உ
சிவமயம்.




5722.

ஸ்ரீ மஹாகணபதயே நம:

ஸ்ரீ சங்கரானந்த சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

இது

கோவிலூர் மடாலயம்

திருக்களாண்டவரென்னும்

ஸ்ரீ வீரசேகர ஞானதேசிகர் பாதசேகரராகி

வேதாந்தபாஸ்கரராய் விளங்காநின்ற

ஸ்ரீ சுப்பையசுவாமிகளவர்களால்

மொழிபெயர்க்கப்பட்டு,

சென்னை: வியாசர்பாடி

ஆநந்தாஸ்ரமம்

ஸ்ரீ க. சிவப்பிரகாச சுவாமிகள்

பாதசேகரராகிய

ஸ்ரீ மூர்த்தி சுவாமிகளால்

மதராஸ் டைம்ஸ் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1916



விலை ரூபா 8 0 0.





யம்.

ஓம் கணபதயே நம:

# முகவுரை.

---

அன்பிற்சிறந்த அறிவுடையீர்! நம்மனோர்கட்குச் சுகத்தின்கண் விழைவும் துக்கத்தின்கண் துவேடமு மிருந்தபோதினும், செயற்கை மாத்திரம் மாறாகவே நிகழுகின்றது; ஆதலின், துற்செயற்கைமாறி நற்செயற்கையில் தலைப்பட்டு, ஈசனை யுபாசித்து, குருவருளைக் கிட்டினாற்றான் சர்வ துக்கங்களையும் நீக்கிப் பரமானந்தத்தைப் பயக்கும் மோக்ஷசாதனமாய சிவஞானம் செவ்வனே கரதலாமலகம்போலா மென்பது திண்ணம். அத்தகைய சிவஞானமோ வேதசிகரங்களையாயும் வாயிலாயறியத்தக்கதேயன்றி மற்றொருவகையாலன்றாம்; அவையோ ஸ்ரீமத் சங்கரபாடிய உதவியைப்பெற்று மேதாவிகளாலரிதிலுணர்தற் பாலனவாதலின், நம்மனோராலெளிதிலறியத்தக்கதொன்றன்றாம் இதனைத்திருவுளத்தெண்ணியே ஸ்ரீமத் சங்கராநந்த சுவாமிகளால் சர்வ வேதசிரோபாகங்களாகிய உபநிடதங்களின்பொருளை விரிவாய்த்தெரிவான் வேண்டி இவ்வான்ம புராணமென்னும் அருமபெருநூலியற்றி யருளப்பட்டது. இவ்வாத்மபுராணத்தை அத்தியயனம் செய்வதானே தத்துவபோதம் முதல் கண்டனகண்ட காத்தியமீறாக வமைந்த சர்வ வேதாந்தக்கிரந்தபாராயணம் செய்தபயன் கரவில்வதுல்லியமாய்க் கிடைக்குமென்பதன்கண்ணே ஐயமின்றாம். சர்வ வேதாந்தங்களின் பொக்கிஷம் இதுவே என இதனைச் சிரவணிக்கும் ஒவ்வொருவருந்தெரிந்துகொள்ளக்கூடியதே; விரிப்பானேன், இதிலில்லாதன இல்லையெனவே சொல்லலாம். இந்நூலாசிரியர் இந்நூலியற்றி யருளியதேயல்லாமல் 32 உபநிடத வியாக்யானத்தையும், சங்கராநந்தியென்னும் ஸ்ரீ பகவற்கீதை வியாக்யானத்தையும், ஸ்ரீ பிரஹ்மசூத்திர விருத்தியையும், மற்றும் பிறவற்றையும் இயற்றியருளியுள்ளார். இச்சங்கராநந்த முனிவரையே உலகப்பிரசித்தமாய ஸ்ரீ வித்தியாரண்ய ஸ்ரீ பாரதீதீர்த்த முனீசுரர்களின் தேசிகரென்றும். ஸ்ரீ வித்தியா சங்கர மூர்த்திகளெனவும், லம்பிகாபோகத்தால் நெடுங்காலம் பூமிக்குள் இருந்தவர்களெனவும், ஸ்ரீமத் ஆதிசங்கர தேசிகேந்திரரின் வியாக்யான சிம்ஹாசனத்தை 10வதாசிரியராய் அலங்கரித்துக் கொண்டிருந்தனரெனவும், சிருங்ககிரிக்கு வருமுன் புண்ணிய மாதாவாகிய காவிரிதீரத்தே வசித்தநேகம் சீடர்கட்கு மெய்ஞ்ஞான நூல்களைப்போதித்து வந்தார்களெனவும், மற்றுமநேக வைபவங்களோடும் இருந்தார்களெனவும் பெரியோர்கள் கூறுவார்கள். இவர்கட்குச் சிருங்ககிரியின்கண்ணே அமைந்துள்ள ஆலயம்போ லிவ்வுலகத்தும் மற்றெவ்

வுலகத்தும் இருப்பதரிதென்றே தோற்றுகின்றது; என்னை, சர்வ சாஸ்திரமு முணர்ந்த வித்யாரண்ய பாரதிதீர்த்த முனிசுவராலமைக்கப்பெற்றிருத்தலின். இவ்வாலய மண்டபத்திருக்கும் 12 தூண்களில், துவாதச ஆதித்தியர்களும் முறையே தங்கள் தங்கள் பிரபையை மாதந்தோறும் செலுத்திவருகின்றனர். 84 ஆசனமே முதல் எத்தனைச் சாஸ்திரப்பொருள்களுள்ளனவோ, சக்கிரங்களுள்ளனவோ அவையாவும் இவ்வாலயத்தின்வடிவமா யமைந்திருக்கின்றன. இப்போதாங்கில முதலியவற்றில் சிறப்புற்றிருக்கும் பெரும் பண்டிதர்களும் மற்றையரும் இவ்வாலய நுட்பத்தை யறிவதே கூடாதகாரியமெனின், இதுபோலொன்றமைப்பது யாண்டையதென்க; எனவே, இதற்கிதுவே யொப்பென்றுமே. இந்நூலாசிரியர் ஆங்கு நெடுங்காலம் சமாதியிலிருப்ப, அரசர்கள் சென்று அவ்விடத்தைத் திறந்து பார்த்தபோது இவ்ப மங்களவடிவ சிவலிங்க ஆகிருதி மாத்திரம் இருந்ததாமென அறிஞரறைவர். இத்தகைய மகா முனிவர் பெருங்கருணையாலருளிச்செய்த இவ்வாத்மபுராணத்தினருமை பெருமைகளை நோக்கியே ஸ்ரீ நிச்சலதாஸ் அவர்களின் திருமூர்த்திகளாகிய ஸ்ரீ காகாராம்பண்டிதரென்னும் இராமகிருஷ்ணபண்டிதரவர்களால் வியாக்யானிக்கப்பட்டது இது வியாக்யானவினையிலார்க்குப் பயன்படாமை கருதியே ஸ்ரீ காசியின்கண் ணெழுந்தருளியிருந்தவரும் நியாயப்பிரகாசிகை, தத்வாநுசந்தானம், பகவற்கீதா கூடார்த்ததீபிகை என்னும் இந்திநூற்கட்கு ஆசிரியருமாகிய ஸ்ரீ சிற்கனாநந்த சுவாமிகளால் இதுவும் இந்திபாஷையிலருளப்பட்டது; இத்துணைப் பிரசித்தமாகிய மகாபுராணம் உலக முழுதும் பரவியும் தமிழ் மக்கட்குப் பயன்படாமலிருந்த ஒருபெருங்குறையை நீக்குவான் வேண்டி, கோயிலூர் மடாலயத்தில் அதிபதியாயெழுந்தருளியிருந்த ஸ்ரீ திருக்காள் என்னும் க்ஷேத்திரத்தில் ஸ்ரீ மஹாதேவ நாமஸ்மரண பூர்வகம் விதேஹமுத்தி யெய்திய ஸ்ரீ வீரசேகர ஞானதேசிகரின் பாததேசகராகி வேதாந்த பாஸ்கரராய் விளங்கிய ஸ்ரீ வீரசுப்பைய சுவாமிகளால் (சிவமகிமை முதலிய அநேக நூல்களின் மொழிபெயர்ப்பாசிரியரால்) செந்தமிழ் நடையில் இம்மகாபுராணம் மொழிபெயர்க்கப்பட்டது. இம்மஹாபுராணம் ஒன்றை உபக்கிரமமுதல் உபசம்ஹாரமவரையில் வாசித்துணர்வாராயின், சகல புராணங்களின் ரகசியார்த்தங்களும், வேதாந்தத்தின் அத்தியந்த அந்தரங்க அபிப்பிராயங்களும் குன்றின்மேலிட்ட விளக்கைப்போல் தெற்றென விளங்குமாதலினாலும், சமுத்திர ஸ்நானஞ்செய்துள்ளோர் சர்வ தீர்த்தஸ்நானமும் செய்ததற்கொக்குமென்னு முதுரைபோல், இவ்வாத்மபுராண ஆராய்ச்சி ஒன்றே சகல சாஸ்திர ஆராய்ச்சி செய்ததற்கு ஒக்குமாதலினாலும், இப்புராணத்தில் பிரதிபாதிக்கப்படாத விஷயம் எச்சாஸ்திரங்களிலும் பிரதிபாதிக்கப்பட்டுள்ளன இல்லையாதலினாலும், எத்தகைய அதிகாரிகளின் சித்தத்தையும் தன் வசப்படுத்திய புருடார்த்தத்தைப் பயப்பிக்கச்செய்வதாயும், சிறு குழவிக்குத் தாய் அமுதூட்டி வளர்ப்பதுபோல, இதிகாசரூபமாய்த் தத்துவார்த்தங்களைப் போதிப்பதாயுமிருத்தலின், மக்கள் யாக்கையினை யெடுத்துள்ள ஒவ்வொரு புருட ஸ்திரீகளின் மாட்டும் இவ்வாத்மபுராணம் அத்தியாவசியம் இருக்கற்பாற்று. இம்

மகா புராணம் முட்டின்றி இனிது முடிதற்பொருட்டு மேற்படி புராணத்திற்குச் சக தாதாரர்களாய்ச் சேர்ந்து முன்பணம் அனுப்பிய அன்பர்களின் நன்றி யெக்காலத்தும் மறக்கத்தக்கதன்று. இப்புராணத்தைத் தமிழ் நடையில் அச்சியற்றுவதற்கு வேண்டிய உதவிகளைப்புரிந்த டைம்ஸ் ஆபீஸ் பேப்பர் பப்ளிஷ்செய்யும் டிபார்ட்மெண்டில், போர்மேனாயிருந்த ஸ்ரீமத் இரத்தின முதலியார் பெருங்கருணைக் குணம் என்றும் மறக்கத்தக்கதன்றாம். இப்புராணத்தை புருப்புபார்த்து பிழை இன்றி செப்பம் செய்துக்கொடுத்த சாதுக்கள் நன்றி எஞ்ஞான்றும் மறக்கற்பால தன்று. இப்புராணத்தை அச்சுவாகனமேற்றிப் புத்தகவடிவாய்ச் செப்பஞ்செய்து கொடுத்த டைம்ஸ் ஆபீஸரின் நன்றி என்றும் மறக்கத்தக்கதன்று. பிழையுள தேல் உலகம் பொறுக்க.

இங்ஙனம் :

மூர்த்தி சுவாமிகள்,

ஆநந்த - ஆசிரமம் வியாசர்பாடி.



சிவமயம்.

ஓம்மகாகணபதயேநம:

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## மங்கலம்.

வேத நாயக னாகிய வேழமா முகனைச்
சோதி நாயக னாகிய பரசிவச் சுடரைத்
தாதை நாயக னாகிய குகன்றனைச் சகமீ
யாதி நாயகி யாகிய சிவையினைத் தொழுவாம். (1)

சங்கர குரவன் றண்மரை யுயர்ந்த சங்கரா னந்ததே சிகன்றன்
இங்கித வினைகண் முத்திரா மேச னிருமரை யருணைவெற் பினைகள்
பொங்கரு ணிதியின் பொன்னடி கரியின் புகர்முகம் படைத்ததே வுருவா
யிங்கெனை யாண்ட வீரஞா னேச விறைமரை யிறைஞ்சிவாழ்த் திடுவோம். (2)

சிற்கனா னந்த தேசிகன் றனைப்பணிந் தடியேன்
கற்கு மாறெளி தருந்தெய்வ வாணியைக் கணித்தே
நிற்குமீ தினைத் தமிழ்மொழி தரவுள நிகழு
மெற்கு மாதுனை யிபமுக வீரனி னருளே. (3)

ஓம் ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ குருப்யோநம:
ஸ்ரீகாசி விஸ்வேஸ்வராப்யாம்நம:

புகழு மெய்யுணர் வஞ்சனச் சலாகையாற் பொதிந்து
விகழுஞ் ஞானமா மிருள்படு குருடனென் றனது
திகழுங் கட்புலன் றிறந்திடப் பட்டதிங் கெவரா
னிகழு நற்சிறப் பாரியன் பதநித நினைவாம். (4)

இகழ்கழிற் பிரம சூத்திரத் தோடு மிறைஞ்சுறும் பாடிய மியற்றுஞ்
சங்கரி வடிவாம் வாதரா யணனென் சதுர்மறை வகுத்தநா யகனைச்
சங்கர னுருவாஞ் சங்கர பகவற் சதுர்மறை புகழ்முனி வரனைப்
பொங்குள மதனிற் பன்முறை வணங்கிப் போற்றுதும் புரையெலா கறவே. (5)

## நூல்.

பரமகருணை நிறைந்த பரமேசுரனவர் சிருஷ்டியின் ஆதிகாலத்தில் ஜீவர்கள் மோக்ஷமடையும்பொருட்டு வேதங்களை இயற்றியருளினர்; ஆண்டு முதலாவதாய கருமகாண்டத்தின்கண் ஜீவர்களின் சித்த சுத்தியின்பொருட்டு வருணாசிரம தர்மங்களை நிருபணம் செய்தருளினர்; இரண்டாவதாய உபாசனாகாண்டத்தின்கண் ஜீவர்களின் விக்ஷேப நிவிர்த்தியின்பொருட்டுப் பலவிதமாய உபாசனைகளை நிரு

பணஞ் செய்தருளினர்; மூன்றாவதாய உபநிஷத் வடிவஞான காண்டத்தின் கண்ணே, கன்மத்தானும், உபாசனையானும், சுத்த மாய சித்தத்தோடு கூடிய முமுக்ஷுக்கட்குப்பிரஹ்மத் தன்மையினடைவு ஜனனமரணத்தி நிவிர்த்தியென்னு மிரண்டின் வடிவ மோக்ஷங் கிடைத்தற் பொருட்டு ஜீவப பிரஹ்மங்களின் அபே தத்தைக் கூறியருளினர்.

இது கூறியதா லிது துணிபப்பெற்றதாயிற்று; வேத முழுவதும் ஜீவப் பிரஹ்மங்களின் அபேதத்தைப பிரதி பாதிபபதாம்; ஜீவப்பிரஹ்மங்களின் பேதத்தைக் கூறுவதன்றாம்; ஏனெனின், ஜீவபபிரஹ்ம பேதத்தைக் காணப பட்ட புருடனுக்கு வேதத்தின்கண் பயத்தினடைவு கூறியிருத்தலினெனக. அல்லது ஜீவேசுவாரின் பேதத்தை வேதம் போதிக்குமாயின் அபபிரமாண மாம்; ஏனெனின், ஜீவேஸ்வரரின் பேதம் "யானீசுவரனன்று" என்னு மிவ் வுலகோ ரனுபவத்தாலேயே துணியப்பெறும்; உலகோரா லறியபபடாத பிர யோஜனமுடையதாய அருத்தத்தைப போதித்தே வேதங்கட்குப் பிரமாணத் தன்மை சாஸ்திரத்தின்கண்ணே சாற்றப்பட்டிருக்கின்றது; ஜீவபபிரஹ்மத்தின் பேதமோ உலகத்தின்கண் பிரசித்தியாம் என்றறிக. மேலும், பேதஞானத்தால் மோக்ஷரூபபலத்தி னடைவுமின்றாம; மாறாய்ச ஜனன மரண வடிவ துக்கத்தி னடைவுமாம்.

ஆகையினாலே பேதத்தை யறிவிப்பதில் வேதங்கட்குத் தாற்பர்யமின் றாம். இத்தகைய பரமேசுவரரின் திருக்கருத்தை யறியாதவராய், பேதவாதி யராய நையாயிகராதியோர் வேத முழுவதிற்கும ஜீவப் பிரஹ்ம பேத நிரூ பணத்தின்கண் தாற்பர்யவருணனஞ் செய்தனர். அந்த ஜீவப் பிரஹ்ம பேதத்தை நிச்சயித்து ஜனன மரண வடிவ துக்கத்தை ஜீவர்க ளடைநதனர். அநத ஜீவர் கள் துன்புறுதலைத் திருக்கண்ணுற்ற பரமகருணா மூர்த்தியாகிய ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ சங்கரபூஜ்யபகவற்பாத ஆசார்யவடிவ அவதாரததைத தரித்து உபநிஷத் துக்களுக்கும், ஸ்ரீ வியாசசூததிரங் கட்கும் பாஷியஞ் செய்தருளினர்; அபபாஷி யத்தின்கண் பேதவாதியரைக் கண்டித்துச சருவ உபநிஷத்துக்கட்கும், ஜீவப பிரஹ்மங்களின் அபேதத்தைப் போதிபபதில் தாற்பர்ய நிரூபணத்தைச் செய் தருளினர். அந்தப்பாஷியத்தா லுபநிஷத்துக்களின் பொருளையறியப் புத்தி சாமர்த்தியமில்லாத முமுக்ஷுக்களின்மீது கிருபைபுரிந்து, ஸ்ரீ சங்கரானந்த சுவாமிகள் எந்த எநத வாக்கியம் முமுக்ஷுவின் மனனத்தின்கண் ணுபயோக மாமோ அந்த அந்த உபநிஷத் வாக்கியார்த்தத்தை ஸ்ரீ ஆத்மபுராணத்தின்கண் நிரூபணஞ் செய்தருளினர்.

அநத ஸ்ரீ ஆத்மபுராணத்தின்கண்ணும் உலகின்கண்ணுள்ளார்க்குப் பெரும் பான்மையும் பிரவிர்த்தி யின்மையைக்கண்டு ஸ்ரீ காகாராமபண்டிதர் அதற்கு வியாக்யானஞ் செய்தருளினர். அந்த வியாக்யானசகித ஸ்ரீ ஆத்மபுராணத் தாலும் வியாகரணாதி அப்யாசமின்றிப் பாஷை படிப்பவராய முமுக்ஷுக்கட்குச் சுருதிப்பொருளின் ஞானமானது உண்டாகமாட்டாது; ஆகையினால் அவர்களின் பொருட்டு, உபயோகியாய் எவ்வெவ் வியாக்கியானங்களுளவோ அவற்றைச்

சேர்த்து மூலமுழுவதும் பாஷையி லெழுதப்படுகின்றது. ஆண்டு முத லத்தியாயத்தின்கண் இருக்குவேதத்தின் ஐதரேய உபநிஷதார்த்தத்தை நிரூபணம் செய்வாம். அதன்கண் குருசீடரின் சம்வாதத்தால் ஆதியில் அதிகாரியி னிலக்கணத்தை நிரூபணஞ்செய்வாம்.

வேதங்களை அத்தியயனஞ் செய்தவனும், ஆசிரியர் அருளும் அருத்தத்தைத் தரிப்பதிற் சமர்த்த புத்தியுடையவனும், தயையோடுகூடிய மனத்தனும் ஆய முமுக்ஷுவானவன் ஐந்துவகையாய பேதஞானத்தாற் பயத்தையடைந்த உலகைப்பார்த்து ஒருகாலத்தில் விசாரஞ் செய்வானாயினன். அவ்வைந்து வகையாய பேதமோ; (1) ஜீவேசுவரர்களின் பேதம், (2) ஜீவர்களின் பரஸ்பரபேதம், (3) ஜீவ ஜடங்களின்பேதம், (4) ஈச ஜடங்களின் பேதம், (5) ஜட ஜடங்களின் பேதம் என்னு மிவையாம். இப்போது அவ் விசாரத்தின் வடிவம் கூறப்படுகின்றது: அந்தோ! பெருங்கஷ்டம்! தேகதாரிகளாய சர்வஜீவர்களும சம்சார ரூபசூலத்தால் ஜனன மரண வடிவ துக்கத்தை யடைந்துகொண் டிருக்கின்றனர்.

இந்தச சம்சார வடிவசூல மெவ்வண்ண மிருக்கின்றதெனின், அது காமக குரோதாதி வடிவகாகங்களாற் சூழப்பட்டதும பெண்வடிவநரிகளாற் சுகமடையப பெற்றதுமா யிருக்கின்றது. பெண்வடிவநரி இதன் சுககாரணமன்றும், மாறாயிதன் றுக்ககாரணமாம், என்றாலும், வழிநடப்பதில் இளைப்பையடைந்தபுருடனுக்குத் * துக்ககாரணமாய பாதங்களின் அடிபடலுஞ் சுககாரணமாம்; அதுபோல விஷயத்தின்கண்ணே பிரீதியுடைய புருடனுக்குத துக்ககாரணமாய பெண்ணானவள் சுககாரணமாய்த் தோற்றுகின்றனள். இத்தகைய சமசார ரூபசூலத்தால் சருவப் பிராணிகட்கும் இவ்வுலகின்கண்ணே அச்சம் ஏன் உண்டாகமாட்டாது? இவ்வகை விசாரம் செய்து புத்திமானாய முமுக்ஷுவானவன் தன் னாசிரியரைக கேட்பானாயினன்:

ஹே பகவன்! இச்சம்சார வடிவ சூலமானது கூர்மையாக விருக்கின்றது, அஞ்ஞானவடிவ இரும்பாற் செய்யப்பட்டிருக்கின்றது, சத்துவம், ரஜசு, தமசு என்னும் முக்குணவடிவ சிகையோடுகூடியிருக்கின்றது. ஆகையினால், இச்சம்சார சூலத்தை விட்டொழித்து எவ்வுபாயத்தாற புருடன் மோக்ஷத்தை யடைவன், என்று இவ்வண்ணம் சீடனால் வினவப்பட அதற்கு தயாசமுத்திரமாகிய அவ்வாசிரியர் வினவிய சீடன்பொருட்டு அருளுவாராயினர்; ஹே குழந்தாய்! அஞ்ஞான நிவிர்த்தியினுபாயம் ஞானம் ஒன்றேயாம்; கரும உபாசனாதிகள் அஞ்ஞான நிவிர்த்தியின் காரணமன்றாம்.

ஹே பகவன்! அடியேன் சம்சார வடிவசூல நிவிர்த்தியி னுபாயத்தை வினவினேன் தேவரீரோ அஞ்ஞான நிவிர்த்தியி னுபாயத்தை யருளிச்செய்தீர்; ஆகையினால் அடியேனுடைய வினாவிற்கொத்த விடையாக வில்லையெனச்

---

* வழி நடந்து சிரமத்தை அடைந்தவன் பாதங்களை அன்னியர் தம் பாதங்களால் மிதிப்பது துக்ககாரணமா யிருந்தாலும், அச் சமயம் அது சுகத்தை உண்டுபண்ணுவதாம்.

சீடன் கூற ஆசிரிய ,ரருளிச்செய்கின்றார்: ஹே மைந்த ! காமக்குரோதாதி வடிவ காகங்கட்கும் பெண்வடிவநரிக்கும் வாசஸ்தானமாய அகில சம்சார வடிவசூல மானது பரமேசுவரன் றன் மாயையினால் உற்பன்னமாயது, நூலினாசத்தால் வஸ்திரத்தி னாசமாவதுபோல ஞானத்தால் மாயையின் நிவிர்த்தியாயின், அதன்றன் காரியமாய சம்சாரசூலத்தின்றன் நிவிர்த்தியும் ஆய்விடும்.

ஹே பகவன் ! முன் தேவரீர், ஞானத்தால் அஞ்ஞானத்தின் நிவர்த்தி கூறியருளினீர்; இபபோதோ ஞானத்தால் மாயையின் நிவர்த்தி கூறியருளினீர். ஆகையினால் முற்கூற்றுக்குப பிறகூற்று முரணுகின்றதே யெனச சீடன் கூற ஆசிரியரருளிசசெய்கின்றார்: ஹே புத்திர ! கடம் கலசம் என்னு மிருசொற களும் ஒரே பொருளின் வாசகங்களாவது எபபடியோ அப்படியே மாயை அஞ்ஞான மென்னும் இரு சொற்களும் ஒரே பொருளின் வாசகங்களாம். ஆகையினால் முரணில்லை யென்று தெரிநதுகொள்.

ஹே பகவன் ! முன் தேவரீர், ஞானத்தால் அஞ்ஞானத்தின் நிவிர்ததி கூறியருளினீர். அது பொருநதாது ஏனெனின், கடபடாதி பதார்ததங்களின் ஞானங்களோ உலகருக் கிருக்கின்றன, ஆயினும் எவருக்கும் அஞ்ஞான நிவிர்ததியோ உண்டாகவில்லையெனச சீடன் கூற, ஆசிரிய ரருளிசசெய்கின்றார்: ஹே குமர ! வேதாந்தசாஸ்திர சிரவணத்தா லுற்பன்ன மாய ஞானமே அஞ்ஞானத்தின் நிவிர்த்தகமாம். அதனின் வேறாய எத்துணை ஞானங்களுளவோ அத்துணையும் அஞ்ஞான வடிவினவேயாம். ஆகையினால் அவறறால அஞ்ஞானத்தின் நிவிர்த்தி யுண்டாக மாட்டாது. சன்னிபாதமென்னும நோயால் மயககத்தை யடைந்த புருடனானவன் எனக்குப் பேரியின் சப்தங் கேடகின்றது எனக கூறா நிற்பன். அந்த ஞானத்தை உலகத்தின்கண் எவரும் மெய்யென உடன்படுவதில்லை யன்றோ? ஆகையினால், வேதாந்தசிரவணத்தாலும் ஆசிரியரின் றிவ்விய அருளினாலும் உண்டாய "யான் பிரஹ்மமாயிருக்கின்றேன்" என்னு மித்தகைய ஞானமே மோக்ஷமடைவதற்கு நெறியாம். ஆதலினால், ஹே மைநத! சம்சார வடிவசூலத்தைவிட்டொழித்துப பிரஹ்ம பாவத்தின் அடைவின் வடிவ முத்திமண்டபத்தை யடைதி; தன்னுடைய ஸ்வரூப அஞ்ஞான நிவிர்ததியின்பொருட்டு வேதாந்த சிரவணாதிகளினால் யான் பிரஹ்மமாயிருக்கின்றேன் என்னு மிஞ்ஞானத்தை யவசியம் சம்பாதனஞ் செய்துக் கொள். ஆன்மஞானத்தின் வேறாய தேகவடிவபநதனத்தைத் தருவதாய யாகாதி காமியகன்மங்களை விட்டொழிதி; அநத ஆன்மஞானம் எத்தகையதெனின், சம்சார வடிவசூலகாரணமாய அஞ்ஞானததை யழிப்பதாம், பேதமற்ற ஆன்ம ஸ்வரூப பிரஹ்மத்தை யடைவிபபதாம், ஆகையால் ஆன்மஞானமே யாவற்றினு மதிகமாம்.

இப்போது ஆன்மஸ்வரூப பிரஹ்மத்தின்கண் தேச பரிச்சேதம், கால பரிச்சேதம், வஸ்து பரிசசேதம் என்னு மிம் மூன்று பரிச்சேதங்களு மின்றாம் என்னு மிவ் வர்த்தத்தை யறிவித்தற்பொருட்டு முதலில் கடாதி அனான்மபதார்த்தங்களில் அம் முப்பரிச்சேதத்தைக் காண்பிப்பாம். (1) முற்று மின்மையின் எதிர்ம்மறையின் பெயர் தேச பரிசசேதமாம்; பூதலத்தின்கண் ணிராநின்ற கடத்தின் வேறிடத்துள்ள முற்று மின்மையின் எதிர்மறைத்தன்மையானது கடத்தின்கண் ணுளதென்

பது இதற் குதாரணமாம். (2) கடத்தி னுதயத்தின்முன் கபாலத்தின்கண் கடத்தின் முன்னின்மையுளது, கடத்தின் நாசமாயின் அக் கபாலத்தின்கண் கடத்தின் பின்னின்மையுளது, அவ்விரண்டின்மைகளின் எதிர்மறைத்தன்மை கடத்தின் கண் ணுளது ; அதன் பெயர் காலபரிசசேதமாம். (3) ஒன்றினிலொன் றின்மையின் எதிர்மறையின் பெயர் வஸ்து பரிச்சேதமாம் ; படம் கடமன்று என்னு மித் தோற்றத்தால் கடத்தின் ஒன்றினிலொன் றின்மையானது படத்தின்கண் தோன் றுநிற்கும், அவ் வொன்றினிலொன் றின்மையின் எதிர்மறைததன்மையானது கடத்தின்கண் ணுளது ; அதன் பெயர் வஸ்து பரிசசேதமாம. இவ்வண்ணம் எலலா அனான்ம பதார்த்தங்களும முப்பரிசசேதங்களோடு கூடியனவாம். ஆன்மஸ்வரூபப பிரஹ்மததின்கண் முப்பரிசசேதங்களு மின்றும ; ஏனெனின், பிரஹ்மம் வியாபகமாதலினால் தேசபரிசசேதம் பிரஹ்மத்தின்கண்இன்றும், உற் பத்தி நாசமின்மைய தாதலின் காலபரிச்சேதம் பிரஹ்மத்தின்கண் இன்றும், எல்லாவறறின் வடிவமாயிருத்தலின் வஸ்துபரிசசேதம் பிரஹ்மத்தின்கணின்றும். இக் கருத்தினாலேயே சுருதியினாற் ஜீவப பிரஹ்மங்களின் அபேதமானது கூறப் பட்டதென் றுணர்க.

ஆன்மஸ்வரூபப் பிரஹ்மத்தி னடைவின் சாதனம் ஞானமாம்; ஆத லின் ஞானத்தைச் சுருதி பிரஹ்மரூபமாகக் கூறியது. எப்படி. ஞானத்திற் குப பிரஹ்மரூபம் சுருதியின்கண் கூறபபட்டுளதோ அப்படியே ஞானததிற் குச் சத்தியரூபமும் சுருதியில் கூறபபட்டுளது ; ஏனெனின், சத்தியப் பிரஹ்மத்தை யடைவிப்பது ஞானமாம். அஞ்ஞானத்தின் நிவர்த்தகமாய விர்த்தி ஞானத்தைப் பிரஹ்மரூபமாயும் சததியரூபமாயுங் கூறுதல் கூடாது; ஏனெனின், சிரவணாதிகளினால் ஞானததின் உற்பத்தி சாஸ்திரத்தின்கண் கூறப் பட்டுளது என்றாலும், சத்தியப பிரஹ்மத்தினடைவின் சாதனம் ஞானமாம. ஆகையினால் ஞானத்திற்குப் பிரஹ்மரூபமும சத்தியரூபமும் ஆயுளை வளர்விப்ப தாய நெய்யை நூலின்கண் ஆயுளெனக கூறியிருபபதுபோலக் கூறபபட்டன. ஆகையினால் பிரஹ்ம சபதத்திற்கும் சததிய சபதத்திற்கும முக்கியபபொருள் ஞானமன்றும், மற்றோ, கௌணபபொருளாம். ஆன்மாவே பிரஹ்ம சபதத்திற் குஞ் சத்திய சப்தத்திற்கும் முக்கியபபொருளாம. இப்போது சத்தியத்தின் இலக்கணததைக் கூறுகின்றோம்:—முதலிலுங் கடையிலு மிடையிலும் எது தன் வடிவத்தை விடுவதின்றோ, மற்றோ, முககாலத்திலும் ஏகரசமாயிருக்குமோ அது சத்தியமென்று சொல்லபபடும், அத்தகைய சத்திய சொரூபன் யானா யிருக்கி றேன் எனின், அன்னிய அனான்மவஸ்து சத்தியமன்றும. இவ்வண்ணம் சாஸ் திரத்தாற் சத்திய சப்தத்தின் பொருள் சொல்லபபட்டது ; இபபோது உலகப் பிரசித்தியினால் சத்திய சப்தத்தின் பொருள்சொல்லபபடுகிறது:—எந்த வஸ்து இருக்கின்றதென்னும் ஞானத்திற்கும் இருக்கின்றதென்னும் சபதத்திற்கும் விஷய மாமோ அஃது உலகத்தின்கண் சத்திய சபதத்தின் பொருளாம் ; ஏனெனின், மலடிமகனிடத்தே "மலடிமகனிருக்கின்றான்" என்னும் ஞானத்திற்கு விஷயமாங்

தன்மையின்றும். ஆகையினால் மலடிமகனை உலகின்கண்ணேனும் சாஸ்திரத்தின் கண்ணேனும் எவரும் சத்தியமெனக் கூறுவதின்றாம்.

ஹே பகவன்! கடமிருக்கின்றது, படமிருக்கின்றது என்னு மிவ்வகையால் இருக்கின்றதென்னும் சபதத்திற்கும் இருக்கின்றதென்னும் ஞானத்திற்கும் விஷயமாய கடபடாதிகளும் சத்தியமாகவேண்டும்; சித்தாந்தத்திலோ பிரஹ்மத்தின் வேறாய சத்திய பதார்த்த மொன்றுமின்றாம என்று சீடன் கூற, ஆசிரியரருளிச் செய்கின்றார்: ஹே மகனே! சததுசசித்து ஆநநதவடிவப பிரஹ்மம் யானேயே யிருக்கின்றேன்; ஆகையினால் என்னுடைய சததியததன்மையே எல்லா அனான்ம பதார்த்தங்களிலுமம தோற்றுகின்றது; ஆகையினாலே ஆன்மாவினும் வேறாய எதுவும் சத்தியமன்றாம். அசசத்தியவடிவ ஆன்மாவை விஷயஞ்செய்வதாய ஞானத்தையும் சத்தியமெனச் சுருதியானது கூறியது உலகின்கண் சததிய அர்த்ததததை யறிவிப்பதாகிய விசாரவானான புருடன் வசனததைச் சத்தியமெனச் சாற்றாநிற்பது போலவாம். ஆகையினால் சத்திய சபதத்திற்குப பரமான்மாவே முக்கியப்பொருளாம்; ஞானமோ சத்திய சபததிற்குக கௌணப்பொருளாம். அல்லது சத்துருவின்றிய ஹிரண்யகாப்பனைச் சுருதியின்கண் சததியமெனக கூறப்பட்டது அவ்வண்ணம் அஞ்ஞான அதன் காரியப்பிரபஞச வடிவ சததுருவினை நாசஞ் செய்வது ஆன்மஞானமாம. ஆகையினால ஞானத்தைச் சுருதிசத்தியமென்று கூறியது.

சத்துருவிலலாத்தன்மை ஞானததின்கண்ணும் ஹிரண்யகர்ப்பன் கண்ணும சமானமாம. ஹே பகவன்! ஞானததின் சததுருவாய அஞ்ஞானத்தையும் அதன் காரியமாய பிரபஞசத்தையும, தேவரீர அசததியமெனப புகன்றருளினீர். அது பொருநதமாட்டாது; ஏனெனின், முககாலத்திலும எதற சுபாவமாமோ அஃது அசததியமெனபபடும. அஞ்ஞான அதன் காரியப பிரபஞசங்கட்கு முக்காலத்திலும் அபாவமோவின்றாம். ஞானகாலததே அஞ்ஞானமான தழியுமென்றாலும நிகழ்காலததிலும இறநதகாலததிலும அஞ்ஞானமிருக்கின்றது; ஏனெனின், அஞ்ஞானம அநாதியாம; அதன் காரியப பிரபஞ்சமும நிகழ்காலததிலிருக்கின்றது; ஆகையினால் அஞ்ஞானமும் பிரபஞசமும அசததியமன்றாம எனச் சீடன் கூற, ஆசிரியரருளிச்செய்கின்றார: ஹே நநதன! எநத வஸ்துவானது ஒருகாலத்திருப்பதாய் மற்றொரு காலததிலலாததாமோ அஃது அசததியமெனபபடும; முக்காலத்திலும ஏது இலலாததாமோ அதுதான் அசத்தியமாமென்னும் நியமமின்றாம். ஆகையினால அஞ்ஞானத்திற்கு எதிர்காலத்திலின்மையுளது, உலகிற்கோ இறநதகால எதிர்காலமென்னு மிரண்டுகாலங்களிலு மின்மையுளது. ஆகையினால் அஞ்ஞானமும பிரபஞசமும அசததியமாம். மலடி மைந்தன் இறநதகால எதிர்காலங்களில இன்றாம; ஆகையினால நிகழ்காலத்தின்கண்ணும அவனைச் சத்தியமென்று எவருங் கூறுவதில்லையன்றோ? ஆகையினால ஆன்மாவினும் வேறாய எல்லாம் மலடிமகன்போல அசத்தியமாம்; ஏனெனின், மலடிமகனுடைய காட்சி ஞானமுண்டாகாமைபோல, காரியசகித அஞ்ஞானத்தின் காட்சி ஞானமும் உண்டாவதில்லை; ஆகையினால் இரண்டுஞ் சமானமாம்.

ஹே பகவன்! ஆன்மாவின் பிரகாசத்தையடைந்து காரியத்தோடுகூடிய அஞ்ஞானம் விளங்குகின்றது; மலடிமகனோ விளங்குவதில்லை; ஆகையினால் மலடிமகனினும் வேற்றுமை காரியத்தோடுற்ற அஞ்ஞானத்தின்கண் ணிருக்கிறது எனச் சீடன்கூற, ஆசிரியாருளிச்செய்கின்றார்:—ஹே மைந்தா! முமுக்ஷுவிற்கு மலடி மகனினின்றும் அஞ்ஞானத்தின்கண் வேற்றுமையானது தோற்றியபோதிலும் ஞானிக்கிரண்டுஞ் சமானமாம். ஆகையினால் ஆன்மாவின் இருப்பு விளக்கங்களைப் பெற்று அஞ்ஞானமானது விளங்குகின்றது, மலடி மகனோ விளங்குவதில்லை எனக் கூறுதல்கூடாது; ஏனெனின், ஆன்மாவின் இருப்பு விளக்கங்களைப்பெற்று அஞ்ஞானமானது சத்தியமாமென வுடன்படினே மலடி மகனும் சத்தியமாதல் வேண்டும்.

உலகின்கண் மற்றொருவன் பொருளால் மற்றொருவன் தனிகன் என எங்ஙனஞ் சொல்லப்படுவதின்றோ அங்ஙனம் ஆன்மாவின் இருப்பு விளக்கங்களைக் கொண்டு அஞ்ஞானத்தைச் சத்தியமெனக் கூறல பொருந்தாது; ஆகையினால் காரியசஹித அஞ்ஞானமும், மலடி மகனும் ஞானிக்குச சமானமாம். முமுக்ஷுவின் திருஷ்டியை அங்கீகரித்து ஆநந்தவடிவ ஆன்மாவின்கண் அஞ்ஞானத்தைப் பழுதைப பாம்புபோற் கற்பிதமென அங்கீகரிபபினும் பேதபுத்தி மித்தையேயெனச் சித்தமாம்.

ஏனெனின், கற்பிதவஸ்துவிற்கு அதிஷ்டானததினும் பேதமுண்டாவதில்லை. அநேக ஜன்ம புண்ணியத்தால் யான் பிரஹ்மமா யிருக்கின்றேனென்று, ஞானமுற்பன்னமானவனுக்கு அன்னிய எநத அனான்மாவஸ்துவும் அறியுந தகுதியுடைய தன்றாம்; ஏனெனின், ஜீவபபிரஹ்மங்களின் அபேதஞானமே பரமாநநதத்தின் அடைவைச செய்வதாம். ஆதலினால் பரமாநந்தத்தின் அடைவைச செய்வதாய வேதாந்தத்தினின்றும உதித்த ஞானத்தைவிட் டொழிதது ஜன்ம மரணவடிவ பந்தகாரணமாய கருமத்தை முமுக்ஷுசெய்யலாகாது. சச்சிதாநநத மாய்ச் சர்வாந்தரியாமியாய் அத்விதீயமாகிய ஆன்மாவை எநத எநத ஜீவர்கள் விட்டொழித்தனரோ அவர் யாவரும் தாமதப பசுவாதி தேகங்களை யடைகின்றனர். பரமேசுரன் உண்டாககிய வேதத்தை அஙகீகரியாமையே பரமேசுரனை விட்டொழித்ததாம்.

ஹே மைந்த! இதுவிஷயத்திற் பழமையான இதிகாசத்தைக் கூறுவாம். அஃதெத்தகைய இதிகாசமெனின், மோக்ஷசாதனத்தை யறிவிப்பதும், சனகாதி இருஷிகளாகிய பிரஜைகளின் சம்வாதவடிவமாயதுவுமாமென் றறிக. அத்தகைய அருமையாய இதிகாசத்தை ஏகாக்கிரக சித்தவிருத்தியோடுங்கூடிநின்று கேள்.

சிருஷ்டியி னாதிகாலத்தில் பிரஹ்மாவானவர் சனகாதிகளை யுண்டாக்கினர், எத்தகைய சனகாதிகளவர்களெனின், அவர்கள் புருஷர்களின் தர்க்கத்திற்கு விஷயமல்லாத வேதத்தின்பொருளை யறிந்தவர்கள்; கட்புலனாதி புற இந்திரியங்களையும் மனவடிவ உள்ளிந்திரியத்தையும் வசஞ்செய்தவர்கள்; கிடைத்ததுகொண்டு மகிழ்

வடைந்துள்ளவர்கள்; சீதம் உஷ்ணம் முதலியவற்றைச் சகித்துள்ளவர்கள்; ஆன்ம ஞானத்தோடு கூடியுள்ளவர்கள்; உலகத்தாரின் நன்மையின்பொருட்டுச் சரீர தாரணஞ் செய்தவர்கள் என்றுணர்க. அத்தகைய சனகாதிகள், பிரஜைகள் மோக்ஷ சாதனமாய ஆன்மஞானமின்றி யிருப்பதைப் பார்த்தும், விஷயங்களிற் பற்றுத விருப்பதைப பார்த்தும் கிருபையோடிங்கூறுகின்றார்: ஹே பிரஜைகளே! ஆன்மஞானமே உங்களுக்குச் சுகசாதனமாம். அதனின் வேறாய யாவும் துக்கத்தின் சாதனமாம் எனக் கூறிய சனகாதிகளின் வசனங்களைக் கேட்டும் முன் வாதனைவயத்தால் மோகத்தை யடைந்துள்ள அந்தப் பிரஜைகள் சனகாதிகளின் வசனங்களை அநாதரவு செய்துவிட்டு விஷயசுகத்தின் பொருட்டுக் கன்மங்களைச் செய்தனர்.

அப் பிரஜைகளிலும் அதமம், மத்திமம், உத்தமம் என்னும் மூவகையினராய தாமசப் பிரஜைகள் பாபத்தோடுகூடியவராய் வேதத்தின் ஆணையை அங்கீகரித்திலர்; முன் மலினவாதனையால் உதித்த புத்தியாற் சத்தப் பரிசாதி விஷயங்களைச சுகசாதனமாக அங்கீகரித்தனர். அந்தச சத்தாதிவிஷயங்களிற் சுக சாதன புத்தியால் அவர்களுக்கு மனம வாக்குசசரீரததின்கண் தோஷ முண்டாயிற்று. அவற்றுள், அன்னியரின் பொருள்முதலியவற்றை இச்சித்தல் மனத்தின் தோஷமாம்; கடுஞ்சொற் கூறல், பொய்ம்மை யுரைத்தல் என்னு மிரண்டும் வாக்கிந்திரியத்தின் தோஷமாம்; கள்ளமே முதலாயவை தேகத்தின் தோஷமாம். இந்தத் தோஷங்களால் மூவகையான தேகங்களை யடைந்தனர். அவற்றுள் சில ஆகாசத்திற் சஞ்சரிக்கும் பறவைமுதலியனவாயின; சில பூமியின்கண் தருவாதியாய்ச்சனித்தன; சில சர்ப்பாதிகளாயின; பறவைமுதலிய தேகங்கள் எததகையன வெனின், மனுடர் போகிக்க யோககியமாயினவாம், அழிபபதற்கு யோக்கியமாயினவாம், வெட்ட யோக்கியமாயினவாம, கைகால் வாககாதி இந்திரியங்களற்றனவாம், சுகமற்றனவாம், மிகுந்த துக்கத்தோடு கூடியனவாம். அவற்றினும புறவைகையற்றதாம, தரு (விருக்ஷம) ஞானேந்திரிய கருமேந்திரியங்களற்றதாம். ஐந்து ஞானேந்திரியங்கள், ஐநது கருமேநதிரியங்கள், ஐந்து பிராணன்கள், மனம், புத்தி என்னும் பதினேழுதத்துவ வடிவலிங்க சரீரமானது தருக்கண்ணு முளது, ஆகையினால் தருக்கண் இநதிரியங்களி னின்மைகூறல் பொருந்தமாட்டாதெனினும், மனுடாதிகளி னிந்திரியம் பிரசித்தமாயிருப்பதுபோற் றருவாதிகட்கின்றாம்; மற்றோ, சூக்குமமாம்; ஆகையாற் சமானமன்றாம். கிராமத்தின் கண்ணும வனத்தின்கண்ணும் இராநின்ற பசுவாதிகள் நல்ல வாககில்லனவாம். ஏனெனின், அவற்றின் வாக்கால் அர்த்தஞான முண்டாவதின்றாம். சர்ப்பாதிகள் பாதாதிகளற்றனவாம். இவ்விஷயமானது எல்லா உலகத்தாருக்கும் நன்றாய்த்தெரிந்ததேயாகும். இவ்வண்ணம் தாமத புருடரின் கதியானதுகூறப்பட்டது.

இப்போது சாத்துவிகப் புருடரின் கதியைச் சொல்லும் பொருட்டு முதலில் இராஜத சாத்துவிகப் புருடரின் இயற்கையைக் காண்பிக்கின்றோம். இரண்டாவது பிரஜையானது ஆன்மஞானத்தை விட்டொழித்து வேதத்தாலறிவுறுத்தப்பெற்ற யாகாதி கன்மங்களையும், அக்கினி, சூரியன், வாயு முதலிய தேவதைகளின் உபாசனைகளையும், சுகத்தின் சாதனமென அங்கீகரித்துச்

செய்தது வேறு வேறு பயன்களைப் போதிப்பதாய வேதவாக்கியங்களைப் பார்த்துக் கர்ம உபாசனைகளைச் செய்த பிரஜைகள் இருவகையாகப் பேதமுற்றன. அவற்றுள் இராஜசப் பிரஜைகள் சுவர்க்காதி யின்பத்தின்பொருட்டுக் கர்ம உபாசனைகளைச் செய்தன, சாத்துவிகப் பிரஜைகள் இவ்வண்ணம் ஒன்றற்கொன்று விசாரஞ்செய்து கர்ம உபாசனைகளைச் செய்தன. அவ்விசாரத்தின் வடிவத்தைச் சொல்லுகின்றோம்: வேதங்களையறிந்த சனகாதியரால நம்மனோர்க்கு முன் மோக்ஷசாதனம் ஆன்மஞானமெனக் கூறப்பட்டது. அந்த ஞானத்தின்கண் இப்போது நம்மனோர்க் கதிகாரமின்றாம்; ஏனெனின், எதனது ஞானமானது சுக சாதனமாமோ அத்தகைய துவம்பத இலக்கியமாய சாக்ஷிவடிவ கூடஸ்தரும் தற்பத இலக்கியமாய பரப்பிரஹ்மமும் நம்மனோரால் தேகாதிகளினின்றும் வேறுபடுத்தப் படவில்லை; வேதங்களை யறிந்தவராய் முன்னிருந்த நம் தந்தைமுதலியோர் வசனத்தினாலும் அந்தப் பரமான்மா நம்மனோரா லறியப்படவில்லை; தத்தம புத்தியினாலும் அந்தப் பரமான்மா நம்மனோரா லறியப்படவில்லை; மனதின்பிரவிருத்தியிற் குசலர்களாகிய நம்மனோர் மனத்தாலு மந்தப் பரமான்மா கற்பனை செய்யப்படவில்லை; இத்தேகவடிவ ஆலயத்தின்கண்ணே அந்தப் பரமான்மா கிராண இந்திரியத்தாலும நம்மனோரா லறியப்படவில்லை; நேத்திராதி யிந்திரியங்களாற் கனவினும் அந்தப் பரமான்மா நம்மனோராற் காணப்படவில்லை; சுருதி வாக்கியங்களாலும் அந்த நிர்க்குணப் பரமான்மா நம்மனோரா லறியப்படவில்லை. நம்மனோரால் சுயமாய்ச சிரத்தையையுடைய சீடர்களின்பொருட்டு ஒருபொழுதும் நிர்க்குணப பரமான்மாவானது உபதேசிக்கப்படவில்லை.

தூல சரீரத்தின் வேறாய்க் கர்த்தாவாகவும புண்ணிய பாப பலத்தின் போக்தாவாகவும் ஆன்மா விருக்கின்றதெனு ஆன்மாவின் வடிவத்தை யாமறிந்துள்ளோம். சுருதிகளும் ஆன்மாவைச சுரோதாவெனவும, திருஷ்டாவெனவும, விஞ்ஞாதாவெனவும் விளம்புகின்றன. வாககுபபிராணன் தன் வியாபாரத்தின்கண் ஒன்றற்கொன்று லயசிந்தனை வடிவ உள்ளக்கினி ஹோத்திரத்தை யுணர்ந்த கவஷ முனியின் புத்திரர் எப்படி வெளி அக்கினி ஹோத்திரத்தினின்றும் வைராக்கியத்தை யடைந்தனரோ அப்படி யாகாதி காமத்தின்கண் வைராக்கியத்தை யாமடையவில்லை. ஆகையினாலே சற்குரு மூர்த்தியின் சந்நிதியை யடைந்து நம் வடிவத்தை நிச்சயஞ் செய்வதிலும் நமக் கதிகாரமின்று. யாமந்தப் பரமான்மாவை யறியாமற் சுவர்க்காதியை யடையும் பொருட்டுக் கர்மங்களையே செய்வோமாயின், நமது ஜன்மம் பயனற்றதாய்ப் போம.

ஏனெனின், சர்வ ஜீவர்களின் சரீரங்களையும் பரமான்மாவானவர் நிர்க்குணப் பிரஹ்மத்தை யறியும்பொருட்டுச் செய்தார்; விஷய போகத்தின்பொருட்டுச் செய்யவில்லை. இக்காரணத்தினாலே சுருதியின்கண் காலின் நகநுனி தொடங்கிச் சிரசுபரியந்தம் தொடை, வயிறு, இருதயம முதலிய இடங்களில பிரஹ்மத்தின் நுழைவு சொல்லப்பட்டுள்ளது. அத்தேகங்களுள்ளும சற்குரு சற்சாஸ்திரம் முதலிய சாதனங்களோடுகூடிய புருடன் தன்தேகமே அப்பிரதிபந்த ஆன்மஞானத்

தின் பொருட்டாம்; ஏனெனின், சுருதியானது இப்புருடதேகத்தின் கண்ணேயே ஆன்மாவின் அபரோக்ஷஞானத்தைக் கூறியிருக்கின்றது. முன்னர்ச் சனகாதியர் நம்பொருட்டுச் சுருதியினுற் றுணியப்பெற்ற மோக்ஷசாதனமாய ஆன்மஞானமே உங்களுககுச செய்யத்தக்கதெனக் கூறினுர். சனகாதியர் கூறிய ஆன்மஞானத்தைச சம்பாதிபபதில் நமக்குச் சாமர்த்தியமின்றெனக் கண்டு, இந்த ஞானத்தின் கண் நமக்கு எந்த வகையா லதிகாரமுண்டாம் என்னுந சிந்தையோடு மௌனந் தரித்து யாமிங்குவநதிருக்கின்றேம; ஆகையினுல் விவேகாதி நான்கு சாதன வடிவ அதிகார அடைவின்பொருட்டுக் கர்ம உபாசனைகளை யாம செய்வோமென, இவ்வண்ணம் விசாரஞ்செய்து பிரஜைகள் உபாசனைகளையும் கர்மங்களையும் பயனை யிசசியாமற் செய்தன. அநதக் கர்ம உபாசனைகளாற் சுத்தமாய மனத்தை யுடையவரும், சமதமாதி சாதனங்களோடுகூடியவரும, ஆன்மஞான மின்றியவருமாகிய முமுக்ஷுக்கள் மீண்டும சனகாதி இருஷிகளை யடைநது பிரஹ்மஞானத்தி னடைவின்பொருட்டு அவரிடததுத் தங்கள் கருத்தெல்லாவறறையும தெரிவித்தனர். அவர்கள் வசனததைக் கேடடுக் கிருபையோடு கூடிய சாவஞராய சனகாதியர் ஆன்மஞானததின் அடைவின்பொருடடு அவர்கட குபதேசிபபாராயினுர்.

சனகாதியர்கூறல்:—ஹே பிரஜைகளே! வாககிற்கும் மனதிறகு மான்மாவிஷய மன்றும். ஏனெனின், ஜாதி, குணம், கிரியையோடுகூடிய வஸ்துவையே சபதமறிவிக்கும். கடமென்னு மிசசபதம் கடததன்மைச சாதியையுடைய கடததை யுணர்த்தும், நீலக்கடம் என்னுமிடததே நீலசபதம நீலகுணமுடையதைஅறிவிக்கும், பாசகன் (சமைப்போன்) என்னு மிச சப்தம பாக (சமையல்) வடிவக்கிரியயையுடைய புருடனை யறிவிக்கும். இவ்வண்ணம் யாதாவ தொரு தருமத்தைக கவர்ந்தே சப்தம், தன்பொருளைப் போதிக்கும், ஆன்மாவோ ஜாதியாதி தருமங்களற்றதாம்; ஆகையினுலே சபதத்திற்கு ஆன்மாவின்கட பிரவிருத்தி யுண்டாவதின்றும. இங்ஙனம் மனவாக்கிறகு விஷயமற்ற சச்சிதாநநத வடிவ ஆன்மாவை யாமுபதேசிக்கச் சமர்த்துடையே மல்லேம், நீவிரும உணரச் சமர்த்துடையீ ரல்லீர் எனினும், நிர்க்குணப பரமான்மாவின்கண் உலகை யாரோபித்து அநத உலகின் நிஷேத வடிவமாய அத்தியாரோப அபவாதத்தாற் கிடைதத பாகத்தியாக இலககணையால் பரமான்மாவை யா மிபபோது உங்கள் பொருட டுபதேசிக்கின்றேம. எங்ஙனம் உறங்குகின்ற அரசனைக கடடியக்காரா எழுபபுகின்றனரோ அங்ஙனம உண்மையிற் சுத்தமாய் அஞ்ஞானவடிவ உறக்கத்திஞல் உறங்காநின்ற பரமான்மாவை வேதாநத சாஸ்திரம் பாகத்தியாக இலக்கணையால் உணர்ததுகின்றதென்பதை யுதாரணமா யறிந்துகொள்ளவேண்டும்.

பிரஜைகள் கூறல்:—ஹே பகவன்! முன தேவரீர் சுத்த ஆன்மாவை வேதாநதம் போதிக்கின்றதென உபதேசித்தீர்; அஃதொவ்வாது, ஏனெனின், ஆன்மா அகங்காராதிகளாற் சிறப்புற்றிருக்கிறது; ஆகையினுற் பிரததியக்ஷாதிப் பிரமாணத்தாற் சித்தமாம். சனகாதியர் கூறல்: ஹேபிரஜைகளே! ஆன்மாவின்கண் யாதொரு ஆகாரத்தோடு கூடிய தன்மையுண்டோ அது மாயையாற் கற்பிதமாம்; ஆகையினுற் பொய்யாம். சர்வ கற்பனைகட்கும அதிஷ்டானவஸ்துவே ஆன்ம சப்தத்தின் பொருளாம. இபபோது இப்பொருளை பிரத்தியக்ஷமாய்க் காண்பிக்கின்றேம.

ஹே மதிமான்களாய பிரஜைகளே ! சாஸ்திரவாசனையில்லாத இலௌகிக புருடர் சாஸ்திரமறிந்த வாதி புருடர் என்னு மிவர்கள் உலகின்கண் இருவகையாய சபதத்தையும், இருவகையாய ஞானத்தையும துணிந்திருக்கின்றனர். அந்தச் சபத ஞானங்களின் விஷய வடிவ அருத்தத்தையும இருவகையாய்த் துணிந்திருக்கின்றனர். அவற்றுள், யானென்னும சபதத்திற்கும் யானென்னும ஞானத்திற்கும அந்தரான்மா அருத்தமாம். யானன்று என்னுஞ சபதத்திற்கும் யானன்று என்னும ஞானத்திற்கும் வாகிய அனுன்மவஸ்து அருத்தமாம. அவற்றுள், யானென்னும் சபதத்தினும யானென்னும் ஞானத்தினும ஆன்மவடிவ அருத்தம அயலாம் ; யானன்று என்னுஞ் சபதத்தினும யானன்று என்னும ஞானத்தினும அனுன்ம வடிவ அருத்தம் அயலாம். இவ்வண்ணம் ஒன்றற்கொன்று வேறுய சபதம், ஞானம், அருத்தம் என்னு மிவற்றை ஒருருவா யுணர்ந்து மயங்கிய புருடனுனவன் ஆன்மாவை யானென்னும் சபதத்தின் விஷயமாகவும யானென்னும ஞானத்தின் விஷயமாகவும அங்கீகரித் துளன் ; அனுன்ம பதார்த்தத்தை யானன்று என்னும சபதத்தின் விஷயமாகவும யானன்று என்னும ஞானத்தின் விஷயமாகவும அங்கீகரித் துளன். ஆகையினுல,யான் யானன்று என்னு மிவ்வெல்லா விவகாரமும் மயல்வடிவமாம். இவ்வண்ணம கடம் என்னும சபதத்தினும கடம என்னும ஞானத்தினும் கடரூப அர்த்தம வேறும. அதன்கண் கடமென்னும உலகரின்விவகாரமும, சபதம, ஞானம, அர்த்தம என்னும வடிவினதாம் ; ஆகையினுன் மயல்வடிவமாம். ஏனெனின், இலௌகிக புருடனிடத்தே இஃதென்ன வஸ்துவென எவனேனுங் கேட்பானுயின், அப்போது கடம் என்னு மிவ்வுத்தரத்தை இலௌகிக புருடன் கூறுவன். எத்தகைய ஞானம நினக்குண்டாயதென எவனேனுங் கேட்பானுயின், அப்போது கடமென்னு மிவ்வுத்தரத்தைக கூறுவன். என்ன சபதத்தை நீ கேட்டாயென எவனேனுங் கேட்பானுயின், அப்போது கடமென உத்தரங் கூறுவன். இவ்வண்ணம் ஒன்றற்கொன்று பேதமுடையனவாய சபத, ஞான, அர்த்தங்களை ஒருருவமா யுணர்தல மயலாலன்றிப பொருந்தாதென்க. ஆகையினுல எல்லா வுலகரின் விவகாரமும் மயல வடிவமாம. இவ்வுலகரின் விவகாரம யுக்திக்கும பொருந்துகின்றதில்லை, ஆகையினுனும் மயல் வடிவமாம்.

ஏனெனின், வாக்கிந்திரியத்தின்கண் சப்தமிருக்கின்றது, இருதயத்தின் கண் ஞானமிருக்கின்றது, அருத்தமாய கடாதியோ பூமியின்கண் ணிருக்கின்றன. அந்த அருத்தத்தைச் சபத வடிவாயும் ஞானவடிவாயும் அங்கீகரித்தலாய இது புருடர்களின் மயலாலன்றிப பொருந்துகின்றதில்லை. அல்லது சப்தம், ஞானம், அர்த்தம் என்னும மூன்றையும் ஒன்று யங்கீகரிப்பதில் * வியாகாததோஷமு முண்டாம; ஏனெனின், எப்பொழுது சபதமும ஞானமும் விளக்கிவைப்பதாமோ சபதஞானத்தி னர்த்தம் விளங்குவதாமோ அப்பொழுது சபதஞானங்கட்கும, அர்த்தத்திற்கும ஒன்றற்கொன்று வேற்று

* பரஸ்பர விருத்த தருமங்கள் ஓர் அதிகரணத்தில் சமுச்சயமாத(கூடுத)லே வியாகாத தோஷ மென்பார்.

மையே சித்தமாம. ஏனெனின், உலகின்கண் விளக்கிவைப்பதற்கும் விளங்கு வதற்கும் ஒன்றற்கொன்று வேற்றுமையே கண்டுளேம். ஒரு புருடன் தந்தை யையும் மைந்தனையும ஓரிடத்திற கண்டிருபபனேல், வேறறிடத்தில அம்மைந்த னைக் கண்டு அவன் தன் தநதையி னினைவு அபபுருடனுக்குண்டாம; இவ்விடத தில் மைநதன் விளக்கிவைப்போன், தநதை விளங்குபவனும. இவ்வர்த்தத்தின் வேற்றுமை உலகின்கண்ணே பிரசித்தியாம. விளக்கிவைபபனவாய சபதஞானங் களை விளஙகும வடிவதாய அர்த்ததடுதோடு அபேதமா யங்கீகரிப்பினே, தன்னு லேயே தானென்னும பேதவடிவ வியாகாதடுதாஷவடை வுண்டாம். இபபோது முற்கூறிய பொருளைச சித்தாநதத்தின்கண்ணே கூடடுவாம. இநதபபிரகாரம விவ கார காலத்தின்கண் யானென்னும சபதத்திற்கும யானெனும ஞானத்திறகும உலகோா ஆன்மாவை விஷயமாக அஙகீகரிததுளா. யானன்றென்னும சபதத திற்கும யானன்றென்னும ஞானத்திற்கும அனுன்மவஸ்துவை விஷயமாக அங்கீ கரித்துளர். ஆண்டு யான் என்னும சபததடுதையும ஞானத்தையும் விட்டொ ழித்து அவறறின் யாதோ ரருததபேதமுமறறு எஞசி நின்றது யாதோ, அதுவே பேதமற்ற எல்லா வலலமையுமுளள பரமான்மா, உலகின் உறபத்திககு முன்னி ருநதது; உலகடபிரசித்த சபதமும், ஞானமும, அனுன்மாவும் முன்னில்லாதிருந தன. எங்ஙனம இருடடின் பகையாய சூரியபகவானுனவர் இருடடை நீககி, இருட்டினின்றும, அவவிருடடிற சுற்றுநின்ற பேய் முதலியவறறினின்றும் நீங்கி யவராய்ப பிரகாசிக்கின்றுரோ, அஙஙனமே பரமான்மாவும தன் காரியப பிரபஞ் சததைத தன்னிடத்தில ஒடுககிககொண்டு அததுவிதீயமாய்* முன்னிருக்கிறது.

இப்போது இபபொருளையே கரதலாமலகம்போலக காண்பிப்பாம:—நாடோ றும் சூரியனிடததே யநதகாரம ஒடுங்குவதுபோலச சததிய ஆநநதவடிவ ஆன்மா வின்கண் இவ்வெலலா வுலகும ஒடுங்குகின்றன.

எங்ஙனம் முழு இரவின்கண் இரவியை(சூரியனை)மறைதது இருளானது அவி த்தையி னின்றும உற்பன்னமாமோ அஙஙனம சசசிதாநநதவடிவ ஆன்மாவை மறைதது ஆன்மாவோடு பகைபியல்புடையதாய அசத்துசசடதுகக அனுன்மவடிவ உலகமுற்பன்னமாம. எங்ஙனம பாம்பின உறபததிககு முனபழுதையே யிருபப தாமோ, பாமபு தன்னுதயததின் முன்னிலலாததாமோ அங்ஙனம அனுன்ம உல கின் உற்பத்தியின்முன்னம ஆனநதவடிவ ஆன்மாவே யிருபபதாகும். அனுன்ம உலகோ தன்னுதயத்தின்முன் னில்லாததேயாகுமென உதாரணநதாமுந தெரிந்து கொள்க. பிரஜைகள் கூறல்:—ஹே பகவன்! சிருஷ்டியின்முன்னர்த் தேவரீர் அததுவிதீய பரமான்மா வுளதெனக் கூறினீா; அது பொருநதாது; ஏனெனின், சிருஷ்டியின்முன் காரியவடிவப பிரபஞச மிலலாவிடினும சருவஜகதததின் காரண வடிவ மாயை இருககின்றதன்றே? சனகாதியர் கூறல்:—

ஹே பிரஜைகளே! ஆன்மாவின் வேறாய் மாயை தோற்றுகின்றது ஆதலின் மாயையைச சத்தியமென உடன்படுகின்றீர்களா? அல்லது பிரமாணத்தான் மாயை துணியபபெறுகின்றது ஆதலின் மாயையைச் சத்தியமென உடன்படுகிறீர் களா? அவற்றுள், முதற பக்ஷம் பொருநதாது; ஏனெனின், துயிலையடைநத

புருடன் நனுக்கனுக்களின் அநந்தவாதனுவடிவ கர்பபத்தோடுகூடிய அவித்தை யைப பார்த்தும் தன்னின் வேறுயவ்வவிதததையைப் பார்ததிலன்; இநதபபிரகாரம மாயையையுடைய மஹேஸ்வர ஆநநதவடிவ ஆன்மாவும சமபூரண சகததுவடிவ கர்ப்பத்தாற் சிறபபுறற மாயையைப பாாததபோதினும தனனிற பின்னமாய் அதனைப பார்த்திலதாம. துயிலின் கண்ணும, பிரளயததின் கண்ணும, சமஸ்கார வடிவமாய்ச சகத்தானது அஞ்ஞானததின்கண்ணே யுளது. மழை யோய்நத போது மண்டூகங்களின் சூககும அவஸ்தைவடிவ சமஸ்காரம பூமியின்கண்ணே இருககின்றது, மழை யுண்டாயிறே மீண்டுமவறறின் உதயமாம. அஃதொப்ப, வாதனுவடிவமாய் அஞ்ஞானததின்கண் ணிராநின்ற உலகானது சிருஷ்டிகாலத தில் உதயமாம. மாயை பிரமாணததாற றுணியபபெறறதாமாதலிற் சததியமாம் என்னும இரண்டாவது பக்ஷமும பொருநதாது; ஏனெனின், மாயை யிருக கின்றதென மாயையின் றுணிவுபபேறு யாதுண்டோ அதுவும மாயையினின்றே மாயையின் றுணிவுபபேறும். பிரமாணததால மாயையின் றுணிவுப்பேற்றை விவேகி புருடர்கள் அங்கீகரித்திலர்; துயிலுமோனறன் றுயில் துயிலினுலேயே துணியப்பெறும, எபபிரமாணத்தானும் துணிவுபபேறின்றும் எவரேனும பிர மாண முடன்படினே அவரை யிது கேட்கவேண்டும. அத்துயில்வடிவ அவிததை யின்கண் பிரத்தியக்ஷப்பிரமாண முளதா? அல்லது அனுமானபபிரமாண முளதா? அலலது சபதபபிரமாண முளதா? அல்லது இவற்றின் வேறுயபாதாமொரு பிர மாண முளதா? அவற்றுள், பிரத்தியக்ஷபபிரமாண மிருக்கின்றதென்னுமிம முதற பக்ஷத்திலும் துயிலும் புருடன்றன் பிரததியக்ஷபபிரமாணத்தாற சித்தமா? அலலது அன்னிய புருடன்றன பிரத்தியக்ஷபபிரமாணத்தாற சித்தமா? இவ் விரண்டு பக்ஷங்களும் பொருநதா. ஏனெனின், இநதிரிய ஜன்னிய ஞானத் தைப்பிரத்தியக்ஷமென நையாயிகர் அங்கீகரிததுளார். துயிலின்கண் இநதிரியங் கட்கு ஒடுககமுண்டாம ஆகையினுல் துயின்றபுருடன் பிரததியக்ஷபபிரமாணத தாற றுயிலை யறிகின்றனில்லை. அஙஙனமே விழித்துககொண்டிருககும அன் னிய புருடனும் அன்னியன்றுயிலைப பிரத்தியக்ஷபபிரமாணததால் அறிகின்ற னில்லை. ஏனெனின், ஒரு புருஷன் றன் ஞானத்தின் பிரததியக்ஷம மறறொரு புருடனுக்கு உண்டாவதின்றும். அஃதொபப, அஞ்ஞானவடிவ துயிலின் பிரத்திய க்ஷமும் மற்றொரு புருடனுக குண்டாவதின்றும. ஆகையினுல பிரததியக்ஷபபிர மாணத்தாற றுயிலின் றுணிவுண்டாகமாட்டாது.

**சங்கை:**—ஹே பகவன்? பிரததியக்ஷபபிரமாணத்தாற றுயிலின் றுணிவுண் டாகாதெனினும் இபபுருடன் றுயிலவோன், இநதிரியஙகளின் றெழிலறறிருதத லின் என்னு மிவ்வனுமானத்தாற றுயிலவடிவ அஞ்ஞானததின் றுணிவுண்டாம.

**சமாதானம்:**—இநதிரியங்களின் தொழிலற்றிருததல்வடிவ ஹேது துயிலின் சாதனமன்றும். ஏனெனின், துயில்வடிவ சாத்தியமிலலாததாய கனுவிடததினும சமாதியிடத்தினும் இந்திரியங்களின் தொழிலறறிருததல் வடிவஹேதுவானதிருக் கின்றது; ஆகையினுற் பிறழ்ச்சியுடையதாம. சாத்தியததை விட்டொழித்து எநத

ஹேது ஒருபோது மிருக்கமாட்டாதோ அந்த ஹேது சாத்தியத்தின் றுணிவைச்செய்யும். ஆகையினால் அனுமானப் பிரமாணமும் துயிலின் சாதகமன்றாம். சாஸ்திரவடிவ சபதபிரமாணம் துயில்வடிவ அஞ்ஞானததின் சாதகமாமென்னும இம் மூன்றாவது பக்ஷமும் பொருநதாது; ஏனெனின், புருடனாலெழுதப்பட்ட சாஸ்திரம் அவித்தைவடிவ துயிலின்கண் பிரமாணமா? அல்லது அபௌருஷேய வேத மதன்கண் பிரமாணமா? அவற்றுள், முதற்பக்ஷமோ பொருந்தாது; ஏனெனின், பிரதகியக்ஷாதிப பிரமாணங்களாற் றுணியபபெற்ற பதாாத்தங்களையே புருடனாலியற்றபபட்ட சாஸ்திரம் சாற்றும; பிரத்தியக்ஷாதிப்பிரமாணங்கள் அவித்தையின் சாதகமன்றாம். ஆகையினாலே இலௌகிக சாஸ்திரமும் அதன்கட் பிரமாணமன்றாம. வேதம் பிரமாணமாமென்னும் இரண்டாவது பக்ஷமும் பொருநதாது, ஏனெனின், பயனோடுகூடிய பொருளின்கண்ணேயே வேதம் பிரமாணமாயிருததலினென் றுணர்க. பயனென்பது இன்பத்தி னடைவும துன்பத்தின் நீக்கமும ஆம. அவையிரண்டும் ஜீவபரஹ்ம ஐககிய ஞானத்தா லுண்டாம்; அவிததையின் ஞானததால் உண்டாகமாட்டாது. ஆகையினால் அவித்தையின் கண் சாஸ்திரபபிரமாணமின்றாம்.

சங்கை:—வேதத்தின்கண் மாயை அவித்தைகளைபபோதிககும் வாககியங் களும் அவித்தையினின்றும் உலகுற்பததியைப போதிக்கும் வாக்கியங்களும் பற்பல காணபபடுகின்றனவே; அவற்றிற் கியாதபிபபிராயம?

சமாதானம்:—பயனின்மையின் அவித்தையை யுணர்ததுவதிற் சாஸ்திரததிற்குத் தாற்பரியமின்றாம; மற்றோ அதவிதீய ஆநநதவடிவ ஆன்மாவை அறிவிக்கும் பொருட்டே அவித்தையையும அதினின்றும் உலகின் உற்பததியையும வேதங் கூறுகின்றது. அஃது எத்தகைய அவித்தை யெனின், விள்ககினா லிருட்டின் ஞானமுண்டாகாததுபோல பிரமாணத்தால் அவித்தையின் ஞான முண்டாகமாட்டாது; மற்றோ அவித்தையி னாலேயே அவித்தை துணியப் பெறுவதாம். இந்தப்பிரகாரம பிரளயகாலத்தின்கண் பரமாத்மா, காரியாகார பரிணாமத்தை யடையாத மாயையாற சிறபபுற்றிருக்கின்றதென்றாலும் பரமாத்மா மாயையற்றதெனக கூறப்பட்டிருக்கிறது. சூரியபகவான் இருட்டின் காரணமாய அஞ்ஞானத்தாற் சிறப்புறறிருப்பினும் பகலில் காரியவடிவ இருட்டற்றவராவ ரன்றோ? அதனாறான் சூரியன் இருட்டற்றவரெனக கூறபபெற்றிருக்கிறார். இவ் வண்ணமிருபபதாய பரமான்மா சிருஷ்டியின் ஆதிகாலத்தின்கண் இவ்விசாரத் தைச செய்ததது. எத்தகையது அப பரமான்மாவெனின், முன் முற்கற்பத்தின் கண் சிருஷ்டியை விஷயஞ்செய்வதாய மாயையின் விருத்திவடிவ ஞானத்தாலுற் பன்னமாய சமஸ்காரத்தோடு கூடியது, ஜீவர்களின் புண்ணிய பாபவடிவ அதிர்ஷ் டத்தால் வெளிப்பட்டதாய சமஸ்காரத்தோடுகூடிய தென்றுணர்க. இத்தகைய பரமாத்மா ஆராய்ச்சிசெய்ததது. இபபோது அவ்வாராய்ச்சி வடிவத்தைக் கூறு வாம்:—மாயா உபஹித பரமான்மாவாய நம்மிடத்தே பஞ்சபூதமும் அவற்றின் காரியமாய பிரஹ்மாண்டமியாவும் சூக்குமவடிவமா யிருக்கின்றன. ஆகையினால் இவ்வண்ணம் வெளிப்படையாய்ச் சுவர்க்கம், ஆகாசம், பூமி என்னு மிம்மூன்று

உலகங்களையும் சிருட்டிப்போம். ஈண்டுச் சுவர்க்கமென்றதால் மேலெல்லா வுலகங் களையும் கொள்க. பூமியென்றதால் கீழெல்லா வுலகங்களையுங் கொள்க. இவ் வண்ணமாய்ந்து சத்திய சங்கற்பத்தையுடைய பரமேசுரனுனவர் பிரஹ்மாண்டத் தைச் சிருட்டித்தார். எப்படிப்பட்ட பிரஹ்மாண்டமெனின், விராட்பகவானுக் குச் சரீரமாம், ஹிரண்யகற்பன் றன் சரீரவடிவ சூக்ஷ்ம பஞ்சபூதங்களின்கண் ணிருப்பது, பூவாதிபதினுன்கு லோகங்களோடு கூடியது, சேதனசத்தையைப் பார்க்கினும் வேறுசத்தையற்றது, நாமரூபக் கிரியைகளையே சரீரமாகவுடையது.

ஆண்டு நாமமென்றதாற் சப்தவடிவப் பிரபஞ்சத்தைக்கொள்க, ரூபமென்றதா லர்த்தவடிவப் பிரபஞ்சத்தைக்கொள்க, கிரியையென்றதால் நாமரூப காரணமாய கர்மங்களைக்கொள்க. இந்தப்பிரகாரம் சர்வஞ்ஞராயும் சர்வசக்திமானுயும் இரா நின்ற பரமேசுரனுனவர் சம்பூரணஜகத்தை உண்டுசெய்து இவ்வண்ணம் ஆராய்வா ராயினர். எங்ஙனம் அசுரர்களின் பாலகர் இராகத் துவேஷமற்றவராய்த் தம் மாயாபலத்தாற் பதார்த்தங்களை யுண்டாக்குகின்றனரோ அங்ஙனம் பரமேசுரர் சகத்தையுண்டாக்கினர்.

இப்போது அந்த விசாரவடிவத்தைக் கூறுகின்றோம்:—எவ்விப பஞ்சபூதங்க ளுளவோ ஜலம் முக்கியம் எவற்றின்கண்ணே அத்தகைய பஞ்சபூதங்களின் கண்ணிராநின்ற யாதோ ரிப்பிரமாண்டமுளதோ அந்தப் பிரமாண்டத்தின் கண்ணிராநின்ற எவ்விப பதினுன்கு உலகங்கள் உளவோ அவையெல்லாம் அசேதனங்களாம்; ஆகையினுற் கணமாத்திரையில் அழிவையடையும். எங் ஙனம் எஜமானனில்லாத வீடானது அழிவையடையுமோ அங்ஙனம் பிராண னின்றிய சரீரம் அழிவையடையும் என ஆய்ந்து தந்தையைப்போற் காப்பாற்றும் பரமேசுரரானவர் முன்னர்த் தத்தம் சத்துவகுணுதி காரணத்தால் உற்பன்னமாய சம்பூரண இந்திரியங்களையும் தேவதைமுதலிய ஜகத்தையும் வெளிப்படுத்தும் பொருட்டு, அவ்வண்டத்தின்கண் பல்வகையாய துவாரங்களைச் செய்தனர். அவற் றுள், முகத்துவாரவடிவ கோளகத்தையடைந்து சப்தவியவகாரஞ் செய்வதாய வாகிந்திரியம் வெளிப்பட்டது; அவ்வாக்கிந்திரியத்தினின்றும் வைதிக யாகாதி கருமங்களைச் சித்திசெய்வதாய அக்கினிதேவதை வெளிப்பட்டது. நாசிகைத் துவாரவடிவ கோளகத்தையடைந்து கிராண இந்திரியம் வெளிப்பட்டது; அந்தக் கிராண இந்திரியத்தினின்றும் கந்த உபாதிவானுய வாயுதேவதை வெளிப்பட்டது. நேத்திரத் துவாரவடிவ கோளகத்தையடைந்து நேத்திர இந்திரியம் வெளிப்பட் டது; அந்த நேத்திர இந்திரியத்தினின்றும் பகவான் சூரியதேவதை வெளிப்பட் டது. கர்ணத்துவாரவடிவ கோளகத்தை அடைந்து சுரோத்திர இந்திரியம் வெளிப்பட்டது; அந்தச் சுரோத்திர இந்திரியத்தினின்றும் சம்பூரண திசைகள் வெளிப்பட்டன. தேக முழுவதிலும் இராநின்ற அதிசூக்கும அனந்த துவாரங் களினின்றும் சரீர முழுவதும் வியாபித்திராநின்ற தோல்வடிவத் துவக்கானது வெளிப்பட்டது; அந்தத்துவக்குவடிவ கோளகத்தையடைந்து உரோமகேசத் தோடுகூடிய ஸ்பரிசன இந்திரியம் வெளிப்பட்டது; அந்த ஸ்பரிசன இந்திரியத்

தோடுகூடிய ஐரோமகேசங்களினின்றும் ஓடதிகள்முதலிய எல்லாத் தாவரங்களும் வெளிப்பட்டன ; தாவரவடிவ உபாதிவாளுய வாயு தேவதையும் வெளிப்பட்டது. அவை எத்தகைய தாவரமெனின், சர்வ ஜீவர்கட்கு முபகாரமாம் பொருட்டுப் பகலு மிரவும் தம்பாற் கிலேசத்தைத் தரித்திருப்பனவாமென்க. மாமிசத்தின் கமலவடிவ இருதயகோளக முற்பன்னமாயது, அந்த இருதய மெத்தகைய தெனின், ஐந்து துவாரங்களோடு கூடியதும் உள்ளாகாசத்தின்கண்ணிருப்பதும் ஆமெனவறிக. அந்த இருதயவடிவ கோளகத்தையடைந்து மனம் வெளிப்பட்டது, அந்த மனத்தினின்றும் உலகத்தை ஆநந்திக்கச்செய்வதாய சந்திரதேவதை வெளிப்பட்டது; நாபிததுவாரவடிவகோளகத்தை யடைந்து அபான வாயுவெளிப்பட்டது, எத்தகைய அபானனெனின், துக்கத்தாற் சகிக்கத்தக்கது. இக்காரணத்தினுலேயே பிராணுயாமம் சாஸ்திரங்களில் மிகவுங் கடினமெனக் கூறப்பட்டுள்ளது. முகவாயிலா யடையப்பெற்ற அன்ன ஜலங்களைக் கீழிடத்திற கொண்டுபோய்ச் சேர்ப்பது, ஆகையினு லிஃது அபானனெனக் கூறப்பெறும். அந்த அபானனினின்றும் மகாளுய மிருத்தியு வெளிப்பட்டது. எத்தகையமிருத்தியு வெனின், சர்வப் பிராணிகட்கும் பயத்தைக் கொடுப்பது, அபானன் மிருத்தியுவின் காரணன் என்னு மிவ்வார்த்தை உலகத்தின்கண்ணும் பிரசித்தமாம். ஏனெனின், அன்னத்தின் தோஷமின்றி எத்தானத்தின் கண்ணும் பிராணிகள் மரிப்பதில்லையாம், மறறேரு அன்னதோஷத்தினுலே யாண்டும் பிராணிகள் மரிக்கின்றன. அன்னுதிகளை இவ் வபானவாயு விழுங்குகின்றது. இக் காரணத்தால அபானனினின்றும் மிருத்தியுவின் வெளிப்படுதல் கூறப்பட்டது. உபஸ்தத் துவாரவடிவ கோளகத்தை யடைந்து வீரியத்தோடுகூடிய உபஸ்த இந்திரியம் வெளிப்பட்டது; அஃ தெத்தகைய வீரியமெனின், ஜராயுஜ அண்டஜ தேகங்களை விஸ்தாரஞ் செய்வதாய் உலகத்தின்கண்ணும் பிரசித்தமாம். மேலும் பஞ்சம ஆகுதியின சாதனமுமாம, இவ்விஷயம மேறகூறப்பெறும், மேலும் ஷட்கோசவாளுய சரீரத்தின் காரணமுமாம். அவற்றின்கண் துவக்கு, உதிரம், மாமசம் என்னு மிம மூன்றுகோசங்களும தாயி னமசத்தினின்று முண்டாகின்றன ; நரம்பு, எலும்பு, மச்சை என்னும மூன்று கோசங்களும தந்தையின் அமசத்தினின்றும் உண்டாகின்றன. வீரியசகித அந்த உபஸ்த இந்திரியத்தினின்றும, ஜலத்தைப் பிரதானமாகவுடைய பஞ்சபூதங்களையே சரீரமாகவுடைய பிரஜாபதி தேவதை வெளிப்பட்டது. இந்தப்பிரகாரம ஐதரேய உபநிஷத்தின்கண் இந்திரியங்களும் அவற்றின் தேவதைகளும வெளிப்பட்டமை கூறப்பட்டுள்ளது.

இப்போது எஞ்சிநின்றதேவதை இந்திரியமென்னும இவற்றிற்கும் சுருதியின் கண்ணுள்ளவர்க்கு அக்கினிமுதலிய சப்தங்களின் இலக்கணையாறகொள்ளும் வகையைக்காண்பிப்பாம. முன்னங்கூறிய மிருத்தியுவின் காரணமாய அபானன் குதத்துவாரத்தினின்றும் வெளிப்படையாம. இக்காரணத்தானே அவ்வபான வாயு தேவதையோடுகூடிய பாயுரு விந்திரியமாம்.

இதனது கருத்து இதுவாம் :—அபானனென்னுந் தேவதையோடு கூடிய பாயுரு இந்திரியமும் வெளிப்படுகின்ற தெனக் கொள்ளற்பாலதாம், கிராண இந்திரி

யத்தையடைந்து கந்தமின்றியதேனும் வாயுக்கந்தமுடையதாம். இக்காரணத் தாலே கிராண இந்திரியம் பிருதிவியாம். இத்தானத்தின்கண்ணே கந்தத்தோடு கூடியவாயுவாற் பிருதிவிதேவதையைக் கவரற்பாலதாம். முன்னர்த் துவக்கினின் றும் உரோமங்கள் வெளிப்பட்டனவெனக் கூறியுள்ளேம், அவ்வுரோமங்கள் அசை வோடுகூடியனவாம், உரோமங்களின்கண் அசைவு வாயுவாலுண்டாவதாம். ஆகை யாலிநிர்ணயமுண்டாம்: உரோம ஸ்பரிச இந்திரியங்களோடுகூடிய துவக்குவடிவ கோளகத்தினின்றும் வாயுதேவதை வெளிப்பட்டதாம்.

ஆவரணத்தின்விரோதி அவகாசவடிவ இலககண ஆகாசம்திசைக்குச்சமான மாம். ஆகையினுல முற்கூறியதிசை ஆகாசவடிவமாம். முன்னர் இருதயத்தின் கண் மனம் வெளிபபட்டமை கூறபபட்டது. ஆண்டுமனம் வெளிபபட்டது கொண்டு புத்தியும அகங்காரமுஞ் சிததமும் வெளிபபட்டனவென உணர்நது கொள்க. ஏனெனின், சுருதியின்கண் மனததினுலேயே எலலாவுலகின் உற்பத்தி கூறப்பட்டுள்ளது. முன்னர் மனத்தின்தேவதையாய சந்திரன் வெளிப்பட் டமை கூறப்பட்டது. அசசநதிரனுல் புத்தி, யகங்காரஞ் சித்தமென்பவற்றின் தேவதைகளாய பிரம்மா, ருததிரன், மகேசன் என்பவா வெளிபபட்டமையும் கிரகிததுககொளக. முன்னா அபானன் வெளிப்பட்டமை கூறபபட்டது அவ் வபானனுல் கிரியாசக்தியுடையனவாய சர்வப்பிராணன்களையுங் கவர்ந்துகொள்க. முன்னா முகவடிவகோளகத்தின்கண் வாக்கிநதிரியம வெளிபபட்டமை கூறப பட்டது, அதன்றன் தேவதையாய அக்கினியும் வெளிபபட்டமை கூறப்பட்டது. ஆண்டு வாககிந்திரியத்தால முகவடிவ ஓரிடத்தின்கண் ணிருப்பதாய இரசன இநதிரியம வெளிபபட்டமையும் கண்டுகொள்க. அக்கினிதேவதையினுல் வருண தேவதை வெளிபபட்டமையும் கவாநதுகொள்க. இவ்வண்ணம் அநநதம் பிரகார மானவற்றை அண்டததின்கண்ணே செய்து இருகரங்களையும், இரண்டு பாதங் களையும பரமேசுரர் வெளிபபடுத்தினா; கரங்களினின்றும் இநதிரதேவதையை வெளிப்படுத்தினர்; பாதங்களினின்றும் உபேநதிர தேவதையை வெளிப்படுத் தினர்.

இநதப்பிரகாரம் விராட்பகவானுடைய தேகத்தின்கண் ணிராநின்ற முக முதலிய துளைகளின்கண்ணே சுருதியின்கட்கூறிய பிரகாரம் எல்லாத்தேவதை களையும் வாக்காதியெல்லா இநதிரியங்களையும பரமேசுரர் வெளிபபடுத்தினர். கன்ம உபாசனைகளால் அடைநதுள்ளதாய தேவசரீரம் யாதோ அதுவுநதுன்பத் தோடுகூடிய.தெனின், அன்னியதேகத்தைப்பற்றி கூறவேண்டியதென்னிருக் கிறது.

இக்கருத்துப்பற்றி அவ்விராட் சரீரத்தைச்சமுத்திரவடிவமாய் வருணனஞ் செய்கின்றேம். அநந்தங்கோடிகளை அநநதங்கோடிவாரம் எண்ணினுல் எத்துணை யெண்ணுமோ அத்துணையோஜனை விஸ்தாரததோடு கூடியதாகும விராட்டின் தேகவடிவ சமுத்திரம். சமுத்திரத்தின் எண்ணிக்கையின் நியமம சாஸ்திரத தின்கண் எழுதபபட் டிருககின்றதென்றுலும பிரளயகாலத்தின்கண் நியம

யின்றும்; ஏனெனின், பிரளயகாலத்தின்கண் யோஜனையையெண்ணுபவர்கள் ஒரு வருமின்றும்.

ஈசுவரன் பிரளயகாலத்தின்கண்ணும் இருக்கின்றானெனினும் எண்ணுவதா லீசனுக் கியாதொரு பிரயோஜனமுமின்றும்; ஆகையினால் யோஜனையின் எண்ணிக்கை செய்யவில்லையென் றறிக. பார்ப்பதினாலே சமுத்திரம் எல்லாப் பிராணிகட்கும் பயத்தை யுண்டாக்குவதேபோல எல்லாவடிவமாயுமுள்ள விராட்டு யானவன் என்னும் இத்தகைய விராட்டின் ஞானத்தாற் பரிசசின்ன திருஷ்டியையுடைய அஞ்ஞானியானவன் பயத்தையடைவன். பஞ்சமகா பூதவடிவ நீரானது அதன் கண்ணும், பதினன்கு உலகவடிவ அலைமாலைகள் அதன்கண்ணும். கடலானது இப்பி, சங்கு என்னு மிவற்றால் எழிலோடு கூடி யிருப்பதேபோல இவ் விராட் பகவானுடைய சரீரமும், ஜராயுஜம், அண்டஜம், சுவேதஜம், உத்பிஜம் என்னு மிந நான்கு வகையாய சரீரவடிவ இப்பி, சங்கங்களால் எழிலோடு கூடியிருக்கின்றது; காமக்குரோதாதி வடிவ மகரங்களுக் காசிரயமாயுமிருக்கின்றது; ஏனெனின், சமுத்திரத்தின் மகரமானது தன்னுடைய தந்துக்களாற் புருடனைக் கட்டிச் சமுத்திரத்தின்கண் ணாழ்த்திவிடுவதே போலக் காமக் குரோதாதிகளும் வாதனைவடிவ தந்துக்களாற் கட்டி யிப்புருடனைச் சமுசாரவடிவ சமுத்திரத்தின்கண் வீழ்த்திவிடுகின்றது; ஆகையினால் மகரத்திற்குச் சமானமாம்.

கடலின்கண் பல்வகையாய தடைசெய்பவையுளவாம்; அவற்றினுஞ் சில கடலின் கரை யடைவதற்குத் தடைசெய்பவாய அனுமான்றன் நிழலைக் கவரு மரக்கராம்; சில கடலின்கண் தாண்டுதற்குத் தடையாய தண்ணீரின் சுழல்களாம்; சில வெளிவருவதற்குத் தடையாய முதலைகளின் முகங்களாம். இவையொப்பத் தடைசெய்வனவாய சஞ்சிதங்கள் ஆகாமியங்கள் பிராரப்தங்கள் என்னும் கன்மங்கள் அதன்கண் ணுளவாம். இத்தகையதாம் விராட்பகவான்றன் சரீரம். துவக்கு முதலிய தாதுக்களால் துர்க்கந்தமாம், *விட்டை மூத்திரமலங்கட்காசிரயமாம். துர்க்கந்தாதி அன்னத்தின்றேடம் விராட் சரீரத்தின்கண் கூறல் மறைக்குமுரணு மாயினும் வியஷ்டி சரீரவாயிலாய் அதன்கண் ணறியத்தக்கதாம், இயல்பாக அதன்கண் துர்க்கந்தாதிகளின்றும். இத்தகைய விராட்சரீரத்தின்கண் ணடைந்துள்ள வாக்குமுதலிய தேவதைகள் பசி தாகாதிகளால் வியாகூலமடைந்தவர்களாய் விராட்சரீரத்தைத் திருப்திசெய்ய யோக்கியமாய அன்ன ஜலங்களைக் காணுதவர்களாய்த் தங்களுடைய பிதாவாய பரமேசுவரனைப் பார்த்துக் கூறத் தொடங்கினர்:

ஹே பகவன்! சம்பூரண ஜகத்தைச் சரீரமாகவுடைய விராட் பகவான்றன் சரீரத்தைத் தாங்கள் உற்பன்னஞ் செய்தீர்கள். இச் சரீரத்திற்கு வேறாய் யாதொரு அன்ன ஜலத்தையும் காணேம். இச் சரீரத்தின்கண் எங்களுக்குப் போஜனஞ் செய்வதற்கு யோக்கியமாய அன்னாதிகளைக்கண்டிலேம்; பானஞ்செய்வதற்கு யோக்கியமாய ஜலத்தைக் கண்டிலேம்; ஆகையினால் ஹே பகவன்! எங்கள் இன்பத்தின் பொருட்டுச் சிறிது அன்ன ஜலத்தால் எதற்குத் திருப்தியுண்டாமோ அத்தகைய வேறு சரீரத்தைத் தேவரீர் உற்பன்னஞ் செய்யவேண்டும், அதன்கண்

* விட்டை = மலம்.

ணே யிருந்து யாங்கள் அன்னஜலங்களை யடைவோமென இந்தப் பிரகாரம் வாக்காதி தேவதைகளாற் பிரார்த்திக்கப்பட்ட அந்தப் பரமாத்மாவானவர் கோவின் தேகத்தைச் சிருட்டித்தனர். அந்தக் கோவின் தேகத்தின்கண் வாக்காதி தேவதைகட்குப் பிரீதி உண்டாகவில்லை; ஏனெனின், கோ முதலிய சரீரத்தின்கண் முன்னர்செய்த கன்மமே போகிக்கப்பெறும்; புதிதாய புத்திகர்மங்களின் சமபாதனம் உண்டாவதில்லை. இந்தப்பிரகாரம் கோவின் சரீரத்தின்கண் அத்தேவதைகளுககுப் பிரீதியின்மையைக்கண்டு பரமாத்மா புத்திரர்களின் பிரீதியின்பொருட்டு அசுவத்தை உற்பன்னஞ்செய்தனா. அநத அசுவத்தின்கண்ணும் அவர்கட்குப பிரீதியுண்டாகவில்லை.

ஏனெனின், அசுவத்தின்கண் கரங்(கை)களுக்கும் ஞானகர்மங்களின் சாதனங்களுக்கும் அபாவமிருத்தலினென்க. இந்தபபிரகாரம் புத்திரர்களின் பிரீதியின் பொருட்டுப பரமேசுரா எண்பத்துநான்கு லக்ஷம தேகங்களைச சிருட்டித்தார், ஆயினும எசசரீரததின்கண்ணும அவர்கட்குப பிரீதியுண்டாகவில்லை. அதன் பின்னா மனுட சரீரத்தைப பரமேசுரா சிருட்டித்தனர். அம்மனுட சரீரம உற்பன்னமானதைக கண்டு அந்தச சரீரததின்கண் தேவதைகள பிரீதி செய்து மகிழ்வுற்றவராய்ப பரமேசுரனை நோககிக கூறததொடங்கினர், ஹே தநதையே! இமமனுட சரீரத்தை நேரே தாஙகளே செய்தீர்கள் வேறொரு வாயிலாய்ச் செய்யவிலலை; ஆகையினால் அது மகிழ்வைச் செய்வதாயிருக்கின்றது. புததிமான்களாய தச்சன் முதலாயினோர் தம்முடைய கையால எந்த வஸ்துவைச செய்கின்றனரோ அநத வஸ்து இரமணீயமாயிருக்கின்றது; தம்முடைய வேலையாடகளாற் செய்விக்கப்பட்ட வஸ்து இரமணீயமாகவிலலையென்னு மிஃதுலகததின்கண் பிரசித்தமாம்.

இம்மனுட சரீரத்தின்கண் நேரே ஈசுரன்றன் காரியத்தன்மை பொருத்தமுடையதாம்; ஏனெனின், இந்த மனுடன் வஸ்துவையறிந்து கூறுகின்றான், ஞானேநதிரிய கருமேந்திரியங்களோடு கூடியுள்ளானென்பது கருத்தாம். வானர முதலிய சரீரத்தின்கண்ணும் நேத்திர முதலிய இந்திரியஙகளால்ஞானமுண்டாம்; ஆகையினால் மனுட சரீரத்தின்கண் அவற்றினின்றும் சிறபபு உண்டாவதின்றாமென்றாலும், மனுடரின் வேறாய வானராதிகளினது இநதிரியங்கட்கு வஸ்துவோடுகூடச சம்பநதமுண்டாயினும் அதனால எல்லாவகையாய அஞ்ஞானத்தினிவிர்த்தியும் உண்டாவதின்றாம்; கடாதிவஸ்துக்களோடு இந்திரியஙகளினது சம்பந்தமுண்டாயின் மிகுதியாய இடங்களில் மனுடன் அஞ்ஞானமற்றவனாகின்றான்; ஆகையினால் வானராதிகளினின்றும் மனுடன் சிரேட்டனாம்.

மேலும், எத்தகையது இம்மனுட சரீரமெனின், இவ்வுலகத்தினின்பம் இன்பததின்சாதனம என்னுமிவற்றை யுணர்வது, சுவர்க்காதி உலகங்களினின்பம் அவற்றின் சாதனமாய யாகாதிகருமம் என்னுமிவற்றையும் சாஸ்திரத்தாலறிவது. சென்றகாலத்தேயாய காரியத்தையும் இனியாவதாய காரியததையும் உணர்வது, இன்பத்தின் அடைவிற்கும் துன்பததின் நீககத்திற்குஞ் சாதனத்தை யுணர்வதன்

பொருட்டுச் சாதனங்களை யுணர்பவராய மகாத்மாக்களின் அடையின் பிரகாரத்தையும் இம்மனுடனுணர்வன், மகாத்மாக்களினடைவுண்டாய் இஃதெனக்கியற்ற யோக்கியமாயது இஃதெனக்கியற்றத்தகாதது என்னு மிவ்வெல்லாவற்றையும் பிரமாணத்தாலறிவன், இம்மனுட சரீரத்தின் கண்ணேயே வேதவாக்கியங்களால் ஆன்மாவின் சாக்ஷாத்காரமுண்டாம். இத்தகைய மனுடசரீரத்தின் கண்ணேயே சம்பூரண தேவதைகள் சந்தோஷத்தையடைந்தன.

இந்தப்பிரகாரம் மகிழ்வோடு கூடியிராநின்ற புத்திரர்கட்குப் பிதா கட்டளையிடுவாராயினர்: ஹே தேவதைகளே! இவ்வியஷ்டி சரீரத்தின்கண் தததம் கோளகவடிவத்தானத்தின்கண் நீங்கள் பிரவேசியுங்கள்.

**சங்கை:**—ஹேபகவன்! இந்திரியங்களிருப்பதற்கு யோக்கியமாய தானங்களின் கண் எங்கள் பிரவேசம் கூடாததாம்; ஏனெனின், யாங்கள் வியாபகர், இவை அற்பத்தானங்கள்; அல்லது இந்திரியங்களினாலேயே பொருளின் றுணிவுண்டாய் விடும்; எங்கள் பிரவேசத்திற்குச சிறிதும பயனின்றாம்.

**சமாதானம்:**—ஹே தேவதைகளே! உங்கள் சம்பந்தியாய இநதிரியங்களிடத்தில் பேதபாவத்தை விட்டொழித்து ஒருமை யபிமானம்செய்து பிரவேசியுங்கள். குகையின்கண்ணே வார்த்த தாமிராதிதாதுக்கள் ஒரு தன்மையை யடைகின்றனவன்றோ. ஈண்டிஃதபிப்பிராயமாம்:—ஒன்று மற்றதன் அபேக்ஷையின்றித் தனது காரியத்தைச் செய்யின் அதற்கோா அதிகரணத்தின்கண் ணிருப்பது கூடாதாம். இந்திரியங்கட்கும் தேவதைகட்கும் பரஸ்பரம (ஒனறறகொன்று) அபேக்ஷையிருக்கின்றது. ஏனெனின், நேத்திரமின்றி ஒளிவடிவ சூரியன் துணியப்பெறான், சூரியனின்றி நேத்திரஇநதிரியம் துணியபபெறமாட்டாது. ஏனெனின் சூரியனின்றி நேத்திர இந்திரியம் உருவமுதலிய வஸ்துக்களின் ஞானத்தை உற்பன்னஞ்செய்யமாட்டாது. இக்காரணத்தினாலேயே இருட்டின்கண் ணுருவத்தின் நேத்திர ஜன்னிய ஞானமுண்டாவதின்றாம், உருவமுதலிய வஸ்துககளின் ஞானவடிவ காரியத்தாலேயே நேத்திர இந்திரியத்தின் அனுமிதி ஞானமுண்டாகின்றது. ஏனெனின், இந்திரியங்களா லிந்திரியங்களின் பிரத்தியக்ஷ முண்டாவதின்றாம், ஆகையினா லிது துணியபபெற்றதாம்:—சூரியனுண்டாயின் உருவமுதலியவற்றின் பிரத்தியக்ஷ ஞானமுண்டாம்.

அந்த ஞானவடிவ காரியத்தாற கரணவடிவ நேததிரத்தின் அனுமிதிவடிவ ஞானமுண்டாகின்றது. இவ்வாறு பரம்பரையாய்ச சூரியன் நேத்திர இந்திரியத்தின் சாதகமாம். இவ்வண்ணம் எல்லா இந்திரியங்களும் அவற்றின் தேவதைகளும் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) அபேக்ஷையுடையனவாமென்றறிக. ஆகையினால் இந்திரியங்களோடு கூடித் தேவதைகட்குவியஷ்டிசரீரததின்கண் பிரவேசம பொருந்தும். இந்தப பிரகாரம் பரமேசுரனாற் கூறப்பட்ட சம்பூரண தேவதைகள் அவ்விதமே செய்தன. அவற்றின்கண் அக்கினிதேவதை முன்னருற்பன்னமாய வாக்கிந்திரியத்தோடு ஒருமையை யடைந்து முகவடிவ கோளகத்தின்கண் நிலைபெறுதலை யடைந்தது. ஜலத்தின் பதியாயவருணன் இரசன இநதிரியத்தோடு ஒருமை

யபிமானஞ்செய்து நாவின் முற்பாகவடிவ கோளகத்தின்கண் நிலைபேற்றை யடைந்தனன்.

கந்தவிசிஷ்ட வாயுதேவதை கிராண இந்திரியத்தோடு ஒருமை யபிமானஞ்செய்து நாசிகைத்துளைவடிவ கோளகத்தின்கண் பிரவேசஞ்செய்தது. சூரிய தேவதை நேத்திர இந்திரியத்தின்கண் ஒருமை யபிமானஞ்செய்து நேத்திரவடிவ கோள்கத்தின்கண் பிரவேசஞ்செய்தது. திக்குத்தேவதை சுரோத்திர இந்திரியத்தோடு ஒருமை யபிமானஞ்செய்து செவித்துளைவடிவ கோளகையின்கண் புகுந்தது. ஸ்தாவரவடிவ உபாதியையுடைய வாயுதேவதை உரோமத்தோடுகூடிய ஸ்பரிஸ இந்திரியத்தின்கண் ஒருமை யபிமானஞ்செய்து துவக்குவடிவ கோளகையின்கண் ணிலைபேற்றை யடைந்தது. சந்திரதேவதை மனத்தோடு ஒருமை யபிமானஞ்செய்து இருதயவடிவ கோளகத்தின்கண் பிரவேசஞ்செய்தது. மிருத்தியுதேவதை பாயுருவிந்திரியத்தோடு ஒருமையபிமானஞ்செய்து குதத்துளைவடிவ கோளகத்தின்கண்ணிலைபேற்றையடைந்தது. பிரஜாபதிதேவதை உபஸ்த இந்திரியத்தோடு ஒருமையபிமானஞ்செய்து சிசுனத்துளையின்கண் பிரவேசஞ்செய்தது. இதனுணைத தேவதைகளின் பிரவேசம் சுருதியின்கண் கூறப்பட்டுள்ளது. இந்த ரீதியாகவே மற்றதேவதைகள அத்தியாத்ம இந்திரியங்களின்கண்ணும, அதிதெய்வங்களின்கண்ணும், இராநின்ற பேதமற்றனவாய்இந்திரியங்களோடு ஒருமை யபிமானமுற்றனவாய்த தத்தம தானத்தின்கண் பிரவேசஞ்செய்தன. இந்தப்பிரகாரம் வியஷ்டிசரீரததின்கண் பிரவேசமாவதால் அதிதெய்வம், அத்தியாத்மம், அதிபூதம என்னுமித்திரிபுடி சித்திக்கும்.

ஆண்டுச சூரியன்முதலிய தேவதைகள் அதிதெய்வங்களாம், நேத்திர முதலிய இந்திரியங்கள் அத்தியாத்மமாம, உருவமுதலிய விடயங்கள் அதிபூதமாம். இவ்வாறு சருவஇந்திரியங்களிடத்து மறிந்துகொள்க. இந்தபிரகாரம் பரமேசுர வடிவபிதாவானவர சருவதேவதைகடகும அவரவாக்குததககதானத்தைக கொடுத்தனர். அதன்பின்னர்ப பசிதாக தேவதைகள் தம்மினும விருத்த சருவதேவதைகளின் தானத்தி னடைவைக்கண்டு பரமேசுரனிடத்து தானத்தை யாசித்தன. அப்பசிதாக தேவதைகடகு முன்முற்றேவதைகளின் றானங்களின் வேறாய தானங்களைக் காணுதவராய பரமேசுரா அத்தியாதம அதிதெய்வவடிவ தேவதைகளின் கண்ணேயே அவற்றிறகுத் தானத்தைத்தநது இதுகூறுவாராயினா:

ஹே பசிதாகங்களே! இநதத் தேவதைகளின் திருப்தியினலே உங்களுக்குத் திருப்தியுண்டாம. இவ்வண்ணம் பரமேசுரர் அவற்றிறகுத தானஞ்செய்தனர். அவை யிபபோது மப்படிக் காணபபடுகின்றன. சூரியாதி தேவதைகளின் பொருட்டு நெய்முதலிய வடிவ உணவு கொடுப்பின் அத்தேவதைகட்குப் பசிதாகங்கள் சாநதியாம். அத்தியாத்ம இந்திரியங்களின்பொருட்டு உருவமுதலிய விஷய வடிவ உணவு கொடுப்பின், சிறிதுபோது அவறறின் பசிதாகங்கள் சாநதியாம். இதுவே அவற்றின் திருப்தியாம். இநதவிதம் அத்தேவதைகட்குத் தானங்கொடுத்து அன்ன அடைவின் இச்சையுடையவர்களாய அத்தேவதைகளினுபகாரத்

தின் பொருட்டு அத்தேவதைகளாற் கூறப்படாவிடினும், உலகின்கண்ணே தந்தை மைந்தர்களாற் கூறப்படாவிடினும் அவர்களை அன்னவஸ்திராதிகளாற் பாலனஞ் செய்கின்றதேபோற்செய்ய, பிதாவாய பரமேசுரர் இத்தகைய விசாரஞ்செய்தனர் :—இந்த இந்திரிய தேவதைவடிவ எமது மைந்தர்கள் பசியால் வருந்துகின்றனர், ஆகையினால் இவர்களின்பொருட்டு யாம அன்னத்தைசசெய்வோம என விசாரஞ்செய்து பரமாத்மாவானவர் பல்வகையாய உபாயங்களாற் பஞ்சபூதங்களினின்றும் பல்வகையாய அன்னத்தைசசெய்தனா.

ஏனெனின், ஒருவகையாய அன்னததாற் சருவபபிராணிகட்கும் திருப்தியுண்டாகமாட்டாது; மனுடர் முதலாயினாககு நெல், புல் முதலிய தாவரவடிவ அன்னங்களாம், சிம்மாதிகட்கு மிருகாதிவடிவ ஜங்கம அன்னமாம், சர்பபாதிகட்கு வாயு, எலிமுதலிய அன்னமாம். இநதவிதம அன்னஙகள் உறபன்னமாய், இவ்வன்னத்தை நீவிர்கவர்மின் எனப பரமேசுரராற் கூறபபட்டும் சமபூரண தேவதைகள் அபானவாயுவின்றி அன்னக்கவாசசியிற சாமாத்தியமறறனவாயின. இககாரணம்பற்றியே சுருதியினகண்ணே சாவதேவதைகடகு மீசுரனெனவும அன்னுதனெனவும அபானவாயுக கூறபபட்டுள்ளது; அன்னத்தை யாவன் கொடுப்பனே அவன் அன்னுதனெனபபடுவன். இநத அபானவாயு நமபொருடடு அன்னததைக் கொடுபபது என எண்ணிச சருவதேவதைகளுமு அவ் வபானவாயுவை யாசிரயித்தனவெனினும், அந்த அபானவாயுவானது சர்வ வியவகாரததிற்கும சாதகமாய அநதர்யாமியாய ஆன்மாவினாலன்றி அன்னங் கவாதறகுச சமாதத முடையதன்றும. சேதனபபுருடனாலன்றிக் கோடாரி வெடடுதல வடிவ காரியத்தைச் செய்வதிற சமர்த்தமாவ துண்டோவென்று கண்டு பரமேசுரா அத தேவதைகளாற் கூறப்படாவிடினும் விசாரஞ் செய்வாராயினர்.

இந்த அதிதெய்வாதி வடிவஜகததுப பிராணவாயுவோடுகூட வெளிபபட்டதாயினும், பிரகாசவடிவ பரமாதமாவாய எம்மையன்றி இசசடஜகத்து எவ்விதததானும் சித்தமாவதன்றும். இதுகூறியதாலயாதுயாது ஜடவஸ்துவோ அஃதஃது ஒளியினபேக்ஷையுடையதாம என்னுமிது துணியபபெற்றதாமென்க. இவ்வன்னம் போஜனஞ்செய்வதறகுத தகுதியாம், இசசபதம சொலவதறகுத் தகுதியாம, இவ்வுருவமுதலியன காண்டற்குத தகுதியாம். இநதபபிரகாரமாய ஞானமானது போகதா, வகதா, திருஷ்டா வடிவபபிரகாசஞ் செய்விபபதாய ஆன்மாவினாலன்றிச சித்தியாதாம். ஆண்டோரே ஆன்மாபபிராண விசிஷ்டமாய்ப போகதாவெனபபெறும், வாககிநதிரிய விசிஷ்டமாய் வக்தாவெனபபெறும, சக்ஷு விசிஷ்டமாய்த் திருஷ்டாவெனபபெறும், இவ்வகையே சுரோதாதிகளையும அறிக; இது சாஸ்திரரீதியாய்க கூறியதிருஷ்டாநதமாம். இபபோது உலகப பிரசித்த திருஷ்டாந்தமியம்பபபடும்: ஒளியின்றியிருட்டின்கண் உருவ முடையனவாய கடாதிபதார்த்தங்களை இவ்வுலகமறிவதின்றும.

சங்கை:—ஹே பகவன்! முன்னர்த் தாங்கள் யாதுயாது ஜடவஸ்துவோ அஃதஃது தம் சித்தியிற் பிரகாசாபேக்ஷை செய்யும் என எநநியமம் கூறினீரோ அந்நியமம் கடாதிகளிடத்தே பொருநதுகின்றதென்றாலும், இருட்டின்கண் அங்

நியமம் பிறழ்கின்றது; ஏனெனின், இருட்டோ ஜடமாம் ஆயினும் தன் சித்தி யிற பிரகாசத்தின் அபேக்ஷையைச் செய்கின்றதில்லை, மாறுகபபிரகாசத்தினின்றும் நிவிர்த்தமாம்.

சமாதானம் :—இருட்டுசெ சூரியாதிப் பிரகாசத்தை யபேக்ஷிப்பதின்றும் எனினும சக்ஷுவடிவப பிரகாசததை யபேக்ஷைசெய்யும். இக்காரணத்தினு லேயே சக்ஷுவின்றிப் புருடன் இருட்டைப் பார்ப்பதின்றும்.

இருட்டிற்குப் பிரகாச அபேக்ஷையுண்டென்னு மிவ்வர்த்தத்தை இபபோது அனுமானப பிரமாணத்தினுலே சித்தஞசெய்வாம. கடாதிபதார்த்தங்களின் ஞானத்தின்கண் கடாதிகளின் வேறாய சூரியாதிப பிரகாசம் காரணமாம். அது போல, இருட்டின்வேறாய சக்ஷுவின் பிரகாசம் இருட்டின் ஞானத்திற்குக காரண மாம். அனுமானத்தின் பிரகார மிதுவாம் :—அநதகாரமாயது பிரகாசத்தின் அபேக்ஷையைச செய்யும்; சடமாதலின், எங்ஙனம அநதகாரம் ஜடமாதலின் சக்ஷுவின் பிரகாசத்தை யபேக்ஷிககின்றதோ அங்ஙனம சக்ஷுவாதிகளும் ஜடமாம். ஆகையினுல அவறறையும் வேறு பிரகாசம பிரகாசிபபிக்கின்றது. அசசக்ஷுவாதிகளைப பிரகாசிபபிபபது ஆன்மாவாம.

சங்கை:—சக்ஷுவைப் பிரகாசிப்பிப்பது ஆன்மாவெனத் தாங்கள் கூறினீர் கள் அது பொருநதாது; ஏனெனின், சூரியனுலேயே சக்ஷுவின் பிரகாசம கூடும்.

சமாதானம் :—எங்ஙனம் விஷயவடிவ கடம சூரியனை யொளிர்விக்கமாட் டாதோ அங்ஙனம விஷயவடிவ சூரியனும சக்ஷுவை யொளிர்விககமாட்டாது. இது கூறியதுகொண்டு இவ்வனுமானம் சிததமாம்:—சக்ஷு முதலிய பிரகாசங் கள் தம் சித்தியின்கண் வேறு பிரகாசத்தை யபேக்ஷிககின்றன. ஏனெனின், ஜட மாதலின்; எது தன் சிததியின்கண் வேறு பிரகாசததை யபேக்ஷிபபதின்றோ அது ஜடமுமன்றும். சுயம்பிரகாச ஆன்மா அபபிரகாசத்தின் அபேக்ஷையையும் செய்வதின்றும்; ஆகையினுல ஜடமுமன்றும; மறறோ சேதனமாம்.

சங்கை:—ஹே பகவன்! முன்னர்த தாஙகள் சக்ஷு முதலிய பிரகாசங்கள் ஜடஙகளாம; ஆகையினுல வேறு பிரசாசததை யபேக்ஷிககின்றனவெனக் கூறி னீர்கள், அது பொருந்தாது; ஏனெனின, சக்ஷு முதலிய பிரகாசங்கள் தம சித்தியில் வேறு பிரகாசத்தை யபேக்ஷிபபதின்றும; ஏனெனின், பிரகாசவடிவ மாதலின், விளக்கைப்போல என்னு மிவ்வனுமானததிற்கு விரோதமாம்.

சமாதானம்:—எங்ஙனம் விளக்கானது சஜாதீயமான வேறு பிரகாசத்தை யபேக்ஷிபபதின்றோ அங்ஙனம எல்லாப பிரகாசமும சஜாதீயமாய வேறு பிரகாசத் தின் அபேக்ஷையைச செய்வதின்றென்னும நியமமின்றும; ஏனெனின், மணி முதலிய பிரகாசங்களினிடத்தே பிரகாசரூபத்தன்மையோ இருக்கின்றது; ஆயி னும சஜாதீய வேறு பிரகாச அபேக்ஷையினபாவமின்றும; மறறோ அபேக்ஷையே யுளது. இஃதெல்லா வாதியாக்குஞ் சமமதமாம.

சங்கை:—ஹே பகவன்! பிரகாசத்தன்மை மணி சக்ஷு முதலிய எல்லாவற்றி னும் சமானமாம். ஆயினும், சில பிரகாசங்கள் வேறு பிரகாசத்தையபேக்ஷிக்கும், சில பிரகாசங்கள் வேறு பிரகாசத்தை யபேக்ஷியா. இதன்கண் யாதுகாரணம்?

சமாதானம்:—ஹே சிஷ்ய! பிரகாசியத் தன்மையின்கண்ணும் பிரகாசகத் தன்மையின் கண்ணும் பரிச்சின்னத்தன்மையும், வியாபகத்தன்மையும் காரண மாம். எவ்வெப் பிரகாசம் பரிச்சின்னமோ அது வதுபிரகாசியமாம்; விளக்கி னபேக்ஷையால் மணிமுதலியன பரிச்சின்னமாம்; ஆகையினால் பிரகாசியமாம். எவ்வெப பிரகாசம் வியாபகமாமோ அதுவது பிரகாசகமாம். மணி முதலிய வற்றி னபேக்ஷையால் விளக்கு முதலிய பிரகாசங்கள் வியாபகங்களாம். ஆகையி னால மணி முதலியவற்றின் பிரகாசகங்களாம். இது கூறியதா லிது துணியப் பெற்றதாம். யாது வியாபகமாமோ பிரகாச வடிவமாமோ, அதுவே வேறு பரிச சின்னப் பிரகாசத்தைப் பிரகாசிப்பிப்பதாம்: அந்தப் பிரகாசத்தன்மையும், வியா பகத்தன்மையும் கூடஸ்தனாப என் கண்ணேயுள. ஆகையினாலே யானே சர்வப பிரகாசங்களையும் விளக்குபவனாம். இது கூறியதுகொண்டு இவ் வனுமானந் துணியப்பெற்றதாம்:—தன்னிற பின்னமாய யாவற்றையும் ஒளிர்விப்பதாய புத் தியானது கூடஸ்தனாப என்னால ஒளிர்விப்பதாம். ஏனெனின், பரிச்சின்ன மாதலின். வியாபகப பிரகாசவடிவ புத்தியால் சூரிய கடாதிவடிவ ஜகத்துப் பிரகாசியமாம். எது எதனை யொளிர்விக்குமோ அது பிரகாசியமாம். பஞ்ச பூதத்தின் சத்துவகுணத்தின் காரியமாமாதலின் புத்தி பிரகாசவடிவமாம்; இர ணிய கர்ப்பர்க்கு உபாதியாமாதலின் வியாபகமாம. இந்தப்பிரகாரம சுருதிகூறிய ஆன்மாவின் வியாபகததன்மை அசம்பாவனாதிய தோஷததினாலே புத்தியின்கண் ஏறுவதின்றாம். ஆகையினாலே அதந்தோஷங்களின் நிவிர்த்தியின்பொருட்டு மூப பரிச்சேதமின்மையை ஆன்மாவின்கண் காண்பிக்கின்றாம. எங்ஙனம் கோஷியக்தி வடிவ ஏகதேசத்தின்கண் கோததன்மைச சாதியானது இருக்கின்றதோ அசுவாதி யின்கண் இருப்பதின்றோ அங்ஙனம பரமான்மாவாய யான் எவ்வேகதேசத்தின் கண்ணு மிருப்பவனன்று; ஏனெனின், யானொரு தேயததின்கண் இல்லாதிருப்ப னேல் அத்தேயத்தின்கண்ணுள்ள பதார்த்தங்கட்கு உண்மையும் ஒளிர்வுமின் றாய்விடும். ஆகையினால் யான் யாண்டும் வியாபகனாவேன். இது கூறியதால் தேச பரிச்சேதமின்மை ஆன்மாவின்கண்ணே காட்டப்பட்டதாம். சென்ற, வருவன, இருப்பனவாய பதார்த்தங்கள், ஒரு காலத்தின்கண்ணே யுள்ளன; மற்றொரு காலத்தின்கண்ணே யில்லனவாகின்றன; ஆகையினாற் காலபரிச்சேத முடையன வாம். இதுபோல பரமான்மாவாய யான் யாதா மோர்காலத்திலேனு மில்லாதவனா? அல்லேன், மற்றோ முக்காலத்தினு மிருப்பவனே யாவன். இதுகூறியதால் கால பரிச்சேதமின்மை ஆன்மாவின்கண்ணே காட்டப்பட்டதாம். இருக்கின்றதென் னும் சப்தத்திற்கும் ஞானத்திற்கும் விஷயமாய பூமி, கடத்தின்வேறாய்த் தோற்று கின்றது; இல்லையென்னும் சப்தத்திற்கும ஞானத்திற்கும் விஷயமாய மலடி மகன் கடத்தின்வேறாய்த் தோற்றுகின்றனன். ஆகையினால் கடாதிவஸ்துக்கள் வஸ்து பரிச்சேதத்தோடு கூடியனவாம இதுபோல பரமான்மாவாய என்னிற் பின்ன

மாய், இருக்கின்றது இல்லையென்னும் சபதஞானங்கட்கு விஷயமெதுவுமின்றாம்; ஏனெனின், யானே யாவற்றிற்கும் ஆன்மாவாம. இது கூறியதுகொண்டு வஸ்துபரிச சேதமின்மை ஆன்மாவின்கண்ணே காட்டபபட்டது. மூன்று பரிச சேதஙகட்கு மிலக்கணம் முன்னிரூபணம் செய்துள்ளேம; ஆகையினாலே ஈண்டுக கூறுதொழிநதேம். இபபோது அதவைத ஆன்மாவின் சித்தியின்பொருட்டுப பிரபஞ்சத்தை மிததியாவடிவமாக நிரூபணஞ்செய்வாம்: பரமான்மாவாயவென் கண் இவ்வெல்லா வுலகங்களுமே கற்பிதமாம; எத்தகைய வுலகெனின், தேச காலாதிகளின வடிவமாயதாம, நாமரூபககிரியையோடு கூடியதாம, பழுதையின் கண்ணே பாம்பு கற்பிதமாவதுபோன்றதாம. ஆகையினாலே பரமான்மாவாய யானே யாண்டும வியாபகனுவேன்; என்னிற பின்னமா யெவ்வததுவுமின்றாம.

சங்கை:—ஹே பகவன்! ஜகததின்பேதம் ஆன்மாவின்கண் ணுண்டாதல் கூடாது; மற்றென்று கடததின் கண்ணிராநின்ற உருவாதி குணங்களினின்றும் கடம் பின்னமாவதேபோல சச்சிதானநத தாமங்களினின்றும ஆன்மா பின்னம் ஏன் ஆக மாட்டாது? ஆகையால வஸ்துபரிசசேதம ஆன்மாவின்கண் ணுமன்றோ.

சமாதானம்:—சதது, சித்து, ஆநநதம என்னு மிததாமஙகள் அந்தாயாமி யாய்ப பரமான்மாவா யிராநின்ற என்னினின்றும பின்னமாயினே தமமுடைய சததுசசிதது ஆநநதவடிவததினின்றே நழுவிவிடும். ஏனெனின், வியாபகமாய என்னினும ஆநநதம பினனமாயினே வஸ்துபரிச சேதமுடையதாய்விடும; யாது பரிசசின்னமோ அஃது ஆநநதவடிவமன்றாம. சுருதியானது வியாபகததிறகே சுக வடிவமுளதெனக கூறியுளது. இநதபபிரகாரம சததானது பிரகாசவடிவ ஆதமா வாய என்னிற பின்னமாயினே, அசததாம. சிததானது சத்துருவ ஆன்மாவாய என்னிறபின்னமாயினே, அசததாம. ஏனெனின, என்னிற பின்னமாயெவையும் இவற்றைச சிததிசெய்வதிலையாம. ஆகையினாலே சச்சிதாநநதம ஆதமசொரூ பமாம; ஆன்மாவினின்றும வேறன்றாம.

சங்கை:—ஹே பகவன்! சத்துசசித்து ஆநந்தத தன்மங்களை ஆன்மாவின் கண் அபின்னமெனா அஙகீகரிககினே! ஆன்மா தன்மியாம, சததுசசிதது ஆனந தங்கள் தன்மங்களாமென்னு மிததனம தன்மிவியவகாரம உண்டாகாமற் போய் விடும். ஏனெனின், பின்னஙகட்கே தன்ம தன்மிததன்மை உலகததின்கண்ணே கண்டோம்.

சமாதானம்:—ஹே மைந்த! அத்தியநதம பின்னஙகடகும அததியந்தம் அபின்னங்கட்கும் தன்ம தன்மிததன்மை யுண்டாவதின்றாம. ஏனெனின், அத தியநதம் பின்னங்கட்குத் தன்ம தன்மிபாவமுண்டாயினே கோவினும் அசுவம் அத்தியந்தம் பின்னமாம; ஆகையினால் அசுவம கோவின்றன்மம் ஆகவேண்டும், ஆவதோ இன்றாம். அங்ஙனமே அததியந்தம அபின்னங்கட்குத் தன்ம தன்மித் தன்மையாயினே, கடததிற்கும கலசத்திற்கும் அத்தியந்தம் அபேதமிருககின் றது; ஆகையினால் கலசம் கடததின்றன்மம ஆகவேண்டும, ஆவதோ இன்றாம்.

ஆகையினால் ஒன்றற்கொன்று பின்னுபின்னத் தலத்தின்கண்ணேயே தன்ம தன்மிவியவகாரமாம.

சங்கை:—ஹே பகவன்! ஓரதிகரணத்தின்கண்ணே ஒரு வஸ்துவின் பேதமும் அபேதமும விருத்தமாம்.

சமாதானம்:—ஒரு சத்தையையுடைய பேதாபேதங்கட்குப பாஸ்பரம விரோதமாம். பின்னசத்தையையுடைய பேதாபேதங்கட்குப பாஸ்பரம விரோதமாவதின்றும். அங்ஙனமே யீண்டுச சச்சிதாநந்த தர்மங்கட் கான்மாவோ டபேதமோ பாரமார்த்திகசத்தை யுடையதாம, பேதமோ கற்பிதசத்தை யுடையதாம. ஆகையினால் அவற்றிற குப பாஸ்பரம் விரோதமின்றும. இக்கற்பித பேதத்தை அங்கீகாரஞ்செய்தே தன்ம தன்மித்தன்மை வியவகாரம சித்தமாம. ஓரரசன் மற்றொரு மன்னனைச சிறைச்சாலையில வைத்துப பின்னா விடுத்து ஒரு கிராமத்தையுங் கொடுத்து அனுபப அக்கிராமத்தைபபெற்று அவ்வரசன் சந்தோஷமடைவதேபோல கற்பித பேதத்தையே அங்கீகரித்துத தன்ம தன்மித்தன்மை வியவகாரம் சித்தமாயின், சத்தியபேதத்தின் அபேக்ஷை செய்யப்படுவதின்றும. கற்பிதபேதத்தால துவைதமு முண்டாகமாட்டாது. ஆகையினாலே பரமான்மாவாய என்னிற கற்பிதபேத முடையனவாய சச்சிதாநந்த தன்மங்கள் இரஜ்ஜு சாப்பம போன்று பேதத்தை யுண்டாக்கமாட்டாது; உண்மையாயோ சச்சிதாநந்தம என்னுடைய வடிவமாம். ஆகையினாலே வியாபகத்தன்மை பிரகாசத்தன்மைவடிவ பரமான்மாவாய என்னாலேயே சூரியாதிகளும கடாதி சாவஜடப பிரபஞ்சங்களும ஒளிர்வது கூடும். யாவற்றையும் ஒளிர்விக்கும் பரமான்மாவாய யான் வேறு வத்துவினால ஒளிர்வது கூடாததாம. கடத்தால சூரியன்றன் ஒளிர்வு உண்டாவதின்றுமன்றே? சமபூரணமாய இச்சடக கூட்டத்தின் சித்தியானது என்னுடைய அதீனமாம. இக்காரணத்தினாலே அசத்துச்சட துக்கவடிவ இதேகாதிகட்குத தன்னுடைய தாதாதமிய அத்தியாசத்தாற சச்சிதாநந்தவடிவஞ் செய்ய வேண்டி இக்களேபரத்தின்கண்ணே பரமான்மாவாய யானே புகுவேன். (இக் கூட்டத்தின்கண்ணே பரமேசுரன் புகுதற்கு இரண்டு பிரயோஜனங்களுள, ஒன்றே போகத்தின் சித்தியாம, மற்றொன்றே தன் சொரூபத்தின் ஞானமாம்). அவற்றுள், முதறபிரயோஜனத்தின் விசாரம முன்னே மொழியப்பெற்றது. இப போது இரண்டாவது பிரயோஜனத்தின் விசாரத்தை நிரூபணஞ்செய்வாம. இந தப்பிரகாரம சிந்தனஞ்செய்து மீண்டும பரமேசுரர் இவ்வண்ணம சிந்திப்பாராயினர்; இக்கூட்டத்தின்கண் ஞானசக்தி வடிவபுத்தியையுடைய பரமாத்மாவாய எனது பிரவேசத்திற்கு யாதுவாயில?

சங்கை:—ஹே பகவன்! எம்மார்க்கத்தாலேனும பிரவேசம் செய்யலாமே. இதன்கண் விசாரத்திற்குப பயன் யாதோ?

சமாதானம்:—இக் கூட்டத்தின்கண்ணே பாதநகத்தின் முற்பாகவடிவமார்க்கத்தால் முன்னர்ப பிராணன் புகுந்திருக்கின்றது; ஏனெனின், பிராணன் கிரியா சக்தியுடையதாம, ஞானசக்தியற்றதாம்; ஆகையினால் இவ்வெல்லாவற்றினின்றும

கீழ்மார்க்கததிற் பிராணனுடைய பிரவேசங் கூடும். ஞானசக்தியோடுகூடிய பரமான்மாவாய யான் யாவற்றினும் உயர்ந்தவன், ஆகையினாற் பிராண இந்திரிய முதலிய தாசர்கள் புகுமார்க்கததால் எனது பிரவேசம் பொருநதாது. சேதன ஞய என்னையன்றி இச சர்வஜடங்களின் சேட்டை பொருந்தாது. ஆகையால யானிவ்வெல்லாவற்றினு முயர்நதோன். சேதனனையன்றித் தேரின்கண் சேட்டை யுண்டாக மாட்டாதன்றே என இவ்வண்ணம பிரவேசததின் மார்க்கததை விசாரஞ்செய்து, மீண்டும் பரமேசுரர் வேறு விசாரத்தைச செய்வாராயினர். யான் ஞானசக்தி உடையவனுதலாலே என்னுடைய ஈஸ்வரவடிவத்தை விசாரியாமல் எங்ஙனம பிரவேசஞ்செய்வேன்; பின்னையோ என்னுடைய சொரூபததையும விசாரஞ் செய்தே எனது பிரவேசங் கூடும்.

ஆண்டு தன் சொரூபஞான இசசையாற் பரமான்மா இவ்விசாரஞ்செய்தது.

சங்கை:—ஹே பகவன்! அனுன்மவடிவததாலே தேகம் பிரசித்தமாம். ஆகையினால விசாரததிற்கு யாதொரு பயனுமின்றும்; ஏனெனின், அபபிரசித தவததுவைப்பற்றியே விசாரம்வேண்டும்.

சமாதானம்:—சாஸ்திரததின் ருற்பரியத்தை யுணர்பவராய அறிஞர்களு டைய திருஷ்டியின்கண்ணே தேகம அனுன்மாவெனப பிரசிததமாம் என்றுலும, மந்தபுநதியையுடைய புருடாகளின் உபகாரததின்பொருட்டுத தேகத்தின் அனுன் மததன்மை, திருசியததன்மை முதலிய ஹேதுககளால ஆன்மஞானியாய புருட ஞனவன் அறிவிகக யோக்கியமாம. ஆகையினுல் விசாரம சபலமாம.

இது கூறியதுகொண்டு இவ்வனுமானஞ் சிததிக்கின்றது:—இத்தேகம் அனுன்மாவாம, திருசியமாதலின, பரிசசின்னமாதலின், சடமாதலின், யாது அனுன்மாவன்றே, அது திருசிய பரிசசின்ன ஜடமுமன்று; ஆன்மாவைபபோல தேகம அநிரவசனீயமாதலினுனும அனுன்மாவாம. இபபோ திபபொருளை விஸ் தாரமாய் நிரூபணஞ்செய்வாம. அனுபவ விஷயமாய வஸ்துககளில் யாது தேக மாம?

சங்கை:—ஹே பகவன்! கூட்டததின்பெயர் தேகமாம்; இது உலகினர்க்குப பிரசிததமாம.

சமாதானம்:—ஹே குழநதாய்! கேவலமூலகப பிரசிததியால் அருததததின் சிததியுண்டாவதின்றும், கேவலமூலகப பிரசிததியினுலேயே அருதததின் சிததி யாவதாயின், தேகமு மான்மா ஆகவேண்டும. ஏனெனின், விசாரமின்றிய அநேகம புருடர் தேகததையே யான்மாவென அங்கீகரிததுள்ளார் ஆகையினுலே பிரமாண யுகதிகளோடு பகையாத உலகப்பிரசிததியினுலேயே அருத்ததின் சித தியாம. விசாரஞ்செய்து கூட்டததைப பாாககினே தேகததின் சிததியுண்டாவ தின்றும;

ஏனெனின், சமான தாமமுடையனவற்றிறகுளள பரஸ்பர சம்பநதத்தின் பெயர் கூட்டமாம். அககூட்ட மநேகமாம. அவறறின்கண் எககூட்டத்தின்

பெயர் தேகமாகுமா? அவற்றுள், சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, கிராணம், இரசனம் என்னுமிவை பஞ்ச ஞானேந்திரியங்களின் கூட்டமாம். (1) வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் என்னுமிவை பஞ்ச கருமேந்திரியங்களின் கூட்டமாம். (2) பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என்னுமிவை பஞ்சப பிராணன்களின் கூட்டமாம். (3) தோல், உதிரம், மாம்சம், மேதை, எலும்பு, மஜ்ஜை, வீரியம் என்னும் இவை ஏழு தாதுக்களின் கூட்டமாம். (4) கபம், வாதம், பித்தம் என்னுமிவை முத்தோடங்களின் கூட்டமாம். (5) விட்டை, மூத்திரமென்னு மிவையிரண்டின் கூட்டமாம். (6) ஒவ்வொருகாலுற் பன்னமாம் வேர்வை, சீய் என்னு மிவையிரண்டின் கூட்டமாம். (7) கேச ரோமாதிகளி னதோ எண்ணிறந்ததின் கூட்டமாம். (8) இவ்வெவ்வேறாய எட்டுக் கூட்டங் களின் கூட்டத்தில் எக்கூட்டத்திற்குத் தேகமென்று பெயர்? கூட்டத்தைத் தேகமென அங்கீகரித்த வாதியை இதுகேட்டல் வேண்டும்: முன்னர்க்கூறிய எட்டுக் கூட்டங்களுஞ்சேர்ந்த கூட்டத்திற்குத் தேகமென்று பெயரா? அல்லது ஒவ்வொரு கூட்டத்திற்குத் தேகமென்று பெயரா? இவ்விரண்டு பக்ஷமும் பொருந்தா.

ஏனெனின், எக்கூட்டத்தை நீ தேகமென உடன்படுகின்றனையோ அக்கூட் டமே சாதிக்கத்தக்கதாம். ஆண்டு முன்னாகக்கூறிய எட்டுக் கூட்டங்களின் கூட்டம் மகா கூட்டமெனச் சொல்லப்பெறும். பஞ்ச ஞானேந்திரிய முதலிய வற்றின் வேறு வேறாய கூட்டமியாதோ அது உள்ளிட்ட கூட்டமெனச் சொல் லப்பெறும். இவ்விருபிரகாரமாய கூட்டங்களும் சாதிக்கத் தகாதனவேயாம். ஏனெனின், அவ்விருபிரகாரமாய கூட்டங்களும் கூட்டமுடையவற்றினின்றும் பின்னமா? அல்லது அபின்னமா? அவற்றுள் முதலாவதாய பின்னபக்ஷமோ பொருந்தாது. ஏனெனின், கூட்டமுடையவற்றினின்றும் வேறாய்க் கூட்டத் தின் வடிவம் யுக்தியினுற் சித்திப்பதின்றாம். மற்ற அபின்னபக்ஷமும் பொருந்து கின்றதில்லை; ஏனெனின், மகாகூட்டத்தின் பெயர் தேகமாம் என்னு மிப பக்ஷத்தில் மகா கூட்டத்தின் கூட்டமுடையதாய எட்டு உள்ளிட்ட கூட்டங்க ளோடு எப்போது மகா கூட்டமபின்னமாமோ அப்போது ஒவ்வொரு உள்ளிட்ட கூட்டத்தின்கண்ணும் மகா கூட்ட வியவகாரமும் தேக வியவகாரமும் உண்டாக வேண்டும், உண்டாவதோ இன்றாம். அல்லது உள்ளிட்ட எட்டுக் கூட்டத்தின் கண் ஒவ்வொரு கூட்டத்திற்குத் தேகமெனப் பெயராமென்னு மிப்பக்ஷத்தில், உள்ளிட்ட கூட்டமுடையதாய ஒவ்வொரு இந்திரிய முதலியவற்றோடும் எப்போது உள்ளிட்டகூட்டம் அபின்னமாமோ அப்போது ஒவ்வொரு இந்திரிய முதலிய வற்றின்கண்ணும் கூட்டவியவகாரமும் தேகவியவகாரமும் உண்டாகவேண்டும், உண்டாவதோ இன்றாம்; ஆகையினு லபின்னபக்ஷமும் பொருந்தாது. எண்டுக் கூட்டத்தின் உள்ளடங்கியதின் பெயர் கூட்டமுடையதெனப்படும். மகா கூட் டத்தின் உள்ளடங்கிய துள்ளிட்ட கூட்டமாதலின் அது கூட்டமுடையதெனக் கூறப்பெறும். அங்ஙனமே உள்ளிட்ட கூட்டத்தின் உள்ளடங்கியது ஒவ்வொரு இந்திரிய முதலியனவுமாமாதலின் அது கூட்டமுடையதெனக் கூறப்பெறும்.

சங்கை:—ஹே பகவன்! முன்னர்த தாங்கள் கூட்டம் கூட்டமுடையவற்றி னின்றும் பின்னமா? அபின்னமா? என்னு மிரண்டு பக்ஷத்தின்கண்ணும தோ ஷங் கூறினீர் ஆதலின், யான் இரண்டு பக்ஷத்தையு மங்கீகரியேன்; மற்றோ முன்னர்க்கூறிய இந்திரியாதிகள் யாவையோ அவையாவும் ஒருங்குகூடிக் கூட்ட மாம. ஆகையின் இப்பக்ஷத்தின்கண்ணே தூஷணமின்றாம.

சமாதானம்:—ஹே மைந்த! இப்பக்ஷத்தின்கண்ணும் கூறியது கூறல் என் னுங் குற்றமுண்டாம். ஏனெனின், எல்லாக கூட்டமுமுடையவற்றின் ஒரு ஞானத் தால் விஷயஞ்செய்யும் வடிவ ஒருங்குகூடலே கூட்டமென எல்லா நூல்களின் றுணிபொருளாம. எல்லா மொருங்குகூடிற கூட்டமாம என்னுமிதனு லிப்பொ ருள் துணியப்பெறுவதாம:—ஒருங்குகூடிய வடிவக கூட்டத்தாற சிறப்புற்றது கூட்டமாம. தேவதத்த தனிகன் உற்பன்னமானுன் என்னும இவ்விடத்தே சிறப்புடையோனுப தேவதத்தனிடத்தே உற்பத்தியின் சோககை யுண்டாகமாட டாது, மற்றோ சிறப்பாய தனத்தினகண்ணே உற்பத்தியின் சேர்க்கை யுண்டா கின்றது. அதுபோல ஒருங்குகூடிய வடிவககூட்டச் சிறப்புடையது கூட்டமா மென்னு மிவ்விடத்தினும, ஒருங்குகூடிய வடிவககூட்டம சிறப்பாம, அதன் கண்ணே கூட்டத்தைச சேர்க்கினு கூட்டங் கூட்டமாமெனத தோற்றும. கடங் கடமாமென்பதிற கூறியது கூறல் உண்டாவதேபோல கூட்டங் கூட்டமா மென்பதினும கூறியது கூறல வெளிப்படையாம. ஈண்டுச சேர்க்கையென்பது சமபந்தமாம.

சங்கை:—ஹே பகவன்! ஒருங்குகூடிய சிறப்புடையவற்றின் பெயர் கூட்ட மாம என்னு மிப்பக்ஷத்தில தாங்கள தோஷங்கூறினீர்கள, ஆகையினு லிப்பக்ஷம அங்கீகரிக்கத்தகாததாம. மற்றோ இந்திரிய முதலியவற்றின் ஒன்றற்கொன் றுள்ள ஒருங்குகூடலுக்கே கூட்டமெனப் பெயராம.

சமாதானம்:—ஹே குமர! ஒருங்குகூடலென்பது சமபந்தத்திற்காம. அது தாதான்மியமா? சையோகமா? சமவாயமா? இவற்றுள் முதலாவதாய தாதான் மிய பக்ஷமோ பொருநதாது. ஏனெனின, பேதத்தைச சகிப்பதாய அபேதம தாதான்மிய சமபந்த மெனப்பெறும. ஆண்டுபேக்ஷபற்ற அபேதமோ வாஸ் தவமாம, அனுயோகிப் பிரதியோகிகளை யபேக்ஷிப்பதாய பேதமோ கற்பிதமா மென்பது துணிபாம. ஆகையினுல வாஸ்தவமாய் அபின்ன வஸ்துககட்கு ஒருங்குகூடலைக கூறல் என்முகத்தின்கண் நாவில்லையென்னும் வாக்கியத்திற்குச சமானமாம. இந்த ரீதியாய் முதலாவதாய தாதான்மிய பக்ஷம பொருத்தமற்ற தாம். சையோக சமபந்தத்திற்கு ஒருங்குகூடலெனப் பெயராமென்னு மிரண்டா வது பக்ஷமும பொருத்தமற்றதாம.

ஏனெனின், இருதிரவியங்கட்குச சையோக சம்பந்தமாம்; அது சம்யுக்த இருதிரவியங்களினின்றும வேறாய்ப் புலப்படுவதின்றாம. இககாரணத்தினுலேயே பிரபாகரா சையோகத்தை விகற்பமாத்திரமெனக கூறினா. சமவாய சமபந்த

திற்கு ஒருங்குகூடலெனப் பெயர்மென்னும் மூன்றாவது பக்ஷமும் பொருந்தாது; ஏனெனின், குணகுணி முதலியவற்றிற்கு நையாயிகர் சமவாய சம்பந்த மங்கீகரித்துளார். அச்சமவாயம தன் சம்பந்திகளாய திரவிய குணங்களிடத்தே சையோக சம்பந்தத்தா லிருக்கின்றதா? அல்லது சமவாயசம்பந்தத்தா லிருக்கின்றதா? அவற்றுள்; முதல் பக்ஷமோ பொருந்தாது; ஏனெனின், இருதிரவியங்கட்குச சம்யோகமுண்டாம, சமவாயமோ திரவியமன்றும். ஆகையினு லதற்குச சையோகம பொருந்தாது. சமவாய சமபந்தத்தாற் றன் சமபந்திகளின்கண் சமவாய மிருக்கு மென்னும இரண்டாவது பக்ஷ மும பொருந்தாது. ஏனெனின், எசசமவாய சமபந்தத்தாற சமவாய மிருக்குமோ அசசமவாயம முதற்சமவாயத்தினும அபின்னமா? அல்லது பின்னமா? அவற்றுள், முதலாவதாய அபின்ன பக்ஷமோ பொருந்தாதாம். ஏனெனின், தன்னுடைய இருபபின்கண் தனனுடைய அபேக்ஷாவடிவ ஆன்மாசிரய தோஷமுண்டாகும. பின்னமென்னும் இரண்டாவது பக்ஷமும பொருந்தாது; ஏனெனின், அவ்விரண்டாவது சமவாயம் தன் சமபந்திகளிடத்தே எசசமவாயத்தா லிருக்கின்றது? முதற சமவாயத்தால் இரண்டாவது சமவாயம தன் சமபந்திகளிடத்தே இருக்கின்றதென்னினோ அன்னியோன்னிய ஆசிரய தோஷமுண்டாம; ஏனெனின், முதறசமவாயம இரண்டாவது சமவாயத்தால தன் சமபந்திகளிடத்தே யிருக்கின்றது, இரண்டாவது சமவாயம முதற சமவாயத்தாற் றன் சம்பந்திகளிடத்தே யிருக்கின்றது. இததோஷ நிவிர்த்தியின்பொருட்டு இரண்டாவது சமவாயம மூன்றாவது சமவாயத்தாற தன் சமபந்திகளிடத்தே யிருக்கின்றதென அங்கீகரிக்கினோ, அமமூன்றாவது சமவாயம எசசமபந்தத்தாற றன் சமபந்திகளிடத்தே யிருக்கின்றது? முதற் சமவாயத்தாற சமபந்திகளின் கண்ணே யிருக்கின்றதெனினோ, சக்கிரிகாதோஷம உண்டாம.

ஏனெனின், முதற் சமவாயம இரண்டாவதாலிருக்கின்றது, இரண்டாவது மூன்றாவதா லிருக்கின்றது; மூன்றாவது மீண்டும முதலாவதா லிருக்கின்றது. இது சக்கரமபோற் சுழலாநிற்கும. மூன்றாவது சமவாயத்தின இருப்பின்பொருட்டு நான்காவது சமவாயமும நான்காவதின்பொருட்டு ஐந்தாவதும என இவ்வண்ணம சமவாயங்களின் தாரையை அங்கீகரிக்கினோ அநவஸ்தா தோஷமுண்டாம. ஆகையினுலே சமவாய சமபந்தவடிவ ஒருங்குகூடலின் பெயர் கூட்டமன்றும; அல்லது சையோக சமவாய சமபந்தவடிவ ஒருங்குகூடற்குப் பெயர் கூட்டமாமேலாயினோ, விருக்ஷங்களின் கூட்டம வனமெனப்படும. இவ்விடத்தே விருக்ஷங்கட்குப் பரஸ்பரசையோக சம்பந்தமேனும சமவாய சமபந்தமேனுமின்றும. ஆகையினுலே கூட்டவியவகாரம் உண்டாகலாகாது, கூட்டவியவகாரமோ உண்டாகின்றது. ஆனுலும சையோக சமவாய சம்பந்தவடிவ ஒருங்குகூடலின் பெயர் கூட்டமன்றும. அல்லது, சமபந்தத்தை யெவ்வாதி கூட்டமென உடன்படுகினறனனோ அவனை இதுகேட்டல வேண்டும:—சமபந்தமென்ப தீண்டிரண்டு பதங்களாம. ஒன்றோ சம என்னும பதமாம், மறறொன்றோ பந்தம என்னும பதமாம் அவற்றுள், சம என்னும் பதத்திற்கு யாதுபொருள்? பந்தமென்னும பதத்திற்கு யாதுபொருள்? இதை வாதி கூறலவேண்டும்.

சங்கை:—ஹே பகவன்? சம் என்னும் சப்தத்திற்கு நன்றாக என்பது பொருளாம், பந்தம் என்னும் சபதத்திற்குப் பநதனமென்பது பொருளாம்.

சமாதானம்:—ஹே மைந்த! இப்பொருளை நின்வசனத்தாலன்றி எசசம சார சமபநத வஸ்துவின்கண்ணும் யான் கண்டதில்லை; மற்றோ அது நின்வசனத தின்கண்ணேயே யிருக்கின்றது. இப்போ திவவர்த்தத்தை வெளிபபடையாக நிரூபிபபாம. எவ்வஸ்து முக்காலததினும் பரிணமததை யடையாதோ அது நல்ல தெனச சொலலபபெறும. இசசமபூரண ஜகததுஜடமாம்; ஆகையினாலே கயிற் றரவுபோலப பரிணமத்தையடையும. சுருதியின்கண்ணும் ஆன்மாவின் வேறாய சாவஜகததும் மிதததையெனக கூறபபட்டுள்ளது, ஆகையினாலே ஆன்மாவின் வேறாய எவவத்துவின்கண்ணும நலலதாந தன்மைபொருநதாது; அஙஙனமே பந்தமென்னும பதத்தின் பொருளாய பந்தனமும பொருநதாது. ஏனெனின், உலகின்கண் கடடுபபடட வஸ்துவைக காட்டினும பநதனம வேறாகக காணபபடு கிறது. கட்டுபபடட இரண்டு கோககளைப பாரககிலும கயிறு வடிவபநதனம வேறாம. அலலது மூர்ததவஸ்துவே உலகததின்கண்ணே பநதனமாகக காணபப டுகிறது; அமூர்ததவஸ்து பநதனமாவதின்றாம. இக்காரணத்தினாலேயே அமூர்தத ஆகாசததைக கடபடாதி பதார்ததம பநதனஞ்செய்வதிலலையாம. அங்ஙனமே இத் தேகததின்கண் இநதிரியாதிகளைப் பரஸ்பரம பநதனஞ்செய்வதாய் இநதிரியாதி சாவக கூட்டததினினும வேறாய்க கயிறுமுதலியபோ லொருமூர்த்தபதார்ததத தையும கண்டிலேம. ஆகையினாலே சமபநதபதததின் பொருள் யாதொன்றும பிரசிததமில்லை.

இநதபபிரகாரம கூட்டம தேகமென்னு மிபபக்ஷததைக கண்டனஞ்செய் தேம. இப்போது கூட்டததுள அடங்கிய இநதிரிய முதலியவற்றின் அனான்மத் தன்மையை நிரூபிபபாம. முமுக்ஷுககளின் ஆன்மஞானததின் பொருட்டு ஒவ் வொரு இநதிரிய முதலியவற்றின் அனான்மததன்மையையும விசாரிபபது யோக கியமாம். அறிஞ புருஷனைவன் இநதிரிய முதலியவற்றின் ஆன்மத்தன்மையை யாண்டும அனுபவிபபதின்றாம. ஏனெனின், யாவற்றினும உள்ளாவது ஆன்மா வெனபபடும; இநதிரியமோ பாகியமாம; ஆகையினால் கடாதியைபபோன்ற னான் மாவாம. இநதபபிரகாரம அறிஞனது அனுபவப பிரமாணத்தினாலே இநதிரியங் கட் கனான்மததன்மை கூறபபெற்றது. இப்போது அனுமானப பிரமாணத்தினா லும இந்திரியஙகளின் அனான்மததன்மையைச சித்தஞ்செய்வாம. வாககாதி இநதிரியங்கள் அனான்மா ஆவதிற்கு யோககியமாம; திருசியமாதலின், பரிசசின்ன மாதலின்; எவ்வெவ வஸ்தது திருசியமும பரிசசின்னமுமாமோ அவ்வவ் வஸ்து அனான்மாவேயாம, தேகம்போல.

சங்கை:—ஹே பகவன்! கர்ததாவை யான்மாவென்னும்; என்னு மிது சாஸ்திரத்தின்கண்ணே கூறபபட்டுள்ளது. சுதந்திரனைக கர்ததாவென்பர் அந்தச சுதந்திரத்தன்மை தத்தம வியாபாரத்தின்கண்ணே இநதிரியங்கட்கு மிருக்கின்றது. ஆகையினாலே இந்திரியமே யான்மாவாம.

**சமாதானம்:**—யாது யாது சுதந்திரமாமோ அஃதஃது சேதனமாம். சேதனத் தன்மையினன்றிச் சுதந்திரத்தன்மை நிலைபெறாதாம், அக்கினியினன்றித் தூபம் நிலைபெறாததுபோல. ஆகையினால் பரமான்மாவாய்ச் சேதனனாய என்னாலன்றிச் சமபூரண இந்திரியங்களின்கண் சேதனத்தன்மையின்றாம். இக்காரணத்தினாலே அசேதன இந்திரியங்கட்குத் தமது எந்த வியாபாரத்தின்கண்ணும் சுதந்திரத் தன்மையின்றாம்; அசேதனமாய இரதமுதலியன சேதனமாய அசுவ முதலியவற்றினானன்றிச் சுதந்திரமாய்க் கமனஞ்செய்ய மாட்டாதன்றோ? ஞானேந்திரியங்களும் அந்தக்கரணமுஞ்செய்யும் ஞானவடிவ வியாபாரமும், கருமேந்திரியங்களும் பிராணனுஞ்செய்யும் கிரியாவடிவ வியாபாரமும் ஆகிய சமபூரண வியாபாரங்கள் பரமான்மாவாய என் சமீபத்தன்மையினாலேயே சித்தமாம். ஆகையினாலே சுதந்திரத்தன்மை சேதனமாய ஆன்மாவின் கண்ணேயேயாம். ஜட இந்திரியங்களின்கண் சுதந்திரத்தன்மையின்றாம். அல்லது வாக்கு முதலிய இந்திரியங்கட்குச் சப்தோச்சாரணமுதலிய தத்தம் வியாபாரங்களின் சுதந்திரத்தன்மை யிருப்பினும், அன்னிய வியாபாரத்தின்கண் இந்திரியாதிகள் சமார்த்தமுடையனவன்றாம்.

ஆகையினால் அவற்றின்கண் ஆன்மத்தன்மை பொருந்தாதாம். இப்போதிப்பொருளை வெளிப்படையாய் நிரூபிப்பாம்.—சப்தத்தின் உச்சாரணம் வாக்கிந்திரியத்தின் வியாபாரமாம், கிரகணம் பாணி இந்திரியத்தின் வியாபாரமாம், கமனம் பாத இந்திரியத்தின் வியாபாரமாம், மலத்தின் பரித்தியாகம் பாயுரு இந்திரியத்தின் வியாபாரமாம், ஆநந்தம் உபஸ்த இந்திரியத்தின் வியாபாரமாம்; எங்ஙனம் அரசனானவன் தத்தம் காரியத்தின்கண் தாசர்களைச் சோபிக்கின்றனனோ அங்ஙனம் பரமான்மாவாய யான் தத்தம் வியாபாரத்தின்கண் இந்திரியாதிகளை நிலைபெறுத்துகின்றேன். கருத்திஃதாம்:—ஜட இந்திரியங்களின் வியாபாரத்தின் நியமமானது அந்தரியாமியாய் ஆன்மாவாய என்னைப் போதிக்கின்றது.

ஏனெனின், சேதனத்தினானன்றி ஜடங்களின் பிரவிர்த்தி நியமமாய் உண்டாவதின்றாம், மற்றோ வாயுவினாலே சலிப்பிக்கப்பட்ட காய்ந்த இலையைப்போல நியமமற்ற பிரவிர்த்தி யுண்டாய்விடும். இவ்விதம் ஞானேந்திரியங்களிடத்தும் பிராணாதியினிடத்தும் அறிக. உருவ முதலியவற்றின் ஞானம், சப்தஞானம், கந்தஞானம், இரசஞானம், ஸ்பரிச முதலியவற்றின் ஞானம் என்னுமிவை முறையே சக்ஷு, சுரோத்திரம், கிராணம், இரசனம், துவக்கு என்னும் ஐந்து ஞானேந்திரியங்களின் நியமமான வியாபாரமாம். முற்கூறிய ரீதியினாலே இவ்வியாபாரங்களின் நியமமும் சர்வ அந்தரியாமியாய ஆன்மாவைப் போதிப்பதாம். இந்திரியங்கட்கேபோலப் பிராணன்கட்கும் நியமமாய வியாபாரம் உண்டு; ஏனெனின், அன்னத்தையும் ஜலத்தையும் சூக்ஷுமமாய நாடித் துவாரங்களில் பிராணன் செலுத்திவைக்கின்றது; ஆகையினாலே பிராணன்கட்கிஃதோராச்சரியவடிவத் தொழிலாம், மற்றோ வாக்குமுதலிய இந்திரியங்களின் இருப்பின் காரணத்துவவடிவ ஜீவனமும் பிராணன்களின் காரியமாம். இவ்விரு வியாபாரத்தினும் வேறாய எவ்வியாபாரத்திற்கும் பிராணன் காரணமன்றாம்.

சங்கற்பம், நிச்சயம், அபிமானம், ஸ்மரணம் என்னு மிந்நான்கும் முறையே மனம், புத்தி, அகங்காரம், சித்தம, என்பவற்றின் நியமமான வியாபாரமாம். இப்போது பஞ்சபூதங்களின் வியாபார நிரூபணத்தையும், விஷயங்களின் வியாபார நிரூபணத்தையும செய்வாம். பாத்திரமானது நெய்யைத் தாங்குவது போல உலகத்தைத் தாங்குவது பிருதிவியின் வியாபாரமாம், * கிலேதனம ஜலத்தின் வியாபாரமாம, அரிசி முதலியவற்றைப் பக்குவஞ் செய்வது தேயுவின் வியாபாரமாம், சங்கோச விகாச வடிவக்கிரியை வாயுவின் வியாபாரமாம, திதியின் கண்ணும சலனத்தின்கண்ணும் அனுகூல அவகாசதன்மை ஆகாசததின் வியாபாரமாம். இவ்வியாபாரங்களிலும் வேறுப்ப் பிருதிவியாதிகட்கு வேறொரு வியாபாரமுமின்றும. ஜீவனைப பநதனஞ்செய்வதாய யாதொரு சுரோத்திராதி இநதிரியங்களின் இயற்கையுளதோ அவ்வியறகையை வெளிபபடுததுவது மிதுவே சத்தப, பரிச, ரூப, ரச, கநத விஷயங்களின் வியாபாரமாம; ஏனெனின், விஷய சமபந்தமின்றிக கேவல இநதிரியங்களிற் பநதனஞ்செய்வதன் காரணத்தன்மையின்றும். இக்காரணத்தினுலேயே சுருதியின்கண் விஷயங்களை அதிக்கிரகங்களெனக் கூறபபட்டிருக்கின்றன.

சங்கை:—ஹே பகவன்! இநதிரியாதிகளின்கண் சுதநதிரமின்மையின், ஆன்மாவன்றும அவை அங்ஙனமாயினும ஞானசகதி யுடைமையின் சர்வஞ்ஞ பரமான்மாவிறகு வுபாதியாய புதகி சுதநதிரமாதலின் அஃதேன் ஆன்மா ஆகாது?

சமாதானம்:—புததியின்கண் சாவஞ்ஞ பரமேசுரர்க்கு வுபாதியாந்தன்மை பிரசிததமா யிருபபினும அபபுத்தி யான்மாவன்றும; ஏனெனின், புததியின்கண் சாவ வஸ்துக்களையும விஷயம செய்யும சாமாததியம யாதுளதோ அது பரமான்மாவாய என் சமீபததன்மையின் அதீனமாம; புததியின்கண் சுதநதிரமன்றும.

சண்டிதூ அபிப்பிராயமாம்:—எல்லா வுலகையும ஒளிர்விபபதாய ஒரு சேதனம ஞான சபதததிற்கு முககியப்பொருளாம. எங்ஙனம ஜலம தன் சமபந்தத்தால் அஸ்வசச கடாதி பதாாத்தத்தில் சூரியாதிப பிரதி பிம்பக்கிரகணஞ்செய்யும யோக்யதையை வெளிபபடுததுகின்றதோ அங்ஙனம புததியும தன் சமபநதத்தால் அஸ்வசச கடாதி பதாாததஙகளில சேதனப பிரதி பிமபக்கிரகணஞ்செய்யும யோக்யதையை வெளிபபடுததுகின்றது; ஆவரணததின் நிவிர்த்தியைச செய்கின்றது. புத்தியானது தானும சேதனததின் பிரதிபிம்பததைக கிரகணஞ செய்கின்றது. ஆகையினுற் புத்தி ஞான சப்தததின் கௌணப பொருளாம. இது கூறியதா விது சிததிததது:—எங்ஙனம சூரியப்பிரதி பிமபத்தோடு கூடியிராநின்ற தர்பபணமானது சுவர்முதலிய பதார்ததங்களை ஒளிர்விக்கின்றதோ, ஒளிர்வித்தபோதினும தர்ப்பணமாயதான் ஒளிவடிவமல்லவோ; அங்ஙனம புத்தியானது சேதனத்தின் பிரதிபிம்பததைக் கிரகணஞ்செய்து எல்லா வஸ்துக்களையும விளக்கிவைத்தபோதினும் புத்தியாயதான் ஒளியுருவமன்றும, ஆகையினுல் பரமான்மாவாய என் சமீபததன்மையினுலே புத்தியின்கண் சாமர்ததியமாம்.

* கிலேதனம்=ஈரமாக்குதல்.

பரமான்மாவாய என்னை யன்றிப் புத்தியின்கண் சாமார்த்தியமின்றாம். ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய திருச்சந்நிதான சமீபத்திலேயே அர்ச்சுனனிடத்திற் சாமர்த்தியமாம்; ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய திருச்சந்நிதான சமீபமின்றி அர்ச்சுனனிடத்திற் சாமர்த்தியமின்று மன்றோ; ஆகையினால் புத்தி யான்மாவன்றாம்.

வியாபக பரமான்மாவாய யான் அந்தப் புத்தியின் ஜடத்தன்மையையும் நிச்சயித்துள்ளேன்; ஏனெனின், புத்திவிஷயகார பரிணாமத்தை அடைகின்றது. யாது பரிணாமத்தை யடைகின்றதோ அது ஜடமாம். மண் முதலியபோல் சேதனம் பரிணாமத்தை யடையாது; ஆகையினாலும் புத்தி யான்மாவன்றாம். இப்போது முன்னர்க் கூறிய பிராணனது அனான்மத்தன்மையைச் சுருதிப் பிரமாணத்தாற் சித்தஞ் செய்வாம்:—பிராணன் ஜீவனஹேதுவாயினும், இந்திரியங்களின் அபேக்ஷையால் உள்ளாயினும், பரமான்மாவாய என் சாமர்த்தியத்தாலே ஜீவனத்தின்கண் பிராணன் ஹேதுவாம். இது சுருதியின்கண்ணும் கூறப்பட்டுள்ளது. பிராணனாலும் அபானனாலும் எப்பிராணியும் ஜீவிப்பதில்லை, மற்றோ, பிராணனுக்கும் அபானனுக்கும் அதிஷ்டானமாய ஆன்மாவால் பிராணி ஜீவிக்கின்றது; ஆகையினாற் பிராணன் ஆன்மாவன்றாம்.

வாகிந்திரிய முதலாக முன்னர்க் கூறப்பட்டவற்றிற்கு எவ்வகையானும் ஒவ்வொன்றிற்கும் ஆன்மத்தன்மையின்றாம்; ஏனெனின், யாது சம்பூர்ண வாக்காதிகளின் பிரயோஜகமாமோ அது ஆன்மாவெனப்படுமென இதனாற் சித்தித்தது. இதன் கருத்திதுவாம்:—யாது தன் சமீபத்தன்மையினாலே வாக்காதிகளைத் தத்தம் வியாபாரத்தின்கண் பிரவிருத்திப்பிக்குமோ எதன் பொருட்டு இவ் வாக்காதிகள் பிரவிருத்திக்குமோ, அது ஆன்மாவெனப்படும். இவ்வான்மாவின் இலக்கணம் வாக்கிந்திரிய முதலியவற்றின்கணின்றாம்; ஏனெனின், வாக்காதிகள் எல்லாப் பொருள்களுக்கும் சாதகமன்றாம்; மற்றோ தத்தம் வியாபாரத்தின் சித்தியைச் செய்யும்; ஆகையினால் ஆன்மா அன்றாம்.

வாக்காதி யாவும் ஒருங்கு கூடிக் கூட்ட வடிவாம்; ஆகையினாற் பரமான்மாவாய என் பொருட்டாம். இல்லம் முதலிய பதார்த்தங்கள் மண் காட்ட முதலிய கூட்டவடிவமாம்; ஆகையினால் இல்லறத்தோன்பொருட்டா மன்றோ. எவ்வெப் பதார்த்தம் அயலார் பொருட்டாமோ அது அது அனான்மாவாம்; இல்ல முதலிய அனான்மாபோல. ஆகையினாலே, என் சுகசாதனங்களாய வாக்காதிகளிடத்தே பரமான்மாவாய என்னான்மத்தன்மை யெங்ஙனமாம்? கருத்திதுவாம்:—அவ் வாக்காதிகள் ஆன்மவடிவன்றாம், இவ்வாக்காதி யாவுமொருங்குசேர்ந்துத் தம் பொருட்டன்றாம், ஒவ்வொன்றும் தன் பொருட்டன்றாம், மற்றோ பரமான்மாவாய என் பொருட்டாம்; ஆகையினால் இவ்வாக்காதிகள் யாவும் என் வடிவமன்றாம். எல்லா வாக்காதிகளும் ஒருங்குகூடியும் என்னுடைய சொரூபம் அன்றாங்கால் ஒவ்வொரு வாக்காதியும் என்னுடைய சொரூபம் எங்ஙனமாம்? பின்னையோ ஆகமாட்டா.

சங்கை:—ஹே பகவன்! இவ்வெல்லா வாக்காதிகளும் ஈஸ்வரராய தங்களுடைய தாசர்கள்; தங்களுடைய ஏவுதலின்றியே தங்களுடைய பயத்தினாற் சப்

தத்தின் உச்சாரணமுதலிய தத்தம் வியாபாரங்களைச் செய்யாநிற்பர்; அரசனு டைய பயத்தா லடிமைகள் தத்தமது காரியங்களைச் செய்வதேபோலும். ஆகையி னுல் கூட்டத்தின்கண்ணே தங்களுடைய பிரவேசத்திற்கு யாதொரு பயனுமில்லை.

சமாதானம்:—இவ்வாக்காதிகள் என்னுடைய பயத்தால் தத்தமது வியாபாரங் களைச் செய்தபோதிலும பரமான்மாவாகிய என்னைத் துவமபதத்தின் அர்த்த ரூப மாய் இவ்வாக்காதிகள் அறிகிறதில்லை; எல்லா வுலகிற்குங் காரணமாய தற்பதார்த் தமாய என்னையும் இவ்வாக்காதிகள் அறிகிறதில்லை. துவம் பதார்த்தத்தையும தத் பதார்த்தத்தையும் இவ்வாககாதிகள் அறியாதபோது இவற்றின் ஏகத்து வத்தை எவ்வண்ண மறியும்? பின்னேயோ அறியாவென்க. ஆகையினுல் பரமான் மாவாய யானே இக்கூட்டத்தின்கட் பிரவேசஞ்செய்து யான் யாரென விசாரஞ் செய்வேன். இவ்வாக்காதி இநதிரியங்களோடு தாதாத்மிய அத்தியாசஞ் செய்து யான் சபதோசசாரணஞ் செய்வேன், யான் காண்பேன், என்னும் இவ்வண்ண மாய அபிமானமே பரமேஸ்வரரது பிரவேசமாம. இதுவே பிரதிபிமபவாதம, அவச்சேதவாதம, என்பவற்றுற் சாஸ்திரத்தின்கண் கூறப்பட்டுள்ளது.

சங்கை:—ஹே பகவன்! தாங்கள் செய்யவேண்டிய தங்கள் வடிவ விசா ரத்தை இச்சரீரத்தின்கட் பிரவேசியாமலே செய்யலாமே; யாதின்பொருட்டித் துன்பமயச சரீரத்தின்கட் பிரவேசிக்கவேண்டும.

சமாதானம்:—என்னுடைய வடிவ மெங்ஙனமாமோ அங்ஙனம நிகழ்க, இக் காற்றன் வடிவ சிநதனத்தாற சிறிது பயனுஞ் சிததியாது. ஆகையினுல் கூட்டத் தின்கட் பிரவேசித்து இவ்வாககாதிகட்குச சுகததை யடைவித்துத தன் வடி வத்தை நிர்ணயஞ்செய்வேன். ஈண்டு வாக்காதிகட்குச சுகத்தினடைவும் தன் சொரூபததின் நிர்ணயமும் என்னு மிவ்விரு பிரயோஜனமும பிரவேசத்திற்காம். இநதபபிரகாரம் பரமான்மா சிந்தனஞ்செய்து தன் வடிவ சிநதனத்தை விடடொ ழித்துச சரீரததின்கட் பிரவேசஞ்செய்தற பொருட்டுத துவாரததை விசாரஞ் செய்தது.

அந்தச சர்வதேவதைகட்கும் பிதாவாய பரமேசுரர் தம தாசரின் பிரவேசத் துவாரங்களாகிய மூக்கு முதலியவற்றிற் றம் யோக்யதையைக் காணுதவராய்த் தம் சமீபத் தன்மையால் (சந்நிதி மாத்திரத்தால்) தலை யுசசியின் எல்லையைப பிளந்து இசசரீரத்தின்கண்ணே பிரவேசஞ் செய்தனர். ஆண்டுச் சிரத்தின்கண்ணே யிராநின்ற வாம தக்ஷிண மத்தியமென்னும முக் கபாலங்களின் மத்திய பாகம தலையுச்சியி னெல்லையெனக் கூறப்பெறும. இதனைக் கேசமின்றிய இளைத்த புருட னுடைய மஸ்தகத்திற் காணலாம்; அல்லது பெண்கள் கேச விபாகரேகையின் முடிவுடைய இடத்திற்குத் தலையுச்சியி னெல்லையெனப்படும. இது யாவருக்குந தெரிந்தவிஷயமேயாம். எங்ஙனம் பிரசித்தமாய துவாரகாபுரியின்கண் பிரவர்ஷ ணம் எனப் பெயரியபர்வததத்தினின்றுங் குதித்து, ஆகாசவடிவ மேன்மார்க்கமாய் ஸ்ரீ கிருஷ்ணபகவான் முதலிற் பிரவேசஞ் செய்தனரோ அங்ஙனம இந்த மநுட சரீரவடிவ புரியின்கண் கிருஷ்ணவடிவ பரமாத்மாவானவர் மேலமார்க்கமாய்ப் பிர

வேசஞ்செய்தனர். ஆகையினுல் எல்லா மநுட சரீரங்களும் துவாரகாபுரிகளாம். ஈண்டு மநுட சரீரத்தின்கண்ணேயே ஆத்ம சாட்சாத்காரத்தின் யோக்யதை யிருக்கின்றது. ஆகையினுல் மநுட சரீரத்தின்கண் பிரவேசங் கூறப்பட்டது. அந்த மநுட சரீரங்கொண்டு சர்வ சரீரங்களின் கிரகணமுஞ் செய்யத்தக்கதாம்.

சங்கை :—ஹே பகவன்! சுருதியின்கண்ணும், ஸ்மிருதியின்கண்ணும், நவத் துவாரம் பிரசித்தமா யிருக்கின்றது; இத்தலையுசித துவாரமானது பிரசித்தமா யில்லை; ஆகையினுல் இத்துவாரத்தாற் சரீரத்தைத் துவாராவதிபுரியென்று எவ் வண்ணஞ் சொன்னீர்கள்.

சமாதானம் :—பரமேஸ்வரர் மஸ்தகத்தைப் பிளந்து இச்சரீரவடிவ புரியின் கண் பிரவேசஞ்செய்தனர், ஆகையினுல் மஸ்தகத்தின் மேற்பாகத்தி லிராநின்ற துவாரத்தை உபாசக புருஷர் விஹ்ருதி நாமத்தாற் கூறுகின்றனர். உலகின் கண்ணும் மஸ்தகத்தில் கடுத்தைலத்தின் தாரணத்தாற் கடுத்தன்மையைப் புத்திமானுன புருஷன் அநுபவிக்கின்றனன்; மூட புருடர் ஸ்ரீ கிருஷ்ணபகவா னையும் அவருடைய துவாரத்தையும் அறிவது முடியாததாம்; ஆகையினுற் பர மேஸ்வரது பிரவேசத்தின் துவாரம் அப்பிரசித்தமன்றும். வாக்காதி தாசாக ளின் பிரவேச நவத்துவாரத்திற்குச் சமானம் இப்பரமேஸ்வரரின் பிரவேசத் துவாரமன்றும். ஆகையினுல் அந்த நவத்துவாரங்களோடுகூட இத்துவாரத்தைச் சுருதிஸ்மிருதிகளில் எண்ணிக்கை செய்யவில்லை. இக்காரணத்தால் யோகி புரு ஷன் மேல்வாயிலாய்க் கிளம்பிய பிரமலோகத்தி னடைவின் வாயிலாய் முத்திக்குக் காரணமான தேவயான மார்க்கத்தை யடைகின்றனன். அக்காரணத்தால் இம் மேல்வாயில் நந்தனமாம். எதனுல் ஆநந்தத்தி னடைவுண்டாமோ அது நந்தன மெனப்படும். இந்திரனுடைய வனத்தின் நாமம் நந்தனமாயினும் கீழே விழும் பயத்தாலுண்டாந் துக்கத்தோடு இந்திரனுடைய வனங் கூடியிருக்கின்றது; ஆகை யினு லதன்கண் சுககாரணத் தன்மையின் சமசயமிருக்கின்றது.

இப்போது இந்த மேலவாயிலே நந்தனவன சமானமாய்க் கூறுவாம் :—எங்ங னம் சுவர்க்கத்தின்கண் அடைந்துள்ள கர்மிபுருஷரின் சுககாரணம் நந்தன வனமோ, அங்ஙனம் இம்மேல வாயிலும் பிரமலோக வாயிலாய் முத்திவடிவ சுகத்தின் காரணமாம். இந்தப்பிரகாரம், ஜீவரூபமாய்ப் பரமாத்மாவின் பிரவே சஞ் சொல்லப்பட்டது. இப்போது உபாதியின் அபிமானத்தால் அப்பரமாத்மா விற்குச் சமசாரத்தி னடைவை நிரூபணஞ்செய்வாம்.

பிரசித்த நவத்துவாரம், நாபி, மேல்வாயில என்னும் இப்பதினொரு துவா ரங்களுள்ள சரீர ரூபப்புரியை யடைந்து அக்கினிமுதலிய தேவதைகளின் பிரபு வாய்ப் பரமாத்மாவாயுள்ள இந்திரரானவர் தாம வாசஞ் செய்யும் பொருட்டு மூன்று கிருகங்களைச் செய்தனர். நேத்திர இந்திரியம் இருக்கும் கோளகை முதல்வாசஸ்தானமாம். சித்தத்தின் இடமாய இதயகமலத்தின் ஸ்தலம் இரண்டா வது வாசஸ்தானமாம். இதய கமலத்தின் உள்ளாகாசம் மூன்றுவது வாச ஸ்தானமாம். அகங்காரவடிவ சையையின்கட் சேதனவடிவ பரமாத்மாவின்

பிரதிபிம்பரூப கர்ப்பத்தைத தாரணை செய்பவளாய ஞானசக்தி வடிவ வைதய லோடு சயனததை யடைநத இநதிரவடிவ ஆதமா, நனவு, கனவு, துயில என்னும் இம்மூன்று சொபபனங்களேயும் காணுகின்றது.

சங்கை :—ஹே பகவன்! கனவோ சொபபனவடிவாம. ஆதலால் நனவுத் துயில்கட்குச் சொபபனவடிவத தன்மையைககூறல் பொருந்தாது.

சமாதானம் :—இவ்விந்திரவடிவ ஜீவாத்மா தனது சொரூப ஞானமின்றிய தாம. ஆகையினுல் நனவு, கனவு, துயிலென்னும இமமூன்றும சொபபன சொரூபமாம. ஏனெனின், வஸ்துவின் சொரூப மெபபடியோ அப்படியே அத னைக காணுதல் நனவெனபபடும. இநத ஜீவாதமா அதவிதீய ஆநநதரூப தன் வடிவததை மறநது துக்கியென்றும, காததாவென்றும, போக்தாவென்றும் தன்னை நினைநதுகொண்டது. ஆகையினுல அஞ்ஞானவடிவ நித்திரையால் எவ் வெவ் வஸ்துவைக் காணுகின்றதோ அவையெலலாங கனவாம. அவற்றுள் முத லில நனவுவடிவக கனவை நிரூபணஞ் செய்வாம. உண்மையாய்ச சுதத பரமாத்மா வானது சப்த ஸ்பரிசாதி பாகிய ஸ்தூல போகங்களின் அடைவின்பொருட்டு அநாதிஅஞ்ஞானத்தாற போகததின் காரணமாய தாமா தர்மஙகளை பெககாலத்தில் அங்கீகாரஞ் செய்கின்றதோ அதன் பெயா நனவாம. இநநனவுக்காலத்தில் இடது வலது நேததிரங்களிற பகவானவர் பெண் ஆண் வடிவமாய் வெளிபபடுவர். ஆண்டு வலது நேததிரததின்கணுள்ள ரூபம அதிகப பிரகாச ரூபபலமுடைய தாம; ஆகையினுல் போகதா புருஷரூபமாம. இடது நேததிரத்தின்கணுள்ள ரூபம் அதிகப பிரகாசரூப பலமுடையதன்றும. ஆகையினுல் போக்கியம ஸ்திரீ ரூபமாம. இவ்வகையானே போக்தா போக்கியவடிவமாய்ப பரமேஸ்வரரின் உபாஸனை சுருதியின்கண்ணே கூறபபட்டிருககின்றது. இநதப் பிரகாரம வியஷ்டி சரீரத்தின் அபிமானததால் தமமைப பரிசசின்னமாய் உடன்பட்ட பகவானவர் வாககாதி சர்வேந்திரியங்களேயு மங்கீகாரஞ்செய்து காமபலத்தின் அங்கீகார வடிவ போகததை யடைநதனா.

ஆண்டுப் பாகியமாகிய பலவகைப போகங்களை நிரூபணஞ செய்வாம:—யான் பிறநதேன், இவர் எனது தநதை, இவள் எனது தாய், இவர் எனது தமையன், இவள் எனது தமக்கை, இவர் எனது உறவினர், இவர் எனது தாசர், இவள் எனது மனைவி, இவன் எனது மைந்தன், இவள் எனது மகள், இவன் எனது மித் திரன், இவன் எனது சத்துரு, இவன் எனது உதாசீனன் (மித்திரத்தன்மை, சத்துருத்தன்மை இன்றியவன்றன் பெயா உதாசீனனும்), இவா எனது நியாமக ராம,(தருமமரியாதையின்கண் யாவர் நிலைபெறுத்துகின்றனரோ அவர் நியாமக ரெனப்படுவர்; தந்தை, ஆசிரியா, அரசன்முதலியோா போலவாம்), இவர் எனது இருதவிக்காம் (யாகம செய்விபபவராய பிராஹ்மணர் இருத்விக கெனபபடுவர்), இவர் எனது குருவாம, இது பெண், இது ஆண், இது அலி என இநதபபிர காரம் சேதன சரீரத்தின்கண் போகஙகள் சொல்லப்பட்டன.

சப்தத்திற்கு முன்னிலையிலிருக்கு மிப்பியின்கண், இது வெள்ளியென்னுங் கூற்றினது வெள்ளியத்தியாசமின்றிப பொருந்தமாட்டாதோ, அங்ஙனம் இப்புருடனும் ஆத்மாவின் வாசகமாய யானென்னுஞ் சப்தத்தைத் தேகாதிகளிடத்தில் யான் வெள்ளையனென்பது முதலாகக் கூறுகின்றனன். ஆகையினால் சரீராதிகளிடத்தே யானென்னுஞ் சப்தத்தின் கூற்றினது யான் வெள்ளையனென்னும் ஞானத்தை மயலவடிவ மாக்குகின்றது. இவ்விதம தேகாதிகளோடு தாதாத்மிய வத்தியாசத்தால் ஆத்மாவின்கண் பேதஞானததின் நிரூபணஞ் செய்யப்பட்டது.

இப்போது அவ்வத்தியாசத்தால் பாகிய வஸ்துக்களை விஷயஞ்செய்வதாய பேதஞானத்தை நிரூபணஞ்செய்வாம்:—இவரென்னுடைய தந்தை, இவளென்னுடைய தாய், இவர்கட்கு வேறு யெவருமே என்னுடைய தந்தையு மென்னுடைய தாயுமிலா. இத்தேவதையி னாலயம, நதிதீரமே முதலாய வஸ்துக்கள் எல்லா வுலகரின் பொருட்டாம். இவை முதலாய பேதங்களை அஞ்ஞானவடிவ நித்திரையால உறங்காநின்ற வான்மா கனவைபபோற் காணுகின்றது; ஒவ்வோரிடத்தில் காரணமின்றியே சோகத்தை யடைகின்றது; மற்றொவ்வோ ரிடத்தில் மகிழ்வை யடைகின்றது.

இப்போது பிராணன்களின் அத்தியாசங்களை யறிவிப்பதாய ஆன்மாவின்கண் பிராணன்களினது தர்மங்களி னத்தியாசத்தை நிரூபணஞ் செய்வாம:—யான் பசியுடையோன், யான் தாகமுடையோன் என விவ்வண்ணம் பிராணன்களின் தன்மங்களாய பசிதாகங்களை ஆத்மாவின்கண் அங்கீகரிக்கின்றனன்.

இப்போது ஆன்மாவின்கண் மனோதர்மங்களி னத்தியாசத்தைக் காண்பிபபாம:—காமம, சங்கற்பம, சமசயம, சிரத்தை, அசிரத்தை, தைரியம, அதைரியம, லஜ்ஜை, விருத்திஞானம், பயம எனச சுருதியின்கண்ணே மனோதன்மங்களை ஆத்மாவின்கண் அங்கீகரித்து, இப புருடன் றபிப்பன். உண்மையாயோ ஆன்மா அசங்கமாம, நிர்க்குணமாம, தேசகாலவஸ்து பரிசசேதமற்றதாம, ஆநந்தசேதன வடிவினதாம். அவ் வான்மாவே தன் சொரூபா அஞ்ஞானத்தால ஆகாசாதி பஞ்ச பூதத்தின்கண்ணும, அவற்றின் காரியமாய பிரபஞசததின்கண்ணும, இவ்வஸ்து நன்றென்றும, இவ் வஸ்து நன்றன்றென்றும இவ்விதம பல்வகையாய பேதபுததிகளைச செய்து, பல்வகையாய சுகதுக்கங்களை யிவ் வுலகின்கண் அடையாநிற்கும். இது பேதஞானத்தி னவாநதரபலமாம். முக்கிய பலமோ, சுருதியின்கண்ணே கூறிய ஜனனமரணத்தின் பிரவாகமாம. முன்னாக் கூறிய ஞானேந்திரிய கன்மேந்திரியங்களின் வியாபாரங்கள் ஆகாசாதி பஞசபூதங்களின் வியாபாரங்கள், பூதங்களின் காரியப்பிரபஞசததின் வியாபாரங்கள் இவ்வெல்லாவற்றையும் அஞ்ஞானததினால் ஆத்மா தன்னிடத்தி லங்கீகரிததுள்ளது. முன்னர்க கூறிய எத்துணை நன அவஸ்தையின் ஞானங்களுளவோ அத்துணையு மததியாசத்தால் வியாப்தமாம. ஆகையினால் சசசிதாநநத அநநதவடிவ ஆன்மாவின் நனமுழுவதும் கனவாம். ஏனெனின், பிரபோததததிற்கு பாண்டு அபாவமாமோ மிததியா வஸ்துவிற்கு யாண்டுதரிசனமாமோ அதற்குக் கனவெனப பெயராம. இக்கனவினிலக்கணம் நனவின்கண்ணும பொருநதுகின்றது.

ஏனெனின், அஞ்ஞானவஸ்தையின்கண் ஆத்மஞானவடிவப் பிரபோதத் தினபாவமு மிருக்கின்றது; யான் பிராஹ்மணன், யான் க்ஷத்திரியன், யான் குருடன் என விவ்வகையாய அநாத்ம தேகாதி தர்மங்களின் ஆத்மாவின் கண் ஆரோபணவடிவ மித்தியா தரிசனமு மிருக்கின்றது; ஆகையினுல் நனுக் கனுவடிவமாம். இப்போது இவ்வர்த்தத்தை லோகப்பிரசித்தியினுனும் வெளி யாக்குவாம்:—எந்தப் புருடனுனவன் சக்ஷு யிந்திரியமே முதலாயுள்ள பிரத் தியக்ஷ ஞான சாமக கிரியை யாவற்றேடும கூடியுளனே, அப்புருடன் கடாதி வஸ்துக்களைக் கடாதி ரூபமா யறியாமல், படாதி ரூபமா யறியின், அந்த மயங்கிய புருஷனை நனுவவஸ்தையின்கண்ணும் உலகர் உறங்குகின்றனனென்பர். ஆகை யினுல் இவ்வுலக வியவகாரத்தினின்றும் விபரீதக்காட்சியின் பெயர் கனுவெனத் துணியப்பெறும. அவ்விலக்கணம நனுவின்கண்ணும முற்கூறிய நெறியே பொருந்தும. இநதப்பிரகார மிவ்வாநநதவடிவ வாத்மாவும விபரீத தரிஸன விசிஷ்டமாம; ஆகையினுல் அதனது நனுவுங் கனுவடிவமேயாம். கனுவின்கண் இந்திரியங்களி னெடுக்கமிருக்கின்றது; அவ் வொடுக்கம நனுவின்கணில்லையென் றுலும, மித்தியா தரிசனவடிவ தாமம நனுவின்கண்ணும, கனுவின்கண்ணுஞ் சமானமாம். ஆகையினுல நனுவுங் கனுவடிவமாம. இவ்வண்ணம பொய்யாய நனு அவஸ்தையின் நிரூபணஞ் செய்யப்பட்டது.

இப்போது கனு அவஸ்தையை நிரூபிப்பாம:—இவ்வண்ணம் நனுவவஸ்தை யின்கண் பல்வகையாய கனுக்களைக் கண்ணுற்று, இநதிராணியோடு கூடிய பர மாத்மவடிவ இந்திரரானவர் வேறு ஸ்தானமாய ஹிருதய கமலதலத்தில் பிரவே சஞ் செய்தனர். ஈண்டு ஆன்மாவின்கண் கர்த்துருத்தன்மை, போக்துருத் தன்மைகளி னுபாதியாய புத்தியின்பெயர் இந்திராணியாம். அவ்விடத்தில இநதிர னிநதிராணிகளின் சமீபத்திற் பூர்வ பூர்வ கன்மாநுசாரமாய்க் கூத்தாடி யைப்போல் பல்வகையாய தன்வடிவங்களை மனங் காண்பியாநிற்கும். ஈண்டிது தாற்பரியமாம்:—அம்மனம் ஞானுகார விடயாகார பரிணுமங்களையடையும். அநந்த ஜன்மங்களில் உத்பன்னமாய பதார்த்தங்களின் சமஸ்காரத்தோடு மனங் கூடியிருக்கின்றது. அக்காரணத்தால் மனத்தின்கண் இத்தகைய சாமர்த்திய முளது.

இப்போது பிரசித்தமாய நனுவினின்றுங் கனுவின்கண் இந்திரியங்களின் உப ராமத்தன்மை வடிவ விலக்ஷணத்தன்மையைக் காண்பிப்பாம:—அகநனு வவத்தை யின்கண் மனத்தாலுண்டாக்கிய பல்வகையாய காரியவடிவ நாட்டியத்தைப் பர மான்மாவடிவ இந்திரர் காண்பர். எத்தகைய பரமான்மாவெனின் ஞானகர்மேந் திரியங்களற்றவர், நனுவின் சம்ஸ்காரத்தோடு கூடியவர், கனுப் போகத்தைத் தருங் கன்மங்களோடு கூடியவராவர். (இவ்விடத்தில் இரண்டு பிரக்கிரியை சாஸ்திரத்தின்கண்ணே கூறப்பட்டிருக்கின்றன. கனுவின்கண் மனமே ரதாதி விடயாகாரமாயும், ஞானுகாரமாயும் பரிணமிக்கும எனச் சில நூலாசிரியர் உடன்பட்டிருக்கின்றனர்; மற்றுஞ் சில நூலாசிரியரோ மனத்தின்கண்ணே யிரா

நின்ற வாசனையோடுகூடிய வஞ்ஞானமே கனவின்கண் ரதாதி விடயாகாரமாயும் ஞானகாரமாயும் பரிணமிக்குமென வுடன்பட்டிருக்கின்றனர்), இப்போது கனவி னின்றும் வேறுவித விலக்ஷணத்தன்மையுங் கனவின்கண்ணே காண்பிப்பாம்:— அக்கன வவத்தையின்கண் திருஷ்டாவானவன் றன்சொரூபத்தினிடத்தும் திருசிய பதார்த்தத்தின்கண்ணுஞ் சொரூபநியமம், தேசநியமம், காலநிய மம், காரணநியமம் என்னு மிந்நான்கு வகையாய நியமங்களி னபாவங்களைக் காணுகின்றனன். இப்போது திருசிய பதார்த்தத்தின்கண் சொரூப நியமத்தி னபாவத்தை நிரூபணஞ்செய்வாம்:—கனவின்கண்ணே தோற்றுநின்ற யானையா னது பிற்கணத்தில மரமாய்த் தோற்றும், அம்மரம் பிற்கணத்தில் மலையாய்த் தோற்றும், அம்மலை பிற்கணத்தில் திருணமாய்த் தோற்றும். இவ்வண்ணங் கன வின்கண் திருசியபதார்த்த வடிவங்கட்கு நியமமின்றாம். இப்போது திருஷ்டா வின்கண் சொரூப நியமமின்மையை நிரூபிப்பாம்:—இவ்விதம் கனவின்கண் பிராஹ்மண திருஷ்டாவானவன் கணத்தின்பின் சூத்திரனாய்த் தோற்றுவன், கணத்தின்பின் றன்னைப் பசுவாய்க் காண்பன், கணத்தின்பின் ஒவ்வோரிடத்தில் றன்னைத் தேவதையாய்க் காண்பன், கணத்தின்பின் ஒவ்வோரிடத்தில் றன்னை மஹாராஜனாய்க் காண்பன். இவ்வண்ணம் திருஷ்டாவின் சொரூபத்தின்கண்ணும் நியமமின்றாம்.

இப்போது கனவின்கண் தேசநியம மின்மையைக் காண்பிப்பாம்:—சொப் பன வஹமெனப் பெயரிய சூக்கும நாடிகளின்கண் ணிராநின்ற திருஷ்டாவான வன் அந்தச் சூட்சும ஸ்தானத்தின்கண் சமுத்திரத்தையும், மேருகிரியையும், ஏழு தீவுகளோடுகூடிய பிருதிவியையும் காணுகின்றனன். ஆகையினுற கனவின் கண் தேச நியமுமின்றாம். இப்போது காலநியம மின்மையைக் காண்பிப்பாம்:— மனுசத்தின் மேலிராநின்ற விப்புருடன் இரவின்கண் சூரியனோடுகூடிய பகலைக் காணுகின்றனன். ஆகையினுற கனவின்கண் காலநியமமுமின்றாம். இப்போது காரண நியமமின்மையைக் காண்பிப்பாம்.—இப்பாரத கண்டத்தின்கண் ணிரா நின்ற புருடனானவன் இப்புருட சரீரத்தினாலே சூரிய சந்திரர்களைக் கனவின்கண் பட்சணஞ் செய்கின்றனன். பக்ஷணத்திற்கு யாதொரு காரணமுமின்றாம். ஏனெ னின், வஸ்துவின் பக்ஷணத்தில் மூன்று காரணங்களுள:—ஒன்றோ! பக்ஷணஞ் செய்வதற்கு யோக்கியமாய முகத்தோடுள்ள வஸ்துவின் சம்பந்தம்; மற்றொன்றோ! முகத்தினபேக்ஷையால் வஸ்துவின்கண் அற்பத்தன்மை; மற்றொன்றோ! போக்தா புருஷனுடைய வாற்றல; என்னு மிம்மூக காரணங்களுமின்றாம். எனினும் கன வின்கண் சூரிய சந்திரர்களைப் பக்ஷணஞ் செய்கின்றனன். கனவின்கண் ரதத்தின் காரணமாய தச்சன், காஷ்டம், வாசி முதலியன வின்றெனினும சங்கற்ப மாத் திரத்தால் ரதத்தை யுண்டாக்குகின்றனன். ஆகையினுற் கனவின்கண் காரணத் தின் நியமமுமின்றாம். இதனால் மாயையையன்றிக் கனவிற்கு வேறொரு காரணமு மின்றாம், மற்றோ! மாயையே அதன் காரணமாம். ஆகையினால் சுருதியின் றாற் பரியத்தை யுணர்ந்த ஸ்ரீ வியாசபகவான் முதலிய மஹான்கள் கனவை மாயா மாத்திரமாய்க் கூறியிருக்கின்றனர்.

இப்போது சுழுபதி அவஸ்தாவடிவ மூன்றாவது கனவை நிரூபிப்பாம்:— அந்த இந்திரனுய வாதமாவானவர் கனவைக்கண்ட பின்னரேனும், நனவைக்கண்ட பின்னரேனும் இந்திராணியோடு கூடியவராய் மூன்றாவதாய ஹிருதய கமலத்தின் உள்ளாகாசவடிவ ஸ்தானத்தின்கண் பிரவேசஞ்செய்தனர். ஈண்டிது கருத்தாம்:—நனவின் பிற்காலத்திற கனவுண்டாம், கனவின் பிற்காலத்திற றுயிலுண்டாமென்னும நியமமில்லை. ஏனெனின், ஓரொருகால் நனவின்பின் றுயிலுண்டாம், துயிலின்பின் கனவுண்டாம, ஓரொருகால நனவின்பின் கனவுண்டாம, கனவின்பின் றுயிலுண்டாம. அந்த ஹிருதயாகாசத்தின்கண் போக்கிய வடிவ இந்திராணியை யாலிங்கனஞ்செய்து அவ்விந்திராணியோடும அபேதத்தை யடைவா. (போக்துரு போக்கியத் தன்மைகள் வெவவேறாய்ப புலப்படுவதில்லை யெனபது கருத்தாம.)

சங்கை:—ஹே பகவன்! துயிலின்கண் அஞ்ஞானத்தின் காரியவடிவ போக்கியமின்றெனினும, அஞ்ஞானவடிவ போக்கியம் ஆண்டுளதாம். ஆகையினால் போக்துரு போக்கியங்களின் அபேதம பொருந்தாது.

சமாதானம்:—துயிலின்கண் ஆவரணவடிவ மாயையை இத் திருஷ்டாவானவன் கண்டுங் கண்டிலன். ஈண்டிது கருத்தாம:—எங்ஙனம விளக்கா லிருட்டின் ஞானமுண்டாவதின்றோ! அங்ஙனம ஒரு பிரமாணத்தா லஞ்ஞானந் துணியப்பெறுவதில்லை. மற்றோ சாக்ஷியாய சேதனத்தாலே அஞ்ஞானந் துணியப்பெறும. அந்தச சாக்ஷியானது துயிலின்கண்ணு முளது. ஆகையினால் திருஷ்டாவாய சேதனன் துயிலின்கண் அஞ்ஞானத்தைக் காண்பன், துயிலினின்றும நனவை யடைந்த புருடனவன் யானொன்று மறியாமலிருந்தேன் என வஞ்ஞானத்தை ஸ்மரிக்கின்றனன். யாதுயாது ஸ்மிருதி ஞானமாமோ அதது முன் னனுபவத்தாற சம்பவிமென்பது நியமமாம. ஆகையினால யானொன்று மறியாமலிருந்தேன் என்று நனவின்கண்ணுண்டா மஞ்ஞானத்தின் ஸ்மரணமானது துயிலின்கண் அஞ்ஞானத்தி னனுபவத்தைத் துணிவிக்கின்றது. இந்நெறியே துயிலின்கண் சாமானியமாய் அஞ்ஞானத்தைக்கண்டும் வெளிப்படையாய்க் கண்டிலன். ஆகையினால துயிலின்கண் போக்தாவையும போக்கியத்தையும அபேதமாகக் கூறினேம்.

சங்கை:—ஹே பகவன்! அஞ்ஞான ரூப ஆவரணஞ் சுழுப்தியின்கண் வெளிப்படையாகவில்லாக்கால் பிரதிபந்தகமின்மையினாலே யிப்புருடன் றன் வடிவத்தைச சுழுபதியின்கண் ணறியலாமாதலின் சுழுபதிமாத்திரத்தினாலேயே யெல்லாச சீவாகட்கும் மோக்ஷ முண்டாகவேண்டும.

சமாதானம்:—சுழுபதி யவஸ்தையின்கண் இந்தத் திருஷ்டாவானவன் அத்வித்திய வானந்தரூப தன் ஸ்வரூபத்தை அறிகின்றா னிலலை.

ஏனெனின், சுழுபதியின்கண் விசேஷஞானமின்றாம. இது கருத்தாம்:— சுழுபதியின்கண் பிரதிபந்தக மின்றெனினும சாஸ்திரம, ஆசிரியர்முதலா யுள்ள

ஞானத்தின் சாமக்கிரியைகள் ஆண்டின்றும். ஆகையினால் சுழுப்தியின்கண் மோக்ஷத்தின் சாதனமாய வான்மஞான முண்டாவதில்லை. சுழுபதியின்கண் தன் சொரூபத்தின் ஞானமுளது. இக்காரணததாலே ஆன்ம சாக்ஷாத்கார மின் ஏுதலினாலும் சாட்சி பாஸியமாய பொய்யவித்தை யிருத்தலினாலும் துயில் கனவடிவமாம். இங்ஙனம் சுருதியின்கண் கூறபபட்டிருக்கின்றது. ஏனெனின், யாண்டு பிரபோதமின்றோ! பொய் வஸ்துவின் காட்சியுளதோ! அது கனவாம் என முன்னே கூறிய கனவினிலக்கணம் துயிலின்கண்ணும் பொருந்துகின்றது. இநதபபிரகாரம் நனவு, கனவு, துயில் என்னும் மூன்றுகனவை யுடையவரும் நேத்திரம், ஹிருதயகமலம், ஹிருதயகமலததினுள் ளாகாசம் என்னு முக்கிருகங் களை யேனும், தந்தைபின்சரீரம், தாயின் சரீரம், மீண்டுந் தநதையின் சரீரம, என்னு முக்கிருகங்களையேனு முடையவரும் இச சரீரவடிவத துவாரவதீபுரியின் கண் இருபபவரும், தேகாதியின்கண் யானெனதென்னு மபிமானமுடையவரும, யானெனதென்னு மபிமானவடிவ ஜன்மத்தை யடைந்தவருமாய பரமாத்மதேவ ரானவர் குருவினுடைய கிருபையினால் அஞ்ஞானவடிவ நித்திரையினின்றும் விழித்து இத்தகைய விசாரஞ் செய்வாராயினர்:—உண்மையாய் உற்பத்தியின்றிய பரமாத்மாவாகிய யான் எப்பஞ்சபூதங்களினின்றும் விசேஷ ரூபமாய் வெளிபபட் டேனோ! அவ் விவ்வாகாசாதி பஞ்சபூதங்கள் பரமாதமாவாய என்னுடைய வுபாதிவடிவமா யுறபன்னமாயிருககின்றன. இபபஞ்சபூதங்க ளெததகையன வெனின், சரீராதிபேதத்தா லநநதவிதமாம. சுருககமாய் இருவிதமாம; சில ஜட ரூபமாம், சில அஜடரூபமாம். அவற்றுள்; போககியரூபமாய்ச சடமாம், போகதா ரூபமா யஜடமாம.

இபபோது பூதஙகளினிடத்தே போககியத்தன்மையையும், போக்துருத் தன்மையையும் வெளிபபடையாய் நிரூபிபபாம:—ஆண்டுப பாஹ்ய வாகாசாதி பஞ்சபூதம் ஸ்தாவரசங்கமததாற் கேவல போக்கியமாம். விருக்ஷாதி ஸ்தாவரங் கட்கும், மநுஷியாதி சஙகமங்கட்கும், பரஸ்பர போக்துரு போககியததன்மை நியமமாயின்றும். ஓரொருகால் ஸ்தாவரம் போக்தாவாம, ஜங்கமம் போககிய மாம்; மற்றொருகால் ஸ்தாவரம் போக்கியமாம்; ஜங்கமம் போகதாவாம. யாண்டு யாது உபகாரமாமோ அது போககியமாம். எதன்பொருட்டு உபகாரஞ்செய் யுமோ அது போக்தாவாம. மநுஷியாதிகள் ஜலததின் றெளிததல வடிவ வுப காரத்தைத தருவின்பொருட்டுச செய்கின்றனர்; ஆகையினால் மநுஷியாதி ஜங்க மங்கள் போக்கியமாம். தருவாதி தாவரங்கள் போக்தாவாம். தரு முதலியன நிழல், காஷ்டம், பலம் முதலியவற்றின் பிராபதிவடிவ உபகாரத்தை மநுஷியாதி களின் பொருட்டுச செய்கின்றன. ஆகையினால் மநுஷியாதி ஜங்கமங்கள் போக்தா வாம். தரு முதலிய தாவரங்கள் போககியமாம். இது யாவர்க்குந தெரிநததே யாம். இநதப பிரகாரம் போக்தாவடிவததாலும், போக்யவடிவத்தாலு மிரு வகையாய பிரபஞ்சம் என முன்னர்க் கூறப்பட்டது. இப்போது ஆராய்ந்து நோக்குங்கால சேதனவடிவமாய என்னிடத்திலேயே போக்துருததன்மை, போக் கியத்தன்மை பொருநதுவதாய் எனது அத்விதீயத்தன்மையை உணர்த்துகின் றன. இப்பொருளை நிரூபிபபாம் :—

ஜடவஸ்துக்கட்குப் போக்துருத்தன்மை முக்காலத்திலும் பொருந்துவதில்லை. ஏனெனின், யாது கர்த்தாவாமோ அதுவே போக்தாவாம். ஜடவஸ்துக்கட்குப் போகரூபக்கிரியையின் கர்த்துருத்தன்மையில்லை. ஆகையினால் போக்துருத் தன்மையும் ஜடவஸ்துக்கட்குப் பொருந்துவதில்லை.

ஈண்டிது கருத்தாம்:—

இவ்வஸ்து எனது சுகசாதனம், இவ்வஸ்து எனது துக்கசாதனம் என்னு மிவ்வகையாய ஞானம் போகமெனப்படும். அது சேதனமாய ஆன்மாவின்கண்ணேயே கூடும். ஏனெனின், எல்லா ஜடவஸ்துக்களும் சேதனமாய ஆன்மாவின் சுகசாதனமாம். ஜடவஸ்து ஜடத்தின் சுகசாதனமன்றும். ஆகையினால் போகத்தின் ஆசிரயவடிவ போக்தா ஆத்மாவாம். போகரூபக்கிரியையின் கர்த்தாவும் ஜடவஸ்துவன்றும். ஏனெனின், சுதந்திரன் கர்த்தாவெனப்படுவன். அச்சுதந்தரத்தன்மை ஆன்மாவின் வேறாய ஜடவஸ்துவிற் பொருந்துவதில்லை. ஆகையினால் கர்த்தாவும் ஆத்மாவேயாம். இப்பொருளைப் பூர்வம் நிரூபித்தாம்.

இப்போது ஜடவஸ்து போக்கியமுமன்று மென்னு மிப்பொருளை நிரூபிப்பாம்:—இவ்வஸ்து எனது சுகசாதனம என்னும அந்தக்காண விருத்தியின்கண் ஆரூடமாய பல சேதனத்தன்மையின் ஆசிரயத்வ வடிவ போக்கியத்தன்மையும ஜடவஸ்துவின்கட் பொருந்தாது. கருத்திதுவாம:—சேதன ஜடங்களின் சம்பந்தத்தைச் செய்வதாய அஞ்ஞானமானது விசாரகாலத்தில் நீங்கும். ஆகையினால இவ்வஸ்து எனது சுகசாதனமென்னும அந்தக்காண விருத்தியின்கண் ஆரூடமாய பலசேதன ரூபப்பிரகாசம ஆன்மாவாய யானே யாம்; என்னிற் பின்னமாய் எதுவும் பிரகாச வடிவமன்றும். அந்தக்கரண விருத்தியின்கண் இராநின்ற பிரகாசமும் பரமாத்மாவாய எனது சம்பந்தத்தா லுளது; சுதந்தரமாய் அந்தக்கரண விருத்தியின்கண் பிரகாசமின்றும. எங்ஙனம் சூரியனது பிரதிபிம்பத்தைக் கவர்ந்தே தர்ப்பணமானது சுவா முதலியவற்றை யொளிர்விக்கின்றதோ அந்தத் தர்ப்பணமானது தான்பிரகாச ரூபமன்றுமோ அங்ஙனம புத்தியும் பரமான்மாவின் பிரகாசத்தைப்பெற்று பிரகாசிப்பிக்கும என முன்னர்க் கூறப்பட்டது. ஆகையினால சமஷ்டி வியஷ்டி தேகங்களின் பிரகாசகன் பரமாத்மவாய யானும்; எல்லாத் திருசியங்களுமென் னதீனமாம். எங்ஙனம் மஹா ராஜாவின் சபையின்கண் இராஜாவின் ஆக்ஞையின்றி எப்புருடனும சுதந்திரமாய் வசனிப்பதின்றே அங்ஙனம் பரமாத்மாவாய என்னாலன்றி எத்திருசிய வஸ்துவும சுதந்திரமாய் வசனிப்பதில்லை.

இப்போது ஆத்மாவின் வேறாய எவையும் அநிர்வசநீயமாமென்னு மிப்பொருளை நிரூபிப்பாம:— முப்பரிசசேதமுமற்ற கூடஸ்தனாய என்னிடத்தில் போக்துரு போக்கிய வடிவப்பிரபஞ்சங் கற்பிதமாம். ஏனெனின், பரமான்மாவாய எனது அஞ்ஞானத்தால் சம்பூர்ணமாய ஜகத்து உற்பன்னமாயது. இரஜ்ஜுவின் அஞ்ஞானத்தாற் றோற்றாநின்ற சர்ப்பங் கற்பிதமாமாறுபோல என்னிற் பின்னமாய் எவ்வஸ்துவின் துணிவு முண்டாவதின்றுமென்பது கருத்தாம். சுருதி வசனத்தினாலே பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மை சித்தமாயினும அசம்பாவனை நிவிர்த்தி

யின்பொருட்டு பிரபஞ்சத்தினது வடிவமியாதென ஊகத்தாலும் ஆராயத்தக்க தாம். கருத்திஃதாம்:—சுருதியுங் குருவும் பலாதகாரமாய்ப பிரபஞ்சத்தின் மித்தியாத்தன்மையை என்னை யங்கீகரிக்கச செய்கின்றனவென வாதியின் சித தததிலுள்ள பசசாத்தாபததின் நிவிர்ததியின் பொருட்டு ஊகத்தால் அவசியம பிரபஞ்சத்தின்கண் மிததியாத்தன்மையைச சிததஞ்செய்யவேண்டும்.

ஆண்டுப் பிரபஞ்சத்தின் சொரூபமியாது? நாமரூபககிரியை யென்னும் மூன் றன் கூட்டத்தின் பெயர் பிரபஞ்சமா? அலலது, ஒவவொரு நாமாதிகளின் பெயர் பிரபஞ்சமா? அவறறுள், முதற்பக்ஷம் பொருநதாது; ஏனெனின், அக்கூட்டம் நாமரூபக்கிரியையினின்றும் பின்னமா? அலலது அபின்னமா? அவற்றுள, பின்ன பக்ஷமோ பொருநதாது; ஏனெனின், நாமரூபககிரியையின் வேறாய்க கூட்டத தின் வடிவத்தைக் கண்டிலேம். இரண்டாவதாய அபின்னபக்ஷமும் பொருந தாது; ஏனெனின், ஒவ்வொரு நாமாதிகளினிடததும கூடடவிவகாரமும் பிர பஞ்சவிவகாரமும் உண்டாகவேண்டும, உண்டாவதோ இன்றாம். இபபொருளை தேகத்தின் கண்டனப பிரசங்கத்தில் விஸ்தாரமாய் நிரூபிததேம். ஈண்டு நாம மென்னும் இப்பதத்தால சபததகைக் கவர்நதுகொள்ளல வேண்டும்; ரூபமென்னு மிப்பதததால் இந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயபூத அருததத்தின் கிரக ணஞ் செய்துகொள்ளல் வேண்டும்; கிரியையென்னு மிபபதத்தாற கருமத்தைக் கிரகிக்கவேண்டும்.

இபபோது நாமரூபக்கிரியையின் கூட்டததின் பெயர் பிரபஞசமாம் என் னும் இம்முதற பக்ஷத்தின்கண் வேறு தூஷணங கூறுமபொருட்டு விகற்பிப பாம்:—அநநாமரூபக் கிரியையும் நாமரூபக் கிரியை வடிவமா? அன்றா? அவற் றுள், அந்திபபக்ஷமோ பொருந்தாது; ஏனெனின், நாமரூபக கிரியைக்கு நாம ரூபக் கிரியை வடிவத்தை அங்கீகரியாவிடின் நாமரூபக கிரியைக்கு அபபிரபஞசத தன்மை யுண்டாம். கருத்திஃதாம்:—பிரபஞ்சவடிவ நாமரூபக கிரியையைப பிரபஞ்சத்தின் புறம்பாயுடன்படின், ஒன்றோ வியாகாத தோஷமாம், மற்றொன் றோ சுருதியோடு விரோதமுமாம்.

நாமரூபக் கிரியை நாமரூபக் கிரியை வடிவமாம் என்னு மிம்முதற் பக்ஷமும் பொருந்தாது; ஏனெனின், நாமரூபக்கிரியை யொவ்வொன்றிற்கும நாமரூபக்கிரியா சொரூபத்தன்மையா? அல்லது ஒவ்வொன்றிற்கு மொவ்வொரு ரூபத்தன்மையா? இவ்விரண்டு விகற்பத்தின் தாற்பரிய மிஃதாம்:—ஒரு நாமம் நாமரூபககிரியை வடிவமா? ஒரு ரூபம் நாமரூபக்கிரியை வடிவமா? ஒரு கிரியை நாமரூபககிரியை வடிவமா? அல்லது நாமம் நாம வடிவமா? ரூபம ரூபவடிவமா? கிரியை கிரியை வடிவமா? அவற்றுள், முதற்பக்ஷமோ பொருந்தாது; ஏனெனின், ஒவவொரு நாமாதிகட்கும் நாமரூபக் கிரியையென்னும் மூவுருவத் தன்மையின்கண் அனு பவமின்மை யென்பது முதற் றூஷணமாம். ஒரு நாமம் நாமரூபக்கிரியா ரூப மாய்ப் புலபபடமாட்டாது; அங்ஙனமே ரூபமும் கிரியையும நாமரூபக்கிரியா வடிவ மாய்ப புலபபடமாடடா. ஒவ்வொரு நாமாதிகளும நாமரூபக்கிரியை வடிவ மென்னும் இபபிரதமபக்ஷததில் அநவஸ்தாதோஷத்தைக் காரணமாயுடைய

பிராக்லோபம், விநிகமனுவிரஹம், பிரமாணுபகமம் என்னும் முத்தோடங்களுள. இவ்வெல்லாத் தோடங்களின் கூட்டவடிவ இரண்டாவது தோடமும் பிராப்தமாம.

இப்போது அத்தோடங்களை நிரூபிப்பாம்:—பேதத்தைச் சகிபபதாய அபேதம் தாதாத்மிய சம்பந்தமெனப்படும், அததாதாத்மியம இருவகையாம. ஒன்றோ திரவியத்திறகும் குணததிற்கும், கிரியைக்கும் கிரியாவானுக்கும், ஜாதிக்கும வியக்திகும், அவயவததிற்கும் அவயவிக்கும, விசேஷங்கட்கும நித்திய திரவியங்கட்கும் சமவாய சமபநதம என நையாயிகா அங்கீகரிததுளர். அச்சமவாய சமபநத ஸ்தானத்தில் வேதாநத சாஸ்திரததின்கண் தாதாதமிய சமபநத மங்கீகரிக்கப்பட்டுள்ளது. இத்தலததில் திரவிய குணாதிகளின் அபேதமோ வாஸ்தவமாம்; பேதமோ கறபிதமாம. இவ்வாறதை முன்னரே கூறபபட்டது. முற்கூறிய திரவிய குணாதிகளின் வேறாய இடத்தில மற்றொரு தாதாதமியமாம், அது தூரதேசததின்கண்ணுள்ள பின்ன பின்ன விருக்ஷங்களின் றாதாத்மியம் புருடனுககுப் புலபபடுதலாம். இத்தானததில் விருக்ஷங்களின் பரஸ்பர பேதமோ வாஸ்தவமாம்; அபேதமோ கறபிதமாம. இவவிரு வகையாய தாதாத்மியங் கூறியதால், இப பொருள் துணியப்பெற்றதாம:—நாமரூபகிரியை யொவ்வொன்றிற்கும் முதற்றாதான்மிய சம்பநததாலோ நாமரூபக்கிரியை வடிவத்தன்மையின்றாம், இரண்டாவது தாதாத்மிய சம்பநததாலோ நாமரூபக்கிரியை வடிவத்தன்மையுளது; ஆகையினால், வாசகிநதிரியததின்கண்ணுள்ள நாமத்திற்குப பாகிய கடாதிகளோடு தாதாத்மியத்தின்கண் நாமத்திற்குங் கடாதிகட்கும் பரஸ்பரபேதம் வாஸ்தவமாவதேபோல அபேதங்கற்பிதமாவதேபோல நாமத்தின்கண் நாமததின் தாதான்மியததை யஙகீகரிப்பினும் முதல் நாமததோடு இரண்டாவது நாமததிற்கு வாஸ்தவபேத மங்கீகரிககவேண்டும், அவ்விரண்டாவது நாமததின்கண் மூன்றாவது நாமத்தின் தாதாதமியமும், மூன்றாவது நாமததின்கண் நானகாவது நாமத்தின் தாதான்மியமும் அங்கீகரிக்கவேண்டிவரும், வாவே இவ்வகை யனநத நாமங்களின்றாரையை யஙகீகரிபபின் அனவஸ்தா தோஷமுண்டாம். இவ்வண்ணம் ரூபகிரியைகளினிடத்தும் அனவஸ்தை முதலிய தோஷங்களையறிக.

அனவஸ்தா தோஷததை வாதி யஙகீகரிப்பினோ பிற்பின் நாமங்களினாலேயே அருததததின் ஞானரூபவியவகாரத்தின் சித்தியாம், முன்முன்னுமங்களின் வியர்த்தத்தன்மை வடிவப பிராக்லோபதோஷம் பிராப்தமாம். அநத்த நாமங்களால் விசிஷ்டமாய கடத்தின்கண் எநநாமம கடமென்னும் வியவகாரத்தை யுண்டாக்கியது என்னும் விநிகமனு விரகவடிவ இரண்டாவது தூடணமாம். அநத்த அர்த்தத்தின்கண் ஒரு அர்த்ததின் சாதக யுக்தியை விநிகமனமென்பர், அபாவத்தை விரஹமென்பர். ஒரு வஸ்துவின்கண் அனநத நாமங்களை விஷயஞ் செய்வதாய ஒரு பிரமாணமுமின்றாம், ஆகையினாற் பிரமாணுபகமரூப மூன்றாவது தோஷம் பிராப்தமாம், அபகமமென்பது அபாவத்திற்காம; ஆகையினால் ஒவ்வொரு நாமாதிகளும் நாமரூபக்கிரியை வடிவமென்னும் வாதியின் கற்பனை பிரத்

தியக்ஷாதிப் பிரமாணமும் சுருதிப் பிரமாணமும் அற்றதாம். ஏனெனின், பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் ஒவ்வொரு நாமாதிகளின்கண் நாமரூபக்கிரியை வடிவத்தன்மையைக் கண்டிலேம், சுருதியோ சம்பூரண ஜகத்தை நாமரூபக்கிரியை வடிவமெனக் கூறியிருக்கின்றது, ஒவ்வொரு வஸ்துவிற்கும நாமரூபக்கிரியை வடிவத்தைச் சுருதி கூறவில்லை; ஆகையினால் ஒவ்வொரு நாமாதிகளும் நாமரூபக்கிரியை வடிவமன்றுமென்பது சித்தித்தது.

நாமம் நாமவடிவமாம், ரூபம் ரூபவடிவமாம், கிரியை கிரியைவடிவமாம். இவ்விரண்டாவது பக்ஷத்தின்கண்ணும் முன்னர்க் கூறிய அனவஸ்தாதி தூஷணங்களின் பிராப்தியுண்டாம். ஆகையினால் அசங்கதமாம். அல்லது நாமம் நாமவடிவமாமென்னு மிந்நியமம் பொருந்தாது; ஏனெனின், சுரோத்திர இந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயமாதலின் நாமதத்திற்கு ரூபசொரூபத்தன்மையும் பொருந்தும. இந்திரிய ஜன்னிய ஞானத்திற்கு விஷயமா மர்த்தம ரூபமெனப்படும், இது முன்னர்க் கூறப்பட்டது. நாமம் ஒருகால் நாமவடிவமாம், ஒருகாலோ ரூபவடிவமாம் என்னும் இந்நியமமும் பொருநதாது; ஏனெனின், நாமத்தின் நாமம் சொரூபமாயே புலப்படும், ரூபசொரூபமாய் எக்காலும் நாமம் புலப்படலின்றும். இது கூறியதால் நாமரூபக்கிரியையின் கூட்டம் பிரபஞ்சமன்றும் என முற் கூறிய பக்ஷத்திற்கும் சமாதான முணர்க.

இபபோது வேறு பிரகாரத்தினாலும் பிரபஞ்சத்தின் அநிர்வசநீயத் தன்மையை நிரூபிப்பாம். அவ்வகை யிதுவாம்:—நாமரூபக் கிரியையின் கூட்டம பிரபஞ்சமெனப்படும், ஆண்டு நாமரூபககிரியையின் வடிவின் சித்தி யெபபோதாமோ அபபோது அவற்றின் கூட்டவடிவப பிரபஞ்சம சித்தமாம், அந்நாமரூபக் கிரியையின் வடிவ நிரவசனம் ஆவதின்றும், ஆகையினால அவற்றின் கூட்டவடிவப பிரபஞ்சத்தின் நிர்வசனமும் ஆவதின்றும். இப்பொருளின் சித்தியின்பொருட்டு முதலில் விகறபத்தைச செய்வாம்:—நாமரூபக்கிரியையின் கூட்டததிற்குப பிரபஞ்சமென்று பெயர் என்னு மித்தலத்தில் நாமத்திற்கு யாது வடிவம, ரூபத்திற்கு யாது வடிவம, கிரியைக்கு யாது வடிவம்; அவற்றுள், சபதத்திற்கு நாமமெனப் பெயர் என வாதி சொல்லின் அவ் வாதியை யிது கேட்கவேண்டும், சபதத்தின் சொரூப மியாது, அச் சப்தததின் சொரூபத்தை நீ நிரூபணஞ்செய். கருத் திதுவாம்:—இலக்கணப பிரமாணங்களால் வஸ்துவின் சித்தியாம். சப்தம் நாமமெனப்படும் என்றிவ்விதங் கேவலம் உரையாடன் மாத்திரையானே வஸ்துவின் சித்தி யுண்டாகமாட்டாது; ஆகையினால் சப்தத்தின் சித்தியின் பொருட்டு அச சப்தத்தின் இலக்கணத்தை நீ கூறுதி. ஆண்டு வாதி சப்ததத்தின் இலக்கணத்தை இவ்வாறு கூறின்:—

சங்கை:—சபதத்தை விஷயஞ்செயவதாய சபதஞானங்களின் காரணம் சப்தமெனப்படும். எங்ஙனம் கடத்தை விஷயஞ்செய்வதாய இது கடமென்னும் சப்த ஞானங்க ளிரண்டிற்கும் கடங் காரணமோ அங்ஙனம் சப்தத்தை விஷயஞ் செய்வதாய இது சப்தமென்னும் சப்தஞானங்க ளிரண்டிற்கும் சப்தங் காரண

மாம. இச சபதத்தின் இலக்கணததை அதிவியாபதி தோஷத்தாற் சித்தாந்தி கண்டனஞ் செய்கின்றார்:—

சமாதானம்:—எவ்விலக்கணம் தன்னிலக்கியத்தின்கண்ணு மிருந்து இலக்கியத்தின் வேறாய இலக்கியமல்லாத வஸ்துவின்கண்ணு மிருக்கின்றதோ அவ்விலக்கணம அதிவியாபதி தோஷமுடையதாம, "கோடுடையதுகோ" என்பதுபோல, இவ்விடத்தே கோடு இலககணமாம, கோ இலக்கியமாம். அக்கோடு வடிவ இலககணம் தன்னிலக்கியமாய கோவின்கண்ணு மிருக்கின்றது இலக்கியத்தின் வேறாய மகிடாதி இலக்கியமல்லாததின்கண்ணு மிருககின்றது. ஆகையினால் அககோடு வடிவ இலக்கணம் அதிவியாபதி தோஷத்தோடு கூடியதாம். அததுஷ்ட இலககணத்தால் வஸ்துவின் சித்தியுண்டாக மாட்டாததுபோல, இசசப்ததகின் இலககணமும அதிவியாபதி தோஷமுடையதாம. ஏனெனின், எங்ஙனம இது சபதமென்னு மிவ்வகையாய சபதஞானங்கள் சபதகாரணமாமோ அங்ஙனம மலடிமகன் என்னும் இவ்வகையாய சபதஞானங்களின் காரணம் மலடிமகனுமாம; ஆகையினால இத்துஷ்ட இலககணத்தால சபதத்தின் சித்தியுண்டாகமாட்டாது.

இபபோது வேறு இலககணத்தால வாதி சபததகின் சித்தியைச செய்கின்றான்:—

சங்கை:—சத்திய அருததத்தை விஷயஞ்செய்வதாய ஞானத்தின் காரணம் சபதமெனபபடும. மலடிமகன் உளன் என்னும ஞானததிறகு மலடிமகன் காரணமாம எனினும் மலடிமகனுளன் என்னும ஞானம் சத்திய அருத்தத்தை விஷயஞ்செய்வதின்றாம, மறறோ அசத்திய மலடிமகனை விஷயஞ்செய்கின்றது; ஆகையினால மலடிமகனிடததே இவ்விலக்கணததிற்கு அதிவியாபதியின்றாம். சத்திய அருததத்தை விஷயஞ்செய்வதாய கடமென்னும் ஞானத்தின் காரணம் கடம என்னும் சபதமாம; ஆகையினால் தோடமின்றிய இவ்விலக்கணததாற் சப்ததகின் சிததி பொருநதும். இவ்வகையாய வாதியி னிலக்கணததை அவ்வியாபதி தோஷததாற் சித்தாநதி கண்டனஞ் செய்கின்றார்:—

சமாதானம:—எவவிலககணம தன்னிலககியததின் ஏகதேசத்தின்கண் இருக்குமோ ஏகதேசததின்கண் இராதோ அது அவ்வியாபதி தோஷமுடையதாம். எங்ஙனம் "வெண்ணிறமுடையதுகோ" என்னும இவ்விடத்தே வெண்ணிறம் கோவினிலக்கணமாம; அது நீலநிறக கோவின்கண்ணே இராது, ஆகையினால் அவ்வியாப்தி தோஷமுடையதாமோ அங்ஙனம் சததிய அருத்தத்தை விஷயஞ்செய்வதாய ஞானத்தின் காரணத்வவடிவ இலக்கணமும் பேரியாதிகளின் றொனிவடிவ சப்ததகின்கண் இன்றாம; ஏனெனின், பேரிசபதத்தா லெப்புருடனுககும அருத்தத்தின் ஞானமுண்டாவதின்றாம், ஆகையினால அவ்வியாபதி தோஷததோடு கூடிய இவ்விலக்கணததால் சப்தத்தின் சித்தியுண்டாவதின்றாம்.

இப்போது தொனிவடிவ சபதத்தின்கண் அவ்வியாபதிதோஷத்தின் நிவாரணத்தின்பொருட்டு அன்னிய இலக்கணத்தால் வாதி சபதத்தின் சித்தியைச செய்கின்றான்.

சங்கை:—வர்ணங்களோடு தாதாத்மிய சம்பந்தத்தால் அருத்த ஞானத்தின் காரணத்தன்மை சப்தத்தின் இலக்கணமாம். இவ் விலக்கணத்திற்குத் தொனி வடிவ சப்தத்தின்கண் அவ்வியாப்தியின்றும்; ஏனெனின், தொனியை வர்ணங் களின் அபிவியஞ்சகமென மீமாம்சகர் அங்கீகரித்திருக்கின்றனர். ஆகையினுல் தொனிக்கு வர்ணங்களோடு தாதாத்மிய சம்பந்தமுளது. எவ்வஸ்து எதன் றோற்றததைச செய்விக்குமோ அவ்வஸ்து அதனபிவியஞ்சகமாம். ஈண்டிது கருத்தாம்:—எங்ஙனம் நையாயிகர் மதத்தில் கடத்தன்மை முதலிய ஜாதி யாண்டு முளதெனினும், அந்த ஜாதி யாண்டும் புலபபடுவதின்றுமோ, மற்றோ கடாதி வியக்தியின்கண்ணேயே கடத்தன்மை முதலிய ஜாதி புலபபடுமோ ஆகையினுல் கடாதி வியகதிகள் கடத்தன்மை முதலிய ஜாதிகளின் அபிவியஞ்சகமாமோ அக் கடாதி வியக்திகட்குக் கடத்தன்மை முதலிய ஜாதிகளோடு தாதாத்மிய சம்பந்த முளதோ அங்ஙனம் மீமாம்சகர் வர்ணங்களை நித்தியமென அங்கீகரித்துளர். அந்நித்தியவர்ணங்கட் கெப்போதும் பிரதீதி யுண்டாகவேண்டும் என்னு மிச் சங்கை நிவிர்த்தியின்பொருட்டுத் தொனியை அபிவியஞ்சகமென மீமாம்சகர் அங்கீகரித்துளர். அத்தொனிக்கு வர்ணங்களோடு தாதாத்மிய சம்பந்த மிருக் கின்றது, வர்ணங்கட்கும் வர்ணங்களிற் றாதான்மிய சம்பந்த மிருக்கின்றது. ஆகையினுல் வர்ணங்களோடு தாதான்மிய சம்பநதத்தால் வர்ணங்கட்கு அர்த்த ஞானத்தின் காரணத்தன்மை யிருக்கின்றதுபோல வர்ணங்களோடு தாதாத்மிய சம்பநதத்தால் தொனிவடிவ சப்தத்திற்கும் அர்த்தஞானததின் காரணத்தன்மை யிருக்கின்றது. ஆகையினு லித்தோட ரஹித இலக்கணத்தால் சபதத்தின் சித்தி யுண்டாம்.

இப்போது அவ்வாதியி னிலக்கணத்தைக் கண்டனஞ் செய்யும்பொருட்டுச் சித்தாநதி வாதியைக் கேட்கின்றனன்:—

சமாதானம்:—வர்ணங்களோடு தாதாத்மிய சம்பந்தத்தாற் சமபூரணமனுடர் களின் ஞானகாரணத்தன்மை சபதத்தின் இலக்கணமா? அல்லது எம்மனுட னுடைய இநதிரியத்தோடு சபதத்தின் சம்பந்தமாமோ, அம்மனுடனுடைய ஞானகாரணத்தன்மை சப்தத்தின் இலக்கணமா? அவற்றுள் முதற்பக்ஷம் பொருந்தாது; ஏனெனின், வர்ண தாதாத்மியமுடைய சப்தமும் நியமமாய் எல்லா மனுடர்களின் ஞானகாரணமாகமாட்டாது. இக்காரணத்தாலே செவிட னிடத்தும், துயில்வோனிடத்தும், மூர்ச்சையுடையோ னிடத்தும், பிரமத்த (உன் மத்த) புருடனிடத்தும், நோயாளியினிடத்தும் அர்த்தஞானத்தை சப்தம் உற் பன்னஞ் செய்வதின்றும். ஆகையினுல் இவ்விலக்கணம் அசம்பவதோடமுடைய தாம், எவ்விலக்கணம் தன்னிலக்கியத்தின்கண் இருப்பதின்றுமோ அது அசம்பவ தோட முடையதாம். எங்ஙனம் "ஒற்றைக் குளம்புடையது கோ" வென்னு மிவ் விடத்தே ஒற்றைக்குளம்புவடிவ இலக்கணம் எக்கோவின்கண்ணு மிருப்பதின் றும்; மற்றோ அசுவாதிகளின்கண் இருக்கின்றது அங்ஙனம்சர்வமனுடரின் ஞான காரணத்தன்மை எச்சப்தத்தின்கண் ணு மின்றும்.

வர்ணங்களோடு தாதாத்மியமுடையதாய் எம்மனுடனுடைய இந்திரிய சம் பந்த முடையதாமோ அம்மனுடனுடைய ஞானகாரணத்தன்மை சப்தத்தின் இலக்

கணமாம். இவ்வேறு பக்ஷத்தை யுடன்படினும் முற்கூறிய அசம்பவதோடமின்றா மெனினும், மலையின்கண் வன்னிஞான காரண தூமாதிகளினிடத்தே அதிவியாப்தி வடிவதூஷணத்தால் இவ்விலக்கணத்திற்குங் காப்புப் (ரக்ஷிப்பு,) பொருந்துவதின் றாம். ஈண்டிது கருத்தாம்:—சப்தத்திற்கும் அருத்தத்திற்கும் பரஸ்பரம் தாதாத் மிய சம்பந்தமின்றாம்; தூமமென்னும் வருணங்களோடு தூமவடிவ அர்த்தத்திற் குத் தாதாத்மிய சம்பந்த மிருக்கின்றது. சக்ஷு இந்திரியத்தின் சம்பந்தத்தாற் புருடனுடைய வன்னிஞான காரணத்தன்மை யுடையதும் தூமமாம்; ஏனெனின், தூமத்தை நேத்திரங்களாற் பார்தது மலை முதலியவற்றில் வன்னியின் ஞானம் புருடனுக் குண்டாகின்றது. ஆகையினு விசசப்தத்தின் இலக்கணத்திற்குத் தூமத்தின்கண் அதிவியாப்தி யுண்டாதலின், இவ்விலக்கணத்தாலும் சப்தத்தின் சித்தியுண்டாவதின்றாம்.

இப்போது தூமத்தின்கண் அதிவியாபதி தோஷ நிவிர்த்தியின்பொருட்டு வாதியானவன் அன்னியரீதியாய் அவ்விலக்கணத்தால் சபதத்தின் சித்தியைச செய்கின்றான்:—

சங்கை:—வர்ணங்களோடு தாதாத்மிய முடையதாய் எம்மனுடனுடைய சுரோத்திர இந்திரிய சம்பநத முடையதாமோ அம்மனுடனுடைய அர்த்தஞான காரணத்தன்மை சப்தத்தின் இலக்கணமாம. இவ்விலக்கணத்திற்குத் தூமத தின்கண் அதிவியாப்தி யின்றாம்; ஏனெனின், தூமத்திற்கு முற்கூறிய ரீதியாய் வருணங்களோடு தாதாத்மியமு மிருக்கின்றது. நேத்திர இந்திரிய சம்பந்த முடையதாய்த் தூமம் மனுடர்களின் வன்னிஞான காரணமுமாம். என்றாலும், சுரோத்திர இநதிரிய சம்பநத முடையதாய்த தூமம் ஞானத்தின் காரணமன்றாம், சப்தமோ சுரேத்திரேந்திரிய சம்பநத முடையதாய் ஞானத்தின் காரணமாம். ஈண்டுச சுரோத்திர சம்பந்தம் சுரோத்திர இநதிரிய ஜன்னிய ஞானவிஷயத் தன்மை வடிவமென முணர்க.

இபபோது இச்சப்ததநி னிலக்கணததிற்கும் சபதத்வ ஜாதியின்கண் அதி வியாபதி தோஷத்தாற் சித்தாந்தி கண்டனஞ் செய்கின்றார்:—

சமாதானம்:—முன்னர்த் தூமத்தின்கண் அதிவியாபதி தோஷ நிவாரணத் தின் பொருட்டு இலக்கணத்தின்கண் சுரோத்திர இந்திரியத்தின் சம்பந்தஞ் சொல்லப்பட்டது. அசசம்பநதமும் சப்தசித்தியின் காரணமன்றாம; ஏனெனின், சப்தத்தின்கண்ணுள்ள சப்தத்தன்மைச் சாதிக்கு வர்ணங்களோடு தாதாத் மிய சமபந்தமாம். சுரோத்திர இந்திரிய சம்பநதததால் ஞானகாரணத்தன்மை யும் அச்சபதத்தன்மையின்கண் இருக்கின்றது. ஆகையினால் சப்தத்தன்மைச் சாதியின்கண் இலக்கணத்திற் கதிவியாப்தி யுண்டாம். குணமாய் வருணங்க ளோடு தாதாதமிய சம்பநதமுடையதாய்ச் சுரோத்திர இநதிரிய சம்பந்தத்தால் ஞானகாரணமாவது சப்தமெனின், இவ்வகையாய குணபத நிவேசத்தால் சப்தத்வ ஜாதியின்கண் அதிவியாப்தி யுண்டாகாது; ஏனெனின், சப்தத்வ ஜாதியின்கண்

குணத்வதர்ம மின்றும். என்றாலும், குணத்திற்கு இனி ஆகாச நிரூபணத்தின் கண் கண்டனஞ்செய்வோம், ஆகையினல் இவ்விலககணத்தாலும் சபததின் சித்தி யுண்டாகமாட்டாது.

சங்கை:—இலக்கியத்தின் வேருயவஸ்துவின்கண் இலக்கண மிருப்பின் அதிவியாபதி தோஷமுண்டயதாம். முற்கூறிய இலக்கணம் சப்தத்வஜாதியின் கண் இருக்கின்றதென்றாலும, அசசபதத்வஜாதி இலககியசப்தத்தின் வேறன் ரும்; ஏனெனின், ஜாதி வியத்திகட்குத் தாதாதமியமாம் ஆகையினுற் சபதத்வ ஜாதியும் சபத இலக்கணத்தின் இலககியமாம்.

சமாதானம்:—சபதத்வ ஜாதியைச சபதஸ்வரூபமென அங்கீகரிககினே, சப் தத்தின் சொரூபம் ரூபபாவத்தை யடையும். கருத்திதுவாம:—

இநதிரிய ஜன்னியஞானததின் விஷயமாய அருத்தம ரூபமெனபபடும, இந்த ரூபத்தி னிலககணம சப்ததநன்மை முதலிய ஜாதியின்கண்ணு மிருக்கின்றது. ஆகையினுற சம்பூரண ஜகததிற்கு நாமரூபக்கிரியை வடிவத்தைக கூறுகின்ற சுருதியின்கண் ஜாதியாதிகள் ரூபத்துட் கூறபபட்டிருக்கின்றன.

இப்போது சபதத்வஜாதியைச் சபதரூபமென அங்கீகரிக்கினே, நாமரூபங் கட்குப பேதஞ சித்திக்கமாட்டாது.

சங்கை:—சபதத்வஜாதி சமபூரண சபதங்களி லிருககின்றது; சப்தமோ யாண்டுமிருபபதின்றும்; ஆகையினுற சபதத்வ ஜாதிககும சபததிற்கும பேதம பிரசித்தமாம.

சமாதானம்:—சமபூரண ககாரததின்கண் கத்வஜாதியும், சம்பூரண சப்தத் தின்கண் சபததவஜாதியு மிருககின்றமைபோல சமபூரண கடாதி அருத்தததின் கண்ணும் சபதத்தின் சமபநதமும தோறறுகின்றது; ஆகையினல யாண்டும மனு ஷத்தன்மை சபதத்வ ஜாதியின்கண்ணும் சபததததின்கண்ணும சமானமாம. எவ் வுகையாலும ரூபததினின்றும நாமததின்பேதம சிததியாதென்பது கருத்தாம.

இந்தப பிரகாரம நாமததின் அநிர்வசநீயத தன்மையைச சிததஞசெய்து இபபோது ரூபககிரியைகளின்கண்ணும அநிர்வசநீயத தன்மையைச சிததஞ செய்வாம். நாம மெவ்வகையானுஞ் சித்தமாகாததுபோல ரூபக்கிரியைகளும எவ்வகையானுஞ் சிததியாது; ஏனெனின், அறப முகம பெரிய உதரம என்பது கடத்தின்வடிவம் அது கடத்தின் வேருய்ப புலபபடாததுபோலக கிரியையும ரூபத்தின்வேருய்ப புலப்படுகின்றதின்றும், ஆகையினல ரூபம ரூபத்தின் வேறன் ருவதுபோலக் கிரியையும் ரூபத்தின் வேறன்றும்.

இப்போது நாமத்தின் வேருய் ரூபததின் அநிர்வசநீயத் தன்மையைக் காண்பிபபாம:—சம்பூரண ரூபங்கள் நாமததின் அனுகூல ஞானத்தை யுற்பன் னஞ் செய்கின்றனவாதலின் ரூபம் வாஸ்தவமன்றும், மற்றே விகற்பமாத்திரமாம். சுருதியின்கண்ணும் சாவ விகாரமும நாமமாத்திர மென்று கூறபபட்டுள்ளது. மனுடனிடததே கூர்மையாய முனையோடுகூடிய கோடு அசததிய மாவதுபோல ரூபமும் அசத்தியமாம.

சங்கை:—அசத்திய மலடி மகனிடத்தும் மனுடக்கோடிடத்தும, மலடி மக னெனவும் மனுடக கோடெனவும் ஞானமுண்டாவதில்லை. கடாதி பதாாத்தங் களின் கண்ணே கடம படம் என்னும் ஞானமுண்டாகின்றது, ஆகையினுல் மலடி மகனுககும கடபடாதி ரூபஙகடகும துலலியத தன்மையின்றும.

சமாதானம்:—நரசிருங்கததின்கண்ணும வநதியா புத்திரனிடத்தும நரசிருங் கம் வந்தியா புத்திரன் என உண்டாய ஞான மெதனு னீங்கும்; ஏனெனின், சாங் கிய சாஸ்திரககாரர் வநதியா புத்திராதி அசததிய பதாாத்தங்களை விகற்பஞானத தின் விஷயமாய் அங்கீகரித்துளா; நையாயிகா ஆஹாாய ஞானததின் விஷயமாய் அங்கீகரித்துளர். எததலததில் எவ்வதது வி னததியந்தாபாவமாமோ அததலத தில் அவ்வத்துவின் ஞானம் புருடனுடைய இசசையாலுண்டாயின, அது ஆஹாாய ஞானமெனபபடும. ஜலததின்கண் அக்கினியி னத்தியநதா பாவமிருக்கின்றது ஜலததின்கண் அககினியின் ஞானமெனக குண்டாகுகவென்னு மிசசையுண்டா யின், அவவிசசையினுல ஜலமககினியை யுடையதென்னும ஞானம் புருடனுக் குண்டாம; இநத ஞானததை நையாயிகா் ஆஹாா்ய ஞானமென்பா. இதனுல, கடம்படமென்னும ஞானததிறகு விஷயம கடபடாதிக ளாவதுபோல வந்தியா புத்திரன் நரசிருங்கம என்னு மாஹாா்ய ஞானத்திறகு விஷயம் வநதியாபுத்திரன் நரசிருஙகாதிகளுமாமாதலி னிரண்டும சமானமாம என்பது சிததிததது.

சங்கை:— கடம, வநதியா புத்திரன், என்னும ஞானங்கட்குச சமானத தன்மையிலலை; ஏனெனின், கடாதி ஞானங்களோ இநதிரியத்தாற் ஜன்னியமாம, வந்தியா புத்திர ஞானமோ இநதிரியததாற ஜன்னியமன்றும.

சமாதானம்:—சமபூரண இநதிரியங்களால கடாதிகளின் ஞானங்கள் ஜன்னி யமாமாதலின், அவை வநதியா புததிர ஞானததினும விலக்ஷணமா? அல்லது ஒவ் வோரிநதிரியங்களால ஜன்னியமாதலின் வநதியா புததிர ஞானததினும விலக்ஷண மா? அவறறுள், முதறபக்ஷமோ பொருநதாது; ஏனெனின், கந்தஞானததிறகு ஒரு கிராணேநதிரியங் காரணமாம், நேததிராதி இநதிரியங்கள காரணமன்றும. அஙஙன னம் ரூபஞானததிறகுச சக்ஷு இநதிரியங் காரணமாம, அன்னிய இநதிரியங் காரணமன்றும. கருத்திதுவாம்:—எங்ஙனம் தனததை விருத்திசெய்யு மிசசை யால் வியாபாரததின்கண் முயன்ற புருடனுக்கு மூலதனத்தின் ஹானியுமாமோ அங்ஙனம் வந்தியா புத்திரனினும் விலக்ஷணதத்தன்மை கடாதிகளிற சிததிக்கும் பொருட்டுச சா்வ இநதிரிய ஜன்னியஞான விஷயத்தன்மையை யங்கீகரிக்கில், கந் தாதிகட்கு வந்தியாபுத்திரத் துல்லியததன்மையே சித்திககின்றது; ஏனெனின், கந் தாதிகளின்கண் சர்வ இந்திரிய ஜன்னியஞான விஷயத்தன்மையின்றும். ஒவ்வோ ரிந்திரிய ஜன்னியஞான விஷயத்தன்மை கநதாதிகளின்கண் ணுளது, அசத்திய நரசிருங்க வநதியா புத்திரனிடத்தி லின்றும். ஆகையினுல் விலக்ஷணமாம். இவ் விரண்டாவது பக்ஷமும் பொருநதாது; ஏனெனின், கநதாதிகளின்கண் ஒவ் வோ ரிநதிரிய ஜன்னியஞான விஷயததன்மை வடிவ விசேஷத்தன்மையை யங்கீ காரஞ் செய்யினே நின்மதத்தில் நரசிருங்காதிகளின் ஞானம் மனவடிவ இந்திரி

யத்தா லுண்டாம். இதன்கண் யாதொரு பிரதிபந்தகமுமின்றாம். இவ் விசேஷத் தன்மையினாலும் வந்தியா புத்திரனிலும் கநதாதிகளின் விலக்ஷணத்தன்மை சித்திக்க மாட்டாதென்பது கருத்தாம்.

சங்கை :—மனத்தால் வந்தியா புத்திரனுடைய ஞானம் உண்டாகாது; ஏனெனின், நேத்திராதி இந்திரியங்களா லன்றி மனம் எந்த ஞானத்தையும் உற்பன்னஞ் செய்யமாட்டாது, நேத்திராதி இநதிரியங்கட்கு வந்தியா புத்திரனோடு சம்பந்தமின்றாம, ஆகையினால், மனத்திற்கு இந்திரியங்களி னபேக்ஷையே வந்தியா புத்திர ஞானத்தின்கண் பிரதி பந்தகமாம்.

சமாதானம் :—சம்பூர்ணஞானங்களின் உற்பத்தியின்கண் இநதிரியங்களி னபேக்ஷயை மனஞ்செய்கின்றதென்னும் நியமமின்றாம்; ஏனெனின், நேத்திரேந்திரியாதிகட்கு விஷயமாகாத சுகதுக்காதிகளின் ஞானம் மனத்தா லுண்டாவதுபோல வந்தியா புத்திர நரசிருங்க ஞானங்கள் மனத்தா லுண்டாவதற்கும் யாதொரு பாதகமுமின்றாம். கருத்திதுவாம : — நேதத்திராதி யிநதிரியங்களா லன்றிச சுகதுக்காதி அனந்த ஞானங்களை மனமுறபன்னஞ் செய்யும்; அந்த மனத்திற்கு இந்திரியங்களாலன்றி வந்தியாபுத்திர ஞானததை யுறபன்னஞ் செய்வதில் யாதொரு பாரமு மின்றாம்.

சங்கை:—மனத்தால் அசத்திய வஸ்துவின் ஞானம் உலகின்கண் பிரசித்தமின்றாம்.

சமாதானம்:—வைரியின்கணுள்ள துக்கம் சுகரூபமாய் வந்தியா புத்திரனைப் போல அசத்தியமாம். அங்ஙனமேனும் அநத வைரியின் றுக்கத்தைச சுகரூபமாயப புருட னுணர்கின்றனன். இது உலகின்கண்ணே பிரசித்தமாம். இஃதொபப அசத்திய வநதியாபுத்திர நரசிருங்கஙகளின் ஞானமனததா லுண்டாம்.

இபபோது லோகபபிரசித்தியினாலும் ரூபம் நாமததினும் வேறன்று என்னு மிப்பொருளை நிரூபிப்பாம: கடாதிய பதார்த்தங்களிற புருடரின் பிரவிர்த்தி யுண்டாம். அந்தப் பிரவிர்ததி இசசையாற சனித்ததாம்; ஏனெனின், இசசையின்றி எவ்வஸ்துவின் கண்ணும் பிரவிர்த்தி யுண்டாகாது, அவ் விசசை ஞானத்தால் ஜன்னியமாம்; ஏனெனின், அன்னியதேசத்தின்கண் இராநின்ற பதார்த்தங்களின் ஞானபாவததால் அபபதார்த்தங்களி னிசசை யுண்டாவதின்றாம். இநநெறியே பிரவிருத்தியின் முன்னர் இசசையின்வாயிலாய்ப் பிரவிர்த்தியின் காரண ஞானம் சபதத்தாலன்றி விசாரமுடைய புருடனுக் குண்டாகாது; மற்றே சப்தத்தை விஷயஞ் செய்துகொண்டு ஞானம் அருத்தத்தை விஷயஞ்செய்யும். ஆகையினால் ஒரு ஞானத்திற்கு விஷயம நாமரூபத்தின் அபேதமே சித்தமாம். இந்தப்பிரகாரம யுக்தியினால் நிரூபணஞ் செய்யின் நாமரூபக்கிரியை சித்திப்ப தில்லையாம்.

இபபோது பஞ்சபூதத்தின்கண் யுகதியினா லநிர்வசநீயத் தன்மையைக் காண்பிபபாம் :—அபபஞ்சபூதம் நாமரூபக்கிரியையின் வேறாய் எத்தானத்தின் கண்ணு மிரா. ஆகையினால் அநிர்வசநீயமாம். அபபஞசபூதத்தின்கண்ணும் பிரதமம் ஆகாசத்தின் வடிவ மியாதென நீ அங்கீகரிக்கின்றனை ?

**சங்கை:**—அவகாச சொரூபம் ஆகாசமாம். இது எல்லா வுலகருக்கும் பிர சித்தமாம்.

**சமாதானம்:**—அவகாசசொரூபம் ஆகாசமென நீ கூறுவதால், ஆவரணாபாவத் தின் அதிகாணம் ஆகாசமாம் என்றாகாசத்தி னிலக்கணம் சித்தமாம். அவ்வில் விலக்கணம் வந்தியாபுத்திரனிடத்திலு மிருக்கின்றது. ஆகாசத்தின்கண் ஆவா ணாபாவ மிருப்பதுபோல வந்தியா புத்திரன்கண்ணும் ஆவரணாபாவ முளது. அசத்திய வஸ்துவின்கண்ணும் அபாவாதி காணத்தன்மை சாஸ்திரத்தின்கண்ணே கூறப்பட்டிருக்கின்றது. ஆகையினுல், ஆகாசத்திற் கவகாசசொரூபம் உன்னு லங் கீகரிக்கபபட்டதுபோல வந்தியாபுத்திரன் அவகாச சொரூபமென அங்கீகரிக்கப படாததேன் ? பின்னேயோ வந்தியாபுத்திரனுககும் அவகாச சொரூபமோ பொருந் துகின்றது. ஆகாச இலக்கணத்திற்கு வநதியாபுத்திரனிடத்தில் அதிவியாபதி யுண்டாகின்றதாதலின், இத்துட்ட இலக்கணத்தால் ஆகாசத்தின் சித்தியுண்டாக மாட்டாதென்பது கருத்தாம்.

**சங்கை:**—யாது சப்தகுண முடையதாமோ அவகாச சொரூபமாமோ அது ஆகாசமெனப்படும். வந்தியாபுத்திரனிடத்தில முற்கூறிய நெறியே அவகாச சொரூ பத்தன்மை யுளதெனினும், சப்தகுண மதன்கண் இன்றும்; ஆகாசத்தின்கண் சப்தகுண முளது. ஆகையினுல் வநதியாபுத்திரனினும் ஆகாசத்திற்குப் பேத முளது. ஆகாசத்தி னிலக்கணத்திற்கு வந்தியாபுத்திரனிடத்தி லதிவியாபதியின் றென்பது கருத்தாம்.

**சமாதானம்:**— சபதகுணத்தினுலும் வந்தியாபுத்திரனினும் ஆகாசத்தின் பேதம் சித்தமாவதின்றும; ஏனெனின், அச்சபதகுணம் ஆகாசவடிவ குணியி னின்றும் பின்னமா ? அபின்னமா ? அவற்றுள, முதலாவதாய பின்னபக்ஷமானது பொருந்தாது, ஏனெனின் ! கடத்தினின்றும படம் வேறுடாதலின் கடத்திற்குப் படம் குணமன்றும். அஃதொப்ப ஆகாசவடிவ குணியினும சபதகுணத்தைப் பின் னமாய் உடன்படினே,' ஆகாசத்திற்குச் சபதங் குணமாகாது. சப்தகுணம் ஆகா சத்தினு மபின்னமாம் என்னு மிரண்டாவது பக்ஷமும பொருநதாது ; ஏனெனின், கந்தகுணத்திற்குக் கந்தத்தினு மபேதமுளது, ஆண்டுக் கநததிற்குக் கந்தகுண முளதென எவருங் கூறுவதில்லே. அதுபோல ஆகாசத்தினும் அபேதம் சபதகுண மென அங்கீகரிக்கினே, ஆகாசத்திற்குச சபதகுணம் என்னு மர்த்தத்தின் சித்தி யுண்டாகமாட்டாது. சபதத்திற்கும் ஆகாசத்திறகும் கற்பிதபேத மங்கீகரிக்கின் குணகுணீ பாவம் பொருந்துமெனினும், எங்ஙன மியக்கனே அங்ஙனமே அவனுக் குப் பலியென்னும் நியாயத்தாற் கற்பிதபேதம கற்பித ஆகாசத்தையே சித்தி செய்யும், கற்பிதபேதத்தால் வாஸ்தவ ஆகாசத்தின் சிததியுண்டாகாது.

**சங்கை:**—குணத்திற்கும் குணிக்கும் தாதாத்மிய சம்பநதமுண்டாம். பேதத் தைச் சகிப்பதாய அபேதம் தாதாத்மிய மெனப்படும், அபபேதாபேத மிரண்டும் வாஸ்தவமா மாதலின், வாஸ்தவபேதத்தால் வாஸ்தவ ஆகாசத்தின் சித்திகூடும்.

சமாதானம்:—பகையாய இயற்கையோடுகூடிய பதார்த்தங்கள் ஓரிடத்தில் இரா, உஷ்ணஸ்பரிசமும் சீதஸ்பரிசமும் ஒருவஸ்துவின்கண் இரா, இவ்வகையாய யுக்தியோடுகூடிய புத்திரூப நேத்திரத்தால் சமானசத்தமுடைய ஆகாயத்தின் பேதமும அபேதமும் யாண்டுங் கண்டதில்லையாம். துராக்கிரகத்தால் வாஸ்தவ பேதாபேதங்களை யங்கீகரிக்கின், முற்கூறிய பேதபக்ஷத்தின்கண்ணும் அபேத பக்ஷத்தின்கண்ணும தோஷம பலாத்காரமா யுண்டாமாதலின் வாஸ்தவபேதமும் அபேதமும ஒரு வஸ்துவின்கட் பொருந்தா. அல்லது பேதாபேதத்தால் வாதி குணகுணீ பாவத்தைச் சித்தஞ்செய்யின், அந்தப பேத அபேதங்களின் சொரூபத்தை ஆராயின் சித்தியாது; ஏனெனின், சப்தாதிகுணத்தின் ஆகாசாதி குணியின் பேதமும அபேதமும் வாதி யுடன்படின், அவனிடத்தில் கேட்கவேண்டும்:— அந்தப பேதம அபேதமென்னும சப்தம ஆகாசாதி வஸ்துவினும அபின்னமா? அல்லது பின்னமா? அவற்றுள், முதலாவதாய அபின்னபக்ஷமோ பொருந்தாது; ஏனெனின், பேதாபேதங்களை வஸ்துவின் வடிவமென உடன்படின், இது பின்னம இது அபின்னம இவையிரண்டு வஸ்துக்கள் என்னு மிவ்வகையாய கூற்று அசங்கதமாம். கருத்திதுவாம:—கடகடத்தைக் கொண்டுவா படபடத்தைக் கொண்டுவாவென இவ்வகையாய சப்தத்தை எத்தானத்தின்கண்ணும அறிஞன் உச்சாரணஞ் செய்வதில்லை; ஏனெனின், இச்சப்தம புனருத்தி தோஷத்தோடு கூடியதாம, (ஒருதரம உச்சாரணஞ்செய்த சப்தத்தை மீண்டும உச்சாரணஞ்செய்தலுக்குப புனருத்தியெனபபெயராம. அல்லது கூறியது கூறலாம்) இதுபோல, பேதாபேதங்களை வஸ்துவின்சொரூபமென அங்கீகரிக்கின், இக்கனி தருவினின்றும் வேறும், இக்கடம் மண்ணினும் அபேதமாம், இவை யிரண்டு வஸ்துக்கள் என்னு மிக்கூற்றின்கண்ணும் புனருத்தி தோஷமுண்டாம, ஆகையினால பேதமும அபேதமும வஸ்துவின் சொரூபமன்றாம. பேதமும் அபேதமும வஸ்துவினின்றும பின்னமாம என்னும இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது; ஏனெனின், பேதமுடையதைப பின்னமென்பர். பேதமும அபேதமும வஸ்துவினின்றும பின்னமாம். இதனால் வஸ்துவின் பேதமுடையது பேதமு மபேதமுமாமெனச் சித்தித்தது. ஆண்டு இரண்டாவது பேதத்தின்கண் மூன்றாவது வஸ்துவின் பேதத்தை யங்கீகரிக்கின், மூன்றாவதின்கண் நான்காவதுபேதம என இவ்வகையாய்ப பேதத்தின்றாரையை யங்கீகரித்து அனவஸ்தா தோஷமுண்டாம். இத்தோஷத்தின் நிவிருத்தியின் பொருட்டும பிரதமபேத அபேதத்தின் சித்தியின்பொருட்டும் இரண்டாவது பேதம வஸ்துவின் வடிவமெனக் கூறின், இந்த நின்வசனம கொக்கைக்கட்டல் போலாம். கொக்கைக்கட்ட இச்சித்த ஒரு புருடன் இந்தவிதமான உபாயத்தைச் சித்தத்தின்கண்ணே சிந்தித்தனன்:—மீனிடத்தே சித்தத்தை நிலைக்கவைத்து வெயிலி லிராநின்ற கொக்கின் றலையில வெண்ணெயை வைப்பனேல் அவ்வெண்ணெய் சூரியனுடைய வெயிலினால இளகி இக்கொக்கின் நேத்திரத்தின்கண் விழும, அவ்வெண்ணெய் விழலாற குருடாய கொக்கை யான் கட்டிவிடுவன் என மனதில் நினைந்து அவ்வண்ணமே உபாயஞ்செய்யின், அப்புருடனுடைய உபாயம் வியர்த்தமாமன்றோ? ஆம ஏனெனின், கொக்கி னண்மையிற் சென்றாலன்றி யதன்

சிரத்தின்கண் வெண்ணெயை வைத்தல் முடியாதாம், அதனண்மையிற் (அதன் சமீபத்தில்) சென்றபோதே அதனைக் கட்டுதல்கூடும். இதுபோலப பிரதம பேதா பேதங்களை வஸ்துவின் வேறென அங்கீகரித்து அவற்றின் சித்தியின்பொருட்டுக் கற்பனை செய்யப்பட்ட இரண்டாவது பேதத்தை வஸ்துவின் வடிவமென அங்கீ கரிபபதிற் கேவலம் வியர்த்தப்பிரயாசமாம். ஆகையினுற் சப்தகுணத்தின் சித்தி யெவ்வகையாலு மாவதின்ரும். சப்தத்தின், அசித்தியாயின் ஆகாசத்திற்கு வந்தியா புத்திரனிலும் விலக்ஷணத்தன்மை சித்திக்கமாட்டாது.

ஆகாசத்தின் சப்தகுணம் யுக்தியினுற் சித்தமாகாததுபோல வாயுவின் ஸ்பரி சகுணம், அககினியின் ரூபகுணம், ஜலத்தின் இரசகுணம், பிருதிவியின் கந்த குணம் என்பனவும் முற்கூறிய நெறியே சித்தியாதாம். அந்த ஸ்பரிசாதி குணங் களி னபாவத்தால் வாயுமுதலிய பூதங்கட்கும் வந்தியாபுத்திர சமானத்தன்மை யுண்டாம். அல்லது அவகாசத்தைக் கொடுப்பது ஆகாசமாம், ஸ்பரிசத்தைச் செய்வது வாயுவாம, அன்னுதிகளைப பாகஞ்செய்வது அக்கினியாம, தாகத்தை நிவாரணஞ்செய்வது ஜலமாம், உலகரைத் தாரணஞ்செய்வது பிருதிவியாம். இவ் வகையாய இலக்கணம் ஆகாசாதிகட்கு லோகபபிரசித்தமாம். இவற்றினுலும் ஆகாசாதிகளின் சித்தியாவதின்ரும்; ஏனெனின், அவ்வாகாசாதி பஞ்சபூதங்கள் எல்லா வுலகரின்பொருட்டு அவகாசாதிகளைக் கொடுக்கின்றனவா? அல்லது யாதாவ தொரு பிராணியின்பொருட்டுக கொடுக்கின்றனவா? அவற்றுள், முதறபக்ஷமோ அசம்பவதோஷத்தோடு கூடியுள்ளது; ஏனெனின், வாதபித்தாதி தாதுக்களின் குறைவு மிகுதிகளால் ஜடபாவததை யடைந்துள்ள பிராணிகட்கு ஆகாசம் அவகா சஞ்செய்வதின்ரும, வாயு ஸ்பரிசத்தைச் செய்வதின்ரும், அககினி பாகாதிகளின் காரணமுன்ரும், ஜலம் அவற்றின் தாகத்தை நீக்குவதின்ரும், பிருதிவி தாரணை செய்வதின்ரும், இந்தப் பிரகாரம் அன்னிய தர்மங்களிடத்தும் யாண்டும அநுக மாபாவமுளது. ஆகாசாதிபூதங்கள் யாதாவதொரு பிராணிக்கு அவகாசாதிகள் கொடுக்குமென்னு மிரண்டாவதுபக்ஷ மங்கீகரிப்பதால், ஆகாசாதிபூதங்கட்கு மித்தியாத்தன்மையே சித்திக்கும்; ஏனெனின், சொப்பன பதார்த்தங்கள் எக் காலத்தின்கண் புலப்படுமோ அக்காலத்தின் கண்ணுள; புலபபடுவதற்கு முன் னும் பின்னும் இல்லையாம், ஆகையினுல் மித்தையாம். அஃதொப்ப ஆகாசாதி பூதமும எவ்வெப புருடனுக்குப புலப்படுமோ அவ்வப் புருடனுடைய பிரதீதி காலத்தின்கண்ணுண்டு; புலப்படுவதற்கு முன்னும பின்னுமில்லையாம்; ஆகையினுல் மித்தையாம். • ஆகாசாதி பஞ்சபூதங்களே மித்தை யாங்கால் அப்பூதங்களின் காரியமாய பிரபஞ்ச மெங்ஙனஞ் சத்தியமாம்; மற்றே அந்தப் பிரபஞ்சமும் அசத்தியமேயாம். அசத்திய வநதியா புத்திரனுடைய புத்திரனும் அசத்தியனே யாவன், சத்தியனுகமாட்டான்; அதுபோல அசத்திய பஞ்சபூதங்களின் காரியப் பிரபஞ்சமும் சத்தியமாகமாட்டாது. ஆகையினுல் ஆன்மாவின் வேறுய பஞ்ச பூதமும் அதன் காரியப் பிரபஞ்சமும் வந்தியாசுதனைப் போன்று அசத்திய மெனச் சித்தித்தது.

இப்போது ஆகாசாதிப் பிரபஞ்சத்தின் காரணமாய மாயையின் அசத்திய ரூபத்தன்மையை நிரூபிப்பாம்:—ஆண்டுக் காரியப் பிரபஞ்சமானது மாயையினாலன்றிச சித்தியாதென்னும அநுபவத்திவடிவ அருத்தாபத்திப் பிரமாணத்தால் மாயையின் சித்தியாமா? அல்லது சுருதிப பிரமாணத்தால் மாயையின் சித்தியாமா? அல்லது அனுமானப பிரமாணததால் மாயையின் சித்தியாமா? அவற்றுள, முதறபக்ஷம பொருநதாது; ஏனெனின், அசததிய வந்தியாபுத்திரனுடைய உற்பத்தி மாயையினாலும் உண்டாவதில்லையென முற்கூறிய நெறியே பிரபஞ்சம அசத்தியமாதலின், அநதப பிரபஞ்சத்தின் உற்பத்தி மாயையினாலும் சம்பவிப்பதின்றாம்.

சங்கை:—உலகின்கண் அசததியத்திற்கும் மாயையால் உற்பததி காணப்படுகின்றது. பூமியின்கண் இராநின்ற மாயாவியாய நடன் தன் மாயையினால் ஆகாசத்தின்கண் இராநின்ற அசத்தியமாகிய தன்னுடைய வேறு வடிவத்தைக் காண்பிப்பன். அதுபோல அசததியப பிரபஞசத்திற்கும மாயையால உற்பததி பொருந்தும்.

சமாதானம்:—அததலததின்கண்ணும் நிமித்தகாரணரூப மாயையால் சததிய மாயாவி புருடனுக்கே நாநாரூபமாய்ப பிராதுர்ப்பாவங் கண்டேம. கருததிதுவாம:—ஆகாசததின்கண் இராநின்ற வடிவததிற்குப பரிணாமி யுபாதான காரணம் மாயையன்றாம, மற்றோ மாயையின் விஷயமாய நடனுடைய ஆன்மாவே அவ்வவ் வடிவமாய்த் தோற்றுநிற்கும. ஆகையினால அசததிய வஸ்துவின் உற்பததியின்கண் மாயை யாண்டும் சமர்த்தமாதலைக் கண்டிலேம. இககாரணத்தால மாயை பரதநதிரமாம்; சுதந்திரமன்றாம்.

மாயை சுருதிப பிரமாணததாற சித்தமாமென்னு மிரண்டாவது பக்ஷமும பொருந்தாது; ஏனெனின், மாயைககுச சகததின் உற்பததி, ஸ்திதி, நாசகாரணத தன்மையைச சுருதி வாககியங்கள் கூறி யிருககின்றன வென்றாலும, அநதச சகத்தின் காரணததன்மை மாயைககின்றாம; மாயை தானே அசததியமாம. அசததிய மெதற்கும் காரணமும காரியமுமன்றாம. மாயையினாற சகத்துற்பத்தியைப போதிககும சுருதிக்கு அததுவிதீயப் பிரஹ்மததை யறிவிப்பதிற தாற்பரியம், மாயையைப போதிப்பதிற கருததின்றாம; ஏனெனின், பயனோடுகூடிய அருததத்தைச சுருதி போதனஞ் செய்யும், அந்தப் பயனுடைய அடைவு அததுவிதீய ஆன்மாவின் ஞானததாலாம; மாயையின் ஞானததா லாகாது.

மாயை யனுபவத்தாற் சித்தமாமென்னும் இம்மூன்றாவது பக்ஷமும பொருந்தாது; ஏனெனின், எககாலத்தில் அவிவேகி புருடன் தன்னுடைய சச்சிதாநந்த சொரூபததை யனுபவியானோ, அக்காலத்தின்கண் இப்புருடன் மாயையால் அஞ்ஞானியென்னு மிவ்வகையாய அபரோக்ஷ ஞானத்தின் விஷயமா யங்கீகரிப்பன். உறங்காநின்ற பாலகன் தன்னுடைய தேகத்தை இராக்கதனென நினைந்து பயத்தை யடைவன், அதுபோல் ஆநந்தசொரூப ஆன்மாவும் சத்துச சித்தாய தன்னுடைய சொரூபத்தை மறந்து ஆன்மசொரூபததை மறைப்பதாய மாயையைத் தானே கற்பிக்கின்றது. கருத்திதுவாம்:—விசாரமின்றிய பிராநத

புருடனுடைய அனுபவத்தினலேயோ மாயையின் சித்தியுண்டாகமாட்டாது; ஏனெனின், பிராந்தி ஞானமானது எவ்வஸ்துவின் சித்தியைச் செய்யுமோ அந்த இப்பியின்கண் வெள்ளியும் கயிற்றின்கண் பாம்பும் சித்திக்கவேண்டும்; விசார சஹித அனுபவம் உற்பன்னமாயின் மாயை நிலையாதாம், சூரியனுடைய உதயமாயின் இருட்டானது நிலையாததுபோல. ஆகையினல் மாயை யனுபவத்தாற் சித்தியாது. இந்தப் பிரகாரம் எப்பிரமாணத்தாலும் மாயை சித்தியாதாம். ஆகையினல் அத்துவிதீய ஆன்மாவாய என்னிடத்தில் மாயையின்றும்.

**சங்கை:**—மாயை சைதன்ய ஆன்மாவின்கண் இன்றுமாயின், யான் அஞ்ஞானியென்னும் அனுபவம் எதனை விஷயஞ்செய்யும்.

**சமாதானம்:**—இம்மாயை பரமான்மாவாய என்னிற் பின்னமன்றும், மற்றே எனது வடிவமேயாம். பாலகனுடைய சரீரத்தினும் இராக்கதன் பின்னமன்றும், மற்றே தன்னுடைய சரீரத்தையே இராக்கதனென நினைந்து பாலகன் பயத்தை யடைவன். கருத்திதுவாம்:—உண்மை ஞானத்திற்கு விஷயமாகாத ஆன்மாவின் சொரூபமே மாயை, அஞ்ஞானம், அவித்தை என்னு மிவ்வகையாய சப்தங்களாற் கூறப்படும். ஆகையினல் மாயை சுதந்திரமன்றும்.

**சங்கை:**—மாயை, அவித்தை, அஞ்ஞானம என்னு மிவ்வகையாய சப்த ஞானங்களின் பலத்தால் சைதன்ய ஆன்மாவின் வேறுய்ச சுதந்திரமாயையின் சித்தியேன் உண்டாகமாட்டாது.

**சமாதானம்:**—சப்தஞானங்கள் பிரமாணமாயின், அதன் பலத்தால் மாயையின் சித்தி யுண்டாம்; அந்தச் சப்தஞானங்கள் பிரமாண வடிவமன்றும்; ஏனெனின், வஸ்து அசத்தியமா யிருந்தபோதினும் சப்தஞானங்க ளுண்டாம். இக்காரணத்தினலே அசத்திய வந்தியாபுத்திரனிடத்தே வந்தியாபுத்திரன் என இவ்விதமாய சப்தஞானங்களைக் கண்டுளேம. ஆகையினற் சப்தஞானங்கட்குத் தம முடைய விஷயத்தைச் சித்தஞ்செய்வதிற சாமர்த்தியமின்றும. அவற்றுள், சப்தத்தையோ பூர்வம் நாமவிசாரத்தின்கண் கண்டனஞ் செய்துள்ளேம்.

இப்போது ஞானவடிவ புத்தியைக் கண்டிப்பாம:—அந்தப் புத்தி யாதுவடிவினது என முதலில விசாரஞ் செய்யவேண்டும். கருத்திதுவாம்:—அந்தப் புத்தி போதவடிவமா? அல்லது அபோதவடிவமா? அவற்றுள், அபோதவடிவம புத்தியென்னும் இரண்டாவது பக்ஷம் பொருந்தாது; ஏனெனின், அபோத வடிவமாதலின் கடாதிகள் சுதந்திரங்களன்றும், பரதந்திரங்களாம். அதுபோல அபோதவடிவமாதலிற் புத்திக்கும சுதந்திரத்தன்மை சித்தியாது. புத்தி போதவடிவமாம் என்னும முதற்பக்ஷத்தின்கண்ணும அந்தப் போதம தர்மவடிவமா? அல்லது எல்லாவற்றின் அதிட்டான தர்மிவடிவமா? அவற்றுள், தர்மவடிவம போதமென்னும் முதற்பக்ஷத்தின்கண் போதத்திற்குத் தர்மவடிவத்தன்மை சித்தமாயின், போத வடிவ புத்தி சித்தமாம; ஆயின் விசாரஞ்செய்யினே போதத்திற்கே தர்மவடிவத் தன்மை சித்தியாது. தர்மிவடிவம போதமென்னும இரண்டாவது பக்ஷத்தின்கண்

போதமானது அதிஷ்டான பரமான்மாவாகிய என்னிடத்து அபின்னமாமாதலின் போதவடிவ புத்தி சுதந்திரமாய்ச் சித்தியாது. இவ்வகையாக நிர்ணயிக்கும்பொருட்டு முதலில் போதத்தின் சொரூப விசாரத்தைச் செய்தல்வேண்டும். போத சொரூபத்தின் நிர்ணயஞ்செய்வதே போதஸ்வரூப புத்தியின் நிர்ணயமுமாம். அவற்றுள், தர்மவடிவம் போதமாமென்னும் முதற்பக்ஷத்தின்கண் விசாரஞ்செய்வாம்:—அந்தப் போதம் கடபடாதி விஷயங்களின் தர்மமா? அல்லது ஞானத்தின் காரணமாய சக்ஷுசு முதலிய இந்திரியங்களின் தர்மமா? அல்லது ஆன்மாவின் தர்மமா? அல்லது புத்தியின் தர்மமா? அவற்றுள் விஷயத்தின் தர்மம் போதமென்னும் முதற்பக்ஷம் பொருந்தாது; ஏனெனின், போதமானது கடாதி விஷயங்களின் தர்மமாயினே கடாதிவிஷயங்கள் சேதனமாகவேண்டும்.* யாது யாது போதமுடையதாமோ அது வது சேதனமாம் என்பது நியமம்.

சங்கை:—கடாதிவிஷயங்கள் சேதனவடிவமாமென யாங்கள் அங்கீகரிக்கின்றோம்.

சமாதானம்:—கடாதிகளைச சேதனவடிவமா யங்கீகரிக்கினே கடாதிகட்குத் தமது ஞானத்தி லன்னியாபேக்ஷை வேண்டுவதின்றாம்; ஏனெனின், சேதனம் சொப்பிரகாசமாம். யாது தன் சித்தியின்கண் அன்னியப்பிரகாசத்தி னபேக்ஷையைச் செய்வதின்றோ அது சொப்பிரகாச மெனப்படும். கடாதிகள் தமது சித்தியின்கண் அன்னியப்பிரகாசத்தி னபேக்ஷையைச் செய்கின்றன; ஆகையினால் கடாதி விஷயங்களின் தருமம் போதமன்றாம். அல்லது கடாதிவிஷயங்களின் தருமம் போதமென அங்கீகரிக்கினே போக்துருபோக்கியங்களின் விபரீதத் தன்மையினடைவுண்டாம். கருத்திதுவாம்:—போக்கியவடிவத்தாற் பிரசித்தமாயிராநின்ற கடாதிவிஷயங்கள் போக்துரு வடிவங்களாம், கடாதி விஷயங்களின் வேறாய போக்தா போக்கியவடிவமாம், ஏனெனின், போதவானே போக்தாவாம். இது போக்தாவி னிலக்கணமாம். கடாதிவிஷயங்களைப் போக்தாவெனப் புகலல் அனுபவ விருத்தமாம். ஆகையினாற் கடாதிவிஷயங்களின் தருமம் போதமன்றாம்.

இந்திரியங்களின் தருமம் போதமாமென்னும் இரண்டாவதுபக்ஷமும் பொருந்தாது; ஏனெனின், எது எதனது தர்மமாமோ அஃதெப்போதும் அதன்கண் தோற்றவேண்டும். அக்கினிகருஷ்ணப் பரிசம தர்மமாம். எக்காலத்தினும் அக்கினி உஷ்ணப் பரிசத்தைவிட்டுத் தோற்றுவதின்றாம். அதுபோலப் போதமானது இந்திரிய தர்மமாயினே யாண்டு யாண்டு இந்திரியமுளதோ ஆண்டாண்டு நியமமாய்ப் போதம் பிரதீதியாகவேண்டும். நியமமாய்ப் போதம் பிரதீதியாவதின்றாம்; மறறே ஒவ்வொருகால் இந்திரியமிருந்து போதம் பிரதீதியாகும், ஒவ்வொருகால இல்லாதிருந்தும் பிரதீதியாகும. ஆகையினால், இந்திரியங்களின் தருமம போதமன்றாம்.

இப்போது நியமாபாவத்தை நிரூபிப்பாம:—சபதமிருந்தும் செவிடனது நேத்திர இந்திரியம் சப்தத்தை யறிகின்றதில்லை; அவ்வண்ணமே ரூபமிருநதும குருடனது சுரோத்திரேந்திரியம் ரூபத்தை யறிகின்றதில்லை. எபபோது மனம் சாவதானமின்றோ அப்போது எதிரிலிராநின்ற அல்லது பின்னிராநின்ற புருடனைச் சக்ஷுசு இந்திரியம் அறிகின்றதில்லை. அவ்வண்ணமே சுரோத்திராதி இந்திரியங்களும்

சப்தாதிவிஷயங்களை யறிவதில்லையாம். இந்திரியங்களின் தர்மம் போதமாயினே யாண்டு இந்திரியமுள்ளதோ ஆண்டு அவசியம போதம தோற்றவேண்டும், எல்லாவிடங்களிலும் போதம் பிரதீதியாவதின்றும. ஆகையினு லிந்திரியங்களின் தருமம் போதமன்றும்; மற்றோ போதத்திற் குபகரணங்க ளிந்திரியங்களாம். கருத்திதுவாம்:—அந்தக்கரண விருத்தியின்கண் ஆரூடமாய சேதனத்தின்பெயர் போதமாம், அநத விருத்தி இநதிரியாதிகளினுல் உண்டாம், ஆகையினுல் இநதிரியங்கள் போதத்தி னுபகரணங்களாம; உபகரணமா யங்கீகரிப்பதில் முற்கூறிய தோடஙகளி னடைவுண்டாகாது. அல்லது, இநதிரியங்களிடத்திற் போதமிருப்பதானுல் அஃது அவ்விநதிரியங்களின் தருமமாம, அபபோதம் எவ்விந்திரியங்களினிடத்துந தோற்றுவதின்றும்; மற்றோ கடாதி அருததங்களின்கண் இருப்பதாய்ப போதம் பிரதீதியாகின்றது. கருத்திதுவாம :—ஸ்புரணத்தின் (விளக்கத்தின்) பெயர் போதமாம். அநதப போதம கடம் ஸ்புரணமாகின்றது, படம ஸ்புரணமாகின்றது என்னும இவ்வகையாய அனுபவத்தால் விஷயத்தின்கண் இருப்பதாய்த் தோறறுநிற்கும. அலலது, பரோக்ஷஞானததின் விஷயீபூத இநதிரியத்தின்கண் போதமிருக்கின்றதென்பதின்கண் ஒரு பிரமாணமுமின்றும.

சங்கை:—நையாயிகர்மததில் ஆன்மாவின்கண் இராநின்ற போதம கடாதி பதாரததங்களை விஷயஞ் செய்வதுபோல இநதிரியங்களிடத்தி லிராநின்ற போதமும் கடாதிகளை விஷயஞ் செய்யும். போதத்திறகுக கடாதி விஷயங்களோடு விஷயததன்மை வடிவச சமபந்தம் நையாயிகாகடகேபோல ஈண்டும் பொருந்தும.

சமாதானம்:—அன்னிய வஸ்துவின்கண்ணே யிராநின்ற போதமானது அன்னிய வஸ்துவை யொளிர்விககுமாயின், தாதாதமிய சம்பநதத்தாற கடத்தின்கண் இராநின்ற போதம படத்தை ஏனெளிர்விககவில்லை? இந்திரியங்களின்கண் இராநின்ற போததிற்குக கடாதி விஷயங்களோடு விஷயத்தன்மைச சமபந்தத்தை நீ அங்கிகரித்ததுபோல, கடத்தின்கண் இராநின்ற போதத்திற்குப் படாதிகளோடு விஷயத்தன்மைச சம்பநதமும எதனுலும் நிவாரணமாகாது; ஆகையினு லிநதிரியங்களின் தருமம் போதமன்றும. அலலது நேத்திரேந்திரியத்தின்கண் இராநின்ற போதத்தால கடாதிகளின் விளககத்தை யங்கீகரிபபினே உன்னுடைய மதத்தில் நேத்திரேநதிரியததிற்குக கடத்தோடு சமயோக சம்பநதமும், கடத்தின்கண் இராநின்ற ரூபததோடு சம்யுக்த சமவாயசமபநதமும் சம்பவித்தல்போல கடாதியின்கண் இராநின்ற இரசாதிகளோடும சக்ஷுவிற்குச் சம்யுக்தசமவாய சம்பந்தஞ சமபவிக்கின்றது. ஆகையினுல் கடத்தின் ரூபம் சக்ஷு இந்திரியத்தின்கண் இராநின்ற போதத்திற் பிரதீதியாவதேபோல கடத்தின்கண் இராநின்ற இரசாதிகள் சக்ஷு இநதிரியத்தின்கண் இரானின்ற போதத்திற்கு ஏன் பிரதீதியாவதில்லை? மறறோ பிரதீதியோ ஆதல் வேண்டும. எங்கள் மதத்திலோ இத்தோஷத்தி னடைவின்றும்; ஏனெனின், ரூபாகார விருத்தியின்கண் ஆரூடமாய சேதனவடிவ போதத்திற்குத் தாதாத்மிய வடிவ விஷயத்தன்மைச் சம்பந்தம் ரூபத்தின்கண்ணே யுளது, இரசததினகண்ணே யின்றும; ஆகையினுல்

சக்ஷு இந்திரியத்தால் இரசாதியின் றோற்ற முண்டாகமாட்டாது. இது கூறி யதுகொண்டு இது சித்தித்தது:—அன்னிய பதார்த்தத்தின்கண் இராநின்ற போதமானது அன்னிய பதார்த்தத்தை யொளிர்வியாது; அவ்வண்ண மங்கீகரிப பினே கடத்தின்கண் இராநின்ற போதம் படத்தையும் விளக்கும் என்னும அதிப் பிரசங்க தோஷத்தின் பிராப்தியுண்டாம். கடாதிகளின்கண் தர்ம ரூபமாய்ப் போதமிருபபினே கடாதிகட்குப போததாற பிரகாசங் கூடும, ஆனால கடாதி களின்கண் தர்மரூபமாய்ப் போத மிருபபதின்றாம், கடாதிகளின்தாமம் போதமா யினே கடாதிகள் போகதாவாக வேண்டுமென முன்னர்க் கூறியுள்ளோம். ஆகையினாலிந்திரியங்களின் தருமம போதமன்றாம.

ஆன்மாவின்தருமம் போதமா மென்னும மூன்றாவதுப்க்ஷமும் பொருந்தாது; ஏனெனின், அன்னியததின்கண் இரானின்ற போதம் அன்னியத்தைப பிரகாசி யாது என்னு மித்தோடத்திற் கீண்டும் பிராபதி யுண்டாம். ஆகையினால் ஆன்மா வாய என்னிடத்து தர்மரூபமாய்ப் போதமிராதாம.

சங்கை:—ஆன்மாவின்கண்ணே யிராநின்ற போதமானது கடாதிகளைப் பிர காசியாவிடினும், ஆன்மாவின் பிரகாசததின்பொருட்டு ஆன்மாவின் தாமமாய்ப போதத்தை யாங்க ளுடன்படுகின்றோம்.

சமாதானம்:—ஆன்மாவாய எனது தர்மம் போதமாயின், தர்மத்தைப் பார்க் கினும் தர்மி பின்னமாதலின் போததின் வேறான ஆன்மாவாய எனக்கு ஜடத் தன்மையுண்டாம். அல்லது கடாதிகளைப போதம பிரகாசிப்பதேபோல ஆன்மாவாய யென்னைப் போதம் பிரகாசியாது; ஏனெனின், கடாதி பதார்த் தங்கள் போதத்தின் கட் கற்பிதஙகளாம. ஆகையினால அதிஷ்டான வடிவ போத மவற்றைப பிரகாசிபபிககும. கருத்திதுவாம:—கட உபஹித சேதனததிற் கடங்கற்பிதமாம். எக்காலத்தி லந்தக கரணவிருத்தி நேத்திரவாயிலாய் வெளிப் போந்து கடாகாரமாமோ அக்காலத்தில கட உபஹித சேதனத்தோடு விருத்தி யுபஹித சேதன ரூபபோததிற்கு அபேதமாம; ஏனெனின், சேதனததின்கண் உண்மையாயோ பேதமின்றாம, மற்றோ உபாதியாற் பேதமாம, அவ்வுபாதிகள் எத்துணைப் பின்ன பின்ன தேசத்தின்கண் இருக்குமோ அத்துணைச சேதனத் தைப பேதிக்கும; எககால உபாதிகள் ஏகதேசத்தின்கண் இருக்குமோ அக்கால் அவ்வுபாதிகளையுடைய சேதனஙகளைப பேதியா, மற்றோ ஆண்டுச சேதனங் கட்கு அபேதமாம். மடத்திற்பின்ன தேசத்தின்கண் கடமிருக்குமாயின் கடா காசமும் மடாகாசமும் பேதமாம. மடத்தினுட் கடத்தைக கொண்டுவரின் மடா காசத்தோடு கடாகாசம் அபேதமாம். இந்நெறியே கடவுபஹித சேதனத்தோடு அபேதபாவத்தை யடைந்துள்ள கடாகாரவிருத்தி யுபஹித சேதனரூப போதத் தின்கண் கடாதிகள் கற்பிதங்களாம். அககற்பித கடாதிகளை அதிஷ்டான வடிவ போதம் பிரகாசிபபிக்கும். இவ்விதம ஆன்மாவாய எனக்கு யாதோ ரதிஷ்டான முமின்றாம. மற்றோ யானே என் மகிமையின்கண் இருபபவனாய்ச சர்வ அநான்ம வஸ்துக்கட்கு மதிஷ்டானமாவேன். போதத்தை யான்மாவாய எனது அதிஷ் டானமென அங்கீகரிக்கினே அப்போதமே யான்மாவெனச சித்தமாம்; ஏனெ

னின், சர்வத்திற்கும் அதிஷ்டானம் ஆன்மாவேயாம். ஆன்மாவாய என்னிற் பின்னமாகப போதத்தைப பிரகாச சொரூபமாய் அங்கீகரிக்கின், அப்போதத் தால் ஆன்மாவாய எனது விளக்கம உண்டாகமாட்டாது. புத்திரன் பண்டித னபோதினும் பிதாப பண்டிதனுவதின்றும். ஆகையினல் ஆன்மாவின் தர்மம் போதமன்றுமெனச சித்தித்தது.

புத்தியின் தர்மம் போதமாமென்னும் நான்காவதுபக்ஷமும் பொருந்தாது; ஏனெனின், அந்த புத்தி போதத்தினும் வேறன்றும்; போதத்தோடு தாதாத்மிய பாவத்தையடைந்த புத்தியானது ஞானபதவியை யடையும். அந்தக்காண பரி ணமவடிவ புத்திக்குச் சுயமே ஞானரூபததன்மை யின்றும். போதத்தைப் புத் தியின் தர்மமென உடன்படின் போததின் வேருய புத்தி ஞானபதவியை யடையமாட்டாது. அலலது புத்தியின் தர்மம் போதமாயின் போதத்தின் வேருய புததி யாது வடிவினதாம்? போதத்திற் பின்னமாதலின் போதவடிவமோ அன்றும. மற்றே அபோதவடிவினதெனப புத்தியை யங்கீகரிகக வேண்டிவரும், வரவே அநத அபோதவடிவ புத்தி கடாதிகளைபபோல ஆன்மாவாய என்கண் கற்பிதமாதலின், ஆன்மாவாய எனது அதீனமாம்; சுதநதிரமன்றும. ஆகை யின புததியின் தர்மமும போதமன்றும் எனச சிததித்தது.

இபபோது போதம அநநதமாதலிற புத்தியும போதவடிவமாம என்னு மிவ்வகையாய வாதியின் சங்கையை நீக்கும்பொருட்டும், போததிறகோர் ஆன் மஸ்வரூபததன்மையின் சிததியின்பொருட்டும, போததின் சொரூபத்தின்கண் அன்னிய விசாரத்தைச செய்வாம:—அநதப போதம உலகின்கண் ஒன்று? அநேகமா? அவறறுள், ஒன்றென்னும் முதறபக்ஷம் பொருநதாது; ஏனெனின், ஒரு போதமாயின் சமஸ்காரஙகளின் பேதமும, பிரமாணங்களின் பேதமும, பிரமைஞானம், ஸ்மிருதிஞானம், அப்பிரமைஞானம் என்னுமிவற்றின் பாஸ்பர பேதமும உண்டாக மாட்டா. கருததிதுவாம்:—நாச அவஸ்தையை யடைந்த ஞானததினின்றும் சம்ஸ்காரம் உற்பன்னமாம. அசசம்ஸ்காரங்களின் பேதம ஞானபேததது லன்றிப பொருநதாது. பிரததியக்ஷம, அனுமானம், உபமா னம், சபதம, அருததாபததி, அனுபலபதி என்னும இவ்வாறு பிரமாணங்களின் பேதமும பிரமைஞானத்தின் பேதத்தினலன்றிச சிததியாது; ஆகையினலொரு போதமின்றும். இனிப போததின் ஒருமையே சிததஞ்செய்யுப பெறும் என் றுஉம அவ்வொருமையின் றிடத்தன்மையின்பொருட்டு ஒருமையின் கண்டனத் தின் விகற்பம,முதலிற செய்யபபட்டது.

போதமநேகமென்னும் இரண்டாவது பக்ஷத்தின்கண்ணும் இவ்விசாரஞ் செய்யத்தக்கதாம்:—சொரூபமாயே கடபடங்கட்குப பேதம இருபபதுபோலப் போதங்கட்குப் பரஸ்பரம சொரூபமாய்ப பேதமா? அல்லது கடாகாச மடாகாசங் கட்கு மகாகாசத்தினின்றும் கடமடவடிவ உபாதியினற் பேதமாவதுபோ லுபாதி யாற் போதங்கட்குப பரஸ்பரம் பேதமா? அவற்றுள், சொரூபமாய்ப போதங கட்குப் பேதமென்னும் முதற்பக்ஷம் பொருந்தாது; ஏனெனின், போத சொரூ

பத்தன்மை சம்பூர்ண போதங்களினிடத்திற் சமானமாம். ஆகையினொலொரு போதத்தின்கண் மற்றொரு போதத்தின் பேதமிராது; கடத்தின்கண் கடத்தின் பேதமிராததுபோல; ஆகையினால், சொரூபமாய்ப் போதத்தின் பேதமின்றாம். உபாதியின் பேதத்தாற் போதத்தின் பேதம் என்னு மிரண்டாவதுபக்ஷம் எமக்குச சம்மதமாம்; ஏனெனின், கடமடவடிவ உபாதிகளின் பேதத்தால் ஆகாசம் நாநாவாகமாட்டாது, கடமடவடிவ உபாதியின்கண் இராநின்ற பேதமானது ஆகாசத்தின்கண் ஆரோபணமாம் அஃதொப்ப அபோதவடிவ அந்தக்கரண விருத்தியின் பேதமிருந்தபோதினும் அந்தப் பேதமானது போதத்தின்கண் உண்மையாய் இன்றாம், மற்றை விருத்திவடிவ உபாதியின்கண் இராநின்ற பேதம் போதத்தின்கண் ஆரோபணமாம்; அவ்வாரோபித பேதத்தினாலேயே பிரமைஞானம், அப்பிரமைஞானம், ஸ்மிருதிஞானம் என்னு மிவ்வகையாய பேத வியவகாரமுண்டாம். போதத்தின் உபாதியாய விருத்திவடிவ ஞானத்தின் பேதத்தால் சம்ஸ்காரங்களின் பேதமும் பிரமாணங்களின் பேதமும் பொருந்தும்; கற்பிதமாய கானற் சலத்தினாற் பிருதிவி நனையமாட்டாமைபோல, கற்பித சர்ப்பத்தாற் கயிறு விஷமுடையதாக மாட்டாமைபோல, ஆரோபித பேதத்தாற் போதத்தின்கண் நாநாத்தன்மை சித்தியாது. அல்லது போதங்கட்குப் பரஸ்பர வாஸ்தவ பேத மங்கீகரிக்கின் அவனையிது கேட்கவேண்டும்:—அப்போதங்கள் பரஸ்பர அபேக்ஷை யுடையனவா? அல்லது பரஸ்பரஅபேக்ஷை யற்றனவா? அவற்றுள், அந்தியபக்ஷத்தை யங்கீகரிக்கின், போதங்களின் பேதம் சித்தியாது; ஏனெனின், அன்னியபோதத்தி னபேக்ஷையின்றிய ஒரு போதத்தாலேயே சர்வ வியவகாரத்தின் சித்தியுங்கூடும், அநந்தபோத மங்கீகரிப்பதில் யாதொரு பயனுமின்றாம். போதம் பரஸ்பரம் அபேக்ஷை யுடையதாமென்னும் முதற்பக்ஷமும் பொருந்தாது; ஏனெனின், எப்போதமானது தன் பிரகாசத்தின்பொருட்டு மற்றொரு போதத்தி னபேக்ஷையைச் செய்யுமோ அப்போதம் அபோதவடிவமாம், கடம் தன் பிரகாசத்தின்பொருட்டுப் போதத்தி னபேக்ஷையைச் செய்கின்றதாதலின் அபோதவடிவமாம். இது கூறியதுகொண்டு போதமொன்றெனச் சித்தித்தது.

இப்போது போதத்தின் சொப்பிரகாசத் தன்மையின் சித்தியின்பொருட்டு அன்னியவிசாரத்தைச் செய்வாம்:—அப்போதம் அஞ்ஞாதமாய் (அறியப்படாததாய்ச்) சர்வ வியவகாரத்தின் காரணமா? அல்லது ஞாதமாய் (அறியப்பட்டதாய்க்) காரணமா? அவற்றுள், அஞ்ஞாதமாய்ப் போதம் வியவகாரத்தின் காரணமென்னும் முதற்பக்ஷம் பொருந்தாது; ஏனெனின், ஞானவிஷயத் தன்மையின் அபாவத்தை அஞ்ஞாததை யென்பர். அவ்வஞ்ஞாததை இருவகையாம், ஒன்றை சொப்பிரகாசத்தன்மை வடிவமாம், மற்றொன்றை ஜடத்தன்மைத் தர்மவிசிஷ்ட சேதனசம்பந்தத்தின் அபாவவடிவமாம், அவற்றுள் போதத்தின்கண் சுயம்பிரகாசத் தன்மைவடிவ முதலஞ்ஞாததையைச் சித்தாந்த வடிவமென இனிக் கூறுதும், இப்போது இரண்டாவது அஞ்ஞாததையைக் கண்டிப்பாம்:—கடம் அஞ்ஞாத மாயினும் ஜல ஆதாரவடிவ காரியத்தின் காரணமாவதுபோல இப்போதம் அஞ்ஞாதமாய் எக்காரியத்திற்குங் காரணமன்றாம். போதத்தை யஞ்ஞாத

மென அங்கீகரிக்கினே போதமும் ஜடமாதலின் போதமற்றதாய்க் கடாதிக ளின் சமானமாம். போதம் ஞாதமாய் வியவகாரத்தின் காரணமாமென்னும் இரண்டாவதுபக்ஷமும் பொருந்தாது ; ஏனெனின், ஞானத்தின் விஷயமாய வஸ் துவை ஞாதமெனப்படும்; போததனை விஷயஞ்செய்வதாய இரண்டாவது போ தத்தை யுடன்படினே போதத்திற்குக் கடாதிகளைப்போல அபோதரூபத் தன்மை யென்னும் ஒரு தூஷணமுண்டாம், மற்றொன்றோ அநவஸ்தைவடிவ தூஷணமாம் ; ஏனெனின், முதற்போதம் இரண்டாவது போதத்திற்கு விஷயமாய் வியவகாரத் தின் சாதகமாம், அந்த இரண்டாவது போதம் அஞ்ஞாதமாய் முதற்போதத்தின் சித்தியைச செய்யுமென்றலோ ! அஞ்ஞாத பக்ஷத்தின்கண் எத்துணைத் தோஷங் கள் முன்னர்க் கூறப்பெற்றனவோ அத்துணைத் தோஷங்களுண்டாம. ஆகையினல் அந்த இரண்டாவது போதமும் மூன்றாவது போதத்திறகு விஷயமாயே முதற்போ தத்தின் சித்தியைச்செய்யும்; அம்மூன்றாவது போதம் நான்காவது போதத்திற்கு விஷயமாய் இரண்டாவது போததின் சித்தியைசசெய்யும் ; இவ்வகையே போதங் களின் தாரையை யங்கீகரிப்பதில் அநவஸ்தாதோஷ முண்டாம்.

சங்கை:—போதத்தைச சித்திசெய்வதாய ஒரு போதமின்றும் ; ஆகையி னல் அநவஸ்தாதோஷ முண்டாகமாட்டாது.

சமாதானம்:—போதத்தின் சாதகமாய்ப் போதத்தை அங்கீகரியாவிடில் உலகின்கண் அந்தக(குருட்டு)த்தன்மையின் அடைவுண்டாம்; எவ்வஸ்துவின் சித்தி யும் உண்டாகமாட்டாதென்பது கருத்தாம் ; ஆகையினு லிப்போதம போதமற்ற தன்றும்.

சங்கை:—போதம அஞ்ஞாதமாமென்னு மிபபக்ஷத்தின்கண்ணும் தோ ஷத்தை முன்னர்த்தாங்கள் கூறினீர்கள், ஞாதபக்ஷத்தின்கண்ணும தோஷத்தை முன்னர்த்தாங்கள் கூறினீாகள் ; ஆகையினல் அத்தோஷங்களின் நீக்கத்தின்பொ ருட்டுப் போதத்திற்குச் சுயம்பிரகாசத்தன்மையை யாங்கள் உடன்படுகின்றேம்.

சமாதானம்:—விசாரஞ்செய்து அத்விதீயபோதம் சுயம்பிரகாசமாம் என்னு மிவ்வித அருத்தம் நின்மதியின்கண் ஆரூடமாயது எமக்கும் இஷ்டமாம்; போதத் திற்குச் சுயம்பிரகாசத்தன்மையை யாமும் அங்கீகரிக்கின்றேம்.

சங்கை:—போதத்திற்குச் சுயம்பிரகாசத்தன்மை அங்கீகரிப்பதினல் உங் கட்கு யாது லாபமுண்டாம்.

சமாதானம்:—சுயம்பிரகாச சொரூப ஆன்மாவே யான் ; என்னிற் பின்னம் போதமன்றும்.' கருத்திதுவாம்:—போதமானது ஆத்மாவாய என்னிற் பின்னமா யின்; கடாதிகளைப்போல ஆன்மாவாய யான் திருசியமாவேன். திருசியவஸ்து சுயம் பிரகாச மாகமாட்டாது ; மற்றோ அன்னியத்தாற் பிரகாசியமாம். போதத்திற்கு அன்னியத்தாற் பிரகாச மங்கீகரிப்பதில், முன்னர்க்கூறிய அநவஸ்தாதிதூஷணம் உண்டாம். ஆகையினல், போதம் ஆன்மாவாய என்னின் வேறன்றும். போதத் திற்கு ஆன்மஸ்வரூபத்தன்மை சித்திக்கவே பூமாநந்தத்தின் (வியாபக வடிவ பிரஹ்மாநந்தத்தின்) பிராப்தியே லாபமாம்.

சங்கை:—பூமாநந்தத்தை யடைந்தபோதிலும் அதன் ரக்ஷிப்பின் சிந்தை உங்களுக்குண்டாம்.

சமாதானம்:—அநித்தியவஸ்துவிற்கு ரக்ஷிப்பு வேண்டும்; நித்திய வஸ்துவிற்கு ரக்ஷிப்பு வேண்டுவதின்றாம். சத்தியவடிவ ஆன்மாவாய எனக்கு அநித்தியத்தன்மை யின்றாம். ஆகையினால் ஆன்மாவாய என்னின் அபின்னமாகிய பூமாநந்தத்திற்கும் அநித்தியத்தன்மை சம்பவியாது. (பூமா வென்பது வியாபகத்திற்காம்).

இப்போது ஆநந்தவடிவ ஆன்மாவின்கண் அநித்தியத்தன்மையின் அபாவ சித்தியின்பொருட்டு முப்பரிச்சேதத்தின் அபாவத்தை நிரூபிப்பாம்:—எவ்வஸ்து ஆதியிலும் அந்தத்திலும் இராதோ அவ்வஸ்து அநித்தியமெனப்படும், ஆநந்த வடிவ ஆன்மாவாய யான் முக்காலத்திலு மிருக்கின்றேன், ஆகையினால் ஆநந்த வடிவ ஆன்மாவாய யான் அநித்தியன் அன்றாம்; மற்றோ நித்தியனாம். என்னிற் பின்னமாய் யாதொரு வஸ்துவுமின்றாம்; பின்னையோ யானே யாண்டுமுளன். இது கூறியதுகொண்டு வஸ்துபரிச்சேதத்தின் அபாவம் ஆன்மாவின்கண் காட்டப் பட்டது. எவ்வஸ்து யாதாவதோர் காரணத்தின்கண் இருக்குமோ, அல்லது யாதாவதோர் தேசத்தின்கண் இருக்குமோ, அல்லது யாதாவதோர் காலத்தின் கண் இருக்குமோ அவ்வஸ்து தனது ஆதாரத்தினின்றும் உலகினின்றும் பின்னமாம். அப்பேதத்தால் அவ்வஸ்து அநித்தியத்தன்மையை யடையும், ஏனெனின், "யாது யாது பேதமுடைய வஸ்துவாமோ அது அது அநித்தியமாம்" என்னு மிவ் வகையாய நியமத்தை ஸ்ரீ வியாசபகவான் சூத்திரத்தின்கண்ணே கூறியிருக்கின் றார், கடபடாதி பதார்த்தங்கள் பேதமுடையனவாமாதலின் அநித்தியமாம்; கட படாதிகளைப்போல ஆநந்தவடிவ ஆன்மாவாய யான் எககாரணத்திலேனும் எத் தேச காலங்களிலேனும் (பின்னமாய்) இருப்பதில்லை. கருத்திதுவாம்:—சம்பூர்ண தேசகாலாதிகளாய கற்பிதவஸ்துக்கட்கு ஆநந்தஸ்வரூப ஆன்மாவாய யான் ஆதாரமாம். ஆத்மாவாய எனது ஆதாரம் ஒரு கற்பிதவஸ்துவும் ஆகமாட்டாது, ஆகையினால் ஆநந்தவடிவ ஆன்மாவாய எனக்கு எவ்வகையானும் அநித்தியத்தன்மை யின்றாம்; இது கூறியதால் ஆன்மாவின்கண் தேசபரிசசேத காலபரிச்சேதங்களின் அபாவங் காட்டப்பட்டது. அல்லது தேசம், காலம், அந்தத் தேசத்தா லுற்பன்னமாம் வஸ்து, அந்தத் தேசகாலத்தின்கண் உள்ள (1) சத்திய (2) அசத்தியவடிவ ஜட வஸ்து என்னும் இவ்வனைத்தும் அதிஷ்டானவடிவ ஆன்மாவாய என்கண் இருக்கும், சர்வாதிஷ்டான ஆன்மாவாய யான் எவ்வனும வஸ்துவின்கண்ணு மிருப்பதில்லை; மற்றோ என் மகிமையின்கண்ணே யானிருக்கின்றேன்.

இப்போது நாநாவகையாயபிரபஞ்சத்திற்கு அத்விதீய ஆத்மா ஆதாரமென்னு மிப்பொருளை அநேக திருஷ்டாந்தங்களால் ஸ்பஷ்டஞ் செய்வாம்:—மாலையின் மணிகள் நூலின்கண் இருப்பதுபோல, இத்தூலப் பிரபஞ்சம் சூத்திர ஆத்மாவாய என்கண் இருக்கின்றது. பிருதிவியின் சூக்குமமாய தூளிகள் பிருதிவியின்கண் இருப்பதேபோல, இந்தச் சூக்குமப் பிரபஞ்சம் காரணவடிவ ஈஸ்வரனுய

(1) தோற்றுங் காரியவஸ்து. (2) தோற்றாக் காரணவஸ்து.

என்கண் இருக்கின்றது. கங்காதி நதிகளின் ஜலங்கள் தமது நாமரூபங்களை விட்டொழித்துச் சமுத்திரத்தின்கண் இருக்கின்றதுபோல இவ்வவ்வியாகிருத வடிவ காரணம் பிரஹ்மஸ்வரூபமாய என்னிடத்திருக்கின்றது. அக்கினியின்கண் தூமரூப இருட்டிருப்பதுபோல, சிருஷ்டி காலத்தின்கண் அநித்திய ஜடதுக்க வடிவ இப்பிரபஞ்சம் சச்சிதாநந்தஸ்வரூப ஆன்மாவாய என்கண் இருக்கும். வாயுவின் ஆதாரத்தால் கந்தமும், திருணமும் இருப்பதுபோல, இப்பிரபஞ்சம் ஸ்திதி காலத்தின்கண் ஆன்மாவாய என்கண் இருக்கும். (ஈண்டுக் கந்தமென்பதாற் கந தத்தின் ஆதாரமாய பிருதிவியின் சூக்குமபாகத்தைக் கொள்க.) சரத்து இருது வின்(கோடைக்காலத்தின்) கண் ஆகாசத்தில் லயபாவத்தையடைந்து மேகமிருக்கு மாறுபோல பிரளய காலத்தின்கண் இப்பிரபஞ்சம் பரமாத்மாவாய என்கண் இருக் கும், இவ்விதம் ஆன்மாவிற்குத் தற்பதார்த்த ஈஸ்வரவடிவத்தாலே உலகின் ஆதாரத் தன்மை கூறப்பெற்றது.

இப்போது துவம்பதார்த்த ஜீவரூபத்தன்மையினாலே கர்த்துருத்வ போக் துருத்வாதிப பிரபஞ்சத்தின் ஆதாரத்தன்மையை ஆன்மாவின்கண் மூவிததிருட்டா ந்தங்களாற் காண்பிப்பாம் :—நல்ல புருடனிடத்தில் துஷ்டத்தன்மை கற்பித்தல்போ லும், துஷ்டபுருடனிடத்திற் சாதுத்தன்மை கற்பித்தல்போலும், பாலகனது சரீ ரத்தின்கண் இராக்ஷஸத்தன்மை கற்பித்தல்போலும் ஆன்மாவாய என்கண் சம் பூர்ணசகத்துக் கற்பிதமாம். ஆன்மாவாய யான் எத்தகையனெனின், சுயம்பிரகாச னும் சுகசொரூபனுமாவன். ஆத்மாவாய என்கண் அணுமாத்திரையேனும் துன்ப மின்றாம்.

சங்கை:—ஹே பகவன்! சமபூர்ண ஜகத்தின் ஆத்மா தாங்களேயாம். அந்த ஜகத்தின்கண் இராநின்ற துன்பத்தோடு தங்கட்குச் சம்பந்தம் ஏன் இல்லாமற் போம்?

சமாதானம்:—அதவிதீய ஆத்மஸ்வரூபத்தை விசாரஞ்செய்யின், இச்சகத் தின்கண் ஒருகாலுந் துக்கமின்றாம; ஏனெனின், எவ்வெவ்வஸ்து உற்பன்ன மாமோ அது வது ஜடமாம். துன்பத்தின் உற்பத்தி சர்வப் பிராணிகட்கும பிரசித்தமாம். ஆகையினால் துன்பமும் ஜடமாம. சேதன ஆன்மாவாய என்னிடத் தில் ஜடவஸ்து உண்மையாயின்றாம; ஆகையினால் ஜடதுக்கஸ்வரூபம யானன்றாம்.

சங்கை:—துக்கம் உற்பன்னமாதலிற் சடமா மாறுபோல சுகமும் உற் பன்னம்; ஆதலினாற் சுகமும் ஜடமாம், ஜடவஸ்து உண்மையாயின்றாம என முன்ன ர்த் தாங்கள் கூறினீர்களாதலின் சுகஸ்வரூபத்தன்மையும் ஆன்மாவிற்கு உண்டாக மாட்டாது.

சமாதானம்:—துக்கம் உற்பன்னமாவதுபோல ஆன்மஸ்வரூபமாதலின் சுகத் திற் குற்பத்தியை விவேகிபுருடன் அங்கீகரிப்பதின்றாம்; மற்றோ சுகத்தை நித் தியமென அங்கீகரித்துளன். மூடபுருடனோ ஆநந்தஸ்வரூப ஆன்மாவின் பிரதி பிம்பத்தோடுற்ற அந்தக்கரண விருத்தியைச் சுகரூபமென அங்கீகரித்து அதன் உற்பத்தி நாசங்களை அங்கீகரித்துளன்.

**சங்கை:—** அந்தக்கரணத்தின் விருத்தியே முக்கிய சுகரூபம் ஏனாகாது?

**சமாதானம்:—** அந்தக்கரணத்தின் விருத்தியைச் சுகஸ்வரூபமா யுடன்படல் சுருதி யுக்திகட்கு விருத்தமாம்; ஏனெனின், சுருதியோ வியாபக ஆன்மாவையே சுகவடிவமெனக் கூறுகின்றது; பரிச்சின்ன வஸ்துவிற்குச் சுகரூபத்தன்மையைக் கண்டனஞ்செய்கின்றது, அனுமான வடிவயுக்தியினாலும் விருத்திக்குச் சுகரூபத் தன்மை சித்தியாது; ஏனெனின், யாது யாது உற்பத்தி யுடையதாமோ அது வது சுகஸ்வரூபமன்றாம், உற்பத்தியுடையது துக்கமாதலின் சுகரூபமன்றாம். அது போல அந்தக்கரணத்தின் விருத்தியும் பிரசித்தமா யுற்பன்னமாதலின், சுகஸ்வரூபமன்றாம்.

இப்போது ஆன்ம சாக்ஷாத்காரத்தின் காரணமான வைராக்கியத்தின் உற்பத்தியின்பொருட்டு விஷயஜன்னிய சுகத்தின்கண் துக்கரூபத்தன்மையை நிரூபிப்பாம்:—விஷயத்தினின்று முற்பன்னமாய பலமானது சுகரூபமா? அல்லது அப்பலத்தின் சாதனவிஷயமே சுகரூபமா? அவற்றுள், முதற்பக்ஷமோ பொருந்தாது; ஏனெனின், விஷயத்தினின்றும் உற்பன்னமாய பலமானது முக்காலத்தினும் சுகரூபமன்றாம்; மற்றோ துக்கரூபமாம்.

**சங்கை:—** விஷயஜன்னிய பலம் சுகரூபமன்றாயின், விஷயத்தினின்றும் எனக்குச் சுகமுண்டாயிற்றென்னும் உலகரின் கூற்று அசங்கதமாம். யாவரு மிவ்வண்ணம் கூறுநிற்பாராதலின், விஷயஜன்னிய பலமே சுகரூபமாம்.

**சமாதானம்:—** விஷயத்தினின்றும் சுகரூப பலம் உற்பன்னமாகமாட்டாது; மற்றோ துக்கரூப பலம் உற்பன்னமாம். அத்துன்பத்தின்கண் முன்முன் பிராந்தி ஜன்னிய சம்ஸ்காரங்களால் புருடர்கட்குச் சுகபுத்தி யுண்டாம். அத்துன்பத்தின்கண் சுகபுத்தி மயல்வடிவமாம்; ஏனெனின், அன்னிய வஸ்துவின்கண் அன்னிய புத்தி செய்தலுக்குப் பிராந்தியெனப் பெயராமாதலின், விஷயஜன்னிய பலம் சுகரூபமன்றாம். விஷயமே சுகரூபமாம் என்னும் இரண்டாவதுபக்ஷத்தைக் கண்டிப்பதன்பொருட்டு முதலில் ஸ்திரீவடிவ விஷயத்தின்கண் சுகரூபத்தன்மையின் கண்டனஞ்செய்வாம். அதன் கண்டனமாயின் எல்லா விடயங்களினும் சுகரூபத் தன்மையின் கண்டனமாய்விடும். எல்லா மல்லரினும் பிரதானமாய மல்லனைச் சயித்தாற் சம்பூர்ண மல்லரின் ஜயமாம். அதுபோல எல்லா வுலகரும் எல்லா விஷயங்களினும் அதிகமா பங்கீகரித்துள்ள ஸ்திரீரூப விஷயத்தின்கண் சுகரூபத்தன்மையின் கண்டனமாய் விடுமேல சாவ விஷயங்களினும் சுகரூபத்தன்மையின் கண்டனம் சித்திக்குமாதலின், முதலில் ஸ்திரீரூப விஷயத்தின்கண்ணேயே சுகரூபத் தன்மையின் அபாவம் கூறுதல் வேண்டும். இறந்த தவளை உப்பி வயிற்றினின்றும் வெடித்தால் அது துர்நாற்றமுடையதாம், அதிக மாமசமுடையதாம், உதிரம் மலமூத்திரம் என்பவற்றோடு கூடியதாம், மிருதுவான ஸ்பரிசமுடையதாம், பசையோடு கூடியதாம், இங்ஙனம் ஆராயின் துர்நாற்ற மண்டூகத்தோலினிடத்தும் நாரியின் யோனியின்கண்ணும் கிஞ்சித்மாத்திரமும் பேதமின்றாம்; மற்றோ இரண்டும் சமானமாம். அங்ஙனமாயினும் காமிப்புருடர்கட்கு துர்நாற்ற மண்டூகத்

தோலிலும் நாரியின் யோனியின்கண் சுந்தரத்தன்மை தோற்றும; அது கேவலம் பிராந்தி மாத்திரத்தாலேயே பிரதீதியாம.

உரோமமின்றிய ஸ்திரீயின் இரண்டு தன(ஸ்தன்னிய)ங்களின்கண்ணும் புருடனுடைய இடுபபின் கீழ்ராநின்ற மாமிசபிண்டத்தின்கண்ணும ஆராயின், ஒரு சிறிதும பேதமின்றும். ஆயினும, அவிவேகியாகிய காமிபபுருடனுக்குப் பேதமாய்த் தோற்றும்; அப்பேதங் கேவலம பிராந்தியாலேயே தோற்றும். உரோமங்களின்றிய புருடனுடைய முகத்திலும, ஸ்திரீயினுடைய முகத்திலும் ஆராயின், ஒரு சிறிதும் பேதமின்றும். ஆயினும், அவிவேகியாய காமிபபுருடனுக்கு யாதொரு பேதம் தோற்றுகின்றதோ அது கேவலம மயல்மாத்திரத்தாலேயே தோற்றும். அலிகட்கும், நாரிகட்கும ஆராயின், கிஞ்சித்மாத்திரமும் பேதமின்றும். மயலால் அவிவேகிப் புருடனுக்குப் பேதம் பிரதீதியாம். அங்ஙனம் புருடசரீரத்திலும ஸ்திரீயின் சரீரத்திலும் ஆராயின் கிஞ்சிதமாத்திரமும் பேதமின்றும.

சங்கை:—புருட சரீரத்தின்கண்ணும ஸ்திரீ சரீரத்தின்கண்ணும் பிரசித்த பேதம உலகருக்குத் தோற்றும. அவ்விரண்டு சரீரங்கட்கும் அபேதங்கூறுதல் அத்தியந்தம் விருத்தமாம.

சமாதானம்:—புருட சரீரத்தின்கண்ணும் ஸ்திரீ சரீரத்தின்கண்ணும் தத்துவங்களின் பேதத்தாற பேதமா? அல்லது ஆன்மாவின் பேதத்தாற் பேதமா? அவற்றுள், தததுவங்களின் பேதத்தாற் பேதமென்னும் முதறபக்ஷம் பொருநதாது; ஏனெனின், ஐநது கர்மேந்திரியம், ஐந்து ஞானேந்திரியம, ஐநது பூதம், ஐநது பிராணன், நான்கு அநதக்கரணம் என்னும இருபத்துநான்கு தத்துவங்களின் கூட்டமே ஸ்திரீ புருஷாதிபபிராணி மாத்திரங்களின் சரீரங்களாம. இவ்வார்த்தை முன்னம் தேகத்தின் கண்டனததின்கண் கூறிவநதோம். ஆதலின், தத்துவஙகளின் பேததலால் ஸ்திரீ புருஷாதி சரீரங்களில பேதம் சித்தியாது.

ஆன்மாவின் பேதத்தாற் பேதமென்னும் இரண்டாவதுபக்ஷமும் பொருநதாது; ஏனெனின், ஸ்திரீ புருஷாதி சமபூரணப் பிராணிமாததிரததின் இருதயத்திற் சச்சிதாநநதவடிவ ஆன்மாவாய யானே இருககின்றேன். ஆன்மாவாய யான் அகமென்னும் ஞானத்திறகு விஷயனுவன், அகமென்னும சபதத்திற்கு இலக்கியனுவன், யாண்டும் நிறைந்துள்ளேனுவன், ஆதாரமற்றவனுவன். இவ்விதம நாரி சரீரத்தின்கண்ணும புருட சரீரததின் கண்ணும இருபத்து நான்கு தத்துவங்களும ஆன்மாவும் சமானமாயினும், காம ரூபப பிசாசின் வயமாய்ப் புருடனும் ஸ்திரீயும் இவள் ஸ்திரீயென்றும இவன் புருடனென்றும இவ்வகையாய பேதத்தைக் கற்பித்து வாயினின்றும் ஊறிய எச்சிலைப் பரஸ்பரம் பானஞ் செய்கின்றனர்; வேர்வைமுதலிய மலங்களைக் கொள்ளுகின்றனர். ஆட்டுக்கடாக்கள் பரஸ்பரம் சரீரதாடனஞ் செய்வதுபோலும், ஸ்ரீ மஹாதேவரின் மகிழ்வின்பொருட்டுப பேய்கள் பரஸ்பரம் சரீரதாடனஞ் செய்வதுபோலும், ஸ்திரீயும, புருடனும், காமத்தாலுன்மத்தராய்ப் பரஸ்பரம் சரீரதாடனஞ் செய்வர். இவ்

வகையாய வியாபாரஞ் செய்தபின், அவர்கள் அங்கத்தினின்றும் வீரியரூபமாய் மிகு நகையோடுகூடிய புருடனைபபோலக் காமன் வெளிப்படுவன்; ஒவ்வொருகால் வெளிப்படான். கருத்திதுவாம :—மகாராஜாவின் சபையின்கண் இராநின்ற புருடனுக்கு யாதாவதொரு நிமித்தத்தால் மிகுநகையின் வேகமுண்டாயின், அந்நகையின் வேகத்தை யடக்கமுடியாதவனாய்ச் சபையினின்றும் வெளியே வந்துவிடுவன், அடக்கமுடியினோ சபையின்கண்ணேயே யிருப்பன், வெளியே வரான். அதுபோல சரீரத்துள் இராநின்ற தேவதைகளின் சபையின் மத்தியிலிருக்கின்ற.காமன் ஸ்ரீ மஹாதேவரின் விநோதத்தின்பொருட்டு நாடகத்தைச் செய்வதுபோல நாடகத்தைச் செய்வன். அந்நாடகத்தால் விபரீத * ஆசரணத்தை யடைந்துள்ள ஸ்திரீ புருடர்களைக்கண்டு நகையின்வேகத்தை யடக்கமுடியாதீ காமன் வீரியரூபமாய் வெளிப்படுவன். இது கூறியதுகொண்டு இது சித்தித்தது:—வாயின் எச்சில் முதலியவற்றை அதராமிருதரூபமாய்க் கூறுங் காமசாஸ்திரத்திற்கும் புருடர்களின் வைராக்கிய உற்பத்தியின்கண்ணே தாற்பரியமாம். உலகின்கண் தனது விபரீத ஆசரணத்தைக் கேட்டு அவ்விபரீத ஆசரணத்தாற் புருடன் நிவிர்த்தனுவதுபோல, காமியாய புருடனுடைய விபரீத ஆசரணத்தைக் கூறுதல் வடிவ நகையைச செய்யாநின்ற காமசாஸ்திரத்திற்கும் அவ்விபரீத ஆசரணத்தின் நிவிர்த்தியின்கண்ணே முக்கியக் கருததாம்; அவ்விபரீத ஆசரணத்தின்கண் கருத்தின்றும.

**சங்கை** :—அந்த மைதுனவடிவ தர்மத்தால் சுகத்தின் பிராபதிவடிவ புருஷார்த்தமின்றும்; என்றாலும், காமத்தின் சாந்திவடிவ துக்கத்தின் நிவிர்த்திவடிவம் புருஷார்த்தத்தன்மை யாலே பிராபதமாம்.

**சமாதானம்** :—மைதுனதர்மத்தால துக்கத்தின் நிவிர்த்தியுமாவதின்றும், மாறாய்க் கிலேசத்தின் பிராபதியுமாம். பிசாசாதிவடிவ கிரகத்தோடுகூடிய புருடன் அந்தக் † கிரகபலததால் விபரீதசித்தனுயப பரஸ்பரம சன்முகனுபேனும் விமுகனுயேனும் தன்னுடைய இடைபபாகங்களைத் தாடனஞ்செய்வன்; அதனுலதிகக் கிலேசத்தை யடைவதாற் பிசாசுவடிவ கிரகத்தினின்றும விடுபடானுயினும் அப்புருடன் சுகியாய புருடனைபபோல முன்வியாபாரததை விட்டிருப்பன். அங்ஙனம காமரூபக் கிரகத்தினின்றும் விடுபடாராயினும் காமிகளாய ஸ்திரீ புருடர் பூர்வ வியாபாரத்தினின்றும் நீங்கியவராய்ச சுகிகளைப்போலப புலபபடுவர்; ஆகையினுற் காமத்தின் நீக்கவடிவ துன்பநீக்கமும மைதுனதர்மத்தா லுண்டாகமாட்டாது, நெய் விறகு முதலியவற்றுல் அக்கினியின் சாந்தியுண்டாகமாட்டாது, மற்றோமாறாய் விர்த்தியாம. அதுபோல் மைதுனதர்மத்தால் எப்போதும் காமத்தின் நீக்கமுண்டாகமாட்டாது; மாறாய் அதனுற் காமததின் விர்த்தியாம். அல்லது முதலில் எவ்வஸ்துவின்கண் புருடனுக்கு இச்சையுண்டாமோ அவ்வஸ்துவின்கண் பின்னர் அப்புருடனுக்குப் பிரவிர்த்தியுண்டாம். இது நியமமாமாதலின் இச்சை காரணமாம், பிரவிர்த்தி யதன்காரியமாம். காரணமின்றிக் காரியமுண்டாகாது. ஆதலிற் காரியத்தாற் காரணத்தின், அநுமானமாம். நதிஜலத்தின் விர்த்தியால்

* ஆசரணம்=வழிபாடு=கிரியை. † கிரகம்=பீடை

மழையின் அநுமானமாம். அதுபோல ஸ்திரீ புருடர்கட்குக் காமத்தின் நிவிர்த்தி யுண்டாயிருப்பின், மீண்டும் மைதுனதர்மத்தின்கண் பிரவிர்த்தி யுண்டாதல் கூடாது. நாடோறும் இவர்களின் பிரவிர்த்தி யுண்டாகின்றது. ஆகையினால் இவர்கட்குக் காமத்தின் நிவிர்த்தி யுண்டாகவில்லையென் றுணரப்படும்.

சங்கை:—மைதுனதர்மத்தின்கண் பிரவிர்த்திரூப ஹேதுவால் ஸ்திரீ புருடர்கட்குக் காமத்தின் அநுமானமாமென்ன மைதுனதர்மத்தின் நிவிர்த்திரூப ஏதுவினால் காமாபாவத்தின் அநுமானமும் உண்டாகக்கூடும்.

சமாதானம்:—நிவிர்த்தி ரூபஹேதுவினால், காமாபாவத்தின்சித்தி யுண்டாக மாட்டாது; ஏனெனின், காமத்தினபாவமின்றி நிவிர்த்தியாகாவிடின், நிவிர்த்தி ரூப ஹேதுவினாற் காமாபாவத்தின் அநுமானமுண்டாம். அந்நிவிர்த்தி காமாபாவ மின்றியே உண்டாகுமாதலின், நிவிர்த்திவடிவ வியபிசாரி ஹேதுவால் காமாபாவத்தின் சித்தியுண்டாகமாட்டாது. ஈண்டிது கருத்தாம்:—மைதுனதர்மத்தினின் றும் ஸ்திரீ புருடர்களின் நிவிர்த்தியுண்டாம, அந்நிவிர்த்தி சுகரூபபலத்தின் பிராப்தியால் இன்றாம்; ஏனெனின், பலத்தின் பிராப்தியாயின் மீண்டும் சாதனத்தின் இசசை யுண்டாகமாட்டாது. ஈண்டோ மீண்டும் சாதனத்தின் இச்சையைக் காண்கின்றோம். ஆகையினால் சுகரூபபலத்தின் பிராப்தியால் அந்நிவிர்த்தியின்றாம்; அங்ஙனமே காமாபாவத்தாலும் அந்நிவிர்த்தியின்றாம, மற்றோ எதுபரியந்தம் ஸ்திரீ புருடர்களின் சரீரத்தின்கண் சிரமம உண்டாகவில்லையோ அதுபரியந்தம் மைதுனதர்மத்தின்கண் பரஸ்பரம பிரவிர்த்தராவர், சிரமமுண்டாய்விடினோ அதினின்றும் நிவிர்த்தராவர். ஆகையினாற் கேவலம சிரமத்தாலேயே நிவிர்த்தியுண்டாம். சுகத்தின் பிராப்தியினாலும் காமத்தி னபாவததாலும் அந்நிவிர்த்தி யுண்டாவதில்லை. பரஸ்பரம யுத்தஞ்செய்யாநின்ற இருமல்லர்கட்கு யுத்தத்தினின்றும் நிவிர்த்தியுண்டாம். அந்த நிவிர்ததி சுகவடிவபபலத்தின் அடைவினாலேனும், காமத்தின் அபாவத்தினாலேனும் உண்டாவதின்றாம்; மற்றோ கேவலம சிரமத்தினாலேயே அந்நிவிர்த்தி யுண்டாகின்றது. ஆகையினால் நிவிர்த்திவடிவ ஹேதுவால் காமத்தினபாவம் சித்திக்கமாட்டாது. அல்லது வீரியம வெளிவருதலால் ஒரு சிறிதும் சுகமுண்டாகமாட்டாது, மாறாய்த் துககமேயாம. என்றாலும, அத்துக்கத்தைப் பிராந்தியினாற் சுகமென நினைக்கின்றனன். அம்மயலாற் சித்தித்தசுகத்திலும் அதிக சுகம் மல மூத்திர பரித்தியாகத்தாலேயேயுண்டாம்; ஏனெனின், வீரியம் வெளிப்போந்தபின்னர் புருடனுக்குப பசசாத்தாபமுண்டாகின்றது; பலத்திற்கு ஹானியுமுண்டாகின்றது. மல மூத்திரபரித்தியாகத்தின்பின் பச்சாத்தாபாதிகள் உண்டாவதின்றாம், மாறாய் மகிழ்ச்சியுண்டாகின்றது. கருத்திதுவாம்:—யாதாவதொரு சமீபவிருக்ஷத்தில் தேனினடை வுண்டாய்விடின்; தேனை யடையும் பொருட்டு மலைமேற்போதல் வியர்த்தமாவதுபோல, வீரியபரித்தியாக சுகத்தைக்காட்டிலும் மல மூத்திரபரித்தியாக ஜன்னிய அதிக சுகத்தினடைவு நாடோறுமுண்டாயினும், வீரியபரித்தியாக ஜன்னிய சுகத்தினடைவின்பொருட்டுப் புருடர்களின் முயற்சி வியர்த்தமாம்.

சங்கை:—(1) இரதத்திற் (இரமித்தலில்) சுகமுண்டாவதுபோல மலமூத்திர பரித்தியாகத் தாற் சுகமுண்டாவதின்றாம்.

சமாதானம்:—வீரிய பரித்தியாகத்தின்கண் இரதசப்தத்தின் பொருட் டன்மையை யங்கீகரித்த நீ மல மூத்திரபரித்தியாகத்தின்கண் இரதசப்தத்தின் பொருட்டன்மையை எத்தூடணபயத்தா லங்கீகரிக்கவில்லை? மற்றோ அங்கீகரித்தல்வேண்டும்; ஏனெனின், சுகத்தின் அநுகூல வியாபாரத்தன்மை வடிவமும் இரதசப்தத்தின் பிரவிர்த்தியின் நிமித்தமும் வீரியபரித்தியாகத்தின்கண்ணும் மல மூத்திரபரித்தியாகத்தின்கண்ணும் சமானமாம். அல்லது சப்த சஹித அபானவாயுவின் பரித்தியாகத்தின்கண்ணே எச்சுகமுளதோ அச்சுகம சமபூர்ண *தேவாங்கனைகளின் சம்யோகத்தின்கண்ணும் உண்டாகமாட்டாது, ஆகையினால் மயங்கியபுருடன் தேவாஙகனாஜன்னிய சுகப்பிராபதியின்பொருட்டு யாகாதிகர்மங்களைச செய்கின்றனன். அதுபோல அபானவாயுஜன்னிய சுகபிராபதியின்பொருட்டு யாகாதிகாமங்களை ஏன் செய்வதில்லை; கருத்திதுவாம்:—திருணாதி துச்சவஸ்துக்களின் பிராபதியின்பொருட்டு எபபுருடன் சிநதாமணியைய பரித்தியாகஞ்செய்வனோ அப்புததியீன புருடனைச் சிந்தாமணி சபிக்கும். அதுபோல, அபானவாயு வெளிப்போதலா லுண்டாம் சுகத்திலும் மிகவுந் தாழ்நததாய தேவாங்கனையாலுண்டாகும துசசசுகத்தின் பிராபதியின்பொருட்டுச் சித்தசுத்திவாயிலாய் மோக்ஷத்தின் சாதனமாகிய யாகாதிகர்மங்களை எப்புருடன் செய்கின்றனனோ அவ்வற்ப மதிப்புருடனை யாகாதிகர்மங்களுஞ் சபிக்கும்.

அல்லது, எவ்வாதி விஷயஜன்னிய சுகத்தை யுடன்படுகின்றனனோ அவனையிது கேட்கவேண்டும்:—அச்சுகத்திறகு ஸ்திரீயின்சரீரம் காரணமா? அல்லது புருடன்சரீரம காரணமா? அல்லது அவ்விரண்டு சரீரங்களின் சம்பநதங் காரணமா? அல்லது பிரஜையின் உறபத்தி காரணமா? அல்லது சமானஜாதியை யுடைய பிரஜையின் உற்பத்தி காரணமா? அவற்றுள், ஸ்திரீ புருஷசரீரம சுக காரணமென்னும இமமுதற்பக்ஷம் பொருநதாது. ஏனெனின், சரீரத்தின்கண் சுகம் உற்பன்ன மாவதாயின், சுகப பிராப்தியின்பொருட்டு ஸ்திரீ, புருஷ சமீபம் செலலவேண்டியதின்றாம; அங்ஙனமே புருடன் சுகப பிராப்தியின் பொருட்டு ஸ்திரீயின்சமீபம செல்லவேண்டிய தின்றாம; ஏனெனின், சுக சாதனங்களாய தமது சரீரமிரண்டு மிருக்கின்றனவாதலின் தேகத்தின்கண் எந்த ஸ்திரீக்கேனும் புருடனுக்கேனும சுகமின்றாம்.

ஸ்திரீ புருடர்களின் சம்யோகம சுகத்தின் காரணமாம், என்னும் இவ்விரண்டாவதுபக்ஷமும் பொருநதாது; ஏனெனின், ஸ்திரீ புருடர்களின் சம்யோகமே சுக காரணமாயினோ மைதுனதர்மத்தின் பின்னரும் அச்சம்யோகத்தாற் சுகமுண்டாகவேண்டும், சுகமோ உண்டாவதின்றாம்; மாறாய்ப் பசசாத்தாபமுண்டாம். இக்காரணத்தினால் மகாதம புருடர்கள்:—

(1) இரதம்=புணர்ச்சி.

* தேவாங்கனை=தேவதாஸ்திரி.

போஜநாந்தே ஶ்மஶாநாந்தே மைதுநாந்தே ச யா மதி: ।
ஸா மதி: ஸர்வதா சேத்ஸ்யாத் கோ ந முச்யேத பந்தநாத் ॥

"அம்மயில் வுறறனி னடர்ம சானத்தின்
எம்மதி மைதுன மதனி னீற்றினும்
அம்மதி வைகலும் அமர்ந்து வைகுவான்
செம்மரை விழியேழிற் செல்வ னாகுமே." (1)

என்று கூறியிருக்கின்றனர். இதன்பொருளிதுவாம்:—போஜனத்தின் முடிவிலும், மசானத்தின் கண்ணும், மைதுனத்தின் முடிவிலும் புருஷனுக்குத தோஷதிருஷ்டி யுண்டாவதுபோல எப்போதும் அஃதிருப்பின் அப்புருஷன் சாக்ஷாத் பரமேசுர சொரூபனும்; ஆனால் அத்திருஷ்டி சந்ததமிருப்பதின்றாம். ஆகையினால் ஸ்திரீ புருஷர்களின் சையோகமும் சுகததின் காரணமன்றாம்.

பிரஜையின் உற்பத்தி சுககாரணமாமென்னும இம்மூன்றாவதுபக்ஷமும பொருநதாது; ஏனெனின், பிரஜையினுற்பததி சுகததின் காரணமாயினே மூட்டை, (ஓர் பூசசி அல்லது மூட்டுபபூச்சி) கீடம், பேன்முதலிய பிரஜையி னுற்பததியினாலும் நமமனோர்க்குச சுகமுண்டாகவேண்டும், உண்டாவதோ இன்றாம; மாறாய்த் துக்கமாம். ஆகையினாற் பிரஜையினுற்பததியும சுககாரணமன்றாம.

சமானஜாதியையுடைய பிரஜையினுற்பத்தி சுகத்தின் காரணமென்னும இந நான்காவதுபக்ஷமும் பொருந்தாது; ஏனெனின், உலகின்கண் புத்திராதிவடிவப பிரஜையோடுகூடியவனா யிருநதபோதிலும புருஷன் புததிராதிகளால் துக்கியா யிருத்தல் கண்டுளேம். கருத்திதுவாம:—பிரதிகூலமாகிய புததிராதிகளோ பிரசித்தமாய்ப பிதா மாதாக்களின் துக்கத்தின் காரணமாகின்றனர்; அனுகூலமாய புத்திராதிகளும் காத்தல் ஆதரித்தல்களின் சிந்தையின் வாயிலாய்ப பிதா மாதாக களின் துக்ககாரணமாகின்றனர்.

ஆண்டுப் பூர்வ கிரந்தத்தால ஸ்திரீரூப விஷயததின்கண் சுககாரணததன்மையின் கண்டனஞ்செய்யப்பட்டது. இப்போது இரசன இந்திரியத்தின் விஷயமாய இரசாதிகளின்கண் சுககாரணத்தன்மையின் கண்டனத்தைச் செய்வாம:—ஸ்திரீரூப விஷயம் புருஷனுடைய சுககாரண மலலாததுபோல அன்னமும், ஜலமும் இவனது சுககாரணமன்றாம்; ஏனெனின், போஜனஞ் செய்யபபெற்ற அன்னமும், பானஞ்செய்யப்பெற்ற ஜலமும் பின்னரிபபுருஷனுடைய துக்ககாரணமாய்த் தோற்றும். கருத்திதுவாம:—போஜனஞ்செய்து திருப்தனாகிய புருஷனுககு மேலுஞ் சிறிது அன்னததைப் பரிமாறின் உரத்தகுரலோடுங் தடுபபன், ஆகையினா லிப்புருஷனுக்கு அன்னத்தின்கண் துவேஷமுளதென அறியப்படும். யாது துவேஷத்தின் விஷயமாமோ அது துக்கத்தின் சாதனமாம்; சிம்ம சர்ப்பாதிகளைப்போல; ஆகையினால் அன்னாதிகள் சுகத்தின் காரணமன்றாம்.

சங்கை:—அன்னமும் ஜலமும் சுகத்தின் காரணமன்றாயின் சுகப்பிராப்தியின் பொருட்டு அன்னஜலத்தின்கண் உலகரின் பிரவிர்த்தி உண்டாதல் கூடாது,

யாவருக்கும் அன்னஜலத்தின்கண் பிரவிர்த்தியுண்டாதலைக் கண்டுளோம்; ஆதலின் அன்னமும் ஜலமும் சுகத்தின் காரணமேயாம்.

சமாதானம்:—அன்னமும் ஜலமும் சுகத்தின் காரணமன்றாம்; மற்றோ அன்ன ஜலத்தாற் சிறிதுபோது பசிதாகங்களின் சாந்தியுண்டாம். ஓங்கி எறியா நிற்கும் தீயின்கண் எறியாநின்ற காஷ்டக்கூட்டமானது கணமாத்திரை அத்தீயின் ஓங்கிய ஜ்வாலையைத் தணிக்கும். ஜலத்தால் நனைக்கப்பட்ட பிருதிவியை வாயு காயவைக்கும், அவ்வாயுவை அனுசரஞ்செய்து ஜலத்தின் தெளித்தலானது கண மாத்திரை அப்பிருதிவியின் உஷ்ணத்தை நிவாரணஞ்செய்யும. இவ்வண்ணம் சரீரத்தினுள் இராநின்ற அக்கினியும பிராணனும் தடையற்றனவாய்ப் பிராணிக ளின் பசிதாகங்களை யுண்டாக்கும். அவற்றுள், பிராணன் பசியையுண்டாக்கும், அக்கினிதாகத்தை யுண்டாக்கும. புருஷனால் உட்கொள்ளப்பட்ட அன்னஜலங்க ளாற் சிறிதுபோது பசிதாகங்களின் சாந்தியுண்டாம். கருத்திதுவாம்:—அன்ன மும் ஜலமும் விழு (உட்கொள்ளப்படுத)லாற் பிராணாக்கினிகளின் நிரோதமுண் டாம். அந்நிரோதத்தாற் கணமாத்திரை பசிதாகங்களின் சாந்தியுண்டாம்; அப பசிதாகங்களைச் சகித்தல்வடிவ சாந்தியின்கண்ணேயே அற்பபுத்தியையுடைய பிரா ந்த புருஷன் சுகத்தை யுடன்பட்டனன். ஆகையினால் இரசனேந்திரியவிஷய அன் னாதிகளின்கண் சுகத்தின் காரணத்தன்மையின்றாம். இவ்வகை சபதாதிவிஷயங் கள் பிராப்தமுறினும் புருஷர்கட்குச் சுகமுண்டாகமாட்டாது; மற்றோ கணமாத் திரை இச்சையின் நீக்கமுண்டாம். கருத்திதுவாம்:—சப்தாதிவிஷயங்களின் இச் சையினால் முதலிற் சித்தம் சஞ்சலமாம், அச்சப்தாதிவிஷயங்கள் அடைவுறினோ கணமாத்திரை சித்தத்தின் சஞ்சலத்தன்மையின் நீக்கமுண்டாம், அச்சஞ்சலத் தன்மையின் நீக்க வடிவசித்தத்தின் அவஸ்தையையே மூடபுருஷன் சுகரூபமென அங்கீகரித்துளன். அறிஞ புருஷனோ! இங்ஙனமுணர்வன்:—சித்தம் பூதங் களின் சத்துவகுணத்தின் காரியமாம்; ஆகையினால் நிர்மலமாம். அங்ஙனமாயினும், சப்தாதிவிஷயங்களி னிச்சையினாற் சலிபபிக்கபபெற்ற சித்தமானது ஆநந்தவடிவ ஆன்மாவின் பிரதிபிம்பத்தைக் கவர்வதில்லை. அசசப்தாதிவிஷபங்களின் அடைவு உண்டாயினோ சிறிதுபோது இச்சை நீங்கிச் சித்தம நிலையாம். அநநிலையாய சித்தத்தின்கண் ஆநநதவடிவ ஆன்மாவின் பிரதிபிம்பமுண்டாம். ஆநந்தவடிவ ஆன்மாவின் பிரதிபிம்பத்தாற் றுன்ப வடிவசித்தமும் இன்பமெனத் தோன்றும். அந்தப் பிம்பவடிவ ஆன்மாவே முக்கிய சுகவடிவமாம். இக்கருத்தினாலேயே சாஸ்திரத்தின்கண் விஷயப்பிராப்தி காலத்திலும் அறிஞனுக்கு நித்திய சுகாநு பவங் கூறப்பட்டுளது. அறிவிலானுக்கு க்ஷணிக சுகாநுபவமாம். ஆகையினால் சப்தாதிவிஷயங்களாற் கிஞ்சித்மாத்திரையும் புருஷர்கட்குச் சுகமுண்டாகமாட் டாது; மற்றோ துன்பவடிவ அந்தக்கரணத்தினது பரிணாமத்தின் கண்ணே பிராந்த புருஷன் சுகபுத்தியைச் செய்வன்.

அல்லது விஷயஜன்னிய அநதக்கரணத்தின் பரிணாமவடிவ பலத்தின்கண் உற்பத்தி, நாசம், பரிச்சின்னப்பான்மைவடிவ தோஷங்க ளுளவாதலின், அதன் கண் புத்திமானாகிய புருஷனுக்குச் சுகபுத்தி யெங்ஙனமுண்டாம்? மற்றோ வுண்

டாகமாட்டாது. ஏனெனின், சுருதியின்கண் வியாபக ஆன்மாவிற்கே சுகஸ்வரூபத்தன்மை கூறப்பட்டுள்ளது.

அல்லது வியாகரணரீதியாய்ச் சுகசப்தத்தின்பொருளைச் செய்யினும் அந்தக்கரணத்தின் பரிணமத்திற்குச் சுகஸ்வரூபத்தன்மை சித்தியாது; ஏனெனின், எதனால் இந்திரியங்களின் கோளகை பிரசன்னமாமோ அது சுகமெனப்படும், விஷய ஜன்னிய சுகத்தை விசாரஞ்செய்வதனால் மாறுய்த் தோஷசிந்தையால் ஹிருதய வடிவகோளகம் தபிக்குமாதலின் எத்துணை விஷயஜன்னிய சுகங்களுளவோ அவை யாவுந் துக்கவடிவமாம். முற்கூறிய முத்தியினின்றும் எக்காரணத்தாலேனும் சுகமுண்டாகமாட்டாது; மற்றேறு சுகம் நித்தியமாம், யாது உற்பன்னமாமோ அது சுகரூபமன்றும்; ஆகையினு லித்தகைய நித்திய சுகவடிவ ஆன்மாவாய யான் சத்துச்சித்து அத்விதீயவடிவனும்.

சங்கை:—சத்து, சித்து, ஆநந்தம் என்னு மிவ்வகையாய சப்தங்களின் பேதத்தால் ஆத்மாவின் சொரூபபேதம் ஏன் உண்டாகமாட்டாது.

சமாதானம்:—புத்திமான்களாய புருஷர்கட்குச் சத்துமுதலிய சத்தங்களின் பேதத்தாற் சத்துச் சித்து ஆநந்தவடிவ அருத்தங்களின் பேதபுத்தி ஒருகாலும் உண்டாகமாட்டாது; ஏனெனின், சப்தங்களின் பேதமுறினும் அருத்தத்தின் ஒருமை உலகின்கட் கண்டனம். ஒரேபுருஷ வியக்தியின்கண் தந்தை, மைந்தன், நாயகன், தமையன் என்னும் இவ்வகையாய பின்ன பின்ன சப்தங்களை மைந்தன், தந்தை, மனைவி, தம்பி முதலியோர் முறையே கூறுகின்றனர்; அங்ஙனமாயினும், அச்சப்தங்களின் பேதத்தாற் புருஷவியக்தியின் பேதமுண்டாவதின்றும். அதுபோல ஆன்மாவாய என்கண் சத்து, சித்து, ஆநந்தம், பரிபூர்ணம் என்னுமிவ்வகையாய பின்ன பின்ன சப்தங்களைச் சாஸ்திரங் கூறுகின்றதென்றும் சத்துமுதலிய சப்தங்களின் பேதத்தால் ஆன்மாவாய எனக்குப் பேதமுண்டாகமாட்டாது. இப்போது எந்நிமித்தத்தைக் கவர்ந்து சத்துமுதலிய சப்தங்கள் ஆன்மாவை யுணர்த்துமோ அந்நிமித்தங்களைக் காண்பிப்பாம்:—மலடிமகன் அசத்தியனுவதேபோல ஆத்மாவாய யான் அசத்தியனன்றும்; மற்றேறு அசத்தியத்தினும் விலக்ஷணமாம். அவ்விலக்ஷணத்தன்மை வடிவநிமித்தத்தைக் கவர்ந்து சத்தியசப்தமானது ஆன்மாவாய என்கண்ணே பிரவிர்த்தித்தது. கடாதி ஜடபதார்த்தங்கள் அன்னியத்தால் விளங்குவதுபோல ஆன்மாவாய யான் அன்னியமெதனுலும் விளங்குபவனன்றும். ஆகையினுல், ஆன்மாவாய யான் ஜடனன்றும்; மற்றேறு கடாதி ஜடபதார்த்தங்களினும் விலக்ஷணனும். அவ்விலக்ஷணத்தன்மை வடிவநிமித்தத்தைக் கவர்ந்தே சேதனசப்தம் ஆன்மாவாய என்கண்ணே பிரவிர்த்திக்கின்றது. எவ்வஸ்து பிரதிகூலமாமோ அது சுகசப்தத்தின் அருத்தம் ஆகமாட்டாது; மற்றேறு துக்கசப்தத்தி னருத்தமாம். சிம்மசர்ப்பாதிகளேபோல. எவ்வஸ்து அன்னியத்தின் சேஷ (அங்க) மாமோ அதுவும் சுகசப்தத்தின் அருத்தமன்றும், மற்றேறு துக்கசப்தத்தி னருத்தமாம்; ஸ்திரீ தனாதிகளைப்போல. இவ்விதம் ஆன்மாவாய யான் துக்கவடிவனன்றும், மற்றேறு துக்கத்தினும் விலக்ஷணனும்.

ஆகையினால் அவ்விலக்ஷணத்தன்மை வடிவநிமித்தத்தைக் கவர்ந்து ஆநந்தசப்தம் ஆன்மாவாய என் கண்ணே பிரவிர்த்தித்தது. இந்நெறியே ஆத்மசப்தமும், ஏக சப்தமும், அத்விதீயசப்தமும், அஸ்தூலசப்தமும், அநணுசப்தமும் பேதமின் றிய சச்சிதாநந்தவடிவ ஆன்மாவாய என் கண்ணே பிரவிர்த்தித்தது. ஈண்டிது கருத்தாம:—ஆன்மாவைப் பிரதி பாதிக்கப்பட்ட சப்தங்கள் இருவகையாம். ஒன்று விதிமுகமாம்; மற்றொன்று நிஷேதமுகமாம். அவற்றுள், விதிமுகமாய சத்தியாதி சப்தங்களோ முதலில் ஆன்மாவையுணர்த்திப் பின்னர் அசத்தியாதி களினின்றும் வியாவிர்த்தியை யுணர்த்தும். நிஷேதமுகமாய அத்விதீயாதி சப் தங்களோ முதலில் சாக்ஷாத் (நேரே) வியாவிர்த்தியை யுணர்த்திப் பொருளால் ஆன்மாவை யுணர்த்தும் (வியாவிர்த்தியென்பது பேதத்திற்காம்.) ஆகையினாற் சத்தியாதி சபதங்கட்குப பேதமுண்டாயினும் அவற்றின் அருத்தத்திற்குப் பேத மின்றாம், மற்றோ ஒரே ஆன்மாவைச சர்வ சத்தியாதிசப்தங்கள் உணர்த்தும் எனத் துணியப்பெற்றதாம்.

இப்போது யுத்தியினாலும் சததியாதிசப்தங்களின் அருத்தத்தின் அபே தத்தை நிரூபிபபாம்:—ஆண்டுச சுகத்தினின்றும் பிரகாசம் பின்னமின்றாம். ஏனெ னின், சுகததினின்றும் பிரகாசம் பின்னமாயின், துன்பம் துன்பத்தின் சாதன மாய சர்ப்பாதிகளைபபோல் பிரகாசமும் பிரதிகூலமாம்.

அல்லது சுகத்தின் சாதனமாய ஸ்திரீ தனாதிகளைபபோல அன்னிய போக்தா வின் அங்கவடிவமாம். அநுகூலதமமாதலின் பிரதிகூலமும், அன்னியத்தின் அங்க வடிவமும் பிரகாசமன்றாம். ஆகையினாற் பிரகாசம் சுகத்தினும் பின்னமன்றாம். கருத்திதுவாம்:—சுகசாதனங்களாய மாலை சநதனாதிவிஷயங்கள் அநுகூலங்க ளாம். அவ்விஷயங்களின் சமபநதத்தால் உற்பன்னங்களாய அநதக்கரணத்தின் விர்த்திகள் அநுகூலதரங்களாம, அவற்றை யொளிர்விபபதாய ஆநநதவடிவ ஆன்மா அநுகூலதமமாம்; ஆகையினாற் பிரதிகூலத்தன்மையும் அன்னியசேஷத் தன்மையும் பிரகாசத்தின்கண்ணே பொருந்தாது. தரம், தமம் என்னு மிவ்வி ரண்டு சப்தங்களும் அதிகததன்மையின் வாசகங்களாம்.

சங்கை:—பிரகாசசுகங்களின் பரஸ்பரபேதமுண்டாக வேண்டாமெனினும் அவ்விரண்டு தர்மங்களினும் ஆன்மவடிவதர்மி பின்னம் ஏனாகமாட்டாது.

சமாதானம்:—இவ்வான்மாப பிரகாச வடிவத்தினும் பின்னமன்றாம்; ஏனெ னின், ஆன்மா எல்லா அந்தக்கரண விர்த்திகளையும் ஒளிர்விப்பவர். யாது பிரகா சத்தினின்றும் பின்னமாமோ அது எல்லா விர்த்திகளையும் ஒளிர்வியாது. புத்தி யாதிகளைப்போல. ஆன்மாப் பிரகாசத்தினின்றும் பின்னமாயினோ அப்பிரகாச சொரூபமாதலின், கடாதிகளைப்போல அநான்ம சொரூபமாம். கடாதிகட்கேபோல அநான்மசொரூபத்தன்மையை ஆன்மாவிற்கு உடன்படல் வாதிக்குஞ் சம்மதமின் றாம், ஆகையினால் பிரகாசத்தினும் ஆன்மா பின்னமன்றாம்; மற்றோ பிரகாச சொரூபமாம். சுகத்தினின்றும் பிரகாசம் வேறன்றென்று முன்னஞ் சொன்னதே போல பிரகாசத்தினின்றும் சுகமும் வேறன்றாம். ஏனெனின், பிரகாசத்தி

னின்றும் பின்னமாயினே அப்பிரகாச சொரூபமாம்; அப்பிரகாசமான சுகத்திற்குச் சுகரூபத்தன்மை பொருந்தாது.

**சங்கை:**—விளக்காற் கடாதிகளின் விளக்கங்கூடும்; கடாதிகளினின்றும் விளக்கு வேறும். அதுபோலச சுகத்தின்வேறுய பிரகாசத்தினுலும் சுகத்தின் விளக்கங்கூடும், சுகப்பிரகாசங்களை யபேதமா யங்கீகரித்தல் நிஷ்பலமாம்.

**சமாதானம்:**—பழுதைமுதலிய வியாவகாரிக பதார்த்தங்களும் பாம்புமுதலிய கற்பித பதார்த்தங்களும் தம்மின்வேறுய ஒளியால் விளங்குவதுபோல தன்னிற்பின்னமாய பிரகாசத்தாற் சுகம பிரகாசமாவதின்றும்; மற்றே தன்னின் அபின்னமாய பிரகாசத்தினுலேயே சுகம பிரகாசமாம. ஆகையினுல் சுகமும் பிரகாசமும் அபேதமாம். ஈண்டிது கருத்தாம்:—பழுதைமுதலிய திருசிய வஸ்துக்கள் சேதனத்தின்கண் கற்பிதங்களாம் ஆகையினு லவற்றிற்குப் பின்னப் பிரகாசத்தாற் பிரகாசத்தன்மை பொருந்தும். ஆன்மசொரூப சுகம் கற்பிதமன்றும்;. மற்றே சாவத்தினதிஷ்டானமாம்; ஆகையினுற் பின்னப்பிரகாசத்தால் அதனது பிரகாசமாந்தன்மை பொருநதாது.

பிரகாசத்தினின்றும் ஆன்மா பின்னமன்றுவதுபோல, சுகத்தினின்றும் ஆன்மா பின்னமன்றும; மற்றே அபின்னமாம். பிரகாசசொரூபசுகத்தினின்றும ஆன்மாப் பின்னமாமேற் கடாதிகளைபபோல அனுன்மாவாம். ஆன்மாவிற்கு அநான்மத்தன்மை யங்கீகாரமின்றும். ஆகையினுற் பிரகாசம், சுகம், ஆன்மாஎன்னு மிவை மூன்றற்கும அபேதமாமெனச் சித்தித்தது. ஈண்டுப பிரகாசசப்தத்தாற் சைதன்னியத்தைக் கவர்ந்துகொள்க, சுகசபதத்தால் ஆநநதத்தைக் கவர்நதுகொள்க. ஆத்மா? ஆநந்தம, பிரகாசம் என்னுமம இம்மூன்றும சத்தினின்றும் பின்னமன்றும்; ஏனெனின், மலடிமகன் சத்தினின்றும் பின்னமாதலின் அசததியமாவதுபோலச் சத்தினின்றும் பின்னமாய ஆன்மா, ஆநநதம், பிரகாசம் என்னும மூன்றற்கும் மலடிமகனுக்குப்போல அசத்தியத்தன்மையே பிராபதமாம். ஆன்மாவிற்கு அசத்தியத்தன்மையை யெவருமஙகீகாரஞ் செய்வதின்றும். ஆன்மா, ஆநந்தம், பிரகாசம் என்னும் இம்மூன்றும சத்தினின்றும் பின்னமன்றுமாவதுபோல சத்தும் இம் மூன்றினின்றும் பின்னமன்றுப; ஏனெனின், ஆன்மா, ஆநநதம், பிரகாசம் என்பவற்றி னின்றும் சத்தை பின்னமாயினே கடாதிகளைப்போல அனுன்மதுக்க ஜடவடிவமாம். அனுன்ம வடிவமடைந்த சத்தை, மலடி மகனைப்போல அசத்தியமாம." கருத்திதுவாம்:—ஆன்மா என்பது தனது வடிவத்திற்காம், தன் வடிவினின்றும் சத்தை பின்னமாயின் மலடிமகனைபபோல அசத்தியமேயாம், ஆகையினுல் ஆன்மாவினின்றுஞ் சத்தை பின்னமன்றும. அச்சச்சிதாநந்தவடிவ பரமான்மாவே யான், தேசகால வஸ்து பரிச்சேதமற்றவன் யான். ஆகையினுல், பரமான்மாவாய யான் அநந்தனுவேன்; பழுதையின்கட் பாம்பு கற்பிதமாவதுபோல அநந்த (அந்தமற்ற) ஆன்மாவாய என்னிடத்திற் சகலப் பிரபஞ்சமுங் கற்பிதமாம். காரணகாரிய தேசகாலாதிகளின் வாசக சர்வ சப்தங்கட்கும், அங்ஙன

னமே சர்வஞானங்கட்கும் பரமான்மாவாய யானே விஷயமாம். இக்காரணத்தினாலேயே வேதாந்தவாக்கியங்களினாலும், அங்ஙனமே வேதாந்தவாக்கிய ஜன்னிய ஞானத்தினாலும் பரிபூர்ண ஆன்மாவையும் யான் கண்டனன். ஆகையினால் யான் கிருதகிருத்தியன். கருத்திதுவாம்:—எவ்வான்ம சொரூபத்தை நிச்சயஞ் செய்யும் பொருட்டு இத்துன்பவடிவ சரீரத்தின்கண் யான் பிரவேசஞ்செய்தனனோ! அவ்வான்ம சாக்ஷாத்காரம் இப்போதெனக்குப் பிராப்தமாயிற்று; ஆகையினாற் கிஞ்சித்மாத்திரமும் எனக்கிப்போது கர்த்தவ்யமின்றாம். இப்பரமான்ம தேவரானவர் குரு வேதாந்தவாக்கிய ஜன்னியஞானத்தால் அபரோக்ஷமாய தம்முடைய வடிவத்தைக் கண்டனர். இக்காரணத்தினாலேயே "இவரிந்திரர்" என்னு மிந்நாமத்தை யடைவுற்ற ஆநந்த ஆன்மா பிரஹ்மரூபமாயினர்; ஏனெனின், பிரஹ்மத்தை யறிபவர்க்குப் பிரஹ்மரூபத்தன்மை சுருதியின்கண்ணே பிரசித்தமாம். அவ்விந்திரரெனப் பெயரிய பரமான்மாவை அக்கினிமுதலிய தேவதைகள் தேவத்தன்மையையுடைய மனுஷர் இந்திரர் எனப் பரோக்ஷநாமத்தாற் கூறினர். இக்காரணத்தாலேயே இத்தேவதைகள் பிரத்தியக்ஷ நாமக்கிரகணத்தால் துவேஷங் கொள்கின்றனர். உலகின்கண்ணும் மகா புருஷரை ஆசிரியரென்பன வாதிய பரோக்ஷநாமங்களா லழைக்கின் அவர்கள்மேல் அம்மகாபுருடர் சந்தோஷமுடையராகின்றனர். தேவதத்தன், யஞ்ஞதத்தன் என இவ்விதம் நேர்நாமத்தால் மகா புருஷரை அழைக்கினோ அவன்பேரில் துவேஷங்கொள்கின்றனர். கருத்திதுவாம்:—தேவதையும் சிஷ்டபுருஷரும் பிரத்தியக்ஷநாம கிரகணத்தால் துவேஷிப்பரேல் பரமேசுரர் பிரத்தியக்ஷ நாமக்கிரகணத்தால் துவேஷிப்பரென்பதில் அற்புதம் என்னை? இநதிரரெனப் பெயரிய பரமேசுரரை இந்திரர் என்னும் நாமத்தால் இத்தேவதைகள் கூறுவர், தாமும் பிரத்தியக்ஷநாமக் கிரகணத்தால் துவேஷிக்கும்; இக்காரணத்தால் விவேகிபுருஷன் பரோக்ஷப்பிரியர்கள் தேவதைகள் எனக் கூறுவன். இவ்வுலகின்கண்ணும் சன்மார்க்கத்தின்கண் சஞ்சரியாநின்ற புருஷர் தேவதைக்குச் சமானமாவர், அவரிடத்திலும் தேவதைகளைப்போல நியமமாய்ப் பரோக்ஷநாமக்கிரகணத்தினாலே மகிழ்வைக் கண்டனம். இக்காரணத்தினாலேயே தந்தை, ஆசிரியர் முதலியோரின் நேரான தேவதத்தாதி நாமங்களைப் புத்திமானான புருஷன் கூறுவதின்றாம். அங்ஙனம் மங்கையர்களும் தங்கள் பதிமுதலியோரின் நேரானதேவதத்தாதி நாமங்களைக் கூறுவதின்றாம்; மற்றோ! ஸ்வாமி என்பன முதலிய பரோக்ஷ நாமங்களால் விவகரித்துக் கொள்ளுவர். இவ்வகை ஸனகாதி இருடியர் சாத்துவிகமான பிரஜைகட்கு ஆன்மாவி னுபதேசத்தைச் செய்து கூறுவாராயினர்:—ஓ ஆன்மஞானத்தின்கண் அதிகாரிகளாய பிரஜைகளே! உங்கள் பொருட்டு அத்தியாரோப அபவாதத்தால் ஆத்மாவின்வடிவம் இதுபரியந்தம் யாம் கூறினோம். அந்த ஆன்மா மகாவாக்கியங்கட்கும், மகா வாக்கிய ஜன்னிய விர்த்தி ஞானத்திற்கும் விஷயமாம். ஆயினும் நீங்கள் கடாதிகளைப்போலச் சொரூபமாய் ஆன்மாவை விடயவடிவமென அறியவேண்டாம்; மற்றோ வேதாந்தத்தின் தாற்பரிய ஞானவாயிலாய் அவிஷய வடிவமாயே ஆன்மா அறியத்தக்கதாம். கருத்திதுவாம்:—கொம்பைப் பிடித்துக் கோவைக் (பசுவை) காண்பிப்பதுபோல ஆத்மாவைக் காண்பிப்பதில் சமர்த்தரொவருமின்றாம்.

சங்கை :—ஹே பகவன்! தாங்கள் சர்வசக்தி சம்பன்னராதலின் கோளைப் போல நேரே ஆன்மாவை எங்கள்பொருட்டு அநுக்கிரகித்தல் வேண்டும்.

சமாதானம் :—ஹே அதிகாரிகளாகிய பிரஜைகளே! அத்தியாரோப அபவாதவடிவ மாயையினாலன்றி அத்விதீய ஆன்மாவைக் கூறுவதில் எப்புருஷன் சமர்த்தனுவன், எவன்றான் கேட்பதிற்சமர்த்தனுவன்; மற்றோ அத்தியாரோப அபவாதத்தினாலேயே ஆன்மாவைக் குரு கூறுகின்றார் சாஸ்திரம் கூறுகின்றது, அதிகாரியும் சிரவணஞ்செய்வன். இக்காரணத்தினாலேயே தைத்திரீயசுருதியின் கண் ஆன்மா மன வாக்குகட்கு அவிஷயமெனக் கூறப்பட்டுளது. கேனோபநிஷத்தின்கண் இது கூறப்பெற்றுளது:—தத்துவஞானிகளின் சம்மதத்தில் ஆன்மா அவிஷயமாம், எவ்வவிவேகி புருஷர் புத்தியாதிகளை ஆன்மாவென உடன்பட்டுளரோ அவர்சம்மதத்தே கடாதிகளைப் போல ஆன்மாவும் விஷயமாம். கடோபநிஷத்தின்கண் இது கூறப்பெற்றுள்ளது:—வாக்கிற்கு அவிஷயமாய ஆன்மாவை யாவன்கூறுவனோ அவ்வான்மாவின் வக்தாவும் ஆச்சரியவடிவமாம். இந்திரியங்கட்கு அவிஷயமாய ஆன்மாவை யாவன் கேட்பனோ அச்சுரோதாவும் ஆச்சரியவடிவமாம். மனதிற்கு அவிஷயமாய ஆன்மாவை ஆசிரியர் உபதேசத்தால் யாவன் சாக்ஷாத்கரிப்பனோ அவ்வடைவுற்றுனும் ஆச்சரிய சொரூபமாம். ஹே சாத்துவிகப்பிரஜைகளே! இதற்குமேல் ஆன்மசொரூபத்தை யுபதேசிப்பதிற்கு யாம்சமர்த்தரல்லேம்; மற்றோ திசைமாத்திரமாய் ஆன்மாவின் உபதேசத்தை யாம் உங்கள்பொருட்டுச் செய்தேம். மேல் நீங்கள் சர்வயுத்திகளை யுமுணர்ந்தோர்களே யாவீர், வேதசாஸ்திரங்களையும் நன்றாக அறிந்தேயுள்ளீர். ஆகையினால் உங்களுடையபுத்திகளால்விசாரித்து இந்த ஆன்மாவை நீங்களடைந்துவிடுங்கள். இராமேச்சுரத்தை யடையுமிச்சையுடையோன் ஒருவன், மற்றொருவனை நோக்கி எம்மார்க்கத்தால் யான் இராமேச் சுரத்தையடைதல் கூடும் கூறுமென, அப்புருஷன் தென்றிசையைக் காண்பித்தனன். மேல் செல்லும்புருஷன் தன்மதியினாலேயே இராமேச்சுரத்தை யடைவன். அதுபோல, ஹே பிரஜைகளே! திசைமாத்திரமாய் ஆன்மாவையாம் உங்கள்பொருட்டுக் கூறினேம. மேல் உங்கள்புத்தியால் நீங்கள் ஆன்மாவையறியுங்கள். ஸ்ரீ வசிஷ்டபகவானும், ஸ்ரீ இராமச்சந்திரமூர்த்திக்கு இவ்வண்ணங் கூறியுள்ளார் :—

உவடுெஶகூ ஒோராீ வுவஷாோ தூவாஙநம ।
ஜ்வெஷ க்காரணம்ஶ ஙா ஶிஷ்ய வூ ஒஜெவஓகவஙா

" திகழ ருண்முறை ராகவ விவத்தைமாத் திரத்தி
னிகழ பாலன மாயுற ஞெப்தியா மதற்கோ
புகழ கேவல காரணம் புரையறு குமரன்
மகிழ றுஞ்சுத்த புத்தியே யாகிமன் னுறுமால்." (2)

இதுபொருளாம்:—ஸாதனசதுஷ்டய ஸம்பன்ன முமுட்சுவானவன் அசேஷசாஸ்திர பாண்டித்தியமும், பிரஹ்மநிஷ்டையுமுடைய வாசிரியரின் ஸந்நிதியை

அடைந்து வேதாந்தசிரவணஞ் செய்க. என்னுஞ் சுருதியின் ஆஞ்ஞையைப் பாலனஞ் செய்யும்பொருட்டே சீடன்பொருட்டுக் குருவி னுபதேசமாம்; ஆத்ம சாட்சாத்காரத்திற்கோ! சீடனுடைய சுத்தபுத்தியே கேவலங்காரணமாம். அசுத்த புத்தியுடைய புருஷனுக்குப் பிரமாவி னுபதேசத்தினாலும ஆத்மாவின் சாக்ஷாத்கார முண்டாகமாட்டாது; இக்காரணத்தினாலேயே பிரமாவி னுபதேசத்தால் விரோசனனுக்கு ஆத்மஞான முண்டாகவில்லை. ஹே ஸாத்விகப் பிரஜைகளே! வைராக்கியமில்லாத புருஷர்களால் இப்பரமான்மா அறிய யோக்கியமன்றாம்; மற்றோ, வைராக்கியமுடைய புருஷர்களாலேயே இப்பரமான்மா அறிய யோக்கியராதலின் ஹே பிரஜைகளே! ஆன்ம சாக்ஷாத்காரத்தின்பொருட்டு நீங்கள் வைராக்கியத்தைச் சம்பாதித்துக்கொள்ளுங்கள்.

சங்கை:—ஹே பகவன்! எதனாலியாங்கள் வைராக்கியததை யடைவோமோ! அத்தகைய வுபாயமியாது.

சமாதானம்:—ஹே அதிகாரிகளாகிய பிரஜைகளே! வைராக்கியமடையும உபாயத்தை யுங்கட்கு யாம் முன்னமே கூறினேம். சுகத்தின் ஸாதனமாய ஸ்திரீ புத்திராதிகளிடத்தில எப்போதும் தோஷததைக் காண்பதே வைராக்கியமுண்டாதற்குக் காரணமாம். இந்தப்பிரகாரம அதிகாரிகளாகிய பிரஜைகட்கு உபதேசஞ்செய்து உலகரின் சோகத்தைக் கெடுப்பவராய ஸனகாதி மஹாதமாக்கள் மீண்டும் வினவ இசசித்துள்ள அதிகாரிகளை அனுதாநுசெய்து அவ்விடத்தே மறைந்தனர். அந்தச சனகாதி ரிஷிகள் மறைந்தபின் கிடைததற்கரிய வாசிரிய லாபத்தால் மகிழ்வையடைந்த மனத்தோடுகூடிய அவ்வெல்லா அதிகாரிப பிரஜைகளும் பரஸ்பரம இவ்விதமான வசனங்களைக் கூறுவாராயினர்:—அதிகாரிகளாய நம்மனோரது பாக்கியமே பாக்கியம். எக்காரணத்தாற் சனகாதி மஹாரிஷிகள் குருவாயினரோ! அச்சனகாதி மஹாரிஷிக ளெத்தகையரெனின்? ஸர்வப்பிராணிகளிடத்திலுஞ் சமான திருஷ்டியுடையவர்கள், காமக்குரோதமற்றவர்கள், வாயுவானது உள்ளும் வெளியுஞ் சஞ்சரிப்பதேபோல சர்வ புருஷர்களின் உள்ளும் புறம்புஞ் சஞ்சரிக்கின்றவர்கள், பரோபகாரத்தின்கண் நித்தியப்பிரீதி யுடையவர்கள், சீதோஷ்ணாதிகளைச சகிப்பவர்கள், பிறர்தோஷங்களைக் கூறுவதில் மௌனமுற்றவர்கள், ஸர்வதோஷமு மற்றவர்கள், ஆத்மஞான ஸம்பன்னர்கள், சரத்காலத்தோடுகூடிய சமுத்திரமானது கலக்கமற்றிருப்பதுபோலக் கலக்கம் அற்றிருப்பவர்கள், சலனமற்றிருப்பவர்கள், நின்மலமானமனதை யுடையவர்கள், பூரணசசந்திரன் ஒளிபோன்ற ஒளியையுடையவர்கள்; இத்தகைய ஸனகாதி மஹாரிஷிகள் நம்மனோர்க்கு ஹிதமுண்டாதற்பொருட்டு ஆத்மாவி னுபதேசத்தைச் செய்தபோதினும் நம்மனோர்க்கு வைராக்கியமின்மையின், அவர்கள் உபதேசமெல்லாம் நிடபலமாயின. செவிடன் ஸமீபத்திற்செய்த (1) கீதகானாதிகள் வியர்த்தமாவதேபோல, ஸனகாதிகளுடையவசனத்தால் நமக்கு ஆத்மாவின் அபரோக்ஷஞான முண்டாகவில்லை; மற்றோ! பரோக்ஷ ஞானமாத்திர முண்டாயிருக்கின்றது, (வித்தையின் அத்தியயனகாலத்திற் சாமானியமாய் அர்த்தஞான முண்டாவதேபோல ஆத்மா

(1) கீதம்=வாத்தியம். கானம்=பாடல்.

வின் பரோட்சஞானம் நம்மனோர்க் குண்டாயிருக்கின்ற தென்பதாம்.) ஸனகாதிக ளின் வசனத்தால் எக்ஞாதி கர்மங்களின் கர்த்தாவும் போக்தாவுமாய யாம் அத்வி தீய ஆத்மஸ்வரூபமன்றும். இவ்வண்ணம் மஹா சம்சயம் நம்மனோர்க் குண்டாயி ருக்கின்றது. தாத்பர்யமிதுவாம்:—மதுர ரஸத்தின் அநுபவத்திற்கு வெல்லங்காரண மாயிருந்தபோதிலும், பித்த ரோகத்தையுடைய புருஷனுக்குக் கசப்பின் அநுபு வத்தின் காரணமாம். அதுபோல ஸனகாதி மஹரிஷிகளின் வாக்கியமானது உண் மையாய ஆத்மஞான காரணமாயிருந்த போதிலும் நம்மனோரது தோஷத்தால அவ்வாக்கியம் ஸம்சயத்தை யுண்டாக்கியது. ஸனகாதியர்களினுடைய வசனத் தின்கண் நம்மனோர்களின் மனம் நிலைபெறவில்லை; ஏனெனின், ஸனகாதியர்கள் நம்மனோர்க்கு அத்விதீய வாத்மஸ்வரூபத்தை யுபதேசித்தனர். அது பொருந் தாது; ஏனெனின், யாம் கர்மத்தின் கர்த்தாவுங் கர்மபலத்தின் போக்தாவுமாவே மாகலின் அத்விதீய வாத்மஸ்வரூபம் யாமெவ்வண்ணமாவேம்; மற்றோ அத்விதீய வாத்மஸ்வரூப மியாமன்றும்.

ஸனகாதிகள் முன்னர்யானென்னும் ஞானத்திற்கு விஷயமும், யானென் னுஞ் சப்தத்திற்கு லட்சியமும் ஆன்மாவென்றுகூறினர். அதுவும் பொருந்தாது; ஏனெனின், யானென்னும் ஞானத்தின் விஷயத்தன்மை நம்பாலில்லை, யானென் னுஞ் சப்தத்தின் இலக்ஷியத்தன்மையும் நம்பாலில்லை. ஆகையினால் ஹே அதி காரிகளே! நம்மனோர்க்கு ஆன்மாவின்கண் திடமாய் அசம்பாவனை யுண்டா யிருக்கின்றது. இக்காரணத்தால் நம்மனோரது அசம்பாவனையைப் பார்த்து நாம் வினவாவிடினும் ஸனகாதி மஹரிஷிகள் ஆத்மஞான அடைவின்பொருட்டு நம் மனோர்க்கு வைராக்கியவடிவ வுபாயத்தையே யுபதேசித்தனர். பதார்த்தங் களினிடத்துத் தோஷதிருஷ்டிவடிவ வைராக்கியத்தின் உபாயத்தையும் நம் மனோர்க்குபதேசித்தனர். ஆகையினால் ஹே அதிகாரிகளே! நாமனைவருமொ ருங்குகூடிப் பதார்த்தங்களினிடத்தில் தோஷங்களை விசாரிப்போம். அவற்றுள், முதலில் இச்சரீரத்தின்கண் யாது தோஷமெனவிசாரஞ் செய்யவேண்டுமெ னச்சிந்தித்து, அக்கினி ஹோத்திரத்தைச் செய்யாநின்ற வதிகாரிகள் பரஸ் பரங்கூடித் தோஷங்களைவிசாரித்தனர். அவற்றுள், கர்ப்பதுக்கத்தை நிரூபணஞ் செய்யும்பொருட்டு முதலிற் கன்மவசத்தால் ஜீவர்களின் சுவர்க்காதிலோககமனாக மனங்களை விசாரிப்பாம்:—மாலையினுங் காலையினும் ஹவனஞ்செய்த (தேவதை யை யுத்தேசித்துக்கொடுத்த) அக்கினி ஹோத்திரத்தின்கண் இரண்டாகுதி களுள. அவ்விரண்டு ஆகுதிகளும் எத்தகையனவெனின், அவை ஜலத்தை முக்கிய மாகவுடைய பால் முதலியவற்றின் பரிணாமமாதலின், ஜலத்தை முக்கியமாகவுடை யன; ஹோமத்தின்பின் அக்கினியினின்றும் சூக்ஷ்மவடிவமாய் ஆகாசத்தை யடைவன; கருமத்தைச் செய்யாநின்ற பிரமாதாக்களாய நம்மனோரை வியாபித் துள்ள ஜீவாத்மாவோடு எப்போதுங் கூடியுள்ளவை. இந்தப்பிரகாரம் அந்தரி க்ஷலோகத்தையடைந்த காலை மாலையனவாகிய இரண்டு ஆகுதிகளும், சரீரத்தின் நாச[illegible]காலத்திற் சுவர்க்கமடையும்பொருட்டுத் தகியாநின்ற மூன்றாவது ஆகு

தியும், ஆகியவிம் மூன்றுருகுதிகளும் கர்மிபுருஷர்களாய நம்மனோரைக் கவர்ந்து முதலிற் சுவர்க்கலோகரூப அக்கினியை யடையும்; ஆண்டுப் புண்ணிய கருமத்தைப் போகித்ததன்பின், மேகவடிவ இரண்டாவதக்கினியை யடையும், அதன்பின்னர் மழைவாயிலாய்ப் பிருதிவிவடிவ மூன்றாவதக்கினியை யடையும், அதன்பின்னர் அன்னவாயிலாய்ப் புருடவடிவ நான்காவது அக்கினியை யடையும். ஆண்டு ஜீவன் சுவர்க்கலோகத்தினின்றும் மேகவாயிலாய்ப் பூலோகத்தின்கண் வருவதில் இவ்வளவுபேத முளதாம்:—புண்ணியபாபங்களோடு கூடிய சில ஜீவர் புண்ணிய கர்மத்தினுதயத்தால் முதலில் ஸ்வர்க்க சுகத்தை யநுபவித்துப புண்ணியகர்மம் அழிந்தபின் ஸ்வர்க்கத்தினின்றும் வீழ்வர்; மீண்டும் பாபகர்மத்தினுதயத்தால் நரகதுக்கத்தை யநுபவித்து அந்நரகத்தினின்றும் பூவுலகின்கண் வீழ்வர். அவ்வீழ்ச்சிக்காலத்தில் எவ்வண்ண மெவ்வண்ண மிச்சீவர்களினது கன்மங்களுதயமாமோ அக்கன்மங்களின் அநுசாரமாய்ப் பராதீனத்தன்மையோடு இச்சீவர் பலவிதமாய ஜந்துக்களின் யோனியை யடைவர். கேவலம் புண்ணிய கன்மத்தினுதயத்தால் இப்புண்ணியவான்களாய ஜீவர்கள் ஸ்வர்க்கலோகத்தின்கண் சம்பூர்ண புண்யகர்மங்களின் பலன்களை யநுபவித்து நரகப் பிராப்தியின்றியே மழை வாயிலாய் ஔஷதங்கணிறைந்த பூவுலகையடைவர். மனுஷ்யசரீரத்தின் காரணமாய புண்ணியபாபங்களோடு கூடி மூட அவஸ்தையை யடைந்துள்ள பராதீன ஜீவர் அன்னத்தோடு ஏகவடிவத்தை யடைந்தோராய் மீண்டும் புருட சரீரத்தின்கண் பிரவேசிப்பர். கயிற்றாற் கட்டப்பட்ட கடமானது கூபத்தின்கண் பிரவேசிக்குமாறுபோல, காமவடிவக கயிற்றாற் கட்டபபட்ட ஜீவர் பிதா சரீரத்தின்கட் பிரவேசிப்பர். சங்கிலியாற் கட்டப்பட்ட சரீரத்தையுடையவனும, தனத்தையும் பந்துக்களையும் பறிகொடுத்தவனும ஆகிய தோஷத்தோடுகூடிய புருடனை அரசசேவகர்கள் சிறைச்சாலையின்கண்ணே சேர்ப்பர்; அதுபோல கர்மவடிவச் சங்கிலியாற் கட்டுப்பட்டவனும், பநதுக்களற்றவனும், தனியனும் ஆகிய இச்சீவனையும் இநதிரியாதிகளின் அபிமானிகளாய தேவதைகள் பிதா சரீரததிற் சேர்ப்பர். அத்தநதையின் தேகமானது அநத (இருண்ட) கூபம்போல் இச்சீவனுக்குப் பயகாரணமாய்த் தோற்றும்; மேலும், பாம்புகளைப்போலப பயஞ்செய்பபனவாய புழுக்கூட்டத்தா னிறைநததாம். எங்ஙனம் தனம் பறிக்கும்பொருட்டு, அரசபுருடா உலகரைத் துன்புறுத்துகின்றனரோ அங்ஙனம் அன்னவாயிலாய்த் தந்தையின் அகட்டி (வயற்றி)லுற்ற ஜீவனைத் தந்தையின் ஜாடராக்கினி துன்புறுத்தும். எங்ஙனம் ஹிமாலய பர்வதத்தின்கண் நோயாற் பீடிக்கபபெற்ற பலமற்ற புருடனைப் பெருங்காற்றானது வாட்டுமோ, அங்ஙனம தந்தையி னுதரத்தின்கண் இராநின்ற ஜீவனைப் பிதாவின் பிராணவாயு வாட்டும். பிதாவின் ஆகத்தின்கண்ணே இச்சீவன் மூர்ச்சையோடு கூடியவனுதலால், துக்காநுபவம் சம்பவியாதெனினும் வைராக்கிய முண்டாம்பொருட்டுத் துக்காநுபவங் கூறபபட்டது. யோனிவாயிலாய் மாதாவின் கர்ப்பத்தில் இச்சீவன் புகுவதுபோல முகவடிவ யோனித் துவாரத்தாற் பிதாவின் கர்ப்பத்தின்கண் இச்சீவன் பிரவேசிப்பன். காமத்தாற் பீடையடைந்த இந்த ஸ்திரீயானவள் கர்ப்பதாரணத்தின் இச்சையைச் செய்வதேபோலப் பசிதாகத்தாற் பீடையுற்ற இப்புருடனும் ஜீவனோடுற்ற அன்னவடிவ கர்ப்பதா

ணத்தை யிச்சிப்பன். ஆகையினால் மாதாவின் சரீரத்தின்கண் இச்சீவன் கர்ப்ப பாவத்தை யடைவதுபோலப் பிதாவின் சரீரத்தின்கண்ணும் கர்ப்பபாவத்தை யடைவன்.

சங்கை:—ஸ்திரீயினுக் கொப்பாகவே ஜீவரூப கர்ப்பத்தைத் தந்தை தரிப் பதேயாயின், ஸ்திரீயின் கர்ப்பாதானத்தின்கண் புருடவடிவ பிதாவும், அவனது மைதுனவடிவ வியாபாரமும் காரணமாவதுபோலப் புருடனது கர்ப்பாதானத் தின்கண்ணும் புருடவடிவ பிதாவையும், அவனது வியாபாரத்தையுங் கூற வேண்டும்.

சமாதானம்:—அன்னவாயிலாய்ப் புருட சரீரத்தின்கண்ணே யடைந்துள்ள ஜீவவடிவ கர்ப்பத்திற்கு உலகின்கண் பிரசித்தமாய பிதாவே மாதாவாம்; ஏனெ னின், கர்ப்பத்தைத் தரிப்பவரே மாதாவெனப்படுவர். மாயாவிசிஷ்ட ஈசுவர வடிவ புருடன் இதற்குப் பிதாவாம். ஈசுவரனுக்கும் பிதாவிற்கும் உண்டாகும் சமயோகம் மைதுனதர்மம்போல் இக்கர்ப்பத்திற்குக் காரணமாம். ஆகையினால், பிதா மாதாக்களின் சரீரங்களில் சமான கர்ப்பபாவத்தை இச்சீவ னடைவன், இச்சீவன் மாதாவின் கர்ப்பத்தின்கண் துக்கத்தை யநுபவிப்பதுபோலப் பிதாவின் உதரத்தின்கண் இராநின்ற இச்சீவன் துன்பத்தை யநுபவிப்பன். ஆண்டு அன்னத் தோடு ஏகவடிவுற்ற இச்சீவன் முதலிற் புருடன்முகத்தை யடைவன். ஆண்டுப் பற்களால் அவன்சரீரம் பேதனத்தை யடையும்; முகத்தின் துர்நாற்றத்தால் அவ னது கிராணேந்திரியம் வியாபதமாம். இவ்வண்ணம் பிதாவின் முகத்தின்கண் அனந்ததுக்கங்களை யநுபவித்து மீண்டுந் துன்பத்தோடு கண்டத்துவாரத்தை யடை வன். ஆண்டு அற்பமாராகமாய கண்டத்துவாரத்தின்கண் இச்சீவன் புழுவைப் போற் சேட்டிப்பன், கபத்தால் வியாபதமாவன், வியாகூல இந்திரியங்களோடு கூடி யவனாவன், சக்தியற்றவனாவன், மிகவுந் துக்கியாவன். இவ்விதம கண்டத்தின்கண் இராநின்ற இச்சீவன் துன்பத்தையடைவன். கருடனுடைய வாயிற் சேர்ந்துள்ள மீனமானது நாலுபக்கமும் சுழலும, கருடனுடைய வாயினின்றுந் தப்பவும் விரும் பும; அங்ஙனமாயினும் தப்பமுடியாதாம. அதுபோல இச்சீவனும் கண்டத்துவா ரத்தில் தடைப்பட்டதாய் அநந்ததுக்கங்களை யநுபவிக்கும். இந்தப்பிரகாரம கபத் தின் ஸ்தானமாய கண்டதேசத்தின்கண் அநந்த துக்கங்களை இச்சீவ னடைந்து யோனித்துவாரத்தினின்றும் வெளிப்போதலிற் றுன்பமுறுவதுபோலக் கண்டஸ் தானத்தினின்றும் துன்பத்தோடும் விடுபடுவன். மீண்டும இச்சீவன் இருதயதே சத்தின்கண் இராநின்ற பித்தத்தையடையும். அப்பித்தம் இளகியமலம்போலிருக் கும். தோலையுரித்துவிட்டு ஒரு புருஷனைக் காய்ச்சிய எண்ணெயிலிட்டா லெவ்வண் ணம் துன்பமுண்டாமோ அவ்வண்ணமாய துக்கத்தை யனுபவிப்பவனாய் இச்சீவன் கபஸ்தானகண்டத்தினின்றும் பித்தத்தையடைவன். ஆண்டு ஹிருதய தேசத்தின் கண் பித்தத்தையடைந்த இச்சீவன் அநந்ததுக்கத்தையடைவன். பிராணவாயு வினால் குரங்கைப்போற்சலிப்பதும், ஜடராக்கினியால் தப்தமானதுமாய பித்தத் தின்கண் அடைந்துள்ள இச்சீவன் ஒருகாற் கீழேசெல்வன், ஒருகால் மேலே

செல்வன் ஒருகாற் பித்தத்தின்கண்ணேயே நாலுபுறமும் சுழல்வன். காய்ச்சிய எண்ணெயையடைந்த ஜலமானது கீழும்மேலும் சுழல்வதுபோல இச்சீவன் பித்தத்தின்கட் சுழல்வன். இவ்விதம் பித்தாசயத்தின்கண் அநந்தது:க்கங்களை அநுபவித்து மீண்டும் வாதத்திற் காசிரயமாய வாயுவை இச்சீவனடைவன். அவ் வாயுவானது புரீததிவடிவ கோட்டையின்மத்தியிலிருக்கும், நரிபிவடிவ பர்வதத் தினின்றும் வெளிப்படும், புரீததியென்பது இருதய நாளமாம். வாயுவின்கண் அகப்பட்ட துரும்புபோ லிச்சீவன் *வாதாசய வாயுவின்கண் அகப்படும். தச்சன் காட்டத்தை வாச்சியாற் சேதிப்பதுபோலப் பிராணவாயு அன்னத்தோடுகூடிய இச்சீவனுடைய சர்வ அங்கங்களையும் சேதிக்கும்; அச்சேதிப்பால் சீவனது இந்தி ரியம் வியாகூலத்தையடையும். அவ்வாயு அக்கினிக்குச் சமானமாய் உஷ்ணப்பரி சத்தையுடையது, காய்வையுடையது, துக்கத்தாற் சகிக்கத்தக்கது. அவ்வாயுவின் கண்ணிருந்துகொண்டு சிறிதுகாலம் அங்கே துக்கமநுபவித்து மீண்டும் ஜடராக் கினியை இச்சீவனடையும். ஆண்டு ஜடராக்கினியின்கண் ஜீவனோடுகூடிய அன்னம் பாகமாகும்; அப்பாகத்தாலும் இச்சீவன் பிராரப்தகருமவயத்தால் மரணத்தையடையான். அப்பாகத்தால் அன்னம் உத்தமம் மத்யமம் அதமம் என்னும் முப்பாவங்களையடையும். ஆண்டு அன்னத்தின் உத்தமபாகம் மனபாவத் தையடையும், அதமபாகம் விட்டையின் றன்மையையடையும். அன்னத்தின்மத் தியபாகத்தோடுகூடி யேகரூபத்தையடைந்த சீவன்துவக்கு, உதிரம், மாம்சம், மேதை, அஸ்தி, மஜ்ஜை என்னும் ஆறு தாதுக்களைக்கிரமமாயடையும்; ஆண்டு சமானனெனப் பெயரிய வாயுவின்பலத்தால் பூர்வ பூர்வதாதுக்களையடைந்து மீண்டும் உத்தர உத்தரதாதுக்களையடையும். ஆண்டு ஒவ்வொரு தாதுவின் பிர வேசத்தின்கண்ணும் இச்சீவனுக்கு அநந்த துக்கம் பொறுக்கமுடியாததாயுண் டாம். ஒரு தாதுவின் பிரவேசத்தின்கண்ணேயே ஜீவனுக்குச் சகிக்கமுடியாத துக்கமுண்டாயின், ஆறுதாதுக்களின் பிரவேசத்தின்கண்ணே சகிக்கமுடியாத அநந்தது:க்கம் இச்சீவனுக்குண்டா மென்பதுபற்றி பதில்யாது கூறவேண்டும்? ஆண்டு முதலிற் றுவக்கின்பிரவேசத்தில் சீவனுக்குண்டாம்துன்பத்தைக்காண்பிப் பாம்:—இச்சீவன் அன்னத்தின் மத்தியபாகத்தோடு ஏகரூபத்தையடைந்து நாடி வாயிலாய் முதலில் துவக்கையடையும். †கேசத்தின் நுனிக்கூற்றை நூறு கூறாக் கின் ஒரு கூற்றிற்கு ஒப்பாய்சூக்குமமானவையும், 72,000, எண்ணிக்கை யுடைய வையும், இருதயதேசத்தினின்றும் வெளிப்படுபவையுமாகிய சூக்கும நாடிமார்க்க மாய் இச்சீவன் துவக்கையடைவன். அத்துவக்கானது சர்வசரீரத்தின்கண்ணும் வியாபகமானதும், கேச ‡ரோமங்களோடு கூடியதுமாம். இத்தகைய சூக்கும நாடிகளிற் பிரவேசித்தலினும், நாடிமார்க்கத்திற் செல்வதினும், அந்நாடிகளி னின்றும் வெளிப்போதலினும், நாடிவாயிலாய்த் துவக்கின்கண் ணடைவதினும் எவ்வெத்துக்கம் ஜீவனுக்காமோ அவை ஸ்மிருதியின்கண்ணே பிரசித்தமாம். அத்துக்கங்களைக் கூறுவதினுங் கூட எமக்கு மோக முண்டாகின்றது. இந்தப் பிரகாரம் துவக்கின்கண் அநந்த துக்கங்களையநுபவித்து அத்துவக்கினின்றும்

---

* வாதாசயம்=வாதத்திற் கிருப்பிடமாகிய பை. † கேசம்=தலை மயிர்.
‡ ரோமம்=சரீரத்தின்கண்ணுள் மயிர்.

மீண்டும் உதிரரூப இரண்டாவது தாதுவை இச்சீவனடையும். செவ்வரக்கின் இரசத்திற் கொப்பாய இரக்தவர்ணமாயதும், பயத்தோடுகூடிய புருஷனுக்குக் கண்டமாத்திரத்தாலேயே மோகத்தையுண்டு பண்ணுவதுமாகிய உதிரத்தின் கண்ணே அனந்த துக்கங்களை யனுபவித்து மீண்டும் அந்த உதிரத்தினின்றும் மாம்சவடிவ மூன்றாவதுதாதுவை இச்சீவனடையும். மிகவுங்கனமாயதும், இலவ விருக்ஷத்தின் புஷ்பத்திற்குச் சமானமான வர்ணமுடையதுமாகிய மாமிசத்தின் கண் அடைந்துள்ள இச்சீவன் ஒருகால் மூர்ச்சையையடைவன், ஒருகால் பயத்தை யடைவன், ஒருகால் இந்திரிய வியாகூலத்தையடைவன். இந்தப்பிரகாரம் மாம்சத் தின்கண் அநந்ததுக்கங்களை யனுபவித்து மீண்டும் அம்மாமிசத்தினின்றும் விழுந்த இச்சீவன் அக்கினியாலும் பிராணவாயுவாலும் செலுத்தப்பெற்று மேதை வடிவ நான்காவது தாதுவையடைவன். அக்கினியாற் காயவைக்கப்பட்ட நெய்யா னது சூரணத்தின்கண்ணே பிரவேசிப்பதுபோல இச்சீவன் மேதையின்கண்ணே பிரவேசஞ்செய்வன். கோதுமையின் சூரணத்தைப்போன்று வெண்மையாய மேதையின்கண் அநந்த துக்கங்களை அநுபவித்து மீண்டும் அம்மேதையினின் றும் என்புவடிவ ஐந்தாந்தாதுவை யிச்சீவனடைவன். மண்ணானது காஷ்டக் கூட்டத்தை யடைவதுபோலப் புருஷகர்ப்பத்தின்கண் இராநின்ற இச்சீவன் என் புகளையடைவன். சரீரரூபகிருகத்தின் தூண்களும் சாஸ்திரங்களில் 360 என எண்ணிக்கை செய்யப்பட்டவையுமான என்புகளின்கண் அநந்த துக்கத்தை யனுபவித்து மீண்டும் அவ்வென்புகளினின்றும் மஜ்ஜைவடிவ ஆறாந்தாதுவைப் பைய்யப் பைய்ய இசசீவனடைவன். காஷ்டத்தின் கண்ணிரா நின்ற ஜலம் பைய்யப்பைய்யக் காட்டத்தின்கண்ணே பிரவேசிப்பதுபோல இச்சீவன் மஜ்ஜை யின்கண்ணே பிரவேசிப்பன். என்புகளினுள்ளிருப்பதும், சாரரூபவீரியத்தோடு கூடியதுமான மஜ்ஜையின் சாரரூபமாய்ச் சிறிதுகாலம் இசசீவனிருப்பன். மீண்டும் ஸ்திரீயின் சம்பந்தரூப நிமித்தத்தாற் பிதாவிற்குக் காமவடிவ அக்கினி மனத்தின்கண் உற்பன்னமாயின், நாற்புறங்களினும் மஜ்ஜை வீரியரூபசாரத்தைப் பரித்தியாகஞ்செய்யும். அக்கினியின் சம்பந்தததால் நெய் நெகிழ்வதுபோலக் காமாக்கினியால் மத்தகத்தினின்றும் பாதபரியந்தம சர்வாங்கங்களினின்றும் மஜ்ஜையின் சாரம் வெளிப்படும். அம்மஜ்ஜையின் சாரரூப வீரியம் பிதாவாற் சகிக்கமுடியாததாம் என்னுமிவ்வர்த்தத்தை நான்கு திருஷ்டாநதங்களாற் காண் பிப்பாம்:—பத்தாவது மாதத்திற் பிரசவகாலத்தில் ஸ்திரீயால் இகேர்ப்பம் துக்கத் தாற் சகிப்பதுபோலக் காமாக்கினியுதயமாயின், பிதாவால் இவ்வீரியரூப கர்ப்பம் துக்கத்தாற் சகிக்கப்படும். ஈரத்தருவானது தனது பொந்தின்கண் அழலைச் சகிக்க மாட்டாததுபோலப் பிதாவும் வீரிய ரூபகர்ப்பத்தை அக்காலத்திற் சகியான். ஒரு புருஷன் சத்துருவின் நாசத்தின்பொருட்டுச் சேனயாக முதலிய வடிவ கர்மங்களைச் செய்வனேல் அக்கர்மங்களாற் சத்துருவின் இருதயம் ஒருபோதும் நிலை பெறாதது. அதுபோல காமாக்கினியின் தாபத்தாற் பிதாவின் வீரியம் நிலை பெறமாட்டாது. இரச(பாதரச)மானது தேகத்தின்கண் நிலைபெறாததுபோலக் காமாக்கினியால் நெகிழ்வையடைந்த மஜ்ஜையின் சாரவீரியம் ஒருகாலுந்தேகத்

தின்கண் நிலைபெறுது. மாதாவின் உதரத்தினின்றும் கர்ப்பத்தைப் பிரசூத வாயுவானது வெளியே தள்ளும். பிதாவின் சரீரத்தினின்றும் கர்ப்பத்தைக் காமாக்கினியானது சலிப்பிக்கும். ஆகையினால் இரண்டிற்குஞ் சமானத்தன்மை சம்பவியாதெனினும், மாதாவின் சரீரத்தின்கண் இச்சீவன் கர்ப்பரூபமாய் நிலை பெற்றிருப்பதுபோலப் பிதாவின் சரீரத்தின் கண்ணும் கர்ப்பரூபமாய் நிலை பெற்றிருக்கும். பிரசவகாலத்தின்கண் மாதாவை இக்கர்ப்பம் வியாமோகம் செய்வது போலப் பிதாவையும் இவ்வீரிய வடிவகர்ப்பம் வியாமோகஞ்செய்யும். ஆகையினால் இரண்டினும ஜீவனுக்குக் கர்ப்பரூபத்தன்மை சமானமாம். (அன்னிய வஸ்துவின்கண் அன்னியபுத்தியின் பெயர் வியாமோகமாம்.) ஆண்டு வீரியரூப கர்ப்பம் வெளிப்போங்காலத்து உண்டாகும் பிதாவின் வியாமோகத்தைத் திருஷ்டாந்தத்தாற் காண்பிப்பாம் :—கபதோஷத்தால் வேம்புமுதலிய கசப்பு வஸ்துக்கள் மதுரபாவத்தை யடையுமாறுபோலக் காமாக்கினிவடிவ தோஷ முண்டாயின் இக்காமி புருஷனுக்கு ஸ்திரீ சரீரம் துன்பசாதனமாயினும் சுகசாதனமாய்ப் பிரதீதியாகும். துர்நாற்ற நீரோடுகூடிய பெண்ணின் முகமானது ஆராயின் வெறுக்கத்தக்கதாயினும், காமதோஷத்தாற் காமியானவனுக்கு நிலாப்போற் சுகசாதனமாய்ப் பிரதீதிபாம. மலத்தோடுகூடிய ஸ்திரீயின் கண்ணானது ஆராயின், வெறுப்பிற்கு ஏதுவாயிருப்பினும் காமதோஷததாற் காமியானவனுக்குக் கமலம்போல இரமணீயமாய்த் தோறறும. ஸ்திரீயின் நேத்திரங்களின் கடாக்ஷம விஷத்தோடுற்ற அம்புபோலச சம்பூரண நரகங்களின் காரணமாமெனினும், காமதோஷத்தாற காமிககுச சநததம புஷ்பம்போற றோறறும். சிலேட்டும வெளிபபடும் மார்க்கமாய ஸ்திரீயின் மூக்கானது ஆராயின் வெறுப்பின் காரணமாயினும் காமதோஷத்தாற் காமிக்குப பால்போல மதுரமாய்த் தோற்றும். பாயு இந்திரியத்திற்குச சமானமாய ஸ்திரீயின் அதரமானது ஆராயின், வெறுப்பின் ஏதுவேயெனினும், காமிபுருஷனுககுக் காமதோஷத்தால் அமிருதம்போற் றோற்றும். இருட்டிற்குச சமானமாய்க் கறுபபா யிராநின்ற ஸ்திரீயின் கேசமானது நேத்திரத்தின் சாமர்த்தியத்தைக குன்றசசெய்வதேயாயினும், காமதோஷததாற் காமியின் நேத்திரங்கட்கு மகிழ்வையுண்டாக்கும். தசையின் முடிச்சாகிய ஸ்திரீயின் தனமானது ஆராயின் வெறுபபிற்கு ஹேதுவேயெனினும், காம தோஷத்தாற் காமிக்கு அமிருதத்தால நிறைக்கபபெற்ற பொறகுமபம்போற் றோற்றும். அதிக மாமிசத்தோடுகூடிய ஸ்திரீயின் வயிறும், மாமிசரஹித வயிறும், பன்றி நாய்களின் வயிற்றிற்குச சமானமாம். விட்டை, மூத்திரங்களின் ஸ்தானமாம், ஆராயின் வெறுககககூடியதாயினும, காமககிரகத்தாற பீடிக்கப பெற்ற காமிசகுச சுககாரணமாய்த் தோற்றும். பாயுவடிவ நதியின்றீர வடிவஸ்திரீயின் ஸ்பிஜமானது விஷ்டா மூத்திரத்தாற பூசப்பெற்றதாமாதலின், ஆராயின் வெறுக்கக் காரணமாயிருப்பினும், காமதோஷத்தாற் காமிக்கு இரமணீயமாய்த் தோற்றும். இடையின் கீழிருக்கும் மாமிசபிண்டத்தின் பெயர் ஸ்பிஜமாம். அதனையே ஜகனமென்றுங் கூறப்பெறும். பகந்தரநோய்க்குச சமானமானதும், மூத்திர கந்தத்தாற் றூஷிதமானதுமாய ஸ்திரீயின் யோனியானது ஆராயின், வெறுக்க ஏதுவாயினும், காமதோஷத்தாற் காமிக்குச் சுவர்க்கசமானமாய்த் தோற்றும்.

துடையினின்றும் பாதபரியந்தம் மாமிசத்தோடுகூடிய என்பு வடிவஸ்திரீயின் காலானது ஆராயின், வெறுக்கத்தக்கதேயெனினும், காமதோஷத்தாற் காமிக்குச் சுவர்ணவாழைத் தம்பசமானமா யிரமணீயமாய்த் தோற்றும். இந்தப்பிரகாரம், காமதோஷபலத்தாற் காமிபுருஷனுக்குப பெண்ணானவள் அமிருத சமானமாய்த் தோற்றுவதேபோலக் காமதோஷத்தின் பலத்தாற் பெண்ணிற்கும் புருஷன் அமிருதசமானமாய்த் தோற்றுவன். ஈண்டிது கருத்தாம் :—ஒவ்வொரு தோஷம் காரியத்தின் பிரதிபந்தகமாம். நேத்திரத்தின்கண் இராநின்ற பித்த தோஷமானது சங்கத்தின்கண் ணுண்டாம். சுவேத ஞானவடிவ காரியத்தின் பிரதிபந்தக மாவதுபோல, ஒவ்வொரு தோஷம் விபரீதகாரியத்தை யுண்டுசெய்யும் ; அக்கினியாற் றகிகக்ப்பெற்ற பிரமபின் பீஜமானது வாழையை யுண்டாக்குவது போல, அல்லது பஸ்மகரோகததால் தூஷிக்கப்பெற்ற ஜாடராக்னி மிகுதியாய அன்னத்தைப் பக்குவபபடுத்துவதுபோலவாம். இந்தபபிரகாரம் காமரூபதோஷமும், விபரீதகாரியத்தின் ஆரம்பகமாம். அங்ஙனமே காரியத்தின் பிரதிபந்தகமாம் ; ஆண்டு ஸ்திரீயின் முக முதலிய அவயவங்களில் நிலாமுதலிய புத்திவடிவ விபரீத காரியத்தின் ஆரம்பகத்தன்மை காமதோஷத்திற்கு முன்னரே காண்பித்தாம். இபபோது சர்வஞானங்களுக்கும் பிரதிபநதகமாங் காமதோஷத்தைக் காண்பிப்பாம் :—இவ்வகைபாகக் காமிக்குக்காமாக்கினியாலுண்டாம் வீரியவடிவ கர்ப்பத்தின் கலக்கமாம்போது இக்காமியானவன் சாஸ்திரபபிரமாணத்தால் தர்மத்தை யறியமாட்டான், அதர்மத்தையும் அறியமாட்டான், இரவையும் பகலையும் அறியமாட்டான், தன்னையும் அன்னியனையுமறியமாட்டான், சுஹிருத்தையும (பதினுபகாரத்தை விரும்பியவனையும்) மித்திரனையு மறியான், ஸ்திரீயின் அவயவங்களில் நேத்திரத்தால் தோஷத்தைக்கண்டபோதினும் இக்காமியானவன் காமதோஷத்தின் பலத்தால் அந்தகனைபபோல் பார்க்கமாட்டான், தோஷத்தைச சிரவணஞ் செய்தபோதினும் இக்காமியானவன் செவிடனைபபோல் கேளான், கிராண இந்திரியத்தால் துர்க்கந்தத்தை முகரினும் காமியானவன் கிராணதோஷமுற்ற புருஷனைப் போல முகரான். இரசன இந்திரியததால் இரசத்தின் அனுபவததைச செய்த போதினும் இரசனமின்றிய புருஷனைபபோல் அனுபவிக்கின்றானில்லை. துவக்கிந்திரியத்தால ஸ்பரிசஞ் செய்தபோதினும இககாமியானவன் துவககிந்திரியமற்றவனை போல பரிசியான். இவ்வகை ஞானேநதிரியங்களின் சத்தியின் பிரதிபநதகத்தன்மையைக் காமதோஷத்தின்கண் காட்டப்பட்டது.

இப்போது கர்ம இந்திரியங்களின் சத்தியின் பிரதிபநதகத்தன்மையைக் காமதோஷத்தின்கண் காட்டுவாம் :—காமதோஷபலததாற் பண்டிதனாயினும் இப்புருஷன் ஜடனைப்போற் பேசுவன். இக்காமிபுருஷன் கரங்களோடு கூடியவனேயெனினும் கரங்களற்றவனைப்போல வஸ்துவைக் கிரகிப்பன். பாத இந்திரியவானாயினும் இக்காமியானவன் பாத இந்திரியமின்றிய *பங்குவைபபோலக கமனஞ்செய்வன். மலபரித்தியாக இச்சையையுண்டாக்குவதாய வயிற்றின் உப்பல் இருப்பினும்

---

* பங்கு = முடம்.

ரோக்கமின்றிய இக்காமியானவன் மலத்தின் பரித்தியாகத்தைச்செய்யான் ; அல்லது மலத்தின் பரித்தியாகத்தைச் செய்தபோதிலும் பரித்தியாகத்தைச் செய்யவில்லை. கருத்திதுவாம் :—சரீரத்தின் மலதரிசனத்தின்பலம், சரீரத்தின்கண் வைராக்கிய முண்டாதலாம். அம்மலதரிசனத்தால் எப்போது சரீரத்தின்கண் வைராக்கியம் உற்பன்னமாகவில்லையோ அப்போது மலத்தின் பரித்தியாகஞ் செய்தபோதிலும் செய்யவில்லை.

இப்போது பலம் ஐசுவரியம் பிரபுத்தன்மைகளின் பிரதிபந்தகத்தன்மை காமதோஷத்தின்கண் காண்பிப்பாம் :—இக்காமியானவன் பலவானாயினும் பல மற்றவனைப்போற் பிரதீதியாவன், ஐசுவரியவானாயினும் தாரித்திரனைப்போற் றோற்றுவன், பிரபுத்தன்மையோடு கூடிய அரசனாயினும் இக்காமியானவன் தாசனைப்போற் றோற்றுவன்.

இப்போது அந்தக்கரண சதுஷ்டயத்தின் பிரதிபந்தகத்தன்மையைக் காமதோஷத்தின்கண்ணே காண்பிப்பாம் :—இக்காமியானவன் புத்திமானாயினும் புத்தியற்றவனைப்போற் றோற்றுவன் ; மனமுடையவனாயினும் மனமற்றவனைப்போற் றோற்றுவன். அகங்காரவானாயினும் இக்காமியானவன் அகங்காரம் அற்றவனைப் போற் றோற்றுவன். சித்த முற்றவனாயினும் இக்காமியானவன் சித்தமற்றவனைப் போற் றோற்றுவன். இந்தப்பிரகாரம் காமரூபசுரத்தின் வயத்தனாய் வீரியரூப சர்ப்பத்தைத் தரியாநின்ற காமியானவன் விவேகிகளால் நிந்திக்கப்படுவன் ; பச்சாத்தாபத்தின் விஷயமென முற்கூறிய அவஸ்தையையுமடைவன்.

சங்கை :—காமதோஷமானது ஸ்திரீயின் வேறாயபதார்த்தங்களில் சர்வ இந்திரியங்களின் வியாபாரத்தின் பிரதி பந்தகத்தன்மையை ஏன் செய்கின்றது ?

சமாதானம் :—கூடஸ்த ஆன்மாவை மோகவடிவக் கயிற்றாற்கட்டி மகாமோகன் சுதந்திர அரசாங்கஞ்செய்ய இச்சித்தனன். அந்தமகா மோகன் விவேகத்தினின்றும் பயத்தை யடைந்தவனாய்க் காமனைப் பிரதான மந்திரியாக்கினன். அக்காமன்தனது எஜமானனாகிய மகா மோகனுக்கு இவ்வண்ணங் கூறினன் :—ஹே மகாமோக ! தாங்கள் சிறிதேனும் விவேகத்தாற் பயப்படவேண்டியதில்லை ; ஏனெனின், எப்புருட சரீரத்தின்கண் விவேக உற்பத்தியின் ஆசையுண்டாகின்றதோ அப்புருட சரீரத்தைச் சர்வ இந்திரியங்களோடு நிந்திதமாய ஸ்திரீ சரீரத்தின்கண் யான் முயல்விப்பேன் என்னும் பிரதிஞ்ஞையைக் காமனானவன் மகாமோகன் முன்னே கூறினன். அந்தப்பிரதிஞ்ஞையைப் பாலனஞ்செய்யும் பொருட்டு மற்றிடங்களில் இந்திரியங்களின் வியாபாரத்தின் பிரதிபந்தகத்தைச்செய்து ஸ்திரீயின்கண்ணேயே சர்வ இந்திரியங்களின் வியாபாரத்தையும காமன் பிரவிருத்திப்பித்தனன். இக்கருத்தினாலே காமியின் சர்வ இந்திரியங்களின் வியாபாரத்தையும் ஸ்திரீயின்கண்ணே காண்பிப்பாம் :—அக்காமியானவன் காமமுண்டாங்கால் நேத்திரங்களால் ஸ்திரீயையேபார்ப்பன், ஒரு மனதோடும் அக்காமியானவன் சுரோத்திர இந்திரியத்தால் ஸ்திரீயைக்கேட்பன், கிராண இந்திரியத்தால் அந்தஸ்திரீயையே முகருவன், இரசன இந்திரியத்தால் அடிக்கடி அந்தஸ்திரீயின் இரசத்தை

யே பருகுவன், துவக்இந்திரியத்தால் ஆதரபூர்வகமாய்ச் சர்வ அங்கங்களாலும் அந்த ஸ்திரீயையேபரிசிப்பன்.

இப்போது ஸ்திரீவிஷயகமாய கர்ம இந்திரியங்களின் வியாபாரத்தைக் காண்பிப்பாம் :—அக்காமியானவன் வாக்கிந்திரியத்தால் அந்த ஸ்திரீயையே சுகத்தின் காரணமெனக் கூறுவன், ஹஸ்த இந்திரியத்தால் ஆதரபூர்வகமாய் அடிக்கடி அந்த ஸ்திரீயையே கிரகிப்பன். இக்காமியானவன் பாத இந்திரியத்தாலும் தேவதையினிடத்திலுங் குருவினிடத்திலும் போல அந்த ஸ்திரீயின் சமீபத்திலேயே கமனஞ் செய்வன். பாயு இந்திரியத்தால் மலத்தின் பரித்தியாகவடிவ வியாபாரஞ்செய்வதற்கும் இக்காமியானவன் முயல்வன், ஆனால் பாயு இந்திரியத்தின் வியாபாரம் ஸ்திரீயின்கண் ஒவ்வாததாமாதலின் அதனைச் செய்யான். இது கூறியதுகொண்டு காமிபுருஷனைப் பரிகசித்தல் காண்பிக்கப்பட்டது.

இப்போது ஸ்திரீயின்கண் அந்தக்கரண சதுஷ்டய வியாபாரத்தைக் காண்பிப்பாம் :—விவேகியானவன் மனத்தால் தேவதையின் ஸ்மரணஞ் செய்வதேபோல இக்காமியானவன் மனத்தால் ஸ்திரீயையே ஸ்மரிப்பன். யோகியானவன் மதியால் ஆன்மாவை நிச்சயஞ்செய்வதேபோல இக்காமியானவன் மதியால் அந்த ஸ்திரீயையே நிச்சயஞ்செய்வன். சுத்தபுத்தியையுடைய விவேகியானவன் இரவினும் பகலினும் சித்தத்தால் விஷ்ணுவைச்சிந்திப்பதேபோல இக்காமியானவன் இரவினும்பகலினும் ஸ்திரீயையே சித்தத்தாற் சிந்திப்பன். இக்காமியானவன் காமதோஷத்தின் பலத்தால் ஸ்திரீயையே ஆன்மாவென எண்ணுவன்; இக்காரணத்தால் ஸ்திரீயால் அடிபடினும் அவளையே அதிகமாயெண்ணுவன்.

இப்போது ஸ்திரீயின் அதீனத்தாற சனித்தபுருஷனுடைய தோஷத்தைக் கூறும் பொருட்டு முதலில் உலகப்பிரசித்தமாய ஸ்திரீயின் தோஷத்தைக் காண்பிப்பாம் :—ஸ்திரீயும் தன்னதீனமான காமியைப புருஷன் குரங்கையாட்டுவதேபோலாட்டுவள்; தனது கருத்தின்படியே சர்வகாரியத்தையும் செய்விப்பள் என்பது கருத்தாம்.

இப்போது, ஸ்திரீயின் விவஸ்தையற்ற இயல்பாய தோஷத்தைக்காண்பிப்பாம் :—ஒவ்வொருக்கால் ஸ்திரீயானவள் பல்வகையாய பணிவிடைகளாற் புருஷனைச்சன்மானஞ் செய்வள், ஒவ்வொருக்கால கூர்மையாய அம்புபோன்ற வசனங்களாற் புருஷனை நிராதரஞ்செய்வள், ஒவ்வொருக்கால் ஸ்திரீயானவள் பதியைப் பார்த்து இங்ஙன் கூறுநிற்பள் :— ஹே நாத! உடலைக்காட்டினும் உயிரைக்காட்டினும் நீ எனக்கு மிகப்பிரியனாகும். ஒவ்வொருக்கால் இங்ஙன்கூறு நிற்பள் :— நீயாருக்குக்கணவன் யான் உன்னை அறிந்ததேயில்லை, ஒவ்வொருக்காற் கணவனோடு ஸ்திரீயானவள் பேசுவள், ஒவ்வொருக்கால் ஒருமொழியும் பேசாள். ஒவ்வொருக்கால் ஸ்திரீயானவள் பதியினிடத்தே தனத்தைக்கேட்பள், ஒவ்வொருக்கால் ஸ்திரீயானவள் கணவனுக்குத் தான் றனத்தைக்கொடுப்பள்.

இப்போது ஸ்திரீயின் நிர்த்தயைத் (தயையில்லாத்) தன்மைவடிவ தோஷத்தைக்காண்பிப்பாம்:—ஒவ்வொருக்கால் ஸ்திரீயானவள் பரபுருஷனிடத்திற் பற்றுடையவளாய் உறங்காநின்ற தன்பதியை நாசஞ்செய்வள்; ஒவ்வொருக்கால் அன்னிய புருஷனிடத்திற்கூறிப பதியை நாசஞ்செய்விபபள். இந்தப்பிரகாரம் சாது சுபாவத்தோடு கூடியஸ்திரீயும் தனக்கனிஷ்டஞ் (விரோதஞ்) செய்பவனுகிய அன்னிய புருஷனைத் தன்பதியைக்கொண்டேனும் அண்ணன்மார் முதலியோரைக்கொண்டேனும் நாசஞ்செய்விப்பள். வியபிசாரி ஸ்திரீயோ நேயமற்றவளாய்த் தனதுபதி புத்திரன் பிதா முதலியோரையும் அன்னிய பலவானுய புருஷனைக்கொண்டு நாசஞ்செய்விப்பள். ஒவ்வொருககால் ஸ்திரீ சிஷ்டபுருஷர்களின் சபையின்கண் சாது புருஷனையும் பொய்வசனங்களால் சிரிப்பிற்கு யோக்கியமாக்குவள். ஒவ்வொருகால் ஸ்திரீயானவள் தனது அற்பகாரியத்தின்கண் பிதாவையும் தமையனையும் மைந்தனையும் வித்தைநிறைந்த மறையோனையும் நாசஞ்செய்விபபள். இவ்வார்த்தை எல்லாவுலகின்கண்ணும் பிரசித்தமாம். இந்தபபிரகாரம் ஸ்திரீயின்கண்ணே பற்றுள்ள புருஷனுககு இச்சன்மத்தின்கண் நிசசயமாய்த் துன்பமுண்டாம; பரலோகத்தின்கண் நரகப்பிராபதியாம். ஆகையினுல் ஸ்திரீயின்கண்ணே பற்றுற்றிருக்கும் விவேகி புருஷன் யாவன்? மற்றோ மூடபுருஷனுக்கே பற்றுண்டாம். ஈண்டிது கருத்தாம்:—மன்னர் முதலியோரோ! நேயமற்றவராயப புருஷரை நாசஞ்செய்வர், *டாகினி நேயமுற்ற தாயே நாசஞ்செய்யும்; ஸ்திரீயோ நேயமுற்றவளாயும் நேயமற்றவளாயும புருஷனை நாசஞ்செய்வள். அநதஸ்திரீயும் இருவகையாவள், ஒருத்தியோ தனது ஸ்திரீயாம், மற்றவளோ பரஸ்திரீயாம். அவருள் நேயத்தோடு கூடியவளாயினும் தனது ஸ்திரீ, பதி அன்னிய ஸ்திரீயின் பாற் செல்வதைககண்டு குரோதமுற்றவளாய், விடங்கொடுத்தேனும், வேறுயாதாவது மநதிரமுதலிய கொண்டேனுந தனது பதியை நாசஞ்செய்வள். பரஸ்திரீ அன்னிய புருஷனிடத்தில் நேயமுறுவளேல், அநதப பரஸ்திரீ யாதாவதொரு நிமிததத்தாற் குரோத முற்றவளாய் அந்தப்பரபுருஷனைத தனது பிதாவாயிலாயேனும் தமையன் வாயிலாயேனும் நாசஞ்செய்விபபள்: இந்தபபிரகாரம தனது ஸ்திரீயும் பரஸ்திரீயும் புருஷனிடத்தில் நேயமுற்றவளேனும்; இரண்டு லோகத்தினும் பயத்தின் காரணமாவள். தனது ஸ்திரீ புருஷனிடத்தில நேயமற்றவளாயின், ஏகாந்தஸ்தானத்தின்கண் காமச்சுரத்தாற் பீடிக்கப்பெறற புருஷனைக் கடினவசனங்களால் அடிப்பள் அவனது சமீபத்தினுஞ்செல்லாள். அல்லது காரியாநதர கற்பனை முன்னிலபாய் இக்காமத்தாற் பீடிக்கப்பெற்ற புருஷனைப் பரித்தியாகஞ்செய்து அன்னிய புருஷனிடத்திற் செல்வள். • பதியானவன் பரபுருஷனிடத்தில் ஸ்திரீசெல்வதைக் கண்டுகொண்டால் அவள் பலமுடையவளாயிருப்பின் இரவிற் புருஷனைத் தானேகொல்வள், பலமற்றவளாயிருப்பின் அன்னிய புருஷனைக்கொண்டு பதியை நாசஞ்செய்விப்பள். பரஸ்திரீ அன்னிய புருஷனிடத்தில் நேயமற்றவளாயின் அக்கால் அப்புருஷனுடைய மரணத்தின் காரணமாவள். ஏகாந்தஸ்தானத்தின்கண் இப்புருஷன் என்னை யிசசித்தானெனத் தன்னுடைய சம்பந்திகட்குக்கூறி யப்புருஷனைக் கொல்விப்பள். இந்தப்பிரகாரம் தனது ஸ்திரீயினிடத்திலும் பரஸ்திரீயினிடத்

* டாகினி=ஓர் பிசாசு.

திலும் அநந்தவகையாய தோஷங்களுள ; அத்தோஷங்களைக் காமியானவன் இரவிலும் பகலிலும் சந்தத மனுபவிக்கின்றனன். காமிக்குத் துன்பகாரணம் ஸ்திரீயாவதேபோல காமத்தோடுற்ற ஸ்திரீக்கும் துன்பகாரணம் புருஷனும்; ஆகையினுல் இது சித்தித்ததாம் :—காமமே சர்வ துன்பத்தின் காரணமாம் ஸ்திரீயும் புருஷனும் துன்பத்தின் காரணமன்றும். ஸ்திரீயே புருஷனுடைய துன்பகாரணமாயின் காமமின்றிய ஸ்திரீயும் புருஷனுடைய துன்பகாரணமாக வேண்டும், காமமின்றிய ஸ்திரீயோ! புருஷனுடைய துன்பகாரணமன்றும், புருஷனே ஸ்திரீயின் துன்பகாரணமாயின், காமமின்றிய புருஷனும் துன்பத்தின் காரணமாதல்வேண்டும். காமமின்றிய புருஷனே! ஸ்திரீயின் துன்பகாரணமாவதின்றும். ஆகையினுல் காமத்தின் உற்பத்தியுண்டேல் துன்பத்தின் உற்பத்தியுண்டாம்; காமத்தின் அபாவத்தால் துன்பத்தின் அபாவமாம்; இவ்வண்ணம் உடன்பாட்டாலும் எதிர் மறையாலும் காமமே சர்வ துன்பத்தின் காரணமாம். இந்தப் பிரகாரம் துன்பத்தின் காரணமாய காமரூப சத்துருவை அறிந்து புத்திமானுய புருஷனுனவன் அக்காமத்தைப் பரித்தியாகஞ்செய்யவேண்டும். இதன்கண்ணே வித்வான்களுடைய அநுபவத்தைக் கூறுதும் :—

காமகிங்கரதாம்ப்ராப்ய ஜநா நாநாகஸ்ய கிங்கரா:।
வசகம்காமம்பரித்யஜ்ய ஜநாஸர்வஸ்ய கிங்கரா:॥

"காம கிங்கரத் தன்மையைக் கவர்ந்து காளையர்க
டாமே வர்க்குமே கிங்கர ராகுவர் தரைமேற்
காம மொன்றினை விடுத்திடிற் காளைய ரிவர்க
டாமே வர்க்குமே கிங்கரர் தரையி லா யிலரே." (3)

இதன் பொருள்.—ஒரு காமத்தின் அதீனமாய இபபுருஷன் சர்வத்தின் தாசனுவன் ஒரு காமத்தைப பரித்தியாகஞ்செய்யின் எதற்குந்தாசன் அன்றும்.

இப்போது காமத்தின் மூலத்தையும் அதன் நிவிர்த்தியின் உபாயத்தையும் காண்பிப்பாம் :—இந்நாரி இரமணீயமானவள் என்னும் புத்தியினுல் காமமுற்பன்னமாம், இரமணீயபுத்தியும சௌந்தரியாதி குணபுத்தியா லுற்பன்னமாம். ஆகையினுல் குணபுத்தி இரமணீய புத்திவாயிலாய்க் காமத்தின் காரணமாம். அதன் நாசமின்றிக் காமத்தின் நாசமுண்டாகமாட்டாது. அநதக்குணபுததியின் நாசம் முற் கூறிய ஸ்திரீயின்கண் ணுள்ள தோஷ ஞானத்தா லுண்டாம்; தோஷதரிசனத்தால் குணபுத்தியின் காரணமாய மோகமும் நாசமாம். அந்த மோகமானது ஜகத்தைக்குருடாக்குவதாம், சுந்தரத்தன்மைக் குணமில்லாத நாரிமுதலியவற்றின்கண் சுந்தரத்தன்மைய புத்தியின் காரணமாம; ஆவரணசக்தி விக்ஷேபசக்தியோடு கூடியதென்பது கருத்தாம். மேலும அம்மோகம் அதிவிஸ்தாரமாய காமவிருக்ஷத்தின் பீஜமாம், ஆகையினுல் அம்மோகம் நஷ்டமாயின் க்ஷணமாத்திரத்திற் காமந்தானே நஷ்டமாம், மூலம் நஷ்டமான விருக்ஷம் நாசமாவதேபோல, இச்சைவடிவ காமம் நஷ்டமுறின் குரோதமும் அக்கால் நாசமாம், ஏனெனின், இச்சாரூப காமத்தை யொரு புருஷன் நிரோதஞ்செய்யின் இச்சாரூப காமமே த்வேஷ

ரூப குரோதாகார பரிணாமத்தைபடையும். இச்சையின்றிய புருஷனுக்கு எந்நிமித்தத்தாலும் குரோதமுண்டாகமாட்டாது.

இனிக்காமக் குரோதங்களின் நிவிர்த்தியின் பலவர்ணனம் :—

விவேகவஹ்நிநாத஗்த்⁴ காமக்ரோத⁴மயம் மலம் ।
ஸம்ஸாரமூலம் தஹதி ஸ்வாத்மா ஆவிர்பவத்யஹோ ॥

"மெய்யுணர் வழலி னானே மிளிர்தரு மூலத் தோடும்
பொய்யுறு காமம் வெய்ய சினமதும் பொன்று மாயி
னய்யசம் சாரந் தன்னி னரும் பெரும் பகவா னான
செய்யவிவ் வானந் தான்மா செவ்வனே திகழு மன்றே." (4)

இதன் பொருள் :—மகாவாக்கியத்தாற் ஜன்னிய ஆன்மஞானரூப அக்கினியால் மூல அஞ்ஞான சஹிதகாமக்குரோதம் நாசமாயின், இச்சரீரத்தின்கண் மகாவாக்கியத்தின் அர்த்தவடிவ ஆநந்த ஆன்மா பிராதுர்ப்பாவமாம் (வெளிப்படும்) இவ்வர்த்தத்தின்கண் ஸ்மிருதிவசனத்தையுங் காண்பிப்பாம் :—

காம ஜாநாமி தே மூலம் ஸங்கல்பாத்கில ஜாயஸே ।
ஸங்கல்பம் ந கரிஷ்யாமி தேந மே ந ப⁴விஷ்யஸி ॥

"நின்னுடை மூலங் காம நிபுணமா யறிகு வேன்யா
னுன்னுசங் கற்பத் தானே யுதிதநீ யாகு வாயா
லன்னசங் கற்பந்தன்னை யறிந்துயான் விட்டு நீக்கி
னென்னண மென்னி டத்தே யெழுந்துதித் திடுவாய் நீயே." (5)

இதன்பொருள் :—ஹே காம! நின்மூலம் நானறிவன், சங்கற்பத்தினின்றும் நீயுற்பன்னமாவாய், அசசங்கற்பத்தையான் பரித்தியாகம்செய்துளேனாதலின் எவ்வகையானும் என்னிடத்தில் உனது உற்பத்திசம்பவியாது. இந்தப்பிரகாரம் காமத்தின்கண் சர்வ அனர்த்த மூலத்தன்மையையும், காமநிவிர்த்தியின் உபாயத்தன்மையையும், இக்காமியானவன் அறியானாய் வீரியவடிவகர்ப்பத்தோடு கூடியவனுய்க் காமரூபக் கிரகத்தால் வியாகூலமுடையவனாய்ச் சர்ப்பம் போன்ற உபஸ்தவடிவ சர்ப்பத்தாற் கடியுண்டவனாய் அக்கால் ஒன்றுமறியான். காமரூபக்கிரகப்பிரவேசத்தாலும் உபஸ்தவடிவ சர்ப்பம் பக்ஷணஞ் செய்திருத்தலினாலும் இக்காமியானவன் வீரியரூபகர்ப்பத்தால் க்ஷீணமடைந்தவனாய் அவ்வீரியரூப கர்ப்பத்தின் தியாகத்தை இச்சிப்பன். அவ்வீரியரூப கர்ப்பமானது சரீரத்தின் சாரபூதமாம், சர்வாங்கங்களினின்றும் தனிப்படுத்தப்பட்டதாம். அவ்வீரியரூப கர்ப்பத்தை இக்காமியானவன் சகியாதபோது நாரியின் யோனியின்கண் பரித்தியாகஞ்செய்வன். இவ்வண்ணம் மைதுனதர்மத்தாற் பிதாவின் அற்பவடிவமாய வீரியவடிவ கர்ப்பமானது ஸ்திரீயின் யோனியையடையும். பாரத்தாற்றுன்பமுற்ற புருஷன் பாரத்தியாகத்தாற் சுகியாவன்; அதுபோல், வீரியரூபகர்ப்பத்தின் தியாகத் தாலிக்கர்ப்பி புருஷனவன் சுகத்தையடைவன். பிசாசாதிகிரகங்களால் பிடிக்கப்பட்ட புருஷன் துன்பத்தையடைவன் அக்கிரகம் நீங்கின் சுகமுறுவான். அதுபோல, இக்கர்ப்பி புருடன் வீரியரூபகர்ப்பம் வெளிப்படின் சுகமடை

வன்; ஈண்டு வீரியம் வெளிப்படலாற் சுகத்தினடைவு லௌகிக திருஷ்டியாற் கூறப் பட்டது. விசார திருஷ்டியாலோ வீரியம் வெளிப்படலிற் புருஷனுக்குமகா ஹானி யுண்டாகா நிற்கும் ஜீர்ணத் தன்மையையடையாத அன்னமானது பிராணாந்த துக்கத்தை யுண்டுசெய்து வெளிப்படும் அதுபோல இவ்வீரியமும் பிராணாந்த துக்கத்தை யுண்டுசெய்து வெளிப்படும். புருஷனுடையபலத்தை நாசஞ்செய் வது அஜீர்ண அன்னத்தின் வெளிப்படலாவதேபோல, வீரியத்தின் வெளிப்பட லும் புருஷனுடையபலத்தை நாசஞ்செய்வதாம். அதிசார நோயானது புருஷ னுடைய சர்வதேஜசை யழிப்பதேபோல வீரியத்தின் வெளிப்படலும் புருஷ னுடைய சர்வபலத்தையும் நாசஞ்செய்வதாம். இவ்வகை வீரியம் வெளிப்பட லால் புருஷனுக்கு மகா ஆனிகூறப்பட்டது.

இப்போது அவ்வீரியத்தின் நிரோதத்தாற் புருஷனுடைய மகாபலத்தின் பிராப்தியைக் காண்பிப்பாம்:—புருஷனாற்றடுக்கப்பட்ட வீரியவடிவ ஏழாவது தாதுவானது ஓஜமெனப் பெயரிய எட்டாவது தசையையடையும் ஹ்ருதய தேசத்தின்கண் இராநிற்பதும், மஞ்சள் வருணத்ததாய்ச் சீவன்வசிக்குந் தான மாயுள்ளதும் ஆயதை ஓஜமென ஞானவாசிஷ்டத்தின் கண்ணே கூறப்பட்டுள் ளது. ஓஜமெனப் பெயரியதசையால் இச்சீவன் தேஜஸோடு கூடியவனுய்ச்சீவிப் பன். வீரியத்தை நிரோதஞ்செய்யின் புருஷனை யழகறும்படிசெய்வதாய ஜரைய வஸ்தையும் சீக்கிரம் அடையமாட்டாது. மரணமும் சீக்கிரம் அடையமாட்டாது. அப்புருஷனுக்குப் பலமுமழியமாட்டாது. வீரியத்தை நிரோதஞ் செய்பவனாய பிரஹ்மசாரிக்குப் பரலோகத்தின்கண் பிரஹ்மலோகப பிராப்தியாம், இவ்வுலகின் கண்ணே மகாகீர்த்தியுமுண்டாம் ஆகையினால் வீரியத்தின் நிரோதத்தினா லேயே பிரஹ்மசாரிக்கு இருவகையுலகும் சித்திக்கும். வீரியத்தின் பரித்தியாகத் தால் காமியானவன் இருவகையுலகினின்றும் பிரஷ்டனாவன். வீரிய நிரோதத்தால் யோகியானவன் ஆகாசத்தின்கண்ணே செல்வதற்கும் சமர்த்தனாவன், அணிமாதி அஷ்டசித்திகளையுமடைவன். இந்தப்பிரகாரம் வீரியத்தின் நிரோதம் மகாபலத் தின் ஏதுவாம். அவ்வீரியத்தின் பரித்தியாகத்தால் காமியானவன் மகா ஹானி யை அடைவன். கரும்பானது ஆலையிலிடலாற் சாரமற்றதாவதேபோல இக் காமியும் ஸ்திரீயின் புயங்களின் பீடனத்தாற் சாரரூப வீரியமற்றவனாவன், காம ரூப அக்கினியாற் சர்வாங்கங்களினின்றும் வெளிப்பட்ட வீரியமானது ஆயுளை யும் பலத்தையும் விர்த்திசெய்வதாம். அத்தகைய வீரியத்தை யிம்மூடக்காமி யானவன் அஞ்ஞானத்தால் மறைப்புண்டவனாய், ஸ்திரீயினிடத்தே பரித்தியாகஞ் செய்வன். இந்தப்பிரகாரம் ஸ்திரீயின் யோனிஸ்தானத்தின் கண்ணே பிராப்த மாய ஜீவனோடுற்ற வீரியத்திற்குப் புருஷசரீரத்தினின்றும் வெளிப்படல் முதல் ஜன்மமெனப்படும். அந்த யோனியையடைந்த ஜீவன் பல்வகையாய ஆயிரமவஸ் தைகளையடைவன்; ஒவ்வோரவஸ்தையும் துக்கசோக *ஸஹஸ்ரங்களால் வியாப்த மாம். சர்ப்ப உபநிஷத்தின்கண் அவ்வவஸ்தைகள் விஸ்தாரமாய் நிரூபணஞ் செய்

* ஸஹஸ்ரம்=ஆயிரம்.

யப்பட்டிருக்கிறது. வீரியரூப கர்ப்பத்தைத் தாரணஞ்செய்பவனுய இப்புருஷன் ஸ்திரீயின் உதரத்தின்கண் கர்ப்பரூபமாய்ப்பிரவேசிப்பன் இக்காரணத்தால் புருஷனது வீரியரூப கர்ப்பத்தைத்தாரணஞ் செய்பவளாய ஸ்திரீயானவள் புருஷனுல் சர்வப்பிரகாரத்தானும் இரக்ஷிப்பதற்கு யோக்கியமாவள்.

இப்போது அவ்விரக்ஷணையின் பிரகாரத்தைக்காண்பிப்பாம்:—வஸ்திரங்களாலும் அன்னத்தாலும் கர்ப்பிணி ஸ்திரீயின் ரக்ஷணையைப் புருஷன் செய்வன், தனத்தால் ரக்ஷணைசெய்வன், நான்காவது மாதத்தில் இருதயதேசத்தின்கண் கர்ப்பமிருக்கும் அக்காலெவ்வப் பதார்த்தங்களில் ஸ்திரீயினுக் காசையுண்டாமோ அவ்வப்பதார்த்தங்களைச் சம்பாதித்துக் கொடுப்பதினுலும் ஸ்திரீயை இரக்ஷிப்பன். அப்பதார்த்தங்களைக் கொடாததினுற் பாலகனுக்குத் துக்கத்தின் பிராப்தியுண்டாமென்று சுசுருத கிரந்தத்தின்கண் அறையப்பட்டுள்ளது. ஆண்டிது பிரசங்கமாம்:—நான்காவது மாதத்தின்கண் நேத்திர இந்திரிய விஷயமாய உருவாதி பதார்த்தங்களினிச்சை ஸ்திரீயினுக்குண்டாய் அபபதார்த்தங்கள் ஸ்திரீயினுக்குக் கிட்டாவிடின் பாலகனுக்கு நேத்திர இந்திரியத்தின் கண்ணே பீடையுண்டாம். அங்ஙனமே இரசன இநதிரியத்தின் விஷயங்களாய இரசாதிகளை ஸ்திரீயானவ ளிச்சித்து அவ்விரசாதிகள் கிட்டாவிடின் பாலகனுக்கு இரசன இந்திரியத்தின் கண்ணே பீடையுண்டாம். இவ்விதம எவ்வெவ்விந்திரியஙகளின் விஷயங்கள் கர்பபிணிக்குக் கிட்டமாட்டாவோ அவ்வவ்விந்திரியங்களின் கண் பாலகனுக்குப் பீடையுண்டாம். ஆதலின், சர்வேந்திரியார்த்தங்களைக் கொடுத்துப் புருஷன் ஸ்திரீயை இரக்ஷிபபன். பல்வகையாய இரதாதிகளைக் கொண்டு ஸ்திரீயை இரக்ஷிப்பன், ஸ்நானத்தாலும் *கட்டிலாலும் ஆசனுதிகளாலும் புருஷன் ஸ்திரீயை இரக்ஷிப்பன், கிரகவியாபார நீக்கத்தாலும் ஸ்திரீயை இரக்ஷிப்பன், ஔஷதாதி சேவையினுலும் ஸ்திரீயை இரக்ஷிபபன், அபத்திய வஸ்துவின் நீக்கத்தாலும் ஸ்திரீயை இரக்ஷிப்பன். இவ்விதம் கர்பபிணி ஸ்திரீயின் பரிபாலனத்தைச் செய்தல் புருஷனுக்குசிதமாம். ஏனெனின், உலகின்கண்ணே இம்மரியாதை பிரசித்தமாம்:—யாவன் உபகாரஞ்செய்வனே அவன்பால் துர்ஜனபுருஷனும் உபகாரஞ்செய்வன், சஜ்ஜனபுருஷன் உபகரிப்பனென்பதைப் பற்றிச்சொல்லவும் வேண்டுமா! இந்நாரியும் புருஷனுடைய வீரியரூப கர்ப்பத்தைத் தாங்குவதாற் புருஷன்பா லுபகரிப்பள். கருத்திதுவாம்:—புருஷனது துன்பத்தின் காரணமாய் வீரியரூப கர்பபத்தை ஸ்திரீயானவள் தன்பாற்றரிப்பள் ஆகையினுற் செய்ந்நன்றி கொன்றதோஷநிவிர்த்தியின் பொருட்டுப் புருஷன் எல்லாவகையாலும் கர்ப்பிணி ஸ்திரீயை இரக்ஷிப்பன், அல்லது, வீரியரூப கர்ப்பவிசிஷ்ட புருஷன் கர்ப்பரூபமாய் ஸ்திரீயின்கண்ணே பிரவேசிப்பன், மீண்டும் புதிதாய் ஸ்திரீயினிடத்தே யுற்பன்னமாவன். இக்காரணத்தாற் புருஷனுக்கு ஸ்திரீதாயாம், ஆகையினுலும் இரக்ஷிக்க யோக்கியமாம். கர்ப்பாதானகாலமே முதலாய்ப் பிரசவபரியந்தம் ஸ்திரீயின் இரக்கத்தோடு தாதாத்மிய பாவமுற்ற புருஷனுடைய அம்சமானதை ஸ்திரீயானவள் தன் தேகத்தைப்போன்று தரிப்பள், ஆகையினுலும் புருஷனுல் ஸ்திரீ இரக்ஷிக்க யோக்கியமாவள். ஆண்டு முன்னம் புருஷசரீ

* கட்டிலாலும்=படுக்கையாலும்.

ரத்தின்கண்ணே புகுதல்வடிவ முதற்கர்ப்பத்தாற் சீவனுக்குத் துக்கத்தினடைவு கூறப்பட்டது. இப்போது ஸ்திரீயின் சரீரத்தின்கண்ணே புகுதல்வடிவ இரண்டாவது கர்ப்பத்தாற் சீவனது துன்பவடைவின் நிரூபணஞ்செய்வாம்:—யோனிவாயிலாய் எவ்வுதரத்தின்கண்ணே புகுமோ அவ்வுதரமானது புழுமலாதிகளாற் பூரித்துத்தூஷிதமாம். அவ்வுதரத்தின்கண்ணே அனந்தந் துன்பங்களைச சீவன் அனுபவித்து மீண்டும் யோனிவாயிலாய் வெளியேவரும் இக்கர்ப்ப துக்கத்தின் பயத்தாலேயே எல்லாமு முமுக்ஷுக்களும் பிரஹ்மஞானத்தை இச்சிப்பர்கள்; பிரஹ்மஞானப்பிராப்தியின் பொருட்டு ஆலசியமற்றவராய் நூலின்கண்ணே கூறிய நிட்காம கருமத்தைச் செய்வர். அக்கர்ப்ப துன்பமானது மரணகாலத்தின் கண்ணே புருஷனுக்குண்டாந் துன்பத்தைக்காட்டினும், நரகத்தின்கண்ணே யுண்டாந துன்பத்தைக்காட்டினும் கோடி கோடி பங்கதிக துன்பம் யோனியந்திரத்தின்கண்ணே ஜீவனுக்குண்டாம், மரணகாலத்தின்கண்ணே ஜீவனுக்குப் பீடையுண்டாவதைக் காட்டினும் நூறுபங் கதிகப்பீடை யோனியந்திரப் பிரவேசத்தின் கண்ணுண்டாம்; அங்ஙனம் வெளிபபோதலின்கண்ணே ஜீவனுக்குண்டாம். மாதாவின் வயிற்றின்கண்ணே ஜீவன் வசித்தலானது, நரகத்தின்கண் வசித்தலைக் காட்டினும் அதிகமாம, மாதாவின் உதரத்தின்கண்ணே தேகதாரியாகிய ஜீவன் அனந்ததுக்கத்தை யனுபவிபபன், அந்தத் துக்கங்களை யுரைப்பினும், எமக்கு மிகுமோகமுண்டாம். மலமூத்திரங்களின் வீடாய ஜன்னியின் உதரத்தின் கண்ணே வசித்தலாற பொறுக்கவொண்ணாத துக்கததை யிச்சீவ னடைவன். மாதாவின் உதரவடிவ வீடானது, சீயினாலும் இரத்தத்தாலும பூசப்பட்டுள்ளது; நானாவர்ணத்தோடுகூடிய கபவாதபித்த தாதுவடிவ சித்திரங்களோடுகூடிய மாம்சமயச சுவரோடு கூடியதாம். இக்காரணததாலே சகிககக்கூடாததாம். வயிற்றின் புழுவடிவ சர்ப்பசகஸ்ரங்களோடு கூடியதாம். வியாதி வடிவமாய தேள்களால் நிறைந்ததாம். மாதாவினுடைய மகாப பிராண வாயுவினாற் சலிபபிக்கபபட்ட நாடிவடிவ கயறுகளோடு கூடியதாம். எபபோதும உள்ளே அக்கினியுடையதாம், இக்காரணத்தினாலே பாதி தகிக்கபபெறறதாம், காப்பத்திற் கவகாசம குறைந்ததாயுள்ள மாதாவி னுதரத்தின்கண்ணே சகிக்கமுடியாத துக்கம ஜீவனுக்குண்டாம். அக்கர்பப துன்பம் விவேகிபுருஷனுக்குப் பிரசித்தமாம். விசேஷமாய் யோகியானவன் கர்பபதுக்கத்தை ஸ்மரிக்கின்றான். இவ்வகை கர்ப்பத்தின் கண்ணே அனநத துக்கங்களை ஜீவனடைவன். ஆயிரஞ சன்மங்களை யெடுத்துக் கர்ப்பதுக்கத்தை யளவிடினும், அளவிட முடியாதாதலின், ஒரு சிறிது மாத்திரமே கர்ப்பதுக்கம் உமக்கு யாங் கூறினேம். கர்ப்ப உபநிடதத்தின்கண்ணும் இந்தப்பிரகாரம் சிறிது துக்கங் கூறபபட்டுள்ளது; கர்பபத்தின் சர்வ துக்கத்தை யுங்கூற எவருஞ் சமர்த்தரன்றாம்; ஆகையினால் முக்கிய முக்கியமாயுள்ள கர்ப்பத்தின் றுக்கங்களை யாங் கூறுவாம்:—அக்கர்ப்பத்தின்கண்ணே எட்டுமாதபரியந்தம் ஜீவனுக்கு மூர்ச்சைவடிவ அஞ்ஞானமிருக்கும். அவ்வஞ்ஞானமானது, சர்வ துக்கங்கட்குங் காரணமாம். கர்ப்பத்தின்கண்ணே ஜீவனுக்குத் தன்னுடைய பசிதாகங்களாலேனும், மாதாவினுடைய பசிதாகங்களாலேனும் மிகவுஞ் சந்தாப

முண்டாம்; சிரத்தின்கண்ணே அசமர்த்தமுண்டாம்; ஒன்பதாவது மாதத்தில் இவனுக்கு அனந்த ஜன்மதுக்கங்களின் ஸ்மிருதியுண்டாம். அன்றி அவிப்பங்களை ஸ்மரித்து இவ்வண்ணம் கூறும்:—

ஆஹாராவிவிதாபுக்தாঃ பீதாஸ்தவிவிதாঃஸ்தநாঃ ।
மாதரோவிவிதாத்ருஷ்டாঃ பிதரஃஸுஹ்ருதஸ்ததா ॥

"உணவு பல்வகையுண்டனம் பலமுலைகுடித்தே
மணிசேயன்னையர் தந்தைய ரரியமாநேய
ரேணவிறந்தன கண்டனமினிப் பிறந்திடலே
துணிமகேச்சுரன் பதத்தினைத் தவத்தினற்றேடுவேம்." (6)

இதன் பொருள்:—ஒன்பதாவது மாதத்திற் பூர்வதுக்கங்களை ஸ்மரித்து இச்சீவன் இங்ஙனங் கூறுநிற்பன். எண்பத்து நான்கு சரீரங்களில் யான் ஆகாரத்தையு மனந்தவிதமாய்ப் புசித்தேன், யான் அனந்தவகையாய ஸ்தனபானஞ் செய்தேன், யான் அனந்தவகையாய மாதாக்களைப் பார்த்தேன், யான் அனந்தவகையாய பிதாக்களைப் பார்த்தேன், அனந்தவகையாய நேயர்களை யான் பார்த்தேன், இந்த யோனியினின்றும் யான் வெளிப் போந்தவுடனே தவத்தால் பரமேஸ்வரனுடைய சரணாரவிந்தத்தை யானடைவன். என, இவ்வண்ணம் பூர்வதுக்கங்களை ஸ்மரித்துக் கர்ப்பத்தின்கண் இவ்வண்ணஞ் சீவன் கூறுவன, தாய்க்கும் பீடையை யுண்டாக்குவன். இந்தப்பிரகாரம் உதரத்தின் கண்ணே நானா துக்கங்களைச் சகித்துப் பரிபூரணத்தை யடைந்த பாலகனைப் பிரசூதிகால வாயுவானது மாதாவி னுதரத்தினின்றும், வெளியே தள்ளும் அந்தப் பாலகனானவன் றெளிவிலாக் *கலிலாதி அவஸ்தாக்கிரமமாய்ச் சர்வ ஹஸ்த பாதாதிகளைச் சம்பூரண மாயடைவன். ஈண்டிது கருத்தாம்:—முதலிரவின் கண்தெளிவிலாக் கலில அவஸ்தையையடையும், ஏழு இரவிற் புற்புதமாம், அரை மாதத்திற் பிண்டமாம், ஒரு மாதத்திற் கடினத் தன்மையயடையும், இரண்டாவது மாதத்திற் சிரமுண்டாம், மூன்றாவது மாதத்திற் பாதமாம், நான்காவது மாதத்தில் விரல், வயிறு, இடைப்பிரதேசம் உண்டாம், ஐந்தாவதுமாதத்திற் பின்னிடமுண்டாம், ஆறாவது மாதத்தில் வாய், மூக்கு, கண், செவி யுண்டாம், ஏழாவது மாதத்தில் ஜீவசம்பந்தமுண்டாம், எட்டாவது மாதத்திற் சர்வ அங்கங்களும் பூரணமாம், ஒன்பதாவது மாதத்தில் ஞானம் நிறைதலின் முற்பிறப்புகளின் ஸ்மிருதியுண்டாம், இவ்வண்ணம் கர்ப்ப உபநிஷத்தின்கண் மாதாவினுதரத்தினிடமாக பாலகனவயவ பூரணத் தன்மையைக் கூறியிருக்கின்றது. அந்த ஜீவனானவன் கர்ப்பாசனத்தை விட்டவனுவன்; கர்ப்பத்தின் கண்ணே இவ்வண்ண மாசனமுண்டாம்:—பின்பாகமும் கழுத்தும் வட்டமிட்டிருக்கும், ஹஸ்தபாதங்கள் குறுகியிருக்கும், வயிற்றின்கண்ணே தலையை வைத்துக்கொண்டிருக்கும் அந்தப்பாலகனானவன் பிரசவ சமீப காலத்தில் ஜராயுவழுத்த படமின்றி பவனுவன். மாதாவின் உதரத்தின் கண் மண்கேம் போலிங்கு மங்கும் குதிப்பன், ...

* கலிலம் = ஸ்திரீ புருஷர்களுடைய ... கலந்த ... பிண்டமும்.

தேகக்கிரியைகளாலும் மாதாவின் வயிற்றைப் பேதிக்கும் பொருட்டு முயல்வன் ஒவ்வொருகால் அப்பாலகன் மாதாவின் வயிற்றின்கண் ஓடுவன், ஒவ்வொருகால் இருதயதேசத்தின்கண் ஓடுவன், ஒவ்வொருகால் யோனியந்திரத்தின்கண் ஓடுவன். குரங்கானது ஓரிடத்தில் நில்லாததுபோல இப்பாலகனும் மாதாவின் உதரத்தின்கண் ஒருக்காலும் நில்லாதலைவன். அந்தப்பாலகனானவன் தன்னுடைய சரீரத்தின்மத்தியில் சிரசை வைத்துக் குனிந்துக்கொண்டிருப்பன்; பல்வகையாகிய கிலேசங்களால் மாதாவிற்குக் கிலேசத்தைக் கொடுப்பன். ஆகையினாலதி நிந்திதமாம். சர்ப்பமானது விழுங்கலால் மண்டூகமானது கத்துவதுபோல இப்பாலகனுங்கத்துவன். இத்தசையையடைந்த பாலகனைப் பிரசூதிகாலப பிராணவாயுவானது மாதாவின் உதரத்தினின்றும் வெளியே தள்ளும். எலியைச் சர்ப்பம் (உள்ளுக்கு) தள்ளுவதுபோல் காஷ்டத்தைப் பேதனஞ் செய்வதாகிய ஆயுதத்தின் முனையின் ஆயிரமடங்கதிகமாய்க கூர்மையான அற்பயோனி யந்திரத்தினின்றும் வெளிப்போந்து புழுவைப்போலிப்பாலகன் பூமியின் கண்ணே விழுவன். அப்பாலகன் வெளிப்போதலால் ஸ்திரீக்கும் பெரும்பீடையுண்டாம். புழுவோடு கூடிய புண்ணிற்குக் கோபமுண்டாயின் புருஷனுக்குண்டாம் பீடையைக் காட்டினுமதிக பீடை யோனியந்திரத்தின் கண்ணே பாலகனுககுண்டாய் ஸ்திரீக்குண்டாம். வயிற்றின் கண்ணே புண்ணிருபபின், சர்ப்பமிருபபின் நம்மனோருக்குப் பீடையுண்டாவதுபோல கர்ப்பதாரணததாற் கர்ப்பிணி ஸ்திரீகருப் பீடையுண்டாம். சீயினால் பூரிக்கப்பெற்ற புண்ணைப் பேதனஞ் செய்து அபபுண்ணி னின்றும் புழுக்கள் வெளியானால் நம்மனோருக்குச சுகமுண்டாவதுபோலக் கர்ப்பத்தினைத் தியாகஞ் செய்த ஸ்திரீக்கும் சுகமுண்டாம். மல மூத்திர மடககலால் நம்மனோருக்குத் துக்கமுண்டாவதைக் காட்டினுமதிகத் துக்கம் கர்ப்பதாரணத்தின்கண் ஸ்திரீக்குண்டாம். நெடுங்காலம் கட்டுப்பட்ட மல மூத்திராதிகளின் பரித்தியாகத்தால் நம்மனோருக்குச் சுகமுண்டாவதுபோலக கர்ப்பிணி ஸ்திரீக்குக் கர்ப்பத்தியாகத்தாற் சுகமுண்டாம்.

இப்போது * அபூத உபமானத்தால் ஸ்திரீயின் துக்கத்தைக் காண்பிப்பாம் :— இருபது அங்குலபரிமாண நீளமுடையதும், விஸ்தாரமாயும் விசாலமாயும் சாண் மாத்திர பரிமாணமுடையதும் எலும்பு சுவாசங்களோடு கூடியதுமாகிய ஒரு ஜந்துவானது நம்மனோரது வயிற்றின்கண்ணே இருக்குமானால் அந்த ஜந்துவால் நம்மனோருக்குத் துன்பமுண்டாவதுபோல ஸ்திரீகருக் கர்ப்பதாரணத்தாலுண்டாம், பாயுத்துவாரத்தினின்றும் அந்த ஜந்துவெளிபபடலால் நம்மனோருக்குத் துக்கமுண்டாவதுபோலக் கர்ப்பிணி ஸ்திரீக்குக் கர்ப்பத்தியாகத்தாற் றுன்பமுண்டாம். பதினறங்குல பரிமிதமத்திய அவகாசமுடைய வட்டவடிவமாம் வெட்டுமாயுதத்தினின்றும் வெளிப்போதலால் நம்மனோருக்குத் துக்கமுண்டாவதுபோலப் பாலகனுக்கு மாதாவி னுதரத்தினின்றும் வெளிப்போதலாற் றுக்கமுண்டாம். இந்தப்பிரகாரம் மாதாவி னுதரத்தின்கண்ணே பிரவேசித்தலினும், உதரத்தினின்றும் வெளிப்போதலினாலும், மாதாவோடுகூடிய இந்த ஜீவ

* இல்பொருளுவமை.

னுக்கு அநந்த துக்கமுண்டாம். அந்தத்துக்கங்கள் உலகப்பிரசித்த துக்கங் களைக்கொண்டு உவமிக்கத்தகாதனவாம். இந்தப்பிரகாரம் பிதாவின் ஆன்மஸ்வரூப மானபுத்திரன், உலகரின் பிரவாஹந் தடைப்படாம லிருக்கும்பொருட்டு மாதாவி னுதரத்தினின்றும் வெளிப்படுவன். அந்தப்புத்திரன் தன்னுடைய தரிசனத்தாற் பிதாவிற்கு ஆநந்தத்தைக்கொடுப்பன். உற்பன்னமாகிய புத்திரனைத் தன்னுடைய மடிமீது வைத்தேனும் அல்லது பூமியின்கண்ணே வைத்தேனும் சந்தோஷமனத் தோடுகூடிய பிதா ஜன்மகால ஸம்ஸ்காரத்தைச் செய்வன். ஜன்மத்திற்கு முன்னர்க் கர்ப்பாதான மாரம்பித்து எவ்வெச் ஸம்ஸ்காரம் புத்திரனிடத்தே பிதா செய்வனோ, ஜன்மத்தின் பின்னர் எவ்வெச் ஸம்ஸ்காரம் பிதா செய்வனோ அவ்வெல்லாச் ஸம்ஸ்காரங்களும் தனக்கே பிதா செய்வன்; ஏனெனின், அந்தத் தந்தையே மீண்டும் புத்திரரூபமாய்ப் புதிதாய் ஸ்திரீயின்கண் உற்பன்னமா வன். பிதாவின் காரியமாகிய சந்ததிப் பிரவாஹத்தைப் பௌத்திராதி ரூபமாய் இப்புத்திரன் விஸ்தாரஞ்செய்வன். நன்னடையில் நடக்கும் புத்திரன் பிதா வின் சுவர்க்கத்திற்குங் காரணமாவன். இந்த மனுஷ்ய லோகத்திற்கும் புத் திரன் சாதகமாவன். ஏனெனின், புத்திராதிகளாலேயே மனுஷ்யலோகம் வச முடையதாம். இது கூறியதுகொண்டு இது சித்தித்ததாம்:—இவ்வுலகி னடைவும் சுவர்க்காதிபுலகி னடைவும் புத்திரனாலுண்டாம்; ஆனால் மோக்ஷத்தின் பிராப்தி யானது புத்திரனா லுண்டாகமாட்டாது. ஏனெனின், சுருதியானது புத்திரதனாதி கள் மோக்ஷசாதனமன்றென நிஷேதித்துக் கேவலந் தியாகத்தினாலேயே மோக்ஷ மடையலாமென்று கூறியிருக்கிறது. முன்னர் அன்ன வாயிலாய்ப பிதா சரீரத்திற் பிரவேசித்தபின் வீரியவாயிலாய்ப் பிதா சரீரத்தினின்றும் வெளிப்படுதல் வடிவ முதற் ஜன்மம் ஜீவனுக்குக் கூறப்பட்டது, அந்த ஜன்மத்தை யபேக்ஷித்து மாதா வின் உதரத்தினின்றும் வெளிப்படுதல்வடிவ இரண்டாவது ஜன்மம் இச்சீவனுக் குண்டாம். மீண்டும் அன்னவாயிலாய்ப் பிதாவின் சரீரத்தின்கண் அடைந்து வீரிய வாயிலாய் வெளிப்படுதல்வடிவ மூன்றாவது ஜன்மத்தை மேல் நிரூபிப்பாம். சற் கரும நடையுடைய புத்திரன் ஜனித்தலாற் பிதாவிற்கும் சுவர்க்கப் பிராப்தியுண் டாம். ஆகையினால் எண்பத்துநான்கு லக்ஷம் சரீரங்களில் மனுஷ்யசரீரமே கிடைப்பதற்கு மிகவுமரியதாம். இத்தகைய மனுஷசரீரங் கிடைத்ததுகொண்டே புண்ணியகன்மத்தையே மனுஷன் சம்பாதனஞ்செய்யவேண்டும். இம்மனுஷ சரீ ரத்தின் அடைவின்பொருட்டு தேவதைகளும் சந்ததம் இச்சிக்கின்றனர். கருத் திதுவாம்:—தேவதாதி சரீரங்களிலும், பசுவாதி சரீரங்களிலும புதிதாய புண் ணியபாபங்களின் சம்பாதனம் உண்டாகமாட்டாது; ஆனால் பூர்வம் மனுஷசரீரத் தின்கண்ணே செய்துள்ள புண்ணயபாவங்களின் பயனாகிய சுகதுக்கங்கள் அநுப விக்கப்படும். இந்த மனுஷசரீரத்தின் கண்ணும் பாரத கண்டத்தில் விவேகாதி சாதனசதுஷ்டயவடிவ அதிகாரத்தைச் சம்பாதிக்க யோக்கியமாகிய சரீரமானது ஜீவனுக்குண்டாமாயின், எட்டுத்தோஷங்களின் நிவிர்த்தி யுபாயமாகிய பிரஹ்ம வித்தை சம்பாதிக்கப்படும். பிரஹ்மவித்தைக்கயலாகிய உபாயங்களா லெட்டுத் தோஷங்களினிவிர்த்தி யுண்டாகமாட்டாது. கருத்திதுதாம்:—பாரதகண்டத்

தில் அதிகாரியானவன் மனுஷசரீரத்தையடைந்து பிரஹ்மான்ம ஞானத்தையே சம்பாதிக்கவேண்டியது யோக்கியமாம். ஏனெனின், ஆன்ம ஞானமே சர்வ அநர்த்த நிவிர்த்திக்குச் சாதனமாம்; சர்வ யாகாதிகர்மங்களின் பலங்கட்கும் ஆன்ம ஞானத்தின்கண்ணேயே உள்ளடக்கமாம். இப்போது எட்டுத் தோஷங் களை நிரூபிப்பாம்:—இச்சை (1), துவேஷம் (2), பயம் (3), மோகம் (4), பசி (5), தாகம் (6), நித்திரை (7), மலமூத்திரத்தாலுண்டாம் பீடை (8) இவ் வெட்டுத் தோஷங்களும் தேகத்தைத் தரித்துள்ள எல்லா ஜீவர்கட்கு முண் டாம்; ஆன்மஞானமின்றி அன்னிய உபாயத்தால் அழியமாட்டா; மற்றோ ஆன்ம ஞானத்தாலேயே நாசமாம்.

இனி இச்சையின் தொடர்பை நிரூபிபபாம்:—சாத்துவிக புருஷன் முத்தியை யிச்சிப்பன், இராஜச புருஷன் முத்தியையும் விஷயத்தையு மிச்சிப்பன், தாமதபுரு ஷன் கேவலம்விஷயங்களையே இச்சிப்பன், ஆகையினால் இச்சையின்றிய தேகந் தரித்த புருஷனெவனுமின்றாம். இனித்துவேஷத் தொடர்பை நிரூபிப்பாம்:— சாத்துவிக புருஷன் விஷயங்களில் துவேஷத்தையடைவன், இராஜச புருஷன் வைரியின்கண் துவேஷத்தையடைவன், தாமத புருஷன் வைரிகளிடத்தே துவே ஷத்தையடைவதோடு மித்திரர்களிடத்துந் துவேஷத்தையடைவன், ஆகையினால், துவேஷமின்றிய தேகதாரி ஜீவரெவருமின்றாம். இனிப் பயத்தின் தொடர்பை நிரூபிப்பாம்:—சாத்துவிக புருஷர் பிரமாதத்தினின்றும் பயத்தை யடைவர், இராஜச புருஷருக்கு யமனினின்றும் பயமுண்டாம், தாமத புருஷருக்குக் கேவ லம் அரசரினின்றும் பயமுண்டாம், ஆகையினாற் பயமின்றிய யாதொரு தேகதாரி ஜீவனையுங் காணமுடியாது.

இனி அஞ்ஞானவடிவ மோகத்தொடர்பின் நிரூபணதனைச் செய்வாம்:— சாத்துவிக புருஷருக்கு ஆன்மாவி னஞ்ஞானமுண்டாம், இராஜச புருஷருக்குச் சாஸ்திரவித்தையி னஞ்ஞானமுமுண்டாம், தாமதபுருஷருக்குச சர்வ வஸ்துவின் கண்ணும் அஞ்ஞானமுண்டாம், ஆகையினால் மோகமின்றிய தேகதாரி புருஷர் களொருவருமின்றாம்.

இனிப் பசி தாகம் நித்திரை என்பவற்றின் தொடர்பை நிரூபிப்பாம்:—பசி தாகம் நித்திரை என்னுமிம் மூன்றும் சர்வ தேகதாரி புருஷருக்கும் சமானமாம். மல மூத்திரஜன்னிய பீடையோ தருமுதலிய ஸ்தாவரங்களை விட்டுவிட்டு அன் னிய சர்வ தேகதாரி ஜீவர்கட்கு முண்டாம், அல்லது மலமூத்திர ஜன்னிய பீடை யோ ஸ்தாவர ஜங்கமங்களாகிய சர்வ தேகதாரி ஜீவர்கட்கு முண்டாம். இக் காரணத்தினாலேயே விருக்ஷாதிகளும் தனது பசைரசத்தைப் பரித்தியாகஞ்செய் யும், அவ்விரசத்தை உலகின்கண்ணே கோந்தெனக் கூறுவர். இந்தப் பிரகாரம் எட்டுத்தோஷங்களும் சர்வ தேகதாரி ஜீவர்களிடத்தும் இருக்கும். சத்துவ ரஜ தமோகுணங்களின் அபிமானத்தை நாசஞ் செய்வது ஆன்மஞானமாம், அதனா லன்றி எவ்வுபாயத்தாலும் எட்டுத் தோஷங்களின் அழிவு உண்டாகமாட்டாது;

ஆன்மஞான மொன்றாலேயே நாசமாம். அண்டஜம், ஜராயுஜம், சுவேதஜம், உற்பிஜ்ஜம் என்னும் நான்கு பிரகாரமாகிய தேகதாரி ஜீவர்கள் எட்டுத் தோஷங்களையும் விட்டொழித்து ஒருபோதும் இருப்பதின்றாம். பிரஹ்ம வித்தையால் எட்டுத் தோஷங்களை ஜெயிக்கும்பொருட்டு இம்மனுஷ சரீரத்தைப் பரமேசுவரன் கொடுத்தார். அந்த மனுஷ சரீரத்தையடைந்து, பிரஹ்மவித்தையின்றிய மூட புருஷன் மாறாய் எட்டுத் தோஷங்களின் வயத்தனாவன். ஆண்டு, முதலிற் பாலிய அவஸ்தையின்கண் தோஷங்கள் தொடர்தலைக் காண்பிப்பாம்:—மாதாவின் உதரத்தினின்றும் ஜன்மித்த பாலகனானவன் பல்வகையாய சப்தங்களைச செய்பவனாய்ப் பூமியின்கண்ணே கிடப்பவனாய்த் தாயின் முலையையுண்ண இச்சிப்பன். முலையுண்ணும் வேட்கையினாலுண்டாம் துக்கமே முதலாய் எவ்வளவு துக்கங்களை இந்த அஞ்ஞானி யடைவனோ அவ்வளவு துக்கங்களும் எட்டுத் தோஷங்களாற் ஜன்னியமாம். இச்சாதி எட்டுத்தோஷ அனுபவஜன்னிய முன்முன் ஸம்ஸ்காரங்களாற் பின்பின் எட்டுத் தோஷங்களை யிச்சிப்பனடைவன். மாதாவி னுதரத்தின்கண் இப்பாலகன் சமர்த்தனாவதுபோலச் ஜனித்தபின்னும் தனது இச்சையின்படி கரங்கால்முதலிய அங்கங்களைப் பிரவிர்த்திப்பிக்கச் சமர்த்தனாகான். மூட்டை முதலிய ஜந்துக்களின் நீக்கத்திலும் தனது சரீரத்தைச் சொரிதலிலும் இப்பாலகன் சமர்த்தனாகான்; ஆகையினா லதிதுக்கத்தை யடைவன். தனது இச்சைப்படி அன்னஜலங்களை யிப்பாலக னடையான்; மற்றோ, பசிக்கும்போது தாய் இவனுக்கு நீரைக் கொடுப்பள்; தாகமுண்டாகும்போது அன்னத்தைக் கொடுப்பள். ஆகையினாலும் அதிதுக்கத்தை யடைவன். கண்டத்தின் அஸ்பஷ்டத் தன்மையினாலே சிறிது சப்தோச்சாரணஞ் செய்தபோதிலும் இப்பாலகன் உச்சாரணஞ் செய்யாதவனாவான். ஒவ்வொருகால் மிகவுந்துக்கியா யிப்பாலகன் பெருஞ் சப்தத்தான் மாதாவை யழைப்பன், அச்சப்தத்தைக் கேட்டுத் தாயானவள் ஒரு சமயம் அதன் சமீபம் வருவள். ஒரு சமயம் வராமலுமிருந்து விடுவள்; ஆகையினாலும் அதிதுக்கத்தை யப்பாலகனடைவன். மலத்தாலும் மூத்திரத்தாலும் வாயிலொழுகும் எச்சின் முதலியவற்றாலும் பூசப்பட்ட பாலகனுடைய ஹஸ்தபாதாதியங்கங்களை ஒவ்வொருகாலந்த மாதாவானவள் ஜலத்தாற் கழுவுவள், ஒவ்வொருகால் கழுவவுமாட்டாள். ஆகையினாலும் அதிதுக்கத்தைப் பாலகனடைவன். இப்பாலகன் வாளா சிரிப்பன், வாளா அழுவன், வாளா பயத்தை யடைவன். மோகத்தோடு கூடியவனாயிப்பாலகன் ஒவ்வொருகால் மலாதிகளையும் புசிப்பன், இப்பாலக னடிக்கடி சப்தோச்சாரணஞ்செய்ய இச்சிப்பன், சப்தத்தை யுச்சரிக்கச்சமர்த்தோ இன்றாகும்; ஆகையினால் அதிதுக்கத்தை யடைவன். நடக்கவும் வஸ்துவைக் கவர்வதற்கு மிப்பாலக னிச்சிப்பன். அவ்விரண்டுஞ் செய்வதற்கோ சாமர்த்தியமின்றாகும் அதனாலும் பாலகன் அதிதுக்கத்தை யடைவன். மோகத்தையடைந்த இப்பாலகன் தனது தாயைப் பேயினைப்போற் காண்பன். தனது பிதாவையும் தமையனையும் இராக்ஷசனைப்போற காண்பன். இந்தப்பிரகாரம் பாலிய அவஸ்தையின்கண் இச்சைமுதலிய எட்டுத் தோஷஜன்னிய கோடி துக்கங்களை யனுபவித்து அந்தப் பாலிய அவஸ்தையி னுள்ளடங்கிய குமாராவஸ்தையை யடைவன். அக்

குமாராவஸ்தையின்கண் இப்பாலகன் முழங்கால்களாலுங் கரங்களாலும் மையப்
மையக்கமனஞ் செய்வன் கருத்திதுவாம்:—குமார அவஸ்தையின்கண்ணே சீக்
கிரங் கமனஞ்செய்யப் பாலகனிச்சிப்பன் சீக்கிரங் கமனஞ்செய்யப் பாலகனுக்குச்
சாமர்த்திய மின்றாகு மாதலி னதிதுக்கமடைவன். சப்தோச் சாரணத்திற்
சாமர்த்திய மின்மையினு லொருவஸ்துவையடைய இச்சித்து அன்னியவஸ்துவின்
வாசக சப்தோச்சாரணத்தைப் பாலகன் செய்வன். அந்த வாஞ்சிதவஸ்து கிடை
யாமையாலும் அதிதுக்கத்தை யிப்பாலகனடைவன், நாயானது சங்கையோடு
கூடியதாய் வீட்டின்கண்ணே புகுவதேபோல இப்பாலகனும் சங்கையோடுகூடிய
வனாய்த் தனது வீட்டிற்புகுவன். மோகத்தையடைந்த இப்பாலகன் இதஞ்செய்
பவராகிய தாய் தந்தைபரி னின்றும பயத்தையடைவன். புருஷாபிப்பிராயத்
தைப் போதிப்பதாகிய காமுதலியவற்றின் சேஷ்டையாற் புருஷாபிப்பிராயத்தை
யறிந்து நாய்முதலிய பசுக்களும் பிரவிர்த்தி நிவிர்த்தியை யடையும். இப்பால
கன் ஹஸ்தாதிகளின் சேஷ்டையினுலும அபிபபிராயத்தை யறியான், ஆகையினுற்
பசுவைக்காட்டிலும் மிகுந்த அதமனும். சிறிதுகாலங்கழித்து இப்பாலகன் பாதங்க
ளால் நடப்பன், மிகவும் சஞ்சலமுடையவனுவன், வெளிப்படையாகிய வாக்காற்
சப்தோச்சாரணஞ்செய்வன், தனதிதாகிதங்களை யறியான். பிதா மாதாக்களாலும்
அன்னியபந்துக்களாலும் பலவான்களாகியப் பாலகர்களாலும் இப்பாலகனடிபடு
வன், துர்வசனங்களால் நிராதரத்தையடைவன். நாயானது வீடுகள்தோறும்
வீணுய்ச் சுழல்வதேபோ லிப்பாலகனும் வீணுகவே ஓரிடத்தினின்றும் மற்றோ
ரிடத்திற்குச்செல்வன். பைத்தியக்காரன் வீணுகவே வஸ்துககளைக் கவாவதேபோ
லும் வீணுகவே சப்தோசசாரணஞ் செய்வதேபோலும இபபாலகனும் வீணுகவே
வஸ்துக்களைக்கவர்வன், வீணுகவே சப்தோசசாரணஞ் செய்வன், தூளியினுற் சர்
வாங்கமும் அழுக்குடையவனுய்த் திரிவன், மகாசிரமத்தோடு கூடியவனுவன். அன்
னிய பாலகரோடு மிப்பாலகன் வாளாசிநேகஞ் செய்வன், வாளா துவேஷிபபன்.
தனது வீட்டிலில்லாத வஸ்துக்களையு மிபபாலகன் இராஜாவைப்போல வேண்டு
வன், அந்தவஸ்துவானது கிடையாதிருக்கும் பக்ஷத்திலிபபாலகன் போஜனஞ்
செய்யான், ஒவ்வொருகாலழுவன். இநதபபிரகாரம் குமாராவஸ்தையின்கண்
இச்சை முதலிய எட்டுத் தோஷஜன்னிய அனநத துக்கங்களை இச்சீவனனுப
வித்து மீண்டும கோடி துக்கங்கள் உண்டாவதற்கு ஸ்தானமாகிய யெவ்வனுவஸ்
தையை இச்சீவனடைவன். அநத யெவ்வனுவஸ்தையின்கண்ணே ஸ்திரீபாவத்
தாலும் அங்ஙனமே புருஷபாவத்தாலும் நானுப பிரகாரமாகிய துக்கங்களை அந்த
ஜீவனடையா நிற்பன். அந்த ஜீவனெத்தகையனெனின்? தனது ஆற்றலற்றவனு
வன், மேலும் கர்மவடிவ பாசத்தி னதீனனுமாவன். எபபோது அந்த ஜீவனுன
வன் கர்மவசத்தால் நாரியின் றன்மையையடைவனே அப்போது நாயகனே முத
லாக எவ்வளவு தன்சம்பந்திகளுளரோ அவர்களினின்றும் பயத்தையடைவள்.
எப்போதும் ஸ்திரீயானவள் சுதந்திரமற்றவளாவள். வீட்டிலவளுக்கு மகாவியா
பாரமிருக்கும். காமிக்கெப்பொழுதும் ஸ்திரீயினிசசை யிருப்பதேபோல, ஸ்திரீ
க்கு மெப்போதும் காமியினிச்சையிருக்கும், சங்கிலியாற் கட்டப்பட்ட சோரர்

முதலியோர் துக்கவாயிலாய்க் காலங்கழிப்பர், அஃதொப்ப இந்த ஸ்திரீகளும் பதிமுதலியோரால் தடைபட்டவராயும், தனது சம்பந்தியோரால் தடைபட்டவராயும், தர்மலோப பயத்தால் தடைபட்டவராயும் துக்கத்தாற் காலங்கழிப்பர். புருஷன் கிடையாமையாலும், கிடைத்த புருஷனிடத்திற் பிரியமின்மையாலும், அந்த நாரி துக்கவடிவ சமுத்திரத்தில் மூழ்குவள். புத்திர இச்சையினாலும் கர்ப்பதாரணத்தாலும் அனந்ததுக்கங்களை அந்த ஸ்திரீ யடைவள். இந்தப் பிரகாரம் ஸ்திரீ பாவத்தையடைந்த இச்சீவன் யெவ்வன அவஸ்தையின்கண் இச்சைமுதலிய எட்டுத் தோஷங்களால் ஜன்னியமான அநந்ததுக்கங்களை யனுபவிப்பன். இச்சீவன் கர்மவசத்தாற் புருஷசரீரத்தை யுடையவனாயினும் யெவ்வன அவஸ்தையின்கண் இச்சைமுதலிய எட்டுத் தோஷங்களாற் ஜன்னியமான அநந்த துக்கங்களை யடைவன். அந்த யெவ்வன அவஸ்தையின்கண்ணே சாஸ்திரத்தை யறிந்த புருஷனுக்கோ யமனினின்றும் ஈஸ்வராதிகளினின்றும் பயமுண்டாம். வியவகாரத்தின்கண்ணே குசல புருஷனுக்கு அரசாதியரினின்றும் பயமுண்டாம். மூடபுருஷனுக்குக் கேவலம் தனது பிதா முதலியோரிடத்தினின்றும் பயமுண்டாம். தனமின்றிய புருஷனுக்குச சந்ததம் பராதீனத்தன்மை யுண்டாம். யெவ்வன அவஸ்தையின்கண்ணே ஸ்திரீ கிடையாவிடின், அவளைப்பற்றிய இச்சையினாற் புருஷனுக்குத் துக்கமுண்டாம். ஸ்திரீ கிடைப்பினும் அவளிடத்தினிச்சை யில்லாவிடினே, அதனாலும் புருஷனுக்கு அதிதுக்கமுண்டாம். கர்மத்தினதீனமாகியப் புருஷனுக்கு முதலில் யெவ்வனமே சுரத்திற்குச சமானமாய்ப் பிரதான தோஷமாம். அந்த யெவ்வனவடிவ சுரத்தின்கண்ணும் அபிமான ஜனகமாகிய பிராஹ்மணத்தி உத்தமகுலத்தின் பிராப்தியும் வித்தையின் பிராப்தியும், தனத்தின் பிராப்தியும், ஆகிய மூன்று தோஷங்களும், மகா அனர்த்தகாரணமாம். உலகப்பிரசித்த சுரத்தின்கண் வாத, பித்த, கப்மென்னும் மூன்று தாதுவடிவ தோஷங்கட்குக் கோபமுண்டாயின், அந்தப் புருஷனுக்கு மரணமின்றி வேறு யாதொரு உபாயமுமின்றாம்; மற்றோ மரணமேயுண்டாம். அதுபோல யெவ்வனவடிவ சுரமும், குலம், வித்தை, தனம் என்னும் முத்தோஷங்களோடு கூடியதாய் அநந்த அனர்த்தங்களை யாரம்பிக்கும். ஆகையினலந்த யெவ்வனவடிவச் சுரத்தை நீக்குவதற் குபாயம் மரணமின்றி வேறு யாதொன்றையும் யான் காணேன். அந்த யெவ்வனரூப சுரத்தால் மோகத்தையடைந்த ஜீவன் ஒவ்வொருகால் பாடுவன், ஒவ்வொருகால் நானாப்பிரகாரமாகிய தன்னுடைய கதியைக் காண்பிப்பன், ஒவ்வொருகால் சிரிப்பன், ஒவ்வொருகால் மதயானையைப்போ லிப்புருஷன் தனது தந்தை முதலியோரைப்போன்ற விருத்தர்களையும் கீழே தள்ளுவன், ஒவ்வொருகால் யுத்தம் புரிவன், யுத்தம்புரியு மன்னியபுருஷரைப் பிளந்தெறிவன், ஒவ்வொருகால் ஆடுவன், நான்குபக்கமும் ஓடுவன், ஒவ்வொருகால் எனக்குச் சமானம் யாரென அகங்கரிப்பன், ஒவ்வொருகால் சயனஞ்செய்வன், இந்தப்பிரகாரம் யெவ்வன அவஸ்தையின்கண்ணே தடையற்றவனாய் இப்புருஷன் நானாப்பிரகாரமாகிய துஷ்ட சேஷ்டைகளை அடிக்கடி செய்வன். அந்த யெவ்வன அவஸ்தையின்கண் இப்புருஷன் விஷயபோகங்களால் திருப்தியை யடையான். விதிக்கப்பெற்ற கருமத்தையும் நிஷேதிக்கப்பெற்ற கருமத்தையும் அறியான், அவனுடைய

மனத்தை ஸ்திரீ ஜனங்கள் எப்போதும் கவர்ந்து வைத்திருப்பர். மனத்தாலெப்போதும் ஸ்திரீகளையே சிந்தனஞ்செய்வன் என்பது கருத்தாம். பரதனத்தை அபகரிப்பதற்கு அவன் மனமெப்போது மிச்சித்துக்கொண்டிருக்கும். சாஸ்திரத்தின் ஆஜ்ஞையை யத்தியந்தம்விட்டொழித்திருப்பன். இத்தகைய யவ்வனவஸ்தையையுடைய புருஷனை அதிசீக்கிரங் காலபகவான் வந்தடைவன். யவ்வனமண்டூகத்தைச் சர்ப்பம் விழுங்குவதேபோல, வீட்டினிடத்தும் க்ஷேத்திரத்தினிடத்தும் பந்துக்களினிடத்தும் பற்றுற்ற துர்புத்தியோடுகூடிய இந்த ஜீவனை, மிகப் பயங்கரமாகிய காலபகவான் விழுங்குவர். இந்தபிரகாரம் யெவ்வன அவஸ்தையின்கண் இச்சை முதலிய எட்டுத் தோஷங்களால் ஜனித்த அநந்த துக்கங்களை இச்சீவனடைவன்.

இப்போது விருத்த அவஸ்தையின்கண் இச்சை முதலிய எட்டுத் தோஷங்களால் ஜன்னியமாகிய துக்கங்களைக் காண்பிப்பாம் :—இரவிலும் பகலிலும், துக்கங்கட்கு வீடாயும், சிந்தையோடு கூடியவனுயும் இராநின்றயெவ்வன புருஷனைச் சரைவடிவப் பேயானது விழுங்கும். அந்த ஜரையானது வெண்குஷ்டத்தோடு கூடியதாம். அக்குஷ்டத் தோடுகூடிய ஜரையின் சங்கத்தால் தோஷத்தோடுகூடிய இபபுருஷனும் எல்லாப்பக்கங்களிலும் வெண்மையையடைவன். அழகற்றவனுவன், சக்தியற்றவனுவன், துக்கசோகங்களோடு கூடியவனுவன். ஜரையவஸ்தையையுடைய புருஷன் அனுபவித்த வஸ்துக்களையும் ஸ்மரிக்க முடியாதவனுவன்; ஆகையினுல் ஆதரவின்மைக்குப் பாத்திரனுவன். ஜரையவஸ்தையின்கண் இம்மந்தப் புருஷன் காச சுவாசரோகத்தால் வியாகூலத்தையடைவன், யெவ்வன அவஸ்தையின்கண்ணே செய்த பாபகன்மங்களைச சரையவஸ்தையின்கண்ணே நினைந்து விருத்தனுனவன், தன்னைத்திக்காரஞ் செய்துகொள்வன், எத்தகைய எத்தகைய பாபகர்மங்களை யான் செய்தேன் என இந்தப்பிரகாரம் பச்சாத்தாபத்தையடைவன். வித்தை தனமுடைய ஜரையவஸ்தைப் புருஷனுக்கும் புத்திராதிகள் ஆதரஞ் செய்யமாட்டார்கள் என்றுல், மூர்க்கனுயுந் தனமற்றவனுயுமிரா நின்ற கிழவனுக் குறுங்கதையாதோ. இபபுருஷனுனவன் பால்யாவஸ்தையின்கண்ணே பராதீனத்தன்மைவடிவ அவஸ்தையை யடைந்ததேபோல ஜராவஸ்தையின்கண்ணுமடைவன். வாஸ்தவமாய் ஆராயினே பால்ய அவஸ்தையைப் பார்க்கிலும் ஜராவஸ்தை மிகவும் நிந்திதமாம். ஏனெனின், சக்தியற்றவனும், மலமூத்திராதிகளாற் பூசப்பெற்றவனும் ஆகியபாலகனை அவிவேகியாகிய லௌகிக புருஷனும் நிந்தியான். மலாதிகளாற் பூசப்பெற்ற தாமசவிருத்தனைப்பார்த்து அவிவேகி புருஷனும் நிந்திப்பன். ஆகையினுற் பாலிய அவஸ்தையைப்பார்க்கிலும் ஜராவஸ்தை அதிக நிகிருஷ்டமாம். இந்தப்பிரகாரம் விருத்த அவஸ்தையின்கண் காலபாசவசமாய் எல்லா ஜீவர்களும் பல்வகையாகிய துன்பங்களையனுபவிப்பர். விருத்த அவஸ்தையின்கண்ணே புருஷனுக்கு விஷயங்களினடைவில் மகா இச்சையுண்டாகும். சக்தி யின்மையினுலும் இந்திரியங்களின் க்ஷயத்தாலும சிறிதுவிஷயங்களையேனும் விருத்தனடையான். விருத்த புருஷனுக்குப் பந்துக்களிடத்தே

நேயம் விருத்தியாய்க் கொண்டேபோம். சத்துருக்களினிடத்தே துவேஷம் விருத்தியாய்க் கொண்டேபோம், ஆனால் அவனுடைய சிநேகத்தா லெம்மித்திரனுக்கும் உபகார முண்டாகமாட்டாது; ஆகையினால் அவனது சிநேகம் வியர்த்தமாம். அவனது துவேஷத்தால் எசசத்துருவிற்கும் ஹானியுண்டாகமாட்டாது; ஆகையினால் அவனது துவேஷமும் வியர்த்தமாம். இது முதலாக அநந்த துக்கங்களை விருத்தாவஸ்தையின்கண் இசசீவனடைவன். அதன் பின்னர் யெவ்வன அவஸ்தையின்கண் உதிபபித்த புத்திரனை யிந்த மனுஷலோகத்தில் நிலைபெறுத்துவன். அந்தப புத்திரனவன் பிதாவினிரண்டாவது சரீரமாம, அநந்த புண்ணியங்களா லடைவுற்றவனவன் தநதையாற் செய்யததக்கதாகிய வேதங்களை அத்தியயனம் செய்பவனவன், யாகாதிகர்மங்களைச் செய்பவனவன், யாகாதிகளாற் சர்வபூதங்கட்குஞ் சுகம்செய்பவனவன், பிதாவாலாரம்பிக்கப்பட்ட கூபதடாகாதி கார்யங்களையும் பரிபூரணஞ் செய்பவனவன், பிதாவாற்செய்யாத சுபகாரியங்களையும் செய்பவனவன், இந்தப் பிரகாரம் பிதாவின் சர்வகாரியங்களையுஞ் செய்பவனாகிய நன்னெறியினடககும புத்திரனை இவ்வுலகின்கண்ணே நிலைபெறுத்துவன். ஜரா அவஸ்தையோடு கூடிய பிதா மரணவஸ்தையையடைவன். அதன் பின்னர்க் காலபகவானாகிய தோபபாகன் சூக்கும சரீரமாகியதேரைச சாமக்ரிகளோடு கூடியதாக்குவன். அநதச சூசகுமசரீரமாகிய தேரானது புண்ணிய பாபங்களாகிய சக்கரஙகளோடு கூடியதாம். துககமாகிய கட்டமுளை முதலிய பதார்த்தங்களால் நிறைநததாம். இநதிரியவடிவ துஷ்ட அசுவங்களோடு கூடியதாம். புத்தியாகிய காஷ்டத்தாற செய்யபபெறறதாம். காச சுவாசங்களோடு கூடியதும் கரடடு முரடடு சப்தத்தோடு கூடியதுமாம். இத்தகைய சூக்குமசரீரமாகிய இரதத்தைக் காலபகவான் தியாகஞ்செய்வன். இச்சீவன் சரீரசம்பந்தத்தால் பாலிய அவஸ்தையின்கண்ணும, யெவ்வன அவஸ்தையின்கண்ணும, விருத்த அவஸ்தையின்கண்ணும், அநநத துககங்களை யனுபவித்தபோதிலும அத்தியாச பலத்தா லித்தூல சரீரததை நீக்குமிசசை செய்வதேயின்றும். மரணகாலத்திலதி துக்கத்தையடைநத இசசீவன் தனது மைநதரையும் பந்துக்களையும் ஸ்மரிப்பன். மரணக்கலக்கத்தால் மகாபயததையடைவன், சரீரம் நடுங்கும், தாரபுததிர உறவினர் எவரும் இந்தபபிராணியை நாற்புறமும் சுற்றிக்கொண்டிருபபா; ஆயினும் மரணதுன்பத்தினின்றும் காபபாற்றுவதற் கெவருஞ் சமர்த்தராகார. ஹிம்சையினிடத்திலிரா நின்ற பசுவானது பாதி ஹிம்சையையடைந்துள்ள பசுவைக் காப்பாற்ற முடியாததேபோல பந்துக்கள் காப்பாறற முடியாதவராவர். 72,000 தேட்கள் ஒருகாலத்தில் ஊசியின் முனைக்குச் சமானமான முகங்களால் நம்மனோரது சரீரத்தைக்கடிததுவிடின் அதனால் உண்டாந்துன்பத்தைக் காட்டிலு மதிகத் துக்கமானது மரணவஸ்தையையடைந்துள்ள புருஷனுக்குச சரீரத்தியாகத்தின்கண்ணுண்டாம். அத்துக்கத்தாற் புருஷனவன் கரங்களையும் கால்களையும் புரட்டிக் கொண்டிருபபன், ஹிம்சையை யடைந்த பசுவானது கால்களைப் புரட்டுவதேபோல; அத்துக்கத்தாலிவன் சடத்தன்மையை யடைவன். இத்தகைய துக்கத்தையடைந்த புருஷனைக கண்டு சர்வபந்துக்களும் சோகத்தை யடைந்து அழுவர். பந்தனத்தாற் றுக்கத்தையடைந்த காக்த்தைக்கண்டு சர்வகாகங்களும்

சோகத்தோடு கூடியபவையாய்க் கத்தும்; ஆனாலதைவிடுவிப்பதில் அவற்றிற்குச் சாமர்த்தியமின்றாம். வேடனால் கட்டபபட்ட ஊர்ப்பன்றியானது மிருந்தசப்தங் களைச் செய்வதேபோ லளவற்ற சப்தங்களைச்செய்யு மிவனைக் காலனாகிய வேடன் கட்டிச் சம்பந்திகளின் றரிசனமற்ற தூரதேசத்திற் கிழுத்துக்கொண்டு போவன். பாசத்தாற் கட்டுப்பட்ட புறாவானது தீனத்தன்மையை யடையுமாபோற் காலபா சத்தாற் கட்டுற்ற இந்த ஜீவனும் தீனத்தன்மையை யடைவன். தின்பண்டத் தோடுற்ற தூண்டில் முள்ளை ஜலத்தின்கண்ணே செம்படவன் போடுவன். அந்தத் தின்பண்டத்தைப் புஜிக்கும் பொருட்டுற்ற மீனத்தைச செம்படவன் வீட்டிற் குக்கொண்டு செல்லுவதுபோல மனுஷலோகமாகிய மகா மடுவின்கண் ஸ்திரீபுத் திர தனாதிவடிவ தின்பண்டத்தைப புஜிக்குமபொருட்டு அடைந்துள்ள இந்த ஜீவ வடிவ மீனத்தை மிருத்தியுவாகிய செம்படவன் கட்டிப்பரலோகத்திற் கெடுத் துச் செல்வன். வனத்தின்கண் இராநின்ற மிருகத்தை அம்பால் வேடன் அடிப்பதுபோலச் சம்சாரவடிவ வனத்தின்கண் இராநின்ற ஜீவரூப மிருகத்தைச் சுரமுதலிய வியாதிவடிவ பாணத்தாற் காலரூபவேடன் கொல்லுவன். மரண அவஸ்தையின்கண்ணே சோர்ந்த முகத்தோடு கூடியவனாய் அநந்தவித பயங்கர சப்தங்களோடுள்ள தீன புருஷனைக்கண்டும் காலபகவான்தயையை யடையமாட் டார். ஏனெனின், பிரஜாபதியின் ஆஞ்ஞையினால் மிருத்தியுவானவர் பிரஜையைக் கொல்வதாகிய உத்தியோகத்தைத் தரிததுள்ளார்; இவ்வார்த்தை மோக்ஷ தர்ம மென்னும் சாஸ்திரத்தின்கண் வெளியாம். ஜீவஹிம்சைவடிவ அதிகார நிவிர்த்தி யின்பொருட்டு அநந்த காலபரியந்தம தவத்தை மிருத்தியு செய்தார். செய்தும், பிரஜாபதியானவர் மிருத்தியுவின்பொருட்டு அந்த ஹிம்சாவடிவ அதிகாரத்தையே கொடுத்தனர். வழிப்போக்கனைததிருடன் கொல்வதுபோல ஆ மைந்த! ஆ மனை வியே! ஆ உடன்பிறந்தோரே! ஆ என்மகளே! என இவ்வண்ணம் ஆயிரக்கணக் கான சப்தங்களைச் செய்யாநின்ற ஜீவவடிவப் பதிகனை யிக்காலவடிவக் கள்வன் கொல்வன். ஹிம்சையின் ஸ்தானத்திற் கெஜமானனானவன் தன்காரியத்தின் பொருட்டு ஆட்டைக்கொல்வன். அதுபோல காலபகவானும் தனது காரியத் தின் பொருட்டு இந்த ஜீவனைக்கொல்வன். இந்த ஜீவனானவன் கபத்தாலடை பட்ட கண்டத்தோடு கூடியிருப்பன்; "குர் குர்" என இவ்வண்ணம் அநந்த சப்தங்களைச் செய்வன். ஈண்டுப்பிறப் பிறப்பின் ஒரு *நிலைக்களத் தன்மையின் காப்பே, காலபகவானது காரியமெனத் தெரிந்துகொள்க. அபராதியாகிய புரு ஷனை அரசசேவகர் இழுத்துக்கொண்டு போவதுபோலக் கூகாவெனக் கதறும் எல்லா உறவினரையும் அநாதாஞ்செய்து, யமகிங்கரர் இந்த ஜீவனை இழுத்துக் கொண்டு போவர். இச்சீவ சரீரத்தின்கண்ணே பிராணனைத் தரிப்பவையாய 72,000 நாடிகளினின்றும் பிராணன் வெளிப்போதற்கு மிருத்தியுபகவான் அந் நாடிகளின் கட்டைவெட்டுவர். வேளாண்மைசெய்யும் புருஷன் அனாயாசமாய்க் கதலி வனத்தைக் கோடரியால் வெட்டுவதுபோல் இம்மிருத்தியு பகவானும் முடி வுகாலமாகிய கோடரியாலிச்சீவனது அங்கங்களோடுள்ள பிராணனது சம்பந்த

* நிலைக்களம் = நின்றவிடம்.

மாகிய கட்டைவெட்டுவர். மரணகாலத்தில் மிருத்தியு பகவான் காலமாகிய கோடரி யாற் புருஷனது சரீரத்தின்கண்ணே கால்நுனியே முதலாய்த் தலைமயிர்வரை அநந்த பீடைகளையுண்டாக்குவர். மூன்றரைக்கோடி கூர்மையான ஊசிகள் ஒருகாலத்தில் நம்மனோரது சரீரத்தின்கண் நுழையுமாயின் எவ்வளவு துன்ப முண்டாகுமோ அவ்வளவுதுன்பம் மரணகாலத்தின்கண்ணே புருஷனுக்குண்டாம். கூர்மையாய மரம் வெட்டுமாயுதங்கொண்டு ஜீவித நம்மனோரது அங்கங்களை அநேகந்தடவை வெட்டின் எவ்வளவு துன்பம் நம்மனோருக் குண்டாகுமோ அவ் வளவு துன்பம் சர்வதேகதாரி புருஷருக்கும் மரணகாலத்தின்கண் உண்டாம். பாதமே முதலாய்த் தலைவரை தோலையுரித்தா லெவ்வளவு துக்கஞ் சீவிதராகிய நம்மனோருக் குண்டாகுமோ அவ்வளவு துக்கம் மரணகாலத்தின்கண் ஜீவர்களுக் குண்டாம். காய்ந்த எண்ணெயின்கண்ணே பிரவேசஞ் செய்வதால் எவ்வளவு துக்கம் ஜீவிதராகிய நம்மனோருக்குண்டாமோ அவ்வளவு துக்கம் மரணகாலத் திற் புருஷருக்குண்டாம். முகநாசிமுதலிய ஒன்பது வாயில்களுந் தடைப்படலால் எவ்வளவு துன்பம் நம்மனோருக் குண்டாகுமோ அவ்வளவு துக்கம் மரண காலத் திற் புருஷனுக்குண்டாம். அல்லது, நரகதுன்பத்தைக் காட்டினு மதிகதுக்கம் மரணகாலத்தின்கண்ணுண்டாம். மரணகாலத்தில் புருஷன் சிலகணம் மூர்ச்சை யையடைவன், சிலகணம் மூர்சையினின்றும் விழித்திருப்பன், சிலகணம் பயத்தை யுண்டாக்கத்தக்க யமபடர்களைக்கண்டு பயத்தையடைவன், அந்தப் பயத்தாற் சில சமயம் மல மூத்திராதிகளையும் பரித்தியாகஞ் செய்வன், விழிகளினின்றும் கண் ணீரைப் பெருக்குவன், சிலகணம் யமகிங்கரர்களைககண்டு மகாபயத்தை யுண்டாக் குஞ் சப்தத்தைச் செய்வன். அந்தயமகிங்கரர் வளர்ந்து பருததகாததிரமுடைய வர், மிக நீண்டு வளைநத பற்களோடுற்ற முகத்தையுடையவர், நீல நிறமுடையவர், விரிந்து சுருண்டகேசமுடையவா, கசையையும் (சவுக்கையும) பாசத்தையுங் கையி லுடையவர் ஆவர். அத்தகைய யமகிங்கரரைக் கண்டு பயத்தையடைந்த இச சீவன் வாயினின்றும் நுரையைக ககுவன். எல்லாத் துவாரங்களினின்றும் மலத்தைப பரித்தியாகம் செய்வன். அநத யமகிங்கரர் எதிரில் வந்து முதலிற் பாபியரைத் துர்வசனங்களாற் றிடடுவர். பின்னர், கட்டிப் பரலோகத்திற் கிழுத் துக்கொண்டு போவர்.

இப்போது அந்த யமகிங்கரர்களுடைய வசனங்களைக் காண்பிப்பாம்:—ஹே பாபியே! நினதுஜன்மம் சீயென இகழத்தக்கதன்றோ? ஏனெனின், இந்த மனுஷ சரீரத்தை யடைந்தும், நீ நரகத்திற்குக் காரணமாகிய பாபகாமததையே சம்பா தித்தனையன்றோ? உனக்கு முக்கிய இதமாகிய மோக்ஷத்தை நீ ஆன்மஞானத்தாற் சம்பாதனஞ்செய்யாது காலத்தைவாளா ஒழிததனையே? கௌண இதமாகிய சுவர்க்காதிகளையும் யாகாதிகர்மங்களால் நீ சம்பாதனஞ் செய்யவில்லையல்லவா? மாறாய் இவன் எனது சத்துரு, இவன் எனது மித்திரன், இவனென்னு லுபே க்ஷிக்கத்தக்கவன் என்னும் பேதபுத்தியாற் றனக்குத்தானே அநர்த்தத்தை நீ சம்பாதித்துக்கொண்டாயன்றோ? ஆகையினாற்றனது சத்துரு நீ தானேயாயினை யன்றோ? வேறொருவர் உனக்குச்சத்துருவின்றாம். ஏனெனின், குருசாஸ்திர முதலிய ஆன்ம ஞானத்தின் சாமக்கிரிகளையடைந்தும் ஜன்ம மரணரூப *பந்த

னத்தை நீ நிவிர்த்தி செய்யவில்லையல்லவா? தனக்குப் பிரதிகூலமா யிராநின்ற அவமானாதிகளை அன்னிய புருஷனுக்குச் செய்யின் அப்புருஷன் தனக்குத்தானே சத்துருவாகின்றான்; ஆகையினாற் பேதபுத்தியே அநர்த்தகாரணமாம். எப் புருஷன் பேதபுத்தியினாலன்னிய ஜீவர்களைப பீடைசெய்வனோ அவனுக்குச் சீவித காலத்திற்றானே அன்னிய அரசர் முதலிய பலமுடைய புருஷரால் பயமுண்டாம். மரணகாலத்தின்கண் யமகிங்கரராகிய எங்களாற் பயமுண்டாம; ஆகையினாலிரண்டு லோகங்களிலும பயஹேதுவாகிய பேதபுத்தி ஜன்னிய பரபீடையை எந்த மதி மானாகிய புருஷன் செய்வன்? மற்றோசெய்யான், என்பனமுதலிய துர்வசனங்களால் யமகிங்கரர் பாபிகளாகிய ஜீவரைத் தாடனஞ்செய்வர். அரசசேவகர் குற்றவான்க ளைக் கள்ள முதலிய குற்றங்களை ஸ்மரிபபித்துக் கட்டியிழுத்துக்கொண்டு செல்வது போல யமகிங்கரரும் பேதபுத்திவடிவ அபராதத்தையும், அநான்ம தேகாதியின் கண் ஆன்ம புததிவடிவ அபராததததையும் ஸ்மரிப்பித்து இசசீவனைப் பரலோகத் தின்கண் இழுததுசசெல்வர். ஆண்டு முதலில் தேகதோஷத்தைக் காண்பிப பாம்:—அடேபாவியே! எநதத் தேகத்தின்கண்ணே நீ ஆன்ம புத்தி செய்தனை யோ அத்தேகம் எத்தகைய தென்னின், பிதாவின் வீரியவடிவ மலத்தாலும், மாதாவின் இரததவடிவ மலத்தாலும் உண்டாவதாம்; மலமூததிரங்களா னிறைக் கப்பெற்றதாம். இஃதெல்லாவுலகருக்கு மனுபவசித்தமாம். அங்ஙனமே சாஸ் திரத்தின்கண்ணுங் கூறப்பட்டுளது:—

யதந்தரஸ்ய தேஹஸ்ய பஹிஸ்ஸ்யாத் தத்தேஹவஸ்து
தண்டமாதாய லோகஃ ஶுநஃ காகாம்ஶ்ச வாரயேத்

"உடலி லுள்ளவை யாகிய வுதிரமே முதல
நெடிது பாகியம் வந்துறி னீட்டி கவர்ந்தே
கடிது காகங்கள் ஞாளிகள் காவலாற் றடுப்பர்
சடமிது தனைக் காத்திடச் சகத்தின் மானவரே." (7)

இது பொருளாம்:—இசசரீரத்தினுள் இராநின்ற மலமூத்திர மாமிசவுதிராதி மலங்கள் வெளியிற் கிளமபினோ எல்லாப புருஷரும தண்டத்தைக கிரகித்துத் தனதுசரீர ரக்ஷணையின் பொருட்டுச சநததம் காகங்களையும நாய்களையுமே நிவா ரணஞ் (தடை) செய்வர். ஆகையினா லிசசரீரம் மிகவும நிநதிதமும், விநாசியுமாம். நூறு வருஷம்வரை சேவித்து வைத்திருந்த போதிலும் இசசரீரம் விட்டொழிப்ப தேயாம. ஆகையினால் செய்ந்நன்றி கொன்றதாம், ஆயிரம் பரிணாமங்களோடு கூடிய தாம், புருஷனுக்குட் படாததாம்; இதன்கண் ஆன்மபுத்தி வாயிலாய்ப புருஷார்த்த நாசகமாம், ஆகையினா லெப்போதும் துககககாரண மிச்சரீரமாம. இத்தகைய நிந் தித சரீரத்தின்கண் ஆன்மாபிமானஞ் செய்து நீ அநந்த பாபகர்மங்களைச செய் தனை, அந்தப் பாபங்களாற் ஜனிக்கு மநநததுக்க முனக்குண்டாம். இவ்விஷயம் வியாசபகவானுங் கூறியிருக்கின்றனர்:—

ஸர்வாஶுசிநிதாநஸ்ய க்ருதக்நஸ்ய விநாஶிநஃ
ஶரீரகஸ்யார்தே அஜ்ஞாஃ பாபாநி குர்வதே

" மலங்க ளியாவையு மருவுறும் வீடதாய் மகிழ்செய்
நலங்க ளின்றிறங் கொல்வதாய் நாசமே யாகும்
புலன்கொள் புற்கலப் போஷணப் பொருட்டமி ழ்வினர்
நிலங்கோள் பாபங்க ணிறைவுற நிதம்புரி குவரால்." (8)

*இது பொருள் :—மலமூத்திரமுதலிய சர்வ அசுசிபதார்த்தங்கட்கு வீடாகியதும், செய்ந்நன்றி கொல்வதும், விநாசியாயதும் ஆகியசரீரத்தைக் காப்பாற்றி ரக்ஷிப்பதின்பொருட்டு மூடபுருஷன் பாபங்களைச் செய்வன். ஹேபாபியாய ஜீவனே! இந்த அநித்திய தேகபோகங்களின் சித்தியின் பொருட்டுத் தார புத்திரதனாதிகளிடத்தே மமதை (என தென்னுந் தன்மை) யபிமானத்தால் நீ சிறிதுமாத்திரமும் சுகிர்தத்தைச் செய்தாயில்லை; மாறாய்ப் பாபகர்மங்களை நீ சம்பாதனஞ் செய்திருக்கின்றாய். ஆகையினா லெமக்கு மிகுந்த வருத்தமுண்டாகின்றது. யாகாதிகளாற் புண்ணியஞ் சம்பாதிப்பதற்குச் சரீர ஆயாசமும் தனமுதலியவற்றின் செலவுமுண்டாம்; ஆகையினால் நீ சம்பாதிக்கவில்லை என்றாலும் யான் பிரஹ்மமாயிருக்கின்றேன் என்னும் அபதஞானத்தைச சம்பாதிப்பதில் சரீரத்தின் பிரயாசமும் பொருள் முதலியவற்றின் விரயமும உண்டாவதின்றன்றோ? அத்தகைய அதிசுலப ஆன்மஞானத்தையும் நீ சம்பாதனஞ செய்யவில்லை. ஆகையினால் ஹேபாவியே! நின் ஜன்மம் சீசீயெனத் திக்காரஞ் செய்யத்தக்கதேயாம். அல்லது மனம்வாக்குகட் கெட்டாத நிர்க்குணப் பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரிப்பதற்குச சமர்த்தில்லையென நீ சொல்லுவாயாயின், சர்வ சுகத்தையும் செய்விக்கும் நிர்க்குண பிரஹ்மத்தி னுபாசனையை நீ ஏன் செய்யாதொழிந்தனை! அல்லது, மனமானது மிகவுஞ் சஞ்சலத்தை யுடையதாதலின் அது நிர்க்குணப பிரஹ்மத் தியானத்தின்கண்ணே பொருந்துவதில்லையென நீ கூறுவாயாயின், பரஸ்திரீகமனாதி பாப கர்மத்தின்கண் எவ்வளவு நினக்குச சரீராயாசமிருக்கின்றதோ அதுபோலத் தனாதிஹானிவடிவக் கிலேசமுண்டாமோ அவ்வொரு சிறிது கிலேச ஆயாச லேசமாத்திரமும் பரமேஸ்வரனது நாம கீர்த்தனத்தின்கண்ணே கிடையாது. சுவர்ககாதிகளை யடைவிப்பதாய பரமேஸ்வரனது நாமகீர்த்தனமாகிய சுகிர்தத்தை நீ ஏன் சம்பாதிககவில்லை? நீ மனத்தைச் சாவதானப்படுத்தி யெப்போதும் பரபுருஷரின் தோஷத்தை விசாரஞ் செய்ததுபோல, மகத்தாய பலத்தை யடைவிப்பதாய கணமாத்திர ஆன்ம விசாரத்தை நீ ஏன் சமபாதிக்கவில்லை? கணமாத்திர பிரஹ்மவிசார பலத்தை அன்னிய சாஸ்திரத்தின்கண்ணும் கூறப்பட்டுள்ளது :—*

ஸாதூ௦லெ க௩ஸஸெ தீயஹ் ஸூிஜெஉ தாவ ஸவஹாவநி
யஜூா நீ௦வகூ தஂஸஆஸஹ ஃவிஊா ஜெவாமூஸ௦ வஹுஜிதா
ஸ௦ஸாாாஹ ஃஉஹுதா ஸுவிதாஜெஸெ ஜொகூவஹூஜெூாவஹூஸெள
யஸூவஹ ஆவிவாாணெக்ஷண ஃவிஜெஸயஹு௦ஃந வஹாவூயாஃ

" எவன்மனம் பிரம வாய்வினிற் கணப்போ தேனுநன் னிலைபெறுந் தீர்த்த
மவன்முழு தாடிப் படிமுழு தளித்திங் காயிர மகம்புரிந் தமர
ரேவரையுந் தொழுது தன்பிதுர்க் களையு மிருங்குமே பக்கட லிருந்தே
நவமுட னேத்து மூவுல கினரு நாடிவாழ்த் திடவிளங் குவனால்." (9)

இதுபொருள் :—எந்தப் புருஷனுடைய மனமானது கணமாத்திரமேனும், பிரஹ்மவிசாரத்தின்கண்ணே நிலைபெறுமோ அந்தப்புருஷன் சர்வ தீர்த்தங்களின்கண்ணும் ஸ்நானஞ்செய்தவனுவன். பிருதிவி யாவற்றையுந் (உலகமுழுவதையும்) தானஞ்செய்தவனுவன். ஆயிரக்கணக்கான யாகங்களையு மவன்செய்தவனுவன். சம்பூர்ண தேவதைகளையு மவன் பூஜித்தவனுவன். சம்சார சமுத்திரத்தினின்றும் தன்னுடைய பிதுர்க்களையும் ஈடேற்றினவனுவன். மூன்று லோகத்திலுள்ளோர்களாலு மவன் பூஜிக்கப்படுபவனுமாவன். இத்தகைய ஆன்மவிசாரத்தையும் நீ செய்தாயில்லை. நீ அன்னியப் பிராணிகளின் அழிவின்பொருட்டு மிகுமுயற்சி செய்தது போலச் சிறிதுமாத்திரமேனும முயற்சி சுவர்க்க அடைவின்பொருட்டேனும் மோக்ஷ அடைவின்பொருட்டேனும் நீ ஏன் செய்யாதொழிந்தனை? நீ விருக்ஷாதிகளைப்போல முயற்சி யின்றியவனுவையாயின்; உன்னை யான் இகழேன். ஆனல், நீ சர்வசக்தி சம்பன்ன மனுடசரீரத்தை யடைந்தும், சாஸ்திரத்தில் விதித்த புண்ணியகர்மங்களைச் சம்பாதித்தற்கு மாறாய்ப் பாபகாமங்களைச் சம்பாதித்தனை; ஆகையினல் நீ தண்டிப்பதற்கு யோக்கியனுயிருக்கின்றாய். நீர் எனது பாபங்களை எப்படி அறிவீரெனில், கேள்:—இவ்வுலகின்கண்ணே எவ்வெப்பாவங்களை அரசனுக்குத் தெரியாதியற்றினையோ, உனது பலத்தா லெவ்வெவ பாவங்களை நீ பிரசித்தமாய்ச செய்தனையோ, அவ்வெல்லாப் பாவங்களையும் சூரியசந்திரர்கள் கூறுவர். அதனல் நினது பாபங்களை யானறிவேன்; அந்தப பாவங்கள் மர்மத்துக் கொப்பானதாம. மர்மஸ்தானம பேதனத்தை யடையின் மிகுந்த துயரையுண்டாக்குவதுபோலப பாப கர்மமும பிரசித்தமாய் மிகுந்த துயரையே விளைவிக்கும். யமகிங்கரரின் வயத்தையடைந்த பாபியானவனை மீண்டும யமகிங்கர ரிவ்வண்ணமுவைவர் :—ஹே பாபியே! நீ யிவவண்ண மகங்கரித்தனையல்லவா :—இவ்வுலகின்கண்ணே யாவரினும் பலமிகுந்தவன் யான், என்னைப்பார்க்கினும் பலமுடையோன் எப்புருஷனுமின்றாம். இத்தொழிலின்கண்ணே முயன்ற என்னைத் தண்டிக்க வல்லார் யாவர் என்னுங் கெட்ட எண்ணத்தா லந்தப்பிரகாரமாகிய துர்விசாரஞ்செய்து அகங்காரத்தாற் பாபகாமத்தின்கண்ணே நீ முயன்றனையன்றே! சாஸ்திரத்திற்கூறிய மரியாதையையும் நீ விட்டொழித்தனையன்றே! ஆகையினல், யாவருக்கும நீ சோகந்தர யோக்கியனுகின்றாய். அவ்வகை யாவருக்கும பீடைசெய்பவனுகிய மதியற்ற உன்னைச சிக்ஷிக்கும்பொருட்டு யமகிங்கரராகிய யாம வந்திருக்கின்றோம. யாங்க ளுன்னைக்காட்டினு மதிக பலமுடையவராக இருக்கின்றோம். நீ செய்த சர்வ பாபங்களையும் யாம் அறிந்திருக்கின்றோம. யமராஜனின் சபையின்கண்ணே தினமுதலியவை உனது சர்வ பாபங்களையும என்னிடங் கூறியிருக்கின்றன. பகலின்கண்ணே நீ செய்யும பாபங்க ளியாவற்றையும் பகலுஞ் சூரியபகவானுங் கூறியுள்ளார், இரவின்கண்ணே நீ செய்யும் பாபங்களி யாவற்றையும் இரவும் சந்திரனும கூறியுள்ளார், இரண்டு சந்தியாகாலங்களிலும் நீ செய்த பாபங்களனைத்தையும் இரண்டு சந்தியாகாலங்களும் கூறியுள்ளன, எல்லாக் காலங்களிலும் நீ செய்த எல்லாப் பாபங்களையும் ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பிருதிவியென்னும் பஞ்சபூதங்களும் கூறியுள்ளன. இரகசியமான இடத்தில் யான்செய்த

பாபங்களைச் சூரியாதிக ளெவ்வண்ண மறிவரென நீ கூறுவாயாயின், அக்கூற்றுச் சரியன்று ஏனெனின், சூரியாதிகள் சர்வஞ்ஞர், சர்வப்பிராணிகளோடு யமராஜா வின் இரகசிய புருஷர் எப்பொழுதுஞ் சுற்றுகின்றனர். பரமேஸ்வரனுடைய மாயையினால் மோகிப்பிக்கப்பட்ட நீ அவ்வெமபுருஷரை அறியாய்; இந்தப் பிரகாரம் துர்வசனங்களைக் கூறிப் பயங்கரமாய கயிற்றாற் கட்டிக் கசையால் அடித் துப் பாபிகளைப் பரலோகத்தின்கண் ணிழுத்துச் செல்வரவ்வெம கிங்கரர். பிர சித்த துவாரகாபுரியினின்றும் ஸ்ரீ கிருஷ்ணபகவானனவர் தனதுபரந்தாமத் திற்குச் சென்றதன்பின், அநதத் துவாரகாபுரியைச சமுத்திரம் லயமசெய்து விட்டதேபோலச் சரீரமாகிய துவாரகாபுரியின் எஜமானனாகிய இச்சீவன் அப் புரியினின்றும காலனாகிய சாரதியோடுகூடிய சூக்கும சரீரமாகிய தேரிலேறிப் பரலோகத்திற்குச சென்றபின், அக்கினியாகிய கடல் சரீரமாகிய துவாரகாபுரியை இலயமசெய்யும. பதி மிருததியுவை (மரண ததை) யடைந்தபின், விதவையானவள் சோபை (அழகு) யற்றவ ளாவதுபோலச் சீவனாகிய கிருஷ்ணபகவான் சென்றபின்பு இச்சரீரரூபபுரி சோபையற்றதாம். பிரசிதத துவாரகாபுரியினின்றுமகிருஷ்ணபக வான் சென்றதன்பின்னா, அர்ச்சுனனோடுகூடிய சர்வ பந்துஜனங்களுந துட்டர்க ளாய இடையர்களால் கவரப்பட்ட ஸ்திரீமுதலிய சர்வ பதார்த்தங்களையுங் காப் பாற்ற ஆற்றலற்றவராயினர். அதுபோல சரீரரூப புரியினின்றும ஜீவன் சென்ற பின்னர், இவனது ஸ்திரீ தனாதி பதார்த்தங்களைக் காபபாற்றுவதற்கு எப்பநதுவும சாமர்த்தியமுடையவராகார். முன்னர் இச்சரீரரூப புரியின்கண் சிரசின் உசசி வாயிலாய்ப் பரமான்மாவானவர் ஜீவரூபமாய்ப பிரவேசிததனர். அந்தத் துவாரத் தினின்றும் ஜீவன்புறப்பட்டுவிடின் பிரஹ்மலோகத்தையே யடைவன். நேத்திராதி துவாரங்களினின்றும் இநத ஜீவன் செல்லின், புண்ணியவானனவன் சுவர்க்காதி களை யடைவன்; பாபியாயினோ னேததிராதி துவாரங்களினின்று சென்றாலும நர கத்தையே யடைவன். இநதபபிரகாரம பரலோகத்தின்கண்ணே ஜீவன் சென்றபின் அவன்சம்பநதியின் அவஸ்தைகளைக் கூறுவாம:—இபபுருஷன் ஜீவித்திருப்பின், எநத ஸ்திரீ புததிராதி பநதுக்கள் இவனின்றி யொருகவளமும போஜனஞ் செய்யாரோ, அவாகளே இவனிறந்தபின் சுவாதாய (இனிமையாகிய) அன்னத் தைக் கழுத்துவரை யுண்பா. இவன் ஜீவிததிருபபின், இப்புருஷனை மிருதுவா கிய கட்டிலின் மேல் (மெதததையிற்) படுககவைபபா; இவனிறந்த பின்னா ஓங்கி யெரியாநின்ற அழலின்கண்ணே போடுவர். ஜீவிததிருக்கும் புருஷனை மிருது வாகிய கந்தபுஷ்பங்களா லலங்கரிககும்போதும் தொடுமபோதும பயத்தையடை வர்; கட்டையில் வைத்திருக்கும் புருஷனைத தீக்ஷணமாகிய காஷ்டங்களால் தொடுவர். ஜீவிததிருக்குமபோ திவனைக குதிரையினுமம, பல்லக்கினும், யானை யினும், தேரினுமம, கொண்டுசெல்வர்; இறநதபின் இவனைக் காஷ்டத்தோடு கட்டிக் காஷ்டம்போல மயானத்திற்கு எடுத்துச்செல்வர். ஜீவித்திருக்கும்போது மங்கலவாததியங்களோடு கிராமத்தினின்றும் வெளிச் செல்வன். இறந்தபின் சோகத்தோடுற்ற ஸ்திரீயின் அழுகையோடு செல்வன். ஜீவியாநின்ற புருடன் முன்பு தயிர் முதலிய மங்கலவஸ்துக்களை யெடுத்துச் செல்பவரே இறந்த தின்பின் இவன் முன்பு புகையோடுற்ற நெருப்பை யெடுத்துச் செல்வர். ஜீவிக்

குங்கா லெவரைக் கணமாத்திரையேனும் பிரியாறோ அவனே மரிக்கின் வைராக்கியவானைப் போலச் சர்வ பந்துக்களையும் விட்டுச் செல்வன். ஜீவிதகாலத்திலெப்புருடனின்றி யெத்தாரபுத்திராதி பந்துக்கள் கணமாத்திரையேனும் நிலைகொளாதிருந்தனரோ, அவரே இவனிறந்ததன் பின்னர், இவனின்றிச் சுகமாய் நிலைபெறுவர். சூரியனைக்கண்டு கமலமானது விரிவதேபோல், ஜீவித காலத்தின்கண் எந்தப் புருஷனாகிய சூரியனைக் கண்டு எத்தாரபுத்திராதி பந்துக்களின் முகங்களாகிய கமலங்கள் விரிந்தனவோ, இறந்ததன் பின்னர், அதே புருஷனைத்தரிசித்தாலும் பரிசித்தாலும் அந்தத் தாரபுத்திராதி பந்துக்கள் ஸ்நானஞ்செய்வர். முன்னர், ஜீவிதகாலத்தின்கண்ணே புருஷனுடைய பாதத்தினின்றும் வெளிவராநின்ற தீர்த்தத்தைத் தாரபுத்திராதி பந்துக்கள் தமமுடையமத்தகத்தின்கண்ணே தரித்தனர். இறந்த பின்னர் அவனைத் தீண்டினாலவர்கள் ஸ்நானஞ்செய்யாநிற்பர்; அல்லது தீண்டார். இந்தப் பிரகாரம் பிரத்தியக்ஷ தோஷங்களோடுகூடிய சம்சாரவடிவசூலத்தின்கண் அடைவுற்ற இச்சீவனானவன், பரமேஸ்வரமாயையினால் மோகிதனாய்ப்பிரத்தியக்ஷப் பிரமாணத்தாற் சித்தமாகிய சமுசாரதுக்கங்களையு மறிகின்றிலன். இப்பிரகாரம் மரணத்தின் பின்னர் பந்துக்களினவஸ்தையானது கூறப்பட்டது.

இப்போது பரலோகத்தின்கண் ஜீவனது அவஸ்தையைக் கூறுவாம்:—இத்தூல சரீரத்தை விட்டொழித்து அதிதுக்கியாயிராநின்ற இச்சீவன் பரலோகத்திற்குச் செல்வன். பசிதாகத்தாற் பீடிதனாவன், யமகிங்கரரால் நிராதரத்தையடைவன், அநந்தங்கோடியோஜனை தூரத்துள்ள யமபுரிக்குச் சொற்பகாலத்துள் இச்சீவனை யமகிங்கரர்கொண்டு செல்வர். பாசத்தாற் கட்டுப்பட்டுக் கசையால் (சவுக்கால்) அடிக்கப்பட்ட பிராணியைப் பலாத்காரமாய் அரச சேவகர்கொண்டு செல்வது போல இச்சீவனையும் யமகிங்கரர் பரலோகத்தின்கண் இழுத்துச் செல்வர். அந்த யம்புரியின்கண் பாபி, யமசாசனத்தா லநந்த துக்கத்தையடைவன். அந்தத் துக்கங்கள் யாவற்றையும் கூறுவதற்கேனும் கேட்பதற்கேனும் எவருக்குஞ் சாமர்த்தியமின்றாம்; என்றாலும், வைராக்கியத்தின் பொருட்டுச் சிறிதுமாத்திரத் துக்கத்தைச் சாஸ்திரத்தின்கண்ணே கூறப்பட்டுள்ளது. அந்த யமபுரியின் மார்க்கத்தின்கண் மாமிசம் புசிக்கும் பன்றிகளும் காகங்களும் கழுகாதிகளும் மகா உபத்திரவத்தை யிச்சீவனுக்குச் செய்யும். அம்மார்க்கத்தின்கண்ணே பாபியைப் பல்வகையாகிய ஆயுதங்களால் இராக்கதர்போலத் திருடர் கொல்வர். அவ்வாயுதங்களாலும் பாபவசத்தா லிச்சீவனுக்கு மரணமுண்டாகமாட்டாது. அந்த மார்க்கத்தின்கண் அந்தப் பாபியானவன் ஆண்டு மலத்தாலும் சீயாலும் நிறைந்துள்ள நதிகளைத்தாண்டுவன், அந்நதியின்கண் மூழ்குவன், அந்நதியின்கண் இருக்கும் மகரங்களாற் பயத்தையடைவன். யமபுரியின்கண் அக்கினிவளராநின்ற நரக மிருக்கின்றது; ஜலம், பிருதிவி, வாயு, ஆகாசம் என்பவற்றின் பரிணாமங்களாகிய நரகங்களுமுள. சாஸ்திரங்கள் நிறைந்துள்ள நரகமுமுளது, இருணிறைந்துள்ள நரகமுமுளது, இவைமுதலாகிய பல்வகையான நரகங்கள் பாபிகட்குத் துக்கத்தைக்கொடுக்கும். கட்கத்தின்(வாளாயுதத்தின்)முனையைப்போன்று கூர்மையான இலைகளோடு கூடிய விருக்ஷங்களின் வனமாகிய நரகமே முதலாய் மகாபயத்தைக் கொடுக்கத்

தக்க நரகங்களில் அந்தப் பாபியானவன் அநந்த கற்பபரியந்தம் துக்கங்களை யடைவன். பரலோகத்தின்கண் பாபிகளைத் துன்பஞ்செய்வதாகிய நரகங்களைப்பற்றிக் கருடபுராணமுதலியன பிரசித்தமாகக்கூறுகின்றன. ஆகையினு லீண்டுக் கூற வில்லை. இவ்வண்ணம் பாபியானவன் நரகதுக்கங்களை யனுபவித்துக் காலவசத்தால் மீண்டும் மழைவாயிலாய் அன்னபாவத்தையடைந்து மனுஷலோகத்தையடைவன். புண்ணியவானுகிய ஜீவனே சுவர்க்கத்தின்கண் மகாசுகத்தை யனுபவித்து அப்புண்ணியகர்மம் முடிந்தபின்னர் முற்கூறிய ரீதியாய் மழைவாயிலாய் அன்னபாவத்தை யடைந்து இவ்வுலகின்கண்ணே வருவன். இவ்வகை இவ்வுலகத்தையடைந்து முன்போலப் புண்ணியபாபவசமாய் மீண்டும் பிதாவாயிலாயும் மாதாவாயிலாயும் பல்வகையாகிய ஜன்மங்களை எப்போது மிச்சீவனடைவன். முன்னர், இச்சீவனுக்குப் பிதாவினிடத்தினின்றுஞ் மாதாவினிடத்தினின்றுஞ் ஜனித்தலை நிரூபணஞ்செய்தோம். அவ்விரண்டு ஜன்மங்களையு மபேக்ஷித்து மீண்டும் பிதாவினிடத்தினின்றும் மூன்றுவது ஜன்மம் ஜீவனுக்குண்டாம. இந்தப்பிரகாரம பிதாவினிடத்தினின்றும், மீண்டும் மாதாவினிடத்தினின்றும் ஜன்மம, மீண்டும் பிதாவினிடத்தினின்றும் ஜன்மம என்னும இம்மூன்று ஜன்மங்களுங் கவலையேற்றம்போற் புண்ணிய பாபவசத்தாற் சீவனையடையும். இச்சீவனுக்கு ஆன்மஞான முண்டாகாதிருக்கும வரையில் மிருத்தியுவும் வந்துகொண்டேயிருக்கும். மீண்டும் ஜன்மமும் வந்துகொண்டே யிருக்கும, மீண்டும் பாலியாவஸ்தையும் வந்துகொண்டேயிருக்கும், மீண்டும பௌவனுவஸ்தையும் வந்துகொண்டே யிருக்கும், மீண்டும் விருத்தாவஸ்தையும வந்துகொண்டேயிருக்கும், மீண்டும் மிருத்தியுவும் வந்துகொண்டேயிருக்கும். இந்தப்பிரகாரம சமசாரத்தின்கண் இச்சீவன் சுற்றிக்கொண்டே திரிவன். சூரியாதிகட்கு இரவிவாரம, சோமவாரம் முதலிய ஏழு வாரங்களின் தாரை கெடாமலிருப்பதுபோல் இச்சீவனுக்குச் ஜன்மமரணுதி ஆறு விகாரமும கெடாமலுண்டாம. கிழிந்த வஸ்திரங்களை யெறிந்து விட்டுப புதிய வஸ்திரங்களைப புருஷன் தரித்துக்கொள்வதுபோல ஆன்மஞானமின்றிய புருஷனும ஒரு சரீரத்தை விட்டொழிந்து மற்றொரு சரீரத்தை யெடுத்துக்கொள்வன். சூரியாதி ரூபதேஜஸையடைந்து இருட்டொழிந்து விடுவதுபோல, ஜன்மாவஸ்தையை யடைந்து மரணுவஸ்தை லயத்தையடையும். ஒளியுமிருட்டும் இந்த மனுஷ லோகத்தை விட்டொழியாது மாறி மாறி வருவதுபோல அவிவேகியாகிய ஜீவனையும, ஜன்மமரணமும விட்டொழியாமல் மாறி மாறி வரும. ஆகையினுல், சாவதுக்கங்களுக்குங் காரணம் அஞ்ஞானமாம். அதை நாசஞ்செய்வதாகிய ஆநந்தரூப ஆன்மஞானமானது எதுபரியந்த முண்டாகமாட்டாதோ, அதுபரியந்தம் ஜன்மமரணுதியனந்த துக்கம் ஜீவர்கட்குண்டாம். ஆகையினுல், ஆநந்தரூப ஆன்மஞானமே சர்வ அநர்த்த நிவிர்த்தியின் காரணமாம், அதனின் வேறுய சர்வ உபாயங்களும் ஜன்மமரண ஏதுவாம். முன்னர் ஸனகாதி இருஷிகளும் நமக்கு ஆன்மஞானத்தையே உபதேசஞ் செய்தனர். இந்தப்பிரகாரம் சர்வ அதிகாரிகளும் வைராக்ய உற்பத்தியின்பொருட்டுத் தேகமே முதலாய்ச் சர்வ அநான்மாவின்கண்ணும் தோஷவிசாரஞ் செய்தனர். அத்தோஷ விசாரத்தா லந்த அதிகாரிகட்குத் தேகாதிகளின்கண் வைராக்யம்

உண்டாயது. அவ்வெல்லா அதிகாரிகளுள்ளும் வாமதேவரென்னு மோரதிகாரி மிருத்தியுவையடைந்தார். அதிருஷ்டமாகிய எதிர்காலப் பிரதிபந்தவசத்தாற்சன காதி இருஷிகளினுபதேசத்தா லந்த வாமதேவருக்கு இச்சன்மத்தின்கண் ஞான முண்டாகவில்லை யாதலின் மீண்டும் பிதாவின் கர்ப்பவாயிலாய் மாதாவின் கர்ப்பத் தின்கண்ணே பிரவேசித்தனர்; ஆண்டுப் பூர்வ சம்ஸ்காரத்தோடுகூடியே வாமதே வர் ஒன்பது மாதபரியந்தமிருந்தனர். ஒன்பதாவது மாதத்தின்கண் நியமமாய்ச் சர்வ ஜீவர்கட்கும் கர்ப்பத்தின்கண்ணே அறிவுண்டாம், அவ்வறிவால் எல்லா ஜீவ ரும் முன்முன்னுள்ள தமது ஜன்மத்தை ஸ்மரிப்பர். வாமதேவரோ ஒன்பதாவது மாதத்திலான்ம சாக்ஷாத் காரத்தையடைந்தனர்; ஏனெனின், எதிர்காலப் பிரதி பந்தகத்தால் வாமதேவருக்குப் பூர்வஜன்மத்தின்கண் ஆன்மஞானம் உண்டாக வில்லை. ஒன்பதாவதுமாதத்தில் அந்தப் பாவரூபப் பிரதிபந்தகம் நீங்கவே வாம தேவருக்கு முற்கூறிய ஸனகாதிகளினுபதேச ஸ்மரணமுண்டாயிற்று, அதனால் மனன நிதித்தியாசனங்களோடுகூடிய வாமதேவர் கர்ப்பத்தின்கண்ணேயே ஆன்ம சாக்ஷாத்காரத்தையடைந்தனர். முன்னர் எவ்வதிகாரிகளோடுகூடி வாமதேவர் ஸனகாதி இருஷிகளின்பாற் பிரஹ்மவித்தையைச் சிரவணஞ் செய்தனரோ, சர்வ விஷயங்களிலும் தோஷவிசாரஞ்செய்தனரோ, தம்முடைய அவ்வெல்லா மித்திரரை யும் குறித்துக்கர்ப்பத்தின்கண் இராநின்ற வாமதேவா இவ்வகையாய வசனத்தைக் கூறினர் :—வாமதேவர் கூறல்: ஹேமித்திரரே! பூர்வ ஜன்மத்தின்கண் யானும் உங்கள் மத்தியிலிருந்தேன், ஆனால் முறபிறப்பில் பரிச்சின்ன தேகாதிகளி னிடத்தே ஆன்ம புத்திசெய்து பரிச்சின்ன பாவத்தையான் அடைந்திருந்தேன். இப்போது எனக்குக் கர்ப்பத்தின்கண் ஸனகாதிகளினுபதேச ஸ்மரணத்தால் ஆன்ம ஞானமுண்டாய் விட்டது. ஆகையினு லெனது அத்விதீயவடிவததிற்கு வேறாய்ச் சிறிதுமாத்திரமும் வஸ்துவையான் கண்டேனில்லை; மற்றோ சாவத்தை யும் ஆன்மரூபமாகக் காண்கின்றனன். பூர்வம் தக்ஷிணம முதலிய அஷ்டதிசை களும் என்னுலேயே பூரணமாயிருந்தன, ஆகாசமும் என்னுலேயே பூரணமாம். சிருஷ்டியின் ஆதிகாலத்தில் யானே சுவாயம்புவாதிமனுக்களாகவும் முன்னர் யுண்டாயிருந்தேன், சூரிய பகவானும் யானே, சக்தியோடு கூடிய இந்திராதி லோகபாலரு மென்னுடைய சொரூபமேயாம். என்னிற் பின்னமாய் இவர்கட்குச் சத்தையின்றாம். அண்டஜம், ஜராயுஜம், சுவேதஜம், உற்பிஜம் என்னு மிந்நான்கு பிரகாரமாகிய பிராணிகளும என்னிற் பின்னமன்றாம்; மற்றோ என்னுடைய சொரூபமேயாம. இரண்யகர்ப்பனே முதலாய் ஸ்தாவரபரியந்தம் எவ்வெப் புண்ணிய பாப ஜீவர்களுளரோ அவ்வியாவரும் என்னுடைய சொரூபமேயாம் என்னிற் பின்னமா மெவ்வஸ்துவு மின்றாமென்பது கருத்தாம்.

சங்கை :—சர்வ வஸ்துக்களும் உம்மிற்பின்னமன்றேல், பிறத்தல், இருத்தல், வளர்தல், மாறல், சிதைதல், அழிதலென்னும் இவ்வாறு விகாரங்களும் ஆன்மா வின்கண்ணே யடைவுறும்.

சமாதானம்:—இவை இந்திரிய சகிததேகத்தின் தர்மங்கள்; பிறத்தல் முதலிய ஆறு விகாரங்களோடுகூடிய தேகமென்னிடத்தே கற்பிதமாம். ஆகையினாற் கற்பித தேகத்தின் தர்மம் அதிஷ்டானவடிவாகிய என்னைத் தொடமாட்டாது. சிதநிவிர்த்தியின் பொருட்டுக் குன்றிமணிக்கொத்தில் வானரங்கள் கற்பித்த அக்கினியினது உஷ்ணஸ்பரிசத்தால் குன்றிமணிக கொத்தானது தகிக்கப்படமாட்டாது. அதுபோலக் கற்பிததேகாதிகளின் றன்மங்களாகிய ஜன்மாதிகளும் அதிஷ்டானமாகிய என்னைத் தொடமாட்டா. ஆநந்தவடிவ ஆன்மாவாகிய யான் வாக்காதி இந்திரியங்களின் ஜன்மாதிகளையும் அவற்றினது தேவதைகளின் ஜன்மாதிகளையும் யறிகின்றனன். ஆனால் அவற்றின் ஜன்மாதி விகாரங்களின் அதிஷ்டானவடிவ ஆன்மாவாகிய என்னைச் சுகதுக்கங்களடையமாட்டாது; ஏனெனின், அவை யாவு மென்னிடத்தில் கற்பிதமாம். பூர்வம் அஞ்ஞான அவஸ்தையின்கண் சரீர இந்திரியாதிகளின் அத்தியாசத்தால் யான் பிராஹ்மணன், யான் ஸ்தூலன், யான் செவிடன், யான் ஊமை, இவை முதலாகச் சரீர இந்திரியாதிகளின் தர்மங்கள் ஏன்பாற் றேற்றிக்கொண்டிருந்தன.

இப்போது அத்தர்மங்களியாவும், சரீரசகித இந்திரியங்களும், அவ்விந்திரியங்களின் தேவதைகளும் என்னைத் தொடமாட்டா. ஏனெனின், அத்விதீய ஆன்ம ஞானத்தாலநதச சரீராதிகளின் அத்தியாசம் நிவிர்த்தியாய்விட்டது. ஹே மித்திரர்களே! இரும்பினாற் செய்த சிறைச்சாலையானது புருஷனைக் கட்டுப்படுத்த ஹேதுவாயிருக்கின்றதுபோல அஞ்ஞானமாகிய இரும்பினாற் செய்யப்பட்ட எண்பத்துநான்கிலக்ஷம் சரீரவடிவபுரிகளும் முன்னர் எனது கட்டுப்பாட்டின் காரணங்களாயிருந்தன. உலகின்கண்ணே பெருஞ் சரீரத்தோடுகூடிய பருந்தென்னும் பக்ஷியானது மிகுந்த பலமுடையதாம்; ஆகையினால் அது பாசங்களாற் கவரத்தக்கதன்றாம். என்றாலும் திடமான பாசத்தாலதனைக்கட்டி இரும்புக் கூட்டின்கண்ணே தடைப்படுவதுபோல அஞ்ஞானமாகிய இரும்பினாற் செய்யப்பட்ட எண்பத்திநான்கிலக்ஷம் சரீரவடிவப் புரிகளும் கட்டமுடியாத அத்விதீய ஆன்மாவாகிய என்னைத் தேகாதிகளின்கண்ணே ஆன்ம புத்திவடிவப் பாசங்களாற் கட்டுப்படுத்தின. கூட்டின்கண்ணே கட்டுப்பட்ட பருந்தானது வஜ்ரத்திற்குச் சமானமான தனது மூக்கால் கூட்டினடியைப் பேதித்து வெளியிலோடிபபோம். அதுபோல யானும் பிராஹ்ம ஞானமாகிய மூக்கால் எண்பத்திநான்கிலக்ஷம் சரீரவடிவப்புரிகளையும், காமக்குரோதாதி இருப்பு முளைகளடித்த கட்டுத்தறிகளையும், தேகாதிகளின்கண் ஆன்ம புத்திவடிவப் பாசத்தையும் அறுத்தெறிந்து விட்டேன்.

ஹே மித்திரரே! முன்னர் ஸனகாதி இருஷிகள் தேகம், ஸ்திரீ, புத்திரன் முதலியவற்றின்கண்ணேயுள்ள வைராக்கியம் ஆன்ம ஞானகாரணமாமென்று உங்கட்குக் கூறினாரன்றே, அதனை யானிப்போது ஆன்ம ஞானரூபப் பலத்தினுற்பத்தியால் நிச்சயஞ் செய்தேன். பூர்வ ஜன்மத்தில் உம்மோடுகூடி யான் விஷயங்களில் தோஷங்களை விசாரித்தேன்; ஆனால் எதிர்கால அதிர்ஷ்டரூபப் பிரதிபந்தவசத்தால் எனக்கு அச்சன்மத்தில் ஆன்ம ஞானமுண்டாகவில்லை. மரணமானபின், அந்தப்

பிரதிபந்தங்கெடவே ஸனகாதி இருஷிகளின் கிருபையினால் விஷயவைராக்கியத்தால் எனக்கிப்போது ஆன்மஞானமுண்டாய்விட்டது. ஆகையினால் விஷயவைராக்கியமும் குருகிருபையும் ஆன்ம ஞானத்திற்கு முக்கிய காரணமாம். உங்களுக்கு ஆன்ம ஞானமுண்டாகாமைக்குக் காரணம் ஏதோ பிரதிபந்த வசத்தாலேயே யாம் ஆகையினால் வைராக்கியத்தின்கண்ணும் குருவி னுபதேசத்தின்கண்ணும் ஆன்ம ஞான காரணத்தன்மை யின்றென நீங்கள் அசம்பாவனை யொருகாலும் செய்யாதீர்கள்.

ஹே மித்திரரே! குருவின் கிருபையால் எனக்குண்டாயிருக்கும் ஞானத்தின் மகிமையைக் கூறுகின்றேன் கேளுங்கள் :—அந்த ஞானத்தின் பலத்தால் இந்த அதிகோரவடிவ சம்சாரத்தினின்றுங்கூட யான் பயத்தை யடைகிறதில்லை, காலத்தினாலும் மிருத்யுவினாலும் யான் பயத்தை யடைகிறதில்லை; ஏனெனின், இரண்டாவது வஸ்துவினால் பயத்தினடைவைச் சுருதிகூறியிருக்கின்றது. யானோ அத்விதீயன். சகலப்பிரபஞ்சமும் என்னிடத்திற் கற்பிதமாம்; இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பம கற்பிதமாவதுபோலும். கற்பிதப பிரபஞ்சத்தால் துவைதபாவம் என்னிடத்தி லுண்டாகமாட்டாது. ஆகையினால் யானத்விதீயன். மிருத்தியு அற்றவன்யான்; ஏனெனின், என்னிடததிற் கற்பிதனாகிய மிருத்யுவானவன் அதிஷ்டானவடிவாகிய என்னைச் சிறிதுமாத்திரமும் ஹானிசெய்யமாட்டான். உலகின்கண்ணே தன்னைத்தானே ஒருவருங் கொல்லாததுபோல மிருத்யுவிற்கும் ஆன்மசொரூபமா யிராநின்ற என்னை மிருத்தியு நாசஞ்செய்யான். ஜன்மமும், மரணமும், பாலியமும், யவ்வனமும், ஜரையும் மற்றும பிறவும் தேகத்தின்கண்ணே காணப்படுகின்றன. அவை அத்விதீய ஆன்மாவாகிய என்கண் இன்றாம். அன்னிய புருஷனுடைய சுகத்தாலும் துக்கத்தாலும் அன்னிய புருஷன் சுகியேனுந் துக்கியேனுமாவதின்றாம். அதுபோலத் தேகாதிகட்கு வேறாய ஆநந்தரூப ஆன்மாவாகிய எனக்குத் தேகாதிகளின் தர்மங்களாகிய ஜன்ம மரணாதிகள் உண்டாகமாட்டா. இச்சை, துவேஷம், பயம், மோஹம், பசி, தாகம், நித்திரை, மல மூத்திரபாதை என்று முற்கூறிய எட்டுத்தோஷங்களும் ஆநந்தரூப ஆன்மாவாகிய என்னைத் தீண்டமாட்டா; ஏனெனின், இச்சை, துவேஷம், பயம், மோஹம் என்னு மிந்நான்கும் மனத்தின் தர்மங்களாம். பசி, தாகம் இரண்டும் பிராணன்களின் தர்மங்களாம். நித்திரை மன இந்திரியத்தின் தர்மமாம். மல மூத்திரபாதை சரீரத்தின் தர்மமாம். சாக்ஷிவடிவமா யிராநின்ற யான் மன இந்திரியாதி சர்வ திருசியங்களுக்கும பிரகாசகனும், ஆகையினால் பிரகாசிக்கப்படுவனவாய்த் திருசியமாகிய வஸ்துக்களின் தர்மங்கள் பிரகாசகனாகிய என்னைத் தீண்டமாட்டா; பிரகாசிக்கப்படுவனவாகிய கடாதி பதார்த்தங்களின் தர்மங்கள் பிரகாசமாய சூரியனைத் தீண்டமாட்டாமைபோலும்.

இப்போதிப்பொருளை வெளிப்படையாய்க் காண்பிப்பாம் :—மோக்ஷத்தையும். சுவர்க்கத்தையும், இவ்வுலகின்கண்ணேயுள்ள விஷய ஜன்னிய சுகத்தையும்

மனமிச்சிக்கும்; ஆநந்தரூப ஆன்மாவாய யான் அவற்றை இச்சியேன். அஞ்ஞானத்தின்கண்ணும் நரகத்தின்கண்ணும் மனமே துவேஷஞ்செய்யும். இவ்வுலக துன்பத்தின்கண்ணும் துன்பத்தின் சாதனங்களாகியச் சிங்கசாப்பாதிகளிடத்தும் மனமேதுவேஷஞ்செய்யும; ஆநந்த வடிவமாய்ச் சர்வத்திற்கும் ஆன்மாவா யிராநின்ற யான் எதன்கண்ணும் துவேஷஞ்செய்வதின்றாம். அல்லது விஷய இச்சையுடையவனாகியும் பேத திருஷ்டியுடையவனாகியு மிராநின்ற புருஷன் தானிச்சித்ததற்குப் பிரதிபந்தகஞ்செய்யும், அன்னிய புருஷனிடத்தில் துவேஷஞ்செய்வன். இவ்விஷயம் உலகின்கண்ணே பிரசித்தமாம். யான் ஆப்தகாமன், யான் அபேதமாய்க் காண்போன். ஆகையினா லெனக்கெவரோடுந் துவேஷமின்றாம். பயமும் மோஹமும் மனதின் தர்மமாம்; யானத்விதிய ஆன்மாவாம். ஆகையினால் பயமெனது தர்மமன்றாம. யான் போதசொரூபன்; ஆகையினால் மோஹமும் எனது தர்மமன்றாம். அல்லது இவ்வுலகின்கண்ணே எப்புருஷன் தன்னிற் பின்னமாய்ச் சத்துருவை யறிகின்றானோ, பிரதிகூலமா யறிகின்றானோ அப்புருஷனே மோஹத்தையும் பயத்தையுமடைவன். யான் என் சொரூபத்திற்கு வேறாய் எம்மித்திரனையும், சத்துருவையும, உதாசீனனையும் அறிவதில்லை; எவனையும் பிரதிகூலனாகவு மறிவதில்லை, ஆகையினால எக்காரணத்தாலெனக்குப பயமும மோஹமுமுண்டாம். பயத்திற்கும் மோஹத்திற்கும் காரணம் பேதபுத்தியும் பிரதிகூலத்தன்மை ஞானமுமாம். அவை என்னிடததிலின்றாம். ஆகையினாற் காரணமின்மையின் பயமும் மோஹமும என்னைத் தீண்டமாட்டாவென்பது கருத்தாம். பிராணனது தர்மங்களாகிய பசி தாகங்களும் பிராணனின்றிய ஆன்மாவாகிய எனது தர்மமன்றாம். காரணத்தின்கண் ஒடுங்காநின்ற நித்திரையும கனவாகாதபோது மனத்தினது தர்மமாம. வாக்கு முதலிய இந்திரியங்கட்கோ அது சொப்பன தரிசனகாலத்தின் கண்ணும அதரிசனகாலத்தின்கண்ணும் எப்போதுமே தர்மமாம. ஆகையினால் மன இந்திரியங்களின் தர்மம நித்திரையாம். அது மன இந்திரியங்களின்றிய ஆன்மாவாகிய என்னை யடையமாட்டாது. மலமூத்திரபாதை சரீரதர்மமாம்; சரீரமற்ற ஆன்மாவாகிய எனக்கு அப்பாதையுண்டாகமாட்டாது.

அதிகாரிகளாகிய பிரஜைகள்கூறல்:—ஹே வாமதேவரே! மித்திரராகிய எம்பொருட்டு அத்துவிதிய அமிருத அஜரம் ஆன்மாவாம் என இவ்வண்ணம் நிஷேதவாயிலாய் ஆன்மாவி னுபதேசத்தை எதன் பொருட்டுச் செய்கின்றீர்? ஒருவன் கொம்பைப் பிடித்துக் கோவைக் காண்பிப்பதுபோல விதிமுகமாய் ஆன்மாவை ஏன் காண்பிக்கின்றிலீர்.

வாமதேவர்கூறல்:—ஹே மித்திரரே! உங்களிதத்தின் பொருட்டுப் பல்வகையாய வசனங்களால் யான் கூறிய ஆன்ம சொரூபமானது உண்மையாய்க் கோமுதலியவற்றைப்போல இஃதென்னும் ஞானத்திற்கு விஷயமன்றாம். அத்விதிய அமிருத அஜரம் என்பது முதலாய நிஷேத வாக்கியமும் இலக்ஷணா விருத்தியால் ஆன்மாவை யுணர்த்துகின்றது. ஹே மித்திரரே! அத்விதிய ஆன்மா நேத்திராதி வெளி இந்திரியங்களா லுணரத்தக்கதன்றாம். அது மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னு மிவ்வந்தக்கரண சதுஷ்டயத்தாலும் அறியமுடியாது.

அதிகாரிகள் கூறல்:—ஹே பகவன்! இந்திரியங்கட் கான்மா விஷயமன்றாமென்றாலும் வேதாந்த வாக்கியத்தா லுற்பன்னமாகிய புத்திவிருத்திக்கும் அஞ்ஞானத்திற்கும் ஆன்மா விஷயமாம.

வாமதேவர் கூறல்:—ஹே மித்திரரே! புத்திவிருத்தியையும் அஞ்ஞானத்தையும் பிரகாசஞ் செய்வதாகிய சாக்ஷி ஆன்மாவாம். ஆகையினால் ஆன்மா அவற்றிற்கு விஷயமன்றாம்; மாறாய்ப் புத்திவிருத்தியும் அஞ்ஞானமும ஆன்மாவால் விளங்குவனவாம். ஆகையினால் அவை ஆன்மாவிற்கு விஷயமாம். ஆதலின் ஹே மித்திரரே! முன்னர் ஸனகாதி இருஷிகள் உபதேசித்த தேசகால வஸ்து பரிச்சேதமின்றி யாவற்றையும் விளக்குவதாகிய ஆநந்தவடிவ ஆன்மாவை நன்றாய் விசாரித்து நீங்கள் சாக்ஷாத்கரிக்கவேண்டும்.

கருத்திதுதாம்:—எதிர்காலப் பிரதிபந்த சங்கையினால் நீங்கள் ஆன்ம விசாரத்தினின்றும் நிவிர்த்தியடைந்து விடாதீர்கள். ஏனெனின், புண்ணிய பாபரூப அதிருஷ்டத்தின் பெயர் எதிர்காலப பிரதிபந்தமாம, அது வர்த்தமானப் பிரதிபந்தத்தின் சகாயத்தாலன்றி விசாரத்தின் பிரதிபந்தக மாகமாட்டாது; மற்றோ வர்த்தமானப் பிரதிபந்தத்தின் சகாயத்தைபபெற்றே பிரதிபந்தமாம். வர்த்தமானப் பிரதிபந்தமின்றாயின் அதிருஷ்டவடிவ எதிர்காலப் பிரதிபந்த மின்மையும் நிச்சயமாம். ஆகையினால, விஷயத்தின்கண்ணே ஆசக்தி, புத்தியின் மந்தத்தன்மை, குதர்க்கம், விபரீதத்தின்கண்ணே துராக்கிரகம் என இந்நான்கு பிரகாரமாகிய வர்த்தமானப பிரதிபநதங்களைப பரித்தியாகஞ்செய்து நீங்கள் விரைவில் ஆன்ம விசாரத்தின்கண்ணே முயலுங்கள்; அதனால என்போலுங்களுக்கு மீண்டும் ஜன்மத்தின் அடைவு உண்டாகமாட்டாது.

அதிகாரிகள் கூறல்:—ஹே பகவன்! ஆன்ம விசாரத்தின்கண்ணே யாங்கள் முயலுவோம. ஆனால் தத்துவத்தையறிநத உமககும் கர்பபதுககம வந்தடைந்ததைக்கண்டு துக்கத்தின் நிவிர்த்திவடிவ ஆன்ம விசாரபலத்தின்கண் எங்கட்குச் சம்சய முண்டாகிறது. ஆன்ம விசாரததினால் துக்கத்தின் நிவிர்த்தியுண்டாமா அல்லது உண்டாகாதா என்னு மிசசம்சயம ஆன்ம விசாரப் பிரவிர்த்திக்குப் பிரதிபந்தமாம்.

வாமதேவர்கூறல்:—ஹே மித்திரரே! உம்முடைய திருஷ்டியினால் யான் கர்ப்பத்தின்கண்ணே யிருக்கின்றேன், கர்ப்பதுக்கத்தை யனுபவிக்கின்றேன், எனது திருஷ்டியாலோ யான் சர்வதேக இந்திரியாதிக ளற்றவனாயிருககின்றேன். ஹே மித்திரரே! முற்சன்மத்தில் நானும் நீங்களுங்கூடி எநதகர்ப்ப துக்கத்தை விசாரஞ் செய்தோமோ அவ்வளவு துக்கத்தை யிப்போது கர்ப்பத்தில் யான் அனுபவிக்கின்றேன்; அல்லது அதனினும் அதிக் துக்கத்தை அனுபவிக்கின்றேன். ஆனால் யாவற்றினும் ஆன்ம புத்திவடிவ பௌர்ண மாசிச் சந்திரன் றன் சீதளத் தன்மையாலே கர்ப்ப துக்கவடிவ உஷ்ணகால இரவி யென்னைச சந்தாபஞ்செய்யவில்லை; ஆகையினால் ஹே மித்திரரே! ஆன்ம ஞானத்தையே நீங்கள்

சம்பாதியுங்கள். இந்தப்பிரகாரம் ஆன்ம ஞானத்தின்கண்ணே சிரத்தை செய்வித்தற்காக அநந்த பிரகாரமாய வசனங்களைக்கூறி வாமதேவமுனியானவர் மாதாவின் கர்ப்பத்தினின்றும் வெளிப்போந்து பூவுலக முதலாக பிரமலோக பரியந்தம் ஜீவன் முக்தனாய்ச் சஞ்சரித்தனர். அந்த வாமதேவரானவர் ஸனகாதி இருஷிகளுக்குச் சமானமானவர். இவ்வுலக சுகத்தின்கண்ணும் அவ்வுலக சுகத்தின்கண்ணும் இச்சையற்றவர். ஒன்றினும் முயர்ச்சியற்றவர், நிர்மல சித்தமுடையவர். இத்தகைய வாமதேவரானவர் பிராரப்த கர்ம சமாப்தியின் பொருட்டு மனுஷ்ய லோகத்தின்கண்ணும், சுவர்க்காதி யுலகங்களினிடத்தும் கிடைத்த போகங்களைப் போகித்தார். அப்போகங்களால் பிராரப்த கர்மங்கள் நாசமான பின்னர் அவ்வாமதேவரானவர் விதேகமோக்ஷத்தை யடைந்தனர். இவ்வண்ணம் கர்ப்பத்தின்கண்ணே யிருந்த வாமதேவரது வசனத்தைச் சிரவணஞ்செய்து அந்த எல்லா அதிகாரிகளும் ஆச்சரியத்தை யடைந்தனர். அவர்கள் பரஸ்பரம் ஒருவர்க்கொருவர் கூறிக்கொள்வாராயினர், ஆ! ஆ! மகா ஆச்சரியம் இவ்வாமதேவர் சர்வத்திற்கும் அதிகாரிகளாகிய நமது கூட்டத்தினின்றும் எப்புண்ணிய மகிமையால் வெளிப்போந்தனர். சேற்றின்கண்ணே விழுந்தழுந்தும் கோவின் கூட்டத்தினின்றும் யாதாவதொரு கோபுண்ணியத்தின் மகிமையால் வெளிவருவது போல இவ்வாமதேவர் நம்மினின்றும் வெளிப்போந்தனர். கயிற்றால் கட்டுப்பட்ட பறவைகளினின்றும் யாதாவதொரு பக்ஷி புண்ணியபலத்தால் மற்றெல்லாப் பக்ஷிகளையும் பரித்தியாகஞ்செய்து வெளியிற் போவதுபோலக் காமக்குரோதாதி ரூப பாசத்தால் கட்டுப்பட்ட நம்மெல்லா ஜனங்களையும் பரித்தியாகஞ்செய்து இவ்வாமதேவர் இப்பொழுது போய்விட்டார். பஞ்சமுதலிய இடர்களடைந்தபோதிலும் மோகவசத்தால் தேசபரித்தியாகம் உலகர் செய்யார். அவர்களுள் எவராவதொருவர் நேயமற்றவராய்ச் சாவ பந்துக்களையும் பரித்தியாகஞ்செய்து அத்தேசத்தினின்றும் வெளியே போய்விடுவதுபோல இவ்வாமதேவர் நம்மெல்லோரையும் பரித்தியாகஞ்செய்து போய்விட்டார். மார்க்கத்தின்கண் செல்லாநின்ற அநேக புருஷரில் எவனுவதொரு புருஷனுக்குப் புண்ணியப் பிரபாவத்தாற் பூமியின்கண் இராநின்ற தனங் கிடைத்துவிடுவதுபோல நம்மெல்லா அதிகாரிகளுள்ளும் இவ்வாமதேவர் ஆத்ம சாக்ஷாத்கார ரூபதனத்தை யடைந்தனர். குருவின் சேவையின்கண்ணே முயன்ற அநேக சீடருள் எவனுவதொரு சீடனே மகாவித்தையை யடைவதுபோல நம்மெல்லா அதிகாரிகளுள்ளும் இவ்வாமதேவரே பிரஹ்மவித்யாரூப பலத்தையடைந்தனர். ஆகையினு லிவ்வாமதேவரே புருஷர். நாமியாவரும் நபும்சகருக்குச் சமானமாவோம். அநேகர், மந்திரஜபத்தின்கண்ணே முயல்வாராயின், அவருள் எவனுவதொருவனே சித்தியையடைவன்; அதுபோல விசாரத்தின்கண்ணே முயன்ற நம்மெல்லாரினும் இவ்வாமதேவருக்கே விசாரஜன்ய ஆன்ம ஞான ரூபபலம் உண்டாயது. அநந்த வேடர்களாற் றடுக்கப்பட்ட மானினங்களுள் யாதாவதொரு மானே வெளிச்செல்வதுபோல நம்மெல்லாத் துக்கிகளுக்குள்ளும் வாமதேவரொருவரே சென்றனர். அந்தப் புத்திமானுன வாமதேவருக்கு யாதோ வோரற்புத புண்ணிய கர்மமிருந்துள்ளது, அந்தப் புண்ணிய கர்மத்தின் மகிமையாற் கர்ப்பத்தின்கண் இருந்த வாமதேவருக்கு ஆன்ம சாக்ஷாத்கார

முண்டாயது. நம்மனோருக்குக் குரு சாஸ்திராதி சாதனங்களோடு நிறைந்துள்ள பூவுலகின்கண்ணும் ஆன்மஞான முண்டாகவில்லை. இவ்வாமதேவர் கர்ப்பத்தின் கண் இருந்தே நம்பொருட்டு உபதேசஞ்செய்தனர்; ஆகையினால் இவ்வாமதேவருக்கு நம்பால் முதிர்ந்த நேயமிருந்ததெனை அறிந்துகொள்ளத் தக்கதன்றாம்; மற்றோ கேவலம் நம்பால்வைத்த கருணையேயெனத் தெரிந்துகொள்ளல்வேண்டும். நேயமான திருப்பின் வெளிவந்து தமது மாதா பிதாதி முதலியவர்கட்கும் உபதேசஞ்செய்திருப்பர். இவ்வாமதேவரோ பிறந்தவுடனே தாய் தந்தையர்முதலிய சர்வ பந்துக்களையும் உபேக்ஷித்து ஜடனைப்போலும், உன்மத்தனைப்போலும், பேய்போலும், சம்பந்திகளாலறியாத தேசத்தின்கண் சென்றனர். ஆகையினாற் கேவலம் கிருபையால் வாமதேவர் நம்பொருட்டு உபதேசஞ்செய்தனர். நேயத்தால் உபதேசஞ் செய்தாரில்லை கர்ப்பத்தின்கண்ணேயிருந்து வாமதேவர் நம்பொருட் டுபதேசஞ்செய்ததற் கிரண்டு பிரயோஜனமுண்டு. ஒன்றோ, முன்னர் யாம் விசாரஞ்செய்த கர்ப்பதுக்கமானது உண்மையாம்; மற்றதோ ஆன்மஞான பலத்தாற் கர்ப்பதுக்கஞ்சந்தாபஞ் செய்யமாட்டாது. யாமெல்லோரும் நபும்சகரைப்போல நிராதர பாத்திரமாவோம். ஏனெனில், மனுஷசரீரத்தை யடைந்தும் நாம் ஆன்மஞானத்தைச் சம்பாதிக்கவில்லை; அஞ்ஞானத்தால் வீணாகவே காலங்கழித்தோம், இம் மனுஷலோகத்தின்கண் அநந்தம்பிரகாரமாகிய துக்கத்தை நாமனுபவித்தோம்; சுவர்க்காதி லோகங்களிடத்தும் சிறிதுமாத்திர சுகத்தையும் யாமடையவில்லை. ஏனெனின், சுவர்க்காதி லோகங்களில் மூவகையாய தோஷங்களுள. ஒன்றோ சாதிசய தோஷமாம், அஃதாவது:— அதிக புண்ணியமுள்ளவனுக்கு அதிக போகத்தினடைவு சுவர்க்கத்தின்கண் உண்டாம். குறைநத புண்ணியமுள்ளவனுக்குக் குறைந்தபோகத்தி னடைவுண்டாம். தம்மைக்காட்டினும் அதிக போகங்களோடுகூடிய தேவதைகளைப் பார்த்துக் குறைந்த போகங்களோடுகூடிய தேவதைகட்கு ஈரிஷையுண்டாம். இரண்டாவது இந்திராதி தேவதைகளின் அதீனத்தன்மைவடிவ தோஷமாம். அப்பராதீனத்தன்மையால் எப்போதும் ஜீவனுக்குப் பயமுண்டாம். மூன்றாவது கீழே வீழ்தலாகிய தோஷமாம். சுவர்க்கத்தின் கண்ணே கர்மதேவதைகட்குத் தமது புண்ணியகர்மத்தின் ஞானமிருக்கும். இத்தனை காலம் யான் சுவர்க்கத்தின்கண்ணே யிருப்பன் என எக்காலத்திற் கீழே வீழும் ஞானமுண்டாமோ அக்கால் அவர்கள் மிகுந்த சோகத்தையடைவர். சுவர்க்கத்தின்கண்ணே இம்மூன்று தோஷங்களும் நிவிர்த்தியாவதின்றாம், ஆகையினால் சுவர்க்கமும் துக்கரூபமாம். ஒவ்வொருகால் நாம் புண்ணியவயத்தால் பூவுலகினின்றும் சுவர்க்கத்தை யடைந்தோம். மீண்டும் சுவர்க்கலோகத்தினின்றும் புண்ணியம் க்ஷயமானபின் பூவுலகையடைநதோம். மீண்டும் புண்ணியவயத்தால் அப்பூவுலகினின்றும் சுவர்க்கலோகத்தை யடைந்தனம். ஒவ்வொருகால் பாவவயத்தால் நாம் பூவுலகினின்றும் நரகத்தையடைந்தனம். மீண்டும் அந்நரகத்தினின்றும் பூவுலகையடைந்தனம். மீண்டும் பாவவயத்தால் நரகத்தையடைந்தனம். ஆகாசத்தின்கண்ணே யிராநின்ற புருஷனானது பூமியின்கண் இராநின்ற பெண் புருஷனைப் பார்த்துப் பூமியையடையும். பூமியின்கண் இராநின்ற புருஷனானது

ஆகாயத்தின்கண் இராநின்ற பெண்புறுவைப் பார்த்து ஆகாயத்திற்குச் செல்லும். கிழக்குத்தேசத்தில் இராநின்றபுறுவானது மேற்குதேசத்தில் இருக்கும்பெண்புறுவைப் பார்த்து மேற்கே செல்லும். இவ்வகை விஷயசுக ஆசையால் புறுவானது கீழும் மேலும் சுழலுவதுபோல யாமும் விஷயசுக ஆசையால ஒவ்வொருகால் தேவதா சரீரத்தையும், ஒவ்வொருகால் மனுஷசரீரத்தையும், ஒவ்வொருகால் ஸ்தாவராதி சரீரத்தையும் அடைந்தோம். அந்தச் சரீரமானது கேவல துக்கத்தையும் சோகத்தையும் கொடுக்கத்தக்கது. இவ்வண்ணம் சர்வ அதிகாரிகளும் ஒருவர்க்கொருவர் விசாரஞ்செய்தனர். அந்த விசாரத்தாலுண்டாகிய வைராக்கியமுடையவர்களும், ஸனகாதிகளி னுபதேசத்தின்கண் ணுண்டாய சிரத்தையுடையவர்களும் ஆகிய சர்வ அதிகாரிகளும் மீண்டும் ஒருவர்க்கொருவர் ஆன்மவிசாரத்தைச செய்தனர்.

ஹே மேன்மைபொருந்திய மறையோர்களே! முன்னர் ஸனகாதிகளி னுபதேசத்தாலும் இப்போது வாமதேவாது உபதேசத்தாலும் எநத ஆன்மாவை யறிய நாம் முயன்றோமோ அவ்வான்மா யாது? ஆண்டுச சக்ஷு முதலிய இந்திரியங்களின் கூட்டங்களோடு கூடிப் பிரத்தியக்ஷமாய்ப் புலப்படாநின்ற இத்தேகமே யான்மாவா? அல்லது சாஸ்திரத்தாற் புலப்படாநின்ற சச்சிதாநந்த சொரூபம் ஆன்மாவா? அவற்றுள், தேகத்திற்கோ ஆன்மத்தன்மை பொருந்தாது; ஏனெனின், தேகம் பிறப்பிறபபோடு கூடியது, எவ்வஸ்து பிறபபிறபபோடு கூடியதாமோ அவ்வஸ்து ஆன்மாவாகமாட்டாது, கடபடாதி பதார்த்தங்கள் பிறப்பிறபபோடு கூடியனவாதலின் ஆன்மாவன்றாம். அல்லது ஆன்மா தேகவடிவமாயின், சுவர்க்கப் பிராப்தியின்பொருட்டு வேதம் போதித்துள்ள யாகாதிகர்மங்களை யெபபுருஷனும் செய்யான்; ஏனெனின், தேகத்திற்குப பிறப்புண்டாமாதலின் அதற்கிறப்புமவசியமுடன்பட வேண்டிவரும். எவ்வெபபொருள் பிறப்புடையதாமோ அவ்வப பொருள் இறபபுடையதாம் என்பது நியமம். நஷ்டமுற்ற தேகம் சுவர்க்க நரகங்கட்குச் செல்லமாட்டாது. ஆகையினல் வேதம் போதித்த புண்ணியகர்மமும் பாவகர்மமும வீணாய்பபோம. அல்லது தேகத்தை யான்மாவென அங்கீகரிக்கின் சாஸ்திரத்திற்கூறிய கர்மத்திற்குமாத்திரம் கேவலம் வியர்த்தத்தன்மை யின்றாம்; மற்றோ லௌகிக கர்மத்திற்கும் பயனற்ற தன்மையுண்டாம். ஏனெனின், பாலிய அவஸ்தையின்கண் அத்யயனஞ்செய்த வித்தையானது யவ்வனவஸ்தையின்கண்ணும் விருத்தாவஸ்தையின்கண்ணும் பயன்படுகின்றது அஃதுண்டாகலாகாது. ஏனெனின், பாலிய அவஸ்தையின் கண்ணுள்ள தேகம் யவ்வனவஸ்தையின்கண்ணும் விருத்தாவஸ்தையின்கண்ணும இராது; அவயவங்களின் விருத்தியினலும், க்ஷயத்தினலும், தேகத்திற்கு நாசம் சர்வ மதத்தரும் அங்கீகாரம் செய்துளார். சைத்திரன் (வேலை செய்பவன்) செய்த கருமத்தின் பலம் மைத்திரனுக் (அவன் சிநேகனுக்கு) குண்டாகமாட்டாது; மற்றோ சைத்திர புருஷனுக்கே யுண்டாம். ஏனெனின், எக்கர்மத்திற் கெவன் கர்த்தாவோ அவனே அக்கருமபலத்தின் போக்தாவாம்; அன்னியன் போக்தாவாகான். அதுபோல பாலிய தேகமாகிய ஆன்மா செய்த வித்தையி னத்தியயனமாகிய கர்மத்தின் பலன் யவ்வன தேகமா

கிய ஆன்மாவையேனும், விருத்ததேகமாகிய ஆன்மாவையேனும் அடைதல் கூடாது; அடையவோ செய்கின்றது. ஆகையினால் தேக மான்மாவன்றும்.

சங்கை :—யாவன் கர்த்தாவாவனோ அவனே போக்தாவாவான் என்னும் நியமமின்றும். ஏனெனின், உலகின்கண்ணே கருத்தாவின் வேறாயே பல போக்தாவைக் கண்டோம். சேவகர்கள் செய்த யுத்தத்தின் பலமானது அரசனை அனுபவிக்கச்செய்யும். சாஸ்திரத்தின் கண்ணும் கர்த்தாவினும வேறாகவே போக்தாவைக் கண்டோம். பிதா செய்த வைஸ்வானர யாகத்தின் பலத்தைப் புத்திரன் போகிப்பன், புத்திரன் செய்த கயைசிராத்தத்தின் பலத்தைப் பிதா போகிப்பன். அதுபோலப் பாலியதேகமாகிய ஆன்மா செய்த வித்தையின் அத்தியயன கருமபலத்தை யவ்வனதேகமாகிய ஆன்மாவும் விருத்த தேகமாகிய ஆன்மாவும் அனுபவிக்குமென்னும் இவ்வார்த்தையும் சம்பவிக்கும்; ஆகையினால் தேகத்தை யான்மாவென அங்கீகரிப்பதில் கருமத்திற்கு வியர்த்தத் தன்மைவடிவ தோஷமின்றும்.

சமாதானம் :—சேவகனுக்கு அரசனோடு சுவாமித்தன்மைச சம்பந்தமுண்டாதலின், சேவகன் செய்த யுத்தத்தின் பலத்தை அரசன் போகிப்பன். பிதாவிற்குப் புத்திரனோடு புத்திரத்தன்மைச சம்பந்தமுண்டாதலின், பிதா செய்த வைஸ்வானரயாகத்தின் பயனைப் புத்திரன் போகிப்பன். புத்திரனுக்குப் பிதாவோடு பிதாத்தன்மைச சம்பந்தமுண்டாதலின், புத்திரன் செய்த கயைச்சிராத்தத்தின் பலத்தைப பிதா போகிப்பன். இவ்வண்ணம பாலிய தேகத்திற்கு யவ்வனதேகத்தோடும, விருத்ததேகத்தோடும சுவாமித்தன்மை முதலிய யாதொரு சம்பந்தமுமின்றும. ஆகையினால் தேகத்தை யான்மாவென அங்கீகரிப்பின், காமங்கட்கு வியர்த்தத்தன்மைவடிவ தோஷம வஜ்ஜிரலேபமாம். அலலது தேகமே ஆன்மாவாயின், பாலகனாயிருந்த யானே இப்போது விருத்தனாயிருக்கின்றேன் என்னும் இப்பாலகவிருத்த ஆன்மபேதத்தை விஷயஞ்செய்யும் பிரத்தியபிஞ்ஞை யுண்டாதல்கூடாது; ஏனெனின், பாலியதேகத்திற்கும விருத்த தேகத்திற்கும் பேதம் பிரத்தியக்ஷப பிரமாணத்தாற் சித்தமாம். பரஸ்பர பின்ன பதார்த்தங்கட்கு அபேதஞான முண்டாகமாட்டாது. பிதாவும் புத்திரனும் பரஸ்பரம் பின்னமாதலின், அவர்கட் கபேதஞான முண்டாகமாட்டாது. ஆகையினாலும் தேகம் ஆன்மாவன்றும். அலலது அனுமானப பிரமாணத்தாலும் தேகத்திற்கு அனான்மத்தன்மையே சித்தமாம். இததேகமானது அனான்மா ஆவதற்கு யோக்கியமாம்; ஏனெனின், ஜடமாதலின்; எவ்வெவ்வஸ்து ஜடமாமோ அவ்வெல்லாம் அனான்மாவேயாம், கடாதிகள் ஜடமாதலின் அனான்மாவாவது போல, ஜடதவதர்மத்தால் கடமுந தேகமும் ஒன்றாயிருந்தும் தேகத்தை ஆன்மாவென அங்கீகரிக்கினே கடமும் ஆன்மாவாகவேண்டும்; கடமோ ஆன்மாவாக மாட்டாது.

சங்கை:—நேத்திராதி இந்திரியங்களின் ஆதாரத்தன்மை தேகத்தின்கண்ணே யுளது, கடத்தின்கண் இன்றும்; ஆகையினால் தேகமே சேதனமாம்; கடம் சேதனமன்றும.

சமாதானம்:—இந்திரியங்கட் காதாரத்தன்மை வடிவஹேதுவினால் தேகத் தின்கண் கடத்தின் விலக்ஷணத்தன்மை கூறல் சம்பவியாது; ஏனெனின், தேகத தின்கண் இந்திரியங்களின் ஆதாரத்தன்மை யிருப்பதுபோலக் கடத்தின்கண்ணும் பரம்பரா சம்பந்தத்தா லிந்திரியங்களி னாதாரத்தன்மை யுளது. ஆண்டு விஷயத் தன்மைச் சம்பந்ததால் இந்திரியங்களின் ஆதாரமாய ரூபரசாதிகளின் ஆதாரத் தன்மை கடத்தின்கண் உளது. இப்பரம்பரா சம்பந்தத்தா லிந்திரியங்களின் ஆதா ரத்தன்மை கடத்தின்கண்ணுமுளது. சாக்ஷாத சம்பந்தத்தைப்போலப் பரம்பரா சம்பந்தமும் ஆதாரத்தன்மைக்கு நியாமகமாம். கட்டிலின்கண்ணே யுறங்கா நின்ற புருஷனிடத்தே வீட்டின்கண்ணே யுறங்குகின்றான் என உலகரின் வியவ காரம் உண்டாம. இவ்விடத்திற் புருஷனுக்குச சாக்ஷாத் சம்பநதம் கட்டிலோ டுளது, கட்டிலவாயிலாய் வீட்டோடு பரம்பரா சம்பநதமுளது. அப்பரம்பரா சம்பந்தங்கொண்டு வீட்டின்கண் புருஷனுக் காதாரத்தன்மை பிரதீதியாவது போலக் கடத்தின்கண்ணும பரமபரா சம்பந்ததால் இந்திரியங்களின் ஆதாரத் தன்மை சம்பவிக்குமாதலின் தேகத்தைப்போலக் கடமும சேதனமாகவேண்டும். அல்லது இந்திரியங்களின் ஆதாரத்தன்மையால் தேகத்திற்குச் சேதனத்தன்மை யானது இந்திரியங்களில் முதலிற் சேதனத்தன்மை யுண்டாயினுண்டாம், இந்திரி யங்களிற் சேதனத்தன்மை சம்பவியாது; ஏனெனின், சக்ஷுராதி முதலாகிய இந்திரி யங்களி லொவ்வோ ரிநதிரியம் சேதனமா? அலலது சர்வேநதிரியங்களின் சமு தாயம் சேதனமா? அவற்றுள், முதறபக்ஷம் பொருநதாது; ஏனெனின், சர்வ இநதிரியங்களுக்குள் ஒரு சக்ஷுர் இநதிரியததிறகே சேதனத்தன்மை யங்கீ கரிக்கின் குருடருக்குச சக்ஷுர் இநதிரியமின்றும. ஆகையினா லெவனுக்கொரு ஞானமுமுண்டாதல்கூடாது; குருடருககும் சபதாதிகளின் ஞானமோ உண்டா கின்றது. சுரோத்திர இந்திரியத்திற்கே சேதனத்தன்மை யங்கீகரிக்கின் செவிட ருக்குச் சுரோத்திர இநதிரியமின்றும். ஆகையினால் அவருககு ரூபாதிகளின் ஞானங்கூட உண்டாதல்கூடாது. செவிடருக்கோ ரூபாதிகளின் ஞானம் உண் டாகின்றது. இந்தப்பிரகாரம அன்னிய இநதிரியங்களிலும் அறிந்துகொள்ளல வேண்டும். குருடருக்கு உருவத்தின் ஞானமுண்டாகாது எனக் கூறுவதும் பொருந்தாது; ஏனெனின், இரசாதிகளின் ஞானம் குருடருக்குண்டாம். அந்த இரசாதிகள் ரூபவடிவமாம்; ஏனெனின், இநதிரியஜன்னிய ஞானத்திற்கு விஷய மாவது ரூபமெனப்படும். இநதிரியஜன்னிய ஞானத்திற்கு விஷயம் இரசாதிகளு மாம்; ஆகையினால் இரசாதிகள் ரூபவடிவமாம. இவ்வார்த்தை முன்னர் நாமரூபக கிரியை வடிவம் ஜகத்தாமென்னு மிவ்வர்த்த நிரூபணத்தின்கண் கூறப்பட்டது. ஆகையினால் ரூபத்தின் ஞானம குருடருக்குங் கூடும். இவ்வண்ணம் செவிடருக் கும் உதடு அசைதலால் சபதத்தின் ஞானமுண்டாம். பின்பக்கத்தில் கையால் அக்ஷரங்களை யெழுதுவதினாலும் சப்தத்தின் ஞானம் செவிடருக்குண்டாம், அஃ துண்டாகலாகாது; ஆகையினா லொவ்வோ ரிந்தியத்திற் சேதனத்தன்மை சம்ப

வியாது. அல்லது சர்வ இந்திரியங்களில் ஒவ்வோரிந்திரியம் ஆன்மாவென்பதும் சம்பவியாது; ஏனெனின், சர்வ இந்திரியங்களுக்குள் ஒரு சக்ஷு இந்திரியத்தை யான்மாவெனின் சக்ஷு இந்திரியரூப ஆன்மாவே பிரதானமாம்; அன்னிய சுரோத்திராதி இந்திரியங்கள் கௌணமாம். இதை யங்கீகரிப்பது கூடாதாம்; ஏனெனின், சர்வ இந்திரியங்களும சமானமாம. அவற்றுள், ஒன்றை முக்கியமாய்க் கருதுவதற்கும் அன்னியத்தைக் கௌணமாய்க் கருதுவதற்கும் யாதொரு யுக்தியுமின்றாம; கேவலம் சொல்மாத்திரமேயாம். ஆகையினால் ஒவ்வோரிந்திரியத்திற்கும் ஆன்மதன்மையின்றா மென்பது சித்திததது. சர்வ இந்திரியங்களின் சமுதாயம் ஆன்மாவாமென்னு மிரண்டாவதுபக்ஷமும் பொருநதாது; ஏனெனின், சாவ இந்திரியங்களின் கூட்டம ஆன்மாவாயினே ஒரு சக்ஷு இந்திரியத்தின் நாசத்தால் சர்வ இநதிரியங்களின் கூடடவடிவ ஆன்மா இராது; ஆகையினால் குருடருடைய சரீரம ஆன்மாவின்றியதாகவேண்டும். நையாயிகர் மதத்தில ஆயிர நூறகளா லுறபன்னமாகிய படம் ஒருநூலி னாசத்தால் நாசமாய் விடுவதுபோல ஒரு சக்ஷு இநதிரியத்தின் நாசத்தால் ஆன்மாவின்றியதாய்க் குருடா சரீரமாகவேண்டும்; ஆகவோமாட்டாது. ஆகையினால் இந்திரியங்களின் சமுதாயம் ஆன்மாவன்றாம்.

சங்கை:—கிராமததின்கண் பிரதான புருஷனாயிருபபவன் மரணமடையின் பிரதான புருஷத்தன்மை மற்றொரு ஜீவித புருஷனிடத்தே யுண்டாவதுபோல ஈண்டும் சக்ஷு இநதிரியம் நாசமாயின், பாககி யிராநின்ற சுரோத்திராதி இந்திரியங்களில் ஆன்மததன்மையிருககும்; ஆங்கயினா லிந்திரியமே ஆன்மாவாம்.

சமாதானம்:—திருஷ்டாநததகில ஒரு பிரதான புருஷன் நாசமாயினும் அவனது நிாணயரூப வியவகாரத்தின் லோப முண்டாகமாட்டாது; மற்றோ வேறொரு ஜீவித பிரதான புருஷன் அவனது நிர்ணயரூப வியவகாரத்தைச செய்வன்.

மாறுய்ச சிலவிடத்திலோ இவ்வண்ணம் காணபபடுகின்றது:—முதற் பிரதான புருஷன் தனது கிராமமாத்திரததின் நிாணயததைசசெய்தான். அவனிறந்த பின் இரண்டாவது வநத பிரதான புருஷன் அன்னியகிராமத்தின் நிர்ணயத்தையும் செய்வன், அதுபோ லீண்டும் சக்ஷு இநதிரியம நாசமாயின், அதன் காரியமாய நீல பீதாதிரூபங்களின் ஞானம் அன்னிய சுரோத்திராதி இந்திரியங்களாலு முண்டாகவேண்டும். சக்ஷு இந்திரியத்தின் காரியம் சுரோத்திராதி இந்திரியங்களா லாகமாட்டாது; ஒருகா லாகுமாயின் குருடருககும் சுரோத்திராதி இந்திரியததால நீல பீதாதிரூபஙகளின் ஞானம உண்டாகவேண்டும்; உண்டாவதோ இன்றாம். ஆகையினால் உன்னுடைய திருஷ்டாநதம விஷமமாம்.

சங்கை:—எனது திருஷ்டாநதம விஷமமன்றாம்; ஏனெனின், சில இடத்திற் பிரதானபுருஷன் மரணமடையின், அவனது நிர்ணயரூப வியவகார லோபமுங் கண்டோம்.

சமாதானம்:—நீ கூறியதுகொண்டு இவ்வர்த்தமன்றோ சித்தித்தது: சில கிராமத்தின்கண் பிரதான புருஷன் மரணமடையின் அவனது வியவகாரத்தை அன்னிய பிரதான புருஷன் செய்வன், சில பிரதான புருஷர் மரணமடையின் அவரது வியவகாரத்தை வேறெவரும் செய்யார். மற்றோ அவரது வியவகாரம் லோபத்தையடையும். அதுபோலீண்டும் எல்லாக் குருடருக்கும் சுரோத்திராதி இந்திரியங்களால் நீல பீதாதிரூப ஞானமுண்டாகவேண்டாம்; ஆனாலொவ்வொரு குருடருக்குமே உண்டாகவேண்டுமென்று, எக்குருடருக்கும் ரூபத்தின்ஞானம் உண்டாவதின்றாம். ஆகையினாற் பிரதான புருஷனுடைய திருஷ்டாந்தத்தால் இந்திரியங்களி லான்மத்தன்மை சம்பவியாது.

சங்கை:—இந்திரியங்களின்று மான்மாவை வேறாயங்கீகரிப்பதிலும், குருடருக்கு நீலபீதாதி ரூபஞான அடைவின் வடிவதோஷமேன் உண்டாகமாட்டாது.

சமாதானம்:—இந்திரியங்களின் வேறு ஆன்மாவென்னும் பக்ஷத்திலும் குருடருக்கு நீலாதி ரூபஞான அடைவின் வடிவதோஷ முண்டாகாது; ஏனெனின், சப்த ஸ்பரிச ரூப ரச கந்த ஞானங்களில் முறையே சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, இரசனம், கிராணம் என்னுமைந் திந்திரியமுங் காரணமாம். குருடரிடத்தே சக்ஷு இந்திரியமின்றாம்; ஆகையினாலவனுக்கு நீலாதி ரூபஞான முண்டாகாது. மணிமுதலிய பதார்த்தங்களின் சாக்ஷுஷஞானத்தில் உபகரணமாகிய தீபாதிப்பிரகாசத்தி னபாவமுண்டாயின் கண்ணுள்ள புருஷனும் மணிமுதலிய பதார்த்தங்களைக் காணான். அதுபோல சக்ஷுஇந்திரியமற்ற குருடர் ரூபத்தைக்காணார். அல்லது, ஒரு தீபம் நாசமாயினந்த விடத்தில் மற்றொரு தீபத்தி னுற்பத்திபோவதுபோல ஓரிந்திரிய மழியின் மற்றோரிந்திரியத்தி னுற்பத்தியை எவ்வாஸ்திகபுருஷனும் அங்கீகாரம் செய்யான்; ஏனெனின், ஆஸ்திகர் மதத்தில் தர்மாதர்ம ரூப அதிருஷ்டமின்றி ஏககாரியத்தி னுற்பத்தியும் ஆகமாட்டாது. எந்தச சார்வாகனென்ற நாஸ்திகனுடைய மதத்தின்கண் தேகத்தின் வேறாய் யாதொரு ஆன்மாவுமின்றோ அவன் மதத்தின்கண் ஓரிந்திரியம் நாசமாயின், அத்தானத்தில் மற்றோரிந்திரியத்தி னுற்பத்தி யுண்டாதல்வேண்டும். எங்கள் மதத்திலும் அதிஷ்டரூப காரணமாவ மிருத்தலின் ஓரிந்திரியம் நஷ்டமாயின் அத்தானத்தில மற்றோரிந்திரியத்தி னுற்பத்தி யுண்டாகாது எனக் கூறுவானாயின், அது பொருந்தாது; ஏனெனின், பூர்வ ஜன்மத்தின்கண்ணே சம்பாதித்த புண்ணிய பாபரூப அதிருஷ்டம் உத்தர உத்தர ஜன்மத்தின்கண் காரியத்தி னுற்பத்தியைச் செய்யும் என்பது நியமமாம். பூர்வ ஜன்மம் தேகாத்மவாதியின் மதத்திற் சம்பவியாது. எதனாலதிருஷ்ட முண்டாமோ அதனால் ஓரிந்திரியம் நஷ்டமாயின், மற்றோரிந்திரியத்தி னுற்பத்தி தேகான்மவாதியின் மதத்திலவசியம் உண்டாதல்வேண்டும். அல்லது தேகாத்மவாதியின் மதத்தில ஓரிந்திரியம் நஷ்டமாயின் மற்றோரிந்திரியத்தி னுற்பத்தி ரூபதோஷ முண்டாவதுபோல இந்திரிய ஆன்மாவாதி மதத்தினும் இத்தோஷமுண்டாம்; ஏனெனின், முற்சன்மமின்மையின் புண்ணிய பாவரூப அதிருஷ்டத்தினுற்பத்தி இந்திரிய ஆன்மவாதிக்கும் சம்பவியாது. ஆகையினால் ஒரு சக்ஷு இந்திரியம் நஷ்டமாயினும்

பாக்கியிராநின்ற சுரோத்திராதி இந்திரியங்களால் மற்றொரு சக்ஷு இந்திரியத்தி னுற்பத்தி யுண்டாதல்வேண்டும்; கிராமத்தின்கண் ஒருபிரதான புருஷன் மரிக்கின், அவன் காரியத்தில் மற்றொரு பிரதான புருஷனை மகா ஜனங்கள் நிய மிப்பதுபோலும், ஓரரசன் மரிக்கின் அத்தானத்தில் மற்றோ ரரசனைப் பிரஜைக ளங்கீகரிப்பதுபோலு மென்க.

சங்கை :—ஒரு சக்ஷு இந்திரியம் நஷ்டமாயின் அத்தானத்தில் மற்றொரு சக்ஷுவைச் சுரோத்திராதி இந்திரியங்கள் அப்போது தாபனஞ்செய்யும்; எப் போது சர்வ இந்திரியங்கட்கும் பரஸ்பர மொருமதியாமோ, அவ்வொருமதி அவற்றிற்கே யின்றாம். ஆகையினாலொரு சக்ஷு நஷ்டமடையின் மற்றொரு சக்ஷுவின் உற்பத்தி சுரோத்திராதி இந்திரியங்களா லுண்டாகமாட்டாது.

சமாதானம் :—இந்திரியங்கட்குப் பரஸ்பரம ஒருமதி யுண்டாகாதாயின், எவ் விந்திரியத்தினாலும் எக்கிரியையு முண்டாகமாட்டாது. கிராமத்தின்கண் பிர தான புருஷருக்குப் பரஸ்பரம் ஒருமதி யுண்டாகாதாயின் எக்காரியத்தின் சித் தியு முண்டாகமாட்டாது. ஆகையினா லெவ்வகையாலும் இந்திரியங்களில் சேத னத்தன்மையின் சம்பாவனை யுண்டாகமாட்டாது. ரூபாசாதி விஷயங்களோடு சக்ஷு முதலிய இந்திரியங்கட்குக் கேவலம் சம்பந்தமாத்திரமாம். இந்திரியங் களா லெவ்வாதத்தின் பிரகாசமு முண்டாகமாட்டாது. ஆகையினால் ரூபாதி விஷயங்களைப் பிரகாசஞ்செய்வது இந்திரியங்களின் அபலேபாய வொரு சேதன மாம். இந்தப்பிரகாரம் இந்திரியங்க ளசேதனமாதலின், தேகத்தின்கண் சேதன த்தின் ஆதாரத்தன்மை சம்பவியாது; ஆகையினால கடத்திற்கும் தேகத்திற்கும் விலக்ஷணத்தன்மை பொருந்தாது, மற்றோ இரண்டும் சமானமாம்.

சங்கை :—*கத்தைக்காம்பு சுண்ணாம்புடன்கூடிய தாம்பூலத்தின்கண் சிவப் புத்தன்மை யுண்டாவதுபோ லாகாசாதி பஞ்சபூதங்களின் சமுதாயரூப சரீரத் தின்கண் சேதனத்தன்மையுண்டாம்; அசேதனத்தன்மையே சரீரத்தின்கண் கடத்தின் விலக்ஷணத்தன்மையாம்.

சமாதானம்:—பஞ்சபூதங்கள் சேர்தலினால சரீரத்தின்கண் சேதனத்தன்மை யுற்பன்னமாம் என நீ கூறல் பொருந்தாது; ஏனெனின், பஞ்சபூதமோ கடத் தின்கண்ணும் சேர்ந்துள்ளது ஆகையினால கடத்தின்கண் சேதனத்தன்மை ஏனுண்டாகமாட்டாது? மற்றோ உண்டாகவேண்டும்.

சங்கை :—கடத்தின்கண் பிருதிவியாதி பூதங்களோ இருக்கின்றன; ஆனால் வாயுகடத்தின்கண் இன்றாம். ஆகையினால் அதன்கண் சேதனத்தன்மை யுண் டாகமாட்டாது.

சமாதானம் :—கடத்தின்கண் வாயுவி னபாவத்தைக் கூறல் சம்பவியாது; ஏனெனின், பாண்டம ஆகாசத்தின்கண் வாயுவி னவயவமபரஸ்பரம சேர்ந்திருக்

* வெள்ளைக்காசுக்கட்டி.

கும். இக்காரணத்தினுலே விசிஷ்டயை யசைத்தலா லவவவயங்கட்குப பாஸ்பரம் விபாகமாம். அவ்வாகாசம் கடத்தின்கண்ணு முளது; ஆகையினுற் கடத்தின் கண்ணும் வாயுவுளது. ஆகையினுல் சரீரத்தைபபோலக் கடத்தின்கண்ணும் சேதனத்தன்மை யுண்டாதல்வேண்டும், அல்லது வாயுவின் சம்பந்தத்தால் தேக த்தின்கண் சேதனத்தன்மை சம்பவிககவுமாட்டாது; ஏனெனின், இறந்த சரீரத் தின்கண்ணும் கடத்தின்கண்ணும் வாயுவின் சமயோகமிருபபினும் சேதனத் தன்மையைக் கண்டோமில்லை. ஆகையினுல் பஞ்சபூதங்கள் சேர்தலினுல் சரீரத் தின்கண் சேதனத்தன்மை யுற்பன்னமாம் என்னு முன் வசனம் பொய்யாம. அல்லது இந்திரியத்தின்கண் சேதனததன்மை யிருபபின் இந்திரியத்தின்கண் முக்கிய ஆன்மத்தன்மையும், இந்திரியங்கட் காதாரமாய சரீரத்தின்கண் கௌண ஆன்மத் தன்மையுமாம்; அவ்விந்திரியங்களின்கண்ணே சேதனத் தன்மையின் ரும். ஆகையினு லிந்திரியங்களில் முக்கிய ஆன்மத்தன்மையுந் தேகத்தின்கண் கௌண ஆன்மத்தன்மையும் சமபவியா. ஈண்டிது தாத்பர்யமாம:—வேதவி ரோதிகளாய நாஸ்திகர்கட்குள் அநநத மதங்களுள. அவருள் ஒருவர் சார்வாக ராம், அச்சார்வாகரும் நான்கு பிரகாரம ஆவர். அவருள் ஒருவனே தேகததையே ஆன்மாவென அங்கீகரிப்பவன், மறறவனே இந்திரியங்களையே ஆன்மாவென அங் கீகரிப்பவன், மூன்ருமவனே இருதயத்தையே யான்மாவென அங்கீகரிபபவன், நான்காமவனே பிராணனையே யான்மாவென அங்கீகரிப்பவன். அவருள் தேகான் மவாதியையும் இந்திரி யான்மவாதியையும முன்னர்க கண்டிததோம. இபபோது இருதய ஆன்மவாதியையும் பிராணுன்மவாதியையும் கண்டிபபாம்:—இருதயதே யத்தில் சர்வ தேகதாரி ஜீவர்கட்குமஞானமுண்டாமென்ருலும அவவிருதயதேச மான்மாவன்ரும்; ஏனெனின், தேகம மாமசவடிவமாதலின் ஆன்மாவலலாதது போல இருதயதேசமும் மாமசவடிவமாதலின் ஆன்மாவன்ரும். பாகியவாயு ஆன்மாவல்லாததுபோலப் பிராணனும் வாயுரூபமாதலின் ஆன்மாவன்ரும்.

சங்கை:—எதன் தரிசனமின்மையின் மரணமாமோ அஃது ஆன்மாவெனப படும் என்னு மிவ்வான்மாவின் இலக்கணம் பிராணனிடத்தே சமபவிக்கும்; ஏனெனின், பிராணனது தரிசனமின்மையினுலே மரணமாம். எதுவரை சரீரத் தின்கண் பிராணனது தரிசனமாமோ அதுவரை சரீரத்தின்கண் மரணவியவ காரம் உண்டாகாதாதலின், பிராணனே யான்மாவாம்.

சமாதானம்:—சரீரத்தின்கண் பிராணனது தரிசனமின்மையின் மரணமாம் என நீ கூறுதலால் பிராணனது அப்பிரத்தியக்ஷத்தால் மரணமாமென்னு மிப் பொருள் சித்தித்தது; ஏனெனின், சார்வாகன் ஒரு பிரத்தியக்ஷப பிரமாணத் தையே யங்கீகரித்துளான். அநதப பிராணன்களின் அப்பிரததியக்ஷத்தாலே மரணமாகாது; ஏனெனின், ஸ்தாவர விருக்ஷாதிகளில் பிராணன்களின் பிரத்தி யக்ஷஞானம் எபப்புருஷனுக்குமின்ரும் எனினும் தருமுதலியவற்றிற்கு மரண முண்டாகாது. ஜங்கமங்களாய மனுஷ்யாதி சரீரங்களில் பிராணனது அப்பிரத் தியக்ஷத்தால் மரணமாம் எனப பிராணுன்ம வாதி கூறின், அதுவும் பொருந் தாது; ஏனெனின், ஜங்கம மனுஷ்யாதி சரீரத்தின்கண்ணும் மூர்ச்சைமுதலிய

அவஸ்தையில் பிராணனது பிரத்தியக்ஷம ஆகாது. ஆகையினால் மூர்ச்சைமுதலிய அவஸ்தையின்கண் மரணமுண்டாதல் வேண்டும், மரணமோ உண்டாகாது. ஆகையினால் பிராணன் ஆன்மாவன்றாம்.

சங்கை :—எது வெளிபபோதலால் மரணமாமோ அஃது ஆன்மாவெனப் படும் என்று இவ்வான்மாவின் இலக்கணம் பிராணனிடத்தே சம்பவிக்கும்; ஏனெனின், பிராணனது வெளிபபோதலினாலேயே மரணமாம். மூர்ச்சை யவஸ்தை யின்கண் பிராணனது வெளிப்போத லுண்டாகாது; மற்றோ சரீரத்தினுள் ளேயே பிராணனது கதியின் நிரோதமாம். ஆகையினால் மூர்ச்சைமுதலிய அவஸ்தையின்கண் மரணமாகாது. ஆகையினால் பிராணனே யான்மாவாம்.

சமாதானம் :—யாது வெளிப்போதலால் மரணமாமோ அஃது ஆன்மா வெனபபடும, அத்தகையது பிராணனும என நீ கூறுதல் சேவலம் வியர்த்தமாம்; ஏனெனின், ஜாடராக்கினியின் நிர்ககமனத்தினாலும் பிராணிசட்கு மரணத்தைக் கண்டோம். ஆகையினால் ஜாடராக்கினியும் நின்மதத்தில் ஆன்மாவாகவேண்டும்; ஜாடராக்கினிககு ஆன்மத்தன்மை பிராணன்மவாதிக்கும் அங்கீகாரமின்றாம்.

சங்கை :—அககினியின் நிர்க்கமனம் யாருக்காவது பிரத்தியக்ஷமாயின், அது மரண ஏதுவாகும; ஆனாலது பிரததியக்ஷமோவன்றாம்

சமாதானம் :—ஜாடராக்கினியின் நிாக்கமனததின் பிரத்திடக்ஷஞான முண் டாகாதெனினும் நாசிகைத்துளையின் முறபாகத்தின்கண் கை வைக்கின் பிராண வாயுவின் ஸ்பாஸ அபாவத்தின் ஞானமுண்டாம. அநத ஸ்பர்ஸ அபாவரூப ஹேதுவால் பிராணன்களின் நிர்ககமனுமான முண்டாவதுபோல ஜாடராக் கினியின் * நிர்க்கமனத்திற்கும் சீத ஸ்பரிச ரூப ஏதுவினா லனுமானமாம்.

சங்கை :—பிராணன்களின் நிாககமனத்தினாலும் ஜாடராக்கினியின் நிர்க்கம னத்தினாலும் பிராணிகட்கு மரணமுண்டாமாதலின், இரண்டுமே யான்மாவாம்.

சமாதானம் :—அககினியும பிராணனும் ஆன்மாவாகமாட்டா; ஏனெனின், இரண்டையும் ஆன்மாவென அங்கீகரிக்கின், ஒரு சரீரத்தின்கண் இரண்டான்மா சித்திக்கும். ஒரு சரீரத்தின்கண் இரண்டான்மா அங்கீகரித்தல் விருத்தமாம்; ஏனெனின், முன் மாதா பிதாதிகளைக் கண்டயானே இப்போது அவர்களை ஸ்மரிக்கின்றேன் என இவ்வண்ணம் ஆன்மாவின் ஏகத்தன்மையை விஷயஞ்செய் வதாய பிரத்தியபிஞ்ஞை ஞானமானது உண்டாதல்கூடாது. ஏனெனின், அன் னியன்கண்ட வஸ்துவின் ஸ்மரணம் அன்னியனுக் குண்டாகாது. ஆகையினால் அக்கினியும் பிராணனு மான்மாவன்றாம். அல்லது யாது வெளிப்படின் மரண மாமோ அஃதான்மாவென வான்மாவின் இலக்கணங் கூறின், உதிரமும் ஆன்மா வாகவேண்டும். ஏனெனின், உதிர நிர்க்கமனத்தாலும் பிராணிகட்கு மரணம்

* நிர்க்கமனம்=வெளிப்போதல்.

உலகின்கண்ணே கண்டோம். அக்கினியையும் பிராணனையும் ஆன்மாவென வொப்பும் வாதியாய நினக்கு உதிர மான்மாவாத லுடன்பா டினறன்றோ? அல்லது உதிரத்தை யான்மாவென அங்கீகரித்தல் சம்பவிக்கவுமாட்டாது; ஏனெனின், உதிரத்தை வற்றச்செய்வதாய ஒரு ரோகவிசேடத்தோடுற்ற பிராணி உதிரமின்றியும் சில விடங்களிற் சீவித்தலைக் கண்டோம். சாஸ்திரத்தின்கண்ணும் இரண்ய கசிபு முதலியோரின் சரீரம் தவத்தா லுதிரமற்றதாய்க் கேவல மென்பு மாத்திரமா யிருந்ததாய்க் கேட்டிருக்கின்றோம். ஆகையினால் உதிரத்திற் கான்மத்தன்மை சம்பவியாது; அல்லது, பிராணன், அக்கினி, உதிரம் என்னும் இம் மூன்றற்கும் ஆன்மத்தன்மை சம்பவியாது; ஏனெனின், எவ்வெவ் வஸ்து ஜடமாமோ அஃது அனான்மாவாம், கடாதிகளைபபோல. இந்தப்பிரகாரம் சரீரத்தினின்றும் வெளியிலிராநின்ற பிராணன், அக்கினி, உதிரம் என்பவற்றில் சடத்தன்மை பிரத்தியக்ஷ சித்தமாம. ஆகையினால் சரீரத்துள் இராநின்ற பிராணன், அக்கினி, உதிரம் என்பவையும ஜடமாம. ஜடவஸ்து ஆன்மாவாகாது, மற்றோ சேதனமே யான்மாவாம். ஆகையினால் பிராணன், அககினி, உதிரம் என்னு மிம மூன்று மான்மாவன்றாம். மனம், புத்தி, சித்தம, அகங்காரம் என்னு மிந்நான்கு பிரகாரமாய அநதக்கரணமு மான்மாவன்றாம்; ஏனெனின், ஒரு சரீரத்தின் கண் அநநத ஆன்மா அங்கீகரிககின் முன்னர் தநதை முதலியோரைக் கண்டயானே இபபோது ஸ்மரிக்கின்றேன் என்னும பிரத்தியபிஞ்ஞைஞானம் உண்டாகலாகாது.

சங்கை :—நான் கநதக்கரணத்தின் சமுதாயம் ஆன்மாவாகாது; ஆனால ஒவ்வோ ரநதக்கரணம் ஆன்மாவேனாகாது.

சமாதானம்:—ஒவ்வோ ரநதக்கரணத்திற்கும ஆன்மத்தன்மை சம்பவியாது; ஏனெனின், அநதக்கரணம விருததிரூபமாய் நேத்திரமுதலிய இந்திரிய வாயிலாய் வெளிப்போந்து கடாதிவிஷயாவசின்ன சேதனாசிரித ஆவரணத்தை நீக்கும்; அவ்விருத்தி யுபஹித சாக்ஷிசேதனம் அக்கடத்தைப பிரகாசிப்பிக்கும. ஆகையினால் சாக்ஷி சேதனத்தாற கடாதிகள் பிரகாசிக்கும்போது அந்தக்கரணம உபகரணமாம. யாது உபகரணமாமோ அஃது ஆன்மாவன்றாம். உபகரணமு மான்மாவாகுமாயின் தீபாதிப் பிரகாசங்களும, சக்ஷுமுதலிய இந்திரியங்களும் விஷயப்பிரகாசத்தின்கண் உபகரணங்களாம, ஆகையினால் ஆன்மாவாகவேண்டும்; ஏனெனின், பிரகாசமின்றி இருட்டின்கண் இராநின்ற கடாதிகளின் ஞானம் சக்ஷுவா லுண்டாகாததுபோலச சக்ஷுமுதலிய இநதிரியங்களற்ற புருஷனுக்கு ரூபாதி விஷயஞான முண்டாகாது. ஆகையினால் அநதக்கரணத்தைப்போல தீபாதிப பிரகாசங்களும சக்ஷுமுதலிய இநதிரியங்களும் விஷயபபிரகாசத்தின் கண் உபகரணங்களாம். ஆன்மா உபகரணமாவதின்றாம், ஆகையினால் அந்தக்கரணம் ஆன்மாவன்றாம்.

சங்கை :—இந்திரியங்களைபபோல மனம, புத்தி, சித்தம, அகங்காரங்கள் ஞானத்தின்கண் உபகரணமன்றாம், மற்றோ கர்த்தாவாம், கர்த்தா ஆன்மாவேயாம்.

சமாதானம் :—மன முதலியவற்றின்கண் கர்த்தாத்தன்மை அங்கீகாரம் செய்திருப்பினும் அவற்றின்கண் ஆன்மத்தன்மை சித்தியாது ; ஏனெனின், மனம் புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் இந்நான்கினுள் ஏதேனும் ஒன்று கர்த்தாவா, அல்லது நான்குமே கர்த்தாவா. அவற்றுள், ஒன்று கர்த்தாவென்னும் முதற் பக்ஷம் பொருந்தாது ; ஏனெனின், ஜடத்வதர்மம் நான்கன்கண்ணும் சமானமாம். அவற்றுள், ஒன்றிறகுக் கர்த்துருத்தன்மை அங்கீகரித்து மற்றொன்றிற்கு அங்கீகரியாமையின்கண் யாதொரு யுக்தியுமின்றாம். நான்குங் கர்த்தாவாமென்னு மிரண்டாவதுபக்ஷமும் பொருந்தாது ; ஏனெனின், ஒரு சரீரத்தின்கண் அநேக கர்த்தாவை யான்மாவா யங்கீகரித்தலில் முன்னர் தோஷங் கூறப்பட்டுள்ளது. ஆகையினால் அந்தக்கரணம ஆன்மாவன்றாம். அல்லது மனம, புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் இந்நான்கையும் ஆன்மாவா யங்கீகரிப்பவனை யிதுகேட்டல்வேண்டும். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னு மிந்நான்கு சப்தங்கள் ஆன்மாவா ? அல்லது மனம், புத்தி, சித்தம, அகங்காரம என்னு மிந்நான்கு சப்தங்களினின்று முண்டாய அர்த்தவிஷயக அந்தக்கரணத்தின் நான்கு விருத்திகள் ஆன்மாவா ? அல்லது மனம, புத்தி, சித்தம், அகங்காரம என்னும் நான்கு சப்தங்களின் நான்கு அர்த்தங்கள் ஆன்மாவா ? அவற்றுள் முதறபக்ஷமு மிரண்டாவது பக்ஷமும் பொருந்தா ; ஏனெனின், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னு மிந்நான்கு சப்தங்களும், அவற்றினின்று முண்டாய அந்தக்கரணத்தின் நான்கு விருத்திகளும் அர்த்தப பிரகாசத்திற குபகரணங்களாம் ; ஆகையினு லான்மாவன்றாம். மனம், புத்தி, சித்தம, அகங்காரம என்னு மிந்நான்கு சப்தங்களின் நான்கு அர்த்தங்கள் ஆன்மாவென்னும் மூன்றாவது பக்ஷமும் பொருந்தாது ; ஏனெனின், அந்நான்கு அர்த்தங்கள் ஜடமா ? அல்லது சேதனமா ? அவற்றுள், பிரதமமாய ஜட பக்ஷம் பொருந்தாது ; ஏனெனின், எவ்வெவ்வஸ்து ஜடமாமோ அதுவது பரிச்சின்னமாம், எவ்வெவ்வஸ்து பரிச்சின்னமாமோ அதுவது அநித்தியமாம், எவ்வெவ்வஸ்து அநித்தியமாமோ அதுவது அனான்மாவாம், கடாதி பதார்த்தங்களைப்போல மனம், புத்தி, சித்தம், அகங்காரமாகிய அர்த்தங்களைச சடமா யங்கீகரிக்கின் அனான்மத்தன்மையே சித்தமாம. அநேக ஜடங்களை யான்மாவாக அங்கீகரிப்பதில் முற்கூறிய பிரத்திய பிஞ்ஞைஞான விரோதமுமாம். ஆகையினால் மனம், புத்தி, சித்தமகங்காரமாகிய அர்த்தங்க ளான்மாவன்றாம.

சங்கை :—எவ்வெவ்வஸ்து ஜடமாமோ அதுவது பரிச்சின்னமாம் என முன்னர்த் தாங்கள் கூறிய நியமம் சம்பவியாது ; ஏனெனின், ஆகாசம, காலம், திசை என்னு மிம்மூன்றும ஜடமேயாம், ஆனால் பரிச்சின்னமன்றாம்; மற்றோ வியாபகமாம். இக்காரணத்தினாலே ஆகாசாதிகள் நித்தியமாம்.

சமாதானம் :—ஆகாசாதிகளில பரிச்சின்னத தன்மையின்மை சம்பவியாது ; ஏனெனின், சுருதியின்கண் ஆகாசாதிகளின் உற்பத்தி கூறப்பட்டுளது. யாது யாது உறபத்தியையுடைய காரியமாமோ அதுவது தனது உபாதானகாரணத்தி

னேகதேசத்தில் இருக்கும், ஆகையினால் ஆகாசாதிகளும் தமது காரணத்தினபே க்ஷையால் பரிசசின்னமாம்.

சங்கை :—ஆகாசம் பரிச்சின்னமாயின், சாஸ்திரததின்கண் ஆகாச திருஷ்டாந்தத்தால் ஆன்மாவின்கண் வியாபகத்தன்மை சித்தஞ்செய்யப் பெற்றுளது அசங்கதமாம்.

சமாதானம் :—வியாபகத்தன்மை நிரபேக்ஷ வியாபகத் தன்மையென்றும், சாபேக்ஷ வியாபகத்தன்மையென்றும் இருவகையாம். அவறறுள், நிரபேக்ஷ வியாபகததன்மை ஆன்மா வொன்றன் கண்ணேயே யுளது; ஆகாசாதியின் கண் தமது காரியமாகிய வாயு முதலியவற்றை யபேக்ஷிததுச சாபேக்ஷ வியாபகத்தன்மை யுளது. அந்தச சாபேக்ஷ வியாபகத்தன்மையை யங்கீகரித்தே ஆன்மாவின்கண் ஆகாச திருஷ்டாநதங் கொடுககபபட்டுளது. ஆன்மாவினபேக்ஷையால் ஆகாசாதிகள் பரிசசின்னமேயாம்; ஆகையினால நிததியமன்றும். நையாயிகர் ஆகாசாதிகளை விபுவென அங்கீகரித்துளாா, அவரது ரீதியினுனும ஆகாசாதிகட்கு நித்தியத்தன்மை சித்தியாது; ஏனெனின், நையாயிகா ஆகாசாதி விபுபதார்த்தங்களிலும அன்னியோன்னியாபாவப பிரதியோகித தன்மைவடிவ வஸ்துபரிசசேத மங்கீகரித்துளாா். பரிசசின்ன வஸ்து நிததியமாகாது; ஆகையினால் ஆகாசாதி அநித்தியமாம். இது கூறியதால் சாவ அனான்ம பதாாத்தங்களிலும் வஸ்துபரிசசேதம், தேசபரிசசேதம், காலபரிசசேதமென்னு மூன்று முள. ஆகையினால் சாவ அனான்ம பதாாத்தங்களும் அநிததியமாமெனச சித்தித்தது. அவற்றுள், ஆகாசாதிகள நிததியமென்றும், கடாதிகள் அநிததியமென்றும உலகருக்குப பிரபஞ்சத்தின்கண் பேதபபிரதீதியாம; அது கேவலம அவிவேகததினாலுண்டாவதேயாம. ஆகையினால மனம, புத்தி, சிததம, அகங்காரம என்பவற்றிற்கு ஜடப்பான்மையை யுடன்பட்டு நிததியபபான்மையை யுடன்படல அத்தியநதம் விருத்தமாம. மனம், புத்தி, சித்த, அகங்காரரூப அருத்தம சேதனமாம் என்னு மிரண்டாவதுபக்ஷ மங்கீகரிககின் சத்திய ஆநநதவடிவ ஆன்மாவினின்றும் மனம், புததி, சித்தம, அகங்காரம் அபின்னமாயே சிததமாம். அல்லது, சத்து, சிதது, ஆநநதம், ஆன்மா இநநான்கிறகும் பரஸ்பரபேதம விசாரஞ்செய்யின் சித்தியாது. வாதியானவன் சத்து, சித்து, ஆநந்தம், ஆன்மா என்னு மிர்நான்கிற்கும பரஸ்பரபேதம அங்சீகரிக்கின், அவனேயிது கேட்பாம:—சததினின்றும் சத்து பின்னமீ, சித்தினின்றும் சிதது பின்னம, ஆநநதத்தினின்றும ஆநந்தம பின்னம், ஆன்மாவினின்றும்ஆன்மா பின்னம் என இவ்வண்ணம் பரஸ்பரம் பின்னமா? அல்லது சத்தினின்றும சித்து பின்னம, சித்தினின்றும ஆநநதம் பின்னம், ஆநந்தத்தினின்றும ஆன்மா பின்னம், இவ்வண்ணம இந்நான்கிற்கும பரஸ்பரம பேதமா? அவற்றுள், முதற் பக்ஷம் சம்பவியாது; ஏனெனின், உலகின்கண் கடபடாதிவஸ்துக்கள் தமது வடிவத்தினின்றுந தாம் பின்னமாவதின்றும. அங்ஙனம் சத்திற்குச் சத்தினின்றும் பேதம, சேதனததிற்குச சேதனததினின்றும பேதம் எனக் கூறல் சம்பவியாது. சத்து, சித்து, ஆநந்தம், ஆன்மா என்னு மிநநான்கிற்கும் பரஸ்பரம் பேதமாமென்னு மிரண்டாவது பக்ஷமும் பொருந

தாது. ஏனெனின், பிரகாசஸ்வரூப சைதன்யம் ஆநந்தத்தினின்றும் வேறன்று. ஆநந்தத்தினின்றும் சைதன்யம பின்னமாயின் பிரதிகூலமாம்; யாது பிரதிகூலமாமோ அது ஜடமாம். ஆகையினால் ஆநநதத்தினின்றும சைதன்யம் பின்னமன்றும். அங்ஙனம் ஆநநதமும் சைதன்யததினின்றும பின்னமன்றும்; ஏனெனின், பிரகாசஸ்வரூப சைதன்யத்தினின்றும ஆநந்தம பின்னமாயின் துக்கரூபமாம; இநதபபிரகாரம சத்தியமும் ஆநநததினின்றும் சைதன்யத்தினின்றும் பின்னமன்றும். சததியம ஆநநதத்தினின்றும் சைதன்யத்தினின்றும் பின்னமாயின் அசத்துருவமாம. சததியமும அசததியமாயின் இவ்வஸ்து சத்தியம் இவ்வஸ்து அசத்தியம என்னு மிவ்வகையாய பேதவிபவகாரம உலகின்கண் உண்டாகாது. ஆகையினால ஆநநததினின்றும் சைதன்யத்தினின்றும சத்தியம் பின்னமன்றும். அங்ஙனம ஆநநதமும் சைதன்யமும சத்தியத்தினின்றும் பின்னமன்றும்; ஏனெனின், ஆநநதமும் சைதன்யமும் சததியத்தினின்றும பின்னமாயின், மலடிமகனுககுச சமானமாய் அசததியமேயாம. இவ்வண்ணம சததுசசித்து ஆநநதத்தினின்றும ஆன்மாவும பின்னமன்றும்; ஏனெனின், ஆன்மா சச்சிதாநந்தத்தினின்றும பின்னமாயின், அசதது ஜடதுககஸ்வரூபமாதல வேண்டும. அது சம்பவியாது. ஏனெனின், சர்வப பிராணிகட்கும் யானுளன் எனனும் பிரதீதியில ஆன்மாவின் சததியரூபத்தன்மை தோறறுநிற்கும; யானெபபோதும் அபபிரியனன்றும் என்னும பிரதீதியின்கண் ஆன்மாவின் ஆநநதரூபத்தன்மை தோற்றுநிற்கும்; யானறிகின்றேன் என்னும பிரதீதியில ஆன்மாவின் சைதன்யத்தன்மை தோற்றுநிறகும். ஆகையினால சச்சிதானநததினின்றும ஆன்மா பின்னமன்றும. அல்லது, யானெனவும ஆன்மாவெனவும் சாவபபிராணி மாததிரததிறகும ஆநநத ஆன்மாவின்ஞான மையமின்றி யுண்டாதலின், யானிருக்கின்றேனோ? அல்லதில்லையா? என இவ்வகையாய சமசயம யாவருககு முண்டாகாது; மற்றே யானெபபோது மிருககின்றேன் என்னும நிசசயம சாவப பிராணிகட்கு முண்டாம். ஆகையினால சதது, சித்து, ஆநநதம என்னு மிமமூன்றும ஆன்மாவினின்றும் வேறன்று. ஆன்மாவினின்றும சச்சிதாநநதம பின்னமாயின், சததியத்திற்குச் சத்தியரூபமாய் ஞானமும, சித்திறகுச சிதது ரூபமாய் ஞானமும், ஆநந்தத்திற்கு ஆநநதரூபமாய் ஞானமும எவருககு முண்டாகா; ஏனெனின், ஆன்மாவினின்றும் வேறாய முயறகோட்டின்கண் சததியபுததி யெவருககு முண்டாகாது. ஆன்மாவினின்றும வேறாய கடாதிகளிடத்தே சைதன்ய புததியுண்டாகாது. ஆன்மாவினின்றும் வேறாய சிங்கசாபபாதிகளிடததே ஆநநத புததி யுண்டாகாது. ஆகையினால் ஆன்மாவினின்றும சச்சிதாநநதம் பின்னமன்றும்.

சங்கை:—சதது, சிதது, ஆநநதம, ஆன்மா என்னு மிநநான்கிற்கும் பரஸ்பரம பேதமில்லையென்றாலும், கடபடாதி ஜடவஸ்துக்களால ஆன்மாவின்கண் வஸ்து பரிசசேதம் ஏன் உண்டாகமாட்டாது?

சமாதானம்:—ஆன்மாவின் வேறாய எவவஸ்துவும ஜகதகாரணமன்றும்; ஏனெனின், ஆன்மாவென்பது தன்து சொரூபத்திறகாம. தனது சொரூபத்தினின்றும

யாது பின்னமாமோ அது முயற் கோடுபோலச் சொரூபமற்றதாம். ஆகையினால் ஆன்மாவே சர்வ ஜகத்காரணமாம். காரணத்தினுங் காரியம் பின்னமாய்ப பிர தீதியாகாது. மண்ணினுங் கடம் பின்னமாய்ப் பிரதீதியாகாது. அங்ஙனம் காரிய மாகிய ஜகததும் காரணமாகிய ஆன்மாவினும பின்னமாய்ப் பிரதீதியாகாது.

சங்கை :—ஜகத்தின்காரணம் ஆன்மாவன்றாம; மற்றோ தனது காரணம் ஜகத்துத்தானேயாம்.

சமாதானம் :—எவவிடததினும் எவவஸ்துவுந் தனது காரணம் தானாவதின் றாம்; ஏனெனின், காரிய உற்பததிககு முன்னொடியில் இராநின்ற வஸ்து காரண மாம்; காரணத்தின் பின்னிருபபது காரியமாம். மண் கடத்தி னுற்பத்திற்கு முன்னுளதாதலின், கடத்தின்காரணம் மண்ணாம். கடம் மண்ணின்பின் னிருப்ப தால் மண்ணின் காரியங் கடமாம். தனது காரணம் ஜட ஜகத்துத் தானேயா யின், தானே ஜகததுத தன்னின்முன் னிருபபதுந தானே தன்னிற் பின்னிருப பதுமாகக் கூறவேண்டிவரும, அது அததியநதம விருததமாம.

சங்கை :—அஞ்ஞான பலத்தால் ஜடஜகததுத தனதுகாரணந தானேனாக மாட்டாது?

சமாதானம் :—அஞ்ஞான பலததினாலும் ஜகத்துத தனது காரணந தானா காது, ஏனெனின், அஞ்ஞானபலததால கயிறு முதலியவை கற்பித சர்ப்பாதி கட்கே காரணமாகக கண்டனம. கயிறு கயிற்றின்பொருட்டுக் காரணமாத லஞ் ஞான பலததினாலுஞ சமபவியாது. ஆகையினால் ஆன்மாவின் வேறாய எந்த ஜட வஸ்துவிற்குஞ சத்தையின்றாம். இது கூறியதால் ஆன்மாவின்கண் வஸ்து பரிச சேததததி னபாவங காண்பிககபபட்டது; இபபோது தேசகால பரிசசேதத்தி னபாவத்தை ஆன்மாவின்கண் காண்பிப்பாம் :—கோததன்மைச சாதி கோவியத் தியின்கண்ணே இருப்பதுபோல ஆன்மா ஒரு தேசத்தின்கண் இருப்பதன்றாம்; மற்றோ சர்வ தேசத்தின்கண்ணு மிருக்கும். மழைமுதலியன சர்வகாலததின் கண் இராது; மற்றோ ஒருகாலத்திருககும. அதுபோ லான்மா ஒருகாலத்திருப்ப தன்றாம்; மற்றோ எல்லாக்காலத்தினு மிருக்கும். ஏனெனின், தேசகாலாதி லௌகிக ஆதாரங்களெலலாம பிரகாசவடிவ ஆன்மாவன்றிச சித்தியா; ஆகையி னால், ஆன்மா தேசகால வஸ்து பரிசசேதமற்றதாம்.

சங்கை :—ஆன்மாவின் சொரூபம் தேச கால வஸ்து பரிசசேத மற்றதாயின் பிரபஞசத்தின் றோற்றமேனுண்டாம்?

சமாதானம் :—தேசகாலமே முதலாய் உள்ள அநிர்வசநீய ஜகத்தியாவும் ஆன்மாவின்கண் அஞ்ஞானியானவனாற் கறபிக்கபபட்டுள. மத்தியான சூரிய னிடத்தில கூகையானது இரவின் கற்பனையைச செய்யும். உறங்காநின்ற புருஷ னுக்குக் கனவின்கண் நித்திரை தோஷத்தால் நாநாப்பிரகாரமாய ஜகத்துத் தோற்றாநிற்கும். அதுபோல ஆன்மாவின் அஞ்ஞானத்தால் சம்பூரண ஜகத்து நமக்குப பிரதீதியாகின்றது. சச்சிதாநந்த சொரூப ஆன்மாவின்கண் தேசகால வஸ்துபரிசசேதமின்றாம். இக்காரணத்தா லான்மா அநந்தமாம். சிருஷ்டியி

ஞதிகாலத்திற் சனகாதி இருஷிகள் இந்த ஆன்மாவை நம்பொருட் டுபதேசித்தார்; இப்போது வாமதேவரும் இந்த ஆன்மாவை நம்பொருட் டுபதேசித்தார். இந்த அத்விதீய ஆன்மாவையறிய இச்சித்து அதிகாரிகளாகிய நம்மெல்லோரின் சமாஜ மீண்டு சேர்ந்திருக்கின்றது. இந்த அத்விதீய ஆன்மாவை யறியும்பொருட்டு விசார ஆரம்பகாலத்தில் யாமிச சங்காதத்தின்கண் யாது ஆன்மாவெனக் கூறினேமோ, அதே அத்விதீய ஆன்மாவை யிப்போது யாம் அந்தக்கரண முதலியவற்றை விசாரித்து நிசசயஞ்செய்தோம்; இக்காரணத்தினாலே அதிகாரிகளாய யாமியாவருங் கிருதகிருத்தியர். யாம் ஆநந்தசொரூப ஆன்மாவை யந்தக்கரண விவேகததால நிசசயஞ்செய்துள்ளோம். ஆகையினால அந்தக்கரணத்தின் வாசகங்களாகிய இருதயாதி நாமங்கள் யாவற்றையும சுத்தாத்மாவின்கண் யாம் சமர்ப்பணஞ்செய்தோம். இருதயாதி நாமஙகள் யாவும் அந்தக்கரண விசிஷ்ட சேதனத்தின் வாசகங்களும அந்தக்கரண விருத்தி விசிஷ்ட சேதனததின் வாசகங்களுமாம. ஆண்டுப பாகத்தியாக இலககணையால அநதககரண பாகத்தையும் விர்த்திவடிவ ஜடபாகத்தையும தியாகஞ்செய்யின், சம்பூர்ண இருதயாதி பதங்கள் சுத்த ஆன்மாவை யுணர்த்துமென்பது கருத்தாம.

சங்கை:—மனவாக்கிற்கெட்டாத சுதத ஆன்மாவின்கண விசிஷ்ட சேதன வாசக இருதயாதி பதங்களைப பிரயோகஞ்செய்தல வியர்த்தமாம.

சமாதானம்:—சுத்த ஆன்மாவின்கண் இருதயாதி பதங்களின் பிரயோகஞ் செய்தல் வியர்த்தமன்றும், மற்றோ பயனுடைததாம; ஏனெனின், அதிகாரிகளாய யாம இருதயாதி பதஙகளைககொண்டு சுததாதமாவின் நிசசயஞ்செய்வது போலச சாவ அதிகாரிகளும இருதயாதி பதங்களைக்கொண்டு சுத்தாதமாவின் நிசசயஞ்செய்துவய்கவென அதிகாரிகளுக்கு குணர்த்தும்பொருட்டு இருதயாதி பதங்களைச சுதத ஆனமாவின்கண் யாம பிரயோகிததோம. ஆண்டுவுபாசனையினாலும் பஞ்சகோசங்களின் விசாரததினாலும இருதய தேசததின்கண் ஆன்மாவின் அபரோக்ஷ ஞானமுண்டாம. இக்காரணததா லான்மா இருதயமெனப்படும், இவ்வாநந்தரூப ஆன்மா சம்பூர்ண விசுவத்தைப பிரகாசிப்பிக்கும். இக்காரணத்தினாலே இவ்வான்மா மனமெனபபடும. அல்லது சர்வ முமுக்ஷுக்களும் மனத்தால ஆன்மநிசசயஞ் செய்கின்றனர். இககாரணததால் ஆன்மா மனமெனப்படும். தன்பாற் கற்பிதமாய சர்வப பிரபஞசததையும் இவ்வான்மா நன்றுயறியும. இக்காரணத்தால் ஆன்மா சம்ஞானம் எனபபடும். ஆன்மாவின் ஆஞ்ஞையால் சர்வ வாககாதி இந்திரியங்களும் அக்கினிமுதலிய சர்வ தேவதைகளும் நடைபெறும். இக்காரணத்தால் ஆநநதசொரூப ஆன்மா யாஜ்ஞானம் எனபபடும். இவ்வாநநதசொரூப ஆன்மா ஜடசேதனரூபப பிரபஞ்சத்தின் பேத விசார பூர்வகமாய்த் தனது சொரூபத்தையும பரமான்மாவையும் விசேடமாயறியுங் காரணத்தால் ஆன்மா விஞ்ஞானமெனபபடும். இவ்வாநந்தசொரூப ஆன்மா சர்வப பிரபஞ்சத்தையும் விளக்கிவைப்பதாய தனது சொரூபத்தை யுமென்ன எப்போதுமறிதலினால், ஆன்மா பிரஞ்ஞானமெனப்படும். இவ்வா

நந்தசொரூப ஆன்மா ஒருதரமறிந்த தனது சொரூபத்தையும் மற்றெவ்வான்ம வஸ்துவையும் மறப்பதில்லையாதலினால், ஆன்மா மேதையென்பபடும். இவ்வாநந்தசொரூப ஆன்மா சக்ஷுமுதலிய இந்திரியங்களால் எல்லா வஸ்துக்களையுங் காண்டலின், ஆன்மா திருஷ்டியெனப்படும். தூண்முதலியன வீட்டினுட் பிரவேசித்து வீட்டைத் தாங்குவதுபோல இவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவும் எல்லாச சரீரங்களிலும் பிரவேசித்துத் தேகேந்திரியாதிகளைத் தரிக்குமாதலால், ஆன்மா திருதியெனப்படும்; அல்லது காட்டத்தாலும் மண்ணாலும் செய்யப்பட்ட சேதுவானது க்ஷேத்திராதிகளின் மரியாதையைத் தரிப்பதுபோல இவ்வாநந்தவடிவ ஆன்மாவும் வர்ண ஆஸ்ரமங்களின் மரியாதையையும், அவற்றின் தாம மரியாதையையும் தரிப்பதால், இவ்வான்மா திருதியெனப்படும். காஷ்ட முதலியவற்றின் பாத்திர விசேஷமாய *பிரஸ்தமானது †யவைமுதலிய அன்னபரிமாணத்தை நிச்சயஞ் செய்விப்பதுபோலும், இரஜ்ஜு அவச்சின்னசேதனம் தன்பாற் கற்பிதமாய சர்ப்ப தண்டாதிகளின் பரிமாணத்தைத் தெரிவிப்பதுபோலும், இவ்வாநந்தவடிவ ஆன்மாவும் சம்பூரண விசுவத்தின் பரிமாணத்தை நிச்சயஞ் செய்வதால், ஆன்மா மதியெனப்படும்; அல்லது சர்வப் பிராணிகளுள்ளேயிராநின்ற இவ்வான்மாவானது சர்வப் பிராணிகளினிதத்தையும் அஹிதத்தையும் நன்றாய் நிச்சயிப்பதால், ஆன்மா மதியெனப்படும். இவ்வாநந்தவடிவ ஆன்மா இவ்வஸ்து எனக்குக் கிடைக்கவேண்டுமென்றும் இவ்வஸ்து எனக்குக் கிடைக்கவேண்டாமென்றும் திரியாநின்ற மனத்தைத் தடைப்படுத்தச் சமாத்தமாதலின், ஆன்மா மனீஷா எனப்படும். இவ்வாநந்தசொரூப ஆன்மா, தேகம், இந்திரியம், அந்தக்கரணம், அஞ்ஞானம் முதலியவற்றைப் பிரகாசிப்பித்தலின், ஆன்மா ஜோதியெனப்படும்; அல்லது அத்தியான்மதுக்கம், அதிதைவதுக்கம், அதிபூததுக்கம் என்னும் மூவகைத் துக்கங்களையும் விஷயஞ்செய்வதாய அந்தக்கரண விருத்திகளை யான்மா பிரகாசம் செய்தலின், ஆன்மா ஜோதியெனப்படும்; அல்லது ஆன்மாவின் பிரகாசத்தாற் சம்பூரண ஜகத்தும் தத்தம காரியத்தைச் சித்தி செய்தலால், ஆன்மா ஜோதியெனப்படும். தாய் தன் மைந்தனை நினைப்பதுபோல இவ்வாநந்தசொரூப ஆன்மாவும் என்னாலன்றி யிவ்வெல்லா வுலகும் எங்ஙனஞ் சித்திக்குமென ஸ்மரணஞ்செய்தலின், ஆன்மா ஸ்மிருதி யெனப்படும். இவ்வாநந்தசொரூப ஆன்மா நனுக் கனுத துயில என்னும் மூன்றவத்தைகளையும் நன்றாகக் கற்பனை செய்யுமாதலின், ஆன்மா சங்கற்ப மெனப்படும். இவ்வாநந்தசொரூப ஆன்மாவின் இச்சையா லிவ்வெல்லா வுலகும் உண்டாமாதலின், ஆன்மா கிரதுவெனப்படும்; அல்லது ஆநந்தவடிவ ஆன்மாவின் பிரபஞ்சத்தை விஷயஞ் செய்வதாய மாயாவிருத்தி வடிவ ஞானத்தா லிவ்வெல்லா வுலகும் உற்பன்னமாமாதலின், ஆன்மா கிரதுவெனப்படும். இவ்வாநந்தசொரூப ஆன்மா தனது சமீபத்தன்மையால் பிராணன்களைத் தத்தம் வியாபாரத்தின்கண் பிரவிர்த்திப்பிக்குமாதலின், ஆன்மா அசுவெனப்படும். இவ்வாநந்தவடிவ ஆன்மா சுகப்பிராப்தியி னிச்சையையும், துக்க நிவிர்த்தியி னிச்சையையும் பிரகாசஞ் செய்தலின், ஆன்மா காமமெனப்படும். பிரஜையி னுற்

* பிரஸ்தம்=இரண்டு சேர் அளவைகொண்ட ஓர் படி. † யவை=ஓர்வித தான்னியம்.

பத்தியின் காரணமாய தனது ஸ்திரீ சங்கம இச்சையை இவ்வாநந்த வடிவ ஆன்மா பிரகாசஞ் செய்யுமாதலின், ஆன்மா வசமெனப்படும். இவ்வண்ணம் இருதயதேயத்தின்கண் இராநின்ற அந்தக்கரணம் அதனது விர்த்திகளினது வாசகங்களே சம்பூர்ண இருதயாதி சப்தங்களாம். அவ்வந்தக்கரணத்தின்கண் அதிகாரிகளாய யாம் ஆநந்தவடிவ ஆன்மாவை அறிந்தோமாதலின், விர்த்திசகித அந்தக்கரணத்திற்குள்ள இருதயாதி நாமங்கள் யாவற்றையும் ஆநந்தசொரூப ஆன்மாவிற்கு யாங்கூறினேம். அந்தக்கரணத்தின் இருதயாதி நாமங்கள் பரமான்மாவின்கண்ணே சம்பவிக்கவும் செய்கின்றன, ஏனெனின், பரமான்மாவின் வேறாய் யாதொரு பதார்த்தமுமின்றாம். வாஸ்தவமாய் ஆராயின் கடபடாதி நாமங்கள் யாவும் பரமான்மாவையே புணர்த்தும்; ஏனெனின், பரமான்மாவின் வேறு யெவ்வஸ்துவுமின்றாம். எவ்வஸ்துவைக் கடபடாதி நாமமுணர்த்துமோ. அவ்விஷயத்தை வார்த்திககிரந்த கர்த்தாவாய ஸ்ரீ சுரேச்வர ஆசார்ய சுவாமிகளும் கூறியிருக்கின்றனர் :—

> ஸ்வதோऽநவகதோ யோऽர்த்த: விஷயோऽஜ்ஞாத லக்ஷண: ।
> ப்ரத்யக்ஷாதீநாம் ஸ தத்வமேவ யத்ப்ரோக்தம் ப்ரமாணதா ॥

> " அரிய சோப்பிர காசவஞ் ஞாதமா மறிவே
> யுரிய காட்சிமுன் னளவைகட் குறும்விட யம்தாந்
> தரிய ரிவினிற் காட்சிமுன் னளவைக டமக்கோ
> பெரிய சட்பிர மாணநற் பெற்றியே பிறங்கும்." (10)

இதன்பொருள் :—சுவப்பிரகாசமும் அஞ்ஞாதமும் ஆயசேதனம் யாதோ அதுவே பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களின் விஷயமாம், அசேதனத்தின்கண்ணே பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்கட்குப் பிரமாணத்தன்மையாம். கருத்திதுவாம் :—அஞ்ஞாத (அறியாத) அர்த்தத்தை யாது போதிப்பதாமோ அது பிரமாணமெனப் படும். அஞ்ஞானத்திற்கு யாதாசிரயமாமோ அஞ்ஞானத்திற்கு யாதுவிஷயமாமோ அது அஞ்ஞாதமாம். அஞ்ஞானத்திற்கு ஆசிரயமும் விஷயமும் சேதனமாம். சேதனத்தின் வேறாய ஜடவஸ்து அஞ்ஞானத்திற்கு ஆசிரயமும் விஷயமுமாகாது, ஆகையினாலே ஆன்மாவைப் போதிப்பதினாலேயே சம்பூர்ணப் பிரமாணங்களினிடத்திற் பிரமாணத்தன்மை சித்திக்கும். இவ்வாநந்தசொரூப ஆன்மாவே சுத்தப்பிரஹ்மமாம். ஜகத்தின் காரணமாய மாயாவிசிஷ்ட ஈச்வரனும் இவ்வாநந்தசொரூப ஆன்மாவேயாம். சமஷ்டி சூக்குமசரீர அபிமானியாய இரணிய காப்பனும் இவ்வாநந்தவடிவ ஆன்மாவேயாம். சமஷ்டி ஸ்தூலசரீர அபிமானியாய விராட்பகவானும் இவ்வாநந்தசொரூப ஆன்மாவேயாம். விராட்பகவானுடைய சரீரத்தின்கண்ணும் சர்வப்பிராணிகளாய நம்மனோரது சரீரத்தின்கண்ணும் போக்தாவாயும், மூவுலகத்தையுந் தாங்குபவராயும், சர்வத்தையும் பிரகாசிப்பவராயும் உள்ளபரமான்மாவாய இந்திரனும் இவ்வாநந்தசொரூப ஆன்மாவே

யாம், அல்லது பிரசித்தமாய தேவதைகளின் அரசனான இந்திரனும் இவ்வாநந்த சொரூப ஆன்மாவேயாம் மரீசியேமுதலாய பிரஜாபதிகளும் ஆநந்தசொரூப ஆன்மாவேயாம். சரீரத்தை யாசிரயித்துள்ள வாககாதி இந்திரியங்களும், அக்கினி முதலாய அவற்றின் தேவதைகளும், ஆநநதசொரூப ஆன்மாவேயாம். ஆன்மாவின் வேறாய்ச சிறிது மாத்திரமுமின்றாம. கனவின்கண்ணே வேறு வேறாய்க் கற்பிககபபட்ட பிரமாதாக்கள் யாவரும் யாமேயாம்; நமமிற் பின்னமாய்க் கனவின் கண் எபபிரமாதாவுமின்றாம. இவ்வளவு கூறியதால ஆன்மாவின்கண் சஜாதீய பேதத்தைக்கண்டித்ததாம். இபபோது விஜாதீய பேதததைக் கண்டிபபாம்:— பிருதிவி, ஜலம், தேயு, வாயு, ஆகாசம என்னும பஞ்சபூதம ஆநநதவடிவ ஆன்மாவாய நம்மிற்பின்னமன்றாம். அண்டஜம், ஜராயுஜம், சுவேதஜம, உற்பிஜ்ஜம் என்னும மிநநான்கு பிரகாரமாய பூதமானவை ஸ்தாவர ஜங்கம ரூபத்தாலும், காரிய காரண ரூபத்தாலும இருவகையாம். அவ்வியாவும ஆநநதசொரூப ஆன்மாவின் வேறன்றாம். அககினியின் வேறாயுஷ்ணததன்மையும் பிரகாசமுமில்லாமைபோல, ஆநந்தசொரூப ஆன்மாவின் வேறாய்த தூலசூககும ரூபபபிரபஞசமில்லையாம். ஜலத்தின் வேறாய்ச சீதளத்தன்மையும் நெகிழ்சசித்தன்மையு மில்லாமைபோல, ஆநநத சொரூப ஆன்மாவின் வேறாய்ப பிரபஞசமின்றாம், பிருதிவியின் வேறாய்க் கடினத் தன்மையும் கநதமுமில்லாமைபோல, ஆநநதசொரூப ஆன்மாவின் வேறாய்த தூல சூக்குமப பிரபஞசமில்லையாம. வாயுவின் வேறாய்க் கிரியையும ஸ்பரிசமும இல்லாமைபோல, ஆநநதசொரூப ஆன்மாவின் வேறாய்ப பிரபஞசமில்லையாம். ஆகாசததினின்று மவகாசமும சபதமும பின்னமனறாவதுபோல, ஆநநதசொரூப ஆன்மாவினின்றும் ஜகத்துப பின்னமன்றாம். தோஷமறற சூரியபபிரகாசத்தின் கண் இருட்டினபாவமிருபபினும கூகைமுதலாயின சூரியனிடத்தேயிருட்டைக கறபிககுமாறுபோல, சகததின்றிய ஆநநதசொரூப ஆன்மாவின்கண் அஞ்ஞானிகள் ஜகத்தைக கறபிபபாாகள். அமூர்தத ஆகாசததின்கண் மேகமுதலிய மூர்ததப பதார்த்தங்களிருபபதுபோல, ஆநநதசொரூப ஆன்மாவின்கண் இசசமபூரண ஜடஜகததிருககும. நாநாபபிரகாரமாய மேகாதிகள் ஆகாசத்தின்கண் ஒவ்வொரு கால் பிரதீதியாகுமேயன்றி யெபபோதும பிரதீதியாகா; அதுபோல ஆநநத சொரூப ஆன்மாவின்கண் இவ்வெலலாவுலகும் ஒவ்வொருகால் பிரதீதியாகுமேயன்றி யெபபோதும் பிரதீதியாகா. மாயாவிகளாய இராக்ஷசருடைய பாலகாபாதொரு பயனுமின்றிமாயையாற் பதாாததஙகளைச செய்வதுபோல, இவ்வாநநத சொரூப ஆன்மாபிரயோஜனமின்றியே ஜகத்தைச சிருஷ்டிக்கும. கள்ளைக்குடித்தலாற்கண்டெரியாத புருஷன் மறைபபின்றிய தேசத்தின்கண்ணும் சுவர் முதலிய மறைபபைக் காண்பன். அதுபோல, இவ்வாநந்த சொரூப ஆன்மா அசத்தாய ஜகததைக் காணும். ஒவ்வொரு புருஷன் தனது சித்ததோஷத்தால் தோஷமின்றிய தனது தந்தையர் சிறியர் முதலியோரிடத்தில் தோஷததைக் காண்பதுபோல, இவ்வாநந்த சொரூப ஆன்மாபபிரபஞ்சரூப தோஷமின்றிய தனது சொரூபத்தின்கண் பிரபஞசத்தைககாணும. உறங்காநின்ற புருஷன் கனவின்கண் தனது ஒருமையைக் காணாது நாநாரூபமாய்த் தன்னைக் காண்பதுபோல, இவ்வாநந்தரூப ஆன்மா நனைக்கனத்துயில்வடிவ மூன்று கனைக்களையும் காண்பவனாய்த் தனது

ஒருமையைக் காணுன். *நலிகையானது சுற்றின் நலிகையின்மேல் இராநின்ற கிளியானது நலிகையினுல் கட்டுப்படாவிடினும் தான் கட்டுப்பட்டிருப்பதாக எண்ணிச் சுழலும். அதுபோல இச்சீவான்மா நித்தியமுக்த ஆநந்தசொரூப ஆன்மாவின் அஞ்ஞானத்தால் சமசாரரூப சூலத்தின்கண் சுழலும். கந்தத்தின் ஆசையால வண்டானது கமலத்தை விடாததாய் இரவுவரவும் கமலம் சுருங்கியவுடன் அக்கமலத்தினுள்ளே அகப்பட்டுக்கொண்டு அத்தியந்தம துன்பத்தை யடையும். இரவானது கழிந்து விடியற்காலமானவுடனே யான் வெளியில ஓடிவிடுவன என இவ்வண்ணம் விசாரம் செய்துகொண்டிருக்கும்போதே யானை அக்கமலத்தைத் தின்றுபோய்விடும்; அதுபோல இச்சீவான்மா ஸ்திரீமுதலிய விஷயங்களில் ஆசக்தியையடைந்து அநந்தம பிரகாரமாய துன்பத்தை யடையும். ஒரு தனிகனுன வன் மயலால் தனது தனிகத்தன்மையை மறந்து உலகின்கண் துக்கஹேதுவாய தரித்திரத்தன்மையை அடைவதுபோல, இவ்வான்மா ஆநந்தசமுத்திரமாய தனது சொரூபத்தை மறந்து துச்சவிஷய சுகப்பிராப்தியின்பொருட்டு அத்தியந்தம தீனதசையை யடையும். சாவகுண சமபன்னனுய ஒரு புருஷன் ஒரு வியபிசார ஸ்திரீயால மோகிதனுய்த் தீனதன்மையை யடைவதுபோல, இவ்வாநந்தவடிவ ஆன்மா மாயையால மோகிதனுய் நானுபிரகாரமாய தீனத்தன்மையை யடைவன். மூவுலகத்திற்கும இறைவனுய இந்திரன் சர்வ தேவதைகட்கும் அதிபதியாதலின்; காமதேவதையை வசஞ்செய்வதற்குஞ சாமாத்தியமுடையவனுவன். அங்ஙன மேனும் காமினியை வசஞ்செய்யச் சமாத்தனுகான்; மற்றே காமனுற காமினியின் அதீனமாவன். அதுபோல, மாயையே முதலாய எவற்றிற்கும அதிஷ்டான மாய ஆன்மா மாயையை வசஞ்செய்யச் சமாத்தமற்றதாம். பிரியமாய புத்திராதிகள் செய்த நிராதரத்தின்கண், பிதா தோஷத்தைப் பாராததுபோல, இவவாநந்தரூப ஆன்மா மாயையின் தோஷத்தைப் பாராது. கலைமானனது தனது கொமபின் பாரத்தை மகிழ்வோடு தாங்குவதுபோல, இவ்வான்மா தனது சொரூப அஞ்ஞானத்தால் மாயையின் பாரத்தைத் தாங்கும். துஷ்டபுருஷ சங்கத்தாற் சாதுபுருஷன் தோஷமடைவதுபோல, இவ்வாநந்தசொரூப ஆன்மா மாயையின் சங்கத்தால தோஷத்தை யடையும். துஷ்டபுருஷனது திருஷ்டியால், தோஷமற்றவனிடத்தும தோஷந் தோற்றுவதுபோல, அஞ்ஞானியின் திருஷ்டியால ஆன்மாவின்கண் அநந்த தோஷத்தோடுகூடியது சமசாரமாம். தனது பிரஜையின்கண் இராநின்ற துக்கத்தை அரசன் தன்பால அங்கீகரிப்பதுபோல, ஜட அந்தக்கரணத்தின்கண் இராநின்ற துக்கத்தைத் தாதாதமிய அத்தியாசத்தால் ஆன்மா தன்பா லங்கீகரிக்கும். காரண சாமக்கிரியின்றிய ஒரு சொப்பன புருஷனிடத்தே திடீரெனச் சம்பூரண ஜகம உற்பன்னமாவதுபோல, ஆநந்தசொரூப ஆன்மாவின்கண் திடீரெனத் தூலசூக்குமப் பிரபஞ்சம் உற்பன்னமாம். கனுவின் கண் இப்புருஷன் பிரயோஜனமின்றித் தனக்குத்தானே துன்பத்தை யடைவிக்

* நலிகையென்பது கயிற்றால் மத்தியிற் குறுக்கிட்டிருப்பது கிளியைக்கட்டும் நூதனமெனப் பிரசித்தம்.

கின்றனன். அதுபோல, இவ்வாநந்தசொரூப ஆன்மா நனவின்கண் வியர்த்தமாகவே தனக்குத் துக்கத்தை யடைவிக்கின்றது. கனவினின்றும் விழித்த புருஷனுக்குக கனவின் துக்கம நாசமாம். எனக்கு முன்னர் துக்கமுண்டாகவில்லை, இப்போதும் எனக்குத் துக்கமில்லையாம்; இனி மேலும் எனக்குத் துக்கமுண்டாகமாட்டாது. இவ்வண்ணம் மூன்று காலத்திலும் கனவின் துக்காபாவ நிச்சயமுண்டாவதுபோல, நனைகனுத் துயில்வடிவ சமசார சொப்பனத்தினின்றும் ஆத்ம சாக்ஷாத்காரவடிவ விழிப்பையடைநத இவ்வானநதசொரூப ஆன்மாவிற்குச சாவ துக்கங்களின் நாசமுண்டாம. அந்த ஞானவஸ்தையின்கண், ஆன்மா, எனக்கு முன்னருந துன்பமின்றும், இப்போதும எனச்குத் துன்பமின்றும, இனிமேலு மெனக்குத் துன்பமுண்டாகாது என உணரும். இவ்வண்ண முக்காலத்திலும் தனது சொரூபத்தின்கண் அறிஞன் துக்கத்தை யுடன்படான்; மற்றோ துக்கத்தை யநதககரணுதிகளின் தர்மமா யுணர்வன். நனைகனுத் துயில்வடிவ சம்சார சொப்பனத்தினின்றும் பிரஹ்ம சாக்ஷாத்காரரூப ஜாக்கிரமானது அதிகாரிகளாய நமமெல்லோருக்கும அடைவுற்றிருக்கிறது. இக்காரணத்தால் நாம் மகா புண்ணியவான்களாம். முன்னா நாம் அநதக்கரணவாசகங்களாய, எநத இருதயாதி நாமங்களை அத்விதீய ஆன்மாவின்கண்ணே கூறினேமோ, அநத நாமங்கள் எல்லாவறறினும சிறநத பிரஞ்ஞையென்னும நாமமே அத்தியந்தம் அழகுடையதாம. ஏனெனின், பிரஞ்ஞையென்னும் நாமததின்கண், "பிர," என்றும், "ஞை" என்றும் இருசபதங்களுள. அவறறுள், சஜாதீய பேதம், விஜாதீயபேதம, சுவகதபேதம் என்னும் முபபேதங்களில்லாமை "பிர" சப்தத்தின் பொருளாம்; "ஞை" சபததிறகுப பிரகாசம் பொருளாம். அவ்விரு சபதங்களின் பொருளும ஆநநதசொரூப ஆன்மாவின்கண்ணேயே பொருநதும். ஆன்மாவின் வேறாய அனான்மாவின்கண்ணே பொருநதாது.

ஈண்டிது கருததாம:—சமான ஜாதியையுடைய பதாாததங்களின் பரஸ்பர பேதம சஜாதீயபேத மெனபபடும். ஒரு பிராஹ்மணனுக்கு மறறொரு பிராஹ்மணனினின்றும் பேதம்போல. ஆண்டுப் பிராஹ்மணத்தன்மைச சாதி இருபாலும் சமானமாம். இச்சஜாதீய பேதமும் ஆன்மாவின்கண் இன்றாம. ஏனெனின், ஆன்மாவிறகுச சமானமான ஜாதியையுடைய வேறொரு ஆன்மாவின்றாம். விருத்த ஜாதியையுடைய பதார்த்தங்களின் பரஸ்பரபேதம் விஜாதீய பேதமெனப்படும. பிராஹ்மணனுக்கு க்ஷத்திரியனின்றும் பேதமாவதுபோல. ஆண்டுப் பிராஹ்மணத்தன்மை, க்ஷத்திரியததன்மை யென்னும் இருஜாதியும ஒரு நிலைக்களத்தின் கண்ணேயிராது; ஆகையினுல், பரஸ்பரம் விருத்தமாம். இவ்விஜாதீய பேதமும் ஆன்மாவின்கண் இலலையாம். ஏனெனின், ஆன்மாவின் வேறொரு வஸ்துவுமில்லை; அனான்ம ஜகத்தானது ஆன்மாவினின்றும் விஜாதீயமெனினும், கற்பிதப் பிரபஞ்சத்தால் ஆன்மாவின்கண் விஜாதீயபேதம சித்தியா. சமான சத்தையையுடைய பதார்த்தமே பேத சம்பாதகமாம். தன்பா லிராநின்ற பேதம் சுவகத பேதமெனபபடும. ஒரே சரீரத்தின்கண் கை கால் முதலியவற்றின் பரஸ்பரபேதம உண்டு. இச்சுவகதபேதமும் ஆநந்தசொரூப ஆன்மாவின்

கண் இன்றும்; ஏனெனின், சுவகதபேதமானது சாவயவ (அவயவங்களோடுகூடிய) பதார்த்தங்களிலுண்டாம. ஆன்மாவோநிரவயவமாம். இவ்வண்ணம் முப்பேத மற்ற பிரகாசசொரூப ஆன்மாவைப் பிரஞ்ஞான நாமத்தால் முன்னர் யாம் கூறினோம். பிரஞ்ஞையென்னும் சபதத்திற்கும், பிரஞ்ஞான சப்தத்திற்கும பொருளொன்றேயாம். அந்தப பிரஞ்ஞான சப்தத்தின் பொருள் ஆநந்தசொரூபமாகிய ஆன்மாவே, பிரஹ்மா முதலாய்த் தாவரம் ஈறாயுள்ள சர்வ சரீரத்தின்கண்ணும் வியாபகமாம. காஷ்ட முழுவதிலும் தீயிருப்பதுபோல, ஆகாசாதி பஞ்சபூதங்கள், அவற்றின் காரியமாய தாவர ஜங்கமங்கள் முழுமையையும் பிரஞ்ஞைவடிவ நேத்திரமே விவகரிக்கசசெய்வதாம்; நம்மனோரை மாமிசமய நேத்திரமானது விவகரிக்கச் செய்வதுபோலும.

ஈண்டிவ்வளவு பேதமுளது:—மாமிசமாய நேத்திரமோ கேவலம நிமித்தகாரணமாய் விவகரிககசசெய்யும. இநதபபிரஞ்ஞை ரூபநேத்திரமோ உபாதானகாரணமாய்ப பிரபஞ்சத்தை விவகரிக்கசசெய்யும். ஏனெனின், எல்லாவுலகிறகும் ஆன்மாவினின்று முறபத்தியையும, ஆன்மாவின்கண்ணே ஸ்திதியையும், ஆன்மாவின் கண்ணே இலயத்தையும சுருதியானது கூறியுள்ளது. அந்த உறபத்தி ஸ்திதி இலயத்தின் காரணத்தன்மை உபாதான காரணத்தின்கண்ணேயாம். கடத்தினுற்பத்தி ஸ்திதி இலயம மண்ணின் கண்ணேயாதலின் மண் கடத்திற்கு உபாதான காரணமாவதுபோல. அல்லது, மூவுலகிலுமுள்ள சூரியன், சந்திரன், அக்கினிமுதலிய பிரகாசங்களும பிரஞ்ஞைவடிவ நேத்திரத்தினும வேறன்றும்; மற்றே பிரஞ்ஞைவடிவமாம. பிரஞ்ஞைவடிவ சைதன்யமின்றிச சூரியாதிகட்கும் சித்தியுண்டாவது இன்றும. இவ்வார்த்தை சம்பூர்ணப பிராணிகட்கும் அனுபவ சித்தமாம். ஏனெனின், சமபூரணப் பிராணிமாத்திரமும எக்காலததின்கண் எத்தேசததின்கண் சிறிது சிறிது வஸ்துவை அறிகின்றனவோ, அவ்வியாவும பிரஞ்ஞைவடிவ நேத்திரததால அறியபபடுவனவாம. பிரஞ்ஞையாகிய நேததிரததாலன்றி எவ்வஸ்துவின் ஞானமும் உண்டாகமாட்டாது.

இபபோது சைதன்யரூபப பிரஞ்ஞையின் யாண்டும உளள வியாபகத்தன்மையை யறிவிக்குமபொருட்டு; முதலில் தருமுதலிய தாவர பதார்ததங்களில் பிரஞ்ஞை யிருத்தலைக் காண்பிபபாம்.—நமமனோகட்கு அன்னமுதலிய பதார்த்தங்கள் கிடைத்தலால சுகத்தின் ஞானமுண்டாகின்றது; அநத சுகஞானத்தால் சரீர விர்த்தியுண்டாகின்றது; பாணங்களின் அடிபடலால் துக்க ஞானமுண்டாகின்றது; அநதத் துக்க ஞானத்தால் சரீரத்தின் க்ஷயமுண்டாகின்றது; அதுபோல விருக்ஷாதிகட்குஞ், சலநதெளித்தலால விர்த்தியுண்டாதல் கண்டோம். வேர் முதலியவறறை வெட்டுதலானும், அததியநதம உஷ்ணத்தானும், அத்தியநதஞ் சீதத்தானும் விருக்ஷாதிகளின் க்ஷயமுண்டாதல் கண்டோம. அநத விருத்தியும் க்ஷயமும் சுகதுக்க ஞானத்தாலன்றி உண்டாகமாட்டாது. ஆகையினுல், விருத்திரூப ஹேதுவால விருக்ஷாதிகளின் சுகஞானம் அனுமானமாம். க்ஷயரூபஹேதுவால துக்கஞானம் அனுமானமாம். இநதப பிரகாரம் தாவரங்களி

டத்தே சைதன்யரூபப் பிரஞ்ஞை தொடர்ந்திருக்கின்றது. பசும்புல்லோடுகூடிய கையைப் பார்த்துக் கிராமத்திலேனும் வனத்திலேனும் இராநின்ற பசுவிற்குப் பிரவிர்த்தியுண்டாகின்றது. தண்டாதிகளோடுகூடிய கையைக் கண்டு நிவிர்த்தியையடையும். அந்தப் பிரவிர்த்தி சுகசாதன ஞானமின்றிச் சித்தியாது. மற்றோ, இவ்வஸ்து எனது சுகசாதனம் என்னும் ஞானத்தால் பிரவிர்த்தியுண்டாம். அந்நிவிர்த்தியானது துக்கசாதன ஞானமின்றிச் சித்தியாது. மற்றோ, இவ்வஸ்து எனது துக்கசாதனமென்னும் ஞானத்தால் நிவிர்த்தியுண்டாம். இந்த ரீதியானது நம்மனோரது பிரவிர்த்தியின் கண்ணும் நிவிர்த்தியின் கண்ணும் பிரசித்தமாம். ஆகையினால், பிரவிர்த்திரூப ஹேதுவினால் பசுவாதிகளிடத்தில் சுகசாதனத்தன்மையின் ஞானம் அனுமானமாம். நிவிர்த்திரூப ஹேதுவினால் துக்கசாதனத்தன்மையின் ஞானம் அனுமானமாம். இந்தப்பிரகாரம் எறும்புமுதலாய் மனுஷன்வரை எவ்வளவு ஜங்கமங்களுளவோ அவையாவற்றிற்கும் அநுகூல வஸ்துவின்கண் பிரவிர்த்திவியவகாரமும், பிரதிகூல வஸ்துவின்கண் நிவிர்த்திரூப வியவகாரமும் சமானமாம். ஆகையினால், சம்பூர்ண ஜங்கமங்கள் சுகதுக்க ஞானவான்களாம். வசிட்டாதி முனிவர்க்கும் பிரஹ்மா முதலிய தேவர்கட்கும் சுகதுக்கஞானம் சாஸ்திரப் பிரமாணத்தாலறியப்பெறும். அல்லது சேதனத்தன்மையாகிய ஹேதுவினால் வசிட்டாதிகட்குச் சுகதுக்க ஞானம் அனுமானமாம். யாதியாது சேதனமாமோ அது சுகதுக்க ஞானமுடையதாம், நம்மனோரைப்போல. அந்தச் சேதனத்தன்மை வசிஷ்டாதி முனிகளிடத்தேயும், தேவதைகளிடத்தேயும் இருக்கின்றது. ஆகையினால் அவர்களும் சுகதுக்க ஞானவான்களாம். இவ்வண்ணம், சர்வப்பிராணி மாத்திரத்தினும் இராநின்ற சுகதுக்கானுபவத்தையே பிரஞ்ஞையென்னும் சப்தத்தாற் கூறியதாகும். சுகத்தின்கண்ணும் துக்கத்தின்கண்ணும் யாதொரு கிரியையுமின்றாம். மற்றோ, எதுவரை சுகதுக்கமாகிய பலம் உண்டாகவில்லையோ அதுவரையே சம்பூர்ணகாரககிரியையைச்செய்வர்; சுகதுக்க ரூபபலமுண்டானபின்னர் கிரியையைச்செய்யார். திருப்தியாகிய பயன் உண்டாகாத பரியந்தம் கர்த்தா முதலிய காரகங்கள் போஜனமாகிய கிரியையைச்செய்யும்; திருப்தி ரூப பயனுற்பன்னமாய்விடின் இராநின்ற காரகங்களும் போஜனரூபக்கிரியையைச் செய்யமாட்டாது. சுகதுக்கங்களாய பலன்களைப் போகிப்பவர்களாய நமக்குப் பிரஞ்ஞையாகிய நேத்திரத்தாலன்றிச் சுகதுக்க முற்பன்னமாகாது. பிரஞ்ஞையாகிய நேத்திரத்தாலன்றிச் சுகதுக்கத்தின் ஸ்திதியுஞ் சம்பவியாது. ஏனெனின், பிரஞ்ஞாரூப நேத்திரத்தினின்றும் சுகதுக்கம் பின்னமாயின் முயற்கோடுபோல அசத்தாம். ஆகையினால், பிரஞ்ஞைவடிவ நேத்திரத்தினின்றும் சுகதுக்கம் பின்னமன்றாம்; மற்றோ அபின்னமாம். நம்மனோரது சுகதுக்கம் பிரஞ்ஞைவடிவமாவதுபோல சாவதேகதாரி ஜீவர்களின் சுகதுக்கமும் பிரஞ்ஞைவடிவமாம்; பிரஞ்ஞையினின்றும் வேறன்றாம். சாவதேகதாரி ஜீவர்களின் சுகதுக்கம் பிரஞ்ஞைவடிவமாம், பிரஞ்ஞையினின்றும் பின்னமாயின் முயற்கோடுபோல அசத்தாம். அதுபோல காரியகாரணப் பிரபஞ்சமியாவும் பிரஞ்ஞைவடிவமாம். ஏனெனின், அந்தப் பிரஞ்ஞைவடிவ நேத்திரமிருந்தே பிரபஞ்சத்தின் விளக்கமாம். கயிறிருந்தே சர்ப்பம் தோற்றவேண்டும், கயிற்றினின்றும் பிரிவுபட்ட சர்ப்பம் முயற்கோடுபோல

அசத்தாம். அதுபோல, பிரஞ்ஞையினின்றும் பிரிபட்ட சுகதுக்காதிப் பிரபஞ்சம் அசத்தாம்.

சங்கை :—எல்லாப் பொருள்களையும் விளக்குவது புத்தியாதலின் புத்தியே பிரஞ்ஞையாம்.

சமாதானம் :—சுகதுக்காதிகப் பிரபஞ்சம் ஜடமாமாதலின், தனது சித்தியின்கண் பிரஞ்ஞைவடிவப் பிரகாசத்தை யபேக்ஷிப்பதுபோல, புத்தியும் ஜடமாமாதலின் தனது சித்தியிற் சைதன்யமாகிய பிரஞ்ஞையை யபேக்ஷிக்கும். பஞ்சபூதங்களின் சத்துவ குணகாரியமாய புத்தியின்கண் சேதனத்தின் பிரதிபிம்பத்தைக் கவரும் யோக்யதை யுளதாதலின் பிரஞ்ஞை சப்தம் கௌணமாம்; சூரியப் பிரகாசத்தின்கண் பிரகாச சப்தம் கௌணமாவதுபோல, சர்வப் பிரகாசங்களையும் பிரகாசிப்பதாய பேதமின்றிய ஆநந்தசொரூப ஆன்மாவின்கண்ணே பிரஞ்ஞை சப்தம் முக்கியமாம். மாயாசக்தி பூதபௌதிக சகலப் பிரபஞ்சத்திற்கும், ஸ்வப் பிரகாச சேதனத்தாலேயே பிரகாசமாம். இக்காரணத்தினாலே, சுருதி சர்வப் பிரபஞ்சத்தைத் தாங்குவது பிரஞ்ஞை நேத்திரமெனக் கூறியது. அந்தப் பிரஞ்ஞையே சர்வப் பிரஞ்ஞஸ்திதியின் ஆதாரமாம். ஏனெனின், பிரஞ்ஞை பிரபஞ்சத்தின் உபாதான காரணமாம்; உபாதான காரணத்தின்கண்ணே காரியத்தின் ஸ்திதி உலகின்கண்ணே கண்டோம்; மண்ணாகிய உபாதான காரணத்தின்கண்ணேயே கடத்தின் ஸ்திதியாவதுபோல. இவ்வெல்லா வுலகும் தமதுற்பத்தியின்முன் நாசத்தின்பின் வெளிப்படா. நாமரூபமாய்ப் பிரஞ்ஞையின்கண் இருக்கும் மத்தியகாலத்தில், வெளிப்பட்ட நாமரூபமாய்ப் பிரஞ்ஞையின்கண் இருக்கும். ஆகையினால் எல்லா வுலகும் பிரஞ்ஞைவடிவ உபாதான காரணத்தின்கண் இருக்கும்.

ஈண்டுது அபிப்பிராயமாம் :—பரிணாமி உபாதான காரணமென்றும், ஆரம்ப உபாதான காரணமென்றும், விவர்த்த உபாதான காரணமென்றும், உபாதானகாரணம் மூவிதமாம். அவற்றுள் சைதன்யரூபப் பிரஞ்ஞையானது பிரபஞ்சத்தின்பொருட்டுப் பரிணாமி யுபாதான காரணமாகாது; ஏனெனின், பிரஞ்ஞை நிரவயவமாம். சாவயவமாய பால் முதலியனவே தயிர் முதலிய பரிணாமத்தையடையும். அல்லது பரிணாமி யுபாதான காரணமானது காரியசமானசத்தை யுடையதாம். பாலின்கண்ணும் தயிரின்கண்ணும் வியாவகாரிக சத்தையேனும் பிராதிபாசிக சத்தையேனும் சமானமாம். அதுபோல, சைதன்யரூபப் பிரஞ்ஞைக்கும் பிரபஞ்சத்திற்கும் சமானசத்தை யின்றாம்; மற்றோ, விஷமசத்தையாம். சைதன்யத்தின்கண்ணோ பாரமார்த்திகசத்தையாம். பிரபஞ்சத்தின்கண்ணே வியாவகாரிக சத்தையாம், அல்லது பிராதிபாசிகசத்தையாம். ஆகையினால் பிரபஞ்சத்தின் பரிணாமி யுபாதான காரணம் பிரஞ்ஞையன்றாம். சைதன்யரூபப் பிரஞ்ஞை பிரபஞ்சத்திற்கு ஆரம்ப உபாதான காரணமும் அன்றாம். ஏனெனின், ஆரம்பம் மிகுந்த பதார்த்தங்களாலுண்டாவதாம்; ஒன்றாலாரம்பமாகாது. நையாயிகர் மதத்தில் அநந்தம் பரமாணு சேர்ந்து ஜகத்தினாரம்பமாம். பிரஞ்ஞையோ ஒன்றாம். ஆகையினால ஜகத்திற்கு ஆரம்ப உபாதான காரணமாகமாட்டாது. மற்றோ பிரபஞ்சத்தின் விவர்த்த

உபாதானகாரணம் பிரஞ்ஞையாம். தனது வாஸ்தவ சொரூபத்தை விடாமல் வேறுவிதமாய்ப் பிரதீதியாவது விவர்த்த உபாதானமெனப்படும்.

இப்பொருளைத் திருஷ்டாந்தத்தால் வெளிப்படுத்துவாம்:—விசுத்த ஆகாசத்தின்கண் கந்தர்வநகரமும் நீலத்தன்மையும் பிரதீதியாவதுபோலும், பாலகனுக்குத் தனது மனத்தின்கண் துக்கத்தைக் கொடுப்பவராய இராக்ஷசாதிகள் பிரதீதியாவதுபோலும் சைதன்யரூபப் பிரஞ்ஞையின்கண் சம்பூர்ண ஜகத்துத் தோற்றும். இக்காரணத்தினாலேயே வேதாந்த சாஸ்திரத்தை யறிந்துள்ள மகாத்மாக்கள் பிரஞ்ஞையைப் பிரஹ்மரூபமாகக் கூறுகின்றனர். ஏனெனின், "பிரஞ்ஞானம் ஆநந்தம் பிரஹ்மம்" இம்மகாவாக்கியத்தின்கண் பிரஞ்ஞானத்தைப் பிரஹ்ம சொரூபமெனக் கூறியிருக்கின்றது. பிரஞ்ஞானத்திற்கும் பிரஞ்ஞையென்பதற்கும் பொருள் ஒன்றேயாம். பிரஞ்ஞையின் வேறாய்த் தூல சூக்குமரூபப் பிரபஞ்சமின்றாம். ஆகையினால் பிரஞ்ஞைக்குப் பிரஹ்ம ஸ்வரூபத்தன்மை சம்பவிக்கும். ஜலஜந்துக்களாற் சம்பூர்ண பத்திரமானது நன்றாக வியாப்தமாவதுபோலச் சைதன்யவடிவப் பிரஞ்ஞையால் தேசகாலமே முதலாய்ச் சம்பூர்ணபாவ அபாவரூபப் பிரபஞ்சம் வியாப்தமாம். ஒரே ஆகாசமானது பாதாளம், பூமி, சுவர்க்கம் என்னும் மூவுலகங்களையும், அவற்றின் வெளிப்பிர தேசத்தையும் வியாபித்திருக்கின்றதேபோலச் சைதன்யரூபப் பிரஞ்ஞையானது சர்வ ஜகத்தையும் வியாபித்து நிற்கும். ஆகாசத்தின்கண்ணே கற்பிதமாய கந்தர்வ நகரம், மேகம், நீலத்தன்மை முதலிய யாவும் ஆகாசசொரூபமாம்; அதினின்றும் வேறன்றாம். அதுபோல, சைதன்ய சொரூபப் பிரஞ்ஞையின் கண் கற்பிதமாய ஜடசேதன ரூபப்பிரபஞ்சம் பிரஞ்ஞைவடிவமேயாம்; பிரஞ்ஞையைப் பார்க்கினும் வேறன்றாம். இவ்வண்ணம் விசாரித்துச் சம்பூர்ண அதிகாரிகள் விவேகவைராக்யம் முதலிய சாதனசம்பன்னர்களாய்ச் சீவப்பிரஹ்மங்களின் அபேதத்தை நிச்சயஞ்செய்தனர். அந்நிச்சயத்தால் சரீராதிகளின்கண் யானென்றுள்ள அபிமானத்தை விட்டொழித்தனர். மனைபுத்திரன் முதலியவற்றில் எனதென்றுள்ள அபிமானத்தையும் விட்டொழித்தனர். பிராரப்த கர்மத்திற்குப் போகத்தாலன்றி நிவிருத்தியுண்டாகாதாதலின் பிராரப்த கர்மத்தின் சமாப்தியின் பொருட்டு இச்சை, அநிச்சை, பர இச்சை வாயிலாய்ப் போகங்களை அனுபவித்தனர். ஜீவன்முக்தராய்ச் சர்வ அதிகாரிகளும் சஞ்சரித்தனரென்பது கருத்தாம். வாமதேவமுனிவர் பிராரப்தகர்மத்தைப் போகத்தாற் சமாப்திசெய்து விதேகமுத்தியை அடைந்ததுபோல, சம்பூர்ண அதிகாரிகள் போகத்தாற் பிராரப்த காமத்தின் சமாப்தியைச்செய்து ஆநந்தசொரூப ஆன்மா யானென அத்விதீய ஆன்மாவினனுபவத்தைச் செய்தவராய்ச் சுக சொரூபப் பிரஹ்மத்தின்கண் அபேதரூப விதேகமோக்ஷத்தை அடைந்தனர்.

ஸ்ரீ குருமூர்த்தி கூறல்:—ஹே சிஷ்ய! சனகாதி இருஷிகளுக்கும் வாமதேவாதி அதிகாரிப் பிரஜைகளுக்கும் பரஸ்பரம் சம்வாதரூப இதிகாசத்தை இதரரின் புத்திரரான இருஷிகள் தமது சீடரின்பொருட்டு வேதவசனங்களாற் கூறினர்; இக்காரணத்தால் இவ்வுபநிஷத்திற்கு ஐதரேயநாமமாம். இவ்விதிகாசத்தைக்கூறியதற் கிதுபயனும்:—அத்தியாய ஆரம்பத்தின்கண் முன்னர்கூறியுள்ள

அத்விதீய ஆன்மஞானமே யாதோ அதுவே மோக்ஷமார்க்கமாம்; அவ்வான்மஞானமே புருஷன் சம்பாதிக்க யோக்கியமாம். சத்தியப பிரஹ்மத்தை யடைவிப்பது ஆன்மஞானமாதலின் ஆன்மஞானம் சத்தியஸ்வரூபம; அதுவே பிரஹ்மஸ்வரூபமாம். புருஷனித்தகைய ஆன்மஞானத்தினின்றும பிரமாதத்தை யடையலாகாது; மற்றோ அதை யவசியம் சமபாதிக்கவேண்டும. ஆன்மஞானத்தை யுபேக்ஷித்து மோக்ஷத்தின் பொருட்டு அன்னியசாதனத்தை முமுக்ஷுவானவன் சம்பாதிக்கக்கூடாது. எவ்வெப்புருஷா இவ்வான்மஞானத்தை யுபேக்ஷைசெய்தனரோ, அததுர்பபுத்தியினை உடையயாவரும அபஜயத்தை யடைந்தனர்.

சீடன் கூறல்:—ஹே பகவன்! உலகின்கண் ஒரு மல்லன் மற்றொரு மல்லனால் அபஜயத்தை அடைவதுபோல, எண்டு ஆன்மஞானமின்றிய புருஷருக்கெவரால் அபஜயமாம.

ஸ்ரீ குருமூர்த்தி கூறல்:—ஹே சிஷ்ய! துவைதஞானத்தால் சுருதியானது பயத்தினடைவைக கூறியிருக்கின்றது ஆகையினுல், அந்தர்யாமியாகிய ஈஸ்வரரே யமராஜாவைப்போல, ஆன்மஞானமின்றிய புருஷரை அபஜயபபடுத்துவாராம. மாயையின் காரியமாய யானெனதென்னு மபிமான சமசாரமானது, யமகிங்கரரைப்போல ஆன்மஞானமின்றிய புருஷரை அபஜயப்படுத்தும்; ஆகையினுல், ஆன்மஞானத்தையே முமுக்ஷுககள் அவசியம சமபாதிக்கவேண்டும. இப பொருளின்கண் புருஷருககுச் சிரத்தையுண்டாம்பொருட்டு ஐதரேய முனிவர் இவ் விதிகாசத்தைக கூறினர்.

கருத்திதுவாம:—வாமதேவரேமுதலாய் முன்னா எவ்வளவு அதிகாரிகள உண்டாயினரோ அவர் யாவரும ஆன்மஞானத்தினலேயே மோக்ஷத்தை அடைந்தனர். இக்காரணத்தினனே இப்போதுள்ள முமுக்ஷுக்களும மோக்ஷம் அடையும்பொருட்டு, ஆன்மஞானத்தையே அவசியம சம்பாதிக்கவேண்டும்; இஃதே யிவ்விதிகாசங் கூறியதற்குபபயனும. மனுஷசரீரத்தை அடைநதும எவன் இவ்விதிகாசத்தின் பொருளையறியானே அவனை வேடன் மிருகததைத துன்பம் செய்வதுபோலச சமசாரரூப *சுபடனுனவன் கொல்வன்.

சீடன் கூறல்:—ஹே பகவன்! பாணங்களால் மிருகத்தை வேடன் துன்பம் செய்வன். எண்டுச சமசாரரூப சுபடனுனவன் எப்பாணங்களைக்கொண்டு அஞ்ஞானியைத் துன்பமசெய்வன்.

ஸ்ரீ குருமூர்த்தி கூறல்:—ஹே குழந்தாய்! எப்பாணங்களைக்கொண்டு சம்சார சுபடனுனவன் அஞ்ஞானியைத துன்பஞ்செய்வனே, அதுபற்றி முன்னர் யாம் விஸ்தாரமாய்க்கூறி இருக்கின்றேம்; ஆயினும் சுருக்கமாக மீண்டும கூறுவாம. நீ கேட்பாயாக: முதலில் தந்தை தாயரின் வயிற்றிலுள்ள தோல், உதிரம், மாமிசம், மேதை, என்பு, மஜ்ஜை, வீரியம என்னும எழுதாதுமயமாகிய குழியின்கண் அஞ்ஞானியைத் தள்ளுதலாகிய பாணத்தாற் சம்சார சுபடன் துன்பஞ்

* சுபடன் = நல்வீரன்.

செய்வன். காப்பத்தின்கண்ணே மல மூத்திர முதலியவற்றைப் பூசுதல்வடிவ பாணத்தால் சம்சார சுபடன் துன்பஞ்செய்வன். கர்ப்பத்தின்கண் கட்டுப்படுத்துவதாய ஜராயுத்தோல் என்புமுதலிய கட்டென்னும் பாணத்தால் துன்பஞ்செய்வன். சர்ப்பத்திற்குச் சமானமாய் வயிற்றுக்கிருமிரூப பாசமென்னும் பாணத்தாற் துன்பஞ்செய்வன். வயிற்றின்கண் இராநின்ற ஜாடராக்கினியாலும் பிராண வாயுவாலும் உண்டாய்ச் சகிக்க முடியாத தாபமென்னும் பாணத்தாற் துன்பஞ்செய்வன். சூக்கும உபஸ்தத் துவாரத்தினின்றும் வெளிப்போதல் வடிவபாணத்தால் அஞ்ஞானியைச் சம்சார சுபடன் துன்பஞ்செய்வன். கர்ப்பத்தின்கண் அநேக ஜன்மங்களின் ஸ்மிருதிவடிவ பாணத்தாலும், மூர்ச்சையாற் சர்வபதார்த்தங்களின் மறத்தல் வடிவபாணத்தாலும், சம்சார சுபடன் அஞ்ஞானியைத் துன்பஞ்செய்வன். இவ்வண்ணம் கர்ப்பத்தின்கண் அஞ்ஞானியை நரகத்திற்குச் சமானமான அனந்த துக்கங்களையடைவித்து மீண்டும் பாலிய அவஸ்தையின்கண் சமர்த்தன்மை, பராதீனத்தன்மை ரூப பாணத்தால் சம்சார சுபடன் அஞ்ஞானியைத் துன்பஞ்செய்வன். மோகத்தால் மலமூத்திராதி பக்ஷணவடிவ பாணத்தாலும், விளையாடக் கிட்டாமைவடிவ பாணத்தாலும் சம்சார சுபடன் துன்பஞ்செய்வன். தாய்தந்தை ஆசிரியர் முதலியோரால் உண்டாம் பயவடிவ பாணத்தால் அஞ்ஞானியைச் சம்சார சுபடன் துன்பஞ்செய்வன். இவ்வண்ணம் பாலிய அவஸ்தையின்கண் நரகத்திற்குச் சமானமாய அநேகந் துன்பங்களை யடைவித்து மீண்டும் யவ்வனவஸ்தையின்கண் சித்தரூப பூமியின்கண் காமதேவனாற் செய்யப்பெற்ற ஸ்திரீமூர்த்தியின் லேகனமாகிய (அதாவது அடிக்கடி சித்தத்தால் ஸ்திரீயின் ஸ்மரணமாகிய) பாணத்தாலும், பலவகையாய்த் திரிதல்வடிவ பாணத்தாலும், சம்சார சுபடன் அஞ்ஞானியைத் துன்பஞ் செய்வன். இவ்வண்ணம் யவ்வனவஸ்தையின்கண் அனந்த துக்கங்களை அடைவித்து மீண்டும் விருத்தா வஸ்தையின்கண் ஜராவஸ்தை பொருந்துதலால் உண்டாகாநின்ற பலவகைய காச சுவாசாதி நோய்களாகிய பாணங்களால் அஞ்ஞானியைச் சம்சார சுபடன் துன்பஞ் செய்வன். இவ்வண்ணம் விருத்தாவஸ்தையின்கண் அநந்த துக்கங்களை அடைவித்து, மீண்டும் மரணவஸ்தையின்கண் கால சர்ப்பத்தால் விழுங்குதல்வடிவ பாணத்தாலும், யமகிங்கரரூப பாணத்தாலும் அஞ்ஞானியைச் சம்சார சுபடன் துன்பஞ் செய்வன். இவ்வண்ணம் மரணவஸ்தையின்கண் அனந்த துக்கங்களை யடைவித்து, மீண்டும் நரகத்தின்கண் பலவகையாய ஆயுதங்களின் பரிகாரரூப பாணங்களாலும்; பிருதிவி ஜலாதிகளின் விகாரமாயு அனந்த நரகங்களின் அடைவுவடிவ பாணங்களாலும் ஆன்ம ஞானரகித புருடர்களைச் சம்சார சுபடன் துன்பஞ் செய்வன். சுவர்க்கத்தினின்றும் கீழே விழுதல வடிவ பாணத்தால் சம்சார சுபடன் துன்பஞ் செய்வன். இவ்வண்ணம் பரலோகத்தின்கண் பல்வகையாய துக்கங்களை யடைவித்து, மீண்டும் இம்மானிட லோகத்தின்கண் தேகாதிகளையடையும் பொருட்டுப் பிதா மாதாக்களின் கர்ப்பத்தின்கண்ணே பிரவேசவடிவ பாணத்தால் ஆன்ம ஞானரகித ஜீவனைச் சம்சார சுபடன் துன்பஞ் செய்வன். உலகின்கண் ஒருமல்லன் மற்றொரு பலமற்ற மல்லனைக் கீழுமேலும் தள்ளி கிழக்கு மேற்கு முதலிய எட்டுத் திசைகளி

லெறிந்து விளையாடும்போது தனது புஜவடிவ பாணத்தால் அவனை இடித் தல்வடிவ துன்பம் செய்வன். இவ்வண்ணம் அவனை அபஜயம செய்விபபன். அதுபோல இச்சம்சாரரூப சுபடனும் ஆன்மஞானம் இன்றிய தீனஜீவனை எண் பத்து நான்கிலக்கம் சரீரரூபப் பத்துத்திசைகளில் எறிநது எறிந்து முறகூறிய பிதா மாதாக்களின் சரீரத்தின்கண் பிரவேச முதலிய பாணங்களால் இடித்தல் வடிவதுன்பம் செய்து அஞ்ஞானிகளாகிய ஜீவரை அபஜயப படுத்துவன். பேன் முதலிய துசச ஜந்துவை அபஜயப்படுத்த நம்மனோருக்கு ஆயாசமுண்டாகாததே போல, ஆன்மஞானமின்றிய புருஷனை அபஜயப்படுத்துவதில் சம்சார சுபடனுக் கும் சிறிதுமாத்திரமும் ஆயாசமுண்டாகமாட்டாது. ஹே சிஷ்ய! சம்சார சுபடன் அடைவித்த ஜன்மமரணாதி அபஜயதநை எந்த எநதப் புருஷர் அறிகின்றனரோ, அந்த அபஜயத்தின் ஞானபலமாய வைராக்கியத்தை எந்தப் புருஷர் சம்பாதிக்கின் றனரோ, அந்தச் சுபட புருஷரே இவ்வேதாநத சாஸ்திர அர்த்தத்தை அறிவர். கருததிதுவாம் :—ஆன்மசாக்ஷாத்காரம் உண்டாகாதவரையில் சமசார சுபடன் பேன் முதலிய துச்ச ஜந்துவைபபோல ஜீவர்களை அபஜயப்படுத்துவன். இச சீவர்களுக்குக் குருமுகமாய் வேதாநத சிரவணாதிகளால் ஆன்மசாக்ஷாத்காரம் உண்டாயின், துசச ஜந்துவைபபோலச சம்சாரமே அபஜயத்தையடையும்.

சீடன் கூறல் :—ஹே பகவன்! ஐதரேய உபநிஷத்தின்பொருள் ஜீவப்பிரஹ் மங்களின் அபேதமாம் எனத்தாங்கள் முன்னர்க்கூறினீர்கள்; அது எனது புத்தி யின்கண் ஏறவில்லை; ஏனெனின், வேறு உபநிஷததானது ஜீவபபிரஹ்மங்களின் அபேததநை யுணர்த்துகின்றதா? அல்லது பேதத்தை யுணாததுகின்றதா? என் னுமை ஐயம் எனககுண்டாகின்றது.

ஸ்ரீ குருமூர்த்தி கூறல்:—ஹே சிஷ்ய! சர்வ உபநிஷத்துக்களும் ஜீவப பிரஹ்ம அபேதத்தையே உணர்ததும்; ஜீவப்பிரஹ்ம பேததநின்கண் எவ் வுப நிஷத்திற்கும் தாற்பரியமின்றும. அவற்றுள் முதலில இருககுவேதத்தின் ஐத ரேய உபநிஷத்தின் அர்த்தமாகிய ஜீவபபிரஹ்மத்தின் அபேதத்தை உன்பொ ருட்டு யாம் கூறினோம. இபபோது இருக்குவேதத்தின் கௌஷீதகி உபநிஷத்துக் கூறிய பொருளையும நீ கேட்க யோக்கியமாம்.

ஸ்ரீ ஆத்மபுராணம்
முதலாவது அத்தியாயம் முற்றும்.

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## இரண்டாவது அத்தியாயம்.



ஓம் ஸ்ரீ கணேஶாயநம: ஸ்ரீ குருப்யோநம:
ஸ்ரீ காஸீவிஶ்வேஶ்வராப்யாம்நம:

ஆண்டு முதலத்தியாயத்தின்கண் இருக்குவேதத்தின் ஐதரேய உபநிஷத்தினர்த்தத்தை நிரூபித்தோம். இப்போது இரண்டாவது அத்தியாயத்தின்கண் இருக்குவேதத்தில் உள்ள கௌஷீதகீ உபநிஷத்தின் அர்த்தத்தை நிரூபணஞ் செய்வாம்.

ஸ்ரீ குருமூர்த்தி கூறல்:—ஹே மைந்த! யான் பிரஹ்மமாயுள்ளேன் என்னும் ஜீவப்பிரஹ்ம அபேதஞானமானது அநந்தங்கோடி ஜன்மங்களாலும் அடைதற்கரியதேனும் விவேகியானவன் குருவின் சேவையாலும், சிரத்தை முதலிய சாதனங்களாலும் அடைவன். இவ்வான்ம ஞானமன்றி வேறு எப்பதாரத்தங்களும் மனுடருக்கு இததமம் அன்றாம்; ஆன்மஞானமே அத்தியந்தம் இததமாம். ஏனெனின், நிரதிசய சுகத்தின் அடைவிற்கும், மூலசகித சர்வதுக்கத்தின் ஒழிவிற்கும், ஆன்மஞானமே சாதனமாம். ஆன்மஞானத்தின் வேறாகிய சர்வபதார்த்தங்களும் பந்தத்திற்குக் காரணமாம். ஹே சிஷ்ய! இவ்வர்த்தத்தின்கண் முன்னர்ப பிரதர்த்தன ராஜாவிற்கு இந்திரனோடு உண்டாகிய சம்வாதவடிவ இதிகாசத்தைக் கூறுகின்றோம்; அதனை நீ கேட்பாயாக. மகா மகிமைவாய்ந்த ஸ்ரீ காசி க்ஷேத்திரத்தின்கண் திவோதாசன் எனப பெயரிய ஓர் அரசனிருந்தான். அவனுக்குப பிரதர்த்தனன் எனப்பெயரிய ஒரு புத்திரனிருந்தான். அவன் வெளியில் உள்ள அரசர்முதலிய சத்துருக்களையும் உள்ளிலுள்ள காமக்குரோதாதி சத்துருக்களையும் ஜயித்திருந்தான்; க்ஷத்திரியருடைய தர்மத்தின்கண்ணே எப்போதும் பிரீதியுடையவனுயுமிருந்தான். அந்தப்பிரதர்த்தன அரசனானவன் தர்மயுத்தத்தாற் பிருதிவியில் உள்ள எல்லா அரசர்களையும் ஜயித்த பின்னர்த் தேவதைகளை ஜயிக்கும்பொருட்டு ஒருவனுகவே வில்லையெடுத்துக்கொண்டு சுவர்க்கத்துக்குச் சென்றனன். ஆண்டுச் சுவர்க்கவாயிலிற் போயிருந்துகொண்டு இந்திரனிடத்தில் கீழ்வருமாறு கூறித்தூதனையனுப்பினன்.

பிரதர்த்தனன் கூறல்:—ஹே தூதனே! தேவராஜாவாகிய இந்திரனுக்கு யான் கூறும் இவ்வசனத்தைச் சென்று சொல்வாயாக. ஹே தேவராஜனே! எல்லாவுலகினரும் நின்னைத் தேவதைகட்கு இந்திரனெனக் கூறுகின்றனர். என்னையோ மனுஷர்கட்கு இந்திரனெனக் கூறுகின்றனர். ஆயினும் நம்மிருவரிடத்திலும் இந்திரத்தன்மைசம்பவியாது; ஏனெனின், பரம ஐஶ்வர்யம் உள்ளவனே இந்திரன் எனப்படுவன். பரம ஐஶ்வர்யமாவது எவ்வைஶ்வர்யத்திற்குச்

சமமாயேனும், அதிகமாயேனும், மற்றோர் ஐஸ்வர்யம் இன்றோமோ அதுவாம். அத்தகைய பரம ஐஸ்வர்யம் ஒருவனிடத்தேயே பொருந்தும்; இருவரிடத்திற் சம்பவியாது. ஆகையினால், நம்மிருவரிடத்தும் இந்திரசப்தம் முக்கியமன்றாம், மற்றோ கௌணமாம். தேவதத்த புருஷன் சிம்மமா மென்னுமிடத்துச் சிம்மசபதம் மிருகராஜாவாகிய பசு விசேஷத்தினிடத்தோ முக்கியமாம். தேவதத்த புருஷனிடத்தில் கௌணமாம். ஹே தேவராஜனே! நின்னின் வேறாகிய பிருதிவியில் உள்ள அரசர்கள் யாவரையும் ஜயித்துவந்தேன்; எனது இந்திரத்தன்மையின் கௌணதையை நீக்கும் பொருட்டு நின்னை ஜயிக்க இச்சித்து யான் சுவர்க்கத்தின்கண்ணே வந்தனன். ஆகையினால் ஹே தேவராஜனே! என்னோடு யுத்தஞ் செய்யும பொருட்டுப படையெடுத்து விரைவாக நீவரவேண்டும்; அல்லது தனியாகவேனும் வரவேண்டும் உனக்கு யுத்தஞ்செய்யச் சமர்த்தமின்றாகில், என்னிடத்தில் வநது யான் அபஜயத்தை அடைநது விட்டேனெனக் கூறி விடுதி; இவ்விருவார்த்தைகளில் இச்சையெதன்கண் இருக்கின்றதோ அதைச் செய்வாயாக. வில்லைத்தவிர்த்து வேறு சகாயமின்றிய பிரதர்தனன் என்னுமியான் நினது பிரியஸ்தானமாகிய சுவர்க்கத்தை அடைந்துள்ளேன். இநத என்னுடைய பிரபாவத்தை (மகிமையை) விசாரித்துப் பாரத்து உனக்கு உசிதமானதைச் செய்வாயாக.

என இவ்வண்ணம பிரதாதன அரசனுற கூறி விடுக்கபபட்ட தூதன் தேவ சபையின்கண்ணே சென்று அந்தச சுதர்மமெனப் பெயரிய திவ்ய தேவசபையின் கண் வீற்றிருப்பவரும, சூரியனைபபோல தேஜசால பிரகாசிபபவரும, சம பூர்ண தேவதைகளால் நாறபுறமும சூழபபெற்றவரும், தேவராஜாவும ஆய இந்திரனைச சாஷ்டாங்கமாய் நமஸ்கரித்துப பிரதாத்தன அரசன் கூறியவசனததைக் கூறுவானாயினன்.

தூதன் கூறல்:—ஹே பகவன்! சர்வ உலகாகடகும, சமபூர்ண உலக பாலர்கட்கும், தாங்களே ஒப்பற்ற சுவாமியாவீர்கள்; ஆனால், ஒரு சிறிது வார்ததை யடியேன் தங்கள் பொருட்டுக கூறுகின்றேன். பூவுலகின்கண்ணே ஸ்ரீ காசியெனப பெயரிய ஒரு மகா தேசம உளது. அது தங்களுடைய சுவர்க்கத்தைக்காட்டினும் அத்தியந்தம இரமணீயமானது. ஏனெனின், தேவதைகளின் நதியாகிய ஸ்ரீ கங்காதேவியானவள் சுவாக்கத்தை யுபேக்ஷித்து ஸ்ரீ காசிமா நகரத்திற்குச சென்று விட்டனள். ஆகையினால் சுவர்கத்தினும ஸ்ரீ காசிமா நகரம் இரமணீயமானதெனத் தெரிந்துகொள்ள வேண்டியதாயிருக்கின்றது. ஆண்டு ஸ்ரீ கங்கையின் தீரத்தின்கண் ஸ்ரீ காசியெனப பெயரிய புரி யொன்றிருக்கின்றது. அந்த ஸ்ரீ காசியென்னும் புரியானது ஸ்ரீ மகாதேவரது திரிசூலத்தின் மேலிருக்கின்றது. தனது அழகால் சுவர்க்கத்தையும் திரஸ்காரம செய்வதாயிருக்கின்றது. அந்த ஸ்ரீ காசிமா நகரின்கண்ணே மரணத்தை அடைந்த அண்டஜம், ஜராயுஜம், சுவேதஜம், உறபிஜ்ஜம் என்னுமிந் நான்கு வகையாய ஜீவர்களும் ஸ்ரீ மகாதேவரது தாரகமந்திர உபதேசத்தால் ஆன்மஞானவாயிலாய்

மோக்ஷத்தையடைவர். ஸ்ரீ காசியில் அடையும் மரணத்தால் வேதபாடிய பிராஹ்மணனால் அடையப்பெற்ற மோக்ஷத்தையே கிருமிபதங்கம் முதலிய துச்ச ஜந்து, அடையும். ஸ்ரீ காசிமா நகரின்கண் ஸ்ரீ பகவானாகிய மகாதேவர் எழுந்தருளி யிருக்கின்றனர். அந்த பகவானாகிய ஸ்ரீ மகாதேவர் சர்வப் பிராணி மாத்திரத்தின் ஆன்ம சொரூபமாம். சம்பூர்ண ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, இலயம் செய்பவராவர். ஸ்ரீ பவானியின் இருதயரூப கமலத்தை நன்கு விரிக்கும் சூரியனாவர். கர்ப்பூரம்போன்ற வெள்ளிய வர்ணமுடையவர். ஸ்ரீ பகவானாகிய ஸ்ரீ மகாதேவரை நமஸ்காரஞ் செய்யும் சம்பூர்ண தேவதைகளின் சிரசின்கண் இராநின்ற இரத்தினங்களோடு கூடிய பூஷணங்களின் கிரணங்களால் அவரது சரணகமலம் பிரகாசித்துக் கொண்டிருக்கும். அந்த ஸ்ரீ பகவானாகிய ஸ்ரீ மகாதேவரது உபகாரத்தை மதித்துச் சம்பூர்ண முனிவரும் நான்குவேதங்களும் அடிக்கடி அவரை வர்ணிக்கின்றன; உலகின்கண் மகாராஜாவைக் கட்டியக்காரனும் சாரணனும் வர்ணனஞ் செய்வதுபோல.

ஈண்டிது தாற்பரியமாம்.—அரசனானவன் கட்டியக்காரன் சாரணன் என்பவர்கட்குத் தனத்தைக் கொடுப்பன். அதனால் அவ்விருவரும் அரசனைப் புகழ்வர். அதுபோல ஸ்ரீ மகாதேவரும் முனிவர்கட்குப் பிரஹ்ம வித்தையைக் கொடுக்கின்றனர். அதனால் முனிவர் ஸ்ரீ பகவானாகிய மகாதேவரை வர்ணனஞ்செய்கின்றனர். வேதங்கட்குப் பிரமாணத்தன்மையின் அடைவின் வடிவ உபகாரத்தை ஸ்ரீ பகவானாகிய மகாதேவர் செய்கின்றனர். அதனால் வேதம் அவரை வர்ணிக்கின்றது. ஏனெனின், பயனோடு கூடிய அர்த்தத்தைப் போதித்தே வேதங்கட்குப் பிரமாணத்தன்மை சாஸ்திரத்தின்கண்ணே கூறப்பட்டுள்ளது. அநான்ம வஸ்துவின் ஞானத்தால் சுகப்பிராப்தியாகிய பலமேனும் துக்க நிவிருத்தியாகிய பலமேனும் உண்டாகாது. ஆகையினால், அநான்ம வஸ்துவைப் போதித்தால் வேதத்தின்கண் பிரமாணத்தன்மை சித்தியாது; மற்றோ சர்வாந்தர்யாமியாய ஸ்ரீ மகாதேவரது ஞானத்தாலேயே சுகத்தின் அடைவும் துக்கத்தின் நீக்கமுமாகிய பலம் கிட்டும். ஆகையினால், ஸ்ரீ பகவானாகிய மகாதேவரைப் போதிப்பித்தே பிரமாணத்தன்மையை வேதம் அடைகின்றது. மேலும் அந்த மகாதேவர் ஆனவர் இச்சித்த மாத்திரத்தினாலே பிரஹ்மா முதலிய சர்வ தேவதைகளும் அனந்தந் தடவை தோற்றத்தையும் மறைவையும் அடைவர். அந்த ஸ்ரீ மகாதேவரை அடைய இச்சித்தே, எல்லா ஸ்திரீகளினும் முக்கியமானவரும், முற்பிறப்பினும் சதி வடிவமாய் ஸ்ரீ பகவானான மகாதேவரது தர்மபத்தினியாயிருந்தவரும், இமராஜபுத்திரியாரும் ஆகிய ஸ்ரீ பார்வதி தேவியார் உக்கிரமான தபசைச்செய்தனர். அந்த ஸ்ரீ பகவானான மகாதேவருக்கு முருகக் கடவுளென்றும் கணேசப பெருமானென்றும் இரண்டு மகாவீரிய சௌரியாலங்கிருத குமாரர்களிருக்கின்றனர். அந்த ஸ்ரீ மகாதேவருக்கு ஜயத்தால் சோபியாநின்ற பிரமதர் என்ப பெயரிய கணம் சேனாபதியாம். அந்த ஸ்ரீ மகாதேவரது நாமத்தை ஜபித்தலால் சீவர் சம்சாரரூப துக்கத்தை யடையார். அந்த ஸ்ரீ மகாதேவரது சரணகமலத்தைப் பூஜித்தலாற் புருஷனுக்கு மனத்தில் இச்சித்த பயன் யாவுங்கிடைக்கும்.

இவ்வார்த்தை சிவபுராணத்தின்கண் ஸ்ரீ வியாச பகவானும் கூறியிருக்கின்றனர் :—

𑌮𑌹𑌾𑌦𑍇𑌵 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵 𑌮𑌹𑌾𑌦𑍇𑌵𑍇𑌤𑌿 𑌯𑍋 𑌵𑌦𑍇𑌤𑍍 ।
𑌏𑌕𑍇𑌨 𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌦𑌸𑍍𑌤𑌸𑍍𑌯 𑌦𑍍𑌵𑌾𑌭𑍍𑌯𑌾𑌂 𑌶𑌮𑍍𑌭𑍁𑌰𑍃𑌣𑍀 𑌭𑌵𑍇𑌤𑍍 ॥

"திகழ்மகா தேவ வின்பச் சீர்மகா தேவ யாரும்
புகழ்மகா தேவ வென்னப் புகன்றிடின் மூன்று வாரம்
நிகழ்தரு மோன்றி னுக்கே நின்மல முத்தி யீயும்
மகிழிரண் டினுக்குஞ் சம்பு மன்கட னுடைய னாமே." (11)

இதன் பொருள் :—எவன் அதிசிரத்தையோடும் "மகாதேவ மகாதேவ மகாதேவ" என மூன்றுதரம் ஸ்ரீ மகாதேவரது நாமத்தைக் கூறுவனோ, அவனுக்கு ஒரு நாமத்தாலேயே முத்திவடிவப் பலத்தினடைவை ஸ்ரீ மகாதேவர் செய்விப்பர். மற்றிரண்டு நாமங்களால் ஸ்ரீ மகாதேவர் பக்தர்கட்குக் கடன்காரராவர். ஏனெனின், முத்தியைக்காட்டிலும் அதிகமாக வேறொருபதார்த்தம் உலகின்கண் இன்றாம். எதன்றன் அடைவிப்பினால் ஸ்ரீ மகாதேவர் கடனினின்றும் நீங்குவரோ! மேலும் அந்த ஸ்ரீ மகாதேவரானவர் பிரஹ்மாண்டத்தின்கண் இராநின்ற விஷயபோகங்களின் இச்சையற்றவராவர். பிரஹ்மவித்யா சமுத்திரமாவர். எப்போதுஞ் சுத்தர். சித்த நிரோதனஞ்செய்யும் சர்வயோகிகட்குங் குருவாவர். அந்த ஸ்ரீ பகவானாய மகாதேவரிடத்தினின்றும் சர்வஜகத்துமுண்டாம். அந்த ஸ்ரீ பகவானாய மகாதேவரிடத்தில் சர்வஜகத்தும் ஸ்திதிபெற்றிருக்கின்றது. அந்த ஸ்ரீ மகாதேவரிடத்தில் சமபூர்ணஜகத்தும் இலயத்தை யடைகின்றது. இத்தகைய ஸ்ரீ பகவானாய மகாதேவரது பெருமைபொருந்திய குணங்களை வருணிப்பதில் எப்பிராணிதான் சமர்த்தமுடையதாம்; மற்றோ எவருஞ்சமர்த்தரன்றாம். இத்தகைய ஸ்ரீ பகவானாய மகாதேவரானவர் அந்த ஸ்ரீ காசிபுரியின்கண் எழுந்தருளியிருக்கின்றார். முத்தியைக்கொடுப்பதாய, அயோத்தியாபுரி, மதுராபுரி, மாயாபுரி, ஸ்ரீ காசிபுரி, காஞ்சிபுரி, அவந்திகாபுரி, துவாரகாபுரி என்னும் புரிகள் ஏழுள. அவற்றுள் ஸ்ரீ காசிபுரியினுக்கே அதிக சௌபாக்கியம் இருப்பதாய்ச் சமபூர்ணஜீவர்களும் அனுபவிக்கின்றனர். ஏனெனின், ஸ்ரீ காசிபுரியின்கண் போகமோக்ஷம் இரண்டும் சுலபமாய்க்கிடைக்கும். ஹே தேவதைகளே! தங்களுடைய அமராவதிபுரியும் ஸ்ரீ காசிபுரிக்குச் சமானம் அன்றாம். ஏனெனின், தங்களுடைய புரியைப்படைந்தவர்க்குக் கீழே தள்ளிவிடுவார்களென்னும் பயம் எப்போதுமிருக்கும். நாகர்களுடைய போகவதியென்னும் புரியும் ஸ்ரீ காசிபுரிக்குச் சமானமாகாது. தங்களுடைய அமராவதிபுரியும் நாகர்களுடைய போகவதிபுரியும் ஸ்ரீ காசிபுரிக்குச் சமானம் அன்றாயின் அன்னிய புரிகளின் கதையென்னும். ஸ்ரீ காசிபுரியை ஸ்ரீ கங்காதேவியானவள் எப்போதும் சேவித்துக்கொண்டே யிருக்கின்றனள். ஸ்ரீ பகவானாய மகாதேவரும் அந்த ஸ்ரீ காசிபுரியின்கண் எப்போதுமிருப்பர். சர்வபுரிகளைக்காட்டிலும் அதிக சௌபாக்கியமிருத்தலினாலேயே அதனை ஸ்ரீ காசிபுரியென்று கூறுவர். பிரகாசிப்பதற்குக்

காசியெனப்பெயராம். அத்தகைய ஸ்ரீ காசிபுரியினுக்கு அரசன் சர்வலோகப் பிரசித்தனுய திவோதாசனும். அந்தத்திவோதாச மகாராஜனுனவன் சம்பூர்ண சத்துருக்களையும் ஜயித்துள்ளவன். தனது பிரதிஞ்ஞையைச் சத்தியமாய் நிலைநிறுத்துபவன். க்ஷத்திரியர் தர்மத்தின்கண்ணே பிரீதியுடையவன். யானை, குதிரை, தேர், காலாள் என்னும் நான்குவகையாய சேனையோடுகூடியவன். அந்தத்திவோதாச ராஜனும் அதிகபலவான். யாகாதிகர்மங்களில் தற்பரனுயுள்ளோனுதலின் தேவதைகளாகிய தங்களுக்கும் பிரசித்தியானவன். அத்தகைய திவோதாச ராஜா ஸ்ரீ காசிபுரியின்கண்ணே இருக்கின்றனன். அந்ததிவோதாச ராஜாவின் புத்திரனுப பிரதர்த்தனனெனப்பெயரிய அரசனும் மிகபபிரசித்தனேயாவன். அந்தப்பிரதாத்தன ராஜாவானவன் சம்பூர்ண சுபகுணங்களால் தனது தந்தை பாட்டன் முதலாயினேருக்குச சமானமானவன். சம்பூர்ணபபிராணி மாத்திரத்தின்கண்ணே தயாதிருஷ்டியுடையவன். அந்தப் பிரதர்த்தன அரசனுக்கு மலைபோன்ற யானைகளனந்தங் கோடியிருக்கின்றன. சூரியனுடைய குதிரைகட்குச் சமானமான அனந்தங் குணங்களோடுகூடிய குதிரைகளும் அனநதங்கோடி இருக்கின்றன. புராரியின் தேரக்குச சமானமான மகாசபதத்தைச செய்வதாய தேர்களும் அனந்தங்கோடி இருக்கின்றன. பலததால தனக்குச சமானமான காலாட்களும் அளவற்றனவுள. அந்தப்பிரதர்ததன ராஜன் சஸ்திரவிததையின்கண்ணும அதிகுசலன். போரின்கண்ணே வஞசனையற்றவன். அந்தப பிரதர்த்தன ராஜன் ஸ்ரீ மகாதேவரது பிரசாதத்தால் சமபூர்ண அஸ்திரங்களின் பிரயோகரூப சந்தானத்தை யறிந்துளன். நிர்மோக்ஷமாகிய விசர்க்கததை யறிநதுளன். அஸ்திரங்களின் மரியாதை வடிவஸ்திதியை அறிநதுளன். உபசம்மாரரூப சமஹ்ருதியை யறிந்துளன். ஆயினும், அஸ்திரத்தை எவர்பேரினுஞ செலுத்துவதில்லை. ஏனெனின், அஸ்திரத்தால் கொல்லபபடின் அவனென்னுற கொல்லபபட்டவனன்ரும். ஒவ்வோரசமர்த்த புருஷன் சேனயாகரூப அபிசார கர்மத்தால் சத்துருவை நாசஞ்செய்வன். அஸ்திரத்தாற் சத்துருவை நாசஞ்செய்யின் அதற்குச் சமானமேயாம். அபிசாரத்திறகும் அஸ்திரத்திற்கும் சிறிதுமாத்திரமும் விசேடமின்ரும் என விசாரித்து அநதப பிரதர்த்தன ராஜா அஸ்திரங்களால் சத்துருவைக் கொல்வதில்லை. மற்ருே, சத்துருகட்கு எவ்வண்ணம் யுத்தஞ்செய்ய இசசையோ அவ்வண்ணமே யுததஞ்செய்வன். அந்தப் பிரதர்தன அரசன் சத்துருக்களால் அடிபடுவதற்குமுன் சத்துருக்களைக் கொல்லான். மற்ருே, சத்துருக்களால் அடிபட்டபின்னரே சத்துருக்களைக் கொல்வன். சத்துருக்களால் முன்னா அடிபட்டபோதினும் ஐம்பது வருஷங்கட்குமேல் வயதாய சத்துருக்களைக் கொல்வதில்லை; பதினுறு வருஷங்கட்குக் கீழ்வயதுள்ள சத்துருக்களையும் கொல்வதில்லை. ஏனெனின், அவன் சூரவீரர்களின் விரதத்தைத் தரித்துள்ளான். சூரவீரர்களின் தர்மம் தனுர்வேதத்தில் இங்ஙனங் கூறப்பெற்றுளது :—

ஊ-ஷ்ரீதஂ௵நவ விகஂ௵ நாஶஂ௵ நாஜ்யோயிநூ ।
வஶாயதோஜ ஶஶ௵ ஶதஂ௵நவ வஷிஂஶயெக ॥

## இருக்குவேதத்தின் கௌஷீதகீ உபநிடதத்தின் தாற்பரியவருணனம்.

"இனிதின் மூர்ச்சிதர் விகலர்கள் சத்திர மிழந்தோ
ரனிய ரோடமர் புரிபவர டைக்கலம் புகுந்தோர்
பணிசெய் தோரவே ராகிய பகைவரைப் படிமேற்
குனிவில் வீரராஞ் சூரர்கள் கொலைசெய லாகா."

இதன்பொருள் :— மூர்ச்சையடைந்த சத்துருக்களையும், வியாகுலமடை ரையும், சஸ்திரமின்றியவரையும், அன்னியரோடு யுத்தஞ்செய்பவரையும், கின்றவரையும், அடைக்கலம் புகுந்தாரையும் சூரவீரர் கொல்லல் ஆகாது. பே அந்தப் பிரதர்த்தன அரசனனவன் பிராஹ்மணர்களையும் தேவதைகளையும் ( களையும் விருக்ஷங்களையும ஒருக்காலும் இகழ்சசி செய்வதில்லையென்னும் தத்தை மேற்கொண்டவன். ஹே தேவராஜனே! அவனுக்கு மற்றொரு விர உண்டு. அஃதென்னவெனின், அகங்காரத்தோடுகூடிய க்ஷத்ர தர்மத்தின் இராநின்ற தேவதைகளானாலும், பிராஹ்மணர்களானாலும், அல்லது த தந்தையானாலும, பாட்டனானாலும, தன் பலததால் அவர் யாவரையும் ஜயிக்கவேண்டு மென்பதே. அத்தகைய பிரதர்த்தனனிடத்தில் ஒருகால நாரதாதி முனிவர் சென்று சமபாஷணை செய்துகொண்டிருக்குங்கால் பி வபமாய் இவ்வாறு கூறுவாராயினர் :—ஹே பிரதர்த்தன அரசனே! ட வியிலுள்ள எல்லா அரசர்களையும் நீ ஜயித்துள்ளனை ; ஆனாலும், இந்திராதி தைகள் க்ஷத்ர தர்மத்தால் சமபூர்ண பிருதிவியில் உள்ள அரசர்களைப பார்க் பலவான்களாவர் ; ஏனெனின், அவர்களோடு யுத்தஞ்செய்தற்கு அசுரர், வர், தைத்தியர் முதலிய எவருஞ் சமர்த்தராகார். அசுரர், தானவர், தை முதலிய எவருமே தேவதைகளோடு போர்செய்யச சமர்த்தர் அன்றாயின், ட ரின் கதையென்னை. இவ்வுலகின்கண் இந்திரன் ஒருவனைமாத்திரம் ஜயிப்ப எவர்க்குஞ் சமர்த்தம் இன்றாயின், சம்பூர்ண சேனைகளோடும் லோகபாலகே கூடிய இந்திரனை ஜயிக்க யாவரே வல்லார ; மற்றோ, இந்திரனை ஜயிப்பதில் ருஞ் சமர்த்தராகார். இவ்வண்ணங் கூறிய நாரதாதி முனிவரின் வசன கேட்டுத் தனது பிரதிஞ்ஞைவடிவ விரதத்தை ஸ்மரித்துத் தேவதைக( போர்புரியும்பொருட்டு உற்சாகத்தோடும் தனியாகவே சுவர்க்கத்திற்கு வர் கின்றனன். ஹே தேவராஜனே! அந்தப் பிரதர்த்தன ராஜன் இவ்விடம் தங்களுடைய புரியின் வாயிலில் சமான பிருதிவியின்கண் இருக்கின்றனன். வரசன், தூதனாகிய என்னை அழைத்துத் தேவதைகளாகிய தங்களுடைய த தில் அனுப்பினான். அவ்வரசன் தங்கள்பாற் சொல்லச் சொல்லிய வசன எவற்றையுஞ் சொன்னேன். இனித் தங்களுடைய இச்சை யெப்படியோ படிச் செய்யலாம் எனச் சம்பூர்ண வசனத்தைத் தேவராஜன்பொருட்டுக் கூறினன்.

இங்ஙனங்கூறிய தூதன்வசனத்தைக் கேட்டுப பிரதர்த்தன அரசனுடை மற்ற ஆண்மையை விசாரித்துத் தேவராஜாவாகிய இந்திரனும் அதி விஸ்ம (ஆச்சர்யத்தை) யடைந்தனன்; தனது க்ஷத்ர தர்மத்தை ஸ்மரித்துக் கோபமு

வனும் ஆனான். சம்பூர்ண தேவதைகளைத் தன்னுடன் அழைத்துக்கொண்டு அதி விரைவாகவே தனது புரியினின்றும் வெளியேவந்தனன். போர்செய்யும்பொருட்டு அடைந்துள்ள இந்திராதி எல்லாத் தேவதைகளையும் பார்த்து அந்தப் பிரதர்த்தன அரசனும் தானிருந்த இடத்தினின்றும் அசையாதவனாய் இந்திராதிகளின் பொருட்டுக் கூறுகின்றான் :—ஹே தேவராஜாவாகிய இந்திரனே! ஹே சம்பூர்ண தேவதைகளே! நீங்கள் கூர்மைபொருந்திய பாணங்களால் முதலில் என்னை அடியுங்கள்; பின்னர் யான் கூர்மைபொருந்திய பாணங்களால் உங்களையடிக்கின்றேன்; இது எனது பிரதிஞ்ஞையாம் என இவ்வண்ணம் கூறிய பிரதர்த்தன அரசனுடைய வசனத்தைக்கேட்டு இந்திர சகித சம்பூர்ண தேவதைகள் குரோதத்தால் பூரசகிதராயினர். பின் குண்டலாகாரமாய்ச் சேனையை வகுத்துப் பிரதர்த்தன அரசனுடைய நாற்பக்கங்களிலும் சுற்றிக்கொண்டு இவ்வரசனைக் கொல்லுங்கள் கட்டுங்கள் என்பனவாய வசனங்களைப் பரஸ்பரம் தேவதைகள் கூறினர். ஆண்டு யுத்தத்தின்கண் பலவகைப்பட்ட வாத்தியங்களின் கோஷங்களுண்டாயின; சம்பூர்ண இந்திராதி தேவதைகள் கோபத்தோடு கூடியவராய் அந்த அரசன்மீது அம்பின் மாரியைப் பெய்தனர். மேகமானது மலையின்மேல் நீர்மாரியைப் பெய்வதுபோலப் பெய்த அத்தேவதைகளின் அம்புகளால் பிரதர்த்தன அரசனது தேகமானது பேதித்தது. பின்னர் அவ்வரசனும் விரைவாகவே கூர்மைபொருந்திய பாணங்களால் சம்பூர்ண தேவதைகளை யடித்தனன். அவனது பாணங்களால் சில தேவதைகட்குத் தோளறுந்து விழுந்தன, சில தேவதைகட்கு மார்பு கிழிந்தன, சில தேவதைகளின் மண்டை யுடைந்தன. இவ்வண்ணம் தேவதைகளின் சேனையில் ஒருவரேனும் பிரதர்த்தன அரசனது அம்புகளால் அடிபடாதவர் இல்லையாம்; மற்றோ, யாவருமே அடிபட்டனர். புஜங்களில் அம்படிபாடுண்டாய பீடையால் துக்கிதராய தேவதைகளெல்லாம் புஜங்களினின்றும் பலவகைப்பட்ட ஆயுதங்களைப் பூமியின்கண்ணே நழுவவிட்டனர். போரின்கண்ணே பிரதர்த்தன அரசன் சில தேவதைகளை நூறு பாணங்களால் வேதனைப்படுத்தினன். சில தேவதைகளை ஐந்து பாணங்களால் வேதனைப்படுத்தினன். தேவராஜாவாய இந்திரனையோ ஆயிரம் பாணங்களால் வேதனைப்படுத்தினன். பூமியின்கண் விழுந்திராநின்ற ஆயுதங்கள் எவரின் நீங்கியவோ, அத்தகைய தேவதைகளைப் பார்த்துப் பிரதர்த்தன அரசனானவன் தனது வில்லின் நாணியை இறக்கினன். தேவராஜாவாகிய இந்திரனானவன் இவ்வண்ணமாகிய மகா ஆயுதங்களையும், பிரதர்த்தனனுடைய புருஷார்த்தத்தையும் கண்டு விஸ்மயத்தை அடைந்தனன்.

அந்தப் பிரதர்த்தன அரசன் பொருட்டு இந்திரன் இவ்வண்ணங் கூறத் தொடங்கினன் :—ஹே பிருதிவிபதியாகிய பிரதர்த்தன அரசனே! உனது யுத்தத்தாலும் ஆண்மையாலும் யான் மிகவும் மகிழ்வையடைந்தனன். ஆகையினால், எந்தவரம் வேண்டுமென்று உனக்கிச்சையிருக்கின்றதோ அந்த வரத்தை நீ என்னிடத்தே கேட்டுக்கொள். இப்போது அவ்வரத்தை யான் நின்பொருட்டுக் கொடுக்கின்றனன். ஹே பிரதர்த்தன! உனது போரினுக்கும் ஆண்மைக்கும்

சமானமாய், எவர் போரையும் ஆண்மையையும் யான் கண்டதில்லை. சுவர்க்கத்தின்கண்ணே வந்து தேவதைகளோடுகூடிய என்னை அபஜயப்படுத்தும்படியான சாமர்த்தியவான்கள் நின்னையன்றி வேறு யாவர் இருக்கின்றார்கள். ஒரு கணத்திற் சம்பூர்ண தேவதைகளையும் கூர்மை பொருந்திய அம்புகளால் பேதனஞ் செய்ய யாவரே சமர்த்தராவர்? மற்றோ, நீயே சமர்த்தனாைப். இவ்வண்ணம் தேவராஜனாகிய இந்திரன் கூறியவுடன் அந்தப் பிரதர்த்தன ராஜாவானவன் இந்திரனுக்குத் தண்டம்போல விழுந்து நமஸ்காரம் செய்து இவ்வண்ணம் கூறுவானாயினன்:—ஹே தேவராஜனே! தேவதைகளோடுகூடிய இந்திரனாகிய என்னை நீ ஜயம் செய்தாய் எனத்தாங்கள் கூறிய வசனத்தால் எனது பிரதிஞ்ஞை ரூப வசனத்தைப் பூரணஞ் செய்தவர்களானீர்கள்.

ஹே தேவராஜனே! துர்ப்புத்தியோடு கூடிய பாலகனாய எனது அபராதத்தை நீர் பொறுத்துக்கொள்ளல் வேண்டும்; ஏனெனின், புஷ்பங்களாலும் அடிபடற்கு யோக்கியமல்லாத தேவதைகளாகிய தங்களைக் கூர்மை பொருந்திய பாணங்களால் யான் அடித்தனனன்றோ; ஆதலினாலிஃதெனது மகா அபராதமாம். ஹே தேவராஜனே! என்னால் பூஜிக்கத்தகுந்த எனது தாதை மூதாதை முதலியவர்களாலும் தாங்கள் பூஜிக்கத்தகுந்தவர்; ஆதலின், என்னாலோ அத்தியந்தம் பூஜிக்க யோக்கியராவீர். ஹே தேவராஜனே! தேவதைகளாய தாங்கள் சத்துவகுணப் பிரதானிகள். அதனாலேயே எனது அபராதத்தை எண்ணாமல் தாங்களென் பொருட்டு வரங்கொடுக்க முயன்றீர்கள்; மனுஷனாகிய யான் இரஜோகுணத்தோடு கூடியவனாய் இருக்கின்றேன். அதனால் தேவதைகளை அடிப்பதாய பாபத்தின் கண்ணே யான் பிரவிர்த்தனானேன்.

ஹே தேவராஜனே! எல்லாவற்றிலும் ஆன்மதரிசிகளாகிய சாது ஜனங்கட்கு இவ்வஸ்து என்னுடையதென்றும் இவ்வஸ்து அன்னியனுடையதென்றுமுண்டாகும் விஷமபுத்தியானது ஒருகாலுமுண்டாவதின்றாம். இக்காரணத்தினாலேயே அபராதியாய என்னிடத்தே நீர் வரத்தைக்கொடுத்தீர். ஹே தேவராஜனே! இவ்வுலகின்கண்ணே தங்களைப்போன்ற மகாத்மாவே புருஷர்களுக்குள் உத்தம புருஷராம்; ஏனெனின், என்னைப்போன்ற அபராதியாய புருஷரிடத்தும் தேவதைகளாய தாங்கள் உபகாரமன்றோ செய்தீர்கள். அபகாரிக்கு உபகாரம் செய்தலே உத்தம புருஷ இலக்கணமாம். ஹே தேவராஜனே! ஸ்தம்பமானது வீட்டைத் தாங்குவதுபோல அபகாரியினிடத்துபகாரம் செய்பவன் மூவுலகையுந் தம்பம்போல் தாங்குவன். ஹே தேவராஜனே! உபகாரிக்கு யாவருமுபகாரம் செய்வர், இஃதுலகரின்கண் வெட்ட வெளியாம்; ஆனால் என்னைப்போன்ற அபகாரியாய புருஷனுக்குத் தங்களைப்போன்ற ஒவ்வொரு மகான்மாவே உபகாரத்தைச் செய்வர். ஹே தேவராஜனே! மனுஷனாகிய யான் இரஜோகுணத்தோடு கூடியவனாயிருக்கின்றேன், ஆதலின் உலகின்கண் எனக்கு இதத்தையும் அகிதத்தையும் யானறியேன்; ஏனெனின், எனக்கு என்னிதாகிதத்தைப் பற்றிய உணர்வுண்டாயிருப்பின் தேவதைகளாகிய தங்களோடு போர்

செய்யும் பொருட்டு யான் வரமாட்டேனன்றோ? ஆகையினால் போர்செய்யும் பொருட்டு வந்த இவ்வினைதுவரவே, என்னிதாகிதத்தின் அறியாமையை யுணர்த்தும். ஹே தேவராஜனே! ஒரு துச்ச ஜந்துவாகிய கொசுகு அறியாமையால் பெரிய ஒரு மதயானையோடு போர்புரிய வந்ததுபோல எனது இதாகிதங்களை யறியாத யானும் தேவதைகளாய தங்களோடு போர்புரிய வந்தேன். ஹே தேவராஜனே! மனுஷனாய யான் எனது இதாகிதத்தை அறியாதவனாதலினாலே எனது இதத்தின் பிரார்த்தனையை யான் செய்யவல்லேனல்லன். ஆகையினால் ஹே மூவுலகிறையே! எல்லாத்துயரையுங் கெடுக்க வல்லதாய ஹிததமவஸ்து யாதுளதோ அதனைத்தாங்களே விசாரித்து எனக்குக் கொடுக்கவேண்டும். என இவ்வண்ணங் கூறிய பிரதர்த்தனன் வசனத்தைக்கேட்டு இந்திரன் அரசனைப்பார்த்துக் கூறுகின்றான்:—ஹே நரபதியே! யாசித்தலாலன்றித தனது மதியா லெப்புருஷனும் எவர்பொருட்டும் வரத்தைக் கொடான், மற்றோ யாசனையின் பின்னரே எல்லாரும் வரத்தைக் கொடுப்பர்; ஆகையினால் ஹே மன்னனே! நீயும் என் பால் முதலில் வரத்தைக்கேள் எனக் கூறிய இந்திரன் வசனத்தைக் கேட்டு அமமதிமானாய மன்னவன் சத்திய வாதியாய இந்திரனைப் பார்த்து யுத்தியோடு கூடிய வசனத்தைக் கூறததொடங்கினன்:—ஹே தேவராஜனே! வேண்டு கோளின்றி யாருமெவனுக்கும் வரங் கொடுபபதில்லையெனத் தாங்கள் கூறிய வசனம் சத்தியமேயாகும். ஆனால், இந்த வசனம் பேததரிசிகளாகிய விஷம புருஷரிடததில் பொருந்துமேயன்றித் தங்களைபபோன்ற சமதிருஷ்டியுடையவரிடததில் பொருநதாது. ஹே தேவராஜனே! தங்களையன்றி யெபபுருஷன் அபகாரியாய சத்துருவிற்கு வரத்தைக் கொடுபபன்; மற்றோ தாங்களே அத்தகையா. ஆகையினால் தேவதைகளாய தாங்கள் எவரிடத்திலும் விஷம திருஷ்டியுடையவரான்றோம்; மறறோ யாவரிடத்திலும் சமதிருஷ்டியுடையவ ரென்பது நிசசயமாம். ஆகையினலை, ஹே தேவராஜனே! தாங்களெனக்குக் கொடுக்குமபொருட்டு வரத்தின் பிரதிஞ்ஞையைச் செய்தீர்களல்லவா? அதைக கொடுபபின் தங்கள் மதியால் இததமவரத்தை விசாரித்துக் கொடுக்கவேண்டும். ஹே தேவராஜனே! யான், எனது இச்சைபபடி வரத்தை வேண்டிக் கொள்ளினோ தாங்கள் வரங் கொடுக்கச செய்த பிரதிஞ்ஞையானது அழிநதுவிடும; ஏனெனின், வரமென்பது சிரேஷ்டத்திற்காம். சிரேஷ்ட மென்பது ஹிததமத்திற்காம். அந்த இததமத்தை யானறிநதிலேன். ஆகையினால், அறியாமையினால் எவ்வெவ்வரம் யான் வேண்டுவனோ அவ்வியாவும் அசிரேஷ்டமேயாம். அசிரேஷ்டமாயது வரமாகாது. தாங்களோ வரங் கொடுப்பதாய்ப் பிரதிஞ்ஞை செய்திருக்கின்றீர்கள்.

ஆகையினால், தங்களுடைய பிரதிஞ்ஞையைக் காபபாற்றும் பொருட்டுத் தாங்களே விசாரித்து எனக்கு வரந்தரவேண்டும். இவ்வண்ணங் கூறிய அரசன் வசனத்தைக்கேட்டு அவனது புத்தி சாதுர்யத்தைக் கண்டு தேவராஜாவாகிய இந்திரன் மீண்டும் மகிழ்வை யடைந்தனன்.

**சங்கை:**—ஹே பகவன்! தேவராஜன் அத்தியந்தம் மகிழ்வையடையின் இந்திரனது பிரசன்னத் தன்மையே வித்தையினடைவில் காரணமாம்; ஏனெனின்,

குருவின் பிரசன்னத் தன்மையினுலன்றி வித்தையின் அடைவுண்டாகாது. சுருதியின்கண் இந்திரன் தனது உண்மையாய பிரதிஞ்ஞையினின்றும் நழுவாதவனுயினுன் என்றிவ்வண்ணம் கூறப்பட்டுள்ளது. இது கூறியதாலிக் கருத்தறியப்படும்:—தேவராஜாவாகிய இந்திரன் தனது பிரதிஞ்ஞையை உண்மையாக்கும் பொருட்டு அரசனுக்குப் பிரஹ்ம வித்தையைக் கொடுத்தனன்; பிரதர்த்தன அரசனுக்கு வித்தை யீவதில் தேவராஜாவாகிய இந்திரனைத் தடைப்படுத்த எவரேனும் வந்துறினும் அதனைப் பிரதிபந்தஞ்செய்பவர் யாவர்?

சமாதானம்:—ஹே குழந்தாய்! பிரஹ்மத்தை யறிந்த பிராஹ்மணன் பொருட்டுப் பிரஹ்மவித்தை கூறிய வசனத்தின் ஸ்மிருதியே பிரதிபந்தஞ் செய்வதாம். இப்போது அந்தப் பிரஹ்மவித்தையின் வசனத்தைக் கூறுவாம்:—ஒருகாலத்தில் அநதி காரியினிடத்தி லடைவுற்ற பிரஹ்ம வித்தையானது அத்தியந்தம் துயரை அடைந்து, பிரஹ்மத்தை யுணர்ந்த பிராஹ்மணனிடத்திற் சென்றிங்ஙனங் கூறியது:—ஹே பிராஹ்மணனே! வேசியானவள் எல்லாராலும் ஆளப்படுவதுபோலத் தனலோபத்தால் பிரஹ்ம வித்தையாகிய என்னை வேசிக்குச் சமானமாய் நீ செய்யாதே; மற்றே, குலீன ஸ்திரீயைப்போல என்னை நீ இரகசியமாய் வைத்துக் கொள்; சிரத்தையா லென்னைச் சேவித்துக்கொண்டிரு. அக்காரணத்தால் பிரஹ்ம வித்தையாய யான் உனக்கு இகலோகத்தின்கண்ணும் பரலோகத்தின்கண்ணும் கெடாத நிதிக்குச் சமானமாவேன். ஹே பிராஹ்மணனே! யாவருக்கும் உபகாரம் செய்வதில் எனக்குப் பிரீதியாயிருக்கின்றது; உதாரத்தன்மையோடு கூடினவன் யான்; தீனர்களிடத்தில் எனக்கு அத்தியந்தங் கிருபையிருக்கிறது. ஆகையினுல் பிரஹ்ம வித்தையை இரகசியமாய் வைக்க என்னுல் முடியாது என்று நீ கூறுவையேயாயினும், ஹே பிராஹ்மணனே! குணமில்லாத புருஷரின் பொருட்டு நீ என்னை யொருகாலும் கொடாதே, அத்தியந்தம் ரூபவதியாய தனது புத்திரியை நபும்சகனுக்கு எவருங்கொடாததுபோல. ஹே பிராஹ்மணனே! இத்தனை தோஷங்கள் எப்போதும் எனக்குத் துக்கத்தைக் கொடுப்பதாம்:—குணவான்களாய புருஷரிடத்தில் தோஷத்தின் ஆரோபிதமாய நிந்தை, குடிலத் (வஞ்சகத்) தன்மை, இந்திரிய அதீனத்தன்மை, நித்தியமும் ஸ்திரீயின் சங்கம, வணக்கமின்மை, மனோவாக்குக் காயங்களாற் குருபத்தியின்மை என்பன முதலிய தோஷங்கள் எவன் பாலுளவோ அவன் பொருட்டுப் பிரஹ்மவித்தையாய என்னை யொருகாலும் நீ கொடாதே. மற்றே, இத்தோஷங்களெல்லாம் இன்றியவனும், சமதமாதி குணங்களோடு கூடியவனுமாகிய புருஷன் பொருட்டு என்னைக் கொடு. அல்லது என்னை இரகசியமாய் வைத்துக்கொள். இவ்விரண்டு பக்ஷத்தில் எப்பக்ஷத்தையேனும் நீ அங்கீகரிப்பையாயின் நினக்குக் காமதேனுவைப்போல மனதில் இச்சித்த பதார்த்தங்களை யான் கொடுப்பேன். நீ தனலோபத்தால் குணமின்றியவன் பொருட்டுப் பிரஹ்ம வித்தையாகிய என்னைக் கொடுப்பையாயின் பழமின்றிய கொடியைப்போல யான் மலடியாய்விடுவேன். ஹே பிராஹ்மணனே! முற்கூறிய தோஷங்களோடுகூடிய புருஷனுக்கு வித்தையைக்கொடாதே, இவ்வர்த்

தத்தின்கண் சர்வ ஜனோபகாரத்தின்பொருட்டு யுக்தியோடு கூடிய வசனத்தை யான் கூறுகின்றேன். நீ கேள். சீடனுடைய இருதயத்தின்கண் இராநின்ற அஞ்ஞானமாகிய அந்தகாரத்தைச் சூரியாதி தேவதைகளும் நாசஞ்செய்ய மாட்டார். அத்தகைய சீடனுடைய அஞ்ஞானரூப அந்தகாரத்தை எவ்வாசிரியரானவர் ஆத்ம சாக்ஷாத்காரத்தால் நாசஞ்செய்விப்பரோ, நீ பிரஹ்ம சொரூபமென்னும் மகாவாக்கியரூப அமிருததத்தை எவ்வாசிரியர் பானஞ் செய்விப்பரோ, அந்த மகாவாக்கியரூப அமிருதத்தால் சீடன் செவியைத் துக்கமற்றதாக்குவரோ, எவ்வாசிரியர் அந்த யுக்திகளால் சீடனுக்கெப்போது ஆத்மாவினுணர்ச்சியை யுண்டாக்கிவைப்பரோ, அவ்வாசிரியரே முமுக்ஷு புருஷருக்குப் பிதாவும் மாதாவுமாவர். குருவைக்காட்டிலும் வேறொரு பிதா மாதாவில்லையாம; ஏனெனின், குருவின் பிரஹ்ம வித்யாரூப சம்பிரதாயத்தின்கண் பிரவேசித்தலினாலேயே சம்பூர்ண ஜன்மமரணாதி துக்கங்கள் நாசமாம். லௌகிக பிதா மாதாக்களின் சந்ததியின்கண் பிரவேசித்தலால் புத்திரனுக்கு ஜன்மமரணாதி துக்கத்தின் நிவிர்த்தி யுண்டாகமாட்டாது; மாறாய் ஜன்மமரணாதிகளின் பிராப்தியுண்டாம். ஆகையினால் ஜன்மமரணரூப துக்கநிவிர்த்தியின் உபாயம் பிரஹ்ம வித்யாரூப குரு சம்பிரதாயமன்றி மற்றொன்றுமன்றாம; மற்றோ, பிரஹ்ம வித்யாரூப குரு சம்பிரதாயமே ஜன்ம மரணரூப துக்கநிவிர்த்தியின் உபாயமாம. ஆகையினால் குருவே முமுக்ஷு ஜனங்களின் பிதா மாதாவாம். அல்லது பிதா மாதா சப்தங்களின் அர்த்தமும குருவின்கண்ணேயே பொருந்தும்; லௌகிக பிதா மாதாக்களிடத்தே பொருந்தாது. ஏனெனின, காப்பாற்றுபவனை பிதாவென்பர், பூஜித்து வைத்துக்கொண்டிருப்பவளை மாதாவென்பர், ஆண்டு ஆத்ம சாக்ஷாத்காரத்தின் பிராப்திவாயிலாய் ஜன்ம மரணரூப சம்சார பயத்தினின்றும முமுக்ஷு ஜனங்களைக குரு காப்பாற்றுகின்றனராதலின் குருவே பிதாவாம. ஆநந்தசொரூப ஆன்மாவின் பிராப்திவடிவ சுவராஜ்யத்தின்கண் சீடனைக் குருவே ஸ்தாபனஞ்செய்வராதலின் குருவே மாதாவாம. குருவிற்குக காயத்தாலும, வாக்காலும, மனத்தாலும, ஒருகாலும் துரோகஞ் செய்யக்கூடாது; அவற்றுள், அடித்தல் முதலியன காயத்தால் ஆற்றுந் துரோகமாம, அநுசிதவசனத்தைக கூறல வாக்கால ஆற்றுந் துரோகமாம, அனிஷ்டத்தைச சிந்தித்தல மனத்தால ஆற்றுந் துரோகமாம. வாக்கால் ஆற்றும் துரோகத்தின் பலம நூலின்கண்ணே கூறப்பட்டுளது .—

[illegible]
[illegible]

"குருவை யும்மெனத் தும்மெனக் கூறுவர்வாதா
லருமறையவர் தங்களை யரிதின்வெல் லுநர்கள்
எரிசுடலையிற் பெருந்தரு வாகியே யிருந்து
திரிகழுகுகள் முதலன சேரவா ழுவரே." (13)

இதன்பொருள் :—எப்புருஷர் தமது குருவை ஹும்மென்று தட்டுகின்றனரோ அல்லது துப்பென்று தட்டுகின்றனரோ எப்புருஷர் பிராஹ்மணர்களை வாதத்தால்

ஜயிக்கின்றனரோ, அவர்கள் மயான பூமியின்கண் தருசசரீரத்தை அடைவா; மாம்சத்தைப் புசிப்பனவாய கழுகு கூளி முதலிய பக்ஷிகளால் அததரு சேவிக்கப்பெறும். கருத்திதுவாம:—எல்லாத் தருசசரீரங்களும் பாவத்தின் பலமாமாயினும் மயான பூமியின்கண் தருசசரீரததின் அடைவு அத்தியந்தம் உககிரமான பாவபலமாம்; ஏனெனின், மயான பூமியின்கண்ணுள்ள தருவானது எபபோதும் மயான அகக்னியால் தாகத்தையடையும். ஆகையால் எவ்வகையாலும புருஷன் குருவுக்குத் துரோகம செய்யலாகாது. ஹே பிராஹ்மணனே! குருவுககுத் துரோகம் செய்யலாகாது; மற்றே குருவினுககுச் சேவை செய்யவேண்டும என யாது யான் கூறினனே அது பிரஹ்ம வித்தையைக் கொடுத்தருளும் குருவின்கண்ணே கூறினேன். வேதத்தினுககோ கருத்திதுவாம:—லௌகிக விததைகளை யுபதேசஞ் செய்யும் குருவிற்கும் புருஷனொருகாலும துரோகம செய்யலாகாது. இக காரணத்தினாலேயே உலகின்கண் எவ்வத்தியாபகன் எசசீடனுககு லௌகிக வித்தையை அத்தியயனஞ் செய்துவைப்பனே அந்த அததியாபகனை அசசீடன் குருவாய் அங்கீகரிப்பன். கருததிதுவாம:—பிரஹ்மவித்தையைக் கொடுக்குங் குருவிடததினும், லௌகிக வித்தையைக கொடுக்கும குருவிடத்தினும், எவ்வெச்சீடன் சிரத்தை பக்திகளைச செய்வானே அவ்வவன் வித்தை பயனுடையதாம. எவ்வெச்சீடன் சிரத்தை பகதிகளறறவனுவனே அவனவன் வித்தை பயனறறதாம. ஆகையினால ஹே பிராஹ்மணனே! உனககுப பிரஹ்மவிதததை யாகிய என்னைக் கூற இசசையுண்டாயின், என்னைக் காபபதில உனக்கு அபிப பிராயமிருபபின், குணவானான சீடன்பொருட்டு நீ என்னைக் கூறுதி. எசசீடன் குருபக்தனே, பிரஹ்மவிதயா சிரவணத்தில யாவனுக்குச சிரத்தையுளதோ, பிரமாதமற் றெவனிருபபானே, ஆததாரணததில எவனுடைய புத்தி குசலமாமோ, யாவன் பிரஹ்மசாயததோடு கூடியிருபபானே அவனே குணவானும. இத்தகைய அதிகாரியாய சீடனுககன்றி வேறெவன்பொருட்டும நீ என்னைக கூறவேண்டாம். இநதபபிரகாரம பிரஹ்மத்தை யுணர்நதவன்பொருட்டுப் பிரஹ்ம வித்தை கூறிய வசனத்தை ஸ்மரிததுச சத்திய பாசத்தாறகட்டுபபட்ட இநதிரன் சமசயததை யடைநதனன். கருததிதுவாம:—பிரதர்ததன இராஜாவின் பொருட்டுப பிரஹ்ம வித்தைகொடுபபது தகுதியா? அல்லது கொடாமை தகுதியா? இவ்வண்ணம் சமசயத்தையடைநத இநதிரன மீண்டும இவ்வண்ணம விசாரஞ் செய்தனன்:—பிரஹ்மவித்தையானது அதிகாரி சீடனுடைய குணங்கள் யாவை கூறிற்றோ அக்குணங்க ளெல்லாவற்றோடுங் கூடினவன் இப்பிரதர்த்தன ராஜனன்றும். சிற்சில குணங்கள் பிரதாத்தன அரசனிடத்திலுளவெனினும் இவன் நமது சத்துருவாதலின் இவன் பொருட்டுப பிரஹ்ம விததையைக்கொடுத்தல் கூடாது. அல்லது பிரதர்த்தன அரசனனவன் எனது வரத்தைக்கண்டு சததுருத் தன்மையைப் பரித்தியாகம் செய்தன னாதலின், அதிகாரி சீடரின் குணங்களை யுடையவனாயிருக்கின்றனன். இக்காரணத்தால் இவன் பொருட்டு விததையைக் கொடுத்தல் தகுதியாம்; ஈண்டு மிகுந்த விசாரம் செய்வதற்கு யாதொரு பயனுமின்றும். இவ்வரசன் அதிகாரி சீடரின் குணங்களோடு கூடியவனாகுக, அல்லது கூடாதவனு

குக. எவ்வாற்றானும் இவ்வரசன் பொருட்டு ஹிததம வித்தையை யான் கூறு நிற்பேன்; ஏனெனின், யான் முன்னர் நின்பொருட்டு வரத்தைக் கொடுக்கின்றே னெனக் கூறிய பிரதிஞ்ஞையைப் பிரஹ்ம வித்தையைக் கொடுத்தலால் உண்மை யாக்கவேண்டும். கருத்திதுவாம்:—இரண்டுவாக்கியங்கள் பரஸ்பரம் விரோத மடையின் ஒருவாக்கியம் பலமுடையதாம், மற்றொருவாக்கியம் பலமற்றதாம், எவ்வாக்கியத்திற்கு எவ்வகையானும் கதியில்லாமற் போமோ அவ்வாக்கியம் பல முடையதாம், எவ்வாக்கியத்திற்கு எவ்வகையானும் கதியுளதாய்ப போமோ அவ் வாக்கியம் பலமற்றதாம். ஈண்டுப் பிரசங்கத்தின்கண் பிரஹ்மவித்தையின் வசனத் திற்குக் கதியுளதாய்ப் போமாதலின் பலமற்றதாம். ஏனெனின், பிரஹ்ம வித்தை யின் அதிகாரி யிருதிறத்தாராவர்; அவருள், ஒருவனே உத்தம அதிகாரியாம்; மற் றொருவனே மத்திம அதிகாரியாம். அவருள் ஸ்திரீ சங்கமற்ற விரக்த சந்யாசி உத் தம அதிகாரியாம், கிருகஸ்தன் மத்திம அதிகாரியாம். இவ்வரசன் கிருகஸ்தனாத லின் வித்தைக்கு மத்திம அதிகாரியாம். இவ்வண்ணம் பிரஹ்ம விதத்தையின் வச னத்திற்குக் கதிகூடும், "நாந்ருதம்வதேத" (பொய்புகலற்க) இதன்பொருள் புரு ஷன் பொய்ம்மொழியைப புகலலாகாதென்பது, இவ்வசனததிற்கு வித்தை கொடுத தாலன்றி வேறொரு கதியின்றாம். ஆகையினால் இவ்வசனம் வித்தையின் வாக்கியத தைக்காட்டினும் பலமுடையதாம; என இந்திரன் விசாரித்து அரசன பொருட்டுக் கூறுவானாயினன், ஹே பிரதாத்தன அரசனே! இந்திரனாகிய எனனை நீயறி. யான் எத்தகையனெனின் கேட்பாயாக, சம்பூரண ஜகத்திற்கும ஆன்மாவா யுள்ள வன், புத்திபாதிகளின் சாக்ஷி, ஆகாசம சாவததையும வியாபித்திருபபதுபோலச சர்வ ஜகத்தையும் உள்ளும வெளியும வியாபித்து நிறகின்றேன், கனவிறகுச சமா னமான சம்பூர்ண ஸ்தூலசூக்கும ஜகத்தற்றவன்; இக்காரணத்தால யான் துரிய சிவரூபன். தேசகாலவஸ்து பரிசசேதமற்றவன் யான்; சஜாதியபேதம், விஜாதீய பேதம், சுவகதபேதம என்னும முப்பேதரூப விதையைத் தகிக்கு மக்கினிவடிவன் யான். கற்பிதசர்ப்பதண்டாதிகளின் அதிஷ்டான இரஜ்ஜுவைப போற்றூலச சூக் கும சர்வப பிரபஞ்சத்திற்கும யானே அதிஷ்டானன்; இக்காரணத்தா லேகன். கருத்திதுவாம்:—இரஜ்ஜுரூப அதிஷ்டானம் தன்னை விஷயஞ் செய்யும ஞான வாயிலாய்க் கற்பித சாப்பதண்டாதிகளை நாசஞ் செய்யுமாறுபோல அதிஷ்டான ஆன்மாவாய யானும எனது விஷயக ஞானவாயிலாய்ச சர்வ கற்பிதப பிரபஞ்சத் தையும் நாசஞ் செய்பவனாவேன். மாயாவிசிஷ்டனாய் யானே ஈசுவரனாயுள்ளேன். ஹே பிரதர்த்தன! இத்தகைய எனது வடிவததை நீ விசேஷமாயறி. எனது சொரூபஞானமே மனுஷராய உங்களுக்கு இதமமாம்; யாகாதிகர்மபலனாய சுவர்க்க சுகமும் அதன் சாதனமாய அபசாசாதியும பந்தகாரணமாம். ஆகையினால் மனுஷ ரின்பொருட்டு இதமன்றாம். உபாசனையின் பலமாய பிரஹ்மலோகசுகமும் அச சுக சாதனமும் பந்த ஹேதுவாம். ஆகையினால் மனுஷரின் பொருட்டு ஹித மன்றாம். சுவர்க்கலோக சுகமும், பிரஹ்மலோக சுகமும் மனுஷரின் பொருட்டு ஹிதமன்றாயின், மனுஷலோகத்தின்கண் இராநின்ற வனிதாதி விஷயஜன்னிய சுகம் அத்தியந்தமற்பமாம்; விரைவில் அழிவனவாம். இத்தகைய மனுஷ லோக

சுகம் மனுஷரின்பொருட்டு எவ்வண்ணம் இதமாம்; மற்றேர், இதமன்றும். ஹே பிரதர்த்தன! வாழைத்தம்பமானது சாரமற்றதாவதுபோலச் சம்பூர்ண சரீரமுஞ் சாரமற்றதாம். ஜலத்தின்கண் உற்பன்னமாகிய புற்புதமானது கணத்தில் நாசமாவதுபோல இச்சம்பூர்ண சரீரமும் நாசமாவதாம். இத்தகைய அநித்திய சரீரத்தின்கண் வனிதைமுதலிய சாதனங்களால் உற்பன்னமாய சுகம் கேவலந் துக்கரூபமாம. ஆன்மவடிவமாகிய இந்திரனுய யானே ஏக சுகசொரூபமாம். என்னிற் பின்னமாகிய சர்வ அனுன்மவஸ்துக்களும் துக்கரூபமாம. ஆகையினுல் ஹே பிரதர்த்தன! இவ்வுலகின்கண் ஏககாலத்திலும எவ்வஸ்துவும் இதமன்றும்; உலகின்கண் எவ்வஸ்துவும ஹிதமேயன்றுயின் ஹிததர ஹிததமங்களின் ஆசையெவ்வண்ணங் கூடும. கருததிதுவாம்:—ஹிதத்தைப்பார்க்கிலும அதிகமானதற்கு ஹிததரமென்று பெயராம. ஹிததரத்திலும் அதிகமானதற்கு ஹிததமமென்று பெயராம. ஆநநதசொரூப இந்திரனுகிய என்னிற் பின்னமாகிய எவ்வனுன்ம பதார்த்தமும் ஹிதமும ஹிததரமும் ஹிததமமும் அன்றும்.

சங்கை:—ஹே தேவராஜ இந்திரனே! உலகின்கண் எபபதார்த்தமும் ஹிதமும், ஹிததரமும அன்றுயின், முன்னர்த் தாங்கள் ஆன்மஞானத்தை ஹிததமமெனக் கூறியது எங்ஙனம் பொருந்தும். ஏனெனின், ஹிதஹிததர அபேக்ஷையால் ஹிததமங் கூறவேண்டும்.

சமாதானம்:—ஹே பிரதர்த்தன! கற்பித முசசரீரங்களின் அபேக்ஷையாற் சுத்த ஆன்மா துரீயமெனப்படும்; அதுபோல, மயக்கம் பொருந்திய உணர்ச்சியாற் சித்தமான ஹிதஹிததர அபேக்ஷயால் ஆன்மஞானம் ஹிததமமெனப்படும். ஆண்டு மனுஷர்கட்கும் தேவதைகட்கும் உண்டாம் விஷயஜன்னிய சுகம் ஹிதமாம். அந்த விஷயஜன்னிய சுகத்தைக்காட்டிலும் வைராக்கியம் ஹிததரமாம், அந்த வைராக்கியத்திலும் ஆன்மஞானம் ஹிததமமாம்.

சங்கை:—ஹே பகவன்! மனுஷலோகத்தின் வி[illegible]ன்னிய சுகமும் சுவர்க்காதி லோகத்தின் விஷயஜன்னிய சுகமும் ஹிதமென்று[illegible]வராக்கியம் ஹிததரமென்றும் முன்னர்த் தாங்கள் கூறியது பொருந்தாது; ஏ[illegible]ன், மனுஷ லோக சுகத்திலும் சுவர்க்காதி லோகசுகம் உற்கிருஷ்டமாம்; ஆகையினுல் மனுஷ லோக சுகமோ ஹிதமாம்; சுவர்க்காதி லோகசுகம ஹிததரமாம்; வைராக்கியத்திற்கு ஹிததரத்தன்மை பொருநதாது.

சமாதானம்:—மனுஷ லோகசுகத்தைக் காட்டிலும் சுவர்க்காதி லோகசுகத்தின்கண் எவ்விசேஷத்தன்மையை நீ கூறினுயோ அது சொரூபமாயே இருக்கின்றதா? அல்லது சாதனத்தாலா? அவற்றுள்; சொரூபமாயே விசேஷத்தன்மையுளதென்னும் முதற்பக்ஷம பொருநதாது; ஏனெனின், மனுஷலோகத்தின் யாதொரு விஷயஜன்னிய சுகமுளதோ அங்ஙனம் சுவர்க்கலோகத்தின்கண் எவ் விஷயஜன்னிய சுகமுளதோ அங்ஙனம் பிரஹ்மலோகத்தின்கண் எவ்விஷயஜன்னிய சுகமுளதோ அவ்வெல்லாச் சுகங்களிலும் அனுகூலத் தன்மைத்தர்மம்

சமானமாம். ஆகையினால் சொரூபமாய்ச் சுவர்க்காதி சுகத்தின்கண் விசேஷத் தன்மை சம்பவியாது. சாதனங்களின் விசேஷத்தன்மையினாலே சுவர்க்காதி சுகங்களின் விசேஷத்தன்மை கூடுமென்னும் இரண்டாவதுபக்ஷமும பொருந் தாது; ஏனெனின், சுவர்க்காதி லோகங்களில் இராநின்ற தேகதாரி ஜீவர்கட் குப் பல்வகையாய ஆகாரமிருக்கின்றது; நேத்திராதி இந்திரியங்களோடு கூடிய சரீரமிருக்கின்றது; மனோரம்மியமான ஸ்திரீயுமிருக்கின்றனள். அதுபோலவே மனுஷலோகத்தின்கண் இராநின்ற தேகதாரி ஜீவர்கட்குப பல்வகையாய ஆகார மிருக்கின்றது; நேத்திராதி இந்திரியங்களோடு கூடிய சரீரமிருக்கின்றது; மனோரம்மியமான ஸ்திரீயு மிருக்கின்றனள். கருத்திதுவாம்:—அமிருத பானத் தால் தேவதைகட்குத திருப்தியுண்டாவதுபோல நெல் கோதுமை முதலிய அன்னபக்ஷணத்தால மனுஷர்க்குத திருப்தியுண்டாம. அங்ஙனமே புல் முத லியவற்றைத தின்னுதலால் மிருகாதிகட்குந திருப்தியுண்டாம். சுவர்க்காதி லோகங்களில் இராநின்ற அப்சர ஸ்திரீகள் தேவதைகளின் சுகசாதனமாவர். அதுபோல மனுஷலோகத்தின்கண் இராநின்ற ஸ்திரீகளும் புருஷர்களின் சுக சாதனமாவர். இவை முதலாகிய சர்வ சாதனங்களிலும் சமானத்தன்மையுளது.

**சங்கை**:—ஹே பகவன்! மனுஷலோக சுகமானது பராதீனமா மாதலின் நிக்கிருஷ்டமாம்; சுவர்க்காதி லோகங்களின் சுகம் பராதீனமன்று மாதலின் உற்கிருஷ்டமாம்.

**சமாதானம்**:—ஹே பிரதர்த்தன! இராஜசேவையாற் கிடைத்த லௌகிக சுகமானது பராதீனமாம; அதுபோலத் தேவதைகளின் ஆராதனையாற கிடைத்த பிரஹ்மலோக சுகமும் சுவர்க்கலோக சுகமும பராதீனமன்றாம். ஆகையினால் சம் பூர்ண லோகத்தின்கண் ஜீவாகட்குப பராதீனத்தன்மை சமானமாம. சுவதந் திரத்தன்மை எவ்வுலகின் கண்ணுமின்றாம. ஏனெனின், நம்மனோர் யாவரினும் அதிகமாகிய இரண்யகாப்பனும் அந்தர்யாமியாகிய ஈஸ்வராதீனமாம. இந்திர னாகிய யான் இரண்யகர்ப்பனுடைய அதீனமாம. இரண்யகர்ப்பனும் இந்திர னாய யானும பராதீனமாயின் அன்னியர்களின் சுதந்திரத்தன்மையின் கதை யென்னும்? அல்லது மனுஷலோகமே முதலாய் இரண்ய கர்ப்பலோக பரியந் தம் எவ்வளவு விஷயஜன்னிய சுகங்களுளவோ அச்சுகங்கள் யாவும் ஸாதிசய தோஷத்தோடு கூடியனவாம; ஆகையினாலும சமானமாம். ஏனெனின், அந்தர் யாமியாகிய ஈஸ்வர ஆநந்தத்தைப பார்க்கிலும் நூறு மடங்கு குறைந்ததாம் இரண்யகர்ப்பனுடைய ஆநந்தம்; இரண்யகர்ப்பனுடைய ஆநந்தத்தைப பார்க் கிலும நூறு மடங்கு குறைந்ததாம் பிரஜாபதியின் ஆநந்தம்; பிரஜாபதியின் ஆநந்தத்தைப் பார்க்கிலும் நூறு மடங்கு குறைந்ததாம் இந்திரனாகிய எனது ஆநந்தம். இரண்யகர்ப்பனுடைய விஷய ஜன்னிய ஆநந்தமும் இந்திரனாகிய எனது ஆநந்தமும் ஸாதிசய தோஷத்தோடு கூடியனவாயின், மற்றைய ஆநந் தங்களின் கதையென்னும? ஹே பிரதர்த்தன! மனுஷர்களாகிய உங்களுக்கு மனுஷலோக ஸ்திரீகளின் ஆலிங்கனத்தாற் சுகமுற்பன்னமாவது போலவே

இந்திரனுகிய எனக்கு இச்சுவர்க்கலோக ஸ்திரீகளின் ஆலிங்கனத்தாற் சுகமுண்டாகின்றது. அது போலவே இரண்யகர்ப்பனுக்கு ஸ்திரீ ஆலிங்கனத்தாற் சுகமுண்டாகின்றது. அதுபோலவே ஈஸ்வரனுக்கு ஸ்திரீயின் ஆலிங்கனத்தாற் சுக முண்டாகின்றது. விஷய ஜன்னிய சுகத்தின்கண் கிஞ்சித் மாத்திரையும் விசேஷத் தன்மையின்றும்.

ஆகையினுல் சுவர்க்காதி சுகத்திற்கு ஹிததரத்தன்மை சம்பவியாது. மற்றே, விஷய ஜன்னியசுகம் எனக்கு வேண்டாமென்னும் வைராக்கியமே ஹிததரமாம். ஏனெனின், விஷய ஜன்னிய சுகங்கள்யாவும் கடாதிகளைப் போல அழியும். இவ்வைராக்கிய ரூப சுகம் உத்தம புருஷர்கட்கு ஒரு தரமுற்பன்னமாயின் மீண்டும் அழியாது; மற்றே, நாளுக்குநாள் விர்த்தியடையாநிற்கும். ஆகையினுல் விஷயஜன்னிய சுகத்தினின்று முண்டாகும் வைராக்கியம் ஹிததரமாம். அல்லது, வாந்திசெய்த அன்னத்தின்கண்ணும் மலமுதலியவற்றின்கண்ணும் உண்டாகும் புருஷனது வைராக்கியத்தில் கேவலம தோஷதிருஷ்டியே காரணமாவதுபோல விஷய ஜன்னிய சுகத்தின்கண் தோஷதிருஷ்டியே வைராக்கிய காரணமாம். தோஷதிருஷ்டியின் வேறும் யாதொருகாரணமும் வைராக்கியத்தின் பொருட்டின்றும். விஷயஜன்னிய சுகத்தின்கண்ணே பாகிய தனுதிகளாகிய அநேக காரணங்களுள. ஆகையினுலும் விஷய சுகத்தினின்றும் வைராக்கியரூப சுகம் ஹிததரமாம. அல்லது, எபபுருஷனுக்கு விஷயத்தின்கண்ணே தோஷ தரிசனத்தினுலும் வைராக்கியம் உற்பன்னமாகவில்லேயோ, மாறும் விஷய சுகத்தின்கண் இச்சை அதிகமாய் உண்டாகிக்கொண்டிருக்குமோ, அத்தகைய வைராக்கியமின்றிய புருஷனுக்கு இவன் என்னைபபார்க்கிலும் அதிக சுகியாம், இவனிடத்தில் சுகசாதனமிருக்கின்றது ; அது என்னிடததில் இல்லையென்று இவ்வகையாகிய விஷமத்தன்மை ஞானவடிவ அககினி யெபபோதுா தாகத்தைக் கொடுக்கும். கருத்திதுவாம் :—பிரஹ்மலோக பரியந்தமுளள விஷயஜன்னிய சம்பூர்ண சுகங்கிடைப்பினும் தீனத்தன்மையின் நிவிர்த்தியுண்டாகாது; வைராககியமுண்டாயின் தீனத்தன்மை நிவிர்த்தியாம். இக்காரணத்தினுலும் வைராக்கியமே ஹிததரமாம். இவ்வைராக்கியத்தைக்காட்டிலும் யான் ஆநந்தசொரூப ஆன்மாவாயிருக்கின்றேன் என்றுண்டாகும் அத்விதீய ஆன்மாவின் ஞானம் ஹிததமமாம; ஏனெனின், வைராக்கியத்தால் மூல அஞ்ஞானத்தின் நிவிர்த்தியுண்டாகாது. ஆகையினுல் மித்தை யுணர்வானுண்டாகும் சம்ஸ்காரத்தால் வைராக்கியமுடைய புருஷனுக்குப் பயமுண்டாகிக் கொண்டிருக்கும். யான் அத்விதீய ஆன்மாவென்னும் ஞானத்தால் மூல அஞ்ஞானத்தின் நிவிர்தியா மாதலின் ஞானவானுக்குப் பொய்யுணர்சசியா லுண்டாகிய சம்ஸ்காரத்தாற பயமுண்டாகாது. இக்காரணத்தால் வைராக்கியத்தினும் அத்விதீய ஆன்மாவின் ஞானம் ஹிததமமாம். அல்லது, ஆன்ம சொரூபாநந்தத் தோற்றததின்கண்ணே தடையாகிய துக்க நிவிர்த்தியின்கண் வைராக்கியம் காரணமாம். ஆன்ம சொரூபாநந்தத் தோற்றத்தின்கண் வைராக்கியம் நேரே காரணமன்றும்; மற்றே, பரம்பரையாய்க் காரண

மாம். எனது அத்விதீய ஆன்மாவின் ஞானமோ ஆன்ம சொரூபாநந்தத் தோற்றத்தின்கண் சாக்ஷாத்காரணமாம். ஆகையினாலும் ஆன்மஞானம் வைராக்கியத்தினும் ஹிததமமாம். ஹே பிரதர்த்தன! யான் இந்திரவடிவ ஆன்மா என்னும் ஞானத்தின் வேறாகிய எவ்வஸ்துவும் உலகின்கண் ஹிததமமன்றாம். எனது ஞானமே ஹிததமமாம. ஹே பிரதர்த்தன! பிரஹ்ம ஹத்தியே முதலாகிய எப்பாபங்கள் உலகின்கண்ணும் சாஸ்திரத்தின்கண்ணும் பிரசித்தமாமோ, எப்பாபங்களால் அநந்தங்கோடிகற்பங்களில் ஜீவர்கட்கு அநநதத் துன்பங்களின் பிராப்தியுண்டாகுமோ அத்தகைய பிரஹ்ம ஹத்தியாதி பாபங்களும் எனது ஞானமகிமையால் ஜீவாகளை யொருககாலும் ஸ்பரிசம் செய்யமாட்டா. ஹே பிரதர்த்தன! ஞானவானைப் பிரஹ்ம ஹத்தியாதி பாபங்கள் தீண்டமாட்டா என்னும் எனது வசனத்தை ஆன்ம ஞானியின் உறுதிவடிவ அர்தத வாதமென நீ யறிபற்க. மற்றோ மெய்யென்றேயுணர்தி; ஏனெனின், இவ்வான்ம ஞானமகிமையால் எப பாவமும் என்னைப்பற்றுவதின்றாம்.

இவ்வர்த்தத்தை விஸ்தாரமாய் நின்பொருட்டு யான் கூறுகின்றேன்; நீ ஏகாக்கிர சித்தவிர்த்தியோடு நின்று கேட்பாயாக:—மூவுலகினுக்கும் இறைவனை இந்திரனாகிய யான் எனது காபபின்பொருட்டும் பிரஜைகளைக் காபபாற்றும்பொருட்டும் அநநதம் பாவங்களைச செய்தேனாயினும் ஆன்ம சாக்ஷாத்கார மகிமையால் அபபாவங்களெனது ரோமததையும் கெடுக்கவில்லை. இபபோது அபபாபங்களைக் காண்பிப்பேன்:—ஹே பிரதர்த்தன! ஒருகாலத்தில துஷ்டாவெனப் பெயரிய தேவதையின் மைநதனை விபவரூபன் தேவதைகளாகிய எங்கட்குப் புரோகிதனாயினன். அவ்விஸ்வரூபன் ஓரிடத்தில் தைத்தியரின் சகோதரியினிடம் உறபன்னமானவன்; அவனுககு மூன்று சிரங்களிருநதன; ஒன்று சாத்விக இயல்புடையது, மற்றொன்று தாமச வியல்புடையது, மறறொன்று இராஜச வியல்புடையது. அவற்றுள், தேவதைகளின் அனுசாரியாய் அவ்விஸ்வரூபன் சாத்விக முகத்தால் அமிருததததைப பானம செய்தனன். அசுரர்களின் அனுசாரியாய் அவ் விஸ்வரூபன் தாமசமுகத்தால் மதுபானஞ்செய்தனன். இராஜச முகத்தால் அவ் விஸ்வரூபன் மனுஷரைபபோன்று அன்னாதிகளைப புஜித்தனன். அவ்விஸ்வரூபன் ஒருகால் ஒரு யாகததில் இருததுவிக்காய்த் தேவதைகளின்பொருட்டு ஓங்கிய சபதத்தால யாகபாகத்தைக் கொடுத்தனன். தனது மாதாவின் பக்ஷபாதிகளாகிய அசுரர்களின்பொருட்டும தாழ்நத சபதத்தால யாகபாகத்தைக கொடுததனன்.

**சங்கை**:—ஹே பகவன்! விஸ்வரூபன் தேவதைகளின்பொருட்டு யாக பாகத்தைப் பிரத்தியக்ஷமாய்க் கொடுத்தது போல, அசுரரின்பொருட்டுப பிரத்தியக்ஷமாய் யாகபாகத்தை ஏன் கொடுக்கவில்லை?

**சமாதானம்**:—யாகபாகஸ்தர் அசுரரன்றாம். ஆகையினால், அவர்பொருட்டுப் பிரத்தியக்ஷ யாகபாகங் கொடுத்தல சமபவியாது. இவ்வார்த்தை யுலகின்கண்ணும் பிரசித்தமாம. குறிபபிட்ட நான்கு புருஷர்க்கு அரசன் ஒரு கிராமங் கொடுப்பனாயின், அக்கிராமத்திற்கு அந்நால்வரே பாகஸ்தராம். அந்தக் கிராமத்

தின்கண் பிசுன (பொய், கோள்முதலிய) விர்த்தியால் ஜீவியா நிற்பவனாகிய துஷ்ட னொருவ னிருப்பின் அவன் கிராமத்தின் பாகஸ்த னன்றாயினும் கிராமபாகத்தை யடைவன். ஆனால் அத்துஷ்ட புருஷனுக்குக் கிராமத்தின் பாகம் பிரசித்தமாய்க் கிடைக்காது; மற்றோ மறைவாய்க் கிடைக்கும். பாகஸ்தராய நால்வருக்கோ கிரா மத்தின் பாகம் பிரசித்தமாய்க் கிடைக்கும். ஆனால் அப்பாகஸ்தனுக்குப பாகம் கொடுத்தல் கிராமத்தின் சுவாமிக்கு (எஜமானுக்கு) அநர்த்தஞ் செய்விப்பதாம்; ஏனெனின், அப்பிரசித்தமாகிய பாகத்தின் அடைவால் பையப் பையச் சாமாத்தி யத்தை யடைந்த துஷ்ட புருஷன் ஒருகாலத்தில் கிராமத்தின் சுவாமியைக் கொல் வன், கிராமாதி சம்பத்துக்களையும் கவர்வன். ஆகையினால், பாகமின்றிய புருஷனுக் குப் பாகத்தின் அடைவு சுவாமியின் அநர்த்த காரணமாம். இவ்வார்தகை யுலகின் கண்ணே பிரசித்தமாம். இவ்வண்ணம விசாரித்துத் தேவதைகட்கு அநிஷ்டம் செய்பவராகிய அசுரரின்பொருட்டு யாகபாகத்தை யடைவிபபதாகிய விப்வரூபன் தன் கிரியைப பார்தது அபபுரோகிதனிடத்தே இததகைய மதியை இந்திரனாகிய யான் செய்தேன் :—இவ்விப்வரூப புரோகிதன் எனது சத்துருவாகிய அசுரரின் ஹிதத்தை விரும்புகின்றனன்; ஆதலின் அரசனாகி என்னையும் தேசத்தையும் கெடுப்பன்; ஆகையினால் இத்துரான்மாவாகிய விப்வரூபன் கொல்ல யோக் கியனாவன்.

இபபோது விப்வரூபனது துரான்மபாவத்தைக் காண்பிபபாம :—விப்வா சத்தோடுகூடி யிராநின்ற தேவதைகளாகிய நம்மை நாசம் செய்யும்பொருட்டு இவ்விப்வரூபன் நமது சததுருவின்பொருட்டு யாகபாகத்தைக் கொடுககின்றனன். ஆகையினால் இவ்விப்வரூபன் துரான்மாவாம். நன்றி கொன்ற புருஷனை உலகின் கண்ணும் துரான்மாவென்பர். அலலது எபபுருஷன் எவனன்னததை யெப போதும் புசிபபனோ அபபுருஷனுக்கு அவ்வன்ன தாதாவானவன் ஆன்மாவாம. ஆன்ம துரோகியானவன் அத்தியந்தம பாவியாவன், இது எல்லா நூற்களின் றுணி பொருளாம். இவ்விசுவரூபனோ எபபோதும் தேவதைகளாகிய நமதன்னத்தைப் புசித்தவனாதலின் தேவதைகளாகிய நாம் விபவரூபனுடைய ஆன்மாவாம். இவன் நமமோடு துரோகம் செய்பவனாய்த் தனது ஆன்மாவோடு துரோகம் செய்தவ னாவன். ஆன்ம துரோகிக்குச் சமானமாகிய பாவி யெவனுமில்லையாம். இவ்விசுவ ரூபன் வேதங்களை யுணர்ந்தோன், பிராஹ்மணன், நம்மெல்லா தேவதைகட்கும் புரோகிதன்; ஆகையினாற் கொல்ல யோக்கியனன்றாயினும எஜமானனாகிய நம் மைக் கொலல இவன் முயன்றனனாதலின் இத்துரான்மாவாகிய விப்வரூபன் அவ சியம் கொல்ல யோக்கியனாவன். ஹே பிரதர்த்தன! இவ்வண்ணம் ஆய்ந்து இநதிர னாகிய யான் தேவதைகளின் சபையின்கண் அந்த விப்வரூபனது மூன்று மத்தகங் களையும் வஜ்ஜிராயுதத்தால் வெட்டியெறிந்தேன். அப்பாபகர்மத்தால், ஆன்ம ஞான மகிமையால் எனது ரோமமாத்திரமும் கெடுக்கபபடவில்லை.

ஹே பிரதர்த்தன! ஆன்மஞான மகிமையால் வேதாந்த விசாரமற்ற கோடி சந்நியாசிகளைக் கொன்றும், என்னைப் பாவம் தீண்டவில்லை; முன் ஒருகாலத்தில்

ஓரிடத்தே கோடி சந்நியாசிகள் கூடியிருந்தனர். அவர் வருணாசிரம ஆசாரங்களிற் பிரீதியுடையவர்; பிரஹ்மசரியம், கிருகஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் என்னு மிந்நான்கு ஆசிரமங்களில் உத்தம ஆசிரமமாகிய சந்நியாசத்தோடு கூடினவர்கள்; இவ்விந்திரன் என தான்மாவென்னும் சர்வான்ம ஞானமின்றியவர்கள். அத்தகைய வெளிமுகமாகிய சந்நியாசிகளைப பார்த்து இந்திரனாகிய யானிது கேட்டனன்:— நீங்கள் எல்லோரும் யாவரென யான் கேட்டவுடன் அவர் என்னைப் பார்த்து, வருணாசிரம கர்மங்களைச் செய்யும் சந்நியாசிகள் யாங்கள் எனக் கூறி, மீண்டுமவர் தெய்வத்தால் மோகமுற்றவராய் இவ்வண்ண மென்னிடத்தில் கூறுவாராயினர்:—சந்நியாசிகளாகிய எங்களை வினவவந்த நீ யாவன். சந்நியாசிகளின் இத்தகைய நிராதரத்தோடுகூடிய வசனத்தைக்கேட்டும் கிருபையோடுகூடிய இந்திரனாகிய யான் அச்சந்நியாசிகளை நோக்கிக் கூறியதாவது:—ஹே சந்நியாசிகளே! உங்கள் யாவருக்கு மான்மா இந்திரனாகிய யான் எனக்கூறிய எனது வசனத்தைக்கேட்டு அச்சந்நியாசிகள் யாவரும் கோபத்தோடு கூடியவராயினர்; அவர் மூர்க்கராயினும் தம்மைப பண்டிதரென நினைந்தவராய்த் தெய்வத்தால் மோகமுற்றவராய் மீண்டும் நிராதரத்தோடுகூடிய வசனத்தை இந்திரனாகிய என்னிடத்திற் கூறினர். சரீரரூப விக்கிரகவானாகிய நீ எவ்வண்ண மிந்திரனாவாய்? கருத்திதுவாம்:— இந்திரனென்னும் சப்தம் இந்திர சப்தத்தினர்த்தம் என்னுமிவ்விரண்டினும் வேறாய் யாதொரு இந்திரனும் சம்பவிப்பதைக் காணோம். அவற்றுள் இந்திர சபதத்தை யிநதிரனெனக் கூறும் முதற் பக்ஷத்தில் விக்கிரகவானாகிய நினக்கு இநதிர ரூபத்தன்மை சம்பவியாது. இநதிரசபதத்தி னர்த்தத்தை இந்திரனெனக் கூறும் இரண்டாவது பக்ஷத்திலும், விககிரகம், ஹவிஷின்போகம், ஐசுவரியம், பிரசன்னத்தன்மை, பலப்பிரதானம் என்னும விக்கிரகாதி ஐந்து விசேஷணங்களோடு கூடிய தேவதை விசேஷம் இநதிரசப்தத்தி னருத்தமா? அல்லது நீ கூறிய சம்பூர்ண சநநியாசிகளினான்மா இநதிர சப்தத்தி னருத்தமா? அவற்றுள், முதற் பக்ஷமோ சம்பவியாது; ஏனெனின், சரீரரூப விக்கிரகத்தோடு கூடிய தேவதை விசேஷம் இந்திரசப்தத்தி னருத்தமாயின், யாகத்தின்கண் அதிதியின் பிரத்தியக்ஷ மாவதுபோல இந்திரனது பிரத்தியக்ஷ ஞானமும் உண்டாதல் வேண்டும். யாகத்தின்கண்ணே இந்திரனது பிரத்தியக்ஷ ஞானமுண்டாவதின்றாம். ஆகையினால், சரீரரூப விக்கிரகவானாகிய தேவதை விசேஷம் இந்திரசப்தத்தி னர்த்தமெனல் சம்பவியாது. ஹவிஷ் அன்னத்தின் போகரூப விசேஷணத்தோடு கூடிய தேவதை விசேஷம் இந்திரசப்தத்தி னருத்தமெனவும் கூறல் சம்பவியாது; ஏனெனின், அதிதியின் பொருட்டு யாகத்தின்கண்ணே கொடுக்கபபட்ட அன்னத்தை அவ்வதிதி புசிபபன்; இஃதியாவரும் பிரத்தியக்ஷமாய்க் கண்டதேயாம். அங்ஙனம் யாகத்தின்கண் இந்திராதி தேவதைகளின் பொருட்டுக் கொடுக்கப்பட்ட ஹவிஷ்வடிவ அன்னத்தைத் தேவதைகள் புசிப்பதில்லையாம். தேவதைகள் ஹவிஷ் அன்னத்தை யாகத்தின்கண்ணே புசிப்பாராயின், அதிதியைப் போன்று எங்கட்குத் தோற்றவேண்டும்; ஆனாற் றோற்றுவதில்லையாம்.

சங்கை :—தேவதைகள் பிரசித்தமாகிய ஹவிஷ்வடிவ அன்னத்தைப் பக்ஷணஞ் செய்வதில்லையா மென்றாலும், வண்டானது மலரின் மணத்தை கவர்வது போலத் தேவதைகளும் அன்னத்தின் சாராம்சத்தைக் கவருவர்.

சமாதானம் :—தேவதைகள் அன்னத்தின் சாராம்சத்தையும் கவர்வதின்றாம்; ஏனெனின், தேவதைகள் அன்னத்தின் சாராம்சத்தைக் கவருவாராயின், ஸ்ரீ கணேசப் பெருமானுக்குச் சமர்பபித்த மோதகமானது சாராம்சமற்றதாகவேண்டும் ஆனால் சாராம்ச மற்றதாய் மோதகமாதலைக் காணேம். ஆகையினால் ஹவிஷின் போகவடிவ விசேஷணத்தோடு கூடிய தேவதையும் இந்திர சப்தத்தின் அர்த்தமாய்ச சம்பவிப்பதில்லையாம்.

ஐசுவரியரூப விசேஷணத்தோடு கூடிய தேவதா விசேஷம் இந்திர சப்தத்தின் அர்த்தமென்னும் கூற்றும் பொருந்தாது; ஏனெனின், தன்பால் சுவாமித்தன்மையின் அபிமானமும் மற்றவற்றின்பால் என்னுடையதென்னும் அபிமானமும் உடைத்தாதல் ஐசுவரியமாம். அல்லது அநேக யாகங்களில் ஏககால அடைவின்பொருட்டு அநந்த வடிவத்தைத் தரிக்கும்படியான ஆற்றல் ஐசுவரியமெனப்படும். இவ்விரண்டு பக்ஷத்தின்கண்ணும் தேவதை இராகமுடையதென்றுச் சித்திக்கின்றது. ஆகையினால் இராகத்தை (இசசையை) உடையவளையும் நாநா வடிவங்களைத் தரிபபவளாயு மிராநின்ற வேசியையும் மதிமானெவனும் பூஜியாததுபோல, இராகவானையும் நாநாவடிவங்களைத் தாரணஞ் செய்பவனாயு மிராநின்ற தேவதையை எப்புத்திமான் பூஜிபபன்; மற்றோ எவனும் பூஜியானென்க. ஆகையினால் ஐசுவரிய விசிஷ்ட தேவதா விசேஷமும் இந்திர சப்ததின் அருத்தமாய்ச் சம்பவியாது.

பிரசன்னத் தன்மைவடிவ விசேஷணத்தோடுகூடிய தேவதா விசேஷம் இந்திர சபதத்தின் அருத்தமெனக் கூறலும் சம்பவியாது; ஏனெனின், யாகாதி கர்மங்களைச் செய்தலால் தேவதை பிரசன்னமாமா? அல்லது, யாகாதி கர்மங்களின்றியும் தேவதை பிரசன்னமாமா? அவற்றுள், முதற்பக்ஷம் சம்பவியாது. ஏனெனின், கர்மம் செய்தலினாலேயே தேவதை பிரசன்னமாயின் மனுஷராகிய எங்களைப்பார்க்கிலும் தேவதைகளிடத்தே என்ன சிறப்புள்ளது, சேவை வடிவ கர்மத்தைச் செய்யாநின்ற பிராணியிடத்தே மனுஷராகிய யாமும் பிரசன்னத்தை யடைகின்றோம். அங்ஙனம் யாகரூப கர்மத்தைச் செய்யாநின்ற புருஷனிடத்தே தேவதையும் பிரசன்னத்தை யடைகின்றது. ஆகையினால் மனுஷராகிய எம்மைப் பார்க்கினும் தேவதைகளிடத்தே விசேஷத்தன்மை சித்தியாது. கருமம் செய்யாமலே தேவதை பிரசன்னமாமென்னு மிரண்டாவதுபக்ஷமும் சம்பவியாது; ஏனெனின், கருமமியற்றாமலே தேவதையின் பிரசன்னத்தன்மை யாண்டும் கண்டிலேம். ஆகையினால், பிரசன்னத் தன்மைவடிவ விசேஷணத்தோடுகூடிய தேவதா விசேஷமும் இந்திர சப்தத்தின் அருத்தமன்றாம். இக்காரணத்தால் பலப்பிரதானவடிவ விசேஷணத்தோடுகூடிய தேவதா விசேஷமும் இந்திர சப்தத்தின் அருத்தமாயச் 'சம்பவியாது; ஏனெனின், பிரசன்னத்தன்மையின் பின்

னரே பலங்கொடுத்தல் பொருந்தும். பிரசன்னத்தன்மை யின்றயின் பலப்பிரதானமும் தேவதையின்கண்ணே சம்பவியாது. ஆகையினால் பலபபிரதான ரூப விசேஷணத்தோடுகூடிய தேவதா விசேஷமும் இந்திர சப்தத்தின் அருத்தமன்றும். இவ்வளவு கூறியதால் விக்கிரகாதி ஐந்து விசேஷணங்களோடுகூடிய தேவதாவிசேஷம் இநதிர சப்தத்தின் அருத்தமாமென்னும் முதற்பக்ஷத்தைச் சந்நியாசிகள் கண்டித்ததாம.

இப்போது நம்மெல்லோருடைய ஆன்மா இந்திர சப்தத்தின் அருத்தமாமென்னு மிரண்டாவது பக்ஷத்தை சந்நியாசிகள் கண்டித்தல் :—நம்மெல்லோருடைய ஆன்மா இந்திர சப்தத்தின் அருத்தமாய்ச் சம்பவியாது. ஏனெனின், சம்பூர்ண பிராணிகளின் ஆன்மா ஒவ்வொரு சரீரத்தின்கண்ணே வெவ்வேறும். எல்லா சரீரத்தின்கண்ணும யான்மாவொன்றே ஆயின் ? ஒரு சரீரத்தில் சுக துக்கத்தின் அனுபவமுண்டானல் சர்வ சரீரங்களிலும சுக துக்கத்தின் அனுபவமுண்டாதல்வேண்டும், ஆனல் அனுபவமோ உண்டாவதின்றும். ஆகையினல், சர்வசரீரங்களில் ஆன்மாவொன்றன்றும ; மற்றே நாநா ஆன்மாவாம். புண்ணிய பாவங்களின் கர்த்தா ஆன்மாவாம ; ஆன்மாவே அவற்றின் பலங்களாகிய சுக துக்கங்களின் போக்தாவாம் ; ஆன்மா அமூர்த்தமும் விபுவுமாம். புத்தி (1), சுகம் (2), துக்கம் (3), இச்சை (4), துவேஷம் (5), முயற்சி (6), தர்மம் (7), அதர்மம் (8), சம்ஸ்காரம் (9), சங்கை (10), பரிமாணம (11), வேற்றுமை (12), சையோகம் (13), விபாகம (14) என்னும் பதினான்கு குணங்களோடுகூடியது ஆன்மாவாம். யான்சுகி யான்துக்கியென்னும் பிரதீதிக்கு விஷயமான்மாவாம். நீ சநநியாசிகளாகிய எஙகளைககாட்டினும் வேறாய்த் தோறறுகின்றனையாதலின் எல்லா சந்நியாசிகளுடைய ஆன்மா நீ எங்ஙனமாவாய், மறறே நீ யெங்களுடைய ஆன்மாவன்றும். ஆகையினல் இநதிர சபதத்தின் அருதத மிந்திரனன்றும் ; மற்றே இந்திரனென்னும சபதமே இந்திரனும். இநதிர சபததிினும் வேறாய் எவ்விநதிர தேவதையின் வடிவமுமின்றும். இவ்வண்ணம் சர்வ தேவதைகளும சப்தவடிவமாம் ; சப்தத்தினும் வேறாய யெத்தேவதைகளுமின்றும்.

ஹே பிரதர்த்தன ! அந்தப பகிர்முக (வெளிமுக) சந்நியாசிகள் இவ்வண்ணம் குதர்க்கத்தோடு கூடியதும் நிராதரவோடு கூடியதுமாகிய வசனங்களைக் கூறி, மீண்டும் என்மேற் கோபஞ்செய்தனர். அசசந்நியாசிகளின் மூர்க்கத்தன்மையையும் வசனங்களின் குரூரத்தன்மையையும காரணமின்றிக் கோபித்தலையும் கண்டு மீண்டும் கிருபையோடுகூடிய இந்திரனகிய யான் அசசந்நியாசிகளைப் பார்த்துக் கூறியதாவது :—ஹே சந்நியாசிகளே ! தேவதைகட்கு விக்கிரகாதிகள் இன்றென்றும், சரீரந்தோறும் ஆன்மாவின் வாஸ்தவபேத முளதென்றும், இந்திரனுய நீ எங்களுடைய ஆன்மாவன்றென்றும் முன்னர் நீங்கள் கூறியதின் கண்ணே ஏதாவது வேதவசனம் பிரமாணமாயிருப்பின், நீங்கள் கூறுங்களென ஹே பிரதர்த்தன ! அசசந்நியாசிகளிடத்தே பிரமாணம் வினவியவுடன் அம்மூர்க்கர் மீண்டுங் குரோதமுற்றவராய் ஒரு வேதவசனத்தையுங் கூறிலர். சுழித்த புருவமுமுகமுமுடையராகிய அவர் மீண்டும் என்னை நிந்தித்து போ போவெனக் கூறினர்.

அக்கூற்றும் முகத்தாற செய்திலா மற்றோ அத்தியந்தம் நிராதரத்தைக் காண்பிபபதாகிய கரத்தின் சேஷ்டையால அறிவிததனர். ஹே பிரதர்த்தன! இங்ஙனம் சந்நியாசிகள் நிராதரம் செய்தபின், மூவுலகையுங் காப்பாற்றும்பொருட்டு முபன்றுகொண் டிராநின்ற இந்திரனாகிய யான் எனது மனத்தில் இவ்வகையா ராய்ந்தேன்:—இச்சந்நியாசிகளை யாது செய்வது யோக்கியம், கருத்திதுவாம்:—இவரை யுபேக்ஷிப்பது யோக்கியமா? அல்லது தண்டிப்பது யோக்கியமா? அவற்றுள் உபேக்ஷித்த லென்னு முதற பக்ஷமோ சமபவியாது. ஏனெனின், மூவுலகத்தாரையும அதர்மத்தினின்றுங் காபபாறறும பொருட்டு எனது அவதாரமாம். தண்டித்தல் என்னும் இரண்டாவது பக்ஷமோ அபராத நிாணயமின்றிப பொருந்தாது. ஆகையினால் இசசந்நியாசிகள் அபராதத்தை நிர்ணயிக்கவேண்டும். அபராத நிாணயத்தின் பின்னரே தண்டித்தலுசிதமாம்.

ஆண்டு அபராத நிர்ணயத்தின் பொருட்டுச சநநியாசத்தையும, சநநியாச தர்மங்களையும், சநநியாசபலத்தையும் உணாத்துவிபபதாகிய சுருதியின் பொருளை நிரூபிபபாம்:—விவேகாதி சாதன சதுஷ்டயமுடைய புருஷன் ஆன்மசாக்ஷாத்காரமடையும் பொருட்டுச சம்பூர்ண காமங்களின்றி யாகரூப சந்நியாசததைச் செய்க. சர்வ கர்மங்களையுந்தியாகித்துச் சநநியாசியானவன் சிரவணமனன நிதித்தியாசனங்களால் வேதாந்த அர்த்த விசாரமொன்றே யெப்போதுஞ் செய்தலவேண்டும். இங்ஙனம் சந்நியாசம வேதாநத விசாரம் என்பவறறால் எபபுருஷனுக்கு அத்விதீய ஆநந்தசொரூப ஆன்மாவின் சாக்ஷாத்கார முண்டாமோ அவன் ஜன்ம மரணரூப சம்சார துக்கத்தையடையான். இவ்வண்ணம சுருதியானது கூறியிருக்கின்றது. ஈண்டு விவேகாதி சாதன சம்பததி வாயிலாய்ச் சர்வ கர்மங்களின் தியாகத்தின் பெயர் சந்நியாசமாம். எப்போதும் வேதாந்த சாஸ்திரத்தின் விசாரம சந்நியாசியின் தாமமாம், ஜன்மமரணாதி அனர்த்த நிவிர்த்தி பிரஹ்ம பாவத்தின் பிராப்தி வடிவான மோக்ஷத்தின் அடைவு சநநியாசததின் பபனும். இவ்வகையாய சந்நியாசம் இவரிடத்தில் இன்றும்.

அல்லது இருவகையாகிய சநநியாசம சுருதியின்கண்ணே கூறி இருக்கின்றது. ஒன்றோ கிரமமாகிய சநநியாசம், மற்றொன்றோ கிரமமின்றிய சந்நியாசம். அவற்றுள், முதலாவது பிரஹ்மசாரியாதல், பின்னர் கிரகஸ்தனாதல், அதன் பின்னர் வானப்பிரஸ்தனாதல, அதன் பின்பு சநநியாசியாதல் என்னும் இக்கிரம சந்நியாசத்தைத் தீவிரமான வைராக்கிய மின்றிய புருஷனுக்கு 70 வயதுக்குமேல் செய்துகொள்ளச் சுருதியானது கூறியிருக்கின்றது. எப்புருஷனுக்கு விஷயங்களிடத்தே தீவிரமான வைராக்கியமுளதோ, அபபுருஷனுக்குக் கிரமமின்றியும் சுருதியானது சந்நியாசத்தை விதித்திருக்கிறது. எத்தினத்தில் புருஷனுக்கு விஷயங்களில் தீவிரவைராக்கிய முண்டாமோ அத்தினத்திலேயே சந்நியாசம் செய்துகொள்க, பிரஹ்மசாரியா யிருப்பினும், கிரகஸ்தனாயிருப்பினும், வானப்பிரஸ்தனா யிருபபினும், இவ்விருவகையாய சந்நியாசத்தின்கண் கிரம சந்நியாசமோ இவர்கட்கின்றும். ஏனெனின், இவ்வியாவரும் யவ்வன

வஸ்தை யுடையவர்கள். மற்றதாகிய கிரமமின்றிய சந்நியாசமும் இவர்க ளிடத்து இன்றும். ஏனெனின், இவ்வியாவரும் ஆன்மஞானம் இன்றியவர் களாம், நீதியற்றவர்களாம், கோபவடிவப் பகைவன்றன் வயப்பட்டவர்களாம்; இக்காரணத்தால் துன்மதிமூர்க்கர் தமதிஹிதத்தைக் கேட்டிலர், மாறாய் ஹி தத்தை யுபதேசிக்கும் இந்திரனாகிய என்னோடு துவேஷிக்கின்றனர். மரணத்தின் சமீபத்துற்ற நோயாளியானவன் ஹிதஞ்செய்யும் வைத்தியனோடு துவேஷிப்பன்; அங்ஙனம் இச்சந்நியாசிகள் மிருத்தியுவின் சமீபத்துற்றவராய் என்னோடு துவே ஷத்தை யடைகின்றனர்.

சங்கை :—ஹே பகவன்! இச்சந்நியாசிகள் அபராதிகளாயினும் தாங்கள் பொறுத்துக்கொள்வது யோக்கியமாம், வேறு எவருடைய உபதேசத்தாலேனும் இவர்கட்கு ஆன்ம சாக்ஷாத்காரமுண்டாம்.

சமாதானம் :—இந்திரனாகிய எனது வசனத்தை இவர்கள் அங்கீகரிக்காத போது இவர் எவர் உபதேசத்தையும் அங்கீகரியார். ஏனெனின், இச்சந்நியாசிக ளுணரும்பொருட்டு இவர் தம்நிராதரத்தோடுகூடிய வசனத்தைச சகித்துக் கொண்டும், கிருபையோடுகூடிய இந்திரனாகிய யான் இவர்களிடத்தே சுருதிப்பிர மாணத்தைக் கேட்டேன். கருததிதுவாம் :—நிராதரத்தைச் சகித்துக்கொண்டு உபதேசிப்பவர் என்னையன்றி வேறெவருமின்றும்.

சங்கை :—ஹே பகவன்! அத்தகைய பகிர்முக சந்நியாசிகளிடத்தே தாங் கள் யாதின்பொருட்டுச் சுருதிப்பிரமாணத்தை வினவினீர்கள்.

சமாதானம் :—ஹே பிரதர்த்தன! யான் வினவியதற்கு அபிப்பிராய மியாதெ னின், இச்சந்நியாசிகள் ஆன்மாவின் வாஸ்தவபேதத்தின்கண் யாதாவது வேத வசன மோதுவாராயின், அந்த வேதவசனத்தானே இவர்பொருட்டு யான் ஆன்ம உபதேசம் செய்யலாமென்பதே; எனதிவ் வபிப்பிராயத்தை யறியாராய் இம் மூட சந்நியாசிகள் காரணமின்றியே என்மேற கோபப்பட்டனர். வேதவசன வடிவப்பிரமாணத்தையு மிவரறிந்திலர். குதர்க்கத்தை வாளாகூறுவர். ஆகை யினால் இவர் தண்டிக்க யோக்கியர்.

அல்லது, சண்டாளர், பகைவர், தாழ்ந்தோர், துராசாரர் என்னு மிநநால் வரில் எவனேனும் எதார்த்தவினாவை வினவின், மதிமானானவன் அவ்வினா விற்கு உத்தரம் கூறல்வேண்டும் என்பது சாஸ்திர நியமமாம். இந்நியமத்தையு மிவர் விட்டொழித்தனர். ஏனெனின், சாக்ஷாத் இந்திரனாகிய என்னாற் கேட்டு மிவர் விடைபகர்ந்திலரன்றோ.

அல்லது இத்துன்மதிச் சந்நியாசியர் ஜன்மமும் நிஷ்பலமாம். ஏனெனின், சர்வ கர்மத்தின் தியாகவடிவ சந்நியாசத்தை இவர் தரித்துளார்; ஆகையினால் இவர் கர்மத்திற்கு மதிகாரிகளல்லர். வைராக்கியாதி சாதனங்களை யுடையோரல் லர். ஆகையினால், இவர் ஞானத்திற்கு மதிகாரிகளல்லர். வைராக்கியம், விவேகம், சமாதிஷட்சம்பத்தி, முமுக்ஷுத்தன்மை என்னு மிந்நான்கு சாதனங்களோடு கூடிய புருஷர் வேதாந்த சிரவணத்தின்கண் அதிகாரியாவர்.

சங்கை :—சந்நியாசிகளிடத்தே வைராக்கியத்தின் அபாவத்தைத் தாங்கள் எவ்வண்ண மறிந்தீர்கள் ?

சமாதானம்:—கோபவடிவ ஏதுவால் இவர்களது வைராக்கியத்தின் அபாவம் அறியப்பட்டது; யாண்டுக் கோபமுளதாமோ ஆண்டு வைராக்கியமின்றாம். ஏனெனின், முதலிலோ ஜீவர்கட்குச ஜன்மமே கஷ்டவடிவமாம்; அந்த ஜன்மத்தினும், ஜன்மத்தின் காரணமாகிய காமம் கஷ்டதரமாம்; அக்காமத்தினும் கோபம் கஷ்டதமமாம. அந்தக் கோபம் இந்தச் சந்நியாசிகளிடத்தே யுளது; ஆகையினால இவரிடத்தே வைராக்கியத்தின் அபாவமுளது.

இப்போது காமத்தினும் கோபத்திற் கதிகத்தன்மையைக காண்பிப்பாம் :—காமத்தால் ஜன்னியதுக்கமானது பரிணாமகாலத்தின் கண்ணே பிராணிகட்குண்டாம். காமத்தின் வர்த்தமான காலத்தில் (நிகழ்காலத்தில்) துன்பமுண்டாகாது. கோபமோ பரிணாமகாலத்தின் கண்ணும் வர்த்தமானகாலத்தின் கண்ணும் எப்போதும ஜீவர்கட்குத துன்பந்தருவதாம. ஆகையினால், காமத்தினுங் கோபம் அதிக துக்கரூபமாம.

அல்லது மற்றும காமத்தினுங் கோபத்திற் கதிகத்தன்மை யுளது. காமமோ எச்சரீரத்தின்கண்ணே யுற்பன்னமாமோ அச்சரீரரூப ஆசிரயத்தைச் சந்தாபம் செய்யும்; அன்னியத்தைச சந்தாபம செய்யமாட்டாது. அயலாரை யடிக்கும வடிவபலத்தோடு கூடிய கோபமோ எச்சரீரத்தின்கண்ணே யுற்பன்னமாமோ அச்சரீரரூப ஆசிரயத்தையும, எச்சரீரத்தின்மீது கோபமாமோ அச்சரீரரூப விஷயத்தையும சந்தாபஞ்செய்யும். இக்காரணத்தினாலேயே கோபத்தோடு கூடிய சில பிராணிகள் தமது மதகத்தை (சிரசை) யுடைத்துக்கொள்வர ; கிணறு முதலியவற்றில விழுவர். ஆகையினால காமத்தைக்காட்டிலும கோபம கஷ்டதமமாம.

அல்லது மற்றும் காமத்தைக்காட்டினும் கோபத்திற் கதிகத்தன்மை யுளது. உற்பத்தியின் காரணம காமமாம்; ஆகையினால் காமம் இரஜோகுணத்தின் பரிணாமமாம. கோபம் நாசத்தின் காரணமாதலின் தமோகுணத்தின் பரிணாமமாம ; ஏனெனின், அண்டஜம், ஜராயுஜம், சுவேதஜம், உற்பிஜ்ஜம என்னும இந்நான்கு வகையாய பிராணிகளின் சரீரம, மனம், வாக்கு என்பவற்று ஹிம்சையேற்படின் அது கோபத்தாலேயே உண்டாம்; கோபத்தாலன்றி இம்சை உண்டாகாது. ஆகையினாலும் காமத்தைக் காட்டினுங் கோபமதிகமாம்.

அல்லது, குஷ்டம முதலிய நோய்கள் தோலை யழிப்பதுபோல விஸ்வத்தின் கண்ணே வியாபித்திராநின்ற புருஷனுடைய கீர்த்தியை யககாலத்திலேயே கோபமழிக்கும்.

அல்லது, அயலாரை யடிக்கும் வடிவ பலத்தோடு கூடிய இக்கோபமானது ஜீவர்களைச் சுவர்க்கத்தினின்றும் திரும்பும்படி செய்யும். கருத்திதுவாம் :—சுவர்க்கத்தின் காரணமாய யாகாதி கன்மங்களும் கோபித்தலினால் சுவர்க்கரூப

பலத்தி னேதுவன்றாய் விடும். துர்ச்சன புருஷர், இராஜத் துவாரத்தின்கண்ணே (இராஜனது அரண்மனையின் வாசற்படியின்கண்ணே) புகுதல்வடிவ பலத்தோடு கூடியவராய்ப் புகச்செயும் புருஷரை இராஜத் துவாரத்தினின்றும் வெளிப்படுத்தி விடுவதுபோல கோபமும் புருஷனைச் சுவாக்கத்தினின்றும் திருப்பிவிடும்.

அல்லது குதிரையை நடத்தும் புருஷனைத் துஷ்ட அசுவமானது குழியின் கண்ணே தள்ளுவதுபோல இக்கோபமும புருஷனை நரகத்தின்கண்ணே தள்ளும். ஆகையினால் சுகத்தையடைய இசசித்த புருஷனுக்குக் கோபத்திற்குச் சமான மாய் எப்பகையுமின்றாம்; கோபமே பரமசத்துருவாம். ஆகையினால் சுகத்தை யடைய விசசித்த புருஷன் அவசியம் கோபத்தைத் தடுக்கவேண்டும். இக்கோ பம் காமத்தைக் காட்டினும் அதிக துக்கத்தைக் கொடுப்பதாம.

அல்லது, ஓங்கி யெரியாநின்ற பேரழலானது காய்நத காஷ்டத்தையும் ஈரமாய விர்தனத்தை(விறகை)யும் தகிக்கும்; அங்ஙனம் புருஷனிடத்தே யுதய மான கோபமும் சுவர்க்கசாதனத்தையும், மோக்ஷ சாதனத்தையும் நாசம செய்யும். கருத்திதுவாம்:—சாதனங்களிடத்தேயுள்ள பலத்தை யுதிப்பிக்கும் வல்லமை கோபத்தாலழிந்து போய்விடும்.

அலலது தருவின்கண் அக்கினிவடிவ ஹேதுவின் ஞானததால் இரசத்தோடு கூடியதன்மை யின்மையின் அனுமிதி ஞானம் தூரதேசத்தின்கண் இராநின்ற புருஷனுக்கு உண்டாம்; அவ்வனுமானத்தின் பிரகாரமிதுவாம. இவ்விருக்ஷம, இரசத்தோடு கூடிய தன்மையின்மையது. அழலோடு கூடியிருத்தலின், பிரசித்த விருக்ஷம்போல இவ்வனுமானத்தால விருக்ஷத்தின்கண் இரசத்தோடு கூடிய தன்மையினின்மையி னிச்சயம் உண்டாமாறுபோலக் கோபரூப ஏதுவின் ஞானத் தால் இசசநநியாசிகளிடத்தும் வைராக்கியமின்மையின் அனுமிதி ஞானமுண்டாம். அவ்வனுமானத்தின் பிரகாரமிதுவாம்:—இவ்வெல்லாச சந்நியாசியரும் வைராக் கியமற்றவா; கோபத்தோடு கூடியவராதலால்; பிரசித்த அஞ்ஞானியைபபோல இவ்வனுமானத்தால் இசசந்நியாசிகளிடத்தே வைராக்கிய மின்மையின்ஞானம் உண்டாம்.

அல்லது யாண்டுக் குரோதமுளதாமோ ஆண்டு இசசையு மவசியமிருக்கும்; இச்சையின்றிக் கோபமுண்டாகாது ஏனெனின், இசசையின் விஷயத்தை யாவ ரேனுந் தடுப்பின் அவ்விசசையே கோபாகார பரிணமத்தையடையும். இவ் வார்த்தை கீதையின்கண் ஸ்ரீ பகவானவர் "காமமிது கோபமிது" என்னும் சுலோகத்தின்கண்ணே பிரதிபாதித் தருளியிருக்கின்றார். உலகின்கண்ணும் இவ் வார்த்தை பிரசித்தமாம். ஒரு புருஷன் ஒரு வஸ்துவை யிச்சித்து ஒரு புருஷனி டத்தே செல்லின் அவ்வஸ்துவினது அடைவின்கண் யாவரேனும் தடைசெய்யின் அவர்மீது அவனுக்கு அத்தியந்தம் கோபமுண்டாம். இச்சை யுதயமாகாவிடின் அதன் பலத்தை எவருந் தடைசெய்வதின்றாம். அசத்தாய மலடிமகனுடைய அரசாங்கத்தை யெவருந் தடுப்பதின்றாமன்றோ, ஆகையினால் தடுப்பதால் பலத் தைக் கைவிட்ட இச்சையே கோபாகார பரிணமத்தையடையும். இச்சந்நியாசிக

ளிடத்திற் கோபங் காணப்படுதலின் ; கோபத்தின் காரணமாய இச்சையும் அவசியம் இவர்களிடத்தே யுண்டாம். யாண்டிச்சையுளதோ ஆண்டு வைராக்கியமின்றாம், ஆகையினால் இச்சந்நியாசிகள் வைராக்கியமற்றவராவார்கள்.

அல்லது இச்சந்நியாசிகளிடத்தே காமமுங் கோபமுமிருக்கின்றன. அவையோ நீங்கும் உபாயமற்றவையா யிருக்கின்றன. இக்காரணத்தால் அவை ஜயிப்பதற்கு அசக்கியமாம். அத்தகைய காமக்குரோதங்க ளிருப்ப இச்சந்நியாசிகளிடத்தே வைராக்கியம் எங்ஙன் சம்பவிக்கும்? மற்றோ, இவர்களிடத்தே வைராக்கியமின்றாம். ஸ்திரீயின் சம்சர்க்கத்தின் இச்சையின் பெயர் காமமாமென்றலும், ஈண்டுக் காமசப்தத்தால் இச்சாமாத்திரத்தைக் கவர்ந்துகொள்க.

சங்கை :—ஹே பகவன்! தாங்கள் நீங்கு முபாயமற்றன காமக்குரோதங்களெனக் கூறினீர்கள், அது பொருந்தாது; ஏனெனின், முமுக்ஷு ஜனங்கள் உபாயத்தாற் காமக்குரோதங்களை நிவிருத்திப்பர்.

சமாதானம் :—எவ்வுபாயத்தால் முமுக்ஷு ஜனங்கள் காமக்குரோதங்களை நிவிருத்தி செய்வார்களோ அவ்வுபாயம் இச்சந்நியாசிகளிடத்தே யின்றாம்; ஏனெனின், பிரஹ்மத்தை யுணர்ந்த மகான் புருஷரின் சேவையும் வினவுதல் வடிவ சங்கமுமே காமக் குரோதங்களின் நிவிருத்தி யுபாயங்களாம். அவ்வுபாயம் இவர்களிடத்தின்றாம். சர்வ பிரஹ்ம வேத்தாக்களிலும் முக்கியமாயுள்ள இந்திரனாகிய என்னோடு இச்சந்நியாசிப்பா லக்கால வசனித்தலையும் செய்திலரேல், இவர் சேவையும் வினவுதலும் செய்வதியாங்ஙன், ஆகையினாலிவர்தங் காமக்குரோதத்தின் நிவிர்த்திக்கு யாதொரு உபாயமுமின்றாம்.

அல்லது வைராக்கியமின்றிய இச்சந்நியாசிகட்குச் சந்நியாச ஆசிரமத்தைத் தரித்திருப்பதால் எப்பலத்தின் பிராப்தியு முண்டாகமாட்டாது, மாறாய் இதனே காமி மானிகட்கிச் சந்நியாசத்தால் தாழ்வுண்டாம்.

அல்லது வைராக்கியமின்றிய இவர்களுடைய சந்நியாசம் பயனற்றதாம். ஏனெனின், சந்நியாசமும் சந்நியாசத்தினபானு மிருவகைப்பாம். ஒன்றோ விவிதிஷா சந்நியாசமாம், மற்றொன்றோ வித்வத் சந்நியாசமாம். அவற்றுள், பிரஹ்மஞானமடையும்பொருட்டுச் சர்வ கருமங்களின் தியாகம் செய்தலை விவிதிஷா சந்நியாசமென்பர். ஆன்ம சாக்ஷாத்காரத்தின் அடைவின் பின்னர் ஜீவன்முத்தி சுகத்தின்பொருட்டுச் சர்வ கருமங்களின் தியாகம் செய்தலை வித்வத் சந்நியாசமென்பர். அவற்றுள், ஆசிரியர் வாயிலாய் வேதாந்த சிரவணம் செய்து ஆன்மாவை நிச்சயம் செய்தல் விவிதிஷா சந்நியாசத்தின் பயனும். ஜீவன் முத்திச் சுகத்தின் அடைவு வித்வத் சந்நியாசத்தின் பயனுமாம். அவற்றுள், விவிதிஷா சந்நியாசத்தின் பயனாகிய ஆன்ம சாக்ஷாத்காரத்தின் சம்பாவனை இச்சந்நியாசிகளிடத்தே யின்றாம் ; ஏனெனின், இவர்பால ஆன்ம சாக்ஷாத்காரத்தின் இச்சையின்றாம் ; இச்சையின்மையின் இம்மூர்க்க சந்நியாசிகள் ஆன்ம சாக்ஷாத்கார மடையும்பொருட்டுக் குருவின் சமீபத்திலும் செல்லார். குருவின் சமீபத்தை யடைந்தாலன்றி

ஆன்ம சாக்ஷாத்காரம் துர்லபமாம். ஆகையினால் விவிதிஷா சந்நியாசத்தின் பலமாகிய ஆன்ம சாக்ஷாத்காரமும் இவர்களிடத்தே சம்பவியாது. விவிதிஷா சந்நியாசத்தின் பலமாகிய ஆன்ம சாக்ஷாத்கார மிவர்கட் குண்டாகாதபோது, ஆன்ம சாக்ஷாத்காரத்தின்பின் னுண்டாவதாகிய ஜீவன் முத்தியின் ஆநந்தவடிவ வித்வத் சந்நியாசத்தின் பலமிவர்கட் கெங்ஙனமுண்டாம். ஆகையினு லிருபயனு மின்மையின் இவர்களுடைய சந்நியாசம் பயனற்றதாம்.

அல்லது, இச்சந்நியாசியா சந்நியாச சப்தத்தினர்த்தம் தம்பாற் பொருந்துகின்றதா? இன்றென்வும் அறிந்தாரில்லை. சந்நியாச சப்தத்தின் அர்த்தத்தை இவர் அறியாதபோது அன்னிய அர்த்தத்தை இவரெங்ஙன மறிவர்?

இப்போது சந்நியாச சப்தத்தின் அருத்தத்தைக் காண்பிப்பாம், சந்நியாச சப்தத்தின்கண் இருபதமுள. ஒன்றே "சம" பதமாம்; மற்றது "ந்யாச" பதமாம்.

அவற்றுள், யான் பிரஹ்மரூபனு மென்னும் ஆன்மஞானவடிவ பாணத்தால் மூலாஞ்ஞானத்தோடு காமக்குரோதாதி சத்துருக்களின் நாசம், "சம்" பதத்தின் பொருளாம். மீண்டும் பிறத்தலின்றிப் பிரஹ்ம பாவமாய் நிலைபெறல் ந்யாச பதத்தின் அருத்தமாம். இரண்டு பதங்கட்கு மொருங்கே இவ்வாத்தமாம்:— ஆன்மஞானவடிவ பாணத்தால் மூலாஞ்ஞானத்தோடுகூடிய காமக்குரோதாதிகளை நிவிருத்திசெய்து மீண்டும் பிறவாமல் பிரஹ்ம பாவமாய் நிலைபெற்றிருத்தலாம். இச்சந்நியாச சப்தத்தினர்த்தம இவ்வைராக்கிய மின்றியவ ரிடத்தேயின்றும். ஆகையினால இவர்தம சந்நியாசம் பயனற்றதாம்.

அல்லது, இச்சந்நியாச சப்தத்தினருத்தம் வித்வத் சந்நியாசத்தின்கண்ணே பொருந்துமென்னினும் விவிதிஷா சந்நியாசத்தின்கண்ணே பொருந்தாது. ஆகையினால விவிதிஷா சந்நியாசத்தின் சங்கிரகத்தின் பொருட்டு வேறுபிரகாரமாய்ச் சந்நியாச சப்தத்தின் அருத்தத்தைக் கூறுவாம். அவற்றுள், சாதனசகித இவ்வுலக சுகத்தின் தியாகமும், சாதனசகித பரலோக சுகத்தின் தியாகமும், சம்பதத்தின் அருத்தமாம். ஆன்மஞான அடைவின் பொருட்டுக் குருவின் சமீப மிருத்தல "ந்யாச" பதத்தின் அர்த்தமாம். இரண்டு பதங்கட்கு மொருங்கே இவ்வர்த்தமாம், சாதனசகித சம்பூரண சுகங்களைப் பரித்தியாகஞ்செய்து ஆன்மஞான அடைவின் பொருட்டுக் குருவின் சமீபஸ்திதியாம். இவ்விவிதிஷா சந்நியாச சப்தத்தின் அர்த்தம் இச்சந்நியாசிகளிடத்தே யின்றும். ஆகையினாலும் இவர்தம் சந்நியாசம நிஷ்பலமாம்.

அல்லது, விவிதிஷா சந்நியாசமும வித்வத் சந்நியாசமும மோக்ஷகாரணங்களாம். அவ்விரண்டு மிவர்பா லின்றும. கேவலம் சந்நியாச மாத்திரத்தை யிவர்கள தரித்திருக்கின்றனர். கேவலம் சந்நியாச மாத்திரத்தால் மோக்ஷமுண்டாக மாட்டாது. கேவலம சந்நியாச மாத்திரத்தாலேயே மோக்ஷமுண்டாமாயின், சந்நியாசியின் வேஷத்தைத் தரித்திராநின்ற நடர்(வேஷதாரி)கட்கும் மோக்ஷமுண்டாகவேண்டும் உண்டாவதோ இன்றும். ஆகையினால் சந்நியாச மாத்திரம் மோக்ஷ

காரணமன்றும், மற்றோ, விஷய ஜன்னிய சுகத்தின் இச்சையின் பரித்தியாகத்தாலும், காமக்குரோதாதிகளின் பரித்தியாகத்தாலும் மோக்ஷமுண்டாம.

சங்கை :—காமக்குரோதாதிகளை வசஞ்செய்ய முடியாதவன் என்ன உபாயம் செய்வது.

சமாதானம் :—எவ்வகையாலுங் காமக் குரோதாதிகளை வசஞ்செய்வதிற சமர்த்த மில்லாதவன் அடிக்கடி சற்சங்கத்தையும், வேதாந்த சாஸ்திர விசாரத்தையும் செய்க. சரற்காலமானது ஜலத்தின் மலினத்தன்மையை நஷ்டஞ்செய்வதுபோலச் சற்சங்கமும் வேதாந்த சாஸ்திர விசாரமும் வையப்பையக் காமக்குரோதாதிகளை நாசஞ்செய்யும். துஷ்ட அஸ்வமானது அஸ்வவித்தையை யறிந்துள்ளவனால் அநந்தநடவை பழக்கிவைபபினும் நெடுநாட்பின் தனது தோஷமற்றதாகின்றதுபோல, காமக்குரோதாதிகளின் வசமுற்ற துஷ்ட மனமானது குரு சாஸ்திரங்களால் சிக்ஷிக்கப்படினும் நெடுநாட்பின் தோஷமற்றதாம். ஆகையினால் சிரத்தையோடு தடையின்றி நெடுநாள்வரை யியற்றிய சற்சங்கமும் வேதாந்த சாஸ்திர விசாரமுமே காமக்குரோதாதிகளின் நிவிருத்தி வாயிலாய்ப் புருஷர்கட்கு மோக்ஷசாதனமாம. இச்சந்நியாசிகளிடத்தே இச்சாதனங்களின் ஆசையுமின்றும் ; ஏனெனின், இவரோ மூடர், ஆயினும் இவர்கட்குத் தமமிடத்தே பண்டிதத்தன்மையின் அபிமானமுளது. அபிமானி புருஷனுக்குச் சற்சங்க முண்டாகமாட்டாது. இச்சந்நியாசிகள் குருவேதாந்த வசனத்தையும் அநாதரஞ் செய்துளார்; ஆன்மஞானமற்றவர்; காமக்கிரியையின்கண்ணே தற்பரர். கர்மிகட்கு 70 வயதுக்குப் பின்னரே சந்நியாசத்தின் அதிகாரமாம. 70 வயதுக்குமுன் கர்மிகட்குச் சந்நியாசத்தின் அதிகாரமின்றும. எப்புருஷனுக்கு விஷயங்களிடத்தே தீவிர வைராக்கியமுண்டாமோ, ஆன்மஞானத்தின் அடைவினிச்சையுண்டாமோ, அப்புருஷனுக்குச் சந்நியாசத்தைக் கிரகணஞ்செய்வதில் காலத்தின் நியமமின்றும. இச்சை யுண்டானபோது சுவாநதுகொள்ளலாம. ஏனெனின், சுருதியின்கண் ஆன்மா அனான்மாக்களின் விவேகத்தின்பொருட்டுச் சந்நியாசம விதித்துளது. அவ்வான்மா அனான்மாக்களின் விவேகத்தை யிம்மூடர் சந்நியாசியாய்ச் செய்திலாதலிற் றாழ்ந்தோராவர். ஸ்ரீ சுரேஸ்வர ஆசாரியர் வார்த்திகத்தின் கண்ணும இவ்வார்த்தை கூறியுள்ளார் :—

ப்ரத்யக்தத்வவிவேகாய ஸம்ந்யாஸ: ஸர்வகர்மணாம் ।
ஸ்ருத்யாவிதீயதே யஸ்மாத் த்யாகீ பதிதோ பவேத் ॥

“ தகுபிரத்தியக் காகிய தத்துவ முணாவா
னிகழ்கருமங் களேவற்றினற் றியாகமே யியைய
மிகுசுருதிகள் மிழற்றி மோதலின் மிளிரந்தே
புகுமதுதனைப் போக்கினன் பதிதனுய்ப் போமே.” (14)

இதன்பொருள் :—தேகாதிகளினின்றும ஆன்மாவை வேறு பிரித்தறியும்பொருட்டுச் சர்வ கர்மங்களின் தியாகவடிவ சந்நியாசத்தைச் சுருதியானது விதித்

திருக்கின்றது. எப்புருஷன் சந்நியாசத்தைத் தரித்துக்கொண்டு ஆன்மவிசாரத்தைப் பரித்தியாகம் செய்துளானே அப்புருஷன் தாழ்ந்தோனாவன்.

அல்லது எப்புருஷன் தீவிர வைராக்கியமின்றியவனே பிரஹ்மலோகத்தையடைய இச்சித்துளானே அப்புருஷனுக்கு 70 வருஷத்தின் பின்னர்க் கிரம சந்நியாசத்தின்கண் அதிகாரமாம். அச்சந்நியாசத்தாற் பிரஹ்மலோகத்தை யடைவன், இவ்வகையாய கிரமசந்நியாசமும் அக்கிரமசந்நியாசமும் எவனின்றியவனுய்க கேவலம் வேஷமாத்திரத்தை யாவன் தரித்துக்கொண்டுளானே அவனுக்குப் பிரஹ்மலோகப் பிராப்தியும் மோக்ஷப்பிராப்தியு முண்டாகா; மற்றே, இரண்டினும் பிரஷ்டனாவன்.

அல்லது, இச்சந்நியாசியர் சதாசாரத்தோடு கூடியவர், பிராஹ்மணர், ஆகையினால் மிகவும் மேலோரே யாவரென்றாலும் துஷ்ட அசுவமானது நெறியைவிட்டொழித்துக் கெட்டநெறியி லோடுவதுபோல இச்சந்நியாசியரும் ஆன்மவிசாரவடிவமார்க்கத்தைப் பரித்தியாகம்செய்து குமார்க்கத்தின்கண்ணே செலலுகின்றனர். இவர்களைச் சிக்ஷிப்பவர் எவருமின்றாம்; ஏனெனின், சிக்ஷை செய்பவர் இருவர் அவருள் ஒருவரோ குருவாகவேண்டும் மற்றொருவரோ அரசனாகவேண்டும். அவருள் குருவோ இச்சந்நியாசிகட்கு எவருமின்றாம்; இருப்பினன்றே இவர்களைப் பலாத்காரமாய் ஆன்ம விசாரரூப மார்க்கத்தின்கண்ணே சரிப்பிக்கலாம். இச்சந்நியாசிகள் தமது பலத்தால் தம்மை வேதாந்த விசாரத்தின்கண்ணே முயல்வித்துக்கொள்வதிலும் சமர்த்துடையரன்றாம்; ஏனெனின், இந்திரனையென்னால் உபதேசிக்கப்பட்டு இச்சந்நியாசியர் வேதார்த்தத்தின்கண் மதியை யொருமைப்படுத்திலர். ஆகையினால் இங்ஙனம் அறியலாமன்றோ இவர் தம் மனம் எவ்வகையாலும் வசமாவதன்றாம். ஆகையினால், இத்துரான்ம சந்நியாசிகள் அரசனால் சிக்ஷிக்க யோக்கியர். அவ்வரசன் மூவுலகிற்கு இந்திரனே யானும் ஆகையினால் யானே இவர்களைச் சிக்ஷிப்பேன் என இவ்வண்ணம் சந்நியாசிகளின் அபராதத்தை யாராய்ந்து தண்டிப்பதற்கு நிச்சயித்தேன்; மீண்டும் இவ்வண்ணம் விசாரம் செய்தனன். அதாவது இச்சந்நியாசிகட்கு யாது தண்டம் செய்வதென்பதே. ஆண்டுத் தனத்தைப் பறித்துக்கொள்ளுந் தண்டமோ இவர்களிடத்தே சம்பவியாது; ஏனெனின், இச்சந்நியாசிகளிடத்தே தனத்தின் சங்கிரகமின்றாம். இரண்டாவது தலையை மொட்டையடித்தல் வடிவதண்டமும் இவரிடத்தே சம்பவியாது. ஏனெனின், இவர் முதலிலேயே தலையை மழித்துக்கொண்டுளார். மூன்றாவது தேசத்தினின்றும் வெளிப்படுத்தல் வடிவதண்டமும் இவரிடத்தே சம்பவியாது. ஏனெனின், சம்பூர்ண தேச மென்னுடையதாம். அல்லது இச்சந்நியாசிகட்கு இத்தூல சரீரத்தோடு மூவுலகத்தினின்றும் வெளியேபோகச் சாமர்த்தியமிருப்பின் இவர்கட்குத் தேசத்தினின்றும் வெளிப்படுத்தல்வடிவ தண்டம் சம்பவிக்கும்; ஆனால் அத்தகைய சாமர்த்தியம் இவர்கட்கின்றாம். மூவுலகமெல்லா மென்னுடைய தேசமாதலின் தேசத்தினின்றும் வெளிப்படுத்தல் வடிவதண்டமும் இச்சந்நியாசிகளிடத்தே சம்பவியாது. எஞ்சியதாய் இச்சந்நியாசியர்தம் சரீரத்தின் நாசரூப தண்டமே செய்தலுசிதமாம் என விசாரம் செய்து சம்பூர்ண லோகங்களையுங்

காப்பாற்றும் இந்திரனாகிய யான் வேதாந்த விசாரமற்ற சம்பூர்ண சந்நியாசிகளையும் வனத்தின்கண்ணே கொன்று நாய்களின் பொருட்டுக்கொடுத்தனன். அச்சந்நியாசிகளின் மத்தகங்கள் மாம்சமின்றிய என்பு வடிவுடையனவாம். ஆகையினால் அவைகள் பூமியின்கண்ணே யுருண்டுகிடந்தன. அந்தாயாமியாய இந்திரனை என்னாலேவப்பட்ட அந்நாய்கள் கர்மிகட்குக் காண்பிக்குமாறு அச்சந்நியாசிகளின் தலைகளைக் கவ்விக்கொண்டேகி யாகபூமியின் தென் திசையில் டக்ஷித்தன; அதனால் கர்மிகட் கிவ்வாததத்தைப போதித்தனவாயின். ஹே கர்மிகளே! வைராக்கியமின்றி நீங்கள் கர்மங்களைத் தியாகஞ் செய்யாதீர்கள், அங்ஙனம் செய்வீர்களேல் இச்சந்நியாசிகளுக்குத் துர்க்கதி யுண்டானதுபோல உங்களுக்கு முண்டாம். இவ்வர்த்தத்தைப போதிப்பதின் பொருட்டே இந்திரனாகிய என்னா லேவப்பட்ட நாய்கள் யாக பூமியின்கண் சந்நியாசிகளின் மாமிசத்தைப பக்ஷணஞ் செய்தன. வனத்தின்கண்ணே விழுந்திருந்த அச்சந்நியாசிகளின் தலைகள் *கர்ஜூர விருகார பரிணாமத்தை யடைந்தன. அதன் பின்னாக கர்ஜூர விருக்ஷத்தின் சாரரூப ரசமானது மேற்பாகத்திற்குச் சென்றது. மீண்டும அந்த இரசம் பூமியின்கண்ணே விழுந்தது ; அவ்விரசத்தினின்றும் கரீர விருக்ஷமுண்டாயது. அக்கரீரமானதுசௌமிய சுபாவத்தோடு கூடியது. இக்காரணத்தினாலேயே தேவதைகட்குப்பிரசன்னத் தன்மையைச் செய்துவைப்பதின் பொருட்டு அக்கரீரம் யாக ஆஹூதியின் சாதனமாம்.

சங்கை :—கரீரத்தின்கண்ணே சௌமியத் தன்மை எவ்வேதுவால அடைந்துள்ளது ?

சமாதானம்:—பரம்பரையாய்க் கரீரமானது சந்நியாசிகளினின்று முண்டாயது. சந்நியாசிக ளியல்பாயே குரோதமற்றவர்கள் சௌமிய சுபாவத்தோடு கூடியவர்கள், ஆகையினால் காரணத்தின் சௌமியத் தன்மையால் கரீரத்தில் சௌமியத தன்மையுளது.

சங்கை :—முன்னர்த் தாங்கள் சந்நியாசிகளிடத்தே குரோதாதிகளிருக்கின்றனவென்று சொன்னீர்கள், இப்போது குரோதாதிகளற்ற சௌமிய சுபாவம் சந்நியாசிகளுக்குளதெனக் கூறினீர்களாதலின் முற்கூற்றுக்குப பிற்கூற்று முரணுகின்றதே ?

சமாதானம்:—தேகத்தை விடுவதன் முன்னர் அச்சந்நியாசிகளிடத்தே குரோதாதிகளிருந்தன ; ஆயினும தேகபரித்தியாகவடிவ தண்டத்தால் பாபவடிவ குரோதாதிகள் அவர்கட்கு நிவிருத்தியாயின. சந்நியாசிகளின் சுபாவமாய சௌமியத்தன்மை அதன்கண்ணே நிலைபெற்றது.

சங்கை :—அங்ஙனமாயினும சந்நியாசிகளின் சௌமியத்தன்மையானது கரீரத்தில் எங்ஙனம் வந்தது.

---

* கர்ஜூரம் = பேரீச்சு.

சமாதானம் :—அச்சந்நியாசிகளின் வீரியமானது மேற்கதியையுடையதாம்; அவ்வீரியத்தோடுகூடிய அச்சந்நியாசிகளின் மஸ்தகங்களினின்றும் கர்ஜூர விருக்ஷம் உண்டாயது. அம்மஸ்தகங்களில் நெடுநாள்வரை காமரூப அக்கினியின் கலக்கமற்ற வீரியத்தை அச்சந்நியாசிகள் தரித்திருந்தனர். அந்தச் சௌமிய சுபாவத்தோடுகூடிய வீரியமே கர்ஜூர ரசபாவமுறையாய்க் கீரபாவத்தை யடைந்தது. அந்தச் சௌமியமாய கீரத்தின் ஆகுதியால் யாவற்றிற்கும் ஆன்மாவாயிராநின்ற இந்திரனுகிய யான் பிரசன்னமாவேன். சர்வ ஜீவர்கட்கும் உபகாரமாய சௌமிய தமமழையைப் பெய்விப்பேன். கருத்திதுவாம் :—சந்நியாசிகளோ சௌமியர்கள். அவர் தம் வீரியத்தினின்றுமுண்டாய கீரம் சௌமியதரமாம்; கீரத்தின் பரிணமவடிவ மழை சௌமியதமமாம். ஈண்டுத் தரதம சப்தங்கள் அதிகத்தன்மையின் வாசகங்களாம், கீர சப்தம் மூங்கிலின் வாசகமாம்.

சங்கை :—சரீரத்தைவிட்ட பின்னர் அச்சந்நியாசிகட் கென்ன கதியுண்டாயது.

சமாதானம் :—முன்னர் அச்சந்நியாசிகட்கு ஆன்ம விசாரத்தின்கண் யாதோ ஒரு பாப கருமம் தடையாயிருந்தது. அந்தப் பாப கருமமானது இந்திரனுகிய எனது தண்டனையால் நிவிர்த்தியடைந்தது. பின்னர் அவர் கோபாதியற்றவராயினர்; இச்சரீரத்தை விட்டொழித்துச் சன்மாந்தரத்தையடைந்தனர்; அச்ஜன்மாந்தரத்தில் பிரஹ்ம வித்தையின் பிரவிர்த்தகர்களாய ஸ்ரீ வியாசபகவான் ஸ்ரீ நாரதாதி மஹரிஷிகளுடைய பிரஹ்ம வித்யாரூப சந்ததியின்கண்ணே உற்பத்தியாயினர். ஆண்டு யான் பிரஹ்மமாயுளன் என்னும் ஆன்ம ஞானத்தால் அவர் தம் சமபூர்ணவிகாரம நஷ்டமாய்விட்டது. இந்திரனுகிய என்னோடு அவர் அபேத பாவத்தையடைந்தனர். ஹே பிரதர்த்தன ! இவ்வண்ணம் விஸ்வரூப புரோகிதனையும் சாபானுக்கிரகங்களைக் கொடுப்பதில் வல்லுநராய்க் காமகாண்டத்தின்கண்ணே தற்பரராய பிராஹ்மண சந்நியாசிகளையும் இந்திரனுகிய யான் கொன்றேன் என்றுனும ஆன்மஞான மகிமையால் எனக்குக் கிஞ்சிதமாத்திரமும் பாபபரிசம் உண்டாகவில்லை. ஹே பிரதர்த்தன! கேவலம் விஸ்வரூப புரோகிதனையும் சந்நியாசிகளையும் மாத்திரம் யான் கொல்லவில்லை; மற்றோ வேறு கோடானுகோடி தைத்தியர்களையும் யான் கொன்றுளேன். அத்தைத்தியரோ வேதங்களை யறிந்தோர் மாயையின் ஆசாரியனுகிய மய தைத்தியனையும் மோகஞ்செய்வதாய மாயையோடுகூடியவர்; எனக்குச் சமானமாய பலமுடையோர் அவர்களுள் சிலர் என்னைக்காட்டினும் அதிக பலமுடையோர்; சூரியனைப்போல தேஜசுடையோர். அத்தைத்தியர் தம் அநந்த வகையாய மாயைகளையும் விசித்திர பலத்தையும் திரஸ்காரஞ்செய்து ஆன்மஞான மகிமையால் அத்தைத்தியரை இந்திரனுகிய யான் கொன்றனன். ஆண்டுச் சுவர்க்க லோகத்தின்கண் பிரகலாதனது சம்பந்தியாய தைத்தியரையும் யான் கொன்றனன்; அந்தரிக்ஷ லோகத்தின்கண் புலோமையின் புத்திரர்களையும் யான் கொன்றனன். பூவுலகின்கண்ணே காலகஞ்சியரெனப் பெயரிய தைத்தியர்களை யான் கொன்றனன். ஹே பிரதர்த்தன ! இவ்வண்ணம் விஸ்வரூப புரோகிதனையும், கோடானுகோடி சந்நியாசிகளையும், கோடானுகோடி தைத்தியர்களையும் யான் கொன்றனன்;

ஆனால் அந்தப் பிராஹ்மணர்களின் சாபத்தாலும் அத்தைத்தியர்களின் பாணங்களாலும் எனது ரோமமாத்திரமும் ஆன்மஞான மகிமையால் கெடவில்லை; உலகின்கண்ணே யெனக்கு அபகீர்த்தியு முண்டாகவில்லை; மாறாய் எனக்கு இவ்வகையாய கீர்த்தியுண்டாயது. அஃதாவது, உலகத்தாலும் வேதத்தாலும் நிந்திதமாய அநேக கர்மங்களை இந்திர னியற்றினனெனினும் ஆன்மஞான மகிமையால் அவனுக்குச் சிறிதுமாத்திரமும் பாபஸ்பரிச முண்டாகவில்லை யென்பதாம். ஹே பிரதர்த்தன! நீக்கமுடியாதனவாய அந்தப் பிராஹ்மண சந்நியாசிகளின் சாபமும், நீக்கமுடியாதனவாய தைத்தியர்களின் பிரஹ்மாஸ்திர முதலாய எவ்வளவோ அஸ்திரங்களும், மய தைத்தியனையும் மோகிப்பிக்கும் படியான எவ்வளவோ தைத்தியர்களின் மாயைகளும், என்னிலும் அதிக பலவான்களாய தைத்தியர்கள் பிரயோகித்த மிருத்தியுவின் முகசமானமான வையும் சுமேருகிரியையும் பிளக்குமாற்ற லுற்றவையுமாய பாணங்களும் ஆன்மஞான மகிமையால் எனது ரோமத்தையும அசைக்கவில்லை. ஹே பிரதர்த்தன! இந்திரனும் எனக்கு ஆன்மஞான மகிமையால் நிஷித்த கர்மங்களைச் செய்த போதிலும் பாவத்தின் ஸ்பரிசம எங்ஙன முண்டாகவில்லையோ, அங்ஙனம் எத்தேவதைகளேனும் மனுஷர்களேனும் இவ்வான்மஞானத்தைச் சம்பாதிப்பர்களாயின் அவர்கட்கும் ஆன்மஞான மகிமையால் நிஷித்தகர்மம் செய்வதால் பாவத்தின் பரிசமுமுண்டாகாது.

பாபகர்மங்களை யுற்பத்திசெய்யும் நிஷித்தகர்மங்களை யிப்போது சுருக்கமாய் நிரூபிப்பாம்:—தமது மாதா பிதாக்களை நாசம்செய்வதால் ஜீவர்கட்குப் பாப உற்பத்தியுண்டாம்; பொன்னைக் களவுசெய்வதால் பாப உற்பத்தியுண்டாம்; வேதபாடி பிராஹ்மணனை யடித்தலால் பாப உற்பத்தியுண்டாம்; கர்ப்ப நாசம் செய்வதால் பாப உற்பத்தியுண்டாம்; பிரஹ்மவேத்தாவா பிரஹ்மத்தை யறிந்தவனாகிய மகாத்மாவை யடித்தலாற் பாபோற்பத்தி யுண்டாம; தனது மித்திரனை யடித்தலாற் பாப உற்பத்தியுண்டாம்; பிராஹ்மணனுக்கும் அல்லது பிராஹ்மணனாதி மூன்று வர்ணத்தாருக்கும் கள்குடித்தலால் பாப உறபத்தியுண்டாம்; தன் மாதாவோடு மைதுனம் செய்தலால் பாப உற்பத்தியுண்டாம். அவற்றினுள்ளும் பொன்னைத் திருடுபவன், பிரஹ்மஹத்தியைச் செய்பவன், கள்குடிபபவன், குருபத்தினியைப் புணராநின்ற புருஷன் என்னு மிந்நால்வரும் கர்ம சண்டாளராம்; இக்காரணத்தால பதிதராம். இந்நால்வரோடு ஒருவருஷ பரியந்தம் எப்புருஷனேனும் மாந்துதலயிலல் (புசித்தல், உண்ணல்) முதலிய சம்பந்தம் செய்யினும் இந்நால்வரின் சமானபாவத்தையே யடைவன். இவ்வைவரும் மகா பாதகராம். இவை முதலாக எவ்வளவு பாபங்கள்சாஸ்திரங்களில் கூறபபெறுகின்றனவோ, அவ்வெல்லாப் பாப கர்மங்களாலும் தத்துவஞானியின் ரோமமாத்திரமும் அசைவதயின்றாம். ஹே பிரதர்த்தன! எவனுக்கெனது அத்விதீய ஆன்மஞானம் உண்டாயிருக்கின்றதோ, அவனுக்கு ஒருகால் பாபகர்மம் செய்ய இச்சை யுண்டாமாயினும் அப்பாப கர்மத்தால் அவனுடைய முககாந்தியழியாது. ஆன்ம ஞானமின்றிய புருஷனுக்குப்

பாபகர்மத்தால் முககாந்தி யழிந்துவிடும். ஆகையினால், இவ்வுலகின்கண்ணே பிரஹ்ம வித்தைக்குச் சமானமான வஸ்து யாதொன்று மின்றாம். பிரஹ்ம வித்தையே யாவற்றினும்மேலாம். ஹே பிரதர்த்தன! இந்தப பிரஹ்ம வித்தையின் மகிமையைக் கண்டனையா? தத்துவ ஞானியானவன் பாப கர்மத்தை இச்சித்த போதிலும், அந்த பாப கர்மங்களைச் செய்தபோதிலும் அவனுடைய சர்வான்ம திருஷ்டியைக் கண்டு உறவினரும் அரசனும அவனைப பந்தியினின்றும் வெளிப படுத்திலர்; அவனுக்குச சரீரதண்டமும் செய்திலர், வாக்கினாலும அவனைவைதிலா; மாறாய் அவனது ஆன்மஞான மகிமையைக்கண்டு அற்புதத்தையடைவர். உறவின ரும் அரசனும் மற்றைபரும தத்துவஞானியை அதிகத்தினு மதிகமாய் ஆதரிப்பர்; ஏனெனின், சம்பூர்ண ஜகத்தை ஆன்ம சொரூபமாய் அறிந்த தத்துவ ஞானியி னும வேறாய் எவ்வரசர் முதலியோருமின்றாம்; மற்றோ சமபூரண அரசர் முதலிய வர்கட்கும தத்துவ வேத்தா ஆன்மாவாம். தனது ஆன்மாவின் அனிஷ்டத்தை யெப்பிராணியும செய்வதேயின்றாம. ஆகையினால, தத்துவ வேத்தாவாகிய புரு ஷனைப் பந்துக்களும் அரசன் முதலியோரும நிராதரம் செய்யார்; மற்றோயாவருமம அவனை ஆதரமே செய்யாநிற்பர். ஆகையினால, அத்விதீய ஆன்மாவின் ஞானமே புருஷனுக்கிதமமாம. இவ்வண்ணம் இந்திரன் வாயிலாய் ஹிதமமான ஆன்ம ஞானத்தைக்கேட்டப பிரதர்த்தனன் தனதபிப்பிராயத்தைத் தெரிவிப்பதாய சரீ ரத்தின் சேஷ்டையால இந்திரனைக் கேட்பானாயினன்.

இப்போது அசசேஷ்டையைக காண்பிப்பாம் :—இந்திரனுடைய வசனத் தைக்கேட்டு அவ்வரசன் முகம் விரிவையடைந்தது; நேத்திரமும கமலம்போல விரிந்தொளிர்ந்தது. ஆனால தங்கள் வசனத்தால் யான் கிருதார்த்தனாயினேன் என்பதாய வசனத்தையும விரோதத்தோடு கூடிய தங்களுடைய வசனத்தால எனக்கையம நிகழ்ந்திருக்கின்றது என்பதாய வசனத்தையும அவவரசன் இந்திரன் பாற கூறவில்லை; மற்றோ மௌனமாயிருந்தனன். இவ்வகையாய சேஷ்டையால அவ்வரசன் தனது ஜடத்தன்மையைக் குறிப்பித்தனன். இஷ்ட அர்த்தத்தையும் அனிஷ்ட அர்த்தத்தையும் கண்டு அதனாலுண்டாய கர்த்தவ்ய அர்த்தத்தின் அநிச சயம் ஜடத்தன்மையாம. ஆண்டு இந்திரனை யான் வரத்தால வசம செய்துளேன், ஆகையினால் இதமம ஆன்மஞானத்தை அவசியம் என்பொருட்டுக் கொடுப்பர். இவ்வகையாய இஷ்ட அர்த்தத்தின் தரிசனம் அவ்வரசனுக் குண்டாயது. என்னை நீ யறியென்னும் இவ்வசனம் இந்திரன் கூறினான்றோ? இதன்கண் என்னை யென் னும் சப்தத்திற்கு அனேக அர்த்தம உண்டாகக் கூடியதாயிருக்கின்றதே. யான் சிறிது மாத்திரங் கூறுவேனாயின் எனது புத்தியின் மந்தத்தன்மை சித்தமாமென இவ்வகையாய அனிஷ்ட அர்த்தத்தின் தரிசனம அவ்வரசனுக்குண்டாயது.

இங்ஙனம் ஜடபாவத்தை யடைந்த அவ்வரசனைக்கண்டு சர்வஞ்ஞனாய இந்தி ரன் தனது மனத்தின்கண்ணே இவ்வண்ண மாராயலானான் :—இவ்வரசன் தனது மனத்தின்கண்ணே இவ்வண்ண மாராய்கின்றனன் போலும்? ஆன்மஞானத்தைத் துதிசெய்யா நின்ற இந்திரனானவர், ஆன்மஞானத்தின்கண்ணே எனக்கு விசுவாச முண்டாம் பொருட்டுத் தம்மைப் பாபகர்மங்கள் தீண்டவில்லை எனக்காண்பித்தார்.

அங்ஙனமேனும் இந்திரனு லுபதேசிக்கப்பட்ட ஹிததமஞான விஷயத்தில் எனக்கு ஐயம் நிகழ்ந்திருக்கின்றது ; ஏனெனின், என்னை நீயறியென முன்னர் என்பொருட்டிந்திர னுபதேசித்தனரன்றோ? இதன்கண்ணே எனக்கு என்னை யென்னும் சப்தத்தாலும் ஞானத்தாலும் எவ்வர்த்தத்தை இந்திரன் உணர்த்தினுர் ; ஆயிரம் கண்களோடு கூடியதும், வஜ்ஜிராயுதம் தாங்கிய கரத்தோடு கூடியதும், சம்பூர்ண தேவதைகள் சேவிக்கப்பெற்ற பாதங்களோடு கூடியதும், சசிதேவியின் பதியாயதுமாகிய ஸ்தூலசரீரம் என் முன்னுளதோ அது முற்புகன்ற வென்னையென்னும சப்தத்திற் கருத்தமா? அல்லது இத்தேகத்தினும் வேருய் சரீரத்தினுள்ளே இராநின்ற வேறுயாதாவது ஆன்மாவென அர்த்தமா? சரீரத்தினுள்ளே இராநின்ற ஆன்மா யாதுகொல்! என்னை நீயறியெனக் கூறியது ஜீவான்மாவா ? சாக்ஷியாய ஆன்மாவா ? கருததிதுவாம :—என்னை நீயறியென்னும் இந்திரன் கூறினுரன்றே? இதன்கண் என்னை யென்னும் சபதத்திற்கு யாது பொருள், ஸ்தூலசரீரம் பொருளா ? ஜீவான்மா பொருளா ? சாக்ஷியாய சேதனம் பொருளா ? அவற்றுள் ஸ்தூல சரீரத்தின்கண்ணும் ஜீவனிடத்தோ என்னை நீயறியென்னும் இந்திரன் வாக்கியத்தின் விஷயத்தன்மை சமபவியாது ; ஏனெனின், ஸ்தூல சரீரம் ஜீவன் என்னும் இரண்டும் பரிச்சின்னமாம ; அந்தப் பரிசசின்ன ஞானத்தால் அபரிச்சின்ன பலத்தின் அடைவுண்டாகாது. மூன்றுவதாய சாக்ஷிவடிவ கூடஸ்தரின்கண்ணும் என்னை நீயறி யென்னும இநதிரனது வசனத்திற்கும ஞானத்திறகும விஷயத்தன்மை சமபவியாது ; ஏனெனின், அநதச சாக்ஷிசேதனம மனவாக்குகட் ககோசரமாம். இவ்வகையாய ஐயததை யான் வெளிபபடுத்துவேனுயின் எனது மதியின் மநதத்தன்மை சிததமாம் ; இந்த ஐயத்தை வெளிப்படுத்தாதொழிவேனுயின் எனக்கு ஐயந்திரிபற்ற ஆன்மஞான முண்டாகமாட்டாதென ; இவ்வண்ணம் சிநதித்து வியாகூலத்தோடுகூடிய மனத்தையுடைய இவ்வரசன் என்னை நோக்கிச சிறிதும் வசனியாதிருக்கின்றனன் ; ஏனெனின், தனது மதியின் குறைவைச் சம்பாதிக்குந் தொழிலில் மதிமான்கட்கு உருசியுண்டாகாதன்றே.

அல்லது, இவ்வரசன் இக்கருத்தாலும மௌனததைத் தரித்திருபபன். மனுஷராய யாம் நமது ஹிததமத்தை யறிந்திலேம்; ஆகையினுல் தாங்கள் சுயமே யாராய்ந்து ஹிததம வரத்தைக் கொடுங்கள் என்பதாய் யான் இநதிரன் பொருட்டுக் கூறியபோது இநதிரன் சுயமே என்பொருட்டு ஹிததம வரத்தைக் கூறினனன்றே ; ஆகையினுல் இநதிரனை வரப்பிரதானத்தால் யான் எனது வசம் செய்துளேன். யான் கேளாவிடினும தனது பிரதிஞ்ஞையை யுண்மையாக்கும்பொருட்டுத் தானே யிநதிரன் எனது சம்சய நிவிர்த்தியைச செய்வனென இங்ஙனம் ஆராய்ந்து இவ்வரசன் என்பால் வினவாதிருக்கின்றனன். ஆன்மஞானத்தினடைவு இவனுக்குண்டாகவில்லை. இக்காரணத்தால் யான் கிருதார்த்தனுயினேன் என்னும் வசனத்தையும் இவன் கூருதிருக்கின்றனன். ஆகையினுல் நமது பிரதிஞ்ஞையை யுண்மையாக்கும்பொருட்டு இவ்வரசனுக்கு ஹிததம ஆன்மஞானத்தின்கண் எதுவரை ஐயத்தின் அபாவமுளதாமோ அதுவரை

வினவாவிடினும் இவன்பொருட்டு உபதேசித்தல் யோக்கியமாம். இங்ஙனம் ஆராய்ந்து மீண்டும் இந்திரன் இங்ஙனம் விசாரிப்பானாயினன்; இவ்வாநந்த சொரூப ஆன்மா அலௌகிக பதார்த்தமாம், மனவாக்குகட்கு அகோசரமாம். ஆகையினால் இவ்வான்மாவை நேரே கூறுதற்கு யான் சமர்த்தனன்றாம்; இந்தப் பிரதர்த்தன அரசனும் நேரே யான்மாவை யறிதற்குச் சமர்த்தனன்றாம். மற்றோ உபாதிவாயிலாய் ஆன்மாவைக் கூறற்கு யான் சமர்த்தனாவேன்; இவ்வரசனும் உபாதிவாயிலாய் ஆன்மாவை யறிவதில் சமர்த்தனாவன். ஆகையினால் எவ்வுபாதியின் வாயிலாய் இவன்பொருட்டு ஆன்மாவை யானுபதேசிக்கலாம். அவ்வுபாதிகளுள்ளும் தூலசரீரம் இந்திரியம முதலிய உபாதிகளை யபேக்ஷித்து கிரியாசக்தியையுடைய பிராணன் ஞானசக்தியையுடைய புத்தி யென்னு மிரண்டு உபாதிகளும் ஆன்மாவிற்குச் சமீபித்தனவாம். ஆகையினால் உலகப்பிரசித்த பிராணனையும் பிரஞ்ஞைவடிவ உபாதியையும அங்கீகரித்து இவ்வரசன்பொருட்டு அலௌகிக ஆன்மாவை யானறைவேன்.

இப்போது சமபூர்ண உபாதிகளைக்காட்டிலும், பிராணப் பிரஞ்ஞைவடிவ உபாதிகளிடத்தே அதிகத்தன்மையைக் காண்பிப்பாம்:—பிராணப் பிரஞ்ஞைகளிருப்பின் தேகேந்திரியாதிகளின் திதியாம், பிராணப பிரஞ்ஞைகளில்லாவிடின் தேகேந்திரியாதிகளின் திதியுண்டாகாது. இவ்வன்வய வியதிரேகங்களால சம்பூர்ண சரீராதி உபாதிகளின் சாதகத்தன்மை பிராணப பிரஞ்ஞைகளிடத்தே சித்திக்கும். ஆகையினாற் பிராணப் பிரஞ்ஞைகளே சர்வ வுபாதிகளினும் மேலாயதாம். இவ்விடத்தே யிஃதபிப்பிராயமாம். எவ்வுபாதியைக் கூறின் முமுக்ஷுவிற்குச் சுகமாயே ஆன்மாவின் போதமாமோ இலாகவமாமோ (எளிதின் முடிதலாமோ) அவ்வுபாதியை யங்கீகரித்துத் தத்துவ ஞானியாய புருஷன் ஆன்மாவின் உபதேசத்தைச செய்க என்பதாய நியமும் பிராணப பிரஞ்ஞைகளிடத்திலேயே பொருந்தும். ஏனெனின், எஃதிருப்பதினாலே தேகாதிகளின் திதியாமோ எஃதில்லாதிருப்பின் தேகாதிகளின் அபாவமாமோ என்னும் அன்வய வியதிரேகத்தால் தேகாதிகளின் சங்காதத்தின் (கூட்டத்தின்) சாதகத்தன்மை ஆன்மாவினிலக்கணமாம். அவ்விலக்கணம் பிராணப் பிரஞ்ஞைகளிடத்தும சபபவிக்கின்றது; ஆகையினால் பிராணப் பிரஞ்ஞைக ளான்மாவாம். இவ்வண்ணம் பிராணப் பிரஞ்ஞைகளிடத்தே முமுக்ஷுவிற்கு ஆன்மபுத்தி யுண்டாகுமிடத்தும் பிராணப் பிரஞ்ஞைகளை நேரே யறிய முயல்வியாநிற்கும், சுத்த ஆன்மாவின்கண்ணும் சுகமாயே முமுக்ஷுவிற்குப் புத்தியுண்டாம். கருத்திதுவாம்:—அத்தியந்த சூக்குமஅருந்ததி நக்ஷத்திரத்தை யறியா நின்ற புருஷன் அன்னிய னொருவனுக் கருந்ததியைக் காண்பிக்கவேண்டின் அருந்ததியின் சமீபத்திலிருப்பதாய (சமீபத்திலிருக்கும்) தூலநக்ஷத்திரங்களை முன்னருந்ததி வடிவமாய்க் காண்பித்துக் தான் போனுடைய திருஷ்டியானது அத்தூல நக்ஷத்திரத்தின்கண் ணிலைபெறின் முறையே சாக்ஷாத் தருந்ததியின் கண்ணும் அவன் திருட்டிசேரும்; அதுபோல சுத்த ஆன்மாவை யறிவிக்கும் பொருட்டுப் பிராணப் பிரஞ்ஞைகளையே ஆன்மரூபமாய் முதலில் உபதேசிக்கவேண்டும்.

அல்லது பிராணப் பிரஞ்ஞை சப்தங்களின் இலக்ஷணாவிருத்தியினால் ஆன்மாவின் போதமங்கீகரிப்பதில் பிராணப் பிரஞ்ஞைகட்கு ஆன்மாவோடு சாக்ஷாத் சம்பந்தம் சம்பவிக்கும்; ஆகையினால் இலாகவமுமாம். சரீராதி யுபாதிகளை யங்கீகரித்து ஆன்மாவைப் போதிப்பினே பிராணப பிரஞ்ஞை வாயிலாய் ஆன்மாவின் போதமுண்டாம்; சாக்ஷாத்போத முண்டாகாது. சரீராதிபதங்களின் இலக்ஷணாவிருத்தியினால் ஆன்மாவின் போதமங்கீகரிப்பதில சரீராதிகட்கு ஆன்மாவோடு பிராணபபிரஞ்ஞை வாயிலாய்ப பரம்பரா சம்பந்தம் சம்பவிக்கும. சாக்ஷாத் சம்பந்தம் சம்பவியாது. அந்தப பரமபராசமபந்தம் கௌரவரூப தூஷணத்தோடு கூடியதாம். ஆகையினால் பிராணப்பிரஞ்ஞை வடிவ உபாதியை யங்கீகரித்தே ஆன்மாவை யுணர்த்துவது சுகமத் தன்மையையும் இலாகவத் தன்மையையு முடையதாம்.

சங்கை:—முற்கூறிய அன்வய வியதிரேகங்களால் தேகேந்திரி யாதிகளின் சாக்ஷாத தன்மைவடிவ ஆன்மாவின் இலக்கணம பிராணப் பிரஞ்ஞைகளிடத்தே சம்பவியாது; ஏனெனின், பிராணப பிரஞ்ஞைகட்குப் பரஸ்பரம்வியதிரேகமாம். கருத்திதுவாம்:—பிராணனை விடுத்துப பிரஞ்ஞையிருக்கும்; பிரஞ்ஞையை விடுத்துப் பிராணனிருக்கும்.

சமாதானம்:—கிரியா சக்தியையுடைய பிராணன் பிரஞ்ஞையின்றி யிராது; ஞானசக்தியையுடைய பிரஞ்ஞையும் பிராணனின்றி யிராது. யாண்டுப பிரஞ்ஞையின் அபாவமாமோ ஆண்டு பிராணனுக்கும அபாவமாம. ஸ்தாவர விருக்ஷங்களிடத்தே பிரஞ்ஞைவடிவ புத்தி பிரத்தியக்ஷமாய்க் காணப்படுவதின்றாம். ஆகையினாற் பிராணனும் அவ்விருக்ஷாதிகளிற் காணக்கிடையாதது போலவாம்.

சங்கை:—சரீரத்தின்கண்ணே சஸ்திரத்தால் காயமுண்டாம், அக்காயம் நெடு நாட்பின் கூடிவிடும; அதுபோல விருக்ஷத்தின்கண் கோடரி முதலிய வற்றாலுண்டாகிய காயமும நெடுநாட்பின் கூடிவிடும். சரீரத்தின் விருத்தியுண்டாவதுபோலத் தருக்கட்கும் விருத்தியுண்டாம. ஆகையினால் காயத்தின் சேர்க்கை வடிவ ஹேதுவினாலும் விருத்திவடிவ ஹேதுவினாலும விருக்ஷங்களிடத்தே பிராணனது அனுமானம் சம்பவிக்கும். ஆகையினால் பிரஞ்ஞைவடிவ யுத்தியை விடுத்தும் பிராணன் விருக்ஷங்களிடத்தே யிருக்கும்.

சமாதானம்:—காயத்தின் சேர்க்கைவடிவ ஹேதுவினாலும் விருத்திவடிவ ஹேதுவினாலும் விருக்ஷங்களிடத்தே பிராணனது அனுமானம் சம்பவிப்பது போலக் கொடியினுயர்ந்த தேசத்தில் செல்வடிவ ஹேதுவினால் அதற்குப பிரஞ்ஞை வடிவப புத்தியினனுமானமும் உண்டாதலகூடும். விருக்ஷத்தின்கண் சூக்குமவடிவமாய்ப பிராணப்பிரஞ்ஞைகளிருக்கின்றனவென்றாலும் வெளிப்படையாயின்றாம்.

சங்கை:—யாண்டுப பிரஞ்ஞையின் அபாவமாமோ ஆண்டுப பிராணனுக்கும் அபாவமுண்டாம் என முன்னர்த் தாங்கள் கூறியது சம்பவியாது; ஏனெனின், துயிலின்கண்ணே பிரஞ்ஞைவடிவப் புத்தியின் அபாவமிருப்பினும் பிராணனது இருப்பைக்கண்டோம்,

சமாதானம் :—துயிலவஸ்தையின்கண் பிரஞ்ஞையினத்தியந்தா யாவமின்றும்; மற்றோ, காரண சொரூபமாய்ப் புத்தி சுழுப்தியின்கண்ணே இருக்கின்றது. ஆகையினால் யாண்டுப் பிரஞ்ஞையி னபாவமுளதாமோ ஆண்டுப் பிராணனதபாவமும் அவசியம் உண்டாம் என்பது துணியப்பட்டது. யாண்டுப் பிராணனதபாவமாமோ ஆண்டுப் பிரஞ்ஞையினபாவமும் அவசியமுண்டாம்; கடாதிகளிடத்தே பிராணனதபாவமுளதாதலின் அவற்றில் பிரஞ்ஞையி னபாவமுமுளது. ஆகையினால், பிராணனும் பிரஞ்ஞையும் ஒன்று மற்றொன்றை விடுத்து இரா என்பது துணியப்பட்டது. அந்தப் பிராணப் பிரஞ்ஞைகளிரண்டும் ஆன்ம ஞானத்திற் கேதுக்களாம்; ஏனெனின், ஸ்தம்பாதிகள் ஜடமாதலின் தமது பிரதீதியில் தீபாதிப் பிரகாசங்களை அபேக்ஷிக்கின்றன; அதுபோலப் பிராணனும் பிரஞ்ஞையும் ஜடமாதலின் தமது பிரதீதியின்கண் வேறு யாதாவதொரு பிரகாசத்தை யபேக்ஷிக்கும் அது பிராணப் பிரஞ்ஞைகளைப் பிரகாசஞ்செய்வதாய கூடஸ்த ஆன்மாவாம். இவ்வகையாய யுக்தியால் பிராணப் பிரஞ்ஞைகட்கு ஆன்மஞானத்தின் காரணத்தன்மை யுளது. ஈண்டிது அபிப்பிராயமாம் :—பிராண சப்தமும் பிரஞ்ஞா சப்தமும் சக்தி விருத்தியினலா ஆன்மாவின் போதகமன்றும்; ஏனெனின், சக்தி விருத்தியினாலே சத்தியாதி பதங்களுமா ஆன்மாவைப் போதியாது; மற்றோ, இலக்ஷணை விருத்தியினால் பிராண சப்தமும் பிரஞ்ஞா சப்தமும ஆன்மாவின் போதகங்களாம். அவ்விலக்கணை சக்கிய அர்த்தத்தின் பொருந்தாமையினானன்றி யுண்டாகாது. கங்கையின்கண்ணே கிராமமுளது என்னுந் தொடர்மொழியில் கங்காபதத்தின் சக்கிய அர்த்தம ஜலத்தின் பிரவாஹமாம். அந்தப் பிரவாஹத்தின்கண்ணே கிராமத்தின் அதிகாணத்தன்மை பொருந்தாததாம். ஆகையினால் கங்கா பதத்திற்குத தீரததின்கண்ணே இலக்ஷணையாம. அங்ஙனம ஈண்டு பிரசங்கத்தின்கண்ணும் பிராணன் யான் பிரஞ்ஞையான் என்னு மிவ்வசனம் இந்திரனாற் கூறப்பட்டதன்றோ; ஆண்டுச சரீரத்தினுள்ளே சஞ்சாரம் செய்யாநின்ற வாயு பிராண சப்தத்தின் சக்கியார்த்தமாம். அந்தக்கரணத்தின் விருத்தி விசேஷ புத்தி பிரஞ்ஞை சப்தத்தின் சக்கிய அர்த்தமாம. அவ்விரண்டு சக்கிய அர்த்தத்தின்கண் ஆன்மத்தன்மை சம்பவியாது. ஆகையினால் பிராண சப்தத்திற்கும் பிரஞ்ஞை சப்தத்திற்கும் பிராணப் பிரஞ்ஞைகளின் பிரவர்த்தகமாய சேதன ஆன்மாவின்கண் இலக்கணை சம்பவிக்கும். இவ்வர்த்தத்தை நிரூபணம் செய்யும்பொருட்டு முதலில் பிராணப்பிரஞ்ஞை சப்தங்களின் சக்கிய அர்த்தத்தையும், சக்கிய அர்த்தத்தின் பொருந்தாமையையும் காண்பிப்பாம் :—ஆண்டுப் பிராணனென்னும் சப்தத்தின்கண் இருபதங்களுள. ஒன்றோ 'பிர' என்னும் பதமாம், மற்றொன்றோ 'அன' என்னும் பதமாம். அவற்றுள் பிர என்னும் பதத்திற்கு அதிசயமென்பது பொருளாம்; அன என்னும் பதத்திற்குச் சலன ரூபக்கிரியை பொருளாம். அங்ஙனமே பிரஞ்ஞையென்னும் சப்தத்தின்கண்ணும் இருபதங்களுள, ஒன்றோ பிர என்னும் பதமாம்; மற்றொன்றோ ஞை என்னும் பதமாம். அவற்றுள் பிர என்னும் பதத்திற்கு அதிசயமென்பது பொருளாம்; ஞை யென்னும் பதத்திற்கு ஞானமென்பது பொருளாம்; அவ்விரண்டு பதங்கட்கு மொருங்கே இப்பொருள் துணியப்பெறும், அதிசயமாய் யாது சலியாநிற்குமோ அது பிராணனெனப்படும்,

அதிசயமாய் யாது அறியாநிற்குமோ அது மதியெனப்படும். சரீரத்துள் இராநின்ற வாயு அதிசயமாய்ச் சலிக்குமாதலின் அது பிராணனெனப்படும். அந்தக்கரணத்தின் விருத்தி விசேஷ புத்தி கடபடாதி பதார்த்தங்களை அதிசயமாயறியும்; ஆதலின் பிரஞ்ஞையெனப்படும். வாஸ்தவமாய் விசாரம் செய்யின் பிராணனிடத்தே சலித்தல் பொருந்தாது; ஏனெனின், பிராணன் ஜடமாம். ஜடத்தினிடத்தே, சுதந்திரமாய்க் கிரியை சம்பவியாது. இரதாதி ஜடபதார்த்தத்தில் சேதன அசுவாதிகளின்றி எக்காலத்திலும் எத்தேசத்திலும் சுதந்திரமாய்ச் சலனரூபக்கிரியை உண்டாகாது; அங்ஙனமே ஜடபிராணனிடத்தும் சேதனமின்றிச் சுதந்திரமாய்ச் சலனரூபக்கிரியை சம்பவியாது. இவ்வண்ணமே புத்தியின்கண்ணும் கடபடாதி பதார்த்தங்களை அறியும் ஆற்றல் சம்பவியாது; ஏனெனின், பிராணனைப்போன்றே புத்தியும் ஜடமாம். ஜடவஸ்து தன்னையும் அன்னிய எப்பொருளையும் அறியமாட்டாது. கருத்திதுவாம்:—முதலில் மூலதனம் ஒருவனிடத்தில் இருப்பினன்றோ அந்தத் தனத்தின் விருத்தியினும் சம்பாவனையுண்டாம், மூலதனமின்றித் தனத்தின் விருத்தி சம்பவியாதன்றோ? அங்ஙனமே சாமானியமாய்ப் பிராணனிடத்தே சலனரூபக்கிரியை உண்டாமாயின், புத்தியினிடத்தே ஞானமிருக்குமாயின் அந்தக்கிரியையின்கண்ணும் ஞானத்தின்கண்ணும் அதிசயரூப விசேஷத்தன்மை வடிவ விசேஷத்தன்மை சம்பவிக்கும். அங்ஙனமந்தச் சடபிராணனிடத்தே சலனரூபக்கிரியை சம்பவியாது; புத்தியின்கண் ஞானம் சம்பவியாது. ஆகையினால், எந்தச் சேதன ஆன்மாவின் சமீபத்தன்மையால சரீர இந்திரியாதிகளினிடத்தோ அந்தரவாயுவினிடத்தோ சலனரூபக்கிரியையுண்டாம், அந்தச் சேதன ஆன்மாவே பிராண சப்தத்தின் இலக்ஷியார்த்தமாம். இங்ஙனம், பிரஞ்ஞை சப்தத்தின் இலக்ஷிய அர்த்தமும் சேதனமாய ஆன்மாவேயாம். ஏனெனின், சேதன ஆன்மாவே சம்பூர்ண ஜடபதார்த்தங்களையும் பிரகாசிப்பிக்கும் சுவப்பிரகாசத் தன்மையாலே பேதமற்ற தனது சொரூபத்தையும் பிரகாசிப்பித்துக்கொள்ளும். அன்னிய எப்பொருளும் ஆன்மாவைப் பிரகாசிப்பியாது. இத்தகைய சுவப்பிரகாச ஆநந்தவடிவ ஆன்மாவாய யானே பிராணப்பிரஞ்ஞை சப்தங்கட்குப் பொருளாம். என்னிற பின்னமாய எவ்வஸ்துவும் பிராணப்பிரஞ்ஞை சப்தங்கட் கருத்தமன்றும். இந்தப்பிரகாரம் தனது மனத்தின்கண்ணே விசாரித்து அந்தத் தேவராஜாவாய இந்திரன் பிரதர்த்தன ராஜாவிற்குக் கூறத் தொடங்கினன்:—ஹே பிரதர்த்தன! நாநாப் பிரகாரமாய கிரியையின் காரணம் யானே யாவன், ஆகையினால யான் பிராண சொரூபன், பேதமற்ற சுயம்பிரகாசன் யான்; ஆகையினால் யானே பிரஞ்ஞைவடிவன், சம்பூர்ணப் பிராணிகட்குச் சீவனகாரணன் யான்; ஆகையினால் யானே ஆயுஷ்வடிவன். யான் சுயம் ஜன்ம மரணரகிதன்; ஆகையினால் யானே அமிருதவடிவன். ஹே பிரதர்த்தன! பிராணன், பிரஞ்ஞை, ஆயுஷ், அமிருதம் ஆய எனது வடிவத்தை யான் உன்பொருட்டுக் கூறினேன். அச்சொரூபத்தை நீ யடிக்கடி விசாரம் செய்து அனுன்மாகார விஜாதீய விர்த்திகளைப் பரித்தியாகம் செய்து அந்தச் சொரூபாகார

சஜாதீய விர்த்திகளால் எனது சொரூபத்தைச் சாக்ஷாத்காரம் செய்தி. இது குடமென்னும் அநந்த ஞானங்கள் ஒருகட பதார்த்தத்தை விஷயம் செய்யலாவது போலவாம். ஹே பிரதர்த்தன! புருஷனைக் காட்டினும் தண்டம் பின்னமாவது போல ஆயுஷ் அமிருதமென்னும் இரண்டு விசேஷணங்களைப் பிராணனினும் பின்னமாய் நீ யறியவேண்டாம்; மற்றோ ஆயுஷ் அமிருதம் என்னும் இரண்டு விசேஷணங்களைப் பிராணனினும் அபின்னமாய் நீ யறிதி. ஆகாசத்தை நபமென்பர், நபத்தை ஆகாசமென்பர். ஆகாசபதத்திற்கும் நபபதத்திற்கும் அர்த்த பேதமின்றாம். அதுபோல ஆயுஷ் அமிருதபதத்தின் அருத்தத்திற்கும் பிராணபதத்தின் அருத்தத்திற்கும் பேதமின்றாம்; மற்றோ, ஆயுஷ் அமிருதம் பிராணனது வடிவமாம், பிராணனாயுஷ் அமிருதவடிவமாம்.

சங்கை :—ஆயுஷ் அமிருதம் பிராணன் என்னும் மூன்றுபதங்கட்கும் ஒரே அர்த்த மங்கீகரிக்கின் கூறியது கூறலென்னும் அடைவுண்டாம். ஓரர்த்தத்தைப் போதிப்பதாய அநேக பதங்களி னுச்சாரணத்தைக் கூறியது கூறலென்பர். யாண்டுக் கூறியதுகூறல் என்னும் தோஷமாமோ, ஆண்டொருபதத்திற்கே பயன் படுந்தன்மையுண்டாம்; மற்றபபதம் பயனற்றதாம்.

சமாதானம் :—சத்தியம், ஞானம், ஆநந்தம் என்னும் மூன்று பதங்கள் ஆன்மா ஒன்றனையே யுணர்த்துவ தாகின்றது. ஆனால் மூன்று சபதங்களின் பிரவிர்த்தியின் நிமித்தம் வேறு வேறும. ஆகையினால் கூறியது கூறலென்னும் குற்றமின்றாம. அங்ஙனமே ஈண்டும் ஆயுஷ், அமிருதம், பிராணன் என்னுமிம் முப்பதங்களும் ஒரேயர்த்தத்தை உணர்த்துவதாம். ஆனால் அவற்றின் பிரவிர்த்தி நிமித்தம் வேறு வேறும். ஆகையினால் கூறியது கூறலென்னு குற்றமின்றாம்.

இப்போது இபபொருளையே வெளிபபடையாய்க காண்பிப்பாம்; உலகாகட்கு ஜீவனகாரணம் யாதாமோ அஃது ஆயுஷெனபபடும். அத்தகைய ஜீவனகாரணம் பிராணனும்; ஏனெனின், சரீரத்தின்கண்ணே எதுவரை பிராணனிருக்குமோ அதுவரை அதன்கண் ஜீவனவியவகாரமாம். பிராணனின்றிச ஜீவன் வியவகாரம் உண்டாகாது. இநநிமித்தங் கொண்டே பிராணனை ஆயுஷென்று கூறுகின்றனா. சரீரத்தைவிட்டபின் சுவர்க்கரூப அமிருதத்தையும் சரீரமிருக்குங்காலோ மோக்ஷரூப அமிருதத்தையும பிராணனாலேயே ஜீவனடைவன். இந்நிமித்தங்கொண்டே பிராணன் அமிருதமெனப்படும். அவ்வாயுஷ் அமிருதசொருபப் பிராணனென ஆன்மாவாம். அல்லது பிராணவடிவமெனது ஆன்மாவாம் அதுபோலப் பிரஞ்ஞை வடிவமும் எனது ஆன்மாவாம். ஏனெனின், ஞானசக்திவடிவப பிரஞ்ஞையினாலேயே ஆகாசாதி வியாவகாரிகப் பிரபஞ்சத்தையும், கனவுமுதலிய பிராதிபாசிகப் பதார்த்தங்களையும் ஆன்மாவாய யானறிவன். ஹே பிரதர்த்தன! எப்புருஷன் பிராணவடிவ எனது ஆன்மாவை ஆயுஷ்வடிவமாய் உபாசனைசெய்வனோ அவன் 100 வருஷபரியந்தம் ஜீவிப்பன். எப்புருஷன் பிராணவடிவ எனதான்மாவை அமிருதரூபமா உபாசனைசெயவனே அவன் அக்ஷயமாய சுவர்க்கத்தை யடைவன். எப்புருஷன் பிராணவடிவ எனது ஆன்மாவை ஆயுஷ் அமிருதமென்னும் இரு வடிவமாயும் உபாசனைசெய்வனோ, அவன் சதவருஷபரியந்தம் ஜீவிப்பதுடன்

அக்ஷய சுவர்க்கத்தையு மடைவன். ஹே பிரதர்த்தன! பிராணவடிவ உபாதியோடு கூடிய எனது ஆன்மாவை யுபாசிப்பதற்கே இத்தகைய பலமுண்டாமாயின் பிராணவடிவ உபாதியற்ற சுதத ஆன்மாவின் ஞானத்தால் புருஷனுக்கு மகாபலத தின் அடைவுண்டா மென்பதில் யாது ஆசசரியமாம. இங்ஙனம, இநதிரன் பிராண சொரூப ஆன்மாவைக் கூறியவுடன் பிரதர்த்தனன் அதன்கண்ணே காரணத் தைக் கேட்பானாயினன்.

பிரதர்த்தனன் கூறல்:—ஹே பகவன்! பிராணவடிவன் யான் என்னுந் தங்களுடைய வசனத்தைக்கேட்டு முற்கூறிய முனிகளின் வசனங்களை நினைநது எனது மனத்தில் இவ்வகையாய ஐயம் நிகழுகின்றது. கருத்திதுதாம:—தாங் கள் பிராணனையே பிரதானமாகக் கூறினீர்கள், முனிகள் பிராணனைப பிரதான மாகக் கூறினார்களில்லை ஆகையினால், எப்பொருளின்கண்ணே யான் ஆன்ம புத்தி செய்வது.

இப்போது அம்முனிகளின் வசனங்களைக் காண்பிக்கும்பொருட்டு அரசன் கூறுகின்றனன்:—தேவராஜனாகிய இந்திரனே! ஒருகாலத்தில் எனது சபையை நோக்கிச சில முனிவர் வந்தனர், வந்து சமபாஷிததுக் கொண்டிருக்குங்கால் ஒரு பிரசங்கவாயிலாய் அந்த வேதங்களை யறிந்தமுனிவர் என் பொருட்டிவ்வசனத்தைக் கூறினர்; அதாவது உள்வாயுவோடு கூடிய சம்பூர்ண இந்திரியங்களின் வாசகம் பிராணசப்தமாம். கேவலம் உள்வாயுவின் வாயுவின் வாசகம் பிராண சப்தமன் றும். ஏனெனின், அதிசயமாய்த் தனது வியாபாரத்தை யாது செய்யுமோ அது பிராணனெனப் பெறும். இந்தப் பிராணசப்தத்தின் அர்த்தம் சம்பூர்ண இந்திரி யங்களிடத்தும் பொருநதும்; ஆகையினால் சம்பூர்ண இந்திரியங்கட்குப் பிராண சப்தத்தின் அர்த்தத்தன்மை சித்திக்கும். அவ்வெல்லாப் பிராணன்களுக்கு ஒன் றற்குப் பிரதானமாநதன்மை நியமமாய்ச சித்தியாது; மற்றே, தத்தம் வியாபாரத் தில் யாவற்றிற்கும் பிரதானத்தன்மையுண்டு. ஏனெனின், வாக்கிந்திரியததிற் குச் சப்தோச்சாரணம் காரியமாம். சக்ஷு இந்திரியத்திற்கு ரூபாதிகளின் தரி சனம் காரியமாம். இவ்வண்ணம் அன்னிய இந்திரியங்கட்கும் தத்தம் காரியம் வேறுவேறும். அக்காரிய பேதத்தால் இந்திரியம் வேறு வேறேயாயினும் தத் தம் காரியத்தின்கண்ணே எல்லா இநதிரியங்களும் ஒரு தன்மையை யடையும். கிராமத்தின்கண்ணே வேறுவேறு யிராநின்ற மகாஜன புருஷர் விவாகாதி காரி யத்தின்பொருட்டு யாவரும் ஒருமைபபடுவதுபோல, எக்கால் ஓரிந்திரியம் தனது வியாபாரத்தில் பிரவிர்த்தி யடையுமோ அக்கால் அன்னிய இந்திரியங்கட் குத் தமது வியாபாரத்தின்கண்ணே பிரவிர்த்தி யுண்டாகாது. இதுவே இந் திரியங்கட்கு ஏகத்தன்மையாம். ஏனெனின், எக்காலத்தில் வாக்கிந்திரியம் சப் தோச்சாரண வடிவமாய தனது வியாபாரத்தைச் செய்யாநிற்குமோ, அக்காலத் தில் நேத்திராதி இந்திரியங்கள் தத்தம் வியாபாரங்களைச் செய்யாது. எக்கால் நேத்திரேந்திரியம் ரூபாதிகளின் தரிசனவடிவ வியாபாரத்தை யுற்பன்னம் செய் யுமோ, அக்கால் வாக்காதி இந்திரியங்கள் தமது வியாபாரத்தை யுற்பன்னஞ்

செய்யா ; இங்ஙனம் சர்வ இந்திரியங்களிடத்து மறிந்துகொள்ளல்வேண்டும். ஒருவர(கணவ)னுக்குத் தனது விவாகத்தின்கண்ணே பிரதானத்தன்மையும் மற்றொருவனுடைய விவாகத்தின்கண்ணே கௌணத்தன்மையுமாம் ; ஆதலின் நியமமாய் வானிடத்தே பிரதானத்தன்மையேனும் கௌணத்தன்மையேனுமின்றாம். அங்ஙனமே, வசனாதி வியாபாரத்தின்கண்ணே வாக்கிந்திரியத்திற்குப் பிரதானத்தன்மையாம், நேத்திராதி இந்திரியங்கட்குக் கௌணத்தன்மையாம். ரூபதரிசனத்தின்கண் சக்ஷு இந்திரியத்திற்குப பிரதானத்தன்மையாம், வாக்காதி இந்திரியங்கட்குக் கௌணத்தன்மையாம். இங்ஙனம சர்வ இந்திரியங்களில் தத்தம வியாபாரத்தின்கண்ணே பிரதானத்தன்மையும், அன்னிய இந்திரிய வியாபாரத்தின் கண்ணே கௌணத்தன்மையும், அறிந்துகொள்ளல்வேண்டும். நியமமாய்ப் பிரதானத்தன்மை யெவ்விந்திரியத்தின் கண் ணுமின்றும ; ஆகையினல், யாவும் சமானமாம். சுருதியின்கண் ணும் வாக்காதிய சம்பூர்ணப் பிராணன்களுக்குச் சமானத்தன்மையும் அநேகத்தன்மையும் கூறப்பட்டிருக்கின்றன. அல்லது யுக்தியினல் விசாரித்துப்பார்க்கினும் வாக்காதி சமபூர்ணப் பிராணன்களுக்குச் சமானத்தன்மையே சித்திக்கும்; விஷயத்தன்மை சித்தியாது. ஏனெனின், இப்புருஷன் எக்காலத்தில் வாக்கிந்திரியத்தால் சப்தோசசாரணம் செய்வனே, அக்காலத்தில நேத்திரேந்திரியத்தாற் பாரான், எக்காலத்தில் நேத்திரத்தாற காண்கின்றனனே அக்காலத்தில் வாககிந்திரியத்தால் வசனியான். இங்ஙனம், சமபூர்ண இந்திரியங்கட்கும் தத்தம் வியாபாரத்தின்கண் பிரதானத் தன்மையாம் ; அன்னிய இந்திரிய வியாபாரத்தின்கண் கௌணத்தன்மையாம். நியமமாய் வாக்காதி இந்திரியங்கட்குப் பிரதானத் தன்மையே யுண்டாயின், தரிசனரூப வியாபாரத்தின்கண் சக்ஷுவிற்கேபோல வாக்கிந்திரியத்திற்கும் பிரதானத்தன்மை யுண்டாதல்வேண்டும ; தரிசனரூப வியாபாரத்தின்கண் வாக்கிநதிரியத்திற்குப் பிரதானத் தன்மையில்லை. அல்லது நியமமாய் இநதிரியங்களிடத்தே கௌணத்தன்மையே யுடன்படின், சப்த உச்சாரணரூப வியாபாரத்தின்கண் ணும் வாக்கிநதிரியததிற்குப பிரதானத தன்மை யுண்டாகமாட்டாது ; மற்றோ கௌணத்தன்மை உண்டாகவேண்டும் ; கௌணத்தன்மையோ உண்டாகமாட்டாது. இங்ஙனம் சர்வ இந்திரியங்களிடத்தேயும் பிரதானத்தன்மை கௌணத்தன்மைகட்கு நியமமின்றாம். அல்லது வாக்காதி சம்பூர்ணப் பிராணன்களிடத்தே ஏககாலத்திற் கிரியை உண்டாகமாட்டாது. மற்றோ ஏக இந்திரியத்தின் வியாபாரம் உபராமமடையுங்கால் இந்திரியம தனது வியாபாரத்தைச் செய்யும.

சங்கை :—எல்லா இந்திரியங்களும் ஏககாலத்தில் தத்தம் வியாபாரத்தை உற்பன்னம் செய்யாவிடின் இவ்வுலகரினனுபவம் விபர்த்தமாம். வாக்கிந்திரியத்தால் வசனியாநின்ற யான் சக்ஷு இந்திரியத்தால் ரூபத்தைக் காண்கின்றேன், சுரோத்திர இந்திரியத்தால் சப்தத்தைக் கேட்கின்றேன், கிராண இநதிரியத்தாற் கந்தத்தைக் கவர்கின்றேன், துவக்கிந்திரியத்தால் ஸ்பரிசத்தை யறிகின்றேன், இரசன இந்திரியத்தால் இரசத்தையறிகின்றேன், பாணி இநதிரியத்தால் கிரகணம் செய்கின்றேன், பாத இந்திரியத்தால் யான் நடக்கின்றேன், உபஸ்த இக்

திரியத்தால் யான் ஆநந்தத்தை யடைகின்றேன், பாயுரு இந்திரியத்தால் யான் மலாதிகளைப் பரித்தியாகம் செய்கின்றேன், பிராணனால் உசுவாசாதிக் கிரியையைச் செய்கின்றேன், அகங்காரத்தால் அகம்பாவத்தை யானடைகின்றேன், மனத்தால் சங்கற்ப விகற்பங்களைச் செய்கின்றேன், சித்தத்தால் சாமானியரூபமாய்ப் பதார்த்தங்களை யானறிகின்றேன், புத்தியால் தேகத்தின்கண்ணே இராநின்ற சுகதுக்காதி பதார்த்தங்களைச் சாமானியமாயும் விசேஷமாயும் யானறிகின்றேனென்னும், இவ்வகையாய உலகரின் அனுபவப்பிரமாணத்தால் சம்பூர்ண இந்திரியங்களிடத்தே ஏககாலத்திலேயே சம்பூர்ண வியாபாரம் பிரதீதியாம. ஆகையினால் நியமமின்றிப் பிரதானத் தன்மையைக்கொண்டு சம்பூர்ண இந்திரியங்கட்குச் சமானம் கூறல் சம்பவியாது.

சமாதானம்:—ஏககாலத்தில் சம்பூர்ண இந்திரியங்களின் வியாபாரத்தின்கண் உலகரின் அனுபவமியாது உன்னால் கூறப்பட்டதோ அது மயல்வடிவமாம். ஏனெனின், எந்த க்ஷணத்தில் ஓரிந்திரிய வியாபாரமாமோ அந்த க்ஷணத்தில் மற்றோரிந்திரிய வியாபாரமுண்டாகாது. மற்றோ மற்றொரு க்ஷணத்தே மற்றோரிந்திரிய வியாபார முண்டாம. மூன்றாவது க்ஷணத்தே மூன்றாவதிந்திரிய வியாபாரமுண்டாம். இந்தப்பிரகாரம் க்ஷணத்தின்பின் க்ஷணத்தின்பின் இந்திரியங்களின் வியாபாரமாம். ஆனால், அந்த க்ஷணமதி சூக்குமமாமாதலின் அவிவேகி புருஷர்கட்கு ஏககாலத்தில எனககுச சமபூர்ண தரிசனாதி வியாபாரம் உற்பன்னமாயது என மயக்கவுணர்ச்சி யுண்டாம. மேலுங்கீழு மிராநின்ற அநேக பத்மபத்திரங்(தாமரையிலை)கள் ஏககாலத்தில ஊசியாற் குத்தபபடுவதின்றும. மற்றோ முதறக்ஷணத்தே ஊசியின்கண்ணே கிரியையுண்டாம், இரண்டாவது க்ஷணத்தே முன்னிடத்தினின்றும் ஊசியின் விபாகம் உற்பன்னமாம், மூன்றாவது க்ஷணத்தே ஊசியின் முற்சையோக நாசமுண்டாம, நான்காவது க்ஷணததே பத்மபத்திரரூப உத்தரதேசத்தோடு ஊசியின் சையோகம உற்பன்னமாம். இங்ஙனம், ஒவ்வொரு பத்திரமுங் குத்துப்படுவதில நந்நான்கு க்ஷணங்களாம ; ஆனால், அக்ஷக்ஷணமதி சூக்குமமாம்; ஆகையினால், அவிவேகி ஜனங்கட்கு ஏககாலத்தின்கண்ணே யான் அநந்தம பத்மபத்திரங்களை ஊசியாற் குத்தினேன் என மயக்க உணர்சசியுண்டாம். இவ்வண்ணம் வாக்காதிப பிராணன்களின் வியாபாரமும் வேறு வேறு காலத்திலுண்டாம் ; ஆனால், அக்கால மதிசூக்குமமாம். ஆகையினல, ஏககாலததன்மையின் மயல் அவிவேகி புருஷருக்குண்டாம். ஆகையினால், சம்பூர்ணப பிராணன்களுமு சமானமாம்

ஹே தேவராஜேந்திரனே! இங்ஙனம் சமபூர்ணப பிராணன்களிடத்தே சமானத்தன்மையை முனிகள் முனனர் என்பொருட்டுக கூறியுள்ளார்கள் ; தாங்களோ வாயுவடிவப பிராணனிடத்தேயே ஆன்மபுத்தியின் விதானத்தை(விரிவை)ச் செய்தீர்கள். அஃதெக் காரணத்தாலென்னும ஐயம் எனது சித்தத்தின்கண்ணே நிகழ்கின்றது எனக் கூறிய பிரதர்த்தன அரசன்றன் வசனத்தைக் கேட்டுப் பிராணனுடைய பிரதானத் தன்மையின்கண்ணே காரணங் கூற இச்சித்த இந்திரனவா அவ்வரசன் வசனத்தை யங்கீகரித்துக் கூறத்தொடங்கினர் :—

ஹே பிரதர்த்தன! இவ்வுலக ஜீவன் காரணத்தன்மை பிராணனிடத்தே யிருக்கின்றது; பரலோக ஜீவன் காரணத்தன்மையும் பிராணனிடத்தே யுளது. அன்னிய எவ்வாக்காதி இந்திரியங்களிடத்துமின்றாம். அந்த ஜீவனத்தின் காரணத்தன்மையே பிராணனிடத்தே ஆன்மபுத்தியின் ஏதுவாம். அந்த ஜீவன் காரணத்தன்மையே வாக்காதி இந்திரியங்களினின்றும் பிராணனிடத்தே விசேஷத்தன்மையாம்; வேறு யாதொரு விசேஷத்தன்மையுமின்றாம்.

ஹே பிரதர்த்தன! முன்னர் நீ இருஷிகளின் வசனத்தால் பிராணனிடத்தே பிரதானத்தன்மை கௌணத்தன்மைகளின் நியமமின்மை கூறினையல்லவா? அந்த நியமமின்மையும வாயுவடிவ முக்கியப் பிராணனிடத்தே சமபவியாது. மற்றோ வாக்காதி இநதிரியவடிவ கௌணப் பிராணன்களிடத்தேயே அநத நியமமின்மை சம்பவிக்கும். ஏனெனின், எதுவரை பிராணன்களின் வியாபாரம் சரீரத்தின் கண்ணே நிகழ்நதுகொண்டே யிருக்குமோ அதுவரை சம்பூர்ண வாக்காதி இந்திரியங்களிடத்தே வசனுதி ரூபக்கிரியை நிகழும். பிராணனது வியாபாரம் உபரமமாங்கால் எவ்விநதிரியத்தின்கண்ணும் எக்கிரியையு முண்டாகாது; இவ்வார்த்தை சர்வ உலகரின் அனுபவசித்தமாம். பிராணனிருப்பின், வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம, துவககு, சக்ஷு, சுரோத்திரம், சிங்குவை, கிராணம என்னும இபபத்து இநதிரியங்களிடத்தே ஒவ்வோரிந்திரியங்களின் வியாபாரமின்றியும், அல்லது சாவேநதிரியங்களின் வியாபாரமின்றியும, பிராணிகளின் ஜீவனத்தைக் கண்டோம். வாக்கிந்திரியததின் வசனரூப வியாபாரமின்றியும, ஊமைப்பிராணி ஜீவிக்கின்றது; ஹஸ்த இநதிரியத்தின் கிரகணரூப வியாபாரமின்றியும், குணப புருஷன் ஜீவிககின்றனன், பாயுரு இநதிரியத்தின் மலவிசர்க்க ரூப வியாபாரமின்றியும், சிலரோகிப பிராணி ஜீவிககின்றது; உபஸ்த இநதிரியத்தின் ஆநந்த வடிவ வியாபாரமின்றியும் பிரஹ்மசாரி ஜீவிக்கின்றனன்; துவக்கிந்திரியத்தின் ஸ்பரிசனவடிவ வியாபாரமின்றியும் குஷ்டிபபிராணி ஜீவிக்கின்றன; சக்ஷு இநதிரியத்தின் தரிசனவடிவ வியாபாரமின்றியும் அநதகப புருஷன் ஜீவிககின்றனன்; சுரோததிர இநதிரியத்தின் சிரவணவடிவ வியாபாரமின்றியும் செவிடன் ஜீவிககின்றனன்; இரசன இநதிரியத்தின் இரசக்கிரகணவடிவ வியாபாரமின்றியும இரசன தோஷத்தோடு கூடிய புருஷன் ஜீவிக்கின்றனன்; கிராண இநதிரியத்தின் கநதக்கிரகணவடிவ வியாபாரமின்றியும் கிராண தோஷவானுப புருஷன் ஜீவிக்கின்றனன்; அந்தககரணததின் நிசசய வடிவ வியாபாரமின்றியும் ஜட உன்மத்த புருஷன் ஜீவிககின்றனன். இவ்வணணம சர்வ இநதிரியங்களின் வியாபாரமின்றியும் பிராணி ஜீவிக்கும; ஆனால், பிராணனுடைய வியாபாரமின்றி எப்பிராணியும எவ்விடததும ஜீவித்தலைக் கண்டிலேம. ஆகையினால், சர்வ இந்திரியங்களினும பிராணன் உத்கிருஷ்டமாம். இக்காரணத்தால், ஹே பிரதர்த்தன! பிராணரூப உபாதியை யங்கீகரித்துப் பிராணசொரூபன் யான் என்பதாய உபதேசத்தை நின்பொருட்டு யான் செய்தனன். சம்பூர்ணவாக்காதி இந்திரியங்களினும் பிராணனுக்கு உத்கிருஷ்டத்தன்மையை யங்கீகரித்தே சுருதி பிராணனை "உகத" ரூபமாய் உபாசிக்கக் கூறியுள்ளது. கோளகங்களாலும், இந்திரி

யங்களாலும், தேவதைகளாலும் கூடியிருப்பினும் இச்சரீரம் மூர்ச்சையாதியவஸ்தையின்கண் மரணமடைந்ததற்குச சமானமாம். அச்சரீரத்தை ஆசனாதிகளினின்றும் இப்பிராணன் எழுப்பும். இக்காரணத்தாற்றான் பிராணனை "உக்த" மென்னும் நாமத்தால் விவேகிபுருஷன் உபாசனை செய்வன். அல்லது, சம்பூர்ண வாக்காதிகளினின்றும் முன்னர்க் காரணரூபமாய பிராணனே கிளம்புவன். இக்காரணத்தினாலும் பிராணன் "உக்த" மெனப்படும். யாது யாவற்றினும் முன்னர்க் கிளம்புதலை யடையுமோ அது சிரேஷ்டமாம். ஹிரண்யகர்ப்பன் யாவற்றினும் முன்னர்க கிளம்புதலை யடைவன். ஆகையினால் சிரேஷ்டனவன் அங்ஙனமே, பிராணனும் யாவற்றிற்கும் முன்னர்க் கிளம்புதலை யடையும்; ஆகையினால் சிரேஷ்டமாம். யாது சிரேஷ்டமாமோ அது இததமமாகும. ஆகையினால், பிராண சொரூப ஆன்மாவாய யானே இததமனும் என்னின் வேறாய யாதும் இத தமமன்றாம்.

இப்போது பிராணனுக்குப பிரஞ்ஞைவடிவத் தன்மையைக் காண்பித்தற்பொருட்டு கூறுகின்றார்:—ஹே பிரதர்த்தன! எங்ஙனம நேத்திராதி ஞான இந்திரியங்கட்கும், வாக்காதிகர்ம இந்திரியங்கட்குமு முக்கியப பிரஞ்ஞைவடிவத் தன்மையின்றாமோ, மற்றேறு அந்தக்கரணத்தின் விருத்தி சமபந்தத்தால் நேத்திராதி இந்திரியங்கட்குக் கௌணப் பிரஞ்ஞை வடிவத்தன்மையாமோ அங்ஙனம் பிராணனுக்குக் கௌணப பிரஞ்ஞை வடிவத்தன்மையின்றாம்; மற்றேறு பிராணனுக்கு முக்கியப் பிரஞ்ஞை வடிவத்தன்மையாம்.

கருத்திதுவாம்:—ஆயுஷ், அமிருதம, பிராணன் என்பவற்றிற்குப் பரஸ்பரம் பேதமின்றாம்; மற்றேறு, பிராணனே ஆயுஷ் அமிருத சொரூபமாம். இதனை முன்னரே கூறிவந்துளேம. அங்ஙனமே பிராணனுக்கும பிரஞ்ஞைக்கும் பரஸ்பரம் பேதமின்றாம்; மறறேறு, பிராணனே பிரஞ்ஞை வடிவமாம். அல்லது, உலகப்பிரசித்த வாயுரூபப பிராணனும அநதக்கரணத்தின் விருத்தி வடிவப பிரஞைையும் கட்டிலின் கால பின்னபின்னமாய்ப பிரதீதியாமாறு போலப் பின்னபின்னமாய்ப பிரதீதியாகா; மறறேறு, ஜீவன காலத்தின்கண் சாவ ஜீவாகளின் சரீரத்தின்கண் ஒன்றாயே பிராணப்பிரஞ்ஞைகள் பிரதீதியாம். மரணகாலத்தின்கண்ணும் ஒன்றாயே பிராணப்பிரஞ்ஞைகள் லோகாந்தரத்தின்கண்ணே செல்லும்; ஆகையினால், பிராணனும் பிரஞ்ஞையும் அபின்னமாம். உலகப்பிரசித்தமாய பிராணனிடத்தும பிரஞைையிடத்துங்கூடப பேதம் சிததியாதபோது, பிராணப்பிரஞ்ஞைச சபதங்கட்கு இலக்ஷிய அர்த்தமாய அலௌகிக அத்விதீய ஆன்மாவாய என்னிடத்தே எக்காரணத்தாற் பேதம் சித்தியாம்; மற்றேறு எவ்வாற்றானும் பேதம் சித்தியாது; ஆகையினால், பிராணப பிரஞ்ஞைவடிவ ஆன்மாவே யான். அல்லது அன்வய வியதிரேகத்தாலும் பிராணனுக்கே ஆன்மத்தன்மை சித்தமாம. ஏனெனின், சுழுபதி யவஸ்தையின்கண்ணும் மரணவஸ்தையின்கண்ணும் பிராணனுளது. ஆகையினால், பிராணனுக்குச் சுழுப்தி மரணத்தின்கண் அன்வயமாம். வாக்காதி இந்திரியங்கட்குச் சுழுப்தி யவஸ்தை

யின்கண்ணும் மரணவஸ்தையின்கண்ணும் இலயம் உண்டாம்; ஆகையினால், அவ் வாக்காதிகட்கு ஆண்டு வியதிரேகமாம். இந்தப் பிரகாரமாய அன்வய வியதிரேகமே பிராணனுக்கு ஆன்மரூபத்தன்மையைச சித்தம்செய்யும்.

இப்போது இப்பொருளையே வெளிப்படையாய்க் காட்டுமாறு தொடங்குகின்றார் :—எச்சுழுப்தி யவஸ்தையின்கண்ணே தூலசூக்கும சரீரங்களின் அபிமானியாய இஜ்ஜீவான்மா சயனத்தை யடைந்ததாய்ச் சிறிதுமாத்திரமேனும் சுவப்ன பதார்த்தங்களைக்காண்பதின்றோ! அச்சுழுப்தியின்கண்ணே இஜ்ஜீவான்மா பிராண உபகித பரமான்மாவோடு அபேதபாவத்தை யடையும். அவை நனுக்கனு வவஸ்தையின்கண்ணும் அபேதமாயே யிருப்பினும் உபாதியாற் பேதமும், வாஸ்தவத்தால் அபேதமும் என அவற்றிற்கு இரண்டுமுள. ஈண்டுச் சுழுப்தி யவஸ்தையின் கண்ணே கேவலம் அபேதமேயாம்.

கருத்திதுவாம் :—வாக்காதி பஞ்சகாம இந்திரியங்கள், நேத்திராதி பஞ்ச ஞானேந்திரியங்கள், அந்தககரண சதுஷ்டயம், வாக்காதிகளின் விஷயம் என்னு மிவ்வெல்லா வுபாதிகளும் நனுவவஸ்தையின்கண்ணும், கனுவவஸ்தையின்கண்ணும், ஆன்மாவைப பேதம் செய்வனவாம்; அவ்வுபாதிகளாலும் சுழுப்தி யவஸ்தையின்கண்ணே ஆன்மாவின் பேதம சித்தியாது; ஏனெனின், இவ்வெல்லா வாக்காதி இநதிரியங்களும் தத்தம விஷயங்களோடு சுழுபதி யவஸ்தையின்கண் பிராணவுபகித பரமான்மாவாய என்னிடத்தே இலயத்தையடையும். ஆகையினால், சுழுப்தி யவஸ்தையின்கண் பரமான்மாவாய எனக்கு ஒருமையே சம்பவிக்கும். ஹே பிரதர்த்தன! யானத்விதீய ஆன்மாவாதலின் சொரூபமாய் என்னிடத்தே பேதம் சமபவியாது; மறறோ வாககாதிய உபாதிகளால் ஆன்மாவாய என்கண்ணே பேதம் பிரதீதியாகும். அவ்வாக்கு முதலிய வுபாதிகள் சுழுபதி யவஸ்தையின்கண்ணே இலயமடையுப. ஆகையினால் சர்வ பேதங்களுமறற பிராணசொரூப ஆன்மாவாய எனது ஏகத்தன்மையே சுழுபதி யவஸ்தையின்கண்ணே சித்தமாம.

சங்கை :—ஹே பகவன்! சுழுபதி யவஸ்தையின்கண் வாக்காதி சம்பூரண இநதிரியங்களின் இலயம் பிராணனிடத்தேயாமெனத தாங்கள் கூறினீர்கள்; அதனுலிது நிச்சயமாம் :—வாக்காதி இநதிரியங்களின் உபாதானகாரணம பிராணனும். ஏனெனின்! காரிய இலயத்தினதாரம உபாதான காரணமேயாம, நிமித்த காரணமன்றும; கடத்தின் இலய ஆதாரம் மண்ணுட, குலாலனன்று மாதலின் குலாலனைபபோல வாக்காதி இநதிரியங்கட்குப பிராணனினும் வேறாயே யொரு நிமித்தகாரணங் கூறவேண்டும்.

**சமாதானம்** :—ஹே பிரதர்த்தன! வாக்காதி இந்திரியங்களின் உபாதான காரணமும் நிமித்தகாரணமும் பிராணவடிவ ஆன்மாவாய யானேயாம். ஒரே ஊர்ண நாபி (உலண்டு, சிலந்தி, நூற்பூச்சி) யாகிய ஜந்துவானது நூலினுக்கு உபாதான நிமித்தகாரண மாவதுபோல. நையாயிகர் தம்மதத்தில் கட ஈஸ்வர சம்யோகத்திற்கு ஒரு ஈஸ்வரனே உபாதான நிமித்தகாரணமாவர். ஹே பிரதர்த்தன!

சுழுப்தி யவஸ்தையின்கண் எந்தப் பிராணவடிவ ஆன்மாவாய எனதிடத்தே வாக்காதி இந்திரியங்கள் இலயத்தை யடையா நிற்குமோ, அந்தப பிராணவடிவ ஆன்மாவாய என்னிடத்திருந்தே நனு வவஸ்தையின்கண் சம்பூர்ண வாக்காதி இநதிரியங்கள் உற்பன்னமாகின்றன. மிருத்திகையினின்றும உற்பன்னமாய கடம் மிருத்திகையினின்றும் பின்னமாவதின்றும்; அங்ஙனமே, பிராணவடிவ ஆன்மாவாய என்னினின்றும உற்பன்னமாய வாக்காதி இந்திரியங்கள் என்னிற பின்னமாயெவ்வகையாலும ஆவதின்றும.

சங்கை :—ஹே பகவன்! வாக்காதி இந்திரியங்கள் பிராணவடிவ ஆன்மாவினின்றும் பின்னமன்றும ஆயின் பின்னமாயேன் தோறறவேண்டும.

சமாதானம் :—ஹே பிரதாத்தன! இவ்வாக்காதிகள் பிராணவடிவ பரமான்மாவாய எனது விபூதிகளாம; ஆகையினலை, ஆன்மாவாய என்னிற் பின்னமாய் உற்பன்னமாகா. மற்றே, எனது சொரூபமாயிருநதே என்னிடத்திருந்துற் பன்னமாம். அவிவேகத்தா லவற்றின் பேதம் பிரதீதியாகும்.

சங்கை :—ஹே பகவன்! வாக்காதி இநதிரியரூப விபூதிகட்குப பிராணவடிவ ஆன்மாவினின்றும அபின்ன ரூபமாய்த் தாங்கள் உறபத்தி கூறினீர்கள், அது சம்பவியாது; ஏனெனின், உலகின்கண்ணே பின்னங்கட்கே காரியகாரண பாவம் கண்டோம்.

சமாதானம் :—பின்னங்கட்கே காரியகாரண பாவமுண்டாமென்னும் நியமம் சம்பவியாது; மற்றே அபின்னங்கட்கும் காரியகாரண பாவமுண்டாம. தூங்கியெரியாநின்ற அக்கினியினின்றும் கணம் (பொறி) உற்பன்னமாம. அக்கணம அக்கினியினின்றும பின்னமன்றும், மற்றே அபின்னமாம். அங்ஙனமே நனு அவஸ்தையின்கண் பிராணவடிவ ஆன்மாவாய என்னினின்றும் வாக்காதி இந்திரியங்களுற்பன்னமாம. அவ்வாக்காதி இநதிரியஙகளினின்றும அக்கினியாதி தேவதைக ளுற்பன்னமாம்; அவ்வக்கினியாதி தேவதைகளினின்றும் சபதோச்சாரணுதி விஷயங்களுண்டாம்.

இப்போது திருஷ்டி சிருஷ்டி வாதத்தை வெளிப்படுத்தும்பொருட்டு இவ் வர்த்தத்தையே யுக்திகளால் நிரூபிபபாம் :—ஹே பிரதர்த்தன! சுழுபதி யவஸ்தையின்கண் சுழுப்த புருஷன் விஷயசகித வாககாதி இநதிரியங்களைக் காண்கிலன்; அங்ஙனமே அன்னிய எந்நனுப் புருஷனும் சுழுப்த புருஷனுடைய வாக்காதி இந்திரியங்களைக் காண்கிலன். சுழுப்த புருஷனுடைய பிராணனையோ அன்னிய நனுப்புருஷன் காண்கின்றனன். இக்காரணததினுலும் பிராணனுக்கே வாக்காதி இந்திரியங்களின் காரணத்தன்மை சித்திக்கும. ஏனெனின், எவ்வஸ்துவிலிருந்து எவ்வஸ்து பிரதீதியாமோ, எவவஸ்துவிலிருந்து எவ்வஸ்து ஆண்டுப் பிரதீதியாகாதோ அவ்வஸ்துவிற்கு அவ்வஸ்து காரியமாம. மண்ணிலிருந்தே கடாதிகள் பிரதீதியாம். கடாதி உற்பத்தியின் முன்னர் மண்ணிலிருந்து கடாதிகள் ஆண்டு பிரதீதியாவதின்றும்; ஆகையினுல் மண்ணினுக்குக் கடாதிகள் காரியமாம்.

சங்கை :—ஹே பகவன்! எஃது இருந்து எது தோற்றுமோ அது அதனது காரியமாம் எனக்காரிய இலக்கணம் தாங்கள் கூறினீர்களன்றோ? அவ்விலக்கணம் அதிவியாப்தித் தோஷமுடையதாம். ஏனெனின், சூரியாதிப் பிரகாசங்களிருந்தே கடாதிகளின் பிரதீதி சக்ஷு இந்திரியத்தா லுண்டாகின்றது; பிரகாசமின்றி அந்த காரத்தின்கண்ணே யிராநின்ற கடாதிகளின் பிரதீதியாவதின்றாம். ஆகையினால், கடாதிகளும் பிரகாசத்தின் காரியமாகவேண்டும்; பிரகாசத்தின் காரியம் கடாதிகளாவதின்றாம்.

சமாதானம் :—எவ்வஸ்து இருந்தே எவ்வஸ்து உற்பன்னமாமோ அவ்வஸ்துவின் வேறாயெவ்வஸ்துவினின்றும் உற்பன்னமாகாதோ, அவ்வஸ்துவிலிருந்தும எவ்வஸ்து ஒருகால் ஆண்டு உற்பன்னமாகாதோ அவ்வஸ்து அவ்வஸ்துவின் காரியமாம். நூலிலிருந்தே படமுற்பன்னமாம், நூலின் வேறாய் மண்ணிருந்த போதினும் அதினின்றும் படத்தினுற்பத்தி யுண்டாகாது. படத்தினுற்பத்தியின் முன்னர்த் தந்துக்களிருந்த போதினும் துரிவேமாதி சாமக்கிரியின்றி ஆண்டுப் படமுற்பன்னமாகாது. ஆகையினால், நூற்கட்குப் படம் காரியமாம்; மண்ணிற்குக் கடம் காரியமாம், சூரியாதிப் பிரகாசத்திற்குக் கடம் காரியமன்றாம். ஆகையினால் இக்காரியத்தின் இலக்கணம் தோஷமற்றதாம். அந்த இக்காரிய இலக்கணம் வாக்காதி இந்திரியங்களிடத்தும் பொருந்தும்; ஏனெனின், சுழுப்தியவஸ்தையின்கண்ணே பிராணனிருந்தும் ஆண்டுவாக்காதி இந்திரியங்கள் உற்பன்னமாகா. நனு அவஸ்தையின்கண் பிராணனிருந்தே வாக்காதி இந்திரியங்கள் உற்பன்னமாம்; பிராணனினும் வேறாய எக்காரணத்தினின்றும் வாக்காதி உற்பன்னமாகமாட்டா. ஆகையினால் வாக்காதி இந்திரியம் பிராணனது காரியமாம்.

கருத்திதுவாம் :—அக்கினியை விட்டுப் புகையிராது, மற்றே யாண்டுப புகையிருக்குமோ ஆண்டவசியம் அக்கினியிருக்கும், அக்கினியோ புகையை விட்டும் தப்தாய பிண்டத்தின்கண்ணே இருக்கும். அக்கினி வியாபகமாம், புகை வியாப்பியமாம்; அங்ஙனமே, பிராணனை விட்டு வாக்காதி இந்திரியங்களிரா, பிராணனே சுழுப்தியின்கண்ணே வாக்காதி இந்திரியங்கள் இலயமடைந்த போதினும் இருக்கும். ஆகையினாற் பிராணன் வியாபகமாம்; வாக்காதி இந்திரியங்கள் வியாப்பியமாம். காரணம் வியாபகமாம, காரியம் வியாப்பியமாம். அல்லது சுழுப்தியின்கண் விஷயத்தோடு வாக்காதி இந்திரியங்களின் கூட்டம் பிராணனிடத்தே இலயமடையாதிருப்பின் சுழுப்தியின்கண்ணே சுழுப்த புருஷனாலும் அன்னிய நனுப் புருஷனாலும் விஷயசகித வாக்காதி இந்திரியங்கள் அறியப்படல் வேண்டும்; ஆண்டு அங்ஙனம் பிரதீதியாவதின்றாம். ஆகையினால், இஃதறியப் பெறலாம் :—சுழுப்தியின்கண் விஷயசகித வாக்காதி இந்திரியங்கள் பிராணனிடத்தே இலயமடைந்துவிடும் என்பதே. தண்டாதிகளாற் பிரத்வம்சமாய கடம் மண்வடிவ தனது காரணத்தின்கண் இலயத்தையடையும்.

---

(அன்வய வியதிரேகம்=உடன்பாடெதிர்மறை.)

சங்கை :—ஹே பகவன்! வாக்காதி இந்திரியங்கட்கும் சப்தோச்சாரணாதி விஷயங்கட்கும் பரஸ்பரம் பேதமாம்; ஆகையினால் சுழுப்தியின்கண்ணே வாக்காதி இந்திரியங்கள் இலயமடைந்திருப்பினும் அவற்றினது விஷயங்களின் இலயம் சம்பவியாது.

சமாதானம் :—காரணத்தி னபாவமுண்டாமாயின் காரியமுற்பன்ன மாகமாட்டாது. விளக்கின்றி விளக்கின் காரியமாய பிரபை யுற்பன்ன மாகமாட்டாது; அங்ஙனமே வாக்காதி இந்திரியங்கள் இலயமடையின் அவற்றின் காரியமாய சப்தோச்சாரணாதி விஷயங்களும் சுழுப்தி யவஸ்தையின்கண் உற்பன்னமாகா. ஆகையினால், அவ்விஷயங்கட்கும் இலயம் சம்பவிக்கும். எவ்வஸ்து எவ்வஸ்துவின்கண்ணே இலயமாமோ அவ்வஸ்து அவ்வஸ்துவினின்றும் உற்பன்னமாமென்பது நியமமாம். ஓங்கி யெரியாநின்ற அக்கினியின்கண் *கணங்களின் இலயமாம். அவ்வக்கினியினின்றும் அக்கணங்களின் உற்பத்தியுண்டாம். அங்ஙனமே சுழுபதி யவஸ்தையின்கண் வாக்காதி இநதிரியஙகட்குப பிராணனிடத்தே இலயமாம்; நனு அவஸ்தையின்கண் அநதப பிராணனினின்றும் வாக்காதிகளின் உற்பத்தியுண்டாம.

சங்கை :—ஹே பகவன்! அக்கினியின்கண்ணே எவ்வெக்கணம் இலயத்தை யடையாநிற்குமோ அவ்வக்கணம் மீண்டு உற்பன்னமாவதின்றாம்; மற்றோ அவற்றினும் பின்னமாயே கணமுறபன்னமாம்; அங்ஙனம் சுழுபதியின்கண் பிராணனிடத்தே லயமாய வாக்காதி இநதிரியங்களினின்றும் பின்னமாயே வாக்காதி இந்திரியங்கட்கு நனவின்கண் உற்பத்தியுண்டாகவேண்டும.

சமாதானம் :—அக்கினியினின்றும் உறபன்னமாய கணம் பூர்வம் விலீனமாய கணத்தினின்றும் பின்னமாய்ப பிரதீதியாம்; அங்ஙனமே நனவின்கண் பிராணனினின்றும் உற்பன்னமாய வாக்காதிகள் பூர்வம் விலீனமாய வாக்காதிகளினின்றும் பின்னமாய்ப பிரதீதியாகா. மற்றோ சுழுப்தியின்கண்ணே எவ்வாக்காதி இநதிரியங்கள் பிராணனிடத்தே இலயமடைந்தனவோ அவ்வாககாதி இந்திரியங்களே மீண்டும் நனவின்கண் பிராணனினின்றும் உறபன்னமாய்ப் பிரதீதியாம்; ஆகையினால், அவற்றினது பேதத்தின்கண் பிரத்தியக்ஷப பிரமாணம் சம்பவியாது.

சங்கை :—வர்த்தமான வாக்காதி இந்திரியங்களினின்றும் முன்னர் இலயமடைந்த வாக்காதி இந்திரியங்களின் பேதம் அனுமானப் பிரமாணத்தாற் றுணியப்பெறும். அவ்வனுமானத்தின் பிரகாரம் இதுவாம் :—முன் வாக்காதி இந்திரியங்கள் வர்த்தமான வாக்காதி இந்திரியங்களின் வேறாம்; விலீனமாதலின்; எந்தெந்தவஸ்து முன் விலீனத்தன்மையை யடையுமோ அதுவது வர்த்தமான வஸ்துவின் வேறாம். முன் அக்கினியின்கண்ணே விலீனமடைந்த கணம் வர்த்தமான கணத்தினும் வேறுமாறுபோல இவ்வனுமானப் பிரமாணத்தால் பூர்வ உத்தர வாக்காதி இந்திரியங்கட்குப் பேதமே சித்தித்தது.

* கணம்=தீப்பொறி.

சமாதானம் :—இவ்வனுமானத்தினாலும் வாக்காதி இந்திரியங்களின் பேதம் சித்தியாது ; ஏனெனின், எவ்வேது தனது சாத்தியத்தை விட்டு வேறிடத்திராதோ அவ்வேதுவினால் அச்சாத்தியத்தின் சித்தியுண்டாம். தூமரூப ஹேது வன்னிவடிவ சாத்தியத்தை விட்டு வேறிடத்திராது ; ஆகையினால், தூமரூப ஹேதுவினால் பர்வதத்தின்கண் வன்னியின் துணிவுண்டாம். எவ்வேது தனது சாத்தியத்தை விடுத்து மற்றிடத்து மிருக்குமோ அவ்வேதுவினால் அச்சாத்தியத்தின் சித்தியுண்டாகாது. பிரமேயத்வ ஹேது வன்னியின்மையை யுடையதாய ஜலாதிகளிடத்தேயு மிருக்கும். ஆகையினால் பிரமேயத்வரூப வியபிசாரி ஹேதுவினால் பர்வதத்தின்கண் வன்னிவடிவ சாத்திய சித்தியுண்டாகாது. அங்ஙனமே இவ்விலீனத்தன்மை வடிவ ஹேதுவும் பேதரூப் சாத்தியத்தை விட்டு வேறிடத் திருக்குமாதலின் வியபிசாரியாம். ஏனெனின், மிகவுந் தூளியான் மறைபட்ட கடத்தின்கண் விலீனத்வரூப ஹேதுவோ இருக்கின்றது ; ஆனால் நிகழ்காலத்திருப்பதாய அக்கடத்தினின்றும் அதற்குப பேதமுண்டாவதின்றாம். மற்றோ, முன்னர்த் தூளியான் மறைபட்ட கடமே தூளியற்றதாய்ப் பிரதீதியாமாதலின், விலீனத்வ வடிவ வியபிசாரி ஹேதுவால் வாக்காதி இந்திரியங்களின் பேதசித்தி சம்பவியாது.

சங்கை :—தூளியான் மறைபட்ட கடத்தின்கண் வர்த்தமான அக்கடத்தின் பேதவடிவ சாத்திய மின்றாவதுபோல, விலீனத்வ வடிவ ஹேதுவும அதன்கண் இல்லையாம். ஆகையினால், விலீனத்வ வடிவ ஹேது வியபசாரியன்றாம்.

சமாதானம்:—வஸ்துவின் அதரிசனத்தின் நாமம் இலயமாம்; அதரிசனத்தின் வேறாய் இலயசபதத்தின் அருத்தம் யாதொன்று மின்றாம். நனவின்கண் கனப்பொருள்களின் தரிசனமுண்டாவதின்று ஆதலின் கனப்பொருள்கட்கு நனவின்கண் இலயங்கூறப்பெறும். அதுபோலத் தூளியால் மறைபட்ட கடத்தினுக்கும் அக்காலத்தில் தரிசனமுண்டாவதில்லை யாதலின் விலீனத்வ வடிவ ஹேது அக்கடத்தின்கண்ணே சம்பவிக்கும்.

சங்கை :—அதரிசனத்தின் நாமம் இலயம் எனத்தாங்கள் கூறினீர்கள், அது பிராதி பாசிகமாய கனப்பொருள்களிடத்தே பொருந்து மென்றாலும், வியாவகாரிகப் பொருள்களிடத்தே பொருந்தாது. ஏனெனின், யாண்டும் அதரிசனமென்பதே இலயமாகுமாயின், தேசாந்தரத்தின்கண் இராநின்ற புத்திராதி பந்துக்களின் தரிசனம் எவருக்கு முண்டாகாதாதலின், எனது புத்திராதி பந்துக்கள் இலயமடைந்தனர் என இவ்வகையாய வியவகாரம் உலகத்தின்கண்ணே யுண்டாக வேண்டும் ; இவ்விதம் கூறுவாரெவரு மின்றாம், ஆகையினால், அதரிசனமென்பது இலயமன்றாம்.

சமாதானம் :—எக்காலத்தில் புத்திராதி பந்துக்களின் அதரிசனமாமோ அக்காலத்தில் அவற்றின் இலயமேயுண்டாம். எக்காலத்தில் அந்தப்புத்திராதி பந்துக்களின் தரிசனமாமோ அக்காலத்தில் அவர்க்கு மீண்டு முற்பத்தியுண்டாம். இவ்வர்த்தத்தை யங்கீகரிப்பதில் சிறிதுமாத்திரையும் எமக்கு ஹானியின்றாம்.

சங்கை :—இலயமடைந்த புத்திராதிகட்கு மீண்டும் உற்பத்தி யங்கீகரிக்கின் மரணமடைந்த புத்திராதி பந்துக்களும் மீண்டு முற்பத்தியாதல்வேண்டும்; மரணமடைந்த அன்னாரை மீண்டெவரும் பார்ப்பதின்றாம்.

சமாதானம் :—புத்திராதி பந்துக்களின் தரிசனத்தின்கண் மரணமும் ஜீவனமும் காரணமன்றாம்; மற்றோ, அவற்றினும் வேறாயே அதிர்ஷ்டாதிகள் காரணமாம். ஏனெனின், அத்தியந்தம் தூரதேசத்தின்கண் இராநின்ற உயிரோடுற்ற பந்துக்களின் தரிசனமும் ஒரோருகால் மீண்டு முண்டாகாமற் போகின்றது. ஆகையினாற் ஜீவனமும் மரணமும் மீண்டு முண்டாந் தரிசன காரணமன்றாம்.

சங்கை:—தூரதேசத்தின்கண் இராநின்ற பந்துக்களின் தரிசனம் அத்தேசத்தின்கண்ணே சென்றால் சம்பவிக்கும். மரணமடைந்த உறவினர் தரிசனம் எவ்வாற்றானும் சம்பவிப்பதின்றாம். ஆகையினால் ஜீவனமே மீண்டுண்டாந் தரிசன காரணமாம்; மரணமன்றாம்.

சமாதானம் :—ஜீவனம் ஒரோருகால் மீண்டுமுண்டாம் தரிசன காரணத்தன்மை நீ கண்டதுபோல, மரணத்திற்கும் ஒரோருகால் மீண்டுமுண்டாந் தரிசன காரணத்தன்மை சம்பவிக்கும், ஏனெனின், கனவின்கண் நெடுநாட்குமுன்னர் மரித்த உறவினரும் ஒரோருகால் உலகருக்குக் காணக்கிடைப்பர். ஆகையினால், நியமமாய் ஜீவனமேனும் மரணமேனும் மீண்டுமுண்டாதற்குத் தரிசனம் காரணமன்றாம்; மற்றோ, அதிஷ்டாதிகளே மீண்டுமுண்டாந தரிசனத்திற்குக் காரணமாம்.

சங்கை :—தரிசனகாலத்தில் புத்திராதி பந்துக்களின் உற்பத்தியுண்டாமென முன்னர்த தாங்கள் கூறினீர்கள்; அது சம்பவியாது. ஏனெனின், உலகின்கண் உண்டாகாநின்ற மைந்தர் முதலாயினார்க்கு இவ்வகையாய ஞானம் நியமமாக உண்டாகிறது :—தேவதத்தனெனப் பெயரிய யான் யஞ்ஞதத்தன் எனப் பெயரிய தநதையிடத்திருந்தே உறபன்னமானேன். ஆகையினால் இங்ஙனம் உணரபபடுமன்றோ? அநதப பிதாவிடத்திருந்தே உண்டானேன் என்பதாய ஞானமோ வியாபகமாம். புத்திராதிகளின் உற்பத்தி வியாபபியமாம். வியாபகத்தாலன்றி வியாபபியத்தின் ஸ்திதியுண்டாவதின்றாம்; அக்கினியினாலன்றித் தூமத்தின் ஸ்திதியுண்டாகாததுபோல. காணும்போது காணும்போது புத்திராதிகளின் உற்பத்தி யுண்டாகுமாயின் அவன்பால் நின்றும் யானிபபோது உற்பன்னமாயினேன் என்னும் ஞானம் புத்திராதிகட்கு உண்டாகவேண்டும். இத்தகைய ஞானம் எவர்க்குமுண்டாவதின்றாம். ஆகையினால், வியாபகவடிவ ஞானபாவ முண்டாதலின், அந்த ஞானத்தின் வியாப்பிய வடிவ புத்திராதிகளின் உற்பத்தியும் தரிசன காலத்தின்கண் உண்டாகாது.

சமாதானம் :—அவன்பால் நின்றும் யான் உற்பன்னமாயினேன் என்னும் ஞானத்திற்கு உற்பத்தியின் வியாபகத்தன்மை யாண்டுமிருப்பின், நினது பூர்வ

பக்ஷம் சம்பவிக்கும். ஆனல், அந்த ஞானத்திற்கு உற்பத்தியின் வியூாபகத்தன்மை யாண்டுமின்றாம். ஏனெனின், கடாதி ஜடபதார்த்தங்களின் உற்பத்தியோ உண்டாம்; ஆனல், கடாதி ஜடபதார்த்தங்களிடத்தே அதன்பால் நின்றும் யான் உற்பன்னமாயினேன் என்னும் ஞானமுண்டாகாது.

சங்கை :—அதன்பால் நின்றும் யான் உற்பன்னமாயினேன் என்னும் ஞானம் கடாதி ஜடபதார்த்தங்களிடத்தே இன்றுமென்றாலும், கடாதிகளைக் காணும் புருஷனுக்கு இவ்வகையாய ஞானமுண்டாம் மண் முதலியவற்றினின்றும் இக்கடம் உண்டாயிற்று. ஆகையினலை, யாண்டு உறபன்னமாமோ ஆண்டு இவ்வகையாய ஞானம அவசியமுண்டாமன்றோ ?

சமாதானம் :—காண்போனுடைய ஞானத்திற்குக் கடோற்பத்தியின் வியாபகத்தன்மை சம்பவியாது. ஏனெனின், ஓரதிகரணத்தின்கண்ணே யுள்ள பதார்த்தங்கட்கே பரஸ்பரம் வியாப்ய வியாபக பாவமாம்; ஓரதிகரணத்தின்கண் உள்ள தூமத்திறகும் வன்னிக்கும் பரஸ்பரம் வியாப்ய வியாபக பாவமாவது போலுமென்க. பின்ன பின்ன அதிகரணத்தின்கண்ணே யிருபபதற்கோ பரஸ்பரம் வியாபய வியாபக பாவமின்றும; சீதஸ்பரிசததிறகும உஷ்ணஸ்பரிசத்திற்கும் பரஸ்பரம் வியாபய வியாபக பாவம் உண்டாகாதது போலுமென்க. அங்ஙனமே உற்பத்திக்கும் முறகூறிய ஞானத்திற்கும் ஓரதிகரணமின்றும. மற்றோ உறபத்தியின் அதிகரணம் கடமாம்; ஞானததின் அதிகரணம் கடத்தைக் காண்போனும். பின்ன பின்ன அதிகரணத்தின்கண் ணேயுள்ள உறபத்திக்கும் ஞானத்திற்கும் பரஸ்பரம் வியாபய வியாபக பாவமங்கீகரித்தல் அத்தியந்தம விருத்தமாம. ஆகையினலை உற்பததிக்கும் முறகூறிய ஞானத்திறகும பரஸ்பரம வியாபய வியாபகபாவம் சம்பவியாது.

சங்கை :—கடாதிஜட பதாரத்தங்களின் உறபத்திக்கும் முறகூறிய ஞானத்திற்கும் பரஸ்பரம் வியாப்பிய வியாபக பாவம் சம்பவியாதெனினும், சைதன்ய மனுடாதியர்கடு அவன்பால் நின்றும் யான் உற்பன்னமானேன் என்னும ஞானம் உண்டாமாதலின், சைதன்ய மனுஷாதியரின் உற்பததிககே முற்கூறிய ஞானம் வியாபகமாம்; ஜடங்களின் உறபத்திக்கு வியாபகமன்றும்.

சமாதானம் :—அவன்பால் நின்றும் யானுண்டானேன் என்னும் ஞானம், சேதன மனுஷாதியரின் உற்பத்திக்கு வியாபகமென்பது சம்பவியாது; ஏனெனின், சேதன மனுஷாதிகளும் உற்பத்தியின் பின்னர் இவ்வண்ண மறியார். இவன்பால் நின்றும் உற்பன்னமானேன், மறறோ தாய்தந்தையர்தம் வசனத்தால் அநதக் குமாரனுக்கு நெடுநாட்குப்பின் அந்த ஞான முண்டாமாதலின், சேதனத்தின் உற்பத்திக்கு முற்கூறிய ஞானம் வியாபகமாமென நீ நிகழ்த்தலும் பயனற்றதாம். அல்லது, சேதனத்தின் உற்பத்திக்கு முன்னர்கூறிய ஞானம், வியாபகமாம் என்னும் நினது வசனம என் வாயிலே நாவில்லை யென்னும் வசனம்போல வியாகாத தோஷத்தோடு கூடியதாம். ஏனெனின், சைதன்யம்

ஆன்மசொரூபமாம்; ஆகையினுல் நித்தியமாம்; அத்தகைய நித்திய சைதன்யத்திற்கும் வுற்பத்தி கூறுதல் முற்றிலும முரணும்.

சங்கை :—இத்தேவதத்தனெனப் பெயரிய புருஷன் உற்பன்னமானுன் என்பதாய அனுபவம் யாவருககு முண்டாமாதலின் சைதன்யத்திற்கும் உற்பத்தி சம்பவிக்கும்.

சமாதானம் :—உலகரின் அனுபவம மெய்யாயின் சைதன்ய உற்பத்தியைத் துணிவிககும்; ஆனுல் அவ்வுலகரின் அனுபவம் மயல்வடிவமாம்; ஏனெனின், அன்னிய வஸ்துவின் தாமங்களை அன்னியவஸ்துவின்கண் ஆரோபணம் செய்வதை மயக்கவுணர்வென்பர்; இரஜ்ஜுவினிடத்தே இது சர்பபமென உண்டாம் ஞானம் மயக்கமாவதுபோல. உறபத்தியும் நாசமும தேகதர்மங்களாம்; சைதன்ய தர்மமன்றும. மற்றேரு அஞ்ஞானரூப தோஷத்தால் அவிவேகி புருஷன் சைதன்ய ஆன்மாவின்கண் உறபத்தியையும நாசததையும் அங்கீகரித்துளான்; ஆகையினுல அவன் மயககததை யுடையவனும. அவனுடைய அனுபவத்தால சைதன்ய உறபததி சிததியுண்டாகாது.

சங்கை :—சைதன்யத்திற்கு வுற்பததியும நாசமும உண்டாகா திருககுமாயின் தரிசனகாலத்தில் புததிராதிகளின் உற்பததியும் அதரிசன காலத்தின்கண் அவா தம இலயமும் கூடுமென்னும திருஷ்டிசிருஷ்டி வாதமானது எங்ஙனந் துணியபபெறும்?

சமாதானம் :—தரிசனகாலத்திலும அதரிசன காலத்திலும் சைதன்யத்தின் உற்பததியையும் நாசத்தையும யாமும உடன்படுவதின்றும். மற்றேரு, ஆண்டும், சரீராதி அனுன்ம பதார்ததங்களின் உற்பத்தியும நாசமுமே யுண்டாம.

அல்லது, ஜன்ம சபததின் அர்த்ததை விசாரிததபோதினும் திருஷ்டி சிருஷ்டி வாதமே சித்தமாம. ஏனெனின், உற்பன்னமாவதனை ஜன்மமென்பர். அவ்வுறபன்னமாதல் தரிசனததினும வேறன்றும; மற்றேரு, வஸ்துவின் தரிசனமே உறபன்னமாதலாம. அதிகாலையில் சூரிய தரிசனமாயின் உலகர் சூரியன் உதயமானுனெனக் கூறுகிறபர். இவ்வுலகரது வியவகாரத்தால் தரிசனத்தின் பெயரே யுற்பன்னமாதல் (உதயம்) என்பதாயிற்றன்றேரு? ஆகையினுல, புத்திராதி பதார்த்தஙகளின் தரிசனமே அவர்தம் முறபததியாம புத்திராதிகளின் அதரிசனமே அவர்தம் இலயமுமாம். இத்திருஷ்டி சிருஷ்டி வாதமே யுத்தம சித்தாந்தமாம்.

சங்கை :—முதலில் மாதாவின் உதரததினின்றும புத்திரனுதிப்பின், பிதா அப்பாலகனுககு ஜன்ம சமஸ்காரம் செய்வர்; தேவதத்தாதி நாமங்களையும் வைப்பர். அதுபோல புத்திரனைக் கண்டபோதும் ஜன்ம சம்ஸ்காரம் உண்டாதல் வேண்டும்; ஏனெனின், தங்கள் மதத்தில் எஞ்ஞான்றெஞ்ஞான்று புத்திர தரிசனமாமோ அஞ்ஞான்றஞ்ஞான்று புத்திரோறபத்தி யாமன்றேரு?

சமாதானம் :—இத்தோஷம் கேவலம் எமது மதத்தின்றும் மற்றோ வாதியாய நின்மதத்தும் இத்தோஷம் சமானமாம் ; ஏனெனின், நின்மதத்தில் மூத்த குமரன் சரீரத்தைக்காட்டினும் இளைய குமரன் சரீரம் வேறும். ஆகையினால் அவன் சம்ஸ்காரமும் பின்னபின்னமாம், அங்ஙனமே புத்திரனது பாலிய சரீரத்தைக்காட்டினும் யவ்வன சரீரம் பின்னமாம். பாலிய சரீரத்திற்கும் யவ்வன சரீரத்திற்கும் அபேதம் நினக்கு முடன்பாடின்றும். ஆகையினால் பாலிய சரீரத்தைப்போல யவ்வன சரீர முற்பன்னமாயினும் மீண்டும் ஜன்ம சம்ஸ்கார முண்டாகவேண்டும். யவ்வனாவஸ்தை யடைந்தபின் ஜன்ம சம்ஸ்காரத்தை யாவரும் செய்வதின்றும்.

சங்கை :—பாலிய சரீரத்திற்கும் யவ்வன சரீரத்திற்கும் பரஸ்பரம் பேதமின்றும் ; மற்றோ அபேதமாம் ஆகையினால், ஜன்ம சம்ஸ்கார அடைவின்வடிவ தோஷம் என்மதத்தே சம்பவியாது.

சமாதானம் :—பாலிய சரீரத்திறகும யவ்வன சரீரத்திற்கும் அபேதம் சம்பவியாது. ஏனெனின், பாலிய சரீர பரிமாணத்தைக் காட்டினும யவ்வன சரீர பரிமாணம் வேறும். ஆசிரய பேதமின்றிப பரிமாணபேதம சம்பவியாது. ஐந்துமுழ அளவுடைய வஸ்திரத்தைக் காட்டினும பத்துமுழ அளவுடைய வஸ்திரம் வேறும். அதுபோல அற்ப அளவுடைய பாலிய சரீரத்தைக் காட்டினும் தீர்க்க பரிமாணமுடைய யவ்வன சரீரமுங் பின்னமாம். சரீரத்தின் பேதமே ஜன்ம சம்ஸ்காரத்தின்கட் காரணமாம். ஆகையினல, யவ்வன சரீர உற்பத்தியின்கண் ஜன்ம சம்ஸ்காரத்தின் அடைவின்வடிவ தூஷணம நினக்கு அவசியமுண்டா மன்றோ ?

சங்கை :—பாலிய சரீரத்தைக் காட்டினும் யவ்வன சரீரம் பின்னமாயின் தேவதத்தனெனப் பெயரிய புருஷனுக்குத் தனது சரீரத்தின்கண் இவ்வகையாய பிரத்தியபிஞ்ஞை ஞானமுண்டாம். பாலகனாயிருந்த யானே யவ்வனனாயிருக்கின்றேன் அவ்வண்ணம் அவனிடத்தே மற்றவனுக்கும் அவனே யித்தேவதத்தன் என பிரத்திய பிஞ்ஞையுண்டாம். அவ்விரண்டும் தேவதத்தனது பால்ய யவ்வன அபேதத்தை விஷயம் செய்யும், அஃதுண்டாகலாகாது. அங்ஙனமே தங்கள் திருஷ்டி சிருஷ்டி வாதத்தின்கண்ணும் அத்தேவதத்தனே யான் அத்தேவதத்தனேயிவன் என்னுமிரண்டு பிரத்திய பிஞ்ஞைகளும் உண்டாதல்கூடாது. யாவருக்கும் இவ்வகையாய பிரத்திய பிஞ்ஞையோ உண்டாகின்றது.

சமாதானம் :—அத்தேவதத்தனே யான் என்னும் பிரத்திய பிஞ்ஞை ஞானம் பூர்வோத்தர சரீர அபேதத்தை விஷயம் செய்வதின்றும் ; மற்றோ இருசரீரத்தின்கண் ஆரோபித ஆன்மாவின் ஏகத்தன்மையை விஷயம் செய்யும். அந்தத் தேவதத்த புருஷனிடத்தே மற்றொரு யஞ்ஞதத்த புருஷனுக்கு அவனே யித்தேவதத்தன் என்னும் பிரத்திய பிஞ்ஞை ஞானமுண்டாயினும் தனது சம்பந்திகளின் வசனத்தின்கண் உள்ள சிரத்தையாலுண்டாம். சரீர அபேதத்தால் எம்மதத்தின்கண்ணும் பிரத்திய பிஞ்ஞை ஞானம் சம்பவிப்பதின்றும். ஆகையினால்,

ஹே வாதியே! பாலிய யவ்வனதி சரீரங்களில் ஆரோபிதமாய ஆன்மாவின் ஏகத்தன்மையைக் கவர்ந்தே எல்லாமதத்திலும் பிரத்திய பிஞ்ஞை ஞான சம்பவமாதல் கூடும். சரீர ஒருமையை யுடன்படல் பயனற்றதாம்.

சங்கை :—என்மதத்தே ஆன்மாவின் அபேதத்தைக் கவர்ந்தே அத்தேவதத்தனேயான் என்னும் பிரத்திய பிஞ்ஞை ஞான முண்டாகாது; மற்றோ சரீரத்தை யாரம்பம் செய்வதாய அவயவங்களின் சேர்க்கை விசேஷம் பாலிய யவ்வன சரீரங்களில் ஒன்றேயாம. ஆகையினால் அந்த அவயவங்களின் சேர்க்கை விசேஷத்தைக் கவர்ந்து முற்கூறிய பிரத்திய பிஞ்ஞைஞானம் சம்பவிக்கும்; அல்லது பாலிய யவ்வன சரீரத்தை ஆரம்பம் செய்வதாய தாய் தந்தையரின் சுக்கில சோணிதத்தைக் கவர்நது முற்கூறிய பிரத்திய பிஞ்ஞைஞானம் சம்பவிக்கும்.

சமாதானம் :—ஆரம்பகாரண அபேதத்தால் முன்னர் மொழிந்த பிரத்திய பிஞ்ஞைஞானம் சம்பவியாது. ஏனெனின், காரண அபேதத்தால் பிரத்திய பிஞ்ஞைஞானம் உண்டாயினோ, ஒரு காஷ்டத்தாலேனும் ஒரு கல்லாலேனும் அமைக்கப்பட்ட இரண்டு தம்பங்கட்குங் காரணம் ஒன்றேயாம். ஆகையினால், அவ்விரண்டு தம்பங்களில் அதுவே யித்தமபம் என்னும் பிரத்திய பிஞ்ஞைஞான முண்டாகவேண்டும். வெவ்வேறாய தமபங்களிடத்தே இவ்வகையாய அபேத ஞானம் எவருக்கும் உண்டாவதின்றாம்; ஆகையினால் ஆரம்ப காரணத்தின் அபேதத்தைக் கவர்ந்து அந்தப் பிரத்திய பிஞ்ஞைஞானம் சம்பவியாது.

சங்கை :—வெவ்வேறாய தேகங்களிடத்தே யாரோபித ஆன்மாவின் ஏகத்தன்மையைக் கவர்ந்து அத்தேவதத்தனே யானென்னும் பிரத்திய பிஞ்ஞை ஞானம் தேவதத்தனுக்குண்டாம் என முன்னர் தாங்கள் கூறினீர்கள். அது தேவதத்தனுடைய பிரதிதிய பிஞ்ஞையின்கண்ணே சம்பவிக்குமாயினும், தம்பத்தின் பிரத்திய பிஞ்ஞைஞானத்தின்கண் சம்பவியாது; ஏனெனின், தம்பம் ஜடமாம், ஆகையினால் அந்தத் தம்பமே யான் என்னும் பிரத்திய பிஞ்ஞைஞானம் அதற்குண்டாகாது; மற்றோ அந்தத் தம்பத்தைக் காண்போனுக்கு அந்தத் தம்பமே யிதுவென்னும் பிரத்திய பிஞ்ஞைஞானம் உண்டாம், அஃது உண்டாகலாகாது; ஏனெனின், ஆண்டு ஆன்மாவின் அபேதமின்றாம்.

சமாதானம் :—ஆன்மாவின் அபேதத்தைக் கவர்ந்து தம்பத்தின்கண் அபேதப் பிரத்தியபிஞ்ஞை யுண்டாவதின்றாமென்றாலும் தேவதத்தனிடத்தே அஞ்ஞதத்தனுக்குத் தனது சம்பந்திகளின் வசனங்களிடத்துள்ள நம்பிக்கையால் அந்தத் தேவதத்தனே யாவன் என்னும் பிரத்தியபிஞ்ஞை ஞானமுண்டாம். அதுபோலத் தம்பத்தைக் காண்கின்ற புருஷனுக்கும் அன்னியனுடைய வசனத்தின்கண் உள்ள விசுவாசத்தால் அந்தத் தம்பமே யிதுவென்னும் பிரத்தியபிஞ்ஞை ஞானம் சம்பவிக்கும். அல்லது பாலிய யவ்வன சரீரத்தின்கண் பிதா மாதாக்களின் சுக்கில சோணிதத்தின் ஒருமையைக் கவர்ந்து பூர்வவாதி பிரத்தியபிஞ்ஞை ஞானத்

தைக் கூறின் அதுவும் சம்பவியாது; ஏனெனின், அங்குரமுண்டாயின் பீஜம் நஷ்டமாய் விடுவதுபோலச் சரீரமுண்டானபின்னர்ச் சுக்கில சோணிதமும் நஷ்டமாய்விடும். ஆகையினால் அந்தச சுக்கில சோணிதத்தைக் கவர்ந்து பிரத்திய பிஞ்ஞைஞானம் சம்பவியாது; அல்லது முன்னர் வாதி யிஃதன்றோ கூறினன் பாலிய யவ்வன சரீரத்தின்கண் ஒரே அவயவங்களின் *ரசனாவிசேஷம் காரணமாம். ஆகையினால், அந்த அவயவங்களின் ரசனாவிசேஷத்தைக் கவர்ந்தே பிரத்திய பிஞ்ஞை ஞானஞ் சம்பவிக்கும் எனக் கூறுதலுஞ் சம்பவியாது. ஏனெனின் அவயவங்களின் ரசனாவிசேஷத்தினுக்குச் சரீர காரணத்தன்மை எந்த பிரமாணத்தாலேனுஞ் சித்தமாயின், அந்த ரசனையைக் கவர்ந்து பிரத்தியபிஞ்ஞை ஞானஞ் சம்பவிக்கும் ஆனால், அவயவங்களின் ரசனாவிசேஷத்திற்குச் சரீரத்தின் காரணத்தன்மை எப்பிரமாணத்தாலும் சித்தமாகாது. ஏனெனின், பிருதிவி முதலியவற்றின் பரமாணுக்கள் அதிசூக்குமங்களாம், ஆதலின் அவற்றின் பிரத்தியக்ஷ ஞானம் எவர்க்கும் உண்டாகமாட்டாததுபோலத் தேகத்தை ஆரம்பியாநின்ற அவயவங்களும் அதிசூக்குமங்களாம். ஆகையினால் பிரத்தியக்ஷ பிரமாணங்களால் அவற்றின் ஞானம் சம்பவியாது. பிரத்தியக்ஷ பிரமாணத்தின் பிரவிர்த்தி யின்மையின் அனுமானாதிகளாலும் அவ்வவயவங்களின் ஞானம் சம்பவியாது அல்லது, பரமாணுக்களால் ஏககாரியத்தின் உற்பத்தியும் சம்பவியாது; ஏனெனின், பரமாணு ஜடமாம் அநேகமாம். ஜடவஸ்துவின்கண் காரியத்தின் ஆரம்பஞ்செய்வதின் விசாரம் சம்பவியாது. வாதி பரமாணுக்களைச் சேதனமென அங்கீகரிக்கினும் வெவ்வேறு கருத்துடைய அநேக பரமாணுக்களினின்றும் ஒரு காரியத்தின் உற்பத்தி சம்பவியாது. ஆகையினால் பரமாணுரூப அவயவங்களின் ரசனா விசேஷத்தைக் கவர்ந்து அவனே யானென்னும் பிரத்தியபிஞ்ஞை ஞானம் சம்பவியாது.

சங்கை :—பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயமாய ஸ்தூல அவயவங்களின் இரசனா விசேஷமே பாலிய யவ்வன சரீர காரணமாம். ஆகையினால் அதனைக் கவர்ந்தே அவனே யானென்னும் பிரத்தியபிஞ்ஞை ஞானம் சம்பவிக்கும்.

சமாதானம் :—பாலிய சரீரத்தின்கண் இராநின்ற ஸ்தூல அவயவங்களின் இரசனையே யவ்வன சரீரத்தின்கண்ணே சம்பவிப்பதின்றாம்; ஏனெனின், பாலிய சரீர அவயவங்களின் இரசனை யவ்வன சரீரத்தின்கண் இருக்குமாயின் யவ்வன சரீரத்திற்குப் பாலிய சரீரத்திலும் அதிக பரிமாணமும் அதிக பராக்கிரமும் உண்டாகக்கூடா. பாலிய சரீரத்திலும் யவ்வன சரீரத்தின்கண் அதிக பரிமாணமும் அதிக பராக்கிரமும் உண்டாயிருத்தல் சர்வ லோகர்கட்கும் அனுபவ சித்தமாம். ஆகையினால் பாலிய யவ்வன சரீரங்களில் ஸ்தூல அவயவங்களின் இரசனை வெவ்வேறே யொழிய ஒன்றன்றாம். உலகின்கண்ணும் பரிமாணத்தின் குறைவு மிகுதித்தன்மையால் அவயவங்களினது இரசனையின் பேதமே கண்டோம்; பத்துமணங்கு அளவுள்ள உளுந்து ராசியினின்றும் ஐந்துமணங்கு

---

* இரசனை = சேர்க்கை, அல்லது செய்கையாம்.

உளுந்தை எடுத்துவிடின்; அல்லது அவ்வுளுந்து ராசியின்கண் இரந்துமணங்கு உளுந்தை மிகுதியாய்க்கலந்துவிடின்; ஆண்டு உளுந்து ராசியைக் காப்பாற்றும் புருஷன் அவயவங்களின் இரசனை விசேஷத்தை வெவ்வேறாயே அறிவன், ஏகரசனையாய் உடன்படுவதில்லையா மன்றோ? ஆகையால் பரிமாணத்தின் பேதமிருக்குமாயின் அவயவ இரசனையும் பின்ன பின்னமேயாம்; ஒன்றாகமாட்டாது. ஆகையால், ஹே வாதியே! நினது மதத்தில் பாலிய சரீரத்தினும் வேறாய் யவ்வனசரீரத்தின் உற்பத்தியுண்டாயினும் மீண்டும் ஜன்ம சம்ஸ்காரம் உண்டாகமாட்டாததுபோலத் திருஷ்டி சிருஷ்டி வாதிகளாய எமது மதத்தின்கண்ணும் தரிசனத்தாற் புத்திரோற்பத்தி யுண்டாயினும் மீண்டுஞ் ஜன்ம சம்ஸ்காரம் உண்டாவதில்லையாம்.

சங்கை :—யவ்வன சரீரத்தின்கண் இத்தேவதத்தன் உற்பன்னமானான் என்னும் ஞானம் எப்புருஷனுக்கும் உண்டாகமாட்டாது; ஆகையால், யவ்வன சரீரத்தின்கண் மீண்டும் ஜன்ம சம்ஸ்காரத்தின் அடைவின் வடிவதூஷணம் என் மதத்திற் சம்பவியாது.

சமாதானம் :—எமது மதத்திலும் தரிசன காலத்தின்கண் புததிராதிகள் உற்பன்னமாயினும், அந்தப் புத்திராதிகளிடத்தே இப்புத்திரன் நமக்குண்டானானென்னும் ஞானம், பிதா, மாதா முதலிய சம்பந்திகட்குண்டாவதில்லையாம். ஆகையால், திருஷ்டி சிருஷ்டி வாதிகளாகிய எமது மதத்திலும் மீண்டும் ஜன்ம சம்ஸ்காரத்தினது அடைவின் வடிவ தோஷமில்லையாம்.

சங்கை :—திருஷ்டி சிருஷ்டி வாதிகளாகிய நுமதுமதத்தில் புத்திராதிகளின் அதரிசனமே அவர்தம் மரணமாம. ஆகையால் எங்ஙனம் மரணத்தின்பின் புத்திராதிகளின் தகனக்கிரியை செய்கின்றீர்களோ, அங்ஙனம அவர்தம் அதரிசனத்தின் பின்னரும் அந்தப் புத்திராதிகளின் தகனக்கிரியை செய்யவேண்டும். அதரிசனத்தின் பின்னர்ப் புத்திராதி பந்துககளின் தகனக்கிரியையை யெவரும் செய்வதில்லையாம்.

• சமாதானம் :—ஹே வாதியே! நினது மதத்தில் யவ்வனசரீர முற்பன்னமாயின், பாலிய சரீரம் நாசமாய்விடும்; ஏனெனின், யவ்வனசரீர மடைந்தும் பாலிய சரீரம் நாசமாகாதிருக்குமாயின், யவ்வன காலத்தின்கண்ணும் பாலிய சரீரத்தின் பிரதீதியுண்டாகவேண்டும. யவ்வன காலத்தின்கண் பாலியசரீரம் பிரதீதியாவதில்லையாம், ஆகையால் யவ்வன காலத்தின்கண் பாலிய சரீரத்தின் நாசமுண்டாம், நாசமடைந்த பாலிய சரீரத்தை நீ தகனம் செய்யாததுபோல எமது திருஷ்டி சிருஷ்டி வாதத்தின்கண்ணும் புத்திராதி சம்பந்திகள் வெளியே சென்றிருப்பாராயின், அவர்தம் தரிசன முண்டாகமாட்டாது. அத்தரிசனமின்மையே அப்புத்திராதி பந்துக்களின் மரணமாம்; அத்தரிசனமின்மைரூப மரண மடையினும் அவர்தம் தகனக்கிரியையை யாம் செய்வதில்லையாதலின், எமது மதத்திலும் உனது மதத்திலும் இவ்விடை யொப்பானதாமன்றோ?

சங்கை :—ஹே திருஷ்டி சிருஷ்டி வாதிகளே! தங்கள் மதத்தில் சிறிது மாத்திரை சிறப்புளது; ஏனெனின், புத்திராதி சம்பந்திகள் தேசாந்திரத்தினின் றும் வீட்டிற்கு வருவார்களானால், மாதா பிதாக்கட்கு அவ்விவனே எனது குமார னென்னும் ஞானமுண்டாம். இவ்வபேத ஞானபலத்தால் முன்பின் சரீரங்களின் அபேதமே சித்தமாம்.

சமாதானம் :—பாலிய சரீரத்தின்பின் யவ்வன சரீரமுற்பன்னமாயினும் அவனே யித்தேவதத்தன் என்னும் அபேதஞானம் நினது மதத்தின்கண்ணும் உண்டாம். ஆகையால், நினது மதத்தின்கண்ணும் பாலிய யவ்வன சரீரங் களின் அபேதமுண்டாகவேண்டும். பாலிய யவ்வன சரீரங்களின் அபேதமோ முற்கூறிய ரீதியாய்ச்சம்பவியாது. ஆகையால், இவ்விடையும் இருவர் மதத்தி னும் சமானமாம்.

சங்கை :—புத்திராதி சம்பந்திகளின் அதரிசனமே அவர்தம் மரணமாயின் புத்திராதி பந்துக்களின் மரணத்தின்பின் பிதா மாதா முதலிய சம்பந்திகள் சோகித்தலையும் அழுதலையுஞ் செய்வதுபோலப் புத்திராதி பந்துக்களின் அதரிசன காலத்தின்கண்ணும் சோகித்தலையும் அழுதலையும் செய்தல் வேண்டும்.

சமாதானம் :—ஹே வாதியே! நினது மதத்தில் யவ்வன சரீரமடையுங்கால் பாலக சரீரம் நாசமாயினும், பிதா, மாதாதி, சம்பந்திகள், சோகத்தையும் அழு கையையும் செய்யாததுபோல, திருஷ்டி சிருஷ்டி வாதத்தினும் புத்திராதி பந்துக் களின் அதரிசனகாலத்தின்கண் பிதா மாதா முதலிய சம்பந்திகள் சோகத்தையும் அழுகையையும் செய்வதில்லையாம்.

சங்கை :—யவ்வன சரீரமடையுங்கால் பாலிய சரீரம் நஷ்டமாயினும் அவ் விவனே எனது மைந்தன் என்னும் அபேதஞானம் மாதா பிதாதி சம்பந்திகட் குண்டாம். ஆகையால், அவ்வபேதஞானமே எனது மதத்தில் தகனுதிக்கிரியைக் கும் சோகாதிகட்குந் தடையாம்.

சமாதானம் :—புத்திராதி பந்துக்களின் அதரிசனத்தின் பின்னர் அவரை மீண்டுங்காணின், அவ்விவனே எனது புத்திரன் என்னும் அபேதஞானம் பிதா மாதாதி சம்பந்திகட்குண்டாம். ஆகையால் அவ்வபேதஞானமே எமது மதத் தின்கண்ணும் தகனுதிக்கிரியைக்கும் சோகாதிகட்குந் தடையாம். ஆகையால் இவ்விடையுமிருவர் மதத்தினும் சமானமாம்.

சங்கை :—புத்திராதி சம்பந்திகளின் அதரிசனமே அவர்தம் மரணமாயின் மீண்டும் தரிசனகாலத்தின்கண் அவர் யாங்கள் மரிக்கவில்லை யெனக்கூறின், அக் கூற்று உங்கள் மதத்தில் அசங்கதமாம். ஆகையால், அதரிசனத்தின் பெயர் மரணமன்றாம்.

சமாதானம் :—ஹே வாதியே! நினது மதத்தின்கண்ணும் யவ்வன தேக மடையப்பெறின், பாலிய சரீரம் நஷ்டமாய்விடும். ஆனல் அந்த யவ்வன புரு ஷன் யான் மரிக்கவில்லையெனக் கூறுவன். ஆகையால், இவ்வசன விரோதத்

தால் நினது மதத்தின்கண்ணும் பாலிய சரீரத்தின் நாசம் உண்டாகக்கூடாது. இவ்வார்த்தை நினக்குமங்கீகாரமில்லையாம்.

சங்கை :— பாலிய சரீரத்திற்கும் யவ்வன சரீரத்திற்கும் பரஸ்பரம் பேதமாம், அந்தப்பேதவுணர்வு புருஷனுக்கு உண்டாவதில்லையாம். ஆகையால் முன்பின் சரீரபேதத்தின் அறியாமைரூப தோஷத்தோடுகூடிய யவ்வன புருஷனுடைய யான் மரிக்கவில்லை யென்னும் வசனம் பிரமாண ரூபமன்றும், மற்றோ அவ்வசனம் பிரமாண மறறதாம். ஆதலின், அவ்வசனத்தால பாலிய சரீரத்திற்கு நித்தியத் தன்மை சம்பவியாது.

சமாதானம் :—மீண்டும் தரிசனகாலததின்கண் புத்திராதி பந்துக்களில் யாங்கள் மரிக்கவில்லை யென்னும் இவ்வசனமும் முன்பின் சரீரபேதத்தின் அறியாமை வடிவ தோஷத்தோடுகூடிய புருஷனுக்கு ஜன்னியமாம் ஆகையால் அப் பிரமாணரூபமாம். அவ்வப்பிரமாண வசனததால் முற்சரீரத்தின் நிததியத்தன்மை எமது மதத்தினும சித்தியாது. ஆகையால், இவ்வுத்தரமும் இருவர் மதத்தினும் சமானமேயாம். அல்லது முற்சரீரத்தினின்றும் பிற்சரீரத்தின்கண்ணே பேதமிருப்பினும் அந்தபபேதத்தின் ஞானம் உலகர்கட்கு உண்டாவதில்லையாம். ஆகையால், அநதப்பேத ஞானத்திற்கு ஏதாவது தடையங்கீகரிக்கவேண்டும். அநதத் தடையும் முன்பின் சரீரபேதத்தின் அறியாமை வடிவ தோஷமாம். அந்தத் தோஷத்தின் மகிமையினுலேயே முன்பின் சரீரபேதஞானம் புருஷனுக்குண்டாவதில்லையாம். இக்காரணத்தினுலே பிதா மாதா முதலிய பந்துக்கள் புத்திரனுடைய முற்சரீரம் நாசமாயினும் சோகத்தையும் அழுகையையும் செய்வதில்லையாம். அல்லது, முன்பின் சரீர பேதஞானத்தின் தடையென முறகூறிய அஞ்ஞானவடிவ தோஷத்தை அங்கீகரியாவிடின் புத்திராதி களின் முற்சரீரத்தினின்றும் பிற்சரீரத்தின்கண் பேதஞானம் பிதா மாதா முதலிய பநதுகட்கு அவசியமுண்டாம்; அந்தப பேதஞானத்தால் புத்திராதிகளின் பூர்வ சரீரத்தின்கண் மரண புத்தியுண்டாம்; அந்த மரண புத்தியினின்றும் பிதா மாதா முதலியவாகட்குச் சோகாதிகளின் அடைவுண்டாம். 'ஆகையால், இத்தோஷத்தின் நிவிர்த்தியின்பொருட்டு முன்பின் சரீரத்தின் பேதஞானத்தின் தடையென முறகூறிய அஞ்ஞானரூப தோஷத்தை யவசியம் யாமும் நீயும் அங்கீகரித்தல் வேண்டும். ஆகையால் ஹே வாதியே! எங்ஙனம் நினது மதத்தில் பாலிய சரீரத்திறகும் யவ்வன சரீரத்திற்கும் அபேதமின்றோ, மற்றோ பேதமாமோ, அங்ஙனமே திருஷ்டி சிருஷ்டி வாதிகளாகிய எமது மதத்தும் பூர்வதரிசனவிஷய புத்திராதியர்கரும், உத்தர தரிசனவிஷய புத்திராதியர்க்கும அபேதமின்றும; மற்றோ பேதமாம். ஹே வாதியே! எவ்வண்ணம் நினதுமதத்தில் யவ்வன சரீரமடைநத காலையில் பாலியசரீரம் நஷ்டமாயினும் தாய் தந்தையர் அம்மைந்தனிடத்தே மரணபுத்தி செய்யாரோ அவ்வண்ணம் திருஷ்டி சிருஷ்டி வாதமாய எமது மதத்தின்கண்ணும் அதரிசன காலத்தின்கண் புத்திராதிகட்கு நஷ்டம்வரினும், பிதா மாதாதி சம்பந்திகள் அப்புத்திராதிகளிடத்தே மரணபுத்தியைச் செய்யார். ஆகையால் ஹே வாதியே! நீ எந்த எந்தத்

தோஷம் எமது மதத்திற் கூறினையோ அந்த அந்தத் தோஷம் நினது மதத்தின் கண்ணும் பிராப்தியாம். அந்தத் தோஷங்களின் நிவிருத்தியின்பொருட்டு எவ் வெவ்விடை நீ கூறினையோ, அவ்வவ்விடை யெமது மதத்தினும் சம்பவிக்கும் என் பது துணியப்பெற்றதாம். அல்லது உலகின்கண்ணே பிரசித்தமாய ஜீவர்களின் ஜன்மமரணமே எமது திருஷ்டி சிருஷ்டி வாதத்தைத் துணிவித்துவிடும்; ஏனெ னின், அந்த ஜன்மமும், மரணமும், ஞானத்தாலன்றி வேறு எந்தக் காரணத்தா லும் துணியப்பெறமாட்டா; மற்றோ ஞானத்தாலேயே ஜன்மமரணத்தின் சித்தி யாம். எதுவரை புத்திராதி பந்துக்களின் ஜன்மத்தையும் மரணத்தையும் பிதா முதலிய சம்பந்திகள் அறிகின்றாரில்லையோ அதுவரை மகிழ்சசி சோகங்களுண் டாகா; மற்றோ புத்திராதிகளின் ஜன்மமரணாதி ஞானத்தின் பின்னரேயே பிதா முதலிய சம்பந்திகள் மகிழ்வு சோகங்களை யடைவர். அங்ஙனம் இப்புத்திராதிக ளும் வேறன்னியன்வசனத்தால் தமது ஜன்மத்தை யறிந்துகொண்டு சநதோஷத் தை யடைவர்; தமது மரணத்தை யறிந்துகொண்டு சோகத்தை யடைவர். தமது ஜன்ம ஞானத்தாலன்றியும் மரண ஞானத்தாலன்றியும் எபபுருஷனுக்கும் மகிழ்ச்சி யினடைவும சோகத்தினடைவுமுண்டாகமாட்டா; ஆண்டுப் புத்திராதிகளின் ஜன் மத்தையும் மரணத்தையும் பிதா மாதா முதலிய சம்பந்திகள் பிரத்தியக்ஷப பிர மாணத்தாலேயே யறிவா. புத்திராதியர் தமது ஜன்மத்தையும் மரணத்தையும் பிரத்தியக்ஷப பிரமாணத்தாலறியார்; மற்றோ பிதா மாதா முதலிய சம்பந்திகளின் வசனரூப சபதப பிரமாணத்தாலும், அனுமானப் பிரமாணத்தாலும் தமது ஜன்ம மரணத்தை யறிவர். ஏனெனின், யோனியினின்றும வெளிபபோந்த காலத்தில் இஜ்ஜீவன் துக்கத்தால் மூர்சசையையடைவன்; மூாச்சை அவஸ்தையின்கண் எவ் வஸ்துவின் ஞானமும் உண்டாகமாட்டாது; ஆகையால், யோனியினின்றும் வெ ளிபபோதல் வடிவ தமது ஜன்மத்தை அக்காலத்தில பிரத்தியக்ஷமாயறியச சமர்த் துடையவனுகான். அங்ஙனம் மரணகாலத்தின்கண்ணும் இஜ்ஜீவன் துக்கத்தால மூர்சசைத் தன்மையை யடைவன்; ஆகையால அக்காலத்தின்கண்ணும் இஜ்ஜீவன் தமது மரணத்தைப் பிரத்தியக்ஷமாய் அறியவல்லானல்லன். மற்றோ, சப்தப் பிர மாணத்தாலும் அனுமானப பிரமாணததாலும தமது ஜன்மத்தையும மரணத் தையும் இஜ்ஜீவன் அறிவன். ஆகையால் ஹே வாதியே! எங்ஙனம் லௌகிக பிதா மாதா முதலிய சம்பநதிகளின் வசனங்களால் நினது ஜன்ம மரணங்களை நீ நிச்சயம்செய்துளாயோ அங்ஙனம் சர்வஞ்ஞ ஈஸ்வரனால் செய்யப்பட்ட வேதப்பிர மாணத்தானும புத்திராதி பதார்த்தங்களின் தரிசனமே அவர்தம் பிறப்பாம்; புத்திராதி பதார்த்தங்களின் அதரிசனமே அவர்தம் மரணமாம் என்னும் பொருள் சித்தித்தது.

சங்கை:—வாக்காதி இந்திரியங்களையும் அக்கினியாதி தேவதைகளையும் பரித்தியாகம் செய்து கேவலம் புத்திராதி விஷயங்களில் திருஷ்டி சிருஷ்டி வாத சித்தியின் பொருட்டு யுக்திகளைக் கூறுதல் விருத்தமாம்; ஏனெனின், ஆன்மா வின் வேறாய சர்வபதார்த்தங்களும் தங்களுடைய மதத்தின்கண் திருஷ்டி சிரு ஷ்டி வாதவிஷயமன்றோ ?

சமாதானம்:—புத்திராதி விஷயத்தில் அவனே யிந்தத்தேவதத்தன் என்னும் பிரத்திய பிஞ்ஞை ஞானம் உண்டாவதுபோல வாக்காதி இந்திரியங்களிடத்தும், அக்கினியாதி தேவதைகளிடத்தும், அதுவே யிவ்வாக்கிந்திரியம்; அதுவே இவ் வக்கினிதேவதை, என்னும் பிரத்திய பிஞ்ஞை ஞானம் எப்புருஷனுக்கும் உண்டா வதில்லையாம்; ஏனெனின், எவ்வஸ்துவின்கண் பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயத் தன்மையுளதோ அவ்வஸ்துவின்கண்ணேயே பிரத்திய பிஞ்ஞை ஞானத்தின் விஷயத்தன்மையுண்டாம். அந்தப்பிரத்தியக்ஷ ஞானத்தின் விஷயத்தன்மை வாக்காதி இந்திரியங்களிடத்தில்லையாம். ஆகையால், பிரத்திய பிஞ்ஞை ஞான விஷயத்தன்மையும் வாக்காதி இந்திரியங்களிடத்திற் சம்பவியாது. ஈண்டிது கருத்தாம்:—கேவலம் இந்திரியத்தாற் ஜனித்த ஞானத்தைப் பிரத்தியக்ஷ மென் பர். சக்ஷுா இந்திரியத்தால் இவன்தேவதத்தனென்னும் பிரத்தியக்ஷ ஞானமுண் டாவதுபோல, பூர்வசம்ஸ்காரத்தோடுகூடிய இந்திரியத்தாற் ஜனித்த ஞானத்தின் பெயர் பிரத்திய பிஞ்ஞை ஞானமாம். தேசாநதரத்தின் கண்ணேனும் காலாந்தரத் தின் கண்ணேனும் கண்டிராநின்ற தேவதத்தனோடு சக்ஷுா இநதிரியத்தின் சம் பந்தமுண்டாயின், அவனே யித்தேவதத்தன் என்னும் பிரத்திய பிஞ்ஞை ஞானம் உலகர்க்குண்டாவதுபோல அவ்விந்திரியங்களுள்ளும், வாக்கு, பாணி, பாதம், பாயுறு, உபஸ்தம் என்னும் பஞ்ச இநதிரியங்களிடத்திலேயோ ஞானகாரணத் தன்மையின்றாம். மற்றோ, சப்தோச்சாரணாதி கிரியையின் காரணத்தன்மையுண் டாம். சக்ஷுா, துவக்கு, இரசனம், கிராணம, சுரோத்திரம், இவ்வைந்து ஞானேந் திரியங்களிடத்தே ஞானத்தின் காரணததன்மையுண்டாம். அவற்றினும் இரசன இந்திரியம் இரசகுணத்தைக்கவரும், இரச ஆசிரய திரவியத்தைக்கவராது. அங் ஙனம் கிராண இந்திரியம் கந்தகுணத்தைக்கவரும், கந்தகுணாசிரய திரவியத்தைக் கவராது. சுரோத்திர இந்திரியம் சபத குணத்தைககவரும், சப்த ஆசிரய திர வியத்தைககவராது. ஆகையால், இம்மூன்று இநதிரியங்களால் ஜனித்த ஞானங் களின் விஷயத்தன்மை வாக்காதி, இநதிரியங்களிடத்தே சம்பவியாது. ஏனெ னின், வாக்காதி இநதிரியங்கள் திரவியரூபமாம; குணரூபமன்றாம். சக்ஷுா இந்தி ரியம் ரூபாதிகுணங்களையும் ரூபாதிகுணங்களின் ஆசிரய திரவியததையும் கவரும். அங்ஙனம் துவக்கிநதிரியமும் ஸ்பரிசாதி குணங்களையும், ஸ்பரிசாதி குணங்களினாசி ரய திரவியத்தையும் கவரும். அவ்விரண்டினும் சக்ஷுா இந்திரியமோ உற்பூத ரூபத்தையும், உற்பூதரூபமுடைய திரவியத்தையும் கவரும். அங்ஙனம் துவக்கிந் திரியமும் உற்பூத ஸ்பரிசத்தையும் உற்பூத ஸ்பரிசமுடைய திரவியத்தையும் கவ ரும். அந்த உற்பூதரூபமும் உற்பூதஸ்பரிசமும வாக்காதி இந்திரியங்களிலில்லை யாம்; மற்றோ அனுற்பூத ரூபஸ்பரிசாதிகள் இந்திரியங்களிடத்தில் இருக்கின்றன. ஆகையால் சக்ஷுா இந்திரிய ஜன்னிய ஞானத்தின் விஷயத்தன்மையும் துவக்கிந் திரிய ஜன்னியஞானத்தின் விஷயத்தன்மையும் வாக்காதி இந்திரியங்களிடத்து சம்பவியா. மற்றோ சாஸ்திரப் பிரமாணத்தாலும் அனுமானப் பிரமாணத் தாலும் வாக்காதி இந்திரியங்களின் பரோக்ஷ ஞானமுண்டாம். அங்ஙனம் வாக்

காதி இந்திரியங்களினது அக்கினியாதி தேவதைகளினது பரோக்ஷஞானமே யுண்டாம். ஆகையால் பரோக்ஷஞானத்திற்கு விஷயமாய வாக்காதி இந்திரியங்களிடத்தும் அக்கினியாதி தேவதைகளிடத்தும் அதுவே இவ்வாக்கிந்திரியமென்றும் அதுவே இவ்வக்கினி தேவதையென்றும் பிரத்திய பிஞ்ஞை ஞானம் உண்டாகமாட்டாது. ஆகையால் கேவலம் சுருதி வசனத்தினாலேயே வாக்காதி இந்திரியங்களிடத்தும் அக்கினியாதி தேவதைகளிடத்தும் திருஷ்டி, சிருஷ்டி, வாதம் சித்திக்கும். புத்திராதி விஷயங்களிலோ அவனே யித்தேவதத்தன் என்னும் பிரத்திய பிஞ்ஞைஞானம் சம்பவிக்கும். ஆகையால் அந்தப் பிரத்திய பிஞ்ஞைவடிவ விரோத நிவிருத்தியின்பொருட்டுப் புத்திராதி விஷயங்களிலேயே திருஷ்டி சிருஷ்டி வாதம் யுக்தியால் நிரூபணம் செய்யப்பட்டது. உண்மையாயோ ஆன்மாவின் வேறாய சம்பூர்ண ஜடவஸ்தும் தரிசனகாலத்தின்கண் உற்பன்னமாம், அதரிசன காலத்தின்கண் இலயமாம். நம்மனோராய ஜீவர்கட்கு வாக்காதி இந்திரியங்களின் பிரத்தியக்ஷஞானம் உண்டாகாதெனினும், அக்கினியாதியபிமானி தேவதைகட்கு வாக்காதி இந்திரியங்களின் பிரத்தியக்ஷஞானமோ யுண்டாம். ஆகையால் தேவதைகளின் அதரிசனத்தால் வாக்காதி இந்திரியங்களின் உற்பத்தியும், தேவதைகளின் தரிசனத்தால் அவற்றின் நாசமும் சம்பவிக்கும். ஆகாசாதி பூதங்களின் காரியங்களாகிய வாக்காதி இந்திரியங்கட்குத் தரிசன காலத்தின்கண்ணே ஜன்மமும், அதரிசன காலத்தின்கண் மரணமும் உண்டாவதுபோல ஆகாசாதி பஞ்சபூதங்கட்கும் தரிசனகாலத்தின்கண்ணே ஜன்மமும் அதரிசன காலத்தின்கண்ணே நாசமுமுண்டாம். பாலிய யவ்வனாதி சரீரங்களில் பிரத்திய பிஞ்ஞைவடிவ விரோதத்தின் சமாதானம் முன்னர் செய்யப்பட்டது போல ஆகாசாதிப் பஞ்சபூதங்களிடத்தும் பிரத்தியபிஞ்ஞை ஞானவடிவ விரோதத்தின் சமாதானந் தெரிந்துகொள்க. முன்னர்ப் பாலிய யவ்வன சரீராதிகளிடத்து எங்ஙனம் அவயவத்தினுடைய அவயவரசனையினுடைய பிரத்தியபிஞ்ஞை ஞானத்தினது காரணத்தன்மையின் கண்டனம் செய்யப்பெற்றதோ, அங்ஙனம் ஆகாசாதி பூதங்களிடத்தும் கண்டுகொள்க. ஆகையால் ஆன்மாவின் வேறாய சர்வ ஜடவஸ்துக்களின் தரிசனமே ஜன்மமாம், அதரிசனமே அவற்றின் நாசமாம.

சங்கை:—அதரிசனமே வஸ்துவின் நாசமாயின், எக்காலத்தில் புருஷனுக்குத் தடாகஜலத்தின் ஞானமின்றாமோ, அக்காலத்தில் தங்களுடைய மதத்தில் தடாக ஜலம் நாசமாய் விடுமன்றோ? ஆகையால் ஜலத்தின் விரோதியாய அக்கினியின் உற்பத்தி யாண்டுண்டாகவேண்டும்; அங்ஙனமென்று முண்டாகாது, ஆகையால் திருஷ்டி சிருஷ்டி வாதம் அசங்கதமாம்.

சமாதானம்:—ஹே வாதியே! நினது மதத்தினும் இத்தோஷத்தின் அடைவுண்டாம்; ஏனெனின், அன்னிய ஒரு புருஷனுடைய பாலிய அவஸ்தை நாசமாயின், அந்தப்பாலிய அவஸ்தையின் விரோதியாய யவ்வனாவஸ்தை நினக்கும் அடையவேண்டிவரும், அன்னிய புருஷனுடைய பாலிய அவஸ்தையின் விரோதி

யாய யவ்வனுவஸ்தை நினக்குண்டாக மாட்டாது. அதுபோல, அதரிசனகாலத்தின்கண் ஜலத்தின் நஷ்டம் நேரிடினும் ஆண்டக்கினி உண்டாகமாட்டாது.

சங்கை :—யவ்வனுவஸ்தையினது அடைவின்கண் தர்ம அதர்ம ரூபகர்மம் காரணமாம். ஆகையால், அன்னிய புருஷனுடைய யவ்வனுவஸ்தை என்னை யடையமாட்டாது.

சமாதானம் :—ஹே வாதியே! எங்ஙனம் நீ கர்மத்தை அங்கீகரித்துத் தூஷண நிவிருத்தியினைச் செய்தனையோ, அங்ஙனம் திருஷ்டி சிருஷ்டி வாதியாய யாமும் கர்மத்தை யங்கீகரித்துச் சர்வ தூஷணங்களின் நிவிருத்தியைச் செய்வோம். அதரிசனகாலத்தின்கண் தடாக ஜலத்தின் நாசமுண்டாயினும், கர்ம வசத்தால் ஜலமே ஆண்டுற்பன்னமாம்; அக்கினி யுற்பன்னமாகமாட்டாது.

சங்கை :—ஆகாசாதி பஞ்ச பூதங்களின் காரியங்களாய சரீராதிகள் சுக துக்கரூப போகசாதனங்களாம. ஆகையால் அவற்றின் உற்பத்தியின்கண் தர்மா தர்மரூப கர்மங்கட்குக காரணத்தன்மை சம்பவிப்பினும், ஆகாசாதி பஞ்ச பூதங்களின் உற்பததியின்கண் கர்மங்கட்குக் காரணத்தன்மை சம்பவியாது.

சமாதானம் :—ஹே வாதியே! ஆகாசாதி பஞ்ச பூதங்களின் பொருட்டுக் கர்மங்கட்குக காரணத்தன்மையில்லையாம என நீஆ சங்கை செய்யவில்லை; மற்றே இங்ஙனம நீ கூறியதால் நினது அறியாமையை வெளிபபடுத்திக்கொண்டனை. ஏனெனின், சுருதியின்கண்ணும், ஸ்மிருதியின்கண்ணும், வியாச பகவானுடைய சூத்திரததின்கண்ணும, இவ்வண்ணம் கூறபபெறறுளது. ஜீவர்களின் புண்ணிய பாவ ரூப கர்மஙகளோடுகூடிய மாயை விசிஷ்ட பரமான்மா பூதபௌதிக ரூப பிரபஞ்சததை உற்பன்னம் செய்யும், அதன் தன் திதியையும் சம்ஹாரத்தையும் செய்யும். பரமான்மா ஜீவர்களின் கர்மங்களின்றியே ஜகத்தின் உற்பத்தியைச் செய்யுமாயின், பரமான்மாவின்கண் விஷமத்தன்மையும் நிர்த்தயைத்தன்மையுமாய இரண்டு தோஷங்களின் அடைவுண்டாம். ஏனெனின், சிலபுருஷர் தனிகராயிருக்கின்றனர், சில புருஷரோ தனமற்றவராயிருக்கின்றனர், சில புருஷர் சுகிகளாயிருக்கின்றனர், சில புருஷர் துக்கிகளாயிருககின்றனர், சில புருஷர் பண்டிதராயிருக்கின்றனா, சில புருஷர் மூர்க்கராயிருக்கின்றனா. இவ்வகையாக விஷயப பிரபஞசததைசசெய்த பரமான்மா, விஷமத்தன்மை நிர்த்தயைத்தன்மை வடிவ தோஷத்தோடுகூடியதாம. சமதிருஷ்டியையுடைய ஈஸ்வரனிடத்தே விஷமத்தன்மை, நிர்த்தயைததன்மை வடிவ தோஷம் சம்பவியாது. ஆகையால் அத்தோஷ நிவிருத்தியின்பொருட்டு அவசியம் கர்மங்களை யங்கீகரித்தல்வேண்டும். அல்லது, எவ்வஸ்து எந்தஜீவனுடைய சுகசாதனமாமோ, அவ்வஸ்து அந்த ஜீவனுடைய புண்ணியத்தால் உண்டாம். எவ்வஸ்து எந்த ஜீவனுடைய துக்கசாதனமாமோ அவ்வஸ்து அந்த ஜீவனுடைய பாவகர்மத்தால் உண்டாம். அந்தச் சுக துக்கக் காரணத்தன்மை சரீராதி பௌதிக பதார்த்தங்களில் இருப்பதுபோல, ஆகாசாதி பஞ்ச பூதத்தின் கண்ணும் உளது. ஆகையால் ஆகாசாதி பஞ்ச

பூதங்களின் உற்பத்தியின்கண்ணும் ஜீவர்களின் அதிர்ஷ்டத்திற்குக் காரணத் தன்மை யுளது.

சங்கை :—முன் முற்சிருஷ்டியின்கண் இராநின்ற ஜீவர்களின் கர்மங்கட்குப் பிற்பிற் சிருஷ்டியின்பொருட்டுக் காரணத்தன்மை சம்பவித்தபோதினும் எல்லாச் சிருஷ்டிகளினும் முதலிலுண்டாய சிருஷ்டியின்கண் கர்மத்திற்குக் காரணத் தன்மை சம்பவியாது. ஆகையால், சம்பூர்ண காரியத்தின்பொருட்டுக் கர்மங் கட்குக் காரணத்தன்மையின்றாம்.

சமாதானம் :—எல்லாச் சிருஷ்டிகளினும் முதலாவதாய ஒரு சிருஷ்டியின் றாம்; மற்றே, பீஜஅங்குரம்போல சம்சாரத்தின் பிரவாகம அநாதியாம். முன் முற் கர்மங்களின் அனுசாரமாய்ப் பிற்பிற் சிருஷ்டி யுற்பன்னமாம். ஆன்ம ஞானமன்றி யன்னிய வுபாயத்தால் இச்சம்சாரத்தினாசம் உண்டாகாது; மற்றே ஆன்மஞானத்தினாலேயே இச்சம்சாரத்தின் நாசமாம்.

சங்கை :—கர்மங்கட்கே சர்வ சமசாரத்தினது காரணத்தன்மை கினே,. மாயையின்கண் ஜகத்தின் காரணத்தன்மையை அங்கீகரித்தல் பயனில் கூற்றாம்.

சமாதானம் :—கர்மங்களிடத்தே ஜகத்தின் காரணத்தன்மையை யுடன்படுவ தால் மாயைக்குப் பயனில் கூற்றாந் தன்மையின்றாம்; ஏனெனின், மாயையினானன் றிக் கர்மங்கட்குப் பலத்தின் வியவஸ்தையே சம்பவியாது. கருத்திதுவாம் :—கார்த் திகை மாதத்தின்கண் கிருத்திகை நக்ஷத்திரங்கூடிய சுபதினத்தே எப்புருஷன் சண்முகநாதனது தரிசனம் செய்வனே, அபபுருஷன் ஏழு ஜன்மங்கள் தனத் தோடுகூடிய வேதங்களை கற்றமறையோனாவன். இவ்வகையாய பலன் சண்முக நாதனுடைய தரிசனரூப காமத்தாலுண்டாம். சாஸ்திரங்களின்கண்ணே கூறப் பெற்ற இதன்கண் இவ்வகையாய சங்கையுண்டாம் :—சண்முகநாதனுடைய தரி சனஞ் செய்யாநின்ற புருஷனுக்கு ஜன்மாந்தரத்தின்கண் பிராஹ்மண சரீரத்தின் அடைவாய பலமும், தனாதிகளின் அடைவாய பலமும் உண்டாம். அந்தப் பிராஹ்மணனினும் வேறாய புருஷனிடத்தே அந்தத் தரிசனவடிவ கர்மத்தால் துக்கத்தின் அடைவின்றாம். இவ்வகையாய நியமத்தின்கண் யாது காரணம்? என உளதாஞ் சங்கைக்கு யாமறிகின்றிலேம் என்னும் இவ்வகையாய விடையன்றி மற்றொரு விடையின்றாம். மற்றே, யாமறிகின்றிலேம் இவ்வகையாய விடையே விளம்பல்வேண்டும். யாமறிகின்றிலேம் என்னும் இத்தோற்றம் மாயையே விஷ யஞ்செய்யும். ஆகையால், சர்வ புருஷர்களின் அனுபவத்தாற் பெறப்பட்டதும் சர்வகாரியங்களையும் சித்தம்செய்வதும் ஆய மாயை பயனற்றதன்றாம்; மற்றே பயனுற்றதாம்.

சங்கை :—யாமறிகின்றிலேமென்னும் இவ்வகையாய சப்தம் பாவரூப மாயை யின் வாசகமன்றாம்; மற்றே, ஞானபாவ வாசகமாம்; ஆகையால், இச்சப்தத்தின் மாயையின் சித்தி சம்பவிக்கமாட்டாது.

சமாதானம் :—யாம் அறிகின்றிலேமென்னும் சப்தம் யாதாவதொரு ஞானத்தின் அபாவத்தை யுணர்த்துகின்றதா? அல்லது சம்பூர்ண ஞானுபாவத்தை யுணர்த்துகின்றதா? அவற்றுள் முதற்பக்ஷமோ சம்பவியாது. ஏனெனின், எக்காலத்தில் கடத்தின் ஞானம் புருஷனுக்குண்டாமோ அக்காலத்தில் படத்தின் ஞானம் உண்டாகாது; ஆகையால் அந்தப் படஞானத்தின் அபாவத்தை யங்கீகரித்து யாம் அறிகின்றிலேமென்னும் பிரயோகம் உண்டாதல்வேண்டும். கடஞான காலத்தின்கண் இப்பிரயோக முண்டாகாதாகலின் யாதேனும் ஒரு சிறிது ஞானுபாவத்தையும் யாம் அறிகின்றிலேமென்னும் சப்தம் உணர்த்தாது. யாம் அறிகின்றிலேமென்னும் சப்தம் சம்பூர்ண ஞானுபாவத்தை யுணர்த்துகின்றதென்னும் இரண்டாவது பக்ஷமும் சம்பவியாது; ஏனெனின், அபாவ ஞானத்தின்கண் பிரதியோகியின் ஞானமும் அனுயோகியின் ஞானமும் காரணமாம். பிரதியோகி அனுயோகி ஞானங்களின்றி அபாவத்தின் ஞானமுண்டாகாது. எவ்வஸ்துவின் அபாவமாமோ அவ்வஸ்து அந்த அபாவத்தின் பிரதியோகியாம். எவ்வஸ்துவின்கண் அபாவமிருக்குமோ அவ்வஸ்து அவ்வபாவத்தின் அனுயோகியாம். கடாபாவமுடையது பூதலம் என்னுமிடத்து அபாவத்திற்குக் கடம் பிரதியோகியாம்; பூதலம் அனுயோகியாம். அங்ஙனம் சம்பூர்ண ஞானத்தின் அபாவத்திற்குச் சம்பூர்ண ஞானம் பிரதியோகியாம், ஜீவான்மா அனுயோகியாம், ஆண்டுப் பூத பவிஷ்யத் காலத்தின்கண் (இறந்த எதிர்காலங்களில்) உண்டாகாநின்ற சம்பூர்ண ஞானங்களின் ஞானம் அற்ப அறிவினனுக்குச் சம்பவியாது. ஆகையால் யாம் அறிகின்றிலேம் என்னும் சபதம சர்வ ஞானங்களின் அபாவத்தையும் உணர்த்தமாட்டாது. மற்றே, பாவரூப மாயையையே உணர்த்தும்; ஆகையால் மாயையை அவசியம் அங்கீகரித்தல்வேண்டும்.

இப்போது வேறு வகையாய் மாயையின் ஆவசியகத்தன்மையை நிரூபிப்பாம் :—சுபாவமே ஜகத்தின் காரணமெனச் சுபாவவாதியாய ஒரு நாஸ்திகன் அங்கீகரித்துளான். காலமே ஜகத்தின் காரணமெனக் காலவாதியாய ஒரு நாஸ்திகன் அங்கீகரித்துளான். இவை முதலாய நாஸ்திகர்களின் பக்ஷங்களைக் கண்டன தர்க்கவடிவ இராக்ஷச இறைவன் மாயைவடிவ அன்னையின் சகாயமின்றிப் புசித்தல்முடியாது; மற்றே, மாயைவடிவ அன்னையின் சகாயத்தாலேயே அந்தப் பக்ஷங்களைப் பக்ஷணஞ்செய்வன். கருத்திதுவாம் :—கண்டனஞ்செய்ய யோக்கியமாய நாஸ்திகர்களின் மதங்கள், கண்டனதர்க்கவடிவ இராக்ஷச இறைவன் என்னும் யாவற்றிற்கும் தாய் மாயையாம். அந்தமாயை கண்டன தர்க்க வடிவ இளைய மைந்தனிடத்தில் மிகுநேயமுற்றவள். ஆகையால் நாஸ்திகர்களின் சித்தத்தின்கண் யாம் அறிகின்றிலேம் என்னும் வடிவமாய் வெளிப்பட்ட அம்மாயை கண்டன தர்க்கவடிவ இளைய குமாரனுக்கு நாஸ்திகர்களின் மதவடிவ மூத்த மைந்தர்களைப் பக்ஷணஞ்செய்யும் பொருட்டுக் கொடுப்பள். ஆகையால் கண்டன தர்க்க வடிவ இளைய மைந்தனுடைய ஜயசம்பாதன வடிவை செய்ய முடியாத தொழிலைச் செய்பவளாய மாயையை அவசியம் அங்கீகரித்தல்வேண்டும்.

அல்லது எக்கால் கண்டன தர்க்கவடிவ இராக்ஷச இறைவன் சர்வ நாஸ்திகர்களின் மதங்களையுங் கண்டிப்பனே, அக்கால் அம்மாயைத் தாய் தனது செய்யமுடியாத வடிவ கர்மத்தை வெளிப்படுத்தாள்; மற்றோ இரகசியமாய் வைப்பள். மாயை வடிவ தாய் தனது செய்யமுடியாததாய கர்மத்தையும் வெளிப்படுத்துவளாயின், கண்டன தர்க்கவடிவ இராக்ஷச இறைவன் அந்த மாயையின் செய்யமுடியாததாய கர்மத்தையும் கண்டனம் செய்துவிடுவன். தனது தாயைக்கொல்லல் அனுசிதமேயாயினும், தமது குலத்தை நாசஞ்செய்வது இராக்ஷசரினியல்பாம். இக்காரணத்தினாலே மாயைவடிவ அன்னை கண்டன தர்க்கவடிவ இளைய குமாரனினின்றும் இரகசியமாயிருப்பள்.

கருத்திதுவாம்:—சர்வ நாஸ்திகர்களின் மதங்களையுங் கண்டனஞ் செய்வித்துத் தான் இரகசியமாயிருக்கும் இதுவும் மாயையின் செய்தற்கரிய தொழிலாம். ஆகையினால், யாம் அறிகின்றிலேம் என்னும் அனுபவத்தாற் றுணியப்பெற்ற மாயை அவசியம் அங்கீகரிக்கத்தக்கதாம.

சங்கை:—அர்த்தத்தை யுணர்த்திவைக்கும் வசனத்தின் பெயர் விடையாம். யாம் அறிகின்றிலேம் என்னும் வசனம் அர்த்த மின்றியதாம். ஆகையினால், இவ்வசனத்திற்கு விடை வடிவத்தன்மை பொருந்தாது.

சமாதானம்:—பிரதிவாதியின் மௌனத்திற்கு எவ்வசனம் காரணமாமோ அவ்வசனத்தின் பெயர் விடையாம். யாமறிகின்றிலேம் என்னும் வசனமும் பிரதிவாதியின் மௌனகாரணமாம். ஆகையால், இவ்வசனத்திற்கும் விடை வடிவத்தன்மை சம்பவிக்கும். கருத்திதுவாம்:—பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களை யங்கீகரித்தே பரஸ்பரம் வாதமுண்டாம். எபபுருஷன் யானறிகின்றிலேன் எனக்கூறுவனோ அப்புருஷனிடத்தே எந்தப் பிரதிவாதியும் கேளான்; மற்றோ, மௌனமுறுவன். ஆகையினால் பிரதிவாதியின் மௌனத்தின் சம்பாதனமே அவ்வசனத்தின் பலமாம்.

சங்கை:—யானறிகின்றிலேன் என்னும் இவ்வகையாய பிரதீதிக்கு விஷயமாய அஞ்ஞான ரூப தோஷத்தை அங்கீகாரஞ்செய்து பிரதிவாதியை ஜயிப்பதும் அபஜயசமானமாம்.

சமாதானம்:—அஞ்ஞானம் இருவகையாம், அவற்றுள் ஒன்றோ ஆன்மவிஷயக அஞ்ஞானமாம்; மற்றொன்றோ அனான்மவிஷயக அஞ்ஞானமாம். அவற்றுள் ஆன்மவிஷயக அஞ்ஞானமோ ஜீவர்கள் தம் மகாஹானியின் காரணமாம். ஜன்மாதி அனான்ம பதார்த்த விஷயக அஞ்ஞானம் ஜீவர்கட்கானி செய்வதில்லையாம். கருத்திதுவாம்:—எவனுக்கு ஆன்மஞானமுண்டாமோ, அவனுக்குச் சர்வ அனான்மவஸ்துக்களும் பொய்வடிவமா மென்னும் ஞானமுண்டாம். அந்தப்பொய்ப் பிரபஞ்சத்தை விசேஷரூபமாய் அறியவேண்டுமென்னும் இச்சையும், ஆன்மஞானிக் குண்டாக மாட்டாது. ஆகையால் ஆன்மஞானிக்கனான்ம பதார்த்தங்களின் அறியாமை தூஷண மன்றாம்; மாறாய்ப் பூஷணமாம். அங்ஙனமே ஆன்மஞானமின்றிய அஞ்ஞானிக்கும் ஜன்மாதி அனான்ம பதார்த்தங்களின் அஞ்ஞானம் தூஷணமன்றாம்.

நேத்திரஹீனனுடைய குருடனுக்கு ரூபாதி பதார்த்தங்களின் அஞ்ஞானம் தூஷண மன்றுவதுபோலும், தூளியானிறைந்த உடம்புடையோன் மீண்டுந் தூளியை யடைதல் தூஷணமன்றுவது போலும், ஆன்மஞானமின்றிய அஞ்ஞானிக்கு அனான்ம பதார்த்தங்களின் அஞ்ஞானம் தூஷணமன்றும்.

இப்போது இவ்வர்த்தத்தையே நிரூபிக்கும் பொருட்டுப் பிரபஞ்ச உற்பத்தி யின்கண் தர்க்க அயோக்கியத்தன்மையை நிரூபிப்பாம் :—ஆநந்தசொரூப ஆன் மாவினின்றும் ஜகத்தினுற்பத்தி சாஸ்திரத்தின் கண்ணே கூறப்பட்டுளது. அது சம்பவியாது ; ஏனெனின், ஆன்மா பிரகாச வடிவமாம், துவைதமற்றதாம், அசங்கமாம், குணங்களற்றதாம், அநந்தமாம், கிரியையற்றதாம், மனவாக்கு கட்கெட்டாததாம். இத்தகைய அத்விதீய ஆன்மா நாநாப்பிரகாரமாய விசித்திர உலகை எங்ஙனம் உண்டாக்குமென்னுஞ் சங்கையுண்டாயின், அந்தச் சங்கைக் குச் சமாதானம் செய்யவும அறியவும் எவனும் சமர்த்தனுகான். ஆகையால், பிரபஞ்சத்தினுற்பத்தி தர்க்க விஷயமன்றும். அந்தப்பிரபஞ்சத்தின்கண் ணுள்ள ஒவ்வொரு வஸ்துவும் நூறு கோடி பிரமாணங்களாலும் அறியத்தகாததாம். கருத்திதுவாம :—இவ்வஸ்துவின் வடிவமியாது, இதன்கண் எவ்வளவு தர்மங்க ளுள, இவ்வஸ்துவிற்கு எவ்வளவு அவயவங்கள், என இவ்வண்ணம் எவ்வஸ்து வையும் அறிதல்முடியாது. ஒருவஸ்துவை உணர்வதின்கண்ணேயும் ஒரு புருஷ னுக்குச் சமர்த்தின்றுயின், சர்வஜகததையு முணர்வதில் எவன்றுன் சமர்த்துடை யனுவன் ; மற்றேறு அங்ஙனமெவனும் சமாத்தனுகான். யானெல்லாவுலகையும் உணர்வனென்னுமபிமான முடையவன்பால் யாம் இதுகேடபாம். எதிரில் இரா நின்ற இக்கடத்தின் சொரூபத்தை முதலில நீ நிரூபணஞ்செய்தி. இக்கடத்தை நீ நிருபணஞ் செய்வையாயின் சம்பூரணப் பிரபஞ்சத்தையு முன்னுல் நிரூபித்தல் கூடும். ஆண்டுக் கடத்தின் சொரூபத்தினதும், அன்னிய பதார்த்ததநினின்றும் கடத்தின் நீக்கத்தினதும், நீக்கத்தின் பிரயோஜகதர்மங்களினதும் ஆய நிரூப ணமே கடத்தின் நிரூபணமாம். ஆகையால எதிரிலிராநின்ற கடத்தின்சொரூபம் யாது? என்பது சொரூபப்பிரசினமாம். இக்கடம் கடத்தினும் வேறுய் ஏன் ஆகாது? கருத்திதுவாம்:—இக்கடத்திற்கு அன்னிய பதார்த்தத்தினின்றும் நீக்கம் எவ்வகையாம்? என்பது நீக்கப்பிரசினமாம். எதிரில இருப்பதாய கடத்தின் நீக் கப் *பிரயோஜகம் நேத்திர இநதிரியத்தின் சம்பந்தத்தையே கூறவேண்டும். கடத் தன்மை முதலிய ஜாதிகளும் நீக்கப பிரயோஜகமாய்ச சம்பவிக்குமெனினும் கடத் தன்மை முதலிய ஜாதிகளை இனி நிராகாணஞ்செய்வாம். ஆகையால், கடத் தன்மை முதலிய ஜாதிகட்கு நீக்கப் பிரயோஜகத்தன்மை சம்பவியாது. அந் நேத்திரேந்திரியத்தின் சம்பந்தமோ எதிரில் இராநின்ற கடத்தின்கண் உளது ; அன்னிய பதார்த்தத்தோடு இல்லையாம். இதன்கண் யாது நியாமகம் என்பது தர்மப்பிரசினமாம. இவ்வகையாய சித்தாந்தியின் மூன்று வினுக்களைக் கேட்டு வாதியானவன் முதலாவது கடசொரூபத்தை நிரூபணஞ்செய்கின்றனன்.

---

* பிரயோஜகம்=ஏது.

சங்கை :—இதுவாமென்னும் சப்தத்தின் வாச்சியம் எவ்வஸ்துவோ அதன் பெயர் கடமாம்.

சமாதானம் :—இதுவாமென்னும் சப்தத்தின் வாச்சியத்தன்மை வடிவ இலக்கணத்தாற் கடத்தின் சித்தியுண்டாகாது ; ஏனெனின், இதுவாமென்னும் சப்தத்தின் வாசசியத்தன்மை எங்ஙனங் கடத்தின்கண் உளதோ அங்ஙனம் படாதிகளின்கண்ணும் உளது. ஆகையினால் இவ்விலக்கணம் அதிவியாப்தி தோஷத்தோடு கூடியதாம். இலக்கியத்தின்கண்ணும் இலக்கியமல்லாததின்கண்ணும் இலக்கணமிருப்பின் அஃது அதிவியாபதியெனப்படும்.

சங்கை :—இது கடமென்னும் சப்தத்தின் வாச்சியத்தன்மை கடத்தினிலக்கணமாம். பட முதலியவைகளிடத்தே இதுவாம் என்னும் சப்தத்தின் வாச்சியத்தன்மையிருப்பினும், இது கடமென்னும் சப்தத்தின் வாச்சியத்தன்மை பட முதலியவைகளிடத்தே யில்லையாம். மற்றோ, கேவலங் கடத்தின்கண்ணே உளது. ஆகையால், முற்கூறிய அதிவியாப்திரூப தூஷணம் இவ்விலக்கணத்தின்கண் இல்லையாம்.

சமாதானம் :—இது கடமென்னும் சப்தத்தின் வாச்சியத்தன்மை எங்ஙனம் எதிரில் இராநின்ற கடத்தின்கண் உளதோ அங்ஙனம் அன்னிய கடத்தின்கண்ணும் உளது. ஆகையால், இவ்விலக்கணமும் அதிவியாப்தி தூஷணத்தோடு கூடியதாமாதலின், எதிரில் இராநின்ற கடத்தின் சித்தியைச் செய்யாது.

சங்கை :—* அகடத்தின் பேதமுடையது யாதாமோ அது கடமெனப்படும்.

சமாதானம் :—இவ்விலக்கணத்திலும் கடத்தின் சித்தியுண்டாகாது ; ஏனெனின், அகடத்தின் பேதமுடையது யாதாமோ அது கடமெனபபடும் இவ்விலக்கணத்தின்கண் அகடசப்தத்திற்கு யாதுபொருள்? கடத்தின் பேதத்தையே அகடமென்றுகூறின், அந்தக் கடத்தின்பேதம அன்யோன்யாபாவ ரூபமாம். ஆகையால், பிரதியோகிரூப கட நிர்ணயத்தாலன்றிக் கட பேதத்தின் நிர்ணயம் சம்பவியாது. கடத்தின் நிர்ணயம் இதுவரை சம்பவிக்கவில்லையாதலின், எதிரிலிராநின்ற கடத்தின்கண் கடபேத சம்சயமுளதாம் அதுபோல, படாதிகளிடத்தும் கடபேத சம்சயமுளதாம். ஆகையால், எதிரில் இராநின்ற கடம்படமாகவேண்டும், படம்கடமாகவேண்டும், கடத்திற்குப படரூபத்தன்மையும் படத்திற்குக் கடரூபத்தன்மையும் அத்தியந்தம் விருத்தமாம். அல்லது அகடத்தின் பேதரூப இலக்கணத்தால் கடத்தின் சித்தியைச் செய்யின், கடத்தின் சித்தியின்கண் கடத்தின் அபேக்ஷை வடிவ ஆத்மா சிரயதூஷணத்தின் அடைவுமுண்டாம். ஆகையினால் இவ்விலக்கணத்தாலும் கடத்தின்சித்தி சம்பவியாது.

சங்கை :—இந்திரியங்களின் வேறாய் எதிரில் இராநின்ற கடத்தோடுள்ள இந்திரியத்தின் சையோக சம்பந்தத்தின் நிரூபகமாயிருபபது கடமெனப்படும். இவ்விலக்கணத்தின்கண் இந்திரியங்களின் வேறாய் என்னு மிம்மொழியைப் புகு

* அகடம்=கடமல்லாதது.

விக்காவிடின், இந்திரியங்களிடத்து கடவிலக்கணத்தின் அதிவியாப்தியுண்டாம்; ஏனெனின், கடத்தோடுள்ள நேத்திரேந்திரியத்தின் சையோக சம்பந்தம் கடத்தினிடத்தும் நேத்திர இந்திரியத்தினிடத்துமிருக்கும்; ஆகையால், கடம் அச்சம்பந்தத்தின் நிரூபகமாவதுபோல நேத்திராதி இந்திரியங்களும் அச்சம்பந்தத்தின் நிரூபகங்களாம். ஆனால் நேத்திராதி இந்திரியங்கள், இந்திரியங்களின் வேறாயில்லையாம்; கடமோ நேத்திராதி இந்திரியங்களினும வேறாம். ஆதலின் இந்திரியத்தின்கண் இலக்கணத்தின் அதிவியாப்தியை நீக்கும்பொருட்டு இந்திரியங்களின் வேறாமென்னும் பதம் அவசியமீதல்வேண்டும்.

சமாதானம் :—இவ்விலக்கணத்தினாலும் எதிரில் இராநின்ற கடத்தின் சித்தியுண்டாகாது; ஏனெனின், எந்தக்ஷணத்தில் நேததிரேநதிரியத்திற்கு எதிரில் இராநின்ற கடத்தோடு சையோக சம்பந்த முளதாமோ, அந்தக்ஷணத்தில் அக்கடத்தின் சமீபித்துள்ள அன்னிய பதார்த்தங்களோடும நேத்திர இந்திரியத்திற்குச் சையோக சம்பநத முளது. அசசையோக சம்பநதத்தின் நிரூபகங்கள் அன்னிய பதார்த்தங்களுமாம்; அவை இநதிரியங்களின் வேறாயுமுள. ஆகையால், அப்பதார்த்தங்களில கடவிலக்கணத்தின் அதிவியாபதியுண்டாம.

சங்கை :—ஜலங்கொண்டுவரும சக்தி யெதன்கண்ணுளதாமோ அது கடமெனப்படும்.

சமாதானம் :—ஜலங்கொண்டுவரும் சகதிவடிவ இலக்கணத்தாலும் எதிரில் இராநின்ற கடத்தின் சித்தியுண்டாகாது; ஏனெனின், எதிரில் இராநின்ற கடத்தின்கண் ஜலங்கொண்டுவரும் ஆற்றலெங்களுதாமோ அங்ஙனே அன்னிய கடத்தின்கண்ணும் படத்தின்கண்ணும் வேறு யாதாவதொரு பாத்திரத்தின்கண்ணும் ஜலம் கொண்டுவரும் ஆற்றலிறுத்தலைககண்டனம. ஆகையால், அவ்வெதிரில் இராநின்ற கடம் படாதிரூபமாதல் வேண்டும். கருத்திதுவாம் :—இக்கடவிலக்கணத்திற்குப் படாதிகளிடத்தே அதிவியாப்தியாம்.

சங்கை :—ஜலங்கொண்டுவரல் வடிவககிரியை கடவடிவ காரகத்தையே அபேக்ஷிக்கும; படாதிகளை அபேக்ஷியாது. ஆகையினால் படாதிகளிடததே முற்கூறிய இலக்கணத்திற்கு அதிவியாப்தியின்றாம்.

சமாதானம் :—யாது யாது கிரியையாமோ அது வது பூர்வ காரகத்திற்குச் சமானமான காரகத்தை அபேக்ஷிக்கும. பாகரூபக்கிரியை பூர்வ அக்கினிக்குச் சமான அக்கினியின் அபேக்ஷையைச்செய்யும், கேவலம் பூர்வஅக்கினிமாத்திரத்தின் அபேக்ஷையைச்செய்யாது; அதுபோல, ஜலங்கொண்டுவரல் வடிவக்கிரியையும் கேவலங் கடமாத்திரத்தின் அபேக்ஷையைச் செய்யாது; மற்றோ, பார்த்திவத் தன்மைரூபத்தால் கடத்திற்குச் சமானமானபடாதிகளையும் அபேக்ஷிக்கும். ஆகையால், ஜலத்தைக் கொண்டுவரும்சக்தி பட முதலியவைகளின்கண்ணும் உளது. அல்லது ஜலத்தைக் கொண்டுவரும் சக்தியையுடையது யாதோ அதுகடமெனப்படும்.

இவ்வண்ணம் கடத்தின் இலக்கணத்தைக்கூறின், துவாரத்தோடு கூடியகடத்தின்கண் ஜலத்தைக் கொண்டுவரும் சக்தியில்லையாம். ஆகையால், அந்தத் துவாரத்தோடுகூடிய கடத்தின்கண்ணே கடபுத்தியுண்டாதல்கூடாது. துவாரத்தோடு கூடிய கடத்தின்கண்ணே கடபுத்தி யெல்லா ஜீவர்கட்கு முண்டாம். கருத்திதுவாம் :—கடத்தின் இலக்கணத்திற்குத் துவாரத்தோடுகூடிய கடத்தின்கண் அவ்வியாப்தியுண்டாம். அல்லது ஜலத்தைக்கொண்டுவரும் சக்தி கடத்தின் இலக்கணமாயின் பச்சைக் (சூளையில் வேகாத) கடத்தின்கண் ஜலத்தைக் கொண்டுவரும் சக்தியின்றும். ஆகையால், பச்சைக் கடத்தின்கண் கடபுத்தியுண்டாகக்கூடாது ; யாவருக்கும் அதன்கண் கடபுத்தியுண்டாம். கருத்திதுவாம் :—நேத்திராதி இந்திரியத்தால் சக்தியின் பிரத்தியக்ஷ ஞானம் எவர்க்கும் உண்டாகாது. மற்றே, காரியரூப ஹேதுவால் சக்தியின் அநுமானமுண்டாம். ஸ்போடாதி (அக்கினிப்பொறி கிளம்புதல்வடிவ) காரியத்தால் அக்கினியின்கண் தாகசக்தியின் அநுமானமுண்டாவதுபோல பச்சைக கடத்தால ஜலத்தைக் கொண்டுவருதல் வடிவகாரியம உண்டாகாது. ஆகையால், அநுமானத்தாலும் பச்சைக் கடத்தின்கண் சக்தியின் சித்தியுண்டாகாது. அல்லது ஜலத்தைக் கொண்டுவர எதன்கண்ணே சக்தியுளதோ அது கடமெனப்படும் எனக் கடத்திற்கிலக்கணங்கூறின் ஜலத்தைக் கொண்டுவரும் சக்தி ஒரு கடமாத்திரத்தின்கண் இல்லையாம். மற்றே, அன்னிய அநேக பாத்திரத்தின்கண்ணும் ஜலத்தைக் கொண்டுவரும் சகதியுளது. ஆகையால், அவற்றின்கண்ணும் கடபுத்தி யுண்டாகவேண்டும். கடத்தின் வேறய பாத்திரத்தின்கண் கடபுத்தி யெவர்க்கும் உண்டாவதில்லையாம். கருத்திதுவாம் :—இக்கடத்தின் இலக்கணத்திற்கு அன்னியபாத்திரத்தின்கண் அதிவியாப்தியுண்டாம். ஆகையால், இத்துஷ்ட இலக்கணத்தினலும் கடத்தின் சித்தியுண்டாகாது.

சங்கை :—கடத்தன்மை ஜாதியுடையது யாதோ அது கடமாம்.

சமாதானம் :—கடத்தன்மை ஜாதிவடிவ இலக்கணத்தினலும் கடத்தின் சித்தியுண்டாகாது ; ஏனெனின், அந்தக் கடத்தன்மை ஜாதி யாண்டும் வியாபகமா ? அல்லது பரிச்சின்னமா ? கடத்தன்மை ஜாதியை வியாபகமெனக் கூறினே கடத்தன்மை ஜாதிக்குக் கடத்தோடு சம்பந்த மிருப்பதுபோல படாதிகளோடும் அவசியஞ் சம்பநதம் அங்கீகரிக்கவேண்டும் ; ஏனெனின், சர்வ மூர்த்த பதார்த்தத்தோடும் எதற்குச் சம்பந்தமாமோ அது வியாபகமெனப்படும். ஆகாசத்திற்குச் சர்வ கடபடாதி மூர்த்த பதார்த்தங்களோடும் சம்பந்த முளதாதலின் ஆகாசம் வியாபகமாம். அதுபோன்றே கடத்தன்மை ஜாதியை வியாபகமாய் அங்கீகரிக்கினே படாதிகளோடும் கடத்தன்மை ஜாதிக்குச் சம்பந்தமுளதாதலின் படாதிகளிடத்தே கடத்தன்மை ஜாதிவடிவ இலக்கணத்திற்கு அதிவியாப்தியுண்டாம். அந்த அதிவியாப்திவடிவ தூஷணநிவிர்த்தியின் பொருட்டு அக்கடத்தன்மை ஜாதியைப் பரிச்சின்னமா உடன்படினே, அந்தக்கடத்தன்மை ஜாதி கடவியக்தியின்கண்ணேயே சுற்றிவரும் ; படாதியின்கண்ணே செல்லாது. இந்நியமத்தின்கண்ணே யாதுபிரயோஜகம்; அநநதங்கோக்களிருநதபோதிலும்

எங்ஙனங் கன்று தனது தாயை அறிந்து அதன்பாற் செல்லுமோ, அங்ஙனங் கடத்தன்மை ஜாதியும் தனது கடவியக்தியை யுணர்ந்து அதன்கண்ணே புகும்; படாதிகளிடத்தே புகாது என்று நீ கூறுவையாயின், அது சம்பவியாது; ஏனெனின், கன்று சேதனமாம்; ஆகையால் அதன்கண்ணே தனது தாயின் ஞானம் சம்பவிக்கும். கடத்தன்மை ஜாதி ஜடமாமாதலின் அதன்கண்ணே இக்கடவடிவ வியக்தி என்னுடையதென்னும் ஞானம் சம்பவியாது. அல்லது, மூர்த்த திரவியத்தின்கண்ணேயே, கமனரூபக் கிரியையை நையாயிக ரங்கீகரித்துளார். பிருதுவி, ஜலம், தேயு, வாயு, மனம் என்னுமிவ்வைந்தும் மூர்த்த திரவியங்களாம். ஆகையால் இவைகளிடத்தே கமனரூபக் கிரியை யுண்டாம். ஆகாசம், காலம், திக்கு, ஆன்மா என்னு மிந்நான்கும் அமூர்த்த திரவியங்களாம்; வியாபகங்களாம். ஆகையால், இவற்றின்கண்ணே கிரியை யுண்டாகாது. கடத்தன்மை ஜாதி திரவிய ரூபமுமன்றும்; மூர்த்த ரூபமுமன்றும். ஆகையால், கடத்தன்மை ஜாதியின்கண் கமனரூபக் கிரியை சம்பவியாது. கிரியையற்ற கடத்தன்மை ஜாதி கடத்தின்கண்ணே புகுதல் அத்தியந்தம் விருத்தமாம்.

சங்கை:—கடத்வஜாதியின்கண் இயல்பாய்க் கிரியையின்றும். ஆகையால், அக்கடத்தன்மை ஜாதி சுதந்திர கடவியக்தியின்கண்ணே வரமாட்டாது; மற்றோ, கடத்தின் வேறாய ஏதாவது வியக்தியின்கண் அக்கடத்தன்மை ஜாதியிருக்கும். எக்காலத்திற் கடத்தின் உற்பத்தியாமோ அக்காலத்தில் அவ்வியக்தியினுக்குக் கடத்தின் சமீபத்தே வருகையுண்டாம். அந்த வியக்தியோடு கடத்தன்மை ஜாதியும கடத்தின்கண்ணே வரும். ரூபாதி குணங்களிடத்தே சுதந்திர கமனவடிவக் கிரியை சம்பவியாது. ஆனால் ரூபாதி குணங்கட்கு ஆசிரயமாய குசும்பாதி திரவியங்கள் வஸ்திரத்தோடு சம்பவிப்பின், அக்குசும்பாதிகளோடு ரூபாதிகளையும் வஸ்திரத்தின்கண்ணே உணரலாம்.

சமாதானம்:—வஸ்திர சம்பந்தத்தின் முன்னரே குசும்பாதிகளிடத்தே இரக்த ரூபத்தின் பிரதீதியாம்; அதுபோல, கடவியக்தி யொழிந்து யாதாவது அன்னிய வியக்தியின்கண் கடத்தன்மை ஜாதியின் பிரதீதியுண்டாகாது. ஆகையால் அன்னிய வியக்தியின் வரவால் கடத்தன்மை ஜாதிக்குக் கடத்தின்கண் வரவு சம்பவியாது.

சங்கை:—அன்னிய வியக்தியின் வரவால் கடத்வ ஜாதிக்குக் கடத்தின்கண் வரவுண்டாகாது; மற்றோ, எத்தேசத்தின்கண் கடத்தின் உற்பத்தியாமோ அத்தேசத்தின்கண்ணே தனது வெளிப்படையின்பொருட்டுக் கடத்தன்மை ஜாதி முன்னரே நிலைபெற்றிருப்பதாம்.

சமாதானம்:—கடத்தினது உற்பத்தியின் முன்னர்க் கடத்தன்மை ஜாதி ஆண்டிருக்கும் என நீ கூறுவது சம்பவியாது; ஏனெனின், கடத்தினது உற்பத்தியின் முன்னர்க் கடத்தன்மை ஜாதிக்கு ஓராசிரயமுமில்லையாம். கடத்தின் உற்பத்தியின் முன்னர்க் கடத்தன்மை ஜாதிக்குக் கடத்தின்வேறாய் ஏதாவது

ஆசிரயத்தை அங்கீகரிக்கினே உற்பன்னமாய கடத்தின்கண்ணும், கடத்தன்மை ஜாதியின் சுதந்திர கமனமும், ஆசிரயத்தின் கமனத்தாற் கமனமும் முற்கூறிய யுக்திகளால் சம்பவியாது.

சங்கை :—எக்காலத்தில் கடம் உற்பன்னமாமோ அக்காலத்தில் கடத்தோடு கடத்தன்மை ஜாதியும் உற்பன்னமாம். ஆகையால், முற்கூறிய தோஷம் இப் பக்ஷத்திற் சம்பவியாது.

சமாதானம் :—கடத்தோடு நீல பீதாதி ரூபங்களின் உற்பத்தியாம். அது போல கடத்தன்மை ஜாதியின் உற்பத்தி சம்பவியாது ; ஏனெனின், ஜாதியின் உற்பத்தியை நையாயிகர் உடன்படவில்லை. உற்பத்தி உடைத்தான பதார்த்தமும் ஜாதியாயினே, நீல பீதாதி குணமும் கடத்தன்மை ஜாதி வடிவமாதல் வேண்டும் ; நீல பீதாதி ரூபங்களை யெவரும் கடத்தன்மை ஜாதியெனக் கூறுர். ஆகையால், எவ்வகையாலும் கடத்தன்மை ஜாதியின் சித்தியுண்டாவதில்லையாம். அல்லது அந்தக் கடத்தன்மை ஜாதி அபாவரூபமா ? அல்லது பாவரூபமா ? அவற்றுள், அபாவவடிவம் கடத்தன்மை ஜாதியென்னும முதற்பக்ஷத்தின்கண்ணும் எவ்வபாவ வடிவம் ? கருத்திதுவாம் :—இருவகையாய அபாவத்தை நையாயிகர் உடன்பட்டுளார் ; ஒன்று அநித்தியாபாவம், மற்றொன்று நித்தியாபாவம், ஆண்டு முன்னின்மை பின்னின்மையென்னும் இரண்டும் அநித்தியங்களாம். அன்யோன்யாபாவம், (ஒன்றிலொன்றின்மை) அத்தியந்தாபாவம் (முற்றுமின்மை) என்னும் இவ்விரண்டும் நித்தியங்களாம். அவற்றுள், முதலாவதாய முன்னின்மை வடிவத்தன்மை கடத்தன்மை ஜாதியின்கண்ணே சம்பவியாது ; ஏனெனின், அக் கடத்தன்மை ஜாதி கடத்தின் முன்னின்மைவடிவமா? அலலது படாதிகளின் முன்னின்மை வடிவமா ? அவற்றுள், கடத்தன்மை ஜாதியைக் கடத்தின் முன்னின்மை வடிவமென வுடன்படினே கடத்தின்கண் கடத்தன்மை ஜாதியின் பிரதீதியுண்டாதல்கூடாது; ஏனெனின், கடமுற்பன்னமாயின், கடத்தின் முன்னின்மை நாசமாய் விடும். ஆகையால், கடத்தின் முன்னின்மைவடிவம் கடத்தன்மை ஜாதியன்றும் ; அங்ஙனமே படத்தின் முன்னின்மை வடிவமும் கடத்தன்மை ஜாதியன்றும். ஏனெனின், முன்னின்மையானது எதிர்மறையின் உற்பத்தியின் முன்னர் எதிர்மறையின் சமவாயிகாரணத்தின்கண் இருக்கும். அன்னிய எதன்கண்ணும் முன்னின்மையிராது. படத்தின் முன்னின்மை படத்தின் உற்பத்தியின் முன்னர்த் தந்துக்களின்கண்ணே இருக்கும் ; கடத்தின்கண்ணே இராது, ஆகையால் படாதிகளின் முன்னின்மை வடிவமும் கடத்தன்மை ஜாதியன்றும். கடத்தன்மை ஜாதியை முன்னின்மை வடிவமென உடன்படினே, எதிர்மறை உதயமாயின் முன்னின்மை அழியும். ஆகையால் கடத்தன்மை ஜாதிக்கும் அழிவு அங்கீகரிக்க வேண்டிவரும். அக்கடத்தன்மை ஜாதியின் உற்பத்தியும் நாசமும் உனக்கு அங்கீகாரம் அன்றும். ஆகையால், முன்னின்மை வடிவங் கடத்வஜாதியன்றும். பின்னின்மை வடிவம் கடத்வஜாதியாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தின்கண்ணும் கடத்தின் துவம்சவடிவங் கடத்வ ஜாதியா ? அல்லது படாதிகளின் துவம்ச வடிவம் கடத்வஜாதியா ? அவற்றுள், கடத்தின் துவம்ச வடிவம் கடத்வஜாதி

யாயினே கடமிருக்குங்காற் புலப்படாது ஒழியவேண்டும்; ஏனெனின், கடமிருக்கும் காலத்தில் கடத்தின் துவம்சமின்றும். ஆகையால் கடத்தின் துவம்ச வடிவம் கடத்வஜாதியன்றும். அங்ஙனமே, படத்தின் துவம்சவடிவமும் கடத்வஜாதியன்றும். ஏனெனின், படத்தின் துவம்சம் படத்தின் சமவாயி காரணமாய *தந்துக்களின்கண்ணே உளது. கடத்தின்கண்ணே படத்தின் துவம்சம் எப்போதுமிராது. ஆகையால், படத்தின் துவம்சாபாவ வடிவமும் கடத்தன்மை ஜாதியன்றும். அல்லது, துவம்சாபாவவடிவத்தைக் கடத்தன்மை ஜாதிக் கங்கீகரிக்கினே துவம்சாபாவத்திற்கு உற்பத்தியுண்டாம். ஆகையால், கடத்வ ஜாதியினுக்கும் உற்பத்தியுடன்பட வேண்டிவரும். ஜாதியின் உற்பத்தியோ உனக்கு உடன்பாடில்லையாம்; ஆகையால் துவம்சாபாவரூபமும் கடத்வஜாதியன்றும். இவ்வண்ணம், அன்யோன்யாபாவரூபத் தன்மையும் அத்தியந்தாபாவரூபத் தன்மையும் கடத்வஜாதிக்குச் சம்பவியாது; ஏனெனின், கடத்தின் ஒன்றிலொன்றின்மைவடிவமும் கடத்தின் முற்றுமின்மைவடிவமும் கடத்வ ஜாதியாயினே கடத்தின்கண் கடத்வஜாதி தோற்றுதல்கூடாது; மற்றே படாதிகளிடத்தே கடத்வஜாதியின் தோற்றம் உண்டாதல்வேண்டும். ஏனெனின், கடத்தின் ஒன்றிலொன்றின்மையும் முற்றுமின்மையும் கடத்தின்கண்ணே இராது; மற்றே, படாதிகளிடத்தே யிருக்கும். ஆகையால், கடத்தின் ஒன்றிலொன்றின்மைவடிவமும முற்றுமின்மைவடிவமும் கடத்வ ஜாதியன்றும். படத்தின் ஒன்றிலொன்றின்மைவடிவமும் முற்றுமின்மைவடிவமும் கடத்வ ஜாதியாம் என வாதி கூறின், அக்கூற்றும் சம்பவியாது; ஏனெனின், படத்தின் ஒன்றிலொன்றின்மையும் முற்றுமின்மையும் கடவியக்தியின்கண்ணே இருப்பதுபோன்று ஸ்தம்பாதி பதார்த்தங்களிடத்தும் உள. ஆகையால் ஸ்தம்பாதிகளிடத்தும் கடத்தன்மை ஜாதியின் தோற்றம் உண்டாதல்வேண்டும். கடத்தினும் வேறாய சர்வ பதார்த்தங்களின் ஒன்றிலொன்றின்மைவடிவமும முற்றுமின்மைவடிவமும் கடத்வ ஜாதியாம் எனக் கூறின், இக்கூற்றும் நலமுடையதன்று; ஏனெனின், இன்மையுணர்ச்சியின்கண்ணே எதிர்மறை யுணர்ச்சி காரணமாம். எதிர்மறை யுணர்ச்சியின்றி இன்மைஞானம் உண்டாகாது. கடத்தினும் வேறாய சர்வ பதார்த்தங்களின் ஞானம் ஈச்வரனுக்குண்டாமன்றி எவ்வற்ப அறிவுடைய ஜீவர்கட்கும் உண்டாகாது. ஆகையால், கடத்தினும் வேறாய சர்வ பதார்த்தங்களின் ஒன்றிலொன்றின்மைவடிவ முற்றுமின்மைவடிவ கடத்தன்மைச சாதியின் பிரத்தியக்ஷ ஞானம் எப்புருஷனுக்கும் உண்டாகாது. இது கடமென்னும் பிரத்தியக்ஷஞான விஷயத்தன்மை கடத்தன்மை ஜாதியின்கண் வாதியும் அங்கீகரித்துளான். ஆகையால், கடத்தன்மை ஜாதி அபாவரூபமன்றுமெனத் துணியப்பெற்றதாயது. கடத்வஜாதி பாவரூபமாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தின்கண்ணும் பாவ வடிவ கடத்வஜாதி நித்தியமா? அல்லது அநித்தியமா? அவற்றுள், அநித்திய ரூபத்தன்மையோ கடத்வ ஜாதியின்கண்ணே சம்பவியாது; ஏனெனின், யாது

---

* தந்து = நூல்.

அநித்தியவஸ்துவாமோ அது அபாவத்தால் வியாப்தமாம். கடாதிகள் அநித்தியமாதலின் அபாவத்தால் வியாப்தமாவதுபோல கருத்திதுவாம் :—கடத்வ ஜாதியை அநித்தியமென அங்கீகரிக்கினே, ஒரு கடம் அபாவமாயின் கடத்வ ஜாதிக்கும் அபாவம் அங்கீகரிக்கவேண்டிவரும். கடத்வ ஜாதிக்கு அபாவமுண்டாயின் யாண்டும் கடாபாவ புத்தி யுண்டாதல்வேண்டும்; அங்ஙனமோ உண்டாவதில்லையாம். ஆகையால் கடத்வஜாதி அநித்தியமன்றாம்; நித்தியமாம் என்னும் முதற்பக்ஷத்தினும் எவ்வேதுவால் கடத்வஜாதி நித்தியம் என்பதை நீ கூறல்வேண்டும்.

சங்கை:—கடத்வஜாதியின் அழிவினுக்கு யாதொரு காரணமும் இன்றாமாதலின், கடத்வ ஜாதி நித்தியமாம்.

சமாதானம் :—ஹே வாதியே! கடத்வ ஜாதியின் நாசத்திற்கு யாதொரு காரணமு மில்லையாமென்பது உனக்குக் கேவலம் மயக்கமேயாம; ஏனெனின், சுருதியின்கண் ஆன்மஞானத்தால் சர்வ அனாத்ம பதார்த்தங்களுக்கும் அழிவு கூறப்பட்டுளது. அல்லது கடத்வ ஜாதியின் நாசத்திற்கு யாதொரு காரணமு மில்லையாயின், கடத்தின் நாசத்திற்கும் யாதொரு காரணமுமுண்டாதல் கூடாது. ஏனெனின், ஆசிரயத்தின் நித்தியததன்மையின்றி அசிரித வஸ்துவின் நித்தியத் தன்மை சம்பவியாது. ஆகையால் கடத்வ ஜாதியின் நித்தியத்தன்மையின் பொருட்டுக் கடவியகதியையும நித்தியமாய் அங்கீகரிக்கவேண்டும. அக்கடத்தின் நித்தியத்தன்மை உனக்கும் அங்கீகாரமில்லையாம். ஆகையால், கடத்வ ஜாதி நித்தியமன்றாம. அல்லது, அநிதநிய வஸ்துவினசிரிதமாய் எவ்வஸ்து இருக்குமோ அஃதநித்தியமேயாம். அநித்தியமாய நூறகளை யாசிரித்திராநின்ற வஸ்திரமானது அநித்தியமேயாம்; நிததியமன்றாம். அதுபோல அநிதநிய கடவியக்தியை ஆசிரிதநிராநின்ற கடத்தன்மை ஜாதியும அநிததியமேயாம. அநத ஜாதியின் அநித்தியத்தன்மை உனக்கு அங்கீகாரமிலலையாம். அல்லது, அககடத்வ ஜாதியானது பாவரூபமாகுக, அல்லது அபாவரூபமாகுக; இதன்கண்ணே யாம் ஆராய்கின்றிலம். ஆனல், அக்கடத்வ ஜாதியை யங்கீகரிப்பதால் எப்பயனின் அடைவுண்டாம் என்பதை நீ கூறல் வேண்டும்.

சங்கை :—கடத்தின்கண் இராநின்ற படாதிகளின் பேத அனுமிதி ஞானமே கடத்தன்மை ஜாதியை அங்கீகரிப்பதின் பலமாம். அவ்வனுமானத்தின் பிரகாரமிதுவாம் :—இக்கடம், படாதிகளினும் வேறாம்; கடத்வ ஜாதியுடைய தாதலின்; யாது படாதிகளினும் வேறன்றோ, அது கடத்தன்மை ஜாதியுடையதுமன்றாம; படாதிகளைப்போலும.

சமாதானம் :—கடத்வ ஜாதிரூப ஹேதுவினல், கடத்தின்கண்ணே படாதிகளின்பேதம், கடத்தன்மை ஜாதிக்குப் படத்தன்மை ஜாதியினின்றும் பேதம் துணியப்பெறில் துணியப்பெறும். கடத்வ படத்வ ஜாதியின் பேதம் துணியப் பெற்றாலன்றிக் கடபட வடிவ வியக்திகளின் பேதம் துணியப்பெறாது. ஆகையால், முதலில் கடத்வ ஜாதியின்கண் படத்வ ஜாதியின் பேதம் துணியப்பெறுதல் வேண்டும்.

சங்கை :—கடத்வ ஜாதியின்கண் படத்வ ஜாதியின் பேதமும் அனுமானப் பிரமாணத்தாலேயே துணியப் படுதல்வேண்டும். அவ்வனுமானத்தின் பிரகார மிதுவாம் :—கடத்தன்மை ஜாதி படத்வாதி ஜாதிகளினின்றும் வேறும் ; கடத் தைபபற்றியிருத்தலின் ; யாதுயாது கடத்தைப்பற்றி யிராநிற்குமோ அது படத் வாதி ஜாதியினின்றும் பின்னமாம்; கடத்தின்கண்ணே இராநின்ற ரூபாதி குணங் களைப்போல.

சமாதானம் :—கடத்தைபபற்றி யிருக்குந தன்மைவடிவ ஹேதுவினுல் கட த்வ ஜாதியின்கண் படத்வாதி ஜாதிகளின் பேதம் துணியப்பெறமாட்டாது ; ஏனெனின், கடத்தின் துணிவு இதுவரை உன்னுற் செய்யமுடியவில்லை ; கடத்தின் துணிவின்றிக் கடத்தைபபற்றிய தன்மைவடிவ ஹேதுவின் துணிவுமுண்டாகாது. துணியப்பெறுத ஹேதுவினுல் துணியபபெறுத துணிபொருட் பெறுதியின் அனுமிதியாண்டு முண்டாகாது ; மறறே துணியபபெறற ஹேதுவினுல் துணி யபபெறுத துணிபொருட் பெறுதியின் அனுமிதியுண்டாம். துணியபபெற்ற தூமவடிவ ஹேதுவினுல மலையின்கண்ணே துணியபபெறுத வன்னிவடிவ துணி பொருட் பெறுதியின் அனுமிதியுண்டாவதுபோல, துணியப்பெறுத ஹேது வினுலும அனுமிதியுண்டாகுமாயின், மலையின்கண்ணே தூமஞானமின்றிய புருஷ னுககும் வன்னியின் அனுமிதி யுண்டாதலவேண்டும். தூமஞானமின்றி வன்னி யின் அனுமிதி யாவருக்கும உண்டாவதிலலையாம. அங்ஙனமே கடத்தைப் பற்றியதாங் தன்மைவடிவ துணியபபெறுத ஹேதுவினுல் கடத்தன்மை ஜாதி யின்கண் படத்தன்மை முதலிய ஜாதிகளின்பேதத்தைத துணிபபபெறுத்துதல் முறறிலும முரணும. ஆகையால, கடத்வ ஜாதியின் வடிவமும் பலமும் நிரூபிக்க முடியாமையின், கடத்வ ஜாதிவடிவ இலக்கணத்தால கடத்தின் துணிவுண்டாகா தெனத் துணியபபடும.

சங்கை :—கடமுளது என்பதாய சபதததின் வாசசியத்தன்மையும், கட முளது என்பதாய ஞானத்தின் விஷயத்தன்மையும, கடததின் இலக்கணமெனச சம்பவிக்கும்.

சமாதானம் :—சாமானியமாய்ச சபதத்தின் வாச்சியத்தன்மையும் ஞானத் தின் விஷயத்தன்மையும் கடத்தின் இலககணமா ? அல்லது கடமுளது என்னும சபதத்தின் வாச்சியத்தன்மையும், ஞானத்தின் விஷயத்தன்மையும் கடத்தின் இலக்கணமா ? அவற்றுள், முதலாவது பக்ஷமோ பொருந்தாது ; ஏனெனின், சாமானியமாய்ச் சப்தத்தின் வாச்சியத்தன்மையும் ஞானத்தின் விஷயத்தன்மை யும் படாதிகளிடத்துமுள. ஆகையால், படாதிகளிடத்தே அவ்விலக்கணத் தின் அதிவியாப்தியுண்டாம். அங்ஙனமே இரண்டாவது பக்ஷமும் பொருந்தாது ; ஏனெனின், கடமுளதென்னும் சப்தத்தின் வாச்சியத்தன்மையும் ஞானத்தின் விஷயத்தன்மையும் கடம் முதலில் துணியப்பெறின் துணியப்பெறும் ; அக்கடத் தின் துணிவோ இதுவரை யுண்டாகவில்லை. ஆகையால், அக்கடத்தின் விஷயத்

தன்மையின் துணிவும் சம்பவியாது. அல்லது கடமுளது என்பதாய ஞானத்தின் விஷயத்தன்மை வடிவ இலக்கணத்தால் கடத்தின் துணிவு முதலில் அவ்விஷயத் தன்மையின் துணிவுண்டாயி னுண்டாம். அவ்விஷயத் தன்மையின் துணிவு உன்னுலுண்டாவது கடினமேயாம்; ஏனெனின், எக்கடத்தால் யாவரும் ஜலாதியைக் கொண்டுவருகின்றனரோ, அந்த வெளிப்படையாய கடத்தின் வடிவத்தை உன்னுல் நிரூபிக்கமுடியாதபோது அக்கடத்தின்கண்ணே இராநின்ற ஞானத்தின் விஷயத் தன்மையின் வடிவம் உன்னுல் எவ்வண்ணம் நிரூபிக்கமுடியும். மற்றேறு, அவ்விஷயத்தன்மையின் வடிவம் உன்னுல் எஞ்ஞான்றும் துணியப் பெறவேமாட்டாது. துணியப்பெருத விஷயத்தன்மையால் கடத்தின் துணிவைச் செய்வையாயின், துணியப்பெருத வஸ்துவால் துணியபபெருத பொருளைத் துணிதலாம் வடிவ முற்கூறிய தோஷம் உன்னையடையும். ஆகையால், கடமுளதென்னும் ஞானத்தின் விஷயத்தன்மை வடிவ இலக்கணத்தினுலும் கடதின் சித்தி சம்பவியாது.

சங்கை :—அடியும் வயிறும் பெருத்து வாய்குவிந்து இருப்பதுயாதோ அது கடமாம்.

சமாதானம் :—இவ்விலக்கணத்தினுலும் முன்னுள்ள கடத்தின் துணிவுண்டாகமாட்டாது; ஏனெனின், பிருதிவியின்கண் எவ்வளவு கடங்களிருக்கின்றனவோ அவை யாவும் இவ்விலக்கணத்தோடு கூடியனவாம். ஆகையால், முன்னுள்ள கடத்தின் இலக்கணத்திற்கு வேறிடத்துள்ள கடத்தின்கண் அதிவியாப்தியாம்.

சங்கை :—எதிரிலுள்ளது யாதோ அது கடமெனபபடும; அலலது இக்காலத்தே யாதுளதாமோ அது கடமெனபபடும்.

சமாதானம் :—எதிரிலிருப்பதும் இக்காலத்தில் இருப்பதும் ஆய இவ்விரண்டு இலக்கணங்களாலும் கடத்தின் துணிவுண்டாகாது, ஏனெனின், எதிரிலும் இக்காலத்திலும் கடமிருக்கின்றதுபோல அன்னிய படாதி பதார்த்தங்களும் அத்தேசகாலத்தின்கண்ணே இருக்கும். ஆகையால் இக்கடத்தின் இலக்கணத்திற்கு அப்படாதிகளிடத்தே அதிவியாபதியாம். அல்லது ஹே வாதியே! கடமுளது என்பதாய் யாவருங் கூறுகின்றனர்; கடமுளதென நீயும் கடத்தை யறிகின்றாய். அதன்கண் எவ்வேதுவால் இது கடமாம் என்னும் எனது சங்கைக்கு வேறொரு உத்தரத்தை நீ கூறவில்லை; மறறேறு யானறிகின்றிலேன் என்பதாய விடை நீ தருதியா? அல்லது என்மேற் கோபம் செய்துகொள்கின்றனையா? இவ்விரண்டு விடைகட்கு அயலாய்ச் சிறிதுமாத்திரமும் உன்னுல் கடத்தின்வடிவம் நிரூபணமாகாது. சர்வலோகப் பிரசித்தமாயதும் எதிரிலிருப்பதும் ஆய கடத்தின்வடிவ நிரூபணம்செய்வதற்கு, நீ சமர்த்தனுகாதபோது சம்பூர்ணப் பிரபஞ்சத்தின் வடிவத்தைக் கூறுதற்கு நீ எவ்வண்ணம் சமர்த்தனுவாய்; மற்றேறு ஆகாய்; ஆகையால், யானறிகின்றிலேன் என்னும் நினது அனுபவத்தால் துணியப்பெற்ற அஞ்ஞானத்தையே கடத்திற்கும் சர்வப் பிரபஞ்சத்திற்கும் உபாதான காரணமென அங்கீகரிக்கவேண்டும்.

சங்கை:—(மாயாம் து ப்ரக்ருதிம் வித்யாத்) மாயையைப் பகுதியென்றே மதிக்க இதன்பொருள்:—மாயையை உலகின் உபாதான காரணமெனவறிக. இம்மறைப் பிரமாணத்தால் மாயையின்கண் உலகின் காரணத்தன்மை துணியப்பெறுமாதலின், ஊகங்களால் உலகின் காரணத்தன்மை மாயையின்கண் கூறுதல் பயனற்றதாம்.

சமாதானம்:—சுருதிப் பிரமாணத்தின்கண் யாவர்க்குச் சிரத்தையுளதாமோ அவர்கட்குக் கேவலம் சுருதிபபிரமாணத்தினலேயே மாயையின்கண் உலகின் காரணத்தன்மை துணியப்பெறும்; யாவர்க்குச் சுருதிப்பிரமாணத்தின்கண்ணே சிரத்தையின்றோ அவர்கட்கு எனது ஊகங்களாலேயே அஞ்ஞானத்தின் துணிவு பேறுண்டாம். ஆகையால் ஊகங்களால் மாயையின்கண் உலகின் காரணத்தன் மையின் கூற்று பயனற்றதன்றாம். அல்லது இவ்வெல்லா உலகும் சத்தியரூப மாயும் அசத்திய ரூபமாயும் நிரூபிக்க முடியா; ஆகையால், அநிர்வசநீயமாம். அவ்வநிர்வசநீயப பிரபஞ்சத்திற்கு மாயையன்றி வேறெக் காரணமும் சம்பவி யாது; மற்றோ, அநிர்வசநீய மாயையே அநிர்வசநீய உலகின் காரணமாய்ச் சம்ப விக்கும். அவ்வநிர்வசநீய மாயையின் நிரூபணமும் அதன் காரியமாய உலகின் நிரூபணமும் எதனாலும் உண்டாகா; ஏனெனின், உலகின்கண்ணே பிரசித்த மாய இந்திர ஜாலத்தைச செய்யாநின்ற புருஷனுடைய மாயையும், அம்மா யையால் இயற்றிய அநேக பதார்த்தங்களையும் யாவருங் காணுகின்றனர். ஆனல் அதன் வடிவ நிரூபணம்செய்வதில் எவரும் சமர்த்துடையரன்றாம். இலௌகிகமாய இந்திர ஜாலிகனது மாயையும், மாயையின் காரியத்தையும் அறிவதிலெவனும் சமர்த்தனன்றாயின், சர்வ சக்தியோடுகூடிய பரமேச்வரனது மாயையும், மாயையின் காரியப பிரபஞ்சத்தையும் எப்புருஷன் நிரூபணம் செய் வன்; மற்றோ எவனும் நிரூபணம் செய்வதில் சமர்த்தனன்றாம். ஆகையால், மாயையும் மாயையியற்றிய சகல உலகுமு அநிர்வசநீயமாம். அல்லது எப்பொரு ளின் உறபத்தியின்கண் யோக்கிய தேசமுமு யோக்கிய காலமும் காரணமன்றாமோ, அப்பொருள் மாயை இயற்றப்பெற்றதாம். மதுரையின் சமீபத்துள்ள வனத்தின் கண்ணே இரவில் துயிலாநின்ற புருஷன் தனது ஹிருதய தேசத்தின்கண்ணே சூரிய கிரகணத்தோடுகூடிய சமுததிரத்தைக் காண்கின்றனன். ஆண்டு அற்பமாய ஹிருதய தேசத்தின்கண்ணே சமுத்திரத்தின் தோற்றம் யோக்யதையின்றாம். இராக்காலத்தின்கண்ணே சூரிய கிரகணத்தின் தோற்ற யோக்யதை இன்றாமென்றா லும் கனவின்கண்ணே அப்பொருட்களின் பிரதீதியுண்டாகின்றது. ஆகையால், கனப்பொருள் மாயையால் ஆக்கப்பட்டதாம். அங்ஙனமே யோக்ய தேசமும் காலமுமின்றியே சராசரரூபப் பிரபஞ்சத்தை மூடன் காண்பன். ஆகையால் இப் பிரபஞ்சமும் மாயையால் ஆக்கப்பட்டதாம். அல்லது எவருக்குச் சுத்தாத்மாவின் சாக்ஷாத்காரம் உண்டாயிருக்கின்றதோ, அவருக்கு மாயையும் மாயையின் காரிய மும் அசத்தியமாய்ப் புலப்படும். ஆகாசத்தின்கண்ணே இராநின்ற பாம்பினது பாதங்களின் குறிகளைக் குருடன் காண்பன், ஊமையின் மொழியைச் செவிடன் கேட்பன் என்னுமிவை எவ்வண்ணம் அசத்தியமாமோ, அவ்வண்ணம் தத்துவ

ஞானியின் திருஷ்டியின்கண்ணே உலகுமுற்றிலும் அசத்தியமாம். ஆன்மஞான மின்றிய மூடன், யான் உலகை யறிகின்றனன் எனக் கூறுதல் கேவலம் அபி மானத்தினலேயாம; ஜகத்தின் சொரூபத்தை அவன் அறிந்திலன். ஆகையால், மாயாவியாய பரமேஸ்வரனல் சிருஷ்ட்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தை எப்புருஷனும் அறிதல்முடியாது. அல்லது, மாயாவியாய பரமேஸ்வரனல் சிருஷ்ட்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் அஞ்ஞானம தேகதாரிகளாய ஜீவர்கட்குத் தூஷணரூபமன்றும. மற்றே, ஆன்மஞானமின்றிய ஜீவர்கட்குப் பிரபஞ்சத்தின் அஞ்ஞானம் பூஷண ரூபமாம். அஞ்ஞானியானவன் எனக்கு எவ்வஸ்துவின் அஞ்ஞானமுமில்லையாம் எனக் கூறுவா னயின், அக்கூற்றுக் கேவலம் மித்தையேயாம்; ஏனெனின், எத்தூல சரீரத்தின் கண்ணே எப்போதும் ஆன்மபுத்தியுளதோ, அச்சரீர சொரூபத்தை யும் அவிவேகி உண்மையாய் அறிந்திலனயின் பாகியப் பிரபஞ்ச சொரூபத்தை எவ் வண்ணம் அறிவன்; மற்றே அறியான். அல்லது எவ்விந்திரியங்களால் சொர்க்க அடைவின் ஏதுவாய விஹிதகர்மங்களை (யாகாதிகளை)ச் செய்வனே, நரக அடை வின் ஏதுவாய நிஷித்த கர்மங்களைச் செய்வனே, மோக்ஷ ஹேதுவாய நிஷ்காம கர்மங்களைச் செய்வனே, அவ்விந்திரியங்களின் சொரூபத்தையும் இச்சீவன் உண் மையாய் அறிந்திலனயின் பாகியப் பிரபஞ்சத்தை எங்ஙனமறிவன்; மற்றே அறியான். அல்லது, எனக்கு எஞ்ஞான்றும் இன்பத்தின் அடைவுண்டாக வேண்டும்; எனக்குத் துன்பத்தின் அடைவு எக்காலும் உண்டாகலாகாது என் னும் மதியால் இச்சீவன் காரியத்தின்கண்ணே பிரவிருத்தனவன். ஆனல், எனக்கு என்னும் சப்தார்த்தத்தையும் இம்மூடன் அறிந்திலனயின், பாகியப் பிர பஞ்சத்தை எங்ஙனம் அறிவன்; மற்றே அறியான். அல்லது பூர்வ ஜன்மத்தின் கண்ணே எனது சம்பந்திகள் யாவர், இனிமேல் எனது சமபந்திகள் யாவராவர், என்னும் ஞானமும எவனுக்கின்றுமோ, அமமூடன் அன்னிய பாகியபபிரபஞ் சத்தை யெங்ஙனமறிவன்; மற்றே அறியான். அல்லது பாலிய அவஸ்தையின் கண்ணும் யவ்வனவஸ்தையின்கண்ணும் எந்தெந்தப்பொருள்களை இப்புருஷன் அனுபவிப்பனே, அந்தந்தப்பொருள்களின் நினைவும் சரியாய் இவனுக்குண்டாவ தின்றும். வரும் பதார்த்தங்களையும இவன் சரியாயறியான் என்னின் சகலப் பிரபஞ்சத்தையும் எங்ஙனம் அறிவன்; மற்றே அறியான். ஆகையால், எப்புரு ஷனுக்கும் பிரபஞ்சத்தின் உண்மையாய பிரத்தியக்ஷமின்றும். அல்லது, உலகின் கண்ணும் எந்தெந்தப்பொருள் இந்திரிய ஜன்னிய ஞான விஷயமன்றுமோ, அந் தந்தப்பொருள்களின் ஞானத்தின்கண்ணே சப்தத்தையே பிரமாணமாய்க் கண் டோம். கழிந்த ஒவ்வொரு வியவகாரமும் தனது குல ஆசார முதலியனவும், இந்திரிய ஜன்னிய ஞானவிஷயங்களன்றும்; மற்றே, தாய் தந்தையாதி பெரி யோர் வசனவடிவ சப்தப் பிரமாணத்தால் அக்குல ஆசாராதிகளின் ஞானம் மைந்தர்கட்கு உண்டாம். அங்ஙனமே, முற்கூறிய வகையே கடாதிப் பிரபஞ்ச சொரூபமும் எவ்விந்திரியத்தானும் நிர்ணயமாகாது. ஆகையால் பிரபஞ்சமும் இந்திரியத்திற்கு விஷயமாகாது அவ்வதீந்திரிய பிரபஞ்ச சித்தியின்கண்ணும் திருஷ்டி சிருஷ்டி வாதத்தையுணர்த்துவதாய சப்தமே பிரமாணமாம்.

சங்கை :—தாய் தந்தையராதி பெரியோர் குலாசாராதி தர்மங்களைக் கூறு நிற்பர். அங்ஙனம் தரிசனகாலத்தில் பதார்த்தங்களின் உற்பத்தியும், அதரிசன காலத்தின்கண் பதார்த்தங்களின் இலயமும் உண்டாமெனத் தாய் தந்தையராதி பெரியோர் கூறுவதின்றும. ஆகையால், சப்தப் பிரமாணத்தினாலும் திருஷ்டி சிருஷ்டி வாதசித்தி சம்பவியாது.

சமாதானம் :—தாய் தந்தையராதியர் தம் வசனத்தால் திருஷ்டி சிருஷ்டி வாதத்தின் சித்தியுண்டாகாதொழிக, ஆனால் அவ்வியாவருக்கும் குருவாய ஸ்ரீ வேதபகவானானவர் திருஷ்டி சிருஷ்டி வாதத்தைக் கூறுநிற்பர். ஆகையால், சுருதிப் பிரமாணத்தினாலேயே திருஷ்டி சிருஷ்டி வாதத்தின் சித்தியுண்டாம். அல்லது, எந்தமனுமுதலிய பெரியோர் தம் வசனத்தை எல்லா உலகரும் பிர மாணரூபமாய் அங்கீகரித்துளாரோ, அந்தமனுமுதலிய பெரியோரும் நம்மனோ ரைப்போன்றே வேதவசனத்தினாலேயே ஆன்மஞானத்தை யடைந்துளார்.

சங்கை :—அவ்வேத பகவான் எவருடைய வசனத்தால் ஞானத்தை யடைவர்.

சமாதானம் :—அவ்வேத பகவானும் வேத வசனங்களாலேயே ஞானத்தை யடைவர். வேறொருவர் மொழியால் வேத புருஷனுக்கு ஞானமுண்டாகாது; ஏனெனின், வேத புருஷனுடைய சரீரமாய சப்தரூப வேதமானது பாரதாதி களைபபோலப் பௌருஷேயமன்றும மறறோ அபௌருஷேயமாம் ஆண்டு பூர்வ கற்பத்தின்கண்ணே வர்ணங்கடகும, சுலோகங்கட்கும், கதைப பிரசங்கங்கட்கும் எவ்வெத் தொடர்புளதாமோ, அவ்வத் தொடர்பினின்றும் சிறிது விலக்ஷணமும் சிறிது சமானமுமுள்ள தொடர்பு எதற்கு மறு கறபத்தின்கண்ணே யுளதாமோ அதனைப் பௌருஷேயமென்பர். மகா பாரதாதிகள் அத்தகையனவாம். ஏனெ னின், முற்கறபத்தில் மகா பாரதத்தை ஸ்ரீ வியாசபகவான் எங்ஙனம் கூறி னரோ, அங்ஙனமே மகா பாரதத்தை பிற்கற்பத்திற் கூறவில்லை; மற்றோ முன்னி னும் சிறிது விலக்ஷணமாயே கூறினர். ஆகையால, மகா பாரதாதிகள் பௌரு ஷேயங்களாம. வேதத்தின்கண்ணேயோ இது நியமமாம். முறகறபத்தில் பர மேஶ்வரனால் எவ்வண்ணம வேதங்களுண்டாயினவோ, பிற்கற்பத்தின்கண் ணும் அவ்வண்ணம் வேதங்கள் பரமேஶ்வரனிடத்திருந்து உண்டாம. சிறிதுமாத்திர மும் முன்பின் வேதத்தின்கண் விலக்ஷணத்தன்மை யுண்டாகாது. ஆகையால், வேதம் அபௌருஷேயமாம். அலலது நம்மனோரது மொழியில் அன்னிய பிரமா ணத்தின் அபேக்ஷையுண்டாம். அன்னிய பிரமாணத்தின் ஸகாயத்தினாலன்றி நம்ம னோரது வசனம் எபபொருளையும் சித்தம் செய்யமாட்டாததுபோல, ஸ்ரீ வேதபக வானுக்குத் தனது ஞானத்தின்பொருட்டும் பிரமாணத்தின்பொருட்டும வேறெப் பிரமாணத்தின் அபேக்ஷயுமின்றும். ஆகையால், ஸ்ரீ வேதபகவான் நம்மனோ ருக்கு எங்ஙனம் ஆணையிடுவரோ அங்ஙனம் அவ்வாணையைச் சிரத்தையோடுகூட அவசியம யாம் அங்கீகரித்தல்வேண்டும்; மகாராஜாவின் ஆணையைச் சிரத்தை யோடும் பிரஜைகள் அங்கீகரிப்பதுபோல, அந்த வேதபகவான் சுழுப்தி யவஸ்தை யின்கண்ணும் மரணாவஸ்தையின்கண்ணும் பிராணனிடத்தே சம்பூர்ண வாக்காதி

இந்திரியங்களின் இலயத்தை யுணர்த்தும். நனவவஸ்தையின்கண்ணும் ஜன்ம காலத்தின்கண்ணும் அந்தப் பிராணனினின்றே வாக்காதி இந்திரியங்களின் உற்பத்தி கூறப்பட்டுளது. இவ்வகையாய ஸ்ரீ வேதபகவானுடைய ஆணையை அவசியம் நம்மனோர் அங்கீகரிக்கவேண்டும். அல்லது, அந்த ஸ்ரீ வேதபகவான் தாய் தந்தையரைப் பார்க்கினும் அதிசுகிருதராம். ஆகையால், மாயாமய அநிர்வசநீயப் பிரபஞ்சத்தின்கண் இராநின்ற ஜீவர்களாய நம்மனோர்மீது கருணைசெய்து, எவ்வெவ் வசனங்கள் உபதேசிக்கப் பெற்றுளவோ அவ்வியாவும் நம்மனோர்க்கு மோக்ஷ சாதனங்களாம். அல்லது, சூரியனுடைய எதிரிலிராநின்ற நேத்திரமானது சூரியனுடைய தேஜஸால் மங்கிப்போய்விடும். அங்ஙனம் ஸ்ரீ வேதபகவானுடைய ஞானம் எவ்வஸ்துவாலும் மங்கவேமாட்டாது. மற்றோ சர்வ வஸ்துக்களையும் விஷயஞ்செய்யும்; ஆகையால், ஸ்ரீ வேதபகவானுக்கு எவ்வஸ்துவின் அஞ்ஞானமுமின்றாம். இக்காரணத்தினாலேயே பிரமம், பிரமாதம், விப்ரலிப்சை முதலிய தோஷங்கள் ஸ்ரீ வேதபகவானிடத்தின்றாம். (வசனிக்கு மிசசையை விப்ரலிப்சையென்பர்). அல்லது வேதம் என்னும் சப்தத்தின் அர்த்தவிசாரம் செயினும் ஆவரணமற்ற ஞான வடிவத்தன்மையே வேதத்திற்குச் சித்திக்கும்; யாது ஞானவடிவமாமோ, அது ஜடமும் பரிச்சின்னரூபமுமன்றாம். இது முதல் அத்தியாயத்தின்கண்ணே கூறினோம். ஆகையால், பரிபூரண சைதன்யவடிவ பிராண உபஹித பரமான்மாவே வேதவடிவமாம். இக்காரணத்தினாலேயே வேதத்தைச் சப்தப் பிரஹ்மமென்பதாம. இத்தகைய பிரஹ்மரூப ஸ்ரீ வேதபகவானை நோக்கி நீர் இவ்வசனத்தை யாதின்பொருட்டுக் கூறினீர் என வினவ எச்சீவனும் சமர்த்துடையனன்றாம். நேத்திரமின்றிய குருட்டுக் குமரன் விழியுடைப் பிதாவை நோக்கி நீலாதி ரூபஞானத்தின்கண் வினவக்கூடியவனாகான். ஆகையால், ஸ்ரீ வேதபகவான் கூறிய பொருளை நிச்சயிப்பதில் எவ்வகையாய் நம்மனோர் மதி சமர்த்துடையதாமோ, அவ்வகையாய முயற்சி நாம செய்வது தகுதியாம். அல்லது, தர்மான்மாவா யிராநின்ற அரசன் வசனத்தைப் பிரஜை பரித்தியாகம் செய்யாததுபோலும், தாய் தந்தையரின் வசனத்தை நன்மைந்தன் பரித்தியாகம் செய்யாததுபோலும, மற்றோ சிரத்தையோடும் அவ்வசனங்களைக் கவர்வதுபோலும், ஸ்ரீ வேதபகவானுடைய வசனத்தையும சுரோதா (கேட்கும்) புருஷன் ஒருக்காலும் பரித்தியாகம் செய்யலாகாது. மற்றோ சிரத்தையோடும் வேதவசனத்தை யவசியம் அங்கீகரிக்கவேண்டும். அவ்வேத வசனத்தால் இப்பொருள் துணியப்பெறும் :—சுழுப்தி யவஸ்தையின்கண்ணே விஷயசகித சம்பூர்ண வாக்காதி இந்திரியங்கள் பிராணனிடத்தே இலயத்தையடையும். நனவவஸ்தையின்கண் அந்தப் பிராணனிடத்தினின்றே வாக்காதி இந்திரியங்கள் உற்பன்னமாம். அல்லது, சுழுப்தி யவஸ்தையின்கண் சம்பூர்ண வாக்காதி இந்திரியங்கள் பிராணனிடத்தே இலயத்தையடையும். அதுபோல மரணவஸ்தையின்கண்ணும் சம்பூர்ண வாக்காதி இந்திரியங்கள் பிராணனிடத்தே இலயத்தையடையும். நனவவஸ்தையின்கண்ணே சம்பூர்ண வாக்காதி இந்திரியங்கள் அந்தப் பிராணனினின்றும் உண்டாவதுபோல, ஜன்ம அவஸ்தையின்கண்ணும் சம்பூர்ண வாக்காதி இந்திரியங்கள் அந்தப் பிராணனினின்று முண்டாமெனத் துணியப்பெறுமன்றோ.

அல்லது தேகத்தில் பிராணன் இருப்பின் வாக்காதி இந்திரியங்களின் இருப் புண்டாம். லோகாந்தரத்தின்கண்ணே பிராணன் சென்றால் வாக்காதி இந்திரி யங்களும் ஆண்டுசெல்லும் என்பதாய அன்வயவியதிரேக நிச்சயமே பிராண வடிவ பரமான்மாவின் துணிவாம். அன்வயவியதிரேக நிச்சயமானது பிராணனது துணிவின் சாதனமாம். ஆகையால், சாதனத்தைத் துணிவு வடிவாய்க் கூறல் சம்பவியாது என்றாலும் பூமியின்கண்ணே யிராநின்ற தனத்தின் சித்தியானது, அஞ்ஜன (மை) வடிவ சாதனத்தாலுண்டாம். ஆகையால், அவ்வஞ்ஜன ரூப சாதனத்தையும் உலகின்கண்ணே சித்தியென்பர்; அதுபோல மரணவஸ்தை யின்கண் அன்வயவியதிரேக நிச்சயத்தாலே பிராணவடிவ ஆன்மாவின் சித்தி யுண்டாம். ஆகையால், அவ்வன்வயவியதிரேக சாதனத்தைச் சித்திவடிவமாய்க் கூறப்பெற்றுளது.

இப்போது மரணவஸ்தையின்கண் இந்திரியங்களின் இலயத்தை வெளிப் படையாய்க் காண்பிப்பாம்:—மரணவஸ்தையின்கண் இப்புருஷன் நானுவகை யாய நோய்களால் அத்தியந்தம் துக்கத்தை யடைவன்; அத்துக்கத்தால் மூர்ச் சையையடைவன்; ஆற்றலற்றவனுவன். ஆகையால், அம்மரணவஸ்தையின்கண் இப்புருஷன் சிறிதுமாத்திரமும் சப்த உச்சாரணத்தின்கண் ஆற்றலற்றவனுவன். இவ்வகையாய அவனது தீன அவஸ்தையைக்கண்டு ஸ்திரீ புத்திராதி சர்வ பந் துக்களும் அதிதுக்கத்தையடைவர். அந்தப்புருஷனுடைய சமீபத்திலிருந்துக் கொண்டு இவ்வண்ணம் வினவுவர்:—ஹே தந்தையே! பிரியமாய மைந்தனை என்னை நீ யறிகின்றனையா? ஹே நாயகனே! பிரியமாய மனைவியான என்னை நீ யறிகின்றனையா? ஹே அண்ணு! நன்மித்திரனைய என்னை நீ யறிகின்றனையா? இவ்வண்ணம் ஸ்திரீ புத்திராதி பந்துக்களால் கேட்கப்பெறினும், அப்புருஷன் காஷ்டத்தைப்போல ஒன்றுமறியாதிருப்பின், அவ்வெல்லா உறவினரும் இங்ஙனங் கூறுவர்:—இவனுக்கு எவ்வஸ்துவின் ஞானமும் இப்போதில்லையாம், ஞானமிருப் பின் பிரியமித்திரனைய எனது வசனத்தை முன்போல இவன் கேட்பானன்றே! முன்போல என் முகத்தை நோக்குவனன்றே! என்னோடு சிறிதேனும் வச னிப்பனன்றே! இப்புருஷன் முன்ஜீவித அவஸ்தையிற்போல இப்போது என்னை நோக்குகின்றானில்லை, பேசுகின்றானுமில்லை, ஆகையால் இப்போது இவனிடத்து உணர்வின்றெனை அறிந்துகொள்ளலாம் என இவ்வண்ணம் சர்வ பந்து ஜனங்களுங் கூறாநிற்பர்.

ஆகையால் அம்மரணவஸ்தையின்கண் வாக்காதி சகல இந்திரியங்களும் தத்த விஷயங்களோடு பிராணனிடத்தே இலயத்தையடையும். சுழுப்தியின்பின்னர் இப்புருஷன் நனவையடைவன்; அங்ஙனமே மரணத்தின்பின் இஜ்ஜீவன் ஜன் மத்தை யடைவனுயின் விஷயங்களோடுகூடிய சம்பூர்ண வாக்காதி இந்திரியங்கள் மீண்டும் அந்தப் பிராணனினின்றும் உற்பன்னமாம்.

சங்கை :—ஜீவித அவஸ்தையின்கண் இஜ்ஜீவனுக்கு வாக்காதி இந்திரியங்கள் போகங்களை அடைவிக்கும்தன்மைபோல மரணகாலத்தின்கண்ணும் வாக்காதி இந்திரியங்கள் போகங்களை யேனடைவிக்கவில்லை.

சமாதானம் :—முன்னர் ஜீவித அவஸ்தையின்கண் எவ்வாக்காதி இந்திரியங்கள் தாசரைப்போல இஜ்ஜீவனுக்குப் போகங்களை யடைவித்தனவோ, அவ்வாக்காதி இந்திரியங்களே மரணாவஸ்தையின்கண் இஜ்ஜீவனது ஆற்றலின்மையைக் கண்டு அவனைப் பரித்தியாகம் செய்யும். கருத்திதுவாம் :—மரணாவஸ்தையின்கண் அவ்வாக்காதி இந்திரியங்கள் தத்தம் விஷயங்களினின்றும் உபராமத்தை யடைந்து இஜ்ஜீவனுக்குப் போகங்களை யடைவிக்கமாட்டாது; இதுவே வாக்காதி இந்திரியங்களின் பரித்தியாகமாம். அசமர்த்த அரசனைப் பிரஜைகள் பரித்தியாகம் செய்வதுபோலும், தனத்தை யடைவுறாத நல்வீரன் யுத்தமத்திய காலத்தில் தனது சுவாமியைப் பரித்தியாகம் செய்வதுபோலும், மரணாவஸ்தையின்கண் வாக்காதி இந்திரியங்களும் ஜீவனாலாற்றும ஆன்ம அபிமானரூப தனத்தைப் பெறுதவையாய் இஜ்ஜீவனைப் பரித்தியாகம்செய்யும்.

சங்கை:—மரணாவஸ்தையின்கண் வாக்காதி இந்திரியங்களின்றியே வேறொரு காரணத்தாலே நாமாதி வியவகாரம் ஏனுண்டாகாது.

சமாதானம் :—அன்னியத்தாற் சாதிக்கபெற்ற வியவகாரமானது அதனினும் வேறாய எதனானும் சித்தியாது. எக்கிராமத்தைச சமபூர்ண வைசியர் பரித்தியாகம்செய்து செல்வரோ, அககிராமத்தில் வைசியராற் சாதிக்கத்தகக வியாபாராதி காரியங்கள் வேறு சில பிராஹ்மணாதிகளால் ஆகாததுபோல வாக்காதி இந்திரியங்கள் பரித்தியாகமாயின் இபபுருஷனிடத்தே வாககாதி இநதிரியங்களாலாக்கப்பெறும் நாமாதி வியவகாரம அன்னிய எககாரணத்தாலும உற்பன்னமாகாது.

சங்கை :—மரணாவஸ்தையின்கண் இப்புருஷனைப பரித்தியாகம் செய்துவிட்டு வாக்காதி இந்திரியங்கள் யாண்டேகும்.

சமாதானம் :—மகாராஜாவின் ஜயரூப காரியத்தைச் செய்யும்பொருட்டுப் போரின்கண்ணுற்ற அற்ப தேசாதிபதியாய அரசன் பகைவரால் நாசமடைவனாயின் அவனுடைய நல்வீரன் அன்னிய அரசனை ஆசிரயம் செய்ய இசசிப்பன். ஆனால், அந்நல்வீரன் தனது சுவாமிக்கு அத்தியந்தம் பக்தனாதலின் அன்னிய எவ்வரசனையும் ஆசிரயம் செய்யான்; மற்றோ தனது சுவாமிக்கும் சுவாமியாய மகாராஜாவையே ஆசிரயிப்பன், அதுபோல ஜீவித அவஸ்தையின்கண் விஷயங்களும் தேவதைகளோடுற்ற வாக்காதி இநதிரியங்களும் யானெனதென்னும் அபிமானியாய ஜீவனது ஆசிரிதங்களாம். மரணாவஸ்தையின்கண் அஜ்ஜீவன் மூர்ச்சிதனாதலைக் கண்டு அவ்வாக்காதி இந்திரியங்கள் யாவற்றிற்கு மதிபதியாய பிராணனை ஆசிரயிக்கும். ஆதலின், பிராணனிருப்பின் வாக்காதிகட்குத் தேகத்தின்கண் இருப்பும், பிராணனின்றேல் வாக்காதிகட்கு இன்மையும் ஆமென்னும் அன்வய வியதிரேகங்களால் பிராணனிடத்தேயே வாக்காதி யாவற்றின் இலயமும் பிராண

னினின்றே அவற்றின் உதயமும் துணியப்பெறுமாதலின், பிராணனின் வேறாய்ச் சிறிதுமாத்திரமும் ஒருபொருளும் இன்றாமெனச் சித்தமாயதென்றுணர்க.

அல்லது, ஜீவித அவஸ்தையின்கண் பிராணனிருப்பதால் பிரஞ்ஞையுமிருக்கின்றது, மரணகாலத்திலோ பிராணன் செல்வதால் பிரஞ்ஞையும் இல்லாது; ஆகையால், பிராணப் பிரஞ்ஞைகட்கு அபேதமுளதென யாது முன்னர் கூறினோமோ அது தோஷமறத் துணியப்பெற்றதென்க. ஏனெனின், பிராணனற்ற புருஷனிடத்தே பிரஞ்ஞையையும் கண்டிலேமன்றோ! கருத்திதுவாம்:—எக்கால் புருஷனது பிராணன் புறம்போந்து செல்லாநிற்குமோ, அக்கால் அப்புருஷனது உறவினர் இப்போதிப்புருஷனிடத்தே ஞானமின்றாமெனக் கூறாநிற்பர்; இவ்வுலக வியவகாரத்தானும் பிராணப் பிரஞ்ஞைகட்கு அபேதமே துணியப்பெறும்.

அல்லது, பிராணரூபமாயும் பிரஞ்ஞை வடிவமாயும் இராநின்ற என்னை நீயறியென்பதாய இந்திர வசனத்தின்கண் எங்ஙனம் பிராண சப்தத்தின் அர்த்தம் சுவாசமாத்திரமன்றோ, மற்றோ பரமான்மாவே பிராண சப்தத்தின் அருத்தமாமோ, அங்ஙனம் பிரஞ்ஞா சப்தத்தின் அருத்தமும் கேவலம் புத்தி மாத்திரமன்றாம; மற்றோ சுயம்பிரகாச சைதன்யமே பிரஞ்ஞா சப்தத்தின் பொருளாம்.

ஆண்டுப் பிராணனது அத்விதீய ரூபத்தன்மையை முன்னர் கூறினோம்; இப்போது பிரஞ்ஞையின் அத்விதீய ரூபத்தன்மையைக் காண்பிப்பாம:—இந்திரன் கூறல், ஹே பிரதாத்தன! பிரஞ்ஞை யென்னும பதத்தின் பொருளாய சம்வித்தா (உணர்வா) னது உண்மையினொன்றா மென்றாலும் உபாதியின் சம்பந்தத்தால ஒரே சம்விததானது நானாவடிவமாய்த் தோறறும, அவ்வகையை உன் பொருட்டு யான் கூறுகின்றேன் கேள்! அவ்வண்ணமே நானாவடிவை யடைவுற்ற சம்விததானது எவ்வகையாய் மீண்டு மேகபாவத்தை யடைவுறுமோ, அவ்வகையையும் யான் நின்பொருட்டு கூறுகின்றேன், நீ ஏகாக்கிரமனத்தனாய்க் கேட்பாயாக. வாககு முதலிய ஐநது கர்மேந்திரியங்கள், சுரோத்திராதி ஐந்து ஞானேநதிரியங்கள், சரீரம், அந்தக்கரணம், என்னும பன்னிரு கரணங்களும் தத்தம் விஷயங்களோடு கூடியதாய்ப பிரஞ்ஞைவடிவ சம்வித்தைப் பேதிப்பிக்கும். அவற்றுள் சப்தத்தின் உச்சாரணம் வாக்கிநதிரியத்தின் விஷயமாம், வஸ்து வைக்கவர்தல் ஹஸ்தம் (கை) என்னும் இந்திரியத்தின் விஷயமாம; செல்வது பாத இநதிரியததின் விஷயமாம; மலம்பரித்தியாகம் பாயுரு இநதிரியத்தின் விஷயமாம், ஆநந்தம் உபஸ்த இந்திரியத்தின் விஷயமாம். இக்கர்மேந்திரியங்களின் பஞ்ச விஷயங்களும் பஞ்ச கர்மேந்திரியங்களும பிரஞ்ஞையின் பேதத்தை யுற்பன்னம் செய்யும்.

சப்தம் சிரவணேந்திரியத்தின் விஷயமாம; ஸ்பரிசம் துவக்கிநதிரியத்தின் விஷயமாம்; ரூபம சக்ஷு இந்திரியத்தின் விஷயமாம்; இரசம் இரசன இந்திரியத்தின் விஷயமாம்; கந்தம் கிராண இந்திரியத்தின் விஷயமாம்; இச்சப்தாதிகள் பஞ்ச ஞானேந்திரிய விஷயங்களாம். சுகதுக்கம் இரண்டும் சரீரத்

தின் விஷயமாம். இச்சை சங்கற்பம் முதலியன அந்தக்கரணத்தின் விஷயமாம். இங்ஙனம் முற்கூறிய வாக்காதிய பன்னிரு காணங்களும் தத்தம் விஷயங்களோடு கூடியனவாய்ப் பிரஞ்ஞையின் விபாகத்தைச் செய்யும். பத்துக் கோபாலர் தமது பிரயோஜனம் சித்திக்கும்பொருட்டு ஒரே கோவைக் கறப்பதுபோல கருத்திதுவாம் :—அந்தக் கோவினின்றும் பாலைத் தனிப்படுத்துவர் வாக்காதிய பன்னிரு காணங்களும் ஒரே பிரஞ்ஞைவடிவ கோவைக் கறக்கும். சிதாபாச ரூபப் பிரஞ்ஞையின் பாகங்களைத் தனிப்படுத்திக்கொள்ளும் என்பது கருத்தாம். இவ்வண்ணம் அந்த ஒரே பிரஞ்ஞை உபாதியின் வயத்தால் அநேகந் தன்மையை யடையாநிற்கும். ஒரே அக்கினியின் சிகையைப் பன்னிரு காஷ்டவடிவ உபாதியின் வயத்தாற் பன்னிருவகையாய் உலகர் கூறுவதுபோல் வாக்காதி இந்திரியங்களின் பேதத்தால் ஒரே பிரஞ்ஞையை வேறு வேறாய் யாம் கூறுகின்றோம். பன்னிரு தீபங்களால் கிருகாதி தேசத்தின்கண் பன்னிரு வகையாய பிரகாசங்கள் உற்பன்னமாவதுபோல வாக்காதிய பன்னிரு காணங்களால் ஒரே போதம் விஷயங்களிடத்தே பன்னிருவகையாய் உற்பன்னமாம். ஒரே பிரஞ்ஞையின் எவ்வெப்பாகத்தை எவ்விந்திரியம் பின்னப்படுத்துகின்றதோ அவ்வப பிரஞ்ஞையின் பாகம் அவ்வவ்விந்திரிய விஷயத்தை யொளிர்விக்கும் என்பது கருத்தாம். இக்காரணத்தினாலே சக்ஷு இந்திரியத்தாற் ஜனித்த அந்தக்கரண விர்த்தியின்கண் இராநின்ற சிதாபாச வடிவப் பிரஞ்ஞையின் பாகமானது சக்ஷு இந்திரியத்திற்கு விஷயமாய ரூபாதிகளையே யொளிர்விக்கும்; இரசாதிகளை யொளிர்வியாது. இவ்வண்ணம் அன்னிய இந்திரியங்களிடத்தும் அறிந்துகொள்க.

அல்லது முற்கூறிய வாக்காதிய பன்னிரு காணங்களும் பிரஞ்ஞையோடுகூடத் தாதாத்மிய பாவத்தையடைந்தே தமது நாமாதி விஷயங்களையடையும். பிரஞ்ஞையின் தாதான்மியமின்றி எவ்விந்திரியமும் தமது விஷயத்தை யடைவுறாது. கருத்திதுவாம் :—வாக்காதி இந்திரியங்களின்றி நாமாதி விஷயங்களின் சித்தியுண்டாகாது; ஆகையால், நாமாதி விஷயங்கள் வாக்காதி இந்திரியங்களின் சொரூபமாம். அங்ஙனமே பிரஞ்ஞையின்றி வாக்காதி இந்திரியங்களின் சித்தியுமுண்டாகாது. ஆகையால், வாக்காதி இந்திரியங்களும் பிரஞ்ஞைவடிவமாம் பிரஞ்ஞையின் வேறாய் வாக்காதிகளில்லையாம். இவ்வாற்றால் பிரஞ்ஞைக்கு அத்விதீய ரூபத்தன்மையே சித்தமாம்.

சங்கை :—வாக்காதி இந்திரியங்கள் பிரஞ்ஞையின் அபேக்ஷையின்றியே தமது விஷயங்களை ஏன் ஒளிர்வியா?

சமாதானம் :—வாக்காதிய பன்னிரு காணங்களும் பிரஞ்ஞையின் வலுவினாலேயே தத்தம் விஷயங்களை அறியும். பிரஞ்ஞையின்றித் தமது வலுவால் எவ்வஸ்துவையும் வாக்காதிகள் அறியமுடியா.

இப்பொருளையே லௌகிக அநுபவத்தால் இப்போது வெளியிடுவாம் :—எவன் மனம் சாவதானமின்றாமோ, அவனை நோக்கி அயலானொருவன் ஏதாவது கூறின், அப்போதவன் எனது மனம் நினது மொழியின்கண் இல்லையாதலின்,

யானினது வசனத்தை யறிந்திலன்; நீ பின்னும் அதனைக் கூறுதியெனக் கூறுவன். இவ்வண்ணம் நேத்திரத்தால் ரூபத்தைக் காணினும் தேகத்தால் சுகதுக்கத்தை யனுபவிக்கினும் மனச்சாவதானமின்றியவன் சிறிதுமாத்திரத்தையும் அறியான். வாக்காதி இந்திரியங்கட்குத் தத்தம் விஷயங்களோடு சம்பந்தமிருப்பினும் பிரஞ்ஞையின்றி எவ்விஷயப் பிரகாசமுமாகாதென்பது கருத்தாம். அல்லது, வாக்கிந்திரிய முதலாய பன்னிரு காரணங்களும் அவற்றின் நாமாதி பன்னிரு விஷயங்களும் பிரஞ்ஞையின்றி ஒருபோதும் பிரதீதியாகா. மண்ணின்றிக் கடசராவாதி விகாரங்கள் பிரதீதியாகாமைபோல. ஆகையால், இது துணியப்பெற்றதாம். எவ்வஸ்து யிருப்பின் எவ்வஸ்துப் புலப்படாநிற்குமோ, எவ்வஸ்து யில்லாவிடின் எவ்வஸ்து புலப்படாதோ அவ்வஸ்து அவ்வஸ்துவினின்றும் வேறன்றாம். மண்ணிருப்பின் கடத்தின் பிரதீதியாம், மண்ணில்லாவிடின் கடத்தின் பிரதீதியுண்டாகாது. ஆகையால், கடாதிகள் மண்ணினின்றும் வேறன்றாம்; மற்றோ மண்ணினின்றும் கடாதிகள் அபின்னமாம். அங்ஙனம், வாக்காதி துவாதச காரணங்களும், நாமாதி துவாதச விஷயங்களும் பிரஞ்ஞையிருப்பின் பிரதீதியாம். பிரஞ்ஞையின்றேற் பிரதீதியாகா. ஆகையால், அவ்வாக்காதிகள் யாவும் பிரஞ்ஞையின் வடிவாம்; அவற்றிற்குப பிரஞ்ஞையினின்றும் சிறிதுமாத்திரமும் வேற்றுமையின்றாம; ஆகையால் அநதப பிரஞ்ஞை ஏகரூபமாம்; பிராணனினின்றும் அபின்னமாம் எனத் துணியபபெற்றது. பிரதர்த்தனன் கூறல்:—ஹே பகவன்! கூறிய முறையே பிரஞ்ஞைக்குச் சர்வ ரூபத்தன்மையுண்டாயின் வாக்காதி இந்திரியங்களும் பிரஞ்ஞையின் சொரூபமேயாம். ஆகையால் பிரஞ்ஞையின்கண் ஆன்மபுத்தி செய்யுமபடி தாங்கள் உபதேசித்தீர்கள். அதுபோல வாக்காதிய இந்திரியங்களிடத்தே ஆன்மபுத்தி செய்வதில் யாது தோஷம்; இந்திரன் கூறல்? ஹே பிரதர்த்தன! வாக்காதிகட்குப் பிரஞ்ஞைவடிவத் தன்மையிருப்பினும் வாக்காதிகட்குச சர்வ ரூபத்தன்மையின்றாம். ஆகையால், அவறறின்கண்ணே ஆன்மபுத்திசெய்தல் சம்பவியாது. பிரஞ்ஞையினிடத்தும் பிராணனிடத்தும் முற்கூறிய முறையே சர்வரூபத்தன்மை யுளதாதலின், பிராணனிடத்தும் பிரஞ்ஞையினிடத்துமே ஆன்மபுத்தி செய்தல் யோக்கியமாம். ஆகையால், ஹே பிரதர்த்தன! வாக்காதிகட்குப் பிரஞ்ஞை வடிவத்தன்மை யுளதாதலின், அவற்றின்கண்ணும் ஆன்மபுத்திசெய்தல் யோக்கியமாம் என்னும் ஐயத்தை விட்டொழித்து, பிராணப் பிரஞ்ஞைவடிவமாயுள்ள இந்திரனை என்னை நீ நிச்சயம் செய்தி. யான் வாக்கிந்திரியத்தால் உனக்குபதேசம் செய்தபோதிலும் உண்மையாய் வாக்கிந்திரியம் அற்றவனுயிருக்கின்றேன். வாக்காதிகளாற் சிறபபுற்ற ஆன்மா: வக்தா, சுரோதா, திருஷ்டா என்பன முதலவாய நாமங்களை யடையாநிற்கும். ஒரே பிராஹ்மணன் அடுதற்றொழிலால் அடுவானென்னும் பெயரையடையா நிற்பன், பாடல்தொழிலாற் பாடகன் என்னும் பெயரை யடையாநிற்பன். அதுபோல் ஒரே அத்விதீய ஆன்மா வாக்காதிகளாற் சிறப்புற்றதாய் வக்தாமுதலிய பெயர்களைப் பெறும். அவ்வாக்காதி காரணங்களைப் பரித்தியாகம்செய்து எஞ்சிநிற்பதாய பிராணப்பிரஞ்

ஞைவடிவ ஆன்மாவை நீ நிச்சயம் செய்தி. அவ்வான்மாவானது, தத்தம் வியா பாரங்களோடுகூடிய வாக்கு முதலிய காணங்களை யொளிர்விப்பதாம்.

சங்கை:—ஹே பகவன்! பிராணனையும் பிரஞைஞையையும் முன்னர்த் தாங்கள் அத்விதிய ரூபமெனக் கூறினீர்கள்; அவை வாக்குமுதலிய யாவற்றையும் ஒளிர் விப்பனவெனப புகன்றீர்கள். அவை சமபவியா; ஏனெனின், உலகின்கண்ணே யொளிரும கடாதிகட்கும், ஒளிர்விப்பனவாய தீபாதிகட்கும் பரஸ்பரம் பேதமே கண்டனம்.

சமாதானம்:—வாக்கு முதலிய பன்னிரு காணங்களும, நாமாதி பன்னிரு விஷயங்களும், பரஸ்பரம் அபேக்ஷை யுடையனவேயாம் ஆதலின் அவ்விரண்டிற் கும் பரஸ்பரம் பேதம் சித்தமாவதில்லையாம். அவ்விரண்டிற்கும் பரஸ்பரம் பேத நிரூபணங் கூடாதாயின், அதிஷ்டானவடிவப் பிராணப்பிரஞைஞைகளோடு அவ் வாக்காதிகளின் பேதத்தை எவ்வகையால் நிரூபித்தல்முடியும். இரஜ்ஜுவினின் றுங் கற்பித சர்ப்பம் பின்னமாகாததுபோலப பிராணப பிரஞைஞைவடிவ ஆன்மா வாய என்னினின்றும், கற்பித வாக்காதிகளும் பின்னமாகமாட்டா என்பது கருத்தாம்.

இப்போது வாக்கு முதலிய காணங்களிடத்தும் நாமாதி விஷயங்களிடத்தும் பரஸ்பரமுள்ள சாபேக்ஷைத் தன்மையைக் காண்பிப்பாம்:—பூதமாத்திரங்களாம் நாமம் எவைகட்கோ அந்நாமாதி துவாதச விஷயங்கள், அவ்வாக்காதிய பன் னிரு காணங்களை ஆசிரயித்தே சித்தமாம்; வாக்காதிகளாலன்றி நாமாதி களின் சித்தியுண்டாகாது. இவ்வண்ணம், பிரஞைஞை மாத்திரமாம் நாமம் எவை கட்கோ அத்தகைய வாக்காதி துவாதச காணங்களும், நாமாதி விஷயங்களை ஆசிரயித்தே சித்தமாம; நாமாதி விஷயங்களாலன்றி வாக்காதி காணங்களின் சித்தியுண்டாகாது; ஏனெனின், கேவலம் வாக்காதிய காணஙகளையே யுடன் பட்டு நாமாதி விஷயங்களை யுடன்படாவிடின், வாக்காதிகளிடத்தே காணத்தன் மையே இருககமாட்டாது. ஏனெனின், வாககாதிகளிடத்தேயுள்ள காணத் தன்மைத் தர்மம் நாமாதி விஷயங்களால் நிரூபிதமாம். இக்காரணத்தினுலேயே உலகின்கண்ணே காணமுளதென்னும் இசசபதத்தைக் கேட்டபின் எவ்விஷயத் தின் காணமென அறியும் வேட்கையுண்டாதல் புருஷனிடத்தே கண்டோம. ஆகையால் வாக்காதிய காணங்கட்கு நாமாதிய விஷயங்களின் அபேக்ஷையுளது. அதுபோல நாமாதி விஷயங்களையே யுடன்பட்டு வாக்காதிய காணங்களை யுடன் படாவிடின், நாமாதி விஷயங்களிடதேதே விஷயத்தன்மை தர்மம் இராது. ஏனெ னின், நாமாதி விஷயங்களிடத்தே யிராநின்ற விஷயத்தன்மைத் தர்மம் வாக் காதிய காணங்களால் நிரூபிதமாம். இக்காரணத்தினுலேயே உலகின்கண் விஷய முளதென்னும் சப்தத்தைக் கேட்பின் எக்காணத்தின் விஷயம் எனக் காணத்தை யறியும் வேட்கையுண்டாதல் புருஷனிடத்தே கண்டோம். ஆகையால், நாமாதி விஷயங்கட்கும் வாக்காதிய காணங்களின் அபேக்ஷையுளது. தந்தையென்னும் பெயரும் மைந்தனென்னும் பெயரும், மைந்தனும் தந்தையும் உளரேனுளவாம். தந்தையின்றே லெவரும் மைந்தன் எனக் கூறிலர், மைந்தனின்றே லெவரும்

தந்தையெனப் புகல்கின்றிலர். அங்ஙனே வாக்காதிகளிடத்தே காரணப்பெயர் நாமாதி விஷயங்களிருப்பினுல் உண்டாம; நாமாதிகளிடத்தே விஷயப்பெயர் வாக்காதி காரணங்களிருப்பினுல் உண்டாம. ஆகையால், வாக்காதிய காரணங்கட்கு நாமாதிய விஷயங்களின் அபேக்ஷையுளது, நாமாதி விஷயங்கட்கு வாக்காதிய காரணங்களின் அபேக்ஷையுளது. ஒன்று அபாவமாயின் மற்றொன்றினது சித்தியுண்டாகாது.

சங்கை :—சுருதியின்கண்ணே பூதமாத்திரவடிவ நாமாதியவிஷயம் பத்துள வாக்காதிய காரணங்களும் பத்துள ஆகையால், பன்னிரு காரணக்கூற்றும், பன்னிரு விஷயக்கூற்றும சுருதியோடு முரணுநிற்கும்.

சமாதானம் :—சுருதியின்கண்ணே சரீரம் அநதக்கரணமென்னு மிருகரணங்களையும், சுகதுக்கம் காமாதிகள் என்னு மிரண்டு விஷயங்களையும் பரித்தியாகம் செய்து, கேவலம் வாககாதிய பாகிய காரணங்களையும், நாமாதிய பாகிய விஷயங்களையும் பத்து வகையாய்க கூறியுளது ; ஆகையால், சுருதியோடு மிந்நூற்கு விரோதமில்லையாம்.

சங்கை :—வாக்காதிய காரணங்களும் நாமாதிய விஷயங்களும் பரஸ்பரம் அபேக்ஷையுடையனவேயாம் என்றாலும், தமது துணிவின்கண் மூன்றாவதொன்றை அபேக்ஷையைச செய்யா. ஆகையால், வாக்காதிகளை யொளிர்விக்கும் வடிவ ஹேதுவால் ஆன்மாவின் சித்தியுண்டாகாது.

சமாதானம் :—எவ்வெவ் வபேக்ஷையுடைய பதார்த்தங்களுளவோ அவை பரஸ்பரம் அபேக்ஷையாற் சித்தியா ; மறறொரு தம்மின் வேறாய ஒரு நிரபேக்ஷ வஸ்துவின் அபேக்ஷயினாலே சிததியாம். இரஜ்ஜுவின்கண் இது சர்பபமென்னும ஞானம் புருஷனுக்குண்டாம் ; அநத ஞானத்தின்கண் இதுவென்னும் சப்தத்தின் அர்த்தமாய இரஜ்ஜு விசேஷ்ய ரூபமாய்ப பிரதீதியாம் ; சர்ப்பம் விசேஷண ரூபமாய்ப பிரதீதியாம. அவ்விரஜ்ஜுவின்கண் சர்பபம் இதுவென்னும ஞானமுண்டாயின், அந்த ஞானத்தின்கண் சர்பபமோ விசேஷ்ய ரூபமாய்ப பிரதீதியாம, இதுவென்னும சபதத்தின் பொருளாய இரஜ்ஜுவோ விசேஷண ரூபமாய்ப் பிரதீதியாம. விசேஷணமும் விசேஷ்யமும் பரஸ்பரம் அபேக்ஷையோடு கூடியதாம. ஆகையால, அவற்றை விஷயம் செய்வதாய ஞானமும் பரஸ்பரம் அபேக்ஷ யுடையதேயாம. ஆகையால, இது துணியப்பெற்றதாம் :—இது சாபபம், சர்ப்பமிது என்னும இவ்விரண்டு ஞானங்களும் பரஸ்பர அபேக்ஷ உடையனவாம். ஆனால் நிரபேக்ஷா இரஜ்ஜுவின்றிப் பரஸ்பரம் அபேக்ஷ மாததிரத்தால் அந்த ஞானங்களின் சித்தியுண்டாகாது, மற்றோ நிரபேக்ஷா இரஜ்ஜுவை அபேக்ஷித்தே அந்த ஞானங்களின் சித்தியுண்டாம் ; அதுபோல வாக்கு முதலிய காரணங்களும நாமாதி விஷயங்களும் பரஸ்பரம் அபேக்ஷ உடையனவேயாயினும, அவற்றிற்கு நிரபேக்ஷையையுடைய ஆன்மாவன்றிச் சித்தியுண்டாகாது ; மற்றோ நிரபேக்ஷையையுடைய ஆன்மாவினாலேயே அவற்றின் சித்தியுண்டாம்.

அல்லது, வாக்கு முதலிய காணங்களும் நாமாதி விஷயங்களும் பாஸ்பரம் பின்னமன்றும்; அங்ஙனம் ஆன்மவடிவ ஆசிரயத்தினின்றும் பின்னமன்றும். இப்பொருளை அனுமானப் பிரமாணத்தாலும் சித்தம் செய்வாம். அவ்வனுமானத்தின் பிரகாரமிதுவாம்:—விஷயங்களோடுகூடிய வாக்கு முதலிய கரணம், பாஸ்பரமும் ஆசிரயத்தினின்றும் பின்னமன்றும்; என்று மொன்றற்கொன்றபேக்ஷை உடையனவாதலின், எவ்வெப்பொருள் ஒன்றற்கொன்று சாபேக்ஷையுடையதாமோ அவை பாஸ்பரமும் ஆசிரயத்தினின்றும் பின்னமன்றும், முற்கூறிய இரஜ்ஜு சர்ப்பவிஷயக ஞானம் பாஸ்பரம் சாபேக்ஷை உடையதாதலின் பாஸ்பரமும் இரஜ்ஜுவடிவ ஆசிரயத்தினின்றும் பின்னமன்றும்.

அல்லது, நாமாதி விஷயங்கள் வாக்காதி காணங்களினின்றும் ஆன்மவடிவ ஆசிரயத்தினின்றும் பின்னமன்றும்; அதுபோலத் தனது ஞானத்தினின்றும் பின்னமன்றும். இரஜ்ஜுவின்கண்ணே தோற்றுநின்ற சர்ப்பமானது இது சர்ப்பமென்னும் ஞானத்திலும் வேறாகாது; வேறாயினே, அந்த ஞானத்தின் நிவிர்த்தி காலத்தின்கண்ணும் பிரதீதியாகவேண்டும். கற்பித சர்ப்பம் இது சர்ப்பம் என்னும் இந்த ஞானத்தின் நிவிர்த்தி காலத்தில் பிரதீதியாகாது. ஆகையால் கற்பித சர்ப்பம் தனது ஞானத்திலும் வேறன்றும். அதுபோல நாமாதி விஷயங்களும் தனது ஞானத்திலும் வேறன்றும்.

அல்லது சக்ஷு முதலிய கரணங்களால் புருஷர்களுக்கு அந்தக் காணத்தின் விர்த்திவடிவ ஜடஞானம் உற்பன்னமாம். அவ்விர்த்திரூப ஞானம் ரூபாதி விஷயங்களின் ஆசிரயவடிவினவாம்; அவ்விர்த்திவடிவ ஞானங்களின் திருஷ்டாவாய பிராணப பிரஞ்ஞைவடிவ யான் சைதன்யனுதலின் அவ்விர்த்திவடிவ ஜடஞானம் சைதன்யவடிவ ஆன்மாவாய என்னினின்றும் பின்னமன்றும். கனவின்கண்ணே ஜீவர்கட்குத் தேர் முதலிய பதார்த்தங்களின் ஞானம் உற்பன்னமாம்; அத்தேர் முதலிய விஷயங்களோடுகூடிய ஞானம் சுவப்பன திருஷ்டா புருஷனைப் பார்க்கிலும் வேறன்றும். அதுபோல விஷயசகித விர்த்திரூப ஜடஞானம் திருஷ்டாவாம்; ஆன்மாவாய என்னிற் பின்னமன்றும். ஆகையால், பிராணப்பிரஞ்ஞை சப்தங்களின் இலக்ஷியார்த்தமாய ஆன்மாவே அத்விதீயமாம். அவ்வான்மாவின் வேறாய் எவ்வஸ்துவும் இன்றும்.

இப்பொருளையே சக்கிரத்தின் உபமானத்தால் காண்பிப்பாம்:—தேரின் சக்கிரத்தின்கண் மூன்று பாகமுளது ஒன்று நேமியாம், மற்றொன்று அராவாம், மற்றொன்று நாபியாம், அவற்றுள் பூமியோடு பரிசமுற்றதாய கங்கணவடிவ காஷ்டம் நேமியாம். நேமியானது யாவற்றிற் காசிரிதமாமோ, அத்தகைய மத்திய வக்கிரகாஷ்டம் அராவாம். அவ்வாராக்களின் ஆதார காஷ்ட மியாதாமோ எதன்கண்ணே சலாகை சுற்றுநிற்குமோ அது நாபியாம். கருத்திதுவாம்:— நேமி, யராவின் ஆதாரமாயிருக்கும். அரா, நாபியின் ஆதாரமாயிருக்கும். அந்நாபி எதனதாசிரதமாயு மிராது; மற்றே யாவற்றிற்கு ஆதாரமாம்; அதுபோல நாமாதி விஷயங்கள் வாக்காதி காணங்களின் ஆசிரிதமாயிருக்கும்; வாக்குமுதலிய கரணங்கள் பிராணப் பிரஞ்ஞைவடிவ ஆன்மாவாய எனது ஆசிரிதமாயிருக்கும்; பிராணப்

பிரஞ்ஞைவடிவ ஆன்மாவாய யான் எதனுடைய ஆசிரிதமாயுமிரேன்; மற்றோ சகல விஷயங்களுக்கும் வாக்காதிகளுக்கும் ஆன்மாவாய யான் அதிஷ்டானன். ஆகையால், ஹே பிரதர்த்தன! நாமாதி விஷயங்களாயும் வாக்காதி காரணங்களாயும் இராநின்ற சகல சம்சாரவடிவ சக்கிரத்திற்குப் பிராணப் பிரஞ்ஞைவடிவ ஆன்மாவாய யான் நாபியாம்; ஏனெனின், பிரசித்தமாய தேர்ச் சக்கிரத்தின் நாபி எதனது ஆசிரிதமுமன்றாவதுபோல, ஆன்மாவாய யானும் எவ்வன்னிய ஆசிரிதனுமன்றாம்; மற்றோ சகல ஜகத்தும் எனது ஆசிரிதமாம்.

அல்லது, விஷயம், விஷயியென்னு மிரண்டிற்கும் ஜகத்தென்று பெயராம். அவற்றுள், நாமாதிகள் விஷயங்களாம்; வாக்காதிய காரணங்கள் விஷயிகளாம். அந்த விஷயவிஷயிரூப சகலப் பிரபஞ்சத்தையும் பிரகாசம் செய்விப்பவன் பிராணப் பிரஞ்ஞைவடிவ ஆன்மாவாய யானும்.

அல்லது, பிராணப்பிரஞ்ஞைவடிவ ஆன்மாவாய என்னினின்றே இத்தூல சூக்கும சகலப் பிரபஞ்சமும் உற்பன்னமாயின; ஆன்மாவாய என்னிடத்தே சகலப் பிரபஞ்சமும் இப்போது திதி பெற்றிருக்கின்றன, ஆன்மாவாய என்னிடத்தே சகலப் பிரபஞ்சமும் இலயத்தையடையும். மூட பாலகன் தனது சரீரத்தின்கண்ணே கற்பனைசெய்த இராக்ஷசனுடைய உற்பத்தி ஸ்திதி இலயமென்னும் மூன்றும், அப் பாலகனாலேயே உண்டாம். அங்ஙனம் பிராணப் பிரஞ்ஞைவடிவ ஆன்மாவாய என்னாலேயே சகலப் பிரபஞ்சமும் உற்பத்தி திதி இலயத்தை யடையாநிற்கும்.

அல்லது, சர்வ பேதமுமற்ற ஆகாசத்தின்கண் கடமடாதி உபாதிகளின் வயத்தால் பேதம் பிரதீதியாவதுபோலச் சரீராதி யுபாதிகளினாலே அத்விதீய ஆன்மாவாய என்னிடத்து நாநாப்பிரகாரமாய பேதம் பிரதீதியாம்.

அல்லது, அத்விதீய ஆன்மாவாய என்னிடத்து உபாதிதிருஷ்டியையுடைய பகிர்முகப் புருஷர்க்கு மாத்திரம் பேதம் பிரதீதியாம்; உபாதிதிருஷ்டியற்ற உன்முகப் புருஷர்கட்கு, அத்விதீய ஆன்மாவாய என்னிடத்து பேதம்பிரதீதி உண்டாகாது. வர்ணத்தாலெழுதிய விருக்ஷாதிவடிவ சித்திரங்களோடுற்ற வஸ்திரத்தின்கண்ணே தாழ்ச்சி உயர்ச்சி சம்பவியாதெனினும், விருக்ஷாதிவடிவ சித்திரங்களின் திருஷ்டியால் அவிவேகியர்க்கு இவ்விருக்ஷத்தின் மூலதேசம் கீழிருக்கின்றது; சாகைகள் மேலிருக்கின்றனவென விஷமதிருஷ்டியுண்டாம். எவர்க்கு விருக்ஷாதிவடிவ சித்திர திருஷ்டியில்லையோ, மற்றோ கேவலம் வஸ்திர திருஷ்டியாமோ, அவர்க்கு அவ்விஷமதிருஷ்டி உண்டாகாது. அதுபோலப் பிரபஞ்சரூப உபாதியின் திருஷ்டியால் அவிவேகியர்க்கு அத்விதீய ஆன்மாவாய என்னிடத்து பேதப்பிரதீதியுண்டாம். உபாதிதிருஷ்டியின்றிய விவேகியர்க்குப் பிராணப் பிரஞ்ஞைவடிவ ஆன்மாவாய என்னிடத்து பேதபுத்தி உண்டாகாது.

இப்போது, பிராணப்பிரஞ்ஞை சப்தங்களின் வாஸ்தவப்பொருளைக் காண்பிப்பாம்:—ஹே பிரதர்த்தன! வாயுவடிவப் பிராணனைப் பார்க்கிலும் ஆன்மாவாய யான் பின்னனாமெனினும், அண்டஜம், ஜராயுஜம், சுவேதஜம், உற்பிஜ்ஜம்

என்னுமிந்நான்கு வகையாய ஜீவர்களின் ஜீவனம் ஆன்மாவாய என்னாலேயே யுண்டாம். இக்காரணத்தாலே அத்விதீய ஆன்மாவாய யானே பிராண சப்தத்தின் பொருளாவேன்; அங்ஙனமே பிராண சப்த ஜன்னிய ஞான விஷயமாவேன்.

சங்கை:—சைதன்ய ஆன்மாவின்கண்ணேயே பிராணிகளின் ஜீவன காரணத்தன்மையுளது, வாயுவடிவப் பிராணனிடத்தே இல்லையாம்; இப்பொருளின் கண்ணே யாது பிரமாணம்?

சமாதானம்:—தைத்தரீய உபநிஷத்தில் சைதன்ய ஆன்மாவின்கண்ணேயே ஜீவன காரணத்தன்மை கூறப்பட்டுளது. ஆண்டுக் கூறியதாவது:—பிராணனாலும், அபானனாலும் எப்பிராணியும் ஜீவிப்பதின்றாம்; மற்றோ எச்சைதன்ய ஆன்மாவின் சமீபத்தன்மையால் இப்பிராண அபானாதிகள் விவசரிக்குமோ, அச்சைதன்ய ஆன்மாவாலேயே இவ்வெல்லாப் பிராணிகளும் ஜீவிக்கின்றன. ஆகையால், சர்வப்பிராணிகளின் ஜீவனகாரணமாய அத்விதீய ஆன்மாவே பிராண சப்தத்தின் பொருளாமெனத் துணியப்படுமென்க.

இப்போது பிரஞ்ஞை சப்தத்தின் அர்த்தத்தைக் காண்பிப்பாம்:—ஐந்து ஞானேந்திரியம், ஐந்து கர்மேந்திரியம், அந்தக்கரணம், சரீரம் என்னும் பன்னிரு காரணங்களையும், நாமாதிகளாய அவற்றின் விஷயங்களையும், எனது சுவப்பிரகாச சொரூபத்தால் அத்விதீய ஆன்மாவாய யான் அறிகின்றேன். இககாரணத்தால் அத்விதீய ஆன்மாவாய யான் பிரஞ்ஞை சப்தத்தின் பொருளாம்.

அல்லது எனது பிரகாசம் இருநதால் மாத்திரம் சம்பூர்ணப் பிரபஞ்சம் பிரதீதியாம்; தனது பிரகாசத்தால் ஜடஜகத்தின் விளக்கம் உண்டாகாது; இக்காரணத்தால் அத்விதீய ஆன்மாவாய யான் பிரஞ்ஞை சபதத்தின் பொருளாவேன்.

அல்லது தேசபரிசசேதம், காலபரிச்சேதம், வஸ்துபரிச்சேதம என்னுமுப்பரிச்சேதமு மற்றவனாவேன்; ஆன்மாவாய யான் அங்ஙனே சுவப்பிரகாசனாவேன். இக்காரணத்தால் அத்விதீய ஆன்மாவாய யான் பிரஞ்ஞை சப்தத்தின் பொருளாம்.

அல்லது உலகின்கண்ணே ஞானத்தினும வேறாய பாகிய இரஜ்ஜுமுதலிய ஜடபதார்த்தங்களைக் கற்பித சர்ப்பாதிகளின் அதிஷ்டானரூபமாய்க் கண்டோம். ஆன்மாவாய யான் ஞானத்தினும் வேறன்றாம்; மற்றோ ஞானவடிவமாம். அங்ஙனமே ஆன்மாவாய யான் பாகியமுமன்றாம்; மற்றோ யாவற்றினும் உள்ளாம். இவ்வண்ணம் இரஜ்ஜுமுதலிய பாகிய அதிஷ்டானத்தைப் பார்க்கினும் விலக்ஷணரூபத்தோடு கூடியிருப்பினும், ஆன்மாவாய யான் சர்வப் பிரபஞ்சத்திற்கும் அதிஷ்டானமாம்; இக்காரணத்தால் அத்விதீய ஆன்மாவாய யான் பிரஞ்ஞை சப்தத்தின் பொருளாம்.

அல்லது சஜாதீயபேதம், விஜாதீயபேதம், சுவகதபேதம் என்னும் முப்பேதமற்ற ஆன்மசொரூபப் பிரஞ்ஞையோடு யான் நித்தியமும் கூடியவனாவேன். இக்காரணத்தால் அத்விதீய ஆன்மாவாய யான் பிரஞ்ஞை சப்தத்தின் பொருளாவேன்.

இப்போது ஆன்ம பதப்பொருளைக் காண்பிப்பாம்:—ஹே பிரதர்த்தன! நின் பொருட்டு யான் அடிக்கடி பிராணப்பிரஞ்ஞைவடிவ எவ்வான்மாவை யுபதேசித் தேனோ, அவ்வான்மாவே நினதுண்மையான சொரூபமாம்; அங்ஙனம் ஸ்தாவர ஜங்கமங்கட்கும் அவ்வான்மாவே உண்மையாய வடிவமாம். அவ்வான்மாவே சர்வப் பிராணிகளிடத்தும் அகம் சப்தத்தின் இலக்கணையாலறியப்படும்; யானென் னும் ஞானத்திற்கும் விஷயமாம்; உண்மையாய் யானென்னும் சப்தத்திற்கும் ஞானத்திற்கும் சம்பந்தப்படாததாம். அவ்வான்மாவே ஆகாசத்தைப்போலப் பேதமற்றதாய் இவ்வுலகின்கண்ணே நிலவுறும்.

அல்லது கடமடாதி நாநா உபாதியின்கண்ணே யிராநின்ற ஆகாசத்திற்கு ஆகாசமே ஒரு நாமமாம். கருத்திதுவாம்:—கடவுபாதியின்கண்ணே யிராநின்ற ஆகாசத்திற்குக் கடாகாசமெனப் பெயராம; மடவடிவ உபாதியின்கண்ணே யிரா நின்ற ஆகாசத்திற்கு மடாகாசமெனப பெயராம்; இவ்வண்ணம் நாநா உபாதியின் கண்ணே இருபபினும், ஆகாசம் ஆகாசமென்னும பெயரற்றதாகாது. ஆகையால், தொடர்ந்துள்ள ஒரு ஆகாசப்பெயர் ஆகாசத்தின் ஒருமையைப் போதிக்கும்; அங்ஙனம், நாநா சரீரரூப உபாதிகளிடத்தே யிராநின்ற அத்விதீய ஆன்மாவிற் கும் ஒரு ஆன்மாவே பெயராம். ஆகையால் யாண்டுந் தொடர்ந்திராநின்ற ஒரு ஆன்மாவென்னும் பெயர் அத்விதீய ஆன்மாவாய எனது ஒருமையை யுணர்த்தும்.

சங்கை:—ஆன்மா உண்மையாய் ஒன்றேயாயின் நாநாரூபமாய் ஏன் தோற்ற வேண்டும்?

சமாதானம்:—அவித்யாவடிவ தோஷபலத்தால் அத்விதீய ஆன்மாவொன்றே ஜகத்துருவமாய்ப் பிரதீதியாம். ஒரே கனுக்காணும் புருஷன் கனவின்கண் நித் திரா தோஷபலத்தால் அநந்த ரூபமாய்ப் பிரதீதியாவன். கனவின்கண்ணே பிரதீதியாகாநின்ற தேர்முதலிய பொருள்கள் கற்பிதங்களாதலின் கனுக்காண் போனினும் வேறன்றும்; அதுபோல அஞ்ஞானத்தாற் கற்பிதமாய இவ்வெல்லா உலகும் அத்விதீய ஆன்மாவாய என்னினின்றும பின்னமன்றும்.

இப்போது ஆநந்த சப்தத்தின் அர்த்தத்தைக் காண்பிப்பாம்:—ஹே பிர தர்த்தன! சம்பூர்ண ஜீவர்கட்கும் ஆன்மாவாய யான் அதிசயமாகப் பிரியனுவேன்; ஆகையால், ஆன்மாவாய யான் ஆநந்தவடிவன். கருத்திதுவாம்:—இவ்வுலகின் கண்ணேயும் பரலோகத்தின்கண்ணேயும் போகிக்க யோக்கியமாய ஸ்திரீ முதலிய பதார்த்தங்கள் பிரியங்களாம்; அவ்விஷயங்களால் உற்பன்னமாய அந்தக் கரணப் பரிணாமவடிவ சுகம் பிரியதரமாம். ஆன்மா சகலத்தின் சேஷிவடிவமாதலின் பிரியதமமாம். ஸ்திரீ புத்திராதி பதார்த்தங்கள் எதன்பொருட்டாமோ அது சேஷியாம்; அவ்வண்ணம் சேஷியாயிருப்பது ஆன்மாவாம். அன்னிய சம்பூர்ண பதார்த்தங்கள் ஆன்மாவின் சேஷரூபமாம்.

இப்போது இப்பொருளையே வெளிப்படையாய்க் காண்பிப்பாம்:—சம்பூர் ணப் பிராணிகள் சுகத்தையும், சுகத்தின் சாதனமாய ஸ்திரீ புத்திராதிகளையும்

இச்சை செய்யின், ஆன்மாவின் பொருட்டே இச்சிக்கின்றன. எனக்கு இன்ப முண்டாகுக, எனக்கு ஸ்திரீபுத்திராதிகளின் அடைவுண்டாகுக என இவ்வகை யாய இச்சையைச் சம்பூர்ண ஜீவர்கள் செய்வர், கேவலம் சுகத்தின் இச்சையே உண்டாமாயின் வைரியின் சுக இச்சையும் உண்டாகவேண்டும்; வைரியின் சுக இச்சை எவரும் செய்வதின்றாம். மற்றோ, ஆன்மசம்பந்தியாய சுகத்தைச் சகலப்பிராணிகளும் இச்சிக்கும்; ஆகையால், ஆன்மாவின்பொருட்டே சுகத்தின் இச்சையும், சுக சாதனங்களாய ஸ்திரீ புத்திராதிகளின் இச்சையும் உண்டாம். சுகத்தின்பொருட்டும் சுகசாதன ஸ்திரீ புத்திராதிகளின் பொருட்டும் ஆன்மாவை எவரும் இச்சிப்பதின்றாம்; ஆகையால், அத்விதீய ஆன்மாவாய யானே சர்வத்தின் சேஷிரூபமாம். அன்னிய பதார்த்தங்களெல்லாம் ஆநந்த வடிவ ஆன்மாவாய எனது சேஷரூபமாம். போகசாதனங்கள் சேஷமெனப்படும்; போக்தா சேஷி யெனப்படும்.

அல்லது, மனுஷ்யலோகம் முதலாகப் பிரஹ்மலோகப் பரியந்தம் எத்துணை விஷயஜன்னிய சுகத்தின் தாழ்வு உயர்வு உளவோ, அவை எதன்கண்ணே சென்று முடிவையடையுமோ அவ்வாநந்த சொரூப ஆன்மா யான்.

இப்போது, இப்பொருளையே வெளிப்படையாய்க் காண்பிப்பாம்:—மனுஷ்ய லோகத்தின் ஆநந்தத்திலும் நூறு மடங்கு அதிக ஆநந்தம் பிதுர்க்கட்குண்டாம்; பிதுர்க்களினும் நூறு மடங்கு அதிக ஆநந்தம் கந்தர்வருக்குண்டாம்; கந்தர்வரினும் நூறு மடங்கு அதிக ஆநந்தம் கர்ம தேவதைகட்குண்டாம; கர்ம தேவதைகளினும் நூறுமடங்கு அதிக ஆநந்தம் ஆஜான தேவதைகட்குண்டாம்; ஆஜான தேவதைகளினும நூறு மடங்கு அதிக ஆநந்தம் பிரஜாபதிக்குண்டாம்; பிரஜாபதியினும் நூறுமடங்கு அதிக ஆநந்தம் ஹிரண்ய கர்ப்பனுக்குண்டாம். விஷய ஜன்னிய சுகத்தின்கண் ஹிரண்ய கர்ப்பலோகத்தின் சுகம் எல்லாவற்றினும் மேலாம். அவ்விரண்ய கர்ப்பனது ஆநந்தம் ஆநந்தக்கடல வடிவ ஆன்மாவாய எனக்கு ஒரு கண (நீர்த்துளி) சமானமாம். கருத்திதுவாம்:—விஷய ஜன்னிய சகல சுகத்தினும் மேலாய ஹிரண்ய கர்ப்பனது ஆநந்தமும் ஆநந்த சமுத்திர ஆன்மாவிற்கு ஒரு கண சமானமாயின், மனுஷ்யாதிகளின் ஆநந்தத்தின் கதை யென்னும்? ஆகையால், சகல ஆநந்தத்திற்கும முடிவு வடிவம் ஆன்மாவாய யானுதலின் ஆநந்த வடிவனுவேன்.

அல்லது சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தமென்னும் இவ்வகையாய விஷயங்களை உலகர் சுககாரணமாய் அங்கீகரித்துளார். அச்சப்தாதி விஷயங்களும் பரமான்மாவாய எனது சுகத்தையே யடைவிக்கும். சப்தாதி விஷயங்களால் வெளிப்பட்ட சுகம் ஆன்மாவாய எனது வடிவமேயா மென்பதுகருத்தாம்.

சங்கை:—சப்தாதி விஷயங்களால உற்பன்னமாய சுகத்திற்கு ஆன்ம ரூபத் தன்மை சம்பவியாது; ஏனெனின், சச்சிதாநந்தரூப ஆன்மாவின் இலக்கணம் அச்சுகத்தின் கண்ணின்றாம்.

சமாதானம்:— எப்புருஷருக்கு வேதாந்த வாக்கியங்களால் ஆன்மாவின் உண்மைஞானம் உண்டாமோ, அப்புருஷர் சப்தாதிவிஷய ஜன்னியசுகத்தின்

கண்ணும் விருத்திரூப உபாதியை விட்டொழித்துச் சுகமாத்திரத்தைச் சச்சி தாநந்த ரூபமாயே யங்கீகரித்துள்ளார். ஆன்ம ஞானமற்ற மூடரோ, சப்தாதி விஷயங்களையே சுகரூபமா அங்கீகரித்துள்ளார். இக்காரணத்தினலேயே தத்துவத்தை உணர்ந்த புருஷனுக்கு விஷயப்பிராப்தி காலத்தினும் ஆன்மசொரூப நித்திய சுகத்தின் பானமே (விளக்கமே) உளதென்றுச் சாஸ்திரத்தின்கண்ணே கூறப்பட்டுளது.

அல்லது சப்தாதி விஷயங்களிடத்தே எச்சுகம் தோற்றுகின்றதோ, அதுவும் ஆநந்தவடிவ ஆன்மாவாய எனது சம்பந்தத்தாலேயே தோற்றுநிற்கும். வெல்லத்தின்கண்ணே யுள்ள மதுரத்தன்மை எவ்வஸ்துவின் சம்பந்தத்தினலு மின்றும்; மற்றோ தானே வெல்லத்தின்கண் அம்மதுரத்தன்மையுளது. அவ்வெல்லத்திற்கு எவ்வஸ்துவோடு சம்பந்தமாமோ, அவ்வஸ்துவும் மதுரமாய்த்தோற்றும். அங்ஙனம், ஆன்மாவாய என்னிடத்துள்ள ஆநந்த ரூபத்தன்மை எதனது சம்பந்தத்தானுமின்றாம்; மற்றோ ஆன்மாவாய யான் தானே ஆநந்தவடிவனும். அவ்வாநந்தவடிவ ஆன்மாவாய எனது சமபந்தத்தால் சப்தாதி விஷயங்களில் ஆநந்த ரூபத்தன்மை பிரதீதியாம. சுயமே சபதாதிகளிடத்தே ஆநநதரூபத்தன்மை யின்றாம். அங்ஙனமேனும், ஆன்ம ஞானமின்றிய மூடன் சப்தாதிகளையே சுக ரூபமாய் நினைநதுளான். வாயுவின் ஸ்பரிசம் சீதளமுமன்றாம், உஷ்ணமுமன்றாம்; மற்றோ ஜலத்தின் சீத ஸ்பரிசத்தினும், அக்கினியின் உஷ்ண ஸ்பரிசத்தினும், வாயுவின் ஸ்பரிசம் விலக்ஷணமேயாம். அங்ஙனமேனும் சீத ஸ்பரிசமுடைய ஜலத்தோடும், உஷ்ண ஸ்பரிசமுடைய அக்கினியோடும, வாயுவின் சம்பந்தம் உண்டாயின், சமுத்திர சம்பந்தியாய வாயுவைச சாஸ்திர சம்ஸ்காரமறற மூடபுருஷன் சீத ஸ்பரிசவாயுவெனக்கூறுவன்; தேயுசம்பந்தியாய வாயுவை உஷ்ண ஸ்பரிச வாயுவெனக்கூறுவன்; விசாரவானய புருஷன் வாயுவை உஷ்ண ஸ்பரிசமுடையதென்றேனும, சீத ஸ்பரிசமுடையதென்றேனும அங்கீகரியான். ஏனெனின், ஜலத்தின்சூக்ஷ்ம அவயவங்களை வாயு எடுத்துக்கொண்டுவரும்; அந்தஜலத்தின் அவயவங்கள் சரீரத்தோடு சம்பந்திக்கின் சீதளத்தன்மை பிரதீதியாம்; அஜ்ஜலத்தின் அவயவங்கள் சூக்ஷ்மமாம். ஆகையால், அவற்றின் சாக்ஷாஷ பிரத்தியக்ஷமுண்டாவதின்றாம்; இங்ஙனம் உஷ்ண ஸ்பரிசத்தினும் அறிந்துகொள்க. அங்ஙனம் சப்தாதி விஷயங்களிடத்தே ஆநநதவடிவ ஆன்மாவின் தாதான்மிய சம்பந்தத்தாலேயே ஆநந்த ரூபத்தன்மையாம்; சுயமே சபதாதி விஷயங்களிடத்தே ஆநந்த ரூபத்தன்மையின்றாமென்றாலும், ஆன்மஞானமின்றிய மூடனுக்கு விஷயங்களிடத்திருந்தே எனக்குச் சுகத்தினடைவுண்டாம் என்னும் மயலுண்டாம்; ஆகையால், ஹே பிரதர்த்தன! அத்விதீய ஆன்மாவாய யானே ஆநந்தசொரூபனும்.

சங்கை :—ஆன்மாவே ஆநந்தரூபமாயின், ஆன்மா எப்போதும உள்ளதாம்; ஒருகாலத்தினும் ஆன்மாவிற்கு அபாவமின்றாம். ஆகையால், எப்போதும் ஆநந்தத்தின் அடைவுண்டாதல்வேண்டும்; எப்போதும் ஆநந்தத்தின் அடைவுண்டாவதின்றாம். அல்லது சப்தாதி விஷயங்களே நமக்கு ஆநந்தமீவதென யாவருங் கூறுகின்றனரன்றோ? அதன்கண்ணே இதுகாரணம்.

சமாதானம் :—ஹே பிரதர்த்தன ! புத்திமுதலிய சர்வ ஜடபதார்த்த சங்காதங்கட்குஞ் சாக்ஷியாய பிராணப் பிரஞ்ஞைவடிவ ஆன்மாவாய யானே ஏக சுகரூபனுமேவன். இத்தகைய ஆன்மாவாய எனது விஷயக அஞ்ஞானமானது ஜீவர்களுக்குண்டாயின், அவ்வஞ்ஞானத்தால் மறைப்புண்ட மூடர் சப்தாதி விஷயங்களின் அடைவை இச்சிப்பர் ; அவ்விச்சையால் அநந்த துன்பங்களையடைவர். ஹே பிரதர்த்தன ! அவ்வஞ்ஞான ஜன்னிய துக்கங்களை நீயும் முன்னர் அனுபவித்தே வந்திருக்கின்றாய். ஆகையால், ஆநந்தரூப ஆன்மா எப்போதும் இருந்தபோதிலும், அஞ்ஞானரூப ஆவரண வபத்தாற் புருஷருக்கு ஆன்மாநந்த விளக்கமுண்டாவதில்லையாம்.

அல்லது, சப்தாதி விஷயங்கள் எனது சுககாரணம் என்று யாவருங் கூறுவதன்கண்ணே இது காரணமாம் :—சப்தாதி விஷயங்கள் கிடையாதகாலத்தே அச் சப்தாதிகளின் இச்சையாற் புருஷார்தம் புத்தி சஞ்சலத்தையடையும். பூர்வ புண்ணியவயத்தால் அச்சப்தாதி விஷயங்களின் அடைவுண்டாமாயின், சிறிதுபோது அவ்விச்சையின் நிவிர்த்தியுண்டாம். அவ்விச்சை நிவிர்த்தியாகவே சிறிது போது அப்புத்தி சஞ்சலத்தைவிட்டு ஏகாக்கிரத்தையடையும். எத்துணை வேறொரு பதார்த்தத்தின் இச்சையுண்டாகாதிருக்குமோ, அத்துணை அவ்வேகாக்கிர புத்தி ஆநந்தவடிவ ஆன்மாவாய என்னால் வியாப்தமாம். இக்காரணத்தினாலே அவ்வேகாக்கிர புத்தி சுகரூப ஆன்மாவைபபோலச் சுகரூபமாயே பிரதீதியாம். அயப் பிண்டத்தின்கண்ணே உஷ்ணஸ்பரிசமும் ஒளிர்வுடைமையும் இல்லையென்றாலும், அக்கினியோடுகூடிய அயப்பிண்டமானது அக்கினியைப்போன்றே உஷ்ணஸ்பரிசமுடையதாகவும் ஒளிர்வுடையதாகவும் பிரதீதியாம். அங்ஙனம் புத்தியானது சுகரூபமன்றென்றாலும் ஆநநதவடிவ ஆன்மாவாய என்னால் வியப்தமானதாய அவ்வேகாக்கிரபுத்தி சுகரூபமாய்ப் பிரதீதியாம். கருத்திதுவாம் :—ஆநந்தரூப ஆன்மாவின் பிரதி பிம்பத்தோடுகூடிய புத்தியின் ஏகாக்கிர அவஸ்தையையே மூடன் சுக ரூபமென அங்கீகரித்துளான் ; அப்புத்தியின் ஏகாக்கிர அவஸ்தையானது சப்தாதி விஷயங்களின் அடைவினாலேயே உண்டாம். சப்தாதிவிஷயங்களாலன்றி அப்புத்தியின் ஏகாககிரத் தன்மையுண்டாகாது என மூடன் நினைந்து, சப்தாதி விஷயங்கள் எனக்குச் சுகத்தின் அடைவைச் செய்விக்கும் எனக் கூறுநிற்பன்.

சங்கை :—ஹே பகவன் ! ஆநந்தரூப ஆன்மாவின் பிரதி பிம்பத்தோடுற்ற புத்தியின் ஏகாக்கிர அவஸ்தையானது லோகப்பிரசித்த சுகமாயின், சர்வப்பிராணி மாத்திரத்திற்கு விஷயஜன்னிய சுகம் சமானமாகவேண்டும் ; விஷயஜன்னிய சுகமோ சமானமாகாது.

சமாதானம் :—ஹே பிரதர்த்தன ! துவாரத்தோடுற்ற கடுகுகள் பெருங் கடலை அடைந்தபோதிலும் தமது துவாரத்தளவே நீரைக்கவரும். தமது துவாரத்திலும் அதிக நீரைக்கவராது, அதுபோல ஆநந்தக்கடவடிவ ஆன்மாவாய என்னிடத்து அடைந்துள்ள விஷயஜன்னிய புத்தி தனதளவே ஆன்மாநந்தத்தைக் கவரும் ; தனதளவினும் அதிகமாய ஆநந்தத்தைக்கவராது. கருத்திதுவாம் :—

அதிநிர்மலமாய கண்ணுடியிடத்தே சூரியனது பிரதிபிம்பம் அதிகமாயுண்டாம்; மலினமாய ஆடியிடத்தே சூரியப் பிரதிபிம்பம் குறைவுடைத்தாகும்; அங்ஙனம் சுத்தசத்துவ குணத்தோடுற்ற ஏகாக்கிர புத்தியின்கண் ஆநந்த சொரூப ஆன்மாவின் பிரதிபிம்பம் ஸ்பஷ்டமாம். ஆகையால், ஆண்டு ஆநந்தத்தின் அதிகத்தன்மை பிரதீதியாம். மலினசத்துவ குணபுத்தியின்கண்ணே ஆநந்தத்தின் பிரதிபிம்பம் ஸ்பஷ்டமாயிராது. ஆகையால், ஆண்டு ஆநந்தத்தின் குறைவு பிரதீதியாம். இக்காரணத்தினுலேயே நீண்டநாட்களின்பின் இல்லின்கண் வந்த புருஷனுக்கு எங்ஙனம் முதலில் ஸ்திரீ தரிசனத்தாலும் புத்திராதியின் தரிசனத்தாலும் ஆநந்தமுண்டாமோ, அங்ஙனம் மீண்டுண்டாம் தரிசனத்தால் ஆநந்தம் உண்டாகாது; மற்ருே பிரதமதரிசன ஜன்னிய ஆநந்தத்தைக் காட்டிலும் குறைவாய ஆநந்தம் உண்டாம். ஏனெனின், பிரதமம் புத்திராதிகளின் தரிசனத்தால் புத்தி அத்தியந்தம் ஏகாக்கிரமமாம்; ஆகையால், ஆநந்தத்தின் அதிகத்தன்மை பிரதீதியாம். பின்னரோ அன்னிய பதார்த்தத்தின் இச்சையினுல் புத்தி சஞ்சலத்தையடையும்; ஆகையால், மீண்டும் புத்திராதிகளின் தரிசனம் உண்டாயினும் பிரதமத்தில் எங்ஙனம் ஆநநதமுண்டாயிற்ருே அங்ஙனமுண்டாகாது. ஆகையால், இது துணியப்பெற்றதாம்:—ஆநந்தவடிவ ஆன்மாவின் பிரதிபிம்பத்தோடுகூடிய யாதொரு ஏகாக்கிர புத்தியுளதோ, அதனை மூடபுருஷன் சுகரூபமென அங்கீகரித்துளான்; அச்சுகமானது இச்சையின் நிவிர்த்தியின்றி உண்டாகாது. ஆகையால், இச்சையின் நிவிர்த்தி அசசுகத்தின்கண்ணே காரணமாம். அவ்விச்சையின் நிவிர்த்தி சப்தாதி விஷயஙகளின் அடைவினுலன்றி உண்டாகாது. ஆகையால, சபதாதிவிஷயங்களைச் சுகத்தின் காரணமென நினைந்து அவிவேகியாய புருஷன் அசசபதாதி விஷயங்களினடைவின் பொருட்டு முயல்வன். இவ்வண்ணம் தும்மல், சொறிதல் முதலியவறறினின்றும் எச்சுகமுற்பன்னமாமோ, அதன்கண்ணும் முற்கூறிய வகையைத் தெரிந்துகொள்ளல்வேண்டும்.

ஆகையால், ஹே பிரதர்த்தன! சம்பூர்ண சரீரங்களில் ஆநந்தசொரூப ஆன்மாவாய யானே சுகத்தைக்கொடுபபவனும். என்னின் வேறுய்ச சுகங்கொடுப்பவன் எவனுமில்லை. அவ்வாநந்தசொரூப ஆன்மாவே நினது சொரூபமாம்.

ஹே பிரதர்த்தன! அத்விதீய ஆநந்தசொரூபம் ஆன்மாவாய யானேவேன் என்றிவ்வகையாய ஆன்மஞானத்தால், இப்போது நினது அஞ்ஞானம் நிவிர்த்தமாயது. ஆகையால், தூலசரீரமும் நின்னுடையதன்ருும்; எப்போது தூலசரீரத்தின் அபாவம் நினதிடத்தே யாயதோ, அப்போது தூலசரீரத்தின் தர்மங்களாய ஜரை, மரணம் முதலியன நினதிடத்தே எவ்வண்ணமுண்டாம்; மற்ருே உண்டாகமாட்டா.

ஹே பிரதர்த்தன! புத்தி முதலியவற்றின் சாக்ஷிரூபமாக யாதொரு நினது சொரூபமுளதோ, அதன்கண்ணே மதியுமில்லையாம். மதியில்லாததால் மதியின் தர்மங்களாய புண்ணிய பாவங்கள் முதலியனவும் நினது வடிவத்தில் இல்லையாம்.

கருத்திதுவாம்:—உலகின்கண்ணே பிரகாசிய கடாதிகளின் தர்மங்கள் பிரகாசகதீபாதிகளைத்தீண்டா. அதுபோலப் பிரகாசிய புத்தியின் புண்ணிய பாவரூப தர்மங்கள் பிரகாசக சாக்ஷியாய ஆன்மாவைத்தீண்டா. அந்தப்புண்ணிய பாவங்களில்லையாதலால் இவ்வுலகின்கண்ணேயும் பரவுலகின்கண்ணேயும் சுகதுக்கரூப பலத்தின் போக்தா ஆன்மாவாகாது. ஹே பிரதர்த்தன! புண்ணிய பாவரூப கர்மங்களின் பலத்தின் போக்தாவானவனுக்கு அதிக போகங்களால் விர்த்தியுண்டாம்; அற்பபோகங்களாற் குறைவுண்டாம். நீ கன்மங்களின் கர்த்தாவும் போக்தாவுமன்றும்; ஆகையால், நினக்கு விர்த்தி குறைவுகள் எக்காரணத்தானுண்டாம்; மற்றே உண்டாகாதாம். ஹே பிரதர்த்தன! எனது சொரூபமாய அத்விதீய ஆன்மாவே நினது சொரூபமாம், நீயே சர்வசாக்ஷியாவாய், அத்தகைய ஆன்மவடிவ நீ புண்ணிய பாவரூப கர்மத்தின் பராதீனனாக ஒருகாலுமாகாய்; மற்றே நினது சமீபத்தன்மையைக்கொண்டே மதிமுதலியவற்றைப் புண்ணிய பாவம் செய்யுமாறு செய்கின்றனை. ஹே பிரதர்த்தன! பரமான்ம தேவனாய நீ எப்புருஷனைச் சுவர்க்கத்திற்கனுப்ப இச்சிக்கின்றனையோ, அப்புருஷனைப் புண்ணிய கர்மம் செய்யுமாறு செய்வாய். எபபுருஷனை நரகத்திற்கனுப்ப இசசிக்கின்றனையோ, அப்புருஷனைப பாவகருமம் நீ செய்யுமாறு செய்கின்றனை. எப்புருஷனை மனுஷ்ய லோகத்திறகனுபப நீ இச்சிக்கின்றனையோ, அப்புருஷனை புண்ணியபாபமிரண்டையும் செய்யுமாறு செய்கின்றனை.

சங்கை:—புண்ணிய கர்மத்தையும் பாவ கர்மத்தையும் பரமான்மா செய்கின்றதென்று உடன்படின் ஜீவரைப்போல விஷமத்தன்மை நிர்த்தயைத் தன்மை வடிவ தோஷ அடைவு பரமான்மாவிடத்து முண்டாம்.

சமாதானம்:—புண்ணிய கருமத்தால் இப்புருஷன் புண்ணியவானும், பாவ கருமத்தாற் பாவியாம், இங்ஙனமே சுருதியின்கண்ணே கூறப்பட்டுளது. அபபுண்ணிய பாவகர்மங்களின் ஞானம் அற்ப அறிவினராய ஜீவர்கட்கின்றும்; மற்றே, முற்றறிவினராய பரமான்மாவிற்குண்டாம். ஆகையால், இச்சீவனது பூர்வ புண்ணிய கர்ம அனுசாரமாய்ப் பிற்பிற் பிறப்பின்கண்ணே புண்ணிய கர்மங்களை ஈஸ்வரன் செய்விப்பர்; இச்சீவனது பூர்வ பாவகர்ம அனுசாரமாய்ப் பிற்பிற் பிறப்பின்கண்ணே பாவகர்மங்களைப் பரமான்மா பண்ணுவியாநிற்பர். ஆகையால், பரமான்மாவிடத்தே விஷமத்தன்மை, நிர்த்தயைத்தன்மை வடிவதோஷ அடைவுண்டாகாது. ஆகையால், ஹே பிரதர்த்தன! சர்வ கர்மங்களையும் பிரேரகம் செய்வது பரமான்ம எனது சொரூபமாய நீயாம்; அது புண்ணிய பாவகர்மங்களின் அதீனமன்றும்.

அல்லது ஹே பிரதர்த்தன! சம்பூர்ண புத்தியாதிகளின் சாக்ஷியும், எல்லாவற்றின் பிரேரகமுமாய எந்தநினது வடிவத்தை யான் கூறினேனே, அந்தநினது வடிவமே சர்வ லோகங்களையும் பாலனம்செய்யும் (காப்பாற்றும்); தாயானவள் பாலகரைப் பாலிப்பதுபோலவென்க.

அல்லது ஹே பிரதர்த்தன! இல்லின் எஜமானன் தனது புத்திராதி யுற வினர்க்கு நாநாவகையாய போகங்களை யடைவித்துத் திருப்திசெய்வதுபோலப் பரமான்ம தேவனுய நீயும், சம்பூர்ண ஜகத்தையும் தனதாயெண்ணி, நாநாவகை யாய போகங்களை யடைவித்து எஞ்ஞான்றும் திருப்தி செய்விக்கின்றாய். ஹே பிரதர்த்தன! காஷ்டத்தாலும் மண்ணாலும் செய்யப்பெற்ற பிரசித்த சேது வானது ஜலத்தின் மரியாதையைத் தாரணம் செய்யுமாறுபோலப் புண்ணியவான் துறக்கத்தையடைவன், பாவியானவன் நரகத்தையடைவன் என்னு மிவ்வகையாய மரியாதையைத் தரிப்பதாய வேதத்தோடும் பிராஹ்மணரோடும் பகைப்பவராய இராக்ஷ ஜாதியரை நினது பலத்தாற் பரமான்மாவாய நீயே வசம்செய்வாய்; அரச னுனவன் தனது பலத்தால் துஷ்டபுருஷரை வசம்செய்வதுபோல வென்க. ஹே பிரதர்த்தன! தாவர ஜங்கம சர்வ பூதங்களிடத்தே ஆகாசம்போலச் சமான வியாபகமாய பரமான்ம தேவரானவரை நின்பொருட்டு யான் கூறினேன். அவ் வத்விதீய பரமான்மாவாய என்னை ஆன்மசொரூபமாய் நீயறி. ஹே பிரதர்த் தன! இவ்வத்விதீய ஆன்மாவின் ஞானமே மனுஷரின்பொருட்டு ஹிததமமா மென்பது எனதுடன்பாடாம். ஆன்மஞானமின்றி எவ்வஸ்துவும் ஜீவர்கட்கு இதமமன்று. ஸ்ரீ சங்கராநந்த முனிவர் கூறல்:—ஹே சிஷ்ய! தனது பிர திஞ்ஞையை உண்மையாக்கும்பொருட்டுத் தேவராஜாவாய இந்திரனுனவர் இவ் வண்ணம் ஹிததமமாய ஆன்மஞானத்தைப் பிரதர்த்தன அரசன்பொருட்டுக் கூறினார். அவ்விந்திரனது உபதேசத்தைக்கேட்டு அந்தப் பிரதர்த்தன அரச னுனவன் இந்திரனைப்போல ஆன்மஞானத்தோடு கூடியவனுனன். பின் தேவ ராஜாவாய இந்திரனுக்குத் தண்டம்போல அஷ்டாங்க நமஸ்காரம்செய்து, இந்திர னது ஆஞ்ஞையைப் பெற்று அவ்வரசன் தனதிருப்பிடமாய ஸ்ரீ காசிமாபுரியை யடைந்தனன். அவன் ஸ்ரீ காசிக்கு வந்தபின் பிராரப்த கர்மத்தை முடிக்கும்பொ ருட்டு நாநாவகையாய போகங்களைப் போகித்தனன். போகங்களைப் போகித்துப் பிராரப்தம் முடிந்தவுடன் சரீரத்தை விட்டொழித்து அவ்வரசனுனவன் இந்திர னது உண்மையாய அத்விதீய வடிவத்தை அடைந்தனன்; பிரஹ்மத்தோடு அபேத வடிவமாய விதேகமோக்ஷத்தை அடைந்தனன். ஹே சிஷ்ய! யாதொரு ஆன்ம ஞானத்தை நின்பொருட்டு யான் கூறினேனே, அவ்வான்மஞானத்தையே பிரதர்த் தனுதி மகா அதிகாரிகள் இந்திராதி மகா குருமார்களிடத்திருந்து பெற்றனர். ஆகையால், இவ்வான்ம ஞானமே அத்தியந்தம் துர்லபமாம். மேற்கூறிய ஆன்ம ஞானம் கிடையாமையினுலே குருபதவிக்கு யோக்கியமாய பிராஹ்மணனும் சிஷ்ய பாவத்தை யடைவன்; மேற்கூறிய ஆன்மஞானம் கிடைத்தமையினுலே சிஷ்ய பதவிக்கு யோக்கியமாய க்ஷத்திரியாதியரும் குருபாவத்தை அடைவர். ஆகை யால், ஆன்மஞானமே குருத்தன்மையைச் சம்பாதிக்கும்.

அல்லது, ஆன்மஞானத்தின்கண் இராநின்ற பெருமையானது அன்னிய எப் பொருள்களினுமில்லையாம்; மற்றுே, அப்பெருமை ஆன்மஞானத்தின் கண்ணே யேயுளது. இக்காரணத்தினுலே சாந்தோக்கிய உபநிஷத்தின்கண்ணே ஞானத்

திற்குச் சமானமாய தக்ஷிணையின் அபாவங் கூறப்பட்டுளது. ஆண்டிது பிரசங்கமாம்:—ஆன்மஞானத்தை அடைவிப்பவராய குருவின்பொருட்டுச் சீடன் சமுத்திர பரியந்தமுள்ள பிருதுவியைத் தக்ஷிணையாகக் கொடுப்பினும் ஆன்மஞானத்திற்குச் சமானமாக அத்தக்ஷிணையாக மாட்டாது; ஆகையால், ஆன்மஞானமே யாவற்றினும் அதிகமாம்.

அல்லது உலகின்கண்ணும் குருசப்தம் அதிக அர்த்தத்தின் வாசகமாம்; அவ்வெல்லாவற்றினும் அதிகம் அத்விதீய ஆன்மாவாம். ஆகையால், அவ்வத்விதீய ஆன்மாவை விஷயம் செய்வதாய ஆன்மஞானமும் அதிகமாம். ஆகையால், இது துணியப்பெற்றதாம்:—எவனுக்கு அத்விதீய ஆன்மசாக்ஷாத்காரம் உண்டாயதோ அவனே குருபதவிக்கு யோக்கியனும்; எவர்க்கு ஆன்மசாக்ஷாத்காரமின்றோ அவர் யாவரும் சிஷ்யபதவிக்கு யோக்கியராம்.

ஸ்ரீ ஆத்மபுராணம்.

**இரண்டாவது அத்தியாயம் முற்றும்.**

---

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## மூன்றாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநமஃ ஸ்ரீ குருப்யோநமஃ
ஸ்ரீ காசிவிஶ்வேஶ்வராப்யாம்நமஃ.

ஆண்டு இரண்டாவது அத்தியாயத்தின்கண் இருக்குவேதத்தின் கண்ணுள்ள கௌஷீதகீ உபநிஷதர்த்தத்தை நிரூபணம் செய்தோம். ஆண்டுத் தேவராஜாவாய இந்திரன் பிரதர்த்தன அரசன் பொருட்டுப் பிராணப் பிரஞ்ஞைகளால் உபகித ஆன்மாவை உபதேசம் செய்தனன். அந்தப்பிராணப் பிரஞ்ஞைவடிவ உபாதியினின்றும் வேறுபிரித்து ஆன்மாவை அறிவதில் எவன் ஆற்றலற்றவனவனே, அம்முமுக்ஷு புருஷனுக்குப் போதமுண்டாம் பொருட்டுப் பிராணாதி உபாதிகளினின்றும் வேறுபிரித்து, ஆன்மாவின் உண்மையாய வடிவத்தைக் கூறுவதாய கௌஷீதகீ உபநிஷத்தின் நான்காவது அத்தியாயப் பொருளை இப்போது இம்மூன்றாவது அத்தியாயத்தின்கண்ணே கூறுவாம்.

ஆண்டும் முன்னத்தியாயத்தில் ஆன்மஞானமே ஹிததமமென்னப்பட்டது. அதைக்கேட்ட சீடன் அத்தியந்தம் ஆச்சரியத்தை யடைந்தனன். மேலும் ஐயத்தோடுற்ற அச்சீடன் தனது குருவை இவ்வாறு வினவினன். சீடன் கூறல்:—ஹே பகவன்! முதல் அத்தியாயத்தின்கண் சனகாதி இருஷிகட்கும் வாம

தேவாதி அதிகாரிகட்கும் பரஸ்பர சம்வாதவடிவ இதிகாசத்தால் இருக்குவேதத்தின் ஐதரேய உபநிஷதங்கூறும் ஆன்மஞானத்தைத் தாங்கள் கூறினீர்கள். அவ்வான்மஞானம் சம்சாரவடிவ சூலத்தின் நிவிர்த்தி சாதனமாம். இரண்டாவது அத்தியாயத்தின்கண் இந்திரப் பிரதர்த்தன சம்வாதத்தால் அவ்வான்ம ஞானத்தையே திடப்படுத்தி என்பொருட்டுத் தாங்கள் கூறினீர்கள். இவ்வான்ம ஞானமே மனுஷர்கட்கு இததமமென்றும், ஆன்மஞானத்தின் வேறாய எப்பதார்த்தமும் ஹிததமமன்றுமென்றும், முன்னர் தாங்கள் கூறிய வசனத்தைக்கேட்டு யானிப்போது கிருத கிருத்தியனாயினேன். ஆனால், எனதிருதய ரூபகமலத்தைத் தங்கள் வசனவடிவ பவனத்தால் (காற்றால்) கிளம்புதலை யடைந்த சம்சயரூபப் பிரமரமானது (வண்டானது) சுற்றுகின்றது. காற்றின் வேகத்தால் கிளம்பிப் பிரமரம் கமலத்தைச் சுற்றாநிற்கும்; அதுபோல முற்கூறிய தங்கள் வசனத்தாலுற்பன்னமாய சம்சயம் எனதிருதயத்தைச் சுற்றுகின்றதென்பது கருத்தாம்.

இப்போது அச்சம்சயத்தைக் காண்பிபபாம் :—ஹே பகவன்! இரண்டாவது அத்திபாயத்தின் முடிவில இவ்வத்விதீய ஆன்மாவின் ஞானத்தாற் குருபதவிக்கு யோக்கியமாய பிராஹ்மணாதியர்களும் சிஷ்யபாவத்தை அடைவர் என்றும், சிஷ்ய பதவிக்கு யோககியமாய க்ஷத்திரியாதியர்களும் இவ்வத்விதீய ஆன்மாவின்ஞானத்தால் குருபாவததை அடைவரென்றும் முன்னாத் தாங்கள் கூறியது கூடாததாமென எனக்குப்புலப்படுகின்றது. இது கூறியதால் தாங்கள் ஆன்மஞானத்தைத் துதிசெய்தீர்களா? அல்லது இவ்வார்த்தை முன்னர் எப்போதேனும் முண்டாயதாகலின் என் பொருட்டுத்தாங்கள் கூறினீர்களா? என்னும் இவ்வையம் எனக்குண்டாகின்றது என்பது கருத்தாம்.

ஹே பகவன்! எனக்கோ இவ்வார்த்தை கூடாததென்றே பிரதீதியாகின்றது; ஏனெனின், கிரீடந்தரிகக யோககியமாயதுசிரமாம், பாதங்களில் தரிக்க யோக்கியமாயவை பாதரக்ஷைகளாம், அபபாதரக்ஷைகளைச சிரத்தின்கண்ணே தரிப்பதின்றும், கிரீடத்தைப் பாதங்களில் தரிபபதின்றும. அதுபோலப பிராஹ்மணாதியர்களிடத்தே நிகழாநின்ற குருத்தன்மை க்ஷத்திரியாதி சீடர்களிடத்தேயிராது; க்ஷத்திரியாதிகளிடத்தே நிகழாநின்ற சிஷ்யத்தன்மை பிராஹ்மணரிடத்தேயிராது. இவ்வண்ணம் கூடாததாய்ப் பிரதீதியாதலின், ஹே பகவன்! ஆன்மஞானவடைவினால சீடரிடத்தே குருத்தன்மை வேதத்தில் யாண்டேனும் கூறப்பட்டிருக்குமாயின், அதனை என்பொருட்டுத் தாங்கள் கூறவேண்டும்; தங்களின் வேறாய எப்புருஷனும் எனக்கு உணர்த்திவைக்க வல்லானல்லன் என்றிவ்வண்ணங்கூறிய சீடனது வசனத்தைக்கேட்டு, அத்தியநதம் மகிழ்வையுற்ற ஸ்ரீ குருவானவர் சீடன் பொருட்டுக் கூறுவாராயினர் :—ஹே குழந்தாய்! ஆன்மஞானத்தின் அடைவினால் சீடனும் குருபாவத்தையடைவன், ஆன்மஞானத்தின் அடைவுயின்மையால் குருவும் சிஷ்யபாவத்தையடைவன் என யான்நின்பொருட்டு முன்னர்க் கூறியது ஆன்மஞானத்தின் துதியை உத்தேசித்தன்றாம்; மற்றோ இவ்வார்த்தை முன்னரே உண்டாயிருக்கின்றது. ஆண்டுக் கௌஷீதகீயெனப் பெயரிய இருஷி

யானவர் தீர்க்ககாலபரியந்தம் தவத்தைப்புரிந்தனர், அவர்க்கு அத்தவமகிமையால் வேதமந்திரங்களையறியும் வல்லமையுண்டாயது. மீண்டும் அக்கௌஷீதகி யெனப் பெயரிய இருஷியானவர் முமுக்ஷுக்கட்கு மங்கலமுண்டாம் பொருட்டுத் தம் சிஷரைநோக்கிக் கௌஷீதகியெனப்பெயரிய உபநிஷத்தைக்கூறினார். அவ்வுபநிஷத் தின்கண் இவ்வார்த்தை கூறப்பெற்றுளது, அங்ஙனமே பிருகதாரண்ய உபநிஷத் தின்கண் சூரியபகவான் யாஞ்ஞவற்கியமுனியின் பொருட்டு இவ்வார்த்தைகூறியுள் ளார். ஆண்டுக் கூறியுள்ளதாவது, க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர்என்னும் மூன்று வர்ணத்தார்களும் சிஷ்ய பதவிக்கு யோக்கியரேயன்றிக் குருபதவிக்கு யோக்கியரல் லர்; பிராஹ்மணன் குருபதவிக்கு யோக்கியனும்; சிஷ்ய பதவிக்கு யோக்கிய னன்றுமென்றாலும், ஆன்மஞான அடைவின் பொருட்டுப் பிராஹ்மணனும் க்ஷத் திரிய அரசனுடைய சீடனானன். இவ்வார்த்தை பிருகதாரண்யக உபநிஷத்தின் கண்ணும் அவ்வண்ணமே, கௌஷீதகி உபநிஷத்தின் நான்காவது அத்தியா யத்தின்கண்ணும் பிரசித்தமாம். ஆகையால், ஹே குமர! ஆன்மஞான மகி மையால் சிஷ்யனும் குருபாவத்தை யடைவன் என யான் முன்னர்க் கூறியது ஆன்மஞானத்தின் ஸ்துதிவடிவ அர்த்த வாதமன்றாம்; மற்றோ மெய்ம்மை யாம். ஆண்டுக் கௌஷீதகி உபநிஷத்தின்கண்ணே பாலாகி யென்னும அந் தணனுக்கு அரசனோடுற்ற சம்வாதவடிவப் பழைமையான இதிகாசங்கூறப் பட்டுளது. அவ்விதிகாசத்தைக் கூறுகின்றேன் கேட்பாயாக; அதைக்கேட் பதனால் இச்சம்சயம் நீங்கிவிடும். கர்க்க கோத்திரத்தின்கண் உற்பன்னமாய பாலாகரெனப் பெயரிய ஒரு பிராஹ்மணரிருந்தார; அவர் ஆறங்கங்களோடு கூடிய நான்கு வேதங்களையும் யத்தியயனம் செய்தவர்; தர்மத்தின்கண்ணே நிஷ்டையுடையவர். அத்தகைய அவ்வந்தணருக்குப் பாலாகியெனப பெயரிய ஒரு மைந்தருண்டாயினர். அவரும் தமது பிதாவைப்போல வேதவேதாங்க வித்தை யின்கண்ணே குசலராயினர்; ஆனால் யானெல்லா மறையோரினும் வித்தையின்கண் அதிகனாவேன்; எனக்கொப்பாய் எவ்வுலகின்கண்ணும் வித்துவானில்லையென்னும் இவ்வகையாய வித்தை மதத்தாலும், தன மதத்தாலும், யவ்வன மதத்தாலும், அந்தப் பாலாகியெனப் பெயரிய அந்தணருக்குத் தர்மத்தின்கண்ணே நிஷ்டை யறவே யொழிந்தது. அவர் சர்வ திசைகளினுமுள்ள பண்டிதர்களை ஜயம் செய்யும்பொருட்டு ஹிமாலய பர்வதமுதல் சேதுபந்த இராமேஸ்வர பரியநதம் இடையிலுள்ள குருதேசம், பாஞ்சாலதேசம், காசிதேசம், மிதிலாதேசம் இவை முதலாய சர்வ தேசங்களினும் சஞ்சரித்தனர்; அவர் தங்கீர்த்தி சர்வ தேசங்களி லும் உண்டாயது. பேசுவதிலோ அத்தியந்தம் வாசாலராயிருந்தனர், அவர் ஆன்மா வின் வேறாய சர்வ அநான்மாக்களையும் அறிந்திருந்தனர்; ஆன்ம சாக்ஷாத்காரம் அற்றவராயிருந்தனர்; பிராணனையே யான்மாவாக அங்கீகரித்திருந்தனர். இத் தகைய புத்திமானாய அப்பாலாகிப் பிராஹ்மணர் தமது வித்யாபலத்தால் பாஞ்சா லாதி தேசங்களில் இராநின்ற பிராஹ்மணர் க்ஷத்திரியர் வைசியர் என்பவர் யாவ ரையும் ஜயம் செய்தனர். இங்ஙனம் சர்வதேச மறையோரையும் ஜயம் செய்து கொண்டு அத்தியந்தம் அபிமானமுடையவராய அவர் ஸ்ரீ காசிதேசத்தில் இரா நின்ற மறையோரை ஜயிக்கும்பொருட்டு ஒருகால் ஸ்ரீ காசி தேசத்தை யடைந்

தனர். ஆண்டு ஸ்ரீ காசிராஜா ஒருவரைவிடுத்து மற்றெல்லாப் பிராஹ்மண க்ஷத்திரிய வைசியர்களையும் ஜயித்தனர். மீண்டும் அவர் அஜாத சத்துருவெனப் பெயரிய ஸ்ரீ காசிராஜாவை ஜயிக்க இச்சித்து அவ்வரசர் சமீபத்தே சென்றனர். அவ்வரசரோ அதிசயமாய தர்மான்மா, சர்வ தர்மாத்மக்களாய புருஷரினும் முக்கியர், விநயத்தோடு கூடியவர், சத்தியத்தின்கண்ணே நிலையுடையவர், மகான்ம புருஷரின் சேவையின்கண்ணே நிதநியம் பிரீதியுடையவர். அவர் பலத்தினும் அதிக பலவானாய எப்பகைவனும் பூமியின்கண்ணே யுண்டாகவேயில்லை. ஆதலினாலே அவர் அஜாத சத்துருவெனப் பெயரை யடைந்திருந்தனர்; அல்லது உட்சத்துருவாய அகங்காராதிகளவர்க்கு நஷ்டமாயிருந்தனவாதலின் அவர் அஜாத சத்துருவெனப் பெயர்பெற்றிருந்தனர்.

இப்போது உட்சத்துருக்களின் அபாவத்தைக் காண்பிப்பாம்:—தமது சத்துருவினிடத்தும் தமது மித்துருவினிடததும், உதாசீனரிடத்தும் அவருக்குக் கனவின் கண்ணும விஷமபுத்தியின்றாம்; மற்றோ யாவரிடத்தும் சமான புததியிருநதது. தமது சரீரத்தினிடத்தும கிருமியினிடத்தும் அவ்வரசருக்கு விஷமபுத்தியில்லை; மற்றோ இரண்டினிடத்தும் சமானபுத்தியிருநதது. கருத்திதுவாம்:—இவன் நமது சத்துரு இவன் நமது மித்திரு என்னும் இவ்வகையாய விஷமபுத்தியினாலே இராகத் துவேஷாதிகளுண்டாம். விஷமபுத்திவடிவ காரணாபாவ முண்டாகவே இராகத்துவேஷாதி ரூப காரியமும் உற்பன்னமாகாது. அவ்விஷமபுத்தி அவ்வரசர் பாலின்றாமாதலின், சம்பூர்ண இராகத்துவேஷாதிகளின் அபாவமிருந்தது. அவ்வரசர் சபையிலிருக்கும்போது அவரை ஜெயிக்கும்பொருட்டு அவ்வந்தணர் ஆண்டுச சென்றனர். பிரசங்கம் யாதொன்றுமின்றியே அவ்வந்தணர் அரசரைநோக்கி இவ்வசனத்தைக் கூறுவாராயினர்:—ஓய் அரசனே! நீ பிரஹ்ம ஞானமறறவனாயிருக்கின்றாய் ஜன்ம மரணரூப சம்சார சமுத்திரத்தின்கண்ணே மூழ்கி இருக்கின்றாய். ஆதலின் நின்பொருட்டும் பிரஹ்மத்தின் உண்மையாய வடிவத்தை உபதேசஞ் செய்கின்றேன், நீ உன் மனத்தைச் சாவதானபபடுத்திக்கேள் எனக்கூறினர். அங்ஙனங்கூறிய பாலாகிப பிராஹ்மணரின் வசனத்தைக்கேட்டு அவ்வரசர் அத்தியந்தம் மகிழ்சசியை யடைந்து, அவ்வந்தணரை நோக்கி அரசர் கூறுகின்றார்:—ஹே ஆரியரே! யான் பிரஹ்மத்தை நின்பொருட்டு உபதேசிக்கின்றேன், எனப பிரசங்கமின்றியே நீர் கூறியமொழி மழையால் எனதுசெவியைக் குளிர்வித்தீர்; தங்களுடைய இவ்வசனத்தைக்கேட்டு எனது இருதயத்தின்கண் அத்தியந்தம் ஆநநதம் உண்டாயது. ஒருவனுக்கு ஒரே மைந்தனிருந்து அவன் நெடுநாள் தூரதேசம ஒன்றன்கண்ணே சென்றிருந்து, எவனேனும் ஒருவனால் அம்மைந்தன் இறந்தானெனக் கூறக்கேட்ட தந்தை தனசம்பத்தியுடையவராய் விருத்தாவஸ்தையை அடைநதவராயிருந்து தமது மரண சமீபகாலத்தில் ஒருகால் அம்மைந்தன் வந்தடைந்துவிடின், எங்ஙனம் அம்மைந்தனது வசனத்தைக்கேட்டு அக்கிழத் தந்தைக்கு ஆநந்தமுண்டாமோ, அங்ஙனமே பிரஹ்மோபதேசப் பிரதிஞ்ஞைவடிவமாய தங்கள் வசனத்தைக்கேட்டு எனக்கு அத்தியந்தம்

ஆனந்தமுண்டாயது. ஹே அந்தணரே! எனது சபையின்கண் அநேக புத்திமான்களாய பிராஹ்மணர் வருகின்றனர்; வந்து வேதங்களின் பாடோச்சாரணஞ் செய்தும் வேதார்த்தங்களைப் பிரகாசிப்பித்தும் தத்தமது விசித்திரமாய தொழிலைக் காண்பிக்கின்றனர். உலகின்கண்ணே பிரசித்தமான நாநாவகையாய வித்தைகளை அம்மறையோர் கூறுகின்றனர். பிரஹ்மவித்தையின் பிரசங்கம் உண்டாயினும், அது என்னாற் கேட்கப்படினும் எம்மறையோரும் பிரஹ்ம வித்தையைக் கூறுகின்றிலர், ஆனால் அம்மறையோரோ, வித்தையால் உலகின்கண்ணே பிரசித்தமானவரும் விருத்த அவஸ்தையோடு கூடியவரும் அநந்தருமாவர். கருத்திதுவாம் :—பிரஹ்ம வித்தையை உபதேசம் செய்யக்கூடாததில் மூன்று காரணங்களுள. ஒன்றோ அப்பிரசித்தியாம், மற்றொன்றோ அயோக்யதை, மற்றொன்றோ அசகாயத்தன்மையாம். இம்முக்காரணங்களும் இம்மறையோர் இடத்திலையாம். ஏனெனின், பிரஹ்ம வித்தியாவான் வடிவமாய் இம்மறையோர்க்கு யாண்டும் பிரசித்தியுண்டாதலின் அப்பிரசித்தி வடிவகாரணமும் இவரிடத்தின்றாம்; இம்மறையோர் விருத்தாவஸ்தையோடு கூடியுள்ளார், சிரத்தையோடுங்கூட யானிவர்பால பிரஹ்ம வித்தையைக் கேட்டனன். ஆகையால், அயோக்யத்தன்மைவடிவ காரணமும் இவர்பாலின்றாம். இவ்வாயிரமறையோர் ஒருங்கு கூடியிருத்தலின் அசகாயத்தன்மைவடிவ காரணமும் இவர்பாலின்றாம்; மற்றோ பிரசித்தி யோக்யதை சகாயத்தன்மை என்னும் முக்காரணமும் பிரஹ்மவிதயா உபதேசத்திற்காக இம்மறையோரிடத்தேயுள. ஆயினும் இம்மறையோர் என்பொருட்டு எபபொழுதேனும் பிரஹ்மவித்தையை உபதேசித்தாரில்லை. ஹே மறையோரே! தங்களிடத்தே இம்மூன்று காரணங்களுமில்லை; ஏனெனின், பாலிய அவஸ்தையோடுகூடியவராதலின் பிரசித்த ரூபகாரணமும் தங்களிடத்தின்றாம்; யான் தங்களிடத்தே பிரஹ்மவித்தையைக் கேட்டேனில்லையாதலின் யோக்யதை வடிவகாரணமும் தங்கள்பாலில்லை; தாங்கள் ஒருவராயிருத்தலின் சகாயத்தன்மை வடிவகாரணமும் தங்களிடத்தின்றாம். இங்ஙனம் உபதேசித்தற்குரிய முககாரணங்களில்லாதிருநதும், பிரஹ்மத்தின் உபதேசத்தை நின்பொருட்டு யான் செய்கின்றேன் எனத்தாங்களென்னை நோக்கிக்கூறிய வசனத்தைக் கேட்டு, யானளவிறநத சந்தோஷத்தை யடைநதனன். ஆகையால், ஹே பிராஹ்மணரே! தாங்கள் பிரஹ்ம உபதேசத்தை என்பொருட்டுசெய்தாலும் செய்யாவிடினும், பிரஹ்மோபதேசத்தின் பிரதிஞ்ஞை வடிவமாய தங்கள் வசனத்திற்காக யானிததக்ஷிணையை மனத்தின்கண்ணே ஆயிரம் கோக்களைப் பிரஹ்மவக்தாவின்பொருட்டு யானீவேன் எனத் தாரணஞ்செய்தேன் அக்கோக்களோ கடத்தைப்போல மடியுடையன; ஒருவருஷத்தில் கன்றீயத்தக்கன; அத்தியந்தம் சௌமிய சுபாவத்தையுடையனவாம். அத்தகையனவாய ஆயிரம் கோக்களையும் தங்களுக்கீந்தேன் என இவ்வண்ணம் கூறி, அவ்வரசர் நூலின்கண்ணேகூறிய கோதானவிதிப்படி சுவர்ணதியசாமக்ரியோடுகூட ஆயிரங்கோக்களைப் பாலாகிப் பிராஹ்மணரின் பொருட்டுத் தானம் செய்தனர். பிரஹ்மோபதேசத்தின் பிரதிஞ்ஞைமாத்திரத்தால் ஆயிரங்கோக்களைக்கொடுப்பதில் அஜாதசத்துரு அரசர்க்கபிப்பிராயமிதுவாம் :—பிரஹ்மவேத்தாவும், உதாரத்தன்மை முதலிய சர்வகுண சம்பன்னனுமாய என்னை அறியாமலிப்

பிராஹ்மணர் ஜனகராஜாவினிடத்தேசெல்வர், மோகவசமாய பிராஹ்மணர் இவ்வகையாய வசனத்தைக்கூறுகிற்பர், எங்ஙனம் பிதா புத்திரன் பொருட்டுத் தனது பதார்த்தங்களைக்கொடுப்பரோ, புத்திராதியர் அத்தியயனம் செய்துள்ள வித்தையையும் கேட்பரோ, அங்ஙனமே ஜனகராஜாவும் பிராஹ்மணரின் பொருட்டுத்தனத்தின் தானத்தையும் பிரஹ்மவித்தையின் தானத்தையும் செய்வர், தாமும் பிராஹ்மணரிடத்தினின்றும் பிரஹ்மவித்தையைச் சிரவணஞ் செய்வர், என இங்ஙனமியாவர் கூறுகிற்பரோ அவர் அஜாதசத்துருவாய எனது மகிமையை அறியாதவராய்க் கேவலம் மயலாற்கூறுகிற்பர்; ஏனெனின், ஜனகராஜாவிற்கு எம்மறையோனேனும் பிரஹ்மவித்தையை உபதேசிக்கின், உபதேசித்தபின் அவர் அம்மறையோன்பொருட்டு ஆயிரங்கோக்களைத் தக்ஷிணையாய்த் தானஞ்செய்வர். அஜாதசத்துரு ராஜாவாயயானோ பிரஹ்மவித்தையையானின் பொருட்டுக்கூறுகின்றேன் என வசனமாத்திரத்தைக்கூறும் பிராஹ்மணனுக்கும் ஆயிரங்கோக்களைக் கொடுத்தேன்; ஆகையால் ஜனகராஜாவைக்காட்டினும் எனது உதாரத்தன்மையதிகமாம். அவ்வெனது உதாரத்தன்மையை அறியாமல் ஜனகராஜாவின் சமீபத்தில் உலகர் செல்வர். இவ்வகையாய அஜாதசத்துருவின் அபிப்பிராயத்தை அற்பமதியையுடைய பாலாகிப் பிராஹ்மணர் அறிந்திலர்; மற்றோ இவ்வகையறிந்தனர் :—இவ்வரசனுக்குப் பிரஹ்மத்தையுணர அத்தியந்த தீவிரஜிஞ்ஞாசையுளதாதலின், பிரஹ்மவித்யா உபதேசத்தின் முன்னரேயே ஆயிரங்கோக்களை என்பொருட்டுக் கொடுத்தனன்; ஆகையால், இவன் ஜிஞ்ஞாசையைப் பூரணமாக்கவேண்டும் என்பதாய மயல் பாலாகிப் பிராஹ்மணருக்குண்டாய் எப்பிரஹ்மத்தின் வடிவத்தைத் தமது குருவிடத்தே கற்றிருநதாரோ அதனை உபதேசிக்கத்தொடங்கினர். ஆண்டு வியஷ்டிரூபத்தைத் தாரணம்செய்வதாய அத்தியாத்மம், சமஷ்டிரூபத்தைத் தாரணம்செய்வதாய அதிதெய்வம் என்னு மிரண்டின் வடிவ பிராணனே பிரஹ்மமாம். இவ்வண்ணம் அவ்வியாகிருத பரியந்தம் சவிசேஷப் பிராணரூபப் பிரஹ்மத்தைத் தாம் அறிந்தபடி அரசரின்பொருட்டு உபதேசித்தனர். ஆனால் அவ்யாகிருதத்திற்குமேல் யாதொரு நிர்க்குணப் பிரஹ்மமுண்டோ அதனைபாலாகியானவர் அறிநதாரில்லை; ஆகையால், அரசரின்பொருட்டுக் கூறினாரில்லை. இங்ஙனம், எவ்வெப் பிரஹ்மோபதேசததைப் பாலாகியானவர் அரசரின்பொருட்டுச செய்தனரோ அவ்வவ் வுபதேசத்தை அஜாத சத்துருவானவர் யான் முன்னரே யறிந்திருக்கின்றேன் எனக் கூறுதலினாலும், நிஷேதத்தை யுணர்த்துவதாய கைச்சேஷ்டையாலும் கண்டனஞ் செய்துகொண்டே போயினர். மீண்டும் அபபிராஹ்மணர் இங்ஙனங் கூறத்தொடங்கினர் :—ஓய் அரசனே! ஆதித்தியன் (1), சந்திரன் (2), மின்னல் (3), மேகமண்டலத்தின் சப்தம் (4), ஆகாசம் (5), வாயு (6), அக்கினி (7), ஜலம் (8) என்னும் எட்டும் அதிதெய்வப் பிரஹ்மபுருஷராம். பிரதிபிம்பத்தைக் கவர யோக்கியமாய தர்ப்பணாதிப் பிரகாசவஸ்துக்கள் (1), பத்துத் திசைவடிவ சுரோத்திரம் (2), வேகமாய்ச் செல்லா நின்ற புருஷன் பின்னுண்டாம் தொனிவடிவ சப்தம் (3), புருஷசமான ஆகாரமாய சாயைவடிவம் (4), தூலசரீரம் (5), சூக்குமசரீரம் (6), தக்ஷிண நேத்திரத்தின்கண்

இராநின்ற சூக்கும சரீரத்தின் ஆகாரம் (7), வாம நேத்திரத்தின்கண் இராநின்ற சூக்கும சரீரத்தின் ஆகாரம் (8) என்னும் எட்டும் அத்தியாத்மப் பிரஹ்ம புருஷர்கள். கருத்திதுவாம்:—ஆதித்தியாதி பதினுறு ஸ்தானத்தின்கண் இராநின்ற சோடச பிரஹ்ம புருஷரைப் பிரஹ்ம புத்தியால் யானுபாசிக்கின்றேன். ஆகையால் ஓய் அரசனே! நீயும் அப்பதினுறு புருஷரைப் பிரஹ்மபுத்தியோடு உபாசனை செய். அவ்வுபாசனையால் நினக்கு மகாபலத்தின் அடைவுண்டாம் என இங்ஙனம் கூறிய அந்தணர் வசனத்தைக்கேட்டு, அவ்வரசர் பாலாகிப் பிராஹ்மணரை நோக்கிக் கூறுகின்றுர். ஹே பிராஹ்மணரே! இப்பதினுறு பிரஹ்ம புருஷரை யான் முன்னர் நன்றுயறிந்துளேன்; யான் முன்னர் அப்பிரஹ்ம புருஷரை யுபாசித்துமுள்ளேன். ஆகையால் முன்னர் அறிந்ததை மீண்டும் உபதேசித்தல் வியர்த்தமாம். இங்ஙனம் பாலாகிப் பிராஹ்மணர் எவ்வெப் பிரஹ்ம வஸ்துவை அறிந்துளாரோ அவ்வெல்லாவற்றையும் அரசர் யானிதை முன்னரே யறிந்துளேன் என்னும் உத்தரத்தாற் கண்டனஞ்செய்தனர். இதன்மேல், நிர்க்குணப் பிரஹ்மசொரூபத்தை பாலாகிப் பிராஹ்மணர் அறிந்தாரில்லை. அரசரின் பொருட்டு அதுவன்றே உபதேசிக்கவேண்டும். என்னை? பாலாகிப் பிராஹ்மணர் முன்னர் இப்பிரதிஞ்ஞை செய்தனரன்று:—ஓய் அரசனே! யான் நின்பொருட்டுப் பிரஹ்மோபதேசத்தைச் செய்கின்றேன் என, பாலாகிப் பிராஹ்மணரின் அந்தப் பிரதிஞ்ஞை பொய்யாகவன்றே முடிந்தது. ஆகையால் அவர் தம் வதனம் (முகம்) அத்தியந்தம் வெட்கத்தோடு கூடியதாய் வாடியது; திருடனைப்போல் கீழ்முகத்தோடும் அவர் சபையின்கண்ணே மௌனத்தையடைந்தனர். அப்பாலாகிப் பிராஹ்மணரோ குலமதத்தாலும், வித்யாமதத்தாலும், தனமதத்தாலும் அத்தியந்தம் அகங்காரியாவர். பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசியரென்னும் மூன்று வர்ணங்களையும் திரஸ்காரம் செய்ததாலுண்டாய பாவத்தால் நஷ்டமடைந்த முககாந்தியை யுடையவர், சரத்காலத்தின் மேகத்தைப்போலப பயனற்ற கர்ஜனையை யுடைவர்; அத்தகையரை அரசர் நோக்கி அவர்தம் அபிமான நிவிருத்தியின் பொருட்டு நிர்த்தயையுடைய புருஷனைப்போல உரத்த சுரத்தால் இவ்வசனத்தைக் கூறுவாராயினர், ஹே துஷ்ட புத்தியையுடைய பாலாகிப் பிராஹ்மண! எப்பிரஹ்ம ஞானத்தை நீ யென்பொருட்டு கூறினையோ அவ்விவ்வளவுதானு நினக்குப் பிரஹ்மஞானம். அல்லது இதனினும் அதிகமும் ஏதாவது ஞானம் உனக்குண்டா? இதனினும் அதிகமாய் நினக்கு ஞானம் இருப்பிற்கூறுதி. ஹே பாலாகி! நின்னினும் அதிக வித்தையுடையோர் ஆயிரமறையோர் ஈண்டு எனது சபையின்கண்ணே இருக்கின்றனர். ஆனுல், வித்யாமதத்தால் மோகிதர் நினக்குச் சமானமாய் எம்மறையோருமின்றும்; மற்றேு நீ ஒருவனே வித்யாமதத்தால் மோகத்தை அடைந்துளாய். ஆகையால், ஹே பாலாகி! நினக்கு முற்கூறிய ஞானத்திலும் அதிக ஞானமிருப்பின் என்பொருட்டுக் கூறுதியென இங்ஙனம் கூறிய அரசர் வாய்மொழிகளைக்கேட்டு அப்பாலாகியானவர் இவ்வண்ணங் கூறுவாராயினர்:—ஹே அரசரே! எப்பிரஹ்ம உபதேசத்தை யான் உம்பொருட்டு உபதேசித்தனனே, அப்பிரஹ்ம சொரூபமே குருவானவர் முன்னர் என்பொருட்டு உபதேசித்தனர், இதனினும் அதிகமாய பிரஹ்மத்தின் சொரூப உபதேசத்தைக்

குருவானவர் எனக்கு உபதேசிக்கவில்லை. ஆதலின், முற்கூறிய காரியப்பிரஹ்மத்தின் சொரூபத்தின் வேறாய நிர்க்குணப் பிரஹ்ம சொரூபத்தை யான் அறிந்திலேன் என இங்ஙனம் கூறிய மறையவர் வசனத்தைக்கேட்டு, அவ்வரசர் இவ்வசனத்தைப் பாலாகியின் பொருட்டுக் கூறத்தொடங்கினார்:—ஹே பாலாகிப் பிராஹ்மண! முன்னர் நீ யாதொரு பிரஹ்மத்தை எனக்கு உபதேசித்தனையோ, அவ்வுனது உபதேசத்தால் நிர்க்குணப் பிரஹ்ம சொரூபத்தை அறிதல்முடியாது ஆகையால், யான் நின்பொருட்டுப் பிரஹ்ம உபதேசம் செய்கின்றேன் என்னும் நினது வசனம் பொய்யாம், பொய் கூறுதற்குமேல் யாதொரு பாவகர்மமுமின்றாம்; இக்காரணத்தினாலேயே மதிமானாய புருஷன் தனது மொழியை பொய்யாக்கான். கருத்திதுவாம்:—தான் மெய் பேசுவதால ஒருகால் தாரபுத்திரதனாதிய பதார்த்தங்களை விடும்படியாக நேரிடினும், அக்கால் விட்டொழித்தாயினும் மதிமானானவன் மெய்யே பேசுவன், தன் மொழியைப் பொய்யாக்கான்; ஏனெனின், பொய் பேசுபவன் இவ்வுலகின்கண்ணே கர்ம சண்டாளனாம். கருத்திதுவாம்:—சண்டாளரிருவகையாவர் ஒருவரோ ஜாதியிற் சண்டாளர், பிரசித்தமாய நாய் முதலியவற்றைப பக்ஷணம் செய்பவராய சண்டாளர்; அவர்பாற் சண்டாளத்வ ஜாதியுண்டாம். மற்றொருவரோ கர்மததால் சண்டாளர், பொய் பேசும் புருஷர்; அப்புருஷர் விசேஷமாய்க் காமசண்டாளராம். ஆகையால், பொய் மொழிக்குச சமானமாய் யாதொரு பாவ கர்மமுமின்றாம்.

“ வணி-ஜ நாஂஹி வபொயத் தத்ஸாக்ஷ்யெ-ந்ரு-தம் வதெசு ”

அல்லது வர்ணிகட்கே தான் வதமெங் குளதோ அங்குக் சாக்கி யநிருத மறைக இதன்பொருள் யாண்டுப பிராஹ்மணக்ஷியாக்கு ஹிம்சை உண்டாகக்கூடுமோ ஆண்டுப் பிராஹ்மணதியரின் காப்பின்பொருட்டுச சாக்ஷியாய புருஷன் பொய் மொழியையும் புகலலாம், அபபொய பேசுதலால சாக்ஷிக்குப் பாவமுண்டாகாது; மாறாப் புண்ணிய உற்பத்தியுண்டாம். என்று இதுமுதலாய நூல்கள் பொய்பேசக் காரணம் கூறியுள்ளது; அக்காரணமின்றி எபபுருஷன் பொய் பேசுவானோ அபபுருஷனுடைய நாவைப பாணத்தால் யமகிங்கரர் அறுபபர்.

அல்லது உலகின்கண்ணே எவ்வளவு அதர்ம புருஷர்களுளரோ, அவவியாவரினும் பொய்பேசும் புருஷனே முக்கிய அதமனாம்.

அல்லது எபபுருஷன் அக்கினி முதலிய தேவதைகளின் சமீபத்தும், குருவின் சமீபத்தும், அரசன் சமீபத்தும் பொய்பேசுகின்றனனோ, அபபொய்பேசுபவனை விசாரியாமலே அரசன் கொல்லலாம் என நூலின்கண்ணே கூறியிருப்பினும், ஹே பாபியாய பாலாகியே! நீ பிராஹ்மணனாயிருக்கின்றாய்; இக்காரணத்தால் நினது சரீரத்தை யான் கொலை செய்திலேன்; யானோ சர்வதர்மத்தையுமறிந்துளேன்; அவற்றினும் ராஜசபையின்கண் விசேஷமாய் யான் தர்மத்தையறிந்துளேன்.

அல்லது ஹே பாலாகி! அநேக சாதுப்பிராஹ்மணரை நீ நிராதரம் செய்துளாய், அப்பாப கர்மத்தினாலேயே யான் பிரஹ்ம உபதேசத்தை நின்பொருட்

டுச்செய்கின்றேன் என்னும் நினது பிரதிஞ்ஞை பொய்யாயது; ஏனெனின், இது நன்னூல் துணிபாம:—எவ்வதம புருஷர் சமதரிசிகளாய சாதுபிராஹ்மணரைச சரீரத்தாலும், வாக்காலும், மனத்தாலும துக்கிகளாக்குவரோ அவ்வதம புருஷருடைய சர்வ * மனோரதங்களையும் சூரியாதி தேவதைகள் நஷ்டமாக்கும் அப்புருஷர்க்கு எம்மனோரதமும் சித்தியாது.

அல்லது எப்புருஷர் சர்வபபிராணிகட்கும் துக்கத்தையுண்டு பண்ணுவாரோ, அப்புருஷர் இவ்வுலகின்கண்ணும் பரலோகததின்கண்ணும தமக்கே துககத்தையுண்டுபண்ணிக் கொளளுகின்றனா. அங்ஙனமே எப்புருஷர் சர்வபபிராணிகட்கும் சுகத்தையுண்டுபண்ணுகின்றனரோ, அபபுருஷர இவ்வுலகின்கண்ணும பரலோகத்தின்கண்ணும் தமககே சுகத்தையுண்டுபண்ணிக கொள்ளுகின்றனர். கருத்திதுவாம்:—எப்புருஷர் தமது மத்தகத்தை அயலார் மததகமெ்ன உணாநது தாடனஞ்செய்வரோ, (அடித்துக்கொள்வரோ) அப்புருஷர் தாமே துக்கத்தையடைவா, அங்ஙனம தமது ஆன்மசொரூபமாய சர்வபபிராணிகளையும தமமிற பின்னமாய் நினைநது, எபபுருஷரேனும் ஒரு பிராணியைத துககப்படுத்துவாராயின் அவ்வதமபுருஷா தமக்கே துன்பத்தை விளைவிததுக் கொள்கின்றனர்.

அல்லது ஹே பாலாகி! விதயாதி மதத்தாலுண்டாய மோகததால் நீ அநேக சாதுப்பிராஹ்மணர்களை நிராதரஞ்செய்துளாய்; அநநிராதர ரூபபாப கர்மத்தின் பலன் இப்போது நின்னை வநது பறறியதாதலின் பிரஹ்ம உபதேசததை யான் நின்பொருட்டுச செய்கின்றேன் என்னும் பொய்மமொழியை நீ என்பொருட்டுக கூறினாய், இத்தகைய பொய்ம்மொழியை இன்று முதல எக்காலும் எவர் முன்னும் நீ சொல்லாதொழிதி. ஹே பாலாகி! சமதமாதி சாதனஙகளோடு கூடிய முமுக்ஷுப் பிராஹ்மணர்களை விசேஷமாய்க் குருவே சிக்ஷிபபர், க்ஷத்திரியாதியர் சிக்ஷைசெய்ய யோக்கியரன்றுமென்றாலும் நீ சமதமாதிசாதனரகித உன்மத்த பிராஹ்மணனாதலின் யானின்னைச சிக்ஷை செய்கிறேன். கருத்திதுவாம:—ஒரு தர்மசாஸ்திரம இங்ஙனம கூறுகின்றது:—"நாத₂ண்ட்₃யோ நாமராஜ்ஞாஸ்தி யஸ்ஸ்வத₄ர்மே ந திஷ்ட₂தி" தன்னுடைத் தர்மந் தன்னி னழுவினோன் தண்டமிறைவனாற் றழுவுதல்கடனே இதன்பொருள்:—எபபுருஷன் தனதுவருணாசிரம தர்மமற்றவனாய் விபரீத ஆசாரணத்தை இயறறுவானோ, அபபுருஷன் அரசனால் தண்டிக்க யோக்கியனாவன். மற்றொரு தாமசாஸ்திரததின்கண் இது கூறப்பட்டுளது:—"அத₃ண்ட்₃யோ ப்₃ராஹ்மணோ ந்ருபேண" அக்ஷதனந்தணனுகு தலமைவே. இதன்பொருள்:—சரீரதண்டத்தைப பிராஹ்மணனுக்கு அரசன் ஆற்றுதல்கூடாது. இவ்விருசாஸ்திரங்களின் வியவஸ்தையில் யான் வாககால நின்னைநிராதரம் செய்தனன். கருத்திதுவாம:—நான்கு வகையாய தண்டம் நீதி சாஸ்திரத்தின்கண்ணே கூறபபட்டுளது. அவை, திக்தண்டம் (1), வாக்தண்டம(2), தனதண்டம் (3), சரீர தண்டம (4) இநநான்கு தண்டங்களில் எத்தண்டமும

* மனோரதம் = இச்சை, இன்பம், விருப்பமென்னும்பொருளாம், ஈண்டு இன்பம் எனப் பொருள் கொள்ளற்பாற்று.

நினக்குயான் ஆற்றுமொழியின் முதற்கூறியநூல் பயனறறதாய் முடியும்; அம் முதற் சாஸ்திரத்திற்குப் பிரமாணத்தன்மையின் பொருட்டு, நின்பால்தண்டம் செய்வதின் அடைவு அவசியமுண்டாம. அததண்டத்திலும சரீரதண்டம்பிராஹ் மணனிடத்தே கொலை "ஈக்ஷதொ ஷ்ராஹ்ணொ வ ஜெஙு" அக்ஷதனந்தண ஞகுதலடைவே. என்னு மிரண்டாவது சாஸ்திரத்திஞலேயே நிவாரணமாயது. ஆகையால், சரீர ஹநந (கொலை) ரூபதண்டம பிராஹ்மணனிடத்தே சம்ப வியாது; அல்லது தனததைக் கவாதல் வடிவதண்டமும் சம்பவியாது; ஏனெனின், பிக்ஷு ரூப பிராஹ்மணனிடததே தனத்தின் யோக்யதையின் றும. திக்தண்டமும் வாக்தண்டமும் துரான்மாவாய பிராஹ்மணனிடத் தேயும் சம்பவிக்கும்; இக்காரணத்தால ஹே பாலாகி! நின்னைக் கொடிய தீ மொழியால் யான் தாடனம்செய்தனன். தர்ம சாஸ்திரத்தின் கண் அரசனுக்கு இததாமம் கூறபபட்டுளது:—உத்தம புருஷரின்பொருட்டும் அதம புருஷரின்பொருட்டும் அரசன் எபபோதும ஹிததைதை யுபதேசம் செய்க என்னு மிநநூலை யங்கீகரித்து யான் நின்பொருட்டு ஹிதோப தேசத்தைச செய்கின்றேன், நீ கேட்பாயாக. ஹே பாலாகி! நீ முன்னர் கூறிய சோடச பிரஹ்ம புருஷரது ஞானததால் மோக்ஷத்தின் பிராபதியுண்டா காது; மற்றே அபபதினறு புருஷர்களுக்கும் சகல உலகிற்கும் காரணமாய பரமான் மாவின் ஞானத்தாலேயே மோக்ஷபபிராப்தி யுண்டாமாதலின், அப்பரமான்மாவே நீ யறிய யோக்கியமாகும. அபபரமான்மாவின் ஞானம் குருவின் உபதேசத்தால் அன்றி யுண்டாகாது; ஆகையால், ஆன்மஞான அடைவின்பொருட்டு உனது குருவினிடததில் நீ போகுதி. குருவின் உபதேசத்தால ஆன்மஞானத்தை நீ சம் பாதியாது விடுவையாயின், இவ்வித்யாமதம் மறித்தும மறித்தும் நினக்கு ஜனன மரணரூப நரகததை யடைவிக்கும். ஹே பாலாகி! எபபரமான்மாவானவர் இவ் வுலக உற்பததி, திதி, லய காரணராவரோ அவரே பிரஹ்ம சபததகின் பொருளாம்; பிரஹ்ம சபதஜன்னிய ஞானவிஷயமாம். இவ்வண்ணங்கூறிய அஜாதசத்துரு அரச ரின் வசனத்தைக்கேட்டு அந்தப பாலாகிப பிராஹ்மணர் அபிமானமறறவராஞர். இவ்வகையாய அபிபபிராயத்தால அபபாலாகியானவா அஜாதசத்துரு அரசரையே குருரூபமாய்த் துணிநதனர். இபபோது அப்பாலாகிப பிராஹ்மணரின் அபிப பிராயத்தைக காண்பிபபாம்:—எவ்வான்மாவின் ஞானத்தால் புருஷனிடத்தே குருத்தன்மையாமோ, அவ்வான்மா அத்தியநதம குருவாம; அவ்வான்மாவை உபதேசம் செய்பவர் எபபுருஷரோ அவருக்கும் குருத்தன்மை யோக்கியமாம். அகங்காராதிகள் எபபுருஷனை ஆசிரயித்திருக்குமோ அவனையும் லகுத்தன்மை யுடையவனுக்கும்; ஆகையால, அவ்வகங்காராதிகள் அத்தியந்தம் லகுவாம், அவ் வகங்காராதிகளை எபபுருஷன் நிவிர்த்திசெய்வனே அப்புருஷனும குருவாதற்கு யோக்கியமாம். இவ்விருவகையாய இலக்கணங்களும் இவ்வஜாத சத்துரு அரச ரிடத்தே பொருந்துகின்றன; ஏனெனின், வித்யாமதம், தனமதம், குலமதம் என்னும இம்மூவகையாய மதமும எனக்கு நரகத்தை ஈவதாம்; இவ்வுலகின் கண்ணும் அமமத சம்பந்தத்தால் மகான்ம புருஷரின் சபையின்கண் நிராதர

ரூபலகுத்தன்மையை யானடைந்தனன்; ஆகையால், வித்யாதிகளின் மதம் அத்தியந்தம் லகுவாம்; அநந்தம் வகையாய துக்கங்களைச் செய்வதாம். இவ்வகையாய எனது மதத்தை இவ்வரசர் அனுதாரூப உபாயத்தால் நிவிர்த்திசெய்தனர்; அரசரோ தாம் வித்யாதிமதங்களற்றவர். இக்குருவின் இலக்கணம் இவ்வஜாதசத்துருவென்னு மிவ்வரசரிடத்திற் பொருந்துகின்றது; ஆகையால், இவ்வஜாதசத்துரு அரசரே எனது குருவாதற்கு யோக்கியராவர்.

அல்லது இவ்வரசரை விட்டொழித்து வேறு எவ்வாசிரியரிடத்தேனும் யான் செல்வேனுயின் என்பால் செய்ந்நன்றி கொன்றதாந் தன்மைத் தோஷம் உண்டாம்; ஏனெனின், எப்புருஷன் ஒரு புருஷன்செய்த உபகாரத்தை நினையானே அப்புருஷன் செய்ந்நன்றி கொன்றவனுவன். இவ்வரசர் எனது அகங்காராதிகளை நிவிர்த்தி செய்தனர், ஆதலின் இவ்வரசர் எனக்கு மகா உபகாரம் செய்துளார்; இவ்வரசரது உபகாரத்தை மறந்து யான் அன்னிய குருவை அடைவனுயின் யானும் செய்ந்நன்றி கொன்றவனுவேன்; ஆகையால், இவ்வரசரையே குருவாய் உடன்பட்டு இவரையே சரணுகதி படைவேன்.

அல்லது இவ்வுலகின்கண்ணே அஜாதசத்துரு அரசா எங்ஙனம் பிரஹ்மத்தின் உண்மையாய வடிவத்தை அறிவரோ, அங்ஙனம எவனும அறியான்; கருத்திதுவாம்:—உலகின்கண் தவிதீயைபிற் தோறறும நிலவை (மூன்றும்பிறைச் சந்திரனை) எவன் விழிகளால பிரத்தியக்ஷமாய்க கண்டிருக்கின்றுனே அவனே மற்றொரு புருஷனுக்கு நிலவைக் காண்பிக்க வலலவனுவன், எவன் தானே நிலவைக் காண்கிலனே அவன் மற்றவனுக்கு நிலவு காண்பிக்க வல்லவனுகான். அதுபோல இவ்வரசரின் வேறுய புருஷர் பிரஹ்மத்தின் உண்மையாய வடிவத்தை அறியவில்லையாயின் என் பொருட்டு அதனை அவர் எங்ஙனங் கூறுவா.

அல்லது, முன்னர் எவ்வாசிரியர்பால் யான் வித்யா அத்தியயனம் செய்தனனே அவர்க்கும் பிரஹ்மத்தின் உண்மையாய வடிவஞானமின்றும்; ஏனெனின், அவர் தமக்குப் பிரஹ்மத்தின் உண்மையாய வடிவஞானம் இருக்குமாயின் பிராணனுக்குச் சமானமாய பிரியசிஷ்யனுய என்பொருட்டு, அவ்வாசிரியர் பிரஹ்ம வித்யா உபதேசத்தைச் செய்தேயிருப்பர்; அவ்வாசிரியர் பிரஹ்ம வித்யா உபதேசத்தை என்பொருட்டுச் செய்திலர்; மற்றே எவ்வளவு வித்தைகள் அவ்வாசிரியருக்கு வருமோ அவ்வளவு வித்தைகளெல்லாவற்றையும் அவ்வாசிரியர் என்பொருட்டுக் கொடுத்துளார். பிரஹ்ம வித்தையை அவ்வாசிரியர் என்பொருட்டுக் கூறுமையின் அவருக்குப் பிரஹ்மத்தின் உண்மைவடிவ ஞானமின்றென்றே அறியலாமன்றே, மேலும் ஹிமாலய பர்வதம் முதல் சேதுபந்த இராமேஸ்வர பரியந்தம் பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசியராய மூன்று வர்ணங்களில் எத்துணைப் பிரசித்தமாய வித்வான்களுளரோ, அவ்வியாவரையும் யான் ஜயித்து இவ்வரசரை ஜயிக்கும்பொருட்டு ஈண்டு உற்றனன். ஆகையால், இவ்வரசரினும் முன்னுள்ள எனது ஆசிரியரினும் வேறுய் எவ்வளவு மறையோர் முதலிய வித்வான்களுளரோ அவர் யாவரும் எனது சிஷ்ய பாவத்தை அடைந்துளார். ஆகையால், அவர்பால் நின்றும் பிரஹ்ம வித்தை அடைவின் சம்பாவனை உண்டாகாது. அம்மறையோர்

முதலாயினோர்க்குப் பிரஹ்ம வித்தை வருமாயின் என்னால் பராஜய மடைந்திரார். அவ்வெல்லா மறையோரையும் யான் பராஜயம செய்தே வந்துளேன் ஆதலின் அவரிடத்தே பிரஹ்ம வித்தையின் சம்பாவனை உண்டாகாது. இவ்வஜாத சத்துருவாய அரசர் மனுஷராயிருப்பினும் குணங்களால் தேவதைகட்கு ஒப்பாவர்.

அல்லது தேவதைகளினும் அதிக குணவானவர், ஏனெனின், இவ்வரசர் பிரமாதமற்றவராய்ப் பிரஹ்ம வித்தையைத் தரித்துளார். அதிகாரியாய முமுக்ஷு ஜனங்களின் பொருட்டும் பிரஹ்ம வித்யா உபதேசம் செயதுளார்; ஆதலின், இவ்வரசர் தேவதைகளினும் உயர்ந்தோர். இந்திராதி தேவதைகளோ தேவதாஸ்திரீகளின் முகத்தின் தரிசனவடிவ மதுபானத்தால் அத்தியந்தம் மோகத்தை அடைந்துளார்; ஆகையால், அத்தேவதைகள் பிரஹ்ம வித்தையை அறிந்திருந்தார் ஆயினும் அறிந்திலர். இபபூவுலகின்கண் மதுபானஞ் செய்யும் புருஷன் தான் கிருகாதிகளை அறிநதிருநதபோதிலும அறிந்திலன். இவ்வஜாத சத்துரு அரசர் இவ்வளவு லக்ஷ்மியை அடைந்திருநதும் முனிவரைப்போன்று அபிமானமற்றவராய் இருக்கின்றனா. புத்திராதிப பிரிய வஸ்துக்களை யடைந்தும் இவ்வரசர் மகிழ்ந்திலர்; அபபிரிய வஸ்துக்களையடைந்தும இவ்வரசருக்குச் சோகமுண்டாவதில்லையாம். கருத்திதுவாம்:—எவ்வஸ்துவின்கண் புருஷனுக்கு இராகமுண்டாமோ, அவ்வஸ்துவடையபபெறின் அபபுருஷனுக்கு மகிழ்சசியுண்டாமாதலின், இராகமே மகிழ்சசியின் காரணமாம்; எவ்வஸ்துவின்கண்ணே புருஷனுக்குத் துவேஷமுண்டாமோ, அவ்வஸ்துவை அடையபபெறின் அப்புருஷனுக்குசசோகம் உறபன்னமாமாதலின், துவேஷமே சோகத்தின் காரணமாம். அவ்விராகமும் துவேஷமும இவ்வரசரிடததில்லையாம்; ஆகையால், மகிழ்ச்சியும் சோகமும் இவ்வரசர்பாறசம்பவியா; ஏனெனின், இவ்வரசருக்குத தனது புத்திரன் எங்ஙனமோ அங்ஙனமே சத்துருவுமாம; புத்திரரிடத்தே இவ்வரசருக்கு இராகமின்றும் சத்துருவின்பால் துவேஷமின்றும்.

அல்லது இவ்வுலகின்கண்ணே ஒர் அஜாதசத்துரு அரசரே காமக்குரோதம் அற்றவராவர்; வேறெப்புருஷரும காமக் குரோதங்களற்றவரன்றும; ஏனெனின், இவ்வரசர் காமதோஷத்தோடுகூடியவராயின் என்பொருட்டு ஆயிரங்கோக்களைக் கொடாரன்றே, ஆனால் இவ்வரசரோ யான் பிரஹ்ம உபதேசத்தை நின்பொருட்டுசசெய்கின்றேன் என்னும் எனது வசனமாத்திரததானே ஆயிரங்கோக்களை என்பொருட்டுக் கொடுத்தனர் ஆதலின், இவ்வரசன்பால் காமதோஷமின்றும். எப்புருஷன் காமதோஷமுடையவனுவனே, அபபுருஷன் சுபாததிரத்தின்கண் (பாத்திரமுடையவரின்கண்) தானம் செய்யான், மற்றே குபாத்திரமாய (பாத்திரமில்லாதவராகிய) வேசியாதி ஸ்திரீகள், வேசியின்பின் வாத்தியங்களை வாசிக்கும் புருஷர், நாநாவகையாய மகிழ்சசியைச் செய்விப்பவராய வேஷதாரிகள், என்றற்றொடக்கத்தனவாய் எத்துணைக்குப் பாத்திரங்களுளவோ அக்குபாத்திரங்கட்கு ஆயிரம் ரூபாய் காமி புருஷன் கொடுப்பன்; ஆனால் பிரஹ்ம வேத்தாவாய சுபாத்திர புருஷன் பொருட்டு ஐநது கௌடியும் (பலகரையும்) காமி

புருஷன் கொடமுடியாதவனுவன். ஆகையால், இது துணியப்படுமன்றோ:—எவ்வெப்புருஷர் தத்தந்திரவியம் சுபாத்திரத்தே செலவாமோ அப்புருஷர் காமதோஷமற்றவராவர். எப்புருஷர் தம்திரவியம் குபாத்திரத்தே செலவாமோ அப்புருஷா காமதோஷமுடையராவர். இவ்வரசரது திரவியமோ சுபாத்திரத்தின்கண்ணே செலவாகின்றதாதலின் இவர் காமதோஷமற்றவராவா.

அல்லது காமதோஷத்தாலுண்டாய ஜனனமரணுதி தோஷங்களை எப்புருஷனறிவனே, அப்புருஷனே காமதோஷமற்றவனுவன். காமஜன்னியதோஷ ஞானமுறாத புருஷன் காமமற்றவனுதல் முடியாது. இவ்வரசரோ காமஜன்னிய ஜனனமரணுதிதோஷங்களை நன்றாயறிந்தி நக்கின்றார்; ஆகையால், இவ்வரசர் காம தோஷமற்றவராவர்.

அல்லது இவ்வரசரிடத்தே குரோதமுமின்றாம்; ஏனெனின், குரோதவானுயவன் தனக்கெவனேனும் அபராதஞ்செய்யின் அக்குரோதி அவ்வபராதியையடிப்பன்; அடிப்பதிற் சமர்த்தின்றாயின் தனது தலையை உடைததுக்கொள்வன்; இக்குரோதவானிலக்கண மிவ்வரசர்பாலின்றாம்; ஏனெனின், சபையின்கண்ணே வந்து அஞ்ஞானியாய யான் இப்பிரஹ்மவேத்தாவாய அஜாதசத்துரு அரசனை அவமரியாதை செய்தும் இவர் என்மீது குரோதமுடையராகவில்லை, மாறாய் எனது இதத்தை இச்சித்தனர்; ஆகையால், இவ்வரசரிடத்தே குரோதமின்றாம். இவ்வரசரிடத்தே குரோதமிருக்குமாயின், அபராதியாய எனது இதததை இசசியாரன்றோ.

அல்லது யான்முன்னர் எனது குருவாயிலாயும் சாஸ்திரவாயிலாயும இது கேட்டுளேன்:—பிரஹ்மததையுணாநத ஒருவனையன்றி மற்றெலலாபபிராணிகளினிருதயத்தையும காமககுரோதங்கள்விடா. பிரஹ்மததையுணர்நத புருஷனிடத்தே காமககுரோதங்களிரா. இஙஙனம குருசாஸ்திர வசனத்தினுலும் இவ்வஜாதசத்துரு அரசரே பிரஹ்மததை யுணாநதவரெனத துணியபபடுவா; ஏனெனின், இவ்வரசரிடத்தே காமககுரோதங்களின் அபாவமிருத்தலின்; ஆகையால் இத்தகைய பிரஹ்ம வேததாவாய அரசரைப பரித்தியாகமசெய்து பிரஹ்மவித்தையை யடையும்பொருட்டு வேறொரு தேவதையின் சமீபஞ்செலலல எனககுசிதமன்றாம்.

அல்லது தேவதைகளால் பிரஹ்ம விததை கிடைபபதில் எனககு ஐயமுண்டாகின்றது; ஏனெனின், இவ்வுலகின்கண்ணே எங்ஙனம் மனுஷாதிகளின் பிரத்தியக்ஷ தரிசனம் உண்டாமோ, அங்ஙனம தேவதைகளின் பிரத்தியக்ஷ தரிசனம் எவனுக்கும் உண்டாவதின்றாம தேவதைகளின் தரிசனத்தின் பொருட்டு அநேக காலபரியந்தம் யான் தவத்தைப் புரியினும இப்பிறபபின்கண்ணே எனக்கு அத்தேவதைகளின் தரிசனம உண்டாமோ அல்லது மறுபிறப்பினுண்டாமோ என்னும் ஐயம் எனக்கு உண்டாகின்றது. அல்லது மகத்தாய தவம் புரிந்து இப்பிறப்பின்கண்ணே தேவதையின் தரிசனங் கிடைப்பினும், சர்வ தேவதைகளினும் முக்கியமாய பிரஹ்மவேத்தா தேவதையின் தரிசனம் கிடைப்பது மிகவுந்துர்லபமேயாகும். அல்லது தவத்தின் மகிமையால் ஒருகால் அம்முக்கிய

பிரஹ்மவேத்தா தேவதையின் தரிசனமும் எனக்குக் கிடைக்கக் கூடுமேனும், அத்தேவதை போகமிகுதியோடு கூடலின், இராஜோகுணத்தோடு கூடியுளதாதலின், என்பொருட்டுப் பிரஹ்ம வித்யா உபதேசத்தைச் செய்யுமோ, அல்லது செய்யாதோ, அல்லது ஏதாவது திரவியாதி பதார்த்தங்களை யடைவித்து எனக்கு மோகத்தை யுண்டாக்கிவிடுமோ, என, இவ்வகையாய சம்சயம் எனக்கு உண்டாகின்றதாதலின் தேவதைகளின் உபதேசத்தால் பிரஹ்ம வித்தையின் அடைவில் எனக்குச சம்பாவனையின்றும். தேவதைகளின் வேறாய் இவ்வுலகின்கண்ணே இராநின்ற எவ்வளவு பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசியரென்னும் மூவருணத்தில் பிரசித்த விதவான்களுளரோ, அவரியாவருமே என்னால் அபஜெயத்தை அடைந்தவரே யாதலின், அவராலும பிரஹ்ம வித்தை யடைவின் சமபாவனை (எண்ணம்) எனக்கு உண்டாவதின்றும். இவ்வண்ணம ஆராய்ந்து, அபபாலாகிப பிராஹ்மணா பிரஹ்ம விதததையை யடையுமபொருட்டு, அஸ்ததகின்கண்ணே காஷ்டத்தை எடுத்துககொண்டு அவவரசரின் சமீபததைசென்றனர். பிராஹ்மணா, க்ஷத்திரியர், வைசியா என்னும் மூவகையாய பாலகரும், எட்டாவது வருஷத்தில அஸ்தத்தில் காஷ்டத்தைக் கவர்நதுகொண்டு, ஆசிரியரது சமீபத்தையடைந்து, இவ்வகையாய்ப் பிரார்த்திப்பர். ஹே பகவன்! யான் உமது சிஷ்யன் ஆகையால், எனக்கு உபதேசம் செய்வீராக என்றா. அங்ஙனமே பாலாகிப் பிராஹ்மணரும் அவ்வரசர் பாலடைந்து இங்ஙனங கூறுவாராயினா :—ஹே பகவன்! யான் தங்களுடைய சிஷ்யன ஆகையால, என்பொருட்டுப பிரஹ்ம வித்தையின் உபதேசம் செய்வீராக. இவ்வகையாய வசனததால பாலாகியானவர் இவ்வர்த்தத்தைப போதிப்பவராயினா. இவ்வுலகின்கண்ணே எபபுருஷன் பிரஹ்ம வித்தையால் அதிகனோ அப்புருஷனே குருபதவியினுககு யோக்கியனாவன்; அவன் மறையோனேயாகுக, அல்லது க்ஷததிரியனேயாகுக, அலலது வைசியனேயாகுக, அல்லது சூததிரனேயாகுக, அலலது ஸ்திரீயேயாகுக, அல்லது நபும்சகனேயாகுக. அல்லது இராக்ஷசனேயாகுக, எவ்வாறாறனும் பிரஹ்ம விததை யுடையவனே குருபதவியினுக்கு யோககியனும. எபபுருஷனுக்குப பிரஹ்ம விததையின் அடைவு உண்டாகவில்லையோ, அவன் பிராஹ்மணனே ஆயினும் அன்னிய வித்தைகளில பிரஹஸ்பதிக்குச சமானனே யாவன், ஆயினும அபபுருஷன் சிஷ்ய பதவியினுக்கே யோககியனாவன்; குருபதவியினுக்கு யோக்கியனன்றும. ஒரு பிரஹ்ம வேத்தாவே குருபதவியினுக்கு யோக்கியனாவன். இங்ஙனம தமது அபிபபிராயததை அபபாலாகியானவர் உணர்த்தி வைபபாராயினா. ஹே சிஷ்ய! இங்ஙனம அபிமானமற்ற பாலாகிப் பிராஹ்மணரை அஜாதசத்துரு அரசாகண்டு தமது ஆசனததினின்றும எழுந்தனர். இருகையையுங் கூப்பி அவ்வரசா பாலாகியின் பொருட்டு நமஸ்காரம் செய்தனர். இவ்வகையாய வசனத்தை அவ்வரசா பாலாகிப பிராஹ்மணரின்பொருட்டுக் கூறுவாராயினர் :—ஹே பாலாகிப பிராஹ்மணரே! இவ்வுலகின்கண்ணே பிரஹ்மாவானவர் பிராஹ்மணத்வ ஜாதியையுடைய சர்வப பிராஹ்மணர்களையும குருரூபமாய் உண்டாககியுள்ளார்; க்ஷததிரியாதி அன்னிய வருணங்களை இயல்பாயே சிஷ்யரூபமாய்ப பிரஹ்மாவானவர் உண்டாக்கியுள்ளார். ஆகையால், ஹே

பாலாகிப் பிராஹ்மணரே! நீர் பிராஹ்மணராயிருந்தும் க்ஷத்திரியனுயை எனது சிஷ்ய பாவரூப விபரீத கருமத்தின் இச்சையை எதன்பொருட்டுச் செய்கின்றீர்; மற்றோ இவ்விபரீத கருமம் செய்தல் உமக்கு உசிதமன்றாம்.

அல்லது ஹே அந்தணரே! விபரீத கர்மத்தின்கண்ணே முயற்சி முக்காரணங்களாலுண்டாம். ஒன்றோ குரோதத்தாலாம், மற்றொன்றோ பயத்தாலாம், மற்றொன்றோ அஞ்ஞானத்தாலாம். அவற்றுள், குரோதத்தாற் தங்களுக்கு இவ் விபரீத கர்மத்தின்கண் முயற்சி உண்டாயிருக்குமாயின், என்பேரில் க்ஷமை செய்து அக்குரோதத்தை நீக்கிக்கொள்ளுங்கள். கருத்திதுவாம்:—அற்ப புத்தியையுடைய பாலகனுப யான் இராஜதர்மத்தை அங்கீகரித்து எவ்வெக் கொடு மொழி தங்கள் பொருட்டுக் கூறினேனோ, அவ்வெல்லா எனது அபராதத்தையும் தாங்கள் பொறுத்துக் கொள்ளுங்கள்; அவ்வாறு பொறுத்துக் கோடல் மறையோர்க்கியல்பாம்.

அல்லது ஹே பாலாகிப் பிராஹ்மணரே! யான் தங்கட்குக கொடுமொழி கூறியதானது, அபராதமின்றிக கூறியதன்றாம்; மறறோ யான் அநேகர் வாயிலாய்ப் பாலாகியானவர் தனமதத்தாலும், குலமதத்தாலும், வித்யாமதத்தாலும் அநந்தம் சாதுப் பிராஹ்மணர்களை நிராதரம் செய்துளார்; யான் எவ்வண்ணம் கேட்டிருந்தேனோ முன் அவ்வண்ணமே தங்களைக் கண்டனன். இக்காரணத்தால் தங்கள் மதநிவிர்த்தியின்பொருட்டு யான் தங்களுக்குக் கொடுமொழி கூறினேன். தங்கள் பொருட்டுப பிரயோகித்த கொடுமொழியானது எனது பிரமாதத்தாற் கூறியதன்றாம். மற்றோ தாமசாஸ்திரத்தின் அனுசாரமாய்க் கூறியதாம்; ஏனெனின், தர்மசாஸ்திரத்தின்கண்ணே இது கூறப்பட்டுளது:— துராசாரியாய பிராஹ்மணனுடைய துராசரணத்தை நன்றாக நிர்ணயம் செய்து அரசன் அந்தப் பிராஹ்மணரை வாக்கால் நிராதரம்செய்க என்பதைத் தர்ம சாஸ்திரத்தின்கண் யான் கேட்டுளேன். இககாரணத்தினுலே யான் தங்கட்குக் கொடுமொழி கூறினேன்.

அல்லது, ஹே மறையோரே! தங்களைபபோன்ற பிராஹ்மணர்களே என் பொருட்டு இராஜ தருமததை உபதேசித்தனர். அத்தர்ம ஆசரணத்தின்கண்ணே எனது பிரமாதமேதேனும் தமக்குக் காணப்பெறினும் பாலகனுய என்பேரில் க்ஷமை செய்யவேண்டும். ஹே மறையோரே! தங்களது கலக்கத்தைக் கண்டு எனக்கு மிகவும் சோகமுண்டாகின்றது. யானும் எனது அரசும், அரச தன்மங்களும் சிசி யென அவருக்குக் கனவேயன்றோ. அரசர்களின் தர்மங்களை அங்கீகரித்தல்லவா யான் பிராஹ்மணரை நிராதரிக்கும்படி நேரிட்டது.

அல்லது ஹே பாலாகிப பிராஹ்மணரே! எனது பயத்தால் நீர் இவ்விபரீத கர்மத்தின்கண் முயன்று இருப்பீராயின் அது ஒருகாலும்கூடாது; ஏனெனின், நீச ஜாதியையுடைய யாதாயினும் ஓர் அபராதிப் பிராணியிருப்பின், அதனையும் யான் கொல்வதில்லையாயின் உம்மைப்போன்ற உத்தம பிராஹ்மணர்களை யான் எங்ஙனம் கொல்வன். ஹே பிராஹ்மணரே! எவனுயினும் ஒரு புருஷன் திருடு

தலாகிய முதல் அபராதத்தைச் செய்யின், அச்சோர புருஷரின்பொருட்டுத் தனுதி பதார்த்தங்களைக் கொடுத்துத் திருடுதலினின்றும் யான் நிவிர்த்திசெய்கின்றேன். அத்தனத்தைக் கவர்ந்தும் அப்புருஷன் மீண்டும் திருடல்வடிவ மற்றோர் அபராதத்தைச் செய்வானாயின், அப்புருஷனை எனது தேசத்தினின்றும் யான் வெளிப்படுத்தி விடுகின்றேன், தேசத்தினின்றும் வெளிப்படுத்திய பின்னரும் அப்புருஷன் திருடுதல்வடிவ மூன்றாவது அபராதத்தைச் செய்வானானால், நாயின் காலுக்குச் சமானமாய ஆகாரத்தோடுகூடிய இரும்பு முத்திரையை அக்கினியின்கண்ணே நன்றாகக் காயவைத்து, அத்திருடனுடைய மஸ்தகத்தில் அடையாளம் செய்துவிடுவேன். அப்புருஷன் மீண்டும் நான்காவதுமுறை திருடுதல் முதலிய அபராதத்தைச் செய்யின், அப்புருஷனுடைய ஒரு கையை யான் வாங்கிவிடுவேன். அப்புருஷன் மீண்டும் ஐந்தாவதுமுறை திருடுதல் முதலிய அபராதத்தைச் செய்யின், அவனுடைய மற்றொரு கையையும் வாங்கிவிடுவேன். அப்புருஷன் மீண்டும் ஆறாவதுமுறை திருடுதல்முதலிய அபராதத்தைச் செய்யின், அவனுடைய ஒரு காலை வெட்டிவிடுவேன். அப்புருஷன் மீண்டும் ஏழாவதுமுறை திருடுதல்முதலிய அபராதத்தைச் செய்யின், அவனுடைய மற்றொரு காலையும் வெட்டிவிடுவேன். இங்ஙனம், ஏழுமுறை அபராதஞ் செய்யபபெற்ற புருஷனை யான் பிராணனற்றவனாய்ச் செய்வதில்லை. எட்டாவதுமுறை அப்புருஷன் அபராதஞ் செய்யின், அவனை யான் கொன்றுவிடுவேன். ஹே பாலாகிப பிராஹ்மணரே! போரின்கண்ணும் பகைவனைத் தர்ம யுத்தத்தினாலேயே யான் கொல்வேன். அதர்மத்தால் எச்சத்துருவையும யான் கொல்வதில்லை. ஏனெனின், சூரவீரர் யுத்தஞ்செய்யும் பொருட்டு எனது எதிரில்வரின், பதினாறு வயதுக்குமேல் ஐம்பது வயதுக்குட்பட்டவர்களாயும், சாவதானராயும, முதலில் என்மேற் பாணத்தைச செலுத்தியவராயும் இருப்பின், யான் கொல்வதுண்டு. கிழத்தன்மை யுடையவனையும், பாலிய அவஸ்தை யுடையவனையும், அசாவதான புருஷனையும் போரின்கண்ணே யான் கொல்வதில்லை. பகைவரையும் அபராதி புருஷரையும் யான் கொல்வதில்லையாயின், சம்பூர்ண தேகதாரிகளாற் பூஜிக்கப்பட்ட பிராஹ்மணராகிய உம்மை யான் எங்ஙனங் கொல்வேன்; மற்றோ பிராஹ்மணரை ஒருகாலும் யான் கொல்வதில்லை. ஆகையால், ஹே பாலாகிப் பிராஹ்மணரே! இவ்வகையாய எனது இயற்கையை விசாரித்து நீர் பயமற்றவராகலாம். கருத்திதுவாம்:— பிராஹ்மணனுய் க்ஷத்திரியனுக்குச் சிஷ்யனாதலாய விபரீதகர்மம் இரண்டு லோகத்தின்கண்ணும் நிந்திதமாம்; அந்நிந்தித கர்மத்தின்கண் எனது பயத்தால் நீர் முயலாதொழிய வேண்டும்.

ஹே பாலாகிப் பிராஹ்மணரே! நீர் உம்முடைய அஞ்ஞான நிவிர்த்தியின் பொருட்டு இவ்விபரீத கர்மத்தின்கண்ணே முயல்வதாயின், முன்னுள்ள தங்கள் குருவினிடத்தே நீர் செல்லலாம்; அவர் தம் உபதேசத்தாலேயே உமது அஞ்ஞான நிவிர்த்தியுண்டாம். ஹே பாலாகிப் பிராஹ்மணரே! உன்பொருட்டு யான் நமஸ்காரம் செய்கின்றேன். எவ்விடத்தினின்றும் நீர் வந்தீரோ, அவ்விடத்திற்கே

மீண்டும் நீர் செல்லுதல் வேண்டும். ஸ்ரீ குரு கூறல்:—ஹே சிஷ்ய! இங்ஙனம், அஜாதசத்துரு அரசரானவர் பாலாகிப் பிராஹ்மணரின் பொருட்டுக் கூறவே அப் பாலாகியானவர் அச்சபையினின்றும் செல்லவில்லை. மற்றோ தமது இலஜ்ஜையையும், சிந்தையையும், உணர்த்தி வைப்பான் வேண்டி கீழ் முகமுடையராய்ப் பாதத்தின் நுனிப்பாகத்தால் பூமியைக் கீறுவாராயினர்; பெருமூச்சு விடுவாராயினர். இங்ஙனம் பாலாகிப் பிராஹ்மணரின் சரீரசேஷ்டையைக் கண்டு, அவ்வரசர் பாலாகியாரின் இருதயக் கருத்தை யுணர்ந்தனர் ஆண்டுப பிராஹ்மணராயிருந்தும் க்ஷத்திரியனது சிஷ்யனுதல் என்னும் விபரீத கர்மத்தின்கண் இச்சையுண்டாய பாலாகியாரின் இலஜ்ஜையை, கீழ்முகமாயிருத்தல் பாதத்தாற பூமியைக்கீறல்வடிவ இரண்டு சேஷ்டையால் இராஜா அறிந்தனா. இவ்வரசரைப பரித்தியாகம் செய்துவிட்டு எங்ஙனம்யான் பிரஹ்மவித்தையை யடைவன என்பதாய பாலாகிப்பிராஹ்மணரின் சிந்தையைப் பெருமூச்சு வடிவ சேஷ்டையால் இராஜா அறிந்தனர்; ஏனெனின், பாதத்தாற் பூமியைக் கீறலும், தாழ்ந்த முகமும, இலஜ்ஜையாலன்றி யுண்டாக மாட்டாது; மற்றோ இலஜ்ஜையாலேயாம். அங்ஙனமே பெருமூச்சுக் கிளம்பலும் சிந்தையின்றியுண்டாகமாட்டாது; மற்றோ சிந்தையாலேயேயாம். கருத்திதுவாம்:—எவ்வஸ்து எவ்வஸ்துவின்றியுண்டாகாதோ எவ்வஸ்துயிருப்பின் எவ்வஸ்து உண்டாகுமோ, அவ்வஸ்துவால் தனதுமானமுண்டாம். எங்ஙனம் அக்கினியின்றித் தூமம் உண்டாகாதோ, அக்கினியிருபபின் தூமமுண்டாமோ அதனுல் தூமரூபஏதுவால் பர்வதாதிகளிடத்தே அக்கினியின் அநுமானமுண்டாமோ அங்ஙனம, இலஜ்ஜையினுலன்றித் தாழ்நதமுகமும் பாதத்தாற பூமியைக் கீறலும் உண்டாகாது; மறறோ இலஜ்ஜையினுலேயே உண்டாம். அதனுல் தாழ்ந்த முகம பூமியைக் கீறல்வடிவ இரண்டு ஹேதுககளினுல பாலாகியாரின் இலஜ்ஜையின் அனுமானதலை இராஜாசெய்தனர். அங்ஙனம் சிநதையினுலன்றிப பெருமூச்சுக்கிளம்புத லுண்டாகாது; மறறோ சிநதையினுலேயே யுண்டாம. ஆகையால் பெருமூசசுவடிவ ஏதுவால பாலாகிபபிராஹ்மணர் சிந்தையின் அநுமானத்தை இராஜாசெய்தனர். அன்னியபுருஷனுடைய அந்தக்கரணத்தின் தர்மங்களாய இலஜ்ஜை, சிந்தைகளின் பிரத்தியக்ஷஞானம் அன்னிய புருஷனுக்குண்டாவதின்றும்; மற்றோ அநுமிதி ஞானமுண்டாம். இங்ஙனம பாலாகிபபிராஹ்மணரின் அபிப்பிராயத்தை அறிந்து அவ்வரசர் பாலாகிப்பிராஹ்மணரின் பொருட்டுக் கூறுவாராயினர்; ஹே பாலாகிப் பிராஹ்மணரே! உத்தம வர்ணத்தோடு கூடிய தர்மாத்மாவாய பிராஹ்மணர் இந்த க்ஷத்திரியர் என் பொருட்டுப பிரஹ்மவித்தையின் உபதேசத்தைச்செய்வர் என்பதாய இச்சைகொண்டு க்ஷத்திரியர்களின் சமீபம் செல்வாம் என்பதாய விபரீதகர்மத்தை யானத்தியந்தம அநுசிதமா யெண்ணியுள்ளேன்; ஏனெனின், தாம யாகத்தைச் செய்தல், மற்றொரு யஜமானன் பொருட்டு யாகத்தைச் செய்வித்தல், தாம் வித்தையை அத்தியயனம் செய்தல், சிஷ்யர்களின் பொருட்டு வித்தையை அத்தியயனம் செய்வித்தல், தாம் தானம் செய்தல், தூயோனுய யஜமானனிடத்திருந்து தானம் வாங்கல் என்னும் ஆறுகர்மங்கள் பிராஹ்மணர்க்காகச் சாஸ்திரத்தின் கண்ணே கூறப்பட்டுள்ளது. தான் மகத்தை யாற்றல், தானமீதல், வித்தையை அத்தியயனம் செய்தல் என்னும் மூன்றுகர்மங்

களும் பிராஹ்மணர்கட்குச் சமானமாயே க்ஷத்திரியர்கட்குமாம். ஆனால் யாகத்தைச் செய்வித்தல், வித்தையை அத்தியயனம் செய்வித்தல், தானமேற்றல் என்னும் மூன்றுகர்மங்களும் க்ஷத்திரியர்கட்கு எச்சாஸ்திரத்தின் கண்ணும் கூறவில்லை. ஆகையால், ஹே பாலாகிப் பிராஹ்மணரே! ஆசாரியனாய்ப் பிராஹ்மணரின் பொருட்டு, வித்யா உபதேசம் செய்வதின்கண் எனக்குச் சாஸ்திரரீதியாய் அதிகாரமின்றாமென்றாலும், எனது நியமமிதுவாம்:—தர்மான்மாவாய பிராஹ்மணர் தனமுதலாகப் பிராணபரியந்தம எவ்வஸ்துவைக் கேட்பினும் கொடுப்பதென்பதாம. ஆகையால், ஹே அநதணரே! பிராஹ்மணராய நீர் எனது ஆசிரியராயினும் நீர் என்னிடத்தே பிரஹ்மவித்தையை யாசித்தீர்; உம்பொருட்டு யான் பிராணனினும் அதிப்பிரியமாய பிரஹ்மவித்தையைக் கொடாவிடின் எனது நியமம் பங்கமாய்விடுமாதலின், எனது நியமத்தைக்காப்பாற்றும் பொருட்டு யாசக குருவாய உமக்குப பிரஹ்ம விதத்தையின் தானத்தை யான் செய்கின்றேன். ஆகையால் உமக்கும் எனககும் குருசிஷ்யபாவ சமபநதமின்றாம்; மற்றோ * தாதா யாசக பாவசம்பநதமிருக்குக. கருத்திதுவாம்:—உம்மிடத்தே சிஷ்யமதியை வைத்து என்னிடததே குருமதியை வைத்து, உமபொருட்டு யான் பிரஹ்மவித்தையைக் கூறவிலலை. மற்றோ உம்மிடத்தே யாசகபுத்தியால் என்னிடத்தே தாதா புத்தியினால் உமபொருட்டுப் பிரஹ்ம வித்தையின் உபதேசத்தை யான் செய்கின்றேன்; அநதப பிரஹ்மவிததையை நீர் கேட்பீராக. இங்ஙனமியம்பி அவ்வரசர் பாலாகிபபிராஹ்மணரை நமஸ்கரித்தனர்; தமது சிம்மாசனத்தின்மீது பாலாகிப்பிராஹ்மணரை உட்காரவைத்தனர்; அவ்வரசரோ பூமியின் கண்ணே யிருநதுகொண்டு பாலாகிபபிராஹ்மணரின் பொருட்டுப பிரஹ்மவித்தையி னுபதேசத்தைச செய்தனர். அரசர கூறல:—ஹே பிராஹ்மணரே! பிராணாதி ஜட பதார்த்தங்களின் வேறாய்த தேசகாலவஸ்து பரிசசேதமற்றதாய்ச் சுவப்பிரகாச ஆநநத சொரூபமாயது ஆன்மாவாம். அதனையே நீர் பிரஹ்மரூபமாய் அறிநதுகொள்வீராக என, இங்ஙனம் கூறிய அரசர் வசனத்தைக் கேட்டுண்டாய விசுவாசத்தோடு கூடிய பாலாகிப் பிராஹ்மணருக்கு, அன்வய வியதிரேகத்தால் ஜடப்பிராணனுடைய அனான்மத் தன்மையை யுணர்த்திவைக்கும் பொருட்டு, அவ்வரசர் தமதாசனத்தினின்றும் எழுந்து அந்தணரின் கையில் தமதுகையைத் தாரணஞ்செய்து சிம்மாசனத்தினின்றும் பாலாகிபபிராஹ்மணரை இறக்கினர். †குஹ்ய அர்த்தத்தைச் சபையின்கண்ணே யுபதேசித்தல் கூடாதாம்; அக்காரணத்தால் சபையைவிட்டுப பாலாகியாரோடும் அரசர் அநதப்புரத்தின் கண்ணேசென்றனர். ஆண்டு அந்தப்புரத்தின் வாயிலில் ஒருவன் உறங்கிக் கொண்டிருந்தனன். சர்வ இந்திரியங்களின் சேஷ்டையற்ற கேவலப்பிராணன் மாத்திரம அப்புருஷனுக்கு சலித்துக்கொண்டிருந்தது; அவ்வுறங்குவோன்சமீபத்தே அந்தணரோடு கூடிய அரசர் நின்றனர். பாலாகிப்பிராஹ்மணரின் அபிமதமாய பிராணனது ஆன்மத்தன்

---

* தாதா = ஈகையாளன். † குஹ்ய = இரகசிய.

மையை நீக்கும்பொருட்டு, அவ்வரசர் பாலாகிப்பிராஹ்மணர் அறிந்துள்ள பிராணனது சம்பூர்ண நாமங்களை உரத்த சத்தத்தால் உச்சரித்து அவ்வுறங்கிய புருஷனை எழுப்பினார்.

இப்போது அந்தப் பிராணனது நாமங்களைக் காண்பிப்பாம்:—ஹே ஆதித்திய ரூப! ஹே சந்திர ரூப! ஹே பிருஹத்! ஹே பாண்டுர நீரக! (இதன்பொருளிதுவாம்:—வெண்ணிறம் வாய்ந்த ஜலத்தை ஆசிரயம் செய்யும் பொருளே!) (ஹே நீரசம்விருத்த! இதன்பொருளிதுவாம்:—ஒரே வஸ்திரத்தால் கீழும் மேலும் புருஷன் மறைவுற்றவனுவன்; அதுபோலக் கீழும் மேலும் ஜலத்தால் மூடப்பட்ட வஸ்துவே!) ஹே பிரியதரிசன! ஹே சோமராஜ! ஹே பிராஹ்மணர்களின் அரசே! ஹே தீப்தி சகஸ்ரபாக்! (இதன் பொருளிதுவாம்:—எண்ணிக்கைபற்ற தேவதை வடிவக் கிரணங்களோடு கூடியவஸ்துவே!) இங்ஙனம் பிராணனது சமஷ்டி ரூபத்தைக் கூறுவதாய சூரியாதி தேவதைகளின் வாசக நாமங்களை உரத்த சத்தத்தால் உச்சாரணம் செய்து அவ்வரசர் பிராணனை யழைத்தனர் எனினும், பிராணன் நனவை யடையவில்லை; ஏனெனின், பிராணன் அசேதனமாம். இக்காரணத்தினுலேயே சுக துக்கரூப பலத்தின் போக்தா பிராணனன்றும். எங்ஙனம், ஜடமாய கடமானது, ஹே கடமே! ஹே குறுகிய கழுத்துடையதே! ஹே ஜலதாரணஞ்செய்யும் பொருளே! என்றற்றொடக்கத்து நாமங்களால் அழைக்கப்பெறினும், அது தன்னையும் அழைக்கும் புருஷனையும் அறிவதின்றாம். இக்காரணத்தாலே கடம் அசேதனமாமோ, அங்ஙனம் பிராணனும் அசேதனமாம். இங்ஙனம் அவ்வரசர் ஆதித்திபாதி நாமங்களால் அழைத்தும் பிராணன் தன்னையும் அரசரையும் அறியாதபோது அந்தணர் கடத்தைப்போலப் பிராணனிடத்தும் அனுன்மத்தன்மை நிச்சயம் செய்தனர். அதன்பின்னர் அவ்வரசர் இவ்வண்ணம் ஆராய்ந்தனர்:—மனவாக்குகட்கு விஷயமில்லாத சுத்த ஆன்மாவைக் கடாதிகளைப்போல இது என்னும் தன்மைவடிவத்தால் சாக்ஷாத் சம்போதனஞ் செய்வதில் (நேரே யழைப்பதில்) எவர்க்கும் சமர்த்தமின்றாம்; அறிவதிலும் எவர்க்குஞ் சமர்த்தமின்றாம். ஆகையால், தூலாருந்ததி நியாயத்தால் சுத்த ஆன்மாவையுணர்த்தி வைக்கும்பொருட்டு முதலில் போக்தாவடிவ விசிஷ்ட ஆன்மாவை அறிவிக்கும் உபாயத்தை அவ்வரசர் செய்தனர். கருத்திதுவாம்:—அத்தியந்தம் சூக்கும அருந்ததி நக்ஷத்திரத்தை அறிபாநின்ற புருஷன் அந்நியன் எவனுக்கேனும் அருந்ததியைக் காண்பிக்கவேண்டுமாயின், முதலிலேயே வாஸ்தவ அருந்ததியைக்காண்பியான்; ஏனெனின், அருந்ததி நக்ஷத்திரம் அதி சூக்குமமாம். ஆகையால் முதலிலேயே அதன்கண் அவனது திருஷ்டிபோய்ச் சேரமாட்டாது; மற்றோ, அவ்வருந்ததியின் சமீபத்திலிருப்பதாய தூல நக்ஷத்திரங்களை அருந்ததியென முதலிற் காண்பிப்பன். அந்தத் தூல நக்ஷத்திரங்களின்கண்ணே அவனது திருஷ்டி சேர்ந்த பின் பையப்பைய அவ்வாஸ்தவ அருந்ததியையும் கண்டுகொள்வன்; அங்ஙனம் அவ்வரசர் பிராணனிடத்தே அனுன்மத் தன்மையை யுணர்த்திச் சுத்த ஆன்மாவை உணர்த்தி வைக்கும்பொருட்டு, முதலில் போக்தாரூப விசிஷ்ட ஆன்மாவையுணர்த்திவைக்கும் உபாயஞ்செய்வாராயினர். அவ்வுபாயத்

கைக்காண்பிப்பாம் :—அந்தப்புரத்தின் வாயிலில் உறங்காநின்ற புருஷனுடைய கையைத் தமதுகையாற் பற்றிக்கொண்டு உருட்டினர். மற்றொரு புருஷனை ஏவி அவ்வுறங்காநின்ற புருஷனுடைய பிற்பாகத்தே தடியால் அடிப்பித்தனர். இங்ஙனம்கையாலுருட்டியதாலும்தடியாலடித்ததாலும் உற்பன்னமாய பீடையையுடைய சுகதுக்க அநுபவஞ்செய்பவனாய போக்தாபுருஷன் பீடையால் நனவையடைந்தனன், பஸ்மத்தால் மறைபட்ட அக்கினி, பஸ்மம் நீங்கியமாத்திரத்தே நன்கொளிருமாறுபோல அப்புருஷன் மிகுந்த குரோத முடையவனானன். இவ்வாறாய அவனைக் கண்டு அவ்வந்தணர் நேத்திராதி இந்திரியங்களோடு கூடிய் போக்தாவாய ஆன்மாவைப் பிராணனினும் வேறாய் நிசசயம் செய்தனர் ; ஆனல் போக்தாவினும் வேறாய்ப் புத்தியாதிகளின் சாக்ஷியாய சுத்த ஆன்மாவை அப்பாலாகிப் பிராஹ்மணர் அறிந்தாரில்லை.

இப்போது சுத்த ஆன்மாவே போக்தா ஏன் ஆகாது, என்றிவ்வாறாய வாதியின் சங்கையை நிவிர்த்தி செய்யும்பொருட்டு, எந்நிமித்தத்தைக் கவர்ந்து போக்தாசப்தம் விசிஷ்ட ஆன்மாவின்கண்ணே பிரவிர்த்தமாமோ அந்நிமித்தத்தைக் காண்பிப்பாம : —ஆண்டுபோஜன ரூபக்கிரியை போக்தா சப்தத்தின் பிரவிர்த்தியின் நிமித்தமாய்ச சம்பவியாது ; ஏனெனின், போஜன ரூபக்கிரியை நியமமாய்ச் சர்வ போக்தாவிடத்தே யிராது. கருத்திதுவாம் :—போஜன ரூபக்கிரியையுடையவனிடத்தே போக்தாசப்தத்தின் பிரவிர்த்தியுண்டாமாயின், யாது யாது கிரியையாமோ அது துக்கரூபமாம் என்பது நியமம். ஆகையால், துக்கவானாய புருஷனிடத்தேயே போக்தாசப்தத்தின் பிரவிர்த்தியாம், சுகமுடையவனாய புருஷனிடத்தே போக்தா சபதத்தின் பிரவிர்த்தியுண்டாகாது. சுகியாய புருஷன் உலகின்கண்ணே போக்தாவெனப்படும்.

அல்லது போஜனரூபக்கிரியையைப் போக்தா சப்தத்தின் பிரவிர்த்தியின் நிமித்தமென அங்கீகரிக்கின், போக்தாத் தன்மையற்ற முகம், பல், நாவு முதலியவற்றினிடத்தும் போஜனரூபக்கிரியை யிருக்கின்றது ; ஆகையால், அவற்றையும் போக்தாவெனல்வேண்டும். முகாதிகளை எவரும் போக்தாவெனப புகல்வதின்றாம்.

அல்லது, போஜனரூபக்கிரியையின் பயனாய திருப்திரூப நிமித்தத்தைக் கவர்ந்து போக்தாசபதத்தின் பிரவிர்த்தியுண்டாமாயின், திருப்தி இருவகையாம் ; ஒன்றோ புஷ்டி ரூபதிருபதி; மற்றொன்றோ துஷ்டிரூபதிருப்தி. அவற்றுள், புஷ்டிரூபத்திருப்திவானின் பெயர், போக்தாவாயின் சுவர் முதலிய ஜடப்பொருளும் போக்தாவாகவேண்டும் ; ஏனெனின், மண்முதலியவற்றின் பூச்சால் (பூசுதலால்) பித்தி (சுவர்) முதலியவற்றிற்குப் புஷ்டியுண்டாம், உலகின்கண்ணே பித்திமுதலியவற்றை எவரும் போக்தாவென்பதின்றாம். ஆகையால், புஷ்டிரூபத்திருப்தியும் போக்தா சப்தத்தின் பிரவிர்த்தியின் நிமித்தமன்றாம் ; மற்றோ எஞ்சியதால் சுகதுக்கரூபத் திருப்தியே போக்தா சப்தத்தின் பிரவிருத்தியின் நிமித்தமாம். அச்சுகதுக்கம் இரண்டினுள்ளும் சுகமேபோகசப்தத்தின் முக்கியப்பொருளாம். துக்கம் போக சப்தத்தின் முக்கிய அர்த்தம் அன்றாம், மற்றோ கௌண அர்த்தமாம்; ஏனெனின்,

உலகின்கண் வனிதாதி (ஸ்திரீமுதலிய) விஷயஜன்னிய சுகமுடைய புருஷனுக்கே போகவானெனப் பெயராம். சூலத்தின் (துக்கத்தின்) கண்ணே யிராநின்ற புருஷனையெவரும் போகவானெனப் புகல்வதின்றாம். ஆகையால், போகசப்தத்தின் முக்கியப்பொருள் துக்கமன்றாம்.

சங்கை:—துக்கத்தின்கண் சுகரூபத் தன்மையினாலே போகசப்தத்தின் அர்த்தத்தன்மை உண்டாகவேண்டாம். ஆனால், சுகத்தை யுண்டுபண்ணுந்தன்மைவடிவாய்த்துக்கத்திற்குப்போகசப்தத்தின் அர்த்தத்தன்மை ஏன் உண்டாகமாட்டாது.

சமாதானம் :—இவ்வுலகின்கண்ணே எப்புருஷனுடைய பிரீதியையும் துக்கம் உண்டாக்குவதில்லை யாதலின் அத்துக்கத்தால் சுக வடிவதிருபதி சம்பவியாது. கருத்திதுவாம் :—எபபதார்த்தத்தின் கண்ணே பிரீதியுண்டாமோ அப்பதார்த்தமே சுகரூப திருபதியை யுண்டாக்குவதாகும். துக்கத்தின்கண் எப்பிராணிக்கும் பிரீதியுண்டாகாது ; ஆகையால் சுகரூபதிருப்தியைத் துக்கமுண்டாக்காது.

அல்லது அநுகூலமாய வனிதாதி விஷயங்களை யடிக்கடி போகிப்பதால் புருஷருக்குச் சுகமுற்பன்னமாம். அதனை யுலகினர் திருப்தி யெனக்கூறுவர். அத்திருப்தி அநுகூல பதார்த்தங்களாலுண்டாம் ; பிரதிகூல துக்காதிகளால் ஒருகாலும உண்டாகாது. ஆகையால் போகசப்தத்தின் முக்கியப் பொருள் துக்கமன்றாம் ; மறறோ போகசபதத்தின் கௌண அர்த்தம் துக்கமாம். தேவதத்தன் சிம்மம் என்னுமிடத்தே சிம்மசபதத்தின் முக்கியப்பொருள் மிருகராஜாவாய பசு விசேஷமாம் ; தேவதத்தனே சிம்மசப்தத்தின் கௌணப்பொருளாம். சிம்மத்தின்கண்ணே யிராநின்ற குரூரத்வாதி குணங்கள் தேவதத்தனிடத்தும் உள ; ஆகையால் அவனைச் சிம்மமென்பர். அதுபோலப் போகசப்தத்தின் முக்கியப்பொருள் சுகமாம் ; கௌண அர்த்தம் துக்கமாம். ஏனெனின், எங்ஙனம் சுகத்தினடைவு புருஷனுடைய சித்தத்தின்கண் யான் சுகியாயுள்ளேன் என்னும் அபிமானரூப அதிசயத்தன்மையை உற்பன்னம் செய்யுமோ, அங்ஙனம் துக்கத்தினடைவும் புருஷனுடைய சித்தத்தின்கண் யான் துக்கியாயுள்ளேன் என்னும் அபிமானரூப அதிசயத்தன்மையை உற்பன்னமாகும. அதிசயத்தன்மையினது உற்பத்தியின் காரணத்தன்மை சுகத்தின் கண்ணேயும் துக்கத்தின் கண்ணேயும் சமானமாம். ஆகையால், போகசப்தத்தின் கௌண அர்த்தம் துக்கமாம் ; சுகமே போகசப்தத்தின் முக்கிய அர்த்தமாம். இங்ஙனம் சுகதுக்க ரூபபோகத்தின் ஆசிரயமாய விசிஷ்ட ஆன்மாவடிவ போக்தாவின் உபதேசத்தைப் பாலாகியாரின் பொருட்டு அரசர் செய்தனர். அப்போக்தா ஆன்மாவின் ஞானத்தால் மோக்ஷத்தினடைவுண்டாகாது ; மற்றோ, சுத்த ஆன்மாவின் ஞானத்தால் மோக்ஷத்தினடைவுண்டாம். இக்காரணத்தால் சுத்த ஆன்மாவை யுணர்த்தும்பொருட்டு, அவ்வரசர் அந்தணருக்குக் கூறுவாராயினர் :—ஹே பாலாகிப்பிராஹ்மணரே! சுகதுக்கரூப போக அடைவின்காலத்தில் போக்தாரூபவிசிஷ்ட ஆன்மாவின்கண் யான்சுகியான்துக்கி என்னுமநுபவத்தால் துணியப்பெற்ற யாதொரு போக்துருத்தன்மையுளதோ, அப்போக்துருத்தன்மை சுத்த அசங்க ஆன்மாவின்கண் உண்மையாய்ச் சம்பவியாது ; மற்றோ காரியகாரண பாவமற்ற சுவப்பிரகாச ஆநந்தரூப ஆன்மா

வின்கண் அத்தியாசத்தினாலேயே போக்துருத் தன்மை தோற்றுகிற்கும். சர்ப்பத்தன்மையற்ற இரஜ்ஜுவின்கண் அத்தியாசத்தால் சர்ப்பம் பிரதீதியாம். அதுபோலச் சுகதுக்கரூப போகமற்ற அத்விதீய சுத்த ஆன்மாவின்கண் அத்தியாசத்தால் போக்துருத்தன்மை பிரதீதியாம்.

அல்லது சஜாதீய, விஜாதீய, சுவகத பேதங்களற்ற சுத்த ஆன்மாவின்கண் அஞ்ஞானரூபமாயையாலன்றிப போக்துருத்தன்மையின் அத்தியாசம் சம்பவியாது; இக்காரணத்தினாலேயே வேதத்தின் தாற்பரியத்தை அறிந்துள்ள மகான்ம புருஷர் அவ்வத்விதீய ஆன்மாவின்கண் மாயையைக் கற்பனை செய்கின்றனர். கருத்திதுவாம்:—எப்பொருள் எப்பொருளின்றித் துணியப் பெறமுடியாதோ, அப்பொருள் அப்பொருளின் கறபனையைச் செய்விக்கும். பகற்பொழுதின்கண்ணே போஜனத்தைச் செய்யாத புருஷனிடத்தேயுள்ள தூலத்தன்மை இராப்போஜனமன்றிச் சம்பவியாதாதலின், அத்தூலத்தன்மையானது அப்புருஷனுடைய இராப்போஜனத்தின் கற்பனையைச செய்விக்கும். அதுபோல அகர்த்தா அபோக்தாவாய சுத்த ஆன்மாவின்கண் யான்சுகி யான்துக்கி என்னும் யாதொரு போக்துருத்தன்மையின் அத்தியாசமுளதோ அவ்வத்தியாசம் மாயையின்றிச் சமபவியாது. ஆகையால், அவ்வத்தியாசம் சுத்த ஆன்மாவின்கண் மாயையின் கற்பனையைச் செய்விக்கும். இங்ஙனம் அர்த்தாபத்தி ரூபப்பிரமாணத்தால் சித்தமாய மாயைக்கு இரு சுபாவங்களுண்டாம. அவறறுள் ஒன்றோ ஆவரண சக்திவடிவ சுபாவமாம், மற்றொன்று விக்ஷேப சக்திவடிவசுபாவமாம். மாயையின் ஆவரணசக்திவடிவசுபாவம் நனவு, கனவு, துயில் என்னும் மூன்றவஸ்தைகளினும் இருக்கும். எதுவரை ஆநந்தசொரூப ஆன்மாவின் சாக்ஷாதகாரம் புருஷனுக்குண்டாகாதோ, அதுவரை மாயையின் ஆவரணசக்தி நிவிர்ததியாகாது; மற்றோ அத்விதீய ஆன்மாவின் ஞானத்தினாலே மாயையின் ஆவரண சக்தியினழிவுண்டாம். மாயையின் மற்றைய விக்ஷேப சக்திரூபசுபாவமோ இருவகையாம். அவற்றுள் ஒன்று நனவு வடிவம், மற்றொன்று கனவு வடிவம. எவ்வவஸ்தையின்கண் நேத்திராதி இநதிரியங்களால பாகியகடபடாதி தூலபதார்த்தங்களின் ஞானமுண்டாமோ, அவ்வவஸ்தை நனவெனபபடும். எவ்வவஸ்தையின்கண் பூர்வசம்ஸ்காரங்களைக் கவர்நது கேவலம் மனத்தாலேயே ஞானமுற்பன்னமாமோ, அவ்வவஸ்தை கனவெனபபடும. இங்ஙனவும் கனவும் விக்ஷேபரூபமாம். ஆகையால், ஹே பாலாகிபபிராஹ்மணரே! எங்ஙனம் ஜாக்கிரத்தின் கண்ணே சுகத்தையடைநதேனும் துக்கத்தையடைநதேனும் யான் சுகி யான்துக்கிஎன்னும போகரூப அதிசயத்தன்மை புருஷனிடத்தே யுற்பன்னமாமோ, அங்ஙனம் கனவின்கண்ணும் சுகதுக்கத்தின் அடைவினால்யான்சுகி யான்துக்கியென்னும் போகரூப அதிசயத்தன்மை புருஷனிடத்தே யுற்பன்னமாம். கனவின் கண்ணே போகரூப அதிசயததன்மைக்கு யாதொன்று ஆதாரமாயுளதோ, அதுவே நனவின்கண்போகரூப அதிசயத்தன்மையின் ஆதாரமாம. ஆண்டுக்கனவின்கண் சுக துக்க ஜன்னிய போகத்தின் ஆதாரம் கேவலம்மனமேயாம். மனத்தின் வேறாய யாதும் கனவின்கண்ணே போகத்தின் ஆதாரமன்றாம். ஏனெனின், நேத்திராதி இந்திரியங்கட்கோ கனவின்கண்ணே இலயமாம்; ஆகையால், இந்திரியங்களிடத்தும்

போகத்தின் ஆதாரத்தன்மை சம்பவியாது. பிராணனும் சுத்த ஆன்மாவும் கனவின் கண்ணுமுள; ஆயினும் அவற்றினிடத்தே போகத்தின் ஆதாரத்தன்மை சம்பவியாது; ஏனெனின், பிராணனோ ஜடமாமாதலின் அதனிடத்தே போகத்தின் ஆதாரத்தன்மை சம்பவியாது. சுத்த ஆன்மாவோ அசங்கமாம்; ஆகையால் அதன்கண்ணும் போகத்தின் ஆதாரத்தன்மை சம்பவியாது. இங்ஙனம் கனவின் கண் இந்திரியாதிகளினிடத்தே போகத்தின் ஆதாரத்தன்மை சம்பவியாது; எஞ்சியதாய மனமே கனவின்கண் சுகதுக்க ஜன்னிய போகாசிரயமாம். கனவின்கண் போகத்தினுதாரம் மனமெனை அங்கீகரிக்கப்பெற்றபோது, நனவின்கண்ணும் அம்மனத்தையே சுகதுக்க போகாசிரய மெனவுடன்படல் தகுதியாம்.

அல்லது கனுப்போக ஆதாரமாய் மனத்தையங்கீகரித்து நனுப்போகத்தின் ஆதாரமாய் மனத்தினும் வேறாயதொன்றை யங்கீகரிக்கிறோ, கனவின்பின்னர் உண்டாகும் நனவின்கண் புருஷனுக்குக் கனவின்கண்ணே இராஜசுகத்தை யநுபவித்த யான்றானே இப்போது நனவின்கண்ணே காந்த (ஸ்திரீ) சுகத்தையநுபவிக்கின்றேன் என்னும் பிரத்தியபிஞ்ஞையுண்டாகின்றது. இது நனுக்கனுப் போக்தாக்களின் அபேதத்தை விஷயஞ் செய்கின்றது; அதனைய இது அசங்கதமாமன்றோ! ஆகையால், கனுவிற்கும் நனுவிற்கும் ஒரேமனரூப போக்தாவையுடன் படல்வேண்டும.

சங்கை :—ஹே பகவன்! ஆகாசாதிப் பஞ்சசூக்கும பூதத்தினின்றும் பிராணனது உற்பத்தியுண்டாயதாதலின், பிராணன் ஜடமாம். அதுபோல ஆகாசாதிப் பஞ்சசூக்குமமாபூதத்தினின்றும் மனத்தினது உற்பத்தியும் உண்டாயதாதலின் மனமும் ஜடமாம். ஜடப்பிராணனிடத்தே போகத்தின் ஆதாரத்தன்மையை எங்ஙனந் தாங்கள் கண்டனம் செய்தீர்களோ, அங்ஙனம் ஜடமனத்தின் கண்ணும போகத்தின் ஆதாரத்தன்மை சம்பவியாது.

சமாதானம் :—ஹே மறையவரே! பிராணனைப்போல மனமும் அசேதனந்தான் என்றாலும் பிராணனிலும் மனத்தின்கண்ணே விசேஷமுளது; ஏனெனின், ஆகாசாதி பஞ்சபூதங்களில் கலந்த சத்துவகுணத்தால் அந்தக்கரணத்தின் உற்பத்தியுண்டாயது; ஆகையால் மனம் பிரகாசகமாம். ஆகாசாதிபஞ்சபூதங்களில் கலந்த இரஜோகுணத்தினின்றும் பிராணன் உற்பத்தியாயது; ஆகையால் பிராணன் பிரகாசகமன்றாம். தீபம் சடம் என்னுமிரண்டினிடத்தும் ஜடத்தன்மைத் தர்மம் சமானமாமாயினும் தீபத்தாலேயே சடம் ஒளிரும்; சடத்தால் தீபம் ஒளிராது.

சங்கை :—ஹே பகவன்! ஜடமனத்தைப் பிரகாசகமெனவுடன்படின் தீபாதியைப்போல மனதின்கண் பாகியத்தன்மை சித்தமாம்.

சமாதானம் :—ஹே பாலாகிப் பிராஹ்மணரே! மனத்தின் விர்த்திரூபப் பிரகாசம் சுதந்திரமாய் எப்பொருளையும் ஒளிர்விப்பதின்றும்; மற்றோ சேதனஆன்மாவின் ஆபாசத்தை யபேக்ஷித்தே பதார்த்தங்களை யொளிர்விக்கும். அந்தச் சேதன ஆன்மாவின் ஆபாசத்தைக் கவர்ந்து அந்த மனத்தின் விர்த்தி ரூபப்பிரகாசம் தனது ஜடபாவத்தைப் பரித்தியாகம் செய்யும்.

அல்லது நாநாவகையாய் ஞானமுடையது அந்தக்கரணமாம் என நூலின் கண்ணே கூறப்பட்டதும், சேதனத்தை யபேக்ஷித்தே நாநாவகையாய ஞான

முடைய அந்தக்கரணம் சம்பவித்தல் என்பதாம். கருத்திதுவாம்:—அந்தக் கரணம் இயல்பாயே சேதனமாயின் ஒருவகையாய ஞானமே எஞ்ஞான்றும் உண்டாதல் வேண்டுமே; சந்ததம் ஒருவகையாய ஞானம் உண்டாவதின்றும். அந்தக்கரணத்திற்குச் சேதனுபேக்ஷையை யங்கீகரிக்கினே சந்ததம் ஒருவகையாய ஞானத்தின் அடைவுவடிவதோஷம் உண்டாகமாட்டாது. ஏனெனின், எக்காலத்தில் இச்சாதிகளின்றும் விலக்ஷணமாய்ச் சேதனத்தின் பிரதி பிம்பத்தைக் கவரத் தக்கதாய அந்தக்கரணத்தின் விருத்தி யுறபன்னமாமோ, அக்கால் அது ஞானமாம்; அநநியகாலத்தில் அது ஞானமன்றும். இங்ஙனம் நாநா ஞானம் அந்தக்கரணத்தின்கண்ணே சம்பவிக்கும். அத்தகைய அந்தக் கரணத்தின்கண் அவித்யா ஜன்னிய தாதாத்மிய அத்தியாச ரூப சம்பந்தத்தால் இராநின்ற இப்பரமான்மா விஞ்ஞான மயப்பெயரை யடையும். அவ்வந்தக் கரணத்தின்கண்ணே யிருந்திவ் வாநநத சொரூப ஆன்மா சம்பூர்ண தேகாதிகளை யொளிர்விக்கும். இக்காரணத்தால் இவ்வாநந்த சொரூப ஆன்மா புருஷனென்னும் பெயரை யடையும். இத்தகைய ஆநந்த சொரூப ஆன்மாவின்கண் அந்தக் கரணத்தின் பரிணுமவடிவ துக்கம் எங்ஙனம் உண்மையாயின்றே, அங்ஙனம் அந்தக் கரணத்தின் பரிணும வடிவ சுகமும் உண்மையாய் ஆன்மாவிடத்திலையாம். இது கூறியதுகொண்டு இவ்வநுமானம் சித்தமாம்:—ஜன்னிய சுகம் ஆன்மாவின்கண் இன்றும்; ஜடமாதலின், பரிச்சின்னமாதலின், திருசியமாதலின் யாது யாது ஜடபரிச்சின்ன திருசிய வஸ்துவாமோ அது ஆன்மாவின்கண் உண்மையாய் நிகழாதாம், ஜடபரிச்சின்ன திருசிய ரூபதுகக ஆன்மாவின்கண் உண்மையாய் நிகழாததேபோல.

அல்லது சுகதுக்கமேபோலச சுகதுக்க அடைவின் சாதனமும் ஜடபரிச்சின்னதிருசிய ரூபமாம். ஆகையால, அசசாதனமும் ஆன்மாவின்கண் உண்மையாய் நிகழாது; ஆகையால் காரிய காரணபாவமற்ற சுயம்பிரகாச ஆன்மாவே விஞ்ஞான மயபோக்தாவின் உண்மையாய வடிவமாம். இப்பொருளைப் பாலாகிப்பிராஹ்மணரின் பொருட்டு உணர்த்தி வைப்பான் வேண்டி, அவ்வரசர் இவ்வகையாய விசாரத்தைத் தமது மனத்திற் செய்வாராயினர்:—இம்மறையோர் எமது பூர்வ உபதேசத்தால் பிராணனினின்றும் வேறாய் விஞ்ஞானமய போக்தாவாய ஆன்மாவை உணர்ந்தாராயினும், விஞ்ஞானமயப் போக்தா பொய்யாமாதலின் அதன் ஞானத்தால் பாலாகிப்பிராஹ்மணர்க்கு மோக்ஷததின் அடைவுண்டாகாது; மற்றே சுத்த ஆன்மாவின் ஞானத்தால் மோக்ஷமுண்டாம். ஆகையால் தமது பிரதிஞ்ஞையை உண்மையாக்கும பொருட்டு இம்மறையவர்க்கு விஞ்ஞானமய போக்தாவின் உண்மைவடிவ உபதேசம் செய்தலவேண்டும். என இங்ஙனம் விசாரித்து அவ்வரசர் விஞ்ஞானமய போக்தாவின்கண் வினவுதல் செய்வாராயினர்.

இப்போது அவ்வினவுதலைக் காண்பிப்பாம்:—ஹே பாலாகிப் பிராஹ்மணரே! இவ்வுறங்கிய புருஷன் கிளம்பியதொழிலால் நீர் விஞ்ஞான மயனைப் பிராணனினின்றும் வேறாயும் போக்தாவாயும் அறிந்துளீர்; ஆனல், இவ்விஞ்ஞான மய போக்தா எத்தேசத்தின்கண்ணே இருந்து உறங்கினுன்? (1) விஞ்ஞான மயபோக்

தாவின் சயனத்தின் ஆதாரமியாது? (2) இவ்விஞ்ஞான மயபோக்தா, எத்தேசத்தினின்றுங் கிளம்பி ஜாக்ரதவஸ்தையின்கண்ணே வந்தனன்? (3) இங்ஙனம் விஞ்ஞான மயபோக்தாவின்கண் மூன்று வினாக்களை அரசர்செய்தனர்.

இப்போது உலகரின் வியவகாரத்தைக் கவர்ந்து அவ்வினாக்களின் பரஸ்பர பேதத்தைக் காண்பிப்பாம்:—உலகின்கண் உறங்காநின்ற புருஷன் ஒருகால் தன்பாலிருந்தே உறங்குவான், நில்லாநின்ற புருஷன் தன்னை யாசிரித்தவனாயே உறங்குவதுபோல, ஒருகால் தன்னிற் பின்னமாய சய்யை முதலியவற்றில் இராநின்றவனாய புருஷன் உறங்காநிற்பன். ஆகையால், உறங்கா நின்றவனுக்கு ஆதார நியமமின்றாம்.

சங்கை:—உறங்கா நின்றவன் தனதுஆதாரத்தைப்பற்றிய முதற்கேள்வி சம்பவிப்பதேயாயினும், சயனத்தின் ஆதாரமியாது என்னும் இரண்டாவது கேள்வி சம்பவியாது; ஏனெனின், யாதுஉறங்காநின்ற புருஷனுக்கு ஆதாரமாமோ, அதுவே அவனது சயனத்தின் ஆதாரமுமாம்.

சமாதானம்:—யாது சயனஞ்செய்யும் புருஷனுக்கு ஆதாரமாமோ, அதுவே அவனது சயனத்தின் ஆதாரமாம் என்பது உலகில் நியமமன்றாம்; மற்றோ, ஒவ்வோரிடத்தே சயனஞ் செய்யும் புருஷனுக்கும், சயனத்திற்கும் ஒரே ஆதாரமாம்; அது ஒரேமஞ்சம் சயனஞ் செய்யும புருஷனுக்கும் அவனது சயனத்திற்கும் ஆதாரமாவதுபோலவாம். ஒவ்வோரிடத்தே, சயனஞ்செய்யும் புருஷனுக்கும் அவனது சயனத்திற்கும் வெவ்வேறு ஆதாரமாம். சயனஞ் செய்யும் புருஷனுக்கு ஆதாரம் மஞ்சம் முதலியனவாம், மஞ்சத்தின்மேல் இராநின்ற பஞ்சு முதலியன அவனது சயனத்தின் ஆதாரமாம். இங்ஙனம், சயனஞ்செய்யும புருஷனுடைய ஆதாரத்தையும் சயனத்தின் ஆதாரத்தையும் உலகத்தார் வெவ்வேறு என அங்கீகரித்துண்மையின், முதல் வினாவால் இரண்டாவது வினாப் பொருள் உடைத்தாதலின்றாம்; மற்றோ, வேறாயே இரண்டாவது வினா சம்பவிக்கும்.

சங்கை:—முதல் வினாவினும் இரண்டாவதுவினா வேறெனப்பெறப்படினும், மூன்றாவது வினா இரண்டாவது வினாவினும் வேறெனசசம்பவியாது; ஏனெனின், யாது சயனத்தின் ஆதாரமாமோ, அதுவே சயனஞ்செய்யும புருஷனுடைய வரவின் அவதியாம். சயன ஆதாரத்தின் நிசசயம் உண்டாமாயின், சயனஞ் செய்யும் புருஷனுடைய வரவின் அவதி நிச்சயமும் உண்டாய்விடும்; ஆகையால், மூன்றாவது வினாப்பயனற்றதாம்.

சமாதானம்:—யாது சயனத்தின் ஆதாரமாமோ, அதுவே சயனஞ்செய்யும் புருஷனுடைய வரவின் அவதியாம் என்பது நியமமன்றாம்; ஏனெனின், உலகின்கண் சயன ஆதாரத்தினும் வேறாயும் வரவின் அவதியைச சிலர்பாற்கண்டோம். மஞ்சத்தின்மேல் உறங்காநின்ற புருஷன் மஞ்சத்தினின்றுங் கிளம்பி வெளியே வந்தனன் என இவ்வண்ணம் எவருங் கூறுவதின்றாம்; மற்றோ, மஞ்சத்தினின்று மெழுந்து வீட்டின்கண் இருந்து அவ்வீட்டினின்றும் வெளியே வந்தனன்

என உலகர் கூறுகிற்பர்; இவ்வகையாய உலகரின் வியவகாரத்தால் சயனத்தின் ஆதாரமாய மஞ்சத்தினின்றும் வாவின் அவதியாய கிருகம் (வீடு) பின்னமாயே பிரதீதியாம். ஆகையால், இரண்டாவது வினவால் மூன்றாவது வினப்பொருள் சம்பவிப்பதின்றாம்; மற்றோ, இரண்டாவது வினவிலும் வெறுயே மூன்றாவது வினச்சம்பவிக்கும். இங்ஙனம், அவ்வரசர் பாலாகிப் பிராஹ்மணரின் பொருட்டுச் சயனஞ் செய்யாநின்ற விஞ்ஞானமய போக்தாவின் வடிவத்தை யுணர்த்திவைக்கும் பொருட்டும், கனுத்துயில்வடிவ இருவகையாய சயனத்தின் சொரூபத்தை உணர்த்திவைக்கும் பொருட்டும், இருவகையாய சயனத்தின் ஆதாரத்தை உணர்த்திவைக்கும் பொருட்டும், சயனகர்த்தாவாய விஞ்ஞானமயபோக்தாவினது வாவின் அவதியை உணர்த்திவைக்கும் பொருட்டும் மூன்று வினக்களைக்கேட்டனர். இங்ஙனம் இரகசியார்த்தத்தை உணர்த்திவைபபனவாய அரசரின் மூன்று வினக்களையும் அப்பாலாகிப்பிராஹ்மணர் கேட்டு, அவ்வினக்கட்கு விடையளிக்கும் பொருட்டுத் தமது சித்தத்தின்கண்ணே அநேகநடவை ஆராய்ந்து பார்த்தனர்; ஆனல் அவ்வரசர் தம் வினக்களின் விடையைச சிறிது மாத்திரமும அவ்வந்தணர் அறிந்திலர். இவ்வண்ணம் பாலாகியாரின் அஞ்ஞானத்தைக் கண்டு அவ்வரசர், தமது பிரதிஞ்ஞையை உண்மையாக்கும் பொருட்டு அவ்வினக்களின் விடையைக்கூறுவாராயினர்; அவ்விடையோ பாலாகிப்பிராஹ்மணரின் சர்வசம்சயத்தையும் நிவாரணம் செய்வதாம். ஆண்டுக் கனு அவஸ்தையின்கண் விஞ்ஞானமய போக்தாவின் வடிவத்தை வெளிப்படையாய் உணர்த்தி வைக்கும்பொருட்டு, முதலில கனுத்துயில் வடிவ இருவகையாய சொபபனத்தைக காண்பிப்பாம்:—ஹே பாலாகிபபிராஹ்மணரே! இபபோக்தாப் புருஷனது சயனம இருவகையாம், ஒன்றே கனுவடிவ சயனமாம், மற்றென்றே துயில்வடிவசயனமாம். அவற்றுள் முதலதாய கனுவடிவ சயனத்தைக் கூறக்கேட்பீராக:—கனு அவஸ்தையின்கண் இவ்வான்மா அந்தக் கரணத்தின்கண் இராநின்ற சேதனத்தின் ஆபாசவடிவ விஞ்ஞானத்தால் நேத்திராதி இந்திரியங்கட்குத் தத்தம ரூபாதிவிஷயங்களைக் கவா ஆற்றலைக்கொடுக்கும. இக்காரணத்தினுலே கனுவவஸ்தையின்கண் இவ்வான்மா சக்ஷுமயன் சுரோத்திரமயன் என்பதாதி நாமங்களைப்பெறுவன். ஆகையால், கனு அவஸ்தையின்கண் விஞ்ஞானமய போக்தாவின் வெளிப்படையாய விளக்கமுண்டாகாது. கனு வடிவ சயனத்திற்கு எதிர்ப்பட்டு அவ்விஞ்ஞானமய போக்தாவாய ஆன்மா நேத்திராதிகளின் சாமர்த்தியத்தை உபசம்ஹாரம் செய்து சயனத்தை யடையும். அக்கனுக் காலத்தில் இப்போக்தாவாய ஆன்மா சக்ஷுமயன் சுரோத்திரமயன் என்றதொடக்கத்து நாமங்களை விட்டொழித்துக் கேவலம் விஞ்ஞானமய நாமத்தையடையும. கருத்திதுவாம்:—அக்கனு அவஸ்தையின்கண் சயனகர்த்தாவாய விஞ்ஞானமய போக்தாவின் வடிவம் நேத்திராதி இந்திரியங்களினும் வேறாய்த் தோற்றும். இங்ஙனம் சயனகர்த்தாவாய விஞ்ஞானமய போக்தாவின் சொரூபத்தைக்கூறி இப்போது அதன் ஆதாரத்தைக் காண்பிப்பாம்:—ஹே அந்தணரே! இவ்விஞ்ஞானமய போக்தாவாய ஆன்மா கனவின்கண் ஹிதையெனப பெயரிய நாடியிலிருந்து சயனத்தை

யடையும்; அல்லது இருதயத்தின்கண்ணிருந்து இவ்விஞ்ஞானமய போக்தாவாய ஆன்மா சயனத்தையடையும். அல்லது புரீதத் என்னுமிடத்திருந்து இப்போக்தாவாய ஆன்மா சயனத்தையடையும்.

இங்ஙனம், வெவ்வேறு சுருதி வாக்கியங்களின் அநுசாரமாய்ச் சயனகர்த்தாவாய புருஷனுடைய ஆதாரத்தைக் கூறி இப்போது இருதய சொரூபத்தையும், புரீதத் என்பதின் சொரூபத்தையும் ஹிதையெனப் பெயரிய நாடியின் சொரூபத்தையும், வெளிப்படையாய்க் காண்பிப்பாம்:—ஆண்டெல்லாப் பிராணிகளின் உதரமும் (வயிறும்) உரஸ்தானமும் (நெஞ்சும்) துவாரத்தோடு கூடியதாம். அவ்விரண்டின் மத்திய தேசத்தில் கீழ்முகத்தோடுகூடிச் சித்தம் வசிக்கும் இடமாய மாம்சமயகமலத்தை இருதயமென்பர். அவ்விருதயத்தை நாற்பக்கங்களிலும் சுற்றிக் கொண்டிருப்பதாய சர்ப்பாகார சர்மமாயதும், உலகின்கண்ணே ஆந்திரையெனப் பெயர் பெற்றதும் யாதோ அதன் பெயர் புரீததமெனப்படும். தனது இருதயத்தின் ஞானமும் புரீதத்தின் ஞானமும் எப்பிராணிகட்கும் நேத்திரங்களாலுண்டாகா; மற்றோர் அந்நிய எப்பிராணியின் உதரமேனும் பேதிக்கப்பெறின் அதன் இருதயத்தின் ஞானமும், புரீதத்தின் ஞானமும் அந்நியப் புருஷனுக்கு நேத்திரங்களாலுண்டாம்.

இப்போது நாடிகளைக் காண்பிப்பாம்:—ஒரு கேசத்தை ஆயிரங்கூறுக்கிடவரும் ஒரு கூறினளவொப்பாய அளவுடைய அநந்த நாடிகள் இருதய தேசத்தின் கண்ணே இருக்கின்றன; நூலாற்பின்னிய வலையின் முதன் முடிப்பினின்றும் அநந்த நூற்கள் வெளியாம்; அதுபோல இருதயதேசத்தினின்றும் அநந்த நாடிகளின் வெளிப்போதலுண்டாம். ஆண்டுப்பிரசின உபநிஷத்தின்கண் எவ்வளவு நாடிகளின் எண்ணிக்கை கூறப்பட்டுள்ளதோ அவ்வெண்ணிக்கையை இப்போது காண்பிப்பாம்:—ஒரு விருக்ஷத்தினின்று முதலில் தூலமாய ஸ்கந்தம் கிளம்பும், அந்த ஸ்கந்தத்தினின்றும் அந்நிய ஒரு சிறிது தூலசாகை கிளம்பும், அந்தத் தூல சாகையினின்றும் அத்தியந்தம் சூக்கும அந்நிய சாகைகிளம்பும்; அதுபோல இருதயரூப ஏகவிருக்ஷத்தினின்றும் ஸ்தூல ஸ்கந்தங்களின் சமானமாய் நூற்றொரு நாடிகள் கிளம்பும், அந்த ஸ்கந்தரூப நாடிகளுள் ஒவ்வொரு நாடியினின்றும் சிறிது தூல சாகையின்சமமாய் ஒவ்வொரு நூறு நாடிகள் கிளம்பும், அவ்வொவ்வொரு நூறு சர்வ நாடிகளுள் ஒவ்வொரு நாடியினின்றும் அத்தியந்தம் நியூனமாய (குறைவாய) சாகைகட்குச் சமானமாய் 72,000 எழுபத்தீராயிரம் நாடிகள் கிளம்பும்; அவ்வெல்லா நாடிகளும் சேர்ந்து 72,72,10,201, எழுபத்திரண்டு கோடியே எழுபத்திரண்டு இலக்ஷத்துப் பதினாயிரத் திருநூற்றொன்றாம். இவ்வளவு நாடிகள் இருதயரூப விருக்ஷத்தினின்றும கிளம்பும். அன்னத்தின் பரிணமமாய ரசத்தால் அவ்வெல்லா நாடிகளும் பூரணமாம்; அவற்றுள்ளும் சில நாடிகள் பிங்கல இரசத்தாற் பூரணமாம்; சில நாடிகள் வெண்மை இரசத்தாற் பூரணமாம்; சில நாடிகள் கறுப்புரசத்தாற பூரணமாம்; சில நாடிகள் மஞ்சள் இரசத்தாற் பூரணமாம்; சில நாடிகள் சிவப்பு இரசத்தாற பூரணமாம். அத்தகைய இரசங்களின் சூக்ஷ்மத் தன்மையின் விசாரத்தினுலும் எமது மனம மோகத்தை

யடைகின்றது. கருத்திதுவாம் :—எவ்வஸ்து எதனுள்ளே புகுமோ அவ்வஸ்து அதனபேக்ஷையால் சூக்ஷுமமாம். எங்ஙனம் புருஷன் தனது வீட்டின் கண்ணே புகுதலின் அவ்வீட்டின் அபேக்ஷையால் சூக்குமமாவன்; அங்ஙனம், முதலிலோ நாடிகளே அத்தியந்தம சூக்குமமாம்; அந்நாடிகளுள்ளும் அன்னத்தின் பரிணமவடிவ ரசம் புகும்; அவ்விரசத்தின் சூக்ஷுமத் தன்மையின் கண் எத்திருஷ்டாந்தமும யான் கண்டிலேன். இங்ஙனம், இருதய தேசத்தினின்றும வெளிப்போந்த சூக்கும நாடிகள் பாதம் முதலாய் மஸ்தகபரியந்தம் சர்வ சரீரத்தினும் வியாபித்து நிற்கும். விருக்ஷத்தின் இலைகளில் ஜலஜெந்துக்கள் வியாபித்து நிற்பதுபோல, அத்தகைய சூக்கும நாடிகளில் சர்வ இந்திரியங்களையு முபசமஹாரம் செய்து மனமடையும். அம்மனம் தர்ம அதர்மரூப பாசத்தாற கட்டுண்டிருக்கும், நாநாப பிரகாரமாய சம்ஸ்காரங்களோடு கூடி நிற்கும, கனவவஸ்தையின்கண் காண்பான் காட்சி காணப்படும் பொருள் என்னுந் திரிபுடிரூபமாய் நிற்கும்; சாக்ஷியாய சேதனத்தால விளங்குவதாகும். இத்தகையமனம எக்கால் நாடிகளிடத்திற புகுமோ அக்கால் விஞ்ஞான மயபோக்தாவாய ஆன்மா தனது மாயாபலத்தாலும், முன்முன் சம்ஸ்காரங்களின் சகாயத்தினாலும் அநந்தம் வகையாய பதார்த்தங்களை ஆண்டுக் காணும். கனவின்கண் ஒருகால் பயிக்கமேற்போன் (பிக்ஷை எடுப்போன்) மகாராஜாவாவன், ஒருகால் மகாராஜாவும் பயிக்கமேறபோனுவன். கனவின்கண் ஒருகால் நீசஜாதியையுடைய சண்டாளனும் உத்தம பிராஹ்மணனுவன்; ஒருகாலுத்தம பிராஹ்மணனும சண்டாளனுவன். கனவின்கண் ஒருகால் இரண்யகாபபனும, ஸ்தாவரமாயும், கிராமப்பன்றியாயும் கிருமியாயும் ஆவன்; ஒருகால ஸ்தாவரமும் கிராமப பன்றியும் கிருமியும் பிரஜாபதியாம். இங்ஙனம் மாயையால் மோகிதமாய தேகதாரி ஜீவன் புண்ணிய பாவ கர்மாநுசாரமாய்க் கனவின்கண்ணே மேலாய சரீரத்தையும் கீழாய சரீரத்தையும் அடைவன்.

இப்போது நனுக்கனுக்களின் சமானத தன்மையைக் காண்பிப்பாம :—ஹே பாலாகிப பிராஹ்மணரே! மாயையால் கனவின்கண்ணே தேர் முதலிய பதார்த்தங்கள் தோறறு நிறகும். உண்மையாய் ஆண்டுத் தேர்முதலிய பதார்த்தங்களில்லை. கனுப்பொருள்கள் உண்மையாயினு நனுவின்கண்ணும் புலப்படவேண்டும், நனுவின்கண்ணே புலப்படுவதில்லையாம்; ஆகையால், கனுபொருள்கள் மித்தையாம். அதுபோல நனுப்பொருளும மாயையாற் பிரதீதியாம்; உண்மையாயோ வில்லையாம். நனுப்பொருள்கள் உண்மையாயிருப்பின் சமாதிகாலத்தின்கண்ணும் தத்துவத்தை யறிந்தோனுக்குத் தோற்றவேண்டும; தத்துவ வேத்தாவிற்குச் சமாதிகாலத்தில் பதார்த்தங்கள் தோற்றுவதில்லையாம்; ஆகையால், கனுவைப்போல நனுப்பொருள்களும் பொய்யாம்.

அல்லது எங்ஙனம் கனுவில் தமதான்மாவின் அஞ்ஞானம் ஜீவர்கட்குண்டாமோ, அங்ஙனமே நனுவின் கண்ணும் ஜீவர்கட்கு ஆன்மாவின் அஞ்ஞானமுளது; ஆகையாலும் நனுவுங்கனுவும் துல்லியமாம்.

அல்லது எங்ஙனம் கனவின்கண் பதார்த்தங்களின் விபரீத விளக்கம் உண்டாமோ, அங்ஙனமே நனவின் கண்ணும் பதார்த்தங்களின் விபரீத விளக்கமுண்டாம்; ஆகையாலும் நனக்கனவிரண்டும் துல்லியமாம்.

சங்கை :—நனக்கனக்கள் இரண்டினுக்கும் துல்லியத்தன்மை சொல்லுதல் கூடாது; ஏனெனின், கனப்பதார்த்தங்கள் அற்பகாலத்திருப்பனவாம், நனப்பதார்த்தங்களோ நீண்டகால மிருப்பனவாம்.

சமாதானம்:—எங்ஙனம் நனவின்கண்ணே தனம், வஸ்திரம், திருணம் முதலிய சகல ஜடபதார்த்தங்களும் பார்த்திவத்தன்மை வடிவமாய்ப்புலப்படுமோ, அங்ஙனமே கனவின் கண்ணும் தனமுதலிய பதார்த்தங்கள் பார்த்திவத்தன்மை வடிவமாய்ப் புலப்படும். எங்ஙனம் நனவின்கண் தனம்முதலிய ஜடபதார்த்தங்கள் இருக்கின்றனவெனப் பிரதீதியாமோ, அங்ஙனமே கனவின்கண்ணும் தனம் முதலிய ஜடபதார்த்தங்களிருக்கின்றன எனப்பிரதீதியாம்; ஆகையால், நனக்கனவிரண்டும் சமானமாம. நனப்பொருள்களில் நீண்டகாலம் இருத்தல் தன்மையும், கனபதார்த்தங்களில் அற்பகாலம் இருத்தல்தன்மையும் ஆகிய விசேஷதர்மங்கள் அஞ்ஞானத்தால் கற்பிதங்களாம்; ஆகையால், அக்கற்பித தர்மங்களால் நனக்கனப் பதார்த்தங்கட்கு விலக்ஷணத்தன்மை சித்தியாது.

அல்லது, எங்ஙனம் கனவவஸ்தையின்கண் ஒரே கனக்காணும் புருஷன் அஞ்ஞானத்தாலாய நாநாவகையாய பதார்த்தங்களைக் காண்பானே, அங்ஙனமே, நன அவஸ்தையின்கண்ணும் ஒரே ஆநந்தசொரூப ஆன்மா அஞ்ஞானத்தாலாய அநந்த பதார்த்தங்களைக் காண்பன்; ஆகையாலும், நனக்கனவிரண்டும் சமானமாம். இங்ஙனம் கன அவஸ்தையை நிரூபித்து மீண்டும் அவ்வரசர் கூறத்தொடங்கினர்:—ஹே பாலாகிப் பிராஹ்மணரே! இக்கன அவஸ்தையின்கண் உறங்காநின்ற விஞ்ஞானமயபோக்தாவின் சொரூபத்தை வெளிப்படையாக யான் உன்பொருட்டுக் காண்பித்தேன். அவ்விஞ்ஞானமய போக்தாப பிராணனினும் வேறாம். ஏனெனின், எங்ஙனம் அரசனது புரியைக் காவல் செய்யும் புருஷன் (சேவகன்) அரசனிலும் வேறுவனே, அங்ஙனம் இப்பிராணனும் சேவகனைப்போலத் தூலசரீர ரூபப்புரியின் காப்பைச்செய்யும். விஞ்ஞானமய போக்தாவாய ஆன்மா மகாராஜாவைப்போலப் பிராணன் முதலிய சகல ஜடபதார்த்தங்களையும் தத்தம் காரியத்தின்கண் பிரவிர்த்திப்பிக்கும்; ஆகையால், அவ்விஞ்ஞானமய போக்தாவினின்றும் பிராணன் பின்னனும்.

அல்லது மகாராஜாவானவர் தமதுபுரியின் காப்பின் பொருட்டு, ஒருபிரதான மந்திரியை அப்புரியின்கண்ணே ஸ்தாபித்துத் தமது சேனையை நடத்திக்கொண்டு வேட்டைமுதலிய செய்யும் நிமித்தத்தால் தமது தேசத்திற் சஞ்சரிப்பர். அதுபோல இவ்விஞ்ஞானமய போக்தாவும் தூலசரீர ரூபப்புரியின் காப்பின் பொருட்டுப் பிராணரூபப் பிரதான மந்திரியை ஸ்தாபனம்செய்து, மனசகிதசர்வ இந்திரியங்களையுங் கவர்ந்து தனதிச்சைப்படி இக்களேபரத்தின் (உடலின்) கண்ணே சுழலாநிற்கும். கருத்திதுவாம் :—அஞ்ஞானத்தாலாய அநேக பதார்த்தங்களைக் காண்பன் என்பதாம்.

இங்ஙனங் கனவடிவமுதற் சயனத்தை நிரூபித்தேம்; இப்போது துயில்வடிவ இரண்டாவது சயனத்தை நிரூபிப்பாம்:—ஹே மறையவரே! இங்ஙனம் நாடி முதலியவற்றில் சஞ்சரியா நின்ற மனமானது எக்காலத்தில் தனது காரணவடிவ அஞ்ஞானத்தின்கண் இலயத்தையடையுமோ, அக்காலத்தில் இவ்வான்மதேவர் பரிபூரணத்தன்மைவடிவ இரண்டாவது சுழுப்தியாகிய சயனத்தையடைவர். கருத்திதுவாம்:—சேதனத்தின்கண்ணுள்ள பரிச்சின்னத்தன்மையானது உண்மையாயின்றாம்; மற்றேறு பரிச்சின்ன உபாதியின் சம்பந்தத்தால் சேதனத்தின்கண் பரிச்சின்னபாவமாம். ஈண்டந்தக்கரண விசிஷ்ட சைதன்யத்தின் பெயர் விஞ்ஞானமய போக்தாவாம; அவ்வந்தக்கரணம் நனவின்கண்ணும் கனவின்கண்ணும் இருக்கின்றது; ஆகையால், நனவின்கண்ணேயும் கனவின்கண்ணேயும் விஞ்ஞானமய போக்தாவாய ஆன்மாவின் பரிச்சின்னத்தன்மை நிவிர்த்தியாகாது. துயிலிடத்தோ அந்தக்கரணத்திற்கு அஞ்ஞானத்தின்கண்ணே இலயமுண்டாம்; ஆகையால், அவ்விஞ்ஞானமய போக்தாவாய ஆன்மா, பரிச்சின்னபாவத்தைப் பரித்தியாகம் செய்து சத்திய பரமான்மாவோடு அபேத வடிவ பூரணத்தன்மையையடையும்.

இப்போது சுழுப்திரூப இரண்டாவது சயனத்தின் ஆதாரத்தை நிரூபணம் செய்வாம்:—அவ்விஞ்ஞானமய போக்தா அந்நாடிவடிவ துவாரத்தால், இருதய கமலத்தின் உள்ளே யிராநின்ற பரமான்ம வடிவ மகா ஆகாசத்தையடையும். கருத்திதுவாம்:—அவ்விஞ்ஞான மயபோக்தா பரிச்சின்னபாவத்தைப் பரித்தியாகம் செய்து, மாயாவிசிஷ்ட பரமான்மாவோடு அபேதரூப பரிபூரணத்தன்மையையடையும். இது கூறியதால் விஞ்ஞானமய போக்தாவின் இரண்டாவது சயன ஆதாரம் மாயாவிசிஷ்ட பரமான்மாவெனக் காண்பிக்கப் பெற்றது. அந்தமாயா விசிஷ்ட பரமான்மாவிடத்தேயே நேத்திராதி சர்வ இந்திரியங்களோடுங்கூடிய மனம் இலயமாம். காரணத்திடத்தேயே காரியம் இலயமாமென்பது நியமமாம். மாயாவிசிஷ்ட பரமான்மாவே இந்திரியாதி சகலப் பிரபஞ்சத்திற்கும் உபாதானகாரணமாம்; ஆகையால், சுழுப்தியில் அம்மாயா விசிஷ்ட பரமான்மாவின்கண் இந்திரியாதிகளின் இலயம் சமபவிக்கும். *கடலின் நீரே கனத்தன்மையையுற்று இலவணபாவத்தையடையும்; ஆகையால், கடல்நீர் இலவணகாரணமாம். அக்காரணரூப கடல்நீரிற் சேர்ந்த இலவணபிண்டம் இலயபாவத்தையடையும்; அங்ஙனமே சுழுப்தியவஸ்தையின்கண் இந்திரியசகிதமனம் பரமான்மவடிவ காரணத்தின்கண் இலயபாவத்தையடையும்.

---

* கடல்நீர் இலவணமாய்த் தடித்ததென்று கடல்நீருக்கும் இலவணத்திற்கும் காரணகாரியபாவம்கூறி, காரணமாய கடல்நீரில் காரியமாய இலவணம் இலயமாகுமென்று ஈண்டு கூறியது, ஒன்றிலொன்று இலயத்தன்மை அடையும். சாதுரியத்தை முன்னிட்டேயன்றி, இத்திருஷ்டாந்தமே தான் உடன்பாடென்பது அன்று; யாதுடன்பாடெனின் ஜலத்தினின்றும் தடித்த ஆலாங்கட்டி காரணவடிவ ஜலத்தில் காரியவடிவ ஆலாங்கட்டி இலயமாவது போலும்.

அல்லது படத்தின்கண்ணே சித்திரித்திராநின்ற சித்திரம் படத்தைச் சுருக்கின் இலயபாவத்தையடையும்; அதுபோல மனம் இலயமாயின் மனத்தாற் கற்பித மாய சர்வ பதார்த்தங்களுக்கும் இலயமாம். அக்காலத்தில் சர்வகாரியப் பிரபஞ்சமுமற்ற ஒரு அத்விதீய பரமான்மா எஞ்சியதாய் நிற்கும்.

சங்கை:—ஹே பகவன்! சுழுப்தி யவஸ்தையின்கண்ணே காரியப் பிரபஞ்சம் இலயமாம் என்றாலும் அஞ்ஞான ரூபகாரணம ஆண்டுளது; ஆகையால், சுழுப்தியின்கண்ணே பரமான்மாவிற்கு அதவிதீய ரூபத்தன்மை சமபவியாது.

சமாதானம்:—சுழுப்தி யவஸ்தையின்கண் அஞ்ஞானமிருந்த போதிலும், அவ்வஞ்ஞானம் வெளிப்படையாய் ஆண்டு விளங்காது; ஆகையால் இராதது போலவேயாம்.

இப்போது இவ்வர்த்தத்தையே உலகப்பிரசித்த திருஷ்டாந்தத்தால் வெளிப்படையாக்குவாம்:—ஒரு யவ்வன அவஸ்தையையுடைய காமிப்புருஷன் நெடுநாட்குப்பின்னர், தனது வீட்டிற்கு வந்து அததியந்தம் அழகையுடையவளும், பதினாறுவயதை யுடையவளும் ஆய தனது பிரிய ஸ்திரீயோடு ஆலிங்கனம் செய்து மாக(மாசி)மாசத்தின்கண் மாளிகையிற் சயனம் செய்யுங்கால், அக்காமியானவன் ஆநநதத்தால் பரிபூர்ணனாய் வெளிபபொருள்களையும் உட்பொருள்களையும் சிறிது மாத்திரமும் அறியானாயிருப்பன்; அக்கால் தன்னையும் தனது பிரிய பிராண நாயகியையும் கண்டுகொண்டிருபபினுங் காணான். அதுபோலவே இவ்விஞ்ஞானமய போக்தாவும் துயிலின் கண்ணே பரமான்மாவோடு தாதான்மிய பாவத்தையடைந்து தன்பால இராநின்ற மாயையையும் அறிகின்றிலன்; மற்றோ அஞ்ஞான விர்த்திகளாற கேவலம் தனது சொரூப ஆநநதத்தையே அநுபவிப்பன். இக்காரணத்தாற் சுருதியின்கண்ணே அவனை ஆநந்தபுக் (புசிப்போன்) என்று சொல்லப்பட்டுளது.

அல்லது சுழுப்தி யவஸ்தையின்கண் எப்போது இவ்விஞ்ஞானமய போக்தா ஆண்டிராநின்ற மாயையையும் அறிகின்றானில்லையோ, அக்கால் இலயபாவத்தையடைந்திராநின்ற மாயையின் காரியங்களாய கனப்பொருள்களையும், நனைப்பொருள்களையும் எங்ஙனமுணர்வன்; மற்றோ எப்பொருளையும் ஆண்டு உணரான், கேவலம் ஆநந்தத்தாற் பரிபூர்ணமாயிருப்பன்.

இப்போது துயிலின்கண் உள்ள துக்க நிவிர்த்தியையும், பரமாநந்தப் பிராப்தியையும், குமாரன், மகாராஜா, மகாப் பிராஹ்மணன் என்னும் மூன்று திருஷ்டாநதங்களால் நிரூபணம் செய்வாம்:—குமார திருஷ்டாந்தமாவ திங்ஙனமாம:—அன்னாதிகளையயில்வ(உண்ப)தில் ஆற்றல் அற்ற பாலகனைத் தாயானவள் கழுத்துவரையில் பாலைப பானம்செய்யும்படி செய்து மூட்டைகொதுகு முதலியன வற்றகோமளம் (மிருது) ஆகிய படுக்கையில் படுக்கவைத்திடின், அப்படுக்கையின்கண் உறங்காநின்ற அப்பாலகன் பரமாநநதத்தையடைவன்; சுகமாய் நகைப்பன். ஆநந்தத்தாற் பரிபூரண முற்றபாலகன் தனது சமீபத்தில் இராநின்ற தாய்தந்தை

யராதியரைக் காணினுங் கண்டிலன்; கேவலம் ஆநந்தத்தாற் பரிபூரணமாயிருப்பன். அங்ஙனம் சுழுப்தி யவஸ்தையின்கண் இவ்விஞ்ஞானமய போக்தா பரமாநந்தத்தின் அடைவால் சர்வ துக்கங்களு மற்றவனுவன். அக்கால் ஆநந்தத்தாற் பரிபூரணமுற்ற இவ்விஞ்ஞான மயபோகதா மாயையைக்கண்டு கொண்டிருப்பினும் காணுன்.

இப்போது மகாராஜாவின் திருஷ்டாநதத்தை நிரூபிப்பாம்:--நாநாவகையாய தனங்களாற் பூரணமாயதும், பகைவரற்றதுமாய சம்பூர்ண பிருதுவியையுமாளப்பட்டவரும், திடகாத்திரரும், முறறிலும பலமுடையவரும், யவ்வனுவஸ்தையோடு கூடியவருமு, சர்வ நோய்களுமற்ற சரீரத்தையுடையவரும், ரூபத்தோடு கூடியவரும், ஹஸ்தபாதாதி அங்கங்களின் பளபளப்பான லாவண்யத்தோடு (பேரழகோடு) கூடியவரும், உலகமுழுதும் பரவிய கீர்த்தியையுடையவரும், தாமசம்பன்னரும், வேத வேதாங்கஙகளை யுணர்நதவரும், மனேஹரமான அநந்த ஸ்திரீகளாற சேவிக்கபபட்டவருமு, அநதத் தருணி (இளம்பெண்) களாற் பாடப்பட்ட மாதுர்ய கீதத்தாலும், நாநாவகையாய வாத்தியசப்தங்களாலும் சேவிதரும், மறையோராலும் சாரணராலும கட்டியக்காரராலும் செய்யப்பட்ட ஆசீர்வாதம் ஜயஜயவென்னும் சபதம் முதலியவற்முற் சேவிதருமு, தந்தைக்குச் சமானமாய குணவான்களும், தநதை தாய்களிடதது மிகுந்த பக்தியுற்றவருமாய அநேக மைந்தர்களாற சேவிதரும், மறறும் எல்லாகுணங்களோடுங் கூடியவரும் ஆய மகாராஜாவானவர் எங்ஙனமு சாவ போகங்களின் அடைவாற் பரமாநந்த முறறிருப்பரோ அங்ஙன்ம். இவ்விஞ்ஞான மயபோக்தா சுழுபதியின்கண் சிறிது மாத்திரமுமு துக்கத்தை யுணர்நதிலன். கருததிதுவாம்:—இசசையின் விஷயமாய ஸ்திரீ தனம்முதலிய பொருள்களின் அடைவுண்டாகாதிருப்பின், அவ்விச்சையால் அநநத துக்கங்களின் உறபத்தியுண்டாம். அததுக்க நிவிர்த்திக கிரண்டுபாயமுண்டு; ஒன்ருே ஸ்திரீ தனுதி பதாாததஙகளின் அடைவாம், மற்ருென்ருே இச்சையின் நிவிர்த்தியாம். அவறறுள், மகாராஜா திருஷ்டாந்தத்திலோ சர்வ பதார்த்தங்களின் அடைவால் துக்காபாவமாமு. சுழுப்தியில் விஞ்ஞான மய போக்தா விடத்து இச்சைமுதலிய சாவ விக்ஷேபத்தின் நிவிர்த்தியினுல் சர்வ துக்கங்களின் அபாவமாம்.

இபபோது மகாப்பிராஹ்மணரூப திருஷ்டாந்தத்தை நிரூபிப்பாம்:—ஆண்டு முதலில் மகாபபிராஹ்மணனுடைய சொரூபத்தைக் காண்பிபபாம்:—நேத்திராதி பாகிய இந்திரியங்களையும் உள்மனுதிகளையுமு வசனுசெய்தவரும், எல்லாக் காமங்களையும் விட்டொழித்தவருமு, கிடைத்த லாபங்கொண்டு மகிழ்வுற்றவரும், மனேவாக்குக் காயங்களால் துஷ்ட ஜனங்கள்செய்யும் அபகாரத்தை யறிந்தபோதினும், இங்ஙனம் மனத்தின்கண் ஓர்ந்து (அறிந்து) அத்துஷ்டரோடு துவேஷத்தைச் செய்யாதவரும், (அவ்வோர்தலாவது :—எத்துக்கம் அபிமானம் முதலியன தனக்குப் பிரதிகூலமாயிருக்கின்றனவோ, அத்துக்கத்தையும் அபிமானமுதலியவைகளையும் எப்புருஷன் சரீரத்தாலும் மனவாக்குகளாலும் வேறொரு பிராணியிடத்தே செய்

கின்றனனோ, அவனுக்கே அத்துக்க அபிமானமுதலியவைகள் இகலோகத்திலும் பரலோகத்திலுமுண்டாகும். இங்ஙனம் தனக்கநுகூலமாய சுகத்தின் அடைவை எப்புருஷன் அந்நிய பிராணியிடத்தே செய்வானோ, அவனுக்கு இகலோகத்தின் கண்ணும் பரலோகத்தின்கண்ணும் அச்சுகத்தின் அடைவுண்டாம்; ஆகையால், புருஷன் எப்பிராணிக்கும் துக்கத்தைச்செய்ய இச்சிக்கலாகாது; மற்றோ, சர்வப் பிராணிகட்கும் சுகமேசெய்ய இச்சை செல்தல் வேண்டும் என்பதாம். இவ்வண்ணம் ஓர்ந்து எப்பிராணிகட்கும் துன்பம் செய்பலாகாது; மற்றோ இன்பமே செய்ய வேண்டும் எனச்சிந்திப்பவரும்,) சர்வ வேதார்த்தங்களையும் அறிந்தவரும், பர நிந்தை செய்யாதவரும், தனது தோஷத்தின்கண்ணேயே எப்போதுந் திருஷ்டியுடையவரும், துஷ்டப் பிராணிகளின் சங்கமற்றவருமு, ஆன்மாவினும் வேறாயசகல ஜகத்துமு அநித்தியம், ஆன்மாவே ஏகமநித்தியம் என்னும் நித்தியாநித்திய விவேகத்தால் எப்போதும் அலங்கரிக்கப் பட்டவருமு, பூர்வபக்ஷ தர்க்கத்தின்கண்ணும், சித்தாந்த தர்க்கத்தின்கண்ணும் அதிகுசலரும், இகலோகத்தும் பரலோகத்தும் இராநின்ற நாநாவகையாய அன்னபானாதி பதார்த்தங்களும், மனோஹர ஸ்திரீகளும், சப்த, ஸ்பரிச, ரூப, ரச, கந்தம் என்னும் பஞ்ச விஷயங்களுமாகிய இவ்வெல்லாவற்றையும் வாந்திசெய்த அன்னத்தைப்போலக் கண்டு இவற்றில் ஆசையற்றவரும், தூல சரீரத்தையும் சூக்கும சரீரத்தையும் அபிமானிக்குமு புருஷருக்குப்புண்ணிய பாவவசத்தால் சுகத்தின் அடைவும் துக்கத்தின் அடைவும் அவசியம் உண்டாம் என்னுந் தோஷ திருஷ்டியால தூல சூக்கும சரீரங்களினின்றும் விடுபட இச்சையுற்றவரும், பிரஹ்மசர்ய ஆசிரமத்தையேனும் கிருகஸ்த ஆசிரமத்தையேனும் வானப்பிரஸ்த ஆசிரமத்தையேனும் பரித்தியாகம் செய்து விதி பூர்வகமாய்ச் சிகை யஞ்ஞோபவீதம் முதலியவறறைப் பரித்தியாகம் செய்து தண்டாதிகளைக் கவரும் வாயிலாய்ச் சந்யாச ஆசிரமத்தைக் கவர்ந்து ஆன்மஞான அடைவின் பொருட்டுச் சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்ட குருவின் சமீபம் செலபவரும், ஆசிரியர் முகார விந்தத்தினின்றும் உதித்தருளிய வசனங்களின் அத்விதீய பிரஹ்மத்தின்கண்ணே தாற்பரிய நிசசயரூப சிரவணத்தைச் செய்து அவ்வர்த்தத்தின் கண் நாநாவகையாய யுக்திகளால் விரோதபரிகாரரூப மனனத்தைச் செய்து, அப்பொருளின்கண்ணே சித்தத்தின் ஏகாக்கிரத் தன்மைவடிவ நிதித்தியாசனத்தைச் செய்து, யான் பிரஹ்மமாயிருக்கின்றேன் என்னும் சாக்ஷாத்காரத்தை யடைந்தவரும், என இங்ஙனம் இந்திரிய நிக்கிரக முதலாய்த் தத்துவ சாக்ஷாத்காரம் ஈறாய்ச் சொல்லிய சுபகுணங்களால், அலங்கரிக்கப் பட்டவரே மகாப்பிராஹ்மணரெனப்படுவர்.

இத்தகைய மகாப் பிராஹ்மணர் எங்ஙனம் இராகத் துவேஷாதிகளற்றவராய்ப் பரமாநந்தத்தை யடைந்திருப்பரோ, அங்ஙனம் சுழுப்தி அவஸ்தையின் கண் இவ்விஞ்ஞானமய போக்தா பரமாநந்தத்தை யடைவர். எங்ஙனம் இத்தகைய மகாப் பிராஹ்மணனிடத்தே அநர்த்தம் செய்வதாய இராகத்துவேஷாதிகளில்லையாமோ, அங்ஙனமே சுழுப்தி யவஸ்தையின்கண் இவ்விஞ்ஞானமய போக்தாவிடத்தும் அநர்த்தம் செய்வனவாய இராகத்துவேஷாதிகளிரா. கருத்திதுவாம்:— இராகத்துவேஷாதிகள் யாவும் அந்தக்கரணத்தின்கண்ணதேயாம்; அவ்வந்தக்கர

ணம் சுழுப்தியின்கண் இலயபாவத்தையடையும்; ஆகையால், அதன் தர்மங்களாய இராகத்துவேஷாதிகள் சுழுப்தியின்கண் உண்டாகா.

அல்லது எப்பொருள்களில் சுகசாதனத்தன்மையின் ஞானமுண்டாமோ அப்பொருள்களில் இராகமுண்டாம்; சுகசாதனத்தன்மையின் ஞானமின்றி இராகமுண்டாகா; ஆகையால் சுகசாதனத்தன்மைஞானம் இராககாரணமாம். எப்பொருள்களில் துக்கசாதனத்தன்மை ஞானமுண்டாமோ அப்பொருள்களில் துவேஷமுண்டாம். துக்கசாதனத்தன்மையின் ஞானமின்றித் துவேஷமுண்டாகமாட்டா; ஆகையால் துக்கசாதனத்தன்மையின் ஞானம் துவேஷ காரணமாம். அச்சுகசாதனத்தன்மை ஞானமும் துக்கசாதனத் தன்மைஞானமும் எப்பொருள்களிலும் தத்துவவேத்தாவாய மகாப் பிராஹ்மணனுக்கில்லையாம்; ஏனெனின், அத்விதீய ஆன்மாவினும் வேறாய எல்லா உலகையும் முயற்கோடுபோல அறிந்திருக்கின்றனாதலின், அசத்தியவஸ்துவின்கண் சுகசாதனததன்மையும் துக்கசாதனத்தன்மையும் சம்பவியாவென்பதொருதலையாம்; ஆகையால முற்கூறிய மகாபிராஹ்மணனிடத்தே இராகத்துவேஷமசம்பவியா. அங்ஙனமே சுழுப்தியவஸ்தையின்கண்ணும் அந்தக்கரணம் இலயமாகவே சுகசாதனத்தன்மையின் ஞானமும் துக்கசாதனத் தன்மையின் ஞானமும் எபபொருளிடத்தும் சுழுபத புருஷனுக்குண்டாகமாட்டா; ஆகையால் அதன்கண்ணும் இராகத்துவேஷத்தின் அபாவம் சம்பவிக்கும். இங்ஙனம் சுழுப்திவடிவ இரண்டாவது சயனததின் நிரூபணத்தைச் செய்து மீண்டும் அவ்வரசர் கூறுகின்றார்:—ஹே பாலாகிப் பிராஹ்மணரே! சயனஞ்செய்யாநின்ற புருஷனுக்கு யாது ஆதாரம் என்னும் முதற் கேள்விக்கும சயனத்திற்கு யாது ஆதாரம் என்னுமிரண்டாவது கேள்விக்கும் இவ்விடை யான் கூறினேன். பரமான்மவடிவ ஆகாசமே சயனகர்த்தாவாய விஞ்ஞானமய போக்தாவிற்கும் சுழுப்திரூப சயனத்திற்கும் ஆதாரமாம். அந்தப்பரமான்மாவினும் வேறாய் யாதொன்றும் அவற்றிற்கு ஆதாரமன்றாம். ஹே பாலாகிப் பிராஹ்மணரே! விஞ்ஞானமய போக்தாவிற்குப் பரமான்மாவோடு அபேதமாதலும் அந்தக்கரணாதிகட்கு அதன்கண்ணே இலயமாதலும் ஆகிய இதுவே சயனத்தின் சொரூபமாம். எங்ஙனங் கடாகாசம் மகாகாசத்தினும் வேறன்றாமோ, மற்றோ கடாகாசம் மகாகாசஸ்வரூபமாமோ, அங்ஙனமே யான் உன்பொருட்டுக் கூறிய விஞ்ஞானமய போக்தா பரமான்மாவினும் வேறன்றாம்; மற்றோ பரமான்மாவின் சொரூபமாம். அப்பரமான்மாவே சர்வப்பிராணிகளிடத்தும் வியாபித்து அவற்றையொளிர்விக்கும். இக்காரணத்தினாலேயே சுருதியின்கண் அப்பரமான்மா ஆகாசமெனப்படும். ஹே பாலாகிப் பிராஹ்மணரே! கடமடாதி அநேக உபாதிகளிலிருந்த போதிலும் மகாகாசம் யாண்டும் ஆகாச ரூபத்தாற் புலப்படா நிற்கும்; இக்காரணத்தால் ஆகாசம் ஒன்றாம். அதுபோல உனதான்மாவும் எனதான்மாவும் மற்றப்பல பிராணிகளின் ஆன்மாவும் யான் எனது சொரூபத்தை அறிகின்றிலேன், அந்நியத்தையும் யானறிகின்றிலேன் என விங்ஙனம் அஞ்ஞானத்தின் ஆசிரய ரூபமாய்ப் பிரதீதியாம்; யான் சுகமாய்ச சயனம் செய்தனன் என விங்ஙனம் சுழுப்தியின் சாக்ஷிவடிவமாய்ப் புலப்படா நிற்கும்; ஆகையால் சர்வபபிராணிகளிடத்தும் ஒரு ஆன்மா தொடர்ந்து

நிற்பதாம். ஹே பாலாகிப் பிராஹ்மணரே! நனவவஸ்தையின்கண்ணும் கனவவஸ்தையின்கண்ணும் ஆன்மாவிற்கு உண்மையாய் ஏகரூபத்தன்மையே யுள்ளதாமெனினும், நனவவஸ்தையின்கண்ணும் கனவவஸ்தையின்கண்ணும் அந்தக்கரண விசிஷ்டமாய ஆன்மா விஞ்ஞானமய பாவத்தையடையும்; ஆகையால், அவ்விஞ்ஞானமய பாவமே நனக்கனவவஸ்தைகளில் ஆன்மாவின் பேதத்திற்குக் காரணமாம். சுழுப்தி யவஸ்தையின்கண்ணோ தனது காரியசகித அந்தக்கரணத்திற்கு அஞ்ஞானத்தின்கண் இலயமுண்டாம்; ஆகையால், சுழுப்தி யவஸ்தையின்கண் ஆன்மாவின் பேதமுண்டாகாது. கடமடாதிரூப உபாதிகளிருந்தாற்றான் ஆகாசத்தின்பேதம் பிரதீதியாம். கடமடாதி உபாதிகள் நாசமாயின், ஆகாசத்தின்கண்ணே பேதப் பிரதீதியுண்டாகா. அங்ஙனமே அந்தக் கரணமும் வாக்குமுதலிய இந்திரியங்களும, நனக்கனக்கண்ணே ஆன்மாவைப் பேதஞ்செய்வனவாம். அம்மனசகித சர்வ வாக்குமுதலிய இந்திரியங்களும சுழுபதி யவஸ்தையின்கண்ணே பரமான்மாவிடத்து இலயபாவத்தையடையாநிறகும; ஆகையால, சுழுப்தி யவஸ்தையின்கண் ஏக அத்விதீய பரமான்மாவிருக்கும்.

சங்கை :—ஹே பகவன்! சுழுப்தி யவஸ்தையின்கண் அந்தக் கரணாதிகாரியமின்றாமென்றாலும், காரணரூப அஞ்ஞானம் ஆண்டுளது; ஆகையால, அஞ்ஞானரூப உபாதியின் வயத்தால் ஆன்மாவின் பேதம் சுழுப்தியின்கண்ணும் சமபவிக்கும்.

சமாதானம் :—அஞ்ஞானத்திற் கிருவடிவமாம; ஒன்றோ ஆவரண சொரூபமாம், மற்றொன்றோ விக்ஷேப சொரூபமாம். அவற்றுள், ஆவரணசொரூப அஞ்ஞானத்தின்கண் பேதத்தின் ஜனகத்தன்மையுளதா? அல்லது விக்ஷேபவடிவ அஞ்ஞானத்தின்கண் பேதத்தின் ஜனகத்தன்மையுளதா? அவற்றுள் ஆவரணரூபத்தால் அஞ்ஞானத்தின்கண் பேதத்தின் காரணத்தன்மையுளது என்னும் முதற் பக்ஷமோ சம்பவியாது; ஏனெனின், சுழுப்தியின்கண் ஆன்மாவை மறைக்கும் அஞ்ஞானமோ உளது, ஆனல் அவ்வஞ்ஞானம் ஆண்டு ஆன்மாவின் பேதத்தையுற்பன்னம செய்யாது; ஆகையால், ஆவரண சொரூப அஞ்ஞானத்தின்கண் ஆன்மாவின் பேதகாரணத்தன்மை சம்பவியாது. சுழுபதியின்கண் விக்ஷேப சொரூப அஞ்ஞானம் ஆன்மாவின் பேதத்திற்குக் காரணமாம் என்னும் இரண்டாவது பக்ஷமும் சப்பவியாது; ஏனெனின், விக்ஷேபம் இருவிதமாம். ஒன்றோ நனவடிவமாம், மற்றொன்றோ கனவடிவமாம். இவ்விருவகையாய காரியவடிவ விக்ஷேபமும் சுழுப்தியின்கண்ணே இலயபாவததையடையும்; ஆகைபால், விக்ஷேபரூப அஞ்ஞானமும் ஆன்மாவின் பேதத்தையுண்டு செய்யாது.

இப்போது இபபொருளையே திருஷ்டாநதததால் வெளிபபடை யாக்குவாம். வர்ஷா (மழை) காலத்தில் இருள்சூழ்ந்த இரவின்கண் சம்பூர்ண மேகாதிகள் அந்தகாரத்தின்கண் இலயபாவத்தையடையும். அங்ஙனம் சுழுபதி யவஸ்தையையடைந்த ஆன்மாவின் அஞ்ஞானத்தின்கண் சர்வகாரியப் பிரபஞ்சமும இலயபாவத்தையடையும். சூரிய பகவானது உதயத்தால் அவ்வந்தகாரமானது நீங்கின் மீண்டும் அம்மேகாதிகள் அவ்வந்தகாரத்தினின்றும வெளிப்படும்; அங்ஙனம் மாயாவிசிஷ்ட பரமான்மாவினின்றும் மீண்டும கர்மங்களின் வயத்தால் நனவுண்

டாம். கருத்திதுவாம் :—நனைப் பிரபஞ்சத்தின் போகத்தைக் கொடுப்பதாய புண்ணிய பாவரூப கர்மங்களுண்டாமாயின், மாயாவிசிஷ்ட பரமான்மாவினின்றும் நனைப் பிரபஞ்சத்தின் உற்பத்தியாம். கனைப்போகங்களைக் கொடுப்பதாய புண்ணிய பாவரூப கர்மங்கள் உற்பவமாகுமாயின், அப்பரமான்மாவினின்றும் சொப்பனப் பிரபஞ்சத்தின் உற்பத்தியாமாதலின், ஹே பாலாகிப் பிராஹ்மணரே! நனைக்கனைத்துயில் என்னும் இம்மூன்று அவஸ்தைகளின் அடைவின்கண் ணியமமின்றும்; மற்றேு, தனதுசொரூப அஞ்ஞானத்தால் இபபரமான்ம தேவர் கர்மங்களின் வயத்தால் ஒருகால் கனைவவஸ்தையின்பின் நனைவவஸ்தையை யடைவர். ஒருகால் துயில் அவஸ்தையின்பின் நனைவவஸ்தையை யடைவர். ஒருகால் நனைவவஸ்தையின்பின் கனைவை யடைவர். ஒருகால் நனைவவஸ்தையின்பின் துயிலை யடைவர். ஒருகால் கனைவவஸ்தையின்பின் துயிலை யடைவர். இங்ஙனம் கர்மங்களின் அதீனமாய இஜ்ஜீவான்மா சர்வ சரீரங்களிலும் நனைக்கனைத்துயிலவடிவ மூன்று அவஸ்தைகளையுமடையும். பாலகன் தடியால் ஆகாசத்திற் செலுத்திய பநதானது நான்கு திசைகளிலும், பூமியிலும், ஆகாசத்திலும் நிரந்தரம் சுழலாநிற்கும். அதுபோல முன்புசெய்த சுபாசுப கர்மத்தின் வயமே இப்பரமான்ம தேவர் ஒருகால நனவையடைவர், ஒருகால் கனவை யடைவர், ஒருகால் துயிலை யடைவர்; இங்ஙனம் நிரந்தரம சுழலாநிற்பர். எங்ஙனம் வாயுவால் சலிப்பிக்கபபெற்ற பஞ்சிற்கு நிலை ஒருகாலும உண்டாகமாட்டாதோ, அங்ஙனமே கர்மரூப வாயுவின் வயத்தால இத்தேகத்தின்கண் நனைமுதலிய அவஸ்தைகளின் பிரவாஹம் ஒருகாலும் நிலைபெறுது; மறறேு, நிரநதரமுமே நனைமுதலிய அவஸ்தைகளின் பிரவாஹம செல்லாநிறகும். ஆகாசத்தின்கண் சம்பூர்ண மேகமண்டலத்தை வாயு சுழலவிக்குமாறுபோலக கர்மரூப வாயுவும் தேகாதிப் பிரபஞசத்தைச சுழல்விககும். எங்ஙனம ஜலத்தின் பிரவாஹம் காய்ந்த காஷ்டத்தை ஒருகால் மேல ஸ்தானத்தின்கண் கிளபபுமோ, ஒருகால் கீழ் ஸ்தானத்தின்கண் அமிழ்த்துமோ, அங்ஙனமே புண்ணிய பாவ ரூப காம வசததால் இஜ்ஜீவான்மா ஒருகால் தேவசரீரத்தை யடையும, ஒருகால மனுஷ்ய சரீரத்தை யடையும், ஒருகால் கிருமி சரீரததை யடையும, ஒருகால் தருமுதலிய தாவர சரீரத்தை யடையும. கருத்திதுவாம் :—புண்ணிய காமத்தின் மிகுதியுண்டாயின், தேவ சரீரத்தை யடையும். புண்ணிய பாவங்கள் சமானமாயின் மனுஷ சரீரத்தை யடையும். பாவகர்மத்தின் மிகுதியுண்டாயின், கிருமிமுதலிய சரீரங்களை யடையும். இங்ஙனம், கர்ம வயத்தால் இஜ்ஜீவன் நாநாவகையாய சரீரத்தை யடைவன். தேவதையே முதலாய்க கிருமிவரை எல்லாச சரீரங்களிலும நனைக்கனைத்துயில் என்னும் மூன்றவஸ்தைகளையும் இஜ்ஜீவனடைவன். நனைமுதலிய மூன்றவஸ்தைகளுமற்ற பிராணி எதுவுமின்றும்.

சங்கை :—ஹே பகவன்! மனுஷ்யாதிகளிடத்தே மூன்றவஸ்தைகள் சம்பவிக்குமெனினும், தேவதைகளிடத்தே மூன்றவஸ்தைகள் சம்பவியா; ஏனெனின், சாஸ்திரத்தின்கண் தேவதைகட்கு அஸ்வபநம் (சொப்பனமின்மை) கூறப்பட்டுளது. ஆகையால், சொபபனைவஸ்தை தேவதைகளிடத்தே சம்பவியாது.

சமாதானம் :—ஹே பாலாகிப் பிராஹ்மணரே! தேவதைகட்கு அஸ்வப்நங் கூறியதானது தேவதைகளிடத்தே சொப்பனுவஸ்தை உண்டாவதின்றும் என்னும் அபிப்பிராயத்தாற் கூறியதன்றும்; மற்றே தேவதைகளிடத்தே சத்துவ குணத்தின் பிரதானத்தன்மை உளதாதலின், மனுஷரைப்போலக் கணந்தோறும் சொப்பனம் உண்டாகமாட்டாது; மற்றே தேவதைகளிடத்தே அற்ப சொப்பன முண்டாம். இவ்வபிப்பிராயத்தினுலே சாஸ்திரத்தின்கண் தேவதைகட்கு அஸ்வப்நங் கூறப்பட்டுளது. எவ்வாற்றானும் தேவதைகளிடத்தே சொப்பனமின்றெனின் உடன்படிநே, சர்வ தேவதைகளிலும் முக்கியமாய விஷ்ணுபகவான் ஆதிசேடராய சய்யையின்கண்ணே சயனஞ் செய்கின்றனரெனக் கூறும் சாஸ்திரம் அசங்கதமாகும்; ஆகையால், தேவதைகள் முதலிய சர்வப் பிராணிகளும் நனு முதலிய மூன்றவஸ்தைகளோடு கூடியவர்களென்பது பெறப்படும். ஆதலினுல் ஹே பாலாகிப் பிராஹ்மணரே! சுழுப்தி அவஸ்தையின்கண் சத்திய பரமான்மாவோடு அபேத பாவத்தை யடைந்த விஞ்ஞானமய போக்தா கர்மங்களின் வயத்தால் நனுமுதலிய அவஸ்தைகளை யடையும்.

சங்கை:—ஹே பகவன்! அந்நிய உபநிஷத்துகளில 'துயிலின்கண்ணே மாயாவிசிஷ்டப் பரமான்மாவின்கண் அந்தக் கரணமுதலியவற்றிற்கு இலயம் கூறப்பட்டிருக்கின்றது. ஆனுல் இக்கௌஷீதகி உபநிஷத்தின்கண்ணே பிராணனிடத்தே சர்வவாக்கு முதலிய இந்திரியத்தோடுகூட அந்தக்கரணத்திறகும் இலயம் கூறப்பட்டிருக்கின்றது; ஆகையால், சுருதிகட்குப பரஸ்பரம் விரோதமாம்.

சமாதானம் :—உறக்கத்தினின்றும் எழுந்த புருஷன் "யானென்று மறிகின்றிலேன்" என, நனவின்கண்ணே இவ்வாறு சிந்திப்பன் இச்சிந்தனையின் கருத்தாலே மாயாவிசிஷ்டப் பரமான்மாவின்கண்ணே சகலவாக்காதிகளுக்கும் இலயம் சித்தமாம். சுழுப்தியவஸ்தையின்கண் பிராணனது இலயத்தை உலகர் அங்கீகரிப்பதின்றும்; மற்றே பிராணனை விடுத்து அந்நிய சர்வ வாக்காதிகளின் இலயத்தைச் சுழுப்தி யவஸ்தையின்கண் உலகர் அங்கீகரித்துளார். ஆகையால், உலகரின் அபிப்பிராயத்தை யங்கீகரித்துச் சுருதியானது பிராணனிடத்தே வாக்காதி இந்திரியங்களின் இலயத்தைக் கூறியுளது; ஆகையால், பிராணசப்தத்தின் இலக்கணு விருத்தியினுல் மாயாவிசிஷ்டப் பரமான்மாவையே கவர்க. இவ்வாற்றுல் இரண்டு சுருதிகட்கும் பகையின்று மாதலின், ஹே பாலாகிப் பிராஹ்மணரே! சுழுப்தி யவஸ்தையின்கண் பரமாத்மசொரூபப் பிராணனிடத்தே தூலசூக்குமவடிவ சர்வப் பிரபஞ்சமும் இலயபாவத்தை யடையும்; ஏனெனின், சுழுப்தியவஸ்தையின்கண் மனசகிதவாக்காதி இந்திரியங்கள் இலயபாவத்தை யடையாதிருப்பின், நனுவைப் போலத் துயிலின்கண்ணும் அவ்வாக்காதிகளின் பிரதீதியாம், ஆண்டோ மன சகிதவாக்காதிகளின் பிரதீதியுண்டாவதின்றும்; ஆகையால் வாக்காதிகளின் இலயமே துயிலின்கண் அறியப்படும். ஹே அந்தணரே! எங்ஙனம், ஆதார ஆதேய பாவசம்பந்தத்தால் பூதலத்தின்கண் கடம் அடையப் படுமோ ஆண்டு பூதலம் எங்ஙனம் ஆதாரமும் கடம் ஆதேயமுமாமோ, அங்ஙனம் சுழுப்தி யவஸ்தையின்கண் இவ்விஞ்ஞானமய போக்தா ஆதார ஆதேயபாவ சம்பந்தத்தால்

பரமான்மாவை யடையாது; மற்றோ, ஆதார ஆதேய பாவமின்றிய கேவல அபேத சம்பந்தத்தால் பரமான்மாவை யடையும். கிருகாகாசத்தின்கண் அடைவுற்ற கடாகாசம் கடமழிந்த பின்னர்க் கிருகாகாசத்தோடு ஏகத்தன்மை வடிவசம்பந்தத்தையடையும். அது போலச் சுழுப்தியவஸ்தையின்கண் இவ்விஞ்ஞானமய போக்தா அந்தக்கரணாதி உபாதியற்றதாய்ப் பரமான்மாவோடு ஏகத்தன்மைவடிவ சம்பந்தத்தையடையும். ஹே பாலாகிப் பிராஹ்மணரே ! எங்ஙனம் கிருகாகாசத்திற்குச் செலவும் வரவும் உண்டாகாவோ, மற்றோ கடாகாசத்திற்கே கிருகத்தின்கண் வரவுண்டாமோ, கிருகத்தினின்றும் போக்குண்டாமோ அங்ஙனமே இருதயதேசத்தின்கண்ணே யிராநின்ற பரமாத்மாவிற்குப்போக்கும் வரவும் உண்டாகமாட்டாது. கடாகாசத்திற்குச் சமானமாய் விஞ்ஞானமய போக்தாவிற்கோ நித்தியமும் சுழுபதியின்கண்ணே போக்கும் நனவின்கண்ணே வரவுமுண்டாம. ஹே மறையவரே ! உண்மையாய் ஆராயின் விஞ்ஞானமய போக்தாவின் சொரூபத்தின் கண்ணும் போக்கும் வரவும் சம்பவியாது ; மற்றோ அந்தக்கரண உபாதியின் போக்குவரவால் விஞ்ஞானமயனிடத்தே போக்குவரவுபுலப்படும். கடோபாதியின் கமனு கமனத்தால் (போதல் வருதலால்) கடாகாசத்தின்கண் கமனு கமனம் காண்பதுபோல, உண்மையாய் கடாகாசத்தின்கண் கமனமும் ஆகமனமும் இல்லையாம். இப்பரமான்மதேவர் ஆகாசத்தைப் போல உடம்பினுள்ளும் புறம்பும் யாண்டும் வியாபகமாவர். அங்ஙனமாயினும் ஹிருதயதேசத்தின்கண்ணே யவருக்கு அந்தர்யாமித் தன்மையானது சித்திக்கும, மற்றிடத்தே அந்தர்யாமித் தன்மை சித்தமாகாது. இக்காரணத்தால் இருதயதேசத்தின்கண் பரமான்மாவின் திதி (இருப்பு) கூறப்பட்டது.

இங்ஙனம், அந்தர்யாமியாய பரமான்மாவால் நேரே பிரகாசிக்கப்பட்ட மனத்தின்கண் சம்பூரண வாக்காதி இந்திரியங்களினின்றும் உள்ள விசேஷணத்தன்மையை இப்போது நிரூபிப்பாம் :—சுகத்தை அநுபவிக்கும் பொருட்டும் துக்கத்தை அநுபவிக்கும் பொருட்டும் சம்பூர்ணப் பிராணிகளின் சரீரம் உற்பன்னமாயது ; ஏனெனின், சரீரத்தாலன்றிச் சுகதுக்கங்களின் போகமுண்டாகாது. சப்தாதி விஷயங்களின் ஒளிர்வை உபபோகமென்பர், அச்சப்தாதி விஷயங்களின் ஒளிர்வு சுரோத்திராதி இந்திரியங்களாலன்றி உண்டாகாது ; மற்றோ, சுரோத்திராதி இந்திரியங்களாலேயே சபதாதி விஷயங்களின் ஒளிர்வுண்டாம். அச்சம்பூர்ண சுரோத்திராதி இந்திரியங்களின் நியாமகம் மனமாம். ஏனெனின், தத்தம் சப்தாதி விஷயங்களோடு சுரோத்திராதி இந்திரியங்கட்குச சம்பந்தம் உண்டாயினும், எத்துணை மனத்தின் சம்பந்தம சுரோததிராதி இநதிரியங்களோடு உண்டாகாதோ, அத்துணை இச்சுரோத்திராதி இந்திரியங்கள் தமது சப்தாதி விஷயங்களையறியா ; மற்றோ, மனத்தின் சம்பந்தம் உண்டான பின்னரே சுரோத்திராதி இந்திரியங்கள் சப்தாதி விஷயங்களையறியும். ஆகையால், இது அறியபபடும்:—சம்பூர்ண சுரோத்திராதி இந்திரியங்கள் மனத்தின் அதீனமாம் என, இப்போது அப்பொருளையே உலகபபிரசித்த திருஷ்டாந்தத்தால் நிரூபணம் செய்வாம் :—உலகின்கண்ணே காஷ்டத்தாற் செய்த பத்துக்குதிரைகள் ஒரு நீள

மான காஷ்டத்தின்கண்ணே இருப்பனவாக அந்நீளமாய காஷ்டத்தின் நடுத்துளை யின்கண்ணே கீழ்முகத்தோடுகூடிய ஒரு கொக்கி உண்டாயின், அப்பத்துக் குதிரைகளின் பாதங்களைக் கட்டிய பத்துச் சூத்திரங்கள் அந்நடுத்துளை வாயிலாய்க் கொக்கியின்கண் மாட்டியிருப்பின், அச்சூத்திரங்களைத் தந்தையானவர் பாலகன் கரத்திற் கொடுப்பின், அப்பாலகன் பிதாவின் மடியிலிருந்து அந்தச் சூத்திரங்களைப் பிடித்துக்கொண்டு அக்குதிரைகளை நாநாவகையாய்ச சேட்டை செய்விப்பன். அதுபோலச சரீரரூப தீர்க்கமாய காஷ்டத்தின்கண் வாக்காதி இந்திரியங்களாகிய பத்துப் பரிகளுள. பிராணவாயுவடிவ சூத்திரத்தால் அவ்வாக்காதிகளாய பரிகள் கட்டப்பட்டிருக்கின்றன. நாடிவடிவ துளைவாயிலாய் அந்தப் பிராணரூப சூத்திரம இருதய ரூபக் கொக்கியின்கண்ணே மாட்டபபட்டுளது. பரமேஸ்வரராகிய தந்தையானவர் மனமாகிய பாலகனைத் தமது இருதய கமலமாய மடியின்கண்ணே உட்காரவைத்துப பிராணவாயுவாகிய சூத்திரத்தைக்கவர்விப்பர், அதனைக்கவர்ந்து அம்மனமாகியமைந்தன் வாக்காதிய இந்திரியக் குதிரைகளையும் பிராணவடிவச் சூததிரங்களையும தததம வியாபாரத்தின்கண் முயல்விபபன் ; இக் காரணத்தால் சாவ வாக்காதி இந்திரியங்களிலும உற்கிருஷ்டத்தன்மை (மேன்மை) புத்தியின்கண்ணேயுளது.

இப்போது மற்றொரு ரீதியினலும (வாயிலானும்) வாக்காதி யிநதிரியங்களினின்றும் உற்கிருஷ்டத்தன்மையை புத்தியின்கண்ணே காண்பிப்பாம :—சூரியபகவானுடைய பிரகாசம எல்லாப பொருளிடத்தும துல்லியமேயாயினும், உபாதியின் வயத்தால் அச்சூரியபகவானின் ஒளியின்கண்ணே பேதத்தைக் கண்ணுற்றோம் ; தாம்பிராதி தாதுக்களாற செய்யப்பட்ட குசூலத்தின்கண் சூரியபகவானின் ஒளி அறபமாய்* அபிவியகதமாம, அக்குசூலத்தினும் சொசசமாகிய தாபபணத்தின்கண் சூரியபகவான் ஒளி அதிகமாய் அபிவியக்தமாம், அததர்பபணத்திலும் கிருபாணத்தி (கததியி)ன் கண் அதிகமாய் அபிவியக்தமாம, அக்கிருபாணத்திலும் மணியின்கண் அதிகமாய் அபிவியக்தமாம், அம்மணியிலும் சூரியகாநத மணியின்கண் அதிகமாய் அபிவியக்தமாம். ஏனெனின், குசூலாதி உபாதிகளின்கண்ணே யிராநின்ற சூரியனுடைய ஒளியானது தாகாதி காரியத்தைச செய்யமாட்டாது. சூரியகாந்த மணியின்கண்ணே யிராநின்ற சூரியனது பிரகாசம் தாகாதி காரியத்தையும் செய்யும். ஆகையால், குசூலாதிய சர்வ உபாதிகளைக்காட்டிலும் சூரியகாந்த மணியின்கண் சூரியபகவானின் ஒளியதிகமாய் அபிவியக்தமாம. அவ்வண்ணமே, குசூலசமானமாய இத்தூல சரீரத்தின்கண்ணும், கண்ணுடி யொப்பாயப் பிராணனிடத்தும், கத்தியொத்ததாய கர்மேந்திரியத்திடத்தும், மணிபோன்ற ஞான இநதிரியத்திடத்தும், சூரியகாந்த மணிக்கொப்பான மதியின்கண்ணும், இவ் வாநந்தசொரூப ஆன்மா இயல்பாய் ஒரு வடிவத்தானே இருக்குமாயினும், மதியாய அந்தக்கரணம் அதிசொச்சமாம் ; ஆகையால், அவ்வந்தக்கரணத்தின்கண் இராநின்ற இவ்வாநந்தவடிவ ஆன்மா போக்தாவெனும் பெயரையுடையும். அந்நியமாய ஆகாதி (சரீரமுதலிய) உபாதிகளின்கண்ணே யிராநின்ற ஆன்மா போக்தா

---

* அபிவியக்தம் = வெளிப்படல்.

வென்னும் பெயரையடையாது. சூரியபகவான் சூரியகாந்த மணியின்கண் இருந்து தாகாதி காரியத்தைச செய்வதுபோல இவ்வாநந்தவடிவ ஆன்மா அந்தக் கரணத்தின்கண் இருநதே கர்த்துருத்வ போக்துருத்வரூப சம்சாரத்தையும் லோகாந்தரத்திற் கமனுகமனத்தையும் அடையும். அற்ப அந்தக்காணத்தின்கண் வியாபக ஆன்மாவின் ஸ்திதி சம்பவியாதாமாயினும், அற்ப தர்ப்பணம் மகாபர்வ தத்தின் பிரதிபிம்பத்தைக் கவர்வதுபோல அற்ப அந்தக்கரணமும் அதிசொச்ச மாதலின் ஆன்மாவின் பிரதிபிம்பத்தைக் கவரும். இதுவே அந்தக்காணத்தின் கண் ஆன்மாவின் திதியாம்.

அல்லது அவ்வநதக்கரணம் எபபோதும் இருதயகமலரூப கிருகத்தின்கண் ணேயே நிவாசம்செய்யும; ஒருகால் நனு அவஸ்தையின்கண் அவ்வந்தக்கரணம் நேத்திராதி ஸ்தானத்தின்கண் நிவாசம்செய்யும். எக்கால் சுழுபதியாமோ அக்கால் நேத்திராதி ஸ்தானங்களை விடடு அவ்வந்தக்கரணம் இருதயகமலரூப தனது கிருகத்தின்கண் வநதுசேரும். அவ்வந்தககாணத்தின் ஆகமனத்தால் விஞ ஞானமய போக்தாவும் இருதய தேசத்தையடைவன். கருத்திதுவாம் :—சைதன் யத்தின்கண் இயல்பாயோ கமனுகமனரூபக் கிரியையின்றாம; மற்றே உபாதி யின் கமனுகமனத்தால் சைதன்ய ஆத்மாவின்கண்ணேயும் கமனுகமனமுண்டாம். அவ்வந்தககாணம் நனவின்கண்ணே தக்ஷிண நேத்திராதி ஸ்தானங்களிலிருக்கும்; ஆகையால விஞ்ஞானமய போக்தாவும் ஆண்டிருக்கும். சுழுபதிகாலத்தின்கண் நேத்திராதி ஸ்தானங்களை விட்டொழிதது அவ்வந்தக்கரணம் இருதயகமலரூப மாய தனது கிருகத்தின்கண் வநதுவிடும; ஆகையால விஞ்ஞானமய ஆன்மாவும் இருதயகமலத்தையடையும.

அல்லது பசுவும மனுஷ்யனும் தமது கிருகத்தைவிட்டு அந்நிய தேசத்தை யடைநது ஹானியையேனும் இலாபத்தையேனும் அடையின் அவ்வானியையும் இலாபசமானமாய்க் கருதி மீண்டும தத்தம் கிருகத்தின்கண்வந்து சேர்வது போல, புததிரூப அநதககரணமும் தனது இருதய தேசரூப கிருகத்தைப் பரித் தியாகம்செய்து நேத்திராதி தேசத்தின்கண்ணே சென்று, ஹானியையேனும் இலாபத்தையேனும அடைநது அவ்வானியையும இலாப சமானமாய்க கருதி அவ் வந்தக்கரணம நேத்திராதி தேசத்தினின்றும்மீண்டும் தனது இருதய கமலரூப கிரு கத்தின்கண் வந்துசேரும. எங்ஙனம விதேச (அந்நியதேச) த்தினின்றும் தனது கிருகத்தையடைநத ஜீவனுக்கு இலாபத்தின் ஆராய்வால் சுகத்தின் பிராப்தியும், ஹானியின் ஆராய்வால் துக்கத்தின் பிராபதியும் உண்டாமோ, அங்ஙனமே நேத்தி ராதிவடிவ விதேசத்தை விடடு இருதயகமலரூபமாய தனது கிருகத்தையடைந்த புத்தியானது இலாபததை விசாரிதது சுகத்தை யநுபவிக்கும்; ஹானியை விசா ரித்துத துக்கத்தை யநுபவிக்கும. இருதய கமலம் ஒன்றைவிடுத்து நகசிகை பரியந்தமுள்ள சம்பூரண சரீரமும், நேத்திராதி இந்திரியங்களோடுகூடிய சம் பூர்ண கோளகங்களும், புரீதத்தென்னும் நாடியும், சிரமும், புத்திக்குப் பர (அநநிய) தேசமாம். இருதய கமலமொன்றே புத்திக்குச் சொந்த தேசமாம்.

அல்லது, நனுக்கனுக்களிலுள்ள போகங்களைக் கொடாநின்ற கர்மங்களழியுங்கால் இருதயகமல மத்தியிலிராநின்ற தகராகாசரூப பரமான்மாவின்கண்ணுள்ள புத்தியானது தனதுகாரணத்தின்கண் மூர்ச்சையையடையும். எங்ஙனம் அத்தியந்தம் மூர்ச்சையையடைந்துள்ள புருஷனை உலகத்தார் மரித்தவன் எனக்கூறுவரோ, அங்ஙனம் துயிலின்கண் தனது காரணத்தில் மூர்ச்சையையடைந்துள்ள புத்தியிடத்தே இலயவியவகாரமுண்டாம். எங்ஙனம் ஆகாசத்தின்கண் அடைந்துள்ள சூக்குமமாய பஞ்சை ஆகாயத்தின்கண்ணே இலயமாயதென உலகர் கூறுகிற்பரோ, அங்ஙனம் இருதயகமலத்துள்ளே பரமான்மரூப ஆகாசத்தின்கண் அடைந்துள்ள புத்தியை இலயமாயதென வேதமவிளம்பாநிற்கும். சித்திரவஸ்திரத்தைச சுருக்கின் அதன்கண்ணுள்ள சித்திரம இலயபாவத்தையடைவதுபோன்று, பித்ததாதுவினால இருதயகமலத்தின் சங்கோசரூப ஏதுவினாலும் புத்தியின்கண் இலயவியவகாரமுண்டாம். ஆகையால், ஹே பாலாகிப பிராஹ்மணரே! அவ்விஞ்ஞானமய போக்தா சுழுபதியவஸ்தையின்கண் அந்தககரண உபாதி இலயமாகவே, பரமான்மாவோடு அபேதரூபசயனத்தை யநுபவித்து மீண்டும நனுபோகத்தைக் கொடாநின்ற காமமானது உதயமாயின், நனுவவஸ்தையையடையும. எங்ஙனம ஊர்ணநாபி (சிலம்பிபூச்சி)யென்னும் ஜந்து விசேஷமானது அநியசாதனங்களின் அபேக்ஷையின்றியே அநந்தநூற்களைத் தன்பானின்று உண்டாக்குமோ, அங்ஙனம சயனத்தினின்று மெழுந்த இப்பரமான்ம தேவர் பிராணாதியநந்த சிருஷ்டியை (தம்மால) உண்டாக்குவர். எங்ஙனம ஓங்கியெரியாநின்ற பெரிய அழலானது தனது சமான ரூபமுடைய அற்பகணத்தையுண்டாக்குமோ அங்ஙனமே சயனத்தினின்று மெழுந்த இவ்வான்மதேவரும பிராணனையும, அந்தககரணத்தையும், ஞானகாம இந்திரியங்களையும, அவ்விந்திரியங்களின் நானாவியாபாரங்களையும உண்டாக்குவர். அவ்வாக்காதி இந்திரியங்களினின்றும அக்கினியாதி தேவதைகள் உண்டாவர். அவ்வக்கினியாதி தேவதைகளினின்றும சப்தாதி விஷயங்களும சம்பூர்ணபோகங்களும உண்டாம. இவ்வண்ணம நனு அவஸ்தையின கண்ணே தினந்தினமும் வாக்காதி இந்திரியங்களின் உற்பத்தியுண்டாம; அங்ஙனமே அக்கினியாதி தேவதைகளின் உற்பத்தியுண்டாம; அங்ஙனமே நாமாதி விஷயங்களின் உற்பத்தியுண்டாம. சுழுபதியவஸ்தையின் கண்ணே தினந்தினமும வாக்காதி இந்திரியங்களின் இலய முண்டாம; அங்ஙனமே அக்கினியாதி தேவதைகளும் நாமாதிவிஷயங்களும் இலயமாம.

சங்கை :—ஹே பகவன்! நனவின் கண்ணே நித்தியமும, வாக்காதிகளின் உற்பத்தியும், சுழுப்தியின்கண்ணே நித்தியமும, வாக்காதிகளின் இலயமும் உண்டாமெனத் தாங்கள் கூறினீர்கள்; இப்பொருளில் எனக்கு நிச்சயமுண்டாகவில்லை.

சமாதானம் :—ஹே மறையவரே! வேதபகவான் கூறிய பொருளின்கண் ஒருகாலும புத்திமானய புருஷன் அவிசுவாசம (விசுவாசமின்மை) செய்தல்கூடாது; மற்றோ எப்பொருளைச சாஸ்திரம் போதிப்பிக்கின்றதோ அப்பொருளையே புத்திமானய புருஷன் அங்கீகரித்தல்வேண்டும்; ஏனெனின், சுவர்க்காதி பதார்த்தங்கள் இந்திரிய ஜன்னிய ஞானவிஷயங்களன்றாம்; இவ்வதீந்திரிய (இந்திரியங்களுக் கெட்டாத) விஷயங்களின் ஞானம் சாஸ்திரப் பிரமாணத்தாலேயே யுண்டாம்.

சாஸ்திரப பிரமாணத்திலும் வேறாய பிரத்தியக்ஷாதிப பிரமாணங்களால் அத் துறக்கம் முதலியவற்றின் ஞானம் உண்டாகமாட்டாது. கருத்திதுவாம்:—எப் பொருளின்கண்ணே பரஸ்பரம் விரோதியாய இருபிரமாணங்களின் பிரவிர்த்தி யுண்டாமோ, அப்பொருளின்கண் ஐயம் நிகழும்; அஃதீண்டுச சமபவியாது; ஏனெனின், வேததநாற போதிபபிதத பொருளின்கண் எபபிரத்தியக்ஷாதிப பிரமாணங்களின் பிரவிாததியும் உண்டாகாது ஆகையால், வேதார்த்தத்தின் கண் ஐயபபடல மதிமானுக்குத் தகுதியன்றாம்

இபபோது இபபொருளேயே வெளிபபடையாய் நிரூபிபபாம:—சாஸ்திரப பிரமாணததால் போதிப்பித்த சுவர்க்காதிகளும, இநதிராதி தேவதைகளும, தர்ம அதாமரூப அதிரஷ்டமும, பிரத்தியக்ஷப பிரமாண விஷயமாகாவென்பது யாவ ருக்குந தெரிநததேயாமன்றே; ஏனெனின், சாஸ்திரததாற கூறிய சுவர்க்காதி களிடத்தும் பிரததியக்ஷப பிரமாணததின் பிரவிாததி யுண்டாமாயின், சாவ ஜீவாகட்கும நேத்திராதி ரூபப பிரததியக்ஷப பிரமாணத்தால சுவாககாதிகளின் பிரத்திபக்ஷ ஞானம உணடாதல வேண்டும; ஆனால பிரததியக்ஷப பிரமாணத் தால ஜீவாகட்குச சுவாககாதிகளின அநுபவமோ உண்டாவதின்றாம. அலலது பிரததியக்ஷப பிரமாணததால ஜீவாகட்குச சுவாககததின் அநுபவம உண்டா மாயின், சுவாகக நாகாதிகளிடததே மூடருக்குப பரஸ்பரம விவாதம உண்டாக லாகாது; ஏனெனின், பிரததியக்ஷப பிரமாணததின் விஷயமாய கடாதிபதார்த் தங்களிடகதே எபபுருஷனும விவாதம செய்வதின்றாம; ஆனால சுவர்கக நாகாதி களிடததே மூடருககு அநநதமவகைபாய விவாதம உண்டாதல உலகின்கணணே கண்டோம. சுவாகக நாகாதிகளிலலை எனச சிலா கூறுகிறபா, இமமனுஷ உல கினகண்ணேயே சுவர்கக நாகங்களுளவெனவும், இமமனுஷ உலகினும் வேறாய் யாதொரு சுவர்க்க நாகமும இலலெனவும், தனிகி பதார்த்தங்களோடுறற புருஷன் சுவாகக சுகத்தைப போகிபபன் எனவும, நிர்த்தனத் தரித்திரியாய புருஷனும் பசு முதலியனவும் நாக துககததைப போகிககும எனவும சில மூடர் கூறுகிறபா. சுவாக்க நாகாதிகளிடததே இவவண்ணம மூடா விவாதம் செய்யாநிறபா, அது உண்டாகலாகாது; ஆகையால, பிரததியக்ஷபபிரமாணத்தால் சுவர்க்காதிகளின அநுபவம எவ்வுயிருககும உண்டாகாது. சாஸ்திரப பிரதி பாதிதமாய சுவாககாதிகளின் பிரத்தியக்ஷ ஞானமே யோகிக்குண்டாமாயினும், யோகியின் பிரத்தியக்ஷப பிரமாணம் சாஸ்திரப பிரமாணத்தோடு விரோதியாது; ஏனெனின், சாஸ்திரத்தின் அநுகூல ஆசாணத்தினாலேயே யோகிக்குப பிரததி யக்ஷமுண்டாம. ஆகையால, அவ்வியோகியின் பிரததியக்ஷப பிரமாணம் பூர்வ சித்த சாஸ்திரப பிரமாணரூப தனது காரணத்தோடு முரணி நிற்கமாட்டாது. ஆகையால், சாஸ்திரப பிரதிபாதித சுவர்க்காதி அர்த்தத்தின்கண் பிரததியக்ஷப் பிரமாணத்தின் பிரவிர்த்தி உண்டாகமாட்டாது எனத் துணியபபெற்றாம். அல்லது எங்ஙனம சாஸ்திரப பிரதிபாதித சுவாக்காதி அர்த்தத்தின்கண்ணே பிரத்தியக்ஷப பிரமாணத்தின் பிரவிர்த்தி யுண்டாகமாட்டாதோ, அங்ஙனம் அநு மானப பிரமாணத்திற்கும் பிரவிர்த்தியுண்டாகாது; ஏனெனின், பிரத்தியக்ஷப்

பிரமாணத்தை யபேக்ஷித்தே பின் அநுமானப் பிரமாணம் பிரவிர்த்திக்கும். கருத்திதுவாம :—எபபுருஷனுக்கு முன்னர் அடுக்களை முதலியவறறில மறித்தும் மறித்தும் புகைவன்னிகளின் உடனிகழ்ச்சிக் காட்சியாற புகை வன்னியின் வியாப பியமாம் என்னும வியாபதிஞானம் பிரத்தியக்ஷப பிரமாணத்தால் உண்டாகின் றதோ அபபுருஷனே மலையின்கண் புகையைக்கண்டு முன்வியாபதியை நினைநதவ னுய்ப பாவததின்கண்ணே வன்னியின் அநுமானம்செய்வன்; ஆகையால், பிரததி யக்ஷப் பிரமாணம் அநுமானப பிரமாணத்தின் காரணமாம். அநதப் பிரததி யக்ஷபபிரமாணம் முறகூறிய முறையே சுவாக்காதி பதாாத்தஙகளிடத்தே பிர விர்த்தியாது; ஆதலின் அநுமானப பிரமாணமும் சுவர்க்காதி பதாாத்தங்களைப் போதிப்பதில் ஆற்றல அற்றதேயாம். அலலது பிரததியக்ஷப் பிரமாணத்தின் அபேக்ஷையின்றியே அநுமானபபிரமாணம் தனது அர்ததத்தை யுணாதது மாயின், அநுமானமென்னும் பெயரையே இழந்துநிற்கும்; ஏனெனின், அநு மானம் என்னும் சப்தத்தின்கண் இருபதஙகளுள. அவற்றுள், ஒன்றே "அநு" என்னும் பதமாம; மறறொன்றே "மானம்" என்னும் பதமாம. அவற்றுள், அநுபதத்தின் பொருளோ பின்னென்பதாம்; மானபதத்தின்பொருளோ பிர மாணமென்பதாம், அவ்விரு பதஙகட்கு ஒருங்கே பின்னுண்டாம் பிரமாணம் என அநுமான சததபபொருள சிததமாம். இங்ஙனம் அநுமானசத்ததை யாரா யினும பிரத்தியக்ஷப பிரமாணத்தின்பின்னரே அநுமானப பிரமாணததின் பிரவிர்த்தி சித்திக்கும். அலலது பிரத்தியக்ஷப பிரமாணத்தாலுண்டாய பிரத் தியக்ஷ ஞானத்திறகு அற்பவிஷபத்தின்கண்ணே பிரவிர்த்தியாம. இககாரணத் தினுலும் சாஸ்திரத்தாற் கூறபபட்ட சுவாக்காதிகளிடததே பிரததியக்ஷப் பிரமாணத்திறகுப பிரவிாததி யுண்டாகமாட்டாது; ஏனெனின், இநதிரிய ஜன்னிய ஞானத்தைப பிரத்தியக்ஷ ஞானமென்பர். அது ஒருவிதமன்றும், மற்றே நேத்திராதி இந்திரிய பேதத்தாற் பின்னபின்னமாயே பிரத்தியக்ஷ ஞானம உண்டாம். அவற்றுள், சக்ஷுா இநதிரியத்தால உற்பன்னமாய பிரத் தியக்ஷ ஞானத்திறகுச சாக்ஷுஷப பிரத்தியக்ஷமெனப பெயராம். இரசன இநதிரியஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்திற்கு இராசனப பிரத்தியக்ஷமெனப பெயராம. துவக்கிந்திரிய ஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்திறகுத் துவாசப் பிரத் தியக்ஷமெனப் பெயராம். கிராண இநதிரியஜன்னிய பிரத்தியக்ஷ ஞானத்திற்குக் கிராணஜப பிரத்தியக்ஷமெனப பெயராம். சுரோத்திர இந்திரியஜன்னியப பிரத் தியக்ஷ ஞானத்திற்குச சிராவணப பிரத்தியக்ஷமெனப் பெயராம். இவ்வண்ணம் இந்திரியங்களின் பேதத்தால் பிரத்தியக்ஷ ஞானமும் பின்னபின்னமாயே உண் டாம. ஆகையால, சாவ பதார்ததங்களிடததும ஒரு பிரத்தியக்ஷ ஞானத்தின் பிரவிர்த்தி யுண்டாகமாட்டாது; மற்றே பின்னபின்ன ரூபாதி விஷயங்களி டத்தே பின்னபின்னமாயே சாக்ஷுஷாதி ஞானங்களின் பிரவிர்த்தியுண்டாம். கருத்திதுவாம :—சாக்ஷுஷ ஞானத்தின் விஷயமாய ரூபாதி பதார்த்தங்களை இராசனஞானம் விஷயம் செய்யமாட்டாது. இராசன ஞானத்திற்கு விஷயமாய இரசாதிகளைச சாக்ஷுஷஞானம விஷயம் செய்யமாட்டாது. இங்ஙனம் அந நியப் பிரத்தியக்ஷ ஞானஙகளிடத்தும அறிந்துகொள்க. இவ்வண்ணம அற்ப

அர்த்தத்தை விஷயமசெய்வதாய பிரததிபக்ஷஞானம் சாஸ்திரப் பிரதிபாதித அர்த்தத்தை விஷயம்செய்தல முடியாது.

அல்லது எக்காலததில தேவதததனது நேத்திரங்களின் சம்பந்தம கடாதி பதார்த்தங்களோடு உண்டாமோ அககாலத்தில் தேவதத்தனுக்கு கடத்தின் பிரத்தியக்ஷ ஞானமுண்டாம்; தேவதத்த புருஷனிலும வேறாய யஞ்ஞதத்த புருஷனுக்கு இந்திரிய சமபந்தமின்றி அககடத்தின் பிரத்தியக்ஷ ஞானம் உண்டாக மாட்டாது. ஆகையால, பிரததியக்ஷ ஞானத்திறகு யோககியமாய கடாதிவிஷயங்களிடத்தும சுதந்திரப பிரததியக்ஷ ஞானத்தின் பிரவிர்த்தி யுண்டாகமாட்டாது; மற்றோ விஷயத்தோடு இந்திரிய சமபந்தத்தை அபேக்ஷித்தே பிரத்தியக்ஷத்தின் பிரவிர்த்தியுண்டாம். இது கூறியதால இது துணியப்படும் :— பிரததியக்ஷ ஞானத்திற்கு யோக்கியமாய கடாதி பதார்த்தங்களிடத்தும பிரத்தியக்ஷ ஞானத்தின் சுதந்திரப பிரவிர்த்தி யுண்டாகமாட்டாதாயின், வேதப்பிரதிபாதித சுவர்ககாதி அதீந்திரிய பதார்த்தங்களிடத்தே எங்ஙனம பிரத்தியக்ஷத்தின் பிரவிர்த்தி யுண்டாம; மற்றோ உண்டாகமாட்டாது. அல்லது வேதப்பிரமாணத்தின் அபேக்ஷையின்றிய கேவலப பிரததியக்ஷப் பிரமாணம் தோஷமற்றதாக மாட்டாது; மற்றோ தோஷத்தோடு கூடியதேயாம். ஏனெனின், நேத்திராதி இந்திரியங்களின் பெயர் பிரத்தியக்ஷப் பிரமாணமாம். அந்நேத்திராதி இந்திரியங்களிடத்தே குருட்டுத்தன்மை செவிட்டுத்தன்மை முதலியதோஷங்களின் பிரததியக்ஷ ஞானமே சாவ புருஷர்கட்கும உண்டாம். ஆகையால், தோஷத்தோடுற்ற பிரததியக்ஷப பிரமாணம வேதத்தின் அபூாவ அர்த்தத்தைப் போதனஞ் செய்யியாது. அல்லது வேதத்தாற போதித்த சுவர்ககாதி அர்த்தத்தின்கண் மொழிந்த முறையே பிரததியக்ஷப பிரமாணத்தின் பிரவிர்த்தியின்மையின், அநுமானப் பிரமாணமும அச்சுவர்ககாதி பதார்த்தங்களிடத்தே பிரவிர்த்தியாது, ஏனெனின், பிரததியக்ஷப பிரமாணத்தை அபேக்ஷித்தே அநுமானப பிரமாணத்தின் பிரவிர்த்தியுண்டாம். இவ்வார்த்தையை முன்னர் மொழிந்துவந்தோம.

சங்கை :—வேதப்பிரதிபாதித சுவர்ககாதி அர்த்தத்தின்கண்ணே பிரத்தியக்ஷ அநுமானப பிரமாணங்களின் பிரவிர்த்தி யுண்டாகாதாயினும், அர்த்தாபத்தி முதலிய பிரமாணங்களின் பிரவிர்த்தி சுவர்ககாதி பதார்த்தங்களிடத்தே யுண்டாம.

சமாதானம் :—அவ்வார்த்தாபத்தி முதலிய பிரமாணங்கள் அநுமானப் பிரமாணத்திலும அபின்னமா? அல்லது பின்னமா? அவற்றுள், முதலாவதாய அபின்ன பக்ஷம் சம்பவியாது; ஏனெனின், அவ்வர்த்தாபத்தி முதலிய பிரமாணங்கள் அநுமானப்பிரமாணத்துள் அடங்கியவையெனஅங்கீகரிக்கின், அநுமானப் பிரமாணத்தின் பிரவிர்த்தியின்கண் கூறிய சமபூர்ண தோஷங்களும் அர்த்தாபத்தி முதலிய பிரமாணங்களிடத்தும் உண்டாம். ஆகையால், அநுமானப் பிரமாணத்தினின்றும அபின்னமாய் அர்த்தாபத்தி முதலிய பிரமாணங்கள் சம்ப

வியா. அவை அநுமானப் பிரமாணத்தினின்றும் பின்னமென்னும் இரண்டாவது பக்ஷமும் சம்பவியாது; ஏனெனின், அவற்றை அநுமானப் பிரமாணத்தினின்றும் பின்னமென அங்கீகரிப்பினும், அவை சுதந்திரமாய் எப்பிரமா(எவ்வுண்மை)ஞானத்தையும் உண்டுசெய்யமாட்டாது. மற்றோ, ஏதாவது திருஷ்டாந்தத்தை அங்கீகரித்தே எவனுக்கேனும் பிரமா ஞானத்தை யுண்டுபண்ணும். திருஷ்டாந்தமின்றி அர்த்தாபத்தி முதலிய பிரமாணங்கள் யாண்டும் ஞானத்தையுண்டாக்கா. அத்திருஷ்டாந்தம் பிரத்தியக்ஷத்திலும் வேறன்றாம்; மற்றோ, பிரத்தியக்ஷத்துள் அடங்கியது திருஷ்டாந்தமாம். பிரத்தியக்ஷத்தின் கண்டனம் முன்னர் விஸ்தாரமாய்ச் செய்துவந்தேன். ஆகையால, அர்த்தாபத்தி முதலிய பிரமாணங்கள் அநுமானப் பிரமாணத்தினின்றும் வேறாயினும், வேதப்பிரபாதித சுவர்க்காதிரூப அர்த்தத்தின்கண்ணே பிரவிர்த்தியா. ஆகையால், ஹே பாலாகிப பிராஹ்மணரே! சம்பூரண தோஷங்களற்ற இவ்வேத பகவான் எவ்வெப்பொருளைப் போதிப்பரோ, அப்பொருளே அவசியமாய்க் கவர்தல் முமுக்ஷுக்கட்கு யோக்கியமாம். தார்மிகமாவாய இராஜாவின் ஆணையைப் பிரஜைகள் கவர்வதே போல வேதபகவான் கூறியபொருளைக் கவர்தல் மதிமான்களாய புருஷர்க்கு யோக்கியமாம். வேதார்த்தத்தின்கண் ஒருகாலும் அசம்பாவனை செய்யற்க. அந்த வேத பகவானவரோ தினமும் நனவு அவஸ்தை யடைந்தவுடன் வாக்காதி இந்திரியங்கட்கு உற்பத்தியையும், அக்கினியாதி தேவதைகட்கு உற்பத்தியையும், நாமாதிவிஷயங்கட்கு உற்பத்தியையும் கூறியிருக்கின்றனர். சுழுபதி யவஸ்தையின்கண் அசசம்பூர்ண வாக்காதிகளின் இலயத்தை வேத பகவானவர் கூறியுள்ளார். ஆகையால், ஹே மறையவரே! இவ்வகையாய வேதப் பொருளின்கண் நீர் சிரத்தையைச்செய்யும். ஹே மறையவரே! பூர்வம் உறங்காநின்ற புருஷன் எழுங்காலத்தில் இச்சரீரத்தின்கண் இராநின்ற ஆநந்தசொரூப ஆன்மாவின் உபதேசத்தை யான் தங்கட்குச் செய்துளேன். பின்னர் இருதயகமலத்தின்கண் இராநின்ற ஆன்மாவின் உபதேசத்தை யான் தங்கள் பொருட்டுச் செய்துளேன். ஆகையால், தாங்கள் ஆன்மாவின்கண்ணே பரிச்சின்ன திருஷ்டியைச் செய்யற்க; மற்றோ ஆன்மாவின்கண்ணே பூரண திருஷ்டியைச்செய்க. இப்போது இப்பொருளையே வெளிப்படையாய்க் காண்பிப்பாம்:—ஹே மறையவரே! ஒரே பரிபூரண ஆகாசம் கடமடசராவாதி உபாதிகளில இருப்பதுபோல ஒரே பரிபூர்ண ஆன்மாவும் வாக்காதி யுபாதிகளிலிருக்கும். வாக்காதி விசிஷ்ட ஆன்மாவை மூடன் கூறுவோனெனவும், கேட்போனெனவும், காண்போனெனவும் அங்கீகரித்துள்ளான். அதுபோலத் தாங்கள் ஆன்மாவைப் பரிச்சின்னமாய்க் கருதலாகாது; மற்றோ உபாதியை விட்டுப் பரிபூர்ண ஆன்மாவைத் தாங்கள் அறிந்துகொள்ளல்வேண்டும்.

சங்கை:—ஹே பகவன்! ஆன்மாவானது யாண்டும் பரிபூர்ணமாமாயின், இருதய தேசத்தின்கண் ஆன்மாவின் திதியை முன்னர் தாங்கள் எதன்பொருட்டுக் கூறினீர்கள்.

சமாதானம்:—ஹே பாலாகிப பிராஹ்மணரே! மயிர் * மழிப்பதற்குச் சாதனமாய கத்தியானது நாவிதனது அடப்பத்தின் ஏகதேசத்திருப்பதுபோல, இவ்வா

* மழிப்பது=சிரைப்பது.

நந்தவடிவ ஆன்மாகேவல மிருதய தேசத்தின்கண் இராது; மற்றோ சர்வப் பிராணி களின் உள்ளும் புறமும் வியாபித்து நிற்கும். அங்ஙனம நிற்பினும் அந்தக் காணத்தின்கண்ணும், இந்திரியங்களிடத்தும், சரீரத்தினிடத்தும ஆன்மாவிசேஷ மாய்ப் புலப்படும். இக்காரணததால ஹிருதயம், இந்திரியம், சரீரம் என்பவற்றில் ஆன்மாவின் திதியை யான் கூறினேன் அக்கினி சாமானிய ரூபமாய் எவ் விடத்து முளதெனினும காஷ்டத்தின்கண் விசேஷரூபமாய்ப புலப்படும். இக் காரணத்தாற காஷ்டத்தின்கண் அக்கினியுளதென உலகர் கூறுநிற்பர். ஆகையால், ஹே பாலாகிப் பிராஹ்மணரே! எங்ஙனம் நாவிதனது அடப்பத்தின்கண் கத்தி யானது விரைவாயே புலப்படுமோ, அங்ஙனம இருதய கமலத்தின்கண் இராநின்ற புத்தியானது அததியநதம் சொச்சமாதலின அப்புத்தியின்கண் ஆன்மாவின் பிரதீதி விசேஷமாயுண்டாம. இவ்வபிப்பிராயத்தாற் புத்தியின்கண் ஆன்மா வின் திதியை யான் கூறினேன். எங்ஙனம நாவிதனது அடப்பத்தின்கண் கத்தியானது இருக்குமோ மற்றிடத்திராதோ அங்ஙனம புத்திவடிவ தேசத் தின்கண் ஆன்மாவிருக்கும; மற்றிடத்திராது என்னுங்கருத்துபபற்றி ஆன்மா புததியின்கண் இருப்பதாக யான் கூறவில்லை. இங்ஙனம இருதயத்தின்கண் ஆன்மாவின் விசேஷ விளக்கத்தைப போதிப்பதாய கத்தியின் திருஷ்டாந்தக் கருத்தை நிரூபித்து, இப்போது ஹிருதயததை யபேக்ஷித்துச சரீராதிகளி டதது ஆன்மாவின அற்பப்பிரகாசத்தைப போதிப்பதாய அக்கினி திருஷ்டாந் தத்தின் கருத்தைக காண்பிப்பாம — ஹே பாலாகிப பிராஹ்மணரே! ஆநந்த சொரூப ஆன்மா ஜராயுஜம, அண்டஜம, சுவேதஜம, உற்பிஜ்ஜம என்னும் நான்கு வகையாய சரீரங்களை உண்டாக்கித்தன து சைதன்ய ரூபததால் நகத்தின் நுனியிலிருந்து சிகைபரியந்தம அவ்வெல்லாச சரீரங்களிலும வியாபித்தது. அக் கினி யாண்டும் சமானமாயினும அரணி வடிவ காஷ்டத்தின்கண் அதன் விசேஷ விளக்கத்தைக கண்டு காஷ்டத்தின்கண் அக்கினியுளதென யாவருங் கூறுநிற்பர். அதுபோலவே இவ்வாநந்த சொரூப ஆன்மா சைதன்ய சொரூபமாய் எவ்விடத் தும சமானமாய் இருப்பினும, சரீரத்தின்கண் சைதன்யத்தின் விசேஷ விளக்கத் தைககண்டு ஆண்டு ஆன்மா வுளதெனக கூறலும பொருந்தும. ஈண்டுச சரீரத் தின்கண் ஆன்மாவின் விசேஷ விளக்கங்கூறியது; கடாதிகளைக குறித்தெனவறிக. அந்தக்காரணததைக்குறிததுச சரீரத்தின்கண் ஆன்மாவின் அற்ப விளக்கமேயுண் டாம. ஆகையால, ஹே மறையவரே! ககனத்திற்குச் (ஆகாயத்திற்குச) சமானமாய் யாண்டும பரிபூரண ஆன்மா இச்சரீரத்தின்கண் சைதன்ய ரூபமாய்த் தோற்றுநிற கும். இக்காரணததாற்றான் நகநுனியிலிருந்து சர்வசரீரத்தின்கண் பரமான்மாவின் பிரவேசம சுருதியாற கூறப்பட்டுளது. ஹே மறையவரே! மண்ணானது கடா கார பரிணாமத்தை அடையுமாதலின் மண்ணின்கண் முக்கியப பிரஞ்ஞையும கௌணப பிரஞ்ஞையும சம்பவியா. அதுபோல மன இந்திரிய தேகாதி ரூபககூட்டமும் அநநத வகையாய பரிணாமத்தை யடையுமாதலின் இக்கூட்டத்தி னிடத்தும முக்கியப பிரஞ்ஞை கௌணப பிரஞ்ஞைகள் சம்பவியா; மற்றோ, பிரஞ்ஞைவடிவ ஆன்மாவின் தாதான்மிய அத்தியாசபலத்தால் அவிசார காலத்தே

சரீராதிகளிடத்திற் சைதன்ய சொரூபப் பிரஞ்ஞை யுண்டாம். விசாரிக்கின் சரீராதிகளிடத்தே பிரஞ்ஞை சம்பவியாது.

சங்கை :—ஹே பகவன்! மனததின்கண்ணும் இந்திரியத்தின்கண்ணும் சரீரத்தின்கண்ணும் பிரஞ்ஞையின்று எனத்தாங்கள் கூறினீர்கள் அது சம்பவியாது; ஏனெனின், புத்திவடிவப பிரஞ்ஞை அம்மனுதிகளிடத்தும் சம்பவிக்கும்.

சமாதானம் :—ஹே மறையவரே! சைதன்ய ஆன்மாவினும வேறுய மன இந்திரிய சரீராதி யாவும் ஜடங்களாம், விகாரமுடையனவாம். ஆகையால், அம்மனுதிகளிடத்து இராநின்ற புத்திரூபப பிரஞ்ஞையும ஜடமாம். ஏனெனின், எங்ஙனம் சரீராதிகள் பரிணமத்தை யடையாநிற்குமோ, அங்ஙனம் புத்தியும் பரிணமத்தை யடையுமாதலின், புத்தி ஜடமேயன்றிச சைதன்ய ரூபமன்றும். ஆகையால், ஹே மறையவரே! ஆநந்தவடிவ ஆன்மாவின் வேறுய எவ்வஸ்துவின்கண்ணும் ஞானசொரூபப பிரஞையின்றும ; மற்றே ஆன்மா ஒன்றே ஞானவடிவமாம். ஹே அந்தணரே! எங்ஙனம ஆன்மாவின் வேறுய எவ்வனுன்மாவின்கண்ணும் ஞானமின்றுமோ, அங்ஙனம ஆநந்தசொரூப ஆன்மாவின் வேறுய எவ்வனுன்ம வஸ்துவின்கண்ணும சுகமுமின்றும ; மற்றே ஆன்மா ஒன்றே சுகரூபமாம. இவ்வண்ணம் சுகமாயும் ஞானமயமாயும இராநின்ற ஆன்மா, சுகஞானங்களற்ற மன இந்திரிய தேகாதிகளைத் தனது தாதாத்மிய சமபந்தத்தால் சுகத்தோடு கூடியதாயும் ஞானத்தோடு கூடியதாயும் இருக்குமாறு செய்விக்கும். எங்ஙனம் தனிகன் தனது சேவகரைத் தனத்தோடு கூடியவராயிருக்குமாறு செய்வானே, அங்ஙனம் சுகஞானவடிவ ஆன்மா, மன இந்திரியாதிகளைச சுகஞான வடிவத்தோடு கூடியதாயிருக்குமாறு செய்விக்கும். ஹே பாலாகிப் பிராஹ்மணரே! இத்தகைய சுகஞானவடிவ ஆன்மாவை யாசிரயித்தே சமபூர்ண வாக்காதி அததியாத்மங்களும, அக்கினியாதி அதிதேவதைகளும, தத்தம நாமாதிவிஷயஙகளை நிசசயம் செய்யும். இநத ஆன்மாவின் சமபநதமின்றிச சுதநதிரமாய் வாக்காதி யெவையும் எவ்வர்த்தத்தையும் நிச்சயம் செய்யமாட்டா. யதார்த்த ஞானத்தோடேனும் விபரீத ஞானத்தோடேனும் கூடிய ஒரு தனிகனுடைய நிசசய அநுசாரமாயே அவன் தாசன் எககாரியத்தையும நிச்சயிபபன் ; அத்தனிகன் நிசசயததைத தழுவாமல தாசன் சுதந்திரமாய் நிசசியான்.

சங்கை :—ஹே பகவன்! தனிகனது பாகியகாரியத்தின்கண்ணே தாசருக்குப பராதீனமாயிருக்குமாறு நேரினும ஞானரூப உள்நிசசயத்தின்கண் அவர்க்குத் தனிகனது அபேக்ஷையேலாததேயாமன்றே?

சமாதானம் :—ஹே பாலாகிப் பிராஹ்மணரே! ஞானரூப உள்நிச்சயவுதயத்தில் தாசருக்குத் தனிகனபேக்ஷையில்லை ; தனிகனது நிசசய மின்றித் தாசரின் நிச்சயம் பயனற்றதே யாமென்றறிதல்வேண்டும். கருத்திதுவாம் :— ஞானரூப நிச்சயத்தாற் புருஷருககுக் காரியத்தின்கண் முயறசியுண்டாம். அம் முயற்சியும் தனிகனது நிச்சயமின்றிச் சுதநதிரமாய்த் தாசருக்கு உண்டாகாது, தனிகன் சம்மதியைக் கவர்ந்தே தாசருக் கெக்காரியத்திலேனு முயற்சியுண்டாம். அதுபோல ஞானவடிவ ஆன்மாவைப பற்றியே சமபூர்ண வாக்காதி தேவதை

களும், தனித்தனி வாக்காதிகளும், இக்காரியம் இன்றியமையாது செய்யத்தக்கதென்றும், இக்காரியம் செய்யத்தகாததென்றும், இவ்வசனம் சொல்லத்தக்கதென்றும், இப்பொருள் காணத்தக்கதென்றும், பதார்த்தங்களை நிச்சயிக்கும் ஞானசொரூப ஆன்மாவின்றிச் சுதந்திரமா யெவ்வாக்காதி தேவதைகளும் எப்பொருளையு முணரா. ஈண்டுத் திருஷ்டாந்தத்திலும் சித்தாந்தத்தின்கண் இத்துணைச் சிறப்புளது :—திருஷ்டாந்தத்தின்கண்ணே தனிகனின் ஞானத்தினும் வேறாயே தாதனது ஞானமுண்டாம். சித்தாந்தத்தின்கண்ணோ ஆன்மாவின் சொரூப ஞானத்தினும் வேறாய் யாதொரு ஞானமும் வாக்காதி இந்திரியங்களிடத் தின்றாம்; மற்றோ ஆன்மசொரூப ஞானமே அவற்றோடு கூடியதாய் நாநா பாவத்தை யடையா நிற்கும். ஆகையால், ஆன்மாவே ஞானசொரூபமாம்; ஆன்மாவினும் வேறாய சர்வ அனான்ம பதார்த்தங்களும் ஜடமாம். ஹே மறையவரே! போகசாதனமாய தனாதிகளோடு கூடிய ஒரு வணிகன் தன்மைந்தரோடுந் தாதரோடுமே யத் தனாதியைப் போகிப்பன், அவரின்றித் தனித்தவன் அவற்றைப் போகியான்; தனித்தவற்றை அவன் போகிப்பனேல் அவனது சர்வ தனத்தையும் சோரர்கொண்டேகுவராதலின் அவரோடுகூடியே அவனவற்றைப் போகிப்பன். அதுபோன்று இவ்வாநந்தசொரூப ஆன்மாவும் வாக்காதி தேவதைகளினுடனின்றே போகத்தைப் போகிக்குமேயன்றி, அவையின்றிக் கேவலந்தானே போகத்தைப் போகியாதெனவுணர்க. தனியாய வணிகனுடைய மைந்தர் முதலிய பந்துக்களும் தாதர்களும் அத்தனிகனைவிட்டுச் சுதந்திரமாய் எப்பொருளையும் போகியார்; மற்றோ அவனுடனே யவர் போகத்தைப் போகிப்பர். அவ்வாறே வாக்காதிகளும் ஆன்மாவின்றிச் சுதந்திரமாய் எப்பொருளையும் போகியா; மற்றோ ஆன்மாவுடன் கலந்தே போகங்களைப் போகிக்கும். ஈண்டிது கருத்தாம்:—சுகதுக்க அநுபவத்தைப் போகமென்பர். அப்போகம் உபாதியற்ற தூய ஆன்மாவின்கண்ணே பொருந்ாது அதுபோல வாக்காதி ஜடபதார்த்தங்களிடத்தும் பொருந்தாதாம்; மற்றோ, அந்தக் கரணாதி யுபாதிகளோடு கூடிய ஆன்மாவே போகாசிரயமாம். உண்மையாயோ எதுவும் போகாசிரயமன்றா மாதலின் அப்போகம் மித்தையாம். ஹே அந்தணரே! யான் தங்கள் பொருட்டுச் சுத்தான்ம ரூபமாய்க் கூறிய இருதயாகாயமாகிய பரமான்மாவே இச்சர்வ சங்காதத் (கூட்டத்)திற்கு மதிபதியாம். அப்பரமான்மாவே இச்சங்காதத்தோடு தாதாத்மிய அத்தியாச மடைந்ததாய் மதிமான்களாலு மறிய முடியாததாம். ஹே மறையவரே! ஆன்மா அறியத்தகாத தாகாதேல் எல்லா நூல்களிலும வல்லுநராய தங்கட்கு ஆன்மாவின் உண்மை வடிவத்தின்கண் மயலுண்டாகாதன்றோ, முன்னர்த்தாங்கள் பிராணனையே ஆன்ம ரூபமாய் என்பொருட்டு உபதேசம் செய்தீர்களாதலின், தங்களது இம்மயலே ஆன்மாவின் துர்விஞ்ஞேயத்தன்மையை யுணர்த்துகின்றது.

சங்கை:—ஹே பகவன்! இவ்வாநந்த சொரூப ஆன்மா இச்சங்காதத்துள் துர்விஞ்ஞேயமாயின், இச்சங்காதத்திலும் வேறாய் அயலெத்தானத்தேனுமுள்ள

ஆன்மாவை யென்பொருட்டு உபதேசிக்கவேண்டும், அத்தானத்துள்ள ஆன்மாவை யான் நிச்சயம் செய்துகொள்கின்றேன்.

சமாதானம்:—ஹே மறையவரே! இச்சங்காதத்தை விடுத்து அயலிடத்துள்ள ஆன்மாவை யறிவதிற் சற்றேனும் நீர் உற்சாகங்கொள்ளாதீர்; மற்றோ இச்சங்காதத்துள்ளேயே ஆன்மாவையறிய உற்சாகத்தை நீர் செய்யும். கனலின் தோற்றத் தானங்களாய காஷ்டங்களோடுகூடிய கனலை விடுத்துக் காஷ்ட சம்பந்தமற்ற கனலடைவின் வேட்கையை எம்மதிமானுங் கொள்ளானன்றோ, அங்ஙனமே ஆன்மாவின் தோறறத்தானமாய இசசங்காததகை விட்டொழித்து அயலிடத்தே யான்மாவைத் தேடுதல் பயனில கூற்றேயாம. ஆகையால், ஹே அந்தணரே! இத்தேகத்தின்கண்ணே அநதக்கரணாதி யெல்லா வுபாதிகளுமற்ற கூடஸ்த ஆன்மாவைப் பிரஹ்மரூபமாய் நிச்சயமசெய்யும் என அஜாதசததுரு அரசரானவர் முற்கூறிய மூன்று வினாக்களின் பொருளை விஸ்தாரமாய்க்கூறினார்.

இப்போது அம்மூன்று வினாக்களின் பொருளையே சுருக்கமாய் நிரூபிக்கின்றார்:—ஹே பாலாகிப் பிராஹ்மணரே! இருதய ஆகாசரூபமாய் எவைக்கும் ஆன்மாவாயுள்ளதே சயனகர்த்தாவாய புருஷனுக்கும் சயனத்திற்கும் ஆதாரமாம. அவ்விருதய ஆகாசசொரூப ஆன்மாவே சயனகர்த்தாப புருஷனது வரவின் முடிவு வடிவமாம். வாக்காதி கரணங்களின் இலயரூப சயனம் இருவகையாம். அவற்றுள் ஒன்றோ சொப்நரூப சயனமாம்; மற்றொன்றோ சுழுப்திரூப சயனமாம். அவற்றுள் முதலாவதாய சொப்நரூப சயனத்தின் கர்த்தாக்கள் புததியின்றிச சம்பூரண வாக்காதிகளாம்; இரண்டாவதாய சுழுபதிரூப சயனததின் கர்த்தாவோ புத்தியாம். இருவகையாய சயனங்களினின்றும் வருங் கர்த்தாக்களும புத்தியோடுற்ற வாக்காதி இந்திரிய சமூகமாம். முறகிரந்தததில் விஞ்ஞானமய போக்தாவைச் சயன கர்த்தாவாயும் ஆகமன கர்த்தாவாயும் கூறினன். ஈண்டோ புத்தியையும் வாக்காதிகளையும் சயன கர்த்தாக்களாய்க் கூறினனாதலின் முற்கூற்றுக்குப் பிற கூற்று முரண்படுவதாகப் புலப்படுமேனும், ஆராயினோ அம்முரண் பொருந்தாது; ஏனெனின், புத்தி விசிஷ்ட சைதன்யத்தின் பெயர் விஞ்ஞானமயமாம். ஆண்டுச் சைதன்யாம்சத்தின்கண்ணோ கருத்துருத்வப்பான்மை சம்பவியாது; மற்றோ எஞ்சியதாய்ப் புத்தியின்கண்ணே கர்த்திருத்வத்தன்மை சம்பவிக்கும். இக்கருத்தே பற்றி ஈண்டுப்புத்தி சயனகர்த்தா வென்னப்பட்டது ஆதலின் முற்கூற்றுக்குப் பிற்கூற்று முரண்படாவின்றாம். ஹே மறையவரே! பிராணரூப உபாதியின்கண்ணும் பிரஞ்ஞாரூப உபாதியின்கண்ணும் தங்கள்பொருட்டு யான் கூறிய இருதயாகாசரூப ஆன்மாவையே முன்னர் தேவராஜாவாகிய இந்திரர் பிரதர்த்தன அரசரின் பொருட்டுக்கூறினார். இவ்வான்மாவின் சாக்ஷாத்கார மகிமையாலே அத்தேவ ராஜாவாய இந்திரர் மூவுலகிற்கும் வேதனையைப் புரியும் அசுரர்களையும் நீதியற்ற விசுவரூபாதி பிராஹ்மணரையும் வேதாந்த விசாரவிஹீன அநந்தஞ் சந்யாசியரையும் கொன்றனர் என்றாலும் அவ்வான்ம ஞானமகிமையால் அவ்விந்திரரது ரோமமாத்திரமுங் கெடவில்லை. இவ்வான்ம ஞானமகிமையாலே அத்தேவ ராஜாவாய இந்திரர் சர்வ தேவதைகளின் மத்தியில் அத்தியந்தம் மேன்மையை யடைந்திருக்கின்றனர்; போர்முதலிய காரியத்தில் எத்தேவதையின்

அபேக்ஷையையும் செய்திலர்; மற்றே, பலனெனப் பெயரிய அசுரன் முதலிய எல்லா அசுரரையும் தனியாயே கொன்றனர். இக்காரணத்தாற்றான் அவர் எல்லா பலவான்களினும் முக்கிய பலவானனார். அவ்விந்திரர் தனது தேஜசால் விசேஷமாய் விளங்குவர்; அதனுல்தான் ஸ்வராட்டென்னும் பெயரை யடைந்தனர். சுபகுணங்களாலும் கீர்த்தி முதலியவற்றாலும் அலங்கரிக்கப்பெற்ற அவ்விந்திரர் சர்வ தேவதைகளினும் முக்கியமாயினர். ஆகையால், ஹே பாலாகிப் பிராஹ்மணரே! அத்விதீய ஆன்மஞான மகிமையால அமரேசர் யாவருக்கும் சுவாமியானது போல, இக்காலத்தும ஆநந்த சொரூப ஆன்மஞானத்தை விவேகாதி சாதனங்களாற் சம்பாதித்த புருஷனும அவ்வான்ம ஞானமகிமையால் எல்லா ஜீவர்களுக்கும் சுவாமி யாவன்.

சங்கை :—ஹே பகவன்! தேவராஜாவாய இந்திரர் ஆன்மஞான மகிமையால் எல்லா அசுரர்களேயும ஜயித்தனா, என முன்னர்த் தாங்கள் கூறினீர்களன்றே, அது பொருந்தாது; ஏனெனின், புராணங்களில் அசுரர்களால் இந்திரனது பராஜயமும் அநந்தவாரமெனக கூறப்பட்டுளதன்றே?

சமாதானம் :—ஹே மறையவரே! எததுணை தேவராஜாவாய இநதிரர் பிரஜாபதியின் உபதேசத்தால் ஆன்மஞானத்தை யடையவில்லேயோ, அத்துணேயே இநதிரரையே ஜயமசெய்து அசுரர் மூவுலகத்திறகும அதிபதியாயினர்; பிரஜாபதியின் உபதேசததால ஆன்மஞானததைபபெற்ற பின்னரோ, அசுரர் யாவரையுங் கொன்றுதாமே மூவுலகிறகும் அதிபதியாயினர். ஆகையால், இவ்வாநநதசொரூப அத்விதீய ஆன்மஞானமே யாவற்றினும அதிகமாம; அதனேயே புருஷர் முயற்சியாற சம்பாதிகக வேண்டும். ஸ்ரீ குரு கூறல்:—ஹே குழநதாய்! இங்ஙனம கௌஷீதகீ இருஷியானவர் தமது சீடரின் பொருட்டுப்பிரஹ்ம வித்தையை உபதேசித்துத் தூஷ்ணீம்பாவததை (மௌனத்தை) யடைநதனர். பிரஹ்ம நிரூபணத்தின்பின் அநதப் பிரஹ்மததிறகு அவசியம கூறத்தகுநததாய சத்தியத்திற்குஞ் சத்தியம் என்னும குகிய நாமத்தை ஆத்ததத்தோடும, அநதக் கௌஷீதகீ இருஷியானவர் தம் சீடரின்பொருட்டு உபதேசிககவில்லே. மறறே, யாஞ்ஞவற்கியரின்தவத்தால் மகிழ்நத சூரியபகவான் அவர் பொருட்டுச சததியத்திறகுஞ சத்தியம் என்னும் பிரஹ்ம நாமததை அர்ததத்தோடும உபதேசிததனர். கௌஷீதகீ இருஷியோ தேவராஜாவாய இநதிரரால அசசததை யடைந்தவராய்ச் சம்பூரண பிரஹ்ம வித்தையைத் தமது சீடரின்பொருட்டுக் கூறுதொழிநதனர்; மற்றே, நான் கத்தியாய ரூப கௌஷீதகீ உபநிஷததின் முதல அத்தியாயத்தின்கண்ணே பிராணரூப பாயங்கத்தே (மஞ்சததே) இராநின்ற பிரஹ்மத்தின் உபாசனேயை உபதேசிததனா; இரண்டாவதத்தியாயததின்கண் அங்கஙகளோடு கூடிப்பிராண விததையை உபதேசித்தனா; மூன்றாவதத்தியாயததின்கண் இந்திரப பிரதர்த்தன சம்வாத வாயிலாக நிர்க்குணப பிரஹ்ம வித்தையை உபதேசித்தனர்; நான்காவதத்தியாயத்தின்கண் பாலாகி அஜாதசதநுரு சமவாத வாயிலாக அந்நிர்க்குணப பிரஹ்ம விததையை உபதேசித்தனா. இத்துணேவித்தைகளேக் கௌஷீதகீ இருஷியானவர் தமசீடரின்பொருடடு, உபதேசித்து இநதிரரினின்றும் அச்சத்தை யடைநதவராய் வித்தையை உபதேசித்தலினின்றும் உபராமத்தை யடைந்தனர். இவ்வெல்லா விஷயஙகளும நான்காவததத்தியாயததிற கூறப்படும். சுபம்.

ஸ்ரீ ஆத்மபுராணம்.

மூன்றாவது அத்தியாயம் முற்றும்.



# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## நான்காவது அத்தியாயம்.



ஓம் ஸ்ரீ கணேசாயநமஃ ஸ்ரீ குருப்யோநமஃ

ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நமஃ

ஆண்டு முதல் அத்தியாயத்தின்கண் இருக்குவேதத்தின் ஐதரேய உபநிஷத்தின் பொருள் நிரூபணம் செய்யப்பட்டது; இரண்டாவதத்தியாயத்தின்கண்ணும் மூன்றாவதத்தியாயத்தின் கண்ணும் இருக்குவேதத்தின் கௌஷீதகி உபநிஷத்தின் பொருள் நிரூபணம் செய்யப்பட்டது. இப்போதேழத்தியா யங்களால் யஜுர்வேத உபநிஷத்துக்களின் பொருளை நிரூபிப்பாம்:—அவற்றுள், முதலிற பிருஹதாரண்ய உபநிஷத்தின் பொருளை நான்கத்தியாயங்களால் நிரூபிப்பாம்:—ஆண்டு முன்னர் மூன்றாவது அத்தியாயத்தின் முடிவில் குருவானவர் சீடன் பொருட்டு, தேவராஜாவாய இந்திரரினின்றும் அச்சத்தை யடைந்தவராய்க் கௌஷீதகி இருஷி தம்சீடர் பொருட்டுச் சம்பூர்ண பிரஹ்ம வித்தையின் உபதேசத்தைச் செய்யாதொழிந்தனரென்றும், சூரியபகவான் யாஞ்ஞவற்கிய இருஷியின்பொருட்டுச் சம்பூர்ண பிரஹ்மவித்தையை உபதேசித்தனரென்று முள்ள விசித்திர கதையைக்கூறினார்; இவ்விசித்திரத்தைக் கேட்ட சீடன் அதிவிஸ்மயத்தை யடைந்தனன். சூரியபகவானவர் யாஞ்ஞவற்கியரின் பொருட்டு உபதேசித்த பிரஹ்ம வித்தையைக் கேட்கச் சீடனுக்கு அவாவிருப்பினும் அத்தியந்தம் புத்திமானதலின் நேரே அந்தப் பிரஹ்ம வித்தையைப்பற்றி வினவாது கௌஷீதகி இருஷியானவர் இந்திரரினின்றும் பயத்தையடைநதனர் என்னும் வசனத்தைக் கேட்டு ஐயத்தோடுகூடியவனாய் முதலில் கௌஷீதகி இருஷியின் பயகாரணத்தைக் கேட்டனன். பயகாரணத்தைக் கேட்பதில் சீடனது இரகசியக் கருத்திதுவாம்:—கௌஷீதகி இருஷியின் பயகாரணத்தை யான் கேட்பேனாயின், பயகாரணத்தைக் கூறியவராய் ஸ்ரீ குருவானவர் அச்சமபூர்ண பிரஹ்ம வித்தையையுங் கூறுவர். இக்கருத்தாற் சீடன் முதலிற் கௌஷீதகி இருஷியின் பயகாரணத்தைக் கேட்கத் தொடங்கினன். சீடன் கூறல்:—ஹே பகவன்! கௌஷீதகி இருஷியானவர் அச்சப்படும்படியாய் இந்திரர் என்ன கொடுந்தொழிலைச் செய்தனர்; இவ்விசித்திரமாய கதையைக் கேட்கவேண்டுமென வெனக்கு இச்சையுளதாகின்றது; ஆதலால் தாங்கள் கிருபைகூர்ந்து அடியேன் பொருட்டதனைக் கூறல்வேண்டும். இவ்வண்ணம் வினவிய சீடனது வினாவைக்கேட்டு, ஸ்ரீ குருவானவர் வேதமந்திரங்களால் கூறப்பட்டுள்ள தத்யங் அஸ்வினர்கட்கும் இந்திரருக்கும் பரஸ்பரம் நடந்ததாய சம்வாதரூப விசித்திரக்கதையை உபதேசிக்கும் பொருட்டு, முதலில் பிரஹ்மவித்தையின் பிரவர்த்தகராய சம்பூர்ண

குரவரைச்சிந்தனை செய்தனர். ஏனெனின், விவேகாதி. சாதன சதுஷ்டயங்கள் பிரஹ்மவித்யா சிரவணத்திற்குச் சாதனமாவதுபோலப் பிரஹ்ம வித்தையின் பிரவர்த்தகராய ஆசிரியர்களின் சிந்தனையும் பாவத்தடையை யொடுக்கும் வாயிலாகப் பிரஹ்மவித்தையடைவின் சாதனமாதலின் பிரஹ்மவித்தையின் அத்தியயன காலத்தில் பிரஹ்மவித்தையின் பிரவர்த்தகராய ஆசிரியர்களின் சிந்தனையை முமுக்ஷு ஜனங்கள் அவசியம் செய்யற்பாலதேயாம். ஆண்டு மதுகாண்ட முடிவின்கண்ணும் யாஞ்ஞவற்கிய காண்டமுடிவின்கண்ணும் புருஷ நாமங்கள் பொருந்திய இருஷிகளின் பெயர்கள் கூறபபட்டுள்ளனவாதலின், அவ்விருவம்சங்களையும் புருஷவம்சமென்பர். அன்றியும் கிலகாண்டமுடிவின்கண் ஸ்திரீநாமங்கள்பொருந்திய இருஷிகளின் பெயர்கள் உளவாதலின் அவ்வம்சத்தை ஸ்திரீ வம்சமென்பர். அவற்றுள், மதுகாண்டத்தின்கண்ணும் யாஞ்ஞவற்கிய காண்டத்தின்கண்ணும் இராநின்ற இருபுருஷ வம்சத்தின்கண்ணும அங்ஙனமே கிலகாண்டத்தின்கண் இராநின்ற ஸ்திரீவம்சத்தின்கண்ணும் இராநின்ற இருஷிகளைச் சிலநூலாசிரியர் பேதமா யங்கீகரித்துளார், வேறு சிலநூலாசிரியரோ அவரை யபேதமா யங்கீகரித்துளார்; அவ்விருபக்கங்களுள் அபேதபக்ஷமே சிரேஷ்டமாம். ஏனெனின், ஏக அத்விதீய பிரஹ்மமே குருமூர்த்தியின் திவ்யமங்கள மூர்த்தத்தைத் தரித்துச் சீடன் பொருட்டு உபதேசிக்கும் இது வேதாந்த சாஸ்திரத்தின் சித்தாந்தமாம். ஆகையால், அபேத பக்ஷத்தை யங்கீகரித்து முதலில் ஸ்திரீ வம்சத்தின்கண் இராநின்ற இருஷிகளின் பரம்பரையை நிரூபிபபாம்:— ஸ்ரீ குரு கூறல்:— ஹே சிஷ்ய! இவ்வுலகின்கண்ணே பௌதிமாஷீயெனப் பெயரிய ஸ்திரீ பிரஹ்ம வித்தையின் அதிகாரிகளாய நம யாவருக்குந தாயாவள்; ஏனெனின், பௌதிமாஷீயின் புத்திரர் இவ்வுலகின்கண் எல்லா மறையவரின்பொருட்டும் அறிதற்கரிய பிரஹ்மவித்தையைக கொடுததார். அவரை ஸ்திரீ வமசத்தின்கண்ணே பௌதிமாஷீயின் புத்திரரென்பர். இருபுருஷ வம்சத்தின்கண்ணும் அவரைப் பௌதிமாஷ்யர் என்பர். ஹே சிஷ்ய! இப்பௌதிமாஷீயின் புத்திரன் முதலாக இரண்யகாபப பரியநதம எத்துணைப் பிரஹ்மவித்தையின் பிரவர்த்தக ஆசிரியர்களுளரோ, அவ்வியாவர் பெயரையும் யாம் நின்பொருட்டுக் கூறுகின்றேம். அவர் பெயரைக் கேட்பதனாலும் சிந்தித்தலினாலும் பிரஹ்மவித்தையின் பிரதிபந்தகமாய சம்பூர்ண பாவங்கள் அழியும். அதன்பின் சம்பூர்ண வேதாந்த அர்த்தங்களை யறிவதில் நீ வல்லவனுவாய் இவ்வார்த்தை சாக்ஷாத் சுருதியின்கண்ணும் கூறப்பட்டுளது.

(கூ-ம்.) [Grantha-script Sanskrit verse, 2 lines — illegible]

" எந்தை யாகிய பரசிவன் பாலெவற் கரிய
முந்து மன்புள தன்னண முதுகுர வரின்பா
லந்த மின்றிய வன்புள தம்மகான் றனக்கே
இந்த நான்மறை யியம்பிய பொருளெலா மிலங்கும்."

இதன்பொருளோ :—எப்புருஷனுக்கு ஸ்ரீமன் மகாதேவரிடத்தேனும் மகா விஷ்ணுவாதி தேவதைகளிடத்தேனும் பரமபக்தி யுளதாமோ, தேவதைகளி டத்தே பரமபக்தி இருப்பதுபோலப் பிரஹ்மவித்தையைக் கொடுப்பவராய ஆசிரிய ரிடத்தே பரமபக்தி யுளதாமோ அம்மகான்ம புருஷனது புத்தியின்கண் உபநிஷ தங்கள் உரைத்த பொருள்கள் ஒளிராநிற்கு மென்பதாம். எவனுக்குத் தேவதை களிடத்தும் ஆசிரியரிடத்தும் பரமபக்தி யின்றாமோ, அவன் மதியின்கண்ணே அருமறை முடிகளறைந்த பொருள்கள் விளங்காவாம் ஆதலின் முமுக்ஷுவான வன் அவசியம் குருபக்தியைச் செய்யவேண்டும்.

இனி வம்சாவலியை வருணிப்பாம் :—ஹே சிஷ்ய! அந்தப் பௌதிமாஷீ யின் புத்திரரெனப் பெயரிய இருஷியானவர் காத்தியாயனீ புத்திரரெனப் பெய ரிய இருஷியினிடத்திலிருந்து பிரஹ்மவித்தையை யடைந்தனர். அக்காத்தி யாயனீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப் புருஷ வம்சத்தின்கண்ணே கௌப வனரென்பர்; அக்காத்யாயனீ புத்திரராய கௌபவனரெனப் பெயரிய இருஷி யானவர் பாரத்வாஜீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித் தையை யடைந்தனர். அந்தப் பாரத்வாஜீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப் புருஷ வம்சத்தின்கண் பௌதிமாஷ்யரென்பர்; இப்பௌதிமாஷ்யரைப் பூர்வ பௌதிமாஷ்யரினும் வேறென வுணர்க. அப்பாரத்வாஜீ புத்திரராய பௌதி மாஷ்யரெனப் பெயரிய இருஷியானவர் பாராசரீ புத்திரரெனப் பெயரிய இருஷி யின்பானின்றும் பிரஹ்மவித்தையைக் கவர்ந்தனர். அந்தப் பாராசரீ புத்திர ரெனப் பெயரிய இருஷியைப் புருஷவம்சத்தின்கண் கௌபவனரென்பர். இக் கௌபவனரும் முற்கௌபவனரினும் வேறெனவறிக. அப்பாராசரீ புத்திரராய கௌபவனரெனப் பெயரிய இருஷியானவர் ஔபஸ்வஸ்தீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அந்த ஔபஸ்வஸ்தீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப் புருஷவம்சத்தின்கண் கௌஷிகரென்பர் அந்த ஔபஸ்வஸ்தீ புத்திரராய கௌஷிகரெனப் பெயரிய இருஷியானவர் பாரா சரீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்ற னர். இப்பாராசரீ புத்திரரெனப் பெயரிய இருஷியும் பூர்வ பாராசரீ புத்திரரி னும் வேறென வுணர்க. அந்தப் பாராசரீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப் புருஷவம்சத்தின்கண் கௌண்டின்யரென்பர். அந்தப் பாராசரீ புத்திரராய கௌண்டின்யரெனப் பெயரிய இருஷியானவர் கௌசிகீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அக்கௌசிகீ புத்திர ரெனப் பெயரிய இருஷியைப் புருஷ வம்சத்தின்கண் சாண்டில்யரென்பர். அக் கௌசிகீ புத்திரராய சாண்டில்யரெனப் பெயரிய இருஷியானவர் ஆலம்பீ புத்திர ரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் அங்ஙனமே வையாக்ரீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். (இருகுரவரா லென்றுணர்க) அவ்வாலம்பீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப் புருஷ வம்சத் தின்கண் கௌசிகரென்பர். அவ்வியாக்ரீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப் புருஷவம்சத்தின்கண் கௌதமரென்பர். அவ்விருவருள், ஆலம்பீ புத்திரராய

கௌசிகரெனப் பெயரிய ்யாசாக்ஷாத் பிரஹ்மாவின்பானின்றும் பிரஹ்ம வித்தையைப் பெற்றனர். வியாக்ரீபுத்திரராய கௌதமரெனப் பெயரிய இருஷியோ, காபீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் அங்ஙனமே காண்வீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்ம வித்தையைப் பெற்றனர். (இருகுரவராலெனவுணர்க). அக்காபீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப் புருஷ வம்சத்தின்கண் அக்கினி வேஶ்யரென்பர். காண்வீ புத்திரரெனப் பெயரிய இருஷியினுக்குப புருஷ வம்சத்தின்கண் சமான சங்கியையுடைய ஒருநாம மின்றுமாதலின் அது எழுதவில்லை யென்றுணர்க. அவ்விருவருள் காண்வீ புத்திரரெனப் பெயரிய இருஷியோ, சாக்ஷாத் பிரஹ்மாவின்பானின்றே பிரஹ்ம வித்தையைப் பெற்றனர். காபீ புத்திரராய அக்கினி வேஶ்யரெனப் பெயரிய இருஷியோ ஆத்ரேயீ புத்திரரெனப பெயரிய இருஷியின்பானின்றும் அங்ஙனமே சாண்டில்யரெனப பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப்பெறறனர். (இருகுரவராலென வுணர்க). அவ்வாத்ரேயீ புத்திரரெனப பெயரிய இருஷியைப் புருஷ வம்சத்தின்கண் ஆனபிம்லாதரென்பர். சாண்டில்யரெனப பெயரிய இருஷியின் பேதத்தைப் போதிபபதாய ஒரு நாமம் ஸ்திரீ வம்சத்தின்கண் இன்றுமாதலின் கூறவில்லை யென்றறிக. அவ்விருவருட் சாண்டில்யரெனப் பெயரிய இருஷியோ சாக்ஷாத் பிரஹ்மாவினின்றே பிரஹ்ம வித்தையைப பெற்றனர். ஆத்ரேயீ புத்திரராய ஆனபிம்லாதரெனப பெயரிய இருஷியானவர் கௌதமீ புத்திரரெனப்பெயரிய இருஷியின்பானின்று ம்பிரஹ்ம விதததையைப பெற்றனர். அக்கௌதமீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப புருஷவம்சத்தின்கண் ஆனபிம்லாதரென்பர். அக்கௌதமீ புத்திரராய ஆனபிம்லாதரெனப் பெயரிய இருஷியானவர் பாரத்வாஜீ புத்திரரெனப்பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்ம வித்தையைப பெற்றனர். அபபாரத்வாஜீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப் புருஷ வம்சத்தின்கண் கௌதமரென்பர். அந்தப பாரத்வாஜீ புத்திரராய கௌதமரெனப பெயரிய இருஷியானவர் பாராசரீ புத்திரரெனப பெயரிய இரண்டிருஷியின்பானின்றும் பிரஹ்ம வித்தையைப பெற்றனர். அவ்விரண்டிருஷிகளுள் ஒருவரைப் புருஷ வம்சத்தின்கண் சைதவரென்பர், மற்றொருவரைப பிராசீன யோக்கியரென்பர். அப்பாராசரீ புத்திரராய சைதவரெனப பெயரிய இருஷியும பிராசீன யோக்கியரெனபபெயரிய இருஷியும் ஆகிய இவ்விரு சகோதரரும் வாத்சீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்ம வித்தையைப பெற்றனர். அவ்வாத்சீ புத்திரரெனப பெயரிய இருஷி மதுகாண்டத்தின்கண் இராநின்ற புருஷ வம்சத்தின் கண்ணே பாராசர்யர் என்னப்படுவர், யாஞ்ஞவற்கிய காண்டத்தின்கண் இராநின்ற புருஷ வம்சத்தின்கண்ணே பாராசர்யாயண ரெனப்படுவர். அவ்வாத்சீ புத்திரராய பாராசர்யாயணரெனப் பெயரிய இருஷியானவர் பாராசரீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அந்தப் பாராசரீ புத்திரரெனப் பெயரிய இருஷி மதுகாண்டத்தின்கண் பாரத்வாஜரெனப்படுவர், யாஞ்ஞவற்கிய காண்டத்தின்கண்ணே கார்க்

கியாயணரெனப்படுவர். அந்தப் பாராசரீ புத்திரராய பாரத்வாஜரெனப் பெயரிய இருஷியானவர் வார்க்காருணீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் அங்ஙனமே கௌதமரின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். (இருகுர வர்களாலெனவறிக). அவ்வார்க்காருணீ புத்திரரெனப் பெயரிய இருஷி யாஞ்ஞவற்கிய காண்டத்தின்கண் உத்தாலகாயன ரெனப்படுவர், மதுகாண்டத்தின் கண்ணே பாரத்வாஜ ரெனப்படுவர். அவ்விருவருள் வார்க்காருணீ புத்திரராய பாரத்வாஜரெனப் பெயரிய இருஷியோ சாக்ஷாத் பிரஹ்மாவின்பானின்றே பிரஹ்மவித்தையைப் பெற்றனர். கௌதமரெனப் பெயரிய இருஷியோ இரண்டாவது வார்க்காருணீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்ம வித்தையைப் பெற்றனர். அவ்வார்க்காருணீ புத்திரரெனப் பெயரிய இருஷி யாஞ்ஞவற்கிய காண்டத்தின்கண் ஜாபாலாயன ரெனப்படுவர், மதுகாண்டத்தின் கண்ணே பாரத்வாஜரெனப்படுவர். அவ்வார்க்காருணீ புத்திரராய பாரத்வாஜ ரெனப் பெயரிய இருஷியானவர் ஆர்த்தபாகீ புத்திரரெனப் பெயரிய இருஷியின் பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வார்த்தபாகீ புத்திரரெனப் பெயரிய இருஷி யாஞ்ஞவற்கிய காண்டத்தின்கண் மாத்யந்தி நாயனரெனப் படுவர்; மதுகாண்டத்தின்கண்ணே பாராசர்யரெனப்படுவர். அவ்வார்த்தபாகி புத்திரராய மாத்யந்தி நாயனரெனப் பெயரிய இருஷியானவர் சௌங்கீ புத்திர ரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அச் சௌங்கீ புத்திரரெனப் பெயரிய இருஷி யாஞ்ஞவற்கிய காண்டத்தின்கண் சௌகராயணரெனப்படுவர். அச்சௌங்கீ புத்திரராய சௌகராயணரெனப் பெயரிய இருஷியானவர் சாங்க்ருதீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அச்சாங்க்ருதீ புத்திரரெனப பெயரிய இருஷி யாஞ்ஞவற்கிய காண்டத்தின்கண் காஷாயணரெனப்படுவர். அச்சாங்க்ருதீ புத்திரராய காஷாயணரெனப பெயரிய இருஷியானவர் ஆலம்பாயனீ புத்திர ரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ் வாலம்பாயனீ புத்திரரெனப் பெயரிய இருஷி யாஞ்ஞவற்கிய காண்டத்தின் கண் சாயகாயனரெனப்படுவர், மதுகாண்டத்தின்கண்ணே வைஜபாயனரெனப் படுவர். அவ்வாலம்பாயனீ புத்திரராய வைஜபாயனரெனப பெயரிய இருஷியான வர் ஆலம்பீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வாலமபீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப் புருஷவம்சத்தின் கண் கௌசிகாயனியென்பர். அவ்வாலம்பீ புத்திரராய கௌசிகாயனியெனப் பெயரிய இருஷியானவர் ஜாயந்தீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அந்த ஜாயந்தீ புத்திரரெனப் பெயரிய இருஷியை இருபுருஷ வம்சத்தின்கண்ணும் கிருதகௌசிகரென்பர். அந்த ஜாயந்தீ புத்திரராய கிருதகௌசிகரெனப் பெயரிய இருஷியானவர் மாண்டூகாயனீ புத்திர ரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அம் மாண்டூகாயனீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப் புருஷ வம்சத்தின்கண் பாரா சர்யாயணரென்பர். அம்மாண்டூகாயனீ புத்திரராய பாராசர்யாயணரெனப் பெய ரிய இருஷியானவர் மாண்டூகீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும்

பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அம்மாண்டூகீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப் புருஷ வம்சத்தின்கண் பாராசர்யரென்பர். அம்மாண்டூகீ புத்திரராய பாராசர்யரெனப் பெயரிய இருஷியானவர் சாண்டிலீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப பெற்றனர். அச்சாண்டிலீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப் புருஷ வம்சத்தின்கண் ஜாதூகர்ண்யரென்பர். அச்சாண்டிலீ புத்திரராய ஜாதூகர்ண்யரெனப் பெயரிய இருஷியானவர் ராதீதரீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் அங்ஙனமே யாஸ்கரெனப் பெயரிய இருஷியின்பானின்றும பிரஹ்மவித்தையைப பெற்றனர்; (இருகுரவராலென வறிக.) அந்தராதீதரீ புத்திரரெனப பெயரிய இருஷியைப் புருஷ வம்சத்தின்கண் ஆசுராயணரென்பர். அவ்விருவருள் யாஸ்கரெனப பெயரிய இருஷியோ சாக்ஷாத் பிரஹ்மாவின்பானின்றே பிரஹ்ம வித்தையைப் பெறறனர்; ராதீதரீ புத்திரராய ஆசுராயணர் எனபபெயரிய இருஷியோ பால்லுகீ புத்திரரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்ம வித்தையைப பெற்றனர். அப் பால்லுகீ புத்திரரெனப் பெயரிய இருஷியைப் புருஷ வமசத்தின்கண் திரைவணீயென்பர்.

இப்போது ஸ்திரீ வம்சத்தின்கண் இரா நின்ற அதிகமாய ஆறு இருஷிகள் ஆசுராயண இருஷியின்பால் உள்ளடங்குவதைக் காண்பிப்பாம்:—அப் பால்லுகீ புத்திரராய திரைவணீ யெனபபெயரிய இருஷியானவர் கிரௌஞ்சகீ புத்திரரெனப் பெயரிய இரண்டு இருஷிகளின்பானின்றும் பிரஹ்ம வித்தையைப பெற்றனர். அக்கிரௌஞ்சகீ புத்திரரெனப பெயரிய இரண்டு இருஷிகளும் வைதப்ருதீ புத்திரரெனப் பெயரிய இருஷியின் பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ் வைதப்ருதீ புத்திரரெனப பெயரிய இருஷியானவர் கார்ஷகேயீ புத்திரர்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அககார்ஷகேயீ புத்திரரெனப பெயரிய இருஷி பிராசீனயோகீ புத்திரரெனப பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்ம வித்தையைப் பெற்றனர். அபபிராசீனயோகீ புத்திரரெனப் பெயரிய இருஷியானவர் சாஞ்சீவீ புத்திரரெனப பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்ம வித்தையைப பெறறனா. அச்சாஞ்சீவீ புத்திரரெனப் பெயரிய இருஷியானவர் பிராஶ்நீ புத்திரரெனப் பெயரிய இருஷியினபானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அப்பிராஶ்நீ புததிரரெனப் பெயரிய இருஷியானவர் ஸ்திரீ வம்சத்தின் முடிவின்கண் உள்ளவர். ஆசுரியெனப பெயரிய தேசத்தின்கண் இருப்பதினாலேனும் அல்லது ஆசுரியெனப் பெயரிய குருவின் சமீபத்திருப்பதினாலேனும் அப்பிராஶ்நீ புத்திரரெனப் பெயரிய இருஷியை ஆசுரிவாசீ யென்பர். அப பிராஶ்நீ புத்திரரெனப பெயரிய இருஷியானவர் முற்கூறிய ராதீதரீ புத்திரராய ஆசுராயணரெனப பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வாசுராயணரெனப பெயரிய இருஷியானவர் முற்கூறிய ஜாதூகர்ண்யரெனப பெயரிய இருஷிக்கோ தேசிகராம்; திரைவணீயெனப பெயரிய இருஷியின் சீடராம்.

சங்கை :—ஹே பகவன்! திரைவணியெனப்பெயரிய இருஷியின் குருமார்களின் பாம்பரையின்கண் இராநின்ற பிராஸ்ரீ புத்திரரெனப் பெயரிய இருஷியானவர் திரைவணியெனப்பெயரிய இருஷியின் சீடராய ஆசுராயணரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் எவ்வாறு பிரஹ்மவித்தையைக் கவர்ந்தனர்? தமது சீடரின் சீடர்பானின்றும் வித்தையைக் கவர்தல் சம்பவியாதன்றோ?

சமாதானம் :—தமது சீடரின் சீடர்பானின்றும் வித்தையை யத்தியயனம் செய்தல் அசங்கதமாயினும், ஒருநிமித்தத்தால் பூர்வமத்தியயனம் செய்தவித்தை மறந்தேனும் ஐயமுண்டாயேனுமிருப்பின் மீண்டும் வித்தையின் அத்தியயனத்தைப் பிரசித்தமாய்க் கண்டோம். மகாபாரதத்தின் க'தாபர்வத்தின் கண்ணும் இவ்வார்த்தைப் பிரசித்தமாயுளது; ஆண்டிது கூறப்பட்டுளது :—ஒரு காலத்தில் பன்னிரண்டு வருஷபரியந்தம் துர்ப்பிக்ஷம் (பஞ்சம்) உண்டாயது. அத்துர்ப்பிக்ஷத்தாற் சம்பூர்ண பிராஹ்மணர்கட்கும் வித்தையின்மறதியுண்டாயது. சாஸ்வதியின் கிருபையால் சாரஸ்வதரெனப் பெயரிய ஒரு பிராஹ்மணருக்குமாத்திரம் வித்தையின்மறதியுண்டாகவில்லை. துர்ப்பிக்ஷம் நீங்கியபின்னர் மீண்டும் அவ்வெல்லா பிராஹ்மணரும் அச்சாரஸ்வதரெனப் பெயரிய பிராஹ்மணர்பானின்றும் வித்தையை அத்தியயனம் செய்தனர். இங்ஙனம் வித்தையை மறந்து மீண்டும் வித்தையின் அத்தியயனம் சம்பவிக்கும். முன்னர் மொழிந்த ஆசுராயணரெனப் பெயரிய இருஷியின் குருவாகிய திரைவணியெனப் பெயரிய இருஷியானவர் ஔபஜந்தனியெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அந்த ஔபஜந்தனியெனப் பெயரிய இருஷியானவர் ஆசுரியெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வாசுரியெனப் பெயரிய இருஷியானவர் மூன்று வம்சத்தின்கண்ணும் சமானரூபமுடையவர். ஆசுரியெனப் பெயரிய இருஷியே முதலாய்க் கீழ்க்கீழ் உள்ளனவாய நாநாவகையாய இருஷிகளின் வம்சத்தின் பேதமானது எப்புருஷனாலும் சமாதானம் செய்யக்கூடாததாம். கருத்திதுவாம் :—பௌதிமாஷீ புத்திரரெனப் பெயரிய இருஷியே முதலாய் ஆசுரியெனப் பெயரிய இருஷிபரியந்தம் இருஷிகளினுடைய நாமங்களின் விலக்ஷணத்தன்மையைக் கண்டும் சங்கியையின் விலக்ஷணத்தன்மையைக் கண்டும் சில நூலாசிரியர் ஸ்திரீ வம்சத்தைப் பின்னமாயே அங்கீகரித்தனர். மற்றுஞ் சில நூலாசிரியராய மகான்மபுருஷர் அளவிறந்த இடங்களிலுள்ள நாமங்களின் சமானத்தன்மையைக் கண்டு ஸ்திரீ வம்சத்தைப் பின்னமா யங்கீகரித்திலர்; மற்றோ அபின்னமா யங்கீகரித்துளார். அங்ஙனமே, இரு புருஷவம்சத்தின்கண்ணும் சில நூலுடையார், அக்கினி வேஸ்யரெனப் பெயரிய இருஷியே முதலாய்க் கௌசிகாயனியெனப் பெயரிய இருஷிபரியந்தம் பரஸ்பரம் நாமங்களின் விலக்ஷணத்தன்மையைக் கண்டு பேதமே அங்கீகரித்துளார். அக்கினி வேஸ்யரெனப் பெயரிய இருஷியின் முன்னருள்ள இருஷிகளுக்கும் அங்ஙனே கௌசிகாயனியெனப் பெயரிய இருஷியின் பின்னருள்ள இருஷிகளுக்கும் பரஸ்பரம் அபேதமே அங்கீகரித்துளார். சில நூலுடைய புருஷரோ, யாண்டும் அபேதமே அங்கீகரித்துளார்; ஏனெனின், ஒரே

இருஷிக்கு நாநாவகையாய நாமம் சம்பவிக்கும். நாமங்களின் பேதத்தைக் கண்டு இருஷிகளின் பேதத்தை யுடன்படல் நிஷ்பலமாம். அல்லது, அவ்வம்சங்கட்குப் பரஸ்பரம் பேதமங்கீகரித்தபோதிலும் அபேதமங்கீகரித்தபோதிலும் எவ்வாற்று னும் ஆசுரியெனப் பெயரிய இருஷியின்கண் ஸ்திரீ வம்சத்தின் அங்ஙனே இரு புருஷ வம்சத்தின் அபேதமே சித்தமாம். கருத்திதுவாம்:—ஆசுரியெனப் பெயரிய இருஷியின் முன்னருள்ள மூன்று வம்சத்தின்கண் பேதாபேதங்களின் விவாதமாம். ஆசுரியெனப் பெயரிய இருஷியின் பின்னர்க் கேவலம் பேதமே யுளது. இங்ஙனம் ஸ்திரீ வம்சத்தை நிரூபித்தனம்.

இப்போது இருபுருஷ வம்சத்தையும் நிரூபிப்பாம்:—ஆண்டு அவ்வாசுரி யெனப் பெயரிய இருஷியானவர் பாரத்வாஜரெனப் பெயரிய இருஷியின்பானின் றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அப்பாரத்வாஜரெனப் பெயரிய இருஷி யானவர் ஆத்ரேயரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வாத்ரேயரெனப் பெயரிய இருஷியானவர் மாண்டியெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அம்மாண்டி யெனப் பெயரிய இருஷியானவர் கௌதமரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அக்கௌதமரெனப் பெயரிய இருஷியானவர் வேறொரு கௌதமரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வேறொரு கௌதமரெனபபெயரிய இருஷியானவர் வாத்சியர் எனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வாத்சிய ரெனப் பெயரிய இருஷியானவர் சாண்டில்யரெனப் பெயரிய இருஷியின்பானின் றும பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அசசாண்டில்யரெனப் பெயரிய இருஷி யானவர் கைசோர்ய காப்பியர் எனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்ம வித்தையைப் பெற்றனர். அக்கைசோர்ய காப்பியரெனப் பெயரிய இருஷியானவர் குமார ஹாரிதரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அக்குமார ஹாரிதரெனப் பெயரிய இருஷியானவர் காலவரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அக்காலவ ரெனப் பெயரிய இருஷியானவர் விதர்ப்பீ கௌண்டின்யரெனப் பெயரிய இருஷி யின்பானின்றும் பிரஹ்ம வித்தையைப் பெற்றனர். அக்கௌண்டின்யரெனப் பெயரிய இருஷியானவர் வாத்சனேயாத் பாப்ரவரெனப் பெயரிய இருஷியின்பா னின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வாத்சனேயாத் பாப்ரவரெனப் பெயரிய இருஷியானவர் பதியெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்ம வித் தையைப் பெற்றனர். அப்பதியெனப் பெயரிய இருஷியைச் சௌபரியென்றுங் கூறுவர். அச்சௌபரி பதியெனப் பெயரிய இருஷியானவர் அபாஸ்யாங்கிரசரெ னப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வபாஸ் யாங்கிரசரெனப் பெயரிய இருஷியானவர் துவாஷ்ட்ர ஆபூதியெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அத்துவாஷ்ட்ர ஆபூதி யெனப் பெயரிய இருஷியானவர் துவாஷ்ட்ர விஸ்வரூபரெனப் பெயரிய இருஷி யின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அத்துவாஷ்ட்ர விஸ்வரூப

ரெனப் பெயரிய இருஷியானவர் அஸ்வினரெனப் பெயரிய இருஷிகளின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். இவ்வஸ்வினரெனப் பெயரிய இருஷிகளுக்கு வித்தையை உபதேசித்த நிமித்தத்தாற்றான் தேவராஜாவாய இந்திரர் தத்யங்கதர்வணரெனப் பெயரிய இருஷியின்மேற் கோபஞ்செய்ததாம். அவ்வஸ்வினரெனப்பெயரிய இரண்டு இருஷிகளும் தத்யங்கதர்வணரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அத்தத்யங்கதர்வணரென்பார் தேவராஜாவாய இந்திரனுக்குங் குருவாம். அத்தத்யங்கதர்வணரெனப் பெயரிய இருஷியானவர் தைவ ஆதர்வணரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அத்தைவ ஆதர்வணரெனப் பெயரிய இருஷியானவர் பிராத்வம்சன மிருத்யுவெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அப்பிராத்வம்சன மிருத்யுவெனப் பெயரிய இருஷியானவர் பிரத்வம்சனரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அப்பிரத்வம்சனரெனப்பெயரிய இருஷியானவர் ஏகர்ஷியெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வேகர்ஷியெனப் பெயரிய இருஷியானவர் விப்ரசித்தியெனப்பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்விப்ரசித்தியெனப் பெயரிய இருஷியானவர் வியஷ்டியெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வியஷ்டியெனப்பெயரிய இருஷியானவர் சனாருவெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அச்சனாருவெனப் பெயரிய இருஷியானவர் சனாதனரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அச்சனாதனரெனப் பெயரிய இருஷியானவர் சனகரெனப் 'பெயரிய இருஷியின்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அச்சனகரெனப் பெயரிய இருஷியானவர் விராட்பகவான்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்விராட்பகவானானவர் ஹிரண்யகர்ப்பன்பானின்றும் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். ஹிரண்யகர்ப்பனின் முன்னியாதொரு பிரஹ்ம வித்யாவக்தாவுமின்றாம். மற்றோ ஹிரண்யகர்ப்பனே சர்வத்திற்கு முடிவுவடிவனும். அவ்விரண்ய கர்ப்பன் பொருட்டு எப்போதும் எனது நமஸ்கார முளதாகுக. அவ்விரண்ய கர்ப்பனானவர் சாவ ஜகத்திற்கும், வேதரூப விருக்ஷத்திற்கும் மூலமாவர். இங்ஙனம், ஸ்திரீ வம்சத்தோடு புருஷ வம்சத்திற்கு அபேதத்தை யங்கீகரித்துப் புருஷ வம்சத்தை நிரூபித்தோம்.

இப்போது பேதபக்ஷத்தை யங்கீகரித்து ஸ்திரீ வம்சத்தை நிரூபிப்பாம்:— ஸ்ரீ குரு கூறல்:—ஹே சிஷ்ய! இருபுருஷவம்சத்தின்கண் இருஷிகளினுடைய நாமங்களின் சமானத்தன்மை அநேகவிடங்களிற் காணப்படுகின்றதாதலின், இரண்டு புருஷ வம்சத்திற்கும் அபேதம் சம்பவிப்பினும் ஸ்திரீ வம்சத்தின்கண் இருஷிகளின் சங்கியையின் பேதம் காணப்படுகின்றது. அங்ஙனமே பிரகரணத்திற்கும் பேதங் காணப்படுகின்றது; அங்ஙனமே அவ்விருஷிகளின் நாமங்கட்கும் விலக்ஷணத்தன்மை காணப்படுகின்றது. ஆகையால் ஸ்திரீ வம்சத்திற்குப் பேதமேயுளதென எனது சித்தத்தின்கண்ணே தோற்றுகின்றதாதலின், அப்பேதபக்ஷத்தை யங்கீகரித்து இப்போது நின்பொருட்டு ஸ்திரீ வம்சத்தின் நிரூபணத்தைச் செய்

கின்றோம். அதனை நீ கேட்பாயாக. முன்னர் அபேதபக்ஷத்தை யங்கீகரித்து பௌதிமாஷ்யரெனப் பெயரிய இருஷியே முதலாய் உத்தரோத்தரம் ஆசுரி யெனப் பெயரிய இருஷியே ஈறாய் ஸ்திரீவம்ச நிரூபணம் செய்தோம். இப் போது பிரஹ்மாவினின்றும கீழ்க்கீழ் இருஷிகளின் நாமங்களை நிரூபணம் செய் வாம். ஹே சிஷ்ய! பூர்வம் புருஷவம்ச முடிவின்கண் கூறப்பட்ட ஸ்வயம்பு வாகிய பிரஹ்மாவினின்றும் விராட்பகவான் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்விராட்பகவான்பானின்றும் காவஷேயரென்னும் இருஷியானவர் பிரஹ்ம வித்தையைப பெற்றனர். அக்காவஷேயரென்னும் இருஷியைத் துரவென்றும் கூறுவர். அத்துரவெனும் காவஷேய இருஷியின்பானின்றும் யஞுவசரு வென்னும் இராஜ ஸ்தம்பாயன இருஷியானவா பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அந்த யஞுவசருவென்னும இருஷியின்பானின்றும குஸ்ரியென்னும் இருஷி யானவர் பிரஹ்மவிதத்தையைப பெறறனா. அக்குஸ்ரியென்னும் இருஷியின் பானின்றும் வாத்சியரென்னும் இருஷியானவர் பிரஹ்மவிததையைப் பெற்றனர். அவ்வாத்சியரென்னும இருஷியின்பானின்றும சாண்டிலயரென்னும் இருஷியான வர் பிரஹ்மவித்தையைப பெற்றனா. அசசாண்டிலயரென்னும் இருஷியின் பானின்றும வாமகக்ஷாயணரென்னும் இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெற் றனர். அவ்வாமகக்ஷாயணரென்னும இருஷியின்பானின்றும் மாஹித்தியென் னும் இருஷியானவா பிரஹ்மவிததையைப பெற்றனா. அம்மாஹிததியென்னும் இருஷியின்பானின்றும் கௌதசரென்னும் இருஷியானவா பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அக்கௌதசரென்னும் இருஷியின்பானின்றும் மாண்டவ்யரென்னும் இருஷியானவர் பிரஹ்மவிததையைப பெற்றனா. அமமாண்டவ்யரென்னும் இரு ஷியின் பானின்றும் மாண்டூகாயனியென்னும இருஷியானவர் பிரஹ்மவித்தை யைப் பெற்றனா. அம்மாண்டூகாயனியென்னும இருஷியின்பானின்றும் சாஞ் சீவி புத்திரரென்னும இருஷியானவா பிரஹ்மவிததையைப பெறறனர். அசசாஞ் சீவி புத்திரரென்னும் இருஷியே முதலாய்க கீழ்க்கீழ் பௌதிமாஷீ புத்திரர் ஈறு யுள்ள சீடரின் பரமபரையை முன்னர்க கூறிவநதேம. அபபரமபரையையே யீண் டுசசாஞசீவி புத்திரரினின்றுங கீழ்க்கீழ் அறிந்துகொளக. ஆனுல் முன்னிலும் இங்கித்துணைப் பேதமுளது. முன்னர் ஸ்திரீநாமசம்பநதமற்ற பௌதிமாஷ்ய கௌபவனுதி நாமங்களைப பரித்தியாகம செய்தும, முன்னர் மொழிந்த ஆசுரா யண இருஷியின்கண் உள்ளடககுவதைப பரித்தியாகம செய்தும், அன்னிய சம் பூர்ண சிஷ்யர்களின் பரம்பரையை முன்போலவுணாக. ஆகையால், ஹே சிஷ்ய! பௌதிமாஷீ புததிரரெனப பெயரிய இருஷியே முதலாய் எத்துணை இருஷிகள் ஸ்திரீவம்சத்தின்கண் உளராவரோ, அவ்வெல்லா இருஷிகளின் ஆதியாசிரியர் ஸ்வயம்புவாய பிரஹ்மாவாம; அநதப் பிரஹ்மாவையே இரண்யகாபபரென்பர். சிலமதிமான்களாய புருஷர் சூரியபகவானையும் ஸ்திரீவம்சத்தின் ஆதியாசிரிய ரென்பர். ஆகையால், ஹே சிஷ்ய! அந்தப்பிரக்கிரியையும் யாம் உன்பொருட் டுக் கூறுகின்றோம் கேள் :—அச சூரியபகவானுடைய தேஜஸானது முமுக்ஷு ஜனங்களாற் சந்ததமுஞ் சிந்தை செய்தற்குரியதாம். அச்சூரிய பகவானுனவர்

ஜீவர்களாய நம்முன்நின்று மதிவிர்த்திகளியாவற்றையும் தர்மாதிகளிற் பிரவிர்த்திப்பிப்பர். அச் சூரியபகவான் மாயாவிசிஷ்டர் ஈய்வர சொரூபமாம்; இரண்யகர்ப்ப சொரூபமாம்; வைய்வானி சொரூபமாம்; அச் சூரியபகவான் பூமி, அந்தரிக்ஷம், சுவர்க்கம் என்னும் மூவுலகவடிவமாம். இருக்கு, யஜுர், ஸாமம் என்னும் மும்மறை உருவமாம். நனு, கனு, துயில் என்னும் மூவவஸ்தை வடிவமாம்; பிரஹ்மா, விஷ்ணு, மகாதேவரென்னும் மும்மூர்த்திரூபமாம். அச் சூரியபகவான் பிரணவத்தினர்த்த வடிவமாம். இத்தகைய சூரியபகவானிடத்தினின்றும் அம்பிணீயென்னுந் தேவதை பிரஹ்ம வித்தையைப்பெற்றது. அவ்வம்பிணீ யென்னும் தேவதைபானின்றும் வாக்குத்தேவதை பிரஹ்ம வித்தையை யடைந்தது; அவ்வாக்குத் தேவதைபானின்றும் கய்யபரென்னும் நைத்ருவி இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அந்நைத்ருவி கய்யபரென்னும இருஷியின்பானின்றும் சிற்பரென்னுங் கய்யப இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அசசிற்பகய்யப ரென்னும் இருஷியின் பானின்றும் ஹரிதகய்யபரென்னும் இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வரிதகய்யபரென்னும் இருஷியின்பானின்றும் வார்ஷகணரென்னும் அசித இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வார்ஷகண அசிதரென்னும இருஷியின்பானின்றும் ஜிஹ்வாவான் என்னும் பாத்யோக இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெறறனர். அந்த ஜிஹ்வாவான் பாத்யோகரென்னும் இருஷியின்பானின்றும வாஜய்ரவசூவென்னும் இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வாஜய்ரவசூ என்னும் இருஷியின்பானின்றும் குய்ரியென்னும் இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். குய்ரி யென்னும் இருஷியின்பானின்றும் உபவேசியென்னும் இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வுபவேசியென்னும் இருஷியின்பானின்றும் அருணரென்னும் இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வருணரென்னும் இருஷியின்பானின்றும் உத்தாலகரென்னும் இருஷியானவர் பிரஹ்ம வித்தையைப் பெற்றனர். அவ்வுத்தாலகரென்னு மிருஷியின்பானின்றும் யாஞ்ஞவற்கியரென்னும் இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வியாஞ்ஞவற்கியரென்னும் இருஷியின்பானின்றும் ஆசுரியென்னும் இருஷியானவர் பிரஹ்ம வித்தையைப் பெற்றனர். அவ்வாசுரியென்னும் இருஷியின்பானின்றும் ஆசுராயணரென்னும் இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அவ்வாசுராயணரென்னும் இருஷியின்பானின்றும் பிராய்நீ புத்திரரென்னும் இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அந்தப் பிராய்நீ புத்திரரென்னும் இருஷியின்பானின்றும் சாஞ்சீவி புத்திரரென்னும் இருஷியானவர் பிரஹ்மவித்தையைப் பெற்றனர். அச்சாஞ்சீவி புத்திரரென்னும் இருஷியை முன்னர்ப் பிரஹ்மாவாற் பிரவிர்த்திப்பித்த வம்சத்தின்கண் மாண்டூகாயனியென்னும் இருஷியின் சிஷ்யரூபமாய்க் கூறப்பட்டது. இவ்வாறு பிராசீனயோகி புத்திரரென்னும் இருஷியே முதலாய்ப் பௌதிமாஷீ புத்திரரென்னும் இருஷிவரை ஸ்திரீ நாமம பொருந்திய நாமங்களால், முன்னிரூபணம் செய்யப்பட்ட இருஷிகளில் யாவரையும் புருஷ நாமமற்றவராய்ச் சாஞ்சீவி புத்திரரென்னு மிருஷியின் சிஷ்ய பரம்பரையில் அறிக.

இங்ஙனம், சூரியபகவான்பானின்றும் வெளிப்போந்த பிர்ஹ்ம வித்தையும், சுவயம்புவாய பிரஹ்மாவினின்றும் வெளிப்போந்த பிரஹ்ம வித்தையும், சாஞ்சீவி புத்திரரென்னும் இருஷியின்கண்ணே ஏகபாவத்தை யடைந்தன. மலையின் இரு சிகரங்களினின்றும் வெளிபபோந்த நதியின் இரு பிரவாஹங்கள் சிறிது தூரஞ் சென்று ஒருமையை யடைவதுபோலச் சூரியபகவான்பானின்றும் பிரஹ்மாவின் பானின்றும் வெளிப்போந்த பிரஹ்ம வித்யாரூப நதிகளிரண்டும் சாஞ்சீவி புத்திரரென்னும் இருஷியை யடைந்து ஒருமையை யடைந்தன. கருத்திதுவாம் :—பிரஹ்மாவினின்றும் சூரியபகவானினின்றும் சாஞ்சீவி புத்திரபரியந்தம் இராநின்ற இருவகையா்ய சிஷ்யபரம்பரையைப் பிரஹ்மவித்தை யடைந்துளது. சாஞ்சீவி புத்திரரினின்றுங் கீழ்க்கீழ் ஒருவிதமாய சிஷ்ய பரம்பரையைப் பிரஹ்ம வித்தை யடைந்துளது. இங்ஙனம் பேதபக்ஷத்தை அங்கீகரித்து ஸ்திரீ வம்சம் நிரூபிக்கப்பெற்றது.

இப்போது அந்தப் பேதபக்ஷத்தை யங்கீகரித்து இரு புருஷ வம்சங்கட்கும் எத்துணையம்சத்தில் சமானரூபத் தன்மையுளதோ, எத்துணை யம்சத்தின்கண் அவற்றிற்கு இலக்ஷணத் தன்மையுளதோ, அவ்விரண்டையும் நிரூபிப்பாம் :—ஆண்டுப் பிருஹதாரண்யக உபநிஷத்தின் மூன்றாவது நான்காவது அத்தியாயரூப மதுகாண்டத்தின் கண்ணும் பிருஹதாரண்யக உபநிஷத்தின் ஐந்தாவது ஆறாவது அத்தியாயரூப யாஞ்ஞவற்கிய காண்டத்தின்கண்ணும் பௌதிமாஷ்யரென்னும் இருஷியே முதலாய்ச் சுவயம்புவாய பிரஹ்மா பரியந்தம் அநேகவிடங்களில் புருஷ வம்சத்தின் சமானரூபத் தன்மையே இருப்பதைக் கண்டேம். ஆக்கினிவேஶ்யரென்னும் இருஷியினுக்கும், கௌசிகாயனரென்னும் இருஷியினுக்கும் மத்திய வர்த்திகளாய இருஷிகளிடத்தே சமானரூபத் தன்மையின்றாம். மற்றோ, விலக்ஷணத் தன்மையாம். அவற்றுள் முதலில் மதுகாண்டத்தின்கண்ணுள்ள விலக்ஷணத் தன்மையை நிரூபணம் செய்வாம் :—ஆக்கினி வேஶ்யரென்னும் இருஷியினுக்குக் குரவரிருவர் உளராவர். ஒருவரோ, சாண்டில்யரென்னும் இருஷியாம், மற்றொருவரோ ஆனபிம்லாதரென்னும் இருஷியாம். அவ்விருவருள் ஆனபிம்லாதரென்னும் இருஷியினுக்கு வேறொரு ஆனபிம்லாதரென்னும் இருஷி குருவானர். அவ்வேறொரு ஆனபிம்லாதரென்னும் இருஷியினுக்கு மூன்றாவது ஆனபிம்லாதரென்னும் இருஷி குருவானர். அம்மூன்றாவது ஆனபிம்லாதரென்னும் இருஷியினுக்குக் கௌதமரென்னும் இருஷி குருவானர். அக்கௌதமரென்னும் இருஷியினுக்குச் சைதவரென்னும் இருஷியும், பிராசீனயோக்கியரென்னும் இருஷியும் குருவானர் (இருகுரவரெனவுணர்க). சைதவ பிராசீன யோக்கியரென்னும் இரண்டு இருஷிகட்கும் பாராசர்யரென்னும் இருஷி குருவானர். அப்பாராசர்யரென்னும் இருஷியினுக்குப் பாரத்வாஜரென்னும் இருஷி குருவானர். அப்பாரத்வாஜரென்னும் இருஷியினுக்கு வேறொரு பாரத்வாஜரென்னும் இருஷியுங் கௌதமரென்னும் இருஷியுங் குருவானர். (இருகுரவரெனவுணர்க,) அவ்விரண்டு இருஷிகளுள் கௌதமரென்னும் இருஷியினுக்கு அன்னிய பாரத்வாஜரென்னும் இருஷி குருவானர். அப்பாரத்வாஜரென்னும் இருஷியினுக்கு அன்னிய

பாராசர்யரென்னும் இருஷி குருவானார். அப்பாராசர்யரென்னும் இருஷியினுக்கு வைஜபாயனரென்னும் இருஷி குருவானார். அவ்வைஜபாயனரென்னும் இருஷியினுக்குக் கௌசிகாயனி யென்னும் இருஷி குருவானார். இங்ஙனம் மதுகாண்டத்தின்கண் ஆக்கினிவேஶ்யரென்னும் இருஷியே முதலாய்க் கௌசிகாயனி யென்னும் இருஷிபரியந்தம விலக்ஷணத்தன்மை கூறப்பட்டது.

இப்போது யாஞ்ஞவற்கிய காண்டத்தின்கண் உள்ள அவ்விலக்ஷணத் தன்மையை நிரூபணம் செய்வாம்:—ஆண்டு ஆக்கினிவேஶ்யரென்னும் இருஷியினுக்குக் கார்க்கியரென்னும் இருஷி குருவானார். அக்கார்க்கியரென்னும் இருஷியினுக்கு இரண்டாவது கார்க்கியரென்னும் இருஷி குருவானார். அவ்விரண்டாவது கார்க்கியரென்னும இருஷியினுக்குக் கௌதமரென்னும் இருஷி குருவானார். அக்கௌதமரென்னும் இருஷியினுக்குச் சைதவரென்னும் இருஷி குருவானார். அச்சைதவரென்னும் இருஷியினுக்குப பாராசர்யாயணரென்னும் இருஷி குருவானார். அப்பாராசர்யாயணரென்னும் இருஷியினுக்குக் கார்க்கியாயணரென்னும் இருஷி குருவானார். அக்கார்க்கியாயணரென்னும் இருஷியினுக்கு உத்தாலகாயனரென்னும் இருஷி குருவானார். அவ்வுத்தாலகாயனரென்னும் இருஷியினுக்கு ஜாபாலாயனரென்னும இருஷி குருவானார். அந்த ஜாபாலாயனரென்னும இருஷியினுக்கு மாத்யந்தி நாயனரென்னும் இருஷி குருவானார். அம்மாதயந்தி நாயனரென்னும் இருஷியினுக்குச சௌகராயணரென்னும் இருஷி குருவானார். அச்சௌகராயணரென்னும் இருஷியினுக்குக காஷாயணரென்னும இருஷி குருவானார். அக்காஷாயணரென்னும் இருஷியினுக்குசசாயகாயனரென்னும இருஷி குருவானார். அச்சாயகாயனரென்னும் இருஷியினுக்குக் கௌசிகாயனியென்னும் இருஷி குருவானார். ஹே சிஷ்ய! மதுகாண்டத்தின்கண் இரா நின்ற புருஷ வம்சத்தின்கண்ணும் யாஞ்ஞவற்கிய காண்டத்தின்கண்ணுள்ள புருஷ வம்சத்தின்கண்ணும் இத்துணையே விலக்ஷணத் தன்மையுளது. அவ்விலக்ஷணத தன்மையைக்கண்டு சிலவித்வான்களாய புருஷா அவ்விரு புருஷவம்சங்கட்கும் பேதத்தையே அங்கீகரித்துளார். சில அறிஞர்களோ, மதுகாண்ட முடிவின்கண்ணும், யாஞ்ஞவற்கியகாண்ட முடிவின்கண்ணும், கிலகாண்ட முடிவின்கண்ணும், ஒரேவம்சத்தின் நிரூபணஞ் செய்யப்பட்டுளதென்றும், ஆனால் மதுகாண்டா திரூப உபாதியின் வேற்றுமையால் வம்சத்தின் வேற்றுமை காணப் பெறுகின்றதென்றும், உண்மையாய் வம்சத்தின் பேதமின்றுமென்றும் கூறுவர். சில அறிஞரோ கற்பபேதத்தால் வம்சததின் பேதத்தை யங்கீகரித்துளார், வேதத்துட்பொருளை உண்மையா யறிந்துள்ள ஸ்ரீமத் சங்கராசார்ய சுவாமிகள் முதலிய பெரியரோ எல்லாவகையானும் அவ்வம்சங்கட்கபேதமே அங்கீகரித்துளார்.

சங்கை :—ஹே பகவன்! அவ்வம்சங்கட்கு எவ்வாற்றானும் அபேதமேயுளதாயின், ஒருதரங் கூறுதலாலே தடையொடுங்கும் வாயிலாய் வித்தையினடைவு வடிவ பலத்தின் சம்பவம் கூடியே விடுமாதலின், மும்முறை வம்சத்தைக்கூறல் பயனற்றதாம்.

சமாதானம் :—மும்முறை வம்சத்தின் கூற்றுப் பயனற்றதன்றும்; மற்றோ பய னுற்றதேயாம். ஏனெனின், ஒரேபிராணன் ஜேஷ்டரூபத்தா லாராதனை செய்யப் பெற்றதாய் வெவ்வேறாய பயனையடைவிக்கும். அஃதொப்ப ஒரே இருஷியின் வம் சம் மதுகாண்டத்தின்கண் இராநின்ற நாமங்களாற் சிந்தனை செய்யப்பெற்றதாய் மதுவித்தையின் பிரதிபந்தகமாய பாவகர்மத்தின் நிவிர்த்தி வாயிலாய் மதுவித்தை வடிவ பலத்தையடைவிக்கும். அஃதே யாஞ்ஞவற்கிய காண்டத்தின்கண் ணுள்ள நாமங்களாற்சிந்திக்கப்பெற்றதாய் யாஞ்ஞவற்கிய வித்தையின் பிரதிபந்தகமாயபாவ கர்மங்களின் நிவிர்த்திவாயிலாய் யாஞ்ஞவற்கிய வித்தைவடிவ பலத்தையடைவிக் கும். அஃதே கிலகாண்டத்தின்கண் ணுள்ள நாமங்களாற் சிந்திக்கப்பெற்றதாய்ச் சர்வ வித்தையின் பிரதிபந்தகமாய பாவகர்ம நிவிர்த்திவாயிலாய்ச்சர்வ வித்தை வடிவ பலத்தையடைவிக்கும். ஆகையால், முக்காண்டத்தின்கண் ணும் இருஷிகளின் நாமங்கட்குப் பேதமேயன்றிச சொரூபத்தின்கண்ணே பேதமின்றாம். அல்லது ஸ்திரீ வம்சத்தின்கண் முன்னாசசிறிதுமாத்திரம் விலக்ஷணத்தன்மை கூறிவந் தேம்; ஆனால், அவ்விலக்ஷணத்தன்மையும பேதகாரணமாகமாட்டா தெனவறிக. ஏனெனின், எங்ஙனம் இருபுருஷ வம்சத்தின்கண்ணே ஆக்கினிவேசியனென்னு மிரு ஷியினுக்கும் கௌசிகாயனியென்னும இருஷியினுக்கும் இடையிலிராநின்ற இருஷி களுடைய நாமங்களின் பேதமானது இருபுருஷ வம்சத்தின் பேதத்தை உற்பன்னம் செய்யமாட்டாதோ. அங்ஙனம் சிலவிடத்தே குறைவாக இருஷிகளைக கூறலும், சில விடத்தே அதிகமாக இருஷிகளைக் கூறலும, சிலவிடத்தே இருகுரவரைக் கூறலும், சிலவிடத்தே பிரஹ்மாசூரியரூப இருசம்பிரதாயங்களைக்கூறலும் ஆகிய இவ்வெல்லா வகையாய விலக்ஷணத்தன்மையும ஸ்திரீ வமச வேறறுமையைச சித்தஞ் செய்ய மாட்டாதென்க. அல்லது பிரஹ்மவித்தையின் பிரவர்த்தகராய சூரியபகவானனவர் சுவயம்புவாய பிரஹ்மாவினும வேறல்லர். அவ்வாறே சுவயம்புவாய பிரஹ் மாவினும் விராட்டுபபகவான் உண்மையாய்ப பின்னமன்றாம், அங்ஙனே விராட் பகவானின்றும் இருஷி யுண்மையாய்ப பின்னமன்றாம்; மற்றோ உபாதியால் இவற் றிற்குப் பரஸ்பரம பேதம் தோற்றும். ஆகையால, இருஷிகளின் சொரூபத்திற் குப பேதமின்றாம்; மறறோ அவர்தம நாமமாத்திரத்திற்கே பேதமாம். அல்லது சாஞ்சீவி புத்திரனென்னும் இருஷியே முதலாய்ப் பிரஹ்மாபரியநதம் சுருதியே அவ்விருஷிகளின் சமானரூபததன்மையைக் கூறுகின்றதாதலின், பௌதிமாஷீ புத்திரபரியநதமும் அவ்வம்சங்களிற பேதவுணாவுறும லபேதவுணர்சசியே உறல் வேண்டும். அல்லது, மூன்று வம்சத்தின்கண் ணும் இராநின்ற இருஷிகட்குப் பரஸ் பரம் பேதமாமே லாகுக, அல்லதபேதமாமே லாகுக. எலலாவகையானும் முமுக்ஷு புருஷர் அவ்விருஷிகளை யடிககடி சிந்தனையேசெய்தல் தகுதியாம். ஒருகால் சர்வ இருஷிகளையும் சிநதிபபதறகெவனுக்குச சாமர்த்தியமின்றாமோ, அவனும் பௌதிமாஷீ புத்திரனென்னு மிருஷியையோ அவசியமாகவே சிந்தித்தல்வேண் டும். ஏனெனின், பிரஹ்மவித்தையின் அதிகாரிகளாய நம்மியாவருக்கும் குரு பௌதிமாஷீ புத்திரனென்னும் இருஷியாம். அநதப் பௌதிமாஷீ புத்திர னென்னும் இருஷியானவர் ஸ்திரீ வம்சத்தின்கண் ணும் புருஷ வம்சத்தின்கண்

னும் பிரசித்தராம். இங்ஙனம் வம்ச வியாக்கியான முடிவெய்தியதென வுணர்க. ஹே குழந்தாய்! முன்னர் நீ பயகாரணங் கேட்டாயன்றோ? அதனைக் கூறும் பொருட்டு இவ்விருஷிகளின் வம்சத்தை யாம் நின்பொருட்டுக் கூறினோம்.

இப்போது அவ்விருஷிகளின் வம்சத்தின்கண் ஒரு விசித்திர இதிகாசத்தை யாங் கேட்டுளோம்; அவ்விதிகாசத்தை நீயுங் கேட்பாயாக. அதனைக் கேட்பதனால் நினதையம் நீங்கும். அவ்விதிகாசம் இந்திரரின் அசுவினீ குமாரரின் இரகசியத்தொழிலை வெளிப்படுத்துவதாம். அசுவினீ குமாரர்களைக் கண்டு கோபத்தோடுகூடிய ஒரு இருஷியானவர் இங்ஙனங் கூறுவாராயினர். ஸ்ரீ குரு கூறல்:—ஹே சிஷ்ய! ஒரு இருஷியானவர் ஒரு காரிய சித்தியின்பொருட்டு அசுவினீ குமாரர்தம் சமீபஞ் சென்றனர், அவ்வசுவினீ குமாரரோ ஒரு நிமித்தத்தால் அவ்விருஷியை யவமரியாதை செய்தனர். அதனாற் குரோதத்தோடுகூடிய அவ்விருஷி அசுவினீ குமாரரை நோக்கி:—ஹே அசுவினீ குமாரரே! நீவிர் முன் இரகசியமாய்ப் பாவமியற்றினீர், அதனை யான் நன்றாயுணர்வேன், அகங்காரத்தோடுகூடிய நீவிர் எனது காரியத்தைச் செய்யாதொழிவீரேல், மேகம் மகா மழையைப் பொழிவதொப்ப நுமது பாவகர்மத்தை வெளியாக்கிவிடுவேன், என விவ்வண்ணங்கூறிய இருஷியின் வசனத்தைக் கேட்டு அம்மகான்மாக்களாய அசுவினீ குமாரர் இங்ஙன மாராய்வாராயினர்:—இவ்விருஷி நமது பாவகர்மத்தை வெளிப்படுத்தின், அதனால் நமக்குச் சிறிதேனு மானியின்றாம்; மாறா யுலகின்கண் நமக்குக் கீர்த்தியேயுண்டாம். கருத்திதுவாம்:—அஞ்ஞானியின் பாவ கர்மம் வெளிப்படுமாயின் பரலோகத் துண்டாம் அவனுடைய துர்க்கதியை விசாரித்து உலகரெல்லாம் அவனை நிந்திப்பர். ஆன்ம ஞானியின் பாவ கர்மத்தைக் கண்டு உலகர் நிந்தியார்; மாறா யிங்ஙனமன்றோ இயம்பா நிற்பர்: இத்தத்துவ வேத்தாவாய ஞானியானவன் இத்தகைய உக்கிரமான பாவகர்மத்தைச் செய்யினும், ஆன்மஞான மகிமையால் இவனது ரோமமாத்திரமும் அசையாதாம். இங்ஙனமியாவரும் தத்துவவேத்தாவாய புருஷனைக் கீர்த்திப்பர் எனத் தமது மனத்தின்கண்ணே விசாரஞ்செய்து அவ்வசுவினீ குமாரர் கூறுவாராயினர்:—ஓய் இருஷியே! குரூரமாய புருஷனைப்போல யாங்கள் அத்தகைய எப்பாவத்தை இயற்றினோம், எவ்வாறு யாங்கள் அப்பாவகர்மத்தை யியற்றினோமோ, எந்நிமித்தத்தால் இயற்றினோமோ, அவ்வெல்லா விருத்தாந்தத்தையும் எம்பொருட்டு நீர்கூறும். ஓய் இருஷியே! நீர் எமது இரகசிய பாவத்தை வெளிப்படையாய்ச் சொல்லாதொழிவீரேல், யாங்கள் உமது காரியத்தைச் சித்தஞ்செய்து தரமாட்டோமாதலின் உமது காரியசித்தியின் பொருட்டு எமது பாவகர்மத்தைப் பிரகடம்செய்யும்; பிரகடம்செய்வீரேல் உமது காரியத்தைச் சித்தஞ்செய்து தருகின்றோம். இது எங்களுண்மையான வசனமெனக் கொள்ளும். இவ்விதமாகக்கூறிய அசுவினீ குமாரரின் வசனத்தைக்கேட்டுத் தமது காரியசித்தியின் பொருட்டு அவ்விருஷியானவர் அவருடைய குகியமாய பாவத்தையும் அதன் நிமித்தத்தையும் அவர்முன்பு கூறத்தொடங்கினர். இருஷி கூறல்:—ஹே அசுவினீ குமாரரே! பிரஹ்மாவின் சீடராய விராட்பகவானே முதலாய்ப் பௌதிமாஷ்ய பரியந்தம் சிஷ்ய பரம்பரையால் விசித்திரமாய் இப்புருஷ வம்சம் பிரசித்

தித்துளது, இதன்கண்ணே பிரஹ்மாவினின்றுங் கீழ்க்கீழ்ப்பன்னிரண்டாவதாய்த் தத்யங் கதர்வணரென்னும் இருஷியுளார். அவர் தைவ அதர்வணரென்னும் இருஷியினுக்குச் சீடரானுர். உம்மிருவருக்குங் குருவானுர். அவர் பிரஹ்ம வித்தையோடுகூடியவர், மதுகாண்டப்பொருளை உணர்ந்தவர். அத்தகைய அவர் உம்மிருவருக்கும் வேதபாடத்தையும், வேதப் பொருளையும் படிப்பித்தனர்; ஆனுல் உமது வைராக்கிய அபாவத்தைக் கண்ணுற்று அவர் உம்பொருட்டு, உபநிஷத் துருவ வேதாந்தபாகப் பொருளைப படிப்பித்திலர்; மற்றோ அர்த்தத்தோடுகூடிய வேதத்தின் கர்மகாண்டத்தைப் படிப்பித்தனர். அவ்வாசிரியர்பானின்றும் வேதத் தையும் அதன்பொருளையும் படித்தபடி நீங்கள் துவாஷ்ட்ர விசுவரூபரென்னும் இருஷிக்குக்கூறினீர். அவரோ, ஆபூதியென்னுந் துவாஷ்டருக்குக் கூறினுர், அவரோ அபாஸ்யரென்னும் அங்கிரச இருஷியினுக்கு வேதத்தை விளம்பினர். இங் ஙனம் அவ்வேதவித்தை பரம்பரையாய்ப பௌதிமாஷ்யரென்னும் இருஷியின்கண் அடைவுற்றது. அப்பௌதிமாஷ்ய ரென்னும் இருஷி மனுஷ்யலோக வர்த்தி களாய் அதிகாரிகளாய நம்பாவா பொருட்டும் குருவானுர். இங்ஙனம் வேத வித்தையின் சம்பிரதாயத்தைப் பிரவிர்த்திப்பித்து அத்தத்யங் கதர்வணரென் னும் இருஷியானவர் பிரஹ்மஞான மகிமையால *மகாயசசை யடைந்திருந்தனர். ஒரு தேசத்தே ஆசிரமஞ்செய்து நிவாசம செய்துகொண்டிருந்தனர். அங்ஙனம் இருந்தவர் பக்ஷபாதமறறவராய்த் தேவதைகட்கும், அசுரர்கட்கும், மனுஷ்யர் கட்கும் சுகத்தை யுண்டாக்கினர். கருத்திதுவாம:—எவ்வெப்புருஷருக்குச் சுவர்க்கரூப பலப்பிராப்தியில் இசசையுளதாமோ, அல்லது பசு புத்திராதி ரூப பலத்தை யடைவதில இசசையுளதாமோ, அல்லது வைரியைக் கொல்வதில் இச்சையுளதாமோ, அவ்வப்புருஷருக்கு அவ்வவ் வுபாயத்தோடுகூடி அவ்வப் பலத்தை யடையுமாறு உபதேசித்துவநதார். உலகருக்கு இதமுண்டாம் பொரு ட்டு அக்கர்மங்களின் பரிணும காலத்தின்கண் உண்டாம் சுகதுக்கங்கள் யாவற் றையும் உபதேசஞ்செய்து வநதனர். கருத்திதுவாம்:—துறக்க அடைவின் உபா யங்கேட்பின் அவன்பொருட்டு இது கூறுவர்; தர்சபௌர்ணமாச மென்னும் யாகத்தை நீ செய்வையேயாயின் நினக்குச சுவர்க்க அடைவுண்டாம்; ஆனுல், புண்ணிய கருமம் கழிந்துவிடின் சுவர்க்கத்தினின்றுங் கீழே தள்ளுவதால் மகா துக்கமுண்டாம். மீண்டும் உத்தம குலத்தின்கண் நீ பிறப்பாய். எவனேனும் சத் துருவைக்கொல்ல உபாயம் அவர்பாற் கேட்பின் அவன்பொருட்டு இங்ஙனங் கூறு வர்:—நீ சேனயாகத்தைச் செய்வையேயாயின் நினது சத்துருவோ மரிப்பன். ஆனுல், பின் நினக்கு நரகத்தின் அடைவுமுண்டாம். எவனேனும் சித்தசுத்தி உபா யத்தைத் தத்யங் இருஷிபாற் கேட்பானுயின், அவர் அவன்பொருட்டோ பலத்தின் விழைவை விடுத்து நீ கர்மங்களைச் செய்வையேயாயின் நினக்குச் சித்த சுத்தியா னது உண்டாம்; பின் சிரவணுதி வாயிலாய் ஆன்மஞானத்தின் பிராப்தியும்நினக் குண்டாமெனக் கூறுவர். இங்ஙனம் அத்தத்யங்கதர்வண இருஷியானவர் சர்வ ஜீவர்களின் பொருட்டும் ஹிதோபதேசத்தைச செய்தனர். எவனேனும் பிரஹ்ம

* மகாயசசை=பெருங்கீர்த்தியை.

வித்தையையடையும் வேட்கையனாய் அத்தத்யங் இருஷியின்சமீபத்தேவரின் அவர் அவன் பொருட்டோ, விவேகம், வைராக்கியம், சமாதி, ஷட்சம்பத்தி, முமுக்ஷுத் தன்மை யென்னும் சாதன சதுட்டயங்களை நீ முதலில் சம்பாதனம் செய்து வருவையேற் பின் உன்பொருட்டு, யான் பிரஹ்ம வித்தையை உபதேசிப்பேன் எனக் கூறுகிறபர். இவ்வண்ணம் அநத மகரிஷியானவர் யாவருக்கும் ஹிதோபதேசத்தைச் செய்துவந்தனர்; அவர் கீர்த்தியானது மூவுலகின்கண்ணும் பத்துத் திசையின்கண்ணும்பரவியது. ஹே அசுவினீ குமாரரே! அத்தத்யங் மகரிஷிக்குச் சர்வப்பிராணிகளிடத்தும் சிநேகமிருப்பினும், நீங்கள் இருவரும் பாலிய அவஸ்தையே முதலாய் அமமுனிவரின் சீடராயுள்ளீராதலின் நம்மிருவர்பாலும் அதி சிநேகம் வைத்திருந்தார். இவ்விதச சிநேகதமோடுகூடிய தத்யங்கதர்வண முனிவரின்பால் நீர் பிரஹ்மவித்தையை யடைய யாசித்தும் உமககு விஷயாசக்தி யிருப்பதைக் கண்டு அவர் நம்பொருட்டு பிரஹ்மவித்தையை ஈந்திலர். விவேகாதி சாதனங்களைத் திடம்செய்விக்கும் பொருட்டு, அடிக்கடி இங்ஙனங் கூறுவாராயினர் :—அகாலத்தில் பெய்யும் மழை பயனற்றதாமாபோலும், சூரிய சமீப தீபம் பயனற்றதாமாபோலும், முன்புசிதத அன்னம அஜீரணமாகபபின் புசித்த அன்னம் பயனற்றதாமாபோலும, அவ்வஸ்துவின் இச்சையற்றானுக்கு அவ்வஸ்துவைக் கொடுத்தல் பயனற்றதாமாபோலும், விவேகாதி சாதனசதுஷ்டயரூப அதிகாரமின்றியவனுக்கு உபதேசித்த பிரஹ்மவித்தை பயனற்றதேயாம். ஆகையால், பிரஹ்ம வித்தையை யடையுமபொருட்டு விவேகாதி சாதன சதுஷ்டயரூப அதிகாரத்தை நீவிர் சம்பாதியுமென அத்தத்யங்கதர்வண முனிவர் நம்பொருட்டு உபதேசித்தனர். ஹே அசுவினீ குமாரரே! ஒரு காலத்தில் நீர் இருவரும் ஒரு நிமித்தத்தால் தேவராஜாவாய இநதிரனை அவமரியாதை செய்துள்ளீர், சுந்தரரூப அபிமான முடையவராயும், வித்தை யபிமான முடையவராயும் நீரிருநததனாற்றான் தேவ ராஜாவாய இநதிரரையும அவமானம் செய்தீர். அவ்வவமானத்தைக கண்ட இந்திரன் கோபத்தோடு கூடியவனாய் நமது யாகபாகததை நீக்கினன்; மூவுலகத்தின்கண்ணும் இவ்வகையாய ஆஞ்ஞையையும செய்தனன் :—ஹே சம்பூர்ண உலகரே! இவ்வசுவினீ குமாரரிருவரும சிகிச்சை செய்பவராதலின், அசுத்தராம், முற்பிறபபின் கண்ணும் நீச ஜாதியுடையவராம் ஆகையாலும் அசுத்தராம்; அசுத்த புருஷரின்பொருட்டு யாகபாகமீதல் உசிதமன்றாம. ஆதலின், இன்று முதல்எப்புருஷனும இவ்விருவர் பொருட்டும் யாகபாகததைக கொடுத்தல்கூடாது. ஹே அசுவினீ குமாரரே! இங்ஙனம் தேவராஜாவாய இநதிரர் சர்வ தேவதைகள் முனிவர்கள் எதிரிற் கூறவே உமமிருவரின் பாகம் எல்லா யாகங்களினும் இல்லாமற்போயது. யாகபாகமற்ற நீவிரிருவரும் அத்தியந்தம தாபத்தை யடைந்தீர். தத்யங்கதர்வணரென்னும குருவின்பாற் சென்று மீண்டும் யாகபாகத்தை யடையும் உபாயத்தை நீர் கேட்டீர். ஹே குரவரே! இன்று தேவராஜாவாய இந்திரரானவர் சபையின் மத்தியில் எங்களிருவருக்கும் யாகபாகமில்லாமல் நீக்கினர்; இப்போது நாங்களிருவரும் என்ன உபாயம் செய்யத்தக்கது என்பதைத் தாங்கள் தயைசெய்து கூறவேண்டும். ஹே தேசிகோத்தமரே! தாங்கள் ஆஞ்ஞை செய்யின்

சம்பூர்ண தேவதைகளோடுகூடிய இந்திரரைப் போரால்திருப்தி செய்வதிலும் யாங்கள் வல்லேம். இதன்கண்ணே சிறிதுமாத்திரையும் தாங்கள் ஐயப்படவேண்டியதின்றாம்; ஆனால் தங்கள் ஆஞ்ஞையின்றி யாங்கள் போர்புரிவதில் வல்லமையுடையவரல்லேம்.

இப்போது ஆசிரியரின் ஐயம் நீங்கும்பொருட்டுத் தங்கள் வல்லமையை அசுவினீ குமாரர் நிரூபித்தல்:—ஹே ஆசிரியரே! எங்களிருவருள் ஒருவரேனும் மூவுலகத்தோடு கூடிய பிரஹ்மாவையும், விஷ்ணுவையும், மகாதேவரையும் சம்பூர்ண தேவதைகளோடு கூடிய இந்திரரையும் ஜயிப்பதில் எங்கட்கு வல்லமையுண்டேல் யாங்களிருவருங் கூடின் யாரைத்தான் ஜயிக்கமாட்டோம்; யாவரையும் ஜயங்கொள்வதிற் சமர்த்துடையே மென்பதொருதலேயாம். ஏனெனின், மிருதசஞ்சீவினீவித்தையை யாங்களறிவோமாதலின் எசசஸ்திரத்தானும், எவ்வஸ்திரத்தானும், எவ்வியாதியானும் எமக்கு மரணம் கிடையாது. ஹே தேசிகோத்தமரே! தேவதைகள, அசுரர்கள், மனுஷரகள் என்னுமிவர்கள் செய்யும் பல்வகையாய மாயைகளும எங்களைச சிறிதுமாத்திரையுந தீண்டாவாம. சர்பபாதிகளிடத்திருககும் ஜஙகமரூப விஷமும், காலகூடாதி ஸ்தாவரவிஷமும் மற்றுமுள்ள பல்வகையாய எல்லாவிஷஙகளுமம எங்கள் மயிர்மாததிரையையும அசைக்கக் கூடியனவன்றாம். ஹே ஆசிரியேந்திரரே! பலவகையாய ஔஷதங்களும், பல்வகையாய மந்திரங்களும, பல்வகையாய பூதபிசாசாதிகளும், சேனயாகரூப அபிசாரகர்மமும, பிராஹ்மணரின் பல்வகையாய சாபங்களும், மரண சாதனங்களேயாயினும் அவையாவும் எமமைத தீண்டவேமாட்டா. தங்கள் கிருபையாலும் இயல்பாயும் யாங்கள் சித்தியோடு கூடியுள்ளேமாதலின் அமமாயாதி யெவற்றையும் நீக்கும் உபாயத்தை யாங்களறிவேம். ஆகையால், எங்களை ஜயிக்க எவருஞ் சமர்த்தரன்றாம். ஹே ஆசிரியோததமரே! போரின்றியும் யாங்களிருவரும் தேவதைகளை ஜயிப்பதிற் சமர்த்துடையவராவோம். சுவர்க்கத்தின்கண்ணே பிரவாகமுற்ற ஸ்ரீ கங்காநதியின்கண் ஒருமருநதை யாங்கள் கலக்கிவிட்டோமாயின் சம்பூர்ண தேவதைகளோடு கூடிய இநதிரர ஒருகணத்தி லிறந்துவிடுவர். ஹே ஆசிரயோத்தமரே! ஒருமநதிரப பிரயோகத்தால் சம்பூர்ண தேவதைகளோடு கூடிய இந்திரரது சித்தத்தில் சுவர்க்கத்தினின்றும வைராக்யமுண்டாமபடி செய்துவிடச் சமர்த்துடையோம். அன்றியும அவரைச சுவர்க்கலோகத்தினின்றும் பூவுலகின்கண்ணே தள்ளிவிடவும் சமாத்துடையோம், மேலும் அன்னிய திசையிலிருக்கும் அவரை மோகமடையுமபடி அன்னியதிசையின்கண்ணே இருக்குமாறு செய்யவும் வலலேம. ஹே ஆசிரியோத்தமரே! தேவதைகட்குச் சுவர்க்கத்துள்ள அப்சரசின் (தேவதாஸ்ரீயின்) கண்ணே காமாபிலாஷைபாம்; மானுடஸ்திரீகளிடத்தே காமாபிலாஷையுண்டாகாது என்றாலும் சம்பூர்ண தேவதைகளோடுகூடிய இந்திரர்க்கும், சம்பூர்ண முனிவருக்கும், மானுட ஸ்திரீகளிடத்தே அபிலாஷையுண்டாமாறு செய்யச் சாமர்த்தியம் எங்களிடத்துளது. ஹே! அசுவினீ குமாரரே! உமதாசிரியருக்கு விசுவாசமுண்டாம் பொருட்டு, இம்மொழிகளால் உங்கள் பலத்தைக் கூறினீர்கள்; இம்மொழிகளைக் கேட்ட

உமது குருவானவர் தமது மனத்தில் நெடுநேரம் ஆராய்ந்து உங்கள்பொருட்டு இவ்வண்ணங் கூறுவாராயினர் :—ஹே அசுவினீ குமாரரே ! எல்லாப் பகைவரையும் நாசமாக்கும் சமர்த்துடையவராயிருந்தும் குரோதரூப உட்சத்துருவின் வசமாதல் உங்கட்கு நலமன்றாம். கருத்திதுவாம் :—பாகிய சத்துருக்களை ஜயிப்பதில் நீவிர் சமர்த்தடைந் திருப்பதுபோலக் காமக்குரோதாதி யுட்சத்துருக்களை ஜயிப்பதின்கண்ணும் நீர் சமர்த்தையடைமின்.

இப்போது குரோதத் தன்மையின்கண் சத்துருத்தன்மையைக் காண்பிப்பாம் :—ஹே அசுவினீ குமாரரே ! உம்மிருவருக்கும் இந்திரரேனும் வேறெவரேனும் சத்துருவன்றாம, மற்றேறு இக்குரோதமே உமது சத்துருவாம்.

சங்கை:—ஹே பகவன்! குரோதத்தைத் தாங்கள் சத்துருவென்று சொல்லுமாறு அக்குரோதஞ் செய்யும் அபராதமியாதோ ?

சமாதானம் :—ஹே அசுவினீ குமாரரே ! சர்வ தேவதைகளாய உங்களாற் பூஜித்தற்கு யோக்கியமாய இந்திரரை நாசஞ்செய்வதிலுங்கட் குண்டாயிருக்கும் பிரவிர்த்தியானது கேவலம் கோபமகிமையானேயாம், கோபமின்றி இத்தகைய நிஷித்த கர்மத்தின்கண் எபபுத்திமானுக்கும் பிரவிர்த்தி யுண்டாகமாட்டாது. மற்றேறு, கோபவசமாயே ஜீவன் குருமுதலிய விருத்த புருஷரைத் திரஸ்காரம் செய்வதில் முயலவன். ஹே அசுவினீ குமாரரே! முன்னர் உங்களுக்கொருகாலும் இந்திரரை வெற்றிகொள்ள வேட்கை யுண்டாகவில்லை யல்லவா ? இக்கால் உங்களுக்கு இந்திரரை வெற்றிகொள்ள விழைவுண்டாயிருபபதன் காரணமென்னே ; இதனை நீவிரே விசாரித்துபபாரும். குரோதமின்றி வேறொருகாரண மிதன்கண் இன்றாம் ; மற்றேறு, உடன்பாட்டானும் எதிர்மறையானும் குரோதமே காரணமாம். ஆதலின் அஃதே உங்களது பரமசத்துருவாம. ஹே அசுவினீ குமாரரே ! சம்பூர்ண சத்துருக்கட்கும இராஜா காமக்குரோதமும் அவற்றின் கிங்கரராய இந்திரியங்களுமாம. அவ்வியாவற்றையும் ஜயிக்காமல் தேவசரீர அடைவுண்டாகாது ; மற்றேறு காமக்குரோதாதிகளை வெற்றிகொள்வதினுலேயே தேவதா சரீரப் பிராபதியுண்டாம். ஆகையால் இஃதுணர்ந்துகொள்ளலாமன்றே, நீவிரிருவரும் முற்பிறப்பில் காமக்குரோதாதி இராஜாவையும், இந்திரிய ரூபகிங்கரரையும், வெற்றிகொண்டீர் ; அதனுலே இஞ்ஞான்று உங்கட்குத் தேவதா சரீரப்பிராப்தி யுண்டாயது. எவ்வாற்றலால் முன்னர் நீர் காமக்குரோதாதிகளை வசம்செய்தீரோ அவ்வாற்றலிப்போது யாண்டுசென்றதோ. ஹே அசுவினீகுமாரரே ! எமது மனத்தில் இங்ஙனமறிகின்றேன் :—ஒரு 'தேசத்தரசன் வேறொரு தேசத்தரசனை வெற்றிகொள்ளின் .மற்றொரு காலத்தே அவ்வரசன் ஆற்றலையுற்று முன் வைரத்தை நினைந்து சென்றவ்வரசனை வெற்றிகொள்வன். அஃதொப்ப முற்பிறப்பில்நீவிரிருவரும் காமக்குரோதாதி சகிதசம்பூர்ண இந்திரியங்களையும் ஜயம்செய்து வந்தீர், அவ்விந்திரியரூபகிங்கரர் பூர்வவைரத்தை நினைந்து குரோதரூப அரசனைக்கூட அழைத்துக்கொண்டு சுவர்க்கத்தின்கண்ணே உம்மை ஜயங்கொள்ள வந்திருக்கின்றனர். ஹே அசுவினீ குமாரரே! குரோதரூப உட்சத்துருவை வெற்றிகொள்வதில் உங்கட்குச் சாமர்த்தியமின்றேல், இந்திரரை ஜயிப்பதில் எவ்வாறு சாமர்த்திய முண்டாம். மற்றேறு இந்திரரை ஜயிப்பதில் உமக்காற்றலின்றாம்.

தேவதைகளின் சபையின்கண் இந்திரர் வசனரூப பாணங்களால் உங்களை முன்னர் தாடனம் செய்ததும் காமரூப சத்துரு வசப்பட்ட உங்களைக்கண்டேயாம். கருத்திதுவாம் :—சிறிதுங்காமமில்லாத பிரஹ்மஞானிக்கு எல்லா உலகும ஆன்மசொரூபமாமாதலின் அவரைத்தாடனம செய்வோா எவருமின்றும். காமமுடைய புருஷனுக்கே யாண்டாண்டும் நிராதரமுண்டாம்.

இப்போது குரோதத்தைபபோன்றே காமத்தின்கண்ணும் உடன்பாடெதிர் மறையால் அநர்த்த காரணத்தன்மையைக் காண்பிப்பாம் :—ஹே அசுவினீ குமாரரே! தேவராஜாவாய இநதிரர் முன்னர் உங்களையேன் நிராதரம் செய்யவில்லை, இப்போதேன் செய்தனரீ என்னும் விசாரமறறவராயிருக்கின்றீர். உங்களது இந் நிராதரத்தின்கண் காமமன்றிக் காரணம் வேறின்றும். மற்றோ காமமேகாரணமாம். எத்துணை உம்பாற் காமம் உதிக்கவில்லையோ அத்துணை இந்திரர் உம்மை நிராதரம் செய்யவில்லை. எப்போது உம்பாற காமோறபத்தி உண்டாயதோ. அப்போது இந்திரர் உம்மை நிராதரம் செய்தனா. ஆகையால் காமமே உமது நிராதர காரணமாம். ஹே அசுவினீ குமாரரே ! சம்பூரண தேவதைகளாற் பூஜித்தற்கு யோக்கியராய இந்திரரை வெற்றிகொள்வதில் நீங்களிருவரும எங்ஙனம சமர்த்துடையராவீர். மற்றோ இந்திரரை வெறறிகொள்வதிற சமாததுடையராகீர். என்னை ? ஒரு காமரூப சத்துரு அமரர் யாவரும நிறைநத *அவையின்கண் உம்மை அவமானம் செய்வித்ததன்றோ. அக்காமரூப ஒரு சருத்துவை வெற்றிகொள்வதிற் சாமர்த்தியம் உங்கட்கின்றேல் சர்வ தேவதைகளோடுகூடிய இநதிரரை நீர் எவ் வண்ணம் வெற்றிகொள்வீர். கருததிதுவாம் :—முன்னர்க் காமரூப ஒரு சத்துரு உமக் கவமானததை உண்டாககினன் ; இபபோது குரோதரூப புத்திரனோடு கூடிய அக்காமரூப சத்துரு உமக்கென்ன அநர்த்தத்தைத்தா னியற்றன் ; மற்றோ எல்லா அநர்த்தத்தையுமே செய்வன். ஹே அசுவினீ குமாரரே! சம்பூர்ண தேகதாரிகளாய ஜீவர்கட்குக் காமகுரோதமே பரம சத்துருவாம். எப்புருஷன் காமக்குரோதரூப உட்சத்துருக்களை உபேக்ஷித்துப பாகிய இராஜாதி சத்துருக்களை வெற்றிகொள்ள இசசிபபனோ, அபபுருஷன் அத்தியந்தம் மூர்க்கன். ஆகையால் உங்கட்குச சத்துருக்களை வெறறிகொள்ளச சாமர்த்தியமிருப்பின் காமக் குரோதரூப மகா பலவான்களாய சத்துருக்களை நீவிர் வெற்றிகொண்மின்.

இப்போது காமத்தின் மகா மகிமையைக் காண்பிப்பாம் :—ஹே அசுவினீ குமாரரே ! சம்பூர்ண ஜகத்தை யுற்பன்னம் செய்பவராய பிரஹ்மாவையும் இக் காமன் ஜயித்துளான், சம்பூர்ண ஜகத்தைப் பாலனம்செய்பவராய விஷ்ணுவையும் இக்காமதேவன் வெற்றிகொண்டுளான், சம்பூர்ண ஜகத்தையும் சம்ஹாரம் செய்யாநின்ற உருத்திரனையும இக்காமதேவன் ஜயம்செய்துளான், சம்பூர்ண தேவதைகட்கும் அதிபதியாய இந்திரனையும் இக்காமதேவன் வெற்றி கொண்டுளான். ஹே மைந்தர்காள்! பிரஹ்மாதி ஈஸ்வரர்களையும் காமதேவன் ஜயித்தனனேல் ஸ்திரீ கிரீடையில் மிகவுமாவலுற்ற அந்நிய தேவதைகளைக் காமதேவன் ஜயிக்கானென்பதில் யாது கூறக் கிடந்துளது ; மற்றோ சர்வப் பிராணிமாத்திரத்

* அவை = சபை.

தைக் காமதேவன் தன் அதீனஞ்செய்வன். சம்பூர்ண ஜகத்தையும் உற்பத்தி, திதி, இலயஞ்செய்யும் பிரஹ்மா, விஷ்ணு, மகேசுரர் முதலிய ஈஸ்வரரிடத்தே காமாதீனத்தன்மை சம்பவியாதாயினும் யாண்டுங் காமத்தின் மகிமையை யறிவிக்கும் பொருட்டுப் பிரஹ்ம, விஷ்ணுவாதி ஈஸ்வரர் லீலைமாத்திரையால் காமாதிகளைத் தரித்துளார். உண்மையாய்ப் பிரஹ்மாதிகள் காமாதிக ளற்றவரேயாவர். ஹே அசுவினீ குமாரரே! எல்லாத் தேகதாரி ஜீவர்கட்கும் பகையாய காமமே உங்களால் ஜயிக்கத்தக்கதாம. ஆனால் அக்காமதேவனை நீவிர் ஜயிக்கவில்லை, மாறாய்க் காமதேவன் உம்மிருவரையும் ஜயங்கொண்டனன். இக்காமதேவனைக காட்டினும குரோதம் அதிசயமாய்ப் பலவானுமாதலின், குரோதத்தை ஜயிப்பதில் நீவிர் அத்தியந்தம் முயலவேண்டும்; ஏனெனின், அநந்தம்வகையாய உபாயங்களால் முனிவராயினோர் காமதேவனையோ தம் வயப்படுததியுளார், ஆனால் காமதேவனது புத்திரனாகிய குரோதத்தை ஜயமகொள்வதில் அம்முனிவரும் சமர்த்தராகிலர். இக்காமக் குரோதரூப பிதா புத்திரரிருவரும் மகா சூரவீரராவர். இவரை ஜயிப்பதில் எவர்க்கும் சமர்த்தின்றாம்; மற்றோ சம்பூர்ண ஜகத்தையும ஜயிதது இக்காமக் குரோதமென்னு மிருவரும் வெறறியாற் †கவினுற்று விளங்காநிற்பர். ஹே அசுவினீ குமாரரே! நீவிர இருவரும் பகைவரை யழிப்பதிற் சமர்த்தரேல் அத்தியந்தம் மானத்தோடு கூடியவரேல்; முதலில் காமக்குரோத ரூபசத்துருவை வெற்றிகொண்மின்; பின்னர்த் தேவராஜாவாய இநதிரரை வெற்றிகொள்வதில் முயன்மின். இருஷி கூறல்:—ஹே அசுவினி குமாரரே! இவ்வண்ணம குரோதத்தைச சாந்திசெய்யும வசனங்களால் அத்தத்யங் இருஷியாய உமது குருவானவர் வைராக்கிய நிவிர்த்தி உபதேசத்தை உமபொருட்டுச செய்தனரெனினும் குரோதரூப அக்கினியால வெதும்பிய நீவிர இருவரும அமமொழிகளாற சாநதியைச சாரவில்லை; அதைக்கண்ட உமது ஆசிரியர் சாமபேதமென்னும் இரண்டு உபாயத்தையும் விட்டொழித்து உம்மிருவரையும் சாந்தராக்கும்பொருட்டு, உபபிரதானரூப உபாயததைச செய்தனர். கருத்திதுவாம்:—சாமபேத உபப்பிரதான தண்டமென்னும் நான்கு உபாயங்களால் உலகின்கண்ணே பிராணிகள் வயபபடும். அவற்றுள் பிரியவசனங்களாற் குரோதாதிகளின் நிவிர்த்தியைச சாமமென்பர். அந்நிய சத்துருவின் பக்ஷபாதத்தினின்றும் நீக்கித் தனது பக்ஷத்திற் கொண்டுவருதலைப பேதமென்பர். மனவாஞ்சித பதாரததங்களை ஈயும் பிரதிஞ்ஞையை உபப்பிரதான மென்பர். தாடனத்தைத் தண்டமென்பர். இந்நான்கு உபாயங்களில், பிரிய வசனங்களாற குரோதாதிகளின் நிவிர்த்திவடிவ சாமோபாயத்தையும், காமக்குரோதாதி சததுருக்களின் பக்ஷபாதத்தினின்றும் நீக்கித் தனது சமத்தன்மைவடிவ பக்ஷத்தின்கண்ணே ஸ்தாபனவடிவ பேதோபாயத்தையும் தத்யங் இருஷியானவர் இயற்றினர். ஆனால், அச்சாம பேதரூப உபாயத்தால் அசுவினீ குமாரர்கட்குக் காமக்குரோதாதிகளின் சாந்தியுண்டாகவில்லை; ஆதலின் அம்மதிமானய தத்யங் இருஷியானவர் அவ்விரண்டு உபாயத்தையும் விட்டொழித்து உபப்பிரதானவடிவ மூன்றாவது உபாயத்தைச் செய்தனர்.

---

† கவின் = அழகு.

இப்போது அவ்வுபப்பிரதானரூப உபாயத்தைக் காண்பிப்பாம்:—ஹே அசுவினீ குமாரரே! எல்லாப் பிராணிகளிடத்தும் வைர பரித்தியாகம் செய்யின் எந்தப் பிரஹ்மவித்தையின் அடைவின்பொருட்டு முன்னர் நீங்கள் எம்மை வேண்டிக்கொண்டீர்களோ, அந்தப பிரஹ்மவித்தையை யாம் உம்பொருட்டு உபதேசிப்போம்; ஆகையால், உங்கட்குப பிரஹ்மவித்தையை யடையவிழை விருப்பின் தேவராஜாவாய இநதிரரிடத்தே வைர பரித்தியாகம் செய்ம்மின். இருஷி கூறல்:—ஹே அசுவினீ குமாரரே! இவ்வாறுய வசனத்தை உம்பொருட்டுத் தத்யங் இருஷி கூறியபோது நீவிர் இருவருமம இங்ஙனங் கூறுவீராயினீர். ஹே எமது தேசிகேந்திரரே! சாமரூப உபாயத்திற்கும் பேதரூப உபாயத்திற்கும் இது காலமல்ல. உபபிரதானரூப உபாயத்திற்கும் இது காலமல்ல. ஏனெனின், விவேகாதி சாதனசதுட்டயரூப அதிகாரத்தை நீர் சமபாதிப்பீராயின் யாம் உம்பொருட்டுப் பிரஹ்மவித்தையை உபதேசம் செய்வேமென, முன்னர் அநந்தவாரம் கூறியுள்ளீர்களன்றோ; ஆகையால், பிரஹ்மவித்தையின் உலோபத்தாலும் இந்திரனோடு வைர பரித்தியாகத்தை யாங்கள் செய்யேமாதலின் கிருபையினால் எம்பொருட்டுப் போாபுரிய ஆஞ்ஞையை ஈயவேண்டும். ஒரு கணப்போதில் சம்பூர்ண தேவர்களோடுகூடிய இந்திரரை யாங்கள் ஜயித்து விடுவோம். இதன்கண் தாங்கள் சிறிது மாத்திரையும் ஐயமுறவேண்டிய அவசியமில்லை. ஹே அசுவினீ குமாரரே! இவ்வாறுய உஙகள் வசனத்தைக்கேட்டு உமது ஆசிரியர் உபபிரதானரூப உபாயததையுமம விட்டொழித்து உம்பொருட்டுத் தண்டரூபியாய வசனங்களைக கூறுவாராயினர். அததத்யங் இருஷியோ உங்கட்கு இதத்தையே செய்யவிருப்பமுடையவா; சர்வப பிராணிகளிடத்தும் சமான திருஷ்டியுடையவர்.

இப்போது அத்தண்டரூபி வசனங்களை நிரூபிப்பாம்:—ஹே அசுவினீ குமாரரே! எப்புருஷன் ஐநது உயிாகளையேனும் இரக்ஷிககின்றனனே, அப்புருஷனைப் பஞ்சபூதங்களையும் சரீரமாயுடைய ஈஶ்வரனென அறிமின். அவ்வைந்து உயிரைக் காக்கும் புருஷனை எவனேனுமம கொலவனேல் அவன் ஈஶ்வர சகித பஞ்சபூத ஸ்வரூப சம்பூரண விசுவத்தைக கொன்றவனாவன். கருததிதுவாம்:—ஈஶ்வர சகித சம்பூர்ண விசுவத்தைக் கொன்றுண்டாம் பாவத்தை அப்புருஷன் அடைவன். ஹே அசுவினீ குமாரரே! ஐந்து ஜீவர்களை இரக்ஷிக்கும் புருஷனைக் கொல்வதால் இத்துணைப் பாவமுண்டாமாயின், மூவுலகங்களையுங் காப்பாற்றும் இந்திரரைக் கொல்வதால மகாபாவமுண்டாம் என்பதிற கூறவேண்டுவதும் உண்டோ? ஹே மைந்தர்காள்! எவன் உபகாரஞ்செய்யாநின்ற தனது சுவாமியைக் கொலலுகின்றனனோ, அவ்வதமன் சம்பூர்ண குடும்பத்தோடுகூடிய தனது மாதாவையும் பிதாவையும் கொன்றவனாவன். சம்பூர்ண குடும்பசகித தனது தாய் தந்தையரைக் கொல்வதாலுண்டாம் பாவத்தை எஜமானத் துரோகியடைவனென்பது கருத்தாம். சாஸ்திரத்தின்கண்ணும் பிரஹ்ம ஹத்யாதி பாவங்களின் நிவிர்த்தியுபாயங் கூறப்பெற்றுளது; ஆனால் செய்ந்நன்றி கொன்றதோஷ ஜன்னிய பாவநிவிர்த்தியின் உபாயமோ எச்சாஸ்திரத்தின்கண்ணும் இயம்புக்கானேம்.

ஆகையால், செய்ந்நன்றி கொன்ற தோஷத்திற்குச் சமானமாக எப்பாவகர்மமும் உலகின்கண்ணின்றாம். ஹே அசுவினீ குமாரரே! எப்புருஷன் தனது சுவாமிக்குத் துரோகம் செய்கின்றனனோ அவ்வதமபுருஷன் அந்ததாமிஸ்ரமெனப் பெயரிய அருநரகின்கண்ணே நெடுங்காலபரியந்தம் நிவாசஞ்செய்வன். கருத்திதுவாம்:—பிரஹ்மஹத்திசெய்யும் புருஷனைக்காட்டிலும் தனது சுவாமிக்குத் துரோகஞ்செய்யும் புருஷன் அத்தியந்தம் அதமனாம்; ஏனெனின், பிரஹ்மஹத்தி செய்யாநின்ற புருஷன் ஆயிரங்கோடி கற்பங்களின்பின் நரகரூபீ சமுத்திரத்தினின்றும் ஒருகால் முக்தனாதல் கூடும். ஆனால், தனது சுவாமிக்குத் துரோகம் செய்யாநின்ற செய்ந்நன்றி கொன்ற புருஷன் ஒருகாலும் நரகத்தினின்றும் விடுபடான்; ஆகையால் செய்ந்நன்றி கொல்கைவடிவப் பாவகர்மத்திற்குச சமானமாக எப்பாவகர்மமும உலகத்திலின்றாம். ஹே அசுவினீ குமாரரே! பூமியின் ஏகதேசத்தை இரக்ஷிக்கும் ஒரு சிற்றரசனேனும் வைரிகளாற் கொல்லத்தக்கவனன்றாயின், மூவுலகத்தையும் ரக்ஷிக்கும் இந்திரர் எங்ஙனங்கொல்ல யோக்கியராவர்; மற்றே, அவ்விந்திரர் கொல்ல யோக்கியரன்றாம். ஹே அசுவினீ குமாரரே! அற்பப்பிருதிவிக்கரசனும் கொல்ல யோக்கியனன்றெனச் சாஸ்திரங் கூறுவதற்குக் காரணம்; பூவுலகின்கண் எத்துணை இறைவர்கள் இருக்கின்றார்களோ, அவ்வியாவரும் இந்திராதி லோகபாலரி னம்சரூபர்களாமாதலின் அவ்விறைவர்கள் கொல்லத் தக்கவர்களன்றா மென்பதேயாம். இந்திராதி லோகபாலரின் அம்சரூப பிருதிவியின் அரசரும் கொல்ல யோக்கியரன்றேல் சாக்ஷாத் இந்திராதி லோகபாலர் எங்ஙனங் கொல்ல யோக்கியராவர்; மற்றே, இந்திராதியர் கொல்ல யோக்கியராகார். ஹே குமாரர்களே! பிருதிவி மாத்திரத்தில் தேவதைத் தன்மையுற்ற பூசுரராய பிராஹ்மணரை யொருகாலுங் கொல்வது தகுதியன்றாமாயின், மூன்றுலோகங்களிலும் தேவதைத்தன்மை பொருந்திய இந்திராதி தேவதைகள் எங்ஙனங் கொல்ல யோக்கியராவர்; மற்றே கொல்ல யோக்கியரேயாகார். ஹே குமாரர்களே! பூசுரராய பிராஹ்மணர் கொல்லத்தக்கவ ரன்றாமென்று சாஸ்திரம் சாற்றுவதற்குக் காரணம; சுவர்க்கத்தின்கண்ணுள்ள இந்திராதி தேவதைகள் யாவரும் பிராஹ்மணருடைய தேகத்தின்கண்ணே அம்சரூபமா யுள்ளாராதலின் வேதமுணர்ந்த பிராஹ்மணர் கொல்ல யோக்கியரன்றா மென்பதேயாம். இந்திராதி தேவதைகளின் நிவாசஸ்தானமாய பிராஹ்மணசரீரமும் கொல்ல யோக்கியமன்றேல் சாக்ஷாத் சுவர்க்கத்தின்கண்ணே யிராநின்ற இந்திராதி தேவதைகள் எங்ஙனம் கொல்ல யோக்கியராவர்; மற்றே கொல்ல யோக்கியரேயாகார். ஹே குழந்தைகாள்! அதமபுருஷர் சரீரத்தாலும், மனத்தாலும், வாக்காலும், கோக்களையும், பிராஹ்மணரையும், தேவதைகளையும இம்சைசெய்வர். அங்ஙனே சர்வ லோகத்திற்கும் உபகாரம் செய்யும் தர்மாத்மாவாய இராஜாக்களையும் இம்சிப்பர்; அவ்வதம புருஷரோ நூறு கோடிகற்பங்களாயினும் நிரயத்தினின்றும் நீங்கார். ஹே பாலர்காள்! மத்தகத்தான் மலையின்பேதனம் உண்டாகாததே போலப் பத்து லோக பாலரை ஜயம் செய்யாமலும், சர்வ தேவதைகளை ஜயம் செய்யாமலும், இந்திரரை ஜயிப்பதற்கு எத்தேவர்களாலும், தானவராலும் முடியவே முடியா; மற்றே, லோகபாலரையும் அந்நிய தேவதைகளையும் வெற்றிகொண்ட பின்னரே இந்திரரை வெற்றிகோடல்

சம்பவிக்கும். இந்திரன் 1, அக்கினி 2, யமன் 3, இராக்ஷன் 4, வருணன் 5, பிரபஞ்சனன் 6, தனேசன் 7, ஈஸ்வரன் 8, சேஷன் 9, பிரஹ்மா 10 என்னும் இப்பதின்மரும் திசைகாப்பாளராம். அவருள், கிழக்கு முதலிய எட்டுத்திசைகட்கும் இந்திராதி எண்மரும திக்குப்பாலகராம் பிரஹ்மா மேற்றிசைக்குப் பதியாம், சேஷன் கீழ்த்திசைககுப் பதியாம். இபபத்துத் திக்குப்பாலகரையும் ஜயிப்பதன் கண்ணும் எத்தேவதைகளேனும் தானவரேனும் சமர்த்தற்றவராமேலாயின், சர்வ தேவதைகட்கும் அதிபதியாய இந்திரனை ஜயம் செயய யாரேவல்லார்; மற்றோ எவருடம் வல்லாரல்லர். ஹே புத்திரர்காள்! உமமிருவர்பால் எச்சமர்த்துளதோ அஃதும இந்திராதி தேவதைகளின் அநுக்கிரகத்தானேயாம். இந்திராதி தேவதைகட்குக் கோபமுண்டாயின் நீவிரிருவரும காட்டமொப்பச் சமாத்தற்றவராவீர். ஹே குமரர்காள்! நீவிரிருவரும பன்னிரு சூரியர்களையும், எட்டு வசுக்களையும், பதினொரு உருத்திரரையும, நாறபத்தொன்பது மருத்கணங்களையும் எங்ஙனம் வெற்றிகொள்வீர்; மற்றோ, அவரைஜயிபபதறகு உமககாறறலின்றும. ஹே அசுவினீ குமாரர்களே! சம்பூரண லோகபாலகரும, சமபூர்ண தேவதைகளும், சம்பூர்ண முனிகளும், சம்பூரண சித்தாகளும், சம்பூரண சாரணாகளும், பிரஹ்மாவும், விஷ்ணுவும், ருதத்திரரும, சம்பூரண சக்திகளும், ஆகாசாதிப பஞ்சபூதங்களின் அபிமானி தேவதைகளும், சநதிரனும, சம்பூர்ண கிரகங்களும், சம்பூர்ண நக்ஷத்திரங்களும், சம்பூர்ண தாராகணஙகளும் ஆகிய இவரே முதலாய் எவ்வளவு விசுவமுளதோ அவ்வியாவும் இந்திராது பக்ஷத்தனவாம்; உமபக்ஷத்திலோ எத்தேவதையுமோ இன்றும். நீவிரிருவரும் இநதிரரோடு போர்புரியின் இவ்வெல்லாலோக பாலகரும மற்றையரும முதலில உமமோடு போர்புரிய எதிர்நிற்பர். அச்சம்பூர்ண லோகபாலாதியரை நீரவெறறிகொள்ளின் இந்திரர் உம்மோடு போர்புரிவர். அசசம்பூர்ண லோகபாலாதியரை ஜயிபபதில் உமககுச் சமர்த்தின்றும்; ஆகையால், இநதிரரோடு போர்புரியும் வேட்கையை நீர்விடுமின். ஹே அசுவினீ குமாரரே! யாண்டியுததம் செய்தலன்றிக் காரிய சித்தியாகாதோ, ஆண்டியுத்தம் செய்தலும் உசிதமாம்; ஆனல் பலத்தாலும, புத்தியாலும், சூரவீரர் சகாயத்தாலும் தனக்கு சமானமாயிருபபின் அவாகளோடே யுததஞ்செய்தலுசிதமாம். பலத்தாலும் புததியாலும அன்னிய சூரவீரரின் சகாயத்தாலும் தன்னினும் அதிகரேல் அவரோடு யுத்தஞ்செய்தலுசிதமன்றும். இததேவராஜாவாய இந்திரரோ பலத்தானும் புத்தியானும் அன்னிய தேவதைகளின் சகாயத்தானும் நும்மிருவரினும் அதிகராமாதலின் இநதிரரோடு போர் புரிதல் உங்கட்கு உசிதமன்றும்.

இப்போது இந்திரரது அதிகத்தன்மையைக் காண்பிப்பாம்:—ஹே அசுவினீ குமாரரே! நும்மிருவாபால் எத்துணைச் சமர்த்துளதோ, அத்துணைச் சமர்த்துச் சம்பூர்ண தேவதைகளுக்குள் ஒவ்வொருவர்கட்கும உளது; சுவர்க்கத்தின்கண் இந்திரரது சமீபத்தே எத்துணைத் தேவதைகள் நிவாசம் செய்கின்றனரோ, அச்சம்பூர்ண தேவதைகளுள் ஒவ்வொரு தேவதையும் உலகத்தை உற்பத்திசெய்வதிலும், திதி செய்வதிலும், சம்ஹரிப்பதிலும் சாமர்த்தியமுடையதாம். இத்தகைய அநந்தந் தேவதைகளோடு கூடிய இந்திரரோடு போர்புரிவதில் உமக்குச்

சாமர்த்தியமின்றாம். ஹே அசுவினீகுமாரர்களே! சுவர்க்கத்தின்கண் இராநின்ற இந்திராதி தேவதைகளோடு துவேஷம் செய்வது கேவலம் சுவர்க்கத்தினின்றுங் கீழ் வீழ்தற்கே காரணமாம். ஆகையால, உங்கட்குச் சுவர்க்கத்தின்கண் இருப்பதற்கு இச்சையிருபபின் இந்திரரோடு நீர் துவேஷம் செய்யவேண்டாம். இந்திரரோடு துவேஷம் செய்வதினால் சுவர்க்கத்தினின்றும் உங்கட்குக் கீழ்வீழ்ச்சியுண்டாம். இருஷி கூறல் :—ஹே அசுவினீ குமாரர்களே! இவ்வுலகத்தின்கண்ணும் பரலோகத்தின்கண்ணும் பயத்தையுணாத்துவதாய நாநாப் பிரகாரயுக்தியோடு கூடிய இவ்வகையாய வசனரூபீ தண்டத்தால் அத்தத்யங் இருஷியாய உமது குருவானவர் உம்மிருவரையும தாடனம் செய்தனர். அவ்வசனங்களைக் கேட்டும் நீவிர் குருவசனத்தை யங்கீகரித்திலீர்; ஏனெனின், ஒன்றோ இநதிரர் உமது யாக பாகத்தை நீககினா, மற்றொன்றோ சாவ தேவதைகளின் சபையின்கண் உம்மிருவரையும் அவமானஞ்செய்தனராதலின் அத்தியந்த துக்கிகளாயினீா. ஆகையால் இதகாரியாய குருவசனத்தையும நீரங்கீகரிக்கவில்லை. ஹே அசுவினீ குமாரரே! நீவிரிருவரும் மீண்டும ஆசிரியரைப பாாத்து, ஹே ஆசிரியோத்தமரே! இநதிரனோடு யுத்தம்செய்வதால் ஒருகால் மரணமேவரினும் நரகமேவரினும் அவற்றையாங்கள் அஙகீகரிககின்றோம்; ஆனால் தாங்கள் எங்கடகுப போாசெய்ய அனுமதிகொடுங்கள். ஹே அசுவினீ குமாரரே! இங்ஙனங் கூறிய உங்கள் வசனத்தைக்கேட்டு உமதாசிரியா மீண்டும் யாகபாகததை யடையுமிச்சைவடிவ உமதபிபபிராயத்தை யறிநது கிருபையோடு கூடிய அவா முயல்வின்றியே யாகபாக அடைவின்பொருட்டு மீண்டும இவ்வகையாய வசனத்தைக் கூறத்தொடங்கினர் :— ஹே குமாராகாள்! அத்தியந்தங் கோமளமாய புஷ்பங்களாலும் எசசத்துருவோடும் போாசெய்வது யோக்கியமன்றாயின், கூர்மையாய சஸ்திரங்களாற் போர்செய்வது எங்ஙனநதகுதியாம்; மற்றோ எவ்வாற்றானும் போர் செய்வது தகுதியேயன்றாம். ஏனெனின், போரின்கண்ணே இத்துணைததோடங்களுள்ளன :—முதலாவது நமக்குவெற்றியாமோ அல்லது பகைவருககு வெறறியாமோ என்னுமையம்; இரண்டாவது மேன்மைதங்கிய புருஷரின் நாசம அவசியமுண்டாதல. மூன்றாவது போரின் கண்ணே யடைநதுளள புருஷன் சஸ்திரங்களின் காயத்தாலன்றியுறவினரின் மரணத்தாலன்றி வெற்றியையடையான்; நான்காவது அபஜயமடையினோ அளவிலா நிந்தை என்னுமிநநான்கு தோஷங்கள் எலலாபபோர்களினும் அவசியமுண்டாம். ஆகையால போர்புரிதல தகுதியன்றாம். ஹே அசுவனீ குமாரரே! எப்போரின் கண் மரணத்தினின்றும் புருஷனுக்கு நரகமுண்டாமோ, உயிர் வாழ்தலர் னுலகின்கண் அபகீர்த்தியுண்டாமோ; எப்போரின் கண்ணே பிராஹ்மணர்களின் நாசமும பந்துக்களின் நாசமும் தேவதைகளின் நாசமும உண்டாமோ அத்தகைய அதர்மமாய போரின்கண்ணே க்ஷத்திரிய இராஜாவும் முயலுதல் கூடாதாம்; மற்றோ அத்தகைய அதர்ம யுத்தத்தினின்றும் க்ஷத்திரிய இராஜா ஓடிப்போதலே நலமாம். ஹே குழந்தைகாள்! இக்கணபங்குரமாய சம்சாரத்தின்கண் அதிகாரிக்குரியதாய சரீரத்தை யடைநத புருஷனைவன் ஆன்ம ஞானத்தையே சம்பாதிப்பது யோக்கியமாமன்றிப் போர் முதலியவற்றைச் சம்பாதித்தல் யோக்கியமன்றாம். இச்சம்சாரமோ, வாழைஸ்தம்பம் சாரமற்றதாமாறுபோலச் சாரமற்ற

தாம்; உயிர்வாழுங்காலமெல்லாம் சம்பூர்ண துக்கங்களால் பூர்ணமாயதாம்; இமைக்கொட்டுமளவே உயிர்வாழ்க்கையையுடையதாமென்றறிக. இத்தகைய அநித்திய சம்சாரத்தின்கண் மனுஷ்ய சரீரத்தையடைந்த புருஷன் தனது இதத்தினுபாயத்தையே சம்பாதித்தல்வேண்டும். அவ்விதத்தினுபாயம அத்விதீய ஆன்மஞானமேயாம். ஆன்மஞானத்தினும் வேறாய போர் முதலிய எல்லாக்கர்மங்களும் புருஷார்த்தக்கிதத சாதனங்களாம். ஆகையால், ஹே குழந்தைகளே! தேவ ராஜராகிய இந்திரரோடு போர்புரிதல இவ்வுலகத்தின்கண்ணும் பரலோகத்தின்கண்ணும் உங்கட்குத் துன்பத்தின் காரணமேயாம்.

சங்கை :—ஹே பகவன்! தாங்கள எல்லா வகையாலும் யுத்தத்தை நிஷேதம் செய்தீர்கள், அது சமபவிபாது. ஏனெனின், யுத்த சாஸ்திரத்தின்கண் அநநத வகையாய்ப் போர்புரியும நெறி கூறப்பட்டுளதாதலின் அந்த யுத்த சாஸ்திரம பயனற்றதேயாமன்றோ?

சமாதானம் :—ஹே அசுவனீ குமாரரே! யுதத சாஸ்திரம் பயனறறதன்றாம்; யுத்தம செய்வதினானன்றித தனது மரணததின நிசசயமாமேலாயினும், யுததம் செய்தலால ஜீவனத்தின் சமபாவனையாகுமேலாயினும், அக்கால் புருஷன் போர்புரிகவென யுத்தசாஸ்திரம யுதததததை விதிததுளது. நவின்றவகையாய்ப போர்புரியுங் காலம் உம இருவாபாலும் உண்டாகவிலலை. மறறே, போாபுரிதலினால் அன்றியே உங்கள் காரியததின் சித்தியுண்டாககூடுமாதலின், ஹே அசுவினீ குமாரரே! யுத்தம செய்யுமிசசையைப பரிததியாகமசெய்து மீண்டும் யாகபாக அடைவினுபாயத்தை உமது புத்தியால் நீவிர நிசசயம செய்யும. ஹே அசுவினீ குமாரரே! இகதால சரீரத்தின் பராக்கிரமத்தைபபாாக்கிலும புததியின் பராக்கிரமம அதிகமாம்; ஏனெனின், புருஷனால செலுத்தபபெறற சஸ்திரம் ஒரு சத்துருவை ஜயம செய்யும, ஒருகால ஒரு சத்துருவையுங்கூட ஜயம செய்யாது. நாநா வகையாய உபாயங்களை நிசசயம் செப்பும புத்தி ரூபிபாய சஸ்திரமோ, மதிமானாற் செலுத்தபபெறறதாய்ச சம்பூர்ண ஜகததையும் ஜயம செய்யும். ஆகைபால, சரீர பராக்கிரமத்திலும் புத்தியின் பராக்கிரமம் அதிகமாயதேயாம; ஹே சிசுக்காள்! புத்தியின் பராக்கிரமத்தைககேண்மின். கோடி ஜன்மங்களாலும் சரீரத்தின் யுத்தாதி பாராககிரமததால எபபதாாத்தங்கள் சமபாதனம செய்ய முடியாவோ அப பதார்ததங்களையும் புருஷனானவன் மதியின் பராககிரமததால் சிறிது காலத்திற்றனே சம்பாதனஞ் செய்து கொள்ளககூடும. கோடி ஜன்மங்களையடைந்தும் யுத்தாதிரூப சரீர பராக்கிரமத்தால் இரண்யகர்ப்பலோகத்தையடைய முடியாது; புத்தியால் நிச்சயம செய்துள்ள இரண்யகர்பபரது உபாசனரூப உபாயத்தாற் சிறிது காலத்திற்றனே இரண்யகர்ப்பலோகததின் பிராப்தியுண்டாதல் கூடும. ஆகைபால் சரீர பராக்கிரமத்திலும் புத்தியின் பராக்கிரமமே அதிகமாயதாமாதலின் ஹே மைநதர்காள், நீவிரும் மதியினால் மீண்டும் யாகபாக அடைவின் உபாயத்தை நிச்சயம் செய்ம்மின்.

சங்கை :—ஹே பகவன்! மீண்டும் யாங்கள் யாகபாகத்தைப் பெறப் போரன்றி வேறோருபாயத்தையுமறியோம்.

சமாதானம் :—ஹே மைந்தர்காள்! இந்திரரோடு போர்புரிவதால் உங்கட்கொருகாலும் யாகபாகம் கிடைக்கமாட்டாது. ஆகையால், மீண்டும் யாகபாகம் அடைவதன் பொருட்டு உங்கட்கு ஒரெளிதாய உபாயங்கூறுகின்றேன்; நீங்கள் சாவதானமாய்க் கேண்மின், சர்யாதியென்னும் அரசன் யாகஞ்செய்ய முயன்றுளான், அவ்வரசனது மருமகன் சியவனரென்னும் இருஷியாம், அவ்விருஷியை யாகத்தின் ஹோதாவாக்கச் சர்யாதியரசன் மனத்தின்கண்ணே சங்கற்பித்திருக்கின்றனன்; ஆனாலவ்விருஷி நேத்திரமற்றவராதலின், இவ்விருஷியானவர் எங்ஙனம் எனக்கு யாகம் செய்விப்பர் என்னும் ஐயத்தை யவ்வரசன் கொண்டிருக்கின்றனன்.

சங்கை :—ஹே பகவன்! அந்தசியவன இருஷியானவர் எங்ஙனம் அவ்வரசனுக்கு மருமகன் ஆயினர், அவ்விருஷி நேத்திரமற்றவ ரெங்ஙனமாயினர் என்பவற்றையெல்லா மெங்கட்குத் தயையினாற் கூறவேண்டும.

சமாதானம் :—ஹே குமாரர்காள்! அவ்வரசனுக்குச் சுகன்யையென்னும் ஒருபெண்ணிருந்தனள். அப்பெண் பாலிய அவஸ்தையின்கண் தனது பிதாவோடு வனத்தின்கண்ணே சென்றிருந்தனள். அவ்வனத்தின்கண் சியவனரென்னும் இருஷிவெகுகாலம் தபம் செய்துகொண்டிருந்தனர்; அவருடைய சரீரமெல்லாம் மண்ணால் மூடப்பட்டிருந்தது. நேத்திரங்களாற் சூரியபகவானைப் பார்த்துக்கொண்டிருந்தனர்; எல்லாத் தவசிகளிலும உத்தமராயிருந்தனர். இத்தகைய சியவன இருஷியைக்கண்டு, அக்கன்யை பிருதுவியின் துவாரத்தின்கண் யாது பிரகாசமாய்த் தோற்றுகின்றதென ஆலோசித்து, ஒரு திருணத்தைக் கையிலெடுத்துப பூமியின் துவாரத்தின்கண் இராநின்ற சியவன இருஷியின் நேத்திரங்களைக் குத்தினள், குத்தியபின் அந்நேத்திரங்களினின்றும இரத்தப பிரவாஹ முண்டாயது, அவ்வுதிரத்தைக் கண்டு அவ்வரசன் அம்மண்ணின்கண் முனியைக் கண்டனன்; கண்டு அத்தியந்தம் பயத்தையடைந்தனன். அவ்வரசன் நேத்திரமற்றிருக்கும் அவ்விருஷியைக்கண்டு தனதுகுமாரியை அவ்விருஷிக்குச் சேவைசெய்யும்பொருட்டுக் கொடுத்தனன். ஹே குமாரர்காள்! இங்ஙனம் அவ்விருஷி குருடராயுள்ளார், விருத்த அவஸ்தையோடு கூடியுளளார். அவ்விருஷியை நீவிர் நேத்திரமுள்ளவராய்ச் செய்வீரேல், யவ்வன அவஸ்தை யுடையவராகச் செய்வீரேல், அவ்விருஷி வல்லமையுள்ளவராதலின், பெயர்த்தும் உங்கட்கு யாகபாகத்தை யடைவிப்பர். ஹே அசுவினீ குமாரர்களே! இங்ஙனம் உமது குரு கூறியவுடன் நீவிரிருவரும் அவ்விருஷியைக் கண்ணோடு கூடியவராக்கினீர்; யவ்வன அவஸ்தையோடு கூடிய வராக்கினீர். பின்னர் அவ்விருஷியும் பலாத்காரமாய் உம்பொருட்டு யாகபாகத்தைக் கொடுப்பித்தனர். (இவ்விஷயம் பாகவதத்தின் நவமஸ்கந்தத்தின் கண்ணே விஸ்தாரமாய்க் கூறப்பட்டுளது.) இங்ஙனம் உங்கட்கு யாகபாகத்தின் பிராப்தியுண்டாயது. பின்னர் ஒருகாலத்தில உமது குருவினாசிரமத்தில் தேவராஜாவாய இந்திர வந்தனர், தமதாசிரமத்தின்கண்ணே வந்துற்ற அவ்விந்திரருக்கு உமது ஆசிரியர் மிகவுஞ் சன்மானம் செய்தனர். பின்னர்ச் சுகபூர்வகமாய்

ஆசனத்தின்கண்ணே உட்கார்ந்து நாநாவிதமாய கதைகளால் அத்தியந்தம் மகிழ்ச்சியை யடைந்தனர். இவ்வண்ணம் மகிழ்ந்திருந்த இந்திரரை நோக்கி, உமதாசிரியர் ஹே தேவராஜாவாய இந்திரரே! மூன்று லோகத்திற்கும் பதியாய இந்திரராகிய நீர் எனதாசிரமத்தின்கண் அதிதியாயடைந்துளீராதலின் உம்மைப் பிரசன்னராக்கும் பொருட்டு யான் எப்பதார்த்தத்தைக் கொடுப்பேன் எனக்கூறினர். ஹே அசுவனீ குமாரரே! இங்ஙனம் உமதாசிரியர் கூறவே, அத்தேவராஜாவாகிய இந்திரரானவர் உம தாசிரியரை நோக்கி, ஹே மகரிஷியே! என்னைப் பிரசன்னனுக்க உமக்கிச்சையுளதேல் சர்வப்பிராணிகட்கும் துர்லபமாய பிரஹ்மவித்தையை என் பொருட்டு உபதேசியும் எனக்கூறினர். இங்ஙனங்கூறவே உமதாசிரியர்மகா சம்சயத்தையடைந்தனர். பெண்ணின் தந்தையானவர் ஒருவனைநோக்கி யான் உனக்கெனது பெண்ணைத்தருகின்றேனென்றுகூறிய பின் வரன்பால் கல்வி முதலியகுணங்களின்மையைக்கண்டு அப்பெண்ணின் தந்தை இக்குணஹீனன் பொருட்டுப் பெண்ணைக்கொடுக்கலாமா? கொடுக்கலாகாதா? எனசசம்சயத்தை யடைவதேபோல உமதாசிரியரும் தேவராஜரின்பொருட்டு முன்னர் பிரியபதார்த்தத்தை ஈவதாய்ப் பிரதிஞ்ஞைசெய்தனர். ஆனாலத்தேவராஜாவாகிய இந்திரரோ குரு பக்தியற்றவர், விஷயாசக்தராதலின் பிரஹ்மவித்தைக்கு அதிகாரியன்றெனஆலோசித்து, இந்திரரின் பொருட்டுபபிரஹ்மவித்தையைக்கொடுத்தல் கூடுமா? அல்லது கூடாதா? என்னுஞ்சம்சயத்தையடைந்தனா. கருததிதுவாம்:—இநதிரரின் பொருட்டுயான் பிரஹ்மவித்தையை உபதேசிக்காவிடின் எனது வசனம பொய்க்கும், உபதேசிக்கின் அநதிகாரியாய இந்திரர்பொருட்டுக கொடுத்தபிரஹ்மவித்தை பயனற்றதேயாய்விடும். இவ்விதம் வித்தையை ஈயும பக்ஷத்தினும ஈயாப பக்ஷத்தினும் தோஷங்களை விசாரித்து உமதாசிரியர் மகாசம்சயத்தையடைந்தனர். மீண்டும உமதாசிரியர் தனது மனத்தின்கண்ணே இவ்வண்ணமாராய்வாராயினர்:—அநதிகாரியாய புருஷரின் பொருட்டுப பிரஹ்மவித்தையைககொடுப்பதால் பொய்வசனிப்பதாலுண்டாம் பாவத்தைபோலப பாவமுண்டாகமாட்டாதாதலின் எனது பிரதிஞ்ஞையை மெய்ப்பிக்கும் பொருட்டு இநதிரருக்கு அவசியம் பிரஹ்ம வித்தையைக் கொடுக்கவேண்டுமென ஆராய்நது உமது குரு கூறுவாராயினர். ஹே தேவராஜாவாகிய இந்திரரே! சர்வ லோகத்தின்கண்ணும பிரசித்தராய அசுவினீ குமாரரென்னும் இரண்டு சீடர்கள் எமக்கிருக்கின்றனா, அவர்கள் பிரஹ்மவித்தையை யடையவேண்டுமென்று முன்னர் என்முன் பிரார்த்தனை செய்தனர். ஆனால் அவர்பால் வைராக்கியாதி சாதனங்களின்மையைக்கண்டு அவர்பொருட்டு யான் பிரஹ்மவித்தையை யுபதேசிக்கவில்லை; அத்தகைய துர்லபமாய பிரஹ்ம வித்தையின் உபதேசத்தை உமக்கு யாம் செய்கின்றோம்; நீர் சாவதானமாய்க் கேளும். ஹே தேவராஜரே! சுகசப்தத்தின் முக்கியபொருள் ஆன்மசொரூப ஆநந்தமாம். ஆன்மசொரூப ஆநந்தத்தினும்வேறாய விஷயஜன்னிய ஆநந்தம் சுகசப்தத்தின் கௌணார்த்தமாம். அதுபோல வித்யாசப்தத்திற்கும் முக்கிய அர்த்தம் பிரஹ்மவித்தையேயாம்; பிரஹ்மவித்தையினும் வேறாயவித்தை வித்தைச்சப்தத்தின் கௌணார்த்தமாம்.

இப்போது பிரஹ்ம வித்தையின்கண் வித்தைச்சப்தத்தின் மூக்கிய அர்த்தத் தன்மையைக் காண்பிக்கும்பொருட்டு முதலில் வித்தைச்சப்தத்தின் அர்த்தத்தைக் காண்பிப்பாம்:—காரிய ரூபத்தால் அநந்த ரூபங்களையடைவுற்றதாய், வாசனு ரூபியாய ஜாலத்தின்மூல ரூபமானதாய், சர்வப்பிராணிகட்கும் பயத்தைக்கொடுப்ப தாய் உள்ள அஞ்ஞானத்தைக் கிஞ்சித்தும எஞ்சாமல் நீக்குவதுயாதோ அதுவே வித்தையெனப்படும். அல்லது வைராக்கியாதி சாதன யுக்தமான அதிகாரிக ளின்பொருட்டு ஆநந்த சொரூப ஆன்மாவைக்கொடுப்பது யாதோ, அதுவே வித் தையெனப்படும்; அல்லது அதிகாரிகளின்பொருட்டு ஆன்மாவின் சாக்ஷாத் காரத்தைசசெய்விப்பது யாதோ அதுவே வித்தையெனப்படும். இங்ஙனம் வித் தைச் சப்தத்தினர்த்தம் பிரஹ்மவிததையின்கண்ணே பொருந்தும். பிரஹ்ம வித்தையினும் வேறாய வித்தையின்கண் இவ்வகையாகிய அர்த்தம் பொருந்தாது, ஏனெனின், பிரஹ்ம விததையே புருஷர்களின் அஞ்ஞானத்தை நிவிர்த்தி செய்விக் கும், ஆநநதசொரூப ஆன்மாவையடைவிக்கும பிரஹ்மவித்தையின் வேறாய எவ்வித்தையும் அஞ்ஞானத்தின் நிவிரத்தியையும் பரமாநந்தப்பிராப்தியையும் செய்விக்கமாட்டாதாதலின், பிரஹ்மவித்தையே வித்தைசசப்தத்தின் முக்கியப் பொருளாம். இவ்விதம வித்தைசசபதத்தின் பொருளை நிரூபணமசெய்து உமதா சிரியர் கூறுவதாவது:—ஹே தேவராஜாவே! எல்லா வேதாந்த சாஸ்திரங்களாலு ஞ்சொல்லறகுரிததாய இபபிரஹ்ம புருஷன் தனது சசசிதாநந்த ரூபத்தால் எல்லா வுலகையும் வியாபித்துள்ளான். இககாரணத்தாலே இப்பிரஹ்மபுருஷன் பூர்ணனெ ன்னும் பெயரை யடைநதுளான். ஹே தேவராஜாவே! அசத்சபதத்தின் பொரு ளும், அச்சபத ஜன்யஞானததின் விஷயமும் தறபதத்தின் பொருளாய பரோக்ஷ ஈஸ்வரனும்; சத்சப்தத்தின் பொருளும, சத்சபத ஜன்யஞானத்தின் விஷயமும் துவமபதத்தின் பொருளாய அபரோக்ஷஜீவனும்; அவ்விரண்டையும் பரமான்மா வின் சதாநந்த சொரூபத்தாற் பூரணமாமென நீரறியும்.

சங்கை:—ஹே பகவன்! ஆன்மாவின் பேதகாரணமாய பிரபஞ்சரூப உபா தியிருக்கும்போது, பரமான்மாவிற்கு யாண்டும் பூர்ணத்தன்மை சமபவியாது.

சமாதானம்:—ஹே தேவராஜாவே! பிரபஞ்சம் ஆநந்தசொரூப ஆன்மாவி னும் வேறாயின், ஆன்மாவின் பேதத்தை யுண்டாக்கும்; ஆனால் ஆநநதசொரூப ஆன்ம அதிஷ்டானத்தினின்றும் பிரபஞ்சம் பின்னமமன்றும். மற்றேர் பூர்ணமாய பரமான்மாவினின்றே இபபிரபஞ்ச முற்பன்னமாகின்றது, பூர்ணமாய ஆன்மா வின்கண்ணே இப்பிரபஞ்சம் முழுதும நிலைபெறுகின்றது, பூர்ணமாய பரமான்மா வின்கண்ணே இவ்வெல்லா வுலகும் அடங்காநிற்கும். அதிஷ்டான ஆன்மாவின் சத்தையினும் வேறாய்ச சகத்திற்குச் சத்தையின்றும. ஆகையினுற் சம்பூர்ண ஜகத்தானது அதிஷ்டானரூப ஆன்மாவின்கண்ணே கற்பிதமாம. இரஜ்ஜுரூப அதிஷ்டானத்தின் ஞானமுளதாகவே கற்பிதசர்ப்பத்தின் நிவிருத்தியுண்டாம் எஞ்சியதாய் இரஜ்ஜுரூப அதிஷ்டானமிருக்கும். அதுபோலவே, அதிஷ்டான சொரூப ஆன்மாவின் சாக்ஷாத்கார முளதாகவே சம்பூர்ணமாய கற்பிதப் பிரபஞ் சத்தின் நிவிருத்தியுண்டாம்; எஞ்சியதாய்ப் பூர்ணமாய பரமான்மாவே பிரபஞ்சரூப

உபாதியற்றதாய் நிலைபெற்றிலங்கும். மழைகாலத்தே ஆகாசத்தினின்றே மேகம் உற்பன்னமாம், ஆகாசத்தின்கண்ணே மேகம் ஸ்திதமாம், ஆகாசத்தின்கண்ணே மேகங்கட்கு இலயமாம். சம்பூர்ண மேகங்கள் நீங்கிவிடின் எஞ்சியதாய் ஆகாசமொன்றேயிருக்கும், அதுபோலவே கற்பிதப் பிரபஞ்சம் நீங்கின் எஞ்சியதாய் ஒரு அத்விதிய பரமான்மாவேயிருக்கும். ஹே இந்திரரே! ஆகாசம் யாண்டும் நிறைந்துநிற்பதேபோல ஆநந்தசொரூபமாய பரமான்மாவும் யாண்டும் நிறைந்து நிற்கும். சரீராதி அநான்மபதார்த்தம் பூத பவிஷ்ய வர்த்தமானமென்னும் முக்காலங்களில் ஒரு இயற்கையோடு கூடியதன்றாம்; மற்றோ பாலியம் யவ்வனம் முதலிய நாநாவியற்கையை யடையாநிற்கும். அதுபோல இவ்வாநந்தசொரூப ஆன்மா நாநாவியற்கையை யடையமாட்டாது; மற்றோ முக்காலங்களிலும் ஒரே இயற்கையினையுடையதாய சச்சிதாநந்த சொரூபமுடையதாம். இத்தகைய நிர்க்குணப் பரமான்மாவின் வாஸ்தவசொரூபத்தைச் சுத்த அந்தக்கரணவானாய அறிஞனே அநுபவிப்பன்; மலின அந்தக்கரணவானனவனோ ஆன்மாவின் வாஸ்தவ சொரூபத்தையறிய முடியாதவனவன்.

சங்கை:—ஹே பகவன்! அறிஞனனுபவிக்கும் ஆன்மாவின் வாஸ்தவ சொரூபத்தைக் கடபடாதிகளைப்போல இதநந்தைவடிவமாய் என்பொருட்டுக் கூற வேண்டும்

சமாதானம்:—ஹே தேவராஜாவே! இவ்வாநந்தசொரூப பரமான்மாவானது உண்மையாய் அசங்கமாம், நிர்க்குணமாம். ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி லயமற்றது; ஆகையினா லித்தகைய நிர்க்குண பரமான்மாவைக் கடாதிகளைப்போல இதநந்தை வடிவமாய்ப் போதிப்பதில எவ்வறிஞனும் சமாத்தனல்லன். மற்றோ இத்தகைய நிர்க்குண பரமான்மாவின்கண் உலகின் உற்பத்தி ஸ்திதி லயம் என்பவற்றை யாரோபித்துச் சீடன்பொருட்டு, அந்நிர்க்குணப பிரஹ்மோபதேசத்தைக் குரு புரிவர். பிரபஞ்சத்தின் அத்தியாரோப அபவாதமின்றிச் சாக்ஷாத் நிர்க்குண பரமான்மாவைப் போதிப்பதில எப்புருஷனும் வல்லவனல்லன். ஏனெனின், இந்நிர்க்குண பரமான்மா சுவப்பிரகாச ஞானசொரூபமாம்; ஆகையினால், பாகிய சக்ஷு முதலிய இந்திரியங்களாலுமறியமுடியாது. அங்ஙனமே, அந்தாமனபுத்தியாதிகளினானும் அறியமுடியாது. அங்ஙனமே, அந்நிய எப்பிரமாணத்தாலு மறியமுடியாது. இங்ஙனம் மனவாக்குகட்கு விஷயமாகாத நிர்க்குணப் பரமான்மாவின்கண் உலகினுற்பத்தி ஸ்திதி லயம் எங்ஙனம் சம்பவிக்குமென்னும் விசாரத்தோடு கூடிய மகான்ம புருஷன் ஜகதுற்பத்தியின் சித்தியின்பொருட்டு, அந்நிர்க்குணப் பரமான்மாவின்கண் மாயாகற்பனையைச்செய்வன்; அம்மாயை அஞ்ஞானத்தினும் வேறன்றாம்; மற்றோ யான் அஞ்ஞானியாயுள்ளேன் என்னும் அனுபவத்தாற் சித்தமாய அஞ்ஞான சொரூபமே மாயையாம். ஹே தேவராஜாவாய இந்திரரே! அவ்வஞ்ஞான ரூபமாயையை இப்பரமான்மாவே யொளிர்விக்குமாதலின், அது சம்பூர்ண பரமான்மாவை மறைக்கமாட்டாது; மற்றோ பரமான்மாவின் சிறிது தேசத்தைமறைக்கும். பரமான்மாமுழுவதையும் மாயை மறைக்குமாயின் இருக்கின்ற இலங்குகின்றதின்பமாமென்னும் வடிவால் ஆன்மாவின்பான (விளக்க) முண்

டாதல்கூடாது ; ஆனுலெல்லாப்பிராணிகட்கும் யானெப்போதும் இருக்கின்றனன் என்னும் பிரதீதியின்கண் இருப்புருவத்தாற் பரமான்மாவின்பானம் (விளக்கம்) உண்டாம். யானிலங்குகின்றேன் என்னும் பிரதீதியின்கண் இலங்குதல் வடிவத்தால் பரமான்மாவின் பானமாம். யானெஞ்ஞான்றும் அப்பிரியனன்றும் என்னுந் தோற்றத்தின்கண்ணே பிரியரூபமாய்ப் பரமான்மாவின் பானமாம். ஆகையினுல், ஹே தேவராஜாவாய இந்திரரே ! இவ்வாநந்த சொரூபபரமான்ம புருஷன் தனது சொப்பிரகாச ஞானவடிவத்தாற் சம்பூர்ண புத்தியாதி ஜட பதார்த்தங்களின் திருஷ்டாவாம். சஜாதீய விஜாதீய சுவகதபேதமற்றவனும், இத்தகைய சொத சித்தமாய ஆநந்த சொரூப பரமான்மாவை நேராயுணாத்துவதிலெவனுஞ் சமர்த்தனுகான்.

இப்போதிப்பொருளேயே வெளிப்படையாய்க் காண்பிப்பாம் :—ஹே தேவராஜாவே ! சப்தஸ்பரிசாதி விஷயங்களின் அநுபவத்தால் உண்டாய சுகத்தை அநுபவியானவன் வேறெவனுக்கேனுங் கூறவேண்டின், வேறொரு பதார்த்தத்தின் திருஷ்டாந்தத்தானே தனது சுகத்தைக்கூறு நிற்பன். திருஷ்டாந்தமின்றி விஷய ஜன்னிய சுகத்தைச் சாக்ஷாத்தாய்க்கூறுவதிலெவனும் ஆற்றலுடையவனுகான். அநுபவித்த விஷயஜன்னிய சுகத்தையும் சாக்ஷாத்தாய்க்கூற எவனும் சமர்த்தனுகாதபோது, அலௌகிக ஆநந்த சொரூப ஆன்மாவை எவன்றான் நேரே கூற வல்லான் ; மற்றேரு ஆநந்த சொரூப ஆன்மாவை நேரே கூறுவதிலெவனும் வல்லனல்லன். ஆகையால் ஹே தேவராஜாவே ! அந்நிர்க்குணப் பரமான்மாவின்கண் உலகின் அத்தியாரோபத்தைக் காண்பித்து யாம் உம்பொருட்டு ஆநந்த சொரூப ஆன்மாவையுபதேசிப்போம் ; உமதந்தக்கரணம் சுத்தமாயிருப்பின் நீரே சுயம பரமான்மாவின் உண்மை வடிவத்தை யுணர்ந்துகொள்ளுவீர்.

இப்போது பரமான்மாவின்கண் ஜகத்தின் அத்தியா ரோபத்தைக் காண்பிப்பாம் :—ஹே தேவராஜாவே ! இவ்வனுதியாய சம்சாரத்தின்கண்ணே எங்ஙனமிரவு பகற் பிரவாகம் நிரந்தரம் நிகழ்கின்றனவோ, அதாவது இரவு நீங்கின் பகலுண்டாதலும் பகல் நீங்கின் மீண்டும இரவுண்டாதலுமாம், இரவு பகற்பிரவாகம் நிரந்தரம் நிகழுமென்பதாம் ; அங்ஙனம், ஜகத்தின் உற்பத்திப் பிரளயங்களின் பிரவாகமும் நிரந்தரம் நிகழாநிற்கும். அதாவது ஜகத்தின் உற்பத்தியின் பின் பிரளயமாம், பிரளயத்தின் பின் மீண்டும் உற்பத்தியாம், இங்ஙனம் ஜகத்தின் உற்பத்திப் பிரளயங்களின் பிரவாகம் நிரந்தரம் நிகழாநிற்கும் என்பதாம். இரவு பகற்களினிடைக்காலத்தை யுலகின்கண்ணே சந்தியாகாலமென்பர் ; அதுபோல உலகின் உற்பத்தி நாசங்களினிடைக்காலத்தைச் சாஸ்திரத்தின்கண்ணே ஸ்திதி காலமென்பர்.

இப்போது ஜகத்தின் சொரூபத்தைக் காண்பிப்பாம் :—ஹே தேவராஜாவே ! இவ்வெல்லாவுலகும் நாமரூபக்கிரியா சொரூபமாம். அவற்றுள் விசுவம், லோகம், திருசியம், பிரபஞ்சம் என்னுஞ் சத்தங்களே நாமமென்பர். ஆகாசாதிய பஞ்சபூதங்களேயும் பஞ்சபூதங்களின் காரியங்களாய சரீராதி வியக்திகளேயும் ரூபமென்பர். ஜகத்தின் உற்பத்தியையும் சம்ஹாரத்தையும் கிரியையென்பர். இங்ஙனம் சம்பூர்ண

ஜகத்தின்கண்ணே நாமரூபக்கிரியை வடிவத்தைக்கூறி, யிப்போது ஒவ்வொரு கடாதிபதார்த்தத்தின்கண் நாமரூபக்கிரியை வடிவத்தைக் காண்பிப்பாம்:—ஒரு கடத்திற்குக் கடம் கும்பம் கலசம் என்பன நாமங்களாம், உதரம் பருத்து முகங் குவிந்து நிகழல் கடத்தின்ரூபமாம், நீர்முதலியவற்றை முகந்துகொண்டுவருதல் கடத்தின் கிரியையாம். இவ்வாறு படமுதலிய எல்லாப் பொருள்களிடத்தேயும் நாமரூபக்கிரியையை யுணர்ந்து கோடல்வேண்டும். இப்போது நாமரூபக்கிரியைகட்குப் பரஸ்பரம அபேதத்தைக் காண்பிப்பாம்:—ஹே தேவராஜாவே! படமுதலிய பதார்த்தங்கள் ஒருகால் நவீன அவஸ்தையை யடையாநிற்கும், ஒருகால் ஜீர்ண அவஸ்தையை யடையாநிறகும. அந்நவீனவஸ்தையும் ஜீர்ணவஸ்தையும் படாதிபதார்த்தங்களினின்றும் வேறன்றாம்; மற்றோ படாதிகளின் சொரூபமேயாம். அதுபோலக் கொண்டுவருதல்முதலிய கிரியையும் கடாதிபதார்த்தங்களின் அவஸ்தா விசேஷமாம். ஆகையினாற் கடாதிவஸ்துக்களின் சொரூபத்தினும் கிரியை பின்னமன்றாம்; மற்றோ ரூபசொரூபமே கிரியையாம். அக்கடாதிகளின் ரூபம கடாதி நாமங்களினின்றும் பின்னமன்றாம்; ஏனெனின், கடாதிநாமங்களாலன்றிக் கடாதிகளின் ரூபசித்தி யுண்டாகமாட்டாது; ஆகையினாலே கடாதிகளின் ரூபம் நாமசொரூபமாம். இங்ஙனம் நாமரூபக் கிரியையென்னு மூன்றும் பரஸ்பரம் பின்னமன்றாம்; மற்றோ அபின்னமாம். ஹே தேவராஜாவே! எங்ஙனம் நாமரூபக் கிரியையென்னும் மூன்றும் பரஸ்பரம் பின்னமன்றோ, அங்ஙனம் தனது காரணத்தினின்றும் நாமரூபக்கிரியை பின்னமன்றாம்; மற்றோ நாமரூபக்கிரியை தனது காரணத்தினின்றும் அபின்னமேயாம். காரியத்திற்குக் காரணத்தோடு அபேதம உலகின்கண்ணும் கண்டோம். இரஜ்ஜுவின்கண்ணே கற்பித சர்ப்பதண்டாதி காரியங்கள் இரஜ்ஜுரூப காரணத்தினின்றும் பின்னமாகாது; பரஸ்பரமும் பின்னமாகாது; மற்றோ கற்பித சர்ப்பதண்டாதிகள் இரஜ்ஜுரூப காரணததினின்றும், பரஸ்பரமும் அபின்னமேயாம். அதுபோலவே நாமரூபக்கிரியை தனது காரணத்தினின்றும் பரஸ்பரமும் பின்னமன்றாம்; மற்றோ அபின்னமேயாம். ஹே தேவராஜாவே! எவ்வண்ணம் ஆகாசத்தின்கண்ணே கற்பிதமேகாதிகள் தனது உற்பத்தியின்முன்னர் ஆகாசசொரூபமேயாமோ அவ்வண்ணம் நாமரூபக் கிரியைவடிவ சகல ஜகத்தும் தமது உற்பத்தியின்முன்னர் அத்விதீய பிரஹ்மரூபமாகவே யிருநதது. இங்ஙனம் சுருதியானது ஜகத்தின் உற்பத்தியின்முன்னர் பிரஹ்மரூபமாய் ஜகத்தின் ஸ்திதியாமெனக் கூறியிருக்கின்றது. பிரஹ்மத்தின்கண்ணே கூறிய ஜகத்தின் ஸ்திதி, பிரஹ்மத்தை ஜகத்தின் காரணமென அங்கீகரியாமற் சம்பவிக்கமாட்டாது. ஏனெனின், தனதுற்பத்தியின்முன்னர் காரியம் காரணத்தின்கண்ணே யிருக்கும்; காரணத்தின்வேறாய எபபொருளின்கண்ணும் காரியமிருக்கமாட்டாது. கடரூப காரியம் தனதுற்பத்தியின்முன்னர் மண்வடிவ காரணத்தின்கண் இருந்தது; மண்ணினும் வேறாய எப்பதார்த்தத்தின்கண்ணும கடரூப காரியமிராது. ஹே தேவராஜாவே! அத்விதீயப் பிரஹ்மத்தின்கண் சுருதியானது கூறிய ஜகத்தின் காரணத்தன்மை மாயையின்றிச் சம்பவியாது; ஆகையினால் அத்விதீய நிர்க்

குணப பரமான்மாவின்கண் ஜகத்காரணத்தன்மையின் சித்தியின்பொருட்டு அறிஞர் அத்விதீய பிரஹ்மத்தின்கண் மாயாகற்பனையைச் செய்கின்றனர். ஹே தேவராஜாவே! அம்மாயையும் அதிஷ்டானப பிரஹ்மத்தினும் வேறன்றும்; மற்றோ அறியப்படாப் பிரஹ்மத்தின் பெயரே மாயையாம். இக்காரணத்தால் விவேகிகளாய மகான்மபுருஷர் பிரஹ்மத்தின்கண்ணே ஜகத்தின் காரணத்தன்மைச் சித்தியின்பொருட்டு, அவ்வறியப்படாப பரமான்மாவையே மாயையின் வாசகங்களாய அவ்யாகிருதாதி சபதங்களாற் கூறுநிற்பர்.

இப்போது மாயாவிசிஷ்ட பரமான்மாவின் நாமங்களைக் காண்பிப்பாம:— ஹே தேவராஜாவே' வேதமுணர்நத பெரியார் சிலர் மாயாவிசிஷ்ட பரமான்மாவை அவ்யாகிருதமென்பா, மற்றுஞ் சில வேதமுணர்ந்த பெரியார் அம்மாயா விசிஷ்ட பரமான்மாவை ஆகாசமென்பர், மறறுஞ் சில வேதமுணர்ந்த பெரியார் அம்மாயாவிசிஷ்ட பரமான்மாவை அக்ஷரமென்பர், மற்றுஞ் சிலவேத முணர்ந்த பெரியார் அம்மாயாவிசிஷ்ட பரமான்மாவை மாயீயென்பர், மற்றுஞ்சில வேத முணர்ந்த பெரியார் அம்மாயாவிசிஷ்ட பரமான்மாவை அதீப்வரர் என்பர், மற்றுஞ்சில வேதமுணர்ந்த பெரியார் அம்மாயாவிசிஷ்ட பரமான்மாவை அந்தர்யாமியென்பர், மற்றுஞ் சிலவேத முணர்ந்த பெரியா அமமாயாவிசிஷ்ட பரமான்மாவை ஈப்வரனென்பர், மற்றுஞ் சிலவேத முணர்ந்த பெரியா அமமாயாவிசிஷ்ட பரமான்மாவைக் காரணமென்பர், மறறுஞ் சிலவேத முணர்ந்த பெரியார் அம்மாயாவிசிஷ்ட பரமான்மாவைப பிரஹ்மமென்பர், மறறுஞ் சிலவேத முணர்ந்த பெரியார் அம்மாயாவிசிஷ்ட பரமான்மாவைப் பூர்ணமென்பர், என்பதாதி அநந்த நாமங்களால அமமாயாவிசிஷ்ட பரமான்மாவை வேதமுணாநத பெரியாா கூறுநிற்பர்.

இப்போது அவ்யாகிருத சபதத்தின் பொருளைக் காண்பிப்பாம்:—ஹே தேவராஜாவே! சிருஷ்டி செய்வதற்குமுன்னர் மாயாவிசிஷ்ட பரமான்மாவின்கண் இவ்வெல்லாவுலகின் நாமரூபங்களுமவெளிபபடாமலிருநதன; அதனல் அமமாயாவிசிஷ்ட பரமான்மாவை அவ்யாகிருத மென்பர். சீதகாலத்தின்கண்ணே சூக்குமவடிவமாய் மேகமானது ஆகாசத்தின்கண் இருககும், மீண்டும் மழைகாலத்தே அவ்வாகாசத்தினின்றும் தூலரூபமாய் மேகம உற்பன்னமாம். அது போன்றே பிரளயகாலத்தின்கண் அவ்வவ்வியாகிருத பரமான்மாவின்கண் நாமரூபக் கிரியா வடிவ உலகானது சூக்குமரூபமாயிருநதது. மீண்டும சிருஷ்டிகாலத்தின்கண் அவ்வவ்வியாகிருத பரமான்மாவினின்றுமே தூலரூபமாய் இவ்வுலகமுண்டாம். ஆகையினல் மாயாவிசிஷ்ட அவ்யாகிருத பரமான்மாவே சம்பூர்ண ஜகத்தின் காரணமாம்.

இப்போது ஹிரண்யகர்ப்பரது சொரூபத்தைக் காண்பிப்பாம்:—ஹே தேவராஜாவே! ஆகாசம், வாயு, அக்கினி, ஜலம், பிருதிவி என்பன பஞ்ச பூதங்கள், ேரோத்திரம், துவக்கு, இரசனம், கிராணம், சுரோத்திரம், என்பன பஞ்ச இந்திரியங்கள். பிராணன், அபானன், சமானன், வியானன், உதானன், என்பன பஞ்சப் பிராணன்கள். மனம் என்னும் பதினறு கலைகளின் கூட்டத்தை வேத

முணர்ந்த பெரியார் சூக்கும சரீரமென்பர். அச்சமஷ்டி சூக்கும சரீரத்தின்கண் யானென்னும அபிமானத்தோடு கூடியவராய மாயாவிசிஷ்ட பரமான்மாவே ஹிரண்யகர்பப நாமத்தைப் பெறுவர். ஹே தேவராஜாவே! அவ்விரண்யகர்ப் பரைச சில வேதமுணாநத பெரியார் சூததிர ஆன்மாவெனவும் கூறுவர், சில வேதமுணர்ந்த பெரியார் மிருத்தியுவெனவும் கூறுவர், சில வேதமுணர்ந்த பெரியார் அசநாயாவென்பர், சில வேதமுணாநத பெரியார் பிரபஞ்சனன் என் பர், சில வேதமுணர்ந்த பெரியார் சுவயமபுவென்பர். சிலவேத முணர்ந்த பெரி யார் ஈசனென்பா, சிலவேத முணர்நத பெரியார் காரியபபிரஹ்மமென்பர். என் பனவாதியாய அநந்த நாமங்களால ஹிரண்யகர்ப்பரைக் கூறுநிற்பர். ஹே தேவராஜாவே! அவ்விரண்ய காபபரது சொரூபம் அத்தியநதம் சூக்குமமாம். நாநாவகையாய வர்ணங்களோடு கூடியதாம. ஈஸ்வர இந்திரிய பிராணவிஷய அந்தக்கரணமென்னும இத்துணைப பதாாததங்களின் கூட்டம அவரது சொரூப மென்பது கருத்தாம்:—ஹே தேவராஜாவே! முதலில் பீஜத்தினின்றும் அங்குர முறபன்னமாம். அங்குரத்தினின்றும விருக்ஷமுறபன்னமாம், பீஜம் அங்குர வாயிலாய் விருக்ஷததின் காரணமாம அங்குரம சாக்ஷாத் விருக்ஷத்தின் காரண மாம். அதுபோல மாயாவிசிஷ்ட பரமான்மா இரண்ய கர்பபவாயிலாய்ப் பிரபஞ் சத்தின் காரணமாம், இவ்விரண்ய கர்பபா ஆகாசாதித தூல பஞ்சபூதங்கட்கும், பஞ்சபூதங்களின் காரியமாய தூல சரீராதிகட்கும் நேரே காரணமாம். இவ் வெல்லாவுலகும் இவ்விரண்ய காபபரது சொபபனமாம.

சங்கை:—ஹே பகவன்! இவவெல்லா உலகும ஹிரண்யகர்ப்பருடைய சொப்பனமென அங்கீகரிக்கின், ஹிரண்ய கர்பபரிடத்தே ஜீவத்தன்மை சித்தமாம்.

சமாதானம்:—ஹே தேவராஜாவே! உபாதிதிருஷ்டியால் இவ்விரண்ய கர்ப் பா தமது சைதனயசொரூபத்தை யனுபவம் செய்யாதபோது ஜீவநாமத்தை யடைவர். சைதன்யதிருஷ்டியால இவவிரண்ய காபபர் தமது வியாபகசொரூ பத்தையே யனுபவிபபா. ஆகையின் இவவிரண்யகர்பபா ஈஸ்வரநாமத்தைப் பெறுவர். எஙஙனம மகா பாரததகதின்கண் யுதிஷ்டிராதி பஞ்சபாண்டவர்களுள் தேவதைகளினம்சமும் மனுஷ்யாகளினம்சமும கூறபபெறறுளதோ அங்ஙனம், சமஷ்டிசூக்கும உபாதியின் திருஷ்டியால இரண்யகர்பபரிடத்தே ஜீவ வியவகார முண்டாம, உபாதிபறற வியாபகசைதன்ய திருஷ்டியால் ஹிரண்யகர்பபரிடத்தே ஈசுவர வியவகாரமுண்டாம்.

இபபோது ஹிரண்யகர்பபரிடததே ஈஸ்வர சொரூபததன்மையை வெளி யாக்கும்பொருட்டு, அவ்விரண்ய கர்ப்பரிடத்தே சர்வான்மத் தன்மையையும், ஜகத்தினுற்பத்தி ஸ்திதி லயகாரணத்தன்மையையும காண்பிப்பாம்:—ஹே தேவ ராஜாவே! இவ்விரண்யகாப்பரே ஜடசேதனரூப சம்பூர்ண ஜகத்சொரூபராம், இவ்விரண்யகர்பபரே இந்திராதி சகல தேவதை வடிவராம், இவ்விரண்யகர்ப் பரே தசதிசைச்சொரூபராம், இதனாலே ஹிரண்யகர்ப்பருக்கு யாண்டும் வியாபகத்

தன்மை காண்பிக்கப்பெற்றது. இப்போது ஜகத்தின் காரணத்தன்மையைக் காண்பிப்பாம்:—ஹே தேவராஜாவே! எங்ஙனம் மாயாவீ ராக்ஷசரின் பாலகர் தமது மாயையின் மகிமையால் அநேக பதார்த்தங்களி னுற்பத்தி ஸ்திதி இலயங்களைச் செய்வரோ, அங்ஙனம் இவ்விரண்யகர்ப்பபகவான் தமது மாயையின் வலிமையால் சம்பூர்ணஜகத்தையும் உற்பத்திஸ்திதி இலயம்செய்வர். ஆகையால் இவ்விரண்யகர்ப்பரே சம்பூர்ணஜகத்தின் காரணராம். ஹே தேவராஜாவே! இவ்வுலகின்கண்ணே இரண்யகர்ப்பரி னதிகமாயேனும் சமானமாயேனும் எத்தேகதாரி ஜீவருமின்றாம். மற்றோ, சம்பூர்ண தேகதாரி ஜீவர்களினும் இவ்விரண்யகர்ப்ப பகவான் அதிகராம்; ஆகையால் இவ்விரண்ய கர்ப்பபகவான் அதிசயத்தன்மைத் தோஷமற்றவர். ஹே தேவராஜாவே! எங்ஙனம் இராஜாவின் பிரியமாய தாசர் தத்தம் இச்சை யனுசாரமாய்ச் சுபகர்மத்தின்கண்ணும் அசுபகர்மத்தின்கண்ணும் முயல்வரோ, அந்தப்பிரிய தாசரின் இச்சையின் அனுசாரமாயே இராஜா அவரைப் பிரேரிப்பரோ, அங்ஙனம் பூர்வபூர்வ புண்ணிய பாவரூப கர்மானுசாரமாய்ப் புண்ணியகர்மத்தின்கண்ணும் பாவகர்மத்தின்கண்ணும் முயலாநின்ற ஜீவர்களை இவ்விரண்யகர்ப்பபகவான் பிரேரணைசெய்வர். ஆகையால் இவ்விரண்யகர்ப்ப பகவான் அந்தர்யாமியாவர். இப்போது இப்பொருளையே வெளிப்படையாய்க் காண்பிப்பாம:—ஹே தேவராஜாவே! இவ்விரண்ய கர்ப்பபகவான் எப்புருஷரை நரகத்தின்கண்ணே கொண்டுபோக இச்சிக்கின்றனரோ, அப்புருஷரை யேவிப் பாவகர்மங்களையே செய்விக்கின்றனர். எவரைச் சுவர்க்கத்தின்கண்ணே கொண்டுபோக இச்சிக்கின்றனரோ, அவரை யேவிப் புண்ணியகர்மத்தையே செய்விக்கின்றனர். எவரை மனுஷ்யலோகத்தின்கண்ணே கொண்டுபோக இச்சிக்கின்றனரோ அவரை யேவி இரு கர்மங்களையும் செய்விக்கின்றனர். ஹே தேவராஜாவே! எங்ஙனமுலகின்கண்ணே தர்மாத்மாவாய இராஜாவானவர் சுபகர்மம் செய்யாநின்ற புருஷனைச் சுகமடையுமாறு செய்கின்றனரோ அசுபகர்மம் செய்யும் புருஷனைத் துக்கமடையுமாறு செய்கின்றனரோ அங்ஙனம் இவ்விரண்ய கர்ப்பபகவானும் புண்ணிய கர்மவான்களாய புருஷர்கட்குச் சுகத்தையடைவிப்பர். பாவகர்மவான்களாய புருஷர்கட்குத் துக்கத்தை யடைவிப்பர். இவ்விரண்யகர்ப்பபகவான் பாவிகளினிச்சை யனுசாரமாய் அவரைப் பாவகர்மத்தின்கண் ஏவுவர்; தர்மான்மபுருடரினிச்சை யனுசாரமாய் அவரைப் புண்ணியகர்மத்தின்கண் ஏவுவர். ஆகையால் ஹிரண்யகர்ப்பரிடத்தே விஷமத்தன்மைத் தோஷமும் நிர்த்தயைத்தன்மைத் தோஷமும் உண்டாகா. தாய் தந்தையர் நாநாவகையாய பதார்த்தங்களை யடைவித்துப் பாலகனுக்குச் சுகத்தை யடைவிப்பர், ஒருகால் அடித்துத் துக்கத்தையும் விளைவிப்பர்; ஆனல் பாலகனையடிக்குங்கால் அவனிடத்தே தாய் தந்தையர்க்கு நிர்த்தயைத்தன்மையுண்டாகாது. மற்றோ பாலகனுடைய இதத்தின் பொருட்டே தாய் தந்தையர் அவனைத் தாடனம்செய்வர். அதுபோல, இவ்விரண்யகர்ப்ப பகவானும் ஜீவர்களின் சித்தசுத்தியின் பொருட்டு, அஜ்ஜீவர்களின் கர்மானுசாரமாய் அவர்கட்கு நரகதுக்கத்தைக்கொடுப்பர். ஆகையால் இரண்யகர்ப்பரிடத்தே விஷமத்தன்மைத் தோஷமும நிர்த்தயைத்தன்மைத் தோஷமும சம்பவியாது. ஹே தேவராஜாவே! இவ்விரண்யகர்ப்ப பகவான் சிருஷ்டியின் ஆதிகாலத்தில் சம்பூர்ண

ஜகத்தை விசாரஞ்செய்தே உற்பன்னம் செய்தனர்; ஸ்திதி காலத்தின்கண் ணும் சம்பூர்ண ஜகத்தைப் பாலனம் செய்கின்றனர், பிரளயகாலத்தின்கண் சம்பூர்ண ஜகத்தைச சம்ஹாரஞ் செய்கின்றனர். இரண்யகர்ப்பரினும் வேறாய் ஒரு புருஷனும் இவ்வுலகையுண்டாக்கவும் அளிக்கவும் அழிக்கவும் சமர்த்து டையவனுகான். ஹே தேவராஜாவே! அவ்விரண்யகர்பப பகவான், ஜலத்தைப் பிரதானமாயுடைய ஸ்தூல பஞ்சபூதங்களை யுண்டாக்கி, அஜ்ஜலத்தின்கண்ணே தமது சக்திவடிவ வீர்யத்தை யிட்டனா. அவ்வீர்யமானது உபாசக புருஷரால் ஆற்றிய கர்ம உபாசனைகளின் சூக்கும பரிணமரூபமாம். அத்தகைய சக்திரூப வீரியத்தை ஜலத்தின்கண் இரண்ய கர்பபரிட்டபோது அது ஜலத்தின்மேல் நின்றது. அங்குரத்தின் உறபததிகாலத்தில பீஜமுப்பி யிருபபதேபோல அவ் வீரியம் உப்பியது. அதன்பின் அவ்வீரியம் ததியினுக்குச் சமமாயது. அதன் பின் அவ்வீரியம் அத்தியந்தம் நடினபாவததை யடைந்தது, அஃதே பிருதிவிரூப மாயதென்க. அப்பிருதிவியின் சாரரூபம இபபிரமாண்ட கோளகமாயது. இக்கா ரணத்தாலேயே இப்பிருதிவி சாரரூப மறறதாய்க் காய்நதுள்ளதாய்க் காணப் படுகின்றது. அபபிருதிவியின் சாரரூபமாய பிரஹ்மாண்ட கோளகம், கோழியின் முட்டையை யொத்த ஆகாரத்தை யுடையதாம, பூராதி (பூவாதி) சப்தலோகங்கட் கும் ஆதாரமாயதாம். இத்தகைய கோளகம ஒருவருஷ பரியந்தம் அச்சலத்தின் கண்ணே யிருந்தது. எங்ஙனம காய்நத சுரைபபழம வாயுவாற சுழலாநிற்குமோ அங்ஙனம் ஜலத்தின்கண்ணே வாயுவாலடிக்கப பெற்றதாய் ஒருவருஷம் முடிந்த பின் கோழிமுட்டையைப்போலப் பிளநதது, அதினின்றும சப்தலோகங்களையும் சரீரமாகவுடைய விராட்டுப பகவான் வெளியானர். அவ்விராட்டுப பகவான் பூத பவிஷ்யத் வர்த்தமான மென்னும் முக்காலத்திலுமுள்ள எத்துணைப் பிரபஞ்ச முளவோ அவ்வியாவும விராட்டுப பகவானுடைய சொரூபமேயாம். இவ்விராட் டுப் பகவானே சம்பூர்ண ஜீவர்கட்கும போகங்களை யடைவிப்பவர். இவரே உயிர்கட்குச் சுவர்க்கரூப கௌண அமிருதத்தை யடைவிப்பவர். அங்ஙனே மோக்ஷரூப முக்கிய அமிருதத்தை யடைவிபபவர். இவ்விராட்டுப் பகவானே விரு க்ஷாதிய ஸ்தாவரப பிராணிகட்கும மனுஷ்யாதி ஜங்கமப பிராணிகட்கும நாநா வகையாய அன்னுதிகளை அடைவித்து விருத்திசெய்பவர். ஹே தேவராஜாவே! இவரதுமகிமையை யானென்னெனப புகலவேன். அகிலமியாவும் இவர்மகிமையின் ஒருபாதமாம். முப்பாதங்களோடு கூடிய அம்மகிமை விராட்டுப் பகவானுடைய சொப்பிரகாச சொரூபத்தின்கண் இருபபதாம். உலகின்கண் சேனுபதியே முதலாகச் சம்பூரண திரவியாதி பதார்த்தங்கள் அரசனுடைய மகிமையாம். சேனுபதிமுதலிய மகிமையைப் பார்க்கிலும் அம்மகிமையின் ஆசிரயரூப மகா ராஜா அதிகமாவர்; அதுபோலச் சம்பூர்ணப் பிரபஞ்சரூப மகிமையிலும் இவ்வி ராட்டுப் பகவானதிகமாம். ஹே தேவராஜாவே! சகாம புருஷர்கட்குச் சுவர்க் காதி லோகங்களினடைவின் பொருட்டுக் கர்மகாண்டரூபப் பிரவிருத்தி மார்க்கத் திற்குக் கர்த்தாவும் இவ்விராட்டுப் பகவானேயாவர். நிட்காம புருஷருக்கு மோக்ஷப் பிராப்தியின் பொருட்டு ஞானகாண்டரூப நிவிருத்தி மார்க்கத்தின்

கர்த்தாவும் இவ்விராட்டுப் பகவானேயாம். ஹே தேவராஜாவே! ஆகாசாதிபஞ்ச பூதங்களா லாக்கப்பெற்ற சம்பூர்ணப் பிரபஞ்சத்தினும் இவ்விராட்டுப் பகவானதி கமானவர், இக்காரணத்தாலே மதிமான்களவரை விராட்டென்கின்றனர். இவ்விரா ட்டுப் பகவான் சம்பூர்ண பிராணிகளின் சரீரரூப புரிகளை யாசிரயித்து ஸ்திதமா வர், தனதுசொரூபத்தால் சம்பூர்ண சரீரங்களை நிறைவிப்பர். இக்காரணத்தால் விராட்டுப்பகவானை அதிபுருஷனென்பர். பிரஹ்மாண்டத்தின்கண் இராநின்ற இவ் விராட்டுப்பகவானிடத்திருந்தே இவ்வெல்லாச் சரீரங்களு முண்டாயின, சமபூர்ண பர்வதங்களும பிருதிவியும் உண்டாயின, இக்காரணத்தால் அவர் சமபூர்ண தேக தாரி ஜீவர்களினும் அதிகர். இவரே யாகவடிவினர், இருக்கு, சாமம், யஜுர், அதர் வணமென்னும் நான்கு வேதங்களின் காரணமுமிவரே. இவர்பானின்றே காயத் திரிமுதலிய சந்தசுகளுண்டாகின்றன, ஆடு முதலாய கிராமபசுக்களும் வனபசுக் களும் உண்டாகின்றன. இவர் முகத்தினின்றும் தேவராஜாவாய இந்திரரும் அக்கினியும் சம்பூர்ண பிராஹ்மணர்களு முண்டாயினர். இவர் புஜத்தினின் றும் இநதிரவருணாதி தேவக்ஷத்திரியர்கள் உண்டாயினர் அங்ஙனே பூமிக்காச ராய மனுஷ்ய க்ஷத்திரியர்களுமுண்டாயினர். இவரது தொடையினின்றும் விஸ்வ தேவாதி தேவவைசியர்களும சமபூர்ண மனுஷ்ய வைசியர்களும் உற்பன்னமாயி னர். இவ்விராட்டுப் பகவானது பாதத்தினின்றும பூஷாவென்னும் தேவசூத் திரரும் சம்பூர்ண மனுஷ்ய சூத்திரரும் உற்பன்னமாயினர். இவரது மனத்தி னின்றும் சநதிரன் உதயமாயினன். இவர்தம நேத்திரத்தினின்றும் சூரியபக வான் உதயமாயினர். இவாதம் பிராணனினின்றும் வாயு உற்பன்னமாயது. இவர்தம் நாபியினின்றும் ஆகாசம் உண்டாயது. இவர்தம் மத்தகத்தினின்றும் சுவர்க்கலோகம் உண்டாயது. இவர்தம சுரோத்திரத்தினின்றும தசதிசைகள் உற்பன்னமாய் வநதன. இங்ஙனம அந்நிய தேவதைகளியாவரும் சப்தாதி விஷ யங்களும இவ்விராட்டுப்பகவானிடத்திருநதே உறபன்னமாயின. ஹே தேவ ராஜாவே! நெய்யேமுதலாய திரவியங்களும், வசநதருதுவே முதலாய காலங் களும், அக்கினியேமுதலாய தேவதைகளும், யாகத்தின் கர்த்தாவாய யஜமான னும், யாகாதிகர்மங்களும, விராட்டுப பகவானினும் வேறன்றும; மறறு விராட் பகவானுடைய சொரூபமேயாம். ஹே தேவராஜாவே! சர்வ லோகங்களினு முள்ள பிராணிகளியாவற்றின் மத்தகங்களியாவும் விராட்பகவானுடையனவே யாம், ஆகையினுலிவரை எண்ணிக்கையற்ற மத்தகங்களுடையவரென்பர், சர்வப் பிராணிகளின் இந்திரியங்களியாவும் இவ்விராட்பகவானுடையனவேயாம். இக்கார ணத்தானே இவரை எண்ணிக்கையற்ற இந்திரியங்களோடு கூடியவரென்பர். இங்ஙனம் கரங்கால்முதலிய சர்வ அங்கங்களையு முணர்க. ஹே தேவராஜாவே! இவ்விராட்டுப் பகவானே பூதபௌதிகப் பிரபஞ்சமுழுவதினும் வியாபித்து இருதயதேயத்தின்கண்ணே யிருப்பர்; சமபூர்ண புததிமுதலியவற்றின் சாக்ஷி யாவர், சம்பூர்ண திருசியவர்க்கத்தினின்றும வேறுவர். ஆவரணமற்ற சுயம்பிர காசர். இத்தகைய சுயம்பிரகாச விராட்டுப்பகவானை யான் சாக்ஷாத்தா யனு பவிக்கின்றேன்; அவ்விராட்டுப் பகவான் நாமரூபான்மக சகலப் பிரபஞ்சத்திற்குங் காரணமாம். இருதயதேசத்தின்கண்ணே இராநின்ற அவர் சப்தோச்சாரணுதி

சகல வியவகாரங்களையும் சித்தம்செய்வர். ஹே தேவராஜாவே! பிரதிபந்தம் நிவிர்த்தியாயின் அத்தகைய விராட்டுப்பகவானுடைய சொரூபத்தைப் பிரஹ்மோப தேசத்தால் நீரும் சாக்ஷாத்தா யனுபவிக்கலாம். இவ்விராட்டுப் பகவான் தச திசைவடிவமாம. ஆகையால், சகலசாமக்ரீசகித யாகசொரூபமும் இவரேயாம், யாவன் யாகத்தா லவ்விராட்டுப்பகவானைப பூஜிக்கின்றனனோ, அம்மகான்ம புரு ஷன் அந்தயாகரூப தர்மத்தால் அவ்விராட்டுப் பகவானுடைய மத்தகரூப சுவர்க்க லோகத்தையடைவன். சுவர்க்கலோகம இவ்விராட்டுப் பகவானுடைய மத்தகமாம், சூரிய சந்திரரிருவரும் இவ்விராட்டுப பகவானுடைய நேத்திரங்களாம், வாயு இவ் விராட்டுப் பகவானுடைய பிராணனும், அந்தரிக்ஷலோகம் இவ்விராட்டுப் பகவா னுடைய தேகத்தின் மத்தியதேசமாம், சம்பூர்ண ஜலம் இவ்விராட்டுப் பகவா னுடைய மூத்திராசயமாம், சம்பூர்ண பூலோகம் இவ்விராட்டுப் பகவானுடைய பாதமாம், ஆஹவநீய மென்னுமக்கினி இவ்விராட்டுப பகவானுடைய முகமாம், கார்ஹபத்தியமென்னும அக்கினி இவ்விராட்டுப் பகவானுடைய இருதயமாம், தக்ஷி ணாக்கினி யென்னும் அக்கினி இவ்விராடடுப பகவானுடைய மனமாம், யாகத்தின் கண்ணே சம்ஸ்காரத்தோடு கூடிய பூமியானது இவ்விராட்டுப பகவானுடைய * வக்ஷஸ்தலமாம, † குசை இவ்விராட்டுப பகவானுடைய ரோமமாம், சம்பூர்ண ஔஷதிகளும் ‡ வனஸ்பதிகளும் இவ்விராட்டுப் பகவானுடைய கேசங்களாம. இவ்விராட்டுப் பகவானுடைய தியானததை உபாசக புருஷர் செயற்பாலதாம். ஹே தேவராஜாவே! விஸ்தாரமாய் விராட்டுப பகவானுடைய சொரூபத்தை யாம் உம்பொருட்டுக் கூறினேம.

இப்போது சுருககமா யவ்விராட்டுப பகவானுடைய சொரூபத்தை நீர் கேட் பீராக. எத்துணைப பிரபஞ்சம் பிரததியக்ஷமாய்க் காணப்படுகின்றதோ, பிரத் தியக்ஷமாய்க காணபபடுகின்றதின்றே இவையாவும விராட்டுப் பகவானுடைய சொரூபமேயாம. இத்தகைய விராட்டுப் பகவானாகிய புத்திரன் உற்பன்னமான தைக்கண்டு பசியாறபீடிககப்பட்ட அவ்விரண்யகர்பபர் விராட்டுரூப புத்திரனைப் பக்ஷணம் செயய முகத்தைத்திறந்தனர்.

சங்கை :—ஹே பகவன்! ஹிரண்யகர்பப பகவானுக்குப் புத்திர பக்ஷணமா கிய நிந்தித கர்மத்தில ஏன் இசசையுண்டாயது?

சமாதானம் :—ஹே தேவராஜாவே! இபபசிவடிவ பிசாசானது எந்த ஜீவனு டைய புத்தியைத்தான் பிரஷ்டமாக்கமாட்டாது; மறறே எல்லா ஜீவர்களின் புத் திகளையும் பிரஷ்டமாக்கும்; இக்காரணததால அவ்விரண்யகர்ப்பர் புத்திரனைப் பக்ஷணம் செய்வதில் முயறசி செய்தனர். கருத்திதுவாம்:—ஹிரண்யகர்ப்பருக்குச் சமானமாய ஈஸ்வரர்களையும் பசியாகிய பிசாசானது அநர்த்தத்தின்கண்ணே பிர விர்த்திபபிக்குமாயின், அநநிய அவிவேக ஜீவர்களின் கதையென்னும்? அல்லது இச்சம்சாரத்தின்கண்ணே நாநாவிதமாகிய நோய்களுள; அவற்றை நீக்கும் உபாய

* வக்ஷஸ்தலம்=மார்பு. † குசை=தர்ப்பை.
‡ வனஸ்பதி=பூவின்றிப்பழுக்கும் புளாமரம் முதலியன.

மும் நாநாவகையாய்ச் சாஸ்திரத்தின்கண்ணே கூறப்பெற்றுள. இப்பசியாகிய நோயின் நீக்கத்திற் குபாயமாய் அன்னபக்ஷணமன்றி வேறொன்றையுங் காணோம்; அன்னபக்ஷணமொன்றே பசியாகிய நோயை நீக்கு முபாயமாம். இக்காரணத்தாலே எல்லா நோய்களினும் இப்பசியாகிய நோய் அதிகமாம். அல்லது புத்திரமரணத்தால் தாய் தந்தையர்க்குத் துக்கமுண்டாம், அத்துக்கத்தினும் அதிகதுக்கம் பசியுடையோனுக்குண்டாம். இப்பொருளின்கண்ணே ஹிரண்யகர்ப்பரே திருஷ்டாந்தமாவர்; ஏனெனின், புத்திரனுடைய மரண ஜன்னிய துக்கத்தை யற்பமென நாடி அவ்விரண்யகர்ப்பர் க்ஷுதா (பசி) ஜன்னிய துக்கத்தை நீக்கப் புத்திரனைப் பக்ஷணம் செய்வதில் முயல்வுற்றனரன்றோ. இதனால் புத்திரமரண ஜன்னிய துக்கத்தினும் க்ஷுதா ஜன்னிய துக்கம் அதிகமாமெனவுணர்ந்து கொள்ளலாமன்றோ? அல்லது எங்ஙனம் தயையின்றிய ராக்ஷசர் தேகதாரீ ஜீவர்களை ஹிம்சைசெய்கின்றனரோ, அங்ஙனம் இவ்வுலகின்கண்ணே பசியாற் பீடிக்கப்பட்ட புருஷன் தனதுபிதாவையும், மாதாவையும், குருவையும், சகோதரனையும், உறவினரையும் கொல்வன். அல்லது இப்பசியாகிய பிசாசானது சத்தியம், சௌசம், ஸ்ரீ, தைரியம், பலம், வீர்யம், பராக்கிரமம், யசசு, தர்மம், தயை என்பதே முதலாய சர்வகுணங்களையும் நாசம்செய்யும்.

இப்போது இப்பொருளையே வெளிப்படையாய்க் காண்பிப்பாம் :—பசியாற பீடிக்கப்பட்டவனாய இப்புருஷன் தனது ஸ்திரீயையும், பிதா மாதா முதலிய சம்பந்திகளையும் நாய்போலத் திரஸ்காரம் புரிவன். இதனால் பசியாற் பீடிக்கப்பட்ட புருஷன் தயையற்றவனாவன். தயாவானாய புருஷன் யாரையும நிராதரம் செய்யான், தயையற்ற புருஷனே பிதா மாதாதி சமபந்திகளை நிராதரம் செய்வன் என உணர்ந்து கொள்ளககிடந்ததன்றோ? அல்லது சர்வ தேகதாரீ ஜீவர்களிடத்தே இப்பசிரூபி பிசாசின் விசித்திரமாய பலமுளது. ஏனெனின், இவ்வுலகின்கண்ணே நித்திரை,காமம், குரோதம் முதலிய தோஷங்களத்தியந்தம் பிரபலங்களாம். ஆயினும் அக்காமாதி தோஷங்களையும், சத்தியாதி சுபகுணங்களையும் இப்பசியாகிய பிசாசானது விரைவாகவே யழிக்கும். ஆகையால் சத்தியாதி சுபகுணங்களைக் காட்டிலும் காமாதி யசுபகுணங்களைக் காட்டிலும் இப்பசிப் பிசாசானது பலமுடையதாம் என அறிந்துகொள்ளலாமன்றோ? உலகின்கண்ணும் பலவானாய புருஷனாலேயே பலமற்ற புருஷனுக் கபஜயமுண்டாம்.

இப்போது பசியின்கண்ணே நித்திராதி தோஷங்களின் ஜயகாரணத்தன்மையை வெளிப்படையாய் நிரூபணம்செய்வாம் :—பசியாற் பீடிக்கப்பட்ட புருஷன் கோமளமாய மெத்தையின்மேற் படுத்திருப்பினும் நித்திரையையடையான்; ஆகையால், நித்திராரூப தோஷத்தினும் இப்பசியாய பிசாசானது பிரபலமாம். பசியாற் பீடிக்கப்பட்ட புருஷன் எவன்பாலேனும் அன்னத்தைக் கேட்பின், அவ்வன்ன தாதாவாய புருஷன் நாநாவகையாய துர்வசனங்களால் அவனை நிராதரம் செய்வன். அந்நிராதரத்தானும் பசியாற் பீடிக்கப்பட்ட புருஷன் குரோதத்தை யடையான். ஆகையால் குரோதரூப தோஷத்தினும் இப்பசியாய பிசாசானது பலமுடையதாம். அல்லது பூர்ண நிலாப்போன்ற முகத்தையும், மலைபோற் பருத்த

இருதனத்தையும், மிருதுவாய தேகத்தையும், பதினறுவயதுடைய யவ்வன அவஸ் தையையும், மாதுர்யத்தோடுகூடிய மிருதுவசனத்தையும், தெய்வப்பெண்கட்குச் சமானமாய அழகையும், காமத்தோடுகூடிய சரீரத்தையும் உடைய ஸ்திரீகளால் ஆலிங்கனம் செய்யபபடினும் பசியோடுகூடிய யவ்வனபுருஷன் பாலகனைப்போலக் காமதோஷத்தை யடையான்; ஆகையால், காமதோஷத்திலும் பசிரூபபிசாசானது பலவானும். அல்லது பசியோடுகூடிய புருஷன் சுவர்ணதிதிரவியங்களையும் அசுவாதி பசுக்களையும், தானியங்களையும், பூமியையும், தனம் நிறைந்த மூவுலகத் தையும் இச்சியான் ஆகையால, இப்பசியாய பிசாசானது லோப தோஷத்தி லும் பலமுடையதாம். அல்லது காமக் குரோத லோபமென்னும் முத்தோஷங்க ளும் மூவுலகத்தையும் வெற்றிகொண்டுள்ளன; ஆகையால் காமம், குரோதம், லோ பம் என்னும் முத்தோஷங்களும் மகாபலமுடையனவாம். அக்காமக்குரோத லோபங்களும் இப்பசிப் பிசாசின் பயத்தால் யாண்டாண்டோ ஓடித்திரிகின்றன. கருத்திதுவாம்:—காமக்குரோத லோபமென்னும் மூன்று சூரவீரரும் பசிப்பிசா சின் பயத்தால் இங்ஙனம் துர்க்கதியை யடைவராயின், காமக்குரோத லோபங்களா லபஜயமடைந்த சத்தியாதிகுணங்களை இப்பசிப் பிசாசானது அபஜயம் செய்யாது எனக்கூறல் சம்பவியாது; ஆகையால் இப்பசிப பிசாசானது சத்தியாதி சுபகுணத் தினும் காமக்குரோதாதி யசுபகுணத்திலும் பலமுடையதாம். பசியாய பிசாசின் வசமாகிய இவ்விரண்யகர்ப்ப பகவான் தமது புத்திரனைப் பக்ஷணம் செய்ய இச்சை செய்தனர். ஹே தேவராஜாவே! இவ்வண்ணம் ஹிரண்யகர்ப்பர் விராட்டுரூப புத் திரனைப் பக்ஷணம் செய்யும்பொருட்டு, முகத்தைத் திறந்தபோது அவ்விராட்டான வர் இரண்யகர்ப்பராய பிதாவை நோக்கிப பயத்தையடைந்தனர்; "பாண்" எனச் சப்தம் செய்தனர். ஹே தேவராஜாவே! இத்தேகாபிமானமே ஜீவர்கட்கு அநர் த்த காரணமாம்; ஏனெனின், தேகாபிமானத்தோடு கூடியதாலன்றோ விராட்டுப் புத்திரர் பசியாற் பீடிக்கப்பட்டவராய ஹிரண்யகர்ப்ப பிதாவை நோக்கிப் பயத்தை யடைந்தனர். மரணத்தின் பின்னர் இத்தூல சரீரத்தை நாய்முதலிய ஜந்துக்கள் பக்ஷணம் செய்யும் என்னும் ஞானம் விராட் புருஷருக்குண்டேனும், ஜீவிதகாலத் தின்கண்ணே தேகாபிமான மகிமையால் சாக்ஷாத் பிதாவின் பொருட்டும் இவ்வி ராட்டானவர் சரீரதானம் செய்திலர்; ஆகையால் இத்தேகாபிமானமே சர்வ தர்மங் கட்கும் பிரதிபந்தகமாம்.

சங்கை:—ஹே பகவன்! விராட்டுப பகவானனவர் ஹிரண்யகர்ப்ப பிதாவின் பொருட்டுச் சரீரதானத்தைச் செய்திலர் என்னும் இதன்கண்ணே தேகாபிமானந் தடையன்றும்; மற்றேறு வேறே யாதோ தடையுளதாம்.

சமாதானம்:—ஹே தேவராஜாவே! பிதாவின்பொருட்டுச் சரீரத்தைக் கொடு ப்பதில் விராட்டுப் பகவானுக்குத் தடையாதுளது? பிதாவின் பொருட்டுச் சரீரத் தைத் தானம்செய்தல் நமது அநிஷ்ட சாதனமாம் என்னும் அநிஷ்ட சாதனத்தன் மைஞானம் தடையா? அல்லது பிதாவின் பொருட்டுச் சரீரத்தைத் தானம்செய்தல் பயனற்றதாம் என்னும் நிஷ்பலத்தன்மை ஞானம் தடையா? அவற்றுள், முதற்ப க்ஷம் பொருந்தாது; ஏனெனின், ஒருபுருஷன் ஒருபொருளை மற்றொரு புருஷன்பால்

வைத்தானாகி, அவன் அப்பொருளை யெப்பொழுது கேட்கின்றனனோ, அப்பொழுது வைத்த புருஷனுக்கு அப்பொருளைக் கொடுப்பதால் எவ்வநிஷ்டப் பிராப்தியு முண்டாகாது; மாறாய்க் கொடாவிடில் பிரதீதியின் ஹானிரூப அநிஷ்டத்தி னடைவுண்டாம். அதுபோலப் பிதாவின் வீரியத்தாற் புத்திரனது சரீரமுண்டா மாதலின், புத்திரனது சரீரம பிதாவினுடையதேயாம். அப்புத்திர சரீரத்தைப் பிதா பக்ஷணஞ்செய்யின் புத்திரனுக்குச் சிறிது மாத்திரமும் அநிஷ்டப் பிராப் தியுண்டாகாது; மாறாய்க் கொடாவிடின் பிரதீதியின் ஹானிரூப அநிஷ்டப் பிராப்தியுண்டாம்; ஆகையால, பிதாவின் பொருட்டுச் சரீரதானஞ் செய்வதில் அநிஷ்ட சாதனத்தன்மை ஞானம் பிரதிபந்தகமன்றாம். பிதாவின் பொருட்டுச் சரீரதானம் செய்வதில் நிஷ்பலத்தன்மை ஞானம் பிரதிபந்தகமா மென்னு மிர ண்டாவது பக்ஷமும் பொருந்தாது; ஏனெனின், இவ்வநித்திய சரீரங்கொண்டு எவர்க்கேனு மெக்காரியமேனும சித்தமாகக் கூடுமேல் இதனினும் மேலாய் வேறொரு கர்த்தவ்யமுமின்றாம்; மறறோ இதனானேயே சரீரத்தின் சபலத் தன்மையாம். ஆகையால் பிதாவின்பொருட்டுச் சரீரதானம் செய்வதில் நிஷ் பலத்தன்மை ஞானமும் பிரதிபந்தகமன்றாம். அல்லது அநிய ஒரு பசியாற பீடிக் கப்பட்ட புருஷனுக்கு மறறொரு புருஷன் அன்னாதிபதார்த்தங்களைக் கொடுப்பின் அவ்வன்ன தாதாவாய புருஷனுக்குச சுவர்க்காதி லோகங்கள் கிடைக்கும் எனச் சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. அன்னாதிகளை யீவதினாலும் புருஷர் கட்குச் சுவர்க்காதி லோகங்களின் பிராப்தியாமேல் சாக்ஷாத்தனது சரீரதானம் செய்வதால் பலபிராபதி யுண்டாகமாட்டாதெனக கூறல் அத்தியநதம் அநுசித மாம்; மற்றோ சரீரத்தைத தானமசெய்வதால் ஜீவர்கட்கு மகாபலத்தின் பிராப்தி யுண்டாம். கருத்திதுவாம்:—யாவனேனு மொரு பசியாற் பீடிக்கபபட்ட அதிதி யின்பொருட்டு அன்னதானம் செய்யப்பட்டவனுக்கும் சுவர்க்காதிப் பலப்பிராபதி யுண்டாமாயின், பசியாற் பீடிக்கப்பட்ட சாக்ஷாத் பிதாவின் பொருட்டு இத்தூல சரீரத்தைத் தானம் செய்வதாலிப்புருஷன் எபபலத்தைத்தானடையான்; மற்றோ சர்வ பலன்களையு மடைவானென்பதாம். ஆகையால பிதாவின் பொருட்டுச் சரீர தானம் செய்வதில் நிஷ்பலத்தன்மை ஞானம பிரதிபநதக மன்றாம். அல்லது இவ்வசுசியாய சரீரத்தின்கண் எப்புருஷன் ஆன்ம அபிமானத்தைச செய்வனோ அவன் பாவிது கேட்கவேண்டும்?

(சு-ம்.) [Grantha verse, illegible]

(த-வி.) மல மூத்திர மாமிச மாதிநிறை
யிலமா முட னானென வெண்ணுதியே
னிலமீ துறு நீளவை தம்மினுநீ
யுலமா யக மூன்னுற லென்னிலையே

இதன் பொருள்:—ஓ ஹ தேகாபிமானிகளாய ஜீவர்களே! மலம், மூத்தி ரம், மாமிசம, உதிரம், மஜ்ஜை, அஸ்தி என்பனவாதி அசுத்த சமுதாயரூபம் இச சரீரமாம். இத்தகைய அசுசியாய சரீரத்தின்கண் நீங்கள் ஆன்ம புத்தி செய்வீர்

களாயின் சரீரத்தினின்றும் வெளியே யிராநின்ற மலமூத்திர மாம்சாதிகளிடத்தே ஆன்மபுத்தியை நீங்கள் ஏன்செய்கின்றிலீர்? மற்றே சரீரத்தினும் வெளித்தேசத்தி லிராநின்ற விஷ்டாமூத்திராதி மலங்களிடத்தும் நீங்கள் ஆன்மபுத்தி செய்யவேண் டும. சரீரத்தினும் வெளித்தேசத்தே யிராநின்ற விஷ்டா மூத்திராதிகளிடத்தும் சரீரத்துள்ளே இராநின்ற விஷ்டா மூத்திராதிகளிடத்தும் சிறிதுமாத்திரமும் விலக்ஷணத் தன்மையின்றும். ஆகையால், சரீரத்தினும வெளித்தேசத்திரா நின்ற விஷ்டா மூத்திராதி மலங்களிடத்தே நீங்கள் ஆன்மபுத்தி செய்யாததே போல, விஷ்டா மூத்திராதிகளின் சமுதாயரூப இசசரீரத்தின்கண்ணும் நீங்க ளான்மபுத்தி செய்தலுசித மாகாதென்பதாம். இங்ஙனம் தேகாபிமானரூபகாரிய அவித்தையின்கண் அநர்த்த காரணத்தன்மையைக் காண்பித்தாம்.

இப்போது தேகாபிமான காரணமாய அஞ்ஞானரூப மாயையின்கண்ணே சர்வ அநர்த்த காரணத்தன்மையைக் காண்பிப்பாம் :—ஹே தேவராஜாவே! இப்பரமேஸ்வரது மாயையானது தன்னை யாசிரயித்த புருஷனையும் மயக்குவதாம்; இக்காரணத்தினுலே இம்மாயையானது மாயையினுசிரயமாய விராட்டுப் புருஷனை மோகிபபித்தது.

சங்கை :—ஹே பகவன்! மாயையானது விராட் புருஷனை மோகிப்பித்த தென எவ்வண்ணம் அறிதல்கூடும?

சமாதானம் :—ஹே தேவராஜாவே! இசசரீரமானது பிதாவின் வீரியத்தா லுண்டாயதாதலின் பிதாவினுடையதேயாம; புத்திரனுடையதன்றும். துர்கந்தத் தோடுகூடியதாம; எபபோதும அபவித்திர(அசுத்த)மாயதாம்; கணந்தோறும் நாச முறுவதாம்; கடத்தைப்போல அநான்மவடிவமாம; திரத்தன்மையற்றதாம். இத்த கையசிறாப சரீரத்தையும் அவ்விராட்புருஷர் பசியாற் பீடிக்கப்பட்ட பிதாவின் பொருட்டுக்கொடுத்திலர்; ஆகையால் இவ்வெல்லாம் மாயையின் மகிமையேயென அறியத்தக்கதாம். கருத்திதுவாம் :—எபபுருஷன் திரவியாதி பதார்த்தங்களைத் தானஞ்செய்வதில் கிருபணனுவனே அப்புருஷனுக்கு அத்திரவியாதி பதார்த்தங்க ளிடத்தே அததியாசமுண்டாம. அததியாசமின்றிக் கிருபணத்தன்மை யுண்டா காது; ஆகையால், கிருபணத்தன்மைரூப ஹேதுவினுலஅத்தியாசத்தின் அநுமான முண்டாம். அவ்வத்தியாசம் அஞ்ஞானரூபமாயையினுலன்றிச சம்பவியாது; ஆகை யால், அத்தியாசரூப ஹேதுவினுல் அஞ்ஞானரூபமாயையின் அநுமானமாம். அது போன்றே ஹிரண்யகர்ப்பரூப பிதாவின் பொருட்டுச் சரீரதானம்செய்வதில் உண் டாய விராட்புருஷருடைய கிருபணத்தன்மையே அத்தியாசவாயிலாய் அஞ்ஞான ரூபமாயையின் அநுமானத்தைச் செய்விக்கும். ஹே தேவராஜாவே! சரீராதிகளில் ஆன்ம அபிமானரூப மோகமும், அஞ்ஞானரூப மோகமும், விராட்டாதி மகா புருஷரையும் அநுசித காரியத்தின்கண் முயல்விக்குமாயின், அந்நிய லௌகிக புருஷரை யநுசிதகாரியத்தின்கண் முயல்வியாதெனக்கூறல் சம்பவிக்கமாட்டா தன்றே? ஆகையால், இவ்விருவகையாய மோகமே ஜீவர்களின் சர்வாநர்த்த காரணமாம். ஹே தேவராஜாவே! விராட்புருஷர் பயத்தால் உச்சரித்த "பாண்"

என்னும் வாணியானது சர்வதேகதாரி ஜீவர்கட்கும் வர்ணரூப வைகரிவாணியும் தொனிரூப வைகரிவாணியும் ஆயது. ஹே தேவராஜாவே! பசியாற் பீடிதராய ஹிரண்யகர்ப்ப பகவான் விராட்புத்திரனைப் பக்ஷணம்செய்ய முயன்றிடினும் பக்ஷணம் செய்திலர்; ஏனெனின், அவ்விரண்ய கர்ப்பபகவான் வித்தையாற் சம்பன்னராதலின் வித்தையின் பலத்தால் புத்திர பக்ஷணரூப நிஷித்த கர்மத்தினின்றும் நிவிர்த்தியை யடைந்தனர். ஆகையால், இவ்வித்தை எப்புருஷனுக்குத்தா னுபகாரத்தைச் செய்யமாட்டாது. மற்றோ, சர்வ ஜனங்கட்கு முபகாரத்தைச் செய்யும்; இப்பொருளின்கண் ஹிரண்யகர்ப்பரே திருஷ்டாந்தமாவர். ஏனெனின், புத்திர பக்ஷணரூப நிஷித்த கர்மத்தின்கண் இவ்விரண்ய கர்ப்பர் பிரவிர்த்தராயினும் இவ்வித்தையானது அவரை நிஷித்த கர்மத்தினின்றும் நிவிர்த்திசெய்தது. கருத்திதுவாம:—ஹிரண்ய கர்ப்பரை நிஷித்த கர்மத்தினின்றும் வித்தை நிவிர்த்தி செய்ததேபோல அந்நிய எப்புருஷனேனும இவ்வித்தையைச் சம்பாதனஞ்செய்து கொள்ளிலவனையும் வித்தைநிஷித்த கர்மத்தினின்றும் நிவிர்த்திப்பித்துச் சுபகர்மத்தின்கண்ணே பிரவிர்த்திப்பிக்கும்.

இப்போது வித்தையின் பிரபாவத்தை (மகிமையைக்) காண்பிப்பாம்:—ஹே தேவராஜாவே! லோகத்தாலும் சாஸ்திரத்தாலும் நிஷித்த கர்மங்களைச் செய்யாநின்ற புருஷரையும், அத்தியந்தம் தீனதசையை யடைந்துள்ள புருஷரையும் இவ்வித்தை சுகமடையுமாறு செய்விக்கும். சுகசாதன திரவியாதி பதார்த்தங்கள் அடையுமாறும் செய்விக்கும். ஹே தேவராஜாவே! இரண்டு லோகங்களையும் ஹானிசெய்வதும் கீர்த்தியை நாசஞ்செய்வதும் ஆபத்துருவமும் தாண்டற்கு முடியாததும் ஆகிய சமுத்திரத்தின்கண்ணே யடைந்திருப்பினும், இப்புருஷன் வித்தையின் மகிமையால் அக்கடலைச் சுகமாகவே தாண்டிவிடுவன். இவ்வித்தையே எல்லாத் தேகதாரிகளாய ஜீவர்கட்கு மாதாவாம். வித்தையினும் வேறாய் எதுவும் உயிர்கட்கு மாதாவாகமாட்டாது. ஏனெனின், லோகப்பிரசித்த மாதாவின் உதரத்தினின்றும் உற்பன்னமாய இச்சீவன் இவ்வுலகின்கண்ணும் பரலோகத்தின்கண்ணும் சுகத்தையடையான். இவ்வித்யாரூபீ மாதாவினின்றும் வெளிப்போந்த இப்புருஷனவன் இவ்வுலகின்கண்ணும் பரலோகத்தின்கண்ணும் சுகத்தையடைவன். இவ்வித்தையே சர்வ சரீரிகட்குந்தனமாம். இவ்வித்தைக்குச் சமானமாய் எத்தனமுமின்றாம். ஏனெனின், உலகின்கண்ணே பிரசித்தமாய சுவர்ணாதிதனங்கள் கொடுப்பதாற் குறைநதுபோய்விடும். பரலோகத்தின்கண்ணும் புருஷனோடு கூடச் செல்லமாட்டாது. இவ்வித்யாரூபீ தனமோ சுபாத்திர புருஷரின்பொருட்டுத் தானஞ்செய்யப் பெறுவதாய்த் தினந்தினம் விருத்தியை யடையா நிற்கும். பரலோகத்தின்கண்ணும் இச்சீவனைப் பரித்தியாகம் செய்யமாட்டாது. ஆகையால், சுவர்ணாதி லௌகிகத்தனத்தினும் இவ்வித்யாரூபீ தனமானது அத்தியந்தம் உற்கிருஷ்டமாம். ஹே தேவராஜாவே! காமக்குரோத லோப மோக க்ஷுதா (பசி) என்பனவாதி சத்துருக்களாற் கொல்ல அகப்பட்ட இப்புருஷன் ஒரு வித்யாரூபி சஸ்திரத்தானேகாமாதி சத்துருக்களைக் கொல்வன். வித்யாரூபீ சஸ்திரத்தானன்றி அன்னிய எவ்வுபாயத்தானும் காமாதிகளின் நிவிர்த்தி யுண்டாகமாட்டாது. ஆகையால், ஹே தேவராஜாவே! இவ்வித்தைக்குச் சமானமாய் யாதொரு

ஷிதகாரியாய பதார்த்தமின்றாம். இக்காரணத்தானே அவ்வித்தை ஹிரண்யகர்ப்ப ரது இருதயத்தின்கண் இருப்பதாய் அவருக்கிது கூறியது.

இப்போது வித்தையின் வசனங்களைக் காண்பிப்பாம்:—ஹே ஹிரண்யகர்ப் பரே! புத்திரனைப் பக்ஷணம்செய்தலுமக்கு யோக்கியமன்று. ஏனெனின், எல்லாவுல கரையும் தர்ம மரியாதையின்கண் னிலைநிறுத்தற்பொருட்டே உமது வெளிப்பாடா மாதலின் நீர் சர்வலோகர்கட்கு மாசிரியரன்றோ; நீரே மரியாதையைக் கடந்து விடுவீரேல் பின்னெவ்வுயிர் மரியாதையைப பாலனஞ் செய்யும்; மற்றோ எவ்வுயிரும் மரியாதையைப் பாலியா. ஹே ஹிரண்யகர்ப்பரே! இவ்வுலகின்கண் சர்வ ஜீவர் கட்கும் தத்தம் தர்மத்தின்கண்ணே தாபனஞ் செய்பவர் நீரேயாம். உம்மைத் தர்ம மரியாதையின்கண்ணே தாபனஞ் செய்பவர் வித்தையாய என்னிற் பின்னமா யெவருமின்றாம்; மற்றோ வித்தையாய யானே உம்மைத் தர்ம மரியாதையின் கண்ணே தாபனம் செய்பவள். ஹே ஹிரண்யகர்ப்பரே! நீர் எனது உபதேசத்தை யங்கீகரியாது விராட்டுப புத்திரரைப் பக்ஷணமசெய்வீரேல், இரண்டுலகத்தின்கண் ணும் உமது கீர்த்தியானது நஷ்டமாம. புத்திரனாலுண்டாவதாய ஆநந்தமும் உமக்கு நஷ்டமாம். ஆகையால், புத்திரனைப பக்ஷணமசெய்த லுமக்குசிதமன்றாம். ஹே ஹிரண்யகர்ப்பரே! இபபுத்திர பக்ஷணரூப கர்மமானது சண்டாளராலும் பசுக்களாலும் நிந்திதமாம்; ஏனெனின், பசியாற் பீடித்த சண்டாளரும் பசுக்களும் புத்திர பக்ஷணம் செய்வதின்றன்றோ, ஆகையால, சண்டாளராலும் பசுக்களாலும் நிந்தித புத்திர பக்ஷணரூப கர்மத்தின்கண் முயலுதல் உமக்குசிதமன்றாம். ஹே ஹிரண்யகர்பபரே! நாய்முதலிய பசுக்கள் காமத்தால் மயங்கியதாய்த் தனது மாதாவோடும தனது சகோதரியோடும் மைதுனஞ்செய்யும். அவையும் தமது புத்திரரைப் பக்ஷணம் செய்யாதொழியின், தர்மத்தை நிலை நிறுத்தும் உமதி டத்தே இப்புத்திர பக்ஷணரூப காமம் எங்ஙனம் சம்பவிக்கும். ஹே தேவரா ஜாவே! இங்ஙனம் வித்தையானது ஹிரண்யகர்ப்பருக்கு உபதேசிக்கவே அவ் விரண்யகர்ப்பபகவான் அவ்வித்தையின் வசனங்களைவிசாரித்துப் புத்திரபக்ஷணத் தினின்று நிவிர்த்தியை யடைந்தனா. அவ்விரண்யகர்ப்பபகவான் அவ்விராட்டுப் புத்திரரின்பொருட்டு, ஆன்ம ஞானத்தைக் கொடுத்துச் சர்வ வேதங்களையும் சாற்றி ஆண்டேமறைந்தனர். அதன்பின்னர் விராட்டுப் பகவான் ஒருவராகவே யிருந்தனர். எங்ஙனம் நிர்ஜனப் பிரதேசத்தின்கண்ணே யிராநின்ற பாலகன் பயத் தையடைவனோ, அங்ஙனம் அவ்விராட்டுப் பகவான் ஹிரண்யகர்ப்பபிதாவைக் காணாதவராய்க் கணமாத்திரம பயத்தையடைந்தனர். கணத்தின் பின்னவ்விராட் புருஷர் விசாரஞ்செய்து அபபயத்தைப பரித்தியாகம் செய்தனர்.

இப்போதவ் விசார சொரூபத்தைக் காண்பிப்பாம்:—சுருதியின்கண் இரண் டாவது வஸ்துவினால் பயத்தினடைவு கூறப்பெற்றுளது. எனது சொரூபத்தினும் வேறாய் யாதொரு பதார்த்தமுமின்றாம். ஏனெனின், எனது சொரூபத்தினும் பிரஹ்மம் பின்னமாயின் பிரஹ்மத்தின்கண்ணே அத்விதீயத் தன்மை யிராது. சாஸ்திரத்தின்கண்ணோ பிரஹ்மத்தை யத்விதீய சொரூபமே யெனக்கூறப்பட்

டுளது. ஆகையால், எனது சொரூபத்தினின்றும் பிரஹ்மம் பின்னமன்றும். எனது சொரூபத்தினும் ஆன்மாப் பின்னமாயினோ என்னிற் பின்னமாய கடபடாதிகள் அனான்மாக்களாவதேபோல ஆன்மாவும் அனான்மாவாம். ஆன்மாவை யனான்மாவென்னல் சம்பவியாது. ஆகையினாலான்மாவும் எனது சொரூபத்தினும் பின்னமன்றும். இங்ஙனம் பிரஹ்ம சொரூபத்தை விசாரித்தும் ஆன்ம சொரூபத்தை விசாரித்தும் அவ்விராட்டுப் பகவான் பேததிருஷ்டியைப் பரித்தியாகம் செய்தனர். அந்தப் பேததிருஷ்டியாகிய காரணம நிவிருத்தியாகவே அவர் பயரூப காரியத்தினின்று நிவிருத்தரானார்.

இப்போது பேததிருஷ்டியின்கண்ணே பயகாரணத்தன்மையை வெளிப்படையாய்க் காண்பிப்பாம்:—உலகின்கண்ணே துக்கசாதனமாய சிம்மசர்ப்பாதிகளைப புருடன் றனக்குப் பின்னமா யங்கீகரிக்கின் அவற்றினின்றும் பயத்தை யடைவன். பேததிருஷ்டியை விட்டொழிப்பனேல் எப்பதார்த்தத்தினின்றும் பயத்தையடையான்; ஆகையால், உடன்பாட்டானும் எதிர்மறையானும் பேத திருஷ்டியே ஜீவர்கட்குப் பயகாரணமாம். அப்பேததிருஷ்டியை அவ்விராட்பகவான் முற்கூறிய விசாரத்தால் பரித்தியாகம்செய்தனர். அதனால் அவ்விராட்டுப் பகவான் நிர்பயத்தன்மையை யடைந்தனர். ஹே தேவராஜாவே! அவர் விசாரத்தாற் பயத்தைவிடினும் காமதோஷத்தால் ஆலிங்கிக்கபெற்றவராய் ஸ்திரீயின்றிசசிறிது சுகத்தையு மடைந்திலர். உலகின்கண்ணே காமிகளுக்கு ஸ்திரீயின்றி இடதுபாகத்தின்கண் இராநின்ற சம்பூர்ண ஆகாசம் சூனியரூபமாய்த் தோற்றுவதேபோல, விராட்டுப்பகவானுக்கும் ஸ்திரீயின்றி இடதுபாகத்தின்கண்ணே இராநின்ற சம்பூர்ண ஆகாசம் சூனியரூபமாய்த் தோற்றியது. கருத்திதுவாம்:—சம்பூர்ண காமங்களில் ஒவ்வோரம்சத்தின்கண்ணே சூனியத்தன்மையின் ஞானகாரணத்தன்மை உளது. ஸ்திரீ இச்சையையுடைய காமியானவன் இடதுபாக ஆகாசத்தைச் சூனியமாய்க் காண்பான், புத்திரேச்சை யுடையவன் அங்க ஆகாசத்தைச் சூனியமாய்க் காண்பன், பசுக்களினிச்சை யுடையோன் கிருக அங்கண ஆகாசத்தைச் சூனியமாய்க் காண்பன், தனத்தை யிச்சித்த புருஷன் கோசா ஆகாசத்தைச் சூனியமாய்க் காண்பன். இங்ஙனம் எவ்வெப் பதார்த்தங்களிற் புருஷனுக்கிச்சை யுண்டாமோ, அவ்வப் பதார்த்தங்க ளிருக்கப்பட்ட இடத்தைச் சூனியமாய்க் காண்பன். நிஷ்காம புருஷன் ஒருவனே யாண்டும் ஆன்மாவைப் பூரணமாய்க் காண்பன். ஆகையால் பதார்த்தங்களின் இச்சையே துக்ககாரணமாம்; அக்காமமகிமையானன்றோ விராட்டுப் பகவானுக்குந் துக்கமுண்டாயது. ஹே தேவராஜாவே! இவ்வாறு ஜீவர்களின் புண்ணிய பாவரூப கர்மவசத்தால் விராட்டுப் பகவானிடத்தே உண்டாய காமரூப சர்ப்பத்தால் கடிபட்ட அவர் தமது மனத்தின் கண்ணே இவ்வண்ணம் ஆராய்ந்தனர். யாண்டும் வியாபித்திரானின்ற இவ்வெனது சரீரமானது எப்போகத்தையும் போகிக்கச் சமர்த்துடையதன்றும் ஆதலின் போகங்களைப் போகிப்பான் இச்சரீரத்தினும் வேறாய ஒரு அற்பசரீரத்தை யான் உண்டாக்குவேன், அச்சரீரத்தா லெனக்கு விஷயஜன்னிய சுகத்தினடைவுண்டாம். ஹே தேவராஜாவே! இங்ஙனம் விசாரித்து, சத்திய சங்கற்பத்தோடு கூடிய விராட்டுப் பகவான் மற்றொரு சரீரத்தை யுற்பன்னம் செய்தனர். அச்சரீரத்தைச்

சுக்தியினிரு * சம்புடம்போலப் பாதி பெண்வடிவமாயும் பாதி யாண்வடிவமாயும் இருக்குமாறு செய்தனர். ஹே தேவராஜாவே! விராட் பகவானுற்பன்ன மாய ஸ்திரீ புருஷான்மக சரீரம் காரணாஞ்ஞானத்தோடு கூடியதாமாதலின், மாயா விசிஷ்ட ஈசுவர சொரூபமாம். அச்சரீரம் அந்தக்கரணாதி சூக்கும பதார்த்தங்களோடு கூடியதாமாதலின் ஹிரண்யகாப்ப சொரூபமாம். அச்சரீரம் ஸ்தூலபௌதிக பதார்த்தங்களோடு கூடியதால் விராட்வடிவமாம். ஹே தேவராஜாவே! இந்த ஸ்திரீ புருஷாத்மக சரீரம் ஈசுவர ஹிரண்யகர்ப்ப விராட்வடிவமாம்; அங்ஙனமே உலகின்கண்ணுள்ள ஸ்திரீ சரீரங்களுட, புருஷ சரீரங்களும், நபும்சக சரீரங்களும ஸ்தாவரஜங்கம சரீரங்களும் ஈசுவர ஹிரண்யகர்ப்ப விராட்வடிவங்களாம். ஏனெனின், சர்வப் பிராணிகளின் சமஷ்டி ஸ்தூல சரீராபிமானி விராட்பகவானாதலின், சர்வப் பிராணிகளோடும் விராட்பகவானுக்குத் தாதாத்மிய முளது. சர்வப்பிராணிகளின் சமஷ்டி சூக்கும சரீராபிமானி ஹிரண்யகர்ப்பராதலின், சர்வப் பிராணிகளின் சங்காததத்தோடும ஹிரண்யகாபபருக்குத் தாதாத்மியமுளது. சர்வப்பிராணிகளின் சமஷ்டிகாரண சரீராபிமானி ஈசுவரராமாதலின், சர்வப்பிராணிகளின் சங்காதத்தோடுகூட ஈசுவரருக்குத் தாதாத்மியமுளது. ஈண்டு அஞ்ஞானரூப மாயையின் பெயர் காரணமாம. அபஞ்சீகிருத பஞ்ச பூதங்களையும் அவற்றின் காரியங்களாய அந்தக்கரணாதிகளையும் சூக்கும மென்பா. பஞ்சீகிருத பஞ்ச பூதங்களையும் அவற்றின் காரியங்களையும ஸ்தூலமென்பர். இவ்வாறு சம்பூர்ணப் பிராணிகளின் சங்காத ஸ்தூல சூக்ஷும காரணம் சொரூபமாமாதலின், சர்வப் பிராணிகளின் சரீரத்தோடு விராட் ஹிரண்யகர்பப ஈசுவரர்க்குத் தாதாத்மிய சம்பந்தமுளதெனத் துணியப்பெற்றதென்றுணர்க.

இப்போது பூர்வ விருத்தாந்தத்தைக் காண்பிப்பாம் :—ஹே தேவராஜாவே! விராட் பகவான்பானின்றும் உற்பன்னமாய ஸ்திரீ புருஷசொரூப வேறுசரீரத்தானேயே இவ்வெல்லா மனுஷ்யாதி சிருஷ்டி யுற்பன்னமாயது. ஆகையால், அவ் விராட் பகவானுடைய வேறு சரீரம வியஷ்டிக்கோடியின்கண் எண்ணத்தக்கதன்றும்; மற்றோ சமஷ்டிகோடியின்கண் எண்ணத்தக்கதாம். இப்போது அவ் விராட்பகவானுடைய வேறொரு சரீரத்தால் மனுஷ்யாதி சிருஷ்டி உற்பத்திப் பிரகாரத்தைக் காண்பிபபாம் :—ஹே தேவராஜாவே! அத்தகைய ஸ்திரீ புருஷ வடிவ சரீரத்தைப் பார்த்து அவ்விராட் பகவான் அச்சரீரத்தை இருபாகமாக்கினர். சுக்தியின் சமபுடத்தின்கண் இராநின்ற கீடமானது அச்சம்புடத்தை இருகூறு செய்வதேபோல அவ்விராட் பகவான் அச்சரீரத்தை இருகூறு செய்தனர். அவற்றுளொரு கூறு ஸ்திரீ ரூபமாயது, அதனைச் சாஸ்திரத்தின்கண்ணே சதரூபா என்பர். மற்றொரு கூறு புருஷ ரூபமாயது, அதனைச் சாஸ்திரத்தின் கண்ணே சுவாயம்புவமனு வென்பர். அவ்விருவர்பானின்றும் இவ்வெல்லா மனுஷ்யாதி சிருஷ்டியும் உண்டாயின. ஹே தேவராஜாவே! இங்ஙனம் விராட் பகவான் சதரூபா என்னும் ஸ்திரீயையும் மனுவையும் உற்பன்னம் செய்தபோது, சதரூபா என்னும் பெண் மனுபுருஷன் காமபீடிதனா யிருப்பதைநோக்கி வரு

* சம்புடம்=சிமிழ்.

முயிர்களின் கர்மானுசாரமாய் இவ்வகையாய விசாரத்தைத் தனது மனத்தின் கண்ணே செய்தனள். இப்போதச் சதரூபாவின் விசாரத்தைக் காண்பிப்பாம் :— இம்மனுவாய புருஷர் விராட்பகவானுடைய வடிவமாமாதலின் எனது பிதாவாம்; அல்லது ஓரே விராட்பகவான்பானின்றும் இம்மனுவும் யானும் உற்பன்னமான தால் இம்மனு வெனது சகோதரராம். ஆகையால், இம்மனு புருஷரோடு வியபி சாரி ஸ்திரீயைப்போல யானெங்ஙனம் விஷயசம்பந்தஞ் செய்வேன்; மற்றே இம் மனுவோடு விஷயசம்பந்தஞ்செய்தல் எனக்கு உசிதமன்றும். காமத்தால் மயங்கிய இம்மனு சுவர்க்க அடையின் சாதனமாய தர்மத்தையும் நரக அடையின் சாதன மாய அதர்மத்தையும் அறியாரேனும், அவ்வறம் பாவங்களை யான் நன்றாயறிந் துளேனாதலின், இந்நிந்தித கர்மத்தின்கண்ணே முயலுதல் எனக்கு யோக்கியமன் றும். அல்லது ஸ்திரீகளிடத்தே புருஷரைப்பார்க்கிலும் அதிக காமமுளதாமாயி னும், இவ்வுலகின்கண்ணே காமத்தால் பீடிக்கப்பட்ட புருஷரே விசேஷமாய்த் தர்ம மரியாதையைத் தாண்டுவர். காமத்தாற் பீடிக்கப்படினும் ஸ்திரீயானவள் விசேஷ மாய்த் தர்ம மரியாதையை * உல்லங்கனஞ் செய்யாள். மற்றே ஸ்திரீகளிடத்தே புருஷரினும் அதிக தைரியமுண்டாம். ஆகையால, எனது இதோபாயத்தை யானுஞ்சிந்தைசெய்தல் யோக்கியமாம். ஹே தேவராஜாவே! இவ்வண்ணம் அநே கந்தரம் ஆராய்ந்து அச்சதரூபா ஸ்திரீ மனுவை நீக்கும்பொருட்டு, இவ்வகையாய உபாயத்தைச் சிந்தனை செய்தனள். இப்போது அவ்வுபாயத்தைக் காண்பிப்பாம்:— இம்மனுவானவர் காமத்தால் பீடிக்கப்பட்டவராயிருத்தலின், இவருக்குத்தர்மோப தேசத்தைச் செய்து யான் நிவாரணஞ்செய்யினும் எனது வசனத்தை யங்கீகாரஞ் செய்யார். ஏனெனின், யாவன் காமத்தாற்பீடிக்கபபடுவனே அவனுக்கு அக்காலத் தில் சாக்ஷாத் குருவேனும் ஈஸ்வரரேனும் வந்து நிவாரணஞ்செய்பினும் அவர்கள் வசனத்தைக்கேளான்; ஆயின், ஸ்திரீயாய எனது வசனத்தை எங்ஙனம் இவர் கேட்பர். ஆகையால், தர்மோபதேசரூப உபாயத்தால் இமமனுவின் நிவாரணம் உண்டாகமாட்டாது; மற்றே, இப்பூர்வ சொரூபத்தைப பரித்தியாகம்செய்து வேறு சொரூபத்தைத் தரித்து யான் மறைநதுவிடுதலே நலம். இஃதே மனுவை நிவாரணஞ்செய்ய வுபாயம். ஏனெனின்,உலகின்கண்ணே சமானஜாதியோடுகூடிய ஸ்திரீயின்கண்ணே புருஷருக்குக காமபாவனையுண்டாம்; விலக்ஷண ஜாதியை யுடைய ஸ்திரீயின்கண்ணே புருஷருக்குக் காமபாவனை யுண்டாகமாட்டாது; மனுஷருக்கு மனுஷ்யத்வ ஜாதியையுடைய ஸ்திரீயின்கண்ணே காமபாவனையுண் டாம். பசுத்வ ஜாதியையுடைய ஸ்திரீயின்கண்ணே மனுஷருக்குக் காமபாவனை யுண்டாகாது; அதுபோன்றே பசுக்கட்கும் பசுத்வஜாதியையுடைய ஸ்திரீயின் கண்ணே காமபாவனையுண்டாம். மனுஷ்யத்வஜாதியையுடைய ஸ்திரீயின்கண்ணே பசுக்கட்குக் காமபாவனை யுண்டாகமாட்டாது. ஆகையால், இச்சொரூபத்தைப பரித்தியாகம்செய்து யான் வேற்றுருவத்தைக் கவர்வேன். ஹே தேவராஜாவே! இங்ஙனமோர்ந்து அந்தச் சதரூபா என்னும் பெண்ணனவள் முன்னுருவத்தைப் பரித்தியாகம்செய்து கோ (பசு) சரீரத்தைக் கவர்ந்தனள். அவள் கோரூபமான தைக்கண்டு அம்மனுவும் விருஷப(எருது)ரூபத்தைத்தரித்தனர். அவ்விரண்டின்பா

* உல்லங்கனம் = தாண்டல்.

னின்றும் சம்பூர்ண கோககளும் விருஷபங்களும் உண்டாயின. மீண்டும் அச்சதரூபா கோரூபத்தை விடுத்து அசுவினீரூபத்தைக் கவர்ந்தனள்; அப்பெண்குதிரையைக் கண்டு அம்மனுவும் அசுவசரீரத்தைத் தரித்தனர்; அவ்விரண்டின்பானின்றும் சம்பூர்ண அசுவங்களும் அசுவினிகளும் பிறந்தன. இங்ஙனமெந்த எந்த ஜாதியையுடைய சரீரங்களை அச்சதரூபா எடுக்கின்றனளோ அவ்வச்சாதியையுடைய புருஷசரீரத்தை அம்மனுவும் கவர்ந்தனர், அவ்விருவர்பானின்றும் அவ்வச்சாதியையுடைய பெண்களும் ஆண்களும் உண்டாயின. ஹே தேவராஜாவே! இவ்விதம் அவ்விருவர்பானின்றும ஸ்திரீ புருஷரூப சம்பூர்ண ஸ்தாவர ஜங்கமரூபப் பிராணிகளுண்டாயின. இவ்வண்ணம் ஹே இந்திரரே! அப்பரமான்ம தேவர், இருகால்களையுடைய மனுஷ்யாதிகளையும், நாற்கால்களையுடைய அசுவாதிகளையும், கால்களற்ற சர்ப்பாதிகளையும உண்டாக்கினர். இத்துணைக் கிரந்தத்தால் மாயாவிசிஷ்ட பரமான்மாவினின்றும ஜகத்தினுற்பத்திப் பிரகாரத்தை நிரூபணஞ்செய்தோம்.

இப்போது அஜ்ஜகத்தின்கண்ணே பரமான்மாவின் பிரவேசப் பிரகாரத்தை நிரூபணம்செய்வாம்:—ஹே தேவராஜாவே! எபபரமான்மதேவர் சமஷ்டி அஞ்ஞானரூப உபாதியின்கண்ணே புகுந்தவராய்ச சகத்தின் கர்த்தாவாய ஈஶ்வரரென்னப் பெயர்பெற்றனரோ, எபபரமான்மதேவர் சமஷ்டிசூக்கும உபாதியின்கண்ணே புகுநதவராய் ஹிரண்யகர்ப்பரென்னும பெயரைப பெற்றனரோ, எப்பரமான்மதேவர் சமஷ்டிஸ்தூல உபாதியின்கண்ணே புகுநதவராய் விராட்டென்னும் பெயரைப் பெற்றனரோ, அபபரமான்மதேவரே சம்பூர்ண சரீரரூபப் புரிகளிடத்தே பிரவேசித்தனர். மகாகாசம மடரூப உபாதியின்கண்ணே புகுநததாய் மடாகாசம் என்னும் பெயரையடையும, அம்மடாகாசம் மடத்தினுள் அறபகிருகத்தின்கண்ணே புகுந்ததாய் அபவாக ஆகாசமென்னும் பெயரையடையும், அவ்வபவரக ஆகாசம கடரூப உபாதியின்கண்ணே பிரவேசித்ததாய்க் கடாகாசமென்னும் பெயரையடையும். அதுபோன்றே இப்பரமான்ம தேவா சமஷ்டி அஞ்ஞானரூப உபாதியின்கண்ணே புகுந்தவராய் ஈஶ்வரரென்னும் பெயரையடைவா, சமஷ்டி சூக்கும உபாதியின் கண்ணே புகுந்தவராய் ஹிரண்யகர்பபரென்னும பெயரையடைவர், சமஷ்டி ஸ்தூல உபாதியின்கண்ணே புகுந்தவராய் விராட்டென்னும் பெயரையடைவர். அப்பரமான்ம தேவரே தமது சைதன்யரூபத்தால் சர்வப்பிராணிகளின் சரீரத்தின்கண்ணே பாதமே முதலாய் மத்தகபரியந்தம் பிரவேசம் செய்தனர். இக்காரணத்தானே ஜீவனென்னும் பெயரை யடைவர். ஈண்டிது தாற்பரியமாம்:—அன்னாதி பதார்த்தங்கட்குக் கிருகத்தின்கண்ணே பிரவேசமாம். ஆண்டு அன்னாதி பதார்த்தங்களின் கிருகத்தின்கண்ணுள்ள சம்யோக சம்பந்தமே அவற்றிற்குக் கிருகத்தின்கண்ணே பிரவேசமாம். இவ்வகையாய பிரவேசமோ பரமான்மாவிற்குச் சம்பவியாது; மற்றோ, அஞ்ஞாநாதி உபாதிகளிடத்தே இருநது விளங்குதலேயாம், இஃதேபரமான்மாவின் பிரவேசமென்றுணர்க. இப்பிரவேசத்தையே சாஸ்திரத்தே ஆபாசவாதத்தானும் அவசசேதவாதத்தானும் கூறப்பட்டுளது. யாண்டும் நிறைந்திராநின்ற ஆகாசத்தை மயங்கிய புருஷன் கடத்தின்கண்ணே யிருப்பதா யங்கீகரித்

துளான். ஆனால், அவ்வாகாசம் உண்மையாய்க் கடத்தின்கண் இன்றாம்; மாறாய்க் கடாதி சர்வபதார்த்தங்களும் ஆகாசத்தின்கண்ணே யிருக்கும். அதுபோலச் சர்வ ஜகத்தின் அதிஷ்டானரூப பரமான்மாவை விசார ஹீனபுருஷன் சரீரத்தின் கண்ணே யிருப்பதாய்க் காண்பன். ஆனால், அபபரமான்ம தேவர் உண்மையாய்ச் சரீராதிகளிடத்தே யிருப்பவரன்றாம்; மாறாய்ச் சரீராதி ஜடபதார்த்தங்கள் பரமான்மாவை யாசிரயித்திருக்கும். ஹே தேவராஜாவே! கடாதிகளுண்டாவதற்கு முன்னரே யாண்டும் ஆகாசம் உளதெனினும் கடோற்பத்தியின் பின் கடத்தின் கண்ணே ஆகாசம் புகுந்ததென உலகர் கூறுநிற்பர். அங்ஙனமே,சரீர உற்பத்தியின் முன்னரே பரமான்மா யாண்டுமிருபபினும் சரீரோற்பத்தியின் பின் சரீரத்தின் கண் ஆன்மா புகுந்தது என்னும் வியவகாரமுண்டாம். சூரிய பகவானுடைய பிரகாசம் சர்வ பதார்த்தங்களிடத்தே சமானமேயாமெனினும் சூரியகாந்த மணியிடத்தே புகுந்து தாகாதி காரியத்தைச் செய்யும். கடாதி பதார்த்தங்களிடத்தே யிராநின்ற சூரிய தேஜசானது தாகாதி காரியத்தைச் செய்யமாட்டாது. அதுபோல இவ்வாநந்த சொரூப பரமான்மா யாண்டும் சமானமாயே வியாபகமாமெனினும் ஹிருதய தேசத்தின்கண் விசேஷமாய் உபலப்தியாம். இக்காரணத்தாலே இருதய தேசத்தின்கண்ணே ஆன்மாவின்ஸ்திதியை நூற்களில் நுவலப்பட்டுளது. ஹே தேவராஜாவே! நாவிதன் கத்திகளைவைக்கும் பெரிய அடைப்பப்பையின் ஏக தேசத்தின்கண்ணே கத்தியின் விரைவாய உபலபதி (தோற்றம்) உண்டாம்; அவ்வாறே சம்பூர்ண சரீரத்தில் ஒரு ஹிருதய தேசத்தின்கண்ணே ஆன்மாவின் விரைவாய உபலபதியுண்டாம். இககாரணத்தானே ஹிருதய தேசத்தின்கண்ணே ஆன்மாவின்ஸ்திதி கூறப்பெற்றுளது. ஹே தேவராஜாவே! அக்கினி சாமானியரூபமாய்ச் சர்வ பதார்த்தங்களிடத்தே யிருபபினும் விசேஷரூபமாய்க் காஷ்டத்தின் கண்ணே உபலப்தி யுண்டாம்; அவ்வண்ணம் சாமானியரூபமாய் இபபரமான்ம தேவர் யாண்டும் நிறைந்திருப்பினும் விசேஷரூபமாய்ச சரீரத்தின்கண்ணே உபலப்தியாவர். சொரூபமாய் அக்கினியின்கண்ணே குறைவும் மிகுதியும் இன்றாமென்றாலும் காஷ்டரூப உபாதியின் குறைவு மிகுதிகளினால் அதன்கண்ணே குறைவு மிகுதிகள் புலபபடாநிற்கும்; அதுபோல, ஆநந்தசொரூப ஆன்மாவின்கண் உண்மையாய்க் குறைவு மிகுதிகளின்றாமென்றாலும் சரீராதி யுபாதிகளின் குறைவு மிகுதிகளா லான்மாவின்கண்ணே குறைவு மிகுதிகள் புலப்படாநிற்கும்.

சங்கை :—ஹே பகவன்! ஆன்மா சர்வசரீரங்களிலும் விசேஷரூபமாயிருக்குமாயின் சர்வ ஜீவர்கட்கு மான்மசாக்ஷாத்கார முண்டாகவேண்டும்.

சமாதானம் :—ஹே தேவராஜாவே! அக்கினி சர்வ காஷ்டங்களிடத்துமுளதாமெனினும், கடைந்த காஷ்டத்தின்கண்ணே கனல்கிளம்பும்; அதுபோல, இவ்வாநந்த சொரூப ஆன்மா சர்வ சரீரங்களிலு மிருந்தபோதிலும், சிரவணாதி சாதனங்களோடு கூடிய சரீரத்தின்கண்ணே ஆன்மாவின் சாக்ஷாத்காரமுண்டாம். கருத்திதுவாம் :—வேதாந்த சாஸ்திர சிரவணமின்றியே இருப்புவிளக்க ரூபங்களால் சர்வ ஜீவர்கட்கும் ஆன்மாவின் ஞானமுண்டா மென்றாலும் பரிபூர்ண ஆநந்த அத்விதீய ரூபத்தால் ஆன்மாவின் ஞானம் சிரவணாதி சாதனங்களின்றி

யுண்டாகமாட்டாது; மற்றோ சிரவணாதி சாதனங்களானே அத்விதீயரூபமாய ஆன்மாவின் சாக்ஷாத்காரமுண்டாம். காஷ்டரூப உபாதியின் பேதத்தா லக்கினியானது பெருந்தன்மையையும் அற்பத்தன்மையையும் அடையும்; உண்மையாய் அக்கினியின்கண்ணே பெருந்தன்மையும அற்பத்தன்மையு மின்றாம். அதுபோன்றே சரீராதி உபாதியின் பேதத்தால் இவ்வாநந்த சொரூப ஆன்மாவும் மகான்மபாவத்தையும் அற்பபாவத்தையு மடையும்; உண்மையாய் ஆன்மா ஏகரசமாம். ஓரே அக்கினியின் பிரகாசம் காஷ்டரூப உபாதியின் பேதத்தால் நாநாவகையாகும்; அங்ஙனமே ஒரே பரமான்ம தேவா அந்தக்கரணாதி உபாதி பேதத்தால் நாநாவகையையடைவர். இரவின்கண்ணே சூக்குமரூபமாய்ச் சூரியனுடைய ஒளியிருப்பினும் அந்தகாரத்தான் மறைக்கப்பட்டதாய் எப்பொருளையும் விசேஷமாய் ஒளிர்விக்க வில்லை; அவ்வண்ணம் இவ்வாநந்தசொரூப ஆன்மா யாண்டுமிருப்பினும் அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டதாய் ஒளிர்விபபதின்றாம்.

சங்கை :—ஹே பகவன்! பிரகாசசொரூப ஆன்மாவின்கண் அஞ்ஞானத்தால். ஆக்கும் ஆவரணம் சமபவியாது?

சமாதானம் :—ஹே தேவராஜாவே! தினத்தில் அந்தகாரரூப ராகு சூரியனை யாசிரயித்திருந்து அச்சூரியனையே மறைக்கும. அதுபோல அஞ்ஞான அவஸ்தையின்கண் பிரகாசசொரூப ஆன்மாவை ஆசிரயித்திருந்து அஞ்ஞானம் அவ்வான்மாவையே மறைக்கும. இககாரணம்பற்றியே சாஸ்திரத்தின்கண் அஞ்ஞானத்தை சுவாசிரய சுவவிஷயமெனக் கூறப்பெற்றுளது கருத்திதுவாம் :—அந்தகாரமானது எவ்வில்லின்கண் இருக்குமோ அவ்வில்லை மறைக்கும். அதுபோல, அஞ்ஞானமும் அந்தகாரரூபமாமாதலின் சுத்த ஆன்மாவைப பற்றியிருந்து அதனையே மறைக்கும்.

இப்போது முன்னர் மொழிந்த ஆன்மாவின்கண் உலகின் அத்தியாரோபத்தை அபவாதஞ்செய்தலை நிரூபிபபாம் :—ஹே இந்திரரே! சூரியனுடைய ஆதபத்தின்கண்ணும் சூரியனிடத்தும் பிரகாசப்பெற்றி சமானமேயாயினும், சூரிய பகவானே பூர்ணப்பிரகாச சொரூபராம். சூரியனுடைய ஆதபம் பூரணப்பிரகாச சொரூபமன்றாம்; மற்றோ, பரிசசின்னப் பிரகாசரூபமாம். அதுபோன்றே வாக்காதி இந்திரியங்களிடத்தே ஆன்மாவின் பிரகாசம் பூரணமாயின்றாம்; மற்றோ, பரிச்சின்னப் பிரகாசமாம். ஆநந்தசொரூப ஆன்மாவே பரிபூர்ணப் பிரகாசமாம். இவ்வாநந்தசொரூப ஆன்மா ஒவ்வொரு வாக்காதி இந்திரியங்களிடத்தே யிருப்பினும் உண்மையாய்ப் பரிபூர்ணமேயாம் என்றாலும், யான்வாக்காயுள்ளேன் யான் சுரோத்திரமாயுள்ளேன் என்பதாதி விபரீதஞானங்கட்கு விஷயமாய் ஆன்மா பரிச்சின்னம்போலப் பிரதீதியாம். பரிபூர்ண ஆன்மாவின்கண்ணே பரிச்சின்னதிருஷ்டி ஜனன மரணரூப சம்சாரகாரணமாமாதலின் அறிஞன் ஆன்மாவைப் பரிச்சின்னமாய்ப் பார்க்கலாகாது; மற்றோ, யாண்டும் பரிபூரணமெனவே காணவேண்டும். இப்போது வாக்காதிகளோடு தாதாத்மிய அத்தியாசத்தால் ஆன்மாவின்கண் பரிச்சின்னத்தன்மை யுண்டாயதை நிரூபிப்பாம்:—தேவராஜாவே! ஒரே தேவதத்தன்

அன்னாதிகளைச் சமைப்பானாயின் அவனை யடுவோனென்பர்; படிப்பானாயின் பாட கனென்பர். ஆகையால், அடுதற்றொழிலைக் கவர்ந்து தேவதத்தனிடத்தே அடுவோ னென்னுஞ் சத்தத்தின் பிரவிர்த்தியுண்டாம், பாடரூபக்கிரியையைக்கவர்ந்து பாடக சப்தத்தின் பிரவிர்த்தியுண்டாம். பாகரூபக்கிரியையையும் பாடரூபக்கிரியையையும் அற்றிருக்கும் தேவதத்தனுடைய வடிவத்தின்கண் பாசகன் பாடகன் என்னும் பெயர்கள் பிரவிர்த்தியா. ஆகையால், பாச பாடக நாமங்கள் தேவதத்தனுடைய பரிச்சின்னத்தன்மையைப் போதிப்பனவாம்; பரிபூர்ணத்தன்மையைப் போதிப்ப னவன்றாம். ஏனெனின், பாசக சப்தத்தானும் பாகக்கிரியை விசிஷ்ட தேவதத்த னுடைய போதமேயுண்டாம்; பாடக்கிரியை விசிஷ்ட தேவதத்தனுடைய போத முண்டாகாது. அங்ஙனம் பாடக சப்தத்தானும் பாடக்கிரியை விசிஷ்ட தேவ தத்தனுடைய போதமேயுண்டாம், பாகக்கிரியை விசிஷ்ட தேவதத்தனுடைய போதமுண்டாகமாட்டாது. ஆகைபால், பாசக பாடக நாமங்கள் தேவதத்த னுடைய பரிச்சின்னத் தன்மையைப் போதிப்பனவாம். அதுபோல வாக்காதி நாமங்களும யாதேனும் ஒரு நிமித்தத்தைக் கவர்ந்து ஆன்மாவின்கண்ணே பிர விர்த்தமாமன்றிச் சுத்த ஆன்மாவின்கண்ணே பிரவிர்த்தமாகா. ஆகைபால், சம் பூர்ண வாக்காதி நாமங்கள் ஆன்மாவின் பரிச்சின்னத் தன்மையைப் போதிப்பன வாம். எந்த எந்த நிமித்தத்தைக் கவர்ந்து வாக்காதி நாமங்கள் ஆன்மாவின் கண்ணே பிரவிர்த்தமாமோ அந்த அந்த நிமித்தத்தை யிப்போது நிரூபிப்பாம்.— இவ்வாநந்த சொரூப ஆன்மா சப்தோச்சாரணரூப வியாபாரத்தைச் செய்வதால் வாக்கென்னும் பெயரையடைவர். இப்பரமான்ம தேவர் கடபடாதி சர்வ பதார்த் தங்களைக் கவர்வாராதலின் ஹஸ்தமென்னும் பெயரைப் பெறுவர். இவ்வாநந்த சொரூப ஆன்மா மார்க்கத்தின்கண்ணே செல்லுமாதலின் பாதநாமத்தைப் பற் றும்; மலாதிகளின் பரித்தியாகவாயிலாய்ச் சர்வப் பிராணிகளையும் பாலனஞ் செய் யுமாதலின் பாயுவென்னும நாமத்தைப் பற்றும்; சர்வப்பிராணிகட்கு மாநந்த உற்பத்தியைச் செய்தலின் சிசுனமென்னும் பெயரைச் செறியும்; ஜீவர்களின் புண்ணிய பர்வரூப பலமாய சுகதுக்க போகங்களின் அதிகாரியாதலின் உபஸ்த மென்னும் பெயரையுறும். இங்ஙனம் வாக்காதிய கர்மேந்திரியங்களோடு தாதாத் மிய அத்தியாசத்தால் ஆன்மாவின்கண் வாக்காதி சப்தங்களின் பிரவிர்த்தி காண் பிக்கப்பட்டது. இப்போது கிராணாதி ஞான இந்திரியங்களோடு தாதாத்மிய அத்தியாசத்தால் ஆன்மாவின்கண்ணே கிராணாதி சப்தங்களின் பிரவிர்த்தியை நிரூபணம் செய்வாம்:—ஹே தேவராஜாவே! இவ்வாநந்த சொரூப ஆன்மா கந் தத்தைக் கவர்தலின் கிராணமென்னும் பெயரைப் பெறும்; காண்கின்ற பதார்த் தத்தைச் சங்கையற்றதாய்க் கூறுமாதலின் சக்ஷுவெனச சாற்றப்பெறும்; சப்தத் தைக்கேட்குமாதலின் சுரோத்திரமென்னும் பெயரைப் பெறும்; மதுராதி ஆறு இரசங்களைக் கவருமாதலின் இரசனமென்னும் பெயரைப் பெறும், சீதோஷ்ண ஸ்பரிசத்தை யனுபவிக்குமாதலின் துவக்கென்னும் பெயரைத் தொடரும். இப் போது ஆன்மாவின்கண் பிராண அந்தக் காணங்களின் நாமங்களது பிரவிர்த்தியை நிரூபிப்பாம்:—ஹே தேவராஜாவே! இவ்வாநந்த சொரூப ஆன்மா சரீரரூப யந்திரத்தின்கண் அதிசயமாய்ச் சலிக்குமாதலின் பிராணனென்னும் பெயரை

யடையும், சம்பூர்ண ஜகத்தை விகற்பஞ் செய்யுமாதலின் மனமென்னும் பெயரை மருவும், ஸ்திரீயானவள் கர்ப்பத்தைத் தரிப்பதேபோலத் தனது சொரூபத்தின் கண்ணே சம்பூர்ண ஜகத்தை வாதனைவடிவமாய்த் தரிக்குமாதலின் தீயென்னும் பெயரைச் சேரும், அநுசந்தானரூப விருத்தியின்கண் இலங்குமாதலின் சித்த மென்னும் பெயரைச் செறியும், யானென்னும் நாமம் எல்லாப் பிராணிகளுடைய ஆன்மாவின் போதகமா மாதலினுனே உலகத்தின்கண் நீ யாரென எவராலேனுங் கேட்கப்பெற்றவன் யான் தேவதத்தன் என விடை யளிப்பன்; அவ்விடையின்கண் யானென்னும் சப்தத்தை முன்னா ருச்சரிப்பன்; தேவதத்த சப்தத்தைப் பின்ன ருச்சரிப்பன்; ஆகையால், யான் என்னும் சப்தம் சர்வப் பிராணிகளின் ஆன்ம வாசகமாம். ஹே தேவராஜாவே! வாக்கே முதலாய் எத்துணை நாமங்கள் முன் னர் மொழியப் பெற்றனவோ அநநிய தேவமனுஷ்ய அசுரர் முதலிய நாமங்கள் எவையோ அவையாவும் பரிசசின்னரூபமாய் ஆன்மாவைப போதிப்பதாமன்றிப் பரிபூர்ணரூபமாய்ப போதிபபதாகாது. ஆகையால், வாககாதி சபதங்களின் அர்த் தமாய பரிசசின்ன ஆன்மாவானது அறிஞராலறிய யோக்கியமன்றாம்; மற்றோ, பரிபூர்ண ஆன்மாவே யறிய யோககியமாம். ஜலரூப உபாதி பேதத்தால் ஒரே சூரிய பகவான் அநேக பிரதிபிமப ரூபமாய்ப பிரதீதியாவர், ஜலரூப உபாதி நீங் கின் அவ்வெல்லாப பிரதிபிம்பங்களும பிமபரூப சூரியனிடததே ஒருமையை யடையும்; அதுபோன்றே ஒரே ஆநநத சொரூப ஆன்மா உபாதி சம்பந்தத்தால் முன்னாப்புகன்ற வாக்காதி விசேஷரூபததை யடையும; அநதக்கரணாதி யுபாதிகள் நீங்கின் அவ்வெல்லா வாக்காதிகளும் விசேஷரூப ஆன்மாவின்கண் ஒருமையை யடையும். அததகைய பரிபூரண ஆன்மாவே சொரூபமா யறிய யோக்கியமாம். ஹே தேவராஜாவே! ஒரே மகாகாசம, கடாகாசம, மடாகாசம், கிருகாகாசம் என்பதாதி விசேஷரூபங்களில அனுகதமா மாறுபோல, ஒரே ஆநந்தசொரூப ஆன்மா வாக்காதி சர்வ விசேஷ ரூபங்களி லனுகதமாம. சஜாதீய பேதம், விஜா தீய பேதம, சுவகதபேதம என்னும மூவகைப் பேதங்களறறதாம்.' ஏனெனின், சர்வ ஜீவர்களிடத்தே இவ்வாநநதசொரூப ஆன்மா யானென்னும் சப்தத்திற்கும் யானென்னும் ஞானத்திற்கும் விஷயரூபமாய்ப பிரதீதியாமாதலிற் பரிபூர்ண அர்த்தத்தைப போதிப்பதாய ஆன்ம சபதமும் அதனையே இலக்ஷணா விர்த்தி யாற் போதிப்பதாய அகம சபதமும என்னும் இவ்விரண்டாலுமே மதிமானுய புருஷன் பரிபூர்ண ஆன்மாவை யறிவன்.

சங்கை :—ஹே பகவன்! அநேக புருஷா தமது சரீரங்களிடத்தே யான் பிராஹ்மணன், யான் தூலன் என அகம்சப்தப் பிரயோகம செய்வர். ஆண்டுக் கூறும் புருஷரின் வேற்றுமையானும அகம்சபத பேதத்தானும் அகம்சப்த அர்த்த ரூப சரீரபேதமே காணப்பெறுகின்றது; அதுபோல அகம்சப்த ஆன்ம சப்தங் களின் வக்தாக்களின் பேதத்தானும், அகம்சப்த ஆன்மசப்தங்களின் பேதத்தா னும், அகம்சபத ஆன்மசப்தங்களின் அர்த்தரூப ஆன்மாவிற்கும் பேதமேயுண் டாம்,

சமாதானம் :—ஹே தேவராஜாவே! வக்தாக்களின் பேதத்தாலும் சப்தப் பிரயோக பேதத்தாலும் பதார்த்தங்களின் பேதமேயுண்டாமென்னும் நியமம் யாண்டும் சம்பவியாது. ஏனெனின், ஒரே கடவியக்தியின்கண் அநேக புருஷர் கடமெனவும் கலசமெனவும் வேறு வேறாய சப்தோச்சாரணஞ் செய்யுமிடத்தே, கூறியவர்க்கும் சப்தங்கட்குமோ பரஸ்பரம பேதமாம். ஆனால், கடவியக்தி பேதிப்பதின்றாம்; மற்றோ, ஒரே கடவியக்தி சர்வ சப்தங்களிற்றோற்றும்; அங்ஙனே சர்வ புருஷரும் ஆன்மாவை அகம் ரூபமாயும ஆன்ம ரூபமாயும் கூறுவர். ஆண்டு வக்தாக்களுக்கும் அகம்சப்த ஆன்ம சப்தங்கட்கும் பரஸ்பரம் வேற்றுமை யுளதாமெனினும், ஆன்ம சப்தத்திற்கும் அகம் சப்தத்திற்கும் இலக்ஷியப் பொருளாய ஆன்மாவிற்குப்பேதம சம்பவியாது; மற்றோ, ஒரே ஆநந்தசொரூப ஆன்மா சர்வப் பிராணிகளின் அகம் சபதத்தின்கண்ணும் ஆன்ம சப்தத்தின்கண்ணும் அனுகதமாய் (தொடர்ந்து) இலங்கும. ஆகையால், வக்தாக்களின் பேதத்தாலும் சப்த பேதத்தாலும் ஆன்மாவின் பேதமாகாது; மற்றோ, ஒரே யான்மா சர்வப் பிராணி மாத்திரத்தே வியாபகமாம். கிருகத்தின்கண் இராநின்ற ஆகாசத்தைக் கிருகாகாசமென்பர், மடத்தின்கண்ணுள்ள ஆகாசத்தை மடாகாசமென்பர், கடத்தின்கண்ணுள்ள ஆகாசத்தைக்கடாகாசமென்பர்; அவற்றுள் கடாகாச சத்தத்தின்பொருள் கடோபகித ஆகாசமாம்; மடாகாசத்தின்பொருள், மடோபகித ஆகாசமாம். இவ்விரண்டிற்கும் பரஸ்பரம்பேதம் சம்பவிகுமேனும் ஆகாச சப்தத்தின் அர்த்தமாய சுத்த மகாகாசத்திற்குபபேதம் சம்பவியாது. அதுபோன்றே முற்கூறிய வாக்காதி நாமங்களின் பொருளாய விசிஷ்டான்மாக்கட்குப பரஸ்பரம்பேதம் சம்பவிபினும், ஆன்ம சப்தத்தின் அகம்சப்தத்தின் அர்த்தமாய சுத்தாத்மாவின் பேதஞ் சம்பவியாது; மறறோ, சர்வ ஜகத்தின்கண்ணும் ஆன்ம சப்தத்தின் அகம் சப்தத்தின் பொருளாய சுத்த ஆன்மாத்தொடர்ந்துளது. ஹே தேவராஜாவே! ஆன்ம சப்தத்தின் அகம் சப்தத்தின் அர்த்தமாய சுத்த ஆன்மாவை யாம் உம்பொருட்டுக் கூறினேம்; இச்சுத்த ஆன்மாவின் சாக்ஷாத்கார உபாயத்தை முமுக்ஷு ஜனங்கள் செய்தல் தகுதியாம். ஆன்மாவின் வேறாய சப்தாதிவிஷயங்களின் அடைவின் உபாயத்தை அதிகாரிகளாற்றல் அயோக்கியமாம். ஏனெனின், சாஸ்திரத்தின்கண்ணே மதிமான்கள் இங்ஙனமியம்பியுள்ளார் :—எப்பொருளடைவின் பிற்கணத்தே சுகப்பிராப்தியுண்டாமோ, அப்பொருளடைவின்பொருட்டே மதிமானவன் முயல்க, எப்பொருளடைவின்பின் துக்க அடைவுண்டாமோ, அப்பொருளடைவின்பொருட்டு மதிமான் முயலற்க; மற்றோ, அப்பொருள்களை நீக்குவான் முயல்கவென. ஆண்டுச் சத்தாதிவிஷய அடைவின்பிற்போ துயிர்கட் கின்பமுண்டாவதின்றாம்; மற்றோ, அநந்தவகையாய துக்கத்தின் அடைவேயுண்டாகின்றது. ஆகையால், சப்தாதிவிஷய அடைவின்பொருட்டு முயலுதல் பயனற்ற காரியமாம். ஆன்மாவின் சாக்ஷாத்கார ரூபப்பிராப்தியின் பிற்காலத்தே ஜீவர்கட்கு நிரதிசய ஆநந்தப் பிராப்தியுண்டாமாதலின் ஆநந்தசொரூப ஆன்மாவினடைவின் பொருட்டே மதிமான்கள் முயலுதலுசிதமாம், ஹே தேவராஜாவே! சப்தஸ்பரிசாதி விஷயங்கள் பரிணும காலத்தில் துக்ககாரணமா மாதலின் மதிமான்களாய புருஷர் அடைய யோக்கியமன்றாம்; அங்ஙனமே சப்தஸ்பரிசாதி விஷயபோக சாதனங்

களாய ஸ்தூல்சரீரம் சூக்குமசரீரம் காரணசரீரம் என்னும் மூவகையாய சரீரங்களும் போகப்பிராப்தி வாயிலாய் உத்தரகாலத்தின்கண்ணே அநந்தவகையாய துக்கங்களின் காரணமாம். ஆகையால கூறிய மூவகையாய சரீரங்களையும் அதிகாரியடைதல் தகுதியன்றாம்; மற்றோ பரித்தியாகம் செய்யயோக்கியமாம். ஒரு ஆநந்த சொரூப ஆன்மாவே அதிகாரி புருஷாலடைய யோக்கியமாம். ஆகையால் ஹே தேவராஜாவே! சப்தாதி விஷயங்களை முதலாய்க் காரண சரீரம் வரையினு முள்ள சர்வ திருசியப் பிரபஞ்சங்களையும் பரித்தியாகம் செய்து இச்சங்காதத்தின்கண் இராநின்ற சச்சிதாநந்த சொரூப ஆன்மாவை யெப்போது இப்புருஷன் அறிகின்றனனோ அப்போது சர்வ பதார்த்தங்களிடத்தே சச்சிதாநந்த சொரூபமாய் ஆன்மாவை யறிதலில் இபபுருஷன் சமர்ததனாவன். உலகின்கண்ணே ஒருவனுடைய கோ (பசு) வீட்டினின்றும வெளியே யெங்கேனும் போய்விடின் அவன் அக்கோவின் அடிச்சுவடுகளையுறற பூமியைப் பார்த்து, இக்கிழககுத் திசையிலெனது கோ சென்றிருக்கின்றது வேறெத்திசையினும் செலலவில்லை யெனத்துணிநது அம்மார்க்கத்தே பையப்பையச்செல்லின் அவன் அக்கோவையடைவன். அதுபோலவே அதிகாரிகளா லடையத்தக்கதாய இசகூட்டததின்கண் இராநின்ற ஆநந்தசொரூப ஆன்மாவைப் புருஷன் துணிவனேயாயின் சாவபூதப பிராணிகளிடத திராநின்ற சசசிதானநத சொரூப ஆன்மாவையும சாக்ஷாத்காரம் செய்யக் கூடியவனாவன். இச்சங்காதத்தின்கண் இராநின்ற ஆன்ம ஞானததாலன்றி யாண்டும் நிறைந்த வடிவமாய் ஆன்மாவின் ஞானமுண்டாகாது. கருத்திதுவாம்:—அநதக்காரணரூப மார்க்கத்தின்கண் கோவின் அடிசசுவடுபோலச சாக்ஷிரூபமாயிராநின்ற ஆன்மாவை யதிகாரியானவன் நிசசயம் செய்யின் ஸ்தாவரஜங்கமரூப சமபூர்ண ஜகத்தைச சச்சிதாநநத ஆன்ம சொரூபமாய் நிசசயஞ்செய்வன். ஆகையால், ஹே தேவராஜாவே! அவ்வாநந்த சொரூப ஆன்மலாபத்திற்கும மேலாயிவ்வுலகின் கண்ணே வேறொரு லாபப்பொருளின்றும; மற்றோ ஆநநதசொரூப ஆன்மாவின் அடைவே பரம இலாபமாம். ஆநந்த சொரூப ஆன்மாவை யடையின் லௌகிக யசசுகீர்த்தியாதி அற்ப பதாாத்தங்களியாவும் ஆன்மஞானியையடையும். கருத்திதுவாம்:—லோகத்தின்கண்ணே யுள்ள மனுஷ்யாதிகளினுடைய பாதங்களியாவும் யானையடியிலடங்கும், அங்ஙனே ஆன்ம ஞானரூப பலத்தின்கண்ணே சர்வ கர்மங்களின் பலன் அந்தர்ப்பாவமாம; ஆகையால் ஆன்மாவின் வேறாய சகல பதார்த்தங்களையும் பரித்தியாகம் செய்து ஆநநத சொரூப ஆன்ம ஞானத்தையே அவசியம் சம்பாதித்தல் தகுதியாம்.

இப்போது இபபொருளையே வெளிப்படுத்தும் பொருட்டுப் புத்திராதி சர்வப் பிரிய பதார்த்தங்களினும் ஆன்மாவின்கண் முக்கியப் பிரியத்தன்மையைக் காண்பாம்:—ஹே தேவராஜாவே! உலகின்கண்ணே ஆன்மாவையும் பிரியமென்பர், புத்திராதி பதார்த்தங்களையும் பிரியமென்பார்; அவ்விரண்டினும் ஆன்மாவோ நிரூபாதிகப் பிரீதிவிஷயமாம் ஆதலின் அதிசயமாய பிரியமாம்; மைந்தர் முதலிய பதார்த்தங்களோ சோபாதிகப் பிரீதிவிஷயமாம் ஆதலின் அதிசயமாய பிரிய

மன்றும். இப்போது புத்திராதி பதார்த்தங்களிடத்தே சோபாதிகப் பிரீதி விஷயத்தன்மையைக் காண்பிப்பாம்:—ஹே தேவராஜாவே! புத்திரனிடத்தே, ஸ்திரீயினிடத்தே, தனத்தினிடத்தே, உறவினரிடத்தே, உலகருக்குப் பிரீதியுண்டாவது ஆன்மாவாய தன் பொருட்டேயாம்; புத்திராதிகளின் பொருட்டன்றும். புத்திராதிகளின் பொருட்டே யந்தப் பிரீதியுண்டாமாயின், வைரியின் மைந்தர்களிடத்தும் அந்தப்பிரியத்தன்மை யுண்டாகவேண்டும்; ஆனால் வைரியின் புத்திரர்களை யெப்புருஷனும் பிரியமென அங்கீகரிப்பதின்றாம்; ஆதலின், புத்திராதிகளிடத்தேயுள்ள புருஷனுடைய பிரியத்தன்மையானது தனது ஆநந்தத்தின் பொருட்டாம். தனதாத்மாவின் கண்ணுள்ள பிரியத்தன்மை வேறொன்றின் ஆநந்தத்தின் பொருட்டன்றும். ஆகையால் ஆநந்தசொரூப ஆன்மாவின்கண் நிருபாதிகப் பிரீதி விஷயத்தன்மையுளது, புத்திராதிகளிடத்தே சோபாதிகப் பிரீதி விஷயத்தன்மை யுளதாமெனத்துணியப்பெற்றதன்றே? இக்காரணத்தானே சுருதியின்கண்ணே புத்திராதி சர்வ பதார்த்தங்களினும் ஆன்மாவை அதிகபபிரியமெனக் கூறப்பெற்றுளது. ஹே தேவராஜாவே! ஆன்மாவை யபேக்ஷித்துப் புத்திராதியர் பாகியமா மாதலின் அவர்களிடத்தே சோபாதிகப பிரீதி விஷயத்தன்மையாம். அவ்வாறே ஆன்மாவை யபேக்ஷித்துப் பிராணாதிகளும் பாகியமாம்; ஆகையால் அவற்றினிடத்தும் சோபாதிகப் பிரீதி விஷயத்தன்மையே யுளது. இப்போது பிராணாதிகளின் பாகியததன்மையை நிரூபிப்பாம்:—ஹே தேவராஜாவே! தூலசரீராகார பரிணமத்தையடைநத சப்தாதி விஷயங்களினின்றும் பிராணவிசிஷ்ட இந்திரியம அநதரமாம (உள்ளாம்); அவ்விந்திரியத்தினின்றும் சங்கற்பவிகற்பரூபமனம் அந்தரமாம்; அம்மனத்தினும் நிச்சயரூப புத்தியந்தரமாம்; அப்புத்தியினின்றும் அகங்கார விசிஷ்ட ஜீவன் அநதரமாம்; அச்சீவனினின்றும் அவ்வியாகிருதமென்னும காரணஞ்ஞானம் அந்தரமாம; அக்காரணஞ்ஞானத்தினின்றும் சுத்த ஆத்மா அந்தரமாம்; அச்சுத்தாத்மாவினின்றும் உள்ளே யாதொரு பதார்த்தமுமின்றாம். இப்போது இபபொருளேயே யூகத்தால் நிரூபிப்பாம்:—ஹே தேவராஜாவே! கடத்தைக் காண்போன் கடரூப விஷயத்தினின்றும் உள்ளாவதேபோல இவ்வாநந்த சொரூபான்மா நேத்திராதி இநதிரியங்களின் வாயிலாய் ரூபாதிவிஷயங்களை யறியுமாதலின் திருஷ்டாவாய ஆன்மாவிறகு விசேஷணமாய இந்திரியம் ரூபாதிகளை யபேக்ஷித்து ஆந்தரமாம் (உள்ளாம்). இவ்வாநந்த சொரூபான்மா மனத்தால் இந்திரியத்தை யறியுமாதலின், காணும் ஆன்மாவின் விசேஷணமாயமனம் இந்திரியத்தை யபேக்ஷித்துஆந்தரமாம். இவ்வாநந்தசொரூபான்மா நிச்சயரூப புத்தியால் மனத்தையறியு மாதலின், காணும் ஆன்மா விசேஷணமாய புத்தி மனத்தை யபேக்ஷித்து ஆந்தரமாம். இவ்வாநந்த சொரூப ஆன்மா அகங்காரவிசிஷ்ட ஜீவரூபத்தால் அப்புத்தியையறியுமாதலின், காணும் ஆன்மாவின் விசேஷணமாய ஜீவன் புத்தியை யபேக்ஷித்து ஆந்தரமாம். இவ்வாநநத சொரூப ஆன்மா அகங்கார விசிஷ்டஜீவனைக் காரண அஞ்ஞான உபகித சாக்ஷிரூபத்தால் அறியுமாதலின், காணும் ஆன்மாவின் விசேஷணமாய அஞ்ஞானம் ஜீவனை யபேக்ஷித்து ஆந்தரமாம். இவ்வாநந்த சொரூப ஆன்மா தனது சொப்பிரகாச சொரூபத்

தால் அவ்வஞ்ஞானத்தை யொளிர்விக்கு மாதலின் காரணஞ்ஞானத்தினும் ஆன்மா ஆந்தரமாம். ஆன்மாவினும் ஆந்தரமாய வேறெப் பொருளுமின்றாம்; மற்றோ ஆன்மாவை யபேக்ஷித்து அஞ்ஞானுதி சர்வ பதார்த்தங்களும் பாகியமாம்; ஆன்மாவே யாவற்றினும் ஆந்தரமாம்; இக்காரணத்தானே ஆன்மா ஆநந்த சொரூபமாம். ஆன்மா ஆநந்த சொரூபமாதலிற்றான் புத்திராதியே முதலாய் காரண அஞ்ஞானம் வரையுமுள்ள சர்வ பதார்த்தங்களினும் அதிசயமாய பிரியமாம.

சங்கை :—ஹே பூகவன்! ஆன்மா வொன்றே பிரியமாம் என்னும் இந்நியமத்தைத் தாங்கள் கூறினீர்கள்; அது சம்பவியாது. ஏனெனின், முக்கியப் பிரியத்தன்மை ஆன்மாவின்கண்ணேயாம், புத்திராதிகளிடத்து ஆகாதென்றாலும் கௌணப் பிரியத்தன்மை மைந்தர் முதலியோரிடத்தேயும் சம்பவிக்குமாதலின், புத்திராதி பதார்த்தங்களும் பிரியமாம்.

சமாதானம் :—ஹே தேவராஜாவாய இந்திரரே! சுருதியின்கண் ஆன்மாவினும வேறாய சர்வ பதார்த்தங்களையும் அழியுந்தன்மை யுடையனவெனக் கூறப் பெற்றுளதாதலின், ஆராய்ந்து பார்க்கின் புத்திராதி பதார்த்தங்களிடத்தே கௌணப பிரியத்தன்மையும் சமபவிக்காது. எபபுருஷன் ஆன்மாவினும் வேறாய சரீர புத்திர தனுதிகளைப பிரியமென்கின்றானே அப்புருஷனுடைய சரீர புத்திர தனுதி யாவும் அவசியம் அழிவை யெதிர் பாரபபனவேபாம். கருத்திதுவாம :—எப்புத்திர தனுதிகளை யுலகர் பிரியமென அங்கீகரித்து உளரோ அவையாவும் அழிவை யுடையனவாதலின், அவறறின் வியோகம் அவசியமுண்டாம். ஒருகால் இவனிருக்கப புத்திராதிகள் போய்விடும, ஒருகால் அவையிருபப இவன் சென்றுவிடுவன்; இவ்விருவகையாய வியோகத்தால் ஜீவர்கட்கு அநந்த துக்கங்களின் பிராப்தியுண்டாமாதலின், புத்திராதி பதார்த்தங்களிடத்தே புத்திமான்களாய புருஷருக்குப் பிரீதியுண்டாதல் அயோக்கியமேயாம்; மற்றோ நாசமற்ற ஆநந்த சொரூப ஆன்மாவின்கண்ணே மதிமான்கடகுப பிரீதியுண்டாதல் யோக்கியமாம். ஆகையால் ஹே தேவராஜாவே! எவன் கேவலம ஆன்மாவையே பிரியமென வறிகின்றனனோ அவ்வறிஞன் சமீபத்தே சென்று எபபுருஷனும் ஆன்மாவினும் வேறாய புத்திராதி பதார்த்தங்களைப் பிரியமெனக கூறக் கூடாது; ஒருகா லங்ஙனங் கூறுவானுயின் அவனது பொய்ம மொழியைப பொறுக்காதவனாய் அவ்வறிஞன் நினது பிரிய புத்திராதிகள் நாசவான்களாம் என ஒருகாற் கூறுவானுயின் அவ்வறிஞன் வசனத்தால் விரைவாகவே அப்புத்திராதிகள் நாசமடையும். எவனேனும் ஒரு மூடன் ஈயத்தை வெள்ளியென நினைந்து, ஒரு பரீக்ஷக புருஷனிடத்தே சென்று இது வெள்ளியெனக் கூறுவானுயின் அபபுருஷனுடைய பொய்ம் மொழியைப் பொறுக்காதவனுப பரீக்ஷகன் இஃதீயமேயன்றி வெள்ளியன்றாம் எனக்கூறின் அம்மொழியால அபபொய்வெள்ளி யழிந்தே போமன்றோ? ஆகையால் ஆன்மாவைப் பிரியமெனவுணர்ந்த அறிஞன்பாற்சென்று புத்திராதியனுன்ம பதார்த்தங்களைப் பிரியமெனக் கூறக் கூடாது.

சங்கை :—ஹே பகவன்! ஆன்மாவைப் பிரியமென வுணர்ந்த அறிஞன் வசனமாத்திரத்தான் புத்திராதி யனான்ம பதார்த்தங்களின் நாசம் சம்பவிக்காது.

சமாதானம் :—ஹே தேவராஜாவே! எவ்வறிஞன் ஆன்மா வொன்றையே பிரியமென்றறிகின்றனனோ அவ்வறிஞன் இப்புத்திராதிபதார்த்தங்கள் விநாசமுடையனவாம் என்னும் வசனமாத்திரத்தால் அவற்றை நாசஞ்செய்யச் சமர்த்தனும.

சங்கை :—ஹே பகவன்! அறிஞனோ இராகத துவேஷாதி யற்றவனுயிற்றே தயாளுவாயிற்றே அங்ஙனமிருப்ப உன்னுடைய புத்திராதிகள் நாசவானென்னுங் கடூர வசனத்தை எங்ஙனங் கூறுவன்.

சமாதானம் :—ஹே தேவராஜாவே! ஒருகாலறிஞன் இவ்வகையாய வசனத்தைக் கூறுதிருப்பினும் அறிஞன் சமீபத்தே சென்று பொய்ம் மொழி புகலற்க; ஏனெனின், சுருதியின்கண்ணே பிரஹ்ம ஞானியைப் பிரஹ்மமெனக கூறப்பெறறுளதாதலின், எங்ஙனம் பரமேஸ்வரா வசன உச்சாரணமின்றியும் உயிர்கட்குப புண்ணியபாவபலமாய சுகதுக்கத்தைக்கொடுக்கின்றனரோ அங்ஙனம், பரமேஸ்வர சொரூபமாய இவ்வறிஞனும் வசன உச்சாரணமின்றியே புண்ணிய பாவபலமாய சுகதுக்கத்தைக் கொடுப்பர். ஸ்ரீ கங்காதேவியின் தீரத்தே நிவாசம் செய்து கொண்டு எப்புருஷன் பாவகாமத்தைச செய்கின்றனனோ அவனுக்குத் துக்க அடைவுண்டாம்; யாவன் ஆண்டு நிவாசம செய்துகொண்டு புண்ணிய காமத்தைச செய்கின்றனனோ அவனுக்குச சுகத்தினடைவு உண்டாம்; அங்ஙனமே அறிஞன்சமீபஞ் சென்று யாவன் சத்தியவசன உச்சாரணரூப சுபகர்மத்தைச செய்கின்றனனோ அவனுக்குச சுகத்தினடைவு உண்டாம; யாவன்அசததியவசன உச்சாரணரூப அசுப கர்மத்தைச செய்கின்றனனோ அவனுககுத துககஅடைவு உண்டாம் ஆதலின், ஸ்ரீ கங்காதேவியைபபோல அறிஞனிடததும், நிர்த்தயைத்தன்மைரூப தோஷப பிராபதியுண்டாகாது.

சங்கை :—ஹே பகவன் அறிஞனுடைய சமீபததேசென்று எவனேனும் புததிராதி யனான்மபதார்த்தங்களைப பிரியமெனக்கூறின் அவனுடைய புத்திராதி பிரிய பதார்த்தங்கள் நாசமாம எனத்தாங்கள் கூறுதல சம்பவியாது. ஏனெனின், இப்பிறபபிற் செய்த புண்ணிய பாவரூப கர்மம் இப்பிறபபிலே சுகதுக்கரூப பலத்தையடைவியாது; மற்றே மறுபிறப்பிலேயே சுகதுக்கரூப பலத்தை யடைவிக்கும்; இது நூற்புகனெறியாம்.

சமாதானம் :—ஹே தேவராஜாவே! மிருதியாய ஸ்தானங்களிலோ மறுபிறப்பின்கண்ணே புண்ணியபாவகர்மத்தின் பலமுண்டாமெனினும் அத்தியந்த முக்கியமாய சிலபுண்ணிய பாவகர்மங்கட்கு இப்பிறப்பில் சுகதுக்கரூப பலமுண்டாம். அறிஞன் சமீபத்தேசென்று பொய்ம்மொழி கூறலும் அத்தியந்தம் உக்கிரமாய பாவமாமாதலின், அபபாவகர்மத்தின் பலமாய துக்கம இப்பிறப்பின்கண்ணே சம்பவிக்கும். அல்லது ஸ்தாவரரூபமாய்ப்பிரசித்தமாய அசுவத்தம், துளசி, பிரதிமை முதலிய அற்ப தேவதைகளின் சமீபத்தே சென்று யாவன் பொய்ம்மொழி புகல்வனோ அவனுக்குத்தேவதைகள் மௌனவிரதம் பூண்டிருப்பினும் பலத்தையடை

விக்குமாயின், சர்வதேவதைகட்கும் ஆன்மசொரூபமாய் வசன உச்சாரணாதி வியவகாரம் செய்வதில் ஆற்றலுற்றவனுமுள்ள அறிஞன் பொய்புகலும் புருடனுக்குத் துக்கரூபபலத்தை யெங்ஙனமடைவியான்? மற்றோ அவசியம் அடைவிப்பன. ஹே தேவராஜாவே! அறிஞன் சமீபத்தே சென்றுளவனேனும் புத்திராதி அனான்ம பதார்த்தங்களைப பிரியமெனக்கூறுவனாயின் அவனது அவைக(கூட்டங்க)ளழிவதே போல அறிஞன்பாற்சென்று எவனேனும் ஆன்மாவேபிரியமெனக்கூறின் அவனது அவைகளழிவுறாவென்க; மற்றோ ஆயுஷ்வான்களாம். ஆகையால் ஹே தேவராஜாவே! வைராக்யாதி சாதனமற்றவனாய்ப பிரியரூபமாய் ஆன்மாவை யறிய அசமர்த்தனாய்ப் புத்திராதி பிரியபதார்த்தங்கள் நெடுநாள்வாழ இச்சையுற்றவனாய் இராநின்ற புருடன் பிரியமாய் ஆன்மாவையுபாசனைசெய்க. அவ்வுபாசனையால் அவனதுபுத்திராதி பிரியபதார்த்தங்கள் நெடுநாள்வரை நிலத்தே நிற்கும்.

சங்கை :—ஹேபகவன்! உண்மைஞானத்திற்கு முபாசனைக்குமுள்ள பேதத்தைக் கூறவேண்டும.

சமாதானம் :—ஹேதேவராஜாவே! தியானஞ்செய்ய யோக்கியமாயவஸ்து இருந்தபோதினும இல்லாதபோதினும கேவலம் குருசாஸ்திர வசனத்தால் மானச ஞானமுண்டாம. அந்த ஞானத்தின்கண்ணே விசுவாசமுற்றுக் குருசாஸ்திரங்களுபதேசித்த அர்த்தத்தின்கண் சஜாதீய விர்த்திகளைப பிரவாகித்தலும், விஜாதீய விருத்திகளை நிரோதித்தலும் உபாசனையாம. சுருதியின்கண்ணே சுவர்க்கம், மேகம், மனுடலோகம், புருடன், ஸ்திரீ, இவ்வைந்தையும் அக்கினிரூபமாய் உபாசனை யுரைக்கப்பெற்றுளது. ஆண்டுசுவாககாதிகளோ அககினிரூப மன்றாமேனும் குரு சாஸ்திரவசனத்தால அசசுவாககாதியின்கண்ணே புருஷனுககு அக்கினிப புத்தியுண்டாம் அதன்கண்ணே விசுவாசமுறறுச் சுவாக்காதிகளிடத்தே நிரந்தர அக்கினியாகார சஜாதீய விர்த்திகளின் பிரவாஹமும், அவறறால் கடாதிவிஷயக விஜாதீய விர்த்திகளின் நிரோதமும உண்டாம; இதனையே யுபாசனையென்பர். கருததிதுவாம்:—யதார்த்த அனுபவரூபப பிரமைஞானமோ பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களின் அதீனமும் விஷயாதீனமுமாம, உபாசனையோ பிரமாண விஷயங்களின் அதீனமன்றாம்; மறறோ குருசாஸ்திர வசனத்தின்கண்ணே விசுவாசம் வைத்தலாலுண்டாம் என்னு மிததுணைபபேதமே யிரண்டிற்குமாமென்றறிக. முன்னர் பிரியரூபமாய் ஆன்மாவை யுபாசனைசெய்தலின்பயன் புத்திராதி பிரியபதார்த்தங்களின் ஜீவனமெனப பகரப்பெற்றது. இப்போது பிரியரூபமாய் ஆன்மாவின் யதார்த்த அனுபவ பயனைக் கூறுவாம:—ஹே தேவராஜாவே! எப்புருஷன் ஆநந்தசொரூப ஆன்மாவைப பிரியரூபமா யறிகின்றனனோ அப் புருஷன் சர்வ தேவதா சொரூபனாவன், இப்பொருளின்கண்ணே நீர் சிறிது மாத்திரமும் ஐயபபடவேண்டாம். ஆதலின் ஹே தேவராஜாவே! ஆநந்த சொரூப ஆன்மாவின் ஞானத்தால அதிகாரி புருஷருக்குச சர்வான்ம பாவத்தின் பிராபதியுண்டாம. கூறிய பொருளானது எனது மனோயுக்தி மாத்திரத்தானே கூறியதன்று; மறறோ இப்பொருளின்கண்ணே ஒரு புராதன விருத்தாந்த முளது

அதனை நீர்கேளும். அவ்விர்த்தாந்தமானது, அநேக மகான்மாக்களாய பிராஹ்மண சமாஜத்தின்கண் விசாரத்தாற் கிளம்பியது. ஹே தேவராஜாவே! ஒரு காலத்தில் ஒரு நிமித்தத்தால் ஒரு தேசத்தின்கண்ணே அநேகம் பிராஹ்மணர் ஒருங்கு கூடினர்; அம்மறையவரோ நான்கு வேதங்களிலும், ஆறங்கங்களிலும், ஆறுசாஸ்திரங்களிலும், அத்தியந்தம் நிபுணராம். அவ்வந்தணர் சமாஜத்தின் கண்ணே நாநாவகையாய லௌகிக கதைகளும், வைதிககதைகளும் கிளம்பின. ஒரு பிரசங்கத்தை முன்னிட்டு இவ்வகையாய கதையின் பிரவிர்த்தியான துண்டாயது.

இப்போதக் கதையைக் காண்பிப்பாம்:—ஹே தேவராஜாவே! அவ்விப்பிரர் சமாஜத்தின்கண் ஒரு வித்வானாகிய பிராஹ்மணர் சர்வ பிராஹ்மணர்களையும் நோக்கி இவ்வினாவைக் கேட்டனர். ஹே அந்தணர் குழுக்காள்! பிரஹ்ம வித்தையை யறிந்த புருஷன் பிரஹ்ம ஞானத்தால் சர்வான்ம பாவத்தின் அடைவைக் கூறுகின்றனன்; அதன்கண்ணே யெனக்குச் சம்சயம் உண்டாகின்றது, அதாவது, எந்தப் பிரஹ்ம ஞானத்தா லதிகாரிகட்குச சர்வான்ம பாவத்தின் அடைவுண்டாமோ, அந்தப் பிரஹ்மமும் யாதாவதொரு பதார்த்தத்தின் ஞானத்தாற் சர்வான்ம பாவத்தை யடைந்ததா? அல்லது, பதார்த்த ஞானமின்றியே சர்வான்ம பாவத்தை யடைந்ததா? இவ்விரண்டு பக்ஷததுள் முதற பக்ஷததை யங்கீகரிக்கினே, எப்பதாாத்த ஞானத்தால் பிரஹ்மத்திற்குச சர்வான்மபாவம உண்டாயதோ அபபதார்த்தங்களை நீங்கள் கூறுவீர்களாக. இரண்டாவது பக்ஷத்தை யங்கீகரிக்கினே, பிரஹ்மத்தின் ஞானம நிஷ்பலமாம். ஏனெனின், எங்ஙனம் பிரஹ்மத்திற்கு ஞானத்தாலன்றியே சர்வான்ம பாவப் பிராப்தியுண்டாயதோ அங்ஙனம அன்னிய அதிகாரிகட்கும் பிரஹ்ம ஞானமின்றியே சர்வான்மபாவ அடைவுண்டாம்; சர்வான்ம பாவ அடைவின் பொருட்டுப் பிரஹ்மஞானத்தைச் சம்பாதனஞ் செய்தல் நிஷ்பலமாம. ஹே பிராஹ்மணாகளே! யாதாவதொரு பதார்த்தத்தின் ஞானத்தால் பிரஹ்மம சர்வான்ம பாவத்தை யடைநதது என்னும் முதற் பக்ஷத்தின்கண்ணும் இவ்விசாரம் செய்தல்வேண்டும், அந்தப் பிரஹ்மம தன்னிற் பின்னமாய யாதாவதொரு பதார்த்த ஞானத்தால சர்வான்ம பாவத்தை யடைந்ததா? அல்லது தனது சொரூபஞானத்தால் சர்வான்ம பாவத்தை யடைந்ததா? என்னும் இவ்விரண்டு பக்ஷத்தில் முதற் பக்ஷத்தை யங்கீகரிக்கினே, பிரஹ்மஞானம் நிஷ்பலமாம்; ஏனெனின், எவ்வன்னிய பதார்த்த ஞானத்தால் பிரஹ்மத்திற்குச் சர்வான்ம பாவப் பிராப்தியுண்டாயதோ, அவ்வன்னிய பதார்த்த ஞானத்தாலே மற்றைய அதிகாரிகட்கும் சர்வான்ம பாவப் பிராப்தியுண்டா மாதலின், அதன்பொருட்டுப் பிரஹ்மஞானத்தைச் சம்பாதித்தல் நிஷ்பலமாம். ஹே பிராஹ்மணர்களே! அந்தப் பிரஹ்மம் தனது சொரூப ஞானத்தால் சர்வான்ம பாவத்தை யடைந்தது என்னும் இரண்டாவது பக்ஷத்தை யங்கீகரிக்கினே பிரஹ்மஞானம் நிஷ்பலமாம். ஏனெனின், எங்ஙனம் பிரஹ்மத்திற்குத் தனது சொரூப ஞானத்தால் சர்வான்ம பாவப பிராப்தியுண்டாயதோ, அங்ஙனம் அன்னிய அதிகாரி ஜனங்கட்கும் தமதான்ம சொரூப ஞானத்தால் சர்வான்ம பாவப பிராப்தியுண்டாம்; அதன் பொருட்டாய்ப் பிரஹ்ம ஞானத்தைச் சம்பாதித்தல் நிஷ்பல

மாம். ஹே தேவராஜாவே! இவ்வாறு பிரஹ்மத்திற்கும் ஆன்மாவிற்கும் பரஸ்பரம் பேதத்தை யங்கீகரித்து அந்தப் பிராஹ்மணர் சர்வ பிராஹ்மணரை நோக்கி வினவினர். அவ்வதிகாரிகளின் வினவைக் கேட்டு அவ்வெல்லா வேதமுணர்ந்த மறையவரும், வேறு யாதாவதொரு பதார்த்தஞானத்தால் சர்வான்மபாவத்தின் பிராப்தியுண்டாமென்னும் முதற்பக்ஷத்தையும், ஞானமின்றியே சர்வான்மபாவப் பிராப்தியுண்டாமென்னு மிரண்டாவதுபக்ஷத்தையும் விட்டொழித்து, ஆன்மாவின் ஞானத்தால் சர்வான்மபாவத்தின் பிராபதியுண்டாமென்னும் மூன்றாவது பக்ஷத்தை யங்கீகரிதது அங்ஙனமே, ஆன்மபிரஹ்மங்களி னபேதத்தை யங்கீகரித்து அவ்வினவிற்கு விடையை விளம்பத் தொடங்கினர்.

இப்போது அவ்விடையைக் கூறுவாம்:—ஹே அதிகாரிகளாய பிராஹ்மணர்களே! அஞ்ஞானத்தாலேனும், வேறொரு பதார்த்த ஞானத்தாலேனும் அந்தப் பிரஹ்மம் சர்வான்மபாவத்தை யடையவில்லை; மற்றோ பிரஹ்மசப்தத்தின் ஆன்மசப்தத்தின் அர்த்தமாய தனது சொரூபஞானத்தால் பிரஹ்மம் சர்வான்மபாவத்தை யடைந்தது ஆகையால, ஹே மறையவரே! எவ்வண்ணம் ஆன்மஞானத்தால் பிரஹ்மம் சர்வான்மபாவத்தை யடைந்ததோ, அவ்வண்ணம் சர்வான்மபாவப் பிராபதியின்பொருட்டு அன்னிய அதிகாரி ஜனங்களும் ஆன்மஞானத்தையே சம்பாதனம்செய்க.

சங்கை:—ஹே பகவன்! பிரஹ்மஞானமின்றிக் கேவலம் ஆன்மாவின் ஞானமாத்திரத்தால சர்வான்மபாவதநின் பிராபதி சம்பவியாது.

சமாதானம்:—ஹே பிராஹ்மணரே! அநதப பிரஹ்மம் எப்பிராணிகளின் ஆன்மாவினும வேறன்றாம்; மறறோ சாவப பிராணிகளின் ஆன்மசொரூபம் பிரஹ்மமாம் ஆதலின், ஆன்மாவின் ஞானமே பிரஹ்மததின் ஞானமாம்; பிரஹ்மத்தின் ஞானமே ஆன்மாவின் ஞானமாம்.

இபபோது பிரஹ்மாதமாக்களின் அபேதத்தை யறிவிக்கும்பொருட்டு வியாகரண சாஸ்திரரீதியாய்ப பிரஹ்மான்ம சபதங்களின்பொருளை நிரூபிப்பாம்:—அவற்றுள், தேசகால வஸ்துபரிசசேதமற்ற அர்த்தமியாதோ, யாவற்றினு மதிக அர்த்தமியாதோ, அதனைப பிரஹ்மசபதம் போதிக்கும்; அங்ஙனமே தேசகால வஸ்துபரிச்சேதமற்ற வஸ்து யாதோ, அங்ஙனமே யாவற்றினும் உள்வியாபக வஸ்து யாதோ அதனை யான்மசபதம் போதிக்கும். அவற்றுள், தேசகால வஸ்துபரிச்சேதமற்ற பிரஹ்மத்தின்கண்ணுள்ள சர்வத்தினு மதிகத்தன்மையானது யாவற்றோடும் அபேதரூபமேயாம்; அபேதத்தினும் வேறாய் யாதொரு அதிகத்தன்மையும் பிரஹ்மத்தின்கண் இன்றாம. அங்ஙனமே தேசகால வஸ்துபரிச்சேதமற்ற ஆன்மாவின்கண் யாவற்றின் உள்வியாபகத்தன்மையும் யாவற்றோடும் அபேதரூபமேயாம்; அபேதத்தினும வேறாய் யாதொரு வியாபகத்தன்மையும் ஆன்மாவின்கண் இன்றாம். பிரஹ்மத்திற்கேனும ஆன்மாவிற்கேனும் எத்தேசகாலத்தோடாவது, எத்தூல சூக்குமபதார்த்தங்களோடாவது பேதத்தை யங்கீகரிக்கினோ முற்கூறிய பிரஹ்மசப்தத்தின் அர்த்தமும் ஆன்மசப்தத்தின் அர்த்

தமும் பிரஹ்மத்தின்கண்ணும் ஆன்மாவின்கண்ணும் பொருந்தாதாம். ஆகையால், எங்ஙனம் ஹஸ்தசப்தமும் காசப்தமும் ஒரே அர்த்தத்தின் வாசகமாமோ, அங்ஙனமே பிரஹ்மசப்தமும் ஆன்மசப்தமும் சர்வ பேதமற்ற ஒரு அத்விதீய சைதன்ய போதகமாம்.

சங்கை :—ஹே பகவன்! சர்வ பேதமற்ற அத்விதீய சைதன்யம் பிரஹ்ம சப்தத்திற்கும் ஆன்மசப்தத்திற்கும அர்த்தமாமெனத் தாங்கள் கூறினீர்கள், அது சம்பவியாது; ஏனெனின், உலகின்கண்ணே பிரஹ்மத்திற்கும் ஆன்மாவிற்கும் பேதமே பிரதீதியாகின்றமையின்.

சமாதானம்:—ஹே பிராஹ்மணர்களே! பிரஹ்மத்தின்கண்ணே யுண்டாம் பேதப் பிரதீதியானது உண்மையாய்ப் பிரஹ்மத்தின்கண் இன்றாம்; மற்றே உபாதியின் சம்பந்தத்தால் பிரஹ்மத்தின்கண்ணே அபபேதப பிரதீதியானதுண்டாமாதலின், அபபேதம் பொய்யாம். ஆகாசத்தின்கண்ணே யுண்மையாய்ப் பேதமின்றேனும, ஆகாசத்தின்கண் உண்டாய மேகமின்னல் முதலியன பேதரகித ஆகாசத்தின்கண்ணும் பேதத்தை யாறறும்; அவ்வாறே பிரஹ்மத்தின்கண் உண்மையாய்ப் பேதமின்றேனும் பிரஹ்மத்தினின்றும் உற்பன்னமாய தூல சூக்கும பதார்த்தங்கள் பேதரகித பிரஹ்மத்தின்கண்ணும பேதத்தை யாற்றும். இப்பொருளேயே வெளிபபடையாய்க் காண்பிபபாம் :—பேதமறற ஆகாசததின் கண்ணே கற்பித கந்தர்வ நகரம் பிரதீதியாம், அநநகர உபாதியால் ஆகாசத்தின் முதற்பேதம பிரதீதியாம். அதன்பின்னர் கந்தாவநகரத்தின்கண் இராநின்ற பல் வகையாய இல்லங்களால ஆகாசத்தின் பேதம் பிரதீதியாம; அதன்பின்னர் அவ் வில்லங்களிலிராநின்ற சிறிய இல்லங்களால் ஆகாசத்தின் பேதம் பிரதீதியாம்; அதன்பின்னர் அவ்விலலங்களிலிராநின்ற கடாதி பதார்த்தங்களால் ஆகாசத்தின் பேதம் பிரதீதியாம். இவ்விதம் உபாதியின் சம்பந்தத்தால் பேதரகித ஆகாசத தின்கண் அனேக பேதம பிரதீதியாமாதலின், அவ்வெலலாப் பேதங்களும் ஆகாசத்தின்கண்ணே கற்பிதமாம். அங்ஙனமே பேதரகித ஆநந்தசொரூப ஆன்மாவின்கண் முதலில் ஆகாசாதி பஞ்சமகாபூதங்களால் பேதப் பிரதீதியுண்டாம. அதன்பின்னா பஞ்சமகாபூதங்களிலிராநின்ற சம்பூாண தூல சூக்கும சரீரங்களால் ஆன்மாவின்கண்ணே பேதபபிரதீதியாம. அதன்பின்னர் பிராணன் புத்தி இநதிரியங்கள் முதலியவற்றால் ஆன்மாவின்கண்ணே பேதபபிரதீதியாம. இவ்வகையாய உபாதிசம்பந்தத்தால் பேதரகித ஆன்மாவின்கண் அனேகம் வகையாய பேதம் பிரதீதியாம். ஆகையால் அவ்வெல்லாப்பேதங்களும் ஆன்மாவின்கண்ணே கற பிதமாம்; அக்கற்பித பேதத்தால் ஆன்மாவின் வாஸ்தவ ஒருமை நிவிர்த்தியாகமாட்டாது. ஆகையால் ஹே பிராஹ்மணர்களே! ஆன்மாவிற்கும் பிரஹ்மத்திற்கும் பரஸ்பரம் பேதமின்றாம்;மற்றே அபேதமேயாம். பிரஹ்மவேத்தாக்களாய மகாத்ம புருடர் பிரஹ்மஞானத்தால் சர்வான்மபாவத்தடைவைப் புகன்றுளார். அவர்கள் கூறல் பொய்யன்றாம்; மற்றே மெய்யாம். ஏனெனின், சமஷ்டி வியஷ்டியுபாதிவான் பிரஹ்மம் பூர்வபூர்வம் பிரஹ்மஞானத்தாலேயே சர்வான்ம பாவத்தை யடைந்தது.

சங்கை :—ஹே பகவன் ! பிரஹ்மம்யாண்டும் வியாபகமாமேல் தனது வியாபக சொரூபத்தை யெப்போதும் ஏனறியவில்லை.

சமாதானம் :—ஹே பிராஹ்மணரே ! நித்திரையின்கண்ணே யுறங்காநின்ற மகாராஜா நித்திராதோஷத்தால தனது மகாராஜாத்தன்மையைக் காண்பதின்றும்; மற்றே தன்னைத்தரித்திரனாய்க் காண்கின்றான். அங்ஙனமே அஞ்ஞானரூபமாயையால் மறைபட்ட இந்தப்பிரஹ்மம் தனது வியாபகசொரூபத்தைக் காண்பதின்றும் ; மற்றே தன்னைப் பரிச்சின்னனாய்க் காணும். ஹே பிராஹ்மணர்களே ! பேதமற்ற சுத்த ஆகாசத்தின்கண்ணே மேகம், தூமம், காற்று முதலிய உபாதிகள் பல்வகையாய பேதத்தையுண்டாக்கும. அங்ஙனமே, பேதமற்ற சுத்த ஆன்மாவின்கண் இவ்வஞ்ஞானரூப மாயையே பேதகாரணமாம். ஹே பிராஹ்மணர்களே ! இராக்காலத்தின்கண் அநதகாரம் சூரியப பிரகாசத்தை ஆச்சாதனம் செய்யும், அங்ஙனமே சம்சாரகாலத்தின்கண் அஞ்ஞானரூபமாயை பிரகாசசொரூப ஆன்மாவை ஆச்சாதனஞ்செய்யும. ஹே பிராஹ்மணர்களே ! நாற்பக்கங்களிலும் மகாவனஞ் சூழ்ந்தகிராமத்தின்கண் இராநின்ற புருஷனுக்குச சத்துருராஜாவின் சைனியத்தின் சைனியத்தால் கிராமத்தைக் கொள்ளையடிப்பதின் அஞ்ஞானமுளதாக, ஒருகால் தெய்வயோகததால் அக் கிராமவாசியாய புருஷனுககுச சத்துருராஜாவின் சைனியத்தின் கொள்ளையடிபபதின் தரிசன முண்டாயின் அத்தரிசனத்தால் வனவாசியாய புருஷனுக்குப் பூர்வ அஞ்ஞானததின் நிவிர்த்தியாம ; ஒருதரம் நிவிர்த்தியான அவ்வஞ்ஞானம மீண்டொருகாலும உறபன்ன மாகமாட்டாது. அவ்வாறே, இவ்வான்மரூப பிரஹ்மத்தின்கண் அநாதிகாலமாய் அஞ்ஞானமிருந்தது. எத்துணை அதிஷ்டான ஆன்மசாக்ஷாதகாரம் உண்டாகவில்லையோ, அத்துணை அஞ்ஞான நிவிர்த்தி எவ்வுபாயத்தானும உண்டாகமாட்டாது ; மறறே அதிஷ்டான ஆன்மாவின் சாக்ஷாத்காரத்தாலேயே அஞ்ஞான நிவிர்த்தி யுண்டாம். அதிஷ்டான ஆன்ம ஞானததால நாசத்தையடைநத அஞ்ஞானம் மீண்டொருகாலும் உண்டாகமாட்டாது.

சங்கை :—ஹே பகவன் ! அதிஷ்டான ஆன்ம ஞானத்தால் அஞ்ஞானம் நிவிர்த்தியாமெனத் தாங்கள் கூறினீர்கள், அது சம்பவியாது ; ஏனெனின், அஞ்ஞானம் கடாதி பதார்ததங்களைப போலப பாவரூபமாயின் அதற்கு ஞானத்தால் நீக்கங்கூடும், ஆனால் அவ்வஞ்ஞானமோ பாவரூபமன்றும் ; மற்றே ஞானபாவத்தையே அஞ்ஞான மென்பராதலின்.

சமாதானம் :—ஹே பிராஹ்மணர்களே ! ஞானபாவரூபம் அஞ்ஞானமன்றும்; ஏனெனின், பிரகாசசொரூப ஆன்மாவே ஞானசொரூபமாம்; ஆன்மாவின் வேறாய சடபுத்தியாதிகள் ஞானரூபமன்றும்; அந்த ஞானரூப ஆத்மா நித்தியமாமாதலின் அதனது அபாவமுடன்படல் சமபவியாதாம்.

சங்கை :—ஹே பகவன் ! ஆன்மாவொன்றே ஞானரூபமாயின் எல்லாவுலகரின் அந்தக்கரண விர்த்தியின்கண் கடஞானம் எனக்குண்டாயது படஞானம் எனக்குண்டாயது என்னும் ஞானவியவகாரம் உண்டாகின்றது ; அவ்வியவகாரம் உண்டா

கலாகாது. ஏனெனின், தங்கள்மதத்தில் ஆன்மாவின் வேறாய எப்பதார்த்தமும் ஞானரூபமன்றாம் ; ஆன்மா வொன்றே ஞானரூபமாமன்றோ ?

சமாதானம் :—ஹே பிராஹ்மணரே ! அயப்பிண்டத்தின்கண் தாகம் செய்யும் சக்தியும பிரகாசம் செய்யும் சக்தியும் இன்றாமென்றாலும், அக்கினிக்கு அயப்பிண் டத்தோடு தாதாத்மிய சம்பந்த முண்டானவுடன், அவ்வயப்பிண்டம் தகிப்பதுடன் பிரகாசிக்கும் என உலகர் கூறாநிற்பர். அங்ஙனமே, ஜட அந்தக் கரணத்தின் கண்ணும் அதன் விர்த்தியின்கண்ணும் உண்மையாய்ப் பிரகாசத் தன்மையின்றா மென்றாலும், பிரகாசசொரூப ஆன்மாவிற்கு அந்தக்காணத்தோடு தாதாத்மிய அத்தியாச முண்டாமாயின், அநதக கரணத்தின்கண்ணேயும் அதன் விர்த்தியின் கண்ணேயும் பிரகாசத்தன்மை பிரதீதியாம. அந்தக்காணத்தின்கண் உள்ள பிரகாசத்தன்மை ஆன்மாவினுடையதே யாமாதலின், அந்தக் கரணவிர்த்திகளில் உலகரின் ஞானவியவகாரம் கௌணமாம ; முக்கியமன்றாம் ; ஆன்மாவே முக்கிய ஞானரூபமாம்.

சங்கை :—ஹே பகவன் ! அந்தக்கரணாதி ஜடபதார்த்தங்களில் பிரகாசத் தன்மைத் தர்மம் உண்டாகவேண்டாம், ஆயினும் ஆன்மாவின் தர்மமாய பிரகா சத்தின் அபாவத்தையே அஞ்ஞான மெனலாமே ?

சமாதானம் :—ஹே பிராஹ்மணரே ! ஆன்மாவினும் வேறாய் ஞானரூபப் பிரகாசத்தை யங்கீகாரம் செய்யினே ஆன்மாவின்கண்ணும் பிரகாசத்தின்கண் ணும் ஜடத்தன்மையின் அடைவுண்டாம ; ஏனெனின், யாது யாது பேதமுடைய பதார்த்தமாமோ அதுவது விகாரரூபமேயாம், யாது யாது விகாரரூபமாமோ அது வது ஜடரூபமாம் ; கடாதி பதார்த்தங்களேபோல. ஆன்மாவையும் அதனது பிரகாசத்தையும் ஜடரூபமென அங்கீகாரம் செய்யினே, எவ்வெபபதார்த்தம் ஜட மாமோ அவ்வப் பதார்த்தம அனான்மாவேயாம் ; கடமும் கடத்துறற சுககிலாதி ரூபமும் ஜடமாதலின், அனான்மாவாவதேபோல, ஆன்மாவும பிரகாசமும ஜடமாத லின் அனான்ம பாவத்தையடையும். ஆன்மாவிற்கும பிரகாசத்திறகும அனான்மத தன்மையை யொபபுதல் உமக்கும் உடன் பாடன்றாம். ஆகையால் ஆன்மாவினும் பிரகாசம் பின்னமன்றாம். ஹே பிராஹ்மணர்களே ! எங்ஙனம் ஆன்மாவினும் பிரகாசம் பின்னமன்றோ, அங்ஙனமே ஆன்மா பிரகாசம் என்னும் இரண்டினும் ஆநந்தமும் பின்னமன்றாம். ஆன்மப் பிரகாசங்களிரண்டினும் ஆநநதம் பின்ன மாயினே, ஆன்மா, பிரகாசம், ஆநநதம் என்னும் மூன்றன்கண்ணும முறறகூறிய முறையே அனான்ம பாவத்தன்மை வந்தடையும். அன்னியமாய ஒரு புருஷனு டைய சரீரமும், சரீரத்தின்கண் இராநின்ற கௌரத்வாதி தர்மமும், அவற்றை யொளிர்விப்பதாய தீபமும் பரஸ்பரம் பேதமுடையதேயாம். ஆகையினலம் மூன்றன்கண் அனான்மத்தன்மை யனுபவத்தால் துணியபபெறும். அங்ஙனம் ஆன்மா, பிரகாசம், ஆநந்தம் என்னும் மூன்றினுக்கும் பரஸ்பரம் பேதமுடன் படினே மூன்றினும் அனான்மத்தன்மை வந்தடையுமாதலின், ஆன்மா பிரகாசம் இரண்டினும் ஆநந்தம் பின்னமன்றாம் ; மற்றோ ஆன்மாவே பிரகாச சொரூபமும் ஆநந்த சொரூபமுமாம். அல்லது, வாதியானவன் பிரகாசரூப ஆன்மாவின்

கண்ணே பிரகாச தர்மத்தை யங்கீகரிக்கின் அவனை யிதுகேட்டல்வேண்டும்:— பிரகாசரூப ஆன்மாவின்கண் இராநின்ற பிரகாச தர்மமானது, அந்தக்கரணாதி ஜடபதார்த்தங்களின் பானத்தின் பொருட்டா? அல்லது ஆன்மாவின் பானத்தின் பொருட்டா? அவற்றுண் முதற் பக்ஷமோ சம்பவியாது; ஏனெனின், ஆன்மரூபப் பிரகாசத்தானேயே அந்தக் கரணாதி ஜடபதார்த்தங்களின் பானம் சம்பவிக்கின்றதாதலின், அந்தக கரணாதிகளின் பிரகாசத்தின் பொருட்டு ஆன்மாவின் கண்ணே பிரகாசதர்மததை யங்கீகரித்தல நிஷ்பலமாம். ஆன்மாவின் பிரகாசத்தின் பொருட்டு ஆன்மாவின்கண்ணே பிரகாசதாமத்தின் அங்கீகாரமாம் என்னும் இரண்டாவதுபக்ஷமும் பொருநதாது; ஏனெனின், பிரகாசரூப ஆன்மாவின்கண் அன்னியப் பிரகாசத்தாற் பிரகாசியத்தன்மையை அங்கீகரிக்கினே, ஆன்மாவின் கண்ணே ஜடத்தன்மையின் அடைவுண்டாம். ஏனெனின், எவ்வெப்பொருள் அன்னியப் பிரகாசத்தாற பிரகாசியமாமோ அவ்வப்பொருள் ஜடங்களாம். நேத்திர ஜன்னிய அநதக் கரணவிருத்தி யவசசின்ன சைதன்யத்தால் தீபாதி பதார்த்தங்கள் பிரகாசியமா மாதலின், தீபாதிகள் ஜடங்களாம். அதுபோல ஆன்மாவும் அன்னியபபிரகாசத்தாற் பிரகாசியமா மாயின், தீபாதிகளைப் போலச் சடமேயாம். அங்ஙனம் ஆன்மாவிற்குச் சடத்தன்மையாதல் உமக்கும் அங்கீகாரமின்றாமன்றே. ஆகைபால தன்னிற பின்னமாய பிரகாசததால ஆன்மா பிரகாசியமன்றாம். அல்லது பிரகாச சொரூப ஆன்மா எவ்வன்னியப் பிரகாசத்தால் பிரகாசியமாமோ அந்தப் பிரகாசமும் வேறொரு பிரகாசத்தாற பிரகாசியமா? அல்லது இன்றா? அது வேறொரு பிரகாசத்தாற பிரகாசிககப படுவதன்று, சொப்பிரகாசமே யாமெனின்; முதலதாய ஆன்மரூபப் பிரகாசததைச சொபபிரகாசமெனை வுடன்படுவதில் வரும் அபாரதம்யாதோ? ஆன்மரூபப பிரகாசததை விடுத்த துவிதீயப் பிரகாசத்தைச் சொபபிரகாச மென வுடன்படுவதில் உமது பிரயாசம் பயனற்றதேயாம். அவ்விரண்டாவது பிரகாசமும, வேறொரு மூன்றாவது பிரகாசத்தால் பிரகாசியமாம்; அம்மூன்றாவது பிரகாசம் வேறொரு நான்காவது பிரகாசத்தாற் பிரகாசியமாம்; ஏனெனின், உமக்கு அனவஸ்தாதோஷ அடைவுண்டாம். ஆகையால், பிரகாச சொரூப ஆன்மாவேறொரு பிரகாசததால பிரகாசியமனறாம; மறறே தனது சொப்பிரகாசரூபததால், ஆன்மா, தன்னையும், ஜட அநதக கரணாதிகளையும ஒளிர்வித்துக் கொள்ளுமாதலின், ஆன்மாவே ஞானசொரூபமாம; முககாலத்திலும நித்தியமாம். இத்தகைய ஞானசொரூப ஆன்மாவின் அபாவம எங்ஙனம் சம்பவிக்கும. சம்பவியாதாதலின், ஞானததின் அபாவத்தை யஞ்ஞான மெனபபடுமென முன்னர் நீர் கூறியது அத்தியந்தம் விருத்தமேயாம்.

சங்கை:—ஹே பகவன்! ஆன்மாசத்திய சொரூபமும் பிரகாச சொரூபமும் அன்றாம்; மற்றே சூனியரூபமாம. ஆகையால் சூனியரூப ஆன்மாவின்கண்ணே பிரகாசதர்மம் சம்பவிக்கும.

சமாதானம்:—ஹே பிராஹ்மணரே! ஆன்மாவைச சூனியரூபமென அங்கீகரிக்கினே, அசத்தியமாய நரசிருங்கத்தின்கண் ஆன்மத்தன்மை யில்லாததே

போல அசத்திய ஆன்மாவின்கண்ணும் ஆன்மத்தன்மையிராது. ஆன்மாவின்கண் ஆன்மத்தன்மையின் அபாவம் அங்கீகரித்தல் உமக்கும் உடன்பாடின்றன்றோ; ஆகையால ஆன்மா சூனியரூபமன்றாம். அல்லது, ஆன்மாவைச் சூனியரூபமென அங்கீகரித்து அதன்கண்ணே பிரகாசதர்மத்தை யங்கீகரித்தலும் அத்தியந்தம் விர்த்தமாம். ஏனெனின், சத்தியவஸ்துவே அதிஷ்டானமாம்; அசத்திய வஸ்துவோ எதற்கு மதிஷ்டானமன்றாம். அசத்தியவஸ்துவும் எதற்கேனும் அதிஷ்டானமாயின், மலடிமகனும் ரூபாதிகுணங்கட்கு அதிஷ்டான மாதல்வேண்டும்; மலடிமகனிடத்தே ரூபாதிகுணங்களின் அதிஷ்டானத்தன்மையை யெவருமங்கீகரிப்பதின்றாம். ஆகையால் சர்வாதிஷ்டான ஆன்மா சூனியரூபமன்றாம. அல்லது, ஆன்மா நரசிருங்கத்தைப்போல அசத்தியமாயின் நரசிருங்கமுளதெனப் புலப்படல் எப்பிராணிக்கும் உண்டாகாததேபோல, ஆன்மாவும் உளதெனத்தோற்றுதல் கூடாதாம்; ஆனால் எல்லாப் பிராணிகட்கும் யானிருக்கின்றே னென்பதாக இருப்பு வடிவமாய் ஆன்மாவின் பிரதீதியோ உண்டாகின்றதாம. ஆகையால், நரசிருங்கத்தைப்போல ஆன்மா அசத்தியமன்றாம்; மற்றோ எஞ்ஞான்றும் சத்தியரூபமாம். அத்தகைய சத்தியவடிவ ஆன்மாவின் அபாவம் ஒருகாலுஞ் சம்பவியாதென்க. ஆகையால் ஞானபாவரூபம் அஞ்ஞானமன்றாம; மற்றோ அஞ்ஞானம பாவரூபமேயாம். அந்தப் பாவரூப அஞ்ஞானத்தின் நிவிர்த்தி பிரஹ்மவிதத்தையாற் சம்பவிக்கும்.

இப்போது பிரஹ்மவித்தையின் சொரூபத்தை நிரூபணம் செய்வாம்:—ஹே பிராஹ்மணர்களே; சர்வபேதமற்ற ஸ்வபபிரகாச, சத்திய, ஆநந்தசொரூப இவ்வான்மாவை விஷயம செய்வதும், மகாவாக்கியத்தினின்றும் உற்பன்னமாயதும் ஆய சைதன்ய ஒளியோடு கூடிய அநதக்கரண விர்த்தியே பிரஹ்மவித்தையாம். இவ்வகையாய பிரஹ்மவித்தை எதுவ்ரை உண்டாகவில்லையோ, அதுவரை ஜீவர்களின் அஞ்ஞான நிவிர்த்தி உண்டாகமாட்டாது. எததுணை அஞ்ஞான நிவிர்த்தி உண்டாகவில்லையோ, அத்துணை ஜனனமரண சமசாரநிவிர்த்தி உண்டாகமாட்டாது. ஆகையால் ஜனன மரணரூபசம்சார நிவிர்த்தியின்பொருட்டு பிரஹ்மவித்தை அவசியம் சம்பாதிக்கத்தக்கதாம். ஹே பிராஹ்மணர்களே! சசிதாநந்த சொரூப பிரஹ்மமானது சர்வஜீவர்களின் ஆன்மசொரூபமாமாயினும, பிரஹ்மவித்தையின்றி அஞ்ஞானத்தால் மறைபட்ட இந்த பிரஹ்மமானது ஜனனமரண சம்சாரத்தினின்றும் ஜீவர்களைக் காப்பாற்றமாட்டாது; மற்றோ பிரஹ்மவித்தையால் அஞ்ஞானம் நீங்கியபின் ஆவரணமற்றதாய் அநுபவ விஷயமாய பிரஹ்மமானது ஜனனமரண சம்சாரத்தினின்றும் ஜீவர்களைக்காப்பாற்றும். கிரகத்தின்கண்ணே மறைபட்டிருந்த தனமானது எதுவரை கிரகத்திற்குரியோனால் அறியப்படாமலிருந்ததோ, அதுவரையில் அக்கிரகத்திறகுரியானுடைய தரித்திரத்தை நீக்கமாட்டாது; அத்தனமே கிரகத்திற்குரியோனால் அறியப்படின் அவனுடைய தரித்திரத்தை நீக்குவதேபோல, எல்லா உயிர்களின் இருதய தேசத்திவிராநின்ற இவ்வாநந்த சொரூப ஆன்மா எதுவரை உயிர்களால் அறியப்படவில்லையோ, அதுவரை ஜனனமரண ரூபசம்சாரத்தினின்றும் ஜீவர்களைக்காப்பாற்ற மாட்டாது. பிரஹ்மவித்தையால் இவ்வாநந்த சொரூப ஆன்மா அறியப்படின் ஜனனமரண சம்சாரத்

தினின்றும் ஜீவர்களைக்காப்பாற்றும். ஆகையால் ஜனனமரண சம்சார நிவிர்த்தியின்பொருட்டும பரமாநந்தப பிராபதியின்பொருட்டும் . அதிகாரிகளாயினோர் பிரஹ்மவித்தையை அவசியம் சம்பாதித்தலவேண்டும. ஹே பிராஹ்மணர்களே! எவ்வான்மரூப பிரஹ்மமானது அபரோக்ஷ ஞானத்திற்கு விஷயமானதாய் ஜனன மரண சம்சாரத்தினின்றும் ஜீவர்களைககாப்பாற்றுமோ, அநத பிரஹ்மமே சமஷ்டி காரண அஞ்ஞானரூப உபாதியோடுகூடியதால் ஈஸ்வரத்தன்மையை யடையும். அந்தப் பிரஹ்மமே சமஷ்டி சூக்ஷ்மரூப உபாதியோடுகூடியதாய் இரண்ய கர்ப்பத்தன்மையை யடையும. அந்த மாயாவிசிஷ்ட ஈஸ்வரரும ஹிரண்ய கர்ப்பரும் ஜீவர்களைப்போலக் குருவின் உபதேசத்தால் பிரஹ்மஞானத்தை யடையார்; மற்றோ, தாமே சுதந்திரமாய் வேதாநத அர்ததத்தை விசாரித்து பிரஹ்மஞானத்தையடைவர். ஆண்டு மாயாவிசிஷ்ட ஈஸவரரிடததும் ஹிரண்ய கர்ப்பரிடத்தும் இவ்வளவு சிறப்புள்ளது. ஈஸ்வரோபாதியாகிய காரண அஞ்ஞானமானது யான் அஞ்ஞன் என்னும அகங்காரத்தின்கண் ஆரூடமானதாய் ஆவரண ரூப மாமோகத்தை உண்டாக்கும். அகங்காரததின்கண் ஆரூடமாகாமல் கேவல அஞ்ஞானம் ஆவரணரூப மாமோகத்தை உண்டாகக மாட்டாது. அவ்வகங்காரம் பரமேஸ்வரரிடத்தோ இன்றாம். ஆகையால சாவஞ்ஞபரமேஸ்வரருக்கு ஆவரணமின்றி எப்போதும வேதாநத அர்ததததின் அநுசநதானமிருக்கும். சமஷ்டி சூக்குமரூப காரியோபாதியையுடைய ஹிரண்ய காபபரிடத்தோ அஹங்காரமுளதாதலின் அவர் சிறிது ஆவரணததை அநுபவிததே வேதாநத அர்த்தத்தை அநுசந்திப்பர். ஈஸ்வரரிடத்தும இரண்ய காபபரிடத்தும் இத்துணை விலக்ஷணத்தன்மையிருப்பினும் குருவின் உபதேசத்தின் அபேக்ஷை இருவருக்குமின்றாம். அக்கினி, ஜலம், வாயு, விருக்ஷம், அண்டஜாதி நான்குவகையாய பிராணிகள் என்னும் இவையாவும் பயம், துன்பம, சபதம, விதி என்பனவாயிலாய்ச சீவர்களை நித்திரையினின்றும் விழிக்கச்செய்யும. அவ்வககினி ஜலாதிகளற்ற யாதாமொரு தேயததின்கண் சயனிதது பலவகையாய சொபபனங்களைக் காண்பவனைக் காடசுழுபதியை யடைநது சர்வஞானங்களு மற்றவனுயுள்ளவன்தானே நித்திரையினின்றும் விழிபபன். அவ்வாறே சமஷ்டிகாரண அஞ்ஞானரூப உபாதியின்கண் இராநின்ற பிரஹ்மமும சமஷ்டி சூக்ஷ்மரூப உபாதியின்கண் இராநின்ற பிரஹ்மமும் குருவின் உபதேசமின்றித் தாமே வேதாநத அர்ததவிசாரஞ்செய்து தமது அத்விதிய சொரூபத்தை அடையாநிறகும். ஆகையால், மாயாவிசிஷ்ட பரமேஸ்வரரிடத்தும் இரண்யகர்பபரிடத்தும் குருவினுபதேசஅபேக்ஷையின்றாம்.

சங்கை:—ஹே பகவன்! மாயாவிசிஷ்ட பரமேஸ்வரருக்கும் இரண்யகர்ப்பருக்கும் குருவின் உபதேசமின்றியே பிரஹ்மஞானத்தின் அடைவு உண்டாமெனத் தாங்கள் முன்னர்க்கூறியது சமபவிப்பினும பரமேஸ்வரரிடத்தும் இரண்யகர்ப்பரிடத்தும் ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி லய காரணத்தன்மை சமபவியாதாம். ஏனெனின், பரமேஸ்வரரிடத்தோ ஜகத்துற்பத்திக்கு அநுகூலமாய யாதொரு வியாபாரமுமின்றாம். உலகின்கண்ணே வியாபாரததையுடைய குலாலாதியரோகடாதிகட்கே காரணமாகின்றனர். வியாபாரமற்ற யாதொரு காரணத்தையும் கண்டதேயில்லை.

சமாதானம் :—ஹே அந்தணரே! சுத்த சைதன்னியத்தை ஜகத்தின் காரணமென யாம் அங்கீகரிப்பின், இவ்வுமது பூர்வபக்ஷம் சம்பவிக்கும். அச்சுத்தப் பிரஹ்மத்தை ஜகத்காரணமென யாமும் அங்கீகரிப்பதில்லை; மற்றோ மாயாவிசிஷ்ட ஈஶ்வரரை ஜகத்தின்காரணமென யாம் அங்கீகரித்துளேம். ஆகையால், சொப்பன அவஸ்தையையுங் காடசுழுப்தியையும் அடைந்துள்ள வியஷ்டி உபாதியையுடைய ஜீவனிடத்தே சொப்பனப்பதார்த்தங்களின் உற்பத்திக்குப்பீஜரூபமாய அஞ்ஞானத்தின் அனுபவமும், தனது சமீபமாத்திரத்தால் பிராணன்களின் தாரணரூப கருமமும் உள்ளன; அதுபோல மாயாவிசிஷ்ட பரமேஶ்வரரிடத்தும் சமஷ்டி சூக்கும உபாதியையுடைய ஹிரண்யகர்ப்பரிடத்தும ஜகத்துற்பத்தியின் அனுகூல வியாபாரம சம்பவிக்கும். ஹே பிராஹ்மணரே! சொப்பனவஸ்தையையும சுழுப்தியவஸ்தையையும் அடைந்த ஜீவனை வியஷ்டிகாரணரூப உபாதியினின்றும வியஷ்டி சூக்ஷ்மரூப உபாதியினின்றும வேறு பிரிக்கின், அஜ்ஜீவனுடைய நிர்க்குண சொரூபத்தின்கண் சிறிது மாத்திரமும் கருமம சம்பவியாது. அதுபோல, சமஷ்டிகாரண அஞ்ஞானரூப உபாதியையுடைய ஈஶ்வரரையும் சமஷ்டி சூக்ஷ்மரூப உபாதியையுடைய இரண்யகாப்பரையும் சமஷ்டிகாரண அஞ்ஞானத்தினின்றும் சமஷ்டி சூக்ஷ்ம உபாதியினின்றும வேறுபிரிக்கின் அவருடைய நிர்க்குண சொரூபத்தின்கண் சிறிது மாத்திரமும கர்மம் சம்பவியாது.

சங்கை :—ஹே பகவன்! பிரஹ்மமானது உண்மையாய் நிர்க்குணமாயின் பிரஹ்மவித்தையை யாதின்பொருட்டு தரித்ததோ?

சமாதானம் :—ஹே பிராஹ்மணரே! வியஷ்டி சரீரத்தின்கண் உண்மையாய் அகர்த்தாவாயும அபோக்தாவாயும உள்ளவனுக்கு நித்திரையினின்றும் விழிப்புண்டாதல, தனது போகத்தின் பொருட்டன்றும்; மற்றோ, அந்தக்காணத்தின் தருமங்களாய ஸ்தூல போகங்களின் பொருட்டாம். அதுபோல உண்மையாய் அகர்த்தாவாயும் அபோகதாவாயும இராநின்ற பரமாத்மாவானவர் பிரஹ்ம வித்தையைத் தரித்தல கேவலம ஜீவாகளின் ஹிதத்தின் பொருட்டேயாம்; சிறிதும் தம்பொருட்டன்றும்.

சங்கை :—ஹே பகவன்! பரமேஶ்வரருக்குப் பிரயோசனம் சிறிதுமின்றாயின் உலகத்தை உண்டாக்குவதில முயற்சியுண்டாக வேண்டுவதில்லை; ஏனெனின், உலகத்தின்கண் எவ்வெவபுருஷனுக்கு முயற்சியுண்டாகின்றதோ, அது தனது ஸ்வபிரயோஜனத்தின் பொருட்டே ஆகின்றதன்றோ? ஸ்வப பிரயோஜனமின்றிச சேதன ஜீவர்களின் முயற்சி உண்டாகக் கண்டோமில்லை.

சமாதானம் :—ஹே பிராஹ்மணரே! இவ்வுலகின்கண்ணே பிரஹ்மத்தையுணர்ந்த ஆசிரியரானவர் தமது சொரூப சாக்ஷாத்காரத்தை அடைந்து சர்வபதார்த்தங்களின் இச்சையற்றிருப்பர். ஆகையால், அத்தகைய ஆசிரியருக்கு ஸ்வப்பிரயோஜனம் சிறிதுமின்றேனும், முமுக்ஷுக்களாகிய நமமனோரது கல்யாணத்தின்பொருட்டு உபதேசரூப காரியத்தின்கண் முயல்வர். அதுபோலப் பரமான்ம தேவரும் ஸ்வயப்பிரயோஜன மற்றவரேனும் ஜீவர்களின் போகத்தின் பொருட்டு ஜகத்துற்பத்தி காரியத்தின்கண் முயல்வர்.

சங்கை :—ஹே பகவன்! சர்வ ஜீவர்களின் சுகத்தின்பொருட்டே பரமேஸ்வாருடைய முயற்சியாயின் அப்பரமேஸ்வரர் தேகரூப சிறைச்சாலையின்கண் ஜீவர்களை யாதின்பொருட்டுச் செலுத்துகின்றார்?

சமாதானம் :—ஹே பிராஹ்மணரே! உலகின்கண்ணே பிரஹ்ம வேத்தாவாகிய குருவானவர் சிஷருக்கு நாநாவகையான கிலேசத்தைக்கொடுக்கும் பிரஹ்மசர்யாதி தர்மங்களை உபதேசிப்பர். அவ்வாசிரியரது உபதேசமானது வெளிப்படையாய்த் துக்க காரணமாய்த் தோற்றினும் துக்க காரணம் அன்றாம்; மற்றோ, முமுக்ஷுகட்கு சித்தசுத்திவாயிலாய் மோக்ஷரூப சுகசாதனமாம். அவ்வண்ணம் பரமேஸ்வரரும அவசியம் போகிக்க யோகயமாய கர்மங்களின் போகத்தின் பொருட்டும் சாதன சம்பத்திவாயிலாய் மோக்ஷரூப சுகப்பிராப்தியின் பொருட்டும் ஜீவர்கட்கு சரீராதிகளைக் கொடுபபர். ஹே பிராஹ்மணரே! எங்ஙனம் உலகின்கண்ணே குருவின் உபதேசத்தைப பாலனஞ்செய்யுஞ் சிஷனானவன் பிற்காலத்தில் பரமாநநதத்தை யடைவனோ, அங்ஙனம பரமேஸ்வரா கூறிய வேதங்களைச் சிரத்தையோடுகூட அங்கீகரிக்கும ஜீவன் பரமாநநதத்தைப் பெறுவன். ஆகையால், பரமேஸ்வரரது ஆணைவடிவ வேதங்களை அவசியம் அங்கீகரித்தல் வேண்டும்.

சங்கை :—ஹே பகவன்! துவைத பான(தோறற)த்திற்குப் பகையாய பிரஹ்ம வித்தையோடு நிரந்தரங்கூடிய பரமேஸ்வரரானவர் எவ்வண்ணம் துவைத ஜகத்தை உண்டாக்குவர்.

சமாதானம் :—ஹே பிராஹ்மணரே! எஙஙனம் பிரஹ்ம சாக்ஷாத்காரத் தோடுகூடிய பிரஹ்மவேததாவானவா நிததிரை யுறறவராய்க் கனுப்போகங்களைக் கொடாநின்ற பிராரபத கன்மவசத்தால நாநாவகையாய ஜகத்தை நித்திரையின்கண் உண்டாக்குவரோ, அஙஙனம இபபரமான்மதேவர் பிரஹ்ம வித்தையால் தமது சொரூபத்தை யறிநதவராயினும மாயையால் சமபூர்ண பூதபௌதிகப பிரபஞ்சத்தை யுண்டாககுவா. ஈண்டும் இததுணை விசேஷமாய்:—பிரஹ்ம சாக்ஷாத்காரத்தோடுகூடிய நிஷ்காம புருஷன் தனது காமஙகளின் அனுசாரமாய்ச சொப்பன பதாாத்தஙகளை உண்டாககுவன்; மாயாவிசிஷ்ட பரமான்மாவின்கண்ணே புண்ணிய பாவரூப காமங்களின்றாதலின் பரமேஸ்வரர் தமது கருமங்களின் அனுசாரமாய் ஜகத்தை யுண்டாககாா; மறறோ ஜீவர்களின் புண்ணிய பாவரூப கர்மங்களின் அனுசாரமாய் ஜகததை யுண்டாககுவா.

சங்கை :—ஹே பகவன்! எவ்வண்ணம சுத்திரூப அதிஷ்டான ஞானத்தின் பின் கற்பித வெள்ளியின் நிவிர்த்தி உண்டாகுமோ, அவ்வண்ணம் மாயாவிசிஷ்ட பரமான்மாவிற்கு அதிஷ்டான பிரஹ்ம சாக்ஷாத்காரத்தால் கற்பிதப் பிரபஞ்சத்தின் நிவிர்த்தி ஏன் உண்டாகமாட்டாது?

சமாதானம் :—ஹே பிராஹ்மணரே! கனு அவஸ்தையின்கண் அறிஞனைவன் கனுப் பொருள்களைக் காணினும் தன்னையும் கனுப்பொருள்களையும வேறாய்க் கண்டிலன்; மற்றோ, இக்கனுப பதாாததங்கள் யாவும் எனது சொரூபமேயாம். அதிஷ்டானமான என்னின் வேறாய் இப்பொருள்களுக்குச சிறிதுமாத்திரமும்

சத்தையின்றும் என அறிஞனுக்குக் கனவின்கண்ணே அதிஷ்டான ஆன்மாவின் ஞானமுண்டாயினும், எங்ஙனம் கனப்பொருள்களின் நிவிர்த்தி உண்டாவதின்றே, மற்றே பிராரப்த கர்மவசத்தால் அக்கனப் பொருள்களின் தோற்றம் அவனுக் குண்டாமோ, அங்ஙனம் ஆன்ம சாக்ஷாத்காரத்தோடு கூடிய பரமான்ம தேவர் சம்பூர்ண துவைதப் பிரபஞ்சத்தைக் காணினும் தமது சொரூபத்திற்கு வேறாய்க் கண்டிலர்; மற்றே, இவ்வெல்லா உலகமும் எமது வடிவமேயாம். எமது வடிவத் தினும் வேறாய் யாதொரு பொருளுமின்றும் என்று பரமான்மாவிற்கு அதிஷ்டா னப் பிரஹ்ம சாக்ஷாத்கார முண்டாயினும்; ஜீவர்களின் புண்ணிய பாவரூப கர்மங் களின் வசத்தால் ஜகத்தின் லயமுண்டாகமாட்டாது; மற்றே பொய்யாய் ஜகத் தின் தோற்றமுண்டாம். கருத்திதுவாம்:—உலகின்கண்ணே மயல் இருவகை யாம். அவற்றுள் ஒன்றே உபாதியறற மயலாம், மற்றொன்றே உபாதியுற்ற மயலாம, அவற்றுள் அதிஷ்டான ஞானததால் யாதினுக்குச் சொரூபமாயே நிவி ர்த்தியுண்டாமோ, அது உபாதியற்றமயலாம். சுத்தி இரச்சுமுதலிய அதிஷ்டான ஞானத்தால் கற்பித வெள்ளி சாபபம் முதலியவற்றிறகும் அவற்றின் ஞானத்திற் கும் சொரூபமாய் நிவிர்த்தியுண்டாம்; ஆதலின் சுததியின்கண்ணே வெள்ளிமய லும் பழுதையின்கண்ணே பாமபின் மயலும் உபாதியற்ற மயல்களாம. அதிஷ் டான ஞானத்தால் யாதினுக்குச சொரூபமாய் நிவிரத்தியின்றுமோ, அதன்கண் உள்ள சத்தியத்தன்மை மாத்திரம் நிவிர்த்தியாமோ அது உபாதியுற்ற மயலாம். செம்பருத்தம் புஷ்பத்தின் சமீபததிலிராநின்ற வெண்படிக மணியானது சிவப்பு வர்ணமுடையதாய்ப் பிரதீதியாம. ஆண்டு அதிஷ்டானரூப படிகமணியின் ஞான முண்டாயினும் செம்பருத்தம புஷ்பமாய உபாதியிருக்கும் வரையிலும் சிவப்பு வர்ணமும் அதன் பிரதீதியும் சொரூபமாய் நிவிர்த்தியாகமாட்டாது. மறறே, அதன்கண்ணுள்ள சத்தியத்தன்மைப் புத்தி நீங்கும. செமபருத்தம் புஷ்பம நீங் கியபின்னரே சிவப்புவர்ணமும் அதன் பிரதீதியும் சொரூபமாய் நீங்கும். ஆகையால் வெண்மை நிறமுடைய படிகமணியின்கண் சிவபபு வர்ணப் பிரதீதியானது உபாதி யுற்றமயலாம்; இதுபோலவே பிரபஞ்சத்தின் பிரதீதியும் உபாதியுற்ற மயலாமாத லின், பிரஹ்மத்தை யுணர்ந்த புருஷனுக்கு அதிஷ்டானப் பிரஹ்ம சாக்ஷாத்கார முண்டாயினும், பிராரப்த கன்ம உபாதி நீங்காத பரியந்தம மித்தியாரூபமாய்ப் பிரபஞ்சத்தின் தோற்றம் சம்பவிக்கும்.

சங்கை:—ஹே பகவன் பரமாதமா ஏக அத்விதீயமாயிருப்பின் சம்சாரத் தின்கண் சிலஜீவர் பெத்தர் எனவும் சிலஜீவர் முத்தர் எனவும் பந்த மோக்ஷ வியவ காரம் உண்டாகலாகாதன்றே?

சமாதானம்:—ஹே பிராஹ்மணர்களே! ஆத்ம சாக்ஷாத்காரத்தோடு கூடிய அறிஞன் சொப்பனவஸ்தையை யடைவானாயின் ஆண்டு அஞ்ஞானத்தாற் கற்பி தர்களாய அநேக ஜீவர்களைக்காண்பன். ஆண்டுச் சொப்பனத்தைக் காணும் அறிஞனுடைய விதேக மோக்ஷமன்றியே அச்சொப்பன கற்பித ஜீவர்களுள் யாவ னேனுமொரு ஜீவன் சிரவணாதி சாதனங்களால் முத்தியை அடைவன். அம்முக்த ஜீவனின் வேறாய ஜீவர்கள் பந்தத்தை யடைநதிருப்பர். அதுபோல ஜகத்தின் நிர் வாகத்தின்பொருட்டு மாயாவிசிஷ்ட பரமாத்மா இருப்பினும் இவ்வுலகின்கண்ணே

சிலமுமுக்ஷுக்கள் சிரவணாதி சாதனங்களால் முத்தியை யடைவர். அம்முத்த புருஷரின் வேறாய அஞ்ஞானிகள் சம்சாரரூப பந்தத்தை யடைந்திருப்பர். இந்தப்பிரகாரம் ஏக அத்விதீய ஆன்மாவை அங்கீகரிப்பினும் கற்பித பந்தமோக்ஷ விவஸ்தை சம்பவிக்கும். ஹே பிராஹ்மணர்களே! ஆத்மஞானத்தோடு கூடிய அறிஞன் கனவின்கண் பலவகையாய சேதன ஜீவர்களையும் பலவகையாய கடாதி சடபதார்த்தங்களையும் காண்பன். அக்கனுச்சீவருள் இச்சீவன் அபேத தரிசியாதலின் முத்தனெனவும், இச்சீவன் பேததரிசியாதலின் பெத்தனெனவும், சொப்பனத்தைக் காணுமறிஞன் அச்சீவனின் பந்தமோக்ஷ கற்பனையைச் செய்வன். ஆனால் அப்பந்தமும் மோக்ஷமும் உண்மையாய் விசாரித்துப்பார்க்கின் சொப்பனத்தைக்காணு மறிஞனிடத்து இன்றாம். சொப்பன கற்பித ஜீவரிடத்தும் உண்மையாய் அப்பந்த மோக்ஷமின்றாம். அவை கேவலம் நித்திரா தோஷத்தால் பிரதீதியாம். அதுபோல வாஸ்தவமாய் விசாரித்துப் பார்க்கின் மாயாவிசிஷ்ட பரமேசுவரரிடத்தும அந்நிய ஜீவர்களிடத்தும் பந்தமோக்ஷமின்றாம்; கேவலம் அஞ்ஞானத்தால் பநதமோக்ஷம் பிரதீதியாம்.

சங்கை :—ஹே பகவன்! உண்மையாய் பந்தமோக்ஷமின்றாயின் பந்த நிவிர்த்தியின் சாதனங்களையும மோக்ஷப் பிராபதியின் சாதனங்களையும் பிரதிபாதனஞ்செய்யும் சாஸ்திரம் பயனற்றதாய் விடுமன்றோ?

சமாதானம் :—ஹே பிராஹ்மணர்களே! கனவின்கண்ணே அநேகம் அஞ்ஞானிகள் சாஸ்திரோபதேசத்தால் சொர்க்கத்தையும் மோக்ஷத்தையும் அடைவராதலின், கனவின்கண்ணே கற்பித அஞ்ஞானிகட்குச் சாஸ்திரம் பயனற்றதாகாததேபோல, நனா அவஸ்தையின்கண்ணும் சாஸ்திரோபதேசத்தால் அஞ்ஞானிகள் சொர்க்காதி லோகங்களையும் மோக்ஷத்தையும் அடைவாராதலின், அஞ்ஞானிகட்குச் சுருதி ஸ்மிருதிரூப சாஸ்திரங்கள் பயனற்றனவன்றாம்; மற்றோ பயனுற்றனவேயாம். இந்தப்பிரகாரம் அஞ்ஞானிகட்குச் சாஸ்திரத்தின் பயனுடையதாந்தன்மை கூறப்பட்டது.

இப்போது பிரஹ்ம வேத்தாவிற்குச் சாஸ்திரத்தின் பயனிலதாந் தன்மையைக் காண்பிப்பாம் :—ஹே பிராஹ்மணர்களே! கனவின்கண் கனாக்காணும் அறிஞனுக்கும் கனவின்கண்ணே கற்பிக்கப்பட்ட அந்நிய ஜீவன்முத்தருக்கும் சாஸ்திரம் பயனற்றதேயாம். ஏனெனின், சுருதி ஸ்மிருதிரூப சாஸ்திரோபதேச ஜன்னிய ஞானம் ஜீவர்களின் அஞ்ஞானத்தை நிவிர்த்திப்பிக்கும். அவ்வஞ்ஞானம் அவ்வறிஞர்களிடத்தே இன்றாமன்றோ? ஆகையால் அந்த ஞானிகட்குச் சாஸ்திரம் பயனற்றதேயாம்; அதுபோல நனா அவஸ்தையின் கண்ணும் யாவருக்கு ஆன்ம சாக்ஷாத்காரம் உண்டாயதோ, அவருக்கும் பரமேசுவரருக்கும் சுருதி ஸ்மிருதிரூப சாஸ்திரங்களின் பயனற்ற தன்மையை யாம் அங்கீகரித்துளேம், அல்லது ஹே பிராஹ்மணர்களே! சர்வ ஜீவர்களின் உபதேசத்தின்கண் சாஸ்திரத்திற்குச் சாதாரணப் பிரவிர்த்தி உண்டாமாயின் சுருதிஸ்மிருதிரூப சாஸ்திரத்திற்குப் பயனற்ற தன்மையுண்டாம். அங்ஙனம் சாஸ்திரத்

திற்குச் சாதாரணப் பிரவிர்த்தி இல்லையன்றே? மற்றே அனதிகாரிகளை விடுத்து அதிகாரிகளின் உபதேசத்தில் சாஸ்திரத்திற்குப் பிரவிர்த்தியாம். வைசிய ஸ்தோமமென்னும யாகத்திற்கு அதிகாரிகள் வைசியரேயாவர்; பிராஹ்மணரும் க்ஷத்திரியரும் அதற்கு அதிகாரிகளாகார். ஆகையால் அந்தயாகமானது அவ்விருவருக்கும் பயனற்றதாம். அவ்வைசியருள்ளும் யாவன் பலத்தை யிச்சிப்பனே, ஸ்திரீ தனுதி பதார்த்தங்களோடு கூடினனே பாவம்முதலிய தோஷங்களற்றவனே அவன்பொருட்டே அநதயாகம் பயனுடையதாம். கூறிய விசேஷணங்களற்ற வைசியனுக்கும் அந்தயாகம் பயனற்றதேயாம். இங்ஙனமே பிருஹஸ்பதி ஸவநமென்னும் யாகத்தின்கண் பிராஹ்மணருக்கே அதிகாரமாம். க்ஷத்திரிய வைசியருக்கு அதன்கண் அதிகாரமின்றும். ஆகையால் க்ஷத்திரிய வைசியரைக் குறித்து அந்தயாகம் நிஷ்பலமாம். அநதப பிராஹ்மணருள்ளும் யாவன் பலயிச்சையுடையவனே ஸ்திரீ தனுதிபதார்த்தங்களோடு கூடினவனே, பாவமுதலியதோஷங்கள் அற்றவனே அவனைக்குறித்தே அந்தயாகம் சபலமாம். கூறிய விசேஷணங்களற்ற அந்நிய பிராஹ்மணனுக்கும் அந்தயாகம் பயனுடையதாகாது. இவ்வண்ணமே ராஜசூயமென்னும் யாகத்தின்கண் க்ஷத்திரியர்கட்கே அதிகாரமாம். பிராஹ்மண வைசியருக்கு அதன்கண் அதிகாரமின்றும்; ஆகையால் பிராஹ்மண வைசியர்களைக் குறித்து அநதயாகம் பயனற்றதாம். அநத க்ஷத்திரியர்களுள்ளும் யாவன் பலேச்சையுடையவனே, ஸ்திரீ தனுதி பதார்த்தங்களோடு கூடினவனே பாவமுதலிய தோஷங்களற்றவனே அவனைக்குறித்தே அந்தயாகம் சபலமாம். கூறிய விசேஷணங்களற்ற க்ஷத்திரியனுக்கும் அநதயாகம் பயனற்றதேயாம். இங்ஙனம் வேறு யாகாதி கர்மங்களும் அதிகாரிகளுக்குப் பயனுடையனவாம்; அனதிகாரிகட்குப பயனற்றனவாம். அதுபோல முத்தியைக் கூறும் வேதாந்த சாஸ்திரமும் சர்வ ஜீவர்கட்கும் பயனுடையதன்றும்; மற்றே ஆத்ம ஞானமின்றிய விவேகாதி சாதன சதுஷ்டய சம்பன்னர்களாய முமுக்ஷுக்கட்கே பயனுடையதாம். ஆகையால ஹே பிராஹ்மணர்களே! சமஷ்டிகாரண அஞ்ஞானரூப உபாதியையுடைய பரமேஶ்வரரும் சமஷ்டி சூக்ஷ்மரூப உபாதியையுடைய ஹிரண்யகர்ப்பரும் பிரஹ்மவித்தையால் சர்வான்மபாவத்தை யடைந்திருக்கின்றனர். அதுபோல சமஷ்டி ஸ்தூல உபாதியையுடைய விராட்பகவானும் சுவாயம்பு மனுமுதலியோரும் பிரஹ்ம வித்தையினுலேயே சர்வான்ம பாவத்தை யடைந்திருக்கின்றனர். அதுபோல இக்காலத்தும் ஒவ்வொரு மஹான்ம புருஷர் பிரஹ்ம வித்தையினுலேயே சர்வான்ம பாவத்தை யடைந்திருக்கின்றனர். அதுபோல இனிமேலும் ஒவ்வொரு மஹான்ம புருஷர் பிரஹ்ம வித்தையினுலேயே சர்வான்ம பாவத்தையடைவர். இங்ஙனம் பிரஹ்மவித்தையின் சர்வாத்மபாவரூப பலத்தின் சமானத்தன்மை கூறப்பட்டது.

இப்போது பிரஹ்மவித்தையின் உற்பத்தியின்கண் சிறிது விலக்ஷணத்தன்மையைக் காண்பிப்பாம:—ஹே பிராஹ்மணர்களே! பறவைகளிடத்தே ஆகாசத்தின்கண்ணே செல்லும் சாதுர்யத்தன்மையும், மீன்களினிடத்தே நீரின் கண்ணே செல்லுஞ் சாதுர்யத்தன்மையும் ஒரு யத்தனத்தாலும் வந்ததல்ல; மற்றே பிறப்பிலேயே அவற்றினிடத்தே அந்தச் சாதுர்யத்தன்மை யுளது.

அதுபோலவே விராட் பகவானிடத்தும் கபில முனிவரிடத்தும் சனத்குமாரர் முதலியோரிடத்தும் அதிர்ஷ்டாதி ஆகந்துக காரணங்களின்றியே பிரஹ்ம வித்தை உற்பன்னமாம். வாலமீகிரிஷியினிடத்தும் வாமதேவாதி முநிவரிடத்துமோ தேசகாலாதி நிமித்தத்தால் பயன்கொடுபப எதிர்முகமாய அநந்தஜன்ம புண்ணிய கர்மாதி ஆகந்துக நிமித்தததால் பிரஹ்மவித்தை உற்பன்னமாம். யவ்வன காலத்தின்கண் புருஷருககுப பூாவ புண்ணிய கர்ம வசத்தால் புகழ், தனம, புத்திரர் முதலிய சுகப்பிராபதியுண்டாம; அதுபோல வாமதேவாதிகட்குப் பூர்வ புண்ணிய கர்ம வசத்தால பிரஹ்ம வித்தையின் அடைவுண்டாம்; ஹே பிராஹ்மணாகளே! நேத்திரஙகளால சாவ ஜனஙகட்கும ரூபஞான முண்டாவதேபோல குரு உபதேசிதத சாஸ்திரத்தால் சமபூர்ண அதிகாரிகட்கும் பிரஹ்ம விததையின் அடைவுண்டாம்.

சங்கை :—ஹே பகவன்! பூாவம் தாஙகள் விராடடாதிகளிடத்தே இயல்பாயே பிரஹ்ம வித்தையின் உறபததியைக கூறினீாகள். இபபோது சம்பூர்ண பிரஹ்ம வித்தையின் பொருட்டுச சாஸ்திரங் காரணமெனக் கூறுகின்றீர்கள். ஆகையால், முற்கூறறுக்குப பிறகூறறு முரணுகின்றதன்றோ?

சமாதானம் :—ஹே பிராஹ்மணாகளே! விராடடாதிகளிடததே இயல்பாயே பிரஹ்ம வித்தை உறபத்தியாகினறதென்றும, வாமதேவாதிகளிடத்தே பூாவ புண்ணிய மகிமையால பிரஹ்ம விததை உறபத்தியாகின்றதென்றும் கூறியதன்கண் இது தாற்பரியமாம்:-எங்ஙனம நம்மனோ முதலியவர்கட்கு பிரஹ்மசர்யாதி சாதன வாயிலாகக் குரு சமீபததில் நிவாசம செய்வதால பிரஹ்ம வித்தையின் பிராப்தி யுண்டாமோ, அங்ஙனமேவிராடபகவானிடததும், கபிலமுனி முதலியோரிடத்தும், பிரஹ்ம வித்தையின் உற்பத்தி யுண்டாகாதாயினும, பிரஹ்ம விததையின் உற்பத்தியின்முன்னர், விராட்டாதிகளிடத்தும், வாமதேவாதிகளிடத்தும, சுருதிஸ்மிருதி ரூப சாஸ்திரங்கட்கோ அவசியம அபேக்ஷையுண்டாம. சாஸ்திர சிநதனமின்றி விராட்டாதிகளிடத்தும, பிரஹ்ம வித்தை உறபன்னமாகமாட்டாது. ஆகையால், விராட்டாதிகளுடைய பிரஹ்ம வித்தையின் பொருட்டும, சாஸ்திரத்திறகுக் காரணத்தன்மை இருககின்றது. எங்ஙனம் ஆகாசத்தின்கண்ணே செலவதில் பறவைக்கு வேறு எசசாதன அபேக்ஷயின்றேனும், இறகுகளின் அபேக்ஷயுண்டாமோ அங்ஙனமே விராட்டாதி மஹாபுருஷர் பிரஹ்மவிததையை அடைவதில் அத்தியயனாதிகளின் அபேக்ஷயைச செய்யாரேனும, பிரஹ்மவித்தையின் உற்பத்தியின் முன்னர்ச் சுருதிரூப சாஸ்திராபேக்ஷயைச செய்வர். ஆகையால் முற்கூற்றுக்குப் பிற்கூற்று முரணின்றுமென்றுணாமின். ஹே பிராஹ்மணர்களே! விராட் பகவான் கபிலமுனிமுதலியோர் இயல்பாயே பிரஹ்மவிததையை யடைந்திருக்கின்றனர். வாமதேவர், வால்மீகி முதலியோர் பூர்வபுண்ணிய கர்மமகிமையால் பிரஹ்மவித்தையை யடைநதனா. குரு உபதேசித்த சால்திரத்தால சர்வாதிகாரிகளும் பிரஹ்மவித்தையை யடைகின்றனர் என்னும இம்மூன்று பக்ஷங்களில் எங்ஙனம் சாஸ்திரத்திற்குப் பிரஹ்மவித்தையின் பொருட்டுக் காரணத்தன்மை

யுளதோ, அங்ஙனம் அத்விதிய பிரஹ்மத்தின்கண் சாஸ்திரதாற்பர்ய நிர்ணய ரூபச் சிரவணத்திற்கும், சம்பூர்ணப் பிரஹ்மவித்தையின் பொருட்டுக் காரணத்தன் மையுளது. பசியுடையோனுடைய திருப்தியின்கண் போஜனமே காரணமாம்; போஜனமின்றி எவனுக்கும் திருப்தி யுண்டாகாது; அங்ஙனமே சிரவணமின்றி எவனுக்கும் பிரஹ்மவித்தை யுண்டாகமாட்டாது; மற்றோ சம்பூர்ண விராட் பகவான் முதலியோருக்கும் சிரவணத்தினாலேயே பிரஹ்மவித்தையுண்டாம்.

இப்போது பிரஹ்மவித்தையின் சொரூபத்தைக் காண்பிப்பாம்:—ஹே பிராஹ்மணர்களே! பிரஹ்மசப்தம், ஆன்மசப்தம், பிரஹ்மசப்த ஆன்மசப்தங் களால் உண்டாய விர்த்திரூப ஞானம் என்பவை யற்றதும், பிரஹ்ம சப்தத்திற்கும் ஆத்மசப்தத்திற்கும் யாவினும் அதிகம் யாவற்றிற்கும் உள்வியாபகரூபம் என் னும் அர்த்தத்தோடு கூடியதும் யாதோ அதுவே யான் ஆவேன். இவ்வகையாய அபேதஞானத்தைப் புத்திமான்கள் பிரஹ்மவித்தை என்பர். ஹே பிராஹ்மணர் களே! இத்தகைய பிரஹ்மவித்தை உற்பன்னமாயின், சர்வாத்ம பாவரூப பலப் பிராப்தியின்கண் பிராமணத்துவாதி உத்தம ஜாதியின் அபேக்ஷை செய்யப்பட மாட்டாது; மற்றோ இந்தப பிரஹ்மவித்தையினால் பிரஹ்மமானது சர்வான்ம பாவத்தை எங்ஙனம் அடைந்ததோ, அங்ஙனமே வேறொரு மனுஷனேனும், முனி வனேனும், தேவதையேனும், தானவனேனும, சிரவணாதி சாதனங்களால் பிர ஹ்மவித்தையைச் சம்பாதனஞ்செய்யின், அந்நிசசயத்தால் சாவான்ம பாவத்தை யடைவன். ஹே பிராஹ்மணர்களே! யான் பிரஹ்மமாயிருக்கின்றேன் என்னும் அபேதஞானத்தால் அநேகம் பிராஹ்மணாகளும, முனிவாகளும், அசுரர்களும் சர் வான்மரூப பிரஹ்மத்தை யடைந்திருக்கின்றனர். இந்தப் பிரஹ்மவித்தையின் பலன் பிரஹ்மவித்துப் பிராஹ்மணர்களாய எங்கள் யாவருக்கும் பரோக்ஷமன் றும். மற்றோ பிரஹ்மவித்தையை யடைந்த பிறகணததிலேயே இப்பலன் சர்வப பிராஹ்மணர்களாய எங்களுக்கு அனுபவமாய்ச் சித்தித்துளது. ஹே பிராஹ்மணர் களே! அதிகாரிகளாய நம எல்லோருள்ளும் ஒரு வாமதேவரென்னும் முனிவர் உண்டாயினர். அவர் தாயின் கர்ப்பத்தில இருந்துகொண்டு அதிகாரிகளாய நம எல்லோர்மீதிலும் தயைபுரிநது பிரஹ்மவித்தையின் பலத்தில் நமக்கு விசு வாசம் உண்டாக்கிவைக்கும பொருட்டு, இவ்வகையாய வசனங்களைக் கூறினர். வாமதேவர் கூறல்:—ஹே அதிகாரிப் பிராஹ்மணர்களே! தாயின் கர்பபத்தில் பிரஹ்மவித்தையினால் எனக்குச் சர்வான்மத்தன்மையின் அடைவு உண்டாயது; ஆகையால் சர்வான்மத்தன்மையின் அடைவுவடிவப் பிரஹ்மவித்தையின் பலத்தின் கண் உங்களுக்கு விசுவாசம் உண்டாக்கிவைக்கும் பொருட்டு உங்களுக்கு யான் சிலவசனங்களைக் கூறுகின்றேன். அவ்வசனங்களைச் சாவதானமாய் நீங்கள் கேளுங்கள். ஹே அதிகாரிகளே! உங்களுடைய திருஷ்டியால் உங்கள் மத்தியில் ஒரு வாமதேவன் என்னும் யான் பூர்வ சரீரத்தைப் பரித்தியாகஞ் செய்து இப் போது தாயாருடைய கர்ப்பத்தில் வசிக்கின்றேன். என்னுடைய திருஷ்டியி னாலோ யான் சர்வான்ம ரூபனாயிருக்கின்றேன். ஹே அதிகாரிகளே! முற்பிறப் பில் எனக்கும் அதிகாரிகளாய உங்கள் யாவருக்கும் சனகாதி முனிகள் சமான மாகவே பிரஹ்மவித்தையை உபதேசஞ்செய்தனர். ஆனால் அக்காலத்தில்

அதிகாரிகளாய நாம் யாவரும் விஷயங்களில் வீழ்ந்து கிடந்தோமாதலின், இருதய தேசத்தின்கண் உள்ள ஆன்மாவையும் நாம் அறிந்திலோம். எவ்வண்ணம் ஜன்மத்திலேயே குருடனானவன் தனது கையில் இராநின்ற அத்தியந்தம் பிரகாசமாகிய மணிகளையும் காண்கின்றான் இல்லையோ, அவ்வண்ணம் விஷயங்களில் வீழ்ந்த தோஷவசத்தால் இருதயதேயத்தின்கண் உள்ள வான்மாவையும் நாம் பார்த்தோமில்லை. ஹே அதிகாரிகளே! அவ்விஷயாசக்திரூப பிரதிபந்த வசத்தால் முற்பிறப்பில் எனக்கு ஆன்ம சாக்ஷாத்காரமுண்டாகவில்லை; அக்காரணத்தினாலே இப்போது எனக்குச சரீரரூப பந்தனப் பிராப்தியுண்டாயது. ஆகையால் ஹே அதிகாரிகளே! எனக்குச சரீரரூப பந்தனப் பிராப்தி உண்டாய் இருப்பதைப்போல, உங்கட்கு மீண்டும் சரீரரூப பந்தனப் பிராப்தி எங்ஙன முண்டாகாதோ அங்ஙனம் ஒருபாயத்தை நீங்கள் செய்யுங்கள். அவ்வுபாயம், ஆத்மஞானம் அன்றி வேறொன்றும் அன்றாம்; ஆகையால், ஆத்ம சாக்ஷாத்காரத்தை யடையும்பொருட்டுச சம்பூர்ண அதிகாரிகளாகிய நீங்கள் முயலுங்கள். ஹே அதிகாரிகளே! பிரஹ்ம வித்தையினால் சர்வான்மபாவப் பிராப்திரூப பலத்தைக் கர்ப்பத்தின்கண் யான் இப்போது அனுபவித்துக் கொண்டிருக்கின்றேன். ஆகையால், பிரஹ்ம விதையின் பலத்தின்கண் நீங்கள் சந்தேகப்படாதீர்கள். ஹே பிராஹ்மணர்களே! சத்திய யுகத்தின்கண்ணே (திரேதாயுகத்தின்கண்ணே) பிரஹ்ம வித்தையால் சர்வான்ம பாவபிராப்தி உண்டாம். கலியுகாதிகளிலோ உண்டாகாது என்னும் சந்தேகத்தையும் நீங்கள் கொள்ளாதீர்கள். ஏனெனில், பிரஹ்ம வித்தை உண்டாயின், நான்கு யுகத்திலும் சர்வான்ம பாவப்பிராப்தி யுண்டாம். ஹே அதிகாரிப் பிராஹ்மணர்களே! உங்களுக்கு விசுவாசம் உண்டாக்கி வைக்கும்பொருட்டுச சர்வான்ம பாவத்தின் பிராபதிரூப பிரஹ்ம வித்தையின் பலத்தை யான் கூறுகின்றேன் நீங்கள் கேட்பீராக. ஹே அதிகாரிப் பிராஹ்மணர்களே! மனுஷ்யாதி சிருஷ்டியின் காரணமாய சுவாயம்பு மனுவும் யானேயாயிருந்தேன்; சர்வஜகத்தையும் ஒளிர்விபபவராய சூரியபகவானும் யானேயாயிருந்தேன்; கக்ஷீவானென்னும் முனிவரும் யானேயாயிருந்தேன்; உலகின் கண்ணே பிரசித்தமாய சூரியாதிப பிரகாசஙகளையும பிரகாசிப்பிக்கும் சைதன்னிய ரூபப்பிரகாசமும் யானேயாயிருக்கின்றேன். இவ்வளவால் வாமதேவர் தம்மிடத்து ஈஸ்வரபாவத்தைக் காண்பித்தனரென்றறிக. இப்போது தம்மிடத்தே ஜீவ பாவத்தைக் காண்பித்தல்:—ஹே அதிகாரிப பிராஹ்மணர்களே! பதினான்கு லோகத்தின்கண்ணும உள்ள சர்வ சரீரங்களையும் யானே அடைகின்றேன். கருத்திதுவாம்:—உண்மையாய் ஜனனமரண மற்றவனாயிருப்பினும் யான் சரீராதி உபாதிகளின் ஜனனமரணத்தால் என்னிடத்தே ஜனனமரணத்தை அங்கீகரித்துளேன். ஹே அதிகாரிப் பிராஹ்மணர்களே! யாண்டும விரிந்திராநின்ற திருஷ்டியையுடைய பிருகுவின் புத்திரராய சுக்கிரரும் யானே யாவேன். ஹே பிராஹ்மணர்களே! யானே பரசுராம அவதாரத்தைத்தரித்துக் கஸ்யபரின் பொருட்டுத் தனத்தால் நிறைந்த சம்பூர்ணப் பிருதிவியைக் கொடுத்தேன். ஹே அதிகாரிகளே! புண்ணிய பாவரூப கர்மத்தோடுகூடிய ஜராயுஜ, அண்டஜ, சுவேதஜ,

உத்பிஜ்ஜங்களென்னும் நான்கு வகையாய ஜீவர்களுக்கும், மேகரூபமாய் யானே மழையைப் பெய்கின்றேன். அம்மழையானது புண்ணிய பாவங்களின் பலன்களாய மேல் கீழ் சரீரங்கட்குக் காரணமாம். இதனாலே அம்மழை ஜீவர்களின் சுகதுக்கங்கட்குக் காரணமாம். ஹே அதிகாரிகளே! மூவுலகின்கண் இராநின்ற ஜலங்களைச் சூரியரூபமாய் யானே கவர்கின்றேன், அச்சூர்ய பகவான் வைஸ்வாநராதிரூபத்தால் சர்வத்துள்ளும் வெளியும் சஞ்சரிப்பவராம். ஹே அதிகாரிகளே! பசியாற் பீடித்த பாலகன் மாதாவைச சரணமடைவதுபோலத் தைத்தியர்களால் அபஜயத்தை யடைந்த இந்திராதி தேவதைகள் எனது சரணத்தையே அடையாநிற்பர். ஹே அதிகாரிகளே! தாரகாசுரனுடைய பக்ஷபாதியாய சம்பரனென்னும் துராத்மாவாய அசுரன் மாயையாற் செய்ததும் தினந்தினமும் தேவர்கட்கெல்லாம அசசத்தைக் கொடுப்பதும் ஆய 99 புரிகளையும் ஷண்முகப்பெருமானுடைய ரூபத்தைத் தரித்து யானே துவமசஞ்செய்தேன்; பிரணவ ரூபதாரக மந்திரமானது முமுக்ஷுக்களின் இருதய அஞ்ஞானத்தை நாசஞ்செய்வதேபோலுமென்றறிக. ஹே பிராஹ்மணர்களே! இவ்வகையாய வசனங்களால் அவ்வாமதேவர் என்னும் இருஷியானவா சர்வான்ம பாவப்பிராபதிரூபப் பிரஹ்ம வித்தையின் பலததை முன்னா நம்பொருட்டு உபதேசித்தனர். அவ்வாமதேவரது வசனம இப்போது எமக்கு நினைவிலிருக்கிறது. ஆகையால் ஹே பிராஹ்மணர்களே! சர்வான்ம பாவததின் பிராபதி ரூபபலததின் சாதனம் ஒரு பிரஹ்ம வித்தையேயாம்; ஆகையால் அந்தப பிரஹ்ம வித்தையை அதிகாரிகள் அவசியம் சம்பாதிக்கவேண்டும. தத்யங் இருஷி கூறல்:—ஹே தேவராஜாவே! இந்தப் பிரகாரம அவ்வறிஞாகளாகிய மறையோர் யாவரும பிரஹ்ம ஆன்மாவின் அபேதஞானத்தாற் சர்வான்ம பாவத்தின் பிராபதி ரூபபலத்தைக் கூறினா. ஆகையால் இககாலத்தும எத்தேவதையேனும், தானவனேனும், மனுஷனேனும் பிரஹ்மவித்தையைச் சம்பாதிப்பானாயின், அவனுககும் அவசியம் சர்வான்மபாவரூபப பிராபதியுண்டாம். ஹே தேவராஜாவே! யான் அத்விதீயப் பிரஹ்மமாயிருக்கின்றேன் என்னும் பிரஹ்மவிததையை எபபுருஷன் அடைவனோ, அப்புருஷனைத் தம வசஞ்செய்தலில் தேவாகளாய உஙகட்கும சமர்த்தின்றாம். ஏனெனின், தேவதைகளாய நீங்கள் யாவரும் உங்களை வசஞ்செய்வதில சமர்த்துடைய வரன்றாம். கருத்திதுவாம:—அக்கினியானது தன்னின் வேறாய காஷ்டாதிகளைத் தகிப்பிக்கும். தன்னைத் தகிபபியாது; அதுபோல தேவதைகளாய நீங்கள் யாவரும் உங்களிற் பின்னமாய புருஷர்களை வசஞ்செய்வதில் சமர்த்துடையீர். ஆனால் உங்களை வசஞ்செய்வதில் உங்கட்குச் சமர்த்தின்றாம்.

சங்கை:—ஹே பகவன்! தேவதைகளாய நாங்கள் எஙகளுடைய ஆத்மாவை வசஞ்செய்வதில் சமத்தற்றவராயினும், எங்களிற பின்னமாய அறிஞரை வசஞ்செய்வதில் எங்கட்கு ஏன் சமத்தின்றாம்?

சமாதானம்:—ஹே தேவராஜாவே! பிரஹ்மவித்தையால் அறிஞனானவன் சர்வான்மபாவத்தை யடைந்துளானாதலின், தேவதைகளாய உங்களைப் பார்க்கினும் வேறன்றாவன்; மற்றோ உங்கள் யாவருக்கும் அவன் ஆன்மாவாம். ஆகையால் உங்களுடைய ஆன்மரூபமாய அறிஞனை வசஞ்செய்வதில் உங்கட்குச் சமர்த்தின்றாம்.

சங்கை:—ஹே பகவன்! ஆத்மா சர்வத்திலும் உள்ளாம். இவ்வறிஞன் தூல சரீரத்தோடு கூடினவனாய் வெளியிற் புலப்படுவன்; ஆகையால் இவ்வறிஞன் எங்களுடைய ஆன்மாவாய் எவ்வண்ணம் சம்பவிப்பன்?

சமாதானம்:—ஹே தேவராஜாவே! கடரூப உபாதியோடு கூடிய ஆகாசம் யாண்டும் வியாபகம் அன்றேனும் கடரூப உபாதியற்ற ஆகாசம் எல்லாருடைய ஹிருதய தேயத்தின்கண்ணும் இருக்கின்றது. அங்ஙனம் பிரஹ்ம வித்தையால் தேகாபிமானம் நீங்கிய வறிஞன் தேவதைகளாகிய உங்கள் எல்லாருடைய ஆன்மாவாய்ச் சம்பவிப்பன். ஆகையால், ஹே தேவராஜாவே! சர்வான்மரூப அறிஞனுக்கு நீங்கள் சிறிது மாத்திரமும் பிரதிகூலஞ் செய்யினும், அனுகூலஞ் செய்யினும் அவ்விரண்டும் உங்களையே பற்றும், அசங்கமாய அவ்வறிஞனை அவ்விரண்டும் பற்றா. எங்ஙனம் தனது தலையை அன்னியன் தலையென நினைந்து உடைத்துக்கொள்ளு மூடன் தானே பீடையை யடைவனோ, அங்ஙனம் சர்வான்ம ரூப வறிஞனைத் தன்னின் வேறென நினைந்து எம்மூடன் தாடனஞ்செய்வனோ, அம்மூடன் தன்னையே தாடனஞ்செய்து கொண்டவனாவன்.

இப்போது இப்பொருளை வெளிப்படையாய்க் காண்பிப்பாம்:—ஹே தேவராஜாவே! எல்லாப்பிராணிகட்கும் இரண்டுவடிவங்களுள. அவற்றுள் ஒன்றே அசங்கரூபமாம், மற்றொன்றே சங்கமுடைய வடிவமாம. சம்பந்தத்தைச் சங்கமென்பர். சம்பந்தமற்றதை அசங்கமென்பர். சம்பந்தமுடையதைச் சங்கமுடையதென்பர். அவற்றுள் உண்மையாயச சம்பந்தமற்ற அறிஞனாவன் சர்வப்பிராணிகளின் அசங்கரூபமாவன். அவித்தையாற் கற்பிதமாய கர்த்தா, போக்தா, பிரமாதா என்பவை சர்வப்பிராணிகட்கும் சங்கமுடையவடிவமாம். அவற்றுள் தனது அசங்கரூப அறிஞனிடத்தே எம்மூடனேனும் சிறிதுமாத்திரமும் பிரதிகூலத்தன்மையைச் செய்வானாயின், அந்தப் பிரதிகூலத்தன்மை அசங்க அறிஞனைத் தீண்டமாட்டாது; மற்றே பிரதிகூலஞ்செய்த சங்கமுடைய பிரமாதாவையே அது பற்றும். எவனேனுமொரு மூடபாலகனானவன் கண்ணாடி சம்பந்தமற்ற *மந்தஹாஸ்யத்தோடுகூடிய தன்முகத்தை எதிர்முகமாயிரா நின்ற கண்ணாடியில் இருப்பதாக நினைந்து தர்ப்பணத்தில் இரா நின்ற முகத்திற்குப் பிரதிகூலஞ் செய்ய இச்சை செய்வானாயின், முதலில் தனது கழுத்தில் இராநின்ற முகத்திற்குப் பிரதி கூலத்தன்மையைச் செய்வன். பின்னர் கண்ணாடியில் இரா நின்ற முகத்திற்குப் பிரதிகூலத் தன்மையைச் செய்வன். கழுத்தின்கண் இராநின்ற முகத்திற்குப் பிரதிகூலஞ் செய்தாலன்றிக் கண்ணாடியில் இராநின்ற முகத்திற்குப் பிரதிகூலம் உண்டாகாது. அந்தப் பிரதிகூலத் தன்மையால் தர்ப்பணத்திலுள்ள அசங்க முகத்திற்குச் சிறிது மாத்திரமும் துக்கத்தின் அடைவு உண்டாகமாட்டாது. மற்றே பிரதிகூலத் தன்மையைச் செய்யும் பாலகனுடைய கழுத்தில் உள்ள முகத்தின் கண்ணே துக்கமாம். அதுபோல அசங்க அறிஞனுக்குத் தேவதைகளாகிய நீங்கள் சிறிதுமாத்திரமும் பிரதிகூலத் தன்மையைச் செய்வீராயின் அது அறிஞ

* மந்தஹாஸ்யம் = புன்சிறிப்பு.

ளைப் பற்று. கர்த்தா போக்தாக்களாய உங்களையேபற்றும். துக்கத்தை யுண்டாக்கும் தாடனாதிகளைப் பிரதிகூலமென்பர். சுகத்தையுண்டாக்கும் பூஜனாதிகளை அநுகூலமென்பர்.

சங்கை :—ஹே பகவன்! எங்களினும் வேறல்லாத அறிஞனுக்குத் துக்கத்தின் அடைவு உண்டாகாது. எங்களுக்குத் துக்கத்தின் அடைவுண்டாம் என்பதில் காரணம் யாதோ?

சமாதானம் :—ஹே தேவராஜாவே! பிம்பரூபச் சரீரத்திற்கு, அலங்காரஞ் செய்வதால் கண்ணாடியில் இராநின்ற பிரதிபிம்பம் அலங்கார முடையதாம். பிம்பரூபச் சரீரத்தைத் திரஸ்காரஞ் செய்வதால் கண்ணாடியின்கண் உள்ள பிரதிபிம்பம் திரஸ்காரமுடையதாம்; அதுபோல பிரஹ்மரூப அறிஞனானவன் சர்வ ஜீவர்கட்கும் பிம்பரூபமாம். சம்பூர்ண ஜீவர்களும் அவனது பிரதிபிம்பரூபமாம். ஆகையால் தேவதைகளாய நீங்கள் அறிஞனுக்குச் சுகத்தையேனுந் துக்கத்தையேனுஞ் செய்வீர்களாயின் அச்சுகதுக்கங்கள் உங்களையே அடையும். அறிஞனுடைய அசங்கரூபத்தின்கண் அவற்றின் சம்பந்தம் சம்பவியாது. ஹே தேவராஜாவே! எவனேனும் சிரத்தையோடும் அசங்க அறிஞனைப் பூஜனஞ் செய்யின், அது அதைச் செய்யா நின்ற புருஷனிடத்தே சபலமாம். அறிஞனிடத்து அப்பூஜனத்தின் சம்பந்தம சம்பவியாது. எவனேனும், நீராலேனும், தூளியாலேனும் சூரியபகவானை மறைப்பானாயின் அவ்விரண்டும் அவனை மறைக்க முடியா; மற்றோ மாறாய் மறையாநின்ற புருஷனையே மறைக்கும். அதுபோல அறிஞனுக்குச் செய்த பூஜனாதிகள் அவ்வசங்கனைத் தீண்டா; மற்றோ செய்யா நின்ற புருஷனிடத்தே அவை சபலமாம். இங்ஙனம் பலசகித பிரஹ்மவித்தைக கூறப்பட்டது.

இப்போது அவித்தையின் சொரூபத்தை நிரூபிப்பாம் :—ஹே தேவராஜாவே! யாவன் தன்னிற் பின்னமாய்த் தேவதைகளைக் கருதி அவர்களை உபாசனை செய்கின்றனனோ, அத்தகைய பேததரிசியாய அஞ்ஞானி ஜீவரூபி பசுக்கட்கு நீங்கள் சுவாமியாவீர்கள். இப்போது அஞ்ஞானி ஜீவர்களைப் பசுரூபமாய் நிரூபணஞ் செய்வாம். ஹே தேவராஜாவே! உலகின்கண்ணே பிரசித்தமாய கோ சாலையானது மரத்தாலும் மண்ணாலும் செய்யப்பட்டுளது. அங்ஙனம் அஞ்ஞானவடிவ மண் மரங்களால் இச்சம்சாரவடிவ சாலையைப் பிரஹ்மா உண்டாக்கினர். அச்சாலை பேததரிசிகளாய அஞ்ஞான ஜீவரூப கோக்களிருப்பதற்கு ஸ்தானமாம். அப்பசுக்களானவை தேவதைகளாய உங்கட்கு ஹவ்யம் (தேவான்னம்) கவ்யம் (பிதுரன்னம்) முதலிய பதார்த்தங்களைக் கொடுக்கும்; ஆகையால் அவ்வஞ்ஞானி ஜீவர்கள் உங்கள் ஆசிரயமாயிருப்பர். உலகின்கண்ணே பால்முதலியவற்றைக் கொடாநின்ற கோக்களை உலகர், தமதாஸ்ரயமாய் அங்கீகரிப்பதேபோலும், ஹே தேவராஜாவே! உலகப்பிரசித்த கோ சாலையின்கண் அச்சாலையின் பாரத்தைத் தாங்கும் அநேக தூண்களிருக்கின்றன. அந்தத்தூண்களில் ஒரு நீளக்கயிறு கட்டப்பட்டிருக்கிறது. அந்நீளக்கயிற்றில் அநேகம் சிறிய கயிறுகள் கட்டப்பட்டிருக்கின்றன. அச்சிறியகயிறுகளுள் ஒவ்வொருகயிற்றோடும் ஒவ்வொருகோ கட்டப்பட்டிருக்கின்றது.

அதுபோல இச்சம்சாரம் ஒரு சாலையாம்; இச்சாலையின் பாரத்தால் வியாகூலப்பட்ட காமக்குரோதாதிகள் அச்சாலையின் தூண்களாம். அக்கினி ஹோத்ராதி கர்மங்கள் பிராஹ்மணர்கட்குச் செய்ய யோக்கியங்களாம், என்பதாதி விதிவாக்கியங்களும், பிராஹ்மணாதிகளை ஹிம்சை செய்வது யோக்கியமன்றாம்; என்பதாதி நிஷேதவாக்கியங்களும் ஆயவிருவகை வேதவசனங்களும் ஒரு நீளக்கயிறாம். அக்கயிறானது காமக்குரோதாதிரூப தூண்களோடு கட்டப்பட்டிருக்கின்றது. அக்கினி ஹோத்ராதி கர்மங்களின் அதிகாரிகளை யுணர்த்துவதாய பிராஹ்மணாதி நாமங்கள் சிறிய கயிறுகட்குச் சமானமாம். அச்சிறிய கயிறுகள் விதிநிஷேத வசனரூப நீளக்கயிற்றின்கண் கட்டப்பட்டிருக்கின்றன. அச்சிறிய கயிறுகளுள் ஒவ்வொரு கயிற்றோடும் ஒவ்வொரு அஞ்ஞானிஜீவரூப பசு கட்டப்பட்டிருக்கின்றது. ஹே தேவராஜாவே! அக்கயிறுகளில் அநேக அஞ்ஞானி ஜீவர்கள் கட்டப்பட்டிருப்பினும், யாகதானாதி கர்மங்களைச் செய்யும் அஞ்ஞானி கிரஹஸ்தர்கள் தேவதைகளாய உங்களுக்குக் காமதேனுவின் சமானமாம். இப்போது அஞ்ஞானிகளாய கிரஹஸ்தரிடத்தே காமதேனுத்தன்மையைக் காண்பிப்பாம்:—ஹே தேவராஜாவே! அக்கினி ஹோத்ராதி கர்மங்களைச் செய்யும் அஞ்ஞானியாய ஒரு கிரஹஸ்தன், தேவதைகளாய உங்கள் யாவரையும், சர்வபிதிர்க்களையும், அதிதி முதலிய மனுஷர்களையும், சர்வ முனிவர்களையும், அந்நிய அநேகம் பிராணிகளையுங் காப்பாற்றுவன். ஆகையால், இவ்வஞ்ஞானியாய இல்லறத்தான் உங்கள் யாவருக்கும் காமதேனுவாய கோவாம். ஹே இந்திரரே! உலகின்கண்ணே ஒவ்வொரு குடும்பியாய இல்லறத்தானுக்கு அநேகம் பசுக்களுள, அதுபோல தேவதைகளாய உங்கட்கு அநேகம் பசுக்களின்றாம்; மற்றோ ஒரே இல்லறத்தானனவன், காமதேனுவாய கோவைப்போல உங்கள் யாவரையுங் காப்பாற்றுவன். ஹே தேவராஜாவே! உலகின்கண்ணே ஒரு குடும்பிக்கு அநேகம் பசுக்களுளவாமாயின் அப்பசுக்களுள் ஒருக்கால் ஒரு பசுவையேனும் கள்வன் கொண்டுபோவானாயின் அக்குடும்பி மகாதுக்கத்தை யடைவன். ஒருபசு போவதாலேயே அக்குடும்பிக்கு மகாதுக்க முண்டாகுமாயின், எல்லாப்பசுக்களும் போய்விடின் துக்கமுண்டாம் என்பதைப்பற்றிச் சொல்லவேண்டியதில்லை யன்றோ. ஆகையால், ஹே தேவராஜாவே! எல்லாப்பசுக்களும் போவதால் அக்குடும்பிக்குத் துக்கமுண்டாவதே போல, உங்கள் யாவருக்குமுரிய பசுக்களாகிய அஞ்ஞானிகட்குப் பிரஹ்மவித்தையினால் அஞ்ஞானம் நாசமாயின் உங்கள்யாவருக்கும் துக்கமுண்டாம். ஹே தேவராஜாவே! உலகின்கண் குடும்பியானவன் கள்வர்களினின்றும் தன்பசுக்களைக் காப்பாற்றும் பொருட்டு, இரவும் பகலும் சாவதானமாயிருந்து அக்கள்வர்களை நீக்குமுபாயத்தைச் செய்வன். அங்ஙனமே பிரஹ்மவித்தையை யடையும்பொருட்டு யாவன் பிரஹ்மசரியாதிச் சாதனங்களைச் சம்பாதிப்பனோ, அவனுடைய அச்சாதனங்களைப் பங்கப்படுத்தும்பொருட்டு, அநந்தம்வகையாய உபத்திரவங்களை நீங்கள் செய்வீர்கள். ஜீவர்களுடைய புத்திகளை விபரீதஞ்செய்வதே உங்களுடைய உபத்திரவமாம். ஆகையால், எம்முமுக்ஷுக்கள் பிரஹ்ம வித்தையை யடைய

இச்சிக்கின்றனரோ, அவர்கள் முதலில் சிரத்தையோடும் தேவதைகளை ஆராதனஞ் செய்யவேண்டும். அதனால் தேவதைகள் பிரசந்நமாயின், அதிகாரிகட்கு நற்புத்தியைக் கொடுத்துப் பிரஹ்மவித்தையின் சாவப் பிரதிபந்தங்களையும் நீக்கிக் காப்பாற்றுவர். இவ்விஷயம் அந்நிய சாஸ்திரத்தின்கண்ணும் கூறப்பட்டுளது.

கூ-ம். "ந தெ³வா த³ண்ட³மாதா³ய ரக்ஷந்தி பஸு²பாலவத் ।
யம் ஹி ரக்ஷிதுமிச்ச²ந்தி பு³த்³த்⁴யா ஸம்யோஜயந்தி தம் ॥

தண்டங் கொண்டு தகும்பசு வோம்பல்போல்
விண்ட லத்தவ ரோம்பிலர் வேலைசூழ்
மண்ட லத்தவ ருக்கருள் வாஞ்சையே
லண்டு புந்தியை நல்வழி யார்ப்பரால்.

இதன் பொருள் :—பசுக்களைக் காப்பாற்றும் புருஷன், கையில் தண்டத்தை ஏந்திக்கொண்டு சிம்மாதிகளினின்றும் பசுக்களைக் காப்பாற்றுவதேபோலத், தேவதைகள் கையில் தண்டமேந்திக்கொண்டு பக்தர்களைக் காப்பாற்றார். மற்றோ எப்பக்தர்களைக் காப்பாற்ற தேவதைகட்கு இச்சையுளதோ, அவர்கட்கு நற்புத்தியைக் கொடுப்பர். ஆகையால் அப்பிரஹ்மவித்தை உண்டாவதின் முன்னர் பிரதிபந்தம் நீங்கும் பொருட்டு முமுக்ஷுக்கள் அவசியம் தேவதைகளை ஆராதிக்கவேண்டும். யாவன் பிரஹ்ம வித்தையை யடைவதின் முன்னர் தேவதைகளை ஆராதித்திலனோ, அவனுக்குப் பிரஹ்மவித்தை யுண்டாவதில் அநந்தம்வகையாய விக்கினங்களைத் தேவர்கள் செய்வர். ஹே தேவராஜாவே! உலகின்கண் பசுக்களைக் களவு செய்யாநின்ற அத்தியந்தம் பலவானாய கள்வன் பசுக்களையுடைய குடும்பிக்குப் பிரியமாயிரான். அதுபோல அஞ்ஞானி ஜீவரூப உங்களுடைய பசுக்களைப் பிரஹ்மவித்தையின் அடைவின் வாயிலாய்க் களவு செய்யும் அறிஞனவன், தேவதைகளாய உங்கட்குப் பிரியமாயிரான். ஆயினும், சர்வ தேவதைகளின் ஆன்மரூபமாய அவனிடத்தே தேவதைகளினுடைய துவேஷம் சம்பவியாது. என்றாலும், சித்த சுத்தியற்ற கர்மாதிகாரிகளாகிய ஜீவர்களை அறிஞன் காமமற்றவராக்கின், அவ்வறிஞனிடத்தே தேவதைகட்குத் துவேஷமுண்டாம். இவ்விஷயம் கீதையின்கண்ணே ஸ்ரீ கிருஷ்ண பகவானும் அர்ச்சுனன் பொருட்டுக் கூறியருளியிருக்கின்றார்.

கூ-ம். ந பு³த்³தி⁴பே⁴த³ம் ஜநயேத³ஜ்ஞாநாம் கர்மஸங்கி³நாம் ॥

கரும சங்கரா மிருமஞ் ஞானிகட்
கூரனேண் வேற்றுமை புரிதரா தோழி.

இதன் பொருள் :—சித்த சுத்தியற்று, கர்மாதிகாரிகளாகிய ஜீவர்களை அறிஞனவன் கர்மமற்றவராக்கலாகாது; மற்றோ அவர்களைச் சுபகர்மத்தில் சேர்ப்பிக்கவேண்டும். இப்பகவானுடைய வசனத்தை எவ்வறிஞன் தாண்டுகின்றனனோ, அவனிடத்தே தேவதைகளின் துவேஷமுண்டாம். ஆகையால், ஹே தேவராஜாவே! பிரஹ்மவித்தை யுண்டாவதன் முன்னர் நீங்கள் விக்கினஞ் செய்யினும், பின்னர் அவ்வித்தையின் சர்வான்ம பாவப்பிராப்திரூபப் பலத்தைப் பிரதிபந்திப்

பதில் உங்கட்குஞ் சமர்த்தின்றும். ஆகையால், இவ்வறிஞன் எல்லாருடைய ஆன்மரூபமாம் ஆதலின் உங்களுடைய ஆன்மாவுமாம. அங்ஙனமே, அத்விதீய பிரஹ்மரூபமாம் ஆதலின் உங்களிலும் அதிகனும். அத்தகைய அறிஞன் சமீபத் தேசென்று ஆன்மாவினும் பின்னமாய புத்திராதி அநாத்மப பதார்த்தங்களைப் பிரியரூப மெனக் கூறுதொழிக வென முன்னாக கூறியது பொருநதுமென்று ணர்க. ஹே தேவராஜாவே! புத்திராதி சாவ அநான்மப பதார்த்தங்களினும் பிரியமானது ஆநந்த சொரூப ஆத்மாவாம. அதனை யறியாமல் எப்புருஷன் மரிப்பனோ, அவ்வஞ்ஞானியின் சொரூபமாயிருப்பினுமம, இவ்வாநந்தசொரூப ஆத்மா அவனை ஜனனமரணப பிரவாகததினின்றுங் காப்பாற்றுது. குரு புஸ் தக வாயிலாய் வேதம் சமீபமாயிருநதபோதிலும, எது பரியநதம் இவன் குரு முகத்தினின்றும் அவ்வேதத்தை அததியயனஞ் செய்திலனோ, அதுபரியந்தம் அததியயனஞ் செய்யபபடாத வேதபகவான் பிராஹ்மணனைப பவித்திரம செய் விக்கமாட்டாது. மறறு குரு முகததினின்றும அறியபபட்ட வேதமே பிராஹ் மணனைப் பவித்திரஞ் செய்யும். அதுபோல, இவ்வாநநதசொரூப ஆன்மாவும குரு சாஸ்திர உபதேசத்தால அறியாத ஜீவாகளை ஜனன மரணரூப சம்சாரத்தி னின்றுங் காப்பாற்றமுடியாததாம. மறறு குரு சாஸ்திர உபதேசத்தால் அறி யபபட்ட இவ்வான்மா ஜீவாகளைச சமசாரததினின்றும காபபாற்றும். ஹே தேவ ராஜாவே! குரு சாஸ்திர வாயிலாய் யாகாதி கர்மங்களை அறிநதிருப்பினும், அநுஷ் டானமின்றிப புருஷாகளுககுப பலபபிராபதி யுண்டாகமாட்டாது. அதுபோல, இவ்விவேகாதி சாதனஙகளைக குரு சாஸ்திர வாயிலாக அறிந்திருநதபோதிலும், அநுஷ்டானமின்றிப புருஷாகட்கு ஆத்மஞான ரூபப்பலபபிராப்தி யுண்டாகமாட் டாது. ஹே தேவராஜாவே! யாவன் ஆநநதசொரூப ஆன்மாவை அறியாமல் அசுவமேதாதி மகா யாகங்களைச செய்வனோ, அவனுக்கு அநத யாககர்மங்கள் சிறிது காலம்வரைச சொர்க்கததின்கண்ணே சுகபபிராபதியை யுண்டாக்கும், மீண்டும் க்ஷயத்தை யடைநத அக்கருமங்கள், இசசீவாகட்குப பரமதுககத்தைக் கொடுக்கும். ஆகையால், எப்புருஷனுககு நித்தியாநநத அடைவின் இச்சை உள தாமோ, அப்புருஷன் அநநிய சாவ உபாதிகளையுமப பரித்தியாகஞ்செய்து, ஆன்ம ஞானப் பிராபதியின் பொருட்டு முயலவேண்டும. ஹே தேவராஜாவே! எப்புரு ஷன் ஆன்மஞான சம்பாதனததில் வலலவனல்லனோ, அப்புருஷன் உபாசனை யையும் நிஷ்காம கர்மங்களையுமம செய்யவேண்டும. அவற்றின் மகிமையால் சித்த சுத்திவாயிலாய் இவ்வுலகத்திலேனும் பிரஹ்மலோகத்திலேனும் அவ்வுபாசகனுக் குப பிரஹ்ம வித்தையின் பிராப்தியுண்டாம். பிரஹ்ம வித்தையின் பிராப்தியே உபாசனையின் முக்கியபலமாம். இப்போது உபாசனையின் அவாநதர பலத்தை நிரூபணஞ் செய்வாம் :—ஹே தேவராஜாவே! இவ்வுபாசக புருஷன் சம்சாரத்தின் கண் இருபபவனுயினும், ஹிரண்யகாபபனுககுச சமானமாய ஐசுவரியத்தை யடை வன். கருத்திதுவாம் :—ஹிரண்ய கர்பப பகவான் எவ்வெவ் பதார்த்தங்களை இசசிக்கின்றனரோ, அவ்வப பதாாததஙகளைத தனதிசசை மாத்திரத்தால் உற்

பன்னஞ் செய்வர். அதுபோல, இவ்வுபாசக புருஷனும் கர்ம உபாசனையின் மகிமையால் சர்வ பதார்த்தங்களையும் தனதிச்சை மாத்திரத்தால் உற்பன்னஞ் செய்வன். ஹே தேவராஜாவே! யான் பிரஹ்மமாயுள்ளேன் என்பதாய புத்தியால், ஆநந்தசொரூப ஆன்மாவைச் சாக்ஷாத்காரஞ்செய்வனே, அப்புருஷனுக்கு இவ்வெல்லா அநான்மப் பிரபஞ்சமும் பரித்தியாகஞ்செய்ய யோக்கியமாம். உங்களுக்கு வாந்திசெய்த அன்னமானது தியாகிக்க யோக்கியமானதேபோலுமென்க. ஹே தேவராஜாவே! இவ்வாநந்தசொரூப ஆன்மாவை அறியாமல் எப்புருஷன் அந்நிய அநாத்ம பதார்த்தங்களை அறிவனே, அப்புருஷனை சாஸ்திரத்தை யுணர்ந்த மகான்மபுருஷர், அநான்மாவை யறிந்தவனென்பர். பாலாகிப் பிராஹ்மணரானவர் ஆத்மாவின் வாஸ்தவ சொரூபத்தை யறியாமல் பிராணனையே ஆன்மாவென வறிந்திருந்தார். இக்காரணத்தால் அவ்வநாத்மக்ஞராய பாலாகியானவர் ஸ்ரீ காசியின்கண் அஜாத சத்துருவென்னும் ராஜாவினுக்குச் சிஷ்யராயினர். இக்கதையை நீர் நன்றாக அறிந்திருக்கின்றீர். ஆகையால் ஹே தேவராஜாவே! ஆநந்தசொரூப ஆன்மாவினும வேறாய எவ்வநான்ம பதார்த்தங்களும அறிய யோக்கியமன்றாம். இப்போது ஆன்மாவினும் வேறாய சர்வபதார்த்தங்களையும அநான்மரூபமாய் நிரூபணஞ்செய்வாம். ஹே தேவராஜாவே! இத்தூல சரீரத்தின்கண்ணே அபிமானியாய ஜீவனுக்கு நேத்திராதி இந்திரியங்களால், ஸ்தூலபதார்த்தங்கள் பிரதீதியாவதைச சாஸ்திரத்தின்கண்ணே நனு அவஸ்தை எனப்படும் அந்நனு அவஸ்தை ஞாதா, ஞானம, ஞேயம், அங்ஙனம தியாதா, தியானம், தியேயம் என்பதாதி திரிபுடி சொரூபமாம. சாக்ஷி சைதன்னியத்தால விளங்குவதாமாதலின் திரிசியசொரூபமாம். யாதுயாது திரிசிய பதார்த்தமாமோ அது அது அநான்மாவேயாம். எங்ஙனம் கடாதிபதார்த்தங்கள் திரிசியமாதலின் அநான்மாவாமோ அங்ஙனம் திரிபுடிரூப நனுப் பிரபஞ்சமும் திரிசியமாமாதலின் அநான்மாவேயாம். ஹே தேவராஜாவே! சொப்பனவஸ்தையின்கண் தேர்முதலிய பதார்த்தங்களினும உற்பத்திக்கு யோக்கியமாய தேசகாலாதிகளின் அபாவமிருபினும், பூர்வபூர்வ வாசனைகளோடுகூடிய மனம் அநேகவகையாயபதார்த்தங்களைச சொப்பனத்தின்கண்ணே உற்பன்னமாக்கும்; ஆகையால், அச்சொபபனபதார்த்தம் மாயாமாத்திரமாம். தேசகாலாதி சாமக்கிரியையின்றியே ஆகாசத்தின்கண் கந்தர்வநகரம் தோற்றுகின்றமையின் மித்தையாவதேபோலச சொப்பன பதாாத்தமும் மித்தையாம. உறபத்தி நாசவானமை. ஆகையால், அசசொப்பனப பதார்த்தமும் ஆன்மரூபமன்றாம்; மற்றோ அநான்மரூபமாம். ஹே தேவராஜாவே! புரீதத்ரூபி கோட்டை மத்தியிலுள்ள இதயத்தின்கண் நாடிரூபமார்க்கமாய்ச் சென்று துயிலவஸ்தையின்கண் அஞ்ஞானத்தோடு கூடாநின்ற ஜீவனும் சுத்த ஆத்மாவினும் வேறாம்; ஆகையால், கடாதிகளைப்போல அதுவும் அநான்ம ரூபமாம்.

சங்கை:—ஹே பகவன்! நனுக்கனுச் சுழுப்தியின் கண்ணுள்ளச் சர்வபதார்த்தங்களும் ஆன்மரூபமன்றாயின், அவற்றின் வேறாய ஆன்மாவிற்குச் சொரூபம் யாதோ? அதனைத்தாங்கள் கிருபையினாலே உபதேசிக்கவேண்டும்.

சமாதானம் :—ஹே தேவராஜாவே! அவ்வான்மா சொப்பிரகாச சொரூபமாம். எந்தப்பிரகாசமானது தனது பிரகாசத்தின்கண்ணும் அந்நியபதார்த்தங்களின் பிரகாசத்தின்கண்ணும் வேறொரு பிரகாசத்தை யபேக்ஷியாதோ, அது வேதாந்த சாஸ்திரத்தின்கண் சொப்பிரகாச மெனப்படும். அத்தகைய சொப்பிரகாச சொரூபம் ஆன்மாவாம். ஆன்மாவினும் வேறாயசம்பூர்ண வஸ்துக்கள் பரப்பிரகாசங்களாம்.

சங்கை :—ஹே பகவன்! இந்த சொப்பிரகாச ஆத்மாவின் இலக்ஷணத்திற்குச் சூரியாதிப் பௌதிகப் பிரகாசத்தின்கண் அதிவியாபதியாம. ஏனெனின், சூரியாதிப் பிரகாசமும் தனது பிரகாசத்தின்கண்ணும் கடாதிபதார்த்தங்களின் பிரகாசத்தின்கண்ணும் அந்நிய எப்பிரகாசத்தையும அபேக்ஷிப்பதின்று மன்றோ?

சமாதானம்:—ஹே தேவராஜாவே! சூரியாதி பௌதிகப் பிரகாசம் தனது பிரகாசத்தின கண்ணும கடாதிபதார்த்தஙகளின் பிரகாசத்தின் கண்ணும் வேறொரு பௌதிகபிரகாசத்தை யபேக்ஷை செய்வதின்றாம். ஆயினும் சைதன்னியரூப அலௌகிகப் பிரகாசத்தைச் சூரியாதிப் பிரகாசமும் அபேக்ஷிக்கும். ஆகையால் சூரியாதிப் பிரகாசஙகளினிடத்தில சொபபிரகாச ஆன்மாவின் இலக்ஷணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகமாட்டாது. ஆகையால் ஹே தேவராஜாவே! சுழுபதி யவஸ்தையின்கண் எவ்வான்மாவிற்கு இருதயதேயத்தின் கண்ணே நிவாசம் சாஸ்திரஙகளால கூறபபட்டுளதோ, சொபபன அவஸ்தையின்கண் எவ்வான்மாவிற்கு மனத்தின்கண்ணே நிவாசம் சாஸ்திரங்களால் கூறப்பட்டுளதோ, ஜாக்கிர அவஸ்தையின்கண் எவ்வான்மாவிற்குத் தூலசரீரத்தின்கண்ணே நிவாசம் சாஸ்திரங்களால கூறபபட்டுளதோ, அசசொபபிரகாச ஆன்மாவை நிஷேதமுகமாய் யாம் உம்பொருட்டு உபதேசம் செய்கின்றோம். முன்னர் 3-வது அத்தியாய முடிவில் தேவராஜாவாய இந்திரரால் பயததையடைந்த கௌஷீதகீ யென்னும் இருஷியானவர் சத்தியத்திற்குஞ சத்தியம என்னும் பிரஹ்மத்தினுடைய குஹ்ய நாமத்தை அர்த்தத்தோடும தமது சிஷரின்பொருட்டே உபதேசஞ் செய்யவில்லை யென்று கூறப்பட்டதன்றோ. இபபோது அவ்வர்த்தத்தை ஈண்டு வெளிப்படையாய் நிரூபிபபாம :—ஹே தேவராஜாவே! சுழுபதி யவஸ்தையை யடைந்த ஜீவனுடைய ஞானேநதிரியங்களைநதும, கர்மேந்திரியங்களைந்தும், அந்தக்கரண சதுஷ்டயமும், அஞ்ஞானததின்கண் லயமாம. சுழுபதி யவஸ்தை நீங்கிய பின்னர் சம்பூர்ண இந்திரியங்களோடுகூடிய அநதக்கரணம் அவ்வஞ்ஞானத்தினின்றும் உற்பன்னமாம். எவ்வெப்பொருள் உறபத்தி நாசமுடையதாமோ, அவ்வப்பொருள் கடாதிகளைப்போல அசத்தியமேயாம. ஆகையால் உற்பத்தி நாசமுடைமையின், அந்தக்கரணசகித சகல இநதிரியங்களும அசத்தியமாம். சுழுப்தி யவஸ்தையை யடையின் பிராணன் லயத்தை யடையமாட்டாது. சுழுப்தி யவஸ்தை நீங்கின் பிராணன் உற்பன்னமாகாததலின் அது சத்தியமாயினும் இவ்வாநந்த சொரூபவான்மா உண்மையாய்ச சத்தியரூபமாம்; ஆகையால் சத்தியப் பிராணனைப் பார்க்கினும் மேன்மை பொருந்தியதாம. இப்பிராணன் ஜடரூபமும் அநாத்ம

ரூபமுமாதலின், ஆநந்தசொரூப ஆன்மாவினும் தாழ்மையுடையதாம். இக்கருத்தினையே சுருதியானது பிரஹ்மத்தைச் சத்தியத்திறகுஞ் சத்தியமெனக் கூறிற்று. அவற்றுள், முதற் சத்திய சப்தத்தால் பிராணசகித சம்பூர்ண பூதபௌதிகப் பிரபஞ்சத்தைக் கவர்ந்துகொள்க. அப்பிரபஞ்சரூப காரியத்திற்கு இவ்வாநந்த சொரூப பரமான்மா விவர்த்தோபாதான காரணமாமாதலின் இப்பரமாத்மா சத்தியத்தினுஞ் சத்தியமாம்.

சங்கை :—ஹே பகவன்! பிராணசகித சம்பூர்ண பூதபௌதிகப் பிரபஞ்சம் அநித்தியமாமாதலின், அதைச சத்தியமாமெனக் கூறல சமபவியாதன்றோ?

சமாதானம் :—ஹே தேவராஜாவே! ரூபாதி குணங்களற்ற அத்விதீயப பிரஹ்மத்தைச சாக்ஷாதகாரஞ் செய்விக்கும்பொருட்டு, அந்தப் பிரஹ்மத்திற்கு இரண்டு ரூபங்கள் சுருதியின்கண்ணே கூறபபட்டுள்ளன அவற்றுள், முதல் பிரஹ்மத்தின் ரூபம் நான்கு விசேஷணங்களோடு கூடியிருக்கிறது. அநநான்கு மிவையாம் :—பிரத்தியக்ஷப் பிரமாணத்திற்கு யோககியமாதலின் சகலருக்கும் பிரசித்தமாம். ஆகையால அதைச சத்தியமென்பர். தேசகாலாதி பரிச்சேத முடையது ஆதலின் அதை ஸ்திதிமான் என்பா. பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் சித்தமாய அவயவங்களின் சேர்க்கை விசேஷத்தோடு கூடியதாதலின் அதை மூர்த்தம் என்பர். பிரததியக்ஷ நாசமுடையதாதலின் அதனை மர்த்யம் என்பர். இவ்வண்ணம சத்தியம், ஸ்திதிமான், மூர்த்தம மர்த்யம் என்னும் நான்கு விசேஷணங்களோடு கூடியது முதல் பிரஹ்மரூபமாம். முதல சத்தியரூபத்தின் சாரம் சூரிய மண்டலத்தின்கண்ணே உளது. அசசூரியமண்டலம் சகலருககும பிரத்தியக்ஷப பிரமாணத்தால் சித்தமாம், தப்தம் செய்யும சுபாவத்தோடு கூடியதாம், பரமேஸ்வரரது விக்கிரகமாம், அத்தகைய சூரியமண்டலத்தின்கண் முதறசத்தியரூபததின் சாரமிருக்கின்றது. இக்காரணத்தானே அசசூரிய மண்டலமானது சர்வ ரூபாதிகளின் பிரகாசகமாம். இபபோது நான்கு விசேஷணங்களோடு கூடிய பிரஹ்மத்தின் இரண்டாவது ரூபத்தைக் காண்பிபபாம் :—ஹே தேவராஜாவே! பிரஹ்மததின் இரண்டாவதுரூபம் பரோக்ஷமாதலின் கேவலம் சாஸ்திரப பிரமாணத்தால் அறியப்படும்; ஆகையால் அதனைச் சுருதியின்கண் த்யத் என்னப்பட்டுளது. யாண்டும் நிறைந்திருத்தலின் அதனைக் கதிமான் என்னபபடும். காணபபட்ட அவயவச சேர்க்கை விசேஷமற்றதாதலின், அதனை அமூர்த்த மென்பர். நாசமறறதாதலின் அதனை அமிர்தமென்பர். இங்ஙனம் த்யத, கதிமான், அமூர்த்தம், அமிர்த ம என்னும் நான்கு விசேஷணங்களோடு கூடிய பிரஹ்மத்தின் இரண்டாவதுரூபம் கூறப்பட்டுளது. அவறறுள், சூரியமண்டலத்தின்கண் இராநின்ற சமஷ்டி சூக்கும சரீர அபிமானியாய ஹிரண்யகர்பபர் முதல் த்யத் சபத அர்த்தத்தின் சாரரூபமாம். ஏனெனின், ஹிரண்யகர்ப்பருடைய சரீர ஆரம்பம் செய்வதின்பொருட்டே சூக்கும பூதங்களின் உறபத்தியாம். இத்துணையால் பிரஹ்மத்தின் அதிதெய்வரூப இரண்டு சொரூபங்களை நிரூபணஞ்செய்தோம இப்போது அந்தப் பிரஹ்மத்தின் அத்யாத்மரூப இரண்டு சொரூபங்களை நிரூபணஞ்செய்வாம். ஹே தேவராஜாவே! அத்யாத்மரூப இக்கூட்டத்தின்கண் இராநின்ற பிரஹ்மத்தின் இரண்டுரூபங்களையும முன்

போல் சாரபாவமாய் அறிதல்வேண்டும். அவற்றுள், சக்ஷு சத்பதார்த்தத்தின் சாரரூபமாம். தக்ஷிணநேத்திரத்தி லிராநின்ற சூக்ஷுமவியஷ்டி அபிமானி புருஷன், த்யத்சப்தார்த்தத்தின் சாரரூபமாம். இவ்விரண்டு ரூபங்களினும் வேறாயபஞ்ச பூதம் அசாரரூபமாம். இப்போது சத்சப்தத்தின் அர்த்தத்தையும் த்யத்சப்தத்தின் அர்த்தத்தையும் நிரூபணஞ்செய்வாம். ஹே தேவராஜாவே! பிருதிவி, ஜலம், தேஜசு என்னும் மூன்று பூதங்கள் பிரத்தியக்ஷஞான விஷயங்களாமாதலின், அம்மூன்றையும் சுருதி சத்சபதத்தாற கூறியது, வாயு, ஆகாசம் என்னும் இரண்டும் பரோக்ஷ ஞானவிஷயங்களா மாதலின் அவ்விரண்டையும் சுருதி த்யத் சப்தத்தால் கூறியது. இப்போது தூலசூக்கும சமஷ்டி வியஷ்டிகளின் அபேதத்தை நிரூபணம் செய்வாம். ஹே தேவராஜாவே! சூரிய மண்டலமும் புருஷருடைய தெக்ஷிணநேத்திரமும் பிருதுவி, ஜல, தேஜோரூப மாதலின் அவை இரண்டும் பரஸ்பரம் அபின்னமாம். சூரிய மண்டலததின்கண் இராநின்ற புருஷனும் தெக்ஷிண நேத்திரத்தின்கண் இராநின்ற புருஷனுமாகிய அமூர்த்த புருஷன் ஒருவனேயாம். தூல சரீரததிறகுள்ளாமாதலின் அபபுருஷனே ஆன்மா வென்னப்படும்.

சங்கை :—ஹே பகவன்! ஸ்தூலத்தை பிருதிவி, ஜல, தேஜசுவடிவ மூன்று பூதரூபமா யங்கீகரிககின் சூக்ஷுமததை வாயு, ஆகாசமென்னும் இரண்டு பூதரூபமாய் அங்கீகரிக்கின், தூலததிறகும் சூககுமத்திறகும சரீரரூபத்தன்மை சம்பவியாது. ஏனெனின் சுருதியின்கண் சாவ சரீரங்களேயும் பஞ்சபூதரூப மெனக் கூறப்பட்டுளது. அசசுருதியினுககு விரோதமா மன்றோ?

சமாதானம் :—ஹே தேவராஜாவே! பஞ்சீகாணப் பிரக்கிரியையின் ரீதியால் பிருதிவி, ஜலம், தேஜசு என்னும் மூன்று ஸ்தூல பூதங்களில் ஆகாசம், வாயுவென்னும் இரண்டு சூக்ஷும பூதங்களுள்ளன. ஆகையால, ஸ்தூலத்திற்குச் சரீரரூபத்தன்மை சம்பவிககும; இங்ஙனம சூககுமத்தை யாரம்பியாநின்ற வாயு, ஆகாசம் என்னும் இரண்டின்கண்ணும் சூக்ஷுமரூபமாய் பிருதிவி, ஜலம், தேஜசு என்னும் மூன்று பூதங்களும உளளன. ஆகையால், அவ்வமூர்த்த சூட்சுமத்திற்கும் சரீரரூபததன்மை சம்பவிககும்; இபபோது சூக்ஷுமசரீரத்தின் நாநா வகையாய ரூபங்களே நிரூபணஞ்செய்வாம.—ஹே தேவராஜாவே! பூர்வ பூர்வ வாசனேகளால் ஜனித்த அச்சூக்ஷும சரீரததிறகு நாநாவகையாய ரூபங்கள் உண்டு. அவற்றுள் ஒரு ரூபததை யாம உமபொருட்டு கூறுகின்றோம்; நீர் கேட்பீராக. எக்காலத்தில ரஜோகுணத்தோடுகூடிய இபபுருஷன் ஸ்திரீமுதலிய பதார்த்தங்களேக் காண்பனே, அக்காலத்தில் இபபுருஷன் அரிதாரத்தால் ரஞ்சிக்கப்பட்ட வஸ்திரத்திற்குச சமானமான ரூபவானுவன். எக்காலத்தில இப்புருஷன் சத்துவ குண மகிமையால் சிரத்தாதி குணங்களுடையவனுவனே, ரஜோகுண மகிமையால் குரோதாதிகளோடு கூடியவனுவனே, அக்காலத்தில் இப்புருஷன் சிறிது வெண்மையாய மலேக்கம்பளததிற்குச சமானமான ரூபத்தையுடையவனுவன். எக்காலத்தில் இப்புருஷன் ஏகாநததேசத்தின்கண் இருந்தும ரஜோகுணமகிமையால் விஷயங்களே நினேப்பனே, அக்காலத்தில் இபபுருஷன் இந்திரகோப சமானமாக

அத்தியந்த ரத்தவர்ணமுடையவனுவன். மழைக்காலத்தின்கண் உண்டாகாநின்ற அத்தியந்தம் ரத்தரூபமுடைய ஒரு ஜந்து விசேஷத்தை இந்திரகோபமென்பர். எக்காலத்தில் இப்புருஷன் சத்துவகுணமகிமையால் வித்தையோடு கூடினவனுயி னும் ரஜோகுணமகிமையால் உலகங்களோடு க்ரீடைசெய்வனே, அக்காலத்தில் இப்புருஷன் தாகசக்திமானுயும், பிரகாச சக்திமானுயும் இராநின்ற அக்கினியின் சுவாலையைப்போன்ற ரூபமுடையவனுவன். எங்ஙனம் வெண்கமலம் இயல்பாயே சுத்தமும் * கோமளமும் ஆமோ, அங்ஙனம் ஒருகாலத்தில் இப்புருஷன் சத்துவ குண மகிமையால் பிறப்பிலேயே சமதமாதி குணங்களுடையவனும் கோமளமான இயற்கையுடையவனும் ஆவன். எக்காலத்தில் இப்புருஷன் சுத்த சத்துவகுணங்க ளோடு கூடியவனுவனே, அக்காலத்தில் இப்புருஷன் மின்னலுக்குச் சமானமாய்ச் சர்வப் பிரகாசக ஞானவானுவன். இரண்யகர்ப்பபகவான் சர்வ பதார்த்த விஷயக ஞானவானுவதேபோலும். ஹே தேவராஜாவே! சகாம புருஷனுக்கே உபா சனையின் மகிமையால் ஹிரண்யகர்ப்பனைப்போல சர்வஞ்ஞத்தன்மை கிடைக்கும். அதுவும் உபாசனையாகிய மானசகர்மத்தால் உண்டாதலின் அநித்தியமாம். ஆகை யால் முமுக்ஷு ஜனங்கள் அந்த சர்வஞ்ஞத் தன்மையையும் இச்சைசெய்தல் கூடாது. கருத்திதுவாம்:—எவ்வளவு பதார்த்தங்களின் இச்சை உளவோ, அவையாவும் ஆத்மரூப ஆநந்தத்தின் பிரதிபந்தகமாமாதலின், முமுக்ஷுக்கட்குச சர்வ ஆசைகளையும் விட்டொழித்தலே உசிதமாம். ஹே தேவராஜாவே! இந்தப பிரகாரம் புண்ணிய பாவரூப கர்மங்களாலும், வாசனைகளாலும், ஜன்னியமாய ஆயிரம் வடிவங்கள் அமூர்த்த சூக்ஷ்மபுருஷனுக்காம். அவ்வெல்லா ரூபங் களையும் கூற யாம் வல்லேமல்லேம். சுருதிபகவதியும் அவ்வெல்லா ரூபங்களையும கூறச் சமர்த்துடையவளாகாள். ஆகையால, சுருக்கமாய் உமபொருட்டு யாம் கூறினேம். இப்போது மூர்த்த அமூர்த்தங்களென்னும் இரண்டு வடிவங்களை யும் நிஷேதம் செய்யுமபொருட்டு முதலில் அவற்றுள் அவித்தையின் காரியத்தன் மையைக் காண்பிப்பாம்:—ஹே தேவராஜாவே! நூற்களின் காரியமாய வஸ் திரத்தின்கண் நூற்கள் தொடர்ந்துநிற்பதேபோல, தூலசூக்குமரூப இப்பிரபஞ்ச மானது அவித்தையினின்று முற்பன்னமாதலின், அக்காரணரூப அவித்தை சமபூ ரணப பிரபஞ்சரூப காரியத்தின்கண் தொடர்ந்துநிற்கும். ஹே தேவராஜாவே! வஸ்திரமுதலிய பதார்த்தங்களும், அவற்றின் காரணங்களாய நூற்கள் முதலிய வையும் திரிசியங்களாதலின் அநான்மாவாவதேபோலத் தூலசூக்கும பிரபஞ்சமும், அவற்றின் காரணமாய அவித்தையும் திரிசியரூபமாதலின் அநான்மாவேயாம்.

சங்கை:—ஹே பகவன்! தூல சூக்குமரூப காரியப பிரபஞ்சமும் அதன் காரணமாய மாயையும் திரிசியரூபமாதலின் ஆன்மா அன்றாகுக. ஆனல் அவ் விரண்டின் அபாவரூப நிஷேதமானது ஆன்மா ஏன் ஆகமாட்டாது?

சமாதானம்:—ஹே தேவராஜாவே! பிரபஞ்சரூப காரியமும் அவித்தை வடிவகாரணமும் ஆன்மாவன்றாவதேபோல அவற்றின் அபாவரூப நிஷேதமும்

* கோமளம்=மிருது.

ஆன்மாவன்றும். ஏனெனின், எதிர்மறையின் சத்தை எங்ஙனமாமோ அங்ஙனமே அபாவத்தின் சத்தையும் ஆம். சுத்தியின்கண்ணே பிரதீதியாகாநின்ற வெள்ளிபானது கற்பிதமாதலின் அக்கற்பித வெள்ளியி னபாவமும் கற்பிதமேயாம். அதுபோல, அநான்மப பிரபஞ்சத்தின் அபாவமும் அநான்மாவேயாம். ஆகையால், ஹே தேவராஜாவே! சர்வ அநாத்மப் பிரபஞ்சத்தையும் நிஷேதஞ் செய்து இவ்வாநந்த சொரூப ஆன்மாவின் உபதேசத்தை யாம் உம்பொருட்டுச் செய்தேம். இதனினுமதிக உபதேசத்தை எபபிரஹ்ம வேத்தாவாய குருவும் சிஷன்பொருட்டுச் செய்யார். மற்றோ எலலாப பிரஹ்ம வேத்தாக்களாய ஆசிரியரும் சர்வப் பிரபஞ்சத்தையும நிஷேதித்து இவ்வாநந்த சொரூப ஆத்மாவின் உபதேசத்தைத் தம் சிஷரின்பொருட்டுச செய்துளார.

சங்கை :— ஹே பகவன்! பிரபஞ்சத்தை நிஷேதிக்காமலே நீ ஆநந்தசொரூபப் பிரஹ்மம் என விதிமுகத்தால் ஆன்மாவின் உபதேசத்தைக் குரு ஏன் செய்யலாகாது?

சமாதானம் :—ஹே தேவராஜாவே! இவ்வாநந்த சொரூப ஆன்மா மனவாக்குகட்கு விஷயமாகாதாம ஆதலின் விதிமுகத்தால் அதின் உபதேசஞ் செய்வதில் எபபுருஷனும் வல்லனல்லன். இக்காரணததாலே பிரஹ்ம வேத்தாக்களாய ஆசிரியர்கள் சர்வ அநாத்மபபிரபஞ்சங்களை நிஷேதித்து முமுக்ஷுக்கட்கு ஆத்மாவின் உபதேசத்தைச செய்திருக்கின்றனர். கருத்திதுவாம் :—பிரஹ்மத்தின் உபதேசம் இருவகையாம. அவற்றுள், ஒன்றோ விதி முகத்தால் உபதேசிப்பதாம். மற்றொன்றோ, நிஷேத முகத்தால் உபதேசிபபதாம். அவற்றுள், இவ்வந்தர்யாமியாய ஆத்மா பிரஹ்ம சொரூபமாம், சத்தியசொரூபமாம, ஞானசொரூபமாம், ஆநந்தசொரூபமாம், பரிபூரண சொரூபமாம் என்னும் இவ்வகைபாய உபதேசத்தை விதிமுக உபதேசமென்பா. இவ்வாநந்த சொரூப ஆன்மா காரிய சொரூபமன்றும், காரண சொரூபமன்றும, தூல சொரூபமன்றும், சூக்கும சொரூபமன்றும் என்னும் இவ்வகையாய உபதேசத்தை நிஷேத முக உபதேசமென்பர். இவ்விருவகை உபதேசத்தினுள் நிஷேதமுக உபதேசத்திற்கு மேன்மை கூறும்பொருட்டு முதலில் விதிமுக உபதேசத்தின்கண் தாழ்மையைக் காண்பிப்பாம் :—ஹே தேவராஜாவே! நீர் பிரஹ்ம ரூபம யாம் பிரஹ்ம ரூபம் என விதிமுகமாய் ஞானத்தை முன்னா உபதேசிததனமன்றோ? அவ்விதிமுக போதம் சப்தத் தொடர்பாய் விசிஷ்டமாயே உற்பன்னமாம். ஆகையால், மனவாக்குகட்கு விஷயமாகாத ஆன்மாவின்கண் அவ்விதிமுக போதம் சம்பவியாது. அல்லது "தத்வமசி" (அந்தப் பிரஹ்மம் நீயாயிருக்கின்றாய்) என விதிமுகமாய் பிரசித்தமாய போதத்தின்கண் தத்பதப்பொருட்கும், துவம்பதப்பொருட்கும் பரஸ்பரம் அபேதம் பிரதீதியாம்; அதுவோ சம்பவியாது. ஏனெனின், தத்பத பொருளாய மாயாவிசிஷ்ட ஈசுவரனிடத்தே சர்வஞ்ஞத்தன்மையும் பரோக்ஷத் தன்மையுமிருக்கின்றன. துவம்பதப் பொருளாய அவித்யாவிசிஷ்ட ஜீவனிடத்தே அற்பஞ்ஞத்தன்மையும், அபரோக்ஷத் தன்மையும், துக்கித் தன்மையுமிருக்கின்றன. இங்ஙனம் விரோத

தர்மங்களையுடைய தத்துவம் பதார்த்தங்கட்குப் பரஸ்பரம் அபேதம் சம்பவியாது மற்றோ அக்னியும், பனியும், பரஸ்பரம் விருத்த தாமங்களை யுடையனவாதலின், அவற்றிற்குப பரஸ்பரம வேற்றுமை இருப்பதேபோல, விருத்த தர்மங்களையுடைய தத்துவம் பதார்த்தங்கட்கும் பரஸ்பரம் பேதமே சம்பவிக்கும் என்னும் ஆசங்கை நீங்கும்பொருட்டும் தத்துவம் பதார்த்தங்களின் அபேதம் சித்திக்கும்பொருட்டும் தத்துவமென்னும இரண்டுபதங்களில் பாகத்தியாக இலக்ஷணையை அங்கீகாரஞ் செய்யவேண்டிவரும். பதத்தின் வாசசியாாதத ஏகதேசத்தைப பரித்தியாகஞ் செய்து, ஏகதேசத்தைக் கவாநதுகொள்வதனைப பாகத்தியாக இலக்ஷணை என்பர். ஈண்டு தத்பதததின் வாசசியார்த்தம ஈஸ்வராாம். அதன்கண் இருபாகங்களுள. அவறறுள், ஒன்றோ சைதன்யபாகமாம், மற்றொன்றோ மாயை மாயையாற்செய்த சர்வஞஞத்துவாதி தர்மங்களாகிய பாகமாம. அவற்றுள், இரண்டாவது பாகத தைப பரித்தியாகஞ் செய்து முதற சைதன்னிய பாகத்தில தத்பதத்தின் இலக்ஷணையைசசெய்து கொள்ளலவேண்டும். இந்தப் பிரகாரம் துவம்பதத்தின் வாச்சியார்த்தம ஜீவனும. அதனிடத்தும இருபாகங்களுள அவற்றுள், ஒன்றோ சைதன்னிய பாகமாம. மறறொன்றோ அவித்தை, அவித்தையாற செய்த அற்பஞஞத்துவாதித தர்மங்களாகிய பாகமாம். அவற்றுள், இரண்டாவது பாகததைப் பரித்தியாகஞ்செய்து சைதனனியரூப முதறபாகத்தின்கண் துவம் பதத்தின் இலக்ஷணையைச்செய்து கொளளல்வேண்டும. இவ்விரு சைதன்னிய பாகங்கட்கும் பரஸ்பரம் அபேதம சம்பவிக்கும. இவ்வண்ணம் இலக்ஷணா விருத்தியை அங்கீகரித்து விதிமுக உபதேசமானது கேவலம கிலேசகாரணமாம. அல்லது விதிமுகமாய் ஆன்மாவை உபதேசிபபதில் அநுமானப் பிரமாணத்தின் அபேக்ஷைவடிவ கௌரவ தூஷணத்தின் பிராபதியாம். ஏனெனின் சசசிதாநநத சொரூப தொம்பதார்த்தம அதிகாரியினுடைய சொரூபததினின்று பேதியாததேபோல, சாவ ஜீவர்களின் சொரூபத்தினின்றும பேதிபபதில்லை. அதுபோலவே தத்பதார்ததத்தின்கண்ணும அதனது பேதமின்றும என்னும இவ்வகைப பொருளைச சித்தஞ் செய்வதாய அநுமானப பிரமாணததை அவசியம அபேக்ஷிகக வேணடிவரும். அவ்வநுமானததின் பிரகாரம இதுவாம:—துவம பதத்தின் அர்த்தமாய ஜீவன் பரமான்மாவின் வேறன்றும, சசசிதாநநத சொரூப மாதலின், அதிகாரியின் ஆன்மாவைப போல, எனனும அநுமானப பிரமாணத்தின் அபேக்ஷை விதிமுக உபதேசததிற குண்டாதலின், விதிமுக உபதேசம தாழ்நததாம. அல்லது விதிமுக உபதேசததில தத்பதார்தத, துவம்பதாாத்த சோதனங்களின்றி இரண்டிறகும் பரஸ்பரம் அபேதம சம்பவியாதாதலின், தத்துவம் பதார்த்தங்களின் சோதனம் அவசியம செய்யவேணடும. தேகாதி ஜடபதார்த்தஙகளின் நீககத்தாலன்றித தத்துவம் பதார்த்த சோதன முண்டாகாது. ஆகையால் தேகாதி ஜடபதார்த்தங்களின் நீக்கத்தை அவசியம செய்தல்வேண்டும். அந்நீக்கம் யுத்திரூப அநுமானத்தால அனறிச் சித்தியாதாதலின், அத்தேகாதி ஜடபதார்த்தங்களின் நீக்கத்தின் பொருட்டுப பலவகையாய அநுமானங்களின் அபேக்ஷையைச செய்ய வேண்டும். இங்ஙனம் அநேக அநுமானங்களின் அபேக்ஷைவடிவக் கௌரவ தோஷம விதிமுக உபதேசத்தின்கண்ணே பிராப்தமாம். ஆதலினாலும் விதிமுக

உபதேசம் தாழ்ந்ததாம். விதிமுக உபதேசத்தின்கண் எவ்வெவ்வநுமான அபேக்ஷை உளதாமோ அவ்வவ்வநுமானமும் சுதந்தரமாய் எவ்வர்த்தத்தையும் சித்தி செய்யமாட்டாது; மற்றோ அநநியப் பிரமாணத்தை யபேக்ஷிக்கும். அநுமானப் பிரமாணம் அன்னியப பிரமாணத்தை யபேக்ஷியாதிருப்பின், அதன்கண் அநுமானத் தன்மையே இன்றாம. ஏனெனின், அநுமானமென்னும் சப்தத்தின் கண் இருபதங்கள் உள. அவற்றுள், ஒன்றோ "அநு" என்னும் பதமாம், மற்றொன்றோ "மான" என்னும பதமாம், அவறறுள், "அநு" வென்னும் பதத்தின் பொருள் பின்னருண்டாவதாம். "மான" என்னும பதத்தின் பொருள் பிரமாணமாம். அவ்விரண்டினுக்கும ஒருங்கே பின்னுண்டாம் பிரமாணமென்பது திரண்டபொருளாம். அநுமானப் பிரமாணமானது ஒரு பிரமாணத்தை அபேக்ஷைசெய்யாதாயின், அநுமானமென்னும் சபதமே அதனிடத்தே பயனற்றுப் போம். இது கூறியதால இது துணியபபெறும்:—ஜீவனுனவன் பிரஹ்மத்தினும் அபின்னன், சச்சிதானநத ரூபமாதலின், அதிகாரிகளின் ஆத்மாவைப்போல. என இவ்வண்ணம ஜீவப்பிரஹ்ம அபேதசாதகம் அநுமானமாம். தேகாதிகள் அனுத்மாக்களாகத தகுதியுடையனவாம், ஜடங்களாயிருத்தலின், திரிசியங்களாயிருத்தலின், பரிசசின்னங்களாயிருத்தலின், கடாதிகளைபபோல. இவ்வண்ணம் தேகாதிகளிடத்துள்ள அனுன்மத்தன்மையின் சாதகம அநுமானமாம். இவ்வநுமானங்கட்கு யாதேனும் மூலரூபப்பிரமாணம் மொழியவேண்டும். அம்மூலரூபப் பிரமாணத்தின் சகாயத்தால் அவ்வநுமானஙகள் விதிமுக உபதேசத்தின்கண் சகாயத்தைசசெய்யும். தூமரூப ஹேதுவினுல மலையின்கண் அக்கினியின் அநுமானம் உண்டாகவேண்டுமானுல் முதலில வீடு முதலியவறறில் பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் தூமரூப ஹேதுவினகண் அக்கினியின் வியாபதிஞானம் உண்டாதல்வேண்டும. வியாப்திஞானமின்றி தூமரூப ஹேதுவினுல பாவதத்தின்கண் அக்கினியின் அநுமானமுண்டாகாது. ஆகையால், தூமத்தின்கண் வியாப்தியைக் கவர்வதும் பாவதத்தின்கண் தூமத்தைக் கவர்வதுமாயப் பிரத்தியக்ஷப் பிரமாணம் பர்வதத்தின்கண் அககினியின் அநுமானததின் மூலரூபமாம். அதுபோல ஈண்டுப் பிரசங்கததில ஜடத்தன்மைமுதலிய ஹேதுககளால் தேகாதிகளிடத்தே அநான்மததன்மை யநுமானததின்கண்ணும், ஜடத்துவாதி ஹேதுக்களிடத்தே அநான்மத்தன்மைரூப சாத்தியத்தின் வியாப்தி ஞானத்தின்பொருட்டும், ஜடத்வாதி ஹேதுஞானத்தின்பொருட்டும், அன்னிய ஒரு பிரமாணத்தினபேக்ஷையுண்டாம். ஆண்டுப் பிரத்தியக்ஷப பிரமாணமோ அவ்வநுமானத்தின் மூலமாகமாட்டாது. ஏனெனின், திருஷ்டாந்தரூப கடாதிகளிடத்தே ஜடத்வாதி ஹேதுக்கள் பிரத்தியக்ஷப பிரமாணத்தால் சித்தமாயினும், அநான்மத்தன்மைரூப சாத்தியத்தின் பிரத்தியக்ஷம் கடாதிகளிடத்தே உண்டாகமாட்டாது. ஏனெனின், ஆன்மாவின் பேதத்தை அநான்மததன்மை என்னப்படும். அவ்வான்மாவின் பேதம் அநநியோன்ய அபாவரூபமாம. பிரதியோகி ஞானத்தாலன்றி அபாவத்தின் ஞானம் உண்டாகமாட்டாது. ஆதலின், பிரதியோகிரூப ஆன்மாவின் பிரத்தியக்ஷமின்றி அதன்பேதப் பிரத்தியக்ஷம் சம்பவிக்கமாட்டாது.

ஆகையால், முற்கூறிய அநுமானத்திற்குப் பிரத்தியக்ஷப்பிரமாணம் மூலமன்றும். அல்லது ஜடத்தன்மைரூப ஹேதுவினால் தேகாதிகளிடத்தே அநான்மத்தன்மைக்குச் சாதகமாய்ப் பூர்வ அநுமானத்தின்கண் திருஷ்டாந்தரூப கடாதிகளிடத்தே அநான்மத்தன்மை, பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் காணப்பெறினும் அவ்வநான்மத்தன்மை அக்கடாதிகளிடத்தே யிருக்கும்; கடாதிகளின் வேறாய தேகாதிகளிடத்து அவ்வநான்மத்தன்மை யிராதாம்; கடத்தை விஷயஞ்செய்வதாய இது கடமென்னும் ஞானம் கடத்தின்கண் ஸ்தம்பத்தன்மைத் தர்மத்தை விஷயஞ் செய்யமாட்டாது. ஆயினும் அந்தஸ்தம்பத்தன்மைத் தர்மம் ஸ்தம்பத்தினின்றும் நீங்கமாட்டாது; மற்றோ ஸ்தம்பத்தின்கண்ணே இருக்கும். அதுபோல கடாதி திருஷ்டாந்தங்களில் ஆத்மத்தன்மைத் தர்மம் உண்டாகாதொழிக. என்றாலும், அவ்வான்மத்தன்மைத் தர்மம் தேகாதிகளிடத்தே இருக்குமென்னும் இவ்விபரீத அர்த்தத்தை அங்கீகரிப்பதில் யாதொரு பாதக தர்க்கமுமின்றாம்.

சங்கை:—ஆன்மா சைதன்னியமாம். தேகமே ஆன்மாவாயின், தேகத்தின்கண் ஜடத்தன்மை யுண்டாகலாகாது, தேகத்தின்கண்ணே ஜடத்தன்மைப் பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதியாமாதலின் தேகம் ஆத்மாவன்றாம; என்னும் தர்க்கம் தேகத்தின் ஆத்மத்தன்மைக்குப் பாதகமாய்ச் சம்பவிக்கும்.

சமாதானம்:—எச்சார்வாக நாஸ்திகர் ஆத்மத்தன்மைத் தர்மத்தைத் தேகத்திற்கே இயல்பாய் அங்கீகரித்துளரோ, அவர்கள்முன்பு இவ்வுனது தர்க்கம் சம்பவியாது. ஏனெனில், கடாதிகளிடத்தே இராநின்ற ஜடத்துவ கிரியத்துவ முதலிய தர்மங்கள் கடாதிகளின் சுபாவத்தை நீக்கமாட்டாததேபோல, தேகத்தின்கண் இராநின்ற ஜடத்துவ, கிரியத்துவ முதலிய தர்மங்களும் தேகத்தின் ஆத்மத்தன்மைச் சுபாவத்தை நீக்கமாட்டாது. அல்லது நையாயிகர்மதத்தில் சத்தையென்னும் ஜாதி, திரவியம், குணம், காமம் என்னும் மூன்று பதார்த்தங்களினிடத்து இருக்கும், ஆனால் அச்சத்தாஜாதி அத்திரவியாதிகளின் சுபாவத்தை வேறாக்கமாட்டாது. அதுபோல ஜடத்துவத் கிரியத்துவாதி தர்மங்கள் ஆன்மாவின் கண்ணும் அநான்மாவின்கண்ணு மிருக்கும். ஆனால் அவ்வான்மா அநான்மாக்களின் சுபாவத்தை வேறாக்கமாட்டாது. என அங்கீகரிப்பதில் தேகாத்மவாதியாய சார்வாகனுக்கு யாதொரு பாதக தர்க்கமுமின்றாம்; அஃதிருப்பினன்றோ, அதன் பயத்தால் ஜடத்துவத் கிரியத்துவாதி தர்மங்கள் ஆன்மாவின்கண்ணே அங்கீகரிக்க முடியாமற்போம். கருத்திதுவாம்:—யாண்டுத் தூமரூப ஹேதுவினால் அக்கினியின் அநுமானமுண்டாமோ, ஆண்டுத் தூமரூப ஹேதுகாரியமாம். அக்கினி அத்தூமத்தின் காரணமாம். அக்கினியின்றித் தூமத்தின் ஸ்திதி எங்கேனுமங்கீகரிக்கின், தூமத்திற்கும் அக்கினிக்கும் பரஸ்பரம் காரியகாரண பாவமிராது என்னுந்தர்க்கம் ஆண்டுப் பாதகமாம். ஈண்டுப் பிரசங்கத்தின்கண் அநான்மத்தன்மைரூப சாத்தியமின்றியும், ஜடத்துவ கிரியத்துவாதி தர்மங்களை அங்கீகரிப்பின் இதன்கண் யாதொரு பாதக தர்க்கமுமின்றாம் ஏனெனின், ஜடத்துவத் கிரியத்துவாதி தர்மங்கட்கு அநான்மத்தன்மைத் தர்மம் காரணமாயின், அநான்மத்தன்மைத் தர்மரூப சாத்தியமின்றி

ஜடத்துவத் திரிசியத்துவாதி தர்மரூப ஹேதுவிராது. அவற்றிற்குப் பரஸ்பரம் காரியகாரண பாவமின்றாம். ஆகையால், ஆத்மாவின்கண் ஜடத்துவத் திரிசியத்துவாதி தர்மங்களை அங்கீகரிபபதில யாதொரு பாதக தர்க்கமும் தோன்றாவாதிக்கின்றாம்.

சங்கை :—யாண்டும் சைதன்னிய ரூபமாகவே ஆன்மாவின் அநுபவமாம். ஜடதேகத்தையே ஆன்மாவென உடன்படின், அவ்வநுபவத்திற்கு விரோதமாமன்றோ ?

சமாதானம் :—சைதன்னிய ரூபமாக உண்டாம ஆன்மாவின் அநுபவத்தின்கண் யாது கரணம் ? நேத்திராதி பாகிய இநதிரியங்கள் கரணமா ? அல்லது மனங் கரணமா ? அவற்றுள் முதற் பட்சமோ சமபவியாதாம். ஏனெனின், பாகிய அநான்ம பதார்த்தங்களை விஷயஞ்செய்வதாலும, நேத்திராதி இந்திரியங்களைப் பாகிய இநதிரியங்களென்பர். அவை அநதர ஆன்மாவை விஷயஞ் செய்யின், அவற்றின்கண் பாகிய இநதிரியத்தன்மை இராதாதலின், அவை ஆன்மாவை சைதன்னிய ரூபமாகக கவரா. இனி அவ்விரண்டாவது பக்ஷமும் பொருந்தாது ; ஏனெனின், ஆன்மாவை சைதன்னிய ரூபமாக மனங்கவரின் ஆன்மாவின்கண்ணே ஜடத்வாதி தர்மங்களின் பகையுண்டாமாதலின், அம்மனம் ஆன்மாவைச் சைதன்யரூபமாய்க் கவராதென்க ; மற்றேறு, யான் உளன் என ஆன்மாவின் சத்தாமாத்திரத்தை மனங்கிரகிக்குமாதலின், ஆன்மாவின்கண் ஜடத்துவாதி தர்மங்களின் நிவாரண முண்டாகமாட்டாது.

சங்கை :—யான் உளன் என்பதாய ஞானம் ஆன்மாவின் சைதன்னிய ரூபத்தை விஷயஞ்செய்யாதாயினும, யான் உணர்கின்றேன் என்பதாய ஞானம் ஆன்மாவின் சைதன்னிய ரூபத்தை விஷயஞ செய்யும்.

சமாதானம் :—தாம்பூல சம்பநதத்தால புருஷனுக்கு வாயில் சிவப்புத் தன்மை யுண்டாவதே போல, மனத்தின் சம்பந்தத்தால் ஆன்மாவின்கண் உண்டாய சைதன்னியத் தன்மையையே யான் உணர்கின்றேன் என்பதாய அனுபவம் விஷயஞ் செய்யும். சுத்த ஆன்மாவின் சைதன்னியத் தன்மையை அவ்வனுபவம் விஷயஞ்செய்யாது. ஆதலினல், ஆன்மாவின் ஜடத்துவாதி தர்மங்களின் விரோதியாய சைதன்னியத் தன்மையை எப்பிரத்தியக்ஷப பிரமாணமும் விஷயஞ் செய்யாது. ஆன்மாவின் சைதன்னியத் தனமையின்கண் பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் பிரவிருத்தி யுண்டாகாதபோது, வாதிகட்கு எப்போதும் பரோக்ஷமாய ஆன்மாவின் வியாபகத்தன்மை முதலிய தர்மஙகளிடத்தே பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் பிரவிருத்தி உண்டாவது யாங்ஙனம் ! மறறேறு உண்டாகாதென்க. இத்துணை கூறியதால் இது துணியப்பெற்றதாம் :—விதிமுக உபதேசத்திற்குச் சகாயஞ் செய்யும் பொருட்டு முயன்ற முற்போந்த அநுமானங்களின் மூலகாரணத் தன்மை பிரத்தியக்ஷப் பிரமாணத்தின்கண்ணே சம்பவியாதாதலின், மூலகாரணம் இன்மையினுனே அவ்வனுமானங்கள் ஆன்மாவின் நிரணயத்தின்கண் முயலா. ஆகையால், முற்கூறிய தோஷங்களின் நிவிர்த்தியின் பொருட்டுச் சுருதிப் பிர

மாணத்தையே அவ்வநுமானங்கட்கு மூலரூபமாய் உடன்படல்வேண்டும். அச்சுருதி இஃதாம்.

சுரு. "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம ஆநந்தோ ப்ரஹ்ம"

இதன்பொருள்:—பிரஹ்மம் சத்தியரூபமாம், ஞானரூபமாம், அநந்தரூபமாம், ஆநந்தரூபமாம் என்பதாம். இவ்விதமாய சுருதிரூப மூலப் பிரமாணங்களை அங்கீகரித்து முற்கூறிய அநுமானங்கள் விதிமுக உபதேசத்தின்கண் உதவிபுரியும். அல்லது எசசுருதிரூப மூலப்பிரமாணத்தின் சகாயத்தால முற்கூறிய அநுமானங்கள் விதிமுக உபதேசத்திற்குச் சகாயத்தன்மையைச் செய்யுமோ அச்சுருதி வாக்கியமே நிஷேதமுக உபதேசத்தின் பிரதானத் தன்மையை உணர்த்தும். ஏனெனின், சத்தியாதி பதங்கட்கு சக்தி விருத்தியினால் சுத்தப் பிரஹ்மத்தின்கண் பிரவிருத்தியை எவ்வறினும் அங்கீகரிப்பதின்றாம்; மற்றோ பாகத்தியாக இலக்ஷணையால் சத்தியாதி சப்தங்கள் பிரஹ்மத்தை யுணர்த்தும். அவற்றுள், சத்திய சப்தம் அசத்தியத்தை நீக்கி பிரஹ்மத்தை யுணாத்தும். ஞான சப்தம் அஞ்ஞானத்தை விலக்கி பிரஹ்மத்தை யுணர்த்தும அநநத சபதம் தேசகாலவஸ்து பரிச்சேதத்தை நீககிப் பிரஹ்மத்தை யுணர்த்தும். ஆநந்த சபதம் துககத்தை நீக்கி பிரஹ்மததை யுணர்த்தும். இவ்வண்ணம் சததியாதி சபதங்கள்யாவும் அசத்தியாதி தர்மங்களை நிஷேதித்துச் சுத்தப பிரஹ்மத்தை யுணர்த்தும். ஆதலினால் அசசுருதி வாக்கியங்கள் யாவும், நிஷேதமுக உபதேசத்தின் பிரதானத் தன்மையையே அறிவிக்குமென்க.

சங்கை:—ஹே பகவன்! சுருதிவாக்கியஙகள் நிஷேத முகவாயிலாய் பிரஹ்மத்தை யுணர்த்துவது யாது காரணம்?

சமாதானம்:—ஹே தேவராஜாவே! இவ்வதவிதீயப பிரஹ்மம் சஜாதீய, விஜாதீய சுவகத, பேதமற்றதாய் தனது மகிமையின்கண்ணே நிலைபெற்றிலங்கும். அத்தகைய நிர்க்குணப் பிரஹ்மத்தை சுருதிவாக்கியங்கள் யாதேனுமொரு குண விசிஷ்டரூபமாய் உணர்த்துமாயின் அசசுருதி வாக்கியங்களின் இடத்தே அப்பிராமாண்யத் தன்மைத் தோஷத்தின் அடைவுண்டாம. சர்ப்பத் தன்மைத் தருமமற்ற ரஜ்ஜுவைச சர்ப்பரூபமாய் உணர்த்துவதாய இது சர்பபமெனும் வாக்கியத்தை உலகின்கண்ணே அப்பிரமாணமாய் அங்கீகரிக்கப் பட்டுளது; அதுபோல சர்வ தர்மஙகளுமற்ற நிர்க்குணப் பிரஹ்மத்தை யாதேனும் ஒருகுண விசிஷ்டரூபமாய் உணர்த்துவதாய விதிவாக்கியமும் அப்பிரமாணமாம். ஆதலின் தமது அப்பிரமாணத் தன்மைத் தோஷத்தை நீக்கிக்கொள்ளும் பொருட்டு, சத்தியாதி வாக்கியங்கள் யாவும் நிர்க்குணப் பிரஹ்மத்தை நிஷேதமுகமாய் உணர்த்தும்.

சங்கை:—ஹே பகவன்! சர்வபேதங்களுமற்ற ஏக அத்விதீய பிரஹ்மம். இவ்வுலகின்கண்ணே பிரசித்தமின்றாம் ஆதலின் அவ்வப்பிரசித்தப் பிரஹ்மத்தை சாஸ்திரம் எங்ஙனம் அறிவிக்கும். சபதமானது பிரசித்த பதார்த்தங்களையே யன்றோ அறிவிக்கின்றது.

சமாதானம்:—ஹே தேவராஜாவே! லோகப் பிரசித்த அர்த்தத்தையே சாஸ்திரம் போதிப்பிக்குமென்னு நியமம் யாண்டு மின்றாம; மற்றோ, உலகின்கண்

அப்பிரசித்த பதார்த்தங்களையும் சாஸ்திரம போதிப்பிக்கின்றது. யூபசப்தத்தின் பொருள் உலகின்கண்ணே அப்பிரசித்தமாயினும் "யூபம்தக்ஷதி" என்னும் வேத வசனத்தால் சம்ஸ்கார விசிஷ்ட காஷ்டவிசேஷம் யூபசபதத்தின் அர்த்தமாய்ப் பிரதீதியாகும். அதுபோல உலகின்கண்ணே அத்விதீய நிர்க்குணப் பிரஹ்மமானது அப்பிரசித்தமாயினும் சத்தியம, ஞானம், அநநதம், பிரஹ்மம் என்பதாதி சுருதிவசனங்களின் விசுவாசத்தால மதிமான்களாய புருஷர் அந்நிர்க்குணப் பிரஹ்மத்தை அறிய யோக்கியராவா.

இப்போது விதிமுக உபதேசததையும நிஷேதமுக உபதேசத்தையும் இலக்ஷணத்தோடும் உலகப் பிரசித்தத திருஷ்டாநதங்களோடும் நிரூபணஞ் செய்வாம்:—ஹே தேவராஜாவே! இவ்வாநநத சொரூபவான்மாவைப் போதிப்பிக்கும் பொருட்டுச சாஸ்திரத்திறகு இருவகையாய பிரவிர்த்தியுண்டாம். அவற்றுள், ஒன்றோ விதிமுகமாய பிரவிருத்தியாம், மற்றொன்றோ நிஷேதமுகமாய பிரவிருத்தியாம் இவ்விரண்டும் அதிகாரிகளின் மதியனுசாரமாய் ஆம். இபபோது விதிமுக உபதேசத்தைக் காண்பிபபாம:—ஹே தேவராஜாவே! ஒரு தனிகனைவனை கோ, சாலையின்கண் சென்று, கோபாலனைநோக்கி எனது கோ யாதெனவினவில் அககோபாலனைவன் அக்கோவின கொம்பைப பிடிதது, இதுதங்களுடைய கோ என அததனிகனுககுக காண்பிபபன் இதனை சிநுககிராகிகா நியாய மென்பர். இங்ஙனம் இந்நியாயததால ஆன்மாவை எசசாஸ்திரம போதிபபிககுமோ அதனை விதிசாஸ்திர மென்பா. உனதுகரத்தில நெலலிக்கனி யுளது என்னும் இது லௌகிக விதிவாக்கியமாம. இங்ஙனம யாதொரு விதிவாக்கியமும் ஆநந்த சொரூப ஆன்மாவைப போதியா எனெனின், இவ்வான்மா மனம் வாக்குகட்கு அவிஷயமன்றோ. ஆதலினால சததியம, ஞானம, அநநதம், பிரஹ்மம் என்பதாதி விதிவாக்கியங்களும, அசததியாதிகளின் நீககவாயிலாகவே சுத்த ஆன்மாவின்கண் பிரவிர்த்திககும். இபபோது நிஷேதசாஸ்திரத்தை இலக்ஷணத்தோடும் லோகப் பிரசித்தத் திருஷ்டாநததத்தோடும நிரூபிபபாம:—ஹே தேவராஜாவே! மயங்கிய புருஷர் இலக்ஷியரூபமாய் அங்கீகரிதத அநேகம பதார்த்தங்களை நிஷேதித்து எஞ்சியதாய் உண்மையாய் இலக்ஷிய பதாரததததை எசசாஸ்திரம் அர்த்தத்தால் போதிபபிக்குமோ அதனை நிஷேத சாஸ்திரமென்பர். தேர் குதிரை முதலிய பல வகையாய சேனைகளோடு கூடிய ஒரு அரசனை யறியாமல் ஒரு மூடபாலகனைவன் தன்தநதையை நோககி, இக்கூட்டததுள் அரசன் யாவன் என வினவின் அபபாலகன் வசனததைககேட்டு அபபாலகனுககு அரசனையறிவிக்கும அவாவினனாய அவன் தந்தை முதலில இவன் அரசன் என்னும் வசனத்தைக் கூறான். மற்றோ இப்பாலகன்பொருட்டு முதலிலேயே இவன் அரசன் என்னும வசனத்தை யான் கூறுவேனாயின், இபபாலகன் மூடனாதலின் அந்நிய எவனையேனும் அல்லது குடைசாமரம் முதலிய எவறறையேனும் ராஜனென உணர்வனாதலின், இவன் ராஜனென்னும் வசனத்தை முதலில் இபபாலகனுக்குக் கூறல் தகுதியன்றாம். மற்றோ, அரசனின் வேறாய சர்வ பதார்த்தங்களையும் யான் நிஷேதிப்பேனாயின், எஞ்சியதாய் யாவுமறிினும் விலக்ஷணமாய அரசனை இப்பாலகன் தானேயுணர்வன்

என மனத்தின்கண்ணே சிந்தித்து அத்தந்தையானவன் அப்பாலகனுக்குக் கூறுவானாயினன். ஹே மைந்தா! காணப்பட்ட இம்மரமும் ராஜனன்றும், இக்குதிரையும் ராஜனன்றும், இவ்யானையும் ராஜனன்றும், இத்தேரும் ராஜனன்றும், இக்காலாட்களும் இராஜனன்றும், பலவகையாய ஆயுதங்களைத் தரித்திராநின்ற இவர்களும் ராஜனன்றும், இவ்வெண் குடையும் ராஜனன்றும், இச்சாமரமும் ராஜனன்றும், குடை, சாமரை முதலியவற்றைக் கையில் வைத்திருக்கும் புருஷர்களும் ஸ்திரீகளும் ராஜனன்றும், இந்நீலச் சட்டையையுடைய புருஷனும் ராஜனன்றும், இம்மஞ்சட் சட்டையையுடைய புருஷனும் ராஜனன்றும். இச்சிவப்புச் சட்டையையுடைய புருஷனும் ராஜனன்றும், இச்சித்திர வஸ்திரமுடைய புருஷனும் ராஜனன்றும், இச்சுவர்ணமய வாளாயுதத்தைத் தரித்திருக்கும் புருஷனும் ராஜனன்றும், இச்சுவர்ணமய வில்லைத்தாங்கிய புருஷனும் ராஜனன்றும், என்பனவாதி வசனங்களால் ராஜாவின் வேறாய சர்வ பதார்த்தங்களையும நிஷேதம் செய்தனன். பின்னர் அப்பாலகன் எஞ்சியதாய் யாவினும் விலக்ஷணமாய் அரசனைக் கண்கூடாய்க் கண்டனன். அவ்வரசனானவன் பொன்போன்ற காந்தியோடுகூடிய அங்கத்தை யுடையவனாயிருந்தான். சிரசிற்குமேல் வெண்குடை யுடையவனாயிருந்தான். பக்கங்களி லிராநின்ற சேடியர்களின் கைகளாகிய கமலங்களில் சுழலாநின்ற சாமரமாகிய அன்னப் பறவையால் சேவிக்கப்பட்ட மஸ்தகத்தோடு கூடி விளங்கினன். வெண்மையாய ஆடையை யணிந்திருந்தனன். திவ்யமாய காந்தியோடுகூடித் திகழ்ந்தனன். அத்தகைய அரசனை எல்லாச சேனையினும் வேறாய் அப்பாலகன் கண்ணுற் கண்டனன். இவ்வண்ணம் நிஷேத சாஸ்திரமும் ஆன்மா ஒன்றைவிட்டு வேறாய ஸ்தூல சூக்குமச் சர்வ பிரபஞ்சங்களையும் நிஷேதிக்கும். அந்நிஷேதத்தின் பின்னர் அவ்வதிகாரியானவன் சர்வப் பிரபஞ்சத்தினும் விலக்ஷண ரூபமாய் ஆன்மாவைத்தானே நிசசயஞ் செய்வன். ஆகையால், ஹே தேவராஜாவே! இந்நிஷேதமுக உபதேசமே, ஆன்மாவைப் போதிப்பதில் மேன்மையாய உபாயமாம. இந்நிஷேதமுக உபதேசத்தை அங்கீகரியாவிடின், பாவாபாவமற்ற நிர்க்குண பரமான்மாவை யாது போதிப்பிக்கும்; மற்றோ நிஷேதமுக உபதேசமின்றி நிர்க்குணப் பரமான்மாவை யுணர்த்துவதில் எவ்வாக்கியமும் சமர்த்துடையதன்றும். ஆதலினால் ஹே தேவராஜாவே! மகா வாக்கியத்தின் லக்ஷியரூபமாய அத்விதீய ஆத்மா மனம் வாக்குகட்கு அவிஷயமாம். சப்தத்தின் பிரவிர்த்திக்கு நிமித்தமாய ஜாதி, குணம், கிரியை முதலியவையற்றதாம. ஆகையினாலே சத்தியாதி வேதவாக்கியங்களும் அவ்வான்மாவை நேரே பிரதிபாதனஞ் செய்யுமாற்ற லுடையனவன்றும். அத்தகைய அத்விதீய ஆன்மாவை யாவன் மனத்தால் விஷயஞ்செய்வன்; மற்றோ எவனும் மனத்தால் ஆன்மாவையறிவதில் சமர்த்தனாகான். அத்தகைய அத்விதீய ஆத்மாவை அறிவிக்கும் பொருட்டு, நிஷேத சாஸ்திரம் ஸ்தூல சூக்ஷ்மரூப சர்வ ஜகத்தையும் நிஷேதஞ் செய்யும்போது அவ்வாநந்த சொரூப ஆன்மதேவர் தாமே அதிகாரிகளின் இருதய தாமரையின்கண்ணே பிரகாசிப்பர் தீபம் இல்லின்கண்ணே அடைந்து நேத்திரங்களை, மறைப்பதாய அந்தகார நிவிர்த்தியை மாத்திரஞ்செய்யும்; இவ்வளவே தீபத்தின் உபயோகமாம். அந்தகாரம் நீங்கியபின்னர் கண்ணுடையோன் சுதந்தரமாயே

கடாதிகளைக் காண்பன். அதுபோல, இப்பாவ அபாவரூப காரியகாரணரூப ஸ்தூல சூக்ஷுமரூப சம்பூர்ண ஜகத்தானது ஆன்மாவன்றும்; என நிஷேதமுக சாஸ்திரங்கூறின், அதிகாரியானவன் தானே ஆன்மாவைச் சாக்ஷாத்கரிப்பன். ஆகையால், ஹே தேவராஜாவே! அத்விதீய ஆன்மாவை யுணர்வதற்கு இந்நிஷேதமுக உபதேசமே மேலாயதாம். ஏனெனின், விதிமுக உபதேசத்தின்கண் தத்துவம் பதார்த்தங்களின் சோதனையின் அபேக்ஷையும், அநுமானாதிகளினபேக்ஷையும் மிகையாம். அதுபோல, நிஷேதமுக உபதேசத்தின்கண் எவ்வநுமானாதிகளின் அபேக்ஷையுமின்றும்.

சங்கை:—ஹே பகவன்! நேதி நேதி என்னும் சுருதியானது மூர்த்த அமூர்த்தரூப பிரபஞ்சத்தை நிஷேதிக்கும். அவ்விருவகையாய பிரபஞ்சத்தினின்றும் வேறாயுள்ள ஜடபதார்த்தங்களைச் சுருதி நிஷேதஞ் செய்யவில்லையாதலின், அப்பதார்த்தங்களோடு ஆன்மாவிற்குத் தாதாத்மிய அத்தியாசமுண்டாவதால், அதிகாரிக்குச் சுத்தரூபமாய் ஆன்மாவின் விளக்கம் உண்டாகாதன்றோ?

சமாதானம்:—ஹே தேவராஜாவே! காரண அஞ்ஞானத்தோடுகூடிய மூர்த்த அமூர்த்தரூப யாதொரு பிரபஞ்சமானது எம்மால் உமக்குக் கூறப்பட்டதோ அத்துணையே ஜடப்பிரபஞ்சமாம். அதனினதிகமாய் வேறு யாதொரு ஜடப்பிரபஞ்சமுமின்றும். இக்காரண அஞ்ஞானசகித மூர்த்த அமூர்த்தரூப பிரபஞ்சத்தை நிஷேதஞ்செய்வதினாலே அறிஞனுக்கு ஆன்ம சாக்ஷாத்காரமுண்டாம். ஆதலினால், ஹே தேவராஜாவே! நேதி நேதி என்னும் சுருதி அத்விதீய ஆன்மாவினும் வேறாய சர்வ ஜடப்பிரபஞ்சத்தையும் நிஷேதஞ்செய்யும். அவற்றுள், முதல் நகாரத்தால் காரியகாரணரூப ஸ்தூல சூக்ஷுமரூப பாவப்பிரபஞ்சத்தை ஆன்மாவின்கண் நிஷேதஞ்செய்யும். இரண்டாவது நகாரத்தால் அப்பாவப் பிரபஞ்சத்தின் அபாவத்தை நிஷேதஞ்செய்யும். பாவ அபாவரூப ஜடப்பிரபஞ்சமானது ஆநந்தசொரூப ஆன்மாவினின்றும் நீங்கவே, இவ்வாநந்தசொரூப சொப்பிரகாச ஆன்மாவே எஞ்சியிலங்கும். அக்கினியின் விசேஷபாவத்தின் காரணமாய காஷ்டமாயது அக்கினியால் தகிக்கப்படவே காஷ்டமற்ற அவ்வக்கினியானது பூர்வ விசேஷரூபத்தைப் பரித்தியாகஞ்செய்து தனது சாமான்யரூபத்தில் நிலைபெறும். அதுபோல, ஆன்மாவின் விசேஷரூபத்தின் காரணமாய பாவ அபாவரூப ஜடப்பிரபஞ்சமானது நீக்கப்படவே, இவ்வாநந்தசொரூப ஆன்மாவும் உபாதியாலுண்டாய விசேஷரூபத்தை யொழித்துத் தனது சச்சிதாநந்த சொரூபத்தின்கண் நிலைபெறும். ஹே தேவராஜாவே! இது யாம், இது நீர், இது திருசியப் பிரபஞ்சம், இவர் அன்னிய ஜீவர் என்னும் சம்பூர்ணபேதமும் மூர்த்த அமூர்த்தரூப உபாதியாலாயதாம். ஆகையால், அச்சம்பூர்ண பேதம் ஆநந்தசொரூப ஆன்மாவின்கண் உண்மையாயின்றும். ஹே தேவராஜாவே! பேதமற்ற ஆகாசத்தின்கண் புகை, மின்னல், மேகம் என்பவை பலவகையாய பேதத்தை யுண்டுபண்ணும்; அங்ஙனமே, பேதமற்ற அத்விதீய ஆன்மாவின்கண் ஸ்தூல சூக்ஷும சரீரங்கள் பலவகையாய பேதங்களையுண்டாக்கும். ஹே தேவராஜாவே! ஆகா

சத்தின்கண்ணே பேதத்தைச் செய்வனவாய மேகாதிகட்கு உபாதானகாரணம் ஆகாசமன்றாம். ஆன்மாவின் பேதத்தைச் செய்யாநின்ற ஸ்தூலசூக்ஷ்மப்பிரபஞ்சங்கட்கோ ஆன்மாவே உபாதான காரணமாம்.

சங்கை :—ஹே பகவன்! அசங்கவான்மாவின்கண் ஜகத்தின் காரணத்தன்மை சம்பவியாதன்றோ?

சமாதானம் :—ஹே தேவராஜாவே! அசங்க ஆன்மாவின்கண் ஜகத்தின் காரணத்தன்மை சம்பவியாதென்னும் வார்த்தை உண்மையாம். அசங்க ஆன்மாவின்கண் ஜகத்தின் காரணத்தன்மையை யாமும் அங்கீகரிப்பதில்லை; மற்றோ, மாயாவிசிஷ்ட பரமாத்மாவின்கண் ஜகத்தின் காரணத்தன்மையை யாம் அங்கீகரிக்கின்றோம. ஆதலினால், ஸ்தூலசூக்ஷ்மரூப சம்பூரணப் பிரபஞ்சமும் பரமேஸ்வரரது மாயையாலாக்கப் பெற்றதாமாதலின், சம்பூர்ணப் பிரபஞ்சமும் மித்தையாம்.

சங்கை :—ஹே பகவன்! சம்பூர்ணப் பிரபஞ்சமும் மாயையாலாக்கப் பெற்றதாமாதலின், மித்தையாமென்னும் இவ்வார்த்தை சம்பவிக்குமாயினும், மாயை மாயையாலாக்கப் பெற்றதன்றுமாதலின், அது சத்தியமாம; மாயையும் வேறொரு மாயையால் ஆக்கப் பெற்றதாமென வுடன்படின், அவ்விரண்டாவது மாயை மூன்றாவது மாயையாலாக்கப் பெற்றதாம் என இங்ஙனம மாயைகளின் அனவஸ்தையுண்டாம். அல்லது மாயையை வேதாந்த சாஸ்திரத்தின்கண் அநாதியென அங்கீகரிக்கப் பட்டுளதாதலின், மாயையின்கண் மாயையின் காரியத்தன்மை சம்பவியாதன்றோ?

சமாதானம் :—ஹே தேவராஜாவே! யாது மாயையின் காரியமாமோ, அது மித்தையாம் என யாம் கூறிய மித்தியாப்பிரபஞ்ச இலக்கணம் கேவலங்காரியப் பிரபஞ்சத்திற்காம். காரணரூப மாயையின் மித்தியாத் தன்மைக்கு இது இலக்கணமன்றாம். சித்தாந்தத்தின்கண் காரியப் பிரபஞ்சத்தைப்போல மாயையும் மித்தையேயாம். ஆகையால், அதிஷ்டான சைதன்யத்தின்கண் யாது அத்தியஸ்தமாமோ, அது மித்தையெனப்படும். இம்மித்தியாத் தன்மையின் இலக்கணம் மாயையின்கண்ணும் மாயையின் காரியத்தின்கண்ணும் உள. ஏனெனின், எங்ஙனம் ஸ்தூல சூக்ஷ்மப்பிரபஞ்சம் அதிஷ்டான சைதன்யத்தின்கண்ணே அத்தியஸ்தமாமோ, அங்ஙனம் மாயையும் அத்தியஸ்தமாம்; ஆகையால், இரண்டும் மித்தையாம். உலகின்கண்ணும் * இந்திரஜாலிகன் ஏவிய மாயையும் மாயையானுற்பன்னமாய சம்பூர்ண பதார்த்தங்களும் மித்தையேயாம்; அவ்வண்ணம் மாயையும் மாயையாலாக்கப்பெற்ற சம்பூர்ணப் பிரபஞ்சமும் மித்தையேயாம். ஹே தேவராஜாவே! எங்ஙனம் உலகின்கண் மாயாவியாய இந்திரஜாலிகனால் ஆக்கப்பட்ட ஸ்தூல சூக்ஷ்ம பதார்த்தங்கள் உலகர்க்குப் பிரதீதியாமோ, அங்ஙனம் மாயாவிசிஷ்ட இந்திரனுக்கிய இவ்விந்திரஜால ரூபப்பிரபஞ்சமும் சர்வ ஜீவர்கட்கும் பிரதீதியாம்.

---

* இந்திரஜாலிகன் = இந்திர ஜாலக்காரன்.

சங்கை :—ஹே பகவன்! மூவுலகத்தின்கண்ணும் யானே இந்திரன், என்னின் வேறாய் எவனும் இந்திரனின்றாம்.

சமாதானம் :—ஹே தேவராஜாவே! எப்பரமான்மதேவர் முன்சர்வான்மரூபமாய் ஆன்மாவை யறிந்தனரோ, அப்பரமான்ம தேவரே ஈண்டிந்திர சப்தத்தால் கூறப்பெறுகின்றனர். உமக்குச் சர்வான்மரூபமாய் ஆன்மாவின் ஞானமின்றாம்; ஆதலின் நீர் இந்திரரன்றாம். அல்லது பரம ஐஶ்வரியம் யாவருக்குளதோ அவரே இந்திரராவர். இவ்வண்ணம் இந்திர சப்த அர்த்தமும் சர்வான்ம ஞானத்தோடுகூடிய சர்வஞ்ஞ பரமான்மாவின்கண்ணே பொருந்துமன்றி, உமதிடத்தே பொருந்தாது. ஏனெனின், எவ்வைஶ்வரியத்திற்குச் சமானமாயேனும் அதிகமாயேனும் யாதொரு ஐஶ்வரியமுமின்றோ, அதனைப பரம ஐஶ்வரியமென்பர். அத்தகைய பரம ஐஶ்வரியம் உமக்கின்றாம்; மற்றோ உம்மினும் ஆயிரமடங்கு அதிக ஐஶ்வரியம் இரண்ய கர்ப்ப பகவானுக்குளது. ஆகையால், சர்வான்ம ஞானத்தோடுகூடிய பரமான்மதேவரே இநதிரராவர். அவரே எல்லா உலகிற்குங் காரணராவர். ஹே தேவராஜாவே! ஸ்தூலசூக்ஷ்ம சரீரங்களோடு உமக்குத் தாதாத்மிய அத்தியாசமிருத்தலின், அப்பரமான்மரூப இந்திரரினின்றும் நீர் உற்பன்னமாயினீர்; இக்காரணத்தாலே உம்மிடத்தே இந்திரத்தன்மை சம்பவியாது.

சங்கை :—ஹே பகவன்! யான் இந்திரனல்லாதிருப்பின், யாவருமென்னை இந்திரரென ஏன் கூறுகின்றனர?

சமாதானம் :—ஹே தேவராஜாவே! எம்மனோரது சமீபத்திரா நின்ற ஐஶ்வரியத்தைக்காட்டினும் உம்மிடத்திரா நின்ற ஐஶ்வரிய மதிகமாம்; ஆதலின், யாவரும் உம்மை இந்திரரென்கின்றனர். உண்மையா யாராய்நது பார்க்கின், பிரஹ்மாத்ம சாக்ஷாத்காரத்தோடு கூடிய ஈஶ்வரரே இநதிரராவர். அஞ்ஞானத்தால் ஆக்கப்பெற்ற தேகாபிமான காலத்தின்கண் உமதைஶ்வரியமும் நாயின் ஐஶ்வரியமும் சமானமேயாம். ஏனெனின், பலவகையாய ஐஶ்வரியத்தின்கண்ணும், உமது தேவதா சரீரத்தின்கண்ணும், மூவுலகத்தின்கண்ணும, சுவர்க்கத்தின்கண் உள்ள ஸ்திரீகளிடத்தும் பிரீதியைச் செய்து நீர் ஆசக்தியை யடைவதேபோல, நாயும் தனது ஐஶ்வரியாதி பதார்த்தங்களிடத்தே பிரீதியைச் செய்து ஆசக்தியையடைகின்றது.

சங்கை :—ஹே பகவன்! எபபதார்த்தம் சுநதரமாயிருக்கின்றதோ அதன்கண் பிரீதிமதியால் ஆசக்தியுண்டாகலாம்; அசுந்தர பதார்த்தத்தின்கண்ணே பிரீதியும் ஆசக்தியு முண்டாகா. அத்தகைய சுந்தர பதார்த்தங்கள் என்னிடத்தே யுளவாதலின், அவற்றின்கண் எனது ஆசக்தி சம்பவிக்கும்; நாயினிடத்தோ யாதொரு சுந்தர பதார்த்தமுமின்றாம்; ஆதலின் நாயினுக்கு ஆசக்தி சம்பவியாதன்றோ?

சமாதானம் :—ஹே தேவராஜாவே! என்னிடத்தே சுந்தர பதார்த்தம் உளது, நாயினிடத்தே யின்று எனக்கேவலம் உமக்கபிமானம் உண்டாயுளது, ஏனெ

னின், நிரபேக்ஷையோடு கூடிய ஐஸ்வரியாதி பதார்த்தங்கள் உம்மிடத்தும் இன்றும், அங்ஙனமே நாயினிடத்தும் இன்றும் ; மற்றோ எம்மனோரைக்குறித்து உமக்கு மகா ஐஸ்வரியமுளது. அங்ஙனமே கீடம் முதலிய துச்சஜந்துக்களைக் குறித்து நாயினுக்கும் மகா ஐஸ்வரியமுளது. எங்ஙனம் எம்மனோரைக் குறித்து உமது சரீரம் கோமளமாமோ, அங்ஙனமே பன்றி முதலியவற்றைக் குறித்து நாயின்தேகமும் கோமளமாம். எங்ஙனம் உமது தேவதா சரீரத்தின்கண் இந்திராணி முதலிய தெய்வப் பெண்களுக்குப் பிரீதியுண்டாகின்றதோ, அங்ஙனமே நாயின்தேகத்தின்கண்ணும் பெண்நாய்கட்குப் பிரீதியுண்டாகின்றது. எங்ஙனம் அமுதம் உங்கட்குப் பிரீதியைப் பயக்கின்றதோ, அங்ஙனமே வாந்தியெடுத்த அன்னம நாயினுக்கும் பிரீதியைப் பயக்கும். எங்ஙனம் உமக்குபகாரம் செய்த ஜீவரிடத்தே நீவிர் பிரீதிசெய்கின்றீரோ, அங்ஙனமே நாயும் தனது சுவாமியிடத்தே பிரீதி செய்கின்றது. எங்ஙனம் அபகாரியாய புருஷர்மீது நீவிர் கோபங் கொள்ளுகின்றீரோ, அங்ஙனமே அபகாரிகளிடத்தே நாயுங் கோபங் கொள்ளுகின்றது. ஹே தேவராஜாவே ! மூவுலகத்தையும் யான் இரக்ஷிக்கின்றேன் ஆதலின், இந்திரனுயானுபகாரம் செய்கின்றேன், இந்நாய் மூவுலகிற்கும் உபகாரம செய்வதின்றும் என்னும் அபிமானத்தையும் நீர் செய்யற்க. ஏனெனின், பிருதிவி, ஜலம், அக்கினி, வாயு, சூரியன், திசை, சந்திரன், மின்னல், மேகம், ஆகாசம், தர்மம், சத்தியவாக்கியம், மனுஷ்யத்தன்மை முதலிய ஜாதி, மனபுத்திப் பிராணுரூப ஹிரண்யகர்ப்பரது சரீரம், அங்ஙனம் விராட்பகவானது சரீரம், அங்ஙனம் சிதாபாசன் என்பனவாய சம்பூர்ணப் பிருதிவியாதி பதார்த்தங்கள் ஸ்தூலரூபமாயும் சூக்ஷ்ம தேவதை வடிவமாயும் சர்வப்பிராணிகட்கும் உபகாரத்தைச் செய்யும். அங்ஙனமே நாய் முதலிய பிராணிகளின் ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களும் அதிருஷ்டவாயிலாய்ப் பிருதிவி முதலிய சர்வ பதார்த்தங்கட்கும் உபகாரத்தைச் செய்யும். கருத்திதுவாம் :—எப்பொருள் எப்பிராணிக்குச் சுககாரணமாமோ, அப்பொருள் அப்பிராணியின் புண்ணியரூப அதிருஷ்டத்தால் உண்டாம்; எப்பொருள் எப்பிராணியின் துக்ககாரணமாமோ அப்பொருள் அப்பிராணியின் பாவரூப அதிருஷ்டத்தால் உண்டாம் என்பது சாஸ்திரநியமமாம். ஆகையால், நாய்முதலிய எல்லாப் பிராணிகளும் புண்ணிய பாவரூப அதிருஷ்டவாயிலாய்ப் பிருதிவி முதலியவற்றிற்குக் காரணமாம். ஆகையால், நாய்முதலிய பிராணிகள் பிருதிவி முதலியவற்றின்மீது உபகாரத்தைச் செய்யும். அந்தப் பிருதிவி முதலிய பதார்த்தங்களும் நாய்முதலிய பிராணிகட்குச் சுகமுதலியவற்றை யடைவிக்கும். ஆகையால், அந்தப் பிருதிவிமுதலிய பதார்த்தங்கள் நாய்முதலிய பிராணிகளின்மீது உபகாரத்தைச்செய்யும். ஆகையால், ஹே தேவராஜாவே ! யாவர்மீதும் செய்யும் உபகாரரூப தர்மம் நாயின்கண்ணும் உம்மிடத்தும் சமானமேயாம். யான் யாவருக்கும் உபகாரத்தைச் செய்கின்றேன் என்னும் பயனற்ற அபிமானத்தை நீர் செய்யாதீர். இது கூறியதால் இவ்வர்த்தங் காண்பிக்கப்பெற்றது :—எப்பதார்த்தங்கள் பரஸ்பரம் உபகாரஞ்செய்வனவாமோ, அவற்றிற்குக் காரணமொன்றேயாம். இரண்டு சகோதரர்கள் பரஸ்பரம் உபகாரஞ்செய்வர், ஆதலின் அவ்விருவர்க்கும் ஒரே தாய்தந்தையர் காரணமாவர். அதுபோல, இவ்வெல்லா வுலகும்

பரஸ்பரம் உபகாரஞ்செய்யும்; ஆதலின், இப்பிரபஞ்சம் முழுவதிற்கும் ஒரேமாயா விசிஷ்ட பரமான்மதேவர் காரணமாவர். அம்மாயாவிசிஷ்ட பரமான்ம தேவரே ஸர்வ ஜடப்பிரபஞ்சத்தின்கண்ணும் தாதாத்மிய சம்பந்தத்தால் இருப்பவராய் யாவர்மீதும் உபகாரத்தைச்செய்வர்.

இப்போது இவ்வர்த்தத்தை வெளிப்படையாய் நிரூபிப்பாம்:—ஹே தேவ ராஜாவே! பிருதுவிமுதலிய பதார்த்தங்களும், மநுஷர்முதலிய பிராணிகளும் ஆகிய யாவும், எவர்மீதும் சிறிதுமாத்திரமும் உபகாரஞ் செய்வதின்றாம். மற்றோ, நேதி நேதியென்னும் ச்ருதியால் முன்னர் உம்பொருட்டு யாங்கூறிய நாசரகித ஸ்வப்பிரகாச பரமான்மாவே பிருதுவிமுதலிய பதார்த்தங்களிடத்தும், ஸ்தாவர ஜங்கமப் பிராணிகளிடத்தும் தாதாத்மிய ஸம்பந்தத்தாலிருப்பதாய் யாவர்மீதும் உபகாரத்தைச்செய்யும். ஹே தேவராஜாவே! அப்பரமான்மதேவர் பிருதுவியி னிடத் திருப்பவராய் ஸர்வப் பிராணிகளின் போகசாதனங்களாய சரீரங்களை யுற்பன்னஞ்செய்வர். இக்காரணத்தால் சர்வப் பிராணிகளின்மீதும் பிருதுவி யுபகாரஞ்செய்யும். ஆதாரரூபப் பிருதுவியின்றிச் சீவர்களிடத்தே சுகதுக்க போகஞ் சம்பவியாது. இக்காரணத்தால் அப்பரமான்மதேவரே ஸர்வப் பிராணி களின் சரீரங்களில் இருப்பவராய்ப் புண்ணிய பாவரூப அதிருஷ்டவாயிலாய்ப் பிருதுவியை விருத்திசெய்வர். இக்காரணத்தால் சர்வப பிராணிகளும் பிருதுவியின் மீது உபகாரஞ்செய்யும். ஈண்டிது அபிப்பிராயமாம்:—பிருதுவிக்கும், சர்வப் பிராணிகட்கும் பரஸ்பரம் காரியகாரண பாவமும், பரஸ்பரம் போக்துரு போக்கிய பாவமுமுள. ஆண்டு ஜட அம்ஸப்பிரதானத்தால் பிருதுவியின்கண்ணும் ஸர்வப் பிராணிகளிடத்தும் காரியத்தன்மையும் போக்கியத்தன்மையும் உள. சைதன்னியப்பிரதானத்தால் பிருதுவியின்கண்ணும் ஸர்வப் பிராணிகளிடத்தும் காரணத்தன்மையும், போக்துருத்தன்மையும் உள. இந்நெறியை இனிக்கூறும் ஜலாதிகளிடத்தும் அறிந்துகொள்க. ஹே தேவராஜாவே! அப்பரமான்ம தேவர் ஜலத்தின்கண் இருந்து ஜீவர்களுடைய சரீரத்தில் வீரியவிருத்தியைச் செய்வர். இக்காரணத்தால் ஜலம் ஸர்வப்பிராணிகளின்மீதும் உபகாரஞ்செய்யும். அப்பரமான்மதேவர் ஜீவர்களின் வீரியத்தின்கண் இருந்து சரீரங்களை யுற்பத்தி செய்வர்; அச்சரீரங்களால் உற்பன்னமாய புண்ணிய பாவரூப அதிருஷ்டங்களால் மீண்டும் ஜலாதிகளை விருத்திசெய்வர். இக்காரணத்தால் ஸர்வப் பிராணிகளும் ஜலத்தின்மீது உபகாரஞ்செய்யும். இந்நெறியே மேலும் உணர்க. ஹே தேவ ராஜாவே! இப்பரமான்மதேவர் அக்கினியின்கண்ணிருந்து சம்பூரண ஜீவர்களின் வாக்கிந்திரியங்களைச்சப்தோச்சாரணரூப வியாபாரத்தின்கண் பிரவிருத்திப்பிப்பர். உதிரம் முதலிய தாதுக்களைப் பக்குவஞ்செய்விப்பர். இக்காரணத்தால் அக்கினி தேவதை ஸர்வப் பிராணிகளின்மீதும் உபகாரஞ்செய்யும். இப்பரமான்மதேவர் ஸர்வப் பிராணிகளின் வாக்கிந்திரியத்தின்கண் இருந்து மந்திர உச்சாரண வாயிலாய், அக்கினியைச் சம்ஸ்காரத்தோடு கூடியதாய் ஆக்குவர். அவ்வக்கினி வேதத்தின்கண் ஆகவநீய மென்றும், கார்ஹபத்திய மென்றும், தக்ஷிணக்

கினி யென்றும் அநேக நாமங்களால் கூறப்பட்டுள்ளது. இக்காரணத்தால் ஸர்வப் பிராணிகளும் அக்கினியின் மீது உபகாரஞ் செய்யும். ஹே தேவ ராஜாவே! இப்பரமான்ம தேவர் வாயுவின்கண் இருந்து, சர்வ ஜீவர்களின் பிராணன்களைச் சலிப்பிப்பர்; இக்காரணத்தால் வாயுவானது சர்வப் பிராணிகளிடத்தும் உபகாரத்தைச் செய்யும். இப்பரமான்ம தேவர் பிராணனிடத்திருந்து புண்ணிய பாவரூப அதிருஷ்டவாயிலாய் வாயுவைப் பிரவிருத்திப்பிப்பர். ஆகையால், சர்வப்பிராணிகளும் வாயுவின் மீது உபகாரஞ் செய்யும். ஹே தேவ ராஜாவே! இப்பரமான்ம தேவர் சூரியனிடத்திருந்து சர்வ ஜீவர்களின் நேத்திரங்களை ரூபாதி விஷயங்களின்கண் பிரவிருத்திப்பிப்பர்; இக்காரணத்தால் சூரிய பகவான் சர்வ ஜீவர்களின் மீதும் உபகாரஞ் செய்வர். அப்பரமான்ம தேவர் சர்வப் பிராணிகளின் நேத்திரங்களிடத்திருந்து இவர் சூரியரெனச் சூரியரைத் துணிவர். இக்காரணத்தால் சர்வப் பிராணிகளும் சூரியரின் மீது உபகாரத்தைச் செய்யும். ஹே தேவராஜாவே! இப்பரமான்ம தேவர், கிழக்குமுதலிய பத்துத் திசைகளில் இருந்து சர்வப பிராணிகளின் சுரோத்திரேந்திரியத்தின் மீது உபகாரஞ் செய்விபபர். ஆகையால், பத்துத்திசைகளும் பிராணிகளின் மீது உபகாரஞ் செய்யும். சர்வப் பிராணிகளின் சுரோத்திரேந்திரியங்களில் இருந்து திசைகளின் பிரதித்தொனிரூப சப்தத்தை அப்பரமான்ம தேவரறிவர். கருத்திதுவாம் :—பேரியாதிகளின் சப்த ஜன்னிய பிரதித்தொனிரூப சப்தத்தானே விசேஷமாய்த் திசைகளின் ஞானமுண்டாம். அந்தப் பிரதித்தொனியின் ஞானம் சுரோத்திரேந்திரியத்தால் உண்டாம். ஆகையால், பிரதித்தொனி ஞானவாயிலாய்ச் சுரேத்திரேந்திரியம் திசைகளைத் துணியும், இதுவேதிசைகளின் மீது சர்வப் பிராணிகளின் உபகாரமாம். ஹே தேவராஜாவே! அப்பரமான்ம தேவர் சந்திரனிடத்திருந்து சர்வ ஜீவர்களின் மனத்தைப் பிரவிருத்திப்பிப்பர்; இக்காரணத்தால் சந்திரன் சர்வப் பிராணிகளின் மீதும் உபகாரத்தைச் செய்வன். சர்வ ஜீவர்களின் மனத்தின்கண் இருந்து அப்பரமான்ம தேவர் மனத்தின் சங்கற்ப ஜந்நிய கர்மங்களால் சந்திர லோகத்தை விருத்திசெய்வர். அல்லது, இவன் சந்திரன் எனமனத்தால் சந்திரனை அறிவர். இக்காரணத்தால் சர்வப் பிராணியும் சந்திரன் மீதும் உபகாரஞ் செய்யும். ஹே தேவராஜாவே! இப்பரமான்ம தேவர், மின்னலின்கண் இருந்து சர்வப் பிராணிகளின் அந்தகாரத்தை நிவிருத்தி செய்விப்பர்; இக்காரணத்தால், மின்னல் சர்வப் பிராணிகளின் மீது உபகாரத்தைச் செய்யும். சர்வ ஜீவர்களின் துவக்கின்கண் உள்ள * உஜ்வலத் தன்மைவடிவ தேஜசின் அபிமானியின்கண் இருந்து இப்பரமான்ம தேவர் யாண்டும் வியாபித்த மின்னலின் தேஜசையறிவர்; இக்காரணத்தால் சர்வப் பிராணிகளும் மின்னல் மீது உபகாரத்தைச் செய்யும். ஹே தேவராஜாவே! இப்பரமான்ம தேவர் மேகங்களிடத்தே யிருந்து கர்ஜனைவடிவ சப்தத்தால் சர்வ ஜீவர்கட்கும் ஆநந்தத்தை யுற்பன்னம் செய்கின்றனர். இக்காரணத்தால் மேகம் சர்வ ஜீவர்களின் மீதும் உபகாரத்தைச் செய்யும். அப்பரமான்ம தேவர் ஜீவர்களின் தொனிரூப சப்தத்தின்கண் இருந்து அக்கர்ஜனையோடு கூடிய மேகத்தை மேன்மையாய் அங்கீகரித்

* உஜ்வலம் = ஒளிர்வு, பிரகாசம்.

துளார். கருத்திதுவாம்:—முகத்தின்கண் இராநின்ற உமிழ்நீர் பாகியரச ஞானத்தின்கண்ணே காரணமாவதேபோல, அந்தர்(உள்)த்தொனிரூப சப்தமும் பாகியசப்த ஞானத்தின் கண்ணே காரணமாம். இக்காரணத்தால் சர்வப் பிராணிகளும் மேகங்களின் மீது உபகாரஞ் செய்யும். ஹே தேவராஜாவே! இப்பரமான்ம தேவர் ஆகாசத்தின்கண் இருநது சர்வப் பிராணிகளின் இருதயரூப துவாரத்தை யடைந்துளா ராதலின், ஆகாசம் சர்வப் பிராணிகளின் மீதும் உபகாரம் செய்யும். ஹிருதயாகாயத்தின்கண் இருந்து இப்பரமான்ம தேவர்யாண்டும் வியாபக ஆகாசத்தையறிவர். கருத்திதுவாம்:—நேத்திராதிகளால் ரூபமற்ற ஆகாசத்தின் ஞானம சம்பவியாது; மற்றோ சாக்ஷி சைதன்யத்தால் ஆகாசத்தின் ஞானமுண்டாம். அச்சாக்ஷி சைதன்யம் விசேஷமாய் ஹிருதயாகாயத்தின் கண்ணேயிருககும் இக்காரணத்தால் சர்வப் பிராணிகளும் ஆகாயத்தின்மீது உபகாரம் செய்யும். ஹே தேவராஜாவே! அப்பரமான்ம தேவர்தர்மத்தின் கண்ணிருந்து சர்வ ஜீவர்கட்கும் சுகத்தை யடைவிப்பராதலின், தர்மம் சர்வ ஜீவர்களின்மீதும உபகாரத்தைச செய்யும். அப்பரமான்ம தேவர் தர்மமுடைய ஜீவர்களிடத்தே யிருந்து மீண்டுந் தர்மத்தைச் செய்வராதலின், சர்வப்பிராணியும் தர்மத்தின்மீது உபகாரததைச்செய்யும. ஹே தேவராஜாவே! அப்பரமான்ம தேவர் சத்திய வாக்கியததின் கண்ணிருந்து ஜீவர்கட்கு உண்மையாய பொருளையுணர்த்துவராதலின், சததிய வாக்கியம் சர்வ ஜீவர்களின்மீதும் உபகாரம் செய்யும். அப்பரமான்ம தேவர் மெய்பேசும புருஷர்பாலிருந்து மீண்டும் சத்திய வாக்கியத்தை உசசாரணம் செய்வராதலின், சர்வ ஜீவரும் சத்திய வாககியத்தின்மீது உபகாரம் செய்வா. ஹே தேவராஜாவே! அப்பரமான்ம தேவர் மனுஷ்யத்தன்மை பிராஹ்மணத்தன்மை முதலிய ஜாதிகளிடத்திருநது அதிகாரததைச சம்பாதிக்கும வாயிலாய் ஜாதி யபிமானி ஜீவர்கட்குச் சுகத்தை யடைவிப்பராதலின், மனுஷ்யத்தன்மை பிராஹ்மணத்தன்மை முதலிய ஜாதிகள் சர்வ ஜீவர்களின்மீதும் உபகாரத்தைச செய்யும். அப்பரமான்ம தேவர் மனுஷ்ய வியக்தியின்கண்ணும், பிராஹ்மண வியக்தியின்கண்ணும் இருந்து, யான் மனுஷ்யன், யான் பிராஹ்மணன் என மனுஷ்யத்துவாதி ஜாதிகளைத் துணிவர். ஆதலின், மனுஷ்யாதி சர்வப்பிராணிகளும, மனுஷ்யத்துவாதி ஜாதிகளின்மீது உபகாரத்தைச் செய்வர். ஹே தேவராஜாவே! அப்பரமான்ம தேவர் தேகம், இநதிரியம், மனம், பிராணன், புத்தி என்பனவாய இக்கூட்டத்தின்கண் இருந்து விஞ்ஞானமய போக்தாவிற்கு ஜனனமரணாதிகளை யடைவிப்பர். கருத்திதுவாம்:—தேகமுதற் புத்திபரியந்த மிராநின்ற கூட்டமாகிய உபாதியின்கண் இருக்கும் ஜன்மாதி தர்மங்களால் விஞ்ஞான மயனை ஜன்மாதி தர்மங்களுடையவனாகச் செய்விப்பர். ஆதலின், இக்கூட்டம் விஞ்ஞானமய போக்தாவின்மீது உபகாரத்தைச் செய்யும். அப்பரமான்ம தேவர் புத்தி விருத்திகளின் கண் இருந்து விடய ஸகித புத்தியை யொளிர்விப்பர்; ஆதலின், அவ்விஞ்ஞானமயன் அக்கூட்டத்தின்மீது உபகாரஞ் செய்வன். ஆகையால், ஹே தேவராஜாவே! முற்கூறிய நெறியே பிருதுவி முதலிய வற்றின்கண் இருந்து எப்பரமான்ம

தேவர் யாண்டும் உபகாரத்தைச் செய்வரோ, அவர் நாய்க்கும், உமக்கும் ஒருவரேயாவர். ஹே தேவராஜாவே! தேனீயானது ஸர்வ புஷ்பங்களினின்றும் மதுவடிவரசத்தைக் கவர்ந்து ஓரிடத்தாக்கும். ஆதலின், தேனீ மதுவடிவ ரசத்தின்மீது உபகாரத்தைச் செய்யும். அம்மதுரூப ரசமும் அத்தேனீக்களின் பசியை நீக்குமாதலின், அம்மதுவடிவ ரசம் அத்தேனீக்களின்மீது உபகாரத்தைச் செய்யும். இவ்வண்ணம் தேனீயும், மதுவடிவ ரசமும் பரஸ்பரம் உபகாரஞ் செய்துகொள்ளும். இதுபோல பிருதுவி முதலாக எவ்வளவு ஜகத்மண்டலமுளவோ அவை எவ்வெப்பிராணிகளின்மீது உபகாரத்தைச் செய்யுமோ, அவ்வப்பிராணிகள் அவ்வப்பிருதுவி முதலியவற்றின்மீது உபகாரத்தைச் செய்யும். உலகின்கண் தனிகனைவன் தனது வேலையாட்களிடத்தே தனதிபதார்த்தங்களினது அடைவின் வடிவ உபகாரத்தைச் செய்வன். அவ்வேலையாட்களும் அத்தனிகனுக்குப் பலவகையாய பணிவிடைவடிவ உபகாரத்தைச் செய்வர். ஹே தேவராஜாவே! பிருதுவிமுதலிய எவ்வளவு பதார்த்தங்களின் உபகாரத்தையாம் உம்பொருட்டுக் கூறினேமோ, அவையாவும் திருஷ்டாந்த மாத்திரத்தைத் தெரிவிக்கும் பொருட்டுக் கூறியவையாம்; உண்மையாய் அவ்வுபகாரம் அநந்தவகையாம். இவ்வார்த்தை ஸ்ரீ சுரேஸ்வராசாரியரும் கூறியுள்ளார்:—

௬௩. ஸர்வம் ஸர்வஸ்ய கார்யம் ஸ்யாத் ஸர்வ: ஸர்வஸ்ய போஜக: ।
இத்யேஷா மதுவித்யா த்ரைவிஷ்ட்யக்லேசஹாரிணீ ॥

யாவும் யாவற்றின் காரிய மாகியே யமையும்
யாவும் யாவற்றின் போஜக மாகியே யமையும்
வீவி லிவ்வகை யிம்மது வித்தைதா னீண்டே
ஓவி லாவிட மத்தன்மைக் கிலேசத்தை யொழிக்கும்.

இதன்பொருள்:—எல்லாப்பொருள்களும் எல்லாப்பொருள்களின் காரியங்களாம், எல்லாப் பொருள்களும் எல்லாப் பொருள்களின் போக்தாக்களாம், இவ்வகையாய மதுவித்தை விஷமத்தன்மை வடிவக்கிலேசத்தை நீக்குவதாம். ஆகையால், ஹே தேவராஜாவே! முற்கூறியபிருதுவி முதலிய பதார்த்தங்களுள் ஒவ்வொரு பதார்த்தங்களும் தம்மின்வேறாய சர்வபதார்த்தங்களின்மீதும் உபகாரத்தைச் செய்யும். கருத்திதுவாம்:—பஞ்சீகாணத்தின் ரீதியாய்ப் பிருதுவி தனது பாகங்களைக் கொடுத்து, ஜலாதிகளைநிறைவிக்கும். அந்த ஜலாதிகளும் தத்தம்பாகங்களைக் கொடுத்துப் பிருதுவியை நிறைவிக்கும்; இந்நெறி யாண்டும் காண்க. ஆகையால், ஹே தேவராஜாவே! ஒரு சரீரத்தின் கரசரணாதி அவயவங்கள் பரஸ்பரம் உபகாரஞ்செய்யும் ஆதலின், அவ்வவயவங்கட்கு ஒரே ஆன்மாவாம். அதுபோலப் பிருதுவி முதலிய பதார்த்தங்களும் முற்கூறிய நெறியே பரஸ்பரம் உபகாரஞ் செய்யும். ஆதலின், அவற்றிற்கும் ஒரே ஆன்மாவை அங்கீகரித்தல் தகுதியாம். ஹே தேவராஜாவே! அப்பரமான்மதேவர் தமது ஸ்வப்பிரகாச தேஜசால் விசேஷமாய் விளங்குவர். ஜனனமரணாதி விகாரங்களற்றவர். ஆகையால் பரம அமிர்தரூபர், அவரே சம்பூரணப் பிராணிகளின் ஹிருதய தேசத்தின்கண் இருந்து புத்தியின் சர்வ விருத்திகளையும் ஒளிர்விப்பர், உண்மையாய்ச்

சங்கரகிதர். ஹே தேவராஜாவே! எப்பரமான்மதேவர் ஸ்தாவரஜங்கமரூப சர்வசரீரங்களிடத்தும் அஸ்திபாதிப் பிரியரூபமாய் நிலைபெற்றிருக்கின்றனரோ, அவரே உமக்கும் நாய்க்கும் ஆத்மாவாம். ஹே தேவராஜாவே! கடமடரூப உபாதிகளிலுள்ள பேதமானது, அசங்க வாகாசத்தைத் தீண்டாததேபோலச் சரீரவடிவ உபாதிகளில் இரானின்ற பேதமானது அசங்க ஆன்மாவைத் தீண்டமாட்டாது ஹே தேவராஜாவே! சர்வஜீவர்களின் ஹிருதய தேசத்தின்கண் இருப்பதும், ஜனனமரண மற்றதும், சர்வபேதங்களு மற்றதும், யாவற்றிற்கும் ஆன்மரூபமானதும், ஆய எந்தப் பிரஹ்ம சொரூபத்தை யாம் நும்பொருட்டுக் கூறினோமோ, அதுவே தனதாத்ம ஞானத்தால் சர்வாத்மபாவத்தை யடைந்தது. இவ்வார்த்தை முன்னர்ப் பிராஹ்மணர்களின் பரஸ்பர விசாரத்தின்கண் யாம் நும்பொருட்டுக் கூறியுள்ளேம். ஹே தேவராஜாவே! அப்பரமான்மதேவரே சம்பூர்ண ஜீவர்களையும், தேவதைகளாய உங்களையும தமது வயத்தேவைத்துக் காப்பாற்றுவர். ஆகையால், இந்திரனுகிய யானே, சர்வஜீவர்களையுங் காப்பாற்றுகின்றேன் என்னும் உமதபிமானம் பயனறறதேயாம. சூரியபகவான் பிரஹ்மாண்டத்தின்கண் இருந்து யாவற்றையும் ஒளிர்விபபதேபோல, இபபரமான்மதேவர் சர்வபூதங்களினுள் இருந்து ஒளிர்விபபர். ஆதலின் இபபரமான்மாவே ராஜாவாம். இந்திரனுகிய யான் மூவுலகிற்கும் இராஜாவென்னும் உமதபிமானம் பயனற்றதேயாம். தேரின் சக்கரத்தின்கண் நேமி, நாபி, அராவென்னும் மூவகையாய காஷ்டங்கள் உள, அவற்றுள், பூமியைப் பரிசிபபதாய்ச் சந்திரனைபபோல வட்டவடிவினதாய காஷ்டம் நேமியெனபபடும. யாதின்கண் சலாகையுருளா நிற்குமோ அது நாபியெனப்படும். நாபிக்கும் நேமிக்கும மத்தியில இராநின்ற வக்கிரகாஷ்டத்தை அரா என்பர். அவ்வராச் சுதந்திரமாய் இராது; மறறு நேமி நாபிகளின் ஆசிரிதமாயிருக்கும். அதுபோலப் பிருதிவியின் அபிமானியாய ஆன்மாவினம்சம் நேமியோடொத்ததாம். சரீராபிமானியாய ஆன்மாவினம்சம் நாபியோடொத்ததாம். சர்வ சரீரங்களும் பிருதிவியும் அராவோடொக்கும். ஆண்டுப் பிருதிவியின் அபிமானியாய ஆன்மாவினம்சத்தையும் சரீராபிமானியாய ஆன்மாவினமசத்தையும பற்றியே சம்பூர்ண சரீரங்களும் பிருதிவியுமிருக்குமன்றிச் சுதந்திரமாயிரா. ஆன்மாவின் அவ்விரண்டம்சங்களும் முற்கூறிய முறையே யாவற்றிற்கு முபகாரம் செய்யும்பொருட்டுப் பிருதிவி முதலியவற்றின்கண் இருப்பனவாம். இம்முறையை நீர்முதலிய பொருள்களின்கண்ணும் அறிந்துகொள்க. ஹே தேவராஜாவே! தேரின் உருளையில ஒரே சிம்சபாகாஷ்டம், நேமி, நாபி, அரா என்னும் மூவுருவைத் தரித்து உபகாரக உபகார்யபாவத்தையும், ஆதார ஆதேய பாவத்தையுமடையும். அதுபோல, ஒரே பரமான்மதேவர் பிருதிவிமுதலிய அதிதைவபாவத்தையும், சரீராதி அத்தியாத்மபாவத்தையும், பிருதிவிமுதலியவற்றின் அபிமானியாய புருஷபாவத்தையும் அடைந்து, யாண்டும் உபகாரத்தைச்செய்வர். ஹே இந்திரரே! தேவதைகளாகிய நீவிரும் பிருதிவிமுதலிய பதார்த்தங்களும் எவர்மீதும் உபகாரம்செய்வதின்றும்; ஆகையால், யானே உபகாரம் செய்கின்றேன் என்னும் உமது அபிமானம் பயனற்றதாம்.

சங்கை :—ஹே பகவன்! பரமான்மாவே யாண்டுமிருந்து உபகாரத்தைச் செய்யுமென்னும் வார்த்தை சத்தியமாயினும், அப்பரமான்மதேவர் மேன்மை பொருந்திய தேவதாதி சரீரங்களிலிருந்தே யாண்டு முபகாரத்தைச் செய்வர். நாய்முதலிய கீழானசரீரங்களிலிருந்து அப்பரமான்மதேவர் யாவர்மீதும் உபகாரத்தைச் செய்யார்.

சமாதானம் :—ஹே தேவராஜாவே! மேன்மையாய சரீரத்தின்கண் இருந்தே பரமான்மா உபகாரத்தைச் செய்வர் என்னும் உமதபிமானம் பயனற்றதேயாம். ஏனெனின், எப்பரமான்மதேவர் தேவதைகளாகிய உங்களது இருதயத்தின்கண் இருந்து யாண்டு முபகாரத்தைச் செய்வரோ, அவரே நாயின் இருதயத்தின்கண் இருந்தும் யாண்டும் உபகாரத்தைச் செய்வர். ஆகையால், ஹே தேவராஜாவே! மிருதியாகக் கூறுவதில் யாது பயன், சுருக்கமாய் ஆன்மாவின் வாஸ்தவசொரூபத்தை நீர் நிச்சயஞ்செய்யும்.

இப்போது அச்சுருக்கத்தைக் காண்பிப்பாம் :—ஹே தேவராஜாவே! சத்துவகுணத்தோடுகூடிய இருஷிகளாய எங்களிடத்தும், இரஜோகுணத்தோடு கூடிய தேவதைகளாகிய உங்களிடத்தும், தமோகுணத்தோடுகூடிய நாய்முதலிய பசுக்களிடத்தும் இப்பரமான்மதேவர் சமானவியாபகராம்.

சங்கை :—ஹே. பகவன்! நாயை யாவரும் நிந்திப்பர், தேவதைகளையோ லோகர் நிந்தை செய்யார்; ஆகையால், தேவதாசரீரம் மேன்மையதாம்.

சமாதானம் :—ஹே தேவராஜாவே! இத்தகையவுமதபிமானமும் பயனற்றதேயாம்; ஏனெனின், எங்ஙனம் தேவதைகளாய நீவிரும், மனுஷராய யாங்களும், நாயின் பிறப்பை நிந்திக்கின்றேமோ, அங்ஙனமே நமக்குவிஷயத்தில் ஆசக்தியிருப்பதைக் கண்ணுற்றுப் பிரஹ்மவேத்தாக்களாய விரக்தபுருஷர், நமது பிறப்பையும் நிந்திப்பர். ஹே தேவராஜாவே! எங்ஙனம் தேவதைகளாகிய உங்கட்கும் மனுஷராய எங்கட்கும் தத்தம் சரீரத்தின்கண்ணே மேன்மை மதியுளதோ, அங்ஙனமே நாய்க்கும் தன் சரீரத்தில் மேன்மை மதியுளது. ஆகையால், ஹே தேவராஜாவே! எவ்வான்மாவின் தாதாத்மிய சம்பந்தத்தால் கீழாய சரீரத்தின் கண்ணும் மேலாய மதிதோற்றுமோ, அவ்வாநந்த சொரூப ஆன்மாவே அதிகாரி புருஷரால் அறிய யோக்கியமாம். ஹே தேவராஜாவே! அத்தகைய ஆநந்த சொரூப ஆன்ம ஞானத்தின்கண் யானென தென்னும் அபிமானமே பிரதிபந்தகமாம். ஆகையால், சரீரத்தின்கண் யானென்னும் அபிமானத்தையும், தேவதா ஸ்திரீகளோடு கூடிய சுவர்க்கத்தின் கண்ணே யெனதென்னும் அபிமானத்தையும் பரித்தியாகம் செய்து, நீர் ஆன்மாவை நிச்சயம் செய்யும். ஹே தேவராஜாவே! எச்சரீரத்தின் கண்ணே யுலகர் யானென்னும் அபிமானம் செய்துளரோ, அச்சரீரமானது நாயின்விட்டை துர்க்கந்தத்தோடு கூடியிருப்பதே போலத் துர்க்கந்தத்தோடு கூடியிருப்பதாம்; கணந்தோறும் பரிணமத்தை யடைவதாம். இத்தகைய சரீரத்தின்கண் புத்திமானாய புருஷன் யானென அபிமானித்தலுசித மன்றும். ஹே தேவராஜாவே! எதுவரை ஜீவர்கட்குச் சரீராதிகளிடத்தே யானென்னும் புத்தியுளதாமோ, ஸ்திரீபுத்திர தனாதிகளிடத்தே எனதென்

னும் புத்தியுளதாமோ அதுவரை ஜீவர்கட்கு ஆநந்த சொரூப ஆன்மாவின் அடைவும், ஜன்மமரணாதி துக்கங்களின் நிவிருத்தியும் உண்டாக மாட்டா. ஆகையால், ஹே தேவராஜாவே! சரீரத்தின்கண் யானென்னும் அபிமானத்தையும் தேவ ஸ்திரீகளோடு கூடிய சுவர்க்கத்தின்கண் எனதென்னும் அபிமானத்தையும் பரித்தியாகம் செய்து, ஆநந்த சொரூப ஆன்மாவை நீர் நிச்சயம் செய்யும். இருஷி கூறல் :—ஹே அசுவினீ குமாரரே! இங்ஙனம் உமதாசிரியராகிய தத்யங் இருஷியானவர் பலவகையாய யுக்திகளால் இந்திரர்பொருட்டுப் பிரஹ்ம வித்தையை யுபதேசம் செய்தனர். அவ்வுமதாசிரியர், தேவராஜாவிற்குப் பிரஹ்ம வித்தையின்கண் அதிகாரமின்றெனத் தெரிந்திருந்தும், தமது பிரதிஞ்ஞையை யுண்மையாக்கும் பொருட்டுச் சம்பூர்ணப் பிரஹ்மவித்தையை யுபதேசம் செய்தனர். ஹே அசுவினீ குமாரரே! இவ்வண்ணம ஆநந்தத்தைக் கொடுப்பதாய தத்யங் இருஷியினுடைய வாக்கைக் கேட்டும், அத்தேவேந்திரர் ஆநந்தத்தை யடைந்திலர்; மற்றோ, விஷயங்களின் ஆசக்தியால் அந்தகனை இந்திரன் மாறாய்க் குரோதத்தை யடைந்தனன். ஒருதயாளுவானவன் பசியோடுகூடிய சர்ப்பத்தைப்பார்த்து அதற்குப் பாற்பானம் செய்விப்பின், அப்பாலைப் பானஞ் செய்த அச்சர்ப்பம் அத்தயாளுவின் பிராண ஹானி செய்யக் குரோதத்தையடையும். அதுபோலத் தனமதத்தால் அந்தகனை இந்திரன் தத்யங் இருஷியின் அமிருத மயமாகியவாக்கைக் கேட்டும் குரோதத்தையே யடைந்தனன். கருத்திதுவாம் :—உலகின்கண் எப்புருஷனுக்கு எவ்வெப்பொருள்களின்கண் ஆசக்தி யிருக்குமோ, அவ்வப் பொருள்களை எவரேனும் நிந்திப்பின் அப்புருஷர் நிந்தை செய்யும் அவர்மேல் அத்தியந்தங் குரோதத்தை யடைவர்; அது போலச் சுவர்க்காதி போகங்களில் ஆசக்தியையுடைய இந்திரன் அச்சுவர்க்காதி போகங்களின் நிந்தையைக் கேட்டு அத்தியந்தங் குரோதவானாயினன். ஹே அசுவினீ குமாரரே! குரோதத்தோடு கூடிய அவ்விந்திரன் தனதுமனத்தின்கண் இவ்வாறு ஆலோசிக்கலானான்:—எனதுபகைவராய அசுரர் எனது அரசை யான் பரித்தியாகம் செய்யும்பொருட்டு இப்பிராஹ்மணனைத் தமது பக்ஷத்தில் அனுப்பியுள்ளார்போலும், அதனாற்றான் இவன் என்பொருட்டுச சுவர்க்க பரித்தியாக உபதேசம் செய்கின்றனன். அல்லது உண்மையாய் விசாரஞ் செய்துபார்க்கின், இப்பிராஹ்மணன் மேன்மையுடையவனல்லன். ஏனெனின், மேன்மையுடையனாயிருப்பின் பொய் வசனத்தைக் கூறானன்றோ? இத்துராத்மாவோ எவ்வாற்றானும் பொய்யே புகன்றனன். ஏனெனின், மூன்றுலோகத்திற்கும் அதிபதியாயிருக்கும் இந்திரனை வென்னை நாய்க்குச் சமானமாய்க் கூறினனன்றோ. ஆகையால், இப்பிராஹ்மணனுக்குச் சமானமாய் எம்மித்தியாவாதியுமின்றாம்.

இப்போது இவ்வர்த்தத்தையே வெளிப்படையாய்க் காண்பிப்பாம் :—பிரஹ்மஹத்தி செய்பவனுக்கு மறுபிறப்பில் நாய்ச் சரீர முண்டாமாதலின், நாய்ச் சரீரம் பிரஹ்மஹத்தியின் பலமாம். அந்நாய் மலமுதலிய வசுத்த பதார்த்தங்களைப் பக்ஷணஞ் செய்யும். அந்நாயைத் தீண்டுதலானும் உலகர் ஸ்நானஞ் செய்வர். நாயோ இவ்வகையாயுள்ளது, இந்திரனாகிய யானோ, நூறு அசுவமேத யாகஞ் செய்து இப்பதத்தை யடைந்துளேன் ஆதலின், அசுவமேத யாகங்களின் பலம்

இந்திர சரீரமாம். இந்திரனாகிய நான் எப்போதும் அமிர்தபானஞ் செய்கின்றேன். உலகர்க்கு எனது தரிசனம் நீண்டகாலம்வரை உபாசனை செய்தலாற் கிடைக்கும். இத்தகைய இந்திரனாகிய வென்னை இத்துராத்மாவாய பிராஹ்மணன் எல்லாவகையாலும் நாய்க்குச் சமானமாயே கூறினன்; ஆகையால், இப்பிராஹ்மணன் அத்தியந்தம் மித்யாவாதியாவன். அல்லது, யாகங்களாலுந் துர்லபமாய தெய்வப் பெண்களின் சரீரத்தை இப்பிராஹ்மணன் பெண் நாயின் சரீர சமானமெனக் கூறினன், எவ் வபிப்பிராயத்தால் இவன் இத்தகைய அநுசித வசனத்தைக கூறினனோ, அவ்வபிப்பிராயத்தை யான் அறிந்தேன். அல்லது, வஜ்ஜிரத்தைத் தரித்த இந்திரனை யான் ஒருவனாகவே சம்பூர்ண ஜகத்தையும் வசஞ் செய்வதில் சமர்த்தனாவேன், அத்தகைய இந்திரனை வென்னிடத்தில் சுவான சமானத்தன்மையை எந்நிமித்தங்கொண்டு இப்பிராஹ்மணன் கூறினன். எவ்வகையாலும் இவன் மித்தியாவாதியே யாவன். ஆகையால், இவன் பிராஹ்மணனல்லன்; மற்றோ, இவன் ஓரசுரனாவன், சுவர்க்கத்தைக் கவரும்பொருட்டுத் தவத்தையுடைய பிராஹ்மண வடிவந்தரித்து தேவதைகளாய வெம்மனோர் மதிகளையும், அந்நிய பிராஹ்மணாதி வருணங்களின் மதிகளையும் கெடுக்கும் பொருட்டு வந்துளான். அல்லது, இவன் ஒருகால் பிராஹ்மணனாயினும் தேவதைகளாகிய வெமது பக்ஷத்துள பிராஹ்மணனன்றாம். மற்றோ, தைத்தியர்களின் குருவாய சுக்கிரனேயாவன், அல்லது, சுக்கிரனுக்குச சண்டாமர்க்கரெனப் பெயரிய விரண்டு புத்திரர்களுளர்; அவர்கள் அத்தியந்தம் புத்திமான்கள், அவ் விருவருள் இவன் ஒருவனாவன். அல்லது, இததுராத்மாவிற்குப பிராஹ்மணத தன்மையைவிசாரிப்பதிற் பயனின்றாம். ஆகையால,இவ்வதம புருஷனை யிப்போதே யான் கொல்லல்வேண்டும். அல்லது, இவ்விடததில் நின்று மிவனையான் துரத்தல் வேண்டும். ஹே அசுவினீ குமாரரே! இவ்வண்ணம் அவ்விந்திரன் தனது மனத்தில் ஆலோசித்து, இங்ஙனம் நிச்சயஞ் செய்தனன்:—யான் இவ்வதமப் பிராஹ்மணனை யிப்போதே கொல்லினும், அல்லது இவ்விடத்தினின்றுந் துரத்திவிடினும, உலகின்கண் எனக்கு அபகீர்த்தி யுண்டாம். ஆகையால், வேறோருபாயத்தால் இவ்வதமப் பிராஹ்மணனை யான் கொல்லா நிற்பேன்; அல்லது, எனது அசுவினீ குமாரர்களாகிய மதியுடைய தேவதைகளையும், இவ்வதமப பிராஹ்மணனே யென்னோடு பகைக்குமாறு செய்தவனாவன். ஆகையாலும், இப்பிராஹ்மணன் தண்டித்தற்குத் தகுதியானவனே யாவன். ஆகையால், இப்பிராஹ்மணனுக்குப் பிரஹ்ம வித்தையின் உபதேசத்தைச் செய்யாதொழியுமாறுயான் ஆஞ்ஞை கொடுப்பேன். இப்பிராஹ்மணன் எனதாஞ்ஞையை மதியாமல் யாவர் பொருட்டேனும் பிரஹ்ம வித்தையின் உபதேசத்தைச செய்யின், யான் இவன் மஸ்தகத்தைச சேதிப்பேன். ஹே அசுவினீ குமாரரே! இவ்வண்ணம் உபாயத்தை யாலோசித்து அவ்விந்திரனவன் உமது குருவாய தத்யங்ஙிஷியை நோக்கி, இவ்வண்ணம் ஆஞ்ஞை செய்தனன்:—ஹே பிராஹ்மண! என் பொருட்டு நீ உபதேசித்த பிரஹ்மவித்தையை இன்றுமுதல்வேறொருவர்பொருட்டுஉபதேசிக்கின், வஜ்ஜிராயுதத்தால் உனது மஸ்தகத்தைச் சேதிப்பேன். ஹே அசுவினீ குமாரரே! இந்தப பிரகாரம் தேவராஜா உமது குருவாய தத்யங் ஙிஷியின் பொருட்டு ஆஞ்ஞை செய்தபோது, அவர்

அவ்விந்திரன் மீது சிறிது மாத்திரமுங் குரோதத்தைச் செய்திலர்; மாறாய்ப் பிரஸன்ன மனமுடையவராய், அவனது ஆஞ்ஞையால் தனது இஷ்ட சித்தி யுண்டானதா யெண்ணினர்.

இப்போது எவ்விசாரத்தால் தத்யங் ரிஷிக்கு மகிழ்வுண்டாயிற்றோ அவ் விசாரத்தை நிரூபிப்பாம் :—இத்தேவராஜாவின் ஆஞ்ஞையைக் காப்பாற்றுவே னுயின், எனக்கு இருவகையாய தோஷநிவிருத்திவடிவ இஷ்டவர்த்தத்தினடை வுண்டாம். அவற்றுள் ஒன்றோ, பிரஹ்மவித்யா உபதேசத்தின்கண், * நிஷ்டுரத்தன்மைரூப தோஷ நிவிருத்தியுண்டாம்; மற்றொன்றோ, அநதிகாரி புருஷரின் பொருட்டுப் பிரஹ்ம வித்யாதானரூப தோஷ நிவிருத்தியுண்டாம்; ஆகையால், இந்திரனது ஆஞ்ஞை என்னுல் காப்பாற்றத் தக்கதாம். அல்லது எங்ஙனம் வித்தையை உபதேசித்ததின் பின்னர்க் குருவின் சந்தோஷத்தின் பொருட்டுச் சிஷ்யன் ஆசிரியர்க்குத் தக்ஷிணை கொடுப்பனோ, அங்ஙனம் இவ் விந்திரனுப சிஷன் இவ்வாஞ்ஞை வடிவ தக்ஷிணையை என்பொருட்டுக் கொடுத்தனன். இத்தக்ஷிணை யெனக்குப் பரமவநுகூலமாயிருக்கின்றது. ஏனெனின், இவ்வாஞ்ஞையின் பின்னர்த் துர்பபுத்தியையுடைய அநதிகாரியின் பொருட்டு யாரொருகாலும் பிரஹ்மவித்தையை உபதேசஞ் செய்யேன். அல்லது, காமக்குரோதாதிகளோடு கூடிய அநதிகாரிபுருஷரின் பொருட்டுக் கொடுத்த பிரஹ்மவித்தையானது பயனற்றதாம். சண்டாளன் பொருட்டுக் கொடுத்த கோதானம் நிஷ்பலமாதலே போலும், ரூபமும, யௌவனமு முடைய தனது கன்னியை நபும்ஸகன் பொருட்டுக் கொடுப்பின் நிஷ்பலமாவதேபோலும், விஷயாசக்த அநதிகாரியின் பொருட்டுக் கொடுத்த பிரஹ்மவித்தையும் நிஷ்பலமாம். அல்லது, எவ்வித்வானுனவன் நேயத்தால் மோஹிதனுயேனும், தனத்தால் மோஹிதனுயேனும், விஷயாசக்த வநதிகாரிகளின் பொருட்டுப் பிரஹ்மவித்யா உபதேசஞ் செய்கின்றனனோ, அவ்வித்வான் தன்னையும் பிரஹ்மவித்தையையும், கேட்பவனையும் நாசஞ்செய்தவனுவன். கருத்திதுவாம் :—அநதிகாரி புருஷர்க்குப் பிரஹ்மவித்தியா உபதேசஞ் செய்தால் பிரஹ்மவித்தை நிஷ்பலமாம், அநதிகாரியாய சுரோதா இரண்டு லோகத்திலும் பிரஷ்டனுவன் பிரஹ்மவித்தையைக் கூறுவோனுக்குத் துவேஷப்பிராப்தி யுண்டாம். இவ்வார்த்தை மஹாபாரதத்தின் கண்ணுங் கூறப்பட்டுளது :—

யஹ்ராயஶெ-ஊ வெஶப்ர-ாயாக யஹ்ராயஶெ-ஊவபூஜ்கி ।
தயொாஈஷ்ஹாஃ வைஶ்ரகி விஜெஷம் வாயிமஜ்கி ॥

அறநெறி வழுவியாவ னறைகுவ னவனுமாங்கே
அறநெறி வழுவியாவன் கேட்பனிங் கவனுமாய
செறியிரு வரினுள்ளேகன் செல்குவன் அலதுதானே
குறையுறு மிகுதுவேடங் கொள்ளுவன் மெள்ளவன்றே.

* நிஷ்டுரத்தன்மை = கரோத்தன்மை.

இதன் பொருள் :—எப்புருஷன் அதர்மத்தால் ப்ரஹ்மவித்தையைக் கூறுவனோ, எப்புருஷன் அதர்மத்தால் ப்ரஹ்ம வித்தையைக் கேட்பனோ, அப்புருஷருள் ஒருவன் போய்விடுவன், அல்லது த்வேஷத்தை யடைவன். ஆகையால், அநதிகாரிபுருஷரின் பொருட்டுப் ப்ரஹ்மவித்யா உபதேசஞ் செய்தல் யோக்கிய மன்றும். அல்லது அதிதிக்குச் சன்மானஞ்செய்வதில் தற்பரராயும், தபசிகளாயும், முனிகளாயும் இராநின்ற எங்களுக்கு வேறொரு பாவ உற்பத்தி நிமித்தமுமின்றும்; அநதிகாரி புருஷர்கட்குப் ப்ரஹ்மவித்யா உபதேசமே பாவ உற்பத்தி நிமித்தமாம்.

இப்போது இந்திரரது ஆஞ்ஞாரூப கிருபையினல், அப்பாவமும் உற்பன்னமாகாது. அல்லது, எவர்களுடைய சங்கத்தால் அநந்தவகையாய பேதபுத்தி யுண்டாமோ, பகிர்முகமனத்தினையுடைய வத்தகைய மநுஷ்யர்கள், தேவதைகள், அசுரர்கள் முதலியோரால் எனக்குச் சிறிது மாத்திரமும் ப்ரயோஜன மின்றும். மாறுய், அப்பேதவாதியரின் சங்கத்தாற் சித்தம் பகிர்முகமாம். அப்பேத தரிசிகள் ஜாக்கிராவஸ்தையின்கண் எவ்வெப் பதார்த்தங்களை யநுபவிக்கின்றார்களோ, அவ்வவ்வநுபவஜன்னிய சம்ஸ்காரமஹிமையால் அவ்வப்பதார்த்தங்களைச் சொப்பனத்தின்கண்ணடைவதுபோல, மரணகாலத்தின்கண்ணும் அவ்வப்பதார்த்தங்களை யடைவர். ஆகையால், பேதபுத்தியே ஜீவர்களின் ஜனனமரணரூப சம்சார காரணமாம். என்னிடத்தில்பேதபுத்திக்குக்காரணம் வேறொன்றுமின்றும்; மற்றோ, சீஷர்கட்குப் ப்ரஹ்மவித்யா உபதேசரூபகாரியமே எனது பேதபுத்திக்குக்காரணமாம். ஆகையால், அந்தப் பேதபுத்தி ஜன்னிய சம்ஸ்காரம் அஞ்ஞானி ஜீவர்கட்கே போல, எனக்கும் ஒருகால் ஜன்மாதிகளைக் கொடுக்கும். அல்லது யான் குரு, இவன் சீஷன் என்னும் பேதபுத்தி அவித்தையினலன்றி யுண்டாகாது. ஆகையால், உபதேசகாலத்தின்கண் அந்தப் பேதபுத்தி அவித்தையாலன்றிப் பொருந்தாததாய்ப் ப்ரஹ்மவேத்தாவாய புருஷனிடத்தும் அவித்யாலேசத்தை யுணர்த்தும். ஆகையால், வித்யாவுபதேசகாலத்தின்கண் பாமர அஞ்ஞானி புருஷனைப்போல யான் ஆவேன். அல்லது இதுயான், இதுவெனது, இதுவெனதன்று என்னும் பேததரிசனம் எதுவரை ஜீவர்கட்கு ஒழியாதோ, அதுவரை தேகரூபகாராக்ரஹத் (சிறைச்சாலை) தினின்றும் ஜீவர்கட்கு விடுபடலுண்டாகாது. ஆகையால், பேத தரிசனமே ஜீவர்கட்குப் பந்தனகாரணமாம், அத்தகைய வெனது பேத தரிசனத்தை இவ்விந்திரர் கிருபையினலே நீக்கினர். ஆகையால், தெய்வ அதர்வணரெனப் பெயரிய வெனதாசிரியரினும் இவ்விந்திரர் பரமாசிரியராவர். கருத்திதுவாம் :—ஆன்மசாக்ஷாத்காரத்தின் பின்னர் ஜீவன் முத்திச் சுகத்தின் பொருட்டு மனோநாசவாசனக்ஷயங்கள் அவசியம் என்றுற் செய்ய யோக்கியங்களாம். அவ்விரண்டுபாயங்களையும், தெய்வ அதர்வணரெனப் பெயரிய ரிஷியானவர் பரம்பரையாய் என்பொருட்டுபதேசித்தனர். ஆகையால், அவ்விருஷி யெனது குருவாம், இவ்விந்திரரோ சாக்ஷாத்தா(னேரா)கவே யெனக்கு மனோநாசவாசனக்ஷயங்களைச் செய்து வைத்தனர். ஏனெனின், சீஷன் பொருட்டு வித்தையை யுபதேசிக்குங் காலத்தில் எனது சித்தம்பகிர்முகமாம், அதன் நிவிருத்தியின்பொருட்டு இவ்விந்திரர் ப்ரஹ்மவித்தையின் உபதேசம் செய்யாதொழிகவென எனக்காஞ்ஞை

செய்துளார். ஆகையால், இவ்விந்திரர் எனது பரமகுருவாவர். ஹே அசுவினீகுமாரரே! இவ்வகையாய விசாரத்தைத் தனதிருதயத்தின்கண்ணே செய்து அத்தத்யங் இருஷியாய உமது ஆசிரியர் தேவராஜாவாய இந்திரர்மீது பொறுமை செய்தனர்.

சங்கை :—குருவிற்குத் துரோகஞ் செய்யும் இந்திரன் பொருட்டுச் சாபத்தை யவ்விருஷி ஏன் கொடுத்திலர்.

சமாதானம் :—இவ்வண்ணம் தமது மனத்தின்கண் விசாரம் செய்து அவ்விருஷி இந்திரருக்குச் சாபத்தைக் கொடுத்திலர். இப்போதவ்விசாரத்தைக் காண்பிப்பாம் :—நாய் பாம்பு முதலிய தாமதஜீவர்கள் அபகாரிகளாய ஜீவர்களிடத்தே குரோதஞ்செய்யும். இவ்வார்த்தை யுலகின்கண்ணே பிரசித்தமாம். அறிஞனும் அபகாரிஜீவர்மீது குரோதஞ் செய்யின், நாய் சர்ப்பம் முதலிய தாமத ஜீவரினும் அறிஞனிடத்தே யாது சிறப்புளதாம்; மற்றே, நாய் பாம்பு முதலிய வற்றிற்குச் சமானமாகவே அவ்வறிஞனவன். ஆகையால், யாவன் அபகாரிகளாய ஜீவர்கள்மீது குரோதஞ் செய்கின்றிலனே, மாறாய் அவர்மீதுபகாரஞ்செய்வனே அவனே அறிஞனவன். அபகாரிகளாய ஜீவர்கள்மீது யாவன் குரோதஞ் செய்வனே அவனறிஞனல்லன். அல்லது அபகாரிகளாய ஜீவரிடத்தே அறிஞன் குரோதிப்பன் என எவனேனும் உடன்படுவானாயின், அவன்பாலிது கேட்க வேண்டும். கூடஸ்த ஆன்மாவிற்கு அபகாரம எனநினைந்து அவ்வறிஞன் அபகாரி ஜீவர்மீது குரோதஞ் செய்கின்றனனா? அல்லது சரீராதி ஜடபதார்த்தங்கட்கு அபகாரம் எனநினைந்து அவ்வறிஞன் அபகாரிபுருஷர்மீது குரோதஞ் செய்கின்றனனா? அவற்றுள் முதற்பக்ஷமோ பொருந்தாது. ஏனெனின், கூடஸ்த ஆன்மா அவிகாரியாம், அசங்கமாம். ஆகையால், அதன்கண் அபகாரரூபவிகார சம்பந்தஞ் சம்பவியாது. அதுபோலவே இரண்டாவதுபக்ஷமும் பொருந்தாது; ஏனெனின், அறிஞன் சரீராதி ஜடபதார்த்தங்களினும் ஆன்மாவைப் பின்னமாயங்கீகரித்துளான். ஆகையால், சரீராதிகட் கபகாரமுறினும் அறிஞனுக்கு ஆனியில்லை. ஒரு கல்லால் மற்றொருகல்லை யடிப்பதாற் சைதன்ய புருஷர்கட்குத் துக்கத்தின் அடை வுண்டாகாததேபோல, ஜடதண்டாதிகளால் ஜடசரீரத்திற்கபகார முறினும் அறிஞனுக்குத் துக்கம் உண்டாகாது.

சங்கை :—சரீரமானது கற்போலச் சடமாயினும் அச்சரீரம் ஆன்மாவின் சுகசாதனமாம். ஆகையால், சரீரத்திற் கபகாரம் நேரின் அறிஞனுக்குக் குரோதஞ் சம்பவிக்கும். தாசர்கட்கு அபகாரம் நேரின் அரசனுக்குக் குரோத முண்டாவதேபோலும்.

சமாதானம் :—ஒரு புருஷன் தனது ஒருகையால் மற்றொரு கையையேனும், காலையேனும், தலையையேனும், அடித்தானாயின் அவ்வடியால் அப்புருஷனுக்குக் குரோத முண்டாகாதன்றே? ஏனெனின், ஒரு சரீரத்தின்கண்ணே யிராநின்ற ஹஸ்தபாதாதி யவயவங்கட்கு ஆன்மா ஒன்றேயாம். அங்ஙனமே, ஒரு சரீரத்

தால் மற்றொரு சரீரம் தாடனமுறினும் அறிஞருக்குக் குரோத முண்டாகாது. ஏனெனின், சாஸ்திரப் பிரமாணத்தாலும், யுக்தியாலும், தனதநுபவத்தாலும் அறிஞன் எல்லாத் தேகங்களிடத்தும் ஒரே ஆன்மாவை நிச்சயம் செய்துளான். ஆகையால், இத்தகைய அறிஞனுக்குத் தனது சரீரம் சுகசாதனம் ஆவதே போலச் சர்வ சரீரங்களும் சுகசாதனங்களாம். இக்காரணத்தால் அவ்வறிஞன் எவர் மீதும் குரோதஞ் செய்யான். அல்லது, எவன் அபகாரஞ் செய்யும் ஜீவரிடத்தே குரோதஞ் செய்வனோ அவன் ஆன்ம வேத்தாவன்றும்; மற்றோ, அவன் ஆன்மாவை நாசம் செய்பவனும். இக்காரணத்தானே நாஸ்திகனும், யாவரையும் இம்சிப்பவனும். கருத்திதுவாம்:— அசங்க ஆன்மாவிற்கோ அபகாரம் உண்டாகாது, மற்றோ, சரீராதி ஜடபதார்த்தங்கட்கு அபகாரமுண்டாம். அச்சரீராதிகளிடத்தே யாவனுக்கான்ம புத்தியுண்டாமோ, அவனுக்குச் சரீரத்திற் கபகாரம் செய்யும் ஜீவரிடத்தே குரோதமுண்டாம். ஆகையால், சரீராதிகளிடத்தே ஆன்ம புத்தியே குரோத காரணமாம், சார்வாக நாஸ்திகரும் சரீரத்தையே யான்மாவென அங்கீகரித்துளார். ஆகையால், குரோதமுடைய புருஷனிடத்தும் நாஸ்திகனிடத்தும் சிறிது மாத்திரமும் பேதமின்றும். குரோத உற்பத்தியின்பின்னர், இப்புருஷன் சரீரத்தாலும், மனத்தாலும், வாக்காலும் ஜீவர்கட்கு இம்சை யவசியம் செய்வன். ஆகையால, குரோதமுடைய புருஷனே சர்வபூதப் பிராணிகளை ஹிம்சை செய்பவனுவன், இது கூறியதாலிது துணியப்பெறும்:—எவனுக்கு ஏக அத்விதீய ஆன்மாவின் ஞானம் உண்டாமோ, அவன் எப்பிராணியின் மீதும் குரோதஞ் செய்யான். யாவன் எப்பிராணியின் மேலேனும் குரோதஞ் செய்வனோ அவன் ஆன்ம வேத்தாவன்றும். அல்லது யாவனுக்கு ஏக அத்விதீய ஆன்மாவின் ஞானமுண்டாகவில்லையோ, மற்றோ, தமது புண்ணிய கருமத்தால் ஜீவர்கட்குச் சுகத்தின் பிராப்தியுண்டாம்; தமது பாவகருமத்தால் ஜீவர்கட்குத் துக்கத்தின் அடைவுண்டாம். ஆகையால், புண்ணிய பாவமே சுகதுக்கங்கட்குக் காரணமாம், வேறொரு காரணமுமின்றுமென்னும் இவ்வகையாய ஞானம் எவனுக்கு உண்டாயிருக்கின்றதோ, அப்புருஷனும் அபகாரிகளாய ஜீவர்களின்மீது குரோதஞ் செய்வதில்லையாயின், சர்வாத்ம தரிசியாகிய தத்துவ வேத்தா புருஷன் அபகாரிகளாகிய ஜீவர்களின் மீது எங்ஙனம் குரோதஞ் செய்வன்; மற்றோ, செய்யான். அல்லது, எப்புருஷன் சாஸ்திரத்தை யறிந்திருந்தும் குரோத முடையவனுவனோ, அப்புருஷன் எங்ஙனம் அறிஞனுவன்; மற்றோ, அக்குரோதமுடைய புருஷன் அறிஞனுகான். ஏனெனின், எப்புருஷன் வித்தையையுடையனுவனோ அவன் அறிஞனெனப்படுவன். சர்வப் பிராணிகளிடத்தும் ஆத்மபுத்தி செய்து யாவருக்கும் இதத்தை யிச்சிப்பதே இவ்வித்தையின் பலமாம்; அத்தகைய வித்தையின் பலம் குரோதமுடைய புருஷனிடத்தே சம்பவியாது. ஆகையால், எங்ஙனம் கழுதை மண்ணின் பாரத்தை யெடுக்கின்றதோ, அங்ஙனம் குரோதமுடைய புருஷன் நிஷ்பலமாகவே சாஸ்திர ரூபபாரத்தை யெடுப்பன். அல்லது, எப்புருஷன் சிறிதுமாத்திரம் நூற்களைப்படிப்பனோ, அல்லது கேட்பனோ, அல்லது கேளானோ, ஆனுல் சர்வப்பிராணிகளிடத்தில் ஆன்மா நிறைந்திருக்கின்றதென்று அறிந்து வாக்கால், மனத்தால், காயத்தால்

எவ்வுயிர்க்கும் வாதை செய்யாதிருப்பனே அப்புருஷன் சர்வ சாஸ்திரத்தின் உண்மைப் பொருளை யறிந்தவனாவன், இவ்வார்த்தை மஹாபாரதத்தின்கண்ணுங் கூறப்பட்டுள்ளது :—

ஸூத்ராநாம் ஶ்ருதிஜாதீயாக ஸர்வஶோதம் ஹாஸ்யம் ।
ஶ்லோகேநயதிவாஜ்யேந க்ஷீணம் தஸ்ய ப்ரயோஜநம் ॥

சருவ பூதத்தி னுட்குகை தமிலமர்ந் தோளிரும்
நிருவி காரநல் லான்மசிந் நின்மல வொளியை
ஒருக வீதையா லல்லது பாதியா லுணரின்
வருப யனேது மேலவற் கிலையென வகுப்பார்.

இதன்பொருள் :—எப்புருஷன் ஒரு சுலோகத்தாலேனும், (கவி) அல்லது, அரைச சுலோகத்தாலேனும் சர்வபூதங்களிடத்தும் வியாபகமாய ஆன்மாவையறிவனோ, அப்புருஷனுக்குச் சர்வப்பிரயோஜனங்களும் சித்தித்தனவாம். ஸ்ரீ கீதையின் கண்ணும் ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ச்சுனன் பொருட்டு அருளிச்செய்திருக்கின்றார் :—

ஆத்மௌபம்யேந ஸர்வத்ர ஸமம் பஶ்யதி யோர்ஜுந ।
ஸுகம் வா யதிவா து:கம் ஸ யோகீ பரமோ மத: ॥

இடரானதுதா னின்பந்தான் யாவர்க்கேனு மாயிடுமேற்
படராநின்ற வவைதானு முறுவான்பரம யோகியென்பான்
சுடராநின்ற வடிவேலோய் துணிநீயென்று துழாயலங்க
லடராநின்ற நெடுமுடியோ னருளிச்செய்ய வவனுரைப்பான்.

இதன்பொருள் :—ஹே அர்ச்சுன ! எங்ஙனம் தனக்குச் சுகம் பிரியமாமோ துக்கம் அப்பிரியமாமோ, அங்ஙனம், எப்புருஷன் சர்வப்பிராணிகளின் சுகத்தைப் பிரியமாக வெண்ணுவனோ, துக்கத்தை அப்பிரியமாக வெண்ணுவனோ, அப்புருஷனே பரமயோகியாம். அல்லது, எப்புருஷன் வாக்கால் மனத்தால காயத்தால் உயிர்கட்கு வாதைசெய்கின்றனனோ அப்புருஷன் இவ்வுலகத்தின்கண்ணும், பரலோகத்தின் கண்ணும், ஆத்மசொரூபாநந்தத்தை யடையான். ஆகையால், ஜீவர்களின் துரோகமே சர்வானர்த்தகாரணமாம். ஹே அசுவினீ குமாரரே ! உமதாசிரியராகிய தத்யங் இருஷியானவர் இவ்வண்ணம் ஆராய்ந்து இந்திரனுக்குச் சாபங்கொடுத்திலர் ; மாறாய் இந்திரன் பொருட்டு இவ்வகையாய வசனத்தைக் கூறுவராயினர். ஹே இந்திரரே ! நீர் என்பொருட்டுச் செய்த ஆஞ்ஞையை யான் அவசியங் காப்பாற்றுவேன். யான் உமது ஆஞ்ஞையைக் காப்பாற்றேனாயின், நீர் எனது மஸ்தகத்தைச சேதித்துவிடும். ஹே தேவராஜாவே ! பிரஹ்மவித்தையை உபதேசியாதொழிக வென்னும் ஆஞ்ஞையை நீர் என்பொருட்டுச செய்தீர். அவ் வாஞ்ஞை யெனக்குத்துக்க காரணமன்றாம் ; மற்றோ, மாறாய் ஜீவன்முக்திச் சுகத்தின் காரணமாம். ஆனால், சர்வ தேவதைகளின் அதிபதியான இந்திரராய நீர் சுவர்க்கலோகத்தினின்றும் எனது ஆச்சிரமத்தின்கண் வந்தீர் ; ஆகையால்,

நீர் ப்ரசன்னமாம் பொருட்டு யானெப்பதார்த்தத்தை உம்பொருட்டுக் கொடுப்பதென விசாரஞ் செய்கின்றேன். ஆகையால், ஹே தேவராஜாவே! தனத்தாலேனும், சரீரத்தாலேனும், வேறோரு பாயத்தாலேனும் உமது ப்ரசன்னத் தன்மையை யான் அவசியம் செய்வேன். நீர் இது விஷயத்துச் சிறிதுமாத்திரமும் ஐயப்படவேண்டாம். ஹே அசுவினீ குமாரரே! உமது ஆசிரியராய தத்யங் இருஷியானவர் இந்திரர் பொருட்டு இவ்வகையாய வசனத்தைக் கூறியபோது அவ்விந்திரர் சாத்விக சுபாவத்தை யெய்தினர். முனிவரின் கோமள சுபாவத்தைக்கண்டு பயத்தையடைந்த இந்திரர் இவ்வகையாய வசனத்தைக் கூறுவாராயினர் :—ஹே பிராஹ்மணரே! தமது வருணாச்ரம தர்மங்களைச் செய்யாநின்ற பிராஹ்மணர்கட்கும் யானொருகாலுந் துரோகஞ் செய்வதில்லையாயின், யாவர்மீதும் உபகாரஞ் செய்யும் மேன்மைதங்கிய பிராஹ்மணராகிய உமக்குயானெவ்வாறு துரோகஞ் செய்வேன். ஹே பிராஹ்மணரே! யான் முன்னர் விஸ்வரூபாதிப் பிராஹ்மணர்களைக் கொன்றிருக்கின்றேன், அநந்தம் சந்நியாசிகளைக் கொன்றிருக்கின்றேன்; ஆயினும், அவர்களின் துஷ்டசுபாவத்தை யறிந்தே கொன்றனன்; அபராதமின்றி யானெவரையுங் கொல்வதில்லை. ஆகையால், ஹே பிராஹ்மணரே! நீர் எமதாஞ்ஞையைத் தாண்டாதிருப்பீரேல் உமது சிரசைச் சேதியேன், நீர் எமதாஞ்ஞையைத் தாண்டுவீராயின் விஸ்வரூபாதிகட்கேபோல உமக்குஞ் சிரச்சேதமுண்டாம். ஹே பிராஹ்மணரே! முன்னர் யாம் எம்பொருட்டுப் பிரஹ்மவித்தையை உபதேசியும் என உமமிடத்துக் கூறினேம், நீரும் எமது வசனத்தையங்கீகரித்து எம்பொருட்டுப் பிரஹ்மவித்யா உபதேசத்தைச் செய்தீர், அவ்வித்தையி னுபதேசத்தால் எமதிச்சையை நீர் பூரணஞ் செய்தீர், வேறொரு காரியமுமிப்போது செய்யயோக்கியமில்லை; ஆகையால், ஹே பிராஹ்மணரே! உமக்கு மங்கலமுண்டாகுக, யாமிப்போது எமது சுவர்க்கத்திற்குச் செல்கின்றோம். ஹே அசுவினீ குமாரரே! இத்தகைய வசனத்தை யத்தேவராஜா கூறித் தமது சுவர்க்கலோகத்திற்குச சென்றனர். உமது குருவாய தத்யங் இருஷியானவர் பெருங்கடல்போலக் கலக்கமற்றவராய் அவ்வாச்சிரமத்தின்கண்ணே இருந்தனர்.

சங்கை :—ஹே பகவன்! பிரஹ்மவித்தையின் உபதேசத்தால் எமதிச்சையை நீர் பூரணஞ் செய்தீர் என்னும் வசனத்தை இந்திரர் எமதாசிரியரின் பொருட்டுக் கூறியது சம்பவியாது. ஏனெனின், இந்திரர்க்குப் பிரஹ்மவித்தையின் அடைவு உண்டாயிருக்குமாயின் எமதாசிரியர்மீது குரோதஞ் செய்யாரன்றோ?

சமாதானம்:—ஹே அசுவினீ குமாரரே! தத்யங் அதர்வணராய உமதாசிரியர் தேவராஜாவாய இந்திரர் பொருட்டுச் சம்பூரணப்பிரஹ்மவித்தையை உபதேசித்தனர். நாநாவகையாய கர்மங்களையும், நாநாவகையாய உபாசனைகளையும் உபதேசஞ் செய்தனர். நாநாவகையாய் ஜகத்தினுற்பத்தியையு முபதேசஞ்செய்தனர்; ஆனால், அவ்விந்திரர் இராகாதிப் பிரதிபந்தக வசத்தால் பிரஹ்மவித்தையை விட்டு மற்றெல்லா வித்தையையுங் கவர்ந்தனர். அதனல், இந்திரர் தமதிச்சையின் பூரணத் தன்மையைக் கூறினர். ஹே அசுவினீ குமாரரே! இங்ஙனம் இந்திரர் சென்ற

பின்னர் உமதாசிரியர் மௌனத்தைத் தரித்திருந்தனர். நீவிரிருவரும் வெகு காலத்திற்குப் பின்னர் வைராக்கியாதி சாதனங்களைச் சம்பாதித்துப் பிரஹ்ம வித்தையையடையும் பொருட்டு, உமது ஆசிரியரின் சமீபத்தேசென்று நமஸ்கரித்து இவ்வண்ணங் கூறுவீராயினீர் :—ஹே ஆசிரியரே! யாங்கள் முன்னர்த் தங்கள்பால் பிரஹ்மவித்தையை வேண்டினேம், தாங்கள் வைராக்கியாதி சாதனங்களை நீவிர் சம்பாதித்து வருவீரேல், பின்னர் உம்பொருட்டு யாம் பிரஹ்மவித்தையை உபதேசஞ் செய்வேம் என உபதேசஞ் செய்துள்ளீர். இப்போது நாங்களிருவரும் வைராக்கியாதி சாதனங்களைச் சம்பாதித்துத் தங்களுடைய சரணாரவிந்தங்களை யடைந்துள்ளேம். ஆகையால், ஹே தேசிகோத்தமரே! தேவரீரது பிரதிஞ்ஞையை உண்மையாக்குமாறு எங்கள் பொருட்டுப் பிரஹ்மவித்தையை உபதேசித்தருளல் வேண்டும். ஹே அசுவினீ குமாரரே! இவ்வகையாய வசனத்தை நீவிர் கூறியபோது, அவ்வுமதாசிரியர் இவ்வகையாய விசாரத்தைத் தமது மனத்தின்கண் செய்து பரமசம்சயத்தை யடைந்தனர்.

இப்போது அவ்விசாரத்தைக் காண்பிப்பாம் :—யான் அசுவினீ குமாரரின் பொருட்டுப் பிரஹ்மவித்தையை உபதேசிப்பேனாயின், இந்திரனெனது மஸ்தகத்தைச் சேதிப்பர். யான் அசுவினீ குமாரரின் பொருட்டுப் பிரஹ்ம வித்தையை உபதேசியேனாயின், எனது வசனம் பொய்யாம்; இவ்வண்ணம் விசாரித்து அவர் பரம சம்சயத்தை யடைந்தனர். யான் எருதுகளுக்கு முன் செல்வேனாயின், எருதுகளின்பாதம் எனது பாதங்களின்மேல் வரும். யான் எ(
பின் செல்வேனாயின், வண்டியின் சக்கரம் எனது பாதங்களின்மேல் வரும் என வண்டிக்காரன் விசாரித்துச் சம்சயமடைவதேபோல, உமது குருவும் சம்சயத்தையடைந்தனர். ஹே அசுவினீ குமாரரே! இவ்வண்ணம் சம்சயத்தையடைந்த உமதாசிரியர் இவ்வகையாய நிச்சயத்தைத் தம்மனத்தின்கண் செய்தனர் :—அசுவினீ குமாரர்கட்கு உபதேசஞ்செய்வதில் எனது மரணமுண்டாமெனினும், அது மேன்மையதாம்; ஆனால், எனது வசனம் பொய்யாகலாகாது. இப்போது மித்தியாவசனத்தால ஜனித்த துக்கத்தினும் மரணஜன்னிய துக்கத்தின்கண் அற்பத்தன்மையைக் காண்பிப்பாம் :—இவ்வுலகின்கண்ணே எப்பிராணி யுண்டாயிருக்கின்றதோ, அப்பிராணிக்கு மரணம் அவசியம் உண்டாம். மரணகாலத்தின்கண் நோய்முதலிய நிமித்தத்தால் துக்கமும் அவசியம் உண்டாம். ஆகையால், மரணஜன்னிய துக்கம் சகிக்கக்கூடாதென்பதின்றாம்; மற்றோ, சகலப்பிராணிகளும் அம்மரணஜன்னிய துக்கத்தை அநந்தமுறை யநுபவிக்கின்றன.

சங்கை :—ஹே பகவன்! அந்நியஜீவர்களின் மரணம் ஜ்வரமுதலிய நோய்களா லுண்டாமாதலின், அவர்கட்கு அற்பதுக்கமுண்டாம்; இந்திரனது வஜ்ராயுதத்தாலுண்டாம் மரணத்தால் பரமதுக்கமுண்டாமன்றோ?

சமாதானம் :—ஜ்வரமுதலிய வியாதிகள், சர்ப்பம், சோரன், சிம்ஹம், விஷம், அக்கினி, ஜலம், சத்துரு, அஜீரணவன்னம் இத்துணை நிமித்தங்களில் யாதாவதொரு நிமித்தங்கொண்டே ஜீவர்கட்கு மிருத்யு உண்டாம். இவ்விந்

திராது வஜ்ராயுதம் திவ்ய அக்னிரூபமாமாதலின், இந்நிமித்தங்கட்குட்பட்டதே யாம்; இஃதோர் அபூர்வ நிமித்தமன்றும். ஆகையால், மரணஜன்னிய துக்கம் சகிக்கக்கூடாததன்றுமென்க; மற்றோ, சகிக்கக்கூடியதாம். இப்போது, மரண ஜன்னிய துக்கத்தினும் மித்தியாவசன துக்கத்தின்கண் அதிகத்தன்மையைக் காண்பிப்பாம் :—எனது வசனத்தைப் பொய்யாக்குவனேல் எனக்கு அநந்தங் கோடி கற்பபரியந்தம் நரகத்தின்கண் அநந்தவகையாய துக்கங்களினடைவுண்டாம்; அந்நரகதுக்கத்தின் நிவிருத்திக்கு யாதோருபாயமுமின்றும். கருத்திதுவாம் :—ஒருவன் பாவகர்மத்தையும் அதன்பலத்தையும் அறியாமல் பாவஞ் செய்வானுயின், அவனுக்கு அற்பதுக்கப் பிராபதியுண்டாம். ஒருவன் பாவகர்மத்தையும் அதன் நரகாதி பலத்தையும் சாஸ்திரப்பிரமாணத்தாலறிந்தும் மீண்டும் அப்பாவகர்மத்தைச் செய்வானுயின், அவனுக்கு அப்பாவகர்மத்தால் அதிக துக்கத்தின் அடைவுண்டாம். யான் மித்தியா வசனரூபமாகிய பாவகர்மபலத்தை யறிவேனுதலின், அறிந்தும் யான் பொய்புகலவேனுயின் எனக்கு அதிகதுக்கமுண்டாம். அலலது, எப்புருஷன் தேகாபிமானத்தோடு கூடியவனுய்ப் பொய் பேசுவனோ, அப்புருஷன் உயிரோடு வாழினும் இறந்தவனேயாவன்; ஏனெனின், இவ்வுலகின்கண் சர்வப் பிராணிகளும் பொய்புகன்றவனை யிகழ்வா. மரித்துப் பொய்பேசிய புருஷன் நரகத்தை யடைவன். ஆகையால், இருவகை யுலகினும் பொய்பேசுபவனுக்குத் துக்கமேயுண்டாம. இது கூறியதால இப்பொருளுணர்த்தலாயது :—எப்புருஷன் காமமுடையவனுவனோ, அப்புருஷனுக்கோ துறக்ககாமன் வேட்க என்பதாதி விதிவாக்கியங்களினும், பொய்ம்மொழியற்க என்பதாதி நிஷேத வாக்கியங்களினும் அதிகாரமுண்டாம். காமமற்ற வறிஞனுக்கு "துறக்ககாமன் வேட்க" என்பதாதி விதிவாக்கியங்களில அதிகாரமின்றேனும், பொய்ம்மொழியற்க என்பதாதி நிஷேதவாக்கியங்களில் அதிகாரம் அவ்வறிஞனுக்குமுண்டாம். இக்காரணத்தாலே அத் தீத்யங் இருஷியானவா "பொய்ம்மொழியற்க" என்னும நிஷேத வாக்கியத்தைத் தாண்டிலா. ஹே அசுவினீ குமாரரோ! இவ்வண்ணந் தனது மனத்தின்கண்ணே உமதாசிரியா விசாரஞ்செய்து, நும்பொருட்டு இங்ஙனங் கூறுவாராயினர் :—ஹே மைந்தர்காள்! பாலிய அவஸ்தை முதலாக யான் ஒருகாலும் பொய் பேசியதேயில்லை. ஆயின், இப்போது விருத்தாவஸ்தையின் கண் பொய் வசனத்தை யாதின்பொருட்டுப் புகலவேண்டும; மற்றோ, பொய் பேசுதல் எனக்குத் தகுதியன்றும; ஆயினும் மித்தியாவசன நிமித்தம யான் எனதுள்ளத்தில சிந்தனஞ் செய்ததை யும்பொருட்டுக் கூறுகின்றேன். ஹே அசுவினீ குமாரரே! தேவதைகட்கும, மனுஷ்யாகட்கும், அசுரர்கட்கும், அந்நிய சர்வப் பிராணிகட்கும் யான் உபகாரஞ் செய்பவன் என்னும் எனதியற்கை உங்கட்குத் தெரிந்ததேயாமன்றோ? பிரிய பதார்த்தங்களைப் போகித்துப் பூர்வ புண்ணியங்களைச் சமாப்தஞ் செய்கின்றேன். அப்பிரிய பதார்த்தங்களை நுகர்ந்து பூர்வ பாவ கர்மங்களைச் சமாப்தஞ் செய்கின்றேன். அஞ்ஞானிகட்கு இஷ்ட வஸ்து கிடைப்பின் மகிழ்ச்சியும், அநிஷ்டவஸ்து கிடைப்பின் வாட்டமும் உண்டாவதேபோல, எனக்கு இஷ்டா நிஷ்ட வஸ்துக்களின் அடைவால் மகிழ்ச்சி வாட்டங்கள் உண்டாவதின்றும்; மற்றோ, இரண்டினடைவினும் யான் சமான

னுயிருக்கின்றேன். ஹே அசுவினீ குமாரரே! இவ்வுலகின்கண் பேததரிசிகளாய அஞ்ஞானிகட்கு, சிலர் சத்துருக்களாவர்; சிலர் மித்திரர்களாவர்; சிலர் உதாசீனர்களாவர்; சிலர் உறவினராவர்; சிலர் துவேஷிகளாவர்; சிலர் மத்தியஸ்தராவர். அதுபோலச் சமதரிசியாய எனக்குச் சத்துருக்களேனும, மித்துருக்களேனும், உதாசீனர்களேனும், உறவினர்களேனும், துவேஷிகளேனும், மத்தியஸ்தர்களேனும் இன்றும். அவருள், அபகாரமின்றியே இயல்பாய் அபகாரம் செய்பவர் சத்துருவெனப்படுவர். எப்புருஷன் வேறு உபகாரத்தை அபேக்ஷியாமல் உபகாரஞ் செய்வனே, அவன் மித்துருவெனபபடுவன். உபேக்ஷை செய்பவன் உதாசீனனெனப்படுவன். சிறிது சமபநததால் உபகாரஞ் செய்பவன் உறவினனெனப்படுவன். அபகாரத்தை அபேக்ஷித்து அபகாரஞ் செய்பவன் துவேஷி எனப்படுவன். விவாதஞ்செய்யும் இருவருடைய இதத்தை இச்சிப்பவன் மத்தியஸ்தனெனப்படுவன். ஹே அசுவினீ குமாரரே! பிராஹ்மணர்களாகிய நமது சரீரத்தின்கண்ணும சமபூரண ஸ்தாவரஜஙகம சரீரங்களிடத்தும் நாய்ச சரீரத்தின்கண்ணும் இரண்யகாபபரது சரீரத்தின்கண்ணும் சமானரூபமாய் யான் இருக்கின்றேன்; ஏனெனின், யான் சர்வ வடிவினனுயிருககின்றனனுதலின் என்க.

இபபோது சர்வரூபததன்மையைக காண்பிப்பாம்:—ஹே அசுவினீ குமாரரே! யானே புருஷன், யானே ஸ்திரீ, யானே நபும்சகன், யானே பஞ்ச மகாபூதம், யானே பௌதிகப பிரபஞ்சம, யானே மனு, யானே சூரியன், யானே சந்திரன், யானே அக்கினி, யானே சமபூரணஜோதி, யானே பூ, புவ, சுவ, மக, ஜன, தப, சத்திய மேலுலகங்கள், யானே அதல, விதல, சுதல, ரசாதல, தலாதல, மகாதல, பாதாள கீழுலகங்கள். ஹே அசுவினீ குமாரரே! கனவின்கண் கனுக்காணும புருஷனினும கனுபபொருள்கள் வேறுகா. அதுபோல, சம்பூரண ஸ்தூல சூக்ஷ்மப பிரபஞ்சம் என்னிற பின்னமன்றும்; மறறு, எனது சொரூபமேயாம். பிரஹ்மாண்டத்தின்கண் இராநின்ற சுவேதஜம், அண்டஜம், ஜராயுஜம், உற்பிஜ்ஜம் என்னும் நாலவகைச சீவருளளும சிலர் மேலாயவர், சிலா கீழாயவர், இவ்வியாவருக்குமே யானன்மாவாவேன். சர்வ பேதமுமறற பிரஹ்மத்தை யான் ஆன்மரூபமாயறிகின்றேன். இககாரணத்தால என்னிடத்தே மாயையின் ஸ்பரிசமுமின்றும். அம்மாயை யிலதாகவே காமம, குரோதம, லோபம் என்பதாதி தோஷமும் எனது சொரூபத்தின்கண் இன்றும். ஹே அசுவினீ குமாரரே! பரமான்ம தேவனுய யானே லீலை மாத்திரையானே சம்பூரண ஜகத்தையும் உண்டாக்குகின்றேன், யானே சம்பூரண ஜகத்தையும் காப்பாறறுகின்றேன், யானே சம்பூரண ஜகத்தையும் சம்ஹாரஞ் செய்கின்றேன். ஊர்ண நாபியென்னும் ஜந்துவானது அநநிய காரணத்தை யபேக்ஷியாமலே தனது சரீரமாததிரத்தால் நூறகளையுண்டாக்கும், அவற்றைக் காபபாற்றும், அவற்றைத் தன்பால் லயம செய்துகொள்ளும். அதுபோல, பரமான்ம தேவனுய யானே சம்பூரண ஜகத்தினுற்பத்தி ஸ்திதி இலயம் செய்வன். ஆனல், ஊர்ண நாபிரூப திருஷ்டாந்தத்தினும் எனதிடத்தே இததுணை விலக்ஷணத் தன்மையுளதாம. அஃதாவது ஊர்ண நாபியானது சாவயவமுடையதாய்ச சம்பநதமுடையதாய் நூறகட்குப் பரிணும

உபாதானகாரணமாம். பரமான்ம தேவனுயயானே, நிரவயவனும் அசங்கனும் ஜகத்தின் விவர்த்த உபாதானகாரணன் ஆவேன்.

சங்கை :—ஹே பகவன்! ஊர்ணநாபி ஜந்துவிற்கும் தங்கட்கும் விலக்ஷணத் தன்மையுண்டாயின், ஊர்ணநாபி ஜந்துவின் திருஷ்டாந்தத்தால் தங்களிடத்தே ஜகத்தின் காரணத்தன்மை சித்தஞ் செய்தல் சம்பவியாது; சமான சுபாவமுடையதே திருஷ்டாந்தமாம்.

சமாதானம் :—ஹே அசுவினீகுமாரரே! சமான சுபாவமுடைய பதார்த்தம் திருஷ்டாந்தமாம் என்னும் இவ்வார்த்தை சத்தியமாம். ஆயினும், எல்லா அம்சத்தோடுஞ் சமானத்தன்மை திருஷ்டாந்தத்தின்கண்ணே யுண்டாகாது; மற்றோ, ஒவ்வோரம்சத்தோடு திருஷ்டாந்தத்தின்கண் சமானத்தன்மை யுண்டாம். அவ்வோரம்சத்தால் சமானத்தன்மை ஈண்டு முளது; ஏனெனின், ஊர்ணநாபியாய ஜந்துவானது நூற்களின் உபாதானகாரணமும் நிமித்தகாரணமும் ஆம். அதுபோல, பரமான்ம தேவனுய நான் ஜகத்தின் உபாதானகாரணமும் நிமித்தகாரணமும் ஆவேன். இங்ஙனம் அபின்ன நிமித்த உபாதான காரணத்தன்மை மாத்திர அம்சத்தின்கண் ஊர்ணநாபியின் திருஷ்டாந்தமாம; சர்வ அம்சத்தின்கண்ணுமின்றாம். ஹே அசுவினீ குமாரரே! கனவின்கண்ணே தோற்றுநின்ற தேர்முதலிய பதார்த்தங்கள் கனவைக்காணும் புருஷனினும் வேறன்றாம். அதுபோல, சம்பூரண ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, இலயம் பரமான்மாவாய என்னின் வேறன்றாம். ஹே அசுவினீ குமாரரே! இத்தகைய பிரஹ்ம நிஷ்டையின்கண்ணெனதாசிரமத்தில் இருந்து கொண்டிருந்தேன். ஒருகாலத்தில் இந்திரர் எனதாசிரமத்தின்கண் வந்தனர். அவ்விந்திரரை அதிதி யெனநினைந்து சக்தியானுசாரம் யானவரைப் பூஜித்து மீண்டும் இந்திரரைப்பார்த்திங்ஙனம கூறினேன் :—ஹே தேவராஜாவே! நீர் பிரசன்னராமாறு யானெப்பிரிய பதார்த்தத்தைக் கொடுப்பேன், எனக்கூறவும் இந்திரர் அதற்குக் கூறியதாவது :—ஹே இருஷியே! நீர் என்னைப் பிரசன்னராக்கவேண்டின், துர்லபப் பிரஹ்மவித்தையை என்பொருட்டு உபதேசியும் ஹே அசுவினீ குமாரரே! இவ்வண்ணம் இந்திரர்கூறவே அவருக்கு மதுகாண்ட அர்த்தத்தோடுகூடிய துர்லபப் பிரஹ்மவிதத்தையையே உபதேசஞ் செய்தேன்; பிரஹ்ம வித்தையின் வேறாய எவ்வித்தையையும் உபதேசித்திலேன், ஏனெனின், உலகின்கண் பிரஹ்மவித்தையே அத்தியந்தம் துர்லபமாம். பிரஹ்மவித்தையின் வேறாய சப்த ஸ்பரிசாதி விஷயமோ, சர்வலோகத்திலும் சர்வ ஜீவர்கட்கும் சுலபமாம். சுவர்க்க லோகத்தின்கண் கருமிகட்கு விஷய வடைவுண்டாவதேபோல, நரகத்தின்கண் உள்ள ஜீவர்கட்கும் விஷயவடைவுண்டாம். பிரஹ்மலோகத்தின்கண் உள்ள ஜீவர்கட்கு விஷயஜன்னிய சுகப்பிராப்தி யுண்டாவதேபோல, மலத்திலுள்ள புழுமுதலிய ஜீவர்கட்கும் விஷயஜன்னிய சுகப்பிராப்தி யுண்டாம் ஆகையால், சப்த ஸ்பரிசாதி விஷயங்கள் துர்லபமன்றாம்; மற்றோ, ஆத்மாவின் வேறாய சர்வ விஷயங்களின் அடைவும்கர்மோபாஸனைகளால் ஜீவர்கட்குண்டாம். இந்தப்பிரஹ்ம வித்தையோ அத்தியந்தந் துர்லபமாம்; ஏனெனின், எனக்கு முன்னர்ப் பிரஹ்ம வித்தையின் பிராப்தி யுண்டாயிருக்குமாயின், இப்போது ஜனன மரணரூப சம்சாரம் எனக்குண்டாகாதன்றோ! ஜனன மரணரூப சம்சாரம் இப்போதெனக்குத்

தோற்றுகின்றமையின், முன்னரெனக்குப் பிரஹ்மவித்தையின் பிராப்தியின்றென வறிந்து கொள்ளலாமன்றோ? ஆகையால், பிரஹ்மவித்தை அத்தியந்தந் துர்லப மாம்.

சங்கை :—ஹே பகவன்! பிரஹ்மவித்தை துர்லபமாதலேபோல, பிரஹ்ம லோகாதிகளின் பிராப்திக்குச் சாதனங்களாய கர்மோபாஸனைகளும் துர்லபமேயா மன்றோ?

சமாதானம் :—கர்மோபாஸனைகள் துர்லபமன்றாம்; ஏனெனின், இவ்வுல கின்கண் அநேகம் பிராஹ்மணர்கள் கர்மோபாஸனைகளை உண்மையா யறிந்துளார் கள். அங்ஙனமே, அக்கர்மோபாஸனைகளின் அநுஷ்டானத்தையும் அநேகம் பிராஹ்மணர்கள் செய்கின்றார்கள். ஆகையால், கர்மோபாஸனைகள் துர்லபமன் றாம்; மற்றோ, பிரஹ்மவித்தையே துர்லபமாம. கீதையின்கண்ணும் ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ஜுனன் பொருட்டுப் பிரஹ்மவித்தையின் துர்லபத்தன்மையைக் கூறியருளியிருக்கின்றார் :—

“ மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஶ்சித்யததி ஸித்தயே ।
யததாமபி ஸித்தாநாம் கஶ்சிந்மாம்வேத்தி தத்த்வத: ॥

மாயுமாநுட ரனேகர்பாலொருவ னென்னையாயுமனம் வைத்துளா
ளுயுமாநுட ரனேகர்பாலொருவ னேயறிந்துமுடி வானையா.”

இதன்பொருள் :—ஆயிரம் மனுஷ்யர்கட்குள் எவனேனு மொருவனே என்னை யடையும் பொருட்டு முயல்கின்றான்; அமமுயல்கின்ற புருஷர்களுள்ளும் எவ னேனுமொருவனே யென்னை யுண்மைவடிவமா யுணர்கின்றான். அல்லது, உலகின் கண்ணும் எப்பதார்த்தத்திற்குச சமானஜாதியையுடைய வேறொரு பதார்த்தம் இன்றாமோ, அப்பதார்த்தத்தைத் துர்லபமென அங்கீகரித்துளார். எப்பதார்த் தத்தின் சமானஜாதியுடைய வேறொருபதார்த்தம் உண்டாமோ, அப்பதார்த் தத்தை யுலகின்கண்ணும் ஒருவரும் துர்லபமாய் அங்கீகரிப்பதில்லை. இவ்வகை யாய துர்லபத்தன்மை சுகசாதன சரீராதிகளிடத்தும், விஷயஜன்னிய சுகவடிவ பலத்தினிடத்துமின்றாம்; ஏனெனின், சரீரசொரூபஜாதியால் சர்வசரீரங்களும் சமானஜாதியுடையனவாம். அங்ஙனமே சுகத்தன்மை வடிவ ஜாதியால் சம் பூரண விஷயஜன்னிய சுகங்கள் சமானஜாதியுடையனவாம். ஆகையால், சம்சார சம்பந்திகளாய சம்பூரணபதார்த்தங்களிடத்தே துர்லபத்தன்மையின்றாம். காரி யப் பிரபஞ்சசகித அவித்தையை நாசஞ்செய்வதாய பிரஹ்மவித்தையின் சமான ஜாதியையுடைய வேறெப்பதார்த்தங்களுமின்றாம்; ஆகையால், அந்தப்பிரஹ்ம வித்தையே துர்லபமாம். இப்போது இவ்வர்த்தத்தை வெளிப்படையாக்கும் பொருட்டு முதலில் சர்வலோகத்தின்கண்ணும் சரீராதிசாதனங்களின் சமானத் தன்மையைக் காண்பிப்பாம் :—ஹே அசுவினீ குமாரரே! இத்தூலசரீரமின்றிச் சுக துக்கபோகங்களுண்டாகா. ஆகையால், பிரஹ்மலோகத்தின்கண் இராநின்ற ஜீவர்கட்கும் மலத்தின்கண்ணிரானின்ற ஜீவர்கட்கும் ஸ்தூலசரீரம் சமானமேயாம். ஆத்மஞானமின்றிப் பிரமலோகத்தின்கண் இராநின்ற ஜீவர்கட்கு விஷயேந்தி

ரிய சம்பந்தத்தால் எங்ஙனஞ் சுகமுண்டாமோ அங்ஙனமே, மலத்தின்கண் இரா நின்ற ஜீவர்கட்கும் விஷயேந்திரிய சம்பந்தத்தாற் சுகமுண்டாம். ஆகையால், யாண்டும் சுகமும் சமானமேயாம். இது கூறியதால் யாண்டும் ஸ்தூலசரீரத்தின் சமானத்தன்மை காண்பிக்கப்பட்டது. இப்போது யாண்டும் ஸூக்ஷ்மசரீரத்தின் சமானத்தன்மையைக் காண்பிப்பாம் :—ஹே மைந்தர்காள்! வாக்கு, பாணி, பாதம், பாயு, உபத்தம் இவை பஞ்ச கன்மேந்திரியங்களாம். சுரோத்திரம், தொக்கு, சக்ஷு, ரசனம், கிராணம் இவை பஞ்சஞானேந்திரியங்களாம். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன அந்தக்கரணசதுஷ்டயமாம். பிராணன், அபானன், சமானன், வியானன், உதானன் என்பன பஞ்சப் பிராணன்களாம. இவ்வெல்லா வாக்காதிகளும் ஸூக்ஷ்ம சரீரத்தினவயவங்களாம். அவ்வாக்காதி அவயவங்களும், பிரஹ்மலோகத்தின்கண் இராநின்ற ஜங்கம ஜீவர்கட்கும் மனுஷ்ய லோகத்தின்கண் இராநின்ற ஜங்கம ஜீவர்கட்கும் சமானங்களேயாம். சில விடங்களில் வெளிப்படுதலின் குறைவு மிகுதிகளைக்குறித்து அவற்றின்விஷமத் தன்மையுந் தோற்றும். ஹே மைந்தர்காள்! வாக்கு முதலாகப பிராணனீருய்ச் ஸூக்ஷ்ம சரீரத்தின் எத்துணை அவயவங்களுளவோ, அவைமனுஷ்யாதி ஜங்கம சரீரங்களி லிருப்பனவேபோலத் தருமுதலிய தாவர சரீரங்களிடத்தும் உள. ஆனால், மனுஷ்யாதி ஜங்கமர்களிடத்தே அவ்வாக்காதி இநதிரியங்களின் வெளிப்படுதலுண்டாதலேபோலத் தருமுதலிய தாவரங்களின்கண் அவற்றின் வெளிப்படையான வெளிப்படுத லுண்டாதலில்லை. ஆகையால், தருமுதலிய தாவர சரீரங்களும், மனுஷ்யாதி ஜங்கம சரீரங்கட்குச் சமானங்களாம்.

சங்கை :—ஹே பகவன்! வெளிபபடுதலையுடைய இநதிரியங்களோடுகூடிய மனுஷ்யாதி ஜங்கமங்களோடு, வெளிபபடுதலின்றிய இநதிரியங்களையுடைய தருமுதலியதாவரங்கட்குச சமானத்தன்மை சாற்றல் அத்தியநதம் விருத்தமாமன்றோ?

சமாதானம் :—தத்தம் விஷயங்களைக் கவருமபொருட்டுள்ள வியாபாரங்களோடுகூடிய இநதிரியங்களை வெளிபபடுத லுடையனவென்பர். அவ்வியாபாரமற்ற விநதிரியங்களை வெளிபபடுதலற்றனவென்பர். அவ்விந்திரியங்களின் வெளிபபடுதலற்றதன்மை மனுஷ்யாதி ஜங்கமர்களிடத்தும் ஒவ்வொரு காலிருக்கும். இல்லத்தின்கண் இராநின்ற ஒருவன் பாகிய அஸ்வ சப்தத்தைக்கேட்டு அசசப்தரூப ஹேதுவால் வெளியிலிராநின்ற அஸ்வத்தைமனத்தால் அநுமானிப்பன். அக்கால் சர்வ வாக்காதி இநதிரியங்களும் தத்தம் வியாபாரமற்றனவாம். இவ்வண்ணம் குறைந்த விந்திரியங்களையுடைய செவிடன் குருடன முதலினருக்கும், தரு முதலியவற்றிற்கும் உண்டாம். ஞானம் இந்திரியங்களின்றி யுண்டாகாது. மற்றே, இந்திரியங்களாலேயே யுற்பன்னமாம். ஆனால், அச்செவிடர் முதலிய குறைந்த விந்திரியங்களுடைய புருஷர்கட்குநேத்திராதி வெளிப்பட்ட இந்திரியங்களினின்றும் வேறாய சுரோத்திராதி இநதிரியங்கள் தம்வியாபாரமற்றனவாய் நிகழும். ஆகையால், செவிடர் குருடர் முதலியோரிடத்தும், விருக்ஷாதிகளிடத்தும் இந்திரியங்களின் அபாவமின்றாம்.

சங்கை :—ஹே பகவன்! பாம்பிற்குக் கர்ணரூப கோளகமின்றாமாதலின், அதற்குச் சுரோத்திரேந்திரிய அபாவமுண்டாமன்றோ?

சமாதானம் :—ஹே அசுவினீ குமாரரே! கோளகமின்மையின் இந்திரிய மின்மை சம்பவியாது. ஏனெனின், சில சரீரத்தின்கண்ணே, நேத்திராதி இந்திரியங்கள் தத்தம் கோளகத்தின் கண்ணிருந்து காரியத்தைச் செய்யும், சிலசரீரத்தின்கண்ணே, ஒரே கோளகத்தின்கண்ணிருந்து காரியத்தைச்செய்யும், சில சரீரத்தின்கண்ணே ஒரே கோளகத்தின்கண்ணே இரண்டிந்திரியங்களிருந்து தத்தம் காரியத்தைச் செய்யும், பாம்பின் நேத்திர கோளகத்திலிருந்து சுரோத்திரேந்திரியமும், நேத்திரேந்திரியமும, தத்தம் காரியத்தைச செய்வதேபோல. ஆகையால், சர்வ சரீரத்தின்கண்ணும் வாக்கு முதலிய சூக்ஷுமம சரீரத்தின் அவயவங்களிருக்கின்றன. இத்துணைக் கூறியதால் சுகதுக்கங்களின் சாதனங்களாய வாக்காதி இந்திரியங்கட்கு யாண்டும் சமானத்தன்மை காண்பிக்கப்பட்டது.

இப்போது யாண்டும் சுகதுக்கரூப பலத்தின் சமானத்தன்மையைக் காண்பிப்பாம் :—ஹே அசுவினீ குமாரரே! வாக்குமுதலிய இந்திரியங்களுள் ஒரு இந்திரிய வெளிப்பாடுடைய, அல்லது, சம்பூரண வாக்கு முதலிய இந்திரியங்களின் வெளிபபாடுடைய மனுஷ்யாதி ஜங்கமங்கட்கும் விருக்ஷாதி ஸ்தாவரங்கட்கும் சுகதுக்கங்கள் கேவலம் மனத்தின்கண்ணே யுண்டாம். மனதைவிட்டு மற்றெதனிடத்தும சுகதுக்கங்களின் உற்பத்தி யுண்டாவதின்றும். அசசுகதுக்கங்கள் ஓரிந்திரிய வியாபாரத்தால் ஆயினுமாகுக, அல்லது அநேக இந்திரிய வியாபாரத்தால் ஆயினுமாகுக, இதன்கண்ணே யாதொரு நியமமுமின்றும். ஆனுல், அச்சுகத்தின்கண்ணும் துக்கத்தின்கண்ணும் சொரூபமாய் யாதொரு விசேஷமுமின்றும; மற்றே, சர்வ சரீரங்களில் சமானமாயே சுகதுக்கமுண்டாம். அல்லது, இந்திரியங்களால் அடைதற்குத் தகுதியாய சபத ஸ்பரிசாதி விஷயங்களுள் இசசித்த விஷயம் கிடைப்பின் புருஷனுடைய மனத்தின்கண் சுக உற்பத்தியுண்டாம்; வெறுக்கும விஷயம் கிடைபபின் அவன் மனத்தின்கண்ணே துக்கமுண்டாம். ஆகையால், ஆசக்திரூப விருபபம் சுககாரணமாம; வெறுப்பே துக்ககாரணமாம. அவ்விருப்பம் தேவதைகடகுத தங்கள் சரீரத்தே யுளதாவதேபோல, மலத்தின்கண் இராநின்ற கிருமிமுதலிய நீச (கீழான) ஜீவர்கட்கும் தம் சரீரத்தே விருப்பமுண்டாம். இவ்வண்ணம், துக்கத்தின் அடைவைச் செய்யும் அபகாரி ஜீவர்களிடத்தே துவேஷமுண்டாதலும், தேவதை முதலிய மேலாய சரீரங்களிடத்தும் கிருமிமுதலிய கீழாய சரீரங்களிடத்தும் சமானமேயாம். ஆகையால், இராகத்துவேஷ ஜன்னிய சுகதுக்கமும் சர்வ சரீரங்களிடத்தே சமானமேயாம்.

இப்போது இவ்வர்த்தத்தையே வெளிப்படையாய்க் காண்பிப்பாம் :—ஹே அசுவினீ குமாரரே! மிருகங்களையடிக்க விரும்பியவனுக்கு மிருகங்களகப்படின் சுகமுண்டாவதேபோலும், கானங்கேட்கக் காதலுற்றவனுக்கு அது கேட்கப்பெறின் சுகமுண்டாவதேபோலும், காமியானவனுக்கு ஸ்திரீயின் ஆலிங்கனத்தாற் சுகமுண்டாம். காமிக்கு ஸ்திரீகிடைப்பின் சுகமுண்டாதல்போலவே புத்திரேச்சை யுடையவனுக்குப் புத்திரன் அடையப்பெறின் உண்டாம்; மைந்தனைப் பெறலால் மைந்தனைக் காதலித்தோனுக்கு உண்டாஞ் சுகமேபோலப் பசியுடை

யோனுக்கு அன்னங் கிட்டலாலுண்டாம்; இந்நெறியை யாண்டுங் கண்டுகொள்க. ஆகையால், ஆசக்திரூப ராகத்தால் சர்வ சரீரங்களிலும் சமானமாயே சுகமுற்பன்னமாமெனத் துணியப்பெறும்.

இப்போது துவேஷத்தாற் சர்வ ஜீவர்கட்கும் துக்க சமானத்தன்மையைக் காண்பிப்பாம் :—ஹே மைந்தர்காள்! இஷ்டமல்லாத வஸ்துவையடையின் ஏக இந்திரிய வியாபாரத்தாலேனும், அநேக இந்திரிய வியாபாரத்தாலேனும் மனத்தின்கண்ணே துக்கமுண்டாம்; அதுவும் சுகம்போல யாண்டும் சமானமேயாம். கருத்திதுவாம் :—விஷ்டையின்கண் இராநின்ற கிருமிக்கு மரணகாலத்தின்கண் எங்ஙனந் துக்கமுண்டாமோ, அங்ஙனமே பிரஹ்மலோகத்தின்கண் இராநின்ற ஜீவர்கட்கும் மரணகாலத்தின்கண்ணே துக்கமுண்டாம். இப்போது சிங்காவலோகனநியாயத்தைக் கைப்பற்றி மீண்டுமே சுகத்தின் சமானத்தன்மையை யாண்டுங் காண்பிப்பாம் :—சிங்கம் மிருகங்களை யடித்துப்பின் சேய்மையிற் சென்று மீண்டும் மிருகத்தின் பக்கத்தே திருமபி நோக்கும்; ஒருகால் வேறுமிருகம் ஆண்டு வரின் அதனையும் அடிக்கும், இதனையே சிங்காவலோகனநியாய மென்பர். ஹே அசுவினீ குமாரரே! பிரஹ்ம லோகத்தின்கண் இராநின்ற பிரஹ்மாவிற்கு விஷய இந்திரிய சம்பந்தத்தால் எங்ஙனம் சுகமுண்டாமோ, அங்ஙனமே மலத்தின்கண் இராநின்ற கிருமிக்கும் விஷய இந்திரிய சம்பந்தத்தால் சுகமுண்டாம். பிரஹ்ம லோகத்தின்கண் இராநின்ற பிரஹ்மாவினுக்குச் சுகசாதனங்களாக ஸ்திரீ புத்திரன் அன்னமுதலியன உளவாதலேபோல, மலத்தின்கண் இருக்குங் கிருமிக்கும் சுகசாதனமாய ஸ்திரீ புத்திர அன்ன முதலிய பதார்த்தங்களிருக்கின்றன. பிரஹ்மலோகத்தின்கண் இராநின்ற பிரஹ்மா, ஜனனமரணத்தை யடைவதேபோல, மலத்தின்கண் இராநின்ற புழுவும ஜனனமரணத்தை யடையும். சுகதுக்கத்தை யடைவிக்கும் தேகாபிமானம் பிரஹ்மாவிற்கிருப்பதேபோல, மலக்கிருமிக்கும் இருக்கும். ஆகையால், விஷயஜன்னிய சுகமும், அதன் சாதனங்களாய ஸ்திரீ புத்திராதிகளும், மலக்கிருமிமுதலாய்ப் பிரஹ்மாபரியந்த முள்ள சர்வ சரீரங்களிலும் உண்டாமாதலின், அவற்றின்கண் துர்லபத்தன்மை சம்பவியாது; மற்றோ, ஜனனமரணத்தை நீக்குவதாய பிரஹ்மவித்தையே கிடைத்தற்கரியதாம். ஹே அசுவினீ குமாரரே! இவ்வண்ணம் பிரஹ்மவித்தையின்கண் துர்லபத்தன்மையை யெனது மனதின்கண்ணாலோசித்து இந்திரருக்கு அந்தப் பிரஹ்மவித்தையை உபதேசித்தேன்; ஆனால், அவ்விந்திரர் பிரஹ்மவித்தையின் அதிகாரியல்லாமையின் அந்தப் பிரஹ்மவித்தையைக்கேட்டு அவர் மாறாய்க் கோபமுடையவராயினர். எனக்கு இவ்வகையாய குருதக்ஷிணையையும் கொடுத்தனர். ஹே பிராஹ்மணரே! இன்றுமுதல் இந்தப் பிரஹ்மவித்தையை நீர் எவருக்கும் உபதேசித்தல் கூடாது. நீர் நேயவயத்தால் எவருக்கேனும் இப்பிரஹ்மவித்தையைக் கூறுவீராயின், உமது மஸ்தகத்தை வஜ்ஜிராயுதத்தால் யான் சேதிப்பேன் என்னும் ஆஞ்ஞையை இந்திரன் எனக்குச் செய்யவும் யான் அவ்வாஞ்ஞையை அங்கீகரித்தேன். அதனால் உங்கட்குப் பிரஹ்மவித்தையை உபதேசிப்பதில் எனக்குப் பெருஞ்சிந்தை (கவலை) உண்டாயிருக்கின்றது.

சங்கை :—ஹே பகவன் ! தாங்கள் தேவராஜாவிற்குப் பிரஹ்மவித்தையை உபதேசித்திலேன் என வாக்குக் கொடுத்திருப்பீர்களாயின், தாங்கள் எங்கள் பொருட்டு எங்ஙனம் பிரஹ்மவித்தையை உபதேசிப்பீர்கள். கருத்திதுவாம் :—எங்கள்பொருட்டுப் பிரஹ்மவித்தையை உபதேசிப்பீர்களாயின் இந்திரருக்குத் தாங்கள் கொடுத்த வாக்குப் பொய்யாய்விடும். அவ்வாக்கை மெய்யாக்கும்பொருட்டு எங்கட்கு உபதேசஞ் செய்கிலீராயின், முன்னர் எங்கட்குத் தாங்கள் கொடுத்த வாக்குப் பொய்யாய் விடுமன்றோ ?

சமாதானம் :—ஹே குழந்தைகாள் ! யான் முன்னர்த்தங்களுக்குப் பிரஹ்மவித்தையை உபதேசிக்கின்றேனெனக் கூறியிருக்கின்றேன். இப்போது இந்திரருக்குப் பிரஹ்மவித்தையை உபதேசியேன் எனக்கூறியிருக்கின்றேன். ஆனால், இதன்கண் இத்துணைச்சிறப்புளது. எவருக்கும் யான் பிரஹ்மவித்தையை உபதேசியேன் என்னும் வசனத்தையான் நியமமாய் இந்திரர்க்குக் கூறவில்லை ; மற்றோ, யான் பிரஹ்மவித்தையை எவருக்கேனும் உபதேசிபபின் நீர் மஸ்தகத்தைச் சேதியும் எனக்கூறியுள்ளேன். ஆகையால், உங்கட்குப் பிரஹ்மவித்தையை உபதேசிப்பதில் எனக்கு யாதொரு பிரதிபந்தகமுமின்றாம். எனது வசனத்தைச் சத்தியமாக்கும்பொருட்டு யான் உங்கட்குப் பிரஹ்மவித்தையை அவசியம் உபதேசிப்பேன்.

சங்கை :—ஹே பகவன்! இந்திரரது வஜ்ஜிராயுதத்தால் மரணமுண்டாமென்னும் பயமே எங்களது உபதேசதிற்குப் பிரதிபந்தமாமன்றோ ?

சமாதானம் :—ஹே மைந்தர்காள் ! மரணத்தாலெனக்குப் பயமில்லை. ஏனெனின், இச்சம்சாரத்தின்கண் எச்சீவனுண்டாவனோ அவன் யாதாவதொரு நிமித்தத்தால்அவசியம் மரணத்தையடைவன், அம்மரணத்தின் நிமித்தங்களுள் இந்திரர் எனது மரணத்திற்குக காரணமாயின் அஃதத்தியந்தங் கிடைத்தற்கரியதாம். கருத்திதுவாம் :—தத்யங் இருஷியானவர் தனது வசனத்தை வாய்மை யாக்கற்பொருட்டு, இந்திரரினின்றுங்கூடப் பயத்தை யடைந்திலர் என்னும் எனது கீர்த்தியைச் சர்வலோகத்தினருங் கீர்த்திப்பர். ஹே மைந்தர்காள் ! சம்பூரண தனங்களும் அழிந்து ஏகுதலும் மேன்மையாம். சம்பூரண ஸ்திரீ.புத்திராதி யுறவினர்களின் விடுபடுகையு மேன்மையாம். தனது மரண முண்டாதலும் மேன்மையாம். ஆனால், பொய் பேசுதல் மதிமான்கட்கு மேன்மையன்றாம். ஹே மைந்தர்காள் ! எனது மரணத்தைத் துச்சமாயெண்ணி உங்கட்குப் பிரஹ்மவித்தையைஉபதேசிப்பதிலும் எனக்கு மித்தியாவசன சம்பாஷணை மஹா நிந்தையைக் கொடுப்பதாம். ஏனெனின், யானுங்கட்குப் பிரஹ்ம வித்தையை உபதேசஞ்செய்ய வாரம்பிக்கும் அக்காலத்திலேயேதேவராஜாவாய இந்திரர் எமது மஸ்தகத்தைச் சேதிப்பர். மஸ்தகம் சேதிக்கப்படின், யானுங்கட்கு எங்ஙனம் பிரஹ்ம வித்தையை உபதேசிப்பேன். ஆகையால், மீண்டும் எனது வசனம் பொய்யேயாகும். அங்ஙனமாதலின், யான் நரகமெய்துவேன். ஹே மைந்தர்காள் ! இவ்வகையாய சிந்தை என் மனத்தின் கண்ணுளது. நீங்களிருவரும் புத்திமான்களாதலின், எவ்வுபாய மிப்போது யான் செய்யத் தகுதியோ அவ்வுபாயத்தை இப்போதெனக்கு நீங்கள் கூறுங்கள்.

ஹே அசுவினீ குமாரர்களே ! இங்ஙனம் உமதாசிரியர் உங்கள்பொருட்டுக்கூறவே நீவிரிருவரும் உங்கள் அர்த்தத்தில் லோபமுடையவர்களாய் தத்யங் இருஷியின் பொருட்டு இவ்வசனத்தைக் கூறினீர். ஹே ஆசிரியரே ! துஷ்ட இந்திரனினின்றும் தாங்கள்பயத்தை யடையவேண்டியதில்லை. ஏனெனின், அங்கங்களைச் சந்தானஞ் செய்யும் மிருதசஞ்சீவனீ வித்தையை யாங்களறிந்திருக்கின்றோம் ; ஆகையால், இந்திரனால் வஜ்ஜிராயுதம் வீசப்படினும், எங்கள் வித்தையின் மகிமையால் நிஷ்பலமாம். ஹே ஆசிரியோத்தமரே ! இந்திரனது வஜ்ஜிராயுதம் நிஷ்பலமாதல் தங்கட்கிஷ்டமின்றாயின், யாங்கள் வேறுபாயத்தைச் செய்கின்றோம். அவ்வுபாயத்தைத் தாங்கள் கேட்பீர்களாக :—இதோ எதிரில் தெரியும் குதிரையின் மஸ்தகத்தையும் தங்கள் மஸ்தகத்தையும் சேதித்துக் குதிரையின் மஸ்தகத்தைத் தங்கள் கழுத்தின்மீதும், தங்கள் மஸ்தகத்தைக் குதிரையின் கழுத்தின்மீதும் வைத்துவிடுகின்றோம். அதன்பின்னர் குதிரையின் முகத்தால் தாங்கள் எங்கட்குப் பிரஹ்ம வித்தையை உபதேசியுங்கள். தேவராஜாவாய விந்திரர் வஜ்ஜிரத்தால் தங்கள் மஸ்தகத்தைச் சேதிப்பின், நாங்கள் முன்போலத் தங்கள் மஸ்தகத்தைத் தங்கள் கழுத்தினும், குதிரையின் மஸ்தகத்தைக் குதிரையின் கழுத்தினும் வைத்து விடுகின்றோம். ஹே ஆசிரியரே ! இவ்வுபாயம் செய்தலாலித்துணைப பயனுண்டாம் :—முதலாவது, குதிரைக்குந தங்கட்கும் மரணமுண்டாகாது. இரண்டாவது, எங்களிருவர்க்கும் குரு ஹிம்சை யுண்டாகாது. மூன்றாவது, தங்கட்கு அபமிருத்யு உண்டாகாது. இந்திரனது வஜ்ஜிரத்தால் மிருத்யு உண்டாயின், அது சாஸ்திரத்தின்கண் அபமிருத்யுவெனபபடும். நான்காவது, தங்கட்கு எங்களால மித்தியாவசன மிலதாகும். ஹே அசுவினீ குமாரர்காள் ! நீங்களிருவரும உங்களர்த்த லோபத்தோடு கூடியவர்களாய் உங்கள் ஆசிரியர்பால் இவ்வண்ணங்கூறவே, சமதரிசியாய அவர் உங்கள் வசனத்தை அங்கீகரித்தனர். அதன்பின்னர் தயையற்ற புருஷன் பசுவின் மஸ்தகத்தைச் சேதிப்பதேபோலத் தயையற்ற நீங்களும் உமது குருவின் மஸ்தகத்தையும், அசுவத்தின் மஸ்தகத்தையுஞ் சேதித்தீர்கள். அதன் பின்னர் உமது குருவின் மஸ்தகத்தை அசுவத்தின் கழுத்தினும், அசுவத்தின் மஸ்தகத்தை உங்கள் குருவின் கழுத்தினும் வைத்தீர்கள். அதன்பின்னர் ஹயக்கிரீவரென்னும் பெயரையடைந்த உமதாசிரியரானவர் உங்கள் பொருட்டுச சித்த சுத்தியின் சாதனங்களாய கர்மோபாஸனைகளை உபதேசித்தனர். அதன்பின்னா உமதாசிரியா இவ்வகையாய உபதேசத்தைச் செய்யத் தொடங்குவாராயினர் :—ஹே அசுவினீ குமாரர்களே ! எதுபரியந்தம் சித்தசுத்தி யுண்டாகவில்லையோ, அது பரியந்தம் கர்மோபாஸனைகள் செய்யத்தக்கனவாம். சித்தசுத்தியின் பின்னர் கர்மோபாஸனைகளைச் செய்வதற்கு யாதோர்பயனுமின்றாம் ; ஆகையால், சித்தசுத்தியின்பின்னர் கர்மோபாஸனைகள் தியாகிக்கத்தக்கனவாம். கேவலம் வேதாந்த சாஸ்திர விசாரமே நிரந்தரம் செய்யத்தக்கதாம். இவ்வண்ணம் உமதாசிரியர் கூறி இந்திரருக்கு உபதேசித்தப் பிரஹ்மவித்தையையே உங்கட்கு உபதேசித்தனர். உபதேசித்து மீண்டும் இவ்வண்ணங் கூறுவாராயினர் :—ஹே மைந்தர்காள் ! உங்கட்கு உபதேசித்த இப்பிரஹ்ம வித்தையை இன்றுமுதல் மேன்மேல், சங்கையற்றவர்களாய்

எந்த இருஷிகளும் தம் சீஷர் பொருட்டுக் கூறார்; மற்றோ, சங்கையோடு கூடிய வர்களாய் கௌஷீதகி முதலிய இருஷிகள் தம் சீஷர் பொருட்டு இப்பிரஹ்ம வித்தையை உபதேசிப்பர். ஏனெனின், தேவராஜாவாய இந்திரர்கையின் கண்ணே வஜ்ஜிராயுதத்தை யேந்தி என்னைக் கொல்வதன்பொருட்டு ஆகாயத்தின் கண்ணே இருக்கின்றனர். மேலும், அவ்விந்திரர் இத்தகைய சங்கற்பத்தைத் தம் மனத்தின்கண்ணே செய்து கொண்டிருக்கின்றார் :—இப்பிராஹ்மணர் எனதாஞ ஞையைத் தாண்டி அசுவினீ குமாரர்கட்குப் பிரஹ்மவித்தையின் உபதேசம் முழுவ தையும் செய்வாராயின், வஜ்ஜிராயுதத்தால இப்பிராஹ்மணரது மஸ்தகத்தை யான் சேதிப்பேன் என இவ்வண்ணஞ் சங்கற்பித்துக் கொண்டு, அவ்விந்திரர் தமது வச னத்தை மெய்யாக்கும் பொருட்டு ஆகாயத்தின்கண்ணே இருக்கின்றனர். ஹே அசுவினீ குமாரர்களே! உங்கட்குப் பிரஹ்மவித்தை முழுவதையும் உபதேசித்த வுடனே அவ்விந்திரர் எனது மஸ்தகத்தை அவசியம் சேதிப்பர். எனது மஸ்தகம் சேதிக்கப்பட்டதைக் கண்டுப பிராஹ்மணர்களியாவரும் பயத்தையடைவர். இந் திராற்பயமடைந்த பிராமஹ்ணர்கள் தங்கள்பிரியமாய புத்திரர்கட்கும சம்பூரணப் பிரஹ்மவித்தையை உபதேசியார். மற்றோ, கௌஷீதகி முதலிய சில இருஷிகள் மாத்திரம் தம்சீஷர் பொருட்டுப பாதி பிரஹ்மவித்தையை உபதேசிப்பர். சில இருஷிகளோ தவம் முதலியவற்றால பரமான்மதேவரைப பிரசன்னப் படுத்துவர். அப்பரமான்ம தேவரின் அநுக்கிரகத்தோடுகூடிய அவ்விருஷிகள் எவனேனும் ஒரு சிஷ்யனுக்குப் பிரஹ்மவித்தையை உபதேசிபபர். ஆனால், அவர்கட்கும் தேவேந்திரரால் சிறிதுபயம் அவசியமுண்டாம். கருத்திதுவாம்:—சூரியபகவானைப் போலத் தேஜசையுடைய சூரியபகவானுடைய சீஷராய யாஞ்ஞவற்கிய முனிவரை ஒழித்து, ஒழிந்துள்ள அநநியசம்பூரண இருஷிகள் இந்திரரினின்றும் பயத்தை யடைவர். யாஞ்ஞவற்கிய முனிவர் ஒருவர்மாத்திரம் இந்திரரால் வரும்பயத்தை இலக்ஷியம் செய்யாமல் தம்சீஷர் பொருட்டுச சம்பூரணப பிரஹ்மவித்தையை உபதேசிப்பர். ஹே அசுவினீ குமாரரே! இவ்வண்ணம் உமதாசிரியரானவர் சம் பூரணப் பிரஹ்மவித்தையை உஙகட்கு உபதேசித்த வுடனே அவ்விநதிரர் வஜ்ஜி ராயுதத்தால் உமதாசிரியரின் மஸ்தகத்தைச சேதித்தனர. அம்மஸ்தகம் பூமி யின்கண்ணே கிடந்ததைக்கண்ட நீவிர அதனையெடுத்து மீண்டும் குதிரையின் கழுத்தில வைத்தீர், குதிரையின் கழுத்திலிருந்த உமதாசிரியரின் மஸ்தகத்தைக் கொணர்ந்து உமதாசிரியர் கழுத்தில் வைத்தீர், ஹே அசுவினீ குமாரரே! உம தாசிரியரானவர் எந்தப் பிரஹ்மவித்தையை உங்கட்குபதேசித்தனரோ, எந்தப் பிரஹ்மவித்தையின் லோபத்தால் குருவின் மஸ்தகத்தைச் சேதித்தல் வடிவ அநுசிதகர்மத்தை நீங்கள் செய்தீர்களோ, அநதப் பிரஹ்மவித்தையை மீண் டும் உங்கட்கு நினைவிக்கும் பொருட்டுச் சுருக்கமாய் யான் கூறுகின்றேன் நீவிர் கேண்மின் :—ஹே அசுவினீ குமாரர்களே! எங்ஙனம் உலகின்கண் மஹாராஜா வானவர் தாம் வசிக்கும்பொருட்டு முதலில் பெரும் புரியைச் செய்து, அதன் பின்னர் அற்பப்புரிகளைச் செய்வரோ அங்ஙனம், ஜகத் காரணமாய பரமான் மதேவர் முதலில் சமஷ்டிசரீர வடிவினதாய மஹாபுரியை யுற்பன்னஞ்செய்து

விபஷ்டி சரீரவடிவினவாய அநந்தஞ் சிறியபுரிகளை யுற்பன்னஞ் செய்தனர். அவற்றுள்ளும், கோ, அசுவமுதலிய சில சரீரங்களை நான்கு பாதங்களுடையனவாயுற்பன்னஞ் செய்தனர். மனுஷியர் முதலிய சில சரீரங்களை இரண்டு பாதங்களுடையனவாயுற்பன்னஞ் செய்தனர். சில சரீரங்களை மூன்று பாதங்களையுடையனவா யுற்பன்னஞ் செய்தனர். சில சரீரங்களை ஒருபாதமுடையனவாக உற்பன்னஞ் செய்தனர். பாம்புமுதலிய சிலசரீரங்களைப் பாதமற்றனவாக உற்பன்னஞ் செய்தனர். இவைமுதலாய அநந்தம் வகையாய சரீரங்களை யப்பரமான்மதேவர் உண்டாக்கினர். பறவையானது தனது சரீரத்தைச் சுருக்கித் தனது கூட்டின்கண் புகுவதேபோல, இவ்விபுவாய பரமான்மதேவரும் பரிச்சின்னத் தன்மை யபிமானரூப அத்தியந்தம் சூக்ஷ்மசொரூபத்தைத் தரித்து அச்சரீரங்களாகிய புரிகளின்கண் புகுந்தனர். ஹே அசுவினீ குமாரர்களே! இவ்வாநந்த சொரூப வான்மதேவர் சம்பூரண சரீரவடிவ புரிகளில் நிவாசஞ்செய்வர். அதனால் இவ்வான்மதேவர் சாஸ்திரத்தின்கண் புருஷரெனப்படுவர். அல்லது, இப்பரமான்மதேவர் தமது உண்மை விளக்க வின்பவடிவத்தால் சம்பூரண சரீர வடிவ புரிகளைப் பூரணஞ்செய்வர். இககாரணத்தால் அவர் சுருதியின்கண் புருஷரெனப்படுவர். ஹே அசுவினீ குமாரரே! சம்பூரண கடமடாதி பதார்த்தங்கள் உள்ளும் புறம்பும் ஆகாயத்தால் நிறைவிக்கப் பெற்றிருப்பதேபோல, இவ்வெல்லாப் பிரபஞ்சமும் பரமான்ம புருஷரால் நிறைவிக்கப் பெற்றிருக்கின்றது. நூற்களால் நிறைவிக்கப் பெற்றதும், குறுக்கு நெடுக்குற்றதுமாய வஸ்திரம் நூற்களினிடத்தேயிருக்கும்; அதுபோல இவ்வெல்லாவுலகும் ஆநந்தவடிவ வான்மாவின்கண்ணேயிருக்கும், எவ்வாநந்தவடிவ வான்மா முன்னரெல்லாச் சரீரங்களினும் பிரவேசித்ததோ, அவ்வாநந்த வடிவவான்மாவே இப்போது உங்களிருதயத்தின்கண்ணும், எனதிருதயத்தின்கண்ணும், மற்றெல்லாப் பிராணிகளிருதயத்தின்கண்ணும் விசேஷரூபமாய்ப் பிரதீதியாம. முன்னர்க் கடத்தின்கண்ணே பிரவேசித்த ஜலமே மத்திய காலத்திற் கடத்தின்கண் இருந்து விளங்குமன்றோ? ஜலம் இயற்கையாய் ஒருவடிவினதாயிருப்பினும் ஸ்தூலகடத்தின்கண் இருந்து ஸ்தூலமெனச்சொல்லப்பெறும். சூக்ஷ்மகடத்தின்கண் இருந்து சூக்ஷ்மமெனச் சொல்லப்பெறும், அக்கினியாற் காய்ந்தகடத்தின்கண் இருந்து காய்ந்ததெனக் கூறப்பெறும். குளிர்ந்தகடத்தின்கண் இருந்து குளிர்ந்ததெனக் கூறப்பெறும்; தூளியால் மறைபட்டகடத்தின்கண் இருந்து அழுக்குடையதென வறையப்பெறும், நறுநாற்றமுடைய கடத்தின்கண் இருந்து நறு நாற்றமென நவிலப்பெறும். தீநாற்றமுடைய கடத்தின்கண் இருந்து தீநாற்றமெனச் செப்பப்பெறும், வாயுவால் உருளுகின்ற கடத்தின்கண் இருந்து, உருளுகின்றதென உரைக்கப்பெறும். அசையாக்கடத்தின்கண் இருந்து அசையாததென வறையப்பெறும், சூரியனுலொளியுடைய கடத்தின்கண் இருந்து ஒளியுடையதென ஓதப்பெறும். இருளால் மறைபட்ட கடத்தின்கண் இருந்து இருளுருவமெனவியம்பப் பெறும். இவ்வண்ணம், எவ்வெவ்வுபாதியோடு ஜலம் சம்பந்திக்குமோ, அவ்வவ்வுபாதியின் வடிவத்தை அச்சலம்பெறும். அதுபோல, இவ்வாநந்த சொரூப வான்மாவும் ஸ்தூல சரீரத்தின் தாதாத்மிய சம்பந்தத்தால் தன்னை ஸ்தூலமென நினையும்,

சூக்ஷுமசரீரத்தின் தாதாத்மிய சம்பந்தத்தால் தன்னைச் சூக்ஷுமமென நினையும், ஜடசரீரத்தின் தாதாத்மிய சம்பந்தத்தால் தன்னைச் சடமென நினையும், மதிமானுடைய சரீரத்தின் தாதாத்மிய சம்பந்தத்தால் தன்னை மதிமானென மதிக்கும், தனிக சரீரத்தின் தாதாத்மிய சம்பந்தத்தால் தன்னைத் தனிகனென நினையும். தரித்திர சரீரத்தின் தாதாத்மிய சம்பந்தத்தால் தன்னைத் தரித்திரனென நினையும், தேவதை முதலிய மேலாய சரீரத்தின் தாதாத்மிய சம்பந்தத்தால் தன்னை மேலானவனென்று நினையும், தாழ்ந்த சரீரத்தின் தாதாத்மிய சம்பந்தத்தால் தன்னைத் தாழ்ந்தவனென நினையும், சுகிதுக்கி சரீரத்தின் தாதாத்மிய சம்பந்தத்தால் தன்னைச் சுகிதுக்கியென நினையும். இவை முதலாய் அநந்தவகையாய சரீராதியுபாதிகளின் தர்மங்களை அஞ்ஞானத்தால் மோகிப்பிக்கப்பட்டதாய இவ்வான்மா தன்னிடத்தில் அங்கீகரிக்கும்; விஷயாசக்தனாகிய காமியானவன், காமினி ஸ்திரீயின் தர்மங்களைத் தன்கண் உடன்படுவதேபோல. கருத்திதுவாம்:—காமினி விசாரமுடையவளா யிருப்பதைக்கண்டு காமியும் விசாரமுடையவனாவன். காமினி துக்கியாயிருப்பதைக் கண்டு காமியுந் துக்கியாவன். காமினி மகிழ்ச்சியுடையாளாயிருப்பதைக் கண்டு காமியும் மகிழ்வன். அதுபோல, இவ்வாநந்த சொரூப ஆன்மா புத்தியாதிகளின் சுகதுக்காதி தர்மங்களற்ற தாயினும் அஞ்ஞானத்தால் ஆக்கப்பெற்ற தாதாத்மிய சம்பந்தத்தால் அநதப் புத்தியாதிகளின் சுகதுக்காதி தர்மங்களைத் தன்னிடத்துடன்படும். ஹே அசுவினீ குமாரரே! இப்பரமான்ம தேவரே இச்சிருஷ்டியின் ஆதியில் ஆகாசாதி பஞ்ச பூதங்களையும், அப்பூதங்களின் காரியங்களாய சரீரங்களையும், சப்தப்பிரபஞ்சத்தையும் உண்டாக்கி அவ்வெல்லாப் பதார்த்தங்களோடுந தாதாத்மிய பாவத்தையடைந்து அவ்வெல்லாப் பதார்த்தங்கட்கும் வேறு வேறாய நாமங்களை வைத்தனர். இப்பரமான்மதேவர் வாக்குமுதலிய விந்திரியங்களோடும், வாக்குமுதலியவற்றை ஏவும்புத்தியோடும், தாதாத்மிய பாவத்தை யடைந்து வசன உச்சாரண முதலிய நாநாவியவகாரங்களைச் செய்பவராய் வாக்குமுதலிய வடிவங்களை யடைவர். அங்ஙனமே நீங்கள் யான் மற்றைப் பிராணிகள் என்பன முதலிய அநந்த வடிவங்களை யடைவர். ஹே அசுவினீ குமாரர்களே! உண்மையாய்ப் பேதமற்ற அசங்கவான்மா எப்பலவகையாய பேதத்தை யுண்டாக்கியதோ, அது தனது இந்திர சுபாவத்தை யறியும் பொருட்டுச் செய்யப்பட்டதாம். கருத்திதுவாம்:—இப்பரமான்ம தேவர் சம்பூரண ஜகத்தை யுண்டாக்கி யச் சம்பூர்ண ஜகத்தை யாத்மரூபமாய்ப் பார்த்தனர். அதனால், அப்பரமான்மதேவர் இந்திரரென்னும் பெயரை யெய்தினர். அவ்விந்திர நாமம் உலகுற்பத்தியன்றிப் பொருந்தாது. ஆகையால், உண்மையாய்ப் பேதமற்றவரேனும், இப்பரமான்ம தேவர் பலவகையாய பேதங்களைக் கற்பிப்பர்.

இபபோது சரீராதி உபாதிகளில் மித்தியாத்தன்மையை யுணர்த்துவிக்கும் பொருட்டு, முதலில் அவற்றின்கண் மாயையின் காரியத்தன்மையைக் காண்பிப்பாம்:—ஹே அசுவினீ குமாரரே! உலகின்கண் மாயாவியாய இந்திர ஜாலக்காரன் தனது மாயையினால் பலவகையாய யானை, புலி முதலிய வடிவங்களைத் தரிப்பதே

போல, ஒரே பரமான்மதேவர் தமது மாயையால் பலவகையாய வடிவங்களைத் தரிப்பர். ஆனால், அம்மாயையாலாக்கிய விசேஷ ரூபங்களால் பரமான்மாவின் உண்மைவிளக்க வானந்தவடிவ உண்மையியற்கை நீங்கமாட்டாது. இப்போது இவ்வர்த்தத்தையே யுத்திகளால் நிரூபிப்பாம்:—ஹே அசுவினீ குமாரர்களே! இவ்வுலகின்கண் புத்திமான்களாய கம்மியர் (பொற்கொல்லர்) முதலாயினோரும், அந்நிய வியற்கையினையுடைய சுவர்ணாதி பதார்த்தங்களை அந்நிய வியற்கைத் தாக்குவதில் வல்லவராகார்; மற்றோ, அச்சுவர்ணாதிகளில் குண்டலகடகாதி விசேஷ வடிவங்களைச் செய்வர். ஆகையால், வஸ்துவின் சுபாவத்தை வேறோராற்றால் செய்வதில் எவரும் வல்லவராகார். நூறு சிற்பிகள் ஒருங்கு கூடினும், நூலைச் சுவர்ணரூபமாய் ஆக்கமுடியாதன்றோ? ஆயிரங் குலாலர்கள் ஒருங்கு கூடினும் காஷ்டத்தை மண்ணாக்க முடியாதன்றோ?

சங்கை:—ஹே பகவன்! உபாயத்தால் வஸ்துவானது அந்நிய பாவத்தை யடையாதாயின், தாதுமாரண நூலின்கண் (இரசவாத நூலின்கண்) தாமிரம் முதலிய தாதுக்களைச் சுவர்ணஞ்செய்யும் வகையைக் கூறியது அசங்கதமன்றோ?

சமாதானம்:—தாதுமாரண நூன்முறையே யாவன் தாமிர முதலிய தாதுக்களைச் சுவர்ணஞ் செய்வனோ, அவனும் அசத்திய சுவர்ணத்தை யுண்டாக்கான். ஏனெனின், உபாயத்தால் அசத்திய வஸ்துவிற்கும் உற்பத்தி யுண்டாமாயின், அசத்தியமாய முயறகோடும், மலடிமகனும் உபாயத்தால் உற்பத்தியாதல் வேண்டும். அசத்தியமாய நரசிருங்கம் (மனுஷக்கொம்பு) முதலியவையுண்டாகா. ஆகையால், ஔஷதம் முதலிய உபாயங்களால் அசத்திய சுவர்ணத்தின் உற்பத்தி யுண்டாகமாட்டாது; மற்றோ, ஔஷதபலத்தால் தாமிராதி தாதுக்களின் முன்னருள்ள சிவப்புவடிவம் மறைநது, அவறறில் மஞ்சள்வடிவமுண்டாம். ஆயினும், முன்னுள்ள தாமிரதாதுவினும் அபபொன் வேறன்றாம்.

சங்கை:—ஹே பகவன்! பூர்வ தாமிரதாதுவினும், சுவர்ணம் வேறன்றாயின், இச்சுவர்ணம் பூர்வ தாமிரதாதுவினும் வேறு என்னும் பேதப் பிரதீதி அவர்கட்குண்டாகலாகாதன்றோ?

சமாதானம்:—ஆண்டு தாமிரதாதுவிற்கும் சுவர்ணத்திற்கும் பரஸ்பரம் பேதமின்றேனும் சிவப்புவடிவத்திற்கும், மஞ்சள்வடிவத்திற்கும பரஸ்பரம் பேதமுண்டு. அப்பேதத்தை யங்கீகரித்தே அவர்கட்கு இச்சுவர்ணம் பூர்வதாமிரத்தினின்றும் வேறாம் என்னும் பிராந்தியுண்டாகின்றது. ஆகையால், ஹே அசுவினீ குமாரரே! மண், சுவர்ணம் முதலியவற்றிற்கு முன்னியற்கை எங்ஙனமுளதோ, அங்ஙனமே சர்வகாலத்தினு மிருக்கும்; ஒருகாலத்தும் அவற்றின் சுபாவம் மாறாது.

சங்கை:—ஹே பகவன்! வஸ்துவினியற்கை மாறாதிருக்குமாயின், குலால தண்டசக்கராதிகள் மண்ணினின்றும் கடத்தை யுண்டாக்குகின்றனவே, அப்போது அக்குலாலாதி காரணங்கள் பயனற்றன வன்றோ?

சமாதானம்:—ஹே அசுவினீ குமாரரே! குலாலாதிகளால் மண் வேற்றுருவத்தை யடையாது; மற்றோ, குலாலாதிகாரணங்களால் அம்மண் கடம்சராவம்

முதலிய விசேஷ ரூபங்களை யுடையுமாதலின், குலாலாதிகாரணங்கள் பயனற்றன வன்றாம்.

சங்கை :—ஹே பகவன் ! கடம் *சராவம முதலிய விசேஷரூபங்களை, மண்ணின் இயற்கை ஏன் ஆகா ?

சமாதானம் :—ஹே அசுவினீ குமாரரே ! கடம் சராவம் முதலிய விசேஷ ரூபங்கள் மண்ணின் இயற்கையன்றாம். மண்ணின் இயற்கையேயாமாயின், கடாதி விசேஷ ரூபங்களின் அழிவுண்டானபின், மண்ணின் தோற்றம் உண்டாகலாகாது. கடம் சராவம் முதலியவையின்றியும் மண் தோற்றுகின்றது. ஆகையால், கடம் சராவம் முதலிய விசேஷ ரூபங்கள் மண்ணின் இயற்கை யன்றாம். கருத்திது வாம் :—எவ்வஸ்துவிற்கு எவ்வியற்கை யுளதோ, அவ்வியற்கை நீங்கின் அவ் வஸ்துவும் நீங்கும். தேயுவினியற்கையாய பிரகாசம் நீங்கின் அத்தேயுவும் நீங்கு மாறுபோலக் கடம் சராவம் முதலிய விசேஷ ரூபங்கள் மண்ணின் இயற்கையாமா யின், கடாதிகள் நாசமடையுங்கால் மண்ணிற்கும நாசமுண்டாம்; ஆனால், கடா திகள் நாசமுறினும், மண் நாசமாவதின்றாம்; ஆகையால், கடம் சராவம் முத லிய விசேஷரூபங்கள் மண்ணின் இயற்கையன்றாம். அல்லது, உலகின்கண் விசேஷ ரூபம் நஷ்டமாயின், வஸ்துவின் நாசமுண்டாகாது. மூர்த்த ஸ்வபாவத்தையுடைய பிருதுவி பூர்வ பிண்டவடிவ விசேஷபாவத்தை யொழித்துக் கடபாவத்தையடை யும். ஆயினும், தனது மூர்த்தஸ்வபாவம ஒருகாலும் ஒழியாது. இதுகூறிய தால் இது துணிபப்பெறுமன்றோ ? மண், சுவாணம் முதலிய வஸ்துக்களிருப்பி னும், கடம் சராவம் முதலிய விசேஷ ரூபங்களும், குண்டலம் கங்கணம் முதலிய விசேஷ ரூபங்களும் தோற்று ; ஆகையால, அககடாதி விசேஷ ரூபங்கள் மண் முதலிய வஸ்துக்களின்கண் வரவு போக்குடைய தர்மங்களாம். எப்பதார்த்தம் வரவுபோக்குடையதாமோ அபபதார்த்தம் அவ்வஸ்துவி னியற்கையன்றாம். மாயா வியாய இநதிரஜாலக்காரன், தனது மாயையின் மகிமையால் ஒருகால் சிம்ஹ உருவத்தைத் தரிப்பன், ஒருகால யானை உருவத்தைத் தரிபபன், அசசிம்ஹத்தன் மையும் யானைத்தன்மையும் மாயாவியினிடத்தே யெப்போதுமிரா ; மற்றோ, ஒரு நிமித்தத்தை முன்னிட்டு ஒவ்வொரு சமயத்துளவாம். ஆதலின், வரவுபோக் குடையதால் அச்சிம்ஹத்தன்மையும் யானைத்தன்மையும், மாயாவியினியற்கை யன்றாம். அதுபோலவே, கடம் சராவம் முதலிய விசேஷ ரூபங்கள் மண்முதலிய வஸ்துக்களின் வியற்கையன்றாம். இப்போது அவ்விசேஷ ரூபங்களில் சத்திய வசத்தியத்தினின்றும விலக்ஷணத்தன்மையைக் காண்பிப்பாம் :—ஹே அசுவினீ குமாரர்களே ! அவ்விசேஷரூபங்கள் வஸ்துவைப்போலச் சத்தியமாயின், வஸ்துவி னியற்கையைப்போல அவ்விசேஷரூபங்களின் பாதமுண்டாகலாகாது ; ஆனால், வஸ் துவிருப்பினும் அவ்விசேஷரூபங்களின் பாதத்தைக் கண்டோம் ; ஆகையால், அவ் விசேஷரூபங்கள் சத்தியமன்றாம் ; மற்றோ, சததியத்தினும் விலக்ஷணமாம். அவ் விசேஷரூபங்கள் அசத்தியமுமன்றாம்; ஏனெனின், மலடிமகன், மனுஷக்கோடுமுத

* சராவம்=ஒரு மட்பாத்திர விசேஷம்,

லிய வசத்திய பதார்த்தங்கள்; இவை விழிமுதலிய பொறிகளின் சம்பந்தத்தால் எவ்வுயிர்கட்கும் கண்கூடாய்ப் புலப்படுவதின்றாம்; இவ்விசேஷ ரூபங்களோ யாவருக்கும் விழிமுதலிய பொறிகளின் சம்பந்தத்தால், கண்கூடாய்ப்புலப்படும். ஆகையால், அவ்விசேஷ ரூபங்கள் அசத்தியத்தினும் விலக்ஷணமாம். எப்பதார்த்தம் சத்தியவசத்தியத்தினின்றும் விலக்ஷணமாமோ, அப்பதார்த்தம் சித்திரசிதம்போலப் பொய்யேயாம். எப்பதார்த்தம் பொய்யேயாமோ, அப்பதார்த்தம் மாயையின் காரியமேயாம். ஆகையால், சம்பூரண விசேஷரூபங்கட்கு மாயையே காரணமாம்.

இப்போது அம்மாயையை நிரூபிப்பாம்:—ஹே அசுவினீ குமாரரே! உண்மையாய் அத்தியந்தம் அசத்தாய விசேஷரூபங்களின் பிரத்தியக்ஷம் நேத்திராதி இந்திரியங்களாற் சம்பவியாது; அவ்விசேஷங்களின் பிரத்தியக்ஷமோ, சர்வஜனங்களுக்கும் உண்டாகின்றதாதலின், எதன் மகிமையால் அவ்வசத்திய விசேஷரூபங்களின் பிரத்தியக்ஷமுண்டாகின்றதோ, அதன் பெயர் மாயையாம். கருத்திதுவாம்:—பகலின்கண் உண்ணாத பருத்த புருஷனுடைய பருமை, இரவுணவின்றிப் பொருந்தாதாதலின், அப்புருஷன் பருமை, அவனது இரவினுணவைக் கற்பிக்கும். அங்ஙனமே, முற்றிலும் அசத்தியமாய விசேஷ ரூபங்களின் பிரதீதியானது. அம்மாயையினாலன்றிச சம்பவியாதாதலின், அவ்விசேஷ ரூபங்களின் பிரதீதியே மாயையைக் கற்பிக்கும்.

சங்கை:—ஹே பகவன்! முற்றிலும் அசத்தியமாய மலடிமகன், மனுஷக்கோடு முதலியவற்றின் பிரத்தியக்ஷஞானம் எவருக்கும் உண்டாவதின்றாம்; ஆனால், முற்றிலும் அசத்தியமாய விசேஷ ரூபங்களின் பிரத்தியக்ஷஞானம் யாவருக்கும் உண்டாகின்றது. இதன்கண் யாது காரணம்?

சமாதானம்:—ஹே அசுவினீ குமாரரே! அசத்தியமாய, மலடிமகன், மனுஷக்கோடு முதலியவற்றிற்கும், கடாதி விசேஷ ரூபங்கட்கும் உண்மையாய்ப் பேதமின்றேனும், செய்பக்கூடாததைச் செய்விக்கு மாயையால் அவற்றின் பேதகற்பனை யுண்டாம். விசேஷரூபங்களும், மனுஷக்கோடு முதலியவற்றினின்றும் அவற்றின் பேதமும், மாயையாற கற்பனையாம். அதுபோல, மாயையும் மாயையாலேயே கற்பனையாம். ஏனெனின், கடாதி விசேஷ ரூபங்களும், மனுஷகக்கோடு முதலியவற்றினின்றும் அவற்றின் பேதமும் அசத்தியங்களாம். அங்ஙனமே மாயையும் அசத்தியமேயாம். அசத்தியவஸ்துவின் சித்தி மாயையினாலன்றி யுண்டாகாது. கருத்திதுவாம்:—குகையின்கண் இராநின்ற புலியின் ஞானம் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களா லுண்டாவதேபோல, மாயையின் ஞானம் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களா லுண்டாகாது. ஏனெனின், எபபதார்த்தத்தால் எப்பதார்த்த நீக்கமுண்டாமோ, அப்பதார்த்தத்தால் அப்பதார்த்தத்தின் சித்தி யுண்டாகாது. பிரகாசத்தால் அந்தகாரத்தின் நீக்கமுண்டாதலின், அந்தகாரத்தின் சித்தியுண்டாகாததேபோல, பிரமாண ஜந்ய ஞானத்தால் அஞ்ஞானத்தின் நீக்கமுண்டாதலின், அதனால் அஞ்ஞானவடிவ மாயையின் சித்தி சம்பவியாது. மற்றோ, மாயையினாலேயே மாயையின் சித்தியுண்டாம்.

இப்போது அஞ்ஞானிகளின் பிரதீதியால் மாயையின் சித்தியைச் செய்வாம் :—ஹே அசுவினீ குமாரரே ! அசத்திய மனுஷக்கோடு மலடிமகன் முதலியவற்றினின்றும், இப்பி வெள்ளி முதலிய விசேஷரூபங்களின் பேதம் எவ்வேதுவால் உளது என ஒருவன் அஞ்ஞானியை நோக்கி வினவினுனாயின், அவ்வஞ்ஞானி யானறியேனென்னும் விடையைக் கொடுப்பன் ; ஆதலின், யானறியேனென்னும் அஞ்ஞானியின் பிரதீதியே துர்க்கடமாய மாயையைச சாதிப்பதாம்.

இப்போது மாயையின் துர்க்கடத்தன்மையை யுணர்த்தும் பொருட்டு நான்கு வகையாய் மாயாசத்தத்தி னர்த்தத்தை நிரூபிப்பாம் :—அவற்றுள், (1) யாது முக்காலத்தினு மிலதாமோ, அதனை மதிமான்கள் மாயையென்பர். அல்லது, (2) காரிய காரணரூப உலகபேதத்தின் காரணமாயதை நூலுணர்ந்தோர் மாயையென்பர். அல்லது, (3) நமது சொரூபஞானத்தை நமக்குண்டாக வொட்டாமல் யாது மறைக்கின்றதோ அதனை யறிஞர் மாயையென்பர். அல்லது, (4) உண்மையுணர்வால் யாது நீங்குமோ அதனை யறிஞர் மாயையென்பர். இப்போது இம்மாயா சப்தத்தின் அர்த்தத்தை வெளிபபடையாய்க் காண்பிப்பாம் :—ஹே அசுவினீ குமாரரே ! இவ்வாநந்தசொரூப வான்மா உண்மையாய் அசங்கமாம், ஸ்வப்பிரகாசமாம், சஜாதீய விஜாதீய சுவகத பேதங்களற்றதாம். இத்தகைய அசங்க அத்விதீய வான்மாவின்கண் மாயையின் சம்பவம் உண்டாகாது. உண்மையாய் ஆன்மாவின்கண் ஜகத்தின் காரணத்தன்மை சம்பவியாது. சுருதியின்கண் ஆன்மாவை ஜகத்தின் காரணமெனவும், சர்வ ஜகத் வடிவினதெனவுங் கூறப்பட்டுளது என இவ்வண்ணம் விசாரித்து வேதததை யுணர்ந்த புருஷன் அசங்க வான்மாவின்கண் ஜகத்தின் காரணத்தன்மையைத் துணிதற்பொருட்டு மாயா கற்பனையைச் செய்கின்றனன். சூரிய னுதயமாயின் இருளொழிவதேபோல, இவ்வகையாய ஞானம் ஜீவர்கட்குண்டாகவே அவர்கட்கு அஞ்ஞான நிவிருத்தியுண்டாம். இவ்வாநந்தவடிவ ஆன்மாவே சம்பூரண ஜகத்துற்பத்தி திதி லயங்கட்குக் காரணமாம். இவ்வெல்லா உலகும் உண்மை விளக்க இன்ப வடிவமாம். இவ்வான்மா சச்சிதாநந்த சொரூபமாம ; பிரஹ்மரூபமாம் என்னும் உண்மையுணர்வால் அஞ்ஞான நிவிருததியுண்டாம. ரஜ்ஜுவின் விசேஷ ரூபங்களாய சர்ப்பதண்டாதிகள் ரஜ்ஜுரூப வதிஷ்டான ஞானத்தானீங்கும் ; அதுபோல, நிர்விசேஷ வான்மாவின் விசேஷரூபப் பிரபஞ்சமும், அப்பிரபஞ்சத்தின் காரணமாய அஞ்ஞானமும், அதிஷ்டான வான்ம சாக்ஷாத்காரத்தா னீங்கும். இக்காரணத்தால் சாஸ்திரத்தை யுணர்ந்த புருஷர் அஞ்ஞானத்தை மாயையென்பர். விளக்கால் இருளின் ஞானமுண்டாகாததேபோல, எம்மைப்போன்ற விவேகிபுருஷர் யாண்டு யாண்டு திருஷ்டியைச் செலுத்துகின்றேமோ, ஆண்டாண்டு மாயையைக் கண்டிலேம் ; ஆகையால், உண்மை ஞானத்தால் யாது நீங்குமோ அது மாயையாம் என மாயாசப்தத்தின் அர்த்தம் சம்பவிக்கும. ஹே அசுவினீ குமாரரே ! ஜகத்தின் காரணமாயை ஒன்றுமென்றுலும், இது கடம், இது பட மென்பதாதி அநேக ஞானங்கள் கடாதி விஷயங்களின் அஞ்ஞானங்களை நீக்குமாதலின்,

அவ்வொரே மாயை யநந்த ரூபங்களைத் தரிக்கும். அவ்வநந்த ரூபங்கள் சாஸ்திரத்தின்கண் தூலாஞ்ஞான மெனப்படும். அவஸ்தாஞ்ஞான மெனவும்படும். மூலாஞ் ஞானத்திற்கும், தூலாஞ் ஞானத்திற்கும் இத்துணைப் பேதமுளது:—எவ்வஞ்ஞானம் பிரஹ்மத்தை யாசிரயித்துப் பிரஹ்மத்தையே மறைக்குமோ, பிரஹ்ம ஞானத்தாலேயே நீங்குமோ அது மூலாஞ்ஞானமெனப்படும். எவ்வஞ்ஞானம் கடாதி விஷயாவசின்ன (விஷயத்தால் வரைந்துகொண்ட) சைதன்யத்தை யாசிரயித்து அதனையே மறைக்குமோ, அதன் ஞானத்தாலேயே நீங்குமோ, அது தூலாஞ் ஞானமெனப்படும், அவஸ்தாஞ் ஞானமெனவும்படும். இவ்வவஸ்தா ஞானங்களைக் கவர்ந்தே இந்திரன் மாயைகளாற் பலரூபங்களை யடைகின்றனன் என்பதுமுதலிய சுருதிகளில் அநேக மாயைகள் கூறப்பட்டிருக்கின்றன. ஒரு *அஜை என்பதுமுதலிய சுருதிகளில் மாயைக்கு ஒருமை கூறப்பட்டுள்ளது; அது மூலாஞ் ஞானத்தைக் குறித்துக் கூறியதாம். இவ்வகையாய மாயையால் அப்பரமான்ம வடிவ இந்திரர் பலவகையாய ரூபங்களைத் தரிப்பர். ஒரே மாயாவியாய இந்திரஜாலக்காரன் தனது மாயையால் அநேக வடிவங்களைத் தரிப்பதேபோல, உண்மையாய் ஏக அத்விதீய வடிவ பரமான்மதேவர் தமது மாயையால் அநந்தரூபங்களைத் தரிப்பர். இவ்வண்ணம் ஸ்ரீ வியாசபகவான் முதலிய தத்துவத்தையுணர்ந்த பெரியோர் மாயையால் ஆன்மாவின்கண் பல உருவத்தன்மையைக் கூறியுள்ளாராயினும், அப்பெரியோர்கட்கு ஆன்மாவின் நானாத்தன்மையிற் கருத்தின்றாம். மற்றோ, ஆன்மாவிற்கு ஒருமையை யுணர்த்தும்பொருட்டு அம்மஹாத்ம புருஷர் லௌகிகப் பிரமாணத்தால் துணியப்பெற்ற நானாவகையாய பேதங்களை அநுவாதஞ்செய்துளார். உலகப்பிரசித்த அர்த்தத்தைக் கூறுவதாய வசனமியாதோ, அது அநுவாதமெனப்படும். தீ பனிக்கு மருந்து என்னு மிவ்வசனம் லோகப்பிரசித்த வர்த்தத்தை அநுவாதஞ்செய்யும். ஏனெனின், தீயின்கண் பனி நீக்குங் காரணத்தன்மை யாவர்க்கும் அநுபவசித்தமாம். அதுபோலச் சர்வ அஞ்ஞானி ஜீவர்களின் அநுபவத்தாற் பெறப்பட்ட நானாவகையாய பேதத்தை யறிஞர் அநுவாதஞ்செய்துளார். மீண்டும் அம்மஹான்மபுருஷர் உலக காரணத்தின்கண் லௌகிகப்பிரமாணங்களின் பிரவிருத்தியின்மையைக் கண்டு சர்வ வியவகாரங்களின் சித்தியின்பொருட்டு ஒரு மாயையையே காரணரூபமாய்க் கற்பித்துளார். கருத்திதுவாம்:—சம்பூர்ண அறிஞர் அத்விதீய ஆன்மாவை யறிவுறுத்தும்பொருட்டும், முமுக்ஷுக்களின் புத்தி விருத்தியின்பொருட்டும், ஆநந்தசொரூப ஆன்மாவின்கண்ணே பலவகையாய் ஜகத்தை யாரோபணஞ் செய்துளார். ஹே அசுவினீ குமாரரே! இவ்வபிப்பிராயத்தாற்றான் தத்யங் இருஷியானவர் உங்கட் கறிவுறுத்துவான்வேண்டி ஆன்மாவின் பேதகாரணமாய சரீரேந்திரிய விஷயபேதத்தை உங்கள்பொருட்டுக் கூறினார். ஆனால், ஆன்மாவின் பேதத்தின்கண் அவருக்குக் கருத்தின்றாம்; மற்றோ, ஆன்மாவின்கண் பேதத்தை யாரோபித்து அதன் நிஷேதவாயிலாய் அத்விதீய வான்மாவை யறிவுறுத்துவதில் அவருக்குக் கருத்தாம். இப்போது இந்திரியங்களின் பேதகாரணத்தன்மையைக் காண்

---

* அஜை=பிறப்பற்றவள்.

பிப்பாம் :—ஹே அசுவினீ குமாரரே! சுவர்க்கத்தின்கண் இராநின்ற தேவராஜா வாய இந்திரர் மூவுலகின்கண்ணே அநேக காரியங்களைச் செய்யும்பொருட்டுத் தனது மாயையால் அநேக ரூபங்களைத் தரிப்பர். அத்தகைய தேவராஜாவின் தேரின்கண் வாயுவின் சமானவேகமுடைய அநேகம் வகையான புரவிகள் பூட் டப்பட்டிருக்கின்றன. அதுபோல, இச்சம்சாரத்தின்கண் இராநின்ற பரமான்ம வடிவ இந்திரருக்குச் சரீரமாகிய தேரின்கண் அத்திபந்தம் பிரபலமுடைய இந்திரி யங்களாகிய குதிரைகளிருக்கின்றன. அவ்விந்திரியங்களாகிய குதிரைகள் ஒவ் வொரு சரீரத்தின்கண்ணும் பத்துவகையாம். அவ்வெல்லா விந்திரியங்களாய குதிரைகளும் ஆன்மாவின் பேதத்தைச் செய்வனவாம். கருத்திதுவாம் :—நேத்தி ராதி இந்திரியங்கட்கு விஷயங்களோடு சமபந்தமாங்கால் அந்தக்கரண விருத்தி அவ்விஷயாகாரத்தை யடையும். ஆகையால், நேத்திராதி இந்திரியங்கள் அந்தக் கரண விருத்திகளைப் பேதஞ்செய்வனவாம்; விருத்திகட்குப பேதமுறவே அவ் விருத்திகளிற் பிரதி விம்பிதமாய ஆன்மாவிற்கும பேதமுண்டாம். இந்நெறியால் நேத்திராதி இந்திரியங்கள் ஆன்மாவின் பேதத்தைச்செய்வனவாம். இத்துணையால் ஆன்மாவின்கண் இந்திரியங்களின் பேதவத்தியாரோபங் காண்பிக்கப்பட்டது.

இப்போது அவறறின் அபவாதத்தைக் காண்பிபபாம் :—ஹே அசுவினீ குமா ரரே! எவ்விந்திரியங்களால் இவ்வான்மா பேதததை யடைநததோ, அவ்விந்திரி யங்களோடு கூடிய சம்பூரணப் பிரபஞ்சத்திற்கு இவ்வான்மா வதிஷ்டானமாம். இக்காரணத்தாலே நேதிநேதி யென்னுஞ் சுருதியானது கற்பிதப் பிரபஞ்சத்தை நிஷேதித்துச் சர்வ பேதமற்ற அதிஷ்டான வான்மாவைப் போதிக்கும். இத் துணையால் துவமபதார்த்தத்தின் சோதனங் காண்பிக்கப்பட்டது.

இப்போது தற்பதார்த்த சோதனப் பிரகாரத்தைக் காண்பிப்பாம் :—ஹே அசுவினீ குமாரரே! எவ்வஸ்து நானுவித பேதங்களாலும் பேதத்தை யடைவதில் லையோ, அதனை யறிஞர்கள் பிரஹ்மரூபமாய் நிசசயஞ் செய்துளார்; அநதப் பிரஹ் மம் கிழக்கு மேற்கு முதலிய திசைகளற்றதாம். இறநதகாலம், எதிர்காலம், நிகழ் காலமென்னு முக்காலங்களற்றதாம; உள் வெளி இயறகைகளையுடைய பதார்த்தங் களினும் வேறாயதாம், இவ்வண்ணம் தத்துவம் பதார்த்தங்கள் சோதிக்கப் பட்டன.

இப்போது அப்பதார்த்தங்களின் அபேதத்தைக் காண்பிப்பாம் :—ஹே அசு வினீ குமாரரே! சர்வ தேகதாரிகளாய ஜீவர்களும் ஏகவத்விதீய வான்மாவை அஹம் பிரஹ்மாஸ்மி யென்பதாதி மஹாவாக்கியங்களால், பிரஹ்மரூபமாய் அறிதல் தகுதியாம். அந்தப் பிரஹ்மரூப வான்மா, காண்போன் வடிவமாயும், கேட்போன் வடிவமாயும் சம்பூரண ஜகத்தை யநுபவிக்கின்றது. சம்பூரணஜகத் திற்கும் ஆன்மாவாம், சம்பூரண புத்தியாதிகட்குச் சாக்ஷியாம், ஸ்வப்பிரகாச வாநந்த சொரூபமாம். ஹே அசுவினீ குமாரரே! இவ்வண்ணம், உமதாசிரிய ராகிய தத்யங் இருஷியானவர் சர்வ முமுக்ஷு ஜனங்களின் மங்கலத்தின் பொருட்டு உங்கள் வாயிலாய் ஆநந்தஸ்வரூப வான்மாவை உபதேசித்தனர்.

ஸ்ரீ குருகூறல்:——ஹே சிஷ்ய! இந்தப் பிரகாரம் அந்த இருஷியானவர் அசுவினீ குமாரர்களின்பொருட்டு முன்னடந்த ரகஸ்யமான விருத்தாந்தத்தைக் கூறினார். அவ்விருஷியின் வசனங்களைக்கேட்டு அவ்வசுவினீ குமாரர்கள் அத்தியந்தம் மகிழ்ச்சி யடைந்தனர். அந்த இருஷியின் சர்வஞ்ஞத்தன்மையை யறிந்து அவரை நமஸ்கரித்தனர். எக்காரியத்தின் பொருட்டு அந்த இருஷியானவர் தங்கள்பால் வந்தனரோ, அக்காரியத்தை அவ்வசுவினீ குமாரர்கள் முடித்துக் கொடுத்தனர். ஹே மைந்த! முன்னர் நீ, கௌஷீதகி இருஷியின் பயகாரணத்தை வினவினும் அதனையாம் நின்பொருட்டு விஸ்தாரமாய்க் கூறினேம், தத்யங் இருஷியின் மஸ்தகம் சேதிக்கப்பட்டதைக் கண்ட அக்கௌஷீதகி இருஷியானவர் இந்திரரால் பயத்தை யடைந்தனர். இக்காரணத்தாலே சிஷ்யர்களின் பொருட்டுச் சம்பூரணப் பிரஹ்ம வித்யா உபதேசத்தைச் செய்திலர், இதுவே கௌஷீதகி இருஷியின் பயகாரணமாம். ஹே சிஷ்ய! தத்யங் அதர்வண இருஷிக்கும், அசுவினீ குமார இந்திரருக்கும், பரஸ்பர சம்வாதவடிவ இவ்விதிகாசத்தை யாம் நின்பொருட்டுக் கூறினேம், இவ்விதிகாசம் முன்னர் வேதமந்திரங்களாற் கூறப்பட்டுளது. இப்போது எவ்வர்த்தத்தைக் கேட்க நினக்கிச்சை யிருக்கின்றதோ, அதை எம்மிடத்தே கூறுவாயாக.

ஸ்ரீ ஆத்மபுராணம்.

நான்வது அத்தியாயம் முற்றும்.

---

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## ஐந்தாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாய நம ஃ ஸ்ரீ குருப்யோ நம ஃ ஸ்ரீ சங்கராசார்யேப்யோ நம ஃ
ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம் நம ஃ.

ஆண்டு நான்காவதத்தியாயத்தின்கண் யஜுர்வேதத்திலுள்ள பிரகதாரண்யக உபநிஷத்தின் மதுகாண்டப்பொருளை நிரூபித்தாம்:—இப்போது ஐந்தாவதத்தியாயத்திலும், ஆறாவ தத்தியாயத்திலும் அந்தப் பிருகதாரண்யக உபநிஷத்தின் யாஞ்ஞவற்கிய காண்டப்பொருளை நிரூபிப்பாம்:—

ஆண்டுப் பூர்வ அத்தியாயத்தில் தத்யங் இருஷியின் * ஆக்கியானத்தைக்கேட்டு அச்சீடன் அத்தியந்தம் ஆச்சரியத்தை யடைந்தனன். மீண்டும், சிறிது பொருளை வினவும் வேட்கையனாய் அச்சீடன் இரு கரங்களையுங் கூப்பி, ஸ்ரீ ஆசிரியரை நோக்கிக் கூறுவானாயினன்:—ஆண்டுத் தன்னிடத்தே முதிர்மதியுடைய தன்மையை வெளிப்படுத்துவான், அச்சீடன் பூர்வ அத்தியாயங்களில் கேட்ட கதைகளைக் குருவின்பொருட்டு முதலில கூறுகின்றான். சீடன் கூறல், ஹே பகவன்! முதலாவது அத்தியாயத்தில் தாங்கள் சனகாதி இருஷிகட்கும், வாமதேவாதி

---

* ஆக்கியானம்=கதை.

அதிகாரி ஜனங்கட்கும் சம்வாதவடிவமாய் ஐதரேய உபநிஷதர்த்தத்தின் நிரூ பணத்தைச் செய்தீர்கள். இரண்டாவது அத்தியாயத்தின்கண் இந்திரப் பிரதர்த் தன சம்வாதவடிவமாய்த் தாங்கள் கௌஷீதகி உபநிஷத்தின் அர்த்த நிரூபணம் செய்தீர்கள். மூன்றாவது அத்தியாயத்தின்கண் அஜாதசத்துரு பாலாகியின் சம் வாதவடிவமாய்த் தாங்கள் அக்கௌஷீதகி உபநிஷதர்த்தத்தையே நிரூபணம் செய்தீர்கள். நான்காவ தத்தியாயத்தில் எப்பிரஹ்ம வித்தையைக் கௌஷீதகி இருஷியானவர் இந்திராது பயத்தால் கூறிலரோ, அந்தப் பிரஹ்ம வித்தையையும் தத்யங் இருஷி அசுவினீ குமாரர்களின் சம்வாத வாயிலாய்த் தாங்கள் கூறினீர் கள். வேதவித்தையின் பிரவர்த்தகர்களாய இருஷிகளின் வம்சத்தையும் தாங் கள் என்பொருட்டுக் கூறினீர்கள். அவ்விருஷிகளின் வம்சங்களோ, ஹிரண்ய கர்ப்பரே முதலாய், சூரியபகவானே முதலாய், பௌதிமாஷ்யரெனப் பெயரிய இருஷிபரியந்தம் விஸ்தாரமாயுள. ஹிரண்ய கர்ப்பரையும் சூரிய பகவானையும் மூலமாயுடையன. ஒரு ஸ்திரீவம்சம் இரண்டு புருஷவம்சம் என்னும் மூவகை யாய சிஷ்யபரம்பரைகளை யுடைத்தானவை. அத்தகைய அருமையாய இருஷி வம் சங்களையும் தாங்கள் என்பொருட்டுக கூறினீர்கள். அம்மூன்று வம்சத்தின்கண் ணும் எவ்வளவோ இருஷிகளின் இலக்ஷண நாமங்களைக் கண்டு, அவர்தம் பேதத் தையும் தாங்கள் கூறினீர்கள். எவ்வளவோ இருஷிகளின் நாமங்களினுடைய சமானரூபத் தன்மையைக் கண்டு அவ்விருஷிகளின் அபேதத்தையும் தாங்கள் கூறினீர்கள். அவ்விருஷிகளின் வமசத்தின்கண் தெய்வ அதர்வணரெனப் பெய ரிய இருஷியினுடைய சீடராய தத்யங் அதர்வணரெனப் பெயரிய இருஷியானவர் அசுவினீ குமாரர்கட்கும், இநதிரருக்கும், மதுகாண்டத்தை உபதேசித்ததையும், அத்தகைய அவரது விருத்தாந்தத்தையுட தாங்கள் என்பொருட்டுக் கூறினீர்கள். தத்யங் இருஷியினிடத்தே தேவராஜாவாய இநதிரரது குராத்மத் தன்மையையும் தாங்கள் கூறினீர்கள். ஆசிரியரின் மஸ்தகத்தைச் சேதித்தல் வடிவ உக்கிர கர் மத்தையும், அதன்கண் முயன்ற அசுவினீ குமாரர்களின் விழைவையுந் தாங்கள் என் பொருட்டுக் கூறினீகள். ஹே பகவன்! முன்னர்த் தாங்கள் இந்திரர் தத்யங் இருஷியினுடைய மஸ்தகத்தைச சேதித்தவுடன் அந்த இருஷியானவர் ஹயக்கிரீவ பாவத்தை (பரிச்சிரமுடைமையை) யடைநது அசுவினீ குமா ரர்களின் பொருட்டுக் கூறினர் :—ஹே அசுவினீ குமாரரே! இன்று முதல் மேன்மேல் இச்சம்பூரண பிரஹ்ம வித்தையை எவ்விருஷியும் கூறார்; சூரிய பகவானுடைய சீடராய யாஞ்ஞவற்கிய முனிவர் ஒருவர் மாத்திரம் இந்திராற் பயமற்றவராய்த் தம் சீடர்பொருட்டுச் சம்பூரணப பிரஹ்மவித்தையை உபதேசஞ் செய்வர் எனத் தத்யங் இருஷி கூறியதாய்த் தாங்கள் கூறினீர்கள். மூன்றாவது அத்தியாயத்தில் அஜாதசத்துருப்பாலாகிப் பிராஹ்மணர் சம்வாதத்தின்கண் யாஞ் ஞவற்கிய முனிவர் சூரியபகவானிடத்தினின்றும் வேதவித்தையை யடைந்த தாகத் தாங்கள் கூறினீர்கள். அநத யாஞ்ஞவற்கிய முனிவர் எச்சீடன் பொரு ட்டு அந்தப் பிரஹ்மவித்தையைக் கொடுத்தனர்? எங்ஙனம் அந்தப் பிரஹ்மவித் தையைக் கொடுத்தனர்? அந்தப் பிரஹ்மவித்தை யெத்தகையது? என்னும்,

மூன்று வினக்களின் விடைகளைக் கேட்கவேண்டு மென்னும் இச்சை யடியேற் குண்டாகிறது. ஆகையால், அவற்றைத் தயவுசெய்து தாங்கள் கூறவேண்டும். இந்தப்பிரகாரங் கூறிய சிடனது வசனத்தைக்கேட்டு, ஸ்ரீ குருவானவர் அத்தி யந்தம் ஆநந்தத்தை யடைந்தவராய்க் கூறுவாராயினர்:—ஹே குழந்தாய்! வேதத்தில் விளம்பிய விசித்திரக்கதையை யாம் நின்பொருட்டுக் கூறுகின்றோம், நீ சாவதான மனதுடையவனாய்க் கேட்பாயாக.

ஸ்ரீ குருகூறல்:—ஹே மைந்த! யாஞ்ஞவற்கியரெனப் பெயரிய இருஷி யானவர் முதலில், வைசம்பாயனரெனப் பெயரிய இருஷியின்பானின்றும் வேத வித்தையை அத்தியயனஞ் செய்தனர். அதன் பின்னர் ஒரு நிமித்தத்தால் குரோதமுடையவராய் அவ்வைசம்பாயன இருஷியானவர் யாஞ்ஞவற்கியரிடத்தி னின்றும் சம்பூரணவித்தையை வாங்கிக்கொண்டனர். அந்த வித்தையைப் பரித்தி யாகஞ்செய்து அந்த யாஞ்ஞவற்கிய முனிவரானவர் மீண்டும் வித்தையை யடையும் பொருட்டு மஹத்தான தவத்தையாற்றிச் சூரியபகவானை மகிழ்வித்தனர். அச்சூரிய பகவான் எத்தகைய ரெனின்:—சூரியமண்டலத்தின்கண்ணே நிவாஸஞ் செய்பவர்; நாமரூபக் கிரியாவடிவசம்பூரணப் பிரபஞ்சவடிவா யிலங்குபவர், சிவப்புப் புஷ்பத் தின் சமான நேத்திரங்களையுடையவர்; நகமுதல, கேசபரியந்தமுள்ள சம்பூரண சரீரமும் சுவர்ணமயமான காந்தி யுடையதாய் விளங்குபவர். சூரியனினும், மேலுள்ள லோகங்களினும் நேத்திரங்களிலிரானின்ற சூரியபகவானுடைய அத்தி யாத்ம ரூபத்தினின்றும், கீழான லோகங்களினும், மத்தியிலுள்ள லோகங்களி னும் இராநின்ற சர்வஜீவர்கட்கும் இஷ்டபபட்ட பதார்த்தங்களைக் கொடுப்பவரா வர், சமஷ்டி சூக்ஷ்மஉபாதியுடையவராவர், சமஷ்டிகாரண உபாதியுடையவராவர் இக்காரணத்தால் சுருதியின்கண் அவர் ஹிரண்யகர்ப்ப ரூபராகவும், ஈஶ்வரரூப ராகவும் கூறப்பட்டுள்ளார். அவர் சுவாசம் விடுவதுபோல முயற்சியின்றியே சம்பூரண வேதங்களை உண்டாக்கியுள்ளார். அவர், இருக்கு, யஜுர், சாமம் என்னும் மூன்று வேதவடிவினராவர். தினத்தின் முதற்பாகத்தில் இருக்கு வேத வடிவமாய் இலங்காநிற்பர். தினத்தின் மத்திமபாகத்தில் யஜுர்வேதரூபமா யிலங்காநிற்பர். தினத்தின் அந்தியபாகத்தில் அதர்வ அங்கிரசத்தோடுகூடிய சாம வேதமாய் ஒளிராநிற்பர். உலகத்தின்கண்ணே பிரசித்தமாய மது, புருஷர் களின் ஆநந்தத்திற்குக் காரணமாவதுபோல, வசு முதலிய தேவதைகட்கு ஆநந்த ஹேதுவாயதும், சர்வகர்மங்களின் பலத்தைக் கொடுப்பதுமாய ஆதித்திய ரூப மதுவின்கண் எப்போதும் விளங்காநிற்பர். அவ்வாதித்ய ரூபமதுவானது, இரக்தம், சுக்லம், கிருஷ்ணம், அதிகிருஷ்ணம், குஹ்யம் என்னும் ஐந்துபிரகாரங் களோடு கூடியிருக்கும். கூறியமுறையே இரக்தாதி ரூபங்களையுடைய இருக்கு, யஜுர், சாமம், அதர்வாங்கிரசம், உபநிஷத் என்னும் ஐந்துவகையாய வேதரூப வண்டினங்களால் சேர்க்கப் பெற்றது. உலகின்கண்ணே, தேனீயானது புஷ்பங் களினின்றும் ரசத்தைக் கவர்ந்து மது வைத்திருக்குமிடத்தில் கொண்டுபோய்ச் சேர்க்கும். அதுபோல, இருக்குவேத முதலிய வண்டினங்கள் யாக முதலிய கர்ம ரூப புஷ்பங்களிடத்தே மந்திரவடிவமா யடைந்து யாகாதி கர்மங்களின் சூக்ஷ்ம அவஸ்தை வடிவ புண்ணியரூப வதிர்ஷ்டமாகிய ரசத்தை ஆதித்ய மதுவின்

கண் கொண்டு சேர்க்கும். அதன்பின்னர், அச்சூரியபகவான் யாவருக்கு மகிழ்ச்சியைத் தாத்தக்க மழையைப் பொழிவிப்பர். இவ்வார்த்தை அந்நிய சாஸ்திரத்தின்கண்ணுங் கூறப்பட்டுளது :—

அக்நௌ ப்ராஸ்தாஹுதி: ஸம்யகாதித்யமுபதிஷ்டதி ।
ஆதித்யாஜ்ஜாயதே வ்ருஷ்டிர்வ்ருஷ்டேரந்நம் தத: ப்ரஜா: ॥

அழ லயில்வுறு மாகுதி யரியசூக் குமமாய்
எழி லிரவியை யடைதரு மினனிடத் திருந்தே
மழை விளைதரு மழையினின் றன்னமோ மன்னும்
அழி பிரசைக ளன்னத்தி னின்றுந்தோன் றுவரால்.

இதன்பொருள் :—அக்கினியின்கண் அடைவித்த வாகுதிகள் சூக்ஷ்மவடிவமாய் ஆதித்தனையடையும். அவ்வாதித்தனால் மழையுண்டாம், மழையால் அன்னமுண்டாம், அன்னத்தால் பிரஜைக ளுறபன்னமாவர். அச்சூரியபகவான் சர்வப் பிராணிகட்கும் வெளியில் நிகழும் பிராணன்களாயிருப்பர். பிரமாமுதல் சர்வ ஸ்தாவர ஜங்கமப்பிராணிகளுடைய ஹிருதயதேசத்தின்கண் இலங்குவர். ஹே மைந்த! அத்தகைய சூரியபகவானை அந்த யாஞ்ஞவற்கிய முனிவரானவர் தவத்தால் மகிழ்வித்தபின்னா, அந்தச சூரியபகவானிடத்தினின்றும் அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் சதுர்வேதங்களையும் அததியயனஞ்செய்தனர். அதன்பின்னர், கிரகஸ்தாப்ரமத்தைத் தரித்து, அம்முனிவா அதிகாரிகளாய சீடர்கட்கு நான்கு வேதங்களையும் அத்தியயனஞ்செய்வித்தனர். அம்முனிவரது சீடர்தம் *மண்டலிகள் நான்கு வகையாயின. ஒரு மண்டலியோ, இருக்குவேதத்தை அத்தியயனஞ் செய்வதாம். மற்றொரு மண்டலியோ, யஜுர்வேதத்தை அத்தியயனஞ்செய்வதாம். மற்றொரு மண்டலியோ, சாமவேதத்தை அத்தியயனஞ்செய்வதாம். மற்றொரு மண்டலியோ, அதர்வணவேதத்தை அத்தியயனஞ் செய்வதாம். சூரியபகவானனவர் கிழக்குமுதலிய நான்கு திசைகளின் மத்தியிற் பிரகாசிப்பதேபோல, அந்த யாஞ்ஞவற்கிய முனிவரும், நான்கு வகையாய சீடமண்டலிகளின் மத்தியில் விசேஷமாக விளங்கினர். உலகின்கண்ணே அந்த யாஞ்ஞவற்கிய முனிவருக்கு மஹா கீர்த்தியுண்டாயது.

இப்போது அந்த யாஞ்ஞவற்கிய முனிவரின் கீர்த்தியைக் கணிகைக்குச் சமானமாய் நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! யாஞ்ஞவற்கியரோடு துவேஷஞ் செய்பவராய ஆஶ்வலாதிப் பிராஹ்மணர்க ளியாவரும், கணிகையரின் பதிகட்குச் சமானமாவர். அவ்வாஶ்வலாதியரை யாஞ்ஞவற்கியரின் கீர்த்திவடிவ வாராங்கனைகள் (கணிகையர்கள்) அடைந்தார்கள். உலகப்பிரசித்தமாய விலைமாதர்கள் காமிகளைத் தாபமடையச் செய்வதேபோல, யாஞ்ஞவற்கியரின் கீர்த்திவடிவப் பொதுமாதர்களும், ஆஶ்வலாதிப் பிராஹ்மணர்களைத் தாபமடையச்செய்தனர். புண்ணியவான்களும் புத்திமான்களுமாய ஜனகாதிகள், ஆஶ்வலாதிப் பிராஹ்மணர்களால் தடுக்கப்படினும் அந்த யாஞ்ஞவற்கிய முனிவரின் கீர்த்திரூப போக

* மண்டலி=கூட்டம்.

மாதரைப் போகித்தனர். கருத்திதுவாம்:—உலகின்கண் ஒருவன் ஒரு பரஸ்திரீ யின்கண் ஆசக்தனுவனேல், அவனை யநேகர் தடுப்பினும், அவன் அவர்கள் கூறலை யங்கீகாரஞ்செய்யாததேபோல, யாஞ்ஞவற்கிய முனிவரின் கீர்த்திரூப வாராங்கனை களிடத்தே ஆசக்தியையடைந்த ஜனகராஜா முதலாயினோர் எந்தப் பிராஹ்மணர் கூறியதையும் அங்கீகரித்திலர். உலகின்கண் ஒரு அரசனுனவன் ஒரு கணிகை யிடத்தே ஆசக்தனுயின், அதைப்பார்த்து அவ்வரசனது தாசன் அவ்வரசனை அக்கணிகையினிடத்தினின்று நீக்கும்பொருட்டு அத்தியந்தம் ரூபவதியாயிரா நின்ற தனது புத்திரியை அரசன்பொருட்டுக் கொடுப்பதேபோல, யாஞ்ஞவற்கிய முனிவரின் கீர்த்திரூப வாராங்கனையிடத்தே ஜனகராஜாவிற்கு ஆசக்தியிருப்ப தைக்கண்டு அவ்வாராங்கனையிடத்தினின்றும் ஜனகராஜாவை நீக்கும்பொருட்டு அவ்வாம்வலாதிப் பிராஹ்மணர்கள் அரூபைவடிவ ஸ்திரீயினின்றும் நிந்தாவடி வினளாய நவீனசுந்தரியை உண்டாக்கினர்.

இப்போது ஆம்வலாதியரின் நிந்தாவசனங்களைக் காண்பிப்பாம்:—இந்த யாஞ்ஞவற்கிய முனிவர் ஒரு லௌகிக குருவின்பால்நின்றும் வித்தையை யடைந் திலர்; மற்றே, சாக்ஷாத் சூரியபகவானிடத்திருந்தே வித்தையை யடைந்துளா ராயின், வாயினலன்றியே சீடர்கட்கு வித்தையை ஏன் படிப்பித்திலர்? நாம் யாவ ரும் வாயால் வித்தையைப் படிப்பிப்பதேபோல, யாஞ்ஞவற்கியரும் வாயாலேயே வித்தையைப் படிப்பிக்கின்றனர்; ஆதலின், சூரியபகவானிடத்தினின்றும் வித்தை யைத் தான் படித்ததாகக் கூறல் பொய்யேயாம். அல்லது, சூரியபகவானது தேரி லிருந்துதான் வித்தையைப் படித்ததாகக் கூறலும் பொய்யேயாம். ஏனெனின், முன்னர்ச் சூரியபகவானது இரதத்திலிருந்து இந்த யாஞ்ஞவற்கியர் வித்தையைப் படித்திருப்பாராயின், இப்போது ஓங்கி வளர்ந்தெரியாநின்ற மஹா அக்கினியின் கண் இருந்து வேதங்களை ஏன் படித்திலர். அல்லது தேஜசின் சமூக (கூட்ட) மாய சூரியன் இவர்க்கு வேதங்களைக் கூறியிருப்பாராயின், இப்போது தேஜசின் சமூகமாய மஹா வக்கினியானது நம்பொருட்டு ஏன் கூறவில்லை? அல்லது, இவ ரது தவத்தான் மகிழ்ந்த சூரியபகவான் வேறு வடிவத்தைத்தரித்து இவர்க்கு வேதத்தைப்படிப்பித்தாரென்பதும் சம்பவியாது. ஏனெனின், சூரியதேவதைக்குச் சரீரமிருக்குமாயின், சரீரமுடைய பிராணிகள் அநித்தியமாவதேபோல, அச்சூரிய பகவானும் அநித்தியமேயாவர். அச்சூரிய தேவதை யநித்தமாயின், நம்மைப் பார்க்கினும் அதன்கண் யாது விசேஷமுளது. ஆகையால், சூரியபகவானிடத்தி னின்றும் இவர் வேதவித்தையை யடைந்ததில் யாதொரு யுத்தியுஞ் சம்பவிப்ப தில்லை, இவ்வுலகின்கண் இவர்க்கு வேறொரு குருவும் பிரசித்தமின்றும்; ஆதலின், இவர் தமதிச்சைப் பிரகாரம் வேதசமான வாக்கியங்களைக் கற்பித்துப் படிப்பிக்கின் றனரென வறிந்துகொள்ளலாமன்றே? இவ்வேதம் சூரிய பகவானிடத்தினின்றும் யான் படித்தேனென்ன உலகெல்லாம் வெளிப்படுத்தி அஞ்ஞானிகட்கு மோஹ த்தை யுண்டாக்குகின்றனர். அல்லது, குரு சம்பிரதாய வநுசாரமாய் உதாத் தாதி ஸ்வரவிசிஷ்ட வர்ணங்களின் முன்பின் றொடர்பைப் புத்திமான்கள் வேத மென்பர். இவ்வகையாய வேதலக்ஷணங்களற்ற வாக்கியங்களைக் கூத்தாடிகளின்

வாக்கியங்கட்கொப்பாய் மதிப்பர். யாஞ்ஞவற்கியர்க்கு ஒரு குரு சம்பிரதாயமும் உலகின்கண் வெளிப்படையாய்க் காணோம்; ஆதலின், இவர் வசனமும கூத்தாடிகளின் வசன சமானமேயாம். அல்லது, இந்த யாஞ்ஞவற்கியர் அஸ்த அபிநயத்தோடுகூடிய பதக்கிரமத்தின் சம்பிரதாயமற்ற யஜுர்வேதத்தை நடிப்பவனைப் போலப் படிப்பிக்கின்றனர்; ஆதலின், இவருக்கு யஜுர்வேதஞ் சிறிதும் வராது. அல்லது, முன்னர் வைசம்பாயன இருஷியினிடத்தினின்றும் இவர் யஜுர்வேதத்தைக் கற்றனர். அதனையு மிவரிப்போதறிந்திலராகையின், அந்நிய வேதங்களை யெங்ஙனமறிவர். ஹே குழந்தாய்! இவை முதலாக அநந்தவகையாய நிந்தா வசனங்களால் ஆஸ்வலாதிப் பிராஹ்மணர் யாஞ்ஞவற்கியரின் கீர்த்திரூப வாராங் கனைத் தடுப்பதின்கண் மிகமுயன்றனர். ஆனல், அக்கீர்த்திரூப வாராங்கனை யானவள் ஜனகராஜாவின் ஹிருதயத்தினின்றும் நீங்கிலள். இத்துணையால் ஆஸ்வலாதிப் பிராஹ்மணர்களின் நிந்தாவசனங்களைக் காண்பித்தாம்.

இப்போது யாஞ்ஞவற்கிய முனிவரது பொறுமையைக் காண்பிப்பாம்:— ஹே குழந்தாய்! இங்ஙனம் ஆஸ்வலாதிப பிராஹ்மணர்கள் செய்த நிந்தைகளை யாஞ்ஞவற்கிய முனிவர் தாம் அறிந்திருப்பினும், அந்நியரால் கேட்டிருப்பினும், சிறிதுமாத்திரமும் கலக்கமடைந்திலர்; மற்றோ, ஆன்மஞான மகிமையால் அவர் மாறாய் மகிழ்ச்சியை யடைந்தனர். மழைக்காலத்தில் கர்ஜனையற்ற மேகம் நீரைப் பொழிதல்போல, யாஞ்ஞவற்கிய முனிவரும் தமது வாயிலாய்த் தமது ஸ்துதியைச் செய்யாது, முன்போலச் சீடர்கட்கு அர்த்தசகித சர்வ வேதங்களையும் படிப்பித்துக் கொண்டிருந்தனர். நிந்தியாநின்ற ஆஸ்வலாதிப பிராஹ்மணர்கட்கு அவர் ஒரு சிறிது வசனத்தையுங் கூறிலர். ஹே குழந்தாய்! இந்தப்பிரகாரம் யாஞ்ஞவற்கிய முனிவரின் கீர்த்தியைக்கேட்டு மிதிலையின் பதியாய ஜனக ராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரைக் காண விழைவுற்றனர். ஜனகராஜாவின் அபிப்பிராயத்தை யறிந்து அந்த ஆஸ்வலாதியராய ராஜப்புரோகிதர் அநந்தவகையாய வுபாயங்களாலும், முற்கூறிய நிந்தாவசனங்களாலும், அவ் வாசனைத் தடுத்தனர். ஹே குழந்தாய்! இவ்வண்ணம், ஆஸ்வலாதியராய புரோகிதர், ஜனகராஜாவைப பார்த்துக் கூறியும் அந்தப்புத்திமானாய ஜனகராஜா வானவர் அவ்வாஸ்வலாதிப பிராஹ்மணரின் துஷ்ட வபிப்பிராயத்தை யறிந்தும் அவருக்குச் சிறிதுங் கூறிலர். ஆனல், யாஞ்ஞவற்கிய முனிவரைக் காணவேண்டு மென்னும் வேட்கைமிகுந்தது; ஆதலின், அந்த ஜனகராஜாவானவா அந்த யாஞ்ஞவற்கிய முனிவரைக் காணும்பொருட்டு யாகத்தை யாரம்பித்தனர். தமக்குப் பிரியமாய பிராஹ்மணர் க்ஷத்திரியர் வைசியர் முதலாயினருக்கும இங்ஙனம் ஆணையிட்டனர்:—அதாவது, ஹே பிராஹ்மண க்ஷத்திரிய வைசியரே! யான் யாகஞ்செய்ய உத்தேசித்திருக்கின்றேன்; ஆகையால், நீவிர் சர்வதேசங்களிலுஞ் சென்று சர்வ பிராஹ்மணர்களையும் அழைத்து வருவீர்களாக. ஹே குழந்தாய்! இங்ஙனம் ஜனகராஜாவின் ஆணையைப் பெற்று அவ்வெல்லாத் தூதரும், குருதேசம் பாஞ்சாலதேசம் முதலாய்ச் சர்வ தேசங்களிலும் சென்றனர்; அத்தேசங்களிலிருந்த

வித்வான்களாய மறையவர் யாவருக்கும் விஷயத்தைத் தெரிவித்துச் சீடரோடு கூட அவர் யாவரையும் அழைத்துவந்தனர். அங்ஙனமே யாஞ்ஞவற்கிய முனிவரையும் சர்வ சீடரோடும் அழைத்துவந்தனர். அந்தப் பிராஹ்மணர்களின் வருகையால் ஜனகராஜாவின் அரண்மனையில் வேதங்களின் பெருந்தொனி யுண்டாயது. அவ்வேதங்களின் தொனியானது சூத்திரர்களை விடுத்து அந்நிய பிராஹ்மண க்ஷத்திரிய வைசியர் யாவருக்கும் பெருமகிழ்ச்சியைக் கொடுப்பதாயிருந்தது.

இப்போது அம்மறையோரது கூட்டத்தே முக்கிய முக்கியமாய பிராஹ்மணரைக் காண்பிப்பாம்:—ஹே மைந்த! அந்த ஜனகராஜாவினது யாகத்தின்கண் ஆச்வலரெனப் பெயரிய பிராஹ்மணர் இருக்கு வேதத்திற் கூறிய கர்மங்களைச் செய்பவராய ஹோதாவா யிருந்தனர். ஜரத்காருவெனப்பெயரிய பிராஹ்மணரின் புத்திரராய ஆர்த்தபாகரெனப் பெயரிய பிராஹ்மணர் ஆண்டுவந்தனர். அங்ஙனம் லஹ்யரெனப்பெயரிய பிராஹ்மணரின் மைந்தராய புஜ்யுவெனப் பெயரிய பிராஹ்மணர் ஆண்டுவந்தனர். சக்கிரரென்னும் மறையவரின் மைந்தராய உஷஸ்தரென்னும் மறையவர் ஆண்டுவந்தனர். அங்ஙனம் குஷீதகரென்னும் மறையவரின் மைந்தராய கஹோலரென்னும் மறையவர் ஆண்டுவந்தனர். அங்ஙனம பிரஹ்ம நிஷ்டையினையுடைய கார்க்கியென்னும் பெண்சிரோரத்தினம் ஆண்டுவந்தனள். அங்ஙனம், அருணரென்னும் மறையவரின் மைந்தராய உத்தாலகர் என்னு மறையவர் ஆண்டுவந்தனர். அங்ஙனம் சகலரென்னு மநதணரின் மைந்தராய சாகல்யரென்னும் விப்பிரர் ஆண்டுவந்தனர். அவரையே விதக்த ரென்றுங் கூறுப. அவர் அத்தியந்தம் வாசாலர், அத்தியந்தம் மானியாயுள்ளவர். பாவத்தால் மயங்கிய அவர் எப்போதும் யாஞ்ஞவற்கியரோடு துவேஷம் செய்துகொணடே யிருபபவர், நான்கு வேதங்களையுங் கூறும் அநேக சீடர்களோடும் யாஞ்ஞவற்கிய முனிவரும் அந்த யாகத்தின்கண்ணே வந்தனர். அங்ஙனம் ஆச்வலாதி மறையோர் தத்தம் சீடரோடு வந்தனர். இவர்களைக் காட்டினும் அயலாய அநேகம் படித்த மறையவர் தத்தம் சீடர்களோடும் ஆண்டுவந்தனர், யாவரும் ஒருங்கு சேர்ந்து அநேகங்கோடி மறையவர் ஆயினர். ஹே சிஷ்ய! இங்ஙனம் அந்த ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரின் வரவின் உபாயத்தைச் செய்தனர். ஒருபிரசங்கத்தால் அநத அரசரானவர் ஆச்வலாதி மறையவரே முதலாய சர்வப் பிராஹ்மணர்கட்கும் கைகூப்பிக்கொண்டு இவ்வசனத்தைக் கூறுவாராயினர்:— ஹே பிராஹ்மணர்களே! அசுவமேதாதி யாகங்களினலே யான் தேவதைகளைப் பூஜிக்க இச்சித்திருக்கின்றேன். அங்ஙனமே, மிகுதியாய தக்ஷிணையால் சர்வப் பிராஹ்மணர்களையும் பூஜிக்க இச்சித்திருக்கின்றேன். தாங்களியாவரும் எனக்கு யாகஞ் செய்ய ஆஞ்ஞை கொடுக்கவேண்டும். அதன்பின்னர் யான் சர்வதிசைகளையும் பேரி முதலியவற்றின் சப்தங்களால் பூரணம் செய்கின்றேன். ஹே சிஷ்ய! இங்ஙனம் ஜனகராஜாவான்வர் பிராஹ்மணர்களை நோக்கிக் கூறியவுடன் அம்மறையவரியாவரும் ஜனகராஜாவிற்கு யாகஞ் செய்யுமாறு ஆஞ்ஞை தந்தனர். அதன் பின்னர் ஜனகராஜாவிற்கு இவ்விச்சை யுண்டாயது; அதாவது, எவ்வளவோ

பிராஹ்மணர் எனது யாகத்தின்கண்ணே ஒருங்கு கூடியிருக்கின்றனரே இவர் யாவரும் மகாத்மாக்கள்; அங்ஙனமே சதாசாரத்தோடு கூடியவர்கள், அங்ஙனமே வேதங்களிடத்தேயும் வேதங்களின் அங்கங்களிடத்தேயும் மகா குசலர். சம்பூரண சீடர்களோடுகூடியவர்; ஆனால், இவர் யாவருள்ளும் அதிகமாக வேத வேத்தாயாவர் என்னுமிச்சையேயாம். அதன் பின்னர் அந்த ஜனகராஜா சர்வப் பிராஹ்மணர்கட்குள்ளே ஒருவரை யதிகரென அறிய இவ்வகையாய உபாயத்தைச் சிந்தித்தனர். யானிந்தப் பிராஹ்மணர் சமாஜத்தில் ஒரு பிராஹ்மணரை நோக்கி நும்மியாவருள்ளும் எந்தப் பிராஹ்மணர் அதிக வித்வானெனக் கேட்பின் அவர் யாராவதொரு தமது மித்திரரையே அதிக வித்வானெனக் கூறுநிற்பர். ஏனெனின், எவருக்கு எவரிடத்தே துவேஷமுண்டாமோ அவர் சாக்ஷாத் தேவதையேனும் குருவேனும் சர்வவித்தையினும் பிரகஸ்பதியேனும் அவரை துவேஷமுடையவர் எப்போதும் எவ்வாற்றானும் நிந்திப்பர். எவருக்கு எவரிடத்தே நேயமுண்டாமோ அவர் ஓரக்ஷரமுமறியாரேனும், உழுது பயிர்செய்பவர்போல மகா மூடரேயெனினும் அந்நேயமுடையவர் அவரை யெப்போதும் புகழ்ந்துக் கொண்டே யிருப்பர். ஆகையால், இராகத்துவேஷமுடைய எப்பிராஹ்மணரையேனும் கேட்பின், எவ்வாற்றானும் யாவரினும் அதிக வித்வானாய பிராஹ்மணரின் நிச்சயமுண்டாகமாட்டாது.

சங்கை :—ஹே பகவன்! எப்பிராஹ்மணர் இராகத்துவேஷ மற்றவராயிருக்கின்றனரோ, அவ்வுதாசீனர்பால் கேட்டு அதிக வித்வானை நிச்சயஞ்செய்து கொள்ளலாமே?

சமாதானம் :—உதாசீன புருஷரைக் கேட்பினும் அதிகத்தன்மையின் ஞானமுண்டாகாது. ஏனெனின், சமதமாதி குணங்களின் ஞானத்தால் அதிகத்தன்மையின் ஞானமுண்டாம். குரோதாதி தோஷங்களின் ஞானத்தால் குறைவுத்தன்மையின் ஞானமுண்டாம். அவ்விரண்டு ஞானங்களும் உதாசீன புருஷர்கட்குண்டாகாது. ஆகையால், அவர்தம் வசனத்தானும் யாவரினும் அதிக அறிஞப்பிராஹ்மணரின் ஞானம் உண்டாகாது.

சங்கை :—ஹே பகவன்! உதாசீன புருஷர்கட்குப் பிராஹ்மணர்களின் குணதோஷங்களின் ஞானம் உண்டாகாதெனினும், அவ்வுதாசீன புருஷர்முன்பு சம்பூரணப் பிராஹ்மணர்களின் குணங்களையும் தோஷங்களையும் வர்ணனம் செய்யின், பின்னர் அவ்வுதாசீன புருஷர் யாவரினும் அதிக அறிஞரைக் கூறுவர்.

சமாதானம் :—தன் முகத்தால் பிராஹ்மணர்களின் குணங்களைக் கேட்டு அவ்வுதாசீன புருஷர் எப்பிராஹ்மணரிடத்தே அதிகத்தன்மையைக் கூறுவரோ, அக்குணங்களால்தானே முதலில் அவரிடத்தே அதிகத்தன்மையை யறியலாமன்றோ; உதாசீனருக்குக் குணங்களைக் கூறல் பலமற்ற காரியமாம். ஆகையால், உதாசீன புருஷராலும் யாவரினும் மேன்மைபொருந்திய பிராஹ்மணரை யறிதல் முடியாதாம்.

சங்கை :—ஹே பகவன்! ஒவ்வொரு பிராஹ்மணரையும் ஏகாந்த தேசத்தி லழைத்துச்சென்று, ஹே பிராஹ்மணரே! நீர் யாவரினும் அதிகரா? அல்லரா? எனவினவின் யாவர் யாவரினும் அதிகரெனக் கூறுநிற்பரோ அவரையே அகி லரினுமதிகரென அறியலாமே?

சமாதானம் :—இவ்வுபாயத்தினாலும் யாவரினும் மேன்மையாய மறையவ ரின் நிச்சயம் உண்டாகாது. ஏனெனின், ஒவ்வொரு பிராஹ்மணரையும அழைத் துக் கேட்பின் சம்பூரணப் பிராஹ்மணர்களும் தம்மையே அதிகமாகக் கூறுவர், எம்மறையவரும் தம்மைக் குறைவாய்க் கூறார்; ஆகையால் இவ்வுபாயமும் பய னின்றாம்.

சங்கை :—ஹே பகவன்! இரகசியப் பொருளை யுணர்த்தும் வினாக்களை விடுப் பின் எம்மறையவர் அவ்வினாக்கட்கு நன்றாக விடைபகாவரோ அவரை யதிகரென அறியலாமே.

சமாதானம் :—இவ்வுபாயத்தானும் யாவரினுமதிகராய அந்தணரை யறிதல் சாத்திய மன்றாம்; மாறாய், ஹானியுமுண்டாம். ஏனெனின், அவரிடத்தே இரக சியமாய வினாக்களைக் கேட்பின் அவர் கோபமுற்றுச் சபித்துச சாம்பராக்குவர். ஆகையால், மேற்கூறிய சம்பூரண உபாயங்களும் யாவரினும் அதிகப் பிராஹ் மணரை நிர்ணயம் செய்யப் பயன்படாவாம்; மற்றோ, பரஸ்பரம் விவாதத்தி னானே இப்பிராஹ்மணரிடத்தே அதிகத்தன்மையையும குறைவுத்தன்மையையும் நிர்ணயிக்கலாம். ஆகையால், இசசபையின்கண் எல்லா மறையவரையும் பரஸ்பரம் விவாதஞ் செய்யுமாறு செய்து, யாவரினும் மேன்மைபராய அந்தணரை யான் நிர் ணயஞ் செய்வேனாகவும், அதன்கண்ணும் இவரை நோக்கியான், ஹே மறையவரே! நீவிர் யாவரும் பரஸ்பரம் விவாதஞ் செய்ம்மின் எனக் கூறுவேனாயின், இவர் குரோ தத்தை யடைநது என்னைச் சபித்துச் சாம்பராககுவர். ஆகையால, யான் கூறா மலே இம்மறையவர் யாவரும் தம்மிற்பரஸ்பரம விவாதஞ் செய்யுமபடியான ஒரு உபாயத்தைச் செய்யவேண்டும். அவ்வுபாயம் தனத்தாலன்றி வேறொன்றாலாகாது, தனந்தான் சர்வ விவாதத்தையும் உண்டாக்கும். ஆகையால், சர்வப்பிராஹ்மணர் களின் மத்தியில் மிகுதியாய தனத்தை யான் வைப்பேனாயின், அத்தன லோபத் தால் இம்மறையவர் தாமே விவாதிபபா. அவர்தம் விவாதத்தால் யாவரினும் அதிகமாய வித்வத் பிராஹ்மணரை யான் நிர்ணயித்துக் கொள்வேன் என்னும் இவ்வகையாய உபாயத்தை அந்தச சனகராஜாவானவா தமது மனத்தின்கண்ணே நிச்சயஞ் செய்தனர்.

இப்போது, தனத்தின்கண்ணே சர்வ விவாதங்களின் காரணத்தன்மையைக் காண்பிப்பாம்:—விஷய போக சாதனமாய இத்தனம் எவ்வுயிர்களின் உள்ளத்தைக் கலக்காது? மற்றோ யாவருடைய உள்ளத்தையும் கலக்கும். கருத்திதுவாம் :—பிர ஹ்ம வேத்தாவாய சந்நியாசியையும் இத்தனம் கலக்குமாயின் அந்நிய குடும்பிக ளாய கிருகஸ்தர்களின் சித்தத்தை இத்தனம் ஏன் கலக்கமாட்டாது? மற்றோ, அவ சியம் அவர்கள் சித்தத்தைக் கலக்கும். அல்லது சித்தக்கலக்கக் காரணங்களாய

காமக்குரோத லோபமோகாதிகளும் இத்தனத்தானே யுதயமாம். தனத்தா லன்றி காமக்குரோதாதி விகாரங்களுண்டாகா.

இப்போது உடன்பாட்டானும் எதிர்மறையானும் தனத்தின்கண் காமக் குரோதாதிகளின் காரணத்தன்மையைக் காண்பிப்பாம்:—ஆண்டு தனமிருப்பின் காமக்குரோதாதிகளுண்டாம் என்னுமிதனை யுடன்பாடென்பர். தனமில்லையாயின் காமக்குரோதாதிகளிரா வென்னும் இதனை எதிர்மறையென்பர். அவற்றுள், முதலில எதிர்மறையைக் காண்பிப்பாம்:—பசியாற பீடிக்கப்பட்ட தனமற்ற தரித்திரமுடையவன் காமஜன்னிய சுகத்தை யடைவதில்லை. ஏனெனின், அத் தனமற்றவன் தனது மனத்தின்கண்ணே இங்ஙனம் விசாரித்து விவாகஞ் செய் யான். யான் விவாகஞ்செய்துகொள்ளவேணுமின், எவ்வளவு அன்னம் ஸ்திரீ போஜ னஞ்செய்வளோ அவ்வளவு அன்னம் எனக்கே போஜனஞ் செய்வதற்குவேண்டும். ஸ்திரீயினுக்குப் போஜனஞ்செய்வதற்காய் யான் எங்கிருந்து ஈவேன்என விசா ரித்து அத்தரித்திரமுடையவன் ஸ்திரீயைக் கிரகத்தின்கண்ணே கொண்டுவரான். புழுக்களோடுகூடிய துர்க்கந்தமாய பிணத்தை எவனும தீண்டாததேபோலப் புருஷனைத் தனமற்றவனைப் கண்டு காமத்தாற பெண்ணானவள் பீடிக்கப்பெற் றிருப்பினும், அந்நிர்த்தன புருஷனைத்தீண்ட இச்சிப்பதில்லை. கருத்திதுவாம்:— தர்மசாஸ்திர ரீதியாய் விவாகஞ் செய்துகொண்ட பதிவிரதையான ஸ்திரீயும் தனதுபதி நிர்த்தன தரித்திரமுடையவனாயிருப்பின், அவனது மரணத்தை யெப் போது மிச்சிப்பளாயின், அந்நிய வியபிசாரிகளாய ஸ்திரீகளின் கதையென்னும். அல்லது, சித்தாஞ்சனமானது பூமியின்கண்ணுள்ள புதையல்களைக்காணச் சாதன மாவதேபோலத் தரித்திரமும் சர்வ தாமங்களின் தரிசனத்தின்கண்ணே சாதன மாம். ஏனெனின், தனது மாதா முதலியோரிடத்தே எப்புருஷனுக்கும் காம பாவனை யுண்டாகாததேபோல தரித்திரமுடையவனுக்கும் எந்த ஸ்திரீயின்கண் ணும் காமமுண்டாகாது. மற்றேறு, பசியாற பீடிக்கப்பட்ட தரித்திரமுடையவன் அன்னமொன்றைமாத்திர மிச்சிப்பன், அல்லது எங்ஙனம விவேகியானவன் யாவற் றையும் ஆன்மரூபமென அறிந்து எவர்மீதும கோபஞ்செய்வதே இல்லையோ; அங்ஙனம் தரித்திரமுடையவனும இராஜபயத்தானும் தர்மராஜாவின் பயத்தா னும் எப்பிராணிகளின்மீதும கோபஞ்செய்யான். அல்லது, தனமற்ற தரித்திர முடையவன் இவ்வண்ணம் விசாரித்து எப்பாவகர்மத்தின்கண்ணும் பிரவிருத்தி யான். இப்போதவன் விசாரத்தைக் காண்பிப்பாம:—யான் முற்பிறப்பில அத்தி யந்தம் பாவகர்மஞ் செய்துளேன். அப்பாவகர்மங்களின் பலத்தால் இத்தரித் திரத்தன்மை யென்னை யடைந்திருக்கிறது. இத்தரித்திரத்தன்மைக்கு மேலாய வேறொரு பாவகர்ம பலம் யாதாகவேண்டும்; மற்றேறு, இத்தரித்திரத்தன்மையே சர்வ பாவகர்மங்களின் பலமாம். ஏனெனின், பிரஹ்மஹத்திசெய்த புருஷனை யாவரும் நிராதரஞ்செய்வர். அதுபோல, நான் தரித்திரமுடையவனாயிருப்பதைப் பார்த்து, எனது தாயும் எனது தந்தையும் எனது மனைவியும் எனது மகனும் மற்றவரும் என்னை நிராதரஞ் செய்துளார்; எவருமென்னை யாதரிப்பதில்லை.

ஆகையால், முற்பிறப்பின் பாவகர்மபலம் இத்தரித்திரத்தன்மையாம். அதனை நன்றாய் அனுபவித்துக்கொண்டிருந்தும் மீண்டும் யான் பாவகர்மங்களைச் செய்வேனாயின், மீண்டும் மறுபிறப்பில் எனக்குத் தரித்திரத்தன்மை வரும்; ஆகையால், யான் பாவகர்மம்செய்த லுசிதமன்றாம். சர்ப்பத்தைத் தனது மாணத்தின் சாதனமென வறிந்தானொருவன், அதனைத்தாண்டானன்றோ. என இவ்வண்ணம் தனது மனத்தின் கண்ணே விசாரித்துத் தனமற்ற தரித்திரி பாவகர்மத்திற் பிரவிருத்தியான். அல்லது, நிர்த்தன தரித்திர முடையவன் சிறிதுமாத்திரமும் தர்மத்தையும் அறியான். ஆயினும் பாவகர்மங்களைச் செய்தானாயின், சாஸ்திரப் பிரமாணத்தால் தர்மத்தை யறிந்த தரித்திர முடையவன் ஏன் பாவகர்மங்களைச் செய்வன்; மற்றோ செய்யான். அல்லது தனமற்ற தரித்திர முடையவர்கள் இராஜாதிகளால் பயந்தவர்களாய் பரதிரவியத்தையும் பரஸ்திரீயையும் இச்சியார்கள். பசியாற் பீடிதர்களாய அவர் சிறிது உண்டி கிடைப்பினும் திருப்தியடைந்து விடுகின்றனர். ஆகையால், தரித்திரமுடையவர்களிடத்தே லோபமும் இராது. இத்துணைக் கிரந்தத்தால் தனமின்றாயின் காமாதி தோஷங்களின் அபாவமும் ஆம் என்னும் எதிர்மறை காண்பிக்கப்பட்டது.

இப்போது தனமிருப்பின் காமாதி தோஷங்களின் அடைவின்வடிவ உடன்பாட்டைக் காண்பிப்பாம்:—தனம்தத்தாற் குருடனாய தனிகனானவன், தனது பலத்தால் இராஜாவையும் குருவையும் தேவதைகளையும் அவமதிப்பன்; அதனாலவன் இவ்வுலகின்கண்ணும் பரலோகத்தின்கண்ணும் அநந்த துக்கங்களை யுடையவன். அல்லது இத்தனிகன் பரஸ்திரீ முதலியோரிடத்தே மோகத்தை யுடையவனாயின், இவ்வுலகிலவனது கீர்த்தி நஷ்டமாம்; யாவரும் அவனைத் * திக்காரஞ்செய்வர். மரணமடைந்தபின் அவன் நரகத்தின்கண்ணே துக்கத்தை யனுபவிப்பன், அல்லது, ஓங்கியெரியாநின்ற அக்கினியானது நெய்யாலும் காஷ்டங்களாலும் திருப்தியடையாததேபோல இத்தனிகனும் தனாதிபதார்த்தங்களை யடைந்து ஒருபோதும் திருப்தியடையான். மற்றோ, மேன்மேலும் பதார்த்தங்களை யடையவேண்டுமென் றெப்போது மிச்சிப்பான். ஒருகால் முற்புண்ணிய மகிமையால் தனிகனுக்குச் சமுத்திரபரியந்தமுள்ள பிருதிவியை ஆளக்கிடைப்பினும் மீண்டும் சுவர்க்க லோகமடைய இச்சிப்பன். ஆகையால், தனிகனது லோபசாந்தி யொருகாலு முண்டாகாது. அல்லது, அந்த லோபத்தால் தனிகனானவன் பரஸ்திரீகளையும், பரதனத்தையும் அபகரிப்பன். ஆகையால், சர்வ ஜனங்களாலும் நிந்திக்கப்படுவன். அத்தகைய நிந்தித கர்மங்களைச் செய்யினும், அத்தனிகன் இலஜ்ஜையற்றவனைப்போல மற்றவரை நோக்கி நகைப்பன். ஆகையால், சர்வ ஜீவர்களினின்றும் அத்தனிகன் அதமனாவன். அல்லது தனத்தால் மோகமுற்ற இத்தனிகன் தமது ஹிதத்தையும் அஹிதத்தையு மறியான். மற்றோ, மோகவசத்தனாய் அத்தனிகன் தனக்குத் துயரையே தேடிக்கொள்வன். அல்லது தனத்தால் மோகமுற்றவனாய் இப்புருஷன் தனது ஹிதத்தைச் செய்யும் மாதாவையும், பிதாவையும், புத்திரனையும், வேதத்தையுணர்ந்த பிராஹ்மணர்களையும் வாக்காலும்

* திக்காரம்=சீயென இகழல்.

மனத்தாலும் காயத்தாலும் வதை செய்வன். இவ்வண்ணம் தனிகன் காமக்குரோதாதி சர்வ தோஷங்களையும் அடைவன். தனமற்ற தரித்திரமுடையவனைக் காமக்குரோதாதி தோஷங்களடையா. மற்றோ, இங்ஙனம் விசாரித்து அத்தரித்திரமுடையவன் எப்போதும் ஆநந்தத்தின்கண் மூழ்கியிருப்பன்.

இப்போது அவனது விசாரத்தைக் காண்பிப்பாம் :—யான் தனிகன்பாற் சென்று அன்னாதிபதார்த்தங்களை யாசித்து அவன் அன்னங்கூடக் கொடானாயின், எனது யாசகமே பலமற்றதன்றோ ஆம். அதனாலெனக்குப் பச்சாத்தாபம் உண்டாம் ; ஆதலின், எத்தனிகன்பாலும் சென்று யாசித்தல் தகுதியன்றாம். இவ்வாறெண்ணி நிர்த்தனத் தரித்திரமுடையவன் லோபமுதலியவை யற்றவனாவன். அல்லது, எனது தாயும், தந்தையும், மற்றபந்துக்களும் எனக்கிதத்தைச செய்பவராதலின், அவர்கள் எவ்வெவ்வாஞ்ஞையை யென்பொருட்டுச் செய்கின்றனரோ, அவ்வாஞ்ஞைகளெல்லாம் என்னாலவசியம் அங்கீகரிக்கத்தக்கனவேயாம் என எண்ணி அந்நிர்த்தனத தரித்திரமுடையவன் மோகத்தினின்றும் நீங்குவன். ஆகையாலிது துணியப்பெற்றதாம் :—தனத்தானே சம்பூரண காமக்குரோதாதி தோஷங்கள் உற்பன்னமாம். பிரஹ்ம வேத்தாக்கட்கும் தனத்தால் காமக்குரோதாதி தோஷ முண்டாமாயின், வெளிநாட்டத்தோடுகூடிய அஞ்ஞானிகளின் கதையென்னும். ஆகையால், யாவரினுமதிக வித்வத் பிராஹ்மணரை நிர்ணயிக்கும்பொருட்டு இவர்களது மத்தியில் சூதாட்டத்திற்குப் பணம்வைப்பதேபோல, மிகுதியாய தனத்தைவைப்பேன். இவருக்குள் யாவரதிகராய் அத்திரவியத்தை யெடுத்துக் கொள்வரோ அக்கால் இம்மறையவர் யாவரும் குரோதத்தால் வியாகூலப்பட்டவர்களாய்த் தாமே அம்மறையவரோடும் விவாதிப்பர்.

சங்கை :—ஹே பகவன்! தனத்தாற் பிராஹ்மணரைக் கலங்குமாறு செய்யின் பாவமன்றோ வரும்.

சமாதானம் :—நீதிபூர்வகமாய தர்மம் இராஜாக்கட்குப் பாவசாதனமாகாது ; மற்றோ, சுகசாதனமாகும். ஆதலின், அத்தர்மத்தைச் செய்தலால் பாவமுண்டாகாது. கருத்திதுவாம் :—பிராஹ்மணர்களின் கலக்கத்தில் லோபாதி தோஷமே காரணமன்றி மற்றொன்றன்றும. இவ்வுபாயத்தால் யாவரினும் அதிகப் பிராஹ்மணரை யறிவதில் சிறிதுமாத்திரமும் பாவமும் உண்டாகமாட்டாது.

சங்கை :—ஹே பகவன்! யாவரினும் அதிகரையறிந்து அவருக்குத் தனத்தைக் கொடுப்பின் ஒருகாலவர் அத்தனத்தைக்கொண்டு பாவகர்மம் செய்யின், கொடுத்தவரையும் பரம்பரையாய்ப் பாவம் பற்றுமன்றோ ?

சமாதானம் :—யாவரினும் அதிகராய வித்வானானவர் அத்தனத்தாற் பாவகர்மத்தைச செய்யார். ஏனெனின், சமதமாதிகுணங்களோடுகூடிய பிராஹ்மணரே யாவரினு மதிகராவர், சமதமாதி குணங்கள் யாண்டு இருக்குமோ ஆண்டுக் காமக்குரோதாதி தோஷ உற்பத்தி யுண்டாகாது. காமக்குரோதாதிகளின்றிப் பாவகர்மத்தின்கண் பிரவிருத்தியுண்டாகாது. அக்காமக்குரோதாதிகள் சமத

மாதிகளையுடைய குணவானிடத்தே சம்பவியாது. ஆகையால், காமக்குரோதாதிகளற்ற சமதமாதி குணவானை யாவரினும் மேன்மை தங்கிய வித்வான் எங்ஙனம் பாவம் செய்யக்கூடும்; மற்றே, ஒருகாலும் பாவஞ் செய்யக் கூடாதாம். ஹே மைந்த! இவ்வண்ணம் விசாரித்து அந்த ஜனகராஜாவானவர் மீண்டும் இவ்வண்ணம் விசாரிக்கலாயினர் :—இப்பிராஹ்மணர்தம் சமாஜத்தில் (கூட்டத்தில்) யாஞ்ஞவற்கிய முனிவரைக்காட்டினும் எம்மறையவரிடத்தும் யாவரினும் அதிகத்தன்மையின் சம்பாவனையின்றாம்; மற்றே, சூரியபகவானுடைய சிடராய இவரே யாவரினும் அதிகராய்த் தோற்றுகின்றனர்.

சங்கை :—ஹே பகவன்! சம்பாஷணை செய்யாமலே யாஞ்ஞவற்கியரின் மேன்மை யறிந்துகொள்வது எங்ஙனம்?

சமாதானம் :—காமம், குரோதம், லோபம், மோகம், கர்வம் என்பன முதலிய தோஷங்கள் எவரிடத்தின்றாமோ, அவர் வித்வானேயாவர் என்னும் இவ்வித்வானுடைய இலக்கணம், யாஞ்ஞவற்கிய முனிவரிடத்தே பொருந்தும்; ஏனெனின், யாஞ்ஞவற்கிய முனிவரிடத்தே காமம், குரோதம், லோபம், மோகம் முதலியன இன்றாம். இத்துணை வித்தையை யடைந்திருந்தும் இவரிடத்தே கர்வமின்றாம்; ஜடபுருஷரைப்போல மௌனத்தைத் தரித்து இந்த யாஞ்ஞவற்கிய முனிவர் இருக்கின்றனர். ஆகையால், இவருக்குச் சமானமாய் வேறொரு வித்வானில்லையென அறிந்து கொள்ளலாமன்றே?

சங்கை :—ஹே பகவன்! இந்த யாஞ்ஞவற்கிய முனிவர் இராகத்துவேஷமற்றவராயின், உமது தனத்தை எங்ஙனங் கவர்வர். இராகமின்றித் தனுதி பதார்த்தங்களின் கிரகணம் உண்டாகமாட்டாதன்றே?

சமாதானம் :—இந்த யாஞ்ஞவற்கிய முனிவர்தமது போகத்தின் பொருட்டு எனது தனத்தைக்கவரார்; மற்றே, ஜீவர்களின் உபகாரத்தின்பொருட்டுத் தனத்தைக் கவர்ந்து இம்மறையவரைச் சபையின்கண்ணே ஜயிப்பர். அல்லது இவ்வெனது தனம் யாஞ்ஞவற்கிய முனிவரின் கரத்தின்கண்ணே செல்லின், அத்தனத்தால் எல்லாப் பிராணிகட்கும் உபகாரமேயாகும். ஏனெனின், யாஞ்ஞவற்கிய முனிவரின் தனமும் சரீரமும் தமது போகத்தின் பொருட்டன்றாம்; மற்றே, கேவலம் பரோபகாரத்தின் பொருட்டேயாம். அல்லது, பாமரனொருவன் தனுதி பதார்த்தங்களின் விழைவோடு கூடியவனாய்ப் பிரசன்ன திருஷ்டியால் அரசனைப் பார்ப்பதேபோல, இந்தயாஞ்ஞவற்கிய முனிவரும் பிரசன்ன திருஷ்டியால் என்னை யடிக்கடி பார்க்கின்றனர். ஆகையால், இம்முனிவருக்கு என்மீது பரம அனுக்கிரகமிருக்கின்றதென அறிந்து கொள்ளலா மன்றே? கருத்திதுவாம் :—யாண்டு யாண்டுப் பிரசன்னத் தன்மை வாயிலாய்த் திருஷ்டியுளதாமோ, ஆண்டாண்டுத் தனுதி பதார்த்தங்களின் விழைவேனும், அனுக்கிரகமேனும் உண்டாம. விழைவின்றி யனுக்கிரகமின்றிப் பிரசன்ன திருஷ்டி யுண்டாகாது. அவற்றுள், தனுதி பதார்த்தங்களின் விழைவோ யாஞ்ஞவற்கிய முனிவரிடத்தே இன்றாகும், எஞ்சியதாய் அனுக்கிரகத்தானே என்னைப் பார்க்கின்றனர்.

சங்கை :—ஹே பகவன்! யாஞ்ஞவற்கிய முனிவரிடத்தே இராகத்துவேஷ மின்றென நீர் எங்ஙனம் அறியக்கூடும்.

சமாதானம் :—யாஞ்ஞவற்கிய முனிவரை ஜயிக்கும் இச்சையையே தலைமை யாய்ப் பூண்ட அகங்காரமுடைய பிராஹ்மணர் ஒருவருக்கொருவர் நகைத்துக் கொண்டு அடாவிடை வாக்கியங்களை யறைந்து கொண்டிருக்கின்றனர். அவர்வாக் கியங்களை இம்முனிவர் அஞ்ஞானிகளைப்போலக் கேட்டுக் கொண்டிருக்கின்றனர். அவ்வசனங்களைக் கேட்டும் இந்த யாஞ்ஞவற்கிய முனிவர் ஜடபுருஷரைப்போல அவர்கட்கு விடையளித்திலர். ஆகையால், இவர்மனத்தே கலக்கமில்லையெனவறிந்து கொள்ளலாமன்றோ? யாவன் கலக்கமற்றவனுவனே அவனே இராகத்துவேஷமற்ற வனுவன். ஹே சிஷ்ய! இவைமுதலாக அநேகவகையாய விசாரத்தை அந்தஜனகரா ஜாவானவர் தமது மனத்தின்கண்ணே செய்து பின்னர் காமதேனுவுக்குச் சமான மான 1,000-கோக்களையும், நாற்பதினுயிரம் பொன் *நிஷ்கங்களைச் சபையின் கண்ணே ஸ்தாபித்தனர். கருத்திதுவாம:—ஆயிரங்கோக்கட் கிரண்டாயிரம் கொம் புகளாம்; அவற்றுள், ஒவ்வொரு கொம்போடு சேர்த்து 20, 20, பொன்னிஷ்கங் களை அரசர் கட்டிவிட்டனர். (90-தோலாபபரிமாண சுவர்ணத்தை நிஷ்கமென் பர்.) இவ்வண்ணம சாஸ்திர ரீதியாய் அந்த ஜனகராஜாவானவர் சபையின்கண் கோக்களை ஸ்தாபனஞ்செய்தனர். அதன்பின் எல்லா மறையவரையும் நோக்கி யிவ்வசனத்தை இராஜாகூறினர் :—ஹே மறையவரே! உங்களுக்குள் மேன்மை தங்கிய பிரஹ்ம வேத்தாப் பிராஹ்மணர் எவரோ, அவர் இவ்வெல்லாக் கோக்க ளையும் தங்களாசிரமத்திற்கு ஓட்டிக்கொண்டுபோகலாம். ஹே சிஷ்ய! இங்ஙனங் கூறிய ஜனகராஜாவின் வசனத்தைக் கேட்டு அவ்வெல்லா மறையவரும் தாழ்ந்த முகமுடையவர்களாய் மௌனத்தை யுறறிருநதனர். தமது வித்யாபலத்தால் எல்லாப் பிராஹ்மணர்களையும் ஜயிக்க எம்மறையவரும் வல்லவரல்லராயினர். இங்ஙனம் எல்லா மறையவரும் மௌனத்தை யடைநதிருந்ததைக் கண்ட யாஞ் ஞவற்கிய முனிவர் சாமவேதம் படிக்குஞ சீடரைநோக்கி இவ்வசனத்தைக் கூறி னர் :—ஹே சாமவேதபாடிகளே! நீவிர் இக்கோக்க ளியாவறறையும் நமது கிரகத் தின்கண்ணே விரைவிற் கொண்டுபோய்விட்டு வாருங்கள். அன்றியும், சர்வப் பிராஹ்மணர்களையும் நோக்கி உரத்த குரலால் யாவரினும் அதிகப் பிரஹ்ம வேத் தாவாய யாஞ்ஞவற்கிய முனிவர் சர்வப பிராஹ்மணர்களின் கோக்களையும் கொண்டு செல்கின்றனர் எனக் கூறுங்கள். இவ்வண்ணங்கூறிய யாஞ்ஞவற்கிய ரின் வசனத்தைக்கேட்டு அந்தச் சாமவேதம் படிக்கும் பிள்ளைகள் அவ்வண்ணமே சர்வப் பிராஹ்மணர்களுக்குங் கூறி எல்லாக் கோக்களையும் யாஞ்ஞவற்கிய முனி வரின் ஆசிரமத்திற்கு ஓட்டிக்கொண்டு சென்றனர். அதன்பின்னர், அந்தப் பிராஹ்மணர்கள் யாவருமை யாஞ்ஞவற்கியர்மீது கோபத்தை யடைந்தனர், ஜனக ராஜாவோ, பரமாநந்தத்தை யடைந்தனர். கருத்திதுவாம் :—அந்த யாஞ்ஞவற்

* நிஷ்கம்=பதினுறு உளுந்தளவுகொண்ட நூற்றெட்டுப் பொன்நாணயங்கள் ஒருங்குற்ற ஒரு நாணயம்.

கிய முனிவர் ஒரேகாலத்தில் பிராஹ்மணர்களுடைய துக்கத்திற்கும், ஜனக ராஜா வின் சுகத்திற்கும் காரணமாயினர். இதனால் அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் இப்பொருளைத் தெரிவித்தனர்:—சாங்கிய நூலுடையார் சப்த ஸ்பரிசாதி விஷயங் களிடத்தே சுகதுக்கத்தை யங்கீகரித்துளார். அதனை நீங்கள் அங்கீகரிக்கவேண் டாம்; மற்றோ, தனது மனத்தின்கண்ணே சுகதுக்கங்களிருக்கின்றன வென்னும் இப்பக்ஷத்தை நீங்கள் அங்கீகரித்துக்கொள்ளுங்கள். ஏனெனின், யாது சிநேகத் தோடுகூடிய சித்தமோ, அதன்கண்ணே சுகத்தினுற்பத்தி யுண்டாம்; ஜனக ராஜாவிற்குச் சுகம் உற்பன்னமானதேபோல. எச்சித்தம் துவேஷத்தோடுகூடிய தாமோ, அதன்கண்ணே துக்க உற்பத்தியுண்டாம்; பிராஹ்மணர்கட்குத் துக்கமுண்டானதேபோல. சுகதுக்கங்கள் விஷயங்களின் தர்மங்களாயின், யாவ ருக்கும் அவ்விஷயத்தினின்றும் சுகத்தினடைவே யுண்டாகவேண்டும். அல்லது, துக்கத்தினடைவே யுண்டாகவேண்டும். சிலர்க்குச சுகத்தினடைவு சிலர்க்குத் துக்கத்தினடைவு என்னும் விஷமத்தன்மை சம்பவியாது. இவ்விஷமத்தன் மையோ, சர்வ ஜீவர்கட்கும் அனுபவமாம். ஆகையால், விஷயத்தின் தர்மங்கள் சுகதுக்கங்களன்றாம்; மற்றோ, பாகிய காரணமின்றியே இவ்வஸ்து இரமணீயம், இவ்வஸ்து அரமணீயம் என்னுங் கற்பனையால் மனத்தின்கண் சுகதுக்கம் உண் டாம். ஜனமற்ற வனத்தின்கண்ணுள்ள விருப்பற்ற புருஷனுக்குத் தனது மனத் தினின்றுமே ஆண்டு ஆநந்தமுண்டாம். அந்நிர்ஜன வனத்தின்கண் இராநின்ற இராகிக்குத் தனது மனத்தினின்றுமே ஆண்டுத் துக்கத்தின் பிராப்தியுண்டாம். ஒரு விஷயத்தாலும் அவ்வனத்தின்கண் இராநின்ற புருஷர்க்குச சுகதுக்கப் பிராப்தியுண்டாகாது. ஆகையால், மனமே சுகதுக்க ஆசிரயமாம்.

இப்போது துக்கத்தால் ஜனித்த பிராஹ்மணர்களது குரோதத்தைக் காண் பிப்பாம்:—ஹே மைந்த! இங்ஙனம் கோக்கள் சென்றதைக்கண்டு கோபத்தால் அந்தப்பிராஹ்மணர்களின் ஆசனங்கள் சலிக்கத்தொடங்கின, மீசைதாடிகள் துடித்தன, கீழ்த்தந்தபந்தி வாயுட்சென்றது, மேற்றந்தபந்தி கீழுதட்டை யழுத்தி யது, பூத ஆவேசங்கொண்டவன் பலவகையாய்ப் புலம்பலேபோலக் கோபத்தோடு கூடிய சிலபிராஹ்மணர் இரக்தத்தாற் பூரிக்கப்பெற்ற நேத்திரங்களால்கண்ணீர்விட் டனர். சிலமறையவர், பயித்தியகாரரைப்போலப் பலவகையாயசப்தங்களைச செய்த னர். இங்ஙனம, யாகமண்டபத்தில மகாகோரசப்தம உண்டாயது. பூரண சந்திரோ தயங்கண்ட கடல்கலக்கமுறுவதேபோலப் பிராஹ்மணர்யாவரும் கலக்கமுடையவரா யிவ்வண்ணங் கூறத்தொடங்கினர்:—வித்வத்பிராஹ்மணர்களாய நம்மியாவரையும் இந்த யாஞ்ஞவற்கிய னொருவனுகவேதாண்டி யவமதித்துச சென்றனன். ஆகை யால், நமது குலங்கள் திக்காரமாம். நாம் படித்த படிப்பிக்கும் மகாசாலைகள் திக்கார மாம். நமது ஜீவனங்களும் திக்காரமாம். அத்தியயனகாலத்தில் ஆசிரியருக்கு யாம்ஆற்றியசேவையும் திக்காரமாம். நமதுவேதாத்தியயனமும் திக்காரமாம். வேத த்தையத்தியயனம்செய்யும் நமது சீடரும் திக்காரமாம். ஹே குழந்தாய்! இவ்வண் ணம், சர்வப்பிராஹ்மணர்களின் அவஸ்தையைக்கண்டு ஆஸ்வலனெனப் பெயரிய பிராஹ்மணர் மிகவுங் குரோதமுடையவராய் யாஞ்ஞவற்கிய முனிவரின் சமீபத்தே

வந்து இவ்வண்ணங் கூறுவாராயினர்:—அடே குருசம்பிரதாயமற்ற துராசாரத்தை யுடைய யாஞ்ஞவற்கிய ! பிராஹ்மணர்களாகிய நம்மெல்லாருள்ளும் நீயொருவனே என்ன யாவரினும் அதிகவித்வானாகி விட்டனை. ஹே யாஞ்ஞவற்கிய ! உன்னிடத்தே வித்தையினாலோ அதிகத்தன்மையின்றாம் ; மற்றோ, லோபத்தாலும் கர்வத்தாலும் உன்னிடத்தே தா எம்மினும் அதிகத்தன்மையுளது. யாங்களியாவரும் ஹிரண்யகர்ப்பருக்குச் சமானர், கர்வம் லோபம் முதலிய தோஷங்களற்றவர், சமதமாதி சாதனங்களோடு கூடியவர், தர்க்கரூப மனனசித்தியின் பொருட்டுப் பதினான்கு வித்தைகளையும் உணர்ந்தவர். (அசசதுர்த்தச வித்தைகளிவையாம்:—இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் எனநான்கு வேதங்கள். சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருக்தம், ஜோதிஷம், பிங்கலம் (சந்தோவிசிதி) இவையாறும் வேதாங்கங்களாம். மீமாம்சாசாஸ்திரம், நியாயசாஸ்திரம், புராணம், தர்மசாஸ்திரம என்னும் இவைகள் பதினான்கு வித்தைகளாம். ஆயுர்வேதம, தனுர்வேதம், காந்தர்வவேதம், அர்த்தசாஸ்திரம் இந்நான்கையும் சேர்த்துப பதினெண்வித்தைகளாம்.)

ஹே யாஞ்ஞவற்கிய ! இப்பிருதிவியின்கண்ணே வெட்கமற்றயாவன்றான் பண்டிதனாகான் ; மற்றோ, வெட்கமற்றவன் பண்டிதனேயாவன் ; பிராஹ்மத்தை யுணர்ந்த மறையவர்களாய நம்முள் வெட்கமற்ற நீ பண்டிதனுபோதபோல. ஹே யாஞ்ஞவற்கிய ! மகாபலத்தோடுகூடிய வாசுகிமுதலிய சர்பபங்களை யாவன் கால்களால் மிதிப்பன், மூவுலகங்களையும் தகிக்கும் காலகூடவிஷத்தை யோகசாதனையற்ற யாவன்றான் விழுங்குவன், ஓங்கியெரியாநின்ற அக்கினியைக் கையிலெடுத்துக் கொண்டு யாவன் வீட்டிற்குட்செல்வன் ; அதுபோல, இவ்வெல்லா மறையவரையும் உன்னையன்றியாவன்றான் கோபமடையுமாறு செய்விப்பன் ; மற்றோ, உன்னையன்றியொருவனும் பிராஹ்மணர்களைக் கோபமடையுமாறு செய்வியான். நீ யொருவனே கர்வம், லோபம், அடக்கமின்மை முதலியவற்றோடு கூடியவனாய்ப் பிராஹ்மணர்களைக் கோபமடையுமாறு செய்வித்தாய். ஹே யாஞ்ஞவற்கிய ! இவ்வெல்லாப் பிராஹ்மணர்களுள் ஒவ்வொருவர் கோபத்தை யடையினும, சம்பூரண ஜகத்தையும் தகிக்கவல்லராயின் கோபத்தோடுகூடிய இவர் யாவரும் உன்னைப்போல அதமப் பிராஹ்மணனை எங்ஙனம் தகியார ? மற்றோ, அவசியம உன்னையழிப்பர். ஹே சிஷ்ய ! என்பனமுதலிய கடோரவசனரூப பாணங்களால் ஆஸ்வலரெனப பெயரிய பிராஹ்மணர் யாஞ்ஞவற்கியமுனிவரின் கர்ணங்களை (செவிகளை)ப் பிளந்தனர். ஆயினும், அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் சிறிது மாத்திரமும் கலக்கத்தை யடைந்திலர். கன்மழைபால் அடிபட்ட பாவதம் கலக்கமுறுததேபோல, யாஞ்ஞவற்கிய முனிவரும் கலக்கத்தை யடைநதிலர், மாறாய் ஆஸ்வலர் வசனத்தைக் கேட்டு நகைத்துக்கொண்டு அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் இவ்வசனத்தை ஆஸ்வலரெனப் பெயரிய பிராஹ்மணர் பொருட்டுக் கூறுவாராயினர் :—ஹே ஆஸ்வலரே ! இந்தப் பிராஹ்மணர்களுடைய சமாஜத்தில் எந்த எந்தப் பிராஹ்மணர் பிரஹ்மவேத்தாக்களோ, அந்த அந்தப பிராஹ்மணர் பொருட்டு யானெப்போதும் நமஸ்கரிக்கின்றேன்.

சங்கை :—ஹே யாஞ்ஞவற்கிய! உனக்கு இங்ஙனம் பிராஹ்மணரிடத்தே சிரத்தையிருக்குமாயின், சர்வப் பிராஹ்மணர்கட்குமுரிய கோக்களை நீ யேன் அபகரித்துக்கொண்டாய்?

சமாதானம் :—ஹே ஆஸ்வலரே! சுவர்ணத்தோடுகூடிய கோக்களைக் கண்டு அக்கோக்களின்கண் எனக்கபிலாஷை யுண்டாயது; ஆதலின், யான் அவற்றை அபகரித்தனன்; இதன்கண்ணே என்மறையவர் கோபமுறுகின்றனர். ஹே ஆஸ்வலரே! யான் இம்மறையவரின் கோக்களைக்கொண்டு செல்வேனாயின், இம்மறையவர் என்மீது கோபித்தல் பொருந்தும். ஆனல், யான் இந்த மறையவர் கோக்களைக்கொண்டு செல்லவில்லை; மற்றோ, ஜனகராஜா கோக்களைக் கொடுத்தனர் யான் கொண்டுசென்றனன். இதன்கண்ணே பிராஹ்மணர்கட்குக் கோபம் வரக் காரணமியாது? இவ்விஷயத்தை நீர் நன்கு விசாரித்துக்கூறும். ஹே ஆஸ்வலரே! இந்த ஜனகராஜா மிகுந்த தனமுடையவர்; இம்மறையவர் யாவருக்கும் உமக்கும் என்னைப்போலத் தனத்தைவாங்க இச்சையிருப்பின், ஜனகராஜாவினிடத்தினின்றும் நீவிர் யாவரும் தனத்தை வாங்கிக்கொள்ளுங்கள். உங்கள் பொருட்டுத் தனங்கொடுப்பதில் யான் அரசரைத் தடுக்கவில்லை; ஆகையால், என்மீது கோபங்கொள்ளுதல் உமக்கு உசிதமன்றும். ஹே சிஷ்ய! இவ்வகையாய வசனத்தை யாஞ்ஞவற்கிய முனிவர் ஆஸ்வலர் பொருட்டுக் கூறியபோது, அந்த ஆஸ்வலர் நெய்சொரியத் தீ வளர்தலேபோலக் கலக்கத்தை மீண்டுமடைந்து, யாஞ்ஞவற்கிய முனிவரோடு விவாதம் செய்ய உத்தேசித்து அவரை நோக்கி எட்டு வினாக்களைக் கேட்டனர். அவற்றுள், நான்கு வினாக்களின் பெயர் அதிமோக்ஷமாம், நான்கு வினாக்களின் பெயர் சம்பத்தாம். அவற்றுள், கர்மிகளின் வாக்கு முதலிய அத்தியாத்மங்கட்கு அக்கினி முதலிய அதிதைவங்களோடுள்ள பரிச்சேதரூப மிருத்தியுவின் நிவிருத்தியின் சாதனமாய வாக்காதிகட்கு அக்கினியாதிகளோடுள்ள அபேதஞானம் மோக்ஷமெனப்படும். அவ்வபேதஞானததால் வாக்காதி அத்தியாத்மங்கட்கு அக்கினியாதி அதிதைவபாவ அடைவு வடிவபலம் அதிமோக்ஷ மெனப்படும். அவ்வதிமோக்ஷ ரூபபலத்தை விஷயம செய்வனவாய வினாக்களும் அதிமோக்ஷ மெனப்படும. கீழாய வஸ்துவின்கண் சிறிதுமாத்திர சமான தர்மத்தைக்கொண்டு மேலாய பார்வைசெய்வது சம்பத்தெனப்படும்; சிராத்த அன்னத்தின்கண் அமிருத திருஷ்டியும், பிராஹ்மணரிடத்தே விஷ்ணு திருஷ்டியும் செய்வதுபோலவாமெனக. அச்சம்பத்தை விஷயம் செய்யும் வினாக்களும் சம்பத்தெனப்படும்.

இப்போது நான்கு அதிமோக்ஷ வினாக்களைக் காண்பிப்பாம் :—ஆஸ்வலர் கூறல், ஹே யாஞ்ஞவற்கிய! இருத்துவிக்காதி சாதனங்களோடு கூடியிருப்பினும், அக்கினி ஹோத்திராதி கர்மங்கள் பரிச்சேத பாவஜன்னிய பிரமாதரூப மிருத்தியுவால் வியாப்தமாம். சாஸ்திரத்திற் கூறிய கர்மங்களின் அனுஷ்டானத்தால் அசாஸ்திரீய இந்திரியாதிகளின் விருத்திகள் நீங்குமாயினும், பரிச்சின்ன பாவஞானமின்றி நீங்கா. ஆகையால், (1) எந்த ஞானத்தால் யஜமானன் பரிச்சின்ன பாவத்தைப் பரித்தியாகம் செய்து அபரிச்சின்ன பாவரூபபலத்தை யடைவன்?

(2) ஹே யாஞ்ஞவற்கிய! பகலிரவு வடிவகாலத்தால் சம்பூரண பதார்த்தங்கள் பரிச்சின்னமாயிருக்கும். அப்பரிச்சின்ன பாவத்தின் நிவிருத்தி எந்த ஞானத்தா லுண்டாம்? (3) ஹே யாஞ்ஞவற்கிய! சுக்கிலபக்ஷம், கிருஷ்ணபக்ஷம் என்னும் காலத்தால் சம்பூரண பதார்த்தங்கள் பரிச்சின்னமாயிருக்கும். அப்பரிச்சின்னபாவ நிவிருத்தி எந்த ஞானத்தாலுண்டாம? (4) ஹே யாஞ்ஞவற்கிய! இத்தூலசரீ ரத்தைப் பரித்தியாகம்செய்து நிராசிரய ஆகாசத்தின்கண் யஜமானன் எச்சாத னத்தாற் செல்வன்?

இப்போது இந்நான்கு வினாக்களி னுத்தரத்தைக் காண்பிப்பாம்:—யாஞ்ஞ வற்கிய முனிவர் கூறல், (1) ஹே ஆஸ்வலரே! கர்மகர்த்தாவாய யஜமானனுடைய அத்தியாத்ம வாக்கு, அவ்வாக்கின் அதிதைவரூப அக்கினி, அவ்வாக்கின் அதி யஞ்ஞரூப ஹோதா என்னும் மூன்றன் அபேதத்தையும் விஷயம்செய்யும் அதி தைவ அக்கினிரூப யஜமானனுடைய வாக்கு யானாயிருக்கின்றேன் என்னும் ஹோ தாவின் திருஷ்டியானது, யஜமானனுடைய முதல் பரிச்சேத ஜன்னிய மிருத்தியு வைத் தாண்டுதற்குச் சாதனமாம். (2) ஹே ஆஸ்வலரே! யஜமானனுடைய அத்தியாத்ம சக்ஷு, அச்சக்ஷுவின் அதிதைவரூப சூரியன், அச்சக்ஷுவின் அதியஞ்ஞரூப அத்வர்யு என்னும மூன்றன் அபேதத்தை விஷயம்செய்வதாய அதி தைவ சூரியரூப யஜமானனது சக்ஷு யானாயிருக்கின்றேன் என்னும் அத்வர்யு வின் திருஷ்டி யஜமானனுடைய இரண்டாவது பரிச்சேதத்தை நிவிருத்திக்கும். (3) ஹே ஆஸ்வலரே! யஜமானனது அத்தியாத்மரூபப் பிராணன், அந்தப் பிராணனுடைய அதிதைவரூப வாயு, அந்தப் பிராணனுடைய அதியஞ்ஞரூப உத்காதா என்னும் மூன்றன் அபேதத்தை விஷயம்செய்யும அதிதைவ வாயுரூப யஜமானனது பிராணன் யானாகின்றேன் என்னும உத்காதாவின் திருஷ்டியானது யஜமானனுடைய மூன்றாவது பரிச்சேதத்தை நீக்கும். (4) ஹே ஆஸ்வலரே! யஜமானனுடைய அத்தியாத்மமாகிய மனம், அம்மனத்தின் அதிதைவரூப சந் திரன், அம்மனத்தின் அதியஞ்ஞரூப பிரஹ்மா என்னும் மூன்றன் அபேதத்தை விஷயம்செய்யும் அதிதைவ சந்திரவடிவ யஜமானனது மனம் யானாகின்றேன் என்னும் பிரஹ்மாவின் திருஷ்டியின் மகிமையால், யஜமானன் ஆகாசத்தின் கண்ணே செல்வன். ஈண்டுத் திருஷ்டிசப்தத்தால் யாண்டும் ஞானங்கவர்க. பரிச்சேதசப்தத்தால் பேதங்கவர்க. இருக்குவேதத்தையறிந்த பிராஹ்மணர் ஹோதாவெனப்படுவர். யஜுர்வேதத்தையுணர்ந்த பிராஹ்மணர் அத்வர்யுவென ப்படுவர். சாமவேதத்தையறிந்த பிராஹ்மணர் உத்காதாவெனப்படுவர். மூன்று வேதங்களையும் அறிந்த பிராஹ்மணர் பிரஹ்மாவெனப்படுவர். இந்நான்கு இருத்துவிக்குகளும் யாகத்தைச்செய்விப்பவர் ஆவர். யாகத்தைச்செய்யும் க்ஷத் திரியாதியர் யஜமானரெனப்படுவர். ஹே சிஷ்ய! இங்ஙனம் அதிமோக்ஷரூப நான்கு வினாக்களின் உத்தரத்தை யாஞ்ஞவற்கிய முனிவர் கூறியவுடன் அவ்வாஸ் வலர் மீண்டும் சம்பத்துருவ நான்கு வினாக்களைக்கேட்டனர். ஆஸ்வலர் கூறல்:— (1) ஹே யாஞ்ஞவற்கிய! ஹோதாவின் சம்பத்துருவ ஞானத்தால் யஜமானனுக்கு

எப்பலத்தினடைவுண்டாம். (2) அத்வர்யுவின் சம்பத்துருவ ஞானத்தால் யஜமானனுக்கு எப்பலத்தின் அடைவுண்டாம். (3) பிரஹ்மாவின் சம்பத்துருவ ஞானத்தால் யஜமானனுக்கு எப்பலத்தினடைவுண்டாம். (4) உத்காதாவின் சம்பத்துருவஞானத்தால் யஜமானனுக்கு எப்பலத்தின் பிராப்தியுண்டாம்.

இப்போதிந்நான்கு வினுக்கட்கும் உத்தரத்தைக் காண்பிப்பாம் :—யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல் :—(1) ஹே ஆஸ்வலரே! யாஜ்யா, புரோநுவாக்யா, ஸஸ்யா என்னும் மூன்று மந்திரங்களில் மும்மைச் சங்கையுளது. மூவுலகத்தின் கண்ணும் மும்மைச சங்கையுளது. மும்மைச சங்கைரூப சமானதர்மத்தைக கவர்ந்து ஹோதாவானவர் யாஜ்யாதி மூன்றுமந்திரங்களை மூவுலகவடிவமாய்க் காணின், அந்த ஹோதாவின் சம்பத்துருவஞானத்தால் யஜமானனை மூவுலகின் ஜயரூபபலம் அடையும். "யஜ" (வேட்குதி) என்னும் ஏவுதலின்பின் படிக்கப்பட்ட மந்திரத்தை யாஜ்யாவென்பர். "அநுப்ரூஹி" (கூறுதி) என்னும் ஏவுதலின்பின் படிக்கப்பட்ட மந்திரத்தைப் புரோனுவாக்கியாவென்பர். ஒரு சுவாசத்தால் படிக்கப்பட்ட மந்திரத்தை "ஸஸ்யா" வென்பர். (2) ஹே ஆஸ்வலரே! அத்வர்யு அக்கினியின்கண்ணே ஹவனம் செய்யும் ஆஹுதிகள் ஒளியுடைமை, சப்தமுடைமை, கீழ்ச்செல்கை யுடைமை என்னும் ரூபத்தால் மூவகையாம். எங்ஙனம் ஆஹுதிகளிடத்தே ஒளியுடைமை முதலிய தர்மங்களிருக்குமோ, அங்ஙனம் தேவலோகம், பிதுர்லோகம், மனுஷ்யலோகம் என்னும் மூவுலகின்கண்ணும் ஒளியுடைமை முதலிய தர்மங்களிருக்கும். அவ்வொளிர்வுடைமை முதலிய சமான தர்மங்களைக் கவர்ந்து அவ்வத்வர்யு அவ்வாஹுதிகளைத் தேவலோகாதி ரூபமாய்ப் பார்ப்பாராயின், அத்வர்யுவின் சமபத்துருவ ஞானத்தால் யஜமானனுக்குத தேவலோகம், பிதுர்லோகம், மனுஷ்யலோகம் என்னும் மூவுலகங்களின் ஜயரூப பலங்கிடைக்கும். (3) ஹே ஆஸ்வலரே! விருத்தி ரூபத்தால் மனம் அநந்தமாம். விஸ்வே தேவதைகளும் அநந்தராவர். அவ்வநநதத் தன்மைவடிவ சாமானிய தர்மத்தைக் கவர்ந்து பிரஹ்மாவானவர் மனத்தை விஸ்வேதேவதாரூபமாய்ச் சிந்தனை செய்வராயின், அந்தப் பிரஹ்மாவின் சம்பத்துருவ ஞானத்தால் யஜமானனுக்கு அநந்த பலத்தின் அடைவுண்டாம். (4) ஹே ஆஸ்வலரே! உத்காதாவானவர் கானஞ்செய்த யாஜ்யா புரோனுவாக்யா ஸஸ்யா வென்னும் மூன்று மந்திரங்களையும் உத்காதா பிராணுபானவியான ரூபமாய்ப் பார்க்கின், அவ்வுத்காதாவின் சம்பத்துருவ ஞானத்தால் யஜமானனுக்கு பூ, புவ, சுவ என்னும் மூன்று லோகங்களின் ஜயரூபபலம் உண்டாம். ஹே சிஷ்ய! இங்ஙனம் யாஞ்ஞவற்கிய முனிவர் ஆஸ்வலரின் எட்டு வினுக்கட்கும் விடைபகரவே அந்த ஆஸ்வலர் யாஞ்ஞவற்கிய முனிவரை ஜயிக்கத் தன்னிடத்தில் ஆற்றலைக் காணுதவராய் வெட்கத்தை யடைந்து யாஞ்ஞவற்கியரோடு விவாதம் செய்விக்க ஆர்த்தபாகரென்னு மறையவரின் முகத்தை நோக்கிக் கொண்டு மீண்டுந் தாம் வினுதலை விட்டனர். அதன்பின்னர் அவ்வார்த்தபாகர் யாஞ்ஞவற்கிய முனிவரைநோக்கி வினவுவாராயினர். ஆர்த்தபாகர் கூறல் :—ஹே யாஞ்ஞவற்கிய! கிரகங்களெத்துணையின? அதிக்கிரகங்கள் எத்துணையின?

யாஞ்ஞவற்கியர் கூறல் :—கிரகங்கள் எட்டாம், அதிக்கிரகங்களெட்டாம். ஆர்த்தபாகர் கூறல் :—ஹே யாஞ்ஞவற்கிய ! அவ்வெட்டுக் கிரகங்களெவை ? அவ்வெட்டு அதிக்கிரகங்களெவை ? யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே ஆர்த்தபாகரே ! சுரோத்திரம் (1) துவக்கு (2) சக்ஷுஸ் (3) இரசனம் (4) கிராணம் (5) மனம் (6) வாக்கு (7) ஹஸ்தம் (8) என்னும் இவ்வெட்டிந்திரியங்களும் ஜீவரைக் கட்டுப்படுத்தும். ஆகையால், இவ்வெட்டும் கிரகங்கள் எனப்பெறும். சப்தம் (1) ஸ்பரிசம் (2) ரூபம் (3) இரசம் (4) கந்தம் (5) இச்சை (6) நாமம் (7) கிரியை (8) என்னும் இவ்வெட்டும் சுரோத்திராதி எட்டு இந்திரியங்களின் முறையினுற்ற விஷயங்களாம். இச்சப்தாதி விஷயங்களின்றிக் கேவலம் சுரோத்திராதி இந்திரியங்கள் ஜீவரைக் கட்டுப்படுத்தா. மற்றோ, சப்தாதி விஷயங்களோடுகூடிய சுரோத்திராதி இந்திரியங்கள் ஜீவர்களுடைய கட்டுப்பாட்டின் காரணங்களாம். ஆகையால், சப்தாதி எட்டும் அதிக்கிரக மெனப்பெறும்.

இப்போது இப்பொருளையே வெளிப்படையாய்க் காண்பிப்பாம் :—ஹே ஆர்த்தபாகரே ! பிரசித்தமாய சமுத்திரத்தின்கண் அடைந்த புருஷனை மகரம் முதலிய கிரகங்கள் பக்ஷணம் செய்துவிடும். அம்மகராதி கிரகங்களை அவற்றினும் அதிக பலம்வாய்ந்த திமிங்கலாதி அதிக்கிரகங்கள் பக்ஷணம் செய்யும். அதுபோலச் சம்சாரரூப சமுத்திரத்தின்கண் அடைந்த அஞ்ஞானியைச் சுரோத்திராதி இந்திரியரூப கிரகங்கள் பக்ஷணம் செய்யும். கருத்தியதுவாம் :—ஜீவனைச் சுரோத்திராதி இந்திரியங்கள் தமததீனம செய்யும். அந்தச் சுரோத்திராதி இந்திரியரூப கிரகங்களைச் சப்தாதி விஷயரூப அதிக்கிரகங்கள் பக்ஷணம் செய்யும். கருத்திதுவாம் :—சப்தாதி விஷயங்கள் சுரோத்திராதி இந்திரியங்களைத் தமததீனமாக்கும், இதுவே அவற்றின் பக்ஷணமாம். ஹே ஆர்த்தபாகரே ! பூனையானது எலியைக் கவர்வதேபோலச சுரோத்திராதி இந்திரியங்கள் இச்சீவனைத் தங்கள் வயம்செய்து கொள்ளும. செம்படவன் ஜலத்தின்கண் உள்ள மீன்களைக் கவர்வதேபோலச் சப்தாதி விஷயங்கள் சுரோத்திராதி இந்திரியங்களைத் தழுதுவயம் செய்யும். ஹே ஆர்த்தபாகரே ! பிசாசுமுதலிய கிரகங்களாற் பீடிக்கப்பட்ட இப்புருஷன் தனது இதத்தையும் அகிதத்தையும் அறியாததே போலச் சுரோத்திராதி இந்திரியங்களின் அதீனமான இச்சீவன் தனது மோக்ஷரூப இதத்தையும் பந்தரூப அகிதத்தையும் பாரான். ஹே ஆர்த்தபாகரே ! ஒரு பலவானுய புருஷனுல் கட்டப்பட்ட மகரமானது எவனையும் கொல்ல இச்சியாது ; ஆயினும், அப்பலமுடைய புருஷவடிவ அதிக்கிரகத்தால் ஏவப்பட்ட அம்மகரம் அந்நிய புருஷனை யடிக்கும் பொருட்டு முயலும். அது போலச் சுரோத்திராதி இந்திரியரூப கிரகங்கள் ஜீவர்களைக் கட்டுப்படுத்த இச்சியாவாயினும் சப்தாதி விஷயரூப அதிக்கிரகங்களின் வயப்பட்டனவாய்ச் சீவர்களைக் கட்டுப்படுத்த முயலும்.

சங்கை :—ஹே பகவன் ! யாஞ்ஞவற்கிய முனிவரானவர் அஷ்ட கிரகங்களையும் அஷ்ட அதிக்கிரகங்களையும் கூறியது சம்பவியாது. ஏனெனின், அந்நிய

சாஸ்திரத்தின்கண் ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து ஞானேந்திரியங்கள், ஓரந்தக்கரணம் என்னும் பதினோரிந்திரியங்கள் கூறப்பட்டுள்ளன. அவற்றிற்கு விஷயங்களும் பதினொன்றே கூறப்பட்டுள்ளன. அந்நூற்கு மூரணுமன்றோ?

சமாதானம் :—ஹே மைந்த! இந்திரியங்களும் விஷயங்களும் பதினொன்றும். ஆயினும், சுரோத்திராதி எட்டு இந்திரியங்களின் பிரதானத் தன்மையையும், சப்தாதி எட்டு விஷயங்களின் பிரதானத் தன்மையையும் கவர்ந்து யாஞ்ஞவற்கிய முனிவர் எட்டுக்கிரகங்கள் எட்டு அதிக் கிரகங்கள் எனக்கூறினர். அல்லது, துவக்கிந்திரியத்தின்கண்ணும் ஹஸ்த இந்திரியத்தின்கண்ணும் பாதம் பாயு உபஸ்தம் என்னும் மூன்றற்கும் உள்ளடக்கமாமெனை உடன்பட்டு அம்முனிவர் எட்டுக் கிரகங்களையும் எட்டதிக்கிரகங்களையும் கூறினர். அவற்றினுள்ளும் உபஸ்த இந்திரியத்திற்குத் துவக்கிந்திரியத்தின்கண் உள்ளடக்கமாம். ஏனெனின், துவக்கிந்திரியம் உடம்பு முழுதும் வியாபகமாம்; ஆதலின், ஸ்திரீயின் சம்பந்தத்தால் உபஸ்தத்தின்கண் உண்டாமின்பம் ஸ்பரிசத்தானே யுண்டாயதாம். ஆகையால், அவ்வின்பம் துவக்கிந்திரியத்தால் உண்டாயதாம். இந்நெறியே உபஸ்தத்திற்குத் துவக்கிந்திரியத்தின்கண் உள்ளடக்கமாம். பாத இந்திரியத்தாற் செல்கை வடிவக்கிரியை யுண்டாம். பாயு விந்திரியத்தால் மலபரித்தியாக வடிவக்கிரியை யுண்டாம். ஹஸ்த இந்திரியத்தால் கவர்தல் வடிவக்கிரியை யுண்டாம். இங்ஙனம் கிரியையின் சாதனத்தன்மை மூன்றன்கண்ணும் சமானமாம். ஆகையால், பாயுவிற்கும் பாதத்திற்கும் ஹஸ்த இந்திரியத்தின்கண் உள்ளடக்கமாம். அல்லது, எக்கால் பாயு இந்திரியத்திற்கு மலபரித்தியாகரூப வியாபார முண்டாமோ, பாத இந்திரியத்திற்குக் கமனரூப வியாபார முண்டாமோ, அக்கால் ஹஸ்த இந்திரியத்திற்கு வளைதல் நிமிர்தல் வடிவ வியாபாரம் அவசியமுண்டாம். ஆகையால், இஃதறியப்பெறும் :—பாயு பாதம் ஹஸ்தம் என்னும் மூன்றிற்கும் நாடிகளின்கட்டுச சமானமாம், அந்நாடிக் கட்டின் சமானத் தன்மையைக் கவர்ந்து யாஞ்ஞவற்கிய முனிவர் பாயு பாதங்களை ஹஸ்தத்தின்கண்ணே யடக்கிக்கூறினர். (1) ஹே சிஷ்ய! இங்ஙனம் யாஞ்ஞவற்கிய முனிவர் ஆர்த்தபாகரது வினவின் விடையை விளம்பவே அவ்வார்த்தபாகர் மீண்டும் வேறு வினவத்தொடங்கினர். ஆர்த்தபாகர் கூறல்:—ஹே யாஞ்ஞவற்கிய! ஹிரண்யகர்ப்பர்முதலாயுள்ள ஜட அஜடப்பிரபஞ்சங்களை இந்தக்கிரக அதிக்கிரகரூபமிருத்தியு பக்ஷணம் செய்யும்; ஆகையால், சம்பூரண ஜகத்தும்கிரக அதிக்கிரகரூபமிருத்தியுவின் அன்னமாம். அம்மிருத்தியுவும் எத்தேவதைக்கன்னமாமோ அத்தேவதை யீண்டியாதாம்? கருத்திதுவாம்:—கிரக அதிக்கிரகரூப மிருத்தியுவைப் பக்ஷணம்செய்யும் வஸ்துவேறொன்றுண்டா? அல்லதின்று? வேறொன்றத்தகைய துண்டெனின் பக்ஷணம் செய்யுமது நித்தியமா? அநித்தியமா? நித்தியமென்னின் துவைத அடைவுவரும். அநித்தியமென்னின் அவ்விரண்டாவதைப்பக்ஷணம் செய்வதாய மூன்றாவதொன்றையுடன் படவேண்டும், அம்மூன்றாவதைப் பக்ஷணம் செய்ய நான்காவதொன்றையுடன் படவேண்டும். என இங்ஙனம் அநவஸ்தா தோஷவடைவுண்டாம். கிரக அதிக்கிரகரூப மிருத்தியுவைப் பக்ஷணம் செய்யும் வஸ்து வேறொன்றின்றென்னின், மோக்ஷப் பிராப்தியின்பொருட்டு ஞான

வகையாய் முயலுதல் பயனில்கூற்றையன்றோ மருவும்? யாஞ்ஞுவற்கிய முனிவர் கூறல் :—ஹே ஆர்த்தபாகரே! சர்வபதார்த்தங்களையும் பக்ஷணஞ் செய்யும் அக்கினியை நீரானது பக்ஷிப்பதேபோலச சர்வஜகத்தையும் பக்ஷணஞ்செய்யும் கிரக அதிக்கிரகரூபமிருத்தியுவை ஆன்மசாக்ஷாத்காரம்பக்ஷிக்கும். ஆகையால், மோக்ஷ அடைவின்பொருட்டு முயலுதல் பயனில் கூற்றை மருவாதாம். தேற்றும்பொடி நீரின் கண்ணுள்ள மண்ணை நீக்கிததானும் நீங்கும. தேற்றும்பொடியை நீகக வேறொருசாதன அபேக்ஷையின்றும்; அதுபோல, மகாவாக்கிய ஜன்னிய அந்தக் கரண விருத்திரூப ஞானமானது காரியசகித அஞ்ஞானத்தை நீக்கித்தானும் தானே நீங்கிவிடும். அந்த ஞானநீக்கத்தின்கண் வேறொரு சாதன அபேக்ஷையுண் டாவதின்றும்; ஆகையால, துவைத அடைவும் அநவஸ்தையும் ஆய இருவகைத் தோடமுமின்றும. (2) ஹே சிஷ்ய! இங்ஙனம் யாஞ்ஞவற்கிய முனிவர் இரண்டா வது வினவிற்கு விடைபகரவே அவ்வார்த்தபாகர் மீண்டும் மூன்றுவது வினவைக் கேட்டனர். ஆர்த்தபாகர் கூறல் :—ஹே யாஞ்ஞவற்கிய! எக்கால் பிரஹ்மத்தை யுணாந்தோன் ஸ்தூலசரீரத்தைப பரித்தியாகம செய்வனோ, அக்கால் பிரஹ்மத்தை யறிந்தவனது பிராணன் அஞ்ஞானியின் பிராணனைப்போல லோகாந்தரத்தின் கண்ணே செல்லுமா? அல்லது செல்லாதா? செல்லுமென்னின், அஞ்ஞானிக்கு லோகாந்தரத்தின்கண் மீண்டும வேறுசரீர அடைவு உண்டாவதேபோலப் பிரஹ் மத்தை யறிந்தவனுக்கும் லோகாந்தரத்தின்கண் மீண்டும சரீரபபிராப்தியுண்டாம். செலலாதென்னின், சரீரததின்கண்ணே பிராணன் நிறகவே மிருத்தியு உண்டா காது; ஆகையால, பிரஹ்மத்தை யுணாந்தவனது சரீரத்தின்கண் னொருகாலும் மாணவியவகாரம் உண்டாகலாகாது. பிராரப்த காமநாசததின்பின் பிரஹ்மத்தை யுணர்ந்தவனது தேகததின்கண் யாவருக்கும் மரணவியவகாரம தோற்றுகின்றது. யாஞ்ஞவற்கியா கூறல :—ஹே ஆர்த்தபாகரே! பிரஹ்மத்தை யுணர்ந்தவனது பிராரபதகர்மம் எபபோது க்ஷயமாமோ அபபோது அந்தப் பிரஹ்மத்தை யுணாந் தவனது பிராணன் சரீரததினின்றும வெளியே செல்லாது. மற்றோ, இசசரீரத் துள்ளேயே இலயத்தையடையும. கருத்திதுவாம் :—அவித்தை காமம் கர்மம் என்னும் மூன்றும பிராணனுடைய லோகாந்தரகமனத்தின்கண்ணே காரணமாம். அம்மூன்றும் பிரஹ்மத்தை யறிந்தவனுககு ஆன்மஞானத்தால நீங்கியிருக்கின் றது. ஆகையால், பிரஹ்மத்தையுணர்ந்த புருஷனுடைய பிராணன் லோகாந்தரத் தின்கண்ணே செல்லாது. ஆகையால், பிரஹ்மத்தையுணர்ந்த புருஷனுக்கு அஞ் ஞானிக்கேபோல மீண்டும் சரீரபபிராபதி யுண்டாவதின்றும. ஸ்தூலசரீரத்தோடு பிராணசம்பந்தமற்று நிறறலைமரணமென்பா. அசசம்பந்தமறல் பிராணனது இல யத்தானும் சம்பவிக்கும. ஆகையால, அறிஞனது சரீரத்தின்கண் மரணவியவ காரமும் சம்பவிக்கும்.

சங்கை :—பிரஹ்மத்தை யறிந்தவனது பிராணன் சரீரத்தினின்றும் வெளியிற் செல்வதில்லை; மற்றோ, சரீரததுள்ளே இலயத்தையடையும் என்னும் இவ்விஷயம் அறிந்துகொள்வது யாங்ஙனம்?

சமாதானம் :—உயிர்த்திருக்கும் அவஸ்தையின்கண் அத்தியந்தம் இளைத்திருக்கும் சரீரமும் மரணத்தின்பின்னர்ப் பேரியைப்போல வீங்கித் தூலபாவத்தை யடையும். அந்த ஸ்தூலத்தன்மையின் காரணம் வேறொரு பதார்த்தமுமன்றும். மற்றே, தனஞ்சயனென்னும் பிராணனே அந்த ஸ்தூலத்தன்மையின் காரணமாம்; ஆகையால், மரணத்தின்பின்னர்ச் சரீரத்தின் விலக்ஷண ஸ்தூலத்தன்மைவடிவ ஹேதுவினல் சரீரத்தின்கண் பிராண இலயத்தின் அனுமானமாம்.

சங்கை :—பிரஹ்மத்தை யுணர்ந்தவனது பிராணன் லோகாந்தரத்தின்கண்ணே செல்லாது என்பதன்கண் யாது பிரமாணமுளது ?

சமாதானம் :—இப்பொருளின்கண் சாக்ஷாத் பகவதியாய சுருதி மாதாவே பிரமாணமாம். அஃதிஃதாம் :—

" ஸஸ்ரீவரிச—ஷிரிஃ ஷொஜஙரவலுஃ
வ—ா—ஷாயணாஃ வ—ா—ஷ0 வுாவசூாஷ0 மஜூஷி."

பொருளிதுவாம் :—ஆறுகள் கடலின்கண் இலயத்தை யடைவதேபோலப் பிரஹ்மத்தையுணர்ந்தவனது பதினேரிந்திரியங்களும் பஞசப்பிராணன்களும் ஆய இப் பதினறு கலைகளும் அதிஷ்டானபுருஷனிடத்தே தோற்றுகிறகும் ; அவ்வதிஷ்டான புருஷனிடத்தே இலயத்தையடையும். ஆகையால, பிரஹ்மத்தை யுணர்ந்தவனுடைய பிராணன் லோகாந்தரத்தின்கண்ணே செல்வதில்லை. பிரஹ்மவேத்தாவின் பிராணனும் லோகாந்தரத்தின்கண்ணே செல்லுமாயின், பிரஹ்மவேத்தாவிற்கும் அஞ்ஞானியைபபோல அவசியம் வேறு சரீரப்பிராபதியுண்டாம். மீண்டும் மீண்டும் சரீரத்தைத் தரிப்பவனுக்கு மோக்ஷப்பிராப்தி சம்பவியாது ; ஆகையால், பிரஹ்மத்தை யுணர்ந்தவனது பிராணன் லோகாநதரத்தின்கண்ணே செல்லாது. (3) ஹே சிஷ்ய ! இங்ஙனம் யாஞ்ஞவற்கியமுனிவர் மூன்றுவது வினவிற்கு விடை பகர்ந்தபோது அவ்வார்த்தபாகர் மீண்டும நான்காவது வினவைச் செய்தனர். ஆர்த்தபாகர் கூறல் :—ஹே யாஞ்ஞவற்கிய ! எக்கால் அந்தப பிரஹ்மத்தை யுணர்ந்த புருஷன் விதேகமோக்ஷத்தை யடைவனே அக்கால் அவன் எவ்வஸ்துவைப் பரித்தியாகம்செய்யான் ? கருத்திதுவாம் :—ஜீவன் முக்தியவஸ்தையைப் போல, ஆண்டு எஞ்சியதாய் துவைதத்தின் இலயமாமா ? அல்லது எஞ்சுதலின்றித் துவைதத்தின் இலயமாமா ? என்பதாம். யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல் :—ஹே ஆர்த்தபாகரே ! மற்றெல்லாப் பதார்த்தங்களும் முக்தபுருஷனைப் பரித்தியாகம்செய்யும் ; ஆனல், வாமதேவாதி நாமங்கள் முக்தபுருஷரைப் பரித்தியாகம்செய்யா. வாமதேவாதி முக்தபுருஷர் நாமரூபக் கிரியைவடிவ பேதப் பிரபஞ்சத்தினின்றும் முக்தராயுள்ளார் ; ஆதலின், உண்மையாய் அம்முக்தபுருஷரிடத்தே வாமதேவாதி நாமங்களின் சம்பந்தம் சம்பவியாது. ஆயினும், இலௌகிகபுருஷர் இப்போது வாமதேவாதி முக்தபுருஷரின் வாமதேவாதி நாமங்களைக் கவர்வர். ஆதலின், இலௌகிகபுருஷரின் திருஷ்டியால் மோக்ஷ அவஸ்தையின்கண் முக்தபுருஷர்கட்கு வாமதேவாதி நாமங்களிருக்கும். அம்முக்தபுருஷரின் நாமங்கள் அநந்தமாம். அங்ஙனமே, விஸ்வேதேவதைகளும் அநந்தமாம் ; ஆகையால்,

எப்புருஷன் அவ்வநந்தநாமங்களில் அநந்தவிஸ்வேதேவரை அபேதசிந்தனை செய்வனே, அப்புருஷனுக்கு அநந்தபலத்தின் பிராப்தியுண்டாம். (4) ஹே சிஷ்ய! இந்நான்கு வினாக்களையும ஆர்த்தபாகர் ஞானிகள் விஷயத்தே செய்தனர். இந நான்கு வினாக்கட்கும் யாஞ்ஞவற்கிய முனிவர் விடை கூறிவிடவே, அவ்வார்த்த பாகர் மீண்டும் அஞ்ஞானிகள் விஷயத்தே ஐந்தாவது வினாவைக் கேட்டனர். ஆர்த்தபாகர் கூறல் :—ஹே யாஞ்ஞவற்கிய! எக்கால் இச்சீவர்கட்கு மரணாவஸ்தை யுண்டாமோ, அக்கால் இச்சீவர்களின் அத்தியாத்மரூப வாக்கிந்திரியம் அதிதைவரூப அக்கினியை யடையும். அத்தியாத்மரூபப் பிராணன் அதிதைவரூப வாயுவையடையும். அத்தியாத்மரூப நேத்திரேந்திரியம் அதிதைவரூப சூரியனை யடையும். அத்தியாத்மரூப சுரோத்திரேந்திரியம் அதிதைவரூப திசைகளையடையும். அத்தியாத்மரூப மனம் அதிதைவரூப சந்திரனையடையும். அத்தியாத்மரூப சரீரம் அதிதைவரூபப் பிருதிவியை யடையும். சரீரத்துள் இராநின்ற அத்தியாத்மரூப ஆகாசம் அதிதைவரூப பாகிய ஆகாசத்தை யடையும். சரீரத்தின்கண் இராநின்ற அத்தியாத்மரூப ரோமம் அதிதைவரூப ஔஷதிகளையடையும். சரீரத்தின்கண் இராநின்ற அத்யாத்மரூப கேசம் அதிதைவரூப வனஸ்பதிகளையடையும். அத்தியாத்மரூப உதிரமும் வீரியமும் அதிதைவரூப ஜலத்தையடையும். இங்ஙனம் அந்நிய அத்தியாத்மரூப இந்திரியங்கட்கும் தமது அதிதைவரூபத்தின்கண் இலயத்தைக்கண்டு கொள்ளல்வேண்டும். அக்கினி முதலிய தேவதைகளை ஆசிரியாததாய்த் தத்தம் வியாபாரத்தைச் செய்யாத விதுவே மரணகாலத்தின்கண் வாக்காதி இந்திரியங்கட்கு அக்கினி முதலியவற்றின்கண் இலயமாம். இங்ஙனம், மரணகாலத்தின்கண் சம்பூரண வாக்குமுதலிய இந்திரியங்கட்கு இலயமுறவே இவ்வஞ்ஞானி ஜீவர் எதனைப்பற்றிப பரலோகத்தின்கண் சுகதுக்கங்களை யனுபவிட்பர்? ஹே சிஷ்ய! இங்ஙனம், ஆர்த்தபாகர் வினாவைக்கேட்டு, அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் அந்தவினாவின் பொருளை இரகசியமெனநினைந்து சபையின்கண்ணே அந்த வினாவின் விடையைப் பகர்ந்திலர்; மற்றோ, ஆர்த்தபாகரின் கையைக் கைப்பற்றித் தனித்தவிடத்தே அழைத்துச்சென்று அவ்வினாவின் விடையைக் கூறுவாராயினர்.

சங்கை :—ஹே பகவன்! இவ்வார்த்தபாகரின் வினாக் கர்மவிஷயகமன்றோ? இனியாஞ்ஞவற்கிய முனிவர் சபையின்கண் இருந்தே பிரஹ்மவித்தையை உபதேசிப்பரன்றோ? ஆகையால், பிரஹ்மவித்தையைப் பார்க்கிலும் கர்மவித்தை அதிரகசியமாம் எனவன்றோவாம்.

சமாதானம் :—ஹே மைந்த! பிரஹ்மவித்தையைக் காட்டினும் கர்மவித்தை இரகசியமாமென்னும் இக்கருத்துபற்றி யாஞ்ஞவற்கிய முனிவர் ஆர்த்தபாகரை ஏகாந்த தேசத்தின்கண் அழைத்துக்கொண்டு சென்றிலர்; மற்றோ, இக்கருத்துப் பற்றி யாஞ்ஞவற்கிய முனிவர் ஆர்த்த பாகரை ஏகாந்த தேசத்தின்கண் அழைத்துச் சென்றனர்.

இப்போது அக்கருத்தைக் காண்பிப்பாம் :—மரணத்தை யடைந்த அஞ்ஞானிகள் தங்கள் புண்ணிய பாவரூப கர்மங்களின் அனுசாரமாய்ப் பரலோகத்

தின்கண்ணே சுகதுக்கங்களை யடைவர். இவ்வார்த்தை பாலர்முதல் கோபாலர் பரியந்தம் யாவருக்கும் பிரசித்தமேயாம். ஆகையால், பிரசித்த அர்த்தத்தை யான் வித்வான்களின் சபையின்கண் விசாரம் செய்யின், இவ்வார்த்தபாகரது வினாவின்கண்ணும் எனது விடையின்கண்ணும் துச்சத்தன்மை யடையும். கருத்திதுவாம.—சபையின்கண்ணுள்ள சாவ வித்வான்களாய மறையவர்களும் எம்மிருவரையும் நோக்கி நகைசெய்வர். உண்ணலாற் பசிதீர்தல் என்பது யாவரும அறிந்ததே யன்றோ? மதிமான்கள் நிறைந்த சபையின்கண்ணே சென்று ஒருவன் எதனாற் பசிதீரும் எனவினவின் அதைக்கேட்ட ஓரறிஞன் உண்ணலாற் பசிதீரும் எனவிடைபகரின், ஆண்டு வினாவியோனையும் விடையளித்தோனையும் யாவரும் நோக்கி நகையாடுவர். அதுபோல, எம்மிருவருககும் சபையின் கண் நகைப்புண்டாமென நினைத்து, யாஞ்ஞவற்கிய முனிவர் ஆர்த்தபாகரை ஏகாந்த தேசத்திற் கழைத்துச சென்றனர். இப்போது யாஞ்ஞவற்கியரின் விடையைக் காண்பிப்பாம :—யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல் :—ஹே ஆர்த்தபாகரே! உயிர்த்து வாழும் அவஸ்தையில இவ்வஞ்ஞானிகள் புண்ணிய பாவ அனுசாரமாய்ச சுகதுக்கங்களை யனுபவிப்பர். அதுபோல, மரணமடைந்த பின்னரும் இவவஞ்ஞானிகள் பூர்வ புண்ணிய பாவரூப கர்மங்களை யாசிரயித்து சுகதுக்கரூப பலன்களை யனுபவிப்பர். இப்போது இப்பொருளையே வெளிப் படையாய்க் காண்பிப்பாம :—ஹே ஆர்த்தபாகரே! யாவன் பாவியாயிருக்கின் றானோ, அவன் நரகத்தை யடைவன். யாவன் புண்ணியவானாயிருக்கின்றானோ, அவன் தேவபாவத்தை யடைவன். யாவன் புண்ணிய பாவரூப இரண்டு கர்மங் களையு முடையவனாவனோ, அவன் மனுஷசரீரத்தை யடைவன். இசசீவன் தனது உண்மைவடிவத்தால அதிகனுமன்று குறைந்தவனுமன்று சமானனுமன்று. ஆயி னும், கர்மங்களின் வயத்தனாய் இசசீவன் அதிகத் தன்மையையும, குறைந்த தன்மையையும, சமானத்தன்மையையும் அடைவன். அவற்றுள், யாவன் புண் ணியாத்மாவாய ஜீவனோ, அவன் ஹிரண்யகர்ப்பாதி ரூபமாய் அதிகத்தன்மையை யடைவன். யாவன் பாவாத்மாவாய ஜீவனோ, அவன் விருக்ஷாதி ரூபமாய்க் குறைந்ததன்மையை யடைவன். எசசீவன் புண்ணியபாவ மிரண்டிற்கும் கர்த்தா வாவனோ, அவன் மனுஷ்யாதிரூப சமானத்தன்மையை யடைவன். ஹே ஆர்த்த பாகரே! யாவன் சரீரத்தாலேனும், வாக்காலேனும், மனத்தாலேனும பிற ஜீவர் கட்கு இன்பமடைவிப்பனோ, அலலது துன்பமடைவிப்பனோ அவன் இப்பிறப்பி லேனும், மறுபிறப்பிலேனும், வாக்கு மனங்காயங்களால் சுகத்தையேனும், துக் கத்தையேனும் அடைவன். யாவன், எத்தேசத்தின்கண், எக்காலத்தின்கண், எந் நிமித்தத்தால், எவ்வகையால், எவ்வுடலால், எவ்வவஸ்தையால் பிறவுயிர்கட்குக் குறைவாயேனும், அதிகமாயேனும், சுகத்தையேனும், துக்கத்தையேனும் உண் டாக்குவனோ, அவன் மறுபிறப்பையடைந்து, அத்தேசத்தே, அக்காலத்தே, அந் நிமித்தாதிகளால், அங்ஙனமே குறைவாயேனும், அதிகமாயேனும், சுகத்தையே னும், துக்கத்தையேனும் அடைந்தனுபவிப்பன்; ஆகையால், இவ்வுலகின்கண்ணும், பரவுலகின்கண்ணும், அஞ்ஞானிகட்குச் சுகதுக்கரூப பலமுண்டாம். அது முற் செய்த புண்ணிய பாவரூபகர்மத்தால் அத்தேசகாலாதிகளில் சமானமேயாம்.

சிலவிடத்தே விசேஷமாயுமாம். ஸ்ரீ காசிமுதலிய புண்ணியதேசங்களில் சூரிய கிரகணமுதலிய புண்ணியகாலங்களில்சுபாத்திராய பிராஹ்மணருக்குச்சிறிது தானம் செய்யினும்அது கோடிகோடி மடங்கு விருத்தியையடையும். மழைகாலத்தே உத்தமபூமியின்கண் விதைத்த நெல்முதலிய பீஜங்கள் விருத்தியையடையும். அதுபோல, உத்தமதேச காலாதிகளிடத்தே கொடுத்த தானமானது விருத்தியை யடையும். ஹே ஆர்த்தபாகரே! யாவன் தனுதிபதார்த்தங்களை விருத்திசெய்ய வியாபாராதிகளைச் செய்கின்றனனோ, அவனுக்கு எங்ஙனம் நாளுக்குநாள் அப்பதார்த்தங்கள் விருத்தி யடைந்துகொண்டேவருமோ; அங்ஙனம், தேகாபிமானிகளாய அஞ்ஞானிகட்குப் புண்ணியபாவரூப கர்மங்கள் நாளுக்குநாள் விருத்தியை யடைந்துகொண்டேவரும். எங்ஙனம் உலகின்கண் அத்தியந்தம் சூக்ஷ்மமாய ஆலம் விதையானது, தேசகாலாதி நிமித்தங்களையடைந்து மகா வடவிருக்ஷத்தின் காரணமாமோ,அங்ஙனமே யாகாதிகாமங்களின்பின்னர்ச்சூக்ஷ்மரூபமாயிரா நின்ற புண்ணிய பாவரூப அதிருஷ்டமும் தேசகாலாதி நிமித்தத்தையடைந்து மகா சுகதுக்கங்களின் காரணமாம்; ஆகையால், புண்ணிய பாவரூப கர்மமே சுகதுக்கரூப பலபோகத்தின்கண்ணே முக்கிய காரணமாம். (5) ஹே மைந்த! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய முனிவர் ஆர்த்தபாகரின் ஐந்தாவது வினவின் விடையைவிளம்பவே, அவ்வார்த்தபாகர் யாஞ்ஞவற்கிய முனிவரைத் துதித்தனர். அங்ஙனமே, அந்த யாஞ்ஞவற்கிய முனிவரும் ஆர்த்தபாகரை ஸ்துதிசெய்தனர். அதன்பின்னர் அவ்வார்த்தபாகர் புஜ்யு என்னும் பிராஹ்மணரின் முகத்தை நோக்கிக்கொண்டு மீண்டும் வினவுதலினின்றும நீங்கினர். அதன்பின்னர் அந்தப் புஜ்யு என்னும் பிராஹ்மணர் யாஞ்ஞவற்கியரினும் அதிகரித்த தனது மேன்மையைத் தெரிவிக்கும்பொருட்டு தனது பூர்வ விருத்தாந்தத்தைச் சொல்லிப பின் வினவத்தொடங்கினர். புஜ்யு கூறல்:—ஹே யாஞ்ஞவற்கிய! முன்னர்ப் பிரஹ்மச்சர்ய அவஸ்தையின்கண் பிராஹ்மணனாகிய யான் வேதவித்தையை அத்தியயனம் செய்யும்பொருட்டு, மத்திரமென்னும் தேசத்தின்கண் சஞ்சரித்தனன். ஆண்டுக் கபிகோத்திரத்தின்கண் ணுற்பத்தியான பதஞ்சலரென்னும் பிராஹ்மணரது வீட்டின்கண் ஒரு ஆச்சரியரூப விஷயத்தைக் கண்டனன். அவ்விஷயம் இதுவாம்:—ஒரு காலத்தின்கண் அபபதஞ்சலரென்னும் மறையவரின்குமாரியின் சரீரத்தின்கண் பூதம்போல அக்கினிதேவதை பிரவேசஞ்செய்தது. அதன்பின்னர் வித்யார்த்திகளாய யாங்களியாவரும் அக்குமாரியின் சமீபத்தேசென்று இதனைக் கேட்டனம்:—நினது நாமம் என்? நினது கோத்திரமென்? எனக்கேட்டபின்னர் அவ்வக்கினிதேவதை எங்கள் பொருட்டுக்கூறியதாவது:—சுதன்வா என்பதென்பெயராம்; ஆங்கிரசம எனது கோத்திரமாம் என அதன்பின்னர்ப் பிராஹ்மணர்களாகிய நாங்கள்யாவரும் அவ்வக்கினி தேவதையின்பாற் காமங்களின் பலமுடிவைக் கேட்டோம். அதன்பின்னர் அவ்வக்கினிதேவதை இவ்விடை யளித்தது, எவ்விடத்தே பாரிக்ஷிதபுருஷன் இருப்பனோ, அவ்விடமே சர்வ கர்மங்களின் பலமுடிவாம்; அதனினு மதிக கர்மங்களின் பலமின்றும். இங்ஙனம், அக்கினி தேவதையானது எங்கள்பொருட்டு விடையளித்தபோது, பிராஹ்மணர்களாகிய யாங்களியாவரும்

மீண்டும் அக்கினி தேவதையின்பாற் கேட்டதாவது :—அந்தப் பாரிக்ஷிதபுருஷன் எவ்விடத்தேயிருப்பன் என யாங்கள் கேட்டபோது, அவ்வக்கினிதேவதை எங்கள் பொருட்டுப் பாரிக்ஷிதபுருஷனுடைய இடத்தைக் கூறியது. ஹே யாஞ்ஞவற்கிய! அக்கினிதேவதையை நோக்கி யாங்கள் முன்னர் எந்த வினவைக் கேட்டனமோ, அதே வினவை இப்போது உன்பொருட்டுக் கேட்கின்றேன்; அதற்கு நீ விடையளிப்பாயாக. எவ்விடத்தே பாரிக்ஷிதபுருஷன் இருப்பனோ அவ்விடமியாது? (1) அவ்விடத்தின் அவாந்தரலோகங்களின் பரிமாணம் எத்துணை? (2) அந்தப் பாரிக்ஷிதபுருஷனுடைய சொரூபமியாது? (3) ஹே சிஷ்ய! இவ்வண்ணம் புஜ்யுவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரை மூன்று வினக்கள் கேட்டனர். அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் புஜ்யுவின்பொருட்டு விடை கூறுவாராயினர் :—ஹே புஜ்யுவே! எவ்வினக்களின் விடையை முன்னர் உம்பொருட்டு அக்கினிதேவதை கூறியதோ, அப்பொருளை நன்றாக அறிந்திருந்தும், நீர் மீண்டும் சபையின்கண்ணே வேதத்தின் குஹ்யமான பொருளை ஏன்கேட்கின்றீர்; மற்றும், ஒருமுறையறிந்த வேதத்தினிரகசியப்பொருள் மீண்டும் சபையின்கண் கேட்குதல் நினக்குத் தகுதியன்றாமாயினும், ஹே புஜ்யுவே! உமக்கு விஸ்வாஸ முண்டாகும்பொருட்டும், வேதப்பொருளின் இரகசியத்தன்மையைக் காப்பாற்றும்பொருட்டும், சுருக்கமாய் அவ்வினவினுத்தரத்தை யான் உம்பொருட்டுக் கூறுகின்றேன் நீர் கேட்பீராக. ஹே புஜ்யுவே! உபாஸனையோடுகூட அஸ்வமேதயாகத்தைச் செய்யாநின்ற புருஷன் அதன் பலத்தை யெவ்விடத்திற் போகிப்பானே, அவ்விடத்தில் பாரிக்ஷிதபுருஷன் செல்வன்; ஈண்டு, உபாசனையோடு அஸ்வமேதயாகத்தைச் செய்யாநின்ற புருஷனே பாரிக்ஷிதனுவனென்னுமிப்பொருளை, யாஞ்ஞவற்கிய முனிவர் வேதப்பொருளின் இரகசியத்தன்மையைக் காப்பாற்றும்பொருட்டுக் கூறவில்லை. ஹே சிஷ்ய! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய முனிவர் சுருக்கமாய்க் கூறியவுடன் புஜ்யுவென்னும் மறையவர் யாஞ்ஞவற்கியருடைய சர்வஞ்ஞத்தன்மையின்கண் விஸ்வாசமில்லாதவராய், மீண்டும் அம்முனிவரிடத்தே கேட்பாராயினர். ஹே யாஞ்ஞவற்கிய! உபாஸனையோடு அஸ்வமேதயாகத்தைச் செய்பவன் எவ்விடத்திற்குச் செல்வனே, அவ்விடத்தை எம்பொருட்டு விஸ்தாரமாய்க் கூறுதி. ஹே மைந்த! இங்ஙனம் புஜ்யுவென்னும் மறையவர் கேட்டபோது, அந்த யாஞ்ஞவற்கியமுனிவர் தமது மனத்தின்கண்ணே இவ்வாறு ஆராய்வாராயினர் :—சபையின்கண் வேதத்தின் இரகசியார்த்தத்தைப் பிரகாசப்படுத்துவதில் எனக்கிச்சையின்றேனும், இப்புஜ்யுவானவர் பன்முறை யென்பால் அப்பொருளை வினவுகின்றனர். ஆதலின், சபையின்கண் வேதத்தின் இரகசியப்பொருளைப் பிரகாசஞ்செய்வதால் எப்பாவமுண்டாமோ, அப்பாவம் அந்தப் புஜ்யுவென்னும் மறையவர்க்கேயுண்டாம்; எனக்குண்டாகாது என ஆராய்ந்து அந்த யாஞ்ஞவற்கிய முனிவரானவர் விஸ்தாரமாய் அவ்வினவுக்கு விடை கூறத்தொடங்கினர். யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல் :—ஹே புஜ்யுவே! சமுத்திரபரியந்தமுள்ள தனத்தாற் பூரிக்கப்பெற்ற பிருதுவியை வசமாக்கிய அஸ்வமேதயாகக் கருத்தாவானவன் பரிக்ஷிதனெனப்படுவன். அப்பரிக்ஷித புருஷனையே சாஸ்திரத்தின்கண்பாரிக்ஷிதனென்பர்.

இப்போது சர்வ கர்மங்களின் போகஸ்தானமாய விராட்பகவானுடைய சரீரத்தைப் பூலோகரூபமாய் வர்ணிப்பவராய், முதலில் அதனளவைக் காண்பிக்கின்றார் :–ஹே புஜ்யுவே! இந்தச் சம்புத் தீவு முழுதும் ஒருலக்ஷ * யோஜனை அளவுள்ளதாம்; இந்தத் தீவை நான்கு பக்கத்திலும் மேகலை யென்னும் பூஷணம் போலச் சுற்றியிருக்கும் உப்புக்கடலும் ஒருலக்ஷம் யோஜனை யளவுடையதாம். (1) அதற்கப்பால் பிலக்ஷத் தீவாம்; அது இரண்டு லக்ஷம் யோஜனை யளவுடையதாம்; அதனை நான்கு பக்கமும் சூழ்ந்திராநின்ற கருப்பஞ்சாற்றுக் கடலும், இரண்டு லக்ஷம் யோஜனை யளவுடையதாம். (2) அதற்கப்பால் சான்மலித் தீவாம்; அது நான்கு லக்ஷம் யோஜனை யளவுடையதாம்; அதனை நாற்புறத்துஞ் சூழ்ந்திராநின்ற மதுக்கடலும் நான்கு லக்ஷம் யோஜனை யளவுடையதாம். (3) அதற்கப்பால், குசத் தீவாம்; அது எட்டு லக்ஷம் யோஜனை யளவுடையதாம்; அதனை நாற்புறமும் சூழ்ந்திருக்கும் நெய்க்கடலும் எட்டுலக்ஷம் யோஜனை யளவுடையதாம். (4) அதற்கப்பால் கிரவுஞ்சத் தீவாம்; அது பதினாறுலக்ஷம் யோஜனை யளவுடையதாம்; அதனை நாற்புறமுஞ் சூழ்ந்திருக்கும் பாற்கடலும், பதினாறு லக்ஷம் யோஜனை யளவுடையதாம். (5) அதற்கப்பால் சாகத் தீவாம்; அது முப்பத்திரண்டு லக்ஷம் யோஜனையளவுடையதாம்; அதனை நாற்புறமும் சூழ்ந்திருக்கும் தயிர்க்கடலும் முப்பத்திரண்டு லக்ஷம் யோஜனையளவுடையதாம். (6) அதற்கப்பால் புஷ்கரத் தீவாம்; அதுவும், அறுபத்துநான்கு லக்ஷம் யோஜனை யளவுடையதாம்; அதன் நாற்புறமும் சூழ்ந்திருக்கும் நன்னீர்க் கடலும் அறுபத்துநான்குலக்ஷம் யோஜனை யளவுடையதாம். (7) இவ்வேழு தீவுகளும், ஏழு கடல்களும் ஒருங்குகூடி இரண்டுகோடியே ஐம்பத்துநான்கு லக்ஷம் யோஜனை யளவுடையதாம். கூறிய பதினான்குங்கூடி எவ்வளவு யோஜனை யிருக்கின்றதோ, அவ்வளவு யோஜனையளவே நன்னீர்க் கடற்கும அப்பாலிருக்கும் பூமியினளவதாம். அப்பூமிக்கப்பால் எட்டுக்கோடியே முப்பத்தொன்பது இலக்ஷம் யோஜனை யளவுடையது பொற்பூமியாம். அப்பூமிக்கப்பால் வட்டவடிவமாய் லோகாலோகமென்னும் பர்வதமிருக்கின்றது. அப்பர்வதத்தின் மத்தியதேசத்தைச் சாஸ்திரத்தின்கண் மானசோத்தரமூர்த்த (சிர) ஸ்தானமெனக் கூறப்பட்டுளது. அம்மத்தியதேசத்தில் இரவும்பகலும் எப்போதும் சூரியபகவான் சுற்றிக்கொண்டேயிருக்கின்றனர். அம்மானசோத்தர பரிமண்டலத்தினளவு இலக்ஷத்தொன்பதரைக் கோடி யோஜனையாம் என நூற்களிற் கூறப்பட்டுள்ளது. இத்துணை யோஜனை யளவு இரவுபகலிற் சூரியபகவான்றன் செல்கையாம். செல்கையின் அளவு யோஜனையினும் முப்பத்திரண்டு பங்கதிகயோஜனையளவு சூரியபகவானுடைய கிரணங்கள் வியாபிக்கும். அவ்வளவு தேசத்தை மதிமான்கள் பூலோகமென்பர். இப்பூலோகம் விராட்டுப்பகவானுடைய சரீரமாம். இப்பூலோகத்தின்கண்ணே சர்வ கர்மங்களின் பலம் போகிக்கப்படும்.

---

* 12-அங்குலி=1-சங்கு, 2-சங்கு=1-சயம், 4-சயம்=1-தனு, 1,000-தனு=1-குரோசம், 4-குரோசம்=1-யோஜனை. என்னுமிம்மதத்தே 16,000-ஹஸ்தங்கள் சேர்ந்து யோஜனையாம். வேறுமதங்களு மிதுவிஷயத்தேயுள.

இப்போது உபாசகராலடையப் படுவதற்குத் தகுதியாய தேசத்தை நிரூபிப்பாம் :—ஹே புஜ்யுவே! இப்பூவுலகிற்கப்பால் பூவுலகின் அளவினும் இரண்டு மடங்கதிகமான யோஜனை யளவுடைய பூமியிருக்கின்றது. அப்பூமியானது, சுவற்றைப்போலப் பூலோகத்தை மறைத்துக் கொண்டிருக்கும். அம் மறைத்துக் கொண்டிருக்கும் பூமிக்கப்பால் அப்பூமியை நாற்புறம் சூழ்ந்திருக்கும் கடலானது அப்பூமியினும், இரண்டு மடங்கு அதிகயோஜனை யளவுள்ளதாம். அக்கடலை நூலின்கண் * கனகடல் எனக் கூறியிருக்கின்றது. அக்கனகடலுக்கப்பால் பிரஹ்மாண்டம் இருக்கின்றது. அந்தப் பிரஹ்மாண்டத்தின் ஒருகபாலம் வெள்ளிமயமாம். மற்றொருகபாலம் பொன்மயமாம். அவ்விரண்டு கபாலங்களின் சந்தி வாளின் முனைபோல அத்தியந்தம் கூர்மையுடையதாம். அல்லது, ஈயின் இறகுபோல அத்தியந்தம் சூக்ஷ்மமாம். இவ்வகையாய சந்தி பிரஹ்மாண்டத்தினின்றும் வெளியே செல்லும் வழியில் இருக்கின்றது. ஹே புஜ்யுவே! உபாசனையோடு கூடிய அஸ்வமேத யாகத்தைச் செய்யும் பாரிக்ஷித புருஷன் சரீரத்தைப் பரித்தியாகம் செய்தகாலத்தே அவனைப் பலவகையாய தேவதைகளும், உபாசனைவடிவ பலமும் கனகடல்வரை அழைத்துச் செல்லும். அதற்குமேல் எத்தேவதைக்கும் வலிமையின்றாம். ஹே புஜ்யுவே! உபாசனையோடுகூட அஸ்வமேத யாகம் செய்த பாரிக்ஷிதனைபபோல, அஸ்வமேத யாகமின்றிக் கேவலம் ஹிரண்யகர்ப்பர் உபாசனையைச் செய்த புருஷனும பாரிக்ஷிதனெனபபடுவன். ஏனெனின், சம்பூரண பாவகர்மங்களும் எவனுக்கு க்ஷயமாகியிருக்குமோ அவனைப் பாரிக்ஷிதனென்பர். அப்பாவ கர்மங்களின் க்ஷயம் அஸ்வமேத யாகத்தாலாதல்போல உபாசனையாலுமாம். ஆதலின், உபாசனையும் அஸ்வமேதயாகமும் பரிக்ஷித சப்தத்தின் பொருளாம். அந்தப் பரிக்ஷித சப்தப் பொருளை அறிநதவன் பாரிக்ஷிதனெனப படுவன். இநநெறியே கேவல உபாசகனிடத்தும் பரிக்ஷித சப்தத்தின் பிரவிருத்தியுண்டாம். ஹே புஜ்யுவே! அந்தப் பிரஹ்மாண்டரூப கடாக சந்தியின்கண் இராநின்ற சூக்ஷ்மமார்க்கத்தின்கண் சர்வ தேவதைகட்கு மதிபதியாகிய இநதிரரும் செல்ல வல்லுநரல்லர். இந்திரரும் அம்மார்க்கத்தின்கண் செல்ல வல்லுநரல்லரேல, கனகடலின் அக்கரையிற் செல்வதற்கு வல்லமையற்ற அந்நிய தேவதைகள் அந்தச் சூக்ஷ்ம மார்க்கத்தின்கண் எங்ஙனம் செல்லக்கூடும். மற்றோ, அவ்வந்நிய தேவதைகள் கனகடலோரத்திலேயே யிருப்பர்.

சங்கை :—இந்திராதி தேவதைகளும் அம்மார்க்கத்திற் செல்ல வல்லுநரல்லரேல், பாரிக்ஷித புருஷன் எங்ஙனம் பிரஹ்மாண்டத்தினின்றும் வெளியே செல்வன்.

சமாதானம் :—அவ்விராட்வடிவ இந்திர தேவதை பக்ஷிவடிவ மெடுத்து அந்தப் பாரிக்ஷித புருஷனைக் கனகடற்கப்பாற்படுத்தும். அக்கனகடலின் அக்கரையின் ஓரத்தே ஹிரண்யகர்ப்பரூப வாயுதேவதை ஆகாசத்தின்கண் இருக்கும், அவ்வாயுவினிடத்தே பாரிக்ஷித புருஷனைக் கொடுத்துவிட்டு அவ்விந்திர தேவதை பின்திரு

---

* கனகடல்=பெரும்புறக்கடல்.

ம்பிவரும். அதன் பின்னர், அவ்விரண்யகர்ப்பவடிவ வாயுதேவதை அப்பாரிக்ஷித புருஷனைச் சூக்ஷுமரூபமாய்த் தனது சரீரத்தோடு அபின்னப்படுத்தி, அச் சுந்திரூப மார்க்க வாயிலாய்ப் பிரஹ்மாண்டத்தினின்றும் வெளியே கொண்டு செல்லும். எவ்விடத்தே முன்முன் உபாசக புருஷர் சென்றிருக்கின்றாரோ, அவ் விடத்தே அப்பாரிக்ஷித புருஷன் சென்றிருப்பன். ஆதலின், இது துணியப் பெற்றதாம்:—அப்பாரிக்ஷித புருஷன், ஹிரண்யகர்ப்ப ரூபமாய்ப் பிரஹ்மாண் டத்துள்ளும் வெளியும் வியாபித்திருப்பன்; ஆதலின், சர்வ கர்மங்களின் பலத்தின் முடிபு ஹிரண்யகர்ப்ப லோகமாம். ஹிரண்யகர்ப்ப லோகத்திற்கு மேல் எக்கர்மபலமுமின்றும். ஹே சிஷ்ய! முன்னர் அக்கினிதேவதை புஜ்யு விற்கு விடைகூறியதேபோல யாஞ்ஞவற்கிய முனிவர் கூறவும், அந்தப் புஜ்யு வானவர் யாஞ்ஞவற்கியரை ஜயிக்கும் இச்சையை விட்டொழித்தனர். உஷ ஸ்தர் என்னும் மறையவரின் முகத்தை நோக்கிக்கொண்டு அந்தப் புஜ்யு வானவர் மீண்டு வினவுதலினின்றும் நீங்கினர். அதன்பின்னர், அவ்வுஷஸ்தர் யாஞ்ஞவற்கியமுனிவரை வினவத்தொடங்கினர். உஷஸ்தர் கூறல்:—ஹே யாஞ் ஞவற்கிய! ஒளியற்ற இரும்பு அக்கினியின் சம்பந்தத்தால் ஒளியுடையதாவதே போல, விருத்தியவச்சின்ன சாக்ஷி சைதன்யசம்பந்தத்தால் கடபடாதி ஜடபதார்த் தங்கள் தோற்றுநிற்கும்; ஆகையால், கடபடாதி ஜடபதார்த்தங்களில் முக்கிய அபரோக்ஷத்தன்மையின்றும்; மற்றே, கடாதிகளிடத்தே கௌண அபரோக்ஷத் தன்மையுளது. பிரஹ்மம் ஸ்வபபிரகாச சைதன்யமாம், ஆதலின், பிரஹ்மத் தின்கண் முக்கிய அபரோக்ஷத்தன்மையுளது. அநதப பிரஹ்மம யாவற்றினும் உள்ளும் வெளியும் வியாபகமாம்; ஆதலின், அநதப் பிரஹ்மமே ஆன்மரூபமாம்; இவ்வார்த்தையை யெல்லா நூல்களு மியம்புகின்றன. ஆனல், இவ்வார்த்தை சம்பவியாது; ஏனெனின், சாஸ்திரங்கள் ஆன்மாவின்கண் பிரஹ்மரூபத்தன்மை யையும் அத்விதியரூபத்தன்மையையும் கூறுகின்றன. இதன்கண் யாம் விவாதம் செய்திலேம்; ஆனல், பிரஹ்மரூபத்தன்மையும் அதவிதீயரூபத்தன்மையும் எவ் வான்மரூபத் தர்மியின்கண் இருக்குமோ, அவ்வான்மா இக்கூட்டத்தின் வேறய் எமக்குப் புலப்படவில்லை; ஆதலின், ஹே யாஞ்ஞவற்கிய! இக்கூட்டத்தினின்றும் ஆன்மா விலக்ஷணமாயின் எமக்குக் கூறுதி, அதன்பின்னா யாம் உன்னைப் புத்திமா னென வறிவேம். ஹே மைந்த! இவ்வண்ணம் உஷஸ்தா யாஞ்ஞவற்கியரைக் கேட்டவுடன் அவர் உஷஸ்தரின்பொருட்டுக கூறுவதாயினர். யாஞ்ஞவற்கியர் கூறல்:—ஹே உஷஸ்தரே! இவ்வான்மா அதவிதிய பிரஹ்மரூபமாம்; ஆகையால், அத்தியந்த சமீப ஆத்மாவின்கண் நீர் அசம்பாவனையடைத லுசிதமன்றும். "இவ் வான்மா" என்னும விடையை யாஞ்ஞவற்கிய முனிவர் கூறியதன்கண் அபிப்பிராய மிதுவாம்:—இவ்வுஷஸ்தர் உண்முகராவரேயாயின் இவ்வான்மாவென்னும் விடை மாத்திரத்தானே ஆன்மாவின் வாஸ்தவசொரூபத்தை அறிந்து சந்தோஷத்தை யடைவர். ஆனலவ்வுஷஸ்தர் வெளிமுகர் ஆதலின், இவ்வான்மா என்னும் விடையால் ஆன்மாவின் வாஸ்தவசொரூபத்தை அறிந்திலர்; மாறுய்ச சம்சயத் தோடு கூடியவராய் மீண்டும் வினவினர். உஷஸ்தர் கூறல்:—ஹே யாஞ்ஞு

வற்கிய! அவ்வான்மா யாது? கருத்திதுவாம்:—ஸ்தூலசரீரம் ஆன்மாவா? அல்லது சூக்ஷ்மசரீரம் ஆன்மாவா? அல்லது அவற்றை யொளிர்விக்கும் சாக்ஷி யான்மாவா? அவற்றுள் ஸ்தூலசரீரமும் சூக்ஷ்மசரீரமும் ஆன்மாவாமென்னும் இரண்டுபக்ஷங்களும் சம்பவியா. ஏனெனின், ஸ்தூலசூக்ஷ்மங்களென்னும் இரண்டு சரீரங்களும் பரிச்சின்னங்களாம்; ஆதலின், அவற்றின்கண் சர்வ வியாபகத்தன்மை சம்பவியாது. சாஸ்திரத்தின்கண் ஆன்மா சர்வாந்தரியாமியெனக் கூறப்பெற்றுளது. அல்லது, புத்திமுதலியவற்றின் சாக்ஷி ஆன்மாவாம் என்னும் மூன்றாவதுபக்ஷமும் சம்பவியாது. ஏனெனின், சாக்ஷி ஆன்மாவாவென்னும்பக்ஷத்தின்கண் யாதொரு பிரமாணமுமின்றாம். ஹே குழந்தாய்! இவ்வண்ணம் உஷஸ்தர் ஆன்மாவின் சொரூபத்தைக் கேட்டவுடன் யாஞ்ஞவற்கிய முனிவர் உஷஸ்தரை நோக்கிக் கூறுவாராயினர். யாஞ்ஞவற்கியர் கூறல்:—ஹே உஷஸ்தரே! பாலகன் கயிற்றால் குரங்கைப் பலவகையாய் ஆட்டிவைப்பதேபோல, யாது உம்முடைய சரீரத்தின்கண்ணே யிருந்து உமது பிராணன், அபானன், உதானன், சமானன், வியானன், புத்திமுதலிய கூட்டங்களைத் தத்தம் வியாபாரத்தின்கண் முயல்விக்குமோ, அதுவே யுமதான்மாவாம். இது கூறியதால் யாஞ்ஞவற்கிய முனிவர் இவ்வனுமானத்தை யுணர்த்தியவாறியது:—பிராணாதிகளை முயல்விக்குமான்மா அப்பிராணாதிகளினும் வேறாம்; பிராணாதிகளை முயல்விப்பதாதலின், எவ்வெப்பொருள் எவ்வெப்பொருளை முயல்விக்குமோ, அவ்வப்பொருள் அவ்வப்பொருளினும் வேறேயாம். குரங்கையாட்டும் பாலகன் குரங்கினும், வேறேயாதல்போலச் சர்வாந்தரியாமியாய இவ்வான்மாவும் பிராணன் முதலிய சர்வக் கூட்டத்தையும் முயல்விப்பதாம்; ஆகையால், பிராணன் முதலிய சர்வக் கூட்டத்தினின்றும் இவ்வான்மா வேறாம். ஹே மைந்த! உஷஸ்தரது மந்தமதியைநோக்கி யாஞ்ஞவற்கிய முனிவர் அனுமானப் பிரமாணத்தால் ஆன்மாவின் சொரூபத்தை நிரூபித்தார். ஆயினும், அவரது கருத்தை யறியாதவராய உஷஸ்தர் பரிகாசம் செய்துகொண்டு மீண்டும் வினவத்தொடங்கினர். உஷஸ்தர் கூறல்:—ஹே யாஞ்ஞவற்கிய! முன்னர் வெளிப்படையாய் ஆன்மவடிவத்தை அறியும்பொருட்டு யாம் வினவினேம்; அதற்கு நீ இதுகாறும் வெளிப்படையாய் ஆன்மாவின் வடிவத்தை எம்பொருட்டுக் கூறக்காணேம். ஆகையால், நீ கூட்டத்தினும் விலக்ஷண ஆன்மாவின் வடிவத்தை அறிவையேயாயின், ஆவையறிந்தோன் ஆவின்கொம்பைப்பற்றி இது ஆவென வெளிப்படையாய்க் காண்பிப்பதேபோல, இப்போது வெளிப்படையாய் ஆன்மாவின் வடிவத்தை எம்பொருட்டுக் கூறுதி. ஹே யாஞ்ஞவற்கிய! முன்னர் யாம் கூட்ட விலக்ஷண ஆன்ம வடிவத்தைக் கேட்டேம். இப்போது நீ பிராணாதிகளை ஏவுவது ஆன்மாவென விடையளித்தாய். இவ்வுனது விடை கூட்டவிலக்ஷண ஆன்மாவைத் துணிவியாது. ஏனெனின், உலகின்கண் வியாபாரமுடைய புருஷனே வேறாய குரங்கு முதலியவற்றின் பிரேரகனவன். வியாபாரமற்றவனெவனும் பிரேரகனாகான். வியாபாரமுடையது இக்கூட்டமாதலின், இக்கூட்டமே பிராணாதிகளின் பிரவர்த்தகமாம். பிராணாதிகளைத் தத்தம் வியாபாரத்தின்கண் ஏவுவதே ஆன்மாவாம் என நீ கூறியதால், கூட்டத்தின்கண்ணே ஆன்மத்தன்மை சித்தித்தது. ஆகையால், ஹே யாஞ்ஞவற்கிய! ஒருவன் மற்றொருவனை

ஆவின்வடிவத்தைக் கேட்டானாக, அவன் கேட்டவனுக்குக் குதிரையை ஆவெனக் காட்டுவதேபோல, யாமோ கூடஸ்தத்தின் வேறாய ஆன்மாவின் வடிவத்தைக்கேட்டேம்; நீயோ கூடஸ்தத்தையே ஆன்மரூபமாய்க் கூறினாய்; ஆதலின், உனது விடைமுற்றிலும் முரணும். ஆகையால், ஹே யாஞ்ஞவற்கிய! கூடஸ்தத்தின் வேறாய்க் கரதலாமலகம்போல ஆன்மாவின் சொரூபத்தை எம்பொருட்டுக்கூறுதி. ஹே குழந்தாய்! இவ்வண்ணம் பரிகாசத்தோடுகூடிய வசனத்தை உஷஸ்தர் சொல்லியபோது யாஞ்ஞவற்கிய முனிவர் சிறிதுங்கோபமுறாதவரானார்; மாறாய்த் தமது கம்பீரத்தால் மந்தகாசம் செய்துகொண்டு உஷஸ்தரின்பொருட்டுக் கூறத் தொடங்கினார். யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல்:—ஹே உஷஸ்தரே! கூடஸ்தத்தினின்றும் வேறாய ஆன்மாவின் சொரூபத்தை எம்பொருட்டுக் கூறுதியென நீர் வினவினீரன்றே? அவ்வுமதான்மா அத்தியந்தம் அபரோக்ஷமாம். ஏனெனின், "யானுளன்" என அந்தக்கரணவிருத்தியினால் நீரும் ஆன்மாவை யறிந்துள்ளீர்; ஆகையால், அபரோக்ஷ ஆன்மாவின்கண் அசம்பாவனை சம்பவியாது. ஹே மைந்த! இவ்விதமாய உத்தரத்தை யாஞ்ஞவற்கிய முனிவர் கூறியபோது அவ்வுஷஸ்தர் மீண்டும், யாஞ்ஞவற்கிய முனிவரின்பால் வினவத்தொடங்கினர். உஷஸ்தர் கூறல்:—ஹே யாஞ்ஞவற்கிய! நீ அகம்புத்தியினுக்கு விஷயம் ஆன்மாவென்றனை, இதனால் ஆன்மாவின் நிர்ணயம் ஆய்விடாது. ஏனெனின், அகம்புத்தி அநேக பதார்த்தங்களிடத்தேயாம். அவற்றுள், யான் ஸ்தூலன் என்பதாய அகம்புத்தி ஸ்தூலசரீரத்தை விஷயம்செய்யும். யான் குருடன் யான் செவிடன் என்பனவாய அகம்புத்தி இந்திரியங்களை விஷயம்செய்யும். யான் பசிதாகமுடையேன் என்னும் அகம்புத்தி பிராணன்களை விஷயம்செய்யும். யான் நிச்சயவான் என்னும் அகம்புத்தி புத்தியை விஷயம்செய்யும்; அகம் அஞ்ஞன் என்னும அகம் புத்தி அஞ்ஞானத்தை விஷயம்செய்யும். ஆகையால், ஸ்தூலசரீரமே முதல் அஞ்ஞானம்வரையில் கூடமுழுவதினும் அகம்புத்திக்கு விஷயத்தன்மைபிரதீதியாம். இவ்வெல்லாவற்றினுள்ளும் யாது ஆன்மாவென அறிதல் முடியாததேயாம். ஆகையால், ஹே யாஞ்ஞவற்கிய! உனக்கு ஆன்மஞானமிருப்பின் புத்திமுதலிய ஜடபதார்த்தங்களினும்வேறாய் ஆன்மாவின் சொரூபத்தை யெம்பொருட்டுக்கூறுதி. ஹே குழந்தாய்! இவ்வகை வினவியபோது, அவர் உஷஸ்தரின்பொருட்டுக் கூறுவாராயினர்; யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல்:—ஹே உஷஸ்தரே! அறிஞராது அனுபவத்தாற்றுணியப்பெற்ற ஆன்மாவின் அபரோக்ஷத்தன்மைவடிவமாய் ஆன்மாவை நிரூபணம் செய்ய வேண்டும் என உமது ஆக்கிரகமா? அல்லது கடத்தின்கண் இந்திரிய ஜன்னிய ஞானவிஷயத் தன்மைவடிவ அபரோக்ஷத்தன்மை இருப்பதேபோன்ற அபரோக்ஷத்தன்மைவடிவமாய் ஆன்மநிரூபணம் செய்யவேண்டுமென உமது ஆக்கிரகமா? அவற்றுள், நீர் முதற்பக்ஷத்தை யங்கீகரிப்பீராயின், அறிஞன் ஆன்மசொரூபத்தை நிரூபிப்பதேபோல, யானும் உம்பொருட்டு ஆன்மசொரூபத்தை நிரூபித்தேன். ஆனால், நீர் வெளிமுகராயுள்ளீர், ஆதலின், ஆன்மாவையறிந்திலீர். ஹே உஷஸ்தரே! நீர் இரண்டாவது பக்ஷத்தை யங்கீகரிப்பினும் சம்பவியாது. ஏனெனின். நித்திய அபரோக்ஷரூப இவ்வான்மா சிதாபாசனோடு கூடிய புத்தியால் கடபடாதி

பதார்த்தங்களை அறியும், அப்புத்தியைத் தனது சொப்பிரகாச உருவத்தால் ஆன்மா ஒளிர்விக்கும். ஆதலின், ஹே உஷஸ்தரே! அத்தகைய புத்திமுதலியவற்றின் திருஷ்டாவாய ஆன்மாவை நீர் எங்ஙனம் விஷயம் செய்வீர்? மற்றொ, புத்தி சகித சர்வ இந்திரியங்களும் திருஷ்டாவாய ஆன்மாவை விஷயம் செய்யமாட்டாது. கடபடாதி பதார்த்தங்களின் பிரகாசகமாய சக்ஷு இந்திரியத்தைக் கடாதிபதார்த்தங்கள் பிரகாசியா; அதுபோல, விஷய இந்திரிய சம்பந்தத்தால் உற்பன்னமாய அந்தக்கரண விருத்திகளை இவ்வாநந்தசொரூப ஆன்மா ஒளிர்விக்கும். ஆதலின், அவ்விருத்திகள் ஆன்மாவைப் பிரகாசியா. ஹே உஷஸ்தரே! புத்தி முதலிய ஜடபதார்த்தங்களை யொளிர்விப்பதும், யாவற்றினுள்ளும் வியாபித்திருப்பதும், உற்பத்தி நாசமற்றதும் ஆய அதுவே கூட்டத்தின் வேறாய உமதான்மாவாம்.

சங்கை :—ஹே யாஞ்ஞவற்கிய! ஆன்மாவினும் வேறாய புத்தி முதலிய பதார்த்தங்கள் சத்தியங்களா? அல்லது அசத்தியங்களா? சத்தியங்களென்னின், கடம் படாதிகளின் அந்தரமாகாததேபோல, ஆன்மாவின்கண்ணும் சர்வாந்தரத் தன்மையுண்டாகாது. அசத்தியங்களென்னின், அங்ஙனமேனும் ஆன்மாவின்கண் சர்வாந்தரத்தன்மை சம்பவியாது. ஏனெனின், ஆன்மா சர்வாந்தர வியாபகமாம். இவ்வசனத்தின்கண் சர்வசப்தத்தால் புத்திமுதலியவற்றைக் கவரவேண்டி வரும்; வரவே அப்பதார்த்தங்களோ உனது மதத்தே அத்தியந்தம் அசத்தியமாம்; ஆகையால், அப்புத்தியாதிகளின் அபாவமிருத்தலின், ஆன்மாவின்கண் சர்வாந்தரத்தன்மை சித்தியாதன்றோ?

சமாதானம் :— ஹே உஷஸ்தரே! இவ்வாநந்தசொரூப ஆன்மாவினும் வேறாய் எத்துணைப்புத்தி இந்திரியங்கள் சரீரம் முதலிய பதார்த்தங்களுளவோ அவையாவும் ஜடங்களாம்; ஆதலின், கடாதிபதார்த்தங்களைப்போல அவையும் உற்பத்தி நாசமுடையனவாம். இக்காரணத்தாலே அவைகள் கற்பிதங்களாம். அக்கற்பித புத்தியாதிகளிடத்தே அதிஷ்டான ஆன்மாவின் வியாபகத்தன்மை சம்பவிக்கும். இரஜ்ஜுரூப அதிஷ்டானத்தின்கண்ணே கற்பிதசர்ப்ப தண்ட ஜலதாரை முதலியவைகள் உளவாம். அவற்றின்கண் இரஜ்ஜுரூப அதிஷ்டானம் வியாபகமாம். அதுபோலக் கற்பித புத்தியாதிகளிடத்தே அதிஷ்டான ஆன்மா வியாபகமாம்; ஆகையால், ஆன்மாவின்கண் சர்வாந்தரத்தன்மை சம்பவிக்கும். ஹே சிஷ்ய! இங்ஙனம் யாஞ்ஞவற்கிய முனிவர் கூட்டத்தின்வேறாய ஆன்மாவைக் கூறியபோது அவ்வுஷஸ்தர் இந்த முனிவர் அத்தியந்தம் புத்திமானாதலின், நம்மால் ஜயிக்கப்படார் என நிச்சயித்துக் ககோளர் முகத்தை நோக்கிக்கொண்டு மீண்டும் வினவுதலினின்றும் நீங்கினர். அதன் பின்னர், ககோளப் பிராஹ்மணர் யாஞ்ஞவற்கிய முனிவரை நோக்கி இவ்வினாவைக் கேட்டனர். ககோளர் கூறல் :—ஹே யாஞ்ஞவற்கிய! முன்னர் உஷஸ்தப் பிராஹ்மணரின் பிரசங்கத்தின்கண் ஆன்மாவைப் பிரஹ்ம ரூபத்தன்மையதாக நீ கூறியது சம்பவியாது. ஏனெனின், சமானதர்மமுடைய பதார்த்தங்கட்கே பரஸ்பரம் அபேதமாம். விருத்ததர்மமுடைய பதார்த்தங்கட்குப் பரஸ்பரம் அபேதம் சம்பவியாது,

உஷ்ணஸ்பரிசத்தையுடைய அக்கினிக்கும் சிதஸ்பரிசத்தையுடைய பனிக்கும் பரஸ்பரம் அபேதம் உண்டாகாததேபோல, இக்கூட்டத்தின் பிரகாசகமாய ஆன்மா, பசி, தாகம், சோகம், மோகம், ஜரை, மரணம் என்னும் ஷடூர்மிரூப சம்சாரமுடையதாய்ப் பிரதீதியாம். பிரஹ்மமோ, பசிதாகாதி ஷடூர்மிரூப சம்சாரமற்றதாய்ச் சாஸ்திரத்தின்கண்ணே காணப்படுகின்றது. ஆகையால், சம்சாரியாய ஆன்மாவிற்கு அசம்சாரியாய பிரஹ்மத்தோடு அபேதங்கூறல் அத்தியந்தம் விருத்தமாம். ஹே சிஷ்ய! இவ்வகையாய வினவைக் கஹோளர் செய்தபோது யாஞ்ஞவற்கிய முனிவர் கஹோளரை நோக்கி விடைகூறுவாராயினர். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே கஹோளரே! விருத்த தர்மங்களையுடைய பதார்த்தங்கட்கு அபேதமுண்டாகாது என்னும் வார்த்தை நீர் கூறியது உண்மையேயாயினும், அந்தப் பசிமுதலிய தர்மங்கள் ஆன்மாவிற்கின்றாம்; மற்றோ, பசிதாகம் இரண்டும் பிராணனது தர்மமாம். சோகமோக மிரண்டும் மனத்தின் தர்மமாம். ஜரைமரண மிரண்டும் சரீரத்தின் தர்மமாம். ஆன்மாவிற்கு யாதொரு தர்மமுமின்றாம். கருத்திதுவாம் :—கடாதிகளை யொளிர்விக்கும் சூரியபகவானைக் கடாதிகளின் தருமம தீண்டாததேபோலப் பிராணாதிகளை யொளிர்விக்கும் ஆன்மாவைப் பிராணாதிகளின் தர்மங்களாய பசிதாகங்கள் தீண்டா; ஆகையால், எங்ஙனம் பிரஹ்மம் ஜன்மாதி சம்சாரமற்றதோ, அங்ஙனம் இவ்வான்மாவும் ஜன்மாதி சம்சாரமற்றதேயாம். இக்காரணத்தால் வேதத்தையுணர்ந்த மஹான்ம புருஷர் ஆன்மாவைப் பிரஹ்மரூபமெனக் கூறுவர். அல்லது, எப்புருஷர்கட்குச் சம்சயமற்ற ஆன்மஞானம் உண்டாயிருக்கின்றதோ, அப்புருஷர்கட்கும் ஜன்மமரணாதி ரூப சம்சாரம் நீங்குமாயின், சாக்ஷாத் பிரஹ்மரூப ஆன்மாவின்கண் ஜன்ம மரணாதி ரூபசம்சாரம் இராதென்பதைக் கூறவும் வேண்டுமோ? ஹே கஹோளரே! ஜன்மாதி சம்சாரமற்ற அஞ்ஞானரகித சர்வப் புத்தியாதிகளின் சாக்ஷியாய பிரஹ்மரூபஆன்மாவின் சாக்ஷாத்காரம் விக்ஷேபமுடைய புருஷர்க்குண்டாகாது; மற்றோ, விக்ஷேபமற்ற விரக்த மகான்ம புருஷருக்கே ஆன்மசாக்ஷாத்காரமுண்டாம். இக்காரணத்தால் முன்னர் வாமதேவாதி மஹாபுருஷர், ஆன்மசாக்ஷாத்கார மடையும் பொருட்டு, எல்லா ஏஷணைகளையும் பரித்தியாகம்செய்து சந்நியாச ஆசிரமத்தைக் கவர்ந்தனர். இது கூறியதால் இப்பொருள் துணியப்பெறும் :—விவேகவைராக்கியாதிகள் ஆன்மசாக்ஷாத்காரத்திற்குச் சாதனமாதலேபோல, உபாதிசப்தார்த்தமாய சந்நியாசமும் விக்ஷேப நிவிருத்திவாயிலாய் ஆன்மசாக்ஷாத்கார சாதனமாம். ஈண்டுச் சந்நியாச சப்தத்தால் விவிதிஷா சந்நியாசத்தைக் கவரவேண்டும்.

இப்போது ஏஷணையின் சொரூபத்தையும் அவற்றின் பேதத்தையும் காண்பிப்பாம் :—ஹே கஹோளரே! ஏஷணை மூவிதமாம். புத்திர ஏஷணை யொன்றாவதாம், வித்த ஏஷணை யிரண்டாவதாம், லோக ஏஷணை மூன்றாவதாம். அவற்றுள் எனக்குப் புத்திரனுண்டாகவேண்டும் என்னுமிச்சை புத்திரஏஷணை யெனப்படும். அப்புத்திர ஏஷணையால் இப்புருஷன் ஸ்திரீயைத் தேடமுயல்வன். எனக்குத் தனம் உண்டாகவேண்டு மென்னுமிச்சை வித்த ஏஷணை யெனப்படும்; அத்

தனமும் இருவகையாம். ஒன்றோ தைவதனமாம், மற்றொன்றோ மாநுஷ்ய தனமாம். அவற்றுள், தேவலோக ஐயசாதனதனமாய கர்ம உபாசனைகள் தைவதனமெனப்படும். இம்மனுஷ்யலோகத்தின் போகசாதனமாய பசுசுவர்ணாதிரூபதனம், மாநுஷ்ய தனமெனப்படும். அவ்விருவித தன இச்சையை வித்த ஏஷணையென்பர். எனக்குச் சுகம் உண்டாகுக என்னும் இச்சை லோக ஏஷணையெனப்படும். அச்சுகமும் இருவகையாம்; ஒன்றோ மனுஷ்யலோகத்தின்கண் வர்த்தமான சுகமாம்; மற்றொன்றோ தேவலோகத்தின்கண் வர்த்தமானசுகமாம். இவ்விருவகையாய சுக இச்சையை லோகஏஷணையென்பர். இச்சாவிஷய பதார்த்தம் அநந்தமாம் ஆதலின், இச்சையும் அநந்தமேயாய்ச் சம்பவிக்கும்; ஆயினும், இம்மூன்று இச்சைகட்குள்ளேயே சர்வஇச்சைகளும் அடங்கும். உண்மையாய் விசாரித்துப்பார்க்கினோ, வித்த ஏஷணை லோக ஏஷணை என்னும் இருவகை ஏஷணையே சித்தமாம். ஏனெனின், பசு க்ஷேத்திரம் சுவர்ணாதிதனம் முதலியவை பிதாவின் சுகசாதனங்களாயிருக்கின்றனவேபோலப் புத்திரனும் பிதாவின் சுகசாதனமாம். ஆகையால், இவ்வுலக சுகசாதனமும் பரலோகசுகசாதனமும் வித்தமேயாம். அவ்வித்த ஏஷணையால் சம்பூரண சுகசாதனங்களின் ஏஷணைகள் கவரப்படும். லோக ஏஷணையால் இவ்வுலக பரலோக எல்லாச் சுகரூப பலங்களின் ஏஷணைகள் கிரகிக்கப்படும்; ஆகையால், பல ஏஷணை சாதன ஏஷணை என்னும் இருவகை ஏஷணையே யாண்டும் தொடர்ந்து நிற்பதாம். இக்காரணத்தினாலே சம்பூரண ஜீவர் முதலில் சுகரூப பலத்தை இச்சிப்பர். ஆனால், அச்சுகம் சாதனங்களின்றிச்சித்தியாது. ஆகையால், அச்சுக சாதனத்தையும் இச்சிப்பர். இவ்வுலக விவகாரத்தாலும் இருவகையாய ஏஷணையே சித்தமாம்.

சங்கை :—ஹே யாஞ்ஞவற்கிய! அறிஞன் ஏஷணைகளைப் பரித்தியாகம் செய்வதில் யாதுகாரணம்.

சமாதானம் :—ஹே கஹோளரே! ஜன்மமரணாதி சம்சாரமற்ற சுவப்பிரகாச ஆநந்த சொரூப ஆன்மாவின்கண்ணே சுகமாம். ஆன்மாவினும் வேறாய சர்வ அனான்ம பதார்த்தங்களும் பரிணாமகாலத்தின்கண்ணே துக்கத்தைக் கொடுப்பனவாம். ஆகையால், அவ்வனான்ம பதார்த்தங்களிடத்தே சிறிதுமாத்திரமும் சுகமின்றாம். இவ்வகைவிசாரித்து அறிஞன் சர்வ ஏஷணைகளையும் பரித்தியாகம் செய்வன்.

இப்போது ஆன்மாவின் வேறாய சர்வ அனான்ம பதார்த்தங்களிடத்தே துக்கரூபத் தன்மையைக் காண்பிப்பாம் :—ஹே கஹோளரே! இவ்வுலகின்கண்ணே எவ்வளவு சுகம் செய்யும் பதார்த்தங்களுளவோ, அவையாவற்றினுள்ளும் மாதா புத்திரனுக்கு அத்தியந்தம் சுகத்தைச் செய்பவளாம். ஏனெனின், இம்மாதா பாலிய அவஸ்தையின்கண் புத்திரனுக்குப் பால் கொடுப்பள். அங்ஙனமே, நாநாவகையாய உபாயங்களால் ஜலம் அக்கினியாதிகளினின்றும் புத்திரனைக் காப்பாற்றுவள். அங்ஙனமே, தனது கரங்களால் புத்திரனது மலமூத்திரங்களை யெடுப்பள். அங்ஙனமே, புத்திரனிடத்தே நாநாவகையாய் நேயம் செய்வள். இவை முதலாய அநந்த உபாயங்களால் மாதாபுத்திரனைக் காப்பாற்றுவள். ஆகையால், மாதாவிற்

குச் சமானமாய்ச் சுகம் செய்யும் பதார்த்தம் ஒன்று மின்றும். ஆனால், கோபத்தோடு கூடியமாதா அடிமுதலியவற்றால் பாலகனைத் துக்கமடையுமாறும் செய்வள். அல்லது, அந்தமாதா மரணமடையின், அப்போதும் அப்பாலகனுக்குப் பரம துக்கமுண்டாம்.

இப்போது இப்பொருளையே வெளிப்படையாய்க் காண்பிப்பாம்:—பாலிய அவஸ்தையின்கண் மாதாவின்மரணத்தாலும், யௌவன அவஸ்தையின்கண் ஸ்திரீயின் மரணத்தாலும், விருத்த அவஸ்தையின்கண் புத்திரமரணத்தாலும், பாலகனுக்கும், யௌவனனுக்கும், பிதாவிற்கும், எவ்வளவு துக்கம் உண்டாமோ அவ்வளவு துக்கம், வஜ்ஜிராயுதத்தால் அடிபடலாலும், உயிரோடு அக்கினிப் பிரவேசஞ் செய்தலாலும், சரீரத்தைச் சேதித்தலாலும், சூலத்தில் வீழ்தலாலும், மலையினின்றும் வீழ்தலாலும் ஜீவருக்கு உண்டாகாது. ஆகையால், அத்தியந்தம் சுகம்செய்யும் மாதாவும், வியோக காலத்தின்கண் ஜீவர்கட்குப் பரமதுக்க காரணமாவள். அல்லது, மாதாவின் வியோகம் ஜீவர்கட்குத் துக்ககாரணமாவதே போலப் பிதாவேமுதலாய் எவ்வளவு சுகம்செய்யும் பிரிய உறவினர்களுளரோ, அவர்கள் வியோகமுண்டாயினும் இசசீவனுக்குப் பரமதுக்கம் உண்டாம். கருத்திதுவாம்:—எப்பதார்த்தங்கட்குப் பரஸ்பரம் சம்பந்த முளதாமோ, அப்பதார்த்தங்கட்குத் தேசகாலாதி நிமித்தத்தால் வியோகமும் அவசியமுண்டாம். அவ்வியோகத்தை நீக்கிக்கொள்ள எச்சீவர்கட்கும் வல்லமையின்றும்; ஆகையால், மாதா பிதாமுதலிய சம்பூரணப் பிரியபதார்த்தங்கள் வியோக காலத்தின்கண் இச்சீவனுக்குத் துக்ககாரணமேயாம். உண்மையாய் விசாரித்துப்பார்க்கின் முக்காலத்தினும் பதார்த்தங்கள் துக்ககாரணமேயாம். ஏனெனின், எத்துணை புத்திராதி பிரிய பதார்த்தங்கள் கிடைக்கவில்லையோ, அத்துணை அவற்றின் இச்சையால் ஜீவனுக்குத் துக்கமுண்டாம். புத்திராதி பிரியபதார்த்தங்களின் அடைவு உண்டாயின், அவற்றின் இரக்ஷணையாதியில் துக்கமுண்டாம். அந்தப் பிரிய பதார்த்தங்கட்கு நாசமுண்டாயின், அவற்றின் வியோகத்தால் ஜீவர்கட்குத் துக்கமுண்டாம். ஆகையால், ஆன்மாவின் வேறாய சர்வ பிரிய பதார்த்தங்களும் இச்சீவனுக்குத் துக்ககாரணமாம். இத்துணையால் பிரிய பதார்த்தங்களிடத்தே துக்ககாரணத்தன்மை காண்பிக்கப்பட்டது.

இப்போது அப்பிரிய பதார்த்தத்தின்கண் துக்ககாரணத்தன்மை காண்பிக்கப்படும்:—ஹே கஹோளரே! அக்கினிக் கெவ்வெப்பதார்த்தங்களோடு சம்பந்தமுண்டாமோ அவ்வப்பதார்த்தங்களை அக்கினிதாகம் செய்யும்; அதுபோல, சிம்ம சர்ப்பாதி அப்பிரிய பதார்த்தங்களின் சம்பந்தம் எவ்வெச் சீவர்கட்குண்டாமோ அவ்வச்சீவர்களை யவை நாசம்செய்யும். இவ்விஷயம் சர்வசீவர்கட்கும் அநுபவசித்தமாம். ஆகையால், இது துணியப்பெறும்:—மாதாபிதாதி பிரியபதார்த்தங்கள் வியோக காலத்தின்கண் ஜீவர்கட்குத் துக்ககாரணமாம். சிம்மசர்ப்பசத்துரு முதலிய அப்பிரியபதார்த்தங்களோ சையோககாலத்தின்கண் ஜீவர்கட்குத் துக்ககாரணமாம். இத்துணையால் மாதாபிதாதி சைதன்ய பதார்த்தங்களிடத்தே

துக்ககாரணத்தன்மை காண்பிக்கப்பட்டது. இப்போது ஜடபதார்த்தங்களி டத்தே துக்ககாரணத்தன்மை காண்பிக்கப்படும்:—ஹே ககோளரே! சைதன் யரூப பிரிய அப்பிரியபதார்த்தங்கள் வியோககாலத்தின்கண்ணும் சையோக காலத்தின்கண்ணும் ஜீவர்கட்குத் துக்ககாரணமாம். அதுபோலச சுவர்ணாதி ஜடபதார்த்தமும் எவ்வெச் சீவர்கட்குப் பிரியமாமோ, அவ்வச சீவர்கட்கு வியோககாலத்தில் அந்தப் பொன்முதலிய ஜடப்பொருள்கள் பரமதுக்கத்தை யுண்டாக்கும். எவ்வெச்சீவர்கட்குச் சுவர்ணாதி ஜடபதார்த்தங்கள் அப்பிரி யமாமோ அவ்வச்சீவர்கட்கு அந்தப் பொன்முதலிய ஜடபதார்த்தங்கள் சையோக காலத்தின்கண் பரமதுக்கத்தை யுண்டாக்கும். அக்கினி, பதங்கத்தைச் சுடுவ தேபோல, வைராக்கிய மின்றிய ஜீவர்களைப் பிரிய அப்பிரியபதார்த்தங்கள் எப் போதும் துன்புறுத்திக்கொண்டே யிருக்கும். ஹே ககோளரே! எப்புருஷன் இராகத்தாற் குருடனா யிருக்கின்றானோ அப்புருஷனுக்குச் சம்சாரம் துக்கரூப மாகத் தோற்றுவிடினும், இராகதோஷமற்ற விவேகியானவனுக்குப் புத்திரன், தனம், லோகம், சரீரம், உறவினர் என்னும் சம்பூரண சம்சாரம் துக்ககாரணமாயே தோற்றும். ஹே ககோளரே! சம்பூரண அனான்மபதார்த்தங்கள் ஜீவர்கட்குத் துக்ககாரணமாயினும், உண்மையாய் விசாரஞ் செய்துபார்க்கினோ, பதார்த்தங்களி னிச்சையே ஜீவர்கட்குத் துக்ககாரணமாம் எனத்துணியப் பெறும்; ஏனெனின், தனாதிபதார்த்தங்களின் பிராப்தியையுமசதசத்துருக்களின் மாணத்தையும் இச்சித் துள்ள இச்சீவன் தனாதிபதார்த்தங்களி னடைவின் பொருட்டும், சத்துருவைக் கொல்லும் பொருட்டும் நானாவகையாய் முயல்வன். ஆனால், தனாதியடைவின் கண்ணும், சத்துருவைக் கொல்வதினும் வல்லமை இல்லனாயின், அவற்றினின்றும் நீங்குவன். எவ்வெப் பொருள்களினின்றும் இவன் நீங்குவனோ, அவ்வப் பொருள் கள் இச்சீவனுக்கும் பரமதுக்க காரணமாம்.

சங்கை :—எப்பொருளின் அடைவின்கண் புருஷனுக்கு வல்லமையின்றோ, அப்பொருளையடைய ஏன் இச்சிக்கின்றான்?

சமாதானம் :—சரீர இந்திரியாதிகளிடத்தே யானென்னும் அபிமானரூப விபரீத ஞானத்தாலும், புத்திரதனாதிகளிடத்தே எனதென்னும் விபரீத ஞானத் தாலும், இச்சீவன் கிடைக்கத் தகுதியற்ற பொருள்களையும் இச்சிப்பன். அப்ப தார்த்தங்கள் கிட்டாவிடின் இச்சீவனுக்குப் பரமதுக்கத்தின் பிராப்தியுண்டாம். ஆகையால், பலமற்ற இச்சையே ஜீவர்கட்குத் துக்ககாரணமாம். அல்லது, மனு ஷ்யலோகமே முதலாய் ஹிரண்யகர்ப்ப லோகபரியந்தம் எவ்வளவு தேகதாரிகளு ளரோ, அவர்கட்குச் சரீரம் இந்திரியம் புத்திராதி பதார்த்தங்கள் எவ்வாற்றானும் அனுகூலமாகா. ஆகையால், பிரதி கூலமாய சரீர புத்திராதி பதார்த்தங்கள் ஜீவர்கட்குத் துக்ககாரணமேயாம். இத்துணை கூறியதால் அனான்ம பதார்த்தங் களிடத்தே துக்கரூபத் தன்மை காண்பிக்கப்பட்டது. இப்போது அனான்ம பதார்த்தங்களிடத்தே சுகரூப அபாவத்தன்மை காண்பிக்கப்படும்:—ஹே ககோ ளரே! ஆன்மாவின் வேறாய எவ்வனான்மபதார்த்தத்தின்கண்ணும் சுகரூபத்தன் மையின்றாம். ஏனெனின், எப்பொருள் எச்சீவனுக்குச் சுககாரணமாமோ, அப்பொ

ருளே மற்றொருகாலத்தே துக்ககாரணமாம். எப்பொருள் எச்சீவனுக்குத் துக்க காரணமாமோ, அப்பொருளே மற்றொரு காலத்தே சுககாரணமாம். சுரவியாதி யற்ற புருஷனுக்கு நெய் முதலிய பதார்த்தங்கள் சுககாரணமாம். அந்நெய் முத லிய பதார்த்தங்களே மற்றொரு காலத்தே அச் சுரமுடையவனுக்குத் துக்க காரணமாம். சுரமுடையவனுக்குத் துக்க காரணமாய அந்த நெய்யே மற்றொரு காலத்தே சுரமற்றவனுக்குச் சுககாரணமாம். இவ்வண்ணம், சர்வ அனான்ம பதார்த்தங்களிடத்தேயும் சுககாரணத்தன்மையின் முறை பிறழ்தல் அறிந்து கொள்ளல் வேண்டும். அனான்ம பதார்த்தமோ நியமமாய்ச் சுகத்தையே யுண் டாக்குமாயின், எல்லாக்காலத்தும் அதனால் சுக உற்பத்தியுண்டாதல் வேண்டும். ஆனால், எல்லாக்காலத்தும் அதனால் சுகத்தினுற்பத்தியோ உண்டாவதின்றாம்; ஆகையால், அனான்ம பதார்த்தங்களிடத்தே சுககாரணத் தன்மையின்றாம்.

சங்கை :—ஹே யாஞ்ஞவற்கிய! அனான்ம பதார்த்தங்களிடத்தே சுககார ணத் தன்மையுண்டாகாதாயின், சுகப்பிராப்தியின் பொருட்டுச் சம்பூரண ஜீவர் கள் சப்தப் பரிசாதி விஷயங்களின் இச்சையை ஏன் செய்கின்றனர்?

சமாதானம் :—ஹே சகோளரே! சப்தப் பரிசாதி விஷயங்கள் எமது சுக சாதனங்கள் என உண்டாம் ஜனங்களின் அனுபவம் யதார்த்தமன்றாம்; மற்றோ, மயக்கமேயாம். ஏனெனின், ஆநந்தம் பிரஹ்மரூபம் என்னும் சுருதியின்கண் பிர ஹ்மத்தையே ஆநந்த சொரூபமெனக் கூறியிருக்கின்றது. அந்தப் பிரஹ்மம் நித்தி யமாம். ஆகையால், பிரஹ்மரூபம் ஆநந்தமும் நித்தியமுமாம். அந்த நித்திய ஆநந் தத்திற்குச் சத்தாதிகளினின்றும் உற்பத்தியை உடன்படல் மயலினால் அன்றிச் சம்பவியாது. அல்லது, சுகம் சப்தப் பரிசாதி விஷயங்களால் உண்டாமாயின், அச்சுகம் நித்திய ஆன்மாவினின்றும் பின்னமேயாம். ஆன்மாவினின்றும் யாது பின்னமாமோ, அது துக்கரூபமேயாம். ஆன்மாவினும் வேறாயுணர்ந்த வைரியின் சுகமும் ஜீவாகட்டுத்த துக்கரூபமேயாய்த் தோறறும். அதுபோல, சுகம் ஆன்மாவினும் வேறுபதாமாயின் அது துக்கரூபமேயாம். சுகத்திற்குத் துக்கரூபத்தன்மை சம்பவியாது; ஆகையால், சுகம் ஆன்மாவினும் வேறன்றாம். அல்லது, சப்தப் பரிசாதி விஷயங்கள் எமது சுகசாதனம் என்னும் லோகரது அனுபவத்தின்கண்ணே காரண மிதுவாம் :—மின்மினிப்பூச்சி சம்பூரண வியா பக ஆகாசத்தை விளக்கமாட்டாது, மற்றோ வியாபக ஆகாசத்தின் சிறிது தேசத்தை விளக்கலேபோலச் சப்தப் பரிசாதி விஷயமும் சம்பூரண ஆத்மரூப வியாபக சுகத்தை வெளிப்படுத்தாது; மற்றோ, வியாபக சுகத்தின் சிறிதுமாத் திரத்தை வெளிப்படுத்தும். கருத்திதுவாம் :—சப்தப் பரிசாதி விஷயங்களோடு சுரோத்திராதி இந்திரியங்கட்குச் சம்பந்தமாங்கால், ஆநந்தசொரூப ஆன்மாவின்பிர திபிம்பத்தைக்கவரும் அந்தக்கரண விருத்தியுண்டாம். அவ்வந்தக் காணவிருத்தி எவ்வளவு பரிமாணமிருக்குமோ, அவ்வளவு பரிமாணமே ஆன்மரூப சுகம்வெளிப் படும். ஆகையால், அந்தக்கரண விருத்தியின்கண் இராநின்ற சப்தப் பரிசாதி

விஷயங்களின் ஜன்னியத்தன்மையை ஆன்மரூப சுகத்தின்கண் ஆரோபணம்செய்து மூடன் சுகத்தை விஷயஜன்னியமென உணர்கின்றான். ஆகையால், சுகம் விஷய ஜன்னியமென்னும் உலகரின் அனுபவம் கேவலம் மயக்கரூபமேயாம். ஆதலின், ஹே சுகோளரே! ஆன்மாவினும் வேறாய சர்வ ஜகத்தையும் துக்கரூப மெனக் கண்டு வாமதேவாதி அறிஞர் ஆன்மரூப நித்திய சுகமடையும்பொருட்டு, எல்லா ஏஷணைகளையும் விட்டுச் சந்நியாச ஆசிரமத்தைக் கவர்ந்தனர். இத்துணை கூறிய தால் ஆன்மஞான சாதனமும் ஜீவன் முக்திச் சுகசாதனமும் ஆய சந்நியாசத்தை நிரூபித்ததாயிற்றென்றுணர்தல் வேண்டும்.

இப்போது ஆன்மஞான சாதனமாய சிரவண, மனன, நிதித்தியாசனங்களின் சொரூபம் நிரூபிக்கப்படும் :—ஹே சுகோளரே! ஸ்வப்பிரகாச சுகரூபப் பிரஹ்மத்தையடைய இச்சையுடையவனும், சாஸ்திரத்தின் பதார்த்தங்களையும் வாக்கியார்த்தங்களையு மறிந்தவனும் ஆய சாதன சதுஷ்டயமுடைய முமுக்ஷுவானவன் முதலில் குருவாயிலாய் வேதாந்த வாக்கியங்களைச் சிரவணம் செய்து, அவ்வேதாந்த வாக்கியங்கட்கு அத்விதீயப் பிரஹ்மத்தின்கண் தாற்பரிய நிச்சயம் செய்ய வேண்டும்; இதுவே சிரவணமாம். அச்சிரவணத்தின் பின்னர் அந்த முமுக்ஷு, ஜன்மமரணாதி விகாரமுடையதும், ஆசக்திவாயிலாய்ச் சர்வ ஏஷணைகளையும், உண்டாக்குவதுமாய இச்சரீரத்தை அந்வய வியதிரேகத்தால் துக்க காரணமென அறிந்து சர்வ ஏஷணைகளையும் பரித்தியாகம்செய்து அந்த முமுக்ஷு, பாலகனைப் போல இராகத்துவேஷமற்றவனாயிருப்பன். கருத்திதுவாம் :—இராகத்துவேஷ வாயிலாய் விஷயங்களிடத்தே இந்திரியங்களின் பிரவிருத்தியே ஜீவாகட்குத் துக்க காரணமாம். இக்காரணத்தாலே இராகத்துவேஷவாயிலாய் இந்திரியங்களின் பிரவிருத்தியற்ற பாலகன் துக்கத்தை யடையான். ஆதலின், இம்முமுக்ஷுவும் பாலகனைப்போல, இராகத்துவேஷ வாயிலாய் இந்திரியப் பிரவிருத்தி யற்றவனாய் வேதாந்த அர்த்தத்தை மனனம்செய்வன். நானுவகையாய யுக்திகளால் விரோத நிவிருத்தி வாயிலாய் வேதாந்த அர்த்தத்தின் சிந்தனத்தைச சாஸ்திர முணர்ந்தோர் மனனமென்பர். அம்மனனம், இராகத்துவேஷமுடைய வெளிமுக புருஷனாலாகமாட்டாது. ஆகையால், இராகத்துவேஷமற்றவனாய் முமுக்ஷு வேதாந்த அர்த்தத்தைமனனம்செய்வன். அந்தச்சிரவணமனனத்தின் பின்னர் இம்முமுக்ஷு அனான்மாகார விஜாதீய விருத்திகளைவிட்டு, ஆன்மாகார சஜாதீய விருத்திகளின் பிரவாகரூப நிதித்தியாசனத்தை நிரந்தரம் செய்வன். கருத்திதுவாம் :—மன வாக்குகட்கு விஷயமாய திருசியப் பிரபஞ்சத்தினின்றும் யான் விலக்ஷணன், யான் ஆநந்தசொரூபன், யான் ஸ்வப்பிரகாசன், யான் சஜாதீய விஜாதீய சுவகத பேதமற்றவன் என்னும் விருத்திகளின் நிரந்தரப் பிரவாகரூப நிதித்தியாசனத்தின்கண்ணே நிஷ்டையுடையவனும், முற்கூறிய சிரவணமனனங்களை நெடுங் கால பரியந்தம் சிரத்தையோடும் சேவிப்பவனும் ஆய முமுக்ஷு, பிரஹ்ம வித்தையை யடைவன். அந்தப் பிரஹ்ம வித்தையுடையவனே சுருதியின்கண்ணே பிராஹ்மணனெனக் கூறப்பட்டுளான்.

சங்கை :—ஹே யாஞ்ஞவற்கிய! முற்கூறிய சிரவண மனன நிதித்தியாசனங்களைவிட்டு, இம்முமுக்ஷு அந்நிய உபாயத்தால் பிரஹ்மஞானரூப பிராஹ்மண பாவத்தை யடைவனா? அல்லதடையானா? அந்நிய உபாயத்தால் பிராஹ்மணனாவனேல், அவ்வுபாயம் யாதோ அதை எம்பொருட்டுக் கூறுதி?

சமாதானம் :—ஹே கஹோளரே! முன்னர்க் கூறிய சிரவண மனன நிதித்தியாசனங்களை விட்டொழித்து, இமமுமுக்ஷு வேறு எவ்வுபாயத்தாலும் பிராஹ்மணத்தன்மையை யடைவதேயில்லை. மற்றோ, சிரவணாதிகளாலேயே இம்முமுக்ஷு, பிராஹ்மணத்தன்மையை யடைவன்; ஆதலின், நாமரூபக்கிரியையற்ற ஸ்வப்பிரகாச சுகஸ்வரூப அத்விதீயப பிரஹ்மமே யானாயுளன், என்னும் நிர்விகற்ப ஞானம் யாவனுக்குண்டாமோ, அநதப பிரஹ்மவேத்தாவைச் சுருதி பிராஹ்மணனென்னுமம. இவ்வண்ணமாய பிராஹ்மணத்தன்மை சிரவணமனன நிதித்தியாசனமின்றி அந்நிய எவ்வுபாயத்தாலும் உண்டாகாது. ஆதலின், அநதப் பிராஹ்மணத்தன்மையினடைவின் பொருட்டு, முமுக்ஷு அவசியம் சிரவணாதி சாதனங்களைச் சம்பாதிக்கவேண்டுமம. ஹே கஹோளரே! இவ்வகையாய பிராஹ்மணத்தன்மை யொருகால் சிரவணாதி சாதனங்களின்றி அநநியசாதனங்களாலாவதாயின், சங்கையின்றியே யுண்டாகுக, இதன்கண் எனக்கு ஆக்கிரகமின்றாம். நதியின் அக்கரை சேர்தலாயபலம ஓடத்தாலுண்டாமம. அல்லது, தோற்பை சுரக்குடுக்கை முதலிய சாதனங்களாலுண்டாமம; தோறபை சுரக்குடுக்கை முதலிய சாதனங்களாலேயே நதியின் அக்கரையடையும் பலம் கைகூடுமாயின், *நாவாயாற் கரைசேர எமமதிமானும் நினைந்து ஆக்கிரகம செய்யான். ஆனால், நதி மகாவேகமுடையதாயின், அத்தியந்தம் விஸ்தாரமுடையதாயின், அந்நதியின்கண்ணே கணக்கற்றநீர் நிறைந்திருபபின், அக்கரைசேர நாவாயொன்றேசாதனமாகும். நாவாயன்றித்தோற்பை சுரக்குடுக்கை முதலிய சாதனங்களால் நதியின்கரைசேர்தல் சம்பவியாது; அதுபோல, முறகூறிய பிராஹ்மணத்தன்மையின்கண் சிரவணாதிகளே சாதனமாம்; சிரவணாதிகளின்றி வேறொரு உபாயத்தால் இவ்வகையாய பிராஹ்மணத்தன்மை யுண்டாகமாட்டாது. கருத்திதுவாம :—சிரவணாதிகளினும் வேறாய உபாயம் ஹிரண்யகர்பபரது உபாசனையாம். அல்லது, அஸ்வமேத முதலிய யாகாதி உற்கிருஷ்டகர்மமாம. அவ்வுபாசனை காமம முதலிய யாவும் சிரவணாதிகளின்றி ஆன்மஞானத்தை யுண்டாக்காது. மறறோ, உபாசனையாலும் கர்மத்தாலும் சித்தசுத்தியுண்டாம; அதன்பின்னா விவேகம், வைராக்கியம், சமாதிசட்சம்பத்தி, முமுக்ஷுத்தன்மை யென்னும் நான்கு சாதனங்களின் பிராப்தியுண்டாம். அதன் பின்னர்க் குருவாயிலாய் வேதாந்த சிரவணஞ் செய்து மனன நிதித்தியாசனம் செய்து முமுக்ஷு ஆன்மசாக்ஷாதகாரத்தை யடைவன். ஆகையால், சித்த சுத்தியின்கண் கர்ம உபாசனைகட் குபயோகமுண்டு; சாக்ஷாத் ஆன்மஞானத்தின்கண் கர்ம உபாசனைகட்குக் காரணத்தன்மையின்றாம்; மற்றோ, சிரவணாதிகட்கே சாக்ஷாத் காரணத் தன்மையாம். ஆன்மவேதாந்த சாஸ்திரம் ஜீவ ஈஸ்வரரின் அபேதத்தை

* நாவாயால்=ஓடத்தால்.

யுணர்த்துகின்றதா? அல்லது பேதத்தையுணர்த்துகின்றதா? என்னும் பிரமாணகத அசம்பாவனை வேதாந்த சாஸ்திர சிரவணத்தால் நீங்கும். ஆன்மா நித்திய வியாபக சுகரூபமா? அல்லது அநித்திய பரிச்சின்ன துக்கரூபமா? என்னும் பிரமேயகத அசம்பாவனை வேதாந்த சாஸ்திர மனனத்தால் நீங்கும். அநித்திய அசுசித் துக்கரூப தேகாதிகளிடத்தே நித்தியசுசி சுகரூபத்தன்மைப புத்தி விபரீதபாவனையாம். அவ்விபரீதபாவனை நிதித்தியாசனத்தால் நீங்கும். இங்ஙனம் அசம்பாவனை விபரீத பாவனைகளை நீக்கும வாயிலாய்ச் சிரவண மனன் நிதித்தியாசனங்கள் ஆன்ம ஞான சாதனமாம். ஆகையால், சிரவணாதிகளாலேயே பிராஹ்மணத் தன்மையை யடையலாம். ஹே கஹோளரே! எபபுருஷன் குருவாயிலாய் வேதாந்த சிரவணத்தைச் செய்திலனோ, அங்ஙனமே மனனநிதித்தியாசனங்களைச் செய்திலனோ, அங்ஙனமே வித்த ஏஷணை, புத்திர ஏஷணை, லோக ஏஷணை என்னும் மூவகையாய ஏஷணைகளைப் பரித்தியாகம் செய்திலனோ, கேவலம் விஷயபோகத்தின்கண்ணே ஆசக்தனோ, அத்தகைய சாதன ரகித புருஷனுக்கு எவ்வுலகின் கண்ணுமம, எக்காலத்தின்கண்ணேனும முற்கூறிய பிராஹ்மணத்தன்மை யுண்டாயிருக்குமாயின், எனபொருட்டுக கூறுவீராக. மறறோ, அத்தகைய சாதன ஹீன புருஷனுககு எவ்வுலகின்கண்ணும, எக்காலத்தின்கண்ணும் பிராஹ்மணத் தன்மை யுண்டாகமாட்டாது. ஆகையால, ஹே கஹோளரே! அன்னத்தை யுண்ணல நியமமாய்த் திருபதி உபாயமாம், அன்னம உண்ணாமல் அந்நிய எவ்வுபாயத்தாலும் புருஷனுக்குத் திருப்தியுண்டாகாது. அதுபோலப் பிரஹ்மஞான அடைவின்வடிவப பிராஹ்மணத் தன்மையின்கண்ணே சிரவண மனனநிதித்தியாசனமே நியமமாய சாதனமாம். இக்காரணத்தால், ஹிரண்யகர்பபருக்கும கணமாத்திரை வேதாந்தவாக்கிய விசாரஞ்செய்தே ஆன்மஞானம் உண்டாயதெனக் கூறப்பெற்றுளது. யோகியும் பிரணவ அர்த்தத்தை விசாரித்தே ஆன்மசாக்ஷாத்காரம் பெறுவன். சிரவண மனன நிதித்தியாசனமின்றி எப்புருஷனும் ஆன்ம ஞானத்தையடையான். ஹே மைநத! இங்ஙனம் யாஞ்ஞவற்கிய முனிவர் விடை கூறவே, அக் கஹோளப பிராஹ்மணா அம்முனிவரைப புத்திமானெனவறிந்து ஜயிக்குமிச்சையை விட்டொழிந்தனா. கார்க்கியின் முகத்தை நோக்கிக்கொண்டு மீண்டும் வினவுதலினின்றும் நிவிருத்தியடைந்தனர். அதன்பின்னர் தார்க்கத்தின்கண்ணே குசல வசக்நு இருஷியின் புத்திரியாய கார்க்கியானவள் அனுமானப பிரமாணத்தையங்கீகரித்து யாஞ்ஞவற்கிய முனிவரை வினவத்தொடங்கினள். கார்க்கி கூறல்:—ஹே யாஞ்ஞவற்கியரே! இவ்வுலகின்கண்ணே எவ்வெப்பொருள் காரியமாமோ, அவ்வப்பொருள் தமது காரணத்தின்கண் இருக்கும். அங்ஙனம் உள்ளும் வெளியும் காரணத்தால் வியாப்தமாம். படரூபகாரியம் தந்துரூப காரணத்தின்கண்ணே இருக்கும். உள்ளும் வெளியும் தந்துரூப காரணத்தால் வியாப்தமாம் என்னும் இவ்விஷயம் யாவருக்கும் அனுபவசித்தமாம். அதுபோல, இம்மனுஷ்ய லோகத்தின்கண்ணே இராநின்ற எவ்வளவு ஸ்தாவர ஜங்கமரூப *பார்த்திவ பதார்த்தங்களுளவோ, அவையாவும் காரியரூபமாம்; ஆதலின், காரணரூபஜலத்தின்கண் இராநிற்கும். அங்ஙனமே, உள்ளும் புறம்பும் காரணரூப ஜலத்

* பார்த்திவம்=பிருதிவிசம்பந்தம்.

தால் வியாப்தமாம். ஒருகால் பார்த்திவ பதார்த்தம் ஜலத்தால் வியாப்தமன்றுமாயின், சத்துமாவின் முஷ்டியைப்போல விசீர்ணபாவத்தை யடைதல்வேண்டும். இக்கடாதி பார்த்திவ பதார்த்தங்கள் விசீர்ணபாவத்தை யடைவதில்லை. ஆகையால், இஃதறியப்பெறுமன்றோ :—கடாதி பார்த்திவ பதார்த்தங்கள் ஜலரூப காரணத்தால் வியாப்தமாம். இதுகூறியதால், இவ்வனுமானம் உணர்த்தப்பட்டது :—ஸ்தாவர ஜங்கமரூப பார்த்திவ பதார்த்தம், ஜலரூப காரணத்தால் வியாப்தமாம், காரியரூபமாதலின், படம்போல. ஆகையால், ஹே யாஞ்ஞவற்கியரே! பிருதிவியைப்போல அந்த நீரும காரியரூபமாம். ஆதலின், அந்நீரும் தனதுகாரணமாய ஒன்றன்கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும். அந்நீரின் காரணம் யாது? அதன்கண்ணன்றோ, அந்நீர் குறுக்கும நெடுக்குமாயிருக்கவேணடும். அதை நீர் கூறுவீராக? ஹே குழந்தாய்! இவ்வண்ணம் கார்க்கி வினவவே யாஞ்ஞவற்கிய முனிவர் விடைகூறததொடங்கினர். யாஞ்ஞவற்கிய முனிவா கூறல் :—ஹே கார்க்கியே! அந்நீர் வாயுரூப காரணத்தின்கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும், வேதாந்த மதத்தின்கண் நீரின் உபாதான காரணம தேயுவாம். தேயுவின் உபாதானகாரணம் வாயுவாம். ஆதலின், வாயுவை நீரின் உபாதான காரணமெனக்கூறல் சம்பவியாதாயினும், உலகின்கண்ணே அக்கினிரூப தேயுவிற்குக் காஷ்டரூப இந்தனத்தின்கண்ணே புலபபடுதலுண்டாம். காஷ்டரூப இந்தனமன்றி வேறெப்பதார்த்தத்தின்கண்ணும, அக்கினிரூப தேயுவிற்குப் புலப்படுதலுண்டாகாது. காஷ்டத்தின்கண் இராநின்ற தூமமற்ற அக்கினியின்கண் ஜலவிரோதிதன்மை பிரத்தியக்ஷமாய்க காணபபடுகின்றது. ஆதலின், ஜலவிரோதியாய அக்கினியின்கண் ஜலத்தினுபாதான காரணத்தன்மை சமபவியாது. காஷ்டரூப இந்தனமற்ற அக்கினியின்கண் ஜலகாரணததன்மை சாஸ்திரப் பிரமாணத்தாலன்றி மற்றெப்பிரமாணங்களாலும் பெறப்படாது. சாஸ்திரப பிரமாணம் ஒன்றினாலேயே பெறப்படும. ஈரவிறகோடுகூடிய அக்கினியின்கண் தூமசம்பந்த வாயிலாய் ஜலகாரணத்தன்மை பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் துணியப்பெறுமாயினும், அவ்விடத்தேஜலகாரணத்தன்மை அககினியின்கண்ணுளதா? அல்லது ஈரவிறகின்கண் இராநின்ற ஜலத்தின்கண் இருக்கின்றதா? என்னும் நிர்ணயம உண்டாகமாட்டாது. ஆதலால், அக்கினியைப் பரித்தியாகம் செய்து வாயுவின்கண் ஜலகாரணத்தன்மை கூறபபட்டது. கருத்திதுவாம் :—புத்திரனுடைய காரணமாய பிதாவானவர் புத்திரனுடைய புத்திரனுக்கும் காரணமாம். அதுபோல, தேயுவின்காரணமான வாயுவானது தேயுவின் காரியமாய நீரினுக்கும் காரணமாதல்கூடும. இதன்கண் சிறிதுமாத்திரையும் விரோதமின்றும். ஹே குழந்தாய்! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய முனிவர் கூறவே அந்தக கார்க்கியானவள் மீண்டும் யாஞ்ஞவற்கிய முனிவரை இவ்வண்ணம் வினவினள். கார்க்கி கூறல் :—ஹே யாஞ்ஞவற்கியரே! அந்தவாயு எக்காரணத்தின் கண்ணே குறுக்கும் நெடுக்குமாயிருக்கும். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே கார்க்கியே! அந்தவாயு அந்தரிக்ஷ லோகத்தின்கண்ணே குறுக்கும் நெடுக்குமாயிருக்கும். கார்க்கி கூறல் :—ஹே யாஞ்ஞவற்கியரே! அவ்வந்த

ரிக்ஷலோகம் எக்காரணத்தின்கண் குறுக்கு நெடுக்குமாயிருக்கும். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே கார்க்கியே! அவ்வந்தரிக்ஷலோகம் கந்தருவ லோகத்தின் கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும். கார்க்கி கூறல் :—ஹே யாஞ்ஞவற்கியரே! அக்கந்தருவலோகம் எக்காரணத்தின்கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே கார்க்கியே! அக்கந்தருவ லோகம்சூரிய லோகத்தின்கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும். கார்க்கி கூறல் :—ஹே யாஞ்ஞவற்கியரே! அந்தச் சூரிய லோகம் எக்காரணத்தின்கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே கார்க்கியே! அச்சூரிய லோகம் சந்திர லோகத்தின்கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும். கார்க்கி கூறல் :—ஹே யாஞ்ஞவற்கியரே! அச்சந்திர லோகம் எக்காரணத்தின்கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே கார்க்கியே! அச்சந்திரலோகம் நக்ஷத்திர லோகத்தின்கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும். கார்க்கி கூறல் :—ஹே யாஞ்ஞவற்கியரே! அந்நக்ஷத்திர லோகம் எக்காரணத்தின் கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருககும். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே கார்க்கியே! அந்நக்ஷத்திரலோகம் தேவலோகத்தின்கண்ணே குறுக்குநெடுக்குமாயிருக்கும். கார்க்கி கூறல் :—ஹே யாஞ்ஞவற்கியரே! அத்தேவ லோகம் எக்காரணத்தின்கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே கார்க்கியே! அத்தேவ லோகம் இந்திர லோகத்தின்கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும். கார்க்கி கூறல் :—ஹே யாஞ்ஞவற்கியரே! அவ்விந்திர லோகம் எக்காரணத்தின் கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே கார்க்கியே! அவ்விந்திர லோகம் பிரஜாபதி லோகத்தின்கண்ணே குறுக்குநெடுக்குமாயிருக்கும். கார்க்கி கூறல் :—ஹே யாஞ்ஞவற்கியரே! அந்தப பிரஜாபதி லோகம் எக்காரணத்தின்கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே கார்க்கியே! அந்தப பிரஜாபதி லோகம் பிரஹ்ம லோகத்தின்கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும்.

இப்போது அந்தரிக்ஷாதி சப்தார்த்தத்தை நிரூபிப்பாம் :—அவகாச ரூபத்தால் சர்வ லோகருக்கும் பிரசித்தமாய ஸ்தூல ஆகாசத்தை யந்தரிக்ஷ மென்பர். கந்தர்வலோகம், சூரியலோகம், சந்திரலோகம், நக்ஷத்திரலோகம், தேவலோகம், இந்திரலோகம் என்னும் ஆறுவகையாய சபதங்கள் ஆகாசாதி பஞ்சபூதங்களின் உத்தர உத்தர சூக்ஷ்மம அவஸ்தைகளின் வாசகங்களாம். கருத்திதுவாம் :—அந்தரிக்ஷ லோகத்தை ஆரம்பிப்பதாய ஆகாசாதி பஞ்சபூதங்களினின்றும் அந்தரிக்ஷலோகத்தை எப்பக்கமும் சூழ்ந்திராநின்ற கந்தருவ சரீரங்களை யாரம்பிக்கும் பஞ்சபூதம் சூக்ஷ்மமாம். அதுபோன்றே கந்தருவ லோகத்தை நாற்புறமும் சூழ்ந்திராநின்ற சூரிய லோகத்தை யாரம்பிக்கும் பஞ்சபூதம், கந்தருவ லோகத்தை யாரம்பிக்கும் பூதங்களினும் சூக்ஷ்மமாம். இவ்வண்ணம் இந்திரலோகபரியந்தம் ஆகாசாதி பஞ்சபூதங்களின் சூக்ஷ்மத் தன்மையை யறிந்து கொள்ளல் வேண்டும். இதன்கண்ணும் இத்துணை விலக்ஷணத்தன்மையுளது. கந்தருவ லோகம் முதலாய் இந்திரலோகபரியந்தம் ஆறுவகையாகப் பூதங்களி னவஸ்தை

யாது கூறப்பட்டதோ, அதுவும் பூர்வபூர்வ அவஸ்தையை யபேக்ஷித்துச் சூக்ஷ்மமாம். உத்தர உத்தர அவஸ்தையை யபேக்ஷித்துத் தூலமாம். கந்தருவ லோகத்தை யபேக்ஷித்துச் சூரியலோகம் சூக்ஷ்மமாம். சந்திரலோகத்தை யபேக்ஷித்துச் சூரியலோகம் ஸ்தூலமாம். அதுபோலவே சந்திரலோகமும் சூரிய லோகத்தைக் குறித்துச் சூக்ஷ்மமாம். நக்ஷத்திரலோகத்தை யபேக்ஷித்து அச்சந்திரலோகமும் ஸ்தூலமாம். இவ்வண்ணம் இந்திரலோக பரியந்தம் ஸ்தூலத்தன்மையையும் சூக்ஷ்மத்தன்மையையும் அறிந்துகொள்க.

இப்போது இந்திரலோகம், பிரஜாபதிலோகம், பிரஹ்மலோகம் என்னும் மூன்று சப்தங்களின் பொருளை நிரூபிப்பாம்:—சம்பூரண திருசியப்பிரபஞ்சத்தை ஆன்மரூபமாய் யாவர் பார்க்கின்றாரோ அவர் இந்திரரெனப்படுவர், இவ்வகையாய இந்திரசப்தத்தின் பொருள் விராட்புருஷனிடத்திலேயே பொருந்தும். ஏனெனின், இச்சம்பூரண விசுவம் விராட்புருஷ சரீரத்தின்கண் இருக்குமாதலின், அவ்விசுவத்தை ஆன்மரூபமாய் அவ்விராட்புருஷர்காண்பர். ஆகையால், இந்திர சப்தத்தால் விராட்புருஷரைக் கவர்ந்து கோடல்வேண்டும். பிரஹ்மாண்டரூபக் கடாகத்துள்ளும் வெளியும் இராநின்ற சூத்திராத்மாவைப் பாரிக்ஷிதபுருஷன் அடைவன். ஆகையால், பிரஜாபதி சப்தத்தால் சூத்திராத்மாவைக் கவர்ந்து கொள்ளல்வேண்டும். மாயை அஞ்ஞானம் என்னும் சப்தங்கட்குப் பொருளாய சர்வகாரண அவ்வியாகிருதம் சூத்திராத்மாவின் இருப்பிற்கு ஆதாரமாம். ஆகையால், பிரஹ்மலோக சப்தத்தால் அந்த அவ்வியாகிருதத்தைக் கவர்ந்துகொள்க. அந்த அவ்வியாகிருதம், சமஷ்டிரூபத்தால் ஒரு வகையாம், வியஷ்டிரூபத்தால் அநேகவகையாம். ஹே குழந்தாய்! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய முனிவரின் வசனங்களைக் கேட்டு அந்தக் கார்க்கியானவள் தமது மனத்தின்கண்ணே இவ்வண்ணம் விசாரம்செய்தனள்.

அவ்விசாரமிதுவாம்:—சர்வ ஜகத்தின் காரணரூப அவ்வியாகிருதம் சுத்தான்மாவை யாசிரயித்திருக்கும்; ஆயினும், அந்த அவ்வியாகிருதம் நீர்முதலியவற்றைப் போல அநுமானப்பிரமாணத்தால் அறியமுடியாது. ஏனெனின், காரியம் யாதோ அது காரணத்தால் வியாப்தமாம், காரியததன்மைத் தருமமுடையதாதலின், படரூப காரியத்தைப்போல. என்னு மிவ்வநுமானம் பிரவிருத்திக்கும் முன்னரே, யாது யாது காரியமாமோ, அது அது காரணத்தால் வியாப்தமாம். என்னும் வியாப்திஞானமும், காரியத்தன்மைவடிவ ஹேதுவின் ஞானமும் அவசியம்வேண்டும். வியாப்திஞானமும் ஏதுஞானமுமின்றி அநுமானப்பிரமாணத்தால் எப்பொருளின் துணிவுமுண்டாகாது; அவ்வியாகிருத ஆசிரயரூபமாயுண்டாம். ஆன்மாவின் [illegible]த்தின்கண், முற்கூறிய வியாப்திஞானத்திற்கும், காரியத்தன்மை வடிவ ஏ[illegible] ஞானத்திற்கும், சிறிதுமாத்திரமும் உபயோகமின்றாம். ஏனெனின், அ[illegible]ணமாயாரூப அவ்வியாகிருதம் அநாதியாம். ஆகையால், அந்த அவ்வி[illegible]த்தின்கண் காரியத்தன்மை சம்பவியாது. சுத்த ஆன்மாவின்கண் கா[illegible]த்தன்மையும் காரணத்தன்மையும் சம்பவியா. ஆகையால், அவ்வியாகிருத

ஆசிரய ஆத்மா அனுமானப்பிரமாணத்திற்கு விஷயமன்றும். உண்மையாய் விசாரித்துப்பார்க்கினே, சூத்திராத்மாவும் அனுமான விஷயமன்றும். ஏனெனின், லோகப்பிரசித்த திருஷ்டாந்தத்தைக்கொண்டு அனுமானப் பிரவிருத்தியுண்டாம். லோகப்பிரசித்த திருஷ்டாந்தமன்றி எவ்வனுமானத்தின் பிரவிருத்தியு முண்டாகாது. லோகப்பிரசித்த திருஷ்டாந்தமோ, சூத்திராத்மாவின் சித்தியின்கண் இன்றும். இக்காரணத்தானே பிரஹ்மாண்டத்தினும் வெளியே சூத்திராத்மா இருக்கின்றாரென்னும் பிரக்கிரியையை எந்நையாயிகரும் எழுதவில்லை. ஆகையால், சூத்திராத்மாவும் அவ்வியாகிருதத்திற் காசிரயமாய சுத்தாத்மாவும், அனுமானரூப தருக்கத்திற்கு விஷயமன்றும் என்னும் இவ்வகையாய விசாரத்தைச் செய்யாமல், அந்தக் கார்க்கியானவள் ஆக்கிரகத்தால் மீண்டும் யாஞ்ஞவற்கியரை வினவத்தொடங்கினள். கார்க்கி கூறல் :—ஹே யாஞ்ஞவற்கியரே! அந்த அவ்வியாகிருதரூப பிரஹ்மலோகம் எக்காரணத்தின்கண் குறுக்கு நெடுக்குமாம். ஹே சிஷ்ய! கேவலம் சாஸ்திரப் பிரமாணத்தால் அறிய யோக்கியமாய ஆன்மாவின் வாஸ்தவசொரூபத்தைக் கார்க்கியானவள் தனது மூர்க்கதன்மையினலே, அனுமானப் பிரமாண ரீதியாய்க் கேட்கவே அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் கூறத்தொடங்கியதாவது :—ஹே கார்க்கியே! இவ்வாநந்தசொரூப ஆன்மா கேவலம் சாஸ்திரப் பிரமாணத்தால் அறிய யோக்கியமாம். ஆகையால், சாஸ்திரப் பிரமாணத்தாலேயே ஆன்மாவின் சொரூபம் நீ கேட்க யோக்கியமாம். ஆனல், அந்த மரியாதையை விட்டொழித்து அனுமான ரீதியாய்கேட்கின்றனை, உனது வினப்பயனற்றதாம். ஏனெனின், சர்வத்தின் அதிஷ்டான ஆன்மா எவ்வனுமானத்திற்கும் விஷயமன்றும் ; ஆகையால், ஹே கார்க்கியே! சர்வ அதிஷ்டானரூப ஆன்மதேவதையை அனுமான ரீதியாய் நீ யொருகாலும் கேட்கவேண்டாம். ஹே கார்க்கியே! விசாரமற்றவளாய் நீ துராக்கிரகத்தால் கடந்த வினவைச்செய்வையேயாயின், நினது மஸ்தகம் பூமியின்கண்ணே வீழ்ந்துபோம். ஏனெனின், யாவன் பரம உற்கிருஷ்ட பதார்த்தத்தை நிக்கிருஷ்ட பதார்த்த சமானமாய்க்காண்பனே, அவனுக்கு மகா அனர்த்தப் பிராப்தியுண்டாம். அருச்சுனனது அஸ்தத்தின்கண் இராநின்ற பாசுபதாஸ்திரம் அந்நிய சரத்திற்குச் சமானம் ஆகத்தகுதியாம். அஸ்திரத்தன்மைத் தர்மமுடையதாதலின், மற்றொரு சரத்தைப்போல. என்னும் அனுமானத்தைச்செய்து, பாசுபதாஸ்திரத்தை அந்நிய சரத்திற்குச் சமானமாய்ச் செய்தல் தகுதியன்றும் ; ஒருவன் துராக்கிரகத்தால் அந்தப் பாசுபதாஸ்திரத்தை அந்நிய சரத்திற்குச் சமானமாய்ச் செய்வனுயின், அந்தப் பாசுபதாஸ்திரம் அந்த விபரீத தரிசியாய புருஷனது மஸ்தகத்தைச் சேதித்துப் பூமியில் வீழ்த்தும். அதர்வண வேதத்தினின்றும் உற்பன்னமாய மாரணமந்திரமானது மிகவுங் கோபத்தோடுகூடிய துர்வாச முனிவர் ஹிருதயத்தின்கண்ணிருப்பின், அம்மந்திரம் பிராகிருத மந்திரங்கட்குச் சமானமாகத் தகுதியதன்றும் ; ஆயினும், யாவன் துராக்கிரகத்தால் அம்மந்திரத்தைப் பிராகிருத மந்திரங்களோடு சமானமாக்குவனே, விபரீததரிசியாய அவனது மஸ்தகத்தை அந்த அதர்வண வேதமந்திரமானது பூமியின்கண்ணே கிடத்தும். அதுபோல, ஹே கார்க்கியே! அனு

மானத்திற்கவிஷயமாய ஆன்மாவை, நீர்முதலியவற்றைப்போல அனுமானவிஷய மென நினைந்து, நீ ஆன்மாவைப்பற்றிய கடந்த வினவைச்செய்வையாயின் நினது மஸதகம பூமியினகண்ணே வீழ்நதுவிடும். ஹே குழந்தாய்! இவ்வண்ணம், யாஞ்ஞவல்கிய முனிவரின் வசனத்தைக் கேட்ட கார்க்கியானவள் அத்தியந்தம் பயத்தை யடைந்தனள். பின்னர் அருண இருஷியின் மைந்தராய உத்தாலகரது முகத்தை நோககிக்கொண்டு வினவுதலினின்றும் நிவிருத்தியடைந்தனள். அதன் பின்னர் அந்த உத்தாலக இருஷியானவா அத்தியந்தம் கோபமுடையவராய்ப் பூர் வம் அக்கினிதேவதை உபதேசித்த அத்தியநதம்குஹ்யமான (இரகசியமான) அர்த் தத்தை வினவத்தொடங்கினர்:—ஆண்டு, புஜ்யுவைப்போலத் தமது வித்தையின் மேன்மையை யறிவிக்கும்பொருட்டு, அநத உத்தாலகர் தமது பூர்வ விருத்தாந் தத்தைக் கூறுவாராயினா. உததாலகா கூறல்:—ஹே யாஞ்ஞவற்கிய! பூர்வம் பிரஹ்மசசரிய ஆசிரமத்தின்கண் அநேகம் பிரஹ்மச்சாரிகளாய நாங்கள் வேதாத் தியயனம செய்யுமபொருட்டு, மததிரதேசத்தின்கண் பதஞ்சலரென்னும் பிராஹ் மணரது வீட்டில இருநதோம். ஒரு காலததே அநதப் பதஞ்சலரது மனைவியின் சரீரத்தின்கண் பேய்போல அககினிதேவதை புகுந்தது. அதன்பின்னர், பதஞ்சல குருவோடு யாங்கள் யாவரும அவ்வக்கினிதேவதையை இங்ஙனம் கேடபவராயி னோம்:—நீ யாா என, அதன்பின்னர் அந்த அக்கினிதேவதை, பிராஹ்மணர் களாகிய எங்கள் யாவரையும நோககி இங்ஙனங்கூறியது:—ஹே பிராஹ்மணர் களே! ஆதர்வணம, எனது கோத்திரமாம். கபநதன், எனது பெயராம். உங்கள் யாவருக்கும் உபகாரத்தைச செய்யுமபொருடடு, இந்த ஸ்திரீயின் சரீரத்தின் கண்ணே புகுநதுளேன் எனக்கூறி, அவ்வககினிதேவதை சீடர்களாய எங்களாற் சூழப்பட்ட பதஞ்சலரென்னும எமது குருவைநோக்கி இங்ஙனம் கூறியது:— ஹே பதஞசல! மாலையின் புஷ்பங்களைச சூததிரம தரிபபதேபோல, இவ்வெல் லாப் பூதபௌதிகப் பிரபஞசமும எச்சூததிரத்தாற கோர்க்கப்பட்டுளவோ, அச் சூத்திரத்தை நீ யறிதியோ என அக்கினி தேவதை கேட்டபோது, எமது குரு வானவர் அக்கினி தேவதையை நோக்கிக கூறியதாவது:—ஹே அக்கினிதேவ தையே! சம்பூரண ஜகத்தையும எச்சூததிரம் தரித்துக்கொண்டிருக்கின்றதோ, அச்சூத்திரத்தை யானறிந்திலேன் என விடையளித்தபின், அந்த அக்கினி தேவதை மீண்டும் எனது குருவை நோக்கி இங்ஙனங் கேட்டது:—ஹே பதஞ்சல! சர்வ ஜகத்தையும பிரேரிப்பிககும அநதாயாமியை நீ யறிதியோ என மற்றொரு வினவை அக்கினி தேவதை எமது ஆசிரியரை நோக்கிக் கேட்டபோது, எமது குருவானவர் இவ்விடையை யளித்தனர்:—ஹே அக்கினி தேவதையே! அந்தர் யாமியின் சொரூபத்தையும் யானறிந்திலேன் என எமதாசிரியர் அக்கினி தேவ தையை நோக்கிக் கூறியபோது, அவ்வக்கினிதேவதை கிருபையோடுகூடியதாய்ப் பதஞ்சலரென்னும் எமது குருவைநோக்கி இங்ஙனங்கூறியது:—ஹே பதஞ்சல! யான் நின்பால் எசசூத்திரத்தின் சொரூபத்தையும் அந்தர்யாமியின் சொரூபத் தையும் கேட்டேனோ, அச்சூத்திரத்தையும், அந்தர்யாமியையும் யாவனறிவனோ,

அவன் சர்வஞ்ஞத் தன்மையை யடைவன். கருத்திதுவாம்:—அவன் பரமான்மாவையும், பூ முதலிய சப்த லோகங்களையும், சம்பூரண தேவதைகளையும், சம்பூர்ண பிராணிகளையும், பஞ்ச பூதங்களையும், ஆன்மாவையும் அறிவன். என இவ்வண்ணம் சூத்திர அந்தர்யாமிகளின் ஞானமேன்மையைக் கூறி எங்கள் யாவருக்கும் அந்த அக்கினிதேவதை சூத்திர சொரூபத்தையும், அந்தர்யாமியின் சொரூபத்தையும் கூறியது. ஹே யாஞ்ஞவற்கிய! அந்த அக்கினிதேவதையின் உபதேசத்தால் யாம் சூத்திர சொரூபத்தையும், அந்தர்யாமியின் சொரூபத்தையும் நன்றாக அறிவோம். நீ அச்சூத்திர சொரூபத்தையும, அந்தர்யாமியின் சொரூபத்தையும், அறியாதவனாய்ச் சர்வப் பிராஹ்மணர்களது கோக்களையும், உனது கிரகத்தின்கண்ணே கொண்டு செல்வையேயாயின், விரைவிலேயே உனது மஸ்தகம் பூமியின்கண்ணே வீழ்ந்துவிடும். ஹே மைந்த! இவ்வகையாய வினாவை உத்தாலகர் செய்தபோது, அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் உத்தாலகரை நோக்கிக் கூறுவாராயினர். யாஞ்ஞவற்கியர் கூறல்:—ஹே உத்தாலகரே! பூர்வம் அக்கினி தேவதை உம்பொருட்டு எச்சூத்திரத்தின் வடிவத்தையும், அந்தர்யாமியின் வடிவத்தையும் கூறியதோ, அசசூத்திரத்தையும் அந்தர்யாமியையும், நான் நன்று யறிந்திருக்கின்றேன். ஹே மைந்த! இவ்வண்ணம யாஞ்ஞவற்கிய முனிவர் உத்தாலகரை நோக்கிக் கூறியபோது, அவ்வுத்தாலகர் கோபமடைநது யாஞ்ஞவற கியரை நோக்கிக் கூறியதாவது:—ஹே யாஞ்ஞவறகிய! அஞ்ஞானியாய பாமர புருஷர் யாம் எல்லாப்பொருளையும் அறிந்திருக்கின்றேம் எனக்கூறுவர். அது போல, நீயும் யான் சூத்திரத்தை யறிந்திருக்கின்றேன், யான் அந்தர்யாமியை யறிந்திருக்கின்றேன் என வசனமாத்திர உச்சாரணத்தைச செய்கின்றனை; ஆனால், அவ்விரண்டின் சொரூபத்தையும் நீ கூறுகின்றாயில்லை. ஆகையால, நினக்கு அவ்விரண்டின் ஞானமில்லையென வறிநதுகொள்ளலாமன்றோ? ஏனெனின், எப்பொருளின் ஞானம் எப்புருஷனுககிருக்குமோ, அபபுருஷன் யான் அதனை யறிந்திருக்கின்றேனென வசனமாததிர உசசாரணத்தைக் கூறமாட்டானன்றோ? மற்றோ, அப்பதார்ததத்தின் சொரூபத்தைக் கூறுவன். ஆகையால், நீ சூத்திரத்தின் சொரூபத்தையும அந்தர்யாமியின் சொரூபத்தையும் அறிந்திருபபையேயாயின், என்பாற் கூறுதி. நீ அறியாயாயின், யானிரண்டையும் அறிவேனென்னும் பலமற்ற கர்ச்சனையைச செய்யாதொழிதி. ஹே மைந்த! இவ்வகையாய வினாவை உத்தாலகர்கேட்டபோது,யாஞ்ஞவற்கியமுனிவர் அவரைநோக்கிக்கூறுகின்றார்: ஹே உத்தாலகரே! நீர் சர்வஜகத்தின் பந்தனகாரண சூத்திரங் கேட்டீரன்றோ? அசசூத்திரம் பிராணரூபவாயுவாம். ஏனெனின், நூல் படத்தைத் தரிப்பதேபோல, இந்தப் பிராணரூபவாயு இவ்வுலகத்தையும் அந்நியலோகத்தையும் சர்வபூதப் பிராணிகளையும் தரிக்கும். இக்காரணத்தானே மரணகாலத்தின்கண் பிராணன் லோகாந்தரம் செல்லின், கரங் கால் முதலிய அவயவங்கள் யாவும் சிதிலமடைந்துபோம்; சூத்திரத்தை வெளிப்படுத்தின் மாலையின் புஷ்பம் சிதிலமாவதேபோல. இவ்வகையாய லோகப் பிரசித்தி யுக்தியினாலும் பிராணனுக்கே சூத்திரரூபத் தன்மை சம்பவிக்கும். ஈண்டுப் பிராணவாயு சபதத்தால் சமஷ்டி வியஷ்டி சூக்ஷ்ம சரீரத்தைக்

கவர்ந்து கொள்க. ஹே குழந்தாய்! இங்ஙனம், யாஞ்ஞவற்கிய முனிவர் சூத்திரத்தின் சொரூபத்தைக் கூறியபோது, உத்தாலகர் யாஞ்ஞவற்கியரது வசனத்தை யங்கீகரித்து மீண்டுங் கூறுவதாவது :—ஹே யாஞ்ஞவற்கிய! பூர்வம் அக்கினி தேவதை எமக்குச் சூத்திர சொரூபத்தைக் கூறியவண்ணமே நீயுங் கூறினாய். ஆதலின், சூத்திர சொரூபத்தின்கண் மீண்டும் வினவிலேன்; ஆனால், அந்தர்யாமியின் சொரூபத்தை யென்பாற் கூறுதி. ஹே சிஷ்ய! இவ்வண்ணம் உத்தாலகர் கூறியபோது, யாஞ்ஞவற்கிய முனிவர் கூறுகின்றார் :—ஹே உத்தாலகரே! எந்த சர்வஞ்ஞப் பரமான்மதேவரைப் பிருதிவி, ஜலம், அக்கினி, புவலோகம், வாயு, சுவர்க்கம், ஆதித்தியன், திசை, சந்திரன், தாரகை (நக்ஷத்திரம்), ஆகாசம், இருள், தேஜஸ் என்னும் 12 அதிதைவங்களின்கண் சுருதியானது கூறியிருக்கின்றதோ, எந்தப் பரமான்ம தேவரை, ஸ்தாவர ஜங்கமரூப சாவ அதிபூதங்களிடத்தே சுருதியானது கூறியிருக்கின்றதோ, எந்த சாவஞ்ஞப பரமான்ம தேவரைப் பிராணன், வாக்கு, சக்ஷு, சுரோத்திரம, மனம், துவககு, புத்தி, உபஸ்த இந்திரியம் என்னும் எண்வகையாய அத்தியாத்மங்களிடத்தே சுருதியானது கூறியிருக்கின்றதோ, எந்தப் பரமான்ம தேவர் பிருதிவி முதலிய 21 ஸ்தானங்களி லிருந்தபோதிலும், அந்த ஸ்தானங்களினின்றும வேறேயாவரோ, கிருகத்தையுடைய புருஷன் கிருகத்தினின்றும் வேறாக இருப்பதேபோல, எபபரமான்ம தேவர் பிருதிவிமுதலியவற்றினின்றும் வேறாயிருப்பரோ, பிருதிவி முதலிய வற்றினுள்ளே இருந்தபோதிலும எந்தப் பரமான்ம தேவரை யவையறியாவோ, அப்பரமான்ம தேவர் பிருதிவி முதலியவற்றை நியமமாய்த் தத்தம காரியத்தின்கண் முயலும்பொருட்டு வேறொரு சரீரத்தைத் தரிக்கிலரோ; மற்றே, ஜீவர்களாகிய நம்மனோருக்குச்சுக்கில சோணித விகாரரூப இச்சரீர மிருப்பதேபோல, எபபரமான்ம தேவருக்குப் பிருதிவி முதலியனவே சரீரமாமோ, எங்ஙனம அரசன் தனது சேவகரை நானாவகையாய வியாபாரங்களில் நியமம் செய்து முயலவிப்பனோ, அங்ஙனம எப்பரமான்ம தேவர் பிருதிவி முதலியவற்றின் அபிமானிகளாய சேதனரூப லிங்க சரீரங்களைத் தத்தம் வியாபாரங்களில் நியமமாய் முயலவிப்பரோ, அந்த மாயையின் அதிபதியாய பரமான்ம தேவரே அந்தர்யாமியாம. ஆகையால், ஹே உத்தாலகரே! எந்த அந்தர்யாமியின் சொரூபத்தை நீ முன்னாக் கேட்டீரோ, அந்த அந்தர்யாமியாய பரமான்ம தேவர் உமமுடைய என்னுடைய சர்வ ஜீவர்களுடைய ஆன்மரூபமாம். அந்தர்யாமியாய அவர், ஜனனம், மரணம், பசி, தாகம, சோகம், மோகம் என்னும் ஷடூர்மியற்றவர். ஹே குழந்தாய்! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய முனிவர் உத்தாலகரை நோக்கி, பிருதிவியாதிகளிடத்தே இருபத்தொருமுறை அந்தர்யாமியின் சொரூபத்தை உபதேசம செய்தனர். கருத்திதுவாம் :— யாவர் பிருதிவியின் கண்ணே இருப்பரோ, பிருதிவியினும் வேறாவரோ, பிருதிவி எவரை யறியாதோ, பிருதிவி எவருக்குச் சரீரமோ, யாவர் பிருதிவியைத் தனது காரியத்தின்கண்ணே செலுத்துவரோ, அப்பரமான்ம தேவரே உமது அந்தர்யாமியும் அமிருதருமாவர். இவ்வண்ணம் நீர் முதலியவற்றின்கண்

னும் அறிந்துகொள்க. இங்ஙனம் பிருதிவி முதலியவற்றின்கண் 21-முறை அந்தர்யாமியின் சொரூபத்தைக் கூறி, அந்தத் தர்மான்மாவாய யாஞ்ஞவற்கியமுனிவர் நேதி நேதியென்னும் சுருதியை அங்கீகரித்துச் சர்வ தர்மங்களையும் நிஷேதம் செய்வனவாய அதிருஷ்டத்வாதி ஆன்மாவின் தருமங்களைக் கூறுவாராயினர். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே உத்தாலகரே ! இவ்வந்தர்யாமியாய பரமான்மதேவர் ஞானவானுடைய விழிகட்கும் புலப்படார் ; செவிகளாலுங் கேட்கப்படார். மனத்தாலுஞ் சிந்திக்கப்படார். சுத்த புத்தியாலும் நிச்சயிக்கப்படார். இங்ஙனம் அந்நிய எவ்விந்திரியத்தாலும் இவ்வந்தர்யாமியாய பரமான்மதேவர் அறியமுடியாதவராவர். ஆகையால், இப்பரமான்மதேவர் அதிருஷ்டத்வ அசுருதத்வாதி (காணக்கூடாததன்மை கேட்கக்கூடாததன்மை முதலிய) தர்மங்களையுடையவர். இவ்வந்தர்யாமியாய ஆன்மா, திருஷ்டி (சக்ஷு-ஜன்னிய அந்தக்கரண விருத்தி) சுருதி (சுரோத்திர ஜன்னிய அந்தக்கரண விருத்தி) மதி (மனோவிருத்தி) விஞ்ஞாதி (புத்திவிருத்தி) இவ்வகையாய விருத்திகளை யொளிர்விக்கும். இக்காரணததால் அநதர்யாமியாய ஆன்மாவை திருஷ்டா, சுரோதா, மநதா, விஞ்ஞாதா என்பனமுதலிய நாமங்களால சுருதி புகலும். ஹே உத்தாலகரே! நேததிராதி இந்திரியங்களின் புத்திமுதலியவற்றின் எவ்வளவு பாகிய அந்தர (வெளி யுள்) வியாபாரங்களுளவோ, அவை யாவற்றையும் இவ்வந்தர்யாமியாய ஆன்மா அறிகின்றார். ஆனால், நேத்திராதி இந்திரியங்கள் அந்தர்யாமியாய பரமான்மாவை அறியா ; ஆகையால், அந்தர்யாமியாய ஆன்மாவின் வேறாய எபபொருளும திருஷ்டா, சுரோதா, மநதா, விஞ்ஞாதாரூபமன்றாம. மறறோ, அந்தர்யாமியாய ஆன்மாவே, திருஷ்டா, சுரோதா, மநதா, விஞ்ஞாதாரூபமாம். ஆகையால், ஹே உத்தாலகரே! இவ்வந்தர்யாமியாய பரமான்மதேவரே உமதான்மாவாம ; அந்தர்யாமியினும வேறா யுமதான்மாவின்றாம். ஏனெனின், எப்பொருள் சைதன்யரூபப பரமான்மாவினும வேறாமோ, அப்பொருள் ஜடமாம், எப்பொருள் ஜடமாமோ அபபொருள் கடாதிபோல உற்பத்தி நாசமுடையதாம். ஹே மைநத! இவ்வகையாய விடையை யாஞ்ஞவறகிய முனிவர் கூறியபோது அவ்வுத்தாலக இருஷியானவர் மீண்டும் வினவுதலினின்றும் உபராமத்தை யடைந்தனர். அதன்பின்னர், வசக்நு என்னும் இருஷியின் புத்திரியாய கார்க்கியென்னும பெண் சிரோரத்தினமானவள் எலலாப பிராஹ்மணர்களையும் நோக்கி, இவ்வசனத்தைக் கூறத்தொடங்கினள் :—ஹே பிராஹ்மணர்களே! நீங்கள் யாவரும் எனது வசனத்தைக் கேடபீர்களாக. இந்த யாஞ்ஞவற்கிய முனிவரின்பால் யான் இரண்டு வினாக்களைக் கேட்பேன். இநதப பிரஹ்மவேத்தாவாகிய முனிவர் என்னுடைய இரண்டு வினாக்களுக்கும் விடையளிபபராயின், உங்கள் யாவருள்ளும எம்மறைபவரும் இம்முனிவரை ஜெயிக்கமாட்டார்கள். அநேக மின்மினிப் பூச்சிகளுக்குள் ஒரு மின்மினிப் பூச்சியேனும் சூரியனை ஜயிக்கமாட்டாததுபோல, எமமறையவரும் இவரை ஜயிக்கமுடியாது. ஆகையால், நீங்கள் யாவரும் யான் வினவுமாறு எனக்கு உத்தரவுகொடுங்கள்.

சங்கை :—ஹே பகவன்! பிராஹ்மணர்களின் உத்தரவின்றியே கார்க்கியானவள் யாஞ்ஞவற்கிய முனிவரை ஏன் வினவவில்லை ?

சமாதானம்:—ஹே குழந்தாய்! இவ்வகையான விசாரத்தைத் தம்மனத்தின்கண்ணேசெய்து, அந்தக் கார்க்கியானவள் பிராஹ்மணர்களிடத்தே உத்தரவு கேட்டனள். அவ்விசாரம் இதுவாம்:—ஒருகால் எம்மறையவரேனும் தமது மனத்தின்கண் வினவுதற்கு நினைந்துகொண்டிருப்பரேல், மத்தியில் ஸ்திரீயாகிய எனது வினவைக்கேட்டு அம்மறையவர் கோபமுற்று என்னைச் சபிப்பராதலின், எல்லா மறையவரின் உத்தரவைப் பெறறு யான் வினவுதல் தகுதியாம; என விசாரித்து அந்தப் புத்திமதியாகிய கார்க்கியானவள் பிராஹ்மணர்களின்பால் உத்தரவு கேட்டனள். அதன்பின்னர், அம்மறையவர் யாவரும் கார்க்கிக்குவினவ உத்தரவு தந்தனர். அமமறையவர்களின் உத்தரவைப்பெற்று அந்தக் கார்க்கியானவள் யாஞ்ஞவற்கிய முனிவரை நோக்கி, இவ்வண்ணம் கூறுவாளாயினள். கார்க்கி கூறல:—ஹே யாஞ்ஞவற்கியரே! இவ்வுலகின்கண்ணே எங்ஙனம் நீர் பிரசித்தமுடையவரா யிருக்கின்றீரோ, அங்ஙனம் கார்க்கியாகிய யானும் பிரசித்தமுடையவளா யிருக்கின்றேன். எங்ஙனம நீர் அதிக புத்திமானாயிருக்கின்றீரோ, அங்ஙனம் கார்க்கியாகிய யானும அதிக புத்தியுடையவளாக விருக்கின்றேன். ஏனெனின் நீதிசாஸ்திரத்தின்கண் புருஷனைககுறித்துப பெண்கட்குப் புத்தியும், அவிவேகமுமம, தைரியமுமம, காமமுமம, குரோதமும் நான்குமடஙகு அதிகமெனக் கூறியிருக்கின்றது. எல்லாப பெண்களிலுமம உத்தமோத்தமமான சரஸ்வதி தேவிக்குச் சமானமாயிராநின்ற மிகவுங கூர்மையான புத்தியுடையவள் யான்.

சங்கை:—ஹே கார்க்கியே! நீ யாவரினு மதிகையென நின்னை நினைக்கும்படியாய் அவ்வளவு புத்தி நினககிருபபது யாது?

சமாதானம்:—ஹே யாஞ்ஞவற்கியரே! எலலா உலகின்கண்ணும் ஆத்மபுத்தியே எனது அதிகத்தன்மைககுக காரணமாம். அதனால யான் சர்வ ஜகத்தையும் புருஷபாவமறறதாய்க் காண்கின்றேன்; தங்கள் ஒருவரையே புருஷராக நினைக்கின்றேன். ஏனெனின், உலகின்கண்ணே எவ்வளவு பெண் ஆண் அலி உளவோ அவை யாவற்றையும் யான் ஆன்மரூபமாய்ப பார்க்கின்றேன். ஆகையால், இது துணியப்பெறும்:—எவருக்கு யாண்டும நிறைந்துள்ள ஆன்மஞான மிருக்கின்றதோ, அவரே புருஷராம். எவருக்கு வியாபக அத்விதீய ஆன்மஞானமின்றோ, அவ்வஞ்ஞானிகள் அலிகளாவர். அல்லது பெண்களாவர்.

இப்போது அஞ்ஞானிகளிடத்தே அலித்தன்மையைக் காண்பிப்பேன். ஹே யாஞ்ஞவற்கியரே! சக்தியற்றவரை உலகின்கண் அலியென்பர். இவ்வகையாய அலியின் இலக்கணம் அஞ்ஞானிகளிடததே பொருந்தும்; ஏனெனின், இவ்வஞ்ஞானிகள் அத்தியநதம் சமீபமாய இருதயதேசத்தின்கண் இராநின்ற ஆநந்த வடிவ சொப்பிரகாச ஆன்மாவை அறிவதற்குக்கூட வல்லரல்லராயிருக்கின்றனர். ஆதலின், இவர் யாவரும் அலிகளேயாவர். இப்போது அஞ்ஞானிகளிடத்தே பெண்தன்மையைக் காண்பிக்கின்றேன் ஹே யாஞ்ஞவற்கியரே! உன்னதஸ்தனங்களையுடைய கார்க்கியாகிய யான் பெண்ணல்லேன்; மற்றே, எப்புருஷருக்கு ஆநந்தசொரூப அத்விதீய ஆன்மஞானமின்றோ, அவ்வஞ்ஞானிபுருஷரே பெண்க

ளாவர். ஏனெனின், உலகப்பிரசித்தமாய பெண்கட்குத் தங்கட்கு வேறாய்ப் பதிக ளுண்டு. எப்போதும் அப்பெண்கள் பதிகளின் அதீனமாகவே யிருப்பர். ஒரு காலும் பெண்ணானவள் சுதந்தரமாயிராள்; அதுபோல, அஞ்ஞானிகளாகிய ஜீவர் கட்கும் தங்களுக்கு வேறாய்ப் பதியுண்டு; எப்போதும் அஞ்ஞானியாய ஜீவரூப ஸ்திரீயானவள் அப்பதியின் அதீனமாயிருப்பள்; ஆகையால, அஞ்ஞானிகளே பெண்களாவர். ஹே யாஞ்ஞவற்கியரே! அப்பெண்களுக்குள்ளும் இவ்வஞ்ஞானி கள் வாராங்கனைகட்குச் சமானமாவர். ஏனெனின், வாராங்கனையை அநேகம் புரு ஷர் போகிப்பதேபோல, இவ்வஞ்ஞானி ஜீவரூப ஸ்திரீயையும் காமம், குரோதம், லோபம், மோகம் முதலிய அநேகம் பதிகள் போகிப்பர். ஆகையால், இவ் வெல்லா அஞ்ஞானிகளும் வாராங்கனைகட்குச் சமானமாவர். என்னிடத்தே காமக்குரோதாதிகளின்றாம்; ஆதலின், யானே புருஷன். ஹே யாஞ்ஞவற் கியரே! உலகப்பிரசித்த ஸ்திரீயானவள் புருஷசம்பந்தத்தால் கர்ப்பத்தைத் தரிப் பள். அதுபோல, இவ்வஞ்ஞானி ஜீவர்களும் காலரூப புருஷ சம்பந்தத்தால் ஏழா வது தாதுவாய வீரியரூப கர்ப்பத்தைத் தரிப்பர்; இக்காரணத்தினாலும், இவ்வஞ் ஞானிகளே ஸ்திரீகளாவர்.

இப்போது காமாதி விகாரங்களின் அபாவத்தைத் தமமிடத்தே கார்க்கி காண்பித்தல்:—ஹே யாஞ்ஞவற்கியரே! கார்க்கியாகிய யான் உயர்ந்த யௌவன அவஸ்தையோடு கூடியிருக்கின்றேன். அங்ஙனமே, எல்லா யௌவன புருஷர்கள் மத்தியிலிருக்கின்றேன். அங்ஙனமாயினும், சிறிதுமாத்திரையும் காமாதி விகா ரங்களை யடைந்திலேன். ஹே யாஞ்ஞவற்கியரே! ஏகாந்ததேசத்தின்கண் பெண் ணானவள் சேலையற்றிருப்பதேபோலச் சபை மத்தியின்கண் யான் சேலையறறிருக் கினளாயிருக்கின்றேன். இவ்வெல்லாப பிராஹ்மணரும காமாதி விகாரங்களின் பயத்தோடுகூடியவர்களா யிருக்கின்றனராதலின், என்பக்கம் பார்ப்பது கூட வில்லை. எனக்குத் தேகாபிமானம் நீங்கியிருக்கின்றது; ஆகையால், இவ்வெல்லா மறையவரையும் யான் நேத்திரங்களாற் காண்கின்றேன், எனதஸ்தத்தால் தீண்டு கின்றேன். ஆயினும், என்னிடத்தே சிறிதுமாத்திரையும் காமாதிவிகாரம் உண் டாவதின்றாம். ஆகையால், யான் பெண்ணன்று; மற்றோ, அஞ்ஞானிகளே பெண் களாவர்.

சங்கை:—ஹே கார்க்கியே! சாஸ்திர திருஷ்டியால் நின்னிடத்தே பெண் தன்மையின்றாயினும், லோகதிருஷ்டியால் நின்னிடத்தே பெண்தன்மை யுண்டா மன்றோ?

சமாதானம்:—ஹே யாஞ்ஞவற்கியரே! லோகதிருஷ்டியாலும் ஸ்திரீ சப்தத் தின் பொருள் யாவரிடத்திற் பொருந்துமோ, அவரே ஸ்திரீயாம்; என்னிடததே ஸ்திரீ சப்தத்தின் பொருள் பொருந்துவதில்லை. ஆகையால், யான் எங்ஙனம் ஸ்திரீயாவேன்; மற்றோ, ஸ்திரீயல்லேன்.

இப்போது வியாகரண ரீதியாய் ஸ்திரீ சப்தத்தின் பொருளைக் காண்பித் தல்:—ஹே யாஞ்ஞவற்கியரே! இவ்வகையாய சப்த சமூகங்கள் எப்பிராணியின்

கண்ணேயுளவோ, அப்பிராணியைப் புத்திமான்கள் ஸ்திரீயென்பர். அச்சப்தங்களிவையாம்:—யான் நல்ல அழகிய பெண், யான் யௌவன அவஸ்தையோடுங்கூடியிருக்கின்றேன், யான் அழகிய உருண்ட ஸ்தனங்களோடு கூடியவள். இவ்வுலகின்கண்ணே எனக்குச் சமானமாய் எந்த ஸ்திரீயும் சுந்தரமாயில்லை; இவர் எனது பதியாவர்; இவன் எனது மைந்தன், இவள் எனது மகளாவள், இத்தனமும் அன்னமும் எனது கிருகத்தின்கண்ணே இருக்கின்றன; யான் மலடி, யான் மிகுந்த குடும்பமுடையவள் என்பன முதலாய், யான், எனது என்னும் அபிமானத்தால் உற்பன்னமாய நானாவகைச் சப்த சமூகங்கள் எவ்வெவ்வஞ்ஞானி ஜீவரிடத்தேயிருக்குமோ, அவ்வஞ்ஞானி ஜீவர்களே இவ்வுலகின்கண்ணே ஸ்திரீகளாம். ஹே யாஞ்ஞவற்கியரே! எப்பிராணி ஆநந்தசொரூப ஆன்மஞானத்தாற் பூரணமாயிருக்கின்றதோ, அந்தப பிராணியை, சுருதி, புருஷன் எனக் கூறுகின்றது. அந்த ஆன்ம ஞானத்தோடுகூடிய பிராணியானது சரீரத்தால் ஸ்திரீயாகுக, அல்லது புருஷனாகுக, அல்லது நபும்சகனாகுக, இவற்றின்கண்ணே சிறிதுமாத்திரையும் ஞானிக்கு ஆனியின்றாம். எவ்வாறாறாலும் ஆன்மஞானவானே புருஷனாம். ஹே யாஞ்ஞவற்கியரே! ஓரே நடன் தனது மாயைபால ஸ்திரீகளை மோகம் செய்பவனாய சுந்தர புருஷரூபத்தைத் தரிக்கின்றனன். கணமாத்திரையில் அந்நடன் புருஷனுடைய தைரியத்தை நாசம் செய்யும் சுந்தரஸ்திரீ ரூபத்தைத் தரிப்பன், கணமாத்திரையில் அந்நடன் நபும்சகரூபத்தைத் தரிப்பன். ஆனால், அந்த ஸ்திரீமுதலிய கற்பித ரூபங்களால் அந்நடனுடைய பூரவ உண்மைவடிவம வேறறுத்தன்மையையடைந்திடாது. அதுபோல, ஓரே இவ்வாநந்த சொரூப ஆன்மா தனது மாயையால் ஒருகால் புருஷ சரீரத்தை யடையும், ஒருகால் ஸ்திரீ சரீரத்தை யடையும், ஒருகால் நபும்சக சரீரத்தையடையும்; ஆனால், அக்கற்பித சரீரரூப உபாதிகளால் ஆன்மாவின் வாஸ்தவ ஏகத்தன்மை வடிவம நீங்கமாட்டாது. ஹே யாஞ்ஞவற்கியரே! ஓரே புருஷன் கனவின்கண்ணே நித்திரா தோஷத்தால, புருஷ, ஸ்திரீ, யானை, குதிரை முதலிய அநேகரூபங்களை அடைவன்; ஆனால, அககற்பிதரூபங்களால் கனுக்காணும் புருஷனுடைய வாஸ்தவ சொரூபம் நீங்குவதில்லை. அதுபோல, ஓரே பரமான்ம தேவர் தமது மாயையினால் ஸ்திரீ, புருஷ, நபும்சக, ஹஸ்தி, அசுவம முதலிய அநேக ரூபங்களைத் தரிப்பார்; ஆனால், அக்கற்பித ரூபங்களால் ஆன்மாவின் வாஸ்தவ சொரூபம் நீங்கமாட்டாது. ஆகையால், ஹே யாஞ்ஞவற்கியரே! ஆன்மஞானரூப புருஷ பாவத்தையும், சர்வஞ்ஞத் தன்மையையும் அடைந்திராநின்ற கார்க்கியாகிய யான் வாக்குவடிவ வில்லின்கண் இரண்டு வினாக்களாய பாணங்களைப் பூட்டி உம்மை யடிக்கும் பொருட்டு வந்திருக்கின்றேன். ஆகையால், ஹே யாஞ்ஞவற்கியரே! வாதரூப யுத்தத்தின்கண் உமக்குச் சமர்த்திருக்குமாயின் தைரியத்தைத் தாங்கி என்னோடு வாதரூப யுத்தஞ்செய்யவாரும். உமக்கு வாதரூப யுத்தத்தில் தைரிய வல்லமையில்லையாயின், என் முன் வந்து நமஸ்காரத்தைச் செய்யும். இவ்விரண்டு வகையுள் எங்ஙனம் உமக்குப் பிரீதியோ அங்ஙனஞ் செய்யும். ஹே யாஞ்ஞவற்கியரே! ஸ்ரீ காசிராஜாவாகிய திவோதாசனு

மைந்தராகிய பிரதர்த்தன னென்னுமரசர் ஒருவராகவே வில்லம்பை எடுத்துக் கொண்டு சென்று இந்திரரோடு போர்புரியச் சுவர்க்க பூமியை யடைந்ததுபோல வும், இந்த ஜனக ராஜாவானவர் சுவர்ணமணி இரத்தினங்களால் அலங்கரிக்கப் பெற்ற வில்லைத் தாங்கி இரும்புமயக் கூர்மையாய அம்புகளைக் கரங்கொண்டு பகை வரை நலிவுறுத்தப் போரின்கண்ணே பகைவரின் முன்பாய் நிற்பதேபோலும், தைரியத்தைத் தரித்துக் கார்க்கியாகிய யானும் வினவடிவு அம்புகளால் உம்மைத் தொலைக்கும் பொருட்டு ஈண்டு நிற்கின்றேன். ஆகையால், ஹே யாஞ்ஞவற் கியரே! அவ்வினாக்களின் விடையை நீரறிவீரேல் என்பொருட்டுக் கூறுவீராக. ஹே மைந்த! இவ்வகையாய வசனத்தைக் கார்க்கியானவள் யாஞ்ஞவற்கியரை நோக்கிக்கூறியபோது, அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் கார்க்கியை நோக்கிக் கூறிய தாவது :—ஹே கார்க்கியே! நினக்கு வினவ இச்சையிருப்பின், யாதொரு தடையு மின்றி வினவலாம். ஹே குழந்தாய்! இங்ஙனங் கூறிய யாஞ்ஞவற்கியர் வசனத் தைக்கேட்ட கார்க்கியானவள் வினவத் தொடங்கினள். கார்க்கி கூறல் :—ஹே யாஞ்ஞவற்கியரே! எச்சூத்திராத்மாவின் சொரூபத்தைச் சாஸ்திர வேத்தாப் புருஷர் பிரஹ்மாண்டத்தின் மேற்கபாலத்தின் மேலுள்ளதாய்க் கூறியுள்ளாரோ, எச்சூத்திராத்மாவின் சொரூபத்தைச் சாஸ்திரத்தை யுணர்ந்த பெரியோர் பிரஹ் மாண்டத்தின் கீழ்க்கபாலத்தினும் கீழிருப்பதாய்க் கூறியுள்ளாரோ, எச்சூத்தி ராத்மாவின் சொரூபத்தை இரண்டு பிரஹ்மாண்ட கபாலங்களின் மத்தியில் கூறி யுள்ளாரோ, எச்சூத்திராத்மாவின் சொரூபத்தைச சாஸ்திர முணர்ந்த பெரியார், பூதபவிஷ்யத் வர்த்தமான சொரூப சகலப் பிரபஞ்சத்தின் வடிவமாய்க் கூறியிருக் கின்றாரோ, அச்சூத்திராத்மா எக்காரணத்தின்கண் குறுக்கும் நெடுக்குமா யிருக்கும்?

சங்கை :—ஹே பகவன்! இவ்வினாவோ, முன்னரே கார்க்கியாற் செய்யப் பட்டது. அங்ஙனமே, இதற்கு விடையும் முன்னரே கருணை நிறைந்த யாஞ்ஞவற் கிய முனிவராற் கூறப்பட்டது. ஆகையால், மீண்டும் கார்க்கியானவள் இவ் வினாவை ஏன் வினவவேண்டும்?

சமாதானம் :—ஹே குழந்தாய்! முன்னர் அனுமானரூப தர்க்கத்தைக் கவர் ந்து கார்க்கி இவ்வினாவை வினவினள். இப்போதோ சாஸ்திர ரீதியைக் கவர்ந்து வினவுகின்றனள். இவ்வகையாய விலக்ஷணத் தன்மையை உணர்ந்து கொள்ளும் பொருட்டே முன்பின் வினாவின்கண் சப்தங்களின் பேதத்தைக் கார்க்கி வைத்திருக் கின்றனள். ஹே குழந்தாய்! இவ்வகையாய வினாவைக் கார்க்கி கேட்டபோது, யாஞ்ஞவற்கிய முனிவர் கார்க்கியை நோக்கிக் கூறியதாவது. யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே கார்க்கியே! நீ எந்தச் சூத்திராத்மாவாகிய காரியத்தைக் கூறி னையோ, அச்சூத்திராத்மாவாகிய காரியம் ஆவரண விக்ஷேப சக்திகளோடுகூடிய அவ்வியாகிருதரூப ஆகாசத்தின்கண்ணே குறுக்கு நெடுக்குமாயிருக்கும். ஹே குமர! இவ்வகையாய விடையை யாஞ்ஞவற்கிய முனிவர் கூறவே அந்தக் கார்க்கி யானவள் யாஞ்ஞவற்கியரை நமஸ்கரித்துக் கூறத்தொடங்கியதாவது :—ஹே யாஞ் ஞவற்கிய முனிவரே! முதல் வினாவிற்கு விடையை நீர் ஈன்பாற் கூறினீர். இப்

போது இரண்டாவது வினவை உம்பால் வினவுகின்றேன், நீர் சாவதானமாய் அவ் வினவிற்கு விடை கூறவேண்டும். ஹே குழந்தாய்! கார்க்கி இங்ஙனங்கூறிய போது யாஞ்ஞவற்கியர் அக்கார்க்கியைநோக்கி ஹே கார்க்கியே! கம்பீரமாய் நின் இரண்டாவது வினவை வினவுதி. ஹே மைந்த! இங்ஙனம் யாஞ்ஞவற்கிய முனி வர் கூறியவுடன் அந்தக் கார்க்கியானவள் முதல் வினவின்கண் சூத்திராத்மாவின் ஆதாரம் யாது கேட்டனளோ, அதனையே மீண்டும் இரண்டாவது முறை கேட்ட னள். யாஞ்ஞவற்கியரும் முதல் வினவின் விடையின்கண்ணே எந்தச் சூத்திர ஆன்மாவின் அவ்வியாகிருதரூப ஆகாச ஆதாரத்தைக் கூறினரோ, அதனையே இரண்டாவது வினவின் விடையின்கண்ணும் கூறினர்.

சங்கை :—ஹே பகவன்! முதல் வினவை இரண்டாவது முறை செய்வதில் கார்க்கியின் கருத்தியாது?

சமாதானம் :—ஹே குழந்தாய்! கார்க்கியானவள் முதலாவது வினவை இர ண்டாவது முறை செய்ததின் கருத்தைக் கூறுகின்றேன் கேட்பாயாக :—வீடா னது கேவலம் ஸ்தம்பங்களை யாசிரயித்திராது; மற்றோ, ஸ்தம்பங்களையும் சுவரு களையும் ஆசிரயித்திருக்கும். அதுபோல, சூத்திராத்மரூப காரியமும் அவ்வியா கிருதரூப ஆகாசத்தின்கண்ணும் வேறொரு காரணத்தின்கண்ணும் இருக்கவேண் டும் என்னும் கருத்தால் கார்க்கி முதல் வினவை மீண்டும் இரண்டாவது முறை செய்தனள்.

சங்கை :—ஹே பகவன்! அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் முதல் வினவின் விடையை மீண்டும் இரண்டாவது முறையேன் கூறினர்?

சமாதானம் :—ஹே மைந்த! அம்முனிவர் முதல் வினவின் விடையை இரண் டாவது முறை கூறியதின் கருத்தை நீ கேட்பாயாக. சூத்திராத்மாவாகிய காரி யம் அவ்வியாகிருதரூப ஆகாசத்தன்றி வேறொதன் ஆசிரிதமாயுமிராது; மற்றோ, மேகம் கேவலம் பூதாகாசத்தின் ஆசிரிதமாயிருப்பதேபோல, இச்சூத்திராத்மா வாகியகாரியமும் கேவலம் அவ்வியாகிருதரூப ஆகாசத்தின் ஆசிரிதமாயேயிருக்கும் என்னும் கருத்தால், யாஞ்ஞவற்கிய முனிவர் அதன் விடையையே மீண்டும் இரண் டாவது முறை கூறினர். ஹே குழந்தாய்! இவ்வகையாய் விடையை யாஞ்ஞவற் கிய முனிவர் கூறியபோது, அந்தக் கார்க்கியானவள் மீண்டும் யாஞ்ஞவற்கிய முனி வர்பாலிது கேட்டனள் :—ஹே யாஞ்ஞவற்கியரே! அந்த அவ்வியாகிருத ஆகாசம் எதன்கண் குறுக்கும் நெடுக்குமாயிருக்கின்றது? என்னும் இந்த வினவை, வினவு வதிற் கார்க்கியின் அபிப்பிராயமிதுவாம் :—அவ்வியாகிருதரூப ஆகாசத்தின் அதிஷ் டானமாகிய ஆன்மா மனவாக்குகட்கு அவிஷயமாம். ஆகையால், அவ்வான்மாவை யாஞ்ஞவற்கியர் கூறுதிருப்பரேல், அப்பிரதிபைரூபத் தோல்வித்தானத்தை யடை வர்; கூறுவரேல், விப்பிரதிபத்திரூபத் தோல்வித்தானத்தையடைவர். இருவகை யானும் யாஞ்ஞவற்கியர் அபஜயமேயடைவர். அவற்றுள் கூறத் தகுதியாய பொரு ளின் அறியாமையை அப்பிரதிபையென்பர். மாறுபடக் கூறலை விப்பிரதிபத்தி

யென்பர். அபஜயகாரணத்தைத் தோல்வித்தானமென்பர். ஹே குழந்தாய்! இவ்வகை விறுவைக் கார்க்கி செய்தபோது, அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் கார்க்கியை நோக்கிக் கூறியதாவது :—ஹே கார்க்கியே! எல்லாருடைய புத்தி முதலியவற்றின் சாக்ஷியாய் நித்தியமும் அபரோக்ஷமாய ஆன்மரூப அக்ஷரத்தின்கண் அவ்வியாகிருத ஆகாசம் குறுக்கும் நெடுக்கமாயிருக்கும். ஈண்டு அவ்வியாகிருத ஆகாசசப்தத்தால் மூலாஞ்ஞானத்தைக் கவர்ந்துகொள்க. அந்த மூலாஞ்ஞானம் ஜீவனையேனும் ஈச்வரனையேனும் ஆசிரயித்திராது. மற்றோ, ஜீவேச்வர விபாகமற்ற சுத்த சைதன்யத்தை யாசிரயித்திருக்கும். அந்தச் சுத்த சைதன்யரூப ஆன்மா யாண்டும் வியாபகமாம்; உற்பத்தி நாசமற்றதாம். ஆகையால், சுத்த ஆன்மாவே அக்ஷரமாம். அவ்வான்மரூப அக்ஷரத்தை யாசிரயித்து அவ்வியாகிருத ஆகாசமிருக்கும். இப்போது முற்கூறிய அப்பிரதிஞை, விப்பிரதிபத்தி ரூபத்தோல்வித்தானத்தை நீக்கும்பொருட்டு, அநான்மபதார்த்தங்களின் நீக்கவாயிலாய் அக்ஷர ஆன்மாவின் சொரூபத்தை நிரூபணம் செய்வாம் :—ஹே கார்க்கியே! வில்வப்பழத்தைக் குறித்துக் கடம் ஸ்தூலமாம், மலையைக்குறித்தோ அக்கடம் சூக்ஷ்மமாம். இவ்வண்ணம் எவ்வளவு ஸ்தூல சூக்ஷ்ம பதார்த்தங்களுளவோ, அவை யாவற்றினும் இவ்வக்ஷர ஆன்மா விலக்ஷணமாம். திரணம்போல எவ்வளவு குறுகிய பதார்த்தங்களுளவோ, அங்ஙனமே பனைமரம்போல எவ்வளவு நீண்ட பதார்த்தங்களுளவோ, அவை யாவற்றினும் இவ்வக்ஷர ஆன்மாவிலக்ஷணமாம். அக்கினியைப்போல எவ்வளவு சிவப்புவர்ணமுடைய பதார்த்தங்களுளவோ, அவையாவற்றினும் இவ்வக்ஷர ஆன்மா விலக்ஷணமாம். ஜலம்போல எவ்வளவு சிநேகமுடைய பதார்த்தங்களுளவோ, அவை யாவற்றினும் இவ்வக்ஷர ஆன்மா விலக்ஷணமாம். நிழற்கொப்பான பூமியைப்போல எத்துணைக் கறுப்பு வர்ணமுடைய பதார்த்தங்களுளவோ அவை யாவற்றினும் இவ்வக்ஷரான்மா விலக்ஷணமாம். தமால விருக்ஷத்தைப்போலக் கறுப்பாயும் இருள்போல விழிகளைத் தடைப்படுத்துவதாயும் உள்ள எத்துணைப் பதார்த்தங்களுளவோ, அவை யாவற்றினும் இவ்வக்ஷரான்மா விலக்ஷணமாம். இவ்வக்ஷரான்மா செல்கையற்றதாமாதலின், நடையுடை வாயுவினும் விலக்ஷணமாம். இவ்வக்ஷர ஆன்மா துவாரமற்றதாதலின், துவாரமுடைய ஆகாசத்தினும் விலக்ஷணமாம். இவ்வக்ஷரான்மா அமூர்த்தமாம்; சங்கமற்றதாம்; ஆகையால், மூர்த்தமாய்ச சங்கமுடையதாய தேயுவினும் விலக்ஷணமாம். இவ்வக்ஷரான்மா மதுரம் முதலிய இரசங்களற்றதாம; ஆகையால், மதுர ரசமுடைய ஜலத்தினும் விலக்ஷணமாம். இவ்வக்ஷரான்மா கந்தமற்றதாம்; ஆகையால், கந்தமுடைய பிருதிவியினும் விலக்ஷணமாம். ஹே கார்க்கியே! இவ்வக்ஷரான்மாவின் சொரூபம், பஞ்ச ஞானேந்திரியமுமன்றும; பஞ்சகர்மேந்திரியமுமன்றும்; மனம், புத்தி, சித்தம், அகங்காரமென்னும் அந்தக்கரண சதுஷ்டயமுமன்றும்; பிராணன், அபானன், சமானன், வியானன், உதானன் என்னும பஞ்சப் பிராணனுமன்றும்; மோக்ஷபரியந்த மிருப்பதாய் இரண்டுலோகத்தினும் கமனஞ்செய்யும் சூக்ஷ்மசரீரமுமன்றும்; அத்விதீய ஆன்மாவைப் பேதப்படுத்துவதாய அவித்தைரூபக் காரணசரீரமுமன்றும். ஹே கார்க்கியே! இவ்வக்ஷ

ஆன்மா கேவலம் உள்ளிலேயே யிருக்குமாயின், வெளியிலுள்ள பதார்த்தங்களை யாவர் விளக்குவர். இவ்வக்ஷரான்மா கேவலம் வெளியிலேயே இருக்குமாயின், உள்ளிலுள்ள பதார்த்தங்களை யாவர் விளக்குவர். ஆன்மாவினும் வேறாய சர்வ பதார்த்தங்களும் ஜடரூபங்களாம். ஆகையால், அவற்றினிடத்தே பிரகாசத்தன்மை சம்பவியாது. இவ்வக்ஷரான்மா தமது சொப்பிரகாசரூபத்தால் உள்ளிலும் வெளியிலுமுள்ள சர்வபதார்த்தங்களையும் ஒளிர்விக்கும். ஆகையால், யாவற்றிற்கும் சாக்ஷியாய அக்ஷர ஆன்மா உள் வெளித்தன்மையற்றதாம். இவ்வக்ஷர ஆன்மா நிர்விகார அசங்கமாம்; ஆதலின், போக்தாத் தன்மையும போக்கியத் தன்மையும் அற்றதாம். ஹே கார்க்கியே! ஆகாசத்தின்கண் மேகங்களின் சமூகமும் அந்தகாரமும் பிரதீதியாவதே போலவும், இரஜ்ஜுவின்கண் சர்ப்பதண்டாதிகள் பிரதீதியாவதேபோலவும், இவ்வக்ஷர ஆன்மாவின்கண் இவ்வுலகமெலலாம பிரதீதியாம. கருத்திதுவாம் :—மேகாதிகளால் ஆகாசபேதம் உண்டாகாததே போலும், கற்பித சர்ப்பாதிகளால் இரஜ்ஜுவின் பேதமுண்டாகாததே போலும், கற்பிதப் பிரபஞ்சத்தால் அதிஷ்டானரூப அக்ஷர ஆன்மாவின் பேதம உண்டாகமாட்டாது. ஆகையால், அக்ஷர ஆன்மா சர்வபேதமு மற்றதாம் ஹே குழந்தாய்! இத்துணை கூறியதால் யாஞ்ஞவற்கிய முனிவர் உபாதியற்ற அக்ஷர ஆன்மாவின் சொரூபத்தைக் கூறியதாம். அவ்வக்ஷர ஆன்மாவின் சொரூபம் எவருடைய சித்தத்தின்கண்ணே பதியவருவதில்லையோ, அவர்கட்கு அநுக்கிரகம் செய்யும் பொருட்டு மாயாவிசிஷ்ட அந்தர்யாமியை யறியும் லிங்கங்களைக் காண்பிக்கின்றார் :—அப்பிரத்தியக்ஷ பதார்த்தத்தைக் காண்பிப்பதை லிங்கமென்பர். மலையின்கண்ணே அபபிரத்தியக்ஷமாகிய தீயைத் *தூமலிங்கமானது அறிவிக்கும். ஹே கார்க்கியே! தாசன் நியமமாய் இராஜாவின் ஆஞ்ஞையின்கண்ணே இருபபதேபோல, இச்சூரிய சந்திரரும் நியமமாய் ஜகத் வியவகாரத்தை நடத்துவர். ஆதலின், எப்பரமான்மாவின் ஆஞ்ஞையினால் இச்சூரிய சந்திரர் நியமமாயிருக்கின்றனரோ, அச்சர்வஞ்ஞ பரமான்மதேவரே சூரிய சநதிரரின் அதிபதியாவர் என்றறிந்து கொள்ளலாமன்றோ? ஆகையால், சூரிய சநதிரரின் நியமமாய பிரவிருத்தி அநதர்யாமியை யறிவிப்பதாய லிங்கமாம. ஹே கார்ககியே! எவ்வெபபொருள்கள் குருத்வ தர்மமுடையனவாமோ, அவை ஓராதார முடையனவன்றாயின் கீழே வீழ்ந்துபோம். குருத்வ (கனத்தன்மை) தர்மமுடைய வஸ்திராதிகள் புருஷரூப ஆதாரமின்றிப் பூமியின்கண்ணே விழுவதேபோலும். அங்ஙனமே சமபூரணப் பூதபபிராணிகளின் பாரத்தைத்தரிக்கும் பிருதிவியும, சுவர்க்கமும் குருத்வதரும முடையனவேயாம். ஆனால், அவற்றிற்குக் கீழ்வீழ்தலாந் தன்மையின்றாம். ஆகையால், யாரோ ஒரு சர்வஞ்ஞ பரமான்ம தேவர் பிருதிவியையும சுவர்க்கத்தையும் தரிக்கின்றாரென அறிந்துகொள்ளக் கிடந்ததன்றோ? ஆகையால, குருத்வதருமமுடைய பிருதிவியின் திதியும் சுவர்க்கத்தின்திதியும பரமான்மாவை யறிவிக்கும் லிங்கமாம். ஹே கார்க்கியே! அரசனால் ஏவப்பட்ட சேவகன் நியமமாய்க் காரியம் செய்வன், அது

---

* தூமம்=புகை.

போல இமைகொட்டல் முதலாய்ச் சம்வற்சர (வருஷ) பரியந்தம் எத்துணை முகூர்த்தம், பிரஹரம், தினம், பக்ஷம், மாதம் இருதுவடிவ காலங்களுளவோ, அனை நியமமாய்ச் சர்வபூதப் பிராணிகளின் ஹிதத்தையும் அஹிதத்தையும் செய்யும்; சர்வ பதார்த்தங்களின் ஆயிஷையும் கணக்கிடும்; ஆதலின், யாரோ ஒரு சர்வஞ்ஞ பரமான்மதேவர், காலத்தை ஏவுபவராய் இருக்கின்றாரெனக் கொள்ளக்கிடந்ததன்றோ? ஆதலின், நியம பூர்வகமாய காலப்பிரவிருத்தியும் பரமான்மாவை யறிவிக்கும் லிங்கமாம். ஹே கார்க்கியே! ஹிமாலயம் முதலிய பர்வதத்தினின்று முண்டாய வாஹினிகையாய கங்காதி நதிகள் உற்பத்திகாலத்தே எங்கெக்கிழக்கு முதலிய திசைகளிற் சென்றனவோ, அவ்வத்திசைகளில் இன்று வரையும் நியமமாய்ப் பிரவாகம் சென்று கொண்டேயிருக்கின்றன. ஒருகாலும் அவற்றிற்கு மாறுபதன்மையுண்டாவதில்லை. ஆகையால், ஒரு சர்வஞ்ஞ பரமான்மதேவர் கங்கை முதலிய நதிகளை நியாயமாய்ச் செலுத்துபவர் என அறிந்துகொள்ளலாமன்றோ? ஆகையால், கங்காதி நதிகளின் நியமமாகிய பிரவாஹமும் அந்தரியாமியாய பரமான்மாவை யறிவிக்கும் இலிங்கமாம். ஹே கார்க்கியே! சாஸ்திர ரீதியாய்த் தானம் செய்யும் தர்மாத்மாவாய புருஷனைப் பிராமாணிக சிஷ்டபுருஷர் ஸ்துதி செய்வர். அந்தத் தர்மாத்மாவாய புருஷனைச் சிஷ்டபுருஷர் ஆசிரயிப்பர். எப்புருஷன் பிரமாதத்தால் தீதாய சூதுமுதலிய காரியத்தே பொருளை விரயம் செய்வனோ, அப்புருஷனைப் பிராமாணிக சிஷ்டபுருஷர் உபேக்ஷையும் நிந்தையும் செய்வர். ஆகையால், கர்ம பலத்தைக் கொடுக்கும் ஒரு சர்வஞ்ஞ பரமான்மதேவர் இருக்கின்றார். அவரது பயத்தால் பிராமாணிக சிஷ்டபுருஷர் தர்மாத்மாவை யாசிரயிக்கின்றனர், அவனைத் துதிசெய்கின்றனர்; சர்வஞ்ஞ பரமான்மாவை யங்கீகரியாதிருப்பின், பிரமாதம் செய்பவனைப் பிராமாணிக சிஷ்டபுருஷர் உபேக்ஷையும் நிந்தையும் செய்வதேபோலத் தர்மாத்மாவை ஏன் செய்வதில்லை என்றறிந்துகொள்ளலாமன்றோ? ஆகையால், இவ்வண்ணமாய பிராமாணிக சிஷ்டபுருஷரின் வியவகாரமும் சர்வஞ்ஞ பரமான்மாவை யறிவிக்கும் இலிங்கமாம். ஹே கார்க்கியே! யாககர்த்தா புருஷரைத் தேவதை யாசிரயிக்கும், சிராத்தாதி கர்மம் செய்யும் புருஷரைப் பிதுர்க்களாசிரயிப்பர். ஆகையால், சர்வ காரியங்களிலும் சமர்த்தராய தேவதைகட்கும் பிதுர்க்கட்கும் மனுஷ்ய அதீன ஜீவனமும் அந்தர்யாமியாய பரமான்மாவை யறிவிக்கும் இலிங்கமாம். ஆகையால், ஹே கார்க்கியே! எவ்வக்ஷர ஆன்மாவை ஆசிரயித்து அவ்வியாகிருத ஆகாசம் இருக்கின்றதென யான் முன்னம் கூறினேனே, அவ்வக்ஷர ஆன்மாவின் ஆஞ்ஞையினாலே இவ்வெல்லாவுலகும் நிலைபெறாநிற்கும். ஹே கார்க்கியே! எவ்வக்ஷர ஆன்மாவை யறியாது எப்புருஷன் யாகதான தப ஹோமமுதலிய அநேக கர்மங்களை, நெடுங்கால பரியந்தம் செய்வனோ, அவ்வஞ்ஞானிக்கு அந்த யாகாதி கர்மங்கள் அழியும் பலனைக்கொடுக்கும். கருத்தியதாவாம்:—என்னது சொரூபத்தை யறியாதியற்றிய சம்பூரண யாகாதி கர்மங்கள் அழியும் பலத்தைக்கொடுக்குமென்னும் நியமத்தை எப்பரமான்மதேவர் செய்தனரோ, அப்பரமான்மதேவரிடத்தே அசம்பாவனை செய்தல் யோக்கியமன்றாம். ஹே கார்க்கியே! கிருமிகளோடுகூடிய நாயை நோக்கி, யாவரும் நாய்க்

ஊகச் சோகிப்பர். அதுபோல, அதிகாரிக்குறிய மனுஷ்ய சரீரத்தையடைந்து இவ் வக்ஷர ஆன்மாவை அறியாது யாவன் இறக்கின்றனனோ, அவ்வஞ்ஞானியானவன் கிருபணனாவன்; யாவராது சோகத்திற்கும் விஷயமாவன். ஹே கார்க்கியே! யாவன் இவ்வக்ஷர ஆன்மாவையறிந்து இச்சரீரத்தைப் பரித்தியாகம் செய்வனோ, அவ் வறிஞன் இவ்வுலகின்கண்ணே கிருதகிருத்தியனாவன். அவனே பிராஹ்மடவேத் தாவாய பிராஹ்மணன். சீடன் கூறல் :—ஹே பகவன்! யாஞ்ஞவற்கிய முனி வர் கார்க்கியின்பொருட்டு எங்ஙனம் அக்ஷர ஆன்மாவின் ஞானத்தை உபதேசித் தாரோ, அங்ஙனம் அக்ஷர ஆன்மாவின் ஞானசாதனங்களை ஏன் உபதேசிக்க வில்லை? ஸ்ரீ குரு கூறல் :—ஹே குழந்தாய்! குருமுகமாய் வேதாந்த சாஸ்திர சிரவணம், மனனம், நிதித்தியாசனம் என்னும் மூன்றும் அக்ஷர ஆன்மாவின் ஞானசாதனங்களாம். அச்சாதனங்களை முன்னர்க் கஹோளப் பிராஹ்மணனை நோக்கி யாஞ்ஞவற்கியர் கூறினரன்றோ? அதனைக் கார்க்கியும் கேட்டுக்கொண் டிருந்தமையின், மீண்டும் கார்க்கியை நோக்கி யாதின்பொருட்டு உபதேசிக்க வேண்டும் என்னுங் கருத்தால் மீண்டுங் கூறவில்லை யென்றுணர்ந்து கொள்ளுதி. அல்லது, யாஞ்ஞவற்கிய முனிவர் பிரஹ்ம சாக்ஷாத்காரரூப பலமுடைய புருஷ னைப் பிராஹ்மணனெனக் கூறினர். அந்தப் பிரஹ்ம சாக்ஷாத்கார ரூபபலம் சிரவணாதி சாதனங்களன்றி யுண்டாகாது; ஆகையால், ஒரு விருத்த குமாரியை நோக்கி இந்திரர் எம்பால் நீ ஒரு வரங்கேட்டுக்கொள் என்றனர், எனவே அந்த விருத்த குமாரியானவள் இவ்வரத்தைக் கேட்டனள் :—எனது அருமைக் குமாரன் பொற்பாத்திரத்தே பாற்குடிக்குமாறு வரம் வேண்டுமென்றனள், எனவே அவ் விருத்தகுமாரி, பதி, புத்திரன், தனம் என்பவை முதலிய சர்வ பதார்த்தங்களையும் கேட்டதாயதன்றோ? அதுபோலப் பிரஹ்ம சாக்ஷாத்கார ரூபபலத்தைக் கூறியது கொண்டு, யாஞ்ஞவற்கிய முனிவர் சம்பூரண சிரவணாதி சாதனங்களைக் கூறிய தாகத் தெரிந்து கொள்ளல்வேண்டும்.

சங்கை :—ஹே பகவன்! மாயாவிசிஷ்ட அந்தர்யாமியின் வடிவத்தை முன் னர் யாஞ்ஞவற்கிய முனிவர் உத்தாலகரின் பொருட்டுக் கூறினரன்றோ? கார்க்கி யும் கேட்டுக்கொண்டு தானேயிருந்தனள். இப்போது கேட்காமலே கார்க்கியை நோக்கி மீண்டும் அந்தர்யாமியின் வடிவத்தை ஏன் கூறினர்?

சமாதானம் :—ஹே மைந்த! எவ்வபிப்பிராயத்தால் யாஞ்ஞவற்கிய முனிவர் மீண்டும் அந்தர்யாமியின் சொரூபத்தை கார்க்கியைநோக்கிக் கூறினரோ, அவ் வபிப்பிராயத்தை நீ கேட்பாயாக, உத்தாலகப் பிராஹ்மணரின் பொருட்டுச் செய்த இரண்டாவது வினாவின் விசாரத்தில் எவ்வந்தர்யாமியைக் கூறினரோ, அவ்வந்தர் யாமி அக்ஷர ஆன்மாவினும் வேறன்றாம்; மற்றோ, அக்ஷர ஆன்மாவின் வடிவு மாம். கருத்திதுவாம் :—சுத்த ஆன்மாவை அக்ஷரமென்பர். அதுவே மாயாவடிவு உபாதியைத் தழுவி உலகின் உற்பத்தியையும், ஸ்திதியையும், லயத்தையும், நியமனத்தையும், பிரவேசத்தையும், மற்றைய காரியங்களையும் செய்யும். அப்போது அவ்வக்ஷர ஆன்மா அந்தர்யாமி யெனப்படும். ஆதலின், அக்ஷர ஆன்மாவினும்

அந்தர்யாமி வேறன்றாம். இவ்வர்த்தத்தை யுணர்த்தும்பொருட்டு, யாஞ்ஞவற்கிய முனிவர் மீண்டும் அந்தர்யாமியின் வடிவத்தைக் கூறினர் என்று உணர்க. யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே கார்க்கியே! இவ்வக்ஷர ஆன்மா நேத்திர முதலிய சர்வ திருசியப் பிரபஞ்சங்களின் சாக்ஷியாம். ஆகையால், அவ்வக்ஷர ஆன்மாவை நேத்திர முதலிய திருசியப் பிரபஞ்சங்கள் உணரா. எங்ஙனம் சுவரினும் கடம் வேறாமோ, அங்ஙனம் திருஷ்டா, சுரோதா, மந்தா, விஞ்ஞாதா ரூபமாய இச்சீவான்மா அவ்வக்ஷர ஆன்மாவினின்றும் வேறன்றாம்; மற்றோ, அக்ஷர ஆன்ம வடிவமாம். ஆகையால், ஹே கார்க்கியே! ஸ்தூல சூக்ஷ்ம பிரபஞ்சரூப விக்ஷேபத்தின் காரணமாய ஆன்மாவை மறைக்கும் அவ்வியாகிருத ஆகாசமானது இவ்வக்ஷர ஆன்மாவின்கண்ணே யிருக்கும். ஹே சிஷ்ய! யாஞ்ஞவற்கிய வடிவ மேகத்தினின்றும் உண்டாய வாக்கியவடிவ அமிர்தமானது சிரத்தை யுடைய புருஷர்களின் செவிகளின் தாபத்தைச் சேதிப்பதாம்; அதனால், அத்தியந்தம் துர்லபமாம். அத்தகைய அமிர்தவடிவ வசனத்தை அக்கார்க்கியானவள் கேட்டு பரமாநந்தத்தை மிகவும் அடைந்தனள். கருணையோடு கூடிய அந்த கார்க்கியானவள் சர்வ பிராஹ்மணர்களையும் நோக்கி இவ்வண்ணம் கூறத்தொடங்கினள். கார்க்கி கூறல் :—ஹே பிராஹ்மணர்களே! நீங்கள் யாவரும் கூடிய இசசபையின் கண் கார்க்கியாகிய யான் பக்ஷபாதமற்றவளாய் ஒரு வசனத்தைக் கூறுகின்றேன். அதனை நீங்கள் யாவரும் பொறுமையுடன் ஒருமையாய்க் கேட்பீர்களாக; இவ்வுலகின்கண்ணே யான் அநேகம்வகையாய புருஷர்களைக் கண்டிருக்கின்றேன்; ஆயினும், யாஞ்ஞவற்கியருக்குச் சமானமாய் ஒருவரையும் யான் கண்டதில்லை. இப்போது ஆன்ம ஞானத்தோடுகூடிய யாஞ்ஞவற்கியரே புருஷர் என்னும் அர்த்தத்தை உணர்த்தும்பொருட்டு, ஆன்மஞானமற்ற அஞ்ஞானிகளின் நிந்தை காண்பிக்கப்படுகின்றது. ஹே பிராஹ்மணர்களே! இவ்வுலகின்கண்ணே யான் சில புருஷரை வெண்மையாய வீட்டுக்குச சமானமாய்க் கண்டுளேன். கருத்திதுவாம் :—எங்ஙனம் வெள்ளிய வீடானது தூரத்தில் ரமணீய மாயிருக்குமோ, உள்ளே ஜடத்தன்மையோடு கூடியிருக்குமோ அங்ஙனம் சில புருஷர் தூரத்தில் ரமணீயமாய்க் காணப்படுகின்றனர்; உள்ளே தமோகுணத்தால் ஜடத்தன்மையோடுகூடியிருக்கின்றனர்.* ஹே பிராஹ்மணர்களே! இவ்வுலகின்கண் யான் சில புருஷரைப் பாரஞ்சுமக்கும் எருதிற்குச் சமானமாய்க் கண்டுளேன். கருத்திதுவாம் :—எங்ஙனம் எருதானது தனக்குப் பயனின்றியே பாரத்தை எடுக்குமோ அங்ஙனம சில புருஷர் சாஸ்திரங்களைப் படித்து அந்நியர்களுக்கோ சாஸ்திரார்த்தங்களை உபதேசிக்கின்றனர். ஆனால், தமது மனத்தின்கண்ணே அணுமாத்திரையும் சாஸ்திரார்த்தத்தை தரிக்கார். ஆகையால், பயனின்றியே சாஸ்திர பாரத்தை எடுப்பர். ஹே பிராஹ்மணர்களே! இவ்வுலகின்கண் யான் சில புருஷரைக் கிளிக்குச் சமானமாய்க் கண்டுளேன். கருத்திதுவாம் :—கிளியானது சுந்தரமான சப்தங்களையே உச்சரிக்கின்றது. ஆனால், அச்சப்தங்களின் அர்த்தத்தை அறிவதில்லை அதுபோல, சில புருஷர் சுந்தர சப்தங்களையே உச்சரிக்கின்றனர். ஆனால், அச்சப்தங்களின் அர்த்தங்களை அறிகின்றிலர். ஹே பிராஹ்மணர்களே! இவ்வுலகின்கண்ணே

யான் சில புருஷரை விசால நேத்திர முடையவர்களாயினும் குருடருக்குச் சமான மாயிருப்பதைக் கண்டுளேன். கருத்திதுவாம் :—எங்ஙனம் குருடன் அத்தியந் தம் சமீபத்திலிராநின்ற பதார்த்தங்களையும் காண்பதில்லையோ, அங்ஙனம் சில புருஷர் அத்தியந்தம் சமீபமாய இருதய தேசத்தின்கண் இராநின்ற ஆத்மாவை யும் அறிந்திலர். ஹே பிராஹ்மணர்களே! இவ்வுலகின்கண்ணே யான் சில புருஷரைச் சித்திரத்திற்றீட்டிய மூர்த்திகட்குச் சமானமாய்க் கண்டுளேன். கருத் திதுவாம் :—சித்திரத்திற்றீட்டிய மூர்த்தி காண்பதற்கு மிகவும் அழகாயிருக்கும். ஆனால், ஏதாவது காரியம் செய்வதிலோ, அது சாமர்த்தியமற்றதாம்; அதுபோல, சில புருஷர் பார்ப்பதற்கு மிகவும் அழகாயிருப்பர்; ஆனால், ஏதாவது காரியத்தின் கண்ணே வல்லமையில்லாதவராவர். ஹே பிராஹ்மணர்களே! இவ்வுலகின்கண்ணே யான் சில புருஷரை அபத்தியபோஜனத்திற்குச் சமானமாய்க் கண்டுளேன். கருத் திதுவாம் :—எங்ஙனம் அபத்திய போஜனமானது முதலில் சுககாரணமாமோ, பரிணாமகாலத்தில் துக்ககாரணமாமோ, அங்ஙனம் சில புருஷர் சபையின்கண் உலகருக்குச் சத்திய அர்த்தத்தை உபதேசித்துச் சிறிதுமாத்திரம் பிரசன்னத்தன் மையை உண்டாக்குவர். ஏகாந்ததேசத்தின்கண் அசத்திய அர்த்தத்தை உப தேசித்துத் துக்ககாரணமாவர். ஹே பிராஹ்மணர்களே! இவ்வுலகின்கண் யான் சில புருஷரைப் புலிக்குச் சமானமாய்க் கண்டுளேன். கருத்திதுவாம் :—எங்ஙனம் புலியானது மான் முதலியவற்றைக் கொல்லுமோ, அங்ஙனம் சில புருஷர், மனம், வாக்கு, காயங்களால் எப்போதும் ஜீவர்கட்கு ஹிம்சையைச் செய்வர். ஹே பிராஹ்மணர்களே! இவ்வுலகின்கண் யான் சில புருஷரை மதுக்குடித்து மதம் பிடித்த குரங்குக்குச் சமானமாய்க் கண்டுளேன். கருத்திதுவாம :—எங்ஙனம் மதுக்குடித்து மதம்பிடித்த குரங்கானது அத்தியந்தம் சஞ்சலமாயிருக்குமோ, அங்ஙனம் சில புருஷர் அஞ்ஞானமாகிய மதுவைக்குடித்து, சாஸ்திர விருத்தமாய் நானாவகையான தொழிலைச்செய்வர். ஹே பிராஹ்மணர்களே! இவ்வுலகின் கண்ணே யான் சில புருஷரைக் காமரூப சத்துரு வசமிருப்பதாய்க் கண்டுளேன். சில புருஷரைக் குரோதரூப சத்துரு வசமிருப்பதாய்க் கண்டுளேன். சில புரு ஷரை லோபம், மோகமுதலிய சத்துருக்களின் வசமிருப்பதாய்க்கண்டுளேன். ஹே பிராஹ்மணர்களே! வேதங்களையும், வேதத்தின் அங்கங்களையும் அறிந்துள்ள தெய்வ புருஷனும், சத்துவம், ரஜசு, தமசுயென்னு முக்குணங்களோடு கூடியவனா யிருப்பதால், விஷயங்களிடத்தே விருப்புடையவனாக விருப்பதாயே கண்டுளேன். அத்தெய்வ புருஷனுக்குக் கனவின்கண்ணும், நனவின்கண்ணும் சிறிதுமாத்திரை யேனும் விலக்ஷணத்தன்மையின்றாம். கருத்திதுவாம்:—நனவின்கண் நித்திரையின் விரோதித் தன்மையிருப்பதுவே கனவினும் விலக்ஷணத் தன்மையாம். அவ்விலக் ஷணத் தன்மை முக்குண அபிமானிகளாகிய தேவதைகட்கு நனவின்கண்ணே சம்பவியாது. ஏனெனின், அத்தேவதைகள் அத்விதீய ஆத்ம ஞானத்தால் தமது அஞ்ஞானத்தை நீக்கிலர். எதுவரை ஜீவர்கட்கு அத்விதீய ஆத்மாவின் சாக்ஷாத் காரம் உண்டாகவில்லையோ, அதுவரை அஞ்ஞான நிவிருத்தியு முண்டாகாது. முக்குண அபிமானியாய தெய்வ புருஷனுக்குப் பிராஹ்மஞானம் உண்டாயினும்,

அஞ்ஞானரூப நித்திரையின்கண்ணே யுண்டாகும் அந்த ஞானத்தால் அவனுடைய மூல அஞ்ஞானம் நீங்கமாட்டாது. ஹே பிராஹ்மணர்களே! இவ்வுலகின்கண் எவ்வளவோ புருஷர் வியாகரண சாஸ்திரத்தைப் படித்துளார். அந்த வியாகரணத்தால் பதார்த்தங்களின் ஞானத்தில் அந்தப் புருஷர்களின் புத்தி குசலமாம். எவ்வளவோ புருஷர் மீமாம்சா சாஸ்திரத்தைப் படித்துளார்; அம்மீமாம்சா சாஸ்திரத்தால் வாக்கியார்த்த ஞானத்தில் அப்புருஷர்களின் புத்தி குசலமாம். சிலபுருஷர் நியாய சாஸ்திரத்தைப் படித்துளார். அந்த நியாய சாஸ்திரத்தால் பிரமாண ஞானத்தில் அந்தப் புருஷர்களின் புத்தி குசலமாம். சில புருஷர் தர்ம சாஸ்திரங்களைப் படித்துளார். அந்தத் தர்மசாஸ்திரத்தால் தர்ம அதர்ம ஞானத்தின்கண் அப்புருஷர்களின் புத்தி குசலமாம். சில புருஷர் இவ்வண்ணம் அந்நிய சாஸ்திரங்களேயும் படித்துளார். அவ்வப் பொருளின்கண் அப்புருஷர்களின் புத்தி குசலமாயிருப்பதைக் கண்டுளேன். ஆனால், அத்விதீய பிராஹ்மத்தைப் பிரதிபாதிக்கும் வேதாந்த சாஸ்திரங்களின் அர்த்தத்தின்கண் அப்புருஷர்களின் புத்தியின் குசலத் தன்மையை யான் கண்டதில்லை. ஹே பிராஹ்மணர்களே! இவ்வுலகின்கண்ணே எப்புருஷருக்கு வேதாந்த சாஸ்திர அர்த்தத்தின் ஞானமிருக்கின்றதோ, அதுவும் பூரணமாயில்லை. மற்றோ சிறிதேயாம். அச்சிறிய ஞானத்தால் சம்சய நிவிருத்தி யுண்டாகமாட்டாது. ஹே பிராஹ்மணர்களே! சில புருஷர்கட்குச் சம்பூரண வேதாந்த சாஸ்திரார்த்த ஞானமிருப்பினும், காமக் குரோதாதிப பிரதி பந்தங்களின் வசத்தால் அந்த ஞானம் அப்புருஷர்களின் மூல அஞ்ஞானத்தை நீக்குவதில் சமர்த்துடையதாகாது. அக்கினியின் சம்பந்தத்தால் ஆற்றலே யிழந்த தானியங்கள் எப்பலத்தையும் உற்பன்னமாக்க மாட்டாததேபோல, காமக்குரோதாதி பிரதி பந்தங்களோடு கூடிய ஞானமானது அப்புருஷர்களின் மூல அஞ்ஞானத்தை நிவிருத்தி செய்யமாட்டாது.

இப்போது காமக்குரோதாதிகளே அபேக்ஷித்து, அகங்காரத்தின்கண் ஞானத்தின் முக்கியப பிரதிபந்தத்தன்மை காண்பிக்கப்படும்:—ஹே பிராஹ்மணர்களே! அபராதிபாய சோர புருஷர்களின் சிறைச்சாலையானது ஸ்தம்பங்களே ஆசிரயித்திருக்கும். அத்தம்பங்களுள்ளும் ஒரு மத்திய ஸ்தம்பமானது முக்கியமாம். வேறு கோணங்களிலுள்ள ஸ்தம்பங்கள் அமுக்கியங்களாம். அதுபோல, அஞ்ஞானிகளின் சிறைச்சாலேயாய இசசமுசாரமானது காமக் குரோதாதி ஸ்தம்பங்களே ஆசிரயித்திருக்கும். அத்தம்பங்களினுள்ளும், இவ்வகங்காரம் மத்திய மூலஸ்தம்பமாம். காமக்குரோதாதிகள், கோணங்களிலிருக்கும் ஸ்தம்பங்களாம். கோண ஸ்தம்பங்கள் நசித்தும் எதுவரை மூலஸ்தம்பமானது இருக்குமோ, அதுவரை வீட்டிற்கு அழிவுண்டாகாது. அதுபோல, காமக் குரோதாதிகளின் நீக்கமுண்டாயினும், எதுவரை இவ்வகங்காரம் உளதாமோ, அதுவரை இச்சமுசாரத்தின் நிவிருத்தி யுண்டாகமாட்டாது; ஆகையால், ஆத்ம ஞானத்தின்கண் முக்கியப் பிரதிபந்தகமாம். இப்போது அகங்காரம் யாண்டும் வியாபித்திருத்தல் என்பதைக் காண்பிக்கப்படும்:—ஹே பிராஹ்மணர்களே! இவ்வகங்காரம் சர்வ ஜீவர்களிடத்தும் இருக்கின்றது. அகங்காரமற்ற எச்சீவர்களையும் யான் கண்டிலேன். ஏனெனின்

இந்த ஜனக ராஜாவின் யாகத்தில் சர்வதேசத்திலுள்ள அறிஞர்களாகிய பிராஹ்மணர்கள் யாவரும் ஒருங்கு கூடியுள்ளார். அவருள், எவ்வளவோ பிராஹ்மணர்கள் காமதோஷம் ஒன்றற்றவரா யுள்ளார், எவ்வளவோ பிராஹ்மணர்கள் காமம், குரோதமென்னும் இரண்டு தோஷமற்றவராயுள்ளார், எவ்வளவோ பிராஹ்மணர்கள் காமம், குரோதம், லோபம், மோக மென்பதாதி யனேகம் தோஷமற்றவராயுள்ளார். ஆனால், அகங்காரமற்ற ஒரு பிராஹ்மணரையும் யான் காணேன்; ஆகையால், அகங்கார மாண்டும வியாபகமாம். இப்போது அகங்காரம் அறிய முடியாததென்பது காண்பிக்கப்படும்:—ஹே பிராஹ்மணர்களே! அகங்காரத்தினும் வேறாய காமம், குரோதம், லோபம், மோகம என்பனவாதியாய தோஷங்களில் புத்திமானானவன் சாஸ்திரப பிரமாணத்தாலும் தனது அனுபவத்தாலும் துக்க காரணத்தன்மை யுளதென வறிந்து, அக்காமாதிகளைப் பரித்தியாகம் செய்வன். ஆனால், அகங்காரத்தின்கண் உள்ள துக்ககாரணத் தன்மையைச் சாஸ்திரப் பிரமாணத்தாலேனும், அனுபவத்தாலேனும் அறியமுடியாது. ஏனெனின், சாவ சாஸ்திரங்களையும உணாந்த அறிஞனிடத்தும் அகங்காரம் காணப்படுகின்றது. சாஸ்திரப பிரமாணததாலும், அனுபவப பிரமாணத்தாலும அறிஞனானவன் அகங்காரததின்கண்ணே துக்க காரணத்தன்மையை அறிந்திருப்பானாயின், மீண்டும ஏன் அகஙகரிபபன். ஆகையால், அநதச் சாஸ்திரம உணாநத புருஷன் அகங்காரததின்கண் துககாரணதத தன்மையை அறியான். இவ்விஷயத்தே சாஸ்திர வேத்தாக்களாய நீங்கள் யாவருமே திருஷ்டாநதமாவீர். இப்போது அகங்காரததின்கண் இகலோக பரலோக துக்க காரணததன்மை காண்பிக்கபபடும:—ஹே பிராஹ்மணாகளே! எங்ஙனம கடகுடித்த புருஷன் விபரீத தரிசியாவனோ, அங்ஙனம அகங்கார வடிவமாகிய கடகுடிதது, இபபுருஷன் விபரீத தரிசியாயிருபபன். அவ்விபரீத தரிசனத்தால இவ்வகங்காரியானவன் தனது மாதா பிதாக்களையும், மறறைய உறவினரையும், தேவதைகளையும, பண்டிதப் பிராஹ்மணர்களையும் நிராதரஞ் செய்வன். கிருஷ்ண சாபபததிறகுச சமானமாய் விரைவிலே மரணகாரணமாய ராஜாவையும, அகங்காரியானவன் அவமதிப்பன. உறங்காநின்ற சர்பபத்திறகுச் சமானமாய் மரணகாரணமாய் இராநின்ற அறிஞாகளாகிய பிராஹ்மணர்களையும, க்ஷத்திரியாகளையும, வைசியாகளையும் அகங்காரியானவன் அவமதிப்பன். இவ்வண்ணம் சர்வஜீவர்களையும் அவமதிககும் அகங்காரியானவன் இவ்வுலகின்கண்ணே விரைவாகவே பிராணாந்த துக்கத்தை யடைவன். சர்வப பிராணிகளையும் அவமதிதது அதனாலுண்டாய பாவ கர்மத்தால் அகங்காரியானவன் இறநதபின் இரௌரவ நரகததையடைவன். ஆகையால், இகலோகத்தின்கண்ணும், பரலோகத்தின்கண்ணும் அகங்காரமேஜீவர்கட்குத் துக்ககாரணமாம். ஹே பிராஹ்மணர்களே! இவ்வண்ணமாய அகங்கார தோஷம் இநத யாஞ்ஞவற்கிய முனிவரிடத்திலில்லை. ஆகையால், காமக்குரோதாதிதோஷங்களுமயாஞ்ஞவற்கியரிடத்தின்றும். கருத்திதுவாம்:—வியாபகமாய் இராநின்ற அக்கினி இலதாயின், வியாப்பியமாய் இராநின்ற தூமம் ஆண்டிலதாகும. அதுபோல, வியாபக அகங்காரமிலதாயின், வியாப்பியக் காமக்குரோதாதிகள் ஆண்டிரா. ஆகையால் ஹே பிராஹ்மணர்களே!

மூவுலகின்கண்ணும் இந்த யாஞ்ஞவற்கியா ஒருவரே புருஷர், யாஞ்ஞவற்கியருக்குச் சமானமாய் எப்புருஷரும் இலராவர். ஏனெனின், சுருதியின்கண் யாண்டும் பூரணமாயிருப்பவனைப் புருஷனென்னப்பட்டுளது. இந்தப் பிரஹ்ம வேத்தாவாய யாஞ்ஞவற்கிய முனிவரால ஸ்தூல சூக்ஷ்மரூப சம்பூரண ஜகத்தானது பூரணமாயிருக்கின்றது; ஆகையால், இந்த யாஞ்ஞவற்கியர் ஒருவரேபுருஷராவர். கருத்திதுவாம:— சுருதியானது பிரஹ்மத்தை யாண்டும் பூரணமெனக் கூறியிருக்கிறது. பிரஹ்மத்தையுணர்ந்தவன் பிரஹ்மரூபமேயாவன் என்னுஞ் சுருதியின்கண் பிரஹ்மத்தையுணர்ந்தவனைப் பிரஹ்மரூபனெனக கூறியிருக்கின்றது; ஆகையால, பிரஹ்ம வேத்தாவாகிய யாஞ்ஞவற்கிய முனிவரிடத்தே யாண்டும் பூரணத்தன்மை சம்பவிக்கும். ஹே பிராஹ்மணர்களே! அத்தகைய இந்த யாஞ்ஞவற்கியருடைய சொரூபத்தைக் கார்க்கியாகிய யான் சாஸ்திரப் பிரமாணத்தாலும, எனது அநுபவத்தாலும நிச்சயஞ் செய்துளேன். ஹே பிராஹ்மணர்களே! வேறொரு ஆச்சரியத்தையும் நீங்கள் பாருங்கள். மாமிசமயமாய் இராநின்ற சக்ஷுவாலும், வாக்காலும ஆத்மா அறியமுடியாததாம் என்னுஞ் சுருதி வாக்கியமானது அசத்தியம்போல எனக்குத் தோற்றுகிறது. ஏனெனின், சுருதியோ, யாண்டும பூரணமாய புருஷன் மாமிசமய நேத்திரங்களால் அறியப்படான் எனக கூறியிருக்கின்றது. கார்க்கியாகிய யான் இம்மாம்சமய நேத்திரங்களால் யாண்டும பூரணமாய யாஞ்ஞவற்கிய புருஷரை என தெதிரிலேயே பார்க்கின்றேன்; ஆகையால், அச்சுருதி வாக்கியத்தின்கண் சத்தியத்தன்மையின் சம்பாவனையின்றாம். ஹே பிராஹ்மணர்களே! வாஸ்தவமாய் விசாரித்துப் பார்க்கினோ, அச்சுருதி வாக்கியம் சத்தியமேயாம். ஏனெனின், மாமிசமய நேத்திரங்களால் நீங்கள் யாவரும் யாஞ்ஞவற்கியரின் வாஸ்தவ சொரூபத்தை அறிந்திலீர். கார்க்கியாகிய யானோ சாஸ்திரப் பிரமாணத்தோடும், உள்ளனுபவத்தோடும கூடிய நேத்திரங்களால் யாஞ்ஞவற்கியரின் வாஸ்தவ சொரூபத்தை அறிகின்றேன். கேவலம் மாமசமய நேத்திரத்தால் யானும் அறிந்திலேன்; அவ்வித் தேவதத்தன் என்னும பிரத்திய பிஞ்ஞை ஞானத்தின்கண் அதீத அம்ச ஞானத்தில கேவல நேத்திர இந்திரியத்திற்குக காரணத்தன்மையின்றாம். மற்றோ, பூர்வ சமஸ்காரத்தோடுகூடிய நேத்திர இந்திரியத்திற்குக் காரணத்தன்மையுளது. அதுபோல, இப்பூரண புருஷனுடைய ஞானத்தின்கண்ணும், கேவல நேத்திர இந்திரியத்திற்குக் காரணத்தன்மையின்றாம. மற்றோ, சாஸ்திரப் பிரமாணமும் உள்ளனுபவமும கூடிய நேத்திர இந்திரியத்திற்குக் காரணத்தன்மை யுளது. ஆகையால, முற்கூறிய சுருதிக்கு முரணின்றாம். ஹே பிராஹ்மணர்களே! எந்த மாதா பிதாக்களினின்றும இந்தப் பிரஹ்ம வேத்தாவாய யாஞ்ஞவற்கியா உண்டானாரோ, அந்த மாதா பிதாக்களும் தன்னியர். எப்பிருதிவியின்மீது இந்த யாஞ்ஞவற்கியர் சஞ்சரிக்கின்றாரோ, அந்தப் பிருதிவியும் தன்னியமாம். இச்சபையின்கண்ணே கார்க்கியாகிய எனக்கும், இந்த ஜனக ராஜாவிற்கும், சம்பூரணப பிராஹ்மணர்களாகிய உங்கட்கும், இந்த யாஞ்ஞவற்கிய முனிவரின் தரிசனங் கிடைத்தது; அங்ஙனமே, அவரது வாக்கிய சிரவணமும் கிடைத்தது; ஆகையால, கார்க்கியாகிய யானும் தன்னியை, ஜனக ராஜாவும் தன்னியர், சர்வப் பிராஹ்மணர்களாகிய நீங்களும் தன்னியர். ஹே

பிராஹ்மணர்களே! இவ்வுலகின்கண்ணே யாஞ்ஞவற்கியருக்குச் சமானமாய் ஒரு புருஷரும் முன்னுண்டாகவில்லை; இப்போதும் ஒரு புருஷரும் இல்லை; இனிமேலும் ஒரு புருஷரும் உண்டாகப்போவதில்லை. ஆகையால், ஹே மறையவர்களே! இந்த யாஞ்ஞவற்கியர் சீதள சந்தனத்திற்குச் சமானமானவர், பாற்கடற்குச் சமானமானவர் ஆதலின், அவரை விவாதரூப மதனம் நீங்கள் செய்யாதீர்கள். நீங்கள் அகங்காரத்தால் யாஞ்ஞவற்கியரோடு விவாதம் செய்யின், மிகவும் மதனம் செய்தலால் பாற்கடலில் காலகூடவிஷம் உண்டானதேபோலவும், மிகவும் மதனம் செய்தலால் சந்தனக் கட்டையினின்றும் அக்கினி யுண்டாவதேபோலவும், யாஞ்ஞவற்கிய முனிவரினின்றும் சாபமாகிய காலகூடவிஷமும், சாபரூப அக்கினியும் உண்டாகும். அந்தச் சாபரூப அக்கினியால் பிராஹ்மணர்களாகிய உங்கள் யாவருக்கும் அழிவுண்டாம்; ஆகையால், யாஞ்ஞவற்கியரோடு நீங்கள் விவாதம் செய்யாதீர்கள். மற்றும், இரண்டு லோகங்களிலும் துக்கத்தைக் கொடுக்கும் அகங்காரத்தைப் பரித்தியாகம் செய்து, பிராஹ்மணர்களாகிய நீங்கள் யாவரும் யாஞ்ஞவற்கிய ஆசிரியரை நமஸ்காரம் செய்யுங்கள். ஹே பிராஹ்மணர்களே! ஆன்மாவின் அபரோக்ஷ ஞானமுடையவர் இந்த யாஞ்ஞவற்கியர். இவரோடு பரோக்ஷஞானமுடைய யாம் வீணாகவே விவாதத்தைத் தொடங்கினோம். அவ்விவாதத்தால் நமக்குத் துக்கத்தின் அடைவேயுண்டாம். கருத்திதுவாம்:—உலகின்கண் ஒரு புருஷனுக்கு நேத்திரங்களால், ஸ்ரீ காசியின் அபரோக்ஷ ஞானம் உண்டாய் இருக்கின்றதாக வைத்துக்கொள்ளுங்கள். மற்றொருவனுக்குச் சப்தப் பிரமாணத்தால், ஸ்ரீகாசியின் பரோக்ஷ ஞானமுண்டாய் இருக்கின்றதாக வைத்துக்கொள்ளுங்கள். அந்தப் பரோக்ஷ ஞானமுடைய புருஷன் அபரோக்ஷ ஞானமுடைய புருஷனோடு, ஸ்ரீகாசியின் சொரூப நிர்ணயம் செய்வதில் விவாதித்தல் தகுமா? எங்ஙனம் தகாதோ, அங்ஙனம் ஆன்மாவின் அபரோக்ஷ ஞானமுடைய யாஞ்ஞவற்கியரோடு ஆன்மாவின் பரோக்ஷமுடைய நாம் யாவரும் விவாதம் செய்தல் தகாது. ஹே பிராஹ்மணர்களே! பூஜை செய்வதற்கு யோக்கியமாய ஆன்மஞானரூப சமுத்திரம் இந்த யாஞ்ஞவற்கியர். இவரைத் தாண்டப் பிரதிவாதியாய யாம் விவாதரூபப் பாதத்தால் தீண்டினோம். ஆகையால், நம்மிடத்தே மகாபாவ உற்பத்தியுண்டாகியிருக்கின்றது; அப்பாவ நிவிருத்தியின் உபாயம் வேறொன்றுமின்றாம். ஆனால், யாஞ்ஞவற்கியருக்கு அடிக்கடி நமஸ்காரம் செய்தலே அந்தப்பாவ நிவிருத்தியின் உபாயமாம். ஆகையால், ஹே பிராஹ்மணர்களே! அப்பாவ நிவிருத்தியின்பொருட்டும், மனம் நினைந்த பதார்த்தங்களை யடையும்பொருட்டும், நீங்கள் யாவரும் யாஞ்ஞவற்கியரை நமஸ்கரியுங்கள். இவ்வார்த்தை சுருதியின்கண்ணும் கூறப்பட்டுள்ளது. “ஆத்மஜ்ஞம் ஹ்யர்சயேத் பூதிகாம:” பொருள் இதுவாம்:—இவ்வுலகத்தின்கண்ணும், பரலோகத்தின்கண்ணும் உள்ள தனம், புத்திரர் முதலிய பதார்த்தங்களை இச்சிப்பவன் சகாம புருஷனும்; அவன் சரீரத்தாலும், தனத்தாலும் பிரஹ்ம வேத்தாவாய ஞானியைச் சேவித்தல் வேண்டும். அச்சேவையால் மனம் நினைந்த பதார்த்தங்கள் யாவும் அவனுக்குக் கிட்டும். ஆகையால், ஹே பிராஹ்மணர்களே! யாஞ்ஞவற்கியரை ஜயிக்கவேண்டும் என்னும் இச்சையையொழித்து,

நீங்கள் யாவரும் யாஞ்ஞுவற்கியரை நமஸ்கரியுங்கள். ஹே குழந்தாய்! இவ்வகையாய வசனத்தைச் சர்வப் பிராஹ்மணர்களையும் நோக்கிக் கூறிவிட்டு, அக்கார்க்கியானவள் யாஞ்ஞுவற்கிய முனிவரை நமஸ்கரித்துக்கொண்டு, மீண்டும் வினவுதலினின்றும் நிவிருத்தியை யடைந்தனள். அதன்பின்னர்க் கார்க்கியின் வசனமாகிய அமிருதத்தைப் பானம் செய்து, அகங்காராதி தோஷம் நீங்கியவர்களாய ஆஸ்வலாதிப் பிராஹ்மணர்களியாவரும் யாஞ்ஞுவற்கியரை நமஸ்கரித்தனர். அவர்களுள்ளும் சிலர் மஸ்தகத்தால் நமஸ்கரித்தனர், சிலர் வாக்கால் நமஸ்கரித்தனர், சிலர் மனத்தால் நமஸ்கரித்தனர்; விதக்தர் என்னும் சாகல்லியப் பிராஹ்மணர் ஒருவர்மாத்திரம் வரும் மரணத்தால் மோகிதராய் யாஞ்ஞுவற்கியரை நமஸ்கரித்திலர். ஜன்மகால நக்ஷத்திரத்தால் இனிவரும் பொருளை யுணரும் ஜோதிஷ சாஸ்திரம் உணர்ந்தவர், சாகல்லியருடைய ஜன்மநக்ஷத்திரத்தைநோக்கி இவ்வகையாய வரும்பொருளை முன் நிச்சயம் செய்தனர் :—இச்சாகல்லியர் யாஞ்ஞுவற்கியரோடு நானுவகையாய ஈர்ஷையைச்செய்து, அதனுல் தக்தமாவர் என்னும் இவ்வகையாய வரும்பொருளை யறிந்துதான் ஜோதிஷமுணர்ந்த பண்டிதர் சாகல்லியருக்கு விதக்தரெனப் பெயர் புனைந்தனர். சாஸ்திரத்தின்கண் மதிமானுக்கும் விதக்தனெனப் பெயராம். ஆகையால், அந்த விதக்தரென்னும் சாகல்லியரது மதிமானுந் தன்மையை உணர்த்தி, அவரது மாதாபிதாக்களைச் சந்தோஷமடையுமாறு செய்வித்தனர். உண்மையாய் விசாரம் செய்யின், விதக்த சபதத்தின் முதற்பொருளே சாகல்லியரிடத்தே பொருந்தும்; விதக்த சப்தத்தின் வேறுபொருள் சாகல்லியரிடத்தே பொருந்தாதாம். ஏனெனின், யாவன் புத்திமானுயிருக்கின்ருனே, அவன் தனக்கு ஹிதஞ்செய்யும் புருஷனுடைய வசனத்தை அங்கீகரிப்பன்; இச்சாகல்லியரோ, கார்க்கியின் ஹித வசனங்களைக்கேட்டு மாருய்க் குரோதத்தை யடைந்தனர். பாம்பிற்குப் பால் வார்ப்பினும், விஷத்தையே விருத்திசெய்யும்; அதுபோல, கார்க்கியின் ஹித வசனமும் சாகல்லியருக்குக் குரோத ஹேதுவாய் முடிந்தது. ஆகையால், சாகல்லியரிடத்தே புத்திமானுந் தன்மை சம்பவியாது.

இப்போது விதக்த சபதத்தின் முதற்பொருள் சாகல்லியரிடத்திற் காண்பிக்கப்படுகின்றது :—ஹே குழந்தாய்! யாஞ்ஞுவற்கியர் சூரியபகவானிடத்திருந்து வித்தையை அடைந்தனர் என்னும் வசனத்தைச் சாகல்லியர் கேட்ட நாள்தொடங்கி நானுவகையாய ஈரிஷைகொண்டு தக்தமாயினர். யாஞ்ஞுவற்கியர் சூரியபகவானிடத்தினின்றும் சுக்கிலயஜுர் வேதத்தை யடைந்தனர் என்னும் வசனத்தை ஒரு பிரசங்க வசத்தால் ஒரு புருஷன் வாயிலாய்ச் சாகல்லியர் கேட்டு, அவ்வசனத்தைச் சொன்ன புருஷனை நோக்கி இவ்வகையாய கடூர வசனத்தைக் கூறத்தொடங்கினர் :—இந்த யாஞ்ஞுவற்கியன் சூரியபகவானிடத்தினின்றும் சுக்கில வர்ணமுடைய யஜுர் வேதத்தை யடைந்ததேபோல, சந்திரனிடத்தினின்றும் இரத்த வர்ணத்தையுடைய அதர்வண வேதகாண்டத்தையும் அடைந்தனன்போலும். அங்ஙனமே, பௌமனிடத்தினின்றும் பசுமைவர்ணமுடைய இருக்குவேத காண்டத்தையுமடைந்தனன்போலும். என இவ்வண்ணம பரிகாசத்தோடு கூடிய கடூரவசனங்களை இரவும் பகலும் அச்சாகல்லியர் உலகர்பொருட்டுக் கூறிவந்தனர். யாஞ்ஞுவற்கியருடைய நிந்தை சகிக்கமுடியாதவராய சஜ்ஜனபுருஷர் யாஞ்ஞுவற்கியரோடு

விவாதம் செய்யும்பொருட்டு சாகல்லியரைத் தூண்டினும், எனக்குச் சமானம் அந்த யாஞ்ஞவற்கியன் அன்று என்னும் அபிமானங்கொண்டு, அச்சாகல்லியர் விவாதஞ் செய்யும்பொருட்டு யாஞ்ஞவற்கியரது சமீபத்தே வருவதில்லை. மற்றோ, அர்ச்சுனனோடு கர்ணன் வைரஞ்செய்ததேபோலவும், இந்திரரோடு நமுசியென்னுந் தானவன் வைரஞ் செய்ததேபோலவும், அச்சாகல்லியர் யாஞ்ஞவற்கியரோடு வைரஞ் செய்துவந்தனர்.

சங்கை:—ஹே பகவன்! யாஞ்ஞவற்கியரோடு மிகவும் வைரமிருந்திருப்பின் எல்லா மறையவர்கட்கு முன்னரே சாகல்லியர் யாஞ்ஞவற்கியரை நோக்கி ஏன் வினவவில்லை?

சமாதானம்:—ஹே மைந்த! எக்கால் யாஞ்ஞவற்கியர் கோக்களைக் கவர்ந்தனரோ, அக்காலத்தும் அச்சாகல்லியர் அச்சபையின்கண்ணே யிருந்தனர். ஆனால், அக்காலத்தே அச்சாகல்லியர் தமது மனத்தின்கண் இவ்வண்ணம் விசாரித்து வினவிலர். இப்போது சாகல்லியரின் விசாரத்தைக் காண்பிப்பாம்:— இந்த யாஞ்ஞவற்கியன் எல்லா மறையவர்களும் நிறைந்த சபையில் கோக்களைக் கவர்ந்தது அத்தியந்தம் தகுதியற்ற தொழிலாம். ஆகையால், இஃதறிந்து கொள்ளலாமன்றோ? எல்லா மறையவர்கட்கும் பரோக்ஷமாய் இந்த யாஞ்ஞவற்கியன், யான் சூரிய பகவானுடைய சீடன், எனப் பொய்புகன்று எல்லா உலகரையும் மோகிப்பிக்கின்றனன். அந்தப் பாவகர்மத்தின் பலன் இப்போது யாஞ்ஞவற்கியனுக்குக் கிடைத்திருக்கின்றது. இன்றைக்கிருந்து பூர்வ பூர்வகாலத்தில் இந்த யாஞ்ஞவற்கியனுக்குப்புகழோடுகூடி யுண்டாயிருந்த ஜீவனம் இன்றுமுதல் மேல் மேல்முடிந்ததாகும். ஏனெனின், இந்த யாஞ்ஞவற்கியன் *பண்ட புருஷனைப்போலப் பாஷண்டியாவன் எனவுணர்ந்து, யானும் அந்நிய எல்லா மறையவரும் இவனை உபேக்ஷித்திருக்கின்றோம். அறிஞர் எப்புருஷனை உபேக்ஷிக்கின்றாரோ, அப்புருஷனை உலகின்கண்ணும் எவரும் சத்காரம் செய்வதில்லை. ஆகையால், எல்லா மறையவரையும் அவமானஞ்செய்து, கோக்களைக் கவர்ந்ததால் இவனுக்கிப்பலன் கிடைத்தது. அல்லது, சூரியபகவானுடைய சமீபத்தில் இருளானது இராததேபோல, சர்வ அறிஞர்களாகிய பிராஹ்மணர்களின் சமீபத்தே எப்புருஷனுடைய பாஷண்டத் தன்மையும் நடவாது என்னும் இப்பொருளையும், பாவத்தால் மோகிக்கப்பட்ட இந்த யாஞ்ஞவற்கியன் அறியான். மறையவரின் மகிமையை இந்த யாஞ்ஞவற்கியன் அறிந்திருப்பானாயின், எம்மறையவரின் ஒரு பாலகனுடைய தேஜசைத் தேவராஜாவாகிய இந்திரரும் சகிக்கமுடியாதே, அத்தகைய எல்லா மறையவரின் சமீபத்தே இந்த யாஞ்ஞவற்கியன் கோக்களைக் கவர்தல் வடிவ தகுதியற்ற தொழிலைச் செய்யானன்றோ? ஹே மைந்த! இவை முதலாக மிகுந்த விசாரத்தைத் தனது மனத்தின்கண்ணே செய்து அகங்காரத்தோடு கூடியவராய் அச்சாகல்லியர் முன்னர் பேசாமலிருந்தனர். எல்லா மறையவருடைய அபஜெயத்தைக் கண்டவுடனே, எல்லா மறையவரோடு கார்கியும் யாஞ்ஞவற்கியருக்கு நமஸ்காரஞ் செய்ததைக் கண்டவுடனே, காலால் மிதிபட்ட பாம்பானது கோபமடைவதேபோல, சாகல்லி

* பண்டன் = ஆண்தன்மையற்றவன்.

யருடைய விழிகள் குரோதத்தோடு கூடிநிறைந்தன. புருவங்களும், லலாடமும் சுளித்தன, அடிக்கடி பெருமூச்செறிந்தன; ஒருவனுடைய புத்திரன் மங்கின் அவன் தெய்வத்தைத் திக்காரஞ் செய்வதேபோல, அசசாகல்லியர் தெய்வத்தைத் திக்காரஞ் செய்தனர். தனது மனத்தின்கண்ணே இவ்வாறு சிந்தித்தனர், இவ்வுல கின்கண்ணே எங்ஙனம் தெய்வ பலமோ, அங்ஙனம் சாஸ்திர அத்தியயனத்திற்கும் பலமின்றாம். உத்தம குலத்திறகும் பலமின்றாம். மந்திராதிகட்கும பலமின்றாம். ஏனெனின், சாஸ்திரம், உததமகுலம், மந்திரம்முதலியவற்றோடுகூடிய இவ்வெல்லா மறையவரையும் யாஞ்ஞவற்கியன் ஜெயித்தனன். அது கேவலந் தெய்வபலத்தாலே ஆயதாம்; வேறுவித்தை முதலியவற்றின் பலம்யாதும யாஞ்ஞவற்கியனுக்கின்றாம். ஆகையால், தெய்வபலமே வித்தை முதலிய சகலபலங்களினும் மேலாயதாம். அல்லது இதிகாசங்களில் புத்திமான்களாய புருஷர் இவ்வகையாய வசனத்தைக்கூறியுள்ளார், நிமேஷம், முகூர்த்தம, பிரஹரம, தினம், பக்ஷம், மாசம், இருது, அயனம், சம்வத்ஸரம் என்பனமுதலிய வடிவமாய காலபகவான் பிரதிகூலமாய் எல்லா ஜீவர் களின் மதியையும் வேறு பிரகாரமாக்குவர். அநுகூலமாய் எல்லா ஜீவர்களின் மதியையும் விருத்தி செய்வர். அக்காலத்தைத் தாண்டுவதில் எவர்க்கும் வல்லமையின்றாம்; என்னும் இதிகாசத்தின் வசனம் இன்று உண்மையாயது. ஏனெனின், பாஷண்டி ஒருவன் மூட பாலகரை வெற்றி செய்வதேபோல, பிரஹ்மாவுக்குச் சமானமாய் வித்தையையுடைய இவ்வெல்லா மறையவரையும், இந்தத் தூபபுத்தியுடைய யாஞ்ஞவற்கியன் வெற்றிகொண்டனன். ஆகையால், இஃதறிந்துகொள்ளலாமன்றோ? கால பகவானை எவனும தாண்டமுடியாது. ஏனெனின், கால பகவானுடைய பிரதிகூலத்தால் இவ்வெல்லா மறையவர்கட்கும் அபஜெய முண்டாயது; கால பகவானுடைய அநுகூலத்தால் வித்தையற்ற யாஞ்ஞவறகியனுக்கு ஜெயமுண்டாயது. அல்லது, இவ்வுலகின் கண்ணே எககாரியம உண்டாவதாகுமோ, அக்காரியம் அவசியம் உண்டாம. ஆயிரம் உபாயங்களாலும், அக் காரியத்தின் நிவிருத்தி யுண்டாகமாட்டாது; என்னும இவ்வார்த்தை சாஸ் திரத்தின்கண்ணே எழுதியிருப்பதும் இன்று உண்மையாயது. ஏனெனின், இக் கூட்டத்தில் எத்துணை மறையவரோ ஒருங்கு கூடியுள்ளார்; இவர் யாவரும பிரஹ்மாவிற்குச சமானமாய வித்தையை உடையவர். இந்தக் *கிருபணனாய யாஞ் ஞவற்கியன் வித்தை யற்றவன். ஆனல், இந்த யாஞ்ஞவற்கியனுக்கு ஜெயமாக வேண்டியிருந்தது; இவ்வெல்லா மறையவர்கட்கும் அபஜெயமாக வேண்டியிருந்தது; அது அவசியமாகவே ஆய்விட்டது. இதனுல் எனக்கு மிகவும் துக்கமுண்டாகியிருக்கின்றது. அல்லது, இக்காலம எனது புகழை விருத்தி செய்யும் பொருட்டு அடைந்திருககின்றது. ஏனெனின், இந்த யாஞ்ஞவறகியன் எல்லா அறிஞர்களாய மறையவாகளேயும ஜயித்தனன்; யான் இவனே ஜயிக்கின், எல்லா உலகின்கண்ணும் எனக்குப் புகழுண்டாம்; ஆகையால, இக்காலம் எனக்குப் புகழை அடைவிக்கும் பொருட்டு வந்திருக்கின்றது. ஹே மைந்த! இவை முதலாகப பலவகையாய்த் தனது மனத்தின்கண்ணே அச்சாகல்லியர் விசாரித்தனர். வரும்பொருளை உணரும் கார்க்கியானவள் முன்னர் ஹிதத்தை உபதேசித்தனள்.

* கிருபணன் = உலோபன்.

அவ்வுபதேசத்தை விட்டு அந்தத் துர்ப்புத்தியுடைய சாகல்லியர் யாஞ்ஞவற்கிய முனிவரைநோக்கி வினவத்தொடங்கினர். இப்போது எந்தத் துர்ப்புத்தியால் சாகல்லியர் கார்க்கியின் வசனத்தை அங்கீகரித்திலரோ, அச்சாகல்லியரின் துர்ப் புத்தியைக் காண்பிப்பாம்:—இந்தக் கார்க்கியானவள் குமரியாயிருக்கின்றனள்; யௌவன அவஸ்தையோடு கூடியிருக்கின்றனள்; தாய் தந்தையர்களின் வீட்டி னின்றும் வெளியில் வந்திருக்கின்றனள்; வியபிசார ஸ்திரீகளைப்போலத் தனது இஷ்டப்படி திரிகின்றனள்; காமிகளிடத்தே இவள் எப்போதும் இச்சை யுடைய வளாயிருக்கின்றனள். இச்சபையின்கண்ணே யாஞ்ஞவற்கியன் ஒருவனை ஒழித்து எத்துணை மறையவர்கள் உளரோ, அவர் யாவரும் நல்லொழுக்க முடையவர். ஸ்நானம், சௌசம் முதலிய கர்மங்களில் நித்தியமும் பிரீதியுடையவர்; ஜடை, மீசை, தாடி முதலியவற்றோடு கூடியவர்; தவத்தால் மெலிந்த காயத்தை யுடையவர்; விருத்த அவஸ்தையோடு கூடியவா; இத்தகைய இவ்வுத்தம பிராஹ் மணர் இந்த நக்னி (சேலையற்றவள்) யாகிய கார்க்கியை நேத்திரங்களாலும் பார்த் திலர். இந்த வெட்கமற்ற கார்க்கியிடத்தே இம்மறையவர் ஏன் இச்சை செய்வர்? இந்த யாஞ்ஞவற்கியன் யௌவன அவஸ்தையோடு கூடியவன், கொழுத்த சரீர முடையவன், நிரந்தரம் சரீரத்தைக் காப்பாற்றுபவன், அத்தியந்தம் காமியாயிருப் பவன், வேதத்தின் பொருளை வேறு விதமாய் விளம்புபவன். இத்தகைய துர்ப் புத்தியுடைய இந்த யாஞ்ஞவற்கியன், தனது பாவ நேத்திரங்களால் கார்க்கியின் இரகஸ்ய ஸ்தானத்தையும், ஸ்தன்னியங்களையும், முகத்தையும அடிக்கடி பார்க் கின்றான். எக்கால் இந்த யாஞ்ஞவறகியன் இசசபையின்கண் வந்தனனோ, அக் காலம் முதல் இதுவரை இந்த யாஞ்ஞவறகியனுடைய கண்ணானது ஜனக ராஜா விடத்திலும், கார்க்கியினிடத்திலும் இருபபதையான் பார்த்துக்கோண்டே யிருக் கிறேன். இவ்விருவரையும் விட்டு எம்மறையவர் பக்கத்திலும், இந்த யாஞ்ஞவற் கியன் பார்க்கின்றானில்லை. இந்த யாஞ்ஞவறகியனை யொழிந்த வேறு மறையவர் யாவரும், குரு சரண கமலங்களை அர்சசிபபதில் தற்பராயுள்ளோர்; குரு சாஸ் திரங்களால் சிக்ஷை செய்யப்பட்டவர்; ஆகையால், மூக்கின் நுனியின்கண் திருஷ் டியை வைத்துக்கொண்டு இச்சபையின்கண்ணே யிருககின்றனர். இவ்வதமனுகிய யாஞ்ஞவற்கியன் இசசபையின்கண் வந்தது, தனது வித்தையைப் பிரகாசஞ் செய்யும் பொருட்டன்றும்; மற்றே, இக்கார்க்கியின் பொருட்டும், பொன்னின் பொருட்டும் இச்சபையின்கண் வந்ததாம். இக்காரணத்தாலே இவன் அடிக்கடி கார்க்கியின் முகத்தையும், ஜனக ராஜாவின் முகத்தையும் பார்த்துக்கொண்டே யிருக்கின்றனன். அல்லது, இவ்வுலகின்கண்ணே வியபிசாரி ஸ்திரீயானவள் வியபி சாரி புருஷனை விரைவில் தெரிந்துகொள்ளுவள். வியபிசாரி புருஷனும், வியபிசாரி ஸ்திரீயை விரைவில் தெரிந்துகொள்ளுவன். ஏனெனின், இவ்வுலகின்கண்ணே எவ்வெப் பதார்த்தங்களை யாவன் அநேகம் முறை அனுபவித்திருக்கின்றானே, அவ்வப் பதார்த்தங்களை அவன் விரைவிலேயே தெரிந்துகொள்ளுகின்றான். ஜலத் தின்கண்ணே, மச்சமானது மீனத்தின் வரவையும், போக்கையும் விரைவிலேயே அறிந்துகொள்ளும். அதுபோல, இக்கார்க்கியும் பால்ய அவஸ்தை முதல் தனது

இச்சைப்படி திரியும் வியபிசாரியாம். இந்த யாஞ்ஞவற்கியனும் வியபிசாரியாவன்; இக்காரணத்தினாலே இவ்விருவருக்கும் பரஸ்பரம் நேயமுண்டாயது; அல்லது, குலஸ்திரீயானவள் தனது நாயகனையும், தனது மைந்தனையும், தனது சகோதரனையும், தனது மாமனையும், தனது மைத்துனனையும், மற்றுள்ள குலஸ்திரீகளையும் பரித்தியாகம் செய்து, தனது கிருகத்தின் வாயில் வரையிலுங் கூடவாராள்; மற்றோ, நாயகன் முதலியோருள் ஒருவரைச் சகாயமாய் அழைத்துக் கொண்டு வெளியே செல்வள்; இது குலஸ்திரீயின் தர்மமாம். அந்தத் தர்மம் இந்தக்கார்க்கியினிடத்தே யின்றாம். ஏனெனின், இந்தக் கார்க்கியானவள் நக்னியாய், தனித்தவளாய் மூவுலகின்கண்ணும் சுற்றுகின்றனள். உலகின்கண்ணே யாண்டாண்டும் வியபிசாரிகளாய காமிகளைப் பார்த்துக் கொண்டே இருக்கின்றனள். ஆனால், கலியுகத்தின்கண் வருணாசிரமமற்ற வியபிசாரி புருஷர்களைப்போல, இந்தத்திரேதா யுகத்தின்கண் எவனும் வருணாசிரம மற்றவனின்றாம். இருப்பனாயின், இக்கார்க்கியை இச்சிப்பன். இப்போது இப்பொருளை வெளிப்படையாய்க் காண்பிப்பாம்:— இந்தத் திரேதாயுகத்தின்கண் மைந்தனை இச்சித்த இல்லறத்தான் தனது மனைவியோடுங்கூட எப்போதும சம்போகஞ் செய்யான்; மற்றோ, இருதுகாலத்தில் சம்போகிப்பன். ஆகையால், இவ்வில்லறத்தார்கட்கும் இக்கார்க்கியின்மேல் இச்சையில்லை. இவரினும வேறாய பிரஹ்மசாரி, வானப்பிரஸ்தன், சந்நியாசி யென்னும் மூவரும மேல் நோக்கிய ரேதசை யுடையவராவர்; ஆகையால், அவரும் இக்கார்க்கியை இச்சியார். கீழ்ஜாதியராய சண்டாளரும் தமது மனைவியரை ஒழித்து, பிறமாதரை விரும்பாராயின், ஆன்றோராய மேலோர் பிறமாதரை எங்ஙனம் விழைவர். இந்திராதி தேவதைகள் சொர்க்கலோகத்தின்கண் உள்ள மங்கையரைவிடுத்து மனுஷ்யலோகத்திலுள்ள மங்கையரைத் தீண்டவுமாட்டார்; ஆகையால், அத்தேவர்களும் இக்கார்க்கியை விழையார். நாய்முதலிய பசுக்கள் தமது சமானஜாதியுடைய பெண்நாய் முதலியவற்றை விடுத்து, விஜாதீயமாய மனுஷ மங்கையரை இச்சை செய்யா. இக்கார்க்கியானவள் எத்தினமும் காமத்தாற் பீடிக்கப்பட்டவள். இக்காரணத்தாலே சேலையற்றவளாய் எல்லா மறையவரின் எதிரில் இருக்கின்றனள். ஆயினும், பாவாத்மாவாய யாஞ்ஞவற்கிய னொருவன் ஒழிந்து, தர்மாத்மாக்களாய இம்மறையவர் கார்க்கியின்பக்கத்தில் பார்வையையும் செலுத்திலர். கலியுகத்தில் வியபிசாரி புருஷர்கட்குச சமானமாய்க் காமபீடிதனாய இந்தயாஞ்ஞவற்கியன் அடிக்கடி கார்க்கியையே நோக்குகின்றனன். இந்த வியபிசாரியாகிய கார்க்கியும், இந்த யாஞ்ஞவற்கியனை வியபிசாரி எனக் கண்டு ஏகாந்த தேசத்திற்கு அழைத்துக்கொண்டு போம்பொருட்டு, வியபிசாரி ஸ்திரீகளின் சாதுரியத்தன்மையை உட்கொண்டு, அடிக்கடி யாஞ்ஞவற்கியனை நமஸ்கரிக்கின்றனள். எல்லாரையும் நோக்கி இதைக் கூறுகின்றனள்:—யாஞ்ஞவற்கியர் பிரஹ்ம வேத்தாவாம்; ஆகையால், யான் இவரை நமஸ்கரிக்கின்றேன். இந்திரஜாலக்காரன் உலகரின் திருஷ்டியைத் தடைப்படுத்துவதேபோல, ஜனகராஜாவின் சர்வப் பிராஹ்மணர்களின் திருஷ்டியைத் தடைப்படுத்தி, இச்சபையின்கண்ணே யான் யாஞ்ஞவற்கியரோடு வியபிசாரஞ் செய்வேன் என்னும் விசாரத்தைச் செய்துகொண்டு, இக்கார்க்கி இச்சபையின்கண்ணே யிருக்கின்றனள். எல்லா மறையவரிடத்தேயும் இக்கார்க்கி

யானவள் அடிக்கடி யாஞ்ஞவற்கியனைத் துதிக்கின்றனள். இவ்வெல்லா அறிஞராய மறையவரும், இவ்வியபிசாரியாகிய கார்க்கியின் உட்கருத்தை யறியாது இவள் வசனத்தால் மயங்கியவராய் யாஞ்ஞவற்கியரை நமஸ்கரித்தனர். எல்லாத் தர்மாத்மாக்களுள்ளும் முக்கியராய இச்சனக ராஜாவும், வியபிசாரியாய கார்க்கியின் வசனத்தால் மோகத்தை யடைந்தனர். அதனாலே, இச்சனக ராஜாவானவர் அடிக்கடி இந்த வியபிசாரியாய யாஞ்ஞவற்கியரின் பொருட்டு நமஸ்காரம் செய்கின்றனர். ஹே குழந்தாய்! எப்போதும் பிரஹ்மசரிய தருமத்தோடு நிகழும் கார்க்கியை மேற்கூறிய அநேகவசனங்களால் அந்தத் துராத்மாவாகிய சாகல்லியர் நிந்தை செய்தனர். எங்ஙனம் மரணத்தையுற நெருங்கிய பதங்கமானது, (விட்டில் பூச்சியானது) ஓங்கியெரியாநின்ற மகா அக்கினியைத் தாண்டமுயலுமோ, அங்ஙனமே, மரணத்தையுற நெருங்கிய அந்தச் சாகல்லியர் ஞானசமுத்திரரூப யாஞ்ஞவற்கியரைத் தாண்டும் பொருட்டு முயன்றனர். அதன்பின்னா அச்சாகல்லியர், அநேகம் வினாக்களால் யாஞ்ஞவற்கியரைத் தேவதைகளின் சங்கியையைக் கேட்டனர். அதன் பின்னர் அந்த யாஞ்ஞவற்கிய முனிவரும், அத்துணை விடைகளாலே தேவதைகளின் சங்கியையைக் கூறினர். ஆண்டு, யாஞ்ஞவற்கியர் விஸ்தாரமாய் அத்தேவதைகளின் அநந்த சங்கியையைக் கூறினர். சுருக்கமாய்ச் சூத்திராத்மா வடிவ ஒரு பிராணனையே தேவதையெனக் கூறினா. மற்றெல்லாத் தேவதைகளையும் அச்சூத்திராத்மாரூபப் பிராணனது விபூதிகளாக விஸ்தாரமாயும் சுருக்கமாயும் அந்த யாஞ்ஞவற்கியர் தேவதைகளின் சங்கியையைக் கூறினா. அதன்பின்னர் அச்சாகல்லியர் யாஞ்ஞவற்கியரை நோக்கி, வேறெட்டு வினாக்களைச் செய்தனர். அவற்றின் விடையையும் அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் கூறினர். ஹே மைந்த! மண்டூகமானது பாம்பின் வாயின்கண் அகப்பட்டுக்கொண்டதேபோலக் காலரூபப் பாம்பின் வாயின்கண் அகப்பட்ட மூடமதியையுடைய அச்சாகல்லியர் யாஞ்ஞவற்கியரை நோக்கி அளவிறந்த வினாக்களைக்கேட்டபோது, யாஞ்ஞவற்கியர் சாகல்லியரை நோக்கிக் கூறுவதாவது :—ஹே சாகல்லியரே! நீர் காரணமின்றியே துவேஷம் செய்வதுபோல, நுமது பிதா பிதாமகாதி (பிதாமகன்-பாட்டன்) விருத்த புருஷர் எவரோடுந் துவேஷம் செய்திலர். அங்ஙனமே, அந்நிய மறையவர், பிரஹ்மசாரிகள், அந்நிய க்ஷத்திரியாதிகளும் உம்மைப்போலக் காரணமின்றியே எவரோடும் துவேஷம் செய்திலர். அத்தகைய உத்தமகுலத்தே உற்பன்னமாய நீர் காரணமின்றியே என்னிடத்தில் துவேஷமேன் செய்கின்றீர். ஹே சாகல்லியரே! எனது துவேஷத்தால் உமது மரணமாகக் கூடாதெனச் சந்ததம் இச்சிக்கின்றேன். ஹே சாகல்லியரே! எங்ஙனமெனது மாதா பிதாக்கட்கும், புத்திரருக்கும், மனைவிக்கும், அந்நிய உறவினர்க்கும் எனது சரீரத்தின்கண்ணே பிரியமிருக்குமோ, அங்ஙனமே உமது மாதா பிதாக்கட்கும், மனைவி மைந்தர்கட்கும், உறவினர் முதலியோருக்கும் உமது சரீரத்தின்கண்ணே பிரியமிருக்கும். ஆகையால், ஈண்டு உமது மரணத்தால் அவ்வுமது மாதா பிதா முதலிய சம்பந்திகட்குத் துக்கத்தினடைவு உண்டாக வேண்டாமென யான இச்சிக்கின்றேன். ஹே சாகல்லியரே! இவ்வேதவித்தையை யான் சூரியபகவானிடத்திருந்தே பெற்றேனாதலின், எனது வித்தை

யின் தேஜசு சகிக்க முடியாததாம். ஆகையால், நீர் எனது வித்தையை யவமதி யாதீர். நீர் அகங்காரத்தால் எனது வித்தையை யவமதிப்பீராயின், க்ஷணமாத் திரையில் எனது வித்தை உம்மைப் பஸ்மஞ்செய்யும். ஹே சாகல்லியரே! சூரியபகவானிடத்திருந்து யான் வித்தையை யத்தியயனம் செய்து, மண்ணின் கண்ணேவரத் திரும்புகையில் மிக மிக மகிழ்வுற்றுச் சூரியபகவான் என்னை நோக்கி இங்ஙனங் கூறினர் :—ஹே யாஞ்ஞவற்கிய! நின்பொருட்டுக் கொடுத்த வித்தையை யெப்புருஷன் அங்கீகரியானோ, அப்புருஷனை யான் அக்கணத்தே பஸ் மஞ்செய்வேன். ஹே சாகல்லியரே! என்னை நோக்கிச் சூரியபகவான் இங்ஙனங் கூறவே யான் சூரியபகவானைக் குறித்திங்ஙனம வேண்டிக்கொண்டேன். அதா வது :— ஹே பகவன்! எனது வித்தையால் எப்பிராணிக்கும் நாசமுண்டாக லாகாது என, எனக்கு வரந்தரல வேண்டும், என இவ்வகையாய பிரார்த்தனையை யான் சூரியபகவானைக் குறித்துசசெய்தபோது, ஹே சாகல்லியரே! அச்சூரியபக வான் இவ்வகையாய நியமத்தைச செய்தனர். ஹே யாஞ்ஞவற்கிய! எப்புருஷன் துராக்கிரகத்தால் நின்முன் இருபது முறை விஞ்வுவனோ, அத்துராத்மாவாய புருஷனை நினது நாவில் யாமிருந்து கொண்டு சபிப்பேம். அசசாபத்தால் அப்புரு ஷன் விரைவாகவே சாம்பராய்ப் போய்விடுவன். ஹே சாகல்லியரே! இவ்வாறு சூரியபகவான் என்னை நோக்கிக் கூறியவுடன் எனக்குப் பயம் உண்டாயது. அக் காரணத்தால் யான் மீண்டும் சூரியபகவானை நோக்கிப் பிரார்த்தனை செய்திலேன். ஹே சாகல்லியரே! சர்வ லோகத்திலும் பிரசித்தமாய எனது ஆசிரியராகிய சூரியபகவானை நீர் எப்பாவரூபப் பிரதிபந்தக வயத்தால் அறிகின்றிலீர். ஆகை யால், இஃதறிநது கொள்ளலாமன்றோ? கால பகவானுல் நீர் மோகத்தை யடைந் திருக்கின்றீர் என. ஹே சாகல்லியரே! சூரியபகவானது வசனத்தைச் சிந்திப் பதால் எனக்கு நும்பேரில் பெருஞ்சிநதை யுண்டாகின்றது. அதாவது என்னி டத்தே துவேஷித்தலால் உமக்கெக்கதி வருமோ என்பதே. ஹே சாகல்லி யரே! நீர் என்னோடு எவ்வாற்றாலும் துவேஷிக்கின்றீர். ஆயினும், எனக்கு உம் பால் துவேஷமில்லை. ஏனெனின், எனது சரீரத்தின்கண் ஆநநதசொரூப ஆன்மா வாய யான் எங்ஙனம் இருக்கின்றேனோ, அங்ஙனமே உமது சரீரத்தின்கண்ணும், மற்றைய பிராணிகளின் சரீரத்தின்கண்ணும், ஸ்தாவர ஜங்கம சர்வ சரீரங்களிடத் தும் ஆநந்தசொரூப ஆன்மாவாய யானிருக்கின்றேன். ஆகையால், இவ்வெல்லா உலகும் ஆநந்தசொரூப ஆன்மாவாய என்னிற் பின்னமன்றாம்; ஆநநதசொரூப ஆன்மாவாய என்னினின்றே இவ்வுலகின் உற்பத்தி ஸ்திதி இலயமுண்டாகின்றது. இத்தகைய சர்வாத்ம ஞானத்தோடுகூடிய எனக்கு எவரிடத்தும் துவேஷ முண் டாகாது. ஹே சாகல்லியரே! சுகதுக்கம், மகிழ்ச்சிவாட்டம், பசிதாகம் என் பன முதலிய துவந்துவ தர்மங்கள் எனது சொரூபத்தின்கண் முக்காலத்தினு மின்றாம்; எங்ஙனம் கடமாகிய உபாதியின் உற்பத்தி, ஸ்திதி, இலயத்தாற் கடா காசத்திற்கு உற்பத்தி, ஸ்திதி, இலயம் உண்டாகமாட்டாதோ, அங்ஙனமே, சரீர ரூப உபாதி உற்பத்தி, ஸ்திதி, இலயமுறினும், அத்விதீய ஆன்மாவாய எனக்கு உற்பத்தி, ஸ்திதி, நாசம் உண்டாகாது. ஹே சாகல்லியரே! யாவன் கிரியை யுடையவனுவனோ, அவன் எவரையேனுங் கொல்லுக. ஆநந்தசொரூப ஆன்மா

வாய யான் நிட்கிரியனுதலின், எப்பிராணியையும் யான் கொல்லேன். ஆநந்த சொரூப ஆன்மாவாய யான் நிராகாரனுதலின், எப்பிராணியும் என்னைக் கொல்வதில்லை. ஹே சாகல்லியரே! கிருமி முதலிய துச்சமாய பிராணிகளின் ஆன்ம சொரூப ஞானம் அஞ்ஞானத்தால் மறைக்கப்படுமாறுபோல, உமது ஆன்ம சொரூப ஞானமும், அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டிருக்கின்றது. அக்காரணத்தால் சர்வான்மதரிசியாய என்னை ஆன்ம காதகனுகிய பாவியைப்போலக் காண்கின்றீர். ஹே சாகல்லியரே! பிரஹ்ம வேத்தாவாய ஞானியோடு செய்யுந் துவேஷம் பிரசித்த அக்கினியினும அதிகமாம். அந்தத் துவேஷரூபியாய அக்கினியால் நீர் பஸ்மமாகுதலைக் கண்டு, இவ்வியாவரும் உமது விஷயத்தே சோகமடைய வேண்டாம். ஹே சாகல்லியரே! உமது மனைவி விதவைத் தன்மையையடைந்து, சகல ஆபரணங்களும் இழநதவளாய் அததியந்தம தீனத்தன்மையை யுற்றுப் புலம்ப வேண்டாம். ஹே சாகல்லியரே! உமது மரணத்தால் உமது மைந்தர் முதலாயினுர் ஆகிய எல்லா உறவினரும், சோகவடிவ சமுத்திரத்தின்கண்ணே மூழ்கவேண்டாம். உமது மரணத்தால் உமது பகைவர் ஆநந்தத்தை யடைய வேண்டாம். ஹே சாகல்லியரே! நீர் பிரேத சரீரத்தையடைந்து, பசிதாகாதிகளோடு கூடியவராய்த துக்கத்தால் வியாகுலப்பட்டவராய்த் தர்மராஜாவின் பட்டணத்தைப் பாரககவேண்டாம். ஹே சாகல்லியரே! மரணத்தின் பின்னர் மைநதராற் கொடுக்கபபட்ட பலிபபிரதானத்தையும, திலோதகத்தையும், காகம் போல நீர் பக்ஷிக்கவேண்டாம். ஹே சாகல்லியரே! இவ்வுமது கோமள சரீரம் அக்கினியினுக்கும், * சுவானத்திற்கும் பக்ஷணமாகவேண்டாம். ஹே சாகல்லியரே! இவ்வெல்லாச சிஷ்யரையும பரித்தியாகம்செய்து, நீர் ஒருவராகவே பரலோகத்தின்கண்ணே செல்லவேண்டாம். ஹே சாகல்லியரே! எங்ஙனம் †பல்லாத விருக்ஷத்தின் பலம் உயிர்களை நாசம் செய்யுமோ, அங்ஙனம் உமது சித்தரூப பூமியின்கண் நீண்டகாலமாய் உண்டாயிராநின்ற பிரஹ்ம வேத்தாவின் துவேஷரூப விருக்ஷமானது, உமககு மிருத்தியு ரூபபலத்தை யடைவிக்கவேண்டாம். ஹே சாகல்லியரே! மரித்த பின்னர் உமது என்புகளைச சோரனுகிய சண்டாளன் தீண்டவேண்டாம். ஹே சாகல்லியரே! எங்ஙனம் பதங்கமானது அக்கினியின் கண்ணே வீழ்நது பஸ்மமாகின்றதோ, அங்ஙனம் சூரியபகவானை நாவின் கண்ணேயுடைய அக்கினியாகிய என்பால் நீர் வீழ்ந்து பஸ்மமாகவேண்டாம். ஹே சாகல்லியரே! இவ்வுலகின்கண்ணே பொரிப்பொரிக்கும் புருஷர் சட்டியின் கண் இருக்கும் பொரியைத் தமது கரத்தால் தீண்டாது; நீண்ட காஷ்டத்தில் மாட்டியிருக்கும் இருபபுக் கரண்டியால் தீண்டுவதேபோல, இச்சபை சட்டியாம். யான் இநதனம் ஒப்பானவன், எனது ஆசிரியராகிய சூரியபகவான் அக்கினியாம்; உம்மை விவாதம் செய்வதில் ஏவாநின்ற இவ்வெல்லா மறையவரும் பொரிப் பொரிக்கும் புருஷருக்கொப்பாவர், நீர் கரண்டிக்குச் சமானமாயுள்ளீர். இம்மறை

---

* சுவானம்=நாய்.

† பல்லாத விருக்ஷம்=சேருமரம். இதனையே வீர விருக்ஷமெனவும் புண்செய் மரமெனவும் அக்கினி முகியெனவும் அறையா நிற்பர்.

யவரியாவரும் மதிமான்களே யாவர். ஆகையால் தான் தம்மைக் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டு, மூடபுத்தியையுடைய உம்மைக் காண்டிக்குச் சமானமாக்கிச் சூரியரூப அக்கினியின்கண்ணே பிரவேசிப்பிக்கின்றனர். கருத்திதுவாம் :—எம் மறையவர் உம்மை விவாதம்செய்யும்பொருட்டு ஏவுகின்றனரோ, அம்மறையவரும் உமது மரணத்தின்கண்ணே மகிழ்வுடையவராயிருக்கின்றனர்; ஆனால், காலபகவானால் மோகிப்பிக்கப்பட்ட நீர் உமது மரணத்தை யறிகின்றிலீர்; அந்தோ இது மிகவும் ஆசசரியத்தை எனக்கு விளைவிக்கின்றது. ஹே குழந்தாய்! சாகல்லியரை நோக்கி யாஞ்ஞவற்கியர் இங்ஙனங் கூறவே, காலவயமாய அச்சாகல்லியர் அவ்வசனங்களை விபரீதமாய் எண்ணி மீண்டும் அதிக துவேஷத்தைச் செய்தனர். மரண தருணத்தையடைந்த நோயாளியானவன், ஹித காரியாய வைத்தியனோடு துவேஷம் செய்வதேபோலும், தேயத்தினின்றும் பிரஷ்டமாதற்குரிய அரசன் ஹிதகாரிகளாய மந்திரிகளோடு துவேஷம் செய்வதேபோலும, பாக்கிய ஹீனபுருஷன் அரசனோடு துவேஷம் செய்வதேபோலும், பாவம் செய்யும் புருஷன் சத்திய உபதேசத்தைச் செய்யும் குருவோடு துவேஷம் செய்வதேபோலும், அந்தச சாகல்லியர் யாஞ்ஞவற்கியரோடு துவேஷம் செய்தனர்.

இப்போது எம்மதியால் அச்சாகல்லியர் யாஞ்ஞவற்கியரோடு துவேஷம் செய்தனரோ, அம்மதியைக் காண்பிப்பாம் :—எங்ஙனம் ஒருவன் மூடபாலகனைப் பயப்படும்படிப் பண்ணுவனோ, அங்ஙனம் இம்மந்தபுத்தியுடைய யாஞ்ஞவற்கியன் என்னைப் பயப்படும்படி பண்ணப் பாாக்கின்றான்; எனது சர்வஞ்ஞத் தன்மையையும் நிர்ப்பயத் தன்மையையும் இம்மந்தமதி யாஞ்ஞவற்கியன் அறிகின்றிலன். அல்லது, கிருஷி செய்யும் மூட புருஷர்களின் கிராமத்தினும், மலையடுத்த கிராமத்தினும் இராநின்ற பாலகர்களும், பெண்களும், காஷ்டமுதலிய ஜடபதார்த்தங்களும் கூடிய கூட்டத்தின் மத்தியில் உட்கார்ந்துகொண்டு, ஒரு வெட்கமறற புருஷன் சங்கையற்றவனாய்ப் பொய் பேசுவதேபோல, இந்த யாஞ்ஞவறகியனும் சர்வ வித்வான்களுடைய சபையின்கண்ணே சங்கையற்றவனாய்ப பொய் பேசுகின்றனன். ஏனெனின், இந்த யாஞ்ஞவற்கியனுடைய குருவாகிய சூரியனானவன் துவேஷம் செய்யும் சாகல்லியனாகிய என்னைப் பஸ்மஞ்செய்ய ஆற்றலுடையவனாயின், இதற்குமுன்னரும் துவேஷம் செய்து கொண்டிருக்கும் என்னை ஏன் பஸ்மம செய்திலன். அல்லது இச்சூரியன் ஜடன் ஆதலின் இவனிடத்தே பஸ்மம் செய்யும் ஆற்றலின்றாம். ஏனெனின், சூரியன், சந்திரன், இந்திரன் என்பன முதலிய சப்தங்கள் தேவதைகளா? அல்லது சப்தங்களின் அர்த்தங்கள் தேவதைகளா? சப்தங்களினும் அர்த்தங்களினும் வேறாகத் தேவதைக்கு யாதொரு வடிவமுமின்றாம். அவற்றுள், சூரிய சப்தத்தைச சூரியதேவதையென வுடன்படின் அச்சூரிய சப்தம் ஆகாசத்தின் குணம் ஆதலின், எல்லா உலகருக்கும் அசசப்தத்தின்கண்ணே ஜடத்தன்மை அனுபவ சித்தமாம். சூரிய சப்தார்த்தத்தைச சூரிய தேவதையெனக் கொள்ளினும், தேஜோமய மண்டலம் சூரிய சப்தத்தின் பொருளாம். அத்தேஜோமய மண்டலத்தின்கண்ணும் ஜடத்தன்மை பிரசித்தமாம். சூரிய சப்தத்தினும் தோஜோமய மண்டலத்தினும் வேறாய ஒரு சைதன்யத்தைச் சூரிய சப்தத்தின் பொருளென உடன்படினும், அச்சூரிய தேவதை பாவகர்மமின்றி எப்பிராணியை

யும் பஸ்மம் செய்யாது; மற்றோ, ஜீவனுடைய பாவகர்மத்தின் அபேக்ஷையைச் செய்தே அவனைப் பஸ்மம் செய்யும்; அத்தகைய பாவகர்மம் என்னிடத்தின்றும். ஆகையால், அச்சூரியன் என்னை என்ன ஹானி செய்வன். அல்லது, சூரியனிடத்தினின்றும் யான் வித்தை படித்தேன் என யாஞ்ஞவற்கியன் கூறலும் பொய்யேயாம். ஏனெனின், இவன் பூமியின்கண்ணே யிருக்கின்றான், சூரியனோ அத்தியந்தஞ் சேய்மையாய ஆகாயத்தின்கண்ணே இருக்கின்றனன். இவ்விருவருக்கும் பரஸ்பர சம்பந்தம் சம்பவியாதன்றோ? ஹே மைந்த! இவ்வாறு விபரீத சிந்தனை செய்து, அச்சாகல்லியர் முன்னினுமதிக துவேஷத்தை யடைந்தனர். அதன் பின்னர்க் குரோதத்தோடுகூடிய அசசாகல்லியர் யாஞ்ஞவற்கியரைநோக்கி, இங்ஙனங் கூறுவாராயினர். சாகல்லியர் கூறல்:—ஹே யாஞ்ஞவற்கிய! குரு, பாஞ்சால முதலிய தேசத்தின்கண்ணே இராநின்ற பிராஹ்மணர்களை நீ ஜயித்தாய், சர்வப் பிராஹ்மணர்களின் கோக்களையும், சுவாணதைையும் நீ கவர்ந்துகொண்டனை, அப்பாவ கர்மத்தால் நினக்கு நீரற்ற கானகத்தே அநேகமுறைபிரஹ்மராக்ஷஸசரீரப்பிராப்தி யுண்டாம். ஹே யாஞ்ஞவற்கிய! எந்தப பிரஹ்ம வித்தையி னபிமானத்தால் நீ சர்வ மகாத்மக்களாகிய மறையவர்களையும் வெற்றிகொண்டனையோ, அந்தப் பிரஹ்மவித்தையை என் முன்னிலையில் நீ கூறுதி? ஹே மைந்த! இவ்வண்ணம் சாகல்லியர் கூறவே, யாஞ்ஞவற்கியமுனிவர் தம்மிடத்தே பிரஹ்மவித்துத் தன்மையைக் காட்டும்பொருட்டுச் சாகல்லியரை நோக்கி இவ்வாறு கூறத்தொடங்கினர். யாஞ்ஞவற்கியர் கூறல்:—ஹே சாகல்லியரே! தேவதைகளோடுந் தேவதைகளின் காரணத்தோடும், சர்வ திசைகளையும் யானறிகின்றேன். சாகல்லியர் கூறல்:—ஹே யாஞ்ஞவற்கிய! பூர்வாதி திசைகளின் தேவதை யாது? அத்தேவதைகளின் காரண மியாது? அத்தேவதைகளின் காரணத்தினும் காரணம் யாது? யாஞ்ஞவற்கியர் கூறல்:—ஹே சாகல்லியரே! பூர்வ, தக்ஷிண, பச்சிம, உத்தர, மேல் என்னும் ஐந்து திசைகட்கும் முறையே ஆதித்யன், யமன், வருணன், சோமன், அக்கினி என்னும் ஐந்து தேவதைகளாம். அத்தேவதைகள் ஆநந்த சொரூப ஆன்மாவாய என்னினும அயலல்லர். மற்றோ, ஆநந்தவடிவ ஆன்மாவாய யானே, ஆதித்தியாதி தேவதைவடிவமா யிருக்கின்றேன். ஹே சாகல்லியரே! அவ்வாதித்திய தேவதை சக்ஷு இந்திரியரூப காரணத்தின்கண்ணே யிருக்கின்றது. யமதேவதை சுரோத்திரேந்திரிய ரூபகாரணத்தின்கண் இருக்கின்றது. வருண தேவதை இரசன இந்திரியரூப காரணத்தின்கண் இருக்கின்றது. சோமதேவதை மனரூப காரணத்தின்கண் இருக்கின்றது. அக்கினிதேவதை வாக்கிந்திரியரூப காரணத்தின்கண் இருக்கின்றது. கருத்திதுவாம்:— ஹிரண்யகர்ப்ப உபாசனையால் ஹிரண்யகர்ப்பரூபத்தை அடைந்திராநின்ற புருஷனுடைய அத்தியாத்மரூப சக்ஷு முதலிய இந்திரியங்களே அதிதெய்வ சூரியாதிரூபமாய்ப் பரிணமத்தையடையும். அக்காரணத்தால் சக்ஷுமுதலிய இந்திரியங்கள் சூரியாதி தேவதைகட்குக் காரணமெனப்படும். ஹே சாகல்லியரே! உருவம் முதலிய விஷயங்கள் தம்மை யொளிர்விக்கும்பொருட்டு, விழிமுதலிய இந்திரியங்களை ஆரம்பிக்கும். இக்காரணத்தால், சக்ஷுமுதலிய இந்திரியங்கள் உருவமுதலிய

விஷயரூப காரணத்தின்கண்ணே யிருக்கும். அவற்றுள், சக்ஷு இந்திரியம் சுக்கில நீலபீதாதி உருவங்களிடத்தே யிருக்கும். சுரோத்திர இந்திரியத்தாற் கவரத் தகுதியாய கர்மகாண்டரூப வேதத்திற்கு, இருவகையாய பொருள் சித்திக்கும். ஒன்றோ மனோவாக்குக் காயங்களைக் கிலேசஞ்செய்விக்கும் யாக தான விரதாதிரூப அர்த்தமாம். மற்றொன்றோ சிரத்தைவடிவ அர்த்தமாம். அவற்றுள், சுரோத்திரேந்திரியம் யாகதானாதிரூப கர்மத்தின்கண் இருக்கும், அக்கருமமும் சிரத்தையின்கண் இருக்கும். இக்காரணத்தாலே, அசிரத்தையாலாற்றிய யாகதான விரதாதி கர்மங்கள் பலத்தைக் கொடுப்பதில்லை, சிரத்தையோடுஞ் செய்யும் மகமுதலியன செவ்விதிற் பயனை யளிக்கும். ஜலரூப இரசன இந்திரியம் வீரியரூபகாரணத்தின்கண்ணே யிருக்கும். தோஷங்களற்ற மனம் சத்திய அர்த்தத்தின்கண்ணே யிருக்கும்; அதுபோல வாக்கிந்திரியமும் சத்திய அர்த்தத்தின்கண்ணேயிருக்கும். ஏனெனின், "யத்தமனஸாத்யாயதி தத்வாசாவததி" (பொ-ள்.) இப்புருஷன் எப்பொருளை மனத்தால் தியானம் செய்கின்றானோ, அப்பொருளை வாக்காற் கூறுகின்றனன் என்னுஞ் சுருதியின்கண் மனத்தினுக்கும், வாக்கினுக்கும் ஒரே விஷயம் கூறப்பட்டிருக்கின்றது. ஹே சாகல்லியரே! எங்ஙனம் எல்லா நீரின் உற்பத்தி ஸ்திதிகளின்காரணம் சமுத்திரம் ஆகுமோ, அங்ஙனமே சூரியாதி தேவதைகட்கும், நேத்திராதி இந்திரியங்கட்கும், உருவமுதலிய விஷயங்கட்கும் உற்பத்தி ஸ்திதிகாரணம் இருதயமாம். ஈண்டு இருதய சப்தத்தால் மாயாவிசிஷ்ட அந்தர்யாமியாய பரமான்மாவைக் கவர்ந்துகொள்க. இப்போ திப்பொருளையே வெளிப்படையாய்க் காண்பிக்கின்றேன்:—ஹே சாகல்லியரே! எங்ஙனம் உலகபிரசித்த சுவரிடத்தே முதலில் ரேகைமாத்திரமாய்த் தேவதை முதலிய மூர்த்திகளின் சித்திரமிருக்கும். அந்த ரேகை வடிவச் சித்திரத்தின் கண்ணே, சுவேதபீதநீல இரக்தாதி வர்ணங்களிருக்கும். அச்சுவேதாதி வர்ணங்களிடத்தும், தேவதைகளின் முகத்தினிடத்துப் பாலிருக்கும், நேத்திரங்களில் அஞ்சன மிருக்கும், மஸ்தகத்தின்மேல் முகுடமிருக்கும். கரங்களினிடத்தே வில், அம்பு முதலிய ஆயுதங்களிருக்கும். இவ்வண்ணம், சித்திராதி பதார்த்தங்கள் ஒன்று மற்றொன்றை ஆஸ்ரயித்து சர்வ லோகர்கட்குந் தோற்றுநிற்கும். ஆனால், உண்மையாய் ஆராய்ந்து பார்க்குங்கால், அச்சித்திராதி பதார்த்தங்கள் முழுமையும் ஒரு சுவரை யாஸ்ரயித்துக்கொண்டிருக்கும். ஆங்கே, கிழக்கு முதலிய திசைகளும், அக்கினி முதலிய தேவதைகளும், நேத்திராதி இந்திரியங்களும், உருவ முதலிய விஷயங்களும், மற்றுப் பிற யாவும் சாக்ஷாத்தாகவேனும், அல்லது பரம்பரையாகவேனும், ஏக பரமான்மவடிவ இருதயத்தின்கண்ணே யிருக்கும். ஆண்டு விருத்திகளோடு கூடிய அந்தக்கரணம், சாக்ஷாத் இருதயத்தின்கண்ணே யிருக்கும். மற்றைய ஜகத்து அந்தக்கரண வாயிலாய்ப் பரம்பரா சம்பந்தத்தால் இருதயத்தின்கண் இருக்கும். ஹே சாகல்லியரே! சித்திரங்கட்கு ஆதாரமாய பித்தியை (சுவரை) மண்கொண்டு பூசிவிடில், அச்சித்திரம் இலயபாவத்தை யடையும். அங்ஙனமே, பிரஹ்மஞானரூப மண்ணாற் பூசின், இவ்வுலகரூப ஓவியம் இலயபாவத்தை யடையும். ஹே சாகல்லியரே! கீழ் மேற்றன்மையற்ற சமான பித்தியின்கண்ணே சில சித்திரம் மேலதாய்ப் பிரதீதியாகும்; சில சித்திரம் கீழதாய்ப்

பிரதீதியாகும். ஆனால், அம்மேற்கீழ்த்தன்மை உண்மையாயின்றும்; மற்றே, கற்பிதமாம் அங்ஙனமே, யாண்டும் சமானமாய பரமாத்மரூப இருதயத்தின்கண் இந்திராதி தேவதைகள் மேலதாய்ப பிரதீதியாவர்; விருக்ஷாதி ஸ்தாவரங்கள் கீழதாய்ப் பிரதீதியாகும். ஆனல், அவவுத்கிருஷ்டத்தன்மையும், நிக்கிருஷ்டத் தன்மையும பரமான்ம வடிவ இருதயத்தின்கண் உண்மையாயின்றும்; மற்றே, கறபிதமாம். ஹே சாகலலியரே! சிததிரக்காரப் புருஷன் நீல பீதாதி நானாவகை யாய வர்ணங்களால பித்தியின்கண்ணே சித்திரத்தைத் தீட்டுவன். அதுபோல, நானாவகையாய வாசனைகளோடு கூடிய புத்திரூப சித்திரக்காரன் யான் எனது என்னும் அபிமானரூப வாணஙகளால பரமான்மவடிவ இருதயத்தின்கண் உலக வடிவ ஓவியங்களைத தீட்டுவன். ஹே சாகலலியரே! சித்திரத்திற்குபயோகியாய நீல பீதாதி நிறங்களைத தாரணம செய்வதாய காஷ்டத்தாலாககும் சாயை, பித்தி யோடும் சம்பநதமாத்திரததைச செய்து, அபபித்தியின்கண்ணே நானாவகை யாய சித்திரங்களைச செயயுமட அதுபோல, பித்தியும சாயையின் சமீபததன்மை யானே, நானாவகையாய சிததிரங்களைச செய்யும. ஏனெனின், பித்தியில்லையா யின், சித்திரங்களின் உற்பத்தி யுண்டாகாது. ஆகையால, பித்தியும் சாயையும் சித்திரங்களின்பொருட்டுக் காரணமாம. அதுபோல, மாயாவிசிஷ்ட சைதன்ய ரூபப பித்தியின்கண் நானாவகையாய வாசனையோடு கூடிய புத்திரூபச்சாயை ஜகத்துருவ சித்திரங்களைச செய்யும ஆகையால, மாயாவிசிஷ்ட பரமான் மாவும் புத்தியும் உலக காரணமாம். ஹே சாகல்லியரே! பித்தியின்கண் இரா நின்ற சிததிரத்தின்மீது அடிககடி மண்ணின் பூசசைப பூசினல், அசசித்திரங கள் லேசமாததிரமாய் அபபித்தியின்கண்ணே யிருநதபோதினும, பாகிய ஸ்பஷ்ட ரூபமாய்ப் பிரதீதியாவதின்றும. அதுபோல, பிராரபத கரும சமாபதிபரியந்தம் பர மாத்மரூப இருதயததின்கண் ஆபாசமாதரிரமாய்ச சிததிர உலகிருந்தபோதினும, அடிககடி கிளம்பும் பிரஹ்மாகார விருததிரூப மிருத்திகையின் (மண்ணின்) பூச சாற் சமாதிகாலத்தின் கண்ணே புலபபடுவதின்றும். கருத்திதுவாம்:—மீண் டும் மீண்டும் செய்யும மிருத்திகையின் பூசசால் சித்திரங்கள எஞசுதலின்றி நிவிருத்தியாகமாட்டா; மறறே, மீண்டும மீணடும மிருத்திகையின் பூச்சால் சித் திரங்களின் தெரியாமை வடிவ லயமுண்டாம. பித்தி நிவிருத்தியாயினே, சித்திரங்களும் எஞசுதலின்றி நீங்கும. அதுபோல, பிரஹ்மஞானத்தால் அஞ் ஞானம் நீங்கினும், எததுணை, பிராரபத கருமம நீங்கமாட்டாதோ, அததுணை, எஞ் சுதலின்றிப பிரபஞ்ச நீககமும் உண்டாகமாட்டாது; மறறே, ஜீவன் முக்தனுக்கு விசார காலத்தின்கண்ணே பிரபஞசததின் தோற்றமை உண்டாம். பிராரப்த கருமம் நீங்கிய உடனே எஞசுத லின்றிப் பிரபஞ்ச நிவிருத்தியுண்டாம். இக்கார ணததாலே ஜீவன் முக்த புருஷர்கட்கு ஆபாச மாததிரமாய் உலகத்தோற்ற முண்டாம். ஹே சாகல்லியரே! மாயாவியாய இந்திர ஜாலக்காரனுகிய கார ணத்தால், ஆகாசததின்கண்ணே நானாவகையாய சேனைகள் தோற்றுவதே போலப் புத்திரூப காரணத்தால் பரமான்மரூப இருதயததின்கண் நானாவகையாய பிரபஞ்சம் தோறறு நிற்கும். ஹே சாகல்லியரே! மாயாவிவடிவ காரணம் நாச

முறினும், துயிலை யடையினும், மற்றைய காரியத்தை மருவியிருப்பினும் ஆகாசத்தின்கண் இராநின்ற நானாவகையாய உலகு தோற்றாது. அங்ஙனமே, சிலநோய் முதலியவற்றால் புத்திரூப காரணம் நாசமுறினும், துயிலையுறினும், ஆன்மாவின்கண்ணே யொருமையுறினும், பரமான்மரூப இருதயத்தின்கண் இராநின்ற பிரபஞ்சரூப சித்திரம் தோற்றாது. ஹே சாகல்லியரே! மாயாவியானவன் ஆகாசத்தின்கண்ணே யுண்டாக்கிய நானாவகையாய பதார்த்தங்கள் மாயாவியினும் வேறன்றாம்; மற்றோ, மாயாவியின் சொரூபமேயாம். அதுபோலப் பரமான்மரூப இருதயத்தின்கண்ணே புத்தியாற் கற்பிக்கப்பட்ட உலகானது புத்தியினும் வேறன்றாம்; மற்றோ, புத்தியின் வடிவமேயாம். இக்கருத்தைப் பற்றியே வேதாந்த சாஸ்திரத்தின்கண்ணே திருஷ்டி சிருஷ்டி வாதம கூறப்பட்டுளது. ஹே சாகல்லியரே! ஆகாசத்தின்கண்ணே இராநின்ற அந்தகாரமானது, அந்தகாரத்தாலே 'தாற்றா நிற்கும். சூரியாதிப பிரகாசத்தால் அந்தகாரப் பிரதீதி உண்டாகாது. அதுபோன்று, பரமாத்மரூப இருதயத்தின்கண் இராநின்ற புத்தியானது புத்தியாலே புலப்படா நிற்கும். சூரியாதிப் பிரகாசத்தால் அந்தகாரம் நீங்கிவிடின், விசுத்த ஆகாசத்தின்கண்ணே தோஷமறற நேத்திரமுடைய புருஷன் அந்தகாரத்தைக் காணான். அதுபோல, ஆன்மஞானத்தால் அஞ்ஞானம் நீங்கப்பெறின், விசுத்த ஆன்மாவின்கண்ணே காரணசகித புத்தியை அறிஞன் காணான். ஆகையால், ஆன்மாவினும வேறாய புத்திமுதலிய ஜடபதார்த்தங்கள் அளவையாற் பெறப்படுவனவன்றாம்; மறறோ, மயலாலே பெறப்படுவனவாம்.

சங்கை:—புததியை அளவையால் உண்டாய உண்மை யுணர்வின் விஷயமென உடன்படா தொழியின், யாது அளவையால உண்டாய உண்மை உணர்விற்கு அவிஷயமாமோ, அது முயறகோடுபோல அசத்தியமேயாம். ஆகையால், புத்தியும் அசத்தியமேயாம். எபபொருள் அசத்தியமாமோ அப்பொருள் எக்காரிய காரணத்திலும் வல்லதல்லவாம். ஆகையால, அசத்திய புத்தியால் எக்காரியத்தின் சித்தியும் உண்டாகலாகாதன்றோ.

சமாதானம்:—முயற்கோடும, மலடிமைநதனும் அசத்தியமாயினும் அவை முயற்கோடு மலடிமைந்தன் என்னும் சப்தத்தாற தம்மை விஷயம் செய்யும் விகற்பரூப ஞானத்தை உண்டாக்கும். அதுபோல, அககாரியகாரண சகித புத்தி அசத்தியமாயினும், நானாவகையாய மபல்வடிவ ஞானங்களை யுண்டாக்கும். ஆகையால், முயற்கோடுபோல அசத்திய புத்தியின்கண்ணும் நானாவகையாய வியவகார காரணத்தன்மை சம்பவிக்கும்.

சங்கை:—புத்தி அசத்தியமாயினும், புத்தியின் காரணமாய அஞ்ஞானம் என் உண்மையாகாது? அஞ்ஞானத்தையும் அசத்தியமென உடன்படின், அசத்திய வஸ்து எவர்க்கும் அநர்த்தத்தைச செய்யாது. ஆகையால், அசத்திய அஞ்ஞானத்தின்கண் ஜன்ம மரணாதிரூப அநர்த்த காரணத் தன்மை உண்டாகலாகாது.

சமாதானம்:—புத்தி அசத்தியமாமாறுபோலப் புத்தியின் காரணமாய அஞ்ஞானமும் அசத்தியமேயாம். அசத்திய வஸ்துவின்கண்ணும் அநர்த்த காரணத்தன்மை உலகின்கண்ணே காணப்படுகின்றது. ஈயோடுண்டிலனெனினும், ஒருவ

னுக்கு ஈயோடுண்டதாய் மயலுண்டாயின், அவன் வாந்தியெடுக்கின்றான். அல்லது, பாமபின்றேனும் என்னைப் பாம்பு தீண்டியது அதன் விஷம் மேலேறுகின்றது என ஒருவனுக்கு மயலுண்டாயின், அவன் பிராணத்தியாகம் செய்கின்றான். ஆகையால், எங்ஙனம் அசத்தியமாய ஈயோடுண்டதும், அசத்தியரூபப் பாம்பின் கடியும் வாந்தி மாணவடிவ அநர்த்தங்களையாற்றியவோ, அங்ஙனம அத்தியந்தம் அசத்திய அஞ்ஞானமும் மயலுற்ற புருஷர்கட்கு ஜன்ம மாணரூப அநர்த்த காரணமாம். ஹே சாகல்லியரே! கணுக்காணு மொருவனே அசத்திய அஞ்ஞானத்தால் யானை, குதிரை முதலிய நானாவகையாய ரூபங்களைத் தாரணம்செய்வன். அதுபோலப் பரமான்ம தேவரொருவரே அசத்திய அஞ்ஞானவயத்தால் பிரபஞ்ச ரூபத்தைத் தாரணம் செய்வர். ஹே சாகல்லியரே! என் போன்ற அறிஞரது திருஷ்டியால் அஞ்ஞானம் முக்காலத்திலும இல்லதாம் என்றாலும், உம்மைப போன்ற அவிவேகிகட்கு இவ்வஞ்ஞானம வஜ்ஜிரப பொருப்பொப்பப் பிளக்கமுடியாததாம். இக்காரணத்தாலே, உம்மைப்போன்ற அவிவேகி புருஷர் அத்தியந்த சமீப இருதயதேசத்தின்கண் இராநின்ற ஆன்மாவையும அறியார்; விழிகளற்ற குருடனானவன் கையாற்றீண்டிய நிதியையும் அறியாததேபோல. ஆகையால், ஹே சாகல்லியரே! சம்பூரணப பிரபஞ்சரூப சித்திரத்தின் ஆசிரயம் பரமாத்மரூப இருதயமா மென்னும உததரததை யான் உம்பொருட்டுக் கூறினேன்.

இபபோது, எபபொருளைச சிரவணஞ்செய்வதற்கு உமக்கிச்சையுளதோ, அப்பொருளை யென்பால் நீர் கேட்பீராக. ஹே குழந்தாய்! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கியர் கூறியபோது, அம்மூடபுத்தியையுடைய சாகல்லியர் மீண்டும் வினாவுதலினின்றும் நீங்கினாரில்லை; மறறோ, காலத்தால் மயங்கிய மண்டூகம் கிருஷ்ண சர்ப்பத்தைக் கூவும் சபதத்தை யடிக்கடி உசசாரணம் செய்யும். அதுபோலப் பாவ கருமத்தால ஏவப்பட்ட இசசாகல்லியரும் காலரூப சர்பபத்தைக கூவும் மீண்டும் வினாதல்வடிவ சப்தத்தை உச்சரித்தனர். அத்தகைய சாகல்லியரை நோக்கி, யாஞ்ஞவறகியர் கருணையினால அத்தியந்தம் துககியாயினர்.

இப்போ தைவ்விசாரத்தால் யாஞ்ஞவறகியரது சித்தத்தின்கண்ணே துக்கமுண்டாயதோ, அவ்விசாரத்தைக்காண்பிபபாம்:—அநதோ பெருங்கஷ்டம்! இந்தத் துர்ப்புத்தியுடைய சாகல்லியரது மாணம இப்போது சமீபித்துவிட்டதே. ஏனெனின், இரக்தவர்ண நேத்திரங்களோடு கூடியவரும் இருக்கு, யஜுஷ், சாமம என்னும் வேதத்திரய சொரூபரும் ஆய சூரியபகவான் என்னும் எனதாசிரிய தமது பிரதிஞ்ஞையை யுண்மையாக்கும பொருட்டு, இப்போது தமது மண்டலத்தினின்றும இறங்கி வந்து எனது நாவின்கண்ணே யிருப்பா. அதன்பின்ன பரவயமாய எனது நாவானது, இததுர்ப் புத்தியையுடைய சாகல்லியருக்கு சாபங்கொடுக்கும், அச்சாபத்தால் இசசாகலலியர் கணமாத்திரையில் பஸ்மமா என விசாரித்துக் கிருபையோடு கூடியவராய் அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் சி த்தின்கண்ணே துக்கமுடையவராயினர். இச்சாகல்லியருக்கு எவ்வகையா மாண முண்டாகாதிருப்பின் மேன்மையதாம் எனச சிந்தித்தனர். அதன்

னர் மரண சமீபத்தையடைந்த மூடபுத்தியையுடைய சாகல்லியர் மீண்டும் யாஞ்ஞவற்கியரை நோக்கி இங்ஙனம் வினவத் தொடங்கினர். சாகல்லியர் கூறல்:—ஹே யாஞ்ஞவற்கிய! சம்பூரணப் பிரபஞ்சரூபச் சித்திரங்களின் ஆதாரமாய இருதயம் எதனை யாசிரயித்திருக்கும்? ஹே குழந்தாய்! இவ்வகை வினாவைக் கேட்டபோது, யாஞ்ஞவற்கியர் ஹே அஹல்லிகரே! என விளித்துச் சாகல்லியருக்குக் கூறத் தொடங்கினர். இப்போது ஐவகையாய் அஹல்லிகரென்னுஞ் சப்தத்தின் பொருளைக் காண்பிப்பாம்:—அவற்றுள், பகலில் இலயத்தையடைந்து இரவின்கண்ணே யுண்டாவதற்கு அஹல்லிகமெனப்பெயராம்; அத்தகையது *பிரேதசரீரமாம். இச் சாகல்லியரும் மரித்துப் பிரேதபாவத்தை யடைவர். ஆதலின், யாஞ்ஞவற்கியர் சாகல்லியரை அஹல்லிகரென விளித்தனர் (1). அல்லது, பகல்போல ஒளிராநின்ற பொருளின்கண் சம்சயரூப இலயத்தை யடைந்தவரை யஹல்லிகரென்பர். யாஞ்ஞவற்கியரது வெளிப்படையாய அர்த்தத்தின்கண் இச்சாகல்லியருக்குச் சம்சய முண்டாயதாதலின், அஹல்லிகர் எனச் சாகல்லியரை விளித்தனர் (2). அல்லது, சூக்ஷ்ம ஆத்மத்தை நிச்சயம் செய்யும் இருதயம் அற்றவன் யாவனோ, அவன் அஹல்லிகனாவன். ஆண்டு, வெளிப்படையாய்க் கூறிய பொருளின்கண் சம்மதிமானும் மீண்டும் வினவான்; இச்சாகல்லியரோ வெளிப்படையாய அர்த்தத்தின்கண்ணும் மீண்டும் மீண்டும் வினவுகின்றமையின் இஃதறிந்து கொள்ளலாமன்றோ:—சூக்ஷ்மப்பொருளை நிச்சயம் செய்யும் இருதயத்தினின்றும் இச் சாகல்லியர் நீங்கினவர் என் என்னை! சாகல்லியரது மதி சூக்ஷ்ம ஆத்மத்தைக் கவருமாயின் மீண்டுமீண்டும் வினவாரன்றோ? அதனாலேதான் யாஞ்ஞவற்கியர் சாகல்லியரை அஹல்லிகரென விளித்தனர் (3). அல்லது, யாஞ்ஞவற்கியர் கூறிய உலக ஒவ்விய ஆதாரமாய பரமாத்மாவாய இருதயத்தைச் சாகல்லியர் அறிந்திலர்; மற்றோ, மரணத்தின் பின்னர் பிருதிவியின்கண் இராநின்ற மாம்சமய இருதயம் யாதோ, எம்மாம்சமய இருதயத்தை நாய் முதலியன பக்ஷணம் செய்யுமோ, அம்மாம்சமய இருதயத்தையே சாகல்லியர் அறிந்தனர்; அதனாலேதான் யாஞ்ஞவற்கியர் சாகல்லியரை அஹல்லிகரென விளித்தனர் (4). அல்லது, தினத்தைச் செய்யும் சூரியபகவானவர் இச்சபையின்கண்ணே இச்சாகல்லியரை நாசம் செய்வர் என்பதனாலேதான் யாஞ்ஞவற்கியர் சாகல்லியரை அஹல்லிகரென விளித்தனர் (5). ஹே குழந்தாய்! இங்ஙனம் யாஞ்ஞவற்கிய முனிவர் அஹல்லிகரென விளித்துச் சாகல்லியருக்கு உத்தரங் கூறத்தொடங்கினர். யாஞ்ஞவற்கியர் கூறல்:—ஹே சாகல்லியரே! பிரபஞ்சரூப சித்திரத்தைத் தாரணம் செய்யும் பரமான்மாவையே யான் இருதயரூபமாய்க் கூறினேன். ஆனால், நீர் இவ்வார்த்தையை யறிந்திலீர்; மற்றோ, பிரசித்த மாம்சகண்டத்தையே நீர் இருதயரூபமாய் அறிந்தீர். ஆகையால், உமதபிப்பிராயானுசாரமாய் யான் அவ்வினாவிற்கு விடை கூறுகின்றேன்:—ஹே சாகல்லியரே! அவ்விருதயம் எனது சூக்ஷ்ம சரீரத்தை யாசிரயித்திருக்கும். ஏனெனின், சூக்ஷ்ம சரீரமின்றி, இஸ்தூல சரீர நிலை பொருந்தாதாம். ஸ்தூல சரீரமின்றிச் சூக்ஷ்ம சரீர நிலை பொருந்தாதாம். சூக்ஷ்ம சரீரத்தினும் இஸ்தூல சரீரம் வேறாயின், மாம்சமய இருதய சகித

* பிரேதம் = பேய்.

இத்தூல சரீரத்தை நாய் முதலியன பக்ஷணம் செய்யும். காகம் முதலிய பறவைகள் கண்டங் கண்டமாய்ச செய்து கவ்விக் கொண்டுபோம். இவ்வபிப பிராயத்தாலே சூக்ஷும சரீரத்தை இருதயசகித ஸ்தூல சரீர ஆதாரமெனக் கூறப்பட்டது. ஹே குழந்தாய்! யாஞ்ஞவற்கியர் முன்னர்ச சாகல்லியர் பொருட்டு இருதய சப்தத்தால் பரமான்மாவைக கூறினர்; அதனை யுணராது எங்ஙனம அசசாகல்லியர் முன்னர் இருதயத்தின் ஆசிரயத்தை வினவினரோ, அங்ஙனமே அமமூடயராய சாகல்லியர் மீண்டும ஆதாரத்தைக் கேட்டனா. சாகல்லியர் கூறல் :—ஹே யாஞ்ஞவற்கிய! நீ பரஸ்பர ஆசிரித எததூல சூக்ஷும சரீரத்தைக் கூறினையோ, அவை எதை ஆசிரயிததிருககும. யாஞ்ஞவற்கியர் கூறல் :— ஹே சாகல்லியரே! அவை பிராணனை யாசிரயிததிருக்கும். சாகலலியா கூறல :—ஹே யாஞ்ஞவற்கிய! அநதப பிராணன் எதை யாசிரயிததிருககும. யாஞ்ஞவற்கியா கூறல் :—ஹே சாகல்லியரே! அந்தப பிராணன் அபானனை யாசிரயிததிருக்கும. சாகலலியா கூறல :—ஹே யாஞ்ஞவற்கிய! அநத அபானன் எதை யாசிரயித்திருக்கும். யாஞ்ஞவற்கியர் கூறல :—ஹே சாகலலியரே! அநத அபானன் வியானனை யாசிரயிததிருககும. சாகலலியா கூறல :—ஹே யாஞ்ஞவற்கிய! அந்த வியானன் எதனையாசிரயிததிருக்கும. யாஞ்ஞவற்கியா கூறல் :—ஹே சாகல்லியரே! அநத வியானன் உதானனை யாசிரயிததிருககும. சாகல்லியர் கூறல :—ஹே யாஞ்ஞவற்கிய! அவ்வுதானன் எதை யாசிரயித்திருக்கும். யாஞ்ஞவற்கியா கூறல் :—ஹே சாகலலியரே! அவவுதானன் சமானனை யாசிரயிததிருக்கும். ஹே மைந்த! சாகலலியா செய்த வினவானது யாஞ்ஞவற்கியரின் அபிபபிராயத்தை யறியாது செய்ததாம. ஏனெனின், சர்வபபிராணிகளின் புத்தியின்கண்ணும், சாக்ஷிரூபமாய் எபபோதும அபரோக்ஷமாயிருபபதை இருதயமென்பர். இவ்வபிபபிராயத்தாலே இருதய சபததால யாஞ்ஞவற்கியர் பரமான்மாவைக் கூறினா. அசசாகலலியா இருதய சபதத்தால அநதக கரணத்தின் நிவாசஸ்தானமாய மாம்சமய இருதயததைக கவாநதனர் சாகல்லியர் இருதய சபதததால் பரமான்மாவை அறிநதிருபபாராயின், அவ்விருதயம் எதனை யாசிரயிததிருககும என வினவாரன்றே; ஏனெனின், "ஸ ஹ௱ஂஶாக௱த்ர ப்ரதிஷ்டித꞉ ஸ்வேமஹிம்நி" (பொருள்) அநத வியாபக பரமான்மா எதன்கண்ணே ஸ்திதமாம் எனச சங்கை யுண்டாக, அநத வியாபக பரமான்மா, தனது மகிமையின் கண்ணேயிருககும என்னும் சுருதியினகண், பரமாத்மாவிறகு மறறோராசிரயம் கூறப்படவிலலை. ஆதலினிஃதறிநது கொள்ளலாமன்றோ? சாகல்லியர் இருதய சப்தத்தால் பரமான்மாவைக கவராது மாமசமய இருதயத்தைக் கவர்நதனரென. அவ்விருதயம் என்கண்ணேயுளது என்னும உததரவாக்கியததின்கண் யாஞ்ஞவற்கியர் என்கண் என்பதினுள்ள யான் என்னும சபதத்தால் யானென்னுந் தோற்றத்திலங்கும் ஆன்மாவையே கூறினர். அந்த மந்த புந்தியையுடைய சாகல்லியர் யானென்னும்சப்தத்தால் சூக்ஷுமசரீரத்தையே கவர்ந்தனர். யாஞ்ஞவற்கியர் பிராணன், அபானன், வியானன், உதானன் என்னுமிந்நான்கு சபதங்களின் இலக்கணவிருத்தியால் பிராணதிகளையேவும் மாயாவிசிஷ்ட பரமான்மாவையே கூறினர். அச்

சாகல்லியர் பிராணாதி சப்தங்களால் வாச்சிய அர்த்தபூத வாயுவையே கவர்ந்தனர். அக்காரணத்தாலே அந்தப் புத்தி ஹீன சாகல்லியர் அந்தப் பிராணன் யாதின் கண்ணேயுளது எனவும், அந்த அபானன் யாதின்கண்ணேயுளது எனவும் வினவினர். முடிவில் யாஞ்ஞவற்கியர் சர்வபூதங்களின் ஆதாரம் சமானன் எனக் கூறினர். அச்சமானனையும் அச்சாகல்லியர் வாயுரூபமாயே அறிந்தனர். ஆனால், சமான சப்தத்தால் யாஞ்ஞவற்கியர் வாயுவைக் கூறிலர்; மற்றோ, யாவற்றிற்கும் ஆன்மவடிவமாய பரமான்மதேவரைச சமான சப்தத்தால் கூறினர். அப்பரமான்ம தேவர் ஆநந்தவடிவினர். நேதிநேதி யென்னுஞ் சுருதியானது இரண்டு நகாரங்களால் ஸ்தூலசூக்ஷமப் பிரபஞ்சத்தை நிஷேதித்துப் பரமான்மதேவரை யுணர்த்தும். அல்லது, அஞ்ஞான காலத்தின்கண் இராநின்ற பாவ அபாவரூப இருவகையாய உலகையும் நிஷேதித்து நேதி நேதி யென்னும் சுருதி பரமான்மதேவரை யுணர்த்தும். அப்பரமான்ம தேவர் சஜாதீயபேதம, விஜாதீயபேதம, சுவகதபேதம் என்னும் மூவகைப் பேதங்களற்றவர். அப்பரமான்ம தேவர் நிர்க்குணராதலின் புத்தி முதலிய காரணங்களால் அறியக்கூடாதவர். ஆடை நீண்ட காலத்தையடைந்து ஜீர்ணத்தன்மையை யடையுமாறுபோல, இவ்வாநந்தசொரூப ஆன்மதேவர் காலத்தால் ஜீர்ணபாவத்தை யடையார்; ஆதலின், இவர் அசீர்யர். நீர் முதலிய பதார்த்தங்களோடு ஆகாசத்திற்குச சம்பந்தம் உண்டாகாதாதலின், அது அசங்கமாம். இவ்வாறே மதிமுதலியவற்றோடு ஆன்மதேவருக்கு உண்மையாய்ச சம்பந்தமின்மையின் இவ்வாநந்தசொரூப ஆன்மதேவரும் அசங்கராவர். இவ்வாநந்தசொரூப ஆன்மதேவர் அபத்தராதலின் துக்க சம்பந்தமாகிய பீடையை அடையார். இவ்வான்ம தேவர் விநாசரகிதராதலின் ஹிம்சையையும் அடையார். ஹே சிஷ்ய! இவ்வண்ணம் சாகல்லியர் யாஞ்ஞவற்கியரிடத்தே அளவிறந்த வினாக்களைச செய்தகாலத்தே சூரியபகவானவர் தமது பிரதிஞ்ஞையைச சத்தியம் செய்யுமபொருட்டு, யாஞ்ஞவற்கியருடைய நாவின்கண்ணே இருந்துகொண்டு சாகல்லியரைக் கேட்கத் தொடங்கினர். இப்போது அக்கேள்வியின் சித்தியின் பொருட்டுச் சாகல்லியர் பூர்வஞ்செய்த எட்டுக் கேள்விகளின் உத்தரங்களைப் பிரசங்கத்தாற காண்பிப்பாம்:—ஆண்டு, முன்னர் சாகல்லியர் தேவதைகளின் எண்ணிக்கை கேட்டகாலத்தே யாஞ்ஞவற்கியர் இங்ஙனம் சமாதானித்தனர். அதாவது:—விஸ்தாரமாயோ தேவதைகள் அநந்தங்களாம். சுருக்கமாயோ பிராணதேவதையொன்றும். இவை அவ்வொரு தேவதையின் எட்டு விபூதிகளாம். சாரீர புருஷன் (1) காமமய புருஷன் (2) ஆதித்திய புருஷன் (3) சிரௌத புருஷன் (4) சாயாமய புருஷன் (5) பிரதிபிம்ப புருஷன் (6) ஜலத்துள புருஷன் (7) புத்திர புருஷன் (8) அவற்றுள் பிருதிவிரூப இத்தூல சரீரத்தின்கண் மாதாவினின்றும் உண்டாய துவக்கு மாமிசம உதிரம் எனனும் முக்கோசம், சரீரமெனப் பெயரிய புருஷனுக்கு இடமாம் (1). ஸ்திரீ சம்போகத்தின் இச்சைவடிவ காமம், காமமய புருஷனுக்கு இடமாம் (2). சுக்கில நீலபீதாதி நானாவகையாய ரூபங்கள், ஆதித்திய புருஷனுக்கிடமாம் (3). பிரதித்தொனிரூப சப்தத்தின்கண்ணே விசேஷமாய் விளக்கத்தையுடைய சுரோதா புருஷனுக்கு ஆகாசம், இடமாம் (4). அந்தகாரரூப தமம், சாயாமய புருஷனுக்கிடமாம் (5). பிரதிபிம்பங்கவர போக்கியமாய கண்ணாடி முதலிய நிர்மல பதார்த்தங்களிடத்தே

யுள்ள பிரதிபிம்ப புருஷனுக்கு, ஒளிரு முருவம், இடமாம் (6). நீர், நீருளபுருஷனுக் கிடமாம் (7). உபஸ்த இந்திரியம் புத்திர புருஷனுக்கிடமாம் (8). அக்கினி (1) ஹிருதயம் (2) சக்ஷு (3) சுரோத்திரம் (4) ஹிருதயம் (5) சக்ஷு (6) ஹிருதயம் (7) ஹிருதயம் (8) என்னுமிவ்வெட்டுச் சரீராதி அஷ்ட புருஷர்கட்கு முறையே சக்ஷுக்களாம். ஈண்டு ஹிருதய சப்தத்தால் புத்தியைக் கவர்ந்துகொள்க. அன்னாதிகளின் பரிணமரூப அமிருதம் சரீரபுருஷ காரணமாம் (1). ஸ்திரீ காமமய புருஷனுக்குக் காரணமாம (2). சக்ஷு இந்திரியம் ஆதித்திய புருஷனுக்குக் காரணமாம் (3). திசை சிரௌத புருஷனுக்குக் காரணமாம். (4) மிருத்தியு சாயாமய புருஷனுக்குக் காரணமாம் (5). பிராணன் பிரதிபிம்ப புருஷனுக்குக் காரணமாம் (6). வருணன் நீருள புருஷனுக்குக் காரணமாம (7). பிரஜாபதி புத்திர புருஷனுக்குக காரணமாம் (8). இவ்வண்ணம் எட்டுப் புருஷர், அப்புருஷர்களின் எட்டு இடம், அவர் தம்மெட்டுச் சக்ஷுக்கள, அவர் தம்மெட்டுக் காரணங்கள் என்னும் இந்நால்வகையாய அஷ்டகங்களில் காரணரூபத்தினின்றும் பிரவேசம் செய்து, பரமான்ம தேவர் அவர்கட்குத் தத்தம வியவகாரம் செய்வதில் ஆற்றலுண்டாக்கினர். நூல் வடிவ காரணம் படரூப காரியத்தின்கண்ணே பிரவேசித்தே, சீதநிவிருத்தி முதலிய சாவ வியவகாரங்களையும் செய்யும். அதுபோல, இப்பரமான்ம தேவரும் சம்பூரணகாரியப பிரபஞசத்தினகண்ணே பிரவேசித்து, நானுவகையாய வியவகாரங்களைச சிததம் செய்வர். நூல் வடிவகாரணம் படரூப காரியத்தைக் காரியத்தன்மைபறறதாய்ச செய்து, கேவலங் காரணரூபமாயிருக்கும். அதுபோல, இபபரமான்ம தேவரும் பிரபஞ்ச உபசம்ஹாரகாலத்தே கிழக்கு முதலிய திசைகள் தொடங்கிச சமான பரியந்தம் சர்வகாரியங்களையும் உபசம்ஹாரம் செய்து, காரியபாவமறற ஏக அதவிதீய ரூபராயிருப்பர். கருத்திதுவாம் :—கிழக்கு முதலிய திசைகளிடத்தே நிகழாநின்ற பதார்த்தத்தோடு கிழக்கு முதலிய திசைகளைச சூரியாதி தேவதைகளிடத்தே உபசம்ஹாரம் செய்வர். அச்சூரியாதி தேவதைகளைச சக்ஷு முதலிய இநதிரியங்களிடத்தே உபசம்ஹாரம் செய்வர். அச்சக்ஷு முதலிய இநதிரியங்களை ரூபாதிவிஷயங்களிடத்தே உபசம ஹாரம்செய்வர். அவ்வுருவாதி விஷயங்களை இருதயத்தின்கண்ணே உபசம்ஹாரம் செய்வர். அவ்விருதயத்தை ஸ்தூலசூக்ஷும சரீரத்தின்கண்ணே உபசம்ஹாரம் செய்வர். அத்தூலசூக்ஷும சரீரங்களைப பிராணனிடத்தே உபசமஹாரம் செய்வர். அந்தப் பிராணனை அபானனிடத்தே உபசம்ஹாரம் செய்வர். அந்த அபானனை வியானனிடத்தே உபசம்ஹாரமசெய்வா. அந்த வியானனை உதானனிடத்தே உபசம்ஹாரம் செய்வர். அவ்வுதானனைச சமானனிடத்தே உபசம்ஹாரம் செய்வர். இவ்வண்ணம் பரமான்ம தேவர் சிருஷ்டிகாலத்தின்கண்ணே ஜகத்தை யுண்டாக்கி, பிரளயகாலத்தின்கண்ணே சமபூரண ஜகத்தையுஞ் சம்ஹரித்துப் புத்தி முதலிய உபாதிகளினும், அவற்றின் சுகதுக்காதி தர்மங்களினும், வேருய்க் காரிய காரண பாவமற்ற சுத்த சொரூபத்தின்கண்ணே நிலை பெற்றிருப்பர். கடமடாதி யுபாதிகளில் இராநின்ற ஆகாசம் உள்வெளிப் பாவத்தையடையும். அவ்வாகாசம் கடம்முதலிய உபாதிகளைப் பரித்தியாகம்செய்யின், உள்வெளித் தன்மையற்றதாய்த்

தனது பரிபூரண சுபாவத்தின்கண்ணே இருக்கும். அதுபோலச் சரீராதி உபாதிகளின் சம்பந்தத்தால் இப்பரமான்மதேவரிடத்தே உள்வெளித்தன்மை தோற்றும். இப்பரமான்மதேவர் அவ்வுபாதிகளைப் பரித்தியாகம் செய்த காலத்து, உள்வெளித் தன்மையற்றவராய்த் தமது பரிபூரண சுபாவத்தின்கண்ணே நிலை பெற்றிருப்பர். எங்ஙனம் மதுரம் முதலிய இரசங்கள் கேவலம் இரசன இந்திரியத்தாலே அறிதல் கூடுமோ, அதனினும் வேறாய எவ்விந்திரியத்தாலும் அறிதல் முடியாதோ, அங்ஙனமே பரமான்மதேவரும கேவலம் உபநிஷத் பிரமாணததாலே அறியத்தகுநதவர். உபநிஷத் பிரமாணத்திலும வேறாய எப்பிரத்தியக்ஷாதிப் பிரமாணத்தாலும் அறியத்தகாதவா. ஹே சாகல்லிய! அத்தகைய பரமான்ம தேவரின் சொரூபத்தை நின்பால் யான் ஒருமுறை கேட்கினறேன், நீ அப்பரமான்மதேவரை யறிந்திருப்பை யாயின், என்பொருட்டுக் கூறுதி. ஹே சாகல்லிய! நினது வினாக்கட்குத்தரம யான் அநேகமுறை கொடுததேனன்றோ? ஆகையால், எனது ஒரு வினாவிறகு விடை நீயும் கூறுதி. ஹே சாகலலிய! நீ எனது வினாவிற்குத்தரம் கூறாதொழிவையேல் தீர்த்தமற்றதும, மனுஷ்ய சமூகங்களோடு கூடியதும ஆய, இஜ்ஜனக புரியாகிய அசுபதேயத்தின்கண்ணே அங்ஙனமே, தக்ஷிணாயன கிருஷ்ணபக்ஷத்தின் அமாவாசியை இரவாகிய அசுபகாலததின்கண்ணே துர்ப்புத்தியோடுகூடிய சாகல்லியனாகிய உனது மிருத்தியு உண்டாம். ஹே சாகல்லிய! பிரஹ்ம வேததாவாய என்னோடு துவேஷம் செய்த சாகல்லியனாகிய நினது மரணத்தின் பின்னா என்புகளும், நினது கிருகத்தையடையா; மற்றோ, சோரனாகிய சண்டாளன் தனலோபத்தாற் பாதிவழியில அவ்வென்புகளைக்கொண்டு செலவன். ஹே குழந்தாய்! ஜகததின் உற்பத்தி, ஸ்திதி, இலயத்தைச செய்யா நிறகும் சூரியபகவான் அத்தியந்தங் குரோதத்தை யுடையவராய் யாஞுவறகியரின நாவின்கண் இருந்துகொண்டு, இவ்வித வசனத்தைச் சாகலலியா பொருட்டுக். கூறினர். அச்சாகல்லியர் ஆனமஞானமற்றவராதலின, சிறிது மாத்திரையும் அவ்வினாவின் விடையைக் கூறிலா. அதன் பின்னர்ச் சூரியபகவானது சாபததால சாகல்லியரது மனம் வாக்கு முதலிய இந்திரியங்கள் சரீரத்தினினறும் வெளிக்கிளமபின. அதன் பின்னர் அவ்வசுப தேசகாலத்தின்கண்ணே சாகல்லியருடைய மஸ்தகம் விரைவாகவே பூமியின்கண் விழுந்தது. தேவதைகளை ஜயித்துச சுவர்க்கத்தின்கண் வாழ்நதுவந்த நமுசியின் மஸ்தகம் வஜ்ஜிராயுதததால் பூமியின்கண்ணே விழுந்ததுபோலச சாகல்லியருடைய மஸ்தகம் பூமியின்கண்ணே விழுந்தது. ஹே குழந்தாய்! இவ்வண்ணம் சாகல்லியருக்கு மிருத்தியு உண்டானபோது, யாண்டும் ஹா, ஹாகார சப்தமுண்டாயது; சமபூரண ராஜமண்டலி பெருங்கலக்கத்தை யடைந்தது. அச்சாகல்லியருடைய சிஷ்யரும் உறவினரும் புலம்பினா. சாகல்லியா பூமியின்கண்ணே விழுந்ததை நோக்கி, அச்சபையினகண்ணே இருந்த பிராஹ்மணர்கள், பாலகர்கள், ஸ்திரீகள் யாவரும் சாகல்லியரைச சீசீ, சீசீ யென விகழ்நதனர். அவா யாவரும் இங்ஙனம் கூறவுந தொடங்கினர்:—பிரஹ்ம வேத்தாவாய யாஞுவறகியரோடு இசசாகல்லியன் துவேஷமசெய்தனன்; ஆதலின், அந்தத் துவேஷரூபத் தருவின் பலம் இவனுக்குக் கிடைத்தது. இச்சாகல்லியன் வித்தை முதலிய சர்வ குணங்களோடுங் கூடியவன்றான்; ஆயினும் பிரஹ்மவேத்தாவின் துவேஷரூப

மிக வலிமையுடைய தோஷத்தால் இவன் மரணத்தை யடைந்தனன். பிரளய காலாக்கினியொன்றே ஸ்தாவர ஜங்கமரூப சம்பூரண ஜகத்தைத் தகிப்பதேபோலப் பிரஹ்ம வேத்தாவின் துவேஷமொன்றே வித்தை முதலிய சம்பூரண குணங்களை நாசம் செய்யும்; இப்பொருளின்கண் இச்சாகல்லியனே திருஷ்டாந்தமாவன். ஏனெனின், இவன் மிகவும் வித்தையிற் குசலன், எல்லாக் குணங்களோடுங் கூடிய வன் என்றாலும், பிரஹ்ம வேத்தாவின் துவேஷரூபி அக்கினியானது இவனைக் கண மாத்திரையில் தகித்துவிட்டது. அல்லது, இவ்வுலகின்கண்ணே சமுத்திரம் வற்று மென்னும் சம்பாவனை எவர்க்குமுண்டாவதில்லை. அதுபோல, யாஞ்ஞவற்கியரது சாபத்தாலே சாகல்லியனது மரணமுண்டாமென எவருக்கும் சம்பாவனையின் றாம். ஆயினும், பிரஹ்ம வேத்தாவாய யாஞ்ஞவற்கியரது துவேஷத்தால் இச்சாகல் லியனது மரணமுண்டாயது. ஆகையால், பிரஹ்ம வேத்தாவின் துவேஷம் அற் புதமான மகிமையுடையதாம். அல்லது, எல்லாக் குணங்களோடு கூடியவனும் அநேக வித்தைகளிற் குசலனும் ஆய சாகல்லியனும் பிரஹ்மவேத்தாவின் துவே ஷத்தால் இத்தகைய துர்க்கதியை யடைவனாயின், வித்தைமுதலிய குணங்களற்ற வேற்றுபுருஷர் பிரஹ்மவேத்தாவின் துவேஷத்தால எத்துர்க்கதியைத்தானடை யார்; மற்றோ, எல்லாத் துர்க்கதியையுமடைவர். ஆகையால், பிரஹ்மவேத்தாவாய ஞானியோடு ஒருகாலும் துவேஷம் செய்யலாகாது; அல்லது, "ப்ரஹ்மவித்ப்ரஹ்மைவ பவதி" பிரஹ்மத்தை யறிந்தோன பரத்தையடைவன். இச்சுருதியானது இன்று உண்மையானதைக் கண்டோம். ஏனெனின், வித்தை முதலிய சர்வ குணங்க ளோடு கூடிய இசசாகல்லியனது மரணத்தில காரண வல்லமை ஜீவர்கட்கின்றாம்; மற்றோ, அசிந்திய சக்தியையுடைய பரமான்மாவின் காரியமே இஃதாம். ஆகை யால், இஃதறிந்து கொள்ளலாமன்றோ:—இந்த யாஞ்ஞவற்கியர் சாக்ஷாத் பிரஹ்மரூபராவர் என. அல்லது, பிரஹ்ம வேத்தாவானவன் சர்வான்ம பாவத்தை யடைவன் என்னும சுருதியும் இன்று உண்மையானதைக் கண்டோம். ஏனெனின், தமது சத்துரு நாசத்தை யடையின், தேகதாரிகளாய ஜீவர்கள் சுகத்தை யடைவர். அதுபோல, யாஞ்ஞவற்கியருடைய சத்துருவாகிய சாகல் லியன் நாசமடையவே, சமபூரண ஜீவர்களும் சுகத்தையடைந்தனர். தேகதாரி கள் தமது நிந்தையைச செய்யாது தம்மின் வேறாய ஜீவர்களை நிந்திப்பர். அது போல, இவ்வெல்லா உயிர்களும் யாஞ்ஞவற்கியரை நிந்தை செய்யாது அடிக்கடி சாகல்லியனையே நிந்தை செய்கின்றன. ஆகையால், இஃதறிந்து கொள்ளல மன்றோ:—பிரஹ்ம வேத்தாவாய இந்த யாஞ்ஞவற்கியர் சர்வ ஜீவர்களின் ஆன் மாவாவர். இந்த யாஞ்ஞவற்கியர் சர்வ ஜீவர்களின் ஆன்ம வடிவமன்றாயிரு பின் தேவதத்தனுடைய சத்துருவின மரணத்தால், யஞ்ஞதத்த புருஷனு குச் சுகமுண்டாவதின்றாமாறுபோல, யாஞ்ஞவற்கியரின் சத்துரு மரணத்தா அந்நிய சர்வ ஜீவர்கட்கும் சுகத்தினடைவுண்டாகமாட்டாது. ஆனால், சாக லியனது மரணத்தால் யாவரும் சுகத்தை யடைந்தனராதலின், இந்த யாஞ் வற்கியர் சர்வ ஜீவர்களின் ஆன்மரூபமாவர். இக்காரணத்தாலே தமது ஆன் ரூபமாகிய யாஞ்ஞவற்கியரை எப்பிராணியும் நிந்தை செய்வதில்லை, மற்றோ, ய

ரும் சாகல்யியனையே நிந்திக்கின்றனர். அல்லது, இவ்வுலகின்கண் எல்லாப் பாவ கருமங்களினும் பிரஹ்ம ஹத்தி வடிவ பாவகருமம் அதிகமாம். அந்தப் பிரஹ்ம ஹத்தியினும் பிரஹ்மவேத்தாவின் துவேஷரூப பாவகருமம அதிகமாம். ஏனெனின, இஜ்ஜன்மத்தின்கண்ணே செய்யப்பட்ட பிரஹ்ம ஹத்தியானது இஜ்ஜன்மத்திலே புருஷனுக்குத் துக்கரூப பலத்தை யடைவியாது ; மற்றோ, அந்தப் பிரஹ்ம ஹத்தி மறு ஜன்மத்தின்கண்ணே அபபுருஷனுக்குத் துக்கரூபபலப பிராப்தியைச செய்விக்கும். இந்தப் பிரஹ்ம வேத்தாவின் துவேஷமோ, இஜ்ஜன்மத்தின்கண்ணும் மறு ஜன்மத்தின்கண்ணும் புருஷனுக்குத் துக்கப் பிராப்தியை யுண்டுபண்ணும். இப்பொருளின்கண் இச்சாகல்யியனே சான்றாவன். ஏனெனின், உத்தமமாய சையை, ஆசன முதலியவற்றிற்கு யோக்கியமாய் அத்தியந்தம் மிருதுவானது இச்சாகல்யியனது சரீரம். பிரஹ்ம வேத்தாவின் துவேஷத்தால், பேய், உன்மத்த புருஷன்போல, இபபவித்திரமினறிய (தூய்மையின்றிய) பூமியினகண்ணே கிடக்கின்றது. ஆகையால், பிரஹ்மவேத்தாவின் துவேஷத்தால் இசசாகலலியனுக்கு இப்பிறப்பின்கண்ணே பரம துக்கபபிராபதி யுண்டாயது. யாஞ்ஞவறகியரது சாபததால் இசசாகல்லியனுக்குத் தக்ஷிணாயன கிருஷ்ணபக்ஷததின் அமாவாசியையில் மரணமுண்டாயது. ஆகையால், இஃதறிந்துகொள்ளலாமன்றே :—இச்சாகல்லியன் அவசியம நரகத்தின்கண்ணே சேரவன. அல்லது, பிரஹ்மவேததாவாய யாஞ்ஞவற்கியரோடு இசசாகல்லியன் காரணமின்றியே துவேஷம் செய்தனன். அந்தத் துவேஷரூப பாவ கருமததால கேவலம சாகல்லியனுக்குமாத்திரம் துக்கத்தி னடைவுண்டாகவில்லை ; மற்றோ, இவனுடைய உறவினர் யாவருககும் சோகக் கடலடைவுண்டாயது. இவனது ஸ்திரீயினுக்கும் விதவைத தன்மையின் அடைவுண்டாயது. இவனுககும் நரகத்தின் அடைவுண்டாயது. அது இவனது கோமள சரீரத்தையும் பூமியின்கண்ணே வீழ்விததது. இவனது புண்ணிய கருமங்களையும் பாவரூப அக்கினியின்கண்ணே புகுவித்தது. ஆகையால், பிரஹ்ம வேத்தாவின் துவேஷத்தால இசசாகல்லியனது இரண்டுலோகங்களும் பயனின்றி யொழிநதன. வேறெவனேனு மொருவன் பிரஹ்மவேத்தாவோடு துவேஷஞ்செய்யின், அவனுக்கும் அங்ஙனே இரண்டுலோகங்களும் கிடையாதொழிநதுபோம. என்பன வாதி வசனங்களால் ஹே குழந்தாய்! ஜனகராஜா, கார்க்கி, அந்நியப பிராஹ்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்னுமியாவரும யாஞ்ஞவற்கியரைத் துதி புரிநதனர் ; சாகல்லியரை நிநதை புரிந்தனர். அதன் பின்னர் சாகல்லியருடைய சிஷ்யர் சாகல்லியருடைய சரீரத்தைக் கிளப்பிச சமஸ்காரமற்ற இலௌகிக அக்கினியில் தகனம் செய்தனர். அதன் பின்னர்ச சிரத்தையையுடைய சிஷ்யர் சாகல்லியருடைய என்புகளை வீட்டிறகுக் கொண்டு செல்லும்பொருட்டு, அவ்வென்புகளை ஆடையிற கட்டிக்கொண்டு வீட்டை நோக்கிச சென்றனர். ஆண்டு மார்க்கததின்கண் சண்டாளத்தன்மை ஜாதியராய சோரர், என்பு மூட்டையைக் கண்டு ஜனகராஜாவின் யாகத்தினின்றும், இம்மறையவா பொன்கொண்டு வருகின்றனர் என வெண்ணித் தனலோபத்தோடுகூடிய அத் தயையற்ற சோரர், அச்சிஷ்யர்களை அடித்து அம்மூட்டையைப் பிடுங்கிக்கொண்டு தம் வீட்டை நோக்கிச் சென்றனர். ஹே மைந்த! இவ்வாறு சாகல்லியர் இறநத பின்னர் அங்ஙனமே, அவர்

மரணத்தால் சபையின்கண்ணே உண்டாய ஹா ஹாகார சப்தம் அடங்கிய பின்னர் யாஞ்ஞவற்கியமுனிவர் சர்வப பிராஹ்மணர்களையும் நோக்கி, இவ்வகை வசனத்தைக் கூறத்தொடங்கினர். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே மறையவரோ! அறிஞர்களாகிய நீங்கள் யாவரும் குரு பாஞ்சாலாதி நாநு தேசத்தினின்றும் பிரயாணப்பட்டு வந்து, இச்சமாஜத்தின்கண்ணே ஒருங்கு கூடியுள்ளீர். ஆகையால், எனது ஒரு வசனத்தை நீவிர் யாவருங் கேட்பீராக. நும்மியாவருள்ளும் எவர் என்னை வினவ வேண்டுமென்று இச்சிக்கின்றனரோ, அவர் என்னைத் தடையின்றி வினவலாம். அல்லது, எவர் எனது வினுவிற்கு விடைகொடுக்க இச்சிக்கின்றனரோ, அவரை யான் வினவுகின்றேன். ஒருவரிடத்தே வினுவுதற்கும், விடைதருதற்கும் வல்லமை இல்லையாயின், நீவிர் யாவரும் ஒருங்குகூடி என்னை வினவலாம்; அல்லது, நும்மி யாவரையும் நோககி யான் வினவுகின்றேன். இவ்விரு வார்த்தைகளுக்குள் யாது இச்சையோ அதைச் செய்யலாம். ஹே குழந்தாய்! இவ்வகையாய வசனத்தை யாஞ்ஞவற்கியா, மறையவர் யாவரையும் நோக்கிக் கூறவே, அம்மறையவர் யாவரும் யாஞ்ஞவற்கியரை வினவுவதின்கண்ணும், அவர் வினுவிற்கு உத்தரங் கொடுபபதின்கண்ணும் வல்லமை யற்றவராயினர்; மற்றுஞ், சாகல்லியருடைய மிருத்தியுவைக் கண்டு பயத்தை யடைந்தவர்களாய் மௌனத்தையடைந்தனர். அதன்பின்னர், அந்த யாஞ்ஞவற்கியர் தமது வித்தையின் மேன்மையை யுணர்த்தும் பொருட்டுத் தாமே எல்லா மறையவரையும் நோக்கி, வினவத் தொடங்கினர். ஹே பிராஹ்மணாகளே! உலகின்கண்ணே புஷ்பங்களின்றியே பலத்தைக் கவரததக்க பிப்பலாதி (திப்பிலி முதலிய) தருக்கள் பொய்யாய்ப் பொலிவதேபோல, இம்மனுஷ்யாதி சரீரமும் பொய்யாயே புலப்படும். இப்போது மனுஷ்யாதி சரீரங்களிலும், பிபபலாதி தருக்களிலும் உள்ள சமானத் தன்மையைக் காண்பிபபாம் :—ஹே மறையவரே! எங்ஙனம் பிப்பல விருக்ஷத்திற்கு அநேகம் இலைகளுளவாமோ, அங்ஙனமே இம்மனுஷ்யாதி சரீரங்கட்கும் அநேக ரோமங்களிருக்கின்றன. எங்ஙனம் பிபபல விருக்ஷததிறகு வெளித் தோல் கடினமாய் இருக்கின்றதோ, அங்ஙனமே, இசசரீரத்தின் வெளிததோலும் கடினமாயிருக்கின்றது. கோடரியால வெட்டப்பட்ட விருக்ஷத்தினின்றும் இரசம் வெளிபபடும். அங்ஙனமே, வெள்ளாடைக்குச் சமானமாய்த் தோலின் கீழ்ப்பாகம் கிளம்பும. அதுபோலச் சஸ்திரத்தால் வெடடுப்பட்ட இச்சரீரத்தினின்றும் இரத்தம் வெளிக்கிளம்பும். அங்ஙனமே, வெள்ளாடைக்குச் சமானமாய்த தோலின் கீழ்ப்பாகம் கிளம்பும். கோடரியால் வெட்டின், விருக்ஷத்தினின்றுங் காஷ்டமய கண்டம் வெளிக்கிளம்பலேபோலச் சஸ்திரத்தினுல் வெட்டின், இத்தேகத்தினின்றும் மாம்சமய கண்டம் வெளிக்கிளம்பும். திப்பிலி விருக்ஷத்தின்கண்ணே இருக்கும நாடிகள் ஒருங்கு சேர்ந்து கிரந்தியைச் செய்யும். அதுபோல, மனுஷ்யாதி சரீரத்தின்கண்ணும், அநேக சூக்ஷ்ம நாடிகள் மஸ்தகமுதலிய இடங்களில் ஒன்றுகூடிக் கிரந்தியைச செய்யும். விருக்ஷத்தினுள் கடின சாரபாக மிருப்பதேபோல, இம்மனுஷ்யாதி சரீரத்தின்கண்ணும் கடின என்புகளிருக்கின்றன. விருக்ஷத்தின் கடின சாரபாகத்தின்கண்

இரசமிருப்பதேபோல, இம்மனுஷ்யாதி சரீரங்களின் அஸ்திகளில் மஜ்ஜைவடிவ இரசமிருக்கும். ஆகையால், மனுஷ்யாதி சரீரங்களிடத்தேயும், பிப்பலாதி விருக்ஷங்களிடத்தேயும் எவ்வாற்றானும் சமானத்தன்மை தோற்றும். ஆனால், ஹே பிராஹ்மணர்களே! மனுஷ்யாதி சரீரங்களிடத்தேயும் பிப்பலாதி விருக்ஷங்களிடத்தேயும் ஒரு விசேஷத்தன்மையும் தோற்றாநிற்கும். அவ்விசேஷத் தன்மை எக்காரணத்தாலாமோ, அக்காரணத்தை மறையவர்களாகிய நீவிர் யாவரும் என் பொருட்டுக் கூறுமின். இப்போது அவ்விசேஷத் தன்மையைக் காண்பிக்கின்றேன்:—ஹே பிராஹ்மணர்களே! கோடரி முதலியவற்றால் வெட்டப்பட்ட விருக்ஷம் மீண்டும் அம்மூலத்தினின்றும் புதிதாயுற்பன்னமாம். இது யாவருக்கும் அனுபவசித்தமாம். இதுபோல, நாசத்தை யடைந்த சரீராதிகள் எம்மூலத்தினின்றும் புதிதாய் உற்பன்னமாமோ, அம்மூலம் பிரத்தியக்ஷமாய்க் காணப்படவில்லை. மூலமின்றிப் புதிய சரீர உற்பத்தி பொருந்தாதாம். ஆகையால், சரீராதிகட்கும் ஒரு மூலம வேண்டும். அம்மூலத்தை நீவிர் யாவரும் என் பொருட்டுக் கூறுமின். ஹே பிராஹ்மணர்களே! பிதாவின் வீரியமும், மாதாவின் இரக்தமும் இச்சரீரமூலமெனக் கூறுவீராயின் அது சம்பவியாது. ஏனெனின், பிராணன்களைத் தாரணம் செய்யும் தேகதாரி ஜீவர்களிடத்தே, அன்னாதிகளின் பக்ஷணத்தினின்றும் வீரியத்தின் உற்பத்தி உண்டாம். யான் கேட்பதற்கோ இங்ஙனமபிப் பிராயமாம்:—துயில் அவஸ்தையின்கண்ணும், பிரளய அவஸ்தையின்கண்ணும், சம்பூரண காரியப் பிரபஞ்சத்தின் நாசமுண்டாம். அதன் பின்னர் எம்மூலகாரணத்தினின்றும் புதிய தேகாதிகள் உற்பன்னமாம் என்பதே. தாய்தந்தையரின் சரீரம் பிரளயகாலத்தின்கண்ணே யின்றாம்; ஆகையால், தேகமூலகாரணம் வீரியமன்றாம். ஹே பிராஹ்மணர்களே! திப்பிலித்தரு பிரசித்தமாய தனது மூலத்திருந்தன்றியும், அந்நிய விருக்ஷத்தின் மீதும் புதிதாய் உற்பன்னமாம்; அதுபோல, இச்சரீரமும் மூலத்திருந்தன்றியே புதிதா யுற்பன்னமாம எனக் கூறுவீராயின் அதுவும் பொருந்தாது. ஏனெனின், அந்நிய விருக்ஷத்தின் மீது பிப்பல விருக்ஷ முற்பன்னமாதல் தனது மூலத்தினின்றும் ஆகாவிடினும், அவ்விருக்ஷத்தின்மேல் திப்பிலி விரையைப் பறவைகொண்டு செல்லும், வீழ்ந்த அதனினின்றும் ஆண்டுப் பிப்பல விருக்ஷம் உண்டாம்; விரையின்றி வேறு விருக்ஷத்தின் மீது பிப்பல விருக்ஷம் உண்டாகாது. அதுபோல, இச்சரீராதிகட்கு மூலரூப காரணமின்றேனும் பீஜரூபகாரணம் ஒன்று நீங்கள் அவசியம் கூறவேண்டும். அந்தப் பீஜத்திற்குச் சமானமாய் இச்சரீராதிகட்குக் காரண மின்னதென நீங்கள் கூறவேண்டும். ஹே பிராஹ்மணர்களே! சரீராதிப் பிரபஞ்சத்தின் மூலரூப காரணத்தையும், பீஜரூபகாரணத்தையும் நிச்சயம் செய்வதால், எப்பிரயோஜன சித்தியும் உண்டாகாது எனக் கூறுவீராயின் அது பொருந்தாது. ஏனெனின், யாவனுக்குத் தருவை யழிக்கவேண்டுமென்னும் இச்சை உண்டாகின்றதோ, அவனத்தருவின் மூலத்தைக் கோடரியாற் பிளப்பன்; அங்ஙனமே, அத்தருவின் விரையை அக்கினியிட்டெரிப்பன்; அவ்விரண்டு உபாயங்களால் தருவின் அழிவுண்டாம். அதுபோல, இவ்வதிகாரி புருஷனுக்குச் சரீராதிப் பிரபஞ்சத்தின் மூல ஞானமும், விரையின் ஞானமும் உண்டாமாயின், அசங்க புத்திரூப சஸ்திரத்தால்,

ஞானரூப அக்கினியால், அம்மூல பீஜங்களை நாசம் செய்வன். மூலாதிகளின் ஞானமின்றி அதனை நாசம் செய்தல் சம்பவியாது. ஆகையால், தேகாதிப் பிரபஞ்சத்தின் மூலரூபகாரணமும் பீஜரூபகாரணமும் அவசியம் அறியத்தக்கனவாம். ஹே பிராஹ்மணர்களே! எப்பொருள் ஒருமுறை யுற்பன்னமாகின்றதோ, அப்பொருள் மீண்டும் மறுமுறை உற்பன்னமாவதின்றும்; மற்றோ, இயற்கைவடிவ காரணத்தினின்றும் அபூர்வ பதார்த்தமே யுண்டாம். ஆகையால், மூலத்தை விசாரம் செய்வதிலொரு பயனுமின்றும் எனக் கூறுவீராயின், அது பொருந்தாது. ஏனெனின், ஒருமுறை உண்டாய பதார்த்தத்திற்கு மீண்டும் உற்பத்தியை அங்கீகாரம் செய்யாவிடின், செய்த புண்ணிய பாவகருமங்களின் நாசம் போகமின்றியே யுண்டாம்; செய்யாத புண்ணிய பாவகருமங்களின் சுகதுக்க ரூபபலத்தைப் போகிக்கவேண்டிவரும். இசசெய்ததற்கின்றிச செயாததற்கொன்றும் வடிவ இரண்டு தோஷங்களின் அடைவுண்டாம். முன்னுறபன்னமாய பதார்த்தத்திற்கு மீண்டும் உற்பத்தி அங்கீகரிபபின், இவ்விருவகையாய தோஷமும் உண்டாகாது. ஏனெனின், முற்பிறபபின்கண்ணே இசசீவன் செய்த புண்ணிய பாவகருமங்களின் பலமாய சுகதுக்கத்தை இப்பிறப்பின்கண்ணே போகிப்பன். இப்பிறப்பிற் புண்ணிய பாவகருமங்களைச செய்யின், அவற்றின் பயனை மறுபிறப்பில் போகிப்பன். ஆகையால், முன்னருண்டாய பதார்ததத்தின்கண்ணே, அறம் பாவவடிவ அதிருஷ்டமிருக்கும். எபபதார்த்தம மனுஷக்கோடுபோல முன்னரொருகாலும் உற்பன்னமாகவில்லையோ, அபபதார்த்தத்தின்கண்ணே அறம் பாவவடிவ அதிருஷ்டம் சம்பவியாது. அல்லது, முன்னருற்பன்னமாய பதாாத்தத்திற்கு மீண்டும் உற்பத்தியை யுடன்படாவிடின், தாயின் காபபத்தினின்றும் வெளிப்போந்த பாலகன், அக்கால் பாற்குடிக்க முயல்கினறனன், அஃதுண்டாகலாகாது. ஏனெனின், இப்பதார்த்தம் எனது சுகசாதனம என்னும், சுகசாதனத்தன்மையின் ஞானம் ஜீவாகளின் முயல்வின்கண்ணே காரணமாம். சுகசாதனத்தன்மை ஞானத்தால் அன்றி எச்சீவர்கட்கும் முயலவுண்டாகாது. ஜன்மகாலத்தின்கண் இப்பாற்குடித்தல் எனது சுகசாதனம் என்னும ஞானமோ பாலகனுக்கின்றும். ஆதலின், அப்பாலகனுக்குப் பாற்குடித்தலில் முயற்சி யுண்டாகலாகாது. உற்பன்னமாய பதார்த்தத்திற்கு மீண்டும் உற்பத்தியை யுடன்படினோ, இத்தூஷணத்தினடைவு உண்டாகமாட்டாது. ஏனெனின், பிறநதகாலததே இச்சீவனுக்கு, இப்பாற்குடித்தல் எனதின்பசாதனம் என்னும ஞானம் அனுபவரூபமன்றுமாயினும், சென்ற அளவிறந்த பிறப்புகளில் இச்சீவன் பாற்குடித்தலின், பாற் சுகசாதனத் தன்மையை யனுபவித்து வந்துளான். அவ்வனுபவ ஜன்னிய சமஸ்காரத்தால் இச்சீவனுக்குப் பிறந்தபோதே, இப்பாற் பருகல் எனது சுகசாதனம் என்னும் ஸ்மிருதி ஞானமுண்டாம். அதன்பின்னர் இப்பாலகன் பாற் பருகலின் முயல்வன். ஆகையால், உற்பன்னமாய பதார்த்தத்திற்கே உற்பத்தியுண்டாம். அபூர்வ பதார்த்தத்திற்கு உற்பத்தி உண்டாகாது. ஹே பிராஹ்மணர்களே! எங்ஙனம் பீஜத்தினின்றும் அங்குரமுண்டாகின்றதோ, மீண்டும் அங்குரத்தினின்றும் பீஜமுண்டாகின்றதோ, அங்ஙனம், அறம்பாவவடிவ அதிருஷ்டத்தினின்றும் இத்தேகமுண்டாம். மீண்டும் இத்

தேகத்தினின்றும் அறம்பாவவடிவ அதிருஷ்ட முண்டாம். ஆகையால், வேறொரு காரண விசாரம் செய்தல் பயனற்றதாம் எனக் கூறுவீராயின், அதுவும் பொருந்தாது. ஏனெனின், எங்ஙனம் பீஜத்தின்கண்ணும், அங்குரத்தின்கண்ணும் பிருதிவி வடிவ காரணம் தொடர்ந்து தோற்றா நிற்குமோ, அங்ஙனமே அறம்பாவ அதிருஷ்டத்தின்கண்ணும், ஆகத்தின்கண்ணும் யாதொரு தொடர்ந்த காரணமும் தோற்றுவதில்லை. ஆகையால், பீஜ அங்குரரூப விஷம திருஷ்டாந்தத்தால், அதிருஷ்ட சரீரங்கட்குக் காரியகாரண பாவந் துணியப் பெறமாட்டாது. ஹே அந்தணர்களே! எங்ஙனம பீஜத்தின்கண்ணும், அங்குரத்தின்கண்ணும் பிருதிவிரூப மூலகாரணம் தொடர்ந்து நிற்குமோ, அங்ஙனமே அறம்பாவ வடிவ அதிருஷ்டத்தின்கண்ணும், ஆகத்தின்கண்ணும் ஒரு மூல பூதகாரணம் தொடர்ந்து நிற்கும். அம்மூல பூதகாரணம் பிரத்தியக்ஷ முதலிய இலௌகிகப் பிரமாணங்களால் துணியப்பெறாது; ஆயினும், வேதரூப அலௌகிகப பிரமாணத்தால் துணியப் பெறும். ஆகையால், அறம்பாவவடிவ அதிருஷ்டத்திற்கும் ஆகமுதலிய பிரபஞ்சத்திற்கும் உபாதான காரணமியாதோ, அதன் சொரூபத்தையும், இலக்கணத்தையும் நீவிர் யாவரும் என் பொருட்டுக் கூறல்வேண்டும். ஹே குழந்தாய்! இவ்வகையாய வினாவை யாஞ்ஞவற்கியர் எல்லா மறையவரையும் நோக்கி வினவவே, அவ்வெல்லா மறையவரும் உலக காரணத்தை யுணர்ந்திலர். ஆகையால், அவர் யாவரும் பாராஜயத்தை யடைந்தனர். அதன் பின்னர் அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் முமுக்ஷுக்களின் ஹிதத்தின் பொருட்டுத் தாமே அவ்வினாவின் விடையை விளம்பினர். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே மறையவாகளே! ஸ்தூல சூக்ஷுமரூப எத்துணை ஜடப் பிரபஞ்சமுளவோ, அவற்றிற்கு விஞ்ஞான ஆநந்தரூப பரமான்மாவே காரணமாம். அபபரமான்மா பொன் முதலிய பொருள்களைத் தானம் செய்பவர்க்குச் சுகரூப பலத்தையடைவிக்கும். பிரஹ்ம ஹத்தி முதலிய பாவ கருமங்களைச் செய்யா நின்றவர்க்குத் துக்கரூப பலத்தை யடைவிக்கும். ஈண்டிது கருத்தாம் :—பரமான்மாவிற்கு இருவகையாய இலக்கணமுண்டு. ஒன்றோ சொரூப இலக்கணமாம்; மற்றொன்றோ தடஸ்த இலக்கணமாம். அவற்றுள், எவ்விலக்கணம் தனது இலககியத்தின் வடிவமாய் இதர பதார்த்தங்களினின்றும் தனது இலக்கியத்தை விலக்குமோ, அது சொரூப இலக்கணமாம். விஞ்ஞானம், ஆநந்தம், பிரஹ்ம சொரூபமாயிருந்தே ஜடப் பிரபஞ்சத்தினின்றும் பிரஹ்மத்தை விலக்கும். ஆகையால விஞ்ஞானம், ஆநந்தம் என்னும் இது பிரஹ்மத்தின் சொரூப இலக்கணமாமென அறிந்துகொள்ளல் வேண்டும. எவ்விலக்கணம் தனது இலக்கியத்தில் எப்போதும் இராததாய், ஒரொருகால் இருப்பதாய், ஒரொருகால் இராததாய்த் தனது இலக்கியத்தை இதர பதார்த்தங்களினின்றும் வேறுபடுத்தி யறிவிக்குமோ, அது தடஸ்த விலக்கணமாம். சுகதுக்கரூப பலதாத்துருத் தன்மை (பலங்கொடுக்குந் தன்மை) பிரஹ்மத்தின்கண் எபபோதும் இராததாய் உலகின் திரிகாலத்தின்கண்ணே இருபபதாய் ஆகாசாதி ஜட பதார்த்தங்களினின்றும் இலக்கியரூப பிரஹ்மத்தை விலக்கும; ஆதலின், சுகதுக்கரூப பலதாத்துருத் தன்மை பிரஹ்மத்தின் தடஸ்த இலக்கணமாம். இங்ஙனம் ஜகத்தின் மூல காரணத்தை நிரூபித்து, இப்போது முற்கூறிய விருக்ஷரூப திருஷ்டாந்தத்தின்

சமானத்தன்மையை நிரூபிக்கின்றார் :—ஹே விப்பிரர்களே! விருக்ஷத்தின் மூலம் நாசமாயினும், மீண்டும் விருக்ஷ உறபத்தியின்கண் பீஜம் காரணமாவதேபோல, இசசீவர்களின் ஸ்தூல சரீரங்கள் நாசமடையினும், மீண்டும் ஸ்தூல சரீரங்களின் உற்பத்தியின்கண் சூக்ஷும சரீரங்கள் காரணமாம். அப்பீஜங்களும் நாசமாயின பின்னர்க் கேவலம பிருதிவி இருககுமாறுபோல, சுழுப்தி யவஸ்தையின்கண்ணும், பிரளய அவஸ்தையின்கண்ணும், அசசூக்ஷும சரீரங்களும இலயமாயின பின்னர்க் கேவலம் அஞ்ஞான மாத்திரமிருக்கும்.

சங்கை :—ஹே யூாஞுவற்கிய மகா முனிவரே! அஞ்ஞானத்தினின்றும் சூக்ஷும சரீரத்தினின்றுமே எல்லாவுலகின் உற்பத்தியுங் கூடுமாயின், பிரஹ்மத்தை யாதின் பொருட்டு அங்கீகாரம் செய்யவேண்டும்.

சமாதானம் :—ஹே அந்தணாகளே! விருக்ஷம உற்பததியாவதின்கண் பீஜமும, அதிருஷ்டரூப நிமித்த காரணமும அவாவபபடுகின்றன. அதுபோலவே, ஸ்தூல சரீரததை உறபததி செய்வதினும, சூக்ஷும சரீரமும் பரமான்மாவும அவாவப்படுகின்றன. சைதன்யரூப பரமான்மாவின் சத்தையினலன்றிச் சட சூக்ஷும சரீரம ஸ்தூல சரீர உறபததியைச செய்யமாட்டாது. ஆகையால், பரமான்மாவை யவசியம அங்கீகரிககவேண்டும. அல்லது, பிருதிவியின்கண்ணே இராநின்ற பீஜமானது அங்குரரூப காரியவாயிலாயுணரபபெறும. ஆண்டு, பிருதிவியின்கண் சமஸ்காரரூபமாயிராநின்ற பீஜத்தின் ஸ்திதியானது, அங்குரரூப காரியவாயிலாய்ப பீஜங்களின் ஞானததின்கண்ணே காரணமாம். ஏனெனின், சமஸ்கார ரூபமாய்ப பீஜம பிருதிவியின்கண்ணே இல்லாதிருக்குமாயின், அங்குரரூப காரியவாயிலாய் அபபீஜங்களின் ஞானம் உண்டாகாது. அதுபோலச் சுழுப்தி யவஸ்தையின் கண்ணும, பிரளயகாலத்தின்கண்ணும இராநின்ற அஞ்ஞானமே சிருஷ்டிகாலத்தின்கண்ணே சூக்ஷும சரீர ஆகாரபரிணமத்தை அடைகின்றது. ஆகையால், அஞ்ஞானத்தின்கண்ணுளள சூக்ஷும சரீரத்தின் சமஸ்காரமானது, சூக்ஷும சரீரத்தின் உற்பத்திக்குக காரணமாம். ஏனெனின், பிரளயகாலத்தின் கண் சூக்ஷும சரீரத்தின் சமஸ்காரம் அஞ்ஞானததின்கண் இராதாயின் சிருஷ்டிகாலத்தே அஞ்ஞானத்தினின்றும, சூக்ஷும சரீரத்தினுற்பத்தி உண்டாகலாகாது. ஆகையால், பிரளயகாலததின்கண் சூக்ஷும சரீரத்தின் சமஸ்காரம் அஞ்ஞானத்தினகண்ணே யிருககும. அசசமஸ்காரம் அத்தியநதம சூக்ஷுமமாம். ஆகையால், சர்வஞ்ஞ பரமான்மாவினன்றி எசசீவராலும அது அறிய முடியாததாம். ஆகையால், அச்சூக்ஷும சமஸ்காரததை அறியும் சர்வஞ்ஞ பரமான்மாவை அவசியம் அங்கீகரிக்கவேண்டும். அலலது, அமூாத்த ஆகாசத்தின்கண் இம்மூர்த்தரூபப் பிருதிவி இருக்கும். அதுபோல, விஞ்ஞானரூபப் பரமான்மாவின்கண் இச்சட அஞ்ஞானமிருக்கும். சைதன்யரூபப் பரமான்மாவின்கண் அன்றி அந்நிய எப்பதார்த்தத்தினிடத்தும் அஞ்ஞானமிராது. ஏனெனின், சைதன்ய பரமான்மாவினும் வேறாய் எத்துணைச் சடபதார்த்தங்களுளவோ, அவை யாவும் அஞ்ஞானத்தின் காரியமாம்; ஆகையால், அசசடபதார்த்தங்களிடத்தே அஞ்ஞானமிராது. அல்லது, அஞ்ஞானம்

எதனை ஆசிரயித்திருக்குமோ, அப்பதார்த்தத்தை இருட்போல மறைக்கும்; இஃது அஞ்ஞானத்தின் இயற்கையாம். ஆகாசாதி ஜடபதார்த்தம் இயற்கையாகவே மறைப்பு வடிவமாம். ஆகையால், அஞ்ஞானத்தாலாக்கும் மறைப்பு அசசடபதார்த் தங்களிடத்தே சம்பவியாது. இக்காரணத்தினலும் ஜடபதார்த்தங்களிடத்தே அஞ்ஞானம் இராது. அல்லது, எவ்வாதியானவன் ஆகாசாதி ஜடபதார்த்தங்களின் ஆசிரிதமாய் அஞ்ஞானத்தை யங்கீகரிக்கின்றனனே, அவன்பாலிது கேட்க வேண்டும். ஆகாசாதி ஜடபதார்த்தங்கள் உண்டாவதற்கு முன்னர் அவ்வஞ்ஞானமானது ஆசிரயமின்றியிருநததா? அல்லது வேறு யாதாவதொன்றை யாசிரயித்துக்கொண்டிருந்ததா? என. அவற்றுள், முதலாவதாய நிராசிரய பக்ஷத்தை யங்கீகரிப்பினே அது சம்பவியாது. ஏனெனின், உலகின்கண்ணே அஞ்ஞானம் என்னும் சபதத்தைக் கேட்டு, உலகர் எவ்வஸ்துவின் அஞ்ஞானமெனவும் எதன்கண் அஞ்ஞானமெனவும் கேட்கின்றனர். இவ்வுலகரது அனுபவத்தாலே அஞ்ஞானம் ஆசிரயத்தையும், விஷயத்தையும் அவசியம் அபேக்ஷிக்கும்; ஆகையால், ஆசிரயமின்றி அஞ்ஞானமிராது. ஆகாசாதி ஜடபதார்த்தங்களின் உற்பத்தியின் முன்னர் வேறொன்றை யாசிரயித்து அஞ்ஞானமிருக்கும் என்னு மிரண்டாவது பக்ஷத்தை யங்கீகரிக்கின், அவ்வாதியை இது கேட்கவேண்டும். அவ்வேறொன்று ஜீவனு? அல்லது ஈஸ்வரரா? அல்லது சுத்த பரமான்மாவா? என. அவற்றுள், ஜீவ ஈஸ்வரர்களிடத்தோ, அஞ்ஞானத்தின் ஆசிரயத் தன்மை சம்பவியாது. ஏனெனின், அஞ்ஞான விசிஷ்ட சைதன்னியங்களே ஜீவ ஈஸ்வரர்களாம். அவர்களிடத்தே அஞ்ஞான ஆசிரயத் தன்மையை அங்கீகரிக்கினே, அஞ்ஞானத்தின்கண் அஞ்ஞான ஆசிரயத் தன்மைவடிவ ஆன்மாசிரயதோஷ அடைவு உண்டாம். ஆகையால், ஜீவேஸ்வரர்களின் ஆசிரிதம அஞ்ஞானமன்றாம்; மற்றே, எஞ்சியதாய்ச் சுத்த பரமான்மாவை யாசிரயித்து அஞ்ஞானமிருக்கும் என்னும் இது சர்வ வேதாந்தங்களின் சித்தாந்தமாம். ஹே அந்தணர்களே! இவ்வுலகின் கண்ணே தனமற்ற புருஷன் தனிகனைப்பற்றலேபோலத் துக்கரூப இவ்வஞ்ஞானம் விஞ்ஞான ஆநந்தரூப ஆன்மாவைபபற்றும். இபபோது விஞ்ஞானம், ஆநந்தம் என்னும் இரண்டற்கும் அபேதத்தைக் காண்பிக்கின்றேன் :—ஹே விப்பிரர்களே! இவ்வுலகின்கண்ணும் விஞ்ஞானத்தினும் வேறாய் ஆநநதங் காணப்பெறுவதின்று; ஏனெனின், யான் சுகியாயிருக்கின்றேன் என்னும் ஞானமின்றி ஆநந்தத்தின் உண்டாவதில்லை. ஆதலின், ஆநந்தம் விஞ்ஞான வடிவமாம்.

**சங்கை :—**ஹே யாஞ்ஞவற்கிய மகாமுனிவரே! யான் சுகியாயிருக்கின்றேன் என்னும் விஞ்ஞானமின்றிச் சுகத்தின் துணிவு உண்டாவதில்லை; ஆதலின், சுகம விஞ்ஞானரூபமாம் எனபதேபோல, யான் துக்கியாயிருக்கின்றேன் என்னும் ஞானமின்றித் துக்கத்தின் துணிவும் உண்டாகமாட்டாது; ஆகையால், துக்கமும் விஞ்ஞான வடிவமாகவேண்டும்.

**சமாதானம் :—**ஹே மறையவர்களே! சுகம் விஞ்ஞானவடிவம் என்பதன் கண்ணே கேவலம் உலகப்பிரசித்தப் பிரமாண மாத்திரமின்றாம்; மற்றே, "விஜ்ஞாநமாநந்தம் ப்ரஹ்ம" என்னும் சுருதியும் பிரமாணமாம். இதுபோன்று துக்கத்தின்

விஞ்ஞானரூபத் தன்மையின்கண் எச்சுருதியும் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களும் இன்றாம்; ஆகையால், துக்கம் விஞ்ஞானரூபமன்றாம்.

சங்கை :—ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே! எல்லா நூல்களிலும், அடையப் படாவஸ்துவின் அடைவு வடிவயோகம், அடையப்பட்ட வஸ்துவின் பரிபாலன வடிவ க்ஷேமம் என்னும் இரண்டு வடிவங்களால் சுகதுக்கங்கள் சமானமாகவே கூறப்பட்டிருக்கின்றன; ஆதலின், சுகத்தை விஞ்ஞானரூபமென உடன்படின் துக்கத்திற்கும் விஞ்ஞானரூபத் தன்மை யுண்டாதல்வேண்டும். சுகத்தை விஞ்ஞானரூபமென அங்கீகரித்துத் துக்கத்தை விஞ்ஞானரூபமென அங்கீகரியாவிடின், எல்லா நூல்களிலுங் கூறியுள்ள சுகதுக்க சமானயோக க்ஷேமத்தன்மை அசங்கதமாமன்றோ?

சமாதானம் :—ஹே மறையவரே! எல்லா நூல்களிலும் சுகதுக்கங்கள் சமானமாய்க் கூறப்பட்டிருப்பினும் அவற்றுள், இவ்வகை விலக்ஷணத்தன்மை யாவருக்கும் அநுபவசித்தமாம், யாவரும் இச்சுகம் எனக்கு எப்போதும் உண்டாகுகவென ஆன்ம சம்பந்தியாய சுகத்தை விழைகின்றனர். மேலும், இத்துக்கம் எனக்கொருகாலும் உண்டாகாதொழிகவெனத் துக்கத்தின்கண்ணே துவேஷ புத்தியை யாவரும் செய்கின்றனர். இது கூறியதாலிது துணியப்பெறு மன்றே :— எனக்கிப்பொருள் எப்போதும் உண்டாகுக என்னும் இச்சைக்கு விஷயமாய பதார்த்தம் அநுகூலமாம்; அங்ஙனமே, "ஸ்வ" சபதத்தால் பிரதி பாத்தியமாம். எனக்கிப்பதார்த்தம் ஒருகாலும் உண்டாகலாகாது என்னு மிச்சைக்கு விஷயமாய பதார்த்தம் பிரதிகூலமாம்; அங்ஙனமே, "ஸ்வ" சப்தத்தால் பிரதி பாத்தியமன்றாம். அவறறுள், எனக்கெப்போதும் சுகம் உண்டாகுக என்னும் இச்சை எல்லாவுயிர்கட்கு முண்டாம். அவ்விச்சையின்கண்ணும், எப்போதும் சுகமுண்டாகுக என்னும் இத்துணை அம்சத்தாலோ, சுகத்தின்கண்ணே அநுகூலத் தன்மைப் பிரதீதியுண்டாம். எனக்கு என்னும இத்துணை அம்சத்தானே சுகத்தின் கண்ணே "ஸ்வ" சப்தத்தின் பிரதிபாத்தியத் தன்மை தோற்றும். ஆகையால், சுகத்தின் இலக்கணம் இதுவெனத் துணியப் பெறுமன்றே :—யாது எப்போதும் அநுகூலமாமோ, அங்ஙனமே, "ஸ்வ" சபதத்தாற் பிரதிபாத்தியமாமோ, அது சுகமெனப்படும். எனக்குத் துக்க மொருகாலும் உண்டாகலாகாது என்னும் இச்சையும் எல்லா ஜீவர்கட்கு முண்டாம். ஆதலின், துக்கத்திற்கு இவ்விலக்கணம் துணியப்பெறும் :—யாது எல்லா உயிர்கட்கும் பிரதிகூலமாமோ, அங்ஙனமே, "ஸ்வ" சப்தத்தால் பிரதிபாத்தியமாகாததாமோ, அது துக்கமெனப்படும். ஆண்டுயாது அநுகூலமாமோ, அது சுகமெனப்படும் என, இத்துணை சுகத்திற்கிலக்கணமாகக் கொள்ளின், வைரியின் சுகமும் சுகரூபமாய் அநுகூலமேயாம்; ஆகையால், வைரியின் சுகமும் அந்நியனுக்குசு சுகரூபமாதல் வேண்டும். வைரியின் சுகம் எவருக்கும் சுகரூபமாய்த் தோற்றுவதில்லை. இக்காரணத்தால், "ஸ்வ" சப்தத்தால் பிரதிபாத்தியமெனக் கூறப்பட்டது. யாது "ஸ்வ" சப்தத்தால் பிரதிபாத்தியமாமோ, அது சுகமெனப்படும் என, இத்துணையே சுகத்தின் இலக்

கணமெனச் செப்பின், இவனெனது சத்துரு, இது வெனது துக்கம் ஏன்னும் தோற்றம் எல்லாவுயிர்கட்கு முண்டாம். ஈண்டு "ஸ்வ" சப்தத்தால் பிரதிபாத்தியத்தன்மை வைரியினிடத்தும், துக்கத்தினிடத்தும் தோற்றும். ஆகையால், வைரியும் துக்கமும் சுகரூபமாதல் வேண்டும். இதனுற்றன் அனுகூலமெனப்பட்டது. வைரியின்கண்ணும், துக்கத்தின்கண்ணும் எவருக்கும் அனுகூலத்தன்மை ஞானமின்றும்.

சங்கை :—யாது அனுகூலமாமோ, அங்ஙனமே, "ஸ்வ" சப்தத்தாற் பிரதிபாத்தியமாமோ, அது சுகமெனப்படும். இச்சுக விலக்கணத்தின்கண்ணே "ஸ்வ" சப்தத்தின்பொருள் ஆன்மாவின் சம்பந்தியெனக் கொள்க. அல்லது, "ஸ்வ" சப்தத்தின் பொருள் ஆன்மாவே யெனக்கொள்க. அவற்றுள், ஆன்மாவின் சம்பந்தி "ஸ்வ" சப்தத்தின் அர்த்தமெனவுடன்படின், எங்ஙனம் ஆன்மாவின் சம்பந்திகளாய சரீராதிகள் ஆன்மரூபமன்றே ; அங்ஙனம், ஆன்மாவின் சம்பந்தியாய சுகமும் ஆன்மரூபமன்றும். "ஸ்வ" சப்தத்தின்பொருள் ஆன்மாவென வுடன்படினே, எனக்குச் சுகமுண்டாகுக என்னுந் தோற்றத்தின்கண் சுகத்திற்கும், ஆன்மாவிற்கும் பேதப் பிரதீதியுண்டாம் ; அஃதுண்டாகலாகாது ; மற்றே, யான் சுகமாயுள்ளேன் என்னும் பிரதீதியே யுண்டாதல் வேண்டும்.

சமாதானம் :—சுகத்தின் இலக்கணத்தின்கண் இராநின்ற "ஸ்வ" சப்தத்திற்கு ஆன்மாவின் சம்பந்தி பொருளன்றும் ; மற்றே, ஆன்மாவே அந்த "ஸ்வ" சப்தத்தின் பொருளாம். ஆகையால், சுகம் ஆன்மரூபமாம். உலகின்கண்ணே இப்புருஷன் தனக்குத்தானே உபகாரம் செய்கின்றனன் எனக் கூறுகின்றனர் ; அக்கூற்றால் தன்னிடத்தே தனது பேதம் பிரதீதியாம் ; ஆயினும் தன்னிடத்தே தனது பேதமின்றும். ஆகையால், அந்தப் பிரதீதி மயல் வடிவமாம். அது போலச் சுருதிப் பிரமாணத்தால் சுக ஆன்மாக்களின் அபேத சித்தியுண்டாயிருப்பினும், எனக்குச் சுகமுண்டாகுக என்னுஞ் சப்தத்தால், சுகம் ஆன்மாவினும் வேறாய்த் தோற்றுதல் மயலேயாம். ஆகையால், அந்த மயல் வடிவ ஞானத்தால் சுக ஆத்மாக்களின் பேதஞ் சித்தியாது. அல்லது, சுகத்திற்கும் ஆன்மாவிற்கும் உள்ள பரஸ்பர சம்பந்தம் நித்தியமாம். ஏனெனின், சுக ஆத்மாக்களின் சம்பந்தத்தை அநித்தியமென உடன்படின், யாது அநித்திய பதார்த்தமாமோ, அஃதொருகாலத்தே இருக்கும், மற்றொரு காலத்தேயிராது. குடமுதலிய அநித்திய பதார்த்தங்கள் ஒரு காலத்தே இருக்கும், மற்றொரு காலத்தே இராது. அது போலச் சுக ஆத்மாக்களின் சம்பந்தமும் எக்காலத்தின்கண் இராதோ, அக்காலத்தின்கண் ஆன்மா சுகத்தினும் வேறும். யாது சுகத்தினின்றும் வேறுமோ, அது துக்கமொக்கப் பிரதிகூலமேயாம். ஆகையால், ஆன்மாவின்கண்ணும் பிரதிகூலத்தன்மை யுண்டாதல் வேண்டும். எச்சீவருக்கும் எக்காலத்தும் தமது ஆன்மாவிடத்தே பிரதிகூலத் தன்மை யுண்டாவதின்றும் ; மற்றே, சர்வ ஜீவர்கட்கும் தமது ஆன்மாவின்கண் அனுகூலத் தன்மையே தோற்றும். ஆகையால், சுக ஆன்மாக்கட்கு நித்திய சம்பந்தமாம்.

சங்கை :—சமவாய சம்பந்தத்தையே நையாயிகர் நித்திய சம்பந்தமென அங்கீகரித்துளார்; பண்பு, பொருளின்கண் சமவாய சம்பந்தத்தாலிருக்கும். ஆகையால், சுக வடிவப் பண்பும் ஆன்மாவின்கண் சமவாய சம்பந்தத்தாலிருக்கும். எவற்றிற்குச் சமவாய சம்பந்த முளதாமோ, அவற்றிற்குப் பரஸ்பரம் பேதமே யுண்டாம்; ஆகையால், சுக ஆன்மாக்கட்குப் பேதமே சித்தமாமன்றோ?

சமாதானம் :—சுக ஆத்மாக்கட்குப் பரஸ்பரம் சமவாய சம்பந்தமின்றாம்; மற்றோ, கற்பித பேதத்தோடுகூடிய வாஸ்தவ அபேதரூப தாதாத்மிய சம்பந்தமே சுக ஆத்மாக்கட்கு நித்திய சம்பந்தமாம். ஏனெனின், நேதி நேதி என்னும் சுருதி ஆன்மாவினும் வேறாய சகல உலகையும் நிஷேதம் செய்கின்றது. ஹே மறையவர்களே! எங்ஙனம் சுகம் ஆன்மாவினும் வேறன்றாமோ, அங்ஙனமே விஞ்ஞானமும் ஆன்மாவினும் வேறன்றாம். ஏனெனின், விஞ்ஞானத்தை ஆன்மாவினும் வேறாய் அங்கீகாரம் செய்யின், எங்ஙனம் புத்தியின் விருத்திரூப கௌண ஞானம் ஆன்மாவினும் வேறேயாதலின் ஜடவடிவமாமோ, அங்ஙனம் ஆன்மாவினும் வேறாய விஞ்ஞானமும் ஜடரூபமாம். எவ்வெப்பொருள் ஜடமாமோ, அவ்வப்பொருள் தமது சித்தியின்பொருட்டு, அந்நிய ஞானாபேக்ஷையைச் செய்யும். குடமுதலிய ஜடப்பொருள்கள் தமது சித்தியின்கண் அந்நிய ஞானத்தை யபேக்ஷிப்பதேபோல, ஜடவிஞ்ஞானமும் தனது சித்தியின்கண் வேறொரு விஞ்ஞானத்தை விரும்பும். அம்மற்றைய விஞ்ஞானமும் தனது சித்தியின்கண் வேறொரு விஞ்ஞானத்தை விரும்பும், இங்ஙனம் விஞ்ஞானங்களின் அனவஸ்தை வடிவதோஷவடை வுண்டாம். அல்லது, யாது தனது சித்தியின்கண் வேறு விஞ்ஞானத்தை விரும்புமோ, அது விஞ்ஞான ரூபமாகாது. குடமுதலிய பதார்த்தங்கள் தமது சித்தியின்கண் வேறு விஞ்ஞானத்தை விரும்புமாதலின், குடமுதலியன விஞ்ஞான ரூபமன்றாம். அதுபோல, விஞ்ஞானமும் தனது பிரகாசத்தின் பொருட்டு வேறு விஞ்ஞானத்தை விரும்புமாயின், விஞ்ஞானமும் குடமுதலியவற்றைப்போல அவிஞ்ஞானரூபமாதல் வேண்டும். விஞ்ஞானத்தை யவிஞ்ஞான ரூபமெனக் கூறல் அத்தியந்தம் விருத்தமாம். ஆகையால், சுகம்போல விஞ்ஞானமும் ஸ்வப்பிரகாச ஆன்மரூபமாம். ஹே அந்தணர்களே! சம்பூரண ஜகத்திற்கும் மித்தியாத்தன்மையை யுணர்த்தும் பொருட்டுச சுருதி விஞ்ஞான ஆநந்தரூப ஆன்மாவைப் பிரஹ்மரூபமாய்க் கூறியிருக்கின்றது. கருத்திதுவாம் :— தேசபரிச்சேதம், காலபரிச்சேதம், வஸ்து பரிச்சேதம் என்னும் முப்பரிச்சேத மற்ற மகா அர்த்தத்தைப் பிரஹ்மசப்தம் உணர்த்தும். ஆண்டுப் பிரபஞ்சத்தைச் சத்தியமென அங்கீகரிக்கின், பிரஹ்மத்தின்கண்ணே வஸ்துபரிச்சேதத்தி னடை வுண்டாம்: ஆகையால், பிரஹ்மசப்தம் ஆன்மாவினும் வேறாய சர்வ ஜகத்தின்கண்ணும் மித்தியாத் தன்மையை யுணர்த்தும். ஹே விப்பிரர்களே! ஒரே ஆகாசத்தின்கண் கடமடாதி உபாதிகளால் நானாவகையாய பேதம் பிரதீதியாவதேபோல, ஒரே அத்விதீய ஆன்மாவின்கண் அஞ்ஞானாதி உபாதிகளால் நானாவகையாய பேதம் பிரதீதியாகும். ஆகையால், பிரஹ்மத்தின்கண் சஜாதீய பேதமின்றாம். ஹே அந்தணர்களே! மாயாவியானவன் தனது மாயையினால் ஆகாசத்தின்

கண்ணே உண்டாக்கிய மாயாமய சரீரரூப உபாதியிருப்பின், மாயாவியின் பேதம் ஆகாசத்தின்கண்ணே பிரதீதியாகும். அங்ஙனமே, ஆகாசத்தின் பேதம் மாயாவியின்கண்ணே தோற்றும்; அப்பேதம் உபாதி பொய்த்தலிற் பொய்யேயாம். அது போல, அஞ்ஞானாதி உபாதிகள் பொய்த்தலின் அவற்றாலாக்கப்பட்ட பிரஹ்மத்தின் கண்ணுள்ள நானாவகையாய பேதமும் பொய்யேயாம். ஆகையால், விஜாதீய பேதமும் பிரஹ்மத்தின்கண் இன்றாம். விஞ்ஞான ஆநந்தரூபப் பிரஹ்மம் எப்போதும் ஏகரசமாம் நிரவயவமாம். ஆதலின், சுவகத பேதமும் பிரஹ்மத்தின்கண் இன்றாம். ஹே அந்தணர்களே! யான் உங்களுக்குரைத்த சுத்த விஞ்ஞான ஆநந்தரூபப் பிரஹ்மம் ஜகத்காரணமாக மாட்டாது. மற்றோ, மாயையால் விசிஷ்டமாய் அது ஜகத் காரணமாகும். இக்கருத்தே பற்றிச் சுருதியானது 'புண்ணிய பாவ பலங் கொடுப்பதை ஜகத்தின் காரணமெனக் கூறியுள்ளது. சுத்தப் பிரஹ்மத்தின்கண்ணே பலங் கொடுக்குந் தன்மை சம்பவியாது. ஹே அந்தணர்களே! மாயையின்கண் ஜகத்தின் காரணத தன்மையை யுணர்த்தும் பொருட்டு, மாயாவிசிஷ்ட பரமான்மாவின்கண் ஜகத்தின் காரணத்தன்மை முன்னர்க் கூறப்பட்டது; ஆனால், இப்பொருளின்கண்ணும் கூடாமை வடிவ தூஷணம் அடைவுண்டாம். ஏனெனின், சைதன்ய சத்தையினானன்றிச் சடமாய மாயை தனது ஸ்திதியின்கண்ணும் சமர்த்துடையதன்றாமாயின், சம்பூரண ஜகத்தின் நிர்வாகத்தில் அது எங்ஙனம் சமர்த்துடையதாகும். இங்ஙனம் கூடாமையின் விசாரத்தைச் செய்து, அந்த வேதபகவான் கேவலம் சுத்தப் பிரஹ்மத்தையே சர்வ ஜகத்தின் அதிஷ்டானமாகக் கூறினார். ஹே மறையவரே! அந்தப் பிரஹ்மம் கேவலம் ஜட அஞ்ஞானத்தின் அதிஷ்டான மன்றாம்; மற்றோ, பிரஹ்மசரியாதி சாதனங்களால் எப்புருஷருக்கு யான் பிரஹ்மமாயிருக்கின்றேன் என்னும் அபேத ஞானம் உண்டாயிருக்கின்றதோ, அவ்வறிஞ புருஷருக்கும் அசசுத்தப் பிரஹ்மமே மேலாய ஸ்தானமாம். ஸ்ரீ குரு கூறல்:—ஹே குழந்தாய்! மாயையால் விசிஷ்டமாய பிரஹ்மம் புண்ணியபாவ பலத்தின் தாதாவாம். மாயையற்ற பிரஹ்ம ஞானிகளின் ஆன்மாவாய பிரஹ்மமே இசசகத்தின் உபாதான காரணமாம். இவ்வபிப்பிராயத்தாலே யாஞ்ஞவற்கிய முனிவர் சர்வப் பிராஹ்மணர்களின்பால் ஜகத்தின் காரணத்தைக கேட்டனர். ஆனால், அவ்வெல்லாப் பிராஹ்மணரும் அச்சகத்தின் காரணத்தை யறிந்திலர். அத்தகைய காரணரூபப் பிரஹ்மத்தை அதிகாரியாய யாம் வேத வசனத்தாற் சிரவணம் செய்தோம். ஹே குழந்தாய்! இங்ஙனம், சூரியபகவானுடைய சீடராய யாஞ்ஞவற்கிய முனிவர் கோக்களைக் கிருகத்திற்குக் கொண்டுபோகும் நிமித்தமாய் எல்லா மறையவரையும் வெற்றி கொண்டனர். பிரஹ்ம வேத்தாவின் துவேஷியாய சாகல்லியரைப் பஸ்மம் செய்தனர். எந்தப் பிரஹ்ம வித்தையைச சூரியபகவான் அவருக்கு உபதேசித்தனரோ, எந்தப் பிரஹ்மவித்தையை அவர் எல்லா மறையவர்பாலும் வினவினரோ, அந்தப் பிரஹ்மவித்தையை யாஞ்ஞவற்கிய முனிவர் சிரத்தையையுடைய ஜனகராஜாவின் பொருட்டு உபதேசம் செய்தனர். சுபம்.

ஸ்ரீ ஆத்மபுராணம்.

ஐந்தாவது அத்தியாயம் முற்றும்.

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## ஆறுவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநம : ஸ்ரீ குருப்யோநம : ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நம:
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநம :.

முன்னர் ஐந்தாவது அத்தியாயத்தின்கண் பிருகதாரண்யக உபநிஷத்தின் யாஞ்ஞவற்கிய காண்டப் பொருளை நிரூபணம் செய்தாம். இப்போது, ஆறுவது அத்தியாயத்தின்கண் அந்த யாஞ்ஞவற்கிய காண்டத்தின் பொருளை நிரூபணம் செய்வாம். ஆண்டு, முன்னத்தியாயங்களில் பிரஹ்ம வித்தையோடு கூடிய நாலு வகையாய கதைகளை ஆசிரியர் வாயிலாய்ச் சிரவணித்து அந்தச் சிரத்தையையுடைய சிடனானவன் மீண்டும் தமதாசிரியரிடததே வினவுவானாயினன். சிடன் கூறல் :— ஹே பகவன்! முதலத்தியாயத்தே தாங்கள் வாமதேவாதி அதிகாரிகளின் ஜனகாதி இருஷிகளின் சம்வாதத்தால், ஐதரேய உபநிஷத்தின் பொருளை நிரூபித்தீர்கள். இரண்டாவது அத்தியாயத்தின்கண் தாங்கள் இந்திரப் பிரதர்த்தன சம்வாதத்தால், கௌஷீதகி உபநிஷத்தின் பொருளை நிரூபணம் செய்தீர்கள். மூன்றுவது அத்தியாயத்தின்கண் தாங்கள் அஜாத சத்துரு பாலாகி சம்வாதத்தால், அந்தக் கௌஷீதகி உபநிஷத்தின் பொருளையே நிரூபணஞ் செய்தீர்கள். நான்காவது அத்தியாயத்தின்கண் தாங்கள் தத்தியங் அதர்வணர் அசுவனீ குமாரர் தேவராஜாவாகிய இந்திரர் சம்வாதத்தால், பிருகதாரண்யக உபநிஷத்தின் மதுகாண்டப் பொருளை நிரூபணம் செய்தீர்கள். ஐந்தாவது அத்தியாயத்தின்கண் தாங்கள் யாஞ்ஞவற்கிய ஆசுவலாதி இருஷிகளின் சம்வாதத்தால், பிருகதாரண்யக உபநிஷத்தின் யாஞ்ஞவற்கிய காண்டப் பொருளை நிரூபணஞ் செய்தீர்கள். அவ்வெல்லா அத்தியாயங்களுள்ளும் நாலுவகையாய பிரஹ்ம வித்தையைத் தாங்கள் என்பொருட்டுக் கூறினீர்கள். ஹே பகவன்! ஐந்தாவது அத்தியாயத்தின் முடிவில் தாங்கள் சூரியபகவானுடைய சிடராகிய யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவின்பொருட்டுப் பிரஹ்ம வித்தையை உபதேசித்தனர் எனக் கூறினீர்கள். ஹே பகவன்! அந்தப் பிரஹ்ம வித்தையைச் சிரவணஞ்செய்ய யான் ஆவலுடையவனாய் இருக்கின்றேன்; தாங்கள் தயவுசெய்து கூறவேண்டும். ஸ்ரீ குரு கூறல் :—ஹே மைந்த! யாஞ்ஞவற்கிய முனிவர் எந்தப் பிரஹ்ம வித்தையை ஜனகராஜாவின் பொருட்டு உபதேசஞ் செய்தனரோ, அந்தப் பிரஹ்ம வித்தை முழுவதையும் யாம் உன் பொருட்டுக் கூறுகின்றோம். நீ சாவதானமாய் அவ்வித்தையைக் கேட்டி. ஹே குழந்தாய்! இங்ஙனம் சாகல்லியர் மரணமடைந்ததும், சம்பூரணப் பிராஹ்மணர்கள் தோல்வியடைந்ததும், ஜனகராஜாவும் மற்றைய சபையோர்களும் தத்தம் இல்லத்திற்குச் சென்றனர். விடிந்தவுடன் துந்துபி முதலிய மதுர சுரங்களை

யுடைய வாத்தியங்களாலும், தெய்வப் பெண்களுக்குச் சமானமாய பெண்களின் மதுரமாகிய குரல்களாலும், ஜனகராஜாவானவர் துயிலினின்றும் நனவையடைந்தனர். காலையில் செய்யற்பாலதெனச சாஸ்திரங்களில் விதித்துள்ள ஸ்நானாதி கருமங்களை ஜனகராஜாவானவர் செய்து முடித்தனர். பிராஹ்மணர்கள், மற்றைய பெரியோர்கள், சாரணர், கட்டியங் கூறுவோர் முதலாயினோரது ஜயஜய சப்தங்களையும் ஆசீர்வாதங்களையும் ஜனகராஜாவானவர் ஏற்றனர். அதன்பின்னாச் சர்வாலங்காரங்களையுந்தரித்து, நாலுவகையாய வாத்திய கோஷங்களோடும் கந்தர்வர்களின் இன் குரல்களோடும் தமது ராஜசபையின்கண் ஜனகராஜாவானவர் வந்து சேர்ந்தனர். அச்சபையானது நாலுவகையாய மணி, ரத்தினம், முத்து, சுவர்ணம், வெள்ளி முதலியவற்றால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. சுதர்மம் என்னும் தேவதைகளின் சபைக்குச சமானமாயிருந்தது. தனது பிரகாசத்தால் பத்துத் திசைகளையும் பிரகாசிப்பித்துக் கொண்டிருந்தது. அத்தகைய சபையின்கண் இருந்த நவரத்தினங்களால் அலங்கரிக்கப்பட்ட பொன்மயமாய உயர்ந்த சிம்மாசனத்தின் மீது ஜனகராஜாவானவர் வீற்றிருந்தனர். மற்றைய பிராஹ்மணர்களும், க்ஷத்திரியர்களும், வைசியர்களும் தகுதியாய தங்கள் தங்களாசனததின் மீது உட்கார்ந்தனர். ஹே குழந்தாய்! யாஞ்ஞவற்கிய முனிவரும் அதிகாலையில் ஸ்நானாதி சர்வ கிரியைகளையுஞ் செய்து சூரிய பகவானை ஆராதித்து விட்டு, சீடர்கள் யாவரும் புடைசூழ ஜனகராஜாவின் சபையின்கண் வந்துசோந்தனர். யாஞ்ஞவற்கியமுனிவர் சபையின்கண் வந்ததைக் கண்ட அந்தத் தர்மாதமாவாகிய அந்த ஜனகராஜாவானவர் சபையின்கண்ணுள்ள சம்பூரணப் பிரஜைகளோடு வந்து எதிர்கொண்டழைத்தனர். அர்க்கியபாத்கியாதிகளால் யாஞ்ஞவற்கிய முனிவரைப பூஜை செய்தனர். நாலுவகையாய மணி, ரததினம், முத்து முதலியவற்றால அலங்கரிக்கபபட்ட அத்தியந்தம் மிருதுவாய பொன்மய ஆசனத்தை யாஞ்ஞவற்கிய முனிவர் வீற்றிருக்கும் பொருட்டுக கொடுத்தனர். அவருடைய அருமையான சீடர்களுக்கும தகுதிப்படி ஆசனஙகளைக் கொடுத்தனர். அதன்பின்னர் யாஞ்ஞவற்கிய முனிவரானவர் ஆசனத்தின்மீது வீற்றிருந்து, ஜனகராஜாவையும மற்றையப் பிராஹ்மணர்களையும், க்ஷத்திரியர்களையும், வைசியர்களையும் நோக்கி, ஹே ஜனகராஜாவே! ஹே சபாவாசிகளே! நீங்கள் யாவரும் உங்கள் உங்கள் ஆசனத்தின்கண் உட்காருங்கள் என ஆஞ்ஞாபித்தனர். இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய முனிவரின் ஆஞ்ஞையைப்பெற்ற ஜனகராஜாவும், சமபூரண சபாவாசிகளும் யாஞ்ஞவற்கிய முனிவரை நமஸ்கரித்துத் தத்தம் ஆசனத்தின்கண் உட்கார்ந்தனர். அதன்பின்னர், ஜனகராஜாவானவா மிகுந்த வணக்கத்துடன் நமஸ்கரித்து, யாஞ்ஞவற்கிய முனிவரிடத்தே இவ்வாறு விண்ணப்பித்தனர். ஜனகராஜா கூறல் :—ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே! தங்களைபபோன்ற அறிஞராய பிராஹ்மணரே இவ்வுலகின்கண் மேலாய தெய்வமாவர். ஏனெனின், பரமான்ம தேவரானவர் உலகின் உற்பத்தியையும், ஸ்திதியையும், இலயத்தையும் செய்வதின்கண் எங்ஙனம் வல்லமையுடையவராவரோ, அங்ஙனம், தங்களைப்போன்ற அறிஞராகிய பிராஹ்மணர் இந்திராதி தேவதைகளையும் உற்பத்தி, ஸ்திதி, இலயம் செய்வதில் வல்லுநராவராயின், என்போன்ற தேகதாரிகளாய ஜீவர்களை உற்பத்தி, ஸ்திதி, இலயம்

செய்வதில் பிராஹ்மணர்கட்கு வல்லமை உண்டு என்பதன்கண் யாதுகூறவேண்டி இருக்கின்றது. ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே! தங்களைப்போன்ற அறிஞராகிய பிராஹ்மணர் சர்வபூதப் பிராணிகளிடத்தும் சமான திருஷ்டியுடையவரா யிருக்கின்றனர். சமதமாதி குணங்களோடு கூடியவராய் விளங்குகின்றனர். மற்சரம் முதலிய விகாரங்களற்றவராயிருக்கின்றனர். சர்வ காமங்களும அற்றவரா யிருக்கின்றனர். இத்தகைய தங்களைப் போன்ற அறிஞராகிய மறையவர் இந்நில உலகின் கண்ணே உலவுதல் பொன்முதலிய பதார்த்தங்களைக் காதலித்தன்றும்; மற்றே, என்போன்ற அஞ்ஞானிகளை உத்தாரணஞ் செய்யும பொருட்டேயாம். ஆனால், தங்களைப்போன்ற அறிஞராகிய பிராஹ்மணர் உலகரால் வினவப்படின் இந்நிமித்தத்தைக கூறுகினறிலா; மற்றே, அவ்வுலகரை நோக்கி, இந்நிமித்தத்தைக் கூறுகின்றனா. அதாவது,யான் பொன்முதலிய பதார்த்தங்களைவேண்டிச் சஞ்சரிக்கின்றேன் என, மறறும சில மறையவரோ இநநிமித்தத்தைக் கூறுகின்றனர். அதாவது, யான் சற்சஙகத்தால ஆன்மாவை யறியுமபொருட்டுச சஞ்சரிக்கின்றேன் என. என்பனமுதலிய அநேகம வகையாய நிமித்தங்களைத் தங்கள் சஞ்சாரத்தில் அம்மறையவர் கூறுகின்றனராயினும், ஹே பகவன்! யானோ என் மனத்தின்கண் இந்நிச்சயம் செய்துளேன் :—சமசாரரூப சமுததிரததின் கண்ணே மூழ்கியிருக்கும் என்போன்ற அரசர்களை உத்தாரணம் செய்யும் பொருட்டே, தங்களைப்போன்ற அறிஞராகிய மறையவா பிருதிவியின்கண்ணே சஞசரிககின்றனா என்பதாம். ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே! தாங்கள சாக்ஷாத் சூரியபகவானுடைய சீடராயிருக்கின்றீர். ஆநந்தசொரூப ஆன்மாவின் அபரோக்ஷ ஞானத்தோடு கூடியிருககின்றீா. புததிர ஏஷணை, வித்த (தன) ஏஷணை, லோக ஏஷணை என்னும் மூவகையாய ஏஷணைகளையும அறறவராயிருக்கின்றீா. ஆகையால், இவ்வுலகின் கண்ணே தாங்கள் சஞ்சரிப்பதறகு யாதொரு பயனுமின்றேனும், தங்கள் வருகைக்கு ஒரு பிரயோசனம உளதென யான் நினைக்கின்றேன் :— அதாவது, இசசமசாரரூபக் குழியின்கண் வீழ்ந்துழலும் என்னை உத்தாரணம் செய்யும்பொருட்டு, தஙகள இவ்வருகையாம என்பதே. இப்போது, சம்சாரசமபந்தியாய துக்கங்களைக கூறுகின்றேன். ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே! கிருமிகீடங்களால் நிறையப் பெற்ற சரீரததையுடையதும், காதும் வாலும் அறுபட்டதும, பலவகையாய நோய்களோடுகூடிய சரீரத்தை யுடையதும் ஆகிய ஒரு நாயானது மலத்தோடுகூடிய காய்நத என்பைப பறகளிற கடித்துக்கொண்டு அதைக்காப்பாற்றும் பொருட்டு, மற்றொரு பலமுடைய நாயோடு வயிரஞ் செய்யும்; அவ்வயிரத்தால் அந்நாயானது உயிர்போம் துயரை எய்தும. அதுபோல, என்பு வடிவத் தூண்களை யுடையதும், மலமூத்திராதிகளால் துர்க்கந்தத்தை யுடையதும் ஆகிய இவ்விகழ்ச்சி பொருந்திய சரீரத்தை யான் என்னும் மதியாற் கவர்ந்து யான் பல வகையாய துக்கங்களை அடைந்துளேன். சிறிது மாத்திரையும் எனக்கு இன்பத்தினடைவின்றும் எனத் துக்கிப்பேன். இப்போது, சரீரத்தின் சர்வ வியவகாரங்களில் துக்க காரணத்தன்மையைக் கூறுகின்றேன். ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே! எங்ஙனம், பசியால்வருநதிய அரக்கனானவன் மனுஷர் முதலாயினரைப்

புசிப்பனோ, அங்ஙனம், பசியால் வருந்திய யான் அரிசி முதலிய தாவர அன்னங்களையும், மான் முதலிய ஜங்கம ஜீவர்களையும் புசிக்கின்றேன். கருத்திதுவாம் :—யான் அன்னாதிகளைப் புசியேனாயின் பசியால் எனக்குத் துக்க முண்டாகின்றது ; அன்னாதிகளை யான் புசிப்பேனாயின், அரக்கனுக்குச் சமானத் தன்மை எனக்குண்டாகின்றது. அவ்வுணவு பரிணாமத்தை யடையுங் காலத்தும் துன்பமே உண்டாகின்றது. ஆகையால், போஜனரூப வியவகாரமும் எவ்வாற்றானும் துக்கத்தின் காரணமே யாகின்றது. ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே ! எங்ஙனம் மயான பூமியின்கண் இராநின்ற பிணத்தைப் பேயானது கவருமோ, அங்ஙனம் காமரூபப் பேயின் ஆவேசத்தை யடைந்த யான் எக்காலும் அசுசியாய ஸ்திரீ சரீரத்தை ஆலிங்கனஞ் செய்கின்றேன். கருத்திதுவாம் :—யான் ஸ்திரீயை ஆலிங்கனம் செய்யாதிருப்பின், காமத்தால் துக்கத்தை யடைகின்றேன் ; ஆலிங்கனம் செய்வேனாயின், பேயின் சமானத் தன்மையை யடைகின்றேன். ஸ்திரீ சம்போக பரிணாமகாலத்தின்கண்ணும் என்னை அநேக துக்கங்களடைகின்றன. ஆகையால், ஸ்திரீகளின் சம்போகவியவகாரமும் எவ்வாற்றானும் துக்ககாரணமேயாம். ஹே யாஞ்ஞவற்கியமகா முனிவரே! எங்ஙனம், தயையற்ற அரக்கனொருவன் மனுஷர் முதலியோரது சரீரங்களை * ஹனனஞ்செய்வனோ, அங்ஙனம், கந்தத்தைக் காதலித்த யான் சந்தனம் முதலிய சுகந்த பதார்த்தங்களைத் தேய்த்து, இத்துர்க்கந்த சரீரத்தின்கண்ணே பூசுகின்றேன். கருத்திதுவாம் :—யான் சந்தனாதிகளைப் பூசேனாயின் அவற்றின் இச்சையால் துக்கத்தை யடைகின்றேன். பூசுவேனாயின் அரக்கனுக்குச் சமானனாகின்றேன் ; ஆகையால், சந்தனாதிகளைப் பூசுதல் வடிவ வியவகாரமும் எவ்வாற்றானு துக்ககாரணமேயாம். ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே! எங்ஙனம், சாந்தமாகிய இயற்கையையுடைய முனிவர்களை அபராதமின்றியே அரக்கர் கொல்லுகின்றனரோ, அங்ஙனம், வேட்டைவடிவ விசனத்தோடு கூடியுள்ள யான் புற்களையும், இலைகளையும் புசியாநின்ற மான் முதலிய ஜந்துக்களைக் குற்றமின்றியே கொல்லுகின்றேன். கருத்திதுவாம் :—யான் மிருகங்களைக் கொல்லேனாயின் வேட்டையாட வேண்டுமென்னும் விசனத்தால் எனக்குத் துக்கமுண்டாகின்றது. கொல்வேனாயின் அரக்கனுக்குச் சமானமாகின்றேன் ; ஆகையால், இவ்வேட்டைவடிவ வியவகாரமும் எவ்வாற்றானும் துக்ககாரணமேயாம். ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே ! எங்ஙனம், வாணியனானவன் எள்ளைச செக்கிலிட்டாட்டி எண்ணெயெடுப்பனோ, அங்ஙனம், திரவிய லோபத்தோடு கூடிய யான் பிரஜைகளைப் பல வகையாகத் துக்கப்படுத்தி அவரிடத்தினின்றும் திரவியத்தை வாங்குகின்றேன். கருத்திதுவாம் :—யான் பிரஜைகளிடத்தினின்றும் திரவியத்தை வாங்காவிடின் திரவிய இச்சையால் துக்கமுண்டாகின்றது. திரவியத்தை வாங்குவேனாயின், வாணியனுக்குச் சமானமாகின்றேன். ஆகையால், பிரஜைகளிடத்தினின்றும், திரவியத்தைக் கவர்தல் வடிவ வியவகாரமும் எவ்வாற்றானுந் துக்ககாரணமேயாம். ஹே யாஞ்ஞவற்கிய முனிவரே ! எங்ஙனம், கழுத்தின்கண்ணும், பிற்பாகத்தும் உற்பன்னமாய கட்டிநோயானது மனுஷர்கட்கும், மிருகங்கட்கும் துக்கத்தை யுண்டாக்குமோ, அங்ஙனம், யான் புருஷர்களின் கழுத்தின் மீதும், யானை, குதிரை,

* ஹனனம்=கொல்கை.

ஒட்டகம் முதலிய மிருகங்களின் முதுகின் மீது ஏறி நடத்துபவனும் அவை களுக்குத் துக்கத்தை யடைவிக்கின்றேன். கருத்து இஃதாம் :—யான் குதிரை முத லியவற்றின்மீது ஏறிலேனாயின், ஏறவேண்டும என்னும் இச்சையால் எனக்குத் துக்கமுண்டாகின்றது. ஏறுவேனாயின் கட்டிநோய்க்குச் சமானத்தன்மை என க்கு உண்டாகின்றது. ஆகையால், குதிரை முதலியவற்றின்மீது ஏறும் வியவகார மும் எவ்வாற்றானுந் துக்க காரணமேயாம். ஹே யாஞ்ஞவற்கிய மகாமுனிவரே ! எங்ஙனம் காகமானது வீட்டின் சிகரத்தின்மீது உட்கார்ந்து பிரிய மற்ற சப்தங் களை உச்சாரணஞ் செய்கின்றதோ, அங்ஙனம, மானத்தோடுகூடிய யான் யாவருக் கும் மேலாய ஆசனததின் மீது உட்காருகின்றேன் ; பலவகையாய பிரியமற்ற சப்தங்களை உச்சரிக்கின்றேன். கருத்திதுவாம் :—யான் உயர்ந்த சிம்மாசனத் தின்மீது உட்காராதிருபபின், மானபங்கததால் துக்கத்தை யடைகின்றேன். உட்காருவேனாயின் காக சமானத்தன்மையை யடைகின்றேன். ஆகையால், உயர்ந்த சிம்மாசனத்தின்மீது இருககும வியவகாரமும் எவ்வாற்றானுந் துக்க காரணமேயாம். ஹே யாஞ்ஞவறகிய மகா முனிவரே ! எங்ஙனம் பற்றுதலையுடைய சர்ப்பமானது, மண்ணின்கண்ணே இராநின்ற பொன்னைக் காப்பாற்றுகின்றதோ, அங்ஙனம், தனததின் பறறுதலையுடைய யான் எப்போதும் தனததைக் காப்பாற்று கின்றேன். கருத்திதுவாம் :—யான் தனத்தைக காபபாற்றாவிடின், தனவியோகத் தால் எனக்குத் துக்க முண்டாகின்றது. தனத்தைக் காப்பாற்றுவேனாயின், சர்ப்ப சமானத் தன்மையுண்டாகின்றது ஆகையால், தனத்தைக் காபபாற்றுதல் வடிவ வியவகாரமும எவ்வாற்றானும் துக்க காரணமேயாம். ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே ! எங்ஙனம் ஊர்ப் பன்றியானது தனது மனைவி மைந்தர் முதலிய குடும் பத்தில் அத்தியந்தம் பறறுதலையுடையதாய் இருக்கின்றதோ, அங்ஙனம், யான் மனைவி மைநதர் முதலிய குடுமபத்தில் அததியந்தம் பற்றுதலை யுடையவனாய் இருக்கின்றேன். இக்காரணததாலே இவ்வஞ்ஞானியாகிய ஜனகன் எக்கதியை யடைவானோ என அறிஞரின் சோகத்திற்கு விஷயமாகின்றேன். ஆகையால், ஹே பகவன் ! அத்தியாத்மம், அதிபூதம், அதிதெய்வம் என்னும் மூவகையாய துக்கங்களாகிய மூன்று *சாகைகளை யுடையதும், அஞ்ஞானவடிவ இரும்பால் ஆக்கப்பட்டதும் ஆகிய இசசம்சாரரூப சூலத்தின்கண் அடைந்துள்ள அஞ்ஞானி யாகிய என்னை உத்தாரணஞ் செய்யும் பொருட்டே தங்களுடைய இவ்வருகை ஆகின்றது. ஹே பகவன் ! தங்களுடைய இவ்வருகையின் பிரயோசனத்தை யான் அறிந்தவண்ணம் தங்கள் முன்னிலையில் கூறினேன். இப்போது எந்நிமித் தத்தால் தாங்கள் இஙகு வந்ததோ, அந்நிமித்தத்தைக் கிருபையோடும் என் பொருட்டுக் கூறவேண்டும். ஹே பகவன் ! பிராமணர்களின் வரவில் இருவகை யாய நிமித்தம் பிரசித்தமாம். ஒன்றோ, ஜனகராஜாவின் சபையின்கண்ணே சென்று, சுவர்ணசகித கோக்களை யாம அடைவேம் என்பதாம். மற்றொன்றோ, ஜனகராஜாவின் சபையின்கண் சென்று, எலலாமறையவர்களோடும் ஆன்மாவின்வடி வத்தை யாம் நிர்ணயம் செய்வேமாக என்பதாம். ஹே பகவன் ! இவ்விருவகை

* சாகை = பிரிவு.

நிமித்தங்களுள் எந்நிமித்தத்தால் தாங்கள் ஈண்டு வந்துற்றதோ, அந்நிமித்தத்தை தயையினாலே சாற்றல் வேண்டும். ஹே மைந்த! இவ்வண்ணம் ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரை வினவியபோது, அம்முனிவர் இவ்வகையாய வசனத்தைக் கூறத் தொடங்கினர் :—ஹே ஜனகராஜாவே! கோக்களின் அடைவும், ஆன்மாவின் நிர்ணயமும் ஆகிய இரண்டு நிமித்தங்களாலே யான் இங்கு வந்ததாகும். ஹே குழந்தாய்! இவ்வண்ணம் தமது வருகையில் இரண்டு நிமித்தங்களையுங் கூறி, அம்முனிவர் மீண்டும் ஜனகராஜாவை நோக்கி, இவ்வகையாய வசனத்தைக் கூறத் தொடங்கினர். ஹே ஜனகராஜாவே! இன்றுமுதல் முன்னர் முன்னர் உன்பொருட்டு எந்த எந்த மறையவர் எந்த எந்த ஞானத்தை உபதேசஞ் செய்தனரோ, அந்த அந்த ஞானத்தை யான் கேட்க விரும்புகின்றேன். அந்த ஞானமானது ரகஸ்ய மில்லாதிருக்கும் பக்ஷத்தில் என்பொருட்டு நீ கூறுவையாயின், உன்னுடைய ஞானத்தைக் கேட்டுப் பின்னர் யான் உன்பொருட்டு உபதேசஞ் செய்கின்றேன். ஹே மைந்த! இவ்வாறு யாஞ்ஞவற்கிய முனிவரானவர் ஜனகராஜாவைக் கேட்டபோது, அந்த ஜனகராஜாவானவா முன்னர் முனிவர்கள் உபதேசித்த அநேக வகையாய ஞானங்கள் யாவற்றையும் யாஞ்ஞவற்கிய முனிவரிடத்துக் கூறத்தொடங்கினர். ஜனகராஜா கூறல் :—ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே! சிலினர் என்னும் இருஷியின் மைந்தராய ஜித்வா என்னும இருஷியானவா அக்கினி தேவதையையே பிரஹ்மரூபமெனக் கூறினர் (1). சுல்பா என்னும் இருஷியின் மைந்தராய உதங்கர் என்னும் இருஷியானவர் வாயு தேவதையையே பிரஹ்மரூப மெனக்கூறினர் (2). விருஷ்ணி யென்னும் இருஷியின் மைந்தராய வர்க்கு என்னும் இருஷியானவர் சூரியனையே பிரஹ்மரூப மெனக்கூறினர் (3). பாரதுவாஜ கோத்திரத்தின் கண்ணே உற்பத்தியாய கர்த்தபி விபீதர் என்னும் இருஷியானவர் திசைகளையே பிரஹ்மரூபமெனக் கூறினர் (4). ஜாபாலரின் மைந்தராய சததியகாமர் என்னும் இருஷியானவா சநதிர தேவதையையே பிரஹ்மரூபமெனக் கூறினர் (5). இப்போது மரணத்தையுறற விதக்தர் என்னும் சாகல்லிய இருஷியானவர் பிரஜாபதி தேவதையையே பிரஹ்மரூப மெனக்கூறினர் (6). ஹே மைந்த! இவ்வண்ணம் பூர்வம் இருஷிகளுபதேசிதத பிரஹ்ம சொரூபத்தை ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கியரிடத்துக் கூறியபோது, அம்முனிவர் அவ்வரசரை நோக்கிக் கூறத் தொடங்கினர். யாஞ்ஞவற்கியர் கூறல் :—ஹே ஜனகராஜாவே! அக்கினி முதலிய தேவதைகள் சர்வ ஜகத்தின் நிர்வாகத்தையும் நடத்துவிப்பவர்கள். ஆகையால், பிரஹ்மரூபமாய் அவர்களை யுபாசித்தல் மேன்மையாம். ஆனால், இத்துணை ஞானமாத்திரத்தால் மோக்ஷத்தினடைவு உண்டாகமாட்டாது. ஹே ஜனகராஜாவே! முன்னர் இருஷிகள் உன்பொருட்டு அக்கினி முதலிய தேவதைகளின் உபதேசத்தைச் செய்ததுங்கூடப் பூரணமாகச் செய்யவில்லை; மற்றோ, ஒரு பாதத்தின் உபதேசத்தை உன்பொருட்டு உபதேசஞ் செய்துளார். மூன்று பாதங்கள் சேஷித்திருக்கின்றனவாதலின், அந்த இருஷிகளின் உபதேசத்தின்கண் குறைவுளது. ஹே ஜனகராஜாவே! அம்மூன்று பாதங்களை நீ கேட்பாயாக; அதிதெய்வரூப அக்கினி முதற்பாதம். அத்தியாத்ம ரூபவாக்கிந்திரியம் இரண்டாவது பாதம். அவ்வியாகிருதரூப ஆகாசம் மூன்றாவது பாதம். பிரஞ்ஞை நான்காவது

பாதம். அங்ஙனமே, அதிதெய்வரூபவாயு முதற்பாதம், அத்தியாத்மரூப கிராண இந்திரியம் இரண்டாவது பாதம். அவ்வியாகிருதரூப ஆகாசம் மூன்றாவது பாதம். பிரியம் நான்காவது பாதம். அங்ஙனமே, அதிதெய்வரூப சூரியன் முதற்பாதம். அத்தியாத்மரூப சக்ஷு இந்திரியம் இரண்டாவதுபாதம். அவ்வியாகிருதரூப ஆகாசம் மூன்றாவது பாதம். சத்தியம் நான்காவது பாதம். அங்ஙனமே, அதிதெய்வரூப திசை முதற்பாதம். அத்தியாத்மரூப சுரோத்திரேந்திரியம் இரண்டாவதுபாதம். அவ்வியாகிருதரூப ஆகாசம் மூன்றாவது பாதம். அநந்தம் நான்காவது பாதம். அங்ஙனமே, அதிதெய்வரூப சந்திரன் முதற்பாதம். அத்தியாத்மரூபமனம் இரண்டாவதுபாதம. அவ்வியாகிருதரூப ஆகாசம் மூன்றாவது பாதம். ஆநந்தம் நான்காவதுபாதம், அங்ஙனமே, அதிதெய்வரூப பிரஜாபதி முதற் பாதம். ஹிருதயம் இரண்டாவது பாதம. அவ்வியாகிருதரூப ஆகாசம் மூன்றாவது பாதம். ஸ்திதி நான்காவது பாதம. ஈண்டு அக்கினி முதலிய நன்னான்கு பாதங்களுள் முதற்பாதத்தைச் சிந்திக்கின், ஹிரண்யகர்ப்பரின் நினைவுண்டாம். இரண்டாவது பாதத்தைச் சிந்திக்கின், விராட பகவானுடைய நினைவுண்டாம். மூன்றாவது பாதத்தைச் சிந்திக்கின், அந்தர்யாமியாகிய ஈஸ்வரரின் நினைவுண்டாம். நான்காவது பாதத்தைச் சிந்திக்கின், துரியத்தின் நினைவுண்டாம். ஹே மைந்த! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவின் பொருட்டு, அக்கினி முதலிய நான்கு பாதங்களோடு கூடிய சகுணப்பிரஹ்மத்தின் உபாசனையை ஆறுமுறை கூறினர். ஜனகராஜாவும் ஆறுமுறை யாஞ்ஞவற்கியரை நோக்கி, இவ்வகையாய வசனத்தைக்கூறினர். அதாவது, ஹே பகவன்! யானைகளுக்குச் சமானமாகிய இரிஷபங்களோடுகூடிய யௌவன அவஸ்தையையுடைய ஆயிரங்கோக்களைக் குரு தக்ஷிணையாகத் தங்கள் பொருட்டுச் சமர்ப்பிக்கின்றேன். தாங்கள் அக்கோக்களை ஏற்றுக் கொள்ளவேண்டும். ஹே மைந்த! இவ்வண்ணம் ஜனகராஜாவின் வசனத்தை ஆறு முறைகேட்டு, அந்த யாஞ்ஞவற்கிய முனிவரும் ஜனகராஜாவின் பொருட்டு, இவ்வகையாய வசனத்தை ஆறு முறைகூறினர். ஹே ஜனகராஜாவே! எதுவரை சீடன் கிருதார்த்தனாகவில்லையோ, அதுவரை குருதக்ஷிணை கவரத்தகுதியாகமாட்டாது. இவ்வகையாய உபதேசத்தை எனக்கு எந்தந்தையானவர் செய்யவில்லை. ஆகையால், எதுவரை உனக்கு ஆத்ம சாக்ஷாத்கார அடைவு உண்டாகவில்லையோ, அதுவரை யான் நின்பானின்றும் குருதக்ஷிணையைக் கவரேன். இது கூறியதால் யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவுக்கு இப்பொருளை உணர்த்தி வைத்தனர். அக்கினி முதலிய நான்கு பாதங்களோடுகூடிய சகுணப் பிரஹ்ம உபாசனை மாத்திரத்தால் சீடன் கிருதார்த்தனாகான்; மற்றோ, நிர்க்குணப் பிரஹ்மத்தின் அபரோக்ஷ ஞானத்தால் சீடன் கிருதார்த்தனாகின்றான். அந்த நிர்க்குணப் பிரஹ்மத்தின் சாக்ஷாத்காரம் இதுவரை நினக்கு உண்டாகவில்லை என்பதாம். ஹே மைந்த! இவ்வகையாய வசனத்தை யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவின் பொருட்டுக் கூறியபோது, அந்த ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரை லோபமற்றவராய்க் கண்டு, அத்தியந்தம் ஆச்சரியத்தை யடைந்தனர். எவ்வஸ்துவின் ஞானத்தால் சீடன் கிருதார்த்தனாவனோ, அவ்வஸ்துவை அறியவேண்டு

மென்னு மிச்சையையுடைய அந்த ஜனகராஜாவானவர் தமது சிம்மாசனத்தைப் பரித்தியாகம் செய்து பூமியின்கண் இருந்தனர். யாஞ்ஞவற்கிய முனிவரை தண்டம்போல நமஸ்கரித்து, இவ்வகையாய வசனத்தைக் கூறத்தொடங்கினர். ஜனகராஜா கூறல்:—ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே! தங்களுக்கு எனது அநந்தங்கோடி நமஸ்காரங்களைச் சமர்ப்பிக்கின்றேன். ஹே பகவன்! ஒரு குருடனானவன் மகா வனத்தின்கண்ணே அடைந்து அநேக துக்கங்களை யனுபவித்துக் கொண்டிருக்குங்கால், அக்குருடன் துக்கப்படுதலைக் கண்ணுற்ற ஒரு தயாளுவான வன்மார்க்கத்தை உபதேசித்து, அக்குருடனை வனத்தினின்றும் வெளிப்படுத்தியது போல, சம்சாரரூப மகா வனத்தின்கண் அஞ்ஞானியாகிய யான் அடைந்து, அநேக வகையாய துக்கங்களை யனுபவிக்கின்றேன். தங்களுடைய தயாளு சுபாவத்தைக் கண்டு, இச்சம்சாரரூப வனத்தினின்றும் வெளிக்கிளம்பும் மார்க்கத்தைத் தங்கள் பால் யான் வினவுகின்றேன். தாங்கள் கிருபை செய்து, அம்மார்க்கத்தை உபதேசிக்கவேண்டும். இப்போது சம்சாரத்தின்கண் வன சமானத் தன்மையை விளம்புகின்றேன். ஹே பகவன் "உலகப் பிரசித்த வனமானது, பயத்தை யுண்டாக்கத்தக்க சர்ப்பங்களோடு கூடியிருக்கும். அநேகங் குழிகளோடு கூடியிருக்கும். அநேகம் குள்ள நரிகளோடு கூடியிருக்கும். அநேகம் சிம்மசப்தங்களால் நிறைந்திருக்கும். அக்கினியால் வெந்திருக்கும். அதுபோல, இச்சம்சாரரூப வனமும் காமரூப சர்ப்பங்களோடு கூடியிருக்கும். நாரிகளாகிய பெருங் குழிகளோடு கூடியிருக்கும். நேத்திராதி இந்திரியரூப குள்ளநரிகளோடு கூடியிருக்கும். அகங்காரரூப சிம்ம சப்தங்களால் நிறைந்திருக்கும். குரோதரூப அக்கினியால் வெந்த சித்தரூபப் பூமியும், வெந்த நற்குணமாகிய மரமும் உடையதாகவிருக்கும். ஹே பகவன்! உலகப் பிரசித்த வனத்தின்கண் வேடனானவன் நாய்களோடு வில்லம்புகளைக் கைக் கொண்டு சென்று நாய்களாலும், வில்லம்புகளாலும் மான்களைக் கொல்வன். அதுபோல, இச்சம்சாரரூப வனத்தின்கண் காலனாகிய வேடன் மனமாகிய நாயைக் கைக்கொண்டு கணம் லவமுதலிய காலரூப வில்லின்கண்ணே பூட்டிய ஜரை வியாதிகளாகிய பாணங்களின் சந்தானங்களால, என்போன்ற ஜீவரூப மான்களைக் கொல்லுகின்றனன். ஆகையால், ஹே பகவன்! அந்தக் காலரூப வேடனானவன் ஜரை நோய் முதலிய பாணங்களோடு என்னெதிரில் வரும் முன்னரே, எனக்கு மார்க்கத்தின் உபதேசத்தைத் தாங்கள் விரைவாகக் கூறவேண்டும். தாமதிக்க இது காலமல்லவாம். ஹே மைந்த! இவ்வண்ணம் ஜனகராஜாவானவர் தீனராய் யாஞ்ஞவற்கிய மகாமுனிவருடைய சந்நிதியில் பிரார்த்தனை செய்தபோது, அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவின் அதிகாரத்தைப் பரீக்ஷைசெய்யும் பொருட்டு, இவ்வகையாய வசனத்தைக் கூறத்தொடங்கினர். யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல்:— ஹே ஜனகராஜாவே! நீ என்னிடத்தில் மார்க்கத்தைக் கேட்டனை, உன்னுடைய அபிப்பிராயத்திற்கு விஷயமாய அடையத்தக்க பதார்த்தத்தை அறியாமல் என்னால் அந்த மார்க்கத்தைக் கூறமுடியாது. ஆகையால், நீ முதலில் அடையத்தக்க பதார்த்தத்தைக் கூறுதி, பின்னர் யான் அதன்மார்க்கத்தை உன்பொருட்டு உபதேசிக்கின்றேன். ஈண்டு, வழி நடப்பதால் அடையத்தக்க கிராமம் முதலியன அடையத்தக்கனவாம். ஹே ஜனகராஜாவே! உலகின்கண் எப்புருஷன் தூரதேசத்

தின்கண்ணே செல்லுகின்றனனோ, அப்புருஷன் பிருதிவி மார்க்கத்தின் கண்ணே தேரையும், குதிரை முதலியவற்றையுங் கொண்டு செல்வன். எப்புருஷன் ஜல மார்க்கத்தின்கண்ணே செல்லுவனோ, அப்புருஷன் ஓடத்தைக்கொண்டு செல்வன். அதுபோல, நீயும் பிரஞ்ஞை, பிரியம், சத்தியம், அநந்தம், ஆநந்தம், ஸ்திதி என்னும் ஆறு நாமங்களோடுகூடிய அக்கினி, வாயு, சூரியன், திக்கு, சந்திரன், பிரஜாபதி என்னும் ஆறு தேவதைகளையும் பிரஹ்மரூபமாய் உபாசனை செய்துள்ளாய். அகிம்சை, சத்தியம் முதலிய தெய்வ சம்பத்துக்களாய குணங்களோடு நீ கூடியவனாதலின், தேவதையைப்போல சர்வலோகராலும் பூஜிக்க யோக்கியனா யிருக்கின்றாய். வேதங்களின் பூர்வ காண்டத்தையும் நீ அத்தியயனஞ் செய்தவனாயிருக்கின்றாய். அநேக இருஷிகளிடத்திருந்து உபாசனைகளின் ரகசியத்தையும் அறிந்திருக்கின்றாய். சர்வலோகத்தின் கண்ணும் நினது புத்திமானாந் தன்மையும் பிரசித்தமாயிருக்கின்றது. ஆகையால, ஹே ஜனகராஜாவே! இச்சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து, அந்தக் கரும உபாசனைவடிவ சாதனங்களால் நீ எந்த ஸ்தானத்தை அடைவாயோ, அவ்வடையத்தக்க ஸ்தானத்தை அறிந்திருப்பாயேயாயின் என்பொருட்டுக் கூறுதி. பின்னர் யான் உன்பொருட்டு அவ்வடையத்தக்க ஸ்தானத்தின் மார்க்கத்தை உபதேசஞ் செய்கின்றேன். ஹே ஜனகராஜாவே! அடையத்தக்கனவாய விதேக தேசம், கோசல தேசம், குருதேசம், பாஞ்சால தேசம் என்பன முதலிய தேசங்களை அறியாமல், எப்புருஷன் வேறு வழிப்போக்கனுக்கு இம்மார்க்கம் விதேக தேசத்தை யடைவிக்கும்; இந்நெறி கோசல தேசத்தை யடைவிக்கும்; இவ்வழி குரு தேசத்தை யடைவிக்கும்; இப்பாதைபாஞ்சால தேசத்தை யடைவிக்கும்; எனத்திசைமாத்திரத்தால் மார்க்க உபதேசஞ் செய்வனோ, அப்புருஷன் அம்மார்க்க உபதேசத்தைச் செய்வானாயினும், செய்யாதவனே யாவன். அதுபோல, அடையத்தக்க ஸ்தானத்தை அறியாமல் மார்க்கத்தை உபதேசித்தல் எனக்கு நிஷ்பலமாய்ப் போகாமலிருக்க வேண்டுமாதலின், ஹே ஜனகராஜாவே! சித்த சுத்திவாயிலாய்க் கரும உபாசனைவடிவ சாதனங்களால் அடையத்தக்க ஸ்தானத்தை நீ முதலில் என்பொருட்டுக் கூறுதி. பின்னர் யான் உன்பொருட்டு அவ்வடையத்தக்க ஸ்தானத்தின் மார்க்கத்தை உபதேசிக்கின்றேன். ஹே குழந்தாய்! ஜனகராஜாவின் பொருட்டு யாஞ்ஞவற்கிய முனிவர் மேல் வினவியதன் கருத்து இஃதாம்:—இந்த ஜனகராஜாவானவன் அவ்வடையத்தக்க ஸ்தானத்தை அறிந்து, குதர்க்கமாய் என்பால் வினவின் இச்சனக ராஜா சிரத்தையுடையவனாகான். ஆகையால், பிரஹ்ம வித்தையை உபதேசிக்கத் தகுந்த அதிகாரியுமாகான். இந்த ஜனகராஜாவானவன் அவ்வடையத்தக்க ஸ்தானத்தை யறியாதவனாய் என்னிடத்தில் வினவுவானாயின் சிரத்தையுடையவனாவன். ஆகையால், பிரஹ்ம வித்தைக்கு அதிகாரியுமாவன். இக்கருத்தால் அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவின் அதிகாரத்தைப் பரீக்ஷை செய்யும் பொருட்டு, ஜனகராஜாவின்பால் இங்ஙனம் வினவினர். ஹே குழந்தாய்! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய முனிவரானவர் ஜனகராஜாவின்பால் கேட்டபோது, அந்த ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரிடத்தே இவ்வண்ணம் விண்ணப்

பித்தனர். ஜனகராஜா கூறல் :—ஹே யாஞ்ஞயவற்கிய மகா முனிவரே ! என குக்கும் அந்நிய புருஷர்கட்கும் கருமம், உபாசனை முதலிய சாதனங்களால் அடையத் தக்க ஸ்தானத்தை யான் அறிந்திலேன். ஹே பகவன் ! சிம்ம சர்ப்பாதிகளோடு கூடிய வனத்தின்கண் ஒரு அயல் நாட்டானாகிய குருடன் வந்து அகப்பட்டுக்கொள்ளின், அவன் விருத்த அவஸ்தையோடு கூடினவனாயிருப்பின், மேலும் பசிதாகாதி நானாவகையாய வியாதிகளால் தனது தேசத்தையும் மறந்திருப்பவனாயின், அத்தகைய குருடன் அத்தேசத்தின் மார்க்கத்தையறிந்த ஒரு தயாளு புருஷன்பால் மார்க்கத்தைக் கேட்பதேபோல, ஹே முனீஸ்வரரே ! யானும் அடையத்தக்க ஸ்தானத்தை யறியாது, அந்த ஸ்தானத்தின் மார்க்கத்தைத் தங்கள்பால் கேட்கின்றேன் இப்போது தனதஞ்ஞானத்தை ஜனகராஜாவானவர் நிரூபணஞ் செய்கின்றார் ஹே பகவன் ! சமுத்திரத்தினின்றும் உப்புக்கட்டி வருவதுபோல, எந்த ஸ்தானத்தினின்றும் யான் வந்தேனோ, அந்த ஸ்தானத்தையும் யானறிந்திலேனாயின், அடையத்தக்க ஸ்தானத்தை யான் எங்ஙன மறிவேன். ஹே பகவன் ! இறந்தகால, நிகழ்கால, எதிர்காலங்களிலுள்ள மூவகைப் பதார்த்தங்களையும் ஆன்மாவின் யாதாவது ஒரு தர்மங்கொண்டு யானறிகின்றேனா, அல்லது, ஆன்மாவின் சொரூபத்தால் யானறிகின்றேனா என்னும் பொருளையும் யானறிந்திலேனாயின், அடையத்தக்க ஸ்தானத்தை யான் எங்ஙன மறிவேன். ஹே பகவன் ! எனது சொரூபம் யாது என்னும் அர்த்தத்தையும் யானறிந்திலேனாயின், அடையத்தக்கஸ்தானத்தை யான் எங்ஙனம் அறிதல் கூடும். ஹே பகவன் ! இரவும் பகலும் யான் சுகதுக்கங்களைப் போகிக்கின்றேன். ஆனால், அச்சுக துக்கங்கட்கு யாது காரணம் என்னும் பொருளையும் யானறிகின்றிலேனாயின், அடையத்தக்க ஸ்தானத்தை யான் எவ்வாறறிவேன், ஹே பகவன் ! பால்யாவஸ்தை முதலாய் இதுவரை சர்வ அவஸ்தைகளிலும் துக்கம் ஒன்றையே யான் அனுபவிக்கின்றேன். ஆனால், அந்தத் துக்க போக்தாவையும், அந்தத் துக்க காரணங்களையும், அந்தத் துக்க விசேஷ சொரூபத்தையும் யான் சிறிது மாத்திரையும் அறிந்திலேன். ஹே பகவன் ! வாயுவால் சுழற்றப்பட்ட பதங்கமானது மகா அக்கினியின்கண் வீழும். அப்பதங்கம் எதுவரை நாசத்தை யடையவில்லையோ, அதுவரை தனதான்மாவையும், அந்நியத்தையும், துக்க காரணங்களையும், மற்றைய வேறு பதார்த்தங்களையும் அது அனுபவியாது ; மற்றோ, துக்கம் ஒன்றையே அது அனுபவிக்கும். அதுபோல, கருமரூப வாயுவின் வயத்தால் இச்சம்சாரரூப அக்கினியின்கண் அடைந்த யான் எனதான்மாவையும், துக்க காரணங்களையும், மற்றைய எப்பதார்த்தங்களையு மறிகின்றிலேன். கேவலம் துக்கம் ஒன்றையே யான் நிரந்தரம் அனுபவிக்கின்றேன். ஹே பகவன் ! இததகைய மூடபுத்தியையுடைய நான் கரும உபாசனைகளால் அடையத்தக்க ஸ்தானத்தை எங்ஙனம் அறிவேன். ஹே பகவன் ! உலகின்கண்ணே எப்புருஷன் அடையத்தக்க கிராமாதிகளை அறிகின்றானோ, அப்புருஷன் அந்தக் கிராமத்தின் மார்க்கத்தையு மறிகின்றான். அதுபோல, யான் கரும உபாசனைவடிவ சாதனங்களால் அடையத்தக்க ஸ்தானத்தை யறிவனேயாயின், அவ்வடையத்தக்க ஸ்தானத்தின் மார்க்கத்தைத் தங்களிடத்தே யான் வினவேன். ஆனால், அவ்வடையத்தக்க ஸ்தானத்தை யான் அறிந்திலேன். இக்காரணத்தானே அடையத்தக்க ஸ்தானத்தை

அறியும் பொருட்டு, தங்களிடத்தே மார்க்கத்தை யான் வினவினேன். ஹே பகவன்! அதிகாரிகளால் அடையத்தக்க ஸ்தானமானது, அறியத்தகாததென்பது ஓர் ஆச்சரியம் அன்றும். ஏனெனின், இச்சீவன் இத்தூல சரீரத்தினின்றும் வெளிப்போந்தவுடன், யாது சொரூபத்தை யுடையவனாயிருப்பன்? எவ்வண்ணம் பரலோகத்திறகுச் செல்வன்? எப்பலத்தை யாண்டு போகிப்பன் என்னும் இவ்வகையாய பொருளையும் எவரும் அறிகின்றிலராயின், அதிகாரிகளால் அடையத்தக்க ஸ்தானத்தை யானறிந்திலன் என்பதன்கண் யாதொரு ஆசசரியமுமின்றும். ஆகையால், ஹே பகவன்! கரும உபாசனை முதலிய சாதனங்களாலடையத்தக்க ஸ்தானத்தை யானறிகின்றிலேன். இதனுற்றான் அவ்வடையத்தக்க ஸ்தானத்தின் மார்க்கத்தைத் தங்களிடத்தில் யான் வினவினேன். தாங்கள் கிருபையோடும், அவ்வடையத்தக்க ஸ்தானத்தையும், அதன் மார்க்கத்தையும் என் பொருட்டு உபதேசிக்கவேண்டும். ஹே மைந்த! இவ்வகையாய வினவை ஜனக ராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரிடத்தே வினவியதும், அம்முனிவரானவர் ஜனகராஜாவை பிரஹ்மவித்தையின் அதிகாரி யெனவறிந்து கூறத்தொடங்கினர். யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல்:—ஹே ஜனகராஜாவே! அதிகாரியானவன் கருமம், உபாசனை முதலிய சாதனங்களால் சித்தசுத்தி வாயிலாய் எவ்வடையத்தக்க ஸ்தானத்தை அடைவனே, அதனை நின்பொருட்டு யான் உபதேசிக்கின்றேன். அவ்வடையத்தக்க ஸ்தானத்தின் ஞானத்தால் உனது பயம் யாவும் நீங்கும். ஹே ஜனகராஜாவே! கருமம், உபாசனை முதலிய சாதனங்களால் நீ எந்த ஸ்தானத்தை யடைவாய் என, யான் முன்னர் உன்னை வினவினேன். அவ்வினவினுதற்குக் காரணமிதுவாம்:—உலகின்கண்ணே வாதிகளின் வினுக்களிருவகைத்தாம். ஒன்றே, பிரதிபாதனஞ் செய்தற்குத் தகுதியாய வஸ்துவை அறியாது வாதி வினுதலாம். மற்றொன்றே, *பிரதிபாதனஞ் செய்தற்குத் தகுதியாய வஸ்துவையறிந்து வாதி வினுதலாம். அவற்றுள், இரண்டாவதும் இருவகைத்தாம். ஒன்றே, வஸ்துவின் உண்மை யுணர்ச்சி வாயிலாய் வாதி வினுதலாம். மற்றொன்றே, வஸ்துவின் இன்மையுணர்ச்சி வாயிலாய் வாதி வினுதலாம். ஆண்டு, வாதியின் ஞானவிஷயமாய பதார்த்தமும, அங்ஙனமே, பிரதிவாதியின் ஞான விஷயமாய பதார்த்தமும ஆகிய இரண்டின் சமானத்தன்மையின் நிர்ணயம் வஸ்துவின் மெய்ஞ்ஞானவாயிலாய் வினுவின் பலமாம். ஐயந்திரிபுகளின் நீக்கம் வஸ்துவின் பொய்ஞ்ஞான பூர்வகமாய் வினுவின் பலமாம். அவ்வஸ்துவின் உண்மை உணர்ச்சி வாயிலாய வினுவும் இருவகைத்தாம். ஒன்றே, தனது புத்தியின் நிர்மலத் தன்மையை யறிவிக்கும்பொருட்டு வாதி வினுதலாம். மற்றொன்றே, பிரதிவாதியின் மதி நிர்மலத் தன்மையை யறியும்பொருட்டு வாதி வினுதலாம. ஹே ஜனக ராஜாவே! இவ்வண்ணம் வஸ்துவின் ஞானவாயிலாய வினுக்கள் அநேக விதமான வேற்றுமைகளை யடையும். அவற்றுள், எவனேனும் ஒருவாதி அடையத்தக்க ஸ்தானத்தை யறிந்து, அதன் மார்க்கத்தை வினவுவானுயின், அவ்வாதிக்கு மதிமானுனவன் அடையத்தக்க ஸ்தானத்தை யறிந்தே அதன் மார்க்கத்தை உபதே

* பிரதிபாதனம் = கூறுதல்.

சிப்பன். அடையத்தக்க ஸ்தானத்தை யறியாது எம்மதிமானும் அதின் மார்க்கத்தை உபதேசியான். ஹே ஜனகராஜாவே! எப்புருஷன் அடையத்தக்க ஸ்தானத்தை யறியாது அதன் மார்க்கத்தை வினவுகின்றனனோ, அந்தச் சிரத்தையுடைய புருஷனுக்கு மதிமானாகிய தயாளுவானவன் அடையத்தக்க ஸ்தானத்தையும், அதன் மார்க்கத்தையும் உபதேசஞ் செய்வன். கேவலம் மார்க்க மாத்திரத்தை உபதேசியான். அதுபோல, நீயும் அடையத்தக்க ஸ்தானத்தை யறியாது என்பால் மார்க்கத்தை வினவுகின்றமையின், சிரத்தையுடைய உன்பொருட்டு யான் முதலில் அடையத்தக்க ஸ்தானத்தின் உபதேசத்தைச் செய்கின்றேன். அவ்வடையத்தக்க ஸ்தானத்தில் சித்தத்தின் ஒருமுகத்தன்மையே அதன் மார்க்கமாம். ஆகையால், ஹே ஜனகராஜாவே! நீ ஐயமற்றவனாய் மனத்தைச் சாவதானப்படுத்திக்கொண்டு, அவ்வடையத்தக்க ஸ்தானத்தைக் கேட்டி. ஹே மைந்த! இவ்வகையாய வசனத்தை யாஞ்ஞுவற்கியமுனிவர் ஜனகராஜாவை நோக்கிக் கூறியபோது, அந்த ஜனகராஜாவானவர் மிகவும் அகமகிழ்வடைந்து விண்ணப்பிக்கலாயினர். ஹே ஆசிரியோத்தமரே! தாங்கள் தயைசெய்து என்பொருட்டு அடையத்தக்க ஸ்தானத்தை உபதேசஞ் செய்வீர்களாயின், யான் சாவதானமாய் இருந்து கேட்க முன்னிற்கின்றேன். ஹே மைந்த! ஜனகராஜாவானவர் இவ்வண்ணம் கூறவே, யாஞ்ஞுவற்கிய முனிவரானவர் அவர்பொருட்டு உபதேசிக்கத் தொடங்கினர். யாஞ்ஞுவற்கிய முனிவர் கூறல்:—ஹே ஜனகராஜாவே! சூரியபகவானானவர், எந்த ஞானத்தை என்பொருட்டு உபதேசஞ்செய்தனரோ, அந்த ஞானத்தை யான் உன்பொருட்டு உபதேசிக்கின்றேன். நீ சாவதானமாய்க் கேட்பாயாக. அந்த ஞானமானது ஆத்ம சாக்ஷாத்காரத்தின் காரணமாம். மகம் முதலிய பகிரங்க சாதனங்களாலும், விவேகம் முதலிய அந்தரங்க சாதனங்களாலும் அடையத்தக்கதாம்.

இப்போது துரியவடிவ சுத்தப் பிரஹ்மத்தை யுணர்த்தும் பொருட்டு நனவு கனவு, துயில் என்னும் மூன்று அவஸ்தைகளின் அபிமானிகளாய விசுவன் தைஜசன், பிராஞ்ஞன் என்பவரின் சொரூபங்களைக் காண்பிப்பாம். அவற்றுள் முதலாவதாய வைசுவானரவடிவ விசுவனுடைய சொரூபத்தை நிரூபிப்பாம்:— ஹே ஜனகராஜாவே! அவித்தைபால் தேகாதிகளோடு தாதான்மிய அத்தியாசத்தை யடைந்த இப்பரமான்மதேவர் எக்கால் நேத்திராதி இந்திரியங்களால் உருவம் முதலிய விஷயங்களைக் கவருவரோ, அக்கால் இவர் நனவு அவஸ்தையையுடையவராவர். அந்நனவஸ்தையின்கண் இப்பரமான்மதேவர் இரண்டு வடிவங்களாய் இருப்பர். அவற்றுள், போக்தாவாய இந்திரரூபமாய்த் தக்ஷிண நேத்திரத்தில் இருப்பர். போக்கியமாகிய இந்திராணிரூபமாய் வாமநேத்திரத்தில் இருப்பர் இவ்வண்ணம் வைசுவானர உபாசகன் விசுவாத்மாவை இந்திர இந்திராணி ரூபமாய்த் தியானஞ்செய்தல் வேண்டும். இப்போது ஆன்மாவின்கண் இந்திரரூபத் தன்மையை நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! இவ்வான்ம தேவர் ஆகாசாதி பூத பௌதிகப பிரபஞ்சத்தை உண்டாக்கி, அதனை இந்திரரூபத்தால் பார்த்தனர் இக்காரணத்தால் இப்பரமான்மதேவர் இதந்திர நாமத்தால் கூற யோக்கியராயினும், பரோக்ஷப் பிரியர்களாய அக்கினிமுதலிய தேவதைகள் "இதந்திரர்" என்னு

அபரோக்ஷ நாமத்தால் அப்பரமான்ம தேவரைக்கூறவில்லை; மற்றோ, இந்திரர் என்னும் பரோக்ஷ நாமத்தால் அந்த அக்கினி முதலிய தேவதைகள் பரமான்ம தேவரைக் கூறினர். இவ்வாநந்த சொரூபராய பரமான்ம தேவர் ஸ்வப்பிரகாச சொரூபராதலின் "இந்த" என்னும் நாமத்தால் கூற யோக்கியராயினும், பரோக்ஷப்பிரியர்களாய அக்கினி முதலிய தேவதைகள் "இந்த" என்னும அபரோக்ஷ நாமதகால் ஆன்மதேவரைக் கூறவில்லை; மறறோ, "இந்திரர்" என்னும் பரோக்ஷ நாமத்தால் ஆன்ம தேவரைக் கூறினர். இப்போது இப்பொருளையே வெளிப்படையாக்கும் பொருட்டு, முதலில் ஆன்மாவின்கண் பிரகாசரூபத் தன்மையைக்காண்பிப்பாம்:— ஹே ஜனகராஜாவே! இவவாநநதசொரூப ஆன்மாவின் பிரகாசத்தானே இவ்வெல்லாச் சராசரவடிவ உலகும பிரதீதியாகின்றது. இவ்வாநநத சொரூப ஆன்மாவைச் சூரியனும், சநதிரனும பிரகாசியார. நக்ஷத்திர கணங்களும, அக்கினியும், ஞானேநதிரியமும், கருமேநதிரியமும், மனமும், சபதமும் இவ்வான்மாவைப் பிரகாசியா. கடபடாதி பதார்த்தங்களைப் பிரகாசிபபிக்கும் தீபத்தை அப்பதார்த்தங்கள் பிரகாசியாததேபோல, சூரிய சநதிரா முதலியவர்களைப பிரகாசிப்பிக்கும் ஆன்மாவை அவா பிரகாசியார். மற்றோ, தனது பிரகாசத்தாலே இவ்வான்மாப் பிரகாசிக்கும். இககாரணத்தாலே அறிஞா இவ்வான்மாவை ஸ்வப்பிரகாசம் எனக் கூறினர். எப்பிரகாசம தனது பிரகாசத்தின்கண்ணும, அநநிய பதார்த்தங்களின் பிரகாசத்தின்கண்ணும வேறோ பிரகாசத்தை யபேக்ஷியாதோ, அது "ஸ்வப் பிரகாசமாம" அத்தகைய ஸ்வபபிரகாச ஆதமா "இந்த" என்னும் அபரோக்ஷ நாமத்தாலே கூற யோக்கியமாயினும், அக்கினி முதலிய சாத்துவிக தேவதைகள் இவ்வான்மாவை "இந்த" என்னும் அபரோக்ஷ நாமத்தால் கூறவிலலை. மற்றோ, "இந்திரா" என்னும் பரோக்ஷ நாமத்தாலே ஆன்மாவைக் கூறினர். ஏனெனின், இம்மனுஷிய லோகத்தின்கண்ணும், சாததுவிகப் புருஷா தாமத புருஷரைப் போலத் தமது குரு, தாய், தநதை முதலிய பெரியோர் என்னுமிவர் தம் சாக்ஷாத்தான தேவதத்தாதி நாமஙகளைக கூறுகினறிலா. மறறோ, ஆசிரியா முதலிய பரோக்ஷநாமத்தால் அநதசசாததுவிகப் புருஷா விவகரிபபர். இவ்வுலகின்கண்ணே சாத்துவிக இயற்கையுடைய ஸ்திரீகள் தமது நாயகா, மாமனா் முதலிய பெரியோர் தம் சாக்ஷாத்தான தேவததாதி நாமங்களை உசசரிததிலர். மற்றோ, "ஸ்வாமி" என்பது முதலிய பரோக்ஷ நாமங்களால அநதச சாததுவிக ஸ்திரீகள் விவகரிப்பர். அநதச சாத்துவிகப் புருஷரின் தாய், தநதை, ஆசிரியர்களது சாக்ஷாத்தான தேவதத்தாதி நாமங்களை வேறொருபுருஷன உசசாரணஞ்செய்யின், அபபுருஷன் மீதும் அசசாத்துவிக புருஷர் கோபமுடையவராவர். ஹே ஜனகராஜாவே! மனுஷிய லோகத்திலுள்ள சாத்துவிகப் புருஷருக்கும தாய், தநதை, குரு முதலியோர்களின் பரோக்ஷ நாமமே பிரியமாகுமாயின், பரம சாத்துவிகர்களாய அக்கினி முதலிய தேவதைகட்கு ஆன்மாவின் பரோக்ஷ நாமமே பிரியமாம், என்பதின்கண் யாது ஆச்சரியமுளது! இககாரணத்தால் பரோக்ஷப பிரியர்களாய அவ்வக்கினி முதலான தேவதைகள் இவ்வாநந்தசொரூப ஆன்மாவை "இதந்திர" "இந்த" என்னும் அபரோக்ஷ நாமங்களால் கூறவில்லை. மற்றோ "இந்திரர்" என்னும்

பரோக்ஷ நாமத்தால் கூறினார்கள். ஹே ஜனகராஜாவே! இத்தகைய "இந்திரர்" எனப்பெயர் வாய்ந்த பரமான்மதேவர் நனவஸ்தையின்கண் வாக்குமுதலிய இந்திரியங்களைத் தமததீனப்படுத்தி தக்ஷிண நேத்திரத்திலிருப்பர். இப்போது, இந்திரர் என்னும் பரமான்மாவின்கண் பிரசித்த தேவராஜாவாகிய இந்திரரது சமானத தன்மையைக் காண்பிப்பாம:—ஹே ஜனகராஜாவே! லோகப்பிரசித்த இந்திரர் சுவர்க்கத்தின்கண "வைஜயந்தம்" எனப பெயரிய கிருகததின்கண் இருப்பா. தேவதைகள் அர்ப்பிக்கும் நானாவகையாய போகங்களைப் போகிப்பர். அதுபோல, இப்பரமான்மாவும நனவஸ்தையின்கண் தக்ஷிண நேததிரரூப கிருகத்தில் வசிக்கும். அக்கினி முதலிய தேவதைகள் அர்ப்பிக்கும் ரூப ரசாதி நானாவகையாய விஷயங்களைப் போகிக்கும். ஹே ஜனகராஜாவே! "வைஜயந்தம்" என்னும் வீட்டிலுள்ள தேவதைகளின் சபையிலிராநின்ற இந்திரரது மனைவியாகிய இநதிராணியானவள் "வைஜயந்தம்" என்னும் வீட்டின்கண் இராள்; மற்றே, அவ்வீட்டிற்குச் சமீபமாய மற்றொரு வீட்டில அவ்விநதிராணியானவள் இருபபள். அவ்விந்திராணியும் இநதிரருக்குச சமானமாகவே சமபததுடையவளாவள். அதுபோல, நனவஸ்தையின்கண் தக்ஷிண நேத்திரததின்கண் இராநின்ற பரமான்மரூப இந்திரரது மனைவியாகிய இந்திராணியானவள் வாம நேத்திரத்தின்கண் இருபபள். நனவஸ்தையின்கண் பலவகையாய ஸ்தூலபோகங்களைப போகிககும பரமான்மரூப இநதிரராகிய பர்த்தாவோடு நானாவகையாய் அவ்விநதிராணியானவள் விசேஷமாய் விளங்கிக்கொண்டிருப்பள். இக்காரணத்தால் அறிஞாகள் அவ்விநதிராணியை "விராட்" என்னும நாமததால் அழைக்கின்றனா. அல்லது, தக்ஷிண நேததிரததின்கண் இராநின்ற இநதிரராகிய புருஷா வாககு முதலிய பதது இந்திரியங்கட்கும் அதிஷ்டாதாவாம். அதுபோல, வாம நேத்திரததின்கண் இராநின்ற இந்திராணியும், வாக்கு முதலிய பத்திந்திரியங்கட்கும அதிஷ்டாதாவாம. இக்காரணத்தாலே அறிஞர் அவ்விநதிராணியை "விராட்" நாமத்தால அழைக்கின்றனர். கருத்திதுவாம:—பதது அக்ஷரங்களையுடைய யாதொரு சநதம் உளதோ, அது "விராட்" எனபபடும. இவ்விந்திராணியும் வாக்கு முதலிய பத்திநதிரியங்களோடு தாதாத்மிய சம்பந்தப்பட்டுப் பத்து வகையாவள். ஆதலின், மதிமான்கள் அவ்விந்திராணியை விராட்டென்னும் நாமத்தாலழைககின்றனர். அல்லது "அன்னம் விராட்" என்னும் சுருதியின்கண் போக்கியமான அன்னததை "விராட்" எனக் கூறப்பட்டுளது. இவ்விநதிராணியும் பரமான்மரூப இநதிரருக்குப போக்கியமாமாதலின், அவ்விநதிராணியை அறிஞர் "விராட்" என்னும் பெயரால் அழைக்கின்றனர். ஹே ஜனகராஜாவே! இவ்வண்ணம் நனவஸ்தையின்கண் இப்பரமான்மதேவர் இந்திராணிரூபமாயும், இந்திரரூபமாயும், சர்வஜீவர்களின் வாம தக்ஷிண நேத்திரங்களில் இருப்பர். அப்பரமான்மரூப இநதிரர் சமஷ்டிவடிவமாய் ஒருவராவர்; வியஷ்டி உபாதியால் மயங்கிய புருஷருக்குப் பலராய்த் தோற்றுவர். ஆகையால், ஹே ஜனகராஜாவே! இநதிரியங்களால் நானாவகையாய ஸ்தூல போகங்

ப் போகித்து,நீ எக்கால் எவ்வவஸ்தையின்கண் நிகழ்கின்றாயோ, அவ்வவஸ்தை நன வெனப்படும். அந்நனவஸ்தையின்கண் பரமான்மாவாய நீ போக்தாவாய இநதிரரூபமாயும், போக்கியமாய இந்திராணிரூபமாயும எல்லாத் தேகங்களினு

பிருந்து சர்வ வியவகார சித்தியைச் செய்கின்றாய். ஹே மைந்த! இது கூறிய தால் யாஞ்ஞவற்கிய முனிவர் இவ்வர்த்தத்தை யுணர்த்தினர் :—எவ்வவஸ்தை யின்கண் பரமான்மாவின் இந்திரரூபமும், இந்திராணிரூபமும் வேறு வேறு ஸ்தா னங்களில் வாசஞ்செய்யுமோ, அது வைசுவானரரூப விசுவனது வடிவமாம். எவ்வவஸ்தையின் பரமான்மாவின் இந்திரரூபமும், இந்திராணிரூபமும் ஓரிடத்தே வாசஞ்செய்யுமோ, அது ஹிரண்யகர்பப சூத்திராத்மரூப தைஜசனுடைய வடிவ மாம். அங்ஙனமே, ஈஸ்வரரூபப் பிராஞ்ஞன் சொரூபமாகும். இப்போது தைஜச னுக்கும், பிராஞ்ஞனுக்கும் பரஸ்பரமுள்ள விலக்ஷணத்தன்மையை நிரூபணஞ் செய்வாம். ஹே ஜனகராஜாவே! சுவர்க்க லோகவாசியராய தேவராஜாவாய இந் திரரும், அவரது மனைவியாராய இந்திராணியும் "வைஜயந்தம்" என்னும் கிருகத் தைப் பரித்தியாகஞ் செய்து, பரஸ்பரம் சம்போகம் செய்யும்பொருட்டு ஒரு ஏகாந்த ஸ்தானத்தை யடைவர். அதுபோல, இப்பரமான்மரூப இந்திரரும், இந் திராணியும் தக்ஷிண வாம நேத்திரங்களைப பரித்தியாகஞ் செய்து, பரஸ்பரம் சம் போகம் செய்யும்பொருட்டு, ஹிருதயரூப ஏகாந்த ஸ்தானத்தை யடைவர். அவ் விருதயத்தைத் தகரவித்தையின்கண் ஈஸ்வர ரூபமாயக் கூறப்பட்டுளது; பாலாகி, அஜாத சத்துரு சம்வாதத்தில சுழுப்திஸ்தானரூபமாய்க் கூறப்பட்டுளது. ஹே ஜனகராஜாவே! அந்த ஹிருதயரூப கமல காணிகைக்கொப்பாய இரக்த வர்ண முடைய மாமிச பிண்டமானது பரமான்மரூப இந்திரர் இந்திராணிக்குப் பக்ஷிக்க யோக்கியமாய அன்னமாம். ஹிருதய கமலத்தின் கேசரத்திற் கொப்பாய நாடி களின் *ஜால சமானமாய ஒன்றறகொன்றுள்ள பிணிப்பு அப்பரமான்மரூப இந்தி ரர், இந்திராணிகளின் வஸ்திரமாம. "சுழும்னை" என்னும் நாடியானது ஹிருதய தேயத்தினின்றும் கிளம்பி †மூர்த்த ஸ்தானத்தை அடைந்திருக்கின்றது. அன்றியும், அந்த மூர்த்த ஸ்தானத்தினின்றும மேலாகப் பிரஹ்மலோக பரியந் தம் அடைந்திருக்கின்றது. அந்தச் சுழும்னை நாடியானது பரமான்மரூப இந் திரர், இந்திராணிகளின் கமன ஆகமனத்தின்கண் இராஜ மார்க்கமாம். ஹே ஜனகராஜாவே! இப்பரமான்மரூப இந்திரர் இச்சுழும்னை நாடிமார்க்கத்தால் இச்சரீரத்தினின்றும வெளிக்கிளம்பின, தேவயான மார்க்கமாய்ப் பிரஹ்மலோ கத்தையே யடைவர். இப்பரமான்மரூப இந்திரர் சரீரத்துள்ளே சஞ்சரிக் கும் சுழுமனை நாடியின் சாகைவடிவ வேறுநாடிகளின் மார்க்கத்தால், ஹிருதய தேயத்தினின்றும் தக்ஷிணநேத்திரத்திற்கு வருவர். ஹே ஜனகராஜாவே! எங் ஙனம் ஒரு மரத்திற்கு அநேகம சாகைகள் உளவாமோ, அங்ஙனம் அச்சுழும்னை நாடியாய மரத்திற்கு வேறு அநேகம நாடிகள சாகைகட்குச் சமானமாயிருக் கின்றன. அந்நாடிகள் ஒரு கேசத்தை ஆயிரங்கூறுக்கின் அவற்றுள் ஒரு கூறுக் குச் சமானமாய்ச சூட்சுமமாம. ஹே ஜனகராஜாவே! இந்திராணியோடு கூடிய அப்பரமான்மரூப இந்திரர் அந்நாடிரூப மார்க்கத்தால் இருதய ஆகாசத்தின்கண் ணே செலலின் துயிலவஸ்தையை யடைவர். இந்திராணியோடுகூட அப்பரமான்ம ரூப இந்திரர், அந்நாடிரூப மார்க்கத்தின்கண்ணே இருப்பாராயின் கனவஸ்

* ஜாலம்=வலை. † மூர்த்த=உச்சி.

தையையடைவர். ஹே ஜனகராஜாவே! இந்திராணியோடுகூடிய அப்பரமான்ம வடிவ இந்திரர் நனவஸ்தையில் வாம தக்ஷிண நேத்திரத்தின்கண் இருந்து கொண்டு சப்தஸ்பரிசாதி ஸ்தூல விஷயங்களைப் போகிப்பர். இக்காரணத்தால் அப்பரமான்மரூப இந்திரரை அறிஞர் "ஸ்தூலபுக்" என்பர். வியஷ்டி ஸ்தூலசரீராபிமானத்தால் அப்பரமான்மரூப இந்திரருக்கு விசுவன் என்னும் நாமத்தைச் சூட்டுவர். அப்பரமான்மரூப இநதிரரே நனவஸ்தையைப் பரித்தியாகஞ் செய்து, கனவஸ்தையின்கண் நாடிரூபஸ்தானத்தில் இருந்து மனோமயமாய சூக்ஷ்ம விஷயங்களைப் போகிப்பர். இக்காரணத்தால், அப்பரமான்மரூப இநதிரரை அறிஞர் "சூக்ஷ்மபுக்" என்பர். வியஷ்டி சூக்ஷ்ம சரீர அபிமானத்தால் அப்பரமாத்மரூப இநதிரருக்குத் தைஜச நாமத்தைச் சூட்டுவர். இந்திராணியோடுகூடிய அப்பரமான்ம வடிவ இந்திரர் கனவஸ்தையைப் பரித்தியாகஞ்செய்து, துயில் அவஸ்தையின்கண் ஹிருதய ஆகாசத்தை யடைவர். ஆண்டு, வாசனை மயமாய அத்தியந்தம் சூக்ஷ்ம போகங்களைப் போகிபபர். இககாரணத்தால அபபரமான்ம வடிவ இநதிரரை அறிஞா அத்தியநதம் "சூக்ஷ்மபுக்" என்பர். துயிலவஸ்தையின்கண் இவ்வான்மரூப இநதிரா ஆநநதவடிவ அநதரியாமியோடு அபேத பாவத்தை யடைவர். இக்காரணத்தால் அவர் "ஆநந்தபுக்" எனப்படுவர். வியஷ்டி காரண சரீர அபிமானத்தால் அவர் "பிராஞ்ஞர்" எனப்படுவர். ஹே ஜனகராஜாவே! உணமையாய் ஆராய்நது நோக்கின், துயிலவஸ்தையின்கண் அப்பரமான்ம வடிவ இநதிரா அபோக்தாவே யாவர். ஏனெனின், சுகதுக்க ஞானம் போகமெனபபடும. அசசுக துக்க ஞானம் துயிலின்கண் புத்தி இலயமாய் இருத்தலின் சம்பவியாது; ஆகையால, துயிலின்கண் ஆன்மா அபோக்தாவேயாம.

சங்கை :—ஹே பகவன்! சுழுபதியவஸ்தையின்கண் ஆத்மா அபோக்தாவேயாகுமாயின், இருதயாகாசத்தின்கண் இராநின்ற இநதிராணியோடு கூடிய பரமான்மவடிவ இநதிரருக்கு இரகத வர்ணமுடைய மாமிசபிண்டம் அன்னமெனவும் நாடிகளின் சமூகம் (கூட்டம்) வஸ்திரமெனவும் முன்னர்த் தாங்கள் கூறியது முரணாகுமன்றோ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! துயிலவஸ்தையின்கண் பரமான்மவடிவ இந்திரர் அம்மாம்சபிண்டரூப அன்னத்தைப பக்ஷணம் செய்வர் எனவும், நாடிரூப வஸ்திரத்தைத் தரிப்பர் எனவும் எனதபிபபிராயமன்றும். மற்றோ, அவ்வசனத்தின்கண் எனதபிப்பிராயமிதுவாம் :—எப்புருஷனுடைய மனம் பாஹ்ய விஷயங்களின் வாசனையால் அத்தியந்தம் சஞ்சலமாமோ, அப்புருஷன் மனத்தை ஒரு முகப்படுத்தும் பொருட்டு, அன்னவஸ்திராதி சாமக்கிரியோடுகூடப் பரமான்மரூப இநதிரரைத் தியானம் செய்யின், அத்தியானததால் அபபுருஷனுடைய மனம் ஒருமுகப்படும். ஆகையால், ஆன்மாவின் தியானத்தில் அவ்வசனத்தின் தாறபரியமாம்; போகத்தின்கண் அன்றும். சுழுப்தியவஸ்தையின்கண் இவ்வான்மதேவர் தமது சாக்ஷிவடிவத்தால் சர்வ துக்கங்களின் அபாவத்தை அனுபவிப்பர். இக்காரணத்தால் அவர் "ஆநந்தபுக்" எனப்படுவர். அங்ஙனமே, அத்தியந்தம் "சூக்ஷ்மபுக்"

எனப்படுவர். ஆகையால், துயிலவஸ்தையின்கண் ஆன்மாவின் ஆநந்தபுக்காந் தன்மையும், அத்தியந்தம் சூக்ஷ்மபுக்காந் தன்மையும் முக்கியமன்றும்; மற்றே, கௌணமாம். ஹே ஜனகராஜாவே! சுவர்க்கத்தின்கண் இராநின்ற தேவராஜாவாய இந்திரர், கிழக்குமுதலிய பத்துத் திசைகளின் அதிபதியாதலின், அப்பத்துத்திசைகளோயுந் தன்னின் அபின்னமாவெண்ணுவர். அதுபோல, துயில் அவஸ்தையின்கண் இவ்வான்மா அந்தரியாமியாகிய ஈஸ்வரரோடு அபேதபாவத்தை யடைந்து, கிழக்கு முதலிய பத்துத் திசைகளோடு அபின்னமாம். ஆண்டு, இத்துணை விசேஷமுளது. திருஷ்டாந்தத்தில தேவராஜாவாகிய இந்திரருக்கு, கிழக்கு முதலிய திசைகளோடுண்டாம் அபேதம் உண்மையாயின்றும்; மற்றே, அபிமானமாத்திரத்தாலாம். இப்பரமான்மரூப இந்திரர் சர்வ ஜகத்திற்கும் உபாதானகாரணராதலின், மண்வடிவ காரணம், கடவடிவ காரியத்துள் வியாபித்திருப்பதுபோலவும், கடரூபகாரியத்தோடு அபின்னமா யிருப்பது போலவும், இப்பரமான்மரூப இந்திரர் திசை முதலிய சர்வப் பிரபஞ்சங்களுள் வியாபகராவர். சர்வ ஜகத்தோடும அபின்னராவா. இபபோது துயிலின்கண் இராநின்ற மாயா விசிஷ்ட ஈஸ்வரரிடத்தே சாவஜகத்தின் காரணத்தன்மையை நிரூபணஞ் செய்வாம. ஹே ஜனகராஜனே! சுழுபதி யவஸ்தையின்கண் இராநின்ற மாயாவிசிஷ்ட பரமேஸ்வரரே ஆகாசாதி பஞ்சபூதங்கட்குங் காரணராம். இங்ஙனமே, ஜராயுஜ, அண்டஜ, சுவேதஜ, உதபிஜ்ஜமென்னும் நான்குவகையாய சரீரங்களின் காரணர். அங்ஙனமே, திககு, காலம முதலிய சம்பூரண ஸ்தூல சூக்ஷ்மப் பிரபஞ்ச காரணர்.

சங்கை:—ஹே பகவன்! சத்து, சித்து, ஆநந்தவடிவ பரமான்மாவின்கண் அசத்து, ஜட, துக்கரூப ஜகத்தின் காரணத்தன்மை சம்பவியாது. ஏனெனின், சமான இயற்கையையுடைய பதார்த்தங்கட்கே பரஸ்பரம் காரியகாரண பாவமாமன்றே?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! சமான இயற்கையையுடைய பதார்த்தங்கட்குப பரஸ்பரம் காரிய காரண பாவம் ஆம் என்னும் நியமம் யாண்டும் சம்பவியாது. ஏனெனின், நிரவயவமாய் ரூபாதிகளற்றதாய் இராநின்ற ஆகாசத்தின்கண், சாவயவமாய் ரூபாதிகளோடு கூடியுள்ள மேகம் மின்னல் முதலியவற்றின் காரணத்தன்மையுளது. அதுபோல, சசிதாநந்த சொரூப பரமான்மாவின்கண்ணும் அசத்து ஜடதுக்கரூபப பிரபஞ்சத்தின் காரணத்தன்மை சம்பவிக்கும். சமான இயற்கையையுடைய பதார்த்தங்கட்குப் பரஸ்பரம் காரியகாரண பாவ முண்டாம் என்னும் நியமம் பரிணும உபாதான காரணத்தின் கண்ணே யுளது. விவர்த்த உபாதான காரணத்தின்கண் இந்நியம மின்றும். இப்பரமான்மதேவர் சர்வஜகத்தின் விவர்த்த உபாதான காரணர். அல்லது, சுத்த ஆத்மாவின் கண்ணே ஜகத்தின் காரணத் தன்மையின்றும்; மற்றே, மாயா விசிஷ்ட பரமான்மாவின்கண் ஜகத்தின் காரணத்தன்மையுளது. அம்மாயை அசத்து ஜடதுக்கரூபமாகும். ஆகையால், மாயையின் அசத்து ஜடதுக்கரூபத் தன்மை காரியப்

பிரபஞ்சத்தின்கண்ணே தோற்றும். இத்துணை கூறியதால் வியஷ்டியாய ஸ்தூல, சூக்ஷும, காரண சரீர அபிமானிகளாய விசுவ, தைஜச, பிராஞ்ஞர்களின் சொரூபம் காண்பிக்கலாயது. இப்போது துரிய சுத்தாத்மாவை நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! நீ முன்னர் எவ்வடையத்தக்க ஸ்தானத்தை என்பால் வினவினையோ அதனை நீ கேட்பாயாக. எப்பரமான்ம தேவர் நனவஸ்தையின்கண் தக்ஷிண நேத்திரத்தில் இருந்து, தமது ஸ்வப்பிரகாச ரூபத்தால் சூரியாதி சகல ஜகத்தையும் பிரகாசஞ் செய்கின்றாரோ, எப்பரமான்ம தேவர் கனவிலுள்ள சர்வ பதார்த்தங்களையும் பிரகாசஞ் செய்கின்றாரோ, எப்பரமான்ம தேவர் துயிலவஸ்தையின்கண் இருதயாகாசத்திலிருந்து திசைமுதலிய சர்வ ஜகத்தோடும் அபேத பாவத்தை யடைகின்றனரோ, அங்ஙனமே, சர்வ பூதபௌதிகப் பிரபஞ்சத்தினுற்பத்தியைச செய்கின்றனரோ, அப்பரமான்ம தேவரே உனக்கும், மற்றைய அதிகாரிகட்கும் அடையத்தக்க இடமாவா. ஹே ஜனகராஜாவே! அப்பரமான்ம தேவரே உனக்கும் எனக்கும் மற்றைய பிராணிகட்கும் ஆன்மாவாவர்.

சங்கை :—ஹே பகவன்! பரமான்ம தேவர் ஒருவரே யாண்டும் தொடர்ந்து நிற்பவராயின், விசுவ, தைஜச, பிராஞ்ஞர்கள் முதலிய வடிவமாயும், யான், தாங்கள், அயலான் முதலியவடிவமாயும் வேறுவேறாய் ஏன் தோற்றுகின்றனர்?

சமாதானம் :— ஹே ஜனகராஜாவே! மகாகாசம் ஒன்றே கடமடாதி வடிவ உபாதிகளின் பேதத்தால் கடாகாசம், மடாகாசம் முதலிய பேதத்தை யடையும். அதுபோலப் பரமான்ம தேவர் ஒருவரே சரீராதி உபாதிகளின் பேதத்தால் வேறு வேறாய்ப் பிரதீதியாவர். உபாதியாலாக்கிய பேதத்தால் ஆகாசத்திற்குரிய உண்மையாய ஒருமை நீங்காததேபோல, உபாதியாலாக்கப்பட்ட பேதத்தால் ஆன்மாவின் உண்மையாய ஒருமையும் நீங்கமாட்டாது. ஹே ஜனகராஜாவே! எப்புருஷர்கட்கு இசசம்சாரரூப கோர வனததினின்றும் பயமுண்டாமோ, அவ்வதிகாரி புருஷர் இநத அத்விதீய ஆன்மாவையே அறிதல் தகுதியாம். இந்த அத்விதீய ஆத்மாவின் சாக்ஷாத்காரமே அடையத்தக்க ஆன்மாவின் அடைவிற்கு இராஜ மார்க்கமாம். ஹே ஜனகராஜாவே! இத்தகைய ஆத்மஞானரூப மார்க்கத்தின்கண் அதிகாரியாய நீ செல்வையாயின், உனக்கு ஆத்மவடிவ அடையத்தக்க ஸ்தானம் கிடைக்கும். ஹே ஜனகராஜாவே! இந்த அத்விதீய ஆத்மா, மனம், வாக்குகட்கு அவிஷயமாதலின், இந்த அத்விதீய ஆன்மாவைச் சாக்ஷாத்தாக உபதேசிப்பதில் யான் வல்லேனல்லேன். நீயும் சாக்ஷாத்தாய் அறிவதில் வல்லாய் அல்லாய். ஆகையால், அநான்ம பதார்த்தங்களின் நிஷேதவாயிலாய் இவ்வான்மாவை அறிஞன் கூறுவன். இப்போது நிஷேதமுகமாய் ஆத்மாவை நிரூபணஞ் செய்வாம் :—ஹே ஜனகராஜாவே! இவ்வாநந்தசொரூப ஆன்மா, பாவத்தன்மை, அபாவத்தன்மைத் தர்மங்களற்றதாம். ஆகையால், இவ்வான்மாவைக் கடாதி பதார்த்தங்களைப்போலப் பாவரூபமாய், கட அபாவத்தைப்போல அபாவரூபமாய் நீ யறியற்க. ஆகாசம், மேகம், மின்னல் முதலியன பாவ பதார்த்த ரூபமன்றும். அவற்றின் அபாவ ரூபமுமன்றும். அதுபோல, இவ்வாநந்த சொரூப ஆன்மா பிரபஞ்சரூபமன்றும், அதன் அபாவரூபமுமன்றும். மற்றோ, பாவ அபாவபதார்த்தங்

களினும் விலக்ஷணமாம். ஹே ஜனகராஜாவே! ரஜ்ஜுரூப அஞ்ஞான அதிஷ்டானத்தால், இரஜ்ஜுவின்கண் சாபபம் பிரதீதியாகும். இரஜ்ஜுரூப அதிஷ்டானத்தின் ஞானமுண்டாயின், காரண அஞ்ஞானத்தோடுகூட அச்சர்ப்பம் ரஜ்ஜுரூப அதிஷ்டானத்தின்கண் இலயத்தை யடையும். அதுபோல, ஆன்மரூப அதிஷ்டான அஞ்ஞானத்தால் இவ்வபாவரூப ஜகத்தானது பிரதீதியாகும். அதிஷ்டான ஆன்மாவின் சாக்ஷாத்காரமுண்டாயின், எல்லா உலகும ஆன்மரூப அதிஷ்டானத்தின்கண் இலயத்தை யடையும். இப்போது ஆன்மாவின்கண் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களின் அவிஷயத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! இவ்வாநந்த சொரூப ஆன்மா நேத்திராதி பாகிய கரணங்களாலும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணங்களாலும் அறிய முடியாததாமாதலின், இவ்வாநந்தசொரூப ஆன்மா கவரத்தகாததாம். ஹே ஜனகராஜாவே! எப்பதார்த்தத்தை நேத்திர முதலிய கரணங்கள் கவருமோ, அப்பதார்த்தமே பிரமாண விஷயமாம். எப்பதார்த்தத்தை நேத்திராதி கரணங்கள் கவரமாட்டாவோ, அப்பதார்த்தம் பிரமாண விஷயமாகாது. கடாதி பதார்த்தங்களை நேத்திராதி கரணங்கள் கவருமாதலின், அவை பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்கட்கு விஷயமாம். பிரமாணங்கட்கு விஷயமாம அவையே, பிரமேயங்களெனப்படும. இவ்வாநந்த சொரூப ஆன்மாவை நேத்திராதி கரணங்கள் கவராவாதலின், இவ்வான்மா பிரமாண விஷயமாகமாட்டாது. இக்காரணத்தால் இவ்வாநந்த சொரூப ஆன்மா அப்பிரமேயமாம்

சங்கை:—ஹே பகவன்! எப்பதார்த்தம் நேத்திர முதலிய கரணங்கட்கு விஷயமாமோ, அதுவே பிரமாண விஷயமாமெனத் தாங்கள் கூறிய நியமம் சம்பவியாது. ஏனெனின், சுவர்க்கம், இந்திரா முதலிய தேவதைகள், தர்மம், அதர்மம் என்பனமுதலிய அதீந்திரியப் பதார்த்தங்கள் நேத்திராதி கரணங்கட்கு யமோ? ஆவதில்லை. ஆயினும், சப்தமுதலிய பிரமாணங்கட்கு விஷயமாமன்றோ?

சமாதானம்:—சுவர்க்கம முதலிய அதீந்திரிய பதார்த்தங்கள் நேத்திரம் முதலிய பாகிய கரணங்கட்கு விஷயமன்றாமாயினும், மனரூப கரணத்திற்கு விஷயமாம். சுவர்க்கம் முதலிய அதீந்திரிய பதார்த்தங்களினிடத்தே மனரூப கரணத்தின் விஷயத்தன்மையை அங்கீகாரஞ் செய்யாவிடின், சுவர்க்காதி பதார்த்தங்கள் அதீந்திரியங்கள், என்னும் ஞானம மனத்தின்கண் உண்டாகின்றதன்றோ, அஃது உண்டாகலாகாது. ஆகையால், அநுமான சப்த சகாயத்தால் மனம சுவர்க்காதி அதீந்திரிய பதார்த்தங்களையும் விஷயம் செய்யும். இத்துணை கூறியதால் ஆன்மாவின்கண் பிரமாண அவிஷயத்தன்மை காண்பிக்கப்பட்டது.

இப்போது ஆன்மாவின் வேறாய சர்வ அநான்ம பதார்த்தங்களினுமுள்ள விஷயத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! பாதிக்கப்படாத பொருளை விஷயஞ் செய்யும் பிரமை ஞானமும, பாதிக்கப்படும் பொருளை விஷயஞ் செய்யும் அப்பிரமை ஞானமும், பிரமை ஞானத்திற்குக் காரணங்களாய பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களும், அப்பிரமை ஞானத்திற்குக் காரணங்களாய தோஷத்

தோற்ற சக்ஷு முதலிய அப்பிரமாணங்களும், பிரமை ஞானத்தால் ஜனித்ததும், அப்பிரமை ஞானத்தால் ஜனித்ததும், ஆகிய விஷயத்திலிருக்கும் ஞாததை (அறியப்பட்டதாந் தன்மை) வடிவ பலமும், பிரமை ஞானத்தின் விஷயங்களாய கடாதி பதார்த்தங்களும், அப்பிரமை ஞானத்தின் விஷயங்களாய இப்பிவெள்ளி முதலியனவும், ஆகிய இவ்வெட்டும் ஜடமாம். ஆகையால், தமது சித்தியின் பொருட்டு ஸ்வப்பிரகாச சைதன்னியரூப சாக்ஷியாய ஆன்மாவை ஆசிரயிக்கும். ஸ்வப்பிரகாச சாக்ஷியாய ஆன்மாவின்றி ஜடமாகிய பிரமை முதலியவற்றின் சித்தி யுண்டாகாது. ஆகையால், (1) பிரமாணம் (2) அப்பிரமாணம் (3) பிரமை (4) அப்பிரமை (5) பிரமையால் உண்டாகிய ஞாததைவடிவ பலம் (6) அப்பிரமையால் உண்டாகிய ஞாததைவடிவ பலம் (7) பிரமை ஞானத்தின் விஷயம் (8) அப்பிரமை ஞானத்தின் விஷயம் என்னும் எட்டும் சாக்ஷியாகிய ஆன்மாவின் விஷயங்களாம். ஆகையால், விஷயரூபத்தால் இவ்வெட்டும் சமானமேயாம். எவ்வாதியானவன் இவ்வெட்டுப் பிரமாணுதிகளையும் பரஸ்பரம் விலக்ஷணமெனஅங்கீகரிக்கின்றனனே, அவ்வாதியானவன் பிரமாணுதிகளிடத்தே சாக்ஷியாய ஆன்மாவின் விஷயத்தன்மையை அறியாது, அந்தப் பிரமாணங்கட்குப் பரஸ்பரம் விலக்ஷணத் தன்மையைக் கூறுவன். ஆதலின், இது துணியப்பெறும். நேத்திரமுடையவனது சமீபத்தில் இராநின்ற பாலானது வெள்ளை வர்ணம் ஒன்றையே உடையதாகும். குருடர்களின் கூட்டத்தில இராநின்ற அந்தப் பால நீலபீதாதி நானுவர்ண முடையதாம். அதுபோல, பேதவாதிகளாய மயங்கிய புருஷரின் திருஷ்டியாலோ, பிரமாணுதிகளிடத்தே நானுவகையாய விலக்ஷணத் தன்மையாம். வேதாந்த சாஸ்திரத்தின் கருத்தை யுணர்ந்த அதவைத வாதிகளின் திருஷ்டியாலோ, சம்பூரணப் பிரமாணுதிகள் சாக்ஷியாய ஆன்மாவிறகு விஷயங்களாம். ஆதலின், சாக்ஷியாய ஆன்மாவின் விஷயத தன்மை வடிவத்தால எல்லாப பிரமாணுதிகளும் ஒரு படித்தேயாம். இப்போது பிரமாண முதலிய எட்டின்கண் சாக்ஷியாய ஆன்மாவின் விஷயத் தன்மையை அங்கீகரியாது பிரமாணுதிகளிடததே விலக்ஷணத் தன்மை அங்கீகரிக்கும் பேதவாதியரைக் கண்டனம் செய்வாம். ஆண்டு, எவ்வாதியானவன் அப்பிரமாணத்தை அங்கீகரிக்கின்றனனே, அவன்பால் இது கேட்டல் வேண்டும். அந்த அப்பிரமாணம் வேறோர் அப்பிரமாணத்தாற் சித்தமாமா, அல்லது வேறொரு பிரமாணத்தாற் சித்தமாமா வென. அவற்றுள், அப்பிரமாணத்தால் அப்பிரமாணத்தின் துணிவு ஆம் என்னும் முதற பக்ஷத்தை அங்கீகரிக்கின், அப்பிரமாணத்தால் துணியப்பெற்ற இப்பிவெள்ளியைச் செப்பாநின்ற புருஷன் தப்பாமல பிராந்தனுவதேபோல, அப்பிரமாணத்தால் துணியப்பெற்ற அபபிரமாணத்தைச செப்பா நின்றவனும் பிராந்தனுவன். ஆகையால, அப்பிரமாணத்தால் அப்பிரமாணத்தின் சித்தி சம்பவியாது. வாதியானவன் பிரமாணத்தால் அப்பிரமாணத்தின் துணிவாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிப்பின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், பொய்ப் பொருளை விஷயஞ் செய்வது அப்பிரமாண மென்னப்படும். அவ் வப்பிரமாணரூபப் பொய்ப்பொருளைப் பிரமாண விஷயமாக்கின் அந்தப் பிரமாணமும் அப்பிரமாணமேயாகும். யாது எப்பொருளை விஷயஞ் செய்யுமோ, அது அப்பொருளின் சித்தியின்கண் பிரமாணமேயாகும்.

ஆகையால், அப்பிரமாணத்தை விஷயஞ்செய்யும் பிரமாணமும் அந்த அப்பிரமாண சித்தியின்கண் பிரமாணமேயாம் என, வாதி கூறுவானாயின், அது சம்பவியாது. ஏனெனின், யாது எப்பொருளை விஷயஞ் செய்யுமோ, அது அப்பொருளின் சித்தியின்கண் பிரமாணமேயாகும் என்னும் நியமத்தை அங்கீகாரஞ்செய்யின், சுத்தி ரஜதத்தை விஷயஞ்செய்யும் அப்பிரமாணமும் பிரமாணமாதல் வேண்டும். இதன்கண்ணும், வாதியானவன் உடன்பாடு உண்டெனக் கூறின், இது பிரமாணம் எனவும் இது அப்பிரமாணம் எனவும் கூறுதல் பயனற்றதாகும். அல்லது, சக்ஷு இந்திரியம் ரூபத்தைக்கவரும், கந்தத்தைக் கவராது. ஆதலின், ரூபத்தைக் குறித்தோ சக்ஷு இந்திரியத்தின்கண் பிரமாணத் தன்மையுளது. கந்தத்தைக் குறித்தோ சக்ஷு இந்திரியத்தின்கண் அப்பிரமாணத் தன்மையுளது. அதுபோல, கிராண இந்திரியத்தின்கண் கந்தத்தைக்குறித்தோ பிரமாணத் தன்மையுளது. ரூபத்தைக் குறித்தோ கிராண இந்திரியத்தின்கண் அப்பிரமாணத் தன்மையுளது. இவ்வண்ணம் சர்வ பிரமாணங்களிலும் ஒரு பொருளைக் குறித்துப் பிரமாணத் தன்மையும், மற்றொரு பொருளைக் குறித்து அப்பிரமாணத் தன்மையும் உண்டு. நியமமாய்ப் பிரமாணத்தன்மையும் அப்பிரமாணத்தன்மையும் எப்பிரமாணத்திலும் இன்றாம். இக்காரணத்தினாலும் இது பிரமாணம் இது அப்பிரமாணம் என்னும் வாதிகள் கூற்றுப் பயனில கூற்றேயாம். அல்லது, பிரமாணத்தால் அப்பிரமாணத்தின் சித்தியை அங்கீகாரஞ் செய்வையேயாயின், பொய்யாகிய இரஜ்ஜு சர்ப்பத்தையும், சுத்தி ரஜதத்தையும் விஷயஞ் செய்யும் ஞானம் அப்பிரமாணமேயாகும். அதுபோல, அப்பிரமாணத்தை விஷயஞ் செய்யும் பிரமாணமும் அப்பிரமாணமே யாகும். ஆகையால், பிரமாணத்தால் அப்பிரமாணத்தின் சித்தி சம்பவியாது. அல்லது, அப்பிரமாணம் அப்பிரமாணத்தாலும் பிரமாணத்தாலும் சித்தியாகாததேபோல, பிரமாணமும் பிரமாணத்தாலேனும் அப்பிரமாணத்தாலேனும் சித்தியாகாது. ஏனெனின், பிரமாணமானது பிரமாணத்தாலே கவரப்பெறுமாயின், அந்தக் கவரும் பிரமாணம் கவரப்பட்ட முதற் பிரமாணத்தினும் அபின்னமா? அல்லது பின்னமா? அந்தக்கவரும் பிரமாணம் கவரப்பட்ட பிரமாணத்தினும் அபின்னமெனின், தன்னைக் கவர்வதின்கண் தனதபேக்ஷை வடிவ ஆத்மாசிரய தோஷத்தின் அடைவுண்டாம். அந்தக் கவரும் பிரமாணம், கவரப்பட்ட பிரமாணத்தினும் பின்னமென்னின், கவரும் பிரமாண சித்தி எப்பிரமாணத்தாலுண்டாகும்? தன்னாலே அந்தக் கவரும் பிரமாணத்தின் சித்தி ஆகுமாயின், தனது சித்தியின்கண் தனது அபேக்ஷை வடிவ ஆத்மாசிரயதோஷத்தின் அடைவுண்டாம். கவரப்பட்ட முதல் பிரமாணத்தாலே கவரும் பிரமாணத்தின் சித்தி ஆகுமாயின், முதற் பிரமாணத்திற்குத் தனது சித்தியின்கண் இரண்டாவது பிரமாணத்தின் அபேக்ஷையும், இரண்டாவது பிரமாணத்திற்குத் தனது சித்தியின்கண் முதற்பிரமாணத்தின் அபேக்ஷையும் ஆம் என்னும், அந்நியோந்நியாசிரய தோஷத்தின் அடைவுண்டாம். அந்த இரண்டாவது பிரமாணம் தனது சித்தியின் பொருட்டு மூன்றாவது பிரமாணத்தை அவாவின், அந்த மூன்றாவது பிரமாணம் தன்னாலே துணியப் பெறுவதா? அல்லது, இரண்

டாவது பிரமாணத்தாலே துணியப்பெறுவதா? அல்லது, முதற் பிரமாணத்தாலே துணியப் பெறுவதா? அம்மூன்றாவது பிரமாணம் தன்னாலே துணியப்பெறுமாயின், ஆத்மாசிரயதோஷத்தின் அடைவுண்டாம். இரண்டாவது பிரமாணத்தாலே துணியப்பெறுமாயின், அந்நியோந்நியாசிரயதோஷத்தின் அடைவுண்டாம். முதற் பிரமாணத்தாலே துணியப் பெறுமாயின், முதற் பிரமாணத்தின் துணிவு இரண்டாவது பிரமாணத்தாலும், இரண்டாவது பிரமாணத்தின் துணிவு மூன்றாவது பிரமாணத்தாலும், மூன்றாவது பிரமாணத்தின் துணிவு மீண்டும் முதற்பிரமாணத்தாலும் ஆம் என்னும், சக்கரம்போற் சுழலும் சக்கிரிகைத் தோஷத்தின் அடைவுண்டாம். மூன்றாவது பிரமாணத் துணிவின் பொருட்டு நான்காவது பிரமாண உடன்பாடும், நான்காவது பிரமாணத் துணிவின் பொருட்டு ஐந்தாவது பிரமாண உடன்பாடும் ஆகிய பிரமாணங்களின் தாரையை உடன்படின், அநவஸ்தா தோஷத்தின் அடைவுண்டாம். ஆகையால், பிரமாணத்தால் பிரமாணத்தின் துணிவு உண்டாகமாட்டாது. அப்பிரமாணத்தால் பிரமாணத்தின் துணிவாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின், அப்பிரமாணத்தின் விஷயமாய பிரமாணமும் அப்பிரமாண ரூபமேயாகும். ஆகையால், அபபிரமாணத்தாலும் பிரமாணத்தின் துணிவு உண்டாகமாட்டாது. அல்லது, பிரமாண அப்பிரமாணங்களின் வடிவத்துணிவு உண்டாகாததேபோல, பிரமை அபபிரமைகளின் வடிவத் துணிவு முண்டாகாது. ஏனெனின், அந்தப் பிரமை ஞானமானது பிரமை ஞானத்தால் துணியப் பெறுகின்றதா? அல்லது அப்பிரமை ஞானத்தால் துணியப்பெறுகின்றதா? அந்த அப்பிரமை ஞானம் அப்பிரமை ஞானத்தால் துணியப் பெறுகின்றதா? அல்லது பிரமை ஞானத்தால் துணியப் பெறுகின்றதா என்பன முதலிய விகற்பங்களில் முற்கூறிய தூஷணங்கள் யாவும் சம்பவிக்கக் கூடும். ஆதலின், பிரமை அப்பிரமை ஞானங்களின் வடிவமும் சித்தமாக மாட்டாது. அல்லது, பிரமாண அப்பிரமாண பேதங்களாலும், பிரமை அப்பிரமை ஞானங்களின் பேதத்தாலும், ஞாததை (அறியப்பட்டதாந் தன்மை) வடிவ பலத்தின் பேதமுண்டாம். அந்தப் பிரமாண அபபிரமாணங்களின் பேதமும், பிரமை அபபிரமைகளின் பேதமும், முற்புகன்ற ஊகங்களால் சம்பவியா. ஆகையால், பிரமை அப்பிரமைகளினின்றும் உண்டாய ஞாததை வடிவ பலத்திற்கும் பேதம் சம்பவியாது. அல்லது, பிரமாணத்தாலும் பிரமை ஞானத்தாலும் கடமுதலிய விஷயங்களின் துணிவுண்டாமாதலின், பிரமாணப் பிரமை ஞானங்களின் பேதமே கடாதி விஷயங்களின் பேதசாதகமாம். அந்தப் பிரமாணப் பிரமை ஞானங்கள் முற்கூறிய ஊகங்களால் அப்பிரமாண வடிவங்களாம். ஆதலின், அந்த அப்பிரமை முதலிய ஞானத்தால் கட முதலிய விஷயங்களின் பேத சித்தி உண்டாகாது. அப்பிரமை ஞானத்தானும் விஷய சித்தியுண்டாகுமாயின், இது சர்ப்பம் என்னும் அப்பிரமை ஞானத்தால் ரஜ்ஜு சர்ப்பத்தின் சித்தியும் உண்டாதல் வேண்டும். இது சர்ப்பமென்னும் அப்பிரமை ஞானத்தால் ரஜ்ஜு சர்ப்பத்தின் சித்தி யுண்டாகாதாதலின், பிரமாணுதிகட்கேபோலக் கடாதி விஷயங்கட்குப் பேதமும் சம்பவியாது; அல்லது, சக்ஷு முதலிய பிரமாணங்களால் விஷயசித்தியை அங்கீகரிக்கும் வாதியை இது கேட்டல் வேண்டும்:—சக்ஷு முதலிய பிரமாணங்கள் எக்கால் கட முத

விய விஷயங்களைக் கவருமோ, அக்கால் சக்ஷு முதலியவற்றின்கண் பிரமாணத் தன்மையுளதா? அல்லது, இயல்பானே சக்ஷு முதலியவற்றின்கண் பிரமாணத் தன்மையுளதா? அவற்றுள், வாதியானவன் முதற் பக்ஷத்தை அங்கீகாரஞ் செய் பின், சக்ஷு முதலிய பிரமாணங்களால் கடாதி விஷயங்களின் சித்தியுண்டாகாது. ஏனென்னின், முதலில் கடாதி விஷயங்கள் சித்தமாகுமாயின், பின்னர்ச் சக்ஷு முதலிய பிரமாணங்களில் பிரமாணத்தன்மை சித்தமாம். முதலில் சக்ஷு முதலிய பிரமாணங்களில் பிரமாணத்தன்மை சித்தமாயின், பின்னர்க் கடாதி விஷயங்களின் சித்தியுண்டாம் என்னும் அந்நியோந்நியாசிரயதோஷத்தின் அடைவுண்டாம். யாண்டு, அந்நியோந்நியாசிரயதோஷத்தின் அடைவுண்டாகின்றதோ, ஆண்டு, எக் காரியத்தின் சித்தியும் உண்டாகாது. சக்ஷு முதலிய பிரமாணங்களில் இயல் பானே பிரமாணத்தன்மை யுளது என்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதி அங் கீகரிக்கின், எங்ஙனம் சக்ஷு முதலிய பிரமாணங்களில் இயல்பானே பிரமாணத் தன்மை இருக்குமோ, அங்ஙனம் அப்பிரமாணங்களி னிடத்தும் இயல்பானே பிரமாணத்தன்மை ஏன் இருக்கலாகாது? சக்ஷு முதலிய பிரமாணங்களில் இரா நின்ற பிரமாணத் தன்மையானது இயல்பானே இருக்கும். அப்பிரமாணங்களில் இயல்பானே பிரமாணத்தன்மை சமபவியாது. ஏனெனின், காசம், காமாலை முத லிய தோஷத்தோடுகூடிய சக்ஷு முதலியவற்றிற்கு அப்பிரமாணமெனப் பெய ராம். அந்த அபபிரமாணங்களின் தோஷத்தைக் கவரும் பிரமாணத்தால், அதன்கண் அப்பிரமாணத்தன்மையே சித்தமாம். ஆகையால், அப்பிரமாணங் களினிடத்தே இயல்பானே பிரமாணத்தன்மை சித்தமாக மாட்டாது என, வாதி கூறுவானாயின், அது சம்பவியாது. ஏனெனின, அப்பிரமாணத்தின்கண் தோஷத் தைக் கவரும் பிரமாணத்தால, அவ் வப்பிரமாணத்தின்கண் அப்பிரமாணத் தன்மை சித்தமாவதேபோல, தோஷத்தைக் கவரும் பிரமாணத்தின் கண்ணும், தோஷத்தைக் கவரும் வேறு பிரமாணத்தால் அப்பிரமாணத்தன்மைச சித்தி ஏன் உண்டாகமாட்டாது. அப்பிரமாணதநின்கண் தோஷத்தைக் கவரும் பிர மாணத்தின்கண் அப்பிரமாணத்தன்மை சித்தமாயின், அதன்கண் தோஷப் பிரதீதியுண்டாம். அநதத் தோஷத்தைக் கவரும் பிரமாணத்தின்கண் எப் பிரமாணத்தானும் தோஷப் பிரதீதி உண்டாகமாட்டாது; மாறாய், அநுபலப்தி ரூபப் பிரமாணத்தால் அத்தோஷத்தைக கவரும் பிரமாணத்தின்கண் தோஷ அபாவத்தின் பிரதீதியே யுண்டாம. ஆகையால், அப்பிரமாண தோஷத்தைக் கவரும் பிரமாணத்தின்கண் அப்பிரமாணத்தன்மை சம்பவியாதென வாதி கூறுவானாயின், அதுவும் சம்பவியாது. ஏனெனின், அப்பிரமாணத்தின்கண் தோஷத்தைக கவரும் முதற்பிரமாணத்தின்கண், தோஷ அபாவத்தைக் கவ ரும் அநுபலப்திப் பிரமாணம் பிரமாணரூபமாய்த் தோஷாபாவத்தைக் கவரு கின்றதா? அல்லது, அவ்வநுபலப்திப் பிரமாணம் அப்பிரமாணரூபமாய்த் தோஷ அபாவத்தைக் கவருகின்றதா? அவற்றுள், முதற் பக்ஷத்தை வாதியுடன் படின், அது சம்பவிக்க மாட்டாது. ஏனெனின், சுருதிரூப அலௌகிகப் பிரமாணத்தை விடுத்துப், பிரத்தியக்ஷம், அநுமானம், உபமானம், சப்தம்,

அர்த்தாபத்தி, அநுபலப்தி என்னும் லௌகிக எந்த ஆறு பிரமாணங்களுளவோ, அவை தோஷ சங்கையுடன் கூடியவாம். ஆகையால், இயல்பாகவே அந்தப் பிரத்தியக்ஷாதிகளிடத்தே பிரமாணத்தன்மை யின்றாம். மற்றோ, எக்கால் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களில் தோஷ அபாவத்தின் ஞான முண்டாகின்றதோ, அக்கால், பிரத்தியக்ஷாதிகட்குப் பிரமாணத் தன்மை யுளவாதலின், தோஷத்தைக் கவரும் பிரமாணத்தின்கண் தோஷ அபாவத்தைக் கவரும் அநுபலப்திப் பிரமாணத்தின் சித்தியின் பொருட்டு, அவ்வநுபலப்திப பிரமாணத்தின் கண் தோஷ அபாவத்தைக் கவரும் வேறொரு அநுபலப்திப் பிரமாணத்தை அங்கிகாரஞ் செய்யவேண்டிவரும். அவ்வநுபலபதிப் பிரமாணம் முதலாவது அநுபலப்திப் பிரமாணத்திலும் அபின்னமா? அல்லது பின்னமா? அபின்னமெனக கூறின், ஆத்மா சிரயதோஷப் பிராப்தி உண்டாம. பின்னமெனக் கூறின், அவ்விரண்டாவது அநுபலபதிப் பிரமாணத்தின்கண் உள்ள தோஷா பாவத்தை எவ்வநுபலப்திப் பிரமாணங் கவரும். ஆண்டு, முதலாவது அநுபலப்திப் பிரமாணத்தால் இரண்டாவது அநுபலபதிப் பிரமாணத்திலுள்ள தோஷாபாவம் கவரப பெறுமென உடன்படின், அநந்யோந்யாசிரயதோஷத்தின் அடைவுண்டாம். அவ்விரண்டாவது அநுபலப்திப் பிரமாணத்தின்கண்ணுள்ள தோஷாபாவத்தைக கவரும்பொருட்டு, மூன்றாவது அநுபலப்திப பிரமாணத்தை யுடன்படின், அம்மூன்றாவது அநுபலபதிப் பிரமாணத்தின்கண்ணுள்ள தோஷாபாவததை எவ்வநுபலபதிப பிரமாணத்தாற் கவரல் கூடும். ஆண்டு, மூன்றாவது அநுபலப்திப் பிரமாணததின் கண்ணுள்ள தோஷாபாவத்தின் கவர்சசி முதல அநுபலபதிப பிரமாணத்தாலுண்டாகுமாயின், சக்கிரிகை தோஷத்தின் அடைவுண்டாம். மூன்றாவது அநுபலப்திப் பிரமாணத்தின் கண்ணுள்ள தோஷாபாவத்தைக கவரும்பொருட்டு, நான்காவது அநுபலப்திப் பிரமாணமும், நான்காவதின்பொருட்டு ஐந்தாவதும் ஆம் என, அநுபலப்திப் பிரமாணங்களின் தாரையை உடன்படின், அநவஸ்தாதோஷ அடைவுண்டாம். ஆகையால், பிரமாணரூபமாய் அநுபலப்தி தோஷாபாவத்தைக் கவருமென்னும் முதற் பக்ஷம் சம்பவியாது. அபபிரமாணரூபமாய் அவ்வநுபலப்திப் பிரமாணம், தோஷத்தைக் கவரும் பிரமாணத்தின்கண் தோஷாபாவத்தைக் கவரும் என்னும் இரண்டாவது பக்ஷத்தை அங்கீகாரஞ் செய்யின், அதுவும் சம்பவியாது. ஏனெனின், யாது அபபிரமாண விஷயமாமோ அதுவும் அப்பிரமாணமேயாம். ஆகையால், அப்பிரமாணரூப அநுபலப்தி விஷயமாய தோஷாபாவ விசிஷ்ட பிரமாணமும் அப்பிரமாணரூபமேயாகும். இது கூறியதால் இபபொருள் துணியப் பெறுமன்றே. எவ்வாதியானவன் ஆன்மாவைப் பிரகாசரூபமென அங்கீகரிக்கின்றிலனோ, அவ்வாதியின் மதத்தில் பிரத்தியக்ஷாதிப பிரமாணங்களாலேயே கடாதி விஷயங்களின் சித்தியுண்டாம். அந்தப் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்கள் முற் கூறிய யுக்திகளால் சித்தமாகமாட்டா. இக்காரணத்தால் கடாதி விஷயங்களும், பிரமை அப்பிரமைவடிவ ஞானங்களும் சித்தமாகா. அல்லது, பிரமாணம், பிரமை, பலம் என்னும் மூன்றன் சித்தியின்கண் யாதாவது பிரமாணமுளதா? அல்லது இல்லையா? அவற்றுள், பிரமாணமில்லை யென்று கூறின், மனுஷக்கோடுபோல அந்தப் பிரமாண முதலியன அத்தியந்தம் அசத்தாகும். பிரமாணம், பிரமை, பலம்

என்னும் மூன்றன் சித்தியின்கண் யாதாவது பிரமாணமிருக்குமாயின், எப்பதார்த்தம் பிரமாணத்திற்கு விஷயமாமோ, அப்பதார்த்தம் பிரமேயமேயாகும். ஆகையால், பிரமாணம், பிரமை, பலம் என்னும் மூன்றன்கண்ணும் கடமுதலிய பதார்த்தங்களிடத்தேபோல, பிரமேய ரூபத்தன்மையே பிராப்தமாகும். எவ்வாதி இதன்கண் இஷ்டந்தானென்கின்றனனோ, அவ்வாதியின்மதத்தில் இது பிரமாணம், இது பிரமை, இது பலம், இது பிரமேயம் என்னும் நான்கு வகையாய பேதம் அசங்கதமாகும். இக்காரணத்தானும் பிரமாணாதிகளின் சித்தி சம்பவியாது. ஆகையால், இது துணியப் பெறுமன்றே :—ஆகாசத்தின்கண்ணே மூடர்கட்குக் கந்தர்வ நகரம் தோற்றும். ஆனால், அது உண்மையாய் ஆகாசத்தின்கண் இன்றாம். மற்றோ, அம்மூடர்களின் கற்பனையால் சித்தமாம. அதுபோல, இது பிரமாணம், இது பிரமை, இது பலம, இது பிரமேயம் என்னும் நான்குவகையாய பேதம், கேவலம் வாதிகளின் கற்பனையால் சித்தமாம். யாது கற்பித பதார்த்தமாமோ, அது சாக்ஷியாய ஆன்மாவாலே ஒளிரத்தக்கதாம். கற்பிதமான கனப்பொருள்கள் சாக்ஷியாய ஆன்மாவால் ஒளிரப்பெறுவதேபோல, கற்பிதமாய பிரமாணாதிகளும் சாக்ஷியாய் ஆன்மாவாலே சித்தமாம. அல்லது, தோஷ ஜன்னிய திருஷ்டியால் எவ்வதிஷ்டானத்தின்கண் எப்பதார்த்தம தோற்றா நிற்குமோ, அவ்வதிஷ்டானத்தின்கண் அப்பதார்த்தம உண்மையாயிராது. புருஷவேஷத்தைத் தாரணஞ் செய்யும் ஸ்திரீயின்கண் தோஷ ஜன்னிய திருஷ்டியால எப்புருஷத்தன்மை தோற்றுகின்றதோ, அப்புருஷத்தன்மையும அந்த ஸ்திரீயினகண் உண்மையாயின்றாம். தோஷ ஜன்னிய திருஷ்டியால் இரஜ்ஜுவின்கண் யாதொரு சர்ப்பப் பிரதீதியுண்டாகின்றதோ, அச்சர்ப்பம் அந்த ரஜ்ஜுவின்கண உண்மையாயின்றாம. அதுபோல, தோஷ ஜன்னிய திருஷ்டியால வாதிகட்குப பிரமாணம், பிரமை, பலம், விஷயம் என்னும் நான்கு வகையாய எப்பேதங்கள தோற்றா நிற்குமோ, அப்பேதமும் உண்மையாய் இன்றாம்.

சங்கை :—பிரமாணம், பிரமை, பலம், விஷயம் என்னும இந்நான்கையும் கற்பிதம் என உடன்படின், அவற்றால் உலகரின் வியவகாரம் உண்டாகமாட்டாது. ஆகையால், பிரமாணாதிகளே உண்மையாய் உடன்படுவதே உசிதமாகும்.

சமாதானம் :—கற்பிதப் பொருள்களால வியவகார சித்தி உண்டாகாதிருக்குமாயின், பிரமாணாதிகளே யான் சத்தியமாய் அங்கீகரிப்பேன். ஆனால், லௌகிக வியவகாரம் பொய்ப் பொருள்களாலும் சித்தமாதல் கூடும். கற்பிதமாய பழுதைப் பாம்பை விஷயஞ் செய்யும், இது சர்ப்பமென்னும் பொய்ஞ்ஞானத்தால் அச்சம், நடுக்கம் முதலிய வியவகாரம உண்டாகின்றது. அதுபோலக் கற்பிதமாய பிரமாணாதிகளாலும் உலகரின் வியவகாரஞ் சம்பவிக்குமாதலின் பிரமாணம், அப்பிரமாணம், பிரமை, அப்பிரமை என்பன முதலிய எல்லா ஜடஜகத்தும் சாக்ஷியாய ஆன்மாவிற்கு விஷயமாம். தீபத்தால் பிரகாசியமாய கடம்முதலிய பதார்த்தங்கள் ஒளிர்விப்பதாய அத்தீபத்தை விஷயஞ் செய்யமாட்டா. அதுபோல, சாக்ஷியாய ஆத்மாவால் பிரகாசியங்களாய பிரமாணாதிகள் பிரகாசக சாக்ஷியாய ஆன்மாவை விஷயஞ் செய்யமாட்டா.

சங்கை :—பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்கட்கு விஷயம் ஆன்மாவன்றாயினும், சுருதிப் பிரமாணத்திற்கு விஷயம் ஆன்மாவாம். ஏனெனின், "தம் த்வௌபநிஷதம் புருஷம் ப்ருச்சாமி" (இ-ள்.) உபநிஷத் பிரமாணத்தால் அறியத்தகுதியாய ஆன்மாவின் வடிவத்தை யான் தங்கள்பால் வினவுகின்றேன், என்னுஞ் சுருதியின்கண் உபநிஷத் பிரமாண ஜன்னிய ஞான விஷயத் தன்மை ஆத்மாவின் கண்ணே கூறப்பட்டது. ஆகையால், ஆத்மா பிரமாணத்திற்கு அவிஷயமன்றாம்; மற்றோ, விஷயமேயாம்.

சமாதானம் :—ஆன்மாவின் வேறாய சகல ஜடஜகத்தும் பொய்யாம் ஆதலின், அந்த ஜடஜகத்து சுருதிரூபப் பிரமாணத்திற்கு விஷயமன்றாம். ஆத்மா ஸ்வப்பிரகாசமாம். ஆகையால், ஆத்மாவும் சுருதிரூபப் பிரமாணத்திற்கு விஷயமன்றாம். மற்றோ, மாதாவைப்போன்று முமுக்ஷுக்கட்கு அத்தியந்தம் இதத்தைச் செய்யும் சுருதி பகவதியானவள், ஆன்மாவின்கண் ஸ்தூல சூக்ஷும ஜகத்தை ஆரோபணஞ் செய்து, அந்த ஜகத்தை நிஷேதஞ் செய்பவளாய் அர்த்தத்தால் ஆன்மாவை உணர்த்துவள். கருத்திதுவாம் :—சுருதிப் பிரமாண ஜன்னிய அந்தக்கரணத்தின் விருத்திரூப ஞானத்தால் ஆன்மாவின் பிரகாசம் உண்டாகாது; மற்றோ, அந்த விருத்தி ஞானத்தால் ஆன்மாவின் ஆவரண நிவிருத்தி உண்டாம். அவ்வாவரண நிவிருத்தி மாத்திரத்தைக் கவர்ந்தே சுருதியின்கண் ஆன்மா உபநிஷத் பிரமாண விஷயமெனக் கூறப்பட்டுளது. ஆகையால், ஸ்வப்பிரகாச சாக்ஷியானது எவ்வகையாலும் சித்தமாகமாட்டாது; மற்றோ, சுயமாகவே சித்தமாம். இப்போது ஆன்மாவின்கண் ஸ்வப்பிரகாசத் தன்மையைத் திடஞ் செய்யும் பொருட்டு, மீண்டும் பூர்வ விசாரத்தைக் கூறுவாம் :—அல்லது, பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் யான் இப்பொருளை நிச்சயஞ் செய்கின்றேன் என்னும், ஞானத்தின் ஆசிரயமாய பிரமாதாவை ஆசிரயித்தே, பிரமாணம், அப்பிரமாணம், பிரமை, அப்பிரமை, பலம், பிரமேயம் என்பனமுதலிய பேதம் சித்தமாம். ஆசிரயரூபப் பிரமாதாவின் சித்தியினலன்றிப் பிரமாணாதிகளின் பேதம் சித்தமாகமாட்டாது. ஆகையால், பிரமாணாதிகளின் சித்தியின் பொருட்டு, பிரமாதாவின் சித்தி அவசியம் வேண்டியதாம். ஆண்டு, வேதாந்த சித்தாந்தத்தின்கண் பிரமாதாவின் சொரூபமாய் இராநின்ற ஸ்வப்பிரகாச சைதன்னியத்தானே பிரமாதாவின் சித்தி உண்டாம். ஏனெனின், வேதாந்த சித்தாந்தத்தின்கண் அந்தக்கரண விசிஷ்ட சைதன்னியம் பிரமாதா வெனப்படும். அந்த விசிஷ்ட சைதன்னியம் சுத்த சைதன்னியத்தினும் பின்னமன்றாம். ஆதலின், ஸ்வப்பிரகாச சைதன்னியமே பிரமாதாவின் சொரூபமாம்; அதனல் பிரமாதாவின் சித்தி சம்பவிக்கும். எவ்வாதியானவன் யான் உளன் என்னும் ஞானத்தால் பிரமாதாவின் சித்தியை அங்கீகாரஞ் செய்கின்றனனோ, அவ்வாதியின்பால் இது கேட்டல் வேண்டும். பிரமாதாவை ஆசிரயித்திராநின்ற யான் உளன் என்னும் ஞானத்தால் அந்தப் பிரமாதாவின் சித்தியாகின்றதா? அல்லது, வேறொரு பிரமாதாவை ஆசிரயித்திருக்கும் யான் உளன் என்னும் ஞானத்தால் அப்பிரமாதாவின் சித்தி யுண்டாகின்றதா? வாதியானவன், அவற்றுள், அந்நிய பக்ஷத்தை அங்கீகரிக்கின், அது சம்பவியாது. ஏனெனின், தேவதத்தனெனப் பெயரிய புருஷன் தன்னின் வேறாய

பஞ்ஞதத்தனெனப் பெயரிய புருஷனை அறிபவனும், யான் இந்த யஞ்ஞதத்தனை அறிகின்றேன் என அநுபவிப்பன். அதுபோல, யான் இந்தப் பிரமாதாவை அறிகின்றேன் என்னும் அநுபவம் ஜீவர்கட்கு உண்டாதல் வேண்டும்; அத்தகை அநுபவம் எச்சீவருக்கு முண்டாவதில்லை; மற்றே, யான் ஆன்மாவை அறிகின்றேன் என்னு மநுபவம் சர்வ ஜீவர்கட்கு முண்டாகின்றது. ஆகையால், அந்நிய பிரமாதாவை ஆசிரயித்த ஞானத்தால் அந்நிய பிரமாதாவின் சித்தி யுண்டாகமாட்டாது. அந்தப் பிரமாதாவை ஆசிரயித்திருக்கும் யான் உளன் என்னும் ஞானத்தால் அந்தப் பிரமாதாவின் சித்தியுண்டாம் என்னும் முதற் பக்ஷத்தை வாதி அங்கீகாரஞ்செய்யின், அதுவும் சம்பவியாது. ஏனெனின், உலகின்கண்ணே யாது யாது கிரியையாமோ, அதுவது காத்தாவின் வேறும். கருமத்தினும் வேறும். வெட்டுதல் வடிவக் கிரியைக்குப் புருஷன் கர்த்தாவாம். காஷ்டாதிகள் கருமங்களாம்; அதுபோல, யான் உளன் என்னும் ஞானரூபக் கிரியைக்கும் கர்த்தாவும், கருமமும் வேறு வேறு ஆதல் வேண்டும். ஒரே பிரமாதா ஞானரூபக் கிரியைக்குக் கர்த்தாவும், கருமமும் ஆம் என்னும் வார்த்தை சம்பவியாதாதலின், தன்னைப் பற்றிய ஞானத்தால் பிரமாதாவின் சித்தி சம்பவியாது. அல்லது, வாதியானவன் ஆன்மா இயற்கையாயோ, ஞானமற்ற ஜடமாமாதலின் தன்னை அறியாது; ஆனால், மனச் சம்பந்தத்தால் ஆன்மாவின்கண் உறபன்னமாய ஞான குணத்தை யடைந்து, சேதன பாவத்தையடைந்த ஆத்மா தன்னைத்தானே அறியும் எனக் கூறின், அது சம்பவியாது. ஏனெனின், அவ்வாதியின் மதத்தில் கடம் இயல்பாயே ஜடமாவது போல, ஆத்மாவும் இயல்பாயே ஜடமாமாதலின், மனசசம்பந்தத்தால் ஞானகுணத்தோடு கூடிய ஆத்மா தன்னை யறிவதேபோல, மனச்சம்பந்தத்தால் ஞானகுணத்தோடு கூடிய கடமும் தன்னை ஏன் அறியமாட்டாது? கடம் தன்னை யறியாதாதலின், இவ்வாதி கூறல் அசஙகதமேயாகும். அல்லது, ஆன்மாவோடு மனத்திற்குச் சையோக சம்பநதமாதலேபோலக் கடத்தோடு மனத்திற்குச் சையோக சம்பந்தமின்று மாதலின், கடந் தன்னை அறியாது என வாதி கூறின், அதுவும் சம்பவியாது. ஏனெனின், நையாயிகரது மதத்தே மனம் பரமாணுப்பிரமாணமுடையதாம், நித்தியமுமாம். முக்த புருஷர்களுடைய சரீரம் நஷ்டமாய்விடும். ஆனால், அவர்தம் மனம் நஷ்டமாகாது. ஆகையால், பந்தத்தையுடைய அஞ்ஞானிகளின் மனச்சம்பந்தம் கடாதிகளோடு சம்பவியாதாயினும், முக்த புருஷர்களின் மனச் சம்பந்தம் கடாதிகளிடத்தே சம்பவிக்கு மாதலின், கடாதிகட்கும் தமது ஞானமுண்டாதல் வேண்டும். அல்லது, ஆன்மாவை இயல்பாகவே ஜடமாய் உடன்பட்ட வாதியின் மதத்தில கடாதி ஜட பதார்த்தங்கட்கும், ஆன்மாவிற்கும் சிறிதுமாத்திரையும் சிறபபுச் சித்தியாது. ஆகையால், வாதியின் மதத்தின்கண் கடாதி ஜட பதார்த்தமும் ஆன்மாவாதல் வேண்டும். அல்லது, கடாதிகளிடத்தும் ஆன்மாவிடத்தும் ஜடத்தன்மையோ சமானமாம். ஆனால், கடாதிகள் பரிச்சின்னங்களும் மூர்த்தங்களுமாம். ஆன்மா விபுவும் அமூர்த்தமுமா மாதலின், கடாதிகட்கு ஆன்மரூபத்தன்மை சம்பவியாதாம் என வாதி கூறின், அதுவும் பொருந்தாதாம். நையாயிகரது மதத்தில் எங்ஙனம் ஆன்மா விபுவாமோ, அமூர்

த்தமாமோ, அங்ஙனமே ஆகாசம், காலம், திக்கு என்னும் மூன்றும் விபுக்களாம். அமூர்த்தப் பொருள்களுமாம். ஆகையால், ஆன்மாவினும் விலக்ஷணமாய குடம் முதலிய பதார்த்தங்களில் ஆன்மரூபத் தன்மை சம்பவியாதாயினும் ஆகாசம், காலம், திக்கு என்னும் மூன்றன்கண் ஆன்மரூபத் தன்மை யுண்டாதல் வேண்டும். அல்லது, வாதியானவன் ஆன்மாவோடு மனச் சம்பந்தம் ஞானகாரணமாவதே போலச் சரீரசம்பந்தமும் ஞான காரணமாம். ஆகையால், சரீரசம்பந்தமே ஆன்மாவின்கண் ஆகாசாதிகளினும் விசேஷமாம், எனக்கூறின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், நையாயிகாது மதத்தே ஆகாசம், காலம், திக்கு, ஆத்மா என்னும் நான்கு திரவியங்களும் விபுக்களாம். சாவமூர்த்தத் திரவியங்களோடு எதற்குச் சையோக சம்பந்தமுண்டாமோ, அதனை நையாயிகர் விபுவென்பர். ஆகையால், மூர்த்தத் திரவியரூப சரீரத்தோடு ஆன்மாவின் சமபந்தம் இருப்பதேபோல, ஆகாசம், காலம், திக்கு என்னும மூன்றினுக்கும சரீரத்தோடு சம்பந்தமுள தாதலின், ஆகாசாதிகளின் கண்ணும் ஆன்மரூபத் தன்மை உண்டாதல் வேண்டும். அல்லது, ஆன்மாவை இயலபாயே ஜடமெனவுடன்படின், அவ்வாதியின் மதத்தில் ஆத்மாவிற்கும் கடாதி விஷயங்கட்கும் பாஸ்பரம போக்துரு போக்கியபாவ சம்பந்தமும், உபகாரிய உபகாரக பாவசம்பந்தமும் சமபவியா. ஏனெனின், கடாதி பதார்த்தங்கள் இயல்பானே ஜடமா மாறுபோல, ஆத்மாவும் வாதியின் மதத்தில் இயல்பானே ஜடமாம். இடையில்வாத ஞானகாரணமாய மனசசையோகாதிகள் முற்கூறிய முறைப்படி கடாதிகளிடத்தும் உள. ஆகையால், ஆத்மா எங்ஙனம் கர்த்தா போக்தாவாமோ, அஙஙனம் கடாதி சமபூரண ஜடபதார்த்தங்களும் கர்த்தா போக்தாவாதல்வேண்டும். கடாதி ஜடபதார்த்தஙகளை எவ்வாதியும் கர்த்தா போக்தாவாக உடன்படுவதில்லை. அல்லது, பிரத்தியக்ஷரூப திருஷ்டியும், அநுமிதிரூபதிருஷ்டியும் எதன்கண்ணுமோ, அதுவே கர்ததா போத்தாவாம். அந்தத் திருஷ்டி ஆத்மாவின்கண்ணே உண்டாம. கடாதிகளின் கண்ணே உண்டாகமாட்டாது. ஆதலின், ஆன்மாவே கர்த்தா போக்தாவாம். கடாதி பதார்த்தங்கள் கர்த்தா போக்தாவன்றுமென வாதிகூறுவானுயின, அதுவும் சமபவியாது. ஏனெனின், ஆன்மாவின்கண் கர்த்துருத்தன்மை போக்துருத்தன்மைகளின் சித்தியின்பொருட்டு, நீ யங்கீகரித்த திருஷ்டி ஆத்மாவின் சொரூப பூதமா? அல்லது, ஆத்மாவின் தர்மமா? அவறறுள், வாதியானவன் முதற்பக்ஷத்தை அங்கீகாரஞ் செயயின், எனக்குடன்பாடாம். ஏனெனின், ஞானரூப திருஷ்டியை ஆன்மவடிவமாய் யானுமங்கீகரிக்கின்றேன். அந்தத் திருஷ்டி ஆன்மாவின் தருமமென்னும் இரண்டாவது பக்ஷததை வாதி அங்கீகாரஞ்செய்யின், அது சம்பவியாது. ஏனெனின், வாதியின் மதத்தில் தருமத்திற்கும் தருமிக்கும் பாஸ்பரம் பேதமே யுண்டாம். ஆகையால், திருஷ்டி ரூபதர்மம் பிரகாச ரூபமாயினும், தருமிரூப ஜடவான்மாவிற்குப் பிரகாச ரூபத்தன்மை சம்பவியாது. புதல்வன் பண்டிதனுயினும், பிதா பண்டிதனுகாததேபோல. அல்லது, ஆன்மாவின்கண் அங்கீகரித்த திருஷ்டியானது தர்மிவடிவ ஆன்மாவினும வேறுமாதலின், அந்தத் திருஷ்டி ஆத்மாவின் சித்தியைச் செய்யமாட்டாது. ஆன்மவடிவ தர்மி அசித்தமாகவே, ஞானரூப திருஷ்டியின் சித்தியும் சம்பவியாது. அல்லது, தர்மரூபதிருஷ்டியால் ஆத்மாவின்

சித்தியுண்டாகாது. மற்றோ, ஸ்வப்பிரகாச ரூபத்தாலேனும், மற்றொரு பிரமாணத்தாலேனும் ஆத்மாவின் சித்தியுண்டாமாதலின், ஆன்மாவின் தர்மரூபதிருஷ்டியும் சித்தம் ஆதல் கூடும்; என வாதிகூறின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், ஸ்வப்பிரகாச ரூபத்தாலேனும், மற்றொரு பிரமாணத்தாலேனும் ஆன்மாவின் சித்தி உண்டாகுமாயின், ஆன்மாவின்கண் திருஷ்டி அங்கீகரித்தல் நிஷ்பலமாம். அல்லது, ஆன்மாவின்கண் திருஷ்டி அங்கீகாரஞ் செய்பவனை இது கேட்டல் வேண்டும்:— எதனால் பதார்த்தங்களின் ஞானமுண்டாமோ, அது திருஷ்டி எனப்படும் என்னும் அர்த்தத்தை அங்கீகாரஞ்செய்து, சக்ஷுமுதலியவற்றைப்போல காணரூபமாய் அந்தத் திருஷ்டி பிரமாணமாகின்றதா? அல்லது ஞானரூபமாய் அந்தத் திருஷ்டி பிரமாணமாகின்றதா? அவற்றுள், முதற் பக்ஷமோ சம்பவியாது. ஏனெனின், பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களின் சித்தியிதுகாறுமுண்டாகாமையின், அந்தப் பிரமாணரூபத் திருஷ்டியால் ஆன்மாவின் சித்தியைச் செய்யமுடியாது. அல்லது, வாதி அங்கீகரித்த பிரமாணரூபத் திருஷ்டியின்கண் பிரமாணரூபத்தன்மை, அந்தத் திருஷ்டி ஜன்னிய ஞானத்தின்கண் பிரமாத்தன்மை சித்தமாயின் சித்தமாகும். ஏனெனின், பிரமாஞானத்திற்கு யாதுகாரணமாமோ, அது பிரமாணமென்னப்படும். ஆகையால், அந்தத் திருஷ்டி தன்னிடத்தே பிரமாணத்தன்மை சித்தியின்பொருட்டு, தன்னால் ஜனித்த ஞானத்தின்கண் பிரமாத்தன்மையைக் கிரகணஞ்செய்யும் வேறொரு இரண்டாவது பிரமாணத்தை யபேக்ஷிக்கும். அந்த இரண்டாவது பிரமாணமும் தனது பிரமாணத்தன்மையின் சித்தியின் பொருட்டு, தன்னால் ஜனித்த ஞானத்தின்கண் பிரமாத்தன்மையைக் கிரகணஞ் செய்யும் வேறொரு மூன்றாவது பிரமாணத்தை அபேக்ஷை செய்யும். இவ்வண்ணம் பிரமாணங்களின் தாரையை அங்கீகரிப்பதில் அனவஸ்தாதோஷத்தின் அடைவுண்டாம். ஆகையால், காணரூபமாய் அந்தத் திருஷ்டி பிரமாணமாகமாட்டாது. அல்லது, ஞானரூபமாய் அந்தத் திருஷ்டி பிரமாணமாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின், அவன்பாலிது கேட்டல் வேண்டும். அந்தப் பிரமாணரூபத்திருஷ்டி பிரகாசமற்றதா? அல்லது, பரப்பிரகாசியமா (அந்நியத்தால் விளங்குவதா)? அல்லது, சுயம்பிரகாசியமா? அவற்றுள், முதற்பக்ஷத்தை வாதி அங்கீகரிக்கின் அது சம்பவியாது. ஏனெனின், பிரகாசமற்ற கடம் பிரமாணரூபம் அன்றாவதேபோல, பிரகாசமற்ற அந்தத் திருஷ்டியும் பிரமாணரூபமன்றாகும். பிரகாசமற்ற திருஷ்டியைப் பிரமாணரூபம் என அங்கீகாரஞ் செய்யின், பிரகாசமற்ற கடமும் பிரமாணரூபமாதல் வேண்டும். அந்தத் திருஷ்டி பரப்பிரகாசியமாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தை அங்கீகாரஞ் செய்யின், அதுவும் சம்பவியாது. ஏனெனின், கடம் பரப்பிரகாசியமாதலின், பிரமாணரூபமன்றாவதேபோலப் பரப்பிரகாசியமாதலின், அந்தத்திருஷ்டியும் பிரமாணரூபமன்றாம். அல்லது, அந்தப் பிரமாணரூபத் திருஷ்டியைப் பரப்பிரகாசியம் என உடன்படுவதில் அனவஸ்தாதோஷத்தின் அடைவும் உண்டாம். ஏனெனின், அந்தப் பிரமாணரூபத்திருஷ்டி வேறொந்தப் பிரமாணரூபத்திருஷ்டியால் பிரகாசியமாமோ, அந்த இரண்டாவது பிரமாணரூபத்திருஷ்டியும் வேறொரு மூன்றாவது பிரமாணரூபத்திருஷ்டியால் பிரகா

சியமாகும். அம்மூன்றுவதும் நான்காவதாலாம், எனப் பிரமாணரூபத்திருஷ்டி களின் தாரையை அங்கீகரிப்பதில் அனவஸ்தாதோஷத்தின் அடைவுண்டாம். ஆத லின், அந்தப் பிரமாணரூபத் திருஷ்டி பரப்பிரகாசியமாகமாட்டாது. அல்லது, அந் தப் பிரமாணரூபத் திருஷ்டி சுயம்பிரகாசியமாம் என்னும் மூன்றுவது பக்ஷத்தை அங்கீகாரஞ்செய்யின், அதுவும் சம்பவியாது. ஏனெனின், சுருதிப் பிரமாணமற்ற கேவலம் வெறுந்தர்க்கத்தைக் கவர்ந்தே வாதியானவன் அர்த்த சித்தி செய்யின், அத்தர்க்கம் லௌகிக திருஷ்டாந்தமின்றி எவ்வர்த்தத்தையும் சித்தம் செய்ய மாட்டாது. ஆதலின், பிரமாணரூபத்திருஷ்டி சுயம்பிரகாசியம் என்னும் அர்த் தத்தின் சித்தியின்கண்ணும் வாதியானவன் லௌகிக திருஷ்டாந்த மொன்றைக் கூறல் வேண்டும். உலகின்கண்ணே தானே பிரகாசவடிவ கிரியைக்குக் கர்த்தா வும் கர்மமுமாம் என்னும் அத்தகைய பதார்த்தம் ஒன்றின்றும். ஆகையால், பிரமாணரூபத் திருஷ்டிக்குச் சுயம்பிரகாசத் தன்மை சம்பவியாது. அல்லது, பிரமாணரூபத் திருஷ்டி ஆன்மாவின் வேறென உடன்பட்டு அத்திருஷ்டியைச் சுயம்பிரகாசம் என அங்கீகரிக்கும் வாதிபாலிது கேட்டல்வேண்டும் :—அந்தச் சுயம்பிரகாசத் திருஷ்டி மின் மினிப் பூச்சிபோலத் தனது வடிவமாத்திரத்தை ஒளிர்விக்கின்றதா? அல்லது, சூரியனைப்போலச் சர்வப் பதார்த்தங்களையும் ஒளிர் விக்கின்றதா? அவற்றுள், முதற்பக்ஷத்தை அங்கீகாரஞ் செய்யின், அது சம்பவி யாது. ஏனெனின், மின் மினிப் பூச்சியானது எப்பதார்த்தத்தையும் பிரகாசியா மல் கேவலம் தன்னையே பிரகாசிப்பித்துக் கொள்வதுபோல, அந்தத் திருஷ்டியும் தன்னின் வேறாய எப்பதார்த்தத்தையும் பிரகாசஞ் செய்யமாட்டாது. ஆதலின், உலகின்கண்ணே எப்பதார்த்தத்தின் சித்தியும் உண்டாதல் கூடாது. சூரியனைப் போல அந்தத் திருஷ்டி சர்வபதார்த்தங்களின் பிரகாசகம் என்னும் இரண்டாவது பக்ஷத்தை அவ்வாதி அங்கீகாரஞ் செய்யின், அதுவும் சம்பவியாது. ஏனெனின், அந்தத் திருஷ்டி சர்வபதார்த்தங்களின் பிரகாசகமாயின், ஒரு பதார்த்தத்தின் ஞானகாலத்தில் சர்வபதார்த்தங்களின் ஞானம் உண்டாதல் வேண்டும். ஒரு பதார்த்தத்தின் ஞானகாலத்தில் சர்வபதார்த்தங்களின் ஞானம் எச்சீவருக்கும் உண்டாவதில்லை. ஆகையால், அந்தத் திருஷ்டி சர்வபதார்த்தங்களின் பிரகாசக மன்றும். இத்துணை கூறியதால் சக்ஷுராதி முதலிய பிரமாணங்களில் பிரமாணத் தன்மை உண்மையைக் கண்டனஞ் செய்து, ஆன்மாவின்கண் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களின் அவிஷயத் தன்மை நிரூபிக்கப்பட்டது.

இப்போது சக்ஷுராதி முதலிய பிரமாணங்களில் பிரமாணத் தன்மை உண் மையை அங்கீகரித்தும், ஆன்மாவின்கண் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களின் அவிஷயத் தன்மை நிரூபிக்கப்படும். அல்லது, உலகின்கண்ணே ஜீவர்கட்கு உண்டாகாநின்ற கடாதி பதார்த்தங்களின் ஞானம் யாதொரு காரணமுமின்றித் தானே உண்டாகமாட்டாது. மற்றோ, சக்ஷுராதி முதலிய பிரமாணங்கட்குக் கடமுதலிய பதார்த்தங்களோடு உளதாய சையோகாதி சம்பந்தரூப காரண த்தை அபேக்ஷித்தே, அந்தக் கடாதி பதார்த்தங்களின் ஞானம் உற்பன்னமா மென்னும் பிரகிரியையை வாதி அங்கீகரிக்கின், அவன் பாலிது கேட்டல் வேண்டும் :—ஆத்மா, கர்த்தா, போக்தா என்னும் ஞானம் உனக்குப் பிரத்தியக்ஷப்

பிரமாணத்தா லுண்டாயதா? அல்லது, அநுமானாதிப் பிரமாணங்களா லுண்டாயதா? அவற்றுள், வாதியானவன் முதற் பக்ஷத்தை அங்கீகரிக்கின், அது பொருந்தாது. ஏனெனின், வாதியின் மதத்தில் பிரத்தியக்ஷப் பிரமாணம் இருவகையாம். ஒன்றோ, பாகியப் பிரத்தியக்ஷப் பிரமாணமாம். மற்றொன்றோ, ஆந்தரப் பிரத்தியக்ஷப் பிரமாணமாம். அவற்றுள், மனம் ஆந்தரப் பிரத்தியக்ஷப் பிரமாணமாம். பாகியப் பிரத்தியக்ஷப பிரமாணம் (1) சுரோத்திரம் (2) துவக்கு (3) சக்ஷு (4) இரசனம் (5) கிராணம் என ஐந்துவகையாம். இவ்வைந்தனுள்ளும் சுரோத்திரம், இரசனம், கிராண மென்னும் மூன்று இந்திரியங்களோ திரவியத்தை விஷயஞ் செய்யா; மற்றோ, முறையாய்ச சப்தம், இரசம், கந்தம் என்னு மூன்று குணங்களையே விஷயஞ்செய்யும. வாதியானவன் ஆன்மாவையே திரவியமெனவுடன் பட்டுளானாதலின், சுரோத்திரம், இரசனம், கிராணம் என்னும் மூன்று பிரமாணங்களாலோ ஆன்மா, கர்த்தா, போக்தாரூப மென்னும் ஞானம் உண்டாகாது. சக்ஷு, துவக்கு என்னுமிரண்டு இந்திரியங்களும் திரவியத்தைக் கவரும். ஆனால், எத்திரவியததின்கண் வெளிபபட்ட உருவமும், வெளிபபட்ட பரிசமும் இருக்கின்றனவோ, அத்திரவியத்தைக் கவரும். அந்நிய திரவியத்தைக் கவரா. ஆன்மாவின்கண் வெளிப்பட்ட உருவமும், வெளிபபட்ட பரிசமுமின்றாமாதலின், சக்ஷு, துவக்கு என்னும் இரண்டிந்திரியங்களாலும் ஆத்மாவின் கர்த்தா, போக்தா வடிவஞானம் சம்பவியாது. அல்லது, ஆன்மாவின்கண் இந்திரிய ஜன்னியஞான விஷயத்தன்மை இன்றாம என்னு மிவ்வார்த்தை கேவலம யுத்திகளாலே சித்தமன்றாம்; மற்றோ, சுருதிப் பிரமாணத்தினாலு மிவ்வார்த்தை சித்தமாம். ஆண்டுசசுருதி "பராஞ்சி கானி வ்யத்ருணத் ஸ்வயம்பூஸ் தஸ்மாத் பராங் பச்யதி நாந்தராத்மந்" (இ-ள்.) சுயமபுவாகிய பரமாத்மா நேத்திராதி இந்திரியங்களை வெளிமுகமாகச் செய்தனா. அக்காரணத்தால் அந்நேத்திராதி இந்திரியங்கள் கடபடாதியாகிய பதார்த்தங்களையே காணும். அந்தர ஆன்மாவை அவை காணாவென்னு மிச்சுருதியின்கண் இந்நியமம கூறப்பட்டது:—எவ்வெப் பதார்த்தங்களிடத்தே பாகியத்தன்மை யுண்டாமோ, அவ்வப் பதார்த்தங்களிடத்தேயே நேத்திராதி இந்திரியங்களின் சம்பந்தமாம். பாகியத்தன்மையின்றி நேத்திராதி இநதிரியங்களின் சம்பந்தம சம்பவியாது. அந்தர ஆத்மாவின்கண் பாகியத்தன்மை இன்றாமாதலின், ஆன்மாவின்கண் நேத்திராதி இநதிரியாதிகளின் சம்பந்தமும் சம்பவியாது. சையோகாதி சம்பந்தமின்றி நேத்திராதி இந்திரியங்கள் எப்பதார்த்தத்தின் ஞானத்தையும் உற்பன்னம செய்யமாட்டா. ஆகையால், ஆத்மா, கர்த்தா, போக்தா என்னும் ஞானம் நேத்திராதி இந்திரியஙகளால் சம்பவியாது. அல்லது, ஆத்மா, கர்த்தா, போக்தா வென்னும் ஞானம் மனரூப ஆந்தரப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தாலாமென வாதி யங்கீகாரஞ்செய்யின், அதுவும் சம்பவியாது. ஏனெனின், காமம், சங்கல்பம், சம்சயம் என்னும் சுருதியின்கண் இச்சை, எண்ணம், ஐயம், சிரத்தை, அசிரத்தை, தைரியம, அதைரியம், வெட்கம், அச்சம், விருத்தி ஞானம் என்னும் யாவற்றிற்கும் மனமே உபாதானகாரணமெனக் கூறப்பட்டுளது. யாது உபாதான காரணமாமோ, அது கரணமாகமாட்டாது. கடத்தின்

உபாதான காரணமாய மண்ணனது கடத்தின் காரணமாகாததேபோல, விருத்தி ஞானத்தின் உபாதானகாரணமாயமனமானது, அந்த ஞானத்தின் காரணமாகமாட்டாது. ஆகையால், ஆத்மா, கர்த்தா, போக்தா வென்னும் ஞானம் மனத்தாலும் சம்பவியாது. அல்லது, ஆத்மா, கர்த்தா, போக்தா வென்னும் ஞானத்தினுற்பத்தி நேத்திராதி இந்திரியங்களின் சம்பந்தத்தால் ஆம் என உடன்படின், நேத்திராதி இந்திரியங்களின் சம்பந்தம் ஸ்தூலசரீரத்தோடு உளதாதலின், ஸ்தூலசரீரத்தின் கண்ணே அந்தஞானம் உண்டாம். அசுரர்களை மோகஞ்செய்யும் பொருட்டு, தேகாத்மவாதிகளாய சார்வாகர்களின் மதத்தைச்செய்த பிரகஸ்பதி மதத்தினடைவு அவ்வாதிக்குப் பலாத்காரமாயுண்டாம். ஆகையால், ஆத்மா, கர்த்தா, போக்தா வென்னும் ஞானம் பிரத்தியக்ஷப பிரமாணத்தாற சம்பவியாது எனத் துணியப்பெற்றது. அல்லது, ஆத்மா, கர்த்தா, போக்தா வென்னும்ஞானம் அநுமானப் பிரமாணங்களாலுண்டாமென்னு மிரண்டாவது பக்ஷத்தை அவ்வாதி அங்கீகாரஞ்செய்யினும் சம்பவியாது. ஏனெனின், அநுமான, உபமான, சப்தமென்னும் மூன்றுபிரமாணங்கட்குப் பிரத்தியக்ஷப பிரமாணமே மூலகாரணமாம். அநதப பிரத்தியக்ஷப் பிரமாணம் ஆன்மாவின் ஞானத்தின்கண் காரணமாகாதபோது, அநுமானுதிப பிரமாணங்கள் எங்ஙனம் காரணமாகும்? ஆகையால், ஆத்மா, கர்த்தா, போக்தாவென்னும் ஞானம் அநுமானுதிப் பிரமாணங்களாலும் சம்பவியாது. அல்லது, ஐதரேய உபநிஷத்தின்கண் ஆன்மாவை திருஷ்டா, சுரோதா, மந்தா, விஞ்ஞாதா எனக் கூறப்பட்டிருக்கிறது. அவற்றுள், தரிசன கர்த்தாவின் பெயர் திருஷ்டாவாம். சிரவண கர்த்தாவின்பெயர் சுரோதாவாம. ஆகையால், இசசுருதியினனே ஆத்மாவின் கண் காத்துருத்தன்மை சிததமாம என வாதி கூறின், அதுவும் சமபவியாது. ஏனெனின், திருஷ்டா, சுரோதா, மநதா, விஞஞாதா என்னும் சுருதி ஆன்மாவைக காத்தா வடிவமாய் உணர்த்துவதேபோல, அதிருஷ்டா, அசுரோதா, அமந்தா, அவிஞ்ஞாதா என்னுஞ சுருதி ஆனமாவின்கண் காத்துருத்தன்மையின் நிஷேதமும் செய்கின்றது. ஆகையால, அவ்விரண்டு சுருதிகளில் ஆன்மாவை அகர்த்தாரூபமாய் உணர்ததும சுருதியே முக்கியப பிரமாணமாம. ஆத்மாவைக் கர்த்தாரூபமாய் உணர்த்தும் சுருதி மயஙகிய புருஷர்களால் துணியப்பெற்ற கர்த்துருத்தன்மையை அநுவாதஞ்செய்கின்றது. ஆகையால், அசசுருதியானது தனது அர்த்தபரமன்றும. கருத்தினுவாம :—பலததையுடைய லௌகிகப் பிரமாணங்களாலறியப்படாத அர்த்ததததை உணாத்துவதாலே சுருதிக்குப் பிரமாணமாதல் உளது. கர்த்தா, போக்தாரூபமாய் ஆத்மா சர்வலோகருக்கும் பிரசித்தமாம். கர்த்தா, போகதாரூபமாய் ஆன்மாவை யுணர்வதால், எபபலத்தின் பிராப்தியுமுண்டாகாது; மாறாய், ஜனன மரணுதிரூப அனர்த்தத்தின் பிராப்தி உண்டாம். ஆகையால், கர்த்தா, போக்தாரூபமாய் ஆன்மாவை உணர்த்துவதில் சுருதியின தாறபரியமன்றும். அகர்த்தா, அபோக்தாரூபமாய் ஆத்மா லோகப பிரசித்தமன்றும். அஙஙனமே, அகர்த்தா, அபோக்தாரூபமாய் ஆன்மாவை உணர்வதால் அஞ்ஞானசகித சர்வ அனர்த்தங்களின் நிவிருத்திவடிவ பலத்தின் பிராப்தியுமுண்டாம். ஆகையால், அகர்த்தா, அபோக்தாரூபமாய் ஆத்மாவை உணர்த்துவதின் கண்ணே சுருதியின் தாற்பரியமாம். ஆகைபால், பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்க

னால் ஆன்மாவின் ஞானமுண்டாகமாட்டாது; மற்ருே, தனது சுயம்பிரகாச ரூபத்தால் ஆன்மாவின் ஞானம் உண்டாம். உண்மையாய் ஆராய்ந்து நோக்கினே, முற்கூறிய யுக்திகளால் எவ்வனுன்ம பதார்த்தங்களின் ஞானமும் பிரத்திய க்ஷாதிப் பிரமாணங்களால சம்பவியாதாயின், நிர்க்குண பரமாத்ம ஞானத்தின் கண் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்கட்கு எங்ஙனம் காரணத்தன்மையுண்டாம்? இக்காரணத்தாலே சுருதி பகவதியானவள் ஆன்மாவைக் கவரப்படாதெனக் கூறினள். இத்துணை கூறியதால் ஆன்மாவின்கண் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங் களின் அவிஷயத்தன்மை காண்பிக்கப்பட்டது. இப்போது ஆன்மாவின்கண் அசீர்யத்தன்மை நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! இவ்வாநந்த சொரூப ஆன்மா சாவப் பிராணிகளின் ஆன்மாவாதலின், ஹனனக்*கிரியையின் †கருமத் தன்மை வடிவமாய சீர்ணத்தன்மை அடையமாட்டாது. அல்லது, உலகின் கண் எவ்வெப்பதார்த்தம் மூர்த்தியாயிருக்கின்றதோ, பேதமுடையதாயிருக்கின் றதோ, அவ்வப்பதார்த்தமே அவயவங்களின் சிதிலத்தன்மைவடிவ சீர்ணத்தன் மையையடையும். வஸ்திராதி பதார்த்தங்கள் மூர்த்திகளாயும், பேதமுடையன வாகவுமிருக்கின்றனவாதலின், சிறிதுகாலம் பொறுத்து நூல் முதலிய அவயவங் களின் சிதிலத்தன்மைவடிவச சீர்ணததன்மையை யடையும். ஆன்மாவின் கண்ணே மூர்த்தத்தன்மையும் பேதத்தன்மையும் இன்ரும். ஆகையால், இவ்வா நந்த சொரூப ஆன்மா சீர்ணத்தன்மை வடிவத்தை அடையாது. இக்காரணத் தால் இவ்வாநந்த சொரூப ஆன்மாவைச சுருதி அசீர்யம் என்றது. இப்போது ஆன்மாவின்கண் அசங்கததன்மை நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! இவ் வுலகின்கண்ணே எப்பதார்த்தம சங்கமுடையதாமோ, அப்பதார்த்தம் வேறுபதார் த்தங்களின் சங்கத்தால் தோஷத்தையடையும. இயல்பாயே குளிர்ச்சியாய ஜலத் தின்கண் அக்கினியின் சங்கத்தால உஷ்ணத்தன்மையுண்டாகின்றது. இயல் பாயே உஷ்ண சீதப்பரிசங்களற்ற வாயுவின்கண் அக்கினியின் சங்கத்தால் உஷ் ணத்தன்மையுண்டாம். ஜலத்தின் சஙகததால் சீதளத்தன்மையுண்டாம் என்பது போலவாம். எப்பதார்த்தம அசங்கமாமோ, அப்பதார்த்தத்தின்கண் எத்தோ ஷத்தின் அடைவுமுண்டாகாது. அசங்க ஆகாசத்தின்கண் மேகம் மின்னல் முதலியவற்ருல் ஆக்கப்பட்ட தோஷங்களின் பிராபதியுண்டாகாதது போலவாம். எப்பதார்த்தம மூர்த்திமானுயிருக்கின்றதோ, பரிச்சின்னமாயிருக்கின்றதோ அப் பதார்த்தமே சங்கமுடையதாம். மூர்த்திமானுயும பரிசசின்னமாயும இராநின்ற ஜலாதி பதார்த்தங்கள் அக்கினி முதலியவற்ருேடு கூடுவதுபோலவாம். இவ்வா நந்த சொரூப ஆன்மா மூர்த்திமானும் பரிசசின்னமுமன்ரும். ஆகையால், எப் பதார்த்தத்தோடும் ஆன்மாவிற்கு சங்கமுண்டாவதில்லை. சங்கமின்மையின் இவ் வான்மா எப்பதார்த்தத்தின் தோஷத்தையும் அடைவதில்லை. அல்லது, சையோ காதிசம்பந்தங்கள் சங்கமெனப்படும். சிறிதுகால பரியந்தம் இதர பதார்த்தங் களின் வடிவம்போல இருப்பது சங்கத்தின் பலமாம். உஷ்ண ஸ்பரிசமுள்ள அக் கினியோடு ஜலத்தின் சையோக சமபந்தமுண்டாயின், அச்சலம் சிறிதுகால பரி

---

* கிரியை=பயனிலை. † கருமத்தன்மை=செயப்படுபொருண்மை.

யந்தம் அக்கினியைப்போல உஷ்ணஸ்பரிச முடையதாயிருப்பதுபோலவாம். இவ்வாநந்தசொரூப ஆன்மா சஜாதியபேதம், விஜாதியபேதம், சுவகதபேதம் என்னும் மூன்று பேதங்கள் அற்றதாம். ஆகையால், இவ்வான்மா சையோகாதி சம்பந்தரூப சங்கத்தை அடைவதில்லை. அங்ஙனம் இதரபதார்த்தங்களோடு தாதாத்மிய வடிவம் ஆகிய சங்கத்தின் பலத்தையுமடைவதில்லை. அல்லது, இவ்வுலகின்கண் சங்கத்தையுடைய வஸ்திராதி பதார்த்தங்கள் பந்தனரூபபலத்தையும் பரிணாமரூப பலத்தையும் அவசிய மடையும். வஸ்திராதி பதார்த்தங்களின் உபாதான காரணமாய நூல்முதலியவற்றின் பரஸ்பரவிபாகத்தாலும், நாசத்தாலும்வஸ்திரம் முதலிய பதார்த்தங்களின் நாசமும் அவசியமுண்டாம். சிலவிடத்தோ வஸ்திராதி பதார்த்தங்கட்கு விரைவாகவே அழிவுண்டாகும். சிலவிடத்தோ பையப் பைய அழிவுண்டாகும். இவ்வாநந்த சொரூப ஆன்மா சங்கமற்றதா மாதலின், பந்தனத்தையும், பரிணாமத்தையும், நாசத்தையும் அடையாது. இவ்வாநந்த சொரூப ஆன்மா சர்வ விசேஷபாவங்களுமற்றதாம். மனம் வாக்குகட்கு அவிஷயமாயதாம். ஹே ஜனகராஜாவே! இத்தகைய துரிய ஆத்மா, ஞானத்தால் நீ அடைய யோக்கியமாயதாம். ஹே ஜனகராஜாவே! சர்வஜீவர்களின் ஆன்மவடிவமாயும், பயமற்றதாயும், அத்விதீய ஆநந்த சொரூபமாயும் இராநின்ற அபயப் பிரஹ்மத்தை நீ நினது வடிவமாயறிந்து அவ்வபயப பிரஹ்மததை அடைந்து விட்டனையாதலின், சம்சாரரூப சூலத்தால இப்போது நினக்குப் பயமுண்டாக மாட்டாது. கருத்திதுவாம் :—தன்னின் வேறாயும பரிச்சின்னமாயுமிராநின்ற கிராமமுதலிய பதார்த்தங்களின் அடைவு, நடத்தல் வடிவ கிரியையால் உண்டாவதேபோல, யாண்டும வியாபகமாய பிரஹ்மத்தின் அடைவு யாதேனுமொரு நடைவடிவ கிரியையா லுண்டாகமாட்டாது; மறறு, தன்னைப் பிரஹ்ம ரூபமாயுணர்ந்த உணர்வே பிரஹ்மத்தினடைவாம.

சங்கை :—ஹே பகவன்! ஆன்மாவின் ஞானம உண்டாயினும் ஜீவர்கட்குச் சம்சாரரூப சூலத்தினின்றும் பயம் ஏன் உண்டாவதில்லை?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! சம்பூரண ஜீவர்கட்கும் இரண்டாவது பதார்த்தத்தின் ஞானத்தால் பயம் உண்டாமாதலின், இரண்டாவது பதார்த்தத்தின் ஞானம் பயத்தின் காரணம் எனச் சித்தமாயது. எதுவரை சிறிதுமாத்திரையேனும் இரண்டாவது பதார்த்தத்தின் ஞானமுண்டாமோ, அதுவரை அத்விதீய ஆத்மாவின் ஞானமும் உண்டாகமாட்டாது. வித்வானுக்கு (அறிஞனுக்கு) அத்விதீய ஆன்மாவின் ஞானத்தால் இரண்டாவது பதார்த்தத்தின் ஞானம் நீங்கிவிடுகின்றது. ஆதலின், துவைத ஞானரூப காரணத்தின் அபாவம் உளதாகவே வித்வானுக்குப் பயத்தின் பிராப்தி உளதாவதின்றாம். ஆண்டுச்சுருதி, "த்விதீயாத்வை பயம் பவதி" (இ-ள்.) இரண்டாவது பதார்த்தத்தின் ஞானத்தால் ஜீவர்கட்குப் பயத்தின் அடைவு உண்டாம். இப்போது, இப்பொருளையே வெளிப்படையாய்க் காண்பிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! எப்பதார்த்தத்தின்கண் இப்பதார்த்தம் எனது துக்கசாதனம் எனப் பிரதிகூலத் தன்மை ஞானமுண்டாமோ, அப்பதார்த்தத்தினின்றும் ஜீவர்கட்குப பயத்தின் அடைவு உண்டாம். சிங்க சர்ப்பாதிகளி

டத்தே ஜீவர்கட்குப் பிரதிகூலத் தன்மை ஞானம் உண்டாங்கால், அவற்றினின் றும் ஜீவர்கட்கு அச்சம் உண்டாவது போலவாம். ஆகையால், இது துணியப் பெறும். துவைத ஞானத்தால் ஜனித்த பிரதிகூலத் தன்மை ஞானமே ஜீவர்கட் குப் பயகாரணமாம். ஆநந்த சொரூப ஆன்மாவின்கண் சர்வ ஜீவர்கட்கும் பிரதிகூலத் தன்மை ஞானம் உண்டாவதில்லை; மற்றோ, சர்வ ஜீவர்கட்கும் ஆன் மாவின்கண் அநுகூலத தன்மை ஞானம் உளது. அத்தகைய அநுகூல ஆன்மா வின் சர்வ வியாபக வடிவமாய ஞானம் எவனுக்கு உண்டாகின்றதோ, அவனுக்கு எப்பதார்த்தத்தினின்றும் பயம் உண்டாவதில்லை. ஹே ஜனகராஜாவே! அந்தப் பிரதிகூலத் தன்மை ஞானம் துவைத ஞானத்தின்றியன்றி உண்டாகாது. ஆகை யால், துவைதத் தன்மையே பிரதிகூலத் தன்மை ஞானத்தின் காரணமாம். அந்தத் துவைதத் தன்மை அத்விதீயப பிரஹ்மத்தின்கண் இன்றும். இக்காரணத் தால் அந்த அத்விதீயப் பிரஹ்மம அபயமாம். விஞ்ஞான ஆநந்த ரூபமாம். எல்லா வேற்றுமையும் அற்றதாம். ஹே ஜனகராஜாவே! அத்தகைய அத்விதீய அபயப் பிரஹ்மம் நின்னிற் பின்னமன்றும்; மற்றோ, நினது சொரூபமாம். ஹே ஜனகராஜாவே! யானும், நீயும், பூதப்பிராணிகள் யாவும் ஸ்தூல சூக்ஷ்ம சரீரம் முதலாய சம்பூரண ஜகத்தும் பிரஹ்மத்தினும் வேறன்றும்; மற்றோ, பிரஹ்ம சொரூபமேயாம். இக்காரணத்தால் பேதமற்ற அத்விதீயப் பிரஹ்மத்தைச் சுருதி யானது அபயம் எனக் கூறியது. இப்போது இப்பொருளையே திருஷ்டாந்தத் தால் வெளிப்படுத்துவாம. ஹே ஜனகராஜாவே! கந்தர்வ நகரம் ஆகாசத்தினும் வேறன்றுவதேபோல, இவ்வெல்லா ஜகத்தும் ஆநந்த சொரூப ஆன்மாவினும் வேறன்றும். ஆகாசத்தின்கண் கநதர்வ நகரத்தின் இருப்பு உண்மையாய் இன் றும்; மற்றோ, மாயையாலாம. அதுபோல, ஆநந்த சொரூப ஆன்மாவின்கண் உலகின் இருப்பும் உண்மையாய் இன்றும; மற்றோ, மாயையாலே ஆம். ஹே ஜனகராஜாவே! ஆகாசரூப அதிஷ்டானத்தின்கண் கநதர்வ நகரம் முன்னருண் டாகவில்லை; இனி உண்டாகமாட்டாது; இப்போதுமில்லை. அதுபோல, இவ் வாநந்த சொரூப ஆன்மாவின்கண் ஜகத்தானது முன்னருண்டாகவில்லை; இனி உண்டாகமாட்டாது; இப்போதுமில்லை என்றுணர்க.

சங்கை :—ஹே பகவன்! ஆநநத சொரூப ஆன்மாவின்கண் முக்காலத்தி னும் ஜகத்தில்லையாயினும், உலகர்கட்குப் பின்ன பின்னரூபமாய் இவ்வுலகம் ஏன் தோற்றுகின்றது?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! ஆகாசத்தின்கண் முக்காலத்தும் கந்தர்வ நகரம் இன்றுயினும், மயங்கிய புருஷர்கட்கு அக்கந்தர்வ நகரம் ஸ்தூல சூக்ஷ்ம ரூபமாயும், ஜட சைதன்னிய ரூபமாயும் தோற்று நிற்கும். அதுபோல, ஆநந்த சொரூப ஆன்மாவின்கண் முக்காலத்தும் ஜகத்தின்றுமாயினும், அஞ்ஞானிகட்கு மயக்கத்தால் அந்த ஜகத்தானது ஸ்தூல சூக்ஷ்ம ரூபமாயும், ஜடசைதன்னியரூப மாயும் தோற்றும். இப்போது இப்பொருளே கனுத்திருஷ்டாந்தத்தால் நிரூபிக்கப் படும் :—ஹே ஜனகராஜாவே! கனுவின்கண் தேர், குதிரை, யானை முதலிய

பதார்த்தங்களின் உற்பத்தியின் சாதனங்களாய தேசகாலாதிகள் கனவின்கண் இல்லாதிருப்பினும், எங்ஙனம் கனக்காண்போன் ஒருவனே அஞ்ஞான வயத்தால் தேர், குதிரை, யானை என்பன முதலிய அநேகந் தன்மையை யடைவனோ, அங்ஙனம், தேசகாலாதி சாதனங்களற்ற பரமான்ம தேவரொருவரே நானுவகையாய ஜகத்வடிவத்தை யடைவர். ஹே ஜனகராஜாவே! கனவினின்றும் நனவையடைந்த புருஷன் கனப்பொருள்களைக் காண்கிலன். ஆகையால், நனவஸ்தை, கனப்பொருள்களை நாசஞ்செய்வதாம். அதுபோல, ஆன்ம சாக்ஷாத்காரத்தால் இவ்வெல்லா உலகும் நாசமாய்விடும். ஹே ஜனகராஜாவே! அத்தகைய அத்விதீய ஆன்ம சாக்ஷாத்காரம் நினக்கு இப்போது உண்டாயிருத்தலின், சம்சார சூலத்தினின்றும் நீ பயத்தை அடையவேண்டாம். ஹே குழந்தாய்! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவிற்குப் பிரஹ்மவித்தையை உபதேசித்த போது, அந்த ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவருக்குக் கொடுக்கத் தக்க குருதக்ஷிணையை இவ்வண்ணம் தம்மனத்தின்கண் விசாரித்துக் காண்கிலர். இப்போது ஜனகராஜாவின் விசாரத்தை நிரூபிப்பாம்:—இந்த யாஞ்ஞவற்கிய மகாமுனிவர் எனக்கு ஆன்ம ஞானத்தைக் கொடுத்தனராதலின், இவருக்கு யான் எப்பதார்த்தத்தைக் குருதக்ஷிணையாகக் கொடுப்பேன். ஆண்டு, எனது மனைவி, மைந்தர், தனம், இராஜ்ஜியம், சேனை எனபவற்றோடு எனது சரீரத்தைக் குருதக்ஷிணையாகக் கொடுப்பினும், அத்தக்ஷிணை ஆத்மஞான சமானமாகமாட்டாது. அல்லது, பிரஹ்மவித்தையை உபதேசித்து, சிஷ்யனுக்கு ஆத்மஞானத்தைக் கொடுக்கும் ஆசிரியருக்குச சிஷ்யனானவன், சமுத்திர பரியந்தமுள்ள பொன் முதலியவற்றால் நிறைந்த சம்பூரணப் பிருதிவியைக் குருதக்ஷிணையாகக் கொடுப்பினும், அத்தக்ஷிணை ஆத்மஞான சமானமாகமாட்டாது. அலலது, அநேக ஜன்மங்களில் அநுஷ்டித்துள்ள பிரமசரியாதி சாதனங்களையுடைய தேகதாரி ஜீவர்களாலும் இவ்வாநந்தசொரூப ஆன்மா அடைய முடியாததாம். மூவுலகின்கண்ணும் ஆன்மாவின் லாபத்திற்குமேலாக வேறொரு லாபமும் இன்றாம். ஆண்டுச்சுருதி "ஆத்மலாபாத் பரம் வித்யதே (இ-ள்.) ஆநந்தசொரூப ஆன்மாவின் லாபத்தினும் மேலாக சம்சாரத்தின்கண்ணே யாதொரு லாபமுமின்றாம். ஆநந்தசொரூப ஆன்மாவின் அடைவே மேலாய லாபமாம். அத்தகைய கிடைக்கத்தகாததாய ஆன்மாவின் அடைவை எக்குருவானவர் செய்வித்தனரோ, அக்குருவின்பொருட்டு மைந்தர், மனைவி, தனம், இராஜ்ஜியம், பிருதிவி என்பன முதலிய அனான்ம பதார்த்தங்களைத் தக்ஷிணையாகக்கொடுத்தல் எனக்குஉசிதமன்றாம. அல்லது, சுவர்க்கத்தின்கண்ணுள்ள தேவதைகளை ஜெயித்து, பாதாளத்தின்கண்ணுள்ள நாகர்களைஜெயித்து, சுவர்க்கம், பூமி, பாதாளம் என்னும் மூன்று லோகங்களையும் யாஞ்ஞவற்கிய முனிவரினபொருட்டுக் குருதக்ஷிணையாக யான் கொடுப்பேனுயினும், ஆத்மஞானத்திற்குச் சமானம் அத்தக்ஷிணை ஆகமாட்டாது. கருத்திதுவாம்:— யாஞ்ஞவற்கிய முனிவர், என்னை ஆன்மாவை அடையுமாறு செய்தனர். அவ்வான்மா, அபரிச்சின்னமாம், நித்தியமாம், ஆநந்தவடிவமாம, துர்லபமாம் (கிடைத்தற் கரியதாம்). அத்தகைய ஆன்மாவிற்குச் சமானமாய் எப்பதார்த்தமும் சம்சாரத்திலின்றாம்; மற்றோ, மைந்தர், மனைவி, தனம், இராஜ்ஜியம், பூவுலகம் என்பன

முதலிய சம்பூரண பதார்த்தங்களும், பரிச்சின்னங்களாம்; அநித்தியங்களாம்; துக்கரூபங்களாம்; சலபங்களாம (கிடைத்தற் கெளியனவாம்); ஆகையால், ஆன்மவடைவிற்குச் சமானம் இத்தக்ஷிணை ஆகமாட்டாது. ஹே மைந்த! அந்த ஜனகராஜாவானவர் இவ்வண்ணம் விசாரித்து, யாஞ்ஞவற்கிய முனிவரின் பொருட்டுக் குருதக்ஷிணை கொடுப்பதற்கு யோக்கியமாய் எப்பதார்த்தத்தையுங் காண்கிலர். அதன்பின்னர், அத்தியந்தம் மகிழ்ச்சி அடைந்தவராய் அந்த ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய மகா முனிவரின் சந்நிதியில் இவ்வண்ணம் விண்ணப்பித்தனர். ஜனகராஜா, கூறல்:—ஹே பகவன்! தங்களுடைய ஆசிரியராகிய சூரியபகவான் சர்வ தேகதாரி ஜீவர்களின் வெளியிற் சஞ்சரிக்கும் பிராணன் ஆகுபவராய்ச் சர்வ ஜீவர்களின் நேத்திரங்களைத் தடைசெய்யும் அந்தகாரத்தை நீக்கி, சர்வ ஜீவர்களின் வியவகார சித்தியைச் செய்வர். அத்தகைய சூரிய பகவானுடைய உபகாரத்திற்குச் சமானமாய் யாதொரு பதார்த்தத்தையும் காணுதவராகிய தேகதாரி ஜீவர்கள் அந்தச் சூரிய பகவான் பொருட்டு, தீபமாத்திரத்தை அர்ப்பணஞ் செய்வர். அந்தச் சூரிய பகவானாகிய தங்கள் ஆசிரியர் அந்தத் தீபமாத்திரையானே மகிழ்வை யடைவர். ஹே பகவன்! தாங்கள் சூரிய பகவானுடைய சிஷ்யராதலின், எங்ஙனம் சூரிய பகவானானவர் ஜீவர்களின் அந்தகாரத்தை நீக்குகின்றனரோ, அங்ஙனம் தாங்களும் ஆத்ம ஞானத்தைக் கொடுப்பதால், சிஷ்யர்களின் அஞ்ஞானரூப அந்தகாரத்தை நீக்குகின்றீர்கள். ஆதலின், தாங்களும் சூரிய பகவானுக்குச் சமானமாவீர்கள். அங்ஙனமே, ஆசை முழுவதையும அறநீருக்கின்றீர்கள். ஆகையால், ஹே பகவன்! தங்களுடைய ஆசிரியராகிய சூரிய பகவான் தீபமாத்திரத்தால ஜீவர்களபால மகிழ்ச்சியை அடைவதேபோலத் தாங்களும் எனது அற்பதக்ஷிணையால மகிழ்ச்சி யடைவீர்கள் என்று எண்ணுகின்றேன். இப்போது ஆசீர்வாதம், சர்வஸ்வம், நமஸ்காரம் என்னும் மூவகையாய அற்பதக்ஷிணைகள் நிரூபிக்கப்படும்:—ஹே பகவன்! முன்னாத் தாங்கள் ஸ்தூல, சூக்ஷ்ம, காரணங்கள் என்னும் மூன்று சரீரங்களைப பரிததியாகஞ் செய்து, துரிய அபயப் பிரஹ்மத்தை எனக்கு உபதேசித்தீர்கள். அவ்வுபதேசத்தால் அபயப் பிரஹ்மத்தை யான் அடைந்தேன். ஆகையால, ஹே பகவன்! எவ்வபயப பிரஹ்மத்தை அடையுமாறு என்னைச் செய்தீர்களோ, அவ்வபயப் பிரஹ்மத்தின் அடைவு தங்களுக்கும் உண்டாகுக என்னும் ஆசீர்வாதரூப தக்ஷிணையை யான் தங்கள் பொருட்டுக் கொடுக்கின்றேன். ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே! கால பகவானானவர் ஜீவர்களாய பறவைகளைக் கட்டும் பொருட்டு, அஞ்ஞானரூப சூத்திரத்தால் காமக்குரோதாதிரூப முடிச்சுகளோடுகூடிய யான் எனது என்னும் அபிமானரூப வலையைச் செய்துளார். அவ்வலையின்கட்பட்டு மிழலும துக்கியாயும் தீனனுயும் இருக்கப்பட்ட என்னைக் கிருபையால் வெளிபபடுத்தினீர்கள். ஆகையால், தங்களது உபகாரத்திற்குச சமானமாய் யான் எத்தக்ஷிணையைக கொடுப்பேன். இப்போது சர்வஸ்வ வடிவ தக்ஷிணை நிரூபிக்கப்படும்:—ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே! சர்வ லோகத்திலும் பிரசித்தமாய இந்த விதேகமெனப் பெயரிய எனது தேசம், யான் வசிக்கும் இடமாகிய இம்மிதிலாபுரி, எனது மனைவியர், எனது மைந்தர்கள்

என்பனமுதலிய எல்லாப் பதார்த்தங்களோடும் ஜனகனுகிய யான் தங்களுடைய அடிமையாய் இருக்கின்றேன். ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே! சுருதியின்கண்ணும், ஸ்மிருதியின்கண்ணும், பிரஹ்மவித்தையின் உபதேசத்தைச் செய்யும் ஆசிரியரைத் தந்தை எனவும், சீடனை மைந்தன் எனவும் கூறப்பட்டுளது. எத்துணைக்காலம் தந்தையானவர் இருக்கின்றனரோ, அத்துணைக்காலம் மைந்தனுக்குத் தனத்தின்கண் அபிமானம் உண்டாகலாகாது. ஆகையால், சாஸ்திரரீதியாய் ஆராய்ந்து பார்க்கின், இந்த இராஜ்ஜியாதி சர்வ பதார்த்தங்களையும் யான் தங்கள் பொருட்டுக் கொடுத்தேன் என்னும் வசனத்தைக் கூறுவதற்கும் வல்லேன் அல்லேன்; மற்றோ, யான் முதலாகச் சம்பூரண இராஜ்ஜியாதி பதார்த்தங்களும் தங்களுடையனவேயாம். ஹே பகவன்! தங்களுடைய ஆஞ்ஞை இன்றி அன்ன மாத்திரத்தை உண்பதற்கும் யான் சுதந்தரன் அல்லனுயின், இராஜ்ஜியாதி சம்பூரணப் பதார்த்தங்களையும் யான் தங்கள்பொருட்டுத் தானஞ்செய்தேன் எனக் கூறல் எங்ஙனம் சம்பவிக்கும்? ஆகையால, இந்த இராஜ்ஜியாதி சர்வஸ்வம தங்களுடையனவேயாம். இப்போது நமஸ்காரரூப தக்ஷிணை நிரூபிக்கபபடும்:—ஹே யாஞ்ஞவற்கிய மகா முனிவரே! பிரஹ்மத்தை உபதேசிக்கும் ஆசிரியராய தங்களுக்கு எனது பன்முறை நமஸ்காரங்கள் உளவாகுக. சர்வ முனிவர்களினும் மேன்மை மிக்கவரும், வேதமந்திரங்களை வெளிப்படுத்துபவரும, சாக்ஷாத் சூரிய பகவானுடைய சீடரும், சாக்ஷாத் பரமேஶ்வரரூபரும் ஆகிய தங்கள் பொருட்டு எனது பன்முறை நமஸ்காரம் உளதாகுக. ஹே மைந்த! இவ்வண்ணம் ஆசீர்வாதம், சர்வஸ்வம், நமஸ்காரம என்னும் மூவகையாய குருதக்ஷிணைகளை ஜனகராஜாவானவர் யாஞ்ஞவறகிய முனிவரின்பொருட்டுக் கொடுத்தபோது அம்முனிவர் மிகவும் மகிழ்ச்சியடைந்தனர்; அன்றியும், ஜனகராஜாவை நோக்கி இவ்வண்ணம் கூறுவாராயினர். யாஞ்ஞவற்கிய முனிவர்கூறல்:—ஹே ஜனகராஜாவே! விதேக தேசம் முதலாய்நினது சரீரம்வரை எத்துணை இராஜ்ஜியாதி பதார்ததங்களுளவோ, அவை யாவும் என்னுடையனவே என்பதன்கண் நீ சிறிது மாத்திரமும ஐயப்படவேண்டியதில்லை. ஆனல், ஒருகுருதக்ஷிணை யான் நின்பால் வேண்டுகின்றேன். அக்குருதக்ஷிணையை நீ என்பால் கொடுத்தி. ஹே ஜனகராஜாவே! உன்னுடைய சித்தமானது அக்கினிமுதலியவற்றின் உபாசனையின்கண் அத்தியநதம் தற்பரமாம. இராஜ்ஜிய வியவகாரத்தின்கண் அத்தியந்தம் லக்ஷியமுடையதாம். அக்காரணத்தால் எனது மனத்தின்கண்ணே இவ்வண்ணம் தோன்றுகின்றது. அதாவது, யான் நின் பொருட்டு ஆன்ம உபதேசம் செய்தனனன்றோ? அவ்வுபதேசத்தை நீ சிறிது காலங்கழித்து மறந்துவிடுவாய் என்பதே. இத்துணையால் யாஞ்ஞவற்கிய முனிவர் இப்பொருளை உணர்த்தினர். அக்கினி முதலியவற்றின் உபாசனைகளால் பிரஹ்மலோகத்தின் அடைவுண்டாமாதலின், பிரஹ்மலோகத்தின் இச்சை ஆன்ம ஞானத்திற்கு எதிர்காலத்தடையாம். இராஜ்ஜியாதி பதார்த்தங்களின் பற்றுடைமை ஆன்ம ஞானத்திற்கு நிகழ்காலத் தடையாம். தடையிருப்பின் காரியமுண்டாக மாட்டாதாதலின், ஹே ஜனகராஜாவே! யான் உன்பொருட்டுச் செய்த ஆன்மாவின் உபதேசத்தை நீ ஒருகாலும் மறவாதிருத்தலாகிய குரு தக்ஷிணையை எனக்குக் கொடுத்தல் வேண்டும். ஹே ஜனகராஜாவே! இவ்விதேக நாடும், மிதிலா

புரியும், சம்பூரண இராஜ்ஜியாதி சகல பதார்த்தங்களும் என்னுடையனவே நீயும் எனது தாசனுகவே இருக்கின்றாய்; ஆகையால், இவ்வெனது இராஜ்ஜியாதி பதார்த்தங்கள் தாசனுகிய நின்பாலே இருக்குக. ஹே ஜனகராஜாவே! இப்போது யான் எனது ஆச்சிரமத்தைநோக்கிப் போகின்றேன். சிறிது காலத்திற்குப் பின்னர் மீண்டும் நின்பால் வருகின்றேன் ஹே மைந்த! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய முனிவரானவர் ஜனகராஜாவை நோக்கிக் கூறியபோது, ஜனகராஜாவும், மற்றைய பிராஹ்மணர்களும், க்ஷத்திரியர்களும, வைசியர்களும் மற்றைய யாவரும் யாஞ்ஞவற்கிய முனிவரை அவ்விடத்திலேயே இருக்கும் பொருட்டு, அநேகம் வகையாகப் பிரார்த்தனை செய்தனர். ஆனால், அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் ஏகாந்த சுகத்தை இச்சித்தவராய் தமது ஆச்சிரமத்தை நோக்கிச் சென்றனர். ஹே மைந்த! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய முனிவர் சென்றபின்னர் சிறிதுகாலங்கழித்து, அந்த ஜனகராஜாவானவர் இராஜ்ஜிய காரியத்தில் சித்தத்தை மூழ்குவித்தும், அக்கினி முதலிய தேவதைகளின் உபாசனையில் சித்தத்தை மூழ்குவித்தும், யாஞ்ஞவற்கிய முனிவரின் உபதேசத்தை மறந்து விட்டனர். அதன் பின்னர், அந்த யாஞ்ஞவற்கிய முனிவரும் உலகா வாயிலாய் ஜனகராஜாவின் விருத்தாந்தத்தைக் கேட்டும், தமது திவ்விய திருஷ்டியால் ஜனகராஜாவின் விருத்தாந்தத்தை உணர்ந்தும், ஜனகராஜாவின் புரியை நோக்கிச் சென்றனர். அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் தமது மனத்தின்கண்ணே இவ்வண்ணம் சங்கற்பித்தனர்:—ஜனகராஜாவானவன் எனது உபதேசத்தை மறந்தனனுதலின், ஜனகனது சமீபத்தே சென்று அவனோடு சிறிதுமாத்திரமும் சம்பாஷணை செய்யேன். அல்லது, ஜனகராஜாவோடு சம்பாஷணை செய்யினும், எந்த நிர்க்குணப பிரஹ்ம உபதேசத்தை முன்னர் யான் ஜனகன் பொருட்டுச் செய்தேனே, அந்த நிர்க்குணபிரஹ்ம உபதேசத்தை யான் மீண்டும் ஜனகன் பொருட்டுச் செய்வேன். ஆனல், என் வருகையின் பயனும் யோகக்ஷேமாதிகளைக் கூறேன் என, இவ்வண்ணம் மனத்தின்கண்ணே சங்கற்பித்துக்கொண்டு, அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவின் சபையின்கண்ணே சென்றனர். அச்சமயத்தே ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவர் சபையின்கண்ணே வந்ததைக் கண்டு சம்பூரணசபையோடுகூடவந்து எதிர்கொண்டழைத்தனர். அன்றியும், அர்க்கிய பாத்தியாதிகளால் யாஞ்ஞவற்கிய முனிவரைப் பூஜை செய்தனர். அன்றியும், யாஞ்ஞவற்கிய முனிவரை சிம்மாசனத்தின் மீது வீற்றிருக்குமாறு செய்தனர். அதன்பின்னர், இராஜ சபையின்கண்ணே இருந்த புத்திமான்களாய பிராஹ்மணர், க்ஷத்திரியர், வைசியர் முதலிய யாவரும், தமது புத்தியனுசாரமாய் நானுவகையாய விசித்திரக் கதைகளைக் கூறினர். அவருள், ஒரு அறிஞராய பிராஹ்மணர், வைசுவானர வித்தையின் பிரசங்கத்தை நடத்தினர். அந்த வைசுவானர வித்தையின்கண் ஜனகராஜாவானவர் அத்தியந்தம குசலர். இக்காரணத்தால் சபாவாசிகளாய சர்வப் பிராஹ்மணர்களின் பொருட்டும், அந்நிய க்ஷத்திரிய வைசியர்களின்பொருட்டும், அந்த ஜனகராஜாவானவர் இவ்வசனத்தைக் கூறினர். ஹே சம்பூரண சபாவாசிகளே! நானுவகையாய பலன்களோடு கூடியதும், பிரஹ்மலோகத்தைக் கொடுப்பதும் ஆய, வைசுவானர வித்தையை யான் நன்றாக உணர்ந்

•திருக்கின்றேனுதலின், இச்சபையின்கண் இராநின்ற எத்துணை அறிஞர்களாய பிராஹ்மணர்களுளரோ, க்ஷத்திரிய வைசியர்களுளரோ, அவர்களுள் யாவர் இவ் வைசுவானரி வித்தையின்கண் குசலராவரோ, அவர் என்னிடத்தே சங்கையின்றி வினவலாம். யான் அதற்கு விடையளிக்கின்றேன். அல்லது, யான் அவரிடத்தே வினவுகின்றேன்; அவர் எனது வினவிற்கு விடைதருக. ஹே குழந்தாய்! இவ்வகையாய வசனத்தை ஜனகராஜாவானவர் சர்வ வித்வான்களையும நோக்கிக் கூறியபோது, அந்தச் சபையின்கண் உள்ள வித்வான்களாய பிராஹ்மணர்களும், க்ஷத்திரிய வைசியர்களும், அவ்வைசுவானரி வித்தையின்கண் ஜனகராஜாவை நோக்கி வினவுதலின்கண்ணும், ஜனகராஜாவின் வினவிற்கு விடைதருதலின்கண் ணும் வல்லமையற்றவர்களாயினர்; மற்றே, சம்பூரண சபாவாசிகளும்மௌனத்தை யடைநதனர். அதன் பின்னர் சர்வப்பிராஹ்மணர்களும மௌனததை யடைந்த தைக்கண்டு, அநத யாஞ்ஞவறகிய முனிவர் ஜனகராஜாவோடு யான் சம்பாஷணை செய்யேன். அல்லது, ஜனகராஜாவுக்கு மீண்டும் அநதப பிரஹ்மத்தையே உப தேசஞ்செய்வேன் என்னும் பூர்வசங்கறபததைப பரித்தியாகஞ் செய்தனர். அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவிடத்தே நாலுவகையாய வினுக்களால அநத வைசுவானரி வித்தையை வினவினா. அந்த ஜனகராஜாவும் நாலுவகை யாய உத்தரங்களால் யாஞ்ஞவற்கிய முனிவர்பால் சமபூரண வைசுவானரி வித் தையைக் கூறினர். ஹே மைந்த! இவ்வண்ணம் ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற் கிய முனிவரிடத்தே சம்பூரண வைசுவானரிவிததையைக் கூறியபோது, அந்த யாஞ்ஞவறகிய முனிவர் ஜனகராஜாவின் புத்தியின் குசலத்தன்மையைக்கண்டு, ஜனகராஜாவின்மீது மிகவும் மகிழ்சசியை யடைந்தனர். ஜனகராஜாவை நோக்கி இங்ஙனம் கூறவும் தொடங்கினர்—ஹே ஜனகராஜாவே! எவ்வரம் வேண்டும் என்று நினக்கு இசசையிருககின்றதோ, அவவரத்தை நீ என்பால வேண்டிக் கொள்வாயாக. ஹே மைந்த! இவ்வகையாய வசனத்தை யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவை நோக்கிக் கூறியபோது, அநத ஜனகராஜாவானவா தமமைக்கிரு தார்த்தா என எண்ணினா. இவ்வகையாய விசாரத்தைத் தமது மனத்தின் கண்ணே அந்த ஜனகராஜாவானவா செய்து, யாஞ்ஞவற்கிய முனிவரிடததே காம வினுவடிவ வரத்தை வேண்டினர். (அநேக வினுக்களின் பெயர் காமவினுவாம்) இப்போது எவ்விசாரத்தால ஜனகராஜாவானவா காமவினுவடிவ வரத்தை வேண் டினரோ, அவ்விசாரம் நிரூபிககப்படும:—இநத மகாத்மாவாய யாஞ்ஞவறகிய முனி வர் கிருபையோடு பூர்வம் எனக்கு ஆன்மஞானத்தின் உபதேசத்தைச செய்தனர். அந்த யாஞ்ஞவற்கிய முனிவரின் உபதேசத்தை மந்த புத்தியையுடைய யான் மறந் தனன். முன்னர்சசெய்த ஒரு புண்ணிய கரும மகிமையால் அடைந்த சிந்தா மணியை மநத புத்தியையுடைய பாக்கியமற்றவன் பரித்தியாகஞ் செய்வன். அதுபோல, பாபான்மாவாகிய யான் யாஞ்ஞவற்கிய முனிவரின் உபதேசத்தை பரித்தியாகஞ்செய்தேன். ஆகையால், இது எனது மகா அபராதமாம். அவ்வப ராதத்தின் நிவிருத்தி உபாயம் துர்லபமாம. ஆனல், முன்னர் ஒரு புண்ணிய கருமமகிமையால் அவ்வபராதத்தின் நிவிருத்தியுபாயமாகிய இக்காமவினுவடிவ வரம் எனக்குக்கிடைத்தது. அல்லது, யானை, குதிரை, சுவர்ணம், மனைவி, மைந்தர்

என்பன முதலிய மனுஷ்ய லோகத்தின் தனமும் எனக்குக் கிடைத்திருக்கின்றது. கரும உபாசனை வடிவ தேவலோகத்தின் தனமும் எனக்குக் கிடைத்திருக்கின்றது. ஆதலின், அந்த மனுஷ்ய தனத்தின்கண்ணும் தெய்வதனத்தின் கண்ணும் எனக்கு இச்சையில்லை. ஆன்மஞானம் ஒன்றினிடத்தே எனக்கிச்சையிருந்தது. அந்த ஆன்மஞானமும் முன்னர் எனக்குக்கிடைத்தது. ஆனால், யான் எனது மூர்க்கத்தன்மையால் அவ்வான்ம ஞானத்தை மறந்துவிட்டனன். இப்போது எனது யாதோ ஒரு பூர்வ புண்ணிய கருமம் உதயமாகியிருக்கின்றது. அதன் மகிமையால் யாஞ்ஞவற்கிய முனிவர் என்மீது மகிழ்வுற்றுக் காமவினாவடிவ வரத்தை எனக்குக் கொடுத்தனர். ஆகையால், அவ்வரத்தால் மறந்த ஆன்ம ஞானத்தை மீண்டும் யாஞ்ஞவற்கிய ஆசிரியர்பானின்றும் சம்பாதித்துக்கொள்வேன். ஹே மைந்த! இவ்வண்ணம் விசாரித்து அந்த ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரின் பால் காமவினாவடிவ வரத்தையே வேண்டினர். அந்த யாஞ்ஞவற்கிய முனிவரும் இரண்டாவது முறை அந்த ஜனகராஜாவின் சமீபத்தே வந்தது, சுவர்ணம் முதலிய பதார்த்தங்களை அடையும் பொருட்டன்றும்; மற்றோ, ஜனகராஜாவிற்கு முன்னர் உபதேசித்த ஆன்ம ஞானத்தை மீண்டும் நினைப்பூட்டும் பொருட்டேயாம். இக்காரணத்தால் அந்த யாஞ்ஞவற்கிய முனிவரானவர் ஜனகராஜாவின் பொருட்டுக் காமவினாவடிவ வரத்தைக் கொடுத்தனர். ஹே மைந்த! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவின் பொருட்டுக் காமவினாவடிவ வரத்தைக்கொடுத்தபோது, அந்த ஜனகராஜாவானவர் மிகவும் மகிழ்ச்சியையடைந்தனர். தமது மனத்தின்கண்ணே இங்ஙனம் விசாரித்துச் சங்கையற்றவராய் வினாவத்தொடங்கினர். இப்போது அந்த ஜனகராஜாவின் விசாரத்தை நிரூபிப்பாம்:— இந்த யாஞ்ஞவற்கிய முனிவர் பொறுமையுடையவர் ஆதலின், சந்தனத்தைப் போன்று சீதள சுபாவமுடையவராயிருக்கின்றனர். ஆயினும், எங்ஙனம் சந்தனக்கட்டையை மிகவும் கடைதலால் அக்கினி உற்பன்னமாமோ, அங்ஙனம் எனது அநந்த முறை வினாக்களால் ஒரு கால் யாஞ்ஞவற்கிய முனிவருக்குக் கோபமுண்டாயின், அடிக்கடி வினாதலால் சாகல்லியப் பிராஹ்மணருக்குத் துர்க்கதி உண்டானதேபோல், எனக்கும் உண்டாமன்றோ என்னும் சங்கையால் யான் யாஞ்ஞவற்கியர்பால் வினவாமல் இருப்பதில்லை. எனக்கு இப்போது அச்சங்கை இன்றும். ஏனெனின், யான் யாஞ்ஞவற்கிய முனிவர்பால் காம வினாவடிவ வரத்தை வாங்கி இருக்கின்றனன். ஆதலின், மீண்டும் மீண்டும் அவ்வினாவையே செய்த போதினும், அசங்கதமாய் வினவிய போதினும், யாஞ்ஞவற்கிய முனிவர் என்மீது குரோதமுடையவர் ஆகார். ஹே மைந்த! இவ்வண்ணம் விசாரித்து அந்த ஜனகராஜாவானவர் தமது மனத்தின்கண்ணே யாதொரு சங்கையும் அற்றவராய் வினாவத் தொடங்கினர். ஆண்டு முதலில் தேகாதி சங்காதத்தினின்றும் விலக்ஷணமாகவும், சுயம்ஜோதி ரூபமாகவும், துவம்பதார்த்தரூப ஆன்மாவை நிரூபணஞ் செய்தல். ஜனகராஜா கூறல்:—ஹே ஆசிரியோத்தமரே! தினத்தின்கண் நனவவஸ்தையை யடைந்த ஸ்தூல சூக்ஷ்ம சங்காத (கூட்ட) ரூப புருஷன் எந்தச் சோதியால் இலங்குவன்? கருத்திதுவாம்:—சங்கா

தத்துள் இருக்கும் யாதாவதொரு ஜோதியால் இலங்குகின்றனனா? அல்லது, சங்காதத்தின் வேறாய வேறொரு ஸ்தானத்தின்கண் இராநின்ற ஜோதியால் இலங்குகின்றனனா? என்பதைத் தாங்கள் கிருபை செய்து என் பொருட்டுக் கூறல்வேண்டும். யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல் :— ஹே ஜனகராஜாவே! நனவவஸ்தையின்கண் இப்புருஷனுக்கு ஆதித்திய ஜோதியுளது. ஜனகராஜா கூறல் :— ஹே தேசிகோத்தமரே! ஜகத்தின் பிராண வடிவமாய ஆதித்தியரூப ஜோதியானது அஸ்த பாவத்தை அடைந்த காலத்தே இப்புருஷனுக்கு யாது ஜோதியாகும்? யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல் :— ஹே ஜனகராஜாவே! ஆதித்தியன் அஸ்தமான பின்னர் இப்புருஷனுக்குச் சந்திரனே ஜோதியாயுளன். ஜனகராஜா கூறல் :— ஹே தேசிகேந்திரரே! சந்திரனும் *அஸ்த பாவத்தை யடையுங் கால் இப்புருஷனுக்கு யாது ஜோதியாம்? யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல் :— ஹே ஜனகராஜாவே! சந்திரன் அஸ்தமான பின்னர் இப்புருஷனுக்கு அக்கினியே ஜோதியாகும். ஜனகராஜா கூறல் :— ஹே யாஞ்ஞவற்கிய முனிவரே! அக்கினியும் அஸ்த பாவத்தை அடையுங்கால் இப்புருஷனுக்கு யாது ஜோதியாகும்? யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல் :— ஹே ஜனகராஜாவே! அக்கினி அஸ்தமான பின்னர் இப்புருஷனுக்கு வாக்கே ஜோதியாகும். இப்போது ஆதித்தியன், சந்திரன், அக்கினி, வாக்கு என்னும் நான்கன்கண் வெளிப்படையாய் ஜோதிரூபத் தன்மை இருப்பதை நிரூபிப்பாம் :— ஹே ஜனகராஜாவே! ஆதித்தியன், சந்திரன், அக்கினி என்னும் மூசசோதியினுள் ஆதித்தியரூப ஜோதியாலேனும், சந்திரரூப ஜோதியாலேனும், அக்கினிரூப ஜோதியாலேனும் இப்புருஷன், பாம்பு, முள் முதலியவை அற்ற அநுகூல தேசத்தை நோக்கி ஆண்டு இருப்பன்; இல்லிற்குச் செல்வன்; க்ஷேத்திராதிகட்குச் செல்வன். க்ஷேத்திரத்தின்கண்ணே சென்று, இகலோக சுகசாதனங்களாய உழவு முதலிய கருமங்களைச் செய்வன். வீட்டின்கண் சென்று பரலோக சுகசாதனங்களாய தானாதி கருமங்களைச் செய்வன். இவை முதலாய அநேகவித வியவகாரங்களை இப்புருஷன் ஆதித்தியாதி ஜோதிகளின் பிரகாசங்களானே செய்வன். ஆதித்தியாதி ஜோதிகளின் பிரகாசமின்றி இருளின்கண் எவ்விவகார சித்தியும் உண்டாகாது. ஆகையால், ஆதித்தியனிடத்தும், சந்திரனிடத்தும், அக்கினியினிடத்தும் ஜோதித் தன்மை சம்பவிக்கும். இப்போது வாக்கின்கண் உள்ள ஜோதித் தன்மையை வெளிப்படையாய் நிரூபிப்பாம் :— ஹே ஜனகராஜாவே! எவ்விடத்தில் ஆதித்தியன், சந்திரன், அக்கினி என்னும் மூஞ்ஜோதிகளின் பிரகாசம் உண்டாகமாட்டாதோ, அவ்விடத்தில் அத்தியந்தம் கடுமையான இருள் உண்டாம். அவ்விடத்தில் தனது கரமும் காணப்பெறமாட்டாது. அத்தகைய இருளின்கண் ஆசனம்முதலிய சம்பூரணவியவகாரம் வாக்குருவ ஜோதியானே உண்டாம். கருத்திதுவாம் :— அந்தகாரத்தின்கண் இராநின்ற புருஷன் வேறொரு புருஷனை நோக்கி, இக்கிழக்குப்பக்கத்தில் மிகவும் இனிதாய இடமிருக்கின்றது. அவ்விடத்தே வந்து நீ உனது ஆசனத்தை விரித்துக்கொள் எனக் கூறுவானாயின், அதைக்கேட்டு அவ்விடத்தில் ஆசனாதி விவகாரங்களை மற்றவன் செய்வன். ஆகையால், ஆதித்தியன், சந்திரன், அக்கினி என்னும் மூன்றும் உலகரின் வரவு

* அஸ்தம் = மறைதல்.

போக்கு முதலியவற்றிற்குச் சாதகங்களாம். ஆகையால், ஆதித்தியாதி மூன்றும் ஜோதிவடிவமாம். அதுபோல, அந்தகாரத்தின்கண் வாக்கும், போக்குவரவு முதலிய விவகார சாதகமா மாகையால் வாக்கும் ஜோதிவடிவமாம். ஹே மைந்த! இவ்வண்ணம் நனவவஸ்தையின்கண் யாஞ்ஞவற்கிய முனிவர், ஆதித்தியன், சந்திரன், அக்கினி, வாக்கு என்னும் நான்கு வகையாய ஜோதிகளைக் கூறினர். அவற்றை அந்த ஜனகராஜாவானவர் அங்கீகாரஞ் செய்தனர். அதன் பின்னர், அந்த ஜனகராஜாவானவர் மீண்டும் யாஞ்ஞவற்கிய முனிவரை நோக்கிக் கேட்கத் தொடங்கினர். ஜனகராஜா கூறல்:—ஹே யாஞ்ஞவற்கிய முனிவரே! தாங்கள் நனவவஸ்தையின்கண் ஆதித்தியன், சந்திரன், அக்கினி, வாக்கு என்னும் நான்கு வகையாய ஜோதிகளைக் கூறினீர்கள். அந்நான்கிற்கும் கனவவஸ்தையின்கண் இலயங் காணப்படுகின்றது. அக்கனவவஸ்தையின்கண் இந்தச் சூக்ஷ்ம சங்காதரூபப் புருஷனுக்கு யாது ஜோதியாம். எஜ்ஜோதியால் கனவின்கண் எல்லா வியவகாரங்களும் நடவா நிற்குமோ அதனைக் கிருபையால் இயம்ப வேண்டும். ஹே யாஞ்ஞவற்கிய முனிவரே! கனவின்கண் ஆதித்தியாதி ஜோதிகள் இலயமாயினும், மனத்தின் இலயமுண்டாவதில்லை. ஆதலின், கனவின்கண் இப்புருஷனுக்கு மனமே ஜோதியாம் எனத் தாங்கள் கூறுவீர்களாயின், அது சம்பவியாது. ஏனெனின், நனவவஸ்தையின்கண் நேத்திர இந்திரிய மிருந்தபோதிலும், ஆதித்தியாதி ஜோதிகளின் பிரகாசமின்றி அந்த நேத்திரேந்திரியம் எப்பொருளையும் பிரகாசஞ் செய்யமாட்டாது. ஆகையால், கடாதி பதார்த்தங்களின் கவர்ச்சியின்கண் கட்புலனுக்குக் கதிரவன் முதலிய ஒளிகளின் காதலுண்டாம். அதுபோல, கடாதி பதார்த்தங்களின் கவர்ச்சியின்கண் மனத்திற்கும் கட்புலன் முதலியவற்றின் காதலுண்டாம். கட்புலன் முதலியவை இன்றிக் கருத்தானது எப்பதார்த்தத்தையுங் கவராது. கட்புலன் முதலானவை கனவின்கண் இலயத்தை யடைந்து விடுமாதலின், கருத்திற்கு ஜோதிவடிவத் தன்மை சம்பவியாது. அல்லது, மண்ணானது கடம் சராவம் முதலிய காரியங்கட்கு உபாதான காரணமாம். அதுபோல, கனவவஸ்தையில் மனமே, தேர் முதலிய பதார்த்தங்கட்கும், தேர் முதலியவற்றின் ஆகாரவிருத்தி ஞானங்கட்கும் உபாதான காரணமாம். இதனானே மனத்தினும் வேறாயே கனாப்பொருள்களை ஒளிர்விப்பது ஒன்று வேண்டும். கனவவஸ்தையின்கண் தேர் முதலிய பதார்த்தங்களின் உபாதான காரணத்தன்மையை அவித்தைக்கே அங்கீகரிப்பினும், நனவின் சம்ஸ்காரத்தோடுகூடிய மனத்தைக் காரணம் என அங்கீகரிப்பினும், எங்ஙனம் நனவின்கண் நேத்திராதி கரணங்கட்கு ஆதித்தியாதிப் பிரகாசங்களின் அபேக்ஷையுண்டாமோ, அங்ஙனம் கனவின்கண் மனரூப கரணத்திற்கும் ஒரு பிரகாசத்தின் அபேக்ஷை அவசியமுண்டாம். கனவின்கண் ஆதித்தியாதி ஜோதிகளும், நேத்திராதி இந்திரியங்களுமோ இன்றாம். கனவின்கண்ணும் நனவிற்போன்று, கமன ஆகமனாதி சர்வவியவகாரங்களும் உண்டாம். ஆதலின், கனவின்கண் மனம் இருந்தபோதிலும், எந்த ஜோதியினுடைய சகாயமின்றிக் கனாப்பொருள்களைக் கவரமாட்டாதோ, மனத்திற்கு அனுக்கிரகஞ் செய்யும் அத்தகைய ஜோதி கனவின்கண்ணே யாதாம்? யாஞ்ஞவற்கிய முனி

வர் கூறல்:—ஹே ஜனகராஜாவே! கனவின்கண் இப்புருஷனுக்கு ஆன்மாவே சுயம் ஜோதியாம். அவ்வான்மா மண்ணைப்போலக் கனப்பதார்த்தங்கட்கு உபாதான காரணரூபமாய மனத்தின் சாக்ஷியாம். அவ்வான்மாவை முன்னர் யான் "இந்த" என்னும் நாமத்தாலும் "இந்திரர்" என்னும் நாமத்தாலும் வர்ணனம் செய்துவந்தேன். ஹே ஜனகராஜாவே! நனவஸ்தையின்கண் இப்புருஷன் ஆதித்தியாதி ஜோதிகளின் பிரகாசங்களால் கமன ஆகமனாதி நானாவகையாய வியவகாரங்களைச்செய்வன். அதுபோல, கனவவஸ்தையின்கண் இப்புருஷன் ஆன்மரூப ஜோதியானே கமன ஆகமனாதி நானாவகையாய வியவகாரங்களைச் செய்வன். ஆகையால், கனவவஸ்தையின்கண் மனாதிகளின் சாக்ஷியாய ஆன்மாவே சுயஞ்ஜோதியாம்.

சங்கை:—ஹே பகவன்! நனவு, கனவு, துயில் என்னும் மூன்றவஸ்தைகளின் கண்ணும், சுயம்பிரகாச ஆன்மா இருக்கின்றது. ஆதலின், நனவவஸ்தையின்கண்ணும், ஆன்மாவினது ஜோதித்தன்மை சம்பவிக்கும். நனவவஸ்தையை விடுத்துச் சுருதியானது கனவவஸ்தையின்கண் ஆன்மாவை ஜோதிரூபமாய் யாதின் பொருட்டுக் கூறியதோ?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! நனவு, கனவு, துயில் என்னும் மூன்றவஸ்தையின் கண்ணும் ஆன்மாவின் சுயஞ்ஜோதித்தன்மை சமானமேயாம். ஆயினும், நனவவஸ்தையின்கண் ஆதித்தியன், சந்திரன், அக்கினி, வாக்கு என்னும் நான்கு ஜோதிகளுமிருக்கின்றன. ஆகையால, நனவவஸ்தையின்கண் ஆதித்தியாதி ஜோதிகளால் கமன ஆகமனாதி வியவகாரங்களுண்டாம். அல்லது, ஆன்மரூப ஜோதியால அந்தக் கமன ஆகமனாதி வியவகாரங்கள் உண்டாம் என்னு மிவ்வாறுய நிர்ணயம் அற்பபுத்தியுடையோருக்கு உண்டாகாது. கனவின்கண் ஆதித்தியாதி நான்கு ஜோதிகளின் இலயம் உண்டாம். ஆன்மா ஒன்றே உளது. ஆகையால், அற்பபுத்தியையுடைய புருஷர்கட்குச் சுயம் ஜோதிரூப ஆன்மாவின் நிச்சயத்தைச் செய்விக்கும பொருட்டுச் சுருதியானது கனவவஸ்தையின்கண்ணே ஆன்மாவைச் சுயஞ் ஜோதி எனக்கூறிது. இவ்வதிகாரியானவன், கனவவஸ்தையின் கண்ணே ஆன்மாவைச் சுயம் ஜோதிரூபமாய் நிசசயம் செய்யின், நனவவஸ்தையின்கண்ணும ஆன்மாவின் சுயம் ஜோதித்தன்மையை பறிநதுகொள்ளக் கூடும். இப்போது இபபொருளையே வெளிப்படையாக்கும் பொருட்டு, கனவவஸ்தையின்கண் ஆன்மாவைக் கனப்பதார்த்தங்களின் காத்தாவடிவமாய் நிரூபணம் செய்வாம்:—ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் சிருஷ்டி காலத்தின்கண் ஒரே மாயாவிசிஷ்ட பரமேஸ்வரர் சம்பூரண ஜகத்தையும் உண்டாக்குகின்றனரோ, அங்ஙனம் கனவவஸ்தையின்கண் ஒரே சுயம் ஜோதி ஆன்மா, ஆதித்தியன், சந்திரன், அக்கினி, வாக்கு என்னும் நான்கு ஜோதிரூபப் பிரகாசங்களையும், தேர், பரிமுதலிய பிரகாசிய பதார்த்தங்களையும் உண்டாக்கும். ஆதித்தியாதிப பிரகாசங்களால் அநுக்கிரகிக்கப்பட்ட நேத்திராதி கரணங்களை உற்பன்னஞ் செய்யும். அக்கனவின்கண் இச்சுயம் ஜோதியாய ஆன்மா ஆகாசாதி பஞ்சபூதங்களையும் பௌதிகமாய ஜகத்தையும் உண்டாக்கும். இறந்தகாலம், எதிர்காலம்,

நிகழ்காலம் என்னும் மூவகைக் காலங்களையு முண்டாக்கும். கிழக்கு, தெற்கு முதலிய பத்துத் திசைகளையு முண்டாக்கும். ஸ்தாவர, ஜங்கமரூப மேற்கூறிய ஜந்துக்களையு முண்டாக்கும். உப்புக்கடல் முதலாய சப்த சமுத்திரங்களையும் உண்டாக்கும். ஜம்புத்தீவு முதலாய சப்த தீவுகளையும் உண்டாக்கும். மகா மேரு பர்வதம் முதலாய சர்வப் பர்வதங்களையும் உண்டாக்கும். ஸ்ரீ கங்கை முத லாய எல்லா நதிகளையும் உண்டாக்கும். கீழுள்ள ஏழு லோகங்களையு முண்டாக் கும். மேலுள்ள ஏழு லோகங்களையு முண்டாக்கும். பதினன்கு லோகங்களின் அதிபதிகளையு முண்டாக்கும். இந்திரன், அக்கினி, யமன், * இராக்ஷன், வருணன், † பவனன், ‡ தனதன், மகேசானன், பிரஹ்மா $ சேஷன் என்னும் பத்துத்திக்குப் பாலர்களையும் உண்டாக்கும். பிரஹ்மா, விஷ்ணு, சிவன் என்பதாதி பரமேஸ் வராது லீலாவிக்கிரகங்களையும் உண்டாக்கும் நானுவகையாய பூமியின்கண்ணுள்ள அரசர்களையும் உண்டாக்கும். இவைமுதலாக எத்துணை ஸ்தூலசூக்ஷ்ம ஜகத்து ளவோ, பரோக்ஷ, அபரோக்ஷ ஜகத்துளவோ, அவை யாவற்றையும் கனவின்கண் இச்சுயம் ஜோதியாய ஆன்மா உற்பன்னஞ் செய்யும். ஹே ஜனகராஜாவே! இச் சீவன் அற்பஅறிவினனுதலின் சர்வஞ்ஞத்துவமுடைய பிரஹ்மத்தோடு அவனுக்கு அபேதம் சம்பவியாது. என்னு மிவ்வகையாய குதர்க்கத்தால் தூஷிக்கப்பட்ட சித்தமுடைய பேதவாதிகள், யான் பிரஹ்மமாயிருக்கின்றேன் என்னுஞ் சுருதியை அப்பிரமாணரூபமாய் அங்கீகரித்துளார். ஆயினும், கனவவஸ்தையின்கண் அந்தப் பேதவாதிகட்குப் பலாத்காரமாய்ச் சுருதியின் பிரமாணத்தன்மை சித்தமாகும். ஏனெனின், பிரஹ்மம் தனது மாயாசத்தியால் ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, இலயம் செய்வதேபோலக் கனவவஸ்தையின்கண் இசசுயஞ்ஜோதியாய ஆன்மாவும் தனது மாயாசத்தியால் ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, இலயங்களைச் செய்யும். ஆதலின், ஜகத்தின் உற்பத்தி,ஸ்திதி, இலயத்தின் காரணத்தன்மை எங்ஙனம் பிரஹ்மத்தின் கண்ணே உளதோ, அங்ஙனம் கனவின்கண் இச்சீவான்மாவிடத்தும் ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, இலயத்தின் காரணத்தன்மை உளது. இதனனே இச்சீவான்மா பிரஹ்மத்தினும் வேறன்றும்; மற்றே, அபின்னமாம். ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் ஓங்கி எரியாநின்ற பேரழலினின்றும் அக்கினிக்குச் சமானமான ரூப முடைய பொறிகள் உற்பன்னமாமோ, அங்ஙனம் கனவின்கண் இச்சுயஞ் ஜோதி யாய ஆன்மாவினின்றும் தனது சமானரூபமுடைய அநேக ஜீவர்கள் உண்டாவர். ஹே ஜனகராஜாவே! மாயாவிசிஷ்ட பரமேஸ்வரர் முதலில் சமஷ்டி சூக்ஷ்ம ஹிரண்ய கர்ப்பரூப மனத்தை உற்பன்னஞ் செய்வர். அவ்விரண்ய கர்ப்பரூப மனம், உற்பன்னமாகும் ஸ்தூல பூத பௌதிகப் பிரபஞ்சரூபக் கர்ப்பத்தோடு கூடியதாம். அத்தகைய ஹிரண்யகர்ப்பரூப மனத்தால் அப்பரமான்ம தேவர் நாமரூபவடிவ சம்பூரண ஸ்தூலசூக்ஷ்ம ஜகத்தை உற்பன்னஞ்செய்வர். ஹிரண்ய கர்ப்பரூப மனத்தினுற்பத்தியின் முன்னர் மாயாவிசிஷ்ட பரமான்மாவின்கண் இந்த ஜகத்தானது சமஸ்காரரூபமாயிருக்கும். அதுபோல, கனவின்க

* இராக்ஷன் = நிருதி.
† பவனன் = வாயு.
‡ தனதன் = குபேரன்.
$ சேஷன் = ஆதிசேஷன்.

ஜோதியாய ஆன்மாவும் ஒரு மனரூப சாதனத்தால் சர்வ ஜகத்தையுமுண்டாக்கும். ஹே ஜனகராஜாவே! உலகின்கண் ஒரே ஆகாசத்தில் கடாகாசம், மடாகாசம் என்னும் பேதம் பிரதீதியாகும். ஆனால், அப்பேதம் உண்மையாய் இன்றாம்; மற்றோ, கடரூப சூக்ஷ்ம உபாதியானும், மடரூப ஸ்தூல உபாதியானும் அப்பேதம் தோற்றாநிற்கும். அதுபோல, அத்விதீய பிரஹ்மத்தினின்றும் ஜீவர்களின் பேதம் பிரதீதியாகும். அந்தப் பேதமும் உண்மையாய் இன்றாம்; மற்றோ, ஸ்தூல சூக்ஷ்ம சரீரரூப உபாதியால் அப்பேதம் தோற்றும். ஹே ஜனக ராஜாவே! ஆகாசம் ஒன்றே கடரூப உபாதியின்கண்ணும், மடரூப உபாதியின்கண்ணும் ஒரேவடிவமா யிருக்கின்றது. ஆகாசத்தின்கண் சிறிது மாத்திரையும் விலக்ஷணத் தன்மையின்றாம். கடாகாசம், மடாகாசம் என்பன முதலியவாய்ப் பிரதீதியாகும் விலக்ஷணத்தன்மைகள் ஆகாசத்தின்கண் உண்டாகாதனவாய், கடமடாதி உபாதிகளையே ஆசிரயித்திருக்கும். அதுபோல, பிரஹ்மமும் ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களில் சமானரூபமாகவே நிலை பெற்றிருக்கும். பிரஹ்மத்தின்கண் சிறிது மாத்திரையும் விலக்ஷணத் தன்மையின்றாம். உலகர்கட்குத் தோற்றும் விலக்ஷணத்தன்மையானது அத்விதீய பிரஹ்மத்தின்கண் உண்டாகாததாய் எஞ்சியதாக ஸ்தூல சூக்ஷ்மரூப உபாதிகளையே ஆசிரயிக்கும். இது கூறியதால் ஆன்மாவிற்கு யாண்டும் அபேத நிரூபணஞ் செய்யப்பட்டதாயது. இப்போது உபாதிகளின் அபேதம் கூறும்பொருட்டு, முதலில் சூக்ஷ்ம உபாதியின் சொரூபத்தை நிரூபணஞ் செய்வாம்:—ஹே ஜனகராஜாவே! சமஷ்டி அஞ்ஞான விசிஷ்ட ஈச்வரருக்கு ஹிரண்ய கர்ப்பரூப சூத்திராத்மா சூக்ஷ்ம சரீரமாம். அதுபோல, வியஷ்டி அஞ்ஞான விசிஷ்ட ஜீவர்கட்கு மனமே சூக்ஷ்ம சரீரமாம். ஈண்டு மன சப்தத்தால் ஐந்து ஞானேந்திரியங்கள், ஐந்து கர்மேந்திரியங்கள், ஐந்து பிராணன்கள், மனம், புத்தி என்னும் பதினேழு தத்துவங்களைக் கவர்ந்துகொள்க. ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் சமஷ்டியாய மாயாவிசிஷ்ட ஈச்வரர் ஹிரண்ய கர்ப்பரூப சூத்திரத்தால் ஸ்தூலஜகத்துருவ படத்தைச்செய்வரோ, அங்ஙனம் கனவின்கண் இச்சீவான்மா மனரூப சூத்திரத்தால் ஜகத்துருவ படத்தைச் செய்யும். இப்போது வியஷ்டி சமஷ்டிகளின் அபேதத்தைக்கூறும்பொருட்டு முதலில் அவற்றின் சமான தர்மங்களைக் காண்பிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! ஓங்கி எரியாநின்ற பேரழலினின்றும் அநேகம் பொறிகள் உற்பன்னமாவதேபோல, சூத்ராத்மரூப ஹிரண்யகர்ப்பரிடத்தினின்றும் அநேக மனங்கள் உற்பன்னமாம். எங்ஙனம் ஓங்கி எரியாநின்ற பேரழலானது தாகத்தையும், பிரகாசத்தையுஞ் செய்யாநிற்குமோ, அங்ஙனம் அக்கினியினின்று முண்டாய பொறிகளும் தாகத்தையும் பிரகாசத்தையுஞ் செய்யும். இவ்வண்ணம் ஹிரண்யகர்ப்பரூப சூத்ராான்மா ஜகத்தின் உற்பத்தி,ஸ்திதி, இலயங்களைச் செய்வதேபோல, சொப்பனாவஸ்தையின்கண் சர்வதேகதாரி ஜீவர்களின் மனமும் ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, இலயங்களைச் செய்யும். ஓங்கி எரியாநின்ற அக்கினியின்கண்ணும், பொறிகளின்கண்ணும், தேயுரூபத்தன்மையும், சிவப்புருவத்தன்மையும் சமானமேயாம். அதுபோலச் சமஷ்டி சூக்ஷ்ம சூத்திராத்மாவின்கண்ணும், ஜீவர்களின் வியஷ்டி மனத்தின்கண்ணும் சூக்ஷ்ம ரூபத்தன்மை சமானமேயாம். இது கூறியதால் சமஷ்டி

சூக்ஷ்ம சூத்திரான்மாவின்கண்ணும், வியஷ்டி சூக்ஷ்ம மனத்தின்கண்ணும் சமான தர்மத்தன்மை காண்பிக்கப்பட்டது. இப்போது இரண்டின் அபேதத்தையும் காண்பிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் ஓங்கி எரியாநின்ற போழுதும் பொறிகளும்தேயுவடிவத்தால் சமானமேயாமாதலின் உண்மையாய் அவற்றிற்குப் பேதமின்றாமோ, மற்றோ,காஷ்டரூபஉபாதியால் அவற்றிற்குப் பேதமாமோ, அங்ஙனம் சமஷ்டி சூத்திரான்மாவின்கண்ணும், வியஷ்டி மனத்தின்கண்ணும் உண்மையாய்ப் பேதமின்றாம்; மற்றோ, சமஷ்டி ஸ்தூலவிராட் சரீரரூப உபாதியால் சூத்திரான்மாவின்கண் பேதமாம். வியஷ்டி ஸ்தூல சரீரரூப உபாதியால் மனத்தின்கண்ணே பேதமாம். இத்துணையால் சமஷ்டி வியஷ்டி உபாதிகளின் அபேதங் காண்பிக்கப்பட்டது. இப்போது சம்பூரண ஜடஜகத்தின்கண் மித்தியாத்தன்மையை யுணர்த்தும்பொருட்டு, முதலில் சம்பூரண ஜடஜகத்தின்கண் சைதன்னிய ஆன்மாவால் பிரகாசியமாந் தன்மையை நிரூபணஞ் செய்வாம்:—ஹே ஜனக ராஜாவே! எங்ஙனம் உலகின்கண்ணே சுவரானது நானாவகைபாய சித்திரங்கட்கு ஆதாரமாமோ, அங்ஙனம் சமஷ்டி சூக்ஷ்மரூப சூத்திரான்மா சமஷ்டி ஸ்தூலரூப சித்திரங்கட்கு ஆதாரமாம். இங்ஙனம் வியஷ்டி சூக்ஷ்ம மனவடிவ சுவரும், வியஷ்டி ஸ்தூல சரீரரூப சித்திரங்கட்கு ஆதாரமாம். ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் தீபமானது முதலில் சுவரை ஒளிர்வித்து அதன்வாயிலாய் அச்சித்திரங்களை யொளிர்விக்குமோ, அங்ஙனம் சமஷ்டி அஞ்ஞான உபஹித ஈஸ்வர சாக்ஷியானது, முதலில் சூத்ரான்மாவடிவ சுவரையே ஒளிர்வித்து, அதன்வாயிலாய்ச் சமஷ்டி ஸ்தூல விராட்டுருவ சித்திரங்களை ஒளிர்விக்கும். இவ்வண்ணம் வியஷ்டி அஞ்ஞான உபஹித ஜீவசாக்ஷியானது முதலில் வியஷ்டிசூக்ஷ்ம சரீரரூப சுவரை ஒளிர்வித்து, அந்தச் சூக்ஷ்ம மனவாயிலாய் வியஷ்டி ஸ்தூல சரீரரூபச் சித்திரங்களை ஒளிர்விக்கும். எங்ஙனம், சுவரும் சித்திரமும் விளக்கை ஒளிர்வியாதோ, அங்ஙனம் சமஷ்டி, வியஷ்டி, சூக்ஷ்ம ஸ்தூலரூப உபாதிகள் சாக்ஷியாய ஆன்மாவை ஒளிர்வியா. இத்துணையால் "அது நீயாயிருக்கின்றாய்" என்னும் சுருதியின் கண் உள்ள அதுவென்னும் பதத்தின் இலக்ஷியார்த்தமாய ஈஸ்வர சாக்ஷி, நீ என்னும் பதத்தின் இலக்ஷியார்த்தமாய ஜீவசாக்ஷி என்னும் இரண்டின் அபேதத் தகுதி காண்பிக்கப்பட்டது. இப்போது மனமிருப்பின் ஆன்மாவின்கண் உலகின் தோற்றமும், மனமில்லாவிடின் ஆன்மாவின்கண் உலகின் தோற்ற மின்மையும் ஆம் என்னு மிப்பொருளை உணர்த்தும்பொருட்டு, சமஷ்டியின்கண் மனத்தின் ஒடுக்கத்தையும், காரண அஞ்ஞானத்தின்கண் மனத்தின் ஒடுக்கத்தையும், அதிஷ்டானத்தின்கண் மனத்தின் ஒடுக்கத்தையும், * வியதிரேக ரூபமாய் நிரூபிப்பாம். அவற்றுள், முதலில் சமஷ்டியின்கண் மனத்தின் ஒடுக்கவடிவ வியதிரேகத்தைக் காண்பிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! காஷ்டங்களின் அபாவத்தை யடைந்த அக்கினி சாமான்ய தேயுவின்கண் இலயத்தையடையும். அதுபோல, அதிகாரியானவன் ஹிரண்யகர்ப்ப உபாசனையால் அத்தியாத்ம பரிச்சின்ன பாவத்தின் நிவிருத்தி வடிவ மோக்ஷத்தை அடைவன். அங்ஙனமே,

* வியதிரேகம்=எதிர்மறை.

ஹிரண்யகர்ப்ப பாவத்தின் அடைவு வடிவ அதிமோக்ஷத்தை அடைவன். அவ் வுபாசகர்களின் மனம் சூத்திரான்ம வடிவ ஹிரண்ய கர்ப்பரிடத்தே இலயமாம். அக்கால் அவ்வுபாசக புருஷரின் அத்தியாத்ம பரிச்சேதரூப சம்சார நிவிருத்தி உண்டாம். இப்போது காரண அஞ்ஞானத்தின்கண் மனத்தின் இலயரூப வியதிரேகத்தைக் காண்பிப்பாம் :—ஹே ஜனகராஜரவே ! சாம்பரால் மறைபட்ட அக்கினியானது தாகரூப காரியத்தையும், பிரகாசரூப காரியத்தையும் செய்யாது. சாம்பர் நீங்கிய பின்னர் அவ்வக்கினியே தாகரூப காரியத்தையும், பிரகாசரூப காரியத்தையும் செய்யும். அதுபோலச சுழுப்தி அவஸ்தையின்கண்ணும், மரண அவஸ்தையின்கண்ணும், ஜீவர்களின் மனரூப அக்கினியானது போகத்தைக் கொடுக்கும் கன்மவின்மை வடிவ பஸ்மத்தால் மறைபட்டு நிற்கும். இக்காரணத்தால், சுழுப்தி அவஸ்தையின்கண்ணும், மரண அவஸ்தையின்கண்ணும், ஜீவர்களின் மனம் ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, இலயரூப காரியத்தைச் செய்யாது. சுகதுக்கரூப பலத்தைக் கொடுக்கும் புண்ணியபாவரூப பிராரப்தகர்மத்தின் உற்பத்தி உண்டாங்கால், அம்மனமே நனக் கனவின்கண் ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, இலயரூப காரியத்தைச் செய்யும். இப்போது அதிஷ்டானத்தின்கண் மனத்தின் இலய வடிவ வியதிரேகத்தைக் காண்பிப்பாம் :—ஹே ஜனகராஜரவே ! காஷ்டங்கள் முழுவதையும பஸ்மஞ் செய்து நாசத்தை யடைநத அக்கினியானது, மீண்டு ஒருகாலும் உற்பன்னமாகமாட்டாது. காஷ்டங்களைக் கடைதலால் உண்டாகும் அக்கினியும் வேறதே ஆகும். முன்னர் நஷ்டமாய அக்கினி மீண்டும் உண்டாகாதாம். அதுபோல, சிரவணுதி சாதனங்களோடுகூடிய சுத்தமனமானது ஆன்ம சாக்ஷாத்காரரூப அக்கினியால் அஞ்ஞானத்தையும், அஞ்ஞானத்தின் காரியமாய ஜகத்தையும் தகிக்கும். அம்மனமும் அஞ்ஞானகாரியமா மாதலின், அஞ்ஞானரூப காரணமானது தகிக்கப்பட்ட பின்னர்த் தக்தமாகும். ஒருமுறை ஆன்ம ஞானத்தால் நாசத்தை யடைந்த மனமானது, மீண்டு ஒருகாலும் உற்பன்னம் ஆகமாட்டாதாதலின், அஞ்ஞானிகளைப்போல முக்தர்களுக்கு அடிக்கடி ஜன்மம் உண்டாகமாட்டாது. இத்துணையால் மனமானது அபாவமாயின், சம்சாரமும் அபாவமாம் என்னும் வியதிரேகங் காண்பிக்கப்பட்டது. இப்போது மனம் இருப்பின் சம்சாரம் இருக்கும் என்னும் அந்வயம் (உடன்பாடு) காண்பிக்கப்படும்:—ஹே ஜனகராஜரவே ! வெய்யிற்காலத்து இரவில் பிரகாசமற்ற உஷ்ணவடிவ தேயுவானது, காஷ்டாதி இந்தனங்க (விறகுக)ளின்றியே சந்தாபரூப காரியத்தை உண்டு பண்ணுவதே போல, கனவின்கண் மன விசிஷ்ட ஆன்மா தேசகாலாதி லௌகிக சாமக்கிரி இன்றியே, சூக்ஷ்ம மாய தேர் முதலிய பதார்த்தங்களை உண்டாக்கும். ஹே ஜனகராஜரவே ! குளிர்காலத்தில் அக்கினி காஷ்டரூப இந்தனங்களை ஆசிரயித்தே ஜீவர்களின் குளிர் நீக்க வடிவ காரியத்தைச் செய்யும். காஷ்டங்களின்றி அந்த அக்கினியானது குளிர் நிவிருத்தியைச் செய்யமாட்டாது. அதுபோல, நனவின்கண் இம்மன விசிஷ்ட ஆன்மா தேசகாலாதி லௌகிக சாதனங்களை ஆசிரயித்தே, ஸ்தூல பதார்த்தங்களை உண்டாக்கும். இப்போது, சொப்பன திருஷ்டாந்தத்தால் ஜாக்கிரத்தின்கண் மித்தியாத் தன்மையை உணர்த்தும்பொருட்டு, முதலில் நனக்கனக்களின் சமானத் தன்மையை நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜரவே ! கன

பின்கண் இம்மனமே ஸ்தூல சூக்ஷ்ம ஜகத்வடிவத்தை அடையும். ஆதலின், கனுப்பதார்த்த மெல்லாம் மனோ மாத்திரமாம். அதுபோல, நனவஸ்தையின்கண் ணும் இம்மனமே சர்வ ஜகத்வடிவத்தையும் அடையும். ஆகையால், நனுப் பதார்த்தமும் மனோமாத்திரமாம். கனவஸ்தையின்கண் மனம் தடைப்படின், துவை தப் பிரபஞ்சம் தோற்றுவதில்லை. அதுபோல, நனவஸ்தையின்கண்ணும் மனம் தடைப்படின், துவைதப் பிரபஞ்சம் தோற்றமாட்டாது. கனவஸ்தையின்கண் மனமே சத்துருவையும், மித்துருவையும், உதாசீனரையும் உற்பத்திசெய்து, சத் துருவினிடத்துத் துவேஷத்தையும், மித்துருவினிடத்து இராகத்தையும், உதா சீனரிடத்து உபேக்ஷா புத்தியையும் செய்யும். அதுபோல, நனவஸ்தையின்கண் ணும் இம்மனமே சத்துருவையும், மித்துருவையும், உதாசீனரையும் உண் டாக்கி, சத்துருவினிடத்தே துவேஷத்தையும், மித்துருவினிடத்தே இராகத் தையும், உதாசீனரிடத்து உபேக்ஷா புத்தியையும் செய்யும்.

சங்கை :—ஹே பகவன்! நனவின்கண் நீண்ட காலமாய் மிகுதியாய தேயத் தில் காஷ்டம் முதலிய நானுவகையாய சாமக்கிரிகளால் தேர்முதலிய பதார்த் தங்கள் உண்டாக்கப்படுகின்றன. கனவின்கண் காஷ்டாதி சாமக்கிரி இன்றியே தேர் முதலிய பதார்த்தங்களின் உற்பத்தி யுண்டாமாதலின், கனுப்பதார்த்தங் களைப்போல நனுப்பதார்த்தங்கள் பொய்யன்றாம்.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! தேர் முதலிய காரியங்களை உண்டாக்கு வதில் தேசம், காலம், காஷ்டம் முதலிய சாதன மாத்திரங்களின் அபேக்ஷையே யன்றி, சத்திய சாதனங்களின் அபேக்ஷை இன்றாம். ஆகையால், நனவின்கண் கற்பிதமாய தேச காலாதி சாதனங்களால் தேர் முதலிய பதார்த்தங்கள் உண்டா வதேபோல, கனவின்கண்ணும் கற்பித தேச காலாதி சாதனங்களால், தேர் முத லிய பதார்த்தங்கள் உண்டாம். நனவின்கண் ஜீவர்கட்குச் சில பதார்த்தங்கள் சுககாரணமாய்த் தோற்றும். சிலபதார்த்தங்கள் துக்ககாரணமாய்த் தோற்றும். அதுபோல, கனவின்கண்ணும் ஜீவர்கட்குச சில பதார்த்தங்கள் துக்ககாரண மாயும், சில பதார்த்தங்கள் சுககாரணமாயும் தோற்றும். ஆகையால், நனுப் பதார்த்தங்களும், கனுப் பதார்த்தங்களும் சமானமேயாம்.

சங்கை :—ஹே பகவன்! கனுப்பதார்த்தம் அற்பகாலபரியந்தமிருக்கும். நனுப்பதார்த்தம் நீண்டகாலபரியந்தம் இருக்குமு. ஆகையால், கனுப்பதார்த்தங் களினும் விலக்ஷணத்தன்மை நனுப்பதார்த்தங்களிடத்தே இருக்கின்றது.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! நனுப்பதார்த்தங்கள் நிலையானவை என நீ கூறுகின்றாயன்றோ, ஈண்டு நிலையாயிருத்தலென்னும் சப்தத்திற்கு யாது பொருள்? ஆண்டு எப்பதார்த்தம் ஒருகாலத்தும் வேற்றுருவத்தை யடைய மாட்டாதோ, அப்பதார்த்தம் நிலையாயிருத்தல் என்னும் சப்தத்தின் பொருளா? அல்லது, நியமமாய் எப்பதார்த்தம் காரியத்தை உற்பத்திசெய்யுமோ, அப்பதார்த் தம் நிலையாயிருத்தல் என்னும் சப்தத்தின் பொருளா? அவற்றுள், முதற்பக்ஷமோ சம்பவியாது. ஏனெனின், ஆன்மாவின் வேறாய எத்துணை ஜடபதார்த்தங்கள்

உளவோ, அவை கணந்தோறும் வேற்றுருவத்தை அடையுமாதலின், வேற்றுருவத்தையடையாமை வடிவ நிலையாயிருத்தற்றன்மை நனுப்பதார்த்தங்களிடத்தே சம்பவியாது. அங்ஙனம் இரண்டாவது பக்ஷமும் சம்பவியாது. ஏனெனின், எப்பதார்த்தம் கனவின்கண் ஜீவர்கட்குச் சுகத்தையடைவிக்கின்றதோ, அப்பதார்த்தமே நனவின்கண் துக்கத்தையடைவிக்கின்றது. எப்பதார்த்தம் கனவின்கண் துக்கத்தையடைவிக்கின்றதோ, அப்பதார்த்தமே நனவின்கண் சுகத்தையடைவிக்கின்றது. இங்ஙனம் நனவின்கண் எப்பதார்த்தம் சுகத்தையடைவிக்கின்றதோ, அப்பதார்த்தமே கனவின்கண் துக்கத்தையடைவிக்கின்றது. எப்பதார்த்தம் நனவின்கண் துக்கத்தையடைவிக்கின்றதோ, அப்பதார்த்தமே கனவின்கண் சுகத்தையடைவிக்கின்றது. ஆகையால், எப்பதார்த்தமும் நியமமாய் ஒருகாரியத்தை உண்டாக்கமாட்டாது. இது கூறியதால் ஜாக்கிர அவஸ்தையின்கண் சொப்பன பதார்த்தங்களினிடத்தே விபரீத காரிய காரணத்தன்மை காண்பிக்கப்பட்டது. அங்ஙனமே, சொப்பனவஸ்தையின்கண் ஜாக்கிர பதார்த்தங்களினிடத்தே விபரீத காரிய காரணத்தன்மை காண்பிக்கப்பட்டது. இப்போது ஜாக்கிர அவஸ்தையின்கண்ணே ஜாக்கிர பதார்த்தங்களினிடத்தே விபரீத காரிய காரணத் தன்மையை நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! சொப்பனத்தின்கண் எந்தப்பிரிய பதார்த்தம் சுககாரணமாமோ, அந்தப்பிரிய பதார்த்தமே பிரிந்துபோங்காலத்துத் துக்க காரணமாகும். அதுபோல ஜாக்கிர அவஸ்தையின்கண்ணும், மனைவி, மைந்தர், தனம் முதலிய பதார்த்தங்கள் சுககாரணங்களாம். அவை பிரிந்து போங் காலத்தே துக்ககாரணங்களாம். நியமமாய் எப்பதார்த்தத்தினிடத்தும் சுக காரணத் தன்மையேனும், துக்ககாரணத் தன்மையேனும் இன்றாம். ஆகையால், சொப்பன பதார்த்தங்களினும் விலக்ஷணத்தன்மை சிறிதுமாத்திரையும் ஜாக்கிர பதார்த்தங்களினிடத்தின்றாம்.

சங்கை :—ஹே பகவன்! சொப்பனப் பதார்த்தங்கட்குக் காரணம் யாதோ, அதனினின்றும் ஜாக்கிர பதார்த்தங்களின் காரணம் விலக்ஷணமாம். ஆகையால், ஜாக்கிர பதார்த்தங்களின் இடத்தே சொப்பன பதார்த்தங்களின் சமானத் தன்மை சம்பவியாதன்றோ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! ஜாக்கிர அவஸ்தையின்கண் ஜீவர்களின் ஸ்தூல சரீரம் சுக்கில சோணிதத்தால் உற்பன்னமாய்த் தோற்றும். அதுபோல, சொப்பன அவஸ்தையின்கண்ணும் ஸ்தூலசரீரம் சுக்கில சோணிதத்தால் உற்பன்னமாய்த் தோற்றும். சொப்பன அவஸ்தையின் சுக்கில சோணிதம் அசத்தியமாய் இருப்பதுபோல, ஜாக்கிர அவஸ்தையின் சுக்கில சோணிதமும் அசத்தியமேயாம். ஜாக்கிர அவஸ்தையின்கண்ணே தந்தை, தாய், மைந்தர், தமயன் என்பன முதலிய அநேகவகைப்பதார்த்தங்கள் இருக்கின்றன. அதுபோல, சொப்பனவஸ்தையின்கண்ணும் தந்தை, தாய், மைந்தர், தமயன் என்பனமுதலிய அநேக வகைப் பதார்த்தங்கள் இருக்கின்றன. ஆகையால், ஜாக்கிரத்திற்கும் சொப்பனத்திற்கும் எவ்வகையானும் விலக்ஷணத்தன்மை சம்பவியாது. ஆதலின், ஹே ஜனகராஜாவே! ஜாக்கிர அவஸ்தையின்கண்ணும் சொப்பன அவஸ்தையின்கண்ணும் எத்

துலை ஸ்தூல சூக்ஷும பதார்த்தங்கள் உளவோ, அவை யாவற்றிற்கும் மனமே காரணமாம். இச்சீவன் ஈஸ்வரனினும் வேறும்; இவ்வீஸ்வரன் ஜீவனினும் வேறும் என்னும் ஜீவேஸ்வர பேதமும் மனோகற்பனையேயாம். இந்த ஜீவேஸ்வர பேதத்தின் நிச்சயத்தால் அஞ்ஞானிகள் அடிக்கடி ஜனன மரணத்தை யடைகின்றார்கள். ஆண்டுச்சுருதி "ம்ருத்யோ: ஸ ம்ருத்யுமாப்னோதி ய இஹ நாநேவ பச்யதி" (இ-ள்) எப்புருஷன் அத்விதீய பிரஹ்மத்தின்கண் நானாவடிவத்தைக் காண்கின்றனனோ, அந்தப் பேதவாதியாகிய புருஷன் அநந்தமுறை ஜனனமரணத்தை யடைவன். ஹே ஜனகராஜாவே! இம்மனம் கேவலம் ஜகத்மாத்திரத்திற்குக் காரண மன்றும்; மற்றோ, ஜீவர்களின் பந்தத்திற்கும் மோக்ஷத்திற்கும் இம்மனமே காரணமாம். ஆண்டு, ஆன்மாவை மறைக்கும் ஆவரண சத்திரூப அஞ்ஞானத்தைத் தன்னிடத்தே அங்கீகரித்த அசுத்த மனமானது ஜீவர்களின் பந்த காரணமாம். பேததரிசனரூப விக்ஷேப சத்தியாய அஞ்ஞானத்தைத் தன்னிடத்தே உடன்பட்டதாய் இம்மனமானது அத்தியாத்ம, அதிதெய்வ, அதிபூதம் என்னும் மூவகையாய துக்கங்களின் காரணமாம். சுருதியானது கூறிய ஆன்மாவின் சொப்பிரகாச ஆநந்த ஸ்வரூபத்தைக் குருசாஸ்திரப் பிரசாதத்தால் அறிந்த சுத்தமனமானது ஜீவர்களின் மோக்ஷகாரணமாம். ஏனெனின், மனத்திற்கும் மனத்தால் உண்டாக்கிய பிரபஞ்சததிற்கும், சாக்ஷிரூப சுத்த ஆன்மாவின்கண், பந்தம், மோக்ஷம், பேததரிசனம் என்னும் மூன்றும் சம்பவியா; மற்றோ, பந்தம், மோக்ஷம் முதலிய சம்பூரண ஜகத்தையும் மனமே உண்டாக்கியது. ஆதலின், மனத்தின்கண்ணே பந்த மோக்ஷாதிகள் உள. இப்போது, இப்பொருளையே வெளிப்படையாய் நிரூபணஞ் செய்வாம்:—ஹே ஜனகராஜாவே! உலகின்கண் அத்தியந்தம் சஞ்சலத்தோடு கூடிய குரங்கானது நானாவகையாய சேஷ்டையால் தனக்குத்தானே மாணாந்த துக்கத்தைத் தேடிக்கொள்ளும். அங்ஙனம், அத்தியந்த சஞ்சலத்தோடு கூடிய மனமும் விஷய வாசனையால் தனக்குத்தானே சம்சாரதுக்கத்தைத் தேடிக்கொள்ளும். ஹே ஜனகராஜாவே! ஆழ்ந்த நீரின்கண்ணே இருக்கும் மீனத்திற்குச் சிறிதுமாத்திரமும் பயமின்றும். ஆனால், அந்த மீனம் தூண்டியிற்கோர்த்த மாமிசத்தைப் பக்ஷிக்கும்பொருட்டு, அந்த ஆழ்ந்த ஜலத்தைவிட்டு வெளியில் வருமாயின், அம்மீனம் பிராணாந்தகதுக்கத்தை அடையும். அதுபோல, சொப்பிரகாச ஆநந்த ஸ்வரூப ஆன்மாவின்கண் இராநின்ற இம்மனமானது சிறிதுமாத்திரையும் துக்கத்தை யடையாது. இம்மனம் விஷய போகத்தின்பொருட்டு, ஆநந்த சொரூப ஆன்மாவை விடுத்து வெளியே வருமாயின், நானாவகையாய துக்கங்களை அடையும். ஹே ஜனகராஜாவே! பத்துக்கயிறுகளால் பந்திக்கப்பட்ட அத்தியந்தம் சஞ்சலமாய மற்கடமானது, பத்துத்திசைகளிலும் சுழன்றுகொண்டு பரமதுக்கத்தை யடையும். அதுபோல, வாக்கு முதலிய பத்து இந்திரியவடிவ கயிறுகளால் கட்டப்பட்ட இம்மனரூப மற்கடமும், விஷயங்களின் பக்கத்தே ஓடிப் பரம துக்கத்தை யடையும். ஹே ஜனகராஜாவே! அத்தியந்தம் தூர ஆகாசத்தின்கண் இராநின்ற புறாவிற்குச் சிறிதுமாத்திரமும் பயமின்றும். ஆனால், அக் கபோதம் பிருதிவியின்

கண் கபோதனியாய பெண் புறாவைக்கண்டு இச்சையால் குருடுபட்டதாய் ஆகாசத்தைவிட்டுப் பூமிக்கண் வரும். அப்பூமியின்கண் அக் கபோதம் நானாவகையாய துக்கத்தையடையும். அதுபோல, சிதாகாசத்தின்கண்ணே இராநின்ற மனமானது, சிறிதுமாத்திரையும் துக்கத்தை யடையமாட்டாது. அம்மனமானது பாகிய சப்தப் பரிசாதி விஷயங்களைக் கண்டு, இச்சையாற் குருடுபட்டதாய் அந்தச் சிதாகாசத்தைப் பரித்தியாகஞ்செய்து, அக்கால் பாகிய விஷயங்களின் பக்கத்தே வரும்; வரின், அம்மனம் அநேகம் வகையாய துக்கங்களை யடையும். ஹே ஜனகராஜாவே! கயிற்றாற் கட்டப்பட்ட பசுவானது, பராதீனத்தன்மையால் மேலும் மேலும் துக்கத்தைக் கொடுக்கப்பட்ட இடத்தையே அடையும். அதுபோல, புண்ணிய பாவரூப கயிற்றாற்கட்டப்பட்ட இக்காம்த்தோடுகூடிய மனமும், மேலும் மேலும் துக்கத்தைக் கொடுக்கப்பட்ட விஷயரூப பூமியை அடையும். ஹே ஜனகராஜாவே! மிருத்தியுவானது சர்வ லோகத்தின்கண்ணும் சஞ்சரிக்கின்றது. ஆனால், அது சஞ்சரிப்பதின் காரணத்தை ஒருவரும் அறியார். அதுபோல, மனமும் எப்போதும் விஷயங்களின் பக்கத்தே யடையும். ஆனால், அது செல்வதின் காரணத்தை எவருமறியார். ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் மூடபாலகனானவன் வீணாகவே நானாவகையாய சேஷ்டைகளைச் செய்வனோ, அங்ஙனம் இம்மனமும் வீணாகவே நானாவகையாய சேஷ்டைகளைச் செய்யும். கட்டுப்பட்ட பாதத்தையுடையவனும், தேரின்கண் அத்தியந்தம் பிரீதியுடையவனுமாகிய ஒரு தேராளி அத்தேரின்கண் நைந்த கயிற்றால் கட்டப்பட்ட அத்தியந்தம் துஷ்டக் குதிரைகள் பூட்டப்பட்டிருப்பின், குதிரைகளோடுகூட, குழியின்கண்ணே விழுந்து அழிவை யடைவன். அதுபோல, மனவடிவ நைந்த கயிற்றால் கட்டப்பட்ட பத்து இந்திரியங்களாகிய துஷ்டக் குதிரைகள் பூட்டப்பட்ட இச்சங்காதரூப தேரின்கண் இராநின்ற இச்சீவான்மா அடிக்கடி சம்சாரரூப குழியின்கண் விழும். ஹே ஜனகராஜாவே! மூடபாலகனானவன் முதலில் தன் முகத்தின்கண் நானாவகையாய *விக்கிரியையைச் செய்வானேயாயின் பின்னர் எதிரிலிராநின்ற சுத்தமாய கண்ணாடியின்கண் நானாவகையாய விக்கிரியையைக் காண்பன். ஆனால், அந்த நானாவகையாய விக்கிரியை கண்ணாடியின்கண் உண்மையாய் இன்றாம; மற்றோ, பாலகனுடைய முகத்தின்கண்ணே யுளது. மயக்கத்தால் அப்பாலகனுக்குத் தர்ப்பணத்தின்கண் விக்கிரியை பிரதீதியாகின்றது. அதுபோல, இம்மனமும் சம்சார சம்பந்தியாய அநேகம்வகை விக்கிரியைகளைச்செய்யும். தனது விக்கிரியைகளைச் சமீபத்திலிராநின்ற சொப்பிரகாச ஆன்மாவில் காணும். ஆனால், உண்மையாய் அவை மனத்தின்கண்ணே இருக்குமன்றி ஆன்மாவின்கண் இரா. பிராந்தியினாலே மனத்தின்கண் உள்ள அவை ஆன்மாவின்கண்ணே தோற்றும்.

சங்கை :—ஹே பகவன்! ஜடமாய மனத்தின்கண் நானாவகையாய விக்கிரியைகளின் காரணத் தன்மை சம்பவியாதன்றோ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! புளிப்பு ரசத்தையுடைய புளியம்பழம் முதலியவற்றைச் சமீபத்திற் காணின், புருஷர்கள் முகத்தில் நீர் உண்டாம். அங்ஙனமே அவர் மனத்தையும் கலக்கும். அதுபோல, சொப்பிரகாச சைதன்னிய

*விக்கிரியை = விபரீதச்செய்கை.

ஆன்மாவும் தனது சந்நிதி மாத்திரத்தால் ஜடமனத்தை நானாவகையாய விக்கிரியை களின்கண் முயல்விக்கும்.

சங்கை :—ஹே பகவன்! அசங்க ஆன்மாவின்கண் மனக்கலக்கத்தின் காரணத்தன்மை எங்ஙனம் சமபவிக்கும?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! அசங்க ஆன்மாவின்கண் மனக்கலக்கத்தின் காரணத்தன்மை சமபவியாதாயினும், அசிந்திய சக்தியாகிய அஞ்ஞானத்தால் அசங்க ஆன்மாவின்கண்ணும் மனககலககததின் காரணத்தன்மை சம்பவிக்கும். ஹே ஜனகராஜாவே! எங்ஙனம கனவின்கண்ணே இவ்வாநந்தசொரூப ஆன்மா ஜீவர்களின் மனஙகளை உறபன்னஞ் செய்யுமோ, அங்ஙனம் எம்மனத்தோடு கூடி இவ்வான்மா கனவை யடையுமோ, அம்மனத்தையும் இவ்வான்மாவே உண்டாக்கும்.

சங்கை :—ஹே பகவன்! கனவின்கண் எமமனத்தால் ஆன்மா அநேக மனங்களை உண்டாககுமோ, அந்த முககியமாய மனத்தையும வேறொரு மனத்தால் உண்டாக்குவதாய் அங்கீகரிகக வேண்டிவரும. வரவே, அனவஸ்தா தோஷத்தின பிராப்தியன்றோ உணடாம்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! மனத்தால் மனம் உண்டாவதாய் உடன்படின் அனவஸ்தா தோஷத்தின் பிராப்தி உண்டாம். ஆனல், மனத்தால் மனத்தின் உறபததி உடன்பாடின்றும மறறோ, உலகின்கண் பீஜங்கள் நஷ்டமானதைக் கண்டு, "பிருது" என்னும அரசா பிருதிவியைப பிரேரிபபித்தனர். அவ்வரசரின் பிரேரணையால பிருதிவியானது பீஜங்களை உண்டாககிறது. ஆண்டு, பீஜங்களைக் குறித்துப பீஜங்கடகுக் காரணததன்மை இன்றும். மற்றோ, எந்தப் பிருதிவியானது பீஜங்களைத் தன்னிடத்தே ஒழுக்கி வைத்திருந்ததோ, அந்தப் பிருதிவிக்கே பீஜங்களைக் குறிததுக காரணத்தன்மை கூடும. அதுபோல, மனத்தின் உறபத்தியின்கண் மனததிறகுக காரணத்தன்மை இன்றும; மற்றோ, மூலாஞ்ஞானத்தோடுகூடிய ஆன்மாவே மனததின் காரணமாம. அந்த மூலாஞ்ஞானம் அனுதியாம். ஆகையால, தன் உறபததியின்கண் அந்நிய அஞ்ஞானத்தின் அபேகைஷ உண்டாகமாட்டாது. ஹே ஜனகராஜாவே! மேகம் மின்னல் முதலியவை அற்ற அத்தியநதம் நிர்மலமாகிய ஆகாசமானது, தனது அசிந்திய சக்தியால் மேகம் மின்னல் முதலியவறறின் உறபத்தி, ஸ்திதி, இலய காரணமாம். மேகாதிகளோடுகூடிய ஆகாசம மேகாதிகளின் காரணமாகாது. அதுபோல, அஞ்ஞானத்தோடுகூடிய இவ்வான்மா மனுதி ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, இலய காரணமாம். மனுதி பிரபஞசத்தோடுகூடிய ஆன்மா மனுதி பிரபஞ்சத்தின் காரணமாகாது.

சங்கை :—ஹே பகவன்! அஞ்ஞானத்தால் இவ்வான்மா எங்ஙனம் விபரீத பாவத்தை அடையும்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! ஒரு தரித்திரியாய பிக்ஷுவானவன் யாதாவது ஒரு மாயை முதலிய நிமித்தங்கொண்டு, தனது பிக்ஷுத்தன்மையின் அஞ்ஞானத்தால் இராஜத்தன்மையை அடைவதுபோலும், ஒரு இராஜாவான வன் தனது இராஜத்தன்மையின் அஞ்ஞானத்தால் பிக்ஷுத்தன்மையை அடைவது போலும், பிரஹ்ம ரூபமான இந்த ஆன்மாவும் தனது உண்மை வடிவத்தின் அஞ்ஞானத்தால் ஸ்தூல சூக்ஷ்மரூப ஜகத்வடிவத்தை அடையும்.

சங்கை :—ஹே பகவன்! அஞ்ஞான வயத்தால் ஆன்மாவிற்கு உலகவடிவ அடைவு சம்பவிக்குமாயினும், அஞ்ஞான வயத்தால் ஆன்மாவின்கண் ஜனன மரணங்கள் சம்பவியா.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! இப்போது ஜனன மரணமற்ற இப் புருஷன் தனது சொரூப அஞ்ஞானத்தால் கனவின்கண் ஜனன மரணத்தை அடையாநிற்பன். அதுபோல, நனவின்கண்ணும் உண்மையாய் ஜனன மரண மற்ற இவ்வாநந்தசொரூப ஆன்மா தனது ஸ்வரூப அஞ்ஞானததால் ஜனன மரணத்தை அடையும். ஆகையால், தனது ஸ்வரூப அஞ்ஞானமே ஜனன மரண காரணமாம். ஹே ஜனகராஜாவே! நனவின்கண் கடமுதலிய ஜட பதார்த்தங்களைக் காண்போனானவன் கடாதி திருசிய பதார்த்தங்களால பிரகாசிக்கப்படான். அதுபோல, கனவின்கண் தேர் முதலிய திருசிய பதார்த்தங்களின் ஆகாரத்தை அடைந்த மனமானது, சொபபனத்தைக காணும் சாக்ஷியாய ஆன்மாவைப் பிரகாசிப்பிக்கமாட்டாது; மறறே, சாக்ஷியாய ஆன்மா அமமனத்தைப பிரகாசிப்பிக்கும்.

சங்கை :—ஹே பகவன்! சுருதியானது ஆன்மாவை ஜோதி என எங்ஙனங் கூறியிருக்கின்றதோ, அங்ஙனம் மனத்தையும் ஜோதி எனக் கூறியிருக்கின்றது. ஆகையால், ஆன்மாவைப்போல மனமும் ஸ்வப்பிரகாசமாம்.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! மனம் ஆன்மாவை ஒளிர்விக்குமாதலின், ஜோதியாம் என்னும் கருத்தால் சுருதியானது மனத்தை ஜோதி எனக் கூறியதன்றும்; மற்றே, ஆன்மாவினும் வேறாய கடபடாதி பதார்த்தங்களை ஆன்மா மனத்தின் விருத்திவாயிலாய் ஒளிர்விக்கும். ஆகையால், கடாதி பாகிய பதார்த்தங்களை ஒளிர்விப்பதின்கண் மனம் ஆன்மாவின் சககாரியாம் என்னும் கருத்தால் சுருதியானது மனத்தை ஜோதி எனக் கூறியது. உலகின்கண் கடபடாதி பதார்த்தங்களின் ஞானத்தில் சககாரியாய நேத்திர இந்திரியத்தை ஜோதி எனக் கூறுவர். அதுபோல, கடாதி பதார்த்தங்களின் ஆகாரமாய விருத்திகட்கு உபாதான காரண மனத்தைச் சுருதி ஜோதி எனக் கூறியது. ஹே ஜனகராஜாவே! இவ்வான்மா பாகிய ஸ்தூல சூக்ஷ்ம பதார்த்தங்களை நேத்திராதி இந்திரியங்களால் அறியும். நேத்திராதி இந்திரியங்களின் விஷயமல்லாத பரோக்ஷ பதார்த்தங்களையும், நேத்திராதி இந்திரியங்களையும் இவ்வான்மா மனத்தால் உணரும். அங்ஙனம் மனத்தையும், மனத்தின் விருத்திகளையும், இவ்வான்மா அந்நிய எச்சாதனங்களாலும் ஒளிர்வியாது; மற்றே, தனது ஸ்வப்பிரகாச ரூபத்

தால் இவ்வான்மா மனத்தை ஒளிர்விக்கும். ஹே ஜனகராஜாவே! ஆன்மாவை ஆசிரயித்து ஆன்மாவை விஷயஞ்செய்யும், அவ்வியாகிருதரூப அஞ்ஞானம் மனத்தின் காரணமாம். அக்காரணமாய அஞ்ஞானத்தையும் இந்த ஸ்வப்பிரகாசரூப ஆன்மாவே விளக்குமாயின், அஞ்ஞானத்தின் காரியமாய மனத்தை ஆன்மா விளக்கும் என்பதன்கண் யாது கூறவேண்டியிருக்கின்றது. ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் இந்த ஸ்வயம்ஜோதியாகிய ஆன்மா அஞ்ஞானத்தோடுகூடிய மனத்தை ஒளிர்விக்குமோ, அங்ஙனம் நேத்திராதி இந்திரியங்களையும், *உடுக்கணங்களையும், மணிகளையும், இரத்தினங்களையும், சூரியனையும, சந்திரனையும், அக்கினியையும் மற்றுமுள்ள பிரகாசக பதார்த்தங்களையும், இந்த ஸ்வப்பிரகாச ஆன்மாவே பிரகாசிப்பிக்கும். சைதன்னிய ஆன்மாவாலன்றி ஜடபதார்த்தங்கள் சித்தியாக மாட்டா. இத்துணை கூறியதால், ஆன்மாவின்கண் சுருதியால் துணியப்பட்ட சர்வ ஜகத்தின் பிரகாசகத்தன்மை நிருபிக்கப்பட்டது. இப்போது யுத்திகளால் ஆன்மாவின்கண் சர்வ ஜகத்தின் பிரகாசகத்தன்மையை நிருபிப்பாம்:—இது கடம், இது படம் என்பனமுதலிய ஞானங்களின் எத்துணை ஞானத்தினும் வேறாய நேத்திராதி காரணங்கள் உளவோ, கடபடாதி விஷயவடிவ காரணங்கள் உளவோ, அவற்றின்கண் எல்லா நூலாசிரியருமம ஜடத்தன்மையை அங்கீகரித்துளார். பிரகஸ்பதியின் சிஷ்யராய சார்வாக நாத்திக மாத்திரம் ஞானத்தின் காரணங்களில் ஜடத்தன்மையை அங்கீகரித்திலர். ஏனெனின், அவர்கள் மதத்தில் சரீராகார பரிணமத்தை அடைந்த பிருதிவி, ஜலம், தேயு, வாயு என்னும் நான்கு பூதங்களின்கண்ணே சைதன்னியத் தன்மையுளது. அந்தச சார்வாகர்களின் மதத்தைச் செய்த கருமங்கட்குப போகமின்றி அழிவும், செய்யாத கருமங்கட்குப் பலபோகமும் ஆம் என்னும் செய்ததறகின்றி செய்யாததற் கொன்றும் வடிவ தோஷத்தால் பாலகருமம கண்டித்துவிடுவா. இக்காரணத்தால் அவர் தம்மதம் ஈண்டு கண்டிக்கப்படவில்லை. ஆகையால், இப்பொருள் துணியப்பெறும். இது கடம், இது படம் என்பன முதலிய ஞானத்தின் வேறாய எத்துணைப் பதார்த்தங்களுளவோ, அவையாவும் ஜடங்களாம்; அவற்றின் ஞானமே பிரகாசரூபமாம். இப்போது, இப்பொருளின்கண்ணே இவ்விசாரஞ் செய்யத் தக்கதாம்:—அதாவது இது கடம், இது படம் என்பன முதலிய ஞானங்கள் சைதன்னிய ரூபமாதலின் ஸ்வப்பிரகாசமா? அல்லது, அந்தக்கரணத்தின் விருத்திரூப மாதலின் பரப்பிரகாசமா? என்பதே. இப்போது முதலாவதாய ஸ்வபபிரகாச பக்ஷத்தின்கண் அந்த ஞானங்களுக்குப் பிரஹ்மான்மரூபத் தன்மை சித்திக்கும் பொருட்டு, அவற்றின் பேதத்தைக் கண்டனம் செய்வாம். இது கடம், இது படம் என்பன முதலிய ஸ்வப்பிரகாச ஞானங்களின் பேதம எதனுற சித்திக்கும்? அந்தப் பேதத்தானே அந்தப் பேதத்தின் சித்தியுண்டாமா? அல்லது, அந்தப் பேதத்தின் ஆசிரயமாய ஞானத்தால் அந்தப் பேதத்தின் சித்தியுண்டாமா? அல்லது, மற்றொரு ஞானத்தால் அந்த ஞானத்தின் சித்தியுண்டாமா? அவற்றுள், அந்தப் பேதத்தால் அந்தப் பேதத்தின் சித்தி ஆம் என்னும் முதற பக்ஷத்தை வாதி அங்கீகரிக்கின், அது சம்பவி

* உடுக்கணம்=நக்ஷத்திரக்கூட்டம்.

யாது. ஏனெனின், ஒரு மூடனானவன் என் முகத்தில் நாவில்லை எனக் கூறுவானாயின், அவ்வசனம் வியாகாத தோஷத்தோடு கூடியதாம். ஏனெனின், நாவின்றி இவ்வசனத்தைக் கூறமுடியாதன்றோ? இதுபோல, ஜடமாய பேதம் தனது சித்தியைச் செய்யும் என்னும் வாதியின் வசனமும், வியாகாத தோஷத்தோடு கூடியதாம். ஏனெனின், ஜட பதார்த்தத்தால் தன் சித்தியும, மற்ற பதார்த்தத்தின் சித்தியும் உண்டாவதை யாண்டும் கண்டிலேம். அநதப் பேதத்தின் ஆசிரயமாய ஞானத்தால் அதன்கண் இருக்கும் பேதத்தின் சித்தி உண்டாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின் அதுவும சம்பவியாது. ஏனெனின், அபாவத்தின் பிரதியோகி அநுயோகி ஞானங்களாலன்றி, அபாவததின் ஞானம உண்டாகமாட்டாது. கடத்தின் அபாவத்தை உடையது பூதலம் என்னும்தோற்றத்தின்கண், கடாபாவத்தின் பிரதியோகி கடமாம். அநுயோகி பூதலமாம, ஆண்டு, கடரூபப் பிரதியோகியின் ஞானத்தினுன் அன்றியும், பூதலரூப அநுயோகியின் ஞானத்தினுன் அன்றியும், கடாபாவததின ஞானம் உண்டாகமாட்டாது. அதுபோல, ஞானங்களின் பரஸ்பர பேதமும அபாவரூபமாம். ஆகையால், அநதப பேதத்தின் பிரதியோகி அநுயோகிரூப ஞானங்களின்றி, அந்தப்பேதத்தின் ஞானம் உண்டாகமாட்டாது. அநதப் பிரதியோகி அநுயோகிரூப ஞானம ஸ்வபபிரகாசமாம். ஆகையால், அந்த ஞானங்களை விஷயஞ் செய்யும ஞானம சம்பவியாது. அந்த ஞானங்களை விஷயஞ் செய்வதற்காக மற்றொரு ஞானத்தை அங்கீகாரஞ் செய்யின், கடாதிகளைப்போல அந்த ஞானங்களிடததே ஸ்வபபிரகாசத தன்மை இராது; மற்றோ, அந்த ஞானங்கள் பரப்பிரகாசங்களாம். அலலது, ஸ்வபபிரகாச ஞானங்களில் இராநின்ற பேதம மற்றொரு ஞானத்தால் சித்தமாம் என்னும் மூன்றாவது பக்ஷத்தை வாதி அங்கீகரிககின், அவன்பா விது கேட்டல் வேண்டும். அந்த ஸ்வப்பிரகாச ஞானங்களின் பேததததை நீ மறறொரு ஞானத்தால் கவர்கின்றனையா? அல்லது, கவரா தொழிகின்றனையா என்பதே. அவன முதற பக்ஷத்தை அங்கீகரிபபின், அவன்பால் இது கேட்க வேண்டும. பேதம இருக்கின்றது என்னும் ஞானத்தால் அநதப் பேதததை விஷயஞ செய்கின்றனையா? அல்லது, இநத ஞானங்களின் பேதம் இருக்கின்றது என்னும ஞானத்தால் அநதப் பேதததினை விஷயஞ் செய்கின்றனையா? என. அவறறுள், முதற பக்ஷத்தை வாதி அங்கீகரிககின் அது சம்பவியாது. ஏனெனின், பேதம் இருக்கின்றது என்னும் ஞானம் பேதமாத்திரத்தை விஷயஞ்செய்கின்றது; ஞானங்களின் பேதத்தைவிஷயஞ் செய்வதின்றும். ஆகையால், பேதமிருக்கின்றது என்னும் ஞானத்தால ஸ்வப்பிரகாச ஞானங்களின் பேதம் சித்தமாகமாட்டாது; பேதம் இருக்கின்றது என்னும் ஞானத்தால் ஆகாசத்திற்கு ஆகாசத்தினின்றும் பேதம் சித்தமாகமாட்டாது. அதுபோல, பேதம் இருக்கின்றது என்னும் ஞானத்தால் ஸ்வப்பிரகாச ஞானங்களின் பேதம் சித்தமாகமாட்டாது. இந்த ஞானங்களின் பேதம் இருக்கின்றது என்னும் ஞானத்தால் ஸ்வப்பிரகாச ஞானங்களின் பேதத்தை விஷயஞ் செய்கின்றனன் என்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், கடம் படத்தினின்றும் வேறாம். அங்ஙனமே, படம் கடத்தினின்றும் வேறாம் என்னும் ஞானம், கடபடங்களையும, அவற்

றின் பேதத்தையும் விஷயம் செய்யும். இக்காரணத்தால் கடபடங்கள் பரப்பிரகாசங்களாம். அதுபோலவே, இதுகடம் என்னும் ஞானம இது படம் என்னும் ஞானத்தினும் வேறும் என்னும் ஞானம் அந்த ஞானங்களையும, அவற்றின் பேதத்தையும் விஷயஞ் செய்யும். ஆகையால், கடாதிகளைப்போல அந்த ஞானங்களும் பரப்பிரகாசமாதல் வேண்டும். அல்லது, ஸ்வப்பிரகாச ஞானங்களின் பேதம் எந்த ஞானங்களாலும் சித்தமாகமாட்டாது என்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகாரம் செய்யின், அதுவும் சம்பவியாது. ஏனெனின், மனுஷ்யகோடு, மலடிமைந்தன் என்பன எந்தப பிரமாண ஜன்னிய ஞானத்திற்கும் விஷயமன்றாம்; ஆதலின், அத்தியந்தம் அசத்தியமாம். அதுபோல, பிரமாண ஜன்னிய ஞானத்திற்கு அவிஷயமாதலின், ஸ்வப்பிரகாச ஞானங்களின் பேதமும் அத்தியந்தம அசத்தியமாம். பிரமாண ஜன்னிய ஞானத்தின் அவிஷயமென உடன்பட்டு ஞானபேதத்தைச் சத்தியமாயங்கீகரிக்கின், பிரமாண ஜன்னிய ஞானத்திற்கு அவிஷயமாய மனுஷ்யகோடும மலடிமைந்தனும் சத்தியமாதல் வேண்டும். அல்லது, ஞானங்களின் பேதத்தைக் கவரும வேறு ஞானம் யாதோ அது பரப்பிரகாசமா? அல்லது ஸ்வப்பிரகாசமா? அவற்றுள், வாதியானவன் முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் அது பொருந்தாது. ஏனெனின், எந்த ஞானமானது ஞானங்களின் பேதத்தைக் கவராநின்றதோ, அந்த ஞானம பரப்பிரகாசமாதலின், அந்த ஞானத்திற்கு வேறொரு ஞானத்தால ஒளிர்வு கூடல் வேண்டும். இரண்டாவதற்கு மூன்றாவதால் ஒளிர்வாம, மூன்றாவதற்கு நான்காவதால் ஒளிர்வாம். என ஞானங்களின் தாரையை உடன்படுவதில அனவஸ்தா தோஷத்தினடைவுண்டாம். ஞானங்களின் பேதத்தைக் கவரும அந்த வேறு ஞானம ஸ்வப்பிரகாசமாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதி அங்கீகரிப்பின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், பிரதியோகி அநுயோகி ஞானத்தாலன்றி, அபாவத்தின் ஞானம் உண்டாகாது என்னும் விஷயத்தை முன்னரே கூறிவந்தேன். ஆகையால், எந்த ஸ்வப்பிரகாச ஞானம் ஸ்வப்பிரகாச ஞானங்களின் பேதத்தைக் கவருமோ, அந்த ஸ்வப்பிரகாச ஞானம் அப்பேதத்தின் பிரதியோகி அநுயோகிரூப ஸ்வப்பிரகாச ஞானங்களையும அவசியம் கவரும் என்னும் இவ்வார்த்தை சம்பவியாது. ஏனெனின், சூரியன், சந்திரன் என்னும இருவரிடத்தும பிரகாசகத்தன்மை சமானமாம். ஆகையால், சூரியன், சந்திரனைப் பிரகாசஞ் செய்வதின்றாம். சந்திரன், சூரியனைப் பிரகாசஞ் செய்வதின்றாம். அதுபோல, பேதத்திற்கு ஆசிரயரூப ஞானமும் ஸ்வப்பிரகாசரூபமாம். அந்தப் பேதத்தைக் கவரும் ஞானமும் ஸ்வப்பிரகாசரூபமாம். ஆகையால், ஸ்வப்பிரகாசரூப ஞானத்தின் கவர்ச்சி, ஸ்வப்பிரகாசரூப வேறு ஞானத்தால் சம்பவியாது. பிரகாசரூப ஞானத்திற்கும் வேறு பிரகாசரூப ஞானத்தால் பிரகாசம் உடன்படின், சூரியன், சந்திரன் என்பவருக்கும் பரஸ்பரம் பிரகாசியப்பிரகாசக பாவம் உண்டாதல் வேண்டும். அல்லது, எந்தவாதியானவன் ஸ்வப்பிரகாச ஞானத்தால ஸ்வப்பிரகாச ஞானத்தின் பிரகாசத்தை அங்கீகாரஞ் செய்வனோ, அவ்வாதியானவன் அந்த ஞானங்கட்குப் பரஸ்பரம் குறைவு மிகுதிவடிவ பேதத்தையும அவசியம் அங்கீகரிப்பன். ஆண்டு, பிரகாசிய

ஞானத்தின்கண் குறைவுத் தன்மையை உடன்பட வேண்டிவரும் பிரகாசக ஞானத்தின்கண் மிகுதித் தன்மையை அங்கீகரிக்க வேண்டிவரும். ஆகையால், எங்ஙனம் இது கடம், இது படம் என்பன முதலிய ஞானங்களால் பிரகாசியக் கடபடாதி பதார்த்தங்களினிடத்தே ஸ்வப்பிரகாசத் தன்மை இன்றாமோ, அங்ஙனமே ஞானத்தால் பிரகாசிய ஞானங்களிடத்தும் ஸ்வப்பிரகாசத் தன்மை இராதாதலின், ஞானத்தை ஸ்வப்பிரகாசமென உடன்பட்டு, அந்த ஞானத்திற்கு மற்றொரு ஞானத்தால் பிரகாசம் உடன்படல் வேண்டுமென் வாதி கூறுதல் எங்ஙனம் கூடும்? என் தாய் மலடி என ஒருவன் கூறும் வசனம்போல வியாகாதமே தோஷத்தை அடையுமன்றோ? அல்லது, எவ்வாதியானவன் ஸ்வப்பிரகாச ஞானங்களிடத்தே குறைவு மிகுதித தன்மை வடிவ பேதத்தை அங்கீகரியானாயினும், அந்த ஞானங்கட்குப் பரஸ்பரம் பிரகாசியப் பிரகாசக பாவம் சித்தியாது. ஏனெனின், சமான ஜாதியையுடைய பதார்த்தங்கட்குப் பரஸ்பரம் பிரகாசியப்பிரகாசக பாவத்தை உலகத்தின்கண் ணே யாண்டும் கண்டதின்றும். தீபம் தன்னினும் விஜாதீயமாய கடாதி பதார்த்தங்களை ஒளிர்விக்கும். ஆனால், பிரகாசரூபத்தால் சமானஜாதியையுடைய மின்மினி முதலியவற்றை அத்தீபம் பிரகாசியாது. அதுபோல, ஸ்வப்பிரகாசரூபத்தால் சமான இயற்கையையுடைய ஞானங்கட்கும் பரஸ்பரம் பிரகாசியப் பிரகாசகபாவம் சம்பவியாது. ஆகையால், எவ்வகையானும் ஞானங்களின் பேதம துணியபபெறமாட்டாதெனத் துணியப்பெற்றது. இப்போது பேதரகித ஞானங்கட்கு ஆனந்தரூபத்தன்மையைக் கூறும்பொருட்டு, முதலில் ஞானத்தின்கண் சுகரூபத்தன்மையை நிரூபிபபாம் :— அந்தப் பேதமற்ற ஞானம் சுகரூபமாம். ஏனெனின், "யொவெஹுஊ தத‌ஸ்ஹுவ௦" (இ-ள்.) எப்பதார்த்தம் பேதமற்றதாமோ, அப்பதார்த்தமே சுகரூபமாம் என்னும் சுருதியின்கண் கூறிய பேத சூன்யத்தன்மைவடிவ சுகத்தின் இலக்கணம் பேத சூன்ய ஞானங்களினிடத்தும் பொருநதும், ஆகையால, பேதமற்ற ஞானம் சுகரூபமாம்.

சங்கை :—சுருதிகூறிய பேத சூன்யத்தன்மைரூப சுகத்தின் இலக்கணம் சுகத்தின்கண் யாண்டு பொருந்தும்?

சமாதானம் :—துயிலின்கண்ணும், சமாதியின்கண்ணும் பேத தரிசனமின்மையின், இச்சீவன் துக்கத்தை யனுபவியான்; மற்றோ, ஆண்டுச் சுகத்தையே அனுபவிப்பன்.

சங்கை :—துயிலின்கண்ணும் சமாதியின்கண்ணும் இராநின்ற சுகத்தின்கண் பேத சூன்யத்தன்மைரூப சுகத்தின இலக்கணம் சம்பவிக்குமாயினும், அச்சுகம் ஸ்வப்பிரகாச ஞானசொரூபம என்னும் அர்தத்தின்கண் யாது பிரமாணம்?

சமாதானம் :—ஸ்வப்பிரகாசரூபமாய் முன்னர் வர்ணித்த ஞானமானது சுகரூபமன்றாமாயின், துயிலின்கண்ணும், சமாதியின்கண்ணும் துக்கத்தினனுபவம் உண்டாகாததேபோல, ஜீவர்கட்குச் சுகத்தின் அனுபவமும் உண்டாதல் கூடாது. சர்வ ஜீவர்கட்கும் துயிலின்கண்ணும், சமாதியின்கண்ணும் சுகத்தினனுபவம் உண்டாகின்றது. ஆகையால், ஸ்வப்பிரகாச ஞானமே சுகரூபமாம். இக்காரணத்

தானே சர்வ ஜீவர்கட்கும், துயிலின் ஸ்வப்பிரகாச ஞானரூப ஆநந்தத்தின்கண் இச்சையுண்டாம்.

சங்கை :— துயிலின்கண் சர்வஜீவர்களுக்கும் இச்சை உண்டாவது சுக அடையின் பொருட்டு அன்றும்; மற்றோ, சர்வ துக்கங்களின் அபாவத்தை அடையும் பொருட்டு, துயிலின்கண் இச்சையுண்டாகின்றது. ஆதலின், துயிலின்கண் ஸ்வப்பிரகாச ஞானத்தோடு சுகத்திற்கு அபேதத்தை அங்கீகரித்தல் பயனற்றதே யாகுமன்றோ?

சமாதானம் :— துயிலின்கண் ஸ்வபபிரகாச ஞானம் சுகரூபமாயிருப்பதே போலத் துக்க அபாவரூபமுமாம். ஸ்வபபிரகாச ஞானத்திலும் வேறாய்த் துக்கா பாவம் இன்றும். ஏனெனின், துயிலினகண் இராநின்ற சாவ துக்கங்களின் அபாவம் ஸ்வப்பிரகாச ஞானததினும் வேறாகுமாயின், அந்தத் துக்காபாவத்தின் சித்தியே உண்டாகமாட்டாது. எவ்வாதியானவன் துயிலின்கண் துக்காபாவத்தை ஸ்வப்பிரகாச ஞானத்தினும் வேறாய் உடன்படடு, அநதத் துக்காபாவத்தின் பிரகாசத்தை அங்கீகாரஞ்செய்வனே, அவவாதிபால இது கேட்டல் வேண்டும்:— துயிலின்கண் அத்துக்காபாவத்தைச சூரியாதிகள் பிரகாசஞ்செய்யுமா? அல்லது, ஸ்வப்பிரகாச ஞானம் பிரகாசஞ்செய்யுமா? என. அவற்றுள், முதறபக்ஷத்தை அவ்வாதியங்கீகரிக்கின் அது சம்பவியாது. ஏனெனின், துயிலின்கண் சர்வகாரியப் பிரபஞ்சத்தின்இலயம் உண்டாம. ஆகையால, சூரியாதிபிரகாசங்கட்கும் துயிலின்கண் இலயம் உண்டாம். துயிலின்கண் ஸ்வப்பிரகாச ஞானத்தால் துக்காபாவம் பிரகாசமாமென்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதி அங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெனின், துயிலின்கண் இராநின்ற துககாபாவத்தை வாதியானவன் ஸ்வப்பிரகாச ஞானத்தினும் அத்தியந்தம் பின்னமாய் அங்கீகரிப்பனுதலின், அந்த அத்தியநதம் பின்னமாய துக்காபாவத்தை ஸ்வபபிரகாச ஞானம் பிரகாசியாது. கருத்திதுவாம் :— சைதன்னியரூப ஸ்வபபிரகாச ஞானமானது இரண்டு பதார்த்தங்களைப் பிரகாசிபபிக்கும. ஒன்றோ, தனது சொரூபத்தைபாம். மற்றொன்றோ, தன்னோடு தாதாத்மிய பாவத்தையடைநத பதார்ததத்தையாம். அத்தியந்தம் பின்னமாய துக்காபாவத்தை ஸ்வபபிரகாச ஞானம் பிரகாசியாது. ஆகையால், துயிலின்கண் துக்காபாவத்தின் சித்தியின்பொருடடு, வாதியானவன் அந்தத்துக்காபாவத்தை ஸ்வப்பிரகாச ஞானரூபமென உடன்படலவேண்டும். இப்போது சத்கியாதி வாதியின் மதத்தை அங்கீகரிதது, துக்காபாவத்தின்கண் ஸ்வப்பிரகாச ஞானரூபத்தன்மையைச் சித்தஞ்செய்வாம. சத்கியாதி வாதியின் மதத்தின்கண் கடத்திலிராநின்ற படாதி சர்வபதார்த்தங்களின் அபாவம் அதிகரணரூப கடத்தினும் பின்னமன்றும்; மற்றோ கடரூபமேயாம். அதுபோல, துயிலின்கண் அதிஷ்டானரூப சைதன்னியத்திலிராநின்ற துக்காபாவமும் அதிஷ்டானரூப சைதன்னியத்தினும் பின்னமன்றும்; மற்றோ, அநதத் துக்காபாவமும் அதிஷ்டான சைதன்னியரூபமாம்.

சங்கை :—சத்கியாதி வாதியைப்போல அபாவத்தை அதிகரண ரூபமாய் உடன்படின், சம்பூரண ஜகத்திற்கும் அபாவ ரூபத்தன்மையின் அடைவுண்டாமன்றோ ?

சமாதானம் :—அபாவத்தை அதிகரணரூபமென உடன்படுவதில், சம்பூரண ஜகத்திற்கும் அபாவ ரூபத்தன்மை உண்டாமாயின் உண்டாகுக. இதன்கண் அத்துவைதவாதிகளாய எங்கட்குச் சிறிது மாத்திரையும் ஹானியுண்டாகாது; மாறாய் அத்விதீய ஆன்மாவின் திட நிச்சயமுண்டாம்.

சங்கை :—சத்கியாதிவாதி மதத்தை அங்கீகரித்துத் துக்காபாவத்தை அதிஷ்டான சைதன்னிய ரூபமென அங்கீகாரஞ்செய்யின், உமது சித்தாந்தத்தின் ஹானியன்றோ? ஆம்.

சமாதானம்:—சர்வ அமசத்தானும் பரமதத்தை அங்கீகாரஞ்செய்யின், எமது சித்தாந்தத்தின் ஹானி உண்டாம். ஆனால், சர்வ அம்சத்தானும் பரமதத்தை யாம் அங்கீகரிப்பதின்றாம். மற்றோ, பரமதத்தில் எத்துணை அம்சம் சுருதிப் பொருளில் அனுகூலமாமோ, அத்துணை அம்சத்தை யாம் அங்கீகரிக்கின்றோம். ஆகையால், எமது சித்தாந்தத்தின் ஹானி உண்டாகாது. கேவலம் தயிரைக் குடிப்பின் ஜுரத்தினுற்பத்தி யுண்டாமாயினும், சர்க்கரையோடு கூடிய தயிரைக் குடிப்பின் ஜுரத்தினுற்பத்தி யுண்டாகாது. அதுபோல, சுருதிக்கு முரணாய பரமதத்தை அங்கீகாரஞ்செய்யின், சித்தாந்தத்தின் ஹானியுண்டாமாயினும், சுருதி அர்த்தத்திற்கு அநுகூலமாய யுக்திரூப சர்க்கரையோடுகூடிய பரமதரூபத்தயிரைக் கவர்வதில சிறிது மாத்திரையும் சித்தாந்தத்திற்கு ஹானி உண்டாகமாட்டாது. ஆகையால், சத்கியாதி வாதி எநதக் கடத்தைப படாதி சர்வபதார்த்தங்களின் அபாவ ரூபமாய் அங்கீகரிப்பனோ, அக்கடத்தையே அத்துவைதவாதியாகிய யாம் பிரஹ்மரூபமாய் உடன்படுவேமே. கருத்திதுவாம் :—அஸ்தி, (இருக்கின்றது.) பாதி, (விளங்குகின்றது) பிரியம், (ஆநந்தம்) நாமம், (பெயர்) ரூபம், (வடிவம்) என்னும் ஐந்து அம்சங்களால் சர்வஜகத்தும் வியாபிக்கப்பட்டிருக்கின்றது. அவற்றுள், கடத்தின் நாமரூபமென்னுமிரண்டம்சம் கற்பிதமாம். ஆதலின், அதிஷ்டான சைதன்னியத்தினும் பின்னமன்றாம்; அஸ்தி, பாதி, பிரியம் என்னும் மூன்று அம்சங்களும் பிரஹ்ம ரூபமாம். இவ்வார்த்தை அந்நிய சாஸ்திரத்தின் கண்ணும் கூறப்பட்டுளது :—

“ அஸ்திபாதிப்ரியம் ரூபம் நாமசேத்யம்சபஞ்சகம் ।
ஆத்யம் த்ரயம் ப்ரஹ்மரூபம் ஜகத்ரூபம் ததோத்வயம்”

“ உண்டிலகலோடின்ப முருவமே-பண்டை நாமமென்றங்கிச பஞ்சகம்
உண்டு மூன்று முன்னெண்பிரமவுரு-மண்டிரண்டு முலகவடிவமே.”

(இ-ள்.) சம்பூர்ண ஜகத்தானது அஸ்தி, பாதி, பிரியம், நாமம், ரூபம் என்னும் ஐந்தம்சங்களோடு கூடியிருக்கின்றது. அவற்றுள், அஸ்தி, பாதி, பிரியம் என்னும் முதல் மூன்றம்சங்களோ பிரஹ்மரூபமாம். நாமம் ரூபம் என்னும் இரண்டம்சங்களோ உலகுருவமாம். அல்லது, அதிகரணரூப பாவபதார்த்தத்தி

னின்றும் அபாவமானது வேருகுமாயின், அவ்வபாவத்தின்கண் பதார்த்தத் தன்மையே சம்பவியாது. ஏனெனின், அஸ்தி என்னும் பதத்தோடு தாதாத்மிய சம்பந்தப்பட்ட வஸ்துவை அறிஞர் பதார்த்தமென்பர். கடமிருக்கின்றது, படமிருக்கின்றது என்னுமிடத்தே அஸ்தி என்னும் சப்தத்திற்குக் கடபடரூப அர்த்தத்தோடு தாதாத்மிய சம்பந்தமாம். அந்த அஸ்தி சப்தத்தின் தாதாத்மியம் அபாவத்தோடு சம்பவியாது. கருத்திதுவாம் :—உலகின்கண்ணும், நூலின்கண்ணும் எத்துணை விருக்ஷாதி சப்தங்களுளவோ, அவற்றிற்கும் சத்தியத்தினும் வேருய அபாவரூப அர்த்தம் உண்டாகமாட்டாதாயின், அஸ்தி சப்தத்திற்குச் சத்தியத்தினும் வேருய அபாவரூப அர்த்தம் எங்ஙனமாகும்? இக்காரணத்தானும் சம்பூரண பதார்த்தங்களும் சத்தியங்களாம்.

சங்கை :—பிரதி சங்கியா நிரோதம், அப்பிரதி சங்கியா நிரோதம், ஆகாசம் என்னும் மூன்றையும் நாஸ்திகர் அசத்தியமென அங்கீகரித்துளார். அவற்றுள், புத்தி பூர்வக பதார்த்த நாசத்தைப் பிரதி சங்கியா நிரோதமென்பர். அபுத்தி பூர்வக (அறியாத) பதார்த்த நாசத்தை அப்பிரதி சங்கியா நிரோதம் என்பர். ஆவரணத்தின் அபாவத்தை ஆகாசம் என்பர். ஆகையால், நாஸ்திகர்களின் மதத்தில் மொழிந்த மூன்றும் அபாவரூபமாய் இருத்தலின், கடம்முதலிய சர்வ பதார்த்தங்கட்கும் அசத்தியரூபத் தன்மை ஏன் ஆகமாட்டாது?

சமாதானம் :—ஆகாசத்தின்கண் அபாவரூபத் தன்மை சித்தமாகுமாயின், ஆகாச திருஷ்டாந்தத்தால் கடாதி பதார்த்தங்களினிடத்தே அசத்தியரூபத் தன்மை சித்தமாம். ஆனல், ஆகாசத்தின்கண்ணே, அபாவரூபத் தன்மை சம்பவியாது; ஏனெனின், ஆகாசம் இருக்கின்றது என்னும் தோற்றத்தின்கண் ஆகாச சப்தத்திற்கும், அஸ்தி சப்தத்திற்கும், ஆகாசத்தோடு தாதாத்மிய சம்பந்தம் யாவருக்கும் தோற்றும். சத்தியபதார்த்தத்திற்கு அசத்தியபதார்த்தத்தோடு தாதாத்மிய சம்பந்தம் சம்பவியாது. ஆதலின், ஆகாசம் அசத்தியமன்ரும். ஆகாசத்தை மலடிமைந்தனைப்போலும், மனுஷக்கோடுபோலும் அத்தியந்தம் அசத்தியமென அங்கீகரிக்கின், அவ்விரண்டின்கண்ணும் எப்பதார்த்தத்தின் ஆதாரத்தன்மையும் இன்ருதலேபோல, ஆகாசத்தின்கண்ணும சப்தகுணத்தின் ஆதாரத்தன்மை உண்டாகமாட்டாது; ஆனல், சம்பூரண நூலாசிரியர்கள் சப்தகுணத்திற்கு ஆகாசமே ஆதாரமென உடன் பட்டுளார். இக்காரணத்தானும் ஆகாசம் அபாவ ரூபமன்ரும். இவ்வண்ணம், சத்கியாதி வாதி சர்வ பதார்த்தங்களையும் சத்தியரூபமென உடன் பட்டுளான். கடத்தின்கண் இராநின்ற படாதி பதார்த்தங்களின் அபாவத்தை அதிகாணரூப கடத்தினின்றும், வேருய் அங்கீகரித்திலன்; மற்ருே, அவ்வபாவத்தை கடஸ்வரூபமாய் அங்கீகரித்துளான். இவ்வகையாய சத்கியாதி வாதியின் மதம் அத்துவைத சித்தாந்தத்திற்கு அநுகூலமாம். ஏனெனின், வேதாந்த சாஸ்திரத்தின்கண் விருத்த (ஆப்த) புருஷர் இங்[illegible] கூறியுள்ளார் :—“ கல்பிதா தாவபெஸஷாதிஷ்டாநா காலிதவஷ்டி ” (இ-[illegible]) கற்பித வஸ்துவின் அபாவம் அதிஷ்டானத்தினும் வேறன்ரும்; மற்ருே, அதிஷ்டான வடிவமேயாம். இரஜ

ஜுரூப அதிஷ்டானத்தின்கண் கற்பிதமாய சர்ப்பத்தின் அபாவம் இரஜ்ஜுரூப அதிஷ்டானத்திலும் வேறன்றாம்; மற்றோ, இரஜ்ஜு ரூபமாம். அதுபோல, "நேஹநா நாஸ்திகிஞ்சந" (அதிஷ்டான ஆன்மாவின்கண் சிறிது மாத்திரையும் துவைதப் பிரபஞ்சம இன்றாம்) என்னும இச்சுருதி அதிஷ்டான ஆன்மாவின்கண் உணர்த்திய கற்பிதப பிரபஞ்சத்தின் அபாவம அதிஷ்டான ஆன்மாவினும் வேறன்றாம்; மற்றோ, அதிஷ்டான ஆன்மரூபமாம். இவ்வண்ணம துயிலின்கண் இராநின்ற சர்வ துக்கங்களின் அபாவம் அதிஷ்டான பரமானமாவினும் வேறன் றாம்; மற்றோ, பரமான்ம வடிவமாம். இதுதுணை கூறியதால இப்பொருள் துணி யப் பெறும். எங்ஙனம் பரமான்மா ஸ்வப்பிரகாசமோ, ஆநந்தரூபமோ, பேதமற றதோ, அங்ஙனம் முன் மொழிந்த முறையே இது கடம், இது படம் என்பனவாதி ஞானங்களும் ஸ்வப்பிரகாசரூபங்களாம, ஆநந்தரூபஙகளாம, பேதமறறவாம். ஆகையால், பரமான்மாவின் சமான இலக்கணம் உடையனவாய் இருததலின், அந்த ஞானங்கள் பரமான்மாவினும் வேறன்றாம்; மற்றோ, பரமான்ம வடிவமாம்

சங்கை:—முன் மொழிந்த முறையே ஞானங்களிடத்தில் சஜாதீய பேத மும், ஸ்வகத பேதமும சமபவியாவாயினும, விஜாதீய கடாதி விஷயங்களின் பேதம் சம்பவிக்குமன்றோ?

சமாதானம்:—யாண்டு யாண்டு விஷயஙகளின் பேதமாமோ, ஆண்டாண்டு ஞானங்களின் பேதம அவசியமாம. ஞானங்களின் பேதததால அன்றி விஷயங களின் பேதம் உண்டாகமாட்டாது. இககாரணத்தானே இது கடம என்னும் ஒரு ஞானத்தின் விஷயமாய கடத்தின்கண் எந்நூலாசிரியரும் பேத அங்கீகாரஞ் செய்வதில்லை. ஆகையால், ஞானங்களின் பேதததாலே விஷய பேதமாம். அந்த ஞானங்களின் பேதம் விசாரம் இல்லாதகாலத்தே புலப்படுமாயினும, விசாரகா லத்தே புலப்படாது. ஆகையால், விஷயங்களின் பேதமும சமபவியாது. கருத திதுவாம்:—உலகின்கண்ணே காரணத்தின் பேதததானே காரியத்தின் பேதத தைக் கண்டோம. மண் நூல்வடிவ காரண பேதத்தால கடபடரூப காரியபேதம உண்டாம். ஈண்டிப பிரசங்கத்தின்கண் திருஷ்டி சிருஷ்டி வாதத்தின் முறையே ஞானரூப திருஷ்டியே கடாதி விஷயங்களின் காரணமாம. அககாரணரூப திருஷ்டியின் அபேதம் சித்தமாகவே, கடாதி விஷயரூப காரியத்தின் பேதம சித்தமாகமாட்டாது.

சங்கை:—ஞானங்களின் பேதத்தினின்றே விஷயங்களின் பேதம உண்டாம என்னும் நியமம் சம்பவியாது. ஏனெனின், உலகின்கண் விசிஷ்ட ஞானம ஒன்று யினும், அதன் விஷயங்கட்குப பேதமே கண்டோம். பத்துக குடங்கள் என்னும் ஒரு விசிஷ்ட ஞானம் பத்துத் தன்மைச சங்கை விசிஷ்ட பத்துக குடங்களை விஷயஞ் செய்யும். இக்குடம் சுக்கிலம் என்னும விசிஷ்ட ஞானம் சுக்கிலகுண விசிஷ்ட குடத்தை விஷயஞ் செய்யும. மைத்திரனின் புதல்வனாய சைத்திரன எனப் பெயரிய மனுஷ்யன் உருவமுடையவனுய்ச செல்லுகினறனன் என்னும் ஓரே விசிஷ்டஞானம், ஜாதி, குணம, கிரியை, பெயர், சம்பநதம் என்னும் ஐந்து விசேஷணங்களோடு சைத்திர வடிவத்தை விஷயஞ் செய்யும. அவற்றுள், மனுஷ்

யன என்னும அம்சத்தால் மனுஷ்யத்தன்மை ஜாதியை விஷயஞ் செய்யும். உருவமுடையவன் என்னும் அம்சத்தால் உருவ குணத்தை விஷயஞ் செய்யும். செல்கின்றனன் என்னும அம்சத்தால செல்லுதல் வடிவ வினையை விஷயஞ் செய்யும். சைத்திரன் என்னும் அம்சத்தால சைத்திரப் பெயரை விஷயஞ் செய்யும். மைத்திரனின் புத்திரன் என்னும் அம்சத்தால், ஜன்னிய ஜனகபாவ சம்பந்தத்தை விஷயஞ் செய்யும். இவை முதலாக மற்ற விசிஷ்ட ஞானங்களும், அநேக பதார்த்தங்களை விஷயஞ் செய்யும். ஆண்டு, ஞானத்திற்கு ஒருமை யிருப்பினும், விஷயங்களின் பேதம் யாவருக்கும் அனுபவசித்தமாம். ஆதலின், ஞானங்களின் பேதத்தானே விஷயங்களின் பேதம் ஆம் என்னும் நியமம சம்பவியாது.

சமாதானம் :—ஹே வாதியே! நீ கூறிய விசிஷ்ட ஞானத்தின்கண்ணும், ஞானங்களின் பேதத்தானன்றி விஷயங்களின் பேதமுண்டாவதில்லை; மற்றோ, ஞானங்களின் பேதத்தானே ஆண்டு, விஷயங்களின் பேதமுண்டாம. ஏனெனின், விசேஷண ஞானத்தானன்றி விசிஷ்ட ஞானம உண்டாகாது என்பது உனது நியமமாமாதலின், விசிஷ்ட ஞானத்தினும் முன்னிராநின்ற விசேஷண ஞானங்களின் பேதத்தை அங்கீகரித்தே விஷயங்களின் பேதமாம. ஆகையால், முற்கூறிய நியமத்திற்குப் பங்கமுண்டாகமாட்டாது.

சங்கை :—ஹே சித்தாந்தியே! பூர்வம தாங்கள் ஞானங்களின் அபேதத்தைச் சித்தஞ் செய்தீர்கள். இப்போது ஞானங்களின் பேதத்தை அங்கீகரித்துச் சமாதானம் செய்தீர்கள் ஆகையால, முற்கூற்றுக்குப் பிற்கூற்று முரணுகுமன்றோ?

சமாதானம் :—ஹே வாதியே! இக்குடம சுக்கிலம் என்பதாதி விசிஷ்ட ஞானம் யாதொன்றுண்டாமோ, ஆண்டு, முதலில் அந்தக்கரணத்தின் விருத்திகளால் சுக்கிலரூப விசேஷணத்தையும், கடரூப விசேஷியத்தையும், அவ்விரண்டின் சம்பந்தத்தையும விஷயஞ் செய்யும. பின்னர் அந்த மூன்று விருத்திகளில் ஆரூடமாய பல சைதன்னியத்தால, கடம, சுக்கிலரூபம, சம்பந்தம என்னும் மூன்றையும் விஷயஞ் செய்யும. கருத்திதுவாம் :—முன்னர் எஞ்ஞானங்களின் ஒருமை கூறப்பட்டதோ, அது அந்தக்கரணத்தின் விருத்திகளில் ஆரூடமாய சைதன்னியரூப ஞானத்தின் அபிப்பிராயத்தால கூறப்பட்டதாம. இப்போது எஞ்ஞானங்களின் பேதம கூறப்பட்டதோ, அது அந்தக்கரணத்தின் விருத்திகளாய உபாதியின் பேதத்தால கூறப்பட்டதாம. ஆகையால், முற்கூற்றுக்குப் பிற்கூற்று முரணின்றுமெனவுணர்க. இது கூறியதால் இப்பொருள் சித்தமாம்: ஞானங்களின் பேதத்தை அபேக்ஷித்தே விஷயங்களின் பேதம சித்தமாம். அந்த ஞானங்களின பேதமோ உண்மையாயின்றும, மற்றோ, அந்தக்கரணத்தின் விருத்திரூப உபாதிகளின் பேதத்தால அஞ்ஞான காலத்தில் பிரதீதியாம். எக்கால இவ்வதிகாரியானவன் பிரஹ்மவித்தையை [illegible]வனோ, அக்கால் அக்கற்பித ஞானங்களின் பேதம நிவிருத்தியாகும். நிவிருத்தியாகவே விஷயங்களின் பேதமும இராது. கனவின்கண் அடையப்பெற்ற இராஜத்தன்மை நனவின்கண் நாச

மாகவே, அந்த இராஜத் தன்மையினுல் நிரூபிதமாய இராஜ்ஜிய சாமக்கிரிகளும் நாசமாகிவிடும். அதுபோல, விசாரகாலத்தின்கண் ஞானங்களின் பேதம் நீங்கவே, அந்த ஞானங்களின் பேதத்தால் நிரூபிக்கப்பட்ட விஷயங்களின் பேதமும் நீங்கி விடும். எஞ்சியதாய் ஒரு அத்விதீய ஆன்மா இருக்கும். இத்துணைகூறியதால் ஞானங்களை ஸ்வப்பிரகாசமென அங்கீகரித்து, அத்விதீய ஆன்மாவின் சித்தி செய் யப்பட்டது. இப்போது ஞானங்களைப் பரப்பிரகாசமென அங்கீகரித்தும், அத்வி தீய ஆன்மாவின் சித்தி செய்யப்படும். கடாதி விஷயங்களாலும், நேத்திராதி இந்திரியங்களாகிய கரணங்களாலும் பேதமுடைய ஞானங்கள் பரப்பிரகாசங் களாம், என்னும் இந்தத்துவிதீய பக்ஷத்தை அங்கீகரிபினும், பரப்பிரகாசியமாய கடாதி பதார்த்தங்கட்குச் சூரியாதிப் பிரகாசங்களால் பிரகாசம் உண்டாம். அது போல, அந்தப் பரப்பிரகாசியமாய ஞானங்கட்கும், மற்றொரு பிரகாசத்தானே பிரகாசத்தை அங்கீகரிக்கவேண்டிவரும். அத்தகையது, ஞானங்களைப் பிரகாசிப் பிக்கும் ஸ்வயம்பிரகாச சாக்ஷியாய ஆன்மாவேயாம். ஹே சிஷ்ய! இவ்வபிப் பிராயத்தால் அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவை நோக்கி, கனவின்கண் ஆன்மா ஒன்றிற்கே ஸ்வயஞ்ஜோதித் தன்மையைக் கூறினர். ஏனெனின், கன வின்கண் சூரியன், சந்திரன், அக்கினி, வாக்கு என்னும் நான்குவகையாய ஜோதி கள் இலய பாவத்தை அடையும். ஆன்மவடிவ ஜோதி எவ்வவஸ்தையின்கண்ணும் இலயத்தை அடைய மாட்டாது; மற்றோ, சர்வ அவஸ்தையின்கண்ணும் சாக்ஷி ரூபமாய் இருக்கும். ஆகையால், கனவின்கண் ஆன்மரூப ஜோதியினுனே கமன ஆகமனுதி சர்வ விவகாரங்களின் சித்தி உண்டாம். ஹே சிஷ்ய! இச்சங்காதத் திற்கு ஆன்மாவே ஜோதியாம் என்னும் இவ்வசனத்தால் யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவை நோக்கி, சங்காதத்தினும் வேறாய ஸ்வயஞ்ஜோதி ஆன்மாவை உபதேசித்தனர். ஆனுல், அந்த யாஞ்ஞவற்கிய முனிவரது அபிப்பிராயத்தை ஜனகராஜாவானவர் அறிந்திலர். மற்றோ, ஜனகராஜாவானவர், ஆன்மா என்பது சொரூபமா மாதலின், சங்காதத்தின் ஸ்வரூபமே ஸ்வயஞ்ஜோதியாம் என்னும் விபரீதப் பொருளை அறிந்து, மீண்டும் யாஞ்ஞவற்கியரை நோக்கி வினவத் தொடங் கினர். ஜனகராஜா கூறல் :—ஹே பகவன்! இச்சங்காதத்தின்கண் இராநின்ற தேகம், இந்திரியம், பிராணன், அந்தக்கரணம் என்பன முதலிய பதார்த்தங்களுக் குள் யாது ஆன்மாவாம்? கருத்திதுவாம் :—ஸ்தூல தேகம் ஆன்மாவா? வாக்காதி இந்திரியங்கள் ஆன்மாவா? அல்லது, பிராணன் ஆன்மாவா? அல்லது, அந்தக் கரணம் ஆன்மாவா? யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல் :—ஹே ஜனகராஜாவே! ஆன்மா, சேதனம், புருஷன் என்பன முதலிய சப்தங்களால் எந்த வஸ்துவை யாவ ரும் கூறுநிற்பரோ, அச்சப்தங்களால் ஜனித்த விருத்திஞானம் எதனை விஷயஞ் செய்யுமோ, யாது அந்தச் சப்தஞானங்களினும் வேறுமோ, அத்தகைய ஆன்மா சர்வ ஜீவர்கட்கும் பிரசித்தமாம். கடாதி பதார்த்தங்கள் திருசிய மாதலின், ஆன்மா வல்லாததேபோல, தேகம், இந்திரியம், பிராணன், அந்தக்கரணம் என்பன முதலிய சங்காதமும், திருசியமாதலின் ஆன்மா அன்றும். மற்றோ, சர்வ சங்கா தத்தினும் வேறாய்ச் சர்வ சங்காதத்திற்கும் அதிஷ்டானமாய் எச்சேதனம் இருக் கின்றதோ, அதுவே ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மாவாம். ஹே ஜனகராஜாவே!

ஆன்ம ஞானத்தின் பொருட்டு, நீ தூரதிருஷ்டி செய்யற்க. மற்றேர், எந்த ஞானத்தால் இந்த வினவை நீ செய்தனையோ, அந்த ஞானத்தின்கண்ணே ஆன்மாவின் *பரிசயம் உண்டாம். ஏனெனின், உலகின்கண் விவாதஞ் செய்யும் புருஷர்களினின்றுஞ் சாக்ஷியாய புருஷன் வேறேயாம். அதுபோல, தேகம், இந்திரியம், பிராணன், அந்தக்கரணம் என்பன முதலிய சங்காதரூப சாக்ஷியங்களினின்றும் பின்னமாய் யாது இருநது சர்வ சங்காதங்கட்கும் சாக்ஷியாமோ, அதுவே நினது அத்விதீய ஆன்மாவாம். ஹே மைந்த! இங்ஙனம் யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனக ராஜாவை நோக்கி, சாமான்யமாய்ச் சங்காதத்தினின்றும் பின்னமாக்கி ஆன்மாவை உபதேசித்தனர். இப்போது சங்காதத்துள் அடங்கிய தேகாதி பதார்த்தங்களினின்றும் பின்னமாக்கி ஆன்மாவை நிரூபிக்கின்றார் :—ஆண்டு, முதலில் ஸ்தூலசரீரத்தினின்றும் வேறாக்கி, ஆன்மாவை நிரூபிப்பதைக் காண்பிப்பாம் :—ஹே ஜனக ராஜாவே! அக்கினியின்கண்ணே காயவைத்த இரும்புப் பிண்டத்தின்கண் அக்கினியானது தாதாத்மிய சம்பந்தத்தாலிருக்கும். அதுபோல, விஞ்ஞானரூப நாஞ அந்தக்கரணங்களிடத்தே இச்சேதன ஆன்மா கற்பித தாதாத்மிய சம்பந்தத்தாலிருக்கும். இரும்பின்கண் இராநின்ற அக்கினியை உலகின்கண் இரும்புமயம் என்பர். அதுபோல, விஞ்ஞானரூப அந்தக்கரணத்தின்கண் இராநின்ற ஆன்மாவை சாஸ்திர முணர்ந்தோர் விஞ்ஞானமயமென்பர். ஹே ஜனகராஜாவே! இரும்பின் பிண்டம் இயல்பாய் எப்பதார்த்தத்தையும் தகிக்கமாட்டாது, பிரகாசிப்பிக்கவும் மாட்டாது. அதுபோல, அந்தக்கரணமும் அந்தக்கரணத்தின் ஸ்மிருதி அநுபவரூப விருத்திகளும் ஜடங்களாம். ஆகையால், இயற்கையாய்ப் பிரகாசவடிவமன்றும், மற்றைய பதார்த்தங்களையும் பிரகாசஞ்செய்யமாட்டா. அக்கினியின் தாதாத்மிய சம்பந்தத்தை அடைந்து, இரும்பின் பிண்டம் பிரகாசிக்கும், தகிக்கும். அதுபோல, ஸ்வப்பிரகாச ஆன்மாவின் தாதாத்மிய சம்பந்தத்தை அடைந்து அந்தக்கரணமும், அந்தக்கரணத்தின் விருத்திகளும் பிரகாசங்களாம். ஸ்தூல சூக்ஷுமரூப சர்வ ஜகத்தையும் பிரகாசிப்பிக்கும். இத்துணையால் அந்தக்கரணத்தின் விருத்திகளில், ஆன்மாவின் தாதாத்மிய அத்தியாசத்தின் பலத்தை நிரூபணஞ் செய்தோம். இப்போது ஆன்மாவின்கண்ணும் அந்தத் தாதாத்மிய அத்தியாசத்தின் பலத்தை நிரூபணஞ் செய்வாம :—ஹே ஜனகராஜாவே! இரும்பின் பிண்டத்தோடு தாதாத்மிய சம்பந்தத்தால், இரும்புமய நாமத்தையுற்ற அக்கினியானது பிரகாசத்தைச் செய்யும், தாகத்தைச் செய்யும் ; இரும்புமயப் பெயர் பெறுமல் கேவல அக்கினியானது பிரகாசமாத்திரத்தையே செய்யும். அதுபோல, விருத்திசகித அந்தக்கரணத்தோடு தாதாத்மிய சம்பந்தத்தையடைந்து, விஞ்ஞானமயமென்னும் பெயரை அடைந்த இவ்வான்மா, இது கடம், இது படம் என்பனவாதியாகிய விசேஷ ஞானங்களின் ஆசிரயமாம். அந்தக்கரணத்தின் தாதாத்மிய சம்பந்தத்திலலன்றி, கேவல ஆன்மா சித்சொரூபமேயாம். இத்துணையால் ஸ்தூலசரீரத்தினின்றும் ஆன்மாவின் பேதம் காண்பிக்கப்பட்டது. இப்போது வாக்கு முதலிய இந்திரியங்களினின்றும், பிராணன்களினின்றும் வேறாக்கி

* பரிசயம் = விசேஷஞானம்.

ஆன்மாவை நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! இவ்வாநந்த சொரூப ஆன்மா வாயுரூப முக்கியப்பிராணனோடும், இந்திரியரூப கௌணப்பிராணனோடும் தாதாத்மிய அத்தியாசத்தை யடைந்து, பிராணன்களின் வாக்காதி இந்திரியங்களின் நானாவகையாய வியாபாரங்களின் காரணமாம். இக்காரணத்தால வேதத்தையுணர்ந்த புருஷன் ஆன்மாவைப் பிராணன்களிடத்தே இருப்பதாய்க் கூறுவன்.

சங்கை :—ஹே பகவன்! ஆன்மா யாண்டும் வியாபக விபுவாம். பிராணன் பரிச்சின்னமாம். பரிச்சின்னப் பிராணனிடத்தே விபுவாய ஆன்மாவின் ஸ்திதி சம்பவியாதன்றோ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! யாண்டும் வியாபகமாய ஆகாசத்தை உலகர் கடத்தின்கண் இருப்பதாகக் கூறுவர். யாண்டும் வியாபகமாய வாயுவானது மரம் அசைவதனால் வெளியாம்; இக்காரணத்தால இவ்விருக்ஷத்தின்கண் வாயுவிருக்கின்றதென உலகர் கூறுவர். அதுபோல, ஆன்மா யாண்டும் வியாபகமாமாயினும், யாண்டும் பிராணனுளதாதலான், ஆண்டு ஆன்மாவின் விசேஷமாய * அபிவியக்தி உண்டாம். இக்காரணத்தால ஞானாநந்த புருஷர் பிராணன்களிடத்தே ஆன்மாவின் ஸ்திதியைக் கூறுவர். இப்போது அந்தக்கரணத்தினின்றும் வேறாக்கி ஆன்மாவை நிரூபிப்பாம் —ஹே ஜனகராஜாவே! இவ்வாநந்த சொரூப ஆன்மா யாண்டும் வியாபகமாயினும், ஹிருதயகமலத்தின்கண் இராநின்ற புத்தியிடத்தே விசேஷமாய இவ்வான்மாவின் அபிவியக்தியுண்டாம். இக்காரணத்தால சுருதி பகவதியானவள் ஆன்மாவை ஹிருதயத்தின்கண் இருப்பதாய்க் கூறினள். இப்போது இப்பொருளைப் பலவா நன்கு அனுபவத்தாலும் வெளிப்படைசெய்வாம். ஹே ஜனகராஜாவே! பாதம் முதல மஸ்தகம்வரை உள்ள சர்வசரீரத்தின்கண் இச்சீவன் சுகத்தையேனும், துக்கத்தையேனும் அனுபவிப்பன் ஆயினும், அச்சுக துக்கங்களின் அனுபவம் விசேஷமாய் ஹிருதயதேசத்தின்கண்ணே இலங்கும். வெய்யிலால தகிக்கப்பட்டவன் சீதளமாய கங்கா ஜலத்தினகண் பிரவேசிக்கும்போது, அந்தச் சீதள ஜலஸ்பரிசத்தால சர்வ அங்கங்களிலும் சுகத்தை யனுபவிப்பன் ஆனால், அச்சுகத்தின் அநுபவம் விசேஷமாய் ஹிருதய தேசத்தின்கண்ணே இருக்கும். இப்போது இப்பொருளைப் திருஷ்டாந்தத்தால வெளிப்படையாக்குவாம். ஹே ஜனகராஜாவே! சூரியனுடைய தேஜசானது சர்வப்பிரஹ்மாண்டத்தின்கண்ணும் சமானமாம். ஆயினும், குடம் முதலிய மலின பதார்த்தங்களினிடத்தே இராநின்ற சூரியனுடைய தேஜசைப்பார்க்கினும், ஸ்படிகம் முதலிய மணிகளிடத்தே சூரியனுடைய தேஜசு அதிகமாக விருக்கும். ஸ்படிகமணியின்கண் இராநின்ற தேஜசைப்பார்க்கிலும் சூரியகாந்தமணியின்கண் இராநின்ற சூரிய தேஜசானது அதிகமாம். இங்ஙனம், உபாதியின் மலினத்தால் மலினமின்மையால், ஒரே சூரியனுடைய தேஜசானது குறைவு மிகுதிகளையடையும். இவ்வாறே இவ்வாநந்தசொரூப ஆன்மா யாண்டும் சமானவியாபகமாயினும், குடமுதலியவற்றின்கண் இராநின்ற ஆன்மாவின் பிரகாசத்தைக் குறித்து, சரீரத்தின்கண் அதிகமாம். சரீரத்தின்கண் இராநின்ற ஆன்மாவின் பிரகாசத்தைக் குறி

* அபிவியக்தி = நல்விளக்கம்.

தது ஹிருதயத்தின்கண் இராநின்ற ஆன்மாவின் பிரகாசம் அதிகமாம். இவ்வண்ணம் உபாதியின் மலினத்தன்மையானும் நிர்மலத்தன்மையானும் ஆன்மாவின் ஏகே பிரகாசம், குறைவும் அதிகத்தன்மையும் அடையும். ஆண்டு, சூரியனுடைய பிரகாசம் கடமுதலிய பதார்த்தங்களினிடத்து இருந்தபோதினும் வெளிப்படையாய்ப் பிரதீதியாகமாட்டாது. அதுபோல, சரீரத்தினின்றும் வெளியே கடமுதலிய பதார்த்தங்களிடத்தே இருந்தபோதிலும் ஆன்மா வெளிப்படையாய்ப் பிரதீதியாகமாட்டாது. எங்ஙனம் சூரியனுடைய பிரகாசம் வெண்பளிங்கு முதலிய மணிகளிடத்தே பிரதிபிம்ப ரூபமாய் வெளிப்படையாகப் பிரதீதியாகுமாயினும், தாகரூப காரியத்தைச் செய்யாதோ அங்ஙனம், சரீரத்தின்கண் சாமான்யமாய்ச் சுகதுக்க ஞானம் உண்டாயினும் விசேஷமாய் உண்டாகாது. எங்ஙனம் சூரியகாந்த மணியின்கண் சூரியனுடைய வெளிப்படையான பிரகாசமும், தாகரூப காரியமும் பிரதீதியாமோ, அங்ஙனம் ஹிருதய தேசத்தின்கண் சுகதுக்கமும், அவற்றின் விசேஷமாய அனுபவமும் பிரதீதியாம். இக்காரணத்தால் சுருதி பகவதியானவள் ஹிருதயத்தின்கண் ஆன்மாவின் ஸ்திதியைக் கூறினள். அல்லது, வாக்கு முதலிய சர்வ இந்திரியங்கட்கும் ஜகத்துருவச் சித்திரத்தைத் தாரணஞ்செய்யும் அந்தக்கரணத்திற்கும், ஹிருதய கமலமே ஆதாரமாம். இக்காரணத்தால் சுருதி பகவதியானவள் ஆன்மாவை ஹிருதயத்தின்கண் இருக்கின்றதெனக் கூறினள் கருத்திதுவாம்:— அந்தக்கரணரூப உபாதிவாயிலாய் ஆன்மாவிற்கு ஹிருதயம் ஆதாரமாம். அல்லது, இவ்வானந்தசொரூப ஆன்மா அந்தக்கரணாதி சர்வ உபாதிகளுமற்றதாய் ஹிருதயத்தின்கண் துயிலை அடையும். இக்காரணத்தால் சுருதி பகவதியானவள் ஆன்மாவை ஹிருதயத்தின்கண் இருப்பதாய்க் கூறினள். அல்லது, அஷ்டாங்க யோகத்தோடு கூடியவரும் பிரமசரியாதி சாதனங்களோடு கூடியவருமாய முமுக்ஷுக்கள் குரு சாஸ்திர உபதேசத்தால், இவ்வானந்தசொரூப ஆன்மாவை ஹிருதயத்தின்கண்ணே அறிவர். இக்காரணத்தால், சுருதி பகவதியானவள் ஆன்மாவை ஹிருதய தேசத்தின்கண் இருப்பதாகக் கூறினள். அல்லது, மரணகாலத்தில் பிரஹ்மலோகத்தையும், பிதுர்லோகத்தையும், கீட, பதங்க முதலிய பிறப்புக்களையும் அடைய இச்சித்துள்ள ஜீவர்கள் அவ்வுலகத்தை அடையும் மார்க்கரூபமாய நாடிகளைப் பிரகாசிப்பிப்பது அந்த விஞ்ஞான ஹிருதயத்தினின்றுமேயாம். இக்காரணத்தால், சுருதி பகவதியானவள் ஆன்மாவை ஹிருதயத்தின்கண் இருப்பதாய்க் கூறினள். இது கூறியதால் இப்பொருள் சித்தித்தது. சூரியனுடைய பிரகாசம் யாண்டும் இருப்பதாயினும், சூரியமண்டலத்தின்கண் அந்தப் பிரகாசம் விசேஷமாய்ப் பிரதீதியாகும். இக்காரணத்தால் யாவரும் சூரியமண்டலத்தில் பிரகாசமிருக்கின்றதெனக் கூறுவர். அதுபோல, இவ்வானந்தசொரூப ஆன்மா யாண்டும் வியாபகமாயிருப்பினும், ஹிருதய தேசத்தின்கண் விசேஷமாக அபிவியக்தியாய். இக்காரணத்தால் சுருதி பகவதியானவள் ஆன்மாவை இருதய தேசத்தின்கண் இருப்பதாய்க் கூறினள். இப்போது சைதன்னிய ரூபத்தன்மையின் சித்தியின் பொருட்டு, ஆன்மாவை ஜோதிரூபமாய் வர்ணிப்பாம்:— ஹே ஜனகராஜாவே! பாகிய கடாதி பதார்த்தங்களைப் பிரகாசஞ்செய்யும் தேஜசுஉருவ சூரியாதிகள்

ஜோதிரூபமாய் இருப்பது யாவருக்கும் பிரசித்தமாம். சூரியாதிப் பிரகாசங்களினும், வேறாயிராநின்ற கடாதிபதார்த்தங்கள் ஜோதியற்றனவா யிருப்பது யாவரும் அறிந்ததேயாம். அதுபோல, இவ்வாநந்தசொரூப ஆன்மா, சூரியாதி ஜோதிகளையும், கடாதி ஜோதியற்றவற்றையும் பிரகாசிப்பிக்கும். அங்ஙனமே சைதன்னியரூபத்தால் அவற்றினும் விலக்ஷணமாம். இக்காரணத்தால் சுருதி பகவதியானவள் இவ்வாநந்தசொரூப ஆன்மாவை ஜோதி எனக்கூறினள். ஹே ஜனகராஜாவே! சரீரத்தினும் வெளியிலிராநின்ற சூரியாதி ஜோதிகள் தம்மினும் வேறாய சத்தையுடைய கடபடாதி பதார்த்தங்களைப் பிரகாசிப்பிக்கும். அவ்வண்ணம் ஆன்மரூபஜோதி ஜகத்தைப் பிரகாசியாது; மற்றோ, தன்னின் வேறல்லாததாய சத்தையுடைய கடாதிபதார்த்தங்களை இவ்வான்மரூபஜோதி பிரகாசிப்பிக்கும். கருத்திதுவாம்:—எங்ஙனம் இரஜ்ஜுவின்கண்ணே கற்பிதமாய சர்ப்ப தண்டாதிகள் இரஜ்ஜுவடிவ அதிஷ்டானத்தினின்றும் வேறாய் சத்தையுடையன அல்லவாமோ, அங்ஙனம் ஆன்மாவின்கண்ணே கற்பிதமாய ஜகத்தும் அதிஷ்டான ஆன்ம சத்தையினும், வேறு சத்தை உடையதல்லவாம. இக்காரணத்தால், சுருதி பகவதியானவள் இவ்வாநந்தசொரூப ஆன்மாவை அந்தர்ஜோதி எனக் கூறினள். அல்லது, வேறு பிரகாசத்தை அபேக்ஷியாது எப்பிரகாசம் தன்னையும் அந்நியத்தையும் பிரகாசிக்குமோ, அது அந்தர் ஜோதி எனப்படும். அத்தகைய அந்தர் ஜோதித்தன்மை ஆன்மாவின்கண்ணே சம்பவிக்கும். சூரியாதி பாகியஜோதிகளிடத்தே சம்பவியாது. ஏனெனின், சூரியாதி ஜோதிகள் கடாதி பதார்த்தங்களின் பிரகாசத்தின்கண் மற்றொரு ஜோதியை அவாவாதாயினும், தமது பிரகாசத்தின்கண் அந்த ஜடங்களாய ஜோதிகள் சைதன்னிய ஆன்மாவை அபேக்ஷிக்கும். ஆதலின், அவற்றின்கண் அந்தர் ஜோதித்தன்மை சம்பவியாது. ஹே ஜனகராஜாவே! பரீக்ஷை செய்யும்பொருட்டு, பாலின்கண் இட்ட மரகதமணி தனது பிரகாசத்தால் பால்முழுவதையும் நிறைவிக்கும். அதுபோல, இந்த ஜோதிரூப ஆன்மாவும் தனது பிரகாசத்தால், சர்வ ஜகத்தையும் பூரணம் செய்யும. இக்காரணத்தாலே சுருதி பகவதியானவள் இந்த ஸ்வயஞ்ஜோதி ஆன்மாவைப் புருஷன் எனக் கூறினள். அல்லது, பக்ஷியானது தனது கிருகத்தின்கண்ணே சயனிப்பதேபோல, இவ்வாநந்தசொரூப ஆன்மா ஸ்தாவர ஜங்கம சரீரங்களைப்புரிவடிவமாய் எண்ணி, அச்சரீரரூப புரிகளில் தாதாத்மிய அத்தியாசத்தால், இருத்தல்வடிவ சயனத்தைச் செய்யும். இக்காரணத்தால் சுருதி பகவதியானவள் இவ்வாநந்தசொரூப ஆன்மாவைப் புருஷன் எனக் கூறினள். இப்போது அந்தக்கரணாதி உபாதிகளோடு தாதாத்மிய அத்தியாசத்தால், இவ்வான்ம புருஷனிடத்தே ஜனனமரண விகாரங்களை நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! நனவவஸ்தையையும், கனவவஸ்தையையும் அடைந்து இவ்வான்ம புருஷன் சுகத்தையும், துக்கத்தையும் அடைவன். அதுபோல, இப்பிறப்பையும், மறுபிறப்பையும் அடைந்து இவ்வான்ம புருஷன் சுகத்தையும், துக்கத்தையும் அடைவன். எங்ஙனம் கயிற்றாற் கட்டிய கடியந்திரம் (ஏற்றமரம்) கீழும் மேலும் சுழலுமோ, அங்ஙனம் கருமவடிவக் கயிற்றாற் கட்டப்பட்ட இப்புருஷன் சிலகால் ஜன்மத்தை அடைவன், சிலகால் மரணத்தை யடைவன். இவ்வண்ணம் அநேக

சரீரங்களைக் கவர்ந்தும், அநேக சரீரங்களை விடுத்தும், இப்புருஷன் நிரந்தரம் சம்சாரத்தின்கண்ணே சுழலாநிற்பன்.

சங்கை :—ஹே பகவன் ! இவ்வாநந்தசொரூப ஆன்மா யாண்டும் பரிபூரண மாம். ஆகையால், அதற்கு லோகாந்தரத்தின்கண் கமனு கமனம் சம்பவியாது. இவ்வாநந்தசொரூப ஆன்மா கர்த்துருத்தன்மை போக்துருத்தன்மை முதலிய சர்வவிகாரங்களும் அற்றதாமாதலின், ஆன்மாவின்கண் புண்ணிய பாவ சம்பந்த மும் சம்பவியாதன்றோ ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே ! இவ்வாநந்தசொரூப ஆன்மா உண்மை யாய் ஜன்மாதி சர்வ விகாரங்களும் அற்றதாமாயினும், தனது சொரூப அஞ்ஞா னத்தால் அந்தக்கரணுதிகளோடு தாதாத்மிய அத்தியாசத்தை அடைந்து இவ் வான்மா புண்ணிய பாவரூப கருமங்களைச செய்யும். அங்ஙனமே, அந்தப் புண்ணிய பாவரூப கருமங்களின் சுகதுக்கரூப பலன்களைப் போகிக்கும் பொருட்டு, லோகாந் தரத்தின்கண் கமனு கமனங்களைச் செய்யும். ஆகையால், அந்தக்கரணரூப உபா தியின் சம்பந்தத்தானே, ஆன்மாவின்கண் கர்த்துருத்தன்மை போக்துருத்தன்மை முதலிய விகாரம் தோறறும்; உண்மையாயின்றும். உண்மையாய் உஷ்ண ஸ்பரிசமற்ற ஆகாசம் உஷ்ண ஜலத்தோடு கூடியதாயேனும், உஷ்ணஜலத்தின் மேல்தேசத்தோடு கூடியதாயேனும் உஷ்ணமொப்பப் பிரதீதியாம். அதுபோல, உண்மையாய்க் கர்த்துருத்துவ போக்துருத்துவாதி விகாரங்களற்ற இவ்வாநந்த சொரூப ஆன்மா, கர்த்தா போக்தாவாய அந்தக்கரணத்தோடு தாதாத்மிய அத் தியாசத்தை யடைந்து, கர்த்துருத்துவ போக்துருத்துவாதி விகாரங்களை அடை யும். ஹே ஜனகராஜாவே ! ஸ்திரீயின் அதீனமான காமியானவன், அவள் சுகி யாயின் சுகியாவன் ; அவள் துக்கியாயின் துக்கியாவன். அதுபோல, புத்தியோடு தாதாத்மிய அத்தியாசத்தை யடைந்த இவ்வான்மாவும, புத்தியினனுசாரமாயே பிரதீதியாகும். ஆண்டு, புத்தியானது எப்பதார்த்தத்தையேனும் தியானிக்கின், ஆன்மாவும் தியானம் செய்வதேபோலத் தோற்றும். புத்தி சஞ்சலிக்கின் ஆன் மாவும் சஞ்சலிப்பதேபோலத் தோற்றும். இங்ஙனம் அந்தக்கரணத்தின் தாதாத் மிய அத்தியாசத்தால் அநேகம் வகையாய விகாரங்களை இவ்வாநந்தசொரூப ஆன்மா அடையும். இத்துணை கூறியதால் புத்தியோடு ஆன்மாவின் தாதாத் மிய அத்தியாசத்தின்கண் அனாத்த காரணத்தன்மை காண்பிக்கப்பட்டது. இப்போது ஸ்தூலசரீரத்தோடு ஆன்மாவின் தாதாத்மிய அத்தியாசத்தின்கண் அன்வய வியதிரேகமாய் அனர்த்த காரணத்தன்மை காண்பிக்கப்படும். அவற் றுள், முதலில் வியதிரேகத்தைக் காண்பிப்பாம் :—ஹே ஜனகராஜாவே ! இவ் வாநந்தசொரூப ஆன்மா புத்தியோடு தாதாத்மிய அத்தியாசத்தை அடைந்து, கனவின்கண் தைஜஸன் என்னும் பெயரை அடையும். ஆண்டு, கனவின்கண் தனது மாயாசத்தியால் உற்பன்னமாய நானுவகைப் பதார்த்தங்களைக் காணும். இங்ஙனம் கனவை அடைந்து இவ்வான்மா சுகமாகவே கனவுலகை உல்லங்கனம் செய்யும். அந்த கனவுலகம் ஸ்தூலசரீரங்களைப் பிரதானமாய் உடைத்தாயிருக்

கும். விகாரூப வாக்காதி இந்திரியங்களை உடைத்தாயிருக்கும். அதிக்கிரகரூப சப்தாதி விஷயங்களை உடையதாகவிருக்கும். அங்ஙனம் அவித்தை, காமம, கருமம் என்னும் மிருத்தியுவின் காரியமாயிருக்கும. நீர்க்குமிழிபோல விரைவாகவே அழிவெய்தும், நானாவகையாய துக்கங்களின் காரணமாம். நானாவகையாய வியாதிகளோடு கூடியிருக்கும். இவ்வாறாய நனவுலகை இபபுருஷன் கனவை அடைந்து சுகமாகவே பரித்தியாகம் செய்வன். எங்ஙனம், மகாராஜாவானவன் ஓடவடிவ சாதனத்தால் சுகமாகவே ஆழ்ந்த நதியைத் தாண்டுவனே, அங்ஙனம் இப்புருஷன் கனவை அடையும் புத்திவடிவ ஓடத்தால சுகமாகவே நனவுலகவடிவ நதியைத் தாண்டுவன். இத்துணையால கனவின்கண் ஸ்தூலசரீர அத்தியாசம் இலதாகவே, அதனால் உண்டாய துக்கங்களின் இன்மைவடிவ வியதிரேகம காண்பிக்கபபட்டது. இபபோது நனவின்கண் ஸ்தூலசரீரத்தின் தாதாதமிய அத்தியாசம இருபபின, நானாவகையாய துககங்களின் இருப்புவடிவ அன்வயத்தை நிரூபிபபாம் :—ஹே ஜனகராஜாவே ! எங்ஙனம் மாதாவின் உதரத்தினின்றும் பாலகன் வெளியில் வருவனே, அங்ஙனம் கனவின்கண் சுகதுக்கரூப பலன்களைக கொடுக்கும புண்ணிய பாவரூப கருமங்களின் க்ஷயமாய பின்னா, நனவின்கண் சுகதுககரூப பலததைக கொடுக்கும புண்ணிய பாவரூப கருமங்களால எழுபபப்பட்ட இபபுருஷன் நனவை அடைநது, ஸ்தூலசரீரத்தில் நான் என்னும் அபிமானததைச செய்தபோது, இபபுருஷன் நானாவகையாய துன்பங்களை அடைவன்.

சங்கை :—ஹே பகவன் ! நனவின்கண் ஸ்தூலசரீர அபிமானத்தால் இபபுருஷன் எவ்வெத்துயரை அடைவன் ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே ! நனவின்கண் ஸ்தூலசரீர அபிமானத்தால் ஜீவர்கட்கு உண்டாம் துககம யாவருக்கும் பிரத்தியக்ஷமாம. ஆகையால், அவற்றை நிரூபிபபதில் யாதொரு பயனுமின்றாம். ஹே ஜனகராஜாவே ! இவ்வாநந்தசொரூப ஆன்மா எதுவரை ஸ்தூலசரீர அபிமானத்தைப பரித்தியாகஞ்செய்யவில்லையோ, அதுவரை அத்தூலசரீர அபிமானத்தால் அநேகம் வகையாய துககங்களை அடையும். ஹே ஜனகராஜாவே ! ஸ்தூலசரீர அபிமானத்தைப பரித்தியாகம் செய்து, கனவை அடைநத இபபுருஷன் ஸ்தூலசரீர அபிமான ஜன்னிய துக்கங்களை அடையான். அதுபோல, மரணகாலத்தில் இத்தூலசரீர அபிமானத்தைப பரித்தியாகமசெய்து, இபபுருஷன் லோகாநதரததிறகுச செலலுங்கால, இத்தூலசரீரத்தின் அபிமான ஜன்னிய நானாவகையாய துக்கங்களை அடையான். இபபோது இப்பொருளையே திருஷ்டாந்தத்தால் ஸ்பஷ்டம் செய்வாம்:—ஹே ஜனகராஜாவே ! பஞ்சம் முதலிய உபத்திரவங்களோடுகூடிய தேசததின்கண் மோகத்தால் எப்புருஷன் வாசஞ்செய்வனே, அபபுருஷன் அத்தேசத்தில நானாவகையாய துக்கங்களை அடைவன். அதுபோல, இத்தூலசரீரத்தின்கண் யான் எனது என்னும் அபிமானத்தால் இராநின்ற இவ்வான்மா நானாவகையாய துக்கங்களை அடையும். ஹே ஜனகராஜாவே ! பஞ்சம் முதலிய உபத்திரவங்களோடுகூடிய தேசத்தைப் பரித்தியாகஞ்செய்து, அப்புருஷன் வேறொரு தேசத்திற்குச் சென்றுவிடுவானாயின், அத்தேச ஜன்னிய துக்கங்களை அடையான். அதுபோல, மரண

காலத்தின்கண் இத்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ் செய்து, இவவான்மா பரலோகத்தை அடைந்து விடுமாயின், இந்த ஸ்தூலசரீர அபிமான ஜன்னிய நானுவகையாய துக்கங்களை அடையாது. இத்துணை கூறியதால், அன்வய வியதிரேகத்தால ஸ்தூலசரீர அபிமானத்தின்கண் அனர்த்த காரணத்தன்மை காட்டபபட்டது. இபபோது பரலோகத்தை அங்கீகரியாத நாஸ்திகரைக் கண்டிக்குமபொருட்டு பரலோகசித்தி செய்வாம :—ஹே ஜனகராஜாவே! உண்மையாய் ஜனன மரணாதி விகாரங்களற்ற இபபரமான்மா அநிர்வசநீய அவித்தியா சம்பந்தத்தால ஜீவபாவத்தை யடையும. நானுவகையாய புண்ணிய பாவரூப கருமங்களைச செய்யும். அவற்றின் வயத்தால நானுவகையாய சரீரங்களை எடுக்கும், விடுககும. இவ்வண்ணம், எபபோதும சமசாரத்தின்கண் சுற்று நின்ற இவ்வான்மாவிற்கு இரண்டிடம தொடாந்து நிற்கும். ஒன்றே இவ்வுலகமாம், மற்றொன்றே அவ்வுலகமாம. அவற்றுள், பிரத்தியக்ஷப பிரமாணததால் சித்தமாய இததூலசரீரம இவ்வுலக மெனபபடும. இததூலசரீரததின் தியாகததின் பின்னா உண்டாகாநின்ற சரீரம அவ்வுலக மெனபபடும. இவ்விரண்டுலகஙகளும் ஆனமா சுற்றுதறகு இடஙகளாம். இபபோது கனவின் பிரததியக்ஷப் பிரமாணத்தால பரலோக சிததி செய்யுமபொருட்டு, முதலில கனவின்கண் இரண்டு லோகங்களின் சநதிரூபத்தன்மையை நிரூபிபபாம —ஹே ஜனகராஜாவே! இவ்வுலகமும் அவவுலகமும் ஜீவாகளின் சுகதுககஙகளுககுப போகஸ்தானஙகளாம. அதுபோல, கனவும ஜீவாகட்குச சுகதுகக போகஸ்தானமாம். இவ்வபிபபிராயத்தால் சில விவேகிபுருஷா கனவை மூன்றுவது ஸ்தானமெனை அங்கீகரிததுளளாா. அத்தியந்தம் சூக்ஷ்மதரிசிகள அககனவை மூன்றுவது ஸ்தானமெனை அஙகீகரித்திலா. மற்றே, இகலோகம் பரலோகமென்னும இரண்டு ஸ்தானங்களையே அங்கீகரித்துளாா். கனவானது இரண்டு லோகங்களின் சநதியின்கண் உண்டாயது. இக்காரணத்தால கனவை சாநதியமெனை அஙகீகரித்துளாா. கருத்திதுவாம :—இரண்டு கிராமங்களின் சநதியை எவனும் மூன்றுவது கிராமமெனக் கூறுவதில்லை. அதுபோல, இரண்டு லோகஙகளின் சநதியின்கண் இராநின்ற கனவானது மூன்றுவது ஸ்தானமாகமாட்டாது.

சங்கை :—ஹே பகவன்! கனவானது மூன்றுவது ஸ்தானமன்றுமாயின், இவ்வுலகின்கண்ணேனும, அவ்வுலகினகண்ணேனும கனவின் உளளடக்கத்தை உடன்பட வேண்டும. கனவிறகுச சாநதியரூபத தன்மையை யாதின்பொருட்டு அங்கீகாரஞ் செய்கின்றீர்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! இரண்டு லோகங்களிலும் கனவின் உள்ளடக்கம் உண்டாகமாட்டாது. இக்காரணத்தால் கனவைச் சாந்தியமென உடன்படப்பட்டது. ஆண்டு சுக்கில சோணிதத்தால உற்பன்னமாய ஸ்தூல சரீரரூப இவ்வுலகின்கண்ணும், கனவிற்கு உள்ளடக்கம் உண்டாகமாட்டாது. ஏனெனின், இச்சீவன் கனவை அடையுங்கால் நனவைப்போன்று, இத்தூலசரீர அபிமானத்தை யடைவதில்லை. இக்காரணத்தானே இறந்த சரீரம்போல பூமியின்கண்ணே கிடக்கும் இத்தூலசரீரத்தைக் கனுக்காணும் புருஷன்காண்பதில்லை.

இவ்வுலகின்கண் கனவின் உள்ளடக்க முண்டாகுமாயின், எங்ஙனம் நனவின்கண் இச்சீவனுக்கு ஸ்தூலசரீராபிமான மிருக்கின்றதோ, அங்ஙனம் கனவின்கண்ணும் இத்தூலசரீராபிமானம் உண்டாதல் வேண்டும். கனவின்கண் இத்தூலசரீராபிமானம் உண்டாவதில்லை. ஆகையால், இவ்வுலகின்கண்ணும் கனவின் உள்ளடக்கம் உண்டாதல் இன்றாம். இவ்வண்ணம் அவ்வுலகின்கண்ணும் கனவின் உள்ளடக்க முண்டாகமாட்டாது. ஏனெனின், மரணத்தின் பின்னர் இச்சீவன் ஸ்தூலசரீரத்தின் தாகாதிகளால் துக்கத்தை யடையான். அங்ஙனம் கனவின்கண் இன்றாம்; மற்றோ, கனவின்கண் இத்தூலசரீரத்தின் தாகாதிகளால் ஜீவனுக்குத் துக்கமுண்டாம். சுவாசங்களோடு கூடியிருப்பன். ஆகையால், இஃதறிந்து கொள்ளலாமன்றோ? மரணத்தின் பின்னர் இத்தூலசரீரத்தின் அபிமானம் அத்தியந்தம் நீங்குகின்றது. அங்ஙனம் கனவின்கண் இத்தூலசரீரத்தின் அபிமானம் அத்தியந்தம் நீங்குவதில்லை. கனவிற்குப் பரலோகத்தின்கண் உள்ளடக்கம் உடன்படின், கனவின்கண் இத்தூலசரீரத்தின் தாகாதிகளால் ஜீவனுக்குப பீடை உண்டாகலாகாது. சுவாசங்கட்கும் அபாவ முண்டாதல் வேண்டும் ஆகையால், பரலோகத்தின்கண்ணும் கனவின் உள்ளடக்கம் உண்டாகமாட்டாது. இது கூறியதால் இது சித்தித்தது. ஸ்தூலசரீர அபிமானத்தைப் பரித்தியாகஞ் செய்யாதிருத்தல் இவ்வுலக விலக்கணமாம். அதுவும் கனவின்கட் பொருந்தாது. ஸ்தூலசரீரத்தில் யான் எனது என்னும் அபிமானத்தைப் பரித்தியாகஞ் செய்தல் அவ்வுலகின் இலக்கணமாம். அதுவும் கனவின்கட் பொருந்தாது. ஆகையால், இரண்டு உலகங்களின் சந்தியில் கனவுண்டாம். இக்காரணத்தால் சுருதி பகவதியானவள் கனவைச் சாந்தியமெனக் கூறினள். இப்போது இப்பொருளையே திருஷ்டாந்தத்தால் ஸ்பஷ்டஞ் செய்வாம்:—ஹே ஜனகராஜாவே! மேகாதிகளற்ற நிர்மல ஆகாசத்தின்கண் நக்ஷத்திரக் கூட்டங்கள் காணப்படாமை * தினத்தின் இலக்கணமாம். நிர்மல ஆகாசத்தின்கண் சூரியமண்டலம் காணப்படாமை இரவின் இலக்கணமாம். இவ்விருவகை இலக்கணங்களும் சாயங்காலத்தில் பொருந்தும். இக்காரணத்தால் சாயங்காலத்தை புத்திமான்கள் இரவு பகல்களின் சந்தி என்பர். அச்சந்தியின்கண் எப்பதார்த்தம் உற்பன்னமாமோ, அது சாந்தியமெனப்படும். அதுபோல, கனவும் இகலோக பரலோக சந்தியின்கண் உண்டாமாதலின், சுருதி பகவதியானவள் கனவைச் சாந்தியம் என்றனள். இத்துணை கூறியதால கனவின்கண் சாந்தியத்தன்மை கூறப்பட்டது. இப்போது கனவின் பிரத்தியக்ஷத்தால் பரலோகத்தின் சித்தியைச் செய்வாம்:—ஹே ஜனகராஜாவே! இக்கனவுவடிவ சாந்தியஸ்தானத்தின்கண் இராநின்ற இவ்வான்மா இவ்வுலகத்தையும் அவ்வுலகத்தையுங்காணும். கருத்திதுவாம்:—இசசரீரத்தால் எவ்வெப்பொருள் அனுபவிக்கப்பட்டனவாமோ, முற்சரீரங்களால் எவ்வெப்பொருள் அனுபவிக்கப் பட்டனவாமோ, வரும் சரீரங்களால் எவ்வெப்பொருள் அனுபவிக்கப்படலாமோ, அவை யாவற்றையும் இச்சீவன் கனவின்கண்ணே காணும். வீட்டிற்கும் வீட்டின் வெளியிலுள்ள † அங்கணத்திற்கும் சந்தி வடிவ வாயிலின்கண் இராநின்ற புருஷன் வீட்டிலுள்ள பதார்த்தங்களையும், வெளி அங்கணத்திலுள்ள பதார்த்தங்களையும் காண்பன்.

* தினம்=பகல். † அங்கணம்=முற்றம்.

அதுபோல, இவ்வான்மா கனவுவடிவ சந்தியின்கண் இருந்து இகலோக பதார்த்தங்களையும், பரலோகபதார்த்தங்களையும் காணும். ஹே ஜனகராஜாவே! இத்தூல சரீரத்தை விட்டபின்னர் புண்ணிய பாவரூப கருமானுசாரமாய் இச்சீவன் எவ்வண்ணம் உயர்ந்த சரீரத்தையும், தாழ்ந்த சரீரத்தையும் அடையுமோ, அவ்வண்ணமாய சரீரத்தைக் கனவின்கண் கவர்ந்து, இசசீவன் புண்ணிய பாவகரும மகிமையால் சுகதுக்கங்களை அடையும். இங்ஙனம கனவின்கண் புண்ணிய பாவ வயத்தால் சுக துக்கரூப பலத்தைப் போகித்து, இவ்வான்மா இவ்வுலகத்தையும அவ்வுலகத்தையுங் காணும். ஆகையால, கனவைக காணும் புருஷனுடைய பிரத்தியக்ஷம் பரலோகத்தின்கண் பிரமாணமாம். அங்ஙனம் மற்றைய சுருதி, ஸ்மிருதி, இதிகாசம், புராணம் முதலியனவும் அவவுலகத்தின்கண்ணே பிரமாணமாம். இத்துணை கூறியதால் பரலோகசித்தி செய்யப்பட்டது. இப்போது கனவின்கண் ஆன்மாவின் ஸ்வயம்பிரகாசத்தன்மையைச சித்தம் செய்வாம்:—ஹே ஜனகராஜாவே! இவ்வாநந்தஸ்வரூப ஆன்மா இத்தூலசரீரரூப உலகத்தைப் பரித்தியாகஞ் செய்து, இரண்டு லோகங்களையும் காணும்பொருட்டு, கனவுவடிவ சாந்திய ஸ்தானத்தை அடையும்போது, ஸ்தூலசரீரசம்பந்தியாய நேத்திராதி இந்திரியங்கள், ரூபாதி விஷயங்கள் என்பனவற்றின் சூக்ஷ்ம வாசனைகளையும், அவ்வாசனைகளின் ஆதாரமாய மனத்தையும் உதவியாகககொண்டே இவ்வான்மா கனவை அடையும். மகாராஜாவானவன் தனது ஏவலர்களைப் பின்கொண்டே செல்வன். அவ்வாறே இவ்வாநந்தஸ்வரூப ஆன்மா விஷய இந்திரியங்களின் வாசனையோடு கூடிய மனத்தை உடன்கொண்டே கனவை அடையும. ஹே ஜனகராஜாவே! மண்ணின் கண்ணே விளையாடும் பாலகன் அவவிளையாட்டின் சாதனங்களாய பலவகை வீடு முதலிய பதார்த்தங்களை அமமண்ணாலேயே செய்துகொள்வன். க்ஷணத்தின் பின்னர் அப்பாலகன் அம்மண்மயப பதார்த்தங்கள் யாவற்றையும் அழிப்பன். இவ்வண்ணம் வீடு முதலிய பதாரத்தங்களை உண்டாக்கி அழித்துக்கொண்டு, நிரந்தரம் அப்பாலகன் விளையாடுவன். அதுபோல, இவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவும கனவின்கண் நானாவகையாய தேரமுதலிய பதாரத்தங்களை உண்டாக்கியும், அழித்தும் நிரந்தரம விளையாடும். அககனவினகண் ஸ்வபபிரகாச ஞானரூப ஆன்மாவன்றி வேறொரு சூரியாதி ஜோதி இன்றாமாதலின், ஆண்டு ஆன்மா ஸ்வயம் ஜோதியாம். கருத்திதுவாம்:—“ஸ்வயம்ப்ராஸ்ராஸ்வஸ்ரீசு” (இ-ள்.) தபஸை உடையவன் தானே தாசன் என்னும் வசனத்தால தபசுடையவர்களினும்வேறாய்த் தாசரின் அபாவம் அறிந்து கொள்ளலாம். அதுபோல, கனவின்கண் ஆன்மா ஸ்வயஞ்ஜோதியாம் என்னும் வசனத்தானும், ஆன்மாவினும் வேறாய் மற்ற ஜோதியின் அபாவம் அறிந்துகொள்ளலாம. ஆகையால், கனவின்கண் ஆன்மாவே ஸ்வயஞ்ஜோதியாம்.

சங்கை:—ஹே பகவன்! கனவின்கண் ஆதித்தியாதி ஜோதிகட்கு இலயம் உண்டாமாதலின், அவற்றிற்கு ஜோதிரூபத்தன்மை சம்பவியாதாயினும், மனமானது கனவின்கண் இலயமாகமாட்டாதாதலின், கனவின்கண் மனத்திற்கு ஜோதிரூபத்தன்மை ஏன் உண்டாகமாட்டாது?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! பாலகனுடைய விளையாட்டின் சாதனங்களாய வீடுமுதலிய பதார்த்தங்களின் உபாதான காரணமாய மண்ணனது ஜடமாம். அதுபோல, சொப்பனத்தைக் காண்பவனுடைய கிரீடையின் சாதனங்களாய சொப்பன பதார்த்தங்களின் உபாதான காரணமாய மனமும் ஜடமாம். கிரீடையின் சாதனங்களாய கிருகம் முதலிய பதார்த்தங்களின் பரிணாமி உபாதான காரணமாய மண்ணைப் பாலகன் முன்னே காண்பன். அதுபோல, சொப்பன அவஸ்தையின்கண்ணும் தேர் முதலிய பதார்த்தங்களின் பரிணாமி உபாதானகாரணமாய மனத்தை, இந்த ஸ்வப்பிரகாச சாக்ஷியாய ஆன்மா காணும். கருத்திதுவாம் :—மண், கிருகம் முதலிய பதார்த்தங்களின் பரிணாமி உபாதான காரணமாதலின் ஜடமாம். அதுபோல, மனமும் சொப்பன பதார்த்தங்களின் பரிணாமி உபாதான காரணமாதலின் ஜடமாம். எப்பதார்த்தம் ஜடமாமோ, அப்பதார்த்தம் மண்போல ஸ்வயம்பிரகாசமாகமாட்டாது; மற்றோ, பரப்பிரகாசமாம். ஆகையால, சொப்பன அவஸ்தையின்கண் ஜடமனத்திற்கு ஜோதித்தன்மை சமபவியாதாம.

சங்கை :—ஹே பகவன்! சொப்பன அவஸ்தையின்கண் மனததிற்கு ஜோதிரூபத்தன்மை உண்டாகாதொழிக. ஆயினும், ஆண்டு அவித்தைககு ஜோதிரூபத்தன்மை ஏன் உண்டாகமாட்டாது?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் சொப்பனத்தின்கண் சாக்ஷியாய ஆன்மாவால் பிரகாசியமாதலின், ஜட மனமானது ஸ்வயஞ்ஜோதிரூபமாகாதோ, அங்ஙனம் சாக்ஷியாய ஆன்மாவால் பிரகாசியமாதலின், ஆவரணரூபமாதலின், ஜட அவித்தையும் ஸ்வயஞ்ஜோதிரூபமன்றாம். அல்லது, ஆவரணரூப அவித்தையை ஸ்வயஞ்ஜோதிரூபத் தன்மையதென உடன்படின், ஆவரணரூப அந்தகாரத்தையும் ஸ்வயஞ்ஜோதிரூபமென அங்கீகரித்தல் வேண்டும். ஆகையால், சொப்பனத்தின்கண் அவித்தையும் ஸ்வயஞ்ஜோதிரூபமன்றாம். நனவின்கண் பிரகாசரூபமாய்ப் பிரசித்தமாயிராநின்ற நேத்திராதி இந்திரியங்களும் கனவின்கண் இன்றாம். ஆதித்தியன், சந்திரன், அக்கினி, வாக்கு என்னும் நான்குவகையாய ஜோதிகளும் கனவின்கண் இன்றாம். ஆகையால், எஞ்சியதாய் ஆன்மரூப ஜோதியினனே கனப்பொருள்கள் இலங்கும். இவ்வபிபபிராயத்தானே சுருதி பகவதியானவள் கனவின்கண் ஆன்மாவையேஸ்வயஞ்ஜோதி என்றனள். இபபோது இப்பொருளையே வெளிப்படையாக்கும் பொருட்டு, சர்வலோகர்களின் அனுபவத்தால் மனத்தின்கண் திருசியத்தன்மையை நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! நனவின்கண் ஒரு புருஷனைநோக்கி, மற்றொரு புருஷன் ஒரு வசனத்தைக் கூறுவானாயின், அப்புருஷன் இப்பிரகாரம் அவன்பொருட்டுக் கூறுகிற்பன்; நீ என்னை நோக்கி கூறியவசனத்தின் அர்த்தத்தை விட்டு, எனது மனம் வேறோரிடத்திற் சென்றிருந்தது; ஆதலின், உனது வசனப்பொருளை யான் உணர்ந்திலேன், நீ மறுமுறை அவ்வசனத்தைக் கூறுதி என, இவ்வாறாய அனுபவத்தால் யாவரும் தம்மனத்தை விஷயஞ் செய்கின்றனர். இக்காரணத்தால் கடாதி பதார்த்தங்களைப்போல மனமும் திருசியமாம். இப்போது யுக்திகளால் மனத்தின்கண் ஜடத்தன்மையை நிரூபணம் செய்வாம் :—ஹே ஜனகராஜாவே! வேதத்தை அங்கீகரியாத நாஸ்திகரை

டுத்து, எவ்வாஸ்திகவாதியரும் மனத்தைச் சேதனம் என உடன்படார்; மற்றோ, ல்லா வாஸ்திகவாதியரும் மனத்தைச் சடமென உடன்படுவர். எந்த நாஸ்திக ாதியானவன் மனத்தைச் சேதனமென உடன்படுவனோ, அவ்வாதியின்பால் இது கேட்டல்வேண்டும். எம் மனத்தை நீ சேதனரூபமாய் அங்கீகரிக்கின்றனையோ, அம்மனம் ஆன்மரூபமா? அநான்மரூபமா? அவற்றுள், இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அது சம்பவியாது. ஏனெனின், மனத்தை அநான்மரூபமென உடன்பட்டு, வாதியானவன் மனத்தைச் சேதனரூபமென உடன்படுவானாயின், மனம்போல அநான்மரூப கடபடாதி ஜடபதார்த்தங்களும் சேதனரூபமாதல் வேண்டும். கடபடாதி ஜடபதார்த்தங்களின் சேதனரூபத் தன்மையில் வாதியான வன் இஷ்டாபத்தியைச் செய்வனேயாயின், மனத்தின்கண் சேதனரூபத்தன்மையை அங்கீகரித்தல் பயனற்றதேயாகும். ஏனெனின், கடபடாதி சம்பூரண அநான்ம பதார்த்தங்களும் மனம்போலச் சேதன ரூபங்களாம். அக்கடபடாதி சேதனங் களானும் வியவகாரத்தின் சித்தியுண்டாம். உண்டாகவே மனத்தைச் சேதனமென உடன்படல் பயனறறதாமன்றோ. ஒரு தீபத்தானே கடாதி பதார்த்தங்களின் பிரகாசம் சம்பவிக்குமாயின், அக்கடபடாதி பதார்த்தங்களின் பிரகாசத்தின் பொருட்டு, வேறு தீபத்தை எப்புருஷரும் ஏற்றுவதில்லையன்றோ?

சங்கை :—ஹே சித்தாந்தியே! சுருதி சர்வ ஜகத்தையும் சைதன்னியரூப மெனக் கூறியிருக்கின்றதாதலின், யானும சர்வ ஜகத்தையும் சேதனரூபமென அங்கீகரித்துளேன்.

சமாதானம் :—ஹே வாதியே! சம்பூரண ஜகத்தின்கண் சைதன்னிய ரூபத் தன்மையைக் கூறுநின்ற சுருதியானது, அனுவாதரூபமாய்ச் சர்வ ஜகத்தின்கண் ணும் சைதன்னியரூபத்தன்மையைக் கூறுகின்றதா? அல்லது, விதிரூபமாய் அசசுருதியானது சர்வ ஜகத்தின்கண் சைதன்னியரூபத்தன்மையைக் கூறுகின் றதா? முதற பக்ஷத்தையே வாதி அங்கீகரிக்கின் அது சம்பவியாது. ஏனெ னின், பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் யாவரும் அறிந்த அர்த்தத்தைக் கூறு நின்ற வசனத்தை நூலுணர்நத நுண்ணறிவுடையோர் அநுவாதம் என்பர். அககினி பனிக்கு மருந்து என்னும் வசனம் யாவருக்கும் பிரத்தியக்ஷமாய அக் கினியின்கண் பனி நீக்க காரணத்தன்மையைப் பகருகின்றது. அதனால், அவ் வசனம் அநுவாத வடிவமாம். அதுபோல, சம்பூரண ஜகத்துச் சேதன ரூபமாமென்னும் சுருதி வசனமும், சம்பூரண ஜகத்தின்கண் நம்மனோராய ஜீவாகளின் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால், சைதன்னியரூபத்தன்மை சித்தமாயின் அநுவாதரூபமாம். அவ்வாறு சர்வ ஜகத்தின்கண்ணும் சைதன் னியரூபத்தன்மை பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால், நம்மனோராய ஜீவர் கட்குச் சித்தமன்றும். ஆகையால், சர்வ ஜகத்தின்கண் சைதன்னியரூபத்தன்மை யைச் சாற்றுநின்ற சுருதியானது அநுவாதரூபமன்றும். சர்வ ஜகத்தின்கண் ணும் சைதன்னியரூபத்தன்மையைக் கூறுநின்ற சுருதியானது, விதிரூபமாம் என் னும் இரண்டாவது பக்ஷத்தை வாதி அங்கீகரிக்கின் அதுவும் சம்பவியாது. ஏனெ

னின், எவ்வர்த்தம் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் முன்னர் அறியாததாமோ, எவ்வர்த்தத்தின் ஞானத்தால் பலத்தின் அடைவுண்டாமோ, எவ்வர்த்தத்திற்குப பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் பாதம் (பொய் என்று நிச்சயித்தல்) உண்டாக மாட்டாதோ, அவ்வர்த்தத்தை விதிரூப சுருதியானது உணர்த்தும். அத்தகைய அர்த்தம் அத்விதீய ஆன்மாவேயாம். ஆகையால், எல்லா உலகும் சேதன ஆன்ம வடிவமாம் என்னும் இவ்வகையாய அர்த்தத்தை உணர்த்தும் சுருதியானது, ஜட ஜகத்தின்கண் சைதன்னியரூபத் தன்மையை உணர்த்தாது. மற்றோ, இது ரஜ்ஜு என்னும் வசனமானது சர்பபமயலை நீக்கி, இரஜ்ஜுத் தன்மையை உணர்தது வதுபோல, இவ்வெல்லா உலகும் சேதன ஆன்மரூபம் என்னும் சுருதிவசனமும, துவைத மயலை நீக்கி அத்விதீய ஆன்மாவையே உணர்த்தும். ஆண்டு, இசசம பூரண ஜகத்தானது அத்விதீய பிரஹ்மசொரூபமாம் என்னும் அர்த்தத்தை உணர்த்தும் சுருதியானது, தற்பதார்த்தத்தின் சோதனத்தைப் *போதனஞ் செய்யும். இச்சராசரரூப சம்பூரண ஜகத்தானது சேதனரூபமாம் என்னும் அர்த தத்தைப் போதனஞ் செய்யும் சுருதியானது, அந்தத் தற்பதார்த்தரூப பரமான்மாவின்கண் சைதன்னியரூபத் தன்மையை விதித்திருக்கின்றது. இவ்வெல்லா உலகும் ஆன்மரூபமாம் என்னும் அர்த்தத்தைப் போதனஞ்செய்யும் சுருதியானது, ஆன்மாவின்கண் சர்வரூபத் தன்மையை உணர்த்தும்வாயிலாய்த் துவம்பதார்த தத்தின் சோதனத்தை விதிக்கும். தற்பதத்தின் அர்த்தமாய பரமான்மா ஆன்மரூபம் என்னும் அர்த்தத்தைப் போதனஞ் செய்யும் சுருதியானது, ஜீவேஸ்வர அபேதத்தை உணர்த்தும். என்பனமுதலாய சம்பூரண சுருதி வசனங்களுள் சில சுருதி வசனங்கள் தறபதார்த்தத்தின் சோதன விதத்தைப் போதனஞ் செய்யும். சில சுருதி வசனங்கள் துவம்பதார்த்தத்தின் சோதன விதத்தைப் போதனஞ்செய்யும். சில சுருதி வசனங்கள் தத்துவம்பதார்த்தத்தின் அபேதத்தைப் போதனஞ்செய்யும். அஞ்ஞானம், அஞ்ஞானத்தின் காரியரூப உபாதி என்பவற றைப் பரித்தியாகஞ்செய்து, அவ்வுபாதியினின்றும் சேதனத்தை வேறு பிரித்து, அறிதலைத் தத்துவம்பதாாத்தங்களின் சோதனம் என்பர். என்னும் சுருதிகளின் அபிப்பிராயத்தை அங்கீகரியாது வாதியானவன் முற்கூறிய சுருதி வசனங்கட்கு ஜடசேதன தாதாத்மிய போதனத்தின்கண் தாற்பரிய கற்பனை செய்வன். அச சேதன ஆன்மாவின் தாதாத்மியத்தால் சம்பூரண ஜட ஜகத்தைச சேதன ரூபமென அங்கீகரித்துளான். அத்தகையன்பால் இது கேட்டல் வேண்டும். சேதன ஆன்மாவிற்கும், ஜட ஜகத்திற்கும யாதொரு தாதாத்மிய சம்பந்தம் உண்டோ, அத்தாதாத்மிய சம்பந்தத்தின் சம்பந்தித்தன்மை சேதன ஆன்மாவின்கண்ணும், ஜட ஜகத்தின்கண்ணும் சமானமேயாம். ஆகையால், சேதன ஆன்மாவின் தாதாத்மிய சம்பந்தத்தால், ஜட ஜகத்தைச் சேதனரூபமாய் அங்கீகரித்ததேபோல, ஜடஜகத்தின் தாதாத்மிய சம்பந்தத்தால் சேதன ஆன்மாவையும் ஜடஜகத்துருவத் தன்மையதாய் ஏன் அங்கீகரித்திலாய்? மற்றோ, சேதன ஆன்மாவின்கண்ணும் அவசியம் அங்கீகரிக்கவேண்டும் என்பதே. ஆகையால், ஜடப்பிரபஞ்சத்திற்குச் சைதன்னியரூபத் தன்மையை உணர்த்துவதின்

---

* போதனம்=உணர்த்தல்.

கண் சுருதிக்குக் கருத்தன்றும். அல்லது, ஜடஜகத்தின்கண் சைதன்னிய ரூபத்தன்மை ஆம் என்னும் அர்த்தத்தின்கண் சுருதியின் தாற்பரியம் சம்பவியாது. ஏனெனின், எவ்வெப்பொருளின்கண் புத்திமான்களுடைய அனுபவ விரோதம் உண்டாவதில்லையோ, அவ்வப் பொருளின்கண் வேதத்தின் தாற்பரியமாம். அனுபவ விருத்த அர்த்தத்தின்கண் வேதத்தின் தாற்பரியம் உண்டாகாது. அனுபவ விருத்த அர்த்தத்தின்கண்ணும் வேதத்தின் தாற்பரியம் இருக்குமாயின், "ஆதித்யோயூப:" (இ-ள்) யாகபூமியின்கண் இராநின்ற காஷ்ட ஸ்தம்பவடிவ யூபம் ஆதித்தியன் என்னும் வேதவசனத்தால், ஆகாசத்தின்கண் இராநின்ற பிரகாசரூப சூரியனுக்கு, அப்பிரகாசரூப யூபத்தோடு தாதாத்மியம் சித்தித்தல் வேண்டும். சூரியனுக்குக் காஷ்டமய யூபத்தோடு தாதாத்மியம் யாவருக்கும் அனுபவ விரோதமாம். ஆகையால், அவ்விரோத அர்த்தத்தின்கண் அவ்வசனத்திற்குக் கருத்து இன்றும்; மற்றோ, அந்த யூபத்தின் ஸ்துதியின்கண் அவ்வசனத்திற்குக் கருத்தாம். இவ்வண்ணம், "யஜமாந: ப்ரஸ்தர:" பொருளிதுவாம்:—தர்ப்பையின் முஷ்டிவடிவப் பிரஸ்தரமானது யாக கர்த்தாவாய எஜமான வடிவமாம் என்னும் வேதவசனத்தால், எஜமானனுக்கும் பிரஸ்தரத்தோடு தாதாத்மியஞ் சித்தமாதல் வேண்டும். எஜமானனுக்குப் பிரஸ்தரத்தோடு தாதாத்மியம் உண்டாதல் எல்லாருடைய அநுபவத்திற்கும் முரணும். ஆகையால், அம்முரணுய பொருளில் அவ்வசனத்திற்குக் கருத்தின்றும். மற்றோ, அந்தப் பிரஸ்தரத்தின் ஸ்துதியின்கண் அவ்வசனத்திற்குக் கருத்தாம். பிரஸ்தர எஜமானர்களின் அபேதத்தின்கண் அவ்வசனத்திற்குக் கருத்தாகுமாயின், அந்தப் பிரஸ்தரமானது அக்கினியின்கண் தாகமானவுடன் எஜமானனும் தகிக்கப்பட வேண்டும். எஜமானன் தகிக்கப்படுவனேல், சம்பூரண யாகாதி கருமங்களும் லோபத்தை யடையும். ஆகையால், இப்பொருள் துணியப்பெறும்:—மதிமான்களுடைய அநுபவத்திற்கு முரணில்லாத பொருளின்கண் வேதத்திற்குக் கருத்தாம் என்பதே. ஜடஜகத்தின்கண்ணே சைதன்யரூபத் தன்மை எல்லாருடைய அநுபவத்திற்கும் முரணும். ஆகையால், அவ்வநுபவ விருத்த அர்த்தத்தின்கண் வேதத்திற்குக் கருத்தின்றும். அல்லது, எப்பொருள் அதிகாரிகளின் புருஷார்த்த காரணமாமோ, அப்பொருளையே வேதவசனம் போதனஞ் செய்யும் என்பது வேதத்தை உணர்ந்தவர்களின் சித்தாந்தமாம். சேதன ஆன்மா ஜடஜகத்துருவம், ஜடஜகத்துச சேதன ஆன்ம வடிவம் என்னும் அர்த்த ஞானத்தால் ஜீவர்கட்குச சிறிது மாத்திரையும் புருஷார்த்த அடைவுண்டாகமாட்டாது. ஆகையால், அப்பயனற்ற பொருளை உணர்த்துவதின்கண் வேத பகவானுக்குக் கருத்தின்றும். அல்லது, எங்ஙனம் பிரிய பதார்த்தத்தின் தரிஸனப் பொருட்டுத் திறந்த விழியானது, அப்பிரிய பதார்த்தத்தையும் விளக்குமோ; அங்ஙனம், புருஷார்த்தமற்ற அர்த்தத்தை வேதபகவான் ஒருகாலுங் கூறார். ஏனெனின், புருஷார்த்தமற்ற அர்த்தத்தைப் போதனஞ் செய்வாராயின், "வேத" என்னும் சப்தத்தின் அர்த்தம் வேதபகவானிடத்தே பொருந்தாது. ஏனெனின், அதிகாரிகட்குப் புருஷார்த்தத்தை யாது அறிவிக்குமோ, அதை "வேதம்"

எனப் புத்திமான்கள் புகலா நிற்பர். அல்லது, வியாகரண முறைப்படி, "வித்" என்னும் பகுதியால் வேதசப்தத்தின் சித்தியாம். அந்த "வித்" என்னும் பகுதிக்கு ஞானம் பொருளாம். அந்த ஞானத்தின்கண் யாது அதிகாரிகளை ஏவுமோ, அது வேதமெனப்படும். பிரேரணைசெய்யும் பிரயோஜகம் உலகில் இருவகையாம்; ஒன்றோ, முக்கியப் பிரயோஜகமாம். மற்றொன்றோ, கௌணப் பிரயோஜகமாம். அவற்றுள், பிரேரணைக்கு விஷயமாய பிரயோஜ்ய புருஷனுக்கு எக்கிரியையின்கண் இச்சை உண்டாமோ, அக்கிரியையின்கண் அந்தப் பிரயோஜ்ய புருஷனை எப்புருஷன் பிரேரணை செய்வனோ, அவன் முக்கியப் பிரயோஜகன் எனப்படுவன். போஜனரூபக்கிரியையை இச்சித்த பசியையுடைய புருஷனை அந்தப் போஜனரூபக்கிரியையின்கண் எப்புருஷன் பிரேரணை செய்வனோ, அவனை நூல் உணர்ந்த நுண்மதி உடையோர் முக்கியப் பிரயோஜகன் என மொழியா நிற்பர். யாண்டு, பிரயோஜ்ய புருஷனுக்கு எக்கிரியையின் இச்சை உண்டாகவில்லையோ, அக்கிரியையின்கண் பிரயோஜ்ய புருஷனை எப்புருஷன் பிரேரணை செய்வனோ, அவன் கௌண பிரயோஜகன் எனப்படுவன். மரணரூபக்கிரியையின்கண் யாவன் ஜீவர்களைப் பிரேரணை செய்வனோ, அவன் மாரீயெனப்படுவன். ஈண்டு மரணரூபக்கிரியையின்கண் ஜீவர்கட்கிச்சை யின்றாம். காலபகவான் ஜீவர்களை மரணரூபக்கிரியையின்கண் பிரேரணை செய்வர். ஆகையால், காலரூப மாரீ கௌணப் பிரயோஜகராம். எப்பொருள் புருஷார்த்தரூபமாமோ, அப்பொருளின்கண் பிரயோஜ்ய புருஷனுக்கு இச்சை யுண்டாம். புருஷார்த்தத்தினும் வேறாய பொருளின்கண் பிரயோஜ்ய புருஷனுக்கு இச்சை யுண்டாகாது. அந்தப் புருஷார்த்தமும் இருவகைத்தாம். ஒன்றோ, முக்கிய புருஷார்த்தமாம். மற்றொன்றோ, கௌணப் புருஷார்த்தமாம். அவற்றுள், சுகரூப பலம் முக்கிய புருஷார்த்தமாம். அச்சுகத்தின் சாதனம் கௌண புருஷார்த்தமாம். ஆன்மாவின்கண் ஜடஜகத்துருவத்தன்மையும், ஜடஜகத்தின்கண்ணே சேதன ஆன்மரூபத்தன்மையும் சுகரூப மன்றாம். அங்ஙனமே எச்சுகத்தின் சாதனமுமன்றாம். மாறாய் ஜன்ம மரணாதி துக்கங்களின் சாதனமாம். இத்தகைய அபுருஷார்த்தரூப அர்த்தத்தின்கண் அதிகாரிகளை வேதபகவான் யாதின் பொருட்டுப் பிரேரணை செய்வர்; மற்றோ, பிரேரணை செய்யார். மைந்தனுடைய இதத்தை இச்சிப்பவராய தந்தையானவர் மைந்தனை அபுருஷார்த்த அர்த்தத்தின்கண் பிரேரணை செய்யார். அதுபோல, சர்வ ஜீவர்களின் மங்கலத்தை இச்சித்த வேதபகவானனவர் ஜீவர்களை அபுருஷார்த்தரூப அர்த்தத்தின்கண் பிரேரியார். வேதபகவான் அபுருஷார்த்தரூப அர்த்தத்தை உணர்த்துவாராயின் அப்பிரமாண ரூபராவர்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! இவ்வெல்லா உலகும் சைதன்ய ஆன்மாவின் வடிவமாம் என்னும் சுருதியின் வசனம் ஜடசேதன அபேதத்தின்கண் கருத்துடையதன்றாமாயின், எவ்வர்த்தத்தின்கண் அவ்வசனத்திற்குக் கருத்தாம்.

சமாதானம் :—ஹே வாதியே! எப்பொருள் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் முன்னர் அறியப்படாததாமோ, எப்பொருட்கு வேறொரு பிரமாணத்தால் பாதமுண்டாகமாட்டாதோ, எவ்வர்த்தத்தாற் பலத்தின் பிராப்தியுண்டாகுமோ,

அத்தகைய அர்த்தத்தை உணர்த்துவதில் வேதபகவானுக்குக் கருத்தாம். அத்தகைய அர்த்தம் ஸ்வப்பிரகாச அத்விதீய ஆநந்தசொரூப ஆன்மாவாம். ஆகையால், அத்விதீய ஆன்மாவை அறிவிப்பதின்கண்ணே வேதபகவானுக்குக் கருத்தாம். அவ்வத்விதீய ஆன்மாவானது, பிரபஞ்சரூப துவைதத்தைக் காணும் குதார்க்கிகளால் அளவறுபிறப்பையடைந்தும் அறியமுடியாததாம். ஒருகால்வேதப் பிரமாணத்தினும் வேறாய எபபிரமாணததாலேனும் ஆன்மாவின் உண்மை வடிவ ஞானமுண்டாகுமாயின், தார்க்கத்தின்கண்ணே குசலராய நையாயிகாதியரும் ஆன்மாவின் உண்மைவடிவத்தை யறிவர். ஆனால், அந்நையாயிகாதியர் ஆன்மாவின் உண்மைவடிவத்தை யறியார். ஆகையால், இஃதறியப் பெறுமன்றே :—சுருதிப் பிரமாணத்தினும் வேறாய கேவல தருக்கத்தால் ஆன்மாவின் உண்மைவடிவம் அறியப் பெறமாட்டாது.

சங்கை :—ஹே சித்தாந்தியே! இவ்வெல்லா உலகும் சேதன ஆன்ம வடிவமாம் என்னும் சுருதி வசனங்கட்கு ஜடசேதனத்தின் அபேதரூப அருத்த மன்றாமாயின் அவ்வசனங்கட்குப் பொருள் யாது?

சமாதானம் :—ஹே வாதியே! முமுக்ஷுக்களின் மதியின்கண் பிரபஞ்ச அபாவத்தை ஆரூடம் செய்யும் பொருட்டு, அந்தச சுருதி பகவதியானவள் தாய் போலக் கிருபையோடும், முமுக்ஷுக்கட்கு இவவகையாய உபதேசத்தைச் செய்கின்றனள் :—ஹே முமுக்ஷுக்களே! இரஜ்ஜுவின்கண் அஞ்ஞானத்தாற் பிரதீதியாய சர்ப்பம், தண்டம், ஜலதாரை, மாலை என்பன முதலிய துவைதங்கள் இரஜ்ஜுமாத்திரமேயாம். சர்ப்பாதி துவைதங்கள் முககாலத்தினு மின்றாம். அதுபோல, இவ்வெல்லாத் திருசியப பிரபஞசமும உங்கள் வடிவமேயாம். ஆன்மாவினும் வேறாய துவைதம் முக்காலத்தினு மின்றாம் என. இங்ஙனம் சுருதியானது துவைதப் பிரபஞ்சத்தை நிஷேதிதது முமுக்ஷுககட்கு அத்விதீய ஆன்மாவை உணர்த்தும். ஆகையால், அத்விதீய ஆன்மாவின்கண்ணே அச்சுருதி வசனங்கட்குத் தாற்பரியமாம்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! ஜடஜகத்தின் சைதன்யரூபத் தன்மையின்கண் சுருதிப்பிரமாணம் சம்பவியாதாயினும, அனுமானப்பிரமாணத்தால் ஜடஜகத்தின்கண் சைதன்னிய ரூபத்தன்மை சித்தமாதல கூடுமன்றோ?

சமாதானம் :—ஹே வாதியே! புகைவடிவக் குறியால் மலையின்கண் அக்கினியின் அனுமானம் உண்டாவதேபோல,ஜகததின் சைதன்னியரூபத்தன்மையின்கண் யாதொரு குறியுமின்றாம். ஆகையால், அனுமானப் பிரமாணத்தானும் ஜகத்தின்கண் சைதன்யரூபத்தன்மை சித்தியாது. மாறாய்ப பிரத்தியக்ஷப் பிரமாணத்தோடு கூடிய அனுமானப்பிரமாணத்தால், திருசியத்தன்மைவடிவக் குறியால் ஜகத்தின்கண்ணே ஜடத்தன்மையே சித்தமாம்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! சுருதிபபிரமாணமும், அனுமானப் பிரமாணமும் ஜகத்தின் சைதன்யரூபத்தன்மையைச் சித்தம் செய்யமாட்டாது. ஆயினும்,

எவனுவது ஒரு புருஷனுடைய பிரத்தியக்ஷப் பிரமாணம் ஜகத்தின் சைதன்னிய ரூபத்தன்மையைச் சித்தஞ்செய்யும்.

சமாதானம் :—ஹே வாதியே! எப்புருஷனுடைய பிரத்தியக்ஷப் பிரமாணம் ஜகத்தின்கண் சைதன்னியரூபத்தன்மையைச் சித்தஞ்செய்யுமோ, அப்புருஷன் நம்மனோரைப்போன்ற ஜாதியையுடையவனு? அல்லது, நம்மனோரினும் அவன் இலக்ஷணனு? அவற்றுள், நீ முதற்பக்ஷத்தை யங்கீகாரஞ்செய்யின், அது சம்பவி யாது. ஏனெனின், நம்மனோருள் எப்புருஷனுக்கும் ஜகத்தின் சைதன்னியரூபத் தன்மையின் பிரத்தியக்ஷம் உண்டாவதின்றுமாதலின், நம்மனோரது பிரத்தியக்ஷத் தால் ஜகத்தின்கண்ணே சைதன்யரூபத்தன்மை சித்தமாகமாட்டாது. நம்மனோ ரினும் இலக்ஷணராய வேறு புருஷனது பிரத்தியக்ஷத்தால் ஜகத்தின் சைதன்ய ரூபத்தன்மை சித்தமாமென்னும் இரண்டாவது பக்ஷத்தை நீ அங்கீகரிக்கின், அதுவும் சம்பவியாது. ஏனெனின், நமமனோரினும் இலக்ஷணனுய ஒரு புரு ஷனிடத்தே ஜகத்தின் சைதன்னியரூபத்தன்மையின் பிரத்தியக்ஷ முளது என்னும் வார்த்தையை எங்ஙனமறிதல் கூடும். கருத்திதுவாம் :—மனுஷக் கோட்டின் சாதகமாய் ஒரு பிரமாணமுமில்லாததேபோல, அவ்விலக்ஷண புருஷ னுடைய பிரத்தியக்ஷ சாதகமாய் ஒரு பிரமாணமுமின்றும்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! ஜகத்தின் சைதன்னிய ரூபத்தன்மையை விஷயஞ்செய்யும் இலக்ஷண புருஷனுடைய பிரத்தியக்ஷம் பிரமாணங்களாற் சித்த மாயினும், அவை நம்மனோரிடத்தேயின்றும்.

சமாதானம் :—ஹே வாதியே! அந்த விலக்ஷண புருஷனுடைய பிரத்தியக்ஷ சாதகப்பிரமாணம் இருக்குமாயின், நமமனோருக்கு அது ஏன் தோற்றுவதில்லை. கருத்திதுவாம் :—சர்வகாரணங்களோடு கூடிய நம்மனோரிடத்தே அந்தப் பிர மாணம் அப்பிரசித்தமாகுமாயின், அது எப்புருஷனிடத்தும் இன்றுகும. அப்பிர சித்தப் பிரமாணத்தின் சித்தியையும அங்கீகரிக்கும் பக்ஷத்தில், உலகத்தின் கண்ணே பிரசித்தமாய தித்திப்பு, புளிப்பு, கார்ப்பு, காழ்ப்பு, கைப்பு, துவர்ப்பு என்னும் ஆறு இரசங்களின் வேறுய் ஒரு ஏழாவது இரசத்தின் சித்தியும் உண்டா தல்வேண்டும். ஆகையால், அந்தபபிரமாணம் நம்மனோரிடத்தே இன்றும் என்னும் வாதியின் அர்த்தத்தின்கண்ணே தெய்வத்தின் ஒரு விசித்திரச செயற்கையிருக் கின்றதன்றே. அல்லது, ஜகத்தின்கண் சைதன்யரூபத்தன்மையை விஷயஞ் செய் யும்பிரத்தியக்ஷம் எவனுவது ஒருபுருஷனிடத்தேயிருக்கும், ஒரு புருஷனிடத்தும் இராது என்னும் அர்த்தத்தை வாதியானவன் அங்கீகாரஞ்செய்வானுயின், அவ் வாதிக்கு வியாகாததோஷத்தின அடைவுண்டாம். ஏனெனின், எந்த ஜகத்தானது சைதன்யரூபமாய் விஷயமாதற்கு யோக்கியமன்றுமோ, அந்த ஜகத்தே சைதன்ய ரூபமாய் எவனேனும் ஒரு புருஷனுடைய ஞானத்திற்கு விஷயமாம். அந்த ஜகத்தே சைதன்யரூபமாய் நம்மனோருடைய ஞானத்திற்கு விஷயமாகாது என் னும் ஒரே ஜடஜகத்தின்கண் சைதன்னியரூபமாய் இயல்பானே விஷயத்தன்மை யையும், சைதன்யரூபமாய் இயல்பானே அவிஷயத்தன்மையையும் அங்கீகாரஞ் செய்யின், தனது வசனத்தானே தனது வசனத்தின் பாதரூப வியாகாததோஷ

முண்டாகும். ஹே வாதியே! மனத்தை அஜ்ஞான்மவடிவமென அங்கீகரித்து, நீ அம்மனத்தைச் சேதனரூபமென அங்கீகாரஞ் செய்வையேயாயின், அஜ்ஞான்மரூபத்தான் மனத்திற்குச் சமானமான கடபடாதி பதார்த்தங்களும் நினது மதத்தில் சேதனரூபமாதல் வேண்டும். அஜ்ஞான்மரூபத்தான் மனத்திற்குச் சமானமாய கடபடாதி ஜடபதார்த்தங்களைச் சேதனரூபமென அங்கீகரியாது, கேவலம் மனத்தையே நீ சேதனரூபமென அங்கீகரிக்கின்றனை, இது உனது * துர்வியசனமாம். இதனால் சேதனரூபமனம் அஜ்ஞான்மரூபமாம் என்னும் இரண்டாவது பக்ஷம் கண்டிக்கப்பட்டதாயது. இப்போது சேதனரூபமனம் ஆன்மரூபமாமென்னும் முதற் பக்ஷம் கண்டிக்கப்படும்:—சேதனரூபமனம் ஆன்மரூபமாமென்னும் பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின், அவ்வாதியின்பாலிது கேட்கவேண்டும். அந்தச் சேதன ஆன்மரூபமனம் பரிச்சின்னமா? அல்லது விபுவா? அவற்றுள், முதற் பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின், அது சம்பவியாது. ஏனெனின், எப்பதார்த்தம் பரிச்சின்னமாமோ, அப்பதார்த்தம் பேதமுடையதாம். எங்ஙனம் கடாதி பதார்த்தங்கள் பரிச்சின்னமாதலின் பேதமுடையனவாமோ, அங்ஙனம் மனமும் பரிச்சின்னமாதலின் பேதமுடையதேயாம். எப்பதார்த்தம் பேதமுடையதாமோ, அப்பதார்த்தம் காரியமாம். எங்ஙனம் கடம் முதலிய பதார்த்தங்கள் பேதமுடையனவாதலின் காரியங்களாமோ, அங்ஙனம் பேதமுடையதாதலின், அம்மனமும் காரியமேயாகும். எப்பதார்த்தம் காரியமாமோ, அப்பதார்த்தம் ஏக் காரணத்தாலேனும் உண்டாயிருக்கவேண்டும். எங்ஙனம் கடமுதலிய பதார்த்தங்கள் காரியரூபமாதலின், மண்வடிவ காரணத்தினின்றும் உண்டானவாமோ, அங்ஙனம் மனமும் காரியரூபமாதலின், பூதபௌதிகரூப காரணத்தினின்றும் ஜனித்ததாம். ஈண்டுப் பூதசப்தத்தால் சத்துவகுணப்பிரதான ஆகாசாதி பஞ்ச பூதங்களைக் கவர்ந்துகொள்க. பௌதிகசப்தத்தால் உண்ட அன்னத்தைக் கவர்ந்துகொள்க. எப்பதார்த்தம் எக்காரணத்திருந்தேனும் ஜன்னியமாமோ, அப்பதார்த்தம் ஜடமாம். எங்ஙனம் மிருத்திகைவடிவ காரணத்திருந்து ஜன்னியமாதலின், கடாதிப் பதார்த்தங்கள் ஜடமாமோ, அங்ஙனம் பூதபௌதிகரூப காரணத்திருந்து ஜன்னியமாதலின் அம்மனமும் ஜடமேயாம். ஆகையால், காரியரூப ஜடமனத்தைச் சேதனரூபமெனக் கூறலும், ஆன்மரூபமெனக்கூறலும் அத்தியந்தம் விருத்தமாம். அந்தச் சேதன ஆன்மரூப மனம் விபுவாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின், அதுவும் சம்பவியாது. ஏனெனின், எப்பதார்த்தம் விபுவாமோ, அது எத்தேயத்தினும், எக்காலத்தினும், எவ்வஸ்துவினும் இராது. மற்றோ, தேசகால வஸ்து பரிச்சேதமற்றதாம். இவ்வண்ணம் வாதியால் அங்கீகரிக்கப்பட்ட விபுவாயமனம் மனரூபமாகமாட்டாது. மற்றோ, ஸ்வயஞ்சோதியாய ஆன்மரூபமாகும். கருத்திதுவாம்:—உலகின்கண்ணே அநேகவகையாய சங்கற்பங்களின் காரணமியாதாமோ, சத்துவகுணம் எதன் கண்ணே பிரதானமாமோ, அதை யாவரும் மனமென்பர். இவ்வகையாய மனத்தை வாதியானவன் கூறவில்லை. மற்றோ, ஸ்வயஞ்சோதியாய ஆன்மாவிற்கே

* துர்வியசனம்=தீராததுயர்.

வாதியானவன் மனமென்னும் பெயரை வைத்தனன். எல்லா நூலுணர்ந்த பெரியோர்கட்கும் நாமமாத்திரத்தின்கண் விவாதம் உண்டாகாது. மற்றோ, பதார்த்தத்தின்கண் விவாதமாம். அப்பதார்த்தத்தின் பேதம் ஈண்டுண்டாவதில்லை. மற்றோ, எந்த விபுவாய சேதனத்தை யாம் ஆன்மநாமத்தாற் கூறுகின்றேமோ, அந்த விபுவாய சேதனத்தையே வாதியான நீ மனமென்னும் நாமத்தாற் கூறுகின்றனை. ஆகையால், ஹே வாதியே! சேதனமனம் விபுவென்னும் பக்ஷத்தின்கண் எமக்கும் உனக்கும் சிறிதுமாத்திரையும் விவாதமின்றாம்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! உமக்கும் எனக்கும் விவாதம் சம்பவிக்கும். ஏனெனின், உம்முடைய மதத்தில் ஆன்மா முதலிய சப்தங்கள் சக்திவிருத்தியினுல் விபுவாய சேதனத்தை யுணர்த்தும். மனமென்னும் சப்தம் இலக்ஷணைவிருத்தியினுல் அந்த விபுசேதனத்தையுணர்த்தும். என்னுடைய மதத்திலோ, மனமென்னுஞ் சப்தம் சக்திவிருத்தியினுல், விபுவாய சேதனத்தை யுணர்த்தும். ஆன்மா முதலிய சப்தங்கள் இலக்ஷணைவிருத்தியினுல், அந்த விபுவாய சேதனத்தை உணர்த்தும். இவ்வண்ணம் உமக்கும் எனக்கும் விவாதம் சம்பவிக்குமன்றோ?

சமாதானம் :—ஹே வாதியே! இங்ஙனம் உனக்கும் எமக்குமுண்டாய விவாதமானது ஆன்மா முதலிய சப்தங்கட்குச் சக்திவிருத்தியினுல் விபு ஆன்மாவின்கண் பிரவிருத்தியை அங்கீகரிக்கின் சம்பவிக்கும். ஆனுல், இங்ஙனம் யாம் அங்கீகரித்திலேம். மற்றோ, எங்ஙனம் மனமென்னுஞ் சப்தமானது இலக்ஷணைவிருத்தியால் ஆன்மாவை யுணர்த்துமோ, அங்ஙனம் ஆன்மா சேதனமென்பன முதலிய நாமங்களும் பாகத்தியாக இலக்ஷணைவிருத்தியினுனே ஆன்மாவை யுணர்த்தும். சக்திவிருத்தியினுல் எந்நாமமும் ஆன்மாவை யுணர்த்தமாட்டாது. இக்காரணத்தானே, "யதோவாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ" (இ-ள்.) எந்த அத்விதீய ஆன்மாவை அடையாமல் மனத்தோடுகூடிய வாக்கானது நீங்குமோ என்னுஞ் சுருதியானது, ஆன்மாவின்கண் சப்தத்தின் சக்திவிருத்தியின் அவிஷயத்தன்மையைக் காண்பிக்கின்றது. ஹே வாதியே! ஆன்மாவின் உண்மைவடிவத்தை உணர்ந்திராநின்ற அறிஞர் எங்ஙனம் ஆன்மா முதலிய நாமங்களைச் சேதன ஆன்மாவின்கண் ஆரோபிக்கின்றனரோ, அங்ஙனம் நீயும் ஒருமனமென்னும் நாமத்தைச் சேதன ஆன்மாவின்கண் ஆரோபிக்கின்றாய். இதன்கண் எமக்குச் சிறிதுமாத்திரையும் ஹானியின்றாம். முன்னர் ஒரு வாதியானவன் கனவின்கண் மனத்திற்கே ஸ்வயஞ்ஜோதித்தன்மையை அங்கீகரித்தனன். அவ்வாதியை இதுவரை கண்டித்தாம். இப்போது அந்தப் பூர்வப் பிரசங்கத்தை நிரூபணஞ்செய்வாம் :—ஹே ஜனகராஜாவே! அக்கனவின்கண் சூரியன், சந்திரன், அக்கினி, வாக்கு, அவித்தை, மனம் என்பன முதலிய யாவற்றிற்கும் முன்னர் மொழிந்த முறையே ஜோதிரூபத் தன்மை சம்பவியாது. ஆகையால் எஞ்சியதாய் ஆன்மாவே கனவின்கண் ஸ்வயஞ்ஜோதியாம். ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் மீமாம்சகரது மதத்தின்கண் ஸ்வப்பிரகாச ஞானம் ஆன்மாவின் தர்மம் ஆதலின், ஆன்மாவினும் வேறோமோ, அங்ஙனம் சித்தாந்த மதத்தின்கண் ஸ்வப்பிரகாச ஞானம் ஆன்மாவினும் வேறன்றாம். ஏனெனின், ஸ்வப்பிரகாச ஞானத்தை

ஆன்மாவினும் வேறாய் அங்கீகரிக்கின், எப்பதார்த்தம் பேதரூப வஸ்து பரிச்சேதம் உடையதாமோ, அப்பதார்த்தம் அநான்ம ரூபமேயாம். எங்ஙனம் கடாதி பதார்த்தங்கள் பேதரூப வஸ்து பரிச்சேதம் உடையன வாதலின் அநான்ம ரூபமாமோ, அங்ஙனம் பேதரூப வஸ்து பரிச்சேதம் உடையன வாதலின், ஆன்மாவும் ஸ்வப்பிரகாச ஞானமும் அநான்மாவே யாகும். ஆனால், ஆன்மாவிற்கு அநான்மத்தன்மையை ஒருவாதியும் அங்கீகரிப்பதில்லை. ஆதலின், ஸ்வப்பிரகாச ஞானத்திற்கும், ஆன்மாவிற்கும் பாஸ்பரம் பேதமின்றாம; மற்றோ அபேதமேயாம். ஞானத்தின்கண் ஸ்வப்பிரகாசத தன்மை சாவ வாதிகட்கும் சம்மதமாம். ஆகையால், ஸ்வப்பிரகாச ஞானத்தோடு அபின்னமாய ஆன்மாவும் ஸ்வப்பிரகாசமேயாகும் என்னும் யுக்தியால், ஆன்மாவின்கண் ஸ்வயஞ்சோதிரூபத்தன்மை சித்தமாகுமாயினும், கனவின்கண் ஆதித்தியாதி ஜோதிகளின் அபாவரூப வியதிரேகமும் ஆன்மாவிற்குச் சாக்ஷிரூபத்தால் அனவபமுமாம் என்னும் இத்தகைய அன்வய வியதிரேகத்தால் சுகமாகவே முமுக்ஷுக்கட்கு ஆன்மாவின் போதம் உண்டாகும் என்னும் அபிப்பிராயத்தால சுருதி பகவதியானவள, கனவின்கண்ணே ஆன்மாவை ஸ்வயஞ்ஜோதி என்றனள். ஹே ஜனகராஜாவே! உலகின்கண் காஷ்டங்களின் சமூகத்தைத் தாகஞ்செய்யும் அக்கினியை உலகர் ஸ்வயஞ்ஜோதி என்பர். காஷ்டங்களின்கண் இரா நின்ற சாமானிய அக்கினியையும், சாம்பரால் மூடப்பட்ட அக்கினியையும் எவரும் ஸ்வயஞ்ஜோதி எனக்கூறார். அதுபோலக் கனவின் கண்ணே சர்வ வியவகாரங்களின் சாதகமாய ஆன்மாவைச சுருதி பகவதியானவள் ஸ்வயஞ்ஜோதி எனக்கூறினள். ஹே ஜனகராஜாவே! பிரளய காலத்தின்கண் வெளிப்படாத நாம ரூபங்களோடு கூடிய இநத ஜகத்தின் அபின்ன நிமித்த உபாதான காரணமும், உண்மையாய் நாம ரூபமற்றதும், சர்வ சரீரங்களிடத்தும் வியாபித்ததும் ஆய, சர்வஞ்ஞமான பிரஹ்மமே வேதாநத சாஸ்திரத்தின்கண் ஸ்வயஞ்ஜோதியாம். அத்தகைய ஸ்வயஞ்ஜோதிப் பிரஹ்மத்தையே கனவின்கண்ணே சுருதியானது, ஜீவனது ஆன்மரூபமாயக் கூறியது.

சங்கை:—ஹே பகவன்! ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, இலயகாரணமாய ஸ்வயஞ்ஜோதிப் பிரஹ்மமே, கனவின்கண் ஜீவனுக்கு ஆன்மாவாம என்னும் வார்த்தையை எங்ஙனம் அறிதல் கூடும?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் ஸ்வயஞ்ஜோதியாய பிரஹ்மம் ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, இலயங்களைச செய்யுமோ அங்ஙனம், கனவின்கண் இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மாவும் ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, இலயங்களைச் செய்யும். எங்ஙனம் ஸ்வயஞ்ஜோதியாய பிரஹ்மம் சச்சிதாநந்த ஸ்வரூபமாமோ, அங்ஙனம் இவ்வான்மாவும் சசசிதாநந்த ஸ்வரூபமாம். இங்ஙனம் ஜகத்தின் காரணத்தன்மைரூப தடஸ்த இலக்கணமும், சத்துச் சித்து ஆநந்த வடிவ ஸ்வரூப இலக்கணமும், ஸ்வயஞ் ஜோதியாய பிரஹ்மத்திற்கும், ஆன்மாவிற்கும் சமானமேயாம். இக்காரணத்தால் இவ்வான்மா ஸ்வயஞ்ஜோதிப் பிரஹ்மரூபமாம் இப்போது கனவின்கண்ணே ஜகத்தின் காரணத்தன்மைவடிவ ஆன்மாவின் தடஸ்த இலக்கணத்தை வெளிப்படையாய்க் காண்பிப்பாம்:—ஹே ஜனக

ராஜாவே! கனவின்கண்ணே தோற்றுநின்ற தேரானது ஆண்டின்றும். ஆண்டுத் தோற்றிய தேரோ பொன்னாலும், மணிகளாலும் பூஷிதமாம். அத்தேரின் கொடியானது ஆகாயத்தை அணுகி விளையாடும். நானாவகையாய சிறிய இடக்கியங்கள் அதன்கண் அபரிமிதமாய் இலகும்; மேகத்தொனிக்குச் சமானமாய தொனியை அஃதுடைத்தாய் இருக்கும். நானாவகையாய சாமக்கிரிகளால் அத்தேர் பூரணமாய் இருக்கும். இத்தகைய அற்புதமாய தேரானது கனவின்கண் இன்றும். அத்தேரின்கண்ணே பூட்ட யோக்கியமாய குதிரையும் கனவின்கண் இன்றும். அக்குதிரையோ விசித்திரமாய நடையையுடையது, விசித்திரமாய கர்ணபூஷணத்தையுடையது; வாயுவைப்போலும் வேகமுடையது. இக்காரணத்தானே எதிரிலுள்ள பூமியைக் கண்டு வெட்கத்தையுற்ற அக்குதிரை பூமியைவிட்டு ஆகாசத்திற் செல்லும் குந்தாளத்திற்குச் சமானமாய தனது பாதத்தாற் பூமியைப் பிளக்கும். அக்குதிரையின் பாதபயத்தால் பூமியும் வியாகுலத்தையடையும். இத்தகைய அசுவமும் அந்தக் கனவின்கண் இன்றும். அந்தக் குதிரை பூட்டிய தேர் செல்லும் வீதியும் கனவின்கண் இன்றும். அந்நெறி மிகவும் விசித்திரமானது, யாவர் மனத்தையும் மகிழ்விப்பது, சந்தனத்தாலும் பன்னீராலும் தெளிக்கப்பட்டது. இக்காரணத்தால் அம்மார்க்கம் கோமளமும் சீதளமுமாம். மீண்டுமப்பாட்டை எத்தகையதென்னின், அத்தியந்த முத்தமமாய முத்து முதலியவை நிறைந்த கடைகளும், மாடமாளிகை கூடகோபுரங்களும் நிறைந்த இடத்தின் மத்தியிலுள்ளது. மங்கல கும்பத்தின் மேலிருப்பதும், வீட்டின் ஒலியங்களை விளக்குவதும் ஆயதீபங்களோடுகூடி விளங்குவதாம். மீண்டுமெத்தகையது அம்மறுகென்னின், தேவாங்கனைகட்குச சமானமாய அநேகம் குங்குமக் கொங்கையாராய மங்கையரோடு கூடியிலங்குவதாம். அம்மங்கையரோ மணிகளாலும், நவரத்தினங்களாலும் நிறைக்கப்பட்ட பொற்பூஷணங்களால் அலங்கரிக்கப்பட்டவர். அங்ஙனமே தயிர், பொரி முதலிய மங்கல பதார்த்தங்களால் நிறைந்த சுவர்ண கலசத்தைக் கங்கணக் கமல கரத்தே இங்கிதமாக ஏந்திச் சங்கையற்று நிற்பவர். அத்தகைய இளம் பிடி நடையர்களால் அந்நெறி ஜோபித்துக் கொண்டிருக்கும். இத்தகைய நெறியும் அக்கனவின்கண்ணே இன்றும். நனவின்கண்ணே பிரிய நாயகியின் சம்போகத்தால் எவ்வாநந்தம் உளதாமோ, அன்னம், பானம், வஸ்திரம், பூஷணம் என்பன முதலிய பிரியபதார்த்தங்களின் போகத்தால் எவ்வாநந்தம் உளதாமோ, அவ்வாநந்தமும் அந்தச் சொப்பனத்தின்கண் இன்றும். நனவின்கண் பிரிய வஸ்துவின் சமாகமத்தான் அப்பிரிய வஸ்துவின் வியோகத்தான் ஜீவர்கட்கு எம்மகிழ்ச்சி யுண்டாமோ, அம்மகிழ்ச்சியும் அக்கனவின்கண் இன்றும். நனவின்கண்ணே புத்திராதி பதார்த்தங்களற்ற புருஷனுக்குப் புத்திராதி பதார்த்தங்களின் அடைவால் எப்பெருமகிழ்ச்சி யுண்டாமோ, அதுவும் கனவின்கண் இன்றும். நனவின்கண்ணே நீரால் நிறைந்த சிறுதடாகம், கூபம் எப்போதும் நீரொழுகும் பெருந்தடாகம் என்னும் யாவும் கனவின்கண் இன்றும். நனவின்கண் இராநின்ற விசித்திரமாய வீடும், விந்தியாசல முதலிய பர்வதங்களும், இந்திர நந்தனவனம்போன்ற நானாவகையாய உத்யானவனங்களும், ஸ்ரீ கங்கையே முதலாய நானாவகையாய நதிகளும், உப்புக்கடலே முதலாய நானாவகையாய கடல்

களும், மற்றும் பிறவும் அக்கனவின்கண்ணே இன்றாம். நனவின்கண் இராநின்ற பூவுலகமே முதலாய பதினன்கு லோகங்களும், அவ்வுலகங்களைப் பாலிக்கும் லோகபாலர்களும், கிழக்கு முதலிய பத்துத் திசைகளும், ஆகாசாதி பஞ்சபூதங் களும், அண்டஜம், ஜராயுஜம், ஸ்வேதஜம், உற்பிஜ்ஜம் என்னும் நான்குவகையாய பிராணிகளும், பிரஹ்மாண்டத்தின்கண் இராநின்ற ஸ்தூலசூக்ஷ்ம பதார்த் தங்களும், பிரஹ்மாண்டத்தின் வெளியிலிராநின்ற ஸ்தூல சூக்ஷ்ம பதார்த் தங்களும் என்பன முதலிய எல்லாப் பதார்த்தங்களும் கனவின்கண் இன்றாம். மனமொன்றே கனவின்கண் இருக்கும். எங்ஙனம் ஜகத்தின் உற்பத்தி காலத்தே மாயாவிசிஷ்ட பரமான்மாவாய ஈஸ்வரர் சர்வ ஜகத்தையும் உற்பத்தி செய்வரோ, அங்ஙனம் கனவின்கண் இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா முற்கூறிய தேரை யும், குதிரைகளையும், அவற்றின் மார்க்கத்தையும், மற்றைய சர்வ பதார்த்தங் களையும் உற்பன்னஞ்செய்யும். இப்போது இப்பொருளையே வெளிப்படையாய்க் காண்பிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் உலகின்கண்ணே சித்திரக் காரன் பித்தியின்மீது நானாவகையாய சித்திரங்களை வரைவனே, அங்ஙனம் கன வின்கண்ணே இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா மனவடிவப் பித்தியின்கண் ஜகத் துருவச் சித்திரங்களைச் சித்திரிக்கும். இக்காரணத்தானே இந்தச் சுயஞ்சோதி யாய ஆன்மா ஜகத்தின் கர்த்தாவாய ஈஸ்வரரூபமாம.

சங்கை :—ஹே பகவன்! ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மாவே சர்வஜகத்தின் காரணமாகுமாயின், மாயை நிஷ்பலமன்றோவாம்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! தேசகாலாதிகளற்ற நிர்க்குண ஆன் மாவை ஜகத்காரணமென அங்கீகாரஞ்செய்யின், மாயை நிஷ்பலமாம். ஆனல், நிர்க்குண ஆன்மாவை ஜகத்காரணமென உடன்படுவதின்றாம். மற்றோ, மாயா விசிஷ்ட பரமான்மாவையே ஜகத்காரணமென உடன்படுமேம். ஆகையால், மாயைக்குப் பயனற்றதன்மையின்றாம். ஹே ஜனகராஜாவே! சிருஷ்டியின் ஆதி காலத்தே மாயாவிசிஷ்ட பரமான்மா தேசகாலாதி காரணங்களைச்செய்து, சம் பூரண ஜகத்தையுண்டாக்கியது. அதுபோலக் கனவின்கண் இந்த ஸ்வயஞ்ஜோதி யாய ஆன்மாவும் தேசகாலாதி காரணங்களைச்செய்து, தேர் முதலிய பதார்த்தங் களைச் செய்தது. நனவின்கண் இராநின்ற ஸ்தூலசரீரமும், ஸ்தூலசரீர சம் பந்தியாய நேதத்திராதி இநதிரியங்களும், நேத்திராதி இநதிரியங்களின் விஷயங்க ளாகிய ரூபாதிபதார்த்தங்களும் என்னுமிவ்வியாவற்றையும் பரித்தியாகஞ்செய்து, இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா கனவையடையும், அக்கனவின்கண் இருந்து இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா தனது ஸ்வப்பிரகாசவடிவத்தால் மனத்தை ஒளிர்விக்கும். மனத்தின் பரிணமமாய தேர் முதலிய பதார்த்தங்களை ஒளிர் விக்கும். அங்ஙனமே, மனமுதலிய சர்வ பதார்த்தங்களின் காரணமான அஞ் ஞானத்தை ஒளிர்விக்கும். ஹே ஜனகராஜாவே! அக்கனவவஸ்தையின் போகத் தைக்கொடுக்கும் புண்ணிய பாவரூபகருமம் போகத்தால் க்ஷயமாகி நனப்போகத் தைக்கொடுக்குங் கருமம் கிளம்புங்கால், இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா

கனவைப் பரித்தியாகஞ்செய்து நனவையடையும். அந்நனுப் போகத்தைக்கொடுக்குங் கருமம் க்ஷயமாகி கனுப்போகத்தைக் கொடுக்குங் கருமம் கிளம்பிய போது, இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா அந்நனவைவிடுத்து மீண்டுங் கனவையடையும். ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் விளையாடும் பாலகனுனவன் ஒரு பதார்த்தத்தைப் பரித்தியாகஞ்செய்து, மற்ருெரு பதார்த்தத்தைக் கவர்வனே அங்ஙனம், ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மாவொன்றே பூர்வ பூர்வ அவஸ்தையைப்பரித்தியாகஞ்செய்து, உத்தர உத்தர அவஸ்தையைக்கவரும். இக்காரணத்தால் சுருதிபகவதியானவள் அந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மாவை "ஏகஹம்ச" நாமத்தாற் கூறினள். ஹே ஜனகராஜாவே! இவ்வுலகின்கண்ணே தரு முதலிய ஸ்தாவர சரீரங்கள் யாவற்றையும், மனுஷர் முதலிய ஜங்கமசரீரங்கள் யாவற்றையும், அன்னத்தாலும் நீராலும் இச்சீவன் நிரந்தரம் நிறைவிப்பன். இக்காரணத்தால் வேதத்தையுணர்ந்த பெரியோர் அச்சரீரங்களைப் "புரி" யென்னும் நாமத்தாற் புகலா நிற்பர். அச்சரீரரூபப் புரிகளினிடத்தே இச்சுயஞ்ஜோதியாய ஆன்மா நிவாசஞ்செய்யும். இக்காரணத்தாற் சுருதிபகவதியானவள் அச்சுயஞ்ஜோதியாய ஆன்மாவைப் புருஷநாமத்தாற் புகன்றனள். ஹே ஜனகராஜாவே! மகாராஜாவானவன் தனது புரியை விடுத்து, மற்ருெரு தேயத்திற்குச் செல்வனுயின் தனது புரியைக் காப்பாற்றும்பொருட்டு, ஒரு பிரதானமான மந்திரியை அப்புரியின்கண்ணே ஸ்தாபனஞ்செய்து செல்வன். அதுபோல, இச்சுயஞ்ஜோதியாய புருஷன் இத்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து கனவையடையுங்கால், இத்தூலசரீரக்காப்பின்பொருட்டுப் பிராணனைவைத்துச் செல்வன். இச்சுயஞ்ஜோதியாய புருஷன் மரணத்தை யடையுங்காலத்துப் பிராணனையுங்கூட அழைத்துக்கொண்டு பரலோகத்தையடைவன். ஹே ஜனகராஜாவே! இத்தூலசரீர அபிமானத்தைப் பரித்தியாகஞ்செய்து, இச்சுயஞ்ஜோதியாய புருஷன் கனவின்கண் ஹிதையென்னும் நாடிகளில் தனதிஷ்டப்படி சஞ்சரிப்பன். அங்ஙனம் நானுவகையாய பதார்த்தங்களைக் கற்பனைசெய்வன். ஹே ஜனகராஜாவே! மாயாவிகளாய இராக்கதர்களின் பாலகர் நானுவகையாய பதார்த்தங்களைச் செய்வதேபோல, இச்சுயஞ்ஜோதியாய ஆன்மாவுங்கனவின்கண் சுகதுக்கபோகத்தையடையும்பொருட்டு ஒருகால் பிரஹ்மாதி உயர்வாய சரீரங்களையடையும், ஒருகால் தரு முதலிய தாழ்ந்த சரீரங்களை யடையும். அங்ஙனமே அச்சரீரங்களைப் பரித்தியாகஞ்செய்து, ஹே ஜனகராஜாவே! கனவின்கண் இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா எந்த எந்தச் சரீரத்தை யடையாநிற்குமோ, அந்த அந்தச் சரீரங்கட்கு வேண்டிய அவ்வவ்வன்னபானுதி போகசாதனங்கள் யாவற்றையும் ஆண்டுச் செய்துகொள்ளும். ஹே ஜனகராஜாவே! கனவின்கண்ணே இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா தந்தை தாய்ரூபமும் தானேயாம் குருரூபமுந் தானேயாம். மனைவி, மைந்தர், சத்துரு, மித்துரு என்பன முதலிய சம்பூரண பதார்த்தங்களுந் தானேயாம். இங்ஙனம், அந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா கனவின்கண் நானுவகையாய உயர்ந்த தாழ்ந்த சரீரங்களைக் கற்பனைசெய்யும். ஹே ஜனகராஜாவே! இச்சுயஞ்ஜோதியாய ஆன்மா உண்மையாய்ச் சுகதுக்க போக்தாவன்றுமாயினும், கனவின்கண் தன்னிடத்தே போக்தாத்தன்மையின் சித்தியின்பொருட்டு, அந்தக்காரணத்தின்

விருத்திரூப போககற்பனையைச் செய்யும். அவ்வத் தேவதாதி சரீரங்கட்குப் போகிக்க யோக்கிய நானுவகையாய போக்கிய பதார்த்தங்களைக் கற்பனைசெய்யும். ஹே ஜனகராஜாவே! இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா உண்மையாய்க்காமாதி விகாரங்களற்றதாம். ஆயினும், இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா தன்னிடத்தே காமித்தன்மைக் கற்பனையைச் செய்யுங்கால் கனவின்கண் அழகிய மங்கையரின் ஆலிங்கனத்தால் பரமாநந்தத்தை யடையும். அம்மங்கையர் எத்தகையரென்னின், தேவாங்கனைகட்குச் சமானமாய எழிலையுடையவர், பதினறுவயதையுடைய யௌவனிகள், மரை புரையும் விசாலமாய மையூட்டிய கண்ணியர், நாயகனையடைய வேண்டுமென்னும் நல்லாசையுடையவர், திரண்ட கொங்கைகளின் பாரத்தானும், திகழ்ந்த விடையின் கீழ்ப்பாகப் பாரத்தானும், மந்த மந்தமாய நடையுடையவர், மதத்தாற் குனுக்கலுக்கு மெலுக்காற் பூமியின்கண்ணே சிதறும் புட்பாலங்காரங்களையும், பூஷணலங்காரங்களையும் பூண்டவர், சித்தத்தை மயக்கும் மத்தகத்திலிட்ட சிந்தூரத்தாற் காவிமயப் பூமியையும் திரஸ்காரஞ்செய்பவர், தங்கள் சரீர காந்தியால் அரிதாரமயப் பூமியையும் திரஸ்காரஞ்செய்பவர், தேவதைகளின் நந்தன வனத்திற்குச் சமானமாய உத்யானவனத்தின்கண்ணே உல்லாசமாய் உலாவுபவர், தூரியம், வீணைமுதலிய வாத்தியங்களின் மாதுரிய சப்தங்களால் பூமியைப் பூரணஞ் செய்பவர், கானவித்தையின்கண்ணும், அழகிய கண்ட முடைமையினும், மனோஹரத்தன்மையினும், அமரப்பெண்கட்குச் சமானமானவர், இத்தகைய மங்கையரோடு லீலை செய்துகொண்டு இப்புருஷன் கனவின்கண்ணே பரமாநந்தத்தை யடைவன். இத்துணை கூறியதால் கேவலம் புண்ணிய கருமத்தாலாய பலமுறுங் கனவு காண்பிக்கப்பட்டது. இப்போது கலந்த புண்ணிய பாவரூப கருமபலக் கனவைக் காண்பிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! நனவின்கண்ணே இப்புருஷன் ஒரு புண்ணியகரும மகிமையால் மங்கையர்முதலிய அனுகூல பதார்த்தங்களை நோக்கிச் சுகத்தையடைவன். தீநாற்ற முதலிய பிரதிகூல பதார்த்தங்களை நோக்கியும், தனது கை கால் முதலிய அவயவங்களின் அழகின்மையை நோக்கியும் துக்கத்தையடைவன். அதுபோலக் கனவின்கண்ணே இச்சுயஞ்ஜோதியாய ஆன்மா புண்ணிய பாவவசத்தால், அனுகூல பிரதிகூல வஸ்துக்களைக் கண்டு சுகதுக்கங்களையடையும். இப்போது கேவலம் பாவகருமத்தின் பலமாய கனவு காண்பிக்கப்பெறும்:—ஹே ஜனகராஜாவே! நனவின்கண்ணே கேவலம் பாவரூப கருமவசத்தால் இப்புருஷன் கள்வன், புலி முதலிய பிரதிகூல பதார்த்தங்களைக் கண்டு பரம துக்கத்தை யடைவன். அதுபோலக் கனவின்கண்ணும் கேவல பாவகர்மவசத்தால் கள்வன், வியாக்கிர முதலிய பதார்த்தங்களைக் கண்டு பரமதுக்கத்தை யடைவன். ஹே ஜனகராஜாவே! ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மாவை யான் நின்பொருட்டுக் கூறினேன். அதனைப் பாக்கிய ஹீனனுயபுருஷன் பார்ப்பதில்லை; மற்றோ, அந்த ஆன்மாவின் கிரீடைக்குச் சாதனமாய தேர் முதலிய பதார்த்தங்களையே அந்தப் பாக்கிய ஹீனபுருஷன் பார்ப்பன். எக்கால் இவ்விந்திரரூப ஆன்மா, கனவின்கண்ணும், துயிலின்கண்ணும் இந்திராணியோடுகூட ஆலிங்கனஞ் செய்துகொண்டு சயனத்தை யடையுமோ, அக்

கால் இவ்வாநந்த ஸ்வரூப ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மாவை எப்புருஷனும் துயிலி னின்றும் எழுப்பலாகாது. ஏனெனின், உலகின்கண்ணே ஏகாந்த தேசத் தின்கண்ணே கூடியிருக்கும் விஷயபோகத்தின் அபிலாஷை நீங்காத ஸ்திரீ புரு ஷர்களை எவனேனும் விரைவாகவே அவ்விடத்தினின்றும் வெளியிற் கிளப்புவா னாயின், அவ்விருவருக்கும் அத்தியந்தங் கலக்க முண்டாகும். அதுபோல, கனவு வடிவ ஏகாந்ததேசத்தின்கண்ணும், துயில்வடிவ ஏகாந்ததேசத்தின்கண்ணும், இராநின்ற ஆன்மவடிவ இந்திர இந்திராணிகளை எவனேனும் நித்திரையினின் றும் எழுப்புவானாயின், அவ்விருவரும் மிகுந்த கலக்கத்தை யடைவர். ஆகையால், துயிலாநின்ற புருஷனை ஒருகாலும் எழுப்பலாகாது. அல்லது, துயிலாநின்ற புருஷனை விரைவாக எழுப்புவதால், அவனது பிராணன் சரீரநாடிகளில் நியம மாய்ப் பிரவேசியாது. இக்காரணத்தாலும் துயிலாநின்ற புருஷனை விரைவாகக் கிளப்பலாகாது. அல்லது, மகாராஜாவானவன் ஓர் அவசியமாய காரியத்தைச் செய்யும்பொருட்டு, இரவின்கண்ணே தனது அந்தப்புரத்தினின்றும் விரைவாகவே வெளியிற் செல்வன். அந்த அரசனது செல்கையைக்கண்டு அவனுடைய சேனாதி பதி, சேவகன் முதலியோர் விரைவாகவே நன்னெறியாலேனும், புன்னெறியா லேனும் அவனது சந்நிதியையடைவர். அரசனுடைய சேவகன் அரசனுக்கு முன்பாகச் செல்லவேண்டிய நெறியைவிடுத்துப் புன்னெறியிற் செல்வனாயின், உலகரின் கிருகமுதலிய பதார்த்தங்களையுங் கெடுப்பன். அதுபோல, கனாத் துயில் வடிவ நித்திரையினின்றும் இசசீவான்மவடிவ அரசன் விரைவாகவரின், அந்தப் பிராணரூபக் கிங்கரனும் நாடிவடிவ மார்க்கத்தைவிடுத்து விரைவாகவே வெளியே செல்வன். அதனால், அப்புருஷனிடத்தே அங்கமுடங்கலென்னும் அசாத்திய ரோகத்தின் உற்பத்தியுண்டாம். இக்காரணத்தாலும், தூங்கும் புருஷனை எவனும் விரைவாக எழுப்பலாகாது. அல்லது, தூங்கும் புருஷனுக்கேனும் எழுப்பும் புருஷ னுக்கேனும் ஒருகால் பிராணனுக்குச் சமானமான ஒரு பிரியமாய காரியமாக வேண்டி இருந்தபோதிலும், தூங்கும் புருஷனைப் புத்திமானானவன் விரைவாக எழுப்பலாகாது. அல்லது, தூங்குகின்ற புருஷனுக்கேனும், எழுப்பும் புருஷனுக் கேனும் யாதாவதொரு மகா காரியம் உண்டாகுமாயின், உறங்காநின்ற புருஷனை இப்புருஷன் கோமள ஸ்பரிசாதி உபாயங்களால் பையப்பைய எழுப்பவேண்டும். அவ்வுறங்கும் புருஷனை விரைவாகவே எழுப்பின், அவ்வுறங்கும் புருஷனிடத்தே அசாத்திய ரோகத்தின் உற்பத்தி உண்டாம். அல்லது, உறங்காநின்ற புருஷனை எழுப்புவதால் உண்டாகாநின்ற பரமான்மவடிவ இந்திர இந்திராணிகளின் வியோ கமானது, உறங்காநின்ற புருஷனுக்கும் எழுப்பும் புருஷனுக்குந் துன்ப ஹேது வாம். ஏனெனின், எப்புருஷன் எழுப்புவனோ, அவனுக்கு வரும் சுகத்தை நாசஞ் செய்யும் பாவமுண்டாம், எழும்பும் புருஷனுக்கோ, வர்த்தமான சுகத்தை நாசஞ் செய்யும் பாவமுண்டாம். இக்காரணத்தால், உறங்காநின்ற எப்பிராணியையும் மதிமானானவன் விரைவாக எழுப்பலாகாது. மற்றோ, பையப்பைய எழுப்ப வேண் டும். இப்போது அதிஷ்டான ஆன்மாவின்கண்ணே பிரபஞ்சத்தின் இலயத்தை நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! எந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா கன வவஸ்தையை யுடையுமோ, அதுவே நனவவஸ்தையை அடையும். ஆகையால்

கனவின்கண்ணேயும நனவின்கண்ணேயும அந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா விற்குப் பேதமின்றும் நனவின்கண்ணும், கனவின்கண்ணும் ஆன்மாவிற்குப பேதம் உண்டாகுமாயின் எந்த யான் கனுப்பொருள்களை அனுபவித்தேனே, அந்த யானே இப்போது நனவின்கண்ணே அப்பதார்த்தங்களை ஸ்மரிக்கின்றேன் என, இவ்வண்ணம் உண்டாம யாவருடைய அனுபவமும் பயனற்றதாய்ப்போம். ஏனெனின், எப்புருஷன் எப்பொருளை அனுபவிக்கின்றனனோ, அப்புருஷனே அப் பொருளை மறறொரு காலத்தில ஸ்மரிப்பன். அந்நியன் அனுபவித்த பதார்த் தத்தை அந்நியன் ஸ்மரிபான். ஆகையால, இவ்வுலக அனுபவத்தாலும் நனுக் கனு ஆன்மாவின் அபேதமே சித்தமாம். ஹே ஜனகராஜாவே! சாஸ்திரத்தின் தாறபரியத்தை அறிநத மகான்ம புருஷர் இங்ஙனங் கூறுவர். நனவின்கண்ணே தேசகாலம் முதலாய் எத்துணைத் திருசிய பதார்த்தங்களுளவோ, கனவின் கண்ணே தேசகாலம் முதலாய எததுணைத திருசிய பதாாத்தங்களுளவோ, அவை யாவறறிற்கும் அதிஷ்டான ஆன்மாவினும வேறுய்ச சத்தையின்றும். இக் காரணத்தால் அந்த நனுக்கனுத திருசிய பதார்ததங்கள் அசததியமாம். எவை அசத்திய பதாாததமாமோ. அவறறிறகு அதிஷ்டானத்தினின்றும் பாஸ்பரம் பேதம் உண்டாகமாட்டாது. இரஜ்ஜுவின்கண்ணே கறபித சர்பபம், தண்டம், ஜலதாரை முதலிய அசத்திய பதார்ததங்களுக்குப பரஸ்பரம் அதிஷ்டானத்தி னின்றும் பேதஞ்சம்பவியாது. அதுபோல, அதிஷ்டான ஆன்மாவின்கண் கற் பித நனுக்கனுப் பொருள்களுககு அதிஷ்டான ஆன்மாவினின்றும பரஸ்பரம் பேதஞ்சம்பவியாது. உபாதியின் பேததகானை, ஆன்மாவின் பேதம் உண்டாம், உபாதிகளின் பேதம் நீஙகவே, ஆன்மாவின் பேதமும சம்பவியாது. ஆகையால். சர்வ அவஸ்தைகளின்கண்ணும ஆன்மாவிறகு அபேதமாம. இபபோது இப் பொருளையே மேல் வெளிபபடையாய்க் காண்பிப்பாம:—ஹே ஜனகராஜாவே! நனவின்கண்ணே சம்பூரண பூதபௌதிகரூபத் திருசியப பதார்த்தங்களோடு கூடிய தேசகாலங்கள் அத்தியஸ்தரூபத்தால அதிஷ்டான ஆன்மாவின்கண் இருக்கும். அதுபோல, கனவின்கண்ணும் பூதபௌதிகரூபத் திருசியப் பிரபஞ் சங்களோடு கூடிய தேசகாலங்கள் அததியஸ்தவடிவத்தால அதிஷ்டான ஆன் மாவின்கண்ணே யிருககும. ஆகையால, ஆனமரூப அதிஷ்டான திருஷ்டியா லும், இயல்பாலும் அநத நனுக கனுத தேச காலாதிகட்குப் பாஸ்பரம் பேதஞ் சம்பவியாது. அல்லது, தர்க்கததின்கண்ணே குசலராய நையாயிகரும் திசையின் கண் வேறு திசையையும், காலததின்கண் வேறு காலத்தையும் அங்கீகரிப்பதின் றும். இப்பொருளின்கண் நையாயிகர் இவ்வகையாய யுகதி கூறல்கூடும்:—அந்தத் தேசகாலரூப வஸ்து வேறொரு தேசகாலத்தின்கண்ணே இராது ; மற்றே, தமது வியவகார சித்தியின்பொருட்டு அந்தத் தேசகாலரூப வஸ்து தாதாதமிய சம்பந் தத்தால் தமது ஸ்வரூபத்தின்கண்ணே இருக்கும் என, இங்ஙனம் அவர்கள் கூற லும் நமது சித்தாந்தத்திற் கனுகூலமேயாம்.

சங்கை:—நையாயிகர் தம் மதத்தே திசை, காலம் என்னு மிரண்டும் விப்பு வாம், நித்தியமாம். அவற்றுள், எல்லாத்தேசத்தும் ஏப்பதார்த்தம் இருக்குமோ,

அதனை நையாயிகர் விபுவென்பர். எல்லாக் காலத்தும் எப்பதார்த்தமிருக்குமோ, அதனை நையாயிகர் நித்தியமென்பர். இவ்வகையாய இலக்கணத்தின்கண் தேசத்திற்குத் தேசத்தின்கண் ஆதாரத்தன்மை தோற்றும். காலத்தின்கண் காலத்திற் காதாரத்தன்மை தோற்றும். அபின்ன பதார்த்தங்கட்குப் பரஸ்பரம் ஆதார ஆதேய பாவமுண்டாகமாட்டாது. ஆகையால், தேசத்திற்கு மற்றொரு தேசத்தை ஆதாரமாய் அங்கீகரிக்கவேண்டும். காலத்திற்கு மற்றொருகாலத்தை ஆதாரமாய் அங்கீகரிக்கவேண்டும்.

சமாதானம் :—நையாயிகரது மதத்தின்கண்ணே, கடாபாவத்தில் யாதொரு படாபாவமிருக்கின்றதோ, அந்தப் படாபாவம் கடாபாவத்தினும் வேறன்றாம். மற்றோ, அந்தப்படாபாவம் கடாபாவரூபமாம். அங்ஙனமாயினும், கடாபாவத்தின்கண் படாபாவமுளது என்னும் ஆதார ஆதேய பாவம் பிரதீதியாம். அது போலத் தேசத்தின்கண் தேசமிருக்கின்றது, காலத்தின்கண் காலமிருக்கின்றது, கடத்தின்கண் கடமிருக்கின்றது என்னும் வியவகாரமும் அவற்றிற்குப் பேதமின்றியே உண்டாகக்கூடும் ஆகையால், தேசகாலாதிகட்கு உண்மையாய்ப் பேதமின்றாம்.

சங்கை :—தேசகாலாதிகளின் பேத வியவகார ஜனகமாய பேதத்திற்கு அசத்தியரூபத்தன்மை சம்பவியாது. ஏனெனின், யாது அசத்திய பதார்த்தமாமோ, அது எவ்வியவகாரத்திற்குங் காரணமாகமாட்டாது.

சமாதானம் :—சத்தியவஸ்துவே வியவகார ஜனகமாமென வாதியானவன் அங்கீகரிக்கின், அவன்பாலிது கேட்கவேண்டும் :—யாண்டு யாண்டு வியவகாரமாமோ, ஆண்டாண்டுச் சத்தியவஸ்துவேயாம் என்பது நியமமா? அல்லது, யாண்டு யாண்டுச் சத்தியவஸ்துவாமோ, ஆண்டாண்டு வியவகாரமாம் என்பது நியமமா? அவற்றுள், வாதியானவன் முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின், அது பொருந்தாது. ஏனெனின், ஒரு புருஷன் மற்றொரு புருஷனைநோக்கி வைவானேயாயின், அவன் அவ்வைதலைக்கேட்டுக் குரோதமுடையவனாவன். ஆண்டு வைதல் வடிவ வசனத்தின் பொருள் அசத்தியமாம். ஆனால், அவ்வசத்திய அர்த்தங் குரோதரூபவியவகாரத்தை உற்பன்னஞ்செய்யும். பதிவிரதையாயஸ்திரீயைநோக்கி எவனேனும் வியபிசாரியெனக் கூறின், ஆண்டு வியபிசார சப்தத்தின் பொருளாய பரபுருஷகமனம் அந்தப் பதிவிரதையின்கண் இன்றாம். அங்ஙனமாயினும், அவ்வசனத்தைக்கேட்டு அந்தப் பதிவிரதையாகிய ஸ்திரீயானவள் குரோதமுடையவளாவள். ஆகையால், யாண்டு யாண்டு வியவகாரமுண்டாமோ, ஆண்டாண்டுச் சத்திய அர்த்தம் இருக்குமென்னும் வாதியின் நியமம் சம்பவியாது. யாண்டு யாண்டுச் சத்தியப்பொருளாமோ, ஆண்டாண்டு வியவகாரமாம் என்னும் இரண்டாவது நியமத்தை வாதி அங்கீகரிக்கின், அதுவுஞ் சம்பவியாது. ஏனெனின், சத்தியரூபமாய பிரஹ்மாநந்தமானது சர்வ ஜீவர்களின் இருதய தேசத்தின்கண் விளங்கிக்கொண்டிருக்கிறது. ஆனால், அந்தப் பிரஹ்மாநந்தத்தின் ஞானரூப வியவகாரமேனும், சப்தரூப வியவகாரமேனும் எந்த அஞ்ஞானிகட்கு முண்டாவதின்றாம். ஆகையால், வியவகாரத்தால் வஸ்துவின் சத்தியத்தன்மை சித்தமாக

மாட்டாது. எம்மீமாம்சக வாதியானவன் சர்வ வியவகாரிக பதார்த்தங்களைச் சத்தியமென அங்கீகரித்துளானோ, அவன் மதத்தின்கண்ணும், முக்காலத்திலும் எதற்கு நாசமாவதில்லையோ, அது சத்தியமெனப்படும். இவ்வகையாய சத்திய சப்தத்தின் முக்கியப்பொருள் வியவகாரிக ஜகத்தின்கண்ணே சம்பவியாது. மற்றோ, நெடுங்கால பரியந்தம் நிலைத்திருக்கும் வடிவ கௌண சத்தியத்தன்மையை யங்கீகரிக்கவேண்டும். அல்லது, எவ்வாதியானவன் பேதத்தின்கண்ணே அபிநிவேசஞ் செய்துகொண்டு, தேசகால விபுத்தன்மை, நித்தியத்தன்மைகளின் சித்தியின்பொருட்டு, ஒரு தேசத்தின்கண் மற்றொரு தேசத்தை அங்கீகரித்தும், ஒரு காலத்தின்கண் மற்றொரு காலத்தை அங்கீகரித்தும் ஒரு கடத்தின்கண் மற்றொரு கடத்தை அங்கீகரித்தும் நிற்கின்றனனோ, அவ்வாதிக்கு வலுவிலேயே அனவஸ்தா தோஷவடைவுண்டாம். ஏனெனின், எங்ஙனம் முதற்றேசகாலம் இரண்டாவது தேசகாலத்தின்கண்ணே யிருக்குமோ, அங்ஙனமே, அவ்விரண்டாவது தேசகாலமும் மூன்றாவது தேசகாலத்தின்கண்ணே இருக்கும், மூன்றாவதும் நான்காவதன் கண்ணே இருக்கும், என அனவஸ்தா தோஷவடைவுண்டாம். வாதியானவன் ஆர்ஹதனைப்போல ஒரே வஸ்துவை அநேகரூபமாய் அங்கீகரிக்கின், உஷ்ணமாய அக்கினியினுக்குச் சீதளரூபத்தன்மை உண்டாதல் வேண்டும்; சீதளஜலத்திற்கு உஷ்ணரூபத்தன்மை உண்டாதல் வேண்டுமென்னும் இவ்வகையாய அவ்வியவஸ்தையை அடையும். ஆனால், உலகின்கண்ணே இத்தகைய அவ்வியவஸ்தை இன்றாம். மற்றோ, ஜீவர்களின் சுகதுக்க போகங்களின் பொருட்டுத் தேசகாலாதி சர்வ பதார்த்தங்களின் வியவஸ்தையேயுளது.

சங்கை :—எங்ஙனம் வாதியின் மதத்தின்கண்ணே வியவஸ்தை சம்பவிப்பதின்றோ, அங்ஙனம் தங்கள் அத்வைத மதத்திலும் ஜகத்தின் வியவஸ்தை சம்பவியாது.

சமாதானம் :—அத்வைத மதத்தின்கண்ணே ஆன்ம சாக்ஷாத்காரத்திற்கு முன்னர் சம்பூரண பதார்த்தங்களின் வியவஸ்தை சம்பவிக்கும். ஆனால், அந்த ஜகத்தின் வியவஸ்தை எப்பிரமாணத்தாலும் சித்தமன்றாம். மற்றோ, எங்ஙனங் கனாப்பொருள் மயலாற் சித்தமாமோ, அங்ஙனம், நனாப்பிரபஞ்சத்தின் வியவஸ்தையும் மயலாற் சித்தமாம். ஆகையால், நனாவஸ்தையின்கண்ணும், கனாவஸ்தையின்கண்ணும் இராநின்ற தேசகாலமும், அத்தேசகாலத்திராநின்ற ஸ்தூல சூக்ஷும பதார்த்தங்களுமாகிய யாவும் அத்விதிய ஆன்மாவின் கண்ணே கற்பிதமாம். அதிஷ்டான ஆன்மாவின் சத்தையை யுற்றே அந்நனாக் கனாப் பதார்த்தங் தத்தங் காரியஞ்செய்வதில் சமர்த்துடையதாம். ஆகையால், நனாப்பதார்த்தமும், கனாப்பதார்த்தமுஞ் சமானமாம். ஹே ஜனகராஜாவே! எங்ஙனம், இரஜ்ஜுரூப அதிஷ்டானத்தின்கண் சர்ப்பம், தண்டம், மாலை, ஜலதாரை என்னும் யாவும் கற்பிதமாமோ, அங்ஙனம் அதிஷ்டான சாக்ஷியாய ஆன்மாவின் கண் தேசகாலமே முதலாய சம்பூரண ஜகத்துங் கற்பிதமாம். ஆகையால், தேச

காலாதி சம்பூரண ஜகத்தும் அதிஷ்டான ஆன்மாவின்கண் இலயத்தை யடையும். ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் இரஜ்ஜுவின்கண்ணே கற்பிதமாய சர்ப்பம், தண்டம், மாலை, ஜலதாரை முதலிய பதார்த்தங்களின் பாஸ்பரபேதம் இரஜ்ஜுரூப அதிஷ்டான பேதத்தானன்றிச் சம்பவியாதோ, அங்ஙனம் அதிஷ்டான ஆன்மாவின் பேதமின்றி நனுக்கனுப் பிரபஞ்சத்தின் பரஸ்பரபேதஞ் சம்பவியாது. முற்கூறிய யுக்தியால் நனுக் கனுவின்கண் ஆன்மாவின் பேதஞ் சம்பவியாது. ஆகையால், ஆன்மாவின்கண்ணே கற்பிதமாய தேசகாலாதி பதார்த்தங்கட்கும் பரஸ்பர பேதஞ்சம்பவியாது.

சங்கை :—ஹே பகவன்! பரமார்த்த திருஷ்டியானே அபேதமேயாம். ஆனுல், காரிய திருஷ்டியால் எனக்குப் பேதமயல் உண்டாகின்றது.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! உலகின்கண்ணே ஆசிரயபேதத்தாலும், ஞானங்களின் பேதத்தாலும் பதார்த்தங்களின் பேதம் உண்டாம். இதுகுடம் என்னும் ஞானத்திற்கு விஷயம் குடமாம், அக்குடத்தின் ஆசிரயம் மண்ணும். இது படம் என்னும் ஞானத்திற்கு விஷயம் படமாம். அந்தப்படத்தின் ஆசிரயம்நூலாம். இவ்வகையாய ஞானங்களின் பேதத்தாலும், ஆசிரயங்களின் பேதத்தாலுங் கடபடாதி பதார்த்தங்கட்குப் பரஸ்பரம் பேதம் உலகின்கண்ணே கண்டோம். அவ்விரண்டும் ஜகத்தின்கண்ணே இன்றும். ஏனெனின், தேசகாலமே முதலாயுள்ள ஸ்தூலசூக்ஷ்மஜகத்திற்கு மாயாவிசிஷ்ட பரமான்மாஒன்றே ஆசிரயமாம். நேத்திராதி இந்திரியவாயிலாய் விருத்திரூபத்தால் கடாதி பதார்த்தங்களை விஷயஞ்செய்யும் அந்தக்கரணரூப கௌணஞானமும் ஒன்றேயாம். அங்ஙனம், அவ்விருத்திகளின்கண் ஆரூடமாய சைதன்யரூப முக்கியஞானமும் ஒன்றேயாம். ஆகையால், ஒன்றை ஆசிரயித்திருப்பதாய், ஒரு ஞானத்திற்கு விஷயமாய் இராநின்ற ஜகத்திற்குப் பரஸ்பரம் பேதஞ் சம்பவியாது. உபாதியின் பேதத்தாலே ஆன்மாவின் பேதம் உண்டாம் அந்த ஜகத்துருவ உபாதிகளின் பேதம் நீங்கவே, ஆன்மாவின் பேதமுஞ் சம்பவியாது. ஆகையால், நனுக்கனுப் பிரபஞ்சத்திற்கு ஓரோ ஆன்மா அதிஷ்டானமாம். ஆண்டு ககனத்தின்கண்ணே தோற்றும் மேகம், மின்னல் முதலிய பதார்த்தங்களின் பேதத்தால் அதிஷ்டான ஆகாசத்தின் பேதம் உண்டாகமாட்டாது. அதுபோல, அதிஷ்டான ஆன்மாவின்கண் தோற்றுநின்ற தேசகாலாதி பதார்த்தங்களின் பேதத்தால் அதிஷ்டான ஆன்மாவிற்குப் பேதஞ் சம்பவியாது. இத்துணை கூறியதால், ஆதேய பதார்த்தங்களின் பேதத்தை அங்கீகரித்தும் ஆன்மவடிவ ஆதாரத்தின் ஒருமையை நிரூபித்தோம். இப்போது கற்பித ஆதாரங்களின் பேதத்தை அங்கீகரித்தும், ஆதேய பதார்த்தங்களின் ஒருமையை நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! ஓரே கடமானது மண்ணுருவ அவயவங்களிடத்தே இருந்து தோற்றும். அக்கடமே கிருகத்தின்கண்ணும், கிருக அங்கணத்தின்கண்ணும் இருந்து தோற்றும். ஆண்டு, மண் கிருகம், கிருக அங்கணம் என்பனவாதி கடத்தின் ஆதாரங்களின் பேதம் இருப்பினும், ஆதேயரூப கடத்தின் பேதம் உண்டாகமாட்டாது. அதுபோல, நனுக் கனுத் துயில் என்பனவாதி அவஸ்தைகளின் பேதம் உண்டாயினும், ஸ்வயஞ்

ஜோதியாய ஆன்மாவின் பேதம் உண்டாகமாட்டாது. ஹே ஜனகராஜாவே! ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா நனுப் பதார்த்தங்களின் அதிஷ்டானமாம். அந்த ஸ்வயஞ் ஜோதியாய ஆன்மா கனுப் பதார்த்தங்களின் அதிஷ்டானமாம். ஆகையால், நனுப் பிரபஞ்சத்திற்கும், கனுப் பிரபஞ்சத்திற்குஞ் சிறிதுமாத்திரமும் விலக்ஷணத் தன்மையின்றும்; கற்பிதரூபத்தால் இரண்டுஞ்சமானமேயாம். ஆகையால், இங்ஙனம் பேதமற்ற ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா கனவின்கண்ணே ஸ்வயஞ்ஜோதி ரூபத்தால் இலங்குகின்றதென நின்பொருட்டுக் கூறினேன். இப்போது எப் பொருளைக் கேட்கவேண்டும் என்று நினக்கு இச்சை இருக்கின்றதோ, அப் பொருளை நீ என்பாற்கேட்குதி. ஹே மைந்த! இவ்வகையாய வசனத்தை யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவை நோக்கிக் கூறியபோது, அந்த மதிமானுய ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரை நோக்கி இவ்வகையாய வசனத்தைக் கூறினர். ஜனகராஜா கூறல்:—ஹே யாஞ்ஞவற்கிய முனிவரே! ஒரு பிராஹ்மணரானவர் எனக்குச் சாதாரணமாய் ஒரு வித்தையை உபதேசித்தபோதிலும், அந்தப் பிராஹ்மணர்பொருட்டு யான் ஆயிரங் கோக்களைத் தக்ஷிணையாகக் கொடுக்கின்றேன். அக்கோக்களோ யானைக்குச் சமானமாய விருஷபங்களோடு கூடியவாம். எவ்வன அவஸ்தைகளோடு கூடியவாம், சாஸ்திரத்தின்கண்ணே மேன்மைமிக்க கோக்களின் இலக்கணம் யாவை வரையப் பட்டிருக்கின்றனவோ, அவை யாவற்றோடுங் கூடியவாம். இத்தகைய கோக்களைச் சாஸ்திர ரீதியாய் மறையவர் பொருட்டுக் கொடுக்கப்படும் என்னும் நியமத்தை யாவரும் அறிந்திருக்கின்றார். ஆகையால், ஹே பகவன்! தாங்கள் என்பொருட்டுச் சாதாரண வித்தையை உபதேசஞ்செய்தீர்கள், அதற்காக ஆயிரங்கோக்களைக் குருதக்ஷிணையெனத் தங்களுக்கு அர்ப்பிக்கின்றேன், தாங்கள் அத்தக்ஷிணையை அங்கீகரிக்கவேண்டும். அதன் பின்னர் ஆன்மாவின் வாஸ்தவ ஸ்வரூப உபதேசத்தை என்பொருட்டுக் கிருபையினுற் செய்யவேண்டும். என மூன்று முறை ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரை நோக்கிக் கூறியபோது, அம்மகாமுனிவர் தமது மனத்தின்கண்ணே இங்ஙனமாராய்ந்தனர்:—யான் ஜனகராஜாவின் பொருட்டுச் சம்பூரணப் பிரஹ்மவித்தையை உபதேசஞ்செய்தும், இந்த ஜனகராஜாவானவன் அந்தப் பிரஹ்மவித்தையை உண்மை என அறிந்தான் இல்லை. மற்றோ, அந்நிய வித்தைக்குச் சமானமாய் இதுவும் ஒரு சாதாரண வித்தையென அறிந்தனன் என, மனத்தின் கண்ணே ஆராய்ந்து அந்த யாஞ்ஞவற்கிய முனிவரானவர் ஜனகராஜாவை நோக்கி இவ்வகையாய வசனத்தைக் கூறத் தொடங்கினர். யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல்:—ஹே ஜனகராஜாவே! தாங்கள் உபதேசித்த சாதாரண வித்தைக்குக் குருதக்ஷிணையாக ஆயிரங் கோக்களைத் தங்கள் பொருட்டு அர்ப்பிக்கின்றேன்; அதனை ஏற்றுக் கொண்ட பின்னர் ஆன்மாவின் உண்மைவடிவ உபதேசத்தை என் பொருட்டுச் செய்யவேண்டும் என நீ கூறிய வசனத்தைக் கேட்டு, யாம் நின் பொருட்டுபதேசித்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மாவை நீ உண்மையாயறிந்தனையா? அல்லதில்லையா? என்னும் ஐயம் எமக்கு உண்டாகின்றது. அது விஷயத்தை நீ எம்பாற் கூறவேண்டும்:—ஹே குழந்தாய்! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய

முனிவர் கூறியபோது, அந்த ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரை நோக்கி இவ்வண்ணங் கூறத்தொடங்கினர் :—ஹே யாஞ்ஞவற்கிய முனிவரே! தாங்கள் எனக்குபதேசித்த ஸ்வயஞ்ஜோதி ஆன்மாவை யானிதுவரையும் அறிந்தேனில்லை. ஆகையால், அந்த ஸ்வயஞ்ஜோதி ஆன்மாவின் ஞானத்தின்பொருட்டு இப்போது எனக்குபதேசிக்க வேண்டும். இப்போது முற்கூறிய பொருளின்கண் ஜனகராஜாவின் மூன்று வினாக்களை நிரூபணஞ் செய்வாம் :—ஹே யாஞ்ஞவற்கிய முனிவரே! முன்னர்த் தாங்கள் என்பொருட்டுக் கனவின்கண் இராநின்ற ஸ்வயஞ்ஜோதி ஆன்மாவை உபதேசஞ்செய்தீர்கள். அதன்கண்ணே யான் இவ்வகையாய தோஷத்தைக் காண்கின்றேன். அதாவது, கனவின்கண் இந்த ஸ்வயஞ்ஜோதி ஆன்மா சுந்தரஸ்திரீகளோடு கிரீடை செய்கின்றது, நகைக்கின்றது, நாலுவகையாய அன்னங்களை பக்ஷிக்கின்றது, பிரியபதார்த்தங்களைப் பார்க்கும் பொருட்டு முயல்கின்றது, அப்பிரிய பதார்த்தங்களினின்றும் நீங்குகின்றது. ஆகையால், இஃதறிந்து கொள்ளக்கிடந்தது :—அந்த ஸ்வயஞ்ஜோதி ஆன்மா போக்தாவாம், யாது போக்தாவாமோ அது சங்கமுடையதாம்; ஆதலின், கனவின்கண்ணே அந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா அசங்கமாக மாட்டாதன்றோ? என்னுமிது முதல்வினாவாம். இப்போதிரண்டாவது வினாவை நிரூபணஞ் செய்வாம் :—ஹே யாஞ்ஞவற்கிய முனிவரே! தாங்கள் கனவின்கண்ணே ஆன்மாவை அசங்கமெனக் கூறினீர்கள்; அஃதெங்ஙனஞ் சம்பவிக்கும். ஏனெனின், கனவின்கண் இராநின்ற சூக்ஷுமசரீரம் அசங்கமாம்; ஆதலினானே, அந்தச் சூக்ஷுமசரீரத்திற்கு மலை முதலியவற்றின்கண்ணும் பிரவேசங் கூடும். இத்தகைய அசங்க சூக்ஷுமசரீரத்தோடுகூடிய ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மாவிற்கும் அசங்கரூபத்தன்மை சம்பவிக்கும். ஆயினும், நனவின்கண் இராநின்ற ஸ்தூலசரீரமானது யாவருக்குஞ் சங்கமுடையதாகத் தோற்றுகின்றது. அந்தச் சங்கமுடைய ஸ்தூலசரீரத்தின்கண் இராநின்ற ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மாவிற்கு அசங்கரூபத்தன்மை சம்பவியாதன்றோ? இஃதிரண்டாவது வினாவாம். இப்போது மூன்றாவது வினாவை நிரூபிப்பாம் :—ஹே யாஞ்ஞவற்கிய முனிவரே! நனவையும் கனவையும் அடையாநின்ற ஒரு ஆன்மாவிற்கு இரண்டிடத்தும் இருப்புளதாதல் அத்தியந்தங் கூடாததாம். ஏனெனின், எங்ஙனம் உஜ்ஜயினிபுரியின்கண் இராநின்ற அரசனானவன் ஸ்ரீ காசிபுரியின்கண் இருக்கமாட்டானோ, மற்றோ, ஸ்ரீ காசிபுரியின் அரசனானவன் உஜ்ஜயினிபுரியின் அரசனினும் வேறேயாவனோ? அங்ஙனம், நனவின்கண் இராநின்ற ஆன்மாவானது கனவின்கண் இருக்கமாட்டாது. மற்றோ, நனவின்கண் இருக்கும் ஆன்மாவினும் கனவின்கண் இருக்கும் ஆன்மா வேறேயாம் என்பது மூன்றாவது வினாவாம். ஹே குழந்தாய்! இவ்வகையாய மூன்று வினாக்களை ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரை நோக்கிக் கேட்டபோது, அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் அவ்வரசருக்கு மூன்று வினாக்களின் விடைகளை முறையே உபதேசித்தனர். இப்போது முதல்வினாவின் விடையை நிரூபணஞ்செய்வாம் :—ஹே ஜனகராஜாவே! முன்னர் யான் கனவின்கண் எவ்வான்மாவை ஸ்வயஞ்ஜோதிரூபமாய் உன்பொருட்டுபதேசித்தேனோ அந்த ஸ்வயஞ்ஜோதி ஆன்மாவே ஒருகால் சம்பிரசாதமெனப்பெயரிய ஸ்தானத்

தின்கண் நிலைபெற்றிருக்கும். இப்போது சம்பிரசாத சப்தத்தின் அர்த்தத்தை நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் சரற்காலத்தின்கண்ணே ஜலமானது கலங்கலை விடுத்து நிர்மலமாமோ, அங்ஙனம் துயிலின்கண்ணே இவ்வாநந்த ஸ்வரூப ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா ஸ்தூல சூக்ஷ்ம சரீரங்களின் அபிமானத்தைப் பரித்தியாகஞ்செய்து நிலைத்திருக்கும். இக்காரணத்தால் வேதத்தை உணர்ந்த புருஷர் அத்துயிலை சம்பிரசாதமெனக் கூறுவர்.

சங்கை :—ஹே பகவன்! துயிலின்கண்ணுஞ்சுருதியானது ஆன்மாவின்கண் ரதியையுங் கதியையுங் கூறியிருக்கின்றது. அவற்றுள் நானுவகையாய்க் கிரீடை செய்தலை ரதியென்பர். நானுவகையாய விஷயங்களை அடையும்பொருட்டுச் சஞ்சரித்தலைக் கதியென்பர். ஆகையால், துயிலின்கண்ணும் விக்ஷேபத்தின் அபாவமின்றும். மற்றே, நனுக்கனுப்போலத் துயிலின்கண்ணும் ரதிகதிவடிவ விக்ஷேபமிருக்கின்றது.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! துயிலின்கண்ணே ரதிகதியென்னும் இரண்டுமின்றுமென்றுனும், துயிலடைவதற்கு முன்னரும் பின்னரும் அந்த ரதி கதியென்னும் இரண்டும் இருக்கின்றன. அவற்றைக் கவர்ந்து துயிலின்கண்ணே சுருதி பகவதியானவள் ஆன்மாவின்கண் ரதிகதிகளைக் கூறினள். இவ்வாறே சுகதுக்கரூபப் பலன்களைக் கொடுக்கும் புண்ணியபாவரூபக் கருமங்கள் துயிலின்கண்ணே இன்றுமாயினும், அவை துயிலின்கண்ணே காரண அஞ்ஞானரூபமாயிருக்கும். துயிலின்கண்ணே புண்ணியபாவரூப கருமங்கட்கு எவ்வாற்றுனும் அபாவமேயிருப்பின், துயிலின் பின்னர் நனவின்கண்ணும், கனவின்கண்ணும் சுகதுக்கரூப பலத்தின் அடைவுண்டாகலாகாது. ஆனுல், நனுக்கனுக்களில் சுகதுக்கரூப பலத்தின் அடைவு சர்வஜீவர்களிடத்துங் காணப்பெறுகின்றது. ஆகையால், இஃதறிந்துகொள்ளலாமன்றே :—துயிலின்கண்ணே புண்ணியபாவரூபகருமங்கள் காரண அஞ்ஞானரூபமாயிருக்கும். துயிலின்கண் இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா தனது ஸ்வப்பிரகாச வடிவத்தால் அந்தக் காரண அஞ்ஞானத்தைப் பிரகாசஞ்செய்யும். இக்காரணத்தால் சுருதி பகவதியானவள், துயிலின்கண்ணே அந்த ஆன்மா புண்ணியபாவரூபக் கருமங்களைக் காணுமெனக் கூறினள். ஹே ஜனகராஜாவே! இவ்வனுதியாய சம்சாரத்தின்கண்ணே, இச்சீவான்மாவானது எவ்வண்ணம் முன் முன் சம்பிரசாதரூப அநேகந்துயிலவஸ்தைகளையடையுமோ, அவ்வண்ணம் இந்த ஜீவான்மா மீண்டும் துயில்வடிவச் சம்பிரசாதத்தை அடையும். இஜ்ஜீவான்மா துயில்வடிவச சம்பிரசாதத்தின்கண் எம்மார்க்கத்தாற் புகுமோ, அம்மார்க்கத்தால் இஜ்ஜீவான்மா அந்தத் துயில்வடிவச் சம்பிரசாதத்தினின்றும் வெளியே வரும். ஹே ஜனகராஜாவே! இஜ்ஜீவான்மா துயிலின்முன்னர் எந்த ஜாதியையுடைய சரீரத்தோடு கூடியதாமோ, அந்த ஜாதியையுடைய சரீரத்தைக் கவர்ந்தே சுழுப்தியடைந்திருந்த இது அச்சுழுப்தியினின்றும் வெளியே வரும். முற்சரீரத்தினும் விலக்ஷணமாய வேறுசரீரத்தை அடையமாட்டாது. ஆண்டு வியாக்கிர சரீரத்தோடுகூடிய இந்த ஜீவான்மா

வானது, சுழுப்தியவஸ்தையை யடையுங்காலத்து, வியாக்கிர சரீரத்தைக் கவர்ந்தே அச்சுழுப்தியினின்றும் வெளியில் வரும். இங்ஙனம் சிங்கம், குள்ளநரி, பன்றி, கீடம், மனுஷன் என்பன முதலியவாய பிராணிகள் யாவும் எவ்வெச்சாதியையுடைய சரீரங்களோடு கூடியனவாய்ச் சுழுப்திவடிவச் சம்பிரசாதத்தை யடையாநிற்குமோ, அவ்வச்சாதியையுடைய சரீரங்களைக் கவர்ந்தே மீண்டுஞ் சுழுப்தியினின்றும் வெளியேவரும்.

சங்கை :—ஹே பகவன்! இஜ்ஜீவான்மா சுழுப்திரூபச் சம்பிரசாதத்தினின்றும் வெளிவருவது சொப்பனத்தை யடையும்பொருட்டேயாம் எனச் சுருதி கூறியது சம்பவியாது. ஏனெனின், துயிலின்பின்னர்க் கனவேயாம் என்னும் நியமமின்றாம். மற்றோ, துயிலின்பின்னர் ஒருகால் நனவுண்டாம், ஒருகால் கனவுண்டாமன்றோ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! இஜ்ஜீவான்மா கனவை அடையும் பொருட்டு, துயிலினின்றும் வெளியேவரும் எனச் சுருதியானது கூறியது அசங்கதமன்றாம்; மற்றோ, உண்மையேயாம். ஏனெனின், ஈண்டு சொப்பன சப்தத்தால் கேவலம் சொப்பனவஸ்தையைக் கவரல்கூடாது; மற்றோ, சொப்பன சப்தத்தால் விபரீதஞானரூப விக்ஷேபத்தைக் கவர்ந்துகொள்க. அந்த விக்ஷேபரூபத்தன்மை எங்ஙனம் சொப்பனத்தின்கண்ணுமோ, அங்ஙனம் சாக்கிரத்தின்கண்ணுமாம். ஆகையால், சுருதியின்கண்ணே எந்தச் சொப்பன பதமுளதோ, அதனால் சாக்கிரம் சொப்பனம் என்னும் இரண்டையும் கவர்ந்துகொள்க.

இப்போது ஆன்மாவின்கண் அசங்கரூபத்தன்மையை நிரூபணஞ்செய்வாம்:— ஹே ஜனகராஜாவே! அவ்வாநந்தசொரூப ஆன்மா சுழுப்தியினின்றும் வெளியே வந்து விக்ஷேபரூப சொப்பனத்தின்கண் இருக்கும். அந்தச் சொப்பனத்தின்கண் இருக்கும் இந்த ஆநந்தஸ்வரூப ஆன்மாவானது, ஸ்திரீ சம்போகமே முதலாக நானாவகையாய விஷயங்களைக் காணும். ஆனால், எங்ஙனங் கடத்தைக் காணும் புருஷன் கடாதி திருசிய பதார்த்தங்களோடு சம்பந்தத்தையடையானோ, அங்ஙனம் கனவின்கண்ணே நானாவகையாய விஷயங்களைக் காணும் ஆன்மா, அந்தத் திருசியரூப விஷயங்களோடு சம்பந்தத்தையடையமாட்டாது.

சங்கை :—ஹே பகவன்! கனவின்கண் இந்தத் திருஷ்டாவானவன் எங்ஙனம் உருவாதி விஷயங்களை யுணர்வானோ, அங்ஙனம் யான்சுகி யான்துக்கி யென்னுந் தோற்றத்தால், அகம் சப்தத்தின் அர்த்தமாய ஆன்மாவையும் உணர்வன். ஆகையால், கனவின்கண் எங்ஙனம் உருவமுதலிய பதார்த்தங்கள் ஞானத்திற்கு விஷயங்களாமோ, அங்ஙனம் ஆன்மாவும் யானென்னும் ஞானத்திற்கு விஷயமாம். ஆகையால், உருவமுதலிய திருசிய பதார்த்தங்களோடு திருஷ்டாவிற்குச் சம்பந்தமின்றாயினும், ஆன்மவடிவத் திருசிய பதார்த்தத்தோடு திருஷ்டாவிற்குச் சம்பந்தமுண்டாமன்றோ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! ஆன்மாவால் விசிஷ்டமாய பதார்த்தத்தை எப்புருஷனுங் காணச் சமர்த்தனல்லன். ஏனெனின், எவ்வாதியானவன்

ஆன்ம விசிஷ்டபதார்த்தத்தின்கண் ஞானவிஷயத் தன்மையை யங்கீகரிக்கின்ற னரேல், அவ்வாதிக்கு ஆன்மாவின்கண்ணும் பலாத்காரமாய் விஷயத்தன்மையை அங்கீகரிக்க வேண்டிவரும். ஏனெனின், எத்தருமம் விசேஷண விசிஷ்ட பதார்த் தத்தின்கண்ணே இருக்குமோ, அத்தருமம் விசேஷணத்தின்கண்ணும் அவசிய மிருக்கும். நீலகடமென்னும் ஞானவிஷயத்தன்மை நீல குணவிசிஷ்ட கடத்தின் கண்ணே இருக்கும். அன்றியும், அவ்விஷயத்தன்மை நீலகுணரூப விசேஷணத் தின்கண்ணுமிருக்கும். அதுபோல, ஆன்ம விசிஷ்ட பதார்த்தத்தின்கண் இருக் கும் ஞானத்தின் விஷயத்தன்மை விசேஷணரூப ஆன்மாவின்கண்ணும் அவ சிய மிருக்கும். அல்லது, எப்புருஷன் விசேஷணத்தையும், விசேஷியத்தையும், அவ்விரண்டின் சம்பந்தத்தையும் அறிகின்றானில்லையோ, அப்புருஷன் விசிஷ்ட பதார்த்தத்தை அறியான். ஆகையால், விசிஷ்ட பதார்த்த ஞானத்தின்கண் விசேஷண ஞானமும், விசேஷிய ஞானமும், அவற்றின் சம்பந்த ஞானமும் காரணங்களாம். தண்டவிசிஷ்ட புருஷனை விஷயஞ் செய்யும் "தண்டிபுருஷன்" என்னும விசிஷ்டஞானம், தண்டரூப விசேஷணத்தின் ஞானத்தானன்றியும், புருஷரூப விசேஷிய ஞானத்தானன்றியும், தண்ட புருஷர்களின் சையோக சம் பந்த ஞானத்தானன்றியும் ஒருகாலும் உண்டாகமாட்டாது. மற்றோ, தண்டம், புருஷன், சையோகம் என்னும் மூன்றின் ஞானத்தானே "தண்டிபுருஷன்" என்னும் விசிஷ்டஞானம் உண்டாகின்றது. இவ்வண்ணம் எந்த ஞானம் ஆன் மவிசிஷ்ட பதார்த்தத்தை விஷயஞ்செய்யுமோ, அந்த ஞானம் விசேஷணரூப ஆன்மாவையும் அவசியம் விஷயஞ்செய்யும். ஆகையால், ஆன்மாவின்கண்ணும் ஞானவிஷயத்தன்மை யுண்டாம்.

சங்கை :—ஹே பகவன்! ஆன்மாவின்கண் ஞானவிஷயத்தன்மை அங்கீக ரிப்பதில் யாது ஹானியுண்டாம்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! வலதுகர முஷ்டியால் வலதுகர முஷ்டி யைக் கவர்தல் கூடாததேபோல, ஆன்மாவால ஆன்மாவின் கவர்ச்சி எவ்வாற்ரு னுஞ் சம்பவியாது. ஆன்மாவின்கண்ணும் ஞானவிஷயத்தன்மையை அங்கீகாரஞ் செய்யின், எவ்வெப்பொருள் ஞானவிஷயமாமோ, அவ்வப்பொருள் ஜடமாம், ஞானவிஷயமாதலின், கடாதி பதார்த்தம் ஜடமாதலேபோல, ஞானவிஷயமாதலின் ஆன்மாவும் ஜடமாம். எவ்வெப்பொருள் ஜடரூபமாமோ, அவ்வப்பொருள் அனான்ம ரூபமாம்; ஜடரூபமாதலின், கடாதி பதார்த்தம் அனான்ம ரூப மாவதேபோல, ஜடரூபமாதலின் ஆன்மாவும் அனான்மரூபமாகும். ஆன்மா வின்கண் அனான்மரூபத்தன்மையை எவ்வாதியும் அங்கீகரிப்பதில்லை. அல்லது, வாதியானவன் ஜடபதார்த்தங்களையும் ஆன்மரூபமென அங்கீகரிக்கின், ஜட ஆன் மாவின்கண் ஆன்மரூபத்தன்மை இருப்பதேபோல, ஜடகடாதிகளின்கண்ணும் ஆன்மரூபத்தன்மையை அவசியம் அங்கீகரிக்கவேண்டும். ஆனல், ஜடகடாதி களை எவ்வாதியும் ஆன்மரூபமென அங்கீகரிப்பதில்லை. ஆகையால், இப்பொருள் சித்தமாயதன்றோ :—ஆகாசாதி விபுபதார்த்தங்களிடத்தேயும், கடாதி பரிச்

சின்ன பதார்த்தங்களிடத்தேயும் யாண்டு யாண்டு ஜடத்தன்மை இருக்குமோ, ஆண்டாண்டு அஞன்மரூபத்தன்மை காணப்படவில்லை. ஆதலின், ஆன்மாவின் கண் எந்த ஞானத்தின் விஷயத்தன்மையுமின்றாம். எவ்வாதியானவன் யான் சுகி யான்துக்கி என்னும் ஞானத்தின் விஷயத்தன்மையை ஆன்மாவின்கண் அங்கி கரிக்கின்றனனோ, அவ்வாதி மயலாலே அங்கீகரித்துளான். ஏனெனின், "யான்" என்னும் ஞானத்தின் விஷயத்தன்மையாகிய அந்தக்கரணத்தின் விஷயத்தன்மை யைச் சுத்த ஆன்மாவின்கண் ஆரோபணஞ் செய்து, அவ்வாதியானவன் ஆன் மாவை யானென்னும் ஞானத்திற்கு விஷயமாய் அங்கீகரித்துளான். ஆகையால், ஆன்மா எந்த ஞானத்திற்கும் விஷயமன்றாம். ஹே ஜனகராஜாவே! கனவின் கண்ணே ஸ்திரீ சம்போகமே முதலாய் எத்துணை அன்னபானுதி திருசிய பதார்த் தங்களுளவோ, அவற்றோடு திருஷ்டாவாய ஆன்மாவிற்குச் சம்பந்தமின்றாம். ஏனெனின், இவ்வுலகின்கண்ணும் எப்புருஷன் திருஷ்டாவாவனோ, அவனுக்குத் திருசியபதார்த்தத்தோடு சம்பந்தம் உண்டாகமாட்டாது. எங்ஙனம், கடாதி பதார்த்தங்களைப் பார்க்கும் திருஷ்டாவிற்குக் கடபடாதி திருசிய பதார்த்தங்க ளோடு முக்காலத்தினும் சம்பந்தமின்றுமோ, அங்ஙனம், கனவின்கண் கனவைக் காணும் புருஷனுக்குக் கனுத்திருசிய பதார்த்தங்களோடு முக்காலத்தினும் சம் பந்தமின்றாம். ஆகையால், ஹே ஜனகராஜாவே! இவ்வண்ணம் கனவின்கண் சர்வ சங்கங்களுமற்ற அசங்க ஆன்மா ஸ்வப்பிரகாசரூபமா யறியப்படின் அதிகாரி கட்கது மோக்ஷத்தை யடைவிக்கும். ஹே மைந்த! இவ்வண்ணம் முதல் வினு விற்கு விடையை யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவை நோக்கிக் கூறியபோது, அந்த ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரின் விடையை அங்கீகரித்தனர். அதன் பின்னர், அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவை நோக்கி, இரண்டா வது வினுவிற்கு விடை பகரத் தொடங்கினர். யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல்:— ஹே ஜனகராஜாவே! எங்ஙனம், திருஷ்டாவாய ஆன்மாவைக் கனுப்பொருள்கள் பற்றுவதில்லையோ; அங்ஙனம், திருஷ்டாவாய ஆன்மாவை நனுப் பதார்த்தமும் பற்றமாட்டாது. ஆகையால், கனவிற்போல நனவின்கண்ணும் ஆன்மா அசங்க மாம். இப்போது இப்பொருளை வெளிப்படுத்தும் பொருட்டு, நனுவஸ்தை கனு வஸ்தைகளின் துல்லியத் தன்மையை நிரூபணஞ் செய்வாம்:—ஹே ஜனகரா ஜாவே! எங்ஙனம், இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா நனுப்பொருள்களைக் கண்டு கொண்டு கனுவையடையுமோ, அங்ஙனம் கனுவின்கண் இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா நாடிரூப மார்க்கத்தையும், புண்ணிய பாவரூப கருமத்தையும், புத்தியை யுங் கண்டு கொண்டே நனுவிற்குவரும். எந்த நாடிரூப மார்க்கத்தால் இந்த ஜீவான்மா கனவின்கண்ணே சென்றதோ, அந்த நாடிரூப மார்க்கத்தால் இந்த ஜீவான்மா நனவையடையும். ஆகையால், நனுக்கனு இரண்டுஞ் சமானமாம்; ஈண்டுக் கனவவஸ்தையினும் நனவவஸ்தையின்கண் இத்துணை விசேஷத் தன்மை யுளது:— நனவவஸ்தையின்கண்ணே கேவலம் பாகியத்தன்மை மாத்திரம் உளது. கனவவஸ்தையின் கண்ணே, பாகியத் தன்மை, ஆந்தரத்தன்மை என்னும் இரண்டுமுளது. அவற்றுள், நனவவஸ்தையைக் குறித்தோ கனவவஸ் தையின்கண் ஆந்தரத் தன்மையுளது. துயில் அவஸ்தையைக் குறித்தோ கன

வவஸ்தையின்கண்ணே பாகியத் தன்மையுளது. ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் கனவவஸ்தையின்கண் இந்தத் திருஷ்டாவானவன் திருசிய பதார்த்தங்களின் சங்கத்தினின்றும் இரகிதனுவனே, அங்ஙனம் நனவவஸ்தையின்கண்ணும் இந்தத் திருஷ்டாவானவன் திருசிய பதார்த்தங்களின் சங்கத்தினின்றும் இரகிதனுவன். ஆகையால், கனவவஸ்தையிற்போல நனவவஸ்தையின்கண்ணும் இந்தத் திருஷ் டாவாய ஆன்மா அசங்கமாம். கருத்திதுவாம்:—ஒரு மூர்த்த பதார்த்தத்திற்கு மற்றொரு மூர்த்த பதார்த்தத்தோடு உண்டாம் கிரியா ஜன்னிய சையோக சம்பந் தத்தை நூல் உணர்ந்த நுண்மதியோர் சங்கமென்பர். கடரூப மூர்த்த பதார்த் தத்திற்குப் பூதலரூப மூர்த்த பதார்த்தத்தோடு கிரியா ஜன்னிய சையோக சம்பந் தம் யாதுளதோ, அதனையே சங்கமென்பதுபோலவாமென்க. இவ்வகையாய சங் கம் எப்பதார்த்தத்தோடும் ஆன்மாவிற்குச சம்பவியாது. ஏனெனின், ஆன்மா ஆகாசத்தைப்போல அமூர்த்தமாம், அங்ஙனமே விபுவாம். அமூர்த்த விபு பதார்த்தத்தின்கண் எவ்வாறியுங் கிரியையை அங்கீகரிப்பதில்லை. ஆகையால், விபு வாய ஆன்மாவிற்குக் கிரியா ஜன்னிய சையோகரூப சங்கம் எப்பதார்த்தத்தோடும் சம்பவியாது. ஆகையால், கனவவஸ்தையிற்போல நனவவஸ்தையின்கண்ணும் ஆன்மா அசங்கமாம். ஹே குழந்தாய்! இவ்வண்ணம் யாஞ்ஞவற்கிய முனிவரா னவர் ஜனகராஜாவை நோக்கி இரண்டாவது வினுவின் விடையைக் கூறியபோது, அந்த ஜனகராஜாவானவர் அவ்விடையை அங்கீகரித்தனர். அதன் பின்னர் அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவை நோக்கி, மூன்றுவது வினுவின் விடையை மொழியத் தொடங்கினர்; யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல்:—ஹே ஜனகராஜாவே! நனவின்கண்ணே இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மா கனவிற்போல, பிரிய நாயகியோடு கிரீடை செய்தும், நாலுவகையாய மார்க்கங்களில் கமனஞ்செய் தும், புண்ணிய பாவரூப கருமங்களால் உண்டாய சுகதுக்காசார புத்தியைக் கண் டுந் திரிந்து, மீண்டுங் கனவவஸ்தையை யடையும். அக்கனவின்கண்ணே நாலு வகையாய பதார்த்தங்களைக்கண்டு, இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா மீண்டும் நனவை யடையும். இங்ஙனம் ஒரே ஸ்வயஞ் சோதியாய ஆன்மா முறையே நனு வஸ்தையையும், கனுவஸ்தையையும் அடையும். உலகின்கண்ணே ஜலத்தாற் பூரண மாய மகா நதியின்கண் இராநின்ற மகாமகரம் ஒன்றே ஒருகால் நதியின் இக்கரையை யடையும், ஒருகால் நதியின் அக்கரையை யடையும். அதுபோல, ஒரே ஸ்வயஞ் ஜோதியாய ஆன்மா ஒருகால் நனவவஸ்தையையடையும், ஒருகால் கனவவஸ் தையையடையும். ஆதலின், கனவைக்காணும் ஆன்மாவினும் நனவைக்காணும் ஆன்மா வேறன்றும். மற்றே, ஒரே ஆன்மா முறையாய் நனவையும் கனவையும் அடையும். ஒரேகாலத்தில் ஆன்மாவிற்கு நனுக்கனு அவஸ்தைகளின் அடைவை அங்கீகரிப்பதில்லை. ஆகையால், உஜ்ஜயினி புரியின் ஸ்ரீ காசிபுரியின் அரச திருஷ்டாந்தத்தால் நனுக்கனு ஆன்மாவின் பேதம் சித்தமாகமாட்டாது. மற்றே, தீர்த்தயாத்திரை செய்பவன் ஒருகால் ஸ்ரீ காசியை யடைவன், ஒருகால் உஜ்ஜயி னியை யடைவன். அதுபோல, ஒரே ஆன்மா ஒருகால் நனவையடையும், ஒருகால் கனவை அடையும். இத்துணை கூறியதால் மூன்றுவது வினுவிற்கு

விடைப்பகரப்பட்டது. இப்போது துயிலின்கண்ணும் ஆன்மாவின் அசங்கரூபத் தன்மையை நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! சேனமா (பருந்தா) னதே னும், அல்லது கருடனானதேனும், பூமிக்குச் சமீபமாய ஆகாச தேசத்தின்கண் இராநின்ற தனது கூட்டைப் பரித்தியாகஞ் செய்து, அத்தியந்தந் தூரமாய ஆகா சத்தின்கண்ணே செல்லும். ஆண்டுத் தனது கூட்டைவிட்டு அத்தியந்தந் தூர மாய ஆகாசத்தின்கண்ணே செல்வதால், அப்பறவைக்கு நான்குவகையாய பிரயோ ஜனம் உண்டாம். ஒன்றோ ஸ்திரீயின் அடைவு, மற்றொன்றோ பக்ஷணம் செய் வதற்கு யோக்கியமாய பதார்த்தத்தின் அடைவு, மற்றொன்றோ, அந்நிய பறவை களைக் கொல்லல், மற்றொன்றோ, தனது இச்சையைப் பூரணஞ்செய்து கொள்ளல். இந்நான்கு வகையாய பிரயோஜனங்களுள் ஒரு பிரயோஜனத்தைக் கவர்ந்தே அப் பறவையானது தனது கூட்டைவிட்டுத் தூர ஆகாசத்தின்கண்ணே செல்லும். ஆண்டுச் சென்ற பறவையானது அத்தியந்தஞ்சிரமத்தை யடையும்போது, விசி ராந்தி யடையும் பொருட்டுத் தனது இரண்டு பக்ஷங்களையுந் தனது சரீரத்தின் கண்ணே சுருக்கிக்கொண்டு தனது கூட்டை நாடி யடையும். அக்கூட்டின் கண்ணே இருந்து, அப்பறவையானது விசிராமத்தை யடையும். அதுபோல, இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மரூபபக்ஷியும் துயில்வடிவ கிருகத்தைப் பரித்தியாகஞ் செய்து, புண்ணிய பாவரூப இரண்டு இறகுகளின் பலத்தால் நனவுகனவு வடிவ தூர ஆகாசத்தின்கண்ணே செல்லும். அநநனவுகனவு அவஸ்தைகளில் நானுவகை யாய விஷய போகரூப வியாபாரங்களைச் செய்து, இவ்வான்மரூப பக்ஷியானது அத்தியந்தஞ்சிரமத்தை யடைந்தபோது, புண்ணிய பாவரூபமாய இரண்டு பக்ஷங் களையுஞ் சங்கோசஞ்செய்து, விசிராமம் அடையவேண்டித் துயில்வடிவ கிருகத்தை யடையும். அத்துயிலின்கண் இராநின்ற இநத ஸ்வயஞ்சோதியாய ஆன்மா எவ் விஷயத்தையும் இச்சிப்பதில்லை, எவ்விஷயத்தையும் பார்க்கவுமாட்டாது. இத்துணை கூறியதால் இப்பொருள் உணர்த்தப்பட்டது :—ஸ்தூல சூக்ஷ்ம சரீரத்தோடும், அவற்றின் தருமங்களோடும் ஆனமாவிற்கு உண்மையாய்ச் சம்பந்த மின்றும். அவற்றோடு ஆன்மாவிற்கு உண்மையாய்ச் சம்பந்தம் உண்டாமாயின், துயிலின்கண் ணும் அவை ஆன்மாவிடத்தே தோறறவேண்டும். ஆனல், துயிலின்கண்ணே அவை இலயமடைந்தபோதிலும், ஆன்மா சாக்ஷிரூபமாயிருக்கின்றது. ஆகை யால், அந்த ஸ்தூல சூக்ஷ்ம பதார்த்தங்களோடு ஆன்மாவிற்கு உண்மையாய்ச சம்பந்தமின்றும். இப்போது அஞ்ஞானரூப காரண சரீரத்தினின்றும் ஆன்மா வைப் பின்னமாக்கும்பொருட்டு, அவித்யாரூப அஞ்ஞானத்தின் சொரூபத்தையும், ஆன்மாவின் சொரூபத்தையும் நிரூபிப்பாம்:—இப்பொருள் சித்திக்கும் பொருட்டு, முதலில் கனத் துயில்களை யடையும் மார்க்கவடிவ நாடிகளை நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! நனவுகனவுத் துயில் என்னும் மூன்றவஸ்தைகளை யடையும்பொரு ட்டும், அவ்வவஸ்தைகளினின்றும் வெளியே வரும்பொருட்டும், எந்த ஸ்வயஞ் ஜோதி ஆன்மாவின் மார்க்கத்தை யான் நின்பொருட்டு முன்னர்க் கூறினேனே, அம்மார்க்கம் நாடிரூபமாம். அந்த மார்க்கரூப நாடிகள் இருதய ஸ்தானத்தி னின்றும் வெளிக் கிளம்பியவையாம். அந்நாடிகளுள்ளும் நூற்றொரு நாடிகள் பிரதானங்களாம். அந்தப் பிரதான நாடிகளின் சாகைவடிவ மற்றைய நாடிகள்

அநேகங்கோடிகளாம். அந்நாடிகளோ ஒரு கேசத்தை ஆயிரங்கூறாக்கின், அவற்றுள் ஒரு கூற்றிற்கொப்ப நொய்தாம். அல்லது, அக்கூற்றினும் நொய்தினும் நொய்தாம். அத்தகைய நாடிகளை நூல் உணர்ந்த நுண்மதியோர் 'ஹிதை' என்னும் பெயரால் அழைப்பர். ஏனெனின், மாதாவின் ஸ்தன்னியத்தின்கண் இரா நின்ற நாடிகள் பாலகனுக்குப் பாலுதவும். ஆகையால், அவை பாலகனுக்கு ஹிதஞ் செய்வனவாம். அதுபோலச் சர்வ சரீரத்தின்கண்ணும் இராநின்ற நாடிகள், கால் முதல் தலைபரியந்தஞ் சர்வ சரீரத்தின்கண்ணும், அன்னத்தின் சூக்ஷ்ம இரசத்தை உதவும். ஆகையால், அந்நாடிகள் இஜ்ஜீவனுக்கு அத்தியந்தம் ஹிதஞ்செய்வனவாம். இக்காரணத்தாலே,' சாஸ்திரம் உணர்ந்த பெரியோர் அந்நாடிகளை 'ஹிதை' என்னும் பெயரால் அழைக்கின்றனர். அந்நாடிகள் உலகின்கண்ணே நதிகள் நீரால் நிறைந்து நிற்பதேபோல, அன்ன பானாதிகளின் விசித்திர வர்ணங்களையுடைய ரசங்களால் பூரணமாம். மேலும், சித்திரக்காரனுடைய வீட்டில் சுக்கிலம், நீலம், பீதம் என்பன முதலிய அநேக வர்ணங்கள் நிறைந்த அநேக பாத்திரங்கள் இருப்பதேபோல, இச்சரீரத்தின்கண் கபத்தைத் தாரணஞ்செய்யும் நாடிகள் சுக்கில இரசத்தாற் பூரணமாம். வாதத்தைத் தாரணஞ்செய்யும் நாடிகள் நீல இரசத்தாற் பூரணமாம். பித்தததைத் தாரணஞ்செய்யும் நாடிகள் பிங்கல இரசத்தாற் பூரணமாம். அற்ப பித்தத்தைத் தாரணஞ்செய்யும் நாடிகள் ஹரித இரசத்தாற் பூரணமாம். உதிரத்தைத் தாரணஞ் செய்யும் நாடிகள் சிவப்பு இரசத்தாற் பூரணமாம். ஈண்டு, நீல சப்தத்தால் அஞ்சனத்திற (மைக்) கொப்பாய்க் கறுப்பு வர்ணமுடைய பதார்த்தத்தைக் கவர்ந்துகொள்க. ஹரித சப்தத்தாற் புற்றளத்திற்கு ஒப்பாய வர்ணமுடைய பதார்த்தத்தைக் கவர்ந்துகொள்க. பிங்கல சப்தத்தால் சுவர்ண சமானமான பீதவர்ணமுடைய பதார்த்தத்தைக் கவர்ந்துகொள்க. அன்றியும், சித்திரக்காரன் நீல பீதாதி இரண்டு மூன்று வர்ணங்களை ஒருங்குகூட்டி நூதன வர்ணத்தை உண்டாக்குவதேபோல, வாத பித்தாதி தாதுக்களின் சேர்க்கையால் நானாவகையாய வர்ணங்கள் உண்டாகும். அந்த நானாவகையாய வர்ணங்களால் நிறைந்திராநின்ற நாடிகளின் மார்க்கவாயிலாய் இந்த ஜீவான்மா கனவையுந் துயிலையுமடையும்.

இப்போது கனவின்கண்ணே காரியவாயிலாய் அவித்தையின் சொரூபத்தை நிரூபணஞ் செய்வாம் :—ஹே ஜனகராஜாவே ! அந்நாடிரூப மார்க்கத்தால் அடையத்தக்க கனா இருவகையாம். ஒரு கனா சுகத்தைக் கொடுப்பதாம். மற்றைய கனா துக்கத்தைக் கொடுப்பதாம். அவற்றுள், நனவவஸ்தையைப்போலப் புண்ணியத்தோடுகூடிய அவித்தையால் ஜனித்த கனவானது ஜீவர்கட்குச் சுகத்தைச்செய்யும். பாவகருமத்தோடுகூடிய அவித்தையால் ஜனித்த கனவானது ஜீவர்கட்குத் துக்கத்தைச் செய்யும். ஹே ஜனகராஜாவே ! நனவின்கண்ணே பிரதிகூலரூபமாய் அறிந்துள்ள கள்வர்முதலிய பதார்த்தங்கள் ஜீவர்கட்குத் துக்கத்தைக்கொடுக்கும். அநுகூலரூபமாய் அறிந்துள்ள மாலை சந்தனாதி பதார்த்தங்கள் ஜீவர்கட்குச் சுகத்தை யடைவிக்கும். அதுபோலக் கனவின்கண்ணும், பிரதிகூலரூபமாய் அறிந்த கள்வர் முதலிய பதார்த்தங்கள் ஜீவர்கட்குத் துக்கத்தை யடைவிக்கும். அநுகூலரூப

மாய் அறிந்துள்ள மாலை சந்தனாதி பதார்த்தங்கள் ஜீவர்கட்குச் சுகத்தையடைவிக்கும். ஆகையால், நனப்பதார்த்தங்களிடத்தேயும், கனப்பதார்த்தங்களிடத்தேயும் ஸ்வரூபத்தால் விசேஷத்தன்மை இன்றாம். சுகதுக்க உற்பத்திரூப காரியததாலும் விசேஷத்தன்மை இன்றாம். ஆகையால், நனப்பொருளுங் கனப்பொருளுஞ் சமானமேயாம். இப்போது துக்கத்தைக் கொடுக்குங் கனவை வெளிப்படையாய் நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! ஆகாசமானது சஸ்திராதிகளால் வெட்டுப்படலை யடையமாட்டாததேபோல, இவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவும் உண்மையாய்ச் சஸ்திராதிகளால் வெட்டுப்படலை யடையமாட்டாது. இத்தகைய ஆநந்த ஸ்வரூப நிர்விகார ஆன்மா, அந்தக்கரணாதி உபாதிகளின் சம்பந்தத்தால் கனவவஸ்தையை அடையுங்கால், பூர்வ பாவ கருமவசத்தால் இக்கனவைக்காணும் புருஷனைச் சோரன் பொருளை அபகரித்துச்செல்லும்பொருட்டுச் சஸ்திரங்களாற் கொல்வன். மாம்சத்தைப் பக்ஷணஞ்செய்யும் வியாக்கிரம், நரி முதலிய ஜந்துக்கள் கனக்காணும் புருஷனைக் கூர்மையாய நகங்களாலுந் தந்தங்களாலுங் காயப்படுத்தும். கூர்மையாய குளம்புகளால் அடிக்கும். ஹே ஜனகராஜாவே! ஆயுஷ் க்ஷயமான இப்புருஷனை ஜராவஸ்தை வசஞ்செய்துகொள்ளும். அதுபோல, உண்மையாய்ச சர்வ ஜகத்தையும் வசஞ்செய்யும் இவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவைக் கனவவஸ்தையின்கண் ஒரு துர்ப்புத்தியையுடைய தூர்த்த புருஷன் தனதுவசஞ் செய்துகொள்வன். அவன் வயப்பட்ட ஆன்மா கனவின்கண் பரம துக்கத்தையடையும். ஹே ஜனகராஜாவே! உலகின்கண்ணே துர்ப்புத்தியையுடைய அரச சேவகனானவன் தனத்தை அபகரிக்கும்பொருட்டுப் பலாத்காரமாய்த் தனிகனைத் தன்வயப்படுத்துவன். அதுபோலக் கனவின்கண்ணே இந்த ஜீவான்மாவை ஒரு தூர்த்த புருஷன் பலாத்காரமாய்த் தன்வயப்படுத்துவன். அவன் வயமாய இஜ்ஜீவான்மா பரமதுக்கத்தை அடையும். ஹே ஜனகராஜாவே! நனவின்கண்ணே இராஜத்துவாரத்திலிருக்கும் யானைக்குச் சமானமான ஆகாரத்தையுடைய காஷ்டத்தாலாக்கிய யானையைக்கண்டு, மூடனாகிய பாலகன் பயத்தையடைவன்; தனது கிருகத்தை நோக்கி ஓடுவன். அதுபோலக் கனவின்கண்ணும் இஜ்ஜீவான்மா யானையைக்கண்டு பயத்தையடையுந் தனது கிருகத்தைநோக்கி ஓடும். அதனாலிதற்கும பரமதுக்கமுண்டாம். ஹே ஜனகராஜாவே! நனவின்கண்ணே சமானபூமியின்கண் இராநின்ற ஒரு சித்திரமாய சபையைக் குழியென நினைந்து, துரியோதன ராஜாவைப்போல ஒரு மூட புருஷன் அக்குழியின்கண் வீழ்வன். அதுபோல, கனவின்கண்ணும் இஜ்ஜீவான்மா சமான பூமியைக் குழியென நினைந்து, அக்குழியின்கண் வீழும். அக்குழியின்கண்ணே வீழ்தலாலும், இஜ்ஜீவான்மாவிற்குப் பரம துக்கத்தினடையுண்டாம். ஹே ஜனகராஜாவே! நனவின்கண்ணே இப்புருஷன் எந்தெந்த அப்பிரிய பதார்த்தங்களை நோக்கிப் பயத்தையடைவனே, கனவின்கண்ணும் அந்தந்த அப்பிரிய பதார்த்தங்களைநோக்கி இஜ்ஜீவான்மா பயத்தையடையும்; என்பன முதலாய் அநேகம் பிரகாரமான துஷ்ட சொப்பனங்களைப் பாவகருமவயத்தால் இஜ்ஜீவான்மா யடையும். இத்துணை கூறியதால் பாவகருமத்தோடுகூடிய அவித்தையால் ஜனித்த துஷ்ட சொப்பன நிரூபணஞ் செய்யப்பட்டது.

இப்போது அவித்தையின் சொரூபத்தைக் கூறும்பொருட்டு, முதலில் அவித்தையின் விரோதியாய வித்தையின் ஸ்வரூபத்தை நிரூபிப்பாம்:—ஹே ஜனக ராஜாவே! இந்தப் பிரஹ்மமானது தேசகாலவஸ்து பரிச்சேதமற்றது, சர்வ ஜீவர்களின் ஆன்மரூபமாயது, ஸ்வயம்பிரகாசரூபமாயது, சச்சிதாநந்த ஸ்வரூபமாயது, அத்விதீயரூபமாயது. இத்தகைய அத்விதீய பிரஹ்மத்தின் விசேஷ ஸ்வரூபத்தைக் காதலாமலகம்போல, அதிகாரி புருஷர்களின் சமீபத்தே யாது கொடுக்குமோ, அல்லது, இத்தகைய அத்விதீயப் பிரஹ்மத்தின் விசேஷரூபத்தை அதிகாரிகளின் ஆன்மரூபமாய் எது ஒளிர்விக்குமோ, அதைச சாஸ்திரமுணர்ந்த பெரியோர் வித்தையென்பர். கருத்திதுவாம:—மகாவாக்கியத்தின் சிரவணத்தால் உற்பன்னமாய ஜீவேப்வர அபேதத்தை விஷயஞ்செய்யும அந்தக்காண விருத்தியால் உபலக்ஷித சைதன்னியத்தை வித்தையென்பர். இதனால, வித்தையின் ஸ்வரூபம் நிரூபிக்கப் பட்டது. இனி அந்தவித்தையால் நிவிருததிக்கத்தக்க அவித்தையின் ஸ்வரூபத்தை நிரூபணஞ்செய்வாம்:—ஹே ஜனகராஜாவே! அந்த வித்தையின் வேறாய பரிச்சின்ன அநான்மா, அசத்து ஜடதுக்கவடிவமாம். அதனைச் சாஸ்திரமுணர்ந்த புருஷர் அவித்தையென்பர். அந்த அவித்தை அஞ்ஞானத்தினும் வேறன்றாம்; மற்றோ, அந்த அவித்தை அஞ்ஞானரூபமாம். இப்போது இபபொருளையே எல்லாருடைய அனுபவத்தானும் வெளிபபடையாக்குவாம:—ஹே ஜனகராஜாவே! இவ்வாநந்த ஸ்வரூப பரமான்மா உண்மையாய்ச சஜாதியபேதம், விஜாதியபேதம், ஸ்வகதபேத மென்னும் மூவகையாய பேதங்களற்றதாம். மனவாக்குகட்கு அவிஷயமாம். ஸ்வப்பிரகாச சைதன்னியரூபமாம். இத்தகைய நிர்விகார ஆன்மா நானாரூபத்தை எங்ஙனம் அடையும்? இத்தகைய நிர்விகார சைதன்னிய பரமான்மாவினின்றும் அசத்து ஜடதுக்கரூப இவ்வுலகமானது எங்ஙனம் உற்பன்னமாகும்? என்னும் இவ்வகையாய வினவை எவனேனும் ஒருவனை நோககி மற்றொருவன் கேட்பானாயின், அவ்வினவைக் கேட்டவன் தனது சித்தத்தின்கண் யானறிநதிலேனென்னும் அனுபவத்தைச்செய்வன். அவ்வனுபவத்தின் விஷயமாகிய அஞ்ஞானமே அவித்தையின் ஸ்வரூபமாம். இதனால், அவித்தையின் வடிவம் காண்பிக்கபபட்டது. இப்போது கனவின்கண் அந்த அவித்தையின் வெளிப்படைத்தன்மையை நிரூபணஞ்செய்வாம்:—ஹே ஜனகராஜாவே! இவ்வவித்தையின் மகிமைபால் இஜ்ஜீவான்மாக் கனவின்கண் சஸ்திராதிகளால் தன்னை வெட்டுப்பட்டதாய்க் காணுந் துஷ்ட புருஷரின் வசத்தையடையும், சிங்க சர்ப்பாதிகளைக் கண்டு பயத்தையடையும், ஓடும், பெருங்குழியின் கண்ணே விழும், ஸ்திரீ முதலிய பிரிய பதார்த்தங்களின் வியோகத்தால் பரம துக்கத்தை யடையும், இவை முதலாக அநேகவகையாய துக்கங்களை இஜ்ஜீவான்மா யடையும்; இவை எல்லாம் அவித்தையினாலே உண்டாம். இப்போது இப்பொருளையே வெளிப்படையாய்க் காண்பிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! சுருதிபகவதியானவள் கனவின்கண் தேர்முதலிய சர்வ பதார்த்தங்களின் அபாவத்தைக் கூறியிருக்கின்றனள். ஏனெனின், சுகதுக்கங்களின் காரணமாய தேர்முதலிய பதார்த்தங்கள் பெரியனவாம். கனவு உண்டாகும் ஹிருதய ஸ்தானமோ அத்தியந்தம் அற்பமாம். அவ்வற்ப தேசத்தின்கண்ணே பெரிய தேர்முதலிய பதார்த்தங்களின்

ஸ்திதி கூடுதல் சம்பவியாது. நனவின்கண்ணே தேர்முதலிய பதார்த்தங்களது உற்பத்தியின்கண்ணே, நெடுந்தேசமும், நெடுங்காலமும், காஷ்டாதிகளும், மற்றும் பிறபதார்த்தங்களும் ஆகிய நாலுவகையாய காரணங்களாம். அக்காரணங்கட்கும் கனவின்கண்ணே அபாவமாம். ஆகையால், கனவின்கண்ணே அற்ப ஹிருதய தேசத்தே, அற்பகாலத்தே உண்மையாய்த் தேர்முதலிய பதார்த்தங்களின் உற்பத்தி சம்பவியாது. கனவின்கண்ணே தேர்முதலிய பதார்த்தங்கள் இன்றாகவே, அவற்றால் ஜனித்த சுகதுக்கங்களும் உண்மையாய்ச்சம்பவியாது. கனவின்கண்ணே சர்வ ஜீவர்கட்குந் தேர்முதலிய பதார்த்தங்களின் அனுபவம் உண்டாகின்றது. புண்ணியபாவ வயத்தால் சுகதுக்க வடைவுண்டாம். காரணமின்றிக் காரியத்தின் உற்பத்தி உண்டாகமாட்டாது என்னும் வார்த்தையுஞ் சர்வ லோகர்களின் அனுபவசித்தமாம். ஆகையால், சொப்பன பதார்த்தங்கட்கும் ஒரு காரணத்தை அங்கீகரிக்கவேண்டும்; லோகப்பிரசித்த தேசகாலாதி காரணங்களாலன்றி எப்பதார்த்தம் உற்பன்னமாமோ, அப்பதார்த்தஞ் சாக்ஷாத் மாயையின் காரியமேயாம். எங்ஙனம் யோக்கிய தேசகாலாதி காரணத்தாலன்றி, ஆகாசத்தின்கண்ணே கந்தர்வ நகரந் தோற்றா நிற்குமாதலின், அது சாக்ஷாத் மாயையின் காரியமேயாமோ, அங்ஙனங் கனவின்கண்ணும் உலகப் பிரசித்த தேசகாலாதி காரணங்களாலன்றியே தேர்முதலிய பதார்த்தங்கள் உற்பன்னமாம். ஆகையால், அத்தேர்முதலிய பதார்த்தங்கள் சாக்ஷாத் மாயையின் காரியமேயாம். அம்மாயை அஞ்ஞானரூப அவித்தையினும் வேறன்றாம்; மற்றோ, அம்மாயை அஞ்ஞான அவித்தைவடிவமாம். இதனால் அவித்தை, அஞ்ஞானம், மாயை என்னும் மூன்றன் அபேதம் நிரூபிக்கப்பட்டது. இப்போது சக்தி யவித்தைகளின் அபேதத்தை நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! கனவின்கண்ணே தேர்முதலிய உலகை உண்டாக்குங் கனக்காண்பவனுடைய சக்தி யாதுளதோ, அது அவித்தையினும் வேறன்றாம்; மற்றோ, அச்சக்தியையே சாஸ்திரமுணர்ந்த பெரியோர் அவித்தையென்பர். அல்லது, வாதியானவன் அசசக்தியை அவித்தையினும் வேறாய் அங்கீகரிக்கின், அவ்வாதியின்பால் இது கேட்கவேண்டும். அவித்தையினும் வேறாய அந்தச் சக்தியானது எக்காரியஞ்செய்வதிற் சமர்த்தமாம். கருத்திதுவாம்:—அந்தச் சக்தியால் இந்த ஜீவான்மா நனப்பிரபஞ்சத்தைத் தனது கனவின்கண்ணே கொண்டுவ[ருமா]? அல்லது, அந்தச் சக்தியால் இஜ்ஜீவான்மா வெளியே சென்று, நனத்தேர் மு[தலிய] பதார்த்தங்களைக் காணுமா? இவ்விரண்டு பக்ஷத்தின்கண்ணும் அச்சக்திக்கு அவித்தையினும் வேற்றுமை சித்தமாகமாட்டாது. ஏனெனின், நனவின்கண்ணே தூணிற்குச் சமானமாய் அத்தியந்தம் ஸ்தூலமாய ஒரு சர்ப்பத்தை ஒரு புருஷன் தனது காதின் சூக்ஷ்ம துவாரத்தின்கண் நிலைபெறுத்துவானாயின், அப்புருஷன் மாயைவடிவ அவித்தையின் பலத்தினாலே செய்வன். மாயைவடிவ அவித்தையினால் அன்றி இத்தகைய பொருந்தாத காரியஞ் செய்வதின்கண் எப்புருஷனுஞ் சமர்த்தனாகான். அதுபோல, கனவின்கண்ணே அங்குஷ்ட மாத்திர பரிமாண இருதய ஆகாசத்தின்கண்ணே ஜடசேதனரூப சர்வபாகிய ஜகத்தையும் மாயைவடிவ அவித்தையினாலன்றி யாவன் நிலைபெறச் செய்வன்; மற்றோ, மாயைவடிவ அவித்தையின்கண்ணே இத்தகைய சாமர்த்தியமாம். ஆகையால், கனவின்

கண்ணே பாகியப் பிரபஞ்சத்தையுள்ளே கொண்டுவரும் சக்தி மாயைவடிவ அவித்தையினின்றும் வேறன்றும். அல்லது, நனவின்கண்ணே எவனேனும் ஒரு புருஷன் பூவுலகின்கண்ணே இருந்துகொண்டு, கணமாத்திரையில் சூரிய லோகத்தையடைந்து மீண்டும் பூவுலகத்தை யடைவனுயின், அவன் மாயைவடிவ அவித்தையின் பலத்தினாலே சூரியலோகத்தைக்கண்டு வருவன். மாயைவடிவ அவித்தையினாலன்றி, இத்தகைய பொருந்தாத காரியத்தை எவனுஞ்செய்ய முடியாது. அதுபோல, கனவின்கண் இச்சரீரத்தின்கண்ணே பிராணன் இருப்பினும், இஜ்ஜீவனுக்குக் கணமாத்திரையில் வேறு தீவின்கண்ணே செல்கை உண்டாம். கணமாத்திரையில் சுவர்க்க லோகத்தைக் கண்டு மீண்டும் இப்பூமியின் கண்ணே வருகையுண்டாம்; என்பன முதலாக அநேகம் வகையான பொருந்தாத காரியங்கள் உளவாம். அவை மாயைவடிவ அவித்தையினாலன்றி யுண்டாகாது; மற்றோ, மாயைவடிவ அவித்தையின் வலுவினானே இத்தகைய பொருந்தாத காரியங்களை இஜ்ஜீவான்மா கனவின்கண்ணே செய்யும். ஆகையால், கனவைக் காண்பவனுடைய சக்தி மாயைவடிவ அவித்தையினின்றும் வேறன்றும். இதனால், கனவின்கண்ணே ஜாககிரத்தின் பாகியபதார்த்தங்களின் வருகை, ஜீவான்மாவின் வெளிச்செல்கை என்னும் இரண்டு பக்ஷங்களையுந் தழுவி, அச்சக்தியினுக்கு அவித்தைவடிவத் தன்மையைச் சித்தஞ்செய்தாம். இப்போது, அவ்விரண்டு பக்ஷங்களையும் கண்டனஞ்செய்வாம். ஹே ஜனகராஜாவே! கனவின்கண்ணே இக்கனுக்காணும் புருஷன் தனது மாயாசக்தியின் மகிமையால், நனப் பாகியபிரபஞ்சத்தை உள்ளே யிருக்குஞ் சித்தத்தின்கண்ணே கொண்டுவருகின்றனன். அல்லது, அம்மாயாசக்தியின் மகிமையால் இஜ்ஜீவான்மா வெளியேசென்று, நனப்பதார்த்தங்களைக்கண்டு வருகின்றனன். என்னும் இரண்டு பிரக்கிரியையின்கண்ணும் ஒரு சுருதிப் பிரமாணமுமின்றும்; மற்றோ, சுருதிபகவதியோ கனவின்கண்ணே ஹிருதய தேசத்தினுள்ளே, தேர்முதலிய சம்பூரண ஜகத்தின் உற்பத்தியைக் கூறுகின்றனள். ஆகையால், அவ்விரண்டு பிரக்கிரியைகளும் சுருதி விருத்தமாம். இதனால், அவ்விரண்டு பிரக்கிரியையின் கண்ணும் சுருதிப் பிரமாண விரோதங் காண்பிக்கப்பட்டது. இப்போது உலகரின் அனுபவத்தானும் அவ்விரண்டு பிரக்கிரியைகளின்கண் விரோதத்தன்மையைக் காண்பிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! கனவின்கண்ணே இக்கனுக்காணும் புருஷன் மாயாசக்தியின் மகிமையால் ஒருகால் நனப்பொருள்களை உள் ஹிருதய தேசத்தின்கண் கொண்டு செல்வனுயின், எந்த ஸ்திரீ புத்திராதி சேதனபதார்த்தங்களை இக்கனுக்காணும் புருஷன் கனவின்கண்ணே காண்கின்றனனே, அவர்கள் நனவின்கண் அக்கனுக்கண்ட புருஷனை நோக்கி, ஹே அன்ப! இன்று கனவின்கண் தாங்கள் எங்களை ஹிருதய தேசத்தின் கண்ணே கொண்டு சென்றிருந்தீர்களல்லவாவென, ஏன் கூறுவதில்லை? அல்லது, அக்கனுக்கண்ட புருஷன் நனவின்கண்ணே அவர்களை நோக்கி, ஹே என் உயிர்க்கொப்பானவர்களே! இன்று கனவின்கண்ணே யான் உங்களை ஹிருதய தேசத்தின் கண்ணே கொண்டு சென்றேனல்லவாவென, ஏன் கூறுவதில்லை? இவ்வகையாய வசனங்களை உலகின்கண்ணே எவரும் கூறுவதின்றும்; அன்றியும், இதனை உல

யின்கண் எவரும் அங்கீகரிப்பதுமின்றாம். ஆகையால், நனப்பொருள் கனவில் வரும் என்னும் பிரக்கிரியை எல்லாருடைய அனுபவத்திற்கும் விரோதமாம். அல்லது, கனவின்கண்ணே இஜ்ஜீவான்மா வெளிப்போந்து நனப்பொருள்களைக் காணும் என்னும் இரண்டாவது பிரக்கிரியையும் சம்பவியாது. ஏனெனின், கனவின்கண்ணே இஜ்ஜீவான்மா ஒருகால் வெளிப்போந்து பதார்த்தங்களைக் காணுமாயின், கனவின்கண்ணே இக்கனக்காணும் புருஷன் எந்த ஸ்திரீ புத்திராதி பந்துக்களைக் காண்கின்றனனோ, அவர்கள் நனவின்கண்ணே அவனை நோக்கி, ஹே அன்ப! இன்றிரவு தாங்கள் எங்களை வீட்டின்கண்ணே கண்டீர்களன்றோவென, ஏன்கேட்பதில்லை. அல்லது, அக்கனக்காணும் புருஷன் கனவின்கண் அவர்களை நோக்கி, ஹே உயிர்க்கொப்பாயினோரே! இன்றிரவு யான் உங்களுடைய வீட்டிற்கு வந்தேனன்றோவென, ஏன் கூறுவதில்லை? இவ்வித வசனத்தை உலகின்கண்ணே எவனும் எவனுக்குஞ் சொல்வதில்லை; சொல்லினும், அங்கீகரிப்பதுமில்லை. ஆகையால், கனவின்கண்ணே இஜ்ஜீவான்மா வெளிப்போந்து நனப்பொருள்களைக் காணும் என்னும் இரண்டாவது பிரக்கிரியையும் உலகானுபவ விருத்தமாம். அல்லது, எவ்வாதியானவன் கனவின்கண் வெளிப்பதார்த்தங்களை உள் ஹிருதய தேசத்தின்கண் வருவதாய் உடன்படுகின்றனனோ, அல்லது, கனக்காணும் புருஷனை வெளிப்போவதாய் உடன்படுகின்றனனோ, அவன்பாலிது கேட்கவேண்டும். கனக்காணும் புருஷனுடைய ஹிருதய தேசத்தின்கண்ணே எம் மனைவி, மைந்தர் முதலிய சேதனபதார்த்தங்கள வருகின்றனவோ, அவை கனவின் சூக்ஷ்ம சரீர விசிஷ்டமாய் வருகின்றனவா? அல்லது, நனவின் ஸ்தூலசரீர விசிஷ்டமாய் வருகின்றனவா? கனவின்கண் இக்கனக்காணும் புருஷன் வெளிப்போந்து கனவின் சூக்ஷ்மசரீர விசிஷ்ட மனைவி, மைந்தராதி சேதனபதார்த்தங்களைக் காண்கின்றனனா? அல்லது, நனவின் ஸ்தூலசரீர விசிஷ்ட மனைவி, மைந்தராதி சேதனபதார்த்தங்களைக காண்கின்றனனா? என்னும் இவ்விரண்டு பக்ஷங்களுள் கனவின் சூக்ஷ்மசரீர விசிஷ்டமாய் அம்மனைவி, மைந்தராதி சேதன பதார்த்தங்கள் கனக்காணும் புருஷனுடைய ஹிருதய தேசத்தின்கண் வருகின்றன; அல்லது, அக்கனக்காணும் புருஷன் வெளிபபோந்து கனவின் சூக்ஷ்ம சரீர விசிஷ்ட மனைவி, மைந்தராதி சேதன பதார்த்தங்களைக் காண்கின்றன என்னும் முதற் பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின், அது சம்பவியா ஏனெனின், எக்காலத்தே இக்கனக்காணும் புருஷன் கனவை யடைகின்றனனோ, அக்காலத்தே ஒருகால் அம்மனைவி, மைந்தராதி பந்துக்கட்கும் கனவின் அடைவு உண்டாகுமாயின், வாதியின் கூற்றுச் சம்பவிக்கும். ஆனால், கனவின்கண் இக்கனக்காணும் புருஷன் எம் மனைவி, மைந்தராதி பந்துக்களைக் காண்கின்றனனோ, அவர்கள் அக்கால் கனவையே யடைந்திருப்பார்கள் என்னும் நியமத்தை உலகின்கண்ணே கண்டதில்லை. மற்றோ, எந்த மனைவி, மைந்தராதி பந்துக்களை இக்கனக்காணும் புருஷன் கனவின்கண்ணே காண்கின்றனனோ, அவர்களுள் சிலர் அக்கால் நனவை யடைந்திருப்பர், சிலர் துயிலை யடைந்திருப்பர், சிலர் கனவையும் அடைந்திருப்பர்; நியமமாய் அவர் யாவருக்கும் ஏககாலத்தே கனவுண்டாகமாட்டாது. ஆகையால், கனவின் சூக்ஷ்மசரீர விசிஷ்ட மனைவி, மைந்தராதி சேதனபதார்த்

தங்களை இக்கனுக்காணும் புருஷன் கனவின்கண்ணே வெளியேசென்று காண்கின்றனன்; அல்லது, அவற்றை இருதயதேசத்தின்கண்ணே கொணர்ந்து காண்கின்றனன் என்னும் முதற் பக்ஷஞ் சம்பவியாது. அல்லது, நனவின் ஸ்தூலசரீர விசிஷ்ட மனைவி, மைந்தராதிசேதனபதார்த்தங்களை இக்கனுக்காணும் புருஷன்வெளிப்போந்து காண்கின்றனன்; அல்லது அம்மனைவி, மைந்தராதி சேதன பதார்த்தங்கள் கனுக்காண்பவனுடைய ஹிருதய தேசத்தின்கண்ணே வருகின்றன என்னும் இரண்டாவதுபக்ஷத்தைவாதியானவன் உடன்படின் அதுவுஞ் சம்பவியாது. ஏனெனின், கனவின்கண்ணே எக்கனுக்காணும் புருஷன் ஹிருதய தேசத்தின் உள்ளேனும், வெளியிற் சென்றேனும் எம் மனைவி, மைநதராதி சேதனபதார்த்தங்களைக் காண்பனோ, அக்கனுக்காணும் புருஷனே நனவவஸ்தையை யடைந்து அவர்களைக் காண்பன். ஆனால், நனவின்கண்ணே எந்தப் பூஷணாதி விசேஷணங்களோடுகூடி மனைவி, மைந்தராதி சேதனபதார்த்தங்களைக காண்பனோ, அந்தவாறே கனவின்கண்ணே காணான்; மறறோ, நனவினும் விலக்ஷணமாயே கனவின்கண்ணே காண்பன். ஆகையால், நனவின் ஸ்தூலசரீர விசிஷ்ட மனைவி, மைந்தராதி உறவினர்களின் தரிசனம் கனவின்கண்ணேயுண்டாம் என்னும் இரண்டாவது பக்ஷமுஞ் சம்பவியாது. அல்லது, கனவின்கண்ணே இக்கனுக்காணும் புருஷன் கனவின் சூக்ஷ்ம சரீர விசிஷ்ட மனைவி, மைந்தராதி சேதனபதார்த்தங்களைத் தனது ஹிருதய தேசத்தின் கண்ணே காண்பன். அல்லது, வெளியே சென்று காண்பன். என்னும் முதற் பக்ஷத்தின்கண் இவ்விரண்டாவது தூஷணமுஞ சம்பவிக்கும். ஏனெனின், எக்கால் தேவதத்தன் என்பவனுக்கு யஞ்ஞதத்தன் என்பவனுடைய தரிசனங் கனவின்கண்ணே உண்டாயதோ, அககால் யஞ்ஞதத்தன் என்பவனுக்குந் தெய்வயோகத்தால் கனவின்கண்ணே தேவதத்தன் என்பவனுடைய தரிசனம் உண்டாகுமாயின், நனவையடைந்தபின் அவரிருவருக்கும் பரஸ்பரம், ஹே யஞ்ஞதத்த! இரவின்கண்ணே நீ எனது ஹிருதயதேசத்தின்கண்ணே வந்தாய் எனவும், ஹே தேவதத்த! இவ்வார்த்தை நீ பொய்யாகக் கூறுகின்றனை, இரவின்கண் நீ எனது ஹிருதயதேசத்தின்கண்ணே வநதாய் எனவும விவாதம் உண்டாகவேண்டும். இவ்வகையாய விவாதத்தை உலகில் எவரும் செய்வதில்லை. ஆகையால், கனவின்கண்ணே ப்பொருள் கனுக்காணும் புருஷனுடைய ஹிருதய தேசத்தின்கண்ணே வருகின்றது; அல்லது, கனுக்காணும் புருஷன் தேகத்தினின்றும் வெளியேசென்று, கனுப் பதார்த்தத்தைப் பார்க்கின்றனன் என்னும் இவ்விருவகையாய பிரக்கிரியைகளும், சுருதிப்பிரமாணத்திற்கும், உலகரின் அனுபவத்திற்கும் முரண்பட்டனவாம். ஆகையால், இவ்விரு பிரக்கிரியைகளும் பரித்தியாகஞ் செய்யத்தக்கனவாம்.

சங்கை:—ஹே பகவன்! அவ்விரு பிரக்கிரியைகளையும் பரித்தியாகஞ்செய்து, வேறு எப்பிரக்கிரியையை யான் அங்கீகரித்தல்வேண்டும்.

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! கனவின்கண்ணே இக்கனுக்காணும் புருஷன் தனது ஹிருதயதேசத்தின்கண்ணே எத்துணை மனைவி, மைந்தராதி சேதனபதார்த்தங்களைக் காண்கின்றனனோ, எத்துணைத் தேர் முதலிய அசேதன பதார்த்தங்களைக் காண்கின்றனனோ, அவை யாவும் கனுக்காணும் புருஷனுடைய மாயா

சத்தியினால் உடம்பினுள்ளே உற்பன்னமாகும். இக்காரணத்தானே அக்கனாப் பதார்த்தங்கள் மாயாமயங்களாம் என்னும் பிரக்கிரியை சுருதிப்பிரமாணத்தாற் சித்தமாம்; உலகராது அநுபவத்திற்கும் முரண்படாததாம், ஆகையால், இப்பிரக்கிரியையே சர்வ வாதிகட்கும் அங்கீகரிக்க யோக்கியமாம்.

இப்போது, கனாப்பொருள்களிடத்தே மாயாமயத்தன்மையை வெளிப்படுத்தும்பொருட்டு, முதலில் கனாப்பொருள்களிடத்தே யோக்கிய தேசகாலாதி காரணங்களின் அபாவத்தைக் காண்பிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! கனவின் கண்ணே இக்கனாக்காணும் புருஷன் ஒருகால் வேறு தேசத்தின்கண் இராநின்ற அரசனுடைய பெரிய அரண்மனையைத் தனது அற்பமாயு குடிசையின்கண்ணே காண்கின்றனன். ஆயிரம் யோஜனை யளவு விஸ்தாரமுடையதும், அநேகம் கல்லோலங்களால் சோபிக்கபபெற்றதும் ஆய பெருங்கடலை ஒருகால் இக்கனாக்காணும் புருஷன் தனது வீட்டின் வாயிலிற் காண்பன். இலக்ஷம் யோஜனை அளவையுடையதும், கங்கை முதலிய சர்வ நதிகளின் பதிவும் ஆகிய மிகவும் ஆழ்ந்த சமுத்திரத்தை ஒருகால் இக்கனாக்காணும் புருஷன் குளப்படி நீர் மாத்திரமென வெண்ணி இம்மனுஷசரீரங்கொண்டே தாண்டுவன். ஒருகால் இக்கனாக்காணும் புருஷன் அக்கடலின் அக்கரையிற் சென்று, ஸ்ரீ பகவானாகிய நரசிம்ஹம் வாசஞ்செய்யும் ஸ்தானமாகிய நீலபர்வதத்தைக் காண்பன். ஒருகால் ஸ்ரீ காசியின்கண்ணே இரவில் துயிலாநின்ற இக்கனாக்காணும் புருஷன் குருக்ஷேத்திரத்தின்கண் சூரிய கிரகணத்தைக் காண்பன்; என்பன முதலாக அநேகம் வகையான பொய்ப் பதார்த்தங்களை இக்கனாக்காணும் புருஷன் கனவின்கண்ணே காண்பன். ஆகையால், இப்பொருள் சித்தமாம்:—கனாக்காணும் புருஷனுடைய சரீரமே முதலாக எத்துணைச் சுகதுக்கங்களைக் கொடுக்கும் ஜடசேதன பதார்த்தங்கள் உளவோ, அவையாவும் மாயாமயமேயாம்.

சங்கை:—ஹே பகவன்! மாயாமயமாய கனாப்பொருள்களின் உபாதான காரணமும் ஆசிரயமும் யாதாம்?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! "ஸ ஹி கர்த்தா" (பொ-ள்.) கனாக்காணும் புருஷனே கனாப்பொருள்களின் கர்த்தாவாம் என்னும் இச்சுருதியானது மாயாவிசிஷ்ட கனாக்காணும் புருஷனையே கனவிற்றோற்றும் எல்லாப்பொருள்களின் கர்த்தாவாய்க் கூறியிருக்கின்றது. ஆகையால், மாயாமயக் கனாப்பொருள்கட்கு மாயாவிசிஷ்ட கனாக்காணும் புருஷனே உபாதான காரணமும் ஆசிரயமுமாவன். இவ்வகையாய சித்தாந்தம் சுருதிப் பிரமாணத்தானும், யுத்திகளானும் சித்தமாம். ஆகையால், கனவின்கண்ணே நனாபிரபஞ்சம் உள்ளே வரும், அல்லது, கனாக்காணும் புருஷன் வெளியேசென்று நனாப்பிரபஞ்சத்தைக் காண்பன், என்னும் இருவகையாய வாதிகளின் பிரக்கிரியைகள் பயனற்றனவாம். ஆகையால், ஹே ஜனகராஜாவே! கனாப்பிரபஞ்சத்தின் உற்பத்தி, ஸ்திதி, இலயங்களைச் செய்யும்; கனாக்காணும் புருஷனுடைய அஞ்ஞானத்தையே நூலுணர்ந்த பெரியோர் மாயையென்னும் சப்தத்தானும், அவித்தையென்னுஞ் சப்தத்தானுங் கூறுகிற்பர். ஹே ஜனகராஜாவே! எங்ஙனங் கனவின்கண் இப்புருஷன் அவித்தையினால்

ஜடசேதன ரூபஜகத்தைக் காண்கின்றனனே, அங்ஙனம் நனவின்கண்ணும் இவ்வான்மா அவித்தையினனே ஜட சைதன்யரூப ஜகத்தைக் காண்கின்றது. ஆகையால், நனவின்கண்ணேயும், கனவின்கண்ணேயுங் காண்போன் வடிவமாய் ஆன்மாவிற்கும் பேதமின்றாம். காண்பொருள் வடிவமாய் அனன்ம பதார்த்தங்கட்கும் பேதமின்றாம். ஆகையால், நனவின்கண்ணுங் கனவின்கண்ணுஞ் சிறிதுமாத்திரையும் விலக்ஷணத்தன்மை இன்றாம்; மற்றோ இரண்டுஞ்சமானமாம். இது கூறியதால் இப்பொருள் சித்தமாயது:—உண்மையாய்ப் பயதுக்கங்களற்ற அத்விதீய ஆன்மாவானது நனவின்கண்ணேயுங் கனவின்கண்ணேயுந் துக்கத்தையும், பயத்தையுந் தன்பால் அங்கீகரித்தல் அவித்தையினனேயாம். இத்துணையால், கனவின்கண்ணே பேததரிசன ரூபகாரிய வாயிலாய் அவித்தையின் ஸ்வரூபத்தை நிரூபணஞ்செய்தாம். இப்போது எவ்வான்மாவின் சொரூபத்தை மறைத்துக் கொண்டு அவித்தையானது முற்கூறிய நானுவகையாய கூடாதகாரியங்களையுஞ் செய்யுமோ, அவ்வான்மாவின் ஸ்வரூபத்தைத் துயிலின்கண் நிரூபணஞ்செய்வாம்:—ஹே ஜனகராஜாவே! இஜ்ஜீவான்மா நாடிரூப மார்க்கத்தால் கனவையுடையுந் துயிலையடையும். இபபொருளை முன்னர் யாம் நின்பொருட்டுக் கூறினேம். அவற்றுள், நாடிரூப மாாக்கத்தால் அடைவதற்குத் தகுதியாய கனவின் விஸ்தாரத்தை இதுகாறும் யாம் நின்பொருட்டுக் கூறினேம். இப்போது அந்நாடிரூப மார்க்கத்தால் இவ்வான்மா எந்தச் சம்பிரசாதமெனப் பெயரிய துயிலையடையுமோ, அத்துயிலின் வடிவத்தை யாம் நின்பொருட்டுக் கூறுவாம், நீ ஏகாக்கிர மனமுடையவனுய்க் கேட்குதி. ஹே ஜனகராஜாவே! 'புரீதத்' என்னும் நாடியாற் சுற்றப்பட்ட ஹிருதய ஆகாசத்தின்கண் அவ்விந்திரரூப ஆன்மா நாடிரூப மார்க்கத்தால் செல்லும். அவ்வான்மா தனது ஸ்வரூபபூதமாயிரா நின்ற ஸ்வப்பிரகாச போதத்தால் தானே போதத்தையடையும். இக்காரணத்தால் சுருதி பகவதியானவள் அவ்விந்திரரூப ஆன்மாவைத் 'தேவசப்தத்தால்' கூறினள். இவ்வான்மா வேறு பிரகாசத்தை யபேக்ஷித்தலைப் பரித்தியாகஞ்செய்து, தனது ஸ்வயஞ்ஜோதிரூபத்தால் ஒளிராநிற்கும்; இக்காணத்தானே சுருதிபகவதியானவள் அவ்வான்மாவை 'ராஜசப்தத்தாற்' கூறினள். அத்தகைய ஆன்மா அந்நாடிரூப மார்க்கத்தால் துயிலையடையும். அத்துயிலின்கண்ணே மனமே முதலாக எத்துணை நனுக் கனுப் பதார்த்தங்களுளவோ, அவை யாவும் இலயபாவத்தை யடையும். அந்தகாரத்தைப்போல ஆவாணஞ் செய்யாநிற்கும் அஞ்ஞானமுந் துயிலின்கண்ணே வெளிப்படையாய்த் தோற்றமாட்டாது. துயிலின்கண்ணே அஞ்ஞானத்தை விஷயஞ்செய்யும்; அங்ஙனமே சுகத்தை விஷயஞ்செய்யும் அஞ்ஞானத்தின் விருத்தியைச் சித்தாந்தத்தின்கண்ணே அங்கீகாரஞ் செய்யப்பட்டுளது. ஆயினும், அந்த அஞ்ஞானத்தின் சூக்ஷ்ம விருத்தியின்கண் வெளிப்படையாய் அஞ்ஞானத்தின் தோற்றம் உண்டாகமாட்டாது. மற்றோ, நனுக் கனுக்களிடத்தே யான் அஞ்ஞானியாயிருக்கின்றேன் என்பதாய அந்தக்கரண விருத்தியின்கண் வெளிப்படையாய் அஞ்ஞானத்தின் தோற்றமுண்டாம். ஆகையால், துயிலின்கண்ணே அஞ்ஞானத்தின் வெளிப்படையாய தோற்றமுண்

டாகமாட்டாது. இவ்வாறு துயில் அவஸ்தையை இஜ்ஜீவான்மா நாடிரூப மார்க்கத்தால் அடையும். அவ்விருதய ஆகாசத்தின்கண்ணே இராநின்ற சத்திய ஸ்வரூபமாய பரமான்மாவோடு இஜ்ஜீவான்மா அபேதபாவத்தை யடையும்போது, இஜ்ஜீவான்மா முக்த புருஷனுக்குச் சமானமாம். ஏனெனின், எப்புருஷன் சர்வ ஜகத்தையும் ஆன்மரூபமாய் அறிகின்றனனோ, அப்புருஷன் சாஸ்திரத்தின்கண்ணே முக்தனெனப் புகலப்பெற்றுளான். இவ்வகையாய முக்த புருஷனுடைய இலக்கணந் துயிலும் ஜீவான்மாவின்கண்ணும் பொருந்தும். ஏனெனின், சம்பூரண ஜகத்திற்கும் ஆன்மவடிவமாய பரமான்மாவோடு அபேத பாவத்தையடைந்து, இஜ்ஜீவான்மாவுஞ் சர்வ ஜகத்தையும் ஆன்மரூபமாயறியும். ஆகையால், துயிலையடைந்த இஜ்ஜீவான்மா முக்தபுருஷனுக்குச் சமானமேயாம்.

சங்கை :—ஹே பகவன்! துயிலையடைந்த இஜ்ஜீவான்மாவிற்கு முக்த புருஷ சமானத்தன்மை சம்பவியாது. ஏனெனின், முக்தபுருஷனுக்கு ஞானரூப அக்கினியால் அஞ்ஞானமும், அஞ்ஞானகாரியப் பிரபஞ்சமும் நஷ்டமடைந்தேபோயிருக்கும்; துயிலும் ஜீவனுக்கோ காரியப் பிரபஞ்சம் நீங்கியிருப்பினுங் காரணரூப அஞ்ஞானம் நீங்கமாட்டாதாம். ஆகையால், துயிலும் ஜீவான்மாவிற்கு முக்த புருஷனோடு சமானத்தன்மை சம்பவியாது.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! முக்த புருஷனுக்குந் துயிலும் புருஷனுக்கும் எல்லா அம்சத்தானுஞ் சமானத்தன்மையை யாம் அங்கீகரிப்பதில்லை; மற்றோ, சர்வ துக்கங்களற்ற பூம (பிரஹ்ம) சுகத்தின்கண் முக்த புருஷனுடைய ஸ்திதியுண்டாவதேபோலச் சர்வ துக்கங்களுமற்ற பிரஹ்மாநந்தத்தின்கண்ணே துயிலும் புருஷனுக்கும் ஸ்திதியுண்டாம். இத்துணை யம்சத்தைக் கவர்ந்தே துயிலும் புருஷனை முக்தபுருஷ சமானமாய் யாம் கூறினோம். ஹே மைந்த! இத்துணையால் யாஞ்ஞவற்கிய முனிவர் இவ்வர்த்தத்தை உணர்வித்தனர். துயிலின்கண்ணே ஆன்மா இருந்தபோதினும், ஆண்டு சர்வகாரியப் பிரபஞ்சத்தின் அபாவமாம். இக்காரணத்தானே அக்காரியப் பிரபஞ்சம் ஆன்மாவின் இயற்கையன்றாம். காரியப் பிரபஞ்சம் ஆன்மாவின் இயற்கையாயிருப்பின், துயிலின்கண்ணும் ஆன்மாவின் சச்சிதாநந்த இயற்கையைப்போன்றே அக்காரியப் பிரபஞ்சமும் ஆன்மாவின்கண்ணே பிரதீதியாகலாம். ஆனால், துயிலின்கண்ணே காரியப் பிரபஞ்சத்தின் பிரதீதியுண்டாவதின்றாம். ஆகையால், அக்காரியப் பிரபஞ்சம் ஆன்மாவின் இயற்கையன்றாம். இவ்வண்ணம் முக்தியின்கண்ணே ஆன்மா விருந்தபோதினுங் காரணரூப அஞ்ஞானமிருக்கமாட்டாது. ஆதலின், காரண அஞ்ஞானமும் ஆன்மாவின் இயற்கையன்றாம். காரண அஞ்ஞானமானது ஆன்மாவின் இயற்கையாயிருப்பின், முத்தியின்கண்ணே சச்சிதாநந்தாதி ஆன்மாவின் இயற்கை பிரதீதியாவதேபோலக் காரண அஞ்ஞானமும் பிரதீதியாகவேண்டும். ஆனால், முக்தியவஸ்தையின்கண் அறிஞர்கட்குக் காரண அஞ்ஞானம் பிரதீதியாவதின்றாம். ஆகையால், அக்காரண அஞ்ஞானமும் ஆன்மாவின் இயற்கையன்றாம். ஹே ஜனகராஜாவே! முக்த புருஷர்களானுந் துயிலும் புருஷர்களானும் அடையத் தகுதியாய ஸ்வப்பிரகாச ஆநந்தஸ்வரூப பரமான்மா சுவர்க்காதி சர்வ அனான்ம லோகங்

களினும் மேலாயதாம். இக்காரணத்தானே சுருதிபகவதியானவள் அந்தப் பர மான்மாவைப் 'பரமலோகம்' என்னும் நாமத்தாற் கூறினள்.

இப்போது லோகசப்தத்தின் அர்த்தத்தை நிரூபிப்பாம்:—ஹே ஜனக ராஜாவே! குரு சாஸ்திர உபதேசத்தால் அதிகாரியானவன் எப்பதார்த்தத்தை அறிவனோ, அப்பதார்த்தம் லோகமெனப்படும். இவ்வகையாய லோகசப்தத் தின் பொருள் ஆநந்தஸ்வரூப ஆன்மாவின்கண்ணே பொருந்தும். ஏனெனின், விஷயவாசனையற்ற உத்தம அதிகாரியானவன், இப்பிறப்பில் குரு சாஸ்திர உப தேசத்தால் ஆநந்தஸ்வரூப ஆன்மாவை யறிவன். உபாசகனானவன் பிரஹ்ம லோகத்தின்கண்ணே சென்று அவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவை யறிவன். ஆகை யால், அவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவே பரமலோகமாம். அதனினும் வேறாய் எத்துணைச் சுவர்க்க முதலியன விருக்கின்றனவோ, அவை பொய்வடிவினவாம். ஆகையால், அவ்வுலகங்களைக் குரு சாஸ்திரம் போதியாது. ஹே ஜனகராஜாவே! அவ்வாநந்தஸ்வரூப பரமான்மா, ஜாதி, குணம், கிரியை, சம்பந்தம் என்பனவாதி சர்வ தருமங்களும் அற்றதாம். ஆகையால், வேதத்தின் காயத்திரி முதலிய சந் தங்கட்கு அப்பரமான்மா விஷயமன்றாம். இக்காரணத்தால் சுருதிபகவதியான வள் அவ்வாநந்தஸ்வரூப பரமான்மாவை 'அதிச்சந்தம்' என்னும் நாமத்தாற் கூறினள். ஹே ஜனகராஜாவே! அவ்வாநந்தஸ்வரூப பரமான்மாவின்கண்ணே பூத பவிஷ்யத் வர்த்தமானமென்னும் முக்காலத்தின்கண்ணே பாவ கருமங்களின் சம்பந்தமின்றாம். இக்காரணத்தால் சுருதிபகவதியானவள் அவ்வாநந்த ஸ்வரூப பரமான்மாவை 'அபஹதபாப்மா' என்னும் நாமத்தால் கூறியிருக்கின்றனள். ஹே ஜனகராஜாவே! துயிலின்கண்ணே இராநின்ற ஆநந்தஸ்வரூப பரமான்மா சர்வ பேதமுமற்றதாம். ஆதலின், அப்பரமான்மாவின்கண்ணே சிறிது மாத்திரை யும் ஆண்டுப் பயமின்றாம். இக்காரணத்தானே சுருதிபகவதியானவள் அந்தப் பரமான்மாவை 'அபயம்' என்னும் நாமத்தாற் கூறினள். ஹே ஜனகராஜாவே! துயிலின்கண்ணே இராநின்ற பரமான்மாவிற்குப் பயமுண்டாகமாட்டாது என் பதன்கண்ணே காரணமிதுவாம்:—பேத ஞானத்தானே ஜீவர்கட்குப் பயமுண் டாம். அந்தப் பேதஞானரூப பயத்தின் காரணந் துயிலின்கண்ணே இன்றாம். ஆகையால், துயிலின்கண்ணே பயரூப காரியமும் உற்பத்தியாகமாட்டாது. ஆண் டுச் சுருதி "த்வீதீயாத்வை பயம் பவதி" (பொ-ள்.) இரண்டாவது பதார்த்தத்தானே ஜீவர்கட்குப் பயப்பிராப்தி உண்டாகின்றது. ஹே ஜனகராஜாவே! தன்னினும் வேறாய் எப்பதார்த்தம் பயகாரணமாமோ, அப்பதார்த்தமும் ஸ்வரூபமாய்ப் பய காரணமாகமாட்டாது; மற்றோ, துக்ககாரணரூபமாய் அறியப்பட்ட பதார்த்தம் பயகாரணமாம். துக்ககாரணரூபமாய் அறியப்பட்ட சிங்கசர்ப்பாதி பதார்த்தங்கள் உலகருக்குப் பயத்தை யடைவிப்பதேபோலும்; ஆகையால், துக்கமே பயகாரண மாம். அந்தப் பயகாரணமாய துக்கம் ஸ்வப்பிரகாச பரமான்மாவின்கண்ணே இன்றாம். ஆகையால், துக்கரூப காரணமின்றாகவே அந்தப் பரமான்மாவின் கண்ணே பயத்தின் அடைவுண்டாகமாட்டாது. ஹே ஜனகராஜாவே! துயிலின் கண்ணே துக்கமின்றாம் என்பதன்கண் இது காரணமாம்:—உலகின்கண்ணே

தேகதாரி ஜீவர்கட்கு உண்டாந் துக்கமானது, அப்பிரிய பதார்த்தத்தின் விசேஷ ஞானத்தால் உண்டாம். கனவின்கண்ணே சிங்கசர்ப்பாதி அப்பிரிய பதார்த்தங் களின் ஞானத்தால் ஜீவர்கட்குத் துக்க அடைவு உண்டாவதேபோலும். ஆகை யால், அப்பிரிய பதார்த்தங்களின் விசேஷ ஞானம் ஜீவர்களின் துக்க காரண மெனச் சித்தமாம். அந்த விசேஷஞானந் துயிலின்கண்ணே இன்றாம். ஆகையால், விசேஷ ஞானரூபகாரண மின்றாகவே காரியரூப துக்கமும், ஆண்டுப் பரமான்மா வின்கண்ணே சம்பவியாது. இப்போது, இப்பொருளையே உலகப்பிரசித்த திருஷ் டாந்தத்தால் நிரூபணஞ்செய்வாம் :—ஹே ஜனகராஜாவே! உலகின்கண்ணே அத் தியந்தம் பிரியமாய ஸ்திரீயால் ஆலிங்கனஞ்செய்யப்பட்ட காமியானவன், அக் கால் சம்பூரண விசேஷ ஞானமற்றவனாவன். ஏனெனின், அக்கால் அக்காமியான வன் தன புத்திராதி பாகிய பதார்த்தங்களையும் அறியான். அங்ஙனமே, உட் பதா ர்த்தங்களையும் அறியான். அங்ஙமே, தன்னையுந் தனது பிரியமாய ஸ்திரீயையும் விசேஷமாய் அறியான். அக்கால் சர்வ துக்கங்களின் அபாவம் எங்ஙனம் உனக் கும் மற்றையருக்கும் அனுபவ சித்தமாயிருக்கின்றதோ, அங்ஙனந் துயில் அவஸ் தையின்கண்ணும், ஸ்வப்பிரகாச பரமான்மாவோடு அபேத பாவத்தை யடைந்து இஜ்ஜீவான்மா சம்பூரண விசேஷ ஞானமற்றதாம். ஏனெனின், அக்கால் இஜ் ஜீவான்மா வெளியில் இராநின்ற பூதபௌதிக பதார்த்தங்களையும் அறியமாட் டாது. அங்ஙனமே, உள்ளிராநின்ற இந்திரியாதி பதார்த்தங்களையும் அறியமாட் டாது. அங்ஙனமே, துயிலின்கண் இராநின்ற மாயைவடிவ அஞ்ஞானத்தையும் அறியமாட்டாது. அங்ஙனமே, இந்திராணியோடுகூட அவ்வான்மரூப இந்திரன் ஹிருதய ஆகாசத்தை யடைந்து எச்சுகத்தை யடைவனோ, அச்சுகத்தையும் விசேஷமாய் அறியான் என்பன முதலாக சர்வ விசேஷ ஞானங்களின் அபாவம் சுழுப்தியின்கண்ணே உண்டாம். இக்காரணத்தால் ஆண்டுச் சிறிதுமாத்திரையுந் துக்கத்தின் அடைவு ஜீவர்கட்கு உண்டாகமாட்டாது. ஹே ஜனகராஜாவே! துயி லின்கண்ணேயும், முக்தியின்கண்ணேயும் அடைய யோக்கியமாய ஆநந்தஸ்வரூப பரமான்மாவே சர்வ ஜகத்தின் உபாதான காரணமாம். உலகின்கண்ணே உபா தான காரணத்தின் அடைவால, அதன் காரியத்தின் அடைவும் அவசியமுண்டாம். எங்ஙனஞ் சுவர்ணமானது அடையப்பெறுமாயின், அதன் காரியமாய குண்டலாதி பூஷணங்களும் அவசியம் அடையப்பெறுமோ, அங்ஙனஞ் சர்வ ஜகத்தின் உபா தான காரணமாய பரமான்மா அடையப்பெறின், சம்பூர்ண புத்திரதனாதி பதார்த் தங்களும் அடையப்பெற்றனவேயாம். இக்காரணத்தால் சுருதி பகவதியானவள் அந்தப் பரமான்மாவை 'ஆப்தகாமன்' என்னும் நாமத்தாற் கூறினள். ஹே ஜனக ராஜாவே! எங்ஙனஞ் சுவர்ணத்தைப் பரித்தியாகஞ்செய்து, குண்டலாதி பூஷணங் கள் இருக்கமாட்டாவோ, அங்ஙனம் ஆநந்தஸ்வரூப பரமான்மாவைப் பரித்தி யாகஞ்செய்து, இஜ்ஜீவர்கட்குத் தனபுத்திராதி அன்னிய பதார்த்தங்களிடத்தே இச்சை யுண்டாகமாட்டாது; மற்றோ, ஆநந்தஸ்வரூப ஆன்மாவின்கண்ணே சர்வ ஜீவர்கட்கும் இச்சை உண்டாகும். இக்காரணத்தானே சுருதிபகவதியானவள் அந்தப் பரமான்மாவை 'ஆன்மகாமன்' என்னும் நாமத்தாற் கூறினள். ஹே ஜனக ராஜாவே! உண்மையாய் ஆராய்ந்து பார்க்கின், ஆன்மாவின்கண்ணே இச்சை

சம்பவியாது. ஏனெனின், இவ்வுலகின்கண்ணே எப்பொருள் ஜீவர்கட்குக் கிடைத் திருக்கமாட்டாதோ, அப்பொருளின்கண் ஜீவர்கட்கு இச்சையுண்டாம். அடைந் திருக்கும் பொருளின்கண் எஜ்ஜீவர்கட்கும் இச்சை உண்டாகமாட்டாது. இவ் வாநந்தஸ்வரூப பரமான்மா சர்வ ஜீவர்கட்கும் ஆன்மவடிவமாம். ஆதலின், யாவ ருக்கும் எப்போதுமே அடைந்திருக்கப்பட்டதாம். அந்த நித்தியப் பிராப்தமாய பரமான்மாவின்கண்ணே இச்சை சம்பவியாது. இக்காரணத்தால் சுருதிபகவதி யானவள் அந்தப் பரமான்மாவை 'அகாமன்' என்னும் நாமத்தாற் கூறினள். ஹே ஜனகராஜாவே! சர்வ துக்கங்கட்குங் காரணமான இச்சையானது எப்புருஷ னிடத்தே உண்டாமோ, அப்புருஷனிடத்தே அவ்விச்சையால் சோகாதி விகாரம் உற்பன்னமாம். எப்புருஷனிடத்தே எப்பதார்த்தத்தின் இச்சையும் இன்றாமோ, அப்புருஷனிடத்தே சோகாதி விகாரமும் உண்டாகமாட்டாது. துயிலின்கண்ணே இவ்வான்மா சர்வ இச்சைகளும் அற்றதாம்; ஆதலின், இதன்கண்ணே சோகாதி விகாரஞ் சம்பவியாது. இக்காரணத்தால் சுருதிபகவதியானவள் அந்தப் பர மான்மாவை 'அசோகன்' என்னும் நாமத்தால் கூறினள். இத்துணையால் துயிலின் கண் இராநின்ற பரமான்மாவின் ஸ்வரூப நிர்ணயஞ் செய்யப்பட்டதாயது. இப் போது அப்பரமான்மாவின்கண்ணே சம்பூரண அத்தியாசத்தின் அபாவத்தை நிரூபணஞ்செய்வாம்:—ஹே ஜனகராஜாவே! துயிலாலடைய யோக்கியமாய பர மான்மா யான் எனது என்னும் அத்தியாசம் அற்றதாம். அங்ஙனமே புண்ணிய பாவரூப கருமங்களற்றதாம். இக்காரணத்தானே அப்பரமான்மாவின்கண் இத்தூல சரீரத்தை உண்டாக்கிய தந்தையானவர் தந்தையற்ற தன்மையை யடைவர். தாய் தாயற்ற தன்மையை யடைவள். மனைவியே முதலாக, மைந்தர் முதலிய பந் துக்கள் யாவரும் அபந்துத்தன்மையை யடைவர். கருத்திதுவாம்:—துயிலின் கண்ணே இவர் எனது தந்தையாவர், இவள் எனது தாயாவள், இவர் எனது பந் துக்களாவர் என்னும் மமதை அத்தியாசம் உண்டாவதின்றாம்; இத்துணையால் துயிலின்கண்ணே ஸ்தூலசரீர சம்பந்தியாய மாதா, பிதா முதலிய பதார்த்தங் களின் அத்தியாச அபாவத்தை நிரூபணஞ்செய்தாம். இப்போது சூக்ஷ்மசரீர சம்பந்தியாய பதார்த்தங்களின் அத்தியாச அபாவத்தை ஆன்மாவின்கண்ணே நிரூபணஞ்செய்வாம்:—ஹே ஜனகராஜாவே! துயிலின்கண்ணே அந்தப் பரமான் மாவிடத்தே சத்தப்பரிசாதி விஷயங்கள் அவிஷயத்தன்மையை யடையாநிற்கும். வாக்கு முதலிய இந்திரியங்கள் அநிந்திரியத்தன்மையை யடையாநிற்கும். வாக்கு முதலிய இந்திரியங்களின் அக்கினி முதலிய தேவதைகள் அதேவதைத் தன் மையை யடைவர். இருக்குவேதமே முதலாய நான்கு வேதங்களும் அவேதத்தன் மையை யடையும். இத்துணையால் துயிலின்கண்ணே ஆன்மாவிடத்தே மமதை அத்தியாசத்தின் அபாவங் காண்பிக்கப்பட்டது. இப்போது துயிலின்கண்ணே அகந்தைவடிவ அத்தியாசத்தின் அபாவத்தை நிரூபணஞ்செய்வாம்:—ஹே ஜனக ராஜாவே! சுவர்ணாதி பதார்த்தங்களைத் திருடும் கள்வனானவன் துயிலின்கண்ணே கள்ளத்தன்மை யற்றவனாவன். கருத்திதுவாம்:—யான் கள்வன் என்னும் அகந்தை அத்தியாசம் துயிலின் கண்ணே யுண்டாகமாட்டாது. இந்நெறியை மேலுங்

அறிந்துகொள்க. ஹே ஜனகராஜாவே! யாகஞ்செய்பவர்களாகிய பிராஹ்மணர், க்ஷத்திரியர், வைசியர், சாஸ்திரங்களை யுணர்ந்த மறையவர், பிராஹ்மண பாவத்தை யடைந்த கர்ப்பம் என்னும் இந்நான்குஞ் சாஸ்திரத்தின்கண்ணே "ப்ரூணை" என்னும் நாமத்தால் கூறப்பட்டிருக்கின்றன. அந்த ப்ரூணரை எப்புருஷன் கொல்லுகின்றனனோ, அப்புருஷன் "ப்ரூணஹா" எனப்படுவன். அந்த ப்ரூண ஹாப்புருஷர் துயிலையடைந்து ப்ரூணஹாத் தன்மை யற்றவராயிருப்பர். ஹே ஜனகராஜாவே! பிராஹ்மணப் பெண்ணிடத்தே சூத்திரப் புருஷனால் உண்டாக்கப பட்ட புத்திரன் சாஸ்திரத்தின்கண்ணே சண்டாளன் எனப்படுவன். அச்சண்டா ளனுந் துயிலையடைந்து சண்டாளத்தன்மை யற்றவனாவன். க்ஷத்திரியப் பெண்ணி டத்தே சூத்திரப் புருஷனால் உண்டாக்கப்பட்ட புத்திரன் சாஸ்திரத்தின்கண்ணே 'புற்கசன்' எனப்படுவன். அல்லது, ஒரு தாழ்ந்தஜாதியுடைய புருஷன் (புற்கசன்) எனப்படுவன். அப்புற்கசனுந் துயிலையடைந்து புற்கசத்தன்மை யற்றவனாவன். ஹே ஜனகராஜாவே! நான்காவது ஆசிரமத்தோடுகூடிய சந்யாசியானவன் துயிலை யடைந்து சந்யாசித்தன்மை யற்றவனாவன். வானப்பிரஸ்த ஆசிரமத்தோடுகூடிய வன் துயிலையடைந்து வானப்பிரஸ்தத்தன்மை யற்றவனாவன். ஹே ஜனகராஜாவே! ஈண்டு, மிகவும் விஸ்தாரமாய்க் கூறுவதில் யாதொரு பயனுமில்லை. மற்றேு, இப் பிதா மாதாக்கள் என்னுடையவர் என்பதே முதலாக எத்துணை மமதையை விஷ யஞ்செய்யும் அத்தியாசம் உளவோ, அங்ஙனமே யான் கள்வன், யான் மறைய வன், யான் சந்யாசி என்பன முதலாக எத்துணை அகந்தையை விஷயஞ்செய்யும் அத்தியாசம் உளவோ, அவ்வெல்லா அகந்தை, மமதை, அத்தியாசங்களுந் துயிலின் கண்ணே ஆன்மாவிடத்தின்றும். இப்போது அத்தியாசரூப காரிய அவித்தையின் கண் அங்ஙனமே புண்ணியபாவரூப கருமங்களிடத்தே அந்வய வியதிரேகத்தால் சோகாதி விகாரங்களின் காரணத்தன்மையை நிரூபணஞ்செய்வாம்:—ஹே ஜனக ராஜாவே! துயிலின்கண்ணே பரமான்மாவோடு அபேத பாவத்தை யடைந்த இஜ் ஜீவான்மாவின்கண் அகமத்தியாசமும், மமவத்தியாசமும் என்னும் இருவகையாய அத்தியாசங்களுமின்றும். அங்ஙனமே, புண்ணியபாவரூப கருமமுமின்றும். இக் காரணத்தால் துயிலின்கண்ணே அந்தப் பரமான்மா சோகமே முதலாக அந்தக் காரணத்தின் சர்வ தருமங்களும் அற்றதாம். நனவின்கண்ணேயுங் கனவின்கண் ணேயும் இஜ்ஜீவான்மாவிடத்தே அகம், மம அத்தியாசங்கள் இருக்கின்றன. அங் ஙனமே புண்ணிய பாவரூப கருமமும் இருக்கின்றது. ஆகையால், நனுக்கனவின் கண் இஜ்ஜீவான்மா புத்திராதி பிரியபதார்த்தங்களின் வியோகத்தால் அங்ஙனமே சிங்க சர்ப்பாதி அப்பிரிய பதார்த்தங்களின் சையோகத்தால் அநேகம் வகையாய சோகத்தை யடையும். அச்சோகங்கள் அக்கினிக்குச் சமானமாய்த் தாகஞ்செய் வனவாம். அத்தகைய சோகரூப சமுத்திரத்தை இஜ்ஜீவான்மா நனுக்கனுக்களி டத்தே தாண்டமாட்டாது; மற்றேு, துயிலின்கண்ணே சர்வ விசேஷ ஞானங் களுமற்றதாய் இஜ்ஜீவான்மா அக்கடலைக் கடக்கும்.

சங்கை:—ஹே பகவன்! துயிலின்கண்ணே இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மா சம்பூரண விசேஷ ஞானங்களற்றதாம் எனத் தாங்கள் கூறியது சம்பவியாது ஏனெனின், எப்பொருள் ஞானமற்றதாமோ அப்பொருள் ஜடமாம். எங்ஙனங்

கடபடாதி பதார்த்தங்கள் ஞானமற்றவாம்; ஆதலின் ஜடங்களாமோ, அங்ஙனந் துயிலின்கண்ணே ஞானமற்றதாதலின் ஆன்மாவும் ஜடமாம்.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! துயிலின்கண்ணே இஜ்ஜீவான்மா சர்வ விசேஷ ஞானங்களுமற்றதாம், என யாம் கூறியதுகொண்டு அவ்வசனத்திற்குத் துயிலின்கண்ணே ஆன்மா பிரகாச ரூபமன்றுமாதலின், எப்பதார்த்தத்தையும் உணராதென்பது கருத்தாமெனக் கொள்ளற்க; மற்றேறு, அவ்வசனத்திற்குத் துயிலின்கண்ணே இவ்வான்மா தனது ஸ்வரூபபூத ஞானத்தோடு கூடியிருந்த போதினும், ஆண்டு ஆன்மா காணுமாறு ஆன்மாவினும் வேறாய் எத்துவைதப் பிரபஞ்சமுமின்றாம் என்பது கருத்தாகக்கொள்க. இக்கருத்தானே துயிலின் கண்ணே சர்வ விசேஷ ஞானங்களின் அபாவங்கள் கூறப்பட்டன. எங்ஙனம் ஆகாசஞ் சர்வ பதார்த்தங்களுள்ளும் வியாபித்து நிற்குமோ, அங்ஙனஞ் சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, இரசனம், கிராணம் என்னும் ஐந்து ஞானேந்திரியங்களால் உண்டாய அந்தக்கரண விருத்திகளிடத்தே பிரதிபிம்பரூபமாய் ஆன்மாவின் சைதன்ய சக்தி வியாபகமாம். அங்ஙனமே, வாக்கு முதலிய கருமேந்திரியங்களின் வியாபாரங்களிடத்தே அந்தச் சைதன்ய சக்தி வியாபகமாம். இத்தகைய ஆன்மாவின் சைதன்ய சக்தி துயிலின்கண்ணும் இருக்கின்றது. ஆகையால், துயிலின் கண்ணே ஸ்வப்பிரகாச ஆன்மா கடாதிகளைப்போல அஞ்ஞான ரூபமும், ஜட ரூபமும், அசத் ரூபமும் ஆகமாட்டாது. ஹே ஜனகராஜாவே! நனவின்கண்ணே இவ்வான்மாச் சுரோத்திரேந்திரியத்தால் சப்தத்தை யுணரும். துவக்கிந்திரியத்தால் பரிசத்தை யுணரும். சக்ஷு இந்திரியத்தால் ரூபத்தை யுணரும். இரசன இந்திரியத்தால் இரசத்தை யுணரும். கிராண இந்திரியத்தால் கந்தத்தை யுணரும். வாக்கிந்திரியத்தால் சப்த உச்சாரணத்தைச் செய்யும் பாணி இந்திரியத்தால் பதார்த்தங்களைக் கவரும். பாத இந்திரியத்தால் கமன ஆகமனங்களைச் செய்யும். உபஸ்த இந்திரியத்தால் ஆநந்தத்தை யடையும். பாயு இந்திரியத்தால் மல முதலியவற்றைப் பரித்தியாகஞ் செய்யும். மனத்தால் சங்கற்ப விகற்பங்களைச் செய்யும். புத்தியால் நிச்சயஞ்செய்யும். சித்தத்தால் ஸ்மரணஞ்செய்யும். அகங்காரத்தால் அபிமானத்தைச் செய்யும். இவை முதலாக அநேகம் வகையாய வியாபாரங்களை இஜ்ஜீவான்மா நனவின்கண்ணே செய்யும். துயிலை யடைந்து இவ்வான்மாவானது கூறிய வியாபாரங்களைச் செய்யாது. இதன்கண்ணே இதுகாரணமாம் :— துயிலின்கண்ணே சுரோத்திராதி இந்திரியங்களே முதலாக சப்தாதி விஷயங்களே முதலாகச் சம்பூரண துவைதப் பிரபஞ்சத்தின் அபாவமாம். இக்காரணத்தால் துயிலின்கண்ணே யாதொரு வியாபாரமும் உண்டாவதின்றாம். துயிலின் கண்ணே ஆன்மாவிற்குச் சைதன்யரூப ஞானமின்றாம்; ஆதலின், துயிலின் கண்ணே யாதொரு வியாபாரமும் உண்டாவதின்றாம் என்னும் பொருளின்கண் சுருதிக்குக் கருத்தின்றாம். ஹே ஜனகராஜாவே! காஷ்டரூப உபாதியோடுகூடிய அக்கினியானது தாகத்தைச் செய்யும், அன்னாதிகளைப் பாகஞ்செய்யும், பிரகாசஞ் செய்யும் அவ்வக்கினியே காஷ்டரூப உபாதியற்றதாய்ச் சாம்பரால் மூடப்பெற்றதாய்த் தாகாதி காரியங்களைச் செய்யமாட்டாது. அதுபோல, நனவின்கண்ணே

இந்திரியாதி உபாதியோடுகூடியதாய் இஜ்ஜீவான்மா நானாவகையாய வியாபாரங்களைச்செய்யும். துயிலின்கண்ணே அந்தச்சுரோத்திராதி இந்திரியங்கட்குஞ்சப்தாதி விஷயங்கட்குங் காரண அஞ்ஞானத்தின்கண் இலயமுண்டாம். ஆகையால், துயிலின்கண்ணே இருந்தபோதினும் அவ்வான்மா எவ்வியாபாரத்தையுஞ் செய்வதின்றாம். ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் அக்கினியின் ஸ்வரூபபூதமாய பிரகாசங் காஷ்டங்கள் நஷ்டமாயினும் நாசத்தை யடையமாட்டாதோ, அங்ஙனந் துயிலின்கண்ணே விஷய இந்திரியரூப உபாதி இலயத்தையடையினும், ஆன்மாவின் ஸ்வரூப பூதஞானம் நாசமாகமாட்டாது. ஏனெனின், உலகின்கண்ணேயுள்ள சர்வ பதார்த்தங்களின் ஸ்வரூபமும் அப்பதார்த்தங்களிருக்க ஒருகாலும் நாசத்தை யடையமாட்டாது; மற்றோ, அப்பதார்த்தங்கள் நாசமாகிய அவற்றின் ஸ்வரூபம் நாசமாம். அக்கினியின் ஸ்வரூபபூதமாய வெம்மை, ஒளியுடைமை என்னும் இருசொரூபங்கட்கும் அக்கினியின் நாசத்தாலன்றி வேறு எவ்வுபாயத்தானும் நாசமுண்டாகமாட்டாது; மற்றோ, அக்கினியின் நாசத்தானே அதன் ஸ்வரூப நாசமுண்டாகும். துயிலின்கண்ணே யிருக்குங் காண்போனுய ஆன்மா அவிநாசியாம். ஆதலின் அந்தக்காண்போனுய ஆன்மாவிற்கு அழிவுண்டாகமாட்டாது. காண்போனுய ஆன்மா அழிவையடையாதாகவே, அதன் ஸ்வரூபபூத ஸ்வப்பிரகாச ஞானரூப திருஷ்டியினுக்கும் நாசமுண்டாகமாட்டாது. இத்துணையால் சுருதிப்பிரமாணங்கொண்டு ஆன்மாவின் அவிநாசித்தன்மை சித்தஞ்செய்யப்பட்டது. இப்போது அப்பொருளையே யுக்திகளால் வெளிப்படையாக்குவாம்:—ஹே ஜனகராஜாவே! எவ்வாதியானவன் ஆன்மாவிற்கும் நாசத்தை யங்கீகரிக்கின்றனனோ, அவ்வாதியின்பால் இது கேட்கவேண்டும்:—திருஷ்டாவாய ஆன்மாவின் நாசமானது யாதாவதொருகாரணத்தானே உண்டாகின்றதா? அல்லது, யாதொரு காரணமுமின்றியே திருஷ்டாவாய ஆன்மாவின்நாசமானது உண்டாகின்றதா? அவற்றுள், முதற்பக்ஷத்தை எவ்வாதியானவன் அங்கீகரிக்கின்றனனோ, அவ்வாதியின்பாலிது கேட்கவேண்டும். அவ்வான்மாவின் நாசம் ஆன்மாவினும் வேறு? அல்லது, ஆன்மாவின் வடிவமா? அவற்றுள், இரண்டாவது பக்ஷத்தை யங்கீகரிக்கின் அது சம்பவியாது. ஏனெனின், ஆன்மாவின் நாசம் ஆன்மாவின் வடிவம் எனக்கூறுவதால் இப்பொருள் சித்தமாம்:—எவ்வாநந்த ஸ்வரூப சேதன ஆன்மாவை வாதியானவன் ஆன்மாவின் நாசம் என்னும் நாமத்தால் கூறுகிற்பனோ, அதனையே சித்தாந்தியாய யாம் ஆன்மா என்னும் நாமத்தால் கூறுகிற்பேம். ஆகையால், வாதியினுக்கும் நமக்கும் ஆன்மாவின் நாமமாத்திரத்தின்கண் விவாதஞ் சித்தமாம். அந்நாமங்களின் அர்த்தத்தில் விவாதஞ் சித்தமாகமாட்டாது. நாமமாத்திர விவாதத்தால் அர்த்தத்தின் ஹானியுண்டாகமாட்டாது. ஒரே கடவியக்தியை ஒரு புருஷன் கடம் என்னும் நாமத்தால் கூறுவன். ஒரு புருஷன் அந்தக்கடவியக்தியைக் கலசம் என்னும் நாமத்தால் கூறுவன். ஆண்டு கடம், கலசம் என்னும் இரண்டு நாமங்கட்குப் பேதமுண்டாயினும், கடவியக்தியினுக்குப் பேதமுண்டாகமாட்டாது. அதுபோல, ஆன்மாவின் நாசம் ஆன்மா என்னும் இரண்டு நாமங்கட்குப் பேதமுண்டாயினும், ஆன்மரூப வியக்தியினுக்குப் பேதம் சம்பவியாது. முதற்பக்ஷத்தை வாதி யங்கீகரிக்கின் அதுவுஞ் சம்பவியாது. ஏனெனின், "வாதீம்

ஞானமநந்தம் ப்ரஹ்ம" (பொ-ள்.) பிரஹ்மரூப ஆன்மா சத்திய ரூபமாம், ஞான ரூபமாம், அநந்தமாம். என்னும் இச்சுருதியின்கண் ஆன்மாவே சத்தியமெனப் பட்டது. அந்தச் சத்தியரூப ஆன்மாவினும் வேறாக ஆன்மாவின் நாசமும், அந் நாசத்தின்காரணமும் பின்னமாகுமாயின், மலடிமைந்தனைப்போல அவ்வான்மாவின் நாசமும், அந்நாசத்தின் காரணமும் அசத்தியமாகும். எப்பதார்த்தம் அசத் தியமாமோ, அப்பதார்த்தத்தின் சித்தி எப்பிரமாணத்தானும் உண்டாகமாட்டாது. எங்ஙனம் அசத்திய மலடிமைந்தனுடைய சித்தி எப்பிரமாணத்தானும் உண்டா காதோ, அங்ஙனம் அசத்தியரூப ஆன்மாவின் நாசமும், அந்நாசத்தின் காரண மும் எப்பிரமாணத்தானுஞ் சித்தமாகமாட்டா அல்லது, சஜாதீய பேதம், ஸ்வகத பேதம், விஜாதீயபேதம் என்னும் முப்பேதங்களுமற்ற அத்விதீய ஆன்மா யாதாள தோ, அந்தச் சத்தியவடிவ ஆன்மாவினும் வேறாய அவ்வான்மாவின் நாசம் அசத் தியரூபமேயாகும். ஆன்மாவின் நாசம் அசத்தியமாகவே அந்நாசரூப காரியத் தால் அனுமானஞ்செய்தற்குத் தகுதியாய அந்நாசத்தின் காரணமும் அசத்திய மேயாகும். ஆன்மாவின் நாசமும் அந்நாசத்தின் காரணமும் அசத்தியமாம். ஆகவே, அவற்றைச் சித்தஞ்செய்யும் பிரமாணமும் அசத்தியமேயாகும். ஏனெ னின், பிரமேயரூப வஸ்துவின் சத்தையதீனமே பிரமாணத்தின் சத்தையாகும். பிரமேயரூபவஸ்து அசத்தியமாகவே அதன் பிரமாணமும் அசத்தியமேயாகும். மலடிமைந்தன் அசத்தியமாகவே அதன் பிரமாணமும் அசத்தியமேயாதல்போல வாம். அல்லது, வாதியானவன் அங்கீகரித்த ஆன்மாவின் நாசம் பாவரூபமா? அல்லது, அபாவரூபமா? முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின், அவ்வாதியின்பாலிது கேட்கவேண்டும். அந்தப் பாவரூப ஆன்மாவின் நாசம் கடாதி பதார்த்தங்களைப் போல அநித்தியமா? அல்லது, ஆன்மாவைப்போல நித்தியமா? முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கிறே, அது சம்பவியாது. ஏனெனின், கடாதிகளைப்போல நாசமுடைய தாகிய ஆன்மாவின் நாசமானது நித்திய ஆன்மாவை ஹானி செய்யமாட்டாது. இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின், அதுவுஞ் சம்பவியாது; ஏனெனின், எங்ஙனம் ஆன்மா பாவரூபமாமோ, சைதன்னிய ரூபமாமோ, நித்தியமாமோ அங்ஙனம் அவ்வான்மாவின் நாசமும், பாவரூபமும், சைதன்னியரூபமும், நித்திய முமாம். ஆதலின், அந்தச் சைதன்னியரூப நாசத்தால் சைதன்னியரூப ஆன்மா வின் ஹானி உண்டாகமாட்டாது. அல்லது, ஆன்மாவைப்போலச் சைதன்னியரூப ஆன்மாவின் நாசம், ஒருகால் சைதன்னியரூப ஆன்மாவின் நாசத்தைச் செய்யுமா யின், சைதன்னியரூபத்தால் அந்நாசத்திற்குச் சமானமாய ஆன்மாவும் அந்நா சத்தை அவசியம் நாசஞ்செய்யும் ஆன்மாவைப்போலச் சைதன்னியரூப அந்நாசம் ஆன்மாவை நாசஞ்செய்யும். ஆனல், சைதன்னியரூப ஆன்மா அந்நாசத்தை நாசஞ் செய்யமாட்டாது என்னும் அர்த்தத்தின் சாதகமாக யாதொரு யுக்தியுமின்றாம். ஆகையால், அவ்வான்மாவின் நாசம் பாவரூபமாம் என வாதி கூறுதல் அத்தியந் தம் அசங்கதமாம். அல்லது, அவ்வான்மாவின் நாசம் அபாவரூபமாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின், அவ்வாதியின்பாலிது கேட்கவேண்டும். அவ்வபாவரூப நாசத்திற்கு அனுன்ம பதார்த்தம் பிரதியோ

யோ ? அல்லது, அவ்வபாவரூப நாசத்திற்கு ஆன்மாப் பிரதியோகியோ ? அவற்றுள், முதற்பக்ஷத்தை அங்கீகாரஞ்செய்யின், அது சம்பவியாது. ஏனெனின், கடத்தின் அபாவமுடையது பூதலம் என்னும் பிரதீதியால் பூதலத்தின்கண்ணே இராநின்ற கடாபாவத்தின் சித்தியுண்டாம்; அக்கடாபாவத்திற்குப் பிரதியோகி கடமாம். மற்றுள்ள பதார்த்தங்கள் அவ்வபாவத்தின் பிரதியோகியாகமாட்டா. ஆகையால், கடாபாவமுடையது பூதலம் என்னும் பிரதீதியானே பூதலத்தின்கண்ணே கடாபாவம் சித்தமாயினும், அந்தப் பிரதீதியால் படாதிகளின் அபாவஞ் சித்தமாகமாட்டாது. அதுபோல, ஆன்மாவினும் வேறாய அனான்ம பதார்த்தங்களின் அபாவஞ் சித்தமாயினும், ஆன்மாவின் அபாவஞ் சித்தமாகமாட்டாது. ஆகையால், அவ்வபாவரூப நாசத்திற்கு அனான்ம பதார்த்தம் பிரதியோகியாம் என வாதி கூறுதல் அசங்கதமாம். அல்லது, அவ்வபாவரூப நாசத்திற்கு ஆன்மாப் பிரதியோகியாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதி அங்கீகரிக்கின், அவ்வாதியின்பால் யாது கேட்கவேண்டும். அவ்வபாவரூப நாசத்திற்குப் பிரதியோகியாய ஆன்மா ஒன்றோ ? அல்லது, பலவா ? அவற்றுள், முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின், அது சம்பவியாது. ஏனெனின், எந்த ஆன்மா அபாவரூப நாசத்திற்குப் பிரதியோகியாமோ, அந்த ஆன்மாவே அவ்வபாவரூப நாசத்திற்கும் ஆன்மாவாம். ஆகையால், தனது ஆன்மாவோடு அவ்வபாவரூப நாசம் எவ்வாறு விரோதிக்கும் ? மற்றேறு, அவ்வபாவரூப நாசம் தனது ஆன்மாவோடு விரோதியாது. ஏனெனின், இவ்வுலகின்கண்ணே எப்புருஷனும் தனது ஆன்மாவோடு விரோதியான்; மற்றேறு, தன்னினும் வேறாய பிரதிகூல பதார்த்தத்தோடு யாவரும் விரோதிப்பர். ஆகையால், அவ்வபாவரூப நாசம் தனது ஆன்மாவோடு விரோதியாது. அவ்வபாவரூப நாசத்தின் பிரதியோகியாய ஆன்மா அநேகமாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின், அதுவுஞ்சம்பவியாது; ஏனெனின், அவ்வபாவரூபநாசத்தின் ஆன்மாவை அவ்வபாவரூப நாசம் நீக்கமாட்டாது. ஆதலின், அவ்வான்மாவை நாசஞ்செய்யும்பொருட்டு, வேறொரு அபாவரூப நாசத்தை யங்கீகரிக்க வேண்டிவரும். வரவே, அவ்விரண்டாவது அபாவரூப நாசமுந் தனதான்மாவின் நாசத்தைச் செய்யமாட்டாது. ஆகையால், அவ்விரண்டாவது அபாவரூப நாசத்தின் ஆன்மாவை நாசஞ்செய்யும்பொருட்டு, ஒரு மூன்றாவது அபாவரூப நாசத்தை அங்கீகாரஞ்செய்யவேண்டும், வேண்டவே இங்ஙனம் மேன்மேல் அபாவரூப நாசங்களின் கற்பனையைச் செய்வதானே அனவஸ்தாதோஷப் பிராப்தியுண்டாம். வாதியானவன் அவ்வனவஸ்தா தோஷ நிவாரணத்தின்பொருட்டு, மேன்மேல் அபாவரூப நாசங்களின் கற்பனையைச் செய்யானாயின், ஆன்மாவின் அபாவரூப நாசஞ் சித்தமாகமாட்டாது. ஏனெனின், நீல பீதாதியுருவமுடைய அநேக கடங்களுள் ஒரு கடமேனும் பூதலத்திலிருக்குமாயின், கடாபாவமுடையது பூதலமென்னும் சாமானியப் பிரதீதியுண்டாகமாட்டாது; மற்றேறு, நீலகடத்தின் அபாவமுடையது பூதலம், பீதகடத்தின் அபாவமுடையது பூதலம் என்னும் விசேஷப் பிரதீதிகள் உண்டாம். அப்பூதலத்தின்கண்ணே சம்பூரண கடங்களின் அபாவம் உளதாமாயின், கடாபாவமுடையது பூதலமென்னுஞ் சாமானியப் பிரதீதியுண்டாம். அதுபோல, [illegible]வேனுமிருப்பினுஞ் சாமானியமாய் ஆன்மாவின் அபாவரூபநாசஞ் சம்ப

யாது. இத்துணையால் ஆன்மாவின் நாசத்தின்கண் சாமாந்நியமாய் அபாவரூப கண்டனஞ் செய்யப்பட்டது. இப்போது பிராகபாவாதி விசேஷரூபத்தாலும் அதனைக் கண்டனஞ் செய்வாம். எவ்வாதியானவன் ஆன்மாவின் நாசத்தை அபாவரூபமென அங்கீகரித்துளானோ, அவ்வாதியின்பால் இது கேட்கவேண்டும். அவ்வபாவரூப ஆன்மாவின் நாசம் பிராகபாவரூபமா? அல்லது, அந்நியோந்நியாபாவரூபமா? அல்லது, அத்தியந்தாபாவரூபமா? அல்லது, பிரத்துவம்சாபாவரூபமா? அவற்றுள், முதற்பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின், அவன்பாலிது கேட்கவேண்டும். எக்கால் அவ்வான்மாவின் பிராகபாவரூப நாசமிருக்கின்றதோ அக்கால் அவ்வான்மா இருக்கின்றதா? அல்லது, இல்லையா? அவற்றுள், முதற் பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின் அது சம்பவியாது; ஏனெனின், ஆன்மாவின் பிராகபாவரூப நாசகாலத்தில் ஆன்மாவின் ஸ்வரூபமிருக்குமாயின், அவ்வான்மாவே தனது பிராகபாவரூபநாசத்தை நீக்கிவிடும். ஆகையால், அந்தப் பிராகபாவரூபநாசத்தால் ஆன்மாவிற்குச் சிறிது மாத்திரையும் ஹானியுண்டாகமாட்டாது. அந்தப் பிராகபாவரூப நாசம் எக்காலத்திருக்கின்றதோ, அக்காலத்தே ஆன்மா இருப்பதின்றாம் என்னுமிரண்டாவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின் அதுவுஞ் சம்பவியாது. ஏனெனின், எங்ஙனம் உலகின்கண்ணே காணுமல் வைவதால் எப்புருஷனுக்கும் ஹானியுண்டாவதின்றாமோ, அங்ஙனம் வேறு காலத்தின்கண்ணே இராநின்ற பிராகபாவத்தால் ஆன்மாவின் ஹானியுண்டாகமாட்டாது. கருத்திதுவாம்:—ஒருகாலத்தே ஒரு தேசத்தே இராநின்ற பதார்த்தங்கட்கே பரஸ்பரம் சாதகபாதக பாவமுண்டாம். வேறுகாலத்தே வேறுதேசத்தே இராநின்ற பதார்த்தங்கட்குப் பரஸ்பரம் சாதகபாதக பாவமுண்டாகமாட்டாது. வேறு காலத்தும் வேறு தேசத்தும் இராநின்ற குலாலன், தண்டம், சக்கிரம் முதலிய காரணங்களினின்றும் வேறு தேசகாலத்தின்கண் இராநின்ற கடத்தின் உற்பத்தி உண்டாகமாட்டாது. அங்ஙனமே வேறு தேசகாலத்தின்கண் இராநின்ற அக்கினியால் வேறு தேசகாலத்தின்கண் இராநின்ற திருணாதிகளின் தாகம் உண்டாகமாட்டாது. அதுபோல, பின்காலத்தின்கண் இராநின்ற பிராகபாவரூப நாசத்தால் பின்காலத்தின்கண் இராநின்ற ஆன்மாவின் ஹானி உண்டாகமாட்டாது. அல்லது, எவ்வாதியானவன் காரிய உற்பத்தியின்முன்னர் அக்காரிய உபாதானகாரணத்தின்கண் முன்னபாவத்தை அங்கீகரிப்பனோ, அவ்வாதியும் முன்னபாவத்தைக் காரியத்தின் உற்பத்தியின்கண்ணே காரணமென அங்கீகரித்துளான். ஆனால், முன்னபாவத்தின்கண்ணே காரிய நாசரூபத்தன்மையை அவ்வாதியானவன் அங்கீகாரஞ்செய்வதில்லை; மாறாய்க் காரியத்தால் பிராகபாவத்தின் நாசத்தையங்கீகரித்துளான். படத்தின் உற்பத்தியின் முன்னர்த் தந்துரூப காரணத்தின்கண்ணே அப்படத்தின் முன்னபாவமிருக்கும். நூலைப்போல, அம்முன்னபாவமும் படத்தின் காரணமாம். படரூப காரியத்தின் உற்பத்தி யுண்டாங்கால், அம்முன்னபாவம் நாசமாய்விடும். ஆகையால், காரியத்தின் உற்பத்தியினது காரணமாய முன்னபாவம் காரியத்தின் விரோதியாகமாட்டாது; மாறாய்க் காரியமே முன்னபாவத்தின் விரோதியாம். அல்லது, எவ்வெப்பதார்த்தத்திற்கும் பிராகபாவமிருக்கும்,

அவ்வப் பதார்த்தத்திற்கு ஜன்மமுண்டாம். எப்பதார்த்தம் ஜன்மமற்றதாமோ, அப்பதார்த்தத்திற்குப் பிராகபாவ முண்டாகமாட்டாது. இவ்வாறந்த ஸ்வரூப ஆன்மா ஜன்மமற்றதாம். ஆகையால், அவ்வான்மாவின் முன்னபாவஞ் சம்பவிப்ப தில்லை. எப்பதார்த்தத்திற்கு நாசமுண்டாமோ, அப்பதார்த்தத்திற்கே ஜன்மமுண்டாம். ஆகையால், பகலின்கண்ணே உண்ணாத பருத்த புருஷனுடைய பருமை உணவின்றிப் பொருந்தாததாய் அப்புருஷனுடைய இரவுணவின் கற்பனையைச் செய்விக்கும். அதுபோல, அப்பதார்த்தத்தின் நாசமும், அப்பதார்த்தத்தின் ஜன்மத்தாலன்றிப் பொருந்தாததாய் அப்பதார்த்தத்தின் ஜன்மகற்பனையைச் செய்விக்கும். ஆன்மாவின் நாசம் எப்பிரமாணத்தானுந் துணியப்பெறமாட்டாது. ஆகையால், அந்நாசத்தால் ஆன்மாவின் ஜன்ம கற்பனையாகமாட்டாது. ஆகையால், ஆன்மாவின் நாசம் முன்னபாவ வடிவமன்றாம். அல்லது, அவ்வான்மாவின் நாசம் அந்நியோந்நியாபாவரூபமாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின் அதுவுஞ் சம்பவியாது. ஏனெனின், அவ்வான்மாவின் நாசம் அந்நியோந்நியாபாவரூபம் ஆகுமாயின், அவ்வந்நியோந்நியாபாவம் ஆசிரயரூப ஆன்மாவின் விரோதியாகமாட்டாது. கடம் படரூபமன்றாம், படங் கடரூபமன்றாம் என்னும் பிரதீதியின் விஷயமாய அந்நியோந்நியா பாவங் கடபடரூபப் பிரதியோகி அநுயோகிகளின் ஆசிரதமாயிருக்கும். கடபடரூப ஆசிரயத்தின் இருப்பின்றாகவே அவ்வந்நியோந்நியா பாவத்தின் ஸ்திதி சம்பவியாது. அதுபோல, ஆன்மவடிவ ஆசிரயத்தின் இருப்பின்றாகவே அவ்வந்நியோந்நியாபாவத்தின் ஸ்திதி சம்பவியாது. ஆகையால், அவ்வந்நியோந்நியாபாவரூப ஆன்மாவின் நாசம் ஆன்மாவைச் சிறிது மாத்திரையும் ஹானி செய்யமாட்டாது. அல்லது, அவ்வான்மாவின் நாசம் அத்தியந்தாபாவரூபமாம் என்னும் மூன்றாவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின் அதுவுஞ் சம்பவியாது. ஏனெனின், அவ்வான்மாவின் நாசம் அத்தியந்தாபாவரூப மாகுமாயின், மனுஷக் கொம்பேபோல, ஆன்மாவும் நாஸ்திரூபமாய்ப் பிரதீதியாகும். மனுஷக் கொம்பேபோல நாஸ்தி வடிவமாய் ஆன்மாப் பிரதீதி யாவதின்றாம்; மற்றோ, யானிருக்கின்றேன் என அஸ்திரூபமாய் ஆன்மாவின் விளக்கம் எல்லாருக்கும் உண்டாகின்றது. ஆகையால், அவ்வான்மாவின் நாசம் அத்தியந்தாபாவரூபமன்றாம். அல்லது, அவ்வான்மாவின் நாசம் பிரத்வம்சாபாவரூபமாம் என்னும் நான்காவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின் அதுவுஞ் சம்பவியாது. ஏனெனின், அவ்வான்மாவின் நாசம் பிரத்வம்சாபாவரூபமாம் என்னும் நான்காவது பக்ஷத்தின்கண்ணே, ஆன்மாவின் சத்தையினலன்றி அந்நாசத்தின் சத்தை துர்லபமாம் என்பதுமுதலாக முற்கூறிய தோஷங்கள் யாவும் உண்டாம்.

சங்கை :—அவ்வான்மாவின் நாசம் அபாவரூபமாம் என்னும் பக்ஷத்தின் கண்ணே முற்கூறிய தூஷணங்கள், இந்நான்காவது பக்ஷத்தின்கண்ணே சம்பவிக்குமாயினும், அவ்வான்மாவின் நாசம் பாவரூபமாம் என்னும் பக்ஷத்தின்கண்ணே முற்கூறிய தூஷணங்கள், இந்நான்காவது பக்ஷத்தின்கண்ணே சம்பவிக்கமாட்டா.

சமாதானம் :—அவ்வான்மாவின் நாசம் பாவரூபமாம் என்னும் பக்ஷத்தின் கண்ணே முன் மொழிந்த தூஷணங்கள் யாவும் இந்நான்காவது பக்ஷத்தின்கண்

னுஞ் சம்பவிக்கும். ஏனெனின், இவ்வுலகின்கண்ணே பாவ பதார்த்தத்தினும் வேறாக யாதொரு அபாவ பதார்த்தமுமின்றாம்; மற்றோ, அபாவ பதார்த்தம் பாவ பதார்த்த ரூபமாம். இவ்வார்த்தையை இவ்வத்தியாயத்தின்கண்ணே முன்னர் விஸ்தாரமாய்க் கூறிவந்தேம். எங்ஙனங் கடத்தின் பிரத்வம்சாபாவங் கடத்தின் உபாதான காரணரூப கபாலங்களினும் பின்னமன்றாமோ, மற்றோ, அக்கடத்தின் துவம்சங் கபாலரூபமாமோ, அங்ஙனம் அக்கபாலங்களின் துவம்சமும், அக்கபாலங்களின் உபாதான காரணரூப கபாலிகைகளினும் வேறன்றாம்; மற்றோ, அக்கபாலத்தின் துவம்சங் கபாலிகை வடிவமாம் என்னும் இவ்வார்த்தை கேவலம் யுக்தியால் மாத்திரம் சித்தமன்றாம்; மற்றோ, விஷ்ணு புராணத்தின்கண்ணே ஸ்ரீ வியாசபகவானும் இவ்விஷயத்தைப்பற்றிக் கூறியிருக்கின்றனர்.

ஆ-சு. "ஜஹீவடுகஸ்ஂ வடிதஃ கவாழிகாகவாழிகா ।
ஆ௰ணாூ ரஜஸூதொணா௬ஃ"

"மண்ணழிவுகடங் கடமாய்வதோ ஒண்கபால வுருவமதனேழி
வெண்ணுசூரண நாசமிரஜமா மண்ணிரஜ மழிவதணுவதே."

(பொ-ள்.) மண்ணின் பிரத்வம்சாபாவங் கடவுருவமாம். கடத்தின் பிரத்வம்சாபாவங் கபால உருவமாம். கபாலங்களின் பிரத்வம்சாபாவங் கபாலிகை வடிவமாம். கபாலிகையின் பிரத்வம்சாபாவஞ் சூரண ரூபமாம். சூரணத்தின் பிரத்வம்சாபாவம் இரஜ ரூபமாம். இரஜத்தின் பிரத்வம்சாபாவம் அணு ரூபமாம். ஆகையால், அவ்வான்மாவின் நாசம் பாவரூபமாம் என்னும் பக்ஷத்தின்கண்ணே முற்கூறிய தூஷணங்கள் யாவும் இந்நான்காவது பக்ஷத்தின்கண்ணும் பிராப்தமாதல் கூடும். இத்துணை கூறியதால் ஆன்மாவின் நாசம் யாதாவதொரு காரணத்தால் உண்டாயதாம் என்னும் முதற் பக்ஷங் கண்டிக்கப்பட்டதாயது. இப்போது அவ்வான்மாவின் நாசம் யாதொரு காரணத்தானும் ஜன்னியமன்றாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தைக் கண்டிப்பாம்:—அவ்வான்மாவின் நாசம் யாதொரு காரணத்தானும் ஜன்னியமன்றாம் என்னும் இரண்டாது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின், அதுவுஞ் சம்பவியாது. ஏனெனின், உலகின்கண்ணே உண்டாங் கடாதி பதார்த்தங்களின் நாசங்கள் உலக்கையடி முதலிய காரணங்களாலேயே யுண்டாம். காரணமின்றி எப்பதார்த்தத்தின் நாசமும உண்டாகமாட்டாது. ஆகையால், ஆன்மாவின் நாசம் யாதொரு காரணத்தானுஞ் ஜன்னியமன்றாம் என வாதி கூறுதல் அத்தியந்தம் விருத்தமாம். அல்லது, அவ்வான்மாவின் நாசம் யாதாவதொரு காரணத்தால் ஜன்னியமாம் என்னும் முதற் பக்ஷத்தின்கண் அவ்வான்மாவின் நாசம் ஆன்மாவினும் பின்னமா? அல்லது, அபின்னமா? என்பதாதிய பூர்வ விகற்பங்களைச் செய்யினும், அவ்விகற்பங்களில் முற்புகன்ற தூஷணங்களைக் கூறினும், அவை யாவும் இவ்விரண்டாவது பக்ஷத்தின்கண்ணும் இயைதல்கூடும். இக்காரணத்தானும் இவ்விரண்டாவது பக்ஷம் அசங்கதமாம். அல்லது, சிங்கம் மிருகத்தை யடித்துவிட்டுத் தூரத்திற் சென்று, ஒருகால் ஆண்டு வேறொரு மிருகம் வரினும், அதனையுங் கொல்வாம் என மீண்டும் அம்மிருகத்தின் பக்கத்தே திரும்பி

சேர்க்குதல் சிங்காவலோகன நியாயமாம். அந்த நியாயத்தால் மீண்டும், முதற் பக்ஷத்தின்கண்ணே தூஷணங்களை நிரூபணஞ் செய்வாம்:—அவ்வான்மாவின் நாசம் எக்காரணத்தால் ஜன்னியமாமோ, அக்காரணம் வேறொரு காரணத்தால் ஜன்னியமா? அல்லது, அஜன்னியமா? அவற்றுள், முதற்பக்ஷத்தை யங்கீகரிக்கின், அது சம்பவியாது. ஏனெனின், எங்ஙனம் ஆன்மநாசத்தின் காரணம் வேறொரு காரணத்தால் ஜன்னியமாமோ, அங்ஙனம் அவ்வேறு காரணமும், ஒரு மூன்றாவது காரணத்தால் ஜன்னியமாம்; அம்மூன்றாவது காரணமும், ஒரு நான்காவது காரணத்தால் ஜன்னியமாம். இவ்வாறு மேலும் மேலும் காரணங்களின் தாரையை அங்கீகரிப்பதில் அனவஸ்தா தூஷணத்தின் அடைவாம். அவ்வான்மாவின் நாசகாரணம் யாதொரு காரணத்தாலுஞ் ஜன்னியமன்றாம் என்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின், அதுவுஞ் சம்பவியாது. ஏனெனின், அவ்வான்மாவின் நாசகாரணம் யாதொரு காரணத்தாலுஞ் ஜன்னியமன்றாகுமாயின், அவ்வான்மாவின் நாசகாரணம் நித்தியமேயாகும். ஆன்மாவினும் வேறாய எப்பதார்த்தமும் நித்தியமன்றாம். ஆகையால், அவ்வான்மாவின் நாசகாரணமும் ஆன்மவடிவமேயாகும். உலகின்கண்ணே எஜ்ஜீவனுந் தனது ஆன்மாவின் நாசத்தைச் செய்யான். ஆதலின், அவ்வான்மாவின் நாசகாரணம் தனது ஆன்மாவை எவ்வண்ணம் நாசஞ் செய்யும்? மற்றோ, நாசஞ்செய்யமாட்டாது. ஆகையால், அவ்வான்மாவின் நாசகாரணம் யாதொரு காரணத்தாலுஞ் ஜன்னியமன்றாம் எனவாதி கூறுதல் அத்தியந்தம் அசங்கதமாம்.

சங்கை:—ஹே சித்தாந்தியே! முற்கூறிய யுக்திகளால் ஆன்மாவின் நாசஞ் சம்பவியாதாயினும், எவ்வெப்பொருள் சத்தாமோ அவ்வப்பொருள் க்ஷணிகமாம். எங்ஙனம், மின்னல் சத்பொருளாமாதலின் க்ஷணிகமாமோ, அங்ஙனம் ஆன்மாவுஞ் சத்பொருளாமாதலின் க்ஷணிகமாம் என்னும் அனுமானப் பிரமாணத்தால் ஆன்மாவின் நாசசித்தி யுண்டாம்.

சமாதானம்:—ஹே வாதியே! ஆன்மாவின் நாசத்தைச் சித்தஞ்செய்யும் எவ்வனுமானப் பிரமாணத்தையும், நாசகாரணத்தைச் சித்தஞ்செய்யும் எவ்வனுமானப் பிரமாணத்தையும் நீ கூறினையோ, அவ்வனுமானத்தின் பிரமாணத் தன்மையினது இலாபரூப சித்தியானது, ஆன்மாவின் நாசமும், அந்நாசத்தின் காரணமும் உண்மையாமாயின் உண்டாம். பிரமேய பதார்த்தத்தின் சத்தையினன்றிப் பிரமாணத்தின் சித்தியுண்டாகமாட்டாது. ஆகையால், அவ்வனுமானத்தின்கண் பிரமாணத்தன்மையின் சித்தியின்பொருட்டு, ஆன்மாவின்நாசத்தின் சத்துவத்தையும் அந்நாசத்தின் காரணத்தின் சத்துவத்தையும் அவசியம் நீ அங்கீகரிக்க வேண்டும். அதன்கண்ணும் இவ்விசாரம் செய்யவேண்டும்:—அவ்வனுமானரூபப் பிரமாணத்தின் பிரவிருத்தியினும் முற்காலத்தே ஆன்மாவின் நாசரூபப் பிரமேயத்தின் இருப்பின்றேனும் அந்தப் பிரமாணத்தின்கண்ணே பிரமாணத்தன்மை வியவகாரம் உண்டாமா? அல்லது, அந்தப் பிரமாணத்தின் பிரவிருத்தியினும் முற்காலத்தே அந்தப் பிரமேயத்தின் இருப்பிருந்தே அந்தப் பிரமாணத்தின்கண்ணே பிரமாணத்தன்மை வியவகார முண்டாமா? அவற்றுள், முதற்பக்ஷ

த்தை வாதியானவன் அங்கீகரிக்கின், அது சம்பவியாது. ஏனெனின், பிரமேய மின்றியும் ஒருகால் பிரமாணத்தின்கண்ணே பிரமாணத்தன்மையின் சித்தியுண்டாகுமாயின், பிரமேயத்தை யங்கீகரித்தல் பயனற்றதாம். அவ்விரண்டாவது பக்ஷத்தை வாதி யங்கீகாரஞ்செய்யின், அவன்பாலிது கேட்கவேண்டும். அந்தப் பிரமேயபதார்த்தத்தின் சத்தை அதன் இயல்பானே சித்தமா? அல்லது, பிரமாண பலத்தாற் சித்தமா? அவற்றுள், முதற் பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின் அது சம்பவியாது. ஏனெனின், பிரமாணத்தினன்றியே பிரமேயத்தின் இயல்பானே அதன் சத்தை சித்திக்குமாயின், நின்மதத்தே பிரமாணத்தை யங்கீகரித்தல் பயனற்றதாம். ஏனெனின், பிரமேய பதார்த்தத்தின் சித்தியின்பொருட்டே பிரமாணத்தின் அங்கீகாரமாகும்; அந்தப் பிரமேய பதார்த்தம் இயல்பானே சித்தமாமாதலின், அந்தப் பிரமேயபதார்த்தத்தின் சித்தியின்பொருட்டுப் பிரமாணத்தை யங்கீகரித்தல் பயனற்றதாமன்றோ? இரண்டாவது பக்ஷத்தை வாதி யங்கீகரிக்கின், அதுவுஞ் சம்பவியாது; ஏனெனின், ஒருகாற் பிரமாணபலத்தானே பிரமேய பதார்த்தத்தின் சித்தியுண்டாகுமாயின், மிதிலாபுரியின்கண் மலடிமைந்தன் அரசுசெய்வன், ஜனகனுடைய மகன் மகனாதலின், பிரசித்தமாய ஜனகனுடைய மகன் மகன்போலும், இவ்வநுமானரூப சப்தப்பிரமாணத்தானே மலடிமைந்தனது சித்தியு முண்டாதல் வேண்டும்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! மலடிமைந்தன் மிதிலாபுரியின்கண் அரசுசெய்வன் என்னும் வசனம் பிரமாணரூபமாகுமாயின், அவ்வசன பலத்தால் மலடிமைந்தனது சத்தை சித்தியாம்; ஆனால், அவ்வசனம் பிரமாணரூபமேயன்றாம். ஆதலின், அவ்வசனத்தால் மலடிமைந்தனது சித்தியுண்டாகமாட்டாது.

சமாதானம் :—ஹே வாதியே! சப்தப்பிரமாணத்தின்கண் மூன்று தோஷங்களால் அப்பிரமாணத்தன்மை பிராப்தமாம். ஒன்றாவது பொய்ப் பொருளின் போதகத்தன்மையாம், இரண்டாவது எப்பொருளையும் உணர்த்திலவயாமை, மூன்றாவது ஐயத்தையுண்டாக்குதல். ஆண்டு எவ்வாதியானவன் பிரமாணத்தின் பலத்தால் பிரமேயபதார்த்தத்தின் சத்தையை அங்கீகாரஞ்செய்கின்றனனோ, அவ்வாதியின் மதத்தே பொய்ப்பொருளின் போதகத்தன்மைவடிவ முதல் தூஷணஞ் சம்பவியாது. மலடிமைந்தன் மிதிலா புரியின்கண்ணே அரசுசெய்வன் என்னும் வாக்கியத்தின்கண் அர்த்தத்தின் அபோதகத்தன்மையும், ஐயத்தின் ஜனகத்தன்மையும் என்னும் இவ்விருபிரகாரங்களின் தூஷணமுமின்றாம். ஆகையால், அவ்வசனமும் நினது மதத்தே பிரமாணமேயாம். அவ்வசனத்தால் மலடிமைந்தனுடைய சித்தியுண்டாதல் வேண்டும். அவ்வசனத்தால் மலடிமைந்தனது சத்தை சித்தமாகமாட்டாது. ஆகையால், பிரமாணபலத்தால் பிரமேயபதார்த்தத்தின் சித்தியை யங்கீகரித்தல் வாதியினுக் குசிதமன்றாம்; மற்றோ, பிரமேயபதார்த்தத்தின் பலத்தானே பிரமாணத்தின் சத்தையை யங்கீகரித்த லுசிதமாம். ஆகையால், எந்தப் பிரமாணத்தால் வாதியானவன் ஆன்மாவின் நாசத்தையும், அந்நாசத்தின் காரணத்[illegible], அந்தப்பிரமாணத்தின் சத்தையும், ஆன்மாவின் [illegible]

ரூபப்பிரமேயத்தின் சத்தையும் அந்நாசகாரணத்தின் சத்தையும் சித்தமாகுமாயின் சித்தமாம். அவ்வான்மாவின் நாசத்தையும், அந்நாசத்தின் காரணத்தையும் உலகின்கண்ணே யாண்டுங் கண்டதின்றாம். ஆகையால், ஆன்மாவின் நாசத்தையும் அந்நாசத்தின் காரணத்தையுஞ் சித்தஞ் செய்வதாய வாதியின் பிரமாணம் பயனற்றதாம் இத்துணை கூறியதால், ஆன்மாவின் நாசத்தின்கண்ணே சாமானியமாய்ப் பிரமாண அவிஷயத்தன்மை காண்பிக்கப்பட்டது, இப்போது விசேஷமாய்ப் பிரமாணத்தின் அவிஷயத்தன்மையை நிரூபணஞ்செய்வாம் :—எவ்வாதியானவன் ஆன்மாவின் நாசத்தின்கண்ணும், அந்நாசத்தின் காரணத்தின்கண்ணும் பிரமாணத்தை யங்கீகரிக்கின்றனனோ, அவ்வாதியின்பாலிது கேட்கவேண்டும் :— ஆன்மாவின் நாசத்தின்கண் பிரத்தியக்ஷம் பிரமாணமா? அல்லது, அநுமானம் பிரமாணமா? அல்லது, சப்தம் பிரமாணமா? அவற்றுள், முதற் பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின் அது சம்பவியாது. ஏனெனின், பிரதியோகியின் ஞானத்தாலன்றி அபாவத்தின் ஞானமுண்டாகமாட்டாது. கடரூபப் பிரதியோகியின் ஞானத்தாலன்றிக் கடாபாவத்தின் ஞானம் உண்டாகமாட்டாததேபோலும். ஈண்டுப் பிரசங்கத்தின்கண்ணே ஆன்மாவின் நாசரூப அபாவத்தின் பிரதியோகி ஆன்மாவாம். அவ்வான்மா உருவமுதலிய குணங்களற்றதாமாதலின், நேத்திராதி இந்திரியங்களால் அதன் பிரத்தியக்ஷ ஞானம் உண்டாகமாட்டாது. ஆன்மவடிவப் பிரதியோகி அப்பிரத்தியக்ஷமாகவே அதனபாவமும் பிரத்தியக்ஷமாகமாட்டாது. ஏனெனின், எப்பொருள் இந்திரிய ஜன்னிய ஞானத்திற்கு விஷயமாமோ, அப்பொருளின் அபாவப் பிரத்தியக்ஷமேயுண்டாம். எப்பொருள் இந்திரிய ஜன்னியஞானத்திற்கு விஷயமன்றாமோ, அப்பொருளின் அபாவப் பிரத்தியக்ஷமுண்டாகமாட்டாது. இக்காரணத்தாலே சூனியஸ்தானத்தின்கண் பேய் இருக்கின்றதென்னும் எண்ணத்தால் உலகர் வாசஞ்செய்வதில்லை. ஆகையால், ஆன்மாவின் நாசத்தின்கண் பிரத்தியக்ஷப் பிரமாணஞ் சம்பவியாது. ஆன்மாவின் நாசத்தின்கண்ணே அநுமானப் பிரமாணமாமென்னும் இரண்டாவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின், அதுவுஞ் சம்பவியாது ; ஏனெனின், பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் சகாயத்தினனன்றி அநுமானப்பிரமாணம் எவ்வர்த்தத்தின் சித்தியையுஞ் செய்யமாட்டாது ; மற்றோ, பிரத்தியக்ஷப்பிரமாணத்தின் சகாயத்தினனே அநுமானப் பிரமாணம் எப்பதார்த்தத்தின் சித்தியையுஞ் செய்யும். எப்புருஷன் தனது வீட்டில் அநேகமுறை புகைக்கனல் உடனிகழ்ச்சியைக் கண்டிருக்கின்றனனோ, அப்புருஷனே மற்றொரு காலத்தே மலையின்கண்ணே புகையைக் கண்டு அனலின் அநுமானத்தைச் செய்வன். எப்புருஷன் புகையையும் அனலையும் ஒருகாலும் பார்த்திரானோ, அப்புருஷனுக்குப் புகையின்காட்சியால் அனலின் அநுமானமுண்டாகமாட்டாது. இம்முறையே அநுமானப் பிரமாணத்திற்குப் பிரத்தியக்ஷப் பிரமாணத்தின் அபேக்ஷையுளது. முன்மொழிந்தமுறையே ஆன்மாவின் நாசத்தின்கண்ணே பிரத்தியக்ஷப் பிரமாணஞ் சம்பவியாது. ஆகையால், அநுமானப் பிரமாணத்தாலும் ஆன்மாவின் நாசசித்தியுண்டாகமாட்டாது. ஆன்மாவின் நாசத்தின்கண்ணே சத்தப்பிரமாணமாம் என்னும் மூன்றாவது பக்ஷத்தை வாதியானவன் அங்கீகரிக்கின், அதுவுஞ்சம்பவியாது. ஏனெனின், ஸ்ருதி, ஸ்மிருதி,

இதிகாசம், புராணம் என்பன முதலாக எத்துணைச் சத்தப்பிரமாணங்களுளவோ, அவற்றுள், யாண்டும் ஆன்மாவின் நாசத்தைக் கூறவில்லை; மாறாய், "ஸ வா ஏஷ மஹாநஜ ஆத்மா அஜரோ(அ)மரோ(அ)ம்ருதோ(அ)பயோ ப்ரஹ்ம" என்பன முதலிய சுருதிகளின்கண்ணும், "அஜோ நித்யஃ ஶாஶ்வதோ(அ)யம் புராணோ ந ஹந்யதே ஹந்யமாநே ஶரீரே" என்பதாதிஸ்மிருதி வசனங்களின்கண்ணும் ஆன்மா அவிநாசி ரூபமாயே கூறப்பெற்றுளது. ஆகையால், ஆன்மாவின் நாசத்தின்கண்ணே சத்தப் பிரமாணமுஞ் சம்பவியாது. இத்துணைக் கிரந்தத்தால் ஆன்மாவின் நாசத்தின்கண்ணேயும், அந்நாசகாரணத்தின்கண்ணேயும் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களின் கண்டனஞ்செய்யப்பட்டது. இப்போது எல்லாருடைய அநுபவத்தாலும், ஆன்மாவின் அவிநாசித்தன்மையைச் சித்தஞ்செய்வாம். ஹே வாதியே! யாவருக்கும் இவ்வகையாய பிரத்தியபிஞ்ஞை ஞானம் உண்டாமன்றே:—கனவின்கண்ணே யானையைக்கண்ட யானே இப்போது நனவின்கண்ணே நீலக் கமலத்தைக் காண்கின்றேன். நானாவகையாய சப்தங்களைக் கேட்கின்றேன். நனவின்கண்ணே நீலக் கமலத்தையும், நானாவகையாய சப்தங்களையுங் கண்டு கேட்ட யானே துயிலின்கண்ணே சிறிதுமாத்திரையும் ஒன்றுமறியாதிருக்கின்றேன். என யாவருக்குமுண்டாம் இவ்வகையாய பிரத்தியபிஞ்ஞைரூப அநுபவத்தால் நனக் கனத் துயில் என்னும் மூன்றவஸ்தையின்கண்ணே ஆன்மாவின் நித்தியத்தன்மையே சித்தமாம். இத்துணையால், நனக் கனத் துயில் என்னும் மூன்றவஸ்தையின்கண்ணும், ஆன்மாவின் நித்தியத்தன்மை சித்தஞ்செய்யப்பட்டது. இப்போது பாலியம், யௌவனம், விருத்தம் என்னும் மூன்றவஸ்தையின்கண்ணும் ஆன்மாவின் நித்தியத்தன்மையைச் சித்தஞ்செய்வாம்:—பாலிய அவஸ்தையின்கண்ணே எனது தாய்தந்தையரைக் கண்ட யானே இப்போது யௌவன அவஸ்தையின்கண்ணே எனது மனைவி மைந்தராதியரைக் காண்கின்றேன். யௌவனவஸ்தையின்கண்ணே எனது மனைவி, மைந்தராதிகளைக் கண்ட யானே இப்போது விருத்தாவஸ்தையின்கண்ணே எனது பௌத்திரர்களையுந் தௌஹித்திரர்களையுங் காண்கின்றேன். இவ்வகையாய பிரத்தியபிஞ்ஞை வடிவ அநுபவம் யாவருக்குமுண்டாம். இவ்வநுபவத்தால் பாலியம், யௌவனம், விருத்தம் என்னும் மூன்றவஸ்தைகளில் ஆன்மாவின் நித்தியத்தன்மையே சித்தமாம்.

சங்கை:—இவ்வகையாய பிரத்தியபிஞ்ஞை வடிவ அநுபவத்தால் இப்பிறப்பின்கண்ணே ஆன்மாவின் அவிநாசித்தன்மை சித்தமாமாயினும், முற்பிறப்பின்கண்ணேயும், வரும்பிறப்பின்கண்ணேயும் ஆன்மாவின் அவிநாசித்தன்மை சித்தமாகமாட்டாது.

சமாதானம்:—பாலிய அவஸ்தையே முதலாக விருத்த அவஸ்தைவரை எங்ஙனம் ஆன்மாவின் அவிநாசித்தன்மை யுளதோ, அங்ஙனமே முற்பிறப்பின்கண்ணும், வரும்பிறப்பின்கண்ணும் ஆன்மா அவிநாசியாம். ஏனெனின், இவ்வுலகின்கண்ணே மாதாவின் உதரத்தினின்றும் வெளியேவந்த பாலகன், வந்த அந்தக் கணத்தே தாயின் ஸ்தன்னியபானத்தின்கண்ணே முயல்வன். இவ்வார்த்தை யாவருக்கும் அநுபவசித்தமாம். உலகின்கண்ணே சேதன புருஷனுக்கு எவ்வெவ்

முயற்சியுண்டாமோ, அவ்வம் முயற்சி இப்பொருள் எனது சுகசாதனம் என்னும் இஷ்டசாதனத்தன்மை ஞானத்தால் ஜன்னியமாம். இஷ்டசாதனத்தன்மை ஞானத்தாலன்றி எச்சேதன புருஷனுடைய முயல்வு முண்டாகமாட்டாது. இவ் வார்த்தையும் யாவருக்கும் அனுபவசித்தமாம். ஆகையால், பிறந்தகாலையில் தாயின் ஸ்தன்னியபானத்தின்கண்ணே பாலகனுக்குண்டாம் முயற்சியும், இந்த ஸ்தன்னிய பானம் எனது சுகசாதனம் என்னும் இஷ்டசாதனத்தன்மை ஞானத்தாலன்றிச் சம்பவியாது. ஆதலின், அந்தப் பாலகனுடைய முயற்சிவடிவ ஹேதுவால் அந்தப் பாலகனுடைய இஷ்டசாதனத்தன்மை ஞானத்தின் அனுமானமுண்டாம். ஜன்ம காலத்தின்கண் இந்த ஸ்தன்னியபானம் எனது சுகசாதனமாம் என்னுமிஷ்டசாத னத்தன்மை ஞானம் யாது பாலகனுக்குண்டாகின்றதோ, அந்த ஞானம் அனுபவ ரூபமெனச் சம்பவியாது. ஆகையால், அந்த இஷ்டசாதனத்தன்மை ஞானத்தை ஸ்மிருதிரூபமென அங்கீகரித்தல்வேண்டும். உலகின்கண்ணே யாதுயாது ஸ்மிருதி ஞானமாமோ, அஃதது பூர்வ அனுபவ ஜன்னிய சமஸ்காரத்தாலுண்டாம். பூர்வ சமஸ்காரத்தாலன்றி, ஸ்மிருதி ஞானமுண்டாகமாட்டாது என்னும் வார்த்தையும் யாவருக்கும் அனுபவசித்தமேயாம். ஆகையால், அந்தப் பாலகனுடைய ஸ்மிருதி ரூப இஷ்டசாதனத்தன்மை ஞானத்தானே பூர்வ ஜன்மத்தின் சமஸ்கார அனு மானமுண்டாம். அந்தச் சமஸ்காரம் உருவ முதலியவற்றைப்போல ஆசிரயமின் றிச் சுதந்திரமாகமாட்டாது. ஆகையால், அநதப் பூர்வ ஜன்மத்தின் சமஸ்காரத் தால் ஆசிரயரூப ஆன்மாவின் அனுமானமுண்டாம். இவ்வகையாய ரீதியால், பூர்வ ஜன்மத்தின்கண்ணும், ஆன்மாவின் அவிநாசித்தன்மை சித்தமாம். இப் போது வரும்பிறப்பின்கண் ஆன்மாவின் அவிநாசித்தன்மையைசித்தஞ்செய்வாம். இவ்வுலகின்கண்ணே சாஸ்திரத்தின் தாற்பரியத்தையுணர்ந்த புத்திமானை புரு ஷனுக்கு யாகாதி புண்ணிய கருமத்தின்கண்ணே முயல்வுண்டாம். பிரஹ்மஹத் தியாதி பாவகருமங்களினின்றும் நிவிருத்தியுண்டாம். ஆண்டு, யாகாதிகருமங் களைச் செய்வதால் இவ்வுலகின்கண்ணே, செய்பவர்க்குச் சிறிதுமாத்திரையுஞ் சுகத் தினடைவின்றும்; மாறாய்க் கருமங்களைச் செய்வதால் அவர்க்குக் கிலேச அடை வுண்டாம். ஆகையால், இஃதறிந்து கொள்ளலாமன்றே:— அந்தயாகாதி புண்ணிய கருமங்களால் ஜன்மாந்தரத்தின்கண்ணே அவர்க்குச் சுகத்தினடைவுண்டாம் என, இவ்வகையாய முறையே வரும்பிறப்பின்கண்ணும், ஆன்மாவின் அவிநாசித்தன்மை சித்தமாம். இத்துணைக் கிரந்தத்தால், நானவகையாய யுக்திகளால் ஆன்மாவின் அவிநாசித்தன்மை சித்தஞ் செய்யப்பட்டது. இப்போது, முற்பிரசங்கத்தை நிரூ பிப்பாம்:— ஹே ஜனகராஜாவே! முற்கூறிய முறையே இக்காண்போனாய ஆன்மா அவிநாசியாமாதலின், அவ்வவிநாசி ஆன்மாவின் ஸ்வரூபபூதமாய ஞானரூப திருஷ்டியும் நாசத்தை யடையமாட்டாது; மற்றே எப்போதுமிருக்கும். எங் ஙனம் அக்கினியிருப்ப அவ்வக்கினியின் ஸ்வரூபபூதமாய வெம்மை நீங்கமாட்டா தோ, மற்றே அக்கினியழிந்தே அவ்வெம்மை யழியுமோ, அங்ஙனம் இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மா விநாசமற்றதாம். ஆகையால், இவ்வான்மாவின் ஸ்வரூபபூத ஞானரூப திருஷ்டியினுக்கும் நாசமுண்டாகமாட்டாது. இது கூறியதுகொண்டு இப்பொருள் துணியப்பெற்றது:— துயிலின்கண்ணே இவ்வான்மா துவைதப்பிர

பஞ்சத்தைக் காண்பதில்லையென்பதன்கண்ணே, ஆன்மாவின் ஸ்வரூபபூத ஞானத்தின் அபாவங் காரணமன்றாம்; மற்றோ, சர்வ துவைதப் பிரபஞ்சத்தினபாவமே அதன்கண்ணே காரணமாம். ஹே ஜனகராஜாவே! நனவின்கண்ணேயுங் கனவின்கண்ணேயும் பேதரூபகாரிய அவித்தையுளது. இக்காரணத்தால் நனவின்கண்ணேயுங் கனவின்கண்ணேயும் இக்காண்போனுப புருஷன் உருவமுதலிய திருசியபதார்த்தங்களைத் தன்னினும் பின்னமாய் அங்கீகரித்துளான். அங்ஙனமே, நேத்திராதி இந்திரியங்களையுந் தன்னிற்பின்னமா யங்கீகரித்துளான். தன்னிற் பின்னரூபமாய்க் கற்பிக்கப்பட்ட நேத்திராதி இந்திரியங்களால் பின்ன ரூபாதி விஷயங்களைக் காண்பன். துயிலின்கண்ணே பேதரூப காரிய அவித்தை, காமம், கருமம் என்பவற்றின் அபாவமுண்டாம். ஆகையால், இக்காண்போன் துயிலின்கண்ணே தனது ஸ்வரூபத்தினும் பின்னரூபமாய்க் கற்பிதப் பிரபஞ்சத்தைக் காண்பதில்லை. ஏனெனின், துயிலின்கண்ணே இச்சம்பூரண பூதபௌதிகப் பிரபஞ்சம் ஒருகால் ஆன்மாவினும் பின்னமாகுமாயின், அந்தப பிரபஞ்சத்தை ஆன்மா காணும். ஆனால், துயிலின்கண்ணே இவ்வெல்லாவுலகும ஆன்மாவினும் பின்னமாகமாட்டாது. ஆகையால், துயிலின்கண்ணே இக்காண்போன இவ்வுலகைத்தன்னிற் பின்னமாய்க் காண்பதில்லை. ஹே ஜனகராஜாவே! துயிலின்கண்ணே இராநின்ற ஆநந்த ஸ்வரூப ஆன்மாவானது சஜாதீய பேதமும், விஜாதீய பேதமும், சுவகதபேதமும் அற்றதாம். இக்காரணத்தானே அவ்வான்மா ஏக அத்விதீயரூபமாம். அவ்வான்மாவே பிரஹ்மரூபமாம், ஸ்வயஞ்ஜோதிரூபமாம், பரமலோகரூபமுமாம். ஹே ஜனகராஜாவே! துயிலின்கண்ணே யாம் நின்பொருட்டு ஆன்மாவின் எச்சொரூபத்தைக் கூறினோமோ, அச்சொரூபமே அதிகாரிகள் யாகாதி பகிரங்க சாதனங்களால் அடையயோக்கியமாம். அங்ஙனமே, விவேக வைராக்கிய சமாதி ஷட்சம்பத்தி முமுக்ஷுத்தன்மை, சிரவணம், மனனம், நிதித்தியாசனம், தத்துவம் பதார்த்த சோதனம் என்னும் எட்டந்தரங்க சாதனங்களால் அடைய யோக்கியமாம். ஆன்மாவினும் வேறாய சம்பூரண பதார்த்தங்களும நாசமுடையனவாம். ஆகையால், அவ்வனான்மபதார்த்தங்கள் அதிகாரிகட்குஅடைய யோக்கியமன்றாம். இக்காரணத்தால் சுருதிபகவதியானவள் அவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவைப் 'பரமகதியென்னும்' நாமத்தால் கூறினள். ஈண்டுச் சித்த சுத்தியின்கண் எச்சாதனங்களின் உபயோகமாமோ, அசசாதனங்கள பகிரங்கசாதனங்களாம். சிரவணத்தின்கண்ணும் ஆன்மஞானத்தின்கண்ணும் எச்சாதனங்களின் உபயோகமாமோ, அச்சாதனங்கள் அந்தரங்கசாதனங்களாம். ஹே ஜனகராஜாவே! இவ்வுலகின்கண்ணேயுள்ள எல்லாச் சம்பத்தினுங் குபேரசம்பத்தானது அதிகமாம். இக்காரணத்தால் குபேரசம்பத்தை உலகர் பரமசமபத்தென்பர். அதுபோல, துயிலின்கண்ணே இராநின்ற ஆநந்த ஸ்வரூப ஆன்மாவினும் மேலாய் எவ்வதிக சமபத்துமின்றாம். இக்காரணத்தால், சுருதிபகவதியானவள் அவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவைப் 'பரமசம்பத்தென்னும்' நாமத்தாற் கூறினள். ஹே ஜனகராஜாவே! துயிலின்கண்ணே எவ்வாநந்த ஸ்வரூப ஆன்மாவை இஜ்ஜீவான்மா நித்தியமுமே யடையுமோ, அவ்வாநந்த ஸ்வரூப ஆன்மாவினும் மேலாக எவ்வனான்ம பதார்த்தமுங் காண யோக்கியமன்றாம்.

மற்றோ, இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மாவே அதிகாரி புருஷர் காண யோக்கியமாம். இக்காரணத்தால் சுருதி பகவதியானவள் இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மாவைப் 'பரம லோகம்' என்னும் நாமத்தாற் கூறினள். ஹே ஜனகராஜாவே! இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மாவினும் வேறாய் உருவமுதலிய குணங்களோடு கூடிய சுந்தரமான ஸ்திரீகளும் இஜ்ஜீவனுக்குப் பரமலோக ரூபமன்றாம். சர்வ குணங்களோடு கூடிய ஆஞ்ஞைப்படி நடக்கும் புத்திரனும், இஜ்ஜீவனுக்குப் பரமலோகமன்றாம். சுந்தர ரூபத்தோடு கூடிய அத்தியந்தம் மிருதுவாய தனது சரீரமும் பரமலோகமன்றாம். ஹே ஜனகராஜாவே! பர்வதத்திற்குச் சமானமாய ஆகாரத்தையுடைய யானைகள், வாயுவைப்போல ஆகாச மார்க்கத்தின்கண்ணே கமனஞ் செய்யுங் குதிரைகள், மேகத்தின் கர்ஜனைக்குச் சமானமாய சப்தத்தையுடைய தேர்கள், பயமற்ற அத்தியந்தஞ் சூர வீரர்களாகிய பதாதிகள், சங்கம், பதுமம் என்னும் எண்ணிக்கையுடைய தனங்கள் நிறைந்த கோசங்கள், நாலுவகையாய அன்னங்கள் நிறைந்த அநேகங் கோட்டைகள், சுவர்க்கத்தின்கண்ணே உள்ள தெய்வப் பெண்கட்குச் சமானமாய அநேகம் பெண்கள், இந்திரருடைய வைஜயந்தம் என்னும் அரண்மனைக்குச் சமானமாய அநேகம் அரண்மனைகள், இந்திராணிக்குச் சமானமாய அநேகம் சுந்தர மனைவியர்கள், தனதானியாதியால் நிறைந்த சம்பத்தையுடைய ஆஞ்ஞைப்படி நடக்கும் பிரஜைகள், என்பன முதலாக அநேகம் வகைப்போக சாதனங்களோடு கூடிய இராஜ்ஜியமும் இஜ்ஜீவனுக்குப் பரமலோகமன்றாம். அந்த இராஜ்ஜியத்தைப் போகிப்பதால் இஜ்ஜீவனுக்கு எச்சுகமுண்டாமோ, அச்சுகமும் இஜ்ஜீவனுக்குப் பரமலோகமன்றாம்; மற்றோ, துயிலின்கண்ணே அடைய யோக்கியமாய அத்விதீய ஆன்மாவே இஜ்ஜீவனுக்குப் பரமலோகமாம். ஹே ஜனகராஜாவே! துயிலின்கண்ணே எவ்வாநந்த ஸ்வரூப ஆன்மாவை இஜ்ஜீவன் அடைவனோ, அவ்வான்மவடிவ ஆநந்தஞ் சர்வ லௌகிக ஆநந்தத்தினும் அதிகமாம். இக்காரணத்தானே சுருதி பகவதியானவள் அவ்வத்விதீய ஆன்மாவைப் 'பரம ஆநந்தம்' என்னும் நாமத்தாற் கூறினள்.

சங்கை:—ஹே பகவன்! சர்வ லௌகிக ஆநந்தங்களினும் இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மா எவ்வாறதிகமாம்?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! ஆநந்த சமுத்திரமாய இவ்வான்மாவின் லேசமாத்திர ஆநந்தத்தைப்பற்றிச் சம்பூரண ஸ்தாவர ஜங்கமப் பிராணிகள் ஜீவிக்கின்றன. ஈண்டு லேச சப்தத்திற்கு இது பொருளாம்:—பசையையுடைய நெய் முதலிய பொருள்களைக் கையின்கண்ணே கவர்ந்து மீண்டும், அவற்றைப் பரித்தியாகஞ்செய்தபின்னர்க் கையின்கண்ணே நெய் முதலியவற்றின் அம்சம் இருக்கும் அதனையே லேசம் எனப்படும். இவ்வாறு ஆன்மாநந்த லேசத்தைப்பற்றிச் சர்வப் பிராணிகளும் ஜீவிக்கின்றன. ஹே ஜனகராஜாவே! எங்ஙனஞ் சர்வ ஜலங்களின் நிதியாய சமுத்திரத்தின் லேசமாத்திர ஜலத்தைக் கவர்ந்து, மழைகாலத்தே மேகம் வெளிப்படையையடையுமோ, அங்ஙனம் ஆநந்த சமுத்திரமாய ஆன்மாவின் லேசமாத்திர ஆநந்தத்தைப்பற்றிப் பிரஹ்மாவே முதலாகக் கீடபரியந்தம் உள்ள சர்வப் பிராணிகளும் ஜீவிக்கும், இக்காரணத்தானே சுருதிபகவதியானவள் அவ்வான்மா

வைப் பரமாநந்தரூபமென்றனள். இப்போது ஆன்மாவின்கண்ணே பரமாநந்தரூபத் தன்மையை வெளிப்படையாக்கும்பொருட்டு, முதலில் சம்சாரதசையின்கண் அந் தப் பரமாநந்தத்தின் அப்பிரதிதியின்கண்ணே காரணத்தை நிரூபணஞ்செய்வாம்:— ஹே ஜனகராஜாவே! விஷயங்களையடைந்து மனுஷ்யாதிப் பிராணிகட்கு எச்சுக முண்டாமோ, அச்சுகத்தையே உலகர் ஆநந்தமென்பர். மனைவி, மைந்தர், தனம், அன்னம் என்பனமுதலாய் உள்ள நானுவகையாய விஷயங்களை உலகர் அச்சுகத்தின் காரணமென எண்ணியுளார். இதன்கண்ணே இவ்விசாரஞ் செய்யத்தக்கதாம். அம்மனைவிமைந்தராதி விஷயங்களிடத்தே அந்தச் சுகத்தின் உற்பத்தியைச் செய் விக்கும் வடிவகாரணத்தன்மையிருக்கின்றதா? அல்லது,பிரதிபந்தக நிவிருத்திவாயி லாய் அந்தச்சுகத்தை வெளிப்படுத்துந்தன்மைவடிவ காரணத்தன்மையிருக்கின் றதா? என அவற்றுள், ஆன்மவடிவ நித்தியசுகத்திற்கு விஷயங்களால் உற்பத்தி சம் பவியாதாதலின், சுகத்தையுண்டாக்கிவைக்கும் வடிவ முதற்காரணத்தன்மை விஷ யங்களிடத்தே சம்பவியாதாயினும் மனைவி, மைந்தராதி விஷயங்களிடத்தே பிரதி பந்தநிவிருத்திவாயிலாய்ச் சுகத்தை வெளிப்படையாக்கும்வடிவ இரண்டாவது கார ணத்தன்மை சம்பவிக்கும். ஏனெனின், தாகத்தால் பீடிக்கப்பட்ட மூடபுருஷன் திருணங்களால் மறைபட்ட சமீபத்துள்ள ஜலத்தைப் பரித்தியாகஞ்செய்து, கானற் சலத்தைப் பானஞ்செய்யச் செல்வதேபோலச சுகத்தையடைய இச்சித்த இவ்வஞ் ஞானியானவன் அஞ்ஞானத்தான் மறைப்பட்ட அத்தியந்தஞ் சமீபத்துள்ள ஆநந் தரூப ஆன்மாவைப் பரித்தியாகஞ் செய்து, பாகிய விஷயங்களைக்கண்டு அவற்றை யடைய இச்சிப்பன். அவ்விஷயங்களை இச்சித்தழுலுவதால் அஜ்ஜீவனிடத்தில் துக்க உற்பத்தியுண்டாம். அவ்விச்சைஜன்னிய துக்கமானது ஆன்மரூப ஆநந் தத்திற்குப் பிரதிபந்தகமாம். மணிமந்திராதி பிரதிபந்தகங்கள் எதுவரை அக்கினி யின் சமீபத்தேயிருக்குமோ, அதுவரை அக்கினி தாகத்தைச்செய்யமாட்டாது. அது போல, எதுவரை அவ்விச்சை ஜன்னிய துக்கம் அந்தக்கரணத்தின்கண்ணேயிருக் குமோ, அதுவரை ஆன்ம ஸ்வரூப ஆநந்தத்தின் விளக்கம் ஜீவர்கட்குண்டாவதின் றும். எங்ஙனம் மணிமந்திராதி ரூபப்பிரதிபந்தகம் நீங்கிய பின்னர் அவ்வக்கினி யானது தாகத்தைச்செய்யுமோ, அங்ஙனம் இஜ்ஜீவனுக்கு எவ்வெவ்விஷயத்தி னிச்சை யுளதாமோ, அவ்வவ்விஷயம் எக்கால் பிராப்தமாமோ, அக்கால் அவ் விஷயத்தினிச்சை நீங்கிப்போகும். ஆனால், அவ்விஷய இச்சையின் நிவிருத்தி எது வரை அவ்விஷயத்திலேனும், வேறு அயல் விஷயத்திலேனும் மீண்டும் இச்சையுண் டாகவில்லையோ அதுவரை இருக்கும். மீண்டும் இச்சையின் உற்பத்தியுண்டாயின், அம்முன் இச்சையின் நிவிருத்தியிருக்கமாட்டாது. விஷய இச்சைவடிவகாரணம் நாசமாயின், அவ்விச்சையால் ஜனித்த துக்கமும் நாசமாய்விடும். எதுவரை அத்துக் கத்தின் அபாவம் அந்தக்கரணத்தின்கண்ணே யிருக்குமோ, அதுவரை விக்ஷேப மற்ற அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட ஆன்ம ஸ்வரூப ஆநந்தத்தின் பிரதீதி ஜீவர்கட்குண்டாம். இவ்வான்ம ஸ்வரூப ஆநந்தத்தை அஞ்ஞானிகள் சுகமெனக் கூறுவர். கருத்திதுவாம்:—உலகின்கண்ணே இருவகையாய பிரதிபந்தம் உண் டாம். ஒன்றோ, ஆவரணரூபப் பிரதிபந்தகமாம். சூரிய தரிசனத்தின்கண்ணே

மேகம் ஆவரணரூபப் பிரதிபந்தகமாவதேபோலும், மற்றொன்றோ விக்ஷேபரூபப் பிரதிபந்தகமாம். கடம் முதலிய பதார்த்தங்களின் தரிசனத்தின்கண் நேத்திரங்களின் அத்தியந்த சஞ்சலத்தன்மை விக்ஷேபரூபப் பிரதிபந்தகமாவதேபோல, ஈண்டுப் பிரசங்கத்தின்கண் விஷய இச்சைவடிவத்தால் உண்டாம் புத்தியின் சஞ்சலத்தன்மைவடிவ விக்ஷேபம் ஆன்மஸ்வரூப ஆநந்தத்தின் விளக்கப் பிரதிபந்தகமாம். எவ்விஷயத்தின் இச்சையால் புத்தி சஞ்சலமாமோ, அவ்விஷயத்தினடைவுண்டாமாயின், சஞ்சலத்தன்மைவடிவ விக்ஷேபத்தைப் பரித்தியாகஞ்செய்து, அப்புத்தி எதுவரை மற்றொரு விஷயத்தை நாடவில்லையோ அதுவரை ஸ்திரமாம். அந்த ஸ்திரபுத்தியின்கண் அஞ்ஞானத்தான் மறைக்கப்பட்ட ஆநந்தஸ்வரூப ஆன்மா வெளிப்படையாய் விளங்கும். அவ்வஞ்ஞானத்தால் மறைபட்ட ஆன்மவடிவ ஆநந்தத்தை அஞ்ஞானியாய மூடபுருஷன் விஷயஜன்னிய சுகமென்பன்.

சங்கை :—ஹே பகவன்! விஷயமடைந்த காலையில் அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்ட ஆன்மாநந்தத்தின் விளக்கமுண்டாம் என்னும் வார்த்தையை எங்ஙனமறிதல் கூடும்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! விஷயமடைந்த காலையில் அஞ்ஞானிகட்கு ஒருகால் ஆவரணமற்ற ஆன்மாநந்தத்தின் விளக்கம் உண்டாகுமாயின், முக்தியவஸ்தையின்கண் ஞானிகட்கு யான் சுகவடிவன் என்னும் சுகத்தின் அனுபவம் எங்ஙனமுண்டாமோ, அங்ஙனம் அஞ்ஞானிகட்கும் விஷயமடைந்த காலையில் யான் சுகரூபன் என்னும் அனுபவம் உண்டாதல் வேண்டும். யான் சுகரூபன் என்னும் அனுபவம் அஞ்ஞானிகட்குண்டாகமாட்டாது; மற்றோ, யான் சுகமுடையவன் என்னும் அனுபவம் அஞ்ஞானிகட்குண்டாம். ஆகையால், இஃதறிந்துகொள்ளலாமன்றே :—விஷயமடையுங் காலையி லுண்டாம் ஆன்மாநந்தப் பிரதீதி அஞ்ஞானத்தால் மறைக்கப்பட்டே பிரதீதியாம். முக்தியவஸ்தை யொன்றன்கண்ணே ஆவரணரகித ஆன்மாவின் பான (விளக்க) முண்டாம். இப்போது அவ்விஷயஜன்னிய சுகத்தின் குறைவு மிகுதிகளை திருஷ்டாந்தத்தால் வெளிப்படையாக்குவாம். ஹே ஜனகராஜாவே! அந்தகாரத்தோடுகூடிய ஆகாசத்தின் ஓர் அம்சத்தின்கண்ணே இருந்துகொண்டு மின்மினிப் பூச்சியானது, அல்லது மணியானது ஆகாசத்தின் எவ்வளவிடத்திலிருக்கும் அந்தகாரத்தை நீக்குமோ, அவ்வளவிடத்திலேயே ஆகாசத்தின் விளக்கமுண்டாம். அதனினும் அதிக ஆகாசத்தின் விளக்கமுண்டாகமாட்டாது. அதுபோல, ஆன்மவடிவ ஆகாசத்தின்கண் இராநின்ற இச்சை ஜன்னிய துக்கரூப அந்தகாரத்தின் எத்துணை அம்சத்தை விஷயவடைவு வடிவ மின்மினியாதிகள் நீக்குமோ, அவ்வளவே ஆன்மவடிவ சுகம் விக்ஷேப மற்றதாய்ப் பிரதீதியாகும்; அதனினும் அதிக சுகம் பிரதீதியாகமாட்டாது. இவ்வண்ணம் ஒரே ஆன்மவடிவ சுகத்தின் குறைவு மிகுதிகள் பிரதீதியாகும். இத்துணையால் இச்சாஜன்னிய துக்கரூபப் பிரதிபந்தக அபாவமுளதாக ஆன்மாநந்தத்தின் பிரதீதியுளதாந் தன்மைவடிவ அன்வயங் காண்பிக்கப்பட்டது. இப்போது அந்தத் துக்கரூபப் பிரதிபந்தக அபாவம் இலதாகவே ஆன்மாநந்தத்தின் பிரதீதி இலதாந் தன்மைவடிவ வியதிரேகத்தை நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! அந்தகாரத்தோடுகூடிய ஆகாயத்தின்கண்ணே மின்மினியேனும், மணியேனும் இருக்குமாயின் எவ்வாகாச

தேசம் இலங்கிக்கொண்டிருக்குமோ, அவ்வாகாசதேசமே மின்மினியேனும், மணியேனும் நீங்கியபின்னர் மீண்டும் அந்தகாரத்தால் மறைபட்டதாய்ப் பிரதீதியாக மாட்டாது. அதுபோல, விஷயமடைந்த காலையில் அவ்விஷயத்தின் இச்சையால் ஜனித்த துக்கம் நீங்குமாயின், எவ்வான்மரூப ஆநந்தம் பிரதீதியாமோ, அவ்வான்மரூப ஆநந்தம் வேறுவிஷயத்தினிச்சை உற்பன்னமாகவே பிரதீதியாகமாட்டாது. ஆகையால், இது துணியப்பெறும்:—விஷய அடைவால் ஜன்னிய எத்துக்காபாவமுளதோ, அத்துக்கா பாவமே அன்வய வியதிரேகத்தால் ஆன்மரூப சுகத்தின் பிரதீதிகாரணமாம்.

சங்கை :—ஹே பகவன்! விஷயவடைவினால் இச்சையின் நீக்கமாம். இச்சை நீங்கவே துக்கத்தின் நீக்கமாம். விக்ஷேபரூப துக்கம் நீங்கவே ஆன்மரூபச் சுகத்தின் பிரதீதியுண்டாம் என்னும் நியமத்தைத தாங்கள் கூறினீர்களன்றோ; அந்நியமம் மனைவி, மைந்தராதி விஷயஜன்னிய சுகத்தின்கண்ணே பொருந்துமாயினும், பீனசரோகமுடைய புருஷனுக்குத் தும்மலின் அடைவால் எச்சுகமுண்டாமோ, ஏப்பத்தால் எசசுகமுண்டாமோ, அசசுகத்தின்கண்ணே பொருந்தமாட்டாது. ஏனெனின், தங்களால் விஷய இச்சையின் நீக்கத்தை ஆன்மரூப சுகப் பிரதீதியின்கண் காரணமெனக் கூறப்பெற்றதன்றோ. ஆனால், தும்மலின்கண்ணேயும், ஏப்பத்தின்கண்ணேயும எபபுருஷனுக்கும் இசசையுண்டாகமாட்டாது. ஆகையால், இச்சையின் நீக்கம் ஆண்டு சம்பவியாது.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! எந்நிமித்தத்தாலேனும் தும்மலுக்கும் ஏப்பத்திற்குந் தடையுண்டாயின், அவ்விரண்டின்கண்ணும் இச்சையுண்டாதல் உலகத்தில் பிரசித்தமாகக் கண்டோம். ஆகையால், தும்மலின் அடைவானும், ஏப்பத்தின் பிராப்தியானும், ஜீவர்கட்கு உண்டாஞ் சுகமும் இச்சையின் நீக்கத்தாலே உண்டாம். ஆதலின், முற்கூறிய நியமத்திற்கு எத்தலத்தின்கண்ணும் விரோதமின்றாம். ஆகையால், ஹே ஜனகராஜாவே! இவ்வுலகின்கண்ணே குறைவு மிகுதித் தன்மையோடுகூடி இராநின்ற எத்துணை விஷயசம்பந்த சுகங்கள் இருக்கின்றனவோ, அவையாவும் ஆன்ம ஸ்வரூப ஆநந்தத்தினும் வேறன்றாம்; மற்றோ, ஆன்மாநந்த ரூபமேயாம். இக்காரணத்தானே மனைவி, மைந்தர் முதலிய விஷயங்களின் அடைவு அவ்வான்மரூப சுகத்தின் உற்பத்தி காரணமன்றாம்; மற்றோ, இச்சையின் நீக்கவாயிலாய் அச்சுகத்தை விளக்குங் காரணமாம். இத்துணையால் விஷய ஜன்னிய சுகத்தின்கண் ஆன்மாநந்த ரூபத்தன்மை காண்பிக்கப்பட்டது. இப்போது விஷய ஜன்னிய இலௌகிக சுகத்தின்கண் அபேக்ஷையோடு கூடிய அதிகத் தன்மையை நிரூபணஞ்செய்து, ஆன்மாநந்தத்தின்கண் அபேக்ஷயின்றிய அதிகத் தன்மையை நிரூபணஞ் செய்வாம்:—ஹே ஜனகராஜாவே! இம்மனுஷ லோகத்தின்கண்ணே, யௌவன அவஸ்தையோடு கூடியவனும், வஜ்ஜிரத்திற்குச் சமானமாய திடகாத்திர முடையவனும், பீம அர்ச்சுனர்கட்குச் சமானமாய பலமுடையவனும், வியாசபகவானுக்குச் சமானமாய்ச் சர்வ சாஸ்திரங்களையும் உணர்ந்தவனும், நானுவகையாய அஸ்திரங்களைப் பிரயோகிப்பதில் ஸ்ரீ மன்

மகாபத்மவருக்குச சமானமானவனும், அசுவினி குமாரர்கட்குச் சமானமாய் எல்லா ரோய் அற்றவனும், அணிமாதி அஷ்ட சித்தியோடு கூடியவனும், ஸ்ரீ கிருஷ்ண பகவானுடைய திருவருளால் தர்மராஜாவும், அர்ச்சுனனும் ஐசுவரியத்தை யடைந்ததேபோலச் சூர வீரர்களின் சகாயத்தால் ஐசுவரியத்தை யடைந்தவனும், ஏழு தீவுகளிலும் இராநின்ற எல்லா மனுஷ்யாதிப் பிராணிகட்குஞ் சக்கரவர்த்தியாய் இருப்பவனும், உலகின்கண்ணே மிகுந்த கீர்த்தியை யுடையவனும், மனுஷர்களின் போக சாதனமாய அன்னம், பானம், ஸ்திரீ, புத்திரர் என்பனவாதிய சம்பூரண சாதன பதார்த்தங்களோடு கூடியவனும், மனுஷலோகத்தினுள்ள எப்பதார்த்தங்களும் கிடைத்தற்கரிய தென்பதற்றவனும், அப்பதார்த்தங்களைப் போகிக்கும் சக்தியோடு கூடியவனும், மிகுந்த ஆயுளை யுடையவனும், என்பனவாய இவை முதலாகச் சர்வபோக சாமக்கிரிகளோடு கூடியவனும் ஆகிய சக்கிரவர்த்தி ராஜாவிற்கு எவ்வாநந்தம் உண்டாகின்றதோ, அவ்வாநந்தத்திற்குச் சமானமாய் இம்மனுஷ லோகத்தின்கண்ணே எப்பிராணிகட்கும் ஆநந்தம் உண்டாகமாட்டாது. ஆகையால், நம்மனோராய மனுஷ்யர்களின் ஆநந்தத்தை யபேக்ஷித்து, அச்சக்கரவர்த்தி ராஜாவின் ஆநந்தம் பரமாநந்தமாம். அச்சக்கரவர்த்தி ராஜாவிற்கு உண்டாம் விஷய ஜன்னிய ஆநந்தத்தினும், நூறுமடங்கு அதிக ஆநந்தம் பிதிர் லோகத்தின்கண்ணே இருக்கும் பிதிர்க்கட்கு உண்டாம். ஆகையால், சக்கரவர்த்தி ராஜாவின் ஆநந்தத்தை யபேக்ஷித்து, அந்தப் பிதிர்க்களின் ஆநந்தம் பரமாநந்தமாம். அந்தப் பிதிர்க்கட்கு உண்டாம் ஆநந்தத்தினும் நூறுமடங்கு அதிக ஆநந்தம் கந்தர்வ லோகத்தின்கண்ணே இருக்கும் கந்தர்வர்க்கு உண்டாம். ஆதலின், பிதிர்க்களின் ஆநந்தத்தை யபேக்ஷித்து அக்கந்தர்வர்களின் ஆநந்தம் பரமாநந்தமாம். கந்தர்வர்கட்கு உண்டாம் ஆநந்தத்தினும், நூறுமடங்கு அதிக ஆநந்தம் கரும தேவதைகட்கு உண்டாம். ஆகையால், கந்தர்வர்களின் ஆநந்தத்தை யபேக்ஷித்துக் கரும தேவதைகளின் ஆநந்தம் பரமாநந்தமாம். அக்கினி ஹோத்திராதி கருமங்களைச் செய்து எப்புருஷருக்குத் தேவ பாவமுண்டாமோ, அவர் கரும தேவரெனப்படுவர். அக்கரும தேவர்கட்கு உண்டாம் ஆநந்தத்தினும், நூறுமடங்கு அதிக ஆநந்தம் ஆஜான தேவதைகட்கு உண்டாம். ஆகையால், கரும தேவதைகளின் ஆநந்தத்தை யபேக்ஷித்து, ஆஜான தேவதைகளின் ஆநந்தம் பரமாநந்தமாம். சிருஷ்டியின் ஆதிகாலத்தில் உற்பன்னமாய அக்கினி முதலிய தேவதைகள் ஆஜான தேவதைகளாம். அவ்வாஜான தேவதைகட்கு உண்டாம் ஆநந்தத்தினும் நூறுமடங்கு அதிக ஆநந்தம் பிரஜாபதி லோகத்தின் கண்ணேயாம். ஆகையால், ஆஜான தேவதைகளின் ஆநந்தத்தை யபேக்ஷித்து, பிரஜாபதி லோகத்தின் ஆநந்தம் பரமாநந்தமாம். பிரஜாபதி லோகத்தின்கண்ணே உண்டாம் ஆநந்தத்தினும், நூறுமடங்கு அதிக ஆநந்தம் விராட் பகவானுடைய லோகத்தின்கண் உண்டாம். ஆகையால், பிரஜாபதி லோகத்தின் ஆநந்தத்தை யபேக்ஷித்து, விராட் பகவானுடைய உலகத்தின் ஆநந்தம் பரமாநந்தமாம். விராட்பகவானுடைய லோகத்தின்கண்ணே உண்டாமாநந்தத்தினும், நூறுமடங்கு அதிக ஆநந்தம் பிரஹ்ம லோகத்தின்கண்ணுண்டாம். ஆகையால், விராட்லோகத்தின் ஆநந்தத்தை யபேக்ஷித்துப் பிரஹ்மலோகத்தின் ஆநந்தம் பரமாநந்தமாம், அந்தப் பிரஹ்ம[illegible]நந்தம்

ஸ்தூலஜகத்தின் காரணமாய சூத்திராத்மாரூப ஹிரண்யகர்ப்பர் இருக்குமிடமாம். அத்தகைய பிரஹ்மலோகத்தின்கண் இராநின்ற உபாசகபுருஷர்கட்குண்டாம் விஷயஜன்னிய ஆநந்தத்திற்கு மேலாய் எவ்விஷயஜன்னிய ஆநந்தமுமின்றாம்; மற்றோ, மனுஷ்யலோகமே முதலாக விராட்லோகபரியந்தம் எத்துணைத் துக்கநிவிருத்தி யுண்டாமோ, விஷயஜன்னிய ஆநந்தங்கள் உளவாமோ, அவ்வெல்லா ஆநந்தங்கட்கும் ஹிரண்யகர்ப்பாது ஆநந்தம் முடிவு வடிவமாம். ஹே ஜனகராஜாவே! மனுஷ்யலோகமே முதலாகப் பிரஹ்மலோகபரியந்தம் உள்ள விஷயஜன்னிய ஆநந்தங்களின் குறைவு மிகுதிகளைச் சுருதியானது கூறியுளது. அச்சுருதிபகவதிக்கு, விஷயஜன்னிய சர்வ ஆநந்தத்திலும் அதிகமாய ஹிரண்ய கர்ப்பாநந்தத்தின்கண்ணும் இப்புருஷனுக்கெதுவரை இச்சையிருக்குமோ, அதுவரை ஆன்மரூப ஆநந்தத்தின் விளக்கமுண்டாகமாட்டாது. ஆகையால், ஆன்மரூப ஆநந்தத்தின் அடைவை இச்சித்த புருஷன், ஹிரண்ய கர்ப்பாநந்தத்தையும் இச்சிக்கலாகாது என்னும் பரம வைராக்கியத்தின்கண்ணே கருத்தாம். ஈண்டு மனுஷ்யலோகமே முதலாகப் பிரஹ்மலோகபரியந்தம் எத்துணை விஷயஜன்னிய ஆநந்தங்கள் உளவோ, அவ்வாநந்தங்களின் சாதனமாய தனம், ஸ்திரீ, புத்திரன், சரீரம் முதலாயவைக ளெவை யுளவோ அவைகளெல்லாவற்றையும் காகவிஷ்டையை (காகத்தின் மலத்தை)ப் போல, அசாரமென வறிந்து அவற்றை அடைய இச்சியாதிருத்தல் பரமவைராக்கியமாம். இவ்வகையாய பரம வைராக்கியம் எப்புருஷனுக்குண்டாமோ, அப்புருஷனுக்கு ஆநந்தஸ்வரூப ஆன்மாவின் சாக்ஷாத்காரம் உண்டாம். இத்துணையால், பரம வைராக்கியத்தின் பலங் காண்பிக்கப்பட்டது. இப்போது, அந்த வைராக்கியத்தின் குறைவு மிகுதிகளால் எவ்வெப் பலமுண்டாமோ அதனை நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! மனுஷ்யலோகமே முதலாகப் பிரஹ்மலோக பரியந்தம் எவ்வெவ் விஷயஜன்னிய ஆநந்தத்தை யாம் நின்பொருட்டுக் கூறினேமோ, அவ்வாநந்தத்தை அடைதற்கு இருவகையாய சாதனங்களுள. ஒன்றோ, காலாந்தரத்தில் அவ்வாநந்தரூப பலத்தைக் கொடுக்கும் கரும உபாசனைரூப சாதனங்கள். மற்றொன்றோ, விரைவிலேயே அவ்வாநந்தரூப பலத்தைக்கொடுக்குஞ் சாதனமாம். அஃதிதுவாம்:—எப்புருஷன் விதிப்படி குருவாயிலாய் வேதத்தையும், வேதத்தின் அர்த்தத்தையும் அத்தியயனஞ் செய்துளானோ, சர்வ பாவகருமங்களுமற்றவனோ, சர்வ விஷயஜன்னிய சுகத்திலும் ஆசையற்றவனோ, அத்தகைய வேதத்தையுணர்ந்த நிஷ்காமபுருஷன் மனுஷ்யலோகமே முதலாகப பிரஹ்மலோகபரியந்தம் உள்ள சம்பூரண ஆநந்தங்களையுமடைவன். ஆனால், இதன்கண்ணே இத்துணைச் சிறப்புளது:—எவ்வேதத்தையுணர்ந்த பாவமற்ற புருஷன் சக்கரவர்த்தி ராஜாவின் விஷயஜன்னிய ஆநந்தத்தை காகவிஷ்டையைப்போல அசாரமென வறிந்து, அதனை யடைய இச்சைசெய்யானோ, ஆனால் பிதிர் லோகாதிகளின் ஆநந்தத்தை அடைய இச்சை செய்வனோ; அவ்வேதமுணர்ந்த பாவமற்ற புருஷனுக்குக் கேவலம் சக்கிரவர்த்தி ராஜாவின் ஆநந்தமே உண்டாம். பிதிர் லோகாதி ஆநந்த அ[illegible]ண்டாகமாட்டாது. இங்ஙனம், எவ்வேதத்தையுணர்ந்த பாவமற்ற புரு[illegible]லோகத்தி[illegible]நந்தத்தைக் காகவிஷ்டையைப்போல அசாரமென வறி

ந்து, அவ்வாநந்தத்தின் அடைவை இச்சியானே; ஆனல், கந்தர்வலோகாதிகளின் ஆநந்தத்தை இச்சிப்பனே, அவ்வேதத்தையுணர்ந்த பாவமற்ற புருஷனுக்குப் பிதிர் லோகத்தின் ஆநந்த அடைவுண்டாம். கந்தர்வ லோகாதிகளின் ஆநந்த அடைவுண்டாகாது. இவ்வண்ணம் மேனுலகங்களிலும், எவ்வெவ்வுலக ஆநந்தத்தை இவ்வேதமுணர்ந்த பாவமற்ற புருஷன் காகவிஷ்டையைப்போல, அசாரமென வறிந்து அதனையடைய இச்சியானே; அவ்வவ்வுலக ஆநந்தத்தை இவ்வேதத்தையுணர்ந்த பாவமற்ற புருஷன் அடைவன். எவ்வேதத்தையுணர்ந்த பாவமற்ற புருஷன் பிரஹ்மலோக ஆநந்தத்தையுங் காகவிஷ்டையைப்போல அசாரமென வறிந்து அதனையடைய இச்சியானே, அவ்வேதத்தையுணர்ந்த பாவமற்ற புருஷன் பிரஹ்மலோகத்தின் ஆநந்தத்தையும் அடைவன். இங்ஙனங் கரும உபாசனுதி சாதனமின்றியே அவ்வேதத்தையுணர்ந்த நிஷ்காம புருஷன் சம்பூரண ஆநந்தத்தையடைவன் :—ஹே ஜனகராஜாவே! மனுஷ்யலோகமே முதலாக எத்துணை விஷயஜன்னிய ஆநந்தமுளதோ, அச்சம்பூரண ஆநந்தத்தினும் பிரஹ்மலோக ஆநந்தம் அதிகமாம். அந்தப் பிரஹ்மலோக ஆநந்தமும் எவ் வான்மவடிவ ஆநந்தத்திற்கு ஒரு லேசமாத்திரமாமோ, அத்தகைய ஆநந்த சமுத்திரமாகிய பரமான்மா சர்வ ஜீவர்கட்குந் துயிலின்கண்ணே அடைவுறும். அப்பரமான்மாவின் ஸ்வரூபபூத ஆநந்தம் மனவாக்குகட்கு அவிஷயமாம், குறைவு மிகுதிகளற்றதாம். இக்காரணத்தானே அவ்வான்மவடிவ ஆநந்தம் பிரஹ்மலோக ஆநந்தத்தினும் அதிகமாம். இப்பொருளையே யுணர்த்தும்பொருட்டுச் சுருதிபகவதியானவள் நிஷ்காம புருஷனுக்குப் பிரஹ்மலோக ஆநந்த அடைவைக்கூறினள். ஆகையால், ஹே ஜனகராஜாவே! துயிலின்கண்ணே நின்பொருட்டு எவ்வான்மசொரூபத்தைக் கூறினேனே, அது மனுஷ்யலோகமே முதலாய்ப் பிரஹ்மலோகபரியந்தம் உள்ள சம்பூரண ஆநந்தத்தினும் அதிகமாம். ஆகையால் அந்தப் பரமான்மாவே பரமாநந்தரூபமாம் :—ஹே குழந்தாய்! இவ்வகையாய உபதேசத்தை யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவிற்குச் செய்தபோது, அந்த ஜனகராஜாவானவர் தமது ஞானத்தின் நிறைவின்மையைத் தெரிவிப்பவராய் முன்போல மீண்டும் இவ்வகையாய வசனத்தைக் கூறினர். ஜனகராஜா கூறல் :—ஹே யாஞ்ஞவற்கிய முனிவரே! இச்சாதாரணவித்தையைத் தாங்கள் என்பொருட்டு உபதேசஞ்செய்தீர்கள். அவ்வித்தைக்குக் குருதக்ஷிணையாக ஓராயிரம கோக்களைத் தங்கள்பொருட்டு அர்ப்பணஞ்செய்கின்றேன். அக்குருதக்ஷிணையைத் தாங்கள் அங்கீகரிக்க வேண்டும். அதன்பின்னர் எவ்வித்தையால் எனக்கு மோக்ஷத்தின் அடைவுண்டாமோ, அவ்வித்தையின் உபதேசத்தைத் தாங்கள் என்பொருட்டுச் செய்யவேண்டும். ஹே மைந்த! எவ்வபிப்பிராயத்தால் ஜனகராஜாவானவர் இவ்வகையாய வசனத்தை யாஞ்ஞவற்கிய முனிவரைநோக்கிக் கூறினரோ, அவ்வபிப்பிராயத்தைக் கேட்பாயாக. ஹே யாஞ்ஞவற்கிய மகாமுனிவரே! முன்னர்த் தாங்கள் என்பொருட்டு இவ்வுபதேசஞ்செய்தீர்களன்றே :—உண்மையாய்ச் சங்கமற்ற ஸ்வயஞ்ஜோதி ஆன்மா ஒன்றே அவித்தையின் சம்பந்தத்தால் ஜீவபாவத்தை அடைந்து, நனுச் கனுத் துயில் என்னும் மூன்று அவஸ்தைகளில் ஸஞ்சாரஞ் செய்யும். அவ்வவஸ்தைகளின்கண்ணும் மூஹ் புண்ணியபாவரூப கருமத்தால் [illegible]

யஞ்ஜோதியான்மா ஒருகால் நனவையடையும், ஒருகால் கனவையுடையும்; அந்நனவின்கண்ணேயுங் கனவின்கண்ணேயும் பூர்வ புண்ணியவயத்தால் இந்த ஸ்வயஞ்சோதியான்மா சுகத்தைப்போகிக்கும்; முற்பாவகருமவயத்தால் துக்கத்தைப் போகிக்கும். நனுக்கனு அவஸ்தைகளிடத்தே சுகதுக்கரூப பலத்தைக்கொடுக்கும் புண்ணியபாவரூப கருமங்கள் நாசமடையுங்கால், ஆகாசத்தின்கண்ணே சுழன்று பரிசிரமத்தையடைந்த பறவையானது ஆகாசத்தைப் பரித்தியாகஞ்செய்து, தனது கூட்டின்கண்ணே வந்துசேரும். அதுபோல, நனுக்கனு அவஸ்தைகளின் வியாபாரத்தால் பரிசிரமத்தையடைந்த இந்த ஸ்வயஞ்சோதியாய ஆன்மா துயிலவஸ்தையை அடையும். ஹே பகவன்! இவ்வண்ணம் நனுக்கனுத் துயில் என்னும் மூன்றவஸ்தைகளினும் வேறாய் ஆன்மாவின் வடிவத்தைத் தாங்கள் என்பொருட்டு முன்னர் உபதேசஞ்செய்தீர்கள். இத்துணை ஞான மாத்திரத்தால் மோக்ஷத்தினடைவுண்டாகமாட்டாது; ஏனெனின், வேறு சரீரத்தையடைதல் வடிவ ஜன்மம், இந்த ஸ்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்தல் வடிவ மரணம், இவ்விரண்டையுமுண்டாக்கும் நானாவகைபாய இச்சைகள் என்னும் இவ்விகாரங்களின் சம்பந்தம் ஆன்மாவின்கண்ணே பிரதீதியாகின்றது. இதனை நானாவகைபாய யுக்திகளால் தாங்கள் கண்டனஞ்செய்தீர்களில்லை. ஆகையால், ஜன்ம மரணாதி விகாரமுடைய இச்சம்சாரியாய ஆன்மா பரம ஆநந்தரூபம் எங்ஙனமாம்? ஹே பகவன்! ஜன்ம மரணாதி சம்சார தருமங்களை விஷயஞ்செய்யாத ஆன்மாவின் உண்மையாய ஞானமானது எதுவரை அதிகாரிகட்கு அடையுமாறு கிடைக்கவில்லையோ, அதுவரை அநேக ஜன்மங்களானும் மோக்ஷப்பிராப்தி யுண்டாகமாட்டாது. ஆகையால், ஹே பகவன்! மோக்ஷ அடைவின்பொருட்டு ஜன்ம மரணாதி விகாரங்களினும், வேறாயுள்ள ஆன்மாவின் உண்மை வடிவத்தை என்பொருட்டுத் தாங்கள் உபதேசித்தருளல்வேண்டும். ஹே மைந்த! இவ்வகையாய அபிப்பிராயத்தை மனத்தின்கண்ணே வைத்துக்கொண்டு அந்த ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரைநோக்கி வினவத்தொடங்கினர். அந்த யாஞ்ஞவற்கிய முனிவரும், அந்த ஜனகராஜாவின் கருத்தையறிந்து பயத்தையடைந்தனர்.

சங்கை:—ஹே பகவன்! ஜனகராஜாவின் வினாவிற்கு விடைகொடுப்பதில் யாஞ்ஞவற்கிய முனிவருக்கு ஆற்றலின்மைதலின் பயத்தையடைந்தனரா? அல்லது, வேறு யாதாவதொரு நிமித்தத்தால் பயத்தையடைந்தனரா?

சமாதானம்:—ஹே மைந்த! சூரியபகவானைப்போலச் சர்வஞ்ஞராய யாஞ்ஞவற்கிய முனிவரிடத்தே ஜனகராஜாவின் வினாவிற்கு விடைகொடுப்பதில் ஆற்றலின்றென்பது சம்பவியாது. மற்றோ, எவ்விசாரத்தால் யாஞ்ஞவற்கிய முனிவர் பயத்தையடைந்தனரோ, அவ்விசாரத்தை நீ சிரவணஞ்செய்வாயாக:—நான்கு வேதங்களை அத்தியயனஞ்செய்யும் அநேக புத்திமான்களாய சிஷ்யர் எனக்குண்டு; அவருள், ஒருவனேனும், ஜனகராஜாவைப்போலப் புத்திமானின்றும்; ஏனெனின், எவ்வித்தையை அநேக வருஷபரியந்தம் அத்தியயனஞ்செய்தும் அடையமுடியவில்லையோ, அவ்வெல்லா வித்தையையும் இந்த ஜனகராஜா சாமப்பிரஸ்னரூபமாத்

தால், சிறிது காலத்துக்குள்ளே கிரகித்துக்கொள்ளப் பார்க்கின்றனன. ஆகையால், இந்த ஜனகராஜா அத்தியந்தம் புத்திமானும். இந்த ஜனகராஜா முன்னர்க் காமப்பிரஸ்னரூப வரத்தை என்பால் வாங்கினன். ஆகையால், அந்தச் சத்திய வசனரூப பாசத்தால் இந்த ஜனகராஜா என்னைக் கட்டிவிட்டனன். ஆகையால், சூரிய பகவானை ஆராதித்து எவ்வித்தையை யான் அடைந்தேனோ, அவ்வெல்லாப் பிரஹ்ம வித்தையையும் எனது வசனத்தை உண்மையாக்கும்பொருட்டு, இந்த ஜனகராஜாவிற்கு உபதேசஞ் செய்யவேண்டியதா யிருக்கின்றது. ஹே மைந்த! இவ்வகையாய விசாரத்தைத் தனது மனத்தின்கண்ணே செய்து, அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் பயத்தை யடைந்தனர். அதன்பின்னர் அந்த யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவை நோக்கிக் கூறத்தொடங்கினர். யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல் :—ஹே ஜனகராஜாவே! புத்திமுதலிய சர்வ சங்காதங்களின் சாக்ஷியாய எந்த ஸ்வயஞ்ஜோதி ஆன்மாவை யான் முன்னர் நின்பொருட்டு உபதேசஞ் செய்தனனோ, அந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா ஒருகால் நனவஸ்தையின் பின்னர் முதலில் துயிலையடையும், துயிலின் பின்னர் கனவையடையும். ஒருகால் அந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா துயிலை யடையாமலே முதலில் கனவையே யடையும். அக்கனவின்கண்ணே இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா மனைவி, மைந்தராதிகளோடு நானாவகையாய வியவகாரத்தைச் செய்யும். அநேக நாடிரூப மார்க்கத்தின்கண்ணே சுழலும். புண்ணிய பாவரூப கருமங்களின் பலமாய சுக துக்கங்களைக் காணும். இவைமுதலாக அநேகம் வகையாய வியவகாரத்தைக் கனவின்கண்ணே செய்யும். அதன்பின்னர் அந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா அந்தக் கனவைப் பரித்தியாகஞ்செய்து, அந்நாடிரூப மார்க்கவாயிலாய் நனவை யடையும். அந்நனவின் கண்ணும் இந்த ஸ்வயஞ்ஜோதியாய ஆன்மா புண்ணிய பாவரூப கரும வயத்தால் அநேகம் வகையாய சுகதுக்கங்களை யடையும். ஹே ஜனகராஜாவே! கனவின்கண்ணே சுகதுக்கரூப பலத்தைக் கொடுக்கும் புண்ணிய பாவரூப கருமங்கள் க்ஷயமடையும்போதும், நனப்போகத்தைக் கொடுக்குங் கருமங்களின் வெளிப்பாடுண்டாம்போதும், இஜ்ஜீவான்மா கனவைப் பரித்தியாகஞ் செய்து நனவை யடையும். அதுபோல, இத்தூல சரீரத்தின்கண்ணே சுகதுக்கரூப போகத்தைக் கொடுக்கும் புண்ணிய பாவரூப கருமங்கள் க்ஷயமடையும்போதும், ஜன்மாந்தரத்தின் கண்ணே சுகதுக்கரூப போகத்தைக் கொடுக்குங் கருமங்களின் வெளிப்பாடுண்டாம் போதும் இஜ்ஜீவான்மா இத்தூல சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து வேறு சரீரத்தையடையும். ஹே ஜனகராஜாவே! இஜ்ஜீவான்மா இத்தூல சரீரத்தைப் பரித்தியாகஞ் செய்து, பரலோகத்தின் கண்ணே செல்வதில் நீ திருஷ்டாந்தத்தைக் கேட்பாயாக :—ஒரு தனிகனானவன் தனது கிராமத்தைப் பரித்தியாகஞ்செய்து, வேறொரு கிராமத்தின்கண்ணே செல்ல எண்ணுவானாயின், தனது வண்டியைத் தயார் செய்வன்; அவ்வண்டியின் மேல் நானாவகையாய அன்னம், தனம், மனைவி, மைந்தர் என்பன முதலிய அநேகம் வகையாய சாமக்கிரிகளைவைப்பன். அந்தத் தனிகனுடைய வண்டியானது நானாவகையாய சப்தங்களைச் செய்வதாய்ப் பைபப்பைய மார்க்கத்தின்கண்ணே செல்லும்; அதுபோல, மரணகாலத்தின்கண்ணே இத்தூல சரீரத்தைப் பரித்தி

யாகஞ்செய்து, பரலோகத்திற்குச் செல்லும் இந்த ஜீவான்மவடிவ தனிகனுக்கும் பரலோகஞ்செல்லுதற்குச் சாதனம் இச்சூக்ஷ்ம சரீரரூபத் தேராம். இத்தேர் புண்ணிய பாவரூப சாமக்கிரியாற் சம்பூரணமாயதாம். இத்தகைய சூக்ஷ்ம சரீரரூபத் தேர் மரணகாலத்தின்கண் நானாவகையாய சப்தங்களைச் செய்வதாய்ப் பரலோகத்தின்கண்ணே செல்லும். இப்போது சூக்ஷ்ம சரீரரூபத் தேரின் சப்தங்களை நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! எக்காலத்தில் இப்புருஷன் மரண சமீபத்தையடைவனோ, அக்காலத்தில் இவ்வகையாய சப்தங்களை உச்சாரணஞ் செய்வன்:—ஹே எனது குணமுடைய மைந்த! ஹே எனது பிராணனுக்குச் சமானமாய்ப் பிரியமாய நவீனயௌவன சுந்தரத்தையுடைய மனைவியே! ஹே எனது தனமே! நின்னைப் பெருமுயற்சியால் யான் ஓரிடத்திற் சேர்த்தினேனன்றோ! ஹே எனது ஹிதகாரியாய பந்துக்களே! உங்கள் யாவரையும் பரித்தியாகஞ்செய்து, பாக்கிய ஹீனனாய யான் தனியனாகவே தூரமார்க்கத்திற் செல்கின்றேன். ஆகையால், எனக்குத் திக்காரமாம். ஹே ஜனகராஜாவே! இவைமுதலாக அநேகவகையாய சப்தங்களை இஜ்ஜீவான்மா மரணகாலத்தின்கண் மனைவி, மைந்தராதி வியோகத்தாற் செய்யும். இப்போது பாலிய அவஸ்தையின்கண்ணே செய்த பாவகருமங்களை நினைந்துகொண்டு, இஜ்ஜீவான்மா மரணகாலத்தின்கண்ணே செய்யுஞ் சப்தங்களை நிரூபிப்பாம்:—பாலிய அவஸ்தையின்கண்ணே பாவான்மாவாய யான் துர்ப்பல பாலகரை வாக்கால் நிராதரஞ் செய்தனன், அப்பாலகரை யடித்தனன், பூஜைசெய்வதற்கு யோக்கியமாய தேவதைகளின் தலைமேல் பாவான்மாவாய யான் பாதங்களை வைத்தனன். எனக்கிதத்தைச் செய்யும் எனது மாதாவிற்கும் அஹிதத்தையே செய்தனன். எம்மாதாவானவள் பாஷாணம்போல ஒன்பது மாதபரியந்தம் உதரத்தின்கண்ணே என்னை வைத்திருந்தனளோ. அத்தகைய ஹிதஞ்செய்த மாதாவிற்குஞ் செய்ந்நன்றி கொன்றயான் நானாவகையாய கிலேசத்தைக்கொடுத்தனன். இரும்பாற்செய்த ஆயுத விசேஷங் காஷ்டத்தைப் பிளப்பதேபோல, அவ் விதகாரியாய மாதாவின் யோனியந்திரத்தைப் பிளந்து கொண்டு துராத்மாவாயயான் மாதாவின் உதரத்தினின்றும் வெளிப்போந்தனன். அதன் பின்னர் பாலிய அவஸ்தையின்கண் எனது மலத்தையும் மூத்திரத்தையும் எம்மாதாவானவள் தனது கைமீது தாங்கி எறிந்தனளோ, அந்தப்பாலிய அவஸ்தையின்கண் அன்னாதிகளைப் பக்ஷணஞ் செய்வதில் எனக்குச் சாமர்த்திய மின்மையைக்கண்டு தனது முலைப்பாலைப் பானஞ்செய்வித்தனளோ, பக்ஷணஞ்செய்வதற்கு யோக்கியமாய உத்தமபதார்த்தங்களைத் தனது உதரத்தின்கண்ணே போடாமலே எம்மாதாவானவள் அவற்றை என்பொருட்டுக் கொடுத்தனளோ, பாலிய அவஸ்தையின்கண் எனது ஹிதாஹித உணர்ச்சியற்ற மூடத்தன்மையை நானாவகையாய உபாயங்களால், எம்மாதா ஜலம் அக்கினி முதலியவற்றினின்றுங் காப்பாற்றினளோ, அத்தகைய ஹிதகாரியாய மாதாவைத் துர்ப்புத்தியோடுகூடிய செய்ந்நன்றி கொன்ற யான் பாலிய அவஸ்தையின்கண் இராக்ஷசிக்குச் சமானமாய் எண்ணி அநாதரஞ்செய்தனன். கடோரவசனரூப பாணங்களால் அம்மாதாவின் செவிகளைப் பிளந்தெறிந்தனன். சத்துரு வசனங்களைப்போன்று அம்மாதாவின்

[illegible] வசனங்களையும் பாவான்மாவாய யான் அங்கீகரித்தேனில்லை. அந்தப் பாலிய அவஸ்தையின்கண்ணே துர்ப்புத்தியையுடைய யான் தந்தை, தந்தையின் தந்தை முதலிய விருத்த புருஷர்களையுஞ் சாஸ்திரம் உணர்ந்த பிராஹ்மணர்களையுஞ் சஹ்ருத் மித்திரர்களையும் நானாவகையாய கடோ வசனங்களால் தாடனஞ் செய்தனன். அந்தப் பாலிய அவஸ்தையின் கண்ணே மூட புத்தியையுடைய யான் பக்ஷணஞ் செய்வதற்கு அயோக்கியமாய பதார்த்தங்களையும் பக்ஷணஞ் செய்தனன். லோகத்தின்கண்ணும், வேதத்தின்கண்ணும் நிந்திதமாய கருமங்களையுஞ் செய்தனன். இவை முதலாக அநேகவகையாய நிந்தித கருமங்களைப் பாவான்மாவாய யான் பாலிய அவஸ்தையின்கண்ணே செய்தனன்; இக்காரணத்தால் எனக்குத் * திக்காரமாம். ஹே ஜனகராஜாவே! இவ்வண்ணம் மரணகாலத்தின்கண்ணே பாலிய அவஸ்தையின் கருமங்களை ஸ்மரிப்பவனாய் இஜ்ஜீவான்மா நானாவகையாய சப்தங்களைச் செய்வன். இப்போது மரணகாலத்தின்கண் யௌவன அவஸ்தையின் நிஷித்த கருமங்களை ஸ்மரணஞ்செய்து, எச்சப்தங்களை இஜ்ஜீவான்மா செய்யுமோ அச்சப்தங்களை நிரூபணஞ் செய்வாம்:—சில புருஷர் சித்தத்தை ஏகாக்கிரஞ் செய்துகொண்டு விஷ்ணு முதலிய தேவதைகளை நிரந்தரந் தியானஞ் செய்வதேபோல, யௌவன அவஸ்தையின்கண்ணே மூடபுத்தியையுடைய யான் எனது ஹிருதயரூப மந்திரத்தின்கண்ணே எனது ஸ்திரீயையேனும், பரஸ்திரீயையேனும் ஸ்தாபனஞ்செய்து, அவர்களை நிரந்தரந் தியானஞ் செய்துகொண்டு இருந்தனன். ஒரு க்ஷணமாத்திரமும் யான் பரமேஸ்வரத் தியானத்தைச் செய்தேன் இல்லை. அந்த யௌவன அவஸ்தையின்கண்ணே எனக்குத் தன முதலிய பதார்த்தங்களை ஒன்றாய்ச் சேகரிக்க அத்தியந்தம் லோபம் உண்டாகி இருந்தது. அந்த லோப வசப்பட்டவனாய்த் துர்ப்புத்தியையுடைய யான் பிராஹ்மணாதி மகா புருஷரின் சுவர்ணம், பசு, கிருகம், க்ஷேத்திரம், அன்னம், ஸ்திரீ என்பன முதலிய அநேக பதார்த்தங்களை அபகரித்தனன். அந்த யௌவன அவஸ்தையின்கண் மூடபுத்தியையுடைய யான் தனாதி பதார்த்தங்களை யடைய இச்சை செய்து தினங்கள் எல்லாவற்றையும் கழித்தனன். ஸ்திரீகளோடு கூடிக் கிரீடை செய்து சம்பூரண இரவைக் கழித்தனன். அந்த யௌவன அவஸ்தையின் கண்ணே துராத்மாவாய யான் தனலோபத்தால் பிரஹ்மஹத்தியாதி பாவகருமங்களைச் செய்தேன். பிரஹ்மஹத்தியாதி பாவகருமங்கள் அநேக ஜன்மங்களில் எனக்குத் துக்க அடைவை உண்டாக்கும் அந்த யௌவன அவஸ்தையின்கண்ணே துராத்மாவாய செய்ந்நன்றி கொன்ற யான் ஸ்திரீயின் அதீனப்பட்டவனாய் எனது தாய் தந்தையரையும் பரித்தியாகஞ் செய்தனன். அந்த யௌவன அவஸ்தையின்கண் அகங்காரத்தோடு கூடியவனாய்த் துராத்மாவாய யான் எனது தந்தை முதலிய விருத்த புருஷர்களையும் பரிஹாசஞ் செய்தனன். இவை முதலாக அநேகம் வகையாய நிந்திதக் கருமங்களைப் பாவான்மாவாய யான் யௌவன அவஸ்தையின் கண்ணே செய்தனன்; இக்காரணத்தால் எனக்குத் திக்காரமாம். ஹே ஜனகராஜாவே! இவ்வகையாய் மரணகாலத்தின்கண்ணே இஜ்ஜீவான்மா யௌவன அவஸ்தையின் நிந்திதக் கருமங்களை ஸ்மரித்து நானாவகையாய சப்தங்களைச் செய்யும்

* திக்காரம்—நிந்தை.

இப்போது மரணகாலத்தின்கண்ணே இஜ்ஜீவான்மா விருத்த அவஸ்தையின் நிந்தித கருமங்களை நினைந்து எச்சப்தங்களைச் செய்யுமோ, அச்சப்தங்களை நிரூபிப்பாம் :— விருத்த அவஸ்தையை யடைந்து ஜீவாத்மாவாய யான் எனது கைகால் முதலிய அங்கங்களைச்சலிப்பதின்கண் ணுஞ் சமாத்தமற்றவனாயினேன். அந்த விருத்த அவஸ்தையின்கண்ணே காமம், குரோதம், லோபம், மோகம் என்னும் இந்நான்கும் விருத்தியை யடைந்தன. அந்த விருத்த அவஸ்தையின்கண்ணே காமத்தாற் பிடிக்கப் பட்டவனும் மூடபுத்தியையுடைய யான் ஸ்திரீயின் அடையின்மையினாலும் யான் துக்கியாயினேன். ஸ்திரீயை யடைந்தபோதினும், அவளை அனுபவிக்கச் சமர்த்தற்றவனாய்த் துக்கத்தை யடைந்தனன். அந்த விருத்த அவஸ்தையின்கண்ணே ஜீவாத்மாவாய யான் குரோதரூப அக்கினியாலும், உலோபாதி விகாரங்களாலும் எவ்வெத்துக்கத்தை யடைந்தனனோ, அவ்வத்துக்கத்தை ஜடனாகிய என்னைப் பார்க்கினுஞ் சேதன புருஷனுப யாவன் பொறுப்பன். அத்துக்கங்களுள் ஒவ்வொரு துக்கமும் பிராணமனத்தியாலுண்டாய துக்கசமானமாம். இவ்வகையாய அநேக துக்கங்களைப் பாவான்மாவாய யான் விருத்த அவஸ்தையின்கண்ணே அடைந்தனன். அந்த விருத்த அவஸ்தையின்கண்ணே எனதிருதய கமலத்தே காமம், குரோதம், லோபம், மோகம் என்னும் நான்கும் அத்தியந்தம் விருத்தியை யடைந்தன. அக்காமக் குரோதாதிகளால் எனதிருதய கமலம் வெள்ளரிப்பழம்போல் வெடிக்காததே எனக்கு மிகவும் ஆச்சரியத்தைக் கொடுக்கின்றது எந்த மனைவி, மைந்தராதி பந்துக்கள் என்னைப் பிராண சமானமாய்ப் பிரியமாக நினைந்திருந்தார்களோ, அவர்கள் என்பால் விருத்த அவஸ்தை யடைந்ததை நோக்கி நாயைப்போல என்னை நிராதரஞ்செய்து விட்டார்கள். காமம், குரோதம், லோபம், மோகம் என்னும் நான்கும் பாலியமுதல் விருத்த அவஸ்தைவரை என்னிடத்தே நிகழ்ந்தன. எங்ஙனம் நெய்யைவிடுதலால் ஓங்கி யெரியாநின்ற அக்கினியின் சாந்தி யுண்டாகாதோ, மாறாய் நெய்யைச் சொரிதலால் அக்கினியின் விருத்தியாகிக்கொண்டேபோமோ, அங்ஙனம் விஷயங்களின் அடைவால் காமாதிகளின் சாந்தியுண்டாகமாட்டாது. மாறாய் விஷயங்களின் அடைவால் நாளும் நாளும் காமாதிகளின் விருத்தி வளர்ந்து கொண்டேபோகும். ஆன்மாவின் விசாரமொன்றே காமாதிகளின் சாந்தியினுக்கு உபாயமாம். அந்த ஆன்மவிசாரத்தை யான் சம்பாதிக்கவில்லை ; மற்றோ, பாலியமே முதலாக மரணம் வரையினும் எனது சரீரத்தைக் காப்பாற்றும் பொருட்டும், ஸ்திரீ புத்திராதி குடும்பத்தைக் காப்பாற்றும்பொருட்டும், அநேகம் வகையாய பாவகருமங்களைத் ஜீவாத்மாவாகிய யான் செய்தனன். ஆகையால், எனக்குத் திக்காரமாம். ஓஹ ஜனகராஜாவே! இவ்வண்ணம் மரணகாலத்தின்கண் விருத்த அவஸ்தையின் நிந்தித கருமங்களை ஸ்மரித்து, இஜ்ஜீவான்மா அநேகம் வகையாய சப்தங்களைச் செய்யும். இப்போது மரணகாலத்தின் துக்கத்தின் அனுபவத்தால், இஜ்ஜீவான்மா எந்த அநேகம் வகையாய சப்தங்களை யுச்சாரணஞ்செய்யுமோ, அவற்றை நிரூபிப்பாம் :—மலின ஜலத்தால் நிறைந்துள்ள தடாகத்தின்கண்ணே இராநின்ற மீனமானது மண்ணால் மறைபடும், சூரியனுடைய தாபத்தால் தபிக்கப்படும். அத்தகைய மீனத்தைச் செம்படவனானவன் பிடிக்க வருவதேபோல,

மமதை, மைந்தராதிரூப மலின ஜலத்தால் நிறைந்த இரதகநிருகரூப தடாகத்தின்
கண்ணே ஜீவாத்மாவான மீனமாகிய யான் இருக்கின்றேன். இந்த யான் அத்தி
யாத்ம, அதிதைவ, அதிபூதமென்னும் மூன்றுவகையாய துக்கரூப சூரியனால் தபிக்
கப்படுகின்றேன்; காமக் குரோதாதிரூப மண்ணால் மூடப்பட்டிருக்கின்றேன். இவ்
வண்ணம் மீனரூபமா யிராநின்ற தீனனாகிய என்னைக் காலனாகிய செம்படவன்
பிடித்துக்கொண்டு போம்பொருட்டு வந்திருக்கின்றனன். எங்ஙனம் பசுக்களின்
ஹிம்சைஸ்தானத்தின்கண் ஒரு தயையற்ற புருஷன் இரும்பாற் செய்த ஆயுத
விசேஷத்தால் பசுக்களின் அங்கங்களைச் சேதிப்பனோ, அங்ஙனந் தயையற்ற இந்
தக் காலன் எனது அங்கங்களைச் சேதிக்கின்றனன். அதனால் எனக்கு மிகவும்
கஷ்டமுண்டாகின்றது. இம்மரணகாலத்தின்கண் அநேகங் கூர்மை பொருந்திய
ஊசிகளால் எனது சர்வ அங்கங்களையும் வேதனைப்படுத்துவதுயாரோ அப்புரு
ஷனை யானறிந்திலேன். இம்மரண காலத்தின்கண்ணே எனது கைகால்களுங்
காஷ்டத்தைப்போலச் சடமாய் விட்டன. எங்ஙனந் துஷ்டக்குதிரை தேர் நடத்
தும் புருஷனுடைய வயப்பட்டு நடப்பதில்லையோ, அங்ஙனம் இக்கால் மனசகித
நேத்திராதி இந்திரியங்கள் யாவும் எனது வயப்பட்டு நடப்பதில்லை. இக்கார
ணத்தால் குருடனைப்போல எப்பதார்த்தத்தையும் யான் காண்பதில்லை, செவிட
னைப்போல, எச்சப்தத்தையும் யான் கேட்பதில்லை. இக்கால் எனது கண்டத்
தைக் கபதாதுவானது தடைப்படுத்துகின்றது. ஜாடராக்கினியுந் தனது ஸ்தா
னத்தை விடுத்து, எனது சரீரத்தைத் தாகஞ்செய்வதாய் மேல் நோக்கிவருகின்றது
பிராணவாயுவுந் தனது ஸ்தானத்தை விடுத்து, எனது சரீரத்தை உலர்த்துவிப்ப
தாய் மேல் நோக்கிவருகின்றது. எங்ஙனம் இவ்வுலகின்கண்ணே கோடிதேள்கள்
கோபமுடையனவாய் ஒரு புருஷனுடைய சரீரத்தின்கண்ணே அடிக்கடி கொட்டி
விடின்; அதனால் அப்புருஷனுக்கு மிகுந்த துயருண்டாமோ, அங்ஙனமாய
பீடையே இக்கால் எனக்குண்டாகின்றது. ஹே ஜனகராஜாவே! இவை முத
லாக அநேகம் வகைச் சப்தங்களை இஜ்ஜீவான்மா மரணகாலத்தின்கண்ணே செய்
யும். அந்த மரணகாலத்தின்கண்ணே வாகருத்தடைப்படினும், இஜ்ஜீவான்மா
குர் குர் என்னுஞ் சப்தத்தைச் செய்யும். இவ்வகை அநேக சப்தங்களைச் செய்து
கொண்டு இந்தச் சூக்ஷுமசரீரரூபத் தேரானது இந்தத் தூலசரீரத்தைப் பரித்தி
யாகஞ்செய்து பரலோகத்திற்குச் செல்லும். இத்தூலசரீரரூபப் புரியினின்றும்
ஒருதரம் வெளிப்போந்த இந்தச் சூக்ஷுமசரீரமாகிய தேரானது மீண்டும், இந்தத்
தூலசரீரத்தின்கண்ணே வரமாட்டாது. ஹே ஜனகராஜாவே! துயிலின்கண்ணே
இஜ்ஜீவான்மா ஹிருதயதேசத்தின்கண்ணே இராநின்ற பரமான்மாவோடு தாதாத்
மிய பாவத்தை யடைவுறும். அதுபோல, மரண காலத்தின்கண்ணும் இஜ்ஜீ
வான்மா ஹிருதயதேசத்தின்கண் இராநின்ற பரமான்மாவோடு தாதாத்மிய பாவ
த்தை யடைவுறும். ஹே ஜனகராஜாவே! எங்ஙனந் துயிலின்கண்ணே இராநின்ற
இஜ்ஜீவான்மா, நனுக்கனுக்களின் சம்பூரண விசேஷ ஞானங்களுமற்றதாமோ, அங்
ஙனம் மரணகாலத்தின்கண்ணும் இஜ்ஜீவான்மா சம்பூரண விசேஷ ஞானங்
களுமற்றதாம். இக்காரணத்தானே இஜ்ஜீவான்மா மரண காலத்தின்கண்ணே
பரமான்மாவோடு தாதாத்மிய பாவத்தை யடையும். எங்ஙனந் துயிலின்கண்ணே

இஜ்ஜீவான்மா பரமான்மாவோடு தாதாத்மிய பாவத்தையடைந்து, சனுக் கனுக் களின் சர்வ விக்ஷேபங்களினின்றும் ரகிதமாமோ, அங்ஙனம் மரணகாலத்தின்கண்ணும் இஜ்ஜீவான்மா பரமான்மாவோடு தாதாத்மிய பாவத்தையடைந்து முற் கூறிய சம்பூரண சப்தங்களையும் பரித்தியாகஞ்செய்யும். அதன்பின்னர் மேற் சுவாசங்களால் தனது தீனபாவத்தை யுணர்த்துவதாய் இஜ்ஜீவான்மா இத்தூல சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து முற்புண்ணிய பாவரூப கருமங்களின் அநுசார மாய் வேறுசரீரத்தையடையும். இப்போது முற்சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து, இஜ்ஜீவான்மா எவ்வகையாய் வேறு சரீரத்தையடையுமோ, அவ்வகையை நிரூபிப் பாம் :—ஹே ஜனகராஜரே! மரணகாலத்தின்கண்ணே அநேக இடங்களிலோ இம்முறையாம் :—முதலில இஜ்ஜீவான்மா தூர்பபலத் தன்மையை யடையும். அதன்பின்னர் மேற் சுவாசங்களால் உபலக்ஷிதமாய தீனதசையையடையும். அந் தத் தூர்ப்பலத்தன்மை இஜ்ஜீவனுககு இருவகையாய காரணத்தாலுண்டாம். ஒன்றோ, ஜரையவஸ்தையால அந்தத் தூர்ப்பலததன்மையுண்டாம். மற்றொன்றோ, வியாதியால் அந்தத் தூர்ப்பலத் தன்மையுண்டாம். அந்தத் தூர்ப்பலத் தன்மையால் தீனதசையையடைந்த இந்த ஜீவன் மரணகாலத்தின்கண்ணே மேற் சுவாசம் வாங்குவன். ஹே ஜனகராஜாவே! இவ்வகையாய தசையையடைந்த இஜ்ஜீ வான்மா எவ்வகை இத்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்யுமோ, அவ்வகையை நீ கேள் :—எங்ஙனம் இவ்வுலகின்கண்ணே மாம்பழமும், அத்திப்பழமும், இப் பிலிப்பழமும் பரிபக்குவமடையுங் காலத்திலேயே அவ்விருக்ஷத்தின் சாகையி னின்றும் பெயர்நது பூமியின்கண்ணே வீழுமோ, அநேக வகையாய உபாயங்க ளாலும் பரிபக்குவ பலத்திற்கு விருக்ஷத்தின்கண்ணே ஸ்திதி உண்டாகமாட் டாதோ, அங்ஙனம் இத்தூலசரீரததை ஆரம்பஞ்செய்யும் புண்ணிய பாவரூபப் பிராரப்த கருமங்கடகுப போகத்தால் க்ஷயமுண்டாகுங்கால், இஜ்ஜீவான்மா இந்த ஸ்தூலசரீரத்தை விரைவாகவே பரிததியாகஞ்செய்யும் எங்ஙனம், கீழே விழுவதற்குமுன்னர் மாம்பழ முதலிய பழங்கட்கு விருக்ஷத்தோடு தாதாத்மிய சம்பந்தமுண்டாமோ, அங்ஙனம் மரணத்தின்முன்னர் இஜ்ஜீவான்மாவிற்கும் இத் தூலசரீரத்தோடு தாதாத்மிய சம்பநதமுண்டாம். இக்காரணத்தானே யான் பிராஹ்மணன், யான் க்ஷத்திரியன், யான் தூலன் என்னும் பிரதீதி உலகருக்குண் டாம். எங்ஙனம் கீழே விழுவதற்குமுன்னர் விருக்ஷத்தோடு பழங்களின் தாதான் மிய முண்டாயினும், பரிபக்குவ அவஸ்தையின்கண்ணே அப்பழங்கட்கு விருக்ஷத் தோடு அவசியம் வியோகமுண்டாமோ, அங்ஙனம் மரணத்தின் முன்னர் இஜ் ஜீவான்மாவிற்குத் தூலசரீரத்தோடு தாதாத்மிய சம்பந்தமுண்டாயினும், மரண காலத்தின்கண்ணே இந்த ஜீவான்மாவிற்கு அந்த ஸ்தூலசரீரத்தோடு அவசியம் வியோகமுண்டாம். ஹே ஜனகராஜாவே! மா முதலிய விருக்ஷத்தின் சாகையி னின்றுங் கீழே விழுந்த மாம்பழ முதலியன ஒரு ஆதாரமின்றி இரா; மற்றோ, கீழே விழுவதற்குமுன்னர் அவை விருக்ஷத்தை யாசிரயித்து இருக்கும். கீழே விழுந்ததின்பின்னர் அவை பூமி முதலியவற்றைப்பற்றி நிற்கும். அதுபோல, இச் சூக்ஷ்ம சரீரமும், இத்தூலசரீரத்தியாகத்தின் பின்னர் ஓர் ஆதாரமின்றி இராது;

மற்றேரு மரணத்தின் முன்னர் இந்தச் சூக்ஷ்ம சரீரம் இந்த ஸ்தூலசரீரத்தைப் பற்றி நிற்கும். இந்த ஸ்தூலசரீரத்தைத் தியாகித்தபின்னர் அது வேறொரு ஸ்தூல சரீரத்தை யடையும். ஆண்டு, இச்சூக்ஷ்மசரீர விசிஷ்ட ஜீவான்மா எவ்வண்ணம் முற்சரீரத்தை யடையாநிற்குமோ, எந்த ஜாதியையுடைய பூர்வசரீரத்தை யடையா நிற்குமோ, அவ்வண்ணம் அந்த ஜாதியையுடைய வேறு சரீரத்தை இஜ்ஜீவான்மா அடையும். ஹே ஜனகராஜாவே! பூர்வ சரீரம் எந்த ஜாதியை யுடையதாமோ, அந்த ஜாதியையுடைய வேறு சரீரத்தை இந்த ஜீவான்மா அடையும் என்னும், அர்த்தத்தைச் சுருதிபகவதியானவள் கூறினள். அதன் கருத்திதுவாம்:—முற் புண்ணிய பாவரூப கரும வசத்தால் இந்த ஜீவான்மா ஒருகால் முற் சரீரத்திற்குச் சமானமான ஜாதியையுடைய சரீரத்தையும் அடையும்; ஆனால், இந்த ஜீவான்மா முற்சரீரத்திற்குச் சமானமான ஜாதியையுடைய சரீரத்தையே அடையும்என்னும், நியமத்தின்கண்ணே சுருதிபகவதிக்குக் கருத்தின்றும், மற்றேரு, ஒரு சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து இந்த ஜீவான்மா வேறு சரீரத்தை அவசியம் அடையுமென் னும், நியமத்தின்கண்ணே சுருதிபகவதிக்குக் கருத்தாம். அவ்வேறு சரீரம் முற் சரீரத்திற்குச் சமான ஜாதியுடையதாகுக; அல்லது, முற் சரீரத்தினின்றும் விலக்ஷணமாகுக; இதன்கண்ணே யாதொரு நியமமும் இன்றும். இப்போது, இப் பொருளையே வெளிப்படையாய் நிரூபணஞ்செய்வாம்:—ஹே ஜனகராஜாவே! பிராரப்த கருமம் க்ஷயமாயபின்னர், இத்தூலசரீரம் நாசமாகுமாயினும், எதுவரை இஜ்ஜீவனுக்கு அத்விதீயப் பிரஹ்ம சாக்ஷாத்காரம் ஆகவில்லையோ, அதுவரை சூக்ஷ்ம சரீரத்தின் நாசம் உண்டாகமாட்டாது. பிரஹ்ம ஞானமொன்றுனேயே சூக்ஷ்ம சரீரத்தின் நாசமுண்டாம். இந்தச் சூக்ஷ்ம சரீரம் ஸ்தூலசரீரத்தான் அன்றிஸ்திரமாகமாட்டாது; மற்றேரு, ஸ்தூலசரீரத்தைப்பற்றியே இந்தச்சூக்ஷ்ம சரீரத்தின் ஸ்திதி உண்டாம். கருத்திதுவாம்:—ஆன்மஞானத்தின் முன்னர் சம் சாரதசையின்கண்ணே இந்தச் சூக்ஷ்ம சரீரத்திற இருவகையாய அவஸ்தை கள் உண்டாம். ஒன்றேரு, காரண அஞ்ஞானத்தின்கண்ணே சமஸ்காரரூபமாய் ஸ்திதியை யடைதலாம். மற்றென்றேரு ஸ்தூல சரீரத்தை யாசிரயித்து ஸ்திதியை அடைதலாம். ஆண்டு, துயிலின்கண்ணே இந்தச் சூக்ஷ்ம சரீரம் காரண அஞ்ஞானத்தின்கண்ணே சமஸ்காரரூபமாய் இருக்கும். துயிலினின்றும் வேறு காலத்தின்கண்ணே இது ஸ்தூல சரீரத்தை யாசிரயித்திருக்கும். இவ்விருவகை யாய் அவஸ்தையின்கண் யாதேனும் ஒரு அவஸ்தையைப்பற்றியே இச்சூக்ஷ்ம சரீரம் இருக்கும். ஹே ஜனகராஜாவே! பாவகரும வசத்தால் இந்தச் சூக்ஷ்ம சரீரம் நரகத்தை யடையும். அந்நரகத்தின்கண்ணே இது நானுவகையாய துக்கங் களை யடையும்; புண்ணிய கருமவசத்தால் இது சுவர்க்காதிலோகங்களை யடை யும்; உபாசனையின் பலத்தால் இது பிரஹ்ம லோகத்தை யடையும். அந்தச் சுவர் க்காதி லோகங்களின்கண்ணேயும், பிரஹ்ம லோகத்தின்கண்ணேயும் இது நானு வகையாய சுகத்தை யடையும். அந்நரகத்தின்கண்ணே துக்கபோகம், சுவர்க்கத் தின்கண்ணே சுகபோகம், பிரஹ்மலோகத்தின்கண்ணே சுகபோகம் என்பவை ஸ்தூலசரீரமின்றிச் சம்பவியாது. ஆகையால், சுவர்க்கத்தின்கண்ணேயும், பிரஹ்ம லோகத்தின்கண்ணேயும், நரகத்தின்கண்ணேயும் இந்தச் சூக்ஷ்ம சரீரம் ஸ்தூல சரீரத்தை யாசிரயித்து இருந்தே சுகத்தையுந் துக்கத்தையும் அநுபவிக்கும்.

சங்கை :—ஹே பகவன்! தாங்கள் சூக்ஷ்ம சரீரத்திற்கு இரண்டு அவஸ்தை கூறினீர்கள்; அது சம்பவியாது; மற்றோ, சூக்ஷ்ம சரீரத்திற்கு மூன்றவஸ்தை சம்பவிக்கும். ஏனெனின், இந்தச் சூக்ஷ்ம சரீரம் இந்தத் தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து பரலோகத்தின்கண்ணே செல்லும். அக்கால் இந்தச் சூக்ஷ்ம சரீரஞ் சமஸ்காரரூபமாய்க் காரண அஞ்ஞானத்தின்கண்ணே இராது. அக்கால் இந்தச் சூக்ஷ்ம சரீரந் தூலசரீரத்தையும் ஆசிரயஞ் செய்யமாட்டாது. ஆகையால், அக்கால் இந்தச் சூக்ஷ்ம சரீரத்திற்கு மூன்றாவது அவஸ்தையை யங்கீகரிக்கவேண்டும்.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! இந்த ஸ்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ் செய்து இந்தச சூக்ஷ்ம சரீரம் எதுவரை வேறு தூலசரீரத்தை யடையவில்லையோ, அதுவரை இந்தச் சூக்ஷ்ம சரீரத்திற்கு ஒருகால் மூன்றாவ தவஸ்தை சம்பவிக்குமாயின், அந்த மூன்றாவதவஸ்தை சஙகையற்றதாம். அதன்கண்ணே எமக்கு யாதொரு ஆக்கிரகமுமின்றாம்; ஆனால், சுகதுக்க போகத்தின் பொருட்டுண்டாம் சூக்ஷ்ம சரீர ஸ்திதியானது ஸ்தூல சரீரமின்றியுண்டாகாது. இவ்வகையாய பொருளின்கண்ணே எமது கருத்தாம் :—ஹே ஜனகராஜாவே! இத்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து இந்தச சூக்ஷ்ம சரீரம் எதுவரை வேறு தூலசரீரத்தை அடையவில்லையோ அதுவரையுள்ள மத்திய காலத்தின்கண்ணே இந்தச் சூக்ஷ்ம சரீரம் எந்தச சுகதுக்கத்தையும் போகிப்பதின்றாம். கழுகானது மாமிசத்தை முகத்தின்கண்ணே கவர்ந்து ஆகாசத்தின்கண்ணே கிளம்புகின்றது, அக் தக்காலத்தினும் மாமிசபக்ஷணஞ் செய்வதின்கண்ணே சமர்த்துடையதாயினும், ஆகாசத்தின்கண்ணே செல்லும் அது அம்மாமிசத்தைப் பக்ஷணஞ் செய்வதின்றாம்; மற்றோ, யாதாவதொரு விருக்ஷத்தின்மீது இருந்துகொண்டு அது அம்மாமிசத்தைப் பக்ஷணஞ்செய்யும். அதுபோல, இந்த ஸ்தூல சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து இந்தச் சூக்ஷ்ம சரீரம் எதுவரை வேறு ஸ்தூல சரீரத்தைக் கவர்வதில்லையோ, அதுவரை இந்தச் சூக்ஷ்ம சரீரம் எப்பதார்த்தத்தையும் போகிப்பதில் சமர்த்துடையதாகாது. இக்காரணத்தால் இந்தச் சூக்ஷ்ம சரீரம் இத்தூல சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து சுகதுக்கங்களை யநுபவிக்கும்பொருட்டு வேறு ஸ்தூலசரீரத்தை அவசியம் அடையும். அந்த வேறு சரீரம் பூர்வ சரீரத்தின் சமானஜாதியுடையதாகுக; அல்லது, பூர்வசரீரத்தினும் விலக்ஷணமாகுக; இதன்கண்ணே யாதொரு நியமமுமின்றாம். ஏனெனின், நரகத்தின்கண்ணே கேவலம் பாவகருமத்தின் துக்கரூப பலத்தை அநுபவிப்பதாய் எச்சீவனுளனோ, அவனுக்குப் பூர்வ புண்ணியபாவரூப மிசிரகருமம் உதயமாயின், அந்த நரகவாசியாய ஜீவன் நரகத்தின் ஸ்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து இந்த மண்ணுலகின்கண்ணே மனுஷ்ய சரீரத்தை யடைவன். அந்நரகவாசிக்கு ஒரு பூர்வ கேவல புண்ணிய கருமம் உதயமாயின், அந்நரகவாசி அந்நரக ஸ்தூல சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து சுவர்க்கத்தின்கண்ணே தேவதா சரீரத்தையும் அடைவன். சுவர்க்கத்தின்கண்ணே இராநின்ற கருமதேவதைக்குப் பூர்வ புண்ணிய பாவரூப மிசிர கருமமொன் றுதயமாயின், அத்தேவதை ஸ்வர்க்கத்தின் ஸ்தூலசரீரத்தைப் பரித்

[illegible] இப்பூமியின்கண்ணே மனுஷ்யசரீரத்தை யடையும். அந்த மனு[illegible]த்தியாக காலத்தின்கண்ணே ஒரு பூர்வ பாவகரும முதயமாயின், [illegible]தேவதை அந்த மனுஷ்யசரீரத்தை விடுத்து நாக சரீரத்தையுமடையும். [illegible]ணம் ஸ்தூலசரீர பரித்தியாக காலத்தின்கண்ணே எவ்வெப் புண்ணியகரு[illegible], அல்லது, பாவகருமம் இஜ்ஜீவனுக் குதயமாமோ, அந்தப் புண்ணிய பாவகரு[illegible]னுசாரமாய் இந்த ஜீவனுக்கு வேறு சரீரத்தினடைவுண்டாம். ஆகையால், இஜ்ஜீவனுக்குப் பூர்வ சரீரத்தின் சமானஜாதியையுடைய வேறு சரீரமே அடைவுறும் என்னும் நியமஞ் சம்பவியாது.

சங்கை :—ஹே பகவன்! இந்த ஜீவன் அற்பஞ்ஞனாதலின், இந்த ஸ்தூல சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து, இந்த ஜாதியையுடைய சரீரத்தை யான் அடைவேன் என்னும் ஞானம் இவனிடத்தே சம்பவியாது. புண்ணிய பாவரூப கருமங்கள் ஜடமாம். ஆகையால், அவற்றினிடத்தும் பின் சரீரத்தின் ஞானஞ் சம்பவியாது. ஆகையால், இந்த ஜீவனுக்கு வேறு சரீரத்தின் அடைவு யார் செய்விகின்றார் என்பதைத் தயையினால் அனுக்கிரகிக்கவேண்டும்.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! இவ்வுலகின்கண்ணே நீண்ட காஷ்டத்தில் கயிற்றாற் கட்டிய காஷ்ட மர்க்கடங்களோடு பாலகன் கிரீடைசெய்வன். ஆண்டு, அப்பாலகன் எம்மர்க்கடத்தைக் கிரீடைசெய்விக்க இச்சிக்கின்றனனோ, அந்த மர்க்கடத்தின் கயிற்றை இழுப்பன்; அதனையிழுத்தலால் அந்த மர்க்கடம் நானாவகையாய கிரீடையைச்செய்யும். அங்ஙனம் இவ்வநாதி சம்சாரம் நீண்ட காஷ்டத்திற்குச் சமானமாம். ஸ்தாவரஜங்கமரூப சர்வப் பிராணிகளும் மர்க்கடங்கட்குச் சமானமாம். ஜீவர்களின் புண்ணிய பாவரூப கருமங் கயிற்றிற்குச் சமானமாம். மாயாவிசிஷ்ட அந்தர்யாமியாகிய பரமான்மா பாலகனுக்குச் சமானமாம். ஆகையால், அந்தப் பரமான்மாரூப பாலகன் கிரீடைசெய்யும்பொருட்டு, எவ்வெப்பிராணிரூப மர்க்கடத்தின் புண்ணியபாவகருமரூப சூத்திரத்தை யிழுக்கின்றனனோ, அவ்வஜ்ஜீவரூப மர்க்கடம் இச்சம்சாரத்தின்கண்ணே நானாவகையாய சேஷ்டையைச்செய்யும். கருத்திதுவாம் :—இந்த ஜீவன் பூர்வ ஜன்மங்களின் கண்ணே அநேக புண்ணிய பாவரூபக் கருமங்களைச் செய்வன்; அவற்றின் ஞானம் இந்த அற்ப அறிவினனாய ஜீவனுக்கின்றாம்; மற்றோ, சர்வஞ்ஞனாய பரமான்மாவிற்கே ஜீவனது புண்ணிய பாவத்தினது ஞானமிருக்கும். இஜ்ஜீவன் எக்கால் இத்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்வனோ, அக்கால் அந்தப் பரமான்மா இஜ்ஜீவனுடைய எப்புண்ணிய பாவரூப கருமங்கட்குச் சுகதுக்கரூப பலன் கொடுக்கும் பொருட்டு எதிர்முகமாகின்றதோ, அப்புண்ணிய பாவரூப கருமானுசாரமாய் இந்தப் பராதீன ஜீவன் வேறு ஜன்மத்தையடைவன். ஆகையால், புண்ணிய பாவரூப கருமத்தைச் செய்வதின்கண்ணேயும், அவற்றின் பலத்தை யனுபவிப்பதின் கண்ணேயும், வேறு சரீரத்தை யடைவதன்கண்ணேயும் இஜ்ஜீவன் ஸ்வதந்திரனன்றாம்; மற்றோ, அந்தர்யாமியாகிய பரமான்மாவே அதன்கண்ணே காரணமாம். அந்தப் பரமான்மா இந்த ஜீவனது புண்ணிய பாவ கருமத்தின் அனுசாரமாய் எவ்வண்ணம் எவ்வண்ணஞ் சரீரத்தைச் செய்யுமோ, அவ்வண்ணம் அவ்வண்ணமாய சரீரத்தை இஜ்ஜீவன் அடைவன். ஆகையால், முற்சரீரத்தின் சமான

ஜாதியையுடைய வேறு சரீரத்தை இஜ்ஜீவன் அடைவன் என்னும் நியமஞ் சம்ப வியாது. அல்லது, அத்தியந்தம் அறப திருண சரீரத்தின்கண் இராநின்ற இஜ்ஜீவன் முற்செய்த ஒரு புண்ணியகரும மகிமையால் பிரஹ்மாவின் சரீரத்தையடைவன். அத்தியந்தம் உத்கிருஷ்டமாகிய (மேலாகிய) பிரஹ்மாவின் சரீரத்தின்கண் இராநின்ற இஜ்ஜீவன் முற்செய்த ஒரு பாவ கரும மகிமையால் திருண சரீரத்தையடைவன். ஆகையால், இது துணியப்பெறும் :—எங்ஙனம் பேய்ச் சரீரங்கட்கும் மேகங்கட்கும் வாயுவின் அதீனமாய்க் கமனமுண்டாமோ, சுதந்திர கமனமுண்டாகமாட்டாதோ, அங்ஙனம பிரஹ்மலோகத்தின்கண்ணேயுஞ் சுவர்க்கலோகத்தின்கண்ணேயும், பூவுலகின்கண்ணேயும் இஜ்ஜீவனுக்கு உண்டாங் கமனஞ் சுதந்திரமாய் உண்டாகமாட்டாது; மற்றே, பரமேசுவரர் சுகதுக்கரூப பலத்தைக் கொடுக்கும்பொருட்டு, எதிர்முகமாக்கிய புண்ணிய பாவரூப கருமங்களின் அனுசாரமாயே இஜ்ஜீவனுக்குப பரலோகத்தின்கண்ணே கமனமுண்டாம்.

சங்கை :—ஹே பகவன்! இஜ்ஜீவன் பூர்வ சரீரசமான ஜாதியையுடைய வேறு சரீரத்தை யடையாதிருப்பானுயின், சுருதியானது இநத ஜீவனுக்குப் பூர்வ சரீரசமான ஜாதியையுடைய வேறு சரீர அடைவை யாதின்பொருட்டுக் கூறியது?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! பூர்வ சரீர சமான ஜாதியையுடைய வேறு சரீரத்தையே இஜ்ஜீவன் அடைவனென்னும் இவ்வகையாய நியமத்தின்கண்ணே சுருதிபகவதியின் கருத்தின்றும்; மற்றே, இஜ்ஜீவான்மா எக்கால் இநத ஸ்தூல சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்யுமோ, அக்கால் அந்தச சரீரத்தின் சமான ஜாதியையுடைய வேறு சரீரத்தை அடைவிக்குங் கருமத்தின் உதயம ஒருகால் உண்டாயின், இஜ்ஜீவான்மா பூர்வ சமஸ்கார வசத்தால அந்த ஜாதியையுடைய சரீரத்தை மீண்டும் அடையும். முற் சரீரத்தினும விலக்ஷண சரீரத்தின் அடைவைச் செய்யுங் கருமங்களின் உற்பவமாமாயின், இஜ்ஜீவான்மா பூர்வசரீரத்தினும் விலக்ஷண சரீரத்தையும் அடையும். ஆனுல, ஒரு சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து இஜ்ஜீவான்மா வேறு சரீரத்தை அவசியம் அடையும் என்னும் நியமத்தின்கண்ணே சுருதி பகவதிக்குக் கருத்தாம். ஹே ஜனகராஜாவே! ஒருகால் இஜ்ஜீவனுக்கு நியமமாய்ப் பூர்வ சரீர சமான ஜாதியுடைய வேறு சரீரமே அடையக் கூடியதாயின், புண்ணியத்தின் சுகரூப பலத்தையும் பாவத்தின் துக்கரூப பலத்தையும் உணர்த்துஞ் சாஸ்திரம் அப்பிரமாணரூபமாம். ஏனெனின், அக்கினிஹோத்திராதி கருமங்களைச் செய்யும் புருஷனுக்குச் சுவாககததின்கண்ணே தேவதா சரீரப் பிராப்தியைச் சாஸ்திரம் கூறியிருக்கின்றது. உபாசனை செய்யும் புருஷனுக்குப் பிரஹ்ம லோகத்தின் அடைவைச சாஸ்திரங கூறியிருக்கின்றது. பிரஹ்மஹத்தியாதி பாவ கருமங்களைச் செய்யும் புருஷனுக்கு நாய் முதலிய கீழாய சரீரத்தின் அடைவைச் சாஸ்திரங் கூறியிருக்கின்றது. இவை முதற்கொண்டு சம்பூரண விதிநிஷேதரூப சாஸ்திரம் அப்பிரமாண ரூபத்தையடையும். அல்லது, இசசம்சாரம் பிரவாஹரூபமாய் அநாதியாம். இந்த அநாதி சம்சாரத்தின்கண்ணே எப்பதார்த்தமும் யாவினும் முதலதன்றும். ஆகையால், இஜ்ஜீவனுக்குச் சர்வ சரீரத்தினும் முதலில் எந்த ஜாதியையுடைய சரீரம் இருந்ததெனை வாதியானவன் வினவின், இந்த ஜாதி

யையுடைய சரீரம் இருந்தது என விடைகொடுப்பதில் எவ்வித்துவானுஞ் சாமர்த்தியமுடையவனுகான். அல்லது, வாதியானவன் வர்த்தமான சரீரங்களைக்கண்டு, இந்த ஜீவனுக்கு மனுஷத்தன்மை ஜாதியையுடைய சரீரமே யோக்கியமாம், இந்த ஜீவனுக்கு பசுத்தன்மை ஜாதியையுடைய சரீரமே யோக்கியமாம் என்னும், நியமத்தைச்செய்யின், பூர்வ சரீரங்களின் அஞ்ஞானத்தால் இச்சம்சாரத்தின்கண்ணே * சாதித் தன்மையேயடையும். சம்சாரத்தின்கண்ணே சாதித்தன்மையை எவ்வாஸ்திக வாதியும் அங்கீகரிப்பதின்றாம்; மற்றோ, சார்வாக நாஸ்திகரினும் வேறாய சம்பூரண ஆஸ்திகவாதிகள் சம்சாரத்தைப் பிரவாகரூபமாய் அநாதியெனவே அங்கீகரித்துளார்கள். ஆகையால், இஜ்ஜீவனுக்கு நியமமாய்ப் பூர்வ சரீரசமான ஜாதியையுடைய வேறுசரீரமே கிடைக்கும் என்னும் நியமத்தை அங்கீகரிக்கினே, சம்சாரத்தின்கண்ணே அநாதித் தன்மை இராது. இப்போது சம்சாரத்தைச் சாதியென உடன்படுஞ் சார்வாகனுய நாஸ்திகனது மதத்தைக் கண்டிக்கும்பொருட்டு, நாலுவகையாய யுக்திகளால் சம்சாரத்தின்கண்ணே அநாதித்தன்மையைச் சித்தஞ்செய்வாம் :—ஹே ஜனகராஜாவே! நனுக்கனுத் துயில் என்னும் மூன்று அவஸ்தைகளுள் இந்நனுச் சர்வ நனுக்களினும் முதலதாம், இக்கனுச்சர்வ கனுக்களினும் முதலதாம், இத்துயில் சர்வ துயிலகளினும் முதலதாம், என்னும் நியமத்தைச் செய்யமுடியாதாம். அதுபோல, இவ்வுலகின் உற்பத்தி, ஸ்திதி, இலயம் என்னும் மூன்றனுள்ளும் இவ்வுற்பத்தி சர்வ உற்பத்திகளினும் முதலதாம், இந்த ஸ்திதி சர்வ ஸ்திதிகளினும் முதலதாம், இநத இலயஞ் சர்வ இலயங்களினும் முதலதாம் என்னும் நியமத்தைச் செய்ய முடியாது. ஆகையால், உலகின் உற்பத்தி, ஸ்திதி, இலயம் என்னும் மூன்றும் பிரவாஹ ரூபத்தால் அநாதியாம். கூபாதிகளினின்றும் ஜலம் வெளிவருவதற்குச் சாதனமாய கடயந்திரத் (ஏற்ற மரத்) தின்கண்ணே இருக்கும் நீண்ட இரஜ்ஜுவோடு கட்டியிராநின்ற † மண்ணுலாக்கிய கட யெனப் பெயரிய பாத்திர விசேஷத்தின்கண் இம்மட்பாத்திரஞ் சர்வ பாத்திரத்தினும் முதலதாம் என்னும நியமத்தைச் செய்யமுடியாதாம். இதுபோல, இச்சம்சாரஞ் சம்பூரண சம்சாரத்தினும் முதலதாம் என்னும் நியமத்தை யாவராலுஞ் செய்யமுடியாது. இப்போது, இப்பொருளையே சத்காரிய வாதரீதியாக வெளிப்படையாய் நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! இவ்வுலகின்கண்ணே எத்துணைக் காரியரூபக் கடாதிபதார்த்தங்களுளவோ, அவை முதலில் உற்பத்தியை யடைந்தே பின்னர் வர்த்தமானத்தன்மைரூப ஸ்திதியை யடையுமென்னும் இவ்வகையாய நியமஞ் சம்பவியாது; ஏனெனின், உற்பத்தியின் முன்னர் அத்தியந்தம் அசத்தாய கடாதி பதார்த்தங்களினுற்பத்தியை யங்கீகரிக்கினே, அத்தியந்தம் அசத்தாய மலடிமைந்தனும், மனுஷக்கோடும் உற்பத்தியாக வேண்டும். ஆகையால், உற்பத்தியின்முன்னர்க் கடமுதலிய பதார்த்தங்கள் அத்தியந்தம் அசத்தன்றாம்; மற்றோ, தமது உற்பத்தியின் முன்னர் அவை தமது மண்முதலிய உபாதான காரணத்தின்கண்ணே சூக்ஷுமரூபமாய் ஸ்திதி பெற்றிருக்கும். ஆகையால், இது துணியப்பெறும் :—ஸ்திதியை யடைந்த அக்கடாதிகள்

* சாதி = ஆதியுடையது, உற்பத்தியுடையது.
† மண்ணுலாக்கிய கட = வடதேசத்திய வழக்கம்

உற்பத்தியையடையும். உற்பத்தியையடைந்த அவை மீண்டும் ஸ்திதியையடையும், உற்பத்தி ஸ்திதியின் பின்னர் அவை நாசத்தை யடையும், நாசத்தின் பின்னர் அவை மீண்டுங் காரணரூபமாய் ஸ்திதமாம். காரணரூபமாய் ஸ்திதமாய அவை மீண்டும் உற்பத்தியையடையும். இவ்வண்ணங் கடாதிபதார்த்தங்களின் உற்பத்தி ஸ்திதி, இலயங்களின் வியவகாரம் மீண்டும் மீண்டும் உண்டாம். ஆகையால், கடாதி பதார்த்தங்களின் உற்பத்தி, ஸ்திதி, இலயம் என்னும் மூன்றும் ஏற்றம்போலப் பிரவாகரூபமாய் அநாதியாம். அல்லது, எச்சார்வாகனுய நாஸ்திகன் சம்சாரத்தைச் சாதியென அங்கீகரித்துளானோ, அவன்பாலிது கேட்கவேண்டும் :—எக்காலத்தே சம்சாரத்திற்குச் சாதித்தன்மையுளதாயதோ, அக்காலத்தை நீ யறிதியேயாயின் அக்காலத்தை யென்பாற் கூறுதியென. ஆண்டு, அச்சார்வாகவாதியானவன் எக்காலத்தே இச்சம்சாரத்தின்கண்ணே சாதித்தன்மை யுளதாயதோ, அக்காலத்தை யான் அறிந்திலனென விடை பகருவானாயின், அவன் இச்சமசாரத்தின்கண்ணே சாதித்தன்மையை எங்ஙனஞ் சித்தஞ்செய்வன்? ஆகையால் இச்சம்சாரஞ் சாதியாம் என்னும் பிரதிஞ்ஞை பொய்யாம். அசசாாவாகன் அத்தியந்தந் துராக்கிரகத்தால், எக்கால் இவ்வெனது சரீரம் உற்பன்னமாயதோ, அக்கால் இச்சம்சாரத்தின் கண்ணே சாதித்தன்மை யுளதெனக் கூறுவானாயின், அக்கூற்றுச் சம்பவியாது. ஏனெனின், அவன்பாலிது கேட்டல்வேண்டும் :—இவ்வுனது ஸ்தூலசரீரந் தாய்தந் தையர் முதலிய காரணங்களின்றியே உற்பன்னமாயதா? அல்லது, அக்காரணங் களானுற்பன்னமாயதா? அவற்றுள், வாதியானவன்முதற்பக்ஷத்தையங்கீகரிக்கின், அதுசம்பவியாது. ஏனெனின், இவ்வுலகின்கண்ணே எவ்வெப்பொருள் காரியரூப மாமோ, அவ்வப்பொருள் ஒரு காரணததாலேயே யுண்டாயதாம். காரியரூப கடாதி பதார்த்தங்கள் மண், குலாலன் முதலிய காரணங்களாற் ஜன்னியமாம். அது போலக் காரியரூப இஃதூலசரீரமும் ஒரு காரணத்தானே ஜன்னியமாம். ஆகை யால், தாய்தந்தையர் முதலிய காரணமின்றியே இவ்வெனது சரீரம் உற்பன்ன மாயது என வாதி கூறின், அது அதத்தியந்தம் விருத்தமாம். இவ்வெனது சரீரம் தாய் தந்தையர் முதலிய காரணத்தினின்றும் உற்பன்னமாயது என்னுமிரண்டா வது பக்ஷத்தை வாதியங்கீகரிப்பினும, வாதியின் பிரதிஞ்ஞைக்கு ஹானியுண்டாம். ஏனெனின், காரியத்தின் உற்பத்தியின் முன்னர் நியமமாய் யாதிருக்கின்றதோ, அது காரணமெனப்படும். ஆகையால, அச்சார்வாக வாதியானவன் தனது சரீர உற்பத்தியின் முன்னர்த் தாய் தந்தையர் முதலிய காரணங்களின் இருப்பை அவ சியம் அங்கீகரிக்கவேண்டும். ஆகையால், எனது சரீர உற்பத்திகாலத்தின்கண்ணே சம்சாரத்திற் சாதித்தன்மை யுளதென்னும் வாதியின் பிரதிஞ்ஞை பொய்யாய்ப் போம். அச்சார்வாக வாதியானவன் என்னை யபேக்ஷித்து இச்சம்சாரஞ் சாதியாம், எனது தந்தை, பாட்டன் முதலியவரைக்குறித்து இச்சம்சாரஞ் சாதியன்றும் எனக் கூறுவானாயின், அக்கூற்றுஞ் சம்பவியாது. ஏனெனில், அவ்வாதியின்பால் இது கேட்கவேண்டும் :—நினது மதத்தே சம்சாரத்திற்கு யாதுசொரூபம் என. அதற்கு அவன் இந்த ஸ்தூலசரீரமே சம்சாரம் என விடை கூறுவானாயின், அவனை நோக்கி இது கூறவேண்டும் :—ஹே வாதியே! இந்தத் தூலசரீரரூப சம்சாரஞ்சாதியாம்

என் நீ கூறுதலை யாங் கண்டனஞ் செய்யவில்லை; மற்றோ, இத்தூல சரீரத்தின் கண்ணே யாமுஞ் சாதித்தன்மையை யங்கீகரிக்கின்றோம்; ஆனால், இச்சரீரஞ் சர்வ சரீரத்தினும் முதலாம் என்னுங் கூற்றை யாம் அங்கீகரிப்பதில்லை; மற்றோ, இச்சரீரத்தின் முன்னரும் அநேக சரீரங்கள் உண்டாயின என யாம் அங்கீகரிக்கின்றோம். அவ்வெமது சித்தாந்தத்தை நீ கண்டனஞ் செய்தாயில்லை. அல்லது, அச்சார்வாகன் இவ்வெனது சரீரஞ் சர்வ சரீரத்தினும் முதலதாம் எனக் கூறுவானாயின், அவன்பாலிது கேட்கவேண்டும்:—ஹே வாதியே! நீ தேகவடிவமா? அல்லது, தேகத்தினும் வேறா? அவற்றுள், முதற் பக்ஷத்தை அங்கீகரிக்கின், அது சம்பவியாது. ஏனெனின், உலகின்கண்ணே ஒரு புருஷன் இவ்வெனது வீடானது இவ்வீட்டினும் முதலதாம் எனின், அவ்வசனத்தால் வீட்டையுடைய புருஷன் வீட்டினும் வேறாயே விளங்குவன். அதுபோல. இவ்வெனது சரீரம் எல்லாச் சரீரங்களினும் முதலதாம் என்னும், வாதியின் வசனத்தால் சரீரத்தினும் வாதியின் ஸ்வரூபம் வேறேயாமெனத் துணியப்பெறும். ஆகையால், யான் சரீரரூபன் என வாதி கூறுதல் அத்தியந்தம் விருத்தமாம். இச்சரீரத்தினும் யான் வேறு என்னும் இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின், அவ்வாதியின்பால் இது கேட்க வேண்டும்:—இவ்வுனது சரீரம் உற்பன்னமாகாதபோது, நீ எந்த ஸ்தானத்தின் கண்ணே இருந்தனை? இச்சரீர உற்பத்தியின்பின்னர் இச்சரீரத்தின்கண்ணே எப்பிரயோஜனத்தின்பொருட்டு நீ வந்தனை என. அதற்கந்தச் சார்வாகன் இந்தச் சரீர உற்பத்தியின் முன்னா யான் வேறு சரீரத்தின்கண்ணே யிருந்தேனில்லை; மற்றோ, எனது ஆன்மாவின்கண்ணே யிருந்தேன். இச்சரீர உற்பத்தியின் பின்னர் யான் இச்சரீரத்தின்கண் ஒன்றையுங் கருதாமலே வந்தேன். ஈண்டு, ஒன்றையுங் கருதாமலென்றது சிந்தியாத பதார்த்தத்தை யடைவிக்கும் இயற்கையேயாம். இவ்வண்ணங் கூறுஞ் சார்வாக வாதியின்பால் இது கேட்கவேண்டும்:—இச்சரீரத்தின் அடைவுண்டாமுன்னர் நீ வேறு சரீரத்தை ஏன் அடையவில்லை? எந்த ஒன்றையுங் கருதாமலால் நீ இந்தச் சரீரத்தை யடைந்தனையோ, அந்த ஒன்றையுங் கருதாமை இச்சரீரத்தின் முன்னா நின்னிடத்தே ஏன் உண்டாகவில்லை? என்னும இவ்விரண்டு வினாக்களின் விடையை நீ எம்பொருட்டுக் கூறுதி என்று சித்தாந்தியால் வினவப்பட்ட அந்தச் சார்வாகன் சிறிதுமாத்திரையும் விடைவிடுப்பதிற் சமர்த்தின்றியவனாவன். அல்லது, அந்தச் சார்வாகவாதியானவன் பூர்வ சரீரங்களின் அபாவத்தைச் சித்திசெய்யும்பொருட்டு, ஒருகால் இச்சரீரத்தினும் முன்னர் எனக்கு வேறு சரீரத்தின் அடைவுண்டாகியிருக்குமாயின், இந்த வர்த்தமான சரீரத்தின்கண்ணே அந்தப் பூர்வ சரீரங்களின் ஸ்மரணம் உண்டாம்; ஆனால், இந்த வர்த்தமான சரீரத்தின்கண்ணே எனக்குப் பூர்வ சரீரங்களின் ஸ்மரணமுண்டாகவில்லை. ஆதலின், இஃதறிந்துகொள்ளலாமன்றோ. இச்சரீரத்தின் முன்னர் எனக்கு வேறொரு சரீரமும் உண்டாகவில்லை என. ஈண்டு அநுமானம் வருமாறு:—சார்வாகனாய யான் பூர்வ சரீரங்களின் அத்தியந்த அபாவத்தை யுடையவன், பூர்வ சரீரங்களின் ஸ்மிருதி யபாவமுடையவனாதலின், அந்நிய புருஷனைப்போல என. இங்ஙனம் அநுமிப்பனேல், இந்தச் சார்வாக வாதியின் அநுமானப்பிரமாணஞ் சம்பவியாது, ஏனெனின், இவ்வுலகின்கண்ணே

எத்துணைப் பொருள்கள் அனுபவிக்கப்படுகின்றனவோ, அவ்வெல்லாவற்றின் ஸ்மிருதியானது நியமமாய் ஜீவர்கட்குண்டாயின், இவ்வாதியின் அநுமானப் பிரமாணம் பூர்வ சரீரங்களின் அத்தியந்தாபாவத்தைச் சித்தஞ்செய்யும். ஆனல், இப்பிறப்பின்கண்ணே அனுபவித்த பதார்த்தத்தின் ஸ்மரணம் இப்பிறப்பின்கண்ணும் நியமமாய் உண்டாகாதாயின், ஜன்மாந்தரங்களின் சரீர ஸ்மரணம் எங்ஙனம் வாதிக்குண்டாம். ஆகையால், அவ்வாதியின் அநுமானம் வியபிசாரியாம், அத்தகைய அநுமானத்தால் எப்பொருளின் சித்தியும் உண்டாகமாட்டாது. என்பது முதலாய அநேகவகைத் தூஷணங்கள் சம்சாரத்தைச் சாதியென உடன்படுவதில் அடையாநிற்கும். ஆகையால், சார்வாகனே முதலாக எல்லாவாதியரும் இச்சம்சாரத்தைப் பிரவாகரூபமாய் அநாதியென அங்கீகரிக்கவேண்டும். சம்சாரத்தை அநாதியென அங்கீகரிப்பதில் புண்ணியமுடைய புருஷன் சுகரூப பலத்தை அடைவன், பாவியானவன் துக்கரூப பலததை அடைவன் என்னுஞ் சாஸ்திர விவஸ்தையுஞ் சுகமாகவே சித்தமாம். ஆகையால, இது துணியப்பெறுமன்றே:—இந்த ஜீவான்மா இநத ஸ்தூல சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து, இந்த ஜாதியையுடைய வேறு சரீரத்தை அடையும என்னும் இவ்வகையாய நியமத்தின்கண்ணே சுருதி பகவதிக்குத் தாற்பரியம இன்றாம்; மற்றோ, இவ்வகையாய பொருளின்கண்ணே சுருதி பகவதிக்குத் தாற்பரியமாம்:—இச்சம்சாரம் அநாதியாம், இவ்வநாதி சம்சாரத்தின்கண்ணே இஜ்ஜீவான்மா எங்ஙனம் இப்போது சரீரத்தை அடைந்துளதோ, அங்ஙனம் பூர்வமும் இஜ்ஜீவான்மா எந்தெந்த ஜாதியையுடைய சரீரங்களை அடைநதிருந்ததோ, அந்தநத ஜாதியையுடைய சரீரத்தை மீண்டும் ஒருகால் அடையும். கருத்திதுவாம்:—இஜ்ஜீவான்மா பசு, பக்ஷியே முதலாக எந்தெந்த ஜாதியையுடைய சரீரத்தை அடையுமோ, அந்தந்த ஜாதியையுடைய சரீரத்தின் உண்ணல், குடித்தல், புணர்தல் முதலிய எத்துணை வியவகாரங்களுளவோ, அவை யாவற்றையும் இஜ்ஜீவான்மா உபதேசமின்றியே செய்யும. ஆகையால், இஃதறிந்துகொள்ளலாமன்றோ:—இஜ்ஜீவான்மாவிற்கு இந்த ஜாதியையுடைய சரீரம் முன்னும் ஒருகால் கிடைத்திருக்கவேண்டும்; அச்சரீர சமஸ்காரத்தால் ஜீவான்மா உபதேசமின்றியே உண்ணல், குடித்தல முதலிய எல்லா வியவகாரங்களையுஞ் செய்யும். இததுணைக் கிரந்தத்தால் இப்பொருள் கூறப்பெறறதாயது:—எதுவரை இஜ்ஜீவனுக்கு ஆன்மாவின் வாஸ்தவ ஸ்வரூபத்தின் சாக்ஷாத்காரம் உண்டாகவில்லையோ, அதுவரை இஜ்ஜீவன் ஒரு ஸ்தூல சரீரத்தைப் பரித்தியாகஞ் செய்து, புண்ணிய பாவ வசத்தால் வேறு ஸ்தூலசரீரத்தை அவசியம் அடைவன். அவ்வேறு சரீரம் ஒருகால் முற்சரீர சமான ஜாதியுடையதாம், ஒருகால் விலக்ஷணமாம். இதன்கண்ணே யாதொரு நியமமுமின்றாம். இப்போது இஜ்ஜீவான்மா இச்சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து, புண்ணிய பாவ வயத்தால் எவ்வண்ணம் வேறு ஸ்தூல சரீரத்தை அடையுமென்னும் பொருளை உலகப் பிரசித்த திருஷ்டாந்தத்தால் நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! க்ஷத்திரியத் தாயினிடத்தே வைசியத் தந்தைக்குப் பிறந்த மைந்தன் உக்கிரன் என நூல் உணர்ந்த புருஷரால் கூறப்பெறுவன். அல்லது, ஹிம்சை முதலிய உக்கிர கருமங்களைச்

செய்யும் புருஷரும் உக்கிரரெனப்படுவர் ; அல்லது, ஹீனஜாதியையுடைய தாயின் கண்ணே மேலாய ஜாதியையுடைய தந்தையால் உற்பன்னமாய மைந்தன் அநுலோமன் என நூல் உணர்ந்த புருஷரால் கூறப்பெறுவன். மேலாய ஜாதியையுடையதாயின்கண்ணே கீழாய ஜாதியையுடைய தந்தையால் உற்பன்னமாய மைந்தன் பிரதிலோமன் என நூல் உணர்ந்த புருஷரால் கூறப்பெறுவன். அவ்வநுலோமரெனப் பெயரியவரையும் பிரதிலோமரெனப் பெயரியவரையும் நூல் உணர்ந்த நுண்ணறிவோர் உக்கிரர் எனக் கூறுவர். பிராஹ்மணத் தாயிடத்தே க்ஷத்திரியத் தந்தையால் உற்பன்னமாய மைந்தன் நூல் உணர்ந்த பெரியோரால் சூதன் எனப்படுவன். அச்சூதப் பெயர் வாய்ந்த புருஷருக்கு இருவகையாய ஜீவனம் உண்டாம். சில சூதரோ தேரின்கண்ணே சாரத்தியஞ்செய்வர். சில சூதரோ பாகவதாதி புராணங்களின் ஞாதாக்களாவர். அல்லது, அரசனது தனத்தால் தமது குடும்பத்தைப் பாலனஞ்செய்யும் பிராஹ்மணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும் நான்கு வருணத்தினர், அநுலோமர், பிரதிலோமர் என்பவர் யாவரும் நூலுணர்ந்த பெரியோரால் சூதரெனப் பெயர்பெறுவர். அல்லது, மாதாவின் உதரத்தினின்றும் எந்தப் பிராணி வெளியேவருமோ, அப்பிராணியுஞ் சூதப பெயரை யடையும். இச்சூத சப்தப்பொருள் சர்வ தேகதாரி ஜீவர்களிடத்தேயும் பொருந்தும். பாவிகளைத் தண்டிக்கும் அரசசேவகன், புரியிலுள்ளார்களை நீதிமார்க்கத்தின்கண்ணே நடத்துவிக்கும முக்கிய புருஷன் என்னும் யாவரையும் நூலுணர்ந்தோர் 'பிரத்யேநசர்' என்பர். கிராமத்துள்ளார்களை நீதிமார்க்கத்தில் நடத்துவிக்கும் புருஷனை நூலுணர்ந்தோர் 'கிராமணி' என்பர். ஹே ஜனக ராஜாவே! இவ்வகையாய உக்கிரரெனப் பெயரியவரும், சூதரெனப் பெயரியவரும், பிரத்யேநசரெனப் பெயரியவரும், கிராமணியெனப பெயரியவரும் இன்னும் இவர் முதலாக அரசதனத்தால் குடும்ப வாழ்க்கையை விருத்திசெய்பவர் யாவரும், அத்தேச அரசன் வருகையைக் கேட்டு அவ்வரசனெதிரிற்செல்வர். அவர் மகாராஜாவை மகிழ்விக்கும்பொருட்டு, நானாவகையாய *கௌதுகஞ்செய்வா, நானாவகையாய மங்[illegible]செய்வர். அவா தூரியமேமுதலிய நானாவகையாய வாத்தியங்களோடு கூடியி[illegible] செவிக்கானந்ததைத யடைவிக்கும் நானாவகையாய மதுரகானங்களைச் செய்பவர்களோடு கூடியிருப்பர், நானாவகையாய †வாராங்கனைகளின் செங்கமலக்கரத்தே இராநின்ற தீபார்த்திகளோடு கூடியிருப்பர். இன்னும் இவை முதலாக அநேகம் வகைக் கௌதுகங்களைச் செய்பவராய் அவர் தமது மகாராஜாவின் சந்நிதியிற் செலவர். அம்மகாராஜா வருவதற்கு முன்னரே அவர் இவ்வகையாய வியுவஸ்தையைச் செய்து வைத்திருப்பர் :—இவ்வீட்டின்கண்ணே மகாராஜா நிவாசஞ் செய்வர், இவ்வீட்டின்கண்ணே மகாராஜாவின் முக்கிய மந்திரி நிவாசஞ் செய்வர், இவ்வீட்டின்கண்ணே மகாராஜாவின் சேனை நிவாசஞ்செய்யும், என ராஜாவின் நிவாசத்தின்பொருட்டு நானாவகையாய வீடுகளைக் கற்பனைசெய்து, மீண்டும் அவ்வுக்கிராதி புருஷர் அவ்வீடுகளில் சரீரத்திற்கும், மனத்திற்கும், நேத்திராதி இந்திரியங்கட்குஞ் சுகத்தைக் கொடுக்கும் நானாவகையாய அன்ன வஸ்திராதி பதார்த்தங்களைத் தகுதிப்படி வைப்பர், இவ்வண்ணம் நானாவகையாய சாமக்கிரிகளைத்

* கௌதுகம் = உற்சவம், கொண்டாட்டம். † வாராங்கனை = பொதுமாது.

தயார்செய்து, அவ்வுக்கிராதி புருஷர் அங்கராத்தைவிட்டு மாகாராஜாவை எதிர்கொண்டழைக்கும்பொருட்டுத் தூரத்தேசெல்வர். அவ்வுக்கிராதிப்புருஷர் மகாராஜா எங்கே சென்றனர், மகாராஜா இப்போது வருவார் என்னும் இவை முதலாக அம் மகாராஜாவின் வார்த்தையையே பரஸ்பரம பேசிக்கொண்டிருப்பர். ஹே ஜனக ராஜாவே! இங்ஙனம், இந்த ஜீவாத்மாரூப மகாராஜா இந்த ஸ்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து எக்கால் வேறு சரீரத்தையடையுமோ, அக்கால் இஜ்ஜீவான்மாவி னுடைய கருமங்களின் அநுசாரமாய்ப போகத்தைக் கொடுக்கும் ஆதித்தியாதி தேவதைகளும், வேறு சரீரத்தை ஆரம்பிக்கும் ஆகாசாதி பஞ்சபூதங்களும், இஜ் ஜீவான்மாவின் புண்ணியபாவரூப கருமாநுசாரமாய்ச் சம்பூரண போக சாமக்கிரிகளைத் தயார்செய்துகொண்டு இநத ஜீவான்மாவடிவமகாராஜாவின் வருகையை எதிர்பார்க்கும. அவ்வாதித்தியாதி தேவதைகள பரஸ்பரம் நமது கர்த்தாவும போக்தாவுமாய இந்த ஜீவாதமாரூப மகாராஜாவானவா இந்தத் தேவதத்தரெனப் பெயரிய புருஷரின் புத்திரராம்பொருட்டும, இநதத தேவதத்தரின் இருது ஸ்நானஞ்செய்த பத்தினியினிடத்தே ஜன்மமெடுக்கும்பொருடடும், இப்போது வருவார் என வார்த்தையாடுவர். அநத ஆதிதநியாதி தேவதைகள இந்த ஜீவான்மாரூப மகாராஜாவின் வரவை எதிர்பாரப்பர்.

சங்கை :—ஹே பகவன்! இநத ஜீவாத்மாரூப மகாராஜா இந்த ஸ்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ் செய்துவிட்டு, ஒருவராகவே வேறு சரீரத்தின்கண்ணே செல்வரா? அல்லது, யாதாவது இவரோடுகூடச செல்லுமா?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! மகாராஜாவானவர் தமது புரியை விடுத்து வேறொரு புரிக்குச செல்ல இசசிக்கும்போது, அம்மகாராஜாவின் அபிப்பிராயத்தை யறிந்து அவ்வுக்கிராதி தாசா மகாராஜாவோடு செல்வர். அதுபோல இந்த ஜீவாத்மாரூபமகாராஜா இந்த ஸ்தூலசரீரரூபப் புரியைப் பரித்தியாகஞ்செய்துவிட்டுப் பரலோகத்திற்குச் செலல இசசிக்கும்போது, வாக்கு முதலிய பத்து இந்திரியங்களும், ஐந்து பிராணன்களும், அந்தக்கரணமும் ஜீவான்மாரூப மகாராஜாவோடு செல்லும். இப்போது இவ்வாறுவது அத்தியாயம் முடியும்வரை சாதனங்களோடுகூடிய சம்சாரத்தையுஞ சாதனங்களோடுகூடிய மோக்ஷத்தையும்விஸ்தாரமாய் நிரூபிப்பாம் :—அவறறுள், முதலிற் சம்சார நிரூபணத்தைச செய்வாம் :— ஹே ஜனகராஜாவே! எம்மரணகாலத்தின்கண்ணே அத்தியந்தம் பலமற்ற தன்மையை யடைந்து இந்த ஜீவான்மா வாக்கு முதலிய இந்திரியங்களால் எப்பொருளையும் அறியாதோ, அக்கால இந்த ஜீவான்மா வாக்குமுதலிய இந்திரியங்களைத் தத்தமது ஸ்தானங்களினின்றுங் கவர்நதுகொண்டு இருதய ஆகாசத்தை யடையும். ஹே ஜனகராஜாவே! எங்ஙனம துயிலின்கண்ணே இந்த ஜீவான்மா வாக்குமுதலிய இந்திரியங்களைக் கவர்ந்து இருதயதேசத்தின்கண்ணே மாயாவிசிஷ்ட பரமான்மாவோடு அபேதபாவத்தை யடையுமோ, அங்ஙனம் மரணகாலத்தின்கண்ணேயும் இந்த ஜீவான்மா வாக்கு முதலிய இந்திரியங்களைக் கவர்ந்து இருதய தேசத்தின்கண்ணே பரமான்மாவோடு அபேதபாவத்தை யடையும். அக்கால் இஜ்ஜீவான்மா எவ்விந்திரியத்தாலும் எவ்விஷயத்தையும் கவராதாம்; மற்றோ, அக்

[illegible]வான்மா வாக்கு முதலிய சர்வ இந்திரியங்களின் வியாபாரமற்றதாம். ஹே ஜனகராஜாவே! மரணகாலத்தின்கண் இஜ்ஜீவான்மா பரமான்மாவோடு அபேதபாவத்தை யடைந்து, சர்வ இந்திரியங்களின் வியாபாரமற்றதாம் என்னும் பொருளையானது யாது முன்னர் நின்பொருட்டுக் கூறப்பட்டதோ, அது கேவலம் [illegible]த்தின்கண்ணே மாத்திரம் பிரசித்தமன்றும்; மற்றோ, சர்வலோகத்தின்கண் ணும் பிரசித்தமாம்; ஏனெனின், எக்கால் இப்புருஷன் மரணவஸ்தையை யடை வனோ, அக்கால் மைந்தன் மனைவி முதலிய சம்பூரண பந்துக்கள் இப்புருஷனைப் பூமியின்கண்ணே படுக்கவைத்து, இவ்வகையாய வசனத்தைப் பரஸ்பரங் கூறுகிற் பர்:—இக்கால் என்னுடைய தந்தையானவர் எனதுபுத்திருடைய பக்கம் பார்க்காம லிருக்கின்றார். இவ்வெனது தந்தையானவர் எனது குமாரர் வசனங்களையும் கேட் டிலர். தமது கழுத்திற் சூடியிருக்கும் புஷ்பமாலையின் சுகந்தத்தையும் இவ்வெ னது தந்தை முகர்ந்திலர். இக்கால் இவ்வெனது தந்தைவாயில் விட்டிருக்கும் தயிரின் ரசத்தையுங் கவர்ந்திலர். இக்கால் எனது தந்தை எனது பிரியமாய புத் திரரோடு பேசுகின்றாரில்லை. இக்கால் எனது தந்தை எனது பிரியமாய புத்திர ரின் பரிசத்தையும் செய்கின்றாரில்லை. இவ்வெனது தந்தை வாக்கு முதலிய சம் பூரண இந்திரியங்களின் வியாபாரமற்றவராயிருக்கின்றனர். ஆகையா லிஃதறிந்து கொள்ளலாம்:—இவ்வெனது தந்தை மனத்தானும், மதியானும் எப்பொருளையும் அறிந்திலர். எங்ஙனந் துயிலின்கண்ணே நாம் வாக்குமுதலிய இந்திரியங்களின் வியாபாரங்களற்றவராகின்றோமோ, அங்ஙனம் இந்த மரணகாலத்தின்கண்ணே இவ் வெனது பிதாவும் வாக்கு முதலிய சர்வ இந்திரியங்களின் வியாபாரமற்றவரா யிருக்கின்றனர் என. இக்கால் எனது பிதாவின் வாக்குமுதலிய இந்திரியங்கள் தத் தமது ஸ்தானங்களை விட்டொழித்து இருதயதேசத்தின்கண்ணே சென்று, ஒன் றாகக் கூடிவிட்டனவாதலின் எனது தந்தையானவர் எவ்விந்திரிய வியாபாரத்தை யுஞ் செய்திலர். ஹே ஜனகராஜாவே! இவ்வகையாய உலகரின் வசனத்தினானும் மரணகாலத்தின்கண்ணே சர்வ இந்திரிய வியாபாரங்களின் அபாவமும், இருதய [illegible]த்தின்கண்ணே அவ்விந்திரியங்களின் ஒருமையுஞ் சித்தமாம். ஹே ஜனக [illegible]! எம்மரண காலத்தின்கண்ணே இஜ்ஜீவான்மா இருதய தேசத்தில் பர [illegible]ரவோடு தாதாத்மிய பாவத்தை யடையுமோ, அக்கால் வேறு எல்லா விசேஷ ஞானங்களின் அபாவம் இருக்கினும் பரலோகத்திற்குச்செல்ல அநுகூலமாய உணர் வின்பாவம் உண்டாகாது; மற்றோ, பரலோக மார்க்கத்தைக் காண்பிக்கும் பொருட் டுச் சிதாபாசனோடு கூடிய விருத்தியால் இருதயத்தின் நுனிப்பாகம் பிரகாசமாம். இப்போது இப்பொருளையே திருஷ்டாந்தத்தால் வெளிப்படுத்துவாம்:—ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் மகாராஜா தமது புரியைப் பரித்தியாகஞ் செய்துவிட்டு, வேறொரு புரியின்கண்ணே செல்ல இச்சிக்கும்போது, அம்மகாராஜா செல்லும் ராஜமார்க்கத்தின்கண்ணே நானாவகையாய தீபங்கள் ஒளிராநிற்குமோ, அங்ஙனம் இந்த ஜீவான்மாரூப மகாராஜா இந்த ஸ்தூல சரீரரூபப் புரியைப் பரித்தியாகஞ் செய்து பரலோகத்திற்குச் செல்ல இச்சிக்கும்போது இருதயத்தின் நுனிப்பாக வடிவ ராஜமார்க்கமான சிதாபாசனோடு கூடிய விருத்திரூப தீபத்தால் ஒளிரும். அதன்பின்னர் இந்த ஜீவான்மாரூப மகாராஜா இந்த ஸ்தூலசரீரரூபப் புரியினின்

றும் பதினொருவாயிலால் வெளியிற்போம். பதினொருவாயில் இவையாம்:—இரு நேத்திரங்கள், இருசெவிகள், இருநாசிகள், உச்சிவாயில், வாய், நாபி, உபஸ்தம், பாயு என்னும் இப்பதினொருவாயிலுள் யாதாவதொரு துவாரத்தால் இந்த ஜீவான்மா வெளியேபோம். இப்போது இப்பதினொரு வாயிலால் வெளிப்போந்த இந்த ஜீவான்மா எவ்வெத் தானத்தை அடையுமோ, அவ்வத்தானங்களை நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! மரணகாலத்தின்கண் இந்த ஜீவான்மா பாயுவாயிலாய் வெளியே போமாயின் நரகத்தை யடையும். உபஸ்தவாயிலாய் வெளியே போமாயின், அத்தியந்தம் காமபீடிதமாய *கபோதாதி காயங்களை யடையும். நாபிவாயிலாய் வெளியே போமாயின் பேய்க்காயத்தைப் பெறும். வாய் வாயிலாய் வெளியே போமாயின், அன்னத்தில் அத்தியந்தம் ஆசக்தியையுடையபிராணிகளின் சரீரத்தை அடையும். நாசிவாயிலாய் வெளியே போமாயின், கந்தத்தின்கண்ணே ஆசக்தியையுடைய பிராணிகளின் சரீரங்களை அடையும். சுரோத்திர வாயிலாய் வெளியே போமாயின், கந்தாவலோகத்தை அடையும். நேத்திரவாயிலாய்வெளியே போமாயின் சூரியலோகத்தையும், சந்திரலோகத்தையும், அக்கினிலோகத்தையும் அடையும். சிரவுசசி வாயிலாய் வெளியே போமாயின் பிரஹ்மலோகத்தையடையும். இவ்வண்ணம் இஜ்ஜீவான்மா தனது புண்ணியபாவ கருமத்திற்கிடாய் அவ்வவ்வாயிலாக வெளியேபோய் அவ்வச சரீரத்தை அடையும். ஹே ஜனகராஜாவே! இப்பதினொரு வாயில்களுள்ளே தாழ்ந்த பலத்தைத் தரும் வாயில்களின் மத்தியில் பாயுவாயிலன்றித் தாழ்ந்த வாயிலொன்றிலலை. உயர்ந்த பலத்தைக்கொடுக்கும் வாயில்களுள்ளே சிரவுச்சி வாயிலன்றி வேறொரு வாயிலுயர்ந்ததின்றும. சிரவுச்சி வாயில், பாயுவாயில் என்னும இவ்விரண்டு வாயிலையும் விடுத்து, வேறு வாயிலின் கண்ணே ஒன்றைக் குறித்து உயர்நத தன்மையும், ஒன்றைக் குறித்துத் தாழ்ந்த தன்மையும் உளது. ஹே ஜனகராஜாவே! புத்திரூப ஞான சக்தியையுடைய இந்த ஜீவான்மா இந்த ஸ்தூல சரீரத்தைப பரித்தியாகஞ்செய்து வெளியே போமாயின், கிரியா சக்தியையுடைய பிராணனும் கூடவே வெளியேபோம். கிரியா சக்தியையுடைய பிராணன் இச்சரீரத்தினின்றும வெளியே போமாயின், வாக்கு முதலிய இந்திரியங்களுங் கூடவே வெளியேபோம். ஹே ஜனகராஜாவே! துயிலின்கண்ணே இந்த ஜீவான்மா இருதய தேசத்தின்கண் பரமான்மாவோடு தாதாத்மிய பாவத்தை யடைநது, சர்வ விசேஷ ஞானங்களும் அற்றதாம். அதுபோல, மரணகாலத்தின்கண்ணே இநத ஜீவான்மா இருதய தேசத்தின்கண் பரமான்மாவோடு தாதாத்மிய பாவத்தை அடைந்து, சர்வ விசேஷ ஞானங்கள் அற்றதேயாயினும், மீண்டும் விசேஷ ஞானத்தை அடையும். கருத்திதுவாம்:—துயிலின்கண்ணே சர்வ விசேஷ ஞானங்களின் அபாவமாம். மரண அவஸ்தையின்கண்ணே இருவகையாய ஞானங்கள் இஜ்ஜீவனுக்குண்டாம். ஒன்றோ இருதயத்தின் நுனிப்பாக வடிவ மார்க்கத்தை விஷயஞ்செய்வதாய ஞானமாம்; மற்றொன்றோ சரீரத்தை விட்டபின்னர் வருஞ் சரீரத்தை விஷயஞ்செய்யும் ஞானமாம். இவ்விருவகை ஞானங்களைவிட்டு வேறு விசேஷ ஞானங்கள் யாவும் இலவாகும்.

* கபோதம்=புறு.

இத்தன்மையே, துயிலினும் மரண அவஸ்தையின்கண்ணே விசேஷமாம். ஹே ஜனகராஜாவே! புண்ணிய பாவத்தின் சுகதுக்கரூப பலத்தைப் போகிக்கும் இஜ் ஜீவான்மா இச்சரீரத்தினின்றும் வெளியே செல்லுமாயின், பூர்வ பூர்வ சரீரங் களிடத்தே அநுபவித்த பதார்த்தங்களின் சமஸ்காரமும், புண்ணிய பாவரூப கருமமுங் கூடவே செல்லும். அங்கே சென்று அந்தப் புண்ணிய பாவரூப கருமமோ, சுகதுக்கத்தை அனுபவிக்கும் அநுகூல சரீரத்தையடைவிக்கும். முன் சமஸ்காரமோ, இஜ்ஜீவனுக்கு அவ்வஜ் ஜாதியையுடைய சரீர விவகாரங்களின் கண்ணே மூபல்வை உண்டாக்கும். ஹே ஜனகராஜாவே! இஜ்ஜீவான்மா இத் தூல சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து, வேறு ஸ்தூல சரீரத்தைப் பற்றுமல் இராது; மற்றே, வேறு ஸ்தூல சரீரத்தைப் பற்றிக்கொண்டே இந்த ஜீவான்மா முன் ஸ்தூல சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்யும். புல்லட்டையென்னும் ஒரு கிருமி விசேஷந் திருணங்களிற் சுழலும். ஆண்டைக் கிருமியானது வேறு திருணத்தைப் பற்றிக்கொண்டே முன் திருணத்தைப் பரித்தியாகஞ்செய்யும். வேறு திருணத் தைப் பற்றுமல் முன் திருணத்தைப பரித்தியாகஞ்செய்யாது. இவ்வார்த்தை யாவ ருக்கும் அநுபவசித்தமாம். அதுபோல, இநத ஜீவான்மாவும், வேறு வருஞ் சரீரத் தைப் பற்றிக்கொண்டே இத்தூல சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்யும். வேறு சரீ ரத்தைப்பற்றுமல், இந்த ஜீவான்மா முற் சரீரத்தைப பரித்தியாகஞ்செய்யாது. இப் பேர்ந்து இப்பொருளேயே அந்நிய திருஷ்டாந்தத்தானும் வெளிப்படையாக்குவாம்:— ஹே ஜனகராஜாவே! இவ்வுலகின்கண்ணே ஒரு மகாராஜா, அல்லது ஒரு தனி கன் தனது ஜீரணமாய பூர்வ கிருகத்தை, வேறு புதிய கிருகத்தைச் சம்பாதி யாது பரித்தியாகஞ் செய்வதின்றும; மற்றே, வேறு புதிய கிருகத்தைச் சம்பா தனஞ் செய்துகொண்டே அந்த மகாராஜாவுந் தனிகனும் முன் ஜீரணமாய கிரு கத்தைப் பரித்தியாகஞ்செய்வர். அதுபோல, இஜ்ஜீவான்மாவும் வேறு வருஞ் சரீரத்தின் பற்றின்றி முற் சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்யமாட்டாது; மற்றே, சரீரத்தைப் பற்றிக்கொண்டே இஜ்ஜீவான்மா முற சரீரத்தைப் பரித்தியா யும்.

கை:—ஹே பகவன்! எப்பதார்த்தம பரிச்சின்னமாமோ, அப்பதார்த் ஒரு ஸ்தானத்தைப் பரித்தியாகஞ்செய்து, வேறு ஸ்தானத்தின்கண் செல் லும். எங்ஙனங் கடாதி பதார்த்தங்கள் பரிச்சின்னமாமாதலின் ஒரு தேசத் தைப் பரித்தியாகஞ்செய்து மறுதேசத்தை அடையுமோ, அங்ஙனம் இவ்வான்மா பரிச்சின்னமன்றும்; மற்றே யாண்டும் பரிபூரணமானதாம். ஆகையால், இச் சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து, வேறு சரீரத்தின்கண்ணே செல்லல் ஆன்மா விற்குச் சம்பவியாது. ஒருகால் ஆன்மா இச்சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து வேறு சரீரத்தே செல்லுமாயின், கடாதிகளைப்போல ஆன்மாவும் பரிச்சின்னமா மன்றே?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மா யாண்டும் பரிபூரணமாம், எல்லாப் பேதங்களும் அற்றதாம். ஆதலின், புண்ணிய பாவ பல த்தை அநுபவிக்கும்பொருட்டு, ஆன்மாவிற்குப் பரலோகத்தின்கண்ணே கமனஞ் சம்பவியாது. ஆயினும், எங்ஙனம் பரிபூரணமாய ஆகாசங் கடரூப உபாதியின்

சம்பந்தத்தால் கமன ஆகமனத்தை யடையுமோ, அங்ஙனம் புத்திரூப உபாதியின் தாதாத்மிய சம்பந்தத்தால் இந்தப் பரிபூரண ஆன்மாவும் லோகாந்தரத்தின் கண்ணே கமன ஆகமனத்தையடையும். கருத்திதுவாம்:—கடரூப உபாதியின் சம்பந்தத்தால் கடாகாசத்தின்கண்ணே கமன ஆகமனம் பிரதீதியாகும், அவ்விரண்டும் உண்மையாய் விசாரித்துப் பார்க்கின் ஆகாசத்தின்கண்ணே சம்பவியா; மற்றோ, கடரூப உபாதியின்கண்ணே அவ்விரண்டுஞ் சம்பவிக்கும். அவ்வண்ணம் புத்தி உபகித ஆன்மாவின்கண்ணே எக்கமன ஆகமன ரூபக்கிரியை பிரதீதியாகுமோ, அது உண்மையாய் ஆராய்ந்து பார்க்கிறே, ஆன்மாவின்கண்ணே சம்பவியா; மற்றோ, புத்திரூப உபாதியின்கண்ணே அக்கமன ஆகமன ரூபக்கிரியை சம்பவிக்கும்.

சங்கை:—ஹே பகவன்! இசசரீரத்தின்கண்ணே இராநின்ற புத்தி வேறு சரீரத்தை அடைகின்றதெனத் தாங்கள் கூறியது சம்பவியாது. ஏனெனின், பரிச்சின்ன மூர்த்த பதார்த்தத்திற்கு வேறு தேசத்தோடு கிரியா ஜன்னிய சம்பந்தமுண்டாம். ஆனால், அது பூர்வ தேசத்தோடு விபாகமுண்டானாலன்றிச் சம்பவியாது; மற்றோ, முதற்கணத்தே மூர்த்த பதார்த்தத்தில் கிரியை உண்டாம. இரண்டாவது கணத்தே அந்த மூர்த்த பதார்த்தத்திற்குப் பூர்வ தேசத்தோடு விபாக முண்டாம். மூன்றாவது கணத்தே அதற்கு முற் தேசத்தோடிருந்த சையோகத்தின் நாசமுண்டம். நான்காவது கணத்தே அதற்கு உத்தர தேசத்தோடு சையோக முண்டாம். ஐந்தாவது கணத்தே அதன் கிரியையின் நாசமுண்டாம். என இவ்வண்ணம், பூர்வ தேசத்தோடு விபாக முண்டான பின்னரே, மூர்த்த பதார்த்தத்திற்கு உத்தர தேசத்தோடு சம்பந்தம் உண்டாமாதலின், மரணகாலத்தின் கண்ணே இசசரீரத்தின்கண் இராநின்ற புத்தியினுக்கு வேறு சரீரத்தோடு சம்பந்தஞ் சம்பவியாது.

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! தேயு வடிவ சக்ஷு இ தனது கோளகத்தின்கண்ணே இருந்து கொண்டே விருத்தி வாயிலாய்ச் சந்திராதி தூரதேசத்தை யடையும். ஒருகால் சக்ஷு இந்திரியந் தனது கோரூப ஸ்தானத்தைப் பரித்தியாகஞ்செய்தே சூரிய மண்டலாதி தேசத்தை அடையுமாயின், அந்தச் சக்ஷு இந்திரியஞ் சென்ற பின்னர் இப்புருஷன் குருடனாதல் வேண்டும். இவ்வண்ணம், மரணகாலத்தின்கண்ணே பூர்வ புண்ணிய பாவரூப கரும வசத்தாலும், பூர்வ சமஸ்காரப் பிரபாவத்தாலும், பரமேஸ்வரரின் இச்சையின் மகிமையாலும், இப்புத்தியும் இத்தூல சரீரத்தின்கண்ணே இருந்து கொண்டே தனது விருத்திவாயிலாய் வேறு வருஞ்சரீரத்தை அடையும்.

சங்கை:—ஹே பகவன்! மரணகாலத்தின்கண்ணே அந்தப் புத்தி விருத்தி வாயிலாய் வேறு சரீரத்தை அடையும். அதுபோன்றே, மரணத்தின் முன்னர் ஜீவித அவஸ்தையின்கண்ணும் அந்தப் புத்தி விருத்திவாயிலாய் வேறுவருஞ் சரீரத்தை ஏன் எடுப்பதின்று?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! எக்கால் இந்த வர்த்தமான சரீரத்தின் போகத்தைக் கொடுக்கும் பிராரப்த கருமத்தின் க்ஷயமுண்டாமோ, வருஞ் சரீரத்தின் போகத்தைக் கொடுக்குங் கருமத்தின் வெளிப்பாடு உண்டாமோ, அக்கால் அந்தர்யாமியாகிய பரமான்மாவாற் பிரேரணை பண்ணப்பட்டதாய புத்தி தனது விருத்திவாயிலாய் வருஞ் சரீரத்தை யடையும். அந்நியகாலத்தே அப்புத்தி வருஞ் சரீரத்தை அடையமாட்டாது.

சங்கை :—ஹே பகவன்! மரணகாலத்தின்கண்ணே இஜ்ஜீவனுடைய புத்தி ஒருகால் வருஞ் சரீரத்தை அடையுமாயின், மரணகாலத்தின்கண்ணே அப்புத்தியால் வேறு சரீரத்தை யான் அடைந்தனன் என்னும் அநுபவத்தை ஏன் செய்வதில்லை?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! சக்ஷு, இந்திரியம், ஜடமும் அத்தியந்தம் வேகமுடையதுமாம். ஆதலின், அவ்விந்திரியந் தனது விருத்திவாயிலாய்ச் சூரியாதி தேசத்தை அடைந்தும், யான் சூரியமண்டலத்தை யடைந்தனன் என்னும் அநுபவத்தைச் செய்வதின்றாம்; அதுபோன்றே இப்புத்தியும், பஞ்சபூதங்களின் காரியமாதலின் ஜடமும், அத்தியந்தம் வேகமுடையதுமாம். ஆகையால், மரணகாலத்தின்கண்ணே இப்புத்தி விருத்திவாயிலாய் வருஞ் சரீரத்தை அடைந்தும் யான் வருஞ்சரீரத்தை அடைந்துளேன் என்னும் அநுபவத்தைச் செய்வதின்றாம். ஹே ஜனகராஜாவே! முன்னர் புல்லட்டைத் திருஷ்டாந்தத்தால் இந்த ஜீவான்மாவிற்கு வேறு சரீரத்தின் அடைவு, யாது யான் நின்பொருட்டுக் கூறினேனோ, அது கூறற்கு இது கருத்தாம் :—ஒரு மகாராஜாவானவர் ஜீரணகிருகத்தைப் பரித்தியாகஞ்செய்து புதிய கிருகத்தின்கண்ணே நிவாசஞ்செய்ய இச்சிக்குங்கால், அந்த மகாராஜாவின் தாசர், அவர் அபிப்பிராயத்தையறிந்து வேறு புதிய வீட்டைத் தயார்செய்வர். அந்த மகாராஜா வருவதற்குமுன்னரே அந்தப் புதிய வீட்டில் ...வில் அத்தாசர் யானை, குதிரை முதலிய ராஜ்ய சாமக்கிரிகளைக் கொண்டு ...ர். அவற்றைக்கண்டு நகரவாசிகள் இதோ ஈண்டரசர் வந்தனர், இதோ ...ர் வந்தனர் எனப் பரஸ்பரம் வார்த்தையாடுவர். ஆண்டு, அம்மகா ...க்கால் முன்னர் உள்ள ஜீரணக்கிருகத்தின்கண்ணே இருப்பர்; அல்லது, ...த்தின்கண்ணே இருப்பர் எனினும், குதிரை முதலிய ராஜ்ய சாமக்கிரிகளைக் கண்டு அந்நகரவாசிகள் புதிய கிருகத்தின்கண்ணே அரசர் வந்தனரெனப் பேசிக்கொள்வர். அதுபோல, இந்த ஜீவான்மாரூப மகாராஜா இத்தூலசரீரரூப ஜீரண கிருகத்தைப் பரித்தியாகஞ்செய்து மரித்ததின்பின்னர், எந்த வேறு சரீரரூப நவீன கிருகத்தை யடைவரோ, அதனைப் புண்ணிய பாவரூபக் கருமத்தாசர் பஞ்சபூதங்களால் தயார்செய்வர். ஆண்டு, ஜீவாத்மாரூப மகாராஜா பூர்வ சரீரத்தின்கண்ணே இருக்கும்போதே அப்புண்ணிய பாவத்தாசர் முதலில் புத்தியின் விருத்திரூப ராஜ்ஜிய சாமக்கிரியை அவ்வருஞ் சரீரத்தின்கண்ணே அடைவிப்பர். இவ்வகை அபிப்பிராயங்கொண்டே முன்னர்ப் புல்லட்டைத் திருஷ்டாந்தத்தால் இஜ்ஜீவான்மாவிற்கு வருஞ் சரீரப்பிராப்தி கூறப்பட்டது. இப்போது இப்பொருளையே வெளிப்படையாய் நிரூபணஞ்செய்வாம் :—ஹே ஜனகராஜாவே! இந்த ஜீவான்மா இத்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து எவ்வருஞ் சரீரத்தால்

சுகதுக்கரூப பலத்தைப் போகிக்குமோ, அச்சரீரம் இஜ்ஜீவனுக்குப் பவிஷ்யத்போக சாதனமாம். இந்தஜீவான்மா மரணகாலத்தின்கண்ணே எந்தச்சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்யுமோ, அந்தச்சரீரம் இந்தஜீவான்மாவின் பூர்வபோக சாதனமாம். ஆகையால், இஜ்ஜீவான்மாவிற்கு இரண்டு சரீரங்களோடுஞ் சம்பந்தஞ் சம்பவிக்கும். ஹே ஜனகராஜாவே! இவ்வுலகின்கண்ணே சில புருஷர், தமது சரீரத்தில் புஷ்பமாலைகளைத் தரிப்பர். அல்லது, வஸ்திரங்களைத் தரிப்பர். அம்மாலையும் வஸ்திரமும் ஜீரணபாவத்தையடையுமாயின், அப்புருஷர் அவற்றை எறிய விச்சித்து வேறுபுதியமாலையையும், புதியவஸ்திரத்தையும் அடிக்கடிபார்ப்பர். அதுபோலவே மரணகாலத்தின்கண்ணே இத்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்ய இச்சித்து, இந்த ஜீவான்மா புண்ணியபாவகருமானுசாரமாய் வருஞ் சரீரத்தைப்பார்க்கும். கருத்திதுவாம்:—மரணகாலத்தின்கண்ணே இந்தஜீவான்மாவிற்குப் புண்ணிய பாவரூப கருமானுசாரமாய்வரும் சரீரஞானம் யாதுளதாமோ, அதுவே இந்த ஜீவான்மாவிற்கு மரணகாலத்தின்கண்ணே வரும்சரீரஅடைவாம். ஹே ஜனகராஜாவே! தாகத்தையும் பிரகாசத்தையுஞ்செய்யும் ஓங்கியெரியாநின்ற அக்கினியானது தனது தாதாத்மியசம்பந்தத்தால் அயப்பிண்டத்தையும் தன்னைப் போலப் பிரகாசதாகசக்தி யுடையதாய்ச்செய்யும். அவ்வக்கினியானது அவ்வயப்பிண்டத்தைப் பரித்தியாகஞ்செய்யின், பிரகாசமும் தாகசக்தியுமற்ற முற்சுபாவத்தை அவ்வயப்பிண்டமடையும். இங்ஙனமே, இவ்வாத்மாவும் தனது தாதாத்மியசம்பந்தத்தால் இஜ்ஜடசரீரத்தின்கண்ணே சைதன்யபாவத்தின் அடைவையுண்டாக்கும். மரணகாலத்தின்கண்ணே இச்சேதனஆன்மா இத்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்தபோது, இத்தூலசரீரம் முன்னுடைத்தாயிருந்த ஜடசுபாவத்தையேயடையும். ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் அக்கினியானது இருபின் பிண்டத்தைப் பரித்தியாகஞ்செய்தலே அப்பிண்டத்தின் ஹனனமாமோ, அங்ஙனம் இந்தச்சைதன்யஆன்மா இத்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்தலே இதன் ஹனனமாம். ஓங்கியெரியாநின்ற அக்கினியானது,முதல்அயப்பிண்டத்தைப் பரித்தியாகஞ்செய்து, வேறுபுதிய அயப்பிண்டத்தையடையும். அவ்வயப்பிண்டத்தையும் அவ்வக்கினி தனது தாதாத்மியசம்பந்தத்தால் தனதுசமானரூபமுடையதேயாகும். அதுபோல, இஜ்ஜீவான்மாவும் இத்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து வேறுபுதியசரீரத்தையடையும். இவ்வானந்தஸ்வரூப ஜீவான்மா, தனது தாதாத்மிய சம்பந்தத்தால், எங்ஙனம் முற்சரீரத்தைச் சைதன்யரூபமாக்கிவைத்ததோ, தனது சுகசாதனமென வெண்ணியதோ, அங்ஙனம் வேறு சரீரத்தையும் இவ்வான்மா, தனது தாதாத்மிய சம்பந்தத்தால் சைதன்யரூபமாக்கும்; சுகசாதனமெனவெண்ணும். ஹே ஜனகராஜாவே! இவ்வுலகின்கண்ணே பொற்கம்மியர் ஒரே சுவர்ணக்கட்டியினின்றும் ஒருகால் கங்கணத்தையுண்டாக்குவர், மற்றொருகால் குண்டலத்தையுண்டாக்குவர், இவ்வண்ணம் அவர் ஒரே சுவர்ணபிண்டத்தை முறையாய் நானாபாவத்தையடையுமாறு செய்விப்பர். அதுபோல, இப்பரமான்மாவும் ஒரே அவித்தையினின்றும் ஒருகால் மனுஷசரீரத்தை யுண்டாக்கும், ஒருகால் தேவசரீரத்தையுண்டாக்கும், ஒருகால் பசுச்சரீரத்தை யுண்டாக்கும்; இவ்வண்ணம் அப்பரமான்மா ஒரே அவித்தையை அநேக சரீரமாயடைவிக்கும்.

சங்கை :—ஹே பகவன்! இவ்வுலகின்கண்ணே காரணவிலக்ஷணத்தன்மையினுலே காரியவிலக்ஷணத்தன்மையுண்டாம். மண்வடிவ காரணவிலக்ஷணத்தன்மையினுலேயும், தந்துவடிவ காரணவிலக்ஷணத்தன்மையினுலேயும், கடவடிவ காரியமும், படவடிவகாரியமும், பரஸ்பரவிலக்ஷணத்தன்மையையுடையனவாகுமென்பதுபோலவாம். காரணங்களின் விலக்ஷணத்தன்மையினுலன்றிக் காரியங்களின்விலக்ஷணத்தன்மை யுண்டாவதின்றும். கண்டுப் பிரசங்கத்தின்கண்ணே மனுஷ்யாதிசரீரங்களின் பரிணாமிஉபாதானகாரண அவித்தையொன்றேயாம். அங்ஙனமே மனுஷ்யாதி சரீரங்களின் விவர்த்தஉபாதானகாரணமாய சேதனமும் ஒன்றேயாம். ஆகையால், மனுஷ்யாதிசரீரங்களில் விலக்ஷணத்தன்மை உண்டாகலாகாது.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! சேதன ஆன்மாவும், அவித்தைவடிவ காரணமு மொன்றேயாமென்றாலும், ஜீவர்களின் புண்ணிய பாவரூப கருமங்கள் விலக்ஷணங்களாம். ஆகையால,அப்புண்ணியபாவவடிவகாரணவிலக்ஷணத்தன்மையால் சரீரரூபகாரியமும் விலக்ஷணமேயாகும். ஹே ஜனகராஜாவே! எம்மரண காலத்தின்கண்ணே இத்தேகத்திற்குப் போகத்தைக்கொடுக்குங் கருமங்களின் க்ஷயமுண்டாகுமோ, வருஞ்சரீரத்திற்குப் போகத்தையீயுங் கருமங்களின் வெளிப்பாடுண்டாமோ, அம்மரணகாலத்தின்கண்ணே இஜ்ஜீவான்மா முந்திய மேலாயசரீரத்தையுங் கீழாயதாயெண்ணும் வருந்தாழ்ந்த சரீரத்தையும் உயர்நததாயுன்னும்.

சங்கை :—ஹே பகவன்! மரணகாலத்தின்கண்ணே இஜ்ஜீவான்மா முந்திய மேலாய சரீரத்தையுங் கீழாயதாயுணரும், வருநதாழ்ந்த சரீரத்தையும் உயர்ந்ததாயுணரும் எனத் தாங்கள் என்பொருட்டுக் கூறியதை நினைக்க எனக்காச்சரியத்தைத் தருகின்றது.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! இவ்விஷயத்தே நீ ஆச்சரியமடைய வேண்டியதில்லை. மரணகாலத்தின்கண்ணே பாவகருமரூபத்தோஷமகிமையால் ...னுடைய புத்தி விபரீதபாவத்தையடைகின்றது; ஆதலின், மரணகாலத்தின் ...ணே இஜ்ஜீவான்மா நிகழ்காலத்திய மேலாயசரீரத்தையும் கீழாயதாய் நினைக்கும், வருந்தாழ்ந்தசரீரத்தையும உயர்ந்ததாயுன்னும். இவ்வுலகின்கண்ணே ஒரு வியபிசாரிஸ்திரீயானவள் ஒருதனிகனை யாதாவது மந்திரமகிமையாலேனும், மருந்தின் மகிமையாலேனும், வயஞ்செய்து கொள்வளேயாயின், அவள் குஷ்டரோகத்தோடு கூடியிருந்தபோதினும், அவள்சரீரம் தூளியால்நிறையப் பெற்றிருப்பினும், அவள் செவி மூக்கறறவளாயினும், அவள்வயமுற்ற அத்தனிகன் அவளை இந்திராணிக்கொப்பாகச் சுந்தரியென வெண்ணுவன். அத்தனிகன் வீட்டிலிருக்கும் அவன் மனைவியானவள் இந்திராணிக்குச் சமானமான சுந்தரியாயினும, சர்வ குணங்களோடு கூடியவளாயினும், பதிவிரதையாயினும், உயர்நத குலத்திற் பிறந்தவளாயினும், அப்பதிவிரதா சுந்தரியை அத்தனிகன் கீழானவளென நினைந்து, அவளைப் பரித்தியாகஞ் செய்துவிடுவன்; இவ்விஷயம் உலகின்கண்ணே பிரசித்தமேயாகும். இதுபோன்றே மரணகாலத்தின்கண்ணே பாவகருமத்தால் மோகத்தையடைந்த இஜ்ஜீவான்மா சர்வசுகங்களோடுகூடிய தேவதாசரீரத்தையும், சக்கரவர்த்தியாதிய

அரசன்சரீரத்தையும், அத்தியந்தந் தாழ்ந்ததாயென்னும். வாரநின்ற நாய் முதலிய தாழ்ந்தசரீரங்களையும், இஜ்ஜீவான்மா அம்மரணகாலத்தின்கண்ணே அத்தியந்தமேலாயதாய் நினைக்கும். ஹேஜனகராஜாவே! மரணகாலத்தின்கண்ணே இஜ்ஜீவான்மாவிற்கு ஒரு பூர்வபுண்ணிய கருமமானது பலன்கொடுக்க எதிர்முகப் படின், இஜ்ஜீவான்மா இத்தூலசரீரத்தைப பரித்தியாகஞ்செய்து, அந்தப் புண்ணிய கருமமகிமையால் அங்ஙனமே பூர்வசுபசமஸ்காரங்களின் மகிமையால் பிதிர் லோகத்தின்கண்ணேனும், கந்தர்வலோகத்தின்கண்ணேனும், தேவலோகத்தின் கண்ணேனும், பிரஜாபதிலோகத்தின்கண்ணேனும், பிரஹ்மலோகத்தின்கண்ணே னும், மேலாயதேவதாசரீரத்தையடையும். மரணகாலத்தின்கண்ணே இஜ்ஜீவ னுடைய புண்ணியபாவங்களிரண்டும் பலத்தைக்கொடுக்க எதிர்முகமாகுமாயின், இஜ்ஜீவான்மா இத்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து மனுஷ்யசரீரத்தையடை யும். மரணகாலத்தின்கண்ணே இஜ்ஜீவான்மாவினுடைய ஒரு பாவகருமம் பலங் கொடுக்க எதிர்முகமாகுமாயின், இஜ்ஜீவான்மா இத்தூலசரீரத்தைப்பரித்தியாகஞ் செய்து, அந்தப் பாவகருமவயத்தால் நாய் முதலிய தாழ்ந்தசரீரங்களையடையும். இவ்வண்ணம் பிரஹ்மாவே முதலாய்க் கீடம்வரை எத்துணையான்மஞானமற்றபி ராணிகளுளவோ, அவை புண்ணிய பாவகருமவயத்தால் நிரந்தரஞ் சம்சாரரூப கூலத்தின்கண்ணே சுழலாநிற்கும்.

இப்போது, எத்தூயதாய ஆன்மஞானத்தால் ஜீவர்கட்குச் சம்சாரநிவிருத்தி யுண்டாமோ அத்தூயதாய ஆன்மாவின்சொரூபத்தைக்கூறும்பொருட்டு முதலில் ஆன்மாவின் ஆநந்தரூபத்தன்மை நிரூபிக்கப்படுகின்றது :—ஹேஜனகராஜாவே! ஆன்மாவின் ஆநந்தவடிவம் யாண்டுஞ் சமானமேயாம். அவ்வான்மவடிவ ஆநந்தத் தின்கண்ணே சிறிதுமாத்திரையுங் குறைவுமிகுதிகளின்றாம். முன்னர் மனுஷ்ய லோகமே முதலாகப் பிரஹ்மலோகபரியந்தமுள்ள ஆநந்தத்தின் எக்குறைவு மிகுதிகள் எம்மால கூறபபெறறனவோ, அக்குறைவு மிகுதிகள் இயல்பாக ஆன்ம ஸ்வரூப ஆநந்தத்தின்கண்ணின்றாம்; மற்றோ, சேதனப்பிரதிபிம்பத்தைக் வதும், சேதனத்தின் ஆவரணத்தை நிவிருத்திப்பதுமாய புத்தியின் தத்தை யபேக்ஷித்து, ஆன்மஸ்வரூப ஆநந்தத்தின் விளக்கக்குறைவு மிகுதிகளுண் டாம். ஆண்டு அதிக சத்துவகுணத்தையுடைய புத்தியின் சம்பந்தத்தால், ஆன்ம ஸ்வரூப ஆநந்தத்தின் அதிகவிளக்கமுண்டாம். குறைந்த சத்துவகுணத்தை யுடைய புத்தியின் சம்பந்தத்தால் ஆன்மஸ்வரூப ஆநந்தத்தின் குறைந்தவிளக்க முண்டாம். இப்போதிப்பொருளை திருஷ்டாந்தத்தால் வெளிப்படுத்தப்படுகின் றது :—ஹேஜனகராஜாவே! எங்ஙனம் பேதமற்ற ஒரே ஆகாசம் வையின்கண் ணும், குடத்தின்கண்ணும், வீட்டின்கண்ணும், நகரத்தின்கண்ணும்இருப்பதாய்க் குறைவுமிகுதித்தன்மையை யடையுமோ, அங்ஙனம் ஓரான்மஸ்வரூப ஆநந்தமே புத்தியின் சம்பந்தத்தால் குறைவு மிகுதித்தன்மையையடையும். உபாதியின் சம் பந்தத்தால்உபகிதபதார்த்தத்தின்கண்ணே எத்தருமத்தோற்றமுண்டாமோ, அத் தருமம் வாஸ்தவமாய் உபகித பதார்த்தத்தின்கண்ணே யுண்டாகமாட்டாது; மற்றோ, உபாதியின்கண்ணே அத்தருமமுண்டாம். எங்ஙனம் அடம்பாதி யுபாதி

களின் சம்பந்தத்தால் எவ்வாகாசத்தின்கண்ணே குறைவுமிகுதிகள் தோற்றுகின்றனவோ, அவை ஆகாசத்தின்கண்ணே உண்மையாய் இன்றாமோ, மற்றோ, கடமடாதியுபாதிகளிடத்தே யவையுண்டாமோ, அங்ஙனம், புத்திவடிவவுபாதியின் சம்பந்தத்தால், ஆன்மவடிவ ஆநந்தத்தின்கண்ணே தோற்றுங் குறைவு மிகுதிகள் உண்மையாய் ஆன்மஸ்வரூப ஆநந்தத்தின்கண்ணேயின்றாம்; மற்றோ, புத்திரூப உபாதியின்கண்ணேயிருக்கும். இக்காரணத்தானே சாஸ்திரத்தின்கண்ணே உபகிதப்பொருளின் சமீபத்திருந்து, எவ்வஸ்து தன்தருமத்தை அப்பொருளின்பாலாரோபிக்குமோ, அஃதுபாதியாமென உபாதிசப்தப பொருள் கூறப்பெற்றுளது. ஈண்டுப் பிரசங்கத்தின்கண்ணே ஆன்மஸ்வரூப ஆநந்தத்தின் சமீபத்திருந்து, புத்தியானது தனது குறைவு மிகுதியை அதன்கண்ணே ஆரோபிக்குமாதலின், அப்புத்தி உபாதிரூபமாம்; உபாதியுடையது உபகிதமாம். ஆகையால், ஹே ஜனகராஜாவே! பிரஹ்மலோகத்தின்கண்ணேயிருக்கும் யாவினும் மேலாய பிரஹ்மாவின் சரீரத்தும், பூவுலகின்கண்ணிருக்கும் தேகங்கள்யாவினுந் தாழ்ந்த நாய்த்தேகத்தும், பிறசரீரத்தும் உள்ள அந்தக்கரண விசிஷ்ட போக்தான்மாவிற்கும், சுகதுக்க போக்கியத்திற்கும் கிஞ்சின்மாத்திரையும் விஷமத்தன்மையின்றாய்; மற்றோ, எல்லா தேகத்துஞ் சமமாம். கருத்திதுவாம்:—அந்தக்கரண விசிஷ்ட போக்தான்மாவிற்கும், சுகதுக்கபோக்கியத்திற்கும், சர்வ சரீரத்தும் விஷமத்தன்மை சித்தமாகாதபோது, ஆநந்தஸ்வரூப சுத்த ஆன்மாவின் விஷமத்தன்மை எங்ஙனஞ் சம்பவிக்கும். இப்போது இப்பொருள் வெளிப்படையாய்க் காண்பிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! எங்ஙனம் வரகு முதலிய தாழ்ந்த அன்னத்தைப் புசித்துத் தனமற்ற தரித்திரன் இன்பத்தை யெய்துவனோ, அங்ஙனம் தின்பன, நக்குவன, சுவைப்பன, உண்பன என்னும் நால்வகை உண்டியை உண்டு மாமன்னனும், தனிகனும் இன்பத்தை யெய்துவர். ஆகையால், சுகபோக்தாவிடத்துஞ் சுகரூபபோகத்திடத்துஞ் சிறிதுமாத்திரையும விஷமத்தன்மையின்றாம். எவ்வாறு பசி தாகங்களால் தனமற்ற தரித்திரன் துன்புறுவனோ, அவ்வாறு மாமன்னவ—, தனிகனும் துன்புறுவர். ஆதலின், துக்கபோக்தாவின்கண்ணும், துக்கத்துஞ் சிறிதுமாத்திரையும் விஷமத்தன்மையின்றாம்.

சங்கை:—ஹே பகவன்! மாமன்னனிடத்தும், தரித்திரனிடத்தும் சுகதுக்கபல விஷமத்தன்மை இன்றாமேனும், சுகதுக்க பலமுண்டாவதன் சாதனங்களாய அன்னபானாதிகளின் பரஸ்பர விஷமத்தன்மை பிரத்தியக்ஷமாய்க் காணப்பெறுமாதலின், சாதனங்களின் விஷமத்தன்மையால் பலமும் விஷமமாமன்றோ?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! சுகதுக்க பலமுண்டாவதற்கு இருவகைச் சாதனங்களுள; ஒன்றோ பாகியசாதனமாம், மற்றொன்றோ ஆந்தரசாதனமாம். அவற்றுள், அன்னபானாதிகள் பாகியசாதனமாம், இராகத்துவேஷாதி ஆந்தரசாதனமாம். அப்பாகியசாதனத்தே சிறிதுமாத்திரை கற்பித விஷமத்தன்மை சம்பவிக்குமாயினும், ஆந்தரசாதனத்தே சிறிதுமாத்திரையும் விஷமத்தன்மை சம்பவியாது; ஏனெனின், பசி, தாகம், பயம், நித்திரை, பிரியவஸ்துவிலிச்சை, அப்பிரியவஸ்துவில் துவேஷம், ஆன்மாவை மறைக்குமோகம், மலஜலம்விடுவதன்முன் விஷமத்தசையடைவு என்னும் இவ்வெட்டுத் தோஷங்கள் ஜீவர்கட்குச் சுகதுக்க

காரணமாம். ஆண்டு இவ்வெட்டுத் தோஷங்களின்நிவிருத்தி சுககாரணமாம், இவற்றினிருப்புத் துக்காரணமாம். இவ்வெட்டும் எல்லாப்பிராணிகளிடத்துஞ் சமமாமாதலின், சுகதுக்கபலமுஞ் சமானமாம். தரித்திரனிடத்தும், மாமன்னனிடத்தும், நாய்முதலிய விடத்தும், உலகர் திருஷ்டியால் மகாவிஷமத்தன்மை தோற்றுமேனும், எட்டுத்தோஷகாரணத்தின்கண்ணும், சுகதுக்கபலத்தின்கண்ணுஞ் சிறிதுமாத்திரையும் விஷமத்தன்மையின்றாம். ஆதலின், சர்வசரீரத்திலும் மேலாய பிரஹ்மாவின்சரீரத்தும், கீழாய நாய்ச்சரீரத்துஞ் சிறிதுமாத்திரையும் விஷமத்தன்மையின்றாம். இப்போது சர்வசரீரங்களின் சமானத்தன்மையைச் சித்திசெய்யும்பொருட்டுச் சர்வசரீரத்தின்கண்ணும் எட்டுத்தோஷங்களின் தொடர்ச்சி நிரூபிக்கப்படுகின்றது :—ஹே ஜனகராஜாவே! நாய்ச்சரீரத்தே காமக்குரோதாதி தோஷமிருப்பதேபோல, ஹிரண்யகர்ப்ப சரீரத்தின்கண்ணு மிருக்கின்றது ; ஆதலின், அத்தோஷம் யாண்டுந் தொடர்ந்ததாம்.

சங்கை :—ஹே பகவன்! எல்லா உலகினுற்பத்தி, ஸ்திதி, இலயங்களைச்செய்யுஞ் சூத்திராத்மாரூப ஹிரண்யகர்ப்பரிடத்தே காமக்குரோதாதிகள் சம்பவிக்குமாயினும் பசிதாகாதிதோஷஞ் சம்பவியாதாம்.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! உலகுக்கு ஈசுவரராய ஹிரண்யகர்ப்பர் நாயினுங்கீழாவர் ; ஏனெனின், பசிபாற்பீடிக்கப்படினும் நாய் தன்குட்டியைப் புசியாது. இவ்விரண்யகர்ப்பரோ விராட்வடிவமைந்தனை உண்டாக்கி அவனைப் புசிக்க முயன்றனர். (இவ்விஷயம் நான்காவதத்தியாயத்தேவிஸ்தாரமாய்க் கூறிவந்தேம்) ஆதலின், ஹிரண்யகர்ப்பரிடத்தும் பசிதாகாதி தோஷமுளதாம். நாய்முதலியன ஒருகால் தங்குட்டிகளை உண்ண முயலின், அவற்றை எவருமிகழாராதலின், அவை பாவகருமஞ்செய்வதில் உலகநிந்தைபயமின்றாம். எல்லா உலகுக்குங்குருவாய ஹிரண்யகர்ப்பர் ஒருகால் புத்திரபக்ஷணாதி பாவகருமத்தில்முயலின் யாவருமவரை இகழ்வர். அவ்வுலக நிந்தையின்பயம் அவருக்குண்டாம். இக்காரணத்தாலும் அவர் நாய் முதலியவற்றினுந் தாழ்ந்தவர். நாயின் குலேத்தல்வியாபாரந் [illegible] முதலியோரை நீக்குமாதலின், அது கிருஹஸ்தனுக்குச் சுகசாதனமாம். ஹிர[illegible]கர்ப்பரின்உலகுற்பத்திமுதலிய வியாபாரம் எவ்வுயிர்க்குஞ் சுகசாதனமன்றாம். இக்காரணத்தாலும் அவர்நாயினுங்கீழானவர். ஹிரண்யகர்ப்பரதுவியாபாரத்தை ஜீவர்களின் சுகசாதனமாய்அங்கீகரிக்கும் வாதியை இது வினவல்வேண்டும் :—அவரது உலகஉற்பத்தியாதி வியாபாரம் கருமிகளின் சுகசாதனமா? உபாசகரின் சுகசாதனமா? ஞானிகளின் சுகசாதனமா? என. அவற்றுள், முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் அது சம்பவியாது ; ஏனெனின், இரவின்கண் அவர் துயிலின் சுவர்க்காதி மூவுலகங்களும் பிரளயத்தையடையும், அது சாஸ்திரத்தின்கண் நைமித்திகப் பிரளயமெனப்படும். ஆதலின், அவருடைய நித்திரைவியாபாரம் கருமிகட்குச் சுகவேதுவன்றாம் ; மாறுயக்கருமிகளின் பயவேதுவாம். இரண்டாவதுபக்ஷத்தை அங்கீகரிக்கின்,அதுவுஞ்சம்பவியாது. ஏனெனின், உபாசனையின் மகிமையால் அவருடைய உலகத்திற்குச் செல்லும் புருஷனுக்கு அவருக்குச் சமான ஐசுவரியமுண்டாகாதாதலின், அவரது ஐசுவரியத்தை நோக்கி யவ்வுபாசகன் ஈரிஷையுற்றுப் பரமதுக்

கத்தையடைவன். ஆகையால், அவரது வியாபாரம் உபாசகனுக்குச் சுகஹேதுவன்றும்; மாறாய்த் துக்கஹேதுவாம். மூன்றாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் அதுவுஞ் சம்பவியாது. ஏனெனின், இவனுக்குப் பிரஹ்மலோகத்தையடையுமிச்சை இருக்கும்வரையும் ஆன்மசாக்ஷாத்காரமுண்டாகாதாதலின், அவ்விச்சையை யுண்டுபண்ணும் வாயிலாய் அவர் வியாபாரம் ஞானிக்குப் பயகாரணமேயாம். ஆகையால், ஹிரண்யகர்ப்பரது வியாபாரம் எவருக்கும் சுகசாதனமன்றும்; மாறாய்த் துக்கசாதனமாம். அல்லது, எல்லாஸ்தூலப்பிரபஞ்சத்திற்குங் காரணமாய விராட்பகவானைப் புசிக்கும்பொருட்டுப் பிரவிருத்தித்த ஹிரண்யகர்ப்பரின் வியாபாரம் எவர்க்கும் சுகசாதனமன்றும்; மற்றோ, யாவருக்கும் துக்கசாதனமேயாம். இக்காரணத்தானே நாய் முதலியவற்றினின்றும் ஹிரண்யகர்ப்பர் தாழ்ந்தவர்.

சங்கை:—ஹே பகவன்! ஒருகால் ஹிரண்யகர்ப்பரும் நாய் முதலியவையும் சமானமாயின், சாஸ்திரத்தின்கண் அவரை உயர்த்தியும்,நாயைத்தாழ்த்தியுங் கூறியிருத்தல் அசங்கதமாமன்றோ?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! சுகதுக்கத்தைக்கொண்டேனும்,அஷ்ட, தோஷ சாதனங்களைக்கொண்டேனும்,பாஞ்சபௌதிக சரீரத்தைக்கொண்டேனும் சாஸ்திரம் அவரை மேன்மைப்படுத்தவில்லை; மற்றோ, பிரஹ்மவித்தையைக் கொண்டு மேன்மைப்படுத்தியுளது; அது நாய் முதலியவற்றின்கண்ணின்றாமாதலின், அவை தாழ்ந்தனவாம். ஆகையால், இப்பொருள் துணியப்பெற்றதாம்:— யான் பிரஹ்மமாயிருக்கின்றேன் என்னும் அபேதஞானத்தையடைந்தவனே யாவரினும் மேலானவன்; அடையாதவன் நாயினுங் கீழானவன். எதன் ஞானத்தால் ஜீவர்கட்கு மேன்மையுண்டாமோ, அவ்வானந்தஸ்வரூப ஆன்மா ஹிரண்யகர்ப்பரிடத்தும், நாயிடத்தும், நின்னிடத்தும், எம்மிடத்தும, மற்றையபிராணிகளிடத்தும், யாண்டுஞ் சமவியாபகமாயுளது. அவ்வானந்தஸ்வரூப ஆன்மாவே பிரஹ்மரூபமாம். இத்துணையால் எல்லாவற்றிற்கும் அதிஷ்டானவடிவ சுத்தான்மாவின் ஸ்வரூபம் நிரூபிக்கப்பட்டது. இப்போது, புத்தியாதியுபாதிகளின் தாதாத்மிய சம்பந்தத்தால், ஆன்மாவின் கற்பித நானாரூபங்கள் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! புத்திரூபஉபாதியின் தாதாத்மியசம்பந்தத்தால், இவ்வான்மா விஞ்ஞானமயனெனப்பெயர்பெறும். மனரூப உபாதியின் சம்பந்தத்தால் மனோமயனெனப் பெயர்பெறும். பிராணரூப உபாதியின் சம்பந்தத்தால் பிராணமயனெனப் பெயர்பெறும். சுரோத்திரம், துவக்கு, சக்ஷு, இரசனம், கிராணம் என்னும் ஐந்திந்திரியரூப உபாதிகளின் சம்பந்தத்தால் முறையே சுரோத்திரமயன், துவக்குமயன், சக்ஷுமயன், இரசனமயன், கிராணமயன் என்பனவாதி பெயர்களைப் பெறும். ஆகாசம், வாயு, தேயு, அப்பு, பிருதிவி என்னும் பஞ்சபூதரூப உபாதிகளின் சம்பந்தத்தால் முறையே ஆகாசமயன், வாயுமயன், தேயுமயன், அப்புமயன், பிருதிவிமயன் என்பனவாதி பெயர்களைப்பெறும். அஞ்ஞானரூப தமசம்பந்தத்தால் தமோமயனெனப்பெயர்பெறும். காமக்குரோதரூப உபாதியின் சம்பந்தத்தால் காமமயனெனவும் குரோதமயனெனவும் பெயர்பெறும். தருமோபாதியின் சம்பந்தத்தால் தருமமயனெனப்பெயர்பெறும். தயிவின்கண்ணுள்ள தருமாபாவம், மீடித்தன்முதலிய பிட்பல கருமத்தாலும் தருமாபாவம், ஹிம்சைமுதலிய

நிஷித்தத்தொழிலின்கண்ணுள்ள தருமவிரோதம் என்னும் மூன்றன் சம்பந்தத்தால் அதருமமயனெனப்பெயர்பெறும். அதிகமாயறைவானேன், ஸ்தூலசூக்ஷ்ம சம்பூரண பதார்த்தங்களின் தாதாத்மிய சம்பந்தத்தால் இவ்வான்மா சர்வமய னெனப் பெயர்பெறும். இது நாலுவகையாய வேதவிகித நிஷித்தகருமங்களைச் செய்தலின், யதாகாரியென்னும் பெயரையடையும். நாலுவகையாய ஆசாரங்களைப் புரிதலின் யதாசாரியென்னும் பெயரை யடையும்.

சங்கை :—ஹே பகவன்! அறம் பாவமாங் கருமத்தினும் ஆசாரம் பின்னமன்றாம்; மற்றேறு, கருமங்களின் நாமமே ஆசாரமாமாதலின், யதாசாரியென்பது ஆன்மாவின் பெயர் அன்றாகுமன்றோ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! தருமஅதருமரூப கருமத்தினும் ஆசாரமவேறன்றாமாயினும், கருமத்தினும் ஆசாரத்தின்கண் இத்துணைவிசேஷமுளது வேதபகவான் ஜீவர்களின் சுகசாதனரூபமாய்க் கூறியகருமம்தருமமாம்; அக்கினி ஹோத்திரம்போலும், துக்கசாதனரூபமாய்க் கூறியகருமம் அதருமமாம்; பிரஹ்மஹத்தியாதிபோலும். சாஸ்திரங்களாற் கூறப்பெறாததாய் தேசபரம்பரையாயேனும தனது குலபரம்பரையாயேனும் அடையப்பெறுங் கருமம் ஆசாரமாம். அது வுமிருவிதமாகும் :—ஒன்றோ விகிதஆசாரமாம், மற்றொன்றோ நிஷித்தஆசாரமாம். பிதாபிதாமகாதி பெரியோர் சுகசாதனமெனக் கூறியஆசாரம் விஹிதமாம். துக்கசாதனமெனக் கூறியஆசாரம் நிஷித்தமாம். இவ்வான்மா லோகசாஸ்திரகவிகிதசுபகருமங்களைச் செய்யின் சாதுகாரியென்னும் பெயரைப்பெறும். லோகசாஸ்திரநிஷித்தகருமங்களைச் செய்யின் அசாதுகாரி யென்னும் பெயரைப்பெறும். இவ்வான்மாசாஸ்திரவிகித சுபகருமத்தைச் செய்யின் தேவதாதி மேலாயசரீரத்தையடையும், சாஸ்திரநிஷித்த அசுபகருமத்தைச் செய்யின் நாய்முதலிய கீழாய சரீரத்தையடையும். இவ்வண்ணம் புண்ணியபாவ கருமவயத்தால் இஜ்ஜீவான்மா நிரந்தரஞ் சம்சாரத்தின்கண்ணே சுழலும். இத்துணையால் புத்திமுதலிய உபாதிகளின் சம்பந்தத்தால் ஆன்மாவின் விஞ்ஞானமயாதி அநேகரூபங்கள் நிரூபிக்கப் பட்டன. இப்போது அவற்றின்கண் கற்பிதரூபத்தன்மையை வெளிப்படுத்தும் பொருட்டு அதிஷ்டான ஆன்மாவின்கண் அவ்வுருவங்களினபாவம் நிரூபிக்கப் படும் :—ஹே ஜனகராஜாவே! இவ்வாநந்தஸ்வரூப ஆன்மா அசங்கமாமாதலின் இதன்கண்ணுண்மையாய்ப் புண்ணியபாவமிரண்டுமில்லை, லௌகிகஆசாரமுமில்லை, தருமமுமில்லை, தருமாபாவ தருமபேத தருமவிரோதரூப அதருமமுமில்லை, அஞ்ஞானரூப உட்டமமும் இருண்மயமாய வெளித்தமமுமில்லை, ஆகாசாதிபஞ்சபூதமுமில்லை, வாக்குமுதலிய பத்துஇந்திரியங்களுமில்லை, கிரியாசக்தியையுடைய பிராணனுமில்லை, ஞானசக்தியையுடைய புத்தியும் மனமுமில்லை, கிடைத்தகாலத்தே சுகத்தையும் கிடையாக்காலத்தே துக்கத்தையும் விளைக்குஞ் சப்தஸ்பரிசாதி விஷயங்களுமில்லை, இவைமுதலாகத் தூலசூக்ஷ்ம சர்வஜகத்தும் உண்மையாய் அதிஷ்டான ஆன்மாவின்கண் இன்றாம். யாது எவ்வதிஷ்டானத்தின்கண் உண்மையாய் இல்லாதிருக்கும் ஒருகாற்றோற்றுமோ அது பொய்யேயாம். இரஜ்ஜுவடிவ அதிஷ்

டானத்தின்கண் சர்ப்பம் உண்மையாயில்லாதிருந்தும், தோஷமகிமையால் "அது தோற்றுமாதலின் பொய்யேயாவதுபோல, ஆநந்தஸ்வரூப ஆன்மாவின்கண் இவ்வுலகம் உண்மையாயில்லாதிருந்தும், தோற்றுமாதலின் இதுவும் பொய்யேயாம். இவ்வெல்லா வுலகுங் கற்பிதமாயிருக்கும் அதிஷ்டானஆன்மா ஆநந்தவடிவமாம். ஸ்வயஞ்சோதி யுருவமாம், மனம்வாக்குகட் கெட்டாததாம், சஜாதீயவிஜாதீய சுவகதபேதமற்றதாம். இத்தகைய ஆநந்தவடிவஆன்மா யாண்டுஞ் சமானவியாபகமாமாயினும், யாண்டும் நிறைந்த சூரியப்பிரகாசம் சூரியகாந்தமணியின்கண் விசேஷமாயிலங்குவதேபோல இவ்வான்மாவும், நினது, எமது மற்றெல்லாப் பிராணிகளின் இருதயத்திலும் விசேஷமாய் விளங்கும். உண்மையாய்ச் சங்கமற்ற ஆகாசம் கந்தருவ நகரத்திற்குக் காரணமாவதேபோல உண்மையாய்ச் சங்கமற்ற அத்விதீய ஆன்மா இக்கற்பிதவுலகிற்குக் காரணமாகும். அத்தகைய அத்விதீய ஆநந்தவடிவ ஆன்மா தனதுவாஸ்தவவடிவ அஞ்ஞானத்தால் நானுவகையாய துன்பங்களையடையும். இப்போது புத்தியின்தாதாத்மிய சம்பந்தத்தால் விஞ்ஞானமயனென்னும் பெயரையடைந்த இவ்வான்மா அடையும் துக்கங்கள் நிரூபிக்கப்படுகின்றன:—ஹே ஜனகராஜாவே! இவ்வாநந்தசொரூப ஆன்மாயாண்டும் வியாபகமாமாயினும் பரிச்சின்னபுத்தியோடுதாதாத்மியசம்பந்தத்தையடைந்து காய்ந்த சுரைக்குடுக்கைபோல மிகவும் லகுத்தன்மையையடையும் ஜன்மமரணாதி சம்சாரகாரண அவித்தை, காமம், கருமம் என்பவற்றின் சம்பந்தத்தை இவ்விஞ்ஞானமய ஆன்மாவடையும். இவ்வுலகின்கண்ணே விளையாடும் பாலகன்கைத்தடிகொண்டு பந்தைப்பத்துத்திசையினும் சுழற்றுவன். ஒருகணமாத்திரையும் பூமியின்கண்ணே அப்பந்தை நிலைக்கவிடான். அதுபோலப் புண்ணிய பாவரூப கருமம் இஜ்ஜீவனை நானுவகையாய யோனிகளிற்றள்ளும். இவ்வுலகின்கண்ணே கூபாதிகளினின்றும் ஜலத்தை வெளிப்படுத்தச் சாதனமாய யந்திரத்தின்மேலிருக்கும் நீளக்கயிற்றோடு கட்டியுள்ள மட்குடங்கள் கூபாதிகளினின்றும் நீரைக் கவர்ந்து மேற்கொணர்ந்துவிடும். மீண்டும அக்குடங்கள் கீழ்ச்சென்று நீரைக்கவர்ந்து மேற்கொணர்ந்துவிடும்; இவ்வாறு அநேகமுறை அக்குடங்கள் நீரைக்கவர்ந்து மேற்கொணர்ந்துவிடும். அதுபோல, இஜ்ஜீவான்மாவும் புண்ணியபாவரூப கருமவயத்தால், அநேகம் வகை மேற்கீழ் சரீரங்களைக்கவர்ந்து மீண்டும்விடும், ஒருகால் பாதாளத்திற்குச்செல்லும், ஒருகால் நரகத்தையடையும், ஒருகால் சுவர்க்காதி லோகங்களை அடையும், ஒருகால் பிரஹ்மலோகத்தையடையும்; இவ்வண்ணம் புண்ணிய பாவரூப கருமவயத்தால் இஜ்ஜீவான்மா அநேகம் வகையாய சரீரங்களை அடையாநிற்கும். ஒரு புண்ணியகரும மகிமையால் இஜ்ஜீவான்மா பிரஹ்மாவின் சரீரத்தை அடையுமாயின் அதனையே தனதான்மாவென எண்ணும். ஒரு பாவகரும மகிமையால் நாய்ச்சரீரத்தையடையுமாயின், அதனையே தனதான்மாவென எண்ணும். இவ்வாறு புண்ணிய பாவரூப கருமவயத்தால் இவ்விஞ்ஞானமய ஆன்மா அடைந்த சரீரங்களையே தனதான்மாவென எண்ணும். இவ்விஞ்ஞானமய ஆன்மா புண்ணிய கருமம் க்ஷயமானபின்னர் பிரஹ்மாவின் சரீரத்தை விடுமாயின், அதனை நாய்விட்டைக்குச் சமமாய் அத்தியந்தங்கீழென நினைக்கும். பாவகருமம் நஷ்டமாயின் நாய்ச்சரீரத்தைவிடுத்து அதனையும் அத்தியந்தம் கீழதாய் எண்ணும். இவ்வாறு

இஜ்ஜீவான்மாவிடும்சரீரங்களை நாய்விட்டைக்குச் சமானமாய் அத்தியந்தம் கீழ் எனக்கருதும். இத்தூலசரீரத்தைவிடுத்துப் பிரஹ்மாமுதல் நாய்பரியந்தம் அடைந்தசரீரங்களின் ஆகாரங்களையும், மனைவி மைந்தர் முதலியபந்துக்களையும் யாவற்றினும் அதிகமாய்க்கருதும். இத்தூலசரீரத்தின்கண்ணே ஆன்மபுத்தியைச் செய்யுமாயின் அதன்நாசத்தைத் தன்னதாயெண்ணும். அதன்சந்தனாதி பூஜையைத் தன்னதாயெண்ணும். அதன்பிறப்பிறப்பைத் தன்னதாய்நினைக்கும். இவ்வாறு சரீராதிகளில் ஆன்மபுத்தியைச்செய்து இவ்விஞ்ஞானமய ஆன்மா அநேகம்வகையாய துக்கங்களை அடையும். இப்போது நரகதுக்கம் நிரூபிக்கப்படும் :— ஹே ஜனகராஜாவே! இச்சம்சாரத்தின்கண்ணே துக்கத்தை நீ அனந்தமுறை அனுபவித்திருப்பாயாயினும் அவற்றை நினைப்பூட்டும்பொருட்டுச் சிற்சில துக்கங்களை யாம் நின்பொருட்டுக் கூறுகின்றேம்; அவற்றை நீ சாவதானமாய்க்கேள். இவ்விஞ்ஞானமய ஆன்மா இத்தூலசரீரத்தைவிடும்போது அநேகம்வகைத்துக்கங்களை அடையுமென முன்னற்கூறிவந்தேமாதலின் மீண்டும்சண்டுக்கூறேம். இப்போது நரகதுக்கத்தைக் கூறுகின்றேம். இவ்விஞ்ஞானமய ஆன்மா ஒருசரீரத்தைவிட்டு மற்றொருசரீரத்தை அவசியம அடையும். ஆண்டு முற்பாவகருமவயத்தால் நரகசரீரத்தையடையுமாயின் அவ்விடத்தில் அநேகம்வகைத்துக்கங்களை அடையும. அந்நரகதுக்கங்களை நினைப்பினும் எமக்குப் பயமுண்டாகின்றது.

சங்கை :—ஹே பகவன்! இவ்வுலகின்கண் மிகுந்த துக்கத்தையடையும் ஜீவனுடைய சரீரம் நாசத்தையடையும். அதுபோல, நரகத்தின்கண் மிகுந்ததுக்கத்தால் இஜ்ஜீவனுடையசரீரம் நாசத்தை ஏன் அடைவதில்லை?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! கனவின்கண் இஜ்ஜீவனுக்கு நானாவகையாயதுக்கம் உண்டாயினும் ஸ்தூலசரீரநாசமுண்டாவதில்லை. அதுபோல, நரகத்தின்கண் நானாவகையாய துக்கத்தையடையினும் யமயாதனாசரீரம் நாசத்தையடையாது. கருத்திதுவாம் :—நரகத்தின்கண் இஜ்ஜீவனுக்குத் துன்பத்தைக் கொடுக்கும்பாவகருமம்அச்சரீரத்தை நாசமாகவிடுவதில்லை. இம்மனுஷலோகத்தில் எப்பிராணியை எவன் எச்சரீரத்தால், எம்மனத்தால்,எவ்வாக்கால்,எவ்வகைத்துக்கத்தை அடையுமாறு செய்வனோ, அவன் நரகத்திற்போங்கால் அவனை அப்பிராணி அச்சரீரத்தால், அம்மனத்தால், அவ்வாக்கால், அவ்வகைத்துக்கத்தினும் கோடிமடங்கு அதிகமானதுக்கத்தை அடையும்படி செய்யும். இத்துணையால் சாமான்யமாய்நரகதுக்கம் நிரூபிக்கப்பட்டது; இப்போது விசேஷமாய் அதுநிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! இவ்வுலகில் வழியில் களவுமுதலிய உபத்திரவங்களைச் செய்தவன் மரித்து நரகத்தையடையின், அத்தியந்தம் சமீபவழியும் அவனுக்குக் கோடியோஜனையளவு விஸ்தாரமுடையதாய்த் தோற்றும். அம்மார்க்கத்தில் செல்[illegible]ன் பரமதுக்கத்தையடைவன். பாதரக்ஷையைத்திருடும்புருஷன் மரித்து [illegible]தயடையின், அவன்காலில் விஷத்தோடுகூடிய கூர்மையாய இரும்பு முட்[illegible]மத்[illegible]க்கும், அதனால் பரமதுக்கத்தையடைவன். அன்னத்தையும் நீரையும் திரு[illegible]ரா[illegible]ஷன் மரித்து நரகத்தையடையின், பசியாலுந் தாகத்தாலும்பரமதுக்கத்தை [illegible]வன். ஆடையைத்திருடும் புருஷனும், தனது தாய் தந்தைமுதலிய பெரியோரி

டத்தேபாலகளைப்போலின்றாமல், அகங்காரியாய்த்திரியும் புருஷனும் மரித்துநரகத்தையடையின், அவன் வஸ்திரங்களை யமதூதர்பிடுங்குவர், அதனுல் பரமதுக்கத்தை அவன் அடைவன். பொன்னைத்திருடும் புருஷன் மரித்து நரகத்தையடையின் அவன்தோலைப் பொன்னைப்போற்செய்து வெட்டி வெட்டி யெடுப்பர். அதனுல் அவன் பரமதுக்கத்தை அடைவன். பிராஹ்மணனைக்கொன்றபுருஷன் மரித்து நரகத்தையடையின், கொல்லன் இருப்புச்சம்மட்டியாற் காய்ந்தஇரும்பை அடிப்பதுபோல, யமகிங்கரர் இருப்புலக்கையால் அவனுடைய மண்டையை உடைப்பர்; அதனுல் அவன் பரமதுக்கத்தை அடைவன். கள்குடித்தவன் மரித்து நரகத்தையடையின், யமகிங்கரர் அவன் வாயில் கள்ளைக் காய்ச்சிவிடுவர்; அக்கள் அழலால் இளகிய இரும்பையொக்கும் அதை வாயில் வார்த்தலால் அவன் பரமதுக்கத்தையடைவன். ஒரெள்ளளவேனும், பிராஹ்மணனது பொன்னைத்திருடும் புருஷன் மரித்து நரகத்தையடையின், யமகிங்கரர் பொன்னுக்கொப்ப உஜ்வலமாயும், கனமுடையதாயும் அவனுடைய தோலைச்செய்து அதனை எள்ளெள்ளளவாய்க் குத்தியெடுப்பர்; அதனுல் அவன் பரமதுக்கத்தை யடைவன். தனது குருவின் மனைவியையும், தாயையும் புணர்ந்தவன் மரித்து நரகத்தை யடையின், யமகிங்கரர் அவனுடைய உபஸ்தத்தைவெட்டி அதனை அவன் வாயில்வைத்துப பிராணனைத் தடுப்பர். அத்துஷ்டன் முன்னர்ப்புணர்ந்த குருஸ்திரீபோலச்செய்த இரும்புவிக்கிரகத்தை அழலிற்காய்ச்சி, அதனோடு ஆலிங்கனஞ்செய்யுமாறு அத்துஷ்டனை உதைப்பர்; அதனுல் அவன் பரமதுக்கத்தை யடைவன். பிறர்மனைவியைப் புணர்ந்தவன் மரித்து நரகத்தை யடையின், அவனுக்குக் குருஸ்திரீயைப் புணர்ந்தவனினும் சிறிது குறைந்த துக்கமுண்டாம். கருத்திதுவாம்:—பிறர்மனைவியைப் புணர்ந்தவன்உபஸ்தத்தை யமகிங்கரர் சேதியார்; மற்றோ, அவளைப்போன்ற இரும்புஸ்திரீயை அழலாற்காய்ச்சி ஆலிங்கனஞ்செய்விப்பர்; அதனுல், அவன் பரமதுக்கத்தை யடைவன். பிறர்மனைவியைப் புணர்வதால் வியபிசாரிபுருஷன் நரகத்தில் துக்கமடைவதுபோல, வியபிசாரிஸ்திரீயும், பரபுருஷரைப் புணர்தலால் நரகத்தில் துக்கத்தையடைவள்.

சங்கை:—ஹே பகவன்! புண்ணிய பாவகருமபலன்களையுணர்த்தும் சுருதிஸ்மிருதி முதலிய சாஸ்திரங்களில புருஷன்பேரெடுத்தே புண்ணிய பாவகருமங்களின்பலம் புகலப்பட்டுளது. ஸ்திரீயின்பெயர்கொண்டு அப்பலம் எந்நூலின் கண்ணும் புகலப்படவில்லை. ஆதலின், பெண்ணிற்குப் புண்ணிய பாவகருமபலம் உண்டாகாதெனத்தெரிந்து கொள்ளலாமன்றோ?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! பெண்ணிற்கும் அலிக்கும் புண்ணிய பாவகருமபலம் உண்டாகாதெனுங் கருத்தால் நூலின்கண் புருஷன்பெயர் கவரப்பட்டதன்றாம்; மற்றோ, ஆண், பெண், அலி என்னும் மூவருள்ளும் ஆண் முக்கியமாதலின், புருஷநாமத்தைக் கவர்தலால் பெண் அலிகளும் பொருளால் க[illegible] கூடும். இக்கருத்தைப்பற்றித்தான் நூலின்கண் புருஷநாமங் கவரப்பெற்[illegible] ஆகையால், முற்கூறிய பாவகருமங்களின்பலம்புருஷன் போகிப்பதேபோல, [illegible] யும், நபும்சகனும் போகிப்பர். சிலநூலுணர்ந்த முனிவரோ, பசு, ப[illegible]

கட்கும் புண்ணிய பாவகருமபல அடைவை அங்கீகரித்துள்ளார். ஆகையால் பசு, பக்ஷியாதிகட்கும் புண்ணிய பாவகருமபலன் உண்டாயின், பத்தினி ரூபத்தால் யாகாதி கருமங்கட்கு அதிகாரியாய ஸ்திரீகட்குப் புண்ணிய பாவரூபகருமபலம் உண்டாமென்பதில் யாது கூறவேண்டியுளது.

சங்கை :—ஹே பகவன்! பத்தினிரூபத்தால் யாகத்திற்கு அதிகாரியாய ஸ்திரீக்கு யாகாதி புண்ணியகருமங்களின் பலத்தினடைவு சம்பவிக்குமாயினும், பாவகருமபலப்பிராப்தி சம்பவியாதாம்.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! ஒருகால் ஸ்திரீக்குக் கேவலம் புண்ணிய கருமபலமே அடைவுற்றுப் பாவகருமபலம் அடைவுறாதாயின், ஸ்திரீயைப் பாணிக் கிரகணஞ்செய்தல் பயனற்றதாம். ஏனெனின், விவாகத்தில் புருஷன் இவ்வசனத்தை உச்சரித்து ஸ்திரீயைப பாணிக்கிரகணஞ் செய்யவேண்டும். "[illegible]" (பொருள்.)—ஹே பத்தினியே! நீ என் தருமத்திலும், அதருமத்திலும, அர்த்தத்திலும, காமத்திலும் எனக்குச் சமானபலத்தின் பங்கினளாவாய். இது பயனற்றதாமன்றோ? ஆகையால், புண்ணியகருமபலத்தைப்போல பாவகருமபலத்தையும் ஸ்திரீ அவசியம் போகிப்பள். அல்லது, இவ்வுலகில் யாவன் எவனது சுபகருமபலத்தைப் போகிப்பனோ, அவன் அவனது அசுபகருமபலத்தையும் அவசியம் போகிப்பன். மஹாராஜாவின் புண்ணியகரும பலமாய ராஜ்யசம்பத்தை யாவன் போகிக்கின்றனனோ, அவன் அவனது பாவ கருமபலமாய ஆபத்தையும் அவசியம் போகிப்பன். பாவபலத்தை விடுத்துப் புண்ணியபலத்தைமாத்திரம் எப்பிராணியும் போகியாது. அதுபோல, எவள் நாயகனது புண்ணியகருமபலத்தைப் போகிக்கின்றனளோ, அவள் பாவகருமபலத்தையும் அவசியம் போகிப்பள். இத்துணையால இது துணியப்பெறும் :—ஆணேனும், பெண்ணேனும், அலியேனும் பாவகருமத்தைச் செய்யின், மரித்து நரகத்தில் துக்கத்தையடையும். இப்போது பாவகருமத்தில் அயலாரை ஏவுபவரின் துக்கங்கள் நிரூபிக்கப்படுகின்றன :—ஹே ஜனகராஜாவே! இவ்வுலகத்தில் பெண்ணேனும், ஆணேனும், அந்நிய பெண்ணையேனும், ஆணையேனும், பலாத்காரமாய் பாவகருமத்தில் ஏவின் அதன்பலஞ் செய்யும்பெண்ணிற்கும் ஆணிற்குமுண்டாகாது, மற்றே, அதன்கண்ணே பிரவிருத்திப்பித்த பெண்ணிற்கேனும் ஆணிற்கேனுமே அதன்பலம்உண்டாம். யாண்டு பெண்ணேனும், ஆணேனும், அயற்பெண்ணையேனும், ஆணையேனும் பாவகருமத்தில் ஏவுகின்றனரோ, அதன்கண் தமக்குமிச்சையிருப்பின் அவ்விடத்தில் அதன்பலம் அதைச்செய்பவருக்கும், ஏவுபவருக்குஞ் சமானமாகவே உண்டாம். ஒரு பெண்ணிற்கும் ஆணிற்கும் வியபிசாரஞ்செய்வதில் தமதிச்சையில்லாமல் வேறொரு பலமுடையவன் பலாத்காரமாய் அவர்களை வியபிசாரத்திற் பிரவிருத்திப்பின் அதன்பலம் அவ்விருவருக்குமுண்டாகாது; மற்றே, பலாத்காரமாய் அதனைச் செய்வித்த புருஷனுக்கே அப்பலமுண்டாம். ஆனல், இதன்கண்ணும் இத்துணைச்சிறப்புண்டு :—யாவருக்கு வியபிசாரகருமத்தில் இச்சையின்றே, அவர் பலமுடையபுருஷனல் அக்கருமத்தில் ஏவப்படுவராயின், அவர் அக்கருமத்தின் நிவிருத்தியுபாயத்தைச்செய்யாது அதன்கண் ஒரு

ரல் பிரவிருத்திக்கின் அவருக்கு அககருமபலமுண்டாம. ஆனல அந்த வியபிசார ருமத்தைச்செய்விப்புவனுக்கு அதிகபலமுண்டாம். செய்பவருக்கு அற்பபல மண்டாம். இவ்வுலகில் வியபிசாரபாவகருமத்தில் விசேஷமாய் உலகரின் பிர ிருத்திகாணப்படுதலின், அதன்கண் துக்கரூபபலவிவஸ்தைகாண்பிக்கப்பட்டது. ஆகையால, இவ்வாறு கருமபலவிவஸ்தையை ஹிம்சைமுதலிய எல்லாப்பாவ கரு மங்களிலும் புத்திமான் தெரிந்துகொள்ளல்வேண்டும். இப்போது பாவகருமத் தினின்றும் நிவிருத்தியுபாயம் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! நூலு ணர்ந்த சில முனிவரோ இங்ஙனம் கூறியுள்ளார். ஒரு பலவானனவன் மற்றொரு ஆணையேனும், பெண்ணையேனும் பலாத்காரமாய் ஒரு பாவகருமத்தில் பிரவிருத் திப்பிக்கின், அக்கருமத்தின் நிவிருத்தி வேறொரு உபாயத்தான் முடியாதாயின், அவர்கள் அப்பாவத்தினின்றும நீங்கும்பொருட்டுத் தங்கள்சரீரத்தையேனும்விட்டு விடுக; ஆனல் அப்பாவகருமத்தைச் செய்யலாகாது. ஒருகால் பாவகருமத்தைச் செய்விப்பவன் மரண உபாயத்தைச்செய்யவிடானயின், அப்பாவபலஞ் செய்பவனை யடையாது; மற்றோ, பலாத்காரமாய்ச்செய்விப்பவனையே அடையும். ஆகையால், மரணபரியந்தம் பாவகருமநிவிருத்தியுபாயத்தை ஜீவர்கள்செய்கவென நூலுணர் ந்த சிலமுனிவர் கூறுகின்றனர். ஹே ஜனகராஜாவே! நூலின் உண்மைஅபிப் பிராயத்தையறிந்த சிலமுனிவரோ இவ்வண்ணம் கூறுவர்:—பலாத்காரத்தால் அடைவுற்ற பாவகருமநிவிருத்தியின்பொருட்டு மரணரூப உபாயத்தையொழித்து வேறே எல்லா உபாயமுஞ்செய்க. மரணரூப உபாயத்தை ஒருகாலுஞ் செய்யா தொழிக; ஏனெனின் பிரஹ்மஹத்தி முதலாயுள்ள பாவங்கள் யாவற்றினும் ஆத் மஹத்தி அதிகமாம். ஆதலின், வியபிசாராதி அற்பப்பாவகருமங்களின் பயத்தால் ஆத்மஹத்தியாய மஹாபாவத்தைச்செய்பவன் பெருமூடனவன், இவ்வுலகில் தேட் கடிக்குப் பயந்தோடிப்பாம்புக்கடிபடும் பரமமூடனைப்போலவாம். ஆதலின், தனது சரீரநாசத்தையுற்றேனும் பாவகருமத்தினின்றும், நிவிருத்தியடைகவெனக் கூறு தல் அத்தியந்தம் அசங்கதமாம். மாறாய்ப் பாவகருமத்தைச் செய்யாதிருப்பின் தனது மரணமே நிச்சயமாயாகுமாயின், ஆண்டுத் தனது தேகத்தைக்காக்கும்பொ ருட்டு யாதொரு சங்கற்பமுமில்லாமல் பாவத்தைசசெய்க. இச்சித்தாந்தபக்ஷத்தில் சாஸ்திரத்தையுணர்ந்த முனிவர் இவ்வகை யுத்தியுங்கூறியுள்ளார்:—பாவகருமஞ் செய்வதில் தனதிச்சையின்றி ஒரு பலவான் பலாத்காரமாய்ப் பாவகருமத்தில் பிர விருத்திப்பிக்கின் அதன்பலஞ் செய்யப்பட்டவனை அடையாது; மற்றோ, செய்விப் பவனையேயடையும். பாவத்தைச்செய்பவன் அதைச்செய்வதில் பயத்தையடைந்து தனது மரணத்தைச்சம்பாதிக்கின், அந்த ஆத்மஹத்தியின்பலஞ் செய்யும்புரு ஷனையேயடையும்; செய்விக்கும்புருஷனையடையமாட்டாது. ஏனெனின், செய் விக்கும்புருஷனே அவனைப் பாவகருமஞ்செய்ய ஏவினனேயன்றி ஆத்மஹத்தி செய்ய ஏவவில்லை. ஆதலின் இது துணியப்பெறும்:—பாவகருமநிவிருத்தியின் பொருட்டுத்தனதுமரணத்தைவிடுத்து வேறுஎல்லாஉபாயத்தையுஞ்செய்க. தனது மரணத்தை ஒருகாலுஞ்செய்யாதொழிக.

சங்கை:—ஹே பகவன்! சாஸ்திரத்தின்கண்ணே பாவகருமம் எல்லாவகை யாலும் நிஷேதஞ்செய்யப்பட்டுளது.

ஆ-சு. யாவத்ப்ராணோ யாவத்ப்ராணோ ஹ்யாத்மனே கர்ம கர்தவ்யம் நாஸ்தி ।
யாவத்ப்ராணோ வா ஹ்யாத்மனே கர்ம ந கர்தவ்யம் ॥

"கண்டத்துயிர் நின்றிடு காறுங் கடையர்செய்யுந்
தண்டத்தொழிற் சிஞ்சிலுஞ் செய்திடத் தக்கதன்றும்
கண்டத்துயிர் நின்றிடு காறுங் கடையர்செய்யாக்
கொண்டேய்த்திடு நல்வினை செய்திடல் கொள்கையாமே."

(பொருள்.) எதுவரை இப்புருஷனுடையகண்டத்தில் பிராணனிருக்கின்றதோ அதுவரை இப்புருஷன் செய்யத்தகாத பாவகருமத்தை ஒருகாலுஞ் செய்யாதொழிக. செய்யயோக்கியமாய புண்ணியகருமத்தை அதுவரைசெய்க. என்பதாதிசாஸ்திரங்களில் எல்லாவகையானும் பாவகருமம் நிஷேதிக்கப்பட்டுளதாதலின், மரணத்தினின்று மிச்சரீரத்தைக் காப்பாற்றும்பொருட்டுப் பாவகருமத்தையுஞ் செய்கவெனக்கூறல் சாஸ்திரத்தோடு முரணுமன்றோ?

சமாதானம்:— ஹே ஜனகராஜாவே! பலவானல் பாவகருமத்தில் பிரவிருத்திப்பிக்கப்பட்டவன் தனதுமரணத்தைசசம்பாதித்தும் அப்பாவத்தினின்றும், நிவிருத்தியடைகவென்னும் பொருளில் அவ்வசனங்கட்குக்கருத்தின்றும்; மற்றோ, எதுவரை இவன்கண்டத்தில் பிராணனிருக்குமோ, அதுவரை இவன் தனது இச்சைப்படி எப்பாவத்தையுஞ் செய்யாதொழிகவென்னும் பொருளிலேயே அவ்வசனங்கட்குக் கருத்தாமாதலின், பாவபயத்தால் ஆத்மஹத்தி ஒருகாலுஞ் செய்யற்க. பாவகன்மத்தால் ஆன்மஹத்தியைச்செய்யின், பரமதுக்கத்தின் அடைவுண்டாம்.

ஆ-சு. அஸுர்யா நாம தே லோகா அந்தேன தமஸாவ்ருதாஃ ।
தாꣳஸ்தே ப்ரேத்யாபிகச்சந்தி யே கே சாத்மஹனோ ஜனாஃ ॥

"மிக்க வான்மனைக் கொன்றவர் மேவுவர்
சிக்க றிவிலர் பாமரர் சேர்வுறத்
தக்க தாயிரு டன்னி னிறைவுறு
தக்க துன்படை தாமசி லோகமே."

(பொ-ள்.) தன் ஆன்மாவைக் கொலபவன் மரித்து அவிவேகிகளாய பாமரபுருஷர் அடையயோக்கியமும், அந்தகாரத்தால் மறைபட்டதுமாய தாமசலோகத்தை யடைவன். என்னும் இச்சுருதி ஆத்மஹத்தி செய்பவனுக்குப் பரமதுக்கப் பிராப்தியாமெனக் கூறியது. ஆதலின், இப்பொருள் துணியப்பெறும்:— பிரயோஜகன், பிரயோஜ்யன், அநுமந்தா என்னும் மூவருக்கும் பாவத்தின் துக்கபலம் அவசியமுண்டாம். ஆனல் அத்துக்கபலம் இராகாதி ஆபத்துக்களின் குறைவுமிகுதிகளால் பிரயோஜகன் முதலியோரிடத்தே குறைவு மிகுதியுமாம். ஈண்டு, ஒருவனைப் பாவகருமத்தில் பிரவிருத்திப்பவன் பிரயோஜகனவன். பலமுடையவனல் பிரவிருத்திப்பிக்கப்பட்டு, இராகவாயிலாய் அப்பாவகருமத்தில் பிரவிருத்தியுடையவன் பிரயோஜ்யனவன். பாவகருமத்தினின்றும் நிவிருத்திப்பதில்

சமர்த்துடையவனுயினும் [illegible] னஞ்செய்யாதவன் அநுமந்தாவாவன். இம்மூவருக்கும் பாவகருமபலப் [illegible] ண்டாம். இக்காரணத்தால் தனது மங்கலத்தை இச்சித்தவன் தான் பாவ [illegible] தைச் செய்யலாகாது. மற்றொருவனை ஏவிச்செய்விக்கலாகாது. தனக்கு [illegible] ருப்பின், மற்றவனையும் பாவகருமத்தினின்றும் நிவாரணஞ்செய்க.

சங்கை :—ஹே ப [illegible] பாவகருமத்தைச் செய்தவன் நரகத்திற்சென்று அதன் துக்கபலத்தை அ [illegible] பாகிப்பன் என்னும் நியமம் முன்னர்த் தங்களால் கூறப்பட்டது ; அது சம் [illegible] ரம். ஏனெனின், தருமசாஸ்திரத்தில் துக்கபலம் போகித்தலின்றியும், பிரா [illegible] த்தாற் பாவகருமநிவிருத்திகூறப்பட்டதன்றோ?

சமாதானம் :—ஹே [illegible] ஜாவே ! வியாமோகத்தாலேனும், மயக்கத்தாலேனும், ஆபத்தாலேனும் [illegible] மத்தைச்செய்யின், அதன் நிவிருத்தியின்பொருட்டுத் தருமசாஸ்திரம் பி [illegible] ந்தத்தை விதித்துளது. பிராயச்சித்தத்தானும் பாவகருமம்நிவிருத் [illegible] அப்பாவகருமத்தை மீண்டு ஒருகாலுஞ் செய்யாதிருப்பிற்றான்கூடும். பா [illegible] த்தை நீக்கும்பொருட்டுப் பிராயச்சித்தத்தைச் செய்து மீண்டும், அப்பாவ [illegible] தைச் செய்யின், அது பிராயச்சித்தத்தால் நீங்கமாட்டாது ; மற்றோ, யானை [illegible] தில் மூழ்கிவிட்டு மீண்டும், தனது தலையில் மண்ணைப்போட்டுக்கொள்ளுமா [illegible] அதன் ஸ்நானம் நிஷ்பலமாவதேபோல, பாவகருமநீக்கத்தின்பொருட்டுப் [illegible] சித்தஞ்செய்து மீண்டும் அப்பாவத்தைச் செய்யின் அப்பிராயச்சித்தமும் [illegible] மேயாம். ஆதலின், இப்பொருள் துணியப்பெறும் :—பிராயச்சித்தமற்றப [illegible] ற்கு, பாபிகளாய ஆண், பெண், அலியென்னும் யாவர்களும் மரித்துநரகத்தில் அ [illegible] யம்துக்கத்தை யநுபவிக்கவேண்டும். இவ்வார்த்தை அந்நிய சாஸ்திரத்தின்கண் [illegible] னும் கூறப்பட்டுளது.

“ [illegible] ”

(பொ-ள்.) ஆன்மஞான [illegible] பிராயச்சித்தமும் அற்றவனுடைய புண்ணிய பாவங்கள் அநேககோடிகற்பங் [illegible] னும் போகித்தலின்றி நீங்கமாட்டா ; மற்றோ, போகித்தே நீங்கும். பிரஹ்ம [illegible] யாதி பாவங்களைச்செய்யும் மஹாபாதகனுஞ் செய்விப்பவனும் எவ்வாறு நரக [illegible] த்தையடைவரோ, அவ்வாறே அவனோடு ஒரு வருஷபரியந்தம் [illegible] மரித்து நரகத்தில்துக்கத்தையடைவன். ஹே ஜனகராஜாவே ! [illegible] த்தின்கண்ணே வாத விவாதமற்ற இயற்கையையுடைய பிரா [illegible] லும் தயையற்றவன் மரித்து நரகத்தையடையின் எவ்வகைச்சி [illegible] முன்னர்க்கொன்றனனோ, அவ்வகைச்சிவன் நரகமார்க்கத்தில் அவ [illegible] னைத் தடைப்படுத்துவன் ; நானாவகைச் சஸ்திரங்களால் அவன்சரீர [illegible] ட்டுவன் ; கூர்மையாயபற்களால் அவனைத் துன்புறுத்துவன். தீக்ஷண [illegible] ம்புகளாலும், தீக்ஷணமாயகொம்புகளாலும் அப்பாபியின்சரீரத்தைத் [illegible] த்துவன். இருப்புலக்கைகளால் அவன் மண்டையையுடைப்பன்; அதன [illegible] வி பரமதுக்கத்தையடைவன். மாம்சத்தைப்புசிப்பவன் மரித்து நரகத்தை [illegible] , அப்பாவியின் மாம்சத்தை நாய், கழுகுமுதலியவை இடும்பித்தின்னும் ; [illegible] ல் அப்பாவி பரமதுக்கத்தையடைவன். வஞ்சனையாதி

யால் அந்நியர் தனங்களை யபகரித்துத் தனது மனைவி மைந்தர் முதலிய குடும்பத்தைக்காப்பாற்றுபவன் மரித்து நரகத்தையடையின் அவனுக்கெதிரில் அவனது மனைவி, மைந்தராதி பிரியபந்துக்களை நாய் கழுகுமுதலியவைபுசிக்கும். அதைக் கண்டு அவன் பரமதுக்கத்தையடைவன். அதருமத்தால் குடும்பத்தைக்காப்பாற்றுபவனையும், அவனது மனைவிமைந்தராதியரையும் கழுகு முதலியவை தம்வாயாற் கவ்விக்கொண்டு ஆகாசத்திற்கிளம்பும். வெகுதூரஞ்சென்று அப்பாபியரைக் கீழே வீழ்த்தும், இவ்வண்ணம் மேலிருந்து கீழேவீழ்ந்த அப்பாபியர் ஒருகால் அக்கினி குண்டத்தில் வீழ்வர்; மூஷிகம்முதலிய ஜீவர்கள் நிறைந்தஜலஸ்தானத்தில் வீழ்வர்; ஒருகால் பாறையின்மேல் வீழ்வர்; ஒருகால் ஆழ்ந்தஜலத்தில் வீழ்வர், ஒருகால் மஹாவாயுகுண்டத்தின்கண் வீழ்வர், ஒருகால் மலமூத்திராதி குண்டத்தில் வீழ்வர்; இவைமுதலாக அநேக மலினஸ்தானங்களில் வீழாநிற்பர். பூமியின்கண்ணே வீழ்ந்த அப்பாபியரைப் புசிக்கும்பொருட்டு நாய் கழுகுமுதலியவை பரஸ்பரம் இழுத்துக்கொண்டுசெல்லும். ஒருகால் அப்பாபியரை நாய்முதலியன சமானபூமியிலிழுத்துச்செல்லும். ஒருகால் மேடுபள்ளங்களிலிழுத்துச்செல்லும். இவ்வகைத்துர்க்கதியையடைந்த அப்பாபியர் சரீரத்தாலும், மனத்தாலும் பரமதுக்கத்தையடைவர். புழுவோடுகூடிய நாயை உலகர் நிராதரஞ்செய்வதேபோல, நரகத்தில் அப்பாபியரை எல்லாப்பிராணிகளும் நிராதரஞ்செய்யும். அதருமத்தால் குடும்பத்தைக்காப்பாற்றுபவன் இவைமுதலாக அநேகம்வகைத் துக்கங்களைப்பொறுத்துக்கொண்டு குடும்பசகிதமாயேனும், தனியாயேனும் யமலோகமார்க்கத்தையடைவன். அம்மார்க்கம் சூரியபகவான் பன்னிருமூர்த்தங்களைத்தரித்துத் தபிப்பிப்பதாம். அக்கினியிற்காய்ச்சிய இரும்புமுதலிய தாதுக்களால் நிறைந்திருக்கும். அக்கினிச்சுவாலையால் வியாபித்திருக்கும். ஆண்டுச்சிறிதும் ஜலம் கிடைக்கமாட்டாது. விருக்ஷமொன்றும் இன்றாம். வாக்கால், மனத்தால், காயத்தால் ஜீவர்களைத்துக்கப்படுத்துபவன் யமகிங்கரரால் அடிக்கப்பட்டவனாய் இவ்வகைப் பயங்கரமாய மார்க்கத்தையடைவன். இம்மார்க்கத்தில் நடப்பதால் அப்பாபி பரமதுக்கத்தையடைவன். களவுமுதலிய பாபகருமங்கள்செய்தவனை அரசசேவகர் கொடிய பாசத்தாற்கட்டி அரசவாயிலிற் கொண்டுசேர்ப்பர். அவ்வரசசேவகர் அப்பாபியரின் சரீரத்தில் நானாவகைச் சஸ்திரப்பிரயோகஞ்செய்வர். அப்பாபியர் மகாராஜாவிற்கும் மற்றையருக்குஞ்செய்த அபராதங்களை அடிக்கடி கூறுபவராய் அச்சேவகர் அப்பாபியரைக்கடோரவசனங்களால்வைவர். அதுபோல மனைவி,மைந்தராதி குடும்பத்தைக் காக்கும்பொருட்டு, நானாவகைப்பாவங்கள் செய்தவனைத்திடபாசத்தாற்கட்டி யமகிங்கரர் நரகமார்க்கத்திற்கொண்டுசெல்வர். ஆங்கு அவர் நானாவகைச் சஸ்திரங்களால் அப்பாபியரைக்கொல்வர். அப்பாபி குடும்பத்தைக் காக்கும்பொருட்டு, முன்னர்ச்செய்த பாவகருமங்களையெல்லாம் அடிக்கடிகூறி நானாவகைக் கடோரவசனங்களால் அவர் அப்பாபியரைவைவர். இப்போது, அந்த யமகிங்கரர் அப்பாபியரை நிராதரிக்கும் கடோரவசனங்கள் காண்பிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! அப்பாபியரைநோக்கி அந்த யமகிங்கரர் இவ்வகைக் கடோரவசனங்களை இயம்புவர். ஹே பாபிகளே! அக்கினி ஹோத்திராதி கருமங்களால் சுவர்க்கத்தை அடைவிப்பதும்

சிரவணாதி சாதனங்களால் மோக்ஷத்தையடைவிப்பதுமாய இம்மனுஷசரீரம் அத்தியந்தம் துர்லபமாம். அதனினும், பாரதகண்டத்தில் மனுஷசரீரத்தையடைதல் அத்தியந்தம் துர்லபமாம். அத்தகைய துர்லபமாய மனுஷசரீரத்தை யடைந்தும் நீங்கள் சிறிது மாத்திரையும் புண்ணிய கருமத்தைச் செய்யவில்லை ; மாறாய்க் குடும்பத்தைக் காக்கும்பொருட்டு நானாவகைப் பாவங்களையே சம்பாதித்தீர்களாதலின், உங்களுக்குத் திக்காரமாம். ஹே பாபிகளே ! இம்மனுஷசரீரத்தையடைந்து எம்மனைவி, மைந்தராதி பந்துக்களின் மோகத்தால் நீவிர் புண்ணியத்தைத் தேடவில்லையோ அவர் கிடைக்கத்தகாதவரல்லர் ; மற்றோ, இந்நரகசரீரத்தின் கண்ணும், நாய்முதலிய சரீரங்களிடத்தும் மனைவி,மைந்தராதியர் மிகவும் கிடைப்பர். ஆனால் சுகத்தைக்கொடுக்கும் புண்ணியகருமம் உமக்கு இச்சரீரத்தானன்றி வேறெச்சரீரத்தானுங் கிடைக்காது. ஹே பாபிகளே ! எம்மனைவிமைந்தராதியரைக் காப்பாற்றும் பொருட்டு, நீவிர் நானாவகைப்பாபங்களைச் செய்தீரோ, அச்செய்ந்நன்றிகொன்றவர் மயானத்தில் உங்களைத்தனித்து விடுத்துத்தம்வீட்டிற்குச் சென்றனர் ; அத்தகைய செய்ந்நன்றிகொன்றவரைக் காக்கும்பொருட்டு நீவிர் அநேகம் வகைப்பாவகருமங்களைச் செய்தீர் ; இக்காரணத்தால் உங்களுக்குத் திக்காரமாம். ஹே பாபிகளே ! இச்சரீரத்தே குடும்பத்தைக்காக்கும் பொருட்டுச்செய்தபாவங்களெல்லாம் உங்களோடு துக்கங்கொடுக்கவந்தனபோலப் புண்ணியகருமத்தைச் செய்திருப்பின், அவையும் சுகங்கொடுக்கும்பொருட்டு உங்களோடுவந்திருக்குமல்லவா, ஆனால் நீவிர்புண்ணியகருமத்தைச் செய்யவில்லையாதலின், கேவலம் பாவகருமபலதுக்கத்தை இப்போது நீவிர் அனுபவிமின். ஹே பாபிகளே! புலியால் ஜீவர்கள்பயமுறுவதேபோல, அந்நியரின் தனாதிபதார்த்தங்களை யபகரிக்கும் பலவான்களாய உங்களால் அஜ்ஜீவர் பயத்தையடைந்தனரன்றோ? ஹே பாபிகளே ! எவ்வெப்புருஷரிடத்தே அழகியஸ்திரீகளும், கோக்களும், குதிரைகள்முதலிய அழகியபசுக்களும், நானாவகையாய தனங்களுமிருந்தனவோ, அவற்றையெல்லாம் பாவிகளாய நீங்கள்பலாத்காரமா யபகரித்தீர்களல்லவா ? அப்பாவகருமத்தாலிப்போது உங்கள்விழிகளையும் இருதயங்களையும் இக்கழுகுமுதலிய பக்ஷிகள் சேதிக்கின்றன. ஹே பாவியரே ! நீங்கள்மனத்தால், வாக்கால், காயத்தால் மற்றையர்க்குத் துக்கத்தையுண்டாக்கினீர்கள். அவ்வுமதுபாவகருமம் இப்போது உமக்குத்துக்கத்தைக்கொடுக்கும்பொருட்டு எதிரில் நிற்கின்றது. ஹே பாவியரே! ஒருபாக்கியஹீனன் பூர்வபுண்ணியகருமமின்மையால், இராஜ்ஜியபதவியையடைந்தும் அக்கால் கஷ்டத்தையடைவன். அதுபோலப்பூர்வபுண்ணியகருமமின்மையால் இப்பாரதகண்டத்தில் மனுஷ்யசரீரத்தையடைந்தும், பாக்கியஹீனர்களாயநீங்கள் பாவத்தால் நரகத்தையேயடைந்தீர்கள். இக்காரணத்தால் உங்கட்குத் திக்காரமாம். இப்போது பாவியரைஉத்வேகஞ் செய்யும்பொருட்டுப் பிதிர்லோகத்தின் பிதிர்யாணமெனப் பெயரியநெறி நிரூபிக்கப்படும்;—ஹே பாவிகளே ! யாகாதிபுண்ணியகருமங்களைச்செய்தவர் இம்மனுஷசரீரத்தைவிடுத்து முதலில் தூமத்தையடைவர், அதன்பின் அக்கருமிகள் இரவையடைவர். அதன்பின் அவர் கிருஷ்ணபக்ஷத்தையடைவர். அதன்பின் அவர்ஷண்மாசமாகிய தக்ஷிணாயனத்தையடைவர். அதன்பின் அவர்பிதிர்லோகத்தையடைவர். அதன்பின் அவர் அந்தரிக்ஷலோகத்தை

யடைவர். அதன்பின் அவர்சந்திரலோகத்தையடைவர். அவ்வுலகில் தேவதைகளு கொடுக்கும் நானுவகைப்போகங்களை அவாநெடுங்காலம்போகிப்பர். ஈண்டுத்தூமம், இரவு, கிருஷ்ணபக்ஷம் என்பனவாதியால் அவற்றின் அபிமானி தேவதைகளைக் கொள்க. ஹே பாவிகளே! யாகாதிகருமங்களை நீங்கள் செய்யவில்லை யாதலின் உங்கட்குப் பிதிர்லோகஅடைவுமுண்டாகவில்லை. ஹே பாவியரே! சுவர்க்காதிலோகங்களை யடைவதற்குச் சாதனமாய யாகாதிகருமங்கள் இத்தூலசரீரத்தாற்சித்தமாவனவாமாதலின் அவை சரீரகருமங்களாம். பிரஹ்மலோகப்பிராப்தியின் சாதனமாய உபாசனை மனத்தாற்சித்திப்பதாமாதலின் அதுமானசகருமமாம். சரீரகருமத்தை யபேக்ஷித்து மானசகருமம அதத்தியந்தம் கடினமாம். ஹே பாவியரே! அவ்வியாகாதியாய சரீரகருமத்தானும் நீங்கள் சுவர்க்கத்தையடையவில்லையாயின், உபாசனையாகிய மானசகருமத்தால் பிரஹ்மலோகஞ்செல்வீர்களென்பதன்கண்யாதுஆசையுளது. இப்போது பிரஹ்மலோகஅதிகாரி நிரூபிக்கப்படுகின்றனன் :—ஹே பாவியரே! இப்பாரதகண்டத்தில் அதிகாரியாய மனுஷசரீரத்தையடைந்து விஷயசுகத்தில் விரக்தனாய், ஜிதேந்திரியனாய் இயமநியமாதி சாதனங்களோடுகூடியவனாயிருக்கும் அதிகாரியானவன் குருசாஸ்திர உபதேசத்தால் நானுவகையுபாசனைகளையறிந்து, அவற்றுள், பரியங்கவித்தையுபாசனையாலேனும், பஞ்சாக்கினிவித்தையுபாசனையாலேனும, அந்நிய உபாசனையாலேனும அவ்வுபாசகன் பிரஹ்மலோகத்தையடைவன். இப்போது பிரஹ்மலோகத்தின்சொரூபமும், பிரஹ்மலோகத்தின் தேவயானமெனப்பெயரியமார்க்கசொரூபமும் நிரூபிக்கப்படும் :—ஹே பாவிகளே! பஞ்சாக்கினிமுதலிய உபாசனைகளைச்செய்த உபாசகன் சுழும்நைநாடிரூபமார்க்கவாயிலாய்ப் பததாவதுவாயிலினின்றும் பாகியத்திற்கிளம்பி, முதலில் அர்ச்சிஷையடைவன், அதன்பின் தினத்தையடைவன், அதன்பின் சுக்கிலபக்ஷத்தையடைவன். அதன்பின் ஷண்மாசமாகிய உத்தராயணத்தையடைவன், அதன்பின் சம்வத்சரத்தையடைவன், அதன்பின்தேவலோகத்தையடைவன், அதன்பின் வாயுவையடைவன், அவ்வாயு தேராழியிலிருக்குந் துளைபோன்ற துளையை யுபாசகனுக்குத் தனது தேகத்தே கொடுக்கும். அதன்பின் ஆதித்தியனை யடைவன்; அவ்வாதித்தன் ரணபேரியென்னும் வாத்திய விசேஷத்தின் நடுத்துளைபோன்ற துளையைத்தன்னிடத்தே உபாசகனுக்குக்கொடுப்பன். அதன்பின் சந்திரனையடைவன், அச்சந்திரன் துந்துபியெனப்பெயரிய வாத்தியத்தின் மத்தியசித்திரத்தையொத்தசித்திரத்தைத் தன்பானுபாசகனுக்குக் கொடுப்பன். அதன்பின் மின்னலையடைவன், அம்மின்னனுலகில் அமானவனெனப்பெயரிய புருஷன்வந்து அவ்வுபாசகனைப் பிரஹ்மலோகத்திற்குக கொண்டுசெல்வன். ஈண்டு அர்ச்சிஷ், தினம், சுக்கிலபக்ஷம் என்பனவாதிகளால் அவற்றின்அபிமானிதேவதைகளைக் கொள்க. மனுவின் சிருஷ்டியினுற்பத்தியாகாதவன் அமானவனாவன். உபாசகன் செல்லும் பிரஹ்மலோகமானது வருணலோகம், இந்திரலோகம், விராட்லோகம் என்னும் மூவுலகங்களினும் மேலேயுள்ளது. ஆரமென்னுந் தடாகத்தோடும், விஜராவென்னும் நதியோடுங்கூடியது. அத்தகைய பிரஹ்மலோகத்தின்கண்ணே அவ்வமானவபுருஷன் அவ்வுபாசகனைக்கொண்டு சேர்ப்பன். மின்னுலகிலிருந்து

உபாசகன் ஆரமென்னுந்தடாகக்கரையிற் போகும்போது, பிரஹ்மாவின் ஆஞ்ஞையைப்பெற்று 500 திவ்யதேவாங்கனைகள் நானுவகையாய பதார்த்தங்களைக் கையிற்கொண்டு உபாசகன்சமீபத்தேவருவர். அவருள் நூறுபேரோ, அவன் அணியும்பொருட்டுச் சுகந்தபூமாலைகளைக் கரத்திற்கொண்டுவருவர், மற்றும் நூறுபேரோ, அவன்தேய்த்துக்கொள்ளக் கஸ்தூரி கர்ப்பூராதிகளோடுகூடிய நானுவகையாய தைலத்தைக் கரங்கொண்டுவருவர், மற்றும் நூறுபேரோ, அவனுக்குப் போஜனம்செய்விக்கும்பொருட்டு, நானுவகையாய திவ்யகனிகளைக் கரங்கொண்டுவருவர், மற்றும நூறுபேரோ, அவன்சரீரத்தில் பூசிக்கொள்ளும் பொருட்டு, நானுவகையாய சுகந்தத்தையுடைய சூரணத்தைக்கையிற்கொண்டுவருவர், மற்றும் நூறுபேரோ, அவன் அணிந்துகொள்ளும்பொருட்டு நானுவகையாய வஸ்திரங்களையும் பூஷணங்களையும் கையிற்கொண்டுவருவர். அத்தேவாங்கனைகள் நானூறும் அலங்காரங்களால் பிரஹ்மாவைச் சோபிக்கச்செய்வதேபோலப் புஷ்பாதி அலங்காரங்களால் அவ்வுபாசகனைச் சோபிக்கச்செய்வர். இவ்வண்ணம் அவர்களால் அலங்கரிக்கப்பட்ட அவன் ஒரு கணமாத்திரையில் மனோசங்கற்பமாத்திரையானே ஆரமென்னும் தடாகத்தின் அக்கரையையடைவன். அத்தடாகத்தின் அக்கரையின்மேலிருக்கும் 'யேஷ்டிக' வெனச் சுருதியிற்கூறும் முப்பது முகூர்த்தங்களின்சமீபத்தே அவ்வுபாசகன்செல்லின், ஆங்கவன் வந்ததைக்கண்டு அம்முப்பது முகூர்த்தம் அவ்விடத்திருந்தோடிவிடும். ஈண்டு யேஷ்டிகவென்பதற்கிதுபொருளாம்:—பிரஹ்மலோகத்தையடையும் வேட்கையினரின் உபாசனையை நானுவகையாய சங்கற்பங்களை உண்டாக்கிக்கெடுப்பதுவாம். அதன்பின் விஜராவெனப்பெயரிய நதியைநண்ணுவன். அந்நதியின் இக்கரையிலிருக்கும் அவ்வுபாசகன் தனது பூர்வபாவகருமத்தைத் துவேஷியின்பொருட்டுக்கொடுப்பன். தனது புண்ணியகருமத்தைச் சுகிருத்துக்களுக்குக் கொடுப்பன். தனது தனுதிகளை மைந்தனுக்குக்கொடுப்பன். இங்ஙனம், புண்ணிய பாவங்கள்இலயமானபின்னர் அவ்வுபாசகன் ஜராமரணமற்றவனாய், அந்நதியை ஒருகணமாத்திரையில் மனோசங்கற்பத்தால் தாண்டிவிடுவன். அதன்பின் இல்யவெனப்பெயரியவிருக்ஷத்தையடைவன். ஆண்டுப் பிரஹ்மாவுடைய யோக்கியமாய திவ்யசுகந்தம் அவனுக்குக்கிடைக்கும். அதன்பின் சாலஜ்யமெனப்பெயரியஸ்தானத்தையடைவன். ஆண்டுப் பிரஹ்மாவுடையத்தக்க திவ்யஇரசம் அவனுக்குக்கிடைக்கும். அதன்பின் பிரஹ்மாவின் அபராஜிதமெனப்பெயரியமந்திரத்தையடைவன். ஆண்டவனிடத்தே பிரஹ்மாவினுடையதேஜஸ் பிரவேசிக்கும், அதனால் அவன் பிரஹ்மாவைப்போலத் தேஜஸ் உடையவனாவன். அம்மந்திரத்தின்வாயிலில் இந்திரன் பிரஜாபதியெனப்பெயரிய இரண்டு துவாரபாலர்களுளர். அவர் அவன் பொருட்டு உள்ளேசெல்ல, வழிவிட்டுப் பயத்தோடு கூடியவர்போல விருப்பர். அதன்பின் அவன் பிரஹ்மாவின் விபுப்பிரமிதம் எனப்பெயரிய சபாமண்டபத்தையடைவன். ஆண்டவனிடத்தே பிரஹ்மாவின் யசசுபுகும், அதனால் அவன் பிரஹ்மாவைப் போன்ற யசசுடையவனாவன், அதன்பின் அவன் பிரஹ்மாவின் ஆசந்தியெனச் சுருதிகூறும் புத்திமயவேதிகையையடைவன். ஈண்டுக் காஷ்டாதிகளாற் செய்யப்பட்ட நான்கு பாதங்களையுடைய உயர்ந்தஆசனம் வேதிகையெனப்பெறும்.

அதனையடைந்து அவன் பிரஹ்மாவின் சமபுத்தியையுடையவனாவன். அவ்வே திகை, பிருகத்சாமவேதத்தையும் ரதந்தரசாமவேதத்தையும், தனது கிழக்குத் திசையில் இருபாதங்களாய் உடைத்தாயிருக்கும். ப்ரமைதசாமவேதத்தையும், நௌதசசாமவேதத்தையும், தனது மேற்குத்திசையில் இருபாதங்களாய் உடைத் தாயிருக்கும். அவ்வேதிகையின்மேலிருக்கும் நாற்கோணத்தே வைரூபசாமவே தம் தெற்குக்கோணமாம், வைராஜசாமவேதம் வடக்குக்கோணமாம், சாக்வரசாம வேதம் கிழக்குக்கோணமாம், ரைவதசாமவேதம் மேற்குக்கோணமாம். இத்த கைய வேதிகை அச்சபாமண்டபத்தேயுளது. அதன்பின் அவன் பிரஹ்மாவின் பரியங்கத்தையடைவன். அப்பரியங்கம், அவ்வேதிகையின்மேலிருக்கும், நானு வகை விசித்திரத்தோடு கூடியிருக்கும் பிராணரூபமாம். அமித ஔஜசம் எனப் பெயர்பெற்றதாம், பூத பவிஷ்யத் வர்த்தமானமென்னும் மூன்றுகாலத்துமிருக்கும் உலகமுழுவதையும் தன் கிழக்கிலுள்ள இருபாதங்களாய் உடைத்தாயிருக்கும், பிரு திவியையும் இலக்ஷ்மியையும் தன் மேற்கிலுள்ள இருபாதங்களாய்உடைத்தாயிரு க்கும், பிருகத் சாமவேதத்தைத் தெற்குத்திசையின் நீண்ட காட்டமயப்பட்டி கையா யுடைத்தாயிருக்கும், ரதந்தரசாமவேதத்தை வடக்குத்திசையின் நீண்ட காட்டமயப்பட்டிகையா யுடைத்தாயிருக்கும். பத்ரசாமவேதத்தைக் கிழக்குத் திசையின் குறுகிய காட்டமயப்பட்டிகையா யுடைத்தாயிருக்கும். யஜ்ஞாயஜ்ஞீய சாமவேதத்தை மேற்குத்திசையின் குறுகிய காட்டமயப்பட்டிகையா யுடைத்தா யிருக்கும். ரிருப சாமத்தோடுற்ற சந்தோபத்தமந்திரரூப இருசாக்களை கிழக்கு மேற்கில் சூத்திரமய நீண்ட பட்டியைகளா யுடைத்தாயிருக்கும். மந்திரவடிவ யஜுர்வேதத்தைத் தெற்கு வடக்கில் சூத்திரமயகுறுகிய பட்டியைகளாய் யுடைத் தாயிருக்கும். அதன்மேல் மெத்தையென்னும் பஞ்சு நிரப்பிய உபஸ்தரணம் சந்தி ரன்கிரணரூபமாயிலங்கும், அதன்மேல் வெள்ளாடைவிரித்திருக்கும், அது உத் கிதசாமவேதரூபமாம், அதன்மேல் தலைவைக்குந்தலையணை இலக்ஷ்மிவடிவமாம். முன்னர் அதன்பாதரூபமாய் இலக்ஷ்மியைக்கூறி, இப்போது அதன்மேலிருக்குந் தலையணையாய்க் கூறல் கூடாதாயினும், முன்னர் லௌகிக இலக்ஷ்மியின் கூற் றும், பின்னர் வைதிக இலக்ஷ்மியின் கூற்றும்; ஆதலின் முற்பிற் கிரந்த முரணின்றுமென்க. அத்தகைய பரியங்கத்தின்மேல் ஹிரண்யகர்ப்பரூபப்பிரஹ்மா விருப்பர். எந்தப்பிரஹ்மாவின் விஷயஜன்னிய ஆநந்தத்தினும் மேலாய் எவ்வுலகத் தினும் அதிக ஆநந்தமின்றுமோ, அத்தகைய பிரஹ்மாவின் உலகின்கண் அவரைப் பிரீதிப்படுத்தும் சோமசவனமெனப்பெயரிய சந்ததம் அமிருதம்வழியும் அசு வத்தவிருக்ஷமுளது. இதனாலே அத்தரு சோமசவனமெனப்பெறும். அவ்வுலக த்தே அவரைப்பிரீதிப்படுத்தும் அரக்கடலும், ண்யக்கடலும் அமிருதத்தால் நிறை ந்திலங்கும். மனத்தின் ஜனனியாய சர்வஜகத்தின்காரண அவித்தியாசக்தி பிரஹ் மாவின் பிரியபாரியையாம். சக்ஷு இந்திரியத்தின் உபாதானகாரணரூப சத்துவ குணப்பிரதானதேஜசானது அவருடைய பிரதிபிம்பரூப சாயையாம். சம்பூரண ஜக த்தின் காரணரூப வேதசப்தங்களும், அவற்றினின்றுமுண்டாய சாப்தபோதரூப ஞானம் என்னுமியாவும் பிரஹ்மாவின் சமீபத்தேதேவாங்கனைகள் வடிவமாய் நிவா

சஞ்செய்யும். ஈண்டு வேதசப்தங்களை ஜகத்காரணமாய்க் கூறியதின் கருத்திது வாம் :—சிருஷ்டியின் ஆதிகாலத்தே பரமான்மா எல்லாப்பதார்த்தங்களையும் நாமோச்சாரணஞ்செய்துண்டாக்கினர்.

ஆ-சு. "[illegible]."

(பொ-ள்.) சிருஷ்டியின் ஆதியில் அப்பரமான்மா பூவென உச்சரித்துப் பூமியைச் செய்தது. இங்ஙனம் வேதசப்தங்களை உச்சரித்து ஆகாசாதி யாவற்றையும் உண்டாக்கியது.

ஆ-சு. "[illegible]."

(பொ-ள்.) அம்மஹேஸ்வரவடிவபரமான்மா சிருஷ்டியாதியில் வேதசப்தத்தானே சம்பூரணஜகத்தையுண்டாக்கியது. என்பதாதி சுருதி ஸ்மிருதிப் பிரமாணங்களால் வேதபகவானிடத்தும் ஜகத்தின்காரணத்தன்மை சித்தமாம். அவ்விரண்யகர்ப்பவடிவப் பிரஹ்மாவின் தேசத்தில் நாலுவகையாய உபாசனைவடிவநதிகள் சகுண நிர்க்குணப் பிரஹ்மஞானவடிவ ஜலத்தைத்தரித்து ஓடிக்கொண்டிருக்கும். ஸ்தூலசூக்ஷ்மரூபசம்பூரணஜகத்தும் அவருக்குப்புஷ்பமாம்அல்லதுவஸ்திரமாம். இவ்வாறுதேவயானமார்க்கந்தொடங்கிவஸ்திரபரியந்தம்கூறப்பட்டவிபூதிகளோடு கூடிய பிரஹ்மாவையகங்கிரக உபாசனைசெய்து, அவ்வுபாசகன் பிரஹ்மாவின் ஆசனத்தின்மீது மைந்தனைப்போலச் சங்கையற்றவனு யிருப்பன். பிரஹ்மாவானவர் அவனைநோக்கி ஹே மைந்த! நீயார்? நினது போகசாதனமியாது? எனக் கேட்பர். அதற்கவன் ஹே பகவன்! நீரேயான்,உமதுபோகசாதனமே எனதுபோகசாதனமாம். எனப்பிரஹ்மாவோடு சம்வாதஞ்செய்து, பிரஹ்மாவின் ஆஞ்ஞையைப்பெற்றுப் பிரஹ்மாவிற்குச் சமானபோகத்தை அவன்போகிப்பன். பிரஹ்மாவின் ஆயுஷ் சமாப்தமானவுடன் அவ்வுபாசகன் மோக்ஷத்தையடைவன். இவ்வகைப்பரியங்கவித்தைவடிவ அகங்கிரகஉபாசனை கௌஷீதகீ உபநிஷத்தின் முதலத்தியாயத்தின்கண் மொழியப்பெற்றுளது. அந்நிய உபநிஷத்துக்களிலும் நாலுவகையாய அகங்கிரக உபாசனைகள் கூறப்பட்டுள்ளன. ஹே பாவிகளே! நீங்கள் அதிகாரியாய மனுஷசரீரத்தையடைந்தும் அவ்வுபாசனைகளையும் செய்யவில்லை; ஆதலின் உங்கட்குத்திக்காரமாம. இப்போது சாந்தோக்கியத்தின் மூன்றாவதத்தியாயத்தே இருதயகமலத்தின் தியானம் கூறப்பட்டிருப்பது நிரூபிக்கப்படும் :— இப்புருஷனது இருதயகமலத்தே ஐந்து துளைகளுள்ளன ; அவற்றுள், கிழக்கு, தெற்கு,மேற்கு, வடக்கு என் னுநான்கு திசைகளில் நான்குதுளைகள்அதிலுள்ளன. ஐந்தாவது துளை அதன்மேற்பாகத்தேயுளது. அவற்றுள், அதிதைவரூப ஆதித்தியனோடு கூடிய சக்ஷுஇந்திரியத்திற்கு அத்தியாத்மரூபப் பிராணனுசிரயமாம். அதற்கு இருதயகமலக் கிழக்குத்திசையின்றுளை யாசிரயமாம். அக்கினிரூப அதிதைவத்தோடு கூடியவாக்கிந்திரியத்திற்கு அத்தியாத்மரூப அபானன் ஆசிரயமாம், அதற்கு இருதயகமலத் தெற்குத்திசையின்றுளை யாசிரயமாம். அதிதைவரூபதிக்கோடுகூடிய சுரோத்திர இந்திரியத்தின் ஆசிரயம் அத்தியாத்மரூப வியானனும், அதற்கு இருதயகமல மேற்குத்திசையின்றுளை யாசிரயமாம். அதிதைவரூபபர்ஜன்யத்தோடுகூடிய மனத்தினுசிரயம் அத்தியாத்மவடிவசமானனும், அத

ற்கு இருதயகமல வடக்குத்திசையின்றுளை யாசிரயமாம். அதிதைவரூப ஆகாசத் தோடுகூடிய வாயுவிற்கு அத்தியாத்மரூப உதானன் ஆசிரயமாம், அதற்குஹிருதய கமலத்தின் மேற்றுளையாசிரயமாம். இவ்வண்ணம் ஐந்து துளைகளோடுகூடிய இருதயகமலத்தின்கண் சத்தியகாமன், சத்தியசங்கற்பன் என்பனவாதிகுணங்களோடு கூடிய சகுணப்பிரஹ்மத்தைத் தியானஞ்செய்பவனும் பிரஹ்மலோகத்தையடைவன். ஹே பாவிகளே! ஹிருதயகமலத்தே அந்தச்சகுணப்பிரஹ்மத்தியானத்தையும் நீங்கள் செய்யவில்லை, ஆதலினுங்கட்குத்திக்காரமாம். ஹே பாவிகளே! நிர்க்குணப்பிரஹ்மத்தியானத்தை யபேக்ஷித்துச் சகுணப்பிரஹ்மத்தியானம் அத்தியந்தம் எளிதாம்; அதனையும் நீங்கள்செய்யாதபோது நிர்க்குணப்பிரஹ்மத்தியானத்தை நீங்கள் எங்ஙனஞ்செய்யப்போகின்றீர்கள். அந்நிர்க்குணப்பிரஹ்ம சாக்ஷாத்காரத்தால் இவ்வதிகாரிகட்கு ஜன்மமாணாதிசம்சாரதுக்கஞ்சிறிதுமாத்திரையும் அடையமாட்டாது. ஹே பாவிகளே! பரியங்கவித்தியாவடிவ உபாசனையே முதலாகவுள்ள அகங்கிரக உபாசனைகளெல்லாம் உண்முகதிருஷ்டியாற் சித்திப்பனவாம்; ஆதலின் மிகவுங்கடினமாம். இதனற்றான் அவற்றைச்செய்து பிரஹ்மலோகத்தையடைந்தவன் மீண்டும்பூமியின்கண்வருவதில்லை; மற்றோ, ஆங்கே மோக்ஷத்தையடைவன். நீங்கள் இவற்றைக் கடினமெனநினைந்துசெய்யாதிருப்பினும் பாகியதிருஷ்டியாற் சித்திப்பதாய பஞ்சாக்கினிவித்தைவடிவஉபாசனை மிகவுமெளிதாம், இதனானே இவ்வுபாசனையைச்செய்து பிரஹ்மலோகத்தையடைந்து மீண்டும் பூமியின்கண்ணே உபாசகன்வருவதில்லை; அத்தகைய எளியதையும் நீங்கள் செய்யவில்லை. இப்போது பஞ்சாக்கினிவித்தை நிரூபிக்கப்படும்:—பிரஹ்மலோகத்தையடையும் இச்சையுடையவனும், கிருகத்தில் அக்கினி ஹோத்திரத்தையுடையவனும் ஆயவன் பஞ்சாக்கினிவித்தைக்கதிகாரியாவன். அவன், சுவர்க்கம், மேகம், மனுஷலோகம், புருஷன், ஸ்திரீ என்னுமைந்தையும் அக்கினிரூபமாய்த் தியானிக்குக. இப்போது சுவர்க்காதி பஞ்சாக்கினியின்கண்ணே உலகப்பிரசித்த அக்கினியின் சமானதருமங்கள் நிரூபிக்கப்படும்:—இவ்வுலக அக்கினியைக் காஷ்டாதிகள் ஓங்கியெரிவிக்குமாதலின், அவைஇத்தழற்குச் சமித்தாமாறுபோலச் சுவர்க்கமடையச் சாதனமாய புண்ணியத்தின்கண்ணே ஆதித்தியபகவானே எல்லாவுயிரையும் ஏவுபவராம். அதனாலவர் சுவர்க்க அக்கினியின் சமித்தாவர். சம்வற்சரத்தால் ஜலத்தைக்கவரும்மேகம் மழைகாலத்தே பெய்யச்சமர்த்துடையதாமாதலின் சம்வற்சரம் மேகரூபஅக்கினியின்சமித்தாம். யாவர்க்குமாதாரமாய இப்பிருதிவியால் இம்மனுஷலோகம் சோபிக்குமாதலின், இது மனுஷலோகஅக்கினியின்சமித்தாம். இப்புருஷன்பேசுங்கால் விரிந்தமுகத்தாற் சோபிப்பனாதலின், அது புருஷரூபஅக்கினியின்சமித்தாம். புத்திராதிசந்தானங்களைம்பும்ஸ்திரீயின் உபஸ்த இந்திரியத்தால் அவள்சோபிப்பளாதலின், அது ஸ்திரீரூபஅக்கினியின் சமித்தாம். இப்போது சுவர்க்காதிபஞ்சாக்கினிகளைத் தூமரூபத்தால் தியானிக்க யோக்கியபதார்த்தங்கள் நிரூபிக்கப்படும்:—இவ்வக்கினியின்கண் காஷ்டசமித்தினின்றுந் தூமோற்பத்தியுண்டாவதேபோல், ஆதித்தியசமித்தினின்றும் கிரணங்களின் உற்பத்தியாமாதலின், அவை சுவர்க்கஅக்கினியின்தூமமாம். சம்வற்சர

சமித்தினின்றும் வெண்மேகங்களின் உற்பத்தியாதலின், அவை மேகரூப அக்கினியின் தூமமாம். காஷ்டமயபிருதிவிரூபசமித்தினின்றும் உலகப்பிரசித்த அக்கினியுண்டாமாதலின், அது மனுஷலோகரூப அக்கினியின் தூமமாம். விரிந்தமுகரூப சமித்தினின்றும் பிராணரூபவாயுவின்உற்பத்தியாதலின், அது புருஷரூபஅக்கினியின் தூமமாம். உபஸ்தரூப சமித்தினின்றும் ரோமங்களின்உற்பத்தியாமாதலின் அவை ஸ்திரீரூப அக்கினியின் தூமமாம். இப்போது சுவர்க்காதி ஐந்தக்கினிகளை ஜுவாலை வடிவத்தால் தியானிக்கயோக்கியமாய பதார்த்தங்கள் நிரூபிக்கப்படும் :—சமித்தால் ஜனித்ததும் பிரகாசகமும் ஆயது ஜுவாலையாம். பிரசித்த அக்கினிஜுவாலை காஷ்டசமித்தினின்றும்ஜனித்ததும்பிரகாசகமுமாவதேபோலத் தினமானது ஆதித்தியசமித்தால் ஜனித்ததும் பிரகாசகமுமாமாதலின், அது சுவர்க்க அக்கினியின்ஜுவாலையாம். மின்னல் சம்வற்சரசமித்தினின்றும் ஜனித்ததும் பிரகாசகமுமாமாதலின், அது மேகஅக்கினியின்ஜுவாலையாம். அந்தகாரமய இரவு கிருஷ்ணவர்ணத்தையுடைய பிருதிவிச்சமித்தால்ஜனித்ததும் நிசாசரர்களின் பிரகாசகமுமாமாதலின், அவ்விரவு மனுஷலோகரூப அக்கினியின் ஜுவாலையாம். வாக்கிந்திரியம் விரிந்தமுகச்சமித்தால் ஜனித்ததும் அர்த்தத்தின் பிரகாசகமுமாமாதலின், அது புருஷரூப அக்கினியின்ஜுவாலையாம். கோளக வடிவ யோனி உபஸ்தஇந்திரியரூபசமித்தால்ஜனித்ததும் அக்கினிஜுவாலையைப் போல இரக்தவர்ணத்தாற் பிரகாசமானதுமாமாதலின், அது ஸ்திரீரூபஅக்கினியின்ஜுவாலையாம். இப்போது சுவர்க்காதி பஞ்சஅக்கினிகளை அங்காரரூபத்தால் தியானிக்கயோக்கியமாயபதார்த்தங்கள் நிரூபிக்கப்படும் :—உலகப்பிரசித்த அக்கினியின்ஜுவாலை சாந்தியடையுங்காலத்தே அங்காரம் பிரகாசிப்பதேபோலத் தினரூபஜுவாலை சாந்தியடையுஞ் சந்தியாகாலத்தே கிழக்குமுதலிய நான்கு திசைகள் நாணரூபமாய்ப் பிரகாசிக்குமாதலின், கிழக்குமுதலிய திசைகள் சுவர்க்கரூப அக்கினியின் அங்காரமாம். மின்னல்ஜுவாலைசாந்தியாம்போது வஜ்ஜிரரூப இடி பிரகாசமாகுமாதலின், அவ்விடி மேகரூபஅக்கினியின் அங்காரமாம். இரவு வடிவஜுவாலை சாந்தியாம்போது, மந்தப்பிரபையையுடையசந்திரன் பிரகாசமாமாதலின், அச்சந்திரன் மனுஷலோகரூபஅக்கினியின் அங்காரமாம். வாக்கிந்திரிய ஜுவாலைசாந்தியாம்போது சக்ஷு இந்திரியம் பிரகாசமாமாதலின், அது புருஷரூபஅக்கினியின் அங்காரமாம். யோனிரூபஜுவாலைசாந்தியாம்போது, மைதுனத்திடையேயுண்டாமாநந்தம் ஸ்திரீரூபஅக்கினியின்அங்காரமாம். இப்போது சுவர்க்காதி ஐந்து அக்கினிகளை விஸ்புலிங்கரூபத்தால் தியானிக்கயோக்கியமாய பதார்த்தங்கள் நிரூபிக்கப்படும் :—உலகப்பிரசித்த அக்கினிக்கு விஸ்புலிங்கமிருப்பதேபோல, ஈசானகோணமேமுதலாய நான்குதிசைகள் ஸ்வர்க்கரூப அக்கினியின் விஸ்புலிங்கங்களாம். மேகங்களின் கர்ஜனைவடிவசப்தம் மேகரூபஅக்கினியின் விஸ்புலிங்கமாம். யாகாதிகளைச்செய்யும் கருமிகளே மனுஷலோகத்தே நக்ஷத்திரக் கூட்டரூபமாய்ப் பரிணமிப்பாதலின், நக்ஷத்திரக்கூட்டம் மனுஷலோகரூப அக்கினியின் விஸ்புலிங்கமாம்; செவிப்புலனால்ஜனித்த சப்தாகாரவிருத்திகள் புருஷரூபஅக்கினியின் விஸ்புலிங்கங்களாம். ஆலிங்கனதியாலுண்டாய ஆநந்தம் ஸ்திரீரூபஅக்கினியின் விஸ்புலிங்கமாம். இப்போது சுவர்க்காதிபஞ்ச அக்கினிகளை

ஆகுதிரூபத்தால் தியானஞ்செய்யயோக்கியமாய பதார்த்தங்கள் நிரூபிக்கப்படும்:— பிரசித்த அக்கினிக்கு யவை நெய்முதலியவைவையாகுதியாவதேபோல, சிரத்தை சுவர்க்கஅக்கினியின் ஆகுதியாம். சிரத்தைசப்தத்தால் சிரத்தையாற்செய்த அக்கினி ஹோத்திராதிகளினின்றும் உண்டாயதருமரூப அபூர்வம் இஜ்ஜீவான்மாவோடு பரலோகஞ்செல்லும் அதையீண்டுக்கொள்க. அதுசுவர்க்கத்தின்கண்ணேசென்று, அக்கருமிகட்குச் சோமமயசரீரத்தைச்செய்யும். போகம்முடியுங்காலத்தேசோகாக்கினியால் அது நெகிழ்ந்து, மேகத்தையடையுமாதலின் அவ்வுயிரோடுகலந்தசோமம் மேகரூபஅக்கினியின் ஆகுதியாம. அது மேகத்தினின்றும் மழைவாயிலாய் மனுஷலோகத்தையடையுமாதலின், அந்தஜீவன்கலந்தமழை மனுஷலோக அக்கினியினாகுதியாம். அது அம்மழையினின்றும் அன்னவாயிலாய்ப் புருஷனையடையுமாதலின், அஜ்ஜீவன்கலந்த அன்னம் புருஷரூபஅக்கினியின் ஆகுதியாம். அது அப்புருஷனிடத்திருந்தும் வீரியவாயிலாய் ஸ்திரீயின்கண்ணேயடையுமாதலின், அஜ்ஜீவன்கலந்தவீரியம் ஸ்திரீரூபஅக்கினியின் ஆகுதியாம். யஜமானனதுகரணங்களின் அதிஷ்டாதாக்களாய இந்திராதிதேவதைகள், சுவர்க்காதி ஐந்தக்கினிகளிடத்தே சிரத்தைமுதலியபஞ்சஆகுதிகளை ஹவனஞ்செய்பவர்களாம். இவ்வண்ணம் சுவர்க்காதியைந்தையும் அக்கினிரூபமாய்த் தியானஞ்செய்யும்புருஷனும் பிரஹ்மலோகத்திற்குச்செல்வன். ஹே பாவிகளே! அந்தப்பஞ்சாக்கினிவித்தைவடிவ உபாசனையையும் நீங்கள்செய்யவில்லையாதலின் உங்கட்குத்திக்காரமாம். யாதோவொரு முற்புண்ணியகருமமகிமையால் நீங்கள்சுவர்க்கத்தை யடைந்து, போகத்தாலது அழியவே ஆகாசம், வாயு, மேகம் என்பனவாதி மார்க்கத்தால் நீங்கள் பூவுலகின் கண்ணே மனுஷசரீரத்தையடைந்தீர்கள். இபபோது கர்ப்பதுக்கம் நிரூபிக்கப்படும் :—ஹே பாவிகளே ! தாயுதரத்தின்கண் கலிலம், புற்புதம் என்பனமுதலிய அவஸ்தைகளால் உங்கட்கெவ்வெத்துக்கம் உண்டாயதோ, அதன் இலேசமாத்திரமும் இந்நரகத்தின்கண்ணேயின்றும். அத்தகைய கொடுந்துயரையடைவிக்கும் தாயுதரவாசத்தை உம்மைப்போன்றஜடரன்றி வேறெச்சேதனர்சகிப்பர் ; மற்றோ, நீவிரேசகித்தீர். நீங்கள் அநேகமுறை நிவாசஞ்செய்துவந்த தாயினுதரமானது, மலத்தாலும்மூத்திரத்தாலும் பூரணமாம். ஆதலினத்தியந்தந்துர்க்கந்தமாம். புழுக்கூட்டங்களாற்பூரணமாம். இத்தகைய உதரத்தின்கண்ணேபாவிகளாய நீங்கள் ஜராயுவென்னும்படத்தால் மறைபட்டவராய்வசித்தீர்கள். அவ்வுதரத்தே பாவியராய நீவிர் சுவாசத்தையும் ஹஸ்தபாதாதி யவயவங்களையும் சலிப்பதற்குக்கூட ஆற்றலற்றவராயிருந்தீர. அவ்வுதரத்தே தாயின்ஜாடராக்கினி உங்களையெங்ஙனந்தபித்ததோ, அத்தாபலேசமாத்திரமும் இந்நரகத்தின்கண்ணின்றும். அவ்வுதரத்தேபிராணரூபவாயுவால் பாவிகளாய நீவிர் பத்துத்திசைகளிலும் சுழன்றீர். அதனல் எத்துணைத்துக்கத்தையடைந்திரோ அதன்லேசமாத்திரமும் இந்நரகத்தின்கணின்றும். அவ்வுதரத்தேபுகுதலினனும் பிரசூதிவாயுவால் அதனினின்றும் வெளிப்போதலினனும் எத்துணைத்துயரம் உங்கட்குற்றதோ, அதனையஙிங்காராகிய யாங்களுஞ்சொல்ல வல்லேமல்லேம். தாய்புசிக்கும் எல்லா அன்னங்களின்ரூக்ஷமதுரசமும், கர்ப்பத்தின்கண்ணிருக்கும் பாலகனையடையும்.

ஆதலின்தாய்புசித்த காழ்ப்பு, புளிப்பு, கார்ப்பு, கைபபு, துவர்ப்பு, வெப்பு என்புளு முதலிய அநேகபதார்த்தங்களால்தாகமுற்ற நீங்கள் அவ்வுதரத்தேபத்துமாதம் வரை எவ்விதமிருந்தீர்கள். நாறுபக்கங்களில் நெருப்புப்பற்றியெரிந்து மிகவுந்தபித்துக்கொண்டிருக்குங் கிரகத்தைப்போலத் தபித்துக்கொண்டிருக்கும் தாயுதரத்தின்கண்ணே பாம்புகளைப்போன்ற அநேகங்கொடியகிருமிகளால் கடிக்கப்பட்டவர்களாய்ப் பத்துமாதம்வரை எங்ஙனம் நீவிரிருந்தீர். தாயுதரத்தில் நீங்களடைந்த துர்த்தசைகளைச்சொல்வதில் பயங்கொண்டெமதுசரீரமும் நடுங்குகின்றதாதலின், அவற்றைச்சொல்லயாங்களும் ஆற்றலுடையவர்களல்லேம். ஒருகால் ஒருமகாபாபியானவன், அநேகநூறுகோடிகற்பபரியந்தம் நிரந்தரம் நரகத்தின்கண்ணே கிடத்தலாலுண்டாம்துக்கமேபோலத் தாயுதரத்தேவசித்தலால் துக்கமுண்டாம். கர்ப்பந்தரித்தபின்னர் தனதுபுருஷனோடுசெய்யும் ஸ்திரீகளின் சுரதம் கருவின்கண்ணுள்ள பாலகனுக்கும், கர்ப்பிணிக்கும், புருஷனுக்கும்துரந்தமாம்; ஆனால் அத்துரந்தம் பரோக்ஷகாலத்தாம், அதனாலதைத்துரந்தமெனக்கூறிலர்; மறறோ சுரதமென்பர். விஷயசம்போகம் சுரதமாம். பரிணாமகாலத்தே துக்கஹேதுவாவது துரந்தமாம். அவ்விஷயசம்போகரூபதுரந்தத்தை மதிமான்கள் சுரதமென்றனர். ஏனெனின், இவ்வுலகில்சிஷ்டமகான்மாக்கள் தம்மிற்பின்னமாய பதார்த்தங்களை மேலாயபெயரிட்டே யழைப்பர். கிழாயநாமத்தாலெவ்வஸ்துவையும் கிளத்தார். இவ்வகைச்சிஷ்டாசாரத்தை யங்கீகரித்து மதிமான்கள் துரந்தத்தைச் சுரதமென்றனர். இப்போது விஷயசம்போகத்தே துரந்தத்தன்மை வெளிப்படைசெய்யப்படும் :—கர்ப்பிணியோடுபுணர்பவனுக்கு ஸ்திரீ ஹத்தியும் பாலகஹத்தியுமுண்டாம். ஸ்திரீயினுக்கோ ஆன்மஹத்தியும் சிசுஹத்தியுமுண்டாம். ஆதலின் கர்ப்பிணியோடுபுணர்தல் மூவருக்குந்துக்கஹேதுவாம். இச்சம்சாரசக்கிரத்தேயுற்று அநேகம்வகைத்துக்கங்களை நீவிரனுபவித்தீராயினும், அவ்வியாவற்றையும்மறந்து இம்மனுஷசரீரத்தேமீண்டும் பாவகருமத்[illegible]யேசெய்தீர். நீங்கள் நானென அபிமானித்துப்பாவஞ்செய்தசரீரம், தாய்தந்தையரின் மலமூத்திரங்கட்குச் சமமேயாய சுக்கிலசோணிதமலமாம். அம்மலத்தினின்[illegible]ம் இச்சரீரம் உற்பத்தியாயதாதலின் தாய்தந்தையரின் மலமூத்திரங்கட்குச்சம[illegible]மேயாம். நிகழ்காலத்துமிது மலமூத்திரங்களால்நிறைந்ததாம். மரித்தபின்னிது [illegible]நரிமுதலியவைகட்குணவாம். இத்தகைய நிந்திதசரீரத்தைநீவிர் ஆன்மா[illegible]வெண்ணி, லோகசாஸ்திரநிஷித்த கருமங்களைச்செய்தீர். அவற்றின்துக்கபலம் [illegible]போது நரகத்தேயுங்கட்கடைவுறது. ஒருவனதுவீட்டில்நெருப்புப்பற்றிக்கொ[illegible]ின் அதையணைக்கும்பொருட்டு, அ[illegible] அக்காற்கூபந்தோண்டின் அவ்வியாப[illegible] பயனற்றதாவதேபோல, இப்போ[illegible]முன்னர் ஏன்யான்பாவத்தைச்செய்தே[illegible] [illegible]ண்ணியத்தை ஏன் செய்யவில்லைஎன்னும் உங்கள் பச்சாத்தாபம்பயன[illegible] யமகிங்கார்களாய நாங்களும், சூரியபுத்திராயதருமராஜாவும் இந்நாய், [illegible]தலியவையும் உங்கட்குத் துக்கத்தைக்கொடுப்பதில்லை; மற்றோ, இம்மனு[illegible]த்தையடைந்தும் நீங்கள் சரீரத்தானும், மனவாக்குகளானும் அந்நியபிரா[illegible]துக்கப்படுத்திச் சம்பாதித்தபாவகருமமே ஈண்டு நரகத்தின்கண்ணே உ[illegible] துக்கத்தைக்கொடுக்கின்றது. இப்போதுபாவிகளைப் பச்சாத்தாபஞ்செய்[illegible]ருட்டு; அவருடைய

பூர்வபாவகருமங்கள் நிரூபிக்கப்படுகின்றன :—ஹே பாவிகளே! இம்மனுஷ்யசரீரத்தையடைந்தும் நீங்கள் யாவருக்குந் துன்பத்தையேசெய்தீர்கள். அதனிலுஞ் சாதுக்களாகிய மகாத்மாக்கட்கு மிகவுந்துன்பத்தையேசெய்தீர்கள். நீங்கள் மகான்மபுருஷரை எத்துர்ப்பாவனையால் நிராதரஞ்செய்தீர்களோ அதனைக்கேளுங்கள். பித்தமுடையவன் வெண்சங்கை மஞ்சளாய்க்காண்பதேபோலக் காமரூபதோஷத்தால் தூஷிதபாவியராய நீங்கள் சர்வஜகத்தையுங் காமியெனவெண்ணினீர்கள். ஏகாந்தத்திருக்கும் மகான்மாக்களாய சந்யாசிகளையும், நைஷ்டிகபிரஹ்மசாரிகளையும், வானப்பிரஸ்தர்களையும், நோக்கிப் பாவியராயநீவிர் இங்ஙனங்கூறினீர் :—யான் நாடோறும் ஆகாராதிகள்செய்தலின் மைதுனம்விட்ட பிரஹ்மசர்யமற்றவனாவதே போல, இச்சந்யாசியும் பிரஹ்மசாரியும் வானபபிரஸ்தனும் நாடோறும் ஆகாரஞ் செய்கின்றாராதலின், இவர்களும்பிரஹ்மசாயமறறவர்களேயாவர்கள். அல்லது, இச்சந்யாசி ஏகாந்ததேயத்திருக்கின்றனன், சபதாதிபஞ்சவிஷயங்களையும், சுரோத்திராதிஐந்திந்திரியங்களால் கவர்கின்றனன். வாக்குமுதலியகரும இந்திரியங்களால், சப்தோச்சாரணாதிகளைச்செய்கின்றனன். மனத்தாற் சுகதுக்கத்தைக் கவர்கின்றனன். இங்ஙனம் எல்லாஞ்செய்யுமிவன் உபஸ்தஇந்திரியவியாபாரத்தையெங்ஙனஞ் செய்யாதிருப்பன்; மற்றோ, மைதுனத்தையும் அவசியஞ்செய்வன். அல்லது, இவ்வுலகில் எவனதுவாக்காதி இந்திரியங்கள் போகத்தைப்போகிப்பதில் ஆற்றலற்றனவாமோ, அவன் உயிர்வாழும்வரை ஆகாரம், நித்திரை, மைதுனம்என்னும் மூன்றையும்விடான். இச்சந்யாசி ஆகாரநித்திரைகளையோ செய்கின்றனனாதலின் மைதுனத்தையும் அவசியஞ்செய்வன். அல்லது, வாக்குமுதலிய சர்வஇந்திரியங்களுந் தம் வியாபாரத்தைவிடா; மற்றோ, அவைதம்வியாபாரத்தேமுயலுமாதலின் இச்சந்யாசியின் உபஸ்தந் தன் மைதுனவியாபாரந்தவிர்ந்திருக்குமென்பது அத்தியந்தம் அசம்பவமாம். அல்லது, வனத்தில் திருணங்களைத்தின்னும் மான்முதலியவற்றையும், ஜலத்தின்கண்ணே சஞ்சரித்துச் சலபக்ஷணஞ்செய்யும் மீனம்முதலியவற்றையும், மண்ணையுங்காற்றையுமுண்ணும் பாம்புமுதலியவற்றையும், இக்காமதேவன் தன் வயப்படுத்தியுள்ளானாதலின், திருணாதிகளைப் புசிப்பவையுங் காமமற்றனவாகாவிடின், நானாவகையன்னங்களைப்புசிக்கும் இந்த யௌவனசந்யாசி எங்ஙனங்காமமற்றவனாவன்? ஆதலினிஃதறிந்துகொள்ளலாம் :—பூனை எலிபிடிக்கத் தியானிப்பதே போல, இச்சந்யாசியும் உலகரின் ஸ்திரீதனாதிகளைக்கவருமபொருட்டுத் தியானஞ் செய்கின்றனனாதலின் இவன் டம்பியாம். இவன்மூக்கின் நுனியில் திருஷ்டியைவைத்திருப்பதும் உலகரை மோகிக்கும்பொருட்டேயாம். மனத்தாலோ இவ[illegible]பிறர் பொருளையும் பிறர் மனைவியையுஞ் சிந்திக்கின்றனன். ஹே பாவிகளே! இவைமுதலாக அநேகம்வகைத் துர்ப்பாவனைகளால் நீங்கள் தருமாத்மாக்களாய சந்யாசிகளிடத்தும், நைஷ்டிகப்பிரஹ்மசாரியரிடத்தும், வானப்பிரஸ்தரிடத்தும் நானாவகைத் தூஷணத்தை யாரோபணஞ்செய்தீர்கள். அப்பாவங்களின் துக்கரூபபலமிப்போது நரகத்தே உங்கட்குக்கிடைக்கும். நீங்கள்பதிவிரதைகளிடத்தே தூஷணாரோபணப்பொருட்டுச்செய்த துர்ப்பாவனையைக்கேளுங்கள் :—ஹே பாவிகளே! பதிவிரதைகளைப்பார்த்து இங்ஙனங்கூறினீர்; அழகுவாய்ந்த பரபுருஷனை நச்சாத்

யௌவனத்தையுடையமங்கை யாவள் இவ்வுலகத்தேயுளாள்? மற்றோ, எவனும் ஊழியுள்ளானை இச்சிப்பவளேயாவள். ஏனெனின், இந்தஸ்திரீகள் தனதுபிதாவை யும், சகோதரனையும், மைந்தனையும் அழகுள்ளவரெனநினைந்து காமபீடிதராயின், அழகுவாய்ந்த பரபுருஷனைக்கண்டு எங்ஙனங் காமபீடையையடையாதிருப்பர்; மற்றோ, அவசியம்அடைவர். இவர்பரபுருஷரிடத்தேசெல்லாதகாரணம்நான்காம்:— தன்மானம், உலக இலஜ்ஜை, பதியாதியரின்பயம், தனியிடமின்மை என்பனவாய நான்குநிமித்தங்களாற்றான் செல்வதில்லை; ஆனால், தம்மனத்திலிவர் எப்போதுமே பரபுருஷத்தியானஞ்செய்கின்றனர். அல்லது, பரபுருஷனைநோக்கிக்கீழ்முகந்தாழ்த்துபவளை உலகர்பதிவிரதையென்பர். இவ்வகைஇலக்கணஞ்சம்பவியாதாம்; ஏனெனின், கீழ்முகந்தாழ்த்துபவள் காமபீடிதையாய் தன்மனத்தே மூவுலகபுருஷரைத் தியானஞ்செய்பவளாவள். அல்லது, இவ்வுலகில் பதிவிரதையெனப் பிரசித்தியுடையவள் வேசியினும் பெரியவியபிசாரியெனவறிக; என்னை? வேசி தன்சம்பந்திகளோடு வியபிசாரஞ்செய்யாள், இவளோ அவர்களோடுங்கூட வியபிசாரஞ்செய்வளாதலின் அல்லது, விவேகாதிசாதனங்களோடுற்ற இந்திராதி மகாபுருஷரின்தைரியத்தையும் காமதேவன்கெடுப்பனெனின் இம்மூடைகளின் தைரியத்தைக்கெடுப்பனென்பதன்கண் யாதுகூறவேண்டும். இவைமுதலான அநேகவகைத் துர்ப்பாவனைகளால் நீங்கள் அப்பதிவிரதைகளிடத்தே நானுவகைத் தூஷணாரோபணஞ்செய்தீர்கள். தைலசம்பந்தத்தால் வஸ்திரங்கெடுதலேபோல இவ்வுலகில் சாஸ்திரத்திற்கூறிய சகலதருமங்களினும் நீவிர்நானுவித குதர்க்கங்களைச்செய்து நானுவகைத் தூஷண ஆரோபணஞ்செய்தீர்கள். அத்தருமம், மாலையின் மலர்களை நூற்றுங்குவதேபோலும் இத்தருமசூத்திரம் ஜகத்ரூப புஷ்பங்களைத்தாரணஞ்செய்யும். இம்மனுஷசரீரத்தைப்பெற்றும் நீவிர்பிரஹ்மாதிதேவதைகளையும், உங்கள் குருமார்களையும் நிந்தையேசெய்தீர்கள், தாய்தந்தையர்முதலிய உறவினர்யாவரையும் நிசாதரமேசெய்தீர்கள். உலோபவசமுற்றவர்களாய் அந்நியரின் தனுதிகளை யபகரித்தீர்கள். காமவயப்பட்டவராய்ப் பிறர்மனைவியரை யபகரித்தீர்கள். துர்ப்புத்தியையுடைய நீவிர் அந்நியருக்குத் துயரீயும்பொருட்டு இவ்வகைவிசாரஞ்செய்தீர்:— இப்பகைவனுக்கு அற்பதுக்கங்கொடுக்க இதுஎளிதாயவுபாயமாம்; இதனைமுதலிற்செய்துவிட்டுப்பின் மகாதுக்கத்தைக்கொடுக்கும். இம்மகாவுபாயத்தைச்செய்வேன் அதனுலிவனுக்குப்பரமதுக்கமுண்டாம். அல்லது, இவனோடு முதலில்யான்நேயஞ்செய்து என்மேல் மிகவுமிவன்நம்பிக்கையுடையவனுய்விடின் பரமதுக்கத்தைக் கொடுப்பேன். என இவைமுதலாக அநேகம்வகை உபாயங்களைச்சிந்தித்து அந்நியர்க[illegible]வாக்கால் மனத்தால் காயத்தால் பலவகைப்பெருந்துன்புறுத்தினீர்கள், அதனுல் உங்கட்குத்திக்காரமாம். ஹே ஜனகராஜாவே! இவைமுதலிய நானுவகைக் கடோரவசனங்களால் அந்த யமகிங்கரர் அப்பாவியரை நிராதரஞ்செய்வர். அதன் பின்னர் அவர் அப்பாவியரை நானுவகை நரகத்திடுவர். அதன்கண்வாழ்வுற்ற அப்பாவியர் அநேகந்துக்கத்தையடைவர். அப்பாவியர்க்குக் கேவலம் நரகத்திலேயே துயருண்டாமன்றி, மற்றிடங்களிலின்றும் என்னும்பொருளை நீநிச்சயஞ்செய்யற்க; மற்றோ, அவர்க்கு நரகத்திற்றுயர் உண்டாவதுபோலவே, இச்சரீரஜன்மகாலத்தின்கண்ணும், ஸ்திதிகாலத்தின்கண்ணும், மரணகாலத்தின்கண்ணும் உண்டாம்.

இப்போது சர்வலோகத்தும் ஜன்மதுக்க சமானத்தன்மை நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! பிரஹ்மலோகத்தின்கண்ணும், தேவலோகத்தின்கண்ணும், மனுஷலோகத்தின்கண்ணும், பாதாளலோகத்தின்கண்ணும், ஜராயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம், உற்பிஜ்ஜம் என்னும்நால்வகைச் சரீரங்கள் சமானமாகவே உற்பத்தியாகும். இக்காரணத்தால் அத்தேகங்களின் ஜன்மகாலதுக்கமும் யாண்டுஞ் சமானமேயாம். இங்குத்தருமுதலியசரீரம் பூமியைப்பிளந்துண்டாவதாதலின், அவை உற்பிஜ்ஜமாவதேபோலத் தேவதைகளின்சரீரங்களுஞ் சூக்ஷ்மபூதங்களைப்பிளந்துவருதலின் அவையும் உற்பிஜ்ஜமாம். இப்போது சர்வலோகங்களிலும் ஸ்திதிகாலதுக்கசமானத்தன்மை நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! பிரஹ்மலோகமுதற பாதாளம்வரையுமுள்ள எல்லா உலகங்களிலும் உண்டாம்விஷயஜன்னியசுகமியாவும் அதிசயதோஷமுடையனவாமாதலின், அவை யாண்டும் ஈரிஷையையுண்டாக்கித் துக்ககாரணமேயாம். அவை பராதீனமாமாதலின், பயத்தையுண்டாக்கித் துக்ககாரணமேயாம். அவை கரும உபாசனைச் சாதனங்களால் ஜனித்தனவாம், யாதுஜனித்ததோ அதுநாசமாம்; கடாதிகளைப்போலும் இக்காரணத்தால்அவை நாசசிந்தையையுண்டாக்கும்வாயிலாய்த் துக்ககாரணமேயாம். இங்ஙனம் பிரஹ்மலோகமுதல் எல்லாலோகத்தும் ஸ்திதிகாலத்தே சமானதுக்கமேயுண்டாம். இப்போதெல்லாலோகத்தும் மரணகாலத்துக்கசமானத்தன்மைநிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! பிரஹ்மலோகமுதல் எல்லாலோகத்துமிருக்குந்தேகதாரிகட்குத் தத்தம்மனைவிமைந்தாதியரிடத்தே முற்றினும் பற்றுதலிருக்கும். முற்றினும்பற்றுதலுள்ள பதார்த்தங்கள்போங்காலத்தே பரம துக்கமுண்டாம். அந்தப்பிரியபதார்த்தங்களின் வியோகமிருவிதத்ததாம், ஒன்றோ மனைவிமைந்தாதியரிருப்பப் போக்தாவின் மரணத்தால் வியோகமாம். மற்றொன்றோ போக்தாவிருப்ப அவர்களின்நாசத்தால் வியோகமாம். இதுகூறியதாலிது துணியப்பெறும்:—இவ்வுலகத்தே தான்மரித்தலினானுந் தன்மனைவிமைந்தாதி மரித்தலினானும் இவனுககுண்டாந்துக்கத்தினும் அநேகங்கோடிமடங்கு அதிக துக்கம் பிரஹ்மலோகத்துஞ் சுவர்க்கத்தும் பாதலத்துந் தான்மரித்தலினானுந் தன் மனைவிமைநதாதி மரித்தலினானுமுண்டாம். இவ்வுலகில் எங்ஙனம் இத்தேகதாரிகட்குத் தநதை, தாய், மனைவி, மைந்தா, உறவினர், மித்திரர், சத்துருக்கள், உதாசீனர் உளரோ அங்ஙனம்பிரஹ்மலோகாதிகளிலும் இவருக்குத்தாய்தந்தையர் முதலிய அநேகஞ்சம்பந்திகளுண்டு. அவர்களின்வியோகத்தால் இவர்க்கெல்லாலோகததும் துக்கமுண்டாம். இப்போது சரீரதாதாத்மிய சம்பந்தத்தில் சர்வ துக்ககாரணத்தன்மையை யுணர்தற்பொருட்டு முதலில்பிரஹ்மாதிதேவதைகளின் பெருமைநிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! இவ்விரண்யகர்ப்பராய பிரஹ்மா நம்மனோர்யாவரினும் முதலிலுண்டானவர். மனுஷலோகமுதல் விராட்டுலோகம்வரையுண்டாம்விஷயஜன்னியசுகங்கள்யாவற்றினும் அதிகசுகத்தையுடையவர். நான்குவேதங்களின் சம்பிரதாயப்பிரவர்த்தகர். உற்பத்தி ஸ்திதி இலயங்களைச்செய்பவர். இயற்கையான பிரஹ்மவித்தையால் துவைதபாவமற்றவர். இப் பிரஹ்மாவாகிய தருவினின்றுந்தான் அநேகம் பிரஹ்மாண்டங்களாய அத்திப்

பழங்கள் உற்பன்னமாம். இவரிடத்திற்றான் அவை இலயமாம். இப்பிரஹ்மா வின் பிரஜாபதிமுதலிய விபூதிகள்தத்தம்லோகங்களில் வசிக்கும். இவர்பிராண ரூப பரியங்கத்தின்மீது தமது பாரியையோடுமிருந்து எப்போதும் பிரஹ்ம லோகத்தேவசிப்பர். தேவராஜாவாகிய இந்திரர் இந்திராணியோடும் சுவர்க்கத் தேவசிப்பர். இவர் அக்கினிமுதலிய சர்வதேவதைகட்கும் எஜமான், மூவுலகவதி பதி. கிழக்குமுதலியதிசைகளின் அதிபதிகளாய அஷ்டலோகபாலர். பாதாளத்தி லிருக்கும் வாசுகி, தக்ஷகன், பத்மகன்முதலியநாகங்கள், இவ்வுலகிலுள்ளமனுஷர் பசு பக்ஷி கிருமிமுதலிய ஜீவர்களாகிய இவ்வெல்லாரிடத்தும் சுகப்பிரதீதியாதல் அவிசாரத்தாலாம. விசாரித்துநோக்கினோ சிறிதுமாத்திரையுஞ் சுகமேயின்றாம். சர்வஜீவரிடத்தும் பிறப்பிறப்புஞ்சுகதுக்கமும், அவற்றின்சாதனமும், பாஞ்சபௌ திகசரீரமும், சமானமேயாமாதலின், சர்வதேகதாரிகளிடத்துஞ் சிறிதுமாத்திரை யும் விஷமத்தன்மையின்றாம். ஈண்டிதுகருத்தாம் :—பிரஹ்மா, இந்திரர், திக்பால கர், நாகர்முதலிய மகாபுருஷருஞ் சரீரதாதாத்மியத்தாற் பிறப்பிறப்புமுதலிய துக்கத்தையடைவாராயின், நம்மனோர்க்கு அதனுற்றுக்கமுண்டாமெனவறைபவும் வேண்டுமோ, ஆதலினிப்பொருள்துணியப்பெறும் :—விஞ்ஞானமய ஆன்மாக்கள் சரீரமற்றிரா. சரீரமுடையன சுகதுக்கமற்றிரா.

ஆ-சு. ஏவமெவ ஶரீரஸ்ஸ்யாத்ꣳ விஜ்ஞாநவிஜ்ஞயொஃவஹதிஃஷ்லி.

(பொ-ள்) சரீரதாரிஜீவர்களெவர்க்குஞ் சுகதுக்கம் நீங்கமாட்டாது இவ் வண்ணம் புத்தியோடுதாதாத்மியப்பட்டு, விஞ்ஞானமயப்பெயரையுற்ற இவ்வா ன்மா நாலுவகையுயர்ந்ததாழ்ந்த சரீரங்களையடையும். இத்துணையியம்பியதால் புத்தியின்தாதாத்மிய அத்தியாசபலம் நிரூபிக்கப்பட்டது. இப்போதுமனத்தின் தாதாத்மிய அத்தியாசபலம் நிரூபிக்கப்படும் :—ஹே ஜனகராஜாவே! இவ்வாநந்த ஸ்வரூபஆன்மா மனத்தின்தாதாத்மிய அத்தியாசத்தால் மனோமயனெனப்பெயரை யடையும்போது நாலுவகை இச்சையையுடையதாம். இச்சையின் காரணவடிவசுப அசுபவஸ்துவின் ஞானமுடையதாம். நாலுவகைசசம்சயமுடையதாம், சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதைரியம், இலஜ்ஜை, சிந்தை, பயம்என்பனவாதி அநேக தருமமுடையதாம். கருத்திதுவாம் :—கூறிய இச்சைமுதலியவற்றைச் சுருதி, மனத் தின்தருமமாகவே கூறியுள்ளதாதலின், இவ்வுலகில் ஸ்திரீயின்கண்ணே ஆசக்தியை யுடையகாமியானவன் அவளுடையசுகதுக்காதிகளைத் தன்பாலனவாயெண்ணுவன் அதுபோல, மனத்தோடுதாதாத்மிய அத்தியாசத்தையடைந்த இந்தஆன்மா மனத் தின் இச்சைமுதலிய தருமங்களைத் தன்பாலெண்ணும். இவ்வகைரீதியை மேல் பிராணாதிகளின் அத்தியாசத்தின்கண்ணும்அறிக. இப்போது பிராணனது தாதா த்மிய அத்தியாசபலம் நிரூபிக்கப்படும் :—ஹே ஜனகராஜாவே! பிராணனுடன் தாதாத்மியப்பட்டு இவ்வான்மா பிராணமயப்பெயரைப் பெறும்போது பிராணன், அபானன், சமானன், வியானன், உதானன், நாகன், கூர்மன், கிருகலன், தேவதத் தன், தனஞ்சயன் என்னும் பத்துவகையையடையும். அநேக நாடிகளில் சஞ்சரிக் கும் அநேகம்பிராணபேதத்தால்ஆன்மாவும் அநேகபாவத்தையடையும். பிராணசம் பந்தத்தால் ஆன்மாமேற்சுவாசாதி வியவகாரத்திற்கும் ஜீவன வியவகாரத்திற்கும் காரணமாம். அன்னாதிகளின் போக்தாவாம், பலத்தாற்சாதிக்கும் அநேககருமங்க

ளின்கர்த்தாவாம். இங்ஙனம் பிராணதாதாத்மியத்தாற் பிராணமய ஆன்மா பிராண தருமங்கள்யாவற்றையுந் தன்பாலெண்ணும். இப்போதிந்திரியங்களின் தாதாத்மிய அத்தியாசபலம் நிரூபிக்கப்படும்:—சுரோத்திராதி பஞ்சஞானேந்திரியங்களின் தாதாத்மியத்தால் இவ்வான்மா சுரோத்திரமயாதிநாமங்களைப்பெறுங்கால், நானுவகைச்சப்தங்களையும், கோமளகடினஸ்பரிசங்களையும், நீலபீதாதிரூபங்களையும், இனிப்பு முதலிய இரசங்களையும், மணத்தையுங்கவரும். இங்ஙனம் வாக்காதி ஐந்து கருமேந்திரியங்களின் தாதாத்மிய அத்தியாசத்தால், இவ்வான்மா வாக்மயன்முதலியநாமங்களைப்பெறும்போது, நானுவகைச் சப்தோச்சாரணத்தையும், பதார்த்தக்கிரகணத்தையும், கமனுகமனங்களையும், மலாதிகளின்பரித்தியாகத்தையும், ஸ்திரீசம்போகத்தாலுண்டா மாநந்தத்தையும் அடையும். இங்ஙனம், சுரோத்திராதி பஞ்சஞானேந்திரியங்களோடும், வாக்காதிபஞ்சகருமேந்திரியங்களோடுந் தாதாத்மியப்பட்ட இவ்வான்மா அவற்றின்தருமங்களைத் தன்னதாய்க்கருதும். இப்போது, ஆகாசாதி பஞ்சபூதங்களின் தாதாத்மிய அத்தியாசபலம் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! ஆகாசாதி ஐந்தின்தாதாத்மிய அத்தியாசத்தால் இவ்வான்மா, பூதமயப்பெயரையடையுமாயின், ஜராயுஜாதி நால்வகைச் சரீரத்தை யுண்டுபண்ணும். சுரோத்ராதிகளின் விஷயங்களாய சப்தாதிகளை யுண்டுபண்ணும். இப்போது அதேஜசின்தாதாத்மிய அத்தியாசபலம் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! அதேஜஸ்வடிவ அவித்தையின் தாதாத்மிய அத்தியாசத்தால் இவ்வான்மா அதேஜோமயன் என்னும்பெயரைப்பெறின் தனதுசொரூபஆவரணத்திற்கும் உற்பத்திரூபவிக்ஷேபத்திற்கும் காரணமாம். அல்லது, அதேஜரூப அந்தகாரத்தின்தாதாத்மிய அத்தியாசத்தால இவ்வான்மா அதேஜோமயனென்னும்பெயரைப்பெறின் நித்திரைசொப்நாதிகளின் காரணமாம். இப்போது காமதாதாத்மிய அத்தியாசபலம்நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! காமத்தோடுதாதாத்மிய அத்தியாசப்பட்டு இவ்வான்மா, காமமயனென்னும்பெயரையடையுங்கால், புத்திராதிப்பிரஜைகளினுற்பத்திகாரணமாம், பரிணுமகாலத்தே துக்கத்தையடைவிக்கும் விஷயஜன்னிய சுககாரணமாம். ஆடுங்குரங்குபோல ஸ்திரீகளின் அதீனமாம், புண்ணியபாவங்களின் கர்த்தாவாம், இதுசுடம், இஃதசுபம் என்னும் ஞானத்திற்குங் காரணமாம். இப்போது குரோததாதாத்மிய அததியாசபலம் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! குரோததாதாத்மிய அத்தியாசத்தால் இவ்வான்மா குரோதமயப் பெயரையடையுங்கால், நானுவகைப் பிரஹ்மஹத்தியாதி பாவகருமங்களையே செய்யும். அக்கினிகுண்டத்தின்கண்ணிருபபவன் பரமதுக்கமுறுவதேபோல, பிரஹ்மஹத்தியாதி பாவகருமங்களால் குரோதமுடையவன் கும்பிபாகாதி நரகங்களில் துக்கத்தையடைவன். இக்காமக்குரோத மிரண்டுஞ் சம்சாரகாரணமாமாதலின், அவற்றைப பரித்தியாகஞ்செய்து இவ்வான்மா அகாமமயன் அக்குரோதமயன் என்னும் பெயரையடையும்போது, ஜீவன்முக்த அவஸ்தையை அடையும். இப்போது தரும அதருமரூப அதிர்ஷ்டத்தின் தாதாத்மிய அத்தியாசபலம் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! தரும அதருமரூப அதிர்ஷ்டத்தின்தாதாத்மியசம்பந்தத்தால் இவ்வான்மா தருமமயன் அதருமமயன் என்

னும்பெயரை யடையும்போது நானுவகை ...துக்ககாரணமாம். நானுவகைக் கிழ்மேற்சரீரகாரணமாம். இப்போது ...ச் சர்வபதார்த்தங்களின் தாதாத்மிய அத்தியாசபலம் நிரூபிக்கப்படும் :—ஹே ஜனகராஜாவே! பரோக்ஷாபரோக்ஷமாய்ச் சகத்திலுள்ள சர்வபதார்த்தங்களின் தாதாத்மியத்தால் இவ்வான்மா சர்வமயனென்னும் பெயரையடையுங்கால், சர்வ பதார்த்தங்களின் தருமங்களையு மடையும். ஒருவனேபாகரூபக்கிரியையால் பாசகனென்றும், பாடரூபக்கிரியையால் பாடகனென்றும் பெயர்பெறுவதுபோல, இவ்வான்மாவுஞ் செய்யுங்கருமஆசாரங்களின் நாமங்களையேயடையும் உண்மையாயோ இதுசாது, அசாது, புண்ணியபாவமென்பனவாதி சர்வநாமங்களுமற்றதாம், ஆகாசம்போலயாண்டும்பரிபூரணமாம். இத்தகைய ஆன்மா அவித்தையின்சம்பந்தத்தால் ஜீவபாவத்தையடைந்துபுண்ணியத்தைச் செய்யுங்கால்சாதுகாரியென்னும்பெயரைப்பெறும், இவ்வுலகிற்புகழைப்பெறும், நானுவகைச்சுகத்தையடையும். இதுபாவத்தைச்செய்யின் அசாதுகாரியென்னும் பெயரைப்பெறும், இவ்வுலகிலிகழையடையும், நானுவகைத்துக்கங்களை யனுபவிக்கும். இத்துணைக்கிரந்தத்தால், புண்ணியபாவரூபகருமங்களின் பிரதானத்தன்மையை அங்கீகரித்து, அவற்றின்கண் சம்சாரகாரணத்தன்மை நிரூபிக்கப்பட்டது. இப்போது அவித்யாஜன்னியகாமமே அதன்காரணமென்னுஞ் சித்தாந்தபக்ஷம் நிரூபிக்கப்படும் :—ஹேஜனகராஜாவே! இஜ்ஜன்மமரணுதிரூப சம்சாரவிசாரத்தே சிலபுத்திமான்களாயமகாத்மாக்கள் இங்ஙனங்கூறுகின்றனர் :—இப்பரமான்மா நிர்க்குணமும் அசங்கமுஞ்சர்வபேதமற்றதுமாம். இத்தகைய நிர்க்குணவஸ்து இபற்கையாய் எத்தூல சூக்ஷ்மபதார்த்தங்களையுமுண்டாக்காது; மற்றோ, இது அநிர்வசநீய அவித்தையின்சம்பந்தத்தையடைந்து முதலில்காமத்தையுண்டாக்கும் அதன்பின் ஆகாசாதிசர்வ ஜகத்தையுமுண்டாக்கும். இக்கருத்தேபற்றிச் சுருதியின்கண் காமபூர்வகமாய் எல்லாவுலகினுற்பத்தியுங் கூறப்பெறறுளது.

ஆ-சு. “ஸோऽகாமயத ஸஹொவாம் ஸஹுஸ்யாம்.”

(பொ-ள்.) அம்மாயாவிசிஷ்ட பரமான்மா சிருஷ்டியினுதியில் இங்ஙனமிச்சித்தது, பரமான்மாவாய யானொருவனே அநேகரூபத்தையடைவேன் என. இவ்வண்ணம் அதுசங்கற்பித்து ஸ்தூலசூக்ஷ்மரூப சம்பூரணஜகத்தையும் உண்டாக்கியது. என்பனமுதலிய சுருதிகளில் அவித்தையால் ஜன்னியகாமத்தின்கண்ணே சர்வ ஜகத்தின் காரணத்தன்மை கூறப்பெற்றுளது. கேவலஞ் சுருதிப்பிரமாணத்தானே காமத்தின்கண் ஹுலககாரணத்தன்மை துணியப்பெற்றதன்றாம்; மற்றோ, உலகினனுபவகாரத்தாலுங் காமத்தின்கண்ணே அதுசித்தமாம். ஏனெனின், இவ்வுலகில்சேதனப்பிராணிகள் யாவும் முதலில் இவ்வஸ்து எனக்குக்கிடைக்குக, இது எனக்கும் கிடையாதொழிகவென விச்சிக்கும். அதன்பின் அவ்வக்காரியத்தே முயலும்வாரிலாய் நானுவகைச் சம்சாரத்தையடையும். இப்போது காமசப்தார்த்தம் நிரூபிக்கப்படும் :—ஹே ஜனகராஜாவே! சாஸ்திர தாற்பரியத்தையுணர்ந்த மதிமான்கள், காமம், இச்சை, இராகம், ஸ்பிருஹை என்னும் இந்நான்குசப்தங்கட்கும் வெவ்வேறுபொருள் அங்கீகரித்திலர்; மற்றோ, அவற்றிற்கு ஓரேபொருள் அங்கீகரித்தனர். ஸ்திரீசங்கத்தைக் காமமெனக்கூறுபவரும், காமசப்தத்தால் ஸ்திரீசங்க இச்சையையேகூறுவாதலின் இச்சையேமுக்கியப்பொருளாம். அவ்விச்சை

வடிவகாமமே சம்சாரரூபஅட்டிவிருக்ஷவிரையாம். விஞ்ஞானமய, மனோமய, பிராண மயவென்பனவாதி சப்தங்களாற்கூறிய நானுவகை அவஸ்தைகளையுடைய இச்சம் சாரி, சம்சாரரூபவிருக்ஷத்தின்பலரூபமாம். குருசாஸ்திரஉபதேசத்தாலறியத்தக்க சுத்தப்பிரஹ்மம் நித்தியசுத்தமாமாதலின் அது அதன்பலரூபமன்றும். கர்த்தா போக்தாரூபசம்சாரியின்கண்ணே காமமேமுக்கியமாம். இப்பொருளில்அவர்இந்த யுக்தியைக் கூறுகின்றனர் :—இவ்வுலகிலித்தேகதாரிகள் முதலிலிப்பிரிய பதார்த் தத்தை யானடைவேன், இவ்வப்பிரியபதார்த்தத்தை யான்விடுவேன் என இச் சித்துப்பின்அதன் அடைவினும்பரித்தியாகத்தினும் நிச்சயஞ்செய்வர். அதன்பின் பிரியமாயதையடையும்பொருட்டும், அப்பிரியமாயதைவிடும்பொருட்டும், சுபகரு மத்தின்கண்ணும், அசுபகருமத்தின்கண்ணும் முயல்வர். அவ்விரண்டையுஞ்செய் தபின் இகலோகத்தும், பரலோகத்தும் சுகதுக்கரூப்பலத்தையடைவர் ; ஆதலின் காமமே புருஷர்க்குத்துக்ககாரணமாம்.

சங்கை :—ஹே பகவன் ! சுகத்தினடைவின்பொருட்டும், துக்கநிவிருத்தியின் பொருட்டும் யாகாதிகருமங்களைச்செய்யுஞ் சகாமபுருஷர்கட்குத் துக்கத்தினடைவு எங்ஙனுண்டாம் ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே ! சகாமி சுகத்தையடையும்பொருட்டும், துக்கத்தைநீக்கும்பொருட்டும், யாகாதிகருமங்களைச்செய்வானுயினும், அவனுக்கு அவ்விரண்டுங்கிடைக்கமாட்டா. ஏனெனின், சுவர்க்காதிபலஅடைவினிச்சையை மனதில்வைத்துக்கொண்டு அவற்றைச்செய்புமவனுக்குச் சிறிது சாதனக்குறைவு வடிவ வைகுண்யதோஷம் அவசியமுண்டாம். அத்தோஷத்தோடுகூடிய காமிய கருமம் பலத்தின் அடைவையுண்டாக்கமாட்டாது ; மாறுய்ப் பச்சாத்தாபவாயி லாய்த் துக்கத்தையேதருமாதலின், அவனுக்குச் சிறிதுமாத்திரையுஞ் சுகவடை வுண்டாகமாட்டாது. அல்லது, ஒருகால் அவன் அத்தோஷமின்றி யாகாதிகளை முடிப்பினும், அவற்றால் கிடைத்தவிஷய சுகங்கள்யாவையும் நானுவகைத் துன் பங்களோடுகலந்துநிற்கும். இக்காரணத்தானும் அவனுக்குச் சிறிதுமாத்திரமுஞ் சுகவடைவுண்டாகமாட்டாது. ஆதலின் மனத்தின்தருமமாய காமத்தானே இஜ் ஜீவன்ஜன்மமரணுதி சம்சாரத்தையடைவன். இப்போது இப்பொருளையே வெளிப் படையாய் நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே ! மரணகாலத்தே வருங்கருமங்க ளால் ஏவப்பட்ட இஜ்ஜீவன் பிரஹ்மலோகம், சுவர்க்கலோகம், பூமி, நரகம் என் பனவாதியாய் அடைய இச்சிக்கும் உலகங்களிலெல்லாம் ஸ்தூலசரீரத்தையடைவன். ஆண்டு மரணகாலத்தே பூர்வபுண்ணியகருமத்தாலேவப்பட்ட இஜ்ஜீவன் சுவர்க் காதியுத்தமலோகங்களை இச்சிக்கின், இத்தூலசரீரத்தைவிடுத்து அவ்வுலகங்களில் தேவதாசரீரத்தையடைந்துநானுவகைப்போகங்களைப்போகிப்பன். அவ்வுலகங்களை யடைவித்த புண்ணியங்கள் போகத்தால் க்ஷயத்தையடையின், இஜ்ஜீவன் அவ்வுல கங்களைவிட்டுப் பூர்வகருமானுசாரமாய்ப் பூவுலகில் ஸ்தூலசரீரத்தையடைவன். ஈண்டடைந்தஜீவன் இப்பாரதகண்டத்தே பிராஹ்மணுதி மூவர்ணதேகத்தையடை வனுயின், பூர்வ சமஸ்காரவசத்தால் மீண்டுஞ் சுவர்க்காதியையடையும்பொருட்டு யாகாதிகளைச்செய்வன் ; அதனுல் மீண்டுஞ் சுவர்க்காதியையடைவன். இங்ஙனம்

காமத்தோடுகூடிய கருமியானவன் பூவுலகினின்றுந் தேவுலகையும், தேவுலகினின்றும் மீண்டும் பூவுலகையும் அடைவன். இவ்வண்ணங் கடீயந்திரம்போலச் சகாம கருமியானவன் நிரந்தரஞ் சம்சாரத்தின்கண்ணே சுழல்வன். இவனுக்குப் பாவ கருமமதிகரிப்பின், பூவுலகினின்றும் நரகத்தையடைவன். இவ்வுலகில் தான்யாதி விரைகள் நீரின்சம்பந்தத்தையடைந்தே அங்குராதிவடிவகாரியத்தைச் செய்வதிலாற்றலுடையனவாம். அதுபோலப் புண்ணியபாவகருமரூபவிரை இச்சையாகிய நீரின்சம்பந்தத்தையுற்றே சரீரரூப அங்குரத்தை யுண்டாக்குமாதலின், பிரஹ்ம லோகமுதலிய லோகங்களில் இவன் நானுவகைச்சரீரங்களை அக்காமத்தானே யடைவன்.

சங்கை :—ஹே பகவன்! காமானுசாரமாகவே இவன் மரித்ததின்பின் வேறு சரீரத்தையடைவன் என்னும் வார்த்தையை எங்ஙனமறிதல் கூடும்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! நனவின்கண் இவன் அதிக ஆசையுறும் பதார்த்தங்களை நனவைவிடுத்துக் கனவையடைந்தகாலத்தே, நனவின்வாதனைவயத்தால் அடைவன். அதுபோல, மரணகாலத்தே இவன்இச்சிக்குஞ்சரீரங்களைப் பின்னடைவன்.

சங்கை :—ஹே பகவன்! மரணகாலஇச்சைப்படியே இவன்சரீரத்தையடைவனுயின், பாவிகள்யாவரும் அக்கால் சுவர்க்க அடைவின் இச்சையை ஏன்செய்திலர்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! மாணகாலத்தே இவன் சுவர்க்காதிலோக அடைவின் இச்சையைச் செய்வதில் சுவதந்திரனுகான்; மற்றேறு, புண்ணிய பாவரூபகருமத்தால் ஏவப்பட்ட இவன்செய்யும் உயர்வுதாழ்வாய சரீர அடைவின் இச்சைப்படி பின்னர்ச் சரீரங்களையடைவன். ஆதலின் பூர்வ புண்ணியபாவகரும அனுசாரமாகவே அக்கால் இவனுக்கிச்சையுண்டாம்.

சங்கை :—ஹே பகவன்! மாணகாலத்தே இவன் இச்சித்த சரீரங்களையடைவதேபோல, ஜீவித அவஸ்தையில் இச்சித்தபதார்த்தங்களின் பிராப்தியேன் உண்டாவதில்லை?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! இவ்வர்த்தமான சரீரத்திற்குப்போகத்தைக்கொடுக்கும் பிராரப்தகருமத்தின் இருப்பும், வருஞ்சரீரத்தையடைவிக்கும் கருமங்களில்பலத்தையுண்டாக்காமையும், வாஞ்சிதசரீர அடைவின்கண்ணே தடையாம். இவ்விரண்டும்ஜீவித அவஸ்தையின்கண்ணேயிருக்கின்றன. இக்காரணத்தால் இங்கு இவனுக்கு இச்சித்தபடி சரீரஅடைவுண்டாவதின்றும். மரணகாலத்தே அவ்விரண்டுதடைகளும் நிவிருத்தியாய்விடுமாதலின், அக்காலிச்சித்தசரீரத்தைப் பின்னர் அடைவன். இவ்வுலகில் ஒருகூத்தாடி பிரஜைகளை மகிழ்விக்கும்பொருட்டு, நானுவகைத்தேகங்களைத்தரிப்பதேபோல, இவன்கருமபலத்தைப் போகிக்கும்பொருட்டு நானுவகைச்சரீரங்களையடைவன். ஆதலின் இச்சம்சாரரூபசக்கிரத்திற்குக் காமமேமூலகாரணமாம். இப்போது இப்பொருளையேவெளிப்படையாய் நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! இஜ்ஜீவன்முதலில் சுபகருமத்திலேனும், அசுபகருமத்திலேனும் இச்சைசெய்வன், பின்னவற்றைச்செய்யநிச்சயிப்பன், பின்னவற்றில் முயல்வன், பின்முற்சுபாசுபகருமப்படி மீண்டுமவற்றை இச்சிப்பன். இங்ஙனங்காம

ரூபமூலகாரணத்தால் இச்சம்சாரரூபசக்கிரம் எப்போதுஞ்சுழலும். கருத்திதுவாம் :—சித்தபூமியில் இருவகைச்சமஸ்காரங்களுண்டாம், ஒன்றோகருமஜன்னிய சமஸ்காரமாம். மற்றொன்றோ ஞானஜன்னியசமஸ்காரமாம். முதலதோ தனதுபல ஆரம்பசித்தியின்பொருட்டு இச்சையையுண்டாக்கும், மற்றதோ இச்சித்தகருமத்தே இது என்னாலவசியஞ்செய்யத்தக்கதாம்என்னும்ஞானத்தையுண்டுபண்ணும். அந்தஞானானுசாரமாயிவன் அவற்றில் முயல்வன் அவற்றின்சமஸ்காரத்தால் மீண்டும் அவற்றைஇச்சிப்பன். பூர்வகர்த்தவ்யஞானசமஸ்காரத்தால்அவற்றின்கண்ணே இதுஎன்னாலவசியஞ்செய்யத்தக்கது எனநிச்சயிப்பன், பின்னரிவன் மீண்டும் அவற்றின்கண்ணே முயல்வன். ஆகையால், இப்பொருள் துணியப்பெறும் :—இஜ்ஜீவனைச்சுபாசுபகருமத்தே ஏவுவது கர்த்தவ்யபதார்த்தத்தின் நிச்சயமாம், அதற்குக்காமமேமுக்கியகாரணமாம. அதனால்காமமே இவனதுஜனனமரணசம்சாரத்தின்கண்ணே காரணமாம். அக்காமத்தைச்சாந்திசெய்ய எவ்வுலகத்தும் எப்பதார்த்தமுமின்றாம்.

சங்கை :—ஹே பகவன்! நானாவகையாயவிஷயங்களினடைவே அக்காமத்தின்சாந்தியுபாயமாம்.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! விஷயங்களினடைவால் காமநிவிருத்தியுண்டாகமாட்டாது. ஏனெனின், காமரூப அக்கினியோடுகூடியவனுக்கு ஒருகால் சம்பூரணபிருதிவி, சுவர்ணாதிபதார்த்தங்கள் கிடைப்பினும் காமசாந்தியுண்டாகாது; மாறாய்ப்பதார்த்தங்களினடைவால் நாட்குநாள் அது விருத்தியடைந்துகொண்டேபோகும். ஒருகால்நானாவகைவிஷயங்களினடைவால் இவனது காமம் நீங்குமாயின், தேவராஜாவாய இந்திரருக்குநம்மனோர் யாவரையுங்குறித்து அதிகவிஷயங்களினடைவுளதாதலின், அவரது காமநீக்கமுண்டாகவேண்டும், ஆனாலவருக்குண்டாவதின்றாம்; மற்றோபிரஹ்மலோகவிஷயஜன்னிய சுகஇச்சையால் அவர் எப்போதுமேதபிக்கின்றார். இந்திரபதவியையடையும்பொருட்டு எவனேனுஞ்செய்யும் அசுவமேதாதியாகத்தே அவர்நானாவகைவிக்கினங்களைச்செய்வர். எவனேனுந்தைத்தியன் பலாத்காரமாய்ச்சுவர்க்கத்தைப பிடுங்கிக்கொள்ளின்,அவர் அதனையடையும்பொருட்டுப் பிரஹ்மாதிதேவதைகளின் சமீபத்தேசென்று நானாவகைத்தீனத்தன்மையையடைவர். ஆதலினிஃதறிந்துகொள்ளலாமன்றே :— சுவர்க்கபோகங்களால் தேவேந்திரருக்குக காமநிவிருத்தியுண்டாகவில்லையென. மிகுந்த ஆயுளையும் மிகுந்தபோகங்களையுமுடைய இந்திராதிதேவதைகளின் காமமும் விஷயஅடைவால் நீங்காவிடின், அற்பஆயுளையும் அற்பபோகத்தையுமுடைய நோய்களால் நிறைவுற்றநம்மனோர்களின் காமம்விஷயப்பிராப்தியால் எங்ஙனம் நிவிருத்தியாகும். இவ்வுலகப்பிரசித்த அக்கினி, நெய்முதலியஇந்தனங்களினடைவால் சாந்தியையடையமாட்டாதெனினும், மிகவும்நெய்முதலியவற்றை விடுதலால் அவ்வழலின்சாந்தியாதல்கூடும். ஆனால், பூவுலகம், தேவுலகம், பிரஹ்மலோகமென்னும் மூவுலகங்களையுந்தகிக்கும் காமாக்கினியைச்சாந்திசெய்ய யாதொருவிஷயரூப இந்தனமுமின்றாம்; மாறாய், விஷயப்பிராப்தியால் காமவிருத்தியுண்டாகிக்கொண்டே

போம். இவ்வுலகில்பலமுடையானொருவன் இருப்புச்சட்டையை யணிந்துகொண்டு சிவிகையின்மீதேறிச் சத்துருக்களின்பயமற்றவனாய்ச் சஞ்சரிப்பதேபோல, இஜ்ஜீவனும் காமரூபகஞ்சுகத்தை (சட்டையை) யணிந்து சூக்ஷ்மசரீரரூப சிவிகையின் கண்ணேறி விவேகரூப அரசன் சமதமாதிரூபசேனை என்பவற்றின் பயமற்றவனாய் எண்பத்துநான்கிலக்கஞ் சரீரங்களிற்றிரிவன். இவ்வுலகில் நூலானது ஆடையின் காரணமாவதேபோல, இவ்விச்சைவடிவ நூலே உலகவடிவ ஆடைக்குமுக்கியகாரணமாம். இதனானே "காமஃ ஸங்கல்போவிசிகித்ஸாஶ்ரத்தாஶ்ரத்தா' என்னும் சுருதி பகவதியானவள் மனோவிருத்திகள் யாவற்றுள்ளும் காமத்தை முதலில் கூறினள்.

சங்கை :—ஹே பகவன்! ஜனனமரணாதிசம்சாரதுக்ககாரணங்களுள் அவித்தை, மனம் என்னுமிரண்டும் பிரதானகாரணங்களென அநேகநூற்களில் பெரியோரறைந்துளார், தாங்களோ இக்காமமே பிரதானகாரணமெனக்கூறுகின்றீர்கள் இதன்கண்ணே யாதுஏதுவாம்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! எக்கருத்தால் காமத்திற்குப் பிரதானத்தன்மையாங்கூறினேமோ அதை நீ கேட்பாயாக; இச்சம்சாரத்திற்குள்ள காரணங்கள்யாவற்றினுள்ளும் மனதையங்கீகரித்தே அவித்தையின்கண்ணே பிரதானத்தன்மையாம். காமத்தையங்கீகரித்தே மனவடிவகாரணத்தின்கண்ணே பிரதானத்தன்மையாம். அதனைப்பற்றியே இம்மனம் எல்லாவுலகையும் வெற்றிகொள்ளும்; இக்காரணத்தானே காமமேசம்சாரதுக்கத்தின் பிரதானகாரணமாம். இத்துணையால் காமமிருப்பின் சம்சாரதுக்கத்தின் இருப்பாகிய அன்வயம் நிரூபிக்கப்பட்டது. இப்போது காமமில்லாதிருப்பின் சம்சாரதுக்கமிராதென்னும் வியதிரேகம் நிரூபிக்கப்படும் :—ஹே ஜனகராஜாவே! காமமற்றவனுக்குச் சங்கற்பாதிவிருத்தியோடுகூடிய மனமும் ஜகத்ஜனனியாகிய அவித்தையும் சிறிதுமாத்திரையும் துக்கஞ்செய்யமாட்டா. கருத்திதுவாம் :—துயிலின்கண்ணே ஜீவனிடத்தே காமமின்றாமாதலின், அவித்தையிருப்பினும் துயில்பவனுக்குத் துயரஞ்செய்வதில்லை. சமாதியின்கண்ணே முக்தனிடத்தே காமமின்றாமாதலின், மனமிருப்பினும் அவனைத் துயரப்படுத்துவதில்லை. ஒருகால் காமமின்றிச் சுதந்தரமாயே அவித்தையும் மனமும் துக்ககாரணமாகுமாயின், துயிலின்கண்ணும், சமாதியின்கண்ணும் இவனுக்குத் துக்கவடைவுண்டாகவேண்டும். அவ்விரண்டிடத்தும் இவனுக்குத் துக்கவடைவுண்டாவதின்றாம். ஆதலினிஃதறிந்துகொள்ளலாமன்றோ? காமமே சம்சாரதுக்ககாரணமென. அல்லது, காமமற்றவன் பார்க்கும்விஷயங்களும் அவனுக்குச் சுகவடைவையேனும், துக்கவடைவையேனும்செய்யமாட்டா. அவன்மனமும் இக்காரியம்எனக்கு அவசியஞ்செய்யத்தக்கதாமென்னும் எண்ணத்தை யுண்டாக்கமாட்டாது. சுவாசப்பிரசுவாசாதி வியாபாரங்களுடைய பஞ்சப்பிராணன்களும், தத்தம் வியாபாரத்தோடுகூடியவாக்குமுதலிய பத்திந்திரியங்களும், ஆகாசாதி பஞ்சபூதங்களும், அவற்றின் காரியங்களாய இத்தூலசரீரங்களும் மற்றைய சர்வபதார்த்தங்களும் இருப்பினும், இச்சையற்றபுருஷனைத்துயரப்படுத்தமாட்டா. இக்காரணத்தால் இச்சையற்றவனுடைய பிராணாதிசங்காதம் இருப்பினும் இல்லாததுபோலவேயாம். யௌவனரூப அக்கினியாற்றபிக்கப்பட்ட சுந்தரஸ்திரீகள், வாக்குமனகாயங்களால் ஹிம்சையைச் செய்யும் சத்துருக்கள், சுகத்தையடைவிக்கும்

தருமம், துக்கத்தையடைவிக்கும் அதருமம்என்பனவாதியாய எல்லாப்பிரிய அப்பிரியபதார்த்தங்களும் இச்சையற்ற புருஷனுக்குச் சிறிதுமாத்திரையுஞ் சுகதுக்கத்தை யடைவிக்கமாட்டா. காமமிருக்கும் புருஷனிடத்தே மனைவிமைந்தராதி பிரியபதார்த்தங்கள் சுகத்தையுஞ் சத்துருமுதலிய அப்பிரியபதார்த்தங்கள் துக்கத்தையுமுண்டாக்குவனவாதலின், அன்வயவியதிரேகத்தாற்காமமே சம்சாரதுககாரணமாம். காமமற்றவன் ஜீவன்முக்தனுக்கொப்பாவன். இச்சையினுலிச் சிவனிவ்வுலகிற்றுன்புறுவதேபோல, இனிவரும் உயர்ந்த தாழ்ந்தசரீரங்களிடத்துந் துன்பத்தைபடைவன். ஆதலின், எல்லாத்தேகங்களிடத்துங் காமமேதுக்கமுடைவைச்செய்யும். இத்துணைக் கிரந்தத்தால் காமத்தின்கண் சர்வ துக்கங்களின் காரணத்தன்மை காண்பிக்கப்பட்டது. இப்போது முற்கூறிய துயில்திருஷ்டாந்தத்தால் மோக்ஷம் நிரூபிக்கப்பெறும்:—பூர்வபுண்ணிய கருமமகிமையால் காமமற்றவனுயின் இவன்சிறிதுமாத்திரையுஞ் சம்சாரதுக்கத்தையடையான்; மற்றுே,இச்சையற்றவன் மோக்ஷத்தையேயடைவன். துயிலின்கண் சர்வகாமங்களுமறவே நிட்காமத்தன்மையைப் புருஷனடைவதேபோலப் பூர்வபுண்ணியகருமமகிமையாலுண்டாய தீவிரவைராக்கியத்தால் சர்வகாமங்களும் நீங்குமாயின், புருஷன் நிட்காமத்தன்மையையடைவன்.

சங்கை :—ஹே பகவன்! அறிஞனிடத்தே சர்வகாமங்களின் அபாவரூப நிட்காமத்தன்மை எவ்வேதுவாலுண்டாம்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! சகாமி அநேகம்பிறப்புக்களையடைவுறறும் தனபுத்திராதிசம்பூரணபதார்த்தங்களை அடையான்; அறிஞன் அவற்றை ஒரேகாலத்தடைவன், இக்காரணத்தால் அவ்வாப்தகாம அறிஞன்நிட்காமனுவன். கருத்திதுவாம்:—கிடையாதவஸ்துவிலேயே உயிர்கட்கிச்சையுண்டாம், கிடைத்ததிலிச்சையெவ்வுயிர்க்குமுண்டாகாது.

சங்கை :—ஹேபகவன்! அவ்வித்வானுடையதனபுத்திராதி சர்வபதார்த்தங்களின் அடைவுவடிவ ஆப்தகாமத்தன்மையின்கண் யாதுஹேதுவாம்?

சமாதானம் :—ஹேஜனகராஜாவே! பொன்வடிவகாரணங் கிடைக்கப்பெறின், அதிற்கற்பிதகுண்டலாதி பூஷணமும் அவசியம்கிடைத்ததேயாம். அதுபோலத் தனுதியாவற்றிற்கு முபாதானகாரணமாய ஆநந்தவடிவ ஆன்மாவையடையப்பெற்றிருத்தலின், அறிஞனுக்குத்தனுதியாவுமடையப் பெற்றனவேயாமாதலின் அவ்வாத்மகாமரூப அறிஞன் ஆப்தகாமத்தன்மையின்கண்ணேதுவாவன். இதுகூறியதாலிப்பொருள்சித்தமாம்:—யாவனுத்மகாமனே அவனே ஆப்தகாமனுவனுதலின் ஆத்மகாமதை ஆப்தகாமதையிலேதுவாம். யாவன்ஆப்தகாமனே, அவனே நிட்காமனுவனுதலின், ஆப்தகாமதை நிட்காமதையிலேதுவாம். யாவன் நிட்காமனே அவனேசர்வகாமங்களுமற்ற அகாமனுவனுதலின்நிட்காமதை அகாமதையின்கண்ணேதுவாம். இம்முறையே ஆத்மகாமதையேபரம்பரையாய்ச் சர்வகாமங்களின் அபாவரூப அகாமதையின்கண்ணேகாரணமாம். இப்போதிப்பொருளையே

வெளிப்படையாய் நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! இவ்வுலகில்காமத்தோடு கூடிய அஞ்ஞானிகள் அடையுந்தனுதிபதார்த்தங்கள் அழிவுடையனவாமாதலின், அவை அவர்களின் திருஷ்ணையின் நீக்கத்தைச்செய்யமாட்டா; மற்றோ, நெய்முதலிய வற்றால் அக்கினிவிருத்தியாவதேபோல அவைகளால் அவ்வஞ்ஞானிகளின்காமரூப அக்கினிநாடோறும் விருத்தியையடைந்துகொண்டேபோம். ஆத்மகாம அறிஞன் மனைவியாதி சர்வபதார்த்தங்களையுமடைவது அஞ்ஞானியைப்போல நானுவகை முயல்வுகளால்பாகியமாயன்றும்; மற்றோ, அவையாவும் எனது வடிவமே எனச் சர்வான்மபாவப்பிராப்திரூபப் பிரஹ்மவித்தையால் அவ்வாத்மகாமஅறிஞன் சர்வ ஜகத்தையும்தனது ஆன்மவடிவென வெண்ணியடைவன். ஆதலின், யான்பிரஹ்ம ரூபன்என்னும் அபேதஞானமே காமநிவிருத்திவாயிலாயப் பரமாநந்தப்பிராப்தி யினேதுவாம். இத்துணையால் காமாபாவத்தின்கண் சுருதிப்பிரமாணத்தால் பர மாநந்தப்பிராப்தியின்காரணத்தன்மை நிரூபிக்கப்பட்டது. இப்போது உலகப்பிர சித்ததிருஷ்டாந்தத்தானும் அப்பொருள்நிரூபிக்கப்படும்:—ஹேஜனகராஜாவே! இவ்வுலகில்தனுதிகளின் இச்சையையுடையவன் அவற்றினிச்சையால்பரமதுக்கத்தை யடைவன்; ஏனெனின், அவற்றினிச்சையற்றசந்தோஷமுடையவன் பரமசுகத்தை யடைவனன்றோ. என்னை? அவற்றினிச்சையோடுகூடியதனிகன் அவற்றையடை யும்பொருட்டு அரசர்முதலியோருக்குச்சேவைசெய்வன், அதனுல்பரமதுக்கத்தை யடைவுற்று ஒரொருகால் அற்பத்தினுமற்பமாய இராஜசசுகத்தையடைவன். சர்வ காமமுமற்றவனும் கிடைத்ததின்கண்மகிழ்பவனுமஆயவன் தரித்திரனுயினும் பரம சாத்விகசுகத்தைப்பெறுவன். ஆகையால், சர்வகாமங்களின் அபாவரூபசந்தோ ஷமே ஜீவர்களின்சுககாரணமாம். அல்லது, ஆசையோடுகூடியதனிகனுக்குக் கள் வன் அக்கினி அரசன்முதலியோரால் எப்போதுமபயப்பிராப்தியுண்டாம். மகிழ்ச் சியையுடையதரித்திரனுக்கு அவர்களால்பயமின்றும். இக்காரணத்தானும் மகிழ் வுடையோன்பரமசுகியாம். அல்லது, சர்வகாமங்களின் அபாவரூபமகிழ்ச்சி சிறிது முயல்வானும்புருஷனுக்குச்சுகத்தையேயுண்டாக்கும். ஆதலின், மகிழ்ச்சியின்கண் சுககாரணத்தன்மைநிச்சயமாம். காமம்பெருமுயற்சிசெய்துந் துக்கத்தையேயடை விக்குமாதலின், காமத்தின்கண் சுககாரணத்தன்மை சம்சயமாம். முள்முதலியவற் றினின்றும் பாதத்தைக்காக்கும்தோற்பாதரக்ஷைமார்க்கத்தின்கண் நடப்பவர்க்குச் சுககாரணமாமாறுபோல் சர்வகாமங்களின் அபாவரூபமகிழ்ச்சியும்பரமாநந்த கார ணமாம். மார்க்கத்திற்செல்பவர், யாம் எவ்விடத்துமுள்ளில்லாமற்செய்வோம், மிரு துவைச்செய்வோம் பின் நமதுகாலில்முள் முதலியவைதைக்காஎனவெண்ணி அவ் வுபாயத்தில் எவனேனும்முயலின், அம்மூடன் பரமதுக்கத்தையடைவன்; ஏனெ னின், சம்பூரணபிருதிவி முள்ளில்லாமலும் மிருதுவாயுமாதல் மிகவுமுடியாததா மன்றோ, அவ்வாறுகாமவிஷயமாய சர்வபதார்த்தங்களையும் யானடைவேன் என வெண்ணி அவற்றின்பொருட்டுமுயல்பவனுகிய மூடன் பரமதுக்கத்தையடைவன். ஏனெனின், காமத்திற்கு விஷயமாய சர்வபதார்த்தங்களையுமடைதல் அத்தியந்தந் துர்க்கடமாமாதலின் சகாமனுக்குத் துக்கமேயுண்டாம். சர்வகாமங்களையும் விடுத லால் நிட்காமனுக்குண்டாஞ் சுகம் சக்கரவர்த்தியரசனுக்குமின்றும், தேவராஜ வாகிய இந்திரனுக்கு மின்றும், பிரஹ்மாவிற்குமின்றும். ஏனெனின், அவைகளெல்

லாம்கருமஉபாசனுதி சாதனங்களாலுண்டாவனவாம். அதனுன், அவைஅழிவுடை யனவாம்.

ஆ-சு. யமெஹகஉ-ஜிதொலொகஃ க்ஷீயதெ ஏவமெவா ।
உ-த்ரவா-ணஞ் ஜிதொலொகஃ க்ஷீயதெ ॥

(போ-ள்.) இவ்வுலகில் வீடுமுதலியவை சரீரவியாபாரரூப கருமத்தால் செய்யப்பட்டனவாதலின், அவைஒருகாலத்தே க்ஷயத்தையடையும். அதுபோல, பிரஹ்மலோகாதிகளெல்லாம் ஜீவர்களின் புண்ணிய உபாசனரூப கருமத்தால் செய்யப்பெற்றனவாமாதலின் அவையும் ஒருகாலத்தே க்ஷயத்தையடையும். என்னுஞ்சுருதிப்பிரமாணத்தால் உற்பத்தியையுடைய பதார்த்தங்களெல்லாம் நாசமுடையனவாம். கடாதிகள்போலும், என்னுமனுமானத்தால் பிரஹ்மலோகாதியின்கண் அநித்தியத்தன்மையேசித்திக்கும். அழிவையுடையது வியோககாலத்தே அவசியந் துக்கத்தையடைவிக்குமாதலின், சக்கரவர்த்தி முதல் பிரஹ்மாவரையுமுள்ளவிஷய சுகங்கள் பரிணமகாலத்தே துக்கஹேதுவாதலின் துக்கரூபமேயாம்.

“ நகா-வம் ஸாவ-ஹளஉஸெஞ் விஷ்ணேதெ நபியஸஜஸஃ ।
ப்ரஹ்மணொநகா-வம் யதஞ்ஜாகஃ வா-ஂஸஃ காஉவிவஜ-ஜாகஃ ॥” இது மூல சுலோகமாம்.

இச்சை யாவையும் விடுத்தலி னிவற்கெழு சுகந்தான்
மெச்சு சாருவபவும னும்மேவி லன்விணிலே
வச்சிராயுத னடைந்திலன் வாணியை நாவில்
வைச்ச நாயக னடைந்திலன் வடிப்பவ ரேவரே.

(போ-ள்.) சர்வஆசைகளின் நிவிருத்தியால் நிட்காமனுக்குண்டாஞ் சுகஞ்சக்கிரவர்த்தியாசனுக்கும், இந்திரர்க்கும், பிரஹ்மாவிற்குங் கிடைக்கமாட்டாது. ஹே ஜனகராஜாவே! விஷயஜன்னியசுகத்தின்காமமே உயிர்கட்கான்மசாக்ஷாத்காரத்தின்கண்ணே தடையாம். அக்காமம நீங்கப்பெற்ற நிட்காமனுக்கு குருவுபதேசித்தமகாவாக்கியத்தால் யான்பிரஹ்மரூபனுயிருக்கின்றேன் என ஆன்மசாக்ஷாத்காரப் பிராப்தியுண்டாம். அதனுல், அவனுக்குப்புண்ணியபாவாதிசஞ்சிதகருமங்கள் அழியும். அவையே வாதனையையுண்டாக்கும்வாயிலாய் லோகாந்தரஅடைவின் காரணமாம். ஆதலின், அவைநாசமாகுமாயின், அறிஞனுக்கு எவ்வுலகவாதனையுமுண்டாகாது. இக்காரணத்தான் அவ்வறிஞனது இலிங்கசரீரம் லோகாந்தரத்தை யடையாது; மற்றோ, வீட்டின்கண்ணே இருக்குந்தீபம் அவ்விடத்தே இலயமாவதுபோல பிராரப்தகருமம் முடிந்தவுடன் அவ்வறிஞனது மன இந்திரியசகிதப்பிராணன் தேகத்துள்ளே அதிஷ்டான ஆன்மாவின்கண்ணே இலயத்தையடையும்.

ஆ-சு. “ நதஸ்ஞ்ப்ராணா உத்ராமந்தி.”

(போ-ள்.) மரணத்தின்பின் அஞ்ஞானிகளின் பிராணன் வாதனையின் அநுசாரம் லோகாந்தரத்திற் கமனஞ்செய்யுமாறுபோல, வாதனையற்ற அறிஞனது பிராணன் எவ்வுலகத்துஞ்செல்லாது; மற்றோ, சரீரத்துள்ளே இலயத்தையடையும்.

சங்கை :—ஹே பகவன் ! மரணகாலத்தே அவ்வறிஞனது பிராணாதிகள் இல யமடையினும், அவனது சைதன்யபாகம் யாண்டுசெல்லும்.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே ! அவ்வறிஞன் ஆன்மசாக்ஷாத்காரத்தின் முன்னரும் பிரஹ்மரூபமேயாம். ஆனல், முன்னர் அஞ்ஞானத்தால்மறைபட்ட பிரஹ்மரூபனயிருந்தனன் ; பின்னர் அஞ்ஞானமறைப்பற்ற சுத்தப்பிரஹ்மரூபனுவன்; அது யாண்டும் நிறைந்ததாமாதலின் அதற்கு யாண்டுங் கமனுகமனஞ்சம்பவியாது. இப்போதிப்பொருளேயே திருஷ்டாந்தத்தால் வெளிப்படையாக்குவாம் :—ஹே ஜனகராஜாவே ! கடத்தின்கண்ணிருக்கும் ஆகாசம் கடநாசத்தின்முன்னரும் மகாகாசரூபமேயாம்; ஆனல், கடரூபவுபாதியின்சம்பந்தத்தால் அவ்வாகாசம்கடாகாசப் பெயரையடையும். அவ்வுபாதிநாசமானபின் அதுவே கடாகாசப்பெயரை யொழித்து மகாகாசரூபமேயாம் ; அதுபோல, அறிஞனுடைய ஆன்மா, சரீராதியுபாதிகளிருப்பினும் பிரஹ்மரூபமேயாம் ; அவை நீங்கியபின்னும் அது பிரஹ்மரூபமேயாம், அஞ்ஞானவிஷயமாயசுத்தஆகாசம் கந்தருவநகரவிருக்ஷஉற்பத்தியின்க்ஷேத்திரமாவதேபோல, அஞ்ஞானவிஷயமாய ஆன்மாவும் காமவிதையோடுகூடிய இச் சம்சாரவிருக்ஷ உற்பத்தியின் க்ஷேத்திரமாம். ஆகாசரூப அதிஷ்டானஉண்மையுணர்வால் கற்பிதகந்தருவ நகரம்நிவிருத்தியாய் விடுவதேபோல, அதிஷ்டான சுத்தான்மசாக்ஷாத்காரத்தால் இச்சம்சாரவிருக்ஷம்நாசமாம். கருத்திதுவாம் :—ஆன்ம அஞ்ஞானத்தாற் காமமுண்டாம், காமத்தினின்று முலகெல்லா முண்டாமாதலின் அஞ்ஞான விசிஷ்ட ஆன்மா இச்சம்சார விருக்ஷோற்பத்திக்ஷேத்திரமாம், காமம் இதன்விதையாம். ஆன்மசாக்ஷாத்கார அக்கினியால் அஞ்ஞானமழியின், அஞ்ஞான விசிஷ்ட ஆன்மவடிவக்ஷேத்திரமும்நாசமுறும். ஆன்மாநித்தியமாதலின் அதன் நாசம்சம்பவியாதாயினும், சுத்தஆன்மாவின்கண்ணே சம்சாரவிருக்ஷக்ஷேத்திரூபத்தன்மையின்றாம் ; மற்றோ, விசிஷ்டத்தின்கண்ணே அஃதாம். அஞ்ஞானமாகியவிசேஷணம் நாசமுறவே, ஆன்மாவின்கண் சம்சாரரூபவிருக்ஷத்தின்க்ஷேத்திரத்தன்மையிராது ; அஃதிலதாகவேகாமவிதையுங்கழியும் ; அதுகழியவே சம்சாரவிருக்ஷமுஞ்சாயும். இவ்வண்ணம் ஆன்மசாக்ஷாத்காரத்தால் நாசத்தையுற்ற அவ்விருக்ஷம் மீண்டுமுண்டாகாது. இப்போதிப்பொருளேயே வெளிப்படையாய் நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே ! புத்திரேஷணை, வித்தேஷணை, லோகேஷணையென்னுமூன்றும் நீங்கியவன் இத்தேகத்தே அத்விதீயப் பிரஹ்மத்தையடைந்து மோக்ஷத்தைப்பெறுவன். தேகாதிகளில் யானென்னும் அபிமான அத்தியாசமும், மனைவிமைந்தாதியரிடத்தே எனதென்னும்அபிமான அத்தியாசமுமேசர்வகாமங் கட்குங்காரணமாம். அவ்விரண்டையும் மரணத்தின்பின்யாவரும் விடுவரெனினும், ஜீவிதகாலத்தேவிட்டவன் இத்தேகத்திருப்பினும் முக்தனேயெனவுணர்க. ஏனெனின், காமம் இருதயத்தின்கண்ணிருத்தலே மதிமான்கள் சம்சாரரூபபந்தமென்பர், அஃதற்றிருத்தலே மோக்ஷமென்பர். அதன்நாசம்பிரஹ்மஞானத்தானன்றியுண்டாகாது; மற்றோ, பிரஹ்மஞானத்தானே அவித்தியாநிவிருத்திவாயிலாய்க் காமத்தின்நாசமுண்டாம். அந்தப் பிரஹ்மஞானத்தைச் சீவிக்குங்காலத்தே யடைவனுயின், இச்சரீரமிருப்பினும் அவன் ஜீவன்முக்தியையடைவன். ஆதலின் ஆன்மசாக்ஷாத்காரமகிமையால் இவ்வறிஞன்சரீராதி யுபாதிகளிருப்பினும் ஜீவன்முக்தி

யையடைவனுயின், அவையொழிந்தபின்னவன்விதேகமுக்தியை யடைவனென்ப தில் யாதுகூறவேண்டியுளது.

சங்கை :—ஹே பகவன்! ஜீவன்முக்தியைக்குறித்து விதேகமுக்தியின்கண் எத்துணைவிசேஷத்தன்மையுளது?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! ஆன்மாவைப்பற்றியமாயைவடிவ அவித்தைக்கிருவகைச்சக்திகளுள. ஒன்று ஆவரணசக்தியாம். மற்றொன்றுவிக்ஷேப சக்தியாம். அவ்விக்ஷேபசக்தியுமிருவகையாம்; ஒன்றேசரீரத்துள்ளும் சரீரசம் பந்திதனபுத்திராதிகளிடத்தும் இராகத்தையுண்டாக்குவதாம்; மற்றொன்றே பிர பஞ்சத்தைத் தோற்றிவைப்பதாம். இவையாவற்றிற்கும் பந்தமெனப்பெயராம். ஆண்டு ஆன்மசாக்ஷாத்காரத்தால் இவ்வறிஞனுக்கு ஆவரணசக்தியும், இராககாரண விக்ஷேபசக்தியும் ஆகியபந்தம் நழுவுமாயின், இவன்ஜீவன்முக்த அவஸ்தையை யடைவன். பிரபஞ்சத்தைத் தோற்றிவைக்கும் விக்ஷேபசக்திநீங்கின் இவன்விதேக முக்தியையடைவன், என்னும் இத்துணையே இரண்டிற்குமுள்ளவிசேஷமாம்.

சங்கை :—ஹே பகவன்! ஆன்மசாக்ஷாத்காரம் அவ்விரண்டையும் நாசஞ் செய்யும்போது, பிரபஞ்சத்தைத்தோற்றிவைக்கும் விக்ஷேபசக்தியை ஏன்நாசஞ் செய்வதில்லை?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! அறிஞன்சரீரத்தையாரம்பித்த பிராரப் தம் அவனுக்குச்சுகதுக்கங்களைக்கொடுக்கும்பொருட்டு, அவ்விக்ஷேப அம்சத்தை நிவிருத்தியாகவிடாது. போகத்தாலப்பிராரப்தம்க்ஷயமாயின், அவன்சரீரமும் அவ் விக்ஷேபாம்சமும் அழியும். அதன்பின்னவன் விதேகமுக்தியையடைவன்.

சங்கை :—ஹே பகவன்! ஜீவித அவஸ்தையின்கண் அவ்விக்ஷேபத்தால் பிர பஞ்சத்தைக் காணுமவன் அஞ்ஞானியைப்போல பந்தத்தை ஏன் அடைவதில்லை?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! அஞ்ஞானி தனதான்மாவின் தாதான் மியசம்பந்தத்தால் ஸ்தூலசூக்ஷ்மகாரண சரீராதிகளைக்காண்பன், ஆன்மாவை யசங்கமெனவறியானுதலின், சம்சாரத்தின்கட் கட்டுப்படுவன். இவ்வறிஞன்தன தான்மாவையசங்கமெனவறிந்து சரீராதிகளைக்காண்பனுதலின் சம்சாரத்தின்கட் கட்டுப்படானுதலினுனே இவன்ஜீவன்முக்தனுவன்.

சங்கை :—ஹே பகவன்! இராகாதியறறஜீவன்முக்தனுக்கு அருந்தலாதி இலௌகிகவியவகாரம் எங்ஙனமுண்டாம்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! பிராரப்தகருமவசத்தால் உன்மத்தனுக் கும், பாலகனுக்கும் அருந்தலாதிகளாவதேபோல் அறிஞனுக்குண்டாம்.

சங்கை :—ஹே பகவன்! அருந்தலாதிகளைச் செய்துகொள்ளு மவ்வறிஞன் அவற்றில் இராகமுடையவனேனுகான்.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! பதார்த்தங்களின் விசேஷரூபஞானமே இராகத்வேஷகாரணமாம், அஃதவ்வறிஞனுக்குண்டாகாது; மற்றே, ஒன்பதுமாத

த்தின்முன் தாயின்கர்பத்திலிருக்கும் பாலகன் தாய்புசித்தநாலுவகை இரசங்களைப் புசிக்கினும்விசேஷமாய் அவற்றையறியான். இவ்வாறு ஆநந்தஸ்வரூப ஆன்மாவைச் சிந்திக்குமறிஞன் அருந்தலாதிகளைச்செய்யினும்விசேஷமாய் அதனையறியானாதலின் அவ்வறிஞனுக்கெப்பொருளின்கண்ணும் இராகத்வேஷமுண்டாகாது. அசோகவனிகாநியாயத்தால் உன்மத்தனதுசித்தம் ஒருவிஷயத்தே யவசியம்பற்றியிருத்தலேபோல, அவ்வறிஞனதுசித்தமும் ஆன்மவிசாரத்தேபற்றியிருக்கும். சீதையைக் களவுசெய்துபோன இராவணன் யாதாவதொருவனத்தே அவ்வம்மையைவைக்கவேண்டியவனன்றோ. ஆனால்,தைவயோகத்தால்அசோகவனத்தின்கண்ணேவைத்தனன். என்னுமிது அசோகவனிகாநியாயமாம். இவ்வாறுஇச்சித்தமும்யாதாவதொரு விஷயத்தின்கண்ணே அவசியம் பற்றுமாதலின், அறிஞன் ஆன்மவிசாரத்தின்கண்ணே அதனைப்பற்றுமாறு செய்விப்பன்

சங்கை :—ஹே பகவன்! ஆநந்தஸ்வரூப ஆன்மாவை எப்போதும் சிந்தித்துக்கொண்டிருக்கும் அறிஞன் ஒருகால்பாகியபதார்த்தத்தை விசேஷமாயறியானயின், அவனுக்குச் சாஸ்திரவிசாராதி சுபகருமத்தில் முயல்வுண்டாவதேபோல பாத்துரோகாதி நிஷித்தகருமத்தில் ஏனுண்டாகவில்லை?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! இவ்வுலகில் யாவன்நெடுங்காலம் சாஸ்திராப்யாசஞ்செய்துளானோ, அங்ஙனமே சுபகருமஞ்செய்துளானோ, அவன்ஒருகால் நோய்முதலிய நிமித்தத்தால் உன்மத்ததசையை யடையினும்பூர்வசுபகரும, அப்யாசவசத்தால் சாஸ்திரநிஷித்தகருமத்தைச்செய்யான்; மற்றோ, அக்காலும் அவன் யதார்த்தமாயேனும் அயதார்த்தமாயேனும் சுபகருமத்தையே செய்வன். பூர்வமப்யசித்தசாஸ்திரத்தையே அடிக்கடியுச்சரிப்பன். அதுபோல, இவ்வறிஞன் ஆன்மசாக்ஷாத்காரத்தின்முன் முமுக்ஷுதசையில்,நெடுநாள்சமதமாதி சாதனங்களையும், நிரந்தரவேதாந்த சாஸ்திரவிசாரத்தையும் செய்துளான். அச்சமஸ்காரவசத்தால் அவ்வறிஞனுக்கு ஜீவன்முக்த அவஸ்தையின்கண்ணே பாத்துரோகாதி நிஷித்த கருமத்தின் முயல்வுண்டாகாது; மற்றோ, பூர்வசமஸ்காரவசத்தால் அவ்வறிஞன் சுபகருமங்களினும் வேதாந்தசாஸ்திரவிசாரத்தின்கண்ணேயும் முயல்வன்.

சங்கை :—ஹே பகவன்! அத்விதீய ஆன்மசாக்ஷாத்காரத்தால் இவ்வித்வானுடையபேததிருஷ்டி நீங்கிவிடுமாதலின், இவன்உபதேசிக்கஅதிகாரியெனவும் அனதிகாரியெனவும் பேததிருஷ்டியை அங்கீகரித்து எங்ஙனமனுக்கிரகம் புரிவன்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! சர்வசாஸ்திரங்களையுமறிந்த மாயாவியானவன் தன்மாயாமகிமையால் நானாவகைரூபங்களைத் தரித்துத் தனது ஏகஅத்விதீயஸ்வரூபத்தை மறந்துவிடுவன்; தனது வடிவங்களைத் தன்னினும் பின்னமாயெண்ணி, அவற்றிற்குச் சாஸ்திரோபதேசஞ்செய்வன். ஆண்டுண்மையாய்ப் பேதமற்றிருப்பினும், அவன்பேதமுடையவனைப்போலத்தோற்றுவன். அதுபோல, அத்விதீய ஆன்மசாக்ஷாத்காரத்தால் சர்வபேத தரிசனமற்றவனாயினும், இவ்வறிஞன் பிராரப்தகரும வயத்தால் பேதத்தைக் காண்பவனாய்ச் சிஷ்யர்க்குபதேசிப்பன்.

சங்கை :—ஹே பகவன்! 'த்விதீயாத்வைபயம்பவதி' பொ-ள். அனைதரூப பேததரிசனத்தால் ஜீவர்கட்குப் பயமுண்டாம். என்னு மிச்சுருதியின்கண்

பேததரிசிக்குப் பயப்பிராப்தி கூறப்பெற்றுளது ; ஆதலின் குருசிஷ்யாதிபேதங் களைக் காணும் அறிஞனுக்கும் பயப்பிராப்தி யுண்டாமன்றோ ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே ! ஸ்தூலசரீர அபிமானத்தைப் பரித்தி யாகஞ்செய்து, கனவையுற்றவன் ஆண்டு நானாவகைஜடசேதனபதார்த்தங்களைக் காண்பன். ஒருகால் அக்கனக்காண்போன் ஆண்டு இவ்வியாவும் கனவடிவாதலின் மித்தையேயாம் எனநிச்சயிப்பின், பின்னவன் அவற்றிற் கட்டுப்படான். சாஸ்திர அப்யாசஜன்னிய சம்ஸ்காரவசததால அக்கனக்காண்போன் அந்த மித்தியா பதார்த்தங்கட்குபதேசிப்பதாதியின்கண்ணும் முயலுவன். அங்ஙனமே இவ்வறி ஞனும் அஞ்ஞானசகிதஸ்தூலசூக்ஷுமசரீராதிரூப சர்வப்பிரபஞ்சத்தையும் பொய் யெனவுணர்ந்து அதன்கண்கட்டுபபடான் ; அதிகாரிகட்குபதேசாதிகளுஞ் செய் வன். கருத்திதுவாம் :—அத்விதீய ஆன்மசாக்ஷாத்காரத்தால் சர்வஜகத்தையும் மித்தையெனவுணர்ந்த வறிஞனை, ஜீவனமாத்திரவுபயோகியாய பேததரிசனம் பந் தப்படுத்தாது ; சத்தியரூபமாய பேததரிசனமே பந்தஹேதுவாம்.

சங்கை :—ஹே பகவன் ! ஜீவன்முக்த அவஸ்தையின்முன்னுள்ள பந்தஅவஸ் தையில் இவ்வறிஞன் சரீரசகிதனுய்த் தோறறுவதேபோல, ஜீவன்முக்த அவஸ் தையிலும் இவ்வறிஞன் அங்ஙனந் தோற்றுவனுதலின், பநதஅவஸ்தையினும் ஜீவன்முக்த அவஸ்தையின்கண் யாதுபேதம் ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே ! இவ்வுலகில் சர்பபம் தனது கஞ்சுகத் தைப்பரித்தியாகஞ் செய்யாதவரை அதனதுபத்திரவாதிகளால் துக்கத்தையடை யும, அதைப்பரித்தியாகஞ் செய்துவிடின் அதனதுபத்திரவாதிகளால் துக்கத்தை யடையாது. தனதுபுற்றின்வாயின்மேலுள்ளகஞ்சுகத்தைத் தினந்தினங் காணி னும் அது அதன்கண்ணுசக்தியுறாது ; அதன்தருமத்தையுந் தன்பாலெண்ணுது. அவ்வாறே இவ்வறிஞன் தேகாபிமானத்தைப பரித்தியாகஞ்செய்யாதவரையுமே அவ்வுடலுபத்திரவங்களால் துக்கத்தையடைவன், உடற்பிறப்பாதியைத் தன்பா லெண்ணுவன். ஆன்மசாக்ஷாதகாரத்தால் அவ்வறிஞன் தேகாதிகளினுந் தன்னைப் பின்னாயறிவனுயின், தேகாதிகளின்ருகச்சேதனுதிகளால்துக்கத்தையடையான். தினந்தோறுந் தனது தேகாதிகளைக்காணினும், அவன் அவற்றின்கண்ணே பற்று தலையடையான், அவற்றின் பிறப்புமுதலியவற்றையும் தன்வடிவத்தே யுடன் படான். கருத்திதுவாம் :—விசாரமற்ற தாமதசர்ப்பாதிகளுங் கஞ்சுகத்தைவிட்ட பின், கஞ்சுக உபத்திரவங்களைத் தமது வடிவத்தின்கண்ணே அங்கீகரியாவாயின், விசாராதிசாதனங்களோடுகூடிய சாத்விக அறிஞன் சரீராதிகளின் அபிமானத்தி யாகத்தின்பின் அவற்றின் பிறப்புமுதலியவற்றைத் தன்வடிவத்தில் அங்கீகரியா னென்பதுபற்றி யாது கூறவேண்டியுளது.

சங்கை :—ஹே பகவன் ! கஞ்சுகத்தைவிட்டபின் பாம்பிற்கததனேடு யாதொரு சம்பந்தமுமின்ருமாதலின், அதுகஞ்சுக உபத்திரவாதிகளால் துக்கத்தையடையா தென்பது சம்பவிக்குமாயினும், ஜீவன்முக்த அவஸ்தையின்கண் அறிஞனுக்குஞ்

சரீராதிகளோடு சம்பந்தங்காணப்படுதலின், அவற்றின் உபத்திரவங்களால் அவனுக்கவசியந் துக்கஅடைவுண்டாமன்றோ ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே ! சாமான்னிய சரீரசம்பந்தந் துக்கஹேதுவன்றாம் ; மற்றோ, யான்சரீரரூபன், இஃதெனது சரீரம், என்னுமயானெனதபிமானரூப சம்பந்தத்தால் சரீரவிசிஷ்டனுக்கே சரீரபூஜனதாடனாதிகளால் சுகதுக்கங்களின் அடைவுண்டாம் ; சரீரஅகமம அபிமானமற்றவனுக்கோ அவற்றால் அவையுண்டாகா. பூதஆவேசத்தோடுகூடிய தேகம பூதபூஜனதாடனங்களால் சுகதுக்கங்களையடையும. அச்சரீரத்திருக்கும் பூதத்திற்கு மனுஷசரீரத்தே யானெனதென்னுமபிமானமின்றாமாதலின், அது, சரீரபூஜனதாடனாதிகளால் சுகதுக்கத்தையடையாது. அதுபோலப புண்ணியபாவரூபப பிராரபதகருமவயத்தால் அறிஞன்சரீரம் பூஜனாதிகளால் சுகத்தையடையும், தாடனாதிகளால் துக்கத்தையடையும். சரீரஅகமம அபிமானமற்றவனும, புண்ணியபாவமறறவனும ஆயவறிஞனுடைய வாஸ்தவவடிவம் சுகதுக்கததையடையாது. இததுணையால் சமாதியவஸ்தையின்கண்ணிருக்கும் அறிஞனிடத்தே சுகதுக்க அனுபவாபாவம் காண்பிக்கப்பட்டது. இப்போது சமாதியினின்றுங்கிளம்பியகாலததே அறிஞனுக்குண்டாஞ் சுகதுக்கானுபவத்தின்கண் அஞ்ஞானியினும விலக்ஷணத்தன்மை நிரூபிக்கப்படும :—ஹே ஜனகராஜாவே ! பாலகனுககுப பிரியவஸ்துவினடைவாற்சுகத்தினனுபவமும், அப்பிரியவஸ்துவினடைவாலதுக்கததினனுபவமுமுண்டாம்; ஆனால், அவை அவன்பால இராகத்துவேஷததை யுண்டாக்கா. அதுபோலச் சமாதியினின்றுங் கிளம்பியகாலத்தே இவ்வறிஞனுக்குப பிரியவஸ்துவினடைவால் சுகானுபவமும், அப்பிரியவஸ்துவினடைவால் துக்கானுபவமுமுண்டாம் ; ஆனால், அவை அவன்பால் அஞ்ஞானியின்பாற்போல இராகத்துவேஷத்தை யுண்டாக்காவாதலின். அஞ்ஞானியின் சுகதுக்கானுபவத்தினும் அறிஞன் சுகதுக்கானுபவத்தே மகாவிஷமத்தன்மையுளது. இப்போது அவ்வறிஞனிடத்தே பராவிசசையதீனசுகதுக்கவடைவை நிரூபிப்பாம் :— ஹே ஜனகராஜாவே ! விருத்தாவஸ்தையோடுகூடி நோய்முதலியவறறால ஆற்றலற்றவனாகியகிழவன் தன்னிச்சையால் சுகதுக்கங்களையடையான் ; மற்றோ, அவன் தனதுமனைவிமைந்தராதியரின் இசசையினதீனமாகவே சுகதுக்கத்தையடைவன். ஆண்டு அவர்கள் அக்கிழவனுக்குபபிரிய பதார்த்தங்களைக் கொடுபபாராயின், அவன் இன்புறுவன் ; அபபிரியபதார்ததங்களைக் கொடுப்பாராயின் துன்புறுவன். அதுபோன்றே அறிஞனும், தன்னிச்சையால் சுகதுக்கத்தை யடையான் ; மற்றோ, அநநியர்களின் இச்சையினதீனமாய்ச் சுகதுக்கத்தையடைவன். ஆண்டு அன்பர் அவனைபபூஜிக்கின்றோ சுகத்தையடைவன். துஷ்டர் தாடனஞ்செய்யினோ துக்கத்தையடைவன். இப்போது அனுன்மபதார்த்தங்களின் பிராப்தியினானும், வியோகத்தினானும அறிஞனுக்கு மகிழ்ச்சிவாட்டமுண்டாகாதென்பது நிரூபிக்கப்படும் :—ஹே ஜனகராஜாவே ! மிகுந்த தனத்தோடும், அன்னத்தோடுங்கூடிய தனிகன் தனதுகேக்ஷத்திரத்திற்கு யாதாவதொரு நிமித்தத்தாற் செல்லின், ஆண்டு அன்னாதிகளின் அபபிராப்தியைக்கண்டு சோகத்தையேனும, மிகுந்த அன்னப்பிராப்தியைக்கண்டு ஹர்ஷத்தையேனும் அடையான் ; பிரஹ்மாநந்தத்தால் திருப்தியையடைந்த இவ்வறிஞனும், தனாதிகளினடைவால்

மகிழ்ச்சியையேனும், அவற்றின் வியோகத்தால் வாட்டத்தையேனும் அடையான். இப்போது அவ்வறிஞனது சித்தம் ஆன்மாவின்கண் தற்பரமாயிருப்பதையும், விய வகாரத்தே உதாசீனமாயிருப்பதையும் நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! ஒரு கிருஹஸ்தன் ஒரு காரியத்தைச்செய்யும்பொருட்டு ஒருவேலைக்காரனை வைப் பின், அவனோடு அவன் இவ்வாறு நிர்ணயஞ்செய்து கொள்வன்:—காலைமுதல் சாயந்திரம்வரை இக்காரியத்தை நீ செய்யின், யானித்துணைக் கூலிகொடுப்பேன் என. அவனோ, தனது கூலியை நினைந்துநினைந்து சாயங்காலத்தை நோக்கிக் கொண்டு அதன்கண்ணே முயலுவன்; ஆனால், அக்காரியத்தே அவனுக்கு இராக மின்மையின் கிருஹஸ்தனைப்போல மிகுந்தகாரியத்தையேனும், குறைந்தகாரி யத்தையேனும் செய்யான். அதுபோல, இவ்வறிஞனும், ஆநந்தஸ்வரூப ஆன்மா வைச் சிந்திப்பவனும், பிராரப்தசமாபதியை நோக்குபவனும் அருந்தலாதி வியவ காரங்களைச் செய்வன்; ஆனால, அவற்றின்கண் அவனுக்கு இராகமின்றாமாதலின், அவ்வறிஞன் அஞ்ஞானிகளைப்போல அவற்றை விருத்திசெய்யான். இப்போது பிராரப்தகருமவசத்தால அவ்வறிஞனுடைய கமன ஆகமனாதிகள் நிரூபிக்கப்படு கின்றன:—ஹே ஜனகராஜாவே! சூக்கிரசந்திரட்டுஞ் சாதனமாய காஷ்டயந்திரம் சூத்திரக்கயிற்றாற் சுழலுவதேபோல, அறிஞனது சரீரமும் பிராரப்த கருமவசத் தால் தீர்த்தாதிகளின்கண் கமன கமனங்களைச் செய்யும். இப்போது நீவர்களின் பாவனையினனுசாரமாய் அறிஞனது சரீரத்தின்கண் சுக துக்க காரணத்தன்மை நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! ஒருவன்மகிழ்வுறுமாறு தோலாலேனும் மரத்தாலேனும் ஓர்ஆனைபைச்செய்தனன், அது பாவனையின் அனுசாரமாய்ச் சிலர்க் குச் சுகத்தையும், சிலபாலகாதிகட்குத் துக்கத்தையும் கொடுக்கும்; அதுபோல, இவ்வறிஞன் சரீரமும், பாவனைப்படி சுகதுக்கங்களைக்கொடுக்கும். யாவன் அவன் சரீரத்தே பிரீதியைச்செய்வனோ, அவனுக்குத் தனது புண்ணியத்தைக் கொடுத் துச் சுகத்தையடைவிப்பன். துவேஷஞ்செய்பவனுக்கோ தன்பாவத்தைக் கொடுத் துத் துக்கத்தை யடைவிப்பன்.

ஆ-சு. "தஸ்ய புத்ராதாயமுபயாந்தி ஸுஹ்ருத꞉ ।
ஸாது க்ருத்யம் த்விஷந்த꞉ பாபக்ருத்யம்" ॥

(பொ-ள்.) அவ்வறிஞனது தனாதிகளைப் புத்திராதியர் கொண்டுசெல்வர், அவனது புண்ணியத்தை அன்பர் கவர்வர், அவனது பாவத்தைத் துவேஷியர் கொள்வர். இப்போது மனோவியாபாரமின்றியே அறிஞனது சரீரப்பிரவிருத்தி நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! வில்லினின்றும் அம்பைவிடின், அது பூமியின்கண்ணே வீழாதவரை பூர்வவேகவசத்தால் ஆகாசத்திற்சுழலும்; அது போல, இவ்வறிஞனது தேகவீழ்ச்சி யுண்டாகாதவரை அவன்சரீரம் பிராரப்த கருமவேகத்தால் கமனாகமனத்தைச்செய்யும். இப்போது பிரஹ்மநிஷ்டையினா வேசத்தால் அறிஞனிடத்தே சர்வவியவகாரங்களின் மறதிநிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! எவனதுதேகத்தே பூதப்பிரவேசமுண்டாயதோ அவன் அக்கால் நானாவகைவியவகாரங்களைச்செய்வானாயினும்விசேஷமாய் அவற்றையறியான்; அது போலப் பிரஹ்மநிஷ்டையின் ஆவேசத்தின்பின் இவ்வறிஞன்நானாவகைவியவகா

ரங்களைச்செய்வானுயினும் விசேஷமாய் அவற்றையறியான். இவ்வகையவஸ்தையை அவ்வறிஞன் அடைந்தபோது, ஸ்தூல சூக்ஷ்ம காரணசரீரங்களிருந்தபோதினும் அவையற்றவனுவன், அவற்றின் தருமங்களுமற்றவனுவன். ஆதலின், சுருதிபகவதி அவ்வறிஞனை அசரீரன் எனக்கூறினள். சரீராதிகள்நாசமுறினும் அவ்வறிஞனது வாஸ்தவஸ்வரூபம் நாசமுறாதாதலின், சுருதிபகவதி அவனை அமிருதமெனக்கூறினள். அவ்வறிஞன் உண்மையாய்ப் பிராண அபானுதிகளற்றவனுயினும், தனது சமீபத்தன்மையால் அவற்றைத் தத்தமதுவியாபாரத்தே ஏவுவனுதலின், சுருதிபகவதி அவனைப்பிராணனெனக்கூறினள். அவ்வறிஞன் சஜாதீய விஜாதீய சுவகத பேதங்களற்றவனுதலின் சுருதிபகவதி அவனைப்பிரஹ்மம் என்றனள். அவ்வறிஞன் ஸ்வப்பிரகாசசைதன்யரூபனுதலின், சுருதிபகவதி அவனைத்தேஜஸ் எனக்கூறினள். ஹே குழந்தாய்! இவ்வண்ணம்யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவிற்குப்பிரஹ்மவித்தையை உபதேசித்தபோது, அவ்வரசர் அந்தப்பிரஹ்மவித்தையையறிந்தனர். ஆனல், அந்தப்பிரஹ்மவித்தையை யடையும்சாதனங்களை யறியவில்லையாதலின், அவர் தம்மனதில் இவ்வகைவிசாரத்தைச்செய்தனர்:—சாதனமற்றபுருஷனுடைய மனம்சுத்தமாகாது, அசுத்தமனத்தையுடையவனுக்கு வேதாந்த சிரவணத்தாலும் யதார்த்தஞானமுண்டாகாதாதலின், மனத்தைத்தூய்தாக்குஞ் சாதனத்தை யவசியங்கேட்கவேண்டும் எனக்கருதி அவ்வரசர்முன்போல மீண்டும் யாஞ்ஞவற்கிய முனிவரைநோக்கி இங்ஙனங்கூறினர்:—ஹே யாஞ்ஞவற்கிய மகாமுனிவரே! தங்களுடையஉபதேசத்தால் யான்வித்தையையடைந்தனனுதலின், அதற்குக் குருதக்ஷிணையாக ஆயிரங்கோக்களைத் தங்களுக்குச் சமர்ப்பிக்கின்றேன், அவற்றைத் தாங்கள் அங்கீகரிக்கவேண்டும். ஹே குழந்தாய்! இவ்வண்ணம் ஜனகராஜாவானவர் முனிவரைப்பார்த்துக்கூறியபோது, அம்முனிவர் அவ்வரசர்கருத்தையறிந்து நானுவகைச்சாதனங்களோடுகூடிய பிரஹ்மவித்தையை உபதேசிக்கத்தொடங்கினுர்:—ஹே ஜனகராஜாவே! அநேகமபிறப்புகளின் புண்ணியமகிமையால் முடிபாயபிறப்பில்உண்டாம் ஆன்மசாக்ஷாத்காரமே, பிரஹ்மபாவப்பிராப்திவடிவ மோக்ஷமார்க்கமாம். அம்மார்க்கம்அத்தியந்தம தர்க்கத்திற்குசலராயவருக்கும் அறியத்தகாததாமாதலின், சுருதிபகவதி அதனைச் 'சூக்ஷ்மமாம்' எனக்கூறினள். அது பரிபூரணநித்தியப்பிரஹ்மப்பிராப்தியையுண்டாக்குமாதலின், சுருதிபகவதி அதனை 'விததபுராணம்' எனக்கூறினள். அத்தகைய ஆன்மசாக்ஷாத்காரரூபமார்க்கத்தைச் சர்வஞ்ஞயயானே அறிந்துளேன், என்னிற்பின்னமாய அற்பஞ்ஞப் பிராணிகள் அம்மார்க்கத்தையறியவல்லாரல்லர்.

சங்கை:—ஹே பகவன்! தங்களைப்பார்க்கிலும் வேறெப்பிராணியும் அந்த ஞானரூபமார்க்கத்தையறியமுடியாதாயின், என்னைநிகர்த்தோர் அதனையடைய எண்ணுவதில் யாதுபயன்?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! யானே அம்மார்க்கத்தையறிந்துளேன் எனக்கூறியதின் கருத்திதுவாம்:—யான்பிரஹ்மசரியாதி சாதனங்களாலும் குருவின்கிருபையாலும் ஆன்மஞானரூபமார்க்கத்தையடைந்தனன், அம்மார்க்கவாயிலாய் மோக்ஷத்தையடைந்துளேன்; அதுபோல, வேறதிகாரியும் பிரஹ்மசரியாதி சாதனங்களாலும், குருவின்கிருபையாலும் அம்மார்க்கத்தையடைக. அதனல்,

மோக்ஷமுறுக, கூறியசாதனங்களற்ற பகிர்முகன் அம்மார்க்கத்தையறியான் என்ப தாம். உப்புக்கட்டியானது கடலையடைந்து அதன்வடிவமாவதேபோல, அறிஞன் ஞானமார்க்கவாயிலாய் ஆநந்தஸ்வரூப ஆன்மாவையடைந்து அவ்வடிவமாகவே நிலைபெறுவன். அவ்வகைநிலைபெற்று அவன் ஜனனமரணாதிதுக்கங்களும், இராகத்துவேஷங்களும், அஞ்ஞானமும் அற்றவனாவன்; தேகாதி உபாதிகளினின்றும் தன்னைப்பின்னமாயெண்ணி அவ்வறிஞன் தேகாதி சர்வதருமங்களுமற்றவனாவனாதலின், காரியசகித அஞ்ஞானத்தின்நிவிருத்தியும், பிரஹ்மபாவத்தின் பிராப்தியுமாயமோக்ஷத்தை அடைவிப்பது ஆன்மஞானமார்க்கமேயாம்.

ஆ-சு. "நாநத்ஃ வஂயாவிஷூதெ அயநாய"

(பொ-ள்.) மோக்ஷ அடைவின்பொருட்டு ஞானத்தினும் வேறுயொருமார்க்கமுமின்றாம்; மற்றோ, ஆன்மஞானமே அதன்மார்க்கமாம். இப்போது மணிப்பிரபையின்கண்மணிமதிசெய்வதேபோலச் சிலவுபாசகர் சுழும்னையெனப் பெயரிய நாடியையே மோக்ஷமார்க்கமெனக்கூறுவர், அவர்மதம் நிரூபிக்கப்படும்:— ஹே ஜனகராஜாவே! சிலவுபாசகா கூறுவதாவது, இருதயகமலத்தின்கண் இராநின்ற சூரியபகவானுடனும், பாகிய ஆகாசத்தின்கண் இராநின்ற சூரியபகவானுடனுஞ் சம்பந்தமுற்ற சுழும்னைநாடிமார்க்கத்தால் உபாசகன் பிரஹ்மலோகத்தையடையுங்கால் பிரஹ்மாவோடு மோக்ஷத்தையடைவனாதலின், ஆன்மசாக்ஷாத்காரமார்க்கத்தால் அதிகாரி மோக்ஷத்தையடைவதேபோலச் சுழும்னைநாடிமார்க்கத்தானும் இவ்வுபாசகன் மோக்ஷத்தையடைவன். ஆகையால், இதுவும் மோக்ஷ அடைவின் மார்க்கமாம். அந்தப் பிரஹ்மலோகத்தின் மார்க்கம், சூரியனினின்றுங் கிளம்பிய கிரணத்தானும், இருதயகமலத்தினின்றுங் கிளம்பிய நாடிகளானும் ஆக்கப்பட்டதாம். நானுவகையன்னரசங்களால் அந்நாடிகள் நிறையப்பெற்றனவாமாதலின், உபாசகன் பிரஹ்மலோகமார்க்கத்தை வெண்மை, கருமை, பொன்மை, பசுமை, செம்மையென்பனவாதி யநேகவர்ணமுடையனவென வெண்ணியுளான். அத்தகைய விசித்திர மார்க்கத்தை அவ்வுபாசகனே தனது சாக்ஷிரூபப் பிரத்தியக்ஷத்தாலறிவன்; வேறெவனுமறியான். சகுணப்பிரஹ்மத்தின் அகங்கிரக உபாசனைசெய்பவன் அந்நாடிமார்க்கவாயிலாய்ப பிரஹ்மலோகத்தையடைவன். முற்கூறிய பஞ்சாக்கினிவித்தையையறியும் அக்கினிஹோத்திரியாய கிருஹஸ்தனும், அம்மார்க்கமாய்ப் பிரஹ்மலோகத்தையடைவன். கிருஹஸ்தனினும் வேறாய ஊர்த்வரேதசையுடைய பிரஹ்மசாரி, வானப்பிரஸ்தன், சந்யாசியென்னும மூவிதத்த ஆசிரமத்தரும் தத்தமாசிரமத்திற்குரிய புண்ணியகருமத்தைச்செய்து அம்மார்க்கவாயிலாய்ப் பிரஹ்மலோகத்தையடைவர். ஆங்குச்சென்றவ்வுபாசகன் பிரஹ்மாவோடு மோக்ஷத்தைஅடைவன். ஆதலின், சுழும்னைநாடியேமோக்ஷமார்க்கமாம். இங்ஙனஞ் சிலரிதனையே மோக்ஷமார்க்கமெனக்கூறுவர். இப்போது ஆன்மஞானரூப மார்க்கத்தின்கண் முமுக்ஷுக்கட்குச் சிரத்தையுண்டாக்கும்பொருட்டு, அதனினும் வேறாய எல்லாமார்க்கங்களின் நிந்தை நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! சுவர்க்கத்தையடையும்பொருட்டு யாகதானாதி கருமங்களைச்செய்யும் சகாமியானவன் தூமாதிரூப தக்ஷிணமார்க்கத்தால் ஸ்வர்க்கத்தையடைவன். ஆங்

நடைந்தக்கருமி தேகாபிமானரூப அந்தந்தமத்தையேயடைவன். அவ்வந்தந்தமம் மனைவிமைந்தராதியரிடத்தே பற்றுதல்வாயிலாய் அவனுடைய விசாரநேத்திரத்தை மறைக்கும். இத்துணையால்இப்பொருள் உணர்த்தப்பெற்றது:—யாகதானாதி புண்ணியகருமங்களைச்செய்து, தக்ஷிணமார்க்கத்தின்கண்ணே கமனஞ்செய்யுங்கருமியும் அந்தந்தமத்தையடையின், கேவலம் பாவகருமத்தால கீடபதங்காதி பாவப் பிராப்திவடிவ மூன்றாவது மார்க்கத்தின்கண்ணே கமனஞ்செய்யும் பாவாத்மாக்கள் அந்தந்தமத்தையடைவரென்பதில் யாதுகூறவேண்டியுளது. இப்போது பிரஹ்மலோகமார்க்க நிந்தை நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! பிரஹ்மலோகத்தையடையும்பொருட்டு, பிரஹ்மாதி தேவதைகளின் உபாசனையைச் செய்பவன் கருமிபுருஷனைப்பார்க்கினும் அதிக அந்தந்தமத்தையடைவன்; ஏனெனின், பிரஹ்மாதிதேவதைகளை உபாசித்து உபாசகனானவன் பிரஹ்மலோகத்திற்குச் செல்லின், ஆண்டு அவனுக்குப் பரமைஸ்வர்யப்பிராப்தியுண்டாம். சுவர்க்கத்தில் கருமிகட்கு மனைவிமைந்தராதிபதார்த்தங்களிலிருக்கும் பற்றுதலைப்பார்க்கினும் கோடிமடங்கு அதிகப்பற்றுதல் பிரஹ்மலோகத்தே உபாசகனுக்கு அவற்றின்கண் உண்டாம். ஆகையால், பிரஹ்மலோகப்பிராப்தியின்மார்க்கமும் அவனுக்குத் தேகாபிமானரூப அந்தந்தமத்தையேயடைவிக்கும். இங்ஙனம் மனைவிமைந்தராதியரிடத்தே ஆசக்திபூண்ட அக்கருமியும் உபாசகனும் அவ்வுலகங்களில் கிஞ்சின்மாத்திரசுகத்தைப்போகித்துப் புண்ணியகருமமழிந்தபின்னர் மீண்டும் ஜன்மமரணதுக்கத்தையடைவர். ஆதலினிப்பொருள் தோன்றியதுபெறும்:—ஞானரக்ஷாநகமற்ற கருமியும் உபாசகனுமமிருத்தியுமையடைந்து, அக்கரும உபாசனைகளின் பலத்தையடைவர், அது அதிசயத்தன்மைத் தோஷத்தையுடையதாம், நாசமுடையதாமாதலின் அப்பலஞ் சுகமற்றதாம், தேகாபிமானரூப அந்தந்தமத்தால் மறைபட்டதாம். இத்தகையபலத்தைத்தான் அக்கருமியுபாசகர் அடைவர். இம்மனுஷலோகத்தேயிருக்குஞ் சாத்விக ராஜச தாமச ஜீவர்களியாவரும் மரணத்தின்பின்னர் அம்மார்க்கங்களால்பரலோகஞ்செல்வர். அவற்றுள், ஒன்றே உபாசகர்க்குப் பிரஹ்மலோகத்தை யடைவிக்கும் தேவயானமார்க்கமாம். சாஸ்திரத்தின்கண்ணிது 'அர்ச்சிஷ்' எனக்கூறப்பெற்றுளது. மற்றொன்றே, கருமிகட்குச் சுவர்க்கத்தை யடைவிக்கும் பிதுர்யானமார்க்கமாம் சாஸ்திரத்தின்கண்ணிது 'தூமமார்க்கம்' எனக்கூறப்பெற்றுளது. மற்றொன்றே, கீடபதங்காதி சரீரங்களையும் நரகத்தையுமடைவிக்கும் மூன்றாவதுஸ்தானமெனப்பெயரிய மார்க்கமாம். இம்மூன்றுமார்க்கங்களும் முற்கூறியமுறையே துக்கரூப பலத்தையேயடைவிக்குமாயினும் அம்மூன்றினும் பரஸ்பரம் இத்துணைவிலக்ஷணத்தன்மையுண்டு. அவற்றுள், கீடபதங்காதிசரீரங்களை யடைவிப்பதும், நரகத்தையடைவிப்பதும் மூன்றாவது ஸ்தானமெனப்பெயரிய மார்க்கமாம். அம்மூன்றாவது மார்க்கத்திற்குப் பிரஹ்மஞானரூப நான்காவதுமார்க்கத்தோடு பரம்பரையானுஞ் சம்பந்தமின்றாம். இவ்வார்த்தை ஸ்ரீ பகவற்கீதையில் ஸ்ரீ கிருஷ்ணபகவானும் அர்ச்சுனனைநோக்கித் திருவாய் மலர்ந்தருளியுள்ளார்:—

"தாநஹம்த்விஷத꞉ க்ரூராந் ஸம்ஸாரேஷு நராத⁴மாந் ।
க்ஷிபாம்யஜஸ்ரமஶுபா⁴நாஸுரீஷ்வேவ யோநிஷு" ॥

"மற்றவா தம்மை யிந்த மானுட ராஞே ரியார்க்குங்
கோற்றவ கீழா ஞேரைக் கோடுமையா லரவோப் பாரை
யற்றமி லிம்மை சேரு மாசுர யோனி யாய
புற்றவை தோறு மியானே புகப்புக விழுத்து கின்றேன்."

(பொ-ள்.) துவேஷாதிபாவ கருமங்களைச்செய்யும அதமர்களை ஸ்ரீ கிருஷ்ண பகவானுகியயானே இச்சம்சாரத்தின்கணணே கிடபதங்காதி தாமதயோனிகளை யடையுமாறு செய்விப்பேன் என்னும ஸ்ரீ பகவானது திருவாய்மொழியினுனும், மூன்ருவதுஸ்தானமார்க்கததிறகு ஆன்மசாக்ஷாதகாரவடிவ நான்காவதுமார்க்கத் தோடு சம்பநதஞசம்பவியாது. உபாசகாகட்குரிய தேவயானமாாககமும், கருமி கட்குரிய பிதிரியாணமார்க்கமும ஒருகாற சித்தத்தூய்மைவாயிலாய்ப பாக்கியவா னுகது ஆன்மஞானத்தையுமடைவிக்குமாதலின, அவ்விரண்டிறகுஞ சித்தத்தூய் மைவாயிலாய் ஆன்மஞானரூப நான்காவதுமார்க்கததின்கண் சம்பநதங் கூடும். ஜனனமரணுதி சாவதுக்கஙகளுமறற அநநானகாவதுமாாக்கததே சஞ்சரிக்க இச் சிபபவன் அமமூன்றுமாாககஙகளையுமபரிததியாகஞசெய்து, கேவலம ஆன்மஞான ரூபமாாககததின்கண்ணே சஞசரிககுக. இததுணையால நான்காவதுமார்க்கத்தின் மேன்மை நிரூபிககபபட்டது. இபபோது அவ்வான்மஞானததால் அடையததகக பலம நிரூபிககபபடும:—ஹே ஜனகராஜாவே! இவவாநநதஸ்வரூபஆன்மாத்தேகா திகளினின்றுமவேறுமாதலின், சுகதுககமுதலாயுளள சரீரதருமஙகள்யாவும் அச ங்கஆன்மாவைத தீணடமாட்டா. இததகைய ஆநநதஸ்வரூப ஆன்மாத்தன்னுண் மைவடிவ அஞ்ஞானததால தேகததோடு தாதாதமிய அததியாசததையடையின், தனது சர்வான்மபாவததைமறநது மூடத்தன்மையையடையும். சுகதுக்காதி சம் சாரதருமங்களால தபிககுமிசசரீரதாதாதமியததால் ஆனமாவுநதபிக்கும; எனக் குச சுகமுண்டாகுகவென்னுமிச்சையால பரமதுககததையடையும். எல்லா ஜீவர்க ளின் ஹிருதயதேசத்திருப்பதும் சாவசுகசமுததிரமுமாய சுயஞ்ஜோதியாய பர மான்மா என்னினும்பினனமன்றும; மறறே, யானே பரமான்மரூபன்என ஆன்மா வையறிபவன் சரீராதிகளினினறுந தன்னைப பினனமாயெண்ணுவன். சர்வவிஷய ஜன்னிய சுகஇச்சையறறவனுவன. ஆதலின், அவவறிஞன் விஷயஜன்னிய சுகஇச் சையானும சரீரசுகதுககாதிதருமஙகளானும தபியான். இபபோது இபபொருளை திருஷ்டாந்தத்தால நிரூபிககபபடும:—ஹே ஜனகராஜாவே! ஆன்மசாக்ஷாத்கார முண்டானவனுக்குக காரணஅவித்தை நீஙகியேபோம. அது நீங்கியபின் அவ்வறி ஞனுக்குச சரீராதிகளின் தாதாதமிய அததியாசரூப காரியஅவிததைநீங்கிவிடும். அதன்பின்னா அவ்வறிஞனைச சரீரசுகதுககாதிதருமஙகள தபிக்கமாட்டா. இரும் பின் பிண்டத்திறகு அக்கினியோடு தாதாதமியமிருக்குமவரை அது பிரகாசிக்கும் தபிக்கும். தாதாதமியமிலலாககால அது பிரகாசியாது தபியாது. அதுபோல, இவ்வறிஞனுக்குச சரீரத்தோடு தாதாதமியாத்தியாசமுள்ளவரை இவன் சரீரத் தின் சுகதுக்காதிதருமஙகளாறறபிபபன். அவவததியாசமழிநதுவிடின் தபியான். உலகினுந் தாதாத்மியஅத்தியாசமே ஜீவர்களின் துக்ககாரணமெனக் கண்டோம்; ஏனெனின், தன் மனைவிமைந்தாதியரைத் தனது ஆன்மவடிவமாயெண்ணுபவன்

அவர்களின் துக்கத்தாற் பரமதுக்கத்தையடைவன். அவர்களின் அகமம அபிமானமற்றவன் உதாசீனனையொப்ப அவர்களின் துக்கத்தால் துக்கத்தையடையான். அவ்வாறே இவ்வறிஞனும சரீரத்தின்கண்ணே அகமம அபிமானஞ்செய்யுங்கால் அதன் துக்கங்களால் துக்கத்தையடைவன்; செய்யாதபோது அடையான். ஆதலின், ஆநந்தஸ்வரூப ஆன்மாவின் சாக்ஷாத்காரமே காரியசகித அஞ்ஞான நிவிருத்திவாயிலாய்ப் பரமாநந்தப்பிராப்தியையும சர்வதுக்கநிவிருத்தியையும் உண்டாக்கும். இத்துணையால் சர்வதுக்கங்களின் நிவிருத்திவடிவ ஆன்மஞானபலம் நிரூபிக்கப்பட்டது:—இப்போது அவ்வான்மசாக்ஷாத்காரத்தின் ஜகத்கர்த்திருத்துவரூபபலமும், சாவான்மபாவத்தின் பிராப்திரூபபலமும் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! இருதயகமலத்தின்கண்ணிருக்கும் ஸ்வயஞ்ஜோதியாய ஆநநதஸ்வரூப ஆன்மா யாண்டும நிறைநது புத்தியாதி சங்காதங்களினின்றும் விலக்ஷணமாம். அத்தகைய ஆநநதஸ்வரூப அத்விதீய ஆன்மாவைக்குருசாஸ்திரோபதேசவாயிலாய் நிச்சயித்தறிந்த அறிஞனே இவ்வெல்லாவிசுவத்திற்குங் கருத்தாவாம். இரஜ்ஜுரூப அதிஷ்டானத்தின்கண்ணே கறபிதமாயசர்ப்பதண்டமாலை ஜலதாரைமுதலியவற்றிறகு ஓர இரஜ்ஜுவே அதிஷ்டானமாம். அதுபோல, மனுஷ்யலோகமுதல் பிரஹ்மலோகபரியந்தமுள்ள சுகதுக்கங்களைக்கொடுக்கும் எல்லாவுலகங்கட்கும் அவவறிஞனே யதிஷ்டானனுவன். கற்பித சர்ப்பதண்டாதிகள் இரஜ்ஜுரூப அதிஷ்டானததினும்வேறன்றும; மற்றே, அதிஷ்டானமேயாம். அதுபோல முற்கூறியமும்மார்க்கங்களாலடைய யோககியமாய பிரஹ்மலோகாதிகள் அத்தியாத்மம், அதிதைவம், அதிபூதம் என்பனமுதலவாயுள்ள ஸ்தூலசூக்ஷ்ம சம்பூரணஜகத்தும் அவ்வறிஞனினும்வேறன்றும். மற்றே, அவனதான்மரூபமேயாம். இத்துணையால் ஆன்மஞானபலம் நிரூபிக்கபபட்டது. இப்போதுஅவ்வான்மஞானமிலதாகச் சீவர்கட்கு மகாஹானியினடைவு நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! தேவயானம, பிதிர்யாணம் மூன்றுவதுஸ்தானம் என்னுமமூன்றுமார்க்கங்களும் சம்சாரரூபகோரவனத்தே இஜ்ஜீவனை யடைவிப்பனவாமாதலின், அவற்றைப் பரித்தியாகஞ்செய்து மிருத்தியுவின் எதிர்முகமாகாதவரை இம்முமுக்ஷுக்கள் விரைவாகவே ஆன்மஞானரூப நான்காவது மார்க்கத்தின்கண்ணேயுறுவர். அம்மார்க்கத்தையுற்று அதிகாரிகளாயயாம் ஜீவித அவஸ்தையின்கண்ணே பிரஹ்மபாவத்தின் அடைவுவடிவமோக்ஷத்தை யடைவோம். ஆன்ம சாக்ஷாத்காரத்தை யடையும்பொருட்டு அதிகாரிகளாயயாம் வேதாந்த சாஸ்திரசிரவணமனன நிதித்தியாசனங்களை முயன்றுசம்பாதிக்கவேண்டும்; அதனுல், நாம்சர்வான்மபாவத்தை யடைவோம். இப்பிராஹ்மணாதிசரீரங்களில் நமக்கொருகால் ஆன்மசாக்ஷாத்கார அடைவுண்டாகாதாயின், மகாஹானியுண்டாமாதலின் மின்னலைப்போலச் சஞ்சலமும் அத்தியந்தந்துர்லபமும் ஆகியமனுஷசரீரத்தையடைந்து, மீண்டுஞ்ஜனனமரணாதிதுக்கங்களின் பிராப்தியாகாத உபாயத்தையாமடையவேண்டும்; அத்தகைய உபாயம் ஆன்மஞானமன்றிவேறென்றுமின்றும். ஆதலின், ஜன்மமரணாதிதுக்க நிவிருத்தியின்பொருட்டு ஆன்மஞானத்தையே யாம் சம்பாதிக்கவேண்டும். இப்போது மனுஷசரீரதுர்லபத்தன்மை நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! கோடைகாலத்து மத்தியான சூரியனுல் தபிப்பிக்கப்பட்ட புழுதியில் ஒருவன்தை

யினின்றும் நழுவியநெய்யானது புத்திமானாலும்மீண்டும் அடையப்படமாட்டாது. அதுபோல, இம்மனுஷசரீரம் நஷ்டமானபின்னர் நமக்கித்தகையதும்மீண்டுங்கிடைப்பது அத்தியந்தந்துர்லபமாம். இம்மனுஷசரீரத்தையொழித்து வேறு எத்துணை உயர்வுதாழ்வாய சரீரங்களேனும்யாதொரு துர்லபமுமின்றும்; மற்றோ, சர்வ சரீரங்களும் சுலபமேயாம், மனுஷசரீரமொன்றே துர்லபமாம். இம்மனுஷசரீரத்தின் கண்ணும் பாரதகண்டத்துண்டாந்தன்மை சம்பவித்தல் அத்தியந்தந்துர்லபமாம். அதனினும் பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசியசரீரப்பிராப்தியாதல் அத்தியந்தந்துர்லபமாம். ஆதலின்பாரதகண்டத்தே மனுஷ்யசரீர அடைவுவடிவ இலாபத்தினும் மேலாய்வேறொரு அதிகலாபமுமின்றும். எம்மனைவியாதியரின்மோகத்தால் நாம் இம்மனுஷசரீரத்தை வாளாபோக்குகின்றேமோ அவர்துர்லபால்லர்; மற்றோ, சுவர்க்கத்தின்கண்ணும் நரகத்திலும எண்பத்துநான்குலக்ஷம் சரீரங்களிலும்நாமடையுங்கால், அச் சமானஜாதியையுடைய மனைவியாதியர் புண்ணியபாவகருமவசத்தால் எத்தனமின்றியே கிடைப்பர்; ஆதலின், அவர் கிடையாதவரல்லர். இம்மனுஷ சரீரமோ, ஒருதரம் கிடைப்பின் மீண்டுங்கிடைப்பது மிகவும் கடினமாம்; ஆகையால், இதுவே யாவற்றினும துர்லபமாம். இப்போது இம்மனுஷசரீரத்தே சர்வ லோகங்களின் பிராபதிசாதனத்தன்மையைக்காண்பித்து அதன்துர்லபத்தன்மை சித்தஞ்செய்யபபடும். ஹே ஜனகராஜாவே! பரமேஶ்வரர் இப்பாரத கண்டத்தை மனுஷர்கள் கருமஞ்செய்யும்பொருட்டுச் செய்தனர். இதன்கண் ஜீவர்கள் மனுஷ சரீரத்தையடைந்து, ஒருகால் புண்ணியகருமததைச்செய்யின், சுவர்க்காதி உத்தமலோகங்களையடைவர். பாவகருமத்தைசசெய்யின் நரகாதிகளையடைவர். ஆதலின், பாரதகண்டத்திலுள்ள மனுஷசரீரங்களே புண்ணியபாவகரும உற்பத்தி வாயிலாய் ஜீவர்கட்குச சர்வலோகங்களையும் அடைவிக்கும். ஈண்டுப் புண்ணிய கருமத்தைச்செய்தே இஜ்ஜீவன்பாதாளலோகத்தையடைவன். அவ்வுலகம் சுவர்க்கலோகத்தினும் அதிகசோபையுடையதாம். அதலம், விதலம, சுதலம், தலாதலம், மஹாதலம், ரசாதலம், பாதாளம என்னும் ஏழுவடிவமாய் விளங்கும்; நானாவகையாய போகசாதனங்களால் நிறைந்திருக்கும். நாகர்களின் சுந்தர கன்னியர்கள் நானாவகையாய் நடனம்புரிவர். அவர் அரிசந்தனாதிகளின் பூச்சோடு கூடிப்பருத்து உயர்ந்த ஸ்தன்னியங்களையுடையவர். நானாவகை மணிகளின் காந்தியால் சோபிக்கபபட்ட வதனமதியை யுடையவர். சித்திரத்தில் தீட்டிய மூர்த்தம் போன்ற அங்கத்தையுடையவர். யௌவன அவஸ்தையையுடைய புருஷர்களின் தைரியரூபதனத்தைக்கவர்பவர். அவர்க்குச் சமானமாய்ச சுவர்க்கத்தின்கண்ணும் எம்மங்கையருமில்லர். அவர்களின்சிரசில் சூரியனைப்போலப் பிரகாசமுடையமணிகள்விளங்கும. வில்வப்பழத்திற்குச் சமானமாய முத்துக் குஞ்சங்களோடுகூடிய நானாவகை ஆரங்கள் அவர்கள்மேனியில்விளங்கும். இத்தகைய சர்வகுணங்களோடுகூடிய நாகர்களின் சுந்தரகன்னியரிருக்கும் பாதாளலோகத்தேயமர்ந்த ஜீவர்களின் சம்பூரண புண்ணியகருமம் ஒருங்குகூடிப் பாதாள வடிவையடைந்திருக்கின்றது. சூரியபகவானைக் காணாதவர் அசூரியம்பஶ்யரெனப் படுவர். இச்சப்தத்தின் பொருளைப் பாணினிரிஷியானவர் அரசமங்கையர்படல்

பொருத்தி யுள்ளாராயினும், அவர்கட்கும் ஒருகால் சூரியதரிசன முண்டாகிவிடு மாதலின், இச்சப்தம் அவர்களை முக்கியவிருத்தியாலுணர்த்தாது; மற்றோ, கௌணவிருத்தியாலுணர்த்தும். பாதாளத்தின்கண் இருக்கும் ஜீவர்கட்கு ஒருகாலும் சூரியதரிசனமுண்டாகமாட்டாது; மற்றோ, மணிகளின் பிரகாசத்தால் அவர்களின் கமனுகமனுதி விவகாரமுண்டாம். ஆதலின், இச்சப்தம் முக்கியவிருத்தியால் பாதாளவாசிகளையே யுணர்த்தும். அவ்விடத்தே நானுவகையாய ஐஶ்வரியங்களைப் போகித்துக்கொண்டு அசுரரும், நாகருமவசிப்பர். இக்காரணத்தானே அந்நாகரைச் சாஸ்திரமுணர்ந்தோர் 'போகி' என்பர். இப்போது அந்நாகர் அசுரர்களின் பிரசித்த நாமங்கள் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! ஸ்ரீ மகாதேவருடைய கண்டபூஷணமாய வாசுகியென்னுமநாகமும பாதாளலோகத்திலேயேயிருக்கும். ஸ்ரீ விஷ்ணு பகவானுடைய சயனமாகிய சேஷநாகமும் ஆண்டேயிருக்கும். சூரியபகவானுடைய ரதத்திலிருக்கும் தக்ஷக நாகமும் ஆண்டேயிருக்கும். அதன்விஷத்தை நிவிருத்திக்க எவவுலகத்திலும் உபாயமின்றும். நளராஜாவின் மித்திரனுய கார்க்கோடக நாகமும், ஸ்ரீ மஹாதேவர், தேவி, கருடன் முதலிய தேவதைகளின் குண்டலாதி பூஷணவடிவமாய பத்மம், மகாபத்மம், லலங்கம், குளிகம், ஏலாபத்ரகம் என்னும் பெயர்வாய்ந்த எல்லாநாகங்களும் தமது மனைவி, மைந்தராதி பந்துக்களோடும், தாசர்களோடும் பாதாளலோகத்தின் கண்ணேயிருக்கும். விஶ்வகருமாவிற்குச சமானமாய் மாயையில அத்தியந்தம் குசலத்தையுடைய மயன் என்னும் தைத்தியனும, இந்திராதி தேவதைகளும பயப்படும்படியான விப்பிரசித்தி, பலி, முதலிய அநேக அசுரர்களும் அப்பாதாளலோகத்தின்கண்ணே இருப்பர். அத்தகைய பாதாளலோகத்தில் நாரதாதிமுனிவர் வந்து, அவ்வுலக மகிமையைக்கண்டு பின் சுவர்க்கலோகத்திற்குச் சென்று, தேவராஜாவாய இந்திரனிடத்தே அப்பாதாளலோகமகிமையை வர்ணிப்பர். அவ்விடத்திலுண்டாஞ் சுகத்தையும், பிரஹ்மலோகத்திலுண்டாஞ சுகத்தையும், சுவர்க்கத்திலுண்டாஞ் சுகத்தையும், இவ்விடத்திலுண்டாஞ் சுகத்தையும், மற்றைய சுகங்களையும் இஜ்ஜீவர்கள் இப்பாரதகண்டத்தே மனுஷசரீரத்தாற்செய்த புண்ணியகருமத்தானேயடைவர். இவ்விடத்திற்செய்த பாவகருமங்களால் நரகத்தையுமடைவர். ஆத்மசாக்ஷாத்காரத்தால அடையத்தக்க முத்தியையும், இவர்கள் பாரதகண்ட மனுஷசரீர சாதனங்களாலே யடைவார்கள். க்ஷேத்திரங்களில் உற்பன்னமாந் தானியாதிகளை உலகர் கிருகத்திற் போஜனஞ்செய்வதேபோல, இப்பாரதகண்டத்தேயுண்டாம் புண்ணிய பாவரூபகருமங்களின் பலத்தை இஜ்ஜீவர்கள் சுவர்க்காதிலோகங்களில் போகிப்பாராதலின், இப்பாரதகண்டமே சுவர்க்காதி சுகங்கட்கும், பிரஹ்மஞானத்திற்கு முற்பத்தி க்ஷேத்திரமாம்.

சங்கை:—ஹே பகவன்! ஸ்ரீவியாசபகவான் 'தத்-வய-தவி' என்னுஞ் சூத்திரத்தின்கண் தேவதைகளின் தேகத்தும் பிரஹ்மவித்தையின் அதிகாரத்தைச் சித்தஞ்செய்துளாராதலின், பாரதகண்டத்தின்கண்ணே பிரஹ்மஞானத்தின் பிராப்தியாம் என்னும் நியமம் சம்பவியாதன்றோ?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! ஸ்ரீ வியாசபகவானவர் தேவதைகளின்தேகத்தும் பிரஹ்மஞானப் பிராப்தியைக் கூறியுள்ளாராயினும், ஆண்டு

அவசியம் பிரஹ்மஞானப் பிராப்தி உண்டாமென்னும் நிச்சயம் நமக்குண்டாகாது; மற்றோ, ஆண்டு உண்டாமோ, அல்லது, உண்டாகாதோ என்னும் ஐயமுண்டாம். இப்பாரதகண்டத்தே மனுஷசரீர சிரவணாதி சாதனங்களால் பிரஹ்மஞானத்தின் பிராப்தியில் நிச்சயமேயன்றிச் சம்சயமில்லை. ஆதலின், இவ்விடத்தே பிரஹ்மஞான அடைவின்பொருட்டு முயலத்தக்கதாம். இவ்விடத்தே மனுஷசரீரத்தையடைந்தும் பிரஹ்மஞான அடைவின்பொருட்டு முயலாது, சுவர்க்காதி லோகங்களில் பிரஹ்மஞானத்தையிச்சிக்கும் மூடமதியுடையவன், 'விம்பம் த்யக்த்வா கரம் லேடி' என்னும் நியாயத்திற்கு விஷயமாவன். அதன் பொருளிதுவாம்:—மிகுந்த பசியுடைய ஒருவனுக்குத் ததியோதன வுருண்டை கையிற்கிடைப்ப அதனைநழுவவிட்டு அவன் பசிநிவிருத்திக்காகத்தன துகைகளைநாக்காற்றடவுவதாம். எங்ஙனம் அவனத்தியந்தம் மூடனோ, அங்ஙனம் இப்பாரதகண்டத்தே கிடைத்த மனுஷ சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்து சுவர்க்காதி லோகங்களில் பிரஹ்மஞானத்தினடைவை இச்சிப்பவனும் அவனைப்போல அத்தியந்தம் மூடபுத்தியுடையவனாவனென்றேயறிக. ஆகையால், மதிமானானவன் இவ்விடத்திலேயே பிரஹ்மஞான அடைவின்பொருட்டு முயலுக. இப்போது சுவர்க்காதிலோகங்களில் பிரஹ்மஞான அடைவின் சம்சயம் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! இப்பாரத கண்டத்தே மனுஷசரீரத்தையடைந்தும் பிரஹ்மஞான அடைவின் சாதனங்களைச் செய்யாது சுவர்க்காதிலோகங்களில் அதனையடைய இச்சிப்பவனை அறிஞர்களாய மகாத்மாக்கள் மூடபாலகனென நினைவர். ஏனெனின் இவ்வநாதியாய சம்சாரத்தே பூர்வம் அநேக ஜன்மங்களிற்செய்த புண்ணியபாவங்களனைத்தும் சூக்ஷ்ம ரூபமாய் அந்தக்கரணத்தின்கண்ணிருக்கும். அவற்றுள், எக்கருமம் மரணகாலத்தி லிவனுக்கு வரும்பலத்தைக்கொடுக்கும்பொருட்டு எதிர்முகமாகுமோ அதை சர்வஞ்ஞ ஈஸ்வரனன்றி வேறு யாவரறிதல்கூடும். மற்றோ, அவரே அவற்றின் கதியையறிவாராதலின், சுவர்க்காதி லோகங்களில் பிரஹ்மஞான அடைவினிச்சையையுடையவனுக்கு ஒருகால் மரணகாலத்தே பாவகருமமே நரகாதிபலத்தைக் கொடுக்கும்பொருட்டு எதிர்முகமாகுமாயின், அம்மூடன் அக்கால் என்ன உபாயத்தைச்செய்வன்? இப்போது இப்பொருளே சூதாடுபவரின் திருஷ்டாந்தத்தால் வெளிப்படுத்தப்படும்:—ஹே ஜனகராஜாவே! சூதாடிகளுள் ஒருவன் பூர்வபுண்ணியமகிமையால் சூதில் ஒருபெரும்பொருளைப்பெறுவன். அவனே அப்பெரும் பொருளை அச்சூதில் மீண்டுமிழப்பன். அதன்பின் அவன் அடிக்கடி சூதாடினும் அப்பெரும்பொருளை மீண்டுமடையான். அதுபோல, இஜ்ஜீவனாகியசூதாடி விஷய ரூபச்சூதாடிகளோடுசம்சாரரூபச் சூதையாடுவன்; ஆடவே இவனுக்குப் பூர்வபுண்ணியமகிமையால் இம்மனுஷசரீரரூபப் பெரும்பொருள் கிடைக்கும். இப்பெரும் பொருளை இஜ்ஜீவச்சூதாடி சம்சாரச்சூதிலிழந்துவிடுவனாயின், இம்மனுஷசரீரப் பெரும்பொருள் மீண்டுமிச் சூதாடிக்குக்கிடைப்பது மிகவும் துர்லபமாம். இவ்வுலகில் சூதாடி சூதில் தோல்வியையடையின் உலகவெளிப்படையான துக்கத்தையும் ரகசியதுக்கத்தையும் அனுபவிப்பதேபோல, இப்பாரதகண்டத்தே விஷயரூபச் சூதாடிகளால் தோல்வியையடைந்த இஜ்ஜீவச்சூதாடி இம்மனுஷசரீரத்தைவிட்

டுப் பாதாளலோகத்தும் பிரஹ்மலோகத்தும் பூவுலகத்தும் நரகலோகத்தும் நானு வகைச் சரீரங்களையடையுங்காலிவன் அவ்வுலகங்களில் விஷய ஜன்னிய பராதீன மாய சுகலேசத்தால் மறைபட்டதுக்கத்தையே யனுபவிப்பன். நரகாதிகளிலோ பிரசித்த துக்கத்தையே யனுபவிப்பன். ஈண்டு, சூதாடிகளுக்கு இவ்வியற்கை வெளிப்படையாம்:—எச் சூதாடிகள் எம்மூடர்களை ஒருமுறை ஜயிப்பரோ அம் மூடர்கள் போமிடமெல்லாம் அவர்கள்போய் வெல்லமுயல்வர். அம்மூடரிடத்தே சிறிதுமாத்திரதனமிருக்கும்வரையும் பின்தொடர்தலைவிடார். அவர்பால் ஒரு கௌபீனமாத்திரமிருக்குமாயின் பின்தொடர்தலை விடுவர். அதுபோல,விஷயரூபச் சூதாடிகள் இப்பாரதகண்டத்தே எம்மூட ஜீவர்களுடைய மனுஷசரீரரூபதனத் தை வெற்றிகொள்வரோ, அம்மூடஜீவர்கள் இத்தூலசரீரத்தைப் பரித்தியாகஞ் செய்து செல்லும்லோகங்களிலெல்லாம் இவ்விஷயரூபச்சூதாடிகள் அவரைவெல்லும் பொருட்டுச்செல்லுவர். அம்மூடரிடத்தே புண்ணியதனமிருக்கும்வரை பின்றொ டர்தலைவிடார்; மறறு, சர்வபுண்ணியதனத்தையும் வெற்றிகொண்டு அம்மூடர் பால் பாவவடிவ கௌபீனமாத்திரமிருக்குமாயின், அவ்விஷயச்சூதாடிகள் பின்றொ டர்தலைவிடுவர். இப்பாரதகண்டத்தே மனுஷசரீரத்தையடைந்தும் யான்பிரஹ்ம ரூபன் என்னும் அபேதஞானத்தையடையாத அஞ்ஞானிக்கு இசசரீரமழிந்தபின் னர்க் கூறியவண்ணம் மகாஹானியுண்டாம்; அதுநம்மையடையாமலிருக்குமாறு ஒருபாயத்தை நாம்செய்தல்வேண்டும் அவ்வுபாயமும பிரஹ்மஞானமன்றி வேறொ ன்றுமன்றுமாதலின், இவ்விடத்திலேயே நாம்பிரஹ்மஞானத்தைச் சமபாதித்தல் வேண்டும்; அதனால் அம்மஹாஹானி நமக்குமீண்டு முண்டாகமாட்டாது.

சங்கை:—ஹே பகவன்! பிரஹ்மவித்தையின்பிராப்தியால் அதிகாரிகட்கு விஷயசூதாடிகளினின்றும் பயநிவிருத்தி எங்ஙனமுண்டாம்?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! ஈண்டுச்சூதாடிகள் கபடப்பாசகைகளால் அச்சூதில் உண்மையைக்கூறுஞ் சாக்ஷியின்றாயின், வேறொருமூடனைத் தோல்வி யடைவிப்பர்கள். உண்மையைக்கூறும்சாக்ஷியிருப்பின் அவர்கள் அயலானைத்தோல் வியார்கள்; மாறாய், அக்கபடிகளே தோல்வியடைவர்கள். அதுபோல, நாம்பூர்வ அநேகஜன்மங்களில் விஷயச்சூதாடிகளோடு சூதாடினோம். ஆனால், வேதாந்தசாஸ் திரவடிவசாக்ஷியில்லாமலே ஆடினோமாதலின், அவர்கள் கபடப்பாசகைகளால் நம் மைத் தோல்வித்தனர். இப்போது நாம்வேதாந்தசாஸ்திர சாக்ஷியைஸ்தாபனஞ் செய்து விஷயச்சூதாடிகளோடு ஆடஆரம்பித்தோமாதலின், அவர்களை நாம் அவசி யம்வெற்றிகொள்வோம். ஹே ஜனகராஜாவே! என்போலநீயும் வேதாந்தசாஸ்திர சாக்ஷியைவைத்து அவ்விஷயச்சூதாடிகளைவெற்றிகொள்ள முயலுதி, அச்சாக்ஷி யிருப்பின் அக்கபடிகள் நின்னைவெற்றிகொள்ளார்; மற்று,' நீயேவெற்றிகொள் வாய். வேதாந்தசாஸ்திரசாக்ஷியின் முன்னர் நாம்விஷயச்சூதாடிகளோடு சூதாட ஆரம்பித்தோம். மனுஷ சரீரரூபதனத்தைமத்தியில்வைத்து ஆடவே அத்தனம் அவ்விஷயச்சூதாடிகட்கும் போகோபயோகியாதலின் முன்னர் நமக்குஜயமுண் டாகவில்லை. இப்போதுநாம்வேதாந்தசாஸ்திரசாக்ஷியைமத்தியில் வைத்திருக்கின் றோம். அதுநமக்கு அநுகூலமாமாதலின் இவ்வகை உபதேசத்தைச்செய்கின்றது. ஹே அதிகாரிகளே! இம்மனுஷசரீரரூபதனம விஷயச்சூதாடிகட்கு அநுகூலமா

மாதலின், இதனைமத்தியில்வைத்து அவர்களோடுசூதாடுவீர்களாயின், உங்கட்கு ஒருகாலும் வெற்றியுண்டாகாமல் தோல்வியேயுண்டாம். ஆகையால், இவ்விஷயச் சூதாடிகளை வெற்றிகொள்ளுமிச்சையுங்கட்கிருப்பின் நீங்கள் பிரமசரியாதி சாத னதனத்தைமத்தியில்வைத்து அவர்களோடு சூதாடுங்கள். அத்தனம் அவர்கட் குப்பிரதிகூலமாமாதலின், அதனைக்கண்டு அவர்கள்விரைவாகவே ஓடிப்போவர்கள். ஹே ஜனகராஜாவே! இவ்வண்ணமாய வேதாந்தசாஸ்திரசாக்ஷியின் வசனத்தை நம்பிக்கையோடுமங்கீகரித்துநாம இக்கால் அவ்விஷயச்சூதாடிகளை அவசியம்வெற் றிகொள்ளல்வேண்டும்.

சங்கை :—ஹே பகவன்! இஜ்ஜீவர்கட்குவிஷயரூபசத்துருக்கள் அநேகரு ளர். அவர்கள்யாவரையுஞ் சூதுமாத்திரததால வெற்றிகொள்ளல் முடியாதன்றோ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! இவ்வுலகில்ஜீவர்கட்குள்ள அநேகசத்து ருக்களுள் தூரதேசத்திலிருப்பவரைப் பாணங்களாற்கொல்வர். சமீபத்திலிருப்ப வர்களைப் பாசங்களாற்கட்டுவர். அத்தியந்தம் அற்பர்களைச்சூதால்வெற்றிகொள் வர். அதுபோல, சாஸ்திரங்களில் நிஷேதித்துள்ள விஷயசத்துருக்களை நாம்சாஸ் திரவிகிதயாகதானுதி பகிரங்கசாதனரூப பாணங்களாற்கொல்வோம். சாஸ்திரத் தில் நிஷேதியாதவிஷயசத்துருக்களை நாம்சமதமாதி அந்தரங்கசாதனரூப பாசங்க ளாற்கட்டுவோம். பிரஹ்மாகாரவிருததி கிளம்புங்காலத்தில் ஒவ்வொருகாற் பிரதீ தியாகும் அற்பவிஷயசத்துருக்களை நாமபிரஹ்மசரியாதிரூபதனத்தை மத்தியில் வைத்துச்சூதில்ஜயிப்போம். வேதாந்தசாஸ்திரப் பிரமாணத்தால் உற்பன்னமாய நான்பிரஹ்மரூபன் என்னும் அபேதஞானக்கினியால நாம அவ்விஷயரூபபிரமத்த சத்துருக்களையும், அவர்களின் தாய்தந்தைபந்துக்களையும் சாம்பராக்குவோம்.

சங்கை :—ஹே பகவன்! அவ்விஷயரூபசததுருக்கட்குத் தாய்தந்தைபந்துக் கள்யாவர்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! அநித்தியபதார்த்தங்களில் நித்திய புத்தி, அசுசிபதார்த்தங்களில் சுசிபுத்தி, இவைமுதலாக அந்நியபதார்த்தங் களிடத்தே அந்நிய புத்திவடிவ விக்ஷேபசகதி, ஆன்மாவைமறைக்கும் ஆவரண சக்தி, என்னும் இவ்விருவகையையுமுடைய அவித்தையே அவ்விஷயச்சூதாடி களின் தாயாம். சாஸ்திரசம்ஸ்காரமற்ற அசுத்தமனம் தந்தையாம். நானுவகை வாசனைகள் பந்துக்களாம். இவர்களோடுகூட அவ்விஷயச்சூதாடிகளைப பிரஹ்ம ஞானரூப அக்கினியாற் சாம்பராக்கி நாமவரை வெற்றிகொள்வோம்.

சங்கை :—ஹேபகவன்! எவ்வபராதத்தால் தாங்கள் அச்சத்துருக்களைக் குடும்பத்தோடு நாசஞ்செய்யமுயன்றீர்களோ, அவ்வாறு அவ்விஷயரூப சத்துருக் கள் என்ன அபராதஞ்செய்தார்கள்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! அவ்விஷயக்கபடச் சூதாடிகள் நம்ம னைரைப் பூர்வஜன்மத்தே அநேகமுறைவெற்றிகொண்டனராதலின், இப்பகைவ ரின் மகாஅபராத அனுசாரமாகவே அவர்கட்குத்தண்டம் தரல்வேண்டும்.

சங்கை :—ஹே பகவன்! விஷயக்கபடச் சூதாடிகள் பூர்வம் நம்மனோரைப் பன்முறை பராஜயஞ்செய்தனர் என்பதின்கண் யாது பிரமாணம்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! இவ்விஷயத்தில் பிருதிவிமுதலிய லோகங்களும், தருமராஜாதிலோகபாலர்களும், அந்தர்யாமியாகிய ஈஶ்வரரும், சாக்ஷிரூபமாய்ப் பிரமாணங்களாவர். இவ்வார்த்தை மனுஸ்மிருதியின்கண்ணும் ஸ்ரீமநுபகவானுங்கூறியுள்ளார்.

ஆ-சு. "ஆதித்யசந்த்ராவநிலோऽக்நிஶ்ச த்யௌர்பூமிராபோ ஹ்ருதயம் யமஶ்ச ।
அஹஶ்ச ராத்ரிஶ்ச உபே ச ஸந்த்யே தர்மஶ்ச ஜாநாதி நரஸ்ய வ்ருத்தம்" ॥

இரவியும் மதியுங்காலு மெரியோடு தேவும்பூவு
மருவற லிதயந்தானு மனந்தின மிரவினோடு
மிருவிதச் சந்திதாமு மிதம்புரி தருமராஜன்
நரருடைச் சரிதநாளு நன்கறிந் திவேரன்றே.

(பொ-ள்.) ஆதித்தியன், சந்திரன், பவநன், அக்கினி, சொர்க்கலோகம், பூமி, ஜலம், சாக்ஷிஆத்மா, மனம், தினம், இராத்திரி, இரண்டு சந்தியைகள், தர்மராஜா என்னுமிவர் யாவரும் இஜ்ஜீவர்களின் சுப அசுப விருத்தாந்தங்களையறிவர். ஹே ஜனகராஜாவே! பூர்வ பூர்வஜன்மங்களில் விஷயரூபச் சூதாடிகளால் தோல்வியையடைந்தநாமே இப்போது வேதாந்தசாஸ்திரரூப சாக்ஷியின் பலத்தால் இந்திரியரூபப் பாசகைகளாலும் யாகதானாதிரூபப் பாணங்களாலும் அக்கபடிகளை அவசியம் வெற்றிகொள்வோம். கருத்திதுவாம் :—பாசகைகளின் பிரவிருத்தியால் சூதாடிகளின் ஜயமுண்டாவதேபோல, இராகத்துவேஷமற்ற இந்திரியரூபப் பாசகைகளின் பிரவிருத்தியால் நம்மனோர்க்கும் விஷயச்சூதாடிகளினின்றும் வெற்றி சம்பவிக்கும். இவ்விஷயம் கீதையின்கண்ணே ஸ்ரீகிருஷ்ணபகவானும் அர்ச்சுனனை நோக்கித்திருவாய்மலர்ந்தருளியுள்ளார்.

"ராகத்வேஷவியுக்தைஸ்து விஷயாநிந்த்ரியைஶ்சரந் ।
ஆத்மவஶ்யைர்விதேயாத்மா ப்ரஸாதமதிகச்சதி" ॥

"வேண்டல்வேண் டாமை யின்றிமிகைசெலாப் புலன்களாலே
மாண்டபோ கங்க டுய்ப்பான் மனங்கலக் குறன் மற் றத்தா
லீண்டிய தெளிவுண் டாமாற் றெளியவே யெல்லை யின்றிப்
பூண்டநோய் நீங்கு நீங்கப் புலனிலை நிற்கு மன்றே."

(பொ-ள்.) இராகத்துவேஷமற்றனவும், தனதுவயப்பட்டனவுமாகிய நேத்திராதி இந்திரியங்களால் ரூபாதிவிஷயங்களைக் கிரகணஞ்செய்யும் இவ்வறிஞன் பந்தத்தையடையான்; மற்றோ, பரமாநந்தத்தையடைவன். ஹே ஜனகராஜாவே! யுதிஷ்டிராதி பஞ்சபாண்டவர்கள் ஸ்ரீகிருஷ்ணபகவானாகிய சாக்ஷியின்பலத்தால் துரியோதனாதி கபடச்சூதாடிகளைவெற்றி கொண்டதேபோல, நாமும் வேதாந்தசாஸ்திரரூப சாக்ஷியின்பலத்தால் அவ்விஷயரூபக் கபடச்சூதாடிகளை அவசியம் வெற்றிகொள்வோம். வேதாந்தசாஸ்திர சாக்ஷியினையன்றி அவர்களோடு சூதாடுமஞ்ஞானிகட்கு மகாஹானியுண்டாம். நாம் இப்போது அச்சாக்ஷியின் சகாயத்

தால் அவர்களோடு சூதாடுகின்றோமாதலின் அம்மகாஹானியையடையோம்; மற்றோ, இப்போது நமக்கே வெற்றியுண்டாம். முன்னிருந்த சுகர் வாமதேவாதி அதிகாரிகள் வேதாந்தசாஸ்திர சாக்ஷியின்பலத்தால் விஷயச்சூதாடிகளை வெற்றி கொண்டு பிரஹ்மபாவத்தைப்பெறுதல் வடிவ ஸ்வாராஜ்ஜியத்தைப்பெற்றனர். அது போல, நாமும் இப்போது வேதாந்த சாஸ்திர சாக்ஷியின்பலத்தால் விஷயக்கபடச் சூதாடிகளை வெற்றிகொண்டு பிரஹ்மபாவப் பிராப்திவடிவ ஸ்வாராஜ்ஜியத்தைப் பெறுவோம். இக்காரியஞ்செய்வதில் நாம் நேரம்போக்கலாகாது. வேதாந்தசாஸ் திரசாக்ஷியின்றியே விஷயச்சூதாடிகளோடு சூதாட ஆரம்பிக்கும் மூடமதியுடை யோர புண்ணியரூபதனமற்றவராய் ஒருபாவவடிவகௌபீனத்தைக்கவர்ந்து அநே கமவகைத் துக்கங்களையடைவர். பிரசித்தமாய சூதில் தோல்வியடைந்தவர் களின்கூட்டம் அவ்விடத்தே வேறாய்க் காணவருவதேபோல, இசசம்சாரத்தே விஷயச்சூதாடிகளால் தோல்வியுற்ற மூடர்களுள் சில ஜீவாகளோ பக்ஷிசரீரத்தை யடைவர், சிலரோ தருமுதலிய தாவரசரீரங்களையடைவர், சிலரோ கிராமத்திலிருப் பனவும் வனததிலிருப்பனவுமாய பசுசரீரங்களையடைவர், சிலரோ சர்ப்பாதி சரீ ரங்களையடைவர். எனவிவை முதலாய்த்தோறறபபட்ட எண்பத்துநான்குலக்ஷம் சரீரங்களும் தோல்வியையடைந்த ஜீவர்களின் கூட்டமெனத்தெரிந்துகொள்க. இவ்வுலகில கிருத, திரேதா, துவாபர, கலி, என்னும்நாமங்கள்கற்பிக்கப்பட்ட சூதாடுங்கருவியாய பாசகைகளால அசசூதாடிகள் அவற்றையநுகூலமாய்ச் செலுத்தும்சாதனமாகிய அக்ஷஹிருதயமென்னும் மந்திர ஞானமில்லாதவர்களை வெற்றிகொள்வர். அநத ஞானமுடையவரை அவாகள் வெறறிகொள்ளார்கள்; மாறாய், அககபடிகள் தாமே தோல்வியையடைவர். அதுபோல, இவ்விஷயக் கபடச சூதாடிகளால வெற்றிகொள்ளப்பட்டவரோ, அத்விதீயப் பிரஹ்மரூப அக்ஷஹிருதயமென்னும மநதிர ஞானமறறவராவர். அந்த ஞானமுடையவரை அவாகள்வெறறிகொள்ளார்கள்; மறறோ, அசசூதாடிகள் தாமேதோல்வியடை வா. அவ்வத்விதீயப் பிரஹ்மரூப அக்ஷஹிருதயமென்னும் மந்திரததை நாம் இபபோது அறிநதிருக்கின்றோமாதலின், நமமை இவ்விஷயசசூதாடிகள் வெற்றி கொள்ள முடியாதவராவர்; மறறோ, நாமே இவர்களை வெறறிகொள்வோம். சமபூரண ஜகத்தின் அதிஷ்டானவடிவ அதவிதீயப பிரஹ்மம் என்வடிவினும் வேறன்றாம்; மற்றோ, அவ்வத்விதீயப பிரஹ்மம் யானே என, இவ்வதிகாரி யானவன் அம்மந்திரததைக குருசாஸ்திர உபதேசததால் நிசசயிக்கின்; அஞ் ஞானி ஜீவர்களைபபோல பச்சாத்தாபததை யடையான். இப்போது அபபச்சாத் தாபம் நிரூபிக்கப்படும்:—இபபாரதகண்டத்தே பூாவபுண்ணிய மகிமையால் என க்கு மனுஷசரீரங் கிடைத்தது. அதனை யடைந்தும் மூடப்புத்தியையுடைய யான் வேதாந்த சாஸ்திர சாக்ஷியின்சகாயமின்றியே விஷயச்சூதாடிகளோடு சூதாடி னேனாதலின், அவர்கள் எனது வித்தையாகிய தனத்தையும், புண்ணியமாகிய தனததையும் முழுவதுங் கொள்ளைகொண்டனர். எப்பாவரூப கௌபீனத்தால் மூடபுததியையுடைய யான் அநேக ஜன்மங்களில் துக்கததை யடையலாமோ, அவ்வொன்றே என்பாலிருக்கின்றது. என இவ்வண்ணம்பச்சாத்தாபப்பட்டு அஞ்

ஞானியானவன் தன்னைத் திக்காரஞ்செய்துகொள்வதேபோல, அத்விதீயப் பிரஹ்மரூப அக்ஷஹிருதயமென்னும் மந்திரத்தை அறிந்தவறிஞன் பச்சாத்தாபப்பட்டுத் தன்னைத் திக்காரஞ்செய்யான். எவ்வத்விதீயப் பிரஹ்மரூப ஆன்மாவை நிச்சயித்து அவ்வறிஞன் பச்சாத்தாபமற்றவனுவனே, அது ஜன்ம மரணாதி சரீர தருமங்களும், பசிதாகாதி பிராண தருமங்களும், கருத்திருத்துவ போக்த்ருத்துவாதி அந்தக்கரண தருமங்களுமற்றதாம். அந்தக்கரணாதி சர்வ சங்காதங்கட்குஞ்சாக்ஷியாம் பிரஹ்மாதி தேவதைகளின் தினங்களோடுகூடிய சம்வச்சரவடிவ நானுவகைக் காலங்களும், ஆகாசாதி பதார்த்தங்களைப் போதிக்கும்பொருட்டு, அதினின்றே யுற்பன்னமாகும அத்தகைய ஆநநதசொரூபஆன்மா, தனது பிரகாசத்தில் சூரியன், சந்திரன், மின்னல், வாக்கு என்பனமுதலிய வேறு ஜோதிகளையபேக்ஷியாது; மற்றே, அச்சுயஞ்சோதி ஆன்மாவே சூரியாதிஜடஜோதிகளை ஒளிர்விக்குமாதலின், சுருதிபகவதியானவள் அவ்வான்மாவை ஜோதிகட்குஞ் ஜோதி எனக்கூறினள். இத்தேகத்தைத்தரித்த பிராணிகளைப் பிராணவாயுவும், அபானவாயுவும் ஜீவிக்கச செய்யமாட்டா; மற்றே, இச்சுயஞ்ஜோதியாய ஆன்மாவே சர்வப் பிராணிகளையுஞ் ஜீவிக்கச்செய்யுமாதலின், சுருதிபகவதியானவள் அச்சுயஞ்ஜோதி ஆன்மாவை ஆயுஷ் எனக்கூறினள். எவ்வதிஷ்டானரூப ஆன்மாவிடத்தே பிராணன், சக்ஷுா, சுரோத்திரம, மனம், சூரியாதி என்னும் ஐந்துமிருக்கின்றனவோ, எதன்பால் பிருதிவிமுதலிய நான்கு பூதங்களோடுகூட ஆகாசமிருக்கின்றதோ, அத்தகைய அதிஷ்டான ஆன்மாவை யான் எனது வடிவமாய் அறிகின்றேனுதலின், யானும் ஜன்மமரணாதி விகாரங்களற்ற சர்வ ஜகத்தினதிஷ்டானமாவேன். பிராணன், சக்ஷுா, சுரோத்திரம், மனம், சூரியாதிகள் என்னும் ஐவகை ஜோதிகளுள், இவ்வான்மாப் பிராணனுக்கும் பிராணனும், சக்ஷுாவிற்கும் சக்ஷுாவாம், சுரோத்திரத்திற்குஞ் சுரோத்திரமாம, மனத்திற்கும் மனமாம், சூரியாதிகட்குஞ் சூரியனும். இங்ஙனம் சர்வப்பிராணாதி ஜோதிகட்குஞ்ஜோதிரூபமாய் அந்தரியாமியாகிய ஆன்மாவை நிசசயஞ்செய்துள்ள அதிகாரியே அவ்வத்விதீயப் பிரஹ்மரூப அக்ஷஹிருதயமென்னும் மந்திரத்தை யறிவன். அவ்வந்தரியாமியாய ஆன்மா ஜகதுற்பத்தியின் முன்னரும், நாசமானபின்னரும் ஏக அத்விதீயரூபமாயே நிலைபெற்றிருக்கும். ஸ்திதிகாலத்தே சரீராதிரூப கற்பித உபாதிகளின் சம்பந்தத்தால் நானுவடிவத்தை யடைந்ததேபோலத் தோற்றுநிற்கும். இவ்வண்ணம் ஆன்மாவின் வாஸ்தவவடிவத்தை யறிந்தவனுக்கு விஷயரூபப் பகைவரினின்றுஞ் சிறிதும்பயமின்றும்.

சங்கை:—ஹே பகவன்! அத்தகைய அத்விதீய ஆன்மாவின் சாக்ஷாத்காரம் அதிகாரிகட்கெப்பிரமாணத்தாலுண்டாம்?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! சர்வபேதங்களுமற்ற அத்விதீய ஆத்மா ரூபஸ்பரிசாதிகுணங்களற்றதாமாதலின், நேத்திராதி பாஹ்யேந்திரியங்களால் அதன்சாக்ஷாத்காரம் உண்டாகமாட்டாது; மற்றே, மனத்தானே அதன்சாக்ஷாத்காரமுண்டாம்.

சங்கை :—ஹே பகவன்! மனத்தானே அத்விதீய ஆன்மாவின் சாக்ஷாத்கார முண்டாகுமாயின், சர்வ ஜீவர்கட்கும் மனமிருக்கின்றதாதலின், யாவருக்குமே சாதகமின்றியே அதன் சாக்ஷாத்காரம் ஏன் உண்டாவதில்லை?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! வேதாந்தசாஸ்திர சிரவணமனனாதி சாதனங்களால் சீர்திருத்தப்பட்ட சுத்தமனத்தானே ஆன்மாவின் சாக்ஷாத்கார முண்டாம். இவ்வகைமனம சர்வ ஜீவர்கட்குமின்றாதலின் சாதனஹீனர்கட்கு அதன் சாக்ஷாத்காரமுண்டாகமாட்டாது. இப்போது இப்பொருளையே வெளிப் படையாக்கும்பொருட்டு, மனத்தின்கண் சர்வ பதார்த்தங்களின் ஞானகாரணத் தன்மை நிரூபிக்கப்படும் :—ஹே ஜனகராஜாவே! "வாரா௦ஷிவாநிவ௫தூணக ஷ்யா௦ஹ௵" என்னும் இச்சுருதியின்கண் நேத்திராதி இந்திரியங்கட்கு அந்த ராத்மாவின் தரிசன அயோக்கியத்தன்மை கூறப்பட்டுளது. ஆயினும், பிரஹ்மா வானவர் மனத்தை உள்ளிலும, வெளியிலுமுள்ள சர்வபதார்த்த தரிசனத்தின் பொருட்டு, உண்டாக்கினாராதலின், பூத பவிஷ்யத் வர்த்தமானமென்னும் முக்கா லங்களிலுமுள்ள வெளிப்பொருள்களை இஜ்ஜீவன் மனத்தானே யறிவன். முக்கால மற்ற அந்தர அத்விதீய ஆன்மாவையும் இவ்வதிகாரி மனத்தானே யறிவன்.

சங்கை :—ஹே பகவன்! மனத்தானே சர்வ பதார்த்தங்களின் ஞானமுண் டாகுமாயின், நேத்திரமற்ற குருடனுக்கு மனமேயிருக்கின்றதாதலின், அதனால் அவனுக்கும் ரூபாதிகளின் நிச்சயம் உண்டாதல் வேண்டுமன்றோ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! ரூபாதிபதார்த்தங்களின் தரிசனத்தின் கண் நேத்திராதி இந்திரியங்கள் மனத்திற்குச் சககாரிகாரணங்களாம். அவை யின்மையின் அம்மனம் உருவாதிகளின் நிச்சயத்தை உண்டாக்காது. ஏனெனின், கண்டு நேத்திரேந்திரியத்தோடுகூடிய மனத்தையுடையவன் நீலபீதாதிரூபங் களைக் காண்பதேபோல, சுரோத்திரேந்திரியத்தோடுகூடிய மனத்தையுடைய அந் தகன் நீலபீதாதிகளைக் காணான். நேத்திரமற்ற அந்தகன் நீலபீதாதியை யறியாத தால் அபராதமடையாததுபோல, நேத்திராதிப் பிரமாணங்களின்றி நீலபீதாதி களை யறியாததால் இம்மனமும் அபராதத்தையடையாது. ஆகையால், இஜ்ஜீவன் மனத்தானே எல்லா உள் வெளிப் பதார்த்தங்களையுமறிவன். அவற்றுள், பேதத் தைக் கவரும் நேத்திராதிப பிரமாணங்களோடு கூடியமனத்தால் நானாவகையாய பேதத்தைக் கவர்வன். ஜீவேஸ்வர அபேதத்தையுணர்த்தும் மஹாவாக்கியரூப சப்தப்பிரமாணத்தோடு கூடியமனத்தால் அத்விதீயப் பிரஹ்மத்தைச் சாக்ஷாத் கரிப்பன். ஆகையால், சர்வ பேதங்களுமற்றதும், சர்வஜீவர்களின் ஆன்மவடிவமு மாய் அத்விதீயப் பிரஹ்ம சாக்ஷாத்காரம் சுத்த மனத்தானேயாம். 'உதஸெவ ர௲ஷவ௫.' சிரவணமனனாதி சாதனங்களோடுகூடிய சுத்தமனத்தானே அதி காரிகள் அத்விதீய ஆன்மாவைக் காணத்தக்கவர்களாவர்கள் என்பதாம்.

சங்கை :—ஹே பகவன்! 'யதொவாசொநிவத்தூக சுவஸ்ராவ௫உதவோவஷ' மத்தியான சூரியனை விஷயஞ்செய்யும்பொருட்டுப் பிரவிருத்தித்த சக்ஷுரிந்தி ரியம் அச்சூரியப் பிரபையைச சகிக்கமுடியாததாய் அச்சூரியனிடத்தினின்றும்

நிவிருத்தியுற்று வருவதேபோல, அத்விதீய ஆன்மாவை விஷயஞ்செய்யும்பொரு ட்டுச்சென்ற மனமும் வாணியும் அதனையடையமுடியாமல் அதனிடத்தினின் றும் திரும்பிவரும், என்னும் இச்சுருதியின்கண் அத்விதீயப் பிரஹ்மம் மன சஹிதவாணிக் கவிஷயமெனக் கூறபபட்டுளது. 'மநஸைவாநு த்ரஷ்டவ்யம்' என்னுமிச் சுருதியின்கண் அத்விதீய ஆன்மா மனத்தின் விஷயமெனக் கூறப்பட் டுளதாதலின், இவ்விரண்டு சுருதிகட்கும் பரஸ்பரம் விரோதமாமன்றோ?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! 'யதோவாசோ நிவர்த்தந்தே' என்னும் இச்சுருதியின்கண் அத்விதீய ஆன்மசாக்ஷாத்காரத்தின்கண் சிரவணாதி சாதனங் களோடுகூடிய சுத்தமனத்திற்குக் காரணத்தன்மை கூறபபட்டுளதாதலின், இர ண்டு சுருதிகட்கும் பரஸ்பரம் விரோதஞ்சம்பவியாது.

சங்கை:—ஹேபகவன்! 'தம் த்வௌபநிஷதம் புருஷம் ப்ருச்சாமி' உபநிஷத் ரூப சப்தப்பிரமாணத்தால் அறியயோக்கியமாய அத்விதீயப் பிரஹ்மரூப ஆன்மா வின்சொரூபத்தை யான் நின்பால் கேட்கின்றேன். என்னும் சுருதியின்கண் அத் விதீயப் பிரஹ்மரூப ஆன்ம சாக்ஷாத்காரத்தின்கண் உபநிஷத்வடிவ சப்தத்திற்கே காரணத்தன்மைகூறபபட்டுளது. 'மநஸைவாநு த்ரஷ்டவ்யம்' என்னுஞ் சுருதி யின்கண் அத்விதீய ஆன்மசாக்ஷாத்காரத்தின்கண் மனத்திற்கே காரணத்தன்மை கூறப்பட்டுளதாதலின் இவ்விரண்டு சுருதிகட்கும் பரஸ்பரம் விரோதமாமன்றோ?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! உபநிஷத்வடிவ சப்தப்பிரமாணத்தின் சகாயத்தானன்றி இம்மனம் ஆத்மசாக்ஷாத்காரத்தையுண்டாக்காது; மற்றோ, அச்சகாயத்தானே இச்சுத்தமனம் அதனையுண்டாக்குமாதலின் அவ்விரு சுருதி கட்கும் பரஸ்பரம் விரோதம் சம்பவியாது. கருத்திதுவாம:—சில அறிஞரோ ஆத்மசாக்ஷாத்காரத்தின்கண் உபநிஷத் வடிவ சப்தத்தைக்காரணம் எனவும் மனத் தைச் சககாரிகாரணம் எனவுமங்கீகரித்துளார். வேறுசில அறிஞரோ மனத்தைக் காரணமெனவும் உபநிஷத்வடிவ சப்தப்பிரமாணத்தைச் சககாரிகாரணமெனவு மங்கீகரித்துளார். இவ்விருவகைப் பிரக்கிரியைகளும் சுருதிப்பிரமாணத்தால் சித் தமாம். இத்துணையால், அத்விதீயப் பிரஹ்மரூப ஆத்மசாக்ஷாத்காரத்தின்கண் பிர மாண நிரூபணம் பிரதிபாதிக்கப்பட்டது. இப்போது அவ்வத்விதீயப் பிரஹ்மத் தின்கண் சர்வத்துவைத நிஷேதம் நிரூபிக்கப்படும். ஹே ஜனகராஜாவே! அத் விதீயப்பிரஹ்மரூப ஆத்மாவின்கண் நானாவகைப்பேதத்தையுடைய இப்பிரபஞ்சம் சிறிதுமாத்திரையுமின்றாம். ஏனெனின் வியாகரணமுறைப்படி தேசகாலவஸ்து பரிச்சேதமற்ற யாவினும்அதிகமாயவஸ்துவே பிரஹ்மசப்தத்தின் பொருளெனத் துணியப்பெறும். ஒருகால் பிரஹ்மத்தின்கண் எப்பதார்த்தத்தின்பேதமேனும் அங்கீகரிக்கின் யாதுபேதமுடையதாமோ அது வஸ்துபரிச்சேதமுடையதாம். யாதுபேதரூப வஸ்து பரிச்சேதமுடையதாமோ அது அற்பமாம். யாது அற்ப மாமோ அது யாவினுமதிகமாகாது; கடபடாதிபதார்த்தங்களேபோலுமெனவா மாதலின், பேதத்தையங்கீகரித்தலால யாவினுமதிகத்தன்மைவடிவப் பிரஹ்மசப் தத்தின்பொருள் பரமான்மாவிடத்தே பொருந்தாதாம். இப்போதிப்பொருளே வெளிப்படையாய்க்காண்பிக்கப்படும:—ஹே ஜனகராஜாவே! கண்டு நூலுணர்

தோர் சப்தங்கட்கு இருவகைப்பொருள்கள் உடன்பட்டுளார். அவற்றுள், ஒன்றே சப்தத்திற்கு முக்கியப்பொருளாம், மற்றொன்றே, சப்தத்திற்குக் கௌணப்பொருளாம், தேவதத்தன் சிங்கம் என்புழி மிருகராஜாவாய பசுவின்கண் சிம்மசப்தத்தின் முக்கியப்பொருளுளது. கௌணப்பொருளோ தேவதத்தன்பாலுளது. சப்தத்தின் முக்கியப்பொருள் சம்பவிக்குமிடத்து கௌணப்பொருளை அங்கீகரிக்கலாகாதென்றும் நூலுணர்ந்தோர் நிர்ணயித்துளாராதலின், ஏக அத்விதீயப்பரமான்மாவைவிடுத்துள்ள யானைமுதலிய அநான்மபதார்த்தங்களிடத்தே குதிரைமுதலியனவற்றைக் குறித்து அதிகத்தன்மையிருப்பினும் மலை முதலியவற்றைக் குறித்து அவற்றின்கண் அதிகத்தன்மையின்றாம். மலை முதலியவற்றின்கண்ணும் யானை முதலியவற்றைக் குறித்து அதிகத்தன்மையிருப்பினும் ஆகாசாதிகளைக் குறித்து அதிகத்தன்மையின்றாம். இவ்வண்ணம சர்வ அநாத்மபதார்த்தங்களிடத்திலும் அபேக்ஷையோடுகூடிய அதிகத்தன்மையுளதாதலின் யானை முதலிய அநாத்மபதார்த்தங்கள் பிரஹ்மசப்தத்தின் முக்கியப்பொருளன்றாம்; மற்றே, கௌணப்பொருளாம். தேசகாலவஸ்து பரிச்சேதமற்ற பரமான்மாவின்கண் ஒரு பதார்த்தத்தைக்குறித்து அதிகத்தன்மையின்றாம்; மற்றே, அபேக்ஷையற்ற அதிகத்தன்மையுளது. ஆதலாலப்பரமான்மாவே பிரஹ்மசபதததிறகு முக்கியப்பொருளாம். யாது ஒருதேசத்திருநது ஒருதேசததிராதோ அது தேசபரிச்சேதமுடையதாம். யாது ஒருகாலததிருநது ஒருகாலத்திராதோ அது காலபரிச்சேதமுடையதாம். யாது வேறொருபொருளினும் வேறாமோ அது வஸ்துபரிச்சேதமுடையதாம். யாது தேசகாலவஸ்து பரிச்சேதமுடையதாமோ அது அற்பமாம். கையிலிருக்கும நெல்லிக்கனி தேசகாலவஸ்துபரிச்சேதமுடையதாதலின், அற்பமாதல்போலப பரமான்மாவினும்வேறாய அநான்மபதார்த்தங்கள் தேசகாலவஸ்து பரிச்சேதமுடையனவாமாதலின் அறபமாம. முபபரிச்சேதமமற்ற யாவினுமதிக வஸ்து பிரஹ்மசப்தத்தின்பொருளாம. யாவினுமதிகத்தன்மையும் அற்பத்தன்மையும் பரஸ்பரம விரோதமுடையனவாமாதலின் ஒன்றன்கண் அவ்விருதருமங்களுமிரா; மற்றே, எப்பொருளில் அதிகத்தன்மையுளதோ அதன்கண் அறபத்தன்மையிராது. எதன்கண் அற்பததன்மையுளதோ அதன்கணதிகத்தன்மையிராது. ஆதலின், பரமான்மாவினும வேறாய எலலா அநான்மபதார்த்தங்களும் பிரஹ்மசப்தத்தின் கௌணப்பொருளாம. பரமான்மா ஒன்றே முக்கியப்பொருளாம். பேதவடிவ வஸ்துபரிச்சேதமும் மூவகைத்தாம். ஒன்றே, சொரூபபேதமாம; மற்றொன்றே ஸஜாதீயபேதமாம்; மற்றொன்றே விஜாதீயபேதமாம். அவற்றுள், தன்வடிவத்திலிருக்கும பேதம் சொரூபபேதமாம். ஒருவிருக்ஷத்தின்கண் ஸ்கந்தம், சாகை, பத்திரம், புஷ்பம், பலம், என்பனமுதலியவற்றின் பரஸ்பர பேதம் சொரூபபேதமாவதேபோலுமாம்; இதனையே சாஸ்திரத்தின்கண் சுவகத பேதம் எனப்படும். இப்பேதம் சாவயவபதார்த்தத்தேயுண்டாம்; இவ்வத்விதீய பிரஹ்மம் நிரவயவமாமாதலின் இதன்கண் இபபேதம் சம்பவியாது. சமானஜாதியையுடைய பதார்த்தங்களின் பரஸ்பரபேதம் ஸஜாதீயபேதமெனப்படும். கோத்தன்மைச்சாதியையுடைய சர்வகோக்களுள், வெண்ணிறக்கோவின்கண் கருநிறக்

கோவின் பேதம், அல்லது, ஸர்வாங்கங்களோடுகூடிய கோவின்கண் கொம்புமுதலிய அங்கமற்ற கோவின்பேதம், ஸஜாதீயபேதமாவதேபோலுமாம். இதுவும் அத்விதீயப்பிரஹ்மத்தின்கணின்றாம். விருத்தஜாதியையுடைய பதார்த்தங்களின் பாஸ்பரபேதம் விஜாதீயபேதமாம. மனுஷத்தன்மைச் சாதியையுடைய மனுஷர்களிடத்தே கடத்தன்மைச்சாதியையுடைய கடங்களின்பேதம் விஜாதீயபேதமாதலேபோலுமாம். இதுவும் அத்விதீயபபிரஹ்மத்தின்கணின்றாம். ஆகாசத்தின்கண்ணேதோற்றாநின்ற பெரியகந்தர்வநகரம் அதிஷ்டானஆகாசத்திலும் முக்காலத்தும் வேறன்றுமாவதேபோல, அத்விதீயப்பிரஹ்மத்தின்கண்ணே தோற்றாநின்ற இத்தூலசூக்ஷுமரூப சம்பூரணஜகத்தும் அதிஷ்டானப்பிரஹ்மத்திலும் முக்காலத்தும் வேறன்றாம். கனவின்கண் சம்பூரண பதார்த்தங்களோடுகூடிய தேசகாலங்கள் கனக்காண்பவனிடத்தே யுற்பன்னமாவதுபோல, தேசகாலமேமுதலாய இவ்வெல்லாவுலகும் பிரஹ்மத்தின்கண்ணேயுண்டாம். அது பரமாநந்தவடிவாம், சூரியாதிஜோதிகட்கும் ஜோதியாம், நாசமற்றதாம், சர்வபேதமற்றதாம், யாண்டும் நிறைந்ததாம். கடாதியுபாதிகளற்ற சுத்தஆகாசத்திற்குத் தனதுசொரூபத்தோடு பேதமில்லாததேபோல, மாயாதியுபாதிகளற்ற சுத்தப் பிரஹ்மத்திற்கு அந்தக்கரணாதியுபாதிகளற்ற சுத்த ஆன்மாவோடு பேதமின்றாம். ஏனெனின், கொதுகின் தேகத்தும் யானையின்யாக்கையிலும ஆகாசம் உள்ளுமவெளியும் சமானவியாபகமாயிருப்பதேபோலஇவ்வான்மாவும் சர்வஜகத்தின் உள்ளும்வெளியும் சமானவியாபகமாம். இத்தகைய ஆன்மாவிற்கு பிரஹ்மத்தோடு ஒருமைசம்பவிக்கும். ரஜ்ஜுரூப அதிஷ்டானத்தின்கண்ணேதோற்றும் சர்ப்பம், தண்டம், மாலை, ஜலதாரை என்பன முதலிய கற்பிதபதார்த்தங்கள் அதன்கண்ணேயிருக்கும். அதனிலும் அவை முக்காலத்திலும் வேறாகாதவேபோல, தேசகாலம்முதலிய சம்பூரணஜகத்தும் அதிஷ்டானரூபப் பிரஹ்மத்தின்கண்ணேயிருக்கும். முக்காலத்தும் அதனிலும் வேறன்றாம். சம்பூரண தேகதாரி ஜீவர்களின் ஆன்மா முறகூறிய சர்வபேதங்களுமற்றதாமாதலின், இவ்வான்மாவே பரப்பிரஹ்மரூபமாம். இவ்வாநந்தசொரூப ஆன்மாவினும் மேலாய் வேறொரு அதிகபதார்த்தமுமின்றாம்; மற்றோ, இவ்வான்மாவே சர்வபதார்த்தங்களினும் அதிகமாமாதலின், 'அயமான்மாப் பிரஹ்மம்' என்பன முதலிய சுருதிகளில் இவ்வாநந்தசொரூப ஆன்மாவே பிரஹ்மரூபமெனக்கூறப்பட்டுளது. ஆகையால், பிரஹ்மத்தின்கண்ணும் ஆன்மாவின்கண்ணும் சிறிதுமாத்திரையும் பேதமின்றாம். ஒருகால் பேதமிருக்குமாயின், 'அயமான்மாப் பிரஹ்மம்' என்னுஞ் சுருதிகூறிய ஆன்மாவின் பிரஹ்மரூபத்தன்மை சம்பவியாது. சம்பவிக்குமாயின் பேதமிராது ஏனெனின், பிரஹ்மரூபத்தன்மை, பேதம் என்னுமிரண்டும் பாஸ்பரம் விரோதிகளாம்; அவைகள் ஓரதிகரணத்திரா. வெப்பமுந் தட்பமும் பாஸ்பாம் விரோதிகளாமாதலின், அவ்விரண்டும் ஓரதிகரணத்தின்றாம்; அதுபோலப் பிரஹ்மரூபத்தன்மையும் பேதமும் பாஸ்பரம் விரோதியாதலின் ஓரிடத்திராவாம். ஆகையால், அவ்விரண்டனுள் ஒன்றைப் பரித்தியாகஞ்செய்தல்வேண்டும். ஆண்டு அந்நியோந்நியாபாவரூபபேதம் தனதுபிரதியோகியை யபேக்ஷிக்குமாதலின், அப்பேதம் பகிரங்கமாம். பிரஹ்மரூபத்தன்மை எதனையு மபேக்ஷியாதாதலின் அது அந்தரங்கமாம். இவ்விரண்டிற்கும் யாண்டு, ஒருநிலைக்களத்தன்மையி

னடைவுண்டாமோ, ஆண்டு விரோதநீக்கப்பொருட்டுப் பகிரங்கதருமத்தையே பரித்தியாகஞ்செய்தலுசிதமாம்; என்னுமிவ்வார்த்தை யாவருக்குஞ் சம்மதமாதலின் பகிரங்கபேதத்தைப் பரித்தியாகஞ்செய்து, ஆன்மாவின்கண் பிரஹ்மரூபத்தன்மையையே அங்கீகரித்தல்வேண்டும். யாவிற்குமுள்ளாய் வியாபகமாய வஸ்துவே ஆன்மசப்தத்தின்பொருளாம். ஆகையால், பிரஹ்மரூபத்தன்மை ஆன்மரூபத்தன்மையினும் வேறன்றாம்; மற்றோ, அபின்னமேயாம். ஆண்டு ஆன்மாவின்கண்ணொருகால் பேதபரித்தியாகஞ் செய்யாவிடின், ஆன்மாவின்கண் பிரஹ்மரூபத்தன்மையினழிவுண்டாம். அதன்பின்னர் அதனினும் அபின்னமாய ஆன்மரூபத்தன்மையுமழியும், அதன்பின்னர் ஆன்மாவிற்குமழிவுண்டாம். அஃதெவ்வாஸ்திகர்கட்கும் அங்கீகாரமின்றாம். ஆகையால், ஆநந்தஸ்வரூப ஆன்மாவைக் காப்பாற்றும்பொருட்டு அந்தப் பேதத்தின்நாசமேஅங்கீகரித்தல் தகுதியாம். இப்போதிப்பொருள் வெளிப்படையாய் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! கேவலம் நீதிசாஸ்திரத்தையறிந்தவன், அர்த்தத்தையுங் காமத்தையுமே பரமபுருஷார்த்தமென்பன். அவனும் தன்னான்மாவின் நாசமுண்டாமிடத்தே இம்மதிமானானவன் அதனைக் காப்பாற்றும்பொருட்டுச் சர்வபதார்த்தங்களையும் பரித்தியாகஞ்செய்கவென்பன். அதனானும் ஆன்மாவைக்காப்பாற்றும்பொருட்டுச் சர்வபேதத்தையும் பரித்தியாகஞ்செய்தலுசிதமாம். கருத்திதுவாம்:—இத்தூலசரீரத்தையே ஆன்மாவென அங்கீகரித்த சகாம பகிர்முகனாகிய நீதிசாஸ்திரமுணர்ந்தோனும், சரீரரூப மித்தியான்மாவைக் காப்பாற்றும்பொருட்டுச் சர்வபதார்த்தங்களையும் பரித்தியாகஞ் செய்யின், அந்தர்முகர்களாய் நிட்காமர்களாயிராநின்ற யாம் பரமபுருஷார்த்தரூப சுத்தாத்மாவைக் காப்பாற்றும்பொருட்டுத் துக்கரூப ஜடபேதத்தை ஏன் பரித்தியாகஞ்செய்யலாகாது? மற்றோ, அதனை அவசியஞ்செய்தல் வேண்டும். ஜடபதார்த்தங்களில் அபிநிவேசஞ்செய்து, தனது ஆன்மரூபத்தன்மையைப் பரித்தியாகஞ்செய்யும் புருஷரின் அனான்ம ஜடபதார்த்தங்கள் பரித்தியாகமின்றியே நாசத்தையடையும். உலோபியானவன் ஜீவிதகாலத்தே தனத்தைவிடான்; ஆனால் அவன் இறந்தபின் அவன்தனமும் விடாமலே நாசத்தையடையும். அதுபோல, ஆன்மா அழியின் அந்தஜடபதார்த்தங்கட்குமவசியம் அழிவுண்டாமாதலின், ஆநந்தஸ்வரூபஆன்மாவைக் காப்பாற்றும்பொருட்டு, நாம் ஜடபேதபரித்தியாகத்தை அவசியஞ்செய்தல்வேண்டும். பிருஹஸ்பதியின் சிஷ்யனாய சார்வாக நாஸ்திகனும், நூலுணர்ச்சியற்ற பாமரனும் இத்தூலசரீரத்தையே ஆன்மாவென வெண்ணியுள்ளார்கள். இத்தூலசரீரரூபப் பொய்யான்மா அழிந்தபின்சர்வஜகந்நாசத்தை யுடன்பட்டுளார். சார்வாகரும், பாமரரும் சரீரரூபஆன்மா அழிந்தபின் சர்வஜகத்தின் நாசத்தைக்கூறுவாராயின், சாஸ்திரமுணர்ந்த புத்திமான்கள் சாட்சியான்மா அழிந்தபின்னர்ச் சர்வஜகத்தின்நாசத்தை ஏன்கூறார்? கருத்திதுவாம்:—சூரியாதிஜோதிகட்கும் ஜோதியாய ஆன்மாவொன்றே சேதனமாம். ஆன்மாவினும்வேறாய அனான்மபதார்த்தங்களியாவும் ஜடங்களாம். அச்சாக்ஷியபதார்த்தங்கட்குச் சேதனசாக்ஷியாய ஆன்மாவின்றி எவ்வாற்றானுஞ்சித்தியுண்டாகாது. ஆகையால், ஆன்

மாவின் நாசத்தையுடன்படுவதால் ஜடபதார்த்தத்தின் நாசத்தையும் உடன்பட்டதேயாகும்.

சங்கை :—ஹே பகவன்! அத்விதீயப்பிரஹ்மரூப ஆன்மாவைக்காப்பாற்றும் பொருட்டுச் சர்வஜடபதார்த்தங்களின்நாசத்தையங்கீகரித்தல் உசிதமாமெனத் தாங்கள் கூறியதுண்மையாமாயின், ஜடபதார்த்தங்களியாவும் அழிந்தபின்னர் அவற்றைச் சித்திசெய்யும அத்விதீயப்பிரஹ்மரூபசாக்ஷி எவ்வாறுநிலைபெறும்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! சாக்ஷியான்மாவின் சாக்ஷியரூப அந்தக் காணவிருத்திகள் துயிலின்கண்ணே நாசத்தையுறினும், ஆண்டுச் சாக்ஷியான்மாவின் நாசமுண்டாகாது. அதுபோல, சம்பூரண ஜடஜகத்தழிவுறினும், அத்விதீயப்பிரஹ்மமழியாதாம். ஆதலின், நாம் அதனைக் காபபாற்றும்பொருட்டு, ஜடப்பிரபஞ்சத்தையே பரித்தியாகஞ் செய்தல்வேண்டும். உஷ்ணவியற்கையையுடைய அக்கினியின்கண், குளிர்ச்சியை எப்பிரமாணத்தானுங் கவரமுடியாததேபோல, அத்விதீய வியற்கையையுடைய பிரஹ்மத்தின்கண் எப்பிரமாணத்தானும் பேதங் கவரமுடியாதாம். யாதுபிரமாணத்தாற்கவரபபடுமோ, அதுவே சித்தியாமாதலின், அப்பேதத்தின்சித்திசமபவியாது. இரஜ்ஜுரூப அதிஷ்டானத்தின்கண்ணே தோற்றும்சர்ப்பம் உண்மையாய் ஆண்டின்றாம்; ஏனெனின், ஆண்டஃதுண்மையாயிருக்குமாயின், அதிஷ்டானஞானமுண்டானபின்னரும் அச்சர்ப்பந்தோற்றல்வேண்டும். ஆனால், அதன்பின் அச்சர்ப்பந் தோற்றுவதில்லையாதலின், அஃதாண்டுண்மையாயின்றென்றறிந்துகொள்ளலாமன்றோ? அதுபோல, அத்விதீயப பிரஹ்மத்தின் கண்ணே தோற்றும்பேதமானது ஆண்டுண்மையாயின்றாம். ஏனெனின், ஒருகால் ஆண்டு உண்மையாயப்பேதமிருப்பின், சமாதியின்கண்ணும் அறிஞனுக்குச சச்சிதானந்தந் தோற்றுவதேபோல, அப்பேதமுந தோற்றலவேண்டும. ஆனால், அவனுக்கு ஆண்டது தோற்றுவதின்றாமாதலின், அப்பேதம உண்மையாயின்றென்றறிந்துகொள்ளலாமன்றோ?

சங்கை :—ஹே பகவன்! ஒருகால் அத்விதீயப்பிரஹ்மத்தின்கண் அப்பேதம் உண்மையாயின்றாமாயின், அஃததன்கண் இருந்து தோற்றுவானேன்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! யாது, எதன்கண் இருந்து தோற்றுநிற்குமோ, அது அதன்கண் உண்மையாயேயிருக்கும் என்னும் நியமஞ்சம்பவியாது. ஏனெனின், பிரகாசத்தையுடைய சூரியனிடத்தே கூகை முதலியவை இருளைக்காணும். ஆனால், அவ்விருள் அவரிடத்தேயுண்மையாயின்றாம். அது அவரிடத்தேயுண்மையாயிருக்குமாயின் நம்மனோர்க்குந் தோற்றல்வேண்டும். அங்ஙனந் தோற்றுவதின்றாமாதலின், கூகை முதலியவை தமதஞ்ஞானத்தால் சூரியனிடத்தே இருளைக்கற்பிக்கின்றனவெனவறிந்துகொள்ளல்வேண்டும். அதுபோல, அத்விதீயப்பிரஹ்மத்தின்கண், அஞ்ஞானிகள் பேதத்தைக்காண்பர். ஆனால், அது அதன்கண் உண்மையாயின்றாம்; ஒருகால், உண்மையாயிருக்குமாயின், எம்போன்றவறிஞர்க்கும் அப்பேதந்தோற்றல்வேண்டும். ஆனால், எம்மனோர்க்குத் தோற்றுவதின்றாமாதலின், அவிவேகிகள் தமதுண்மைவடிவையுணராமையால், அத்விதீயப்பிரஹ்மத்தின்கண்ணே பேதகற்பனையைச் செய்கின்றார்களென்றறிந்துகொள்ள

வேண்டும். யாது அஞ்ஞானத்தாற் கற்பிதமாமோ, அது உண்மையாயிராதாதலின் பேதமென்னுஞ் சப்தத்தினும், பேதமென்னும் ஞானத்தினும் பின்னமாகப் பேதத்தின் உண்மைவடிவமொன்றின்றாம்; மற்றோ, பேதமென்னுஞ் சப்தஞான வடிவமே அப்பேதமாம். மலடிமைந்தன் என்னுஞ்சப்தத்தினும், ஞானத்தினும் வேறாக அவனுக்கியாதோருண்மைவடிவமுமின்றாம்; மற்றோ, அச்சப்தஞானமே அவனாதலின் அவன் அத்தியந்தம் அசத்தியனாவன். அவ்வாறே அப்பேதமும் அத்தியந்தம் அசத்தியமேயாம். இச்சமசாரத்தின்கண்ணே அத்விதீயபிரஹ்மத்தினும் வேறாக ஒருபதார்த்தமிருக்குமாயின் அதன்பேதம் ஆண்டிருக்கும். ஆனால், ஈண்டு அதனினும் வேறாக யாதொரு ஸ்தூலசூக்ஷுமபதார்த்தங்களுமின்றாம்; மற்றோ, அவ்வியாவும் அத்விதீயப்பிரஹ்மரூபமேயாம். ஆகையால், அதன்கண் பேதவெண்ணமுந் திண்ணமாயின்றாம். முயற்கோடு, மலடிமைந்தன் என்னுஞ் சப்தஞானங்களின் பலத்தானே அவ்விரண்டுமிருக்குமன்றி, அவ்விரண்டினும் வேறாய் எப்பதார்த்தமும் அவற்றின் ஸ்திதிகாரணமாகமாட்டா. அதுபோல, பேதமென்னுஞ் சப்தஞானபலத்தானே, அப்பேதம் நிலைபெறுமன்றி அவ்விரண்டுமல்லாது வேறெப்பதார்த்தமும் அதன்ஸ்திதிகாரணமாகமாட்டாது. ஆகையால், பேதமென்னும் சப்தஞானமகிமையால் அது தோற்றினும், அத்விதீயப்பிரஹ்மத்தின்கண் உண்மையாயின்றாம். இத்துணையால் அத்விதீயப் பிரஹ்மத்தின்கண் சம்பூரணபேதரூபப் பிரபஞ்சத்தினபாவம் நிரூபிக்கப்பட்டது. இப்போது பேததரிசனத்தின்கண் அனர்த்தகாரணத்தன்மை நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! மனவாணிகட்கு அவிஷயமாய்ச் சுயம்பிரகாசமாய அத்விதீயப்பிரஹ்மத்தின்கண் நானாவகைப்பேதத்தைக்காண்பவன் மீண்டும் மீண்டும் மிருத்தியுவையடைவன். "ம்ருத்யோ꞉ ஸ ம்ருத்யுமாப்னோதி ய இஹ நாநேவ பஶ்யதி." அத்விதீயப்பிரஹ்மத்தின்கண் நானாவகைப் பேதப்பிரபஞ்சத்தைக்காண்பவன் அடிக்கடி மிருத்தியுவை யடைவன். அத்விதீயப்பிரஹ்மத்தின்கண்ணுள்ள பேதபுத்தியே அஞ்ஞானிகட்குச் சம்சாரத்தையடைவிப்பதாமாதலின், முமுக்ஷுக்கள் அதன்கண் ஒருகாலும் பேதபுத்திசெய்யலாகாது. அதன்கண் பேதபுத்திசெய்பவன் நரகாதிகளிற்பலவகைச் சரீரங்களையடைந்து பலவகைத்துக்கங்களை யனுபவிப்பன். ஆதலால், முமுக்ஷுக்கள் அப்பேதபுத்தியை விட்டொழித்துப் பிரஹ்மத்தை ஏக அத்விதீயரூபமாய் நிச்சயஞ்செய்க; அது சூரியாதி ஜோதிகட்குஞ் ஜோதியாம். மனவாணிகட்கவிஷயமாமாதலினானே அப்பிரமேயமாம். பிரத்தியக்ஷாதிப்பிரமாண ஜன்னிய ஞானத்திற்கவிஷயமாயது அப்பிரமேயமெனப்படும்.

சங்கை:—ஹே பகவன்! 'மனஸைவானுத்ரஷ்டவ்யம்' என்னுஞ்சுருதியின்பொருளுரைக்குங்கால் தாங்கள் சுத்தமனோஜன்னியஞானவிஷயத்தன்மை அத்விதீயப்பிரஹ்மத்தின்கண் உளதெனக்கூறினீர்கள். இப்போது அதன்கண் பிரமாணஜன்னியஞான அவிஷயத்தன்மையுளதெனக் கூறுகின்றீர்களாதலின் முற்கூற்றுக்குப் பிற்கூற்றுமுரணுமன்றோ?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! சேதனஆபாசத்தோடுகூடிய அந்தக்கரணத்தின்விருத்தி ஞானமாம். கடாதி ஜடபதார்த்தங்களில், அதுவே ஆவரணநிவிருத்தியைச்செய்யும். அதன்கண்ணிருக்கும் சிதாபாசன் அப்பொருள்களைவிளக்குவன்; ஆதலின், அவற்றில் விருத்திவிஷயத்தன்மையும், சிதாபாசரூபப் பலவிஷயத்தன்மையுமிருக்கும். சேதனரூப அத்விதீயப்பிரஹ்மம் சுயஞ்சோதியாமாதலின் அதன்கண் சிதாபாசரூபப் பலவிஷயத்தன்மையோ சம்பவியாது. மகாவாக்கியத்தாலுண்டாய அந்தக்கரணவிருத்தி அத்விதீயப்பிரஹ்மத்தின் அஞ்ஞானவடிவ ஆவரணத்தை நீக்குமாதலின், அவ்விருத்திவிஷயத்தன்மை அதன்கண்ணுமுளது. ஆகையால், இப்பொருள் துணியப்பெறும் :—முன்னர் அத்விதீயப் பிரஹ்மத்தின்கண்பிரமாணஜன்னியஞான விஷயத்தன்மைகூறியது, விருத்திவிஷயத்தன்மையை அங்கீகரித்தேயாம். இப்போது அதன்கண் ஞான அவிஷயத்தன்மைகூறுதல சிதாபாசரூபபல அவிஷயத்தன்மையை யங்கீகரித்தாம். ஆதலின், முற்கூற்றுக்குப பிற்கூற்று முரணின்றுமென்றுணர்க. இங்ஙனம் சர்வபேதமுமறற அத்விதீயப பிரஹ்மத்தின்கண் பேதத்தைககாண்பவன் பரமதுக்கத்தையடைவன். பேதங்காண்பவனுக்கு நானுவகைத் துக்கத்தை யடைவிக்குமபேதத்தை உண்டுபண்ணும அவித்தையினும், பரமாய அத்விதீயப்பிரஹ்மம ஜன்மமரணுதி விகாரங்களற்றதாமாதலின், அதனைச் சுருதிபகவதியானவள் அஜமெனக்கூறினள். அது கமனுகமனுதிக் கிரியைகளற்றதாமாதலின், சுருதிபகவதியானவள் அதனைத் துருவமென்றனள். அது தேசகாலவஸ்து பரிச்சேதமற்றதாமாதலின், சுருதிபகவதியானவள் அதனை மகான் என்றனள். அத்தகைய அத்விதீயப் பிரஹ்ம சாக்ஷாத்கார இசசையுடையவன் இவ்வுபாயத்தைச் செய்க. அனுன்ம பதார்த்தங்களைக் கூறும் வியாகரணுதி சாஸ்திரங்களை விட்டொழித்து, சுரோத்திரியப் பிரஹ்ம நிஷ்டராய ஆசிரியரின் வாயிலாய்க் கேவலம் வேதாந்தசாஸ்திர சிரவணத்தையேசெய்க. ஏகாந்ததேசத்திலிருந்து அதனை மனனஞ்செய்க. மனனத்தானிச்சயித்த அத்விதீயப் பிரஹ்மத்தின்கண் சிததவிருத்திகளின் நிரந்தரப் பிரவாகவடிவ நிதித்தியாசனஞ்செய்க. பாலகனைப்போல, இராகத்துவேஷாதிகளற்றுவிடுக. பிரஹ்மசரியாதி சாதனங்களோடு கூடிவாழ்க. இங்ஙனம் சிரவணுதி சாதனங்களோடுகூடிய இவ்வதிகாரி தனது மனத்தை அந்தரான்மாவின்கண் இலயஞ்செய்க. மனததின் இலயமே சர்வதுக்கநிவிருத்தி காரணமாம். இப்போது அனுன்மபதார்த்தங்களின் நிவிருத்தி நிரூபிக்கபபடும் :—ஹே ஜனகராஜாவே! இவ்வத்விதீய ஆன்மாவின் வேறுயுள்ள பிரசித்த அனுன்ம பதார்த்தங்களுமவறறைக்கூறும் சாஸ்திரங்களும், அவற்றையடையும் சாதனங்களும் சாஸ்திரத்தால் நிஷித்தஞ்செய்யப்படாதிருபபினும், அவை சிந்தனஞ்செய்யும் புருஷனுடைய வாக்காதி இந்திரியங்கட்குப் பரிசிரமத்தையே கொடுக்கும். ஆதலால் அவற்றையும், அவற்றைக்கூறும் சாஸ்திரங்களையும் முழுதுமக்கள் விட்டொழிக்கவே வேண்டும். இவ்வுலகில் பாரத்தை எடுக்குங் கழுதை பரமதுக்கத்தை யடைவதுபோல, வர்த்தமான விஷயசிந்தையால் வியாகுலமுற்றவன் பரமதுக்கத்தையேயடைவன். வர்த்தமான விஷயசிந்தையாலும் பரமதுக்கத்தையடைவனுயின், பூத பவிஷ்யத் விஷயசிந்தையால் பரமதுக்கத்தை யடைவனென்பதில்யாது கூறவேண்டுமென்பது கருத்தாம். ஆனந்தசொரூப ஆன்மாவின்

சிந்தனத்தை விட்டொழித்து இவன் சிந்தனஞ்செய்யும்விஷயங்கள் சாஸ்திரத்தால் நிஷேதிக்கப்படாவிடினும், அவை பிரவிருத்திவாயிலாய் இவனுடைய வாக்காதி இந்திரியங்கட்குக் கேவலம் பரிசிரமத்தையே கொடுக்கும். சாஸ்திரவிதான பாணிக்கிரகணஞ்செய்த ஸ்திரீசம்போகாதிவிஷயங்களும் இவனுக்குத் துக்கத்தையே கொடுக்குமாயின், சாஸ்திர நிஷித்த பிறர்மனைதழுவல் முதலிய நிஷித்த விஷயங்கள் பரமதுக்கத்தைக் கொடுக்குமென்பதில் யாதுகூறவேண்டுமென்பதுகருத்தாம். ஆகையால், இம்மனம் மீண்டும் துக்கத்தையடையாவண்ணஞ் சர்வவிஷயங்களையும் பரித்தியாகஞ்செய்து, இதனை அந்தராத்மாவின்கண் ஒருமைப்படுத்தவேண்டும்; இதுவே சர்வதுக்கநிவிருத்திசாதனமாம். இவ்வண்ணம் சமதமாதி சாதனங்களாலும், சிரவணாதிகளாலும், பஞ்சகோச விசாரத்தாலும் அத்விதீய ஆன்மாவின்கண் உள்ளத்தை ஒருமைப்படுத்திய அதிகாரியே அத்விதீயஆன்மசாக்ஷாத்காரத்தையடைவன். ஆகையால், அனான்மபதார்த்தங்களின் சிந்தனையைப் பரித்தியாகஞ்செய்து, அந்தராத்மாவின்கண்ணேசெலுத்திய சித்தத்தின்ஒருமைப்பாடே ஆன்மசாக்ஷாத்கார சாதனமெனத் துணியப்பெறும். இப்போது வியாகரணாதி சாஸ்திரங்கள்கூறிய அனான்மபதார்த்தங்கள் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! நோயாளிக்குப் குபத்திய அன்னபக்ஷணம் தோஷகாரணமே யாவதுபோல, அதிகாரிகட்கு வியாகரணாதி அனான்மசாஸ்திரங்களின் அத்தியயனமும், பகிர்முகத்தன்மையின்காரணமேயாம். ஆண்டு, முதலில் வியாகரணசாஸ்திர பதார்த்தம் நிரூபிக்கப்படும்:—பாணினி இருஷி இயற்றிய அஷ்டாத்தியாயீ முதலிய வியாகரண கிரந்தங்களில் இவ்வகைப்பொருள்கள் நிரூபிக்கப்பட்டுள்ளன:—ஆண்டு சக்தி, கௌணீ, இலக்ஷணை என்னும் மூவகை விருத்திகளுள. பதங்கட்குத் தத்தம் அர்த்தத்தோடுள்ளசம்பந்தம் விருத்திஎனப்படும். யோகசக்தி எனவும், ரூடிசக்தி எனவும் சக்திவிருத்தி இருவகையாம். பதத்தின் அவயவங்களிலிருக்கும் சக்தி யோகசக்தியாம். அதையுடைய பதம் 'யௌகி' எனப்படும். பாசகன் என்னும்பதத்தில் பசப் பகுதி எனவும், அகச் விகுதி எனவும் இரண்டவயவங்களுள. பசப்பகுதிக்குப் பாகரூப அர்த்தத்திற்சக்தியாம். அகச்விகுதிக்குக் கர்த்தாரூப அர்த்தத்திற் சக்தியாம். அவ்விரண்டவயவங்களும் ஒருமித்து அடுபவனை யுணர்த்தும். பத அவயவங்களின்சமுதாயத்தே இருக்குஞ்சக்தி 'ரூடிசக்தி' எனப்படும். அதனையுடையபதம் ரூடமாம். விப்பிரன், கௌ, குடம் என்பன முதலிய பதங்களினவயவசமுதாயத்தின்கண்ணே பிராம்மணாதி அர்த்தத்தை யுணர்த்தும் சக்தியிருக்கும். அதனையுடைய பதம் 'சக்தம்' எனப்படும். பதத்தின் வாச்சிய அர்த்தத்திலிருக்கும் குணவாயிலாய்ப் பதத்தின் அவாச்சிய அர்த்தத்தோடுள்ள சம்பந்தம் 'கௌணீவிருத்தி' எனப்படும். அதனையுடையபதம் கௌணமாம். 'இப்பாலகன் அக்கினியாவன்' என்னும் வசனத்தின்கண் அக்கினி சப்தத்தின் வாச்சியார்த்தம் நெருப்பாம். அதன்கண் ஒளிர்வுடைமைக் குணம் உளது. அதுபாலகனிடத்து முளதாதலின் அக்கினிபதத்திற்குப் பாலகனிடத்தே கௌணீவிருத்தியாம். பதத்தின் வாச்சியார்த்தத்திற்கு அவாச்சியார்த்தத்தோடுள்ள சம்பந்தம் இலக்ஷணாவிருத்தியாம். அதனையுடையபதம் 'இலாக்ஷணி

கம்' எனப்படும். அதுவும், விட்டலக்ஷணை எனவும், விடாதலக்ஷணை எனவும், இலக்ஷிதலக்ஷணையெனவும் மூவகைத்தாம். பதத்தின் வாச்சியார்த்தத்தைப் பரித்தியாகஞ்செய்து, அவாச்சியார்த்தத்தைக் கவருதல் விட்டலக்ஷணையாம். 'கங்கையின்கண் கிராமம்' எனக்கூறின் இதன்கண் கங்காபதத்தின் வாச்சியார்த்தமாகிய ஜலப்பிரவாகத்தே கிராமத்தின் இருப்புச்சம்பவியாதாதலின், வாச்சியார்த்தத்தை விடுத்துப்பிரவாகசம்பந்தியாய கரையில் கங்காபதத்தின் இலக்ஷணையாம். பதத்தின் வாச்சியார்த்தத்தை விடாமல், அவாச்சியார்த்தத்தைக் கவர்தல் விடாதலக்ஷணையாம். 'காகங்களினின்றுந் தயிரைக்காப்பாற்றுக' எனக்கூறின் அதுகேட்டமற்றையன் தயிரைக்குடிக்குங் காகம், நாய்முதலிய பசுக்களிடத்தே காக சப்தத்தின் இலக்ஷணைசெய்வன். பதத்தின் வாச்சியார்த்தத்திற்கு அவாச்சிய அர்த்தத்தோடுள்ள பரம்பராசம்பந்தம் இலக்ஷிதலக்ஷணையெனப்படும். 'இருரேபமிசைபாடுகின்றது' என ஒருவன்கூறின், இதன்கண் இருரேபபதத்தின் வாச்சியார்த்தம் இரண்டு ரேபங்களாம். அவ்வர்ணங்களிடத்தே சப்தகாரணத்தன்மை சம்பவியாதாதலின் இருரேபபதத்திற்கு மதுகரத்தின்கண் இலக்ஷணையாம். அப்பதத்தின் வாச்சியார்த்தமாய இரண்டு ரேபங்கட்கு வண்டினோடு சாக்ஷாத் சம்பந்தஞ் சம்பவியாது; மற்றோ, தாமடங்கிய பதவாச்சியத்தன்மைவடிவ பரம்பரைச் சம்பந்தஞ் சம்பவிக்கும். ஈண்டு தாம் என்பதால் இரண்டு ரேபங்களைக்கொள்க. அவ்விரண்டுமடங்கிய பிரமரபதத்தின் வாச்சியார்த்தம் வண்டாம். இங்ஙனம் வியாகரணசாஸ்திரத்தே பாசகாதி பதங்களில் சத்திமுதலிய விருத்திகள் கூறப்பட்டிருக்கின்றன. அவர் மீண்டும் இவ்வகைப்பதார்த்தங்களைக் கூறுகிற்பர். 'பூசுகீ' என்பதாதி பதங்களில்பகுதிப்பொருள் முக்கியமாம். 'வாஅசுகீ' என்பதாதி பதங்களில் விகுதிப்பொருள் முக்கியமாம. கர்த்தா, கருமம், கரணம், சம்பிரதானம், அபாதானம், அதிகரணம்எனக் காரகங்கள் ஆறுவகையாம், பசமுதலியபகுதிகளின் பொருள்கிரியையாம். அரிசிமுதலியவைகருமமாம். பசமுதலியவை சகர்மகப்பகுதிகளாம், பூமுதலியவை அகர்மகப்பகுதிகளாம். இந்த ṇிச் என்னும் விகுதி, பிரயோஜகபுருஷனது வியாபாரத்தைக்கூறும். இவ்விகுதி பிரயோஜ்யபுருஷனது வியாபாரத்தைக்கூறும். இப்பகுதிவிகுதி இரண்டும்ஒருமித்தேயுச்சரிக்கப்படும். ஸு, ஔ, ஜஸ்என்பனமுதலியவை சுப்விகுதிகளாம். அவை எப்பதத்தின் முடிவிலிருக்குமோ அது சுபந்தபதமாம். திப், தஸ், ஸி, என்பன முதலியவை திங் விகுதிகளாம் இவற்றை முடிவிலுள்ளபதம் திஙந்தபதமாம். இவ்விருவிகுதிகளுமுள்ளவிடத்தே வேறொரு விகுதியும் வாராதாம். இது தத்திதவிகுதியாம், இது கிருதந்த விகுதியாம். இது கிருத்தியவிகுதியாம். அவ்யயீபாவம், தத்புருஷம், துவிகு, துவந்துவம், கருமதாரயம், பகுவிரீகி என்னும் அறுவகையினவும் சமாசங்களாம். இது நாமப்பகுதியாம் இது ஸ்திரீ விகுதியாம், இவ்விகுதி பாவத்தின்கண்ணும், இவ்விகுதி கர்த்தாவின்கண்ணும் என்பன முதலியவாய் வியாகரணசாஸ்திரத்தில் அநேகவகைச் சப்தங்கள் சாற்றப்பட்டிருக்கின்றன. அவையாவும் அனுன்மாக்களையுணர்த்துமாதலின், அவற்றைச் சிந்தித்தலால் இவ்வதிகாரி பரமமோகத்தையடைவன். இப்போது ஜைமினிரிஷி இயற்றிய பூர்வ மீமாம்ஸாசாஸ்திரத்தின் பதார்த்தங்கள் நிரூபிக்கப்படும்;—ஈண்டு, ககாராதி வர்ணங்களின்சமுதாயம்பதமாம். அவற்றின்சமுதா

யம் வாக்கியமாம். 'சோதிட்டோமத்தால் துறக்ககாமன் வேட்க' என்பதாதி வாக்கியங்களிலுள்ள பதங்கள் ஒன்று மற்றொன்றைவிடுத்து சாப்தபோதம் உண்டாக்க மாட்டாவாதலின், அவைபரஸ்பரம் ஆகாங்க்ஷையுடையனவாம் துறக்ககாமன் சோதிட்டோமத்தால் வேட்க என்பதன்கண்ணிருக்கும் பதசமுதாயமும், 'உற்பித்தால் வேட்க' என்பதன்கண்ணுள்ள பதசமூகமும் பரஸ்பரம் அவாவமாட்டாவாதலின் அவைஇரண்டும் பரஸ்பரம் பின்னமாம். ஒரு முறை யுச்சாரணஞ்செய்த பதமும் வாக்கியமும் ஒரேஅர்த்தத்தையுணர்த்தும். எத்தலத்தே அப்பதமும் வாக்கியமும் வேறுபொருளையுமுணர்த்துமோ, ஆண்டுவாக்கியபேதப் பிராப்தியுண்டாம். மாயா விசிஷ்ட பரமான்மாவினின்றும் ஆகாசாதிபூதங்களுற்பன்னமாவதேபோலக் ககராதிவர்ணங்களுமுற்பன்னமாம். இங்ஙனம் உத்தரமீமாம்ஸையுடையார் உரைப்பர். பூர்வமீமாம்ஸையுடையரோ ககராதி வர்ணங்கள் விபுக்களும் நித்தியங்களுமா மாதலின், அவற்றிற்கு உற்பத்திநாசம் ஒவ்வாதெனெ உரைப்பர்.

சங்கை :—ககராதி வர்ணங்கள் நித்தியமாமாயின் அவற்றின் தோற்றம் எப்போதுமுண்டாதல்வேண்டும்.

சமாதானம் :—ஆகாசத்தின்கண் உடுக்கணமிருப்பினும் தினத்தில்தோற்றாது இராத்திரியிற் றோற்றுதலின், இராத்திரி அவற்றின் அபிவியஞ்சகமாம். அது போல எப்போதுமிருப்பினும் ககாராதிவர்ணங்கள் கண்டம், நாவுமுதலியவற்றின் சம்பந்தத்தினன்றித்தோற்றா ; மற்றோ, அதன்பின்னரே தோற்றுமாதலின் அந்தரவாயுவோடுசம்பந்தமுற்ற மார்பு, கண்டம், சிரம், நாவடி, பல், நாசி, உதடு, நாவு என்னும் எட்டுத்தானங்களும் ஸ்பிருஷ்டாதிப் பிரயத்தனங்களும் அவ்வர்ணங்களின் அபிவியஞ்சகங்களாம். இங்ஙனம் அத்தானங்களால் அபிவியக்தியையடைந்த ககாராதிவர்ணங்கள் கேட்பவனுடைய செவிப்புலனையடையுங்கால், அவை பதப்பெயரையேனும் வாக்கியப்பெயரையேனுமடையும். அவற்றின் முடிவிலிருக்கும் வர்ணமே பூர்வவர்ணங்களின் அநுபவஜன்னிய சம்ஸ்காரங்களோடு கூடியதாய்ப் பதார்த்தஞானத்திற்கும் வாக்கியார்த்தஞானத்திற்குங் காரணமாம். அவற்றோடுஅர்த்தங்கட்குப் போத்தியபோதகபாவநித்தியசம்பந்தமுளது. அது கடாதி பதங்கட்குக் கடத்தன்மைமுதலிய ஜாதிகளிடத்தேயாமாதலின், கடாதிசப்தங்களால் கடத்துவாதி ஜாதிகளின் சாப்தபோதமேயுண்டாம். கடாதி வியக்திகளின் ஞானம் அர்த்தாபத்திரூப ஆக்ஷேபத்தாலுண்டாம். சோதிட்டோமத்தால் துறக்ககாமன் வேட்க என்பதுமுதலிய வாக்கியங்களிலிருக்கும் பதங்கள் தத்தம் அர்த்தங்களை நினைப்பிக்குமாதலின், அவை அபிதாயகங்களாம். வாக்கியார்த்த ஞானத்தின்பொருட்டே அவற்றின் பிரவிருத்தியாமாயினும், பதார்த்தங்களின் ஞானத்தானன்றி வாக்கியார்த்தஞானம் உண்டாகாதாதலின், அவை தத்தம் அருத்தத்தையும் அவசியமுணர்த்தும். சச்சிதாநந்தரூபம் ஆன்மா என்பதுமுதலிய வாக்கியங்களிலிராநின்ற பதங்கள் நினைப்பித்த தத்தம்அர்த்தங்களே பரஸ்பரம் சம்பந்தரூப வாக்கியார்த்தத்தையுணர்த்தும். பரஸ்பரம் ஆகாங்க்ஷையையுடைய சம்பூரண பதார்த்தங்கட்கும் வாக்கியார்த்தத்தின்கண்ணே சம்பந்தமுண்டாம். கர்த்தா, கருமம் என்பனமுதலிய பதார்த்தங்களிருப்பினும், கிரியாபதார்த்தமின்றி வாக்கியார்

த்தபூரணத்தன்மையுண்டாகாதாதலின் கிரியாபதாமைம்ம வாக்கியார்த்தத்தைப் பூரணிப்பிக்கும். வேறுவாக்கியத்தை யபேக்ஷியாததே வாக்கியமெனப்படுமாதலின், ஒரு வாக்கியத்தின்கண் ஒரேகிரியாபதமிருக்குமன்றி அநேகங்களிரா. யாண்டு ஒருவாக்கியம் மற்றொருவாக்கியத்தையபேக்ஷிக்குமோ, ஆண்டுப் பிரகரணரூபப் பிரமாணமாம். அந்தக் கிரியாபதம்பொருந்திய வாக்கியங்களிடத்தும் லிங், லோட், லேட், தவ்வியம் என்பனமுதலிய கிருத்தியவிருதிகள் யாவும் விதியை யுணர்த்தும். உலகினும் வேதத்தினும் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் அறியப்படாத பதார்த்தமே விதாதி விதிவிருதிகளின் பொருளாம். அபௌருஷேய வாக்கியங்களின் சமூகம் வேதமாம். அவ்வேதமும் மந்திரபாகமெனவும், பிராஹ்மணபாகமெனவு மிருவகைத்தாம். விதிவாக்கியங்களின்யாகாதிரூப அர்த்தத்தைத் துதித்து அதிகாரிகளை அவற்றின்கண்ணே பிரவிருத்திப்பிக்கும் வேதவாக்கியம் அர்த்தவாதரூபமாம். அதுவும் குணார்த்தவாதமெனவும், அநுவாதார்த்தவாதமெனவும், பூதார்த்தவாதமெனவும் மூவகைத்தாம். எவ்வாக்கியத்தின்கண் கிரியாபதமின்றாமோ, அதன்கண் பூர்வவாக்கியத்தினின்றேனும் உத்தரவாக்கியத்தினின்றேனுங் கிரியாபதத்தைச்சேர்க்க. இங்ஙனம் எவ்வாக்கியத்தின்கண் கர்த்தா கருமாதி காரகங்களின் வாசகபதமின்றாமோ, அதன்கண்ணும் பூர்வோத்தரவாக்கியங்களினின்றும் அவற்றைச் சேர்க்க. எவ்வாக்கியத்தின்கண் எப்பதம் அபேக்ஷிதமாமோ அது பூர்வோத்தர வாக்கியங்களில் ஒருகாலில்லாதிருப்பின் அதன்கண் அப்பதத்தை அத்தியாகாரஞ்செய்க. ஆகாங்க்ஷை, யோக்யதை முதலியவற்றின் வயத்தால் பதங்களின் வாக்கியங்களின் பரஸ்பர மாறுபாட்டைச் செய்க. பதங்கட்கு அர்த்தங்களோடுள்ள சம்பந்தம் உலகில் பெரியோர்களின் வியவகாரத்தாலறிந்துகொள்ளலாம். லௌகிகசப்தங்களே வைதிகசப்தங்களாமென்ப. உலகினும் வேதத்தினும் பதங்கட்கும் பதார்த்தங்கட்கும் சமானத்தன்மையேயுளதாயினும், வேதத்தின்கண் வாக்கியங்களின் அர்த்தம் அபூர்வமேயாகும். ஆண்டு பூர்வகாண்டவாக்கியங்கட்குத் தர்மரூபஅர்த்தமாம். உபநிஷத்ரூப உத்தரகாண்டவாக்கியங்கட்கு அத்விதீயப்பிரஹ்மரூப அர்த்தமாம். அவையிரண்டும் பிரத்தியக்ஷாதி லௌகிகப்பிரமாணங்களால் அறியப்படமாட்டாவாதலின் அபூர்வமாம். விதிவாக்கியங்களின் யாகாதிரூப அர்த்தத்தை ஸ்துதித்து, அவற்றினும்வேறாய அர்த்தத்தை நிந்தித்து, அர்த்தவாதவசனம் அதிகாரிகட்குப் பிரவிருத்தி நிவிருத்தியை யுண்டாக்கும். மந்திரரூப வசனந் தேவதைகளை நினைப்பிக்குமாதலின், அர்த்தவாதமும், மந்திரமும், விதிவாக்கிய அர்த்தத்தின்கண்ணே பிரமாணமாம். அவ்விதிவாக்கியமும், விநியோகவிதி, பிரயோகவிதி, உற்பத்திவிதி, அதிக்கிரியாவிதி என நால்வகைத்தாம். பாவனையைப் பிரதிபாதனஞ்செய்யும் விதிவாக்கிய அர்த்தத்தின்கண் சாதனம், சாத்தியம், இதிகர்த்தவ்வியதை என்னும் மூன்றும் உபயோகிகளாம். சுவர்க்ககாமன் வேட்க என்னும் வாக்கியார்த்த ஞானத்தின் பின்னர் யாகாதிகருமங்களின் அனுஷ்டானத்தால் தருமரூப அபூர்வமுண்டாம்; அதனால், சுவர்க்கங்கிடைக்கும். அவ்வேதப் பிரதிபாதித கருமமும், பிராகிருதகருமம், வைகிருதகருமம் என இருவகைத்தாம். அவற்றுள், இக்கருமம் இவ்வாறுசெய்க என விதித்துள்ளது பிராகிருதகருமமாம். இக்கருமம் இக்கருமத்

தைப்போலச் செய்க என விதித்துள்ளது வைகிருதகருமமாம். சப்தாந்தரம், அப்பாசம், சம்ஜ்ஞை, சங்கியை, குணம், பிரகரணாந்தரம் என்பவற்றால் அக்கருமம் பின்னபின்னமாம். அவற்றுள்ளும் சில அங்கரூபமாம், சில அங்கிரூபமாம். அவற்றின் அங்காங்கிபாவத்தில் சுருதி, லிங்கம், வாக்கியம், பிரகரணம், ஸ்தானம், சமாக்கியை என ஆறு பிரமாணங்களுள. அவற்றின் அங்காங்கிபாவ நிச்சயத்தின்பின் இவ்வளவென்னும் பரிமாணம், சுருதி, அர்த்தம், பாடம், ஸ்தானம், முக்கியம், பிரவிருத்தி என்னும் ஆறு பிரமாணங்களாலறியப்பெறும். அவற்றின் பரிமாணம், பத்தினியோடுகூடிய மூன்றுவருணை அதிகாரிகளுள், ஒருவனாலேனும், பலராலேனும் வியவஸ்தைவாயிலாய்ச் செய்யயோக்கியமாம். யாகாதிகருமங்களில் உபயோகியாய திரவிய தேவதைகளைக்கண்டு விவேகியானவன் இக்கருமம் இக்கருமத்தின் விகிருதியாமென யாகாதிகருமங்களின் பரஸ்பரப் பிரகிருதி விகிருதி பாகத்தை நிச்சயஞ்செய்துகொள்க. விகிருதியாகத்தே பதார்த்தங்களின் ஊகஞ்செய்க. சர்வகருமங்களின் பூரணத்தையுற்ற அவ்விகிருதி கருமத்தே பிரகிருதிகருமத்தின் அங்கநிவிருத்திரூப பாதத்தையுணர்க. மற்றொன்றின்பொருட்டுச் செய்யப்பட்ட அங்கத்தால் மற்றொன்றின் உபகாரமேயாயின், அது பிரசங்கமெனப்படும். ஒருமுறை செய்யப்பட்ட கருமம் பலகருமங்கட்கு அங்கரூபமாயின் அது தந்திரமாம். இவைமுதலாக அநேகவகைப் பதார்த்தங்களை பூர்வமீமாம்சையின்கண் ஜைமினி இருஷியானவர் கூறியுள்ளார். அப்பதார்த்தங்களின் அப்பியாசத்தால் இப்போதுள்ள புருஷர் தம்மைப்பண்டிதரென அங்கீகரித்துளார்; அவர் வித்வான்களின் சபையிலிருந்துகொண்டு அப்பூர்வமீமாம்சையின் பதார்த்தங்களைக்கூறுகிற்பர். அவர் அபிமானத்தால் உத்தரமீமாம்சையையும் யாமே யறிவேமெனவும், அதன்கண் பிரஹ்மஞானத்தால மோக்ஷப்பிராப்திகூறப்பட்டுளது, அதனிடையில் யாகாதி கருமங்கள் முதலிய அநேகமலைச் சாதனங்கள் கூறப்பட்டிருக்கின்றன, அவை யாவற்றையும் யாம் நன்றாயறிவேமெனவுங் கூறுகிற்பர். இங்ஙனம் மீமாம்ஸாசாஸ்திர அனுன்மபதார்த்தங்களைச் சிந்தித்து அந்தப் பண்டிதர்கள் நானாவகை வியாமோஹத்தையடைவர். இப்போது கௌதம இருஷி இயற்றிய நியாயசாஸ்திரத்தின்பதார்த்தங்கள் நிரூபிக்கப்படும் :—பிரதிஜ்ஞை, ஹேது, உதாஹரணம் என்னும மூன்று அவயவங்களின் சமுதாயரூப வாக்கியத்தால் பரார்த்த அனுமானமுண்டாமென மீமாம்ஸகர் அங்கீகரித்துளார், உதாஹரணம், உபநயம் என்னும் இரண்டவயவங்களின் சமுதாயரூப வாக்கியத்தால் பரார்த்தாநுமானமுண்டாமென பௌத்தன் அங்கீகரித்துளான், இவ்விரண்டும் அசங்கதமாம்; மற்றோ, பிரதிஜ்ஞைமுதலிய ஐந்து அவயவங்களின்சமுதாயரூப வாக்கியத்தாலே பரார்த்தானுமானமுண்டாம். அந்நையாயிகர் மற்றைய நூலுடையார் மதத்தே இவ்வகைத்தூஷணங் கூறுவர் :—நின்மதத்தே இவ் வான்மாசிரயரூபதர்க்கமுண்டாம். நின்மதத்தே இவ்வந்நியோந்யாசிரயரூபதர்க்கமுண்டாம். நின்மதத்தே இச்சக்கிரிகைரூபதர்க்கமுண்டாம். நின்மதத்தே இவ் வநவஸ்தாரூபதர்க்கமுண்டாம். நின்மதத்தே இவ் வியாகாதரூப தர்க்கமுண்டாம். நின்மதத்தே இப் பிரதிபந்திரூப தர்க்கமுண்டாம். இவ்வுணது தர்க்கம் உடன்பாடுரூபதூஷணத்தால் மிகுக்

கப்பட்டிருத்தலின் அசத்தியமாம். இவ்வுனது தர்க்கம் பிரதிவாதியின் அநிஷ்டத்தைச்செய்யாதாதலின் அசத்தியமாம். இவ்வுனது தர்க்கம் வியாப்தியற்றதாமாதலின் அசத்தியமாம். இவ்வுனதுதர்க்கம் விபரீதமாமாதலின் அசத்தியமாம். இவ்வுனது தர்க்கம் அநுக்கிராஹகப்பிரமாணமற்றதாமாதலின் அப்பிரயோஜகமாம். இவ்வுனது ஏது, வியாப்திபக்ஷதருமத்தன்மையற்றதாமாதலின் ஏதுப்போலியாம். இவ்வுனது சாத்தியம் ஆசிரயமற்றதும் பிரசித்தியற்றதுமாம். இவ்வுனது அநுமானத்தில் யாதொரு திருஷ்டாந்தமும் நல்லதில்லை. இவ்வநுமானத்தே நீ உதாஹரணத்தைவாளாகூறினுய், இவ்வநுமானத்தே நீ நிகமனத்தைவாளாகூறினுய். இவைமுதலாகஅநேகவகைஅனுன்ம பதார்த்தங்கள்நியாய சாஸ்திரத்திற் கூறப்பட்டிருக்கின்றன. ஹே ஜனகராஜாவே! இவ்வண்ணம் வியாகரணசாஸ்திரத்தும், பூர்வமீமாம்ஸையிலும், நியாயசாஸ்திரத்துங் கூறப்பட்டிருக்கும் அநேகம்வகை அனுன்மபதார்த்தங்களில் ஆசக்தியையடைந்து இப்போதுள்ள பகிர்முகர்கள் இவ்வெல்லாப்பொருளேயும் யாமேயறிவேம், எம்மையன்றி வேறொருவரும் இப்பொருளேயறியாரெனக்கூறுவர். இங்ஙனந் தம்மையாவரினும மேன்மையாகக்கருதி, அப்பகிர்முகர்வியர்த்தமாகவேகுரோதத்தையுறுவர். அநேகம் நாய்களால் சூழப்பெற்ற நாயானது குரோதத்தால் தனதுபற்களேக்காட்டுவதுபோல, குரோதத்தோடுகூடிய அப்பகிர்முகருந்தமதுபற்களேக்காட்டுவர். வேதாந்தசாஸ்திர விசாரத்தைவிட்டொழித்து முற்கூறிய அனுன்மசாஸ்திரங்களே விசாரிப்பவர் உலகில் நூலுணர்ந்தோரெனக்கூறப் பெறுவாராயினும், அவர்பால் மற்றவரினின்றுஞ் சிறிதுமாத்திரையுஞ் சிறப்பின்றும். ஏனெனின், இவ்வுலகத்திலுள்ள ஜீவர்களிடத்தே பசி, தாகம், பயம், நித்திரை என்பன முதலிய சமானமேயாம். அனுன்மசாஸ்திர விசாரஞ்செய்பவர் மற்றைய ஜீவரினும் அதிகமாய்ப் பேசுவாராதலின், மற்றையரினும் அவர்பால் விசேஷத்தன்மையுளதெனக் கூறின், அது சம்பவியாது; ஏனெனின், மிகவும் வாயாடுவதால் குள்ளநரியைப்பார்க்கினும் இப்பகிர்முகரிடத்தே விசேஷத்தன்மை சம்பவியாது; மற்றுே, குள்ளநரிக்குச் சமானமேயாவர். அனுத்மபதார்த்தங்களே விசாரஞ்செய்யும பகிர்முகர் பிரஹ்மசிந்தனஞ்செய்யும் அறிஞரைப் பிரயோஜனமின்றியே நிராதரம்புரிவர். சாஸ்திரார்த்தத்தைக் கூறும் மஹான்மபுருஷரைப் பரிகாசஞ்செய்வர். துர்ஜ்ஜனப்பிசுநன் தோஷமற்ற மஹாத்மபுருஷரிடத்தே தோஷாரோபணஞ்செய்து அதனேக் கூறுநிற்பதேபோல, அனுன்மபதார்த்த விசாரத்தால் அத்தியந்தம் அபிமானத்தையடைந்த பகிர்முகர், இருஷிகளிடத்தேயும், பாணினி இருஷியானவர் விசாரமின்றியே இச்சூத்திரத்தைச்செய்தனர்; ஜைமினிஇருஷியானவர் இச்சூத்திரத்தை விசாரமின்றியேசெய்தனர்; வியாஸபகவான் விசாரமின்றியேஇச்சூத்திரத்தைச்செய்தனர்; ஏனெனின், பூர்வசூத்திரத்தாலேனும், உத்தரசூத்திரத்தாலேனும் இவ்வர்த்தசித்தியுண்டாமாதலின், இச்சூத்திரம் வியர்த்தரூபமாம். இவ்வேதவசனம் உன்மத்தபுருஷனுடைய வசனத்தைப்போல அசங்கதமாய்த்தோற்றுகின்றதாதலின், இவ்வசனம் பரமேசுவரரால் செய்யப்பட்டதன்றும்; மற்றுே, இது யாரோ ஒரு தூர்த்தபுருஷனுல் வேதத்தின்கண்ணேபுகுத்தப்பட்டதாம்; ஆகையினுலிவ்வசனம்வியர்த்தமாம. அல்லது, இவ்வசனம்பரமேசுவரராற் செய்யப்பட்டதாமாதலின் பயனுடையதேயாம்.

ஆனல், இவ்வசனர்த்தத்தை யாமேயறிவேம்; எம்மையன்றி வேறெவருமிதனை யறியார் என ஆரோபித்துப் பிதற்றுவர். இவ்வண்ணம் அப்பகிர்முகர் அவ்விருஷிகளின் சாஸ்திரங்களைப்படித்தே மதிமான்களாகி அவர்களிடத்தே பலவகைத்தூஷணுரோபஞ்செய்வர். வேதபாடத்தைச்சிரவணித்து, அப்பகிர்முகர் இவ்வண்ணம் கூறுகிற்பர்:—ஈண்டு, இச்சுரம் வேண்டியதாம். ஈண்டு, இவ்வர்ணம் வேண்டியதாம். ஈண்டு, இப்பதம் வேண்டியதாம். ஈண்டு இக்கிரமம் வேண்டியதாம். இப்பிராஹ்மணர்கள் சுரவர்ணுதிகளை உச்சரித்திலராதலின், இவர் வேதத்தையே நஷ்டஞ்செய்து விட்டனர். இவ்வண்ணம் அப்பகிர்முகர் வேதத்தைப் படிக்குஞ் சாதுப் பிராஹ்மணர்களையும் நிந்தையேபுரிவர். அவர் மீண்டும் இங்ஙனங் கூறுகிற்பர். சாஸ்திரவிசாரத்தில் என்னுடைய புத்தியானது கூர்மையாயிருப்பது போல என்னுடைய குருவிற்குமின்றும், பிரஹ்மாவிற்குமின்றும், அந்நிய அறிஞர்கட்குமுன்னுமின்றும், இப்போதுமின்றும், இனிமேலுமுண்டாகாது. சமுத்திரத்தினின்றும் நாணுவகையாய அலைகளுண்டாவதேபோல, என்னுடைய முகரூப சமுத்திரத்தினின்றும் வியாகரண மீமாம்ஸை நியாயசாஸ்திரானுசாரமாய் நாணுவகை விசித்திரவாக்குகள் கிளம்புகின்றன. ஹே ஜனகராஜாவே! பாரத்தாற் பீடிக்கப்பட்ட கழுதையானது நாணுவகைச் சப்தங்களைச் செய்வதேபோல, அனுன்ம சாஸ்திரபாரத்தால் பீடிக்கப்பட்ட பகிர்முகக்கழுதை நாணுவகையாய்ப் பிதற்றித் திரியுமாதலின், அது அத்தியந்தநதுஷ்டக்கழுதையாம். இவ்வுலகில் மனைவிமைந்தாதியரைத் தியாகஞ்செய்தல் அத்தியந்தம் கடினமாமாயினும், ஒவ்வொருவர் அவர்களை விட்டொழித்துச் சந்யாசஆசிரமத்தைத்தரித்தும்,வித்தைமுதலியவற்றினபிமானத்தை விடுவதின்றும. இவ்வுலகில் ஒரு சுமைசுமைப்போன் தனது மஸ்தகத்தின்மேலிருக்கும் பக்ஷணத்தாற்பசிதீருந் ததியோதன முதலிய பாரத்தைப் பரித்தியாகஞ்செய்து கறபாரத்தைத் தன்தலைமேல்தூக்குவானுயின் அவன் அத்தியநதம் மூடனுவதேபோல, சுகசாதனமாய மனைவிமைந்தாதியரைப் பரித்தியாகஞ் செய்து, சந்யாச ஆசிரமத்தையடைந்தும் வித்தை முதலியவற்றின் அபிமானபாரத்தை எடுப்பவனுமம, அத்தியநதம் மூடனேயாவனுதலின், தனதுமங்கலத்தை இச்சித்த அதிகாரியானவன் வேதாநதசாஸ்திர விசாரத்தைவிட்டு, வேறு அனுன்ம சாஸ்திரவிசாரத்தை ஒருகாலும் செய்யலாகாது. ஏனெனின், அது இவனுடைய வாக்கு முதலிய இந்திரியங்கட்குக் கேவலம் பரிசிரமத்தையேதரும் அபிமானத்தையுண்டாக்கும்.

"நாநுத்⁴யாயாத்³ ப³ஹூஞ்ச²ப்³தா³ந் வாசோ விக்³லாபநம் ஹிதத்."

(பொ-ள்.) மிருதியாய அனுன்ம பதார்த்த சிந்தனம் இவனுடைய வாக்கு முதலிய இந்திரியங்கட்குப் பரிசிரமத்தையேகொடுக்குமாதலின், இவன் அனுன்ம பதார்த்தங்களைச் சிந்திக்கலாகாது; மற்றூ, நிரந்தரம் வேதாந்தசாஸ்திரத்தையே சிந்திக்கவேண்டும். கோவானது தனது நான்கு முலைகளாலுங் கன்றைத் திருப்திசெய்விப்பதேபோல, ஸ்வாஹாகாரம, வஷட்காரம், ஸ்வதாகாரம், ஹந்தகாரம் என்னும் நான்கு ஸ்தனங்களால் தேவதைகள், இருடிகள், பிதிர்க்கள், மனுஷர்கள் முதலியயாவரையும் திருப்திசெய்விக்கும் வேதவாணிவடிவக் காமதேனுவை அபிமா

ஜுவிகாரங்களற்றவனுய் மகிழ்விக்கும் அதிகாரியின்பொருட்டே அக்காமதேனு மோக்ஷப்பாலைக் கொடுக்கும். அபிமாநாதிகளோடுகூடிய யாவன் அக்காமதேனுவைத் துன்புறுத்துவனே, அவனுக்கு அது மோக்ஷரூப அமிர்தத்தைக்கொடுக்காது. ஆதலின், ஈண்டு வேதகாமதேனுவைத் துன்புறுத்தும் விவேகியாவன் உளன்? ஆனுல், ஆன்மவிசாரமற்ற பகிர்முகனே அதனைத் துன்புறுத்துவன். ஆகையால், இவ்வதிகாரி அவ்வேதகாமதேனுவை மகிழ்விக்கும்பொருட்டு, இவ்வகையுபாயஞ் செய்க. அதாவது அத்விதீயப்பிரஹ்மரூப ஆத்மாவின்கண் தனதுமனத்தை ஒருமைப்படுத்தி சேத்திராதி பாஹ்யேந்திரியங்களின் சம்பூரண வியாபாரங்களைப் பரித்தியாகஞ்செய்க, இவ்விதத்தால் மகிழ்வுற்ற அவ்வேதகாமதேனு இவனுக்கு மோக்ஷரூப அமிர்தத்தைக்கொடுக்கும்; இத்துணையால் நிர்க்குணப் பிரஹ்மத்தின்கண் மனதின்ஒருமைப்பிரகாரம் நிரூபிக்கப்பட்டது. இப்போது சகுணப்பிரஹ்மத்தின்கண் மனதின் ஒருமைப்பிரகாரத்தை நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! இம்மனம் அத்தியர்தஞ் சஞ்சலமாமாதலின், நிர்க்குணப் பிரஹ்மத்தின்கண் இதனை லயப்படுத்த உனக்குச் சமர்த்தின்றாயின், நின்பொருட்டுச் சகுணப்பிரஹ்ம அபேத சிந்தனரூப வேறு உபாயத்தை யான் கூறுகின்றேன், இதனை நீ சாவதானமாய்க் கேட்பாயாக. பிராண இந்திரியங்களின் சாக்ஷிரூபமாய் முன்னர் என்றுற் கூறப்பட்ட பரமான்மா, புத்தியின் தாதாத்மிய சம்பந்தத்தால் விஞ்ஞானமயப் பெயரையடையும். யாது சர்வப்பிராணிகளின் இருதய தேசத்திலிருக்குமோ, எதன்கண் இவ்விஞ்ஞானமயன் துயிலிலபேதத்தையடைவனே, அத்தகைய இப்பரமான்மா யாண்டும்பரிபூரணமாமாதலின், சுருதிபகவதியானவள் இதனை 'மஹான்' எனக்கூறினள். இதுஜனனமரணாதி சர்வவிகாரங்களுமற்றதாமாதலின், சுருதிபகவதியானவள் இதனை 'அஜம்' எனக்கூறினள். ஈண்டு மந்திரசித்தியையுடையவன்வசமாய் எல்லாப்பிராணிகளுமாவதேபோல, மாயாவிசிஷ்ட பரமான்மாவின்வசமாய்ச் சம்பூரண பூதபௌதிக உலகம் ஆய்விடுமாதலின், சுருதிபகவதியானவள் இதனை 'வசி' எனக்கூறினள். அல்லது, புத்திரர்களிடத்தே நேயத்தையுடையதாயை, அவர் தம் வசஞ்செய்துகொள்வதேபோல, இப்பரமான்மாவுஞ் சர்வஜீவர்களின் இதயத்தை விட்டு யாண்டுஞ் செல்வதில்லையாதலின் யாவருமதனைத் தம்வசஞ்செய்துளார். ஆதலின், சுருதிபகவதியானவள் இதனை 'வசி' எனக்கூறினள். ஒருகிருகஸ்தன் தனது மனைவிமைந்தராதி குடும்பத்தைத் தன் ஆணைக்குள் நடத்துவிப்பதேபோல, பரமான்மாவும்சம்பூரண ஜகத்தைத் தன் ஆணைப்படி நடத்துமாதலின் சுருதிபகவதியானவள் இதனை 'ஈசானன்' எனக்கூறினள். சூரியபகவான் இவ்வெல்லாவுலகையுங் காப்பாற்றுவதேபோல, இப்பரமான்மாவும் பலத்தைக்கொடுக்கும் வடிவத்தால் சர்வஜகத்தையுங்காப்பாற்றுவதாதலின், சுருதிபகவதியானவள் இதனை 'அதிபதி' என்றனள். புண்ணியவானானவன் புண்ணியகருமங்களால் புகழ்ச்சி முதலியவற்றைப் பொருந்தி விருத்தியடைவதேபோல, இவ்வாகாசசொரூப பரமான்மா புண்ணிய கருமத்தால் விருத்தியடையாது. பாபியானவன்பாபகருமத்தால் இகழ்ச்சிமுதலியவற்றைப்பெற்றி லகுத்தன்மையையடைவதேபோல, இப்பரமான்மா பாபகருமத்தால் இலகுத்தன்மையையடையாது. உண்மையாய்ப் புண்ணியபாபமற்றதும் [illegible] தன்மையுற்றதுமாகிய பரமான்மாவே மஹாராஜனைப்போலச் சம்பூரணஜகத்தையும்

தனதாஞ்ஞையில் நடத்துமாதலின், சுருதிபகவதியானவள் இதனைச் 'சர்வேஸ்வரன்' எனக் கூறினள். சூரியபகவானைப்போல இப்பரமான்மாவே சர்வபூதங்கட்கும் ராஜாவாமாதலின், சுருதிபகவதியானவள் இதனைப் 'பூதாதிபதி' எனக் கூறினள். தாய் தன் குழந்தைகளைக் காப்பாற்றுவதுபோல, இப்பரமான்மாவுஞ் சர்வ பூதப்பிராணிகளையுங் காப்பாற்றுமாதலின், சுருதிபகவதியானவளிதனைப் 'பூதபாலன்' எனக்கூறினள். நதியின் இருகரைமத்தியிலுள்ள காஷ்டம் மண்முதலியவற்றாற்செய்யப்பட்ட சேதுவானது, நதிஜலத்தின் மரியாதையைத் தரிப்பதே போல, இச்சுயஞ்ஜோதியாய பரமான்மாவே பூவுலகாதிகளின் வருணாசிரமதருமமரியாதையைத் தரிக்குமாதலின், சுருதிபகவதியானவள் இதனைச் 'சேது' எனக் கூறினள். இப்போது இப்பொருளையே வெளிப்படையாய் நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! இப்பரமான்மா ஜகத்மரியாதையின் விவஸ்தையை ஒருகாற் செய்யாதிருக்குமாயின், பிருதிவியாதி ஐந்துபூதங்களுந் தத்தம் மரியாதையைக்கடந்து சர்வஜகத்தையும் பிரளயஞ்செய்துவிடும். அங்ஙனஞ்செய்யுமாகில் இப்பரமான்மாவன்றி வேறுயார் அவற்றைத் தடுப்பர்; மற்றோ, இதுவே அவற்றைத் தத்தம் மரியாதையின்கண் ஸ்தாபனஞ்செய்விக்கும். இப்பூவுலகில் பிரியவிரதாதிக்ஷத்திரிய அரசர்கள் இருந்தனர். அவர்கள் மிகுந்த புண்ணியசாலிகள், அக்கினியைப்போன்று தேஜஸையுடையவர்கள். சஸ்திரஅஸ்திரவித்தைகளில் அத்தியந்தங் குசலர். பூவுலகிலுள்ள எல்லா அரசர்களினும் மகா பலவான்கள். அத்தகையர்கள் தமது தருமமரியாதையைத்தாண்டிப் பிரஜைகளை அநர்த்தஞ்செய்ய முயல்வராயின், சர்வஞ்ஞபரமான்மாவன்றி வேறுயார் அவர்களைத் தடுப்பர்? மற்றோ, இப்பரமான்மாவே அவர்களைத் தமது தருமமரியாதையில் ஸ்தாபித்தது. சாபானுக்கிரகாதிகளில் சமர்த்துடைய துர்வாசராதி குரோத முற்ற இருஷிகள் சபித்து இம்மூவுலகையுஞ் சாம்பராக்க ஒருகால் முயலின், இப்பரமான்மாவன்றி வேறுயார் அவர்களைத் தடுப்பர்; மற்றோ, இப்பரமான்மாவே அவர்களைத் தமது மரியாதையின்கண் ஸ்தாபிக்கும். ஸர்ப்பத்தைப்போலக்குரோதத்தையுடைய சிங்கமுதலிய தாமசியஜீவர்கள் தமது மரியாதையைவிடுத்து, சர்வப்பிராணிகளையும் ஒருகால்இம்சிக்கமுயலின், சர்வஞ்ஞபரமான்மாவன்றி வேறு யார் அவற்றைத் தடுப்பர்; மற்றோ, இதுவே அவற்றைத் தத்தம் மரியாதையின்கண் நிறுத்தும். அகாதஜலத்தையுடைய உப்புக்கடல்முதலிய ஏழுந் தத்தம் மரியாதையைவிடுத்து, சம்பூரணஜகத்தைப் பிரளயஞ்செய்ய ஒருகால் முயலுமாயின், இப்பரமான்மாவன்றி அவற்றை வேறு யார் தடுப்பர்? மற்றோ, இதுவே அவற்றை மரியாதையின்கண் நிலைபெறச்செய்யும். ஸ்ரீ கங்கைமுதலிய நதிகளின் ஜலங்கள் தமதுமரியாதையைவிடுத்து ஒருகால் மாறுகச்செல்லுமாயின், அவற்றைச் சர்வஞ்ஞ பரமான்மாவன்றி வேறுயார் தடுப்பர்; மற்றோ, இதுவே அவற்றைத் தத்தம்மரியாதையின்கணசெலுத்தும். பிரஹ்மாண்ட பாரத்தோடுகூடிய இப்பிருதிவி ஜலத்தின்மேலிருக்கின்றது. இது தனதுமரியாதையைவிடுத்து ஜலத்தின்கண்ணே ஒருகால் பிரவேசிக்க இச்சிக்குமாயின், இதனைச் சர்வஞ்ஞ பரமான்மாவன்றி வேறுயார் தடுப்பர்? மற்றோ, இப்பரமான்மாவே இதனைத் தனது மரியாதையின்கண்ணே நிலைநிறுத்தும், ஆகாசத்தின்கண்ணேயிருக்கும்

சூரியாதியர் தமது மரியாதையைவிடுத்து, கீழே பிருதிவியின்கண் ஒருகால் விழுவாராயின், இப்பரமான்மாவன்றி அவரை வேறுயார் தடுப்பர்? மற்றோ, இதுவே அவரைத் தத்தம் மரியாதையில் நிலைநிறுத்தும். ஹே ஜனகராஜாவே! இங்ஙனஞ் சேதுவைப்போலச் சர்வஜகத்தின்மரியாதையை ஸ்தாபனஞ்செய்யும் பரமான்மாவை நீ உனது வடிவமாய நிச்சயஞ்செய்தி. இத்துணையால் மாயாவிசிஷ்ட சகுணப்பிரஹ்ம அபேத சிந்தனப்பிரகாரம் நிரூபிக்கப்பட்டது. இப்போது பகிர்முகர் மீதுவைத்த கருணையினால் வேறு உபாயம் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! சர்வஜகத்தையும் தத்தமதுமரியாதையின்கண் ஸ்தாபனஞ்செய்யும் மாயாவிசிஷ்ட சகுணப்பிரஹ்மமும் பகிர்முகர்களால் அறியப்பெறாததாமென நீ கூறுவையேலாயின், இம்மனத்தின் அந்தர்முக உபாயம் அறிஞர்கள்கூறியிருக்கின்றனர்; அதனை நீ கேட்பாயாக:—ஹே ஜனகராஜாவே! இப்பகிர்முகமனம் பாகிய விஷயங்களை இச்சித்து அதன்கண் முயல்வதேபோல, அந்தராத்மாவை இச்சித்து அதன்கண்ணும் முயலுமாதலின், உள்வெளிகளில் மனத்துண்டாகும் பிரவிருத்திக்கு இச்சையே காரணமாம் எனவறிந்துகொள்ளலாமன்றோ? இப்பதார்த்தம் சர்வதோஷமுமற்றுச் சுந்தரமாயிருக்கின்றதெனச் சுந்தரரூபமாய் எவ்வெப்பதார்த்தங்களை இம்மனம் நினைக்குமோ அவ்வவற்றையுடைய இச்சிக்குமாதலின், பதார்த்தங்களின் சௌந்தரிய ஞானம் அவற்றினிச்சைக்குக் காரணமாமென வறிந்துகொள்ளலாமன்றோ? பாபிகளுக்குச் சிங்கசர்ப்பாதி அப்பிரியபதார்த்தங்களின் ஞானமுண்டாதல் பூர்வபாவகருமத்தாலாமாதலின், அது அவற்றின் ஞானகாரணமாம். புண்ணியவான்கட்குத்தனம் முதலிய பிரிய பதார்த்தங்களின் ஞானமுண்டாதல் புண்ணிய கருமமகிமையாலாமாதலின், அது அவற்றின் ஞானகாரணமாம். ஆகையாலிப்பொருள் துணியப்பெறும்:—ஆத்ம சாக்ஷாத்காரத்தை இச்சித்த அதிகாரி யாகம், தானம், தவம், அநாசகம், என்பனமுதலிய புண்ணியகருமங்களைச்செய்க. அவற்றால் அவனுக்கு ஆன்மாவின் சௌந்தரியத்தன்மை ஞானமுண்டாம். அதன்பின்னர் ஆநந்தஸ்வரூப ஆன்மாவையுடைய இச்சையுண்டாம். அதன்பின் அவன் மனம் ஆநந்தஸ்வரூப ஆன்மாவின்கண்ணே பிரவிருத்திக்கும். இங்ஙனம் யாகாதிகள் ஆன்மஞானத்தில் பரம்பரையாய் உபயோகமாம்.

சங்கை:—ஹே பகவன்! ஜோதிட்டோமத்தாற் சுறக்ககாமன் வேட்க, என்பனமுதலிய வேதவாக்கியங்களில் யாகாதிகள் சொர்க்கபலசாதனமெனக் கூறப்பட்டுள்ளனவாதலின் அவற்றின்கண் ஞானசாதனத்தன்மை எங்ஙனங்கூடும்?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! யாகாதிகள் சொர்க்காதி பலசாதனமெனக் கூறப்பட்டிருக்கின்றனவாமாயினும் அவை ஞானத்திற்கும் சாதனமாம். ஏனெனின், வாழுங்காலம்வரை தரிசபூர்ணமாசங்களால்வேட்க, என்னும் வசனத்தால் தரிசபௌர்ணமாஸ்யயாகங்களில் நித்தியகருமரூபத்தன்மை சித்தமாம். மேற்கூறிய வசனத்தாலுண்டாய நம்மனோருடைய இச்சாவசத்தால் அந்த யாகத்தில் காமியகருமரூபத்தன்மையுஞ் சம்பவிக்கும். அதுபோல, கூறியவசனத்தாலுண்டாய இச்சையின் வசத்தால் அக்கருமங்கள் நம்மனோருக்குச் சொர்க்காதி பலசாதனமாமாயினும்,

"தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணாவிவிதிஷந்தி ।
யஜ்ஞேந தாநேந தபஸாநாசகேந" ॥

(பொ-ள்.) அதிகாரிப் பிராஹ்மணர் வேதாத்தியயனம், யாகம், தானம், தபம், அநசநம் என்பனவாதி கருமங்களால் இவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவையறிய இச்சிக்கின்றனர், என்னும் சுருதிவசனத்தாலவற்றின்கண் முன்மொழிந்த முறையே ஆன்மஞானகாரணத்தன்மையுஞ் சித்திக்கும். இப்போதிச் சுருதியின்பொருளே விஸ்தாரமாய் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! இச்சுருதிபகவதிகூறிய யாகம், தானம், தபம், அநசநம் என்னும் நால்வகைக்கருமங்கள் வருணாசிரம பேதத்தையபேக்ஷித்து நானாவகைவடிவங்களாம். அவற்றுள், முதலில் யாகவடிவ விவஸ்தை நிரூபிக்கப்படும்:—தரிசபௌர்ணமாசயாகமேமுதலிய எத்துணைத் திரவியாதிபதார்த்தங்களாற் சாதிக்கபபட்ட யாகங்களுளவோ, அவற்றின்கண் கிருகஸ்தனுக்கே அதிகாரமாம்; மற்றைய மூவருக்கும் அவற்றிலதிகாரமின்றாம். திரவியமின்றியே சித்திக்கத்தக்க மந்திரஜபரூபயாகமுஞ சமாதிரூபயாகமும், பிரஹ்மசாரிமுதலிய நால்வரும செய்யத்தக்கனவாம். ஆனால், இதன்கண் இத்துணைச்சிறப்புளது கிருகஸ்தனொழிந்த மூவருக்கும் முக்கிய அதிகாரமாம். கிருகஸ்தனுக்குக் கௌண அதிகாரமாம். தனமின்றியே சிததிக்கத்தக்க ஞானப்பியாச வடிவயாகத்தின்கண்ணோ நான்குஆசிரமங்கட்கும் அதிகாரமாம். ஆனல, இதன்கண்ணும் இத்துணைச்சிறப்புளது:—இதன்கண்ணே சந்யாசிக்கு முக்கிய அதிகாரமாம். மற்றைய மூவருக்கும் கௌண அதிகாரமாம். இப்போது தானரூபகருமத்தின் வடிவவிவஸ்தை நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! பலவித அன்னம், சுவர்ணம், கோ, குதிரை, பூமி என்பனமுதலிய அநேகம்வகைப் பதார்த்தங்களின் தானங்களைச் சாஸ்திரங்கள் விதித்துள்ளன. அவை சந்யாசிதவிர மற்றையமூவரும் இயன்றவளவு அவசியஞ்செய்க. சந்யாசிகளோ, சர்வப்பிராணிகட்கும் அபயரூப தானஞ்செய்க. காயத்தாலும், வாக்காலும், மனத்தாலும், ஜராயுஜாதி நால்வகை உயிர்கட்கும் துக்கத்தை உண்டுபண்ணாமையே அபயதானமாம். இதற்குமேலாய் ஒருதானமுமின்றாம்; இதுவே யாவினும் மேன்மையதாம். இதுகேவலஞ் சந்யாசிகளேசெய்க. மற்றையர்செய்யற்கவென நூற்கருத்தன்றாம்; மற்றோ, நால்வருணத்தவரும், நான்காசிரமத்தவரும இதனை அவசியஞ்செய்க. ஆனல், சந்யாசிகள் இதனையே விசேஷமாய்ச்செய்க. ஏனெனில், குடீசகன், பகூதகன், ஹம்சன், பரமஹம்சன் என்னும் நால்வகைச் சன்னியாசத்துள் எவ்வொன்றைச் செய்துகொள்ள இச்சிப்பினும், அதிகாரியானவன் நான் எவ்வுயிர்க்கும் அபயதானஞ்செய்வேன் என்னும்மந்திரத்தையுச்சரித்துப் பூர்வாசிரமத்தைவிட்டுத் துறவாசிரமத்தைக் கொள்ளவேண்டுமாதலின்; சந்யாசியானவன் ஜராயுஜாதி நால்வகை உயிர்கட்கும் அபயதானமவசியஞ்செய்க. சந்யாசாசிரமத்தைத்தரித்துச் சரீராதிகளால் எவ்வுயிரையேனும் துன்புறுத்தின், அச்சந்யாசமே நிஷ்பலமாமாதலின், தனதாசிரமத்தைச் சபலமாக்கும்பொருட்டுச் சந்யாசியானவன் சர்வப்பிராணிகட்கும் அபயதானம் அவசியஞ்செய்க. அதிகாரிகட்குப் பிரஹ்மவித்தையையும், அதன் சாதனங்களையும் தானஞ்செய்க. இதுவுந் தனது பிரதிஷ்டையின் பொருட்டேனும்,

தனுதிகளின் பொருட்டேனும், சந்யாசியானவன் அதிகாரிகட்குப் பிரஹ்மவித்தியா தானஞ்செய்க என்னுங் கருத்தால் சாஸ்திரத்தின்கண்ணே கூறப்படவில்லை. மற்றோ, எனதுசரணத்தையடைந்த சிஷ்யனுக்கு அபயப்பிரஹ்மப் பிராப்தியுண்டாகுகவென உத்தேசித்து, பிரஹ்மவித்தியா தானஞ்செய்கவெனக் கூறப்பட்டுளதாதலின், இதுவும்அபயதானமேயாம். இப்போது அபயதானத்தின்கண் சர்வதானத்தினும்மேன்மை நிரூபிக்கப்படும் :- ஹே ஜனகராஜாவே! குருக்ஷேத்திரத்தில் சூரிய கிரஹணகாலத்தே சுவர்ணாதிகளால் நிறைந்த சம்பூரணப்பிருதிவியைப் பிரஹ்மவேத்தாவாய பிராஹ்மணனுக்குச் சிரத்தையோடு தானஞ்செய்வதினும், ஸ்தாவர ஜங்கமப் பிராணிகளுள் ஒன்றற்கேனும் அபயத்தையடைவித்தல் அதிகதானமாம். கருத்திதுவாம் :—ஸ்தாவராதிப் பிராணிகளுள் ஒன்றற்கேனும் அபயதானஞ்செயின், அதனைப்பார்க்கினும் ஒருபுண்ணியகருமம் அதிகமாயின்றாயின், சர்வகாலத்தும், சர்வதேசத்தும், சர்வப்பிராணிகட்கும் அபயரூபதானத்தைக் கொடுக்கின், அதனின் மேலாயிவ்வுலகில அதிக புண்ணியமின்றாமெனபதன்கண் யாது கூறவேண்டியுளது. ஆகையால், சந்யாசியானவன் சர்வப்பிராணிகட்கும் அபயரூபதானங்கொடுத்துக்கொண்டு ஆன்மசாக்ஷாத்கார அடைவின்பொருட்டு முயலுக. சந்யாசி இச்சரீரத்தின்கண்ணேனும், அந்நிய சரீரத்தின்கண்ணேனுந் துவைததரிசன ஜன்னியபயத்தை யடையான்; மற்றோ, சர்வபயமற்ற அத்விதீயப் பிரஹ்மத்தையே அவனடைவன். ஆதலின், அபயரூபதானத்தின்மேலாக வேறுயாதொரு தானமுமின்றாம். இப்போது அபயரூபதானத்தின் மேன்மையை யறிவிக்கும்பொருட்டு, அதன் இலக்கணவடிவ அஹிம்ஸாதருமத்தில் சர்வதருமங்களையுமடக்கி அதன் மேன்மை நிரூபிக்கப்படும் :—ஹே ஜனகராஜாவே! ஜராயுஜாதிஜீவர்கட்குக் காயாதிகளால் துக்கத்தையடைவியாமலிருப்பதே அஹிம்ஸையாம். அதன்கண்ணே சத்தியம், தயை, தபம், தானம் என்னும் நான்குபாதங்களையுடையதருமம் எபபோதுமிருக்கும். இப்போதிப்பொருளையே வெளிப்படையாக்கும்பொருட்டு, முதலில் ஹிம்ஸையின்ஸ்வரூபம் நிரூபிக்கபபடும் :—ஹே ஜனகராஜாவே! ஹிம்ஸை காயத்தாலாயது, வாக்காலாயது, மனத்தாலாயது என மூவகைத்தாம். அவற்றுள், காயத்தாலாய ஹிம்ஸையின் வடிவமிதுவாம் :—ஜராயு என்னும் சர்மத்தினின்றுமுண்டாகின்ற மனுஷர், கோக்கள், குதிரை முதலியவை ஜராயுஜங்களாம். அண்டத்தினின்றுமுண்டாகின்றனவாய பறவை, சர்ப்பம்முதலியன அண்டஜங்களாம். வேர்வையினின்றுமுற்பன்னமாய மூடு, கொதுகுமுதலியன சுவேதஜங்களாம். பூபிளந்து வருவனவாய தருமுதலியன உத்பிஜ்ஜங்களாம். இந்நால்வகை ஜீவ சரீரங்களில் சஸ்திராதிகளால் துன்புண்டாககல், மந்திர ஔஷதாதிகளால் நோய் முதலியவை யுண்டாக்கல், அவற்றின் ஸ்திரீ, தனம், அன்னம், பசுமுதலிய பதார்த்தங்களை யபகரித்தல் என்பன முதலியவாய் அநேகவகை ஜீவர்களின் மரணோபாயங் காயத்தாலாய ஹிம்ஸையாம். இபபோது வாககாலாய ஹிம்ஸையின் வடிவத்தை நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! களவு முதலிய பாவகருமங்களைச் செய்யும் பாவாத்மாக்களின் களவுமுதலியவற்றை அரசன்பாலேனும், அரசசேவகரின்பாலேனும் கூறுதல், அயலாரைநிந்தித்தல், குணவான்களிடத்தே தோஷத்தைக்கூறல், இவைமுதலாக அநேகவகையாய் வாக்கால் உயிர்களைத் துன்புறுத்

துதல் வாக்காலாய ஹிம்சையாம். இப்போது மனத்தாலாய ஹிம்சையின் வடிவத்தை நிரூபிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! அந்நியரிடத்தே வித்தை முதலியவற்றாலுண்டாய கீர்த்திமுதலிய குணங்களைச்சகியாமையாகிய மச்சரம், அந்நியருடைய மனைவியாதியரை யடையும்பொருட்டு, நானாவகை யுபாயங்களைச் சிந்தித்தல், அந்நியப்பிராணிகளின் மாணோபாயத்தைச் சிந்தித்தல், என்பனமுதலாய அநேகம்வகை மனத்தால் ஜீவர்களின் துகவோபாயசிந்தனம் மனத்தாலாய ஹிம்சையாம். இவ்வுலகில் தேவதத்தனென்பவனுடைய சத்துருவாகிய யஜ்ஞதத்தனுக்குத் தேவதத்தனைக் கொல்லும்பொருட்டுப் புத்திசொல்வது, பொருண்முதலியனகொடுப்பது உபாய ஹிம்சையாம். அது பலவகைப்படும். இகலோகத்தும் பரலோகத்தும் அந்நியப்பிராணிகட்கும தனக்கும் துக்கத்தைக்கொடுக்கும் பொய்மொழிதலும் ஹிம்சையேயாம். யாகதானாதி சுபகருமங்களிற் பிரவிருத்தியுற்ற புருஷனை நானாவகைக் குதர்க்கத்தால் அவற்றினின்றும் நிவிர்த்திப்பதும், தானும் சுபகருமத்தைச்செய்யாதிருப்பதும் நாஸ்திகத்தன்மையாம்; அதுவும் ஹிம்சையேயாம். சாஸ்திரம் விதித்த சந்தியை, காயத்திரிமுதலிய நித்திய நைமித்திக கருமங்களைப் பரித்தியாகஞ்செய்தல், சாஸ்திர நிஷித்த பரஸ்திரீகமனாதி பாவத்தைச்செய்தல் என்னுமிரண்டும், செய்யப்பட்டவனுக்கும் அவன் குலத்திற்கும் தேசாதிகட்கும் அனர்த்தததையேகொடுக்கும். ஆகையால்,இவ்விரண்டும்ஹிம்சையேயாம். இபபாரதகண்டத்தே மனுஷசரீரத்தையடைந்தும் நித்திரை ஆலசியம் முதலிய தாமஸ விருத்திகளால தனதாயுளை வீணாய்க்கழித்தல் இகலோகத்தும் பரலோகத்தும் துக்கத்தையேயுண்டாக்குமாதலின் அவற்றால் ஆயுளை வீணாய்க்கழித்தலும் ஹிம்சையேயாம். இவை முதலாக ஹிம்சைகளின் நானாவகை வடிவங்கள் நூறகளிற் கூறப்பட்டிருக்கின்றன. அவ்விமசைகளினின்றும் விபரீதமாவதும் சாஸ்திரத்தால விதானமாவதும் தர்மமாம். அத்தர்மம் யாவும் அஹிம்சையின்கண் அடங்குமாதலினானே சுருதிஸ்மிருதி முதலிய சாஸ்திரங்களில் அஹிம்சை பரம தருமமெனப் பகரப்பட்டுளது. எததருமத்தினும் அதிகத் தருமமொன்றின்றாமோ அது பரமதருமமாம். ஆகையால், எல்லா விவேகிகளும் அஹிம்சாதர்மத்தை அவசியம் சம்பாதித்தல்வேண்டும். இப்போது அஹிம்சாதருமபலம் நிரூபிக்கப்படும் :—ஹே ஜனகராஜாவே! இவ்வுலகத்தே அஹிம்சாதருமத்தைச் சம்பாதித்தவன்காத்தில் தர்மம், அர்த்தம, காமம், மோக்ஷம், என்னும் நான்கு புருஷார்த்தங்களுமிருக்குமாதலின், அஹிம்சாதர்மமேசர்வபலன்களையுமடைவிபபதாம். இக்காரணத்தானே பதஞ்சலிபகவானனவர் "அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரஹ்மசரியம், அபரிக்கிரகம், இயமங்களாம்" என்னும் யோகசூத்திரத்தே அஹிம்சாதர்மம யாவினும் முதலில் கூறப்பட்டுளது. இப்போது யோகசூத்திரத்திற்கூறிய அஹிம்சைமுதலிய ஐவகை இயமங்களுள் மற்றைய நான்கிற்கும் அஹிம்சையின்கண் அடக்கம் காண்பிப்பாம் :—ஹே ஜனகராஜாவே! ஸ்திரீசம்போக அபாவரூப பிரமசரியத்திற்கும் அஹிம்சையின்கண்ணேயேயடக்கமாம். ஏனெனின், பிரஹ்மசரியமற்ற காமியானவன் மனைவியோடு புணர்ந்தபின் பரமதுக்கத்தையடைவன். யௌவனத்தில் புணர்தலால் மனைவியின்கண் கர்ப்போற்பத்தியுண்டாம். அதனால்,

கர்ப்பிணிக்கும் கர்ப்பத்திற்கும் மாணசமான துக்கமுண்டாம். ஒருகால் அவ்விருவருக்கும் மாணதுக்கமுமுண்டாய்விடுமாதலின் புணர்தலும் ஹிம்சையேயாம்; அல்லது, இக்காமிபுணரின் இவனது ஏழாவது தாதுவாகிய வீரியம் ஸ்திரீயின் உதாத்தில் ஜீவசரீரத்தையுண்டாக்கும். அதன் சம்பந்தத்தால் ஜீவர்கட்கு அத்தியாத்மம், அதிதெய்வம், அதிபூதமென்னு முத்துக்கங்களுமுண்டாம். அதனல், புணருங்காமி பாவத்தையடைவன்; அதனலவன் இகலோகத்தேனும் பாலோகத்தேனும் துக்கத்தையடைவனுதலின் புணர்தல் ஸ்திரீ, பாலகன், புருஷன், என்னும் மூவரின் துக்ககாரணமாதலின், ஹிம்சையேயாம். பிரஹ்மசரியத்தையுடையவனுக்கு அவ்விம்சையுண்டாகாதாதலின், அது அஹிம்சையின்கண்ணே அந்தர்ப்பூதமாம். காயாதிகளாலெப்பிராணிக்கும் ஹிம்சை செய்யாத மகாத்மா பொய்யையும் புகலான். அந்நியர்தனுதிகளையுங்களவுசெய்பான். தனுதிகளையுஞ் சேர்க்கான். ஆகையால், சத்தியம், அஸ்தேயம், அபரிக்கிரகம், என்னும் மூன்றிற்கும் அஹிம்சையின்கண்ணே அடக்கமாமாதலின், அஹிம்சைமுதலிய ஐவகை இயமங்களில் அஹிம்சை சத்தியாதி யாவற்றையுமுண்டாக்குவதாம். அதோடுகூடியவன் யாவரினும் உத்தமனுவன். ஆகையால், சந்நியாசியானவன் அஹிம்சையாகிய அபயதானத்தையே எப்போதுஞ்செய்க. கிருகஸ்தன்முதலியமூவருமம அஹிம்சையாகிய அபயதானத்தைச்செய்வது தகுதியாமாயினும் அவர்கட்குஎல்லாவாறானும் ஹிம்ஸாதிகளின் பரித்தியாகமுண்டாகாது. சந்நியாசிக்கோ அஹிம்சையாகிய அபயதானம் கொடுக்கும்பொருட்டே சந்நியாசத்தின்கவர்ச்சியாமாதலின், அபயதானத்தையே சிறப்பாகக்கொடுக்கவேண்டும். இத்துணையால் தானவடிவம் நிரூபிக்கப்பட்டது. இப்போது தவவடிவம் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! பிராஹ்மணுதி நான்குவருணங்கட்கும் பிரமசரியாதி நான்குஆசிரமங்கட்குமசாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட தருமங்களுள் தத்தமக்குரியதைச் சிரத்தையோடுகூடச செய்வது தவமாம். இப்போது அநசனத்தின்சொரூபம் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! சாஸ்திரங்கள் நிஷேதியாத விஷயங்களின் போகத்தையும் இயன்றவளவு பரித்தியாகஞ்செய்தல் அநசனமாம். இத்தருமம சந்நியாசிகளையொழித்தொழிநதுள்ளசம்பூரண வருணுசிரமமுடையவர் இயன்றவளவு செய்தல்யோக்கியமாம். சந்நியாசிக்கோ இவ்வகை அநசனஞ்செய்தல் தகுதியாம், இகலோகத்தும் பரலோகத்தும் இராநின்ற விஷயஜன்னிய சுகத்தையும், அதன்சாதனமாய மனைவியாதியரையும் அடையும் இச்சைமாத்திரத்தையுஞ் செய்யற்க; மற்றேறு, பிராரப்தகருமவசத்தால் கிடைக்கும் பிக்ஷான்னத்தையும் வஸ்திரத்தையுங்கொண்டு தன்சரீரநிர்வாகஞ்செய்துகொள்க. இவ்வநசனம் சந்நியாசியவசியஞ்செய்யவேண்டும். இங்ஙனம் சுருதிபகவதி விதித்த யாகாதி நான்கு புண்ணியஅதிர்ஷ்டகாரணத்தாலும் குரு, சாஸ்திரம், மனுஷசரீரம், என்பனவாய திருஷ்டகாரணங்களாலும் அதிகாரிக்கு அத்விதீய ஆநந்தஸ்வரூபப் பிரஹ்மஞானமுண்டாங்கால் அதன் சாக்ஷாத்காரத்தின்கண் தானே இசசையுதிக்கும். இதனலிபபொருள் துணியப்பெறும்:—யாகாதி சுபகருமங்களையனுஷ்டித்தலால புண்ணியரூப அதிருஷ்டமுண்டாம். அதனல், குரு, சாஸ்திரம், அதிகாரிசரீரம, சுத்தபுத்தி, என்பனவாதிதிருஷ்டகாரணவடைவுண்டாம். அதனல், முதலில் ஆன்மாவின் பரோக்ஷஞான

முண்டாம். அதன்பின் அபரோக்ஷஞானவிச்சையுண்டாம்; அதன்பின் ஆநந்த சொரூபஆன்மாவின்கண் சித்தவொருமைப்பாடுண்டாம். இங்ஙனம் பரம்பரையாய் யாகதானாதி புண்ணியகருமங்கள் ஆத்மசாக்ஷாத்காரத்திற் காரணமாமாதலின், குருசாஸ்திராதி திருஷ்டகாரணங்களைச் சம்பாதிக்கும்பொருட்டும், பாபரூபப் பிரதிபந்த நீக்கத்தின்பொருட்டும் இவ்வதிகாரி யாகாதி புண்ணியகருமங்களை அவசியஞ் செய்தல்வேண்டும்.

சங்கை :—ஹே பகவன்! யாகாதி நான்கு புண்ணிய கருமங்களாலேயே அதிகாரிகட்கு மோக்ஷவடைவுண்டாம். ஆன்ம ஞானத்திற்கு யாதுபயன்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! ஆன்மஞானமின்றிக் கேவலம் கருமத்தால் மோக்ஷமுண்டாகாது. ஏனெனின், இவ்வதிகாரியின் சித்தம் பாஹியவிஷயங்களின் பக்கத்தே செல்லாதாகில் அவ்வேகாக்கிர சித்தத்தில் ஐயந்திரிபற்ற மஹாவாக்கிய ஜன்னிய ஆன்மசாக்ஷாத்காரமுண்டாம். அதன்பின் ஜீவன் முத்திவடிவ முனித்தன்மையையடைவன்; ஆதலின், யாகதானாதி புண்ணியகருமங்களாலிவனுக்கு அத்விதீயப் பிரஹ்மரூப ஆன்மாவையறியத் திடவிச்சையுண்டாங்கால் அவ்வஸ்துவைக் குருவினுபதேசத்தால் சாக்ஷாத்கரித்து ஜீவன் முத்திரூப முனித்தன்மையையடைவன்; ஆன்மஞானமின்றிக் கேவலங் கருமங்களால் ஜீவன்முத்தியடையானெனத் துணியப்பெறும். இப்போது ஆத்மசாக்ஷாத்காரத்தையடையும்பொருட்டு விவிதிஷாசந்நியாசம் நிரூபிக்கப்படும் :—ஹே ஜனகராஜாவே! சந்நியாசிகளாலறியத்தக்க உண்மையாய்மனவாக்குகட்கு அவிஷயமாய ஆநந்தசொரூப ஆன்மாவின் சாக்ஷாத்காரத்தை இச்சித்து அதிகாரியாய விரக்தன் யாகாதியாவற்றையும் விட்டொழித்துச் சந்யாசாசிரமத்தைக்கொள்க

சங்கை:—ஹே பகவன்! அவ்விரக்த மகாத்மாக்கள் யாகாதிகளைவிடுத்துச் சந்யாசத்தை ஏன் கொள்ளுகின்றனர்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! கருமங்களைச்செய்வதில் பற்றுதலையுடைய கருமிக்கு ஆன்மசாக்ஷாத்காரத்தில் நிஷ்டையுண்டாதல் அத்தியந்தந் துர்லபமாம். ஆதலின், ஆன்மஞான நிஷ்டைபுரியும்பொருட்டுக் கருமங்களை அவசியம் விட்டொழித்தல் வேண்டும்.

சங்கை:—ஹே பகவன்! சந்யாசாசிரமமின்றியே சர்வகருமங்களையும் விட்டொழித்து ஆன்மஞானத்தில் நிஷ்டையுண்டாதல் கூடுமாதலின், சந்யாசாசிரமத்தைக் கொள்வதற்கு யாதொரு பயனுமின்றாம்.

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! சந்நியாசாசிரமமின்றி பிரமசரியாதி ஆசிரமங்களில் சர்வகருமங்களின்தியாகமுண்டாகமாட்டாது. ஏனெனின், நிஷித்தகருமம், காமியகருமம், நித்தியகருமம், நைமித்திககருமம் என நான்கு வகைக்கருமங்கள் சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றுள், பிரஹ்மஹத்தியாதி பாவகருமங்கள் நிஷித்தமாம். சுவர்க்காதி பலஅடைவின்பொருட்டு, சாஸ்திரவிகித்த சோதிட்டோமாதியாகங்கள் காமியமாம், சந்தியை, அக்கினி

ஹோத்திராதிகள் நித்தியமாம். சூரிய கிரஹணத்தே ஸ்நானம், சிராத்தம் முதலியவை நைமித்திகமாம். ஸ்தூலசூக்ஷ்மசரீர அத்தியாசத்தோடுகூடிய பகிர்முகர்களுக்கு நிஷித்தகாமியகருமங்கள் போகானுகூலமாயாதலின், நிஷித்தகாமிய கருமங்களையும் அவர்கள் தியாகஞ்செய்யமுடியாதவராவர். சாஸ்திரவிசாரத்தோடு கூடிய பிரஹ்மசாரிமுதலிய மூவரும் சாஸ்திரவிசாரபலத்தால் நிஷித்தகாமிய கருமங்களைப்பரித்தியாகஞ்செய்தல் கூடுமாயினும், சாஸ்திரம்விதித்த நித்திய நைமித்திககருமங்களின் பரித்தியாகஞ் சந்யாசாசிரமமுடையவர்க்கன்றி மற்றையவர்க்கேலாதாம். ஒருகால், பிரஹ்மசரியாதி மூன்றாசிரமங்களைக் கிரகியாமலே பிரமாதத்தாலேனும், ஆலசியத்தாலேனும் நித்தியநைமித்திக கருமங்களைப்பரித்தியாகஞ்செய்யின், அவர்கட்குப்பாவ அடைவுண்டாமாதலின், இப்பொருள் துணியப்பெறும்:—பிரஹ்மசரியாதி மூன்றாசிரமங்களினின்று நித்தியநைமித்திக கருமங்களைச் செய்பவனுடையசித்தம் அந்தராத்மாவின்கண் ஒருமைப்படாது. அவற்றின்கண் இருந்து நித்தியநைமித்திக கருமங்களைச் செய்யாதவனுக்குப் பாவமுண்டாம்; இங்ஙனம் இருவகையாலும் பந்தமாம். சாஸ்திரத்திற் கூறியமுறையே சந்யாசத்தைக்கிரகித்து நித்தியநைமித்திகாதி சர்வகருமங்களையும்பரித்தியாகஞ்செய்பவனுக்கு அப்பரித்தியாகத்தால் பாவ அடைவுண்டாகாது; மாறாய்ப் பரமானந்தப்பிராப்தியேயுண்டாம். சந்யாசாசிரமத்தைக்கவராமலே நித்தியநைமித்திககருமங்களைச்செய்பவனுக்குப் பாவமுண்டாம். அதனாலவன் அநேகவகைத் துக்கங்களையடைவன். "மோஹாத்தஸ்ய பரித்யாகஸ்தாமஸ: பரிகீர்த்தித:" சந்யாசாசிரமத்தைக கவராமலே பிரமாதவடிவ மோகத்தாலும், ஆலசியத்தாலும் நித்தியநைமித்திக கருமங்களைப்பரித்தியாகஞ்செய்யில் அது தாமசத்தியாகமாம். அதனால், சிறிதுமாத்திரையும் பலப்பிராப்தி யுண்டாகமாட்டாது மாறாய்ப்பாவமேயுண்டாம். இப்போது இப்பொருளையே வெளிப்படையாக்கும்பொருட்டுக்கருமாதிகாரிகளையும், சந்யாசாதிகாரிகளையும் நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! மாலை, சந்தனம், மனைவி, தனம், மைந்தர் முதலிய விஷயங்களில் எவருடையசித்தம் அத்தியந்தம் பற்றுதலை யுடைத்தாயிருக்கின்றதோ, அவ்விராகியர் ஆன்மசாக்ஷாத்காரத்தை யடையாராதலின், அவர் நித்தியநைமித்திககருமங்களையே அவசியமாய்ச் செய்யவேண்டும். விஷயஅடைவின் இச்சையற்றகருமிகள் மீண்டும், கருமரூப பாரத்தை எடார்; மற்றோ, சந்யாசத்தைத்தரித்துச் சர்வகருமங்களையும் பரித்தியாகஞ்செய்வர். ஏனெனின், சுவர்க்காதிபலஅடைவை இச்சிப்பவனைக் குறித்தே வேதபகவான் யாகாதிகளை விதித்துளார்; அவற்றின் இச்சையற்ற நிஷ்காமனுக்கு யாகாதிகளை விதித்திலாதலின், விஷயங்களில் இச்சையுடையவனே கருமாதிகாரியாவன். இராகமற்ற நிஷ்காமன் கருமாதிகாரியாகான்; மற்றோ, சந்யாசாதிகாரியே யாவனாகையால் இப்பொருள் துணியப்பெறும்:—சித்தம் சுத்தியாகாதவரை நித்தியநைமித்திக கருமங்களை அவசியஞ்செய்யவேண்டும். அவற்றைச்செய்து சித்தம் சுத்தமாகுமாயின், மீண்டும் அவற்றைச செய்வதற்கு யாதொரு பிரயோஜனமுமின்றாம். ஆகையால், அதிகாரியானவன் சர்வகருமங்களின் தியாகரூப சந்யாசாசிரமத்தைக் கவர்ந்து, நிரந்தரம் வேதாந்தசாஸ்திரத்தையே விசாரஞ்செய்க. இவ்வார்த்தை அந்திய சாஸ்திரத்தின்கண்ணும் கூறப்பட்டுள்ளது.

" வ்ருஷ்டிகால வர்ஷணதாம் வ்ருஷ்ட்வா ஸ்வயம் லீயதே யதா ।
கர்மாணி சித்தசுத்திம் க்ருத்வா லீயந்தே ததா ॥ "

" மாரிகாலத்தி லெழிலியும் மழையினை வழங்கி
மாரியீறினிற் சுயம்லயம் மருவலே மானும்
நேரதாகிய கருமமும் நிருமலம் புரிந்தே
பூரணுன்மனி லுளத்தினைப் புகுத்தியே போமால்."

(பொ-ள்.) மழைக்காலத்தே மேகம் நீர பெய்தல்வடிவப் பிரயோஜன சித்தியைச்செய்து, அம்மழைக்கால முடிவில அம்மேகம தானே இலயத்தையடையும். அங்ஙனம் நித்தியநைமித்திக கருமமும், சித்தசுத்தி வாயிலாய்ப் புத்தியை ஆன்ம பராயணஞ்செய்வித்துத் தானே இலயத்தையடையும்.

சங்கை:—ஹே பகவன்! அந்தர ஆன்மாவின் விசாரத்தில் தற்பரத்தை யுடைய புத்தியுடையவன் நித்தியநைமித்திக கருமங்களைச்செய்வதால் ஹானி யென்ன ஆம்?

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! இவ்வதிகாரியின் ஆன்மவிசாரத்தில் தற்பரமாயுள்ள புத்தியை மாலைசந்தனுதிகள் பகிர்முகப்படுத்துவதேபோல, நித்தியநைமித்திககருமமும் பகிர்முகமேபடுத்துமாதலின், சித்தசுத்திபரியந்தமே அக்கருமங்கட்கு உபயோகமாம். அதன்பின் அவை ஆன்மவிசாரத்திற்குப் பிரதிபந்தகமாமாதலின் அவற்றின் பரித்தியாகஞ்செய்தலே உசிதமாம்.

சங்கை:—ஹே பகவன்! சந்யாசாசிரமத்தைத் தரிப்பவனும், பிக்ஷாடனுதி கருமங்களைச் செய்வனுதலின், அவற்றால அவன் புத்தி பகிர்முகமாகாததேபோல, அக்கினிஹோத்திராதி நித்தியநைமித்திக கருமங்களைச்செய்வதால் நம்மனோர் புத்தியும் பகிர்முகமாகாதாதலின், அவற்றைப்பரித்தியாகஞ்செய்தற்கு யாதொரு பிரயோஜனமுமின்றாம்.

சமாதானம்:—ஹே ஜனகராஜாவே! அக்கினிஹோத்திராதி கருமங்களில் தற்பரசித்தத்தையுடையவனே அவற்றைச் செய்தல்கூடும். சித்ததற்பரமின்றி அவை சித்தியாவாதலின், அவை புத்தியைப் பகிர்முகப்படுத்துவதேபோல, பிக்ஷாடனுதிகள் சந்யாசியின்புத்தியைப் பகிர்முகப்படுத்தா. ஏனெனின், போஜனகாலத்தே அந்நியபதார்த்தங்களைச் சிந்தனஞ்செய்யினும், அதன்கண் சித்ததற்பரமின்றியே தன்கையால் அன்னத்தை எடுத்துத் தன்வாயிற்போடுவதுபோல, மனத்தால் ஆநந்தசொரூப ஆன்மாவைச் சிந்தனஞ்செய்யும் இச்சந்யாசி பிக்ஷாடனுதி கருமங்களில் சித்ததற்பரமின்றியே அவற்றைச் செய்யலாமாதலின், அவை அச்சந்யாசியின் புத்தியைப் பகிர்முகப்படுத்தா. அல்லது, அக்கினிஹோத்திராதி நித்திய கருமங்களைச் செய்யாமையால கிருஹஸ்தனுக்குப் பாவமுண்டாவதேபோல, பிக்ஷாடனுதி கருமங்களைச் செய்யாமையால சந்யாசிக்குப் பாவமுண்டாகாது. இக்காரணத்தானும் பிக்ஷாடனுதி கருமங்கள் அக்கினிஹோத்திராதி கருமங்களின் விலக்ஷணமாம். இவ்வண்ணம அக்கினிஹோத்திராதி கருமங்களை விக்ஷேபகாரணமென நினைந்து, அதிகாரிகள் முன்னர் ஆன்மசாக்ஷாத்காரத்தையடையும்பொருட்டு, விவிதிஷாசந்யாசத்தையடைந்து நிரந்தரம் வேதாந்தசாஸ்திரத்தையே சிரவணஞ்செய்தனராதலின், இப்போதுள்ள அதிகாரிகளும் அவ்வாறு செய்தலுசிதமாம். இத்துணையால் ஆன்மசாக்ஷாத்காரத்தை யடையும்பொருட்டு, விவிதிஷா சந்யாசநிரூபணஞ்செய்யப்பட்டது. இப்போது ஜீவன் முத்திச்சுகத்தையடையும் பொருட்டு வித்வத்சந்யாசம் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! முன்னர்ச் சந்யாசாசிரமத்தைக் கவ்ராமலே பூர்வபுண்ணியமகிமையால் எம்மஹாத்மபுருஷர்

களுக்குக் கிருஹஸ்தாசிரமத்தின்கண் ஆன்மசாக்ஷாத்காரம் உண்டாகிவிட்டதோ, அல்லது, பிரமசரிய வானப்பிரஸ்தத்தின்கண் ஆன்மசாக்ஷாத்கார முண்டாகிவிட்டதோ, அவர்கட்குப் பதார்த்தங்களைப் பற்றுதல், விடுதலால் யாதொரு ஹானி லாபங்கள் உண்டாகாதாயினும், அவர்கள் அக்கினிஹோத்திராதி கருமங்களை விக்ஷேபகாரணமென நினைந்து, ஜீவன்முத்திச் சுகத்தின்பொருட்டு வித்வத்சந்யாசத்தையே செய்துகொண்டனர். இது கூறியதால் இப்பொருள் சித்தமாம் :— அத்விதீய ஆநந்தசொரூப ஆன்மாவைக் கரதலாமலகம்போல, சாக்ஷாத்கரித்தவனும், நித்தியநைமித்திககருமங்களை விஷயங்களைப்போல விக்ஷேபகாரணமென எண்ணி, ஜீவன்முத்திச்சுகத்தின்பொருட்டு வித்வத்சந்யாசத்தைக் கவர்வனுயின், ஆன்மசாக்ஷாத்காரத்தையடைய இச்சையுடைய முமுக்ஷுவானவன கருமங்களை விக்ஷேபகாரணமென நினைந்து, விவிதிஷாசந்யாசத்தைக்கவர்வன் என்பதின்கண் யாது ஆச்சரியமுளது? ஹே வித்வான்சந்யாசிகளே! இவ்வுலகில் சுபகாரணமாய புத்திராதிகளின் காரணமாய மனைவியாதியரை ஏன் சங்கிரகித்திலீரென அவர்பால் உலகர்கேட்கின் அவர் கூறுவதாவது : ஆன்மஸ்வரூப நித்தியசுகத்தினும் அதிகமாய் எவ்வுலகத்தினும் சுகமின்றாம். அச்சுகம் நாங்கள் அபரோக்ஷமாய் அனுபவிக்கின்றேமாதலின், புத்திராதி விஷயஜன்னிய அநித்தியசுகேச்சை எமக்கின்றுமென்பதே. ஹே உலகரே! இகலோகத்தேனும், பரலோகத்தேனும் புத்திராதிகளாலுண்டாகுஞ் சுகத்திறரூப பரம்பராசம்பந்தத்தால் ஸ்திரீயின் சங்கிரஹங் காரணமாம். அச்சுகத்தே எமக்கிச்சை இன்றாம; மறறே, யாமே நித்திய சுகரூபமாமாதலின், புத்திராதிகளால எப்பிரயோஜனத்தை யாங்கள் சித்தி செய்வோம்.

சங்கை :—ஹே பகவன்! "அபுத்ரஸ்ய கதிர்நாஸ்தி ஸ்வர்கோ நைவ ச நைவ ச" புத்திரரகித புருஷனுக்குக் கெதியுண்டாகாது, சுவாககமுமுண்டாகாதென்னுஞ் சாஸ்திரத்தின்கண் புத்திராதிகளே பிதாவின்மோக்ஷத்திற்கும் சுவர்க்கத்திற்குங்காரணமெனக் கூறப்பட்டுளார் அது அசங்கதமாமன்றோ?

சமாதானம் :—ஹே உலகரே! இவ்வசனம் விஷயாசக்தஇராகிகளின் அபிப்பிராயத்தைக் கூறுகின்றதாதலின், இது அநுவாதரூப அர்த்தவாதமாம் ஆகையால், இவ்வசனத்தால புத்திராதிகளிடத்தே மோக்ஷகாரணத்தன்மை சித்தியாது. ஒருகால் புத்திராதிகளால பிதாவிறகு மோக்ஷமுண்டாகுமாயின், பன்றி முதலியவற்றிற்கு மனுஷரைப்பார்க்கினும, அநேகக்குட்டிகள உண்டாகின்றனவாமாதலின், அவைகட்கும மோக்ஷமுண்டாதல வேணடுமாகையால், புத்திராதிகளால் பிதாவிறகு மோக்ஷமுண்டாகாது; மாறாய், அவர்களைக்காப்பாற்றும்பொருட்டு அநேகவகைப பாவகருமங்களைச செய்வதால நரகத்தையேயடைவன். நிரதிசயப் பிரஹ்மாநந்தரூபசமுத்திரத்தின் லேசமாத்திரத்தைக்கவர்ந்து, பிரஹ்மாதிகளும் ஆநந்தத்தையடைந்துகொண்டிருக்கின்றனர். அந்தப பிரஹ்மாநந்தம் எங்களுடைய ஆன்மாவினும அபின்னமாகவிருக்கின்றதாதலின், எங்கட்குப் புத்திராதி விஷயஜன்னியதுச்சசுகத்தி லிச்சையுண்டாவதின்றாம் :—ஹே ஜனகராஜாவே! உலகரை நோக்கி, இவ்வகை வசனங்களை அவ்வித்வான்கள்கூறிச் சந்யாசாசிரமத்தைக்கவர்ந்து கேவலம் பிக்ஷாவிருத்தியால் சரீரநிர்வாகஞ்செய்தனர். அவர்களுள் சிலரோ, பூர்வம் கிருகஸ்த்தாசிரமத்தைச்செய்து பின்னர்ச் சந்யாசாசிரமத்தைக் கவர்ந்தவர். சிலரோ கிருகஸ்த்தாசிரமத்தைக் கவராமலே பிரஹ்மசரிய ஆசிரமத்தினின்றும் சந்யாசாசிரமத்தைக் கவர்ந்தவர். லோக ஏஷணை, புத்திர ஏஷணை, வித்த ஏஷணை என்னு மூவகை ஏஷணைகளையும் பரித்தியாகஞ்செய்தவராவர். இப்போது அம்மூவேஷணைகளையும் ஏகரூபமாயெண்ணி இருவகை ஏஷணைகள் நிரூபிக்கப்படும் :—ஹே ஜனகராஜாவே! இவ்வுலகில் கோ, சுவர்ணாதிரூப வித்தம், சுகசாதனமாவதேபோலப் புத்திரனும் சுகசாதனமாவனாதலின், புத்திரேஷணை

வித்தேஷணையினும் வேறன்றாம்; மற்றோ, அது அதன்வடிவமேயாம். பசு சுவர்க்கதிரூப வித்தஞ் சுகசாதனமாவதேபோல, சுவர்க்காதிலோகமும் சுகசாதனமாமாதலின், அவ்வித்தேஷணை லோக ஏஷணையினும் வேறன்றாம்; மற்றோ, அது அவ்வடிவமாமாதலின், இச்சம்சாரத்தில் சுகரூபபலஏஷணையெனவும், சாதன ஏஷணையெனவுமிருவகை ஏஷணைகளே சித்தமாம். ஆன்மரூப நித்திய சுகத்தையுற்ற அறிஞா அவ்விருவகை ஏஷணைகளேயும் பரித்தியாகஞ்செய்வர். கேவல ஆன்மரூப நித்திய சுகத்தாலவ்வறிஞர் திருப்தராயிருப்பர். இப்போது சந்யாசாசிரமத்தால் அடைய யோக்கியமாய ஆன்மாவின் சொரூபம நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! பூர்வ கிரந்தத்தில எப்பரமான்மா சுயஞ்சோதிரூபமாயும், ஆநந்தரூபமாயும், நின்பொருட்டுக்கூறப்பட்டதோ அவ்விதனை இவ்வறிஞர்கள தமதான்மரூபமாய்ச் சாக்ஷாத்கரித்துளார். இப்பரமான்மாவின் சொரூபத்தைத்தான் முன்னர் யான் சாகல்லியர்பால வினவினேன். இது மூர்த்த, அமூர்த்தரூப, பாவ, அபாவரூபமாயுள்ள சம்பூரணஜகத்தும் அற்றதாம். இது சுயஞ்சோதிரூபமாமாதலின் வாக்கு முதலிய இந்திரியங்களாலும், அக்கினி சூரியாதிபாஹ்யப பிரகாசங்களாலும் கிரகிக்கமுடியாததாம் பதார்த்தங்களின பிரகாசரூப கிரகணம, அதன்கர்த்தா, காணம, கருமம், பலம், சம்பந்தம என்னும ஐவகைப்பேதத்தை யபேக்ஷித்தேயுண்டாம். அப்பேதத்தாலன்றி அவற்றின் கிரகணஞ் சித்தியாது. கடாதிபதார்த்தங்களைச் சக்ஷு இந்திரியத்தால கவருங்கால புருஷன்கர்த்தாவாம, சக்ஷு இந்திரியங் காணமாம, கடம்கருமமாம், கடத்திலிருக்கும அறியப்பட்டதாந்தன்மைபலமாம், சக்ஷுவிற்குக்கடத்தோடுள்ள சையோகஞ்சம்பந்தமாம, இவ்வைவகைப்பேதத்தை யபேக்ஷித்தே கடாதிபதார்த்தங்களின் கவாச்சியாம. இவைகளின்றி எப்பதார்த்தத்தின் கவர்ச்சியுமுண்டாகாது; இவவான்மா சஜாதீய, விஜாதீய, சுவகதபேதமற்றதாமாதலின், வாக்குமுதலிய இந்திரியஙகள் கிரகியா; அக்கினி சூரியாதிகள் பிரகாசியாவாதலினிதனைச் சுருதிபகவதியானவள் ‘அக்கிருஹ்யம்’ எனககூறினள். இவ்வாநந்த சொரூப ஆன்மா சர்வபேதமற்றதாதலின், வஸ்திராதி பதார்த்தங்கள் ஒருகாலத்தே பரிணமரூபசீரணத்தன்மையையடைவதேபோல, இது அடையாதாதலின் சுருதி பகவதியானவளிதனை ‘அசீர்யம்’ என்றனள். இவ்வாநந்த சொரூப ஆன்மா சர்வபேதமற்றதாமாதலின் உள்ளும வெளியும உள்ள பதார்த்தங்களோடுசம்பந்தமற்றதாம. ஏனெனின்,யாதுபேதமுடையதாமோ அதுவே சையோகாதிரூப சம்பந்தத்தையடையும, நாசத்தையடையும். இதுவோசாவபேதமற்றதாமாதலின், சம்பந்தரூப சங்கத்தையும, பந்தத்தையும, நாசத்தையும, துக்கத்தையும அடையாது. சாவசங்கமற்றஇத்தகைய அசங்கஆன்மாவைசசங்கமடையஇராகியானவனறியான். மற்றோ, முறகூறிய மூவேஷணைகளாற்றவனும கேவலம் பிக்ஷாவிருத்தியாற்சரீரநிர்வாகஞ்செய்பவனுமாகிய மகாத்மாவாய விரக்தசந்யாசியே இப்பரமான்மாவைச் சாக்ஷாத்கரிப்பன். இப்போது ஆன்மஞானபலன் நிரூபிக்கப்படும்:—ஹே ஜனகராஜாவே! மூவேஷணைகளேயும் பரித்தியாகஞ்செய்து இவ்வாநந்த சொரூப ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்த அறிஞர்களைப புண்ணிய பாவங்கள் அஞ்ஞானிகளைப்போலத் தபியா. இப்போது இவ்வாத்தமே வெளிப்படையாய்நிரூபிக்கப்படும்:—இப்புண்ணியபாவரூபகருமஞ்செய்யாத அஞ்ஞானிக்குஞ்செய்யுமஞ்ஞானிக்கும் எப்போதும் துன்பமேசெய்யும. ஏனெனின், இவன் பாவகருமத்தைச் செய்வனாயின், அதன் ஆரம்பகாலத்தே மிகுந்த கிலேசமுண்டாமாதலின் பாவகருமம் ஆரம்பகாலத்திலுங் கர்த்தாவின் துக்கத்திற்கேகாரணமாம். அது பலத்தைக்கொடுக்கும்போதும் கர்த்தாவிற்குப் பரமதுக்கத்தைக் கொடுக்குமாதலின், அக்காலத்தும் துக்கஹேதுவேயாகும். இவ்வாறு புண்ணியகருமத்தைச் செய்

யின், அதனாரம்பத்தில் பரமக்கிலேசத்தையுங்கொடுக்குமாதலின், அது அக்காலத் தும் செய்பவனுக்குத் துக்ககாரணமேயாகும். அழியுஞ் சுகரூபபலத்தைக்கொடுக் கும்போதும் அவன் பரமதுக்கத்தையேயடைவனாதலின், பலப்பிராப்திகாலத்தும் அது துக்ககாரணமேயாகும். இத்துணையால் இப்புண்ணியபாவ கருமங்களிலஞ் ஞானியாகிய கர்த்தாவிற்குத் தாபகாரணத்தன்மை நிரூபிக்கப்பட்டது. இப்போது அவற்றில் அஞ்ஞானி அகர்த்தாவின் தாபகாரணத்தன்மை நிரூபிக்கப்படும் :— ஹே ஜனகராஜாவே! பாபகருமங்களைச்செய்யாதவன் வேறு பாவிகளைப்பார்த்துத் தன்னை அவர்களினும் மேலாய் நினைந்து கர்விப்பனாதலின், அது கர்வோற்பத்தி வாயிலாய் அஞ்ஞானி அகர்த்தாவின் தாபகாரணமேயாகும். இவ்வண்ணம் புண் ணியகருமத்தைசசெய்யாத தயையுடையவன் தனமற்றவர் துக்கித்தலைப்பார்த்து, அவர்மேல் வைத்த கிருபையால் பரமதுக்கததையடைவனாதலின், அது கிருபை யையுண்டாக்கும்வாயிலாய் அகர்த்தா அஞ்ஞானியின் தாபகாரணமேயாகும். இவ் விஷயம் அந்நியசாஸ்திரத்தின்கண் ணுங கூறப்பட்டுளது.

"ஈர்ஷ்யீ க்ருணீ த்வஸந்துஷ்ட: க்ரோதநோ நித்யஸங்கித: ।
பரபாக்யோபஜீவீ ச ஷடேதே நித்யது:கித: " ॥

" திகழு மீரிஷை செய்பவன் றயையினைப் புரிவோன்
மகிழ்வை யெய்ந்திலன் கோபமு மையமு மருவி
இகழ்வை யெய்பவன் பிறர்பொருள் வவ்வியே யெழுவோன்
நிகழு மீங்கிவ ரறுவருந் துயரையே நேர்வர்."

(பொ-ள்.) ஈரிஷைசெய்பவனும், தயைசெய்பவனும், சந்தோஷமற்றவனும, குரோதமுடையவனும், சம்சயமுடையவனும், பரதனத்தால் ஜீவிப்பவனுமாகிய அறுவரும் இவ்வுலகில துக்கிகளேயாவர். அல்லது புண்ணியகருமத்தைச் செய்யா தவனுக்குச் சுகஅடைவு உண்டாகாதாதலினானும், அது அகர்ததா அஞ்ஞானியின தாபகாரணமேயாகும். அல்லது இகலோகத்தும் பரலோகத்தும் எபபுண்ணியகரு மம் ஜீவர்கட்குமஹாசுகததையுண்டாககுமோ, அதனைச்செய்யாதஅஞ்ஞானியான வன் ஜீவர்களின்மகாசுகத்தைபபார்த்து ஈரிஷைபபடுவனாதலினானும, அதுஅதனை யுண்டாக்கும்வாயிலாய் அகர்த்தா அஞ்ஞானியின் தாபகாரணமேயாகும். அல்லது மாணகாலத்தின்கண் இவ்வஞ்ஞானியானவன் தன்மனத்தே இபபாரதகண்டத்தில மனுஷசரீரத்தையடைந்தும், துர்புத்தியையுடையயான்பிறந்ததுமுதல இறக்கும் வரை கேவலம் பாபகருமத்தையேசெய்தனன். சுகத்தைக்கொடுககும் புண்ணிய கருமத்தைச்செய்திலேன்என எண்ணியெண்ணிப பரமதுக்கத்தையடைவனாதலின் மாணகாலத்திலுமவை அஞ்ஞானிகளின் தாபகாரணமேயாகும். இவ்வண்ணம் புண்ணியபாவரூபகருமங்கள் அவற்றைச்செய்யும அஞ்ஞானிகட்குஞ் செய்யாத அஞ்ஞானிகட்கும் எப்போதும் தாபத்தையேகொடுக்கும. குருசாஸ்திர உபதே சத்தால் ஆன்மசாக்ஷாத்காரத்தையடைந்த அறிஞனுக்கு அவற்றைச்செய்யினும் செய்யாவிடினும் தாபத்தையுண்டாக்கா. மற்றேறு, அநுமாரானவர் சமுத்திரத் தைத் தாண்டியதேபோல, அறிஞன் புண்ணியபாவகருமரூபசமுத்திரத்தை முயற் சியின்றியே தாண்டிவிடுவன். ஈண்டு ஆன்மஞான மகிமையால் அறிஞனிடத்தே யவற்றின் அஸ்பரிசமே அவற்றைத்தாண்டுதலாம், அறிஞனை அவை தபிப்பியா, என்பதன்கண் இதுகாரணமாம். இவ்வண்ணமாய சங்கற்பங்களோடுகூடிய அஞ் ஞானிபுருஷரையே அவை தபிப்பிக்கும். அச்சங்கற்பங்களாவன, இந்த ஜோதிஷ் டோமயாகத்தால் எனக்குச் சொர்க்கப்பிராப்தியுண்டாம். இந்தப் பிரஹ்மஹத்தி யாதி பாவங்களாலெனக்கு நரகப்பிராப்தியுண்டாம். இந்தப் புத்திரயிஷ்டிமுதலிய கருமங்களால் எனக்கு இப்பிறப்பில் புத்திராதிபதார்த்தங்களினடைவுண்டாம். இந்தஅஸ்வமேதாதியாகங்களின்பலன் எனக்கு இப்பிறப்பிலுண்டாகாது ; மற்றேறு,

மறுபிறப்பிலுண்டாம். பிராஹ்மணனாகிய எனது பிதாவைக் கொலைசெய்தவனுக்கும், அப்பிராஹ்மணனாகிய எனது தந்தையைப் பாதுகாக்கும் பொருட்டுப் பிராஹ்மணுடைய தனமுதலிய பதார்த்தங்களைக் கொள்ளையடித்து எனது குடும்பத்தைக் காப்பாற்றிய எனக்கு விரைவாகவே குஷ்டம் முதலிய நோய்களினடைவும் இவ்வுலகி லபகீர்த்தியுமுண்டாம். இவை முதலாக நானாவகைச் சங்கற்பங்களைச்செய்யும் அஞ்ஞானிகளையே அப்புண்ணியபாவகருமங் தபிப்பிக்கும். அறிஞனிடத்தே நானாவகைச் சங்கற்பங்களின்றாமாதலின், அவனை அவை தபிப்பியா. இவ்வண்ணம் அறிஞன் புண்ணியபாவகருமத்தைத் தாண்டிவிடுவன். இவ்வாறாய அறிஞனை வேதமந்திரம் இங்ஙனங்கூறும் :—யான் பிரஹ்மரூபனென்னும் அபேதஞானம் எவ்வறிஞனுக்குண்டாயதோ, அவனுடைய சொரூபபூத மகிமை முக்காலத்தும் வேறுவிதத்தன்மையை யடையமாட்டாதாதலின், அவன் மகிமை நித்தியமாம். இவ்வுலகில் அஞ்ஞானியானவன் புண்ணியத்தைச்செய்து விருத்தியையடைவன். பாவத்தைச்செய்து இலகுத்தன்மையையடைவன். இதுபோல அவ்வறிஞன் அவ்விரண்டினாலும் அவ்விரண்டையுமடையானாதலின், அவன் மகிமை அத்தியந்தம்அற்புதமாம். முன் அதிகாரிபுருஷர் அத்விதீய ஆன்மசாக்ஷாத்காரத்தால் புண்ணியபாவமற்றதன்மைவடிவமகிமையையடைந்தனர். அதுபோல, இக்காலத்துள்ள அதிகாரிகளும் இருப்பு, விளக்க, பிரிய, வடிவத்தால் அதவிதீய ஆன்மாவைச சாக்ஷாதகரிப்பாகளேயாயின், இவர்களும் அம்மகிமையை யடைவர். ஆன்ம சாக்ஷாத்காரமின்றி இத்தகைய மகிமையடைதல் அத்தியந்தம் துர்லபமாமாதலின், இவ்வதிகாரிகள் ஆன்ம சாக்ஷாத்காரத்தை அவசியம் சமபாதித்தல்வேண்டும். இத்துணையால ஆதமசாக்ஷாத்காரபலம நிரூபிக்கப்பட்டது. இபபோது அதன்சமதமாதிசாதனங்கள் நிரூபிக்கபபடும் :—ஹே ஜனகராஜாவே! முறகாலத்துண்டாய அதிகாரிகள் ஆன்ம சாக்ஷாத்காரத்தையடையும்பொருட்டு, சமதமாதி சாதனங்களைச் சமபாதித்துச் சநயாசாசிரமத்தைக் கவர்ந்தனராதலின், இப்போதுள்ள அதிகாரிகளும சமதமாதி சாதனங்களைச சம்பாதித்து, ஆன்ம சாக்ஷாத்காரத்தை யடையுமபொருட்டுச சந்யாசாசிரமத்தையே கவர்க. பாலகனைபபோல இம்மனத்தை இராகத்துவேஷாதி விகாரங்களற்றதாய்ச் செய்தல் சமமாம். வாககுமுதலிய இநதிரியஙகளைததததம் விஷயப்பற்றறறிடச்செய்தல் தமமாம். பிராரபதகருமயோகததால் கிடைத்தபதார்த்தங்கொண்டு தன் சரீர நிர்வாகஞ்செய்தல், பிரியவஸ்துவினடைவால மகிழ்வையடையாதிருததல், அப்பிரிய வஸ்துவினடைவால் வாட்டததையடையாதிருத்தல் என்னுஞ் சநதோஷம் உபரதியாம். இபபோதுபொறுமைவடிவததிதிக்ஷையின் சொரூபம் நிரூபிக்கபபடும். இவ்வதிகாரி இங்ஙனம்விசாரித்துத் திதிக்ஷையையடைக :—அதாவது காயமுதலியவற்றால் துஷ்டர்கள்செய்தபீடையானது என்னுடையவாஸ்தவசொரூபததில் முக்காலத்துமின்றாம் ; மற்றேறு, எனதுசரீர அநதக்கரண இந்திரியாதிகளிடத்தேயஃதிருக்கும். யான் அவற்றினின்றும் எபபோதும் அசங்கனேவெனன இவ்வண்ணம் ஆராய்ந்து அதிகாரியானவன் துஷ்டர்கள்மீதுகோபஞ்செய்யலாகாது. அதிகாரியானவன் தனதுநிந்தையைக்கேட்டுநிநதிப்பவர்மீது இங்ஙனம்விசாரித்துப்பொறுமையடைய வேண்டும் :—அதாவது எனதுநிந்தையைசசெய்பவர் எனதுபகைவரல்லர் ; மற்றேறு, பரமமித்திரராவர். ஏனெனின் இவ்வுலகில் ஒருவன் ஒருவனுக்கு உபகாரஞ்செய்யின் அவன் அவனுக்கு மித்திரனுவன்என்னும இம்மித்திரலக்ஷணம் இந்நிந்தகரிடத்தும்பொருந்தும். ஏனெனின், துக்கபலத்தைக்கொடுக்கும் எனதுபாவகருமத்தை இந்நிந்தகர் தம்பாலேற்றுக்கொள்ளுவர். இதனைப்பார்க்கிலும் வேறோர் உபகாரமின்றாம். இத்தகைய பரம உபகாரததைசசெய்யும் இந்நிந்தகர் பரமமித்திரராவர். அல்லது, இவரை உலகர் சத்துருக்களெனக் கூறுவாராயினும் எனது மித்திரரேயாவர். ஏனெனின், எனது தோஷங்களைச் சிந்தனஞ்செய்து இந்நிந்தகர் தங்கள் மனத்தாலும் வாக்காலும் பரிசிரமத்தை எடுத்துக்கொள்ளுகின்றனர். என்னுடைய

பாவகருமங்களைத் தம்பாற்கவர்ந்து இவர் அவற்றின் துக்கரூபபலத்தைத்தாம் போகிக்கின்றனராதலின், சமுத்திரத்தைக்கடைதலாலுண்டாய ஹாலாஹலவிஷத்தால் சர்வ ஜீவர்களுந் தபிப்பதை நோக்கி, கிருபையோடுகூடிய ஸ்ரீமகாதேவர் அவ்விஷத்தைத்தமதுகண்டத்தே தரித்தருளியதேபோல எனக்குத்துக்கமுண்டாயதைக்கண்டு என்பாவகருமங்களை இந்நிந்தகர் கிருபையினால் தம்பாலேற்றனர். ஆனால், உலகின்கண்ணும் சாஸ்திரத்தின்கண்ணும ஸ்ரீமகாதேவரைச் சற்சனர் என்பர். இந்நிந்தகரைத் துற்சனரென்பர். இவ்வார்த்தையைக்கேட்டு எனக்கு மிகவும் ஆச்சரியமுண்டாகின்றது. ஹே ஜனகராஜாவே! இவ்வண்ணம் விசாரித்து அதிகாரிகள் நிந்தகர்பேரிலும் பொறுமையேசெய்வர். அவர்களைச் சில துஷ்டர்கள் கொல்லினும் இங்ஙனம் விசாரிதது அவர்பால் பொறுமைபுரிவர்:—இவன் எக்காரணத்தால் என்னைக்கொல்வன் எனது துக்கரூப அநிஷ்டத்தைச் சிந்தனஞ்செய்தலால், இவனுககுசசண்டாளயோனியுண்டாகலாகாதெனயான் இச்சிக்கின்றனன். இவ்வார்த்தையை ஸ்ரீமனுபகவானுங் கூறியிருக்கின்றனர்.

“ வா ஊ வஸூணஜூஉஹியஸூயம ஹுயொஉநிஷோநி அஹயறு ।
விதயாஉஹிநிவெஶீஅ ஜாயதெஜஸூாஸ வொநிஷு ” ॥

“ பிறா பொருளினை வேட்டிடும் பெற்றியோன்
பிறா துயரினைப் பேணிடும் பேதையன்
பிறா மதங்களிற் பேயெனத் தோய்பவன்
இறவு மெல்லை யெழுங்கடை யோனியே.”

(பொ-ள்.) யாவன் அயலாருடைய தனுதிகளையடைய இச்சிப்பனே, அயலாரின் துக்கரூப அநிஷ்டத்தைச் சிநதிப்பனே, வேதவிருத்தபாஷண்டமதங்களில் துராக்கிரகஞ்செய்வனே அவன்இறந்து சண்டாளயோனியின்கட்பிறப்பன். ஆகையால் என்னனிஷ்டத்தைச் சிந்திப்பதாலிவனுக்குச் சண்டாள சரீர அடைவுண்டாகலாகாது. அல்லது, தனது இருகைகளையும் இருகால்களையும் தானே யடித்துக்கொள்ளுதல்அநுசிதமாவதேபோல, எனது சரீரத்தை அடித்தலும் உசிதமன்றாம். ஏனெனின், என்சரீரத்தும், இவன்சரீரத்தும், அந்நியர்களின்சரீரத்தும் ஆன்மா ஒன்றேயாமாதலின் தன்சரீரததைத் தாடனஞ்செய்தலால் எனக்குத் துக்கமுண்டாவதேபோல, எனது சரீரதாடனத்தாலிவனுக்குத் துக்கமுண்டாகவேண்டாமென யானிச்சிக்கின்றேன். அலலது, அடிககும புருஷன் என்னைத் துக்கப்படுத்திலன்; மற்றே, பூர்வஞ்செய்த பாவகருமமே இப்போது எனக்குத் துக்கத்தைக் கொடுக்கின்றதாதலின் இவன்பால்யாதொரு அபராதமுமின்றாம். அல்லதுஇச்சரீரம் என்னுடையதேபோல எலலாச்சரீரங்களும என்னுடையதாம் எனக் குருசாஸ்திர உபதேசத்தால் யான் அந்தர்யாமியாய ஆன்மாவை நிச்சயஞ்செய்துளேனுதலின், அடிக்குங்காலத்தே எனது சரீரத்துண்டாநதுக்கம் அடிக்கும்புருஷனுடைய சரீரத்தே உண்டாகவேண்டாம்; மறறே, யாவரும் எபபோதுஞ் சுகிகளாகவே இருக்குக, சர்வநோய்களுமற்றவர்களாகுக. என்னையடித்தலால் எச்சீவனுக்கும் பாவமுண்டாகவேண்டாம. ஹேஜனகராஜாவே! இங்ஙனம்விசாரித்து அதிகாரிகள் அடிக்கும புருஷன்பேரிலும க்ஷமையேசெய்வர். இதனைத் திதிக்ஷை எனப்படும். இப்போது சமாதானஞ்சிரத்தை என்பவற்றை நிரூபிப்பாம்:—ஹே ஜனகராஜாவே! ஆத்ம சாக்ஷாத்காரத்தின்பொருட்டுச் சித்தசாவதானத்தன்மை சமாதானமாம். குருசாஸ்திர உபதேசத்தின்கண் நம்பிக்கை சிரத்தையாம். இவ்வண்ணம் சமதமாதி ஆறுசாதனங்களோடுகூடிய இவ்வதிகாரி குருவாயிலாய்வேதாந்தசாஸ்திர சிரவணம்புரிந்து, அதன்பின் சுருதியநுகூல நானாவகை யுக்திகளால் சிரவணித்த பொருளை மனனிப்பன். அதன்பின் அநதராத்மாவில் சித்தவிருத்திகளின் நிரந்தரப்பிரவாகரூப நிதித்தியாசனஞ்செய்வன். அதன்பின் குரு உபதேசித்தமகாவாக்

கியரூபப் பிரமாணத்தோடுகூடிய சுத்த மனத்தால் சுயஞ்ஜோதியாய் ஆநந்தஸ்வரூபமாயிராநின்ற ஆன்மாவைச் சாக்ஷாத்கரிப்பன்.

சங்கை :—ஹே பகவன்! ஆன்மசாக்ஷாத்காரத்தாலெப்பலன்கிடைக்கும்?

சமாதானம் :—ஹே ஜனகராஜாவே! யான் அத்விதீயப் பிரஹ்மரூபன் என்னும் அபேதஞானம் உதித்துள்ள அதிகாரிக்கு அவித்தையாகிய மாயை நீங்கிவிடும். அம்மாயை ஆவரண விக்ஷேபசக்திகளோடுகூடியது. அத்தகைய அது ஆன்மசாக்ஷாத்காரத்தால் ஒருமுறை அழிவுறின் மீண்டு முற்பன்னமாகாது. இவ்விபுவாய ஆன்மாவின்கண் பரிச்சின்னத்தன்மைதோற்றுதல் மாயையாலாம். ஆத்மசாக்ஷாத்காரத்தால் அம்மாயைநிவிருத்தியானபின்னர் இவ்வறிஞன் பரிச்சின்னத் தன்மையைப் பரித்தியாகஞ்செய்து தன் ஆன்மாவைச் சர்வஜீவர்களின் ஆன்மரூபமாய்க் காண்பனாதலின், அவித்தியாநிவிருத்திவாயிலாய்ச் சர்வான்மபாவப்பிராப்தியே ஆன்மசாக்ஷாத்காரபலமாம். இங்ஙனம் குரு வேதாந்தசாஸ்திரஉபதேசத்தால் எவ்வதிகாரியானவன் ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்துளானோ, அவ்வறிஞனுடைய அசங்கவடிவத்தைப் புண்ணியபாபகருமம் தாண்டமாட்டாது; அவனை அவை தபிப்பிக்கமாட்டா. மற்றோ, கப்பலானது சமுத்திரத்தைக்கடப்பதேபோலும், ஆகாசத்தினின்றுமுண்டாய மின்னல்வடிவ அக்கினி பஞ்சுமுதலியவற்றைத் தகிப்பதேபோலும் இவ்வறிஞன் ஆத்மசாக்ஷாத்காரமகிமையால் புண்ணியபாவரூப கருமங்களைத் தாண்டுவன். ஞானாக்கினியால் அவற்றைத் தகிப்பன். "ஜ்ஞாநாக்நி: ஸர்வகர்மாணி பஸ்மஸாத்குருதே ததா" ஹே அர்ச்சுன! ஞானரூப அக்கினியானது அறிஞனுடைய சர்வ கருமங்களையும் தகிக்கின்றது என்பது ஸ்மிருதியாம். ஹே ஜனகராஜாவே! முற்கூறிய சமதமாதி சாதனங்களால் இவ்வறிஞன் எவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவை அடைவனோ, அவ்வான்மா உண்மையாய்ப் புண்ணியபாவ கருமமற்றதாம். மாயைவடிவ அவித்தையற்றதாம். சம்சயமற்றதாம். இத்தகைய அசங்க ஆன்மாவை அத்விதீயப் பிரஹ்மரூபமாய் அறியும் அறிஞன் இச்சரீரமிருப்பினும் பிரஹ்மரூபமேயாவன். "ப்ரஹ்மவேத ப்ரஹ்மைவ பவதி" பிரஹ்மத்தைத் தனது ஆன்மவடிவமாயறிந்த பிரஹ்மவேத்தாவானவன், பிரஹ்மரூபமேயாவன். முன்னர் யான் நினக்குச் சுழுப்தியவஸ்தையின்கண் சர்வஜீவர்களுடைய தக்களப்பரமான்மாவைக்கூறினேனோ, அதனையே புத்தியாதிகளின் சாக்ஷிரூபத்தால் இப்போது கூறினேன். அது உன் ஹிருதயத்தும், என் ஹிருதயத்தும், மற்றையப்பிராணிகளின் ஹிருதயத்தும், ஆகாசம்போலப் பரிபூரணமாம். சூரியாதி ஜோதிகட்குஞ் ஜோதியாம். இத்தகைய அது உண்மையாய்ச் சம்பூரணசமசார தருமங்களுமற்றதாமாதலின், அவித்தையாசம்பந்தத்தால் ஜனனமரண நனவு, கனவு, துயிலென்பனமுதலிய அவஸ்தைகளில் சுழன்றபோதினும், வாஸ்தவமாய் அவற்றையடையாது. முன்னர் எந்தப் பிரஹ்மத்தை அபயரூபமாய் யான் நின்பொருட்டுக் கூறினேனோ, அதனையே இப்போது நின் ஆன்மரூபமாய்க் கூறினேன். அத்தகைய அத்விதீயப் பிரஹ்மரூப ஆன்மாவின்வேறாக யாதொரு ஸ்தூலசூக்ஷ்ம பதார்த்தமும் சித்தமாகமாட்டாது; மற்றோ, அதிஷ்டானரூப ஆன்மாவின் சத்தையையடைந்தே இக்கற்பித உலகந்தோற்றும். நான்குவகைச் சாதனங்களோடுகூடிய ஆன்மசாக்ஷாத்காரத்தைப் போதிப்பிக்கும் எந்தப் பிரஹ்மவித்தையைச் சூரியபகவானனவர் என்பொருட்டுபதேசித்தருளினரோ, அவ்வியாவற்றையும் யான் நின்பொருட்டுபதேசித்தனன். அதன்சிரவணத்தாலிப்போது நினக்குச் சம்சயவிபரீதமற்ற ஆன்ம சாக்ஷாத்காரம் உண்டாயதாதலின், இப்போது நீ ஜனனமரணாதிரூபசம்சாரபயத்தைப் பரித்தியாகஞ்செய்து நின்சித்தத்தே பிரசன்னமடைந்திருத்தி. ஹே மைந்த! இவ்வகைவசனத்தை யாஞ்ஞவற்கியமுனிவர் கூறியபோது அந்த

ஜனகராஜாவானவர் தமதுபோதத்தின் பூரணத்தன்மையைத் தெரிவிக்கும்பொருட்டு அம்முனிவரைநோக்கி இவ்விதங் கூறத்தொடங்கினர். ஜனகராஜாகூறல்:— ஹே யாஞ்ஞவற்கியமகாமுனிவரே! இவ்விதேக தேசமேமுதலாகவுள்ள ராஜ்ஜிய சம்பத்தெல்லாம் யான்முன்னரே தங்கட்கருப்பித்துவிட்டேன். அச்சம்பூரணராஜ்ஜியசம்பத்தோடும் புத்திரா திகுடும்பத்தோடும் ஜனகனெனியயான் தாசனைப்போலத் தங்கள் எதிரில் நிற்கின்றேன் ஆதலின் ஹே பகவன்! என்னையும் எனதுமைந்தர் முதலிய குடும்பத்தையும் தங்கள் தாசரெனநினைந்து தங்கள் சேவையிற் கவர்ந்து இஷ்டமானவிடத்திற்கிட்டுக்கொண்டுபோகலாம். அல்லது இம்மிதிலையின்கண்ணே தாங்கள் நிவாசஞ்செய்யுங்கள். ஹே பகவன்! தங்களைவிடுத்து ஒருகணமாத்திரையும் யானிருக்கமாட்டேன். இவ்வெனது பிரார்த்தனையைத் தாங்கள் தயைசெய்து அங்கிகரித்தல்வேண்டும். ஹே மைந்த! இவ்வண்ணம் ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கிய முனிவரின் முன்பாக அத்தியந்தந் தீனத்தன்மையோடு பிரார்த்தனை செய்தபோது அம்முனிவரும் ஜனகராஜாவின் அத்திபந்த பிரீதியைக்கண்டு கிருபையோடு கூடியவராய் அம்மிதிலாபுரியின் சமீபவனத்தே ஆசிரமஞ்செய்துகொண்டு ஆண்டுவசித்தனர். அதன்பின்னர், நெடுநாட்கழித்து அம்முனிவர் தமது மனைவிக்குப் பிரஹ்மவித்தையை உபதேசித்துச் சந்நியாச ஆசிரமத்தைப்பெற்றுக் கொண்டனர், பின்னர் ஜனகராஜாவோடு தாமும் விதேகமுக்தியையடைந்தனர். ஈண்டுப் பூர்வகிரந்தத்தே இதிகாசரூபமாய் வருணித்த ஆன்மா சகுணரூபமெனவும், நிர்க்குணரூபமெனவும் இரண்டுவடிவுடையதாம். அவ்விரண்டனுள் முதலில் சகுண ஆன்மாவின்வடிவத்தையும் அதன் ஞானத்தின்பலத்தையும் நிரூபிப்பாம்:— ஹே குமர! பூருவம் வருணித்த ஜன்மமரணாதிவிகாரமற்ற ஆன்மாவின்வடிவமே மாயையின் சம்பந்தத்தாற் சகுணரூபத்தையடையும், அடைந்தவிது சம்பூரண சரீரவடிவ உபாதிகளிலிருந்து நாலுவகை அன்னங்களைப் பக்ஷணஞ்செய்யுமாதலின் இதனைச் சுருதிபகவதியானவள் 'அன்னாதவென' வழைத்தனள். இவ்வான்மாவே தானஞ்செய்பவர்க்குக் கருமபலத்தைக்கொடுக்குமாதலின் சுருதி பகவதியானவள் இதனை 'வசுதானன்' என்றனள். இவ்வாறு அந்நாதரூபத்தாலும், வசுதானரூபத்தாலும் இசசகுண ஆன்மாவின் உபாசனையைசசெய்யுமதிகாரிகள் உலகர் சிரத்தையோடுகொடுத்த நாலுவகை யந்நாதி பதார்த்தங்களைப் போகிப்பர். இப்பிறபபிலேலும், மறுபிறப்பிலேனும் அவ்வுபாசகர் நாலுவகைத் தனாதிகளை உலகர்க்குக்கொடுப்பர், இப்போது நிர்க்குண ஆன்மாவின்வடிவத்தையும் அதன் ஞானபலத்தையும் நிரூபிப்பாம்:—ஹே மைந்த! எவ்விஞ்ஞான ஆனந்த ஸ்வரூப ஆன்மாவை முனிவர் அரசருக்கு அபயரூபமாய் உபதேசித்தனரோ அது ஜரையற்றதாமாதலின், 'அஜரமாம்' மரணமற்றதாமாதலின் 'அமரமாம்' அஜரமமரமாதலினுனே அபயமாம். ஏனெனின்! யாவன்ஜராவஸ்தையால் மரணத்தையடைவனோ அவனே ஜனன மரண துக்கத்தையும் அதனாலுண்டாம் பயத்தையுமடைவன். ஆன்மா அஜரமமரமாதலின் ஜன்ம மரணதுக்கத்தையும் பயத்தையும் அடையாது. ஸ்தூல சூக்ஷுமகாரணமென்னும் மூச்சரீரங்களுமற்றதாம், ஆகாசம்போல யாண்டும் வியாபகப்பிரஹ்மரூபமாம். இத்தகைய பிரஹ்மத்தைத் தன்னான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரிக்கும் அறிஞன் அபயப் பிரஹ்மரூபனேயாவன். ஹே மைந்த! முனிவர் ஜனகராஜாவிற்கு உபதேசித்த பிரஹ்மவித்தை முழுவதையும்யாம் நின்பொருட்டுக் கூறினேம். இப்போது எவ்வர்த்தத்தைக் கேட்கவேண்டுமென்று நினக்கு இச்சையிருக்கின்றதோ அதனைக்கேட்பாயாக.

ஆறுவது அத்தியாயம் முற்றும்.

---

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## ஏழாவது அத்தியாயம்.



ஸ்ரீ கணேசாயநமஃ ஸ்ரீ குருப்யோநமஃ ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நமஃ
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநமஃ.

ஆறாவது அத்தியாயத்தின்கண்ணே யஜுர்வேதத்தின் பிருகதாரண்யக உபநிடதார்த்தம் நிரூபிக்கப்பட்டது. இப்போது ஏழாவது அத்தியாயத்தின்கண்ணே அந்தப் பிருகதாரண்யக உபநிடதத்தின்பொருளை நிரூபிக்கப்படும். ஆறாவது அத்தியாயத்தே யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவை நோக்கி உபதேசித்த பிரஹ்மவித்தையைக் குருவாயிலாய்க்கேட்டு அச்சீடன் மீண்டும் பிரஹ்மவித்தையோடு கூடிய கதையைக்கேட்கவிழைவுற்றனனாய்த் தனதாசிரியர்பாலிங்ஙனம் வினவுவானாயினன். சீடன் கூறல்:—ஹே பகவன்! இவ்வான்மபுராண முதல் அத்தியாயத்தின்கண்ணே தாங்கள் இருக்கு வேதத்தின் ஐதரேய உபநிடதப்பொருளை அறிவிக்கும்பொருட்டுச் சநகாதி இருஷிகட்கும் வாமதேவாதி அதிகாரிகட்கும் உற்ற பரஸ்பர சம்வாதவாயிலாய் நானாவகை வைராக்கியாதி சாதனங்களை உபதேசித்தீர்கள். இரண்டாவது அத்தியாயத்தின்கண்ணே தாங்கள் இருக்குவேதத்தின் கௌஷீதகீ உபநிடதப்பொருளையறிவிக்கும்பொருட்டுத் தேவராஜாவாய இந்திரருக்கும் பிரதர்த்தனனுக்கும் உற்ற சம்வாதவாயிலாய் நானாவகையாய பிரஹ்மவித்தையை உபதேசித்தீர்கள். மூன்றாவது அத்தியாயத்தின்கண்ணே தாங்கள் அந்தக் கௌஷீதகீ உபநிடதப்பொருளையே யறிவிக்கும்பொருட்டு அஜாதசத்துரு அரசர்க்கும் பாலாகிப்பிராஹ்மணருக்கும் உற்ற சம்வாதவாயிலாய் நானாவகைப் பிரஹ்மவித்தையை உபதேசித்தீர்கள். நான்காவது அத்தியாயத்தின்கண்ணே தாங்கள் யஜுர்வேதத்தின் பிருகதாரண்யக உபநிடதப்பொருளை யறிவிக்கும்பொருட்டு இரண்டு புருஷவம்சத்தின்கண்ணும், ஒரு ஸ்திரீ வமசத்தின்கண்ணும் உள்ள ரிஷிகளின் பரஸ்பர பேதாபேதங்களை உபதேசித்ததன்றியுஞ் சர்வஞ்ஞராகிய "தத்யங் அதர்வண" இருஷியோடு அசுவினீ குமாரர்கட்குற்ற சம்வாதத்தையும், அவர் உபதேசத்தால் அசுவினீ குமாரர்கள் பிரஹ்மவித்தையடைந்ததையும், தேவராஜாவாய இந்திரரடைந்த பிரஹ்மவித்தையையும், பரோபகாரத்தின்கண்ணே மிகுந்த பிரீதியையுடைய "தத்யங் அதர்வணர்" எனப் பெயரிய மஹாரிஷியானவர் இந்திரராலும், அசுவினீ குமாரர்களாலும் சிரசசேதனரூப ஆபத்தடைந்ததையும் உபதேசித்தீர்கள். ஐந்தாவது அத்தியாயத்தின்கண்ணே தாங்கள் அந்தப் பிருகதாரண்யக உபநிடதப்பொருளையேயறிவிக்கும்பொருட்டு யாஞ்ஞவற்கிய முனிவரோடு ஆஸ்வலாதிப் பிராஹ்மணர்கட்குற்ற சம்வாதத்தையும், யாஞ்ஞவற்கிய முனிவர்க்குற்ற வெற்றியையும், சாகல்லியப் பிராஹ்மணர்க்குற்ற மரணத்தையும் உபு

தேசித்தீர்கள். ஆறாவது அத்தியாயத்தின்கண்ணே தாங்கள் அப்பிருகதாரண்யக உபநிடதப்பொருளையே யறிவித்தற்பொருட்டு யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜா விற்கு உபதேசித்த சம்பூரணப் பிரஹ்மவித்தையையும், ஜனகராஜாவானவர் கிருதகிருத்தியத்தன்மையையடைய ஹேதுவாய காமவரத்தையு முபதேசித்தீர்கள். ஹே பகவன்! அவ்வாறாவதத்தியாய முடிவில் யாஞ்ஞவற்கிய முனிவர் தமது மனைவியின்பொருட்டுப் பிரஹ்மவித்தையை உபதேசித்துவிட்டுச் சந்நியாசாசிரமத்தைக் கவர்ந்தனரெனக் கூறினீர்களன்றோ? அதனைக்கேட்கவெனக்கிச்சையுண்டாகின்றதாதலின் கிருபையோடும் அப் பிரஹ்மவித்தையை உபதேசித்தல்வேண்டுமெனச் சீடன் கூறியதைக்கேட்ட ஸ்ரீ குருவானவர் பரமாநந்தத்தையடைந்து பிருகதாரண்யக உபநிடதத்தின் மதுகாண்டத்தின்கண்ணும், யாஞ்ஞவற்கிய காண்டத்தின்கண்ணும் கூறியுள்ளகதையைச் சீடன்பொருட்டுக் கூறத்தொடங்கினார்:— அக்கதை அதிகாரிகளின் மனத்தையும், செவிப்புலனையும் சுகப்படுத்துவதாகும்.

ஸ்ரீ குருகூறல்:—ஹே குழந்தாய்! ஜனகராஜாவிற்கு உபதேசித்த யாஞ்ஞவற்கிய முனிவர், பாலிய அவஸ்தைமுதல் விருத்த அவஸ்தைவரை விஷயங்களின் இச்சையற்றவராயிருந்தனர். அவர் வெளியில் விகாரிகளைப்போலத் தோற்றினும் தமது சித்தத்தே யாதொருவிகாரமுமற்றவராயிருந்தனர், யாவருக்கு முபகாரஞ் செய்வதில் எப்போதும் மிகுந்தபிரீதியுடையவராயிருந்தனர். அத்தகைய அவர் வித்தையையடையும்பொருட்டுப் பாலிய அவஸ்தையின்கண்ணே தபத்தைத் தொடங்கினர். அத்தபத்தைக்கண்டு பயத்தையடைந்த தேவராஜாவானவர் விக்கினஞ் செய்யும்பொருட்டு அநேக தேவஸ்திரீகளை யனுப்பினர். அத்தேவாங்கனைகளாகிய குள்ளநரிகளோடுகூடிய மகாவனத்தின்கண்ணேயிருந்த அம்முனிவர் அவ்வமாமங்கையரின் இங்கிதங்களைக்கண்டும் தமது தைரியத்தையிழந்திலர். இப்போது அவருடைய தபத்தை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! மழைகாலத்தே அவர் தருவைப்போலவும், மலையைப்போலவும் சமானபூமியின்கண்ணே நின்று குடைமுதலிய மறைப்பின்றியே தவம்புரிந்தனர். மேகங்களின் ஜலதாரையைத் தமது தேகத்தின்கண்ணே பொறுத்திருந்தனர். உஷ்ணகாலத்தே அவர் மத்தியான சூரியபகவானால் தபிப்பிக்கப்பட்ட கற்சிலையின்மீது நாற்புறமும் அக்கினியைமூட்டி அதன் மத்தியிலிருந்து தவம்புரிந்தனர். சீதகாலத்தே அவர் பனியோடுகூடிய தேயத்தின்கண்ணேயிருக்கும் நிலைபெற்ற நீரின்கண்ணேயிருந்து தவம்புரிந்தனர். இருக்கு, யஜுஷ், சாமம் என்னும் வேதத்திரயவடிவமாயிராநின்ற ஆதித்திய மண்டலத்தின்கண்ணேயிருக்கும் சூரியபகவானைத் தமது நேத்திரத்தால் ஒருமையுடன் பார்த்தபடி மனத்தால் அவரைத் தியானஞ்செய்துகொண்டிருந்தனர். தமது பிராணனைக் காப்பாற்றும்பொருட்டு இலைகளையும் மூலபலங்களையும் பக்ஷணஞ்செய்துகொண்டிருந்தனர். ஆனால், அவற்றையுந் தினந்தோறுஞ்செய்திலர்; மற்றோ, சிலகால் மூன்றாந்தினத்தினும், சிலகால் ஆறாவது தினத்தினும், சிலகால் பனிரண்டாவது தினத்தினும் செய்தனர். இவ்வண்ணம் இலைமுதலியவற்றைப் பக்ஷித்தலால் அவர் தமதுசரீரத்தை வாடவைத்தனர். நித்திரை சிரமங்களற்றவராயினர். உபநயனகாலத்தே முன்னர்த் தமது தந்தையாரால் உபதேசிக்கப்பட்ட காயத்திரிமந்திரத்தை வாக்கினாற் சபித்துக்கொண்டு தமது மனத்தால் நிரந்தரம் சூரியபகவா

ஜையே தியானஞ்செய்துகொண்டிருந்தனர். ஹே குழந்தாய்! இவ்வண்ணம் அம்முனிவர் நெடுங்காலந் தவம்புரியவே அவர் தவத்தான் மகிழ்வுற்ற சூரியபகவானனவா புருஷரூபத்தைத்தரித்து அந்த யாஞ்ஞுவற்கியமுனிவருடைய எதிரில் ஆவிர்ப்பவித்தனர். அவரைநோக்கி அம்முனிவர் தண்டம்போல் நமஸ்கரித்தனர். சம்பூரணஜகத்தின்பாகியப் பிராணரூபரும்,மகாதவத்தின் பலவடிவினருமாகிய சூரியபகவானைக் கண்குளிரக்கண்டு மகிழ்வுற்ற மனத்தையுடையவராய அவர் அச்சூரியபகவானைத் துதிபுரிந்தனர். ஹே மைந்த! இவ்வாறு யாஞ்ஞுவற்கிய முனிவரின் பிரேமையைக்கண்ட சூரியபகவானும மிகமகிழ்வுற்றனர். அச்சூரியபகவானுடைய நேத்திரம் ஆநந்தக்கண்ணீரால்நிரம்பியது. பிரேமையால் சூரியபகவானுக்கு ரோமாஞ்சமுண்டாயது. பிரேமையால் நிறைந்த சூரியபகவானவர் தம்மிருகைகளையும யாஞ்ஞுவற்கியமுனிவரின் மஸ்தகத்தின்பேரில்வைத்து யாஞ்ஞுவற்கியமுனிவரைநோக்கி இங்ஙனங் கூறத்தொடங்கினர் :—ஹே குழந்தாய்! நீ பாலிய அவஸ்தையின்கண் இவ்வனததின்கண்ணேயிருநது மிகுந்த தபத்தால் அதிகக் கிலேசத்தையுற்றாய், உன்னுடைய தபத்தால் யான் மிகவும் மகிழ்வுற்றனன். ஆதலின், எப்பதார்த்தம் உனக்கு வேண்டுமோ அதனைக் கேள், உடனே கொடுக்கின்றேன் எனச் சூரியபகவான் கூறியபோது, அந்த யாஞ்ஞுவற்கியமுனிவர் தமது சிரமேற கரங்கூபபித் தாழ்ந்த முகத்தோடும் சூரியபகவானிடத்தே இவ்வாறு கூறினர். முனிவர் கூறல் :—ஹே பகவன்! தாங்கள் சர்வஜகத்தின் பிராணனாயீர்கள், சம்பூரண சுப அசுப் கருமங்கட்குச் சாக்ஷியாவீர்கள். ஆகையால், இவ்வுலகின்கண்ணே தங்கட்கெப்பொருளும் அறியப்படாததாகாதாம. ஆயினும், தங்களதுசமீபத்தே பாலகனாகிய யான் எனதுவிருததாநதத்தைக்கூறுகின்றேன் :-ஹேபகவன்! ஸ்ரீவியாசபகவானுடைய சிஷ்யராய வைசம்பாயன இருஷியானவர் எனக்குமுன்னர் வித்தியா அத்தியயனஞ்செய்துவைததனா. யான் மனோவாக்குக்காயங்களால் தேவதைக்கேபோல அம்மகரிஷிக்குச சேவைசெய்துவந்தேன். ஒருகாலத்தே சர்வ இருஷிகளுங்கூடிப் பரஸ்பரம் இவ்வகை நிர்ணயததைத் தங்களுக்குட்செய்தனர் அதாவது “எந்த இருஷி இன்றையத்தினம் மகாமேருவின்மீது சமாஜத்தின்கண்ணே வாராரோ, அவருக்கு ஏழு இரவிற்குப்பின் பிரஹ்மஹத்தியினடைவு உண்டாகுக” என்பதாம் இவ்வகையாய இருஷிகளின் நிரணயத்தை எனதாசிரியராகிய வைசம்பாயனர் பேதித்தமையின் அவருக்குக் கிஞ்சித் நிமித்தத்தானே பிரஹ்மஹத்தியினடைவுண்டாயது. அதனாற் றுயருற்ற முகத்தையுடைய அவர் அதன் நிவிர்த்தியின்பொருட்டு, எங்களெல்லாரையும்நோக்கிப் பிராயச்சித்தஞ்செய்ய ஆணையிட்டனர். அதன்பின்னர் யான் எல்லாப் பிரஹ்மசாரிகள்பேரினுங் கருணைவைத்துப்பக்திபூர்வகமாய்ஆசிரியரைநோக்கி இங்ஙனங் கூறினேன்:—ஹே தேசிகோத்தமரே! தங்களுடையசரீரம் விருத்த அவஸ்தையோடு கூடியிருக்கின்றதாதலின், அந்தப் பிராயச்சித்தஞ்செய்யத் தங்கட்கோ ஆற்றலின்றாம். இப்பிரஹ்மசாரிகளோ பாலிய அவஸ்தையோடுகூடியவர்களாதலின், இவர்கட்கும் அதனைச்செய்ய ஆற்றலின்றாம். யானோ திடசரீரமுடையவனும் யௌவன அவஸ்தையையுடையவனுமிருக்கின்றேனாதலின், யானே அதனைச்செய்கின்றேன், என யான் அவ்வாசிரியரைநோக்கிக்

கூறியவுடன் அவர் பிராஹ்மஹத்தியின் மகிமையால் விபரீதபாவத்தையடைந்து மாறுயென்மேற் குரோதமுடையவரானார். குரோதத்தையுற்ற அவர் தயையற்றவரைப்போல இங்ஙனங்கூறினார்:—ஹே பிராஹ்மணநிந்தகனாகிய யாஞ்ஞவற்கிய! நின்பொருட்டு யான்கொடுத்தவித்தையைவிரைவாகவே நீ பரித்தியாகஞ்செய்தி; எனக்கூறியபோது யான் எனதபராதத்தைப் பொறுத்துக்கொள்ளுமாறு எனது மனோவாக்குக்காயங்களால் நானுவகை நமஸ்காராதி யுபாயங்களைச் செய்தனன். ஆனால், அவர் என்மீது பிரசன்னத்தையடையவில்லை; மறறோ, மாறாய் எனது பிரார்த்தனையைநோக்கி அதிகக் குரோதத்தையடைந்து இங்ஙனங் கூறினார்:—ஹே பிராஹ்மணர்களின் நிந்தகனாகிய யாஞ்ஞவற்கிய! நீ என்னை மகிழ்விக்கும்பொருட்டு முயலுதியேல நினது சரீராதிகளை யழிவிக்குஞ் சாபத்தைக்கொடுத்துவிடுவேன். அதனால் இகலோகத்தும் பரலோகத்தும் நீ துக்கத்தையேயடைவாயாதலின், இரண்டிடத்தும் சுகேச்சையிருப்பின் என்னை மகிழ்விக்கும் உபாயங்களை விட்டொழித்து விரைவாகவே எனது வித்தையைப பரித்தியாகஞ்செய்தி, விரைவாகச் செய்யாதிருப்பையேயாயின், இப்போதே உனக்குச சாபங்கொடுத்து கஷ்டப்படுத்துவேன். ஹே பகவன்! இவ்வகை யவர் கூறியபோது யான் பயத்தையடைந்து மகிழ்விக்குமுபாயத்தைவிட்டொழித்து அன்னத்தைக கக்குவதேபோல அவ்வெல்லா வித்தையையும் வாந்திசெய்தேன், இவ்வாறு எல்லா வித்தையையும் பரித்தியாகித்து வித்தையற்றவனானபின் மனுஷ ஆசிரியரிடத்தே வித்தையை அத்தியயனஞ்செய்து பூர்வம் துக்கத்தையனுபவிததனனாதலின் மீண்டும் எம்மனுஷ குருவின்பாலும வித்தையையடையும்பொருட்டுப் பிரார்த்தனை செய்திலேன். அதனால் மீண்டும வித்தையையடையும்பொருட்டு யான் ஈஸ்வரராகிய தங்களுடைய சரணத்தையடைநதனன். என விங்ஙன் பிரார்த்தனைசெய்தபோது சூரியபகவான் அந்த யாஞ்ஞவற்கிய முனிவரைத் தமது தேரின்கண்ணே இருத்திக்கொண்டு வியாகரணாதி ஆறங்கங்களோடுகூடிய நான்கு வேதங்களை உபதேசித்தனர். முன்னர் அம்பிணி தேவதை சூரியபகவானுடைய சீடனானதேபோல யாஞ்ஞவற்கியமுனிவரும் அவருடைய சீடனானார். ஹே குழந்தாய்! இவ்வண்ணம சூரியபகவானிடத்தினின்றும சம்பூரண வேதங்களின் உண்மைபபொருளை உணர்ந்து இல்லற ஆசிரமம நடத்துவதினின்றும் அவர் விரக்தியடைந்தனர். அந்தப பிராஹ்மசரிய ஆசிரமத்திலிருந்தே சந்நியாச ஆசிரமத்தைக்கவரமுயன்றனர். இவ்வண்ணம் அவர் விரக்தியடைநததைக்கண்ட சூரியபகவான் இங்ஙனங் கூறுவாராயினர். ஹே யாஞ்ஞவற்கிய! வித்தையை அத்தியயனஞ்செய்தபின்னர்ச் சீடன் ஆசிரியர்பொருட்டுக் குருதக்ஷிணை அவசியம் கொடுக்கவேண்டுமென்பது சாஸ்திர ஆஞ்ஞையாமாதலின், யான் வித்தையை உபதேசித்ததின்பொருட்டு நீ குருதக்ஷிணை கொடுப்பாயாக. ஹே பகவன்! எக்குருதக்ஷிணையைத் தாங்கள் கூறுகின்றீர்களோ அதனைக்கொடுக்கின்றேன். ஹே யாஞ்ஞவற்கிய! நீ இப்போது சந்நியாச ஆசிரமத்தைக் கவராதொழிக; மற்றோ, கிருகஸ்த ஆசிரமத்தைக் கவருதி, யானுபதேசித்த வேத வித்தையை அதிகாரிகளாய பிராஹ்மணர், க்ஷத்திரியர், வைசியர், பொருட்டு உபதேசஞ்செய்தி. இவ்வண்ணமெனது வித்தையின் சம்பிரதாயத்தைப் பிரவிருத்திப்பித்துப் பின் நீ சந்நியாச ஆசிரமத்தைக் கவர்ந்துகொள், இவ்வாறுய எனது

ஆணையை அங்கீகரிப்பதே எனக்குக் குருதக்ஷிணையாம். ஹே யாஞ்ஞவற்கிய! அந் நான்கு வேதங்களுள் உபநிஷத்பாகரூபப பிரஹ்மவித்தை யாதுனக்குபதேசித் தனனோ அதனை நீ சந்நியாச ஆசிரமத்திற்கு முன்னேனும் பின்னேனும் விஷய வாசனையற்ற அதிகாரிகளின்பொருட்டே உபதேசஞ்செய்தி. ஹே மைந்த! இவ் வண்ணம் சூரியபகவான் ஆணையிட்டபோது அம்முனிவர் அவரது ஆணையைத் தமதுசிரமேற்றுங்கிச் சூரியபகவானுக்குத் தண்டம்போல்நமஸ்கரித்துப் பூவுலகின் கண்ணே வந்தனர், வந்து தமது தந்தையாராகிய யஞ்ஞவற்கரிடத்தே இல்லற ஆசி ரமம் நடத்த ஆணை கேட்டனர். அததநதையாரது ஆணையைபபெற்ற அம்முனி வர் ஜனகராஜாவின்பால் தனததைக் கிரகித்துசசென்று இருமனைவியரை மணந் தனா. காத்தியாயனரெனபபெயரிய இருஷியின்புததிரியாகிய காத்தியாயனி ஒரு மனைவியாம். மித்திரயுவெனபபெயரிய இருஷியின புத்திரியாகிய மைத்திரேயி யொருமனைவியாம். இங்ஙனங் கிருஹஸ்த ஆசிரமததைத் தரித்து அம்முனிவர் முன்னர்ப் பிரஹ்மசரிய ஆசிரமததின்கண்ணே வேதங்களை அத்தியயனஞ்செய்து இருஷிகளின் கடன்கழிததமேபோலத தேவதைகளின் கடனையும பிதிர்க்களின் கடனையும் கழித்தனர். மிகுநத தக்ஷிணையோடுகூடிய அககினிஷ்டோமாதியாகங் களைசசெய்து தேவதைகளின் கடனைககழிததனா. தமக்குச சமானமாய குணங் களையுடைய சிரத்தையுறற புத்திராகளையும புததிரிகளையும் ஜனிப்பித்துப் பிதிர்க் களின் கடனைக் கழித்தனா.

சங்கை :—ஹே பகவன! முனனாத்தாங்கள யாஞ்ஞவற்கிய முனிவரை விர க்தரென்றீர்கள் இபபோது அவருககு இருணததின்அடைவைக் கூறினீர்கள் அது சமபவியாது, ஏனெனின் யாவனவிரக்தனோ அவனுக்கு இருணப்பிராப்தி சம்ப வியாது, யாவன் இருணமுடையவனுவனோ அவனிடததே விரகதத்தன்மை சம்ப வியாது.

சமாதானம் :—ஹே குழந்தாய்! யாஞ்ஞவறகிய முனிவர் விரக்தராதலின் அவர்பால இருண அடைவு சம்பவியாதாயினும பிரஹ்மசரிய ஆசிரம கிருஹஸ்த ஆசிரம சம்பநதத்தானே அவரிடத்தே இருணபபிராபதியுண்டாயது. "ஜாயமா ேநாவை ப்ராஹ்மணஸ்த்ரிபிர் ருணவா ஜாயதே" உபநயந சமஸ்காரத்தோடுகூடிய பிராஹ்மணன் இருஷி இருணம, தேவ இருணம், பிதிர் இருணம் என்னும் மூன் றோடுகூடியவனுவன் என்பது சுருதியாம. இபபோதிபபொருளையே வெளிப்படை யாய் நிரூபிப்பாம :—ஹே குழந்தாய்! பிரஹ்மசரியஆசிரமததையுடையவன் இரு ஷிகளின் இருணியாவதேபோலக் கிருஹஸ்த ஆசிரமத்தையுடையவனும் தேவதை களுக்கும் பிதிர்க்களுக்கும் இருணியாவன். யாவன் தீவிர வைராக்கியத்தால் சந்நி யாச ஆசிரமத்தைக் கவர்வனோ அவனை இலௌகிகரின் இருணம் பற்றுதலேபோல இருஷி இருணதி மூவகை வைதிக இருணங்களும் பற்றுவாதலின் சந்நியாச ஆசிர மத்தின் முன்னர் வித்வானையும் அம்மூன்றும் அவசியமடையும். அல்லது, இவ்வுல கில் புத்திரஜன்மாதி நிமித்தத்தையுறறுப் புத்திர இஷ்டி முதலிய கருமங்களை அவசியம் புரிவனுதலின், அவைகள் அவறறைச்செய்வதன்கண்ணே நிமித்தகாரண

மாவதேபோல அம்முக்கடன்கழியும்பொருட்டுச் சாஸ்திரம் விதித்த கருமத்தைச் செய்வதன்கண்ணே பிரஹ்மசரிய ஆசிரமமும் கிருஹஸ்த ஆசிரமமும் நிமித்தகாரணங்களாம். இதனால் சந்நியாச ஆசிரமத்தின்முன்னர் அறிஞனும் அம்மூன்று கடனைக்கழிக்கும்பொருட்டு அக்கருமங்களை அவசியஞ்செய்க.

சங்கை :—ஹே பகவன் ! பிரஹ்மசரிய கிருஹஸ்த ஆசிரமங்களே இம்மூன்று இருணங்களினடைவை அதிகாரிக்குச் செய்விப்பனவாமாயின், அவ்விரண்டையும் ஏன் கவரவேண்டும் ? மற்றே, அவ்விரண்டையும் பரித்தியாகித்து முதலில் வானப்பிரஸ்த ஆசிரமத்தையே கவர்ந்துகொள்ளலாம, அதனாலிவ்வதிகாரி மூன்று இருணங்களினின்றும் முத்தனுவனன்றே ?

சமாதானம் :—ஹே குழந்தாய் ! பிரஹ்மசரிய கிருஹஸ்த ஆசிரமங்களைக் கவராமல் முதலிலேயே வானப்பிரஸ்த ஆசிரமத்தைக் கவர்தல் தகுதியன்றாம், ஏனெனின், “ அநாஶ்ரமீ ந திஷ்டேத க்ஷணமேகமபி த்விஜ: ” பிராஹ்மணுதி துவிஜர் மூவரும் ஓராசிரமமின்றி ஒருகணமாத்திரையேனும இருக்கலாகாது; மற்றே, பிரஹ்மசரியாதி நான்கனுள் யாதாவதோர் ஆசிரமத்தைக்கவர்ந்தே ஈண்டுறைய வேண்டும். அநாசிரமியாயிருப்பனுயின், பாவததையடைவன் என்னும் ஸ்மிருதியின்கண்ணே ஆசிரமமின்றிய துவிஜனிருபபு நிஷேதிக்கப்பட்டுளதாதலின், பிரஹ்மசரியாதி நான்காசிரமங்களுள் யாதாவதொன்றைக் கவர்ந்தே துவிஜனீண்டுறைய வேண்டும். சாஸ்திரத்தின்கண்ணே வானபபிரஸ்த ஆசிரமத்தைக் கவரக் கால நியமங்கூறப்பட்டுளதாதலின், பிரஹ்மசரியம் கிருஹஸ்தம என்னுமிரண்டையுங் கவர்வதற்கு முதலிலேயே வானப்பிரஸ்த ஆசிரமத்தின் கிரகணஞ் சம்பவியாது. இப்போது வானப்பிரஸ்தக் கிரகணகாலம் நிரூபிக்கபபடும :—ஹே குழந்தாய் ! மனுஸ்மிருதிமுதலிய தர்மசாஸ்திரங்களில, இக்கிருஹஸ்தனுனவன் தனது சரீரத்தின்கண்ணே தோலின் சிதிலத்தன்மையையும, தனது கேசங்களில் வெண்ணிறத்தையும், தனது மைந்தாகட்கு மைநதருண்டானதையுங்கண்டு பூர்வாசிரமத்தைப் பரித்தியாகஞ்செய்து வனததின்கண்ணேவசிக்கும்வடிவ வானபபிரஸ்த ஆசிரமத்தைப்பற்றுகவென இவ்வண்ணம் வானப்பிரஸ்த ஆசிரமத்தைக் கவருங்காலங் கூறப்பட்டுளது. ஆகையால் இது துணியப்பெறும் :—பிரஹ்மசரிய கிருஹஸ்த ஆசிரமங்களைக்கவராது அதிகாரியானவன் பாலிய அவஸ்தையிலேனும், யௌவன அவஸ்தையிலேனும் வானப்பிரஸ்த ஆசிரமத்தை பொருகாற் கவர்வனுயின், அதன் காலத்தையுணர்த்துஞ் சாஸ்திரத்தோடு விரோதிபபவனுவன். அதன் காலம் வருமவரை ஓராசிரமுமின்றியேயிருப்பனுயின், “ அநாஶ்ரமீ ந திஷ்டேத க்ஷணமேகமபி த்விஜ: ” என்னும் வசனத்தை விரோதிப்பன். ஆகையால், இரண்டாசிரமங்கட்கு முதலிலேயே வானப்பிரஸ்த ஆசிரமத்தைக் கவர்தல் சுருதி ஸ்மிருதிவிரோதமாம்.

சங்கை :—ஹே பகவன் ! கிருஹஸ்த ஆசிரமமின்றியே பிரஹ்மசரிய ஆசிரமத்திலிருந்தே சந்நியாச ஆசிரமகிரகணமாவதேபோல வானப்பிரஸ்த ஆசிரமத்தின் கிரகணத்தே யாது பாதகமாகும்.

சமாதானம் :—ஹே மைந்த ! தீவிர வைராக்கியமுண்டாயின் பிரஹ்மசரியத்தின்பின்னும் கிருஹஸ்தத்தின்பின்னும் சந்நியாச ஆசிரமவிதானஞ் சுருதி செய்

திருப்பதேபோலப் பிரஹ்மசரிய ஆசிரமத்தின் பின்னர் வானப்பிரஸ்த ஆசிரம விதானம் எச்சுருதியுஞ் செய்யவில்லையாதலின், இவ்வதிகாரியானவன் கிருஹஸ்த ஆசிரமத்தின் பின்னரே வானப்பிரஸ்த ஆசிரமத்தைக் கவர்க.

சங்கை :—ஹே பகவன் ! பிரஹ்மசரிய ஆசிரமத்தின் பின்னர்க் கிருஹஸ்த ஆசிரமத்தைக் கவர்க. அதன்பின் வானபபிரஸ்த ஆசிரமத்தைக் கவர்கவெனத் தாங்கள் கூறிய நியமஞ் சம்பவியாது ; ஏனெனின், "ஸ்ரூஹ அய-௨ வஙிஅஜெஷா ஶரீர விஜொக்ஷணாக" இத்தூலசரீர நாசபரியந்தம் இவ்வதிகாரியானவன் பிர ஹ்மசரிய ஆசிரமத்தைச் சேவிகக என்னும் ஸ்ரீ வசிஷ்டபகவானுடைய வசனத் தோடு விரோதித்தலின்.

சமாதானம் :—ஹே குழந்தாய் ! மரணம்வரை இவ்வதிகாரி ஓராசிரமத்தைச் சேவிக்க, என்னும்பொருளைப போதிபபதாய ஸ்ரீ வசிஷ்டபகவானுடைய வசனம் முற்கூறியமுறையைப் பிறழ்ச்சிசெய்யவில்லை ; மற்றோ, மாறாய் அம்முறையை அது திடஞ்செய்கின்றது. இப்போ திப்பொருளையே நிரூபிப்பாம் :—ஹே மைந்த ! ஸ்ரீ வசிஷ்டபகவானுடைய வசனத்தின் கருத்திதுவாம் :—பிரஹ்மசரிய கிருஹ ஸ்த வானபபிரஸ்த ஆசிரமங்களில் அதிகாரிக் கத்தியந்தம் இராகமுண்டாயின் மரணமவரை அவ்வாசிரமத்தைப பரித்தியாகஞ் செய்வதில்லையென்று சங்கற்பித்து அதன்கண்ணேயே யுறைக. இவ்வண்ணமாய திடசங்கற்பத்தால் ஓராசிரமத்தின் கண்ணே இருபபவன் உத்தரோத்தர ஆசிரமத்தைக் கவராததால் பாவரூபதோஷ த்தை யடையான் இராகவாயிலாய் ஓராசிரமத்தைச சேவிக்கும் புருஷனுக்குப் பாவரூப தோஷ முண்டாவதேபோல, திடசங்கறபவாயிலாய் ஓராசிரமத்தைச் சேவிப்பவனுக்குப பாபரூபதோஷ மடைவுறுமென்பது கருத்தாம்.

சங்கை :—ஹே பகவன் ! கிருஹஸ்த ஆசிரமத்தையடைய இச்சையற்ற நைட் டிகப் பிரஹ்மசாரி, வனததின்கண் வசிபபதாய வானப்பிரஸ்த கர்மங்களைச் செய்து தன்பால் வானப்பிரஸ்தத்தன்மையைச் சித்தஞ்செய்வனாதலின், கிருஹஸ்தாசிர மத்தின் பின்னரே வானப்பிரஸ்தாசிரமம உண்டாமென்னும் விவஸ்தை சம்பவியா தன்றோ ?

சமாதானம் :—ஹே குமர ! கிருஹஸ்தனானவன் ஆபத்காலத்தில் வனத்தின் கண் வாசஞ்செய்து பிக்ஷாடன காஷாயவஸ்திரங்களைத் தரிப்பன். ஆனால், வனத் தின்கண் நிவாசஞ்செயதல முதலிய வானபபிரஸ்த கருமங்களைச செய்வதால் வான ப்பிரஸ்தனாகான். அவ்வாறே பிக்ஷாடனாதிரூப சந்நியாசியின் கருமத்தைச் செய் வதால் சந்நியாசியாகான். அதுபோல, அநநைட்டிகப் பிரஹ்மசாரியும் வனத் தின்கண் வசித்தலால வானபபிரஸ்தனாகான். அல்லது, கிருஹஸ்தனானவன் தேவதைகட்கும், பிதிரர்க்கட்கும் இருணியாவதேபோலப் பிரஹ்மசாரியானாயி னும், இருஷிகளின் இருணியாவன். வானப்பிரஸ்த ஆசிரமத்தைக்கவரும் அதி காரியானவன் முக்கடன் கழித்தன்றி அதனைக்கவர்தல் முடியாதாம் ; மற்றோ, அம் முக்கடன்கழித்தே அதனைக்கவர்தல முடியும். இக்காரணத்தானும், வனசேவனத் தால் அந்நைட்டிகப் பிரஹ்மசாரி வானப்பிரஸ்தத்தன்மையை யடையமாட்டான்.

அல்லது, பிரஹ்மசரிய ஆசிரமமின்றிக் கிருஹஸ்தாசிரமத்தைக் கவரமுடியாது; மற்றே, முதனி லதனைக்கவர்ந்தே பின்னதனைக் கவர்தல்வேண்டும். அதுபோல, கிருஹஸ்தாசிரமமின்றி வானப்பிரஸ்தாசிரமத்தைக் கவரமுடியாது; மற்றே, முத லிலதனைக்கவர்ந்தே பின்னதனைக் கவர்தல்வேண்டும் ஆகையால், இம்முறைமை துணியப்பெறும் :—முதலில் பிரஹ்மசரியாசிரமத்தைக்கவர்ந்து, பின்னர்க் கிருஹஸ் தாசிரமத்தைக்கவர்ந்து, பின்னர் வானப்பிரஸ்தாசிரமத்தைக் கவர்தல்வேண்டும். இம்முறைமை அநேக சுருதிஸ்மிருதியாதிகளிற் கூறப்பட்டுளது. ப்ரஹ்மசர்யம் ஸமாப்ய க்ருஹீ பவேத் க்ருஹீ பூத்வா வநீ பவேத் அதிகாரியானவன் பிரஹ்மசரியாசிரமத்தின்பின்கிரு ஹஸ்தாசிரமத்தையும், அதன்பின் வானப்பிரஸ்தாசிரமத்தையுங் கவர்க. ஆண்டு, தக்ஷப்பிரஜாபதியின் ஸ்மிருதியிதுவாம் :—

" த்ரயாணா மாநுலோம்யம் ஸ்யாத் ப்ராதிலோம்யம் நவித்யதே ।
ப்ராதிலோம்யேந யோயாதி நதஸ்மாத் பாபக்ருத்தம: " ॥

மூன்றி னுக்காநு லோமிய மூண்டிடும்-தோன்றும் ப்ராதிலோ மியந்தொடர்ந்திடா
வூன்றி யங்கத ஞற்செலு வோனினும்-நான்ற பாவத மனிலை நாடினே.

(பொ-ள்.) முதலில் பிரஹ்மசரியாசிரமம், பின் கிருஹஸ்தாசிரமம், பின் வானப்பிரஸ்தாசிரமமென்னுமிம்முறைமை "அநுலோமம்" எனப்படும். முதலில், கிருஹஸ்தாசிரமம், பின் பிரஹ்மசரியாசிரமம், பின் வானப்பிரஸ்தாசிரமம், அல் லது, முதலில் பிரஹ்மசரிய ஆசிரமம், பின் வானப்பிரஸ்த ஆசிரமம், பின் கிரு ஹஸ்தாசிரமம் இவ்வகை விபரீத முறைமை "பிரதிலோமம்" எனப்படும். அதி காரியானவன் அநுலோமத்தால் பிரஹ்மசரியாதி மூன்றாசிரமங்களையுங் கவர்வனு யின், மஹாபுண்ணியத்தின் அடைவுண்டாம. பிரதிலோமத்தால் அம்மூன்றையுங் கவரின், மஹாபாவத்தின் அடைவுண்டாம். ஆகையால், அநுலோமத்தானே அதி காரியானவன் ஆசிரமங்களைக்கவர்க.

சங்கை :—ஹே பகவன்! பிரஹ்மசரியாதி மூன்றாசிரமங்களில் தாங்கள் முறை கூறியதேபோல, நான்காவதாய சந்நியாசாசிரமத்தின்கண் கூறாததென்னை?

சமாதானம் :—ஹே குழந்தாய்! பிரஹ்மசரியாதி மூன்றாசிரமங்களில் சுருதி ஸ்மிருதிகள் முறைகூறியதேபோல,சந்நியாசாசிரமத்தின்கண் கூறவில்லையாதலின், அதனைக் கவர்வதில் யாதொருமுறையுமின்றாம்; மற்றே, தீவிர வைராக்கியமுண் டாம்போது அதிகாரி சந்நியாசாசிரமததைக் கவர்க. ஆ-சு. யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத் யதிவேதரதா ப்ரஹ்மசர்யாதேவ ப்ரவ்ரஜேத் க்ருஹாத்வா வநாத்வா அதிகாரியானவன் தீவிர வைராகத்தையடைந்தபோது சந்நியாசத்தைக் கவர்க. பூர்வ புண்ணியவசத்தால் பிரஹ்மசரியாசிரமத்திலேயே தீவிர வைராக மானதொருகாலுண்டாயின், அதிலிருந்தே சந்நியாசத்தைக்கவர்க. கிருஹஸ்தாசி ரமத்தின்கண் தீவிர வைராக்யமுண்டாயின், அதிலிருந்தே சந்நியாசத்தைக்கவர்க. வானப்பிரஸ்தாசிரமத்தின்கண் தீவிர வைராகமுண்டாயின், அதிலிருந்தே சந்நியா சத்தைக்கவர்க.

ஆ-சு. யதைவ ஜாயதே தீவ்ரோ வைராக்யம் ஜாயதே ஸர்வவஸ்துஷு ।
ததைவ ஸந்ந்யஸேத் வித்வாந் அந்யதா பதிதோ பவேத் ॥

உலகப்பொரு டம்மில்வி ராகமேப் போதுதிக்கு
மிலகப்பொழு தேயிவவ றிஞன்று றவையேய்க
திலகப்பொரு ளாம்வயி ராகம்சே னித்திடாதே
கலகப்படி ஞேபதி தன்னெனக் காணலாமே.

(பொ-ள்.) அதிகாரிக்குச் சாவ பதார்த்தங்களிடத்தும் தீவிரவைராக்யம உண்டாங்கால் சந்நியாச ஆசிரமத்தைக்கவாந்துகொளக, இதன்கண்ணே யாதொரு முறைமையுமின்றும்; ஆனால், அத்தீவிரவைராகயமின்றிச சந்நியாசஞ்செய்துகொளபவன் பதிதனாவன். ஹே குழந்தாய்! இவைமுதலாகிய அநேகஞ் சுருதி ஸ்மிருதிகளில் சந்நியாச ஆசிரமத்தைக் கவாவதின்கணணே தீவிரவைராக்கியத்திற்கே முக்கியகாரணத்தன்மை கூறியுளது. அது எவ்வாசிரமததின்கண்ணே யுண்டாயினும அதிலிருநதே சநநியாச ஆசிரமத்தைக கவாநதுகொள்ளலாம்.

சங்கை:—ஹே பகவன்! சுருதிஸ்மிருதிகள் பிரஹ்மசர்யாதி மூன்றுசிரமங்கடகு முறைகூறியபடியேபோலச சநநியாச ஆசிரமததிறகும் கூறியிருககின்றது. "ப்ரஹ்மசர்யம் ஸமாப்ய க்ருஹீ பவேத் க்ருஹீ பூத்வா வநீ பவேத் வநீ பூத்வா ப்ரவ்ரஜேத்" என்னுஞ் சுருதியின்கண்ணே வானபபிரஸ்தாசிரமததின்பின்னரே சநநியாசாசிரமம விதானஞ்செய்யபபட்டுளது.

ருணத்ரயம் அபாக்ருத்ய நிர்மமோ நிரஹங்க்ருத: ।
ப்ராஹ்மண: க்ஷத்ரியோ வாபி வைச்யோ வா ப்ரவ்ரஜேத் க்ருஹாத் ॥

நல்லற முயன்று கடன்மூன்று நனிநல்கி
யொல்லையென தோடக முறப் பெறலொழித்தே
வில்லரசா விப்பிரா வியன்வணி கரேனும்
இல்லினி லிருந்துதுற வெய்துக வியைந்தே.

(பொ-ள்.) இருஷி இருணம, தேவ இருணம, பிதிர் இருணம், என்னும் முக்கடனையுங்கழிதது யானெனதென்னு மபிமானமற்ற முதன்மூவருணததவரும் சநநியாச ஆசிரமததைககவாக. என்னும ஸ்மிருதியின்கண்ணும் முக்கடன் கழித்த பின்னரே சநநியாச ஆசிரமம் விதிததுளது. ஆதலின், சநநியாசததின் முறையின்மையையுணர்ததும் சுருதி ஸ்மிருதிகட்கும,முறையையுணர்த்தும் சுருதி ஸ்மிருதிகட்கும் பரஸ்பரம் விரோதமுண்டாமன்றே?

சமாதானம்:—ஹே குழந்தாய்! விஷய போகங்களில தீவிரவைராக்கியம் உறாத மந்தவைராககியமுடையவனுக்குச சுருதி ஸ்மிருதிகள் வானபபிரஸ்த ஆசிரமத்தின்பின் நான்காவததவஸ்தையில சநநியாச ஆசிரமததை விதிததுளது. விஷய போகங்களில் தீவிரவைராக்கியமுடையவனுககுச் சுருதி ஸ்மிருதிகள் பிரஹ்மசரியாதி ஆசிரமத்தின்கண்ணும் சந்நியாச ஆசிரமத்தை விதித்துளது. ஆகையால், சந்நியாச ஆசிரம அதிகாரிகள் பேதித்தலின் அச்சுருதி ஸ்மிருதிகட்குப் பரஸ்பரம் விரோதமுண்டாகமாட்டாது. அல்லது, "ந்யாஸோ ப்ரஹ்ம" என்னுஞ் சுருதியின்கண்ணே சந்நியாச ஆசிரமம் பிரஹ்மரூபமெனக் கூறப்பட்டுளது. "தஸ்மாத்

ஸ்ரூ ஹாவ௵வ-உ௨ரவா௦" என்னுஞ் சுருதியின்கண்ணே பிரஹ்மம் பூர்வ உத்தரபாவமற்றதாய்க் கூறப்பெற்றுளது. ஆதலின், பிரஹ்மத்தின்கண்ணே பூர்வ உத்தரபாவமின்றாம். அதுபோலப பிரஹ்மரூப சந்நியாசத்தின் கண்ணும் பூர்வ உத்தரபாவஞ் சமபவியாது.

சங்கை:—ஹே பகவன்! பிரஹ்மசரிய ஆசிரமத்தின் பின்னர்க் கிருஹஸ்த ஆசிரமமாவதேபோலச சந்நியாச ஆசிரமத்தின் பின்னரும் ஓராசிரமம் உண்டா? அல்லது, இன்று?

சமாதானம்:—ஹே குழந்தாய்! பிரஹ்மசரிய ஆசிரமத்தின் பின்னர்க் கிருஹஸ்த ஆசிரமமாம, அதன்பினனா வானபபிரஸ்த ஆசிரமமாம். அதுபோல, சந்நியாச ஆசிரமததின் பின்னா யாதோராசிரமுமின்றாம்; மற்றே, பிரஹ்மசரியாதி சர்வ ஆசிரமங்கட்கும இச சநநியாச ஆசிரமமே அவதிரூபமாம். இவ்வார்த்தை சாரீரகபாஷிய மூன்றாவதத்தியாயத்தே நான்காவது பாததகதில் "தஜ்௵தஸ்ஷ்த௲நா தஜ்ஹாவொ ஜெஜிநொவிநியஶாத்௨௵வாஹாவெஹ்ஃ" என்னு மிநநாற்பதாவது சூத்திரததின்கண்ணே ஸ்ரீ வியாசபகவானும சூத்திர வியாக்கியான கர்த்தாவாய ஸ்ரீ பகவான் பாடியககாரரும விஸ்தாரமாய் நிரூபிததிருக்கின்றனர். அசசூததிரத்தின் சுருஙகியபொருளிதுவாம:—சநநியாச ஆசிரமததினும் மேலாக எவ்வாசிரமத்தையுங் கவருமாறுணர்த்தும் சுருதிஸ்மிருதிகளின்றும், சிஷ்டாசாரமும் காணபபடவின்றாம அதனாற சதுாததமாய சநநியாச ஆசிரமததையடைந்தவனுககுச சரீரநாசபரியந்தம அதனினுமேமேலறறமின்றும். ஹே மைநத! சதுர்த்த சந்நியாச ஆசிரமத்தினும் மேலாக எவ்வாசிரமத்தின கவர்சசியுமின்றாம் என்பது எங்ஙனம் சர்வ சாஸ்திரத்தின் கண்ணும பிரசித்தமாமோ அங்ஙனம் துவிஜனானவன் ஓராசிரமமின்றி யிருக்கலாகாது என்பதும் சுருதி ஸ்மிருதியாதி யாவறறினும் பிரசித்தமேயாம். ஆண்டுத தக்ஷப்பிரஜாபதியின ஸ்மிருதி யிதுவாம்:—

ஸஂ௵ஸ௱ ஶீநெவதிஷெ஠ தூஜஶெகஶவிஷிஜஃ ।
ஶூஸ௱ெணை விநாதிஷஂ௶ வ௱ாயஸ்௲ீதீய தெஹிஸஃ ॥

பேசுமோரு நல்வருட மும்மிரு பிறப்போன்
ஆசிரம மின்றியம ராதொழிக வேதான்
ஆசிரம மின்றியமா கிற்பனெனி னத்தான்
மாசுறவன் மாறுதொழின் மன்னிடுவே னன்றே.

(பொ-ள்) இவ்வுலகின்கண்ணே துவிஜன் ஆசிரமமின்றி ஒருவருடபரியநதமுமிருக்கலாகாது; மற்றே, ஓராசிரமததைபபறறியே யிருக்கவேண்டும். ஒருவருடபரியநதமுமம ஆசிரமமின்றி யிருக்குந் துவிஜனுக்குப் பிராயச்சித்த அடைவுண்டாம. கருததிதுவாம்:—துவிஜனுடைய மனைவி ஜீவித்திருக்கும்பரியந்தம் கிருஹஸ்த ஆசிரமமாம். அவளிறந்தபின் அவ்வாசிரமம் நீங்குமாதலின் ஒருவருடத்திறகுள்ளேயே வேறுமனைவியை மணந்துகொள்க, அல்லது, வானப்பிரஸ்த ஆசிரமத்தைக் கவர்க, அல்லது, சநநியாச ஆசிரமத்தைக்கவர்க; ஆனல் ஓராசிரமத்தையுங் கவராது அநாசிரமியாய் ஒருகாலும் துவிஜனிருக்கலாகா தென்பதாம். ஆகையால், இப்பொருள் துணியப்பெறும்:—பிரஹ்மசரிய ஆசிரமத்தின்கண்ணே இரு

ஷிகடன் கழித்து, கிருஹஸ்தாசிரமத்தே தேவதை பிதிர்க்களின் கடன்கழித்து அதிகாரியானவன் வானப்பிரஸ்த ஆசிரமத்தைக்கவர்க. அதன்கண்ணே முக்கடனற்றவனுவன், பிரஹ்மசாரியானவன் தேவபிதிர்க்கடன் அற்றவனுவதேபோலவும், கிருஹஸ்தன் இருஷிகடனற்றவனுவதேபோலவும், வானப்பிரஸ்தன் முக்கடனுமற்றவனுவதேபோலவும், சதுர்த்த ஆசிரமத்தையுடைய சந்நியாசியும், லௌகிகவைதிக சர்வகடன்களுமற்றவனுவன். ஹே குழந்தாய்! இவ்வண்ணமாய சாஸ்திரவியவஸ்தையை அறிந்துள்ள யாஞ்ஞவற்கியமுனிவர்மனத்தே எல்லாக்கடனுமற்றவரேனும் அந்தக்கிருஹஸ்த ஆசிரம சம்பந்தத்தால் அக்கடன்களை யடைவுற்றனர். கிருஹஸ்தாசிரமத்தை யங்கீகரித்து யாஞ்ஞவற்கியமுனிவர் எவ்விசாரத்தால் தேவபிதிர்க்களை மகிழ்விக்கும்பொருட்டுக் கோ, சுவர்ண, அன்னுதி பதார்த்தங்களைத்தானஞ்செய்தனரோ அதனை நீ கேட்பாயாக:—யான் பிரஹ்மசரிய ஆசிரமத்தின்கண்ணே வேதங்களை அத்தியயனஞ்செய்து இருஷிகளின்கடன்கொடுத்ததேபோலத் தேவபிதிர்க்கடன் கொடுத்துவிட்டுப் பின்னர் யான் சந்நியாச ஆசிரமத்தைக் கவர்வேன், ஒருகால் இருஷிகடனேபோலத் தேவபிதிர்க்கட்குக் கடன் கொடாதொழிவனேயாயின், இருஷி, தேவதை, பிதிர் என்னும் மூவரின்விஷம அர்ச்சனைவடிவப் பந்திபேதமுண்டாமாதலின், இருஷிகட்கேபோலத் தேவ பிதிர்க்கட்கும் யான் நன்றாகக்கடன்கொடுப்பேன், இங்ஙனம் முக்கடனையுங் கழித்து யான் சந்நியாசஆசிரமத்தை யடைவனுயின் எனதாசிரியராய சூரியபகவானுனவர் எனக்கிட்ட கட்டளையின்பாலனம் நன்றாக என்னுற்செய்யப்பட்டதாகும். ஆகையால், சூரியபகவானுடைய வசனத்தை உண்மையாக்கும்பொருட்டு யான் சுவர்க்காதிலோகங்களை யடைவிப்பதாய யாகாதிரூபப்பிரவிருத்திமார்க்கத்தையும், மோக்ஷத்தையடைவிக்கும் ஆன்மஞானரூபநிவிருத்திமார்க்கத்தையும் காப்பாற்றுவேன். ஹே குழந்தாய்! இங்ஙனம் விசாரித்து அம்முனிவர் தேவ பிதிர்க்களை மகிழ்விக்கும் பொருட்டு நானுவகையாய தானத்தைச் செய்தனர். இப்போது யாஞ்ஞவற்கியமுனிவரின் கிருஹஸ்த ஆசிரமத்தை வருணிப்பாம்:—ஹே மைந்த! இரவும் பகலும் சர்வ ஜீவர்கட்கும் உபகாரஞ்செய்யும் அம்முனிவரின் கிருஹஸ்த ஆசிரமத்தைக் கண்ணுற்று யாவரும் ஆச்சரியத்தை யடைந்தனர். ஆண்டுக் காத்யாயனி மைத்திரேயியென்னும் இருமனைவியரோடும் ஆணையைச் சிரமேற்கொள்ளுங் குமாரரோடும் அம்முனிவர் யாக ஓமாதி கருமங்களைச்செய்து இந்திராதி தேவதைகளைப் பாலனஞ் செய்தனர்; தினந்தோறும் வேதபாடாதிகளால் இருஷிகளைப் பாலனஞ்செய்தனர்; மைந்தர்களை உண்டாக்கியும் பிண்டதானுதிகளைச்செய்தும் சுவர்க்கவாசிகளாய பிதிர்க்களைப் பாலனஞ் செய்தனர்; இரவின்கண்ணே இருக்கவிடம், நானுவகையாய அன்னம், வஸ்திரம், சுவர்ணுதி தனம் என்பன முதலிய அநேகவகைப்பதார்த்தங்களைத் தானஞ்செய்வதால் அதிதிகளைக்காப்பாற்றினர்; புல் முதலியவற்றைத் தானஞ்செய்தலால் கோ, அசுவாதி பசுக்களைக்காப்பாற்றினர். அன்னம் பக்குவஞ்செய்யும் பாத்திரத்தும் போஜனஞ்செய்யும் பாத்திரத்தும் எஞ்சி நின்ற அன்னத்தைப்போடுதலானும், பலி, தானுதிகளானும், அம்முனிவர் காகம், நாய், கீடமுதலிய ஜந்துக்களைக் காப்பாற்றினர்.

உதாரமாய தனிகனுடைய கிருகத்தின்கண்ணே துந்துபி சப்தங்களால் அன்னம் வேண்டும் ஜீவாகளை அழைப்பதேபோல, அம்முனிவரது கிருகத்தே வேதவாணி ரூபமேதனுவின் ஸ்வாஹா, வஷட், ஸ்வதா, ஹந்த, வென்னும் ஸ்தனரூப சப்தங்களால் தேவதைகள் அழைக்கப்பட்டுக்கொண்டிருந்தனர். அவற்றுள், ஸ்வாஹா, வஷட் என்னும் இரண்டு சப்தங்களால் இந்திராதி தேவதைகள் அழைக்கப்பட்டனர். ஸ்வதா என்னுஞ் சப்தத்தால் பிதிர்க்கள் அழைக்கப்பட்டனர். மகிழ்வையுணர்த்தும் ஹந்த சப்தத்தால் அன்னத்தை விரும்பும் மனுஷர்கள் அழைக்கப்பட்டனர். ஹே குழந்தாய்! இவ்வகையாய அற்புதக கிருஹஸ்த ஆசிரமம் அந்த யாஞ்ஞுவற்கிய முனிவருக்குக்கிடைத்திருந்தது. இப்போது அம்முனிவரின் காத்தியாயனிமனைவியின் விருத்தாந்தம் நிரூபிக்கப்படும்:—ஹே குழந்தாய்! அக்காத்தியாயனியென்னும் அம்மை கிருககாரியங்களில் அத்தியந்த குசலமுடையவளாயினள். வீட்டின் சுவர்களையும் பூமியையும் துவாரத்தையும் யாகசாலையின் பூமியையும் தினந்தோறும் விளக்கித்தூய்தாக்கினள். சுண்ணும்பு முதலிய வெண்மிருத்திகையால் சம்பூரணகிருகத்தைப் பாலைப்போல வெண்மையாக்கினள். அவ்வீடு சோபிக்கும்பொருட்டுச் சிற்சில விடத்தே சிந்தூராதிகளால சிவப்புவருணஞ் செய்தனள். சிற்சில விடத்தே சிவப்பு மஞ்சள் முதலிய வருணங்களால் விசித்திரவர்ணமுடையதாமாறு செய்தனள். அன்னஞ்செய்யும் பாத்திரங்களையும் நீர்க்குடங்களையும் கமண்டலங்களையும் அவற்றைமூடுஞ் சிறியபாத்திரங்களையுஞ் சாப்பர்முதலியவற்றுலவிளக்கி எப்போதும் தூய்தாக்வைத்தனள். பிமஙளாதியா பாகவிதத்தையின்கண்ணே குசலமுற்றிருப்பதேபோலச் சூரியதேஜசாலும் அக்கினியின்தேஜசாலும் தின்பனவாதி நால்வகை உண்டியையும்பக்குவஞ்செய்தனள். அதிகாலையிலெழுந்து ஸ்நாநாதி நித்தியகருமங்களைச்செய்துவிட்டுத் தமது பதியைப் பூஜனை புரிவள். தமது பதியின்தாய் தந்தையர்களையும் மூத்த இளைய உடன் பிறந்தோர்களையும் சகோதரிகளையும் மற்றைய பந்துக்கள் யாவரையும் முறைப்படி பூஜித்தனள். இவ்வண்ணம் கிருகவிபவகாரங்களில் அத்தியந்தம் குசலபுத்தியுடையவளாய்ச் சர்வஸ்திரீகளினும் பிரதானமாயிருந்தனள். அவ்வம்மைக்குச் சமானமாய் வியவகாரத்தின்கண்ணே குசலமுடையவள் முக்காலத்தினுமின்றும். இப்போது யாஞ்ஞுவற்கியரின் மற்றொருமனைவியாய மைத்திரேயியென்னும்அம்மையின்விருத்தாந்தம் நிரூபிக்கப்படும்:—ஹே குழந்தாய்! அம்முனிவரின் மற்றொருமனைவியாய மைத்திரேயியென்பவள் சமசார சம்பந்தியாய ஜன்மமரணாதி துக்கங்களைக்கண்டு உன்மத்தரைப்போலச் சஞ்சரிப்பள். கன்றுமரிககின் கோவானது எப்போதும் சோகத்தோடுகூடியதாயிருப்பதேபோல, அவ்வம்மை இங்ஙனம் விசாரித்துச் சோகமுடையவளாயிருந்தனள். இப்போது அவ்விசாரங் காண்பிக்கப்படும்:—மைத்திரேயியென்னும் யான் யார்? தேகாதி சங்காதரூபமா? அவற்றினும் வேறு? அவற்றினும் வேறயினும் ஜடரூபமா? அல்லது, சைதன்யரூபமா? இவ்வுலகத்தே யான் எப்பிரயோஜனத்தின்பொருட்டு வந்தனன்? இச்சரீர முண்டாவதற்குமுன் எத்தானத்திலிருந்தேன்? இப்போது யான் எதன்கண்ணிருக்கின்றேன்? மரணத்தின்பின் எத்தானத்தை யடைவேன்? என்பதியின் வடிவம்யாது? எனதுபுத்திர புத்திரிகளின் வடிவம்யாது? கருத்திதுவாம்:—பிரத்தியக்ஷப் பிரமாணத்தாற்

சித்தமாயதூலசரீரங்கட்கே பதி புத்திராதியரென நாமங்களா? அல்லது, அவற்றினும் வேறாய எவ்வத்துவிற்கேனும் அந்நாமங்களா? அவ்வேறாய வஸ்துவும் ஜடமா? அல்லது, சேதனமா? இம்முறையை மேலுமுணர்ந்துகொள்க. தினந்தோறும் எனக்குண்டாந துயருக்கு யாதுவடிவம்? விடயசம்பந்தத்தால் எனக்குண்டாஞ் சுகத்திற்கு யாதுவடிவம? எச்சக்ஷுராதி யிந்திரியங்களால் யான் உருவமுதலிய விடயங்களை யுணர்கின்றேனோ அவற்றின்வடிவமியாதாம்? எத்தாவரஜங்கமாதி யுயிர்களை யான் எனதுநேத்திரங்களாற் காண்கின்றனனோ அவற்றின் வடிவமியாதாம? ஹே குழந்தாய்! இவ்வகையாய விசாரத்தைத் தமது மனத்தின்கண்ணே எப்போதுஞ் செய்துகொண்டிருந்தும அவ்வம்மை பரமசோகத்தோடு கூடியவளாயினள். அவ்வம்மையின் சித்தத்துள்ள சாவவிருத்தாந்தங்களையும் அறிந்திருந்தபோதிலும அம்முனிவர் தமது கிருஹஸ்த ஆசிரமசித்தியின்பொருட்டு முன்னர் அவ்வம்மைக்குப பிரஹ்மவித்தையை யுபதேசித்திலர்; மற்றோ, கிருதகாரியத்தே பிரவிருத்திப்பித்தனர். இப்போது யாஞ்ஞவற்கிய முனிவரின் விருத்தாந்தத்தை நிரூபிப்பாம:—ஹே குழந்தாய்! இங்ஙனம யாஞ்ஞவற்கிய முனிவர் கிருஹஸ்த ஆசிரமத்தின்கண்ணேயிருந்து நெடுநாட்கழித்தனர் ஒருகால் ஏகாந்தஸ்தானத்தின்கண்ணேயிருந்து இங்ஙனம ஆராய்வாராயினர்:—இதுமிகவும் ஆச்சரியமா யிருக்கின்றது! இவ்வுலகின்கண்ணே சாவதேகதாரிஜீவர்கட்கும் அத்தியந்தம் பிரியமாயபிராணதாரணமே பரமதுக்கரூபமாம்; ஏனெனின்? இச்சீவன்சரீரரூப சிறைச்சாலையைக் கவர்ந்திருப்பது பிராணதாரணத்தின் பொருட்டேயாம். இச்சரீரமோ தோல், உதிரம, மாமசம, மேதை, மஜ்ஜை, என்பு, வீரியம் என்னும ஏழு தாதுக்களால நிறைவுற்றதாம. வாதம, பித்தம், கபம என்னுமுத்தோடங்களோடு கூடியதாம. சீய், விட்டை, மூத்திரம என்பனவாதி அசுத்தங்களால் நிறைவுற்றதாம. இக்காரணத்தானே இச்சரீரம அத்தியந்தம் துர்க்கந்த முடையதும நானாவகையாய பயத்தை யடைவிப்பதுமாம. அன்றியும் இது அத்தியாத்மிக, ஆதிபௌதிக, ஆதிதெய்விகமென்னும முத்துக்கங்களோடுகூடியதாம. தலைநோய், கண்ணோய், அதிசாரம, புளீகம, குன்மம், பகந்தரம், குதாவர்த்தம், கண்டமாலை என்பனமுதலியவாய அநேகவகை நோய்களாலுண்டாகிய நானாவகைத்துக்கங்கள், காமம், குரோதம், துவேஷம், லோபம, மோகமுதலிய ஆதிகளாலுண்டாய நானாவகைத்துக்கங்கள், அத்தியாத்மிக துக்கங்களெனப்படும். சிங்கஞ் சர்ப்பந் தேள் பகைவர் முதலிய பூதங்களாலுண்டாம நானாவகைத் துக்கங்கள் ஆதிபௌதிகதுக்கங்களாம். சீத வாத ஆதபம் மழை எரி நீர் முதலிய தேவதைகளா லுண்டாம் நானாவகைத் துக்கங்கள் ஆதிதெய்விக துக்கங்களாம் பாலியம், யௌவனம், விருத்தம என்னும அவஸ்தைகளில இராகம, துவேஷம, மோகம, சோகம், அசக்தி என்பன முதலிய விகாரங்களால நானாவகைத துக்கங்களை யடையும். இச்சரீரத்தின்கண்ணே பிராணனது பிரவேசத்தையும வெளிப்போதலையும் நினைதலாலுண்டாம பயம் எல்லா அவஸ்தைகளினும் எமனேனோர் முதலியவர்கட்குத் துக்கத்தையேயுண்டாக்குகின்றது. அந்தப்பய ஜன்னியதுக்கத்தினும் அதிகதுக்கம் தாயின்கர்ப்பத்தின்கண்ணேயும் மரணகாலத்தின் கண்ணேயும் உண்டாகாது. இவை

முதலாக அநேகவகைத் துயரங்கள் இகலோகத்தும் பரலோகத்தும் ஜீவர்கட்குண்டாவது சரீரசம்பந்தத்தானேயாம். சரீரசப்பந்தமின்றி யொருக்காலுந் துக்கமடைவுண்டாகாதாதலின் இச்சரீரசம்பந்தமே சர்வதுக்கங்கட்குங் காரணமாம். அல்லது, ஏகாந்ததேசத்தின்கண்ணே நிவாசஞ்செய்யும் ஜீவன்முக்தர்கட்கும் இச்சரீரம் துயரையே யுண்டாக்குமெனின் சம்சாரத்தின்கண்ணே ஆசக்தமாய நம்மனோர்முதலியவர்கட்குத் துயரீவதில் யாதுகூறவேண்டியிருக்கின்றது. அல்லது, தனதொரு சரீரத்தே யானெனதென்னும் அபிமானரூப சங்கமும் இஜ்ஜீவர்கட்கு அநேகவகைத் துக்கத்தையடைவிக்குமெனின் இச்சரீர சம்பந்திகளாய மனைவி மைந்தர்முதலிய அநேக உறவினர்பால் யானெனதென்னும் அபிமானரூப சங்கம் அளவறுந்துயரை யீயுமென்பதன்கண் யாது கூறற்குளது. இப்போது இப்பொருளையே வெளிப்படையாக்கும்பொருட்டு அநேகதிருஷ்டாந்தங்களால் சங்கத்தின்கண்ணே துக்ககாரணத்தன்மை நிரூபிக்கப்படும்:—உண்மையாய்ச் சர்வ சங்கமற்ற நிர்க்குண ஆன்மாவும் அவித்தைமுதலியவற்றின் கற்பித சங்கத்தையுற்று நானாவகைத் துயரையடையுமாதலின் இச்சங்கமே சர்வ ஜீவர்கட்கும் அநர்த்தகாரணமாம். அல்லது, இயல்பாகவே சீதஸ்பரிசத்தையுடைய நீரானது அக்கினியோடு சம்பந்தத்தையடையின் உஷ்ணத்தன்மையையடையும். இயல்பாகவே வெட்டுப்படாத விருக்ஷமானது கோடரியின் சங்கமுறின் வெட்டுப்படும். இயல்பாகவே வெட்டுப்படாத இச்சரீரமானது சஸ்திர சங்கத்தையடையின் வெட்டுப்படும். இயல்பாகவே அந்தர்முகமாயமனமானது விஷயசங்கத்தையடையின் பகிர்முகத்தையடையும். பூர்வபாவகருமங்களோடுகூடிய பாவியானவன் துஷ்ட புருஷர்களின் சங்கத்தையடையும்போதே அப்பாவத்தின் துக்கரூப பலத்தை யநுபவிப்பன். இயல்பாகவே துயரற்ற தர்மாத்மா துக்கிகளின் சங்கத்தையடையின் அநேகம்வகைத்துக்கங்களையடைவன். இயல்பாகவே காமதோஷமற்றவன் காமிகளின் சங்கத்தையடைவனாயின் காமதோஷத்தையடைவன். இங்ஙனம் இயல்பாகவே களவுமுதலிய விகாரங்களற்றவன் கள்வர்முதலியோர் சங்கத்தையுறின் அவ்விகாரங்களையடைவன். புளிப்பு இரசத்தையுடைய மாதளை, எலுமிச்சைமுதலிய பதார்த்தங்களின் தரிசனரூப சங்கத்தாற் புருஷனுடைய வாயில் நீரூறிவரும். இயல்பாய்க் கிரியையற்ற இரும்பானது சும்பகபாஷாண சங்கத்தையடையின் நானாவகையாய கமனாகமனாதிகளைச்செய்யும். இங்ஙனம் இஜ்ஜீவன் மனைவி மைந்தராதியரின் சங்கத்தையுற்று நானாவகைத் துக்கத்தையடைவன். கருத்திதுவாம்:—ஜடரூபமாய்ப் பிரசித்தமாய் இராநின்ற இரும்பு முதலிய ஜடங்களும் சும்பகாதி ஜடபதார்த்தங்களின் சங்கத்தால் நானாவகை விகாரங்களையடையுமாயின் இச்சேதன ஜீவன் மனைவி மைந்தராதி சேதனபதார்த்தங்களின் சங்கத்தால் நானாவகையாய விகாரங்களையடைவனென்பதன்கண் யாது கூறவேண்டியிருக்கின்றது? ஆதலின், யான் எனது என்னும் அபிமானரூப சங்கத்தோடுகூடிய இச்சரீரமே சர்வ ஜீவர்களின் துக்ககாரணமாம். இப்பொருளில் யானேயுவமையாவேன்; ஏனெனின் பூர்வம் பிரஹ்மசரியத்தின்கண் சர்வ சங்கமற்றவனாயிருந்தேனாதலின் எனக்குச் சிறிதுமாத்திரையும் விக்ஷேபப் பிராப்தியுண்டாகவில்லை. இப்போது மனைவி மைந்தராதி சங்கத்தால் நானாவகையாய விக்ஷேபத்தையடைந்துள்ளேனாதலின், இச்சங்கமே பரமதுக்ககாரணமெனவறி

நதுகொள்ளலாமன்றோ? இப்போது மனைவியாதி சங்கத்தின்கண் அன்வயவிய திரேகத்தால் விக்ஷேப காரணத்தன்மை நிரூபிக்கப்படும்:—பூர்வம் பிரஹ்மசரிய அவஸ்தையின்கண் எனது தேகத்தையும் மலமொபபமலினமாயறிந்து பரமவைரா க்கியத்தையடைந்தனன், பரம தைரியத்தையுற்று வனத்தின்கண்ணே தவஞ்செய் துகொண்டிருந்தனன். ஆங்குத்தெய்வலோகத்திலிருந்து தெய்வபபெண்கள் வந்து நாஞவகையாய இங்கிதங்களைச்செய்து எனது தைரியததைச சலிப்பித்தனர்; ஆனுல், அவர்களாலெனது தைரியங்கெடவில்லை. அவர்கள் மிகுந்த காமரூப பாரத் தால மந்த மந்தமான நடையுடையவர், தமது சரீர சுகந்தததால் கேதகி, சம்பக முதலிய புஷ்பங்களின் சுகநதத்தைத் திரஸ்கரித்துள்ளவர், சுவாண புஷ்ப சமான மாய சரீர காநதியையுடையவர், பருத்த உநநதமாய ஸ்தநங்களினின்றும் ஜகனஸ் தானங்களினின்றும் வாயுவால் விலக்கபபட்ட வஸ்திரத்தையுடையவர், பூர்ண மதி யைப்போன்ற வதனத்தையுடையவர், சநதிர சமானமாய காநதியோடுகூடிய வஸ் திர பூஷணங்களாற சோபையையுடைய சரீரதழதாடுகூடியவர். இத்தகைய அவர் கள் தமது கடாக்ஷத்தால எனது தைரியததை நீககிலா. அக்கடாக்ஷம காமிகளின் தைரியத்தைக் கெடுபபதாம சமபோக இசசைவடிவ மேலாய அபிப்பிராயத்தை உணர்த்திவைப்பது. அவர்கள் தமது மதுர வசனஙகளாலும எனது தைரியத்தை நீககிலர். அவ்வசனம், அத்தியநதங் கோமளமாம, மநதமாய மநதஹாசத்தோடு கூடியதாம். காமிகளின் மனததைக் கவாவதாம. பிரசித்தமாய அாத்தங்களோடு கூடியதாம், கம்பீரமான அபிபிராயததோடுகூடியதாம, நெய்போலக் காமரூப அக்கினியை ஓங்கி யெரியசசெய்வதாம, நீண்ட லலிதஸ்வரத்தாலுச்சரிக்கப்பட்ட தாம். இததகைய மாதுரிய சப்தங்களாலும, பாதஙகளிலிருக்கும் நூபுராதி பூஷண சப்தங்களாலும் அவர்கள் எனது தைரியததை நீககிலா. அவர்கள தமது ஹஸ்த பாதாதி அங்கங்களாலும் எனதுதைரியத்தை நீககிலர்- அவர்களுடைய அங்கங்கள் வாயுவாலும், நடிப்பதாலுமவிலகிய துகூலாதிக (வஸ்திரஙக)ளோடும, காஞ்சி, கங் கணம், அங்கதம் முதலிய பூஷணஙகளோடுமகூடியவாம. ரோமாஞ்சரூபி கஞுசுக விசிஷ்டமாம். நடனத்தாலுண்டாய சிரமரூப பாரததாற றளாவுறறனவாம். நெகிழ் வுற்ற மஸ்தக சிந்தூரத்தோடும நேத்திரஙகளின் அஞ்சனத்தோடுங கூடியவாம். லலாடஉரஸ்தாஞதிகளி விராநின்ற குங்கும சநதஞதிகளோடு கூடியவாம். சுகந்த மலர்களோடு கூட்டிக்கட்டப்பட்ட கேசததை விரிததுச் சோபை காட்டுவவாம். நகைப்பு வாத்திய கீதாதிகளோடுகூடிச சோபை காட்டுவவாம். இத்தகைய சுந்தர அங்கங்களாலு மவர்கள் எனது தைரியத்தை நீக்கிலர். அவர்கள் சுந்தரஸ்தலங்க ளாலும் எனது தைரியத்தை நீக்கிலர். அத்தலங்கள் கோகிலமுதலிய பறவைக ளின் மதுரசப்தங்களோடுகூடியவாம், வசந்த இருதுவோடு கூடியவாம்; மந்தா கினியின் ஜலசமீபத்தால் அத்தியந்தங் கோமளமாம், வெண்மணல்களோடு கூடிய வாம். தேவதைகளாற் சேவிக்கப்பெற்றவாம். இவைமுதலிய அநேக உபாயங்க ளால் அவர்கள் எனது தைரியத்தை நீக்க நோக்கினரெனினும் எனது தைரியம் நீங்கவில்லை. அத்தகைய எனது தைரியம் இபபோது விருத்த அவஸ்தையின்கண் ணே கேவலம் மயலால் நஷ்டமாய்விட்டது. இபபோது அம்மயல் நிரூபிக்கப்படும்:—

இப்போது விருத்த அவஸ்தையின்கண்ணே எனது தைரியத்தை நீக்கிய ஸ்திரீகளின் சரீரம் சிறிதுமாத்திரையும் என் சரீரத்தினும் விலக்ஷணமன்றாம்; மற்றோ, உதிரம், மாம்சம், சீ, மலம், மூத்திரம், நாடி, மஜ்ஜை, அஸ்தி என்பன முதலிய மலினவஸ்துக்களின் சமுதாயரூபமாகிய எனது சரீரமேபோல இம்மங்கையரின் சரீரங்களுமாம். ஆதலின், இத்தகைய மலினஸ்திரீகளின்சரீரத்தை யான் சுகசாதனமென்னவெண்ணியது கேவலம் மயக்கத்தாலேயாம. அல்லது, யான் எனதுசரீரத்தை யடிக்கடி மண் நீர் முதலியவற்றால் சுத்தஞ்செய்தபோதினும சுத்தமாவதின்றாம். மற்றோ, எப்போதுந் தூக்கந்தத்தோடுகூடி அசுத்தமாகவே யிருக்கிறது. இந்த ஸ்திரீகளோ அங்ஙனஞ் சுத்தஞ்செய்திலாதலின் இவர்கள் சரீரமெங்ஙனஞ் சுத்தமாயிருக்கும்; மற்றோ, எப்போதும் அசுத்தமாகவேயிருக்கும். ஸ்திரீகளின் அசுத்த சரீரத்தின்கண்ணே யான் சுககாரணத் தன்மையை யெண்ணியது கேவலம மயக்கத்தாலேயாம. விவேகிகளாகிய விரக்தர் தமது சரீரத்தையும் ஸ்திரீமுதலியவரின் சரீரத்தையும் எப்போதும் அசுத்தமாகவே யெண்ணுவர்.

ஸாதா³ஜாத³வஷ்ஸா நிஷ்ஸ்தா³நிய்யாத³வி ।
காயஶௌசேய யௌஅகாஶ் வம்ஷிதாஹ்ய யம்ஶிவிஷ ॥

கருவினி னுறைந்து மலந்தனி னுண்டாய்க் கண்முதற் றுளேயி னின்மலத்தைச்
சோரிதர லாகி யசுசியின் பான்மை தொடுத்திடு மேதுவா யியல்பாய்
மருவுறு தூய்மை யற்றதாய் வயங்கும் வழங்கிய காரணங் களினுன்
இரிதரு முடலே யறிஞர்க ளசுசி யென்னவே யுணர்ந்துள ரன்றே.

(பொ-ள்.) இசசரீரம் தாயின் உதர ரூபஸ்தானத்தின்கண்ணே ஸ்திதமாம, தாய்தந்தையரின் சுக்கில சோணிதரூப பீஜத்தினின்றுமுண்டாம, அன்னபானுதிகளின் இரச பரிணாமரூபமாம, நேத்திராதி நவத்துவாரங்களினின்றும் மலத்தை யொழுக்கிக்கொண்டே யிருப்பதாம், அசுசித்தன்மைக்குக் காரணமாம, இயல்பாகவே தூய்மையற்றதாம, இத்துணைக்காரணத்தால விவேகிகளாகிய மகாத்மாக்கள் இச்சரீரத்தை அசுசியெனவே யறிந்துளார். அல்லது, யௌவன அவஸ்தையை யடைந்தபோது யான் ஸ்திரீகளின் பருத்த உன்னத ஸ்தனங்கட்குக் காஞ்சன கும்பங்களை யுவமைகொடுத்தனன். அவை, நம்மனோருக்கு நோயின்வசத்தால இருதயதேசத்தின்கண்ணே மாம்சமுடிச்சுண்டாவதேபோன்றவாம, அத்தகையதின்கண்ணே எனக்குச் சுககாரணத்தன்மையின் ஞானமுண்டாயது கேவலம்மயக்கமாத்திரமேயாம். அல்லது, ஸ்தனத்தைவிட்டு நோக்கின் ஆண் பெண்சரீரம்சமானமேயாம். வாஸ்தவமாய் விசாரித்து நோக்கினோ அத்தனங்களாலும் பெண் சரீரத்தின்கண் விலக்ஷணத்தன்மை சம்பவியாது; ஏனெனின் புருடனுடைய கடிஸ்தானத்தின் கீழேயிருக்கும் மாம்சமுடிச்சினும விலக்ஷணத்தன்மை சிறிதுமாத்திரையும் மங்கையர்கொங்கையின்கண்ணின்றாம். அல்லது, புருஷனுடைய பாயு விந்திரியத்துளேயும் ஸ்திரீகளின் யோனித்துளேயும் மலமொழுகுந் துவாரங்களாமாதலின், அவ்விருதுளேகளினும் சிறிது மாத்திரையும் விலக்ஷணத்தன்மையின்றாம் ஆகையால், ஸ்திரீ சரீரம் இரண்டுபாயுத் துவாரங்களையுடையதாம். புருஷசரீரம் ஒரு பாயுத்துவாரமுடையதாமெனத் துணியப்பெறும். இத்தகைய பெண்

சரீரத்தின்கண் இஃதெனது சுகசாதனமெனச் சுகசாதனத்தன்மைஞான முண்டாதல் மயக்கத்தானேயாம். ஏனெனின், விசார திருஷ்டியான் நோக்கினே இப்பெண்சரீரம் அருவருப்பையுண்டாக்கும்வாயிலாய் விவேகிகட்குப் பசசாத்தாப காரணமேயாம். இத்தகைய துக்கசாதனரூப இதன்கண்ணே சுகசாதனபுத்தி மயலவடிவமேயாம். சர்ப்பத்தன்மையற்ற கயிற்றின்கண்ணே சர்ப்பபுத்தி மயல் வடிவாதலேபோலவாம். அல்லது, ஈண்டு அவிவேகியாராய பாமரரும் அன்னியர் சமீபத்தேயிருக்கின் தமது ஸ்திரீயைப்புணாந்திலர்; யானோ ஸ்திரீகளின் இருதயத்தே அந்தரியாமியானவா அத்தியந்தம் சமீபத்திருக்கவும் இலஜ்ஜையின்றி அவர்களைப் புணர்ந்தனனாதலின் அப்பாமரரினும் யான் கீழாயினேனாவேன். இப்போது விஷயசுககாரணம் விசாரிக்கப்பெறும்:—அல்லது, ஆண் பெண்ணின் பரஸ்பர சையோகசம்பந்தம் ஜீவர்களின் விஷயஜன்னிய சுககாரணமன்றாம்; மற்றோ, இவள் என் விஷயசுகசாதனம், இவன் என் விஷயசுகசாதனம், என எவர்கட்குப் பாவனையாமோ, அதுவே அவாகட்கு விஷயசுகசாதனமாம; ஏனெனின், ஆண்பெண்ணின் சையோகசம்பந்தமே அச்சுககாரணமாகுமாயின், அன்போடுந் தனது யௌவனமாதாவைததழுவிய யௌவனமைந்தனுககும, அன்போடுந்தனது யௌவனமைந்தனைததழுவியயௌவனமாதாவிற்கும், அன்போடுந்தனது யௌவனபிதாவைததழுவிய யௌவனபுத்திரிககும, அன்போடும பரஸ்பரமதழுவிய யௌவனசகோதர சகோதரிகட்கும், பரஸ்பரந் துவேஷத்தோடுகூடிய யௌவன ஆண்பெண்களை தெய்வயோகததால்பரஸ்பரந்தழுவுதலுறப்பெறினும, அச்சுகமுண்டாகவேண்டும்; ஆனால், அங்ஙனம் உண்டாகாதாதலின் ஆண்பெண்களின் பரஸ்பரசையோகசம்பந்தம சுககாரணமன்றாம்; மற்றோ, முற்கூறியபாவனையே அதன்காரணமாம. ஆண், பெண், அவர் சம்பந்தம், என்னும்மூன்றுமே சுககாரணமன்றுமென்றறிந்துகொள்ளலாமன்றோ? அல்லது, எவ்வான்மாநந்தத்தின் லேசமாத்திரத்தைப் பெற்றுப் பிரஹ்மாதிகள் சுகிததுளாரோ அத்தகைய ஆநந்தககடலாய ஸ்வயஞ்சோதியானமா எப்போதும் எனது இருதயத்தின்கண் எழுந்தருளியிலங்குகின்றது. அதனையுபேக்ஷிததது யான் பூதம்பிடித்தவன் பூமியிலநாறுவகையாய் நடிப்பதேபோல, நாரிவடிவநரகபூமியின் கண்ணே நாறுவகையாய நடனத்தைச் செய்தனனாதலின், ஆன்மரூப நித்தியசுகத்தை உபேக்ஷிததுப் பெண்வடிவ நரகத்தின்கணணே எனது சுகபுத்தியே எனது மூர்க்கத்தன்மையைக் காண்பிக்கும; ஏனெனின், இவவுலகின்கண்ணும யாவன மேலாயதையெறிந்து கீழாயதைககவர்கின்றனனோ அவனையாவரும் மூர்க்கனெனவே கூறுவர். அல்லது, ஈண்டு மகான்களை யவமதித்தலே அவர்களைக்கொலவதாகும. சூரியசந்திராதியரையும் தமது ஆணையினகண்ணே நடத்திவைக்கும ஆநந்த ஸ்வரூபஅந்தரியாமியாகிய ஆத்மாவானவா யாவரினும மகானவர். அவரை யான விஷயசுக அடைவின்பொருட்டு உபேக்ஷிததனன், இவ்வவமதிப்பே அவரைககொன்றதாகும. ஆன்மஹத்தி செய்பவனுக்குச சமானமாக ஈண்டொருபாபான்மாவில்லையாமாதலின், எனது ஆன்மாவைக்கொன்றயான் அத்தியந்தம் பாபான்மாவாவேன். அல்லது, அவிவேகியராயபாமரர் ஆநந்தவடிவ ஆன்மாவையறிகின்றிலராதலின்மனைவிமைந்தராதியரிடத்தே பற்றுற்றவராய்ப் பகிர்முகராவர். யான குருசாஸ்திரோப

தேசத்தால் ஆநந்தஸ்வரூப ஆன்மாவை யறிந்திருந்தும் இம்மனைவி மைந்தராதிகளிடத்தே பற்றுற்றுப்பகிர்முகனுயுளேனுதலின், யான் அவிவேகியாய பாமரரினும் கீழோனேனவேன். அல்லது, விருத்த அவஸ்தையோடுகூடிய பாமரரும் தம்மனைவி கிழவியாயிருப்பதைக்கண்டு அவளைப் புணர இச்சியார். யானோ விருத்த அவஸ்தையையடைந்தும் இக்கிழவிகளைப்புணர இச்சிக்கின்றேனுதலின் யான் அப்பாமரரினும் கீழோனேனவேன். அல்லது, விருத்த அவஸ்தையின்கண்ணே எம்மங்கையரிடத்தே யானாசக்திபுற்றனனே அவர் காய்ந்த காஷ்டத்திற் கொப்பான காயத்தையுடையவராவர், பேரிக்கொப்பான வயிற்றையுடையவராவர், மைந்தர்களுக்கு ஸ்தன்யபானஞ்செய்வித்துக் காய்ந்த ஸ்தன்னியங்களையுடையவராவர்; இத்தகைய குரூப விருத்த ஸ்திரீகளிடத்தே என் மனம்இப்போதும் பிரவிருத்திக்கின்றது. இஃதெனக்கு மிகவும் ஆச்சரியத்தைக்கொடுக்கின்றது. அல்லது, முன்னர்ச் சூரிய பகவானவர் என்னைக் கிருஹஸ்த ஆசிரமஞ்செய்துகொள்ள ஆணையிட்டனரன்றே, அது மைந்தரையுண்டாக்கும்பொருட்டும், வேதவித்யா சம்பிரதாயத்தின் பிரவிருத்தியின் பொருட்டுமேயாம். அதனைப் பூர்த்தியாக்கியபின்னர் யானில்லறத்தே காலங்கழித்தது எனதாசக்தியினுலேயாம். இத்துணைக்காலமீண்டுறையச் சூரிய பகவானுடைய ஆணையின்றும்; மற்றோ, தமது வித்யாசம்பிரதாயப் பிரவிருத்தி செய்வதன்கண்ணே சூரியபகவானதாணையாம். அதனை யான்மிகவும்பிரவிருத்தித்தனன்; ஏனெனின், நான்கு வேதங்களையுணர்ந்த எவ்வளவோ பிராஹ்மணர் எனது சீடராவர், எவ்வளவோ பிராஹ்மணர் எனது சீடருக்குஞ் சீடராயுளர். எவ்வளவோபிராஹ்மணர் எனது சீடரின் சீடருக்குஞ் சீடராயுளர். இவ்வண்ணம் அநேகங்கோடிப்பிராஹ்மணர் எனதுசீடராயுளர். இத்தகையமகாசம்பிரதாயம் பிரவிருத்தித்திருந்தும் யானிங்ஙனம் பற்றுற்று இவ்வில்லறத்தை விடாமலிருந்தனன். இப்போது அப்பற்றை நிரூபிப்பாம்:—என்னிடத்தே அத்தியந்தம் நேயத்தையுடைய மனைவிகளாகியகாத்தியாயனியையும் மைத்திரேயியையும் தனித்து வனத்தேவிடுத்து யானிப்போது சந்நியாசத்தைக்கவரினோ இவ்விருவரும் எனது வியோகத்தால பரமதுக்கத்தை யடைவராதலின், இப்போது யான்றுறவடைதலுசிதமல்ல, மற்றோ, இவர்கட்குச் சிறிதுகாலம்வரைச் சம்சாரசுகத்தையடைவித்துப் பின்றுறவையடைவேன் என வெண்ணி இவர்கட்குச் சம்சார சுகத்தையடைவிப்பதில் சிலகாலத்தைக் கழித்தனன். அதன்பின் யான்மீண்டுமிங்ஙனமாராய்ந்தேன்:—இவர்கட்குச் சம்சாரசுகத்தை யடைவித்தோம்; ஆனுல், புத்திர சம்பத்தைக் கொடுக்கவில்லையாதலின் புத்திரோற்பத்தி யுண்டாக்காமல் இவர்களை யான் பரித்தியாகஞ்செய்யின் மைந்தர்களற்ற இவர்கள் எனது வியோகத்தால் மிகுந்த துயரையடைவராதலின் இப்போதில்லறத்தைவிடலதகுதியன்றும்; மற்றோ, புத்திரோற்பத்தியானபின் றுறவையடைவேன் என வெண்ணி யான் புத்திரோற்பத்தி செய்வதிற் சிலகாலங்கழித்தனன். அம்மைந்தர்களுண்டானபின்னர் யான் மீண்டும் இவ்வண்ணமெண்ணினன்:—இவர்கட்கு மைந்தர்களுண்டாயினர்; ஆனுல், மைந்தர்கட்கு ஜாதகருமாதி சமஸ்காரமுண்டாகவில்லை, யான் பாலகரைப் பரித்தியாகித்து இப்போது துறவையடையின் ஜாதகருமாதி சமஸ்காரமற்ற இப்பாலகர் பரமதுக்கத்தை யடைவராதலின் இப்போது துறவையடைதல் தகுதியன்றும்;

மற்றோ, ஜாதகருமமுதல் உபநயநபரியந்தமுள்ள சமஸ்காரத்தைப் பாலகர்க்குச்செய் வித்துப் பின் றுறவையடைவேன் என வெண்ணிப் பாலகர்க்கு ஜாதகர்மாதிசமஸ்கா ரஞ்செய்வதன்கண்ணும் சிலகாலங்கழித்தனன். அவ்வுபநயநசம்ஸ்காரஞ்செய்வித்த பின் யான் இங்ஙனமெண்ணினேன் :—இவர்கட்குபநயனம்வரைச சம்ஸ்காரமோ ஆயது ஆனால் வித்தையுண்டாகவில்லை இவர்களை விட்டிப்போதுயான் றுறவையடை யின் இவர்கள் வித்தையற்றவர்களாய்ப்பரமதுக்கத்தையடைவாரா தலின் இப்போது யான் றுறவையடைதல் தகுதியன்றாம் ; மற்றோ, இவர்கட்கு எனது சம்பூரண வித தையையுங் கொடுத்துவிட்டுப் பின் றுறவையடைவேன் என வெண்ணி யானிவர் கட்கு வித்தையைப் படிப்பிப்பதிற் சிலகாலங்கழித்தனன். மைந்தர்கள் வித்தை யுற்ற பின்னர் யான் மீண்டும் இங்ஙனமெண்ணினன் :—மைந்தர்கட்கு வித்தையோ பூரணமாயிருக்கின்றது ஆனால் விவாகமாகவில்லை இவர்களை விட்டிப்போது யான் றுறவையடையின் விவாகமற்றவிவர் பரமதுக்கத்தையடைவாராதலின் இப்போது யான் றுறவையடைதல் தகுதியன்றாம்; மற்றோ, மைந்தர்கட்கு விவாகமான பின் றுற வையடைவேன் என வெண்ணி யான் மைந்தர்கட்கு விவாகஞ்செய்வதன்கண்ணே சிலகாலங்கழித்தனன். மைந்தர்கட்கும் புதல்வியர்கட்கும் விவாகமானபின் மீண்டும் யான் அம்மைந்தர்களின் மைந்தர்களைககாணும்பொருட்டுச் சிலகாலஙகழித்தனன். அந்தப் பௌத்திரர்கள் உண்டானபின் அப்பௌத்திரர்கட்கும் விவாகஞ்செய்யும் பொருட்டுச் சிலகாலங்கழித்தனன். இவ்வகையாக வெண்ணிய யான் அத்தியந்தம் ஜீரண அவஸ்தையையடைந்தனனெனினும் எனது சித்தம் இச்சம்சாரத்தினின் றும் உபரதிபடையவில்லை ; மற்றோ, இதுவரையும் சம்சாரத்தின்கண்ணே ஒடிததிரி கின்றது. ஆகையினால், இம்மனைவி மைந்தர் முதலியவர் தரு சங்கமே இவ்வுயிர் கட்கனர்த்தகாரணமாம்; இவ்வுயிர்களுள்ளுஞ் சந்நியாசிகட்கோ இச்சங்கம் விசேஷ மாக அனர்த்தகாரணமாம் என வறிந்துகொள்ளலாமன்றே.

“ நிஃஸங்கதாஃக்ஷி வஷ்ம யதீநாம் ஸங்காதுபெஷாஃ ப்ரவஹந்தி தொஷாஃ।
ஆரூட யோகோபி நிபாத்யதேயஃ ஸங்கேந யோகீ கிமுதாஸ்ய ஸித்திஃ॥

சங்கம தோருவுந் தன்மையே சாந்த சந்நியா சியர்க்குயர் வீட்டின்
றுங்கநன் னெறியாஞ் சங்கம தானே தொடர்வுறுந் தோடங்கள் யாவும்
பொங்கருண் ஞானம் நிறைந்தவன் றனையும் பொத்தென வீழ்த்திடிச் சங்கந்
தங்குற வீட்டிற் பயில்சிறி யவரைத் தள்ளுமேன் றறையவுங் கடனே.

(பொ-ள்.) மனைவிதனுதியரின் சங்க பரித்தியாகவடிவ நிர்ச்சங்கத்தன்மையே சந்நியாசிகட்கு மோக்ஷமார்க்கமாம். ஏனெனின், ஸ்திரீயாதியரின் சங்கததாற் சம் பூரணதோஷ அடைவுண்டாம். யாவன் யோகத்தின்கண் ஆரூடனோ அவனையும் இச்சங்கம் கீழே தள்ளுமெனின் யோகத்தில் ஆரூடமாதற்கு இச்சையையுடை யோனை இது கீழே தள்ளுமென்பதன்கண்ணே யாது கூறவேண்டியிருக்கின்றது. ஆதலின், சந்நியாசிகள் இச்சங்கத்தைவிசேஷமாய் விட்டொழிக்கவேண்டும். கருத் திதுவாம் :—வித்தைமுதலிய சர்வ குணங்களோடுகூடிய யானும் இச்சங்கத்தால் இத்தகைய துர்த்தசையையடைந்துளனாயின், அற்பவிசாரத்தையுடைய அன்னிய

ஜீவர்கள்சங்கத்தால் துர்த்தசையையடைவர் என்பதன்கண்ணே யாது கூறவேண்டியுளது? ஆகையாலிது துணியப்பெறுமன்றே:—இம்மனைவியாதிசங்கமே ஆசக்திவாயிலாய் இவ்வுயிர்கட்குச் சர்வாநர்த்தகாரணமாமாதலின் கரதலாமலகம்போலச் சம்சயவிபரீதமற்ற ஆன்மசாக்ஷாத்காரத்தை யடைந்தவனும், மனைவியாதி சங்கத்தை யொருகாலுஞ் செய்யலாகாது. அவற்றுள்ளும் ஸ்திரீசங்கத்தை யொருகாலுமே செய்யவேயாகாது. அதனினும் குமரிகளின்சங்கத்தை யொருகாலும் செய்யவேயாகாது. ஏனெனின், மரித்தபின் பாவிகட்குறும் நரகம் ஸ்தாவரமாமாதலின் விட்டொழித்தபின் பாவியரைப் பின்பற்றுது. ஸ்திரீயோ இருகாலால் நடக்குமமூர்த்தநரகமாமாதலின் விட்டொழித்த பினனரும் பின்பற்றிவரும். இத்தகைய மங்கைவடிவபலமான நரகத்தின்கண்ணே சர்வசாஸ்திரங்களையுணர்ந்த அறிஞனும் விழுவனுயின் அதனினின்றும் வெளியேறச் சமர்த்தனுகான். அவ்வறிஞர்களுக்குள் யானே திருஷ்டாந்தமாவேன். ஏனெனின், சர்வ அறிஞர்களினும் முக்கியனும் சம்பூரணவித்தையை யுணர்ந்தவனும், ஆன்மசாக்ஷாத்காரத்தோடு கூடியவனும ஆகிய யானும் ஸ்திரீரூப நரகத்தினின்றும் என்னை வெளியேற்றிக்கொள்ள ஆற்றலற்றவனு யிருக்கின்றேனுதலின், யோகாரூடபுருடனும் ஸ்திரீசங்கத்தால் தாழ்வையடைவன் எனச சர்வசாஸ்திரங்களினும் கூறியிருத்தலுண்மையேயாம். அலலது, கிராமத்தை யடைவிக்கும் மார்க்கமேபோல நரகக்கிராமத்தை யடைவிக்கும் மார்க்கம் ஸ்திரீசரீரமேயாமாதலின் மோக்ஷத்தை யடைவிக்கும் ஆன்மஞானரூபமார்க்கத்தையடைய இச்சையுடைய முமுக்ஷுவானவன் ஸ்திரீரூபநரகமார்க்கத்தை யவசியம விட்டொழித்தலவேண்டும்; அல்லது, சந்நியாசரூபமார்க்கத்தால் மோக்ஷத்தையடைய இச்சிக்குமதிகாரிகட்கு ஆண்டு ஸ்திரீயினுலேயே பயமுண்டாம். ஸ்திரீயையொழித்து வேறுள்ள சிங்கம், சர்ப்பம், கள்வன், அரசன, நீர், அக்கினி, விஷம, ஆதி, வியாதி, தெய்வம், பூதம் என்பனமுதலியவற்றினின்றுமஅதிகாரிகட்குப் பயபபிராப்தியுண்டாகாது; ஸ்திரீகளினின்றுமசந்நியாசிகட்குப பயமுண்டாவதற்குக் காரணமிதுவாம்:—பகிர்முகனுக்கு ஆன்மசாக்ஷாத்கார முண்டாகாதென்பது நூற்களின்றுணிவாம். அப்பகிர்முகத்தன்மை ஸ்திரீசங்கத்தா லுண்டாவதேபோல வேறெப்பதார்த்த சங்கத்தானு முண்டாகாது. ஏனெனின், ஸ்திரீகளை நினைப்பினும் சித்தத்தே காமோற்பத்தியாம். நினைத்தலு மிங்ஙனஞ்செய்யுமாயின் ஸ்திரீகளின்றரிசனத்தானும், வசனத்தானும், ஸ்பாசனத்தானும் சித்தத்தின்கண்ணே காமோற்பத்தியாமென்பதன்கண்ணே யாது கூறற்குளது. ஆகையால், ஆன்மசாக்ஷாத்காரத்தை யடையும்பொருட்டுச் சந்நியாசத்தைக கவர்ந்த அதிகாரிகள் காய மன வாக்காதிகளா லொருககாலும் ஸ்திரீசங்கஞ் செய்யலாகாது. சந்நியாசத்தைத்தரித்துக் கொண்டு ஸ்திரீசங்கஞ்செய்யின் அழலால் நெய் நெகிழ்வதேபோலச சந்நியாசியின் மனமும் தனது தைரியத்தைவிட்டு நெகிழ்வை யடையும். அதனுல் மோக்ஷமார்க்கத்தினின்றும் பதிதனுவனுதலின் சந்நியாசி சர்வப்பிரகாரத்தானும் ஸ்திரீகளின் சங்கஞ்செய்யற்க. அல்லது, பிரசித்த சர்ப்பாதிகளின் விடத்தைக் கக்கும்பொருட்டுச் சாஸ்திரம் நானுவகை யுபாயங்களை நவின்றிருக்கின்றது; ஆயினும் ஸ்திரீரூப சர்ப்பவிடத்தை நீக்க ஒரே உபாயம் கூறப்பட்டுள்ளது. அது

சரீரத்தான் மங்கையரைத் தீண்டாமையும், மனத்தானினையாமையும், வாக்காதியாற் சம்பாஷணுதிகள் செய்யாமையுமாம். இவ்வகையுபாயத்தை விடுத்துவேறெவ்வுபாயமும் அவ்விடத்தை நீக்கமாட்டாது. அதனைக் கிருஹஸ்த ஆசிரமத்தின்கண்ணே யிருந்துகொண்டு என்றுஞ்செய்யமுடியாதாமாதலின் மனைவி முதலியவெல்லாம்விட்டு யான் சந்நியாசஞ்செய்துகொள்வேன். யானிவர்களை விடாதிருப்பின் இச்சங்கத்தால் எனக்கு மறுபிறப்பு அவசியமுண்டாம்; ஏனெனின், வாசனையினுனே இவ்வுயிர்கட்குப பிறப்புண்டா மாதலின், நனவின்கண்ணே எப்பொருளின்றிடவாசனை யிருக்குமோ அதனையே கனவிற்காண்பதேபோல மரணகாலத்தும் திடவாசனையின் அனுசாரமாகவே வேறுசரீர அடைவுண்டாம். அதன்கண்ணும் முற்காமக்குரோதாதி சமஸ்காரரூபவாசனையால மீண்டுங் காமக்குரோதாதிகள் உண்டாம். அசசமஸ்காரததால மீண்டுமபிறப்பைபடைவன். இவ்வண்ணம் ஸ்திரீ முதலியோரின் சங்கததால அநேகமவகைப பிறபபுக்களையடைவன் அல்லது, அச்சங்கததால் சித்தத்தின்கண்ணே காமககுரோதாதிகளுண்டாம்; அவ்விகாரங்களால் சித்தம் அசுத்தத்தன்மையை யடையும், அவ்வசுத்தசித்தத்தின்கண் ஆன்மஞானம் முன்புண்டாயிருந்தபோதிலும நஷ்டததை யடையும். கருத்திதுவாம்:— முன்னுண்டாய ஆன்மஞானமும் அசுதத சிததத்தின்கண்ணே கெடுமாயின் புதிதாயான்மஞானமுண்டாவதின் விழைவென்னும்? ஆகையால், ஸ்திரீ முதலியசங்கத்தால் காமக்குரோதாதி விகாரமுண்டாம, அதனுல பிரஹ்மஞானத்தினின்றும் கர்மஉபாசனையென்னும இரண்டுமார்க்கங்களினின்றும் பிரஷ்டனுய் அடிக்கடி கீடபதங்காதிசரீர அடைவுவடிவ, நரகபபிராபதிவடிவ, மூன்றுவதுமார்க்கத்தையடைவன். இவ்வண்ணம ஸ்திரீகளினசஙகததால கோடிகறபபரியநதம் நானுவகைத்துயரஙகளையேயடைவன. அல்லது, ஸ்திரீசங்கத்தால் காமாதிகளினுற்பத்திவாயிலாய் அநேகம் பிறபபுக்களில துககததையடைவதேபோல விஷயாசகத காமிகளின்சங்கத்தானும் அவ்வகைத துக்கத்தையடைவன. ஏனெனின், அக்காமி எப்போதும் ஸ்திரீசம்பநதியாய காமததையே வருணிபபன்; அவ்வசனத்தால அவசியமாய் ஸ்திரீயின் நினைவுண்டாம. அந்நினைவால ஸ்திரீரூபஅக்கினி சிததததை அவசியம் தகிக்கும். தகிக்கப்பட்ட சித்ததநத ஆன்மவிசாரமுண்டாகாதாதலின், மோக்ஷவடைவின்பொருட்டுச சநநியாச ஆசிரமத்தைக் கவர்நதவன் ஸ்திரீகளின் சங்கத்தையும், காமியின் சங்கத்தையும அவசியமாய்ப பரிததியாகம்செய்வன். அல்லது, மகாவாயுவின்கண்ணேயிராநின்ற தீபமானது மார்ககாதிகளின் பிரகாசரூப காரியத்தை உண்டாக்காததேபோலக் குருசாஸ்திர உபதேசத்தானுண்டாய்விடினும் பிரஹ்மஞானம், மனைவியராதி சஙகரூபப பிரதிபந்தவயத்தால்அஞ்ஞானநிவிருத்திவடிவ காரியத்தையுண்டாககாது. ஆதலின், மோக்ஷததையடைய இச்சித்தவன் ஸ்திரீயாதியரின் சங்கத்தை யவசியம பரிததியாகஞ்செய்யவேண்டும. வேறுகுழந்தாய்! இங்ஙனம் ஸ்திரீமுதலிய சஙகததின்கணணே நானுவகைத தோடங்களையாராய்ந்து அமமுனிவா அசசங்கததைப பரித்தியாகஞ்செய்யும்பொருட்டுச் சந்நியாசங்கொள்ளத் திடநிசசயஞசெய்தனா. அம்முனிவர் அத்தியந்தம் தயாளுவாதலின் மீண்டுமிங்ஙனமெண்ணினர்:—இப்பூமியின்கண்ணே ஏழுடியெடுத்துவைக்

குங்காலபரியந்தமும் எவன் எவனோடு சகவாசஞ்செய்வனோ அவன் அவனுக்கு மித்திரனாவனெனச் சாஸ்திரத்தின்கண்ணே மகாத்மாக்கள் கூறியுள்ளார். யானோ இம்மனைவியரோடு நெடுங்காலமிருந்தனனாதலின், முறைப்படி இவர்கள் எனது மித்திரராவர். ஈண்டுபகாரஞ்செய்பவர் மித்திரரெனப்படுவராதலின் இம்மனைவியர்க்கும் உபகாரஞ்செய்யவேண்டும். இவருள் காத்தியாயனியோ கேவலங்கிருககாரியத்தின்கண்ணேயே குசலையாவள். யாதொரு பந்தமோக்ஷத்தையுமறியாளாதலின் இவளுக்குப் பிரஹ்மவித்தியா அதிகாரமின்றும். மைத்திரேயியோ சம்சாரத்துள்ள பிறப்பிறப்பாதி துக்கங்களைநோக்கி எப்போதுஞ் சோகிக்கின்றனள், எப்போதும் மோக்ஷமடைய இச்சிக்கின்றனள். இவளுக்கு யௌவன அவஸ்தையின்கண்ணும் காமாதிவிகாரம் உண்டாகவில்லை, தன்சரீரத்தின்கண்ணும் நேயங்கிடையாது. தன்தேகத்தும் நேயமில்லாதபோது நாயகன் மைந்தர்முதலியோரிடத்தே நேயமெங்ஙனமுண்டாம். இவள் முன்னர் எனக்குச் சேவைசெய்துளாள், அதுவும் லௌகிக மங்கையரைப்போலக் காமபாவனையால் செய்திலள்; மற்றோ, பதிவிரதை பதியின் சேவைசெய்க என நூலுணர்த்திய பதிவிரதைத்தருமபங்கபயத்தால் செய்தனள். ஆதலின், இவள் பிரஹ்மவித்தியா அதிகாரியாவள். யானிவளுக்குப் பிரஹ்மவித்தையையுபதேசிக்காமலே சந்நியாசத்தைத்தரிப்பனாயின் காத்தியாயனியைப்போலத் தனதியினடைவாலோ இவள் மகிழ்வையடையாளாதலின் இவள் சிந்தையாற் பரமதுக்கத்தையடைவள். ஆகையால், இவளுக்கு முதலிற் பிரஹ்மவித்தையை யுபதேசித்துப பின் சந்நியாசத்தையடைவேன். ஹே குழந்தாய்! தமது மனத்தே இவ்வண்ணமெண்ணி அம்முனிவர் மைத்திரேயியை நோக்கி யிங்ஙனங் கூறினர், ஹே மைத்திரேயீ! யானிப்போது கிருஹஸ்தாசிரமத்தை விடுத்துச் சந்நியாச ஆசிரமத்தையடையப போகின்றேன், இவ்வார்த்தையை நீ யங்கீகரித்துக்கொள்ளுதி; நமது வீட்டில் பொன், கோ முதலிய தனங்களை இருபாகப்படுத்தி ஒருபாக முனக்குக்கொடுக்கின்றேன், மற்றொரு பாகத்தைக் காத்தியாயனிக்குக் கொடுக்கின்றேன். அத்தனத்தால் யான்சென்றபின் நீங்களிருவரும் சுகத்தையடைவீர்கள். ஹே மைந்த! இங்ஙன முனிவர் கூறியபோது சம்சார ரூபபாரத்தால் அத்தியந்தந் துன்புறற அம்மைத்திரேயியானவள் இவ்வகையாய அவசரத்தையடைந்து அம்முனிவரைநோககிஇங்ஙனங்கூறத்தொடங்கினள்:—ஹே பகவன்! எத்தனத்தி னடைவால் யான் மரணமற்றவளாவனோ அத்தனத்தையடைய யானிச்சிக்கின்றனன. மரணத்தை யடைவிப்பதாய தனத்தை யடைய யானிச்சிக்கவில்லை. சுவர்ணாதி தனத்தோடுகூடிய இச்சமபூரணப் பிருதிவியையொருகால் தாங்கள் என்பொருட்டுக் கொடுப்பின், அதனடைவால் யான் அமிருதபாவத்தை யடைவனோ? அல்லது அடையேனோ? என்னுமிரண்டுபக்ஷங்களுள் ஒரு பக்ஷத்தைத் தாங்கள் நிச்சயித்து என்பொருட்டுக்கூறல்வேண்டும். அதன்பின்னர் விசாரித்துத் தங்கள்பாற் றனம்வாங்கிக்கொள்ளுகின்றேன். ஹே புத்திர! இங்ஙனம் மைத்திரேயி கூறியபோது அம்முனிவர் பொன்முதலிய தனத்தால் உயிர்கட் கமிருதபாவப் பிராப்தியுண்டாகாதென்னும், இரண்டாவது பக்ஷத்தையுடன்பட்டு மைத்திரேயியை நோக்கிக்கூறுகின்றார்:—ஹே மைத்திரேயீ! இப்பொன்முதலிய அழிவுறுந்தனங்களால் எத்தேகதாரிகளும் மோக்ஷரூப அமிருதபாவத்தை

யடையார். மாறுபிதனுல் மரணத்தையேயடைவர். இப்போது இவற்றின்கண்ணே அன்வயவியதிரேகத்தால் மரணகாரணத்தன்மை நிரூபிக்கப்படும்:—தனவந்தர்கள் யாவரும் மஹாராஜாவானும் கள்வரானும் மற்றைய துஷ்டபுருஷரானும் அநேகம்வகைத் துக்கங்களையடைந்து மரணத்தையேயடைவர். சிந்தையற்றுவாழும் தனவந்தரிவ்வுலகத்தேகிடையாது; மற்றோ, தனவந்தர்கட்குக்கனவின்கண்ணும் அரசாதியரின்பயம் உண்டாகிக்கொண்டேயிருக்கும். கருத்திதுவாம்:—கனவின்கண்ணும் தனவந்தர்கள் அரசாதியரின் பயமறறவராகாதபோது நனவின்கண்ணே பயமறறவ ரெங்ஙனமாவர்? ஹே மைத்திரேயி! தனமற்ற நிர்த்தனருக்கு விசேஷமாய் நோய்களுமுண்டாவதுமிலலை, சரீரதநின் கண்ணே பலமு மதிகமாயிருக்கும், ஜாடராக்கினியும் பிரஜ்வொலிதமாயிருக்கும். ஆகையாலிதையறிந்து கொள்ளலாமன்றோ? நிர்த்தனர்மீது தெய்வமும அனுகூலயாகவே யிருக்குமென. இப்போது தனிகரின்மீது தைவபபிரதிகூலத்தைக்காண்பிப்பாம்:—ஹே மைத்திரேயி! தனவான்மீது விசேஷமாயோ தைவம்பிரதிகூலமாகவேயிருக்கும்; ஏனெனின், விசேஷமாயோ தனவான் நோயாளியாகவேயிருப்பன். பசியுமுண்டாகமாட்டாது, ஆயுளும் அற்பமேயாகும, மிகுநததனங்கிடைபபினும் ஆசையின் நீக்கமுண்டாகாது. தனது புததிராதிரநதுககளோடும மனத்தில் துவேஷத்தையே செய்வன். சிலதனிகரோ நாய்போலப பிரசித்தமாகவே மைந்தர் முதலாயினுரோடு துவேடமே செய்வா. இக்காரியததை யானசெய்வேன் செய்யேன் எனச் சிந்தித்துத் தனவான் வியாகூலமாயே எபபோதுமிருபபன. அசசிநதையால தனவான் சிறிதுமாத்திரையும் சுகத்தையடையான். மகாதமாவாகிய தயாளுவானவன் நிர்த்தனர்மீது கிருபையால் நேயஞ்செய்வன்; அத்தகைய நேயம் தனவான்களிடத்தே வையான். தனமதத்தால் தனிகர் மிகுநதபாவகருமங்களைசசெய்வதேபோலத் தனமற்றவன் அரசர்முதலியோரது பயத்தாறசெய்யான். தனிகன் தனமதத்தால் தேவதைகளையும் அவமதிப்பன், குருமாரகளையும அவமதிப்பன், அதிதிகளையும் அவமதிப்பன், வேதமுணர்ந்த மறையவரையும அவமதிபபன், பிரஹ்மவேத்தாவாய ஞானியையும் அவமதிப்பன். தன்பக்ஷதநிலிருக்கும் ஜீவர்களையும் பாபக்ஷத்திலிருக்கும் ஜீவர்களையும் எப்போதும் உபதநிரவிபபன். ஆதலால, தனிகன் இகலோகத்துமபரலோகத்தும் அநேகம்வகைத் துக்கஙகளையேயடைவன். நிர்த்தனத்தரித்திரனுனவன் அன்னியர்களைப் பீடைசெய்வதிற் சமாத்தனுகாறுதலின் அத்துக்கங்களையடையான், இக்காரணத்தால தனவானினும் நிர்த்தனன் அத்தியந்தமுயர்வாவன். ஹே மைத்திரேயி! இப்பொன் முதலியதனத்தை அங்கீகரிப்பையேயாயின் பிரசித்ததனிகர்க்குண்டாரு சீவனமேபோல நின்ஜீவனமுமாம். தனுசக்தியால் சுழலுஞ் சித்ததைதயுடைய தனிகர்க்கு மோக்ஷரூப அமிருதபாவ அடைவின் ஆசையில்லாததேபோல உனக்குமாய்விடும். தனவான்கட் கமிருதபாவப் பிராப்தி யுண்டாகாததின்கண்ணே காரணமிதுவாம:—பிரஹ்மபாவப் பிராப்திவடிவ மோக்ஷம் அமிருதமெனப்படும். அது தேகாதிகளிடத்தே யான் எனது என்னும் அபிமானநீக்கமின்றி யுண்டாகாது. ஆதலின், அவ்வபிமான நீக்கம் மோக்ஷரூபஅமிருதகாரணமாம். அந்நீக்கம் அஞ்ஞானநீக்கமின்றி யுண்டா

காது. ஆகவே அபிமான நீக்கத்தின் காரணம் அஞ்ஞானநீக்கமாம். அவ்வஞ்ஞான நீக்கம் ஆநந்தஸ்வரூப ஆன்மஞானமின்றி யுண்டாகாது. ஆகவே ஆன்மஞானம் அஞ்ஞானநீக்க காரணமாம். தன ஆசக்தியால் விக்ஷேபத்தை யடைந்த தனவந்தர் சித்தத்தின்கண்ணே ஆன்மஞானமுண்டாகாது. அது இலதாகவே அவர்கட்கஞ் ஞான நிவிருத்தியுண்டாகாது அஞ்ஞானமிருப்பின் அதன்காரியமாய சூக்ஷ்மசரீரமும் நீங்கமாட்டாது. சூக்ஷ்மசரீரமிருப்பின் அதனைப்பற்றிய புண்ணிய பாவகருமமும் நாசமாகாது. அறம்பாவமிருப்பின் மீண்டும் தூலசரீர அடைவு அவசியமுண்டாம். அத்தூலசரீரம் அடையப்பெறின், இச்சீவன பூர்வ புண்ணிய கரும அனுசாரமாய்ச் சுகதுக்கங்களை யனுபவிப்பன். பூர்வ சமஸ்கார வயத்தால் மீண்டும் அறம்பாவத்தைப்புரிவன். பிராரப்தகருமத்தை யனுபவித்து மரணத்தை யடைவன். அதன்பின் மீண்டுஞ் சனனத்தையுமடைவன். இவ்வண்ணம் ஆன்மஞானமற்ற தனிகன் ஏற்றமரம்போல நிரந்தரம் சம்சாரத்தின்கண்ணே சுழல்வன். இத்தகைய தனவானிடத்தே மோக்ஷரூப அமிருதப் பிராப்தியினுசையேயின்றாமாதலின், சுவாணுதிரூபதனத்தால மோக்ஷரூப அமிருதப்பிராப்தி யுண்டாகாதெனத் துணியப்பெறும். ஹே மைந்த! இங்ஙனம் அம்முனிவர் கூறியபொழுது அம்மைத்திரேயி அம்முனிவரை நோக்கி இங்ஙனங்கூறுவாளாயினள் :—ஹே பகவன்! இப்பொன்முதலிய தனத்தால மோக்ஷரூப அமிருத அடைவின் ஆசையின்றி மாறாய்மரணத்தினடைவேயுண்டாகுமாயின் அமிருத வீட்டை இச்சிக்கும் யான் பொன்முதலியவற்றை வாங்கி யாதுபயனையடைவேன். மற்றேறு, இவற்றால் சிறிது மாத்திரையும் பயனின்றாமாதலின் எல்லாத்தனத்தையுமே காத்தியாயனிக்குக் கொடுத்துவிடலாம் எனக்கு இத்தனத்தே இச்சையில்லை

சங்கை :—ஹே மைத்திரேயீ! இப்பொன்முதலியவற்றை நீ அங்கீகரியாவிடின் நினது உண்டிமுதலியன எங்ஙனமாகும்?

சமாதானம் :—ஹே பகவன்! சந்நியாச ஆசிரமத்தைத்தரித்துத் தாங்கள் மரணபரியந்தம் பிக்ஷான்னத்தால சரீரநிர்வாகஞ்செய்துகொள்வதேபோல யானும் செய்துகொள்வேனாதலின், எனது ஜீவனத்தைப்பற்றித் தாங்கள் சிறிதுமாத்திரையும் சிந்தைசெய்யவேண்டியதில்லை. ஹே பகவன்! பூர்வம் தாயின்வயிற்றில் பத்துமாதபரியந்தம் எவ்விசுவேசன் எனைக் காப்பாற்றினனோ அவனிப்போதும் காப்பாற்றுவனாதலின் அத்தகைய பரமான்மாவிருப்ப வெனதுசரீரஜீவன சிந்தைசெய்தலெனக் குசிதமன்றாம். ஒருகால் பிக்ஷான்னங் கிடையாமல என் சரீரம் நஷ்டமாயினும் எனக்குப் பயமின்றாம். மாறாய் இச்சரீர நாசமாயின் பரமேசுவரரது உபகாரமெனவெண்ணுவேன். ஏனெனின், இது மல மூத்திராதிகளான் நிறைந்ததாதலின் அத்தியந்தம் துர்க்கந்தமுடையதாம். அநேகம் வியாதிகளோடு கூடியதாம். நானாவகைத் துக்கங்களின் காரணமாம். அசுபப்பிரவிருத்திவாயிலாய் அநேகம் பாவங்களின் காரணமாம். இத்தகைய நிந்தித சரீரத்தின்கண்ணே எனக்குச் சிறிதுமாத்திரையு மாசக்தியின்றாம்.

சங்கை :—ஹே மைத்திரேயீ! நின் தேகத்தின்கண்ணே நினக்காசக்தியின்றாயின், இதனைக்காப்பாற்றும்பொருட்டு அன்னாதிகளை எதன்பொருட்டயில்கின்றனை?

சமாதானம்:—ஹே பகவன்! அரசசேவகன் ஒருவனைப்பலாத்காரமாய் ஒரு காரியத்தின்கண்ணேபிரவிருத்திப்பிப்பதே போலயானும்பராதீனத்தன்மையானே போஜனுதிவியவகாரத்தே பிரவிருத்தித்தனன், சரீர இச்சையால் யான்போஜனுதிகளிடத்தே பிரவிருத்தித்திலேன். இப்போது அன்னம் புசித்தலில் தோஷநிரூபணஞ்செய்யப்படும்:—ஹே பகவன்! அன்னைப்புசித்தலினுல் சித்தத்தின்கண்ணே காமக்குரோதாதிகளுண்டாம். போஜனத்தினுனே நித்திரை, ஆலசியாதி தோஷங்களுண்டாகின்றன. மலமூத்திராதிகளின் விருத்தியும் அதனுனேயுண்டாம். அதனுனே நேத்திராதி இந்திரியங்களும் வாக்காதி இந்திரியங்களும் மனமுங்காயமும் தத்தமது வியாபாரத்தே முயலும், அவற்றின் முயல்வாலிவ்வுயிர்க்கு அநேகம் வகையாய்ப் பாவமுண்டாம், ஆகாரமற்றுப பசியாற் பீடிக்கப்பட்ட பிராணியின் நேத்திராதிகள் தமது விஷயத்தின்கண்ணே பிரவிருத்தியா. போஜனஞ் செய்யாதிருப்பின் இஜ்ஜீவனைப் பசியொன்று மாத்திரம் துன்புறுத்தும், செய்தலாலோ காமக்குரோதாதி யநேகசத்துருக்கள் பீடைசெய்வர். முன்னர்க்காமரூபதோஷம் எனக்கெவ்வெத்தினதசையை யடைவித்ததோ அவற்றையெல்லாந் தாங்களறிவீர்களாதலின், தங்கள் முன்பே அவற்றையான் சொல்லவில்லை. அக்காமரூப துக்கத்தின் கருப்பரூபபலம ஸ்திரிகட்குச் சீக்கிரத்திலேயே கிடைக்கின்றது. அக்கர்ப்பதாரணஞ் செய்வதினும் அதனைப் பரித்தியாகஞ்செய்வதினும் உண்டாந்துயரம், நரகதுக்கத்தினும் மரணதுக்கத்தினும கோடிபங்கதிகமாம். எட்டி விருக்ஷமானது ஜீவர்கட்கு விஷரூபபலத்தை யடைவிப்பதேபோல, இக்காமரூப விருக்ஷம் நானுவகைத் துக்கரூபபலத்தை யடைவிக்கும். இத்துக்கானுபவம் பெண்கட்கேபோல ஆண்கட்கின்றும். இத்தகையகொடிய துக்கத்தைச சகித்தும் ஸ்திரீகளின் சரீரம் அழிவதின்றும் இது மிகவும் ஆச்சரியமேயாகும். ஆகையால், பிரஹ்மாவானவர் ஸ்திரீகளின் சரீரத்தைவஜ்ரரூபமாய் உண்டாக்கியுள்ளாரெனத் தெரிந்துகொள்ளவேண்டியதாயிருக்கின்றது. இக்காமத்தால் எவ்வகைத்துக்கம் எனக்குண்டாயதோ அவ்வகைத்துக்கம்குரோதம், லோபம, மோகமுதலியவற்றுனும் எனக்குண்டாயதாம். அவ்வெல்லாத்துயரையும் எனதுசித்தத்தின்கண்ணே அனுபவிக்கின்றேன். தாங்கள்சர்வஞ்ஞராதலின் தங்கள்முன்னிலையில்அவற்றைவருணித்திலேன். போஜனஞ்செய்தலால்உண்டாகியகாமக்குரோதாதிஅநேகவிகாரங்களால் ஒருகால் எனக்கு மிருத்தியுவுண்டாயின் அதனினும் பசியாலுண்டாய மிருத்தியுவை சிரேஷ்டமாயெண்ணுகின்றேன்; ஏனெனின், ஒரு சூரவீரனுனவன், ஒரே சூரவீரனேடு போர்புரிவதிலாற்றலுடையவனுவன்; அநேக சூரவீரர்களோடு போர்புரிதல் சம்பவியாது. ஒருகால் அநேக சூரவீரர்களோடும் போர்புரிவனுயின், அங்ஙனம் புரிவதாலவனும் கிலேசத்தையேயடைவன். அதுபோலக் காமக்குரோதாதி அநேக விகாரங்களுட் பிரபலமாய ஒரு பசியாய விகாரத்தோடு போர் புரிவதில் யான் சமர்த்தையாயினும் அநேக காமக்குரோதாதி விகாரங்களோடு போர்புரிவதிற் சமர்த்தையல்லேன். ஆகையால், ஹே பகவன்! தனத்தைக் கவராமையால் எனதுசரீரம் நஷ்டமாயின் என்மீதிருந்து இத்துர்நாற்றச்சரீரரூபபாரம் இறங்கும், இக்காயத்தைக் காப்பாற்றுவதில் எனக்குச்சிறிதுமாத்திரையு மிச்சை

யின்றும்; ஆனால் இப்பாரதகண்டத்தே மனுஷசரீரத்தையடைந்தும் ஆன்மஞான
மின்றியே யானிச்சரீரத்தைப் பரித்தியாகஞ்செய்ய இச்சித்திலேன். மற்றோ,
தாங்கள் ஆன்மஞானத்தால் சந்தோஷமடைந்திருப்பதேபோல யானும் அதனைச்
சம்பாதித்துப் பின் சரீரத்தியாகஞ்செய்வது மேன்மையாகும். ஆகையினால், ஹே
பகவன்! தங்கட்கென்மேற்கிருபை இருக்குமாயின், தாங்கள் மோக்ஷரூப அமி
ருத அடைவின் உபாயத்தையறிவீர்களாயின் அவ்வுபாயத்தைத் தாங்கள் தயை
செய்து எனக்கு உபதேசிக்கவேண்டும். அதனால் யான் மோக்ஷரூப அமிருதத்தை
யடைவேன். ஹே குழந்தாய்! இங்ஙனம் தனத்தை அங்கீகரியாத வசனத்தை
மைத்திரேயிகூறியபோது அம்முனிவர் தமதுளத்தின்கண்ணே இவ்வாறாராய்ந்து
மைத்திரேயியின் வசனத்தை அங்கீகரித்தனர். இப்போது அவ்விசாரம் நிரூபிக்
கப்படும்:—இவ்வுலகின்கண்ணே இவ்வுயிர்கள் தனத்தாற் காமரூப புருஷார்த்தத்
தையும் தர்மரூப புருஷார்த்தத்தையும் அடைவராயினும் அதனால் மோக்ஷரூப
அமிருதத்தை ஒருகாலும் அடையமுடியாது. அதனால் ஸ்திரீமுதலிய விஷயங்
களின் சம்பந்தரூபகாமமுண்டாம். அது உண்மையாய் விசாரித்துப் பார்க்கினோ
ஜீவர்களின் துக்கசாதனமேயாம்; ஆனால், வழிநடப்பதாற்பரிசிரமத்தையடைந்த
வனுக்குத் துக்ககாரணமாயினும் பாதமிதித்தல் சுககாரணம் ஆதல்போல விஷயா
சக்தப்பிராந்தபுருஷர்கட்குக் காமம் துக்ககாரணமாயினும் சுககாரணமாகவே
தோற்றும். அல்லது உண்மையாய் விசாரித்து நோக்கினோ விஷய ஜன்னிய சுகத்
தின்கண்ணே சுகரூபத்தன்மை சம்பவியாது; மற்றோ, அதன்கண்ணே துக்க
ரூபத்தன்மையேயுளது. ஆனால், விஷயாசக்தரின் திருஷ்டியைப்பற்றி அதன்
கண்ணே சுகரூபத்தன்மையை அங்கீகரிக்கினும் தனத்திற்குக் காரணத்த
ன்மை சம்பவியாது; தனமற்ற நாய்முதலியவையும் தமது ஸ்திரீயின் சம்போ
கத்தால் விஷயசுகத்தையடையுமாதலின் ஸ்திரீரூப விஷயஜன்னியசு கத்தின்
கண்ணும் தனத்திற்குக் காரணத்தன்மை சம்பவியாது. தனமற்ற வண்டும்
நானாவகைப் புஷ்பங்களின் சுகந்தத்தைக்கவர்ந்து சுகத்தையடையுமாதலின் கந்த
ரூப விஷயஜன்னியசுகத்தின்கண்ணும் தனத்திற்குக் காரணத்தன்மை சம்பவி
யாது. தனமற்றகிளி குயில்முதலிய பக்ஷிகளும் மாங்கனிமுதலியவற்றின் இரசத்
தைக்கவர்ந்து சுகத்தையடையுமாதலின் இரசரூப விஷயஜன்னிய சுகத்தின்கண்
ணும் தனத்திற்குக் காரணத்தன்மை சம்பவியாது. விஷ்ணுமுதலிய தேவதை
களின் ஆலயத்தே இராநின்ற கோமுதலியவைகளும் நிர்த்தனர்களும், நானா
வகைக் கீதவாத்தியாதி சப்தங்களைக்கேட்டு சுகத்தையடைவாராதலின் சப்தரூப
விஷயஜன்னியசுகத்தின்கண்ணும் தனத்திற்குக் காரணத்தன்மை சம்பவியாது.
தனமற்ற தரித்திரனும் வாராங்கனைமுதலிய சுந்தரிகளின் ரூபத்தைக்கண்டு ஆனந்
தத்தையடைவனாதலின் ரூபவிஷயஜன்னியசுகத்தின்கண்ணும் தனத்திற்குக் கார
ணத்தன்மை சம்பவியாது. தனமற்ற ஈ முதலியவையும் துர்லபமாகிய அரசமங்
கையரைத் தீண்டிச்சுகமுறுகின்றனவாதலின் ஸ்பரிசரூப விஷயஜன்னியசுகத்தின்
கண்ணும் தனத்திற்குக் காரணத்தன்மை சம்பவியாது. இவ்வுலகத்தே ஒவ்வொரு
வனுக்குத் தனத்தால் விஷயசுகமுண்டாமாதலின் தனத்தின்கண்ணே அற்பமாக
விஷயசுக காரணத்தன்மையுளதாயினும் சம்பூரண காரியவியுக்திகளின் ஜனகம்

நியமமாகயாதாமோ அது நூற்கட் காரணமெனப்படும். யாது சிலகாரியங்கட்கு ஜனகமாயும் சிலவற்றிற்கு ஜனகமாகாமலுமிருக்குமோ அது காரணமெனப்பட மாட்டாது. மண் தண்டம் சக்கரம் குலாலன் என்னும் நான்கும் நியமமாய்ச் சம்பூரண குடங்களின் ஜனகமாம் ஆதலின் அவை குடத்தின்காரணங்களாம். குலாலன் வீட்டிலிருக்கும் நீள்செவியன் சிறிது குடங்கட்கு ஜனகமாயினும் சம்பூரண குடங்கட்கு ஜனகமன்றுமாதலின் அந்நீள்செவியன் குடகாரணமன்றும்; மற்றோ, வேறோராற்றாற் பெறப்படுவதாம். அதுபோல, இத்தனம் சிலரின் விஷயசுகஜனகமாமெனினும் பசுமுதலிய சர்வ ஜீவர்களின் விஷயசுகஜனகமன்றுமாதலின் இத்தனம் விஷயசுககாரணமன்றும்; மற்றோ, நீள்செவியனைப்போல வேறோராற்றாற் பெறப்பட்டதாம். அல்லது, தனவானும் தனத்தால் சம்பூரணவிஷயசுகங்களையடையான்; மற்றோ, சில விஷயசுகத்தையேயடைவன், அது நிர்த்தனனுக்குங் கிடைக்குமாதலின் விஷயஜன்னியசுகத்தின்கண்ணே தனத்திற்குக் காரணத்தன்மை சம்பவியாது. அல்லது, விஷயஜன்னியசுகத்தின்கண்ணே தனத்திற்குக் காரணத்தன்மை சம்பவியாததேபோலச் சுவர்க்காதி சுகஹேதுவாய தருமத்தின்கண்ணும தனத்திற்குக் காரணத்தன்மை சம்பவியாது; ஏனெனின், முற்கலர் என்னும் மறையவர் முதலிய நிர்த்தனர்களும் அதிதிசேவை முதலிய கருமங்களாற் சுவர்க்கத்தையடைந்ததாகச் சாஸ்திரத்திற் கேட்கின்றோமாதலின், தனத்தானே தரும அடைவுண்டாம் என்னும் நியமம் சம்பவியாது; மாறாய் எத்துணைத் தனவந்தர்களோ தனமதத்தால் நரகத்தையே யடைந்தனரன்றோ.

சங்கை:— சுவர்க்கமடையும் சாதனமாய அசுவமேதாதி யாகங்கள் தனமின்றி யுண்டாகாவாதலின் தனமே சுவர்க்கமடையச் சாதனமாம்.

சமாதானம்:—அசுவமேதாதி யாகமின்றி வேறெவ்வுபாயத்தானேனும் சுவர்க்க அடைவுண்டாகாதாயின், தனத்தின்கண்ணே சுவர்க்ககாரணத்தன்மை சம்பவிக்கும்; ஆனால், சுவர்க்கமடைய ஜபம், விரதம், தவம் முதலிய அநேகவகைச் சாதனங்களைச் சாஸ்திரங்கூறுகின்றது; அச்சாதனங்களாலும் சுவர்க்கங்கிடைக்கும்; ஆதலின், தனமே சுவர்க்காதிகளின் காரணமாமென்னும் நியமம் சம்பவியாது. அல்லது, எவ்வாதியானவன் தனத்தை மோக்ஷகாரணமென்பனோ அவனும் சாக்ஷாத்காரண மென்பதில்லை; மற்றோ, யாகாதி கருமவாயிலாய் அத்தனத்தை மோக்ஷத்தின்கண்ணே காரணமென்கின்றனன். அந்த யாகாதிகருமங்களிடத்தே மோக்ஷகாரணத்தன்மை சம்பவியாதபோது தனத்தில் மோக்ஷகாரணத்தன்மை யெங்ஙனஞ்சம்பவிக்கும்? சுவர்க்காதியினடைவில் யாகாதிகட்குக் காரணத்தன்மையிருப்பதேபோல, ஜபாதிகட்குமுளதாதலின் இப்பொருள் துணியப்பெறும்:— அசுவமேதாதி யாகங்கள் தனத்தால் அடையக்கூடியதாயிருப்பினும், தனத்தால் மோக்ஷரூப அமிருதப்பிராப்தி யுண்டாகாதாம். ஹே குழந்தாய்! இங்ஙனம் ஆராய்ந்து அம்முனிவர் மைத்திரேயியை நோக்கி இங்ஙனங் கூறத்தொடங்கினர்:— ஹே பிரியமுள்ளமைத்திரேயீ! தனத்தைப் பரித்தியாகஞ்செய்யக் கூறியதையும், மோக்ஷரூப அமிருத அடைவின் சாதனம் வினவியதையும் கேட்டு என் மனத்தே

மிகவும் மகிழ்வுண்டாயது. ஹே மைத்திரேயி! இவ்வுலகில் இப்புருஷன் புத்திர ரூபமாய்ப் பிரீதியோடுகூடியவனாய் எந்த ஸ்திரீயினின்றும் உற்பன்னமாவனோ, அவள் ஜாயை யெனப்படுவள். இவ்வகையாய் எனது ஜாயை நீ யொருத்தியே யாவாய்; ஏனெனின், இவ்வுனது வசனத்தைக்கேட்டுப் பிரீதியோடுகூடியவனாய் யான் நின்பானின்று முற்பன்னமாயினேனாதலின், நின்னைப்போன்ற விசாரமுடைய ஸ்திரீகளே ஜாயையெனக் கூறத்தகுதியாராவர்கள். மற்றுமுள்ள இலௌகிக ஸ்திரீகளோ, அன்னவஸ்திர பூஷணாதி பதார்த்தங்களைக் கேட்பதால் தங்கள்பதிகளை அநேகவகைக் கிலேசத்திற்குள்ளாக்குவாராதலின், அவர்கள் ஜாயையெனக்கூறத் தகுதிப்படார்; மற்றோ, லலனை, பாரியை என்பனமுதலிய நாமங்களா லழைக்கத்தகு தியராவர். இக்கால் யான் தனாதிகளிடத்தே காமமற்றதுபோலவே நீயும் அற்று என்பால் ஆனமஸ்வரூபத்தை வினவினாய்; நினது நிஷ்காமவசனத்தைக்கேட்டு யான் பரமாநநதத்தையடைநதேனாதலின் ஸ்திரீகளின் இயற்கையாய இலஜ்ஜை யைப் பரித்தியாகித்து நீயென் எதிரிலிருத்தி. நீ வினவிய மோக்ஷரூப அமிருத அடைவின் சாதனத்தைக் கூறுகின்றேன் நீ நினது மனத்தையும் நேத்திரத்தை யும் கரணங்களையும் சாவதானப்படுத்திக்கொண்டு கேட்குதி. இபபோது அன்வய வியதிரேகத்தால ஆன்மாவின் பரமாநநதரூபம் நிரூபிக்கபபடும்:—ஹே மைத்தி ரேயி! நினக்கு யான் பிரியன், எனக்கு நீபிரியை என்பது நமமிருவருக்குமனுபவ சித்தமாம். ஆனால, இதன்கண்ணே இத்துணை விசேஷமுளது, எனக்கு நின் சரீரத் தின்கண்ணேயுண்டாம் பிரீதியானது நின் சுகததின்பொருட்டன்றும்; மறறோ, எனதான்மசுகத்தின்பொருட்டேயாம். நினக்கு என்சரீரத்தின்கண்ணே உண்டாம பிரீதியானதும் என் சுகத்தின்பொருட்டன்றும்; மறறோ, நினதான்ம சுகத்தின் பொருட்டேயாம். இபபோதிப்பொருளையே வெளிப்படையாய் நிரூபிப்பாம்:— ஹே மைத்திரேயி! ஜாயையானவள் தன்பதியிடத்தே பிரீதிசெய்தல பதியின் சுகத்தின்பொருட்டன்றும்; மறறோ, காமரூப அக்கினியால் தபிக்குமவள் அதன் சாநதிவாயிலாய்த் தன்விஷய சுகபொருட்டேயாம், ஆடையாபரணாதிகளினடை வானுண்டாஞ் சுகத்தின்பொருட்டுப் பதியின்பாற பிரீதிசெய்வள்.

சங்கை:—ஹே பகவன்! ஜாயையானவள் தன்சுகத்தின்பொருட்டுப் பதியின் பாற்பிரீதிப்படுவள் என்பதையறிவதெங்ஙனம்?

சமாதானம்:—ஹே மைத்திரேயி! ஒருகாற் பதியின்சுகத்தின்பொருட்டு ஜாயையானவள் பதியின்கண்ணே பிரீதிசெய்வளானால் அவன் பரஸ்திரீலோல னாய்ப் பிரதிகூலனாயின் அப்போதும் இவளுக் கவன்பாற்பிரீதியுண்டாகவேண்டும். ஆனால், பிரதிகூலப்பதியின்பால் எம்மனைவியும் பிரீதிப்படுவதில்லை; மற்றோ, அநுகூலப்பதியின்கண்ணே சம்பூரண மனைவியரும் பிரீதிசெய்வர். ஆகையால், ஜாயையானவள் தன் சுகப்பொருட்டே பதியின்பாற் பிரீதிசெய்வள் பதியின்சுக த்தின்பொருட்டு எவளும் பதியின்பாற் பிரீதிசெய்வதின்றுமென் றறிந்துகொள்ள லாமன்றே. ஹே மைத்திரேயி! ஜாயையானவள் பதியின்சுகத்தின்பொருட்டுப் பதியின்பாற்பிரீதி செய்யாததேபோலப் பதியும் ஜாயையின் சுகப்பொருட்டு ஜாயையின்பாற்பிரீதி செய்வதில்லை; மற்றோ, காமரூப அக்கினியின் சாந்திவாயி

லாய் தன்விஷயசுகத்தின்பொருட்டும், அன்னபாகாதி கிருகவியவகாரஜன்னியசுகத்தின்பொருட்டும் தன்மனைவியினபாற் பிரீதிசெய்பவன், ஒருகால் ஜாயையின்சுகத்தின்பொருட்டு அவளிடத்தே பிரீதிசெய்வனுயின், அவள் இருது தர்மத்தால் அல்லது வியாபிசாராதியால் இவனுக்குப் பிரதிகூலமாவளாயின் அக்காலத்தும் அவளிடத்தே பிரீதியுண்டாகவேண்டும்; ஆனல், பிரதிகூலமாய ஜாயை யிடத்தே எப்பதிக்கும் பிரீதியுண்டாவதின்றும்; மற்றேற, அனுகூல ஜாயையின்கண்ணே சர்வபதிகட்கும் பிரீதியுண்டாமாதலின், ஜாயையின சுகத்தின்பொருட்டுப பதிக்கு அவள் பாற்பிரீதியின்றும்; மற்றேற, தன் சுகத்தின்பொருட்டே பதிக்கு அவள் பாற்பிரீதியாம் என வறிநதுகொள்ளலாமன்றேற. ஹே மைத்திரேயீ! சர்க்கரை இயல்பாகவே மதுரமும் தனது சமபந்தத்தால் அது மதுரமறறவற்றையும் மதுரஞ்செய்வதுமாமாதலின், அது மதுரதமமாம். அதுபோல, இவ்வாண்பெண்களின் ஸ்வயஞ்சோதியாய ஆநந்தவடிவ ஆன்மாவே இயலபாகப் பிரியரூபமாம். அது தனதுதாதாத்மிய சம்பநதத்தால சரீராதி அபபிரிய பதாாத்தங்களேயும் பிரியரூபமாக்குமாதலின், அது பிரியதமமாம் ஜாயைககுத் தன்சுகத்தின்பொருடடுப் பதிபிரியமும், பதிக்குத் தன்சுகத்தின்பொருட்டு ஜாயைபிரியமும ஆவதேபோலப் புத்திரன் பொன் முதலியவை கோ முதலியவை பிராஹ்மணதவ க்ஷத்திரியத்வ ஜாதிகள் பூ முதலிய ஏழுலகங்கள் இந்திராதிதேவதைகள், இருக்கு முதலிய வேதங்கள் ஸ்தாவரஜங்கமப் பிராணிகள், எனவிவை முதலாகவுள்ள பதாாத்தங்களிடத்தே ஜீவர்கட்குண்டாம் பிரீதி அவற்றின் சுகப்பொருட்டன்றும; மறறேற, தம் சுகப்பொருட்டேயாம். அவற்றின்பொருட்டே அவற்றின் பாற பிரீதியாகுமாயின் அவை இவர்கட்குப் பிரதிகூலமாங்காலத்தும் பிரீதியுண்டாகவேண்டும்; ஆனல், பிரதிகூலமாய அவற்றின்பாலெவரும் பிரீதிசெய்வதிலலே; மறறேற, அநுகூலமாய அவற்றின்பாலே யாவருக்கும் பிரீதியுண்டாம். ஆகையால், தம் சுகததின்பொருட்டே உயிர்கட்குப் புத்திராதி பதார்த்தங்களிடத்தே பிரீதியுண்டாம். அவறறின்பொருடடு எவர்க்குமவற்றின்பாற பிரீதியுண்டாகாதாதலின் யாவருக்கும் தமதான்மாவே இயல்பாய்ப் பிரியமாகுமெனவறிநதுகொளளலாமன்றேற.

சங்கை:—ஹே பகவன்! பதி ஜாயை புத்திரன் முதலிய ஜகத்தானது பிரதிகூலமாயின் உயிர்கட்குச் சுகவேதுவலலறேயினும அனுகூலமாயின் சுகவேதுவாகுமாதலின், ஆநந்தஸ்வரூப ஆன்மசமபநதத்தையடைநது இஜ்ஜகத்துப் பிரியரூபமன்றும்; மற்றேற, இயல்பாகவே இது பிரியரூபமாம்.

சமாதானம்:—ஹே மைத்திரேயீ! ஆநந்தவடிவ ஆன்மாவொன்றைவிடுத்துப் பதிமுதலிய அனன்மபதார்த்தங்களியாவும இயல்பாகப பிரியரூபமும் அபபிரியரூபமுமன்றும்; மற்றேற! இவையெனது சுகசாதனமென்னும் அனுகூலத்தன்மையுணர்வு எவர்கட்கெவற்றின்கண் ணுண்டாமோ அவர்கட்கவை பிரியமாம். இவையெனது துக்கசாதனமென்னும பிரதிகூலத்தன்மையுணர்வு எவர்கட் கெவற்றின்கண்ணுண்டாமோ அவர்கட்கவை யப்பிரியமாம். இக்காரணத்தானே இவ்வுலகத்தே எவனுக்கு மயலால் தனது பிரியமித்திரனிடத்தே பிரதிகூலத்தன்மை

ஞானமுண்டாமோ, தனது சத்துருவிடத்தே அனுகூலத்தன்மை ஞானமுண்டாமோ அம்மயங்கியோன் மித்திரனை அப்பிரியமாயும் சத்துருவைப் பிரியமாயுமெண்ணுவனாதலின், இது துணியப்பெறும்:—அனான்மப் பொருள்களின் பிரியத்தன்மையில் அநுகூலத்தன்மை ஞானங்காரணமாம், அப்பிரியத்தன்மையில் பிரதிகூலத்தன்மை ஞானங்காரணமாம். இயல்பாய் எவ்வனான்மபதார்த்தமும் பிரிய அப்பிரியரூபமன்றாம். வாயு வியல்பாய் உஷ்ணசீதளமன்றாம்; ஆனால், அது அக்கினியின் சம்பந்தத்தால் உஷ்ணமாய்த்தோற்றும்; ஜலசம்பந்தத்தால் சீதளமாய்த்தோற்றும். அதுபோல, இவ்வனான்ம பதார்த்தமும் இயல்பாகப் பிரியரூபமும் அப்பிரியரூபமும் அன்றாம்; ஆனால், அநுகூலத்தன்மை ஞானத்தால் அவைபிரியரூபமாய்த் தோற்றும்; பிரதிகூலத்தன்மை ஞானத்தால் அவை அப்பிரியரூபமாய்த்தோற்றும். அல்லது, எதற்கு எவ்வியல்புளதோ அது அதனினின்றும் எக்காலத்தும் நீங்காது. அக்கினியின் வெம்மையியற்கை அதனினின்றும் எக்காலத்தும் நீங்காது; அதுபோலப்பதிமுதலிய அனான்மபதார்த்தங்களின்பால் இயல்பாகவே பிரியமிருக்குமாயின் எப்போதும் அது தோற்றல்வேண்டும், ஆனாலது எப்போதும அவற்றின் பாற்றோற்றுவதின்றாம; மற்றோ, தமது திதிகாலத்தே அவை உயிர்கட்குச் சுகமடைவிக்கும். அவையே தமது வியோககாலத்தும் பிரதிகூலஞான காலத்தும் பரமதுக்கத்தையடைவிக்குமாதலின், ஆநந்தஸ்வரூப ஆன்மாவினும வேறாய அனான்ம பதார்த்தங்களிடத்தே இயல்பாய்ப பிரியரூபத்தன்மையின்றாம; மற்றோ, அவற்றின் பால் அனுகூலத்தன்மை ஞானமுண்டாங்கால் அவை உயிர்கட்குப பிரியமாம் ஆதலின் இது துணியப்பெறும்:—இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மாத் தனது சம்பந்தத்தால் அப்பிரியபதார்த்தத்தையும் பிரியமாக்கும் இதுவே சர்வ ஜீவர்கட்கும் பிரியதமமாம். இப்போது ஆநநதஸ்வரூப ஆன்மாவின்கண்ணே பிரியதமத்தன்மையை வெளிப்படையாக்கும்பொருட்டு முதலில் அப்பிரியம் பிரியம் பிரியதரம் என்னும் மூன்றையும் நிரூபிப்பாம்:—ஹே மைத்திரேயி! இப்பொருள் என்னையொருகாலுமடையலாகாது என்னும் ஜீவர்களின் த்வேஷவிஷயமாய துக்கமும், அதன் சாதனமாய சிங்கசர்ப்பாதிகளும் அப்பிரியமெனப்படும். இஃதெனது சுகசாதனம் என்னும் ஜீவர்களின்ஞானவிஷய பதியாதிபதார்த்தங்கள் பிரியங்களாம. அவற்றினடைவால் உண்டாம்சாத்விக அநதக்கரணத்தின் பரிணாமவடிவசுகம் பிரியதரமாம். பதியாதியரின்பாலுண்டாம் பிரீதி அவர்பொருட்டன்றாம்; மற்றோ, தம்பொருட்டேயாம். அதுபோல, அந்தப்பிரியதரசுகத்தின்கண்ணேயுண்டாஞ் சீவர்களின் பிரீதி அச்சுகப்பொருட்டாகாதாம்; மற்றோ, தம்பொருட்டேயாம். அச்சுகப்பொருட்டே அதன்கட் பிரீதியாமாயின் வைரியின் சுகத்தின்கண்ணும் பிரீதியுண்டாகவேண்டும். ஆனாலதன்கண்ணே எவர்க்கும் பிரீதியுண்டாவதின்றாம். ஆகையாலிஃதறிந்துகொள்ளலாமன்றோ:—தம்மான்மாவின்பொருட்டே உயிர்கட்கு அச்சுகம் பிரியதரமாம் என. இக்காரணத்தானே இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மாவே சர்வஜீவர்கட்கும் பிரியதமமாம். ஈண்டுப் பிரியத்தினுமதிகமாவது பிரியதரமாம், அதனினும் அதிகப்பிரியம் பிரியதமமாம். ஹே மைத்திரேயி! இத்தகைய பிரியதம ஆன்மாவின் லேசமாத்திர ஆநந்தத்தைப்பற்றிப் பிரஹ்மாதிகளும் ஆநந்த முறுகின்றனர். இக்காரணத்தானே ஆன்மஸ்வரூப ஆநந்தம் பிரஹ்மாவின் ஆநந்தத்தினும்

மேலாயதாம். ஹே மைத்திரேயி! சுவர்க்கலோகமே முதலாய்ப் பிரஹ்மலோக பரியந்தம் உள்ள விஷயஜன்னிய ஆநந்த முழுவதினும் அதிகமும் இருமையற்றதும் ஆய பிரஹ்மாநந்தம் ஜீவர்களின் ஆன்மாவினும் வேறன்றாம்; மற்றோ, அது ஆன்மரூபமேயாமாதலின் இவ்வான்ம சொரூப ஆநந்தமே பரமபுருஷார்த்தரூபமாம். இத்துணையால் ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே பரம புருஷார்த்தரூபத் தன்மை நிரூபிக்கப்பட்டது. இப்போது அவ்வாநந்த ஸ்வரூப ஆன்மாவின் சாக்ஷாத்காரத்தின்பொருட்டுச் சிரவணுதி சாதனங்களை நிரூபிப்பாம்:—ஹே மைத்திரேயி! எவ்வதிகாரிகட்குக் கரதலாமலகம்போலச் சம்சய விபரீதமற்ற ஆன்ம சாக்ஷாத்கார இச்சையுண்டாமோ அவர்கள் முதலில் விவேக வைராக்கிய சமாதி ஷட்சம்பத்தி முமுக்ஷுத்தன்மை என்னும் நான்கு சாதனங்களைச் சம்பாதிக்க வேண்டும். அதன்பின்னர் சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட குருவின் சமீபத்தை யடைக. ஆண்டுச்சென்று அவ்வாசிரியர் வாயிலாய் "அயமாத்மாப் பிரஹ்மம், பிரஹ்மாஹமஸ்மி" இவை முதலாகிய அநேகரு சுருதிவசனங்களை அடிக்கடி சிரவணஞ்செய்க. உபக்கிரம உபசம்ஹாராதி ஆறுலிங்கங்களால் அதிகாரியானவன் வேதாந்த வசனங்கட்கு அத்விதீயப் பிரஹ்மத்தின்கண்ணே தாற்பரிய நிச்சயஞ் செய்வது சிரவணமெனபபடும். இதனுலதிகாரிக்குப் பிரமாணகத அசம்பாவனை நீங்கும். ஆண்டு வேதாந்த சாஸ்திரம் ஜீவப்பிரஹ்ம அபேதத்தைப் பிரதிபாதிப்பதா? அல்லது, பேதத்தைப் பிரதிபாதிப்பதா? என்னும் இவ்வாறுய சம்சயம் பிரமாணகத அசம்பாவனையெனப்படும். இப்போது மனனம் நிரூபிக்கப்படும்:—ஹே மைத்திரேயி! இவ்வாறு குருவாயிலாய் வேதாந்தவசனங்களைச் சிரவணஞ்செய்து அதிகாரியானவன் ஏகாந்ததேசத்திருந்து மறைக்குமுரணுறுத்தர்க்கத்தால் அவ் வசனங்களின் பொருளை மனனஞ்செய்க. அத்தர்க்கமிதுவாம்:—இவ்வுலகத்தே ஒரே மண்முதலிய காரணங் கடசராவாதி அநேககாரியரூபமாய்இருப்பதேபோல, ஒரே அத்விதீயபரமான்மா அஞ்ஞான சம்பந்தத்தால் நானு ஜகத்வடிவமாய்த் தோற்றும். கடமுதலிய காரியங்கள் மண் முதலிய காரணங்களில் இலயமாவதே போல, இவ்வெல்லாவுலகும் அதிஷ்டானபரமான்மாவின்கண் இலயபாவத்தையடையும். மாலையின் மலர்களிற் சூத்திரத்திற்கோ அன்வயமுளதாம், மலர்கட்குப் பரஸ்பரம் வியதிரேகமுளதாம. அதுபோல, நனவு, கனவு, துயில், பாலியம், யௌவனம் விருத்தம என்பனமுதலிய அவஸ்தைகளில் ஆன்மாவிற்கோ அன்வயமாம், அவ்வவஸ்தைகட்கோ பரஸ்பரம் வியதிரேகமாம். என்னும்இவைமுதலிய அநேகவகைத் தர்க்கங்களால் அதிகாரியானவன் வேதவசனங்களின் அர்த்தங்களை மனனஞ்செய்க. அம்மனனத்தால் அதிகாரியின் பிரமேயகத அசம்பாவனை நீங்கும். ஈண்டு ஆன்மா வியாபகமா? அல்லது, பரிச்சின்னமா? என்பனமுதலிய சம்சயங்களின் பெயர் பிரமேயகத அசம்பாவனையாம். இப்போது நிதித்தியாசனத்தை நிரூபிப்பாம்:—ஹே மைத்திரேயி! இம்மனம் அத்தியந்தஞ்சஞ்சலமாம். ஆகையால், இம்மனத்தை இவ்வதிகாரியானவன்முதலில் ஒருபாகிய பிரியபதார்த்தத்தின்கண்ணே ஒருமைப்படுத்தவேண்டும். அதன்பின்னர் சிக்ஷிக்கபபட்டமனத்தை அந்தர ஆத்மாவின்கண்ணொருமைப்படுத்தவேண்டும். ஆன்மாவின்கண்ணொருமையையுடைந்த இம்மனம்

மீண்டும் பகிர்முகத்தை யடையாது, என்னுமிது நித்தியாசனமாம். இதனால், விபரீதபாவனை நீங்கும். அன்னியவஸ்துவின்கண் அன்னியபுத்தி விபரீதபாவனை யெனப்படும். ஹே மைத்திரேயி! இவ்வண்ணம் சிரவணமனன நிதித்தியாசனங்களால் அசம்பாவனை விபரீதபாவனையற்று அந்தர ஆன்மாவின்கண் ஏகாக்கிரத்தன்மையை யடைந்து இத்தூயமனம் குருவுபதேசித்த மகாவாக்கியரூபசப்தப்பிரமாணத்தால் ஆன்மசாக்ஷாத்காரத்தை யுண்டாக்கும்.

சங்கை :—ஹே பகவன்! மகாவாக்கியரூபசப்தப்பிரமாணமின்றியே சுதந்திரமனம் ஆன்மசாக்ஷாத்காரத்தை யேனுண்டாக்கமாட்டாது.

சமாதானம்:—ஹே மைத்திரேயி! நேத்திராதிபாகியேந்திரியம் ஒருகால் யதார்த்தஞானரூபப்பிரமையை யுற்பன்னமாகக்கும், மற்றொருகால் தோஷவசத்தால் அயதார்த்தஞானரூப அப்பிரமையையுமுண்டாக்கும், யதார்த்தஞானத்தையே யானுற்பன்னஞ்செய்வேன், அயதார்த்தஞானத்தை யானுற்பன்னஞ் செய்யமாட்டேன் என்னும் ஆக்கிரகம் அந்நேத்திராதி இந்திரியங்களி லுண்டாகமாட்டாது. அது போலச் சர்வ விருத்திகளினுபாதானகாரணமாய இம்மனமும் ஒருகால் பிரமையையும் மற்றொருகால் தோஷவயத்தால் அபபிரமையையும் உண்டாக்கும். யதார்த்தத்தையேயுண்டாக்குவேன் அயதார்த்தத்தை யுண்டாக்கேன் என்னுமாக்கிரகம் இம்மனத்தே யுண்டாகாதாம. சர்வதோஷமற்ற இம்மகாவாக்கியரூபசப்தப்பிரமாணமோ கேவலம் யதார்த்தஞானரூபப் பிரமாவையே யுண்டாக்குமாதலின், ஆன்மசாக்ஷாத்கார உற்பத்தியின்கண் மகாவாக்கியரூப சப்தப்பிரமாணமே பிரதானகாரணமாம்.

சங்கை :—ஹே பகவன்! ஆன்மசாக்ஷாத்காரத்தின்கண் மகாவாக்கியரூப சப்தப்பிரமாணத்திற்கே பிரதானத்தன்மை கூறின் மனோசகாயமின்றியே அது ஆன்மசாக்ஷாத்காரத்தை யேனுண்டாக்குவதில்லை?

சமாதானம் :—ஹே மைத்திரேயி! நேத்திராதிபாகியேந்திரியங்களால் ஜனித்த கடபடாதிகளின் பிரத்தியக்ஷ ஞானத்தின்கண் இந்திரியங்கட்கு விடயங்களோடுள்ள சையோகாதி சம்பந்தங் காரணமாம். விஷய இந்திரிய சம்பந்தமின்றிப் பிரத்தியக்ஷஞான முண்டாகமாட்டாது; அதுபோல, மகாவாக்கியரூப சப்தப்பிரமாணத்தால் மனத்தின்கண்ணே யுற்பன்னமாய ஆன்மாகார விருத்திஞானத்தே சாக்ஷாத்காரரூபத்தன்மை, ஆன்மாவோடு மனத்தின் சையோகசம்பந்த முண்டாயின் சித்தமாகும, அஃதின்றி யது சித்தமாகாதாம். இக்காரணத்தானே மகாவாக்கிய ஜன்னிய ஆன்மசாக்ஷாத்காரத்தின்கண் ஆன்மாவோடு சுத்தமனத்தின் சம்பந்தமும் அவசியமபேக்ஷிதமா மாதலின் சிரவணமனன நித்தியாசனமென்னும் முச்சாதனங்களோடுகூடிய தூயமனம் குருவுபதேசித்த மகாவாக்கியரூப சப்தப்பிரமாணத்தால் அத்விதீய ஆன்மசாக்ஷாத்காரத்தை யுண்டாக்குமெனத் துணியப்பெறும்.

சங்கை :—ஹே பகவன்! ஆன்மசாக்ஷாத்காரத்தையடைந்த அதிகாரியெப் பலத்தை யடைவுன்.

சமாதானம் :—ஹே மைத்திரேயி ! இவ்வதிகாரிக்குச் சிரவணாதி சாதனங்களால் ஆன்மசாக்ஷாத்காரமுண்டாயின் அஞ்ஞானரூப அவித்தையின் நீக்கமுண்டாம், அவித்தையாய காரணமழியவே கர்த்திருத்துவபோக்திருத்துவாதிசம்பூரண துக்கங்களும் நீங்கும். இவ்வாறு காரியசகித அவித்தியாநிவிருத்தியானபின்னர் இவ்வதிகாரிகளின் இருதயத்தே ஸ்வயஞ்சோதியாய ஆநந்தஸ்வரூப அத்விதீய ஆன்மா வெளிப்பட்டு விளங்கும். மேகாதிகள்நீங்கியபின் கேவலசுத்த ஆகாசப்பிரதீதியாவதேபோலக் காரியசகித அவித்தைநாசமாயின் ஆநந்தஸ்வரூப அத்விதீய ஆன்மாப்பிரதீதியாகும். ஹே மைத்திரேயி ! கனவினின்றும் நனவையடைந்தவன் கனத்துயரைப் பொய்யெனவெண்ணுவன். அதுபோலவே ஆன்மசாக்ஷாத்காரத்தால் அவித்தைவடிவ நித்திரையினின்றும் நனவையடைந்த அறிஞன் சம்பூரண திருசியப் பிரபஞ்சத்தைப் பொய்யென நினைவன். ஹே மைத்திரேயி ! பயமற்ற சக்கிரவர்த்தியாய மகாராஜா கனவின்கண்ணே சென்று நானாவகையாய பயத்தையடைவன், கனவினின்றும் நனவையடைந்த மகாராஜா கனாபயத்தைத் தன்பாலெண்ணான். அதுபோல, உண்மையாயிவன் சர்வதுக்கங்களுமற்றவனாயினும் ஆன்மஸ்வரூப அஞ்ஞானத்தால் தன்பால் நானாவகைத் துன்பங்களையங்கீகரிப்பன். ஆன்மசாக்ஷாத்காரமடைந்தபின்னரிவ்வறிஞன் தன்வடிவத்தே சம்பூரண துக்கங்களைப் பொய்யெனவெண்ணுவன். இப்போது ஆன்மஞானத்தால் சர்வப்பிரபஞ்சஞானத்தின் சித்தியைச் செய்யும்பொருட்டு முதலிலநேக திருஷ்டாந்தங்களால் பிரபஞ்சத்தின்கண்ணே பொய்ம்மையை நிரூபிப்பாம் :—ஹே மைத்திரேயி! சுத்தஆகாசத்தின்கண்ணே அவித்தையால்கந்தாவநகரமுண்டாவதேபோல, இச்சுத்த ஆன்மாவின்கண்ணும் அவித்தையினானே உலகுண்டாம், உண்மையாய்விசாரித்து நோக்கினோ ககனத்தின்கண்ணே கந்தர்வநகரம் முக்காலத்தினும் உண்டாகாததே போல, வுண்மையாயாராய்ந்துநோக்கினோ அத்விதீயஆன்மாவின்கண்ணும் இத்துக்கவடிவ உலகம் முக்காலத்தினும் உண்டாகவேயில்லை. நேத்திரதிமிரரோகத்தால் ஏகசந்திரனை யநேகமாய்க் காண்பதேபோல, அவித்தைவடிவதோஷத்தால் அஞ்ஞானியானவன் ஏக அத்விதீய ஆன்மாவை அநேகரூபமாய்க் காண்பன். மூடபாலகன் தன்விரலால் நேத்திரத்தை நிரோதித்து நிர்மல ஆகாசத்தின்கண்ணே மயிலின்றோகையொப்பாய விசித்திரரூபத்தைக் காண்பதேபோல, மூடஅஞ்ஞானி ஜீவனும் அவித்தியாரூப தோஷத்தால் ஆநந்தஸ்வரூப ஆன்மாவின்கண்ணே இத்துக்கரூப ஜகத்தைக்காண்பன்.

சங்கை :—ஹே பகவன் ! ஆன்மசாக்ஷாத்காரத்தையடையாத அஞ்ஞானிகள் இவ்வுலகைக்காணின் இதில் யாதொரு ஆசசரியமுமின்றும் ; ஆனால், ஆன்மசாக்ஷாத்காரத்தால் எவ்வறிஞர்களின் காரிய சகித அவித்தியா நிவிருத்தியாயதோ அவர்களும் இவ்வுலகைக் காண்பது எனக்கு மிகவும் ஆச்சரியத்தைக்கொடுக்கின்றது.

சமாதானம்:—ஹே மைத்திரேயி! இவ்வுலகின்கண்ணே கிழக்கு முதலியதிசைகளில் மேற்கு முதலிய திசைகளின் மயல் அஞ்ஞானிகட்குண்டாவதேபோலச் சாஸ்

திரத்தையுணர்ந்தவர்க்கும் அந்தத்திக்குப்பிரமையுண்டாம். இவ்வாறே அஞ்ஞானிகட்கு அத்விதீய ஆன்மாவின்கண் நானாவகையாய உலகு தோற்றுவதேபோலப் பிராரப்த கருமத்தாற் காபபாற்றப்பட்ட அவித்தியாலேசத்தால் அறிஞருக்கும் சரீரநாசம்வரைக் கற்பிதரூபமாய் உலகின்தோற்றமுண்டாம். ஹே மைத்திரேயி! சங்கத்தைவெண்ணிறமுடையதாயறிந்தவனுக்கும் நேத்திரங்களின் பித்ததோஷத்தால் அது மஞ்சள்நிறமுடையதாய்த்தோற்றும். வெல்லத்தை மதுரமுடையதாயறிந்தவனுக்கும் நாவின்றோடவசத்தால் அது கைப்பிரசமுடையதாய்த்தோற்றும். அதுபோல, அத்விதீய ஆன்மாவை நிச்சயித்த அறிஞனுக்கும் அவித்தியாலேசவசத்தால் பிராரபதநாசபரியந்தம் இவ்வுலகம் கற்பிதமாய்த்தோற்றும். இப்போது அறிஞரிடத்தே அஞ்ஞானிகளினும் விலக்ஷணத்தன்மையை யுணர்த்தும்பொருட்டு அஞ்ஞானிகளின் பிரபஞ்ச தரிசனத்தை அநேக திருஷ்டாந்தங்களால் நிரூபிப்பாம்:—ஹே மைத்திரேயி! உண்மையாய் நீரற்ற ஊஷரபூமியின்கண் தாகத்தாற் பீடிக்கப்பட்ட மான்முதலிய ஜீவர்கட்கு நானாவகையலைகளோடுகூடிய நீர்தோற்றுவதேபோல, உண்மையாய்ப் பேதப்பிரபஞ்சமற்ற இவ்வத்விதீய ஆன்மாவின்கண் விஷயாசக்த அஞ்ஞானிகட்கு இப்பேதப்பிரபஞ்சம் தோற்றும். உண்மையாய் இரஜதபாவமற்ற சுக்தியின்கண் லோபிகட்கு இரஜதப் பிரதீதியுண்டாவதேபோல, உண்மையாய்ப் பிரபஞ்சபாவமற்ற இவ்வத்விதீய ஆன்மாவின்கண்ணே அஞ்ஞானிகட்கிவ்வுலகந்தோற்றும். மந்த அந்தகாரத்தின்கண்ணே பயதோஷவசத்தாற் சாப்பபாவமற்ற இரஜ்ஜுவின்கண் சர்பபத்தைக் காண்பதேபோலவும், சோரபாவமற்ற ஸ்தாணுவின்கண் சோரனைக்காண்பதேபோலவும், இவ்வஞ்ஞானியானவன் அவித்யாரூபதோஷவசத்தால் துக்கமற்ற சேதன ஆன்மாவின்கண் துக்கஜட அனான்மரூப ஜகத்தைக்காண்பன். ஹே மைத்திரேயி! கனவின்கண்ணே கனுக்காணும புருஷனுக்குத் தோற்றாநின்ற பதிஜாயாதி ஜகத்தானது கனுக்காண்பவனினும் வேறன்றாவதேபோல, நனவின்கண்ணும் தோற்றாநின்ற அது ஆநந்தஸ்வரூப ஆன்மாவினும் வேறன்றாம; மற்றோ, அது ஆன்மரூபமேயாம். ஆகையால், ஹே மைத்திரேயி! இத்தகைய அத்விதீய ஆநந்தஸ்வரூப ஆன்மசாக்ஷாத்காரத்தை நீ சிரவணுதி சாதனங்களோடுகூடிய சுத்தமனத்தாலும் மகாவாக்கியரூப சப்தப்பிரமாணத்தாலும சித்தனுசெய்தி. இத்தகைய ஆன்மசாக்ஷாத்காரத்தின் அடைவின் பின்னர் நீ மீண்டும் சமசார துக்கத்தையடையமாட்டாய். ஹே மைத்திரேயி! ஆகாசத்தின்கண்ணே கற்பிதமாய கந்தர்வநகரம ஆகாசரூபமேயாம; அதனினும் வேறாக அதற்குச் சத்தையின்றாவதேபோல, ஆநந்தஸ்வரூப ஆன்மாவின்கண்ணே கற்பிதமாய இவ்வுலகமும ஆன்மவடிவமேயாம ஆன்மாவினும் வேறாய்அதற்குச் சத்தையின்றாம். இக்காரணத்தானே அதிஷ்டான ஆன்மாவின் சிரவணத்தால் இவ்வெல்லாவுலகின் சிரவணமாகும், அதன் மனனத்தால் இதன் மனனமாகும், அதன் தியானத்தால் இதன் தியானமாகும், அதன் ஞானத்தால இதன் ஞானமாகும். ஹே மைத்திரேயி! அதிஷ்டான ஆன்மாவின் ஞானத்தால் இவ்வறிஞனுக்குச் சர்வஜகத்தின் ஞானமுண்டாம என யான் நின்பொருட்டுக் கூறியவசனத்தின் அபிப்பிராயமிதுவாம்:—அதிஷ்டான ஆன்மாவினும் இக்கற்பித ஜகத்திற்குப் பின்னசத்தையின்றாமாதலின், அதன்ஞானமுண்டானவுடனே யறிஞனுக்கு அர்த்தத்தால் கற்

பித ஜகத்தின் ஞானமும் உண்டாம். ஆனால், இத்தேசத்தே யித்துணைப்பதார்த்தங்களுள்ளன, அவை யித்தகையவடிவனவெனச் சிறப்புருவத்தால் சம்பூரணஜகத்தின்ஞானம் அறிஞனுக்குண்டாகாதாம்; ஏனெனின், இவ்வறிஞன் சிறப்புருவத்தால் ஜகத்தையுணர்வன் என்னும் பொருளையுணர்த்தும் சுருதிவசனமொன்றுங் காணப்பெறுவதின்றாம். இவ்வெல்லாவுலகும் சுகரூப புருஷார்த்தமன்றாம். துக்காபாவரூபபுருஷார்த்தமுமன்றாம். அவ்விரண்டின் சாதனரூபமுமன்றாம். இத்தகைய அபுருஷார்த்தரூப ஜகத்தின் விசேஷஞானத்தால் இவ்வறிஞனுக்குச் சிறிதுமாத்திரையும் சுகப்பிராப்தி யுண்டாவதின்றாம்; மாறாய் அதனால் இவனுக்குப் பரிசிரமத்தினடைவேயுண்டாம். ஹே மைத்திரேயி! இவ்வெல்லா வுலகும் ஜீவர்கட்குச் சுகவேதுவாக விருப்பினும் சிறப்புருவத்தாலிதன் ஞானமுண்டாதல் அத்தியந்தங் கூடாததாமாதலின், இவ்வறிஞன் இதனைச் சிறப்புருவமாயறியான். இவ்வனுன்மப் பிரபஞ்சஞானத்தால் அதிகாரிகட்குச் சிறிதுமாத்திரையும் புருஷார்த்தப்பிராப்தி யுண்டாகாதாயினும், ஸ்திரீஸ்வபாவத்தால் நீ யொருகால் மகிழ்வுறும்பொருட்டு இவ்வெல்லா வுலகையுங்காண இச்சை செய்வையேயாயின் அதிஷ்டான ஆன்மாவின் ஞானமே இக்கற்பிதஜகத்தின் ஞானத்திற்கேதுவாம். அஃதின்றி வேறெவ்வுபாயமும் அதனுக்கின்றாம். கடசராவாதி மண்ணின்காரியங்கட்கு அவற்றின்வாஸ்தவவடிவ மாயமண்ணுப் உபாதானகாரணமாமாதலின், அதன்ஞானமுண்டாகவே பின்னதேயத்தே பின்னகாலத்தே யிருக்கும் சம்பூரணகடாதி காரியங்களின்ஞானமுண்டாம். அதுபோல, இவ்வாநந்தவடிவ ஆன்மாவின் காரியவடிவ ஜகத்முழுவதிற்கும் ஆன்மரூபகாரணமே உண்மை வடிவமாமாதலின் சிரவணாதிசாதனங்களால் இவ்வதிகாரிக்கு ஆன்மரூபகாரணஞானமுண்டாயபோது ஜகத்வடிவகாரியத்தின் ஞானமும் பொருளானேயுண்டாம். இப்போது பேதஞானத்தின்கண்ணே அனர்த்தகாரணத்தன்மை நிரூபிக்கப்படும்:—ஹே மைத்திரேயி! யாவன் அத்விதீய ஆன்மாவின்கண் நானாபேதத்தைக் காண்கின்றனனோ அப்பேததரிசியானவன் இகலோகத்தின்கண்ணும் பரலோகத்தின்கண்ணும் விஷயசம்பந்தியாய சுகத்தையும் அடையானாயின், மோக்ஷரூபசுகத்தை யடைவனென்பதன்கண்ணே யாதுகூறவேண்டியதுளது. இப்போது பேததரிசியிடத்தே இவ்வுலகசுகாபாவத்தை நிரூபிப்பாம்:—ஹே மைத்திரேயி! இவ்வுலகின்கண்ணே எப்பெண்ணானவள் தனதுபதியையும் மைந்தனையும் மற்றைய பந்துக்களையும் தன்னைப்போலப் பிரியரூபமாய்ப் பாராளோ, மற்றோ தன்னினும்வேறாய் அவர்களைப்பார்ப்பாளோ அவளுக்கு, தம்மிடத்தே பேததிருஷ்டிரூப விஷமத்தன்மை யிருப்பதைக்கண்டு அவர்கள் அவளைப் பரித்தியாகஞ்செய்வர்; அல்லது, தமதுசித்தத்தே அவளை உபேக்ஷித்திருப்பர். இவ்வண்ணம் அவர்கள் அவளைத் தமதான்மாப்போன்று பிரியரூபமாய்ப்பாராராயின், மற்றோ தம்மினும் வேறாய்ப் பார்ப்பாராயின், அவர்கட்குத், தன்னிடத்தே பேததிருஷ்டிரூப விஷமத்தன்மை யிருப்பதைக்கண்டு அவள் அவர்களைப் பரித்தியாகஞ்செய்வள்; அல்லது, தனது சித்தத்தே அவர்களை யுபேக்ஷித்திடுவள். ஆதலின் இப்பொருள் துணியப்பெறும்:—ஈண்டு எவ்வாண் எப்பெண் எதுவரை எச்சடசேதன பதார்த்தங்களைத் தம்மைப்போலப் பிரியமெனவெண்ணி காப்பாற்று

வரோ அதுவரையுமே அவை அவர்கட்கின்பத்தைக் கொடுக்கும். இந்தேகதாரிகள் பதார்த்தங்களைத் தம்மினும்வேறாயுணர்வராயின் அவை அவர்களைப் பரித்தியாகஞ்செய்யும். அவற்றின் வியோகத்தால் அவர்கட்குப் பரமதுக்க அடைவுண்டாம். ஹே மைத்திரேயி! பேததரிசனத்தா லிச்சீவர் துயரையுறுவர் என்பதன்கண்ணே காரணமிதுவாம்:—ஈண்டு யாவன் மகாராஜாவை மகாராஜவடிவத்தால் காண்பனோ அவன்மீது அம்மகாராஜா பிரசன்னராவர். யாவன் அவரைத்தரித்திரரெனக்காண்பனோ அவன்மீது அவர்கோபத்தை யுறுவர். அதுபோலத்தேகதாரிகள் பதிமுதலியோரைத் தமதான்மவடிவமாய்க் காண்பர்களாயின், அவர்கள் சுகத்தையடைவிப்பர். தம்மினும்வேறாய்க் காண்பர்களாயின் துக்கததையடைவிப்பர். அவர்கள் இவர்களுடைய ஆன்மவடிவம் அல்லராயின் தம்மினும வேற்றுவடிவமாய்க்கண்ட அவர்கள் துக்கஅடைவைச செய்பாராதலின் இவ்வெல்லா வுலகவனுபவத்தானும் இப்பொருள் சித்தமாம், இவ்வுலகின்கண்ணே பதிமுதலிய சர்வத்திற்கும் ஆன்மா ஒன்றே வாஸ்தவவடிவமாம். பேதமற்ற அத்விதீய ஆன்மாவைப் பேதமுடையதாய்க்காண்பவன் துக்கத்தையே யடைவன். ஹே மைத்திரேயி! பதிமுதலாயினாரைத் தன்னிற் பின்னமாய்க்காண்பவன் துக்கத்தையடைவதுபோல யாவன் பிராஹ்மணத்தன்மை க்ஷத்திரியத்தன்மை முதலிய ஜாதிகளைத் தன்னிற்பின்னமாய்க்காண்பனோ அவனுக்கவ்விரண்டும் ஈண்டுத் துக்கததையே யடைவிக்கும். இப்பிறப்பிலோ அவ்விரண்டும் அவனுக்குப் பாபத்தை யடைவிக்கும் அன்றியும் அப்பாபஜன்னிய அவித்தை, அஸ்மிதை, ராகம், த்வேஷம், அபிநிவேசம் என்னும் ஐந்துகிலேசங்களை யடைவிக்கும். மறுபிறப்பிலோ அவ்விரண்டும் அபபேததரிசியை யடையமாட்டாவாதலின் நீசஜாதியின் அடைவுவாயிலாய் அவ்விரண்டும் ஆண்டும் துக்கத்தையே யடைவிக்கும். ஹே மைத்திரேயி! அவ்விரண்டும் பேததரிசிக்குத் துக்கத்தையடைவிப்பதேபோல சுவர்க்காதி லோகங்களும், இந்திராதி தேவதைகளும், இருக்காதிவேதங்களும், மற்றையயாவும் துக்கத்தையே யடைவிககும். சுவர்க்காதி லோகங்களைத்தன்னான்மாவினும்பின்னமாய் உன்னுங்கால் அவை அபபேததரிசியை இப்பிறப்பில் நானாவகையாய்ச் சுழல்விக்கும். மரித்தபின் அவனுக்கு நானாவகையாய நரகங்களையடைவிககும். இந்திராதி தேவதைகளைத தன்னினும் பின்னமாய்க் காண்பானாயின், அவர்கள் அப்பேததரிசியை நானாவகைநரகதுக்கங்களையடையுமாறு செய்வர். இருக்காதிவேதங்களைத் தன்னிற் பின்னமாய்க் காண்பானாயின், அவை அவனைச் சூத்திராதி நீசயோனியை அடையுமாறுசெய்யும். அல்லது பிராஹ்மணாதி மூவர்ண சரீரத்தை யடையினும அவனை அவை, எஞ்ஞோபவீதாதி சமஸ்காரம் அறுமாறுசெய்யும், அல்லது பதிதனுக்கும், அலலது எஞ்ஞோபவீத சமஸ்காரமுறினும் அப்பேததரிசியை அவை வேதத்தின் பதவாக்கிய, சுவரங்களின்உச்சாரணஞ் செய்வதில் அசமர்த்தனுமாறுசெய்யும். அல்லது, அவ்வேதங்களை அத்தியயனஞ் செய்யினும், அவனை அவை வேதார்த்த ஞானமற்றவனுமாறுசெய்யும். அல்லது, வேதார்த்தங்களை யுணரினும் அவனை அவை வேதார்த்தங்களையும் வேதபாடங்களையும் விரைவிலேயே மறந்துவிடுமாறுசெய்யும். அல்லது, வேதார்த்தங்களின் ஸ்மரணமுண்டாயினும், அவனை அவை வேதவிகிதகர்மங்களைச் செய்வதின்கண் அருசியடையுமாறு செய்யும். இவைமுதலாக அப்பேததரிசிக்கு அவ்விருக்காதி

வேதங்கள் அநேகவிதத் துக்கங்களையடைவிக்கும். சம்பூரணதேகதாரி ஜீவர்களைப் பின்னமாய்க்காணுங்கால் அச்சீவர்கள் அபபேததரிசிக்கு இப்பிறப்பிலும் மறுபிறப்பிலும் அநேகவகைத்துக்கங்களை யடைவிப்பர். ஹே மைத்திரேயி! மிகவும் விஸ்தாரமாக யாதுகூறவேண்டும். ஆகாசாதி பஞ்சபூதங்களோடுகூடிய சம்பூரணஜட சேதனரூப ஜகத்தைத் தன்னிற்பின்னமாய்க் காண்பானாயின், அது அவனை அநேகதுக்கங்களையே யடையுமாறுசெய்யும். இகலோகத்தும் பரலோகத்துமுள்ள மனைவிமைந்தராதி பிரியபதார்த்தங்கள் இச்சீவர்கட்குக் கிடையாக்கால் அவற்றினடைவின்மையால் துக்கங்களையடைவர். தெய்வயோகத்தா லவைகிடைத்துவிடினும், நோய்முதலிய நிமித்தததால அந்தப்பிரியபதார்த்தங்களைப் போகிபபதில் ஆற்றலற்றவராவர். அல்லது அன்னியதேசத்தின்கண்ணே சென்றதால் அவற்றின் வியோகமாயினும், நாசமாயினும் பரமதுக்கத்தையடைவர். ஆகையால், இம்மனைவிமுதலிய பதார்த்தங்கள் தமது அபபிராப்திகாலத்தேயும் பிராப்திகாலத்தேயும் அஞ்ஞானிகட்குத் துக்கத்தையே கொடுக்கும். ஹே மைத்திரேயி! இவ்வண்ணம் சமபூரண ஸ்தாவரஜங்கமபதார்த்தங்கள அந்தபபேததரிசியாய அஞ்ஞானிகட்குத்துக்கத்தையே கொடுக்கும. இக்காரணத்தால் நீ அப்பதார்த்தங்களை நின்னினும்வேறாய் ஒருகாலும் காணவேண்டாம், மற்றேறு, இவ்வெல்லா உலகையும் நினதுவடிவமாகவே காணுதி. இவ்வாநந்தசொரூப ஆத்மா சஜாதீய, விஜாதீய சுவகதம் என்னும் மூன்றுபேதங்களு மறறதாம். சுயஞ்சோதிரூபமாம். ஜன்மாதிவிகாரங்களறறதாம் என்பதாய ஆத்மஞானமே யதார்த்தஞானமாம். இவ்வாநந்தசொரூப ஆன்மாவினும் வேறாயுள்ள அநான்மபதார்த்தங்களை விஷயஞ்செய்யும் ஞானஙகளியாவும் பிராநதிரூபமாம், ஆகையினால், ஹே மைத்திரேயி! பிராஹ்மணத்தன்மை, க்ஷத்திரியத்தன்மை, சுவர்ககாதிலோகம், இருககாதிவேதம், ஆகாசாதி பஞ்சபூதம் இவைமுதலாகிய ஜடசேதனரூப சம்பூரணஜகத்தானது ஆநந்தஸ்வரூப ஆன்மாவினும் பின்னமன்றாம்; மறறேறு, ஆன்மரூபமேயாம். இத்துணையால் சிரவணமுறை காண்பிக்கபபட்டது. இபபோது, மநநமுறை காண்பிக்கப்படும்:— ஹே மைத்திரேயி! ஜடசேதனரூபமாய்ப பிரசித்தமாயுள்ள இவ்வெல்லாவுலகும் ஆநந்தஸ்வரூப ஆன்மாவின்கண்ணேயிருககும, அதினின்றுநேயுண்டாகும், அதன்கண்ணே லயத்தையடையும். சர்வஜகததின் காரணமாய அஞ்ஞானமும், ஆன்மசாக்ஷாத்காரமுண்டாயின் அதன்கண்ணே லயத்தையடையும; ஆதலினாலிவ்வான்மா அத்விதீயரூபமாம். இததகைய அத்விதீய ஆன்மாவின்கண் மனத்தின் ஸ்திரத்தன்மையைச் செய்விக்குந திருட்டாந்தங்களைக் கூறுகின்றேன், நீ சாவதானமாய்க்கேட்டி. இப்போது பிரபஞ்சஸ்திதிகாலததின்கண் ஆன்மாவின் அத்விதீயரூபத்தன்மையைச சித்தஞ்செய்யுமபொருட்டுத் திருட்டாந்தம் நிரூபிக்கப்படும். ஹே மைத்திரேயி! இவ்வுலகின்கண்ணே தாமஸ, ராஜஸ, ஸாத்விகமென்னும் மூவகைப்பதார்த்தங்களுள. அவையாவும் தமது ஸ்திதிகாலத்தே இவ்வாநந்தஸ்வரூபவான்மாவினும் வேறன்றாம. இப்பொருளில் நினக்குச் சம்பாவனையுண்டாம் பொருட்டு யான் பேரி, சங்கம், வீணையென்னும் மூன்றுதிருட்டாந்தங்களைக் கூறுகின்றேன்; நீ சாவதானமாய்க் கேட்டி. ஹே மைத்திரேயி! இவ்வுலகிற் பிரசித்த

மாய பேரி, சங்கம், வீணையென்னும் மூவகைவாத்தியங்கள், தண்டம், வாயின் வாயு முதலிய நிமித்தத்தால் குரூர,மத்தியம்,மஞ்ஜுலமென்னும் மூவகைச்சப்தங் களைச்செய்யும. வீரரஸத்தையுணர்த்தும்பேரிமுதலியவற்றின் சப்தம் குரூரமாம். பயாநகரஸத்தையுணர்த்தும் பேரிமுதலியவற்றின் சப்தம் மத்தியமமாம. சிருங் காரரஸத்தையுணர்த்தும் பேரிமுதலியவற்றின் சப்தம மஞ்ஜுலமாம். இம்மூவகை யாய சப்தமும மேறகீழ்ப்பேதத்தால் அநேகவகையாம், ஹே மைத்திரேயீ! பேரிமுதலிய மூன்றின் விசேஷசப்தம முறையாய்ப பேரிசசததத்தன்மை, சங்கச சப்தத்தன்மை, வீணாசபததனமை யென்னும முததர்மங்க ளுடையனவாதலின் மூவகைத்தாம். அம்முத்தர்மங்களும் முறையாய்க குரூரபேரிசசத்தத்தன்மை மத் தியமபேரிச சத்தத்தன்மை, மஞ்ஜுலபேரிச சத்ததன்மை, குரூரசங்கசசத்தத் தன்மை, மததியமசங்கசசத்தத்தன்மை, மஞ்ஜுலசங்கச சததத்தன்மை, குரூரவீ ணாசத்தத்தன்மை, மத்தியமவீணா சததத்தன்மை, மஞ்ஜுலவீணா சத்தத்தன்மை யென்னுந்தர்மங்களைக்குறித்துச சாமானியதருமங்களாம; ஆயினும்சர்வசபதங்களி லிராநின்ற சத்ததன்மைவடிவ சாமானியதருமததைககுறிதது்ப பேரிசசத்தத்த ன்மை, சங்கசசத்ததன்மை, வீணாசத்தத்தன்மையென்னும மூன்றுமவிசேஷதரு மங்களாம். பேரிச்சத்தத்தன்மை முதலிய மூன்றுவிசேஷதர்மங்களின் ஞானம்சத்த த்தன்மைவடிவசாமானிய தருமஞானததானன்றி யுண்டாகமாட்டாது; மற்றோ, அஃதுண்டாகியே அவையுண்டாம். ஈண்டதிகதேயத்தின்கண்ணே இராநின்றதரு மம் சாமானியமாம; அற்பதேயத்தின்கண்ணேயிருககும் தருமம்விசேஷமாம். ஆண் டுபேரிச்சப்த முதலியமூன்றன்கண் சபதத்தன்மையிருககும. பேரிசசபததன் மை கேவலம் பேரிசசத்தத்தின்கண்ணே இருக்கும், சங்கவீணைச சப்தங்களிலிரா தாம், அங்ஙனமேசங்கசசத்தத்தன்மையும் வீணைசசபதத்தன்மையும் கேவலம் சங் கவீணைச சத்தங்களில முறையேயிருக்குமன்றி மாறுயிராவாம. ஆகையால சபதத் தன்மைச சாமானியமிருக்குந் தேயததைக்குறித்துப் பேரிச்சபதத்தன்மைமுதலிய முத்தாமங்களும குறைநததேயத்தேயிருக்கும. இககாரணததால அம்முத்தரு மங்களும் சப்தத்தன்மை ரூபசசாமானிய தருமத்தைக்குறிதது விசேஷதருமங்க ளாம், இவ்வண்ணம் குரூரமத்தியம மஞ்ஜுலப பேரிசசப்தங்களில் பேரிசசப்தத் தன்மைரூபச சாமானிய தருமமதொடர்ந்து நிறகும். குரூரமததியம மஞ்ஜுலப் பேரிச சத்தத்தன்மைகள் கேவலம் தத்தஞ் சததங்களிலிருக்குமேயன்றி மாறி யொருகாலுமிராவாம். ஆகையால், பேரிச்சபததன்மைரூபச சாமானியதரும அதி காணத்தைக்குறிததுக் குரூரபேரிச சபததன்மைமுதலிய முத்தருமங்கள் குறை ந்ததேயத்தின்கண்ணேயிருக்குமாதலின் பேரிச்சபதத்தன்மைரூபசசாமானியதரு மத்தைக்குறித்துக் குரூரபேரிசசப்தத்தன்மை முதலிய முத்தருமங்கள் விசேஷ தருமங்களாம. இவ்வகை முறையைசசங்கசபதத்தின்கண்ணும் வீணைச்சப்தத்தின் கண்ணும அறிந்துகொள்க. ஆகையால் இபபொருள் துணியப்பெறும்:—சப்தத் தன்மைச சாமானிய தர்மஞானத்தானன்றிப் பேரிசசப்தத்தன்மைமுதலிய விசே ஷதர்மங்களின் ஞானமுண்டாகமாட்டாது. அதுபோல இச்சுவயஞ்ஜோதியான்மா வின் அஸ்திபாதிப் பிரியம் என்னும் சாமானிய தருமங்களின் ஞானமின்றி இவ் வுலகின்கண்ணே எவ்விசேஷ பதார்த்தஞானமுமுண்டாகாதாம்; மற்றோ, அதன்

பின்னரேயலிதுண்டாம். இப்போது அஸ்திபாதிப் பிரியரூப ஆன்மாவின்கண்ணே சாமானியரூபத்தன்மையை வெளிபபடுத்தும்பொருட்டு முதலில் யாண்டும் ஆன்மாவின் அனுகதத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே மைத்திரேயீ! இவ்வுலகின்கண்ணே அபரோக்ஷரூபமாய்க் கவரப்படுவனவும், பரோக்ஷரூபமாய்க் கவரப்படுவனவும் சத்தியரூபமாய்க் கவரப்படுவனவும், அசத்தியரூபமாய்க் கவரப்படுவனவும், அகம்வடிவமாய்க் கவரப்படுவனவும, மமவடிவமாய்க் கவரப்படுவனவும், ஆகிய யாவும சேதன ஆன்மாவினும் வேறன்றும. மற்றோ, அவையாவும் சேதன ஆன்மரூபமேயாம். கருத்திதுவாம:–இரஜ்ஜுரூப அதிஷ்டானத்தின்கண்ணே தோற்றுநின்ற சர்ப்பம் தண்டம் மாலை ஜலதாரை முதலிய கற்பித பதார்த்தங்கள் அவ்வதிஷ்டானத்தினும் வேறன்றும், மறறோ, அந்த இரஜ்ஜுரூப அதிஷ்டானமே அஞ்ஞானவசத்தால் சர்பபாதி அநேகரூபங்களாய் ஸ்திதமாம். அதுபோல இவ்வாநநதவடிவ ஆன்மாவின்கண்ணே தோறறுநின்ற ஆகாசாதிப பிரபஞ்சம் அதிஷ்டான ஆன்மாவினும் வேறன்றும்; மற்றோ, அதிஷ்டான ஆன்மாவே அஞ்ஞானவயத்தால் ஆகாசாதி ஜகத்துருவமாய் ஸ்திதமாகுமாதலின் அஸ்திபாதிப் பிரியரூப சாமானிய தருமங்களைககுறித்து ஆகாசாதி பதார்த்தங்கள் ஆன்மாவின் விசேஷதருமங்களாம், இதன் ஞானம் அதன் ஞானததானேயுண்டாம. ஹே மைததிரேயீ! சேதன ஆன்மாவின் விசேஷரூபம அநந்தவகையாமாயினும் சுருக்கமாக அஃதிருவகையாம. அவை நீ யென்னும் சப்தார்த்தமும் நானென்னுஞ் சப்தார்த்தமும ஆம. இதுமுதலிய சபதங்கள்கூறும் பதார்த்தங்கள் முதலவாம. யான் எனது இதுவல்ல என்பனவாதி சபதங்கள் கூறும பதார்த்தங்கள் இறுதியவாம். ஹே மைததிரேயீ! அந்தக்கரணாதி சங்காத விசிஷ்டசேதனம் யானென்னும் சப்தத்தின் வாச்சியபபொருளாம. பாகிய கடாதிபதார்த்த விசிஷ்ட சேதனம் நீ யென்னுஞ சபதத்தின் வாச்சியபபொருளாம். இருபொருட்கும் பாஸ்பர பேதமிருபபினும் இருசபதங்கட்கும் பாகத்தியாக இலக்கணையால் தோற்றுநின்ற சேதனமாத்திரரூப இலக்கியபபொருள் ஒன்றேயாம். ஆகையால், நீயெனுஞ் சபதமும் நானெனுஞ் சப்தமும ஒருபொருளையே கூறுகின்றது. இபபோதிப்பொருளையே வெளிப்படையாக்கும்பொருட்டு முதலில் நீ யென்னுஞ் சபதார்த்தத்தின்கண் நானென்னும சபதார்தத ரூபத்தன்மை நிரூபிக்கப்படும:—ஹே மைத்திரேயீ! யானென்னுஞ சபதத்தின் அர்ததரூப அந்தர ஆன்மாவினும் வேறாகப பாகிய சங்கம் முதலிய ஜடபதார்த்தமும் புருஷன் முதலிய சேதனபதாரத்தமும் என்னுமியாவும் நீ யென்னுஞ் சபதாரத்தரூபமாம; ஆனால் அசசங்கம முதலிய ஜடபதார்ததஙகள் சேதன புருஷரின் வாக்காதி இந்திரியங்களோடு சமபந்தத்தையடையுங்கால் அவை நானுவகைச் சப்தங்களைச் செய்வதாய்ச சேதனவியவகாரயோக்கியமாம், சேதன புருஷரின் சரீரத்தோடு தாதாத்மிய அபிமானத்தையடைந்த அவை யான் என்னும் சபதார்த்தரூபதம் ஆன்மாவை நீ என்னும் சப்தார்த்தரூப பாகியபதார்த்தத்தினும பின்னமாய் எண்ணும. இவ்வண்ணம் நீ என்னும் சப்தார்ததரூபத்தாற பிரசித்தமாய புருஷாதி சேதனபதார்த்தமும் நான் என்னும் சப்தார்த்தரூப தன் ஆன்மாவை நீ என்னும சப்தார்த்தரூப

அன்னியபதார்த்தத்தினும் பின்னமாயெண்ணுமாதலின் நீ என்னும் சப்தார்த்தரூப சங்காதி ஜடபதார்த்தத்திடத்தும் புருஷாதி சேதனபதார்த்தத்திடத்தும் யான் என்னும் சப்தார்த்தரூபத்தன்மை சம்பவித்தல்கூடும்.

சங்கை :—ஹே பகவன்! சங்கம்முதலிய ஜடபதார்த்தங்கட்குச் சேதனபுருஷரோடு தாதாத்மிய சம்பந்தம் எங்ஙனம் சம்பவிக்கும்?

சமாதானம் :—ஹே மைத்திரேயீ! இவ்வுலகின்கண்ணே எப்பதார்த்தத்தைச்சேதனபுருஷன் தன்ஆன்மாவெனக் கவரானே அத்தகையதொன்றின்றும்; மற்றேறு, சம்பூரண ஜடபதார்த்தங்களைத் தனது ஆன்மரூபமாகவே கவர்ந்துளான். சர்வபதார்த்தங்கட்கும் மூலகாரணமாய அவித்தையைப் பரமான்மா, தனது சரீரவடிவமாய்க் கவர்ந்துளது. அவ்வவித்தையின் காரியமாய சமஷ்டி சூக்ஷ்மப் பிரபஞ்சத்தை ஹிரண்யகர்ப்ப பகவான் தமது சரீரரூபமாய்க் கவர்ந்துளார். அவ்வவித்தையின்காரியமாய சமஷ்டி ஸ்தூலப்பிரபஞ்சத்தை விராட்பகவான் தமதுசரீரரூபமாய்க் கவர்ந்துளார். வியஷ்டிரூபமாய்ப பிரசித்த ஜடபதார்த்தங்களை மனுஷ்யாதி சேதன புருஷர் தமது சரீரரூபமாய் அங்கீகரித்துளார். இம்முறையே சம்பூரண ஜடபதார்த்தங்களும் சேதனத்தையே பற்றியிருக்குமாதலின் இப்பொருள் துணியப்பெறும் :—இவ்வுலகின்கண்ணே நியமமாய் எப்பதார்த்தத்தின்கண்ணும் நீ என்னும் சப்தார்த்தத்தன்மையும நான் என்னும் சப்தார்த்தத்தன்மையுமின்றும். மற்றேறு, ஒன்று மற்றொன்றைக்குறித்தே இசசடசேதன பதார்த்தங்களிடத்தே நீ, நான் என்னும் சபதார்த்தரூபத்தன்மையுளது. தனது ஆன்மரூபமாய் அங்கீகரித்த பதார்த்தத்தே நான் என்னும் சபதார்த்தரூபத்தன்மையுளது, தன்னான்மாவினும் வேறாகவுடன்பட்ட பதார்த்தங்களிடத்தே நீ யென்னும் சப்தார்த்தரூபத்தன்மையுளது தேவதத்தனைக் குறித்து யஞ்ஞதத்தனிடத்தும், யஞ்ஞதத்தனைக்குறித்துத் தேவதத்தனிடத்தும் நீயென்னுஞ சப்தார்த்தத்தன்மையிருப்பதேபோலும். ஹே மைத்திரேயீ! மனோவாக்குகட்கு அவிஷயரூபமாய இவ்வாநந்தஸ்வரூப ஆன்மா, தனது அஸ்திபாதிப்பிரியரூபத்தால் சர்வ அநாத்மபதார்த்தங்கட் கதிஷ்டானரூபமாம. இக்காரணத்தால் இது எசசப்தத்தின் வாச்சியார்த்தமுமன்றும்; மற்றேறு இலக்கியார்த்தமாமாதலின் சேதன ஆன்மரூப இலக்கியார்த்தத்தைக் கவர்ந்து நீ, யான், என்னுஞ் சப்தங்கள் ஒரே பொருளை யுணர்த்தும். இவ்வண்ணம் அவ்விருசப்தங்கட்கும் பாகத்தியாக இலக்கணையால் ஒரு சேதன ஆன்மரூப அர்த்தம் சித்திக்குங்கால்; அசசப்தார்த்தத்தின் வியாப்பியரூப அர்த்தத்தையுணர்த்தும் இது முதலிய சப்தங்கட்கும் இலக்கணை விருத்தியால் ஒரு சேதன ஆன்மாவே அருத்தமெனச் சித்தமாம். இது தனது அஸ்திபாதிப் பிரியரூபத்தாற் சர்வ பதார்த்தங்களிடத்தும் விளங்குவதாம். சூரியாதிஜோதிகட்கும் ஜோதிரூபமாம். இத்தகைய ஆநந்தவடிவ ஆன்மாவின்கண் இவ்வாகாசாதி விசேஷபதார்த்தத்தை அஞ்ஞானிகளாரோபிக்கின்றனர். ஹே மைத்திரேயீ! இது கூறியதாவிது துணியப்பெறும் :—சப்தத்தன்மைரூபச் சாமானிய தருமஞானமுண்டானபின்னரே பேரிச்சப்தத்தன்மை முதலிய விசேஷதருமங்களின் ஞானமுண்டாம். பேரிச்சப்தத்தன்மைமுதலிய சாமானிய தருமங்களின்

ஞானமுண்டானபின்னரே, குரூரா பேரிச்சப்தத்தன்மை முதலிய விசேஷ தருமங்களின் ஞானமுண்டாம். அதுபோல அஸ்திபாதிப பிரியரூப ஆன்மாவின் விளக்கமான பின்னரே நான் நீ முதலிய விசேஷவியவகாரஞ் சித்தமாம். ஆநந்தஸ்வரூப ஆன்மாவின் விளக்கமின்றி எவ்விவகாரமும் சித்தமாகமாட்டாது. ஆதலின் தனது திதிகாலத்தே இச்சம்பூரண ஜடசேதனரூப ஜகத்தானது அத்விதீய ஆன்மரூபமேயாம். ஹே மைத்திரேயீ ! இவ்வத்விதீய ஆன்மாவைத்தான் முன்னர் யான் பிரியதமரூபமாய் நின்பொருட்டுக் கூறினேன். இத்துணைக் கிரந்தத்தால் ஜகத்தின் ஸ்திதி காலத்தே ஆன்மாவின் அத்விதீயரூபத்தன்மை சித்தஞ்செய்யப்பட்டது. இப்போது, ஜகத்தின் உற்பத்தியின் முன்னரும் ஆன்மாவின் அத்விதீயரூபத்தன்மை சித்தஞ்செய்யப்படும் :— ஹே மைத்திரேயீ ! ஜகத்தின் ஸ்திதி காலத்தே இவ்வானந்த ஸ்வரூப ஆன்மா, சாவபேதமற்ற அத்விதீயரூபமாவதேபோல உற்பத்திகாலத்தின்கண்ணும் அத்விதீயரூபமேயாம். இப்பொருளின்கண்ணும் நீ திருஷ்டாந்தத்தைக் கேட்பாயாக :— பொரி முதலிய காரியோற்பத்தியின் முன்னர் சர்வபேதமற்ற ஒங்கியெரியும அக்கினியினின்றும் அக்கினியின் சமானவியற்கையையுடைய விஸ்புலிங்க அங்காரவடிவகாரியமுண்டாம். அதுபோலப் பிரபஞ்சரூபகாரிய உற்பத்தியின்முன்னர்ச சர்வபேதமற்ற அத்விதீய ஆநந்தஸ்வரூப ஆன்மாவினின்றும் இந்த ஜடசேதனரூப சம்பூரணஜகத்துண்டாம. ஹே மைத்திரேயீ ! அந்தப்பரமான்மாவினின்றும ஹிரண்யகர்ப்பவாயிலாய் இத்தூல ஜகத்தின் உற்பத்தியுண்டாய வகையை அநேகஞ்சுருதி ஸ்மிருதிகள கூறியிருக்கின்றன. “ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதா பூர்வமகல்பயத்” அமமாயா விசிஷ்டபரமான்மா ஜகத்தின் உற்பத்திகாலததே சூரியசந்திரன்முதலாகச்சம்பூரணஜகத்தையும் பூர்வகற்பத்தேபோலச செய்தது என்பது சுருதியாம்.

“ஸர்வேஷாம் து ஸ நாமானி கர்மாணி ச ப்ருதக் ப்ருதக் ।
வேதஶப்தேப்ய ஏவாதௌ ப்ருதக் ஸம்ஸ்தாஶ்ச நிர்மமே” ॥

“ உலகுதய காலமதி லுள்ளபர மான்மா
விலகுகக ஞுதிகளின் வேற்றுமையை யுற்றே
யிலகுபெய ரோருேவ மெண்வினைக டம்மை
நிலவுமறை யோசைதனி னின்றுசெயு மன்றே.”

(பொ-ள்.) ஜகத்தின் உற்பத்திகாலத்தே அந்தப்பரமான்மா ஆகாசாதி பதார்த்தங்களின் பின்னபின்னநாமங்களையும், பின்னபின்னரூபங்களையும், பின்ன பின்னகருமங்களையும் வேதசப்தங்களினின்று முண்டாக்கினர். கருத்திதுவாம் :— பூவென்னும் வேதசப்தத்தை யுசசரித்து அபபரமான்மாப் பிருதிவியையுண்டாக்கியது, ஆகாசமென்னும் வேதசபதததை யுசசரித்து ஆகாசத்தை யுண்டாக்கியது. இங்ஙனம் எல்லாவுலகையு முண்டாக்கியது. ஹே மைத்திரேயீ ! இதுமுதலாய அநேகசுருதி ஸ்மிருதிவசனங்களால் இவ்வாகாசாதி ஜகத்தின் உற்பத்தியை நீ சுயமாகவே யறிந்துகொள்ளலாமாதலின் அதைக்கூற லிப்போதாவசியமன்றும்; ஆனால், இருக்குவேதாதி சப்தப்பிரபஞ்சத்தி னுற்பத்தியை நீ சுயமாயறிந்து

கொள்ளமாட்டாயாதலின், அஃதான்மாவினிடத்தினின்றும் உண்டானவிதத்தை நீ கேட்பாயாக. ஹே மைத்திரேயீ! இவ்வுலகின்கண்ணே காய்ந்த விறகோடும், ஈரவிறகோடும், கூடியபோழுதினின்றும் விலக்ஷணதூமத்தி னுற்பத்தியுண்டாம். அதுபோல இச்சர்வஞ்ஞ பரமான்மாவினின்றும் இவ்விலக்ஷண சப்தரூபவேதம் உண்டாம்.

சங்கை :—ஹே பகவன்! இருக்காதி வேதங்கள் ஈஸ்வரனிடத்தினின்றும உண்டாவனவெனவுடன்படின்றோ அவ்வேதசப்தங்கள்லெளகிகசப்தங்களைப்போலப பெளருஷேயசப்தங்களாம், சாஸ்திரத்தின்கண்ணோ அவை அபெளருஷேயங்க ளெனக்கூறப்பட்டுள்ளனவாதலின் அதனோடு முரணுமன்றோ?

சமாதானம் :—ஹே மைத்திரேயீ! எச்சப்தத்தை யுச்சாரணஞ் செய்தபின் னர் அச்சப்தார்த்த நிச்சயம்செய்யும்பொருட்டுப் பிரத்தியக்ஷ அநுமானுதிப்பிர மாணங்களின் அபேக்ஷையாமோ அது அவ்வர்த்தவிசாரவாயிலாயே உற்பன்ன மாகும்; அர்த்தவிசாரமின்றி அஃதுண்டாகாதாம். இப்போதுள்ளாரின்சப்தம் அர் த்தவிசாரபூர்வகமாயே உற்பன்னமாம். இவ்வேதரூபசப்தம் பரமான்மாவினின்று முண்டாம். அர்த்தவிசாரவாயிலாயுண்டாகாது. மற்றோ, முயல்வின்றியே புருஷரி டத்திருந்து சுவாசம் உற்பன்னமாவதேபோலப் பிரயத்தனமின்றியே அப்பரமான் மாவிடத்திருந்து வேதரூபசப்த முண்டாம். ஆகையால், இப்பொருள் துணியப் பெறும் :—புருடனுலுச்சரிக்கப்பட்டவசனம் பெளருஷேயமன்றும். மற்றோ, இவன்றன்மனத்தே பொருளைவிசாரித்து உச்சரிக்கும் வசனம் பெளருஷேயமாம். இத்தகைய பெளருஷேயத்தன்மை வேதவசனத்தின்றுமாதலின் அஃதபெளரு ஷேயமாம்.

சங்கை :—ஹே பகவன்! பொருளை விசாரியாமலே உச்சரித்தவசனம் அபெளருஷேயமாகுமாயின் இக்கால் இலெளகிகர் அர்த்தவிசாரமின்றியே உசசரி த்தவசனமும் வேதவசனம்போல அபெளருஷேயமாகவேண்டும்.

சமாதானம் :—ஹே மைத்திரேயீ! இச்சீவன் பிரமப்பிரமாதாதி தோஷத் தோடு கூடியவனுதலின் அர்த்தவிசாரமின்றி எவ்வெவ்வசனத்தை யுச்சரிப்பனோ அது உன்மத்தன்வசனம்போலத் தன்னர்த்தத்தினின்றும் வியபிசாரியேயாகும். ஈண்டெவ்வசனத்தின்பொருட்குப் பிரத்தியக்ஷாதிப பிரமாணங்களாற் பாதமுண் டாமோ அது தன்னர்த்தத்தினின்றும் வியபிசாரியாம். ஒருவன் அக்கினி சீதள மெனக் கூறுவானுயின் அவ்வசனர்த்தரூப அக்கினியிற் சீதளத்தன்மை பிரத்தி யக்ஷப் பிரமாணத்தாற் பாதிதமாமாதலின் அக்கினி சீதளமென்னும் வசனம் தன்னர்த்தத்தினின்றும் வியபிசாரியாம. ஹே மைத்திரேயீ! இம்மனுடலோகக் கதையென்னே! ஒருகாலிவன் பிரஹ்மலோகத்தின்கண்ணிருந்துகொண்டே னும் அர்த்தவிசாரமின்றியே உச்சரிக்கின் அவ்வசனமும் உன்மத்தனதேபோலத் தன்னர்த்தத்தினின்றும் வியபிசாரியேயாம். சர்வஞ்ஞப்பரமான்மாப் பிரமப்பிர மாதாதி தோஷமற்றதாதலின் அது அர்த்தவிசாரமின்றியே உச்சரித்த வேதவச னம் தன்னர்த்தத்தினின்றும் வியபிசாரியாகாது. ஆகையால் இப்பொருள்துணியப்

பெறும் :—வேதவசனங்கட்குத்தமதர்த்தசித்தியின்பொருட்டுப் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களின் அபேக்ஷையின்றும், தமதர்த்தத்தினின்றும் வியபிசாரமுமின்றும். ஆகையால்அவ்வேதவசனம்பிரத்தியக்ஷாதிச்சர்வப்பிரமாணங்களுள்ளும் அரசனும். இப்போது வேதவசனத்தேபிரமாணத்தன்மைச் சித்தியின்பொருட்டு முதலில் மீமாம்சாசாஸ்திரமுறையே லெளகிக சப்தத்தின்கண்ணும் சாமானியமாய்ப் பிரமாணத்தன்மையை நிரூபிப்பாம் :—ஹே மைத்திரேயி! இவ்வுலகத்தே பொய் கூறும் அனுப்தனுனவன் நெறியிற்செல்லும் பதிகனைநோக்கி "இந்நதியின் கரையில் உனக்குப்புசிக்க யோக்கியமாய நானுவகைப்பலமிருக்கின்றது" எனக்கூறின் அவ்வசனம் அக்கால் கேட்பவனுக்கு நதிதீரத்தே பலஸ்திதிரூபஅர்த்தத்தையுணர்த்துமாதலின் அவ்வசனமும் சாமானியமாய்ப் பிரமாணரூபமேயாம். கருத்திதுவாம்:—நதிதீரத்தே பலஸ்திதிரூப அர்த்தம அக்கால் நேத்திராதி இந்திரியங்களால் காணப்படுவதன்றுமாதலின், அப்பொருளிற் காட்சியோ இன்றும். அக்காற் சப்தத்தால் அதன்போதமுண்டாம். ஆகையால், அதன்கண்ணே சப்தத்திற்கே பிரமாணததன்மையுளதாம். இதுபற்றியே மீமாம்சைநூலுடையார் இவ்வகைப்பிரமாண அப்பிரமாணவியவஸ்தை செய்கின்றார் :—ஒரு பொருளையுணர்த்துவது பிரமாணமாம். ஒருபொருளையுமுணர்த்தாதது அப்பிரமாணமாம். அப்பொருளுணர்த்துந் தன்மை அவ்வசனத்தின்கண் ஊறுமுளதாதலின் அதுவும் சாமானியமாய்ப் பிரமாணரூபமேயாம்; அல்லது நையாயிகவாதியானவர்பொருட்போதகத்தன்மை வடிவத்தால் பிரமாணங்களிற் பிரமாணரூபத்தன்மை யங்கீகரிப்பதின்றும். அவர்மதத்தே அது எதனுற் சித்தமாமெனின், அவர்கூற்றிதுவாம் :—அர்த்தபோதகத்தன்மை வடிவத்தால் அதுசித்தியாதாம். மற்றேு, எப்பிரமாணஜன்னியஞானத்தாற் சமர்த்தப் பிரவிருத்தியாமோ அவ்வேதுவால அப் பிரமாணத்தின்கண்ணும் அதனுலுண்டாய ஞானத்தின்கண்ணும் பிரமாண ரூபத்தன்மையினனுமானமுண்டாம். முன்னறியாத்தலத்தே ஜலத்தைநோக்கி அதனைக்கொணரச்சென்று ஆண்டுஜலங் கிடைக்குமாயின் இவ்வாறனுமானஞ்செய்வன் :—முன்னரெனக்குண்டாய ஜலஞானம, பிரமைவடிவமாம், எனது சமர்த்தப்பிரவிருத்தி ஜனகமாதலின், இவ்வாறு கூறும் நையாயிகர்பாலிதுகேட்கவேண்டும :—எச்சமர்த்தப்பிரவிருத்திரூப ஏதுவால் ஞானப்பிரமாணத்தன்மையின் அனுமானமாமோ அதன்கண்ணே சமர்த்தத் தன்மையென்பது யாதாம்? ஞானத்திற்கு விஷயமாயபதார்த்தமே பிரவிருத்தியின் விஷயமாமென்னுஞ் சமானவிஷயத்தன்மையே சமர்த்தத்தன்மையா? அல்லது பலஜனகத்தன்மையே அதுவா? அவற்றுள் முதற்பக்ஷத்தையங்கீகரிக்கினே அது சம்பவியாது; ஏனெனின், இவ்வுலகின்கண்ணே சேதனர்கட்குண்டாம் பிரவிருத்தியெல்லாம் இஃதெனதுசுகசாதனம்என்னும்இஷ்டசாதனத்தன்மைஞானத்தானன்றி யுண்டாகாது; மற்றேு, அதன்பின்னரே யஃதுண்டாமாதலின், அந்தப்பிரவிருத்திக்கும் அதன் சமர்த்தத்தன்மைக்கும் அந்த ஞானத்தின் அவசிய அபேக்ஷையுண்டாம். அஃதின்றி அந்தப்பிரவிருத்தியின்கண்ணே சமர்த்தத்தன்மை சம்பவியாதாமாதலின்; அச்சமர்த்தப் பிரவிருத்தியினுல் கேவலம் ஞானமாத்திரத்தின் அனுமானமுண்டாமன்றி அதன் பிரமாணத்தன்மையின் அனுமானஞ்

சம்பவியாது. இரண்டாவதுபக்ஷத்தை யங்கீகரிக்கினே அதுவுஞ் சம்பவியாது, ஏனெனின், சுகதுக்கமிரண்டற்கும் பலமெனப்பெயராம். அதன் சித்தியின்கண்ணே உபயோகியாய ஞானமாத்திரத்தையே அந்தப் பிரவிருத்தியபேக்ஷிக்குமன்றிப் பிரமாணஞானத்தை யபேக்ஷியாதாம். அச்சுகதுக்கரூபபலஜனகத்தன்மை வடிவ சமர்த்தத்தன்மை அனுப்தனது வசனத்தாலுண்டாய பிரவிருத்தியின்கண்ணுமுளது ; ஏனெனின், நதிதீரத்தே பலம் உளதென்னும் அவ்வனுப்தன் வசனத்தைக்கேட்டு முயன்றபதிகனுக்கு நதிதீரதரிசனத்தால் சுகதுக்கரூப பலப்பிராப்தி யவசியமுண்டாம்.

சங்கை :—ஹே பகவன் ! அந்நதிதீரத்தே பலப்பிராப்தியால் அப்பதிகனுக்குச் சுகரூப பலப்பிராப்தி சம்பவிக்குமாயினும் அவனுக்குத் துக்கரூப பலப்பிராப்தியோ சம்பவியாதாம்.

சமாதானம் :—ஹே மைத்திரேயீ ! இகலோகத்தும், பரலோகத்தும், துக்கமற்றுக்கேவலம் சுகத்தையே பயக்கத்தக்க ஒருபிரவிருத்தியைக் கண்டிலேம் ; மற்றோ, எப்பிரவிருத்தியும் சுகதுக்கமிரண்டையு முண்டாக்கும். உண்மையாய் விசாரித்துநோக்கினே பிரவிருத்தியாவும் கேவலம் துக்கத்திற்கே காரணமாம். அதன்கண்ணே சுகசாதனத்தன்மைப் புந்தியோ கேவலம் மயலானேயாம். ஹே மைத்திரேயீ ! இவ்வுலகரின் பிரவிருத்தி துக்கமற்ற கேவலசுகத்தை யுண்டாக்காது என்னுமிவ்வர்த்தத்தே நையாயிகரது சித்தாந்தமும் அனுகூலமாம். ஏனெனின், அவர் துக்கமற்ற கேவலசுகத்தை எப்பதார்த்தத்தின்கண்ணும் அங்கீகரிப்பதின்றாம். இக்காரணத்தானே அவர் அந்நியமதத்தைக் காக்கும்பொருட்டுச் சுருதிப்பிரசித்த பரமானந்தரூப மோக்ஷத்தின்கண்ணும ஆநந்தரூபத்தன்மையை யங்கீகரித்திலர் ; மறறோ, துக்காபாவத்தின்கண்ணே மோக்ஷரூபத்தன்மையை யங்கீகரித்துளாராதலின் பிரவிருத்தியானது கேவலம் சுககாரணமேயாம் என நீ கூறல் சம்பவியாது. ஆகையாலிப்பொருள் துணியப்பெறும் :—பிரமாணங்களிடத்தேயுள்ள அர்த்தபோதகத்தன்மையே அவற்றின்கண்ணே பிரமாணரூபத்தன்மையைச சித்தஞ்செய்யும. அவ்வர்த்தபோதகத்தன்மை சப்தப்பிரமாணத்தின்கண்ணிருப்பதேபோலப் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களிடத்தே யின்றாமாதலின் நதிதீரத்தின்கண்ணே பலமுளதென்னும் அனுப்தனது வசனமும் அர்த்தபோதகமாதலின் பிரமாணரூபமேயாம்.

சங்கை :—ஹே பகவன் ! நதிதீரத்தின்கண்ணே பலம் என்னும் வசனத்தே பிரமாணரூபத்தன்மை சம்பவியாது. ஏனெனின், நதிதீரத்தேபலமின்றாம் என்னும் நிஷேதவசனத்தால் அவ்வசனப் பிரமாணத்தன்மை பாதிக்கப்படும்.

சமாதானம் :—ஹே மைத்திரேயீ ! அந்நிஷேதவசனத்தால் அவ்வசனப்பிரமாணரூபத்தன்மை பாதிக்கப்படுவதாயினும், அந்நிஷேதவசனம் பிரவிருத்தியாதவரை அவ்வசனப் பிரமாணரூபத்தன்மையின் நிவிருத்தியுண்டாகாது. மற்றோ, அதன்பின்னரே அதன்நிவிருத்தியாம். (இக்காரணத்தானே ஸ்ரீபகவான் பாடியக்காரர் ஆன்மசாக்ஷாத்காரம் வரையுமே சம்பூர்ண லௌகிக வைதிகப் பிரமாணங்

களிடத்தும் த பிரமாணத்தன்மை யங்கீகரித்துளார்) ஆதலின் சர்வமிருகங்களுள்ளும் சிங்கம் பலவானாயிருப்பதேபோலத் தன்சம்பந்தத்தால் சர்வபதார்த்தங்களின் அபாவத்தை யுணர்த்திவைக்கும் நகாரமானது சம்பூரண ககாராதி வருணங்களுட்பலவானாம்.

சங்கை :—ஹே பகவன்! நகாரத்தோடுகூடிய இரண்டு நிஷேதவசனங்களிருக்குமிடத்தே பரஸ்பரம் பிரதிபந்தகத்தன்மையால் எப்பொருளின் சித்தியும் உண்டாகலாகாது.

சமாதானம் :—ஹே மைத்திரேயி! ஒரே பதார்த்தத்தின்கண்ணே இரண்டு நிஷேதவசனங்களின் பிராப்தியுண்டாயின் ஆண்டொருபொருளை நிச்சயப்படுத்தும்பொருட்டு வேறொரு மூன்றாவது பிரமாணத்தை யவசியமங்கீகரிக்கவேண்டும். ஆனால் அம்மூன்றாவது பிரமாணமும் தன்னர்த்தத்தைப் பாதஞ்செய்யுநான்காவது பிரமாணமின்றாயின் அவ்வர்த்தத்தைச் சித்திசெய்யும். அல்லது அவ்விரண்டு நிஷேத வசனங்களுள்ளும் ஒன்று லௌகிகமும், மற்றொன்று வைதிகமுமாயின் ஒருவசனார்த்த நிச்சயப்பொருட்டு மூன்றாவதுபிரமாணாபேக்ஷையுண்டாகாது; மற்றோ, பிரமப்பிரமாதாதி தோஷங்களின் சங்கைகளோடுகூடிய லௌகிகநிஷேத வசனம் துர்ப்பலமாகும். அச்சங்கையற்ற வைதிக நிஷேதவசனம் பலவானாம். அத்தகைய வைதிகப்பிரமாணத்தால் துர்ப்பல லௌகிகப்பிரமாணம் பாதமாய் விடும். அல்லது நதிதீரத்தே பலங்களினிருப்பை யுணர்த்தும் நதிதீரத்தே பலமிருக்கின்றதென்னும் இலௌகிகவசனமும், ஆண்டதனபாவத்தையுணர்த்தும் நதிதீரத்தே பலமில்லையென்னும் இலௌகிக நிஷேதவசனமும் பரஸ்பரம் விரோதியாவதேபோலப் பரலோகமில்லையென்னும் இலௌகிக நிஷேதவசனமும், பரலோகமிருக்கின்றதென்னும் வைதிகவசனமும் பரஸ்பரம் விரோதியாம். இன்றென்னும் வசனம் நிஷேதவசனமாதலிற் பிரபலமாயினும் அதன்கண்ணே பிரமப்பிரமாதாதி தோஷங்களின் சம்பாவனையுண்டாமாதலின் துர்ப்பலமாம், இருக்கின்றதென்னும் வைதிகவசனத்தின்கண்ணே பிரமப்பிரமாதாதி தோஷசம்பாவனையின்றாமாதலின் அவ்வசனத்தினும் பலவானாம். அப்பலவானாய வைதிகவசனத்தானே அவ்வசனம் பாதமாம். அல்லது ககாராதிசப்த ஸ்வரூபத்தையுணர்த்தும் க, ங என்பனவாதிகளினும் சப்தரூப அர்த்தபோதகத்தன்மைவடிவத்தால் பிரமாணரூபத்தன்மை சித்தமாகுமாயின் நானாவகையர்த்தத்தையுணர்த்தும் வசனத்தே அர்த்தபோதகத்தன்மைவடிவத்தால் பிரமாணரூபத்தன்மை சித்தமாமென்பதன்கண்ணே யாது கூறவேண்டியுளது.

சங்கை :—ஹே பகவன்! அர்த்தபோதகத்தன்மை வடிவத்தால் அவ்வசனத்தே பிரமாணரூபத்தன்மை யுண்டாமாயின் ஒருபொருளையுமுணர்த்தாதவசனம் அப்பிரமாணரூபமாதல்வேண்டும்.

சமாதானம் :—ஹே மைத்திரேயி! எவ்வர்த்தபோதத்தையும் உண்டாக்காத வசனத்தின்கண்ணே பிரமாணரூபத்தன்மை சித்தமாகாதாயின் ஆகாதொழிக.

இதன்கண்ணே நமக்குச் சிறிதுமாத்திரையும் ஹானியின்றாம். ஏனெனின், பொருளையுணர்த்தும் வசனத்தைப் பிரமாணமா யங்கீகரிப்பேம். அபோதகவசனத்தை யாமும் பிரமாணரூபமா யங்கீகரிப்பதின்றாம். அல்லது, பரஸ்பர விரோதமுடைய காட்சிமுதலிய பிரமாணங்களை வெற்றிகொள்ள அவிருத்தப் பிரமாணம் இன்மையையியம்பும் நகாரத்தின் சகாயத்தானே ஆற்றலுடையதாகுமாதலின், அந்நகாரம் ககாராதியவெல்லா வருணங்களினும் பலமுடையதாம். அது அபாவப்பொருளை விஷயஞ்செய்யும் போதத்தை யுண்டாக்குமாயின் நேதி நேதியென்னுஞ் சுருதியின் நகாரஜன்னிய சர்வஜகத்தி னபாவபோதம் நம்மனோர்க்குச் சந்ததமுண்டாமாதலின் நிஷேதவசனத்தே அர்த்தபோதகத்தன்மையால் பிரமாணரூபத்தன்மை சித்தமாவதேபோலச் சர்வ வசனங்களிடத்தும் சித்தமாம். புருஷப் பிரவிருத்தி ஜனகத்தன்மையால் எவ்வசனத்தின்கண்ணும் பிரமாணரூபத்தன்மையின்றாமாதலின், இப்பொருள் துணியப்பெறும். பிரமப்பிரமாதாதிதோஷங்களாற்றூடிதமாய இலௌகிக வசனமும், முற்கூறிய யூகத்தால் அர்த்தபோதகத்தன்மையானே பிரமாணத்தன்மையையடையுமாயின் கூறியதோஷங்கள் யாவுமற்ற வேதவசனம் அடையுமென்பதன்கண் யாதுகூறவேண்டும். இத்துணையால் ஈசுரரியம்பிய அபௌருஷேய வேதத்தின்கண்ணே தன்னுற் பிரமாணமாதல் நிரூபிக்கப்பட்டது. இப்போது வேதவிபாகத்தை நிரூபிப்பாம்:—ஹே மைத்திரேயி! பிரத்தியக்ஷாதி சர்வப்பிரமாணங்களுள் இராஜவடிவமாய வேதப் பிரமாணம் மந்திரரூபமெனவும், பிராஹ்மணரூபமெனவும், இருவகையாம். முதலது இருக்கு, யஜுஷ், சாமம், அதர்வணம் என்னும் வேறு பாட்டால் நால்வகையாம். இரண்டாவதோ இதிகாசம், புராணம், வித்தை, உபநிஷத், சுலோகம், சூத்திரம், வியாக்கியானம், அநுவியாக்கியானம என்னும் வேறுபாட்டால் எண்வகையாம். ஜனகராஜாதியரின் கதாப்பிரசங்கத்தையுணர்த்துவது இதிகாசமாம். 1 மாயாவிசிஷ்டபரமான்மாவினின்றும் உலகுறபத்தி ஸ்திதி இலயத்தையும், பௌதீமாஷ்யாதி இருஷிகளின் வம்சத்தையும, விராட் பகவானுடைய புத்திரராய சுவாயம்பு மனுவினுற்பத்தியையும், மநுவின் சிருஷ்டியிலுண்டாய பிராஹ்மணாதி நான்கு வருணங்களையும், பிரஹ்மசரியாதி நான்காசிரமங்களையும், அவ்வியாவருக்கும் பின்ன பின்ன கருமங்களையும் கூறுவது புராணமாம். 2. ‘உபாசிக்க’ என்பதாதிய சப்தங்களால் பிரஹ்மாதிதேவதைகளின் உபாசனையைக்கூறுவது வித்தையாம். 3. ‘சத்தியத்திற்குஞ் சத்தியம்’ என்பதாதி பிரஹ்மத்தின் இரஹசிய நாமங்களைக் கூறுவது உபநிஷத்தாம். 4. வேதத்தின்பிராஹ்மணபாகத்தின்கண்ணே கூறப்பட்ட மந்திரம் சுலோகமாம். 5. சுருக்கமாய் அநேகம்பொருள்களைக்கூறும் ‘ஆன்மாவையுபாசிக்க’ என்பதாதி வேதம சூத்திரமாம். 6. மந்திரங்களின் பொருளைக் கூறும் பிராஹ்மணரூப வேதம் வியாக்கியானமாம். 7. சூத்திரத்தின்பொருளை மந்திர அர்த்தவாதாதிகளோடுகூட விஸ்தாரமாய்க்கூறுவதுஅநுவியாக்கியானமாம். 8.

சங்கை:—ஹே பகவன்! அநேக அர்த்தத்தைப்போதிக்கும் வசனம் சூத்திரமெனத்தாங்கள் கூறிய இலக்கணம் சம்பவியாது; ஏனெனின், ஒருமுறை கூறுஞ்சத்தம் ஒரே பொருளைப் போதிக்கும் என்பது சாஸ்திர நியமமன்றோ, அஃதீண்டுமுறண்படும்?

சமாதானம் :—ஹே மைத்திரேயி! இலௌகிக வாக்கியத்தே மீண்டு மீண்டும் ஆவிருத்திசெய்வதால் அநேக அர்த்தபோதகத்தன்மை தூஷணமாகும். அதுபோலச் சூத்திரரூப வேதவாக்கியங்களில் மீண்டு மீண்டும் ஆவிருத்திசெய்வதால் அநேக அர்த்தபோதகத்தன்மை தூஷணமாகாதாம்; மற்றே, மாறாய் அநேக அர்த்தபோதகத்தன்மை சூத்திரவாக்கியங்கட்குப் பூஷணரூபமாம். ஹே மைத்திரேயி! பூமியாகிய க்ஷேத்திரத்தினின்றும் விருக்ஷமுண்டாவதேபோலப் பிரஹ்மரூப க்ஷேத்திரத்தினின்றும் இவ்வேதவடிவ கற்பகவிருக்ஷமுண்டாம், அது இருக்கு யஜுஷ் சாமம் அதர்வணம் என்னும் நான்கு ஸ்கந்தங்களோடுகூடியதாம், நானுவகைச் சாகைகளோடுகூடியதாம். இத்தகைய இது பிரஹ்மத்தினின்று முண்டாயதாதலின் சாஸ்திரத்தின்கண்ணே பிரஹ்மரூபமாய்க் கூறப்பெற்றுளது. ஹே மைத்திரேயி! அம்மாயா விசிஷ்ட பிரஹ்மத்தினின்றும் சப்தவடிவவேதமுண்டாயதேபோல அதனர்த்தமும் உண்டாயது. இப்போது சுருக்கமாய் அப்பதார்த்தங்கள் நிரூபிக்கப்படும் :—ஹே மைத்திரேயி! ஞானயோகம் கருமயோகம் என்னுமிருவிதயோகம், யாகபூமியினின்றும் வெளியே செய்தற்குரிய நானுவகைத் தானம், இகலோகத்தும் பரலோகத்தும் ஜீவர்கட்குக்கிடைக்கயோக்கியமாய சுகதுக்கரூபபலம், அவற்றைப் போகித்தற்குச் சாதனமாய ஸ்தாவர ஜங்கமசரீரம், ஆகாசாதி பஞ்சபூதம், வாக்குமுதலிய பதினேரிந்திரியம், பிராணபஞ்சகம், அவ்விந்திரியங்களினபிமானி தேவதைகள், இவை முதலிய சம்பூரண ஜகத்தும், பரமான்மாவிடத்திருந்தேயுண்டாம். இத்துணையால் ஜகத்தினுற்பத்தியின்முன்னர்ப் பிரஹ்மத்தின்கண்ணே அத்விதீயரூபத்தன்மை சித்தஞ்செய்யப்பட்டது. இப்போது ஜகத்தின் பிரளயகாலத்திலும் பிரஹ்மத்தின்கண்ணே அத்விதீயரூபத்தன்மையைச் சித்தஞ்செய்வாம் :—ஹே மைத்திரேயி! ஜகத்தினுற்பத்தி ஸ்திதிகாலத்திற் பிரஹ்மத்தே அத்விதீயரூபத்தன்மையிருப்பதேபோலப் பிரளயகாலத்தும் அஃதிருப்பதன்கண் திருஷ்டாந்தம் கூறுகின்றேன் கேட்டி. ஹே மைத்திரேயி! ஸ்ரீ கங்கைமுதலிய நதிகளிடத்தே இராநின்ற நீர், மேகாதிகளிடத்தே இராநின்ற நீர் முதலிய எல்லாநீரும் சாக்ஷாத் சம்பந்தத்தானேனும் பரம்பரைச் சம்பந்தத்தானேனும் பெருங்கடலையேயடையும். அதுபோலப் பிரளயகாலத்தே இச்சம்பூரணஸ்தாவரஜங்கமரூப ஜகத்தானது சாக்ஷாத் சம்பந்தத்தானேனும் பரம்பரைச் சம்பந்தத்தானேனும் பரமான்மாவையேயடையும். இப்போது இப்பொருளையே வெளிப்படையாய் நிரூபிப்பாம் :—ஹே மைத்திரேயி! பிரளயகாலத்தே இசசப்தாதி விஷயங்கள் சுரோத்திராதி இந்திரியங்களிடத்தே இலயத்தையடையும், அவ்விந்திரியங்கள் ஆகாசாதிகளிடத்தே இலயத்தையடையும், அப்பூதங்கள் மாயாவிசிஷ்டபரமான்மாவின்கண்ணிலயபாவத்தையடையும். ஆண்டுஸ்பரிசம் துவக்கின்கண்ணும், மதுராதிரசங்கள் இரசனேந்திரியத்தும், மணம் கிராணத்தும், நீலாதிரூபங்கள் விழியினிடத்தும், லௌகிக சப்தமியாவும் சுரோத்திரத்தும், சம்பூரண சங்கற்பம் மனத்தும், நிச்சயவடிவ விருத்திகளியாவும் புத்தியின்கண்ணும், கவர்தல் முதலியன ஹஸ்தவிந்திரியத்தும், விஷய ஜன்னிய சுகமுழுதும் உபஸ்த இந்திரியத்தும், மலாதிவிசர்க்கமியாவும் பாயுருவின்கண்ணும், கமனுகமனுதிகள் பா

தத்தும் வைதிக சப்தமியாவும் வாக்கிந்திரியத்தும் இலயபாவத்தையடையும். இவ் வண்ணமிந்திரியங்களெல்லாம் தங்காரணமாய பூதங்களிடத்தே முறைப்படியொடுங்கும். சிறு நதிகளின் நீர் ஸ்ரீகங்கைமுதலிய மகாநதிகளையடைந்து அவற்றோடு பெருங்கடலையடையும். அதுபோலப் பிரளயகாலத்தே காரியமியாவும் தத்தங் காரணத்தே முதலிலொடுங்கி அதனோடுகூட அவை பரமகாரணரூப பரமான்மா விடத்தே யொடுங்குமாதலின் பிரளயகாலத்தே பரமான்மா அத்விதீயரூபமேயாம். இத்துணையாற் பிரளயகாலத்தே ஆநந்தவடிவ ஆன்மாவிற்கத்விதீயத்தன்மை சித் தஞ்செய்யப்பட்டது. இப்போது மோக்ஷத்தின்கண்ணும் அதனுக்கத்விதீயத் தன்மையைச் சித்தஞ்செய்வாம் :—ஹே மைத்திரேயி ! பிரஹ்மஞானமுண்டாய பின்னர்க், காரியசகித அவித்தை இலயபாவமடைவதில் திருஷ்டாந்தங்கூறக்கேட்டி. இயல்பாகவே நெகிழ்ச்சியையுடைய கடன்முதலியவற்றின் நீர், ஆதபவாயுமுதலிய திருஷ்ட நிமித்தத்தையும், ஜீவர்களின் புண்ணியபாவரூப அதிருஷ்ட நிமித்தத் தையும், அடையுமாயின் இலவணதிரூப கனபாவத்தையடையும். உண்மையாய் ஜீவேசுவராதிபேதமற்ற இச்சுத்த ஆன்மாவும் அவித்தியா சம்பந்தரூப நிமித்தத் தையடையின் ஜீவபாவத்தையடையும். அவ்வுப்புப் பிண்டத்தின் பத்துத்திசையி னும் நடுவினும் கடனீரினும் வேற்றுமையின்றாம் ; மற்றோ, கைப்பிரசத்தால் அவ் வுப்புக்கட்டி கடனீரேயாம். அதுபோல, ஜீவாத்மாவிடத்தே பரமான்மாவினும் வேற்றுமையின்றாம் ; மற்றோ, சச்சிதானந்தரூபத்தால் இது அதனினும் அபின்ன மேயாம். அவ்வுப்புக்கட்டி கடனீரையடையுமாயின் கரைந்துவிடுவதேபோல ஜீவ னும் பிரஹ்மவித்தையால் பிரஹ்மத்தையடையின் ஜீவபாவத்தை விட்டுவிடுவன். கடனீரினும் வேற்றுமையாய்த் தோற்றுங்காலத்தே அவ்வுப்புக்கட்டியிற் கனபாவந் தோற்றும். அதுபோல அத்விதீயப் பிரஹ்மபேததரிசனகாலத்திலேயே நம்ம னோர்க் கிச்சம்சாரப் பிரதீதியாம அவ்வுப்புக்கட்டி உண்மையாய் முக்காலத்தும் கடனீரினும் வேறன்றாவதேபோல இஜ்ஜீவனும் உண்மையாய் முக்காலத்தும் பிர ஹ்மத்தினும் வேறாகான். அவ்வுப்புக்கட்டியிலுள்ள கனதையானது நாசமுடைய தாம், கடனீர்த்தன்மையோ நாசமற்றதாம். அவ்வாறே ஆன்மாவின்கண் ஜீவரூபத் தன்மை அழிவுடையதாம், பிரஹ்மரூபத்தன்மையழிவற்றதாம். அவ்வுப்புக்கட்டி யின் கனதையழியுமாயின் அதுவுமழிவதேபோன்று, மோக்ஷத்தின்கண் அவித் தையழிவுறவே ஜீவத்தன்மையுமழியெய்தும். அவ்வுப்புக்கட்டி எப்போதும் எல் லாப்பக்கத்தும் கைப்புடையதாயிருப்பதேபோல இஜ்ஜீவான்மாவும் எக்காலத்தும் சுயம்பிரகாச சேதனரூபமேயாம்.

சங்கை :—ஹே பகவன் ! இவ்வாநந்தவடிவ ஆன்மா, சுயம்பிரகாசவடிவமா யின் யாவருக்கு மேன்றோற்றுவதில்லை ?

சமாதானம்:—ஹே மைத்திரேயி ! அத்தியந்தஞ் சமீபத்தேயிருக்கும் சூரி யாதிகளினொளியை விழியாற் குருடன் காணாததேபோல அஞ்ஞானவிருளால் மறைபட்ட புத்தியாகிய விழியையுடையவன் அத்தியந்தஞ் சமீபத்திருக்கும் சுயஞ் சோதியாய ஆன்மாவைக் காணான். ஸ்திரீமுதலிய விஷயங்களின்பாற் செல்லு மனத்தையுடையவன் அத்தியந்தஞ் சமீபத்திருக்கும் பதார்த்தத்தையும் காணாத

தேபோல மனைவிமைந்தராதியரிடத்தே ஆசக்தியையுடையவன் அத்தியந்தஞ் சமீபத்திருக்கும் ஆன்மாவையும் காணக்கூடாதவனுவன். சமுத்திர இலவணபிண்டத்தே கனதையிருப்பதேபோல இவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவின்கண்ணே யான் மனுஷன், யான் பிராஹ்மணன் என்பனமுதலிய விசேஷஞானங்களேகனதையாம். அதன் காரண பித்தூலசரீரமாமாதலின், இது நாசமாயின் அக்கனதை விசிஷ்ட ஆன்மாவின் நாசமுமாம். ஹே குழந்தாய்! இத்தூலசரீர நாசத்தின்பின் ஆன்மாவும் நாசமாம் என்னும் வசனத்தை அம்முனிவர் எக்கருத்துப்பற்றிக் கூறினரோ அதனைக்கேள்! இவ்வாநந்தஸ்வரூப ஆன்மா உண்மையாய் நாசமற்றதாமாயினும் எங்ஙனம் நாற்கோணமுடைய இரும்புபபிண்டத்தோடு தாதாத்மியத்தையடைந்த அக்கினியும் அவ்வாறுதோற்றுமோ அபபிண்டம் அழிவெய்தவே அவ்வழலும் அழிவெய்துமோ அங்ஙனம் ஜீவித அவஸ்தையின்கண் இத்தூலசரீர தாதாத்மிய அத்தியாசத்தால் இவ்வான்மா, யான் மனுஷன் என்பதாதி விசேஷஞானங்களோடுகூடியதாய்த்தோன்றும். இஃதழிவெய்தின் விசிஷ்ட ஆன்மாவுமழிவெய்தும். கருத்திதுவாம்:—புருஷனிருப்பினும் தண்டவிசேஷணமின்றாயின் தண்டியீண்டின்றும் எனத் தண்டவிசிஷ்டபுருஷாபாவநிச்சயமுண்டாம். அதுபோல மாணகாலத்தே ஆன்மா, விருப்பினும் யான் மனுஷன் என்பதாதி விசேஷஞானமாய விசேஷணமிலதாகவே அவ்விசேஷணவிசிஷ்ட ஆன்மநாசவியவகாரமாம். மரணகாலத்தே யான்மனுடன் யான் மறையோன் என்பனவாதி சர்வ விசேஷஞானங்களுமற்றவனுவனுதலின், தூலசரீர துக்கங்களையடையாததேபோல மோக்ஷத்தின்கண்ணும் யான் மனுடன் என்பதாதி யாவற்றையு மற்றிருத்தலின் சிறிதுமாத்திரைத் துயரையுமடையான்.

சங்கை :—ஹே பகவன்! மரணகாலத்தே யான் மனுடன் என்பதாதி சர்வ விசேஷ ஞானுபாவமாதலேபோலத் துயிலின்கண்ணுமாமாதலின் துயிலின்திருட்டாந்தத்தால் அம்முனிவர் மோக்ஷத்தின்கண் சர்வதுக்காபாவத்தை ஏன்கூறிலர்?

சமாதானம் :—ஹே மைந்த! துயிலின்கண்ணே சம்பூரணவிசேஷ ஞானுபாவமாமாயினும்அத்துயிலைப பரித்தியாகித்து நனவையடையும்போது இச்சரீரத்தே நானுவகைத் துயரையடைவன். மரணகாலத்தே இத்தூலசரீரத்தையும் இத்தூலசரீர சம்பந்தியாய்த் துக்கங்களையும் மீண்டு மடைவதின்றுமாதலின் துயிலைப் பரித்தியாகித்து அம்முனிவர் மோக்ஷத்தே மாணத்தைத் திருட்டாந்தமாக்கினர். ஆகையால், இத்தூலசரீர மழிந்தபின் சம்பூரண விசேஷஞானங்களு மற்றவனுய இந்த ஜீவன்மீண்டும் இச்சரீர ஜன்னியதுக்கங்களையடையான். இதுபோல ஆன்மசாக்ஷாத்காரத்தால் அவித்தையழிந்தபின் சர்வவிசேஷ ஞானமுமற்ற ஸ்வயஞ்சோதியான்மா மீண்டும் இச்சரீரசம்பந்தியாய்த் துக்கங்களையடையமாட்டாது.

சங்கை :—ஹே பகவன்! மோக்ஷத்தேபோல மரணத்தும் சர்வ துக்காபாவமுண்டாகுமாயின் மரணமுற்றஅஞ்ஞானிகளைப்பார்க்கினும் முத்தரிடத்தே விலக்ஷணத்தன்மை சித்தியாதன்றோ?

சமாதானம் :—ஹே குழந்தாய்! மரணத்தே சம்பூரண விசேஷஞானமின்றிய அஞ்ஞானியானவன் பூர்வசரீர ஜன்னிய துக்கத்தை யடையானுயினும் வருஞ்

சரீரங்களைத்தரும் அறம்பாவங்கள், சர்வ சரீரகாரண அவித்தையென்னு மிரண் டும் அக்காலுளவாதலின், அவ்வறம்பாவங்களான் மறுபிறப்பை யடைந்து ஆண் டநேகவகைத் துக்கங்களை யனுபவிப்பன். முக்தனுக்கான்மஞானத்தால் அவித்தை யும் அறம்பாவங்களும் நாசமடைந்துவிடுமாதலின் மீண்டுஞ்சரீரஅடைவால் துக்க மடைவுண்டாகாது. ஹே குழந்தாய்! இவ்வகையாய அபிப்பிராயத்தை மனத்தே கொண்டே அம்முனிவர் அவ்வம்மையைநோக்கிச்சரீரமழிந்தபின் ஞான்மா அழியு மெனக்கூறினர். அம்முனிவரது கருத்தையறியாது அவ்வம்மை இவ்வாறு வினு வினள். மைத்திரேயி கூறல்:—ஹே பகவன்! முன்னர்த் தாங்கள் இவ்வாநந்த ரூபான்மாவைச் சச்சிதானந்த வடிவமாய்க் கூறினீர்கள். இப்போது இத்தூல சரீரநாசத்தின்பின் ஆன்மநாசங் கூறினீர்களாதலின், முற்கூற்றிற்குப் பிற்கூற்று விரோதமாகின்றது; காற்றுப் பஞ்சைப் பத்துத்திசையினுஞ் சுழல்விப்பதே போலத் தங்கள் வசனக்காற்று எனது மனரூபபஞ்சை யெல்லாப்பக்கங்களிலும் சுழல்விக்கின்றது. அரசன் வசனுபிப்பிராயத்தையறியாத சேவகன் மனம் வியா குலத்தையடைவதேபோலத் தங்கள் வசன அபிப்பிராயத்தையறியாது எனது மனமும் வியாகுலத்தையடைந்துளது. விசாரமற்ற கோவானது திருணலோபத் தால் [illegible]று திருணங்களான் மறைபட்ட சேற்றின்கண்ணே அக [illegible] ஆன்மஞானலோபத்தால் தங்கள்பால் வினவிய யான், [illegible]ணகப்பட்டுக்கொண்டேன். முன்னர் யான் ஆன்மா வின் [illegible]றும் வசனத்தை அநேக அறிஞமறையவர் வாயிலாய்க் கேட்டு[illegible] நாசமின்றெ௭ன அநேகசமயத்தே தங்கள்வாயிலாயும் அநேகமுறை[illegible]ளன். இப்போதோ தாங்களித்தூல சரீரமழியவே யான்மா வழியுமெனக்கூறினீர்களாதலின், அதனைக்கேட்டு யான் ஆன்மாவின் நித்தியத் தன்மைநிச்சயத்தையிழந்தேன். ஒருவன்றனது தனத்தைவிருத்தி யாக்கும்பொரு ட்டு ஒருவிபாபாரத்தே முயன்று ஆங்குமுன்னிருந்தமூலதனத்தையு மிழந்தனனெ ன்னும்நியாயம் என்பாலுற்றது; ஏனெனின், ஆன்மாவின் உண்மைவடிவத்தை அறி யும்பொருட்டு யான் தங்கள்பால்வினவித் தங்கள் வசனத்தால் அவ்வுண்மைஞானத் தையே அடை யாமல் யானும் முன்னமெனக்கிருந்த ஆன்மநித்தியரூப நிச்சயத்தையு மிழந்தனன். ஹே குழந்தாய்! இவ்வண்ணம் அவ்வம்மைகூறியதைக்கேட்ட அம்மு னிவர் கிருபையோடு தம்திருதயாபிப்பிராயத்தை அவ்வம்மைக்குபதேசிக்கத் தொடங்கினர். யாஞ்ஞவற்கிய முனிவர் கூறல்:—ஹே மைத்திரேயி! இச்சரீர நாசா னந்தரம் ஆன்மாவும் நாசமாமென்னும் எனதுவசனத்தால் நீவியாமோகத்தையும், முன்னர் நிச்சயித்த ஆன்மநித்தியத்தன்மையானியின் சிந்தையாற்றுயாத்தையும், அடைய[illegible] எனதுவசனத்தைக்கேட்டு நீ மோகத்தையடையும்பொருட்டு யானதைக் கூறவில்லை; மற்றோ, எனது பூர்வோத்தர வசனத்தின்றாற்பரியத்தை யறியாததினாலே மோகமுற்றனை. இத்தூலசரீரமழிந்தபின் ஆன்மாவுமழியும் என்னும்வசனத்தை எக்கருத்தாற் கூறினேனோ அதனை நீ கேட்டி. ஹே மைத் திரேயி! இவ்வானந்தஸ்வரூப ஆன்மா உண்மையாய் ஜீவேசுவரத்தன்மையற்ற தாமாயினும் அவித்தையின் சம்பந்தத்தால் ஜீவவடிவ கனைதையையடையும். ஆன் மசாக்ஷாத்காரத்தால் அவித்தையின் நிவிருத்தியாமாயின் இவ்வாநந்தவடிவ ஆன்

மா ஜீவவடிவகனைதயை விடுத்துத் தன்னுண்மைவடிவத்தே நிலைபெறும். மோக்ஷத்தே யான்மனுடன், யான்மறையோன் என்பனவாதி எல்லா விசேட ஞானங்களும் அழிவுறினும் ஆன்மா அழிவுறாதாம்; மற்றோ, மரணகாலத்தே சர்வ விசேஷஞானங்களுமழியவே தூலசரீரஜன்னிய துக்கங்களைப் புருஷன் அடையாததே போல மோக்ஷத்தினும் அவ்வாறாதலின், ஆன்மா அத்துயர்களையடைவதில்லை. ஹே மைத்திரேயி! நினக்கித்தகையபொருளை யுணர்த்தும்பொருட்டு யான் இச்சரீரநாசத்தின்பின் ஆன்மாவின் நாசத்தைக் கூறினேன்; ஆனாலுண்மையாய் ஆன்மநாசத்தே எனது கருத்தின்றாம். இப்போது, இப்பொருளையே திருஷ்டாந்தத்தால வெளிப்படையாக்குவாம்:—ஹே மைத்திரேயி! கடத்தேயிருக்கும் ஆகாசத்திற் கியல்பாகவே நாசமுளதாகாது; மற்றோ, கடவுபாதியழியவே அவ்வழிவைக்கடாகாசத்தே யாரோபித்து மூடன் கடாகாசநாசத்தைக்கொள்வன்; அதுபோல இவ்வாநந்தவடிவ ஆன்மாவிற்கு மியல்பாகவே யழிவின்றாம்; மற்றோ, இத்தூலசரீரரூப உபாதிநாசமாகவே இந்நாசத்தை ஆன்மாவின்கண்ணாரோபித்து அவிவேகியானவன் ஆன்மநாசத்தைக்கொள்வன். இயல்பாயே ஆன்மாவழியுமெனினோ இவ்வுலகத்தேயியற்றிய அறம்பாவங்கட்குச சுகதுக்கரூப பலபோகமின்றியே அழிவுண்டாமென்னும் செய்ததினழிவாகிய தோஷமும்; செய்யாத அறம்பாவங்கட்குச் சுகதுக்கபலரூபபோகமாமென்னும் செய்யாததினடைவாகிய தோஷமும் எய்தும். ஆகையால், மதிமான்கள் ஆன்மாவினழிவை அங்கீகரித்தல் தகுதியன்றாம். மரணகாலத்தே தேகேந்திரியாதி சர்வ சங்காத இலயமுண்டாமாதலின் அக்கால யான்மனுடன் என்பதாதி விசேஷஞானமுண்டாகாது. அச்சர்வ விசேஷ ஞானங்களுமழியவே ஆன்மா மரணத்தும சமசார துக்கங்களையடையாதாயின் ஆன்மசாக்ஷாத்காரத்தால் காரியசகித அவித்தையறற இது மோக்ஷத்தே அத்துயரடையாதென்பதன்கண் யாதுகூறவேண்டும். ஆகையால், மோக்ஷத்தே யான்மனுஷன் யான்மறையோன் என்பனவாதி சர்வவிசேஷ ஞானங்களழிவெய்தினும் சுயஞ்சோதியாய ஆன்மாவழியாதாமாதலின் அவிநாசிரூபமாம்.

சங்கை:—ஹே பகவன்! மோக்ஷத்தே இவ்வான்மா ஸ்வப்பிரகாசமாமாயின் ஆண்டுச் சரீராதி துவைதப் பிரபஞ்சத்தை யேன் காண்பதில்லை? ஆண்டு அதனைக் காண்பதின்றாமாதலின், இது ஸ்வப்பிரகாசரூபமன்றாமென வறிந்துகொள்ளலாமன்றோ!

சமாதானம்:—ஹே மைத்திரேயி! துயிலினும் மரணத்திலும் ஸ்வப்பிரகாச சைதன்ய ரூபமாயிருந்தபோதினும், இவ்வான்மா மைந்தராதியரைக்காணுதாம் காணுததில் ஆன்மாவின் ஸ்வப்பிரகாச ரூபத்தன்மையினின்மை காரணமன்றாம்; மற்றோ, ஆண்டு அவர்களினபாவமும், நேத்திராதி காரணங்களினபாவமும் ஆமாதலின் ஸ்வப்பிரகாச சைதன்யரூபமாயிருந்தபோதினும் துவைதப்பிரபஞ்சத்தைக் காண்பதில்லை. அதுபோல மோக்ஷத்தின்கண்ணும் ஆன்மா துவைதத்தைக்காண்பதில்லை, அதன்கண்ணே ஸ்வப்ரகாசாபாவங்காரணமன்றாம்; மற்றோ, ஆண்டுச் சர்வ துவைதாபாவமாமாதலின் ஸ்வப்பிரகாச சைதன்யரூபமாயிருப்பினும் துவைதப் பிரபஞ்சத்தைக்காண்பதில்லை. இவ்வாநந்தவடிவ ஸ்வயஞ்சோதியான்மா அவிநாசி

ரூபமாமாதலின் துயில் மரணம் மோக்ஷம் என்னும் மூன்றவஸ்தையின்கண்ணும் தனதுண்மைவடிவை விடமாட்டாதாதலின் மோக்ஷத்தின்கண்ணுள்ள அதனுண்மைவடிவமே சம்சாரதசையின்கண்ணுமுளது; ஆனால் சம்சாரதசையின்கண்ணே தேகாதிகளின் தாதாத்மிய சம்பந்தத்தால் அதனுண்மைவடிவந் தோற்றுவதின்றும். மோக்ஷத்தே அவற்றின்றாதாத்மியம் நீங்கிவிடுதலின் அதனுண்மைவடிவம் அறிஞர்கட்குக் கரதலாமலகம்போல வெளிப்படையாய்த்தோற்றும். ஆகையால், இப்பொருள் துணியப்பெறும்:—அக்கினியின் வெப்பவியற்கை ஒருகாலும் மாறுதலையடையாததேபோலத் துயில் மரணம் மோக்ஷம என்னுமவஸ்தைகளில் இவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவின் ஸ்வப்பிரகாச அத்விதீய சைதன்யவடிவம் ஒருகாலும் மாறுதலையடையாதாம். ஆதலின் இவ்வான்மா சர்வபேதமற்றதாம். இத்துணையால் துவம்பதார்த்தவடிவ ஜீவசோதனஞ்செய்யப்பட்டது. இப்போது, அந்த ஜீவனுக்குப் பரிபூரண பிரஹ்மத்தோடு அபேதபோதனஞ்செய்யும்பொருட்டு முதலில் பேததரிசனத்தே அவித்தைவியாப்பியத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே மைத்திரேயி! இவ்வாநந்தவடிவ ஸ்வயஞ்சோதியாய ஆன்மாவின்கண் உண்மையாயித் துவைதப்பிரபஞ்சம் ஒருகாலுமின்றும். இத்தகைய அத்விதீய வஸ்துவில் துவைதப்பிரபஞ்சம் ஜீவர்கட்குத்தோற்றுநிற்கும். நேத்திரதோஷத்தால் மூடபாலகனுக்கு ஆகாசத்தே இருசந்திரர்கள் தோற்றுவதேபோல அவித்தியாதோஷத்தால் அஞ்ஞானிகட்கு அத்விதீய ஆன்மாவின்கண்ணே இத்துவைதப் பிரபஞ்சந்தோற்றுமாதலின் இவ்வெல்லாம் மாயாமாத்திரமேயாம். ஆன்மாவினத்விதீய வடிவம் துவைதப் பிரபஞ்சம்போலத் தோற்றுங்கால் அஞ்ஞானிகள் தங்களைப் பிரஹ்மபின்னமாய்க்காண்பர், விசுவதைஜசப் பிராஞ்ஞன் என்பனவாதியநேகபேதமுடையவராய்த் தம்மைக்காண்பர். சப்தப்பரிசாதிய சமபூரணஜகத்தையும் சுரோத்திராதியதிஞேரிந்திரியங்களால் வேறுவேறாய்க் காண்பர். இதனால் அவித்தையிருப்பின் துவைததரிசன மிருக்குமென்னும் அன்வயம் நிரூபிக்கப்பட்டது. இப்போது அவித்தையின்றாகவே துவைததரிசனமிலதாமென்னும் வியதிரேகம் நிரூபிக்கப்படும்:—ஹே மைத்திரேயி! அதிகாரிகட்குக் குருசாஸ்திர வுபதேசத்தால் அத்விதீயப் பிரஹ்மஞானமுண்டாயின் மாயைவடிவ அஞ்ஞானமழிந்தேபோம், அக்காரணமழியவே ஸ்தாவர ஜங்கமசரீரங்களும், சபதாதிவிஷயங்களோடு சுரோத்திராதி இந்திரியங்களும், சுகதுக்காதிகளோடுகூடிய அந்தக்கரணமும் மற்றும்பிற காரியப்பிரபஞ்சமும் இலயத்தை யடையும். இவ்வாறு யாவுமொழியவே எஞ்சியதாய் ஸ்வயஞ்சோதியாய ஆநந்தஸ்வரூப ஆன்மாவே நிலைபெற்றிலங்கும். இத்தகைய மோக்ஷத்தையுற்ற அறிஞன் சம்பூரண ஜகத்தையும் தனதான்மாவாகவே காண்பானாதலின் ஆண்டுதன்னினும்வேறாய நேத்திராதி இந்திரியங்களால் உருவமுதலிய பதார்த்தங்களைக் காண்பதின்றாம. அவற்றின் றரிசனத்தா லுண்டாம் ஆவரணநிவிருத்திரூப பலமும் பூர்வம் ஆன்மசாக்ஷாத்காரத்தாற் சித்தமாமாதலின் ஆண்டப்பலமு முண்டாகாது.

சங்கை:—ஹே பகவன்! அம்மோக்ஷ அவஸ்தையின்கண் அவ்வறிஞன் தன்னிற்பின்னமாய ஜகத்தைக் காணவேண்டாம்; ஆனால் தன்னான்மாவை யேன்பார்ப்பதில்லை?

சமாதானம் :—ஹே மைத்திரேயி ! ஆன்மாத்துவைதத்தைப்போலத்தோற்றும் அவித்தியா காலத்தின்கண்ணும எந்தஞானத்திற்கும் விஷயமாவதின்றுமாயின் மோக்ஷத்தின்கண்ணே சர்வதுவைதப் பிரபஞ்சமுமின்றாகவே இவ்வான்மா எந்தஞானத்திற்கும் விஷயமாவதின்று மென்பதன்கண்ணே யாதுகூறவேண்டியிருக்கின்றது. இப்போதிப்பொருளையே வெளிப்படையாய் நிரூபிப்பாம் :—ஹே மைத்திரேயி ! தனது ஸ்வப்பிரகாசரூபத்தால சர்வஜகத்தையுமறியும் விஞ்ஞாதாவாய அத்விதீய ஆன்மாவை யானறிகின்றேனென யாவன்கூறுகின்றனனோ அம்மூடன்பாலிது கேட்கவேண்டும்:—இவ்வுலகத்தே பொருள்களின் எதுதுணைஞானங்களுண்டாகின்றனவோ அவையாவும் நேத்திராதிகரணங்களாலேயே யுண்டாமன்றி வேறுவகையா யொன்றுமுண்டாகாவாதலின் அத்விதீய ஆன்மாவை விஷயஞ்செய்வதாய் நினக்குண்டாய ஞானம் எக்காரணத்தாலுண்டாயது என்னும் வினவிற்கு நீ விடைகூறுதியென. அவ்வாறின்றாத்தாமூர்த்தரூப ஜகத்தையும் அதனபாவத்தையும் ஆன்மஞானத்தே காரணமெனவங்கீகரிக்கினே அதுசம்பவியாதாம்; ஏனெனின், அவித்தையற்ற அத்தூய ஆன்மாவிடத்தே ஜகத்தேனும் அதனின்மையேனும் உண்மையாயின்றுமாதலின் ஸ்வயஞ்சோதியாய ஆன்மா மனம்புத்தியாதி அந்தக்கரணத்தானும்,நேத்திராதிபாகிய கரணத்தானும்கவரமுடியாததாம், அல்லது ஈண்டு இந்திரிய ஜன்னியஞான விஷயமாயபொருள்களெல்லாம் பையப்பையத்தமது அவயவங்களின் சிதிலததன்மை வடிவ ஜீரணத்தன்மையை யவசியமடையும். இந்திரியஜன்னிய ஞானவிஷய ஆடைமுதலியன பையப்பைய ஜீரணத்தையடைவதேபோல ஆன்மாவும் அத்தகையதாகுமேலாயின் ஜீரணத்தன்மையை யவசியமடையும். ஆனாலிவ்வாநந்தவடிவ ஆன்மா அசரீரியராமாதலின் எவ்விந்திரியஜன்னிய ஞானத்திற்கும் விஷயமாகாதாம், ஜீரணத்தன்மையை யடையும்பதார்த்தங்களியாவும் சையோகாதி சம்பந்தரூப சங்கமுடையனவேயாம். ஆடைமுதலியன ஜீரணத்தன்மைத்தருமமுடையனவாமாதலின், ஜலாதிகளின் சங்கமுடையனவேயாதல்போலவாம். ஸ்வயஞ்சோதியாய ஆன்மா,சையோகாதி சம்பந்தரூப சர்வசங்கமுமற்றதாமாதலின் ஜீரணத்தன்மையையடையமாட்டாது. சையோகாதிசங்கமுடையனயாவும்அவசியம் பயமுடையனவேயாம். இம்மனுடாதிசரீரங்கள் சையோகாதிசங்கமுடையனவாமாதலின், இவை சிங்கசர்ப்பாதிகளாற் பயத்தையடைவதுபோலவாம். ஆன்மாவோ சர்வபயமுமற்றதாமாதலின் எப்பதார்த்த சங்கமுமற்றதாம். பயமுடையபதார்த்தங்களியாவும் துயரைத்தருவனவேயாகும். இம்மனுடாதிசரீரங்கள் பயமுடையனவாமாதலின் துயரையுமுடையனவாதல்போலவாம். இவ்வாநந்தவடிவ ஆன்மா சர்வதுயரமுமற்றதாமாதலின் பயமுமற்றதாம். துயரையுடையனயாவும் விநாசகாரணங்களோடு கூடியவாம். இமமனுடாதி சரீரங்கள் துயருடையனவாமாதலின் விநாசகாரணங்களோடுங் கூடியவாதலே போலவாம். இவ்வான்மா விநாசகாரணங்களற்றதாமாதலின்துயருமற்றதாம். கருத்திதுவாம்:—தூமமிருக்குமிடமெல்லாம் அக்கினியிருக்கும், அக்கினியின்றித் தூமமிராதாதலின் தூமம் வியாப்பியமாம் அக்கினி வியாபகமாம். வியாபகஅக்கினியி னபாவமுண்டாமிடத்தே வியாப்பியதூமா பாவமுமுண்டாம். நீர்நிறைந்த தடாகத்தே வியாபக

அக்கினியபாவமிருத்தலின் வியாப்பியதூமாபாவமுமிருப்பதுபோலவாம். அதுபோல சண்டிப்பிரசங்கத்தே இந்திரியஜன்னிய ஞானவிஷயத்தன்மை, சீரியத்தன்மை, சையோகாதி சம்பந்தரூபசங்கம், பயம், துயர், விநாசகாரணம், என்னும் ஆறன்கண் பூர்வபூர்வபதார்த்தத்தை யபேக்ஷித்து உத்தர உத்தரபதார்த்தம் வியாபகமாம். இவற்றையபேக்ஷித்து அவைவியாப்பியமாம். அவ்வுத்தர உத்தரவியாபகபதார்த்தங்கள் ஆன்மாவின்கண்ணிலவாதலின் பூர்வபூர்வ வியாப்பியங்களுமில்லனவேயாகும். இவ்வான்மா நாசமற்றதாதலின் துயரற்றதாம், துயரற்றதாதலின் பயமற்றதாம், பயமற்றதாதலின் சங்கமற்றதாம், சங்கமற்றதாதலின் சீரியத்தன்மையற்றதாம், சீரியதத்தன்மை யற்றதாதலின் இந்திரியஜன்னிய ஞானவிஷயமற்றதாம். இவ்வபிப்பிராயத்தானே சுருதிபகவதியானவள் இச்சுயஞ்சோதியாய ஆன்மாவை அக்கிருகியமெனவறைந்தனள். இவ்வண்ணம் பாவஅபாவரூபசர்வஜகத்தும் மாயையுமற்ற ஸ்வப்பிரகாச ஆன்மாவின்கண் நேத்திராதிகரணஜன்னிய ஞானவிஷயத்தன்மை ஒருகாலுஞ்சம்பவியாதாதலின் வேதாந்தசாஸ்திரத்தேயும், யோகசாஸ்திரத்தேயும், ஆன்ம சாக்ஷாத்காரத்தே நேத்திராதிகட்குக் கரணரூபத்தன்மை சம்பவியாதெனத் துணியப்பெற்றது. இப்போது அந்நிய சாஸ்திர முறையினும ஆன்மசாக்ஷாத்காரத்தே நேத்திராதிகரணங்களினபாவம நிரூபிக்கப்படும் :—ஹே மைத்திரேயீ! பிருஹஸ்பதியின் சீடராய சார்வாகாதியருள், ஒருவனே இத்தூல சரீரத்தையே ஆன்மாவெனக்கொள்வன், மற்றொருவனோ நேத்திராதி இந்திரியங்களையே ஆன்மாவெனக்கொள்வன், மற்றொருவனோ பிராணனையேயான்மாவெனக்கொள்வன், மற்றொருவன் மனத்தையே யான்மாவெனக்கொள்வன். நியாயசாஸ்திரமுடையரோ தேகேந்திரியாதிகளினும்பலாய கர்த்தாபோக்தாவையே ஆன்மாவெனக்கொள்வர். இவ்வெல்லாருடைய மதத்தும் ஆன்மசாக்ஷாத்காரத்தே நேத்திராதிகட்குக் கரணரூபத்தன்மை சம்பவியாது. இப்போது இப்பொருளையே வெளிப்படையாய் நிரூபிப்பாம் :—ஹே மைத்திரேயீ! தூலசங்காதத்தையே யான்மாவென்பவன்மதத்தும் இச்சங்காத ஆன்மசாக்ஷாத்காரத்தே நேத்திராதிகட்குக்கரணரூபத்தன்மை சம்பவியாது ; ஏனெனின், இச்சங்காதத்தினும் இந்நேத்திராதிகள் பின்னமன்றும், மற்றேறு இவைசங்காதரூபமேயாம். இச்சங்காதம் ஞானரூபக்கிரியைக்குக் கர்த்தாவாமாதலின், இதனினும் அபின்னமாயநேத்திராதிகளும் கர்த்தாரூபமேயாகும். கர்த்தாவடிவ அவற்றின்கண்ணே கரணரூபத்தன்மை சம்பவியாதாம். ஏனெனின், இவ்வுலகத்தே கர்த்தாவினும் வேறாகவே கரணத்தைக்கண்டாம். வெட்டுங்கிரியைக்குக்கர்த்தாவாய புருடனினும் குடாரரூபகரணம் பின்னமேயாகுமாதலின் சார்வாகர்மதத்தே சங்காத ஆன்மசாக்ஷாத்காரத்தே நேத்திராதிகட்குக் கரணத்தன்மை சம்பவியாதாம். நேத்திராதி இந்திரியங்களின் சமுதாயத்தையே ஆன்மாவென்பவன்மதத்தும், இந்திரிய ஆன்மசாக்ஷாத்காரத்தே யாதொரு கரணமுஞ் சம்பவியாதாம்; ஏனெனின், நேத்திராதி இந்திரியரூப ஆன்மாவோஞானரூபக்கிரியைக்குக் கர்த்தாவாமாதலின், அக்கர்த்தாவின்கண்ணும் ஞானக்கிரியையின் கரணத்தன்மை சம்பவியாதாம். இத்தூலசரீரமும் பாகியகடாதிகளும் ஞானக்கிரியைக்குக் கர்மங்களாம். ஆதலின் தேகாதியதார்த்தத்தும் ஞானரூபக்கிரியையின்கரணரூபத்தன்மை சம்பவியாது. ஆகையால், அவன்மதத்தும் இந்திரிய ஆன்ம

சாக்ஷாத்கார்த்தே யாதொருகாணமும் சம்பவிக்கவில்லை. பிராணனையே ஆன்மாவெனவும் மனத்தையே ஆன்மாவெனவும், தேகாதிகளினும் வேறுயகர்த்தாபோக்தாவையே ஆன்மாவெனவும் உடன்படும் மூவர்மதத்தும் ஆன்மசாக்ஷாத்காரத்தே நேத்திராதிகட்குக் காணரூபத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனின், அவர் மூவரிடத்தும் இது கேட்கவேண்டும்.—நீவிர் பிராணமனகர்த்தா போக்தாவடிவமாயான்மாங்கீகாரஞ்செய்துளீரே, நும்முடைய ஆன்மா நீலபீதாதியுருவமுடையதா? இல்லதா? முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் சம்பவியாது; ஏனெனின், கடபடாதிகளைப்போல ஆன்மா உருவமுடையதாயின், அவை நமக்கு நேத்திராதிகளாற்புலப்படலேபோல உருவமுடைய உங்களான்மாவும் புலப்படவேண்டும்; ஆனாலவற்றைப்போல ஆன்மாப்புலப்படுவதின்றாம். ஆதலின் நேத்திராதி பாகியேந்திரியத்தோ ஆன்மசாக்ஷாத்கார காணரூபத்தன்மை சம்பவியாதாம். நேத்திராதிகளின் சகாயத்தினானன்றி உருவமுடையபொருளை மனங்கவராது. ஆகையால், ஆன்மசாக்ஷாத்காரத்தே மனத்திற்குங் காணரூபத்தன்மை சம்பவியாது. இரண்டாவது பக்ஷத்தை யுடன்படினும் சம்பவியாது; ஏனெனின், நேத்திராதிபாகிய இந்திரியமோ உருவமுடைய கடாதிகளையே கவருமாதலின் ரூபரகித அநதர ஆன்மசாக்ஷாத்காரத்தே நேத்திராதிபாகிய இநதிரியங்கட்கோ காணரூபத்தன்மை சம்பவியாது. அச்சாக்ஷாத்காரத்தே மனத்தையே காணமெனவுடன் படுபவன்பாலிது கேட்கவேண்டும்:—மனரூப காணத்தால் எவ்வான்ம சாக்ஷாத்காரமாமோ அது ஞானக்கிரியைக்குக் கர்மமா? கர்த்தாவா? முதற்பக்ஷத்தை யுடன்படின் அது சம்பவியாதாம், ஏனெனின் அது கருமமாயினே, யாது கருமமாமோ அது கர்த்தாவாகாதாதலின், அதற்கு ஆன்மாவினும் வேறுகவொன்றைக் கர்த்தாவெனவுடன்படவேண்டும்; ஆனால், ஆன்மாவினும் வேறுகவோ எப்பொருளும் கர்த்தாவாகாதாம். ஆகையாற் கர்த்தாவிலதாகவே ஞானரூபக்கிரியையின்கண் மனத்திற்குக் காணரூபத்தன்மையுஞ் சம்பவியாதாம். இரண்டாவது பக்ஷத்தையுடன்படினே அதுவுஞ் சம்பவியாது; ஏனெனின், ஆன்மாவை விஷயஞ்செய்யும் ஞானரூபக்கிரியைக்கு ஆன்மாவினும் வேறுக எப்பொருளும் கருமமாகமாட்டாது. ஆகையால், கருமமிலதாகவே ஞானக்கிரியையின்கண் மனத்திற்குக் காணரூபத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனின், யாது காணமாமே அது கர்த்தாவையும் கருமத்தையும் அவசியமபேக்ஷிக்கும் கர்த்தாவுங் கருமமுமின்றிக் காணத்தின்வடிவஞ் சித்தமாகாதாம். வெட்டுந்தொழிற்குக் கர்த்தாவாய புருஷனும் கருமமாய காஷ்டமுமிருந்தாற்றான் குடாரத்தே காணரூபத்தன்மை சித்திக்கும். அவையின்றி அதன்கண்ணே அத்தன்மை சித்தியாதாம. இக்காரணத்தானே நூலுணர்ந்தோர் காணத்திற் கிங்ஙனமிலக்கணமியம்பியுள்ளார்:—கருத்தாவானவன் எதனாற் கருமத்தின்கண்ணே சிறிதுபலத்தை யுண்டாக்குவனே அது காணமாம். கருத்தாவானவன் குடாரத்தால் காஷ்டகருமத்தே இருபிளவுவடிவ பலத்தையுண்டாக்குவனாதலின் அக்குடாரங்காணமாவதேபோலும். இவ்வகைக் காணரூபத்தன்மை மனத்தே சம்பவியாது.

சங்கை :—ஆன்மாவினும் வேறாய் எப்பொருளும் ஞானக்கிரியைக்குக் கர்த்தாவாகவேனும் கருமமாகவேனுமின்றாமாயினும் அவ்வான்மா வொன்றே ஞானக்கிரியைக்குக் கர்த்தாவும் கருமமுமாமாதலின் கர்த்தா கருமமிருப்ப ஞானக்கிரியையின்கண்ணே அம்மனத்திற்குக் காரணரூபத்தன்மை சம்பவித்தல் கூடுமன்றோ?

சமாதானம் :—ஹே வாதியே! ஒரேகாலத்தே ஒரே கிரியையின்கண் ஒரே பொருட்குக் கர்த்தாரூபத்தன்மையும் கருமரூபத்தன்மையும் எங்குங்கண்டதின்றாம். யுக்தியினானுஞ் சம்பவியாதாமாதலின், ஒரே ஞானக்கிரியையின்கண் ஒரே ஆன்மாவிற்குக் கர்த்தாத்தன்மையும் கருமத்தன்மையும் முற்றினு முரணாம். இம்முரண்பட்டபொருளை யுடன்பட்டும் வாதி, ஆன்மசாக்ஷாத்காரத்தே மனத்திற்குக் காரணரூபத்தன்மையையுடன்படினோ அவனை நோக்கி இங்ஙனங் கூறவேண்டும் :—ஹே வாதியே! இவ்வுலகத்தே கர்த்தா கருமங்களினபேதம் அத்தியந்தம் விருத்தமாம், அதனை அங்கீகரித்தும் நீ ஆன்மசாக்ஷாத்கரத்தே மனத்தைக் காரணமாயுடன்படினோ சுருதியினானும் அறிஞரின் அனுபவத்தானும் சித்தமாய ஆன்மாவின் ஸ்வப்பிரகாசத்தன்மையை யங்கீகரிப்பதில் நினக்குற்ற பாரமியாதோ? ஆகையினாற் சுருதியனுபவசித்தமாய ஆன்மாவின் ஸ்வப்பிரகாசத்தன்மையைப் பரித்தியாகித்து அதன்கண் நேத்திராதிகரணஜன்னிய ஞானவிஷயத்தன்மையை யங்கீகரித்தல் அத்தியந்தம் அநுசிதமாம்.

சங்கை :—ஹே பகவன்! முன்னர்த்தாங்கள் ஆன்மசாக்ஷாத்காரத்தே மகாவாக்கியரூபசப்தத்தைக் கரணமெனக் கூறினீர்கள் இப்போது கரணத்தைக் கண்டித்தீர்களாதலின் தங்கள்வசனம் முன்பின்முரணுடையதாமன்றோ?

சமாதானம் :—ஹே மைத்திரேயி! குடமுதலிய ஜடப்பொருள்களின் சாக்ஷாத்காரத்தே நேத்திராதிகட்குக் கரணத்தன்மையிருப்பதேபோல ஆன்மசாக்ஷாத்காரத்தே மகாவாக்கிய சுருதிக்குக் கரணத்தன்மையின்றாம்; மற்றோ, ஆன்மாவைப்பற்றி அதனையே விஷயஞ்செய்யும் அஞ்ஞானமாகிய ஆவரணம் ஆன்மசாக்ஷாத்காரத்தின் தடையாம், அத்தடையினீக்கம் மகாவாக்கிய ஜன்னியவிருத்தியாலுண்டாம், அதுநீங்கியபின்னர் இவ்வானந்தஸ்வரூபஆன்மா தனது ஸ்வப்பிரகாசரூபத்தாலிலங்காநிற்குமாதலின் ஆன்மசாக்ஷாத்காரத்தே மகாவாக்கியரூப சுருதிக்கும் உண்மையாய்க் கரணத்தன்மையின்றாம். மற்றோ, அம்மகாவாக்கியரூப சுருதிஜன்னிய அந்தக்கரணவிருத்தி ஆவரணத்தடையைநீக்குமாதலின் இத்துணையம்சத்தை யங்கீகரித்தே முன்னர் யான் ஆன்மசாக்ஷாத்காரத்தே மகாவாக்கியரூப சுருதிக்குக் கரணத்தன்மை கூறியதாம். ஆகையால் முன்பின்வசனவிரோதமின்றாம் மந்தபுத்தியராய சார்வாகாதியர் சரீராதிகளையே ஆன்மாவென வெண்ணியுளார், அவர் மதத்தும் தேகாதியான்ம சாக்ஷாத்காரத்தே முற்கூறியமுறையே ஒரு கரணஞ் சித்தியாதாயின் ஆன்மாவை ஸ்வப்பிரகாசரூபமென வுடன்பட்ட அத்வைதவாதியர்மதத்தே அவ்வான்ம சாக்ஷாத்காரத்தில் யாதொரு கரணமுமின்றாம் என்பதன்கண் யாதுகூறற்குளது. குடமுதலிய பொருள்கள் ஜடமாதலின் அனான்மாவாவதேபோலத் தேகம், இந்திரியம், பிராணன், மனம் என்பனமுதலிய சம்பூரண சங்காதமும்ஜடரூபமாதலின் அனான்மரூபமேயாம். அவை அதிஷ்டான ஆன்மசம்

பந்தத்தையுற்றே தோற்றுமாதலின் மித்தையாம். அம்மித்தை யுலகின்அதிஷ்டானரூப ஆன்மா சர்வபேதமற்ற அத்விதீயரூபமாம். அவ்வத்விதீய ஆன்மாவே மதிமுதலிய சங்காதங்களின் சாக்ஷியாம். இத்தகைய சாக்ஷிவடிவ ஸ்வப்பிரகாச ஆன்மாவை யதிகாரிநேத்திராதிகளால் அறியமுடியாதவனுவன். ஆதலின், துக்கத்தைக்கொடுக்கும் பதிபுத்திரதனாதிகளைப் பரித்தியாகித்து நீ உனது இருதயத்தே ஸ்வயஞ்சோதியாய ஆநந்தஸ்வரூப ஆன்மாவை நிச்சயஞ்செய்தி. ஹே மைத்திரேயி! முன்னர் நீ யென்பால் மோக்ஷரூப அமிருதத்தின் சாதனத்தைக் கேட்டாயாதலின் யானிப் பிரஹ்மவித்தையை யுபதேசித்தனன், இதுவே அதனையடையச் சாதனமாம். சர்வஜீவர்களி னிருதயத்தே விளங்கிக்கொண்டிருக்கும் பரப்பிரஹ்மமே யெனது ஆன்மவடிவமாம் என்னும் ஆன்ம சாக்ஷாத்காரமின்றி வேறொருசாதனம் மோக்ஷரூப அமிருதத்தை யடைவதற்கின்றும்; மற்றே, இதுவே அதனையடையச்சாதனமாம். தேகாதியனுன்ம பதார்த்தங்களில் யானெனதென்னு மபிமானத்தைப் பரித்தியாகித்து நீ இவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவைச் சாக்ஷாத்கரிப்பையேயாயின், அதன்மகிமையால் இத்தேக பரித்தியாகத்தின்பின்னர் மீண்டும் மிருத்யுவையும் ஜன்மத்தையும் ஒருகாலுமடையாய்; ஆதலின், தேகாதி சர்வ அனுன்மபதார்த்தங்களின் அபிமானத்தைப் பரித்தியாகித்து இவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவின் கண் நீ உன்சித்தத்தை யொருமைப்படுத்திக்கொள். ஹே சிஷ்ய! இவ்வண்ணம் அம்முனிவர் தமது மைத்திரேயி மனைவிக்குப பிரஹ்மவித்தையை யுபதேசித்துப் பின்னா அந்தக்கிருஹஸ்த ஆசிரமத்தைப பரித்தியாகித்துச சந்நியாச ஆசிரமத்தைக்கிரகித்துக்கொண்டனர். ஹே மைந்த! எவ்விசாரத்தைசசெய்தம்முனிவர் சந்நியாச ஆசிரமத்தைக் கவர்ந்தனரோ அதனை நீ கேட்டி:—சச்சிதாநந்தவடிவ ஆன்மாவினும் வேறாய அசத்துச்சடதுக்கரூப மாயாசக்தியானது சத்துவம், ரஜசு, தமசு என்னு முக்குணங்களோடுள்ளது அத்தகையதை அம்முனிவர் மித்தியாரூபமாய்க் கண்டனர். அம்மாயாரூப சக்தியைப பூர்வம முனீஸ்வரர்களும் ஜகத்காரண விசாரஞ்செய்து இங்ஙனம நிச்சயஞ்செய்தனா; அதாவது, இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மாவே இவ்வுலகிற்கு முக்கியகாரணமாம; இம்மாயாசக்தியோ உலகின் சககாரிகாரணமாம் என்பதாம். சீதம், உஷ்ணம், சுகம, துக்கம், மானம், அபமானம், சத்துரு, மித்துரு, தன்னுடல், பிறவுடல, தாமாத்மா, பாபாத்மா என்பனமுதலிய அநுகூலப்ரதிகூலப்பதார்த்தங்கள் யாவற்றின்கண்ணும் அம்முனிவர் சமதிருஷ்டியைச்செய்தனர். உருவமுதலிய விஷயங்களிடத்தே நேத்திராதி இந்திரியங்களின் பிரவிருத்தியின்கண் அவர் துவேஷபுத்தியைச செய்திலர். அவற்றினின்றும் அவற்றை நிவிருத்திப்பதில அவரிச்சைசெய்திலர்; மற்றே, விஷயங்களிடத்தே பிரவிருத்தியும், நிவிருத்தியும், நேத்திராதிகளின் தாமங்களேயாம். ஆநந்தவடிவமாய யானே எப்போதும் நிர்விகாரனேயாவேன், என விசாரித்து அம்முனிவர் பொறிகளின் பிரவிருத்தியினும் நிவிருத்தியினும உதாசீனராயினர். மனோவாக்குகாயங்களால் சர்வபபிராணிகட்கும் அபயத்தை யடைவித்தனர். சூரிய சந்திரர்போல இராகத்துவேஷாதிகளற்றவராய் இம்மண்ணின்கண்ணே சஞ்சரித்தனர். இத்துணையால் யாஞ்ஞவற்கியமுனிவரின் விருத்தாந்தம் கூறினேம், இபபோதுமைத்திரேயியின் விருத்தாந்தத்தைக கூறுவாம் :—ஹே குழந்தாய்! யாஞ்ஞவற்கிய முனிவர் சந்நியாச ஆசிரமத்தைத்தரித்து இவ்வுலகத்தே சஞ்சரித்ததேபோல அந்தப்பிரஹ்மவேத்தாவாய மைத்திரேயியும் சந்நியாசத்தைக் கவர்ந்து சஞ்சரித்தனள். ஆனால், இதன்கண்ணே யித்துணைச்சிறப்பிருந்தது; அம்முனிவரோ இலிங்கசந்நியாசத்தைத்தரித்தனர், மைத்திரேயியோ அலிங்கசந்நியாசத்தைத்தரித்தனள். தண்டக்கிரகண பூர்வகமாயசந்நியாசம் இலிங்கமாம். அஃதின்றியது அலிங்கமாம்,

இத்துணைச்சிறப்பைவிட்டுப் பிக்ஷாடனாதி பாகியதர்மங்களும், சமதமாதி ஆந்தர தர்மங்களும் இருவருக்கும் சமானமேயாம்.

சங்கை :—ஹே பகவன்! அம்முனிவரைபபோல அவ்வம்மையும் தண்டக்கிரகண பூர்வக லிங்கசந்நியாசத்தை ஏன் தரிக்கவில்லை?

சமாதானம் :—ஹே குழந்தாய்! தண்டங்கவரும் வாயிலாய லிங்கசந்நியாசத்தின்கண்ணே பிராஹ்மணன் ஒருவனுக்கே அதிகாரமாம், க்ஷத்திரிய வைசியருக்கோ லிங்கசந்நியாசத்தே அதிகாரமின்றாம. க்ஷத்திரிய வைசியருக்கும் லிங்கசந்நியாசத்தே யதிகாரமின்றாயின் அதன்கண் ஸ்திரீயினுக்கதிகார மெங்ஙனமுண்டாம்? இவ்வார்த்தை ஸ்மிருதியின்கண்ணுமுளது :—

"ஈ²வஜாநாஉயம் யசெ஼ாயஷிஷெ ணா ஂ஦஍ஂமயாறணம் ।
஬ாஹூ²ஜாதொ஢²ஜாதாநாம் நாயம்யசெ஼ாவியீயதெ" ॥

" பரமன் வாயினின் றுதித்தவா பயிலுக விலிங்க
வுரம தாகிய தண்ட சந்யாசத்தை யுரித்தா
யுரிய வாகுவிற் குறங்கினின் றுதித்தவா தமக்கோ
தரம தாகிய வலிங்க சந்யாசமே தகுமால்."

(போ-ள.) பரமேசுவரரது முகத்தினின்றும உதயமாய பிராஹ்மணர்க்கே தண்டக்கிரகணவாயிலாய இலிங்கசந்நியாசத்தே அதிகாரமாம. பரமேசுவரரது பாகுவினின்றும, தொடையினின்றும உண்டாய க்ஷத்திரிய வைசியர்க்கோ லிங்கசந்நியாசத்தே அதிகாரமின்றாம். ஹே குழந்தாய்! பூர்வபுண்ணிய கரும மகிமையால் க்ஷத்திரியருக்கும் வைசியர்க்கும மூவருண ஸ்திரீகட்கும இச்சமசாரத்தினின்றும் தீவிரவைராக்கியமுண்டாயின் அவர்கள் அலிங்கசந்நியாசத்தைத்தரித்து லிங்கசந்நியாசியரின் அஹிம்சை பிரஹ்மசரியம சத்தியம என்பனவாதிசாஸ்திரத்திற்கூறிய தர்மங்கள் யாவற்றையும் சமபாதித்துக்கொள்க. அஹிம்சாதி தர்மங்களைச்செய்வதில் எல்லாப்பிராணிகட்கு மதிகாரமுண்டாம. இப்போது நாற்சாதன சம்பன்ன அதிகாரிகட்குப பிரஹ்மவித்தையுண்டாமபொருட்டு குருசீடபாவத்தின் வியவஸ்தையை நிரூபிப்பாம :—ஹே குழந்தாய்! இபபரத்கண்டத்தே அதிகாரியாய மனுடசரீரத்தையுற்றும் ஆன்மசாக்ஷாத்காரத்தை அடையாதவன்மகா ஆனியையடைவன் எனச் சுருதி கூறுகின்றது :—"நசெ஡வெடீ³உஹ ஬தி விநஷ்டியெதி ஡²஢஗ஂதா ஹெஹவதி" இப்பரதகண்டத்தே அதிகாரியாய சரீரத்தையுற்றும ஆநந்தவடிவ ஆன்மாவை யறியாதவனும் அஞ்ஞானிஜனனமரணாதி அநேகதுக்கத்தையடைவன். அதனையறிந்தவன் மோக்ஷரூப அமிருதத்தையடைவன. ஆகையால, அதிகாரியானவன் ஆன்மசாக்ஷாத்காரத்தை யவசியம் சமபாதிக்கவேண்டும. "ஸ்தியொவெ ஶூ²ாஸ்தயா ஶூ²ஂ஦ா஡்஡ாஸ்தெவியாதி வராஂமதிம்" பெண்ணும் வைசியனும் சூத்திரனும மோக்ஷத்தையடைவா என்னும் ஸ்ரீமத பகவற்கீதையின் வசனத்தால் அவர்கட்கும் மோக்ஷத்தே அதிகாரம துணியபபெறும; அம்மோக்ஷம் ஆன்மஞானமின்றி யுண்டாகாது. "ஃதெஜ்ஞாநாந்²஢க்தி஼ நாந்²யவெஂஷாவிமுக்தெ ஷயநாய" ஆன்மஞானமின்றி முக்தியுண்டாகாதாம், ஆன்மஞானமின்றி வேறொரு மார்க்கம் மோக்ஷமடைவதற்கின்றாம; மற்றோ, அஃதொன்றே அதனையடைய மார்க்கமாம். அவ்வான்மஞானம சுரோத்திரிய பிரஹ்மநிஷ்ட குருவினுபதேசத்தினானே கிடைக்கும் "ஆசாய்வாந் ஡²஢ஷொவெ஦" சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட ஆசிரியரையுடையவனே ஆன்மாவையறிவன். ஆகையால், நான்கு வருணத்த புருஷரும் ஸ்திரீகளும சுரோத்திரியப பிரஹ்மநிஷ்ட குருவாயிலாய்ப் பிரஹ்மவித்தியாசிரவணஞ்செய்து ஆன்மஞானத்தை அவசியம் சமபாதிக்கவேண்டும்; ஆண்டு எவ்வருணத்திய அதிகாரி எவ்வருணத்திய அறிஞனைக்குருவாய்க்கொள்வதென்பதை நீ கேட்பாயாக. சமபூர்ண வருணங்களுள்ளும் பிராஹ

மனன் உத்தமனானவனாதலின் பிரஹ்மவேத்தாவாய அவன் நாற்சாதன சம்பன்னப் பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய அதிகாரிகட்கும் மூவருணத்திய மங்கையர்கட்கும் உபநிஷத்வடிவ வேதவசனத்தை உபதேசித்து ஆன்மசாக்ஷாத்காரத்தையுண்டாக்குக; ஏனெனின், சாஸ்திரத்தே சூத்திரர்கள் உபநிஷத்வடிவ வேதவசனத்தைச் சிரவணஞ்செய்வதன்கண் நிஷேதங் கூறப்பட்டுளது. அவ்வாறு க்ஷத்திரிய வைசிய மூவர்ண ஸ்திரீகட்கு உபநிஷத் சிரவண நிஷேதம் எந்நூலின்கண்ணும் கூறப்படவில்லை.

சங்கை :—ஹே பகவன்! சுருதியின்கண்ணே ஸ்திரீகட்கு வேதாத்தியயன நிஷேதங்கூறப்பட்டுளது. "ஸ்த்ரீஶூத்ரௌ நாதீயதாம்" ஸ்திரீயும் சூத்திரரும் வேதாத்தியயனம் செய்யாதொழிக என்னுஞ் சுருதிவசனம் முரண்படுமன்றோ?

சமாதானம் :—ஹே குழந்தாய்! குருவுச்சரித்த வேதவசனத்தைச் சீடனுமுச்சரித்தல் அத்தியயனமாம். இத்தகைய அத்தியயனம் மூவருண ஸ்திரீகட்கு நிஷேதிக்கப்பட்டிருப்பினும், பிரஹ்மவேத்தாவாய குருமுகவாயிலாய் வேதவசன சிரவணஞ்செய்ய நிஷேதமின்றாம். அவர்கட்கு வேதவசன சிரவணத்தினும் நிஷேதமிருக்குமாயின் அவ்வேதத்தின்கண்ணே மைத்திரேயி கார்க்கிமுதலியபெண் சிரோரத்தினங்கட்குப் பிரஹ்மவித்தையினுபதேசப பிரகாரங்கூறியிருத்தல்யாவும் அசங்கதமன்றேவாம. ஆதலின், முமுக்ஷுக்களாய மூவருண ஸ்திரீகட்கு உபநிஷத் சிரவணத்தே யதிகாரமுளது. க்ஷத்திரிய வைசியர்க்கோ வேதாத்தியயனத்தும் அதிகாரமாமாதலின் பிரஹ்மவேத்தாவாய அறிஞன் அதிகாரியாராய க்ஷத்திரிய வைசிய புருஷருக்கும் மூவருணத்திய ஸ்திரீகட்கும் உபநிஷத்தைஉபதேசித்து ஆன்ம சாக்ஷாத் காரத்தையுண்டாக்குக; ஆனால், அவ்வறிஞன் அவ்வைவருக்கும் தண்டக்கிரகண வாயிலாய லிங்கசந்நியாசத்தை யொருகாலுங் கொடாதொழிக. ஒருகால் அவ்வைவருக்கும் சம்சாரத்தே தீவிரவைராக்கியமுண்டாயின் அவர்கட்கு அலிங்கசந்நியாசங்கொடுக்குக; ஏனெனின் சாஸ்திரத்தேசூத்திரர்கள்யாகாதி விசேஷகருமங்களைச்செய்ய நிஷேதிக்கப்பட்டிருப்பினும் அந்த யாகத்தே பிராஹ்மணாதியதிகாரிகளாற்செய்யத்தகுதியாய தானம், தவம், சத்தியம், நமஸ்காராதி சுப கருமங்கள்செய்வதில் அசசூத்திரருக்கதிகாரவிதானமுளதாம் அதுபோல,இலிங்க சந்நியாசத்தே கேவலம்பிராஹ்மணாகட்கே யதிகாரமாமெனினும் அவர்களாற்செய்யத்தக்க அஹிம்சை பிரஹ்மசரியம் சத்தியமுதலிய தருமவாயிலாய் அலிங்கசந்நியாசத்தைச் செய்துகொள்வதில் அவ்வைவருக்கும் தோஷமின்றாம். மாறாய் அவாகட்குப் பெரும்புண்ணியப் பிராபதியுண்டாம. இவ்வுலகத்தே கூறியவைவரும் மற்றையரும் பிரஹ்மவித்தையிற் குசலராயினும் பிரஹ்மவேத்தாவாய பிராஹ்மணனிருபப மற்றையா குருரூபமாய் அதிகாரிகட்குப் பிரஹ்மவித்தையையுபதேசியாதொழிக; மற்றோ, பிராஹ்மணனே உபதேசிக்கவேண்டும். பிரஹ்மவேத்தாவாய பிராஹ்மணனில்லாதிருப்பின், பிரஹ்மத்தையுணர்ந்த க்ஷத்திரியன் குருரூபமாய் க்ஷத்திரிய புருஷ ஸ்திரீகட்கும் வைசியபுருஷ ஸ்திரீகட்கும் பிரஹ்மவித்தையை உபதேசிக்க; ஆனால், பிராஹ்மண ஸ்திரீ புருஷர்கட்கு உபதேசஞ்செய்யாதொழிக. இவ்வண்ணம் வைசியனும் பிரஹ்மவேத்தாக்களாய பிராஹ்மண க்ஷத்தியரிலரேல் சஜாதீய ஸ்திரீ புருஷர்கட்குப் பிரஹ்மவித்தையை உபதேசிக்க; ஆனால், மேற்குலத்தவற்கு உபதேசஞ்செய்யலாகாது. மூவருணத்திய ஸ்திரீகட்குச் சாஸ்திரத்தே வேதாத்தியயன நிஷேதஞ்செய்யப்பட்டுளதாதலின் மூவருண ஸ்திரீகளும் குருவாக மூவருணப் புருஷருக்குஉபதேசிக்கலாகாது. பிரஹ்மவித்தையையுடைய மூவருண புருஷரிலராயின் மூவருணமங்கையரும் குருரூபமாகப் பிரஹ்மவித்தையைஉபதேசிக்க; ஆனாலவர்கள் தமது சமஜாதியர்க்கேனும் தாழ்ந்தவர்க்கேனும் உபதேசிக்க;

தம்மினும் மேலவர்க்குஉபதேசியாதொழிக. மூவருண புருஷருக்கும், தம்மினுமுத்தமஜாதியையுடைய குருவேனும், தமதுசமானஜாதியையுடைய குருவேனும் கிடையாவிடின், அவர்களும் தம்மிற்றாழ்ந்த ஜாதியையுடைய பிரஹ்மவேத்தாவாய குருவின்பால் சாஸ்திரமரியாதையைத் தெரிந்துகொண்டு வேதவசனங்களாற்றமே ஆன்மசாக்ஷாத்காரத்தைச சம்பாதித்துக்கொள்க. நல்லகுலத்தையுடையவனும், தாயாராலும், தந்தையாராலும் ஆசாரியாராலும் முறையே சிக்ஷிக்கப்பெற்றவனும், ஆய பிரஹ்மவேத்தாப் பிராஹ்மணனையே, பிராஹ்மண ஸ்திரீயும் அன்னிய க்ஷத்திரியாதியரும் குருவாகக்கொள்க. முதன் மூவருணத்திய ஸ்திரீகட்கோ தமது பதியே குருவாகுக. பதியானவன் பிரஹ்மவித்தையுடையவனல்லாதிருப்பின் அவர்கள் தம்மினும் மேற்குலத்துப் பிரஹ்மவேத்தாப் புருஷரைக் குருவாகக் கொள்க, அத்தகையரிலராயின் சமஜாதிப் பிரஹ்மவேத்தாக்களைக் குருவாகக் கொள்க, பிராஹ்மணரைக் குறித்துத்தாழ்ந்த ஜாதியர் க்ஷத்திரிய வைசியர்களும், அவர்களினும் தாழ்ந்தோர் சூத்திரருமாவர். இச்சூத்திரர் எவ்வாபத்துக்காலத்தும் பிராஹ்மணாதி யுத்தம வருணங்கட்குக் குருவாகலாகாதாம், சூத்திரர்கட்கும் அன்னிய சங்கரஜாதியர்க்கும் பூர்வபுண்ணிய மகிமையால் ஆன்மசாக்ஷாத்கார இச்சையுண்டாயின் அறிஞனவன் அவர்கட்கும் பிரஹ்மவித்யா உபதேசஞ்செய்க; ஆனல், சாக்ஷாத் வேதவாக்கியத்தை உபதேசியாதொழிக; மற்றோ, உபநிஷதர்த்தங்களை நிரூபணஞ்செய்யும் பாகவதாதிகளையும் (பஞசதசி) முதலிய பிரகாண கிரந்தங்களையும் உபதேசித்து முமுக்ஷுக்களாய சூத்திராதியர்க்கு ஆன்மசாக்ஷாத்காரத்தையுதிபபிக்க. உத்தமஜாதியையுடையபிரஹ்மவேத்தாவாயகுருகிடையாமல் தாழ்ந்த ஜாதிப் பிரஹ்மவேத்தாக் குருகிடைபபின், உத்தமஜாதியர் அத்தாழ்ந்த வர்பானின்றும் தனுதிகளைகொடுத்துப பிரஹ்மவிதைதையைகொள்க. அத்தாழ்ந்தஜாதிக் குருதனதியிச்சையறற நிட்காமராயின் அவருக்கு மேற்குலத்தவர் தம் பாலுற்ற வேறு வித்தையைக்கொடுத்துப் பிரஹ்மவித்தையைக்கொள்க. தாழ்ந்த ஜாதியர் மேலவாக்குப் பிரஹ்மவிதைதைகொடுப்பினுமட, மேலவர் பால்பாதம் வருடன் முதலிய தாழ்நத சேவைகளைச செய்விககலாகாதாம. ஹே மைந்த! வேதத்தே அபூவபதியென்னும் க்ஷததிரிய அரசா உததாலகாதிப் பிராஹ்மணர்கட்குப் பிரஹ்மவிதைதையையுபதேசிததனர். அஜாத சத்துரு அரசர் பாலாகிப பிராஹ்மணருககுப பிரஹ்மவித்தையை உபதேசிததனர். இவ்வகையாய வேதப்பிரதிபாதிதகதைகளைக்கண்டு தாமசாஸ்திர வக்தாக்களாகிய மனுமுதலிய இருஷிகள் க்ஷத்திரியர் முதலிய தாழ்நதவருணங்களினின்றும் பிராஹ்மணாதி உத்தமவருணங்கள் பிரஹ்மவித்தையைக்கொள்ளுமு பிரகாரம கூறியிருககின்றனர்; ஆனலிவ்வெல்லாப் பிரகாரங்களும் பிரஹ்மவேததாவாய பிராஹ்மணகுரு கிடையாவிடிற்றனும், அத்தகையகுரு கிடைத்துவிடினே க்ஷத்திரியாதியாபால் பிராஹ்மணன் பிரஹ்மவித்யா அத்தியயனஞ்செய்யாதொழிக. ஹே குழநதாய்! இங்ஙனம் சாஸ்திரத்தின்கண்ணே மரியாதைகூறபபெற்றுளது, அவ்வெல்லாமரியாதைகளையும் அறிந்துள்ள மைத்திரேயியாகிய பிரஹ்மவேத்தாவானவள் தண்டக்கிரகணவாயிலாய் லிங்கசந்நியாசத்தைத் தரியாது பிரஹ்மசரியாதிசாதனவாயிலாய் அலிங்கசந்நியாசத்தைத்தரித்து யாஞ்ஞவற்கிய முனிவரைப்போல இவ்வுலகத்தே சஞ்சரித்தனள். அம்மைத்திரேயியினும் யாஞ்ஞவற்கிய முனிவர்பால் தண்டக்கிரகணமொன்று மாத்திரமே சிறப்பாகவிருந்தது அதனை விடுத்துச் சமதமாதிதருமங்கள் யாவும் அம்முனிவரிடத்திருந்தனபோலவே அவ்வம்மையாரிடத்துமிருந்தன. ஹே குழந்தாய்! யாஞ்ஞவற்கியமுனிவர் தமது மனைவியாய மைத்திரேயிக்கு உபதேசித்த பிரஹ்மவித்தை முழுவதையும் நின்பொருட்டுக்கூறினேன். இப்போது எப்பொருளைச் சிரவணிக்க இச்சையுளதோ அதையென்பாற் கூறுதி.

ஏழாவது அத்தியாயம் முற்றும்.

---

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## எட்டாவது அத்தியாயம்.



ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ குருப்யோநம: ஸ்ரீ காசிவிஶ்வேஶ்வராப்யாம்நம:
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநம:.

இவ்வாத்மபுராண நான்காவது ஐந்தாவது ஆறாவது ஏழாவது என்னும் நான்கு அத்தியாயங்களில் யஜுர்வேதத்தின் பிருகதாரண்யக உபநிஷதர்த்தம் நிரூபிக்கப்பட்டது. இப்போது, எட்டாவது அத்தியாயத்தே அந்த யஜுர்வேதத்தின் சுவேதாசுவதர உபநிஷதப்பொருள் நிரூபிக்கப்படும். ஆண்டுப் பூர்வ அத்தியாயங்களில் யாஞ்ஞவற்கியமுனிவா கூறிய பிரஹ்மவித்தையைகேட்டுப் பரம ஆச்சரியத்தையடைவுற்ற சீடன் தன்னாசிரியர்பால் மீண்டும் இவ்வண்ணம் வினவத்தொடங்கினன். சீடன்கூறல் :—ஹே பகவன்! இவ்வாத்மபுராணத்தின் முதலாவது அத்தியாயத்தே இருக்குவேதத்தின் ஐதரேய உபநிஷதப்பொருளையுபதேசிக்கக்கருதிச் சனகாதி இருஷிகட்கும் வாமதேவாதி அதிகாரிகட்குமுற்ற சம்வாதவாயிலாய் நானாவகையாய பிரஹ்மவித்தையையுபதேசித்தீர்கள். இரண்டாவது அத்தியாயத்தும் மூன்றாவது அத்தியாயத்தும் அந்த இருக்குவேதத்தின் கௌஷீதகி யுபநிஷதப்பொருளை உபதேசிக்கக்கருதி தேவராஜாவிற்கும ப்ரதர்த்தன அரசர்க்குமுற்ற சம்வாதவாயிலாயும் அஜாதசத்துரு அரசருக்கும் பாலாகிப் பிராஹ்மணருக்கும் உற்ற சமவாதவாயிலாயும் நானாவகையாய பிரஹ்மவித்தையை யுபதேசித்தீர்கள். நான்காவது ஐந்தாவது ஆறாவது ஏழாவது என்னும் நான்கு அத்தியாயங்களில் யஜுர்வேதத்தின் பிருகதாரண்யக உபநிஷதர்த்தத்தையுபதேசிக்கக்கருதி ஒரு ஸ்திரீவம்ச இரண்டு புருஷவம்சத்திய இருஷிகளின் பரஸ்பரபேதத்தையும் அபேதத்தையும், தத்யங் அதர்வண இருஷிக்கும் அசுவநீ குமாரர்கட்கும் தேவராஜாவிற்குமுற்ற சம்வாதவாயிலாப் நானாவகைப்பிரஹ்மவித்தையையும், அசுவிநீ குமாரர்கட்குப் பிரஹ்மவித்தையை யுபதேசித்தலால் தத்யங்முனிவர்க்குச் சிரச்சேதரூபக்கிலேசமுற்றதையும், ஜனகராஜாவின்யாகத்தே யாஞ்ஞவற்கியமுனிவர்க்கும் ஆஶ்வலாதி இருஷிகட்குமுற்ற பரஸ்பர சம்வாதவாயிலாய் நானாவகைப்பிரஹ்மவித்தையையும யாஞ்ஞவற்கிய முனிவரது சாபத்தாற் சாகல்லியாது மரணத்தையும், யாஞ்ஞவற்கிய முனிவர்க்கும் ஜனகராஜாவிற்குமுற்ற சம்வாதவாயிலாய் நானாவகையாய பிரஹ்மவித்தையையும், யாஞ்ஞவற்கிய முனிவருக்கும் மைத்திரேயிக்குமுற்ற சம்வாதவாயிலாய் நானாவகையாய பிரஹ்மவித்தையையும், உபதேசித்தீர்கள். ஹே பகவன்! அவ்வேழாவது அத்தியாயவீற்றில் முன்னர்ச் சாஸ்திரவேத்தாக்களாய முனீஶ்வரர்கள் ஜகத்காரணவிசாரஞ் செய்து கண்ட அவித்யாரூபசக்தியை யாஞ்ஞவற்கியமுனிவர் சந்நியாச ஆசிரமத்

தைத்தரித்துப் பொய்யெனக்கண்டனர் எனக்கூறினீர்கள். இதன்கண்ணே எனக் கித்தகைய ஜிஞ்ஞாசையுண்டாகின்றது. அம்முனீஶ்வரருக்கு எவ்வண்ணம் விசார முண்டாயது, அவர்களின் சபையெங்ஙனமுண்டாயது, அவர்கள் தத்தமதாபிப் பிராயத்தை யெங்ஙனம் வெளிப்படுத்தினர், அவர்கள் ஜகத்காரணத்தை விசா ரித்துப் பிரஹ்மத்தையே ஜகத்காரணமென நிச்சயித்தார்களா? அல்லது, வேறொ ருபொருளை ஜகத்காரணமென நிச்சயித்தார்களா? அவர்களில் யாவரும் எச்சித் தாந்தத்தை நிச்சயஞ்செய்தனர். என்னுமிவை யாவற்றையும் தேவரீர் தயை செய்து உபதேசிக்கவேண்டும். எனக்குக்கூறுது இரகசியமாய் வைக்கும்வார்த்தை தங்களிடத்தின்றன்றோ! என இவ்வண்ணம் சீடன் ஆசிரியரைநோக்கிப் பிரார்த்தி த்தபோது அவ்வாசிரியர் கிருபையோடு மிவ்வாறுகூறத் தொடங்கினர். ஸ்ரீ குரு கூறல்:—ஹே குழந்தாய்! தவத்தாற் பாவங்களைப் போக்கிய சுவேதாசுவதர இருஷியொருவரிருந்தனர். ஒருகாலத்தே அவரதாசிரமத்தே அநேக மகாத்மாக் களாகிய சந்நியாசிகள் ஒருங்குகூடிவந்தனர். ஆண்டு அந்த இருஷியைக்கண்டு அச்சந்நியாசியர் இவ்வாறு கூறினர்:—ஹே வேதசாகையைப் பிரவிருத்திப்பி க்கும் சுவேதாசுவதர முனிவரே! உமக்கு மங்கலமுண்டாகுக. அதிதிகளாய யாங்கள் உமதாசிரமத்தே வந்தன மாதலின் பிரஹ்மவித்யாரூப பிக்ஷையைச் சந்நியாசிகளாய எங்கட்கிடவேண்டும். ஹே பகவன்! பிரஹ்மாவினுபதேசத் தாற்றுங்கள் அடைந்த பிரஹ்மவித்தையைச் சிரவணஞ்செய்யும்பொருட்டுச் சந்நி யாசிகளாய யாங்கள்யாவரும்வந்தோம், ஆகையால், தாங்கள் தயைகூர்ந்து அந் தப் பிரஹ்மவித்தையைக் கூறவேண்டும்; அதனைக்கேட்டே எங்களது ஐயம் நீங்க வேண்டும். ஹே பகவன்! சாஸ்திரங்களின் வேறு வேறாய சம்பிரதாயத்தையுடன் பட்டு நாங்கள்யாவரும் ஜகத்காரணத்தை வேறு வேறாய் அங்கீகரித்துளோம், அதனால் எங்கட்கு ஜகத்காரணத்தே நெடுநாள்வரை விவாதமுண்டாயது; ஆனால், இப்பொருளே சர்வஜகத்தின்காரணமென இதுவரை யெங்கட்கு நிச்சயமுண்டாக வில்லை. இக்காரணத்தானே நாங்கள் யாவரும் ஜகத்காரண நிசசயஞ்செய்யும்பொரு ட்டுப் பரஸ்பரம் இவ்வாறு சங்கேதஞ்செய்தோம். இவ்வுலகத்தே யஜுர்வேத சாகையின் பிரவர்த்தகராய சுவேதாசுவதர இருஷியானவர் பக்ஷபாதமற்றவர், பிரஹ்மாவைப்போலச் சர்வசாஸ்திரமுமுணர்ந்தவர், சத்துருவிடத்தும் தமது புத்திரரிடத்தும், தமதுசரீரத்தும் சமானபுத்தியையுடையவர். அத்தகைய முனி வர் ஜகத்திற்கு எக்காரணத்தைக்கூறுகின்றனரோ அதனையே யாவரும் அங்கீகரிக்க வேண்டுமென்பதாம். ஹே பகவன்! இவ்வாறு பரஸ்பரம் சங்கேதஞ்செய்து கொண்டு யாங்கள்யாவரும் தங்கள்சமீபத்தே யடைந்தோமாதலின், தாங்கள் பிர ஹ்மவித்தையை உபதேசித்து எங்களுடைய ஐயத்தை நீக்கவேண்டும். ஹே குழந் தாய்! அம்மகாத்மாக்களாய சந்நியாசியர் இவ்வகை வினவைக்கேட்டபோது அம் முனிவர் அவர்களைநோக்கி இவ்வாறுகூறினர்:—ஹே சந்நியாசிகளே! இப்போது ஜகத்காரண விசாரஞ்செய்யும்பொருட்டு நீங்கள் யாவரும்ஒருங்குகூடியதுபோல, முன்னொருகாலத்தே ஒரு தேயத்தில் ஒரு நிமித்தத்தால் சம்பூரண வேதவேத் தாக்களாய மறையவர் ஒருங்குகூடினர். அவர்கள் வேதங்களிலும் அவற்றினுறங் கங்களிலும் அத்தியந்தங் குசலர், சாஸ்திரார்த்த கற்பனைசெய்வதில் அத்தியந்தங்

குசலபுத்தியையுடையவர். அவருள்ளும் சிலர் பிரஹ்மவித்தையின்கண்ணே குசலர், சிலரோ அன்னியவித்தையிற் குசலர், இத்தகையர் யாவரும் ஒருங்குகூடினர். அவருள்ளும் பிரஹ்மவேத்தாக்களாய பிராஹ்மணர் சர்வ அஞ்ஞானிகளையுமுத்தாரணஞ்செய்யும்பொருட்டு எல்லா மறையவரையும்நோக்கி இவ்வாறு கூறத்தொடங்கினர் :—ஹே அந்தணரே! வேதவேதாங்கவித்தையினகண்ணே குசலரும் உலகருக்கனுக்கிரகஞ்செய்பவருமாய உங்களுடைய இக்கூட்டத்தே உலகர்கட்குபயோகமாமாறு ஓர் விசாரஞ்செய்யபபடவேண்டும். நீங்களியாவரும் கிலானியைத்தரும்லௌகிக கதைகளைப் பரித்தியாகஞ்செய்து வேதவசனங்களை விசாரம்புரிவீர்களாயின், அஞ்ஞானிகட்குபகாரஞ்சித்திக்கும; வேதவசன விசாரமின்றி அஞ்ஞானிசட்குமங்கலமுண்டாகாது. ஆகையால், ஹே விபபிரர்களே! இவ்வுலகத்திற்குபகாரஞ்செய்யப் பிரீதியிருககுமாயின், நீங்கள் யாவரும் லௌகிக கதைகளை அறவேவிட்டு ஜகதகாரண விசாரஞ்செய்யுங்கள். ஹே சந்நியாசிகளே! இவ்வகை வசனததைககேடடு அமமறைபவாயாவரும மிகவும மகிழ்வுற்றனர். அவர்களெல்லாரும் ஜகத்காரணத்தைக கேடகும்பொருட்டுப் பிரஹ்மவேத்தாக்களாய விருத்த மறையவரைநோக்கி இங்ஙனங கூறததொடங்கினா :—ஹே பிரஹ்மவேத்தாக்களே! தாங்கள் நிசசயஞ்செய்துளள ஜகதகாரணததைக்கிருபைசெய்து எங்கள்பொருட்டுக் கூறவேண்டும; யாங்கள் யாவரும் அதனைக கேட்கின்றோம. ஹே சந்நியாசியரே! இவ்வாறு மறையவர் கூறியபோது அநதப் பிரஹ்மவேத்தாக்கள் மறையவர் யாவரையும தர்ககுசலரெனவுணர்நது நானுவகையாய யுக்திகளால் அம்மறையவர்க்கு ஜகதகாரணததைக் கூறினர். ஹே மறையவரே! இவ்வுலகமானது யாதொரு காரணமுமின்றியேயுண்டாயிருககினறது என நீங்கள கூறுவீர்களாயின் அது சம்பவியாது; எனெனின், ஆடைமுதலிய காரியங்கள் நூன்முதலிய காரணங்களின்றியே உண்டாகாததேபோல இக்காரியரூபவுலகமும் ஒரு காரணமின்றியுண்டாகாது. காரணமின்றியே காரியோறபத்தியை யங்கீகரிப்பினே நூல்வடிவ காரணமின்றியே ஆடைவடிவ காரியமுண்டாதலவேண்டும். அல்லது காரணமின்றியே காரியமுண்டாகுமாயின், புததிரரூபகாரியோறபத்தியின்பொருட்டு மனைவிக்குப் புருஷசமீபஞ செலலலுண்டாகலாகாது. அவவாறே புருஷனுக்கும மனைவிசமீபத்தே செல்லக்கூடாதாம. தனததையடையும்பொருட்டுத் தனமறறவன் சேவையைச செய்யலாகாது, பசிதாக நீககப்பொருட்டு அன்னஜல அடைவிற்காகச் சுழலலாகாது, அன்னஜலபக்ஷணமின்றியே பசிதாகநீக்கமுண்டாகவேண்டும், சீத, ஆதப நீக்கப்பொருட்டு ஆடை, வீடு சமபாதிபபதில முயலலாகாது. இவை முதலாகச் சர்வ வியவகார அபாவமாமாதலின் காரணமின்றி எக்காரியோற்பத்தியுமுண்டாகாதாம். ஆகையால், உலகவடிவகாரியததிற்கும் ஒரு காரணத்தை யுடன்படல்வேண்டும். இபபோது பகிர்முகவாதி காரியோறபத்தியிற் காரண அபாவத்தையே காரணமெனவெண ணுவன்; அவன் மதத்தைக்கண்டிபபாம் :—ஹே மறையவரே! பகிர்முகவாதியானவன் பீஜாதிகாரணங்களின் அபாவத்தையே அங்குராதிகாரியப்பொருட்டுக் காரணமென்பன். அவன்மதத்தே முற்கூறிய சர்வ வியவகார அபாவமாகிய மகாதோஷமுண்டாமாதலின் அவன்மதம அததியந்தம முரணும. அல்லது,

காரண அபாவத்தையே காரணமென்பவனை இது கேட்கவேண்டும்:—காரியோற்பத்தியில் எக்காரணாபாவத்தை நீ காரணமென வுடன்பட்டனையோ அது முற்றுமின்மையா? முன்னின்மையா? பின்னின்மையா? ஒன்றொன்றன்மையா? அவற்றுள் முதற்பக்ஷத்தை யங்கீகரிக்கினதுசம்பவியாது; ஏனெனின், இவ்வுலகம் காரணமின்றியேயுண்டாம் என்னும் பிரதிஞ்ஞையைச் சித்தஞ்செய்வான் காரணாபாவத்தை ஜகத்காரணமென வுடன்பட்டான்; அதுகாரணமானபோது காரணமின்றியே ஜகத்துண்டாமென்னும் பிரதிஞ்ஞை பொய்யாய்ப்போமன்றோ. அல்லது, காரணாத்தியந்தாபாவம் காரியோற்பத்தியில் ஹேதுவாயின் அது யாண்டுஞ்சுலபமாமாதலின்யாண்டுங் காரியோற்பத்தி யுண்டாதல்வேண்டும். யாண்டுமெல்லாக்காரியோற்பத்தி காணப்படுவதின்றாம். ஆகையால், யாண்டுங் காரியோற்பத்தியின்கண் காரணமுற்றுமின்மை காரணமாகாதாம். இங்ஙனம் காரணமின்றியே காரியவுலகமுண்டாம் என்னும் பிரதிஞ்ஞையின் ஹானிரூபதோஷத்தை முன்னின்மைமுதலியவற்றுங் கண்டுகொள்க. இரண்டாவது பக்ஷத்தை யங்கீகரிக்கின் அதுவுஞ்சம்பவியாது; ஏனெனின், முன்னின்மையானே காரியோற்பத்தியை யங்கீகரிக்கின், அவன்பாலிதுகேட்கவேண்டும:—கடாதிகாரியோற்பத்தியாங்கால் அம்முன்னின்மை அழிகின்றதா? அழியாதிருக்கின்றதா? முதற்பக்ஷத்தையுடன்படினோ இதுகேட்கவேண்டும்:—அம்முன்னின்மை கடாதிகளுண்டாவதற்கு முன்னே அழிகின்றதா? பின்னாசமாகின்றதா? முதற்பக்ஷத்தையுடன்படின் அது சம்பவியாது. ஏனெனின், கடமுண்டாவதற்குமுன் இறந்தகுலாலன் அதற்குக் காரணமல்லனவதேபோல முன்னரே நாசமாயமுன்னின்மையும கடாதியுற்பத்தியிற காரணமாகாதாம். அதனானே காரியோற்பத்தியை யங்கீகரிக்கினோ ஒழிந்த குலாலனுங் கடோற்பத்தியாதல்வேண்டும்; ஆனால், அவன் அதற்குக் காரணமாகான். ஆகையாலவை யுதியாததற்குமுன்னேயொழிந்த முன்னின்மை அவற்றிற்குக் காரணமாமெனக் கூறல் முற்றினுமுரணாம். இரண்டாவது பக்ஷத்தை யுடன்படினோ இது கேட்கவேண்டும்:—அம்முன்னின்மை ஏகமா? அநேகமா? ஏகமெனின், இப்போதிருக்கின்றதா? இல்லையா? இல்லையெனின், அது சம்பவியாது, ஏனெனின், சர்வகாரியங்கட்கும் காரணரூப ஒருமுன்னின்மை இக்காலிலதாயின் காரணமின்றிக் காரியோற்பத்தி சம்பவியாதாமாதலின் இப்போது கடாதிகளினுற்பத்தி யுண்டாகலாகாது; ஆனாலிப்போதும் அவற்றினுற்பத்தியை யாவருங்காண்கின்றோம். ஆகையாலிப்போததனின்மை சம்பவியாதாம். இருக்கின்றதெனின்? அதுவுஞ்சம்பவியாது. ஏனெனின், காரியமுதயமானபின் அதுநாசமாய்விடுமென்பது யாவருமுடன்பட்டவிஷயமாம். இதுவரையநேககாரியமுண்டாகியும் அது நாசமாகாதிருப்பின் அஃதெக்கால் நஷ்டமாகும்? அல்லது, இவ்வுலககாரணமாய அவ்வொருமுன்னின்மை நஷ்டமாயின் இக்காரியம் மீண்டுண்டாமா? உண்டாகாதா? உண்டாமெனின் அதுசம்பவியாதாம்; ஏனெனின், வாதியானவன் முன்னின்மையையே உலககாரணமென வங்கீகரித்தனன் அஃதழிந்தபின்னும் உலகவுற்பத்தியையுடன்படின் காரணமின்றியே காரியோற்பத்தி யங்கீகரித்ததாகும். ஆகவேஅவன்மதத்தே நூலின்றியே ஆடையுதயமும அன்னஜலமருந்தாமலே பசிதாகநிவிருத்தியும் ஆமென்னும் முற்கூறியசர்வதூஷணப் பிராப்தியுண்டாம். அல்

லது அம்முன்னின்மையாகிய காரணமழிநதபின்னர்க் காரணமின்றியே உலகவடிவ காரியோற்பத்தி யுண்டாவதேபோல இப்போதும் நூன்முதலியவையின்றியே ஆடைமுதலிய காரியங்கள் ஏன் தோற்றவில்லை? இக்கால நூன்முதலிய காரணமின்றி ஆடைமுதலிய காரியங்கள் உண்டாவதில்லை. முதலில் முன்னின்மைவடிவ காரணமின்றி உலககாரியவுற்பத்தியாம் என்னுமர்ததசித்தியின்பொருட்டு வாதியாதேனும் யுக்தியைக்கூறவேண்டும்; ஆனால அத்தகைய யுகதியொன்றுமின்றாம், ஆகையாலஃதழிந்தபின்னர் இக்காரியமுண்டாமெனை வாதிகூறல் முறறும்முரணும். அஃதழிந்த பின்னர்க் காரிய முண்டாகாதென் றுரைத்ததுஞ சம்பவியாதாம், ஏனெனின், காரண நாசானந்தரம் காரியமுண்டாகாதாயின் சிரவணாதிசாதனங்களின்றியே மோக்ஷபிராப்தியாமாதலின அதன்பொருட்டு நானுவகைப் பிரஹ்ம சரியாதி சாதனானுஷ்டானம நிஷ்பலமாம. அல்லது, அம்முன்னின்மைக்காரணமழிந்தபின்னர் மீண்டும் சமசாரோற்பததியுண்டாகாதாயின அநேகம வாதியர் அநாதியாயும் அநந்தமாயும் உடன்பட்ட இவ்வுலகததே அநததோடுகூடியதாந் தன்மை சித்திக்கும், அது சித்திக்கவே ஸாதித்தன்மையும அவசியஞ சித்திக்கும். ஏனெனின், நாசத்தையுடையனயாவையோ அவையுறபத்தியுடையனவும ஆம், கடாதிகள்போலும. யாவனிவ்வுலகை உறபத்தியுடையதாயும் நாசமுடையதாயும் அங்கீகரித்துளானே அவன் முகதரென அஙகீகரித்தவர்க்கும் மீண்டுஞ சம்சாரப் பிராப்தியுண்டாதல்வேண்டும். அவர்கட்கு மஙஙனமுண்டாயின் அவனுடன்பட்ட முக்திசாதனமுழுதும் வியர்த்தமாம், இததனையால உலககாரணரூப முன்னின்மை ஏகமென்னும் பக்ஷங கண்டிக்கபபட்டது, இனியவ்வநேகமென்னும பக்ஷங் கண்டிக்கப்படும் :—அநேகமெனின? இது கேடகவேண்டும, எவ்வாதியும் ஸ்வரூபமாக அபாவபேதம் அங்கீகரிப்பதிலலை; மறறே, பிரதியோகியின் பேதத்தினனே அங்கீகாரமாம். கடாதிப்பிரதியோகிபேதத்தால கடாபாவாதிபேதம் உண்டாதலே போல முன்னின்மையின்பேதமும பிரதியோகிபேததகினனே அங்கீகரிக்கவேண்டும். அமமுன்னின்மைப் பிரதியோகித்தன்மை யாதின்கண் ணுளது? காரணத்தின் கண்ணோ? காரியததின்கண்ணோ? காரணத்தின்கண்ணெனின் அது சம்பவியாது; ஏனெனின், அது வாதிமதபபடி அநாதியாமாதலின அததகையதற்கு யாதொரு காரணமுமின்றாம். காரியத்தின்கண்ணெனின்? அதுவும் சம்பவியாது; ஏனெனின், முன்னின்மைப் பிரதியோகித்தன்மையைக் காரியத்தின்கண்ணுடன்படின் காரிய அபாவத்தே காரணரூபத்தன்மை சித்தமாம், அதனையவனங்கீகரியான். ஏனெனின், காரண அபாவத்தே காரணரூபததன்மை அங்கீகரித்த பிரதிஞ்ஞை ஹானியாம், ஆகவே காரணமின்றியே காரியோறபத்தி அங்கீகரிககவேண்டிவருமாதலின் அதன்கண்ணே முற்கூறிய சம்பூரணதோஷமும் இப்பக்ஷத்தேவரும. அல்லது, முன்னின்மையையே காரணமெனவுடன்படின் அவன்பாலிது கேட்கவேண்டும் :—அம்முன்னின்மையின்கண் முன்னின்மைத்தன்மையானே காரணத் தன்மையுளதா? கடமுன்னின்மைத்தன்மை முதலிய விசேஷ வடிவத்தானே காரணத்தன்மையுளதா? முதற் பக்ஷத்தையுடன்படின் அது சம்பவியாது; ஏனெனின், அங்ஙனமாயின் கடமுன்னின்மையால் படாதிகாரியங்களும் உண்டாதல்

வேண்டும், ஆனாலவ்வாறுண்டாவதின்றாமாதலின் அது சம்பவியாமை காண்க. இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின்றோ அதுவுஞ் சம்பவியாது; ஏனெனின், கடத்தின்முன்னின்மை கடத்தின்காரணமாம், படத்தின்முன்னின்மை படத்தின் காரணமாம் எனக்கூறலால் இப்பொருள் துணியப்பெறும்:—பிரதியோகித்தன்மைச சம்பந்தத்தால் கடரூப விசேஷணவிசிஷ்ட முன்னின்மை கடத்தின்காரணமும், அங்ஙனமே படமுன்னின்மை படத்தின்காரணமுமாம; அம்முன்னின்மையின்கண் கடரூப விசேஷண விசிஷ்டரூபத்தன்மை கடவிசிஷ்ட முன்னின்மையென விசிஷ்ட ஞானமுண்டாயின் துணியப்பெறுவதாகும். அவ்விசிஷ்டஞானமும் முதலில கடரூப விசேஷணஞானமுண்டாயின் உண்டாம; ஏனெனின் விசிஷ்ட ஞானமியாவும விசேஷண ஞானவாயிலாகவேயுண்டாம், அஃதின்றியஃதுண்டாகாதாம். தண்ட விசேஷணஞானமுண்டான பின்னரே தண்டியென்னும ஞானமுண்டாம். அஃதின்றியவ்விசிஷ்ட தண்டி ஞானமுண்டாகாதாம். ஆகையால, கடவிசிஷ்ட முன்னின்மையுணர்வின்கண்ணும கடவிசேஷணஞானம் அவசியமுண்டாதலவேண்டும். கடமுன்னின்மையிருக்குங்கால கடவிசேஷணமுண்டாகவில்லையாதலின், அககடத்தே முன்னின்மையின் விசேஷணத்தன்மையின்றாம. நிகழ்காலபதார்த்தமே விசேஷணரூபமாமாதலின் கடமுன்னின்மைத்தன்மைவடிவததாலும, படமுன்னின்மைத்தன்மைவடிவததாலும அமமுன்னின்மையின்கண்ணே காரணரூபத்தன்மை சம்பவியாதாம்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! எனது மதத்தே நீகொடுத்த தூஷணம், விசிஷ்டஞானத்தின்கண்ணே விசேஷண ஞானத்தைக காரணமென உடன்படின் வரும்; ஆனால், யான் அவ்வாறுடன்படுவதில்லை; மறறோ, காரணாபாவத்தையே யாண்டுங்காரணமென உடன்பட்டுளேனாதலின் அததூஷணம பொருந்தாதாம்.

சமாதானம் :—ஹே வாதியே! விசிஷ்டஞானத்தே விசேஷ ஞானகாரணத் தன்மையைச சர்வவாதிகளுமங்கீகரித்துளார், அதனை நீயங்கீகரியாவிடின், அஃதின்றி வேறெவ்வுபாயத்தானேனும் விசிஷ்டஞானமுண்டாகாதாதலின் கடவிசிஷ்ட முன்னின்மையென்னும விசிஷ்டஞானம் நின்மதத்தே யொருகாலுமுண்டாகாது.

சங்கை :—ஹே சித்தாந்தியே! மலடிமைந்தன் என்னும் சத்தத்தால் மலடிமைந்தன் என்னும் விகற்பரூப் ஞானமுண்டாவதேபோல, முன்னின்மைக்காலத்தே அக்கடமிலலாதிருப்பினும, அக்கடவடிவ விசேஷண விகறபரூபஞானம் சம்பவித்தல்கூடும், அதன்பின்னர்க் கடவிசிஷ்டமுன்னின்மையெனனும்விசிஷ்டஞானம் சம்பவிக்கும.

சமாதானம் :—ஹே வாதியே! நின்மதத்தே மலடிமைந்தன் அத்தியந்தம சத்தியமாவதேபோல முன்னின்மைக்காலத்தே அக்கடமும அத்தியந்தமசத்தியமேயாமாதலின் மலடிமைந்தனது முன்னின்மையென்னும் விசிஷ்டஞானமுண்டாயினும அதன்கண்ணே அவனுக்குக் காரணத்தன்மையின்றாவதேபோலக் கட முன்னின்மையென்னும் விசிஷ்டஞானமுண்டாயினும் அதன்கண்ணே அதற்குக் காரணத்தன்மை சம்பவியாதாம்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! கடரூபகாரியமுண்டாகாதபோது அம்முன்னின்மைக்குக் கடத்தோடு சம்பந்தமின்றாயினும், கடரூபகாரியமுண்டானபோது, அவ்விசேஷணத்தோடு அதற்குச் சம்பந்தமுண்டாம்; அவ் வருங்காலசம்பந்தத்தையுடன்பட்டே அஃதுண்டாமுன்னரும் கடவிசிஷ்ட முன்னின்மையென வியம்பல் சம்பவிக்கும; பாலிய அவஸ்தையின்கண்ணே அரசகுமாரனுக்கு அரசத்தன்மையோடு சம்பந்தமின்றாயினும யௌவன அவஸ்தையின்கண்ணே அவனுக்கதனோடு சம்பந்தமாமாதலின் அவ் வருஞ்சமபந்தத்தைக்கொண்டே யாவரும் அவனை யரசனென்பர்.

சமாதானம் :—ஹே வாதியே! யௌவன அவஸ்தையின்கண்ணே அவ்வரசகுமாரனுக்கு அரசத்தன்மையோடு சம்பந்தமாமாதலின் அவ் வருஞ்சம்பந்தத்தையுடன்பட்டுப் பாலிய அவஸ்தையில அவ்வரசகுமாரனிடத்தே அரசத்தன்மையைக் கூறல் சம்பவிக்குமாயினும், வருஞ்சம்பந்தத்தை அங்கீகரித்து, அம்முன்னின்மையின்கண் கடவிசிஷ்டரூபத்தன்மையையுரைத்தல் சம்பவியாதாம்; ஏனெனின், கடரூபகாரியமுற்பன்னமாங்கால அம்முன்னின்மையிருக்குமாயின் அதற்கதனோடு சம்பந்தஞ்சம்பவிக்கும, ஆனால் அஃதுண்டான பின்னஃதிராதாமாதலின் வருஞ் சம்பந்தத்தை அங்கீகரித்தும கட உற்பத்தியின்முன்னர் அம்முன்னின்மையின்கண் கடவிசிஷ்டரூபத்தன்மை சம்பவியாதாம. அல்லது, கடகாரிய முண்டான பின்னர் அதனோடு அம்முன்னின்மைக்குச்சம்பந்தம அங்கீகரிக்கின் அம்முன்னின்மையின்கண் நித்தியரூபத்தன்மை சித்தமாம; ஏனெனின், முன்னின்மையை யங்கீகரிக்கும வாதியர் யாவரும் காரிய உற்பத்தியால் அம்முன்னின்மைக்கு நாசத்தை யங்கீகரித்துளார், அக்காரிய உற்பத்தியும அதன் நாசத்தைச் செய்யாவிடின், அஃதன்றி வேறு ஒன்றும் அதனை யழிக்காதாம்; ஆகையாலது நித்தியமேயாகும் யாது முக்காலத்தும் அபாதிதமாமோ அது நித்தியமெனப்படும், இவ்வகை நித்தியரூபத்தன்மை அம்முன்னின்மையின்கண்ணே சம்பவியாதாம் ஏனெனின், காரியோற்பத்தியின்முன்னர் அக்காரிய உபாதானகாரணத்தேயிருக்கும் அபாவம முன்னின்மையெனப்படும இவ்வகையாய முன்னின்மைச்சத்தப்பொருள் அந்த நித்திய முன்னின்மையின்கண்ணே பொருந்தாதாம். அல்லது, அம்முன்னின்மையைச் சொரூபமாயே நித்தியமாகவுடன்படின், அந்நித்திய முன்னின்மையின்கண் அநேகரூபத்தன்மை சமபவியாதாம, ஏனெனின், அதனை நித்தியமாய் அங்கீகரித்து அநேகமென வுடன்படின் இதுகேட்கவேண்டும் :—பிரதியோகிரூப உபாதியின் பேதத்தினானே அபாவத்தின் பேதமுண்டாம, ஸ்வரூபமாய் அதன் பேதமுண்டாகாதாதலின் அந்நித்தியமுன்னின்மையின் பேதம நித்தியபதார்த்தரூப உபாதியின் பேதத்தினானேயுண்டாமா? அல்லது, அநித்தியத்தானேயா? முதற்பக்ஷத்தை அங்கீகரிக்கின் அது சம்பவியாது; ஏனெனின், யாது முன்னின்மைக்கும் பின்னின்மைக்கும் அப்பிரதியோகியாமோ அது நித்தியமாம், ஆன்மா அவ்விரண்டிற்கும் அப்பிரதியோகியாதலின் நித்தியமாவதுபோலவாம், அத்தகைய நித்தியபதார்த்தங்களிடத்தே அம்முன்னின்மைப் பிரதியோகித்தன்மை சம்பவியாதாம். பிரதியோகியின் பேதத்தினானே அபாவத்தின் பேதமுண்டாமாத

லின், அநித்தியபதார்த்தரூப உபாதியின்பேதத்தால் அநித்தியமுன்னின்மையின்பேதம் சம்பவியாதாம். அநித்தியபதார்த்தரூப உபாதியின்பேதத்தால் நித்தியமுன்னின்மையின் பேதமாமென்னும் இரண்டாவது பக்ஷமும் சம்பவியாதாம். ஏனெனின், அநித்தியகடாதி பதார்த்தங்களின்பேதத்தாற் பின்னின்மையின் பேதமாவதேபோல அவற்றின் முன்னின்மையின் பேதத்தையு மங்கீகரிக்கின், அம்முன்னின்மையினும் வேறாய பின்னின்மையை யுடன்படல் பயனற்றதாகும்; ஆனால், அம்முன்னின்மையே பின்னின்மைவடிவமாம். அவ்வாறு அங்கீகரிக்கினும், அம்முன்னின்மையின்கண்ணே காரணரூபத்தன்மை சம்பவியாது. மற்றோ, பின்னின்மை கடாதி காரியங்கட்கு விரோதியாவதேபோல முன்னின்மையும் கடாதிகாரியங்களின் விரோதியேயாம். அல்லது, இப்பிரசங்கத்தே காரணாபாவத்தை முன்னின்மைவடிவமாயெண்ணின் அவன் மதத்தும் இவ்வெல்லா முற்கூறிய தூஷணமுமுண்டாம்; ஏனெனின், எக்காரண முன்னின்மைக் காரணமாமோ அது நித்தியமாகுமாயின், அதன்கண்ணே அம்முன்னின்மையின் பிரதியோகித்தன்மை யுண்டாகாது, அநித்தியமாகுமாயின் அதன் முன்னின்மை பின்னின்மைவடிவமேயாம். கடாதிகளின் பின்னின்மையானது அவற்றிற்கு விரோதியாதலேபோல மண்முதலிய காரணங்களின் பின்னின்மையும்விரோதியேயாமாதலின் பின்னின்மையாய காரணத்தின்முன்னின்மையின் கண்ணேகாரணரூபத்தன்மை சப்பவியாதாம். இத்துணையாற் காரணமுன்னின்மை உலககாரணம் என்னும் இரண்டாவது பக்ஷங்கண்டிக்கப்பட்டது. இப்போதுகாரணத்தின் பின்னின்மை ஜகத்தின்காரணமாம் என்னும மூன்றாவது பக்ஷங்கண்டிக்கப்படும் :—நாஸ்திகவாதியின் அபிப்பிராயத்தை யறியும்பொருட்டு முதலில் சித்தாந்தியானவர் வாதியை வினவுகின்றனர் :—ஹே வாதியே! இவ்வுலகத்தே நித்தியரூபமாயும் அநித்தியரூபமாயும் பிரசித்தமாய மண் நூல்முதலிய பாவபதார்த்தங்களையே யாவரும் கடபடாதிகட்குக் காரணமாயங்கீகரித்துளார்; அவற்றைப் பரித்தியாகித்து அவற்றின் அபாவத்தை நீ காரணமென வுடன்பட்டது எப்பிரயோஜன சித்தியின்பொருட்டாம்? அப்பிரயோஜனத்தை நீ யென்பாற் கூறுதியெனச் சித்தாந்தியால் வினவப்பட்ட நாஸ்திகனானவன் இவ்வாறுகூறுவானாயினன் :—ஹே சித்தாந்தியே! இவ்வுலகத்தே விரைமுதலிய காரணங்களின் அழிவுண்டாகாதவரை அங்குராதிகாரியங்களி னுற்பத்தியுண்டாகாது; மற்றோ, மண், நீர்முதலியவற்றின் சம்பந்தத்தால் அவ்விரையின் நாசமாங்காலே அவற்றின் உற்பத்தியாம். இவ்வகை வியவஸ்தையைக் கண்டுதான் யான் விரைமுதலிய பாவபதார்த்தங்களை அங்குராதி காரியங்களின்பொருட்டுக் காரணமென வங்கீகரிக்கவில்லை; மற்றோ, அவற்றின் அபாவத்தையே அங்குராதிகளின் காரணமாயங்கீகரித்துளேன். இவ்வகையாய வாதியின் அபிப்பிராயத்தைக்கேட்டுச் சித்தாந்தியானவர் கூறுகின்றார் :—ஹே வாதியே! விரைமுதலியவை நாசமாங்கால் அங்குராதிகாரியங்களின் உற்பத்தியாம் என்னும் நினது வசனத்தால் இவ்வபிப்பிராய மறியப்பெறும் :—விரைமுதலிய காரணங்களின் முன்னின்மை அங்குராதிகளின் காரணமன்றாம், மற்றோ விரைமுதலிய காரணங்களின் பின்னின்மையே அவற்றின் காரணமாம். அதுவும் அங்குராதி காரியவுற்பத்தியின்கண்ணே காரணமாகாதாம்;

ஏனெனின், காரணத்தின் பின்னின்மை காரியோற்பத்தியின்கண்ணே காரண மாயின் உயிர்களின் ஜாடராக்கினியின்கண் விரைமுதலிய அநேக காரணங்களின் பின்னின்மையுண்டாமாதலின், அவற்றால் அவ்வுதரத்தே அங்குராதி காரியங்களி னுற்பத்தியாதல்வேண்டும் ஆனாலவ்வாறுண்டாவதின்றாம்; ஆகையால், காரணப் பின்னின்மையின்கண்ணே காரணத்தன்மைசம்பவியாது. அல்லது, எப்பொருள் எப் பொருளையுண்டாக்குமோ அப்பொருள் அப்பொருட்குக்காரணமாம். நூலானதுபட ரூபகாரியத்தையுண்டாக்குமாதலின் அந்நூலதன்காரணமாம். விரைமுதலியவற்றே அங்குராதிகாரியங்களின் ஜனகத்தன்மையை அங்கீகரியாவிடின் விரைமுதலியவ ற்றே காரணரூபத்தன்மையேயின்றாமாதலின் அகாரணரூப விரைமுதலியவற்றின் அபாவத்தைக்காரணாபாவமென்னும் நாமத்தாற கூறுவானாயின், அவன் வசனம் என்வாயில் நாவில்லையென்னும் வசனம் வியாகாததோஷமுடைய தாவதேபோலத் தோஷமுடையதேயாகும். ஒருபொருளைசித்திசெய்யும்பொருட்டுக்கூறும்வசனத் தால்அப்பொருளின்பாதமுண்டாமாயின் அது வியாகாததோஷமெனப்படும். அல் லது, விரைமுதலிய காரணங்களின் அபாவத்தை அங்குராதிகாரியங்களின் உற்பத்தி யின்கண்ணே காரணமெனவங்கீகரிப்பின் அநவஸ்தாதோஷபிராப்தியுமுண்டாம். ஏனெனின், விரைமுதலியவற்றினபாவம காரணாபாவரூபமாமாதலின், அது அங்கு ராதிகளின் காரணமாவதேபோல விரையபாவாபாவமும் விரையபாவவடிவகாரணா பாவமாம். ஆகையால், அங்குராதிகளின் காரணமாம. இவ்வண்ணம் மூன்றாவதபா வம் நான்காவதபாவமேமுதலாக எல்லா அபாவங்கட்கும் காரணாபாவரூபத்தன்மை யுண்மையின் அங்குராதிகாரியோறபத்தியின்கண் காரணரூபத்தன்மையாம். இவ் வாறு காரணங்களின் அநவஸ்தையுண்டாம். அலலது, காரணத்தின் பின்னின்மை காரியவுற்பத்தியின்கண்ணே காரணமாமென வாதி கூறுதல் பிரத்தியக்ஷப் பிரமா ணத்தினும் முரணாம. ஏனெனின், இவ்வுலகத்தே குண்டலகங்கணாதி காரியோற் பத்தியின்பின்னர் அவற்றின்கண்ணே யாவருக்கும் சுவர்ணரூபகாரணம்பிரத்தியக்ஷ மாய்ப்பிரதீதியாகும்; அங்ஙனமே ஆடையின்கண் னூநதோறறும். இவைமுதலாகிய பாவகாரியங்களில் தத்தம் உபாதானகாரணமனுகதமாய்த் தோற்றும். காரணத் தின்பின்னின்மையுண்டாமாயின், குண்டலகங்கணாதி காரியங்களிடத்தே சுவர்ண ரூபகாரணமும், படத்தே தந்துவுந் தோறறலாகாது. ஆகையாற் காரியவுற்பத்தி யின்கண்ணே காரணத்தின்பின்னின்மை காரணமாம் என வாதி கூறுதல் சர்வ லோகானுபவவிருத்தமாம் அல்லது, முன்னர் வாதியானவன் விரையழிவால் அங் குராரூப காரியோற்பத்தியைக் கூறினன், அவ்வாறுகூடாதாம்; மற்றே, அவ்விரை நாசமாயினும் அதனுள்ளிருக்கும் மண்ணவயவம் நாசத்தைபடையாதாதலின் அவ் விரையினவயவமே அவற்றினுற்பத்தியிறகாரணமாம். அல்லது, காரணத்தின்முன் னின்மையே ஜகத்தின் காரணமென்னும் இரண்டாவதுபக்ஷத்தே முன்னர்ச் செய் யப்பட்ட விகற்பங்களில் கொடுத்த தோஷங்கள் யாவும் பின்னின்மை முற்றுமின் மை ஒன்றொன்றன்மைப் பக்கங்களினும் உண்டாம. இக்காரணத்தானும் அக்கார ணப் பின்னின்மையின்கண்ணே ஜகத்காரணத்தன்மை சம்பவியாது. இக்கடம் படத்தினும் வேறு, இப்படம் கடத்தினும் வேறு என்னும் ஞானவிஷயமாய பேத

ரூப அன்னியோன்னியாபாவத்தின்கண்ணே ஜகத்காரணத்தன்மை எவ்வாறிக்குந் தோற்றுவதேயின்றுமாதலின் காரண அன்னியோன்னியாபாவம் ஜகத்தின்காரணமாமென்னும் நான்காவதுபக்ஷமுஞ் சம்பவியாது. இப்போது சூனியவாதியின் மதத்தைக் கண்டிப்பாம் :—ஹே பிராஹ்மணர்களே! முற்கூறிய தூஷணங்களின் பிராப்தியுண்டாதலின் நான்கபாவத்தும் ஜகத்காரணத்தன்மை சித்தியாதபோது சூனியத்திற்கும் அது சம்பவியாதாம். சூனியத்தையே ஜகத்காரணமென வுடன்பட்டவன் அத்தியந்தாபாவத்தையே சூனியமெனக் கூறுவன். அது மலடிமகனைப் போல அத்தியந்தம் அசத்தியமாமாதலின் மலடிமகனுக்கு எக்காரியவுற்பத்தியின் கண்ணும் காரணரூபத்தன்மை யிலதாவதேபோலச் சூனியத்திற்குமிலதாகும். அல்லது, சூனியத்தையே காரணமென வுடன்படின் அவன்பாலிது கேட்கவேண்டும் :—அச்சூனியத்திற்குப் பிரதியோகி யாதாம், காரியம் பிரதியோகியா? காரணம் பிரதியோகியா? இரண்டும் பிரதியோகியா? காரியமெனின், அது சம்பவியாது. ஏனெனின், அவ்வாதியானவன் காரியோற்பத்தியின்கண்ணே காரணாபாவத்தை ஹேதுவென வுடன்பட்டு அதனைப் பரிததியாகஞ்செய்து காரியாபாவத்தைக் காரணமென வுடன்படின் பூர்வப் பிரதிஞ்ஞையின் ஹானியுண்டாம், தன் சித்தாந்தத்தை விடுதலாகிய அபசித்தாந்ததோஷமுமடையும். அல்லது, காரிய அத்தியந்தாபாவத்தைக் காரணமென வுடன்பட்டவன்பால் இது கேட்கவேண்டும் :—அக்காரிய அத்தியந்தாபாவம் லோகப்பிரசித்தகாரணங்களின் அபேக்ஷையின்றியே காரியோற்பத்தியைச் செய்கின்றதா? தண்டரூபகாரணம், சக்கிரகுலாலாதிகாரணங்களை யபேக்ஷித்துக் கடரூபகாரியத்தை யுண்டாக்குவதேபோல அக்காரிய அத்தியந்தாபாவமும் உலகப்பிரசித்த காரணங்களையபேக்ஷித்தே காரியோற்பத்தியைச் செய்கின்றதா? முதற்பக்ஷத்தை யுடன்படிற் சம்பவியாதாம். ஏனெனின், ஆடைமுதலிய காரியங்கள் உண்டாவதற்குமுன்னர் அவற்றின் அத்தியந்தாபாவம் நூன்முதலியவற்றேயிருப்பதேபோல அன்னியபதார்த்தத்தின்கண்ணுமுளதாதலின், அவ்வியாவற்றினும் படாதி சர்வகாரியஙகளி னுறபத்தியுண்டாதல் வேண்டும்; ஆனல் அங்ஙனமுண்டாவதின்றும. இரண்டாவதுபக்ஷத்தை யங்கீகரிக்கின் அதுவுஞ் சம்பவியாது; ஏனெனின், அவன்மதத்தே மலடிமைந்தன் அத்தியந்தம் அசத்தியமாவதேபோலக் கடபடாதிகாரியங்களும் தமதுற்பத்தியின் முன்னர் அத்தியந்தம் அசத்தியமேயாமாதலின், உலகப்பிரசித்த தண்டாதிகாரணங்களோடுகூடிய கடாத்தியநத அபாவத்தால் கடகாரியோற்பத்தியுண்டாவதே போல உலகபபிரசித்த மலடியாகிய காரணத்தோடுகூடிய அம்மலடிமைந்தனத்தியந்தாபாவத்தால் அம்மலடிமைந்தனும் உண்டாதல்வேண்டும்; ஆனல் அவ்வாறுவதின்றும். ஆகையால், வேறு காரணுபேக்ஷையோடுகூடிய அக்காரிய அத்தியந்தாபாவத்தின்கண்ணே காரணரூபத்தன்மை சம்பவியாதாம்.

சங்கை :—ஹே 'சித்தாந்தியே' காரியோற்பத்திசெய்யும் சக்தியையுடைய பொருளே அக்காரியோற்பத்தியின்கண்ணே காரணமாகும்; மிருத்திகை தண்ட சக்கிராதிகளிடத்தே கடகாரியோற்பத்திசெய்யுஞ் சக்தியுளதாதலின் அவை கடத்தின் காரணமாம். மலடியிடத்தே புத்திரனையுண்டாக்குஞ் சக்தியின்றுதலின் அவள் புத்திரகாரணமேயன்றுவளன்றே?

சமாதானம் :—ஹே வாதியே! காரியத்தையுண்டாக்குஞ் சக்திக்கு வடிவம் யாதாம் என்பதை நீ கூறுவாயாக?

சங்கை :—ஹே சித்தாந்தியே! எதன் வலிமையாற் காரணம் காரியத்தைச் செய்யுமோ அதுவே சக்தியாம.

சமாதானம் :—ஹே வாதியே! அச்சக்தி காரணத்தினும் பின்னமா? அபின்னமா? பின்னமெனின், அச்சக்தி காரணாபேக்ஷையின்றியே காரியஜனகமா? அல்லது அச்சக்தியைப்போல அக்காரணமும அக்காரியத்தின் ஜனகமா? முதற்பக்ஷத்தை யுடன்படின் அது சம்பவியாது; ஏனெனின், அச்சக்தியினும் வேறாயுள்ள காரணங்கள்யாவும காரியஜனகமாகா தொழியுமேயாயின் அவற்றின்கண்ணேகாரணத்தன்மையே யிராதாம. இரண்டாவதுபக்ஷத்தை யங்கீகரிக்கின் அதுவுஞ்சம்பவியாதாம்; ஏனெனின், இவ்வுலகப்பிரசித்த காரணங்களாலும் காரியோற்பத்தியுண்டாமாயின் அச்சக்தியைக் காரணமெனவங்கீகரித்தல வியர்த்தமாம். அபின்னமென்னு மிரண்டாவது பக்ஷத்தை யங்கீகரிக்கின் அதுவுஞ்சம்பவியாது; ஏனெனின், அச்சக்திகாரணத்தினும் அபின்னமாயின் சக்தி, காரணம் என்னுமிருநாமங்களும் ஒரேபொருளின் வாசகங்களாம. இக்காரணத்தானும அச்சக்தி வியர்த்தமாகும். இவ்வண்ணம அச்சக்தியின் சித்தியுண்டாகாதபோது காரிய அத்தியந்தாபாவத்தையே காரணமாயெண்ணுபவா மதத்தே கடாதிகாரியங்கள்போல மலடிமைந்தனுமுண்டாதலவேண்டும்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! தாமுண்டாவதற்கு முன்னர்க்கடாதிகாரியங்கள் அத்தியந்தமசத்தியங்களாமாயினும அவை மண் நூன் முதலிய காரணங்களாலேயேயுண்டாம். மலடியோ புத்திரோற்பத்தியிற் காரணமேயன்றாமாதலின் அவளிடத்திருந்து புத்திரோற்பத்தியுண்டாகாதன்றோ?

சமாதானம் :—ஹே வாதியே! மலடியின்கண்ணே புத்திரகாரணத்தன்மையின்றாமெனக் கூறுமுன்னிடத்தேயாமிது கேட்கின்றோம :—அம்மலடியின்கண்ணே புத்திரகாரணத்தன்மை யின்றாமென்பதன்கண்ணேயாதேதுவாம்? புத்திரகாரியங்காணாமையே அதன்கண்ணே ஹேதுவாகுமாமெனக் கூறுவையேயாயின், அக்காணாமையின்கண் தான யாதேதுவாம? 'மலடித்தன்மையும், அவளிடத்தே காரணத்தன்மையினபாவமும் அதனகண் ணேதுவாமெனக்கூறின் அது சம்பவியாது; ஏனெனின், அம்மலடியிடத்தே அவ்விரண்டுஞ்சித்தமாகுமாயின் அவனது காணாமை சித்திக்கும், அதுசித்திக்கின அவ்விரண்டுஞ் சித்திக்கும். இவ்வகையாய அன்னியோன்னியாசிரயதோஷப் பிராபதியுண்டாம. அல்லது, ஹே வாதியே! சத்காரியவாதியாகிய சாங்கியாதியர் கடாதிகாரியங்கள் உற்பத்தியின் முன்னர் மிருத்திகைமுதலிய காரணங்களில் சூக்ஷுமரூபமாயிருக்கின்றனவென வுடன்படுவதேபோல அசத்காரியவாதியாகிய நீ யுடன்படுவதில்லை; மற்றோ, நின்மதத்தே உற்பத்தியின்முன்னர்க் கடாதிகளின் அத்தியந்தாபாவம் மிருத்திகை முதலியவற்றே யிருப்பதுபோலவே தந்துமுதலியவற்றுமிருக்கும். ஆகையால், நின்மதத்தேமிருத்திகையினின்றும் கடமுண்டாவதேபோலத் தந்துவினின்றும் உண்டாகவேண்டும்,

இவ்வண்ணம் சம்பூரண காரியங்கள்யாண்டுமுண்டாகவேண்டும், ஆனாலங்ஙனமாவ தின்றாம், இக்காரணத்தினாலும் நின்மதம் அசங்கதமாம். அல்லது கடாதிகாரியங் களை அத்தியந்தமஅசத்தியமெனவங்கீகரிப்பவன்மதத்தே மிருத்திகைமுதலிய சத் தியபதார்த்தங்கட்குக் கடாதிகளின் காரணரூபத்தன்மை சித்தமாகமாட்டாதாம்; ஏனெனின், சமானவியற்கையையுடையபதார்த்தங்கட்கே பரஸ்பரம்காரிய காரண பாவமாமன்றி விலக்ஷணவியற்கையுடையவற்றிற் காகாதாம். ஆகையால், மண்முத லிய உண்மைப்பொருள்களில் கடமுதலிய இன்மைப்பொருள்களின் காரணத்தன் மை சம்பவியாதாம். அல்லது, அசத்திபகாரியவாதியாய நையாயிகாதியர் கடாதி காரியங்கள் தம்முற்பத்தியின் முன்னர் அத்திபந்தம அசத்தியமாமாயினும் அவை சத்தா ஜாதியின் சம்பந்தத்தால சத்துவோற்பத்தியையடையுமென்பதுஞ் சம்பவி யாது; ஏனெனின், அத்தியந்தம் அசத்திய கடாதிபதார்த்தங்களின்கண்ணே சத் தாஜாதி சம்பந்தத்தால் காரியரூபத்தன்மை யுண்டாகுமாயின் மலடிமைந்தனிடத் தும் அதன் சம்பந்தமும், அதனாற் காரியரூபததன்மையுமுண்டாதல்வேண்டும்; ஆனாலவ்வாறுவதின்றாம். ஆகையால், சத்தாஜாதி சமபந்தத்தால் அசத்தியகாரி யோற்பத்தியை அங்கீகரித்தல அத்தியந்தம் விருததமாம். அல்லது, காரியத்தையச த்தியமெனவுடன்படுபவன் மதத்தே காரணத்திற்கும் அசத்தியரூபத்தன்மையே சித்தமாம். அவ்வாதியானவன் ஒரு யுக்திப் பிரமாணமின்றித் தன்னிச்சையி னாலே காரியத்தை யசத்தியமென நினைந்து காரணத்தைச் சத்தியமென நினை யின் அவன்மதத்தே 'அர்த்தஜரதீய' நியாயப் பிராப்தியுண்டாம் தன்னிச்சை யினாலே ஓரங்கத்தைக்கவர்ந்து ஓரங்கத்தைப பரித்தியாகித்தல் அர்த்த ஜரதீய நியாயமெனப்படும். அல்லது, அநத நியாய நிவிருத்தியின்பொருட்டு அவன் கார ணத்தையும் அசத்தியமாயே அங்கீகரிக்கின் அவனது சித்தாநதம் ஹானியாம்; ஏனெனின், சத்தியகாரணத்தினின்றும் அசத்திய காரியமுற்பத்தியாம் என்னும் அவனது சித்தாநதம நஷ்டமாமன்றே. அல்லது, இவ்வுலகத்தே அசத்தியரூப மாய்ப் பிரசித்தமாய மலடிமைநதன் மனுடக்கோடு முதலியவறறினின்றும் பட தைலாதிகாரியங்களினுற்பத்தி காணவருவதின்றாம்; மற்றே, சத்தியரூபமாய தந்து, திலம் முதலியவற்றினின்றுமே அவை யுற்பன்னமாவனவாய்க் காணப்பெறு கின்றன; இக்காரணத்தினாலும் அசத்திய பதாாத்தங்களில் காரணரூபத்தன்மை சம்பவியாது.

சங்கை :—ஹே சித்தாந்தியே! தந்துமுதலிய சத்திய காரணங்களிருப்பின் படாதிகளினுற்பத்தியும், இலலாவிடின் அவற்றின் அனுற்பத்தியும் ஆமென்னும் உலகரின் அன்வய வியதிரேகஞானம் யதார்த்தமாகுமாயின் அவ்வுணர்வால் கார ணங்களின்கண்ணே சத்தியரூபத்தன்மை சித்தமாம; ஆனால, அவ்வன்வய வியதி ரேகஞானம் மயல்வடிவமாம். ஆகையால், அதனால் காரணத்திற்குச் சத்தியரூபத் தன்மை சித்தமாகமாட்டாது.

சமாதானம் :—ஹே வாதியே! இவ்வுலகத்துண்டாம் ஞானங்களெவற்றையும் மயல்வடிவமாய் அங்கீகரித்தல் நினக்குசிதமன்றாம்; மற்றே, தருமிவடிவ வஸ் துவை விஷயஞ்செய்யும் ஞானத்தைப் பிரமாணரூபமாயே அங்கீகரிக்கவேண்டும்; இக்காரணத்தினாலே சாஸ்திரத்தின்கண்ணே இது கூறப்பெற்றுளது "ஸவ-௨௦

ஜ்ஞாநம் யதி-ஜ்ஞாநத்வேநப்ரமாத்வம் ப்ரகாரேண து விபர்யய:" இவ்வுலகத்தே பிரமை வடிவத்தானும் அப்பிரமைவடிவத்தானும் பிரசித்தமாய் ஞானங்கள்யாவும் தருமி யம்சத்தின்கண்ணே பிரமைவடிவமேயாம். தோஷவசத்தால் அப்பிரமைவடிவமா யினும் அதுபிரகாரஅம்சத்தின்கண்ணே அப்பிரமைவடிவமாம்; தருமியம்சத்தின் கண்ணே எந்த ஞானமும் அப்பிரமைவடிவமாகாதாம். சுத்தியின்கண்ணே இது வெள்ளியென்னும் அப்பிரமைஞான முண்டாவதும் இதுவென்னுந் தருமியம்சத் தின்கண்ணே பிரமைவடிவமேயாம், வெள்ளிவடிவப் பிரகாராம்சத்தின்கண்ணே அப்பிரமைவடிவமாம். அத்தருமியம்சத்தின்கண்ணே ஞானத்திற்குப் பிரமாண ரூபத்தன்மையை அங்கிகரித்தே பூர்வபக்ஷ சித்தாந்தங்களின் நிர்ணயமுண்டாம், ஆண்டுத் தருமியின் உண்மையாய வடிவினும் வெளிப்பட்டபொருள்களை விஷயஞ் செய்யும்பக்ஷம் பூர்வபக்ஷமாம். இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பம் தண்டம் மாலை ஜலதாரைமுதலியபொருள்களை விஷயஞ்செய்யும்பக்ஷம் பூர்வபக்ஷமாதல்போல வாம். தருமியின் உண்மைவடிவத்தை விஷயஞ்செய்யும்பக்ஷம் சித்தாந்தமாம். இது இரஜ்ஜுவென்னும் இரஜ்ஜுவடிவ தருமியை விஷயஞ்செய்யும்பக்ஷம் சித் தாந்தமாதல்போலவாம். அத்தருமியம்சத்தின்கண்ணும் அந்த ஞானத்திற்குப் பிரமாணத்தன்மை அங்கீகரியாவிடின் பூர்வபக்ஷ சித்தாந்தங்களின் நிர்ணயம் உண்டாகமாட்டாதாதலின் தருமியம்சத்தின்கண்ணே ஞானத்திற்குப் பிரமாண த்தன்மைஅவசியம் அங்கீகரிக்கவேண்டும். அல்லது, கடாதிகாரியங்களினும், மண்முதலிய காரணங்களினும் அத்தியந்தம் அசத்தியரூபத்தன்மையிருக்குமா யின் யாவருக்கும் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் அது தோற்றல்வேண்டும். காரியகாரணரூப ஜகத்தின்கண்ணே நம்மனோர்கட்குப் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங் களால் அவ்வசத்தியத்தன்மை தோற்றக்காணேம் ; மாறாய், ஈண்டுச் சத்தியரூபத் தன்மையே தொடர்ந்திலங்குகின்றது. இக்காரணத்தினானும் காரிய காரணரூப ஜகத்திற்கு அசத்தியரூபத்தன்மை சம்பவியாதாம். அல்லது, காரியகாரணரூபத் தானே பிரசித்தமாய ஜகத்தானது மலடிமைந்தன் முயற்கோடுபோல அத்தியந் தம் அசத்தியரூபமேயாயினும் ; அவ்வசத்தியத்தன்மை சாக்ஷியான்மாவினானன்றி எப்பிரமாணத்தானும் சித்தமாகமாட்டாது. மற்றோ, சாக்ஷியையாசிரயித்தே சித்த மாம். ஆகையால், காரியகாரண வடிவஜகத்தானது அசத்தியமாயினும் அவ்வசத் தியத்தன்மையைச் சித்தஞ்செய்யும் சாக்ஷியாய ஆன்மாச்சத்தியரூபமாயேசித்திக் கும். அல்லது, ஜகத்தானது அத்தியந்தம் அசத்தாயின், இவ்வுயிர்கட்கு மயற்றசை யின்றிப் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் மலடிமைந்தன் மனுஷக்கோடுமுதலிய வைதோற்றாததேபோல மயற்றசையின்றிப்பிரத்தியக்ஷாதிப்பிரமாணங்களால் இவ் வுலகப் பிரதீதி உண்டாகலாகாது ; மற்றோ, மலடிமைந்தன் மனுடக்கோடு முதலி யன மயற்றசையிலேயே பிரதீதியாவதேபோல இவ்வுலகும் மயற்றசையிலேயே பிரதீதியாகவேண்டும். ஆனால் மயற்றசையில் இவ்வுலகம் பிரதீதியாகவில்லை ; மற் றோ, சர்வஜீவர்கட்கும் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களாலே இவ்வுலகப்பிரதீதி யாகும். ஆகையால், உலகில் அத்தியந்த அசத்தியரூபத்தன்மை சம்பவியாதாம். ஆகவேயிப்பொருள் துணியப்பெறும் :—காரிய அத்தியந்தாபாவமும், காரண அத்

தியந்தாபாவமும், காரிய காரணமென்னுமிரண்டின் அத்தியந்தாபாவமும் இவ்வுல ககாரணமாம் என்னும் மூன்றுபக்ஷமும் சம்பவியாதாம், அல்லது, இவ்வுலகம் அத்தியந்தம் அசத்தியமாயின், அசத்திய பதார்த்தத்திற்கு எப்பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களோடும் சம்பந்தமுண்டாகாதாம். அசத்திய மலடிமைந்தனுக்குப் பிரத்தியக்ஷாதிகளோடு சம்பந்தமுண்டாகாததேபோல அசத்திய ஜகத்திற்கும் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களோடு சம்பந்தமுண்டாகாதாம், சம்பந்தமின்றிப் பிரத்தியக்ஷாதிகள் எப்பொருளின் ஞானத்தையுமுண்டாக்கமாட்டாவாதலின், சம்பந்தமின்றி அசத்திய ஜகத்தின் ஞானம் எப்பிரமாணத்தாலுமுண்டாகமாட்டாது.

சங்கை :—ஹே சித்தாந்தியே! வந்தியா புத்திரனிருக்கின்றானென்னுஞ் சத்தத்தால் அசத்தியமாய அவன் ஞானமுண்டாவதேபோலக் காரிய காரணவடிவ அசத்திய ஜகத்தின் ஞானமும் சத்தப்பிரமாணத்தாற் சம்பவிக்குமன்றோ?

சமாதானம் :—எச்சத்தத்திற்கு, எப்பொருளின்கண், வாச்சியவாசகபாவ சம்பந்தம், எவனாற் கவரப்பெறுமோ, அவனுக்கு அப்பொருளினுணர்வை அச்சப்தஞ் செய்விக்கும். குடசத்தத்திற்குக் குடவியக்தியின்கண்ணே இக்குடவியக்தி குடசப்தத்தின் வாச்சியார்த்தம் என்னும் வாச்சியவாசகபாவசம்பந்தம் எவனாற் கவரப்பெற்றதோ அவனுக்கு அக்குடசப்தம் குடரூப வியக்தியையுணர்த்தும். அர்த்த சம்பந்த ஞானத்தானன்றி அச்சப்தம் எப்பொருளையும் போதியாது, அவ்வந்தியா புத்திரரூப அர்த்தம் அத்தியந்தம் அசத்தியமாமாதலின், அத்தகைய பொருளின் கண் வந்தியா புத்திரன் என்னும் சப்தசம்பந்தம் எப்புருஷனுக்கும் ஆகாதாம். இக்காரணத்தானே மலடிமைந்தன் என்னும் சப்தத்தினாலும் அவனது ஞானம் சம்பவியாது. அல்லது, வாதியானவன் வந்தியாபுத்திரன் என்பதாதி சப்தங்களால் அசத்திய வந்தியாபுத்திராதி ஞானத்தை யுடன்படினும் பிரமைரூபமாய் உடன்படான்; மற்றோ, அதனை விகற்பரூபமாயுடன்படுவன்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! வந்தியாபுத்திராதி அசத்திய பதார்த்தங்களின் விகற்பரூபஞானமுண்டாவதேபோல உலகின் விகற்பரூப ஞானமுண்டாம். இதன்கண்ணே எனக்குறுமானியென்னோ?

சமாதானம் :—ஹே வாதியே! வந்தியாபுத்திரஞானத்தைப்போல இவ்வுலக ஞானத்தை விகற்பமாயங்கீகரிக்கின், அவ்விகற்பஞானத்தால் எவருக்கும் பிரவிருத்தி நிவிருத்தியுண்டாகாததேபோல இவ்விகற்பஞானத்தானும் உண்டாகாதாதலின், சர்வவியவகாரங்களின் லோபமுண்டாம். ஆகையால் வந்தியாபுத்திரஞானம்போல இவ்வுலகஞானத்திற்கு விகற்பரூபத்தன்மை சம்பவியாதாம். அல்லது எச்சத்தப்பிரமாணத்தால் அசத்தியபதார்த்தத்தைச் சித்திசெய்வனோ அச்சத்தரூபகாரியமே காரணசத்திய ரூபத்தன்மையைச் சித்தஞ்செய்யும்; ஏனெனின், வாக்காதியிந்திரியங்களோடுகூடிய தேவதத்தாதி சரீரரூப சத்காரணத்திலிருந்தே சப்தரூபகாரியோற்பத்தி காணவருகின்றது. அசத்தியவந்தியா புத்திரசரீரத்திருந்து அச்சப்தரூபகாரியோற்பத்தி காணவருவதின்றாம். இக்காரணத்தினாலும் அசத்தியபதார்த்தத்தின்கண்ணே காரணரூபத்தன்மை சம்பவியாது.

சங்கை :—ஹே சித்தாந்தியே! கேவலம் யுக்திபலத்தினால் யான் காரணத்தை யங்கீகரித்தேனில்லை; மற்றோ சாக்ஷாத்சுருதியே காரணத்தை யசத்தியரூபமாய்க் கூறுகின்றது. "அஸதேவேத மக்ர ஆஸீத் ததோவைஸதஜாயத" இத்திருசியப்பிரபஞ்சம் தனதுற்பத்தியின் முன்னர் அசத்தியமாகவே யிருந்தது. அவ்வசத்தியகாரணத்தினின்றும் இச்சத்தியரூபஜகத்தானது உண்டாயது என்னுமிச்சுருதியின்கண்ணே அசத்தியகாரணத்திருந்தே ஜகத்தின் உற்பத்தி கூறப்பட்டுளதாதலின் இச்சுருதிப்பொருளின் கூடாமையால் கற்பனைசெய்யப்பட்ட மாயையின்பலத்தால் அசத்தியத்தையே ஜகத்தின்காரணமென வுடன்பட்டுளேன்.

சமாதானம் :—ஹே வாதியே! நின்மதத்தே வேதம் பிரமாணமாயின் சுருதிப்பொருளின் கூடாமையால் கற்பிக்கப்பட்ட மாயையின்பலத்தால் அசத்தியபதார்த்தத்தின்கண்ணே காரணரூபத்தன்மை சித்தமாம்; ஆனால் நின்மதத்தே வேதம் பிரமாணமின்றாமாதலின் சுருதியின்பலத்தினாலும் அசத்தியபதார்த்தத்தின்கண்ணே காரணரூபத்தன்மை சித்தமாகமாட்டாது. நீ வேதத்தைப் பிரமாணமெனவங்கீகரிக்கினும் அவ்வேதபகவானெவ்விடத்தும் காரியகாரணத்தின் அசத்தியரூபத்தன்மையைக் கூறுவதில்லை. பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களினாலோ இவ்வுலகின்கண்ணே அசத்தியரூபத்தன்மை பிரதீதிபாவதின்றாம். ஆகையால், நின்மதத்தே அக்காரியகாரண அசத்தியரூபத்தன்மை எப்பிரமாணத்தாற் சித்தமாம்; மற்றோ, அது எப்பிரமாணத்தானும் சித்தமாகாதாம்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! வேதத்தின்கண்ணே எவ்விடத்தும் அசத்தியபதார்த்தத்திற்குக் காரணரூபத்தன்மை கூறப்படவில்லையென நீர் கூறியதுசம்பவியாது; ஏனெனின், "அஸதா இதமக்ர ஆஸீத்" என்னுஞ் சுருதி இவ்வுலகின் காரணத்தை அசத்தியரூபமாகவே கூறியிருக்கின்றதன்றோ?

சமாதானம் :—ஹே வாதியே! இச்சுருதியின்கண்ணேயிருக்கும் அசத்துச்சப்தம், நினது அத்தியந்தாபாவரூப சூனியத்தை யுணர்த்துகின்றதின்றாம்; மற்றோ, அது உற்பத்தியின்முன்னர் இத்தூலஜகத்தின் அவ்வியாகிருதரூப சூக்ஷ்ம அவஸ்தையையுணர்த்தும். அல்லது, அத்தியந்தாபாவரூபசூனியத்தையே ஜகத்காரணமாயங்கீகரிக்கும் சூனியவாதியாகிய வுனது பூர்வபக்ஷத்தை அவ்வசனம் அனுவாதஞ்செய்கின்றது; ஆனால், அவ்வசனத்திற்கு காரண அசத்தியரூபத்தன்மையின்கண்ணே தாற்பரியமின்றாம். அதன்கண்ணே சுருதிவசனத்திற்குத் தாற்பரியமுண்டெனக்கற்பனைசெய்யின் காரணசத்தியரூபத்தன்மையை யுணர்த்தும் சுருதிக்கு முரணுண்டாம். "ஸதேவஸோம்யேதமக்ர ஆஸீத்" ஹே பிரியதரிசன! இத்திருசியப்பிரபஞ்சம் தன்னுற்பத்தியின் முன்னர்ச சத்தியரூபமாகவே யிருந்தது என்னுமிச்சுருதியின்கண்ணே காரணசத்தியரூபத்தன்மை கூறப்பெற்றுளது, அஃதசங்கதமன்றோவாம். ஆகையால், காரண அசத்தியரூபத்தன்மையின் கண்ணே அச்சுருதிவசனத்திற்குக் கருத்தின்றாம். இத்துணைக்கிரந்தத்தால் காரணாபாவத்தையும் காரியாபாவத்தையும் ஜகத்காரணமென வுடன்படும் வாதியரின் மதம் கண்டிக்கப்பட்டது. இப்போது பிரஹ்மத்தின்கண்ணே ஜகத்காரணத்தன்

ம்பியக்கண்டிப்பாம்:—ஹே மறையவர்களே! காரணபாவத்தின்கண்ணும் காரி யபாவத்தின்கண்ணும் இச்சகத்தின் காரணத்தன்மை சம்பவியாததேபோலப் பிரஹ்மத்தின்கண்ணும் சம்பவியாதாம்; ஏனெனின், தேசகாலபரிச்சேதமற்ற சஜா தீயாதிமுப்பேதமற்ற யாவற்றினு மதிகவஸ்துவே பிரஹ்மசப்தத்தின் முக்கியப் பொருளாம். இத்தகைய ஆநந்தஸ்வரூப அத்விதீயப்பிரஹ்மத்தின்கண்ணே இச் சகத்காரணத்தன்மை சம்பவியாதாம்.

சங்கை:—ஹே பகவன்! "யதோவா இமாநிபூதாநிஜாயந்தே" எந்தப் பிரஹ்மத்தினின்றும் இச்சம்பூரண பூதபௌதிகஜகத்தானது உற்பன்னமாயதோ என்பது முதலிய அநேகஞ்சுருதி ஸ்மிருதிகளில் பிரஹ்மத்திற்கே ஜகத்காரணத் தன்மை கூறப்பெற்றுளது. பிரஹ்மம் ஜகத்காரணமன்றாமாயின் அச்சுருதி ஸ்மி ருதிவசனங்கட்கென்னகதியாம்?

சமாதானம்:—ஹே பிராஹ்மணர்களே! சுருதிவசனங்களில் பிரஹ்மத்திற் குச் சகத்காரணத்தன்மை கூறியதும் நிர்விகார அத்விதீயப் பிரஹ்மத்திற்கன்றாம்; மற்றோ, பிரஹ்மசப்தத்தின் கௌணார்த்தமாய ஆகாசாதிகட்கேயாம்.

சங்கை:—ஹே பகவன்! இப்பௌதிகப்பிரபஞ்சம் உற்பத்தியுடையதாவதே போல ஆகாசாதிகளு முற்பத்தியுடையனவாமாதலின், அவற்றிற்கும் ஒருகாரணம வேண்டும். "ஆத்மந ஆகாஶஸ்ஸம்பூதஃ" என்னுஞ்சுருதியின்கண்ணே ஆன் மாவினின்றே ஆகாசத்திற்குற்பத்தி கூறப்பட்டுளதாதலின் அவற்றின்காரணத்த ன்மை பிரஹ்மத்தின்கண்ணே சம்பவிக்குமன்றோ?

சமாதானம்:—ஹே பிராஹ்மணர்களே! வாஸ்தவமாயோ அவ்வத்விதீயநிர் விகாரப் பிரஹ்மத்தின்கண்ணே எப்பதார்த்தத்தின் காரணத்தன்மையுமின்றாம்; ஆனால், அநேகஞ்சுருதி ஸ்மிருதிகளில் பிரஹ்மத்திற்கே ஜகத்காரணத்தன்மை கூறப்பட்டிருக்கின்றதாதலின் அவ்வத்விதீயப பிரஹ்மசமீபத்தேயிருந்து அதன் கண்ணே காரணத்தன்மைப் பிரதீதியைச் செய்விக்குமவேறொரு அநாதிகாரண கற்பனைசெய்யவேண்டும்; அக்காரணசம்பந்தத்தானே அத்விதீயப் பிரஹ்மத்தின் கண்ணும் காரணத்தன்மை தோற்றுகின்றது. ஆதலின், ஹே மறையவர்களே! காரணமின்றியே இவ்வுலகம் உற்பன்னமாம்; அல்லது, அபாவத்தினானே யிவ்வுல கமுண்டாம், அத்விதீயப் பிரஹ்மத்தினானே இவ்வுலகமுண்டாம் என்னும் இம் மூன்றுபக்ஷங்களினும் முற்கூறிய சர்வதூஷணங்களின் பிராப்தியுண்டாமாதலின் அம்மூன்றுபக்ஷமும் அசங்கதமாம். ஆகையாலிஃதறியப்பெறும்:—அக்காரணங் களினும் வேறாயுலககாரணம் யாதாம் என்னும் ஆராய்ச்சியை யாமியாவருஞ் செய் யவேண்டுமென்பதே. ஹே பிராஹ்மணர்களே! எக்காரணத்தால் இவ்வெல்லா வுலகுமுண்டாமோ அதன்விசாரத்தை யிப்போது நீங்கள் நிறுத்துங்கள்; மற்றோ, முதலில் நாமியாவரும் இத்தூலசரீர காரணத்தை யாராய்வாம்: நமதித்தூலம் எக்காரணத்தானுதித்துள்ளது:

சங்கை:—ஹே பகவன்? தந்தையின் வீரியத்தினானே இத்தூலசரீரோற் பத்தியுண்டாம்; இதுவிடயம் யாவருக்குந்தெரிந்ததேயாமாதலின், சர்வலோகப் பிரசித்த அர்த்தத்தே ஆராய்ச்சிசெய்தல் பயனற்றதாம்.

சமாதானம் :—ஹே பிராஹ்மணர்களே! தோல், இரத்தம், மாம்சம், மேதை, என்பு, மஜ்ஜை, வீரியம் என்னும் ஏழுதாதுக்களின் அந்தியமாய வீரியத்தி னேயே இத்தூலசரீரோற்பத்தி யுண்டாகுமாயின் ; புருடசரீரத்திருக்கும் வீரிய த்தினும் தூலசரீரோற்பத்தி யுண்டாதல்வேண்டும் ; ஆனாலவ்வா றுண்டாவதின் றாமாதலின், அவ்வீரியத்தே தூலசரீரகாரணத்தன்மை சம்பவியாதாம்.

சங்கை :—ஹே பகவன் ! தோன்முதலிய தாதுக்களோடுசேர்ந்துள்ள வீரி யத்தின்கண்ணே தூலசரீரகாரணத்தன்மையின்றேனும் அவற்றினின்றும் தனிப் பட்டவீரியத்தே அதுசம்பவிக்குமன்றே.

சமாதானம் :—ஹே பிராஹ்மணர்களே ! தனிப்பட்டவீரியஞ் சரீரகாரண மாகுமாயின் காமாக்கினியின் தாபத்தால் அவற்றினின்றும் தனிப்பட்டு ஹிருதய தேயத்தையடைந்த வீரியத்தினும் இச்சரீரமுண்டாதல்வேண்டும், ஆனாலங்ங னுண்டாவதின்றாமாதலின் அதன்கண்ணேயது சம்பவியாதாம்.

சங்கை :—ஹே பகவன் ! தேகத்தின்கண்ணேயிருக்கும் அதுசரீரோற்பத்தி யையுண்டாக்காதாம்; மற்றே, உபஸ்தஇந்திரியவாயிலாய் வெளிப்போந்த அது சரீ ரகாரணமாகும்.

சமாதானம் :—ஹே மறையவர்களே ! வெளிப்போந்த அஃதங்ஙனமாகுமா யின் நித்திராதோஷத்தால் வெளிப்போந்த வீரியத்தினும் இதூலசரீரமுண்டா தல்வேண்டும் ; ஆனாலவ்வா றுண்டாவதின்றாமாதலின் அதன்கண்ணே காரணத் தன்மை சம்பவியாதாம்.

சங்கை :—ஹே பகவன் ! ஸ்திரீசம்போகத்தால் வெளிப்போந்த அது கார ணமாம்.

சமாதானம் ,—ஹே மறையவர்களே ! ஸ்திரீசம்போகத்தால் வெளிப்போந்த வீரியம் தூலகாரணமாகுமாயின், கனவின்கண்ணே அங்ஙனமாம் வீரியத்தினும் தூலசரீரோற்பத்தி யுண்டாதல்வேண்டும் ; ஆனாலவ்வாறுவதில்லையாதலின் அதன் பாற் காரணத்தன்மை சம்பவியாதாம்.

சங்கை :—ஹே பகவன் ! நனவில் ஸ்திரீசம்போகத்தால் வெளிப்போந்தவீரி யமே இத்தூலசரீரகாரணமாம்.

சமாதானம் :—ஹே பிராஹ்மணர்களே ! நனவிலங்ஙனஞ்செய்தலால் வெளி ப்போந்தவீரியந் தூலகாரணமாகுமாயின் பாலியவிருத்த ஸ்திரீகளின் சம்போகத் தால் வெளிப்போந்த வீரியத்தினும் இத்தூலோற்பத்தி யுண்டாதல்வேண்டும் ; ஆனாலங்ஙனுண்டாவதில்லையாதலின் அதன்பாற் காரணத்தன்மை சம்பவியாதாம்.

சங்கை :—ஹே பகவன் ! யௌவனஸ்திரீயின் சம்போகத்தால் வெளிப்போ ந்த வீரியம் இத்தூலசரீரகாரணமாம்.

சமாதானம் :—ஹே பிராஹ்மணர்களே ! அங்ஙனம் வெளிப்போந்த வீரியம் இத்தூலகாரணமாகுமாயின் யௌவனமலடியின் சம்போகத்தால் வெளிப்போந்த

[illegible] இத்தூலோற்பத்தி யுண்டாதல்வேண்டும்; ஆனாலவ்வாறுண் [illegible]மாதலின் அதன்பாற் காரணத்தன்மை சம்பவியாதாம்.

சங்கை :—ஹே பகவன்! கருவைத்தரிக்குமாற்றலுற்ற ஸ்திரீசம்போகத்தால் வெளிப்போந்தவீரிய மித்தூலகாரணமாம்; மலடியிடத்தே கருத்தரிக்குமாற்றலின்மையின் அவள்சம்போகத்தால் வெளிப்போந்தவீரியத்தே சரீரகாரணத்தன்மையின்றாம்.

சமாதானம் :—ஹே மறைபவர்களே! கருத்தரிக்குமாற்றலுற்ற யௌவனியின்சம்போகத்தால் வெளிப்போந்தவீரியந் தூலகாரணமாகுமாயின் அவள்சம்போகத்தாற் காமிக்குத்தினந்தோறும் வீரியம்வெளிவருமாதலின் அதனாற்றினந்தோறும் தூலோற்பத்தி யுண்டாதல்வேண்டும்; ஆனாலவ்வாறுண்டாவதின்றும்; ஆதலின், அதன்பாற் காரணத்தன்மை சம்பவியாதாம். ஆகையினால், ஹே மறையவர்களே! இத்தூலோற்பத்தியின்கண்ணே எவ்வாற்றானும் வீரியத்திற்குக்காரணத்தன்மை சம்பவியாதாம். தாய்தந்தையரிடத்தே இத்தூலசரீர காரணத்தன்மை வீரியவாயிலாகவேயாகும், வீரியத்தே காரணத்தன்மை சித்தியாதபோது அவர்பாலெவ்வாறு சித்திக்கும்; மற்றேறு, அவரும் இத்தூலகாரணமாகார். இதுதுணையால் வீரியமிருப்பினும் தூலசரீர அனுறபத்திவடிவ அன்வயவியபிசாரம் நிரூபிக்கப்பட்டது. இப்போது அவ்வீரியமில்லாதிருப்பினும் இத்தூலசரீரஉற்பத்திரூபவியதிரேக வியபிசாரம் நிரூபிக்கப்படும் :—ஹே மறையவர்களே! மூடு, கொதுகுமுதலிய ஸ்வேதஜசரீரங்களும் தருமுதலியஉறபிஜ்ஜசரீரங்களும் புருஷவீரியமின்றியேயுண்டாம். இக்காரணத்தினாலும் வீரியத்தே தூலகாரணத்தன்மைசம்பவியாதாம், இத்துணையால் வீரியத்தே தூலகாரணத்தன்மை கண்டிக்கப்பட்டது. இப்போது தருமாதருமகருமத்தே தூலகாரணத்தன்மையைக் கண்டிப்பாம் :—ஹே மறையவர்களே! புண்ணியபாவத்தே சரீரகாரணத்தன்மையையங்கீகரிப்பவன்பாலிதுகேட்கவேண்டும்:—சரீரகாரணரூப புண்ணியபாவகருமங்கட்கு யாதுகாரணமாம்? சுத்தஆன்மாக்காரணமா? அல்லது, தூலசரீரமேயா? சுத்தஆன்மாவெனிற், சம்பவியாதாம். ஏனெனின்? ஆன்மஞானத்தான் மோக்ஷத்தையடைந்த முத்தர்கட்கும் சுத்தான்மா விருக்கின்றதாதலின் அதுவும் கருமங்களையுண்டாக்கவேண்டும், சுகதுக்கரூபபலங்களையும் போகிக்கவேண்டும். யாவன் அறம்பாவங்களின் கருத்தாவாவனே அவற்றின் பலபோக்தாவாவனே அவன்முக்தியையடையான்; மற்றேறு, பந்தத்தையடைவனாதலின்சுத்தஆன்மாவின்கண்ணே கருமகாரணத்தன்மையை யுடன்படுவதில் எவனுக்கும் முக்தியுண்டாகாது. தூலசரீரமெனின்; அவன்பாலிதுகேட்கவேண்டும், கருமகாரணரூப தூலசரீரத்திற்கு யாதுகாரணம்? அறம்பாவமா? அல்லதபலா? அறம்பாவமெனிற் சம்பவியாதாம்; ஏனெனின்? அறம்பாவமுண்டாயின் அவற்றாலித்தூலசரீரோற்பத்தியுண்டாம், தூலசரீரஉற்பத்தியுண்டாயின் அதனாற் கருமோற்பத்தியாம், என அன்னியோன்னியாசிரயதோஷவடைவுண்டாமாதலின், தூலசரீரத்தே கருமகாரணத்தன்மை சம்பவியாதாம். அயலெனின், அவ்வயற்காரணத்தைக் கூறவேண்டும், தூலசரீரத்திற்குச் சூக்ஷ்மசரீரங்காரணமெனின்; அவன்பாலிதுகேட்கவேண்டும்: அஃ

தொரு தூலசரீரகாரணமா? சர்வதூலசரீரகாரணமா? ஒருதூலத்திற்கெனின் சம்பவியாதாம், ஏனெனின், எப்பொருள் எக்காரியத்தின் யாதாவதொரு வியக்தியை யுண்டாக்குமோ அப்பொருள் அக்காரியத்தின் காரணமாகமாட்டாது; மற்றே, அது அதனைக்குறித்து வேறோராற்றாற் பெறப்பட்டதாம். குயவனது நீள்செவி பன் சிற்சிலகடவியக்திகட்குக் காரணமாமாயினும் எல்லாக்கடங்கட்குங்காரணமன்றுமாதலின் அது கடகாரியஉற்பத்தியில் வேறோராற்றாற் பெறப்பட்டதாம், அதுபோல, யாதாவதொரு தூலசரீரத்தையுண்டாக்கும் சூக்ஷ்மசரீரமும் இத்தூலசரீர ரூபகாரியோற்பத்தியில் வேறோராற்றாற் பெறப்படுவதேயாம். தண்டுச் சர்வகாரிய உற்பத்தியில் நியமமாயாங்காரணங்களினும் வேறாயபதார்த்தங்கள் வேறோராற்றாற் பெறப்படுவனவாம்; ஆகையால், அச்சூக்ஷ்மசரீரத்தே யாதாவதொரு தூலசரீரகாரணத்தன்மை சம்பவியாதாம் சர்வதூலசரீர காரணமெனின், அதுவுஞ்சம்பவியாது; ஏனெனின், அச்சூக்ஷ்மசரீரத்தே சருவ ஸ்தூலசரீரகாரணத்தன்மையிருக்குமாயின், தேவதத்தனது சரீரத்தாற் றேவதத்தனது தூலசரீரமுண்டாவதேபோல யஞ்ஞதத்தனது தூலசரீரமும் உண்டாதல்வேண்டுப; ஆனாலங்ஙனமுண்டாவதில்லையாதலின் அதன்கண்ணே யவற்றின்காரணத்தன்மை சம்பவியாதாம், அல்லது, சூக்ஷ்மசரீரம் தூலசரீரகாரணமாகுமாயின் அதனினின்றே தூலோற்பத்தி சம்பவிக்குமாதலின் வாதியுடன்பட்ட அறம்பாவத்தே தூலகாரணத்தன்மை பயனற்றதாம். அல்லது, இத்தூலசரீரம் உற்பத்தியுடையதேபோலச் சூக்ஷ்மசரீரமுமாகுமாதலின் இதற்குமொருகாரணத்தைக் கூறவேண்டும். அஞ்ஞானத்தையே யிதன்காரணமென வுடன்படின் அதனானே இத்தூலசரீரஉற்பத்தியாதல்கூடும். இவ்விரண்டிற்கிடையில் சூக்ஷ்மசரீரத்தை யுடன்படல் பயனற்றதாம். அல்லது, அவ்வஞ்ஞானமும் அறம்பாவகருமம் அபேக்ஷையின்றிடே சூக்ஷ்மசரீரகாரணமா?. அல்லது அபேக்ஷித்தா? அபேக்ஷையின்றியெனின், அது சம்பவியாது; ஏனெனின், அறம்பாவத்தையவாவாமலே அஞ்ஞானம் சூக்ஷ்மத்தையுண்டாக்குவதேபோலத் தூலத்தையு முண்டாக்குமாதலின் அச்சூக்ஷ்மத்தே தூலகாரணத்தன்மை யங்கீகரித்தல் பயனற்றதாம். அபேக்ஷித்தெனின் அதுவுஞ் சம்பவியாது, ஏனெனின், அறம்பாவா திவாதனையோடுகூடியதாய் அவ்வஞ்ஞானம் சூக்ஷ்மகாரணமாவதேபோலத் தூலத்திற்குமாப். ஆதலின், சூக்ஷ்மத்தே தூலகாரணத்தன்மையுடன்படல் பயனற்றதாம், அல்லது, அறம்பாவ வாதனையைச் சூக்ஷ்மசரீரகாரணமென வுடன்படின் ஏற்றமரம்போல அனவஸ்தாதோஷப்பிராப்தியாம்; ஏனெனின், சம்ஸ்காரம் வாசனையெனப்பெறும், அச்சம்ஸ்காரம் விநாசஅவஸ்தையையுடைய அறம்பாவத்தாலுண்டாம், எப்பொருள் முன்னரிராநிற்குமோ அதற்கேநாசமுண்டாம், இராததற்குநாசமுண்டாகாதாம். ஆதலின், அச்சம்ஸ்காரத்தின்முன்னர் அறம்பாவங்களின் இருபபு அவசியம் அபேக்ஷிதமாமாதலின் இப்பொருள் துணியப்பெறும் :—அறம்பாவத்தால் வாதனையுண்டாம், வாதனையால் சூக்ஷ்மசரீரமுண்டாம், சூக்ஷ்மசரீரத்தால் தூலசரீரமுண்டாம், இத்தூலசரீரத்தால் மீண்டும் அறம்பாவமுண்டாம்; இவ்வாறு ஏற்றமரம்போல அனவஸ்தாதோஷப் பிராப்தியாமாதலின், ஹே பிராஹ்மணர்களே! இவ்வகை முற்கூறிய

தூலஸ்ரீரகாரணத்தன்மையும் யாம் நிச்சயிக்கமுடியாதவராவோமாயின் சர்வஜகத்தின் காரணநிச்சயம் நமக்கெங்ஙனமுண்டாம்? காரணமின்றி யெக்காரிய உற்பத்தியும் ஆகாதாதலின் இஃதறியப்பெறும் :—இத்தூலசரீரகாரியத்திற்கும் ஒருகாரணமிருக்கவேண்டும், ஆனலிது இதனுலுண்டாயதென வதன்நிச்சயம் நம்மனோர்க்கின்றும். ஹே மறையவர்களே! இத்தேகம் அன்னத்தாலுண்டாயதென வாதிகூறின் அதுவுஞ்சம்பவியாது; ஏனெனின், இஃதுண்டாவதற்குமுன்னெவரும் அன்னம் அயில்வதின்றும்; மற்றேறு, இஃதுதித்தபின்னரே இதன்றிருப்தியின்பொருட்டும் புஷ்டியின்பொருட்டும் யாவரும் அன்னமுண்பராதலின் அன்னத்தின்கண்ணும் தூலகாரணத்தன்மைசம்பவியாதாம், இத்துணைபால் இத்தூலோற்பத்தியின்காரணவிசாரஞ்செய்யப்பட்டது. இப்போது இத்தேகஸ்திதியின் காரணவிசாரஞ்செய்யப்படும் :—ஹே மறையவர்களே! இந்நெற்கோதுமை முதலிய அன்னம் தூலசரீரஉதயத்தே காரணமன்றுவதேபோல ஜீவனத்துமன்றும்; ஏனெனின், அன்னம் ஜீவனகாரணமாகுமாயின் அன்னமிருப்பப் பிராணிகட்கு மிருத்தியுவுண்டாகலாகாது. ஆனல், அன்னமிருப்பவும் மிருத்தியு காணவருகின்றது. ஆதலின், இவ்வன்னத்தே ஜீவனகாரணத்தன்மை சம்பவியாது. மாறும் அன்னதோஷத்தால் நானுவகை வியாதிகளுண்டாம், அவ்வியாதிகளால் மிருத்தியுவுண்டாம். இவ்வாறே சிகித்சாசாஸ்திரத்தே வியாதியையுண்டாக்கும்வாயிலாய் அன்னமே மிருத்தியுவின் காரணமெனக் கூறப்பெற்றுளது; ஆதலின், அன்னத்தே ஜீவனகாரணத்தன்மை சம்பவியாது. ஹே பிராஹ்மணர்களே! அன்னப்பிராப்தி ஜீவனகாரணமன்றுவதேபோல அன்னியவிடய அடைவும் ஜீவனகாரணமன்றும்; மற்றேறு, மாறும் மரணத்தின்காரணமேயாம். அவற்றுள், ஸ்திரீரூப விடய அடைவால் காமிகட்கு இருதயத்தே பரமதாபப்பிராப்தியுண்டாமாதலின் அவ்வடைவும் துக்ககாரணமேயாம். ரோகியானவன் தன் சரீரத்துள்ளே கண்டாமணியின் ஓசைக்குச் சமானப் பிராணவாயுவின் ஓசையைக்கேட்பன். அவன் சிலநாளிலேயே மரணத்தையடைவன். இவ்வாறு நிமித்தசாஸ்திரமுணர்ந்தவர் கூறுவாராதலின் சப்தமும் மரணகாரணமேயாம். இப்போதுஸ்திரீரூபவிடய அடைவின்கண்ணே மரணகாரணத்தன்மையை வெளிப்படையாய்க் காண்பிப்பாம் :—ஹே மறையவர்களே! வேதார்த்தத்தையுணர்ந்த அறிஞர் இங்ஙனங் கூறுவர். எக்காமியானவன் சாஸ்திரமரியாதையைக்கடந்து இரவும்பகலும் தன் மனைவியிடத்தே வீரியபரித்தியாகஞ்செய்கின்றனனே அவன் பாவத்தையடைவன். அதனுல் விரைவாகவே யவன் மிருத்தியுவை அடைவன். பரஸ்திரீயினிடத்தே ஒருமுறை வீரியபரித்தியாகஞ்செய்யினும் பாவத்தையே யடைவன்; அதனுல் விரைவாகவே மரணத்தையடைவன். "ப்ராணம்வா ஏதே ப்ரஸ்கந்தந்தி யே திவா ரத்யா ஸம்யுஜ்யந்தே" யாவன் தன் மனைவியோடு தினத்தே சம்போகிப்பனே அவன் தன் பிராணனையே நஷ்டமாக்குவன் என்பது சுருதியாம். இதுவிடயத்தே ஸ்மிருதியுமுளது.

"பரதாராந் மனுஷ்யாணாமாயுஷோ நாஸகம் பரம் ।
தஸ்மாத் பரதாராவலோகநம் ..." ௺

Note: the first line at the top of the page reads: தூலத்வம ஏதன்கண்ணே யுண்டாகாதோ அத்தகைய ஒருதூலசரீரகாரணம் பிரதியாவதின்றும். கருத்திதுவாம் :—யாவருக்குங்காட்சியாற் சித்தமாய இத்தூல

"மறையுவர் முதலெவர்களும் மனத்திஞ னேனும்
பிறர்மனை வியர்தமை நினையாமையே பேற்றும்
உறையுலகங்கண் மூன்றினு மாயுளை யொருக்கும்
அறையிதைநிக ரயல்வினை யிலையென வுறியே."

(பொ-ள்.) பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும் நான்குவருணத்தே எப்புருடனும் பரஸ்திரீகமனஞ்செய்பற்க; ஏனெனின், மூவுலகத்தும் பரஸ்திரீகமனம் ஆயுளை நஷ்டப்படுத்துவதேபோல வேறெக்கருமமும் ஆயுளை நஷ்டப்படுத்தாது. இவ்வாறு நூலுணர்ந்தோர் நுவலுவர்; யோகசாஸ்திரமுணர்ந்தபெரியாரோ இவ்வாறியம்புவர்:—இவ்வுலகத்தே எத்தருவின் இரசம் வெளிச்செல்லவில்லையோ அத்தரு அவ்விரசமகிமையால் நெடுங்காலமிருக்கும். வெளியிற்சென்ற இரசத்தையுடைய தரு சிறிதுகாலத்திலேயே காய்ந்து மூலத்தோடு நஷ்டமாம். அதுபோல, எவனதுவீரியரூபரசம் இத்தேகத்தினின்றும் வெளிப்போதலிராதோ, அவன் அதன்மகிமையால் காமதேவனைப்போலசு சுந்தரகாந்தியுடையவனாய் நெடுநாள்ஜீவிப்பன். எவன் வீரியத்தைவிட்டுவிடுவனோ அவன் விரைவாகவே மிருத்தியுவையடைவன். அல்லது, விருக்ஷத்தின் சாகைகளிலும் ஸ்கந்தங்களிலும் இருக்கும் இரசம் வெளிவரினும் அஃதழியாதாம்; விருக்ஷமூலத்தினின்றும் இரசம் வெளிவரினோ அது விரைவாகவே நாசத்தையடையும். அதுபோலப் புருடனுடைய ஹஸ்தபாதாதியங்கங்களிலிருக்கும உதிர முதலிய இரசங்கள் வெளிச்செலினும் நாசத்தையடையான்; மஸ்தகத்தினின்றும் வீரியம் வெளிப்போதலின் விரைவாகவே நாசத்தையடைவன். ஆகையால, உதிராதி சர்வ தாதுக்களினும் வீரியவடிவ ஏழாவது தாது மேலானதாம. அல்லது, உலகப்பிரசித்த பிப்பலாதி விருக்ஷங்கட்கு மூலமிருப்பதேபோல இத்தேகவிருக்ஷத்திற்கு இம்மஸ்தகமே மூலமாம். "[illegible]" இவ்வுலகப் பிரசித்த அசுவத்தாதி விருக்ஷங்கட்கோ மூலங்கீழாம் சாகை மேலாம். ஆனால், பிரவாகரூபமா யநாதியாய இச்சரீரரூப அசுவத்தவிருக்ஷத்திற்கோ மஸ்தகரூப மூலமோ மேலாம், ஹஸ்தபாதாதிபவயவரூபசாகைகீழாம். அல்லது, பிரசித்த விருக்ஷமூலத்தே மத்திபபாகமிருப்பதேபோல இப்புருடனது மஸ்தகரூபமூலத்தே மஸ்திஷ்கமெனப்பெயரிய மத்தியபாகமிருக்கும். அவ்விருக்ஷ மூலமத்தியபாகத்தே இருக்குமிரசம் விருக்ஷஜீவனகாரணமாவதேபோலப் புருடனது மஸ்தகமூலத்தின் மஸ்திஷ்கபாகத்தேயிருக்கும் வீரியரசமே ஜீவனகாரணமாம். ஈண்டுப் புருடமஸ்தகத்தேயிருக்கும் சிலேஷ்மவிசிஷ்ட மாம்சபிண்டவிசேஷம் மஸ்திஷ்கமாம். அது இவனது தசமத்துவாரத்தை நிரோதஞ்செய்வது சந்திரனது பிம்பசமானமாய வெண்ணிறத்தையுடையது, சம்பூரணநாடிரூபசூத்திரங்களைத் தாரணஞ்செய்வது, அம்மஸ்திஷ்கத்தின்கண்ணே பதுமபத்திரத்திற்குச்சமானமாய சகஸ்ர ஸ்தூல நாடிகளிருக்கும்; அவை ஆண்டுச் சகஸ்ரதலத்தையுடைய கமலத்தைச்செய்யும். அம்மஸ்திஷ்கதேயத்தே இஜ்ஜீவரூபஹம்சம் கங்கை யமுனைகளைப் பரித்தியாகஞ்செய்து பச்சிமவாஹினீயாய சரஸ்வதீரூபமார்க்கமாய்ச்செல்லும். அவ்வம்ஸம் மனரூபீ மானசரோவரத்தே நிவாசஞ்செய்வதாம். ஈண்டு இடையென்னும் வாமநாடி

யான்று கங்கையெனப்பெயறும். பிங்கலையென்னும் தக்ஷிணநாடி யமுனையெனப்பெறும். இவ்விரு நாடிகளின் மத்தியிலிருக்கும் சுழும்னைநாடி சரஸ்வதி யெனப்பெறும். இவ்வார்த்தை ஸ்வரோதயமென்னும் நூலிலும் கூறப்பெற்றுளது.

"இடாநாமமெதி விஜ்ஞேயா விஂமஹா யமுனாநதீ ।
மத்யே ஸரஸ்வதீ விதூர்த்தா ப்ரயாமாதி ஸமஸ்தயோ:" ॥

"இடையெனுமது கங்கையின் வடிவமா யிலங்கும்
நெடியபிங்கலை யமுனையின் வடிவமாய் நிலவும்
இடையிரண்டதின் சுழுமுனை சரஸ்வதி யெனவாம்
தடையற வவையுறல் பிரயாகையின் சமமே."

(பொ-ள்.) இடையென்னும் வாமநாடி கங்கைவடிவமாம், பிங்கலையென்னுந் தக்ஷிணநாடி யமுனைவடிவமாம், இவ்விரண்டின் மத்தியிலிருக்கும் சுழும்னையென்னும்நாடி சரஸ்வதிவடிவமாம், இவை மூன்றன்சங்கமம் பிரயாகைக்குச்சமானமாம்; அல்லது, இச்சரீரத்தேயிராநின்ற மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆஞ்ஞை என்பன ஆறு சக்கரங்களாம். அவை குண்டலினீ யென்னும் நாடி சஞ்சரிக்குந் தானங்களாம. அவற்றின் மார்க்கஞானம் குருவின் கிருபையினாலேயுண்டாம. குருவின்கிருபையினாலன்றி வேறெவ்வாற்றானுமது வுண்டாகாதாம். குருவின்கிருபையற்ற ஜீவரூபஹம்சம் அம்மார்க்கத்தையறியாத போது தேகத்துற்ற அநேகநாடிகளிலடிக்கடி சுழலும். அவற்றிலிருக்கும் அன்னத்தின் தூலசூக்ஷ்ம இரசங்களைப போகிக்கும்; ஆனாலதற்குமேற்கமனமுண்டாகமாட்டாது. கருத்திதுவாம்:—நீர்மடுவின்கண்ணே நிலவாநிற்கும் பிரசித்த ஹம்சத்திற்கு நீர்க்குமேல் ஆகாசத்தே கமனஞ்செய்யும் மார்க்கம் தடைப்படுமாயின் அது நீரின்கண்ணேயே சுழலும்; நீரின் பதார்த்தங்களைப் பக்ஷணஞ்செய்து கொண்டு அவ்விடத்தே யுறையும். அதுபோல, மோக்ஷமார்க்க சுழும்னைநாடியை யறியாத ஜீவஹம்சம் இச்சம்சாரத்தின்கண்ணே யடிக்கடி சுழலாநிற்கும். இத்தகைய சுழும்னைநாடிரூப மார்க்கவாயிலாய் இஜ்ஜீவரூபஹம்சம் மஸ்திஷ்கதேசத்தை யடையும், ஆண்டிருக்கும் இவ்வீரியரூப ஏழாவதுதாது துவக்காதி ஆறுதாதுக்களின் சாரரூபமாம். அதுவும் இத்தேகத்தே முப்பரிணாமத்தையடையும். காமதோஷமற்ற ஹிருதயகமலத்தே விசேஷமாயிராநின்ற வீரியமும், ஹஸ்தபாதாதிகளில் சாமானியரூபமாயிராநின்ற வீரியமும், பலரூபமுதற்பரிணாமத்தையடையும். அப்பலம் சர்வ வைரிகட்கும் பயத்தையடைவிப்பதாம். மஸ்தகத்திலிருக்கும் வீரியம் சாமர்த்தியரூப இரண்டாவது பரிணாமத்தையடையும். அது நெடுங்கால பரியந்தம் இத்தேகஸ்திதியின் காரணமாம். காமரூப அக்கினியால் கலக்கத்தை யடைவுறினும் வீரியம் நிரோதத்தையடையும் அதிகத்தன்மையையுமடையும். அவ்வீரியம் ஓஜஸ்என்னும் எட்டாவது தாதுவடிவமூன்றாவதுபரிணாமத்தையடையும், அவ்வோஜஸால் அரோகத்தன்மையுண்டாம். இத்துணையால் வீரியநிரோதஞ்செய்வதின் பலங் கூறப்பெற்றது. இப்போது வீரிய பரித்தியாகஞ்செய்வதிற் றோஷநிரூபணஞ்செய்வாம்:—வீரியமானது தேகத்திருந்து வெளியேபோயின் முற்கூறிய பலம் கிடைக்கமாட்டாதாதலின், அப்பலத்தினடைவின்பொருட்டு அதிகாரியா

னவன் மந்திரம், ஔஷதம், தியானம் என்பன முதலிய உபாயங்களால் அவ்வீரி யத்தைத் தேகத்தினின்றும் வெளிப்போகவிடலாகாது. அக்கினியின் சம்பந்தத்தால் மாரசம் வெளிச்செல்வதேபோலப் பெண்வடிவ அழற்சம்பந்தமுறினும் இப்புருஷவிருக்ஷத்தின் வீரியரசம் வெளிப்போகாதாயின் வீரியந் தடைப்பட்டதென வுணர்க. அதன் தடையால் யோகிகட்கு ஆகாச* கமன முதலிய சித்திகளின் பிராப்தியுண்டாம். அப்பயனை வீரியத்தியாகஞ்செய்யும் போகி யடையான்; மாறாய், அதைத் தியாகஞ்செய்தலால் அப்போகி நாசத்தையேயடைவன். கருத்திதுவாம் :—அழற்சம்பந்தத்தால் எவ்விருக்ஷரசம் ஒருமுறையேனும் வெளிவருமோ அதுவும் விரைவாகவே நாசமாகுமாயின், அநேகமுறை அழற்சம்பந்தத்தால் எவ்விருக்ஷரசம் அநேகமுறை வெளிச்செல்லுமோ அது விரைவாகவே நாசத்தையடையும் என்பதன்கண்ணே யாதுகூறற்குளது. இதுபோலவே ஒருமுறை பெண்ணழற் சம்பந்தத்தால் எப்புருஷவிருக்ஷத்தின் வீரியரசம் ஒருமுறையேனும் வெளிச்செல்லுமோ அப்புருஷனும்நாசத்தையடையின், அநேகமுறை பெண்வடிவஅழற்சம்பந்தத்தால் அநேகமுறை வீரியரசம்வெளிச்செல்லின், இப்புருஷவிருக்ஷம் நாசத்தை யடையுமென்பதன்கண்ணே யாதுகூறற்குளது. ஆகையால், அநேகஉபாயங்களால் அவ்வீரியத்தைத் தடுக்கவேண்டும். ஹே பிராஹ்மணர்களே! இவ்வாறு யோக சாஸ்திரத்தே ஸ்திரீசம்போகம் மிருத்யு காரணமெனக்கூறப்பட்டுளதாதலின், இதுவும் ஜீவனகாரணமன்றாம். இது மரணகாரணமாவதேபோலச் சந்தன கர்ப்பூராதிகளோடுகூடிய நானுவகையாய பூச்சும் தேகத்தே சீத, வாத, கப, சந்நிபாதாதி ரோகங்களையுண்டாக்கும்; அவற்றால் விரைவாகவே மிருத்தியுவையடைவனாதலின், சந்தனாதிகளின் பூச்சும் சீதாதிகளையுண்டாக்கும்வாயிலாய் மரணகாரணமேயாகும். ஹே மறையவர்களே! இவைமுதலாகிய நேத்திராதிகளாற் கவரப்பெறும் உருவமுதலிய யாவும் மரணத்தின் காரணமேயாகும். அவ்விஷய அடைவின் இச்சையையுடைய துர்ஜனப் பகைவருஞ் சிங்கசர்ப்பாதிகளும் மரணகாரணங்களேயாம். கருத்திதுவாம் :—விழி முதலியவற்றின் உருவமுதலிய விஷயங்கள் இச்சரீர ஜீவனகாரணமுமன்றாயின், அவை உற்பத்திகாரண மெங்ஙனும்?

சங்கை :—ஹே பகவன்! பிராணனது சுவாசப் பிரசுவாசரூப வியாபாரமே இத்தேக ஜீவனகாரணமாம்.

சமாதானம் :—ஹே மறையவர்களே! அவ்வியாபாரமும் ஜீவனகாரணமன்றாம்; ஏனெனின், தரு முதலிய ஸ்தாவரசரீரத்தே அவ்வியாபாரத்தை எவருங் காண்பதின்றாமாயினும், தரு முதலியவை ஜீவித்திருப்பனவாய்க் காண்கின்றோம். மனுடர் முதலிய ஜங்கமசரீரமும் மூர்ச்சையின்கண் அவ்வியாபாரமற்றதாயினும் ஜீவிப்பதைக்காண்கின்றோம். ஆகையால், அவ்வியாபாரமும் இத்தேக ஜீவனகாரணமன்றாம்.

சங்கை :—ஹே பகவன்! ஜாடராக்கினியும் உதிரமும் இத்தேக ஜீவனகாரணமாம்.

சமாதானம் :—ஹே மறையவர்களே! அவ்விரண்டும் ஜீவனகாரணமன்றாம்; ஏனெனின், எவ்வளவோ ரோகிகளின் நாடிகளைக் கத்தியாலறுக்கினும் உதிரம் கிளம்புவதின்றாம், எவ்வளவோ ரோகிகளின் சரீரத்தைத் தீண்டினும் அதன்கண்ணே உஷ்ணத்தன்மை தோற்றுவதின்றாமாயினும், அவர்கள் ஜீவித்திருப்பதைக் காண்கின்றோம்; ஆகையால், அவ்விரண்டும் ஜீவனகாரணமன்றாம். ஹே அந்தணர்களே! நாம் யாவரும் எப்பொருளால் ஜீவிக்கின்றோம் என ஜீவனகாரணநிச்சயத்தின்கண்ணும் யாம் சமர்த்தற்றவராயின், இத்தேகவுற்பத்தியின் காரணநிச்சயஞ் செய்வதில் யாமெங்ஙனஞ் சமர்த்தராவோம்; மற்றோ, ஆகோம். இத்துணையால் இத்தேக ஜீவனகாரண விசாரஞ்செய்யப்பட்டது. இப்போது இச்சரீர ஆதாரவிசாரஞ்செய்வாம்:—ஹே மறையவர்களே! இத்தேகம் எவ்வாதாரத்திருக்கின்றதென்பதையும் யாமறிகின்றிலேம்.

சங்கை :—ஹே பகவன்! இப்பிரத்தியக்ஷபூமியே இச்சரீர ஆதாரமாம்.

சமாதானம் :—ஹே விப்பிரர்களே! இப்பூமியின்கண்ணே இத்தேக ஆதாரத்தன்மை சம்பவியாதாம். ஏனெனின், இப்பூமி எவ்வாதாரத்தேயுளது? அதுவும் எவ்வாதாரத்தேயுளது? இவ்வகையாய் உத்தரோத்தரம் ஆதாரகற்பனைசெய்தலால் அநவஸ்தாதோஷப் பிராப்தியாம். இக்காரணத்தால் இப்பூமி இத்தேக ஆதாரமன்றாம். இத்தேகத்திற் கவிசேஷத்தன்மையுறினும் சித்தத்தின்கதி நானாவகையாய்க் காணவருமாதலின், இத்தேகாதாரம் சித்தாதாரமாகாதாம்; மற்றோ, இத்தேகாதாரத்தினும் வேறாகவே ஒரு சித்தாதாரம் கூறவேண்டும். அல்லது, இப்பூமியின்கண்ணே இத்தேகாதாரத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனின், எப்பொருளிருப்ப ஆதேயவஸ்துவின்கீழ்வீழ்ச்சியுண்டாகாதோ அப்பொருள் ஆதாரமெனப்படும். ஸ்தம்பமிருப்பக் கிருகத்திற்குக் கீழ்வீழ்ச்சியுண்டாகாதாதலின், ஸ்தம்பம் கிருகாதாரமாதல்போலவாம். இவ்விலக்கணம் பூமியின்கண்ணே பொருந்தாதாம். ஏனெனின், உயர்ந்த பூமியின்கண்ணேனும், ஆசனத்தின்கண்ணேனும் இருப்பினும் இப்புருஷன் நித்திரையோடு கூடியவனாவனாயின், தன் தேகத்தை நிறுத்தச் சமர்த்தனாகான்; மற்றோ, நித்திரையால் அவன் கீழேவீழ்வன், ஆகையாலிஃதறியப்பெறும். இத்தேகத்திற்குப் பூமியாதாரமன்றாம்; மற்றோ, பூமியினும் வேறாய ஓராதாரத்தே இச்சரீரம நிலைபெறவேண்டும். ஹே மறையவர்களே! தேகாதாரத்தையும் பூமியின் ஆதாரத்தையும் யாமறியமுடியாதவராயின் இத்தேகஜீவனகாரணத்தையும் உற்பத்தியின்காரணத்தையும் யாமெங்ஙனமறியப்போகின்றோம்; மற்றோ நாமறியோம. இத்துணையால் இத்தேகாதாரவிசாரஞ்செய்யப்பட்டது. இப்போது இத்தேகப்பிரவர்த்தக விசாரஞ்செய்வாம்;—ஹே விப்பிரர்களே! பூதஆவேசத்தோடுகூடியவன் தன்னிச்சையின்றியே நானாவகையாயசுபாசுபகருமங்களைச்செய்வன். அதுபோல, சுபாசுபகருமங்களைச்செய்ய இச்சையற்ற நம்மனோரது இருதயத்தேயிருந்துகொண்டு எத்தேவனேவுகின்றனன்? என்னும் இவ்விஷயம் பாண்டவகீதையின்கண்ணே துரியோதனனாலும் கூறப்பெற்றுளதாம்.

"ஜாநாமிதர்மம் நசமேப்ரவ்ருத்தி ஜாநாம்யதர்மம் நசமேநிவ்ருத்தி।
கேநாபிதேவேந ஹ்ருதிஸ்திதேநயதாநியுக்தோஸ்மி ததாகரோமி" ॥

"தருமமு மிதுவென வறிவே னதனிற் சார்நடை யிலையெற்கு
மருவுறு மதன்மமு மிதுவென வறிவேன் வரவிலை யொழிவதனி
லிருதய நிலைபெறு தேவ னெனப்படு மெவனோ வெம்முறையா
லருளினி லாட்டவே னம்முறை யேயா னுடிடுகின் றேனால்."

(பொ-ள்.) துரியோதனனாகிய யான் தருமத்தையறிவேனாயினும் அத்தரு மத்தே எனதுபிரவிருத்தியுண்டாவதின்றாம், யான் அதருமத்தையறிவேனாயினும் அவ்வதருமத்தினின்றும் எனது நிவிருத்தியுண்டாவதின்றுமாதலின், எனதுஇரு தயதேசத்தேயாரோ ஒருதேவனிருந்து எவ்வெக்கருமத்தே என்னை ஏவுகின்றனனோ அவ்வவற்றை யான்பராதீனனாயிருந்துசெய்கின்றேன்; நானாவகையாய சுபாசு பத்தே என்னையேவுந் தேவனை யானறியேன். ஹே அந்தணர்களே! எப்புண்ணிய பாவங்களின் சுகதுக்கபலத்தை யாமிரவும்பகலு மனுபவிக்கின்றோமோ அவ்வாற னுபவிப்பதில் யாதுகாரணமாம்; இதையும்யாமறியோம்.

சங்கை:—ஹே பகவன்! அச்சுகதுக்கரூபபலத்தைப் போகிப்பதில் யாமே சுதந்திரகாரணமாவேம்.

சமாதானம்:—ஹே மறையவர்களே! அவ்வாறு யாம் சுதந்திரராகமாட் டோம்; ஏனெனின், யாமெவ்வளவோ கருமங்களைச் சுகசாதனமெனநினைந்து செய்கின்றோம்; ஆனாலவை நமக்குச் சுகவடைவைச்செய்வதின்றாம்; மற்றோ, மாறாய் அவை துக்கத்தையேயடைவிக்கின்றன. எத்துணைக்கருமங்களையோ துக்க சாதனமெனவெண்ணிச் செய்கின்றோம். ஆனாலவை துக்கவடைவைச் செய்வதின் றாம்; மற்றோ, மாறாய்ச்சுகத்தையேகொடுக்கும். குபத்தியஞ்செய்வதானும்ஒரொரு கால்ரோகநிவிருத்தியாய்விடுவதேபோலும். சுகதுக்கரூபபலபோகத்தேயாம் சுதந் திரராவேமாயின் சர்வகருமங்களினும் நமக்குச் சுகப்பிராப்தியே யுண்டாதல்வேண் டும்; எப்போதுமவ்வாறுண்டாவதின்றாம். ஆகையாலிஃதறியப்பெறுமன்றே:— சுபாசுபங்களைச்செய்விப்பவனும், சுகதுக்கபலங்கொடுப்பவனும், ஆகிய ஒருசுதந் திரதேவன் நமதிருதயத்தேயிருக்கின்றான், அவனது ஏவுதலால்சுபாசுபத்தே யாம் முயலுகின்றோம், அப்பலத்தை போகிக்கின்றோம், ஆனாலத்தேவனை யறியோம். ஹே விப்பிரர்களே! இத்தகைய அத்தியந்தசமீபதேவனையும் யாமறியமுடியாதவ ராயின் இத்தேகோற்பத்தி ஸ்திதிஜீவனகாரணத்தை யாமெங்ஙனமறியமுடியவரா வேம். ஆகையினால், ஹே மறையவர்களே! புத்திமான்களாய யாமியாவரும்யாதோ வொருதெய்வயோகத்தால் இங்கேவந்தொருங்குகூடியிருக்கின்றோம். நமதுகூட்டம் யாவருக்குமுபயோகமாமாறாமியாவருமூலககாரணவிசாரஞ்செய்வாம். இவ்வாறு பிரஹ்மவேத்தாக்களாய அறிஞர்கள், யாவரையும்நோக்கிக்கூறிக் காலாதிகளையுலக காரணமெனவங்கீகரிக்கும் வாதியரைக்கண்டிக்கும்பொருட்டுமுதலில் அவர்மதத் தைநிரூபித்தனர். அவற்றுள், முதலில் ஜோதிஷசாஸ்திரமுடைய காலவாதியரின் மதத்தைநிரூபிப்பாம்:—ஹே மறையவர்களே! சிலரோ இக்காலத்தையேஜகத்காரண மெனவுடன்பட்டுளார், அவரிங்ஙனங்கூறுநிற்பர்: ஆகாசாதி பஞ்சபூதமேமுதலாக இவ்வெல்லா வுலகும் காலத்தானேயுண்டாம், ஆண்டே ஸ்திதியாம், ஆண்டே இல

யமாம். இஜ்ஜீவன் காலத்தானே சுவர்க்கத்தையடைவன், காலத்தானே நரகத்தையடைவன், காலத்தானே பூமுதலியசப்தலோகங்களையடைவன், காலத்தானேபிரமாதி உயர்ந்தசரீரங்களையும் மனுஷாதி மத்யமசரீரங்களையும், பசுமுதலியதாழ்ந்த சரீரங்களையும் அடைவன், காலத்தானே சம்பத்தாபத்துக்களையும் சுகதுக்கங்களைக் கொடுக்கும் விஷயங்களையும், போகமோக்ஷங்களைக்கொடுக்கும் வித்தையையும் அடைவன். உபகாரஞ்செய்யும் சுகிருத்துக்களாகிய மித்திரர்களையும், அபகாரஞ்செய்யும் துர்ஜனசத்துருக்களையும், இரண்டுமற்ற உதாசீனர்களாகிய மித்திரர்களையும் காலத்தானேயடைவன், காலத்தானே ஜன்மத்தையும் பாலியயௌவன விருத்தமூவவஸ்தைகளையும், மரணத்தையும் மீண்டும் தாய்தந்தையரையும் சகோதரரையும் சகோதரிகளையும் கர்ப்பவாசத்தையும் கருவினின்றும் வெளிப்போதலையும் நானுவகையாய ஐசுவரியங்களையும், அதன் அழிவையும், அடைவன். காலத்தானே ஸ்திரீயானவள் இருதுதருமத்தையும், கர்ப்பதாரணத்தையும் அடைவள். வாதம், வருஷம், ஆதபம் என்பனவாதியயாவும் காலத்தானேயுண்டாம். மேலு மறையவர்களே! ஈண்டு வெகுவாகச்சொல்வதில் யாதுபயன். அக்காலவாதியரனவன் சம்பூரண ஸ்தாவரஜங்கமரூப ஜகத்துற்பத்தியைக் காலத்தானே யுடன்பட்டுளானாதலின் அவன்மதத்தே காலமே சர்வஜகத்தின்காரணமாம். இப்பொருளிலவன் இவ்வகை வகத்தையுங்கூறுநிற்பன்:–ஒருபாவபதார்த்தம் காலாபேக்ஷையின்றியே எக்காரியத்திற்கேனும் முன்னிற்குமாயின் அப்பதார்த்தத்தின்கண்ணே காரணரூபத்தன்மையுண்டாம், அதையாரும் தடுப்பதில்லை; ஆனால், அத்தகைய காலாபேக்ஷையைச்செய்யாத ஒருபாவபதார்த்தமின்றாம்; மற்றோ, உலகப்பிரசித்த சர்வகாரணங்களிருப்பினும் காலாபேக்ஷபவசியமாமாதலின் காலமே சர்வஜகத்தின்காரணமாம். அல்லது, காலமொன்றைவிடுத்து எத்துணைலோகப்பிரசித்த காரணங்களுளவோ அவைகாரியோற்பத்தியின்கண்ணே பரஸ்பரம் வியபிசாரியாம். இக்காலமோ சர்வகாரியோற்பத்தியினும் அவ்வியபிசாரியாம்; இக்காரணத்தினும் இக்காலமே சர்வஜகத்தின் காரணமாம். அல்லது, எப்பதார்த்தம் முன்னிருப்ப எப்பொருளுண்டாமோ, எப்பதார்த்தம் முன்னிலதாகவே எப்பொருளுண்டாகாதோ அப்பதார்த்தம் அப்பொருளின் காரணமாம். மண்தண்டசக்கிரகுலாலாதி பதார்த்தங்களிருப்பின் கடோற்பத்தியுண்டாம், அவையிலவாகவே அஃதுண்டாகாதாம்; ஆகையாலவை கடகாரணமாவதேபோலும். இவ்வகைக்காரண விலக்கணம் இக்காலத்தின்கண்ணேபொருந்தும்; இக்காரணத்தினும் இக்காலமேசர்வஜகத்காரணமாம். அல்லது, நூற்களினின்றும் ஆடையுண்டாம், மண்ணினின்றும் கடமுண்டாம், விரைகளினின்றும் அங்குரங்களுண்டாம். ஆண்டாடைமுதலியவற்றினுற்பத்தியின்கண் நூன்முதலிய விசேஷகாரணங்கள் புலப்படுமாயினும் அவற்றுள் இப்பூமி அநுகதமாய்த்தோற்றுமாதலின், ஆடைமுதலியவற்றிற் பூமிக்கே காரணத்தன்மையுளது; நூன்முதலியவை சககாரிகளாம். அதுபோல, இக்காலமும் யாண்டுந் தொடர்ந்திலங்குமாதலின் நானுவகையாய காரணத்தினின்றும் உற்பன்னமாய காரியவுற்பத்தியில் இக்காலமே முக்கியகாரணமாம்; மற்றவையெல்லாம் சககாரியாம்; ஏனெனின், காலாபேக்ஷையின்றி எக்காரணமும் எக்காரியவுற்பத்தியினும் சமர்த்துடையதாகாதாம். காலாபேக்ஷையின்றி எக்காரியமும்

தன்னுற்பத்தியிற் சமர்த்துடையதாகாதாம். இக்காரணத்தினுனும் இக்காலமே சர்வஜகத்காரணமாம். அல்லது, இவ்வுலகவுற்பத்தியின்கண் காலமன்றிமற்றொன்று காரணமன்றுவதேபோல ஸ்திதியின்கண்ணும் இலயத்தின்கண்ணுமாம். ஆனுல், காலமே ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி லயகாரணமாமாதலின், சாங்கியாதியர் பிரத்தியக்ஷ அனுமானுதிப் பிரமாணபலத்தால் எப்பிரதானபரமாணுமுதலியவற்றிற்கே காரணத்தன்மை யங்கீகரித்துளாரோ, அவையும் காலாபேக்ஷையின்றிச் சுதந்திமாகவே ஜகத்தையுண்டாக்குவதிற் சமர்த்துடையதாகா; மற்று, காலசம்பந்தத்தானே அவற்றிற் சமர்த்துண்டாமாதலின் இக்காலமே சர்வஜகத்தின்காரணமாம். இப்போது காலகாரணவாதி பரமாணுவிடத்தே உலககாரணத்தன்மையைக்கண்டித்தல் ஆண்டு முதலிற்பரமாணுக்களைக்காரணமா யங்கீகரிக்கும் நையாயிகரின் பிரக்கிரியை நிரூபிக்கப்படும்:—மண், நீர், தேயு, வாயுவென்னும் நான்குபூதங்களின் பரமாணுக்களே இவ்வுலககாரணமாம. ஆண்டு ஜன்னல்வாயிலாய் வீட்டிலடைவுற்ற சூரியகிரணத்தே பிரதீதியாகும் சூக்ஷுமரேணுவின் ஆறிலொருபாகம் பரமாணுவாம். அதுநேத்திராதி இந்திரியஜன்னிய ஞானவிஷபமாகாதாம். அது நித்தியமாம், பரமஅணுத்வபரிமாணமுடையதாம. அததகைய அவற்றின்கண்ணே பரமேசுவாரது இச்சைவயத்தால் கிரியையுண்டாம், அதனுலிரண்டிரண்டு பரமாணுக்கட்குப் பரஸ்பரம சையோக சமபநதமுண்டாம், அதன்பின்னர் துவியணுகரூபகாரியோற்பத்தியுண்டாம, அக்காரியத்தே இருபரமாணுசமவாயி காரணமாம், பரஸ்பர சையோகசம்பந்தம் அசமவாயிகாரணமாம். ஈசுவர இசசைமுதலியன நிமித்தகாரணமாம். இவ்வாறு அநதததுவியணுகரூப காரியத்தின்கண்ணும் முதலிற்கிரியையுண்டாம்; அதன்பின் மூன்று துவியணுகங்கட்குப் பரஸ்பரம் சம்பந்தமுண்டாம், அதன்பின் திரியணுகரூபகாரியோறபத்தியாம். இவ்வாறே சதுரணுகமுதலியவை யுண்டாகுமுறையானே இம்மகாப்பிருதிவியும், மகாஜலமும், மகாதேஜசும், மகாவாயுவும், உண்டாம். இவ்வுலகிறகுப் பிரளயமுண்டாங்கால் மீண்டும் பரமேசுவரரின் இச்சைவயத்தால் அபபரமாணுக்களிடத்தே கிரியையுண்டாம். அதன்பின்னர் அவைகட்குப் பரஸ்பரம் விபாகமுண்டாம. அதன்பின்னர் அவற்றின் சையோக நாசமுண்டாம. அதன்பின்னர் துவியணுகரூபகாரிய நாசமுண்டாம். அதன்பின்னர்த் திரியணுக நாசமுண்டாம். இவ்வாறு சதுரணுகாதிகளின் நாசக்கிரமத்தால் இமமகாப்பிருதிவி, மகாஜலம, மகாதேஜசு, மகாவாயு நாசத்தையடையும். இங்ஙனம் நையாயிகர் பரமாணுவினுனே ஜகத்துற்பத்தியை யங்கீகரிப்பர். பரமாணுவின்கண்ணே நித்தியத்தன்மை சித்திக்கின் அவர்மதம் சித்திக்கும்; அதன்கண்ணே நித்தியரூபத்தன்மையே சித்தியாதாம். ஏனெனின், பிரசித்த ஸ்தூலப் பிருதிவி, ஜலம், தேயு, வாயுவென்னும் நான்குபூதங்களிடத்தே கிரமமாய்ப் பிருதிவித்தன்மை, ஜலத்தன்மை, தேயுத்தன்மை, வாயுத்தன்மையென்னும் நான்கு தருமங்களிருக்கும். இக்காரணத்தானே இப்பிரசித்த பிருதிவிமுதலிய நான்கும் அநித்தியமாம் இதுபோல, இவற்றின் நான்கு பரமாணுக்களிடத்தும் கூறிய நான்கு தருமங்களிருக்குமாதலின், அவையும் அநித்தியமாம். இதுகூறியதால் இவ்வனுமானம் சித்தமாம்:—பிருதிவிப் பரமாணு அநித்தியமாக

யோக்யமாம், பிருதிவித்தன்மைத் தருமமுடையதாதலின் ; பிரசித்த பிருதிவியைப்போலும். இங்ஙனம் முறையே ஜலத்தன்மை, தேயுத்தன்மை, வாயுத்தன்மையென்னும் ஏதுக்களாலும் பிரசித்த ஜல தேயு வாயுக்களின் திருஷ்டாந்தங்களாலும் ஜல தேயு வாயுப் பரமாணுக்களிடத்தும் அநித்தியரூபத்தன்மையின் அநுமானத்தை மதிமான்கள் அறிந்துகொள்ளல்வேண்டும். இத்தகைய அநித்திய பரமாணுக்களிடத்தே இச்சகத்தின் காரணத்தன்மை சம்பவியாது.

சங்கை :—ஹே காலவாதியே! பரமாணுக்களிடத்தே நீ சித்தஞ்செய்த அநித்தியரூபத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனின், இவ்வுலகத்தே எவ்வெப்பதார்த்தத்தே அநித்தியத்தன்மையாமோ அவ்வப்பதார்த்தத்தே மத்தியமபரிமாணம் அவசியமாம். கடாதிகளில் அநித்தியத்தன்மையுளதாதலின் அவற்றின்பால் மத்தியமபரிமாணமுமுளது. அது பரமாணுவின்கண்ணின்றாமாதலின் அவற்றின்கண்ணே அநித்தியத்தன்மையுஞ் சம்பவியாதாம். இது கூறியதால் இவ்வநுமானம் சித்தமாம் :—பிருதிவியாதிகளின் பரமாணு, நித்தியமாதற்கு யோக்கியமாம், மத்தியமபரிமாண அபாவமுடையதாதலின். எப்பொருள் நித்தியமாகாதோ அப்பொருள் மத்தியமபரிமாண அபாவமுடையதுமாகாதாம; கடாதிகள் நித்தியமன்றாமாதலின் மத்தியமபரிமாண அபாவமுடையதுமாகாதாம்; மற்றேறு, அக்கடாதிகள் மத்தியமபரிமாணமுடையனவேயாம்.

சமாதானம்:—ஹே நையாயிக! அணுப்பரிமாணம் பரமமகத்பரிமாணம், என்னும் இரண்டினும் வேறாய பரிமாணம் மத்தியமபரிமாணமாம். அதனபாவம் பரமாணுவின்கண்ணே யிருப்பதேபோலச் சப்தாதி குணங்களிடத்துமுளது. ஆதலின், பரமாணுவிடத்தேபோலச் சப்தாதி குணங்களிடத்தும் நித்தியரூபத்தன்மை சித்தமாதல்வேண்டும்; அவற்றின்கண் நித்தியரூபத்தன்மையை நீ யங்கீகரிப்பதின்றும். ஆகையால், மத்தியமபரிமாண அபாவரூப ஹேதுவால் பரமாணுக்களிடத்தே நித்தியரூபத்தன்மை சித்தமாகாதாம். அல்லது, மத்தியமபரிமாண அபாவம் வஸ்துவின் நித்தியத்தன்மைக்குப் பிரயோஜகமன்றுவதேபோல மத்தியமபரிமாணமும் அநித்தியத்தன்மைக்குப் பிரயோஜகம் அன்றாம் ; ஏனெனின், நையாயிகர்களின் மதத்தே உருவமுதலிய குணங்களிடத்தும், காமத்தின்கண்ணும் உருவமுதலிய குணங்களின்றாமாதலின், மத்தியமபரிமாணரூப குண அபாவத்தையுடைய சப்தாதி குணங்களிடத்துங் கர்மத்தின்கண்ணும் அநித்தியத்தன்மையுண்டாகலாகாது ; அவற்றின்கண்ணே அநித்தியத்தன்மையோ பிரத்தியக்ஷப் பிரமாணத்தால் பிரதீதியாமாதலின் அம்மத்தியமபரிமாணம் வஸ்துவின் அநித்தியத்தன்மைக்குப் பிரயோஜகமன்றாம் ; மற்றேறு, ஆகாசம், காலம், திக்கு, ஆன்மாவென்னு மிந்நான்கு விபுபதார்த்தங்களினும் வேறாந்தன்மையே வஸ்துவின் அநித்தியத்தன்மைக்குப் பிரயோஜகமென உடன்படல்வேண்டும். அவ்வேறாந்தன்மை கடாதிகளிலிருப்பதுபோன்றே பரமாணுக்களிடத்து மிருக்கின்றது ; ஆதலின், கடாதிகட்கேபோலப் பரமாணுக்கட்கும் அநித்தியத்தன்மையையே யங்கீகரிக்கவேண்டும். கடாதிமூர்த்தபதார்த்தங்கட்கு அநித்தியத்தன்மையை யங்கீகரித்து பரமாணுரூப மூர்த்தபதார்த்தத்தின்கண் நித்தியத்தன்மையை யங்கீகரிப்பதில் கேவலம் அவ்வாதியின் பக்ஷபாதமே தோற்றும்.

சங்கை :—ஹே காலவாதியே ! எவ்வெப்பொருள் நிரவயவமாமோ அவ்வவை நித்தியமேயாம். ஆன்மா நிரவயவமாதலின் நித்தியமாதலேபோலப் பரமாணுவும் நிரவயவமாதலின் நித்தியமேயாம். இது கூறியதால் இவ்வனுமானம் சித்தமாம். மண்முதலியவற்றின் பரமாணு, நித்தியமாதற்குயோக்கியமாம், நிரவயவமாதலின், ஆன்மாவைப்போலும். என்னும் இவ்வனுமானப் பிரமாணத்தால் பரமாணுக்களிடத்தே நித்தியத்தன்மையே சித்தமாதலின் அவற்றின்கண்ணே அநித்தியத்தன்மையைச்சித்தஞ்செய்யும் காலவாதியின் அனுமானம் சற்பிரதிபக்ஷதோஷத்தோடு கூடியதாம். எவ்வேதுவின் சாத்தியாபாவத்தை வேறேதுச்சித்தஞ்செய்யுமோ அவ்வேது சற்பிரதிபக்ஷதோஷமுடையதாம்.

சமாதானம் :—ஹே நையாயிகவாதியே ! அந்நிரவயவத்தன்மைவடிவ ஹேதுவினால் பரமாணுக்களிடத்தே நித்தியத்தன்மைவடிவ சாத்தியசித்தியுண்டாகமாட்டாது ; ஏனெனின், நினது மதத்தே எவ்வேது தனது சாத்திய அபாவமுடையதன்கண்ணேயிருக்குமோ அவ்வேது வியபிசாரியாம். அதனாற் சாத்தியசித்தியை நீ அங்கீகரிப்பதின்றாம். அவ்வுனது நிரவயவத்தன்மைவடிவ ஹேதுவோ நித்தியத்தன்மைவடிவ சாத்திய அபாவமுடைய குணகருமாதிகளிடத்தேயுமிருக்குமாதலின், அவ்வேதுவும் வியபிசாரியாம். அதனால், பரமாணுக்களிடத்தே நித்தியரூபத்தன்மை சித்தமாகாதாம்.

சங்கை :—ஹே காலவாதியே ! அந்நிரவயவத்தன்மையாகிய ஹேது நித்தியத்தன்மைவடிவ சாத்தியாபாவமுடைய குணாதிகளிலிருப்பதால் வியபிசாரியாமாயினும், நிரவயவ திரவியத்வரூப ஹேது குணாதிகளிடத்தின்றாமாதலின், அவ்வேது வியபிசாரியாகாதாம். அதனானே யாம் பரமாணுவின்கண்ணே நித்தியரூபத்தன்மையைச் சித்தஞ்செய்வோம்.

சமாதானம் :—ஹே பரமாணுவாதியே ! பிருதிவிமுதலிய பரமாணு, அநித்தியமாக யோக்கியமாம். மூர்த்த பதார்த்தமாதலின்; பிரசித்த பிருதிவியாதிகளே போல : என்னும் எனதனுமானமிருப்ப நினது நிரவயவ திரவியத்வரூப ஹேது அப்பரமாணுக்களிடத்தே நித்தியரூபத்தன்மையைச் சித்தஞ்செய்யமாட்டாது.

சங்கை :—ஹே காலவாதியே ! அப்பரமாணுக்களிடத்தே அநித்தியரூபத்தன்மையைச் சித்தஞ்செய்யும் நினதனுமானமிருப்ப எங்கட்குப் பரமாணுக்களிடத்தே நித்தியரூபத்தன்மையின் நிச்சயமுண்டாகமாட்டாது. அதுபோலவே பரமாணுக்களிடத்தே நித்தியரூபத்தன்மையைச் சித்திசெய்யும் எமதனுமானமிருப்ப நினக்கும் அப்பரமாணுக்களிடத்தே அநித்தியரூபத்தன்மையின் நிச்சயமுண்டாகமாட்டாது.

சமாதானம் :—ஹே பரமாணுவாதியே ! எத்தலத்தே பரஸ்பர விரோதியர்த்தத்தைச் சித்தஞ்செய்யும்பொருட்டு இரண்டனுமானங்கள் பிரவிருத்திக்குமோ அத்தலத்தே ஓரர்த்தத்தின் நிச்சயம் உண்டாகாதாயினும், அவ்விரண்டனுமானங்களில் எவ்வனுமானத்திற்குச் சுருதி, ஸ்மிருதி முதலிய பிரமாணங்கள் சககாரியாமோ அவ்வனுமானம் பிரபலமாம், அச்சககாரியற்றது துர்ப்பலமாம். பிரபலத்

தால் துர்ப்பலத்தின்பாதம் இவ்வுலகத்தே கண்கூடேயாம். "யாவத்விகாரஞ்து விஹாமொவொகவக்" என்னும் ஸ்ரீ வியாசபகவானது சூத்திரத்தேயும் "அதொ௨நுஞாத்ஜ்" என்னும் சுருதியின்கண்ணும் பேதத்தையுடைய பரிச்சின்னபதார்த்தங்களிடத்தே அநித்தியரூபத்தன்மையே கூறப்பெற்றுளது. பேதமுடைய பரிச்சின்னம் பரமாணுவுமாமாதலின் இச்சுருதி சூத்திரரூபப பிரமாண சகாயத்தினானே பிரபலத்தன்மையையடைவுற்ற எமதனுமானம் நினதனுமானத்தைப் பாதித்துப் பரமாணுக்களிடத்தே அநித்தியரூபத்தன்மையையே சித்தஞ்செய்யும். நினதனுமானத்தே எச்சுருதி ஸ்மிருதிரூபப் பிரமாணமும் சகாயஞ்செய்வதாயின்றாமாதலின் அத்துர்ப்பல அனுமானத்தால் பரமாணுக்களிடத்தே நித்தியரூபத்தன்மை சித்தமாகமாட்டாது. அல்லது, எந்நிரவயவத்தன்மைவடிவ ஹேதுவினால் நீ பரமாணுக்களிடத்தே நித்தியரூபத்தன்மையைச் சித்தஞ்செய்வாயோ அவ்வேது அவற்றின்கண்ணே இருக்கவேமாட்டாது; ஏனெனின், நீ அப்பரமாணுக்கட்கு எட்டுத்திசைகளோடுஞ் சையோகசம்பந்தம் அங்கீகரித்துளாய், பரஸ்பரமும் சையோகம் அங்கீகரித்துளாய், அசசையோகத்தை அவ்வியாப்பியவிருத்தியெனவும் அங்கீகரித்துளாய், எப்பொருள் தனதாசிரயத்தே ஏகதேசத்திருந்தேகதேசத்திராதோ அது அவ்வியாபபியவிருத்தியாம். இத்தகைய அவ்வியாப்பியவிருத்தியாய சையோகசம்பந்தத்தையுடைய பரமாணுககளிடதசே நிரவயவரூபத்தன்மை சம்பவியாதாம; மறறே, சையோகததையுடைய மூர்த்தபதார்த்தம் சாவயவமேயாம். கடபடாதிமூர்த்தங்கள் சையோகமுடையனவாமாதலின் சாவயவமேயாவனபோலச் சையோகமுடையதாதலிற பரமாணுவும் சாவயவமேயாகும். யாதுயாது சாவயவமாமோ அஃதது எக்காரணத்தாலேனும் ஜன்னியமேயாம். கடாதிகள்சாவயவமாதலின் மண் முதலிய காரணங்களால் ஜன்னியமாவதேபோலப பரமாணுவும் சாவயவமாதலின் எக்காரணத்தாலேனும் அவசியஞ்ஜன்னியமாம். அப்பரமாணுவின் காரணமும் வேறொருகாரணத்தால் ஜன்னியமாமெனவுடன்படின் அவ்வேறு காரணமும் மற்றொருகாரணத்தால் ஜன்னியமாம. இவ்வாறு காரணஙகளின் அனவஸ்தையடைவாமாதலின் அபபரமாணுவின் காரணத்தை அஜன்னியமேயெனவுடன்படவேண்டும். அத்தகைய உற்பத்தியின்றியகாரணம் காலத்தையொழித்து வேறொன்றுமின்றாம். ஆகையினால் அக்காலத்தையே அப்பரமாணுவின்காரணமெனவுடன்படல்வேண்டும். அக்காலத்தே பரமாணுவின் காரணத்தன்மையை அங்கீகரித்தபோது அதனானே சர்வ ஜகத்தினுற்பத்தி சமபவமாதல்கூடும். இவ்விரண்டின்மத்தியில் பரமாணுவைக் காரணமென வுடன்படல் பயனற்றதாம். அல்லது, நையாயிகர் பரமாணுவை நித்தியமென அங்கீகரிக்கினும் நித்தியப்பரமாணுவால் எப்போதும் ஜகத்தின்உற்பத்தியுண்டாதல்வேண்டும், ஒருக்காலும் பிரளயம் உண்டாகலாகாது. அவ்வாறாகாதாமாதலின், ஜகத்தின் உறபத்தி பிரளய வியவஸ்தை செய்யும்பொருட்டுப்பரமாணு காலாபேக்ஷயை அவசியஞ்செய்யும். இக்காரணத்தினாலும் அக் காலத்தையே உலககாரணமென வுடன்படல் உசிதமாம். அல்லது, பிரளயகாலத்தே பரமாணு பரஸ்பரம் விபாகமுடையதாயிருக்கும். இக்காரணத்தானே அப்பரமாணு அப்பிரளயகாலத்தே இச்சகத்தின் உற்பத்திசெய்வதில் சாமர்த்தியமுடையதாகாது. உற்பத்திகாலத்தே பரமாணுக்கட்குப் பரஸ்பரம் சையோகசம்

பந்தம் உண்டாமாதலின் பரமாணு இவ்வுலகை உற்பத்திசெய்வதில் சமர்த்துடையதாம். அச்சையோகவுற்பத்தியின்கண் இக்காலாபேகை்ஷ அவசியமாம். இக்காரணத்தானே இக்காலமே சர்வஜகத்தின் காரணமாம். காலத்தினும் வேறாய பரமாணு முதலியவற்றே ஜகத்காரணத்தன்மை சம்பவியாது. இத்துணையால் காலவாதியாய ஜோதிஷ சாஸ்திரக்காரரது மதம நிரூபிக்கப்பட்டது. இப்போது சுபாவததையே ஜகத்காரணமென வுடன்படும் சுபாவவாதியாய லோகாயதன் மதம் நிரூபிக்கப்படும்:—அவ்வாதி காலவாதியின்மதத்தே இவ்வகைத் தூஷணத்தைக் கூறுவன்:—ஹே காலவாதியே! இச்சர்வஜகத்தின் காரணரூபத்தால் நீ அங்கீகரித்த காலம் தனது சுபாவத்தையும காரிய சுபாவத்தையும் அபேக்ஷித்தே காரணமா? அல்லது, சுபாவ அபேகை்ஷயின்றியே அககாலம ஜகத்தின் காரணமா? இரண்டாவதுபக்ஷத்தை அங்கீகரிக்கின், அது சம்பவியாது; ஏனெனின், வஸ்து சுபாவ அபேகை்ஷயின்றியே நினது காலம காரியவுற்பத்தியைச் செய்யுமாயின், ஓங்கியெரியாநின்ற பேரழலின்கண்ணும் ஆகாசத்தின்கண்ணும் நினதுகாலம் நீரினுற்பத்தியை ஏன் செய்வதில்லை? அககினியால் தாகநிவிருத்தியை ஏன் செய்வதில்லை? அன்னமின்றியே பசிநிவிருததியை ஏன் செய்வதில்லை? மைநதனை விரும்பியோனுக்கு மனைவியின்றியே மைநதனின் அடைவை ஏன் செய்வதில்லை? பிணத்தின் சையோகத்தானும் இசசீவனிடத்தே சுகதுக்க உறபத்தியை ஏன் செய்வதில்லை? அக்காலமகிமையால பிணமானது நம்மோடு ஏன் பேசவில்லை? பெண்புருஷசம்பந்தமின்றியே கர்ப்பதாரணததை ஏன் செய்வதில்லை. அக்காலமகிமையால்ஆகாசம் அவகாசமறறதாகவேண்டும,பிருதிவி இரசாதலத்தின்கண்ணேசெல்லவேண்டும், இந்நீர் சிநேகபாவமற்றதாகவேண்டும், இவ்வக்கினி முதலியவை பிரகாசமற்றதாகவேண்டும், இவ்வாயு நிச்சலத்தன்மையையடைதல்வேண்டும். அல்லது, நினது காலம வஸ்துசுபாவத்தின் அபேகை்ஷயின்றியே காரிய உற்பத்தியைசசெய்யுமாயின் முகவாயிலாய் மல மூத்திராதிகளின் பரித்தியாகத்தை ஏன் செய்விப்பதில்லை; கிராண இநதிரியத்தால சபத சிரவணத்தை ஏன் செய்விப்பதில்லை? சுரோத்திரேந்திரியத்தால கநதத்தின் கவர்சசியை ஏன் செய்விப்பதில்லை? நேத்திரேந்திரியத்தால் ஆகாரக்கவாசசியை ஏன் செய்விபபதில்லை? இவ்வண்ணம் அக் காலம் இபபுருஷனுடைய வாக்குமுதலிய இந்திரியங்களின் வியாபாரங்களை விபரீதமாய் ஏன் செய்விபபதில்லை? என்பன முதலாய அநேகவகைத் தூஷணத்தை அக் காலம் வஸ்துசுபாவ அபேகை்ஷயின்றியே ஜகத்காரணமென வுடன்படப்படின் அடையும். ஆகையால, அசசுபாவ அபேகை்ஷயின்றி அக்காலத்தே ஜகத்காரணத்தன்மை சம்பவியாதாம. முதற்பக்ஷத்தை யங்கீகரிக்கினோ எச்சுபாவத்தை யபேக்ஷித்து அக்காலம இசசகததை வியவஸ்தைவாயிலாய் உறபத்தி செய்யுமோ அசசுபாவத்தின்கண்ணே இச்சகத்தின் காரணத்தன்மை சமபவிக்கும; ஆகையால், சுபாவம்ஜகத என்னுமிரண்டன்மத்தியில் காலத்தை ஜகத்காரணமாயுடன்படல் நிஷ்பலமாம். அல்லது, அசசுபாவத்தையே ஜகத்காரணமென வுடன்படுவதில் முற்கூறிய தோஷப்பிராப்தியுமுண்டாகாது; ஏனெனின், சக்ஷு இந்திரியம் தற்சுபாவத்தால் ரூபத்தையே கவரும், இரசாதிகளைக்கவராது. சுரோத்

திரேந்திரியமும் தற்சுபாவத்தால் சப்தத்தையேகவரும் ரூபாதிகளைக் கவராது. இவ்வாறே வேறிந்திரியமும் தற்சுபாவபலத்தால தததம விஷயத்தையே கவரும். அன்னிய இந்திரிய விஷயத்தை அன்னிய இநதிரியங்கவராது. இவ்வாறு ரூபாதி விஷயமும் தத்தமது சுபாவபலத்தால் தததமது நேத்திராதி இந்திரியங்களின் விஷயபாவத்தையடையும. அன்னிய இந்திரிய விஷயம் அந்நிய இந்திரியத்தின் விஷயபாவததையடையாது. இவ்வாறு வஸ்துசுபாவத்தை யங்கீகரிக்கின் முற் கூறிய சர்வதோஷபரிகாரமாமாதலின் இச்சகத்தின் பிரவிருததி நிவிருத்தியின் கண்ணும் உறபத்தி ஸ்திதி இலயத்தின்கண்ணும இசசுபாவமே காரணமாம, இத னினும் வேறுய் எப்பதார்த்தமும உலககாரணமாகமாட்டாது; இத்துணையால் சுபாவகாரணவாதியின் மதம் நிரூபிக்கபபட்டது. இபபோது தருமாதருமரூப நியதியையே இவ்வுலககாரணமென அங்கீகரிககும மீமாமசகவாதியா மதம நிரூ பிக்கப்படும்:—ஆண்டு அவர்கள் தருமாதருமரூப நியதியின்கண்ணே உலககாரணத் தன்மையைச் சிததஞசெய்யும்பொருட்டு முதலில சுபாவவாதியின் மததததை இவ வகைத்தூஷணத்தைககூறுவா:—ஹே சுபாவவாதியே! நினது உலககாரணசுபா வம் தருமாதரும நியதியையபேக்ஷிதது ஜகத்காரணமா? அல்லது, அபேக்ஷியாமலா? அபேக்ஷியாமலெனின் அது சமபவியாது; ஏனெனின், அந நியதியின்றியே சுபாவம ஜகத்காரணமாகுமாயின், அநியதசுபாவபலததாலஉஷ்ணசுபாவததையுடைய அககி னியினின்றும்சீதளத்தன்மையுறபததியாதலவேண்டும, சீதளசுபாவததையுடைய ஜலத்தினின்றும உஷ்ணததன்மையுண்டாதல்வேண்டும், இவ்வாறே எலலாககாலத் தும் எல்லாபபொருள்களில எல்லாக் காரியோறபத்தியுண்டாதல்வேண்டும, அங்ங னங்காணவருவதின்றும. ஆகையால, நியதியை யபேக்ஷியாது சுபாவததின்கண் ணே ஜகத்காரணத்தன்மை சம்பவியாது; அபேக்ஷித்தெனின், சுபாவததை யபே க்ஷித்து அக்காலம் ஜகதுறபத்தி ஸ்திதி இலயகாரணமாமாதலின் ஜகத்காரணமன் றும்; மற்றேறு, சுபாவமே ஜகத்காரணமாம், என்னும யுகதியால நீ காலகண்டனஞ் செய்து சுபாவத்தையே ஜகதகாரணமென வுடன்பட்டதேபோல நினது சுபாவ மும் தருமாதரும நியதியை யபேக்ஷிததே ஜகத்காரணமாமாதலின் அதுவும் ஜகத காரணமன்றும; மறறேறு, தர்மாதர்மரூப நியதியே இவ்வுலககாரணமென வுடன் படல்வேண்டும். நியதி, ஜகத், என்னும இரண்டன் மததியில் சுபாவத்தைக்காரண மென வுடன்படல நிஷ்பலமாம். இத்துணையால் தருமாதருமரூப நியதியைக் கார ணமென வுடன்படும் மீமாமசகாது மதம் நிரூபிககபபட்டது. 'இபபோது யதிரிச சையையே ஜகத்காரணமென வுடன்படும வாதியின்மதம நிரூபிக்கப்படும்:—காரி யோறபத்தியின்கண்ணே கர்த்தாதிகளின் அபேக்ஷையுண்டாகாமையே யதிருச சையாம். அவன் தன்மத சிததிசெய்யுமபொருட்டு அநநியதி வாதியின் மததததை இவ்வகைத தூஷணததைக்கூறுவன். ஹே நியதிகாரண வாதியே! நீ இக்காரியம் இக்காரணத்தானே உண்டாம் மற்றெதனுலும் இது உண்டாகாது. இது இவ்வா றுண்டாம், மற்றெவ்வாற்றுலேனு முண்டாகாது; இக்காரணத்தால் இககாரியமே யுண்டாம் வேறு காரியமுண்டாகாது. என்னும இவ்வகையாய நியதியையே இவ் வுலககாரணமாய் அங்கீகரித்தனை. இருதுதர்மத்தோடுகூடிய பெண்ணின் இாஜசே நியமமாய்க் தர்ப்பதாரணகாரணமாகும் என்னும் நியதியை ஜகத்காரணமா யுடன்

படலதினக்குத்தகுதியன்றும்; ஏனெனின், இந்நியதியின்றியேஎத்துணையோகாரண காரியங்களினடைவு யதிரிச்சையாற் காணவருகின்றது. எத்துணையோ தருமாத் மாக்கட்கு அகஸ்மாத்தாய்த் துக்கபிராபதியுண்டாம். எத்துணையோ பாவாத்மாக் கட்கு அகஸ்மாத்தாய்ச் சுகப்பிராப்தியுண்டாம. சுகசாதனரூபமாய்ப் பிரசித்தமாய ஸ்திரீபுத்திராதிகளும ஒரொருகால துககசாரணமேயாகின்றனர். துக்கசாதனரூப மாய்ப் பிரசித்தமாய கால்வருடல் முதலியவையும் ஒரொருகால பரிசிரமத்தோடு கூடியவனுக்குச சுககாரணமேயாம். இவை முதலாக அநேகவகையாய விபரீத பாவம் காணவருகின்றது, முறகூறிய நியதியே காரணமாகுமாயின் இவ்வகையாய விபரீதபாவமுண்டாகலாகாது ; ஆனல, இவவகையாயோ பிரசித்தமாய்க்காணவரு கின்றதாதலின் இந்நியதியின்கண்ணே ஜகதகாரணத்தன்மை சம்பவியாதாம் ; மற்றே, அந்த யதிரிசசையே இச்சகத்தின்காரணமாம். இததுணையால் யதிரிச் சாகாரணவாதியின மதம் நிரூபிககபபடடது :—இபபோது ஆகாசாதிகளை ஜகத் காரணமென வுடன்படுபவன் மதம நிரூபிககபபடும :—ஆண்டப பூதகாரணவாதி தன்மத சித்திசெய்யுமபொருட்டு யதிரிசசாகாரண வாதியின்மதத்தே இவ்வகை யாய தூஷணத்தைக கூறுவன். ஹே யதிரிசசாகாரணவாதியே! எத்துணை ரூப ரசாதிகளுளவோ அத்தருமங்கள் கடாதிதருமிகளின் அபேகூைஷயின்றிச் சுதந்திர மாயிரா ; மறறே, அவை அவறறையபேக்ஷிததேயிருக்கும். அதுபோல, நினது யதி ரிசசையும தருமரூபமாமாதலின் ஒரு தருமியின் அபேகூைஷயின்றிச சுதநதிர மாயிராது ; மறறே, ஒரு தருமியை யபேக்ஷித்தேயிருக்கும். எதுவரை, பிரத் தியக்ஷவஸ்துவின் சமபவமாமோ, அதுவரை பரோக்ஷவஸ்துவின் கற்பனைசெய்த லனுசிதமாம், என்னுமநியமம சர்வசாஸ்திரஙகளினும் கூறபபட்டுளதாதலின் பிரத் தியக்ஷப்பிரமாணத்தாற சித்தித்த இவ்வாகாசாதிபூதமே யதிரிசசைவடிவதருமத் தின் தருமியென அங்கீகரிக்கவேணடிவரும. ஆகையால், அந்த யதிரிச்சை எப் பூதாபேக்ஷையால் இசசகத்தின் காரணமாமோ அபபூதத்தானே இச்சகதுற் பத்தி சம்பவிக்கும. இவ்விரண்டினமததியில யதிரிசசையை ஜகத்காரணமென வுடன்படல் நிஷ்பலமாகும. ஆகையால, ஆகாசாதியே இசசககாரணமாம். இத்து ணையான் ஆகாசாதியைச சகதகாரணமென்னும வாதியின்மதம் நிரூபிக்கபபட்டது. இபபோது பிரகிருதியையே சகத்காரணமென்னும சாங்கியநூலுடையார் மதம் நிரூபிக்கப்படும் :—ஆண்டப்பிரகிருதிகாரணவாதியானவன் பூதகாரணவாதியின் மதத்தே இவ்வகைத் தூஷணத்தைக் கூறுவன் :—ஹே பூதகாரணவாதியே! நீ எப்பூதத்தைச சகத்காரணமென வுடன்பட்டுளாயோ அது கடாதிபோலச் சாவய வமாம். சாவயவமாவதெல்லாம் எக்காரணததாலேனுஞ் ஜன்னியமேயாம். கடா திகள் சாவயவமாமாதலின் மண்முதலிய காரணங்களினனே ஜன்னியமாவதே போல அச்சாவயவபூதத்திற்கும் வேறொரு காரணத்தை நீ யங்கீகரிக்கவேண்டும். இவ்வுலகத்தே எவ்வகையாய்க் காரியமுண்டாமோ அவ்வகையாயே காரணமுமாம் காரியத்தினும் விலக்ஷணசுபாவமுடையதாய்க் காரணமிராதாம். கடாதிகாரியசமா னசுபாவமுடையது மண்ணும, அதுவே கடாதிகளின் காரணமாவதேபோல இச் சகத்வடிவகாரியசமானசுபாவமுடையதேயாயஒருபொருளே இவ்வுலககாரணமென

உடன்படல்வேண்டும். இவ்வுலகத்தே சுவர்ணம், ஸ்திரீ, ரத்தினம், வஸ்திரம்என இவைமுதலிய எத்துணைப்பதார்த்தங்களுளவோ அவையாவும்சுகரூபசத்துவகுணத்தோடும் துக்கரூப ரஜோகுணத்தோடும் மோகரூப தமோகுணத்தோடும்கூடியதாம், சுவர்ணாதிபதார்த்தங்கள் எவன்கையிலிருக்குமோ அவனுக்கோ சுகத்தையடைவிக்கும்; அவனதுசத்துருவிற்குத் துக்கத்தையேயடைவிக்கும், அவற்றினடைவற்ற லோபிக்கு மோகத்தையடைவிக்கும். இவ்வகையே இவ்வெல்லாவுலகமும் சத்துவ ரஜ தமமென்னும் முக்குணங்களோடு கூடியிருக்குமாதலின் இம்முக்குணரூபவுலககாரணமும் ஒரு முக்குணரூபவஸ்துவெனவுடன்படல்வேண்டும். அத்தகைய முக்குணவடிவினதும் சர்வகாரியங்களிலும் தொடர்ந்திருப்பதும் ஜடப்பிரகிருதியேயாம். ஆதலின், அதுவே ஜகத்காரணமாகத்தகுதியுடையதாம். இப்பிரகிருதியே சுருதியின்கண்ணே யோனியெனக்கூறப்பெற்றுளது. இத்தகைய ஜடரூப நித்தியப்பிரகிருதியினின்றும் முதலில் மகத்துவமுண்டாம், அதனினின்றும் அகங்காரமுண்டாம், அதனினின்றும் சப்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்னும் பஞ்சதன்மாத்திரையும் பதினொரு இந்திரியமும் உண்டாம். சுரோத்திராதி ஐந்து ஞானேந்திரியம், வாக்காதி ஐந்துகருமேந்திரியம், மனம்என்பன பதினொருஇந்திரியங்களாம். சப்தாதிபஞ்சதன்மாத்திரைகளினின்றும் முறையே ஆகாசாதிபூதங்களுண்டாம். இம்முறையே இவ்வெல்லாவுலகும் பிரகிருதியினின்றே யுண்டாமாதலின் அதுவே சர்வஜகத்தின்காரணமாம். இத்துணையால் சாங்கியநூலுடையார் மதம் நிரூபிக்கப்பட்டது. இப்போது ஹிரண்யகர்ப்பாதிகளே இச்சகத்காரணமென்னும் புருஷகாரண வாதிமதம் நிரூபிக்கப்படும்:—அப்புருஷகாரணவாதி தனதுமதத்தைச் சித்தஞ்செய்யும்பொருட்டு முதலில் பிரகிருதிகாரணவாதிமதத்தே இவ்வகைத்தூஷணத்தைக் கூறுவன்:—ஹே பிரகிருதிகாரணவாதியே! காரணத்திற் காரியத்தின் ஒப்புமையை யங்கீகரித்து நீ முக்குணவடிவப் பிரகிருதியை ஜகத்காரணமென வுடன்பட்டாய் நின்பாலிதுகேட்கின்றோம்:—காரியகாரணத்திற்குச் சர்வரூபத்தானும் ஒப்புமையா? அல்லது, ஒருசிறிதுவடிவததானே ஒப்புமையா? முதற்பக்ஷத்தையங்கீகரிக்கினதுசம்பவியாது, ஏனெனின், காரிய காரணத்திற்கு அத்தியந்தம் சாதிருசியமிருக்குமாயின் அவற்றிற்குப் பரஸ்பரம்பேதஞ் சித்தியாதாம். ஒருசிறிதுபேதத்தை யபேக்ஷித்தே பதார்த்தங்கட்குப் பரஸ்பரம் காரியகாரணபாவமுண்டாம், அத்தியந்தம் அபின்னபதார்த்தங்கட்குப் பரஸ்பரம் காரியகாரணபாவமுண்டாகாதாம். ஆதலின், முற்றினுமொப்புமையை யொப்பினோ ஜகத்காரணமே பிரகிருதியாகாதாம், இரண்டாவதுபக்ஷத்தை யங்கீகரிக்கினோ அதுவுஞ்சம்பவியாதாம்; ஏனெனின், நின்மதத்தே காரியகாரணபாவமற்ற சேதன அசங்கபுருஷனும் பாவத்தன்மைவடிவ ஒருசிறிதுதருமத்தால் இவ்வுலக சதிருசனே யாவனாதலின் அசங்கனும் ஜகத்காரணமாதல்வேண்டும், அவ்வாறு நீ யங்கீகரிப்பதில்லையாகலின் காரியகாரணத்திற்கு ஒருசிறிதுவடிவத்தானும் ஒப்புமைசம்பவியாதாம். அல்லது, ஜடரூபமாய்ப் பிரசித்தமாய சகடை முதலியவற்றின் பிரவிருத்தி சேதன புருஷனையன்றிச் சுதந்திரமாயுண்டாகாது; மற்றோ, சேதனனது அதீனமாயே சகடாதிகளின் பிரவிருத்தியாவதேபோல, நினது ஜடப்பிரகிருதியும் சேதனனதுபிரேரணையின்றியே சுதந்திரமாய் எக்காரியம் செய்வதினும்

பிரவிருத்திபையடையாது. ஆகையால், இந்தஜடப்பிரகிருதியை தங்காரியத்தே பிரவிருத்திப்பிக்க ஒருசேதனனை நீ யவசியமங்கீகரிக்கவேண்டுமாதலின் எச்சே தனனையபேக்ஷித்துப் பிரகிருதிஜகத்தையுண்டாக்குமோ அச்சேதனனாலே இத னுற்பத்திசம்பவிக்குமாதலின், சேதனன், ஜகத் என்னும் இரண்டன்மத்தியில் மூன்றாவதுபிரகிருதியைக காரணமாயங்கீகரித்தல் நிஷ்பலமாம்; ஆகையால், சேத னனே உலககாரணனுவன். இத்துணையால் புருஷகாரணவாதியின்மதம நிரூபிக்கப் பட்டது. ஹே விப்பிரர்களே! இவ்வாறு காலம் 1, சுபாவம் 2, நியதி 3, யதிரிச் சை, 4, பூதம் 5, பிரகிருதி 6, புருஷன் 7, என்னும் இவ்வேழுபக்ஷத்தை யாம் உங் கள்பொருட்டுக் கூறினேம். பூர்வபூர்வமதத்தே தூஷணங்காண்பித்து உத்தர உத்தரமதத்தைக் கவர்ந்தேம். ஆனுலிவ்வேழுமதங்களும் முற்கூறிய தூஷணங்க ளாற் றூஷிதமாமாதலின் இவ்வேழனுள் எமமதமும் கவரத் தகுதியதன்றாம்.

சங்கை :—ஹே பகவன்! காலமே முதலாகப் பிரகிருதிபரியந்தமுள்ள இவ் வாறுமதத்தே பூர்வம் தூஷணங்கூறியிருப்பினும் புருஷகாரணமதத்தே எத்தூ ஷணமுங் கூறப்படவில்லையாதலின் ஏழாவதே கொள்ளத் தகுதியதாம்.

சமாதானம் :—ஹே விப்பிரர்களே! காலாதியின்கண்ணே காரணத்தன்மை சம்பவியாததேபோலச சேதனனிடத்துஞ் சம்பவியாதாம்; எனெனின், சேத னன் சர்வசங்க ரகிதனும் நிர்க்குணனுமசர்வவியாபாரஙகளற்றவனுமாவன். இத் தகைய நிஷ்கிரிய அசங்கபுருஷனிடத்தே இச்சககாரணத்தன்மையை யங்கீகரித் தல் அத்தியந்தம் அசங்கதமாம்.

சங்கை :—ஹே பகவன்! சேதனன்பொருட்டுற்ற காலாதிகளின்சையோ கமே ஜகத்காரணமாம்.

சமாதானம் :—ஹே மறையவர்களே! அச்சேதனபுருஷனிருப்ப அவன்பொ ருட்டுற்றகாலாதியின் சையோகமும பிரகிருதியைப்போல ஜடமாதலின் அன்னிய காரண அபேக்ஷையை யவசியஞ்செய்யும், அச்சையோகத்திற்கும் யாதுகாரணம் என்னும் ஜிஞ்ஞாசையும நீங்கமாட்டாதாதலின் காலாதிகட்குக் காரணத்தன்மை யிலலாததுபோலவே அவற்றின் சையோகததிற்கும் காரணத்தன்மை சம்பவியா தாம்.

சங்கை :—ஹே பகவன்! அந்தச சுத்தபரமான்மா அசங்கமாமாதலின் அத னிடத்தே காரணத்தன்மை சமபவியாதாயினும் பிரதிபிம்பரூப ஜீவாத்மாவினிடத் தே அதுசம்பவிக்கும்.

சமாதானம் :—ஹே விப்பிரர்களே! இஜ்ஜீவன் பாதந்திரனுதலின் தன்சுக துக்கத்தை யுண்டாக்குவதிலுஞ் சமர்த்தனுகானுயின், இவ்வெல்லாவுலகையுமுண் டாக்க எங்ஙனஞ்சமர்த்தனுவன். அல்லது, இஜ்ஜீவன் ஜகதுற்பத்திசெய்வதிற் சுதந் திரனுயின், தனது சுகசாதனத்தையே யுற்பத்திசெய்துகொள்வனன்றித் துக்க சாதனங்களை யுண்டாக்கானுதலின் இவனிடத்துங்காரணத்தன்மை சம்பவியாது. இத்துணைக்கிரந்தத்தால இவ்வுலககாரணத்தே பூர்வபக்ஷங்களைப் பிரதிபாதித்துக்

கண்டித்தோம், இனி சித்தாந்தபக்ஷத்தைக் கூறுவாம்:—ஹே சந்நியாசிகளே! இவ்வகையாய் அறிஞர்களாகிய மறையவர் சர்வ சபாவாசிகளை நோக்கிக் கூறியபோது தூயசித்தத்தையுடைய அவர்கள் யாவரும் பூர்வபக்ஷங்களில் நானுவகைத் தூஷணங்களைக்கண்டு அவற்றைப் பரித்தியாகித்தனர், வேதவசனத்தால் பிரஹ்மத்தையே ஜகத்காரணமென அறிந்தனரேனும் அப்பொருள் திடப்படும்பொருட்டு நானுவகை யுக்திகளையறிய விச்சித்தனர், அதன்பின்னர் அவர்கள்யாவரும் யோகசாஸ்திரப்படி அத்வதீயப் பிரஹ்மத்தின்கண்ணே சித்தவிருத்திகளின் பிரவாகரூபத் தியானத்தைச்செய்தனர், தியானித்து அவ்வறிஞர் அவ்வத்வதீய ஆன்மாவையாசிரயித்த ஏக அவித்தியாரூபசக்தியைக்கண்டனர். அது ஜகதுற்பத்தி ஸ்திதிலயகாரணமாம், குதர்க்கிகளா லறியப்பெருததாம், ஆவரணவிக்ஷேபாதி குணங்களான் மூடப்பெற்றதாம். இத்தகைப அவித்யாரூபசகதிபைக்கண்டு அவர்கள்யாவரும் ஆச்சரியத்தையடைந்தனர், இப்போதச்சக்தியின் குணங்களை நிரூபிப்பாம்:—ஸ்வப்பிரகாச அத்விதீய ஆநந்தரூப ஆன்மாவிடத்தே இம்மாயாசக்தி வாஸ்தவமாயோ இன்றுமாயினும தோற்றுநின்ற இதுதனது அசத்துசசடதுக்கரூபத்தால் சச்சிதாநந்த ஆன்மாவை மறைக்குமாதலின் இவ்வாவரணம் மாயைக்கியல்பாய குணமாம். இவ்வுலகோற்பத்தி ஸ்திதிலயமும் தூலசூக்ஷமசரீர அத்தியாசமும், இவ்வாநந்தான்மாவை அடைந்து அத்தியாசம் நீங்கவே நீங்குவனவாய காமக்குரோதாதி அநேகவிகாரங்களும் அம்மாயையின் விக்ஷேபரூபகுணமாம். இத்தகைய அநேக குணங்களோடுகூடிய மாயாசக்தியைக்கண்டு அவ்வறிஞர் பரமாச்சரியத்தையடைந்தனர். இப்போது அச்சக்தியின் அதிஷ்டான ஆன்மஸ்வரூபம் நிரூபிக்கப்படும்:—ஹே சந்நியாசிகளே! மாயையின் அதிஷ்டான ஆன்மாவானது சூரிய பகவான் சர்வ பதார்த்தங்களையும் ஒளிர்விப்பதேபோல தனது அஸ்திபாதிப்பிரிய ரூபததால முற்கூறிய காலாதி சர்வகாரணங்களையுமவியாபிக்கும். ஆகாசம் கடமடாதிகளை வியாபிபபதேபோல முதலில் சமஷ்டி காலாதிகாரணங்களைவியாபித்து அதன்பின் வியஷ்டி ஜகததைவியாபிக்கும். ஹே சந்நியாசிகளே! சர்வ விகாரமற்ற அசங்க ஆன்மாவின்கண்ணே காலாதிகாரண அதிஷ்டானத்தன்மையும் காரியப்பிரபஞ்ச அதிஷ்டானத்தன்மையும் மாயையின் பலத்தினுனேயாம; உண்மையாயோ அதன்கண்ணே இவற்றின அதிஷ்டானத்தன்மை சம்பவியாதாம். ஒரு வியபிசாரியானவள செய்த மந்திர ஔஷதாதி உபாயஙகளால் மோகமுற்ற தனிகன் அவள் விலாசத்தே யாசக்தனுவதேபோல அமமாயையால் மோகத்தையுறற ஆன்மா அதன் பிரபஞ்சவிலாசத்தே ஆசகதனுவன். சர்வ சங்கமற்றவனுயினும் மகாத்மாவானவன் தனது சுகிருத்சுபாவத்தால துஷ்டபுருஷ சங்கத்தையடையின் அதனுல் அவன் பொய்வசனவடிவ பாவத்தையும பலமாயதுக்கத்தையும் அடைவதேபோல, உண்மையாய் அசங்கமாய ஆன்மா அம்மாயையின் சம்பந்தத்தால ஜீவரூபத்தன்மையையும் ஜகத்காரணத்தன்மையையும் அடையும்போது அநேக வகைத் துக்கங்களையடையும். ஹே சந்நியாசிகளே! உண்மையாய்ச் சர்வ சங்கமற்ற இச்சுயஞ்சோதி நிர்க்குண ஆன்மாவையும் இம்மாயை மோகமுறுமாறு செய்விக்குமாதலின் இதன்மகிமை மிகவுமற்புதமாம். இக்காரணத்தானே வேதாந்த சாஸ்திரத்தே அகடிதகடனுபடீயசீ (செய்யக்கூடாததைச் செய்விக்குஞ்சமர்த்தை)

யெனக் கூறப்பெற்றுளது. இதன் சம்பந்தத்தானே இவ்வசங்க ஆன்மா, சம்சார சக்கிரத்தே புகும். இப்போது இப்பொருளையே வெளிப்படுத்தும்பொருட்டு முதலி லிச்சம்சாரத்தைச் சக்கிரவடிவமாய் வருணிப்பாம். ஹே சந்நியாசிகளே! பிர சித்த தேர்ச்சக்கிரத்திற்கு நேமி நாபி அராவுள. பிருதிவியோடு சம்பந்தமு றும் வர்த்துலாகாரக் காஷ்டவிசேஷம் நேமியாம். எதன்கண்ணே தேரின்சலாகை யுருளுமோ அம்மத்தியக்காஷ்டவிசேஷம் நாபியாம். அவ்விரண்டின் மத்தியிலிருக் கும் காஷ்டவிசேஷம் அராவாம். அதுபோல, மாயை, சக்தி, அஞ்ஞானம், மூலப் பிரகிருதி, பிரதானம், அவ்வியாகிருதம் என்பனவாதி நாமங்களாற் கூறப்பெற யோக்கியமாய அவித்தை இச்சம்சாரத்தின் நாற்புறத்தும் வியாபித்திருக்குமாத லின், அது சம்சாரசக்கிரத்தின் நேமியாம். பிரசித்தசக்கிரம் இரும்பு, வெள்ளி, பொன் முதலிய தாதுமயப்பட்டிகைகளால் ஜோடிக்கப்பட்டிருப்பதேபோல இச் சம்சாரசக்கிரமும் வெண்ணிறமாய சத்துவகுணம், சிவப்புநிறமாய இரஜோகுணம், கறுப்புநிறமாய தமோகுணம் என்னும் பட்டிகைகளால் ஜோடிக்கப்பட்டிருக்கும். பிரசித்தநாபியின்கண்ணே அராரூப காஷ்டமிருப்பத் துவாரவடிவ சமஸ்தான மிருப்பதேபோல இச்சம்சாரநாபியின்கண்ணும் விலேசாதிரூப அராவிருப்ப ஷோடச (16) விகாரரூப துவாரஸ்தானங்களிருக்கும். அவையாவன :—சுரோத் திராதி 5, வாக்காதி 5, ஆகாசாதி 5, மனம் 1, ஆகப்பதினாறு விகாரங்களாம். பிரசித்த சக்கிரத்தே அராவிருப்பதேபோல இச்சம்சாரசக்கிரத்தே 50 அராக்க ளுள. அவையாவன :—பஞ்சக்கிலேசம் 5, அஷ்டசித்தி 8, நவதுஷ்டி 9, அசக்தி 28, ஆக 50 ஆம். அவற்றுள் அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபிநிவேசம் என்பன பஞ்சக்கிலேசமாம். அநான்மரூப தேகாதிகளிடத்தே ஆன்மபுத்திவடிவ விபரீதவுணர்வே அவித்தையாம். இதுவே சாஸ்திரத்தே மத மெனப்படும். விசாரஹீனர்கட்குத தேகாதிகளிடத்தே அகம் புத்தி, அஸ்மிதை யாம்; இதனையே சாஸ்திரமுணர்ந்தோர் மோகமென்பர். விஷயசுகசாதன தனாதி களிடத்தே அத்தியந்த ஆசக்தி இராகமாம்; இதுவே நூலுணர்ந்தோரால் மகா மோகமெனப்படும். துக்கத்தை யடைவிக்கும் சத்துருமுதலியோராய அநிஷ்ட சிந்தனம் துவேஷமாம்; இதுவே அறிஞரால் தாமிசிரம் எனப்படும். தனமுதலிய வற்றைத் தியாக இச்சைசெய்யாத மமதை அபிநிவேசமாம்; இதுவே நூலுணர்ந் தோரால் அந்ததாமிசிரமெனப்படும். இவை பஞ்சக்கிலேசங்களாம். சுகிருதப்பி ராப்தி 1, அத்தியயனம் 2, ஊகம் 3, சப்தம் 4, அத்தியாத்மதுக்கநாசம் 5, அதிதைவதுக்கநாசம் 6, அதிபூததுக்கநாசம் 7, தானம் 8 என்பவை அஷ்ட சித்திகளாம். பிரகிருதி 1, உபாதானம் 2, காலம் 3, பாக்கியம் 4, சப்தநிவிரு த்தி 5, ஸ்பரிசநிவிருத்தி 6, ரூபநிவிருத்தி 7, இரசநிவிருத்தி 8, கந்தநிவிரு த்தி 9 என்பவை நவதுஷ்டிகளாம். இவற்றுள், பிரகிருதி முதலிய நான்கும் ஆந் தரதுஷ்டிகளாம். சப்தாதி ஐந்தும் பாகியதுஷ்டிகளாம். சுரோத்திராதி ஐந்து ஞானேந்திரியமும் வாக்காதி ஐந்து கருமேந்திரியமும் மனமும் என்னும் பதினொ ன்றின் குஷ்டாதிரோகங்களால் நாசம் அல்லது அவைகளிருப்பினும் அவற்றில் தந் காரியம் ஆற்ற ஆற்றலின்மை அல்லது, மற்றையரின் பெற்றிகளைக்குறித்து அவற்

மின்கண்ணே அற்பகாரியுஞ்செய்யும் ஆற்றல் என்னுமிதுவே அவ்விந்திரியங்களின் நாசமாம். இவ்வாறு அப்பதினோரிந்திரியங்களின் பதினொரு நாசங்களால் இப்புத்தியின்கண்ணே அசாமர்த்தியரூபப் பதினொரு அசக்திகள் உண்டாம். இவ்வண்ணம் முற்கூறிய அஷ்டசித்திகளின் அப்பிராப்தியால் அப்புத்தியின்கண்ணே அஷ்ட அசக்திகள் உற்பன்னமாம். இவ்வாறே நவதுஷ்டிகளின் அப்பிராப்தியால் அப்புத்தியின்கண்ணே நவஅசக்திகள் உற்பன்னமாம். இங்ஙனம் யாவும் ஒருங்குகூடி இருபத்தெட்டு அசக்திகளாம்; இவையாவுஞ்சேர்ந்து ஐம்பதாம். இவையாவும் சம்சாரசக்கிரத்தின் அராக்களாம். இவற்றுள், பூர்வம் அவித்தை முதலிய பஞ்சக்கிலேசங்கள் சாமானியமாய் நிரூபிக்கப்பட்டன. இப்போது விஸ்தாரமாய் நிரூபிப்பாம் :—ஆண்டு அனான்மபதார்த்தங்களிடத்தே ஆன்மபுத்திவடிவ அவித்தைக்கு எண்வகையாய விஷயங்களுள; அவற்றின் பேதத்தால் அதுவும் எண்வகையாம். அவை யிவையாம் :—காரணரூபப் பிரகிருதி, மகதத்துவம், அகங்காரம், பஞ்சபூதம் என்பனவாம். அவ்வவித்தை சுழுப்தியின்கண்ணும் பீஜரூபமாயிருக்கும். அதற்குப் பீஜரூபமாய அஸ்மிதையும் நஞக்கனுக்களில் அவித்தையின் பிரகிருதி முதலிய அஷ்டவிஷயங்களையே நானென விஷயஞ்செய்யுமாதலின், எண்வகைவிஷயபேதத்தால் அம்மோகமாகிய அஸ்மிதையும எண்வகையாம். சுரோத்திராதிகளின் விஷயங்களாய சப்தாதி பஞ்சவிஷயங்களும் திவ்யம் அதிவ்யம் என்னும் வேற்றுமையால் இருவகையாம். சுவர்க்காதி லோகங்களிலுள்ளவை திவ்யங்களாம்; இவ்விடத்துள்ளவை அதிவ்யங்களாம். இவ்விருபேதத்தாலவை பத்துவகையாம்; அவை ஜீவர்கட்குச் சுகசாதனமாதலின் அவரது இராகவிஷயமாம். ஆகையால், விஷயபேதத்தால் மகாமோகரூப இராகமும் பத்துவகையாம். அணிமா, கரிமா, லகிமா, மகிமா, பிராப்தி, பிராகாமியம், ஈசித்துவம், வசித்துவம் என்பன அஷ்டசித்திகளாம், இவையும் முற்புகன்ற சப்தாதி பத்துவிஷயங்களும் ஆகப்பதினெட்டும் துவேஷவிஷயமா மாதலின், இவற்றின்பேதத்தால் துவேஷமும் பதினெண்வகையாம். அல்லது, முற்கூறிய அஸ்மிதையின் பிரகிருதி முதலிய எட்டு விஷயங்கள், முன்மொழிந்த சப்தாதி பத்துவிஷயங்கள் என்னும் பதினெட்டும் துவேஷத்திற்கும் விஷயமாமாதலின், இப்பேதத்தால் துவேஷமும் பதினெண்வகையாம். கருத்திதுவாம்:—இப்பதினெண்விஷயங்களும் எநநிமித்தத்தாலேனும் நாசத்தையடையின், இவை ஜீவனிடத்தே துக்கத்தையுண்டாக்கித் துவேஷ விஷயமாம். விஷயபேதத்தால் தாமிசிரரூப துவேஷமும் பதினெண்வகையாம். முன்மொழிந்த அணிமாதி யஷ்டசித்திகளோடு சப்தாதி பத்துவிஷயங்கள், அல்லது, முன்மொழிந்த அஸ்மிதையின் பிரகிருதிமுதலிய எட்டுவிஷயங்களோடு சப்தாதி பத்துவிஷயங்கள் என்னுமிவற்றை நாசஞ்செய்யும் பலவானுய புருஷனிடத்தே தனது பிரதிகூலத்தன்மையை யுணர்ந்துண்டாம் விஷயநாசபயம் அபிநிவேசமாம். அதுவும்விஷயபேதத்தால் பதினெண்வகையாம். இதனுலிப்பொருள் துணியப்பெறும்:—தமரூப அவித்தை 8, மோகரூப அஸ்மிதை 8, மகாமோகரூப இராகம் 10, தாமிசிரரூபதுவேஷம் 18, அந்ததாமிசிரரூப அபிநிவேசம் 18, ஒருங்குகூடி 62 ஆம். இத்துணையால் அவித்தை முதலிய பஞ்சக்கிலேசங்கள் நிரூபிக்கப்பட்டன. இப்போது முற்கூறிய அஷ்டசித்திகளின் வடிவத்தை நிரூபிப்பாம் :—பிரஹ்மவித்,

தையை யுபதேசிக்கும் சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட ஆசிரியரின் அடைவு சுஹ்ருத்பிராப்தியாம். அவ்வாசிரியர்வாயிலாய் வேதாந்தசாஸ்திர சிரவணஞ்செய்தல் அத்தியயனமாம். அச்சிரவணித்தபொருளை நாலுவகையாய யுத்திகளோடு மனனித்தல் ஊகமாம். மனனஞ்செய்த பொருளின்கண்ணே நிரந்தரசித்தவிருத்திகளின் பிரவாஹரூப நிதித்தியாசனம் சப்தமாம். சுரமுதலிய வியாதிகளாலும் காமக்குரோதமுதலிய ஆதிகளாலும் உண்டாய துக்கநாசம் அத்தியாத்மதுக்கநாசமாம். அக்கினி ஜலாதிகளாலுண்டாய துக்கநாசம் அதிதைவதுக்கநாசமாம். சிங்க சர்பபாதி பூதங்களாலுண்டாய துக்கநாசம் அதிபூததுக்கநாசமாம். பூர்வ விருத்த மகான்களின் அனுசாரமாய் வேதாந்த வித்யாசம்பிரதாயப் பிரவிருத்திசெய்தல் தானமாம் என்னுமிவை அட்டசித்திகளாம். இவை மோக்ஷசாதனங்களாமாதலின், இவ்வெட்டே சித்திசப்தத்தின் முக்கியப்பொருளாம். முற்கூறிய அணிமாதி அட்டசித்திகளோ மாயிகபதார்த்தங்களினடைவைச் செய்விப்பனவாம்; ஆகையால், அவை சித்திசப்த முக்கியப்பொருளன்றாம்; மறறோ, கௌண அர்த்தமாம். இத்துணையால், அஷ்டசித்திகளின் நிரூபணஞ்செய்யப்பட்டது. இப்போது முற்கூறிய நவதுஷ்டிகளின் வடிவம் நிரூபிக்கப்படும்:—இப்பிரகிருதிரூபமாயையே இவ்வெல்லாவுலகின் உற்பத்தி ஸ்திதி இலயங்களைச செய்யும்; நாலுவகையாய தூர்க்கடகாரியங்களையும்செய்யும். ஆதலின், இது ஜகத்தையுண்டாக்குவதேபோல, ஒருகால் ஆன்மஞானத்தையும் உண்டாக்கும; இதனையடைய முயலல் நிஷ்பலமாம் என ஆராய்ந்து ஆலசியமூடர் சிரவணாதி சாதனங்களில் முயலாமை பிரகிருதி துஷ்டியாம். நியமமாய்க் காரியோறபததியைச செய்வது காரணமாம். ‘[illegible]’ என்பதாதி சாஸ்திரத்தே சந்நியாச ஆசிரமமே ஆன்மஞான காரணமென்னபபட்டுளது என ஆராய்ந்து சந்நியாச ஆசிரமத்தைத்தரித்து அதனானே தன்னைக் கிருதகிருத்தியனென நினைந்து சிரவணாதி சாதனத்தே முயலாமை சமபிரதானதுஷ்டியாம. இக்காலமே சர்வ ஜகத்துற்பத்தி ஸ்திதி இலயத்தைச் செய்யுமாதலின், இது சர்வ ஜகத்தையும் உண்டாக்குவதேபோல, ஒருகால் ஆன்மஞானத்தையுமுண்டாக்கும். அதன்பொருட்டு எனது முயறசி பயனற்றதாம் என ஆராய்ந்து மதிஹீன ஆலசியன் சிரவணாதிசாதனத்தே முயலாமை காலதுஷ்டியாம். இச்சீவன் தனது பாக்கியத்தானே இராஜ்ஜியத்தையும் இலக்குமியையும் புகழ் முதலியவற்றையும் அடைவனாதலின், எனக்குத் தனாதிகளையடைவிக்கும பாக்கியமே ஒருகால் ஆன்மஞானத்தையும்டைவிக்கும்; அதன்பொருட்டு எனது முயற்சி நிட்பலமாம் என ஆராய்ந்து மூட ஆலசியன் சிரவணாதி சாதனத்தே முயலாமை பாக்கிய துஷ்டியாம். இந்நான்கும் ஆந்தர துஷ்டிகளாம். இப்போது பாகியபஞ்சதுஷ்டிகளின் வடிவம் நிரூபிக்கப்படும்:—சுரோத்திரேந்திரியத்தால் நாலுவகையாய சப்தங்களைக்கேளாது, அதனைத் தடைப்படுத்தலானே தன்னைக் கிருத கிருத்தியனென்னவெண்ணிச் சிரவணாதி சாதனத்தே முயலாமை சப்தநிவிருத்தி துஷ்டியாம். இவ்வாறே துவக்கிந்திரியத்தாலுறல் பரிசநிவிருத்தி துஷ்டியாம்; நேத்திரேந்திரியத்தாலுறல் ரூபநிவிருத்தி துஷ்டியாம்; இரசனேந்திரியத்தாலுறல் இரசநிவிருத்தி துஷ்டியாம்; கிராணேந்திரியத்தாலுறல் கந்த

நிவிருத்தி துஷ்டியாம். சில நூலாசிரியரோ இவ்வைந்தின் வடிவத்தை இங்ஙனங் கூறுவர் :—தனுதிகளை யொருங்குசேர்த்தல், அவற்றைக் காத்தல், செலவழித்தல், போகித்தல், அவையழிதல், என்னுமைந்தும் ஜீவனுக்குக் கிலேசத்தையே கொடுக்கும்.

ஆ-க. ஸமுஜாதாஜநூதெ தெ௷ஷுஷெஎவ வஙிவாறுதெ ।
நாபெஶ்வஶ்யெஅ ஹொமெ அயிமயஜாது தெ௷ஹாஜிதா ।

பொருடமை யீட்டலும் புரிதல் பாலன
மருடர வழிதலு மயங்கி யீதலு
மிருடர வயிலலு மின்ன லின்னல்சேர்
பொருடமைச் சீயெனப் போக்கற் பாலதே.

(பொ-ள்.) தனுதிகளை ஒருங்கு சேர்த்தலினும், காப்பதினும், நாசத்தினும், செலவழிப்பதினும், போகிப்பதினும், ஜீவர்கட்குக் கிலேசமேயுண்டாமாதலின் எப்போதுங் கிலேசத்தைத் தரும் தனுதிகள் சீ யென விகழற்பாலனவாம். இவ்வாறுராய்ந்து பூர்வம் ஒருங்கு சேர்த்துவைத்திருந்த தனுதிகளையும் பரித்தியாகஞ் செய்த அல்லது விசாரித்துத் தனுதிகளை யொருங்கே சேராத புருஷனது சித்தத்தே அவ்வைவகை நிமித்தத்தால் உண்டாம் ஐவகை யுபராமத்தானே தன்னைக் கிருதகிருத்தியனென நினைந்து சிரவணுதி சாதனத்தே முயலாமை பாகிய ஐவகைத் துஷ்டியாம். ஹே முனீஶ்வரர்களே! இவ்வொன்பதுவகைத் துஷ்டியில் யாதேனுமொன்றை யுடன்பட்டுச் சிரவணுதி சாதனத்தே முயலாத மூடனுக் கொருகாலும் ஆத்மசாக்ஷாத்காரப் பிராபதியுண்டாகமாட்டாது. ஆகையினுல், இவை ஆன்மசாக்ஷாத்கார விரோதியாதலின், ஜன்மமரணுதி சம்சாரகாரணமேயாம், ஆகவே முமுட்சுக்கள் இவற்றைப் பரித்தியாகித்துச் சிரவணுதிகளிலேயே முயலவேண்டும். பிரசித்தசக்கிரத்தே ஒரு மகா அராவிருக்கும், வேறு அற்ப அராவிருக்கும்; அதுபோல, இச்சம்சாரசக்கிரத்தே முற்கூறிய கிலேசாதி ஐம்பது பேராரக்களும், சுரோத்திராதி பத்திந்திரியங்கள், சப்தாதி பத்துவிஷயங்கள் என்னும் இருபது சிற்றாரக்களுமிருக்கின்றன. பிரசித்த சக்கிர நேமியின் கண்ணே கூர்மையாய தாரையிருப்பதேபோலச் சம்சாரசக்கிரத்தே இவ்வாறு அஷ்டகரூப கூர்மையாய தாரைகளிருக்கின்றன; அவை யிவையாம்:—பூவாதி ஐந்து மனம்புத்தி அகங்காரம் பிரகிருதியஷ்டகமாம்; அல்லது, பிரகிருதி பூவாதி ஐந்து மனம் அகங்காரமாம். இயமாதி யோகாங்க அஷ்டகமாம். சுகிருத்தடைவு, அத்தியயனம், ஊகம், சப்தம், அத்தியாத்மதுக்கநிவிருத்தி, அதிதைவதுக்கநிவிருத்தி, அதிபூத துக்கநிவிருத்தி, தானம் சித்தியஷ்டகமாம்; அணிமா முதலியவையும் சித்தியஷ்டகமாம். வாக்கு, சுரோத்திராதி, மனம், ஹஸ்தம், கிரக அஷ்டகமாம். அவற்றிற்கு முறையேயாம் சப்தோச்சாரணம் சப்தாதி சங்கற்பம் கிரகணம் என்னும் விஷயங்களெட்டும் அதிக்கிரக அஷ்டகமாம். இவ்வாறுய் ஆறு அஷ்டக வடிவத்தைச் சிலவறிஞருடன்படுவர். மற்றுஞ் சில நூலாசிரியரோ இவ்வாறு கூறுவர் :—வாக்கு, சுரோத்திராதி, மனம், ஹஸ்தம் கிரக அஷ்டகமாம்; சப்தோச்சார

ணம், சப்தாதி, சங்கற்பம், கிரகணம் அதிக்கிரக அஷ்டகமாம். இக்கிரக அதிக்கிரக வடிவம் ஐந்தாவது அத்தியாயத்தே ஆர்த்தபாகரது சம்வாதத்தே விஸ்தாரமாய்க் கூறிவந்தேம். பிருதிவி, காமம், ரூபம், ஆகாசம், தமம், ரூபம், தலம், ரேதசு ஆயதன அஷ்டகமாம். அக்கினி, இருதயம, சக்ஷு, சுரோத்திரம், இருதயம், சக்ஷு, இருதயம், இருதயம் லோகஅஷ்டகமாம். அமிருதம், ஸ்திரீ, சத்தியம், திசை, மிருத்யு, பிராணன், வருணன், பிரஜாபதி, தேவதாஷ்டகமாம். சரீரம், காமமயம், ஆதித்தியன், சிரௌதம், சாயாமயம், பிரதிபிம்பம், உதகஸ்தம், புத்திரமயம் புருஷாஷ்டகமாம். ஆயதனஷ்டகமுதலிய நான்கன்வடிவம் பூர்வம் ஐந்தாவதத்தியாயத்தே யாஞ்ஞவற்கியமுனிவர் சாகல்ய சம்வாதத்தே விஸ்தாரமாய் நிரூபித்துவந்தேமாதலின், ஈண்டுச் சுருக்கி நாமமாத்திரங்கூறினேம். இங்ஙனம் குலாலசக்கிரத்தே கடமிருப்பதேபோல இவ்வாறுவகை யஷ்டகங்கள் சம்சாரரூபசக்கிரநேமியின் கூர்மையாய தாரைகளாம். பிரசித்தசக்கிரத்தைத்தரிக்கும் இரஜ்ஜுமுதலிய பாசமிருப்பதேபோல இத்தாவர ஜங்கமரூப ஜகத்பாவத்தையடைந்த மாயாவிசிஷ்ட பரமான்மாச் சம்சாரரூபசக்கிரந்தரிக்கும் இரஜ்ஜுரூப பாசமாம். நேமி, நாபி, அரா என்பனவாதி யவயவங்களோடுகூடிய பிரசித்த சக்கிரம் ரஜ்ஜு முதலியவற்றின் கட்டின்றி விரைவாகவே விசீர்ணபாவத்தையடைவதேபோல, இச்சக்கிரமும் பரமான்மரூப பந்தனமின்றி விரைவாகவேயழியும். பிரஹ்மலோகத்தையடைவிக்கும் தேவயானமார்க்கமும், சுவர்க்காதியை யடைவிக்கும் பிதிர்யானமார்க்கமும், கீடபதங்காதி துச்ச சரீரங்களையடைவிக்கும் மூன்றுவது ஸ்தானமாய மார்க்கமும், சமசாரசககிரத்தைப் பேதிக்குங் காரணங்களாம். மும்மார்க்கயோகத்தால் இச்சக்கிரம் மூன்று நாபியுடையதும் மூன்று நேமியுடையதுமாய்க் கூறப்பெறும். கருத்திதுவாம்:—முதலில் வர்த்துலாகாரமாய் ஒரு சூக்ஷுமமண்டலமெழுதி அதனைப் பாகிய மும்மண்டலத்தாற் றழுவுறச் செய்யின், நான்கு மண்டலத்துள் பிரதம மத்தியம சூக்ஷும மண்டலம் சர்வமண்டலங்களின் அந்தர்ப் பூதமாமாதலின், அது கேவலம் நாபிரூபமேயாம். அந்நான்கனுள் அந்தியமண்டலம் சர்வ மண்டலத்தையுமபேக்ஷித்துப் பாகியமாமாதலின், அது கேவலம் நேமிரூபமேயாம். அந்நான்கனுள் மத்திய இரண்டு மண்டலத்திலோ பாகியமண்டலத்தை யபேக்ஷித்து நாபிரூபத்தன்மையுளது; ஆந்தர மண்டலத்தையபேக்ஷித்து நேமிரூபத்தன்மையுளது. இவ்வாறு இச்சம்சாரரூப சக்கிரம மூன்று நேமி நாபியுடையதெனத் துணியபபெறும். தேவயானமார்க்கம் அந்தர்முக உபாசகர்கட்கே கிடைக்குமாதலின் அது சம்சார சக்கிரத்தின் பிரதம மத்திய நாபியாம். பிதிர்யானமார்க்கம் உபாசகரை யபேக்ஷித்துப் பகிர்முகக் கருமிகட்குக் கிடைக்குமாதலின், அது இச்சக்கிரத்தின் வேறுநாபியாம். மூன்றுவதான மார்க்கம் கருமிகளையபேக்ஷித்து அத்தியந்தம் பகிர்முக பாவாத்மாக்களாய ஜீவர்கட்குக் கிடைக்குமாதலின், அது இதன் மூன்றாவது நாபியாம். கீடபதங்காதிகளினும் அத்தியந்தந் தாழ்ந்த தரு முதலிய தாமத ஜீவர்களால் அடையத்தகுந்த தமரூப அவித்தை இதன் அத்தியந்தம் பாகிய நேமியாம். காஷ்டம் மிருத்திகை யிரண்டும் குலாலசக்கிர காரணமாவதேபோலச் சுகதுக்கபலத்தைத்தரும்

ஆரம்பாவயிரண்டும் இச்சக்கிரத்தின் நிமித்தகாரணமாம். இருதயதேசத்திருக்கும் ஆன்மாவையும் மறக்கச்செய்யும் தமோரூபமோகம் இச்சம்சாரசக்கிரத்தின் எப்புறத்தும் தொடர்ந்த ஏகவடிவமாம். ஹே சந்நியாசிகளே! இத்தகைச் சம்சாரசக் கிரபாவத்தையடைந்த மாயாவிசிஷ்ட பரமான்மாவை அந்த வேதமுணர்ந்த மறையவர் தியானத்தாற் கண்டனர். இத்துணையால், மாயாவிசிஷ்ட பரமான்மாச் சம்சாரசக்கிரரூபமாய் வருணனஞ்செய்யப்பெற்றது. இப்போது அது நதிவடிவமாய் வருணிக்கப்பெறும்:—ஹே சந்நியாசிகளே! சம்சாரசக்கிரத்தின் உபாதானகாரண மாயாரூப மகாநதியை மீண்டுமிவ்வடிவமாய் மறையவர் கண்டனர். சுரோத்திராதி ஐந்துமிருக்குமிடமாகிய ஐந்துகோளகஸ்தானங்கள் மாயாநதியின் ஐந்து ஒழுக்குகளாம்; நீர்வழியும் இடவிசேஷம் ஒழுக்காம். நதியின் நீர் அவற்றின்கண் செல்லுவதேபோல இவ்வைந்தும் கோளகஸ்தானத்தே செல்லுமாதலின், இவை மாயாநதியின் ஐவகைநீராம். நதிநீர்க்கு மேகங்காரணமாவதேபோல ஆகாசாதிபூதம் இந்திரியநீர்க்கும் கோளக ஒழுக்கிற்கும் காரணமாம். மழைக்காலத்தே நதியின் கோணற்பிரவாகமுண்டாவதேபோலக் காமக்குரோதாதி ஆசுரீ சம்பத்துடைய பிரமாத ஜீவரிடத்தே சுரோத்திராதிகளாலுண்டாய ஐவகைஞானம் ஜீவர்களின் துக்கஹேதுவாமாதலின், அவை அத்தியந்தம் உக்கிரகோணற் பிரவாகங்களாம்; அல்லது, நதியிலுள்ள நீர்ச்சுழலானது ஜீவரைக் கீழே கொண்டுபோவதேபோலச் சாஸ்திரசமஸ்காரமற்ற பிரமாதிகளிடத்தே சுரோத்திராதிகளாலுண்டாய ஐவகைஞானமும் அவரைக் கீடபதங்காதி சரீரப்பிராப்திரூப அதோகதிக்குக் கொண்டுபோம். ஆதலின், அவை மாயாநதியின் ஐந்து உக்கிரசக்கிரங்களாம். நதியில் நானாவகைத் தரங்கமுண்டாவதேபோலப் பிராணாதியைந்தும் மாயாநதியின் ஐம்பெருந்தரங்கமாம். நதிக்கு மூலமிருப்பதேபோலச் சப்தாதியைந்தையும் விஷயஞ்செய்யும் ஐவகைஞானங்கள் சாஸ்திரவிகிதமாயேனும் நிஷித்தமாயேனும் உண்டாம்; ஐவகை யிச்சையுமுண்டாம். அவை சமஸ்காரவாயிலாய் மாயாநதியின் ஐம்மூலமாம். நதியில் நானாவகை ஆவர்த்தங்களுண்டாம், அதன்கட்பட்டஜீவன் வெளிவரச் சமர்த்தனாகான். அதுபோலச் சப்தாதிவிஷயங்கள் ஐம்பெருமாவர்த்தங்களாம்; ஏனெனின், நதியினின்றும் கரைசேர்க்கும் ஓடக்காரனும் அதன்ஆவர்த்தங்களிற்படின் அதனினின்றும் தன்னைமீட்பதில் சமர்த்தனாகாதேபோல அதிகாரிகளைச் சாஸ்திர உபதேசத்தால் மாயாநதியினின்றும் கடத்தும் அறிஞனும் ஒருகால் விஷய ஆவர்த்தங்களிற்படின் அதனினின்றும் தன்னை வெளியின்மீட்டுக் கொள்ளச் சமர்த்தனாகான். ஓடக்காரன் அன்னியரை நதியினின்றுங் கரையேற்றித் தான் அவ்வாவர்த்தத்தேபடின் அதனினின்றும் தன்னைமீட்பதிற் சமர்த்தனாகாதபோது அவனாற் கடத்தப்பெற்றவருள் அவன் அவ்வாறுற்றதைநோக்கி அவனதுபகாரத்தையுணர்ந்த சற்புருஷரோ சோகிப்பர்; உபகாரத்தையுணராச் செய்ந்நன்றிகொன்றவரோ பரிகசிப்பர்; அதுபோல, சாஸ்திரஉபதேசத்தால் அதிகாரிகளை மாயாநதியினின்றுங் கடத்திய அறிஞன் விஷய ஆவர்த்தத்தேபட்டு அதனினின்றும் தன்னை மீட்பதிற் சமர்த்தனாகாதபோது அவனாற் கடத்தப்பெற்றவருள் அவன் அவ்வாறுற்றதைநோக்கிச் சிலசற்சனரோ சோகிப்பர், சில செய்ந்நன்றிகொன்றவரோ பரிகசிப்பர். ஆகையினால், ஹே முனீஸ்வரரே! அறிஞனையயான் சாஸ்திர

த்தை யுபதேசித்துச் சர்வஜீவர்களையும் மாயாரூப நதியினின்றும் கரையேற்றுபவனுதலின் என்னை இவ்விஷய ஆவர்த்தம் யாதுசெய்யும் என்னுமபிமானத்தையொருகாலும் அறிஞனும் செய்யாதொழிக. ஒருகாலபிமானங்கொண்டு அறிஞன் விஷய ஆவர்த்தத்தேபடின் அவனும் உலகரின் பரிகாசத்திற்கும் சோகத்திற்கும் விஷயனுவன். கரதலாமலகம்போல ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்த அறிஞனும் அவ்விஷய ஆவர்த்தத்தினின்றும பயந்தேயொழுகுக. நதியின் ஆவர்த்தம் ஓடக்காரனுக்கும் மற்றையருக்கும் முற்றினும் தாண்டமுடியாததாவதேபோல மாயாநதியின் விஷய ஆவர்த்தமும் அறிஞனுக்கும் அறியாருக்கும் முற்றினும் கடக்கமுடியாததேயாம்.

சங்கை :—ஹே பகவன்! வீழ்ந்த அறிஞனும் வெளிவரமுடியாத விஷய ஆவர்த்தத்தினின்றும் தங்களைக் காப்பாற்றுமுபாயத்தை எங்கட்குக் கூறவேண்டும்?

சமாதானம் :—ஹே முனீஸ்வரரே! அதனினின்றும் காப்பாற்றும் ஓரேவுபாயம் சாஸ்திரத்தின்கண்ணே கூறப்பெற்றுளது; கேட்பீர்களாக! நதியின் கண்ணேசெல்லும் ஓடக்காரன் ஆவர்த்தத்தைத் தனது வலப்பாகத்தேனும் இடப்பாகத்தேனும் விடுத்துச்சென்றால்மாத்திரம் அவன் அதன்கண்ணேபடான். அதுபோல, அறிஞனும் முமுக்ஷுவும் சாஸ்திர விசாரபலத்தால் விஷயாவர்த்தத்தைத் தூரத்திலேயே பரித்தியாகஞ்செய்யின் அதன்கட்படார். ஆகையால், விஷயங்களிடத்தே தோஷதிருஷ்டிசெய்து அவற்றின் சங்கஹீனமேசெய்க; இதுவே அதனினின்றுந் தப்புவதற்குபாயமாம. இவ்வுபாயத்தையொழித்து அறிஞனும் விஷய ஆவர்த்தத்தேவிழின் அதனினின்றும் தன்னை மீட்பதில் வல்லனுகான்; அறிஞனும் இங்ஙனம்வல்லனுகாதபோது அறிவிலான் எங்ஙன் வல்லனுவன். ஆகையால், யாவரும் அதனைத் தூரத்தேவிடுக்க இச்சங்கபரித்தியாகவுபாயத்தைவிடுத்து வேறெவ்வுபாயமும் அதன் காப்பின்றுமாதலின், சப்தாதியைந்தும் மாயாநதியின் ஐந்தாவர்த்தங்களாம். இவற்றினின்றுண்டாம் ஐவகைச்சுகமும் அழிவதேயாம்; பயகாரணமேயாமாதலின், மது விஷயுக்த அன்னம்போல விஷயசுகம் துக்கரூபமேயாம். ஐவகைத் துக்கங்களின் இரவு பகலாய நிரந்தரப்பிரவாகம் மாயாநதியின் ஐவகைவேகமாம். அல்லது, கர்ப்பதுக்கம், ஜன்மதுக்கம், இராஜதுக்கம், வியாதிதுக்கம், மரணதுக்கம் என்னுமைந்தும் வேகமாம். தமம், மோகம், மகாமோகம், தாமிசிரம், அந்ததாமிசிரம என்னு மைவகைக்கிலேசம் நதியின் பஞ்சபருவங்களாம். ஈண்டு, விபாகம் பருவமெனப்படுமாதலின் இப்பொருள் துணியப்பெறும் :—பஞ்ச இந்திரியகோளகங்கள், பஞ்சசுரோத்திராதி இந்திரியங்கள், ஆகாசாதியைந்து, பஞ்சஞானம், பஞ்சப்பிராணன், பஞ்சபுத்தி, பஞ்ச இச்சை, பஞ்சவிஷயம், பஞ்சதுக்கம், பஞ்சக்கிலேசம் என்னும் ஐம்பதுபேதத்தால் அம்மாயாநதி ஐம்பதுபேதமுடையதாம். அல்லது, பஞ்சக்கிலேசம் அஷ்டசித்தி நவதுஷ்டி 28 அசக்தி என முற்கூறிய 50 பேதத்தால் அம்மாயாநதி 50 பேதமுடையதாம். ஹே சந்நியாசிகளே! இத்தகைய மாயாசக்தியை வேதமுணர்ந்த மறையவர் தியானகாலத்தே காரணப்பிரஹ்ம ஆஸ்ரிதமாய்க்கண்டனர்.

சங்கை :—ஹே பகவன் ! அத்வைதப் பிரஹ்மத்தியானபராயணராய அறிஞு மறையவர் அம்மாயாசக்தியை என் பார்த்தனர் ?

சமாதானம் :—ஹே சந்நியாசிகளே ! அவ்வறிஞர் அத்விதீயப் பிரஹ்மத்தியானத்தால் அம்மாயையை எப்போதும் கண்டிலர் ; மற்றே, அவர் அத்விதீயப் பிரஹ்மத்தினின்றும் ஜகதுற்பத்தியாதிகளின்பொருத்தமின்மையை ஸ்மரித்தபோது அம்மாயாசக்தியைக் கண்டனர். பூர்வம் அவ்வறிஞர் பிரஹ்மாகாரவிருத்திகளின்பிரவாகரூபத்தியானத்தால் மாயாசக்தியைக் கண்டதேபோல நீங்களும் அவ்வாறுசெய்யின் அம்மாயாசக்தியைக் கண்டுகொள்வீர்களாதலின், உங்களுக்கு யாம் அத்விதீயப் பிரஹ்மோபதேசத்தைச் செய்கின்றோம். நீங்கள் சாவதானமாய்க் கேளுங்கள் முற்கூறிய காலாதி சர்வகாரணங்களின் அதிஷ்டான எங்நிர்க்குணப் பிரஹ்மத்தைப் பூர்வம் முனீஸ்வரர் தியானித்துக் கண்டனரோ அது உங்களுடைய ஆன்மாவினும் வேறன்றாம்; மற்றே, அது ஆன்மவடிவமேயாம். உங்களிருதயதேயத்தேயிருந்து புத்திமுதலிய சங்காதத்தையொளிர்விக்கும் அத்விதீயப் பிரஹ்மரூப ஆன்மாவே மாயைவடிவ உபாதியின்சம்பந்தத்தால் ஈஸ்வரப் பெயரையும் ஈஸ்வர சாக்ஷிப்பெயரையும் அடையும்; அதுவே அவித்யோபாதி சம்பந்தத்தால் சம்சாரசக்கிரத்தே சுழல்வதாய் ஜீவப்பெயரையும் ஜீவசாக்ஷிப் பெயரையும் அடையும். கருத்திதுவாம் :—ஒரே பிரகிருதி சுத்தசத்துவகுணப் பிரதானத்தன்மையானே மாயா சம்ஞையையடையும். மலினசத்துவகுணப பிரதானத்தன்மையானே அவித்தைப் பெயரையடையும். மாயாவிசிஷ்ட சேதனம் ஈஸ்வராம் ; மாயா உபகிதசேதனம் ஈஸ்வரசாக்ஷியாம் இவ்வாறு அவித்யா விசிஷ்ட சேதனம் ஜீவனாவன், அவித்யோபகிதசேதனம் ஜீவசாக்ஷியாம். குலாலன் தண்டத்தாற் சக்கிரத்தைச் சுழல்விப்பதேபோல சர்வ ஜீவர்களின் இருதயத்தேயிருந்து பரமான்மா காமக்குரோதாதிரூப தண்டத்தாற பராதீனஜீவரை நிரந்தரம் சுழற்றுவர். ஜீவாத்மா சம்சாரத்தே சுழலுமவரை அத்விதீய ஆத்மசாக்ஷாத்காரத்தையடையாது, குருசாஸ்திர உபதேசத்தால் அத்விதீய ஆன்ம நிச்சயஞ்செய்தபோது சம்சாரரூப காரியசகித அவித்தையை நாசஞ்செய்யும். இக்காரணத்தானே சுருதிபகவதியானவள் இஜ்ஜீவான்மாவை 'ஹம்ஸம்' எனக்கூறினள். அத்விதீய ஆன்மஞானத்தால் அவித்தையை ஹநநம்செய்யும்ஜீவன் ஹம்சனாவன் இவன் தன்னான்மாவை அத்விதீயப் பிரஹ்மரூபமாய்க்காணின், பிறப்பிறப்பு முதலிய விகாரங்களற்று மோக்ஷரூப அமிருதத்தையடைவன். இவன் தன்னான்மவடிவமாய்க்கண்ட அத்விதீயப்பிரஹ்மத்தை இவ்வேதாந்தசாஸ்திரம் பிரதிபாதனஞ்செய்யும்; அவ்வதிஷ்டானத்தே தேயு, ஜலம், பிருதிவியென்னும் முப்பூதமிருக்கும். அது சர்வ கர்மபலன்களின் அவதிரூபமாம். ஆன்மசாக்ஷாத்காரத்தானன்றி வேறெவ்வுபாயத்தானும் நாசமாகாத ஆன்மாவைஆவரணஞ்செய்யும் மாயாசக்தியும் அதை யாசிரயித்தேயிருக்கும். பூர்வம் அவ்வேதமுணர்ந்த மறையவரும் இச்சுயஞ்சோதியான்மாவை மாயையினும் வேறெனவும், அத்விதீயப் பிரஹ்மரூபமெனவுமுணர்ந்து ஆவரண விக்ஷேபரூப மாயையினின்றும் முக்தராயினர். இவ்வத்விதீயப்பிரஹ்மத்தே அபேதபாவத்தையடைந்த அம்மறையவர் ஜன்மமாதிவிகாரமற்றவராயினர். ஆதலின், நீவிரும் அதனை ஆன்மரூபமாயறிந்தமையின். இப்

போது தத்துவமசி வாக்கியத்திருக்கும் தத், துவம் என்னு மிரண்டுபெதங்களின் அர்த்தத்தையும் அதன் விசாரத்தால் மோக்ஷப்பிராப்தியையும் நிரூபிப்பாம் :— ஹே சந்நியாசிகளே! யாண்டும் வியாபகபரமான்மா தத்பதார்த்தமாம். முன்அம் சரூபமாய்க் கூறபெற்ற ஜீவாத்மா துவம்பதார்த்தமாம். இவ்வீஸ்வர ஜீவர்கட்குப் பரஸ்பரம் பிரதீதியாகும்பேதம் உண்மையாயின்றும்; உபாதியாலாம். ஆண்டுச் சுருதியின்கண்ணே க்ஷரவியக்த நாமங்களால் கூறப்பெற்ற அந்தக்கரணாதி காரியப்பிரபஞ்சம் ஜீவோபாதியாம்; அவ்யக்த அக்ஷர நாமங்களால் கூறப்பெற்ற காரண அஞ்ஞானம் ஈஸ்வரோபாதியாம். 'கார்யோபாதிரயம் ஜீவ: காரணோபாதிரீஸ்வர:' காரிய உபாதியுடையவன் ஜீவன், காரணோபாதியுடையவன் ஈஸ்வரன். காரிய காரணரூப இரண்டுபாதிகளின் அதிஷ்டானமும் சுத்த பரப்பிரஹ்மமாம். அதுவே புத்தியோடு தாதாத்மிய சம்பந்தத்தையுற்றுத் தனது வாஸ்தவஸ்வரூபத்தை அறியாதபோது ஜீவபாவத்தையடையும்; அதனுல் அது அறம்பாவவயத்தால் நானுவகைபாய சுகதுக்கத்தைப போகிக்கும். அதுவே மாயையாக்கிய ஜீவபாவத்தைவிட்டுத் தன்னை அத்விதீயப் பிரஹ்மரூபமாயறியின் சர்வ பந்தமும் விடு பட்டதாய் மோக்ஷரூப அமிருதபாவத்தையடையும். உண்மையாய்க் குறைவுமிகுதியற்ற ஆகாசம் ஊசிமூலத்துவாரத்தே யிருக்குமாயின் அற்பமெனப்படும். அதுவே பிரஹ்மாண்டரூப உபாதியில் இருக்குமாயின் மகானெனப்படும். அதுபோல, உண்மையாய்ச் சிவேசுவரபாவமற்ற பரமான்மாப் புத்திரூப உபாதியின்கண்ணே யிருக்குமாயின் ஜீவனெனபபடும. அதுவே மாயாரூப உபாதியின்கண் இருக்குமாயின் ஈஸ்வரனெனப்படும். ஆகையினுல், காரியகாரணரூப உபாதியின் பேதத்தினுனே ஜீவேஸ்வரபேதப பிரதீதியாகும்; உண்மையாய் அப்பேதமின்றும். ஆகையால, கற்பிதவுபாதிகளைப் பரித்தியாகித்து இவ்வம்சம் தன்னை அத்விதீயப்பிரஹ்மரூபமாயறியின் மாயாரூபகாரணசகித சர்வ காமக்குரோதாதி பாசங்களினின்றும் விடுபடும்.

சங்கை :— ஹே பகவன்! இத்தகைய அத்விதீய ஆன்மாவின்கண்ணே ஜீவன், ஈஸ்வரன், பிரஹ்மம் என்பதாதி பேத வியவகாரத்தை யாவர் செய்தவர்?

சமாதானம் :—ஹே சந்நியாசிகளே! கூறிய மூன்றையும் நூலுணர்ந்தோர் அநாதியென்பர்; அம்மூன்றன்கண்ணும் அநாதித்தன்மையும் ஜன்மமற்றதன்மையும் மாயையானே கற்பிதமாம். கருத்திதுவாம் :—அம்மாயாசக்தியே ஈஸ்வராதிகளை அநாதியெனக் கற்பித்தது ஆகாசாதிகளைச் சாதிரூபமாய்க் கற்பித்தது. மாயை அம்மூன்றன்கண்ணும் அநாதித்தன்மையைக் கற்பித்தபோது ஜீவேஸ்வரபேதமும், மாயையும், மாயாசேதனசம்பந்தமும் அநாதியெனப் பொருளானே துணியப்பெறும். இவ்வார்த்தையைச் சுரேஸ்வராசாரியரும் கூறியுள்ளார் :—

ஜீவ ஈஶோ விஶுத்தா சித் விபாகஶ்ச தயோர்த்வயோ: ।
அவித்யா தச்சிதோர்யோக: ஷடஸ்மாகமநாதய: ॥

சீவ னீசன் விசுத்த சிவமோடே, பாவு மவ்விரண் டினல்வி பாகமும்
சீவ வித்தையும் சித்தின்சம் பந்தமும், ஆவ வாறுநிக மாந்தர்க்க நாதியே.

(பொ-ள்.) உயிர், பரன், இரண்டின் பரஸ்பரபேதம், சுத்தசேதனம், அவித்தை, அவித்யாசேதனசம்பந்தம் என்னுமாறும் வேதாந்தசாஸ்திரத்தே அநாதியாம். இவைமுதலியன அத்விதீய ஆன்மாவின்கண்ணே பேதமாய்ப் பிரதீதியாம்; யாவும் மாயையினுனே தோற்றும். இவ்வதிகாரி ஜீவேசசிவத்தைத் தன்னினும் அபின்னமாயறிந்து தன்வடிவத்தை யாண்டும் வியாபகரூபமாய் அறியின் மோக்ஷத்தையடைவன். இப்போது அவ்வநாதிமாயையின் நீக்கவுபாயம் வருணிக்கப்படும்:—ஹே சந்நியாசிகளே! அநாதிமாயை ஜகதுற்பத்திகாலத்தே போக்தா போக்யரூபமாய் ஜீவனுக்கு அநேகவகைச் சுகதுக்கங்களை யடைவிக்கும்; பிரளயத்தே நாமரூபான்மக ஜகத்பாவமற்றிருக்கும்; அதை அக்ஷரமெனச் சுருதிபகவதி கூறுவள். அதுவே ஆன்மசாக்ஷாத்கார உற்பத்தியின்பின்னா நாசமுறும்; இதனுனே சுருதிபகவதி அதனை க்ஷரமென்பள்.

சங்கை:—ஹே பகவன்! முன்னம் மாயையை அக்ஷரமென்று கூறி இப்போது க்ஷரமென்னின், அக்ஷரத்தன்மையும் க்ஷரத்தன்மையும் ஒன்றன்கட் சம்பவியாவாதலின், இரண்டிற்கும் பரஸ்பரம் விரோதமாமன்றோ?

சமாதானம்:—ஹே சந்நியாசிகளே! இவ்வநாதிமாயை ஆன்மசாக்ஷாத்காரமின்றி அன்னிய எவ்வுபாயத்தானும் நாசமாகாதாமாதலின் அக்ஷரமாம்; அதனுனசமெய்தலின் க்ஷரமாம். ஆதலின், இரண்டு சுருதிகட்கும் பரஸ்பரம் விரோதமின்றும். நாசமற்றது அக்ஷரமாம்; அத்தன்மை மாயையின்கண்ணே சம்பவியாது; மற்றோ, உற்பத்திநாசமற்றபரமான்மாவின்கண்ணே அத்தன்மைசம்பவிக்கும். அத்தகைய அக்ஷரபரமான்மா அதிகாரிகளின் விருத்தியின்கண் ஆரூடமாய் மாயையை ஹரணஞ்செய்யுமாயின், அதனை ஹரனெனச் சுருதியழைக்கும். இது தனது சத்தையால் மாயையாகிய காரணத்தையும் ஜகத்துருவகாரியத்தையும் நியமமாய்ப் பிரவிருத்திப்பிக்கும். இதனுனே சுருதி அதனை ஈசனென அழைக்கும். ஹே சந்நியாசிகளே! நீங்கள் உங்கள் மனத்தே எமக்கு ஆன்மஞானமோ உண்டாயது; ஆனுல், அவித்தைநீக்கம் ஆகவில்லையாதலின், அது அதன் நீக்ககாரணமன்றும் என்னும் அசம்பாவனையை ஒருகாலும் செய்யலாகாது; ஏனெனின், அவித்தைக கநேக சக்திகளிருக்கின்றன, அவற்றை ஆன்மஞானவஸ்தை முறையே யழிக்கும். இப போதவற்றை நிரூபிப்பாம்:—ஹே சந்நியாசிகளே! ஜகத்தின்கண்ணே முதலிற் சத்தியபுத்தியைச் செய்வித்துப் பின் ஆசக்தியைச் செய்விக்கும் அவித்தியாசக்தி அபித்தியானரூபஞானத்தால் நாசமாம். இவ்வெல்லாவுலகும் எனதான்மவடிவம் என்னும் சிந்தனம் அபித்யானமாம். அஃதுண்டாதற்குமுன்,ஜகதாசக்தியிருந்ததே போலப் பின்னிராதாதலின், அபித்தியானத்தால் அதிகாரிக்கோரவித்யாசக்தி நீங்கியதென அறியப்பெறும். எதன் நாசத்தால் இவ்வறிஞன் சம்சாரத்தே ஆசக்த அஞ்ஞனினும் விலக்ஷணனுவனே, இராகத்துவேஷமற்றவனுய்ச் சாந்தி முதலிய குணமுடையவனுவனே, இப்பொருளின்கண்ணே சந்நியாசிகளாகிய நீங்களே திருஷ்டாந்தமாவீர்கள்; ஏனெனின், சர்வான்மபாவ சிந்தனை வடிவ அபித்தியானத்தின்முன் உங்கட்கு அனுன்மபதார்த்தத்தே யாசக்தியிருந்தது. அவ்வாறிப்போதின்றுமன்றோ? ஜீவர்கட்குப் பரஸ்பரபேதத்தையும், ஜீவேஶ்வரர்கட்குப் பரஸ்பர பேதத்தையும் தோற்றிவைக்கும் அவித்யாசக்தி யோஜனையினுனே நீங்கும். ஜீவே

ஸ்வா அபேதசிந்தனை யோஜனையாம். லௌகிகபுருஷன் தனது பிராஹ்மணத்வ க்ஷத்திரியத்வாதி ஜாதிகளில் ஐயந்திரிபற்றவனுவதேபோல, யோஜனையானே அவி த்யாசக்தி நீங்கின் அறிஞன் தன்னுன்மாவின் பிரஹ்மரூபத்தன்மையில் ஐயந்திரி பற்றவனுவன்; அனுன்மபதார்த்தங்களை விஷயஞ்செய்யும் ஞானகர்மவாசனைகளை யுண்டாக்கும் அவித்யாசக்தி தத்துவபாவத்தால் நாசமாம். நிரந்தர அத்விதீய ஆன்மாவின் சிந்தனரூப ஆன்மநிஷ்டை தத்துவபாவமாம். அதனுல் அது நாசமா கவே, அறிஞன் ஜீவிதஅவஸ்தையின்கண் ணும் விதேகமுக்தனைப்போலவேயாவன். அவ்வவஸ்தையையடைந்த அறிஞனுக்குச் சுப அசுப சமஸ்காரசகித சர்வப்பிரகார அவித்தையழியும். கனவினின்றும் நனவையடைந்தவன் கனுவுலகைக் காணுததே போலச் சுவப்பிரகாச ஆநந்தவடிவ ஆன்மநிஷ்டையையடைந்த அறிஞன் சரீராதிப் பிரபஞ்சத்தைக்காணுன். சமாதியவஸ்தையின்கண்ணே பிரபஞ்சபானமாகாதாயி னும், வெளிக்கிளம்பியகாலத்தே அறிஞனுக்கும உலகபான (விளக்க) முண்டாமாத லின் உலகப்பிரதிதியாறும் அவித்யாசக்தி பிராரப்தகருமநாசத்தின்பின்னரேயழி யும். இவ்வாறு ஞான அவஸ்தாவிசேஷங்களால் அவித்யாசக்திகள் நாசமாம். இப் போது இப்பொருளையே வெளிபபடையாய் நிரூபிப்பாம் :—ஹே சந்நியாசிகளே! அதிகாரி சர்வான்மபாவ சிநதனரூப அபித்யானத்தால் ஆன்மாவைச் சாக்ஷாத்கரிக் கின், காமக்குரோதாதி சர்வ பாசங்களினின்றும் விடுபடுவன். அவற்ருற் கட்டுற்ற அஞ்ஞானி நானுவகையாய மேற்கீழ்ச் சரீரங்களையடைவன்; அவற்றின்கண் ணும் அத்தியாத்ம, அதிதைவ, அதிபூத துக்கங்களையடைவன். இத்தகைய அக்கொடிய பாசங்கள், குருசாஸ்திர உபதேசத்தால் சம்பூரணஜகத்தையும் தன்னுன்மவடிவமா யறியின் நீங்கும். இத்துணையால் முதல் அபித்யானரூப அவஸ்தையின்பலம் நிரூ பிக்கப்பெற்றது. இப்போது யோஜனை அவஸ்தையின்பலம் நிரூபிக்கப்படும் :—ஹே சந்நியாசிகளே! கடாகாசம் மகாகாசத்தினும் வேறன்ருவதேபோல, என்னுன்மா அத்விதீயப் பிரஹ்மரூபமாம் என்னும் அபேதசிந்தனரூப யோஜனையினுனே அதி காரிக்கு அத்விதீயப் பிரஹ்மஞானமுண்டாயின், ஆன்மானுன்ம அத்யாசரூப இரு தயக்கிரந்தி பேதிக்கும்; அவித்தை முதலிய பஞ்சக்கிலேசங்கள் நீங்கும்; சம்பூ ரண சுப அசுபகர்மங்களின் க்ஷயமாம்; சம்பூரண சம்சயங்களின் நிவிருத்தியாம்.

ஆ-சு. [Grantha-script verse, 2 lines]

இதயமே ங்கமு மிதனைமெய் கண்ட விடத்தின்மற் றிதயநோ யெல்லாஞ்
சிதையுமை யுறவுந் தீருமேவ் வினையுஞ் செய்யினுஞ் செய்தில ஞமால்.

(பொ-ள.) அத்விதீய பரமாத்ம சாக்ஷாத்காரமடைந்தவுடன் இவ்வதிகாரிக் கத்தியாசரூப ஹிருதயக்கிரந்தி பேதனத்தை யடையும்; ஆன்மவிஷயக சம்பூ ரணசம்சயங்கள் அறுபட்டுப்போம்; பிராரப்தகருமத்தினும் வேருய கருமங்க ளெல்லாம் க்ஷயத்தையடையும். இவ்வாறு ஆன்மசாக்ஷாத்காரத்தால் அஞ்ஞான நிவிருத்தி அதிகாரிக்குண்டாமாயின், அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபிநிவேசம் என்னும் பஞ்சக்கிலேச நீக்கமாம்; நீங்கவே மீண்டுந் துக்க அடை

வுண்டாகாது. ஜீவர்களிடத்தே தமது ஸ்வரூப அஞ்ஞானமிருக்கும்வரையுமே அவித்தை முதலிய பஞ்சக்கிலேசங்களிருக்கும்; அவற்றால் நானாவகைத் துக்கமுண்டாம். குரு சாஸ்திரோபதேசத்தால் ஆன்மசாக்ஷாத்காரமுண்டாமாயின், அஞ்ஞான நீக்கமாம்; நீங்கவே அவித்தையாதி பஞ்சக்கிலேசம் நீங்கும் நீங்கவே சர்வ துக்கநீக்கமுண்டாம். இவ்வாறு ஆன்மசாக்ஷாத்காரமகிமையால் சர்வ துக்கங்களுமற்ற அறிஞன் தனது பிராரப்த கருமசமாப்தியை யிச்சித்து இச்சம்சாரத்தே சஞ்சரிப்பன். ஹே சந்நியாசிகளே! தேகாதி சங்காதத்தின்கண்ணே ஆன்மபுத்தியையுடைய அஞ்ஞானிகள் அச்சங்காத பூஜன தாடனாதிகளால் சுகதுக்கத்தையடைவதேபோலவும், அநுகூலப் பிரதிகூலப் பதார்த்தப் பிராப்தியாற் சுகதுக்கங்களையடைவதேபோலவும், அறிஞன் சுகதுக்கங்களையடையான்; மற்றோ, இப்புத்தி தேகாதிசங்காதமே பூர்வ புண்ணியகருமத்தால் சுகத்தையடையும்; பூர்வ பாவகருமத்தால் துக்கத்தையடையும்; ஆன்மாவாய யான் அவற்றினும் பின்னன் என இவ்வாறு விசாரித்து அறிஞன் புத்திமுதலிய சங்காதத்தின்கண்ணே சுகதுக்காதி தருமங்களை யுடன்படுவன்; ஆன்மாவின் கண்ணுடன்படான். எங்ஙனம் உலகத்தே யாவன் தனது சரீரத்தினும் வேறாய சரீரங்களின் அபிமானமற்றவனோ, அவன் அவற்றின் சுகதுக்கங்களால் தன்னைச் சுகிதுக்கியென எண்ணானோ, அங்ஙனம் அறிஞன் தன் தேகத்தையும் வேறு தேகம்போல அறிவனாதலின், சரீரசுகதுக்கங்களால் தன்னான்மாவைச் சுகிதுக்கியென வுடன்படான். பரஸ்பர விவாதஞ்செய்யு மிருவரின் சுகதுக்கங்களை மத்தியஸ்தன் அறியினும் தன்பாலுடன்படாததேபோல, அசங்க அறிஞனும் சங்காத சுகதுக்கங்களையறியினும் தன்வடிவத்தே அவற்றை யுடன்படான். கனாக்காண்பவன் பூர்வ கர்மவாசனானுசாரமாய் நானாவகைக் கனாவைக் காண்பதேபோல, அறிஞனும் பிராரப்த கருமானுசாரம் சமாதியினின்றுங் கிளம்பியகாலத்தே சுகதுக்காதிப் பிரபஞ்சத்தைக்காண்பன் அபித்யானம், யோஜனை, தத்துவபாவம் என்னும் மூன்றவஸ்தைகளுள் பிரதமாவஸ்தையின் பலமாகக் கூறிய அவ்வைசுவரியமோ தேவராஜாவாய இந்திரருக்கும் துர்லபமாம். துவிதீய அவஸ்தையின் பலமாகக்கூறிய அவ்வைசுவரியமோ பிரஹ்மாவிற்கும் துர்லபமாம். திருதீய அவஸ்தையின் பிராப்தியால் அறிஞனுக்கு அவித்யாசகித சர்வ சமஸ்காரங்களின் நாசமாம்; அதனால், பரமேஶ்வர ஐஶ்வரியரூபபலம் பிராப்தமாம். அவ்வவஸ்தை கிடைக்கப்பெறவே, அறிஞன் தன்னான்மாவையும் அன்னிய பதார்த்தங்களையும் பின்னரூபமாய் ஸ்மரணமும் செய்யான். அத்தத்துவபாவத்தையடையவே, இவ்வாப்தகாம அறிஞன் சர்வ பேதமற்றவனாவன்; மனவாணிகட்கவிஷயனாவன்; சர்வ உபமானமுமற்றவனாவன்; சுயஞ்சோதியாய ஆநந்தவடிவனாவன். ஹே சந்நியாசிகளே! சுருதியின்கண்ணே சத்தியசப்தத்தால் கூறப்பெற்ற பிராணன் லோகாந்தரத்தின்கண்ணே கமனஞ்செய்யாது; மற்றோ, இச்சரீரத்தின்கண்ணே இலயத்தையடையும். இவ்வாறாய ஐசுவரியரூபபலத்தை எவனோ ஒருவன் முடிவானபிறப்பிலேயடைவன். லோகாந்தரத்தின்கண்ணே கமனஞ்செய்யாத பிராணனையுடைய அபரோக்ஷஞானி இவ்வுலகத்தே அத்தியந்தம் துர்லபனாவன்; ஏனெனின், ஆயிரம் மனுஷருள் ஒருவனே மோக்ஷமடைய இச்சிப்பனாதலின், யாவருள்ளும் முமுட்சு துர்லபனாவன். ஆயிரம் முமுக்ஷுவுள்ளும் ஒரோமுமு

கூ சிரவணாதிசாதன சம்பன்னனுவனுதலின், சிரவணாதிசாதன சம்பன்ன முமு க்ஷு துர்லபனுவன். அத்தகையர் ஆயிரவருள்ளும் ஒருவனே ஆன்ம பரோக்ஷ ஞானமுடையவனுவனுதலின் அத்தகையன் துர்லபனுவன். அத்தகையர் ஆயிரவ ருள்ளும் ஒருவனே அபரோக்ஷ ஞானமுடையவனுதலின், இராகத்வேஷமற்றவ னும் சர்வ பூதங்களையும் தன்னுன்மவடிவமாய்க் காண்பவனும் ஆய அத்தகைய அறிஞன் இவ்வுலகத்தே அத்தியந்தம் துர்லபனுவன். இவ்வார்த்தையைக் கீதை யின்கண்ணும ஸ்ரீ பகவான் அருளிச்செய்துளார் :—

மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஸ்சித்யததி ஸித்தயே ।
யததாமபி ஸித்தாநாம் கஸ்சிந்மாம்வேத்தி தத்வத: ॥

மாயுமாநுட ரனேகர்பாலொருவ னென்னையாயுமனம் வைத்துளா
ளுயுமாநுட ரனேகர்பாலொருவ னேயறிந்துமுடி வானையா.

(பொ-ள்.) ஹே அர்ச்சுன ! இவ்வுலகத்தே ஆயிரம் மனுஷருள் ஒருவனே எம்மையடைய முயல்வன் ; முயல்பவர் ஆயிரவருள்ளும் ஒருவனே எனது உண் மைவடிவத்தை உணர்வன் ; ஆகையால், ஆன்மாவின் அபரோக்ஷஞானமுடைய வன் இவ்வுலகத்தே அத்தியந்தம் துர்லபனுவன். இத்தகைய பிரஹ்மவேத்தாவை ஜனிப்பித்த மாதாபிதாக்களும் கிருதார்த்தராவர். அவனுண்டாய குலமும் கிரு தார்த்தமாம். அவன் சஞ்சரித்த பூமியும் கிருதார்த்தமாம். அவனை ஜனிப்பித்த தாய்தந்தையரின் மகிமையும் கூறமுடியாதாயின், அவன் மகிமை எங்ஙன் கூறலா கும் என்பது கருத்தாம். ஹே சந்நியாசிகளே ! ஐயநதிரிபறஆன்மாவைச் சாக்ஷாத் கரிப்பவன் ஒருகால் பிரஹ்மஹத்தியாதி பாவகருமங்களைச்செய்யும் மகா பாதக ஜீவன்மீது கிருபாதிருஷ்டியைச செய்யின், அவன் அப்பாதகத்தினின்றும் விடுபடு வன். இவ்வார்த்தை வேறிடத்துமுளது :—

யஸ்யாநுபவபர்யந்தா புத்திஸ்தத்வே ப்ரவர்த்ததே ।
தத்த்ருஷ்டிகோசரா: ஸர்வே முச்யந்தே ஸர்வகில்பிஷை: ॥

புணர்ந்த பாவமே லாம்பரி பூரண
முணர்ந்த ஞானி விழிபட வோடுமே.

(பொ-ள்.) எவன் மதி அத்விதீய ஆன்மாவின்கண் அபரோக்ஷானுபவம்வரை பிரவிருத்தித்துளதோ, அவ்வறிஞன் கிருபாதிருஷ்டியை யாவன் மேற்செய்கின்ற னனே அவன் சர்வ பாவமற்றவனுவன். ஹே சந்நியாசிகளே ! இவ்வுலகத்தே க்ஷயநோயுடையவன் நெடுநாட்குப்பின் தன் தேகத்தைச் சர்வதோஷ கிருகமா யறிவன்; அரோகதிட காத்திரனே சரீர தோஷங்களை யறியான். அதுபோல, நெடு ங்காலம் அத்விதீய ஆன்மாவைத் தியானிக்குமறிஞனே ஆன்மாவின் சச்சிதாநந் தாதி குணங்களை உண்மையாயறிவன். அவன் தன்னுன்மாவைப் பரமேசுரரூபமா யறிந்து அவரது ஐசுவரிய பலத்தையடைவன் ; அவன் அதனுற் சிறிதுமாத்திரை யும் பயத்தையடையான். யாண்டும் வியாபக அத்விதீயப் பிரஹ்மம் எனது ஆன்ம வடிவமாம் என்னும் அபேதஞானத்தினும் மேலாக அதிகாரிக் கறியவேண்டியது

யாதொன்றுமின்றும்; மற்றேே, இதுவே அறியத்தகுதியதாம். இச்சம்சாரரூப சக்கிரத்தே ஸ்திதியையுடைய சுகதுக்க போக்தாவாகிய ஜீவரூப ஹம்சம், சம்சார சக்கரஜனனியாய மாயாரூபசக்தி, ஜீவ ஹம்சத்தாலறியத்தகுந்ததும், ஜீவனைச் சுபா சுபகருமத்தே பிரேரணைசெய்வதும், எதன் ஞானத்தால் ஜீவன் ஈஸ்வரபாவத்தையடைவனே அத்தகையதுமாகிய அத்தற்பதார்த்தப் பிரஹ்மம் என்னும் மூன்றும் உண்மையாய் அத்விதீயப் பிரஹ்மரூபமேயாம். கடமடரூப உபாதிகளின் பேதத்தால் ஆகாசத்தின்கண்ணே பேதப் பிரதீதியாவதேபோல, ஜீவன், பிரஹ்மம், மாயை என்னும் மூன்றன்கண்ணுண்டாம் பேதப்பிரதீதியும் கற்பித உபாதி பேதத்தானே தோற்றும்; உண்மையாய் அம்மூன்றற்கும் பேதமின்றும். இவ்வண்ணம் தத்துவமபதார்த்தசோதனஞ்செய்த அதிகாரிக்கு விரைவாகவே ஆன்ம சாக்ஷாத்காரப் பிராப்தியாம். ஹே சந்நியாசிகளே! மாயாகாரிய தேகாதிபதார்த்தங்களினின்றும் ஆன்மா விலக்ஷணமாய்த் தோற்றுவதின்றுமாதலின், இதன்கண்ணே அத்விதீயரூபத்தன்மை சம்பவியாது; மற்றேே, அநேகரூபத்தன்மையே சம்பவிக்கும் என்னும் சங்கையை நீங்கள் உங்கள் மனத்தே ஒருகாலுஞ் செய்யாதொழிமின். ஏனெனின், இத்தேகாதி சங்காதத்தே எவ்வுபாயத்தாலேனும் ஆன்ம தரிசனம் உண்டாகாதொழியுமாயின், உங்கள் சங்கை சம்பவிக்கும்; ஆனால், இதன்கண்ணே அநேக உபாயங்களால ஆன்மாவின் சத்தை பிரதீதியாமாதலின், சங்கை சம்பவியாதாம். இப்போது இசசங்காததே பிரதமம் அனுமானத்தால் ஆன்மாவின் சத்தையைச் சித்தஞ்செய்வாம் :—காஷ்டத்தின்கண்ணேயிருக்கும் அக்கினி ஸ்வரூபமாய்ப் பிரதீதியாவதின்றுமாயினும, அதில் அக்கினியின்றெனக் கூறெறுதாம்; ஏனெனின், காஷ்டத்தே பிரதீதியாம் உஷ்ணத்தன்மை அனவின்றிச் சம்பவியாதாமாதலின், சரீர உஷ்ணததானே ஜீவானுமானமாவதே போல உஷ்ணத்தன்மைரூப ஹேதுவினல் காஷ்டத்தும் அக்கினியினனுமானமாம். அதுபோல, இத்தேகாதி சங்காததேயிருக்கும் ஆன்மா உபாயமின்றித் தோற்றமாட்டாதாயினும், இசசங்காததே ஆன்மாவின்றெனக கூறெறுதாம்; ஏனெனின், தேகதாரிகட்குக் கடபடாதி ஜடபதார்த்தங்களின் பிரகாசரூப ஸ்புரணம் ஆன்மாவின் சத்தையின்றிச் சம்பவியாதாதலின், அவ்வேதுவாலிச்சங்காதத்தே ஆன்மாவின் அனுமானமாம். ஆன்மானுமான ஹேதுவாகிய விளக்கம் பேதமற்றதாம்.

சங்கை :—ஹே பகவன்! இது குடம, இது படம், இது சுவர் என்பன முதலிய ஸ்புரணங்களின் பேதம் பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதியாமாதலின் விளக்கங்களின் அபேதம் எவ்வாறும்?

சமாதானம்:—ஹே சந்நியாசிகளே! அத்தலத்தும் கடபடாதிகளின் பேதமேயாகும் பிரகாசவடிவவிளக்கத்தே பேதமுண்டாகாதாதலின், அது எப்போதும் அபின்னமேயாம். அது தன்னெளிர்வில் வேறெவ்வொளியையும் அபேக்ஷிப்பதில்லையாதலின் ஸ்வப்பிரகாசரூபமாம்.

சங்கை :—ஹே பகவன்! நேத்திராதிகட்குக் கடபடாதிகளோடு சம்பந்தமாயின்மாத்திரம் இது குடம் இது படம் என்பதாதி ஸ்புரணம் உண்டாம். ஈண்டு

உற்பத்தியுடையனவெல்லாம் பரபபிரகாசமாம். குடமுதலியன உற்பத்தியுடையன வாதலின், பரப்பிரகாசமாவனபோல நேத்திராதிகளாலுண்டாதலின் ஸ்புரணமும் பரப்பிரகாசமேயாகும்.

சமாதானம் :—ஹே சந்நியாசிகளே! நேத்திராதிகள் அவ்விளக்கத்தையுண்டாக்குவனவாகுமாயின், அதன்பாற் பரப்பிரகாசத்தன்மை சித்தமாம். ஆனால், அவை அஃதையுண்டாக்கா; மற்றோ, அவை அந்தக்காணவிருத்தியை யுண்டாக்கும்வாயிலாய் அதனை இனிதுவெளிப்படுத்துமாதலின், உள்வெளிச் சர்வபேதமற்ற அது ஸ்வப்பிரகாசரூபமேயாம். அது தேகாதி சர்வசங்காதத்திலும் உள்ளாமாதலின், நூலுணர்ந்தோர் அதனை ஆன்மரூபமென்பர்; அது யாவற்றினும் அதிகப்பிரியமாம், சர்வபேதமற்றதாமாதலின், அதனை ஆநந்தரூபமென்பர்.

சங்கை :—ஹே பகவன்! ஸ்புரணம் ஆன்மரூபமேயாயின் அவ்வேதுவால் ஆன்மாவின் அனுமானமுண்டாகாது.

சமாதானம் :—ஹே சந்நியாசிகளே! அக்கினியினும் அபின்னமான உஷ்ணத்தன்மைரூபஹேதுவினுல அக்கினியின் அனுமானமுண்டாவதேபோல, ஆன்மாவினும் அபின்னஸ்புரணரூபஹேதுவினுல் இசசங்காதததே ஆன்மானுமானம் சம்பவிக்கும். கருத்திதுவாம்:—சத்து, சித்து, ஆநந்தம் என்னும மூன்று தர்மங்களும் உண்மையாய் ஆன்மஸ்வரூபமேயாயினும், கறபிதபேததனத யங்கீகரித்து அவற்றை ஆன்மாவின் சொரூப இலக்ஷணமென அங்கீகரிககபபட்டிருப்பதேபோல, உண்மையாய் ஆன்மஸ்வரூபமாகிய ஸ்புரணத்தின்கண்ணே கறபிதபேதமங்கீகரித்து ஆன்மாவின் சித்தியின்கண்ணே ஹேதுரூபத்தன்மை சம்பவிக்கும். உலகப்பிரசித்த இலெளகிகாக்கினியும, வேதத்தே பிரசித்த கார்ஹபதியாதி வைதிகாக்கினியும் காஷ்டங்களின் மதனரூபஉபாயத்தால் ஜீவர்கட்குப பிராப்தமாவதேபோலச் சுவாக்காதி லோகங்களின் பலபோக்தாவாய சம்சாரி ஆன்மாவும சர்வகுணங்களுமற்ற சுத்த ஆன்மாவும், அதிகாரிகட்கு ஸ்புரணரூபஹேதுஜன்னிய அனுமானரூப உபாயத்தாலடையப்பெறும். யாதேனும் ஒரு பிரதிபந்தவசத்தால் தத்துவமசியாதி வேதவாக்கியஙகளால் காரியசகித அவித்தையினும் பின்னரூபமாய்ப் பிரஹ்மான்மாவின் சாக்ஷாத்காரம அடையப்படாதாயின், சர்வார்த்தத்தையும் அறியும் மகான்மாவாகிய குரு அவ்வதிகாரிக்கு ஓஙகாரரூபப் பிரணவத்தியானத்தை யுபதேசித்து ஆன்மசாக்ஷாத்காரத்தை யடைவிக்க. இப்போது அந்தப்பிரணவத்தியானப்பிரகாரத்தை நிரூபிப்பாம்:—உலகத்தே காஷ்டரூப இரண்டுஅரணிகளின் மதனத்தால் அக்கினியை வெளிப்படுத்துவதேபோல, இச்சரீரம் கீழரணியாம்; பிரஹ்மவாசகப் பிரணவமந்திரம் மேலரணியாம்; இவ்வோங்காரரூபப் பிரணவம் பிரஹ்மரூப எனதான்மாவின நாமமே யாமென்னுஞ் சித்தவிருத்திகளின் நிரந்தரப்பிரவாகம் அவ்விரண்டின் மதனமாம். ஹே சிஷ்ய! இவ்வகை மதனத்தை நீ நிரந்தரஞ்செய்வையாயின், இச்சங்காதத்தே விரைவாகவே ஆன்மரூப அக்கினியைச் சாக்ஷாத்கரிப்பாயெனப் பிரணவத்தியானத்தை உபதேசித்துப் பிரஹ்மவேத்தாக் குரு அதிகாரிகட்கு ஆன்மசாக்ஷாத்காரத்தை யடைவிக்க. ஆகையால், பிரணவத்தியானமும் ஆன்ம சாக்ஷாத்கார உபாயமாம. ஜராயுஜாதி நான்கு சரீரங்களில்

ஆன்மாத் தோற்றாதாதலின் இச்சங்காதத்தேயில்லையாம்; இருக்குமாயின், எமக்குத் தோற்றலாமேயென்னுஞ் சங்கையை நீங்கள் உங்கள்மனத்தே யொருக்காலுஞ் செய்யற்க. ஏனெனின், யாது யாண்டு தோற்றாதோ அஃதாண்டில்லையாம் என்னும் நியமம் சம்பவியாது; மற்றோ, யாது யாண்டு எவ்வுபாயத்தானேனும் தோற்றாதோ அஃதாண்டில்லையாம் என்னும் நியமம் சம்பவிக்கும். இச்சங்காதத்தோ அநேக உபாயங்களால் ஆன்மாவின் றோற்றமாகின்றதாதலின், இச்சங்காதத்தே ஆன்மாவில்லையாம் என ஆசங்கித்தல் சம்பவியாதாம். ஹே சந்நியாசிகளே! இச்சங்காதத்தேயிருக்கும் ஆன்மாவின் சாக்ஷாத்காரம் உபாயங்களாலுண்டாம் என்னும் பொருளைத் திடஞ்செய்யும்பொருட்டு உங்கட்கு நான்கு திருஷ்டாந்தங்கூறுகின்றேன் நீங்கள் கேளுங்கள் :—எள்ளுள்ளிருக்கும் எண்ணெய் பிரசித்தமாய்க் காணப்படுவதின்றாயினும், எள்ளை யரைத்தலாகிய வுபாயத்தால் எண்ணெய் வெளியாய்க் காணப்பெறும். தயிரின்கண்ணேயிருக்கும் நெய் பிரசித்தமாய்க்காணப்படாவிடினும் தயிரைக்கடைதலாம் உபாயத்தால் நெய் வெளியாகக்காணவரும். ஆற்றுமணலிலிருக்கும் நீர் பிரசித்தமாய்க் காணப்படாவிடினும் அம்மணலைத் தோண்டுதலாகியவுபாயத்தால் அந்நீர் வெளியாகக் காணவரும். காஷ்டத்தின்கண்ணிருக்கும் அக்கினி பிரசித்தமாய்க் காணபபடாவிடினும மதனவுபாயத்தால் அக்கினி பிரசித்தமாய்க் காணவரும். இதுபோலக் குருசாஸ்திராதி யுபாயமற்ற பகிர்முகனுக்கு இச்சங்காதத்தே ஆன்மதரிசனமுண்டாகமாட்டாதாயினும், உபதேசானுசாரமாயொழுகும் சிரத்தையையுடைய அதிகாரி இயம நியமாதி யுபாயங்களால் இச் சங்காதத்தேயே ஆன்மாவைச் சாக்ஷாத்கரிப்பன். நெய் பாலுள் வியாபித்திருப்பதே போல இவ்வான்மா சர்வ சகத்துள்ளும் வியாபித்திருக்கின்றது. இதுவே ஈப்வர வடிவமாய்க் கரும, உபாசனை, தவம் முதலிய தருமங்களின் சம்பிரதாயங்களைப் பிரவிருத்திப்பிப்பதாம்; அவற்றின்பலத்தைக் கொடுப்பதாம்; சர்வஜகத்தின் காரணரூபமாம். இத்தகைய வத்துவைக் குருவுபதேசித்தமகாவாக்கியத்தாற் சாக்ஷாத்கரிக்கு மதிகாரியே வேதங்களின் வேத்தாவாம். இவ்வெல்லா நூற்பொருளையும் சுருக்கிக் கூறினேம். இனி விஸ்தாரமாய்க் கூறுவாம் :—நீங்கள் சாவதானமாய்க் கேட்பீர்களாக. ஹே சந்நியாசிகளே! யாம் முன் ஹம்சரூபமாயும் பிரஹ்மரூபமாயும் கூறிய ஆன்மாவே தன்னுண்மைவடிவ வுணர்ச்சியின்பொருட்டு அதிகாரியின் சங்கற்பரூபமனத்தை ஸ்வரூபத்தின்கண்ணே அஷ்டாங்கயோக நெறியாற் சேர்க்கவே நிச்சயரூப புத்தியின் காரணமாம். அப்புத்தியால் அதிகாரி ஸ்வயஞ்சோதிவடிவ ஆன்மாவை நிச்சயஞ்செய்வன். அதன்பின் இசசங்காதத்தினின்றும் வேறுருவமாயிருப்பவனும், இதன் நியந்தாரூபமாயிருப்பவனுமாய அறிஞன் உள்வெளிப்பூரண வுருவமாயிருப்பன். சூரியமண்டலத்திருக்கும் சவிதாவெனப் பெயரிய அந்தரியாமியின் தியானமகிமையால் முன் எம்போன்ற அதிகாரிகள் சர்வ துக்கநீக்கப்பொருட்டும், பிரஹ்மாநந்த அடைவின்பொருட்டும் அவ் வீப்வர பராயணத் தூயமனத்தால் ஞானப்பியாசரூப யத்னஞ்செய்தனர். அந்தரியாமியின் சக்தியோடுகூடிய மனத்தால் அதிகாரி சுபகருமத்தின்கண்ணே ஏவும் வாக்கு முதலியவற்றையும் அந்தரியாமியே அதன்கண் ணடத்தும். அவை பூமாநந்தரூப நித்தியஈக ஞானத்தை வெளிப்படுத்துவனவாம். அவற்றினின்றும்

உற்பன்னமாய ஆன்மாகார புத்தியின் உற்பத்தியால் அதிகாரி அவற்றின்மீது பர மேசுவர அனுக்கிரக அனுமானஞ்செய்து ஸ்வப்பிரகாச பரமான்மாவையடைவன். அந்தரியாமியாய ஈஶ்வரானுக்கிரகமின்றி அதிகாரிக்கு ஆன்மாகார புத்தியுண்டாகாது. அஃதுண்டாதலின், அந்தரியாமியின் அனுக்கிரகம் அவசியம் அறியப் பெறுமாதலினனே மகான்மாக்களாய யோகிகள்முதலில் தமது சங்கற்பரூபமனத்தைப் பரமான்மாவின்கண்ணே சேர்ப்பர்; அதன்பின்னர்ச் சேர்த்தலாலுண்டாய நிச்சய ஆன்மகபுத்தியையும் பரமான்மாவின்கண்ணே சேர்ப்பர். அது ஸ்வயஞ் சோதிரூப பரமான்மாவின் வடிவமாய ஆநந்தத்தை விஷயஞ்செய்வதாம். அதன் பிரசாதத்தால் மகான்மாக்கட்கு இத்தேகத்தே ஆன்மசாக்ஷாத்காரமுண்டாம். பிராணன் அபானன் என்னும் இருவகை வாயுக்களின் பரஸ்பர இலய சிந்தனரூப உள்ளக்கினிஹோத்திரத்தை முன் மகாத்மாக்கள் செய்தனர்கள். அவர்கள் மனோரதத்தைப் பரமான்மா அதிகாரிகளாய நமக்கு ஆன்மஞான மனோரத பூரணஞ் செய்வித்ததேபோலப் பூரணஞ்செய்யும்; ஏனெனின், சன்மார்க்கத்தின்கண்ணே யொழுகும் அதிகாரிகட்கு அனுக்கிரகஞ்செய்தல் ஈஶ்வரருக்கு இயற்கையேயாம். அவர் மனவாணிகட் கவிஷயமாயினும் அதிகாரிகளின் புத்திக்கு விஷயமாவர்; அவரது இவ்வோராச்சரிய சுபாவத்தைப் பாருங்கள். இங்ஙனம் சர்வ மனோரதங்களையும் அடைவிக்கும் பரமான்மாவின் துதியை யாமெப்போதும் செய்யவேண்டும். இப்போது அத்துதியின்பிரகாரம் கூறப்பெறும் :—ஹே சந்நியாசிகளே! அதிகாரிகட்கு ஆன்மசாக்ஷாத்கார அடைவில் அநேகவகை விக்கினமாமாதலின், அதை நீக்கும்பொருட்டு இவ்வகையாய பரமேசுவர ஸ்துதிசெய்க :— ஹே தற்பதார்த்த ரூபப்பிரஹ்மமே! ஹே துவம்பதார்த்தரூப ஜீவான்மாவே! உங்களிருவரின் அபேதரூபயோகத்தை யாங்கள் குருசாஸ்திரங்களோடுகூடிய தூய மனத்தாற் செய்கின்றேம்; ஏனெனின், சத்தியம், ஞானம், அநந்தம், பிரஹ்மம் என்பனமுதலிய அவாந்தரவாக்கியங்களோடுகூடிய தத்துவமசியாதி மகாவாக்கியம் உங்கள் வாஸ்தவவடிவ அபேதத்தையே கூறுகின்றது; 'ஸ்ருஸூவா உ௲செக ஊவாமு௱ ஸுவிகு' என்பதுமுதலிய சுருதிவசனம் இச்சகத்துற்பத்தியின் முன்னர் உங்களை அத்விதீயப் பிரஹ்மரூபமாய்க் கூறுகின்றது. இலௌகிகன் நெறியால் நகரத்தையடைவதேபோல, உமது தியானத்தால் எல்லாவிடர்களுமற்ற அதிகாரி ஆன்மஞான ரூபமார்க்கத்தால் பிரஹ்மாநந்தரூப மோக்ஷத்தையடைவன். உமது சாக்ஷாத்காரத்தையடைந்த அதிகாரி தனது மோக்ஷரூப கீர்த்தியைப் புத்திமான்களின் வாயிலாய் அநேகமுறை சிரவணிப்பன். தந்தையின்றனத்தே மைந்தனது பாகமிருப்பதேபோலப் பிரஹ்மாநந்தரூப மோக்ஷத்தே சம்பூரண அதிகாரிகளும் பாகமுடையவராவர். ஹிருதயாதி ஸ்தானங்களில் உம்மைச் சிந்திப்பவர், ஆன்மசாக்ஷாத்காரத்தையடைந்து அதன் மகிமையால் சூரிய சந்திராதிகளிடத்திருக்கும் பரமேசுர தேஜஸையடைவர். உண்மையாய்ச் சுத்தப்பிரஹ்மவடிவமும் அபேதவடிவமும் ஆகிய உம்மையடையும்வாயிலை யாங்கள் குருசாஸ்திர உபதேசத்தால் இனிதினுணர்வோம்; ஏனெனின், காஷ்டமதனத்தாலுதயமாய அக்கினி, யுண்டாந்தானத்தின்கண்ணே இலயத்தையடையும்; அதுபோலக் கான், மதி,

யருக்கன் முதலிய உலகுண்டாகி யொடுங்கும் மாயாவிசிஷ்ட சேதனமே உமது சத்துவவடிவத்தை யுணர்த்துமாதலின் அது உம்மையடையும் நெறியாம். ஏனெனின், மண்ணாகிய காரணமுணர்ந்தபின்னர்க் கடாதிகாரியங்களின் பேததரிசனம் நீங்குவதேபோலச் சர்வஜகத்தின் காரணரூப மாயாவிசிஷ்ட சேதனத்தின் ஞானமுண்டாயபின்னர் அதிகாரி பேததரிசன ஜன்னிய சர்வப்பிராந்தியையும் பரித்தியாகித்துத் தூயப் பிரஹ்மத்தையடைவன். இவ்வாறு தூயஆன்ம சாக்ஷாத்காரமுண்டானபின்னர்த் தற்பதார்த்தரூப ஈசுவரராய நீர் உமது பரோக்ஷத்தன்மை நீக்கப்பொருட்டுத் தாதாத்மிய சம்பந்தத்தால் இத் துவம்பதார்த்தரூப ஜீவனைச் சேவிப்பீர். இவன் தனது பரிச்சின்னபாவ நீக்கப்பொருட்டுத் தாதாத்மிய சம்பந்தத்தால் தத்பதார்த்தரூப உம்மைச்சேவிப்பன். இவ்வபேத தசையின்கண் நீர் உமது சாக்ஷாத்காரத்தால் அதிகாரியின் அவித்தையை யழிப்பீர்; அது ஜன்ம மரணாதி துக்கங்களின் காரணமாம். நானுவகைப் பேததரிசனகாரணமாமாதலின், அதிகாரி உம்மை யடையும்பொருட்டு அக்கினிஹோத்திராதி இஷ்டகர்மங்களையும், கூபதடாகாதிபூர்த்த கர்மங்களையும் ஒருகாலுஞ்செய்யான்; மற்றோ, ஆன்மஞானத்தையே யப்பியசிப்பன், அதனையன்றி வேறெவ்வுபாயமுங் கிடையாதாம். ஹே சந்நியாசிகளே! இவ்வாறு அதிகாரியானவன் அந்தரியாமியாகிய பரமான்மாவைத் துதித்துச் சர்வபாவங்களையும் நீக்கிக்கொள்வன். பாவப்பிரதிபந்தம் நீங்கவே சித்தம் சுத்தமாம், பின்னர் யோகஅடைவி னிச்சையுண்டாம், பின்னர் யோகத்தைச் செய்வன், அதனாற் சாக்ஷியாய ஆன்மாவைக் காண்பன், அக்காட்சியால் மோக்ஷ அடைவுண்டாம்; ஆகையால், முமுக்ஷுக்கள் முற்கூறிய முறையே பரமேஶ்வரப் பிரார்த்தனையை யவசியஞ் செய்யவேண்டும். இப்போது அஷ்டாங்கயோகத்தை நிரூபிப்பாம்:—ஹே சந்நியாசிகளே! இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்பன அஷ்டாங்கங்களாம். அவற்றுள், அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரஹ்மசரியம், அபரிக்கிரகம் என்பன இயமமாம். அவற்றுள், வாக்கான், மனத்தாற், காயத்தால், வாதையை எவ்வுயிர்க்கும் ஆக்காதது அஹிம்சையாம். பரஜீவர்களின் ஹிதத்தின்பொருட்டு உண்மை பேசுதல் சத்தியமாம். மறைவினிலாகினும் வலியினிலாகினும் பிறர்பொருள் வவ்வுதலின்மை அஸ்தேயமாம். நேத்திராதி இந்திரியங்களின் நிரோதவாயிலாய் உபஸ்த இந்திரிய நிரோதம் பிரஹ்மசரியமாம். சரீர நிர்வாகத்தினு மதிக போக சாதனங்களின் சங்கிரகஞ்செய்யாமை அபரிக்கிரகமாம். சௌசம், சந்தோஷம், தவம், சுவாத்தியாயம், ஈசுவரப்பிரணிதானம் என்பன நியமமாம். வெளித்தூய்மை உட்டூய்மையெனச் சௌசமிருவகைத்தாம். தோயமும் மண்ணுங்கொண்டு சுத்தமாகக் காயமேவிய மலங்கழுவல் வெளித்தூய்மையாம். மைத்திரி, கருணை, முதிதை என்பன முதலிய தர்மங்களால் தனது சித்தத்தைத் துவேஷாதி விகாரங்களினின்றும் நீக்கல் உட்டூய்மையாம். நுகர்வினை வயத்தாற் கிடைக்கப்பெற்ற அன்னவஸ்திராதிகளால் தன் பிராணதாரணஞ் செய்துகொண்டு அதிக பதார்த்த ஆசைப்படாமை சந்தோஷமாம். சீதோஷ்ணாதிகளைச் சகித்தலும் கிருச்சிரசாந்திராயணாதி விரதங்களையாற்றலும் தவமாம். பிரணவாதி மந்திரங்களை அப்பியசித்தல் ஜபமாம். அறிந்தேனும் அறியாமலேனும் செய்த பாபசமூகங்கள்

யாவற்றையும் கடவுள்பாலர்ப்பித்தல் ஈஸ்வரப்பிரணிதானமாம். ஆசனம் பாகியமெனவும் சாரீரகமெனவு மிருவகைத்தாம். தர்ப்பையைப்பரப்பி அதன்மேல் மான்றோல்விரித்து அதன்மேல் வஸ்திரம் விரித்தல் பாகியஆசனமாம். பதுமம், சுவஸ்திகம்,பத்திரம் இவைமுதலிய அநேகவகை யாசனங்கள் சாரீரக ஆசனமாம்; இடது பாதத்தை வலது துடையின்மேல்வைத்து, வலதுபாதத்தை இடது துடையின் மேல் வைத்தல் பதுமாசனமாம். இடதுபாதத்தை வலதுதுடையின் மடிப்புள் வைத்து, வலதுபாதத்தை இடது துடையின் மடிப்புள்வைத்தல் சுவஸ்திக ஆசனமாம். இருபாதங்களின் இருதலங்களை அண்டகோசத்திற் கருகாமையி லொருங்கு கூட்டி அவற்றின்மீது இருகரங்களையும் ஒருங்குகூட்டிவைத்தல் பத்திராசனமாம். பூரகம், ரேசகம், கும்பகம் என்னும் பேதத்தால் பிராணாயாமம் மூவகைத்தாம். இடதுநாசிவாயிலாய்ப் பாகியவாயுவையிழுத்துக் காயத்துண் ணிலைப்படுத்தல் பூரகமாம். அதனை வலதுநாசிவாயிலாய்க் காயத்துண்ணின்றும் வெளிப்படுத்தல் ரேசகமாம். பூரகரேசகபாவமற்ற வாயுவைக் காயத்துண் ணிரோதஞ்செய்தல் கும்பகமாம். இவ்வகையைக் குருவாயிலாயே அறியவேண்டும். உருவம் முதலிய விஷயங்களில் தோஷ தரிசனத்தின் பின்னர்ச் சித்தம் உண்முகப்படவே விழி முதலிய விஷயங்களினின்றும் தடைப்படல் பிரத்தியாகாரமாம். நாபிசக்கிரம், ஹிருதயம், நாசிகாக்கிரம் என்பன முதலிய விடங்களில் பரமான்மாவிடத்துத் தன் மனத்தைச்சேர்த்தல் தாரணையாம். விஜாதீயவிருத்திகளைப் பரித்தியாகித்துப் பரமான்மாவின்கண்ணே சஜாதீய விருத்திகளின் நிரந்தரப்பிரவாகம் தியானமாம். சமாதி, சவிகற்ப நிருவிகற்ப வேறுபாட்டால் இருவகைத்தாம். ஞாதா, ஞானம், ஞேயம் என்னுந் திரிபுடியிலங்கும் வாயிலாய் அத்விதீயப் பிரஹ்மத்தின்கண்ணே அந்தக்கரணவிருத்தியின்றிதி சவிகற்ப சமாதியாம். திரிபுடியிலங்காது விருத்தியாங்குறல் நிருவிகற்ப சமாதியாம். இரண்டனுள் முதலாவது சாதனமாம்; இரண்டாவது பலமாம். இதன்கண்ணும் இத்துணைச் சிறப்புளதாம். அங்கிவடிவ நிருவிகற்ப சமாதியின் விஷயமாய அத்விதீயப் பிரஹ்மமே தாரணை, தியானம், சமாதி என்னும் மூன்றற்கும் விஷயமாமாதலின், அவை யோகத்தின் அந்தரங்க சாதனமாம். இயமாதி ஐந்தனுக்கும் பின்னபதார்த்தம் விஷயமாதலின், அவை யோகத்தின் பகிரங்கசாதனமாம். இவ்வாறு அத்விதீயப் பிரஹ்ம சாக்ஷாத்கார முறவே அதிகாரியின் அவித்தை நாசத்தையடையும். பிரஹ்ம சாக்ஷாத்காரத்தால் ஒருமுறை நாசமுற்ற அவித்தை மீண்டொருகாலுமுண்டாகாதாம். இங்ஙனம் இயமமுதற் சமாதிவரையுமாய அஷ்டாங்கயோகத்தை யோகநூலுணர்ந்த முனிவர் கூறியுள்ளாராதலின், அதிகாரி முற்கூறிய பதுமாதி யாதனங்களுள் ஒன்றைக் கவர்ந்து ஒரு புனிததேயத்தே நிலைபெறவேண்டும். உதரம், மார்பு, கழுத்து முதலிய சரீர அவயவங்களைத் தண்டம்போல இனிது நேரே நிலைபெறுத்துக. பொறிகளாந் துஷ்டப் பரிகளை மனக்கயிற்றாற் கட்டி ஹிருதயதேயத்தேயிருக்கும் சாரதிரூப புத்தியின்கண்ணே சமர்ப்பணஞ்செய்க. வழிப்போக்கன் ஓடத்தால் நதியைக்கடத்தலேபோல, அதிகாரியும் பிரஹ்மஞானரூப திடவோடத்தால் அவித்தைநதியின் இந்திரியரூபப் பிரவாகத்தைத் தாண்டுக. பிரஹ்மஞான

யின்றி இந்திரியங்களைத் தாண்டல் அத்தியந்தம் துர்க்கடமாம்; ஏனெனின், மன க்கயிற்றாற் கட்டியிருப்பினும் பொறிகள் யாண்டாண்டுஞ் சென்று திரியும். இவை சம்சாரியின் துன்பப்பொருட்டே எப்போதும் முயலும். இத்துஷ்ட இந்திரியங் களின் நிரோதம் பிரத்தியாகாரமாம். அதிகாரியானவன் குருவுபதேச அநுசார மாய் முதலில் சரீரத்தின் முகாதி நவத்துவாரங்களைத் தடைப்படுத்துக; பின்னர் முகாதித்துவாரங்களிலிருக்கும் பிராணரூப வாயுவை இருதயதேயத்தின்கண்ணே நிரோதித்து அந்தர்வாயுவின் இலயமாம்வரை உற்சாகவாயிலாய்ப் பயிலுக. இலய மானபின்னர் நாசிகைவாயிலாய்ச் சுவாச உச்சுவாசத்தால் அதனைக் காயத்தினின் றும் வெளிப்படுத்துக; அது சூக்குமத்தன்மையை யடையாதவரைபயிலுக. பயிலும் அதிகாரிக்குப் பிராணவாயு வசமாம்போதெல்லாம் மனம் வசமாகும்; ஆகவே விழிமுதலிய பொறிகளும் எளிதாகவே வசமாம். ஏனெனின், சாரதியானவன் துஷ்ட அசுவங்களைக் கட்டுப்படுத்தும் கயிற்றைத் தன் வசமாக்கவே அப்பரிகளும் எளிதாகவே அவன் வசமாவதேபோல, அதிகாரியானவன் மனக்கயிற்றைத் தன் வசமாக்கின் இந்திரியரூப துஷ்ட அசுவங்களையும் எளிதாகவே தன் வசமாக்கிக் கொள்ளுவன். இனி யோகஞ்செய்யுமிடங் கூறப்பெறும் :—ஹே சந்நியாசிகளே! யோகாப்யாசஞ்செய்பவர்க்கு ஆசனஞ்செய்யும்பொருட்டு அத்தியந்தம் உயர்ந்திரா ததும் தாழ்ந்திராததும் கோமயாதிகளாற் பூசப்பெற்றதும், நதி முதலிய ஜலஸ்தா னங்களை அத்தியந்தஞ்சமீபத்தற்றதும், முண்முதலியவையற்றதும, மணல்,சூக்ஷ்ம மக்கற்களற்றதும், அத்தியந்தம் சீதமற்றதும், உஷ்ணமற்றதும், நாலுவகைப் பக்ஷி முதலியவற்றின் சப்தமற்றதும், கொதுகுமுதலிய ஜந்துக்களற்றதும், அத்தியந்தம் வாயுவற்றதும், பார்ப்பதினுலே நேத்திரமனங்கட்கு ஆநந்தம் விளைவிப்பதும் ஆய பர்வதக் குகை முதலிய தேசங்கள் சுகஹேதுவாம். ஆண்டு, ஆசனஞ்செறிந் து அதிகாரி யோகாப்யாசஞ்செய்க. யோகஞ்செய்யத் தொடங்கிய தேயத்தே ஒருகால் அதிகாரிக்கு ஏதாவது விக்கின சங்கையுண்டாமாயின், அத்தேயத்தே யோகாப்யாசத்தைச் செய்யற்க. விக்கின நிவிருத்தியின்பொருட்டு அதிகாரிக்கு ஆசனநியமம் கூறியிருப்பதேபோல, ஆகாரநியமமும் கூறப்பெற்றுளது. யோகாப் யாசி தனதுதரத்தை இருபாகம் அன்னத்தாற் பூரணம்செய்க. ஒரு பாகம் நீரால் நிரப்புக. இவ்வாறு அஷ்டாங்கயோகத்தால் ஆன்ம சாக்ஷாத்காரத்தையடைய இச்சிக்கும் அதிகாரிக்குப் பல சமீபகாலத்தே அணிமாதி சித்திகள் வெளிப்படும்; அவைகளில் ஆசக்தியையடையின், ஆன்மசாக்ஷாத்கார முண்டாகாதாமாதலின், அவை அதனடைவில் விக்கினங்களாம். இனியச்சித்திகளைக் கூறுவாம் :—ஹே சந்நியாசிகளே! இவ்வாறு யோகாப்யாசம் செய்யும் அதிகாரிக்கு ஆன்மசாக்ஷாத் கார அடைவுகாலஞ் சமீபிக்கின், தன் மனத்தே ஒருகால் பனிக்குச் சமான ரூபத் தைக்காண்பன், ஒருகால் தூமசமான ரூபத்தைக்காண்பன், ஒருகால் சூரியசமான ரூபத்தைக்காண்பன், ஒருகால் அக்கினியின்சமான ரூபத்தைக் காண்பன், ஒரு கால் வாயு சமான வுருவத்தைக்காண்பன். ஈண்டு, ஜல வெள்ளியரூபத்ததாம்பனி; இதுவே நீகாரமெனவும் துஷாரமெனவும் கூறப்பெறும். தூமங் கிருஷ்ணவர்ண முடையதாம். சூரியன் பிங்கலவர்ணமாம். அநேக வர்ணங்களின் சமுதாயம் பிங் கலவர்ணமாம். அக்கினி சிவப்புவர்ணமுடையதாம்., வாயு அதுருக்குச் சமான

சியாம வர்ணமுடையதாம். ஒருகாலவன் தன்மனத்தே மின்மினிச் சமானவுருவத்தைக் காண்பன், ஒருகால் மின்னலுக்குச் சமானரூபத்தைக்காண்பன், ஒருகால் வெண்பளிங்கு மணிக்குச் சமானரூபத்தைக்காண்பன், ஒருகாற் சந்திரசமான ரூபத்தைக்காண்பன். யோகி நேத்திரத்தால் திவ்யரூபத்தைக் காண்பதேபோலச் சுரோத்திரேந்திரியத்தால் நானாவகைத் திவ்ய சப்தங்களைக் கேட்பன். இரசன இந்திரியத்தால் நானாவகைத் திவ்ய இரசங்களைக் கவர்வன், கிராணேந்திரியத்தால் நானாவகைத் திவ்யகந்தங்களைக் கவர்வன். துவக்கிந்திரியத்தால் நானாவகைத் திவ்ய ஸ்பரிசங்களைக் கவர்வன். இத்துணையா வுட்சித்திகள் நிரூபிக்கப்பெற்றன. இப்போது வெளிச்சித்திகளை நிரூபிப்பாம்:—ஹே சந்நியாசிகளே! சமாதிகாலத்தே யோகிக்கு உட்சித்திகள் உண்டாவதேபோலக் கிளம்பிய காலத்தே பாகிய சித்திகள் உண்டாம். அக்கினியின் சம்பந்தத்தால் பொன்னின் சம்பூரண மலாதி விகாரம் நீங்குவதேபோல, யோகரூப அக்கினி பிராப்தமாகவே பாஞ்சபௌதிக தூலசரீரத்தின் சம்பூரணரோகமும் ஜராமிருத்தியுவும் நாசமாம். யோகமகிமையால் யோகியின் தேகத்தே இத்துணைக்குணம் உண்டாம். ஹஸ்தபாதாதியங்கங்களின் ஜடத்தன்மையின் அபாவரூப இலகுத்தன்மை யோகியின் தேகத்தே பிராப்தமாம். யோகியின் தேகத்தே அரோகத்தன்மையுண்டாம். மண் விண்ணுலகங்களின் விஷயங்களிடத்தே இச்சையுண்டாகாது. சுவர்ண சமானமாய் யோகியின் தேக வர்ணமாம். யோகியின் தரிசனத்தால் யாவர் மனமும் நேத்திரங்களும் ஆநந்தத்தையடையும். யோகியின் ஸ்வரமும் மதுரமாகும். சம்பகாதி புஷ்பகந்த சமானமாய்ச் சரீரம் சுகந்தமாகும். அக்காயத்தே அன்ன ஜலாதிகள் அத்தியந்தம் பக்குவமாமாதலின், மிகுதியாய் அவற்றை யுட்கொண்டும் விஷ்டை மூத்திராதிமலம் அற்பமாம். இவைமுதலாக அநேகவகைப் பலம் அந்த யோகிக்கு ஆன்மசாக்ஷாத்காரத்தின் முன்னருண்டாம். அக்கால், அவனுக்கு அணிமாதி யஷ்டசித்திகளுமுண்டாம். அவற்றின்கண்ணே அந்த யோகி ஒருகா லாசக்திசெய்வானாயின், ஆன்மசாக்ஷாத்காரமுண்டாகாதாம்; மற்றோ, அவன் யோகப்பிரஷ்டனெனப்பெறுவன். அவற்றைப் பரித்தியாகிப்பின், ஆன்மசாக்ஷாத்காரப் பிராப்தியுண்டாம்; அதனாலவன் கிருதார்த்தனாவன். பூஜிக்கும்பொருட்டு வெள்ளி முதலியவற்றாலாற்றிய சூரிய சந்திரமண்டலம் மண்ணான் மூடபபடின், அம்மண் மறைப்பின் நீக்கமின்றி அம்மண்டல தரிசனமுண்டாகாதாம்; மறறோ, அதன்பின்பேயுண்டாம். அஃதொப்ப யோகிக்குச் சித்திகளி லிச்சையிருக்கும்வரை அவன் ஆன்மாவைத் தரிசியான், சித்திகளைப் பரித்தியாகிக்கவே அத்விதீய ஆன்மசாக்ஷாத்காரமுண்டாம்; சர்வசோகங்களுமற்றவனாவன். யோகநூலுடையார் கேவல துவம்பதார்த்தரூப ஆன்மஞானத்தானே மோக்ஷப்பிராப்தியை யுடன்பட்டிருப்பதேபோல, நீங்களுடன்படவேண்டாம்; மற்றோ, இம்மகாபாக்கியமுடைய அதிகாரி முதலில் யோகமகிமையால் சர்வபேதமற்றசுயஞ்சோதிரூப தற்பதார்த்த பிரஹ்ம ஸ்வரூபத்தையறிவன்; அதன்பின்னர்க் காரியகாரண பாவமற்றதும், ஜன்மமரணாதி விகாரமற்றதுமாய துவம்பதார்த்தவடிவ ஆன்மாவையறிவன்; அதன் பின்னர் அத்விதீயப் பிரஹ்மம் யான் என இரண்டின் அபேதத்தை நிச்சயஞ்செய்தபோதே அவித்தை முதலிய

சர்வ பாசங்களினின்றும் முக்தனுவன். கேவல துவம்பதார்த்த ஞானத்தானே அவித்தையாதிபாச நீக்கமுண்டாகாதாம். யோகி சாக்ஷாத்கரிக்கும் சுயஞ்சோதியான்மாப் பூர்வாதி தசதிசைவடிவமாம். அதுவே பூர்வம் ஹிரண்யகர்ப்பரூபமாயுண்டாம்; பிரஹ்மாண்டரூபமாய் நீர்முதலியவற்றேயிருக்கும், ஸ்திரீகளின் கருப்பத்திருக்கும், புத்திமுதலிய சங்காதத்தின் உள்ளேயிருக்கும், சரீர இந்திரியாதி சங்காதத்தின் போக்தாரூபமாம். அக்கினி ஜலாதி மகா பூதங்களிலிருக்கும், உண்டாய பதார்த்தத்தும் உண்டாம் பதார்த்தத்தும் வியாபகமாயிருக்கும், சம்பூரண விசுவத்தையுண்டாக்கி அதன்கண்ணே தானே பிரவேசிக்குமாதலினுனே சர்வ ஜீவர்களினிருதயத்தே சாக்ஷிரூபமாயிலங்கா நிற்கும். ஸ்தாவர ஜங்கம சர்வ பதார்த்தங்களிலிருக்குமாதலின், சர்வ பூதரூபமாம். இத்தகைய சர்வரூப சுத்த பரமான்மாவின்பொருட்டு எனது அநேகங்கோடி நமஸ்காரமாகுக. ஆன்மசாக்ஷாத்காரத்தின் சாதனரூப அஷ்டாங்கயோகத்தை யாம் உங்கள்பொருட்டுச் சுருக்கமாய்க் கூறினேம். இப்போது அதனுலடையத்தக்க அத்விதீய ஆன்மசாக்ஷாத்காரத்தைப் பயக்கும் வித்தையை நீங்கள் கேட்பீர்களாக. ஹே சந்யாசிகளே! முன்னர் யாம்கூறிய பரமான்மாவும் இப்போது கூறிவந்த பரமான்மாவும் ஒன்றேயென அறிந்துகொள்ளுங்கள். இச்சம்சாரரூப ஜாலத்திற்குப் பரமான்மாவே சுவாமியாம் அதுவே தனது வசமாய மாயையின் அநேக சக்திகளால் சம்பூரணவுலகத்தையும் தன்வசமாக்கும்; ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி இலயம்செய்வதில் சமர்த்துடையதாம். இத்தகைய பரமான்மாவைக் குருசாஸ்திர உபதேசத்தால் எவ்வதிகாரி சாக்ஷாத்கரிப்பனே அவனே மோக்ஷரூப அமிருதத்தையடைவன். அதன் சாக்ஷாத்கார மடைந்தவனுக்கு மீண்டும் ஜன்மப்பிராப்தியுண்டாகாதாம். ஈண்டுண்டாம் பொருளழியும்; கடாதிகள் ஜன்மமுற்றனவாதலின், ஒருகாலத்து அவசியம் அழிவையு முறுமென்பதுபோலவாம். இவ்வறிஞனே ஆன்மசாக்ஷாத்காரத்தால் ஜன்மமற்றவனுதலின், மீண்டும் மரணத்தையடையான். அப்பரமான்மாத் தன் மாயையால் உலகவுதயதிதிகளைச் செய்வதேபோலப் பிரளயகாலமுறவே உலகையழித்துச் சர்வஜீவர்கட்கும் துன்பத்தைப் பயக்குமாதலின், சுருதிபகவதி அதனை 'ருத்திரன்' என வழைத்தனள். ஊர்ண நாபியானது தன் தேகத்தினின்றும் நூற்களையுண்டாக்கி, அவற்றைக் காத்து, அந்தியத்தே அவற்றைத் தம்பால் இலயப்படுத்துவதேபோல, அதுவும் சிருஷ்டிகாலத்தே ஜகத்தைத் தன்னினின்று முண்டாக்கித் திதிகாலத்தே காத்துப் பிரளயத்தே தன்பாலொடுக்கும். இவ்வாறு சம்பூரண ஜகத்தையும் தன்பாலிலயப்படுத்தி ஏக அத்விதீயரூபமாயிருக்கும். ஸ்தாவர ஜங்கம சரீரங்கள், அவற்றிலுள்ள நேத்திராதி ஞானேந்திரியங்கள், வாக்காதி கருமேந்திரியங்கள் என்பன யாவும் அந்தரியாமியாய பரமான்மாவுடையனவேயாம். அதுவே தன்மாயையால் முதலில் ஆகாசாதி பஞ்சபூதங்களையுண்டாக்கும், அதன்பின்பு சரீராதி பௌதிகங்களை யுண்டாக்கும் பக்ஷங்களோடும் இரண்டு புயங்களோடும் கூடிய பக்ஷி தனது கூண்டைக் கட்டுவதேபோல ஆகாசாதி பஞ்ச பூதரூப பக்ஷங்களோடும் அறம்பாவமாகிய இரண்டு புயங்களோடும்கூடிய பரமான்மாச் சம்பூரண பௌதிகப் பிரபஞ்சத்தையுண்டாக்கும், சுவர்க்காதி மேலுலகங்களையுண்டாக்கும், பூமிமுதலிய கீழுலகங்களையுண்டாக்கும். இதன்கண்ணே இத்

துணைச் சிறப்புளதாம் :—பக்ஷியோ தன்னிற் பின்னமாய கூண்டைச்செய்யும், பர மான்மாவோ தன்னையே ஜகத்தாருவமாய்ச்செய்யும். கருத்தியதாவாம்:—பக்ஷி தனது கிருகத்தின் கேவல நிமித்தகாரணமாம்; உபாதானகாரணமன்றும். பரமான்மா வோ இரண்டு காரணமுமாமாதலின், கேவலம் நிமித்தகாரணங்கொண்டு பக்ஷித் திருஷ்டாந்தம் கொடுக்கப்பட்டது. இரண்டு காரணத்தின்கண்ணே முற்கூறிய ஊர்ண நாபித்திருஷ்டாந்தமே நலமுடையதாம். எவ்வுருத்திரபகவான் சம்பூரண விசுவத்தினுமதிகரோ, வேதங்களையும் ஸ்மரிக்குமகா இருஷிவடிவரோ, சர்வ ஞா னங்களோடுகூடியவரோ, அக்கினிமுதலிய தேவதைகளையும் வாக்குமுதலிய இந்தி ரியங்களையும் பிறப்பித்திருத்தி யொடுக்குபவரோ, முன்னிரணிய கருப்பனை யுண் டாக்கினவரோ, ஸ்தாவரஜங்கமரூப சர்வ சரீரங்களையுமுண்டாக்குபவரோ, அவரே அதிகாரிகளாய நம்மனோருக்குச் சுபபுத்தியைக் கொடுப்பவராதலின், சுவேதாசுவ தர இருஷியாயயாம் பூர்வம் அந்த ருத்திரபகவானை இவ்வாறு பிரார்த்தித்தேம் :— ஹே ருத்திரபகவன்! சாத்விகி மூர்த்தியெனவும் தாமசி மூர்த்தியெனவும் தங் கட்கிரண்டு மூர்த்தங்களுண்டு, அவற்றுள் பிரஹ்மவித்தையைப் பிரவிருத்திப்பிக் கும் உமது சாத்விகி குருமூர்த்தத்தால் விசாரஹீன அஞ்ஞானிகளாய எங்களைப் பிரகாசிப்பிக்கவேண்டும். ஹே பகவன்! இவ்வுலகத்தே அந்தகர்க்குப் புத்திமான் களாய வைத்தியர் விழியைக்கொடுத்து ஒளிர்விப்பதேபோல மோகரோகத்தால் குருடாகிய புத்திரூப நேத்திரத்தையுடைய அதிகாரிகளாய எங்கட்குத் தங்களது குருமூர்த்ததரிசனம் செய்வித்து ஒளிர்விக்கவேண்டும். ஹே ருத்திரபகவன்! பாவிகளைச் சம்சாரரூபக் குழியின்கண்ணே வீழ்த்த வேறு நாரிவடிவ தாமசி மூர் த்தத்தைத் தாரணமசெய்வீர்; அது எங்கட்கின்பத்தைப் பயக்கும். அது காமக் குரோதாதிகரூப லோஹமயமாம். வில்லம்புபோல வைரியாதிகளை நீக்குவதாம், அத்தியந்தம் பயாநகவடிவுடையதாம். ஹே பகவன்! இத்தகைய அம்மூர்த்தத் தால் இச்சகத்வடிவபுருஷனைப் பிரமாதரூப மிருத்தியுவடையுமாறு செய்யற்க, அதி காரிகளின் வாஸ்தவஸ்வரூபத்தை மறைக்கற்க. ஹே சந்நியாசிகளே! இவ்வாறு யாம் அந்த ருத்திரமூர்த்தியைப் பிரார்த்தித்தபோது எமது அந்தக்கரணம் காமக் குரோதாதி விகாரமற்றுத் தூயதாயது, அதன்பின்பு யாம் அவரது குருரூப சாத் விக மூர்த்தத்தைக்கண்டேம், அதனல் கிருதகிருத்தியத்தன்மையை யுற்றேம். புத்திரனின்றிய தனவந்தன் மைந்தனையடைந்து தன்னைக் கிருதகிருத்தியனகக் கண்டதேபோலவும், எப்போதும் ஸ்திரீ சிந்தனஞ்செய்யும் காமியானவன் பிரிய நாயகியையடைவுற்றுத் தன்னைக் கிருதகிருத்தியனக வெண்ணுவதுபோலவும், அத்தியந்தம் கிருபணனகிய லோபியானவன் பூர்வமிழந்தபொருளையடைந்து தன் னைக் கிருதகிருத்தியனக வெண்ணியதுபோலும்; அந்தருத்திர பகவானுடைய சாத்விக மூர்த்தத்தை யடைவுற்று யாம் எம்மைக் கிருதகிருத்தியத்தன்மையுடை யேமாகமதித்தேம். அக்குருமூர்த்தம் செய்த உபகாரத்திற்குக் கைம்மாறுக இவ் வுலகத்தேனும் அவ்வுலகத்தேனும் அநேகம் பிறப்புற்றும் காணேம். யாம் அக் குருமூர்த்தத்தைத் தரிசித்துக் கிருதகிருத்திய பாவத்தையடைந்ததேபோல நீங் களும் முற்கூறிய ஸ்துதியைச்செய்து அக்குருமூர்த்தத்தைத் தரிசிப்பின் கிருத

ருத்திய பாவத்தையடைவீர்கள். அக்குருமூர்த்தம் எனக்கிவ்வாறு உபதேசித் தருளியது. ஹே மைந்த ! காரண அஞ்ஞானத்தோடுகூடிய இச்சம்சார சக்கிரத்திலும் பரமாய அத்விதீயப் பிரஹ்மமே உனது வாஸ்தவஸ்வரூபமாமன்றிக் கருத்தாபோக்தாவடிவ சம்சாரி உனது வாஸ்தவஸ்வரூபமன்றாம் என நானுவகையுக்திகளோடு அம்மூர்த்தம் எமக்கான்மோபதேசம் செய்தருளியபோது அதனுல் யாம் அநேக சம்சய விபரீதங்களற்றேம். இச்சம்சார ஜாலத்திலும் பரத்திருக்கும் அத்விதீயப் பிரஹ்மத்தை எமது ஆன்மவடிவமாயறிந்தேம். அது யாவினுமதிகமாம். அதனினுமதிகம் எதுவுமின்றாம். காரண அஞ்ஞானசகித ஆகாசாதி பஞ்சபூதம் பரமான்மாவினது சரீரரூபமாம். உண்மையாய்ச் சரீர மற்றதாம். ஆகாசம் தானிருக்குங் கடமடாதியுபாதிகளின் சமான ஆகாரமுடையதாகவே தோற்றுதல்போல எவ்வெச்சீவனுக்கு எவ்வாறெவ்வாறு சரீரமாமோ அவ்வச்சரீரத்தே பரமான்மா அவ்வவ்வுருவமாய் நிலைபெறும். ‘ ஸூக்ஷ்மேஷ்வணுஸ்தோஸ்யகேந ’ சிறு பெரு கொதுகு முதலிய அற்பசரீரங்களிலும், ஹஸ்தி முதலிய மகா காயங்களிலுமிருந்து பரமான்மா அவற்றின் சமான ஆகாரமுடையதாய்ப் பிரதீதியாகும்.

சங்கை :—ஹே பகவன் ! அந்தப் பரமான்மாச் சர்வ சரீரங்களிலும் இருக்குமாயின் யாவருக்குமேன் றோற்றவில்லை ?

சமாதானம் :—ஹே சந்நியாசிகளே ! சர்வ காஷ்டங்களுள்ளும் அக்கினி இரகசியமாயிருக்குமாதலின் அஃதவற்றின் மதனரூப உபாயமின்றித் தோற்றுதலே போலப் பரமான்மாவும் சர்வபூதப் பிராணிகளிடத்தும் குய்யமாயிருக்குமாதலின் ஆன்மஞானரூப உபாயமின்றி அது தோற்றமாட்டாது. ஊர்ணநாபிஜந்து தந்துக்களை நாற்புறமுங் கட்டி ஆங்குறைவதேபோலப் பரமான்மாவும் ஸ்தாவர ஜங்கமரூப ஜகத்தை நாற்புறமும் வியாபித்துறையும். அந்த ருத்திரபகவானுடைய குருமூர்த்தத்தையடைந்து பரமான்மாவைச சாக்ஷாத்கரிக்கும் அதிகாரியே ஜன்மமரணாதி விகாரமற்றவனுவன். இத்தகைய மாயாரூப தமத்தினும் பரத்தேயிருக்கும் சயஞ்சோதியாய வியாபக ஆன்மாவை யாம் அந்த ருத்திரபகவானது பிரசாதத்தானேயறிந்தேம். யாம் குரு உபதேசத்தானே அவ்வத்விதீயப் பரமான்மாவை நிச்சயித்துச் சம்சாரரூப மிருத்தியுவற்றிருப்பதேபோல மற்றைய அதிகாரிகளும் குருவுபதேசத்தானே பரமான்ம நிச்சயஞ்செய்து சம்சார மிருத்தியுவைக் கடக்குக. அஞ்ஞான நிவிருத்திபூர்வகப் பிரஹ்மபாவப் பிராப்திரூபமோக்ஷத்தையடையும்பொருட்டு ஆன்மஞானமின்றி வேறுயாதொருமார்க்கமுமின்றாம்; மற்றோ யான் அத்விதீயப் பிரஹ்மரூபனுயிருக்கின்றேன் என்னும் அபேதஞானமே மோக்ஷப் பிராப்தியின் மார்க்கமாமாதலின், அதிகாரியானவன் சிரவண மனனாதி சாதனங்களால் ஆன்மஞானத்தை யவசியம் சம்பாதனஞ்செய்க. ‘ தமேவவிதித்வாऽதிம்ருத்யுமேதி நாந்ய: பந்தா வித்யதேऽயநாய ’ அத்விதீயப் பிரஹ்மத்தைத் தனதான்மரூபமெனவறிந்து அறிஞன் சம்சாரரூப மிருத்தியுவைக் கடப்பன் ; மோக்ஷமடைய ஆன்மஞானமின்றி வேறொருமார்க்கமுமின்றாம். பரமான்மாச் சர்வ ஜகத்தின் ஆன்மரூபமாதலின் அதனினும் அதிகம் எதுவுமின்றாம், எதுவும் சூக்ஷ்மமன்றாம். அநேக சாகையிலைகளோடுகூடிய ஒரு பெரிய ஆலமரம் மிகுதியாய

அவகாசத்தை வளைத்திருப்பதேபோலப் பரமான்மாவும் சம்பூரண ஜகத்தை வியாபித்துத் தனது ஸ்வப்பிரகாச சொரூபத்தேயிருக்கும். இந்நிர்க்குணப் பரமான்மாவே சமஷ்டி ஸ்தூலசரீரரூப உபாதியின் சம்பந்தத்தால் விராட்டுருவமாயிருக்கும். சமஷ்டி சூக்ஷுமசரீரரூப உபாதியின் சம்பந்தத்தால் ஹிரண்ய கர்ப்பரூபமாயிருக்கும். சமஷ்டி காரண அஞ்ஞானரூப உபாதியின் சம்பந்தத்தால் ஈஸ்வரரூபமாயிருக்குமாயினும், அந்தப் பரமான்மாவின் அம்மூவுருவமும் கேவல முபாசனையின் உபயோகமேயாமாதலின், அவ்வுபாதியுக்தவது முமுக்ஷுக்களால் அறியத்தக்கதன்றாம்; மற்றோ, ஸ்தூலசூக்ஷும காரணத்தினும் பரமாயிருக்கும் ஆன்மாவின் நிர்க்குணவடிவமே முமுக்ஷுக்களால் அறியத்தக்கதாம்; ஏனெனின், அம்மூன்றின்கண்ணும் நாமரூபக்கிரியையென்னும் மூவகையாய ஜகத்துமிருக்கின்றது.நாமரூபக்கிரியையோடுகூடிய யாவும் மித்தையேயாகும், மித்தையாவனவெல்லாம் இரஜ்ஜு சர்ப்பம்போல நாசமுடையனவேயாம். அம்மூன்றும் மித்தையாதலின், நாசமுடையனவேயாமாதலின் முமுக்ஷுக்களால் அறியத்தக்கனவன்றாம்; மற்றோ, அம்மூன்றினும் பரமாயிருக்கும் சுத்த நிர்க்குண ஆன்மாவே முமுக்ஷுக்களாலறியத்தக்கதாம். இத்தகைய நிர்க்குணச சுத்த பரமான்மாவை எவ்வதிகாரி தன் ஆன்மரூபமாயறிவனோ அவனே மோக்ஷரூப அமிருதபாவத்தையடைவன்; அறிபாதவனோ, இசசம்சாரத்தே அநேகவகைத் துக்கங்களையடைவன். 'ய ஏதத் விது³ர் அம்ருதாஸ்தே ப⁴வந்த்யதே²தரே து³:க²மேவாபியந்தி' யான் அத்விதீயப் பிரஹ்மரூபன் என ஆன்மாவையறிந்தவனே மோக்ஷரூப அமிருதபாவத்தையடைவன்; அறியாதவனோ இசசம்சாரத்தே கேவலம் துக்கத்தையேயடைவன். இப்போது பரமான்மாவின் எங்கும நிறைநதிருக்குந்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே சந்நியாசிகளே! இவ்வுலகத்துள்ள ஜீவர்களின் முகம், மஸ்தகம், கழுத்து, ஹஸ்தம், பாதம் முதலிய அவயவங்கள்யாவும் பரமான்மாவினவேயாம். அது சர்வ ஜீவர்களின் ஹிருதயதேயத்தின்கண்ணேயிருக்கும, சர்வ ஜீவர்களின் ஆன்மவடிவமாமாதலின் சர்வகதமாம். ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே சோகாதிகளின் காரணவடிவ அவித்தையின்றாமாதலின், அவற்றின் விகாரமும் சம்பவியாதாம்; இதனானே சுருதிபகவதி அதனைச் 'சிவம்' என்றனள். ஆநந்தரூப ஆன்மா ஆகாசாதி மகாபதார்த்தத்தினும் மிகவும் மகானாம். அது ஜீவர்களின் சரீரரூப புரத்தின்கண்ணே எப்போது மிலங்கிக்கொண்டிருக்கும். அப்புரம், இருவிழி, இருநாசிகை, இருசுரோத்திரம், முகம், பாயு, உபஸ்தம், நாபி, மூர்த்தவாயில் என்னும் பதினொரு வாயில்களையுடையதாம். பரமான்மா ஜீவர்களின் ஹிருதயதேயத்தேயிருந்து ஜீவர்களின் புத்தியைச் சுபாசுப கருமங்களில் ஏவும். தனது சொரூபபூத ஆநந்தத்தைத் தனது ஸ்வப்பிரகாசரூபததானேயறியும். முக்காலத்துமுள்ள ஸ்தூலசூக்ஷுமபதார்த்தங்கட்கு அப்பரமான்மாவே சுவாமியாம். அது சூரியாதி ஜோதிகட்கும் ஜோதியாம். நாசமற்ற சாக்ஷியாய க்ஷேத்திரஞ்ஞரூபமாம். அது உண்மையாய் ஆகாசத்தைப்போல யாண்டும் பரிபூரணமாமாயினும் ஜீவர்களின் அங்குஷ்டமாத்திரபரிமாண ஹிருதயச் சித்திரத்தின்கண்ணேயிருந்து அத்தகைய பரிமாணமுடையதாய்க் கூறப்பெறும். ஸ்தாவர ஜங்கமரூப சர்வ ஜகத்தின்

கண்ணும் சமான வியாபகமாமாயினும், ஹிருதயதேயத்தின்கண்ணே புத்திமுத லிய சங்காதசாக்ஷிரூபத்தால் விசேஷமாய்த் தோற்றுமாதலின், சுருதிபகவதி அதனை ஹிருதயதேயத்திருப்பதென்றனள். புத்தியின் சர்வ விருத்திகளையுமேவும் சிரவணமனன முதலிய சாதனங்களோடுகூடிய அந்தர்முகத் தூயமனத்தானே அஃதறியப்பெறுமாதலின், தூயமனத்தால் அந்தரியாமியாகிய ஆன்மாவைச் சா க்ஷாத்கரிக்கும் அதிகாரியே மோக்ஷரூப அமிருதபாவத்தையடைவன். பரமான்மாச சர்வபூதப் பிராணிகளின் ஆன்மரூபமாமாதலின், ஆயிரம் மஸ்தகங்களையும் விழி களையும் பாதங்களையுமுடையதாம். பத்து அங்குல பரிமாணமுடைய காஷ்டத்தை வியாபித்து அதினுமதிக பாகியதேயத்தும் அக்கினியிருப்பதேபோலப் பரமான் மாவும் விராட்டு ஹிரணியகருப்பன் அவ்வியாகிருதம் என்னும் மூன்றையும் வியா பித்து அவற்றினும் அதிகதேயத்தின்கண்ணுமிருக்கும். அவ்வதிகதேயம பர மான்மாவின் மகிமைவடிவமாமாதலின், ஆகாசத்தைப்போல அவ்வாநந்தஸ்வரூப ஆன்மாப் பிரஹ்மாண்டத்தின் உள்ளும் வெளியும யாண்டும வியாபித்துநிற் கும். முக்காலத்துமுள்ள ஜகத்தியாவும் பரமான்மாவால் வியாபிக்கப்பெற்றதா மாதலின், அதுவே அதிகாரிக்கு மோக்ஷரூப அமிருதத்தைக்கொடுக்கும். கரும உபாசனைசெய்பவர்க்குத் தருமம் அர்த்தம் காமம என்னும் மூவகைப் புருஷார்த் தத்தை யடைவிக்கும். அதுவே இம்மண்ணின்கண்ணே அன்னரூபமாய் வெளிப் படும். அதனைப் பக்ஷித்தலால மனுஷ்யாதி ஜங்கமசரீரங்களுண்டாம். அந்தரி யாமி சர்வ ஜகத்தின் ஆன்மரூபமாமாதலின், அதவிதீயப பிரஹ்மரூபமாம். இவ் வுலகத்துள்ள ஜீவர்களின் ஹஸ்தபாத நேத்திரமுக சுரோத்திரமுதலிய அங்கங் கள் யாவும் பிரஹ்மத்தினுடையவேயாம். அது சர்வ ஜகத்தையும் வியாபித்து நிற்கும். உண்மையாய் நேத்திராதிகளற்றிருப்பினும் அவறறின் ரூபாதிவிஷயங் களியாவற்றையும் ஒளிர்விக்கும்; அதுவே சர்வ ஜகத்தின் சுவாமியாம். சம்பூரண ஜகத்தையும் தனது ஆணையின்படி நடததிவைக்கும், சர்வ ஜகத்தையும் காககும், சர்வ ஜகத்திற்கும் உபகாரஞ்செய்யும். மகாராஜாவானவன் தனது புரததே புகுந திருத்தல்போல, அதுவே ஜீவரூபமாய்த் தேகரூப புரத்தின்கண்ணே புகுந்திருக கும். இத்தேகம் முகாதி நவத்துவாரங்களையுடையதாமாதலின், விவேகி யிதனை நவத்துவாரபுரமென்பன். அன்னபானுதிகளின் பரிணாமரூப இரசாதி தாதுக்க ளால் இது நித்தியமும் பூரணமாமாதலின், விவேகி இதனைப் புரமென்பன். இப் புரத்தேயிருந்து ஜீவாத்மா தன்னை யத்விதீயப் பிரஹ்மரூபமாயறிந்து காரியசகித அஞ்ஞானத்தை நாசஞ்செய்யுமாயின் ஹமசமெனப்பெறும். இவ்வம்சம் இப்புரத் தின்கண்ணேயிருந்து விஷயங்களின் பிராப்தியின்பொருட்டு வெளிப்போந்து நானு வகைச் சேஷ்டையைச்செய்யும். விஷயாசக்தகாமி ஸ்திரீகளின்வசமாய் வசியென் னும் பெயரையடைவதேபோல, உண்மையாய்ச் சுதந்திரமாயிருந்தபோதிலும் பர மான்மா அவித்தையாகிய உபாதிசம்பந்தத்தால் சம்சாரசக்கிரத்தையடைந்து சர்வ லோகர்கட்கும் வசமாங்கால் வசியெனப்பெறும். அல்லது, ஜீவர்களை வயஞ்செய்யும் சாதனமாய மந்திர ஔஷதாதிகளையுடையவனை வசியென்பதேபோல, ஸ்தாவர ஜங் கமரூப ஜகத்தை வசஞ்செய்யும் சாதனமாய சைதன்யரூபத்தன்மை பரமான்மா வின்கண்ணே எப்போது மிருக்கின்றதாதலின், சுருதிபகவதி அதனை 'வசி' என்

றனள். பரமான்மாப் பாணி யிந்திரியமற்றதாயினும் சர்வபதார்த்தங்களையும் கவ ரும், பாத இந்திரியமற்றதாயினும் மனத்தினும் அதிகவேகமுடையதாம், நேத்திர இந்திரியமற்றதாயினும் சர்வ ரூபங்களையுங்காணும், சுரோத்திரேந்திரியமற்றதா யினும் சர்வ சப்தங்களையுங்கேட்கும்.

சங்கை :—ஹே பகவன்! பரமான்மா சர்வ ஜகத்தின் உபாதானகாரணமா மாதலின், அதன்கண்ணே சர்வஜகத்தின் சம்பந்தமாம்; அத்தகையதின்கண்ணே நேத்திராதிகளின் அபாவங் கூறல் சம்பவியாதாம்.

சமாதானம் :—ஹே சந்நியாசிகளே! நேத்திராதி இந்திரியங்களும் அவற் றின் கோளகங்களும் சூக்ஷுமஸ்தூல சரீரத்தின்கண்ணேயிருக்குமன்றி ஆன் மாவின்கண்ணிராவாதலின், ஸ்தூல சூக்ஷுமசரீரத்தோடு தாதாத்மிய அத்தியாச மடைந்த ஆன்மாவிற்கு இந்திரியங்களோடு சம்பந்தமாம். பிரஹ்மவித்தையினல் சரீராதிகளோடு தாதாத்மிய அத்தியாசம்நீங்கிய முக்தாத்மாவின்கண்ணே இந் திரியசம்பந்தமின்றாம். இக்காரணத்தானே சுருதியின்கண்ணே பரமான்மாச் சர் வேந்திரியமற்றதெனப்பட்டது. மாயையின் சம்பந்தத்தானே அதனல் சர்வ இந் திரிய வியாபாரங்கள் சித்தமாமாதலின், அது சர்வேந்திரிய வியாபாரங்களின் கர்த்தாவெனப்படும். அதுவே சர்வ இந்திரிய வியாபாரங்களையும் செய்யும் என்ப தன்கண்ணே நீங்கள் ஆசசரியமடையாதீர்கள்; மற்றே, ஒரே மண் கடசராவாதி அநேகரூபத்தை யடைவதேபோல, ஜீவன் நேத்திராதிபாகிய காணங்களாலும் மனம் புத்திமுதலிய அந்தக்கரணங்களாலும் கவரப்பட்ட சம்பூரண பதார்த்த ரூபம் பரமான்மாவேயாமாதலின், அது தேசகால வஸ்து பரிச்சேதமற்று யாண் டும் நிறைந்ததாம். இத்தகைய சுயஞ்சோதி ஆநந்தவடிவ ஆன்மாவை உல கத்தே எச்சட சேதன பதார்த்தமும் விஷயஞ்செய்யமாட்டாதாதலின், பிரஹ்ம வேத்தாவாய அறிஞன் ஜகதுற்பத்தியின்முன்னரும் அத்விதீய ஆன்மாவின் திதி யைக் கூறுவன். பரமான்மா அணுவினும் அத்தியந்தம் அணுவாம், ஆகாசாதி மகான்களினும் அத்தியந்தம் மகானும். அது ஜீவர்களின் இருதயரூப குகையின் கண்ணே எப்போது மிருந்திலங்கும். இலங்கியபோதினும் குருவின் பூரணகிரு பையின்றி யடையமுடியாதாதலின், அதிகாரி விஷயவாசனையைவிட்டுக் குரு சா ணத்தையடைவன்; அவருபதேசத்தால அதனைச சாக்ஷாத்கரிப்பன்; அவனே காமக்குரோதாதி சர்வபாசங்களினின்றும் விடுபடுவன். தமது கலியாணமூர்த் தத்தால் நம்மியாவரையும் காக்கும் ருத்திரபகவானே நமக்குக் குருவாவர். அவ ரதிகாரிகட் கிவ்வாறுபதேசித்தருளுவர்:—ஹே சிஷ்ய! நீ யறம்பாவங்களின் கருத் தாவல்லை, அவற்றின் சுகதுக்கரூபபல போக்தாவுமல்லை; மற்றே, வேதாந்த சாஸ் திரத்தின்கண்ணே கூறிய அத்விதீயஆநந்தவடிவப் பிரஹ்மஸ்வரூபமே நீ இப்பொரு ளில் நீ சிறிதுமாத்திரையும் ஐயபபடவேண்டாம். நினது ஸ்வரூபத்தினும் வேறாய ஜகத்தியாவும் கனவைப்போல அழிவுடையனவாம்; ஆதலின், நின்பால் இவை யாவும் கற்பிதமேயாம். ஹே சந்நியாசிகளே! இவ்வகையாய ருத்திரபகவானது உபதேசத்தால் உண்டாய அத்விதீய ஆன்மஞானத்தால் அதிகாரி சர்வ சோகத்

தையும் கடந்தவனுவன். உருத்திரபகவானுடைய உபதேசத்தால் அதிகாரி அத்விதீய ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்ததேபோல யாமும் சாக்ஷாத்கரித்தேம். அது அஜரமாம், சர்வ ஜகத்தின் ஆன்மவடிவமாம், புராதனமாம். விபுவாதலின் யாண்டும் வியாபகமாம், சர்வ பேதமற்றதாம். அஞ்ஞானி அதனைச் சனனமரணமுடையதென்பன். பிரஹ்மவேத்தாவாய அறிஞன் ஆன்மாவை நித்தியமென்பன். பரமான்மாவின் சாக்ஷாத்காரம் அசுத்த அந்தக்கரணமுடையவனுக் குண்டாகாகாமாதலின், அந்தக்கரணத் தூய்மையின்பொருட்டு அதிகாரி முதலிலிவ்வாறு சகுணப்பிரஹ்மத்தைச் சிந்தனஞ்செய்க. அந்தப் பரமான்மாவிற்குப் பரரூபமெனவும் அபரரூபமெனவும் இரண்டு ரூபமுண்டு. நிர்க்குணம் பரமாம்; சகுணம் அபரமாம். ‘ஷெவா ஙு-ஹூணொாஙெவ வாஙுாவாஙு’ இத்தகைய பர அபரரூப பரமான்மா ஓங்காரரூப பிரணவத்தின் அர்த்தரூபமாம், பரப்பிரஹ்மம் அதனிலக்கியார்த்தமாம், அபரப்பிரஹ்மம் அதன் வாச்சியார்த்தமாம். மீமாஞ்சைமுதலியவற்றின்கண்ணே சப்தத்திற்குத் தன்னர்த்தத்தோடு தாதாத்மியசம்பந்தம் அங்கீகரிக்கப்பட்டுளது; ஆகையால், பரமான்மாப் பிரணவரூபமாம். இத்தகைய பிரணவரூபப் பரமான்மாத் தனது மாயாசக்தியால் சிருஷ்டியினுதிகாலத்தே ஜீவர்களின் போகசித்தியின்பொருட்டுப பிரணவநாமத்தினின்றுமே சர்வ சப்தங்களையும் அர்த்தங்களையும் உண்டாக்கியது. அதுவே பிரளயகாலததுச் சம்பூரணப் பிரபஞ்சத்தைத் தனது சாந்தஸ்வரூபத்தின்கண்ணே இலயப்படுத்தும். இத்தகைய பரமான்மா நமக்குச் சுபபுத்தியைக்கொடுக்கும், அதன்பிரசாதத்தால் நாம் நமதான்மாவை அத்விதீயப் பிரஹ்மரூபமாய் நிச்சயஞ்செய்வோம். யான் பிரஹ்மரூபமாயுளன் என்னும் சுபபுத்தியால் அறிய யோக்கியமாய பிரஹ்மமே அக்கினிரூபமாம், ஆதித்தியரூபமாம், வாயுரூபமாம், சந்திரரூபமாட், அவ்வியாகிருதரூபமாம், தாராமண்டலரூபமாம், இருக்காதி வேதரூபமாம், சூக்ஷ்மபூதரூபமாம், ஹிரண்யகர்ப்பரூபமாம், விராட்டுரூபமாம், மரீசி தக்ஷப்பிரஜாபதிரூபமாம். இத்துணையால் பிரஹ்மத்தின்கண்ணே அதிதைவரூபத்தன்மை நிரூபிக்கப்பெற்றது. இப்போது அத்தியாத்மரூபத்தன்மை நிரூபிக்கப்பெறும்:—ஹே சந்நியாசிகளே! அந்தப்பிரஹ்மமே ஸ்திரீரூபமாம், புருஷரூபமாம், குமாரரூபமாம், குமாரிரூபமாம், விருத்தாவஸ்தையையுற்றுத் தண்டத்தைக் கரம்பற்றிப் பையப் பையக் கமனஞ்செய்யும், இவை முதலாக அதுவே சர்வ சரீரரூபமாகும். அதுவே அந்தக்கரணவிருத்திரூப உபாதியின் பேதத்தால் நானு ஞானரூபமாம். இவ்வாறு ஸ்திரீ முதலிய சரீரங்களோடு கூடிய துவம்பதார்த்தவடிவ ஆன்மாத் தற்பதார்த்தரூப ஈசுவரரினும் வேறன்றும்; மற்றுே, உபாதியைப் பரித்தியாகித்து ஜீவான்மா ஈஸ்வரரூபமேயாம். இப்போது உபாசனையின்பொருட்டுப் பரமான்மாவைப் பக்ஷிரூபமாய் வர்ணனம் செய்வாம்:—ஹே சந்நியாசிகளே! நிர்க்குணப் பிரஹ்மத்தை யறிவதிற் சமர்த்தற்ற மந்தபுத்தியதிகாரிகள்மீது தயைவைத்து மகாத்மாக்கள் விராட்டுருவப் பரமான்மாவைப் பக்ஷிரூபமாய் வருணித்துளார்; ஜகத்காரணவடிவ விராட்டுப் பகவான் பக்ஷிரூபமாம். அறுகின்தளத்திற்குச் சமானமாய்ச் சியாமவர்ணமாம். இரண்டு நேத்திரங்களும் அக்கினிக்குச் சமானமாய் இரக்தவர்ணமுடையனவாம். மாதாவினுதரத்தின்கண்ணே பாலகனிருப்பதேபோல மின்னலுக்குச் சமானமாய் விரைவாகவே

உற்பத்தி நாசமுடைய இவ்வுலகம் அப்பக்ஷியின் கர்ப்பத்தின்கண்ணிருக்கும். வசந்த இருது முதலிய நாலுவகைக்காலமும் இலவண சமுத்திரமுதலிய நாலுவகைச் சமுத்திரங்களும் அப்பக்ஷியின் பக்ஷரூபமாம். அதுவே உபாசகனைப் பிரஹ்மாண்டத்தினின்றும் வெளியே கொண்டுபோம். அதுவே பிரஹ்மாண்டத்துள்ளும் வெளியும் வியாபகமாம். அதன்பானின்றும் சதுர்த்தச புவனங்களுண்டாம். புவனங்களின் காரணரூப ஸ்தூலபூதமுண்டாம். இவ்வாறு சகுணப்பிரஹ்மத்தியானத்தால் அதிகாரியின் அந்தக்கரணம் சுத்தமாங்கால் எளிதாகவே நிர்க்குணப் பிரஹ்ம சாக்ஷாத்காரமுண்டாம். இவ்வார்த்தை அன்னியசாஸ்திரத்துமுளது:—

நிவிஷெஷம் வரம் ஬ஹ்ம ஸாக்ஷாத்கத்து மநீஶ்வராஃ ।
யெமஂ நாஸ்தாநுகம்பஂ ஸவிஶெஷ நிரூபணெ ॥
வஶீக்ருத மநஸெஷாஂ ஸகுணப்ரஹ்ம ஶீலநாத் ।
ததெவாவிஃ஭வெத் ஸாக்ஷாதபெதொபாயி கல்பிதம் ॥

சிறப்பறு பரம சிவந்தனை யறியுந் திறனிலா மாந்தருக் கருளாற்
சிறப்புறு சிவத்தை யறப்பெரி யவர்கள் சிந்தனை செய்யுமா பணித்தார்
சிறப்புறு சிவத்தைச் சிந்தனை செயவே சித்தமெய்த் தூயதா மாகச்
சிறப்பறு பரம சிவந்தனை யெளிதிற் செறிந்தறிந் திருந்துவா முவரால்.

(பொ-ள்.) நிர்க்குணப்பிரஹ்ம சாக்ஷாத்காரஞ் செய்வதன்கண்ணே சமர்த்தற்ற மந்தமதியினர்மீது தயைவைத்துப் பிரஹ்மவேத்தா குரு சகுணப்பிரஹ்மத்தைக் கூறுவர். அதன் தியானத்தால் அதிகாரிகளின்மனந் தூயதாங்கால் எளிதாகவே நிர்க்குணப் பிரஹ்மசாக்ஷாத்காரமுண்டாம். இத்துணையால் சகுணப்பிரஹ்மத்தியானப்பிரகாரம் நிரூபிக்கப்பட்டது; இனித் தூயமனமுடையவர்க்கு மகாவாக்கிய உபயோகி விசாரம் நிரூபிக்கப்படும்:—ஹே சந்நியாசிகளே! இவ்வாறு பரமேசுவரரிடத்தே பக்ஷிரூப கற்பனையைச்செய்து மீண்டும் மகான்மாக்கள் பரமான்மாவின்கண்ணே ஜீவ ஈஸ்வரர் மாயை என்னும் முப்பேத கற்பனை செய்தனர். சர்வஜகத்தின் காரணரூபமாயை பிறப்பற்றதாமாதலின், சுருதி பகவதி 'அஜை' என்றனள். அவ்வஜையாய மாயை எரி நீர் மண்ணென்னும் முக்காரிய ரூபத்தால் மூன்றுவடிவுடையதாம்; எரிவடிவத்தாலது சிவப்புநிறமுடையதாம்; நீருருவத்தாலது வெண்ணிறமுடையதாம், மண்ணுருவத்தாலது கறுப்புருவமுடையதாம். இவ்வாறு மூன்று வர்ணங்களையுமுடைய அது மூவுருவத்தால் தனக்குச் சமானமாய்ச் சர்வ ஜகத்தையுமுண்டாக்கும். இரக்த சுக்கில நீலநிறமுடைய மறிகள் தமது சமானரூபமுடைய மறிகளையே யுண்டாக்குவதேபோல, மாயையாகிய அஜையும் தன் சமானரூபமுடைய ஜகத்தையே யுண்டாக்கும். மறியைப் போகிக்கும் இச்சையுடைய மறி மறியைச் சேவிக்கும். நிட்காம மறியோ மறியைப் பரித்தியாகஞ்செய்யும். அதுபோலத் துவம்பத அர்த்தரூப ஜீவாத்மாவாகிய அஜம் மாயையாகிய அஜையைப் போகிக்கு மிச்சையுடையதாமாதலின், அது அதனைச் சேவிக்கும்; அதனால், அது கட்டுறும். தற்பதார்த்தரூப ஈஸ்வரராகிய அஜம் மாயையாகிய அஜையைப் போகிக்கு மிச்சையற்றதாமாதலின், அது அதனைப் பரித்

தியாகஞ் செய்யும்; இக்காரணத்தானே அது நித்தியமுக்தமாம். இப்போது வேறுரீதியானும் அந்த ஜீவேஸ்வரமாயையை நிரூபிப்பாம் :—ஹே சந்நியாசிகளே! சில மகான்மபுருஷரோ ஜீவன், ஈஸ்வரர், மாயை என்னும் மூன்றையும் இங்ஙனம் வருணிக்கின்றனர். பிப்பலாதிவிருக்ஷத்தின்மீது பக்ஷியிருக்கின்றதே போல இக்காரியசகிதமாயையோ விருக்ஷமாம். தற்பதார்த்தரூப ஈஸ்வரரும் துவம பதார்த்தரூப ஜீவனும் பக்ஷிகளாம். அவை உண்மையாய்ப் பரஸ்பரம் அபின்னங்களாம், சமானவுருவமுடையனவாம், ஒரே மரத்தை யாசிரயித்திருப்பனவாம், அவற்றுள், புத்தி விசிஷ்டஜீவரூப பக்ஷியோ அம்மரத்தின் அறம்பாவ புஷ்பங்களினின்று முண்டாய சுகதுக்கரூபபலத்தைச் சுவாதெனவெண்ணிப் போகிக்கும். ஈஸ்வரராகிய பக்ஷியோ அப்பலத்தை ஒருகாலும் போகியாது; மற்றோ, அது அப்பலத்தைக் கேவலம் ஒனிர்விக்கும். ஹே சந்நியாசிகளே! அஜரூபத்தானும், பக்ஷிரூபத்தானும் கூறிய சுருதி போக்தா அபோக்தாரூபத்தால் ஜீவேஸ்வர விலக்ஷணத் தன்மையைக் கூறியது. அதற்கு ஜீவபோக்திருத்தன்மையிற் கருத்தின்றாம்; மற்றோ, அதன் நீக்கத்தின்கண்ணே கருத்தாம். ஏனெனின், உலகாலறியப்பெறாத அர்த்தத்தைப் போதனஞ்செய்வதானே சாஸ்திரத்தின்கண்ணே பிரமாணரூபத்தன்மை சித்திக்குமன்றி வேறுவகையாற் சித்தியாதாம். அஞ்ஞானிகட்குச் சீவனிடத்தே போக்தாத்தன்மை பிரத்தியக்ஷசித்தமாமாதலின், அதன்கண்ணே சுருதிக்குக் கருத்தின்றாம்; மற்றோ, அதன் நீக்கத்தின்கண்ணே கருத்தாம்.

சங்கை :—ஹே பகவன்! சுருதி, ஜீவபோக்தாத்தன்மையை நீக்குவதில்லை; மற்றோ, அது ஈஸ்வரபோக்தாத்தன்மையையே நீக்குகின்றது.

சமாதானம் :—ஹே சந்நியாசிகளே! யாது எத்தானத்தே ஒரு பிரமாணத்தாலடையப்பெறுமோ, அதற்கே அத்தானத்தினின்றும் நிஷேதமாம். அங்ஙனமாகாதது நிஷேதமாகாதாம்என்பது சர்வசாஸ்திர சித்தாந்தமா மாதலின், சுருதி, ஈஸ்வரரிடத்தே போக்தாத்தன்மை எப்பிரமாணத்தானேனும் சித்தமாயிருக்குமாயின், அதை நீக்கலாம். அவ்வாறு அது அவரிடத்தே எப்பிரமாணத்தானும் சித்தமின்றாம், அல்லது, அவரிடத்தே போக்தாத்தன்மையை யங்கீகரிப்பவன்பாலிது கேட்கவேண்டும் :—அவர்பாலது காட்சி முதலிய இலௌகிகப் பிரமாணங்களாற் சித்தமா? அல்லது, சுருதியினாற் சித்தமா? முதலாவது சம்பவியாது; ஏனெனின், காட்சிமுதலியவை கடமுதலியவற்றையே விஷயஞ்செய்யுமன்றி அலௌகிக பதார்த்தத்தை விஷயஞ்செய்யாவாம். அவ்வீஸ்வரர் லோகப்பிரசித்தால்லராதலின் அலௌகிகராவர். அத்தகையரைக் காட்சி முதலியவை விஷயஞ்செய்யமாட்டா. இரண்டாவதுஞ் சம்பவியாதாம்; ஏனெனின், அவர்பால் போக்தாத்தன்மையைப் பிரதிபாதிக்கும் ஒரு சுருதியையுங்காணோம்; மாறாக 'நதஷ்நாதிகிம்அத' என்பது முதலிய சுருதிகள் அவரிடத்தே அபோக்தாத்தன்மையையே கூறுகின்றனவாதலின், அவர்பாலது எப்பிரமாணத்தானும்அடைவுறாதாமாதலின் நிஷேதமுஞ் சம்பவியாதாம்; மற்றோ, சுருதி இவ்வகையாய சங்கையை நீக்கித் துவம்பதார்த்த ஜீவனிடத்தே போக்தாத்தன்மையை நீக்கும். அச்சங்கை யிதுவாம் :—யான் பிரஹ்மரூபன் என ஜீவப்பிரஹ்ம அபேதத்தையுணர்த்தும் வசனம் வியர்த்தமாம்.

ஏனெனின், ஜீவனே கருமபல போக்தாவாம், பிரஹ்மமோ அபோக்தாவாம். போக்தாவிற்கு அபோக்தாவோடு அபேதம் சம்பவியாதாம். இவ்வகையாய வாதி யின் சங்கையைச் சுருதி நீக்கும்.

சங்கை :—ஹே பகவன்! ஜீவ ஈசுவரர்களை அஜரூபமாயும் பக்ஷிரூபமாயும் வர்ணனஞ்செய்யும் சுருதி, வாதியின் சங்கைநிவிருத்தியை எவ்வாறுசெய்யும்?

சமாதானம்:—ஹே சந்நியாசிகளே! சுருதி சங்கைநிவிருத்திசெய்யும் முறை யை நீங்கள் கேட்பீர்களாக :—தற்பதார்த்தரூப நிர்விகார ஈசுவரனிடத்தே அஜரூ பத்தன்மையும் பக்ஷிரூபத்தன்மையும் சப்தபலத்தாற் பிரதீதியாகினும் உண்மை யாயின்றாம்; மற்றோ, ஆரோபிதமாம். அதுபோலத் துவம்பதார்த்தரூப ஜீவனி டத்தே புத்திசம்பந்தத்தால் போக்தாத்தன்மை பிரதீதியாகினும் உண்மையா யின்றாம்; மற்றோ, ஆரோபிதமாம். கருத்திதுவாம் :—அநதக்கரணாதி யுபாதி களோடுகூடிய சேதனம் ஜீவனாம். அவ்வுபாதியைவிடுத்துச சீவனுடைய சாக்ஷி கூடஸ்தஸ்வரூபத்தின்கண்ணே முக்காலத்தும் போக்தாத்தன்மையின்றாம்; மற் றோ, அது அநதக்கரணத்தின்கண்ணதேயாம். அதனை யான்மாவின்கண்ணே ஆரோபித்து ஜீவனைப் போக்தாவென்பதேயன்றி யுண்மையாய் ஜீவனும் அபோக் தாவேயாவனாதலின், அபோக்தாவாய ஜீவனுக்கு அபோக்தாவாய பிரஹ்மத்தின் கண்ணே அபேதம் சம்பவிக்கும். அவவிரண்டுமிருககும் அவித்யாவிருக்ஷத்தின் கண்ணே இஜ்ஜீவரூப பக்ஷியானது தனதுண்மைவடிவத்தின் அஞ்ஞானத்தினானே சுகதுக்கரூபபலத்தைப் போகிக்கும். உடன்மதியாதிகளின் தாதாத்மிய அத்தி யாசத்தால் துக்கரூபக்கடலின்கண்ணே முழுகும், ஆற்றலின்மையையுற்று நானா வகைச் சோகத்தை யடையும். குருவின் கிருபையினால் அடைவுற்ற சுத்தபுத்தி யினால் சுயஞ்சோதி யாநந்தஸ்வரூப அத்விதீய ஆன்மாவைத் தேகாதிகளினும் வேறாக அறியும்போது சர்வசோகங்களுமற்றதாம். தற்பதார்த்த ஈசுவரரோடு அபேதபாவத்தை யடைந்து அவருடைய சர்வான்மபாவரூபமகிமையையடை யும். பிரஹ்மவேத்தாவாய குருவின் கிருபையால் அறிஞனவன் அடையும் தற் பதார்த்த ஈசுவரரது மகிமையை யாஞ்ஞவற்கியர் கார்க்கிக்கு அக்ஷரரூபமாய் வரு ணித்தார். அதன்கண்ணே இநத இருக்கு முதலிய வேதமிருக்கும், விஸ்வேதேவ தைகளும் அக்கினிமுதலிய தேவதைகளுமிருக்கும். இவைமுதலாக இவ்வெல்லா வுலகுமிருக்கும். இவ்வாறு சர்வஜகத்தின் அதிஷ்டானரூப அக்ஷரப்பரமான் மாவைச் சர்வாந்தரியாமிரூபமாயறியாத அஞ்ஞானி இவ்வுலகத்தே வாளாவாழ் கின்றனன். அறிந்த அறிஞன்வாழ்க்கையே பலமுடையதாம். கழுதையின்மீது வைத்த சந்தனக்கட்டையின்பாரம் அந்நீள்செவிய னுபகாரப்பொருட்டன்றாம்; மற் றோ, கிலேசத்தின்பொருட்டேயாம். அதுபோல அந்தரியாமியாகிய பரமான்மா வை அறியாத பகிர்முகர்கட்கு ஆறங்கங்களோடுகூடிய நான்குவேதங்களின் அத் தியயனமும் எவ்வுபகாரத்தின்பொருட்டு மாகாதாம்; மாறாக அபிமானமேயுள தாக்கும். ஹே சந்நியாசிகளே! எவ் வுங்களைப்போன்ற அறிஞரும் எம்மைப்போ ன்ற அறிஞரும் பரமான்மாவைத் தமதான்மரூபமாயறிவரோ, அவரே மகாராஜர்

விற்குச்சமானமாய்ச் சுகபூர்வகம் நிலைபெறுவர். வேதங்களின் அத்தியயன பலமும் ஆன்மஞானமேயாம்; அதனினும் அதிகபலம் எதுவு மதற்கின்றாம்.

சங்கை :—ஹே பகவன்! ஏக ஆன்மாவின் ஞானத்தால் அதிகாரி கிருதகிருத்திய பாவத்தையடையான்; ஏனெனின், ஆன்மாவினும் வேறாய் அநேக பதார்த்தங்கள் அறியத்தக்கன விருக்கின்றன.

சமாதானம் :—ஹே சந்நியாசிகளே! ஆன்மஞானமின்றி அதிகாரி அன்னியவுபாயமொன்றினாலும் சர்வ ஜகத்தையுமறியான்; மற்றே, இஃதொன்றினானேயறிவன்; ஏனெனின், கடபடாதி காரியங்கட்கு மண் நூல்முதலிய காரணமே உண்மைவடிவமாம். காரணமன்றிக் காரியத்திற் குண்மைவடிவம் வேறின்றாமாதலின், மண்முதலியவற்றின் ஞானமுண்டானபின்னர்க் கடாதிகளின்ஞானமும் அவசியமுண்டாம். மாயாவியாகிய இந்திரஜாலிகன் நானாவகை ரூபங்களின் காரணமாவதேபோலப் பரமான்மாவே தனது மாயையால் சர்வ ஜகத்தின் காரணமாம்; காயத்திரிமுதலிய நானாவகை சந்தங்களையுண்டாக்கும், நான்கு வேதங்களையுண்டாக்கும், அக்கினிஷ்டோமாதி நானாவகை யாகங்களையுண்டாக்கும், நானாவகைச் சுப அசுப சங்கற்பங்களையுண்டாக்கும், தவமே முதலாக நானாவகைவிரதங்களையுண்டாக்கும். இவை முதலாக முக்காலத்துமுள்ள உலகமியாவும் பரமான்மாவினின்றுமேயுண்டாமாதலின், பரமான்மவடிவ காரணஞானத்தால் உலகவடிவ காரியஞானம் சம்பவிக்கும்.

சங்கை :—ஹே பகவன்! பரமான்மா ஜகத்தை எம்மாயாசக்தியின் சகாயத்தாலுண்டாக்கியதோ அதன் வடிவமியாதாம்?

சமாதானம்:—ஹே சந்நியாசிகளே! அந்தகாரம் தன் சித்தியின்கண்ணே சூரியாதிப் பிரகாசங்களை அபேக்ஷியாததேபோலத் தன் சித்தியின்கண்ணே ஒரு பிரமாணத்தையு மபேக்ஷியாது சர்வ காரியங்களையுமுண்டாக்குவது மாயையாம். கனுக்காண்பவன் அவித்தையின் பலத்தால் கனவின்கண்ணே அநேகம் பதார்த்தங்களை உண்டாக்கிக் காத்தளிப்பதேபோலப் பரமான்மாவும் மாயையால் உலகின் உதயதிதிலயத்தைச்செய்யும். இவ்வாறு அதனினின்றுமுண்டாய இச்சம்சார சக்கிரத்தின்கண்ணே அவித்தையால நிரோதிக்கப்பட்ட ஜீவன் தன்னை அதனினும் வேறாகக்காண்பன், கருமரூப சிறைச்சாலையிற் காமக்குரோதாதி பாசங்களாற் கட்டப்பட்டவனாய் நானாவகைத் தீனதசையை யடைவனாதலின், மாயைக் கத்தியந்த ஆச்சரியரூபபல மிருக்கின்றது. இப்போது மாயையின் சாமர்த்தியத்தை நிரூபிப்பாம் :—ஹே சந்நியாசிகளே! மாயையைப பிரகிருதியென்றறிக, மகேசுரனை மாயையின் அதிஷ்டானமெனவறிக, எதனாலத்தியந்தம் செய்யக்கூடாத காரியஞ் செய்யப்படுமோ அது பிரகிருதியாம். பரமான்மா மாயையால் அத்தியந்தம் செய்யக்கூடாத காரியத்தைச் செய்யுமாதலின், நூலுணர்ந்தோர் மாயையைப் பிரகிருதியென்பர். பரமான்மா நிர்க்குணமாம், அசங்கமாம், ஜன்மாதி சர்வ விகாரமுமற்றதாம், ஏக அத்விதீயரூபமாம், இத்தகைய அத்விதீய ஆன்மாவின் கண் நானாத்தன்மை அத்தியந்தம் துர்க்கடமாயினும் மாயை அதனைக் காரியரூபமாய் நானாபாவத்தையடைவிக்குமாதலின், மாயையைப் புத்திமான்கள் பிரகிருதி

யென்றனர். இந்திர ஜாலக்காரனது மாயையின்கண்ணே பொய்ப்பொருளையுண்டாக்கல், ஒன்றை நானாவகையாய்க் காட்டல் என்னுமிரண்டு இயற்கையுண்டு. அத்தகைய மாயையோடுகூடிய இந்திரஜாலக்காரனை மாயியென்பதேபோலப் பரமான்மாவைப்பற்றியமாயையும் அவ்விருசுபாவங்களோடு கூடியுள்ளது; ஏனெனின், அவ்வொரே அசங்க நிர்க்குணப் பரமான்மா மாயையால் அநேகவகையாம், தன்னவயவவடிவ ஆகாசாதி இந்திரியாதி என்பவற்றால் சராசரவடிவச் சர்வ ஜகத்தையும் வியாபித்துநிற்கும். அதிகாரி எச்சரீரத்தின்கண்ணே னுமிருந்து பரமான்மாவைத் தன்னான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரிக்குங்கால் மோக்ஷரூப பரமசாந்தியையடைவன். அது ஜராயுஜாதி நால்வகைத் தேகத்தே ஏகவடிவமாய் நிலைபெறும்; சர்வ ஜகத்தினுற்பத்தி திதி இலயத்தைச் செய்வதாம், அதிகாரிகளை மோக்ஷமடையுமாறு செய்விப்பதாம், சர்வபுத்தி முதலியவற்றைப் பிரேரிப்பதாம், சர்வ தேவதைகளால் ஸ்துதிக்கத்தக்கதாம். இத்தகைய அத்விதீயப் பரமான்மாவைத் தன்னான்மரூபமெனவறிந்து அதிகாரி மோக்ஷரூபசாந்தியையடைவன். ஹே சந்நியாசிகளே! அதிகாரிகளாய நம்மனோர்க்குச் சுப புத்தியையடைவிக்கும் ஹிரண்யகர்ப்பாதி தேவதைகளையுண்டாக்கிய பரமான்மாவை யாம் முன்னருங்கட்குக்கூறினேம்; அதுவே இந்திராதி சர்வதேவதைகளின் அதிபதியாம். இம்மனுஷ்யாதி சரீரங்கள் பிருதிவியை யாசிரயித்திருப்பதேபோல, இப்பூமுதலிய லோகங்கள் பரமான்மாவை யாசிரயித்தேயிருக்கும்; அதுவே இருகால் மனுஷ்யர்கட்கும் நாற்கால் அசுவாதிகட்கும் விருக்ஷாதி ஸ்தாவரங்கட்கும் நியந்தாவாய ஈஸ்வரராம். இத்தகைய பரமான்மாவை மகிழ்விக்கும்பொருட்டு நாம் நெய், யவை எள் முதலிய அவிஷாலும், நானாவகை யன்னங்களாலும் பூஜிக்கின்றேம். நமக்கு ஆன்மசாக்ஷாத்காரம் உண்டாகாதவரையுமே நான்மொழிந்தமுறையே தத்தம் வருணாச்சிரம அனுசாரமாய் நெய்முதலிய ஹவிஷால் பரமான்மாவைப் பூஜிக்கவேண்டும். குருசாஸ்திர கிருபையாற் பரமான்மாவைத் தன்னான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரிக்கின் அது ஆன்மவடிவமேயாகுமாதலின், ஆன்மஞான அவஸ்தையின்கண்ணே அன்னபானாதிகளால் சரீரதாரணஞ் செய்தலே பரமான்மாவின் பூஜையாம். நேத்திராதி இந்திரியங்களால் அறியமுடியாமற் கேவலம் புத்தியினானே அறியப்பெறுவது சூக்ஷ்மமாம். பரமான்மாவோ புத்தியினானும் கவாமுடியாததாமாதலின், சூக்ஷ்மத்தினுமதிசூக்ஷ்மமாம். ஆன்மாத் தனதுஸ்வரூப அஞ்ஞானத்தால் அறம்பாவத்தைச்செய்யும், அதன்வயத்தால் அன்னவாயிலாய்த் தந்தையின் தேகத்தே செல்லும்; அதனினின்றும் வீரியவாயிலாய் ஸ்திரீயினுதரத்தே செல்லும். ஆண்டு ஸ்திரீயின் இரத்தத்தோடு கலந்து வீரியம் நுரையாகார கலில அவஸ்தையையடையும். அவ்வுபாதியின்கண்ணேயிருந்து பரமான்மா நானாவகைச் சரீரங்களையுண்டாக்கும். இவ்வாறு வடம் முதலிய பீஜங்களிலிருந்து நானாவகை விருக்ஷங்களையுண்டாக்கும். அது சரீரரூப உபாதியின் சம்பந்தத்தால் நானாரூபமாயிருப்பினும் உண்மையாய்ச் சர்வபேதமற்ற ஏக அத்விதீயரூபமாம்; ஸ்மரணமாத்திரையானே நமது பயத்தை நீக்குவதாதலின் மங்கலரூபமாம். இத்தகைய அத்விதீய ஆநந்த வடிவ பரமான்மாவைத் தன்வடிவமாய்ச் சாக்ஷாத்கரித்தவன் மோக்ஷத்தையடை

ந்து சர்வ துக்கங்களுமற்றவனுவன். வீரியாதி பீஜங்களிலிருந்து ஜகத்தையுண் டாக்கும் பரமான்மாவே ஜகத்தின் திரிகாலத்தே காஷ்டங்களின்கண் அக்னியே போலச் சர்வ ஜகத்திலுள்ளும் குஹ்யமாயிருந்து சர்வஜகத்தையுங் காத்தலினுனே சுருதிபகவதி அதை 'விசுவாதிபதி' என்றனள். அதன்கண்ணே யோகிகளும் உண்மூகப் பிராஹ்மணரும் ஹிரண்யகர்ப்பாதி தேவதைகளுமிருப்பர். இத்தகைய பரமான்மாவைச் சர்வ ஜகத்திலுபாதான காரணரூபமாயும் சர்வாந்தரியாமிரூப மாயும் அறிபவனே ஞானரூப வாளால் பிரமாதஜன்ய காமக்குரோதாதி பாசங்க ளைச் சேதிப்பன். தயிரினின்றும் வெளிப்போந்த நெய் தயிரினும் மேலாம். நெகிழ் ச்சியாயநெய்யினும் கனமாயநெய் அத்தியந்தம் சுவாதாமாதலின், அதனினுமது மேலாம். அதுபோல, இத்தூல சூக்ஷ்ம ஜகத்தினும் மாயாவிசிஷ்ட சகுணப் பிரஹ்மம் மேலாம்; அதனினும் நிர்க்குணச் சுத்தப்பிரஹ்மம் மேலாம். இத்தகைய ஆநந்தவடிவ சுத்தப்பிரஹ்மத்தை அதிகாரியானவன் தன்னுன்மவடிவமாயறி யின், காமக்குரோதாதி சர்வ பாசங்களினின்றும் விடுபடுவன். இருதயரூப உபாதி யின் சம்பந்தத்தால் அங்குஷ்டமாத்திரபரிமாணமுடையதென யாம் முற்கூறிய பரமான்மாவே யாண்டும் நிறைந்திருப்பதாம்; சர்வஜகத்தின் கர்த்தாவாம்; மன புத்தியாதிகளின் சாக்ஷிரூபத்தானும் பிரேரகரூபத்தானும் எப்போதும் பிரசித்த மாம்; சுயஞ்சோதிரூபமாம். இத்தகைய பரமான்மாவைத் தன்னுன்மவடிவமாய் அறிபவனே மோக்ஷரூப அமிருதத்தையடைவன். குருசாஸ்திர உபதேசத்தால் அதிகாரிகட்குப் பிரஹ்மாத்ம அபேதஞானமுண்டாயினே, சர்வ ஜகத் ஜனனி யாய மாயாரூபதமம் நாசத்தையடையும்; அக்கால் தினம் ராத்திரி ஸ்தூலம் சூக்ஷ்மம் இவை முதலாகிய எல்லாப்பொருளும் இலயபாவத்தையடையும்; அறிஞனுக்கு ஏகஸ்வயஞ்சோதி அக்ஷர சிவரூப ஆன்மாவே பிரகாசிக்கும்; அதனைக் காயத்திரி யாதி மந்திரங்கள் ஜகத்தின் காரண சூரியரூபமாய் வருணிக்கும். அதை யாரா தித்ததானே நமக்குத் தூயமதியுண்டாகியிருக்கின்றது; அதனுல் யாம் தற்பதார் த்தரூப பரமான்மாவைச் சாக்ஷாத்கரித்தேம். குருவுபதேசத்தின்முன்னர் நம க்கு அப்புத்தியுண்டாயது, அது பத்துத் திசையின்கண்ணும் பறந்துசென்றதாயி னும் அது ஆநந்தஸ்வரூப ஆன்மாவைக் கவரவில்லை. இப்போது குருவுபதேசத் தைப்பெற்று அப்புத்தி பரமான்மாவை யாண்டு நிறைந்ததெனக் கவர்ந்துளது. பரமான்மாவின்வடிவம் எத்தகையதென ஒருகாலும் சங்கியாதொழிமின்; ஏனெ னின், ஆவிற்குச் சமானவியறகையுடையது ஆமாவென்பதாமாதலின் அதை யறி விக்கும்பொருட்டு ஆவை யுவமிப்பதேபோல ஒரு பொருள் பரமான்மாவோடொப் பானவியற்கை யுடையதாமாயின், அதை யறிவிக்கும்பொருட்டு அதை யுவமிக்க லாம்; ஆனுல் அத்தகைய பொருள் யாதொன்றுமின்றுமாதலின், ஆன்மாவை யறிவிப்பதில் எவ்வநான்மபதார்த்தத்திற்கும் உபமானரூபத்தன்மை சம்பவியாது. சர்வ அனுன்மபதார்த்தத்தினும் அத்தியந்தம் பிரியரூபமாமாதலின், சுருதிபக வதி அதனை 'மகத்யசசு' எனக் கூறினள். இத்தகைய ஆநந்தவடிவ அத்விதீய ஆன்மாவை எவனும் சக்ஷு முதலிய இந்திரியங்களாற் கவரான்; மற்றே, அந்த ருத்திரபகவானது கிருபையைப்பெற்றவனே சர்வ விருத்திகளோடுங்கூடிய மன த்தை நிரோதித்து ஆநந்தஸ்வரூப ஆன்மாவைச் சாக்ஷாத்கரிப்பனுதலின், அந்த

ருத்திரபகவானை மகிழ்விக்கும்பொருட்டு அதிகாரி யிவ்வகை அவரைப் பிரார்த்திக்க :—ஹே ருத்திரபகவன்! தாங்கள் ஜன்மமரணாதி சர்வ விகாரங்களுமற்றவராதலின், எங்களுடைய காமக்குரோதாதி பாசங்களை நீக்குவதில் சமர்த்தராவீர். ஜீவிக்கப்பட்ட ஐந்து அக்கினியின்மத்தியிலிருந்து சகிக்கமுடியாத துக்கத்தையடைவதேபோல யாங்கள் இத்தேகத்தீயிலிருந்து நானாவகைத் துக்கங்களையடைகின்றோம். சுரமுதலிய வியாதிகளாலும் காமக்குரோதாதி யாதிகளாலும் உண்டாய அத்தியாத்மிக துக்கத்தாலும், சிங்க சர்ப்பாதிகளாலுண்டாய அதிபூத துக்கத்தாலும், அக்கினி ஜலாதிகளாலுண்டாய அதிதைவ துக்கத்தாலும் எப்போதும் பீடிக்கப்பட்டிருக்கின்றோம். அறம்பாவத்தால் பராதீனத்தன்மையையடைந்த பசுக்களாகிய யாங்கள் பசுபதியாகிய தங்களதீனர்களாவேம். அறம்பாவத்தின் பலத்தைக்கொடுப்பவர் தாங்களே, தங்களைப்போல உத்தாரணஞ்செய்யும் கிருபாலுவெங்குங்கிடையாது எங்களைப்போலத் தீனரெங்குங்கிடையார்; ஆதலின், தெய்வீகமாய்த் தங்களுக்கும் எங்களுக்கும் யோக்கியசம்பந்தமிருக்கின்றது. வேதங்கள் பிரமாணமாகுமாயின், சுகத்தைக்கொடுக்கும் சங்கரராகிய தாங்கள் ஜீவித அவஸ்தையின்கண்ணும் மோக்ஷ அவஸ்தையின்கண்ணும் பரிபூரணரூபராயின் எங்களுடைய ஜன்ம மரணாதி துக்கங்களை நீக்கவேண்டும். ருத்திரபகவான் சரணாகத ஜீவர்களைக்காப்பர் என்னும் வேதவசனத்தால் யாங்கள் தங்கள்மகிமையைக் கேட்டிருக்கின்றோமாதலின், பிறப்பிறப்பு முதலிய துயரறுக்கும்பொருட்டு அநாதர்களாகிய யாங்கள் தங்கள் சரணாகதராயினேமாதலின், தாங்கள் எங்களுக்கு ஆன்மஞானத்தைக்கொடுத்து எங்களுடைய சர்வ துக்கங்களையும் நீக்கவேண்டும்.

சங்கை :—ஹே சிஷ்யர்காள்! நீங்களே ஆன்மவிசாரஞ்செய்து ஜன்ம மரணாதி துக்கங்களை யறுத்துக்கொள்ளுங்கள் எமதனுக்கிரகத்தால் யாது பயன்?

சமாதானம் :—ஹே பகவன்! அற்பபுத்தியையுடைய யாங்கள் ஒருபொருளையு மறிந்திலேமாயின், தங்களுடைய அனுக்கிரகமின்றித் துர்விஞ்ஞேய ஆன்மாவை எங்ஙனமறிவேம். ஆகையால், மதிமான்களுள் எங்கள் கணக்கின்றும்.

சங்கை :—ஹே மைந்தர்காள்! நீங்கள் ஒருபொருளையும் அறியாதிருப்பிராயின், கற்போலச் சடரன்றோவாவீர்?

சமாதானம் :—ஹே பகவன்! சர்ப்ப வியாக்கிராதிகளோடுகூடிய ஒரு நிர்ச்சனவனத்தே ஒரு பாலகனைத் தனியாய்விட்டிடின் அவன் ஆங்கு அச்சமுற்றுக் கேவலந் துக்கத்தையே யனுபவிப்பன்; அதுபோல, யாங்களும் இச்சம்சாரரூப வனத்தின்கண்ணே கேவலந் துக்கத்தையே யனுபவிக்கின்றோம். இத்துணைமாத்திரையானே எங்கள்பாற் சேதனத்தன்மையாம். இவ்வனத்தே பசிதாகரூபப்பேய் எங்கட்குப் பரமதுக்கத்தைக் கொடுக்கின்றது. இவ்வனத்தினும் யௌவனவஸ்தாரூப மகாவனத்தே யடைவுற்ற அநாதர்களாய எங்களைக் காமதேவரூப சர்ப்பம் அடிக்கடி கடிக்கும். அது மிகவும் விஷமுடையதாம். அதைநீக்க ஸ்மராரியாகிய தங்கள் தியானமன்றி வேறுபாயம் கிடையாது; தங்கள்தியானமே பேருபாயமாம். அந்த யௌவனவனத்தே சப்தாதிவிஷய நரிகள் சுற்றும், மங்கையாங் காகமுளது.

அவை எங்களுடைய தர்மவிசாரரூப சரீரங்களை எப்போதும் ஹநநஞ்செய்யும். சம்சாரவனத்தே குரோதரூப சிங்கமிருக்கின்றது, அதன் கர்ச்சனையால் எங்களிருதயம் எப்போதுந் தபித்துக்கொண்டேயிருக்கும். இவ்வனத்தே லோபரூப தாக்ஷூவிருக்கும், (டாகினியின் வாகனம் தாக்ஷூவாம்.) சித்திரவர்ணத்தையுடைய அது தனது தரிசனத்தானே எங்களுடைய விழிகளைத் தபிப்பிக்குமாதலினுனே, லோபியைக்கண்டு தாதாவானவன் தனது விழிகளை லோபியின் பக்கத்தினின்றுந் திருப்பிக்கொள்வன். விந்தியாசலாதி பர்வதம் சூரியப்பிரகாசத்தை மறைப்பதே போல இவ்வனத்தே ஆன்மரூபச் சூரியப்பிரகாசத்தைமறைக்கும் அகங்காரரூப மகா பர்வதமிருக்கின்றது; இவைமுதலாக எண்ணமுடியாத துக்கங்கள் எங்களைத் தினந்தோறு முறுகின்றன. தாங்களத்தியந்தம் தயாளுசுபாவமுடையவர்களாயிருக்கின்றீர்களாதலின், எங்களுடைய துக்கங்களைக் கேட்பதினும் தாங்கள் வல்லமையற்றவர்களாவீர்களாதலின், தங்கள் முன்னிலையில் எங்களுடைய மிகுந்த துக்கங்களை வர்ணிக்கவில்லை. தற்புருஷ அகோர சத்யோஜாத வாமதேவ ஈசானமெனத் தங்கட்கு ஐந்துமுகங்களுள. அவை முறையே கிழக்கு முதலிய நான்கு திசைகளினும் மத்தியினுமிருக்கும். அவற்றுள்ளும் தெற்கிலுள்ள அகோரமுகம் அதிகாரிகட்குப் பிரஹ்மவித்தையை யுபதேசிப்பதில் அத்தியந்தங் குசலமுடையதாம். குருரூப அகோரமுகத்தால் எங்களைச் சம்சாரதுக்கத்தினின்றும் காப்பீராக. ஆன்மஞானத்தைத்தந்து சர்வ சோகங்களற்றவராக்குவீராக. ‘ தரதிசோகமாத்மவித்.’ ஆன்மாவையறிபவன் சர்வசோகத்தையும் கடப்பன். சர்வ சோகங்களையும நீக்கும் ஆன்மஞானம் எங்கட்குக் கிட்டாதவரை அன்னியபாவிகளின் புத்திராதி பிரியபதார்த்தங்களை மிருத்தியுவாய்க் கொல்வதேபோல எங்களுடைய புத்திராதிகளைக் கொல்லாதீர். எங்களுடைய புத்திர பௌத்திராதி சம்பந்திகளிடத்தும் கோ அசுவாதி பசுக்களிடத்தும் ரோகாதி யுபத்திரவங்களை யுண்டாக்காதீர். தாங்கள் சாக்ஷாத் மோக்ஷத்தை யடைவிப்பவராதலின், தங்கள் சந்நிதியில் புத்திராதி யனுன்மபதார்த்தங்களைக் காக்கப் பிரார்த்தித்தல் உசிதமன்றாயினும், புத்திராதி பிரியபதார்த்தங்களின் வியோகத்தால் எங்களுடைய சித்தத்தே கலக்கமுண்டாகும். அச் சித்தத்தில் தங்கள் தியானமுண்டாகாதாதலின், எங்கள் மிருத்தியுவிற்கு முன்னர் எங்கள் பிரியபுத்திரர்களையும் சகோதரர்களையும் அக்கினிகளையும் எங்கட்குபகரிக்கும் அரசர் முதலியோரையும் தாங்கள் மிருத்தியுரூபமாய் ஹனனஞ்செய்யாதீர் ; மற்றே, சம்பூரணப் பிரியபதார்த்தங்களையும் நீள்காலமிருப்பனவாகச் செய்யவேண்டும். தாங்கள் சுபாவமாகவே தயாளுவாதலின், எங்களுடைய பிரியபதார்த்தங்களை ஒருகாலும் ஹநநஞ்செய்கின்றிலீர்; மாறாக, அவற்றை நீள்காலமிருப்பனவாகச் செய்கின்றீர். ஆகையால், தங்கள் சந்நிதியில் அவற்றைக் காக்கப் பிரார்த்தித்தல் உசிதமன்றாமாயினும் தங்களுடைய தயாளுசுபாவத்தையே யாங்கள் அநுவாதஞ்செய்கின்றோம். முற்றுணிந்தபொருளை மீண்டுங்கூறலநுவாதமாம். தனதானியாதி பதார்த்தங்களோடுகூடிய யாங்கள் சுகபூர்வகமாய்த் தங்களை யாராதிப்போமாதலின் அவற்றோடு கூடுமாறு செய்யுவேண்டும். ஹே சந்நியாசிகளே ! இவ்வாறு அதிகாரிகள் ருத்திரபகவானைப் பிரார்த்தித்தபோது அவர் அதிகாரிகள்பால் மகிழ்வுற்று அவர்கட்குப் போக மோக்ஷமிரண்

டையுங்கொடுப்பர். ஆகையால், அவ்விரண்டும்வேண்டினர் அவரை யவசியம் பிரார்த்தனைசெய்க. 'ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்ம' அதிகாரிகட் கிதசாதனபதார்த்தத்தை அநேகவகையாய் நூலுணர்ந்தோர் நுவலுக; இதன்கண்ணே யாதொரு கூறியது கூறற்றோஷமும் மருவாதாம் என்னும் நியமம் சாஸ்திரத்தின்கண்ணே கூறப்பட்டிருக்கின்றதாதலின் அதிகாரிகட்குப் போகமோக்ஷத்தை யடைவிக்கும் பரமான்மாவி னுபதேசத்தை யாம் மீண்டு முங்கட்குச் செய்கின்றோம்; நீங்கள் சாவதானர்களாய்க் கேட்பீர்களாக. ஹே சந்நியாசிகளே! விருக்ஷத்தின்கண்ணே இலைகளால் மறைப்பட்ட மாம்பழம் முதலியவை இரகசியமாயிருப்பதேபோல வேதரூபவிருக்ஷத்தே அவித்தை வித்தை என்னுமிரண்டும் குஹியமாயிருக்கும். அக்கினிஹோத்திராதி கருமங்கள் அவித்தையாம், பிரஹ்மஞானம் வித்தையாம். அவ்வவித்தை ஜீவர்கட்குச் சுவர்க்காதிரூப அநித்தியபலத்தைக் கொடுக்குமாதலின், சுருதிபகவதி அதனை க்ஷரம் என்றனள். வித்தை மோக்ஷரூப நித்தியசுகத்தைக் கொடுத்தலின் அதனை அக்ஷரம் அமிருதம் என்றனள். அவ்விரண்டும் மோக்ஷமடையவேதுவாம். வித்தையோ சாக்ஷாத்ஹேதுவாம், அவித்தையோ பலேச்சையின்றிச் செய்யப்பெற்றதாய்ச் சித்தசுத்திவாயிலாய்ஹேதுவாம். அவ்விரண்டையும் ஏவுபவரும், அவற்றின் பலங்களைக்கொடுப்பவரும் ருத்திரபகவானேயாவர். அவ்விரண்டும் ஜீவர்கட்குத் தத்தம்பலத்தைக்கொடாமல் நாசத்தையடையா; மற்றோ, கொடுத்தபின்பே யழிவுறுமாதலின் சுருதிபகவதி அவ்விரண்டையும் அநந்தம் என்றனள். அவ்விரண்டும் சிவபெருமானுடைய பிரசாதத்தானே ஜீவர்கட்குக் கிடைக்குமன்றி வேறுபாயத்தாற்கிடைக்கா. ஆகையால் அவ்விரண்டிற்கும் உருத்திரபகவானே ஈசுவரராவர். ஜராயுஜாதி நால்வகைச் சரீரவுற்பத்திகாரணமாகிய பீஜங்களியாவற்றையும் பற்றிக்கொண்டு பரமான்மாவிருக்கின்றது; ஆகாசாதி சர்வபூதங்களையும் சர்வபீஜங்களையும் தன்னினின்றுமுண்டாக்கும். விசித்திரவர்ணமுடையவராதலின், சுருதியின்கண்ணே கபிலபதத்தாற் கழறப்பெற்றவரும், சர்வபதார்த்தங்களையுங் காண்பவராதலின் சுருதியின்கண்ணே இருஷிபதத்தாற் கூறப்பெற்றவரும் ஆய ஹிரண்யகருப்பர் இத்தூலஜகத்தின் முன்புண்டாயினர். அவருக்குப் பரமான்மா அர்த்தத்தோடுகூட நான்குவேதங்களைக்கொடுத்து நானாவகை ஞானங்களாற் காப்பாற்றும்; தூலஜகத்தை யுற்பத்திசெய்வதிற் சமர்த்தைக்கொடுக்கும்; அதுவே தத்துவமசிவாக்கியத்துள்ள தற்பதார்த்தவடிவமாம். அது முதலில் ஜராயுஜாதி நால்வகையோனிகளை யுண்டாக்கும். அவற்றினுள்ளும் ஒவ்வொன்றையும் இலக்ஷத்தொருவகையாய்ச் செய்யும்; யாவும் ஒருங்குகூடி 84 இலக்ஷம் யோனியாம். அவற்றுள்ளும் ஒவ்வொன்றையும் வலையைப்போல அவாந்தர அநேகபேதத்தோடுகூடியதாய்ச் செய்யும். இவ்வாறு சிருஷ்டிகாலத்தே சர்வஜகத்தையு முண்டாக்கிப் பிரளயத்தே தன் மாயைவடிவக்ஷேத்திரத்தே இலயஞ்செய்யும்; பின்னர்ச் சிருஷ்டிகாலத்தே மீண்டும் மாயைவடிவ க்ஷேத்திரத்தினின்றும் முன்போன்றே நானாவகையுமாய்ச் சகத்தையுண்டாக்கும், ஜகத்தைக்காக்கும் திக்குப்பாலகரையுண்டாக்கும். இவ்வாறு யாவற்றையுமுண்டாக்கி யாவற்றிற்கு மதிபதியாகும். விருஷபம்...பாரமெடுப்பதேபோலப் பரமான்மாச் சர்வ விசுவபாரத்தையும் தரிக்கும்.

சர்வஜகத்தின் உபகாரப்பொருட்டுச் சூரியரூபமாய்ப் பூர்வாதி தசதிசைகளைப் பிரகாசிக்கும். அதுவே அநேகசரீரங்களை யுண்டாக்கி அவற்றின் அநேக சுபாவங்களைத்தன்னிடத்தே ஆரோபித்து நிலைபெறும். புத்திராதி பிரஜைகளையுண்டாக்கும் ஸ்திரீபுருஷசுபாவத்தைத்தரித்து அதுவே பலத்தையடைவிக்கும். நானாயோனிகளின் சரீரங்களைப் பிற்பிற்காலத்தே அநேகவகையாய்ப் பரிணமிக்கச்செய்யும். ஒருகாற் பாலிய அவஸ்தையுடையதாயும் யுவா அவஸ்தையுடையதாயும் விருத்தாவஸ்தையுடையதாயும் இச்சரீரமாவதேபோலும். அது சர்வபதார்த்தங்களின் அதிஷ்டானமாம் என்னும்அர்த்தத்தின்கண்ணே யாம் விரிவாக யாதுசொல்லவேண்டியதுளது ; மற்றோ, நானாவகைச் சுபாவமுடைய எல்லாச்சரீரங்களுமே எப்பிரஹ்மாண்டத்தின் கருப்பத்தின்கண்ணேயிருக்குமோ அதையும் பரமான்மாவே தரித்திருக்கும், சர்வஜீவர்களையும் தத்தங்காரியத்தே யேவும். இங்ஙனம் சர்வஜகத்தின் காரணரூப அத்விதீயப்பிரஹ்மத்தை யாம் அந்த ருத்திரபகவானது திருவருளால் சாக்ஷாத்கரித்திருக்கின்றேம். அது உபநிஷத்தாற் பிரதிபாதிதமாம், சநாதனமாம், நானாவகைப் பிரவிருத்திரூப ஞானங்களில் ஸ்வப்பிரகாசரூபத்தாற் றிதமாம், சாஸ்திரவிசாரமற்ற மூடர்களால் அறியத்தகாததாம், யாம் அந்த ருத்திரபகவானது திருவருளால் தற்பதார்த்தரூபப் பிரஹ்மத்தை எமதான்மவடிவமா யுணர்ந்ததேபோல, முன்னர் ஹிரண்யகர்ப்பபகவானும், இந்திராதிதேவதைகளும், சநகாதிஇருஷிகளும் அவரது திருவருளால் சுயஞ்சோதியாய சர்வஞ்ஞபரமான்மாவைத் தமதான்மவடிவமா யறிந்தனர். அதுபோல இப்போதும் அவரை யாராதித்த மதிமானும் அத்விதீயப்பிரஹ்மத்தை அவசியம் அறியலாம். இவ்வாறு எவ்விரண்யகர்ப்பாதி தேவதைகள், இருஷிகள், மனுஷ்யர்கள், அத்விதீயப் பிரஹ்மத்தையுணர்ந்தனரோ அவர் யாவரும் பிரஹ்மபாவத்தையடைந்து மோக்ஷரூப அமிருதபாவத்தை யடைந்தனர். இத்துணையால் ஆன்மாவைத் தற்பதார்த்த ஈஸ்வரவடிவமென வர்ணிக்கப்பட்டது. இப்போது அவ்வான்மாவைத் துவம்பதார்த்த ஜீவரூபமாய் நிரூபிப்பாம்:—ஹே சந்நியாசிகளே ! சுபாவமாய் உஷ்ணப்பரிசமுங் கந்தமுமற்ற ஜலம் அக்கினியின் சம்பந்தமுற்று அதன் வெம்மையையடையும். அது புஷ்பாதிகளின் சம்பந்தமுறின் அவற்றின் மணத்தையடையும். அதுபோல உண்மையாய்ச் சர்வதர்மமுமற்ற நிர்க்குணப் பரமான்மாத் தனது ஸ்வரூப அஞ்ஞானத்தால் ஜீவபாவத்தையடைந்து அந்தக்கரணாதியுபாதிகளின் தாதாத்மிய அத்தியாசத்தை யடையும்போது அவற்றின் காமக்குரோதாதிகளையும், சத்துவாதிகளையும் தன்கண்ணெண்ணும். அதன்பின்னர் இராகவாயிலாய் அறம்பாவத்தைச்செய்யும். அதன்வாயிலாய்ச் சுகதுக்கபலத்தையும், அதன்சாதனங்களையும் உண்டாக்கி அவ்வுபாதிகளின் தாதாத்மிய அத்தியாசத்தால் அப்பலத்தைப்போகிக்கும். சுப அசுபகருமங்களினும் உபாசனைவடிவ மானசகருமத்தால் தேவயானமெனப்பெயரியஉத்தமமார்க்கவாயிலாய்ப்பிரஹ்மலோகத்தையடையும். அக்கினிஹோத்திராதி புண்ணியகருமத்தால் பிதிர்யானமெனப்பெயரிய மத்தியமமார்க்கவாயிலாய்ச் சுவர்க்காதிலோகத்தையடையும். பிரஹ்மஹத்தியாதி பாவகருமங்களால் மூன்றாவது தானமெனப்பெயரிய அதமமார்க்கவாயிலாய்க் கீடபதங்காதி க்ஷுத்திரசரீரங்களை யடையும். இவ்வாறு அறம்பாவவயத்தால் நிரந்தரம் சம்சாரத்தின்கண்ணே சுற்

னும். உண்மையாய்த் தேசகாலவஸ்து பரிச்சேதமற்று யாண்டும் நிறைந்திருப்பதா யினும் அங்குஷ்டமாத்திர ஹிருதயரூப உபாதியின் சம்பந்தத்தால் அங்குஷ்டமாத்திர பரிமாணமுடையதாம். அகங்காரத்தோடும், மனோசங்கற்பங்களோடும், புத்தியின் பரிணாமவிருத்திகளோடும்கூடியதாம். அந்தப் புத்திவிருத்திரூபகுணம் மாயாவிசிஷ்ட ஆன்மாவா லுண்டாக்கப்பெற்றதாமாதலின், ஆன்மாவிற்கும் அது குணமாம், கனவிற்கொப்பப் பொய்யாம். அத்தகைய அதனையொளிர்விக்கும் ஆன்மாச் சூரியனைப்போல சுயஞ்சோதிரூபமாம். உண்மையாய் மகானாயினும் அற்ப பரிமாணத்தையுடைய புத்தியின்கண்ணேயிருந்து ஆராவின் அக்கிரபாகம்போல அற்ப பரிமாணமுடையதாம். தோற்பேதிக்கும் தோற்காரனது ஊசி ஆராவாம். இங்ஙனம் புத்திரூப உபாதியின் தாதாத்மியத்தால் ஜீவபாவத்தையடைந்து அவிவேகிகளின் திருஷ்டியில் நிக்கிருஷ்டத்தன்மையை யடைந்திருந்தபோதினும் விவேகிகளாகிய மகான்கள் ஆநந்தவடிவ ஆன்மாவை யாவற்றினும் மேன்மையாயே காண்பர். அப்புத்தியின்கண்ணேயிருந்து அடையாநின்ற சூக்ஷுமத்தன்மையின் கண்ணே சில சூக்ஷுமதரிசிகள் இவ்வகைத் திருஷ்டாந்தங்கூறுவர். ஒருமயிரின் அக்கிரபாகத்தை 100 கூறாக்கி அவற்றுள் ஒன்றை மீண்டும் 100 கூறாக்கின் அவற்றுள் ஒருகூறொப்ப இச்சீவான்மா னொய்தாம். தனது வாஸ்தவவடிவ அஞ்ஞானமிருக்கும்வரையுமே புத்தியின் றாதாத்மியசம்பந்தத்தால் இவ்வாறாய அற்பத்தன்மையை யடையும். அந்த ருத்திரபகவானதுகிருபையால் தன்னைப் பிரஹ்மரூபமாயறியுங்கால் காரியசகித அஞ்ஞானம்நீங்கவே பரிபூரணப் பிரஹ்மபாவத்தையடையும். உண்மையாய் ஸ்திரீபுருஷ நபும்சகபாவமற்றதாயினும் தன்வடிவ அஞ்ஞானத்தால் கவர்ந்த தாதாத்மியசம்பந்தத்தாற் சரீரவடிவமாய்ப் பிரதீதியாம். நடன் ஸ்திரீமுதலியோரின் வேடங்களைத்தரித்து அவ்வடிவமாய்ப் பிரதீதியாவன். சப்தாதி விஷயஜன்னிய பாகியபோகத்தாலும், மனோசங்கற்பத்தாலுண்டாய ஆந்தர போகத்தாலும், சுகமடையும் வேட்கையாலும், நானாவகையன்ன ஜலப்பிராப்தியாலும், தேகாதிகளே விருத்தியடையுமாயினும் தேகாதிகளின் றாதாத்மிய அத்தியாசத்தால் அவ்விருத்தியைத் தன்கண்ணெண்ணும். தேகாதிகளின் வாதனையால் அநேக ஜன்மங்களையடையும். ஜீவர்கள் பூர்வ வாசனையினனுசாரமாய் ஜன்ம மரணவிருத்தியாதிகளை யடைவதில் புண்ணியபாவரூபகருமமும் நிமித்தகாரணமாம், அதனனுசாரமாய்ச் சுகதுக்கப்பிராப்தியின்பொருட்டுச் சம்சாரத்தே நானாவகைச் சரீரங்களையடையும். ஒருகாலோ நபும்சக சரீரத்தையடையும், ஸ்திரீசரீரத்தையடையும், புருஷசரீரத்தையடையும், சுவர்க்காதிலோகங்களில் தேவதா சரீரத்தையடையும். இங்ஙனம் அறம்பாவவயத்தால் அநேக ஜன்மங்களிற் சுழன்றுகொண்டுதிரியும். உலகில் நடன் அநேகவகைரூபங்களைத் தரிப்பதேபோல ஆன்மாவும் புத்தியாதிகளோடு தாதாத்மியபாவத்தையடைந்து அறம்பாவவயத்தால் ஒருகால் தூலமாய யானையாகவும், சூக்ஷுமமாய எறும்பாகவும் ஆகும். ஜீவர்கட்கு நிக்கிருஷ்டபாவத்தையடைவிக்கும். ஸ்வரூப அஞ்ஞானத்தைத் தம்பாலாரோபிக்கும்போது சுரோத்திராதி ஏகாதச இந்திரியங்களோடு தாதாத்மிய பாவத்தையடைந்து நானாவகைத் தேகங்களையடையும். ஆநந்தரூப ஆன்மாவிற்கு உண்மை

யாய் ஜன்ம மரணாதிகளின் அடைவுண்டாகாதாமாதலின், கலிலாதி பீஜங்களின் கண்ணிருக்கும் என முன்னர்க்கூறிய தற்பதத்தின் அர்த்தவடிவ பரமான்மாத் துவம்பதத்தின் அர்த்தரூப ஆன்மாவினும் பின்னமன்றாம்; மற்றோ, ஜீவான்மாப் பிரஹ்மரூபமேயாம். இத்தகைய ஆன்மாவின் ஞானத்தால் அதிகாரி காமக்குரோதாதி சர்வபாசத்தினின்றும் விடுபடுவன். பூர்வம் இந்திரர் பிரதர்த்தனன்பொருட்டுப் பிராணப் பிரஞ்ஞைவடிவமாய்க்கூறிய ஆன்மா அதிகாரிகட்கு யான் பிரஹ்மரூபன் என்னும் அபேதஞானத்தானே அடையப்பெறும். அஃதின்றி அன்னிய எவ்வுபாயத்தாலும் அடையப்பெறமுடியாதாம். பிராணன் 1, சிரத்தை 2, ஆகாசம் 3, வாயு 4, அக்கினி 5, அப்பு 6, பிருதிவி 7, சுரோத்திராதி பத்து இந்திரியங்கள் 8, மனம் 9, அன்னம் 10, வீரியம் 11, தபம் 12, மந்திரம் 13, யாகாதிகருமங்கள் 14, லோகம் 15, நாமம் 16, என்னும் பதினாறு கலைகளையும் பரமான்மாவே சிருஷ்டியின் ஆதிகாலத்தே யுண்டாக்கியது. சர்வ ஜகத்தி னுதய திதி யிலய காரணமு மதுவேயாம். சுயஞ்சோதியாய பரமான்மாவே சர்வ மங்கலங்களினும் மங்கல வடிவமாமாதலின் சுருதிபகவதி அதனைச் சிவம் என்றனள். இத்தகைய அத்விதீயப் பரமான்மாவை எவ்வதிகாரி தன்னுண்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரிப்பனோ அவனே தூலாதி முச்சரீரரூபபந்தனத்தைப் பரித்தியாகித்து மோக்ஷத்தையடைவன். இதுகாறும் பரமான்மாவைச் சர்வஜகத்தின் காரணரூபமாய் யாம் உங்கட்குக்கூறினேம். இப்போது வாதிகளின் மதகண்டனபூர்வகமாய்ப் பரமான்மாவை யுபதேசிப்பேம், நீங்கள் சாவதானமாய்க் கேளுங்கள்:— ஓஹ சந்நியாசிகளே! புத்திமானவன் காலம், சுபாவம், நியதி, யதிருச்சை, பூதம், பிரகிருதி, புருஷன் என்னுமிவற்றிற்கே ஜகத்காரணம் கூறுவன். இவ்வாதிகளின் மதத்தை விஸ்தாரமாய் முன்னர் நிரூபித்தேம்; ஆனால், அவற்றைக் காரணமாயங்கீகரிக்கும் வாதி வேதபகவானுடைய உண்மைக்கருத்தை அறிந்திலனாதலினானே மோகத்தையுற்று ஜகத்காரணத்தின்கண்ணே நானாவகை விவாதத்தைச்செய்வன். பிறவிக்குருடன் பான்முதலியவற்றின் ரூபத்தே விவாதஞ்செய்வதேபோல, வாதியும் பரஸ்பரம் விவாதஞ்செய்வன். வாதியின் வசனம் பிரமாணமும் யுக்தியுமற்றதாமாதலின், வேதத்தினது யதார்த்த தாற்பரியத்தையறியும் மதிமானனவன் வாதியின் வசனத்தை ஒருகாலும் கவரலாகாது. அவன்மதத்தே பிரமாணாபாவம் நிரூபிக்கப்பெறும்:—காலசுபாவாதிகள் ஜகத்காரணமென்பதன்கண்ணே ஒருவேதவசன சப்தப்பிரமாணமோ இன்றாம். அகிலகாரணம் நேத்திராதி யிந்திரியங்களாற் கவரப்பெறாதாதலின் அதன்கண்ணே காட்சியளவையும் சம்பவியாதாம். காட்சியைப்பற்றியே கருதலின் பிரவிருத்தியாமாதலின் அஃதின்றாகவே அதுவுஞ் சம்பவியாதாமாதலின் அம்மதம் பிரமாணமற்றதாம். அதன்கண்ணே யுக்தியின்மையைக் காண்பிப்பாம்:— ஓஹ சந்நியாசிகளே! அகிலகாரணமென வங்கீகரித்த காலசுபாவாதிகள் ஜடங்களாமாதலின் சேதன ஆன்மாவின்றிச் சுதந்திரமாய் அவற்றின்கண்ணே காரணரூபத்தன்மை சம்பவியாதாம். அல்லது ஜடங்களியாவும் காரியமேயாகும். கடபடாதிகள் ஜடங்களாதலின் காரியரூபமுமாவதேபோலக் காலாதிகாரணமும் ஜடமாதலின் காரியரூபமு மவசியமாம். காரியமாவனயாவும் ஒரு காரணத்தால் அவசியம் ஜனிக்கும். கடபடாதிகள் காரியமாதலின் மண் நூல் முதலிய காரணங்

களால் ஜன்னியமாவதேபோலக் காலாதிகாரியங்கட்கும் வேறொரு காரணகற்பனை செய்யவேண்டி வருமாதலின், அக்காலாதிகளின் காரணத்தானே சர்வ ஜகத்தி னுற்பத்தி சம்பவிக்கும். அக்காரிய காரணமத்தியிற் காலாதிகளைச் சககாரண மென வுடன்படல் பயனற்றதாம். ஆகையால், அம்மதம் யுக்தியுமற்றதாம்.

சங்கை :—ஹே பகவன்! வேதரூப சூரியனிருப்பினும் வாதிகட் கிவ்வாறு மோகமேனுண்டாகின்றது?

சமாதானம் :—ஹே சந்நியாசிகளே! உலககாரணத்தே அவர்பாற் காண வரும் நானாவகை விவாதம் ஆச்சரியமுடையதன்றாம்; ஏனெனின், இச்சம்சாரரூப சக்கிரத்தைச் சுழற்றிவைக்கும் பரமான்மாவின் அற்புத மகிமைவாய்ந்த மாயா சக்தி, வாதிகளையும் மோகிப்பித்துவிடும். வாயு ஆகாசத்தேபஞ்சைச் சுழற்றிவைப் பதேபோலப் பரமான்மாத் தனது மாயாசக்தியாற் புத்திமான்களுடைய புத்தியை யும் சுழற்றும். சம்பூரண ஜகத்தை வியாபித்திராநின்ற ஞானஸ்வரூப பரமான் மாக்காலத்திற்குங் காலமாம். எப்பரமான்மாச் சத்தியகாமம் சத்தியசங்கற்பம் முதலிய குணங்களோடுகூடியதோ, தனது ஸ்வப்பிரகாச ஞானத்தால் சர்வஜகத் தையுமறிகின்றதோ, ஜீவர்கட்குச் சுபாசுப கருமங்களின் சுகதுக்கரூப பலத்தைக் கொடுக்குமோ, ஆகாசாதிரூபமாய் விவர்த்தமாயிருக்குமோ, (தன் வடிவத்தை விடாது அன்னியரூபமாய்ப் பிரதீதியாதல் விவர்த்தமாம். இரஜ்ஜுத்தனதுண் மைவடிவத்தைவிடாது சர்ப்பாதிரூபமாய்ப் பிரதீதியாவதேபோலப் பரமான்மா வும் தனதுண்மைவடிவத்தைவிடாது ஆகாசாதிரூபமாய்ப் பிரதீதியாம்.) இத்த கைய பரமான்மா முமுக்ஷுக்களால் எப்போதும் சிந்தனஞ்செய்யத்தக்கதாம். மோக்ஷமடைய இச்சையுடையவன் முதலில் பல இச்சையற்றவனும் மக முதலிய கருமங்களால் தன்மனத்தைத் தூயதாக்குவன். அதன்பின்னர் அதிகாரி மன சகித நேத்திராதி இந்திரியங்களைத் தத்தம் வியாபாரங்களினின்றும் நீக்குவன் அதன்பின்னர்க் குருசாஸ்திர உபதேசத்தால் ஆநந்தஸ்வரூப ஆன்மாவைச் சாக்ஷா த்காரஞ்செய்வன் அவ்வான்மா ஓரவித்தையற்றது, அறம்பாவ மிரண்டற்றது, சத் துவாதி முக்குணமற்றது, ஆகாசாதி 5, அவ்யக்தம் 6, புத்தி 7, அகங்காரம் 8, என் னுமெட்டற்றது. அல்லது, ஐந்தாவதத்தியாயத்திற் கூறிய இந்திரியரூப அஷ்டக் கிரகம், விஷயரூப அஷ்ட அதிக்கிரகம், என்பனவற்றது. காலமற்றது, புத்தி விரு த்திரூப குணமற்றது இத்தகைய ஆன்மாவைத் தூயமனமுடைய அதிகாரி சாக்ஷாத்கரிப்பன். இவ்வாறுண்மையாய்ச் சர்வ தருமமற்றதாயினும் சத்துவாதி முக்குணாபிமானத்தால் அறம்பாவத்தைச்செய்யும், இன்பத்துன்ப மெய்தும்பொரு ட்டு உட்பொருளையும் வெளிப்பொருளையும் தத்தம் வியாபாரத்தின்கண்ணே சேர் க்கும், அதுவே தனதுண்மைவடிவத்தே யாவற்றினபாவத்தையும் நிச்சயஞ்செய் யும்போது ஆன்மஞானாக்கினியால் எல்லாக் கருமங்களையும் க்ஷயம்செய்யும், செய் யவே அறிஞன் சர்வ அனான்மாக்களினும் பின்னனாய்த் தனது பிரஹ்மவடிவத்தை யடைவன். மாயையின் ஆசிரயரூப பரமான்மா உலக உற்பத்தியின் முன்னர்க் காரணரூபமாய்த் திதமாகும், தற்சிதாபாச சம்பந்தத்தாற் காரியசகித அவித்தை

யைச் சேதனம்போற்செய்யும். அதனை மகான்மாக்கள் முக்காலமற்றதும், பிராணாதி பதினாறு கலையற்றதுமாய தூயதாய்க் காண்பர்; அது சர்வ ஜகத்தின் ஆன்மரூபமாம், இந்திராதி தேவதைகளால் துதிக்க யோக்கியமாயதாம், சர்வப் பிராணிகளின் சித்தத்தேயிருப்பதாம். இத்தகைய பரமான்மாவை முதலில் உபாசித்து அதிகாரியானவன் சர்வ விக்கினமற்றவனுவன். குருசாஸ்திர உபதேசத்தால் ஆன்மசாக்ஷாத்காரத்தையடைந்து பிரஹ்மபாவத்தையடைவன். அது இச்சம்சார விருக்ஷத்தினும் காலத்தினும், அவித்தையினும் பரமாம், அதனினின்றும் இவ்வெல்லாவுலகமுமுண்டாம், ஸ்மரணமாத்திரத்தால் ஜீவர்கட்குத் தர்மத்தைத்தரும், அதருமத்தை நீக்கும்; ஐசுவரியம், தருமம், புகழ், ஸ்ரீ, ஞானம், வைராக்கியம் என்னும் ஆறுபகங்கட்கு மீசுவரராம். அல்லது, ஜகத்தினுற்பத்தி, ஸ்திதி, பரலோககமனம், ஆகமனம், வித்தை, அவித்தை என்னும் ஆறுபகங்கட்கு மீசுவரராம், காரியஞ்செய்வதின்கண்ணும், செய்யாமையின்கண்ணும், வேறொன்றாற்றுற் செய்வதின்கண்ணும் சமர்த்துடையவ ரீசுவரராவர். அது ஜீவர்களின் அறம்பாவங்களின் சுவாமியாம், ஜன்மமரணுதி சர்வ விகாரங்களுமற்றதாம். சர்வப்பிராணிகளின் இருதயதேயத்தே வாசம் செய்வதாம். சுயஞ்சோதியத்விதீயரூபமாம், சர்வ விசுவத்திற்கு மீசுவரராம். சூரியாதி சர்வப்பிரகாசங்களின் ஆசிரயரூபமாம். இத்தகைய பரமான்மாவை அதிகாரி தன்னுன்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரிக்கின் கிருதகிருத்தியபாவத்தையடைவன். அது பிரஹ்மாதி ஈஸ்வரர்கட்கும் ஈஸ்வரராம், இந்திராதி தேவதைகட்குந் தேவதையாம், மரீசி முதலிய பிரஜாபதிகட்கும் பதியாம், பூ முதலிய சதுர்த்தச லோகங்களையும் தனது ஆணையின்கண்ணே நடத்திவைப்பதாம்; இத்தகைய பரமான்மாவை நாம் கேவலம் வேதவசனங்களாலறிவேம்.

சங்கை :—ஹே பகவன்! அவ்வத்விதீய ஆன்மாவை வேதவசன மெவ்வாறு போதிக்கும்.

சமாதானம் :—ஹே சந்நியாசிகளே! அதற்கு இத்தூலப் பிரபஞ்ச காரியஞ் சிறிதுமின்றும், நேத்திராதி யிந்திரியங்களோடுகூடிய சூக்ஷ்ம சரீரரூப காரணமுமின்றும். அதற்குச் சமானமாய் எப்பதார்த்தமுமின்றும், அவ்வாறொரு பதார்த்தமுமுண்டாகவில்லையாயின் அதிகமாயெதுவுண்டாம். அதன் ஒரு மாயாசக்தியாண்டும் பிரசித்தமாம், அதுவும் முதலில் ஞானசக்தி கிரியாசக்திகளின் பேதத்தால் இருவகையாம். அந்த ஞானசக்தி பிரமாண சம்சயாதிகளின்பேதத்தால் அநேகவகையாம். இவ்வாறு அந்தக்கிரியாசக்தியும் பலவீரியாதிகளின்பேதத்தால் அநேக வகையாம். தந்தை தனது மைந்தராதியரைக் காப்பதுைதலின் பதியாவன். மகாராஜா பிராஹ்மணுதி நான்குவருணத்தவரையும் தந்தந்தருமமரியாதையின் கண்ணே நடத்திவைப்பாதலின் நியந்தாவாம. மலைமுதலியவற்றே புகையைக் கண்டு வன்னியின் ஞானமாமாதலின் அப்புகை எரியையறிவிக்குங்குறியாமாறு; பரமான்மாவிற்குப் பதியுமின்று நியந்தாவுமின்று குறியுமின்று. கருத்திதுவாம் :—பரமான்மா அந்தரியாமிரூபமாய்ச் சர்வஜகத்தையுங்காக்குமாதலின் அதற்குப் பதியின்றும், பிரஹ்மாதி தேவதைகளையும் தனதாணைப்படி செலுத்தலால் நியந்தாவுமின்று, அசங்க நிர்க்குணமாதலின் அறிவிக்குங்குறியுமின்றும்; அது சர்வஜகத்

தின்காரணமாம். நேத்திராதியிந்திரியங்கட்கும் சூரியாதி தேவதைகட்கும் நியந்தாவாகிய ஈசுவரராமாதலின் அதற்கு யாதொருஜனகமுமின்றாம்; நியந்தாவீசுரருமின்றாவர். நூற்பூச்சி தனது நூற்களால் வீட்டை வியாபிக்கச்செய்யுமாறு பரமான்மா மாயாஜன்னிய பஞ்சபூதரூப தந்துக்களால் நம்மனோரை வியாபிக்கச்செய்யும். இத்தகைய சுயஞ்சோதி அத்விதீயப்பரமான்மா நமதுசித்தத்தே தனது நிர்க்குணவடிவத்தையொளிர்விக்கும். கருத்திதுவாம்:—நமது சித்தவிருத்தியின்கண்ணே ஆரூடமாய் நமதஞ்ஞானத்தை நீக்கும். ஆகாசம் யாண்டும் வியாபகமாயிருப்பதேபோலச் சுயஞ்சோதியாய பரமான்மாவுஞ் சர்வபூதங்களிடத்தும் வியாபகமாம. அக்கினி சர்வகாஷ்டங்களுள் குகியமாயிருப்பதேபோலச் சுயஞ்சோதியாய ஆன்மாவும் சர்வப்பிராணிகளிடத்தும் குகியமாயிருக்கும். அதுவே நமக்கு அறம்பாவங்களின் சுகதுக்கபலமீயும், சர்வஜீவர்களின்சரீரத்தே ஆன்மரூபமாய்வசிக்கும்,சைதன்னியரூபமாமாதலின் சர்வபுத்திவிருத்திகளின் திருஷ்டாவாய சாக்ஷியாம். அதன்பால் சாக்ஷித்தன்மையும் புத்திமுதலிய வுபாதிகளின் சம்பந்தத்தானேயாமன்றி உண்மையாமோ சாக்ஷித்தன்மையுமின்றாமாதலின் அது கேவலம் நிர்க்குணரூபமாம்; சர்வசங்கமற்றதாம். சுபாவமாய்ப் பிரவிருத்திப்பதி லசமர்த்தமாய சர்வஜடபதார்த்தங்களையும் அது தத்தங்காரியத்தே சுதந்திரமாய்ப் பிரவிருத்திப்பிக்கும். சம்பூரண ஸ்தூலசரீரங்களின் பீஜரூபமாய ஹிரண்யகருப்பரைச் சூக்ஷுமஉபாதியின்கண்ணே புகுத்தியுண்டாக்கும்; அதுவொன்றே சர்வஜகத்தையுமுண்டாக்கும். இத்தகையபரமான்மாவை அதிகாரி தன்னான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரிப்பன்; அவனுக்கே சர்வதுக்கநீக்கவாயிலாய் மோக்ஷரூப நித்தியசுகவடைவாம். ஆன்மஞானமற்ற இதரர்கட்கு அந்நித்தியசுகவடைவின்றாமாதலின், மோக்ஷ இச்சையையுடைய அதிகாரிகள் ஆன்மசாக்ஷாத்காரத்தை அவசியமாய்ச் சம்பாதிக்கவேண்டும். அது நித்தியவடிவமாய்ப் பிரசித்தஆகாசாதி நித்தியபதார்த்தங்கட்கும் நித்தியமாம்; சேதனவடிவமாய்ப் பிரசித்த பிரமாதாவினும்சேதனமாம். கருத்திதுவாம்:—பரமான்மாவின் நித்தியத்தன்மையையும் சேதனத்தன்மையையும் அங்கீகரித்து அநித்திய ஜடரூபபதார்த்தமும் நித்தியசேதனரூபமாய்ப் பிரதீதியாம். அதன் ஸ்வரூபபூதசுகத்தை அதிகாரிகள் பிரஹ்மசரியாதி சாதனங்களாலடைவர். இத்தகைய பரமான்மா அதிகாரிகட்கு ஆன்மவடிவமாய்ச் சாக்ஷாத்காரமாயின் அவர்களின் அவித்தையும் அதனாலுளவாய காமக்குரோதாதி சர்வபாசங்களும் அறுபட்டுப்போம. இத்தகைய ஆன்மாவையடைய விசாரரூபசாங்கியமெனவும், யோகமெனவும் இரண்டுசாதனங்களுண்டு. அவற்றுள் முதலாவதைக்கேளுங்கள்! முமுக்ஷுக்கள் ஆன்மாவையடையும்பொருட்டு இவ்வகைச் சிந்தனஞ்செய்க:—சாஸ்திரவேத்தாவாகிய அறிஞன் அத்விதீயப்பிரஹ்மத்தை மனவாணிகட் கவிஷயமென்பன். இத்தகைய அத்விதீயப்பிரஹ்மத்தை யாமெவ்வாறறிவேம். ஆதலின், முதலில் யாமிவ்வகையாராய்வோம். பிரஹ்மரூபசுகம் நமக்குப்பிரதீதியாமா? ஆகாதா?, ஆயினும் பிரகாசரூபமாய்ப் பிரதீதியாமா? அப்பிரகாசரூபமாய்ப் பிரதீதியாமா? விபரீதரூபமாய்ப் பிரதீதியாமா? உண்மையாய் அதற்குப் பிரகாசரூபத்தன்மையுறினும் அது கடாதிபோலவிஷயரூபமாய்ப் பிரதீதியாமா? அவிஷயரூபமாய்ப் பிரதீதி

யாமா? ஆன்மசாக்ஷாத்கார அடைவின்பொருட்டு முமுக்ஷுக்கள் இவ்வாறாராய்க. ஆனால், குருவுபதேசத்தின்முன் செய்யற்க; மற்றோ, சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட குரு முமுக்ஷுக்கட்கு ஆநந்தஸ்வரூப ஆன்மாவாகிய நீ பிரஹ்மரூபமேயாவாய் என வுபதேசித்தபின்னரே செய்க. இப்போது முன்மொழிந்த விகற்பங்களில் ஒன்றை நிச்சயிக்கும்பொருட்டு விசாரத்தை வெளிப்படையாய் நிரூபிப்பாம்:—ஓ சந்நியாசிகளே! குருவாயிலாய் வேதாந்தசாஸ்திர சிரவணத்தால் அதிகாரி தன் னசம் பாவனா நிவிருத்தியின்பொருட்டு இவ்வகை விசாரரூபமனனஞ்செய்க. ஸ்ரீகுருவானவர் எனக்குபதேசித்த ஆன்மாவின்வடிவ ஆநந்தம் சைதன்யரூபப் பிரகாசத்தினும் பின்னமா? அபின்னமா? அது பின்னமென்னின் பொருந்தாதாம்; ஏனெனின், அதன்மாட்டும் இவ்வாறாராய்க. ஆநந்தம் பிரகாசம் என்னுமிரண்டுமே நித்தியமா? அவற்றுள் ஒன்று நித்தியம், ஒன்று அநித்தியமா? முதற்பக்ஷத்தையுடன்படின் காலங்ககன மிரண்டற்கும் பரஸ்பரம் சையோகசம்பந்தமும் சமவாய சம்பந்தமும் உண்டாகாததேபோல நிரவயவ பரிபூரணரூப அவ்விரண்டற்கும் அவ்விரண்டு சம்பந்தமும் சம்பவிபாவாா. அங்ஙனமே தாதாத்மிய சம்பந்தமும் சம்பவியாதாம்; ஏனெனின் எவ்விரண்டு பதார்த்தங்களில் ஒன்று கற்பிதமும் மற்றொன்று சத்தியமுமாமோ அவற்றிற்கே பரஸ்பரம் தாதாத்மிய சம்பந்தமாம், கடகாரியத்திற்கும் மட்காரணத்திற்கும் பரஸ்பரம் தாதாத்மிய சம்பந்தமாம். கடங்கற்பிதமும் மண் சத்தியமுமாம். அதுபோல, ஆநந்த ஆன்மாவிற்கும் சைதன்யப் பிரகாசத்திற்கும் பரஸ்பரம் தாதாத்மிய சம்பந்தத்தை அங்கீகரிக்கின் அவ்விரண்டனுள்ளும் ஒன்றைக் கற்பிதமாய் அங்கீகரிக்கவேண்டும் ஆநந்தவடிவ ஆன்மாவைக் கற்பிதமாய் அங்கீகரிக்கும் வார்த்தையோ சம்பவியாதாம். ஏனெனின், அது கற்பிதமாயின் கிருதநாச அகிருதாப்யாகமரூப இருதூஷணப் பிராப்தியாம். செய்த கருமங்களின் பலபோகமின்றிய நாசம் கிருதநாசமாம், செய்யாத கருமத்தின் பலபோகம் அகிருதாப்யாகமமாம். ஆதலின், அதன்பாற்கற்பிதத்தன்மை சம்பவியாதாம். அதுபோலவே சைதன்யத்தின்கண்ணும் கற்பிதத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனின் அஃதொருகாற் கற்பிதமாயின் அதன்முன் ஆன்மாவின் சித்தியுண்டாகாதாதலின், அதன்பாலும் கற்பிதத்தன்மை சம்பவியாதாம்; அல்லது, கடத்தின்கண்ணே உருவமுதலிய குணமிருப்பதேபோல ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணும் சைதன்யம் குணமாயிருக்கும் என உடன்படினும் சம்பவியாது; ஏனெனின், 'ஸாக்ஷீசேதா கேவலோ நிர்குணஶ்ச' என்னும் சுருதியின்கண்ணே ஆநந்த சொரூப ஆன்மா சர்வகுணமுமற்ற நிர்க்குணமென்னப்பட்டதாதலின் அதன்கண்ணே பிரகாசகுணஞ் சம்பவியாதாம். இப்போது யுக்தியினனும் அதன்கண்ணே குணத்தன்மையைக் கண்டிப்பாம்:—அது நிர்க்குண ஆன்மாவின்கண்ணிருக்கின்றதா? சகுண ஆன்மாவின்கண்ணிருக்கின்றதா? முதற்பக்ஷத்தையுடன்படினோ என்முகத்தே நாவில்லையென்பது வியாகாததோஷமுடையதாவதேபோல நிர்க்குண ஆன்மாவின்கண்ணே பிரகாசகுண மிருக்கும் என்பதுமாம். இரண்டாவது பக்ஷத்தை அங்கீகரிக்கின் ஆன்மாசிரயம் அன்னியோன்னியாசிரயம் சக்கிரிகை அனவஸ்தை என்னும் நான்கு தோஷங்களாம்; ஏனெனின் குணமுடைய பதார்த்தம் சகுணமாம். எச்சகுண ஆன்மாவின்கண்ணே பிரகாசகுண

மிருக்குமோ அது அக்குணத்தானே சகுணமாயதா? வேறு குணத்தாற் சகுண மாயதா? பிரதமபக்ஷத்தை யுடன்படின் அக்குணத்திற்கு தன்றிதியின்கண்ணே தன்னபேக்ஷைவடிவ ஆன்மாசிரயதோஷவடைவாம். துவிதீயபக்ஷத்தை யுடன் படினும் இவ்வாறுராயத்தக்கதாம், அவ்வேறுகுணமும் நிர்க்குண ஆன்மாவின் கண்ணிருக்குமா? சகுண ஆன்மாவின்கண்ணிருக்குமா? முதலாவதுடன்படின் முன்போல் வியாகாததோஷமாம். இரண்டாவதுடன்படினும் இவ்வாறுராயத்தக்க தாம். அவ்விரண்டாவது குணத்தால் சகுணமாய ஆன்மாவின்கண்ணே அவ்விரண் டாவது குணமுளதா? முதற்குணத்தாற் சகுணமாய ஆன்மாவின்கண்ணே அவ் விரண்டாவது குணமுளதா? மூன்றுவது குணத்தாற் சகுணமாய ஆன்மாவின் கண்ணே அவ்விரண்டாவது குணமுளதா? முதற்பக்ஷத்தை யுடன்படின் முன் போல ஆன்மாசிரய தோஷமாம். இரண்டாவதுபக்ஷத்தை யுடன்படின் பிரதம குணவிசிஷ்ட ஆன்மாவின்கண்ணே அவ்விரண்டாவது குணமிருக்கும், அவ்விரண் டாவது குணவிசிஷ்ட ஆன்மாவின்கண்ணே அப்பிரதம குணமிருக்கும் என அன் னியோன்னிய ஆசிரயதோஷமாம். மூன்றுவதுபக்ஷத்தை யுடன்படின் அம்மூன் றுவது குணமும் தன்னால் விசிஷ்ட ஆன்மாவின்கண்ணே தானிருக்கின் ஆன்மா சிரயதோஷமாம். அம்மூன்றுவதுகுணம் இரண்டாவது குணவிசிஷ்ட ஆன்மாவின் கண்ணேயிருக்கின் அன்னியோன்னியாசிரயதோஷமாம். அம்மூன்றுவது குணம் பிரதம குணவிசிஷ்ட ஆன்மாவின்கண்ணிருக்குமாயின் அம்மூன்றுவது குணம் பிரதமகுணவிசிஷ்ட ஆன்மாவின்கண்ணிருக்கும் அப்பிரதமகுணம் இரண்டாவது குணவிசிஷ்ட ஆன்மாவின்கண்ணிருக்கும். அதுமூன்றுவதுகுண விசிஷ்ட ஆன்மா வின்கண்ணிருக்கும் அது பிரதமகுண விசிஷ்ட ஆன்மாவின்கண்ணிருக்கும், என இவ்வாறு சக்கிரம்போலப் பிரமணரூப சக்கிரிகைத்தோஷமாம். அம்மூன்றுவது குணம் நான்காவது குணவிசிஷ்ட ஆன்மாவின்கண்ணிருக்கும், அது ஐந்தாவது குணவிசிஷ்ட ஆன்மாவின்கண்ணிருக்கும் இவ்வாறு மேலும் மேலும் குணங்களை யுடன்படலால் அனவஸ்தா தோஷப்பிராப்தியாமாதலின், அந்தச் சைதன்யரூபப் பிரகாசம்"குணரூபமாய் ஆன்மாவின்கண்ணேயிராதாம். அல்லது, ஆன்மாநந்தம் சைதன்யப் பிரகாசம் என்னுமிரண்டன் மத்தியில் ஒருகால் ஒன்றன்கண் நித்தியத் தன்மையேனும் அநித்தியத்தன்மையேனும் ஆகுமாயின் அவ்விரண்டிற்கும் பரஸ் பர சம்பந்தமே சம்பவியாதாம் ஏனெனின். இவ்வுலகத்தே யோக்கிய பதார்த்தத் திற்கு யோக்கிய பதார்த்தத்தோடே சம்பந்தமாம் அயோக்கிய பதார்த்தத்தோடு சம்பந்தமாகாதாம்; ஆதலின், அவ்விரண்டின் சம்பந்த சித்தியின்பொருட்டு அவ் விரண்டிற்கும் நித்தியத்தன்மையேனும அநித்தியத்தன்மையேனும் அங்கீகரித் தல்வேண்டும். ஆண்டு ஆன்மாவின் அநித்தியத்தன்மையின்கண்ணே முன்னர்க் கிருதநாசம் அகிருதாப்யாகமரூப இரு தூஷணங்களினடைவைக் கூறிவந்தேம். அவ்வாறே பிரகாசம் அநித்தியமென்பதன்கண்ணும் முன்னர்த் தூஷணங்கூறி வந்தேம். அவ்விரண்டிற்கும் பரஸ்பரம் சம்பந்தமே யங்கீகரியாவிடின் அவ்வா நந்தவடிவ ஆன்மாவின்கண்ணே எப்போதும் பிரகாசாபாவம் அங்கீகரிக்கவேண்டி வரும், அவ்வாறுவரல் முற்றிலும் மூரணும்; ஏனெனின், அதன்கண்ணே ஒரு

கால் பிரகாச அபாவமிருக்குமாயின் நம்மனோருக்கு அவ்வாநந்தவடிவ ஆன்மாவின் அத்தியந்தம் பிரியரூபமாய பிரீதி உண்டாகக்கூடாது. ஆனாலங்ஙன் பிரீதியோ ஆகின்றது; ஆதலின், அவ்வான்மவடிவ ஆநந்தம் பிரகாசத்தோடு நித்தியசம்பந்தமுடையதாமென வறியப்பெறும். இப்போது ஆநந்தம்; பிரகாசம் என்னுமிரண்டற்கும் அபேதம் சித்தஞ்செய்யும்பொருட்டு முதலில் அவ்வாநந்தத்தே ஆன்மரூபத்தன்மையானே நித்தியத்தன்மையைச் சித்தம் செய்வாம். அவ்வாநந்தம் ஒருகால் ஆன்மாவினும் வேறாயின் அவ்வாறாய அது அத்தியந்தம் பிரியரூபமாகாதாம்; மற்றோ, ஆநந்தத்தினும் வேறாய அது துக்கரூபமாகும்; அல்லது, மாலை சந்தனவனிதாதியைப்போல அது சுகசாதனமாகும்; துக்கவடிவமேனும் சுகசாதனமேனு மாவதின்கண்ணே ஜீவர்கட்கு நிரதிசயப்பிரீதி யுண்டாகாதாமாதலின், ஆன்மாவின்கண் ணும் ஜீவர்கட்கு நிரதிசயப்பிரீதி யுண்டாகலாகாது. ஒருகாலும் எனக்கபாவமின்றாம்; மற்றோ, யானெப்போதுமிருக்கின்றேன் என்னும் நிரதிசயப்பிரீதி சர்வலோகரின் ஆன்மாவின்கண்ணே காணவருமாதலின் ஆநந்தம் ஆன்மவடிவமேயாம். ஆன்மாவையுண்டாக்குங் காரணமியாதொன்றுமின்றாமாதலின் அது நித்தியமாம், அந்நித்திய ஆன்மாவினும் அவ்வாநந்தம் அபின்னமா மாதலின் அவ்வாநந்தமும் நித்தியமேயாகும், அதனோடு அநித்தியப்பிரகாச சம்பந்தம் சம்பவியாதாமாதலின் அந்தப்பிரகாசக்தையும் நித்தியமேயென அங்கீகரிக்கவேண்டிவரும், அநித்தியமென வங்கீகரிக்கின் அவ்விரண்டற்கும் சம்பந்தங்கூடாதாம். பிரகாசசம்பந்தமின்றி வஸ்துவின்விளக்க முண்டாகாதாதலின் பிரகாசசம்பந்தமற்ற அவ்வான்மாநந்தம் ஒருகாலும் பிரதீதியாகாதாம். இவ்வுலகத்தே அஞ்ஞாதபதார்த்தத்தே எஜ்ஜீவனுக்கும் பிரீதியுண்டாகாதாம்; மற்றோ, ஞாதபதார்த்தத்தின்கண்ணே யாவருக்கும் பிரீதியுண்டா மாதலின் ஆநந்தவடிவ ஆன்மாவை அறியாது நம்மனோர்க்கு அதன்கண்ணே பரமப்பிரீதி யுண்டாகாது; ஆனால், பரமப்பிரீதியே காணவருகின்றதாதலின் பிரகாசத்தையும் ஆநந்தம்போல நித்தியமேயென வுடன்படல்வேண்டும். அல்லது, கடாதிகளின் ஞானம் நேத்திராதிகரணங்களாற் சன்னியமாவதேபோல அவ்வாநந்தஞானம் எக்காரணத்தாலும் ஜன்னியமன்றாம்; ஏனெனின், யாது எதனோடு சம்பந்தித்து அதன்ஞானத்தை யுண்டாக்குமோ அது அதன்ஞானத்தே காரணமாகும். நேத்திராதி இந்திரியங்கள் கடாதிகளோடு சையோகாதி சம்பந்தமுற்றுக் கடாதிகளின் ஞானங்களை யுண்டாக்குமாதலின் அவை அவற்றின் ஞானத்தே காரணங்களாம். அதுபோல, ஆநந்தத்தோடு எப்பதார்த்தத்திற்கேனும் சம்பந்தமுண்டாகுமாயின் அது அதன்ஞானத்தே காரணமாம்; ஆனால், அதனோடு எவ்வநித்தியபதார்த்தசம்பந்தமுஞ் சம்பவியாதாம். 'அஸங்கோஹ்யயம்புருஷ:' இவ்வாநந்தசொரூபஆன்மா இயல்பாகவே அசங்கமாமாதலின் இது எதனோடுஞ் சம்பந்தமுறாது; ஆகையால், ஆநந்தஞானத்தே எவ்வநான்மபதார்த்தத்திற்கும் காரணரூபத்தன்மை சம்பவியாதாம்.

சங்கை :—அவ்வாநந்த ஞானத்தே மனத்திற்கே காரணத்தன்மையாம்.

சமாதானம் :—அவ்வாநந்த சாக்ஷாத்காரத்தின்கண்ணே மனத்திற்கே காரணத்தன்மையுாமாயின், இவ்வுலகத்தே காரணமாவனவெல்லாம் ஒருகர்த்தாவை யுடை

சியமபேக்ஷிக்கும். குடாராதிகாரணம் புருஷனை யபேக்ஷிப்பதேபோல மனமாங்கரணமும் கர்த்தாவினபேக்ஷையை யவசியஞ்செய்யும். ஆண்டு அந்தஞானரூபக் கிரியையின்கண்ணே ஆன்மாவிற்குக் கர்த்தாரூபத்தன்மையா? காரணரூபமனத்திற்கே கர்த்தாரூபத்தன்மையா? முதற்பக்ஷம் பொருந்தாது, ஏனெனின், யாது எக்கிரியையின் கருமமாமோ அது அதன்கண்ணே கர்த்தாரூபமாகாதாம். தரிசனரூபக்கிரியையின் கருமமாய கடம் அதன்கர்த்தாவாகாததேபோல ஞானரூபக்கிரியையின் கருமமாய ஆநந்தான்மா அதன்கண்ணே கருத்தாவாகாதாம். இரண்டாவதுபக்ஷமுஞ் சம்பவியாது; ஏனெனின், யாது எப்போது எக்கிரியைக்குக்காரணரூபமாமோ, அது அப்போது அதற்குக் கருத்தாரூபமாகாதாம். வெட்டுதலாகிய கிரியைக்குக் காரணமாகிய குடாரம் அக்கிரியைக்குக் கர்த்தாவாகாததேபோல ஞானரூபக்கிரியையின்கண்ணே காரணமாயமனம் அக்கிரியையின்கண்ணே கர்த்தாரூபமாகாதாம். அக்கிரியையின்கண்ணே மனத்திற்குக் கர்த்தாத்தன்மை யுடன்படின் அதன்கண்ணே அதற்குக் காரணரூபத்தன்மை சித்தியாதாம். கருத்திதுவாம்:—கர்த்தா உபகாரியமாம், காரணம் உபகாரகமாம், உபகாரத்தைப்பெறுவது உபகாரியமாம், உபகாரஞ்செய்வது உபகாரகமாம். அவ்விரண்டுதன்மைகளும் ஒருபோது ஒன்றன்கண்ணேயிராதாம். அல்லது, என்மனம் இவ்வஸ்துவின்கண்ணே சென்றது, என்மனம் இவ்வஸ்துவையடைய இச்சித்தது என்னும் சர்வலோக அநுபவத்தால் மனத்தின்கண்ணும் ஞானவிஷயத்தன்மை தோற்றும். அதன்கண்ணே இவ்விசாரஞ் செய்யத்தக்கதாம். மனத்தை விஷயஞ்செய்யும் ஞானத்தின்கண்ணே யாது காரணமாம். நேத்திராதிகள் காரணமா? மனம் காரணமா? முதற்பக்ஷஞ் சம்பவியாது; ஏனெனின், அவையோ பாகிய ஸ்தூலகடாதி பதார்த்தங்களின் ஞானத்தே காரணமாம்; ஆந்தரபதார்த்தஞானத்தே அவைகட்குக் காரணரூபத்தன்மை சம்பவியாதாம். இரண்டாவது பக்ஷமுஞ் சம்பவியாது; ஏனெனின், அம்மனம் ஞானரூபக்கிரியையின் கர்மரூபமாமாதலின் அதன்கண்ணே மனத்திற்குக் காரணரூபத்தன்மை சம்பவியாதாம். கருமத்திற்குங் காரணரூபத்தன்மையாமாயின், கடஞானத்தே கடத்திற்கும் காரணத்தன்மையாதல்வேண்டும், ஆனால், அவ்வாறுவதின்றாம்; மற்றேறு, கடாதிஞானத்தே நேத்திராதிகட்கே காரணத்தன்மையாமாதலின் மனத்தை விஷயஞ்செய்யும் ஞானம் எக்காரணத்தானும் பிறப்பதன்றாம்; மற்றேறு, அது நித்திய ஆன்மஸ்வரூபமேயாமாதலின், ஆநந்தம், பிரகாசம், ஆன்மா என்னும் மூன்றற்கும் ஒரேபொருளாமெனத் துணியப்பெறும். இவ்வாறாராயவே ஆன்மாநந்தம் தோற்றுகின்றது தோற்றவில்லையென்னும் ஐயம் சம்பவியாதாம். இப்போது ஆன்மாநந்தத்தின்விபரீதமானபக்ஷத்தைக் கண்டிக்கும்பொருட்டு அதன் காரணவிசாரஞ்செய்வாம்:—அவ்வான்மாநந்தம் எந்நிமித்தத்தால் விபரீதப் பிரதீதியாம். ஆண்டு, அவ்வாநந்தத்தின்கண்ணேயுண்டாம்ஆன்மாவின் பேதப்பிரதீதியும், ஞானவிஷயத்தன்மைப் பிரதீதியும், விஷயப்பிராப்தியாலாம் ஜன்யத்தன்மைப் பிரதீதியும், அதன்கண்ணே விபரீதத்தன்மைகளாம்; ஏனெனின், எதற்கு யாதுண்மைவடிவமாமோ அது எதன் ஞானத்தே தோற்றாதோ அது விபரீதஞானமாம். இரஜ்ஜுவின்கண்ணேயுண்டாம் இது சர்ப்பம் என்னும் ஞானத்தே இரஜ்ஜுவின் உண்மைவடிவம்

தோற்றுதாமாதலின், விபரீதஞானமாம். இதுபோல, விஷயபாவமற்ற ஆன்மஸ்வரூப நித்திய ஆநந்தத்தின்கண்ணே ஆன்மாவின் பேதத்தை விஷயம்செய்யும் ஞானமும், அவ்வாநந்தத்தே விஷயரூபத்தன்மையை விஷயஞ்செய்யும் ஞானமும், அவ்வாநந்தத்தே விஷயஜன்னியரூபத்தன்மையை விஷயஞ்செய்யும் ஞானமும் விபரீதஞானமாம். விபரீதஞானமாவனவெல்லாம் பொய்யேயாகும். சுத்தியின் கண்ணே இரஜதஞானமும், இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பஞானமும் விபரீதரூபமாதலின் மித்தைவடிவமாவதேபோல, ஆன்மஸ்வரூப ஆநந்தத்தே பேதத்தையும் விஷயத்தன்மையையும் ஜன்னியத்தன்மையையும் விஷயஞ்செய்யும் விபரீதஞானமும் பொய்யேயாகும். காரியசமான வியற்கையையுடைய பொருளே காரணமாம். கடசமான வியற்கையதாய மண் கடகாரணமாவதுபோல, அப்பொய்ஞானங்களின் காரணமும் மித்தையேயென அங்கீகரிக்கவேண்டும். சத்தியபதார்த்தத்தின்கண்ணே மித்தியாஞானத்தின் காரணத்தன்மை சம்பவியாதாம். இத்தகைய மித்தைவடிவம் மாயையன்றி வேறு கிடையாதாம். ஆகையால், அப்பொய்ம்மாயையே அப்பொய்விபரீதஞானங்கட்குக் காரணமாம். இவ்வாறாய விசாரமே சாங்கியமாம். ஹே சந்நியாசிகளே! அதிகாரியானவன் இவ்விசாரத்தைச்செய்க. செய்யவே காரியசகித மாயையினும வேறாய சுயஞ்சோதி ஆநந்தவடிவ ஆன்மாவின் சாக்ஷாத்காரமாம். இத்துணையால் சாங்கியோபாயம் கூறப்பெற்றது. இப்போது யோகோபாயம் கூறப்பெறும்:—ஹே சந்நியாசிகளே! யாகதானாதிரூப பாகியகருமமும் உபாசனைவடிவ ஆந்தரகருமமும் யோகமெனப்பெறும். அதனால், அதிகாரி மனந் தூயதாயின் அவனுக்கு ஆன்மசாக்ஷாத்காரமாம். ஆகவே அவித்தையழியும், அழியவே காமக்குரோதாதி சர்வ பாசங்களும் நாசமாம். இவ்வாறு அநிட்காமகருமரூப யோகமும் சித்தசுத்திவாயிலாய் ஆன்ம அடைவிற்கே சாதனமாம். இவ்வாறு சாங்கியயோகரூப உபாயத்தால் உண்டாய பிரஹ்மஞானத்தால் அதிகாரிக்குச் சுயஞ்சோதியான்மாப் பிரதீதியாம். அதனைச் சூரியசந்திராதி தேஜசுக்கள் பிரகாசியாவாம்; மற்றே, மாறாகச் சுயஞ்சோதி யான்மாவே அவற்றைப் பிரகாசிக்கும். கருத்திதுவாம்:—இரவிமதியாதி வெளியொளிகளை யொளிர்விக்கும் சிதாபாசனோடுகூடிய அந்தக்காணவிருத்திஞானமும் ஆன்மாவைப் பிரகாசியாதாம்; மற்றே, அதுவே அதனை யொளிர்விக்கும். விருத்திஞானமும் ஆன்மாவை விளக்காதெனின், விருத்திஞானவிஷயமாய சூரியாதிபாகியஜடவொளிகள் ஆன்மாவையொளிர்வியா என்பதன்கண்ணே யாதுகூறற்குளது. இத்தகைய ஆன்மாவே சர்வஜீவர்களின் ஹிருதயதேயத்தின்கண்ணேயிருக்கின்றது, மூவுலகத்தின்கண்ணுமிருக்கின்றது. அதுவே ஆன்மசாக்ஷாத்காரத்தால் காரியசகித அவித்தையை நாசம்செய்வதாய் ஹம்சம்என்னும் நாமத்தைப்பெறும். அதுவே வடவாக்கினிரூபமாம். ஜாடராக்கினிரூபமாம். விராட்டுரூபமாம். இத்தகைய பரமான்மாவை அதிகாரி தன்னான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரிக்கின் சம்சாரரூப மிருத்தியுவை யுல்லங்கனஞ்செய்து பிரஹ்மபாவத்தையடைவன். யான் பிரஹ்மரூபன் என்னும் ஆன்மஞானமின்றி வேறொரு உபாயம் பிரஹ்மபாவத்தையடைய இன்றாம்; மற்றே, அவ்வபேதஞானமே அதன் சாதனமாமாதலின், முமுக்ஷுக்கள் சிரவணாதி சாதனங்களால் பிரஹ்மஞானத்தை யவசியம் சம்பாதிக்குக. அச்சாதனங்களாலறியப்பெறும் 'பா

மான்மா, சம்பூரண சராசர வுலகைச் சாமானியரூபத்தானும் விசேஷரூபத்தானும் அறிவதாம், சர்வ ஜகத்தின் காரணமாம், காலத்திற்குங் காலமாம், சர்வ குணங்களோடுகூடியதாம், க்ஷேத்ரஞ்ஞ ஜீவனுக்கும் மாயைக்கும், மாயையின் சத்துவாதி குணங்கட்கும் பதியாம், ஜீவர்களின் அறம்பாவங்கட்குச் சுகதுக்க பலத்தைக்கொடுக்கும் பந்தமோக்ஷகாரணமாம், ஜகத் வியவஸ்தையைச் செய்வதாம், ஜகத்தைக் காப்பதாம், பிரபஞ்சவடிவமாய்க் காணப்பெற்ற அது ஜீவர்கட்குப் பந்தத்தைக் கொடுக்கும், ஜன்மமரணாதி விகாரமற்றதாய்க் காணப்பெற்ற அது மோக்ஷரூப அமிருதத்தைத்தரும். தனது ஞானவடிவத்தே நிலைபெற்றதாய்ச் சர்வ ஜகத்தையுங் காக்கும், யாவற்றையுந் தன்னாணைக்குள் நடாத்தும். அதன்ஐசுவரியத்தினும் அதிக ஐசுவரியமுடையது யாதொன்றுமின்றாம். இத்தகைய பரமான்மாவே அதிகாரிகள் தங்கள் ஆன்மவடிவமென அறியத்தகுதியதாம். ஹே சந்நியாசிகளே! யாம் அப்பரமான்மாவின் எப்பிரார்த்தனையால் ஆன்மசாக்ஷாத்காரத்தை யடைந்தேமோ அதனை நீங்கள் கேட்பீர்களாக:—அப்பரமான்மா முன்னர் ஹிரண்ய கருப்பனையுண்டாக்கி அவருக்கு நான்கு வேதங்களோடுகூட ஞானத்தைக்கொடுத்தது, அது கேவலம் ஆன்மஞானத்தானேயடையத்தக்கதாம். அத்தகைய பரமான்மாவின் சரணத்தை முமுக்ஷுக்களாய யாம் அடைவுற்றோம் அது ஹஸ்தபாதாதி அவயவமற்றதாம், கிரியையற்றதாம், சாந்தஸ்வரூபமாம், சுகரூபமாம், சர்வ ஜீவர்களின் ஆன்மவடிவமாம், சர்வ தோஷங்களுமற்றதாம், காரணமற்றதாம், மோக்ஷரூப அமிருதத்தைச் சேதுவைப்போலத் தாரணைசெய்வதாம். காஷ்டங்களைத் தகித்து அக்கினி தன்ஸ்வரூபத்தே நிலைபெறுவதேபோலக் காரியசகிதமாயை வடிவ உபாதியற்றதாய்த் தன்னத்விதீயரூபத்தின்கண்ணே ஸ்திதமாம். அத்தகைய அத்விதீயப் பரமான்மாவின் சரணத்தை முமுக்ஷுக்களாகிய யாம் அடைந்துளேம். இவ்வாறு யாம் பரமாத்மாவைப் பிரார்த்தித்தபோது அது கிருபைகூர்ந்து எம்பொருட்டு மோக்ஷகாரணரூப ஆன்மஞானத்தைக்கொடுத்தது அதன் மகிமையால் யாம் அதனை எமதான்மவடிவமாயறிந்தேம். அதன் ஞானமின்றி ஜீவர்கட்கு ஒருகாலும் மோக்ஷவடைவுண்டாகாதாம். இப்போது ஆன்மஞானமின்றி மோக்ஷ அடைவின் அபாவம் நிரூபிக்கப்பெறும்:—ஹே சந்நியாசிகளே! இத்தேகதாரிகள் தோலைப்போல ஆகாசத்தை ஒருங்கு சேர்ப்பராயின் ஆன்மஞானமின்றியே மோக்ஷத்தையடைவர்; ஆனால், அவ்வாறு முடியாததேபோல ஆன்மஞானமின்றி மோக்ஷப்பிராப்தியுண்டாகாதாம்.

யதா சர்மவதாகாஶம் வேஷ்டயிஷ்யந்தி மாநவா: ।
ததா தேவமவிஜ்ஞாய து:கஸ்யாந்தோ ஹவிஷ்யதி ॥

மேலெப் போதிந்த மாநுடர் மிண்டியே
தோலைப் போலச் சுருட்டுவர் கம்மினை
யேலப் போது சிவனரு ளின்றியே
மாலைப் போழ்ந்து மனும்பெரு மின்பமே.

(பொ-ள்.) இம்மனுடர் எக்கால் தோலைப்போல ஆகாசத்தை யொருங்குசேர்ப்பரோ அக்கால் பரமான்மாவையறியாது இவர்க்கு ஜன்மமரணாதி துக்கங்களின் நிவி

ருத்தியுண்டாம். ஹே சந்நியாசிகளே! எவ்வாநந்தஸ்வரூப சுயஞ்சோதியான்மாவை யாமுபதேசித்தேமோ அதுவே முமுக்ஷுக்களாலறியத்தக்கதாம், அதுவே தனது மாயாசக்தியால் சர்வஜகத்தின் உபாதானகாரணமாம், உமக்கும் எமக்கும் அன்னியஸ்தாவரஜங்கமரூபஜகத்திற்கும் ஆன்மவடிவமாம், சர்வபேதமுமற்றதாம். தூய ஆகாசத்தே நானாவகை மேகம் கற்பிதமாவதேபோல, பரமான்மாவின்கண்ணே முற்கூறிய காலாதி காரணங் கற்பிதமாம். மயங்கியோனுக்குக் ககனத்தே கந்தர்வநகரம் பிரதிதியாவதேபோல அவிவேகிகட்குப் பரமான்மாவின்கண்ணே மாயாசகிதஜகத்தானது தோற்றும். கனவின்கண்ணே ஒருவனேயாய்க் கனாக்காண்போன் அநேகரூபனாவதேபோல இப்பரமான்மாவொன்றே அவித்தியாதோஷத்தால் அநேக ரூபமாம். துயிலின்கண்ணே நேத்திராதிகளும் உருவமுதலியனவும் இலயமாகவே சம்சாரி ஒரு சிறிதுந் துவைதப்பிரபஞ்சத்தைக் கண்டிலாததேபோல, மோக்ஷ அவஸ்தையின் கண்ணே ஆன்மஞானத்தாற் காரியசகித அவித்தை நாசமாகவே அறிஞன் சிறிதுமாத்திரையும் துவைதப்பிரபஞ்சத்தைக் கண்டிலன். கனாவவஸ்தையையடைந்த ஜீவர்கட்குச் சர்வ கனாப்பொருள்கள் இலயமாவதேபோல, ஆநந்தஸ்வரூப ஆன்மாவின் ஞானத்தால் அதிகாரிகட்குச் சம்பூரணப் பிரபஞ்சம் இலயபாவத்தையடையும். இத்தகைய ஆன்மஞானத்தை அதிகாரிகள் அவசியம் சம்பாதிக்கவேண்டும். இப்போது ஆன்மஞானத்தின் துர்லபத்தன்மை நிரூபிக்கப்பெறும்:—ஹே சந்நியாசிகளே! யாமுபதேசித்த ஆன்மஞானம் அத்தியந்தந் துர்லபமாம்; ஏனெனின், அதனையடையும்பொருட்டு மனுஷர் நானாவகைத் தவம்புரிந்து மகிழ்வித்த தேவதைகளும் அவர்கட்கு ஆன்மஞானோபதேசம் செய்வதில்லை; மற்றோ, வேறு அநேக வரங்களைக்கொடுப்பர். அவற்றான் மகிழ்வையடையாத அதிகாரிகட்குச் சத்தியபாசத்தாற் கட்டப்பெற்ற தேவதைகள் ஆன்மஞானத்தை யுபதேசிப்பர். பூர்வம் சத்தியபாசத்தாற் கட்டுபபட்ட யமராஜா நசிகேதாவிற்குப் பிரஹ்மவித்தையினுபதேசத்தைச் செய்தனர். இவ்வார்த்தையை நீங்களும் தவமகிமையாலறிவீர்கள்.

சங்கை:—ஹே பகவன்! இப்பிரஹ்மவித்தை இங்ஙன் துர்லபமாயின் சபையின்கண்ணேயிருந்து தாங்கள் இதனை யெங்கட்கு ஏன் உபதேசிக்கின்றீர்கள்.

சமாதானம்:—ஹே சந்நியாசிகளே! இது அத்தியந்தந் துர்லபமாயினும் எவ்விசாரத்தாலிதனை யுங்கட் குபதேசித்தேனோ அவ்விசாரத்தைக்கேளுங்கள்:— இவ்வதிதி சந்நியாசிகள் எமது ஆசிரமத்தை யடைந்துளார், பிரஹ்மவித்தைக்கும் அதிகாரிகளாயிருக்கின்றனர் யாம் இவர்கட்குப் பிரஹ்மவித்யோபதேசஞ் செய்யாவிடின் எம்மையொழித்து வேறு யாவரிவர்கட்கு இதனை யுபதேசிப்பர்; மற்றோ, எமக்குச் சமான பிரஹ்மவேத்தாத்தன்மை வேறு யாரிடத்தேயும் நிச்சிதமின்றாம். தத்யங் அதர்வண இருஷியைப்போல யாமும் சர்வ ஜீவர்களின் உபகாரப்பொருட்டே பிரவிருத்தித்தேமாதலின், இவ்வதிதி சந்நியாசிகளினின்றும் இது இரகசியமாய் வைத்தல் எமக்குத் தகுதியன்றாம்; என எமதுளத்தேயாராய்ந்து யாம் உங்கட்கு இவ்விரகசியப் பிரஹ்மவித்தையை யுபதேசித்தேம்; அல்லது, எவ்வறிஞன் அதிகாரிகட்குப் பிரஹ்மவித்தையினுபதேசத்தைச் செய்கின்றானோ அவன்மீது பரமேஸ்வாரும் கருணைசெய்வர் என்பதனாலும் யாம் உங்கட்கு இந்தக்

குகியப் பிரஹ்மவித்தையை யுபதேசித்தேம். இவ்வார்த்தையைக் கீதையின்கண்ணும் ஸ்ரீ கிருஷ்ணபகவானருளிச் செய்துளார் :—

𑌯𑌇𑌮𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌗𑍁𑌹𑍍𑌯𑌂 𑌮𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑍇𑌷𑍍𑌵𑌭𑌿𑌧𑌾𑌸𑍍𑌯𑌤𑌿
𑌭𑌕𑍍𑌤𑌿𑌂 𑌮𑌯𑌿𑌪𑌰𑌾𑌂𑌕𑍃𑌤𑍍𑌵𑌾 𑌮𑌾𑌮𑍇𑌵𑍈𑌷𑍍𑌯𑌤𑍍𑌯 𑌸𑌂𑌶𑌯𑌃 ।
𑌨𑌚𑌤𑌸𑍍𑌮𑌾𑌨𑍍𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇𑌷𑍁 𑌕𑌶𑍍𑌚𑌿𑌨𑍍𑌮𑍇 𑌪𑍍𑌰𑌿𑌯𑌕𑍃𑌤𑍍𑌤𑌮𑌃
𑌭𑌵𑌿𑌤𑌾𑌨𑌚𑌮𑍇𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑌨𑍍𑌯𑌃 𑌪𑍍𑌰𑌿𑌯𑌤𑌰𑍋𑌭𑍁𑌵𑌿 ॥

எல்லாப் பொருட்கும் பரமாமிப் பொருளை யென்னன் பர்க்கிசையச்
சொல்லாற் றெரிவிப் பவரென்பா லன்புதுன்னி யெனையடைவர்
நல்லார் களின்மற் றெனக்கினிய நன்மை செய்கின் றருமவ
ரல்லா தவரிப் பொழுதுமிலை மேலு மவர்க ளுளராகார்.

(பொ-ள்.) ஹே அர்ச்சுன! உனக்கு யாம் பரம குகியமாகிய ஆன்மஞானத்தையுபதேசித்தேம். இதனை எவ்வறிஞன் எமது பக்தர்கட்குக் கொடுக்கின்றானோ அவன் எம்மிடத்தே பரமபக்தியைச் செய்தவனாய் எம்மிடத்தே ஐக்கியமாவன் இதன்கண்ணே சிறிதுமாத்திரையும் ஐயமின்றாம். அத்தகைய அறிஞனன்றி இம் மனுஷருள்ளே எம்மனுஷனும் எம்மை மகிழ்விப்பவனில்லை; மற்றோ, அவ்வான்ம ஞானோபதேசம் செய்யும் அறிஞனே எம்மை மகிழ்விப்பவனாவன் எமக்கும் அவ்வறிஞனினும் வேறாக மற்றெப்பொருளும் இவ்வுலகத்தே பிரியமுடையதாகாதாம்; மற்றோ, அவ்வறிஞனே எமக்கு அத்தியந்தம் பிரியமுடையவனாவன். ஸ்ரீ குரு கூறல் :—ஹே குழந்தாய்! அந்தச் சுவேதாசுவதரரெனப்பெயரிய மகரிஷி அச்சந்நியாசிகட்கு அந்தப் பிரஹ்மவித்தையை யுபதேசித்து மௌனமாயிருந்தனர். வேதவேதாங்கங்களின் கருத்தையறிந்த அம்மகரிஷியானவர் தவமகிமையாலும் ஈசுவரப் பிரசாதத்தாலும் ஆன்ம சாக்ஷாத்காரத்தையடைந்து தமதாசிரமத்தே அதியாசிரமிகளாகிய சந்நியாசிகட்கு ஆன்மஞானத்தை யுபதேசித்தனர். இவ்வுலகத்தே பிரஹ்மசாரி, கிருகஸ்தன், வானப்பிரஸ்தன் என்னும் மூன்றாசிரமிகளினும் பரமஹம்ச சந்நியாசி அதிகனாதலின் சுருதியின்கண்ணே அவர்கள் அதியாசிரமிகளெனப்பட்டனர். அவர்கள் அவ்விருஷியிடத்தினின்றும் பிரஹ்மஞானத்தையடைந்தனர். அது அத்தியந்தம் பவித்திரமாம், காரியசகித அஞ்ஞானநிவிர்த்திரூப மோக்ஷப்பிராப்தியின் காரணமாம், மோக்ஷ இச்சையையுடைய முனிகளாற் சேவிதமாம், வேதாந்தங்களில் குகியரூபமாய்க் கூறப்பெற்றதாம். ஈண்டுப் பிரசங்கத்தே புராகற்பரூபமாய்க் கூறப்பெற்றதாம; எவ்வேதபாகத்தே பூர்வவிருத்தபுருஷரின் சிருஷ்டிமுதலிய வியவகாரம் கூறப்பெற்றுளதோ அது புராகற்பமாம். ஈண்டுப் பிரசங்கத்தே பூர்வம் பிரஹ்மவேத்தாக்களாகிய பிராஹ்மணர்கள் ஜகத்காரண விசாரஞ்செய்யும்பொருட்டு இனிது கூடியதே புராகற்பமாம். ஹே மைந்த! எவ்விசாரத்தை மனத்தின்கண்ணேவைத்து அம்மகரிஷி மௌனமுற்றனரோ அதை நீ கேள்: சமதமாதி சாதனங்களற்றவனும் விஷயங்களிலாசக்தியுற்றவனும் ஆயவன் ஒருகால் ஒருதயாளுவாகிய பிரஹ்மவேத்தாக் குருவின் சந்நிதியில் பிரஹ்மவித்தையையடையப் பிரார்த்தனைசெய்தபோதினும், அவர்

அவ்விஷயாசக்தனுக்கு ஒருகாலும் பிரஹ்மவித்தையை உபதேசிக்கலாகாது. அவன் சமதமாதி சாதனங்களோடுகூடியவனாயினும் புத்திரபாவத்தாலும் சிஷ்ய பாவத்தாலுமிரானாயினும் அவனுக்குப் பிரஹ்மவித்தையை யுபதேசிக்கலாகாது. அவர் ஏதாவது பிரதிஞ்ஞை முதலிய நிமித்தத்தால் பரவசமாயினும் குருபக்தி யற்றவனுக்குப் பிரஹ்மவித்தையின் உண்மைக்கருத்தை யொருகாலு முரைக்க லாகாது. விவேகம் வைராக்கியம் சமாதிசட்சம்பத்தி முமுக்ஷுத்வ மென்னும் நான்கு சாதனங்களோடுகூடியவனும், பிரமாதமற்றவனும், பிரஹ்மவேத்தாவாகிய குருவைச் சாக்ஷாத் பரமேசுரரைப்போலக் காண்பவனும் ஆகிய குருபக்தனுக்கு ஆசிரியர் உபதேசம் செய்க. அத்தகைய குருபக்த அதிகாரியே பிரஹ்மவித்தை யின் மோக்ஷரூபபலத்தையடைவன். குருபக்தியற்றவன் ஒரு தெய்வயோகத்தால் அந்தப் பிரஹ்மவித்தையைக் கற்பினும் குருபக்தியில்லாவிடின் பிரஹ்மவித்தை யின் சிரவணபலமுண்டாகாதாம்; மாறாக அக்குருபக்தியற்றவனுக்கு அனர்த்தமே யுண்டாம். இவ்வார்த்தை புராணாதிகளிலும் ஸ்ரீ வியாசபகவானாதியர் கூறியருளி யுள்ளார் :—

ஶூஶூம்யொாசாத வெஶவெஶுஃ ஸஂவஶஃகி ஸொஹதஃ ।
தஸ்யாஷிஷெ லொகெ ஸுவஂவெஶவ வஶத்ரா ॥

எவன் மயங்கிக் குரவனை யேனைய
கவரு மானவர் போனனி காண்பனோ
அவனி கத்தும்ப ரத்தும னுத்துணைச்
சிவன்ற ஞாண சுகஞ்சேறி யானரோ.

(பொ-ள்.) யாவன்றனது பிரமாதத்தால் பிரஹ்மவித்தையை யுபதேசிக்கும் குருவை மற்றை மனுஷரைப்போலக் காண்பனோ அவனுக்கு இவ்வுலகத்தும் பர லோகத்தும் சிறிதுமாத்திரையும் சுகப்பிராப்தியுண்டாகாதாம்; மற்றோ, அவ னுக் கிரண்டுலோகத்தும் துக்கமேயுண்டாம்.

கூஃஷணா தேஹஸாவாசா ஶூஶூம்யொதா வஃஜதெ ।
ஸயாதி நஶகாஜொாஶாஞ ஜோஶள ஶவஸஂஜிதாஞ ॥

வாக்கி ஞன்மனத் தால்வபு வாலுயர்
நோக்கை நல்கிய நுண்குர வன்றனைத்
தேக்க வமதி செய்திடிற் கோரமா
நீக்க மின்றிர வுரவம் நேர்வனே.

(பொ-ள்.) யாவன் சரீர மனவாணிகளால் பிரஹ்மவித்தையைக் கொடுக்கும் குருவை அவமதிப்பனோ அவன் மகாகோரரௌரவ நரகத்தையடைவன். தன் னுடைத் தன்தேகத்தால் குருவைத் துயருறுத்தல் சரீரகிருத அவமானமாம், தன் மனத்தில் குருதூஷணத்தைச் சிந்தித்தல் மனோகிருத அவமானமாம். தன்வாணி யால் குருவை நிந்தித்தல் வாணீகிருத அவமானமாம். ஆயிரந்தேட்குச் சமான விஷமுடைய அநேகஞ் சந்துக்களால் பூரணமாய நரகம் ரௌரவமாம். இத்தகைய நரகத்தே குருவை யவமதிக்கும் புருஷர் அடைவர்.

*ஏகாக்ஷர ப்ரதாதாரம் ம்ருத்யுமேவைக ஈக்ஷதே ।*
*ஸோஸௌரௌரவகம் யாதியாவத்ப்ரளய ஸம்ப்லவம் ॥*

அக்கர மோன்றை யேனு மருஞ்சிவ வித்தை தன்னிற்
போக்கமற் றருளுந் தேசி கேந்திரன் புகழை நாளும்
திக்கரம் புரியு மூடன் செகம்பிர ளயமாங் காறுங்
கக்கறு ரவுர வத்தே கதியற விருப்ப னன்றே.

(பொ-ள்.) *பிரஹ்மவித்தையின் ஏகாக்ஷர மாத்திரத்தையும் உபதேசிக்கும் குருவை மதியாத மூடன் உலகம் பிரளயமாம் பரியந்தம் ரௌரவ நரகத்தே நிவாசம்செய்வன். கருத்திதுவாம்:—பிரஹ்மவித்தையின் ஏகாக்ஷர மாத்திரத்தை யுபதேசம் செய்யும் குருவை மதியாதவனும் பிரளய பரியந்தம் நரகத்தே வாசம் செய்வானுயின், சம்பூரணப் பிரஹ்மவித்தையை யுபதேசித்த குருவை மதியாதவன் அநேகம் பிரளயபரியந்தம் நரகத்தின்கண்ணேயிருப்பன் என்பதன்கண்ணே யாது கூறற்குளது.*

*க்ருதக்நாநாம் ஹிமேயோகா மெயோகாப்ரஹ்ம வாதிநாம் ।*
*உபகாரத்நிஸம்யாதி ம்ருத்யுதுராஸ வாமேராகம் ॥*

செய்தநல் லுபகா ரத்தைச் சிந்தியா நன்றி கொன்றோன்
வெய்தினின் மறையோர்க் கொன்ற வெம்பனும் வெடித்துச் சேரும்
உய்தர லில்லா வெய்ய நரகமே யுறுவ ஞண்டே
மைதவிர்த் தருளும் வள்ளன் மாறுகோள் தீய னன்றே.

(பொ-ள்.) *செய்த உபகாரத்தை மதியாத செய்ந்நன்றி கொன்றவனும், பிராஹ்மணர்களை ஹனனஞ் செய்யும் பிரஹ்மஹத்தியனும் மரித்து எந்நரகாதி லோகங்களையடைவரோ அவற்றை இக்குருத்துரோகியானவன் மரித்தடைவன்.*

*ஸமஸ்தபாதகீ ஜ்ஞேயஸ்ஸோபவாதகீதுவி ।*
*மஹாகல்பஸஹஸ்ராணி விஷ்டாயாம் ஜாயதேக்ருமி: ॥*

வித்தையை யுபதே சிக்கும் வியன்குரு விற்குத் ரோகி
கத்தவன் பெரிய பாத கனுமுப பாத கன்றான்
றத்தவ னரகந் தன்னிற் றசசத கற்ப நின்றே
யெத்துறு மலத்தி லுற்ற கிருமியா யெழுவ னன்றே.

(பொ-ள்.) *பிரஹ்மவித்தையை யுபதேசிக்கும் குருவிற்குத் துரோகம் செய்யும் குருத்துரோகியே மகாபாதகனெனவறிக, உபபாதகனெனவுமறிக. ஈண்டுப் பிரஹ்மஹத்தி, மதிராபானம், பொற்களவு, குருஸ்திரீகமனம், என்னும் பாவங்களைச் செய்பவர் மகாபாதகராவர். கோவதைமுதலிய பாவங்களைச் செய்யும் புருஷன் உபபாதகனுவன். இத்தகைய குருத்துரோகியானவன் ரௌரவாதி நரகங்களையடைந்து அவற்றின்கண்ணே ஆயிர கற்பபரியந்தம் வாசம்செய்வன். அதன்பின்னர் அவன் விஷ்டையின்கண்ணே கிருமிசரீரத்தையடைவன். அல்லது, சாஸ்திரத்தின்கண்ணேயுள்ள வித்தைகள் யாவற்றையும் அடைவதன்கண்ணே*

குருவிசேஷணமாமாதலின் அதிகாரியானவன் ஸ்ரீ மகாதேவரைப் பூஜிப்பதே போல ஸ்ரீ குருவையும் பூஜைசெய்க. அல்லது, அதிகாரியானவன் சிவபூஜையினும் குருபூஜையை அதிகமாகச் செய்க.

ஶிவெ ருஷ்டெ ம்ருஹாதா ம்ரளருஷ்டெஶி வொ தவி ।
ஶிவாதவக்ஷயிகம் தஸ்மாஃ ம்ருமயத்நெந வாஜயெக் ॥

தெருளு றுசிவன் சினந்திடிற் றேசிகன் காக்கும்
அருளு ருக்குரு முனிந்திடி லரனரு ளாஞல்
இருள றப்புரி யிந்துசே கரன் றன் பூசையினும்
அருளி றைக்குறும் பூசையை யதிக மாற் றுகவே.

(பொ-ள்.) சிவபெருமான் முனிந்தருளுவரேல் அதிகாரியைக் குரு காப்பாற்றுவர், குரு முனிந்தருளுவரேல் அதிகாரியைச் சிவபெருமான் காப்பாற்றாராதலின் அதிகாரியானவன் சிவபூசையினும் குருபூசையை மிகுதியாகச்செய்க. அல்லது யாவன் அபிமானமிகுத்துத் தன்னாசிரியரை யவமதிக்கின்றனனோ அவனது பாவநிவிருத்திசெய்யும் யாதொரு பிராயச்சித்தமும் இவ்வுலகின்கண்ணே யின்றாம்; ஏனெனின், பிரஹ்மஹத்தியாதி பாவங்களைநீக்கும் பிராயச்சித்தம் தர்மசாஸ்திரத்தின்கண்ணே காணப்பெறுகின்றது; ஆனல், குருத்துரோகியின் பாவநீக்கப் பிராயச்சித்தம் எந்நூலின்கண்ணும் காணவருவதின்றாம். அல்லது, இவ்வுலகத்தே அன்னியபாவிகளினும் பிரஹ்மஹத்திசெய்பவன் அதிகபாவியாவன், அவனினும் செய்தவுபகாரத்தை மதியாத செய்ந்நன்றிகொன்றவன் அதிகபாவியாவன், அவனினும் குருத்துரோகஞ்செய்யும் புருஷன் அதிகபாவியாவன்; ஏனெனின், அதிகாரிகட்குக் குருவே தாய்தந்தையராவர், குருவே தெய்வம், குருவே யுறவினர், குருவே மித்திரன், குருவே யுபகாரஞ்செய்யும் சுஹ்ருத்தாம், இத்தகைய குருவிற்குத் துரோகஞ்செய்யும் புருஷன் செய்ந்நன்றிகொன்றவனினும் அதிகபாவியாவன், இதன்கண்ணே யாதொரு ஆச்சரியமுமின்றாம். அல்லது, 'ப்ரஹ்மவெத ப்ரஹ்மெவ ஹவதி' என்னுஞ் சுருதியின்கண்ணே பிரஹ்மவேத்தாப் பிரஹ்மமெனக் கூறப்பெற்றுளான்; ஆதலின், அதிகாரியானவன் ஆன்மஞானத்தால் எந்தப்பிரஹ்மத்தை யடைவானே அந்தப்பிரஹ்மம் பிரஹ்மவேத்தாக்குருவினும் அபின்னமாமாதலின், அவரை யவமானித்தலால் பிரஹ்மத்தையே யவமானித்ததாம். 'அயமாத்மா ப்ரஹ்ம' என்னுஞ் சுருதியின்கண்ணே ஆன்மாவிற்குப் பிரஹ்மத்தோடு அபேதங்கூறியிருத்தலின் பிரஹ்மத்தை யவமதித்தலால் ஆன்மாவையே யவமதித்ததாம். 'ஸொத்மா த்ஸ்மிக்ஷம் ஸர்வம்' என்பது முதலிய சுருதியின்கண்ணே இவ்வெல்லாவுலகும் ஆன்மரூபமெனப்பட்டுளதாதலின், ஆன்மாவை யவமதித்தலால் சர்வஜகத்தையும் அவமதித்ததாம். அவ் வவமதிப்பாகிய ஹநநம் சஸ்திரஹநநத்தினும் அத்தியந்தங் கூர்மையதாம்; ஏனெனின், சஸ்திரத்தால் ஹநநஞ்செய்யப்பட்டவன் க்ஷணமாத்திர துக்கத்தையடைவன்; ஒருகாலடையவுமாட்டான். அவமதிப்புவடிவசஸ்திரத்தால் ஹனனம்செய்யப்பட்ட புருஷன் ஸ்மிருதிவாயிலாய் மரணபரியந்தம் துக்கத்தையடைவன்; ஆகையால், குருத்துரோகத்தால் சர்வஜகத்தையும் ஹநநஞ்செய்யும் குருத்துரோகிக்குச் சுகமி

டைத்தல் அத்தியந்தந் துர்லபமாம். ஆகையால், தனது கல்யாணஞ்செய்யவி ழைந்த அதிகாரி சரீரமனவாணியால் பிரஹ்மவேத்தாக்குருவை மகிழ்விக்க வேண்டும். சிவாதிதேவதைகளின் பூஜைக்குச் சாவதானமா யிருப்பதுபோலவே குருபூஜையையும் சாவதானமாய்ச்செய்க. பிரஹ்மவித்தையை யுபதேசிக்கும் குரு சிஷனுக்குச் சுபகாரியத்தைக்கூறினும், அசுபகாரியத்தைக்கூறினும் மகிழ்ந்தமன முடன்செய்க அக்காரியம் செய்வதில் அவன் தனதுசரீரரக்ஷையைச் சிந்தனஞ் செய்யற்க. சிஷனவன் தனதுசெவிகளால் எப்போதும் குருவின்கீர்த்தியையே கேட்குக., தனதுவாயால் எப்போதும் குருவின் ஸ்துதியையேசெய்க. அவன் சமீபத்தே ஒருதுஷ்டன் பிரஹ்மவேத்தாக் குருவின் தோஷத்தைக்கூறின் அந்நிந் தகதுஷ்டனை ஆற்றலுள்ளவரை அவமானமேசெய்க. அவனை யவமானஞ்செய்வ தில் சமர்த்தற்றவனுயின், அவன் நிந்திக்குமிடத்தினின்றுந் தூரத்தேசெல்க. செல்லச் சமர்த்தற்றவனுயின் குருநிந்தை கேளாவண்ணம், தன்செவிகளைப் புதைத் துக்கொள்க. ஆகையால், சுகத்தையிச்சித்த அதிகாரியானவன் சிவாதிதேவதைக ளிடத்தே பக்திசெய்வதேபோல இரவும் பகலும் சாவதானனுய்த் தனது குரு பக்திசெய்க, அதனுல் அதிகாரிகட்கு மோக்ஷரூபப் புருஷார்த்தப் பிராப்தியாம்.

யஸ்யதேவேபராபக்தி: யதாதேவே ததாகுரௌ ।
தஸ்யைதே கதிதாஹ்யர்தா: ப்ரகாஶந்தே மஹாத்மந: ॥

தக்க நற்குர வன்றனைச் சிவனெனத் தானினைந் திடுவோருள்
புக்க லாகுமிங் குரைத்தமெய்ப் பரம்பொருள் புரணமாய் வெளியாக.

(பொ-ள்.) எவ்வதிகாரிக்குப் பரமான்மாவிடத்தே பரமபக்தியாமோ அது போலவே குருவினிடத்தாமோ அந்தக் குருபக்தசிகாமணிக்கே வேதாந்தசாஸ் திரபதார்த்தம் புத்தியின்கண்ணே பிரகாசிக்கும், அவனுக்கே தருமம், அருத்தம், காமம், மோக்ஷம் என்னும் நான்கு புருஷார்த்தங்களுமுண்டாம். அல்லது பிரஹ் மசரிய ஆசிரமத்தின்கண்ணே இவன் ஈசுவர ஆராதனத்தின்கண்ணும் வேதாத் தியயனத்தின்கண்ணும் சாவதானமா யிருந்ததுபோலவே குருபக்தியின்கண்ணே சாவதானமாயிருக்குக; ஏனெனின். பிரஹ்மசரியாதி சாதனத்தினின்றும் பிரஷ்ட னுபினும் சிஷன்மீது குருவின் மகிழ்விருக்கும்பக்ஷத்தில் அவர் அச்சிஷனைப் பிரா யச்சித்தாதி யுபாயங்களால் பரிசுத்தஞ்செய்யக்கூடும். குருபக்தியினின்றும் பிரஷ் டனுப்க் குருகிருபை யற்றவனுயின் அவனைக்காப்பாற்ற எப்பிராயச்சித்தாதி யுபா யமுமின்றும்.

குரௌ விருத்தம்யாதே விருத்தா: ஸர்வதேவதா: ।
பவந்தி க்ரியயாஶ்ரேணம்அவாச்யம் பாபம் ஹிஜாயதே ॥

வித்தையைத் தத்தஞ் செய்த வித்தகன் றன்னைச் சேற்ற
எத்தனைத் தேவ ரெல்லா மேள்ளுவர் கள்ள னென்றே
உத்தமப் புண்ணி யத்தை யுஞற்றினும் பாவ மேயாம்
அத்திற லத்த னென்றே யருளிறை தனையே போற்ற.

(பொ-ள்.) பிரஹ்மவித்தையை யுபதேசிக்கும் குருவையுபேக்ஷித்துத் திரும்புவனுயின் அக்குரு கடாக்ஷமின்றி யவனைச் சம்பூரணதேவதைகளும் வெறுப்பர். அவன் ஒருகால் புண்ணியகருமஞ்செய்யினும் பாவரூபமேயாம். ஆகையால், தருமம், அருத்தம், காமம், மோக்ஷம் என்னும் நால்வகைப் புருஷார்த்தத்தையடைய இச்சையுடையவன் எல்லாவகையானும் தேவதையைப்போலக் குருவைப்பூசை செய்க. அல்லது, சமதமாதிகுணங்களோடு கூடியவனும் ஆன்மசாக்ஷாத்காரத்தோடுகூடியவனும் ஆகிய ஜீவன்முத்த பரமஹம்ஸ சந்நியாசியும் எல்லாவகையானும் தனதுகுருவைப் பூஜனைசெய்க.

யாவதாயுஸ்த்ரயொவம் த்யாவெதாந்தொ குருரீஸ்வர: ॥

ஆயு ளுளவரை, தூய மறைமுடி
மேய குருசிவன், நேய முறுகவே.

(பொ-ள்.) எதுவரை இவ்வறிஞனுக்காயுளுளதோ அதுவரை இவ்வறிஞனும் இம்மூன்றையும் அவசியம்வந்தனஞ்செய்தல் தகுதியாம், அவையாவன:—வேதாந்தசாஸ்திரம், அதனையுபதேசிக்கும் ஆசிரியர், ஈசுரர். கருத்திதுவாம்:—விதிநிஷேதமற்ற ஜீவன்முக்த சந்நியாசிகளும் குருவைப்பூசித்தல் அவசியம் தகுதியதாமாயின், அன்னிய ஆசிரமமுடையவர் குருவை யவசியம் பூசைசெய்யவேண்டும் என்பதன்கண்ணே யாதுகூறற்குளது. ஆகையால், ஹே சந்நியாசிகளே! உங்கட்கு எமதுபதேசத்தால் ஆன்மசாக்ஷாத்காரமுண்டாயினும் தத்தங்குருவைப் பூஜிப்பான் நீங்கள் குருசமீபத்தே அவசியஞ்செல்லவேண்டும். ஹே குழந்தாய்! இவ்வகை யபிப்பிராயத்தை மனத்தின்கண்ணே வைத்துக்கொண்டு அந்தச்சுவேதாசுவதரமகரிஷியானவர் மௌனத்தை யடைந்திருந்தனர். அம்முனிவரின் அபிப்பிராயத்தையறிந்து அவ்வறிஞர்களாகிய சந்நியாசிகள் சுவேதாசுவதரமுனியைத்தக்கவாறு துதிபுரிந்து தத்தமது குருவையடைந்தனர். ஹே குழந்தாய்! பூர்வம் பிரஹ்மவேத்தாப் பிராஹ்மணர்கள் ஜகத்காரணவிசாரஞ்செய்து மாயாசக்தியைத் தரிசித்து எந்தப்பிரஹ்மவித்தையைக் கூறினரோ அதுவே அம்முனிவராற் சந்நியாசிகட்குக் கூறப்பெற்றதாம். அதுவே எம்மாலுனக் குபதேசித்ததுமாம். இப்போதெப்பொருளைச் சிரவணஞ்செய்ய உனக்கிச்சையிருக்கின்றதோ அதனைக் கேட்பாயாக.

எட்டாவது அத்தியாயம் முற்றும்.

---

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## ஒன்பதாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ குருப்யோநம: ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நம:
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநம:.

*முன்னர் எட்டாவது அத்தியாயத்தே யஜுர்வேதத்தின் சுவேதாசுவதர உபநிஷத்தின் அருத்தம் நிரூபிக்கப்பட்டது. இப்போது ஒன்பதாவது அத்தியாயத்தே அந்த யஜுர்வேதத்தின் கடவல்லியுபநிஷதர்த்தம் நிரூபிக்கப்பெறும். ஆண்டுப் பூர்வம் எட்டாவதத்தியாயத்தே பிரஹ்மவேத்தாப் பிராஹ்மணர் சுத்தப்பிரஹ்மத்தினும் வேறாய் மாயையின்வடிவத்தைக் காண்பித்த விசாரத்தைக் கேட்டுப் பரமாநந்தத்தையடைந்த சிஷன் மீண்டும் தன்னாசிரியர்பால் இவ்வாறு வினாவினன் :—ஹே பகவன் ! இவ்வான்மபுராண முதலாவதத்தியாயத்தே தாங்கள் இருக்குவேதத்தின் ஐதரேய உபநிஷதர்த்தத்தைக் கூறியருளும்பொருட்டுச் சனகாதி இருஷிகளினதும், வாமதேவாதி சாத்விகப்பிரஜைகளினதுமாகிய சம்வாதவாயிலாய் வைராக்கியாதிசாதனங்களோடுகூடிய நானாவகைப் பிரஹ்மவித்தையைக்கூறினீர்கள். மாதாவின் உதரத்தின்கண்ணே வாமதேவரிருந்து தமதனுபவத்தை அதிகாரிகட்குக் கூறியதையும் கூறினீர்கள். இரண்டாவது மூன்றாவதத்தியாயத்தே இருக்குவேதத்தின் கௌஷீதகீ யுபநிஷதர்த்தத்தை நிரூபித்தருளுவான், இந்திரப்பிரதர்த்தன சம்வாதத்தால் நானாவகைப் பிரஹ்மவித்தையையும், அஜாதசத்துருபாலாகி சம்வாதத்தால் நானாவகைப் பிரஹ்மவித்தையையும் கூறினீர்கள். நான்காவது ஐந்தாவது ஆறாவது ஏழாவது அத்தியாயங்களில் தாங்கள் யஜுர்வேதத்தின் பிருகதாரண்யக உபநிஷதர்த்தத்தை நிரூபிப்பான்; இரண்டு புருஷவம்சத்தினும் ஒரு ஸ்திரீவம்சத்தினும உள்ள இருஷிகளின் பரஸ்பரபேதத்தையும் அபேதத்தையும் தத்யங் அதர்வண அசுவிநீகுமார இந்திர சம்வாதவாயிலாய் நானாவகையாய பிரஹ்மவித்தையையும், அசுவிநீ குமாரர்கட்குப் பிரஹ்மவித்தையை யுபதேசித்தலால் தேவராஜா தத்யங் இருஷியின் மஸ்தகச்சேதஞ்செய்தமையையும், பிரஹ்மவித்தைப் பிராப்திலோபத்தால் அசுவிநீகுமாரர் அசுவமஸ்தகத்தைத் தமதாசிரியரின் கழுத்தில் வைத்தமையையும், ஆசிரியர் மஸ்தகத்தை அசுவத்தின் கழுத்தில வைத்தமையையும், ஜனகராஜாவின் யாகத்தே யாஞ்ஞவற்கியமுனிவருக்கும், ஆசுவலாதி யநேகம் பிராஹ்மணர்கட்கும் உண்டாய சம்வாதவாயிலாய் நானாவகைப் பிரஹ்மவித்தையையும், யாஞ்ஞவற்கியரோடு துவேஷம்புரிந்த சாகல்லியருடைய மிருத்தியுவையும், யாஞ்ஞவற்கியருக்கும் ஜனகராஜாவிற்கும் இருமுறைச் சம்வாதவாயிலாய் நானாவகைப் பிரஹ்மவித்தையையும் யாஞ்ஞவற்கியருக்கும் மைத்திரேயிக்குமுற்ற சம்வாதவாயிலாய் நானாவகைப் பிரஹ்*

மவித்தையையும், யாஞ்ஞவற்கியரின் சந்நியாசத்தையும் கூறினீர்கள். எட்டாவதத்தியாயத்தின்கண்ணே தாங்கள் சுவேதாசுவதரமுனிவருக்கும் சந்நியாசிகட்கு முற்ற சம்வாதவாயிலாய் நானாவகைப் பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள். ஹே பகவன்! எட்டாவதத்தியாயத்தின் ஈற்றில் தாங்கள் இவ்வார்த்தை கூறினீர்கள்; அதாவது, இந்தப் பிரஹ்மவித்தை அத்தியந்தந் துர்லபமாயது; ஏனெனின், இவ்வுலகத்தே அதிகாரிகள் பிரஹ்மவித்தையை யடையும்பொருட்டு நானாவகைத் தவம் புரிந்து மகிழ்வித்த தேவதைகளும் பிரஹ்மவித்தையை யுபதேசிப்பதில்லை; மற்றோ, அதனினும் வேறாய அநேகவகை வரங்களைக்கொடுத்து மகிழ்விப்பர். அவற்றின் அடைவான் மகிழாதார்க்கு அத்தேவதைகள் சத்தியவசனரூப பாசத்தாற் கட்டுப்பட்டவராய்ப் பிரஹ்மவித்தையை யுபதேசிப்பர். பூர்வம் அன்னியவரங்களாற் சந்தோஷமுறாத நசிகேதாவிற்குத் தருமராஜா பிரஹ்மவித்தையை யுபதேசித்ததேபோலும் எனக் கூறினீர்கள். ஹே பகவன்! இதன்கண்ணே எனக்கு இப்பொருள்கேட்ப விழைவெழுகின்றது. அதாவது, யமராஜா நசிகேதாவிற்கு எவ்வாறு பிரஹ்மவித்தையை யுபதேசித்தனர். அந்த நசிகேதாவானவர் எவ்வாறு யமலோகமுற்றார்? அந்தப் பிரஹ்மவித்தை எத்தகையது என்னும் எல்லா விருத்தாந்தங்களையும் தாங்கள் எனக்குத் தயையோடுங் கூறுவீர்களாக இவ்வாறு சிஷ்யனால் வினவப்பட்ட ஸ்ரீ குரு அவன்பொருட்டு வேதத்தின்கண்ணே விளம்பப்பட்டிருக்குங் கதையை யுபதேசிக்கத்துடங்கினர். ஹே குழந்தாய்! அருண இருஷியின் புத்திரராகிய உத்தாலகரென்பவர் முன்னொருவரிருந்தார், அவர் சர்வ வேதவேத்தாப் பிராஹ்மணர்களிலும் மேன்மையர். இவ்வுலகத்தே அன்னதானத்தால் மகா கீர்த்தியையுடையவர். அதனானே சர்வ அர்த்தி ஜனங்களும் அவரை விரும்பினர். அத்தகைய அவர் ஒருகாலத்தே விசுவஜித்தெனப் பெயரிய யாகஞ்செய்யத்தொடங்கினர். அதன்கண்ணே, அவர் பிராஹ்மணர்கள்பொருட்டுத் தமது சர்வ தனத்தையுங் கொடுப்பதாய்ச் சங்கற்பித்தனர். அம்முனிவருக்கு நசிகேதாவெனப்பெயரிய புத்திரர் ஐந்துவயதுடைய பாலகராயிருந்தனராதலின், அக்குழந்தையிடத்தே அவருக்கு அதிகப் பிரியமிருந்தது. அவர் வீட்டில் மிகுதியாகக் கோக்களாகிய தனமே இருந்தனவாதலின் அவர் அவற்றை இரண்டாகப் பகுத்துப் பாலைத் தருவனவும் யௌவன அவஸ்தையோடுகூடியவும் ஆகிய மேன்மையாயவற்றைப் புத்திரன்பெயராற் செய்தனர். துர்ப்பலவிருத்த கோக்களைத் தன் பெயராற்செய்து அவற்றை மறையவர்க்குக் கொடுக்கத்தொடங்கினர். அவை அன்னபக்ஷணம் செய்வதன்கண்ணும் ஜலபானம் செய்வதன்கண்ணும் சமர்த்தற்றனவாம். உட்கொள்வதினும் சமர்த்தற்றிருப்பின் கருவைத்தரித்துப் பாற்கொடுக்குமென்பதன்கண்ணே என்ன ஆசையிருக்கின்றது. அத்தகையவற்றைக் கொடுக்கத்தொடங்கும்போது, சுந்தரமாகிய கோக்களை எம்மைந்தருக்காக வைத்தனரோ அந்நசிகேதாவியல்பாயே சாஸ்திரதருமத்தே சிரத்தையுடையவர் ஐந்துவருடப் பாலகர். பிதாவின் மடிமீதிருந்து தந்தையின் அநுசித வியவகாரத்தைக்கண்டு தமதுளத்தே இவ்வாறாராய்ந்தனர்.—இவ்வுலகத்தே யாவன் எப்பிராணிக்குச் சுகத்தைச் செய்கின்றானோ அவன் இவ்வுலகத்தும் பரலோகத்தும் அச்சுகத்தையடைவன். துக்கத்தைச் செய்பவனும் அவ்வாறே துக்கத்தையடைவன்

என்பது எல்லா நூல்களின் துணிவாம். என் தந்தை மறையவர்க்குக் கொடுக்க முயல்கின்ற விருத்த கோக்கள் பால் முதலியவற்றைக் கொடுத்து மறையவர்க்குச் சுகத்தைக் கொடுக்கமாட்டா; மாறாக அவை பாணபோஷணச் சிந்தைவாயிலாய்த் துக்கத்தையேகொடுக்கும். இவற்றைத் தானஞ்செய்தலால் மறையவர்க்குத் துக்கத்தைக்கொடுக்குமெனது தந்தையும் துக்கத்தையேயடைவர்; ஏனெனின், இவ்வுலகத்தே மறையவர்க்குத் துன்பமீபவன் சுகமற்ற பயத்தைக்கொடுக்கும் லோகங்களையடைவன் எனச் சுருதியின்கண்ணேயுளது. ஆகையால், எனது தந்தை அந்நராதிலோகங்களை யடையாதபடி யான் விருத்த கோதானத்தை நிவாரணஞ்செய்வேனாகவும். அல்லது, என்தந்தை என்பொருட்டுவைத்த சுந்தரகோக்களை மறையவர்க்கேன் கொடுக்கின்றிலர்? என்னைச் சிந்தித்தலால் அவர்க்கு யாது பிரயோஜனம். அல்லது, மைந்தன், ஸ்திரீ, சுவர்ணம், கோ இவைமுதலாகவுள்ள தனங்களெல்லாம் தனிகனுக்குப் பரலோக சுகசாதனமாயினன்றோ தனமெனக் கூறப்பெறும். பரலோக சுகப்பிராப்தியைக்கொடாத தனங் கேவலம் தனிகனைப் பந்தனஞ்செய்யும் இருப்புச் சங்கிலியேயாம். யான் இவரது மைந்தனாதலின் நூன்முறையே யானும் இவரது தனமேயாவேன். அல்லது, எம்மைந்தன் கண்டுகொண்டிருப்பத் தந்தைக்கு நரக துக்கப்பிராப்திநிமித்தம் வந்து மைந்தன் அதை நீக்காவிடின் அவன் மைந்தனேயல்லன்; மற்றோ, தந்தையின் மலதுல்லியனே யாவனாதலின் யான் என்றந்தையை என்னைத் தானஞ்செய்வதன்கண்ணே யேவுவேனாகவும். புத்திரரூபதனமாகிய என்னைத் தாங்கள் எம்மறையவர்பொருட்டுக் கொடுக்கப்போகின்றீர் என யான் கூறுவேனாயின் என் மொழியைக்கேட்டு எனக்காக வைத்த அழகிய கோக்களைத் தானஞ்செய்ய வேண்டுமென்னும் எனதபிப்பிராயத்தையுணர்ந்து அவற்றைத் தானஞ்செய்வர். அல்லது, எனது கருத்தையறியாரேனும் என் மொழிகேட்டென்னைக் கேட்பர், அதன்பின்னர் யான் எனது கருத்தைக் கூறுவேனாகவும். ஹே குழந்தாய்! இவ்வாறு தமது மனத்தே யாராய்ந்து நசிகேதாவானவர் உத்தாலகரை நோக்கிக் கூறுவாராயினர்:—ஹே தந்தையே! இக்கோக்கள் தங்கள் தனமேபோல யானும் தங்கள் தனமாதலின், என்னை எம்மறையவருக்குக் கொடுக்கப்போகின்றீர்கள். ஹே மைந்த! இவ்வகை இரண்டு மூன்றுமுறை நசிகேதா கூறவே அம்முனிவர் நசிகேதாவின் பண்டிதத்தன்மையபிமானத்தைக்கண்டு கோபமுடையவராய் இவ்வாறு கூறினர்:—ஹே நசிகேதா! நீயெனது நேயத்தை நிராதரஞ்செய்து பண்டிதத்தன்மையைக் காண்பிக்கின்றனையாதலின், சர்வ ஜகத்தையும் அழிக்கும் மிருத்தியுவிற்குன்னைக் கொடுத்தேன். ஹே குழந்தாய்! அம்முனிவர் இவ்வாறு கூறவே நசிகேதா அவ்வசனத்தைக்கேட்டுத் தமது மனத்தே இவ்வாறாராய்ந்தனர். இவ்வுலகத்தே விசாரமற்ற தாமசிகள், தமக்கே துக்கந்தரும் வசனத்தைக் கூறிக்கொள்வதேபோல என்றந்தை தமக்கே துக்கத்தைக்கொடுக்கும் இவ்வசனத்தை ஏன் கூறினர்? ஏனெனின், மகன் மரித்தலால் தந்தை தாயர்க்குத் துக்கமுண்டாம். அதனைப் புத்திமான்கள் பிதுர்மஹத்தியின் பலரூபமென்பர் எனது தந்தையும் எல்லா நூலுணர்ந்த புத்திமானாதலின், தமக்குத்தாமே புத்திர மரண ஜன்னிய துக்க அடைவையாதின்பொருட்டுச் செய்து

கொண்டனர் மிகவுமாச்சரியமாக விருக்கின்றது. அல்லது, என்றந்தை யென்னை யமன்பொருட்டுக் கொடுத்ததில் எனக்கு யாதொரு ஹானியுமின்றாம்; மாறாக எனக்கோ புண்ணியப் பிராப்தியேயாம்; ஏனெனின், இவ்வுலகத்தே யுண்டாந் தேகங்களியாவும், ஒருகாலத்தே அவசியம் மிருத்தியுவின் வசமாம். இத்தகைய அவசியம் பவிக்குமர்த்தத்தே யான்தந்தையின் ஆணையைப்பாலனஞ்செய்து மிருத்தியுவை யடைவனாயின் இத்தருமத்தினும் மேலாய் வேறொரு தருமம் எனது கலியாண வேதுவாகாதாம்; மற்றோ, இது செய்வதே யவ்வேதுவாம்; ஆனால், எனது வியோகத்தால் எனது தந்தைக்கு மகா துக்கப்பிராப்தியுண்டாம். என்னை விடுத்து அவரொரு கணமாத்திரையேனு மிருக்கார், அவர் துயரைநினைந்து எனக்கு மகாக் கிலேசமுண்டாகின்றதேயன்றி எனது மிருத்தியுவாலெனக்குச் சிறிதுமாத்திரையும் கிலேசமுண்டாகவில்லை. அல்லது, யான் பிதாவின் துக்கத்தை நோக்கி யமலோகத்தை யடையாதிருப்பினும், அசிரத்தையோடு செல்லினும் அதமபாவத்தை யடைவேன்.

உத்தமஶ்சிந்திதம் குர்யாத் ப்ரோக்தகாரீ து மத்யம: ।
அதமோऽஶ்ரத்தயா குர்யாத் அகர்தோச்சரிதம் பிது: ॥

எண்ணும் வண்ண மியற்றுவ னுத்தமன்
வண்ண மத்திமன் வாய்சொலச் செய்பவன்
நண்ண தமன் நழுவிய நேயனாய்ப்
பண்ணு கிற்பனும் பண்ணுகி லானுமே.

(பொ-ள்.) இவ்வுலகத்தே மைந்தன் சீடன் என்பார் மூவிதமாவர். தந்தையுங் குருவும் எண்ணியகாரியத்தி னபிப்பிராயத்தை நிமித்தத்தாலுணர்ந்து கூறாமலே காரியத்தைச்சிரத்தையோடும் செய்பவர் உத்தமராவர் (1) அவர் கூறியகாரியத்தைச் சிரத்தையோடும் செய்பவர் மத்திமராவர் (2) கூறியதை அசிரத்தையாகச் செய்பவரும் செய்யாதவரும் அதமராவர் (3) ஆகையால், எனது தந்தைக்குரிய சீஷருள்ளும் மைந்தருள்ளும் யான் அதமனாகாது உத்தமனாகவேனும் மத்திமனாகவேனுமாகவேண்டும். அது தந்தையின் ஆணைப்படி நடத்தலானே யுண்டாம். அல்லது, இவ்வுலகைவிடுத்து யான் யமலோகஞ்சேர்தலால் தருமராஜாவிற்கும் ஒருபயனுமில்லை, எனதுபிதாவிற்குமொருபயனுமில்லை; மாறாக எனதுவியோகத்தால் எனது பிதா உன்மத்த அவஸ்தையை யடைவுற்றுப் பரமதுக்கத்தை யடைவாராதலின் என்னை யமனுக்குக்கொடுக்கும் வசனங்கூறியது தமது துக்கத்தின்பொருட்டேயாம். அல்லது, எனது வியோகத்தின்பின்னர் எனது தந்தைக்குத் துன்புண்டாதலோ திண்ணமேயாம்; ஆனால், இப்போதே என்தந்தைக்குப் பரமதுக்கப்பிராப்தி யுண்டாகிவிட்டது; ஏனெனின், இவர்முகம் மிகவும் வாடிவிட்டது, என்னைநோக்கிக் கண்ணீர்விடுகின்றனர், நேயத்தாலடிக்கடி தழுவிக்கொள்கின்றனர்; ஆகையால், எனது பிதா என்னேயத்தைவிடுமாறு ஒரு யுக்திபூர்வக வசனத்தைக் கூறுவேனாகவும்; ஒருகால் புத்திரவாஞ்சையால் தமது வசனத்தைப் பொய்யாக்கின் அப்பாவத்தால் நரகப்பிராப்தியுண்டாம். ஹே சிஷ்ய! இவ்வகையாய விசாரத்தைத் தமதுமனத்தேசெய்து நசிகேதாவானவர் உத்தாலகரைநோக்

இக் கூறுவாராயினர் :—ஹே தந்தையே! பிறந்ததுமுதல் தாங்கள் பொய்யொன்றும் புகன்றிலீர், அத்தகைய தங்களுடைய சத்தியத்தன்மையை யாராய்ந்து பாருங்கள். தங்கள்குலத்தேயுண்டான பிதாபிதாமகாதி விருத்தர் மாணத்தையுறினும் பொய்பேசிலர் அத்தகைய விருத்தரையெண்ணிப்பாருங்கள்; தங்கள் வம்சசமானமாய்த் தத்யங் அதர்வணாதி சத்தியவாதிப் பிராஹ்மணருண்டாயினர், மற்றைய க்ஷத்திரிய வைசிய ருண்மைவாதியாயுண்டாயினர் அவர் யாவரையும் நோக்குங்கள். பிராஹ்மணரூபத்தைத் தரித்துவந்த இந்திரருக்குக் கர்ணராஜாத் தமது தோலைக்கொடுத்தனர், சிபியாகிய தருமாத்மா சரணாகதமாய புறாவைக்காக்கும்பொருட்டுத் தமது சரீரமாம்சத்தைக்கொடுத்தனர். ஜீமூதனெனப்பெயரிய தருமாத்மா சரணாகதனைக் காக்கும்பொருட்டு ஒரு ராக்ஷசனுக்குத் தமதுசரீரத்தைக் கொடுத்தனர். ததீசியென்பவர் தேவதைகள்பொருட்டுத் தமது முதுகென்பை யீந்தனர். தத்யங் அதர்வணர் தமது மொழியை மெய்ம்மொழியாக்கும்பொருட்டுத் தமது மஸ்தகத்தைச் சேதிப்பித்தும் அசுவினீகுமாரர்கட்குப் பிரஹ்மவித்தையைக்கொடுத்தனர். தேவராஜா தமதுமொழியை மெய்ம்மொழியாக்கும்பொருட்டுத் தமது சத்துருவாகிய பிரதர்த்தன அரசருக்குப் பிரஹ்மவித்தையைக் கொடுத்தனர். யாஞ்ஞவற்கியமுனிவர் தமதுமொழியையுண்மையாக்கும்பொருட்டுஜனகராஜாவிற்குக் காமவரத்தையீந்தனர். தசரதர் தமதுமொழியை மெய்ம்மொழியாக்கும்பொருட்டுப பிராணனினும் அத்தியந்தம்பிரியராய இராமச்சந்திரரை மகாபயாநக வனத்தின்கண்ணே அனுப்பினர். இவைமுதலாக மற்ற அநேக உண்மைவாதியர் தமது மொழியை யுண்மையாக்கும்பொருட்டு நானாவகைக் கிலேசங்களை யடைந்தனர்; அவர் யாவரையும் தாங்கள் நோக்குங்கள். அல்லது, சூரியன் மாம்பழமுதலியவற்றைப் பரிபக்குவப்படுத்துவதேபோலக் காலபகவானும் நாடோறும் ஜீவர்களின்சரீரங்களை மிருத்தியுவின் சன்முகமாக்குவா, இஜ்ஜீவர் புண்ணியபாவரூப கருமவயத்தால் மீண்டும் மீண்டும் ஜன்மமரணத்தையடைவர். இத்தகைய க்ஷணபங்குர அநித்திய சரீரங்களையடைந்து பாவகருமத்தைச் சம்பாதிக்கலாகாது; மற்றோ, புண்ணியரூபசத்தியத்தையே சம்பாதிக்கவேண்டும. ஹே தந்தையே! தாங்கள் நேயவயத்தராய் என்னை மிருத்தியுவிற்குக் கொடுத்திலரேனும் ஒருகாலத்தேமரிப்பது திண்ணம்; யாவரு மவ்வாறேயாவர். ஆகையால், எனதுநேயத்தைவிடுத்து என்னை யமனுக்குக்கொடுத்துத் தங்கள் மொழியை மெய்ம்மொழியாக்கிக்கொள்ளுங்கள். அவ்வாறுசெய்தலால் தங்கட்குமெனக்குங் கலியாணமுண்டாம். எனது நேயத்தால் தங்கள்மொழியைப் பொய்ம்மொழியாக்கின், அதனாலுண்டாயபாவத்தால் தங்கட்குத் துக்கப்பிராப்தியுண்டாம். ஆணையைமறுத்தலால் அதமபாவமெனக்குண்டாம. ஹே சிஷ்ய! இவ்வாறுய வசனத்தை நசிகேதா கூறியபோது அவ்வுத்தாலகர் தமதுமொழியை மெய்ம்மொழியாக்கும்பொருட்டு அத்தியந்தர் துக்கியாய் மைந்தனை யமலோகத்திற் கனுப்பினர். நசிகேதாவும் பிதாவின் பக்திப்பிரபாவத்தாலும், தமது தபோமகிமையாலும் மனத்தூய்மையின் மகிமையாலும் இத்தூலசரீரத்தோடுகூடவே ஆங்கடைந்தனர், யமராஜரோ வேறோரிடத்திற்குச் சென்றிருந்தனர் என்னும்வார்த்தையை யமகிங்கரர்வாயிலாய்க்கேட்டு வாயிலி

லேயே மூன்றுதினபரியந்தம் உபவாசமாயிருந்தனர். ஹே சிஷ்ய! நசிகேதா எவ் விசாரத்தால் மூன்றுநாள்வரை யுபவாசஞ்செய்தனரோ அதனைக்கேட்பாயாக:— தந்தை யென்னை யமராஜாவின்பொருட்டுக் கொடுத்தனர், யமராஜாவென்னை யங் கீகரியாவிடின் என் தந்தைவசனம் மித்தையாய்விடுமாதலின் யானுபவாசரூபஹ டத்தைச்செய்யின் அதனாலவரென்னை யேற்றுக்கொள்வர். இவ்வாறாராய்ந்து அந் நசிகேதா மூன்றுபவாசங்களை யாற்றினர். யமராஜாவும் நசிகேதாவின் தைரியத் தைப் பரீக்ஷிக்கும்பொருட்டு மூன்றுநாள்வரைத்தமது அரண்மனைக்குவந்திலர். நசி கேதா இங்கு வருவானாயின் நீங்கள் நானுவகையாயுபதேசித்து அவனை மீண்டும் பூலோகத்திற்கனுப்பிவிடுங்கள் எனச் சர்வஞ்ஞராய யமராஜா தமது தாசர்கட்குக் கட்டளையிட்டு வெளியே சென்றிருந்தனராதலின், அந்த யமகிங்கரர் நசிகேதா யம லோகத்திற்கு வந்ததைநோக்கி இவ்வாறுகூறினர்:—ஹே நசிகேதாவே! இந்தப்ப யம்பொருந்திய யமபுரியின்கண்ணே பிராஹ்மணபாலகனாகிய நீ யேன் வந்தாயென யமகிங்கரர்கேட்கவே நசிகேதாவானவர் அவரிடத்தே தமது சம்பூரணவிருத்தாந் தங்களைக் கூறினர். சர்வஞ்ஞ யமராஜாவின் சமீபத்தேயிருக்கும் யமகிங்கரர் பூர் வமே அறிந்தவராயினும் மீண்டும் நசிகேதாவாயிலாய் அவ்விருத்தாந்தங்களைக்கே ட்டு அவர் நசிகேதாவிற் கிவ்வாறு கூறினர்:—ஹே நசிகேதா! ஜராயுஜாதி நால்வ கைச்சீவர்களுள்ளே எவ்வுயிரையேனும் கொடுப்பினும் கொடாவிடினும் ஆயுஷின் முடிவின்றி யவர் கவரார்; மற்றோ, ஆயுஷ்முடிந்தபின்னரே கவர்வர். அவரும் ஈண் டிப்போதில்லையாதலின் நீ விரைவாகவே உன்வீட்டிற்குச்செல்லுதி; ஹே சிஷ்ய! இவ்வாறு அநந்தமுறை யமகிங்கரர் கூறினர்; ஆனால், நசிகேதா தமது தைரியத் தைவிட்டிலர். அவர்தைரியத்தைக்கண்டு மூன்றாவது தினத்தின்பின் தமதுமாளி கைக்கு யமராஜாவும் வந்தனர். அவர் வந்தவுடன் யமகிங்கரர் அவரிடத்தே இவ் வாறு கூறினர்:—ஹே தர்மராஜாவே! தங்கள்மாளிகையில் அக்கினிரூபமாய ஒரு பிராஹ்மணபாலக அதிதிவந்திருக்கின்றனன் அவ்வதிதிரூப அக்கினியைச் சாந்தி செய்யும்பொருட்டுத் தாங்கள் விரைவாகவே அர்க்கியபாத்தியாதிரூப நீரையடை வியுங்கள். ஓங்கியெரியாநின்ற மகா அக்கினியின்சாந்தி ஜலத்தாலாவதேபோல, அதிதிரூப அக்கினியின்சாந்தி அர்க்கியபாத்தியாதிரூப ஜலத்தாலாம். ஜலத்தாற் சாந்தியாகாத அக்கினி கிருகாதி சர்வபதார்த்தங்களையும் எரிப்பதேபோலக் கிருகி அர்க்கிய பாத்தியாதிரூபஜலத்தாற் சாந்திப்படுத்தாத அதிதிரூப அக்கினி, கிருகி யின் சர்வபதார்த்தங்களையும் துவம்சம்செய்யும். இப்போதிப்பொருளையேவெளிப் படையாய் நிரூபிப்பாம்:—ஹே யமராஜாவே! மந்தபுத்தியையுடைய கிருஹஸ்தன் வீட்டில் அதிதி அன்னஜலாதிகளினடைவின்றிப் பசிதாகமுடையவனாயிருப்பின் அவ்வதிதி கிருஹஸ்தனுடைய ஆசை, பிரதீக்ஷை, ஸங்கதம், சூநிருதை, இஷ் டம், பூர்த்தம், புத்திரன், பசுமுதலிய சர்வபதார்த்தங்களையும் நாசஞ்செய்வன். ஈண்டு அடையநிச்சயமில்லாத சுகத்தையடைய விரும்புதல் ஆசையாம். அடைய நிச்சயமாயசுகத்தை அடையவிரும்புதல் பிரதீக்ஷையாம். சுகத்தைச்செய்விக்கும் பிராணியோடு சமாகமம் சங்கதமாம். லோகத்தும் வேதத்தும் அர்த்தத்தைப்பிர காசிப்பதும் சுகத்தைச் செய்வதும் ஆகிய வாக்கு சூநிருதையாம். அக்கினியாற் சித்தமாய அக்கினிஷ்டோமாதியாகங்கள் இஷ்டமாம். சர்வ ஜீவோபகாரப்பொ

ருட்டுக் கூபம், தடாகம், கிருகம் முதலியவற்றைச்செய்தல் பூர்த்தமாம். பாணிக்கிரகணஞ்செய்த மனைவியினின்றுமுண்டாய சர்வலக்ஷணமுடைய மைந்தன் புத்திரனுவன். மிகுந்த விலையுடைய மேன்மைமிக்க கோ முதலியவை பசுக்களாம். இவைமுதலிய கிருகியின் பதார்த்தங்கள்யாவும் கிருகியின்வாயிலினின்றும் அதிதி வெறுக்கப்பட்டுச் செல்லின் நாசத்தையடையும்; ஆகையால், சர்வ சாஸ்திர மரியாதையையுமறிந்த தாங்களும் அதிதியைச் சந்தோஷப்படுத்தவேண்டும். ஹே குழந்தாய்! இவ்வண்ணம் யமகிங்கரர் கூறவே யமராஜா அத்தியந்தம் அச்சத்தையடைந்து நசிகேதாவின் பக்கத்தேசென்று இவ்வாறுகூறினர் :—ஹே நசிகேதா! நீ அதிதிப்பிராஹ்மணன், என் வீட்டில் மூன்றுநாள் அன்னஜலமின்றி யிருந்தனை; அதனுன் எனக்கு மகாதோஷ அடைவுண்டாமாதலின், அத்தோஷநீக்கப்பொருட்டு உனக்கு மூன்றுவரங்கொடுக்கின்றேன் நீ இச்சித்ததைக்கேட்டுக்கொள். ஹே நசிகேதா! நீ என்னை மகிழ்விக்கும் முயல்வுடையனேலாயின் உனக்கும் கலியாணமுண்டாம். அதிதியாய உனக்கு எனதுநமஸ்காரமுண்டாகுக. அதிதிப்பிராஹ்மணனுகிய உனதுபிரசாதத்தால் குடும்பசகித யான் எத்துக்கத்தையும் அடையக்கூடாது. ஹே சிஷ்ய! இவ்வாறு யமராஜா நசிகேதாவிடத்தே கூறியபோது நசிகேதா மூன்றுவரம் வாங்கினர். ஒன்றே தனது பிதாவின் பிரசன்னத்தன்மைவரம், மற்றென்றே அக்கினியின் ஞானரூபவரம், மற்றென்றே ஆன்மாவின் ஞானரூபவரம், இப்போது முதல்வரத்தை விஸ்தரிப்பாம் :—ஹே யமராஜாவே! யான் தங்களுடையலோகத்தே தங்களுடைய பிரசாதத்தினுல் சர்வதுக்கமற்றவனுயும் பிரசன்னமனனுயும் குரோதமற்றவனுயுமிருப்பதேபோல எனதுபிதாவாகிய உத்தாலகரும் இருக்கவேண்டும். இந்த யமலோகத்தினின்றும் யான் தந்தைபக்கவிற்செல்லுங்கால் என் றந்தைக்கென்னிடத்தே அவிசுவாச முண்டாகாதிருக்கவேண்டும்; மற்றே, பூர்வம் புத்திரவாஞ்சையாற் சம்பாஷித்தபடியே சம்பாஷிக்கவேண்டும். இவ்வாறு முதல்வரம்வேண்டும்.

சங்கை :—ஹே நசிகேதா! சர்வமுனிவரினும் மேன்மைமிக்க உத்தாலகரிடத்தே துக்கம், சந்தாபம், குரோதம், அவிசுவாசம், சம்பவியாவாதலின் அவற்றைநீக்கும்வரம் யாதின்பொருட்டுக் கேட்கின்றாய்?

சமாதானம் :—ஹே யமராஜாவே! சர்வசாஸ்திரங்களையுமறிந்த எனதுதந்தையின்பால் உண்மையில் அவை சம்பவியாவாயினும் வியவகாரதிருஷ்டியைக்கொண்டு எனக்கவரிடத்தே அவற்றின் சம்பாவனையிருக்கின்றது; ஏனெனின், அவருக்கென்னிடத்தே அதிகநேயமுண்டு ஆதலின், எனதுவியோகத்தால் அவசியம் துக்கத்தையடைவர்; அங்ஙனமே எனக்கும் அவரிடத்தே துக்கத்தின் சம்பாவனையுண்டாம். குரோதவானு யிவ்வசனங்கூறினர்:—ஹே நசிகேதா! எனதுநேயத்தைநிராதாஞ்செய்து என்முன் நீ உனதுபண்டிதத்தன்மையி னபிமானஞ்செய்கின்றனையாதலின், யான் உன்னை மிருத்தியுவிற்குக் கொடுத்தேன். என இவ்வாறு கூறிய வசனத்தால் அவர்பாலவையிருக்கின்றனவெனச் சம்பாவனையாம். யமலோகத்தேசென்று மீண்டும் அச்சரீரத்தோடு எப்பிராணியும் பூவுலகில் வாராமையின் யான் இத்தேகத்தோடு பூலோகத்தே செல்வனுயின் என்னிடத்தே பிதாவிற்கவி

யம் அவிசுவாசமுண்டாம். ஆகையால், ஹே பகவன்! யான் சம்பாவனை செய்த நான்கும் என் பிதாவிடத்தே யுண்டாகலாகாதென்னும் முதல்வரம் தங்கள்பால் வேண்டுகின்றேன். ஹே சிஷ்ய! இவ்வாறு நசிகேதா கூறவே, யமராஜா கூறுவதாவது :—ஹே நசிகேதா! நீ கேட்ட முதல்வரம் இன்றுமுதலே உன் பிதாவையடையும். எனது பிரேரணையால் நீ இவணிருந்து பூவுலகிற் செல்லுங்கால் உனது பிதா முன்போலவே உன் சரீரத்தே நேயத்தையுறுவர். அவ்வாறே துக்கம், சந்தாபம், குரோதம் என்னும் மூன்றுமற்றவராவர். மிருத்தியுவாயில் நின்றும் நீ மீண்டு வந்ததைக்கண்டு அம்முனிவர் சுவஸ்தசித்தராய் முன்போல் நித்திரை யாகாராதிகளைச் செய்வர். உன் பிதா துக்கமற்றதேபோல நீயுமற்றிருப்பாய். ஹே சிஷ்ய! இவ்வாறு பிதாவின் மகிழ்ச்சிவடிவ முதல்வரத்தை வாங்கிக்கொண்டு மீண்டும் அக்கினியின் ஞானரூப இரண்டாவதுவரத்தை வேண்டினர் :—ஹே யமராஜாவே! யான் வேதவேத்தாக்களாய பிராஹ்மணர்கள்வாயிலாய், சுவர்க்கமுதல் பிரஹ்மலோகபரியந்தமுள்ள மேலுலகங்களில் சென்ற அதிகாரிகட்குத் தங்கள் பயமுண்டாகாதென்றும், ஜரை சுர முதலிய நோய், சத்துரு, பசி, தாகம், சோகம், மோகம் என்பன முதலிய விகாரங்களினாலும் பயமுண்டாகாதென்றும்; மற்றோ, சுகத்தையுற்று எப்போதும் மகிழ்ந்திருப்பரென்றும் கேட்டிருக்கின்றேன். ஹே பகவன்! அம்மேலுலகங்கள் ஜீவர்கட்குச் சயனமென்னும் யாகாக்கினியால் கிடைக்குமென்றுங் கேட்டிருக்கின்றேன். சுவர்க்கத்தின்கண்ணேயிருக்குந் தேவதையாகிய தாங்கள் அவ்வக்கினியின் வடிவத்தை இனிதுணர்வீர்களாதலின், சிரத்தையையுடைய சிட்டனாகிய எனக்கு அக்கினியின்சொரூபத்தை யுபதேசஞ்செய்யும். ஹே பகவன்! அவ்வக்கினியால் சுவர்க்காதிலோகத்தையடைந்த அதிகாரிகள் பிரஹ்மவித்தையின் அடைவுவாயிலாய் மோக்ஷரூப முக்கிய அமிருதத்தையடைவரன்றோ! அவர்கள் ஆங்குப் பிரளயபரியந்தந் திதிவடிவகௌண அமிருதத்தையும் அடைவரன்றோ, இவ்வாறு அக்கினியின் மகிமையைக் கேட்டுளேனாதலின், அக்கினியின் ஞானரூப இரண்டாவதுவரத்தைத் தாங்கள் தயையால் எனக்குத் தரவேண்டும். ஹே சிஷ்ய! இவ்வாறு வேண்டியபோது யமராஜா கூறுவாராயினர் :—ஹே நசிகேதா! சுவர்க்காதிலோகங்களின் பிராப்தி சாதனமாய அக்கினியின் வடிவத்தை யான் இனிதறிவேனாதலின், சர்வ அங்கங்களோடுகூட அவ்வக்கினியின் வடிவத்தை யான் கூறுகின்றேன் நீ சாவதானமாய்க் கேட்டி. சுவர்க்காதிலோகப் பிராப்திக்கும் ஸ்திதிக்கும் காரணரூப அக்கினி விராட்டுருவமாதலின், இவ்வுலகாக்கினி சர்வ காஷ்டங்களினுமிருப்பதேபோல அவ்விராட்டும் மூவுலகத்துமிருக்குமாயினும் குகையமாம். அல்லது, உண்மையாய்ச் சாக்ஷி யான்மரூபமாதலின், புத்திமான்களின் புத்திரூபக் குகையின்கண்ணே அவ்வக்கினியையிருப்பதாயறி. ஹே சிஷ்ய! இவ்வாறு கூறிய யமராஜா நசிகேதாவிற்குச் சர்வலோக காரணமாகிய விராட்டுரூப அக்கினியின் வடிவத்தைக் கூறினர். சயனமெனப்பெயரிய யாகத்தே அவ்வக்கினியின் வடிவத்தைச் சித்திசெய்யும் செங்கற்கள் எத்துணையன, எவ்வடிவின, எவ்வாறவற்றை வைத்தல், அதன்கண்ணே யுபயோகி வேறெப்பொருள்கள், மந்திரங்கள், கிரியைகள் என்னும் எல்லாப் பிரக்கிரியைகளையும் நசிகேதாவிற்கு யமராஜா கூறினர். ஹே குழந்தாய்! இவ்வாறு அக்கினிவடிவத்தைக்கூறிய யம

ராஜா கூறுகின்றார்:—ஹே நசிகேதா! யானுனக்கெவ்வாறு அக்கினிவடிவங் கூறினேனே அவ்வெல்லாப் பிரக்கிரியைகளையும் நீ என்முன் கூறுதி. ஹே சிஷ்ய! இவ்வாறு கூறிய யமராஜாவசனத்தைக்கேட்டு நசிகேதா அக்கினியின் வடிவத்தைச் சிரவணித்தவண்ணமே கூறினர். இவ்வாறு பயமின்றி யமராஜாவின் சமீபத்தே கூறியபோது யமராஜா நசிகேதாவின் அலௌகிகபுத்தியைப்பார்த்து மிகவும் மகிழ்ந்து கூறுகின்றார். ஹே நசிகேதா! யான் உபதேசித்தவண்ணமே கூறினையாதலின், உனது கூர்மையாய மதியைக்கண்டு மிகவும் மகிழ்வுற்றனனாதலின், நீ வேண்டிய மூன்று வரத்தையுங் கொடுப்பதுடன் அதிகவரமொன்று கொடுக்கின்றேன் அதையும் வாங்கிக்கொள்ளுதி. அதாவது, எவ்வக்கினியை யான் உனக்குபதேசித்தேனே அது இன்றுமுதலாக உன்னமத்தானே பிரசித்தமாகுக. கருத்திதுவாம்:—இவ்வுலகத்தே வேதமும், சூரியபகவானும், பாஞ்சபௌதிக ஜகத்தும, இருக்கும்வரை வேதவேத்தா மகாத்மாக்கள் அதனை நாசிகேதாக்கினியெனக் கூறுவர். நசிகேதாவின் எவ்வக்கினியாமோ அது நாசிகேதாக்கினியாம்; இவ்வாறு இவ்வக்கினி உன்னமத்தாற் பிரகடமாம். ஹே நசிகேதா! வேறு இத்திவ்ய மாலைவடிவ வரத்தைக் கொடுக்கின்றேன் அதனை நீ யுன் கண்டத்தே தரித்துக்கொள். அது மணிகட்குச் சமானமாய சிரேஷ்ட சுவர்ணமணிகள் கோர்க்கப்பட்டுள்ளன எவற்றின்கண்ணே அத்தகைய அநேக சூத்திரங்களோடு கூடியதாம். மிகுந்த விலையுயர்ந்தனவாய வைடூரியாதி நவீன ரத்தினங்களோடு கூடியதாம். தூலமாகிய ஆமலக பலத்திற்குச் சமானமாய அநேக வெண்டாளங்களோடுகூடியதாம். சூரியனைப்போலப் பிரகாசிப்பதாம். நானாவகைச் சப்தங்களோடு கூடியதாம். இத்தகைய விசித்திர திவ்யமாலையை நீ நினதுகண்டத்தே தரித்துக்கொள், மேகம் மின்னலைத்தரிப்பதேபோல அம்மாலையை நீ தரித்துக்கொள். ஹே சிஷ்ய! இவ்வாறு யமராஜாகூறி நசிகேதாவிற்குத் திவ்யமாலையைக்கொடுத்தனர். இப்போது நாசிகேதாக்கினியின் மகாத்மியம் வருணிக்கப்படுகின்றது:—ஹே நசிகேதா! எனதுவரத்தால் நினதுபெயரால் வழங்குமிந்த அக்கினியை மாதாபிதா குருவால் சிக்ஷித எவ்வதிகாரி சயனயாகத்தால் மும்முறை சம்பாதிப்பனோ, அவ்வக்கினியால் அக்கினிஷ்டோமாதி மூன்றுயாகங்களைச்செய்வனோ அவன் பிரஹ்மலோகப்பிராப்திவாயிலாய் ஜன்மமிருத்தியுவைக்கடப்பன். அல்லது, அவன் இப்பிறப்பில் பிரஹ்மஞானசாதன சம்பத்தியையடைந்து ஜன்மமிருத்தியுவைக்கடப்பன். அல்லது, அவன் தனது புண்ணியகருமபரியந்தம் புனராவிருத்தியற்றவனாய்ச் சுவர்க்கலோகத்தேயிருக்கும்வடிவ ஜன்மமிருத்தியுவைத் தாண்டுவன். அல்லது, அவன் மோக்ஷரூபஜன்மமிருத்தியுவின் கடத்தலையடைவன்; ஆனால், அவன்பாலும் மோக்ஷரூபப் பலப்பிராப்தியோ ஒவ்வொரு நிட்காம அதிகாரிக்கேயாம். ஹே நசிகேதா! ஹிரண்யகருப்பருண்டாக்கிய விராட்டுவடிவ அக்கினி சர்வஞ்ஞமாம், அத்தியந்தம் பிரகாசமுடையதாம், சம்பூரண சுர அசுரர்களால் துதிக்க யோக்கியமாம். இத்தகைய அதனைக் குருமுகமாயுணர்ந்து யாகாதிகருமங்களையும் உபாசனையையும் செய்பவன் பாவனானுசாரமாய்ச் சுவர்க்கரூப சாந்தியையேனும் மோக்ஷரூப சாந்தியையேனும் அடைவன். ஹே சிஷ்ய! இவ்வாறு யமராஜா நானாவகைப்பல

சகிதமாய் அக்கினியை யுபதேசித்து மீண்டும் இவ்வாறு கூறினர்:—ஹே நசிகேதா! எவ்வக்கினியை நீ கேட்டாயோ, எவ்வக்கினியின்ஞானம் நானுவகைப் பலத்தோடு என்னுலுபதேசிக்கப்பெற்றதோ, அது சுவர்க்கரூபத்தால் பிரத்தியக்ஷமாய்க் காணப்படுகின்றது. நினக்கிரண்டாவது வரந்தந்தேன், மூன்றாவது வரத்தை வேண்டிக்கொள்ளுதி. ஹே சிஷ்ய! இவ்வகைவசனத்தை யமராஜா கூறிய போது நசிகேதா மூன்றாவதுவரமடைய இச்சித்து இவ்வாறுகூறினர்:—ஹே யமராஜாவே! முன்னர் யான் வேதவேத்தாக்களாய மகான்கள்வாயிலாய் இவ்வகை வசனங்கேட்டிருக்கின்றேன்; அதாவது, இவ்வுலகத்தே ஜராயுஜாதி நால்வகைச்சரீரங்களோடு கூடியுள்ள ஜீவர்கள்யாவரும் தத்தம் நுகர்வினைமுடிந்தபின்னர் அவசியம் மிருத்தியுவைபடைவர். ஆதலின், புண்ணியபாவ கருமவயத்தால் ஜீவன் அடைவுற்ற சரீரங்களோடே மிருத்தியுவையடைவன். அஃதின்றும்? அல்லது, நூறு வருடங்கழித்தாம் இதன்கண்ணே நியமமியாதொன்றுமின்றும்; ஆனுல், உண்டாமுயிர்களெல்லா மிறக்கும் என்பது திண்ணமாம். பிறந்திருக்கும் பிரஹ்மாதிதேவதைகளும் அவசியம் மிருத்தியுவை யடைவரென்னின் எம்மனோர் வார்த்தையென்னும். 'அதோऽந்யதார்த்தம்' அதிஷ்டான ஆன்மாவினும் வேறாய அனான்மஜகத்மிருத்தியுவோடு கூடியதாம். 'ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர் த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச!' ஜன்மத்தையடைந்த பிராணிகள்யாவும் மிருத்தியுவை யவசியமடையும், மரணமடைந்தயாவும் பிறப்பது திண்ணம் என்பது முதலிய சுருதி ஸ்மிருதிவசனங்களால் ஜன்மமுடையதிற்கு மிருத்தியு அவசியமுண்டாம் எனத் துணியப்பெறும். இப்போது மாணுவஸ்தையின்பின்னர் ஆன்மாவிருக்கின்றதா? இல்லையா? என்னும் சம்சயத்தைக் காட்டும்பொருட்டு முதலில் ஜீவித அவஸ்தையின்கண்ணே சம்சயம் நிரூபிக்கப்படும். ஹே யமராஜாவே! சார்வாகாதி நாஸ்திகர், சரீரமிருப்பினும் ஆன்மாவின் சத்தையின்மையைக் கூறுவர். அவரிவ்வகை யுக்திகூறுவர்:—வேதத்தையுடன்படும் ஆஸ்திகர் அங்கீகரித்த ஆன்மா இச்சங்காதத்தினும் வேறாய்ப் பிரதீதியாவதில்லையாதலின், அது இத்தூலத்தினும் வேறன்றாம்; மற்றோ, இச்சங்காதமேயாத்மரூபமாம். அல்லது, இச்சங்காதத்தினும் ஆன்மாவைப் பின்னமென்பவன்பாலிது கேட்கவேண்டும்: நின்னான்மாப் பரிசாதிகுணங்களுடையதா? அல்லதற்றதா? முதற்பக்ஷம் சம்பவியாது; ஏனெனின், இவ்வுலகத்தே பரிசகுணமுடையவை யாவும், துவக்கிந்திரியத்தாற் கவரப்பெறுவனவாம். கடாதிகள் பரிசகுணமுடையனவாதலின் துவக்கிந்திரியத்தாற் கவரப்பெறுவன போலவே நின்னான்மாவும் பரிசகுணமுடையதாதலின் துவக்கிந்திரியத்தாற் கவரப்படுவதேயாம், அவ்வாறுடன்படவே யது பிராணவாயுவடிவமாம். ஆன்மாவை நித்தியமென நீ யங்கீகரித்தனை, பிராணவாயுவோ அநித்தியமா மாதலின், ஆன்மநித்தியவாதியாய வுன்மதத்தே ஆன்மாவிற் கநித்தியப் பிராணவாயுரூபத்தன்மை சம்பவியாதாம்; அல்லது, பிராணாத்மவாதி வாயுரூபப்பிராணனையே ஆன்மாவென்பன். அவன்பாலிது கேட்கவேண்டும், இச்சங்காதத்தே வாயுரூபப்பிராணனிருப்பதேபோலத் தேயு, நீர், பிருதிவியென்னும் மூன்றுமிருக்கின்றன. நான்கனுள் பிராணனென்றேஆன்மா, மற்றவையன்றென்பதைச் சித்தஞ்செய்ய ஏதாவதுயுக்தி கூறவேண்டும்.

சங்கை :—ஹே சார்வாகவாதியே! எப்பொருளிலதாகவே இத்தேகஜீவன மின்றாமோ அஃதான்மாவாம்; இவ்வாறாய ஆன்மாவினிலக்கணம் இப்பிராணனி டத்தே பொருந்தும். ஏனெனின், பிராணனிலதாகவே, தேகஜீவனபாவம் லோகத் தே காணப்படுகின்றது இவ்வகையுக்தியால் பிராணனிடத்தே ஆன்மரூபத்தன் மைசித்தமாம்.

சமாதானம் :—ஹே பிராணான்மவாதியே! அந்த யுக்தியால் வாயுவடிவப் பிராணனிடத்தே ஆன்மரூபத்தன்மை சித்தமாவதேபோல, மற்றைய மூன்று பூத ங்களிடத்தும் ஆம்; ஏனெனின், இத்தேகத்தே தேயுரூப வுஷ்ணத்தன்மை, ஜலரூப இரக்தம், பிருதிவிரூப வீரியசாரபூத ஓஜாவெனப் பெயரிய எட்டாவது தாது என்னும் மூன்றனபாவமாகவே சரீரஜீவனமு மிலதாமாதலின் பிராண னைப்போல அம்மூன்றன்கண்ணும் ஆன்மரூபத்தன்மையாதல்வேண்டும். அல்லது, ஜீவர்கட்கு மரணமுண்டாங்கால் சரீரத்தே பிராணன், உஷ்ணத்தன்மை, இரக்தம், ஓஜா என்பவை சமானமாயே அபாவமாம். நான்கன்கண்ணும் சடரூபத்தன்மையும் சமானமேயாமாதலின், பிராணனையே யான்மாவென வுடன்படலும் மற்றவற்றை யவ்வாறுடன் படாமையும் என்னும் பக்ஷத்தே யாதொரு யுக்தியுமின்றாம்.

சங்கை :—ஹே சார்வாகவாதியே! இச்சங்காதத்தேயுண்டாம் ஞானத்திற் குக் காரணம் பிராணனேயாம், மற்ற மூன்றுமன்றாமாதலின், பிராணனே யான்மா, மற்றவையன்றாம்.

சமாதானம் :—ஹே பிராணாத்மவாதியே! கடாதி பதார்த்தங்களின் ஞான மாங்கால் இச்சங்காதத்தே பிராணனிருப்பதேபோல உஷ்ணாதிகளுமிருக்கின்றன வாதலின், நான்கிருப்பவும் பிராணனுக்கே ஞானதருமம், மற்றவற்றிற்கன்றா மெனக்கூறல் முற்றினும் மூடமாதலின், சாஸ்திரயுக்தியற்ற மூடபாலகவாதியால் மோகமாத்திரையானே இப்பிராணாத்மவாதம் பிரகடஞ்செய்யப்பட்டது; ஆனால், அது யுக்திப்பிரமாணத்தாற் சித்தியாதாம்; அல்லது, பிராணனையே ஆன்மாவென வுடன்படுபவன்பாலிதுகேட்கவேண்டும:—நின்னான்மாப் பரலோகம் செல்லுங்கால் நிராதாரமா 'யெவ்வாறு செல்லும்? பாகியவாயுவானது ஆகாசத்தே இலயத்தை யடைவதேபோல அதுவும் பரலோகத்திற்குச் செல்வதாய் நெறியின்கண்ணே இல யத்தையடையாததென்னே? இவ்விரண்டினுக்கட்கு நீ உத்தரங்கூறுதி. அல்லது, சருமாதிகளிடத்தே தடுக்கப்பெற்ற வாயுவானது அவற்றின்கண்ணே யொருதுளை யில்லாதவரையுமேயிருக்கும், பின்னர் இரா; மற்றாறு, வெளியே சென்றுவிடும் இது யாவருக்குமனுபவசித்தமாம். முகாதி நவத்துவாரமுடைய இத்தேகத்தின் கண்ணேயிருப்பதாய்ப் பிராணரூப ஆன்மாச் சரீரத்தைவிட்டு வெளியே ஏன் செல் வதில்லை? செல்லாமையின் இத்தேகத்தே ஒரு பொருள் பிராணபந்தனஞ்செய்வ தாம். எதனாற்கட்டப்பட்டதாய் நினது பிராணன் இத்தேகத்தைவிட்டு வெளியே செல்வதில்லையோ அத்தகைய தின்னதெனநீ கூறவேண்டும்.

சங்கை :—ஹே சார்வாகவாதியே! எவ்வறம்பாவ மித்தேகத்தை யடைவித் ததோ அஃதே தேகத்தே பிராணஸ்திதிகாரணமாம், அது சுகதுக்கபோகத்தைக் கொடுத்து முடியின் பிராணனும் சரீரத்தேயிராது.

சமாதானம்:—ஹே பிராணான்மவாதியே! நீ எக்காரணமாய்த் தேகத்தே பிராணனது இதி கூறினுயோ அது நித்தியமா? அநித்தியமா? முதலாவதேல், எதனல் தேகத்தே பிராணனது இதி நாசமாமோ அதுவே யான்மாவேனுகாது. இரண்டாவதேல், கருமமழிதலால் பிராணனது வெளிப்போதல் கற்பிப்பதேபோலப் பிராணான்ம நாசத்தை ஏன் கற்பித்திலை; மற்றே, அதனையும் நீ யங்கீகரிக்க வேண்டும், ஆனலங்கீகரிக்கின்றிலையாதலின் இப்பொருள் துணியப்பெறும்:—எவன் பிராணனையே ஆன்மாவெனக் கொள்கின்றனனே அவன் மதத்தும் தேகான்மவாதிபோலப் பிராணனுக்கும் பரலோகத்தே கமனஞ் சம்பவியாதாதலின், பிருதிவியாதி நான்கன் சமுதாயதேகத்தையே ஆன்மாவென்னும் சார்வாக நாஸ்திகன் மதத்தை அங்கீகரித்தே ஒரு நாஸ்திகன் நாமமாத்திர பேதத்தாற் பிராணனை யான்மாவென்றனன்; ஆனலுண்மையை யாராய்ந்து பார்க்கின் அவன் மதத்தும் வாயுமுதலிய பூதங்கட்கே ஆன்மரூபத்தன்மை சித்தமாமாதலின், சங்காதத்தினும் வேருக ஒரு பரிசகுணமுடைய ஆன்மாவின்றும். அல்லது, இச்சங்காதத்தினும் வேருய ஓரான்மாவில் பரிசகுணம் பிரதீதியாகாததேபோல ரூபாதி மூன்று குணமும் பிரதீதியாகாவாமாதலின், சங்காதத்தினும் வேருக ஒரு பரிசகுணமுடைய ஆன்மாவின்றுவதேபோல ரூப ரச கந்தகுணமுடைய ஆன்மாவுமின்றும். அல்லது, இச்சங்காதத்தினும்வேருய்ச் சப்தகுணமுடைய ஆன்மாவை அங்கீகரித்தலுஞ் சம்பவியாதாம்; ஏனெனின் பிருதிவியாதி நான்குபூதமே சத்தகுணமுடையதாய்ப் பிரதீதியாம். இந்நான்கினும் வேருய எப்பொருளின்கண்ணும் சப்தம் பிரதீதியாகாதாம். வேருய்ச சப்தகுணமுடையதங்கீகரிப்பனேல் வேருய மலடிமைந்தனும் மதுர ஒலியுடையவனுகவேண்டும். அல்லது, இச்சங்காதத்தினும் வேருய ஓரான்மாவைச் சப்தகுணமுடையதா யங்கீகரிக்கின் அவன்பாலிது கேட்கவேண்டும்: நின்மதத்தே அவ்வான்மாவினுணர்ச்சி எப்பிரமாணத்தாலாமோ அதனை நீ கூறல்வேண்டும். சுரோத்திரேந்திரியத்தால் ஆன்மாவின் ஞானத்தையுடன்படின் பொருந்தாதாம்; ஏனெனின், சப்தகுணத்தையும் அதன் ஜாதியையும் அபாவத்தையும் அது கவரும், ஆனல், சப்தகுணமுடையபொருளைக் கவரும் என்னும் பிரக்கிரியையை எவ்வாதியுமங்கீகரிக்கவில்லையாதலின், அதன்ஞானம் அதாற் சம்பவியாதாம்.

. . சங்கை :—ஹே சார்வாகவாதியே! சப்தகுணமுடைய ஆன்மாவின் ஞானம் மனத்தானேயாம்.

சமாதானம் :—ஹே வாதியே! மனத்தானும் சப்தகுணமுடைய ஆன்மாவின் ஞானம் உண்டாகாதாம்; ஏனெனின், ஜீவர்களின்மனம் எவ்வெம்மனேராதிகளைக் கற்பிக்குமோ அவ்வவற்றை மனத்தானேகாண்பர், சப்தாதி குணங்களையும்அவையுடைத்திரவியங்களையும் எச்சீவனும் மனத்தாற் காண்பதின்றும். அல்லது, பரிசாதி குணங்களையுடையது ஆன்மாவென்னும் இப்பக்ஷத்தே ஆன்மாவிற்கு அநித்தியரூபத்தன்மை பிராப்தமாவதேபோலப் பரிசாதிகுணரூபம் ஆன்மா என்னும் பக்ஷத்தின்கண்ணுமாமாதலின் அவையும் ஆன்மாவன்றும். அல்லது, பரிசமுதலியவற்றைக் குணமென வுடன்பட்டு ஆன்மாவைத் திரவியமெனவுடன்பட்டு அவைகட்குப் பரஸ்பரம் பேதமுடன்படுமதத்தே திரவியரூப ஆன்மாப் பரிசாதிகுணரூபமெங்ஙு

னமாம்! மற்றே, ஒருகாலுமாகாதாம். அல்லது, உன்னுன்மா ரூபபரிசாதிகுணரூப மல்லாததேபோல அவற்றினும் வேறுமெனவுங் கூறவொண்ணுதாம்; ஏனெனின், ஆன்மா வாயுமுதலிய திரவியரூபமாகப் பரிசாதிகுணங்களினின்றும் வேறு? அல்லது, வாயுமுதலியவற்றினும் வேறு? இரண்டுபக்ஷத்தினும் ஆன்மாவின் ஞானத் தே நேத்திராதி இந்திரியங்கட்குக் காரணரூபத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனின், அவை ரூபபரிசாதிகளையும் அவையுடைத்திரவியங்களையும் கவர்வதிலாற்றலுடைய னவாமன்றி, மற்றெவற்றையுங் கவராவாதலின் பிருதிவியாதி நான்கன் சமுதாய ரூப தூலசரீரமே ஆன்மாவாம், இதனினும் வேறுயோரான்மாவுமின்றும். இவை முதலாகவுள்ள சார்வாகாதி நாஸ்திகரின் குதர்க்கவசனத்தைக்கேட்டு மதிமானும் ஜீவித அவஸ்தையின்கண்ணே இச்சங்காதத்தினின்றும் ஆன்மா வேறு? இதன் வடிவமேயா? என்னும் வியாமோகத்தை யடைகின்றனன். ஹே தருமராஜாவே! சார்வாகாதிநாஸ்திகர் நானுவகையாய யுக்திகளின் பலத்தால் இத்தூலசங்காதத்தி னும் வேறுய் ஆன்மாவின் அசத்தியத்தன்மையைக் கூறுவதேபோலச் சிலஆஸ்திக வாதியர் வேதவசனபலத்தால் இச்சங்காதத்தினும் வேறு யான்மாவின் சத்தியத் தன்மையையுங் கூறுகின்றனர். ஹே பகவன்! இவ்வாறு ஆன்மாவின்கண்ணே இரண்டுதன்மைகளையுங் கேட்டு எனக்குச் சம்சயமுண்டாகியிருக்கின்றது, எனது ஐயத்தை நீக்கற்பொருட்டுத் தாங்கள் கிருபைகூர்ந்து ஒருபக்ஷத்தைத் துணி யும்வசனம் கூறவேண்டும். இதுதானெனது மூன்றுவது வரம். ஹே சிஷ்ய! இவ் வாறு ஆன்மஞானப்பிராப்திவடிவ மூன்றுவதுவரத்தை வேண்டியபோது யமராஜா தமது ஹஸ்தத்தின் பிரமணரூபச்சேஷ்டையால் நிவாரணஞ்செய்பவரா யிவ்வாறு கூறினர்:—ஹே நசிகேதா! ஆன்மாவின்வடிவத்தை நீ என்பாற்கேட்காதே; ஏனெ னின், சமதமாதிகுணங்களோடு பூர்வமுண்டான தேவதைகளும், இப்போதிருப் பவருமாகிய அப்புத்திமான் தேவதைகளும் ஆன்மஸ்வரூபத்தே சம்சயத்தை யடைந்து ஸ்வரூபநிர்ணயஞ்செய்வதில் சமர்த்தற்றவராயினராயின், பாலகனுகிய நீ ஆன்மவடிவநிர்ணயஞ்செய்வதில் எவ்வாறு சமர்த்தனுவாய். ஆன்மாவின் சத்தியத் தன்மையும் அசத்தியத்தன்மையும் அத்தியந்தம் சூக்ஷுமமாதலின் அம்மகாபுத்தி மான்களாகிய தேவதைகளும் அவ்விருதர்மங்களையும் அறிந்திலர். அத்தகைய அறி யக்கூடாத ஆன்மஞானரூப மூன்றுவதுவரத்தை வேண்டாதே; மற்றே, அதனி னும் வேறு வெப்பதார்த்தத்தே பிரீதியோ அதைக்கேள். துர்விஞ்ஞேயத்தையுப தேசிப்பதி லென்னை நீ பிரேரியாதே. ஹே நசிகேதாவே! சத்தியவசனரூபபாசத் தாற் கட்டுப்பட்ட யான் நின்வசனுயிருக்கின்றேனுதலின் அவ்வறியமுடியாத ஆன் மாவின் விஞவடிவபாரத்தை நீ என்மேற்போடவேண்டாம்; மற்றே, வேறொரு வரத்தைக் கேட்டுக்கொண்டு என்னைச் சத்தியவசனரூப பாசத்தினின்றும் விடுதி. ஹே சிஷ்ய! இவ்வாறு யமராஜாகூறியபோது நசிகேதா கூறுவதாவது:—ஹே யமராஜாவே! எவ்வான்மாவின் வாஸ்தவவடிவத்தே தேவதைகட்கும் ஐயமாமோ எதனைத் துர்விஞ்ஞேயமெனத் தாங்கள் கூறினீர்களோ, பூர்வ மகாத்மாக்களும் கூறினுர்களோ, அத்தகைய அதனையுபதேசஞ்செய்யும் தங்களைப்போன்ற மகாத் மாக்கள் துர்லபமாம். ஹே பகவன்! தங்களைப்போன்ற துர்லபராய குருவை

யடைந்தும் யான் துர்விஞ்ஞேயமாய ஆன்மாவையறியேனாயின் மூவுலகத்தும் அவ்வுபதேசத்தை எனக்கெவ்வறிஞன் செய்வன்; மற்றோ, அவ்வுபதேசத்தே தங்களையன்றி வேறொருவர் சமர்த்தர் அல்லாராதலின் ஹே தருமாராஜாவே! என்னிடத்தே தங்களுக்குப் பிரீதியிருக்குமாயின், தங்களதுவசனமெய்யாயின் ஆன்மஞானவரத்தையே கொடுக்கவேண்டும். ஹே பகவன்! வேறொருவரத்தை யான் மேன்மையதாக நினைக்கவில்லையாதலின், அவ்வரத்தைவிடுத்து வேறொருவரத்தைக்கொடுக்கத் தாங்களேன் முயலுகின்றீர்கள். ஹே சிஷ்ய! இவ்வாறு நசிகேதா கூறியபோது யமராஜா அவருடைய வைராக்கியத்தைப் பரீக்ஷிப்பான் புத்திரன், பௌத்திரன், பசு, யானை, சுவர்ணம், அசுவம், மண்டலாதிபத்தியம், சிரஞ்சீவித்தன்மை, தனம், ஸ்திரஜீவிகை, சக்கிரவர்த்திராஜாத்தன்மை, திவ்ய மனுஷ்ய காமபோகித்தன்மை, சத்தியகாமத்தன்மை, திவ்வியஸ்திரீகள், அவர்கட்குத் தாசிகள், அவர்கட்கு நிருத்தியவாத்தியங்களிற் குசலத்தன்மை, என்னும் பதினாறு வரங்களை நசிகேதாவிற்குக் கொடுத்தனர். இப்போது முறையே அப்பதினாறு வரங்கள் நிரூபிக்கப்படும்:—ஹே நசிகேதா! நூறு வருடபரியந்தம் ஜீவிப்பவரும், ரூபயௌவன வித்தைமுதலிய குணங்களோடு கூடியவரும் ஆகிய அநேக சிரேஷ்ட புத்திரரின் அடைவுவடிவ மூன்றாவதுவரத்தைக் கேட்டி. அல்லது, அவ்வாறே சிரேஷ்ட குணமுடைய பௌத்திரர்களின் வடிவவரத்தைக் கேட்டி. அல்லது, மிகவும் விலையுயர்ந்த கோ முதலிய சிரேஷ்ட பசுக்களின் பிராப்திவடிவவரத்தைக் கேட்டி. அல்லது, பர்வதசமான மேன்மையாய யானைகளின் பிராப்திவடிவவரத்தைக் கேட்டி. அல்லது, சுவர்க்கலோகத்திருக்கும் சுமேருபர்வதசமான சுவர்ணப்பிராப்திவடிவ வரத்தைக் கேட்டி. அல்லது, சூரியபகவானுடைய தேரின்கண்ணேயிருக்கும் அசுவங்கட்குச் சமானமாய் ஆகாசத்தின்கண்ணே கமனஞ்செய்யும் அசுவங்களின் பிராப்திவடிவவரத்தைக் கேட்டி. அல்லது, சர்வ பூமியினுள்ளும் சுபகுணங்களாற் பிரசித்தமாய நிஷ்கண்டகபூமி மண்டல ராஜ்ஜியப் பிராப்திவடிவவரத்தைக் கேட்டி. அல்லது, ஜீவிக்கும் இச்சையிருக்கும் வரை தீர்க்க ஆயுஷின் பிராப்திரூபவரத்தைக் கேட்டி. மூவுலகத்துமிராநின்ற நானாவகையாய தனப்பிராப்திவடிவவரத்தைக் கேட்டி. இவ்வுலகத்தே நெடுங்கால பரியந்தம் வாழுதல் வடிவவரத்தைக் கேட்டி. அல்லது, சர்வ பூமியின்கண்ணும் சக்கிரவர்த்திராஜாத்தன்மையின் அடைவுவடிவவரத்தைக் கேட்டி. அல்லது, உனதிச்சைப்படி புத்திரபௌத்திராதி திவ்யபதார்த்தங்களின் அடைவுவடிவ வரத்தைக் கேட்டி. அல்லது, மூவுலகத்தேயுள்ள துர்லப பதார்த்தங்கள் எவையும் நினைத்தமாத்திரத்தே கிடைப்பதாகிய சத்தியகாமத்தன்மையினடைவுவடிவ வரத்தைக் கேட்டி. அல்லது, சுவர்க்கலோகத்திருக்கும் திவ்ய தேவஸ்திரீகளின் அடைவுவடிவவரத்தைக் கேட்டி. அவர்கள் சுவர்க்கத்துள்ள புருஷரின் மனத்தையும் நேத்திரத்தையும் ஆநந்திக்கும்படி செய்பவர், அசுவமேதாதி மகா யாகங்களால் தரிசனந்தாத்தக்கவர், தமது பருத்துயர்ந்த குயங்களாற் சந்திரமண்டலத்தைத் திரஸ்காரஞ்செய்தவர்கள், நிதம்பஸ்தானத்தேநின்ற சுவர்ணமணிமயகாஞ்சியின் மதுர சப்தங்களால் பூமியை வியாபிக்கச்செய்தவர், தமது முககமல சுகந்தத்தோடுகூடிய வாயுவால் இருகமத்தியபாகத்தைச் சுகந்தியுடையதாய்ச் செய்த

வர், காம்பற்ற சம்பக புஷ்பமாலையின் கோமளபரிசத்தைத் தமது தேககோமள பரிசத்தால் வென்றவர், மேன்மையாய குதுக் கதுக்கு மெதுக்குகளாலும் பார்வையாலும் காமிகட்கு ரச வுல்லாசத்தையுண்டாக்கும் விலாசமுடையவர், குயிற் கொப்பாய இனிமையாய சுரமுடையவர், புன்னகையோடுகூடிய அமிர்தரச வாக்கால் விசித்திர அர்த்தங்களையுடைய சொற்களை இனிது பேசுபவர், தமது சரீர நிர்மலகாந்தியால் சூரிய சந்திரர்களின் காந்தியையும் திரஸ்கரிப்பவர், சர்வலக்ஷணங்களோடுங்கூடியவர், பிரதம நவீன யௌவனமுடையவர், தமது தேக எழிலாற் காமதேவர்கரும் காமமுண்டாக்குபவர், ஒளிர்வனவும், விலையுயர்ந்தனவும் ஆகிய விசித்திர நானாவகை ஆடைகளையும் ஆபரணங்களையும் அணிந்து சோபைகளிற் றொழுகுந் தேகத்தையுடையவர், போக்தாக்களின் அநேக புண்ணியகருமங்களால் உண்டாக்கப்பட்ட தேகத்தையுடையவர், தமக்குச் சமானவடிவ அவஸ்தையுடையவராகிய நூறு நூறு அடிமைப்பெண்களோடுகூடியவர், நடனஞ்செய்யச் சாதனமாய வீணைமுதலிய வாத்தியங்களோடுகூடியவர், இத்தகைய ஸ்திரீகளின் கடாக்ஷம் ஜீவர்கட்கு மோக்ஷரூப சுகத்தினும் அதிக சுகத்தையடைவிப்பதாம். அக்கடாக்ஷ அவ்வாறாயின், அவர்மேனியின் ஆலிங்கனம் பரமஆநந்தத்தைக்கொடுக்குமென்பதன்கண்ணே யாது கூறவேண்டியிருக்கின்றது. ஹே நசிகேதா! எனது ஆணைப்படி நடக்கும் சுவர்க்கவாசிகள் அத்தகைய சுந்தர ஸ்திரீகளையாலிங்கனஞ் செய்து எப்போதும் சுகத்தையடைவர். அத்தகைய சுந்தரிகள் மனுஷலோகத்தே எவருக்குங் கிடைக்கார். அத்தகையவரை யான் நின்பொருட்டுக் கொடுக்கின்றேன் நீயவர்களோடு சுக பூர்வகமாய் இரமித்துக்கொண்டிருத்தி. மரணத்தின் பின்னர் இச்சரீரத்தினும் வேறாய் ஆன்மாவின் சத்தியத்தன்மை அசத்தியத்தன்மை என்னும் மரண விஷயக வினாவை யென்பாற்செய்யாதே; காகத்திற் கெயிறுகளைத் துணை என்னும் காகதந்தப் பரீக்ஷைசெய்தலாற் அணுவளவு பயனுமின்றாமாறு மரணத்தின் பின்னரிச் சீவன் சுவர்க்காதி லோகங்களையடைவனோ? அல்லது, சாம்பராய்ப்போவனோ? என ஆன்மவிசாரஞ்செய்தலால் அணுமாத்திரையும் பயனின்றாம். யான் கொடுக்கும் ஸ்திரீ புத்திராதிகளோ இப்போதுனக்குச் சுகத்தைக் கொடுப்பர். நீ கேட்குமான்மவிசாரமோ தானின்பவடிவமன்றாம், சுகப்பிராப்தியின் சாதனவடிவமுமன்றாமாதலின், நிஷ்பல விசாரத்தை நீ செய்தல் தகுதியன்றாம். இவ்வுலகத்தே மதிமான்களியாவரும் சுகரூபபலப் பிராப்தியையுடைய காரியத்தையே செய்வரன்றி யல்லாதவற்றைச் செய்யார். சுகத்தையடைவிப்பன புத்திர ஸ்திரீ முதலிய பதார்த்தங்களேயாமாதலின், அவற்றின் பிராப்திவடிவ வரத்தைக்கேட்டி. ஆன்மஞானப் பிராப்திவடிவ வரத்தால் உனக்குச் சிறிது மாத்திரையும் சுகமுண்டாகாதாதலின், அவ்வரத்தை நீ கேட்கவேண்டாம். ஹே சிஷ்ய! இவ்வாறு ஆன்மஞானவினாவினின்றும் நீக்கும்பொருட்டு யமராஜா நசிகேதாவின் கண்ணே லோபத்தையுண்டாக்குபவராய் நானாவகையாய வரங்களைக்கொடுத்தனர். அவற்றைக்கேட்டு நசிகேதாவு மிவ்வாறு கூறுவாராயினர்:—ஹே தர்மராஜாவே! எத்தேவாங்கனைகளைச் சுகசாதனமென வருணித்திரோ அவர் உண்டாமுன்னரும் ஒழிந்தபின்னரும் தங்கட்கும் அன்னியர்கட்கும் சுகத்தையடைவிப்பாரா?, அவ்

தில்லையா? முதற்பக்ஷஞ் சம்பவியாது; ஏனெனின், உற்பத்தியின் முன்னரும் நாசத்தின் பின்னரும் எப்பொருளின்கண்ணும் காரணரூபத்தன்மை காணவருவ தின்றாம்; உண்டாயின், குலால உற்பத்தியுண்டாகாததின் முன்னரும் குலாலனி னின்றும் கடரூபகாரியோற்பத்தியுண்டாதல்வேண்டும். குலாலனழிந்தபின்னரும் அவனாற் கடகாரியோற்பத்தி யுண்டாதல்வேண்டும்; ஆனாலவ்வாறுண்டாவதின் றாம். ஆகையால், நிகழ்காலத்தே மாத்திரம் அவர்கள் சுகத்தையடைவிப்பர் என் னும் பக்ஷத்தையே தாங்கள் அங்கிகரிக்கவேண்டும்; அதனையுமாராய்ந்து நோக் கின் சம்பவியாதாம். ஏனெனின், 'ஆதாவந்தே ச யந்நாஸ்தி வர்த்தமாநேபி தத்ததா' (பொள்.) யாது ஆதியிலின்றாமோ அந்தியத்திலுமின்றாமோ அது வர்த்தமான காலத்துமின்றாம். இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பம் ஆதிகாலத்துமின்றாம் இரஜ்ஜு ஞானத்தின் பின்னருமின்றாமாதலின், அது நிகழ்காலத்துமின்றாவதேபோல, அம் மங்கையரும் உண்டாமுன்னரும் ஒழிந்தபின்னரும் சுகத்தையுண்டாக்காராதலின், நிகழ்காலத்தும் சுககாரணத்தன்மை சம்பவியாதாம். நிகழ்காலத்தே மங்கையர் பாற் சுககாரணத்தன்மை தோற்றலில் அவரியற்கைகாரணமன்றாம்; விஷயாசக்தகா மிகட்குள்ள ரமணீகமதியேயாம். முன்னர்த்தாங்கள் வருணித்தமங்கையரும் விஷ யசம்போகப்பிராப்திவாயிலாயே காமிகட்குச் சுகமுண்டாக்குவாராயின் மனுஷலோ கமங்கையரினும் அதிகமியாதுளதாம்? ஆராயின் அதிகத்தன்மையின்றாம், கருத்தி துவாம்:—ஸ்வர்க்கலோக மங்கையர்பாலும் மனுஷலோக மங்கையர்பாலும் இயல் பாயோ சுகசாதனத்தன்மையின்றாம்; மற்றோ, எவள்பால் எவனுக்குக் காமதோஷ ஜன்னிய ரமணீக புத்தியாமோ அவள் அவனுக்குச் சுகசாதனமாவள். அவனுக் குச் சுகந்தமுடைய அமரமங்கையர் சுகஞ்செய்விப்பதேபோலத் துர்க்கந்தமுடைய நரமங்கையரும் செய்விப்பாராதலின், அவர்பாலிவரினுமதிகத்தன்மையின்றாம். இப் போது இப்பொருளே வெளிப்படையாய் நிரூபிக்கப்படும்:—ஹே தருமராஜாவே! பெண்ணாய் ஆணுக்குச் சுகத்தையடைவிக்கும், மனுஷ ஸ்திரீ மனுஷர்கட்குச் சுகத்தையடைவிப்பள், அதுபோலவே அமரமங்கையரும் அமரர்கட்குச் சுகத் தைச்செய்வர்; ஆனால், விஷய ஜன்னிய சுகரூபபலத்தின்கண்ணே சிறிது மாத்தி ரையும் குறைவு மிகுதித்தன்மையின்றாம்; மற்றோ, தேவதை முதலிய மூன்றிற் கும் தத்தமது ஸ்திரீ சம்போகத்தால் சுகம் சமானமேயாம். ஒருகால் மங்கையர் இயல்பானே சுகசாதனமாயின் சர்வஜாதியுடைய ஸ்திரீகளும் சர்வ ஜாதியுடைய புருஷர்கட்குச் சுககாரணமாதல்வேண்டும். அவ்வாறு உலகத்தே காணவில்லை; மற்றோ, எவ்வெவருக்கு எவ்வெப்பெண்களிடத்தே இரமணீக புத்தியாமோ அம் மங்கையர் அவ்வாடவர்க்கே விஷயசம்போகவாயிலாய்ச் சுகத்தையடைவிப்பர்; மற்றையர்க் கடைவியார். தேவமங்கையரிடத்தே தேவதைகட்கு ரமணீக புத்தி யாம் நாய்க்கின்றாமாதலின், அவர் அவர்கட்கே விஷயசம்போகத்தால் சுகத்தை யடைவிப்பர்; நாய்க்கடைவியார். அதுபோல, நாயிடத்தே நாய்க்கு இரமணீக புத் தியாம்; தேவதைகட்கின்றாமாதலின், அது அதற்கே விஷய சம்போகத்தால் சுகத் தையடைவிக்கும்; தேவதை கட்கடைவியாது. இவ்வாறு மனுஷன் பசு பக்ஷி சர்ப் பம் என்பனமுதலிய சர்வ ஜாதியையுடைய ஸ்திரீகள் தம்மிடத்தே இரமணீக புத்தியுடையவர்கட்கே சுகத்தைச்செய்விப்பர். இரமணீகபுத்தியற்ற நிஷ்காமர்க்கு

எவரும் சுகத்தைச்செய்வியாளாதலின், அமரமங்கையர்பால் மனுஷ்யலோகஸ்திரீயினின்றும் அதிகத்தன்மை கூறியது சம்பவியாது. ஹே தருமராஜாவே! அமரமங்கையரிடத்தே சுந்தரரூபாதி குணங்களைப்பார்ப்பதேபோல நாயினிடத்தே பாரார்; மற்றோ, நாயிடத்தே எப்போதுங் குரூபாதிதோஷங்களையே காண்பராதலின், அவர்களினும் நாய் அத்தியந்தம் கீழ்மையதாம் எனத்தாங்கள்கூறியது சம்பவியாது; ஏனெனின், தேவதைகள் தேவமங்கையரிடத்தோ குணத்தைக்காண்பர், நாயின்கண்ணே தோஷத்தைக்காண்பர், அதுபோல, நாயும்நாயின்கண்ணே குணத்தைக்காணும் தேவ மங்கையரிடத்தும் மனுஷ மங்கையரிடத்தும் எப்போதும் தோஷத்தையேகாணும். ஆதலினனே அந்நாய் அவர்களையடைந்து மகிழாது; மற்றோ, பெண்ணாயை யடைந்தேமகிழும். தேவதைகள் அமரமங்கையர்பால் நானுவகைக் குணங்களைக் காண்பதேபோல நாயும் பெண்ணாயிடத்தே இவ்வகைக் குணங்களைக்காணும் :—இவ்வெனது பிரியமாய பெண்ணாய், சுந்தரதீர்க்கமுகமுடையது, அத்தியந்தங் கோமளப்பரிசமுடையது, கூர்மையாய தந்தங்களையுடையது, இரக்தமுகமுடையது, இரக்த புஷ்பம்போல நாவையுடையது, மாம்சருதிர பக்ஷணத்தாற் சுந்தரகந்தமுடையது, நீண்ட நேத்திரமுடையது, உயர்ந்த காதுகளையுடையது, எப்போதும் விரைவாகக் கமனம்செய்வது, புஷ்ட சரீரமுடையது, ஒட்டிய உதரத்தையுடையது, உயர்ந்த வாலையுடையது, சுருங்கிய யோனித்துவாரத்தையுடையது, அத்தியந்தஞ் சோபைமிக்கது, உகுங்கார சப்தத்தானும் பங்கார சப்தத்தானும் எனது மனத்தையும் செவியையும் ஆநந்திக்குமாறு செய்விப்பது, எனதெதிரிற் செல்வதானும் எனது பிற்செல்வதானும் இது எப்போதும் என்னைச் சேவிப்பது, தனது தரிசனததால் எனது விழியையும் உளத்தையும் ஆனந்திக்குமாறு செய்விப்பது என இவை முதலாக அநேகங் குணங்களை நாயானது பெண்ணாயிடத்தேகாணும். ஹே தருமராஜாவே! பெண்ணாயைக்கண்டு ஆணாய்க்கு மனத்தின்கண்ணே மகிழ்வுண்டாவதேபோல, இந்திராணியைக்கண்டு இந்திரருக்கு முண்டாகும் அல்லதுண்டாகாது. ஆகையால், அமரமங்கையர்பால் தாங்கள்கூறிய அதிகத்தன்மை சம்பவியாது. சுவர்க்கமனுஷப் பசுப்பெண்கள் தத்தமிடத்தே ரமணீகபுத்தியையுடைய சஜாதியையுடைய புருஷர்கட்கே சுகத்தைக் கொடுப்பர்; இதரஜாதியர்கட்குக் கொடார். அதுபோல, முற்கூறியவரின் புத்திர பௌத்திராதியரும் தத்தமிடத்தே ரமணீகபுத்தியையுடைய சஜாதீய பிதாமாதா முதலியவர்க்கே சுகத்தையடைவிப்பர். இதரஜாதியையுடைய அவர்கட்கு இதரஜாதியையுடைய அவர் சுகத்தையடைவியாராதலின், அந்தப் புத்திரபௌத்திராதியரும் சர்வ லோகருக்கும் சமானமேயாவர். ஜீவன் அறம்பாவவயத்தாலடைவுற்ற அவ்வஜ்ஜாதியுடைய சரீரத்திற்கு எத்துணை ஸ்திரீ புத்திர அன்னபானாதி பதார்த்தங்களுளவோ அவற்றையே யாவற்றினுமதிகமாயெண்ணுவன். இதர ஜாதியுடைய சரீரத்திற்குரிய யாவற்றையும் முற்றினுந் தாழ்ந்ததாயெண்ணுவன். நாய்க்குரிய போகசாதனங்களில் தேவதைகளாகிய உங்கட்கு எப்போதும் கிலானியி (அருவருப்பி)ருப்பதேபோல உங்களது போகசாதனங்களில் நாய்க்கு மெப்போதும் கிலானியேயிருக்குமாதலின், இயல்பாகவே எந்தப் பெண்சரீரத்தும் எந்தப்

புருஷசரீரத்தும் சுகரூபத்தன்மையின்றாம்; மற்றோ, பித்ததோஷத்தால் மயக்கமுற்றவன் வெண்சங்கத்தை மஞ்சள்நிறமுடையதாய்க் காண்பதேபோலக் காமரூபச் சுரத்தால் உண்டாய வியாமோகரூப பித்ததோஷத்தால்மயங்கியவன் தத்தமது சமானஜாதியுடைய பெண்களிடத்தே சுகபுத்திசெய்வன், இதரஜாதியையுடைய பெண்களிடத்தே சுகபுத்தியைச் செய்யாததேபோல அப்பெண்களும் வியாமோகரூபதோஷத்தால் மயலையடைந்து தத்தமது சமானஜாதியையுடைய புருஷரிடத்தே சுகபுத்திசெய்வர், வேற்றுச்சாதியையுடையவரிடத்தே அவர்கள் சுகபுத்தி செய்யாராதலின், ஆண்கட்கும் பெண்கட்கும் பரஸ்பரமுண்டாம் சுகபுத்தி மஞ்சட்சங்கேபோலக் கேவலம் மயக்கமேயாம். இப்போது பெண்ணிடத்தும் ஆணிடத்தும் இயல்பானே சுகரூபத்தன்மையைக் கண்டிப்பாம்:—ஹே யமராஜாவே! பெண்ணிடத்தும் ஆணிடத்தும் இயல்பானே சுகரூபத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனின், இந்தப் பெண் ஒருகால் தானே சுகரூபமுடையவளாவளேல் தனக்குத்தானே யேன் சுகத்தையடைவித்துக்கொண்டிலள்? தனதுதேகத்தினும் வேறாயதேகத்திற்குச் சுகத்தைக்கொடுக்கின்றனள் எனக் கூறினுஞ் சம்பவியாது; அவ்வாறாயின், தன்னினும்வேறாய சபத்நிமுதலிய ஸ்திரீகட்குச் சுகத்தை யேன் செய்விப்பதில்லை? தன்னினும்வேறாய புருடசரீரத்திற்குச் சுகத்தைச்செய்விப்பளெனின், அதுவுஞ்சம்பவியாது; அவ்வாறுசெய்யின் சேலையுற்றிருப்பவளுடைய இருதயதேயத்தே விளையாடும்பாலகனுக்குச் சுகத்தை ஏன் அடைவித்திலள். யௌவனனுக்குச் சுகத்தை யடைவிப்பளெனின் அதுவுஞ்சம்பவியாது; அவ்வாறுசெய்யின் தனது யௌவனபுத்திரன் சகோதரன்முதலாயினோர்க்குச் சுகத்தை ஏனடைவிப்பதில்லை? தனது யௌவனமாகியபதிக்குத் தான் சுகத்தைச்செய்விப்பளெனின், அதுவுஞ்சம்பவியாது; அவ்வாறாயின், அநேகந்தடவை சம்போகித்துக் காமரூபச்சுரத்தினின்றும் நீங்கியபதிக்கு முன்போலச் சுகத்தை ஏன் செய்வித்திலள்? காமதோஷமுடைய யௌவனபதிக்குச் சுகத்தைச்செய்விப்பளெனின், அதுவுஞ் சம்பவியாது. அவ்வாறாயின், சுரமுதலியரோகங்களால் துர்ப்பலத்தன்மையை யடைந்தவள் அத்தகையனுக்குச்சுகத்தை ஏன் செய்வித்திலள்? ஆகையால், எவ்வாற்றானும் ஸ்திரீகளிடத்தே இயல்பானே சுகரூபத்தன்மை சம்பவியாது. பெண்களிடத்தே இயல்பானே சுககாரணத்தன்மை யில்லாததேபோலப் புருஷரிடத்துமின்றாம். ஏனெனின், புருடன் சுபாவமாகவே ஸ்திரீயின் சுககாரணனாயின், தனது புத்திரி சகோதரிமுதலியோர்க்கும் சுககாரணன் ஏனாகவில்லை? ஹே யமராஜாவே! இவ்வாறாய யுக்திகளோடு ஆராய்ந்துபார்க்கின் இருவரிடத்தும் இயல்பானே சுகரூபத்தன்மை சித்தியாதாயினும் இருவர்க்கும் ஒருவர்க்கொருவர் சரீரத்தே சுகபுத்தியுண்டாதல் காமச்சுரத்தின் மகிமையேயாம். ஊமத்தைவிரையைத் தின்றவன்தோஷத்தால் எல்லாவுலகையும் மஞ்சள்நிறமுடையதாய்ப் பார்ப்பதேபோல, இருவருங் காமதோஷத்தால் தமது சமானஜாதியுடையவரிடத்தே சுகபுத்தியையும், விஜாதியரிடத்தே துக்கபுத்தியையும் அடைவர். ஜரா அவஸ்தை யிருவருக்கும் குரூபத்தன்மையின் காரணமாவதேபோல, இருவரின் யௌவன அவஸ்தையே காமச்சுரத்தின் காரணமாம். யாவன் காமச்சுரத்தால் வியாமோகத்தை யடைந்துளனோ அவனே பெண்களைத் துதிப்பன்; நிட்காமன் துதியானாதலின், தாங்கள் பெண்களைத் துதித்

தும் காமிகளின் அபிப்பிராயத்தைக் கவர்ந்தேயாமன்றி அத்துக்கமய ஸ்திரீக
1த் துதிப்பதில் தங்கட்குக் கருத்தின்றாம். இதன்கண்ணே யான் கூறவேண்டிய
தன்னுளது; தாங்கள் சுககாரணமாய்க்கூறியயாவும் அநித்தியங்களேயாம். ஜீவர்
-கு அத்தியந்தம் பிரியமாயுள்ள அநித்தியபதார்த்தங்கள் தாம் நிகழுங்காலத்தே
த்துணையின்பைச் செய்யுமோ அதனினும் ஆயிரமடங்கு அதிகதுக்கத்தைத்
மது வியோககாலத்தே செய்யுமாதலின், அவற்றின்கண்ணேயிருக்கும் அநித்தி
த்தன்மையே துக்கரூபத்தன்மையை யுணர்த்தும். பிரிய ஸ்திரீமுதலாகத் தாங்
ள் அத்தியந்தம் பிரியரூபங்களெனக் கூறியவை இன்றே என்னிடத்தின்றாம்; தங்
ள்வரத்தால் மறுதினத்தே கிடைக்கும். ஆனால், அவை யநித்தியங்களாமாதலின்,
மன்றுவது தினத்தே என்பாலிருக்குமோ இராவோ என்பதை நிச்சயிக்கமுடியா
ாம். ஆகையா லவை தமதுவியோககாலத்தே பரமதுக்கத்தை யடைவிக்கும். உண்
மையா யாராய்ந்து நோக்கினே அவை கணபங்குரங்களாமாயினும் விசாரஹீனன்
வற்றைநெடுநாணிலைப்பனவாய் நினைவனுதலின், அவன்றிருஷ்டியை யங்கீகரித்து
நடுநாணிலைப்பனவாய் நினையினும் எனக்குச் சுகத்தைக்கொடுப்பனவன்றாம்; மற்
று, துக்கத்தையே எப்போதுங் கொடுப்பனவாம். இப்போது முதலில் பெண்களி
த்தே துக்ககாரணத்தன்மையைக் கூறுகின்றேன் :—ஹே தருமராஜாவே! இவ்
லகத்தே புஷ்பங்களின் இரசத்தை வெளிப்படுத்தும் யந்திரத்தால் அக்கினி புஷ்
ங்களின் சாரரூபரசத்தை வெளிப்படுத்தும், இரசம் வெளிப்போதலால் மலர் சோ
பயற்றதாய், விரைவிலேயழியும். அதுபோலப பெண்ணழனும் சம்போகரூபயந்
ரத்தால் புருஷபுஷ்பத்தின் வீரியரசத்தை வெளிப்படுத்தும், அது வெளிப்போத
ால் விழிமுதலிய பொறிகளும் ஆயுஷ்யம் விரைவாகவே க்ஷயத்தை யடையுமாத
லின்,பெண்கள் நிகழ்காலத்தும் புருடனது துக்ககாரணமேயாவர். இப்போது புத்
ரரிடத்தே துக்ககாரணத்தன்மையைக் கூறுகின்றேன் :—ஹே தருமராஜாவே!
பெண்கள் புருடரின் வீரியரூபரசத்தை நாசஞ்செய்வதேபோல,மைந்தனும் தந்தை
யின் சுரோத்திராதிஇந்திரியமனங்களின் சத்துவரூபரசத்தை நாசஞ்செய்வன்; சத்
துவரூபரசம் ஜீவர்களின் தருமஞானவிருத்தியைச்செய்யும். இவ்விஷயத்தே என
து தாலகபிதாவே திருஷ்டாந்தமாவர்; ஏனெனின், நசிகேதாவாய எனது ஜீவன
ிந்தையால் அவர் மறையவர்பொருட்டுத் துர்ப்பல விருத்தகோக்களைக் கொடுத்த
னர், கொடுத்ததால் தருமஹானியுண்டாயது, எனதுவியோகத்தால் மனத்தே மகா
லக்கத்தையடைந்தனர்; கலக்கமுறவே அவரது செவிமுதலிய பொறிகளின் தே
ஜசுவடிவபலம் க்ஷயமாயது. கருத்திதுவாம் :—என்னைப்போலானைப்படி நடக்குங்
குமானும் தந்தையின் துக்கத்திற்கே காரணமானபோது வேறு இலௌகிக மைந்
தர் தந்தையின் துக்ககாரணமாவர் என்பதன்கண்ணே யாதுகூறவேண்டியிருக்கின்
றதாதலின், இவையாவும் அநித்தியமாதலின் துக்கரூபமேயாம். இத்தகைய அநித்
திய துக்கரூப பதார்த்தங்களையும் தாங்கள் தங்களுடைய லோகபாலரூப அதிகார
பாலனஞ்செய்யும்பொருட்டுப் பிரியரூபமாய்க் கவரின், தங்கட்குத் தகுதியேயாம்;
ஆனால், ஆன்மஞானேச்சையையுடைய எனக்கு அவற்றைக்கவர்தல் தகுதியன்றாம்.
முன்னர்த் தாங்கள் பரமஆயுளின் பிராப்திவடிவ வரங்கொடுப்பதாய்க் கூறியதும்

அத்தியந்தம் துச்சமேயாம்; ஏனெனின், ஹிரண்யகர்ப்பரூபப்பிரஹ்மாவின் ஆயுஷ்யாவினுமதிகமாம்; ஆனால், அதுவும் இரண்டுபரார்த்தத்தோடு முடிவெய்துமாதலின் அற்பமாம். அதுவும் அற்பமாயின், அதனுள்ளடங்கிய தேவமனுஷாதியரின் ஆயுள் அற்பமெனக்கூறவும்வேண்டுமோ, இப்போதிப்பொருளையே வெளிப்படைசெய்கின்றேன் :—ஹே தருமராஜாவே! பூலோகவாசிகளாகிய எங்களுடைய ஒருவருடம் சுவர்க்கவாசிகளாகிய தேவதைகட்கு ஒருநாளாகும். எங்களுடைய ஆறுமாதங்கொண்ட உத்தராயணம் தேவதைகட்குத் தினமாம்; ஆறுமாதங்கொண்ட தக்ஷிணாயனம் இரவாம். இத்தகையன 360 கூடின் தேவதைகட்கொருவருடமாம். இத்தகையன 12000 கூடின் கிருத, திரேதா, துவாபர, கலி என்னும் நான்கு யுகங்களாம். இத்தகைய சதுர்யுகங்கள் 1000 கழியின் பிரஹ்மாவின் ஒருதினமாம்; தினமுள்ளளவே இரவாம்; அவ்விரவின்கண்ணே மூவுலகமும் நாசத்தையடையும். அவ்விரவு சாஸ்திரத்தின்கண்ணே நைமித்திகப்பிரளயமெனவும் அவாந்தரப்பிரளயமெனவும் கூறப்பெறும். இத்தகையன 360 கூடின் பிரஹ்மாவிற்கு ஒருவருடமாம். இத்தகையன 100 வருடம் பிரஹ்மாவின் ஆயுஷாம். பிரஹ்மாவின் நூறுவருடங்களுள் 50 முதற்பரார்த்தமாம்; 50 இரண்டாவது பரார்த்தமாம். அவ்விரண்டனுள் முதற்பரார்த்தமோ கழிந்துவிட்டது; இரண்டாவதோ கழிகின்றது. எந்தப்பிரஹ்மாவின் மரணத்தின்பின்னர் இச்சர்வஜகத்தின் மகாப்பிரளயமாமோ அவரும் இப்போது பாதி ஆயுளுடையவராயிருக்கின்றனர். எங்களுக்கு மரணபயமிருப்பதேபோலப் பிரஹ்மாவிற்கும் மரணபயமுண்டாமாதலினனே அவர் தமது நேத்திரங்களை மூடிக்கொண்டு அந்தர் ஆன்மாவைத் தியானித்துக்கொண்டிருக்கின்றனர். பிரஹ்மாவும் மரணபயத்தோடு கூடியிருப்பின் பிரஹ்மாவின் அம்சபூதமாகிய தாங்கள் என்பொருட்டுப் பரமாயுஷை யெங்ஙனங்கொடுப்பீர்கள். நீரின்பேனபுற்புதம்போலக் கணபங்குரமாய இத்துக்கரூப சம்சாரசமுத்திரத்தின்கண்ணே யிருக்கும் ஹஸ்தி, அசுவம், தேர் முதலியவாகனங்களும், நிருத்திய கீதாதிகளோடுகூடிய சுந்தர ஸ்திரீகளும், சுபகுணமுடைய புத்திர பௌத்திராதி பதார்த்தங்களும் கொடுப்பதாகக்கூறிய மற்றைய யாவும் தங்களிடத்தேயிருக்கின்றன; அவ்வநித்தியங்களின்கண்ணே எனக்கிச்சையின்றாம். இப்போது தனத்தின்கண்ணும் துக்ககாரணத்தன்மையைக் கூறுகின்றேன் :—ஹே தருமராஜாவே! தாங்கள் எனக்கீயும் சுவர்ணாதிரூபதனம், எத்தகையதென்னின், ஒருவனுக்கு மூவுலகதனங் கிடைப்பினும் அவ்வடைவால் அவனாசை நீங்காது; மற்றோ, அதனையடைந்தபின் பிரஹ்மலோகமடைய இச்சிப்பன். ஒருபுண்ணியவயத்தால் பிரஹ்மலோக மடையப்பெறினும் அதனினின்றுங் கீழேவிழாதிருக்க இச்சிப்பன். ஓங்கியெரியாநின்ற அக்கினியானது காஷ்டங்களாலும் நெய்யாலும் திருப்தியடையாததேபோலவும், இச்சமுத்திரம் ஜலங்களால் திருப்தியடையாததேபோலவும், ஸ்திரீபுருடரால் திருப்தியடையாததேபோலவும், நானாவகைத்தனத்தால் திருப்தியை யடையான்; மாறாக, விறகு நெய்யிடலால் அக்கினி விருத்தியாவதேபோல மிகுந்த பொருட்பிராப்தியால் ஆசை விருத்தியடையும். தனத்தைக்காத்தலாலும், தனநாசபயத்தாலும் தனிகர்கட்கெப்போதுங்கிலேசத்தையேகொடுக்குமாதலின், இத்தகைய துக்கரூபத்தனமடைய எனக்கிச்சையின்றாம். இவ்வாறுண்மையையா

ராய்ந்துபார்க்கின்றேன் இத்தனம் ஜீவர்கட்குத் துக்ககாரணமேயாமாயினும் இலௌகிக திருஷ்டியை யங்கீகரித்து இத்தனத்தைச் சுககாரணமாமெண்ணினும் தனப்பிராப் திரூபவரத்தைத் தங்களிடத்தே வாங்குதல் எனக்குசிதமன்றாம்; ஏனெனின், தரி சனமாத்திரத்தானே சர்வதுக்கங்களையும் நீக்குந் தங்களை மாம்சமயநேத்திரங்க ளாற்கண்டேனாதலின் எனக்கு வியவகாரத்தின்கண்ணே அபேக்ஷிதமாய தனம் தானே யெனக்குக்கிடைக்கும்; அதன்பொருட்டுத் தங்கள் சந்நிதியிற்பிரார்த்தி யேன். தாங்கள் மேகம்போலச் சியாமவருணமுடையவர், நீண்டு பருத்ததேகமு டையவர், பீதாம்பரந்தரித்தவர், செவ்வரக்கு ரசசமான இரத்தவருணமுடைய சொச்சவிலாசநேத்திரங்களையுடையவர், நீண்டகண்டத்தையுடையவர், விசாலமாய மார்புத்தலத்தையுடையவர், முழந்தாள்பரியந்தம் நீண்டபுயமுடையவர், சூரியசமா னதேஜசாய நேத்திரத்தையுடையவர், சூரியசமானசரீரதேஜசையுடையவர், மகா மகிஷரூப வாகனத்தின்மீது ஆரோகணித்துவருபவர், பாவிகளைப்பயப்படுத்தும் தண்டத்தை ஹஸ்தத்தின்கண்ணே தரித்தவர், குரோதமுடைய சர்ப்பம்போலத் தரிசனத்தால் பாவிகளைப் பயப்படுத்துபவர், தமதுசித்தத்தே யெப்போதுந் தயா ளுத்தன்மையோடுகூடியவர், வேதபகவான் போதிப்பித்த அறம்பாவங்களின் சுக துக்கரூப பலப்பிராப்திவடிவமார்க்கத்தைக் காப்பாற்றுமதொழிலுடையவர், ஆன் மஞானத்தோடுகூடியவர், சர்வ ரோகமுமற்றவர், எல்லாப் பூதங்களிடத்தும் சம திருஷ்டியையுடையவர், சத்துரு மித்துருபாவமற்றவர், இத்தகைய தாங்களே ஸ்தாவரஜங்கமரூப ஜகத்தின் மிருத்தியுவடிவமாவீர்கள். தாங்களெனக்குக் குரு வானபோது எவ்வாறு எனக்கு மிருத்தியுவுண்டாம்; மற்றோ, தாங்கள் தக்ஷிண திசையின்கண்ணேயிருக்கும்வரையும் யான் ஐயமற்றவனாய்ச் சீவிப்பனாதலின், தங் களுடைய கிருபாகடாக்ஷ அடைவால் நெடுங்காலபரியந்த ஜீவனம் இயல்பாகவே எனக்குச் சித்தித்திருக்கின்றது; அவ்வாறிருக்க அவ்வரத்தைத் தங்கள்பாற் கேட்டல் உசிதமன்றாம். ஹே தருமராஜாவே! மரணத்தின்பின்னர் ஆன்மாவின் சத்தையின் சமசயத்தை நீக்கும் போதப்பிராப்திவடிவ மூன்றாவது வரத்தைத் தாங்கள் என்பொருட்டுக் கொடுக்கவேண்டும். ஜரைமரணத்தோடுற்ற பூவுலகவாசி யாகிய யான் தைவயோகத்தால் ஜரைமரணமற்ற சுவர்க்கவாசி தேவதையாகிய தங் களுடைய சந்நிதியையடைந்து, ஆன்ம அனுன்மவிசாரத்தோடு கூடியவனாயின் மனைவி புத்திராதிகளை இரமணீகமென வுணர்ந்து நெடுநாள் வாழ்க்கையில் எவ்வா றுசக்தியடைவேன்; மற்றோ, அடையேன். அவை விசாரவானுக்கோ எப்போ தும் துக்கரூபமாயே தோற்றும்; மூடனுக்குத் தமது தரிசனவாயிலாயும், போக வாயிலாயும் சுகத்தையடைவிக்கும். மனுஷலோகமே முதல் பிரஹ்மலோகபரியந் தம் உள்ள விஷயஜன்னிய சுகம்; சுகவடைவின் ஸ்திரீ, புத்திரன், தனம் முதலிய சாதனம் யாவற்றையும் முற்கூறியமுறையே யான் துக்கரூபமாயே யறிகின்றேனாத லின் அவற்றினடைவில் எனக்கிச்சையில்லை. ஜரை மரணமற்ற தேவதையும் எத்துர் விஞ்ஞேய ஆன்மாவின்கண் நிர்ணயமின்றிச் சம்சயத்தையடையுமோ அவ்வான்மா வின் நிர்ணயரூப மூன்றாவது வரத்தைத் தாங்கள் என்பொருட்டுத் தரவேண் டும். ஹே சிஷ்ய! இவ்வாறு அநேக வரங்களைக்கொடுத்து தருமராஜா நசிகேதா

வை லோபிக்குமாறு செய்யினும் ஆன்மஞானமன்றி வேறு வரத்தை வேண்டிலர். அவரது தீவிர வைராக்கியத்தைக்கண்டு தருமராஜா மிகவும் மகிழ்வுற்றனர். அவரைப் பிரஹ்மவித்தனத்தின் அதிகாரியென வுணர்ந்து தருமராஜா அவருக்கு ஆன்மஞானவடிவ மூன்றாவது வரத்தைக் கொடுக்கும்பொருட்டு இவ்வாறு கூறத்தொடங்கினர் :—ஓஹ நசிகேதா ! இகலோகத்தும் பரலோகத்தும் ஜீவர்களடையத்தகுந்தன இருவகைப் பலன்களாம் ; அவை சிரேயரூபமும் பிரேயரூபமுமாம்.* புத்திமான்களின் பிரீதி விஷயமாய மோக்ஷரூப நித்தியசுகம் யாவினும் மேன்மையதாமாதலின், அதனைச் சுருதிபகவதி சிரேயவெனக் கூறினள். மூடரின் பிரீதி விஷயமாய சம்சார சம்பந்தி விஷயஜன்னிய அநித்தியசுகம் அத்தியந்தந் தாழ்ந்ததாமாதலின், அதனைச் சுருதிபகவதி பிரேயவெனக் கூறினள். ஸ்வரூப, சாதன, பிரமாண, அதிகாரியென்னும் நான்கன் பேதத்தால் அவ்விருபலனும் பரஸ்பரம் விலக்ஷணமாம். முதலாவதற்கு நித்தியசித்த ஆநந்தவடிவ ஆன்மாவே ஸ்வரூபமாம், யான்பிரஹ்மரூபனுயிருக்கின்றேன் என்னும் அபேதஞானம் சாதனமாம், உபநிஷத்வடிவ வேதாந்த சாஸ்திரம் பிரமாணமாம், விவேகம் வைராக்கியம் சமதமாதிஷட்சம்பத்தி முமுக்ஷுதையென்னும் நாற்சாதனமுடையோன் அதிகாரியாவன். இரண்டாவதற்கு விஷய ஜன்னிய அநித்திய சுகம் ஸ்வரூபமாம், யாகாதி கருமங்கள் சாதனங்களாம், வேதத்தின் பூர்வபாக கருமகாண்டம் பிரமாணமாம், சகாமி அதிகாரியாவன் இவ்வாறுஇரண்டற்கும் பரஸ்பரம் பேதமாமெனவறிக. இவ்விருவகைப் பலங்களுள், சிரேயரூபபலத்தைச் சம்பாதிக்கும்அதிகாரி தனது பிரயோஜனத்தினின்றும் வழுவான் ; மற்றோ, கிருதகிருத்திய பாவத்தையடைவன். பிரேயரூப பலத்தைச் சம்பாதிக்கும் மூடன் இச்சம்சாரத்தே நானுவகையாய ஜன்மமரணுதி துக்கங்களையடைவன். நீரின்கண்ணேயிருக்கும் மீனமானது இரும்பு முள்ளோடு கோர்க்கப்பட்ட மாம்சத்தையுண்ண விழைந்து முயலுங்கால் இன்பம் இறையளவுமின்றிய மரணாந்ததுக்கத்தை யனுபவிப்பதேபோல சகாமியும் சுவர்க்காதி போகங்களை விழைந்து யாகாதிகருமங்களில் முயலுங்கால் இன்பம் இறையளவுமின்றிய ஜன்மமரணுதி அநேகதுக்கங்களை யனுபவிப்பன். நிர்த்தனத் தரித்திரியானவன் துஷ்டராஜாவின்தேயத்தே யிருந்தபோதினும் பந்தனுதிதுக்கங்களையடையாததேபோல, மோக்ஷத்தே யிச்சையுற்ற உன்போன்ற நிட்காமன் பிராரப்தயோகத்தால் இச்சம்சாரத்தே யிருப்பினும் துக்கத்தையடையான். நித்தியசுகத்தை யடைவிக்கும் மோக்ஷமோ நிட்காமியோடு சம்பந்திக்கும். ஜன்மமரணுதிரூப துக்கத்தையடைவிக்கும் விஷயஜன்னியசுகமோ சகாமியோடு சம்பந்திக்கும். நின்போன்ற நிட்காமன் முதலதோடே சம்பந்திப்பன். விஷயாசக்தியையுடைய மந்தபுத்திச்சகாமனே பின்னதோடே சம்பந்திப்பன். அதிகாரிகள் வேதங்களையும் புராணுதி சாஸ்திரங்களையும் கற்று நுண்ணியபொருளிற் குசலராங்கால் சிரேயபிரேயக்களோடு சம்பந்திப்பர்கள் ; அவருள்ளும் அத்தியந்தங் கூர்மையாய புத்தியுடையவர்கள் முதலதையே விழைவர். விஷயாசக்த மந்தமதியினரோ இரண்டாவதையே இச்சிப்பர். பிரேயதை விழையும் சகாமிமுன்னரடையாத மணிவிமைந்தர் தனுதிகளைவேட்பன். முன்னரடைந்த அவற்றைக் காப்பதற்கிச்சிப்பன் ; ஆனால், ஸ்திரீபுத்திராதிகளின் அடைவும் அவற்றின்காப்பும் தைவாதீனமேயாமன்றி இச்சைப்படி முடியாதாம்.

இத்தனைச் சகாமியுணாரானுதலின் மந்தமதியினனுவன். நின்போன்ற புத்திமான்க ளோ நிஷ்காமராவர்; அவர் மேற்கூறிய அடைவையும் காப்பையும் விழையார்; மற்றோ, அவை தைவாதீனமெனவுணர்ந்து தமதுசித்தத்தே நிரந்தரம் பிரேயசிரே யக்களையே விசாரிப்பர். இப்போது முதலில் பிரேயவடிவவிசாரத்தை நிரூபிப் பாம்:—ஹே நசிகேதா! ஜன்ம மரணுதி துக்கநிவிருத்தியை யிச்சிப்பவன் பிரேய வடிவத்தே இவ்வாறு விசாரஞ்செய்க: இவ்வெல்லாவுயிர்களும் எமக்குளப்போதும் சுகமுண்டாக்குக, துக்க அடைவை ஒருகாலும் உண்டாக்காதொழிகவென விச்சிப் பர், ஆனுலவ்வாறுண்டாவதின்றும்; மாறுகத் துக்கவடைவே யுண்டாம். ஆகையால், ஒருபலமுடைத்தே தொடமிருக்கின்றது அதன்மகிமையால் ஜீவன் சுகவடைவின்பொ ருட்டு முயலினும் துக்கத்தையே யடைவனுதலின் விசாரிக்கத்தக்க திதுவாம், துக்கத்தையடைவிக்குந் தோஷம் எதனது தருமம்? அறம்பாவங்களின் கருத் தாவினது தர்மமேயா? அல்லது, அறம்பாவங்களினது தருமமேயா? முதற்ப க்ஷம் சம்பவியாது; ஏனெனின், சாஸ்திரத்தின்கண்ணே கூறிய யாகாதிகருமங் கள்செய்யும் முறை சிறிது குறைவுறலோடும் சிறிது மிகுதியுறலோடும் யாகாதி செய்தல் வைகுண்யமாம். அதனுல் யாகாதிகள் கர்த்தாவிற்குத் தமது பலத்தைக் கொடாவாதலின் வைகுண்யமே புருஷதோஷமெனப் புகலற்பாலதாம். அஃதெ வர்பாலின்றுமோ; மற்றோ, யாவர் யாகாதிகளை சாஸ்திர முறைப்படி நல்வகையி லாற்றுவரோ அவர்க்கும் துக்கவடைவுகாணவருகின்றது, வருதலின் அது புருஷ தருமமன்றும்; மற்றோ, எஞ்சியதாய சுவர்க்காதி லோகப் பிராப்தியின்பொருட் டுச்செய்யும் காமிய கருமங்களின் தர்மமேயாம், ஆகவே காமிய கருமமே ஜீவர்கட் குத் துக்கத்தையடைவிக்கும்; இப்போது உலகப்பிரசித்த சுகசாதனங்களை நிரூ பிப்பாம்:—இவ்வுலகத்தே சாக்ஷாத்தாகவேனும் பரம்பரையாகவேனும் விஷய ஜன்னிய சுகசாதன சுவர்ணுதிரூபதனத்தைப் பிராஹ்மணனே பிரதிக்கிரகம், யாஜனம், அத்தியாபனம், என்னும் மூன்றுபாயங்களாற் சம்பாதிப்பன். ஆண்டுப் பிராஹ்மண க்ஷத்திரிய வைசியரென்னும் மூன்றுவருணங்களுள் யாவன் நான் முறையே தருமபூர்வகம் தனத்தைச் சம்பாதித்துளானே, குருசாஸ்திர தேவதை களிடத்தே சிரத்தை பக்தியுடையவனே, அநாசாரமற்றவனுவனே அத்தகைய தருமாத்மாவின்பானின்றும் பிராஹ்மணன் தனம் வாங்குதல் பிரதிக்கிரகமாம். பிராஹ்மண க்ஷத்திரிய வைசியர்க்கு அதிகாரத்திற்குத் தக்கபடி யாகஞ்செய்வித் தல் யாஜனமாம். வைராக்கியாதி சாதனங்களோடுகூடிய அதிகாரிக்கு வித்தை யைக்கொடுத்தல் அத்தியாபனமாம். க்ஷத்திரியராஜா கள்வர்முதலியவரினின்றும் பிரஜைகளைக் காத்துத் தனத்தைச் சம்பாதித்துக்கொள்க. வைசியன் கிருஷி வாணிஜ்யாதிகளால் தனசம்பாதனம்செய்க. சூத்திரன் முன்மூவருணத்தினர்க் கும் சேவை செய்து தனம் சம்பாதித்துக்கொள்க. இவ்வாறு தத்தமது விருத்திக ளால் தனத்தை ஒருங்குகூட்டி அதனுல் நாலுவகை யன்னத்தையும், ஸ்திரீகளையும், கிருகாதி பதார்த்தங்களையும் அடைவர். அன்னத்தாலே திருப்தியடைவர். ஸ்திரீ களால் புத்திரபௌத்திராதிப் பிரஜைகளையடைவர். கிருக முதலியவற்றுல் மனமகிழ் வையடைவர். ஒருகால் அத்தனத்தால் யாகாதி இஷ்டகருமங்களையும், ஜனங்களின்

சுகப்பொருட்டு வாபீ கூப தடாகாதி பூர்த்தகருமத்தையும், அன்ன வஸ்திராதி ளின் தானத்தையும் அவர்கள் செய்வர்களாயின் இவ்வுலகத்தே புகழையும், இற தபின் சுவர்க்காதி லோகங்களையும் அடைவர். ஆங்கே அவர் அநேக திவ்யபோக களைப் போகிப்பர். புண்ணியம் போனபின் ஆங்கிருந்து மீண்டும் பூவுலகையடை வர். இங்ஙனம் கடியந்திரம்போலச் சகாமர் நிரந்தரம் இச்சம்சாரத்தே சுழலுவரா லின், இவ்வுலகத்தே சகாமன் சுகசாதனமென வெண்ணிய யாவும் அஜ்ஜீவர்கட குத் துக்கரூப விருக்ஷ உற்பத்தியின் பீஜரூபகாரணமாம். இப்போது அவற்றின் துக்ககாரணத்தன்மையை நிரூபிப்பாம் :—சகாமன் தனாதிகளை யொருங்கு கூட்டு கால் மரண சமான துக்கத்தையடைவன்; அவற்றைச் சகித்துப் பொருள்முதலிய வற்றைச் சேர்த்தபின் அவற்றின் வியோகபயத்தால் பரமதுக்கத்தையடைவன் தனாதி ஜடபதார்த்தங்களேனும் ஸ்திரீ புத்திராதி சேதனபதார்த்தங்களேனுட அன்னிய புருஷர்பாற்செல்லுஞ் சங்கையும், அப்பிரிய பதார்த்தங்களின் பிராப்தி சங்கையும் சகாமன் சித்தத்தை அக்கினியைப்போலத் தகிக்கும். இகலோகத்துட பரலோகத்து மிராநின்ற தனது சரீரமும், தற்சம்பந்திகளாய மாதா பிதா குரு முதலியோரது சரீரங்களும் மரிக்குமென்னும் பயத்தானும் சகாமனுக்குப் பரம துக்கப் பிராப்தியாம். சரீர நாசானந்தரம் மீண்டும் அறம்பாவத்தால் எனக்கெச் சரீரம் வருமோவென்னுஞ் சிந்தையாலுண்டாம் பயத்தானும் பரம துக்கப்பிராப் தியாம். ஆத்தியான்மிக ஆதிதைவிக, ஆதிபௌதிகமென்னும் மூவகைத் துக்கப் சகாமனுக்குண்டாமாதலின், இச்சம்சாரத்தே யாதொருபொருளும் சுகசாதன மாகாதாம். விஷத்தோடுகூடிய அன்னம் மூடபாலகர்கட்குச் சுகசாதனமாய்த் தோற்றுவதேபோல, இம்மனைவி மைந்தராதி பதார்த்தமும் விசாரஹீன மூடர் கட்குச் சுகசாதனமாய்த் தோற்றும். இத்துணையாற் பிரேயரூபபலம் விசாரிக்கப் பெற்றது. இனிச்சிரேயரூபபல விசாரத்தை நிரூபிப்பாம் :—நாயின் புணர்ச்சி பிரத மகாலத்தே சுகத்தையடைவித்து உத்தரகாலத்தே துக்கத்தை யடைவிப்பதே போல இகபரலோகங்களிலுள்ள பிரேயக்களெல்லாம் முதலிலோமயங்கியோர்க் குச் சிறிது மாத்திரை சுகத்தையடைவித்துப் பின்னர்ப் பரமதுக்கத்தையடைவிக் கும். இத்தகைய விது விசாரஹீனமூடராற் கவரப்படலதேனும் மதிமான்களாய அதிகாரிகளாற் கவரத்தகாததேயாம்; மற்றோ, சரீரமற்றதும், சர்வதுக்கமற்ற துமாய மோக்ஷசுகரூபசிரேயசே சம்பாதிக்கத்தக்கதாம். அதனை விடுத்து வேறொருபொருள் சம்பாதிக்கத்தக்கதின்றும். அதனடைவு பிரஹ்மவேத்தாவி னுபதேசமின்றி யுண்டாகாதாதலின், வேததாற்பரியத்தை யுணர்ந்த பிரஹ்மவேத் தாமகாத்மாவாகிய ஆசிரியரின் சமீபத்தையடைந்து அதிகாரி இவ்வாறு சிரேய சின் சொரூபம் வினவவேண்டும் :—ஹே பகவன்! இவ்வுலகத்தே சரீரமற்ற ஒரு நித்திய சுகமிருக்கின்றதா? அல்லதில்லையா? என இவ்வாறு வினவப்பட்ட ஆசிரியர் உபதேசிக்கும் வஸ்துவே சிரேயசாம் என ஆராய்ந்த நிட்காம அதிகாரி ஆசிரியர் சந்நிதியில் சிரேயசின் அடைவின்பொருட்டே பிரார்த்தனைசெய்க. ஹே நசிகேதா! மோக்ஷரூபச் சிரேயசையடையும்பொருட்டுக் குருசந்நிதியிற் பிரார்த்தனைசெய் யும் நின்போன்ற நிட்காமன் இவ்வுலகத்தே துர்லபனவன். ஜீவர்கட்குச் சுகத்தைச் செய்விக்கும் ஸ்திரீ புத்திராதனாதிகள் யாவற்றையும் யான் முன்னுனக்குக்கொடுத்

தேன்; ஆனால், நீ யவற்றைத் துக்கரூபமெனவுணர்ந்து அங்கீகரிக்கவில்லையாதலின், மோக்ஷரூப சிரேயசைக்கவரும் எனது சீடனாகிய நீ சர்வவிவேகிகளிலும் மேன்மை யனாவாய். கள்வர்முதலியோரின் கைகால்களிலிருக்கும் இரும்புச்சங்கிலி அவரை நடக்கவிடாததேபோல மனைவிமைந்தராதிகளிடத்தே ஆசக்திரூபபொற்சங்கிலியும் எச்சுபகருமத்தும் முயலவிடாது. அதனை விசாரபலத்தால் அறுத்து நீ வெளியே வந்தனையாதலின் இச்சம்சாரரூபச் சுரத்தினின்றும் நீ யவசியம் முக்தனாவாய். அத னாற் கட்டுப்பட்ட விவேகியாய நூலுணர்ந்தோனும் சம்சாரக்கடலின்கண்ணே மூழ்கிக்கிடப்பன்; அதனினின்றும் தன்னைமீட்பதிற் சமர்த்தனாகான். கருத்திது வாம் :—மனைவி மைந்தராதிகளில் ஆசக்திவடிவச் சங்கிலியாற்கட்டுண்ட நூலு ணர்ந்த நுண்ணறிவோனும் தன்னை இக்கடலினின்றும் மீட்க வாற்றலற்றபோது சாஸ்திரவிசாரமற்ற அன்னிய ஜீவர்கட்கு யாதுவார்த்தையுளது. அச்சங்கிலியை நீ விசாரபலத்தாற் பேதனஞ்செய்தனையாதலின், சர்வ விசாரவான்களுள்ளும் நீ மேன்மையனாவாய். ஹே நசிகேதா! இவ்வுலகத்தே யாகாதிகருமரூப மார்க்கமெ னவும், ஆன்மஞானரூப மார்க்கமெனவும் இரண்டு மார்க்கங்களுண்டு. அவை பரஸ் பரம் தூரத்தே யிருப்பன; ஏனெனின், இக்கருமரூபமார்க்கமோ ஜன்மமரணரூப சம்சார ஸ்திதியின் காரணமாம். அதனானே அது அநித்திய விஷயஜன்னியசுக மாகிய பிரேயரூப புரத்தையடைவிக்கும். ஆன்மஞானரூபமார்க்கமோ சம்சாரநிவி ருத்தி காரணமாம். அதனானே அது நித்தியசுக மோக்ஷமாகிய சிரேயரூபபுரத்தை யடைவிக்கும். முன்னர் யான் நினக்கு மனைவி மைந்தராதி அநேக பதார்த்தங்க ளைக்கொடுத்தும் நினதுமனம் சஞ்சலத்தை யடையவில்லையாதலின், அவ்விருமார்க் கத்துள் ஆன்மஞானமார்க்க அதிகாரி நீயேயெனவெண்ணுகின்றேன். அக்கரும மார்க்கமும், சாஸ்திரவிகித யாகாதிசுபகருமரூபமார்க்கமெனவும், சாஸ்திரநிஷித்த ஹிம்சாதி அசுபகருமரூபமார்க்கமெனவும் இருவிதமாம். அவற்றுள் முதலதை நீ கேட்டி. யாகாதி சுபகருமங்களைச்செய்யும் சகாம அஞ்ஞானியும், அவனது இச் சைக்கு விஷயமாய ஸ்திரீபுத்திராதி பிரியபதார்த்தமும் அவித்தைவடிவ பூமியின் கண்ணேயிருக்கும். அவ்வஞ்ஞானி, இத்தேகாதி சங்காதத்தையே ஆன்மாவென வெண்ணி அதனையே யெப்போதும் துதிப்பன். மூர்க்கனாயினும் பண்டிதனெனத் தன்னையெண்ணுவன். அவன் அவித்தையால் இச்சம்சாரத்தே கர்ப்பவாசாதிரூப துர்க்கதியை யடைந்து நானாவகைத் துக்கத்தையடைவன். அச்சகாமி பிரஹ்ம வேத்தாவாய குருவுபதேசமற்றவனாதலின், ஆன்மஞானரூப மோக்ஷமார்க்கத்தை யறியான். தானே குருவாகி அஞ்ஞானிகட்கே யுபதேசிப்பன்; அவனுபதேசத் தைக்கேட்டு அஞ்ஞானியாகிய அச்சீடனும் அவ்வகைத்துக்கத்தையடைவன். குரு டன் பின்செல்பவனாகிய குருடன் அடிக்கடி பூமியின்கண்ணே வீழ்வதேபோல அஞ்ஞானியாகிய கருமிக் குருவின்பின் செல்லும் அஞ்ஞானியும் குருவைப்போல அடிக்கடி ஜன்ம மரணாதிதுக்கத்தையே யடைவன். இத்தகைய சம்சாரத்தையடை யும் சகாம அஞ்ஞானிகள் அநேகவகையினராயினும் சுருக்கமா யிருவகையினரே யாவர். ஒருசகாமனோ புண்ணியரூப அதிருஷ்டவாயிலாய்ச் சுகப்பிராப்தியை யிச் சிப்பன், மற்றொருவனோ திருஷ்ட உபாயவாயிலாய்ச் சுகப்பிராப்தியையிச்சிப்பன்.

முதலவனே அர்த்தவாதசகித கருமகாண்டரூபவேதத்தைப் பிரமாணமாயெண்ணுவன். மற்றையனே வேதப்பிரமாணத்தை யங்கீகரியான்; மற்றோ, அப்பகிர்முகன் கேவலம் பிரத்தியக்ஷப்பிரமாணத்தையே யங்கீகரிப்பன். வேதத்தின் கருமகாண்டத்தை யங்கீகரிக்கும் சகாமகருமியோ தன் சீடனுக்கு இவ்வாறுகூறுவன். பிதாவுங் குருவும் எவ்வெம்மார்க்கத்தைக் கவர்ந்துளாரோ அவ்வதனையே மைந்தனுஞ் சீடனும் தமதுநேத்திரங்களை மூடிக்கொண்டு கவர்ந்துகொள்ளவேண்டும். கருத்திதுவாம்:—பிதாவுங் குருவு முபதேசித்த கருமகாண்டரூப மார்க்கத்தை மைந்தனுஞ் சீடனும் சிரத்தைவாயிலாகவே கவர்ந்துகொள்ளல்வேண்டும்; அதன் கண்ணே தனது குதர்க்கத்தைச் செய்யாதொழிக. இவ்வாறுபதேசித்த சகாமியின் வசனத்தே நம்பிக்கைவைத்துச் சகாமகருமத்தைச் செய்பவனாகிய மூடன் இச்சம்சாரரூப மகாவனத்தையடைந்து சுவர்க்காதி மேலுலகையடைவன்; பாதாளாதி கீழுலகையடைவன்; இவ்வாறு சகாமன் நிரந்தரம் இச்சம்சாரரூபவனத்தே சுழல்வன். கேவலம் பிரத்தியக்ஷப்பிரமாணத்தையே யங்கீகரிக்கும் மற்றையனோ சுவர்க்காதிலோகங்களையடைய இசசியான்; மற்றோ, இவ்வுலகத்திய மனைவிமைந்தாதிகளையடைய இச்சிப்பன். அவர்கள்பால் ஆசக்தியுற்று அவர்களைக் காக்கும் பொருட்டுக் களவு, நிந்தை, ஹிம்சை முதலிய அநேகபாவகருமங்களைச் செய்வன்; அவற்றாலப்பகிர்முகன் இரௌரவாதி நரகத்தையடைந்து மீண்டும் கீடபதங்காதி துச்ச சரீரங்களையடைவன். யாகாதி புண்ணியகருமங்களைச்செய்யும் சகாமனும் களவுமுதலிய பாவகருமங்களைச்செய்யுஞ் சகாமனும் தமது இருதயதேயத்தேயிருக்குஞ் சுயஞ்சோதியாய ஆன்மாவைப் புலப்படக்காணாதலின், ஆநந்த ஸ்வரூப ஆன்மாஞ்ஞானம் அவ்விருவருக்கும் சாதாரண தருமமாம். இப்போது அவ்விருவருள்ளும் சிறிதுமாத்திர விசேஷத்தன்மையையும் நிரூபிப்பாம்:—ஹே நசிகேதா! தூர ஆகாசத்தின்கண்ணே சுழல்வதாயிருப்பினும் பக்ஷி கீழேவந்து பந்தகனது வலையின்கண்ணே படுவதேபோல யாகாதி புண்ணியகருமப்பிரபாவத்தால் அச்சகாமன் மேற்சுவர்க்கத்தே விளையாடித்திரியினும் புண்ணியம் போகத்தால் க்ஷயமாய்ப் பூர்வ பாவகருமமொன் றுதயமாயின், சுவர்க்கத்தைவிட்டு என் வசமாவன். ‘கவ-ஷியஅர-ணா8 கவ-ஷியாംயொ,திஶாவஷஜ்ஜெ’ சுவர்க்கபலபோகாந்தகாலத்தே ஒரு பூர்வ பாவகருமம் பலங்கொடுக்கும்பொருட்டு எதிர்வருமாயின், சுவர்க்கத்தைவிடுத்து நரகப்பிராப்திவாயிலாய் நாய்முதலிய நீசயோனிகளை யடைவனாதலின் அப்புண்ணியவானாய சகாமன் ஒருகாலத்தே எனதுவசத்தை யவசியமடைவன். யாவன் எப்போதும் பாவகருமத்தே பிரீதியையும், மகாமோகரூபதமத்தால் பிரமாதத்தையும் அடைநதுளானோ அவ்வேதபாகிய பாவாத்மாவாகிய சகாமனோ நித்தியமும் எனதுவசத்தேயிருப்பன். ஹே நசிகேதா! வேதத்தே விருப்பில்லாத சகாமன் எக்குதர்க்கத்தாற் பாவகருமத்தைச்செய்வனோ அக்குதர்க்கத்தை நீ கேட்டி: இவ்வுலகத்தே பிரத்தியக்ஷப்பிரமாணத்தாற் சித்தமாய இத்தூலசரீரமே ஆன்மாவாம். அது மிருத்தியுவானபின்னர் அதற்குப் பரலோகத்தே வேறு சரீரப்பிராப்தியாமென்பதன்கண்ணே யாதுகாரணம்; மற்றோ, யாதொருகாரணத்தையுங் காணேமாதலின், பரலோகத்தே வேறு சரீரப்பிராப்தியுண்டாகாதாம். அல்லது, யாவன் சரீரத்தினும் வேறாக ஆன்மாவை யெண்ணுவ

ளே அவன் வேறுசரீரப்பிராப்தியின்கண்ணே புண்ணியபாவரூப கருமத்தையே காரணமா யங்கீகரிக்கவேண்டும், ஆனலது சம்பவியாது; ஏனெனின், இவ்வுல கத்தே யாவன் கருமகருத்தாவாவனே அவனே போக்தாவுமாவன்; அன்னியன் கருமபலத்தை அன்னியன் போகியான்; இத்தூலமோ அறம்பாவத்தைச்செய்யும், இதனினும்வேறுய ஆன்மாப் பரலோகஞ்சென்று பலத்தைப்போகிக்கும் என்னும் விருத்த அர்த்தம் வாதிமதத்தே யாங்னம் பொருந்தும். அல்லது, இத்தேகத்தி னும் வேறுக ஆன்மாவையுடன்படும் வாதிகளின்மதத்தே செய்தகருமத்திற்குப் போகமின்றியே நாசமாமென்னுங் கிருதஹானித்தோஷப் பிராப்தியும், செய்யாத கருமத்தின் பலபோகப்பிராப்திரூப அகிருதாப்யாகமத்தோஷப் பிராப்தியுமாம்; ஏனெனின், எச்சரீரம் புண்ணியபாவகருமத்தைச் செய்ததோ அது இறந்த பின்னெரிக்கிரையாயதாதலின் அதற்கோ அப்பலமுண்டாகாதாம். இத்தேகத்தி னும்வேறுய நின்னான்மாவோ அறம்பாவத்தைச் செய்யவில்லை, ஆனலது பரலோ கத்தே அப்பலத்தைப்போகிக்கும், இவ்வாறு இருதூஷணம் வாதிமதத்தேயாம். அல்லது, அவ்விரண்டின் நீக்கப்பொருட்டு வாதியொருகா லான்மாவை அறம்பாவத் தின்கருத்தாவென, வுடன்படிளே கிரியையற்றதன்மைவடிவ வேறுவால் ஆன்மா வின்கண்ணே நித்தியரூபத்தன்மை துணிதல் சம்பவியாதாம். வாதிகிரியையுடை யதா யுடன்பட்டும் நித்தியரூபமெனின் கிரியையுடைய ஆன்மாவின்கண்ணே வாதி நித்தியரூபத்தன்மையை யங்கீகரித்ததேபோல இச்சரீரத்தின்கண்ணும் நித் தியரூபத்தன்மையை ஏன் அங்கீகரிக்கவில்லை; மற்றே, அங்கீகரிக்கவேண்டும். அல்லது, இவ்வுலகத்தே யாது யாது கிரியையுடையதாமோ அஃதது பரிசகுணமு டையது மவசியமாகும். கடாதிகள் கிரியையுடையனவாதலின் பரிசகுணமுடைய னவுமாவதேபோல,வாதி யான்மாவைக் கிரியையுடையதாக வுடன்படின் அது பரிச குணமுடையது மவசியமாம். அவ்விரண்டுமுடையது இச்சரீரமாதலின் இதனி னும் வேற்றுமை ஆன்மாவிற்குச் சித்தியாது; மற்றே, இதுவே யான்மாவெனச் சித்தமாம். இதற்குப் பரலோகத்தே கமனஞ் சம்பவியாதாதலின் இறந்தபின்னர் யாதொரு பரலோகமுமின்றும். அல்லது, இதனினும் வேறு யோரான்மாப் பரலோ கத்தே செல்லுமாயின் இவ்வுலகத்தே ஒருவன் தனது கிருகத்தைப் பரித்தியா கித்து ஒருவிதேசத்தேசென்று நெடுநாட்கழித்து மீண்டும் தனதுகிருகத்தேவந்து · தன்மனைவி மைந்தாதி பந்துக்களைக் காண்பதேபோல, இறந்ததன்பின் லோகாந் தரத்தையடைந்த நின்னான்மா மீண்டு மொருகாலேனும் தனது மனைவி மைந்தர் முதலிய பிரியபதார்த்தங்களைக்காண ஏன்வருவதில்லை? வந்ததேயில்லையாதலின் இவ்வுலகினும் வேறுக யாதொரு பரலோகமுமின்றும். அல்லது, யமகிங்கரர்வந்து ஜீவனைப் பரலோகத்திற்குக் கொண்டுபோவர் என வாதிகூறலும் அசங்கதமேயாம்; ஏனெனின், அவர் ஜீவனைக்கட்டிச் சரீரத்தினும் வெளியே பரலோகத்திற்குக் கொண்டுபோவாராயின் இவ்வுலகத்தே அரசசேவகர் ஒருகள்வனைக்கட்டிக் கிருகத் தினின்றும் வெளிக்கிளப்பும்போது அக்கள்வன் வெளிப்போந்து கூக்குரலிடுவதே போல, மரணகாலத்தே யமகிங்கரர் தேகத்தினின்றும் வெளிப்படுத்திய ஜீவாத் மாவும் கூக்குரலிடுவதேனில்லை? கூக்குரலிடுவதையோ ஒருவனிடத்துங் கண்டி

லேம், ஒருவனுக்கு உபகார அபகாரஞ்செய்வதையுங் கண்டிலேம். இதனானே தேகத்திலும் வேறாக யாதோரான்மாவுமின்றென அறிந்துகொள்ளலாமன்றோ? அல்லது, இத்தூலசரீரத்திலும் ஆன்மாவேறு, அஃதறம்பாவ வயத்தாற் பரலோகத்தேசெல்லும் என வேதத்தே காணப்பெற்றவசனம் ஈசுவரன் சொன்னதன்றாம்; மற்றோ, உலகரின் தனுதிகளை யபகரிக்கும்பொருட்டுச் சில லோபிப் பிராஹ்மணர் அதனை வேதத்தின்கண்ணே நுழைத்தனர். அல்லது, இவ்வுலகத்தே யாவன் தனது பிதுர்க்களின் பிரசன்னத்தன்மையின்பொருட்டுப் பிராஹ்மணர்க்கு அன்னம், நீர், வஸ்திரம், பூஷணம், கிருகம் முதலிய பதார்த்தங்களைக்கொடுப்பனோ, அவை யாவும் அவனது பிதுர்க்கட்குப் பரலோகத்தே பிராப்தமாம் என வாதிகூறலும் பொய்யேயாம்; ஏனெனின், அவ்வாறாகுமாயின் ஈண்டும் வீட்டினொருமூலையில் தாய் தந்தையரை வைத்து மைந்தன் அவர்களைத் திருப்தராக்கும் பொருட்டுப் பிராஹ்மணர்க்குஅன்னாதிகளைக்கொடுப்பின் அவற்றால் அவர்பசிதாகம் ஏன் நீங்கவில்லை. கருத்திதுவாம் :—தாய்தந்தையரின் திருப்தியின்பொருட்டு எவ்வீட்டி லன்னாதிகள் மறையவர்க் களிக்கப்பெற்றனவோ அவ்வீட்டிலிருக்குமவர்க்கும் அவற்றால் திருப்தியுண்டாகாதாயின் அத்தியந்தந் தூரத்திலிருக்கும் பரலோக மாதாபிதாக்கட்கு அவற்றால் திருப்தி எங்ஙனமுண்டாம். ஆகையால், தேகத்திலும் வேறாய ஓரான்மாப் பரலோகத்தே செல்லும் என வாதி கூறுதல் அத்தியந்தம் விருத்தமாம். ஹே நசிகேதா! இவைமுதலாக அநேகவகைக் குதர்க்கங்களைப் பகிர்முகமுடன் காமக்குரோதாதிகளின் வயமுற்றவனுய்க் கூறுவன். இத்தகைய வேதபாகிய நாஸ்திகனுக்கு இவ்வுலகமின்றி வேறொருபரலோகந் தோற்றுவதில்லை. இவ்வாறு வேதங்களை நிந்திப்பவனும், தன் தேகத்தைக் காக்கவும், மனைவிமைந்தராதியரைக் காக்கவும் அநேகவகைப் பாவங்களைச் செய்பவனும் ஆகிய பகிர்முக நாஸ்திகனே அடிக்கடி மரித்து எனது வயத்தையடைவன். வனத்தே ஒரு விருக்ஷசாகையிலிருக்கும் வானரமானது தனது சஞ்சல சுபாவத்தால் வில்லுடையோனை அவன் அதனைநோக்கித் தனது வில்லினின்றும் அம்பைப் பிரயோகிக்காதவரை பரிகசிக்கும். அம்பைப் பிரயோகித்துவிடில் மூட வானரம் பரிகாசதுக்க பலத்தை நன்றாயனுபவிக்கும். அதுபோல, யான் பகிர்முகப் பாவியரை உபேக்ஷித்திருக்கும்வரையுமே அவர் வேதங்களையும் தேவதைகளையும் என்னையும் நிந்திப்பர். யான் கொல்லும்போது அவர் அந்நிந்தாரூப பாவகரும துக்கபலத்தை நரகத்தே பிரளயபரியந்தம் அனுபவிப்பர். அப்பகிர்முகர் முன்னர் மறையவர்க்குத் தானமீவதில் பரிகாசஞ்செய்ததன்கண்ணே பதார்த்தங்களின் சாமர்த்திய அஞ்ஞானமே காரணமாம்; ஏனெனின், இவ்வுலகத்தே சம்பூரண பதார்த்தங்கள் திருஷ்ட அர்த்த அனுசாரியேயாம் என்னும் நியமத்தை அங்கீகரித்துக் குதர்க்கம் செய்தனர். ஆனால், அந்நியமம் யாண்டும் சம்பவியாது; ஏனெனின், அந்நியமத்தை யாண்டு முடன்படின், தினத்தே தீபத்தால் இருள்நிவிருத்திகாண வருவதில்லையாதலின், அதனால் இரவிலும் இருள்நிவிருத்தியுண்டாகலாகாது. இரவில் இருள்நீங்குதலோ யாவருக்கும் பிரசித்தமேயாமாதலின், பகிர்முகர் நியமம் சம்பவியாது. அல்லது, ஒருவன் நோய் முதலியவற்றால் மூர்ச்சையடையின் அவன் சம்பந்தி மூர்ச்சையை நீக்கும்பொருட்டு மறையவர்க்குக் கிருகாதிகளைத் தானங்கொ

டுப்பின் அவன் மூர்ச்சை நீங்கிவிடும்; தானங்கொடாதொழியின் அவனுக்கு மூர்ச்சை யிருந்துகொண்டேயிருக்கும். இவ்வார்த்தை உலகத்தே பிரத்தியக்ஷமாய்க் காணவருகின்றதாதலின் தானத்தால் மூர்ச்சைநீங்குவதேபோல ஈண்டு மறையவர்க்கு அன்னாதிகொடுப்பின், பரலோகத்தே தாய்தந்தையரின் திருப்தியாம் என்பதும் சம்பவிக்கும். ஆகையால், தனது மங்கலத்தையிச்சித்த அதிகாரியானவன் முற்கூறிய குதர்க்கத்தைவிடுக, குதர்க்கிகளின் சங்கத்தையும் விடுக, வேதபகவான் எவ்வெப்பொருளை யுணர்த்தினரோ அவ்வப்பொருளைச் சிரத்தையோடும் உடன்படுக. ஹே நசிகேதா! அப்பகிர்முகர் பூர்வம் கிருதநாச அகிருதாப்யாகம முதலிய குதர்க்கங்களால் இத்தேகத்தினும் வேறாய ஆன்மாவின் அபாவசித்தியாமாயினும் அக்குதர்க்கம் எந்த யுக்திப்பிரமாணங்களையும் சகியாதாம். ஆகையால் அதன்கண்ணே ஆஸ்திகனெவனும் விசுவாசம்வைக்கலாகாது. அக்குதர்க்கத்தால் ஆன்மாவின் வாஸ்தவவடிவம் அறியமுடியாததாம்; மற்றோ, அநேகஜன்மங்களின் புண்ணியகருமம் ஒருங்குகூடியிருக்கும் அதிகாரியே பிரஹ்மவேத்தாவாகிய குருவாயிலாய் வேதாந்தவசன சிரவணஞ்செய்து ஆன்மாவின் உண்மைவடிவத்தைக் காண்பன். அது உண்மையாய்ச் சர்வ விகாரமுமற்ற சுயஞ்சோதிரூபமாயினும் அவித்தையின் சம்பந்தத்தால் ஜீவபாவத்தையுற்றுக் கர்த்தா போக்தாத்தன்மையையடையும். அதுவே பிரஹ்மவித்தையால் மீண்டுந் தனது சர்வான்மபாவத்தை அடையும். இப்போது அவ்வான்மாவின் சிரவணாதிகளின் துர்லபத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே நசிகேதா! அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபிநிவேசம் என்னும் ஐவகைக் கிலேசங்களால் மோகத்தையடைந்த பாவான்மாவானவன் சிரவணஞ்செய்யும்பொருட்டும் ஆன்மாக் கிடைக்காதாதலின், ஆன்மாவின் சிரவணமும் துர்லபமாம். துயிலின்கண்ணேயும் மரணாவஸ்தையினும் சம்பூரண ஜீவர்களின் ஹிருதயதேயத்தின்கண்ணேயிருக்கும் சத்திய பரமான்மாவோடு அபேதபாவத்தையடையும் என்னும் வேதாந்தவசனத்தைக்கேட்டும் சிலர் பிரதிபந்தவயத்தால் ஆன்மாவை நிச்சயித்திலர். இவ்வுலகத்தே சத்தியவாதி யுபதேசித்த காரியத்தின் பெருமையை மூட பாலகன் அறியாததேபோல அவர் ஆன்மாவை அறிந்திலாதலின் ஆன்மாவின் ஞானமும் அத்தியந்தந் துர்லபமாம். இவ்வாநந்தஸ்வரூப ஆன்மா மனவாணிகட் கவிஷயமாமாதலின், யாவன் இத்தகைய அத்விதீய ஆன்மோபதேசத்தைத் தமது சிஷ்யருக்குச் செய்வனோ அவ்வக்தாவும் ஆச்சரியரூபனாவன். நிர்க்குண ஆன்மாவை யாவன் குருவினுபதேசத்தால் சாக்ஷாத்கரிப்பனோ அவ்வறிஞனாகிய லப்தாவும் அத்தியந்தங் குசலனெனவறிக. அத்விதீய ஆன்மாவின் பிரதிபாதனமும் ஞானமும் ஆச்சரியவடிவங்களாமாதலின் வக்தாவையும் ஞாதாவையும் சுருதிபகவதி 'ஆச்சரியரூபர்' என்றனள். குரு உபதேசித்த மகாவாக்கியத்தாலுண்டாய நிர்விகற்ப சூக்ஷுமஞானத்தால் ஆன்மாப் பிராப்தமாமாதலின் ஆன்மஞானமுடையவனைச் சுருதிபகவதி 'குசலன்' என்றனள். ஆன்மாபரோக்ஷஞானமுடைய குசலகுரு அதிகாரிகட்கு ஆன்மாவின் உபதேசஞ்செய்தபோதே அதிகாரி ஆன்மாவின் வாஸ்தவ வடிவத்தையறிவன். பரோக்ஷஞானமுடைய குருவின் உபதேசத்தால் அதிகாரிக்கு அபரோக்ஷ

ஞான முண்டாகாதாம். பிரஹ்மவேத்தாவாய குசலகுருவின் உபதேசத்தால் ஆன்ம சாக்ஷாத்காரமடையாதவனாகிய அஞ்ஞானி ஒரு சிஷ்யனுக்கு நெடுநாள் வரையும் ஆன்மோபதேசஞ் செய்யினும் ஆன்மாபரோக்ஷஞான மொருகாலு முண்டாகாதாம். பிரஹ்மவேத்தாக் குசலகுருவி னுபதேசத்தானன்றி யாவன் தனது நானாவகையாய தர்க்கங்களால் ஆன்மாவின் சிந்தனஞ்செய்வனோ அவனும் ஆன்ம சாக்ஷாத்காரத்தை யடையான். மகாவனத்தின்கண்ணேயிருக்கு மொருவன் தனது கிராமமார்க்கத்தை யறியாது வேறொருவனை மார்க்கங்கேட்ப அவனும் அதனையறியாது ஏதாவதொன்றைக் கூறிவிடின் அவ்வசனத்தே நம்பிக்கை வைத்து அவன் அம்மார்க்கத்தேசெல்லின் தனது கிராமத்தை யடையான்; மற்றோ, மாறாக அதனாற் றுன்பமேயடைவன். அதுபோல இச்சம்சாரரூப மகாவனத்தே யிருந்து அதிகாரியானவன் அஞ்ஞானியாகிய கருமியின்பால் ஆன்மஞானரூப மோக்ஷமார்க்கத்தைக் கேட்பின் அவனுபதேசத்தால் அதனை யடையான்; மற்றோ, மாறாக விஷரூப சம்சாரமார்க்கத்தையே யடைவனாதலின் மோக்ஷத்தையடைய இச்சிப்பவன் ஆன்மஞானப் பிராப்தியின்பொருட்டுப் பிரஹ்மவேத்தாவாய குசலகுருவையே தேடுக. அவரதுபதேசத்தானே முமுக்ஷுவிற்கு ஆன்மசாக்ஷாத்காரமுண்டாம். அத்தகைய பிரஹ்மவேத்தாவாய குசலவக்தாவானவன் சர்வஜகத்தின் ஆன்மவடிவப் பிரஹ்மத்தை யான் பிரஹ்மரூபமாயிருக்கின்றேன் எனத் தன்னான்மாவினும் அபின்னமா யறிவனாதலின் சர்வஜகத்தினுமபின்னனாவன். அத்தகைய அறிஞன் அதிகாரிக்கு ஆன்மோபதேசஞ்செய்யின் அவரடைந்த அத்விதீயப் பிரஹ்மபாவப் பிராப்திரூப பலத்தையே சிஷ்ய னடைவனாதலின் அத்தகைய குருவினுபதேசத்தானே சிஷ்யன் சர்வான்ம பாவத்தையடைவன், ஆனால், அவ்வாசிரியர் ரிவ்வுலகி லரியவரேயாவர். ஜீவர்களினான்மா சூக்ஷ்மபதார்த்தத்தினும் அதிக சூக்ஷ்மமா மாதலின் அறியத்தகாத அவ்வான்மா கேவலந் தனது தர்க்கத்தால் அறிய முடியாததாம்; மற்றோ, ஞானாசிரியருபதேசத்தானே ஆன்மா அறியப்பெறும். ஞானாசிரியருபதேசத்தால் ஆன்மாகார மதியையடைந்தவன் அம்மதியை எக்குதர்க்கத்தானும் சேய்மைத்தாக்கலாகாது; மற்றோ, மாறாக நாஸ்திக வாதியர் தேகாதிகளிடத்தே ஆன்மரூபத்தன்மையைச் சித்தஞ்செய்யும்பொருட்டுச் செய்யும் நானாவகைக் குதர்க்கங்களைச் சுருதிகூறிய தர்க்கத்தால்வெட்டித் தற்பதார்த்தமாகிய பிரஹ்மத்தோடு துவம்பதார்த்தரூப ஜீவனுக்குச் சமானத்தன்மையை ஸ்தாபனஞ்செய்க. சுருதிகூறிய தர்க்கத்தானன்றி யுற்பன்னமாய அம்மதி குதர்க்கங்களால் நிட்பலத்தன்மையையே யடையும். ஹே நசிகேதா! இவ்வான்மாகாரமதியி னுற்பத்தியின்கண்ணும், பலத்தின்கண்ணும் பிரதிபந்தஞ்செய்யும் நானாவகையாய குதர்க்கத்தை வாதிகள் கற்பிப்பர்; அதனை நீ கேட்டி: அப்பகிர்முகர் முதலிவ்வாறு குதர்க்கிப்பர்: இவ்வெல்லாச் சரீரங்களினும் ஆன்மா ஏகமா? அநேகமா? முதற்பக்ஷஞ் சம்பவியாது; ஏனெனின், சர்வ சரீரத்தும் ஆன்மா வொன்றுமாயின் நீ, யான், அன்னியன் என்பது முதலிய வியவகாரம் உண்டாகாது. இதுவோ யாண்டும் பிரசித்தமாதலின் சர்வசரீரத்தும் ஆன்மாவொன்றன்றும். இரண்டாவதுபக்ஷமுஞ் சம்பவியாது; ஏனெனின், தேகந்தோறும் ஆன்மாப்பேதப்படின் வாதியங்கீகரித்த ஆன்மாவின் அத்விதீயரூபத்தன்மை யான்மா

வின்கண்ணே யிராதாதலின், ஆன்மாவின்கண்ணே பல்வென்னுந்தன்மையும் யற்
றுது. அல்லது ஆன்மாவை ஏக அத்விதீயரூபமென அங்கீகரிப்பவன் சரீர வுபாதி
பேதத்தால் ஆன்மாவின்பேதத்தை யங்கீகரிக்கின் அவன்பா லிதுகேட்கவேண்டும்.
ஒரே யான்மாவிற்கு ஒரேகாலத்தே நானாசரீரப்பிராப்தி எவ்வாறும், இவ்வுலகத்
தே யோகியானவன் தனது யோகசித்தியின் மகிமையால் ஒரேகாலத்தே அநேக
சரீரத்தை யடைவதேபோல யாதொரு யோகசித்தியும் ஆன்மாவிற்குண்டாக
வில்லை; அஃதிருப்பினன்றோ அவ்வாறுகும். அல்லது சர்வசரீரத்தும் ஒரேயான்மா
விருக்குமாயின் தனது ஒருதேகத்தே எனதுதேகமென்னும் ஞானம் ஆன்மாவிற்
குண்டாவதேபோலச் சம்பூரணசரீரத்தும் இவையாவும் என்னுடையது என்னும்
ஞானம் ஏனுண்டாவதில்லை? அவ்வாறு யாண்டுமுண்டாவதோ இன்றும். இதனு
னும் சர்வசரீரத்தும் ஆன்மாவொன்றன்றும். அல்லது சர்வசரீரத்தும் ஆன்மா
வொன்றேயாயின் தனதுசரீரசுகதுக்கத்தை யனுபவிப்பதேபோலச் சர்வசரீரசுகது
க்கங்களை யேனனுபவிப்பதில்லை? நானாவகை யோனிகளின்கண்ணே சுழல்வதின்றி
ஆன்மா ஏககாலத்தே சர்வ சரீரசுகதுக்கங்களை அனுபவிப்பதில்லை யாதலினானும்
சர்வசரீரத்தும் ஆன்மா ஏகமன்றும். அல்லது, வாதியானவன் சர்வசரீரத்தும்
அங்கீகரித்த ஆன்மாக்கடாதிகளைப்போல ஜடமா? அல்லது சேதனமா? முதற்
பக்ஷஞ் சம்பவியாது; ஏனெனின், ஆன்மாக் கடாதிபோல ஜடமாயின் ஜடஆன்மா
வின்கண்ணே கர்த்தாத்தன்மையும் போக்தாத்தன்மையும் சம்பவியாவாதலின்
ஜட ஆன்மாவை யங்கீகரித்தலே நிட்பலமாம். அல்லது, அவ்வாறு ஜடமாயின்
ஜடகடப்போகப்பொருட்டு வேறொருஜடப்பொருளை யொருவருமுண்டாக்காததே
போல ஜடஆன்மாவின் போகப்பொருட்டும் இச்சடசரீர ஆரம்பம் உண்டாகாது;
ஆனல், ஆன்மாவின் சுகதுக்கரூப போகப்பொருட்டே இச்சடசரீர ஆரம்பமா
மாதலின் ஆன்மாவின்கண்ணே ஜடரூபத்தன்மை சம்பவியாது. இரண்டாவது
பக்ஷமுஞ் சம்பவியாது; ஏனெனின், ஞானமுடையது சேதனமாம்; சேதனபோ
கப்பொருட்டே சரீராதி ஜடபதார்த்தமா மென்பதன்கண்ணே இவ்விசாரஞ் செய்
யத்தக்கதாம்: சரீராதி ஜடப்பொருள் ஆன்மாவின் போகப்பொருட்டாவது ஞான
ரூப சம்பந்தத்தாலா? அஃதின்றியேயா? இறுதியது சம்பவியாது; ஏனெனின்,
ஞானவிஷயமாகாதபொருள் எவன் போகத்திற்கும் சாதனமாகாதாம்; மற்றோ,
ஞானவிஷயமாகியே சர்வ பதார்த்தமும் ஜீவபோக சாதனமாம். முதலதையு
டன்படின் இது கேட்கவேண்டும்: எநத ஞானரூப சம்பந்தத்தானே தேகா
திகள் ஆன்மாவின் போகசாதனமாமோ அது நித்தியமா? அநித்தியமா? முத
லதேற் சம்பவியாது; ஏனெனின், நித்தியமாயின் சரீராதிகளால் ஆன்மாவிற்கு
எப்போதும் போகப்பிராப்தி யுண்டாதல் வேண்டும், அங்ஙனமாவதின்று மாத
லின், அந்தஞானத்தே நித்தியரூபத்தன்மை சம்பவியாது. இரண்டாவதேல்
இது கேட்கவேண்டும், அவ்வநித்திய ஞானம் தன்னானே தாஞெளிர்வதா? மற்
றொன்றாலொளிர்வதா? முதலதை யுடன்படின் ஒரே ஞானத்தே பிரகாசரூபக் கிரி
யையின் கருமரூபத்தன்மையும் கருத்தாரூபத்தன்மையும் உண்டாம், அஃதத்தி
யந்தம் விருத்தமாம். இரண்டாவதை யுடன்படின் அவ்வொருஞானம் மற்றொரு

ஞானத்தாலொளிரும், அதுவும் மற்றொன்றாலொளிரும், அதுவும் மற்றொன்றாலொளிரும் இவ்வாறு ஞானங்களின் தாரையை யங்கீகரிப்பதில் அநவஸ்தாதோஷப்பிராப்தியாம். ஹே நசிகேதா! இவை முதலாக அநேகவகைக் குதர்க்கங்களைப் பகிர்முகமுடர் கற்பிப்பர். அவையாவும் சுருதிப்பிரமாணத்தின் முரண்பட்டவைவாம், அதனானே அவை ஈர்வாளொப்பத் துக்க ஹேதுவாம். ஆன்மாகார மதியுண்டாவதன் முன்னரே அக்குதர்க்கங்க ளுண்டாயவனிடத்தே அம்மதியுண்டாகவேமாட்டாது, அஃதுண்டானபின் அவை யுண்டானவனுக்குச் சுருதியர்த்தத்தே அவிசுவாசமாம், அவ்வவிசுவாசத்தால் அவனுக்குச் சுருதிப்பொருளின்கண் சம்சய விபரீதபாவனையுண்டாம், அதனால் ஆன்மாகாரமதி விநாசத்தையடையுமாதலின் மோக்ஷத்தையடைய இச்சித்தவன் ஆன்மாகாரமதி வடிவக்கோவைக் குதர்க்கவடிவ சிங்கத்தினின்றும் அவசியம் காக்கவேண்டும். வேதங்களைப் பிரமாணமாயங்கீகரிக்கும் ஆஸ்திகரும் அங்கீகரியாத நாஸ்திகரும் தத்தமது மதியனுசாரமாகவே ஒவ்வொரு வகையாய் ஆன்மாவின் ஸ்வரூபத்தையுணர்கின்றனர் சிடருக்கு முபதேசிக்கின்றனராதலின் தத்தமது குருவினுபதேசத்தால் அம்மதி சர்வரிடத்துமுண்டாம். சார்வாகருக்கோ இத்தேகத்தின்கண்ணே ஆன்மாகாரமதியாம், சிலவாதியருக்கோ பிராணாதிகளிடத்தே அம்மதியாம்; சில வாதியருக்கோ கர்த்தா போக்தாவின்கண் அம்மதியாம். ஆனால் அம்மதியால் அம்மூடருக்கு மோக்ஷமுண்டாகமாட்டாது. அத்விதீய ஆன்மயதார்த்த ஞானமுடையவனும், சுருதியனுகூலதர்க்கத்தே குசலனும் ஆய பிரஹ்மவேத்தாக்குரு அதிகாரிக்கு ஆன்மாகாரமதியை யுபதேசித்தபோதே அவன் மோக்ஷத்தையடைவன். பூர்வ அநேக ஜன்மங்களின் புண்ணியகருமங்கள் ஒருங்குகூடப்பெற்றவனே ஆன்மாகாரமதியையடைவன். நசிகேதாவாய நீ பூர்வ புண்ணிய மகிமையால் இவ்வான்மாகார மதியையடைந்தனை. யானினக்கு மனைவி மைந்தராதி அநேக பதார்த்தங்களைக்கொடுத்தும் அவற்றை நீ கவர்ந்திலையாதலின் நினது தைரியம் மிகவும் ஆச்சரியமாகவேயிருக்கிறது. இத்தகைய தீரனுக்கே இவ்வான்மாகாரமதியுண்டாம். தீரனாகிய நின்போன்ற சிடன் இவ்வுலகத்தே அத்தியந்தந் துர்லபனாவன். இத்தகைய சர்வபதார்த்தங்களும் கிடைக்குழ் காலத்தே எத்தகைய தைரியம் நினக்குண்டாயதோ அத்தகைய தைரியம் முன்னரெவனுக்கு முண்டாகவில்லை, இப்போதுமில்லை, இனியுண்டாகவு மாட்டாது. மற்றவர் வார்த்தையென்னே என்னிடத்தும் அத்தகைய தைரியமின்றாம். ஏனெனின், யான் எனது இருதயதேயத்தேயிருக்கும் பிரஹ்மாநந்தரூப நிதியை நித்தியமறிவன், லோகபாலரூப அதிகாரத்தோடுகூடிய எனது தேவதைத்தன்மையையநித்தியமெனவறிவன், ஆயினும் மனைவி மைந்தராதியரிடத்தே நினக்குத் தியாகபுத்தி வந்ததேபோல எனக்குண்டாகவில்லை. நினது தியாகபுத்தி எனக்கெக்காலத்தோ இன்றாம்; ஆனால் முன்னருமுண்டாகவில்லை; ஏனெனின், அதிகாரியானவன் யாகாதி அநித்தியகருமங்களால் மோக்ஷரூப நித்திய சுகத்தையடையான் என்னும் விஷயத்தையறியாது யான் பசு இஷ்டகாதி அநித்தியபதார்த்தங்களால் அக்கினி சயனம் அக்கினிஷ்டோமம் முதலிய அநேக யாகங்களைச்செய்தனன்; அவற்றால் யான் இவ்வுலகபாலபதவியையடைந்தனன், இது பிரளய பரியந்தமிருப்பது. அன்னத்தையுண்ணின் முயல்வின்றியே திருப்தியுண்டாவதேபோல

இப்பதவியின்கண்ணும் முயல்வின்றியே எனக்குச் சர்வ போகங்களின் பிராப்தி யாம். இவ்வாறு முன்னர்ப் பெருமுயல்வால் எனக்குண்டாய இவ்வைசுவரியம் உன க்கு முயல்வின்றியே கிடைத்தும் தியாகித்தனையாதலின் நினது தைரியம் மிகவு மாச்சரியரூபமாம். எவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவின் சாக்ஷாத்காரப்பொருட்டு நீ சர்வ விஷயப் பரித்தியாகஞ்செய்தனையோ அதனை யான் சாக்ஷாத்தாய் அனுபவிக் கின்றேனாயினும் விஷயங்களின் பரித்தியாகத்தைச் செய்யமுடியாதவனாயிருக்கின் றேனாதலினாலும் எனது தைரியத்தினும் உனது தைரியம் அதிகமாம். நீயறிய விரும்பிய ஆநந்தவடிவ ஆன்மா இப்பூவுலக முதல் பிரஹ்மலோகம்வரையிருக்கும் விஷயஜன்னிய ஆநந்தங்கள் யாவற்றையும் தன்னாநந்தத்துள்ளடக்கியதாம், சர் வஜகத்தின் ஆதாரமாம், ஆகாசம்போல யாண்டும் நிறைந்ததாம், இந்திராதிதேவ தைகளால் துதிக்கத்தகுதியதாம், யாண்டும் நிறைவுற்ற வடிவத்தானும் ஜகதுற் பத்திமுதலியவற்றின் காரணரூபத்தானும் அறியத்தக்கதாம், நானுவகைச் சங்கற் பங்களின் பிரவர்த்தகமாம், தேசகாலவஸ்து பரிச்சேதமற்றதால் அநந்தரூபமாம், சர்வ அபயத்தின் அவதிரூபமாம், அதனினும்மேலாய் யாதொரு அபயமின்றாம். இத்தகைய ஆநந்தவடிவ ஆன்மாவை அறியினும் யான் எவ்விஷயங்களைப் பரித்தி யாகஞ்செய்ய முடியாதவனாயிருக்கின்றேனே அவற்றை நீ ஆன்மாவையறியு மிச் சைக்காலத்திலேயே பரித்தியாகஞ்செய்தனையாதலின், எனது தைரியத்தினும் உனது தைரியமதிகமாம். பிரஹ்மாநந்தபபிராப்தியுண்டாகாது கேவலம் இச்சை மாத்திரத்தையுடைய முமுக்ஷுக்களும் மனைவி மைந்தராதிகளைப் பரித்தியாகஞ் செய்யின் பிரஹ்மாநந்தத்தையனுபவிக்கும்; பிரஹ்மவேத்தாவோ அவற்றை முற்றி லும் விட்டொழிக்கவேண்டுமென்பது கருத்தாம். ஹே நசிகேதா! அவற்றின் பரித் தியாகத்தால் எவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவின்கண்ணே நினக்குப் பிரீதியாமோ அது புத்திமுதலிய சர்வசங்காதத்தின் சாக்ஷிரூபமாம், நேத்திராதிகளையும் மனத் தையும் அடக்காத பகிர்முகர்களால் காணத்தகாததாம். அக்கினி சர்வகாஷ்டங்க ளில் இரகசியமாயிருப்பதேபோல ஆன்மாவும் சர்வசரீரத்தும் இரகசியமாயிருக் கின்றது. ஆகாசம் கடாதி யுபாதிகளின்கண்ணே புகுந்திருத்தலேபோல ஆன்மா வும் சம்பூரணஜகத்தையு முண்டாக்கி அதன்கண்ணே புகுந்திருக்கும். அதுவே ஹிருதயதேசத்திருக்கும் மதியாகிய குகையின்கண்ணிருக்கும், பூதபவிஷ்யத்வர்த் தமானங்களில் ஏகரசமாயிருக்கும், சத்தியப்பிரஹ்மம் யானென்னும் நிதித்தியா சனரூபயோகத்தால் அடையத்தக்கதாம், ஸ்வப்பிரகாசமாம். இத்தகைய ஆநந்த வடிவ ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்து நீ சந்தோஷ விஷாதமறுவதேபோலக் குரு சாஸ்திர வுபதேசத்தால் அதனைச் சாக்ஷாத்கரித்த எவனும் அவையற்றிருப்பன். ஹே நசிகேதா! தத்துவமசி என்னும் மகாவாக்கியத்தின்கண்ணேயிருக்கும் தத் துவம் என்னும் இரண்டு பதங்களில் யாண்டும் பரிபூரண மாயாவிசிஷ்ட சர்வஞ்ஞ ஈஶ்வரர் தற்பதார்த்தமாம். அஞ்ஞானவிசிஷ்ட அற்பஞ்ஞ ஜீவாத்மா துவம்பதார்த் தமாம். குருவாயிலாய்த் தத்துவம் பதார்த்தங்களைச்சிரவணித்து இரண்டு பதங்க ளின் வாச்சியங்களாகிய மாயை சர்வஞ்ஞத்தன்மை, அவித்தை யற்பஞ்ஞத்தன்மை முதலியவற்றைப் பரித்தியாகித்து இலக்ஷியமாகிய சேதனமாத்திரத்தைக்கொண்டு

யானத்விதீயப் பிரஹ்மரூபன் எனத் தன்னைப் பிரஹ்மரூபமாயறிந்து அதிகாரி பிரஹ்மாநந்தரூப மோக்ஷத்தையடைந்து எப்போதும் பிரசன்னமாயிருப்பன். அந்தப்பிரஹ்மாநந்தம் சர்வப் பிராணிகட்கும் ஆநந்தத்தை யடைவிப்பதாம். ‘ஏஷஹ்யேவாநந்தயாதி’ இவ்வாநந்தவடிவப் பிரஹ்மமே சர்வப்பிராணிகட்கும் ஆநந்தத்தை யடைவிப்பதாம். ஹிருதயரூபக் குகையின்கண்ணேயிருக்கும் பிரஹ்மாநந்தரூபக்கிருகம் அதிகாரிக்குக் குருசாஸ்திர வுபதேசத்தானே பிராப்தமாம். அவ்வீடு உனக்குத் திறந்தவாயிலுடையதாம். யானோ எனது சித்தத்தே பிரஹ்மாநந்தரூபக் கிருகத்தே நினது பிரவேசமாயிருக்கின்றதென்றே யெண்ணுகின்றேன்; ஏனெனின், ஆண்டுப் பிரவேசிக்கும் மார்க்கம் சித்தத்தின் உண்முகத் தன்மையாம்; அவ்வாயிலாய் அவ்வீட்டினடைவில் இவ்விஷயாகார அந்தக்கரணத்தின் விருத்திரூபமே பிரதிபந்தகமாம். அவ்விடயாகார விருத்திரூப பாசங்களை நீ விசாரபலத்தால் நஷ்டஞ்செய்தனையாதலின் இப்போது நினக்கு அவ்வீட்டிற்புக வேறு யாதொரு பிரதிபந்தகமுமின்றாம். ஹே சிஷ்ய! இவ்வகையாய வுபதேசத்தைத் தருமராஜா நசிகேதாவிற்குச் செய்தபோது அவர் மரணத்தின்பின்னர் ஆன்மாவின் சத்தையை அர்த்தாபத்திரூபப் பிரமாணத்தால் நிச்சயித்தனர். இப்போது அதனை நிரூபிப்பாம்:—யமதர்மராஜாவாகிய எனதாசிரியர் எனக்குப் பூர்வம் சகாமநிட்காமரூப அதிகாரிகளின் பேதத்தானே பிரேய சிரேயரூப பலபேதத்தைக்கூறினர். மரணத்தின்பின்னர்ப் பாவி அடிக்கடி என்வசமாவன் எனவுங் கூறினர். இவ்வெல்லாவசனமும் இத்தூலசரீரத்தினும் வேறாயோரான்மாவை யங்கீகரிக்கின் மெய்யாம். இத்தூலத்தையே யான்மாவென அங்கீகரிக்கின் அவ்வசனம் பொய்யாம்; ஏனெனின், இத்தூலமோ இவ்வுலகத்தே அக்கினியாற் பஸ்பமாம். இவ்வநித்தியத்திற்குப் பரலோகத்தே சுகதுககரூபப் போகப்பிராப்தி சம்பவியாதாதலின், இத்தேகத்தினும் வேறாகவே ஓரான்மாப பரலோகஞ்சேரும். ஹே சிஷ்ய! இவ்வாறு விசாரித்துப் புத்திமானாகிய நசிகேதாவானவர் சரீரத்தினும் பின்னமாய் ஆன்மாவின் சத்தையைத் தாமே நிச்சயித்தனர். அதன்பின்னர் அவர் ஆன்மாவின் விசேஷ ஸ்வரூபத்தை அறிய இச்சித்துத் தர்மராஜாவைநோக்கி இவ்வாறு கூறத்தொடங்கினர்:—ஹே பகவன்! தருமாதருமமற்றதும் காரியகாரணபாவமற்றதும், பூதபவிஷ்யத் வர்த்தமான காலங்களற்றதும் சுகதுக்கமற்றதும் ஆகியவஸ்துவைத்தாங்கள் நன்றுபறிவீர்களாதலின், தங்கள் பாதசேகா சிஷ்யனாகிய எனக்கு அதனை யுபதேசித்தருளவேண்டும். ஹே சிஷ்ய! இவ்வகைவினாவை நசிகேதா செய்தபோது அவர் தூயஆன்மாவை யுணர்த்தும்பொருட்டு முதலில் பிரணவரூபமாய் ஆன்மாவை யுபதேசித்தனர். ஹே நசிகேதா! அதிகாரியானவன் எதனைப் பிரஹ்மசரியாதி சாதனங்களாற் சாக்ஷாத்கரிப்பனோ, எதனை இருக்குமுதலிய சர்வவேதங்களு மியம்புமோ, எதனைக் கிருச்சிர சாந்திராயணாதி தவங்கூறுமோ அந்தப் பரப்பிரஹ்மத்தை நீ பிரணவரூபமாயறி.

சங்கை:—ஹே பகவன்! சப்தரூப இருக்காதிவேதம் அந்தப் பரப்பிரஹ்மத்தைப் பிரதிபாதிக்கும் என்னும் வார்த்தை சம்பவமாகுமாயினும், அர்த்தரூப கிருச்சிர சாந்திராயணாதிதபம் அதனைப் பிரதிபாதிக்குமென்னும் வார்த்தை சம்பவியாது.

சமாதானம் :—ஹே நசிகேதா ! அசுத்த அந்தக்கரணத்தின்கண்ணே பரப்பிரஹ்ம சாக்ஷாத்காரமுண்டாகமாட்டாது ; மற்றோ, நிருச்சிர சாந்திராயணாதி வத்தாற் சுத்தமாய அந்தக்கரணத்தின்கண்ணே பரப்பிரஹ்மசாக்ஷாத்காரமுண்டாமாதலின், இருக்காதி வேதம்பரப்பிரஹ்மத்தைப் பிரதிபாதிப்பதேபோல மேற்படி தவமும் அதனையே பிரதிபாதிக்கும். இப்போது எண்வகை மைதுன பரித்தியாக ரூபப் பிரஹ்மசர்யத்தை யறிவிக்கும்பொருட்டு முதலில் அவ்வெண்வகையை நிரூபிப்பாம் :—ஸ்மரணம், கீர்த்தனம், கிரீடை, பிரேக்ஷணம், குஹியபாஷணம், சங்கற்பம், அத்தியவசாயம், கிரியாநிர்விருத்தி என்பனவாம். அவற்றுள் தனது மனத்தே மங்கையரைச் சிந்தித்தல் ஸ்மரணமாம் ; அவரைப்புகழ்தலும் அவரோடு பேசலும் கீர்த்தனமாம். அவரோடு சூது முதலியவை விளையாடல் கிரீடையாம். காமதோஷத்தோடுகூடிய மனத்தால் பிரேரிப்பிக்கப்பெற்ற நேத்திரத்தாலடிக்கடி அவரைப் பார்த்தல்பிரேக்ஷணமாம். விடயசம்போகப்பொருட்டு அவருடைய இரகசிய அங்கங்களைக்கூறல் குஹியபாஷணமாம். இப்பெண்ணோடு சம்போகஞ் செய்வனெனச் சிந்தித்தல் சங்கற்பமாம். இப்பெண்ணோடு யான் அவசியம் சம்போகஞ்செய்வேன் என நிச்சயித்தல் அத்தியவசாயமாம். விஷய சுகப்பிராப்தியை யடைவிக்கும் பெண்ணோடு சம்போகித்தல் கிரியாநிர்விருத்தியாம். இவ்வெண் வகை நிவிருத்தி பிரஹ்மசரியமாம். எப்பிரஹ்மப் பிராப்தியின்பொருட்டு அதிகாரி பிரஹ்மசரியத்தையாற்றுவனோ அது ஓங்காரரூபப் பிரணவ சப்தார்த்தரூபமாம் ; அல்லது, அது பிரணவசப்தரூபப் பிரதீகத்தையுடையதாமாதலின், அதை நீ பிரணவசப்தத்தினும் அபேதமாயறிதி. எது அன்னியத்தின் ஆரோபணத்தால் தியானிக்கப்பெறுமோ அது பிரதீகமாம் ; பாஷாணரூப சாளக்கிராமம் விஷ்ணுவின் ஆரோபணத்தால் தியானிக்கப்பெறுதலின் பிரதீகமாவதேபோலும், அதிகாரிக்குப் பிரணவரூப அக்ஷரமே ஹிரண்யகருப்பரூபமாயும் பரப்பிரஹ்மரூபமாயும் தியானிக்கத்தக்கதாம். அதிகாரி அவ்வக்ஷரத்தைப் பிரஹ்மரூபமாய்த் தியானிக்கின் ஹிரண்யகர்ப்ப பாவப்பிராப்தி, பரப்பிரஹ்ம பாவப்பிராப்தி என்னுமிரண்டனுள் இச்சித்ததொன்றையடைவன். ஆகையால், அதிகாரி பிரணவரூப அக்ஷரத்தின் பிரதீக உபாசனையை அவசியம் சம்பாதிக்க. ஓங்காரரூப அதன் கண்ணே அகார உகார மகார அர்த்தமாத்திரை என்னும் நான்கு மாத்திரைகளாம். அந்நான்கற்கும் முறைப்படி தூலம், சூக்ஷுமம், காரணம், துரீயம் என்னும் நான்வஸ்தைகள் வாச்சிய அர்த்தங்களாம். அந்நான்கன் உபகித சுத்த சேதனம் யான் என்னும் நிரந்தரசிந்தனம் ஆலம்பன உபாசனையாம், அதைச்செய்பவனுக்குண்டாம் பலத்தைக்கேட்டி. இப்பிரணவரூப ஆலம்பனமே ஹிரண்யகர்ப்பத்தியான உபயோகியாம். இதுவேபரப்பிரஹ்மத்தியான உபயோகியாம். இங்ஙனம்பிரணவ ஆலம்பனத்தால் ஹிரண்யகருப்பரையும் பரப்பிரஹ்மத்தையும் தியானிப்பவன் பிரஹ்ம லோகத்தேசென்று ஆண்டு மோக்ஷத்தையடைவன். இத்துணையால் பலசகித பிரதீக உபாசனையும் ஆலம்பன உபாசனையும் நிரூபிக்கப்பட்டன. இப்போது அதனால் சுத்தசித்தமாயவனுக்கு ஆன்மாவின் வாஸ்தவஸ்வரூப உபதேசம் நிரூபிக்கப்படும்:— ஹே நசிகேதா ! அந்தப் பிரணவசப்தத்தால் பிரதிபாதனஞ்செய்ய யோக்கியமாய

பாஹ்மத்தின் இவ்வகையாய இயற்கையை முமுக்ஷுக்கள் சிந்திக்குக:—இச்சயஞ் சோதியாய ஆன்மா ஜன்மமரணாதி சர்வ விகாரமற்றதாம்; ஏனெனின், இவ்வுலகத்தே உற்பத்தியுடைய யாவும் காரணமுடையனவேயாம். கடாதிகள் உற்பத்தியுடையனவாமாதலின் அவற்றிற்கு மிருத்திகை குலாலாதி காரணங்கள் தோற்றுவதேபோல ஆன்மா உற்பத்தியாகுமாயின், இதற்கு மொருகாரணம் பிரதீதியாக வேண்டும். ஆன்மாவை யுண்டாக்குவதாய ஒரு காரணம் பிரதீதியாவதில்லையாதலின் இதன் ஜன்மம் சம்பவியாது. இஃதுண்மையாய் அத்விதீயரூபமாமாதலின் இதனினின்று மொருபதார்த்தமுண்டாகாது; இவ்வாறு இது ஜன்மமற்றதாமாதலின் சுருதிபகவதி அஜம் நித்தியம் என அழைத்தனள். இது அஜமும் நித்தியமும் ஆதலின், சுருதிபகவதி சாஸ்வதம் என்றனள். சர்வ தேசத்தும் சர்வ காலத்துமிருப்பது சாஸ்வதமாம். சாஸ்வதம் ஆதலின், சுருதிபகவதி இதனைப் புராணம் என்றனள். பூர்வகாலத்தும் நவீனமாகாதது புராணமாம். கடரூப உபாதி நாசமாயினும் அதிலிருக்குமாகாசம் நாசமாகாததேபோல இத்தேகோபாதி நாசமுறினும் இதனிலிருக்குமான்மா நாசமாகாதாம். இஃதுண்மையாய் எவ்வஸ்துவையும் ஹநநஞ்செய்வதின்றும், தானும் எவ்வஸ்துவாலும் ஹநநமாவதின்றுமாயினும் ஹநநக்கிரியையின் கருத்தாவெனவெண்ணும் அவிவேகியும, கருமமெனவெண்ணும் அவிவேகியும் ஆன்மாவின் உண்மைவடிவத்தை யறிந்திலர்; ஏனெனின், ஈண்டுக் காரியமாகிய தேகாதி தூலங்களுக்கும், காரணமாகிய இந்திரியாதி சூக்ஷுமங்களுக்கும் நாசத்தைக் கண்டோமாதலின், இது நியமமாம்:—நாசமாம் பொருள்கள் யாவும் காரியமென்னலாகும்; அல்லது காரணரூபமாகும். காரியகாரண பாவமற்ற எப்பொருட்கும் நாசமுண்டாகமாட்டாது; ஆன்மா அத்தகைமைத்தன்றாதலின் இதற்கு நாசஞ்சம்பவியாது. தேகேந்திரியாதிகளற்றதும் ஆகாசம்போல நிராகாரமுமாய இதனை ஹநநக்கிரியையின் கர்த்தாவாயேனும் கருமமாயேனும் எண்ணுபவன் அத்தியந்தம் மூடபுத்தியனுவன். இவ்வவிநாசி அக்கிரிய ஆன்மாவை அவ்வாறறிந்தவன் எல்லா நூல்களையு முணர்ந்திருந்தவனாயினும் விபரீதஞானமுடையவனென்றேயறிக; ஏனெனின், அன்னிய வஸ்துவின்கண்ணே அன்னிய வஸ்துவின் ஞானம் விபரீதஞானமாம். இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பஞானம் விபரீதஞானமாவதேபோல அகர்த்தாவாய ஆன்மாவின்கண்ணே கர்த்தாத்தன்மைஞானமும், அவிநாசியின்கண்ணே நாசத்தன்மையின்ஞானமும் விபரீதஞானமாம். ஈண்டுச் சத்தியமாவது ஒருகாலும் நாசத்தையடையாது; ஆன்மாவும் சத்தியரூபமாமாதலின் அசத்திய தேகாதிகளைப்போல நாசம் எவ்வாறுறும்; மற்றொ[illegible]நாம். சில நையாயிகாதி வாதியரோ பிருதிவி, ஜலம், தேயு, வாயு [illegible] பூதங்களின் பரமாணுக்கட்கும் மனத்திற்கும் நாசமங்கீகரித்திலர்; [illegible] அவைகட்கு விவர்த்த உபாதானகாரணமாமாதலின், அவற்[illegible] தஞ் சூக்ஷுமமாம். அத்தகைய இதற்கு நாசமெங்ஙனமாம்; [illegible] தாம். அல்லது, நையாயிகரின்மதத்தோ ஆகாசம், காலம், திசை [illegible] பரிமாணமுடையனவாமாதலின் நாசமாகாதாம். ஆன்மாவோ அ[illegible] அதிஷ்டானரூபமாமாதலின், அவற்றினும் அத்தியந்தம் மகத்தாம். அத்தகைய இதற்கு நாசமெங்ஙனமாம்; மற்றோ, ஆகாதாம். வஸ்திராதி சாவயவ பதார்த்

தங்கள் தமது பரிணாமரூப இயற்கையானே நாசத்தையடைவதேபோல இந்தி
ரவயவ ஆன்மாத் தன்னியற்கையானே நாசத்தையடையாதாதலின் ஆன்மாவின்
நாச மங்கீகரித்தவாதி ஆன்மாவினியற்கையினும் வேறாயே ஒன்றை ஆன்மாவின்
நாசத்திற்குக் காரணமா யங்கீகரிக்கவேண்டும். ஈண்டு அவ்வாறு வேறாய குடார
ஔஷதாதி நாசகாரணங்கள் தேகத்தையும் நேத்திராதி இந்திரியங்களையும் அடை
வுற்று அவற்றை நசிப்பித்துத் தாமும் நாசமாம்; ஆனால், அவை புத்தியை நாசஞ்
செய்யப் பிரவிருத்தியா. புத்தியை நாசஞ்செய்வதினும் அவை பிரவிருத்தியாத
போது புத்தியினும் பரத்திருக்கும் புத்தியின்சாக்ஷிரூப ஆன்மாவை நாசஞ்செய்ய
அவை யாங்ஙனம் பிரவிருத்திக்கும்; மற்றோ, பிரவிருத்தியாவாதலின் இவ்வான்மா
அவிநாசியாம். அந்தக்கரண சுத்தத்தை யடைந்தவனும், சுரோத்திராதி இந்திரி
யங்களை ஜயித்தவனும், துக்கத்தின்கண்ணே துவேஷமற்றவனும், சுகத்தின்கண்
ணே இராகமற்றவனும் ஆகிய உத்தம அதிகாரி குருசாஸ்திரகிருபையால் பரமான்
மாவின் மகிமையைத் தன்னான்மாவினும் அபின்னமாய்க் காண்பனாயின் அவ்வறி
ஞன் எவனையுங்கொல்லான் எவனாலுங்கொல்லப்பெறான். அம்மகிமை பரமாணுவே
முதலாய சூக்ஷ்மபதார்த்தங்கட்கும் ஆகாசமே முதலாய மகாபதார்த்தங்கட்
கும் அவதிரூபமாம். எம்மகிமையினும் மேலாய் ஒரு சூக்ஷ்மபதார்த்தமின்றோ
ஒருமகான்பதார்த்தமின்றோ அம்மகிமை ஆநந்த ஆன்மஸ்வரூபமாதலின், சர்வ
பேதமற்ற அத்விதீய ஸ்வரூபமாம். ஈண்டுள்ளனவாய தூலசரீரங்கள் பரிச்சின்
னங்களாதலின் அவை இருக்கும்போதும் சயனஞ்செய்யும்போதும் தூரஞ்செல்லச்
சமர்த்தற்றனவாம். ஆன்மாப பரிச்சின்னமன்றாம், யாண்டும் வியாபகமாமாதலின்
நனாக்கனாத்துயிலைக் காணும்போதும் சர்வதேசகாலத்தே பிராப்தமாம். நீர், செந்
தூரம், ஹரிதாரம் முதலிய பதார்த்தங்களின் சம்பந்தத்தால் இரக்தபீதாதி வர்
ணமுடையதாய்த் தோற்றுமாயினும் அது வாஸ்தவமாய் வெண்ணிறமுடையதா
வதேபோல ஆன்மாவும் புத்திமுதலிய உபாதிகளின் தாதான்மிய சம்பந்தத்தால்
வித்யாமதம் தனமதம் முதலிய விகாரமுடையதாய்ப் பிரதீதியாயினும் உண்மை
யாய்ச் சர்வ விகாரமற்றதாம். இவ்வாறுண்மையாயோ மதமற்றதும் புத்திமுதலிய
உபாதிகளின் சம்பந்தத்தால் மதமுடையதும் ஆய பரமான்மாவைச் சேதன ஆன்
மாவாய என்னினும்வேறாய எப்பொருளும் அறியாது; ஏனெனின், சேதனஎன்
னிற் பின்னமாய யாவும் கடாதிபோல அனான்மஜடரூபமேயாம். ஜடம் சேதன
ஆன்மாவைப் பிரகாசியாதாதலின் ஆன்மா ஸ்வப்பிரகாசரூபமாம். இவ்வான்ம
உண்மையாய்த் தூலம், சூக்ஷ்மம், காரணம் என்னும் முத்தேகங்களுமற்றதாம்
இவ்வநித்திய சரீரங்களிலிருப்பதாம், மகாவிபுவாம். இத்தகைய ஆன்மாவின்வடி
[illegible] அதிகாரி குருசாஸ்திர உபதேசத்தால் சாக்ஷாத்கரிக்கும்போது சர்
[illegible]கமு மற்ற[illegible]வன். கருத்திதுவாம் :—கர்த்திருத்துவ போக்திருத்துவ மு
[illegible] பந்தம் [illegible]. அஃதஞ்ஞானத்தினின்று முண்டாம். வித்துவானுடை
[illegible]ஞானத்தால் நசிக்குமாதலின் அஞ்ஞானகாரணமிலதாகவே அ
[illegible]ரியமு முண்டாகாதாம். யான் நினக்கு விபுவடிவமாயும் ஸ்வ
பிர[illegible]யும் கூறிய ஆன்மா அத்தியந்தந் துர்லபமாம்; ஏனெனின், நான்

வேதங்களைப் படித்தலாலும் படிப்பித்தலாலும் பிராப்தமாகாதாம், அநேக சாஸ்திரஞானத்தாலும் பிராப்தமாகாதாம், கோடிஜன்மங்களாலும் பிராப்தமாகாதாம்.

சங்கை :—ஹே பகவன்! இத்தகைய துர்லப ஆன்மா அதிகாரிகட்கு எவ்வாறு பிராப்தமாம்?

சமாதானம் :—ஹே நசிகேதா! இவ்வாநந்தஸ்வரூப ஆன்மாப் பகிர்முகருக்குத் துர்லபமாயினும் அந்தர்முகருக்குக் குரு சாஸ்திரரூபமாய்த் தனது வாஸ்தவவடிவத்தை அபேதமாய் சாக்ஷாத்கரிப்பிக்கும்; அவனே இதனையடைவன். ஆன்மசாக்ஷாத்காரமடையா னிலக்கணத்தையும் அடைபவ னிலக்கணத்தையும் நீ கேட்டி. பாவகருமத்தினின்றும் நீங்காதவன், சமதமாதியற்றவன், தியானரூப சமாதியற்றவன், மனோசாந்தியற்றவன், ஆகிய பகிர்முகனுக்கு ஆன்மசாக்ஷாத்காரமுண்டாகாதாம். புண்ணிய ஆன்மா சர்வ ஜீவர்களிடத்துங் குரோதமற்றவன், கணந்தோறும் ஆன்மாவைச் சிந்திப்பவன் இராகத்துவேஷமற்றவன் ஆகிய அந்தர்முகனே யான் பிரஹ்மமாயுளேன் எனத் தன்னான்மாவைப் பிரஹ்மரூபமாய்ச் சாக்ஷாத்கரிப்பன். ஓதனத்தே சாகம் தயிர் முதலியவற்றைக் கூட்டியுண்பதேபோலப் பிராஹ்மணாதி சர்வ ஜகத்தா மோதனத்தே சர்வ ஜகத்தையும் நாசஞ்செய்யும் மிருத்தியுவாகிய சாகாதிகளோடு கூட்டிச் சர்வ ஜகத்தையும் பக்ஷணஞ்செய்யும் மாயாவிசிஷ்ட ஈசுவரரிருக்குஞ் சுத்தான்மாவை யான் சாக்ஷாத்கரித்திருப்பதேபோல யாவர் சாக்ஷாத்கரிப்பர்; மற்றோர், சாக்ஷாத்கரியார். கருத்திதுவாம் :—தத்துவம் பதார்த்த சோதனகாலத்தே சுத்த பரமான்மாவைத் தனதான்மவடிவமாயறிந்தவனே மகாவாக்கிய அர்த்தரூபத்தாலும் அறிவன். அவ்விசாரமற்ற மற்றொருவன் அதனையறியான். இப்போது சுத்த ஆன்மாவை அறியும் பிரகாரம் நிரூபிக்கப்படும் :—ஹே நசிகேதா! எத்தியானரூப உபாயத்தால் ஆன்மாவைச் சாக்ஷாத்கரிக்கலாமோ அதனை நீ கேட்டி. பிப்பலாதி விருக்ஷத்தே பக்ஷியிருப்பதேபோலச் சரீரவிருக்ஷத்தே இரண்டு பக்ஷிகளிருக்கின்றன. அவற்றுள் ஒன்றோ தற்பதார்த்தரூப ஈஸ்வரராவர் மற்றொன்றோ துவம்பதார்த்தரூப ஜீவனாவன். இறுதியதோ ஈண்டு அறம்பாவத்தின் இன்பத்துன்பபலத்தைப் போகிக்கும். முதலதோ போகிக்காது, மற்றதைப் போகிப்பிக்கும். அவ்விரண்டும் புத்திரூப மேலாயவிடத்தே ஒருங்குகூடியிருக்கும், போக்தா அபோக்தாரூப அற்பஞ்ஞத்தன்மை சர்வஞ்ஞத்தன்மைரூப பரஸ்பர விருத்த தர்மங்களோடு கூடியிருக்கும். எவ்வதிகாரி தக்ஷிணாக்கினி கார்ஹபத்தியம், ஆஹவனீயம், சப்யம், ஆவசத்யம் என்னு மைந்தக்கினிகளை யுபாசிப்பனோ, நாசிகேதாக்கினியை மும்முறை சயனஞ்செய்வனோ அவனே உபாசனையின் [illegible] அந்தக்கரணமுடையவனாய் ஜீவ ஈஸ்வர சொரூபத்தைப் [illegible]

சங்கை :—ஹே பகவன்! தக்ஷிணாக்கினிமுதலிய பஞ்சாக்கினிகளின் [illegible] ரூபத்தை அறியும் கருமி யுபாசகனுக்கு அத்விதீய [illegible] காணவருவதில்லை; மாறாக பேதத்தையே கூறுவன்.

சமாதானம் :—ஹே நசிகேதா! பஞ்சாக்கினி [illegible] மாயோ பிரஹ்மஞானமற்றவனேயாவன் ஜீவேசுவர [illegible] னும் அக்கருமிக்குப் பிரஹ்மவேத்தாவாய குருவின் சமா[illegible] னைக்கூறுவன் சமாகமம் கிடைத்துவிடின் நாசிகேதாக்கினி[illegible] னவ உபாசனையை அனுட்டித்துச் சுத்தாந்தக்கரணமு[illegible] போதே அபயப்பிரஹ்மத்தையடைவன். அது நதியினை [illegible] சேர்ப்பதேபோல யாகாதி கருமங்களைச் செய்பவனும் சம்சார [illegible] னும் கரைசேர இச்சித்தவனுமாய அதிகாரியைத் தற்பதார்த்த [illegible]மாய

இச்சம்சார சமுத்திரத்தினின்றும் கரை சேர்த்தும் அணைவடிவமாம். பிரஹ்ம வேத்தாவாய குருசமாகமத்தால் அக்கருமி எவ்விசாரஞ்செய்து பிரஹ்மபாவத் தையடைவனோ அவ்விசாரத்தை நீ கேட்டி. புண்ணிய பாவரூப கருமபலபோக்தா வாய துவம்பதார்த்தரூப ஜீவாத்மா இச்சரீரத்தானே சம்சாரத்தையும் மோக்ஷத் தையு மடையுமாதலின் ஜீவனே தேராளியாவன் சரீரம் தேராம். தேரைச்செ லுத்தும் சாரதி புத்தியாம். நேத்திராதி இந்திரியங்கள் குதிரைகளாம், மனம் கய றும். இக்குதிரைகள் சப்தப்பரிசாதி விஷயரூப பூமியின்கண்ணே செல்லும். புத்தி இந்திரியாதிகளற்ற சுத்தஆன்மாத் தேராலடையப்பெறும் தானமாகிய கிரா மமாம். இத்தேருபமானங்கூறற் கிதுபயனும். கரும உபாசனைகளால் சுத்தமாய சித்தமுடைய அதிகாரியே புத்திரூபச்சாரதிவாயிலாய் இந்திரியரூபதுஷ்ட அசுவங் களை ஜயஞ்செய்வன் பின்னர்க் கர்த்திருத்துவ போக்திருத்துவ பூர்வதேசத்தைப் பரித்தியாகித்துப் பிரஹ்மபாவப் பிராப்திரூப உத்தரதேசத்தையடைவன். கருத் திதுவாம் :—தேருடையான் செல்லும் தேசத்தினும் வேறாய மற்றொருதேசத்தே இராகாபாவமுடைத்தாதல், குதிரைகளைச்செலுத்தவும் நிக்கிரகஞ்செய்யவும் ஞான ரூப குசலமுடைத்தாதல் எச்சாரதியின்கண்ணோ அவனே தேராளியை யத்தேய த்தே யடைவிப்பன், அவ்விரண்டுகுணமற்ற சாரதி அத்தேயப்பிராப்தியையடைவி யாததேபோலப் புத்திரூபச்சாரதியும் அவ்விரண்டுகுணமுடையதாகுமாயின் ஜீவா ன்மாவைப் பிரஹ்மபாவ மடையுமாறுசெய்யும். அவ்விரண்டுமில்லையாயின் அதை யடைவியாது; மாறாகச் சம்சாரதுக்கத்தையே அடைவிக்கும். இப்போது இப்பொ ருளையே வெளிப்படையாய் நிரூபிப்பாம் :—ஹே நசிகேதா! எவ்வதிகாரியின்புத் திரூபச்சாரதி வைராக்கியரூபக் கவசத்தையடைந்திருக்குமோ அவனே அதன்வா யிலாய் மனமாகிய திடக்கயிற்றால் இந்திரியக்குதிரைகளைத் தன்வுசமாக்கிப்பரமான் மதேசத்தையடைவன். துஷ்டஅசுவங்கள் சாரதியின் வசமாகாததேபோல எவனு டையபுத்திரூபச்சாரதி விஷயாசக்தமாமோ,எவனது மனரூபக்கயறு தைரியமாகிய பலமற்றதாமோ, அவனுக்கு இந்திரியரூப துஷ்ட அசுவங்கள் வசமாகா; இக்கார ணத்தானே பகிர்முகன் தேகத்தேரால் பரமான்மதேசத்தையடையான். சிரேஷ்ட குணமுடைய குதிரைகள் சாரதிக்கெப்போதும் வசமாவதேபோல எவனுடைய புத்திரூபச்சாரதி விஷயங்களினின்றும் வைராக்கியத்தை யடைந்துளதோ, எவன் மனக்கயறு தைரியரூப பலத்தோடு கூடியதோ அவனுக்கே இந்திரியரூபக்குதி ரைகள் வசமாம்; இதனானே அவன் பிரஹ்மபாவத்தை யடைவன். எவனுடைய புத்திரூபச்சாரதி விவேகமற்றதாமோ, எவனுடைய மனக்கயறு பகிர்முகமாமோ யவன் எப்போதும் அசுசனாவனோ அவ்விவேகஹீனமுடன் பிரஹ்மதேசத்தை யடையான்; மற்றோ, அவ்வைராக்கிய ஹீனன் மாறாக ஜன்மமரணரூப சம்சாரத் தையே யடைவன். எவனுடைய புதஇிரூபச்சாரதி விவேகமுடையதாமோ, எவ னுடைய மனக்கயறு அந்தர்முகமாமோ எவனெப்போதும் சுசனோ அவனே தேகத்தேரால் அத்விதீயப் பிரஹ்மரூப பதத்தையடைவன். அதையடையின் மீண் டும் ஜன்மத்தை யடையான். இவ்வாறு எவனுடைய புத்திரூபச்சாரதி விவேகமு டையதாமோ எவன் மனக்கயிற்றால் நேத்திராதி துஷ்ட அசுவங்களைத் தன்வசப் [illegible] அவனே இச்சம்சாரரூப சமுத்திரத்தின் பரமான்மவடிவக்கரை [illegible] யடைவன். [illegible]தாலிது துணியப்பெறும் :—விஷயங்களில் வைராக்கி [illegible]யுடைய புத்தியும், விஷயங்களை யடைந்தபோதிலும் தைரியமுடைய மன [illegible] மோக்ஷசாதனமாம்; மாறாய புத்தியும் மனமும் பந்தகாரண [illegible] ஆன்மஞானவாயிலாய் மோக்ஷத்தையடைய இச்சித்தவர்கள் [illegible]யத்தையும் தைரியத்தையும் அவசியம் சம்பாதிக்கவேண்டும். ஹே நசி,

கேதா! அந்தர்ப்பாவம் மோக்ஷமாம, பாகியபாவம் பந்தமாம், அந்தர்ப்பாவத்தன்மை யெப்போதும் காரணத்தே யிருக்கும் பாகியத்தன்மை யெப்போதும் காரியத்தே யிருக்கும். இப்போது பரமகாரணரூப பரமான்மாவின்கண்ணே மோக்ஷரூபத்தன்மையைச் சித்தஞ்செய்யும்பொருட்டு முதலில் காரணங்களின் பரம்பரை நிரூபிக்கப்படும்:—ஹே நசிகேதா! சப்தாதி பஞ்சவிஷயங்கள் ஆகாசாதி பஞ்சபூதங்களின் சாரரூபமா மாதலின் அவை ஆகாசாதிரூபமாய் பஞ்ச ஞானேந்திரியங்கட்குக்காரணமாமாதலின் சுரோத்திராதிகளினுஞ் சப்தாதிகள்பரமாம். அவையவற்றைக் கவர்வதில் இம்மனமே யேவுமாதலின் கடல் கல்லோலங்கட்குக் காரணமானதேபோலச் சப்தாதிவிஷய பாவத்தையடைந்த சுரோத்திராதி இந்திரியங்கட்கு இம்மனமே காரணமா மாதலின் மனம் அவற்றினும் பரமாம். கருத்திதுவாம்:—சப்தாதிவிஷயங்கள் ஆகாசாதிரூபமாய்ச் சுரோத்திராதி இந்திரியங்களினும் பரமாவதேபோலச் சுரோத்திராதிகளின் பாவத்தையுற்ற சப்தாதிகளினின்றும் மனத்திற்கும் பரரூபத்தன்மை சம்பவிக்கும். எனக்குச் சுகப்பிராப்தியாகுக, துக்கப் பிராப்தியாகாதொழிக வென்னும் இச்சைவடிவ மனம் தனதுற்பத்தியின் பொருட்டு நிச்சயரூப புத்தியை அவசியம் அபேக்ஷிக்கும், அஃதின்றி யிச்சையுண்டாகாதாதலின், அது இச்சைவடிவமனத்தின் காரணமாம்; இதனானே அது அதனினும் பரமாம். அந்நிச்சயரூப வியஷ்டிப் புத்தியும் தன்னுற்பத்தியிற் சமஷ்டிரூப ஹிரண்யகர்ப்பருடைய புத்தியை யபேக்ஷிக்கும். அது சர்வதூல ஜகத்தின் நிமித்தகாரணமாம் அது சுருதியில் மகதத்துவம் எனக் கூறப்பெறுமாதலின் வியஷ்டியாய புத்திக்கு அச்சமஷ்டி புத்திகாரணமாம். இதனானே அதனினும் அது பரமாம். அதுவுந் தனதுதயத்தே மாயாசகித சமஷ்டி சூக்ஷ்ம சரீரத்தை யபேக்ஷிக்கும் அது இத்தூலத்தினும் விலக்ஷணமாமாதலின், சுருதியில் அவ்யக்தமெனப்படும், அது அதற்குக்காரணமாம்; இதனானே அதனினும் அது பரமாம். அவ்வவித்யாரூபமாயை தனதாசிரய விஷயப்பிராப்தியின்பொருட்டுச் சைதன்ய புருஷனை யபேக்ஷிக்குமாதலின் அதனினும் அவன் பரனாவன். அவன் தன்னுற்பத்தியின்கண்ணும் தன் ஞானத்தின்கண்ணும் ஒன்றையு மபேக்ஷியானாதலின் அவன் யாவினும் பரன்; அவனினும் பரம் யாதொன்றுமின்றாம். அத்தகைய புருஷனை யுணர்த்தும்பொருட்டே நூலுணர்ந்தோர் இந்திரியமே முதலாகச் சேதனன் வரைக் காரண பரம்பரை கூறியுள்ளார்.

“ இந்த்ரியேப்ய: பராஹ்யர்தா அர்தேப்யஶ்ச பரம் மந: ।
மநஸஸ்து பரா புத்திர் புத்தேராத்மா மஹாந் பர: ॥
மஹத: பரமவ்யக்தம் அவ்யக்தாத் புருஷ: பர: ।
புருஷாந்ந பரம் கிஞ்சித் ஸா காஷ்டா ஸா பரா கதி: ” ॥

இந்தியங்களிற் பொருளேனும் பரமனமி வற்றினும் பரமத்திற்
புந்திநற் பரமதிலு மான்பரமேலாம் போன்றிய தேரியாமை
யந்தமானினும் பரமவ் வியக்தமா மதிற்பரம் புருடன்று
னிந்தமெய்ப் பரம்புருடனிற் பரம்பிறி தில்லேமே லிவனே [illegible]

(போ-ள்.) முன்மொழிந்த முறையே சுரோத்திராதிகளினும் [illegible] பரம், அவற்றினும் மனம் பரம், மனத்தினும் வியஷ்டிபுத்தி [illegible] மகதத்துவவடிவச் சமஷ்டிபுத்தி பரம், அதனினும் அவ்வியக்தம் [illegible] சேதன் புருஷன் பரன், அவனினும் பரம் யாதொன்றுமின்றாம்; [illegible] காஷ்டாரூபனாவன் பரகதிரூபனாவன்.

ஹே நசிகேதா! இச்சுயம்பிரகாச சேதனரூப சமஷ்டியே யாவினும் பரமென நீ யறிதி. அது தேச காலாதிகளின் கற்பனைகட்கும் அதிஷ்டானரூபமாம்; சர்வ ஜகத்தின் விவர்த்த உபாதான காரணமாம். இதனினும் பரமாய் யாதொரு கதியு மின்றாம்; ஏனெனின், சுரோத்திராதிகளினும் சப்தாதி பரம், அவற்றினும் மனம் பரம், மனத்தினும் புத்தி பரம் எனக் காரணங்களின் பரம்பரை சேதனன்வரையு மேயாம். அவனினும் மேலாகக் காரணபரம்பரை செலலாதாதலின் சுருதிபகவதி சேதனனைப் பரமகாஷ்டை என அழைத்தனள். சேதனனிடத்தே யாதொரு காரணமுமின்றாமாதலின் அவனினும் மேலாய் வேறொருகதியின்றாம் இதனானே சுருதிபகவதி அச்சேதனனைப் பரமகதி என்றனள். அக்கினி சர்வ காஷ்டங்களினும் குகியமாயிருப்பதேபோல, ஆன்மாவும் சர்வசரீரத்தின் கண்ணும் குகியமாயிருக்கும். மதனரூப உபாயத்தின்முன்னர் அக்கினி காஷ்டத்தே புலப்படாததேபோலக் குருவுபதேசத்தின்முன்னர் ஆன்மாவும தேகத்தே வெளிப்படையாய்ப் புலப்படாது. மதனத்தாலக்கினி காணபபெறுவதேபோலக் குருவுபதேசித்த மகாவாக்கியத்தாலுண்டாய பிரஹ்மாகார சூக்ஷுமபுத்தியால அதிகாரிக்கு ஆன்மா வெளிப்படையாய்ப் பிரதீதியாம்.

'ஏஷ ஸர்வேஷு பூதேஷு கூடோத்மா ந ப்ரகாஶதே ।
த்ருஶ்யதே த்வக்ர்யயா புத்த்யா ஸூக்ஷ்மயா ஸூக்ஷ்மதர்ஶிபி:'

"பூதமெவற் றினுங்குகிய பூரணமாம் பரமான்மா
நீதியறு மோரவிலர்க்கு வெளிப்படையாய் நிகழாதாம்
சோதனைசெய் பிரமமுறு சூக்குமமாம் விருத்தியினற்
சாதலறுஞ் சூக்குமமாந் தரிசிகண்மெய் காணுவரால்."

(பொ-ள.) சர்வ பூதங்களிடத்தும குகியமாயிருக்கும் ஆன்மா, விசாரஹீனனுக்கு வெளிப்படையாகாதாயினும குருவுபதேசத்தா லுண்டாய பிரஹ்மாகார சூக்ஷுமபுத்தியால சூக்ஷுமதரிசியாய அதிகாரி ஆன்மாவை வெளிப்படையாய்க்காண்பன். இப்போது ஆன்மஞான அடைவின்பொருட்டு யோகரூபசாதன நிரூபணஞ்செய்வாம்:—ஹே நசிகேதா! ஆன்ம சாக்ஷாத்கார இச்சையையுடைய அதிகாரி முதலில நான்கவஸ்தையையுடைய யோகத்தைச்செய்க. அவற்றுள், முதலிதுவாம்:—சுகப்பிராப்தியை இச்சித்துச சுரோத்திராதிகளையும் வாக்காதிகளையும் தத்தமது வியாபாரத்தே பிரவிருத்திப்பிக்கும் மனத்தே அதிகாரி அவற்றை இலயம்செய்க. சுரோத்திராதி இந்திரியங்களின் வியாபாரமற்ற கேவல மனவியாபாரமே அவ்விலயமென்பது கருத்தாம். ஈண்டுக் குதிரைகளைச் செலுத்துவன் துஷ்டக்குதிரைகளைப் பாகியதேயத்தினின்றுங் கொணர்ந்து ஆந்தர அகவு[illegible]லயின்கண்ணே கட்டுவன் பாகியத்தேயிருந்த நாலுவகை வியாபாரங்களை[illegible] கேவலஞ் சரீரசலனமாத்திர வியாபாரம் எஞ்சும்; அதுபோல [illegible] உண்மனத்தே இலயஞ்செய்யுங்கால் மனத்திற்கு முன் போல [illegible] வியாபாரங்களொய்ந்து கேவலம் சீரத்[illegible]

பாரம்பரம். இரண்டாவதவஸ்தையை இயம்புவாம்:—ஹே நசிகேதா! அம்மனம் இஃதெனக்குண்டாகுக, இஃதுண்டாகாதொழிக வென்னு மிச்சைவடிவமாம், சர்வத்தோடுகூடியதாம்; அதனனே மிக மதமுற்ற களிறுபோலப் பலாத்காரமா யெப்போதும் பிரமாதஞ்செய்வதிலே முயலும். யானைப்பாகன் அவ்வுன்மத்தயானையை இரும்பின் கூர்மையாய அங்குசத்தால் தனது வசமாக்குவதேபோல, அதிகாரியும் மனமாகிய மா மதயானையை வைராக்கியத்தோடுற்ற நிச்சயான்மக புத்திரூப அங்குசத்தால் தன்வசமாக்குவன். இச்சைவடிவமனத்தை நிச்சயரூப புத்தியின்கண்ணே இலயஞ்செய்கவென்பது கருத்தாம். மூன்றுவது நான்காவ தவஸ்தைகளைக் கூறுவாம்:—ஹே நசிகேதா! அந்நிச்சயரூப வியஷ்டிபுத்தியை அதிகாரி ஹிரண்யகர்ப்பரின் மகதத்துவரூப சமஷ்டிபுத்தியின்கண்ணே இலயம்செய்க. அது, யானிருக்கின்றேன் என்னும் சாமானியஞானரூபமாம்; சாமானியமாய்ச் சர்வ ஜகத்தையும் விஷயஞ்செய்வதாம்; இதனனே விசேஷரூபமாய் ஜகத்தை விடயம் செய்யும் வியஷ்டிபுத்திகட்கு அதுகாரணமாம். அதனை யதிகாரி ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே இலயஞ்செய்க. இப்போது இச்சுருதிப்பொருளையே யுக்திகளால் நிரூபிப்பாம்:—ஹே நசிகேதா! அதிகாரி சுரோத்திராதிகளை மனத்தின்கண்ணே இலயஞ்செய்க, அதனை வியஷ்டிபுத்தியின்கண்ணே இலயஞ்செய்க, அதனைச் சமஷ்டிபுத்தியின்கண்ணே இலயஞ்செய்க, அதனைப் பரமான்மாவின்கண்ணே இலயஞ்செய்க என யோகத்தின் நான்கவத்தைகள் கூறப்பெற்றனவன்று? அவற்றை வெளிப்படுத்தும்பொருட்டு நூலுணர்ந்த நுண்மதியுடையோர் இவ்வகை யுக்திகளைக் கூறுகின்றனர்:—பத்திந்திரியங்களின் சுபாசுப வியாபாரத்தே பிரவிருத்தி, சுகவடைவை யிச்சித்தேயாம். பிரவிருத்தியின் காரணமாய அவ்விச்சையும் அதன்காரணமாய இது இரமணீயமென்னும ஸ்மிருதி ஞானமும் கேவலம் மனோவிலாசமாயே யிருக்குமாதலின் மனத்தினும் வேறன்றும். இதனனே பொறிகட்குளத்தே இலயம் சம்பவிக்கும்; அவ்விரண்டின் வடிவமனத்தினுதயம் நிச்சயான்மக புத்தியினுனன்றி யுண்டாகாதாம்; மற்றேறு, அதனனேயுண்டாம். ஏனெனின், பூர்வம் நிச்சய முண்டாகாதவனுக்குக் கூறிய விரண்டு முண்டாகா; மற்றேறு, பூர்வானுபவரூப நிச்சயமே சமஸ்காரவாயிலாய் அவ்விரண்டின் காரணமாம். இதனனே மனத்திற்கு மதியின்கண்ணே இலயம் சமபவிக்கும். அக்காரணவியஷ்டிபுத்தி தனதுதயத்தே சமஷ்டி சாமானியபுத்தியை யபேக்ஷிக்குமாதலின், அது அதன் காரணமாம். தடாகநீர்க்கு மேகநீர் காரணமாவதேபோல, ஹிரண்யகர்ப்பரின் இச்சைக்குக் காரணமாய அது, நமது வியஷ்டிபுத்தியின் காரணமாம். கனவின்கண்ணே வியஷ்டிபுத்தி ஜடசேதனரூபக் கனவுலகிற்குக்காரணமாவதேபோல, அச்சமஷ்டிபுத்தி இச்சம்பூரண உலகிற்குக் காரணமாம். கருத்திதுவாம்:—நித்திரையின்கண்ணே உறங்குவோன் தன் மதிபலத்தால் ஆகாசாதிகளை யுண்டாக்குவன், ஜராயுஜாதி சரீரங்களை யுண்டாக்குவன், யாவற்றையுமுண்டாக்கிக் கனவு காண்போன்தானே யாவற்றிலுமிருப்பன்; அதுபோல, ஹிரண்யகர்ப்ப[illegible]னும் சமஷ்டிபுத்தியின் பலத்தால் ஜடசேதனரூப ஜகத்தை யுண்டாக்கி [illegible] ஜங்கமரூப சரீரத்தே தாமே இருப்பவராதலின், மடாகாசத்தே [illegible] [illegible] அதுவேயாவதேபோல, வியஷ்டிபுத்தியும் சமஷ்டிபுத்தி ரூப[illegible]

னே அதற்கதன்கண்ணே இலயம் சம்பவிக்கும். அச்சமஷ்டிபுத்திக்கு மாயாவிசிஷ்ட பரமான்மாவே உபாதானகாரணமாமாதலின், அதற்கதன்கண்ணே இலயஞ்சம்பவிக்கும். உலகத்தே உமியோடுகூடிய விரீகியின்கண்ணே பீஜரூபத்தன்மையாம்; கேவல அதன்கண் அது சம்பவியாததேபோல, அவித்தையோடுகூடிய விசிஷ்ட ஆன்மாவின்கண்ணே ஜகத்காரணரூபத்தன்மையாம்; சுத்தான்மாவின்கட்சம்பவியாதாம். யானத்விதீயப் பிரஹ்மரூபமாயிருக்கின்றேன் என்னும் ஆன்மஞானத்தால் அவித்தையழியவே சமஷ்டிபுத்தி கேவலஞ் சுத்தான்மாவினகண்ணே இலயமாமாதலின், ஆண்டான்மாதிகாண முடைமையானே தியானிக்கத் தக்கதாம். இச்சமஷ்டிபுத்திக்கு மாயாவிசிஷ்ட ஈசுவரர் காரணர் என எப்போது மெவன் சிந்திப்பனோ, வியஷ்டியபிமானத்தைப் பரித்தியாகித்துச் சமஷ்டி யபிமானத்தையாவன் தரிப்பனோ, அநேகஜன்ம புண்ணியகருமங்களால் சமபூரண பாவகருமரூபப் பிரதிபந்தகம் யாவனுக்கு நீங்கியதோ, அவ்வுத்தம அதிகாரிக்கே குருசாஸ்திர வுபதேசத்தால் யானத்விதீயப் பிரஹ்மமா யிருககின்றேன் என்னு மான்மஞானமுண்டாம். அது பேததரிசனரூப மலையை இநதிரவசசிரம்போலப் பேதிப்பதாம். யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேன் என்னும பிரஹ்மஞானத்தை அதிகாரி யடைந்தபோது அவித்தை நாசமாம; அக்காரண நாசமாகவே சமஷ்டிபுத்தி நாசமாம்; அக்காரண மொழியவே வியஷ்டி புததியழியும்; அக்காரண நாசமாகவே இச்சைவடிவமனத்தின் பிரவிருத்தியொழியும; ஒழியவே பொறிகளின் பிரவிருத்தியொழியும். சப்தாதிகளிடத்தே சுரோத்திராதிகளின் பிரவிருததியே ஜீவர்கட்கு அநேகவகைத் துக்கத்தையடைவிப்பதாமாதலின், பொறிகளின் பிரவிருத்தி யொழியவே அதிகாரிக்குச் சிறிதுமாததிரையும துக்கபிராபதி யுண்டாகாதாம அதன் பின்னர் அதிகாரி மனவாணிகட் கவிஷய ஆநநதஸ்வரூப ஸ்வயஞ்சோதி அத்விதீய ஆன்மாவை அபேதரூபமாயடைவன்; அதனடைவானே அவனை நூலுணர்ந்தோர் குசலன், அந்தியதேகன், ஆச்சரியன் என அழைப்பர்.

சங்கை :—ஹே பகவன்! இவ்வகையாய யோகரூப உபாயத்தால் சர்வ ஜகத்தையும் இலயஞ்செய்து யோகி முக்தியடைநதபோது அயோகி சம்சாரப்பிராப்தியை எங்ஙனமுறுவன் ?

சமாதானம் :—ஹே நசிகேதா! இம்மாயையின் மகிமை மிகவும் ஆச்சரியரூபமாம்; ஏனெனின், சர்வ ஜகததின் காரணரூப இமமாயை ஒன்றேனும் இவ்வொன்றே ஒரேகாலத்தே பிரஹ்மவேததாப புருஷனிடத்தோ இலயத்தையடையும்; அஞ்ஞானியின்பாலோ அலயததையடையும. கருத்திதுவாம் :—யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேன் என்னும் பிரஹ்மஞான முண்டானவனுக்கோ மாயையின் தரிசனமுண்டாகாதாம்; உண்டாகாதவனுக்கோ மாயையின் தரிசனமாம். இங்ஙனம் ஒரேகாலத்தே ஒரேமாயையின் தரிசன அதரிசனமிரண்டும் சித்தமாம். இவ்விஷயத்தை ஸ்ரீ பதஞ்சலிபகவானுங் கூறியுள்ளார்.

“ [illegible] ”

(பொ-ள்.) ஆன்ம சாக்ஷாத்காரத்தால் கிருதார்த்தனாய அறிஞனுடைய திருஷ்டியால் இம்மாயாரூப அஞ்ஞானம் நஷ்டமாயினும் அஞ்ஞானிகளிடத்தே அஃதிருக்குமாதலின் அவர் திருஷ்டியால் அஃதழியவில்லை.

சங்கை :—ஹே பகவன்! பாதஞ்சலசாஸ்திரத்தே ஆன்மாவின்பேதம் அங்கீகரித்திருத்தலின் அவர் மதத்தே வியவஸ்தை சம்பவிக்குமாயினும், வேதாந்த சித்தாந்தத்தே ஆன்மா ஏக அத்விதீயரூபமாதலின் வியவஸ்தை எங்ஙனஞ் சம்பவிக்கும்?

சமாதானம் :—ஹே நசிகேதா! வேதாந்தமதத்தே ஆன்மா ஏக அத்விதீய ரூபமாயினும் அந்தக்கரணாதிரூப உபாதிபேதத்தால் வியவஸ்தை சம்பவிக்கும்; ஏனெனின், நேத்திரரூப இரண்டு கோளகத்தே சக்ஷு இந்திரியமொன்றேயாயினும், தக்ஷிணகோளகத்தேயிருந்து விழி இனிதுகாண்பதேபோல, வாமகோளகத்தேயிருந்து இனிதுகாணாது. அதுபோல, ஒரே ஆன்மா யோகிதேகத்தேயிருந்து காரியசகிதமாயையைக்காணாது; அயோகிதேகத்தேயிருந்து அதைக்காணும். இவ்வாறு சரீராதி உபாதிபேதத்தால் வியவஸ்தை சம்பவிக்குமாதலின், ஒரேகாலத்தே ஒரேமாயையின் நிவிருத்தி யநிவிருத்தியென்னும் விரோத ஆசங்கையை அதன் துர்க்கட இயற்கையே நீக்கும். இப்போது அதன் வேறு துர்க்கடவியற்கையை நிரூபிப்பாம் :—ஹே நசிகேதா! இவ்வுலகத்தே இது கடம் இது படம் என்பனமுதலிய ஞானங்கட் கந்தக்கரண மாசிரயமாம்; கடபடாதிகள் விடயமாம். இங்ஙனம் ஞானத்தினாசிரயம் விடயம் பரஸ்பரம பேதமாகவேகண்டேம். மாயைக்கோ ஒரே சுயஞ்சோதி அத்விதீய ஆன்மா ஆசிரயமும் விடயமுமாமாதலி னிதுவும் அத்தியந்தந் துர்க்கடமாம். சர்வபேதமற்ற அத்விதீயரூபமாயினும், பிரபஞ்சரூப ஐஶ்வரியத்தை யபேக்ஷித்து மகேஶ்வரபாவத்தை யடையுமாதலி னிதுவும் அத்தியந்தம் துர்க்கடமாம். தனது திதியின்கண்ணே தனதபேக்ஷையாயின் ஆன்மாசிரயதோஷப் பிராப்தியாம். ஈண்டு, மாயாசம்பந்தமற்ற அத்விதீய ஆன்மாவின்கண் மாயையின் திதி மாயையினாலேயாமாதலின் இதுவும அத்தியந்தம் துர்க்கடமாம். இம்மாயை சத்து அசத்து சதசத்துவடிவமன்றாம்; இங்ஙன் அநிர்வசனீயமாயினும் பாவரூபமாய்ப் பிரதீதியாமாதலின் இதுவும் அத்தியந்தம் துர்க்கடமாம். இஃதுண்மையாய் ஜடரூபமாயினும் தூலசூக்ஷ்ம ஜகத்தின் கர்த்தாரூபமாமாதலி னிதுவும் அத்தியந்தம் துர்க்கடமாம். வேதாந்தசாஸ்திரத்தே மாயாவிசிஷ்ட சேதனத்தையே ஜகத்தின் கருத்தாவெனக் கூறியிருக்கின்றதாயினும், அம்மாயையற்ற சுத்தசேதனத்தே ஜகத்கர்ததாத்தன்மையின்றாதலின் எஞ்சியதாய் மாயையின்கண்ணே கர்த்தாத்தன்மை பொருந்தும். ஏனெனின், சாஸ்திரத்தின்கண்ணே இந்நியமம் கூறப்பெற்றுளது :—விசிஷ்டபதார்த்தத்தே அடையும் விதி நிஷேதம் ஒருகால் விசேடியத்தே பொருந்தாதாயின் அது விசேஷணத்தே பிராப்தமாம். இந்நியமத்தால் மாயையின்கண் கர்த்தாத்தன்மை சம்பவிக்கும். மரணத்தின் கண்ணும் துயிலின்கண்ணும் இம்மாயை வெளிப்படையாய்ப் பிரதீதியாகாதாயினும், இனியுண்டாம் சரீரங்கட்குப் பீஜரூபமாயிருக்குமாதலி னிதுவும் அத்தியந்தம் துர்க்கடமாம். அநாதி பாவரூபமாவது நாசத்தையடையாது. மாயையோ அநாதிபாவரூபமாயினும் ஆன்மஞானத்தால் நாசமாமாதலி னிதுவும் அத்தியந்தம் துர்க்கட

மாம். ஞானியை அபேக்ஷித்து காரியசகிதமாயையின் நாசமாயினும் அஞ்ஞானியை அபேக்ஷித்து அதன் நாசமாகாததலி னிதுவும் அத்தியந்தம் துர்க்கடமாம். இம்மாயை எப்பிரமாணத்திற்கும் விஷயமன்றாமாயினும், பந்தமோக்ஷாதி நானாவகை விசித்திரகாரணமாமாதலி னிதுவும் அத்தியந்தம் துர்க்கடமாம். ஹே நசிகேதா! இவை முதலாக அநேகவகைத் துர்க்கடவியற்கை மாயைக்குண்டு, அது பிரசித்தமாமாதலின் அதனை அங்கீகரித்து வேதாந்திகள் சர்வ வாதிகளின் தூஷணத்தை நிவாரணஞ்செய்வர். கோபிகாஸ்திரீகளின் ஆடைகளை அபகரித்த ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்தே காமித்தன்மையும், சாவ ஜகத்தையும் சம்ஹரிக்கும் ருத்திர பகவானிடத்தே குரோதித்தன்மையும, தியானஞ்செய்யும் பக்தர்கட்கு மனவாஞ்சிதபலத்தை அடைவிப்பதாமாதலின் அவ்விரண்டும் தூஷணரூபமன்றாம்; மற்றோ, பூஷணரூபமாம். அதுபோல, அவித்தைவடிவ மாயையின்கண்ணேயிருக்கும் துர்க்கடத்தன்மை தூஷணரூபமாகாது; பூஷணரூபமேயாம். எதன்கண்ணே இயற்கையானே சுகடத்தன்மையாமோ அதிலொருகால் ஓரம்சத்தே துர்க்கடத்தன்மை தோற்றுமாயின் அது வஸ்துவிற்குத் தூஷணரூபமாம். ஒரு மேன்மையாய கவிசெய்த காவியத்தே இயற்கையாயே சுகடத்தன்மையேயாம்; ஆனால் அதில் ஒருகால் ஓரம்சத்தே துர்க்கடத்தன்மை பிரதீதியாகுமாயின் அது காவியத்தின் தூஷணரூபமேயாம். இவ்வவித்தைவடிவ மாயையோ இயல்பானே துர்க்கடரூபமாமாதலின் அத்துர்க்கடத்தன்மை தூஷணரூபமாகாது; பூஷணரூபமேயாம். ஈண்டு, யுக்திப்பிரமாணத்தானே எப்பொருளின் சித்தியாகாதோ அது துர்க்கடத்தன்மையாம்; மாறாயது சுகடத்தன்மையாம். எத்தலத்தே யாவனுக்கடிக்கடி நிராதரமாமோ அத்தலத்தே யொரு காலவனிருப்பனாயின் லோகத்தே சமர்த்தன் எனப்படுவன்; அத்தன்மை யவித்தையி லிருப்பதேபோல வெறெப்பொருளினுமில்லை. ஏனெனின், கடாதிவிஷய உபகிதசேதன ஆவரணத்தை நீக்கும் பிரத்தியக்ஷாதி சர்வப்பிரமாணங்களால் அவித்தை அநேகமுறை நிராதரத்தையடையினும் அசங்க சேதனத்தினின்றும் நீங்காது; மறறோ, இது மீண்டும் ஆண்டே யுறையுமாதலின் அவித்தையின் சாமாத்தியம அறிஞனது திருஷ்டியின்கண்ணே இது முக்காலத்தினுமின்றாம. அத்தகையவிது ஆன்மஞானமொன்றாலன்றி வேறெதனாலும் பயத்தையடையாது; மறறோ, அவ்வொன்றானே பயத்தையடையும். இம்மாயையே சர்வ ஜீவர்கட்கும் ஜன்மமரணாதி துக்கங்களை யடைவிக்குமாதலின் அத்துக்கத்தினின்றும் வைராக்கியத்தை அடைந்தவன் மாயையின் நீக்கோபாயத்தை அவசியஞ்செய்க. அவ்வுபாயமிதுவாம:—ஹிரண்யகர்ப்பாது சமஷ்டிபுத்தி இலயபாவத்தையுற்ற அத்விதீய ஆன்மாவின் சாக்ஷாத்காரமேயாம். ஆகையாலதனை யடையும்பொருட்டு அதிகாரி அவசியம்முயல்க. தாய் தனது குழந்தைக்கிதவுபதேசஞ்செய்வதுபோலச் சுருதிபகவதி அதிகாரிகட்கிவ்வா றிதோபதேசம்செய்வள்:—

ஹே அதிகாரிகளே! இம்மாயை யுண்டாக்கிய விவேகத்தினின்றும் திரும்புகையாய ஜடத்தன்மையைப் பரித்தியாகித்து நீங்கள் ஆன்மவிசாரத்தே சாவதானத்[illegible]யடையுங்கள். அச்சடத்தன்மையானே யுங்கட்கு அத்விதீயப் பிரஹ்மரூப ஆன்[illegible] விஸ்மரணரூப மோகமுண்டாயிருக்கின்றது, நித்திரையோடு கூடியிரும்

பவனுடைய பசு சுவர்ணம் முதலியவற்றைக் கள்வன் கொண்டுசெல்வதுபோல, அவித்தைவடிவ நித்திரையிலிருக்கும் உங்களுடைய தர்மஞானரூபதனத்தைக் காமக்குரோதாதி கள்வர் கொண்டுசெல்வாராதலின், அதனைப் பரித்தியாகித்து நீங்கள் சாவதானமாயிருங்கள். உறங்குபவனுக்கு நானாவகைக் கனவும் அதன் கண்ணே அநேகவகைத் துக்கமும் உண்டாவதேபோல, அவித்யாரூப நித்திரையின்கண் உறங்கும் உங்கட்கு இவ்விபரீதபாவரூபக் கனா உண்டாயது; அன்னியத்தின்கண்ணே அன்னிய மதி விபரீதபாவமாம். அனான்ம தேகாதிகளின்கண் ஆன்மபுத்தி விபரீதபாவமாவதேபோலும், விபரீதக்கனாவில் அகந்தை மமதை என்னு மிருவகை அத்தியாசத்தால் உங்கட்கு அநேகவகைத் துக்கமுண்டாம். முதலில் அகந்தையோடுகூடிய விபரீதபாவத்தை நிரூபிப்பாம்:—ஹே அதிகாரிகளே! இவ்வுலகத்தே பேய்பிடித்த மறையோன் தன்னைச் சூத்திரனென நினைத்தல்போல, உண்மையாய் ஜன்ம மரணாதி விகாரமற்றதாயினும் ஆன்மா அகங்காரப் பேயாற் பீடிக்கப்பெறவே தன்னை, யான் தாயின் கருவிலிருந்தேன், பிறந்தேன், குமாரனானேன், யௌவனனானேன், விருத்தனானேன், தனவானானேன், தனமற்றவனானேன், சுகியானேன். துக்கியானேன், மனைவியுற்றவனானேன், மனைவியற்றவனானேன், மைந்தனுற்றவனானேன், மைந்தனற்றவனானேன் என இவை முதலாக அநேகவகையாய்த் தன்னை எண்ணும். இனி மமதையோடுகூடிய விபரீதபாவத்தை நிரூபிப்பாம்:—ஹே அதிகாரிகளே! அவ்வகந்தை அநேகவகையாயிருப்பதேபோல, அகந்தையின் புத்திரியாய மமதையும் அநேகவகையாம். இவனெனக்குத் துக்கத்தை யடைவிப்பனாதலின் எனது பகைவனாவன்; இவனெனக்குச் சுகத்தை யடைவிப்பனாதலின் எனது சுஹ்ருத் மித்திரனாவன்; இவனெனக் கிரண்டையுஞ் செய்யானாதலின் எனதுதாசீனனாவன்; இவ்வெனது க்ஷேத்திர வஸ்திராதி பதார்த்தங்கள் நெடுநாள்வரையிருக்கும், சிறிது நாளிருக்கும், இக்காமக்குரோத லோப மோகாதி விகாரங்கள் என்பாலிருக்கின்றன, என்பாலில்லை, இவைமுதலாக அமமமதை ஆயிரம்வகையாய் விரியும். இப்போது அகந்தை மமதைகளின் பலத்தை நிரூபிபபாம்:—ஹே அதிகாரிகளே! அவ்விரண்டோடுங் கூடியவன் ஜன்மத்தையடைவன்; பின் மரணத்தையடைவன்; பின் மீண்டும் ஜன்மத்தையடைவன்; இங்ஙனம் அவ்விரண்டையுமுடையவன் சக்கிரம்போலச் சம்சாரத்தே சுழல்வன். இங்ஙன் சர்வ துக்கங்கட்குங் காரணமாய விபரீதபாவரூபக் கனா உங்கட்கு உண்டாயிருக்கின்றது; அக்கனவினின்றும் நீங்கள் நனவையடையுங்கள்; அதனாலுங்கட்குச் சர்வ துக்கநிவிர்த்தியுண்டாம். ஹே அதிகாரிகளே! விபரீதபாவரூப அநேக கனாக்களைக் காண்பிக்கும் இவ்வவித்யாரூப நித்திரை, மாதாவின் உதரத்தின்கண்ணேயிருந்த வாமதேவ இருஷிக்குத் தானே நீங்கியதேபோல, இது ஒருகாலுங்கட்குத் தானே நீங்காதாயின் இந்நித்திரையை நீக்கும்பொருட்டுப் பிரஹ்மவேத்தாவாய குசலரான குருவின்பாற் செல்லுங்கள்; அவர் அவித்தைவடிவ நித்திரையற்றவர்; சர்வ பூதப் பிராணிகளிடத்தே கிருபாதிருஷ்டியையுடையவர்; அத்தகையர்பால் நீங்கள் செல்லுவீராயின் அத்தயாளுவாய மகாத்மாக்கள் உங்கட்கு நானாவகை யுபாயங்களால் ஆன்மோபதேசத்தைச்செய்வர். அவர் உங்களைப் பிரஹ்மவித்யோபதேசத்தின்

அதிகாரியெனக் காணூராயினும் கிருபையினுல் உங்கள் அந்தக்கரணசுத்தியின் பொருட்டுத் தாரணை, தியானம், சமாதிரூப நியமங்களை யுபதேசிப்பர். அவை சமாதிரூப யோகசாதனரூபமாம், யோகாப்பியாசத்தாற் ஜனித்தனவாம். இந்நசி கேதா யமதருமராஜாவை வரரூப பாசத்தாற்கட்டி ஆநந்தவடிவ ஆன்மாவை யறிந்ததேபோல, நீங்களும் ஜடத்தன்மையையும் நித்திரையையும் பரித்தியாகித்து ஆசிரியரை வரரூப பாசத்தால் வயஞ்செய்து ஆநந்தவடிவ ஆன்மாவை நிச்சயஞ் செய்யுங்கள். இப்பாரதகண்டத்தே மனுஷசரீரத்தையடைந்தும் உங்கட்கு ஆன்ம சாக்ஷாத்காரமுண்டாகாதாயின் மகாஹானியுண்டாம்; அதனுல் உங்கட்கு அநேக சரீரப்பிராப்தியாமாதலின், நீங்கள் விரைவாகவே ஆன்ம சாக்ஷாத்காரப் பிராப்தியின்பொருட்டு முயலுங்கள். இவ்வான்மஞானரூபமார்க்கம் அத்தியந்தந் துர்லக்ஷியமும், அத்தியந்தம் விஷமமுமாமாதலின் நீங்கள் பிரமாதத்தைப் பரித்தியாகித்துச்சாவதானமாயிருங்கள். இப்போது, இப்பொருளையே திருஷ்டாந்தத்தால் வெளிப்படையாக்குவாம:—ஹே அதிகாரிகளே! சிங்க வியாக்கிராதிகளோடு கூடி மகா வனத்தேயிருக்கும் மார்க்கம், முட்முளையோடுகூடிய நெருஞ்சிமுள்ளோடுகூடியதாம். அல்லது, முமமுறை சாணையில் தீட்டி அத்தியந்தங் கூர்மையாய நாவிதனது க்ஷுரமெனப பெயரிய சஸ்திரத்தின் அநேகங் கூர்மையாய தாரைகளோடுகூடியதாம் இத்தகைய மார்க்கத்தே அசுவமுதலிய வாகனங்களற்றவன் செல்லமுடியாதவனுவன்; மற்றோ, அவையுடையவனே செல்வன். அது போல, மோக்ஷபுரத்தை யடைவிக்கும் ஆன்மஞானரூபமார்க்கமும் நாளுவகை விக்கினரூப முட்களோடுகூடியதாமாதலின் அத்தியந்தங் கூர்மையாம். அதன் கண்ணே அதிகாரி, குரு பரமேஸ்வர அனுக்கிரகரூப வாகனமின்றிச் செல்லமுடியாதவனுவன்; மற்றோ, அவ்வாகனங்கொண்டே செல்லக்கூடுமாதலின் குருபக்தியற்றவனுக்கு அம்மார்க்கம் அத்தியந்தம் துர்க்கமமாம். ஹே அதிகாரிகளே! அம்மார்க்கத்தே செல்லும் வகையையும் மகாத்மாக்கள் கூறுவர். அவர்கள் பூர்வம் ஞானசிரியர் உபதேசத்தால் ஆன்மஞானரூப மார்க்கத்தை நன்ருக அனுபவித்துளார். அநுபவியாதவர் அம்மார்க்கத்தை யுபதேசிக்கவல்லாரல்லர்; அவருபதேசத்தால் மார்க்கபோதமுமாகாதாம். ஒரு குருடனுபதேசத்தால் மற்றொரு குருடன் எம்மார்க்கத்தையுமறியானுதலின் ஞானசிரியரது கிருபையால அம்மார்க்கத்தை யறிந்த மகான்மாக்களை நீங்கள் சரணடையுங்கள்; அதனுலான்ம சாக்ஷாத்காரப் பிராப்தியாம். ஹே நசிகேதா! இவ்வண்ணம் அச்சுருதிபகவதி தாய்போலச் சர்வ அதிகாரிகட்கும் ஆன்மஞானரூப ஹிதவுபதேசஞ் செய்தனளாதலின் ஆன்மஞானரூப மார்க்கத்தின்கண்ணே செல்லும் பிரகாரத்தை என்னைப்போன்ற ஞானியேகூறுவன். இப்போது அம்மார்க்கத்தே துர்லக்ஷியத் தன்மையைப் போதிப்பிக்கும்பொருட்டு ஆன்மாவின்கண்ணே சம்பூரண திருசியப்பிரபஞ்ச தர்மங்களி னபாவம் நிரூபிக்கப்பெறும்:—ஹே நசிகேதா! இவ்வாநந்த வடிவ ஆன்மாச்சர்வ சரீரத்தும் ஏக அத்விதீயரூபமாயிருக்கும், மனவாணிகட் கவிஷயமாம், [...]சோதிரூபமாம், இத்தகைய ஆன்மஞானரூப மார்க்கத்தைப் பிரஹ்மவேத்தா[...]கூறுவன்; ஆன்மாச் சப்தாதியற்றதாமாதலின் நிர்க்குணமாகிய அதனைத்

சுரோத்திராதிகவரா. கருத்திருவாம் :—விழியே நீலபீதாதிரூபங்களையும், அவையுடைத்திரவியங்களையுங்கவரும் துவக்கிந்திரியமோ, சீதோஷ்ணாதிப்பரிசங்களையும் அவையுடைத்திரவியங்களையுங்கவரும். சுரோத்திரம், இரசனம், கிராணம்என்னும் மூன்றிந்திரியங்களோ, கிரமமாய்ச் சப்தம், இரசம், கந்தம் என்னும் மூன்றுகுணங்களையே கவரும்; அவற்றினாசிரயத்தைக்கவரா. ஆன்மா அவையும், அவற்றினாசிரயமுமன்றுமாதலின் நிர்க்குண வான்மாவை எவ்விந்திரியமும் கிரகணஞ்செய்யாது. பையப் பையப் பதார்த்த நாசமாதல் வியயமாம். அது பரிசகுணமுடைய வாயுமுதலிய சாவயவ பதார்த்தங்கட்கேயாம். ஆன்மாப் பரிசாதிகுண மற்றதும் நிரவயவமுமாமாதலின் அதற்கு நாசரூப வியயம் சம்பவியாதாதலின் சுருதிபகவதி ஆன்மாவை அவ்யய மென்றனள். அவ்யய ஆன்மா நாசமற்றிருத்தலின், அதனை நித்தியமென்றனள். ஆன்மா அநாதியாதலின் நாசமற்றதாம். ஏனெனின், உற்பத்தியையுடைய ஆதியாயினயாவும் நாசரூப அந்தமுடையனவுமாம். கடாதிகள் உற்பத்தியுடையனவாதலின் நாசரூபங்களாதலேபோலும். ஆன்மாவோ, உற்பத்தியற்ற அநாதியாம், ஆகவே நாசமுமடையாதாதலின், சுருதிபகவதி ஆன்மாவை யநந்தமென்றனள். உற்பத்தி நாசமுடைய இரண்ய கருப்பாது மகதத்துவரூப சமஷ்டி புத்தியினும், நானுவகை விக்கிரியையோடுகூடிய அவ்வியாகிருதம் பரம், அதனினும் நிர்விகார ஆன்மாப்பரமும, நாசமற்றதுமாமாதலின் சுருதிபகவதி ஆன்மாவைத் துருவம என்றனள். அம்மகதத்துவபுத்தி உறபத்தி நாசமுடையதேபோல ஆன்மா உற்பதத்தி நாசமுடையதன்றுமாதலின், நித்தியமாம. ஆநந்த ஸ்வரூப நித்திய ஆன்மாவை ஞானசிரியர் வாயிலாய்ச சிரவணித்து, சுருதி யநுகூல யுக்திரூப தர்க்கங்களான் மனனித்து, ஆன்மாவின்கண்ணே நிரந்தர விருத்திகளின் பிரவாகரூப நிதித்தியாசனஞ் செய்பவன்சம்சாரரூப மிருத்தியுவின் முகத்தினின்றும் அவசியம் முக்தனாவன். தேசகாலவஸ்து பரிச்சேதமற்ற இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மாவின் சாக்ஷாத்காரத்தால் அதிகாரி சமசாரரூப மிருத்தியுவின் முகத்தினின்றும் முக்தனாவன். இவ்வாரத்தை யாதொரு ஆசசரியகாரணமுமன்றும்; ஏனெனின், இவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவைப பிரதிபாதனஞ்செய்யும். இக்கடவல்லி உபநிஷத்துருவக்கிரநதத்தைக கூறினமாத்திரையானே கேட்டன்மாத்திரையானே அதிகாரிகட்கு அர்ச்சிராதிமார்க்கவாயிலாய்ப் பிரஹ்மலோகப்பிராப்தியாம். ஹே சிஷ்ய! யமதருமராஜாவானவர் நசிகேதாவிற்கு எவ்விக்கிரந்தத்தின் சிரவணமனன கீர்த்தனத்தால் அநந்த பலப்பிராப்தியைக் கூறினரோ, அப்பொருளில் இவ்விரண்டு சுருதிகளும் பிரமாணங்களாம்.

“ നാചികേതമുപാഖ്യാനം മൃത്യുപ്രോക്തം സനാതനം ।
ഉക്ത്വാ ശ്രുത്വാ ച മേധാവീ ബ്രഹ്മലോകേ മഹീയതേ ॥
യ ഇമം പരമം ഗുഹ്യം ശ്രാവയേദ് ബ്രഹ്മസംസദി ।
പ്രയതഃ ശ്രാദ്ധകാലേ വാ തദാനന്ത്യായ കല്പതേ ” ॥

“ அறத்தினை யுரைத்த வருநசி கேதி னதிசனு தனக்கதை யறைந்தே
மறப்பறக் கேட்டு மதியுள்ன் பிரம மாணுல கடைவன்றா யவனு
யறப்பெ[illegible] குகிய விதனையந் தணர்த மவைக்கணே யறையவ னடைவன்
சிறப்பு[illegible]யனைப் பிதிர்க்கட னமயஞ் செவிபெறி னுழும்பெருஞ் சீரே.

(போ-ள்) யமராஜா கூறிய நசிகேதாவின் சநாதன ஆக்கியானத்தைக் கூறிக் கேட்டுப் புத்திமானானவன் பிரஹ்மலோகத்தையடைவன். புனிதனாய் இப்பரம ரகசிய ஆக்கியானத்தைப் பிராஹ்மணர்களின் சபையின்கண்ணே கேட்பிப்பவ னும் மகாபலத்தையடைவன் இவ்வாக்கியானத்தைச் சிராத்தகாலத்தே சிரவணிப்ப னாயின், அச்சிராத்தம் அநந்தபலத்தைக் கொடுக்கும். கருத்திதுவாம்:—ஆன்மா வைப் பிரதிபாதனஞ்செய்யும் சாஸ்திர சிரவணமாத்திரத்தாலும் கூறினமாத்திரத் தாலும் அதிகாரி பிரஹ்மலோகத்தை யடைவனாயின் அதனைச் சாக்ஷாத்கரித்த லால் சம்சாரரூப மிருத்தியுவின் முகத்தினின்றும் முக்தனாவன் என்பதன்கண் ணே யாதாச்சரியமாம். ஹே குழந்தாய்! ஓங்காரரூபப் பிரதீகத்தையுடையதும் பிரணவ ஆலம்பனத்தையுடையதும் ஆகியபிரஹ்மத்தைச் சுருக்கமாயுபதேசித்து மீண்டுமதனை விஸ்தாரமா யுபதேசிக்கவேண்டித் தருமராஜா நசிகேதாவை நோக்கி இவ்வாறு கூறினர்:—ஹே நசிகேதா! யான் பூர்வமுனக்குச் சுருக்கமாய்க் கூறிய ஆநந்தஸ்வரூப ஆன்மாச் சுரோத்திராதி இந்திரியங்களாற் கவரப்பெறாது; ஏனெனின், இச்சகத்தின் சுதந்திர கருத்தாப் பரமேசுவரர் அவர் சுரோத்திரா திகளை அந்தர ஆன்மாவினின்றும் பகிர்முகமாகவே சிருஷ்டித்தாராதலின், அவர் அவற்றை இம்சித்தாரென அறிஞராய நமக்குத் தோற்றும்; ஏனெனின், இவ்வுல கத்தே வல்லரசனொருவன் தன் மந்திரிக்குத் தன் சமீப அதிகாரத்தைநீக்கி வேறு தூரதேயத்தே அதிகாரங்கொடுப்பின் அவனை இம்சித்ததேயாகும்; அதுபோலப்பர மான்மாவும்சுரோத்திராதிகட்கு அந்தரான்மவடிவவிடயங்கொடுக்கவில்லை; மற்றோ, அவற்றை விமுகப்படுத்திப்பாகிய சப்தாதிகளையே கருதுமாறுசெய்வித்ததாதலின் அவை இம்சையடைந்தனவேயாம தூரதேசத்திருப்பவனும் சத்துருசமீபமடை ந்தவனும ஆய மந்திரியை இராஜ விரோதியாய சத்துரு சித்திரப்படுத்தி வதைப் பதேபோல ஆநந்தஸ்வரூப ஆன்மாவைப் பரித்தியாகித்துப் பாகியவிடய தேயத் தேயுற்ற சுரோத்திராதிகளை அத்விதீய ஆன்மவிரோதியாய காமக்குரோதாதிகள் கொல்லும மந்திரியானவன் அத்தேயத்தேயுறும் பொருள்களைக் காண்பனாயினும் மகாராஜாவைக் காணல் அத்தியந்தம் துர்லபமாவதேபோல அந்தரான்மாவைப் பரி த்தியாகித்துப் பாகியதேயத்தையுற்ற அச்சுரோத்திராதிகள் சப்தாதிவிடயங்களைக் காணுமாயினும் அந்தரான்மாவைக் காணல் அத்தியந்தம் துர்லபமாம்.

சங்கை:—ஹே பகவன்! பரமேசுவரர் சுரோத்திராதிகளைப் பகிர்முகமேயா க்கினராதலின், அவை அந்தரான்மாவைக் காணாவாயினும் மனத்தின்கதி யாதாம்?

சமாதானம்:—ஹே நசிகேதா! மனம், சகாமம், நிட்காமம் என இருவகைத் தாம். சகாமமனமோ சுரோத்திராதிகளின் அதீனமேயாமாதலின் அவற்றைப் போன்றே அந்தரான்மாவை யறியமாட்டாது. நிட்காமமனமோ அவற்றைத் தடைப்படுத்தலால் ஆன்மசாக்ஷாத்கார ஹேதுவாம். இதனையே வெளிப்படுத்து வாம்:—ஹே நசிகேதா! அவ்வ பாகிய சப்தாதிகளிடத்தே செல்லுங்கால் சகாம மனமும் பின்னரே செல்லும். அவை உண்ணிரோதப்படின், நிட்காமமனம் பாகி யத்தே செல்லாது. ஆனால், அவற்றின் உண்ணிரோதம் தேகாபிமானியால் வரி

கூறவும்படாதாம்; வாயினாற்கூறவும் முடியாதபோது செய்வது முடியாதே [illegible]தன்கண்ணே யாது கூறவேண்டியுளது? ஆயிரம் [illegible]ருள் ஒருவனே தே [illegible]மற்றவனுய்ச் சமதமாதி சாதன சம்பன்னனுய்ச் சுரோத்திராதிகளை அந் [illegible] நிரோதப்படுத்துவன். அவை தேகத்துள்ளுறையின் பொறிவாயிலின்றாகவே [illegible] உள்ளேயிருக்கும். ஒரு நவத்துவார வீட்டின்கண்ணே வானரத்தைக் [illegible] ஒன்பது வாயில்களையும் மூடிவிடின் அது வீட்டினின்றும் வெளியேவா ஆற் [illegible]றதாய் வீட்டின்கண்ணே சானுவகைச் சேஷ்டையைசசெய்து பரிசிரமத்தை [illegible]யின், அங்கேதானே சுகமாயிருக்கும். அதுபோலச் சுரோத்திராதிகளின் நிரோதவாயிலாய் மனத்தை யுண்ணிரோதப்படுதலின் அந்நிட்காமமனம் சிரவணு [illegible]சாதனங்களோடு கூடியதாய் அந்தரான்மாவின் சாக்ஷாத்காரத்தை யுண்டாக்கு மாதலின், முமுக்ஷுக்கள் அவற்றின் நிரோதவாயிலாய் மனத்தை அவசியம் நிரோதஞ்செய்க. இகலோகத்தும பரலோகததுமிருக்கும் சபதாதிவிடயங்களைச் சுரோத்திராதிகளாற் கவரும் விசாரஹீனன் ஆகநேதாறும் என்வயத்தையுடை வன், யான் ஆதி, வியாதி, சத்துரு முதலிய ரூபனுயிருக்கின்றேன். வலையாற் கட் [illegible] மீனம் மிருத்தியுவை யடைவதேபோல, இந்திரிய அதீனமாய அவிவேகி அடிக்கடி மிருத்தியுவையடைவன். இத்துணையும் அவிவேகியைப்பற்றிக்கூறினேம், இனி விவேகியைப்பற்றிக் கூறுவாம:—ஹே நசிகேதா! பிரஹ்மாமுகற் றம்பபரி யந்தம் உள்ள ஸ்தாவர ஜங்கமப் பிராணி யாவும் மிருத்தியுவயத்தையடையும். இவ்வியவஸ்தையைக்கண்டு விவேகி கருமோபாசனைப்பலத்தை அநித்தியமாகவேயறி வன், ஆன்மஞானத்தின் மோக்ஷரூபபலத்தை நித்தியமாயறிவன். இவ்வாறு பிர ஹ்மலோகபரியந்தமுள்ள கருமபலத்தை அநித்தியமெனவுணர்நது விவேகி கரும த்தின் சுவர்க்காதிரூபபலத்தை இச்சியான். நீ அதை இச்சியாததேபோல விவேகியும் இச்சியாமல் உன்னைப்போல மோக்ஷரூப நிததியபலத்தையே இச சிப்பன், விவேகி எவ்வான்ம ஞானத்தான் மோக்ஷத்தை யுடைவனே, அவ் வான்மா, நேத்திராதிகளின் வாக்காதிகளின் தரிசனுதி வியாபாரங்களையறியும் [illegible]யசகித அந்தக்கரணத்தை இச்சீவன் எச்சுயஞ்சோதிச சாக்ஷியா லனுபவிபப னே அவ்வுருவதாம். நீ முன்னர்க் கேட்ட தருமாதருமமற்ற ஆன்மாவின் வடிவம் [illegible]யஞ்சோதிரூப சாக்ஷியினின்றும் வேறன்றாம். இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பம் தண்டம், ஜலதாரைமுதலியவை கற்பிதமாவனபோல,முக்காலமுப், அதில் நிகழும் தூலசூக்ஷும வஸ்துக்களும் புகன்ற ஆன்மாவின்கண்ணே கற்பிதமாமாதலின், [illegible]யஞ்சோதியாய சாக்ஷி ஆன்மாவினும் பின்னசத்தையையுடைய பதார்த்தம் யா தொன்றுமின்றாமாதலின் ஆன்மா அத்விதீயரூபமாம். புருடன் எச்சுயஞ்சோதி ரூப சாக்ஷியால் நனுக் கனுத் துயில் மூன்றையுங் காண்பனே, அதனையே நீ நின் னுண்மரூபமாயறிதி. முன்னர்யான் நினக்கு எம்மகா ஆன்மாவையாண்டும் நிறைந்த வடிவத்தானே கூறினேனே அதுவும் இச்சுயஞ்சோதிரூப சாக்ஷியினும் பின்ன மன்றாம்; மற்றே, அது இவ்வடிவமேயாம். அவ்வான்மாவின் அத்விதீயரூப மக த்துவத்தையறிந்த அறிஞன் சர்த்திருத்துவ போக்திருத்துவாதிரூப சர்வ சோ [illegible]யுங் கடப்பன். இச்ஜீவரூப ஆன்மாப் புத்திமுதலியவற்றின் சாக்ஷிரூபத் [illegible] சர்வ ஜீவர்கட்கும் அந்நியத்தஞ் சமீபமாம். [illegible]

ணியபர்வங்களின் சுகதுக்கரூப பலத்திற்கும் இவ்வான்மாவே போக்தாவாம். சர்வ பேதமற்ற இவ்வத்விதீய ஆன்மாவைச் சர்வ ஜகத்தின் அதிபதியென உணர்ந்தவன் எவ்வவ்யத்தையும் எங்நிந்தையையும் செய்யான். இத்துணையால் துவம்பதார்த்தரூப ஜீவசோதனப்பிரகாரம் நிரூபிக்கப்பெற்றது :—இப்போது தற்பதார்த்தரூப ஈசுவர சோதனப்பிரகாரத்தை நிரூபிப்பாம் :—ஹே நசிகேதா ! எப்பரமான்மாவினின்றும் ஹிரண்யகருப்பருண்டாயினரோ அவர், பிரஹ்மாண்டத்தை ஆரம்பிக்கும் ஆகாசாதி ஸ்தூலபூதங்களினும் முன்னருண்டாயினர். பூர்வ ஜன்மத்தே அநுஷ்டானம்புரிந்த கிருச்சிர சாந்திராயணாதி கரும தவபலத்தானும், ஞானவர்க்க உபாசனைத்தவபலத்தானும் எவ்விரண்யகருப்பர் உண்டாகின்றனரோ அவ்வரையும் எபபரமான்மா உண்டாக்குமோ எபபரமான்மாச் சர்வ சரீரத்தும் உள்ள சர்வ புத்திரூபக குகைகளின்கண்ணே பிரவேசித்து அவற்றைச் சாக்ஷிரூபமாயிருந்து கொண்டுளதோ, எப்பரமான்மா ஆகாசம்போலயாண்டும் வியாபகமாமோ, அதனை நீ அத்விதீயப பிரஹ்மரூபமாயறிதி. பிராணஸ்வரூப ஹிரண்யகர்ப்ப தேவதை பூர்வகற்பக் கருமோபாசனைவடிவ தபோமகிமையால் தூல விராட்டினும் முன்னர் உண்டாம். அது இத்தூலப பிரபஞ்சரூப அன்னத்தை போஜனஞ்செய்யுமாதலின், சுருதிபகவதி ஹிரண்யகருப்ப தேவதையை அதிதி எனக் கூறினள். சம்பூர்ண இந்திராதி தேவதைகள் ஹிரண்யகருப்பரின் விபூதிகளாமாதலின், அவர்சர்வதேவமயராவர். அவர் சம்பூரண வியஷ்டி பூதப்பிராணிகளிடத்தே தாதாத்மியசம்பந்தத்தரிருப்பராதலின் அவர் சர்வபூதமயர். அத்தகையரும் எப்பரமான்மாவின் தியானஞ்செய்யத்தக்க வடிவினரோ, அதையே நீ அத்விதீயப் பிரஹ்மவடிவமென அறிதி. அதிதியெனப்பெயரிய ஹிரண்யகருப்பரினின்றுமுண்டாய விராட்பகவான் யாவரோ, அவரைச் சாஸ்திரத்தின்கண்ணே அக்கினிரூபமாய் வருணனை செய்யப்பட்டுளது, இதனுடனே கீழுள்ள காஷ்டமாகிய அதர அரணியினின்றும் மேலுற்ற காஷ்டமாகிய உத்தர அரணியினின்றும் அவர் யாகத்தின்கண்ணே பிராதுர்ப்பாவத்தை (கிளம்புகையை) யடைவர். கர்பபிணி சிநேகத்தோடும் கருவைத் தரித்தலேபோல் யாகத்தைச்செய்பவன் இவ்வக்கினிவடிவ விராட்டைச் சிரத்தையோடும் இரண்டரணிகளால் தாரணஞ்செய்வன். நித்திரையற்ற யோகியும் அவ்விராட்டைத் தன்னுள் தரிப்பன். அதுவே சர்வ பூதத்துமிருக்கும். சுவர்க்க இச்சையுடையவரும் மோக்ஷ இச்சையுடையவரும் ஆகிய தேவ மனுடர்களால் அதுவே துதிக்கத்தக்கதாம். அதிதியெனப்பெயரிய ஹிரண்யகருப்பர் பரமான்மவடிவமாய்த் தியானிக்கத் தக்கவராவதேபோல இவ்வக்கினிரூப விராட்டும் பரமான்மவடிவமாய்த் தியானிக்கத் தக்கதேயாம.

சங்கை :—ஹே பகவன் ! ஹிரண்யகருப்ப ரூபத்தானும், விராட்வடிவத்தானும், பரமான்மாவினுபதேசத்தைத் தாங்களேன் செய்கின்றீர்கள். சாக்ஷாத் தானே பரமான்மவடிவ உபதேசத்தைத் தாங்கள் செய்யுங்கள்.

சமாதானம் :—ஹே நசிகேதா ! பரமான்மாவின் வாஸ்தவசுத்தவடிவம், மனவாணிகட்கு அவிஷயமாம், அத்தியாத்ம அதிதைவ அதிபூதமுதலிய சர்வ பேதமற்ற

நாதலின் அதன் உண்மைவடிவத்தைச் சாக்ஷாத்தாகக்கூற யான்சமர்த்தனல்லன்; ஏனெனின், ஜாதிகுணக்கிரியையுடைய பதார்த்தத்தையே சப்தம் நேரே கூறும். குடமென்னுஞ் சத்தம் குடத்தன்மைச் சாதியையுடைய குடத்தைக்கூறும். நீலக் குடமென்னுஞ்சத்தம் நீலக்குணமுடைய குடத்தைக்கூறும். பாசகன் என்னுஞ் சப்தம் பாகரூபக்கிரியை யுடையவனை யுணர்த்தும். இவ்வாறு சம்பூரண சப்தங்களும் ஜாதி குணக்கிரியா நிமித்தத்தையங்கீகரித்தே தத்தமர்த்தத்தைநேரேகூறும். நிர்க்குண பரமான்மாவோ ஜாதிமுதலிய தருமங்களற்றதாமாதலின் எச்சப்தமும் நேரே கூறாது. ஆகையால், ஹிரணியகருப்பர் விராட்முதலிய சவிசேஷ ரூபங்களால் அந்நிர்க்குணப் பரமான்மாவின் வாஸ்தவவடிவத்தை நீ யறிதி; எவ்வதிதை வஸ்வரூபப் பிராணனினின்றும் இச்சூரிய சந்திராதியொளிகள் உதயமாமோ, எப்பிராணனிடத்தே சூரியாதி தேஜசுகள் அஸ்தபாவததையடையுமோ. தேர்ச் சக்கர நாபியின்கண்ணே அரா இருப்பதேபோல வாக்குமுதலிய இந்திரியங்களும் அக்கினிமுதலிய தேவதைகளும் எப்பிராணனிடத்தே எப்போதுமிருக்குமோ, 'ப்ராணாத்வா ஏஷ உதேதி ப்ராணே அஸ்தமேதி ப்ராணேஸ்வி தம்' பிராணனினின்றே இச்சூரியாதி தேயுக்கள் உதயமாம. அதன்கண்ணே அவை யஸ்தபாவத்தையடையும், அதன்கண்ணே சம்பூரண அக்கினிமுதலிய தேவதைகளிருக்கும்.' எப்பிராணனைத் தனது பலத்தா லுல்லங்கனஞ்செய்ய எவனும் வல்லானல்லனோ; அத்தகைய பிராணனும் எப்பரமான்மாவைத் தியானிக்கத்தகுதியாய வடிவதாமோ அப்பரமான்மாவை நீ பிரஹ்மரூபமாயறிதி. இத்துணையால தற்பதார்த்த ஈசுவர சோதனம் நிரூபிக்கப்பெற்றது. இப்போது சோதிக்கப்பெற்ற தத்துவம் பதார்த்தங்கட்கு அபேதத்தை நிரூபிப்பாம்:—ஹே நசிகேதா! நின்தேகத்தும், என்தேகத்தும், மற்றையர்தேகத்தும், எசைதன்யம் சர்வபுத்தி விருத்திகளின் சாக்ஷிரூபமாயிருக்குமோ, அதுவே பரோக்ஷ ஈசுரசரீரத்தும் ஹிரண்ய கருப்பாதிதேகத்தும், விராட்டாகத்தும், சாக்ஷிரூபமாயிருக்கும். எச்சைதன்யம் ஈசுவராதிதேகத்தே இருக்குமோ அதுவே நமமனோரது ஜீவசரீரத்தேயிருக்கும். அகண்ட ஆகாசத்தே சிறிதுமாத்திரையும் பேதமின்றுவதேபோல அகண்டசைதன்யத்தே சிறிதுமாத்திரையும் பேதமின்றாம். பேதமற்ற ஆகாசம கடமடாதியுபாதிபேதத்தால் பேதத்தையடைவதேபோலச் சைதன்யமும் அவ்வியாகிருத சூக்ஷ்ம தூலமுதலிய உபாதிபேதத்தானே ஈசுவராதி பேதத்தையடையும். உண்மையாய் முக்காலத்தும் அசத்தியமாயினும் கந்தர்வநகரம், ஆகாசபேதத்தைச செய்வதேபோல உண்மையாய் முக்காலத்தும் அசத்தியமாயினும இச்சடசகத்து, சைதன்ய ஆன்மாவின் பேதத்தைச்செய்யும்; ஆனால் அதன்பேதம் அஞ்ஞானிகளின் திருஷ்டியின்கண்ணேயாம். அறிஞர்கள் திருஷ்டியிலோ அத்விதீயப் பிரஹ்மத்தின்கண்ணே கற்பித நானாத்தன்மையுமின்றாம். அத்விதீயப் பிரஹ்மத்தே அஃதுமில்லாதபோது சத்திய நானாத்தன்மை யாங்ஙனமாம்? அதன்பால்யாவன் கற்பித நானாத்தன்மையேனும் காண்பனோ அப்பேததரிசி அடிக்கடி ஜனனமரணத்தையடைவன். மந்தமதியினன் பாவகருமத்தான் மோகிதனாய் அத்விதீயப் பிரஹ்மத்தே வாஸ்தவ பேதத்தைக் காண்பன், பேததரிசியோ அநேகமுறை நரகத்தையேயடைவன். 'ம்ருத்யோ: ஸ ம்ருத்யுமாப்னோதி ய இஹ நானேவ பஶ்யதி' யாவன் அத்விதீயப்

பிரஹ்மத்தே நானாத்தன்மையைப்போற் காண்கின்றனனே அபேததரிசி அடிக்கடி மிருத்தியுவை அடைவனாதலின் முமுக்ஷுக்கள் அந்தப பிரஹ்மத்தைச் சர்வ பேதமற்ற ஏக அத்விதீய ரூபமாயறிக. அதன் தரிசனத்தே பகிர்முகச் சுரோத்திராதிகள் காரணமாகாவாதலின் அதிகாரி நிட்காமசுத்த மனத்தானே ஆன்மவடிவப் பிரஹ்மத்தை நிச்சயஞ்செய்க. அகண்ட ஆகாசதத்தே இயலபாய் நானாத்தன்மையின்றாவதேபோல அகண்டப் பிரஹ்மத்தின் கண்ணும் இயல்பாய் நானாத்தன்மையின்றாம; மற்றோ கடமடரூப உபாதிபேதத்தானே ஆகாசபேதமாவதேபோல தேகாதியுபாதிபேதத்தானே ஆன்மாவின்பேதம கூறலாம. இவ்வுலகத்தே உபாதியாலாயபேதமெலலாம் உபாதியையுடைய உபகிதபதார்த்தத்தைத் தீண்டமாட்டா; மற்றோ அவ்வுபாதிகளின்கண்ணே அபபேதமிருக்கும். கடமடரூப உபாதியாலாக்கிய ஆகாசபேதம் அதனைத் தீண்டாது உபாதிகளின்கண்ணே இருக்கும் அதுபோலத் தேகாதிரூப உபாதியாலாககிய ஆன்மாவின் பேதமும அதவிதீய ஆன்மாவைத் தீண்டாது; உபாதியின் கண்ணேயிருககும. அல்லது அத்விதீயப் பிரஹ்மத்தினும் வேறாயுள்ள தேகாதி பதார்த்தங்கள் பிரஹ்மத்தினும் பின்னமாய நரசிருங்கமபோல அசத்தியமேயாம. அதனால் அதவிதீயப பிரஹ்மபேதஞ் சம்பவியாது. அதன்கண்ணே பேததரிசனததால அடிககடி மிருத்தியுவின் பிராபதியை முன்னர்க் கூறினோனாதலின் அதிகாரி வேதாநத சமஸ்காரததோடுகூடிய தூய மனத்தால் ஆன்மரூபப பிரஹ்மததை அதவிதீய ரூபமாயே காண்க. அது ஜீவரூபமாய் மனுடரின் இருதயதேயததேயிருக்கும். இவ்விருதயம் அங்குஷ்டமாத்திர பரிமாண முடையகாம. இதிலிருக்கும் பரமான்மாவும், அங்குஷ்டமாத்திரமெனபபடும். அதனைப பூதபவிஷ்யத் பதார்த்தங்களின் ஈசானரூபமாயறிபவன் சம்சயாதிகளையடையான். இவ்வங்குஷ்டமாத்திர புருடன் சர்வ ஜகத்தின் ஈசானன், சுயஞ்சோதிரூபன், முக்காலததும விபரீதபாவததை யடையாதவன்; மற்றோ ஏகரசன. நெகிழ்சசிவடிவததானும நேயவடிவததானும நீரின்பேதமாகாதாம்; மறறோபாண்டுமேகரூபமேயாம். அதுபோல அஸ்திபாதிபபிரிய வடிவத்தால் ஆன்மாவின் பேதமாகாதாம்; மறறோயாண்டுமேகரூபமேயாம். உயர்ந்த பர்வதத்தே மேகத்தினின்றும் விழாநின்ற நீரானது மலையினின்றுங் கீழ்த்தேயத்தே விசீர்ணபாவத்தை யடைவதேபோலப பேதரூபமாய்க் காணப்பெற்ற இவ்வான்மாவும், நானுவகையாய்க் கீழ் யோனிகளை அடையும். அம்மேகநீர் முதலில மலைச்சிகரத்தேயுறும், பின்னா அது மலையிடையை யடையும, பின்னர்க் கீழ்ப் பூமியையடையும, அதனினும் மேலாக அந்நீர் யாண்டுஞ் செல்லாதாம்; மற்றோ, அது ஆண்டே தாபிதமாமாதலின் அப்பூமி நீரின் விசிராமஸ்தானமாம். அதுபோல, இஜ்ஜீவான்மாரூபநீரும் பேததரிசனரூப உயர்நத மலையினின்றும் கீழேவிழுந்து அறம்பாவ வயத்தால் நானுவகை யோனிகளிற் சுழலும், பின்னர் மகா பூர்வபுண்ணியயோகத்தால் ஆனமஞானரூபக் கீழ்ப்பூமியை அடையுமபோது பிரஹ்மாநந்தரூபு விசிராமத்தையடையும். இயல்பானே தூய ஜலமானது பர்வதாதி தூயவிடத்தே அடையும்போது சுத்தமாயேயிருக்கும். அது சிவப்பு, மஞ்சள், பூமியிலடையும்போது பூமியின் சம்பந்தத்தால் இரக்தபீதாதி நானுவர்ணங்

ஜனை அடைவதேபோல உண்மையாய்த் தூயதாய ஆன்மாவும், இராகத்துவேஷ மற்ற தூய மனத்தே இதமாய்த் தூய பாவத்தையேயடையும். அவைபுற்ற தூய் இன் மனத்தே இதமாய் அதுவும் தூய்தற்றதேயாம். இயல்பானே வெண்ணிறமுடைய நீர் சிவப்பு முதலியவற்றின் சம்பந்தத்தால் இரக்தாதி வர்ணமுடையதாய்ப் பிரதீதியாயினும், நீரினியற்கையாய வெண்ணிற ஹானி யுண்டாகாததேபோல ஆன்மாவும் அந்தக்கரணாதிகளின் சம்பந்தத்தால் கர்த்திருத்துவ, போக்திருத்துவரூப மலமுடையதாய்ப் பிரதீதியாயினும் ஆன்மாவின் வாஸ்தவ தூயஸ்வரூப ஹானியுண்டாகாதாம். இயல்பாயே சீதளமாயநீர் அனலின் சம்பந்தத்தால் உஷ்ணபாவத்தை அடைவதேபோல இயல்பாயே சுகரூப இவ்வான்மாவும் தேகாதிகளின் சம்பந்தத்தால் துக்கத்தை யடையுமாதலின் சரீரமிருப்பின் ஜீவனுக்குத் துக்கமுண்டாம், அஃதிலதாகவே அஃதுமின்றாம் என்னும் அன்வய வியதிரேகத்தானே காரண சரீரசகித தூலசூக்ஷ்ம சரீரத்தின்கண்ணே துக்ககாரணத்தன்மை சித்தமாமெனத் துணியப்பெறும். தூலாதி மூசசரீரத்துள்ளும் அஞ்ஞானரூப காரணசரீரம் ஜீவர்களின சாக்ஷாத் துக்ககாரணமன்றாம். அஃதங்ஙனமாயின் துயிலின்கண்ணும் துக்கமடைவாதல்வேண்டும். ஆனால், ஆண்டுத் துயரின்றாமாதலின், பீஜம் அங்குராதிவாயிலாய்ப் பல காரணமாவதேபோல அஞ்ஞானரூப காரணசரீரமும் சூக்ஷ்ம ஸ்தூலசரீரவாயிலாயே துக்ககாரணமாம். அவற்றினுள்ளும் சூக்குமசரீரம் சாக்ஷாத் அஞ்ஞானரூப மாயையின் காரியமாமாதலின் காரணநாசமின்றிச் சூக்ஷ்மசரீரம் நாசத்தையடையாது அதுவே ஜீவர்களின் தூல சம்சாரரூபப் படத்தின் காரணமாமாதலின், சூக்ஷ்மசரீரம் சாஸ்திரத்தே சூத்திரமெனப்பட்டது. அது தூலசரீரக் கவர்ச்சியன்றி போகப்பிராப்தியைச் செய்யாது; மற்றோ, கவர்நதேயாகும். ஆகையால், தூலதேகத்தே குருசாஸ்திர உபதேசத்தால் ஆன்மாப் பிரத்தியக்ஷமாமாதலின் யான் நினக்குத் தூலசரீரத்தைக் கூறுகின்றேன் கேட்டி. சூக்ஷ்மசரீரரூப புருடன், துவக்காதி ஏழு தாது, பக்ஷணஞ்செய்யும் அன்னபானாதி நாலு இரசங்கள் என்னும் இவற்றால தினந்தோறும் பூரணமாமாதலின், சுருதிபகவதி தூலவாகத்தைப் புரம் என்றனள் அல்லது, உலகப் பிரசித்தபுரம் அரசர் முதலியவரோடு கூடியதாவதேபோல இத்தூலமும் பூரண பரமான்மாவோடு கூடியதாமாதலின், தூலசரீரம் புரமெனப்படும். இப்போது, இத்தூலசரீரரூப புரத்தே லோகப்பிரசித்தபுர சமானத்தன்மை நிரூபிக்கப்பெறும்:—ஹே நசிகேதா! பிரசித்தபுரம் அநேக வாயிலுடையதாம்; அரசன் அப்புரசுவாமியாவன். அதுபோல, இத்தூலதேகபுரமும் பதினொரு வாயிலுடையதாம். ஆண்டு, இரு விழிகள், இரு நாசிகைகள், இரு செவிகள், ஒரு வாய் என்னுமேழும் சரீரபுர மேல் வாயில்களாம். பாயு, உபஸ்தம் இரண்டும் கீழ் வாயில்களாம். உதரத்தேயிருக்கும் நாபிச்சித்திரம் பத்தாவது வாயிலாம். மத்தகத்தின் மூன்று கபாலங்களின் சந்தியிலிருக்கும் சித்திரம் பதினோராவது வாயிலாம். அதன்கண்ணே சுழும்னை நாடிவடிவ சரஸ்வதியடைவள். அவள் அயோகியாற் குறிக்கொணாதவள்; மற்றோ, யோகியே அவ்வளையறிவன். அவளால் இத்தேகத்தினின்றும் வெளிக்கிளம்பிய யோகி பிரஹ்மலோகத்தின் தேவயான மார்க்கத்தையடைவன். இச்சரீரரூபபுரத்தே பரமான்மாவாய இந்திரர்க்கு

முதலிய இந்திரியரூப அக்கினிமுதலிய தேவதைரூபப் பிரஜையோடு நிவாசஞ்செய்வர். அவர் உண்மையாய் ஜன்மமரணாதி விகாரமற்றவர், ஸ்வயஞ்சோதிவடிவர் பகிர்முகஜட மனமற்றவர், வாக்காதி இந்திரியங்களற்றவர். அவருண்மையாய்ப் புண்ணியபாவமற்றவராயினும் கற்பித அவற்றின் சம்பந்தத்தால் இச்சரீரபுரத்தை யடைவர். துக்கமயமாய இதனையடைந்தும அவ்வானந்தஸ்வரூப ஆன்மா உண்மையாய்ச் சோகத்தையடையார்; ஏனெனின், கண்டுண்டாம சோகமியாவும் துக்கரூப காரணத்தானேயாம். அது அநிஷ்டபதார்த்த சங்கத்தாலாமாதலின், துக்கமுண்டாக்குமவாயிலாய் அசசங்கமே சோககாரணமாம. ஆனல், இவ்வான்மாச் சர்வ சங்கமற்றதாமாதலின், இதை அசசோகமெவ்வாறடையும; மற்றேர், அடையாதாம். முன்னர் நீ கேட்ட தர்மாதாமமற்ற ஆன்மாவும் இச்சாவ சோகமற்ற சுயஞ்சோதியான்மாவேயாம் இதன்கண்ணே நீ சிறிதுமாததிரையும் ஐயப்பட வேண்டாம். அதிகாரி நித்திய முக்த ஆன்மவடிவததால நித்தியமே முக்தரூபனுயினும் சுயஞ்சோதி ஆன்மசாக்ஷாதகாரததால் கற்பித அஞ்ஞானரூப பந்த பரித்தியாகத்தால் நின்போன்ற அதிகாரி மீண்டும முக்தியையடைவன். ஒரு பாக்கியவானனவன் பூர்வம சுகத்தையடையினும் மீண்டும் சுகத்தையடைவதேபோல இவ்வான்மாய பூர்வம் முக்தியடைந்திருப்பினும மீண்டும முக்தியையடையும். ஆன்மாவின்கண்ணே பந்தத்தை அங்கீகரிக்கும வாதியாலிது கேட்கவேண்டும்; ஆன்மாவின்கண்ணே இரஜ்ஜு முதலியவற்றால கட்டும பந்தமா? அல்லது, சங்கரூப பந்தமா? முதலதேற் சம்பவியாது; ஏனெனின், இவ்வுலகத்தே இரஜ்ஜு முதலியவற்றாற் பந்தப்படும பதார்த்தங்களில மூர்த்தத்தன்மையையே கண்டோம். கடாதிகளிடத்தே இரஜ்ஜு முதலியவற்றா பந்தமாமாதலின் அவற்றில் மூர்த்தத்தன்மையுமாம; மூர்த்தத்தன்மையின்றிய தன்கண்ணே அவ்வாறு கட்டுமாகாதாம். ஆகாசததேத அம்மூர்த்திலலையாதலின், அதனற கட்டுமின்றும. மூர்த்தத்தன்மையின்மை யான்மாவின்கண் ணுமாமாதலின் அக்கட்டும் சம்பவியாது. இரண்டாவதுஞ் சம்பவியாது; ஏனெனின், வாதி கற்பித்த சையோகசமவாய சம்பந்தரூப பந்தன கற்பனையும் கற்பிதமேயாமாதலின் அவை அசத்தியமாம். இப்போது அவற்றின்கண்ணே கற்பிதரூபததன்மையை வெளிப்படையாக்கும்பொருட்டு முதலில் அவற்றின்கண்ணே பிரமாணகண்டனஞ்செய்வாம்:—அவற்றை யங்கீகரிப்பவன்பாலிது கேட்கவேண்டும. அவற்றில காட்சியளவையா? கருதலளவையா? உரையளவையா? இவற்றினும வேறளவையா? முதலது சம்பவியாது; ஏனெனின், அவன் மதத்தே தண்டமுடைய புருடனென்னுமிடத்தே தண்டத்திற்குப் புருடனேடு சையோகசமபந்தமாம. ரூபமுடைய கடம் என்னுமிடத்தே ரூபகுணததிற்குக கடததோடு சமவாய சமபநதமாம். சையோகத்திற்குத் தண்டமே பிரதியோகியாம, புருடன் அனுயோகியாம். இவ்வாறு சமவாயசமபந்தத்திற்கும் ரூபமே பிரதியோகியாம, கடம அனுயோகியாம். பிரதியோகியின் வடிவத்தையும், அனுயோகியின் வடிவத்தையும இனிது விசாரிததுநோக்கின், அவ்விரண்டினும் வேருய் அச்சையோகசமவாய சமபநதம தோற்றமாட்டாவாதலின் அவற்றிற் காட்சி சம்பவியாதாம். இரண்டாவதும் பொருந்தாது; ஏனெனின், எவ்வாற்

றானும் காக்ஷிப்படாததன்கண்ணே கருதலுக்கும் பிரவிருத்தியாகாதாம். ஏனெனின், அவ்வாறாயின் மலடிமைந்தனுக்கும் மநுடக்கொம்பிற்கும் கருதலாற் சித்தமாந்தன்மையாம்; ஆனலவ்வாறுகாதாமாதலின் காக்ஷியிலதாகவே அவற்றில் கருத்தும் பொருந்தாதாம். மூன்றாவதும் பொருந்தாது; ஏனெனின், இலௌகிகமெனவும், வைதிகமெனவும் சப்தமிருவகைத்தாம். முதலது பிரமாணமென மொழியொணுதாம், என்னே? காக்ஷிகருதலின் சகாயமின்றி அது எப்பொருளேயும் சித்திசெய்யாது, மற்றே சகாயம்பெற்றே துணியும். அது அவற்றின் சகாயமின்றியே ஒருபொருளில் பிரமாணரூபமாயினே, மலடிமகனிடத்தும் நரசிருங்கத்திடத்தும் பிரமாணமாதல்வேண்டும்; ஆனல், அவ்வாறின்றாமாதலின் அவையிலவாகவே சையோகசமவாயத்தே இலௌகிகசப்தமும் பிரமாணமன்றாம். இரண்டாவதும் பொருந்தாது; ஏனெனின், தண்டபுருடர்க்குச் சையோகசம்பந்தமாகுக, ரூபகடங்கட்குச் சமவாயசம்பந்தமாகுக எனப் போதிக்கும் ஒரு மறைமொழியே தத்தே காணப்பெறவில்லை; இருந்தாலன்றே அவை சித்திக்கும். ஆகையால், அவற்றின்கண்ணே வைதிகசப்தத்திற்கும், பிரமாணரூபத்தன்மை சம்பவிப்பதில்லை. நான்காவதுபக்ஷமுஞ் சம்பவியாது; ஏனெனின், அம்மூன்றனுள் ஒன்றைச் சகாயமாய்க்கொண்டே உபமான அர்த்தாபத்தி முதலிய பிரமாணங்கள் பிரவிருத்திக்கும், அவற்றின்கண்ணே அம்மூன்றன் பிரவிருத்தியிலலாதபோது அவற்றில் உபமானதி எவ்வாறு பிரவிருத்திகதம்; மற்றே, பிரவிருத்திபா. இவ்வாறு ஆகாசாதி ஜட பதார்த்தத்தின்கண்ணும அவை சமபவியா; அவறறினும அவை சம்பவியாதபோது சைதன்யஸ்வரூப அமூர்த்த ஆன்மாவின்கண்ணே அவை எவ்வாறு சித்திக்கும?

சங்கை :—ஹே பகவன்! சையோகசமவாய சம்பந்தரூபபந்தம் ஆன்மாவின் கண்ணே உண்டாகாதாயினும், அநிர்வசநீய சம்பந்தரூப பந்தம் அதில் ஏனுண்டாகாது?

சமாதானம் :—ஹே நசிகேதா? யோக்கியப்பொருளுக்கு மற்றொரு யோக்கியப்பொருளோடே சம்பந்தமாம் என்னும் நியமம் சாஸ்திரத்தே கூறப்பெற்றுளதாதலின், அநிர்வசநீய சமபநதம அநிர்வசநீய சரீராதிகளிடத்தே சம்பவிக்கும். ஆநநதவடிவ அசங்க ஆன்மாவின்கண்ணே அநிர்வசநீய சம்பந்தமும் சமபவியாது. ஆகையால், சர்வ சம்பநதமற்ற இவ்வான்மாப் பூர்வ அஞ்ஞான அவஸ்தையின்கண்ணும் நித்திய முக்த ரூபமாயினும் ஆன்ம சாக்ஷாத்காரத்தால் கற்பித மாயாரூபபந்தம் நீங்கவே ஆன்மா மீண்டும் விசேஷமாய் முக்தியையடையும். 'விமுக்தஸ்ச விமுச்யதே' விசேஷமாய் முகதமாயினும் ஆன்ம சாக்ஷாத்காரத்தால் ஆன்மாமீண்டும் விசேஷமாய் முக்தமாம் இத்துணையா லிவ்வான்மாவின்கண்ணே நித்தியமுக்த ரூபத்தன்மை காண்பிக்கப்பட்டது. இப்போது ஆவரணரகித சுத்த ஆன்மாவின் மகிமையை வருணிப்பாம் —ஹே நசிகேதா! இவ்வான்மாத் தனது சாக்ஷாத்காரத்தால் காரியசகித அவித்தையை ஹநநஞ்செய்யுமாதலின் சுருதிபகவதி ஹம்சமெனக்கூறினள் அல்லது சர்வஜீவர்கட்கும் பர்கியப்பிராணரூபச் சூரிய வடிவமாய் இவ்வான்மாவே மூவுலகங்களேயும் பிரகாசிக்குமாதலின், சுருதிபகவதி ஆன்மாவை அம்சமெனக் கூறினள். '[illegible]'

சர்வப்ராணிப் பிரஜைகளின்பாகியப் பிராணரூப இச்சூரியனுதயமாம். இவ்வாநந்த ஸ்வரூப ஆன்மாச் சுத்த இருதயத்தே அல்லது ஆகாசத்தே திதமாமாதலின் சுருதிபகவதி ஆன்மாவைச் சுசிஷத் என்றனள். மனுடர்க்குச் சுவர்ணுதிரூபதனம் பிரியமாவதேபோல இவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவும் அத்தியந்தம் பிரியமாமாதலின் சுருதிபகவதி ஆன்மாவை வசு என்றனள். இவ்வாநந்தஸ்வரூப ஆன்மா அந்தர ஹிருதய ஆகாசத்தேயோ ஆன்மரூபமாய்த் திதமாம்; பாகிய ஆகாயத்தே சூரியரூபமாய்த் திதமாமாதலின் சுருதிபகவதி ஆன்மாவை அந்தரிக்ஷசத் என்றனள். இவ்வான்மாயாக கருத்தாவாய எஜமானனை மகிழ்விக்கும்பொருட்டு சமஸ்திருத யாகபூமியின்கண்ணே இருத்விக்குருவத்தாற் றிதமாமாதலின் சுருதிபகவதி ஆன்மாவை ஹோதாவென்றனள். அல்லது இவ்வான்மாப் போக்தாரூப ஆன்ம அக்கினியின்கண்ணே சர்வ அன்னத்தையும் ஹவனஞ்செய்யுமாதலின் சுருதிபகவதி இதனை ஹோதாவென்றனள். யாகவேதிக்குச் சமானமாய மத்தியச் சித்திரமுடைய ஹிருதயத்தே அல்லது சூரியமண்டலத்தே இவ்வான்மாவே திதமாமாதலின் சுருதிபகவதி இதனை வேதிஷத்தென்றனள். ஆன்மாவே சோமயாகத்தே சோமவல்லியின் இரசரூபமாய்க் கலசத்தின்கண்ணே திதமாம்; சிரேஷ்டகிருகஸ்தர் வீட்டின்கண்ணே அதிதிரூபமாய்த் திதமாம். யாவனுடைய குலகோத்திரங்கள் அறியப்பெறவில்லையோ மத்தியானுதிகாலத்தே யாவன் வந்தனனே, அன்னப்பிராபதியி னிச்சையனே அவன் அதிதியாவன். குலகோத்திராதிகள் அறியப்பெறுபவராகிய ஆசாரிய இருத்துவிக்காதிப் பிராஹ்மணரும் அதிதிகளேயாவர். வாக்குமுதலிய இந்திரியங்களிடத்தே பிரகடமாய நானுவகையாய சக்திகளும், நானுவகைபாய சுகதுக்கங்களின் போக்தாத்தன்மைகளும் சைதன்ய ஆன்மாவினுனன்றி இச்சடசங்காதத்தே சம்பவியாவாதலின் அவற்றுல் இத்தேகத்தே ஆன்மாவின் திதி அறியவரும். பிருதிவி முதலியவை ஜலாதிகளி னுசிரிதங்களாவனபோல, இச்சுயஞ்ஜோதியான்மா ஒன்றனுசிரிதமாயிராது; மற்றே, தன்பாலே திதமாம். "ஸ ஹ பகவ: கஸ்மிந் ப்ரதிஷ்டித இதி ஸ்வே மஹிம்நி" இந்த வியாபக ஆன்மா எதன்கண்ணே திதமாம எனச சங்கையுண்டாக, இது தனது ஸ்வப்பிரகாச மகிமையின்கண்ணே திதமாம் என்னும் உத்தரத்தைச் சுருதி கூறியது. சுகதுக்கரூப பலத்தை அவசியம் அடைவிக்கும அறம்பாவங்களினும ஆன்மாவே பலரூபமாய்த் திதமாம். சூரியமண்டலத்துள்ளிருக்கும் சூக்ஷ்ம சமஷ்டிரூப ஹிரணியகருப்பரின் சமஷ்டிபுத்தியின் உள்ளிருக்கும் ஆகாசத்திலும் ஜீவர்களின் வியஷ்டிபுத்தியின் உள்ளிருக்கும் ஆகாசத்திலும், இவ்வாநந்தரூப ஸ்வயஞ்ஜோதியான்மாவே சாக்ஷிரூபமாய்த் திதமாம். நீரைப் பிரதானமாகவுடைய சூக்ஷ்ம ஆகாசாதி பஞ்சபூதங்களினின்றும் இவ்வான்மாவே முன்னர் ஹிரணியகருப்பரூபமாயுண்டாம். மேகரூபமாய்ப் பரிணுமத்தையடைந்த சூரியகிரணத்தினின்றும் இவ்வான்மாவே ஜலரூபமாயுண்டாம். சுகதுக்கரூபபலத்தைக் கொடுக்கும்பொருட்டு எதிர்முகமாய புண்ணியபாவரூப கருமங்களினின்றும் இவ்வான்மாவே சுகதுக்கத்தை யடைவிப்பனவாய அநேக தேகேந்திரியாதி ரூபமாயுண்டாம். பிருதிவி ரூபகமலத்தின் கர்ணிகைவடிவ சுமேரு பர்வதத்தினின்றும் இவ்வான்மாவே நான்

முகப் பிரஹ்மாவாயுண்டாம். அப்பார்வதம் பிரஹ்மரூப் கர்ப்பத்தின் பிராதுர்ப் பாவத்தே ஜராயுபட சமானமாம். இப்புரமான்மாவே ஹிமாத்திரி பர்வதத்தினின்றும் ஸ்ரீ பார்வதிதேவி வடிவமாயுண்டாம். ஹே நசிகேதாவே! இவ்வர்த்தத்தே யான் மிகவு மியாதுகூறுவேன், புண்ணியபாவ கருமத்தின் பல பூதமாயுள்ள ஸ்தாவரஜங்கமரூப ஜகத்தியாவும் பிரஹ்மரூபமேயாம; பிரஹ்மத்தினும் வேறாக யாதொரு பொருளுமின்றும். "ஸவஹும் வஷிதம் ஸ்ரூஹ" இவ்வெல்லாவுலகும் பிரஹ்மரூபமேயாம். ஈண்டுச் சர்வ ஜகத்திற்கும பிரஹ்மத்தோடு அபேதங்கூறியது பாத சமானாதிகாணத்தாலறிக ஸ்தாணுவின்கண்ணே பிரதீதமாய கள்வனுக்கு ஸ்தாணுவோடு பாத சமானாதிகரணத்தால் அபேதமாவதேபோலும். இத்துணையால் இவ்வான்மாவின் சர்வான்மபாவரூபப் பிரபாவம வருணிக்கப்பட்டது. இப்போது இவ்வான்மாவை யறிவிக்கும் நாலுவகை லிங்கங்களை நிரூபிப்பாம்:—ஹே நசிகேதாவே! இவ்வாநநதஸ்வரூப ஆன்மாச சர்வ ஜீவாகளின் இருதயத்தே திதமாய்ப் பிராணரூபவாயுவை மேலே கொண்டுபோம, அபானரூபவாயுவைக் கீழே கொண்டுபோமாதலின இத்தேகத்தே அவ்விரண்டின் தாரணையும் ஆன்மாவை யறிவிக்குங் குறிகளாம. இபபுருடனுடைய இருதயதேயத்தின் அங்குஷ்டமாத்திர மத்தியதேயத்தேயிருந்து இவ்வான்மாப் பரிசசின்னம்போலப பிரதீதியாம். இதனையே சம்பூரண வாககுமுதலிய தேவதைகள் ஆசிரயித்திருக்கும. இததேகத்தேயுறையும் ஆன்மா மரணஹேதுரூப கருமஙகளால் இத்தேகததினும் வெளியே கமனஞ்செய்யும்போது தேகஸ்திதியின்காரணம் யாதொன்றுமின்றும்; ஏனெனின், இவ்வான்மாச சென்றதன்பின்னர் தேகம் காஷ்டம்போலக கேவலம் தகிக்கத் தகுதியதாமாதலின் இஃதறியபபெறும்:—மரணகாலததே இத்தேகஸ்திதியின் காரணரூப சைதன்யமின்றுமாதலின், எஃததன காரணமோ அஃதே தர்ம அதர்மமற்ற அத்விதீயப பிரஹ்மரூபமாம; அதையே நீ முன்னர் வினவினாய்.

சங்கை:—ஹே பகவன்! இத்தேகஸ்திதியின் காரணத்தன்மை சைதன்ய ஆன்மாவின்கண்ணே யிருப்பதேபோலப் பிராணன்கண்ணும உளதாதலின் அந்தப் பிராணனே ஆன்மரூபமாம்.

சமாதானம்:—ஹே நசிகேதா! இவ்வுலகததே எவனும் பிராணனாலேனும் அபானனாலேனும் ஜீவிப்பதில்லை; மற்றோ, பிராணனும் அபானனுமிருக்கும் அதிஷ்டான சைதன்யத்தானே ஜீவிபபனாதலின், அவ்விரண்டும் எப்பிராணிக்கும் ஆன்மாவன்றும்; மற்றோ, மரணமூர்ச்சை முதலிய அவஸ்தையின்கண்ணே அவ்விரண்டும் இலயத்தையடையும்; அதிஷ்டான சைதன்யமே சர்வ ஜீவர்கட்கும் ஆன்மரூபமாம்.

"நவ்ராணெநநாஉவாநெந உதெஷ்ஷா ஜீவதிகஸ்ஷந।
உதரெணது ஜீவஷி யஷிநெதாவுவாரஷிதள" ॥

"ஆகுறபி ராணனு லபான னுலுமித்
தேகிக ளெவர்களுந் திகழ வாழ்ந்தில
ரேகுற மிவையுறை யினிய வான்மனாற்
யோகமுற் றுயிரெலாம் பொலிய வாழ்வதால்."

(பொ-ள்.) எத்தேகதாரியும் பிராணனாலும், அபானனாலும் ஜீவிக்கமாட்டான்; மற்றோ, இவ்விரண்டுமிருக்கும் சேதன அதிஷ்டான ஆன்மாவானே ஜீவிப்பன். ஹே நசிகேதா! இத்துணையால் யான் நின்பொருட்டுத் தருமாதருமமற்ற சுத்த ஆன்மாவை யுபதேசித்தேன்; முன்னர் மூன்றாவது வரத்தே நீ மரணத்தின் பின்னர்ப் பரலோகத்தே ஆன்மாவின் உண்மை வினாவினாய், அதை இப்போது கூறுகின்றேன் நீ சாவதானமாய்க்கேட்டி:—ஹே நசிகேதா! மரணத்தையடைந்த ஆன்மாவின் அத்திபந்த அபாவமின்றாம்; மற்றோ, சிலவோ மனுஷ்யாதி ஜங்கம சரீரத்தை யடையும்பொருட்டு அவற்றின் பீஜபாவத்தையடையும். சிலவோ விருக்ஷாதி ஸ்தாவரசரீரப் பிராபதியின்பொருட்டு அவற்றின் பீஜபாவத்தையடையும், அவற்றின்பிராப்தியில் இருவகைக்காரணமாம், ஒன்றோ சரீரமனவாணியாற்செய்த அறம்பாவமாம்; மற்றொன்றோ பூர்வ பூர்வ ஜன்மத்தின் ஞானகருமஜன்னிய சமஸ்காரரூபவாசனையாம். இபபோது முதலதிற் சரீரகாரணத்தன்மையை நிரூபிப்பாம்:- ஹே நசிகேதா! ஜீவர்கட்குப் பாவத்தைபபேக்ஷித்துப் புண்ணியம அதிகமாங்கால் மரணத்தின்பின்னர் அவர்கள் மனுஷ்யாதிரூப ஜங்கம சரீரங்களையடைவர்; புண்ணியத்தை யபேக்ஷித்துப் பாவம் அதிகமாயின், விருக்ஷாதிரூப ஸ்தாவர சரீரங்களையடைவர். ஜங்கம சரீரததுள்ளும புண்ணியபாவங்களின் குறைவுமிகுதியால் பிரஹ்மாமுதற் கீடபரியந்தமுள்ள தேகங்களையடைவர். கருத்திதுவாம:—அதிக புண்ணியமுடையவர் உயர்ந்த சரீரத்தையும், அறப புண்ணியமுடையவர் தாழ்ந்த சரீரத்தையுமடைவர். புண்ணியததை அணுப்போல அதி சூக்ஷ்மமாயும், பாவத்தைப் பர்வதம்போல அதிகமாயும் உடையவர் விருக்ஷாதி ஸ்தாவர சரீரங்களையே யடைவர்; அவற்றில், கேவலந் துக்கத்தி னதிகத்தன்மையும், கமனாகமனாதிகளிற் சுதந்திர மின்மையுமேபாம். இவ்வாறு புண்ணியபாவ அனுசாரமாய்ச் சீவர்கட்கு உயர்ந்த தாழ்ந்த சரீரங்களுண்டாம். இப்போது சமஸ்காரரூப வாசனையின்கண்ணே சரீரகாரணத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே நசிகேதா! தேகதாரிகள் பூர்வஜன்மத்தே பிதாமுதலிய விருத்தர்வாயிலாய்ச் செய்பததக்கதெனக்கேட்ட புண்ணியபாவங்களையேசெய்வர். இவ்வாறு புண்ணியபாவங்களைச்செய்துமிருத்தியுவை யடையின் அவற்றி னனுசாரமாயே மீண்டும் ஜன்மத்தையடைவர்; அடைந்து பூர்வகர்மங்களின் வாசனானுசாரமாய் மீண்டும் பிதாமுதலியவிருத்தர் வாயிலாய்க் கேட்டுஅவ்வப்புண்ணியபாவத்தைச்செய்வர். கருத்திதுவாம்:—பூர்வஜன்மத்தே, பாவத்தைக்கேட்டு அதனையேசெய்த ஜீவன் உத்தர உததர ஜன்மத்தின்கண்ணும் பாவத்தைக் கேட்பதினும், செய்வதினும, பிரீதியையடைவன். புண்ணியத்தைக் கேட்டுச் செய்த ஜீவன் உத்தர உத்தர ஜன்மத்தின்கண்ணும் புண்ணியத்தையே கேட்பதினும், செய்வதினுமே பிரீதியையடைவன். சர்வ ஸ்தூலப்பிரபஞ்சத்தினும் முன்னாற் பன்னமாய ஹிரண்யகர்ப்ப பகவானிடத்தே புண்ணியமோ பர்வதம்போல அதிகமாயிருக்கும், பாவமோ கேசாக்ரசதபாக சமானமாய் அற்பமாயிருக்கும்; இதனானே சுருதியின்கண்ணே ஹிரண்யகருப்பருக்கும் பசிப்பய அடைவு [illegible]ப்பெற்றது. ஆகையால், ஹிரண்யகர்ப்ப சரீரமும் புண்ணியபாவ மிரண்டாற் [illegible]ப்பெற்றதாம். பெறவே இப்பொருள் துணியப்பெறும்:—ஹிரண்யகருப்

பசேமுதல் விருக்ஷாதிருப் [illegible] பரியந்தமுள்ள [illegible] ஜீவர்களின் புண்ணியபாவ கருமத்தாலுண்டாம்; அக்கருமம் பூர்வ பூர்வசரீரத்தாலுண்டாம்; அச்சரீரம்சேதன ஆன்மாவாலன்றிச் சம்பவியாதாதலின், பூர்வ பூர்வசரீரங்களைத் தரிக்கும் சேதன ஆன்மாவை அவசியம் அங்கீகரிக்கவேண்டும். ஹே சிஷ்ய! இவ்வாறு புண்ணியபாவகருமத்தால் சம்சார உற்பத்தியை வருணித்ததிற்கும், ஆன்மாவின் சித்தியின்கண்ணே தாற்பரியமாமாதலின், அவ்வருணனையால் தருமராஜா ஜன்மாந்தரத்தே ஆன்மாவின் சத்தையைக் கூறி நசிகேதாவிற்குச் சர்வ உபநிஷத்தின் சாரபூத ஜீவப்பிரஹ்ம அபேதத்தைக் கூறினார்.

சங்கை :—ஹே பகவன்! சர்வ உபநிஷத்தின் சாரரூப ஜீவப்பிரஹ்ம அபேதத்தை நசிகேதா யமராஜாவிடத்தே வினவவில்லையே, வினவாமலே அவ்வுபதேசத்தை ஏன் செய்தனர்? சீடன் வினவாமல் உபதேசித்தல் சாஸ்திரத்தே நிஷேதிக்கப்பட்டுளதன்றோ?

"நாப்ருஷ்டஃ கஸ்யசித் ப்ரூயாந் நசாந்யாயேந ப்ருச்சதஃ ।
ஜாநந்நபி ஹி மேதாவீ ஜடவல்லோக ஆசரேத் " ॥

"வினவிலர் தமக்கும்வெய்ய விதியினில் வினவுவார்க்கும்
தனதுயா வலியைக்காட்டுஞ் சழக்கர்க்குஞ் சாற்ருெணுதாம்
நனியெவை தமையுமிந்த நானிலத் துணர்ந்தகீர்த்திப்
புனிதமெய்ம் மதியனேனும் போலிகுக லோட்டம்போன்றே."

(பொ-ள்.) சாஸ்திரவேத்தாவாய புத்திமான், வினவினலன்றி எவனுக்கும் சாஸ்திரவார்த்தையை யொருகாலும் கூறலாகாது. யாவன் சிரத்தை பக்தியற்றவனுய்க் கேவலம் பரீக்ஷிக்கும்பொருட்டுக் கேட்கின்றனனே, அலலது தனதுபுத்தியின் சாதுரியத்தன்மையைத் தெரிவிக்கும்பொருட்டு வினவுகின்றனனே, அவனுக்கும் அறிஞன் சாஸ்திரவார்த்தையை யொருகாலும் கூறலாகாது. யாவுந் தெரிந்த மேதாவியாயிருந்தபோதிலும் உலகிற் சடனைபோற் சஞ்சரிக்கவேண்டும்.

சமாதானம் :—ஹே சிஷ்ய! நசிகேதாவானவர் தருமராஜாவிடத்தே ஜீவப்பிரஹ்மாபேதத்தைச் சாக்ஷாத்தாகக் கேட்டிலராயினும் பொருளாற்கேட்டனர்; எங்ஙனமெனின் பூர்வம் தருமராஜா நசிகேதாவிற்கு மூன்றுவரந்தந்தனர். முதல் வரத்தால் பிதாமகிழ்வுற்றனர். இரண்டாவது வரத்தால் அக்கினிவித்தையையடைந்தனர். மூன்றுவது வரத்தால் சம்பூரணப் பிரஹ்மவித்தையையடைய இச்சித்தவராய், நசிகேதா முதலில ஆன்மாவைத் துவம்பதார்த்தவடிவத்தால் கேட்டனர். பின்னர் அவ்வான்மாவைத் தருமாதருமமற்ற தற்பதார்த்தரூபமாய்க் கேட்டனர். அவ்விருவால் ஜீவப் பிரஹ்மத்தின் அபேதவினுவும் பொருளானே அடைவுறும். இவ்வாருய நசிகேதாவின் அபிப்பிராயத்தையறிந்து யமராஜா அவருக்கு அபேதரூப மகாவாக்கியார்த்தத்தை உபதேசஞ்செய்தனர். இப்போது அவ்வுபதேசப் பிரகாரத்தை நிரூபிப்பாம் :—ஹே நசிகேதா! சம்பூரண ஜீவர்களின் ஆன்ம வடிவமாய இச்சுயம்பிரகாச சேதனபுருடன் கனவின்கண்ணே புத்[illegible] திராதி அநேக பதார்த்தங்களையுண்டாக்குவன். அக்கனவின்கண்ணே [illegible]

சாதி இந்திரியங்கள் இலயமாயும் ஆன்மா இலயபாவத்தையடையாது; மற்றும், அது சர்வ அவஸ்தைகளினும் சாக்ஷிரூபமாய் விழித்திருக்கும். இவ்வாறு கனுக் காண்போன் வடிவமாய் யான்கூறிய ஆன்மஸ்வரூபமே சேதனரூபமாதலின், சுத்தவடிவமாம், அத்விதீயப் பிரஹ்மவடிவமாம், மோக்ஷரூபமாம். பூமிமுதலிய பதினான்குலோகங்கள், அவற்றிலிருக்கும் ஜராயுஜாதி நால்வகைச் சரீரங்கள் யாவும் ஆன்மாவையே யாசிரயித்திருக்குமாதலின், சர்வாதாரமாய ஆன்மாவிற்குப் பிரஹ்மரூபத்தன்மை சம்பவிக்கும். இச்சமசாரரூபசமுத்திரத்தைத்தாண்ட இச்சித்த முமுக்ஷுக்கள் ஆன்மாவினவடிவத்தை யுல்லங்கனஞ்செய்து செல்லார்; மற்றேறு, அவர் இக்கடலின்கரையாய ஆன்மாவையேயடைவர். ஏனெனின் ஆநந்தஸ்வரூப ஆன்மாவினும வேறாய வேறொருபொருள் மோக்ஷஸ்வரூபமன்றாம்; மற்றேறு, ஆநந்தஸ்வரூப ஆன்மாவே மோக்ஷரூபமாம. இப்போது, இவ்வான்மாவின் ஸ்வரூபத்தை விஸ்தாரமாய் நிரூபிப்பாம:—ஹே நசிகேதா இவ்வொரேயான்மாச் சம்பூரண ஸ்தூலசரீரத்தே ஸ்திதமாம்; சம்பூரண சூக்ஷ்மசரீரத்தே ஸ்திதமாம்; சர்வதேகதாரிகட்கும் ஆன்மவடிவமாம். அக்கினியுண்மையாய்த் தேஜசுரூபத்தாற் காஷ்டங்களினின்றும விலக்ஷணமாயினும் ஸ்தூலகாஷ்டங்களிலிருப்பதாய் அவ்வக்காஷ்ட சமானவுருவ மாவதேபோல, இவ்வான்மா உண்மையாய்ச்சர்வ ஸ்தூலசரீரங்களினும விலக்ஷணமாயினும், தேவமனுஷ்ய அசுரர் முதலியவருடைய தூலசரீரங்களில ஸ்திதமாய் அவ்வச்சரீர சமானரூபமுடையதாம. சூக்ஷ்மசமஷ்டிரூபவாயு, வியஷ்டிசூக்ஷ்மசரீரத்தேயிருந்து அவ்வச் சூக்ஷ்மசரீரரூபமாய்த் தோற்றினும அது வியஷ்டி சூக்ஷ்மசரீரத்தினும் விலக்ஷணரூபமா யிருப்பதேபோல, இவ்வானமாவும் சூக்ஷ்மசரீரத்தேயிருந்து அவ்வச் சரீரசமான ஆகாரமுடையதாய்ப பிரதீதியாயினும உண்மையாய்ச் சச்சிதாநந்த ரூபமாதலின் அச்சூக்ஷ்ம சரீரஙகளினும் விலக்ஷணமேயாம். சூரியபகவான் சர்வஜீவர்களின் நேத்திரேந்திரியஙகளின் தேவதையாதலின் அவர் தேவதைவடிவத்தாற் சர்வஜீவர்களின் நேத்திரேந்திரியத்தே யிருப்பினும் அவற்றின் குருட்டுத்தன்மைமுதலிய தோஷங்களாலும சொச்சத்தன்மைமுதலிய குணங்களாலும்பற்றுறார்; அதுபோல, இவ்வான்மாவும் சாக்ஷிரூபமாய் இத்தூலசூக்ஷ்ம சரீரத்தே இருப்பினும் இதன்குண தோடங்களாற் பற்றுறாது. பாகிய ஆகாயத்தின்கண்ணே ஸ்திதமாய இச்சூரியபகவான், தோஷமுடைய சர்வபதார்த்தத்தினும் பின்னமாய்ப பிரதீதியாவதேபோல, இவ்விருதய ஆகாயத்தே சாக்ஷிரூபமாயிருக்கும் ஆன்மாவும் சாஸ்திரதிருஷ்டியால் இத்தூல சூக்ஷ்மசரீரத்தினின்றும் பின்னமாய்ப் பிரதீதியாம்; இவற்றின் றருமங்களாலும் பற்றுறாது. அவ்வத்தேயத்தே இருக்கும் தேகதாரிகட்குத் தத்தம் நேத்திரபேதத்தாலும் அவ்வத்தேசபேதத்தாலும் ஒரே சூரியன் அநேகவகையாய்ப் பிரதீதியாம்; ஆனால், அவ்வொரு சூரியனிடத்தே நானாத்தன்மை ஞானம மித்தையேயாம்; அதுபோல ஒரே இச் [illegible]ஜோதியான்மா சரீராதியுபாதிகளால் நானாவகையாய்த் தோற்றும்; ஆனால், அவ்வளவு[illegible]ன்கண்ணே நானாத்தன்மைஞானம் மித்தையேயாம். ஒருசூரியனிடத்தே நானாத்தன்மையை விஷயஞ்செய்யும் மித்தியாஞானங்களால் பே[illegible]

டாகாததேபோல, ஒரேயான்மாவின்கண்ணே நானாத்தன்மையை விஷயஞ்செய்யும் மித்தியாஞானங்களால் பேதஸித்தி உண்டாகமாட்டாது. உண்மையாய் நானாத் தன்மையற்ற சூரியபகவானிடத்தே நானாத்தன்மையைக்காணும்மூடன் உலகரின் பரிகாசத்தாலுண்டாம் அநேகதுக்கங்களை யடைவதேபோல, உண்மையாய்ச் சர்வ பேதமற்ற இவ்வாநந்தஸ்வரூப ஆன்மாவின்கண்ணே பேதத்தைக்காணும் மூடன் அடிக்கடி ஜன்மமரணாதி துக்கத்தையடைவன். இத்தகைய அத்விதீய ஆன்மா உண்மையாய் மாயையற்றதேயாயினும், சுதந்திரமாய அது தனது மாயாசக்தி யால் ஒரே தனதுவடிவத்தை அநேகவகையாய்ச் செய்யும், இருதயத்தேயத்தே இருக்கும் அத்விதீய ஆன்மாவைப் பிரஹ்மசரியாதி சாதனசம்பன்னனாப்க் குரு சாஸ்திர உபதேசத்தால் சாக்ஷாத்கரிப்பவனுக்கே மோக்ஷரூப நித்தியசுகப்பிராப் தியாம்; இவ்வாறறியாத அஞ்ஞானிக்கோ ஜன்மாதி துக்கப்பிராப்தியேயாம. நித் தியரூபமாய்ப் பிரசித்தமாய காலாதிகளின் கண்ணும் ஆன்மாதன் சத்தையை யீந்து நித்தியத்தன்மையைச் சித்தஞ்செய்யுமாதலின், நித்தியபதார்த்தத்திற்கும் நித்தியவடிவமாம். சைதன்யரூபமாய்ப பிரசித்தமாய நேத்திராதிகளிடத்தும் அவற்றினின்றுமுண்டாய அந்தக்கரணவிருத்திகளின் கண்ணும் தனது சிதா பாசப்பிராப்தியால் இவ்வான்மாவே சேதனத்தன்மையைச சித்திசெய்யுமாதலின் சேதனபதார்த்தங்கட்கும சேதனவடிவமாம. எப்பரமான்மாவின் சாக்ஷாத்காரத் தால் அதிகாரி நித்தியசுகத்தையடைவனோ, எவ்வொன்றே சர்வஜீவர்கட்கும மனவாஞ்சித பதார்த்தங்களை யடைவிக்குமோ, சர்வதுக்கததையும் நிவர்த்திக்கு மோ, அதறகிதுவே வடிவமாம்; சர்வப்பிராணிகளின் இருதயதேயத்தே இருக கும் சுயஞ்சோதி சேதனமும், மனவாணிகட்கவிஷயமுமாம். இத்தகைய அத் விதீய ஆன்மாவின் ஸ்வரூபபூத நித்திய ஆநந்தம மனவாணிகட்கவிஷயமாயி னும் மகான்மாக்களாய அறிஞர்தமதனுபவத்தே பிரீதியுடையவராய் அந்நித்திய ஆநந்தத்தையு மபரோக்ஷமாயறிவர். இப்போது ஆன்மரூபநித்திய சுகத்தே வாணியின் அவிஷயத்தன்மையை யுணாத்துமபொருட்டு முதலில விஷயஜன்னிய சுகததின்கண்ணும அததன்மையைக் கூறுவாம்:—ஹே நசிகேதா! தேகதாரிக ளிடத்தே மாதுரியமான போஜனாதிகளால் உண்டாய சுகத்தையுமொருவன் நேராய் வாக்காற்கூற முடியாதவனாவன். ஒருகால் அவ்விலௌகிகன் அவ்விஷய ஜன்னியசுகத்தைக் கூறினும் எனக்குச் சுகமுண்டாயதெனச சாமானியரூபமாய்ச் சுகத்தைக்கூறுவன், ஆனா லிவ்வாறெனக்குச் சுகமுண்டாயதென விசேஷரூப மாய்க் கூறுவதில் ஒருவனும சமர்த்தனாகான; மற்றோ, அசசுகவடிவத்தே ஒரு பொருளினொப்புமையை ஆரோபித்தே அதனைக்கூறுவன்; ஆனாலதனை நேரா ய்க் கூறமாட்டானாதலின், விஷய ஜன்னிய சுகங்களியாவும வாணியாற்கூற முடி யாதனவாம்; தமதனுபவத்தானே அறியபபெறுவனவாம். இலௌகிகவிஷய ஜன்னியசுகமும் வாணியாற் கூறமுடியாதாயின், மனுடன், மனுட கந்தருவன், தேவகந்தருவன், பிதிர், ஆஜானஜதேவன், கர்மஜதேவன், இந்திரன், பிருகஸ் பதி, விராட், ஹிரண்யகருப்பர், என்னும் இவ்வியாவரிடத்தும் பூர்வ பூர்வத்தை அபேக்ஷித்து உத்தர உத்தரம் நூறுகுண அதிக ஆநந்தமாம் ஹிரண்ய கருப் பரின்விஷய ஜன்னியசுகத்தினும் அதிகசுகம் எவனுக்குமின்றாம்; மற்றோ,

அமர்சகம் சர்வவிஷய சுகங்களின் அவதிரூபமாம். அதுவும் ஒருபிந்துவென்னாம் பிரஹ்மானந்தக்கடலின் நித்தியசுகம் வாயாற்கூற முடியாததென்பதன் கண்ணே யாதுகூறற்குளது. அது மனவாக்குகட் கவிஷயமாமாதலினுனே ஞானசிரியரும் வேதமும் அதை நேராய்க்கூறுவதிற் சமர்த்தற்றவராய் அதிகாரிகட்குச் சாமானி யமாய்ப் பிரியதமரூபத்தால் வருணனைசெய்வர். இவ்வாறுகூறிய நித்தியசுகத்தை யான் எவ்வாறு நேரேயனுபவிப்பன் என இச்சித்து, அதிகாரியானவன் தன்மன த்தே இவவாறாராய்வன் :— ஆன்மரூப நித்தியசுகத்தின் மறைப்பைநீக்கும் ஆன்ம ஞானத்தோடு கூடியவனும், விஷயங்களில் இராகவடிவப் பிரதிபந்தக மற்றவனு மாய் அதிகாரியாய எனக்கு ஆன்மநித்தியசுகம் உண்மையாய்த்தோற்றுகின்றதா? அல்லது, விபரீதமாய்த் தோற்றுகின்றதா ? என.

சங்கை :— ஹே பகவன்! வாக்கிற் கவிஷயத்தன்மைவடிவ இலக்ஷணத்தா னே அஃதறிய யோக்கியமாதலின், ஆராயப பயனென்றுங் காணேம்.

சமாதானம் :— ஹே நசிகேதா ! அவ்விலக்கணம் ஆன்மரூப நித்தியசுகத்தே யிருப்பதுபோல விஷயஜன்னிய சுகத்தின்கண்ணு மிருக்குமாதலின், அதிவியாப் த்திரூப தோஷமுடைய அவ்விலக்கணததால் ஆன்மரூப நித்தியசுக ஞானம் உண் டாகாதாம்; ஆகாதாகவே, அது எனக்குண்மையாய்பபிரதீதியாகின்றதா, அல்லது, விபரீதமாய்ப் பிரதீதியாகின்றதாவென ஆராய்தல் பொருததமானதேயாம். அல் லது, கருத்தா, கருமம், கரணம், சம்பிரதானம், அபாதானம, அதிகரணம் என்னும் இவ்வறுவகையாய காரகங்களும், பதார்த்தங்களின் பரஸ்பர சம்பந்தங்களும், கம னுதிக் கிரியைகளும், எதன்கண்ணே பிராப்தமாமோ அதன்கண்ணே பேதமு மவ சியமாம் ; பேதத்தைவிடுத்துக் காரகாதிகளிரா. பேதமுடையனயாவும் வஸ்து பரி ச்சேதமுடையனவாம் ; அவை யாவும முக்கிய சுகரூபங்களன்றாம். ஏனெனின், சுருதிவியாபகவஸ்துவையே சுகரூபமெனக்கூறுகின்றது. “ யோவைபூமா தத்ஸு கம் ” யாது யாண்டும் வியாபகமோ அதுவே சுகரூபமாம் அல்லது, பேதமுடைய சுகம் ஜன்மாதி விகாரத்தாற் பீடிக்கபபெற்றதாம். அதன்கண்ணே சாமானியமா யே சுகரூபத்தன்மை சம்பவியாதாம ; அவ்வாறுகூடச சம்பவியாதபோது பரம சுகரூபத்தன்மை யதன்கண்ணே எங்ஙனஞ் சம்பவிக்கும் ? ஆகையால், விஷயஜன் னிய பரிச்சின்ன சுகம் கேவலம் துக்கரூபமேயாம். அல்லது, அதன்கண்ணே உல கருக்குண்டாம் சுகபுத்தி பிராந்தியேயாம் ; ஏனெனின், யாது ஆதியினும் அந்தத் தினும் துக்கரூபமாமோ அது மத்தியிற் சுகரூப மெங்ஙனமாகும் ? மற்றோ, மத் தியிலும் துக்கரூபமேயாம். அதுபோல, விஷயஜன்னிய சுகமும் பிராப்தியாகாத காலத்தே புருடர்க் கிச்சையினுற்பத்திவாயிலாய்த் துக்கத்தையடைவிக்கும் ; அழி யுங்காலத்தே தனது வியோகத்தால் துக்கத்தையடைவிக்கும். இவ்வாறு முதலி லும் கடையிலும் துக்கரூபமாதலின் நிகழ்காலத்தும் துக்கரூபமேயாம் ; ஆனால், வாதரோகத்தையுடையவன் துக்கரூப முஷ்டி முதலியவற்றி னடியையும் சுகமா யெண்ணுவதேபோல, விடயாசக்த மூடனும் துக்கரூப விடயசுகத்தைச் சுகமா யெண்ணுதலின், இது துணியப்பெறும். மூற்கூறிய காரகாதிகளின் அவா

[illegible]யிருக்கும் வஸ்துவே பரம சுகரூபமாம். அத்தகைய ஆனந்தரூப ஆன்மாவேயாமாதலின் அதுவே பரம சுகரூபமாம்; அதனினும் வேறாய அனைத்து பதார்த்தங்களியாவும் துக்கரூபங்களேயாம். ஆன்மரூபப் பரமசுகம் ஸ்வப்பிரகாச சைதன்யரூபமேயாம், அது பரம சுகரூபமேயாம். இவ்வாறு சுகப்பிரகாசங்கட்குப் பரஸ்பரம் அபேதசித்தமாங்காலே ஆன்மவடிவப் பரமசுகம் ஜீவர்கட்கு எப்போதும் பிரதீதியாம். சைதன்யரூபப் பிரகாச சம்பந்தத்தானன்றிச் சுகத்தின் சத்தைப் பிரதீதி சம்பவியாது. அல்லது, ஆன்மரூபப் பரமசுகம் ஒருகால் ஜீவர்கட்குப் பிரதீதியாகாதாயின், தன்னான்மாவில் சர்வ ஜீவர்கட்கும் நிரதிசயப் பிரீதியுண்டாகலாகாது; ஆனால், அதுவோ காணவருகின்றதாதலின், ஆன்மரூபசுகம் சர்வ ஜீவர்கட்கும் பிரதீதியாகின்றதெனஉணர்ந்துகோடலாம். அல்லது, விடயமடையுங்காலத்தே எனக்குச் சுகப் பிரதீதியாகின்றதென உலகருக்குண்டாம் ஞானத்தே அன்னியத்தில அன்னியத்திலாரோபணரூப அத்தியாசமே நிகழும். கருத்திதுவாம்:-விடயசம்பந்தத்தாலுண்டாய அந்தக்கரணவிருத்தியின்கண்ணே ஆன்மசுகத்தையாரோபித்தே மூடன் எனக்குவிடயத்தினின்றும் சுகமுண்டாயது எனக் கூறுவன். காமிகள் ஸ்திரீயின்பிராப்திகாலத்தே இச்சாநீக்கத்தாலபிவியக்தமாயஸ்வரூபசுகத்தை நிந்தித ஸ்திரீ சரீரத்தில ஆரோபித்து ஸ்திரீயைச் சுகரூபமென்பர். ஆண்டான்மரூபசுகம் ஜீவர்கட்குத் தோற்றாதாயின், சுகத்தை அன்னியபதார்த்தத்தே ஆரோபித்தல் கூடாது; ஆனால், அவ்வாறே காணவருகின்றது. ஆகையாலிஃதறியப்பெறும்:—ஆன்மஸ்வரூபசுகம் சர்வஜீவர்கட்குஞ் சர்வகாலத்தும் பிரதீதியாம். அத்தியந்தம் துக்கமாங்காலத்தும் ஒருசுகத்தை யாசிரயித்தே ஜீவிப்பன்; சுகமின்றி எப்பிராணியும் ஜீவியாதாம். விரக்தமகாத்மா இவ்வாறு அடிக்கடி ஆராய்வன். மகான்மாவிற்கு அம்மனவாணிகட் கவிஷயரூப பரமசுகம் கரதலாமலகம்போல வெளிப்படையாய்ப் பிரதீதியாம். சூரியபகவானுதயமாயின், இரவு நீங்குவதேபோலப் பிரஹ்மாநந்தரூபச் சூரியோதயமுடைய பிரஹ்மாகாரவிருத்தி யுண்டாகவே இச்சம்சார துக்கரூப ராத்திரி நீங்கியேவிடும். கருத்திதுவாம.—சூரியபகவான் உதயாசலமலைமேல் ஆரூடமாய் இராத்திரிரூப அந்தகாரத்தை நீக்குவதேபோல, இவ்வாநந்தஸ்வரூப ஸ்வயஞ்ஜோதி யான்மாவாகிய சூரியனும் அந்தக்கரணவிருத்திரூப உதயாசல மலைமீது ஆரூடமாய் மாயாரூப அந்தகார நாசஞ்செய்யும். இத்தகைய சுயஞ்ஜோதி ஆநந்தஸ்வரூப ஆன்மாவைச் சூரியன், சந்திரன், உடுக்கணம், மின்னல், அக்கினிமுதலிய தேயுக்கள் ஒளிர்வியா; மற்றே, மாறாக அதுவே அவற்றைப் பிரகாசிப்பிக்கும். இயல்பாகவே அப்பிரகாசரூப அயப்பிண்டமானது ஒளிராநின்ற அக்கினியைப்பற்றிப் பின்னொளிருவதேபோல, இச்சடசேதனரூப ஜகத்தும் பிரகாசவடிவ ஆன்மாவைப்பற்றியே பின்னொளிரும். இயல்பானே பிரகாச சக்தியற்ற எண்ணெய் திரிமுதலியவை தீபச்சிகையின் பிரகாசத்தின் பின்னரே தோற்றல்போல, இயல்பானே பிரகாச சக்தியற்ற புத்திமுதலிய ஜகத்முழுவதும் ஸ்வயஞ்ஜோதி ஆன்மாவின் பிரகாசத்தின்பின்னரே தோற்றும்.

சங்கை:—ஹே பகவன்! அப்பிரகாசமாவதுவே தற்பிரகாசப்பொருள் [illegible] வேறு பிரகாசத்தை அபேக்ஷிக்கும். கடாதிகள் அப்பிரகாசங்களாதலின் [illegible]

தம் பிரகாசப்பொருட்டுச் சூரியாதிப் பிரகாசங்களை யபேக்ஷிக்கும்; இவையோ தாமே பிரகாசரூபமாதலின் வேறெப் பிரகாசாபேக்ஷையையுஞ் செய்யா.

சமாதானம் :—ஹே நசிகேதா! ஒரு பிரகாசத்திற்கு வேறு பிரகாசத்தின் அபேக்ஷையுண்டாகாது என்னும்நியமம் யாண்டும் சம்பவியாது; ஏனெனின், தேஜசுவடிவமாகிய சக்ஷு இந்திரியமானது சூரியரூப தேஜஸை அபேக்ஷித்தே கடாதிகளை யொளிர்விக்கும். அதுபோல, இசசூரியாதியும் ஸ்வயஞ்சோதி யான்மாவை அபேக்ஷித்தே பதார்த்தங்களை யொளிர்விக்கும். கருத்திதுவாம் :—ஜட தேஜசு வடிவத்தால் சூரியசமான ஜாதியையுடைய சக்ஷு இந்திரியமும் கடாதிகளை இலக்கும்பொருட்டுச் சூரியாதி ஜடதேஜசுகளை யபேக்ஷிக்குமாயின் ஜடரூபத்தால் சைதன்ய ஆன்மாவினும விலக்ஷணமாய சூரியாதி ஜடதேஜசுகள் தமது வியவகார சித்தியின்பொருட்டுச் சைதன்யரூபப் பிரகாசத்தை அபேக்ஷிக்கும் என்பதன்கண்ணே யாது கூறவேண்டும? இத்துணையால் அத்விதீய ஆன்மரூபப் பிரஹ்மத்தின்கண்ணே ஸ்வயஞ்சோதி ரூபத்தன்மை நிரூபிக்கப்பெற்றது. இப்போது அது இச்சம்சார மூலகாரணரூபமாய் வருணிக்கப்பெறும் :—ஹே நசிகேதா! சம்சாரரூப இத்தூலதேகத்தை முன்னா யான் நினக்குப் பதினொருவாயிலுடைய புரரூபமாய் வருணித்தேன் அதனைச் சில வேதவேத்தாக்கள் அசுவத்த விருக்ஷரூபமாய் வருணித்துளார். முன்னர் யான் நினக்கு ஜகத்காரணரூபமாயும், ஸ்வயஞ்சோதி ஆநந்தஸ்வரூபமாயும், மோக்ஷரூபமாயும வருணித்த பிரஹ்மமே சரீரரூப அசுவத்தவிருக்ஷத்திறகு மூலமாம். யாது மறுதினத்தேயிராதோ, அது அசுவத்தமாம்; அவ்வகைபபொருள் சரீரத்தும் பொருந்தும; ஏனெனின், இத்தேகத்தின் ஒருகணபரியந்த ஸ்திதியினும் புததிமான்கட்கு விசுவாசமின்றாமாயின், மறுதினம்வரை இது திரமாயிருக்கு மென்பதன்கண்ணே மதிமான்கட்கு ஏவ்வாறு விசுவாசமுண்டாம். இதனானே சுருதிபகவதி இத்தூலதேகத்தை அசுவத்தமென வழைத்தனள். தேகவிருக்ஷமூலமாய காரணப்பிரஹ்மததை அபேக்ஷித்துச் சரீரரூப அசுவத்த விருக்ஷத்தின் சாகை கீழேயாம் அறம்பாவவடிவ ஸ்கந்தங்களினின்றும் உண்டாய நானாயோனிகளின்சரீரங்கள் நேத்திராதி இந்திரியங்களோடுகூடிய சூக்ஷுமசரீரம் என்பன யாவும் அதன் சாகைகளாம். வடவிருக்ஷம் வடிவத்திலநித்தியமாயினும் அதன் பீஜத்தினின்றும் அங்குரமுண்டாம்; அதனினின்றும் மீண்டும் பீஜமுண்டாம்; அதனினின்றும் மீண்டும் அங்குரமுண்டாம்; இங்ஙனம் பீஜாங்குரங்களின் பிரவாகரூபத்தால் அது நித்தியமாவதேபோல, இந்தேக அசுவத்த விருக்ஷமும் ஸ்வரூபமா யநித்தியமேயாயினும் சரீரத்தினின்றும் அறம்பாவோற்பத்தியாம்; அவற்றினின்றுமீண்டும் இதுவாம்; இவ்வாறு பிரவாகரூபத்தானே இவ்விருக்ஷமும் நித்தியமேயாம். இதன் மூலமாய பிரஹ்மத்தே இவ்வெல்லாவுலகுமிருக்கும்; இதனை எவனும் உல்லங்கனஞ்செய்யமுடியாது. இத்தகைய அதிஷ்டானரூபப் பிரஹ்மஞானத்தானே இவ்விருக்ஷத்தின் நாசமாம். முன்னர் நீ கேட்ட தருமாதருமமற்ற வஸ்துவும் இவ்வாநந்தஸ்வரூபப் பிரஹ்மமேயாம், இவையாவும் எக்காரணரூபப் பரமான்மாவின்கண்ணேயிருந்து தத்தமது [illegible]த்தே பிரவிருத்திக்குமோ, எதனினின்று மிவையாவு முண்டாமோ

அதுவே மிருத்தியுரூபமாய்ச் சர்வஜகத்தையுஞ் சம்ஹரிக்குமாதலின், இந்திரவஜ்ஜிரம்போலப் பரமான்மாவே சம்பூரண தேகாபிமானிகட்கும் பயகாரணமாம்; இத்தகைய அதைத் தனதான்மரூபமாய்ச் சாக்ஷாத்கரிப்பவனே மோக்ஷரூப அமிர்தத்தையடைவன். இது கூறியதன் கருத்திதுவாம்:—அக்கினி, தன்னிற் பின்னமாய காஷ்டாதிகளைத் தகிக்குமாயினும் தன்னைத் தகியாததேபோல, பரமான்மா மிருத்தியுரூபமாய்ச் சர்வஜகத்தையும் நாசஞ்செய்யினும் தன் வடிவமாய பிரஹ்மவேத்தாவை நாசஞ்செய்யாது; இதனானே அவன் அமிருதனாவன். இப்போததன்கண்ணே யாவருக்கும் பயகாரணத்தன்மை நிரூபிக்கப்பெறும்:—ஹே நசிகேதா! மூவுலகத்தும், சூரியபகவானும் அக்கினியும் ஒளிர்விப்பதும் எரிப்பதும் பரமான்மாவின் பயத்தானேயாம், இந்திரன் மழைபெய்விப்பதும் அதன்பயத்தானேயாம், வாயுசலிப்பதும் அதன்பயத்தானேயாம், சூரியாதிநான்கைக்குறித்து ஐந்தாவதாய மிருத்தியுவாகிய யான் ஜீவர்களின் சரீரத்தினின்றும் பிராணனை வாங்குவதும் அதன்பயத்தானேயாம். கருத்திதுவாம்:—சூரியாதி மகாதேவதைகளும் பரமான்மாவினின்றும் பயத்தையடையின் வேறு ஜீவர்பயத்தையடைவர் என்பதன்கண்ணே யாதுகூறவேண்டும். அப்பயநீக்க வுபாயம் ஆன்மஞானமொன்றேயாம்; அஃதின்றி வேறோருபாயம் பயநிவர்த்திக்கின்றிலாதலின், மிருத்தியுவினின்றும் பயத்தையடைந்தவன் இப்பிறப்பிலேயே ஆன்ம சாக்ஷாத்காரத்தைச் சம்பாதிக்க என்னு மிவ்வார்த்தை அன்னியசாஸ்திரத்தின்கண்ணும் கூறப்பெற்றுளது.

“ ஶ்ருத்யோபி-ஹைஷிகிம் ஸுஐஹீதம் ஸாமஅதிகிம்யஜ
ஐஜாதம்ஜெ வமூஹணாதி கூநாயததஜநூநி ” ॥

“ எமன்றனக் கஞ்சன்மூட வென்னைகோ லஞ்சலானே
யெமனுனை விடுவேனோதா னிவணுதித் தவரைவீடா
னெமனிவ னுதியாதாரை யென்னுமே தோடுவதில்லை
யெமபய மிருக்குமாயி னினிப்பிற பிறவாமைதேடே. ”

(பொ-ள்.) ஹே மூட! நீ மிருத்தியுவினின்றும் பயத்தை யேன் செய்கின்றனை? பயஞ்செய்யும்புருடனை எமராஜாவிட்டுவிடுவாரா என்? விடார்; ஏனெனின், இவ்வுலகத்தே ஜன்மித்தஜீவனை எமராஜா ஒருபோதுமவிடுவதில்லை. ஜன்மியாதவனைக் கவராராதலின் நினக்கு மிருத்தியு பயமிருக்குமாயின் நீ உனக்கு மீண்டும் ஜன்மம் வாராதபடி முயலுதி. ஹே நசிகேதா! இபபாரதகண்டத்தே அதிகாரியாய மனுடசரீரத்தையடைந்தும் மரணத்தின் முன்னர் ஆன்மசாக்ஷாத்காரத்தையடையாவிடின் அவ்வஞ்ஞானிதன்னறம்பாவானுசாரமாய்ப் பூமிமுதலிய சர்வசுப அசுபலோகத்தே நானாவகையாய மேற்கீழ்ச் சரீரங்களையடைவன். அவை மிருத்தியு பயத்தோடு கூடியவாம், அநேகவகைத் துக்கங்களோடு கூடியவாம். தூயகண்ணாடியின்கண்ணே முகம்நன்றாகத் தோற்றுவதேபோல, சாதனசதுஷ்டயசபன்ன இவ்வதிகாரிதேகத்தே அந்தர்முக சுத்தபுத்தியின்கண்ணே ஆன்மா நன்றாகத் தோற்றும். கனவின்கண்ணே ஆன்மாவின்வடிவம் ஜீவர்கட்கு வெளிப்படையாய்த் தோற்றமாட்டாததேபோலச் சுவர்க்கலோகத்தே இரமணீயபோகங்களின் [illegible]

தியையுடைய புத்திகளின்கண் ஆன்மா நன்றாய்த் தோற்றாது. உண்மையாய்ச் சலனாதிகளற்ற முகமானது சலனமாய சலத்தின்கண்ணே அவ்விபரீத தர்மமுடையதாய்த் தோற்றுவதேபோலக் கந்தர்வலோகத்தின்கண்ணும போகாசக்த புருடர்கட்கு இவ்வான்மா விபரீதரூபமாகவே தோற்றும். இவ்வாறு வேறுலோகங்களினும் இவ்வான்மா யதார்த்தரூபமாய்த் தோற்றாதாம். அவ்வுலகங்களிலிருக்கும் புருடர் விஷயபோகத்தே அத்தியந்தம ஆசக்தராவராதலின் ஆன்மஞானமுண்டாயினும் விஷயாசக்திரூபப் பிரதிபந்தவயத்தால் அந்த ஞானம் ஆன்மாவின் வாஸ்தவ வடிவத்தை விடயஞ்செய்யமாட்டாது. அதனால் அவர்தம் அவித்யா நிவிருத்தியுண்டாவதில்லையாதலின் சுவர்க்காதிகளில் ஆன்மஞானம் அடையும் இச்சையுற்று அதிகாரி ஈண்டுப் புருடார்த்தமற்றவனாகாதொழிக. சாயை, ஆதபமிரண்டும் வேறுவேறாகப பிரதீதியாவதேபோலப் பிரஹ்மலோகத்தே ஜீவர்கட்கு ஆன்மாத் தேகாதிகளினும் வேறாருவமாய் வெளிபபடையாய்ப் பிரதீதியாமாயினும், அது நெடுங்கால உபாசனையாற கிட்டுவதாமாதலின் அத்தியந்தந் துர்லபமாம். ஆகவே ஆண்டு ஆன்மஞானமடைய இச்சித்து, அதிகாரி ஈண்டு ஆன்மஞானயத்தனத்தைச் சிதிலஞ்செய்யாதொழிக; மற்றோ, மோக்ஷசுக இச்சையுடையவன் இப்பாரதகண்டத்தே குருசாஸ்திராதி சாதனசமபன்ன மனுடசரீரத்தின் கண்ணே ஆன்ம சாக்ஷாத்காரத்தைச சமபாதித்துககொள்க. அதனடைவின் கண்ணிரண்டு சாதனங்களுள, ஒன்றோ விசாரரூப சாங்கியமாம்; மற்றொன்றோ பொறிகளடக்கலென்னும் யோகமாம் முதலாவதைக்கேள்: ஆகாசாதிகளினின்றும் வேறுவேறாயுண்டாய தத்தம் வியாபாரசகித சுரோத்திராதி இந்திரியங்களை எச்சைதன்யம் தனது ஸ்வரூபத்தினின்றும் பரஸ்பரமும் பின்னமாயறியுமோ அப்புத்தி சாக்ஷிரூப சைதன்யம அதிகாரிக்குத் தன்னான்மவடிவமாயறிய யோக்கியமாம். அதனையே தன தான்மரூபமாயெண்ணிச சர்வ திருசியப் பிரபஞ்சத்தையும் ஆன்மாவின்கண்ணே கற்பிதமாயெண்ணும அதிகாரியே சர்வசோகமுமற்றவனாவன்; சாஸ்திர தாற்பரியமறிந்த வித்வானுமாவன். முன்னர் யான் உனக்கு எவ்வான்மாக் காரணமற்ற அஜரூபமாயிருப்பதெனக் கூறினேனோ அது சுரோத்திராதிகளினின்றும் அவற்றின் ஞானரூப வியாபாரங்களினின்றும் பரமாய்ச் சாக்ஷிரூபமாய்த் திதமாம். அதுவே வாககாதிகளினின்றும் அவற்றின் கிரியாரூப வியாபாரங்களினின்றும் பரமாய்ச் சாக்ஷிரூபமாய்த் திதமாம. இப்போதிப்பொருளே வெளிப்படையாய் நிரூபிக்கப்படும்:— ஹே நசிகேதா! விசேஷரூப சுரோத்திராதிகளினின்றும் சாமானிய ரூபமுடையமனம் பரமாம்; சவிகற்பரூபமனத்தினும் நிர்விகற்பரூப புத்திபரமாம்; அவ்வியஷ்டி புத்தி யினும் சமஷ்டிபுத்தி பரமாம்; அதனினும் அவ்வியாகிருதம் பரமாம்; அதனினும் சர்வாந்தரியாமியாய புருடன் பரமாவன், அவன் தூலப்பிரபஞ்சரூபகாரியமற்றவன், சூக்ஷுமப் பிரபஞ்சரூப காரணமற்றவன், அவனைத் தனது ஆன்மவடிவமாயறிந்து அதிகாரி மோக்ஷத்தையடைவன், அமிருதபாவத்தையடைவன். இப்பரமான்மாவின்கண்ணே காரியசகித அவித்தையின் நாசரூபத்தன்மையாமாதலின், சாஸ்திரவேத்தாக்கள் பரமான்மாவை மோக்ஷரூபமென்பர். இதன்கண்ணே யிலங்குவது ஆனந்தரூபத்தன்மை

யாமாத்தின் சாஸ்திரவேத்தாக்கள் இதனை அமிருதரூபமென்பர். மோக்ஷசப்தத்தினர்த்தமும் அமிருத சப்தத்தின் அருத்தமும் பரஸ்பரம் அபின்னமா மாயினும் காரியசகித அவித்தையின் நாசரூப நிமித்தத்தையும், பரமாநந்தத்தன்மைரூப நிமித்தத்தையு மங்கீகரித்து அறிஞர் அவ்விரண்டிற்கும் சிறிது கற்பிதபேதத்தை அங்கீகரிப்பர். இத்துணையால் விசாரரூபசாங்கியோபாயம் வருணிக்கப்பட்டது. இனிப்பொறிகளின் தடைவடிவயோகசாதனம நிரூபிக்கப்படும்:—ஹே நசிகேதா! சயஞ்சோதி ஆன்மாவின்வடிவம் நேத்திராதி இந்திரிய ஜன்னியஞானத்தே விஷயபாவத்தை அடையாதாதலின் அதனை எவனும் அவற்றாற் காணமாட்டான்; ஏனெனின், உருவ பரிசாதிகுணங்களையுடைய பொருளை நேத்திராதிகளாற் கவரப்பெறுவதாம; அவையற்றபொருள் அவற்றாற் கவரப்படாது. ஆன்மாவும் அவையற்ற நிர்க்குணவடிவமாதலின் அவற்றாற் கவரப்பெறாது. இவ்வாத்தையை முன்னரும் யான் கூறினேனாதலின் அதிகாரி அப்பொறிகளின் நிரோதவடிவயோகத்தால் பரமான்மாவைத் தன்னான்மவடிவமாய்ச சாக்ஷாத்கரிக்குக. சங்கற்பசகிதமனத்தை வயஞ்செய்யும் அந்தர்முகச் சுத்தபுத்தியால் ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே சிறிதுமாத்திரையும் திருசியப்பொருளைச் சங்கற்பியாது எவ்வியோகத்தினுதயமாமோ அநத யோகோபாயததால ஆன்மாவைச் சாக்ஷாத்கரிக்கும அதிகாரியே அமிருதபாவத்தையடைவன், அதிகாரியின சுரோததிராதிகளும், மனமும், புந்தியும் தமது சஞ்சலதததைவிட்டு நிச்சலபாவததை யடையுஙகால, அநநிச்சலத்தன்மையை அறிஞன் பரமகதியென்பன். மனம், புததி, இநதிரியங்களின் நிரந்தர ஏகாக்கிரததன்மைரூப அவஸ்தையின பிராபதிக்குச் சமானமாய் வேறோ அதிக கதியின்றாம்; மற்றோ, அதனாலதிகாரிக்குச சுயஞ்சோதி ஆன்மாவின்சாக்ஷாத்காரமுண்டாம. அதனாலதிகாரி சிறிதுமாத்திரையும் சம்சாரதுககததை யடையானாதலின அவ்வேகாக்கிரத்தன்மையே பரமகதிரூபமாம. நானாவகை விக்கினங்களாலும சஞசலததையடையாத ஏகாக்கிரத்தன்மைரூபு தாரணையை விவேகியோகமென்பன். யோகமே பிரஹ்மபாவப பிராபதிவாயிலாய் ஜகததுறபததிசமஹாரஞ்செய்வதின்சாமாத்தியரூப ஐசுவரிய அடைவின்காரணமாமாதலின அதனையடைய நீ பிரமாதமற்றவனாய்ச சாவதானனாகுதி. யான பிரஹ்மரூபமாய் இருக்கின்றேன் என்னும ஜீவப பிரஹ்மாபேதம ஞானயோகமாம், அது இநதிரியங்களின் ஏகாக்கிரததன்மை வடிவதாரணையின்றி யுண்டாகாதாம. காமசங்கறபாதி சித்தவிருததிகளின் உற்பத்திரூபப் பிரமாதமிருபபினும்யோகம அடையபபடாதாதலின், மனம் புத்தியோடுகூடிய இநதிரியஙகளை நிரோதித்து பிரமாதமறறு அபேதஞானரூப யோகத்தை அடைபவனே பரமேசுரனைப்போல ஜகத்தின் உற்பத்தி சமஹாரஞ்செய்வதிலும சமர்த்தனாவன். யோகரூப உபாயமின்றி ஆன்மா மனவாணியாலும் சுரோத்திராதிகளாலும அடையபபடாது; மறறோ, அவ்வேகயோகரூப உபாயத்தானே ஆன்மா அடையபபெறும. ஆநந்தவடிவ ஆன்மா யோகரூப உபாயத்தாலடைவதேபோலச் சிரத்தைவடிவ உபாயததாலும் அடையப்பெறும். வேதபாகிய நாஸ்திகரின் விகறபங்களைப் பரித்தியாகிதது சறகுருசாஸ்திர உபதேசத்தே விசுவாசம்வைத்து ஆன்மசத்தையை நிச்சயஞ்செய்தல சிரத்தையாம்; முக்காலத்தும் மனவாக்குகட்கு விஷயரூபத்தாற் பிரசித்தமாய தூலசூக்ஷும பதார்த்தங்களியா

வும் மாயாவிசிஷ்டப்பரமான்ம ஸ்வரூபமாம். மனவாணிகட்கவிஷயமாயசைதன்யம் சத்தியரூபமேயாம் எனக்கூறும் ஆஸ்திகரின்மதத்தைப் பரித்தியாகித்து வேதபாகிய நாஸ்திகரின்மதத்தே சிரத்தைசெய்யும் பகிர்முகருக்கு ஆன்மாவின் உண்மை வடிவம் சாக்ஷாத்கரிக்க வாராதாமாதலின், ஆன்மசாக்ஷாத்கார இச்சையுடையவன் நாஸ்திகமதத்தைப் பரித்தியாகித்து ஆஸ்திகமதத்தே சிரத்தைசெய்க ஆன்மாச் சத்ஸ்வரூபதர்மமற்றதாதலின் சத்சப்தத்தானும் கூறவொண்ணுதாம். ஆன்மாச் சர்வ ஜகத்தின் வியவகாரத்தையும் சித்தஞ்செய்யுமாதலின் அசத் சப்தத்தானும் கூறவொண்ணுதாம். ஆயினும், ஆன்மாவின்றரிசனத்தே சாஸ்திரவேத்தாக்கள் இம்முறையைக் கூறினர்கள் :—அதிகாரி முதலில் ஆன்மாவைச் சகத்தின் காரணத்தன்மைரூப சத்ஸ்வரூபத்தாற்காண்க. பின்னர்த் தத்துவபாவரூப சுத்தஸ்வரூபத்தாற்காண்க. இவ்வாறுகாணும் அதிகாரியின் அந்தக்கரணத்தே அஸ்திரூப ஆன்மாவின் தத்துவபாவரூப சுத்தஸ்வரூப ஆவிர்ப்பாவமாம். நிரதிசயப் பிரீதிக்கு விடயமாதலின், பரமாநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே அஸ்திரூபத்தன்மையேயுளது. நாஸ்திரூபத்தன்மை ஒருகாலுமின்றாமாதலின் ஆன்மாவின்கண்ணே இருக்கும் அஸ்திரூபத்தன்மை தத்துவபாவத்தினும் வேறன்றாம்; மற்றோ, அது அதுவேயாம். நாஸ்திரூபத்தன்மையையும் சித்தஞ்செய்யும் ஆன்மாவை நாஸ்திரூபமாய்க்கூறல் சம்பவியாதாம். இசசம்பூரண திருசியப்பிரபஞ்சம் ஜடரூபமாமாதலின் அதற்குத் தானுய்ச் சித்தித்தலசம்பவியாதாம்; மற்றோ, திருஷ்டாவாய ஆன்மாவின் அனுக்கிரகத்தானே ஜடப்பிரபஞ்சசித்தியாம். இங்ஙன் சர்வப் பிரபஞ்சத்திற்குஞ் சத்தையைக்கொடுக்கும் அஸ்திரூப ஆன்மாக்களை அஸ்திரூபத்தன்மையானே சித்தமாகாது; மற்றோ, அதுவே முக்கிய அஸ்திரூபமாம். அதையங்கீகரித்தே அனுன்மபபொருள் அஸ்திரூபமாய்ப் பிரதீதியாம். வெல்லத்தின்மதுரத்தன்மையை அங்கீகரித்தே கடலைமுதலியவை மதுரமாவதேபோலும்; ஈண்டியாவனுக்கு எங்ஙனுண்மை வடிவமாமோ அவனை அங்ஙனுண்மை வடிவமாய் யாவன் காண்பனே கூறுவனே அவன்மீது அவன் சந்தோஷமுறுவன். மகாராஜாவை யாவன்மகாராஜரூபமாய்க்காண்பனே கூறுவனே அவன்மீது அவாபிரசன்னராவர்; இன்பத்தை இயற்றுவர். அதுபோல, அஸ்திரூப ஆன்மாவை அவ்வடிவாயேகண்டு கூறுபவன்மீது ஆன்மாப பிரசன்னமாம, மோக்ஷரூப நித்தியசுகத்தை அடைவிக்கும் மகாராஜாவை அவ்வுருவமாய்ப பாராது கூறாது தாசரூபமாய்ப்பார்த்துக் கூறும் மூடன்மீது மகாராஜாபபிரசன்னராகாமற் குரோதமுடையவராய்த் துக்கத்தையே அடைவிப்பா. அதுபோல, அஸ்திரூப ஆன்மாவை அவ்வுருவமாய்ப் பாராதுகூறாது நாஸ்திரூபமாய்ப பார்த்துக்கூறும மூடன்மீது ஆன்மாப்பிரசன்னமாகாமல் அவ்விபரீததரிசிக்கு ஜனனமரணுதி துக்கத்தையே அடைவிக்கும். ஆகையால், சுகத்தையடைய இச்சித்த அதிகாரி ஆன்மாவை அஸ்திரூபமாயே அறிக, அஸ்திரூபமாயே கூறுக. அதிகாரிகட்குச் சாஸ்திரவேத்தாக்கள் முதலில் ஆன்மாவின் அஸ்திரூப உபதேசத்தைச்செய்து பின்னர், ஆன்மாவின் தத்துவபாவத்தை உபதேசிப்பாராதலின், தத்வபாவரூபமாய்க்கண்ட ஆன்மா அதிகாரிகள்மீது அவசியம் பிரசன்னமாம்.

சங்கை:—ஹே பகவன்! தத்வஸ்வரூபத்தால் ஆன்மாவைத் தரிசிப்பின் அதிகாரி எப்பலத்தை அடைவன்?

சமாதானம்:—ஹே நசிகேதா! ஜீவனுடைய இருதயத்தேயிருக்கும் எல்லாக்காமமும் நீங்குங்கால் ஜீவன் அமிருதபாவத்தை அடைவன், இத்தேகத்தே பிரஹ்மரூப நித்தியசுகத்தை அனுபவிப்பன்; இதுவே தத்துவ தரிசனபலமாம். இப்போது இப்பொருளே வெளிப்படையாய் நிரூபிக்கப்படும்:—ஹே நசிகேதா! ஜீவர்களின் இருதயத்தேயிருக்கும் இவ்வுலக விஷயஜன்னியசுகராகமும், சுவர்க்காதி லோகங்களின் விஷயஜன்னிய சுகராகமும் காமமெனப்படும்; அக்காமத்தைத் தத்வபாவத்தாற்கண்ட ஆன்மாத் தனது சௌந்தரியத்தால் நாசஞ்செய்யும்; ரூபயௌவன அவஸ்தையோடுகூடிய காமினி தனது சௌந்தரியத்தால் காமிக்கு அன்னிய ஸ்திரீயின்கண்ணேயிருக்கு மிராகத்தை நாசஞ்செய்வதேபோலும், அக்கினியால் தபிக்கும் சுகந்தமுடைய கோவின் நவீனநெய் தனது சௌந்தரியத்தால் புருடனுக்குத் தைலத்தின்கண்ணேயிருக்கும் இராகத்தை நாசஞ்செய்வதேபோலும், தத்துவபாவரூபத்தாற்கண்ட ஆநந்தஸ்வரூப ஸ்வயஞ்சோதி ஆன்மாவும் தனது சௌந்தரியத்தால் ஜீவர்கட்கு விஷயசுகத்தின்கண்ணேயிருக்கும் இராகத்தை விரைவாகவே நாசஞ்செய்யும்; ஜீவர்கட்கு விஷயஜன்னியசுகத்தேயுள்ள காமமே மரணமாம்; அதை அங்கீகரித்தே ஜீவன சாஸ்திரத்தே மர்த்தய னெப்பட்டுளான், காமநீங்கவே மர்த்தியபாவத்தை அடையான்; மற்றேறு, ஜீவித அவஸ்தையின்கண்ணே அவன் அமரபாவத்தையடைவன். சாஸ்திரதாற்பரியத்தையுணர்ந்த விதவான் இத்தூல சரீரநாசத்தை மரணமென்னுன்; மற்றேறு, சர்வதுக்கங்களை அடைவிக்கும் காமத்தையே மரணமென்பன். காமரூபமரணம நீங்கிய பின்னர் அமரபாவத்தையடைந்த அவன் சர்வதுக்கமுமற்ற ஜீவனத்தை ஏனடையான்? மற்றேறு, அவசியமடைவன். ஆநந்தவடிவ ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்த அதிகாரி ஏன் பிரஹ்மரூபனாகான்? மற்றேறு, அவசியமாவன். அந்த பிரஹ்மம் சர்வதுக்கமும் அற்றதாதலின் அதனோடு அபேதபாவத்தை அடைந்த ஜீவான்மாவும் சர்வதுக்கமுமற்றதாம். இஜ்ஜீவிதகாலத்தே ஆநந்தஸ்வரூப ஆன்மாவின் சாக்ஷாத்காரமே பிரஹ்மப்பிராப்தியாம. அன்னியவஸ்து ஞானத்தால் அன்னிய வஸ்துவின் பிராப்தியுண்டாகாதாதலின், இவ்வான்மாப் பிரஹ்மத்தினும் வேறன்றும்; மற்றேறு, பிரஹ்மரூபமேயாம். அது ஆன்மாவினும பின்னமாமாயின் ஏகமேவாத்விதீயம் என்னும சுருதியின்கண்ணே பிரஹ்மத்தின் அத்விதீயத்தன்மை கூறியிருத்தல் அசங்கதமாம்; ஆதலினது ஆன்மரூபமேயாம். பாவ அபாவமற்றதும் சர்வபேதமற்றதுமாய இச்சுயஞ்சோதி ஆநந்தஸ்வரூப ஆன்மாவை அதிகாரி இத்தேகத்தே சாக்ஷாத்கரிப்பனாயின் அவனுக்கு அத்விதீயப பிரஹ்மம் அடைவுறுமென யாவன் கூறவல்லன்? எவ்வாஸ்திகனும் வல்லனாகானாதலின் இது துணியப்பெறும்:—அதிகாரிக்கு ஆன்ம சாக்ஷாத்காரத்தால் சர்வகாமங்களின் நிவிருத்தியாங்கால் அதிகாரி இத்தேகத்தே பிரஹ்மரூப ஆன்மாவையடைந்து சர்வதுக்கமற்ற அமிர்தபாவத்தை அடைவன். யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேன் என்னும் ஆன்மஞானத்தை அடைந்தவனுக்குச் சம்பூரண ஸம்சயமும் விபரியயமும் நீங்குமாதலின் அதிகாரி ஆன்மஞானத்தை அவசியம் சம்பாதிக்குக. இப்போது

அக்குதர்க்கரூப் சம்சயவிபரீயம் நிரூபிக்கப்படும்:—பிரஹ்மமென்பதேயின்றும், ஏனெனின் ஒரு பிரஹ்மம் சத்தியமாயின் எனக்குப் பிரதீதியாமன்றோ? ஆனால் அ பிரதீதியாவதின்றாமாதலின் அஃதின்றாம்; அல்லது, அது பிரசித்தமாகுமாயினும் சர்வதர்மமுமற்ற நிர்க்குணப் பிரஹ்மரூபம் கர்த்தா போக்தாவா யான் எவ்வாறு வேன்? மற்றோ, யான் பிரஹ்மரூப மல்லேனென்முதலிய அநேகவகைச் சம்சய விபரீயபங்கள் இருதயத்தேயுண்டாம். குருசாஸ்திரானுக்கிரகத்தால் எக்கணத்தே அதிகாரிக்குச் சம்சய விபரீயரூப இருதயக்கிரந்திகள் நாசத்தையடையுமோ அக் கணத்தே, அவன் அத்விதீயப பிரஹ்மத்தைத் தன்னுண்மவடிவமாய் அடைவன். சூரியோதயகணத்தே, அந்தகார நீக்கமாவதேபோலும். அதிகாரி குருசாஸ்திர உபதேசத்தானும் ஜீவப்பிரஹ்ம அபேதத்தையே அறிதல் தகுதியாம், இதனினும்மேலா பொருபொருளுமறியத்தகக தின்றாம். இவ்வாறாராய்ந்து ஆன்ம சாக்ஷாத்காரத்தை அடையாதவனுக்கு இருவகைக்கதி சாஸ்திரத்தின்கண்ணே கூறப்பட்டிருக்கின்றது. ஒன்றோ, உபாசனையாற பிரஹ்மலோகப் பிராப்தியாம், மறறொன்றோ கருமங்களாற் சுவர்க்காதிலோகங்களின் பிராப்தியாம், இவ்விருகதியும் எந்நாடிகளின் வாயிலாய் ஆமோ அவற்றை நீகேள், இவ்விருதயரூப மூலத்தினின்றும் 101—பிரதானநாடிகள் கிளம்பும். அவ்வியாவற்றுள்ளும் ஒரு சுழும்னையெனப் பெயரிய நாடி மூர்த்தவாயிலைப் பேதித்துச் சூரியமண்டலவாயிலாய்ப் பிரஹ்மலோகபரியந்தம பிராப்தமாம். இதனானே அந்நாடி அவ்வுலகவாயிலாம், அதன்வாயிலாய் ஜீவன் பிரஹ்மலோகத்தை அடைவன் அதனைவிடுத்து வேறுள்ள 100-நாடிகள் வாயிலாய்சசரீரததினின்றும் வெளியேகிளம்பிய ஜீவான்மாத்தனது புண்ணியபாவானுசாரமாய் நானுவகைக் கீழ்மேல சரீரங்களையடையும், தருமாரஜாவாய என்வயதனை அடையுமாதலின் அதிகாரி இப்பிறப்பில் ஆன்ம சாக்ஷாத்காரத்தை அவசியம் சம்பாதிக்கவேண்டும. இப்போது சம்பூர்ணகடவல்லி உபநிஷத்தால நிரூபித்தபொருள் சுருக்கமாய் நிரூபிக்கபபெறும்:—ஹே நசிகேதா! அந்தக்கரணரூப உபாதிசபபந்தத்தால் அங்குஷ்டமாத்திர பரிமாணமுடைய ஆன்மா அவித்தைவடிவ உட்சட்டையாலும, சூக்ஷ்மசரீரரூப வெளிச்சட்டையாலும் மறைபட்ட சாவ ஜீவர்களின் இருதயத்தே விளங்கிக்கொண்டிருக்கும். அச்சூட்சுமசரீரம அநேக பிரகாரதுக்கங்களின் காரணமாம; அதன்கண்ணே யிருககும் சித்தம் இரும்புச்சங்கிலியேபோலப் பநதனகாரணமாம். இத்தகைய சூக்ஷ்மசரீரத்தினின்றும் அவித்தையினின்றும் அதிகாரி ஆன்மாவை விவேகத்தோடுகூடிய தூயமனத்தாற பின்னஞ்செய்க பாலகன் முஞ்ஜரூபபாகிய துவக்கினின்றும் இஷீகைவடிவமத்திய திருணத்தைப் பேதிப்பதேபோல அவித்தை சூக்ஷ்மசரீராதி என்னும் சர்வஜட வுபாதிகளினின்றும் விசாரித்துப பேதித்த ஆன்மா உபாதியாலாக்கப்பெற்ற பரிசசின்னபாவத்தைப பரித்தியாகித்துத் தனது பரிபூரண ஸ்வரூபத்தையடையும், அநதக்கரணாதி யுபாதிகளோடுகூடிய ஜீவான்மா மரணத்தின்பின்னர் எனது பாசங்களாற் கட்டுபபடுவதேபோல அந்தக் கரணாதி யுபாதிகளினின்றும் நீங்கிய தூய ஆன்மாக் கட்டுப்படாது. இவ்வாறு தூல, சூக்ஷ்ம, காரண மூன்றுபாதிகளறற, ஜன்மமரணாதி சர்வ விகாரங்களற்ற சயஞ்சோதிரூப பரமான்மாவையே நீ நினதான்மவடிவமாய் நிச்சயஞ்செய்தி; இச்சீவப் பிரஹ்ம அபேதமேசர்வவேதாநத சாஸ்திரசித்தாந்தமாம். ஸ்ரீகுரு கூறல்:—ஹே குழநதாய்! இவ்வாறு எமராஜா நசிகேதாவிற்குச் சாதனங்களோடுகூடிய சம்பூரணப் பிரஹ்மவித்தையை உபதேசித்து மௌனத்தையுற்றனர், நசிகேதாவும் அந்தப் பிரஹ்மவித்தையைக்கேட்டுச் சந்தோஷமுற்றனர். பிரஹ்மவித்தையின் சிரவண மனன நிதித்தியாசனத்தால் ஆன்ம சாக்ஷாத்காரத்தை அடைந்த அவர்

ஷிருத் கிருத்தியத்தன்மையை அடைந்தனர். எமராஜாவின் உபதேசத்தால் சம்பூரணப் பிரஹ்மவித்தையையடைந்து நசிகேதாவானவர் ஜீவித அவஸ்தையின் கண்ணே அத்விதீயப் பரப்பிரஹ்மத்தை அடைந்தனர். அது சுயஞ்சோதிரூபமாம், பரமானந்தவடிவமாம், சர்வஜீவர்களின் ஆன்மவடிவமாம், இத்தகைய அத்விதீயப்பிரஹ்மத்தைத் தம்மான்மவடிவமாயுணர்ந்து சம்பூரணதுக்க சோகங்களற்றனர் ஜன்மமரணமற்றனர், பிராரப்தகருமம் போகமின்றி நாசமாகாதாதலின் அந்த வித்தையாற் காக்கப்பட்ட விக்ஷேபரூப அவித்யாலேசம பிராரப்தகரும போகானந்தரம் நிவிருத்தமானபோது விதேகமுத்தியை நசிகேதா அடைந்தனர். ஹே குழந்தாய்! நசிகேதா ஆன்ம சாக்ஷாத்காரத்தையடைந்து ஜீவன்முக்தியையும விதேகமுக்தியையும் அடைந்ததேபோல இப்போதுள்ளோரும ஆன்மசாக்ஷாத்காரத்தையடையின் அவ்விரண்டையுமடைவராதலின் அதிகாரி அவசியமாய் ஆன்ம சாக்ஷாத்காரத்தைச் சம்பாதிக்குக. ஹே மைந்த! யாம் கூறிய எமராஜ நசிகேதாவின் ஆக்கியானத்தை முன்னர்க் கடரெனப் பெயரிய இருஷி மூவருணத்திய அதிகாரிகட்குக் கூறினர். ஜீவப்பிரஹ்ம அபேதத்தைப் போதிப்பிக்கும் இப்பிரஹ்மவித்தையை முன்னர் நசிகேதாதி மகான்கள் எமராஜாதி தேவதைகளினின்றும் அடைந்தனராதலின் இது அத்தியந்த துர்லபமாம். இதனானே பிரஹ்மவித்தையைக்கூறும் குருவையும் சிரவணிக்கும் சீடனையும எமராஜா முன்னர் ஆச்சரியரூபமாய்க்கூறினர். இத்தகைய துர்லபமாகியபிரஹ்மவித்தையினுபதேசகாலத்தே பிரஹ்மவித்தையின் வக்தாவாய குருவிற்கும சுரோதாவாய சீடனுக்கும் அல்லது இருவருக்குமிந்திராதிதேவதைகள் நானாவகை விக்கினங்கள்செய்வர். என்னுமிது முன்னர் நான்காவதத்தியாயத்தே ததயங் இருஷி இந்திரசம்வாதத்தே விஸ்தாரமாய் நினக்குக் கூறினேம். பிரஹ்மவித்தையின்கண்ணே குசலமில்லாத குருவின் சீடனுக்கே பிரஹ்மவித்தைப பிராப்தியின்கண்ணே தேவதை விக்கினஞ்செய்யும், பிரஹ்மவித்தியா சம்பிரதாயத்தின்கண்ணே குசலமாய குருவின் சீடனுக்கு விக்கினஞ்செய்யாது. ஆகையால, அதிகாரியானவன் பிரஹ்மவித்தையின் சம்பிரதாயத்தை அறியாநின்ற குசலகுருவினிடத்திருந்தே பிரஹ்மவித்தையின் சிரவணஞ்செய்க. பிரஹ்மவித்தையின் அடைவின்கண்ணே தேவதையால விக்கினஞ்செய்யப்பட்ட புருடனுடைய புத்திபூர்வ பாவகருமயோகத்தால விபரீதமாய் விடும்; அதனாலவன் தனது குருவோடு துவேஷம் செய்வன். அதனால் அவன் அநேகவகை நரகங்களையடைவன். சீடனானவன் பிரஹ்மவேத்தாவிற்குச் சரீரமனவாணியாற் சேவைசெய்யின் அவனுக்குக் குருவின்கிருபையால் விரைவாகவே ஆன்ம சாக்ஷாத்காரப் பிராப்தியாம் தேவதைகளைச சேவிப்பனாயின் அதிகாரிக்கு ஆன்மசாக்ஷாத்காரத்தின் நிஷ்டைவடிவப பலபிராப்தியாம். இவ்வாறு குருவின் சேவையாலும் தேவதைகளின் சேவையாலும் சர்வ விக்கினங்களும் அறறவனாய்ப் பலசகிதப் பிரஹ்மவித்தையை அடைவன். ஸ்வப்பிரகாச ஆன்மவடிவ மோக்ஷரூபப் பலப்பிராப்தி தேவதைகளின் அனுக்கிரக அதீனம் எனயாம் நினைக்கின்றேமாதலின் அத்தேவதைகள் மகிழ்வுறறபொருட்டு முமுக்ஷுக்கள் சாந்தி மந்திரங்களின் பாடத்தை அவசியஞ்செய்க. எனக் கடரெனப பெயரிய இருஷி தமது சீடர்பொருட்டுக் கூறினர். ஹே குழந்தாய்! அவ்விருடி தமது சீடருக்குப் பிரஹ்மவித்தையையுபதேசித்து விக்கின நீக்கப்பொருட்டுச் சாந்தி மந்திரபாடஞ்செய்ய உபதேசஞ்செய்ததேபோலத் தித்திரியெனப் பெயரிய இருஷியும் நானாவகை ஆக்கியானத்தோடுகூடிய இப்பிரஹ்மவித்தையைத் தமதுசீடர்பொருட்டுபதேசித்து விக்கின நிவிருத்தியின்பொருட்டுச் சாந்தி மந்திரபாடஞ்செய்ய வுபதேசித்தனர்.

ஒன்பதாவது அத்தியாயம் முற்றிற்று.

சுபம்.

---

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## பத்தாவது அத்தியாயம்.



ஓம் ஸ்ரீ கணேசாயநமஃ ஸ்ரீ குருப்யோநமஃ ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நமஃ
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநமஃ

முன்னர் ஒன்பதாவதத்தியாயத்தே யஜுர்வேதத்தின் கடவல்லி யுபநிடதார்த்தம் நிரூபிக்கப்பட்டது. இப்போது பத்தாவதத்தியாயத்தே யஜுர்வேதத்தின் தைத்திரீயக உபநிடதார்த்தம் நிரூபிக்கப்படும். ஒன்பதாவதத்தியாயத்தே யம நசிகேதாவின் அற்புத ஆக்கியானத்தைச் சிரவணித்த சிஷ்யன் மிகவும் மகிழ்வுற்று, மீண்டும் தனது குருவிடத்தே இவ்வகை வினவினன் :—ஹே பகவன்! முதலத்தியாயத்தே தாங்கள் இருக்குவேதத்தின் ஐதரேய உபநிஷதார்த்தத்தை நிரூபிக்கும்பொருட்டுச் சனகாதி இருஷிகட்கும் வாமதேவாதி சாத்விகிப் பிரஜைகட்குமுற்ற சம்வாதவாயிலாய் நானாவகைப் பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள். இரண்டாவது மூன்றாவது அத்தியாயங்களில் தாங்கள் அவ்விருக்குவேதத்தின் கௌஷீதகி உபநிஷதார்த்தத்தை நிரூபிக்கும்பொருட்டு இந்திரப்பிரதர்த்தன சம்வாதத்தாலும், அஜாதசத்துரு பாலாகி சம்வாதத்தாலும் நானாவகைப் பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள். நான்காவதுமுதல் நான்கத்தியாயங்களில் தாங்கள் யஜுர்வேதத்தின் பிருகதாரண்ய உபநிடத அர்த்தத்தை நிரூபிக்கும்பொருட்டு, இரண்டு புருஷவம்சத்திலும் ஒரு ஸ்திரீவம்சத்திலும் உள்ள இருஷிகளின் பரஸ்பர பேதத்தையும் அபேதத்தையும், சூக்ஷ்மதரிசி இருஷி அசுவினீ குமாரர்கட்குக் கூறிய விருத்தாந்தங் கூறியதையும், தத்யங் அதர்வண இருஷி இந்திர அசுவினீ குமாரர்கட்கு உபதேசித்த பிரஹ்மவித்தையையும், அசுவினீ குமாரர்கட்குப் பிரஹ்மவித்தையை யுபதேசித்தலால் இந்திரர் அவ்விருடியின் மத்தகச் சேதஞ்செய்த விருத்தாந்தத்தையும், ஜனகராஜாவின் யாகத்தே யாஞ்ஞவற்கியருக்கும் ஆசுவலாதி அநேகப் பிராஹ்மணர்கட்கும் உற்ற சம்வாதத்தானே நானாவகைப் பிரஹ்மவித்தையையும், யாஞ்ஞவற்கிய முனிவரின் சாபத்தாற் சாகல்லியரின் மிருத்தியுவையும், சாவப் பிராஹ்மணர்களினின்றும் யாஞ்ஞவற்கிய முனிவரின் வெற்றியையும், யாஞ்ஞவற்கிய முனிவருக்கும் ஜனகராஜாவிற்கு முண்டாய இருமுறைச் சம்வாதத்தால் நானாவகைப் பிரஹ்மவித்தையையும், யாஞ்ஞவற்கிய முனிவருக்கும் மைத்திரேயிக்குமுண்டாய சம்வாதவாயிலாய் நானாவகைப் பிரஹ்மவித்தையையும், யாஞ்ஞவற்கிய முனிவரின் சந்நியாச ஆசிரமத்தையும் கூறினீர்கள். எட்டாவதத்தியாயத்தே தாங்கள் அந்த யஜுர்வேதத்தின் சுவேதாசுவதர உபநிஷதார்த்தத்தை நிரூபிப்பான் பிரஹ்மவேத்தாப் பிராஹ்மணர்களின் சம்வாதவாயிலாயும், சுவேதாசுவதர சந்நியாசிகளின் சம்வாதவாயி

லையும் நானாவகைப் பிரஹ்மவித்தையையும், ஜகத்காரணத்தையும் கூறினீர்கள். ஒன்பதாவதத்தியாயத்தே தாங்கள் அந்த யஜுர்வேதத்தின் கடவல்லி யுபநிடதார்த்தத்தை நிரூபிப்பான் யமராஜா நசிகேதஸின் சம்வாதவாயிலாய் நானாவகைப் பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள். ஹே பகவன்! அவ்வத்தியாய ஈற்றில் பிரஹ்மவித்யாப் பிராப்தியின்கண்ணே இந்திராதி தேவதைகள் அநேகவகை விக்கினங்களைச் செய்வர்; அதன் நீக்கப்பொருட்டு அதிகாரியாய சீடன் சாந்திமந்திரத்தை அவசியம் படிக்குக எனக் கடர் என்பவர் தமது சீடருக்குக் கூறியதுபோலவே தித்திரி இருஷியும் தமது சீடருக்குப் பிரஹ்மவித்தையை யுபதேசித்து அவ்விக்கினங்களின் நீக்கப்பொருட்டுச் சாந்திமந்திர பாடஞ்செய்ய உபதேசித்தனர் எனத் தாங்கள் கூறினீர்கள். ஹே பகவன்! முதலாவது அத்தியாயமுதல் ஒன்பதாவதுவரை ஐதரேயர், கௌஷீதகி, ஆதித்தியா, தத்யங்ஙதர்வணர், யாஞ்ஞவற்கியர், சுவேதாசுவதரர், கடர் என்னும் எழுவரும தத்தஞ் சீடருக்குக் கூறிய பிரஹ்மவித்தையாவும் தங்கள்வாயிலாய்ச் சிரவணித்தேன்; ஆனால், தித்திரியெனப் பெயரிய இருடி தமது சீடருக் குபதேசித்த பிரஹ்மவித்தையைக் கேட்க ஆவலாயிருக்கின்றது. தாங்கள் கிருபைகூர்ந்து அதனை என்பொருட்டுக் கூறவேண்டும். ஹே பகவன்! தித்திரி இருஷி நானாவகை ஆக்கியானத்தோடுகூடிய பிரஹ்மவித்தையைத் தமது சீடர்பொருட்டுக் கூறினர் எனத் தாங்களத்தியாய ஈற்றிற் கூறினீர்களன்றோ? அவ்வசனத்தால் எனக்குத்தித்திரி இருஷி கூறியபிரஹ்மவித்தையின்கண் அத்தியந்த விசித்திர ஆக்கியானமிருக்கும்போல் தோற்றுகின்றதாதலின் அதன் சிரவணத்தே அத்தியந்தந் தீவிர இச்சையிருக்கின்றது. தங்கட் கென்பேரிற் கிருபையிருக்குமாயின் அதனையெனக் குபதேசித்தருளல்வேண்டும. இவ்வாறு சீடனால் வினவப்பட்ட ஆசிரியர் சீடன்மீது மிகமகிழ்வுற்று த தித்திரிஇருஷி தமது சீடருக்கு உபதேசித்த பிரஹ்மவித்தை யாவறறையுஞ் சீடனுக்குக் கூறத்தொடங்கினர். அது வனத்திற் படிக்க யோக்கியமாய யஜுர்வேதப் பிராஹ்மண பாகத்தைத் தன்னிடத்துள்ளது, கேட்பவரின் செவியையும் மனத்தையும் கவர்வதாம். இப்போது அது நிரூபிக்கப்படும். ஸ்ரீ குருகூறல:—ஹே குழந்தாய்! தித்திரி இருஷி தமது சீடருக் குபதேசித்த சம்பூரணப பிரஹ்மவித்தையை யாமுனக்குக் கூறுகின்றேம் நீ சாவதானனாய்க்கேட்டி. ஹே மைந்த! ஒருகாலத்தே சுமேருபர்வதத்தின்மீது சர்வ இருஷிகளின்சமாஜம் ஒருங்குகூடிற்று, ஆங்குஅவர்பரஸ்பரம் இவ்வகைச் சங்கேதத்தைச்செய்தனர்: "இன்னதினத்தே இச்சமாஜத்தே எவ்விருடி வாராதிருக்கின்றனரோ அவர்க்குப் பிரஹ்மஹத்தி யுண்டாகுக" என்னும் சங்கேதத்தை வைசம்பாயனர் பங்கஞ்செய்தமையின் அவர்க்குப் பிரஹ்மஹத்தி யுண்டாயது; அதை நீக்கும்பொருட்டு அவர் தமது யாஜ்ஞவற்கியாதி சீடரைப் பிராயச்சித்தஞ் செய்யும்பொருட்டு ஆணைதந்தனர்; குருமொழிகேட்ட யாஞ்ஞவற்கியர் ஆசிரியரைநோக்கி இவ்வாறு கூறினர்:—ஹே பகவன்! தாங்கள் விருத்த அவஸ்தையோடு கூடியிருத்தலின் தங்களாலது செய்யமுடியாது; என்னையொழிந்த மற்றையர் பாலகராதலின் அதன்கண்ணே யவர்க்கும் சமர்த்தில்லை; மற்றோ,யானே அதைச்செய்கின்றேன் என்றயாஞ்ஞவற்கியரின்மொழியைக்கேட்டு ஆசிரியர் அத்தியந்தம் குரோதமுடையவராய் இவ்வாறு கூறத்தொடங்கினர்:—

ஹே யாஞ்ஞவற்கிய! நீ சர்வப் பிராஹ்மணர்களையும் நிந்திப்பவனாதலின் யான் கொடுத்த வித்தை முழுவதையும் நீ விரைவாகவே பரித்தியாகஞ்செய்தி, செய்யா தொழியின் சபித்துச் சாம்பராக்குவேன். ஹே குழந்தாய்! இவ்வாறு அவர் கூற வே, அஷ்டாங்கயோகத்தையுணர்ந்த யாஞ்ஞவற்கிய முனிவர் பானஞ்செய்த நீரை யானை வெளியே யெடுப்பதேபோலச் சர்வவித்தையையும் பரித்தியாகித்த னர். இவ்வாறு குரு வசனப்படி அம்முனிவர் யஜுர்வேத மந்திரங்களைப் பரித்தி யாகஞ்செய்தபோது அபிமானி தேவதாரூபமாய்ச் சூரியனைப்போலப் பிரகாசமான மாய யஜுர்வேத மந்திரங்கள் பூமியின்கண்ணே பின்னபின்னமாய்த் திதமாயின. யாஞ்ஞவற்கிய முனிவர் வாந்தியாற் பூமியின்கண்ணே பரித்தியாகித்த யஜுர் வேதமந்திரங்கள் ஒளிர்வதைக்கண்டு மற்றைய சீடர்யாவரும் ஆச்சரியத்தையடை ந்தனர். அவர்கள் ஆச்சரியமுற்றதைக்கண்ட வைசம்பாயனர் அவர்கட் கிவ்வாறு கூறினர்:—ஹே குழந்தைகளே! யாஞ்ஞவற்கியன் சாஸ்திரப்பிரமாணப்படி யஜுர் வேத மந்திரத்தை அத்தியயனஞ்செய்தமையினாலே அது சூரியனைப்போல ஒளிர்கின்றது. அது பிராஹ்மணர்களாகிய நமக்கு அக்ஷயதனமாகும். அது பூவுல கைப் பரித்தியாகித்துப் பிரஹ்மாவின் சபையை அடையாதபடி நீவிர் யாவரும் விரைவிற் கவர்மின், அதை யாஞ்ஞவற்கியன் அன்னம்போல வாந்திசெய்தலின், யா மெங்ஙனங் கவர்தல் என வெண்ணித் தாமதஞ்செய்யாதீர்கள்; ஏனெனின், மனு டசரீரத்தால் வமனஞ்செய்த வஸ்துவைப் பக்ஷணஞ்செய்தல் தகுதியன்றாயினும் வேறு சரீரத்தால பக்ஷணஞ்செய்யலாமாதலின் நீவிர் யாவரும் தித்திரிப் புள்வடி வத்தையெடுத்து விரைவிலேயே மந்திரங்களைக் கவருங்கள். ஹே குழந்தாய்! இவ்வாறு அவ்வாசிரியர் தமது சீடரைநோக்கிக் கூறியவுடன் அவர் யாவரும் தித் திரிப் புள்வடிவமாய் விரைவாகவே அவற்றைக் கவர்ந்தனர்; தித்திரிப்பக்ஷி பசி யாற் பீடிதமாயின் பூமியின்கண்ணேயும் ஆகாயத்தின்கண்ணேயு மிருக்கும் பதங் காதி துச்சஜந்துக்களைப் பக்ஷணஞ்செய்வதேபோலப் பூமியின்கண்ணும் ஆகா யத்தின்கண்ணுமிருந்த யஜுர்வேத மந்திரங்கள் யாவற்றையும் கவர்ந்தனர். அதனாலேவேதக்தே அம்மறையவர் தித்திரியெனப் பட்டுளார். அவர் சீடர்க்குக் கூறிய பிரஹ்மவித்தையை வேதவேததாக்கள் தைத்திரீயக உபநிஷத்தென்பர். யாஞ்ஞவற்கியர் வமனஞ்செய்த யஜுர்வேத மந்திரங்களை மறையவர் தித்திரிப் புள்வடிவமாய்ப் பக்ஷணஞ்செய்தமையின் அம்மந்திரங்கட்குக் கிருஷ்ணயஜுஷ் என்னும் நாமமுண்டாயது. ஹே குழந்தாய்! அம்மந்திரங்களுள்ளும் வனத்தே யிருந்து படிக்கத்தகுதியாய மந்திரங்களிற் கூறியுள்ள பிரஹ்மவித்தையை நீ சாவ தானமாய்க்கேட்டி. அவ்வுபநிஷத்தின்கண்ணே இரண்டு வல்லிகளிருக்கின்றன. ஒன்றே ஆநந்தவல்லியாம், மற்றொன்றே பிருகுவல்லியாம். முதல் வல்லியின் பொருளை முதலில் நிரூபிப்பாம்:—அவ்வல்லியின்கண்ணே முதலில் இச்சூத்திர ரூபவசனம் கூறப்பெற்றுளது. "ப்ரஹ்மவிதாப்நோதிபரம்" பிரஹ்மத்தையுணர்ந் தவன் பரமபதத்தையுறுவன் என்னும் வசனத்தே சம்பூரணப் பிரஹ்மவித்தை நிதமாதலின் இவ்வசனத்தைச் சூத்திரரூபமென்பர். அற்ப அக்ஷரங்களால் அதிக அர்த்தத்தையுணர்த்தும் வசனம் சூத்திரமாம். இப்போது அச்சூத்திர

ரூப வசனத்தே சர்வார்த்த சூசகத்தன்மையை வெளிப்படுத்தும்பொருட்டு முதலில் விடயம், பிரயோஜனம், அதிகாரி, சம்பந்தம் என்னும் நான்கு அநுபந்தங்களின் நிரூபணஞ்செய்வாம். எதன் ஞானத்தால் அதிகாரிக்குச் சாஸ்திரத்தின்கண்ணே பிரவிருத்தியாமோ அது அநுபந்தமாம். "பிரஹ்மவிதாப்நோதிபரம்" என்னுஞ் சூத்திரரூப வசனத்தேயிருக்கும் பிரஹ்மபதத்தால் தைத்திரீயக உபநிஷத்திற்கு விடயம் கூறப்பெற்றது. சாஸ்திரஜன்னியப் பிரமைஞானத்தால் நீங்கயோக்கியமாய அஞ்ஞானத்தால் யாது மறைபட்டதாமோ அது சாஸ்திரவிடயமாம். ஈண்டுப் பிரசங்கத்தே தைத்திரீயக உபநிஷத்துருவ சாஸ்திரத்தால் ஜன்னியப் பிரமைவடிவஞானத்தால் நிவிர்த்தியாகத் தகுதியாய அஞ்ஞானத்தாற் பிரஹ்மம் ஆவிருதமாமாதலின் அது இதற்கு விடயமாம்; ஏனெனின், "பிரஹ்மவிதாப்நோதிபரம்" என்னும் வாக்கியத்தேயிருக்கும் பிரஹ்மசப்த சிரவணத்தால் சாமானியரூபமாய்ப் பிரஹ்மஞானமுண்டாயினும் அது ஜீவர்களின் ஆன்மரூபமா? அல்லது வேறா? சேதனரூபமா? அல்லது ஜடமா? இவைமுதலாக அநேகவகைச் சம்சயம் பிரஹ்மத்தின்கண்ணேயுண்டாம். அதன் நிவிருத்தி உத்தரவாக்கியங்களாலேயே யுண்டாமாதலின் அசூத்திரரூபவசனம உத்தரவாக்கியத்தை அறியும் வேட்கையை அதிகாரிகட்குண்டுபண்ணும். ஹே குழந்தாய்! சாஸ்திரப்பிரயோஜன மிருவகையாம. ஒன்றே கௌணப்பிரயோஜனமாம், மற்றொன்றே முக்கியப் பிரயோஜனமாம். பிரஹ்மத்தை விடயஞ்செய்யும அநதக்கரணவிருத்தி ரூப ஞானம் வேதாநத சாஸ்திரத்தின் கௌணப்பிரயோஜனமாம. சம்பூரண அநர்த்த நிவிருத்திவாயிலாய்ப் பரப்பிரஹ்ம பாவப்பிராப்தி முக்கியப் பிரயோஜனமாம். ஹே குழந்தாய்! இரணடு பிரயோஜனங்களின் பிராப்தியை இச்சித்தவனும், விவேக வைராக்கிய சமதமாதிஷட்சம்பத்தி முமுக்ஷுதை யென்னும் நான்கு சாதனங்களோடு கூடியவனும் ஆயவன் வேதாந்தசாஸ்திர அதிகாரியாவன். ஹே குமர! வேதாந்த சாஸ்திரசம்பந்தமோ யோக்கியத்தன்மையின் வயத்தால் அநேகவகையாம். அதிகாரிக்கும் வேதாந்த சாஸ்திரத்திற்கும் பரஸ்பரம் போத்திய போதகபாவ சம்பந்தமாம். அதிகாரியோ போத்தியமாம, வேதாந்தசாஸ்திரமோ போதகமாம். பிரஹ்மஞானத்திற்கும் வேதாந்தசாஸ்திரத்திறகும் பரஸ்பரம் ஜன்னிய ஜனகபாவ சம்பந்தமாம். பிரஹ்மஞானமோ ஜன்னியமாம்; வேதாந்தசாஸ்திரமோ ஜனகமாம். பிரஹ்மத்திற்கும் வேதாந்த சாஸ்திரத்திற்கும் பரஸ்பரம் அபிவியங்கிய அபிவ்யஞ்சகபாவ சம்பந்தமாம். பிரஹ்மமோ அபிவியங்கியமாம், வேதாந்தசாஸ்திரம் அபிவியஞ்சகமாம். பூர்வ சித்தவஸ்துவைத் தோற்றுவிப்பது அபிவியஞ்சகமாம். பிரதீதிக்கு விடயமாவது அபிவியங்கியமாம். கடுக்காய், நெல்லிக்கனி முதலியவற்றின் பக்ஷணம் நீரின் மதுரரசத்தைத் தோற்றுவிக்குமாதலின் அப்பக்ஷணம் நீரின் மாதுரியத்தன்மைக் கபிவியஞ்சகமாம், மாதுரியத்தன்மை அபிவியங்கியமாம். அதுபோல, வேதாந்தசாஸ்திரமும் பூர்வ சித்தப் பிரஹ்மத்தைச் சாக்ஷாத்காரஞ் செய்விக்குமாதலின், அபிவியஞ்சகமாம்; பிரஹ்மம் அபிவியங்கியமாம். அஞ்ஞானத்திற்கும் வேதாந்தசாஸ்திரத்திற்கும் பரஸ்பரம் நிவர்த்திய நிவர்த்தகபாவசம்பந்தமாம். அஞ்ஞானமோ நிவர்த்தியமாம். ஆன்மஞானவாயிலாய் வேதாந்தசாஸ்திரம் நிவர்த்தகமாம். ஹே குழ

தாய்! "பிரஹ்மவிதாப்நோதிபரம்" என்னும் வசனம் கேவலம் நான்கனுபல்லத்தைச் சூசிப்பித்துச் சூத்திரரூபமன்றும்; மற்றே, இவ்வுபநிடதத்தின் முடிவுவரை இதற்கே விஸ்தார வியாக்யானஞ் செய்யப்பட்டுளது; இதனானே இதற்குச் சூத்திரரூபத்தன்மை சம்பவிக்கும். இப்போதிவ்வசனத்தைச் சுருக்கமாக வியாக்கியானிப்பாம்:—ஹே குழந்தாய்! இவ்வசனத்தேயிருக்கும் பிரஹ்மபதத்தாற் சுருதியின்கண்ணே தற்பதார்த்தரூபப் பரமான்மா கூறப்பெறும்; இலக்ஷணப் பிரமாணத்தானன்றி வஸ்து சித்தியுண்டாகாதாதலின் பிரஹ்மத்திற்கோர் இலக்கணம் கூறவேண்டும். அதுவும் ஸ்வரூப இலக்கணமெனவும் தடஸ்த இலக்கணமெனவும் இருவகைத்தாம். தனது இலக்ஷியபதார்த்தத்தினின்றும் அபின்னமாய் அதனை மற்றவற்றினின்றும் பின்னமாயறிவிக்கும் அசாதாரணதருமம் ஸ்வரூப இலக்கணமாம். தனதிலக்கியத்தே ஒருகாலிருப்பதாய் அதை மற்றவற்றினின்றும் பின்னமாயறிவிக்கும் அசாதாரணதருமம் தடஸ்த இலக்கணமாம். சத்தியம், ஞானம், அநந்தம், பிரஹ்மம் என்னும் சுருதிவசனம் பிரஹ்மத்தின் ஸ்வரூப இலக்கணத்தைக் கூறும். எதன் சாக்ஷாத்காரத்தால் அதிகாரி மோக்ஷரூப பரமபதத்தை அடைவனோ அது சத்திய ஞான அநந்தஸ்வரூபமென்பதாம். இவ்வாக்கியத்தே சிலவேத வேத்தாக்களோ சாஸ்திர திருஷ்டியை அங்கீகரித்துச் சத்தியவடிவம் பிரஹ்மம், ஞானவடிவம் பிரஹ்மம், அநந்தவடிவம் பிரஹ்மம்என மூன்றிலக்கணத்தை பிரஹ்மத்திற்குடன்படுவர். சிலவேத வேத்தாக்களோலோகதிருஷ்டியை அங்கீகரித்துச் சத்தியஞான அநந்தரூபம் பிரஹ்மமென ஒரேயிலக்கணத்தை, பிரஹ்மத்திற் குடன்பட்டுளார். இப்போது முதற்பக்ஷத்தை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! இச்சுருதியின்கண்ணே சத்தியசபதத்திற்கு முக்காலத்தும் நாசமற்றபதார்த்தவஸ்துவேபொருளாம். நாசமற்ற நித்தியவஸ்து ஜடரூபமாகாதாம்; அது சைதன்யரூப ஞானவடிவமேயாமாதலின், சத்தியசபதப்பொருள் ஞானசப்தப்பொருளினும் பின்னமன்றும். இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பதண்ட மாலாதிகள் கற்பிதமாவனபோலச் சம்பூரணஜட திருசியபதார்த்தம் சைதன்யஞானரூப திருஷ்டாவின்கண்ணே கற்பிதமாம். அவ்வெல்லாவுலக அதிஷ்டானமாகிய சைதன்யரூப ஞானத்தே பரிச்சின்னத்தன்மை சம்பவியாதாதலின் அநந்தரூபமாம். இதனானிது துணியப்பெறும்:—சத்தியஸ்வரூபம் பிரஹ்மம் என்னு மிலக்கணத்தே சத்தியசப்தத்தால் சத்தியஞான அநந்தரூபவஸ்துவின் போதமேயுண்டாமாதலின் இவ்விலக்கணத்திற்குச் சடபரிச்சின்னங்களி லதிவியாத்தியாகாததேபோல; ஞானவடிவம் பிரஹ்மம் என்னு மிலக்கணத்தும் ஞானசப்தத்தால் ஞானசத்திய அநந்தரூபவஸ்துவின் போதமேயாமாதலின் இதற்கு அநித்தியபரிச்சின்ன பதார்த்தத்தே அதிவியாப்தியாகாதாம், அநந்தஸ்வரூபம் பிரஹ்மம் என்னு மிலக்கணத்தும் அநந்த சப்தத்தால் அநந்த சத்தியஞான ரூபவஸ்துவின் போதமேயாமாதலின் இதற்கும் அசத்திய ஜடபதார்த்தத்தே அதிவியாப்தியாகாதாமாதலின், சத்தியம், ஞானம், அநந்தம் என்னும் மூன்றும் பிரஹ்மத்திற்குப் பின்னபின்ன இலக்கணங்களாம். கருத்திதுவாம்:—அதிவியாப்தி அவ்வியாப்தி, அசம்பவம் என்னும் முத்தோஷ நீக்கப்பொருட்டே இலக்கணத்தே பதங்களின் நிவேசமாம். அத்

தோடகீக்கம் ஒரேபதத்தாலாமாயின் அதன்கண்ணே வேறு பதப்பிரவேசஞ் செய்தல் வியர்த்தமேயாமாதலின், சுருதிமொழிகொண்டு பிரஹ்மத்திற்கு மூன்றிலக்கணம் உடன்படலுசிதமாம். இப்போதிப்பொருளையே வெளிப்படையாக்கும் பொருட்டு முதலிற் சத்தியசபதார்த்தம நிரூபிக்கப்படும் :—ஹே குழந்தாய்! யாது முக்காலத்தும் வேறுதன்மையை யடையாதோ அது சத்தியமாம்; அச்சத்தப்பொருள் ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே பொருந்துமன்றி வேறனான்ம பதார்த்தத்தே பொருந்தாதாம்; ஏனெனின், ஆன்மாவினும் வேறாய அனான்ம பதார்த்தங்களியாவும் ஒருகாலத்தே அயற்றன்மையை அவசியமடையுமாதலின் அவ்வனான்மபதார்த்தத்தே சத்தியரூபத்தன்மை சம்பவியாதாம். சர்வ ஜகத்தின் ஆன்மவடிவ ஆன்மாவை யழிக்கும் காரணமொன்றுமின்றுமாதலின், ஆன்மா அவிநாசியாம். அவ்வவிநாசி யான்மாவின்கண்ணே சத்தியரூபத்தன்மை சம்பவிக்கும். அல்லது, ஆன்மாவின் நாசத்தை அங்கீகரிக்கும் வாதியின்பால் இது கேட்க வேண்டும் :—அவ்வான்மாவின் நாசம் ஜீவர்களாலறியப்பெறுததா? பெற்றதா? பெறுதமெனிற் சம்பவியாது; ஏனெனின், ஒருவன் எனதுதாய்மலடி எனக்கூறின் அது வியாகாததோஷமுடையதாமாறு; அறியப்பெறுதது, ஆனுலிருக்கின்றதென்னின் அதுவும் வியாகாததோஷமுடையதேயாம். அல்லது, அறியப்பெறுத தன்கண்ணே சத்தியரூபத்தன்மை சமபவியாதாம; மாறாக அதன்மாட்டசத்தியத் தன்மையே சமப்விக்கும. வந்தியாபுத்திர நரசிருங்காதிகள் எச்சீவராலும் அறியப் பெறுதனவாமாதலின் அவை அசத்தியரூபமாவனபோல, ஒருவராலு மறியப் பெறுததாய ஆன்மாவின்நாசமும் அசத்தியரூபமேயாமாதலின் முதற்பக்ஷம் சம்பவியாது. மறுபக்ஷத்தை யுடன்படின் அவன்பால் இதுகேட்கவேண்டும் :—ஆன்ம நாசத்தையறிந்தது ஆன்மாவா? அனான்மாவா? அனான்மாவெனினது சம்பவியாது; ஏனெனின், அனான்மாக்கள்யாவும் ஜடங்களாம. அவற்றிற்குத் தமது பரஞானமுண்டாகாதாதலின், ஜடத்தே ஞாதத்தன்மை லோகசாஸ்திர விருத்தமாம். என்னை, அவ்விருவருமசேதன ஆன்மாவின்கண்ணே ஞாதத்தன்மை யுடன்படுவரன்றி கடஜட பதார்த்தத்து மங்கீகரியார். முதற்பக்ஷத்தை யுடன்படின் அவன்பால் இதுகேட்கவேண்டும் :—அவ்வான்மநாசத்தை விநஷ்டஆன்மா அறியுமா? அவிநஷ்ட ஆன்மா அறியுமா? முதலதை யுடன்படிற் சம்பவியாது; ஏனெனின், விநஷ்ட ஆன்மாத் தன்னாசத்தை யறிவதிற் சமர்த்தமாகாது; ஏனெனின், இவ்வுலகத்தே அன்னியன்நாசத்தையே அன்னியனறிவன்; ஆனால், தன்னாசத்தை எவனு மறியான். இரண்டாவதெனினுஞ் சம்பவியாது; ஏனெனின், ஆன்மாவிருக்கவே ஆன்மநாசஞ் சம்பவியாதன்றோ? பொருளுளதாகவே பொருளின் ஞானமுளதாமாதலின், ஆன்மநாச மிலதாகவே அதன் ஞானமும சம்பவியாதாம்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! இருக்கும்பொருட்கே ஞானமாம் என்னும் நியமம் சம்பவியாதாம்; ஏனெனின், அசத்தியப்பொருட்கும் ஞானம் உலகத்தே கண்டேம். சத்துருவின் மித்திரத்தன்மை அத்தியந்தம் அசத்தியமேனும் மயங்கியோர்க்கு அது தோற்றுவதேபோல, அசத்திய ஆன்மநாசத்தின் ஞானம் ஆன்மாவிற்குச் சம்பவிக்கும்.

சமாதானம் :—ஹே வாதியே! அசத்திய ஆன்மநாசத்தை ஆன்மாவறியும் என நீயங்கீகரிக்கின் ஆன்மநாசம் மடிசேய் முயற்கோட்டின் சமமாம்; அஃதெமக்கு முடன்பாடேயாம். கருத்திதுவாம :—பொருளின் இன்மையின் இன்மையைப் போதனஞ்செய்யுந்தலத்தே பொருளே துணியப்பெறும். பூவிற் கடாபாவமில்லை என்புழிக்கடத்தினிருப்பே துணியப்பெறுவதேபோல, ஆன்மாவின் நாசம் அசத்தியம் என விபம்புவதானும், ஆன்மாவின் சத்தியரூபத்தன்மையே துணியப்பெறும்; ஆன்மாவினுண்மையோ எமக்கிஷ்டமேயாம். ஹே மைந்த! இவ்வாறிவ்வான்மா விநாசமற்றதாமாதலின், பிரியதமமாம்; பிரியதமமாதலின் பரமாநந்தவடிவமாம். இதனினும் வேறாய புத்திராதி சுககாரணங்களும் அவற்றின் பிராப்தியா லுற்பன்னமாய அந்தக்கரண பரிணாமரூப சுகமும் ஜீவர்கட்குப் பிரியமாயிருத்தல தனதான்மாவின்பொருட்டேயாம. இயல்பாகவே அவற்றின்கண் பிரியரூபத்தன்மையின்றாம்.; இருககுமாயின் பிரதிகூலமானபோதும் அவற்றிலது தோற்றவேண்டும்; ஆனலக்கா லொருவருககும அவ்வாறு தோறறுவதின்றாமாதலின், அவற்றில் இயல்பாயே பிரியரூபத்தன்மையின்றாமென வறியலாம். தன்னான்மாவில் ஜீவர்கட்கிருக்கும பிரியரூபத்தன்மை ஒன்றன்பொருட்டன்றாம்; மற்றோ, இயல்பானே இது பிரியதமரூபமாம்.

சங்கை :—ஹே பகவன்! ஆன்மாவினும் வேறாய ஒருபொருளில் பிரியரூபத்தன்மை இராதாயின் இதன்கண் பிரியதமரூபததன்மையும் சம்பவியாது; ஏனெனின், பிரியம் பிரியதரமென்பவற்றைக் கருதியே பிரியதமரூபத்தன்மையாம்.

சமாதானம் :—ஹே குழந்தாய்! உண்மையாய் ஆராய்ந்துபார்க்கினோ, எவ்வனுன்மப்பொருளினும அவ்விரண்டு மின்றாமாயினும் உலகர் திருஷ்டியைக்கொண்டு புத்திராதிகள் பிரியரூபமாம; அவற்றி னடைவா லுண்டாய அந்தக்கரணபரிணாமரூபசுகம் பிரியதரரூபமாம. அது யாதின்பொருட்டோ அவ்வான்மாப் பிரியதமரூபமாமாதலின், விநாசமற்ற அது பரமாநந்தரூபமாம்.

சங்கை :—ஹே பகவன்! சத்தியம, ஞானம, அநந்தம, பிரஹ்மமென்னுஞ் சுருதியின்கண்ணே பிரஹ்மமே சத்தியஞான அனந்தரூபமெனக் கூறப்பெற்றுளது. தாங்களிப்போது நானுவகை யுக்திகளால் ஆன்மாவின்கண்ணே சத் சித் ஆநந்தரூபத் தன்மையைச சித்தஞ்செய்தீர்கள். அதனுற பிரஹ்மத்தின்கண்ணே அச்சச்சிதாநந்ததன்மை எவ்வாறு சித்தமாம்?

சமாதானம் :—ஹே மைந்த! வியாகரணரீதியாய் ஆன்ம சப்தார்த்தமும், பிரஹ்ம சப்தார்த்தமும் ஒரே விபாபகசேதனமாம். இவ்வார்த்தையை முன்னர் நான்காவது அத்தியாயத்தே தத்யங்கதர்வண இந்திரசம்வாதததே யாம் நினக்கு விஸ்தாரமாய்க் கூறியுள்ளேமாதலின், இச்சுருதியின்கண்ணேயிருக்கும் பிரஹ்ம சப்தத்தால் ஆநந்தவடிவ ஆன்மாவே இலக்ஷியரூபமாய்க் கூறப்பெற்றதாம். அது விநாசமற்றதாமாதலின், அதன் சத்தியாதியிலக்கணம் பிரஹ்மத்தினதேயாம்; பிரஹ்மத்தின் அவ்விலக்கணம் அதனதேயாம்.

சங்கை :—ஹே பகவன் ! ஆன்மவடிவமும், பிரஹ்மவடிவமும் ஆகிய சத்தியாதி பதார்த்தங்களில் பிரஹ்மத்தின் இலக்ஷணரூபத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனில், பரஸ்பரம் பேதமுற்றவற்றிற்கே பரஸ்பரம் இலக்ஷியலக்ஷணபாவமாம்; பேதமின்றி அஃதுண்டாகாதாம்.

சமாதானம் :—ஹே குழந்தாய் ! அவ்விலக்கிய இலக்கணபாவம் தனது சித்தியின்பொருட்டுக் கற்பிதபேதத்தை அபேக்ஷிக்கின்றதா? அல்லது, வாஸ்தவபேதத்தை அபேக்ஷிக்கின்றதா ? முதலதை யுடன்படின் அதன்கண்ணே சித்தாந்தஹானி யொன்றுமின்றாம் ; ஏனெனின், இலக்கியத்தே இலக்கண கற்பிதபேதத்தை யாமுடன்பட்டேயிருக்கின்றேம். இரண்டாவதோ சம்பவியாதாம் ; ஏனெனின், இவ்வுலகத்தேயுள்ள இலக்ஷியபதார்த்தமும இலக்ஷணபதார்த்தமும் அவற்றின் பரஸ்பரபேதமும் உண்மையாயின்றாம் ; மற்றோ, ஜீவர்கள் தத்தமது புத்தியால் அப்பேதத்தைக்கற்பித்துளார். லோகப்பிரசித்த இலக்ஷியபதார்த்தத்தின்கண்ணும் தன்னிலக்கணத்தின் பேதம் கற்பிதமாய்ச் சித்திததபோது அத்விதீயப் பிரஹ்மரூப இலக்ஷியத்தின்கண்ணே சத்தியாதி இலக்கணங்களின் பேதம் கற்பிதமென்பதன்கண்ணே யாது கூறறகுளது ? இப்போது உலகப்பிரசித்த இலக்கிய பதார்த்தத்தே இலக்கணங்களின் பேதத்தை கற்பிதமென நிரூபிப்பாம :—ஹே குழந்தாய்! கந்தகுணமுடையது பிருதிவியாம் ; அல்லது, பிருதிவித்தன்மை ஜாதியையுடையது பிருதிவியாம் என இவைமுதலாக அநேகவகை இலக்கணத்தைப் பிருதிவி முதலியவற்றிற்கு நையாயிகாதியர் அங்கீகரித்துளார். அவ்விரண்டிலக்கணங்களும் உண்மையாய்ப் பிருதிவியினின்றும் வேறன்றாம ; ஏனெனின், வேறாயின், கோவிற்குங்குதிரைக்கும் உண்மையாய்ப் பரஸ்பரம் பேதமாதலின்,கோ குதிரையின் தருமமும், குதிரை கோவின் தருமமுமன்றாவதேபோல, அவ்விலக்கணங்கட்கும் பிருதிவிக்கும் பரஸ்பரம் தாமதரிமிபாவமே சித்தமாகாதாம். பரஸ்பரம் தருமதருமிபாவ சம்பந்தமுடையதறகே பரஸ்பரம் இலக்ஷண இலக்ஷியபாவ சம்பந்தமாமாதலின், பிருதிவியாதிய இலக்கியத்தின்கண்ணே அவ்விலக்கணங்களின் பேதம் உண்மையாயின்றாம் ; மற்றோ, நையாயிகாதியர் தமது புத்தியால் அப்பேதத்தைக் கற்பித்துளாரெனத் துணியபபெறும். அல்லது, அவ்விலக்கண இலக்கியங்கள் உண்மையாய்ப் பின்னமாயிருப்பின் கடம் படத்தினு முண்மையாய்ப் பேதமுடையதாமாதலின், கடம் படத்தினும் வேறாகத்தோற்றுவதேபோலப் பிருதிவிமுதலிய இலக்ஷிய பதார்த்தத்தினுங் கந்தகுணாதி இலக்ஷணமும் பின்னமாய்ப் பிரதீதியாதல் வேண்டும் ; அவ்வாறுவதில்லையாமாதலின் அவறறிற்குப் பரஸ்பரம் உண்மையாய்ப் பேதமின்றாம் ; மற்றோ, அது கற்பிதமாம். கற்பிதபேதத்தையுடன்பட்டு அவற்றிற்குப் பரஸ்பரம் இலக்ஷிய இலக்ஷணபாவஞ் சம்பவிபபதேபோல அத்விதீயப் பிரஹ்மத்தே சத்தியாதி இலக்கணங்கட்குங் கற்பிதபேத முடன்பட்டுச் சாஸ்திரவேத்தாக்கள் அவற்றிற்குப் பரஸ்பரம் இலக்ஷியலக்ஷணபாவங் கூறியுள்ளார். இப்போது அத்தருமங்கள் நிரூபிக்கப்படும்:—ஹே குழந்தாய்! அத்விதீயப் பிரஹ்மத்தே கற்பிதபேதத்தை அங்கீகரித்துப் பிரஹ்மத்வரூப தருமமிருப்பதேபோல ஆன்மரூபத்தன்மை, ஆநந்தரூபத்தன்மை, சத்தியரூபத்தன்மை, ஞானரூபத்தன்மை, அநந்தரூபத்தன்மை என்னும ஐந்துதருமங்களிருக்கும், இதனையே வேதவேத்தாக்கள்

அதிஷ்டானரூபசாக்ஷி ஆன்மாவிற்குச் சத்தியம், ஞானம், அநந்தம், பிரஹ்மம், ஆன்மா, ஆநந்தம் என ஆறு நாமங்கள் கூறியிருக்கின்றனர். உண்மையாய்க் கந்தர்வ நகரமற்ற ஆகாசத்தே அது கற்பிதமாவதேபோல, உண்மையாய் ஜகத்பாவமற்ற அத்விதீய ஆன்மாவின்கண் இவ்வெல்லாவுலகுங் கற்பிதமாம். இது அவிவேகிகட்கு நித்தியரூபத்தாற் பிரசித்தமாம், முக்காலங்களோடு கூடியதாம், நாமரூபக்கிரியை வடிவமாம், சத்தசத்துருவமாம். நேத்திராதி ஜன்னியஞான விஷயங்கள் சத்தாம், அல்லாதன அசத்தாம். அக்கற்பித ஜகத்தின் அதிஷ்டானரூப ஆன்மாவையே அறிஞன் சத்தியாதி ஆறு நாமங்களாற கூறுவன்.

சங்கை :—ஹே பகவன்! முன்னர்த் தாங்கள் ஆன்மாவிற்குச் சத்தியாதி ஆறு நாமங்கள் கூறினீர்கள். அவை ஒரே ஆன்மாவின் ஆறிலக்கணங்களைக் கூறும்; சத்தியம், ஞானம், அநந்தம், பிரஹ்மம் என்னும் சுருதியின்கண்ணே பிரஹ்மரூப ஆன்மாவிற்கு மூன்றே யிலக்கணங்கள் கூறப்பெற்றுள்ளனவாதலின் அச்சுருதியோடு தாங்கள் கூறுவது விரோதமாமன்றோ?

சமாதானம் :—ஹே மைந்த! அவ் வாறு நாமங்களும ஒரே சேதன ஆன்மாவைப் போதிப்பதாயினும் அவற்றுள்ளே பிரஹ்மம், ஆன்மா, ஆநந்தம் என்னும் மூன்று நாமங்களின் பொருளை லக்ஷியரூபமாயெண்ணிச் சத்தியம, ஞானம், அநந்தம் என்னும் மூன்று நாமங்கள முறையே ஆநந்த ஆன்மரூபப் பிரஹ்மத்திற்கு மூன்றிலக்கணங்களைக் கூறும். கருத்திதுவாம் :—சத்தியம் ஞானம், அநந்தம், பிரஹ்மம் என்னுஞ் சுருதியின்கண்ணே ஆன்மா ஆநந்தமென்னு மிரண்டு சப்தங்களும் கூறபபெறவில்லை. கேவலம் பிரஹ்மசபதமே கூறப்பெற்றதாமாதலின், ஆன்மா, ஆநந்தமென்னு மிரண்டு சப்தங்களின் பொருள் இலக்ஷியரூபப் பிரஹ்மத்தினுள்ளடக்கத்தால் சுருதி பிரஹ்மசப்தத்தைக் கூறியதாம். சத்தியம், ஞானம், அநந்தம் என்னும மூன்று சப்தங்களால் கிரமமாய்ச் சுருதி இலக்ஷியரூபப் பிரஹ்மத்திற்கு மூன்றிலக்கணங்களைக் கூறியுள்ளது. ஹே குழந்தாய்! இவ்வாறு உபநிஷத்துருவ வேதாந்தசாஸ்திர சித்தாந்தரூபசாரத்தை அறியாநின்ற பிரஹ்மவேத்தாக்கள் சாஸ்திரதிருஷ்டியை அங்கீகரித்து அத்விதீயப் பிரஹ்மத்திற்கு சத்தியம், ஞானம, அநநதம என்னும மூவகை யிலக்கணங்களை அங்கீகரித்தனர். இப்போது சத்தியம், ஞானம், அநந்தம், பிரஹ்மம என்னு மிச்சுருதியின்கண்ணேயிருக்கும் சத்தியம், ஞானம், அநநதமென்னும் மூன்று பதங்களுங்கூடி அத்விதீயப் பிரஹ்மத்திற்கு ஒரேயிலக்கணமாதலைக் கூறுவாம். கருத்திதுவாம் :—சத்தியம், பிரஹ்மம் என இத்துணையே பிரஹ்ம இலக்கணங் கூறின், நையாயிகர் சத்தாஜாதியுடைய திரவிய குண கரும மூன்றையும் சத்தியமென்பர், அவற்றிலிவ்விலக்கணத்திற் கதிவியாத்தியாம். அல்லது, பிரஹ்மத்திற்குப் பாரமார்த்திக சத்தையாம், ஆகாசாதிப் பிரபஞ்சத்திற்கு வியாவகாரிகசத்தையாம், சுத்தி ரஜதத்திற்கும் ஸ்வப்பன பதார்த்தங்கட்கும் பிராதிபாசிகசத்தையாம் என வுடன்படும் சில வேதாந்திகள் மதத்தையுடன்பட்டு வியாவகாரிகசத்தையையுடைய ஆகாசாதி பதார்த்தங்களில் இவ்விலக்கணத்திற் கதிவியாப்தியாம். ஞானரூபம் பிரஹ்மம் என

இத்துணையே பிரஹ்மத்திற் கிலக்கணமாயின், நையாயிகர் ஞானத்தை ஆன்மாவின் குணமென்பர். குணரூபஞானத்தே இவ்விலக்கணத்திற்கதிவியாப்தியாம். அல்லது, சித்தாந்தத்தே அந்தக்கரணவிருத்திகட்கும் ஞானமெனப்பெயராம்; அதன்கண்ணே இவ்விலக்கணத்திற் கதிவியாப்தியாம. அநந்தரூபம் பிரஹ்மம் என இத்துணையே பிரஹ்மத்திற் கிலக்கணமென்னின், நையாயிகர் கால பரிச்சேதமற்ற ஆகாசாதி நித்திய பதார்த்தங்களை அநந்தமென்பர்; அவற்றின்கண்ணே இவ்விலக்கணத்திற் கதிவியாப்தியாமாதலின், சத்தியம், ஞானம, அநந்தம் என்னு மூன்றன்கண்ணும் ஒவ்வொருபதம் பிரஹ்ம இலக்கணத்தைப போதியாது; மற்றோ, மூன்றுங்கூடி அத்விதீயப் பிரஹ்மத்திற்கு ஒரேயிலக்கணத்தையுணர்த்தும்; அதையங்கீகரிப்பதில் முன்போல யாதொரு அதிவியாப்திதோஷமும் வருவதின்றாம்.

சங்கை:—ஹே பகவன்! அவ்வத்விதீயப் பிரஹ்மம் மனவாணிகட் கவிஷயமோமாதலின் அதைச் சத்தியாதிபதங்கள் சக்திவிருத்தியினாலே உணர்த்தமாட்டா; மற்றோ, பாகததிபாக இலக்கணையினாலே அவை அதை யுணர்த்தும்; அவ்விலக்கியார்த்தம அசசர்வ பதங்கட்கும் ஒன்றேயாமாதலின், ஒரு பதத்தானே அத்விதீயப் பிரஹ்மபோதமாம்; வேறு பதம் வியர்த்தமன்றோவாம்?

சமாதானம்:—ஹே குழந்தாய்! சத்தியம், ஞானம், அநந்தம் என்னும் மூன்று பதமும் இலக்கணாவிருத்தியால் ஏக அத்விதீயப் பிரஹ்மத்தையே போதிப்பதாமாயினும், அவை இலக்கியவடிவப் பிரஹ்மத்தேயுணர்த்திய பிரிவுகட்குப பரஸ்பரம் பேதமாமாதலின், சத்தியாதி பதங்களில் புநருக்திதோஷத்தால் வியர்த்தரூபத்தன்மை சித்தியாதாம். ஆண்டு, இலக்கியரூபப் பிரஹ்மத்தே பிராந்தியாற் பிராப்தமாய அசத்தியத்தன்மையின் பிரிவைச் சத்தியசப்தமுணர்த்தும்; ஜடத்தன்மையின் பிரிவை ஞானசப்தமுணர்த்தும; பரிச்சின்னத்தன்மையின் பிரிவை அநந்தசப்தமுணர்த்தும். இபபொருளில் வார்த்திகக்கிரந்தகர்த்தாவாய ஸ்ரீசுரேசுவர ஆசிரியா இத்துணை விசேஷததன்மை கூறியுள்ளார்:—சத்தியம், ஞானம் என்னும் இரண்டு சப்தங்களோ இலக்ஷியவடிவப பிரஹ்மத்தே சாக்ஷாத் சத்தியரூபத்தன்மையையும் ஞானரூபததன்மையையும் உணர்த்திப் பொருளால் அசத்ஜட வியாவிருத்தியையுணர்த்தும். அநந்தசபதமோ சாக்ஷாத் பரிச்சின்னத்தன்மையின் பிரிவை யுணர்த்திப்பொருளால் இலக்கியவடிவப் பிரஹ்மத்தையுணர்த்தும். ஹே குழந்தாய்! இவ்வாறு சத்தியம், ஞானம, அநந்தம் என்னும் மூன்று பதங்களும் அவ்விலக்கியரூபப் பிரஹ்மத்தே அசத் ஜட பரிச்சின்னத்தன்மையின் பிரிவையுணர்த்துமாதலின், நீலகமலம் என்னும் வசனம நீலகுண கமலங்களின் பரஸ்பர குணகுணீபாவ சம்பந்தத்தையும் நீலகுண விசிஷ்ட கமலத்தையும் போதிப்பதே போலச் சத்தியம், ஞானம், அநந்தம், பிரஹ்மம் என்னும் சுருதிவசனம் சத்தியாதி தருமங்கட்கும் பிரஹ்மத்திற்கும் குணகுணீபாவ சம்பந்தத்தையும், சத்தியாதி குணவிசிஷ்டப் பிரஹ்மத்தையும் போதியாது; மற்றோ, பாகத்தியாக இலக்கணையால் அச்சுருதிவசனம் ஏக அத்விதீய அகண்டப் பிரஹ்மத்தையேயுணர்த்தும்.

சங்கை:—ஹே பகவன்! சத்தியம, ஞானம், அநந்தம் என்னும் மூன்று பதங்களும் முறையாய்ப் பிரஹ்மத்தே போதித்த அசத்தியத்தன்மையின் பிரிவு,

ஜடத்தன்மையின் பிரிவு, பரிச்சின்னத்தன்மையின் பிரிவு என்னு மபாவரூப மூன்று பிரிவின் பேதத்தானே பிரஹ்மத்தே அத்விதீயரூபத்தன்மையின் ஹானியாம்?

சமாதானம்:—ஹே குழந்தாய்! அவ்வபாவரூப வியாவிருத்திகள் (பிரிவுகள்) பிரஹ்மத்தின்கண்ணே யிருக்கும்மாயினும், பிரஹ்மத்தினும் வேறாய வேறொரு பாவபதார்த்தமின்றாமாதலின் அது அத்விதீயரூபமாம். இங்ஙனம் பாவ அத்வைத பக்ஷத்தை யங்கீகரிக்கும் சித்தாந்தியாம் எமது மதத்தே பிரஹ்மத்தின் அத்விதீயரூபத்தன்மையின் ஹானி யுண்டாகாதாம். பூர்வம் வேதாந்தசாஸ்திர தாற்பரியமுணர்ந்த ஸ்ரீ நிருசிம்ஹ ஆசிரமாதி அறிஞர்கள் இப்பாவ அத்வைதபக்ஷத்தை யங்கீகரித்த அபிப்பிராயத்தை நீ கேட்டி. இந்தப் பிரஹ்மரூப ஆன்மாவின்கண்ணே ஆயிரம் அபாவமிருக்குமாயின், யாதொரு சங்கையுமின்றியிருக்குக. இப்பொருளுடன்படுவதில் ஆன்மாவின் அத்விதீயரூபத்தன்மையைக் கூறும் சித்தாந்திகட்குச் சிறிதுமாத்திரையும ஹானியுண்டாகாது; ஏனெனின், அந்தத் துவைதப் பிரபஞ்சத்தின் அபாவம் வந்தியாபுத்திர நரசிருங்கம்போல அத்தியந்தந் துச்சமாமாதலின் அது அத்விதீயரூபத்தன்மையின் ஹானியைச் செய்வதில் ஆற்றலுடையதாகாது. இப்போதிப்பொருளையே வெளிப்படுத்துவாம்:— ஹே குழந்தாய்! அபாவங்களின் பேதததாற் பிரஹ்மத்தின் அத்விதீயரூபத்தன்மையின் ஹானிகூறுமவாதியின்பாலிது கேட்கவேண்டும்:—அவ்வபாவம் தன்வடிவத்தானே பேதத்தையடைந்து அத்வைதத்தை ஹானிசெய்கின்றதா? அல்லது, தனது பிரதியோகியின் பேதத்தால பேதமுற்ற அது அத்வைத ஹானி செய்கின்றதா? அல்லது, அவ்வபாவத்தை விடயஞ்செய்யும் சப்தரூப ஞானரூப வியவகாரங்களின் பேதத்தால் பேதத்தையடைந்த அது அத்வைதஹானியைச் செய்கின்றதா? முதலது சம்பவியாது; ஏனெனின், இவ்வுலகத்தேயுள்ள அபாவங்கட்குப் பிரதியோகியின் பேதததானன்றி வடிவத்தானே பேதத்தை எவ்வாதியும் அங்கீகரித்திலன். இரண்டாவதுஞ் சம்பவியாது; ஏனெனின், சர்வ ஜகத்தின் காரணரூப அவித்தையிருக்குங்கால் பிரதியோகியின் பேதத்தால் அபாவபேதஞ் சம்பவிக்குமாயினும், அதிகாரிக்கு ஆன்ம சாக்ஷாத்காரமுண்டாங்கால் 'நேஹ நாநாஸ்தி கிஞ்சந' அத்விதீயப் பிரஹ்மத்தே சிறிதுமாத்திரையும துவைதப்பிரபஞ்சமின்றாம் என்னும் சுருதிரூப நரசிம்ஹம் காரியசகித அவித்தையைப் பக்ஷணஞ் செய்யுமாதலின், ஞான அவஸ்தையின்கண்ணே நாசமுற்ற பிரதியோகியில் அபாவபேத காரணத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனின், இருக்கும் பிரதியோகியே அபாவபேதத்தைச்செய்யும்; இருக்கும் கடபடாதிப பிரதியோகி கடாபாவம் படாபாவமுதலிய அபாவங்களின் பேதத்தைசசெய்வதேபோலும். மூன்றாவதும் பொருந்தாது; ஏனெனின், அபாவத்தை விடயஞ்செய்யும ஞானமுஞ் சப்தமுமே வியவகாரமாம்; அவ்வியவகாரபேதம் வடிவத்தானே யுண்டாகாதாம; மற்றோ, அபாவங்களின் பிரதியோகியின் பேதததை அபேக்ஷித்தேயாம். கடபடரூபப் பிரதியோகியின் பேதத்தை அபேக்ஷிததே கடாபாவம படாபாவம என்னும் ஞானரூப, சப்தரூப வியவகாரம் பரஸ்பரம் பேதபபடும். அவ்வபாவபேதத்தை விடயஞ் செய்யும் வியவகாரம் அஞ்ஞான அவஸ்தையின்கண்ணே சம்பவிக்குமாயினும்,

குருசாஸ்திர உபதேசத்தால் அத்விதீய ஆன்ம சாக்ஷாத்காரமாங்கால் அதிகாரியின் புத்தி சர்வ அனான்ம வியவகாரங்களைப் பரித்தியாகித்துக் கேவலம் ஆனந்த வடிவ அத்விதீய ஆன்மாவின்கண்ணே ஒருமையை அடையுமாதலின், பிரதியோகி பேதமின்றாய் அபாவபேதம் சம்பவியாது. பிரதியோகி யாவும் ஆன்ம சாக்ஷாத்காரம் வந்ததும் நாசமாயின ; ஆகவே ஞான அவஸ்தையின்கண்ணே அத்விதீய ஆன்மாவில் நானா அபாவங்களிராவாம்; மற்றோ, சர்வ துவைதப்பிரபஞ்சத்தின் ஒரே யபாவமிருக்கும்.

சங்கை :—ஹே பகவன்! அவ்வபாவமொன்றே ஆன்மாவின் அத்விதீயரூபத் தன்மையை ஹானிசெய்யும்?

சமாதானம் :—ஹே குழந்தாய்! அவ்வோர் அபாவத்தின் அதிஷ்டான வடிவ ஆன்மாவின் வாஸ்தவவடிவ விசாரஞ்செய்து பார்க்கினோ அவ்வொன்றும் ஆன்மாவினும் வேறாயிராதாம ; மற்றோ, கற்பிதப் பிரபஞ்சாபாவம் அதிஷ்டான ஆன்ம வடிவமேயாம். கற்பித சர்ப்பாபாவம் இரஜ்ஜு ரூபமேயாவது போலவாம். அல்லது, லௌகிக திருஷ்டியை அங்கீகரித்தும் அதிஷ்டானத்தினும் வேற்றுருவமாய் அபாவசத்தை பிரதீதியாகாதாமாதலின் அப்பிரசித்த அபாவசத்தை அத்வைத நாசத்தையாக்கல் யாங்ஙனம்? மற்றோ, ஒருகாலு மாக்காதாம் ; ஏனெனின் பிரசித்த பதார்த்தமே அன்னியபதார்த்தத்தை அழிக்கும், அப்பிரசித்தபதார்த்தம் ஒரு பதார்த்தநாசத்தையுஞ் செய்யமாட்டாது; அவ்வாறாயின் மலடிமகனாலும் பகைவனது நாசமுண்டாகவேண்டும் ; அங்ஙனுவதின்றுமன்றோ! அதுபோல, அப்பிரசித்த அபாவசத்தையால் அத்வைத நாசமுண்டாகாதாம் கடாதி பதார்த்தங்கட்கேபோல அபாவத்திற்கும், அதிஷ்டானத்தினும், பின்னமாயே சத்தை அங்கீகரிக்கின் கடாதிபாவபதார்த்தங்களுக்கும், அபாவத்திற்கும், பாஸ்பரபேதஞ் சித்தமாகாதாம். அல்லது, அவ்வபாவம் ஸ்வரூபம், விசேஷம், சத்தைமுதலிய சர்வதருமங்களற்றதாதலின் அதை அஸ்திரூபத்தாலறைய ஆற்றலுற்றவ ரெவருமில்லை ; மற்றோ, மலடிமகன் நரசிருங்காதி அசத் பதார்த்தம் விகற்பஞானத்திற்கு விஷயமாவதேபோல, அபாவமும், கேவலம் விகற்பஞானத்திற்கே விஷயமாமன்றிப் பிரமாணஜன்னிய ஞானத்திற்கு விடயமன்றாம். எத்தேயத்தும் எக்காலத்தும் எவ்வுயிருக்கும் பிரசித்தமாகாதபொருளின் சபதசிரவணத்தாலுண்டாகு மர்த்தஞானம் விகற்பஞானமாம். மலடிமகன் என்னுஞ் சப்தபொருளாய வந்தியாமைந்தன், எத்தேயத்தும் எக்காலத்தும எவ்வுயிர்க்கும் பிரசித்தமலலாதலின், அச்சப்த சிரவணத்தால் அவன் ஞானம விகற்பரூபமாம். அதன் விஷயமாதலின் வந்தியாமைந்தன் நரசிருங்காதி அசத்தியபதார்த்தம் துச்சரூபமாவதேபோல, அந்தஞானத்திற்கு விஷயமாதலின் அபாவமும் துச்சரூபமாம் ; அத்தகையது ஆன்மாவின் அத்விதீய ரூபத்தன்மையின் ஹானியைச் செய்யமாட்டாது. அல்லது, அபாவத்தின் விகற்பரூபஞானமும் அதிகாரிக்கு அத்விதீய ஆன்மசாக்ஷாத்காரம் வாராதவரைதானிருக்கும். அஃதுண்டாகவே அஃதழியும், இத்தகைய ஆன்மசாக்ஷாத்கார அவஸ்தையில் துவைதப் பிரபஞ்சாபாவம் அத்விதீய ஆன்மாவின்கண்ணெவ்வாறு இதமாம்? மற்றோ, இதமாகாதாமாதலின் அது அத்விதீயஹானி செய்ய

மாட்டாது; இவ்வாறாயவே பிரஹ்மரூப ஆன்மாச் சர்வ துவைதமும் அற்றதா மென்னும் பொருள் துணிபப்பெற்றதாம். இப்போது சத்தியம், ஞானம், அநந் தம், பிரஹ்மமென்னுஞ் சுருதியின்கண்ணேயிருக்கும் அநந்தபதம் எப்பரிச் சின்னப்பொருளின் பிரிவினைப் போதிப்பித்ததோ அதை நிரூபிப்பாம்:—ஹே குழந் தாய்! ஈண்டு ஆன்மாவினும் வேறாயுள்ள அனான்மாக்களியாவும் தேசகாலவஸ்து பரிச்சேதங்களை யுடையனவாம். இதன்கண்ணும் இத்துணைச் சிறப்புண்டு, காரிய ரூபமாய்ப் பிரசித்தமாய கடபடாதிகள் ஒருதேயத்திருந் தொருதேயத்தின்மை யின் தேச பரிச்சேதமுடையனவாம். ஒருகாலத்திருந் தொருகாலத்தின்மையின் கால பரிச்சேதமுடையனவாம். தேயத்துங் காலத்தும் தேசகால பரிச்சேதங்கள் சம்பவியாவாதலின் அவற்றில் பரஸ்பர பேதரூப வஸ்துபரிச்சேதமேயிருக்கும், இருக்கவே அவையும் பரிச்சின்னமேயாம்.

சங்கை:—ஹே பகவன்! வஸ்து பரிச்சேதம தேசகாலங்களி லிருப்பதே போலக் கடபடாதிகளிலு மிருக்குமாதலின் அவ்வொன்றானே சர்வ ஜகத்திலும் பரிச்சின்னத்தன்மை சித்தமாமாதலின் மறறைய இரண்டையும் ஒப்புதல் பயனில் கூற்றாமன்றோ?

சமாதானம்:—ஹே மைந்த! உண்மையாய் விசாரித்துநோக்கினே வஸ்து பரிச்சேதமொன்றானே யாண்டும் பரிச்சின்னத்தன்மை சித்தமாமாயினும் மந்தபுத் தியர்மீது அநுக்கிரகம்வைத்துச் சாஸ்திரத்தே பரிசசேதத்திரயம் கூறப்பட்டுள் ளது. அம்மூன்றையும் அங்கீகரித்த அபிபிராயத்தை நீ கேள்! சில நையாயிகர் மண்ணீரனல் காலின் சூக்ஷ்ம பரமாணுக்களையே ஜகத்காரணமென்பர்; அவர் மதத்தே அப்பரமாணுக்கள் நித்தியமாமாதலின் அவற்றிற் காலபரிச்சேதமோ இன்றாம்; பேதவடிவ வஸ்துபரிச்சேதமிருக்குமாயினும், அப்பேதத்தே வஸ்து பரிச்சேதரூபத்தன்மையை நையாயிகர் அங்கீகரித்திலராதலின் அவற்றில் வஸ்து பரிச்சேதமுமின்றாம்; மற்றோ, அவா அவறறில் கேவலந் தேசபரிசசேதத்தையே அங்கீகரிப்பர்.

சங்கை:—ஹே பகவன்! காடசியாதிப பிரமாணங்களின் அவிஷயமாய பர மாணுக்கள் அவர் மதத்தே எவ்வாறு சத்தியமாம்.

சமாதானம்:—ஹே மைந்த! மூடபாலகர்மதத்தே அசத்தியவந்தியாபுத்திர னும் சத்தியமாவதேபோல அவா மதததே அசத்தியப பரமாணுவும் சததியமே யாம்; ஏனெனின், இவ்வுலகததே பிராநதிஞானததிற்கு விடயமாகாத பதார்த்த மியாதாம்? மற்றோ, யாவுமே பிராநதிஞானவிஷயமேயாம். சாங்கியாதியர் மக தத்துவத்தை விபுவெனவும் சர்வ விகாரங்களின் காரணமெனவு முடன்பட்டுளா ராதலின், அம்மதத்தே அம்மகதத்துவம் தேசவஸ்து பரிச்சேதமற்றதாமாயினும் பிரளயகாலத்தே இலயபாவததையடையுமாதலின் அது கேவலம் காலபரிச்சேத முடையதேயாம். சில வாதியரோ, ஆகாசம், காலம், திசை, ஆன்மா என்னும் நான்கையும் விபு நித்தியமென்பராதலின் அவர் மதத்தே தேசகால பரிச்சேத மிரண்டும் அவற்றின்கணின்றாம்; மற்றோ, கேவலம் பேதரூப வஸ்துபரிச்சேதமே

ஆகாசாதியின்கண்ணிருக்கும். இவ்வாறு பிரார்த்தியுற்ற வாதிகட்கு உணர்த்தவே ண்டி அவர்க ளனுசாரமாய்ச் சாஸ்திரத்தே பரிச்சேதத்திரயங் கூறப்பெற்றது. உண்மையா யாராய்ந்துபார்க்கினே வஸ்து பரிச்சேதமொன்றானே சர்வ ஜகத்தி லும் பரிச்சின்னத்தன்மை சித்தமாம். அதுவும் சுவகதபேதமெனவும், சஜாதீய பேதமெனவும், விஜாதீயபேதமெனவும் மூவிதமாம். தனது வடிவத்தே தனது அவயவங்களின் பேதம சுவகதபேதமாம்; ஓரே வடவிருக்ஷத்தே சாகைபத்திரம் பலம் முதலிய அவயவங்களின் பேதமாவதேபோலும். சமானஜாதியையுடைய வற்றின் பேதம் சஜாதீயபேதமாம்; ஒரு வடவிருக்ஷத்தே மற்றொரு வடவிருக்ஷ பேதமிருப்பதுபோலவாம்; ஆண்டு, வடத்தன்மையாய ஜாதி அவ்விரண்டிலும் சமானமாம். விருத்தஜாதியையுடைய பதார்த்தத்தின் பேதம் விஜாதீயபேதமாம். வடவிருக்ஷத்தே பிப்பலவிருக்ஷத்தின் பேதமாவதேபோலும், ஆண்டுப் பிப்பலத்த ன்மைச் சாதி வடவிருக்ஷத்தேயிராதாம். இவ்வாறாய இமமுப்பேதங்கட்கும், முப் பரிச்சேதங்கட்கும் பெயர் பரிச்சின்னத்தன்மைபாம். அது பிரஹ்மத்தின்கண்ணே யுண்மையாயின்றாமாயினும் மயலாற் கற்பிதமாம். அம்மயலாலாய அதனை அநந்த சப்தம் தடுக்கும். அநந்தசப்தத்தால் பரிச்சின்னத்தன்மை நீங்கிய பிரஹ்மம் உண் மையாய் முற்கூறிய முப்பரிச்சேதமும் முப்பேதமுமற்றதாம், அவற்றின் அபாவ முமற்றதாம்; ஏனெனின், அதன்கண்ணே அபாவம் பின்னரூபமாயிருக்கின் அவ் வநந்தசப்தம் மீண்டுங் குரோதத்தையடையுமாதலின், அது அவற்றி னபாவத் தையும் நீக்கும்; நீக்கவே ஆநந்தவடிவ ஆன்மாச் சர்வ பேதமுமற்ற பரிபூரணப் பிரஹ்மரூபமாம். இத்துணையால் சத்தியம், ஞானம், அநந்தம், பிரஹ்மம் என் னுஞ் சுருதியின்கண்ணேயிருக்கும் அநந்தபதத்தின் பல நிரூபணஞ்செய்யப்பட் டது. இப்போது ஞானபத பல நிரூபணஞ்செய்வாம்.—இச்சுருதியின்கண்ணே கூறிய ஆன்மரூபப் பிரஹ்மத்தைச சில நையாயிகா ஜடரூபமென்பராதலின் அவர் மயலாலாய பிரஹ்மத்தின் ஜடத்தன்மையை ஞானசப்தம் நீக்கும். இச்சுருதியி லிருக்கும் ஞானசப்தத்திறகு நையாயிகர் இவ்வாறு பொருள்கொள்வர்:—ஞான குண மெதன்கண்ணிருக்குமோ அது ஞானமாம்; இவ்வாறு ஞானசபதத்திறகுப் பொருள்செய்து பிரஹ்மத்தை ஞானகுணமுடையதென்பர், ஞானவடிவமாயங்கீ கரித்திலர். இங்ஙனங்கொள்ளின், ஞானசப்தம் பிரஹ்மத்தே ஜடத்தன்மையின்பிரி வைச் செய்யாதாம்; ஏனெனின், இப்பூமி மனுடரையுடையது என்னும வசனம் இதன்கண்ணே மனுடரினும் பின்னத்தன்மையை நீக்கமாட்டாததேபோல, ஞான குணமுடையது பிரஹ்மம் என்னும் வசனமும் இதன்கண்ணே ஞானத்தினும் வேற்றுமைவடிவ ஜடத்தன்மையை நீக்கமாட்டாதாதலின், ஞானசப்தம் ஞான குணமுடைய பிரஹ்மத்தைப் போதியாது; மற்றோ, பிரஹ்மத்தே ஜடத்தன்மை யை நீக்கும்பொருட்டு ஞானசப்தம் கேவலம் ஞானரூபத்தையே போதிக்கும். ஞானசப்தம் ஜடரூபத்தன்மையை நீக்குவதுபோலவே அப்பிரகாசரூபத்தன்மை யையும் பரப்பிரகாசரூபத்தன்மையையும் நீக்கும். ஏனெனின், அஃதப் பிரகாச மாயின், அப்பிரகாசமாதலிற் கடாதி ஜடமாவதேபோல பிரஹ்மமும் ஜடரூப மாம். ஆகையால், பிரஹ்மம் அப்பிரகாசரூபமன்றாம்; மற்றோ, பிரகாசரூபமே யாம். பிரஹ்மத்திற் பிரகாசரூபத்தன்மை சித்தமாயினும் அது பரப்பிரகாச

மாயின், சூரியசந்திராதிகளின் பிரகாசம பரபிரகாசமாதலிற சடரூபமாவதே போலப் பரப்பிரகாசமாதலின் அதற்கு மீண்டும் ஜடரூபத்தன்மையி னடைவாமா தலின், அதை நீக்கும்பொருட்டு ஞானசபதம் அதன்கண்ணே பரப்பிரகாசரூபத் தன்மையை நீக்கிக் கேவலம சுவயம்பிரகாசரூபத்தன்மையைப போதிக்கும். இத் துணையால் ஞானபதபலம் நிரூபிக்கப்பட்டது. இப்போது சத்தியபதபலத்தை நிரூபிப்பாம்:—ஹே குமர! தாம்பிற் பாம்பும, இபபியில் வெள்ளியும் அசத்திய மாவதேபோலச் சுயஞ்சோதிபாய பிரஹ்மம அசத்தியரூபமாகாதொழிகவெனச் சம்பாவனைசெய்து அதன்கண்ணே யடைவுற்ற அசத்தியத்தன்மையை இச்சத்திய சப்தம் நீக்கும்.

சங்கை :—ஹே பகவன்! இப்பிவெள்ளியிலும், தாம்புப் பாம்பிலும், பிராந்தி காலம்வரைச் சத்தியத்தன்மையே யிருக்கின்றதாதலின் இச்சத்தியசப்தம் பிரஹ் மத்தே அசத்தியத் தன்மையின் வியாவிருத்தியை எவ்வாறுசெய்யும்?

சமாதானம்.—ஹே மைந்த! ஞான அநந்தசப்தங்களின், சமீபத்தன்மை யால் அச்சத்தியசப்தம் பிரஹ்மத்தே அசத்தியத்தன்மையை வியாவிருத்திசெ ய்யும்; ஏனெனின், ஈண்டுப் பரிச்சின்ன ஜடங்களாயின யாவும் அவசிய மழிவை யெய்தும், இரஜ்ஜு சர்ப்பாதிகளும் கடாதிகளும் பரிச்சின்ன ஜடங்களாதலின் ஒரு நிமித்தத்தாலவை அவசிய மழிவையெய்துவதேபோலும், பிரஹ்மமோ அவ் விரண்டுமற்றிருத்தலின் அதை எக்காரணமு மழிக்காதாம். ஆகையால் சத்தியம், ஞானம், அநந்தம், பிரஹ்மம், என்னுஞ் சுருதியின்கண்ணிருக்கும் சத்தியம், ஞானம், அநந்தம், என்னும் மூன்றுபதங்களும் முறையே அசத்திய ஜடபரிச் சின்னத் தன்மையை நீக்கி அத்விதீயப் பிரஹ்மத்தை யுணர்த்தும், இலக்ஷியவடி வப் பிரஹ்மம் யாண்டும் பரிபூரணமா மாயினும அது புத்திரூபக் குகையின்கண் ணே சாக்ஷிரூபமாய் வெளிப்படையாய்ப் பிரதீதியாம். அதனைப் பிரஹ்மரூபமா யிருக்கின்றேன் எனத் தன்னுண்ம வடிவமாயறிந்த அதிகாரி பிரஹ்மத்தைப் போலச சர்வ ஜகத்தையும் தனது அஸ்திபாதிப்பிரிய ரூபத்தால் வியாபிப்பன். வியாபித்த அறிஞன் ஒரேகாலத்தே சர்வமனவாஞ்சித பதார்த்தத்தை அடைவன் இச்சுருதியிற் பிரஹ்மரூப ஆன்மாச் சத்தியஞான அநந்தரூபமாய்க் கூறப்பெற் றது. அது சர்வபேதமு மற்றதாமாதலின் அத்விதீயரூபமாம். அவ்வத்விதீயத் தன்மையி லறிஞர்கூறியயுக்திகளை நீ கேட்பாயாக :—காரியமாயயாவும் தமது காரணத்தினின்றும் பின்னசத்தையுடையன வாகாவாம். மண்ணின் காரியமாய கடசராவாதிகள் மண்ணினின்றும வேறன்றும்; மற்றே, அவை மண்ணேயா வதுபோல ஆன்மகாரியமாய இவ்வாகாசாதிகள் ஆன்மாவினும் வேறன்றும்; மற்றே, இவை யான்மரூபமேயாமாதலின் அஃதத்விதீய ரூபமேயாம். இவ்வாறு ஜகத்துற்பத்தியைப் போதிப்பிக்கும் வாக்கியமும் அதன் அத்விதீயத் தன்மை யையேயுணர்த்தும். இப்போது ஜகத்துற்பத்தி ஸ்திதிலய காரணத்தன்மைவடிவ தடஸ்தலக்ஷணத்தையுணர்த்தும்பொருட்டு முதலில் ஆன்மாவினின்றும் ஜகத்துற் பத்திப் பிரகாரத்தை நிரூபிப்பாம் :—ஹே குழந்தாய்! சத்தியஞான அநந்தப்

பிரஹ்மரூப ஆன்மாவினின்றும் முதலிற் சப்தகுணமுடைய ஆகாசமுண்டாயது. அதினின்றும் பரிசகுணமுடையவாயு வுண்டாயது. அதினின்றும் ரூபகுண முடைய அக்கினியுண்டாயது, அதினின்றும், இரசகுணமுடைய நீருண்டாயது, அதினின்றும் கந்தகுணமுடைய மண்ணுமுண்டாயது. எக்காரியத்தும் தத்தங்கார ணம் தாதாத்மிய சம்பந்தத்தா லிருக்குமாதலின், சத்தியரூப ஆன்மா ஆகாசத்தே தாதாத்மியசம்பந்தத்தா லிருப்பதேபோல ஆகாசம் வாயுவிலும், வாயுத்தீயிலும், தீநீரிலும், நீர் மண்ணிலுமிருக்கும்; ஈண்டுக் கற்பிதபேதத்தோடுற்ற வாஸ்தவ அபேதம் தாதாத்மிய சம்பந்தமாம். இவ்வாறு ககனாதிகாரண தாதாத்மிய சம் பந்தம் கான்முதலிய காரியத்தேயாமாதலின் ககனத்தே சப்தகுணமொன்றேயாம், காலில் சப்தம் பரிசமென விரண்டுகுணங்களாம். ஆண்டுப் பரிசமோ தன்னதாம், சப்தமோ காரணத்ததாம். தீயிற்சப்தம், பரிசம், ரூபமென மூன்றுகுணங்களாம்; ஆண்டு ரூபமோ தன்னதாம், மற்றைய காரணங்களினவாம். நீரிற் சப்தம், பரி சம், ரூபம், இரசமென நான்கு குணங்களாம்; ஆண்டு இரசமோ தன்னதாம், மற் றைய காரணங்களினவாம. மண்ணிற் சப்தம, பரிசம, ரூபம், இரசம், கந்தமென வைந்து குணங்களாம்; ஆண்டுக கந்தகுணமோ தன்னதாம்; மற்றைய காரணங்க ளினவாம். இவ்வாறு ஆகாசாதி காரணங்களின்குணம் வாயுமுதலிய காரியத்தே பிராப்தமாம். ககனாதிகட்குச சப்தாதிகள் குணமாவதேபோல ஆநந்தவடிவ ஆன் மாவிற்கு ஞானம், ஆநந்தம், குணரூபமன்றாம்; மற்றே, வடிவமேயாம்; ஏனெ னின், அவைகுணமாயின் ஆகாசாதி காரணங்கட்குச சப்தாதிகுணம் வாயுமுத லிய காரியத்தே பிரதீதியாவதேபோல ஆன்மகாரணத்தின் ஞானாதிகுணமும் ஆகாசாதி காரியத்தே தோற்றும; ஆனலங்ஙனங்காணேமாதலின் அவை யான்ம குணமன்றாம; மற்றே, ஆன்மவடிவமேயாம் அல்லது, பரிணாமிகாரணமாயுள்ள வற்றின் குணமே காரியத்தே பிரதீதியாம். ஆகாசாதி பரிணாமிகாரண சப்தாதி குணம் வாயுமுதலிய காரியத்தே தோற்றுவதேபோல இச்சச்சிதாநந்தஸ்வரூப ஆன்மா ஆகாசாதிகளின் பரிணாமிகாரணமாயின் ஆன்மாவின் சச்சிதாநந்தாதி தருமம் ஆகாசாதிகளிடத்தே தோற்றல்வேண்டும்; அவ்வாறே அச்சடத்தே காணேமாதலின் ஆன்மா ஆகாசாதி ஜடஜகத்திற்குப் பரிணாமி யுபாதானகாரண மன்றாம்; மற்றே, இச்சகத்திற்கு விவர்த்த உபாதானகாரணமாம. அத்தன்மை மாயையின்றிச் சம்பவியாதாதலின் அதனானே அஃதஃதாம். பரிணாமபாவமற்ற இரஜ்ஜு மாயையினானே சர்ப்பத்தின் விவர்த்த உபாதானகாரணமாவதேபோல பரிணாமபாவமற்ற ஆன்மாவும் மாயையினானே ஜகத்தின் விவர்த்த உபாதான காரணமாம். ஆகாசாதிகளின் சப்தாதிகுணங்கள் வாயு முதலிய காரியத்தே யாவருக்குங் காணப்பெறுகின்றமையின், அவை வாயுவாதிகளின் பரிணாமி யுபா தான காரணமாம். ஹே மைந்த! வாஸ்தவமாய் விசாரித்துப்பார்க்கின் சர்வ பரி ணாமங்களுமற்ற ஆன்மரூபப் பிரஹ்மமே யாண்டுங் காரணமாம்; அதனினும் வேறாய ஆகாசாதிகளியாவும் அதன்காரியமேயாம். ஆகாசாதிகளிடத்தே வாயு முதலியவற்றின் காரணத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனின், ஆகாசாதிகளையே காரியமென வுடன்பட்டுப் பிரஹ்மத்தைக் காரணமென வுடன்படாதொழியின் பிரஹ்மஞானத்தாற் சுருதி சர்வ ஜகத்தின் ஞானங் கூறல் அசங்கதமாம்; ஏனெ

ளின் காரணஞானமின்றிக் காரியஞான முண்டாகாதாமாதலின் சுருதியினுற் பிரஹ்மத்தின்கண்ணே சர்வஜகத்தின் காரணத்தன்மை சித்தஞ்செய்யப் பெற்றதாம்.

சங்கை :—ஹே பகவன்! ஆகாசாதி சர்வ காரியங்கட்கும் ஒரு பிரஹ்மமே காரணமாமாயின் அவற்றின்கண்ணே வாயு முதலியவற்றின் காரணத்தன்மை கூறல் அசங்கத மன்றோவாம்.

சமாதானம் :—ஹே குழந்தாய்! உண்மையாய் ஆராய்ந்து நோக்கினே சம்பூரண காரியத்தின் காரணத்தன்மை பிரஹ்மத்திற்கேயிருப்பினும உலகர்க்கு ஆகாசாதிகளிடத்தே காரணத்தன்மை நிகழ்தல்,உபாதித்தன்மையாலாம்; உபாதியற்ற சுத்தப் பிரஹ்மத்தேபோ எப்பொருளின் காரணத்தன்மையுமின்றும; மற்றே, மாயாதி யுபாதியோடுகூடிய பிரஹ்மத்திற்கே ஜகத்காரணத்தன்மையாமாதலின், மாயாவிசிஷ்டப் பிரஹ்மம் ஆகாசகாரணமாவதேபோல ஆகாசாதி விசிஷ்டப பிரஹ்மங்கள் முறையே வாயு தேயு நீர்மட்கடாதிகட்குக் காரணங்களாம். இங்ஙன் முன் முன்னுள்ள விசிஷ்டங்கள் பிறபிறகாரிய காரணங்களாம. இதனுனே ஆகாசாதிகளில காரணத்தன்மை அபிமானமுலகருக்குண்டாம். சப்தாதிகளை வாயுமுதலியவற்றே கண்டு இவற்றின்கண்ணே அவை ஆகாசாதிகளினின்றும் வநதனவெனனு மய லுலகருககுண்டாம; ஆதலின, பிரஹ்மமே சர்வ ஜகத்தின் காரணமெனத் துணியபபெறறதாம. இபபோது பூாவப பிரசங்கத்தை நிருபிப்பாம :—ஹே மைநத! ஒலி முதலிப ஐந்து குணஙகளையுடையதும, சர்வப பிரஹ்மாண்ட ஜனனியும, ஸ்தாவரஜஙகமரூப சாவ ஜகததின் ரக்ஷணையைச செய்வதுமாய பிருதிவி பூாவம ஜலததினினறுமுண்டாயது, அதினின்றும் அநேகவகை ஒஷதிகள் உண்டாயின. அவை அநேகவகையாயினும் சுருக்கமாயவை நாட்டோஷதிகள் காட்டோஷதிகளென இருபகுபபாம். அவற்றுள, புருடபபிரயத்தனஜன்னிய நெல, கோதுமை, உழுநது முதலியவை முதலதாம்; முயல்வின்றியே வனத்தின்கண்ணேயுண்டாம் திருணதானியாதிபேதங்க ளிரண்டாவதாம். அவ்விருவகையும் மனுடாதி ஜங்கமப பிராணிகளால் பக்ஷணஞ்செய்யத்தக்கனவாம். ஒஷதிகளினின்றும நெல, கோதுமை முதலிய நானுவகை அன்னங்களுண்டாயின; அவற்றை ஆணும பெண்ணு மயின்றன; அவற்றினின்றும் வீரியமுண்டாயது; அது சுவர்க்கம், மேகம், பூவுலகம, புருடன், யோஷித் (ஸ்திரீ) என்னும் பஞ்சாக்கினியுள் யோஷித்துருவப பஞ்சமாக்கினியின் ஆகுதிவடிவமாம். பஞ்சாக்கினியைப்பற்றி ஆறுவதத்தியாயததே விஸ்தாரமாய்க் கூறிவநதேம். அவ்வீரியத்தினின்றும் அஸ்தபாதாதி அவயவங்களோடுகூடிய இப்புருடசரீர முண்டாயதாதலின் இதனைச் சுருதிபகவதி அன்னரசமயன் என்றனள். அன்னரசத்தின் விகாரமாயது அன்னரசமயமாம்.

சங்கை :—ஹே பகவன்! இம்மனுடசரீர உறபத்தி அன்னத்தினின்றுமுண்டாவதேபோலக் கோ அசுவாதி பசுக்களுமுண்டாகின்றனவாதலின், சுருதியின் கண்ணே கேவலம் மனுடசரீரத்தையே அவ்வாறு கூறலெற்றினுக்கோ?

சமாதானம் :—ஹே குழந்தாய்! முற்கூறியமுறையே சர்வ சரீர உற்பத்தியும் அன்னத்தினின்றுமேயாயினும், இது யாவினும் மேன்மையதாமாதலின், சுருதிபகவதி அவ்வாறறைந்தனள். சர்வ சரீரத்தும் மனுடசரீரப் பிரதானத்தன்மை முதலத்தியாயத்தே கூறிவந்தேம். அதிலுமன்ன காரிய வீரியவாயிலாயாமாதலின் இதனை அன்னரசமயனென்றதேபோல, நாடோறும் அன்னம்அயிலலால் இதன் விருத்தியாமாதலினானும், சுருதிபகவதி இதனை அன்னரசமயன் என்றனள். இத்துணைக் கிரந்தத்தால் பிரஹ்மத்தின் அத்விதீயரூபத்தன்மையை யறிவிக்கும்பொருட்டுப் பிரஹ்மத்தினின்றும் ஆகாசமேமுதலித்தூலபரியந்தமாய ஜகத்துற்பத்தி நிரூபிக்கப்பட்டது. இப்போது தூலமதியுடைய புருடருக்குச் சர்வாந்தரியாமியாய பரமான்மாவைப் போதிக்கும்பொருட்டுப் பஞ்சகோச நிரூபணஞ்செய்வாம் :—ஹே குழந்தாய்! முன்னர் யாம் சத்திய ஞான அநந்தரூபமாயும் ஆகாசாதி ஜகத்காரணரூபமாயும் எப்பிரஹ்மரூப ஆன்மாவைக் கூறினேமோ அதற்குத் தூலசூக்ஷ்ம காரண சரீரத்திரயமுண்டு. அம்மூன்றன்கண்ணே அத் தித்திரி மறையவர் அன்னமயம், பிராணமயம், மனோமயம, விஞ்ஞானமயம், ஆநந்தமயமெனும் பஞ்சகோச கற்பனைசெய்தனா. வாளை மறைக்கும் காஷ்டவிசேஷம் கோசமாவதேபோல, அவ்வன்னமயாதிகளும் ஆன்மாவை மறைத்தலின் ஐந்து கோசமெனப்பட்டன ; அவை அசங்கபுத்திவடிவ சஸ்திரமற்ற அஞ்ஞானியால் பேதிக்கப்படமாட்டா ; அதனாலவை துர்ப்பேத்தியங்களாம். அவற்றை முச்சரீரத்தேயடக்குவாம் :—தூலசரீரமோ அன்னமயகோசமாம், சூக்ஷ்மசரீரமோ பிராணமய, மனோமய, விஞ்ஞானமயமெனும் முக்கோசவடிவமாம். காரணசரீரமோ ஆநந்தமயகோசரூபமாம். இவ்வாறு முச்சரீரத்தே ஐங்கோசங்களைக் கற்பித்துத் தித்திரி மறையவர் தமது சீடர்க்குப் போதிப்பான், அவற்றைப் பக்ஷிரூபமாய்க் கற்பித்தனர். பக்ஷிகட்குச் சிரம், வாமபக்ஷம், தக்ஷிணபக்ஷம, உதரம், புச்சம என ஐந்தவயவங்க ளிருத்தல்போலத் தித்திரி மறையவர் அவ்வைந்திறகுங கற்பித்தனர் :—ஹே மைந்த! அன்னமயகோசப் பக்ஷிக்கு மஸ்தகமோ சிரமாம் ; தக்ஷிண புஜம் தக்ஷிணபக்ஷமாம், வாமபுஜம் உத்தரபக்ஷமாம், உதரம் உதரமாம், இருபாதங்களும் பக்ஷியின் புச்சம்போல நீண்டிருத்தலின் வாலாம். அவை சரீரஸ்திதிக்கு ஆதாரமாதலின் சுருதிபகவதி அதனைப் பிரதிஷ்டை என்றனள்.

சங்கை :—ஹே பகவன்! பக்ஷி தனது புச்சத்தின்மீதிராதாதலின், பிரதிஷ்டை என்னும் பதத்திறகு ஸ்திதியின் ஆதாரத்தன்மைவடிவ அர்த்தஞ் சம்பவியாது ; மற்றோ, பக்ஷிசரீரத்தின் சமாபதியே அதன் அர்த்தமாம்.

சமாதானம் :—ஹே குழந்தாய்! பக்ஷி தனது புச்சத்தின்மீது இராதாயினும் சில வானராதிகள் தமது வாலின்மீதேயிருக்குமாதலின் அவ்வர்த்தமே சம்பவிக்கும். அத் தித்திரி மறையவர் இவ்வாறு கூறி அன்னமயகோசத்தே இம்மந்திரசுலோகத்தைக் கூறினர் : ரசவீஜபாவத்தை அடைவுற்ற அன்னத்தினின்றுமே இவ்வெல்லாப் பிரஜைகளுமுண்டாயினர், அதனானே ஜீவிப்பர், அதன்கண்ணே இலயமடைவர். விருக்ஷாதி ஸ்தாவரங்கள் நீர்வடிவ அன்னத்தினின்றுமே உற்பத்தியாம், அதனானே ஜீவிக்கும், அதன்கண்ணே இலயமாம். நீராற்கூறிய உற்

பத்தி, ஸ்திதி, இலயம் கேவலம் நீராலன்றும்; மற்றோ, பூமியோடுற்ற நீரானே அவையாம். மனுடாதி ஜங்கம சரீரங்களின் உற்பத்தி, திதி, இலயங்களிலோ நெற் கோதுமை முதலிய அன்னமே காரணமாம். வேறுவிதமாயவற்றிற்கு இலயம் அன்னத்தே கூறுவாம்:—ஹே மைந்த! சம்பூரண சரீரங்களும் ஜீவபாவமற்றனவாய் ஒரு பிராணிக் கன்னரூபத்தன்மையையடைந்தழியும். கருத்திதுவாம்:—பசிதீரப் பக்ஷிப்பது அன்னமாம் என்னும் பொருள் சர்வ சரீரத்தும் பொருந்தும்; ஏனெனின், ஸ்தாவரங்களை ஜங்கமப்பிராணிகள் சாகாதிவடிவமாய்ப் பக்ஷிப்பது போலவே இம்மனுடாதி சரீரங்களையும் சிங்க சுவானகிருமி முதலியவை பக்ஷிக்குமாதலின் எலலாத் தேகங்களும் அன்னபாவத்தையடைந்து நாசத்தையடையும் என்பது பொருத்தமேயாம். அல்லது, இப்பிருதிவி சர்வ ஜீவர்கட்கும் போகசாதனமாதலின், சர்வ ஜீவர்கட்கும் அன்னரூபமாம். எல்லாத் தேகங்களும் தமது நாசகாலத்தே பிருதிவியினின்றும் அபின்னமாமாதலினும் சம்பூரண சரீரத்தும் அன்னரூபதன்மை சம்பவிக்கும. இசசமஷ்டியன்னம் சர்வப் பிரஜைகளின் உற்பத்தி, திதி, லயகாரணமாமாதலின் சுருதிபகவதி இதனை ஜ்யேஷ்டம் என்றனள்; சர்வ ரோகரூபப் பசிநோயை இவ்வன்னம் நாசம்செய்தலின் இதனைச் சர்வோஷதம் என்றனள். அன்னத்தே சர்வ பூதங்களின் உறபத்தி, திதி, இலயகாரணத்தன்மைவடிவப பிரஹ்ம இலக்ஷணத்தை நிசசயித்துப் பிரஹ்மரூபமாய் உபாசனைசெய்யு மதிகாரி மனவாஞ்சித அன்னப்பிராப்திரூப பலத்தையடைவன். ஈண்டன்னசப்தத்திற்கு இருவகைப் பொருளாம். வியஷ்டிரூபமாக யாது பூதபக்ஷணத்தையடையுமோ, அது அன்னமாம்; அல்லது, சமஷ்டிரூபமாக யாது சர்வ பூதபக்ஷணஞ்செய்யுமோ அது அன்னமாம. இவ்வன்னமயாதி பஞ்சகோசத்தே ஒவ்வொன்றிற்கும் சிராதிபஞ்ச அவயவங்களுண்டு; அவறறுள், எது புச்சசப்தத்தானும் பிரதிஷ்டை சபதத்தானும் கூறப்பெறறதோ அதனை அவ்வக்கோசத்தே பிரதானமாயும காரணரூபமாயுமுணர்க. பிறபிற் கோசத்தை முன்முற்கோச காரணமெனவுமறிக. இத்துணை இயம்பியதால் அன்னமயம் நிரூபிக்கப்பட்டது. இப்போது எந்நிமித்தங்கொண்டு ஒரே சூக்குமசரீரத்தே முக்கோசகற்பனை செய்யப்பெற்றதோ அதை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! இச்சூக்ஷுமசரீரத்தே கிரியை, நாமம், ரூபமென்னும் மூன்றும் வேறுவேறாயிருக்கும். அவற்றுள், கிரியை பிரதான அம்சமாம, அதுவே பிராணமயகோசமாம். பிரமாணரூபநாமப் பிரதான அம்சம் மனோமயகோசமாம். பிரமேயவடிவரூபப் பிரதான அம்சம் விஞ்ஞானமய கோசமாம். நாமரூப சப்தங்களின் பொருளை முறையே மனோமயகோச நிரூபணத்தும், விஞ்ஞானமயகோச நிரூபணத்தும், வெளிப்படையாய்க் கூறுவாம். இப்போது பிராணமயகோசத்தை நிரூபிபபாம்:—ஹே மைந்த! ஐந்தவயவங்களோடு கூடிய தூலசரீரரூப அன்னமயகோசத்தினு மன்னியமாயுள்ளாய்ப் பிராணமய கோசந் திதமாம். அப்பக்ஷியும் அன்னமயகோசம்போலச சிராதி யைந்தவயவங்களுடையதாம். அதனினும் உள் மனோமயகோசமாம், அதனினும் உள் விஞ்ஞானமயகோசமாம், அதனினும் உள் அவித்தைவடிவ ஆநந்தமயகோசமாம். இவ்வைந்னுள் உத்தர உத்தரகோசம் பூர்வ பூர்வ கோச சதிருசமேயாம். குகையின்

கண்ணே செலுத்திய நெகிழ்ச்சியாய தாமிராதி தாதுவாற் குகை பூரணமாதலே போல, உத்தர உத்தர கோசத்தாற் பூர்வ பூர்வ கோசம பரிபூரணமாம். அத்திய ந்த அநல சையோகத்தால் நெகிழ்வுற்ற தாமிராதி தாதுக்களை விட்டமாத்திரதே மூர்த்தாகாரத்தையடையும் பாத்திரவிசேஷம் குகையாம். பிராணமயகோசத்தின் ஐந்தவயவங்களாவன: முகநாசிகைவாயிலாயச் சலியாநின்ற பிராணவாயுச்சிரமாம். பிராண அபானன்களின் சந்திரூப வியானவாயுத் தக்ஷிணபக்ஷமாம். கீழே கமனஞ் செய்யும் அபானரூபவாயு உத்தரபக்ஷமாம். ஆகாசத்தைத் தேவதையாகவுடைய சமானவாயு உதரமாம். பிருதிவியைத் தேவதையாகவுடைய உதானவாயுப புச்சரூ பமும்பிரதிஷ்டைவடிவமுமாம். மரணகாலத்தே தேகத்தைப் பரித்தியாகித்து லோ காந்தரத்தேசெல்லும் உதானவாயு இததேகத்தினும வெளியேகிளம்பும்போது சம் பூரணப் பிராணன்களுடம வெளியேகிளம்புமாதலின் உதானவாயுவாகிய புசசத்தைப பிரதிஷ்டையென்றதாம். சமஷ்டிரூபமாய்த் தியானஞ்செய்யப்பட்ட இவ்வன்னமய கோசம் மனவாஞ்சித அன்னத்தைப பெறுவதற கேதுவாவதேபோலச் சமஷ்டி ரூபத்தால் தியானஞ்செய்யப்பட்ட இப்பிராணமயகோசமும் தீர்க்காயுஷின் பிரா ப்திரூப பலஹேதுவாம. இபபிராணமயகோசத்தும தித்திரி மறையவா இவ்வகை மந்திரரூப சுலோகததைக கூறினர். பிராண வியாபாரத்தைசசெய்யும சமஷ்டி பிராண அபிமானி தேவதையை யாசிரயித்தே சமபூரண தேவதைகளும, மனு டர்களும், பசுக்களும் நானுவகையாய்ச சேட்டிபபர், ஜீவனத்தையடைவர். பிரா ணனிருப்பவே சர்வபிராணிகட்குஞ் சீவனமாம். பிராணனின்றி எப்பிராணிக்கும் ஜீவனமின்றுமாதலின், பிராணன் சர்வஜீவர்கட்கும் ஆயுஷ்வடிவமாம். ஆதலினுனே சுருதிபகவதி பிராணனை சாவாயுஷ் என்றனள். இபபிராணனைப் பிரஹ்மரூபமாய் உபாசனைசெய்யும் அதிகாரி சதவருட சகஸ்ரவருடாதி சம்பூரண ஆயுளையடை வன். இப்பிராணமயகோசம் தூலசரீரரூப அன்னமயகோசத்தை நாற்புறமும் வியாபித்துநிற்குமாதலின் இது அன்னமயகோசததின் ஆன்மரூபமாம். கருத் திதுவாம்:—அதிகாரி அன்னமயகோசததே ஆன்மதன்மைய புத்தியைப பரித் தியாகித்து ஆநதரப் பிராணமயகோசததே ஆன்மபுததியைச செய்யற்பாலதாம. ஹே குழந்தாய்! இவவன்னமயகோசததினும வேறாயுள்ளாய் ஆன்மவடிவமாய்ப பிராணமயகோசமிருப்பதேபோலப பிராணமயகோசததினும் வேறாயுள்ளாய் ஆன் மரூபமாய் மனோமயகோசமிருககும. அதன ஐநதவயவங்களாவன: மனோமயகோ சரூபப் பக்ஷிக்கு யஜுர்வேதம் சிரமாம், இருககுவேதம் தக்ஷிணபக்ஷமாம், சாம வேதம் உத்தரபக்ஷமாம், வேதத்தின் பிராஹ்மணபாகம் உதரமாம், அதர்வண வேதம் சாந்தியாதி குணங்கட்குக் காரணமாய்த் திதியேதுவாமாதலின் அது புச்சரூபப் பிரதிஷ்டையாம்

சங்கை:—ஹே பகவன்! இருக்கு முதலிய நான்குவேதமும் சப்தவடிவமா மாதலின் அதன்கண் அவயவரூபத்தன்மை சம்பவியாதாம்.

சமாதானம்:—ஹே குழந்தாய்! இருக்காதிகள் சப்தவடிவமேயாம்; மானச ஞானவடிவமன்றுமாயினும அவற்றின் ஸ்வரூபததுள்ளடங்கியவும் பிரமாணரூபத் தன்மைக்குள்ளடங்கியவும் ஆகிய மனோவிருத்திகள் மனத்தின்கண்ணேயிருக்கு மாதலின் இருக்காதி சப்தங்கள் இலக்ஷணாவிருத்தியால் மனோவிருததிகளையே

யுணர்த்துமாதலின், வேதத்தே அவயவத்தன்மைக்கூற்று முரணன்றாம் கருத்திதுவாம்:—கேவல ககாராதி வர்ணங்கட்கு வேதரூபத்தன்மையின்றாம்; மற்றோ, கண்டாதிஸ்தான உதாத்தாதி ஸ்வர அநுசந்தான விசிஷ்ட ககாராதி வருணங்களின் சமூகத்திற்கே வேதரூபத்தன்மையாமாதலின், வேதவடிவம் அநுசந்தானரூப மானசவிருத்தியாற் பொருந்தியதேபோல அதன்கண்ணே பிரமாஞானத்தின்காரணத்தன்மைவடிவப் பிரமாணத்தன்மையும் இயல்பானே இன்றாம்; மற்றோ, மானசவிருத்திரூபப் பிரமாஞான நிரூபிதம் பிரமாணததன்மையாதலின் அது மானசவிருத்தியினானே பொருநதுவதாம். இபபிரஹ்மரூப ஆன்மாவோ எப்பிரமாணஜன்னிய ஞானத்திறகும விஷயமன்றாமாதலின், அமமனம வேதரூபப் பிரமாணத்தால் இதனைச சாக்ஷாததாய் விடயஞ்செய்யமாட்டாததேபோலத் தனது வடிவத்தினாலும இதனை விடயஞ்செய்யமாட்டாது. இபபொருளின்கண்ணும் இத்திரிமறையவர் இவ்வகை மநதிரரூப சுலோகததைக் கூறியுள்ளார்:—எதனையடைய முடியாமல் மனசகிதவாணி நிவிருததியடைகின்றதோ அநதபிரஹ்மஸ்வரூபபூத ஆநந்ததநதை அறிந்தவனுப அறிஞன் எதனினின்றும பயத்தையடையான். ஹே மைநத! சமபூரண வேதவாணிவடிவப பிரமாணமும, முற்கூறியமுறையே வேதரூபவாணிகளின் வடிவத்துட் பொருநதியதும பிரமாணததன்மையுட்பொருந்தியதும் ஆகிய மனவடிவப பிரமாணமும ஆநநதவடிவ ஆன்மாவைப பிரகாசிப்பதிற் சமாததுடையனவன்றாமாயினும சாஸ்திரசமஸ்காரத்தோடுகூடிய அந்தர்முகச் சுத்தமனத்தால் அதிகாரி மனோமயத்துள்ளிருககும ஆன்மவடிவ ஆநந்தத்தை அறிந்தவனாய் ஜன்மமரணாதிரூப சமசாரததினின்றும் பயததையடையான். பிராணமயகோசத்தே ஆன்மததன்மைமதியைப பரித்தியாகிதது அதிகாரிமனோமயகோசத்தே ஆன்மபுத்தியைச் செய்கவென்பது கருததாம். ஹே குழந்தாய்! கிரியைவடிவப பிராணமயகோசத்தினும பிரமாணரூபமனோமயகோசம் ஆந்தரமாவதேபோல அதனினும் இபபிரமாதாப பிரமேயரூப விஞ்ஞானமயகோசம் உள்ளிருப்பதாம். அதன் ஐநதவயவங்களாவன:—சர்வ கருமங்களின் மூலரூப குரு சாஸ்திரவசன விசுவாசமாகிய சிரததை விஞ்ஞானமயகோசப பக்ஷியின் சிரமாம. சாஸ்திரம் விதிதத யாகாதி கருமங்களின் விசாரததேயுற்ற மீமாமசா சாஸ்திரஜன்னிய மானசீ புததிரூப நததம தக்ஷிணபக்ஷமாம. அநுஷ்டானஞ் செய்யப்பட்ட சாஸ்திரவிகித யாகாதிகருமங்களை விடயஞசெய்யும் புததிரூப சத்தியம் உத்தரபக்ஷமாம். அத்தியாத்ம சாஸ்திரார்த்த நிசசயரூப யோகம் உதரமாம். சர்வ ஸ்தூலப் பிரபஞ்சத்தின் காரணரூப ஹிரண்யகருபபரின் சமஷ்டிபுத்தி, புச்சரூபப் பிரதிஷ்டையாம். இதன்கண்ணும் இத்திரி மறையவா இவ்வகை மந்திரரூபச் சுலோகத்தைக் கூறியுள்ளார். இவ்விஞ்ஞானரூபப புததியே யாகாதி சாவ வைதிக கருமங்களையும் கமனுகமனாதி சர்வ லௌகிக கருமங்களையும் செய்யும். தேவபாவத்தை யடைவுற்ற சர்வ அதிகாரிகளும இவ்விஞ்ஞானரூபச் சமஷ்டிபுத்தியையே பிரஹ்மரூபமாயுபாசிப்பாாக. இவ்விஞ்ஞானமய ஆன்மாவைப் பிரஹ்மரூபமென வுணர்ந்து இதரபதார்த்தத்தே ஆன்மத்தன்மைப் புத்தியைப் பரித்தியாகஞ்செய்யும் அதிகாரி தேகாபிமான ஜன்னிய பாவகருமங்களைப் பரித்தியாகித்து மனோவாஞ்சித சர்வ

பதார்த்தத்தையுமடைவன். ஹே மைந்த! முற்கூறிய குகைத் தாமிர திருஷ்டாந்தத்தால் இவ்விஞ்ஞானமயகோசம் மனோமயகோசத்தைப் பூரணித்திருக்குமாதலின், அது இதன் ஆன்மவடிவமாம். அதிகாரி மனோமயகோசத்தே ஆன்மத்தன்மைப்புத்தியைப் பரித்தியாகித்து விஞ்ஞானமயகோசத்தே ஆன்மபுத்தி செய்கவென்பதுகருத்தாம். ஹே குழந்தாய்! அவ்விஞ்ஞானமயகோசத்தினும் அன்னிய அந்தரான்மா ஆநந்தமயகோசமாம்; அஃதவ் வியாகிருதரூபமாம். அதன்ஐந்தவயவங்களாவன :—இஷ்ட பதார்த்த தரிசனத்தாலுண்டாய சுகரூபப்பிரியம் ஆநந்தமய பக்ஷியின் சிரமாம். இஷ்டபதார்த்தப்பிராப்தியால் உண்டாய சுகரூபமோதம் தக்ஷிணபக்ஷமாம். இஷ்டபதார்த்த போகஜன்னிய சுகரூபப் பிரமோதம் உத்தர பக்ஷமாம். பிரியமோதாதி விசேடங்களிடத்தே சாமானியரூபமா யனுகத ஆநந்தம் உதரமாம். சர்வ ஜகத்தின் காரணரூப ஆநந்தவடிவ அதிஷ்டானப் பிரஹ்மம் புச்சமாகிய பிரதிஷ்டைவடிவமாம். அஞ்ஞானமாகிய ஆநந்தமயகோசம விஞ்ஞானமயகோசத்தை எங்கும் வியாபித்து நிறகுமாதலின் அஃதிதன் ஆன்மவடிவமாம. அதிகாரிவிஞ்ஞானமயகோசத்தே ஆன்மத்துவபுததியைபபரித்தியாகித்துஆநநத மயகோசத்தே ஆன்மத்வபுத்தி செய்கவென்பது கருத்தாம். இத்துணைக் கிரந்தத்தால் அன்னமயாதி பஞ்சகோசங்கள் நிரூபிக்கப்பட்டன. இபபோது சுருதிபகவதி பஞ்சகோசங்களை நிரூபித்த கருத்தைத் தெரிவிபபாம் :—ஹே குழந்தாய்! இவ்வுலகத்தே சர்வ தேகதாரிகட்கும் சித்தம ஞானேந்திரியபஞ்சகம் கருமேந்திரிய பஞ்சகம் நித்தியம் பகிர்முகமேயா மாதலின், யாவரும் காணங்களால் வெளிப்பொருளையே கவர்வர். தேகத்துட்டிதமாய ஆநந்தசமுததிரரூப ஆன்மாவை எவருங் கவரார்; மற்றோ, ஆந்தர ஆநந்தவடிவ ஆன்மாவைப் பரித்தியாகித்து யாவரும் சுகப்பிராபதியின்பொருட்டு வெளியிலேயே சுழலுவர். அவ்வாறு சுழலுபவர் சிறிதுமாத்திரையும் சுகத்தையடையார்; மாறாகப் பகிர்முகத்தன்மையால் மகா துக்கரூப சமுத்திரத்தே ஆழ்வர். இவ்வாறுபகிர்முகர் மோக்ஷரூபப் புருடார்த்தத்தினின்றும் பிரஷ்டானதையும் ஜனனமரணரூப சம்சாரத்தே அடைவுற்றதையுங்கண்டு தாயைப்போல அத்தியந்தம் பிரீதியுடைய சுருதிபகவதி அத்தியந்தந் துக்கியாயினள். பகிர்முகப் பிரவிருத்தியினின்றும ஜீவர்களைச் சாக்ஷாத்தாக நிவிருத்திப்பதில் அசமர்த்தையாய அததாய் பஞ்சகோசரூப உபாய விசாரத்தால் முதலில் அதிகாரிகளைப் பகிர்முகப பிரவிருத்தியினின்றும் நிவிருத்தி செய்தனள்.

சங்கை :—ஹே பகவன்! மாதாவைப்போலச் சர்வ ஜீவர்களின் இதத்தின் பொருட்டுப் பிரவிருத்தித்த சுருதிபகவதி முதலில் கேவலம் பிராஹ்மணர்களுக்கே உபதேசம் ஏன் செய்தனள்?

சமாதானம் :—ஹே மைந்த! அவ்வம்மை முதலில் அவ்வாறு செய்ததன் அபிப்பிராயத்தை நீ கேட்டி : இம்மறையவரை யான் பகிர்முகப் பிரவிருத்தியினின்றும் நிவிருத்திப்பனாயின், இவர் க்ஷத்திரியாதியர்களை வேதவசனோபதேசத்தால் பகிர்முகப் பிரவிருத்தியினின்றும் நிவிருத்திப்பர். சூத்திராதிகளைப் புராண வசனோபதேசத்தால் பகிர்முகப் பிரவிருத்தியினின்றும் நிவிருத்திப்பர். இவ்வா

ரூராய்ந்து சுருதிபகவதி பகிர்முகரீக்கத்தின்பொருட்டுப் பஞ்சகோச உபதேசஞ் செய்தனள்.

சங்கை :—ஹே பகவன்! பஞ்சகோசோபதேசஞ்செய்து எவ்வாறு நிவிருத்திப்பள்?

சமாதானம் :—ஹே குழந்தாய்! ரூப யௌவனாதி குணங்களோடு கூடியவனும், கூடியவளும் தன் தன் சரீரத்தால் மகிழ்வையடையார்; மற்றோ, அவர்கள் சுகப்பிராப்தியின்பொருட்டுப் பிசாசைப்போலத் தனது சரீரத்தினும் வேறாய சிவித சரீரத்திற்கேனும் மிருதசரீரத்திற்கேனும்சேவைபுரிவர். அவர்கள்சேவிக்கும் பரசரீரமும் தூலசூக்ஷ்ம காரணபேதத்தால் மூவகைத்தாம். இத்தூலமோ அன்ன விகாரமாம். சூக்ஷ்மமோ பிராணன், மனம், விஞ்ஞானம் என்னும் மூவுருவமாம். காரணமோ அநாதி அஞ்ஞானரூபமாம் கேவலம்பரசரீரமே அன்னாதிரூபமன்றாம்; மற்றோ, மூவுலகத்துமுள்ள சரீரங்களியாவும் அன்னாதி ஐந்து கோசரூபமேயாம். அத்தகையசம்பூரணபிரபஞ்சமும் தன்தன் தேகத்தே விளங்கிபுறுவதாமாதலின், ஆந்தரபதார்த்தத்தைப் பரித்தியாகிதது பாகியபதார்த்தத்தை விரும்புதல் தகுதியன்றாம். மதுவையடைய இச்சித்தவன் தன் இல்லினருகிலேயே மது கிடைப்பின் அதன்பொருட்டு மலைமேலேகுதல் தகுதியல்லாததேபோலத் தனது சரீரத்தின்கண்ணே சர்வபதார்த்தப் பிராப்தியாயின் அதன்பொருட்டுப் பாகியத்தே யுழலல் தகுதியன்றாமென்பது கருத்தாம். இக்கருத்தை மனத்தேவைத்துத்தான், சுருதிபகவதி மாதாவைபபோலக் கிருபையோடும் அதிகாரிகட்கு இவ்வாறு கூறினள். ஹே குழந்தைகளே! உண்மையாய் ஆராய்ந்துபார்க்கினோ ஆநந்தவடிவ ஆன்மாவினும்வேறாய எவ்வஸ்துவின்கண்ணும சுகரூபத்தன்மையின்றாம்; ஆனால், ஆன்மாவினும் வேறாய வஸ்துவே எமது சுககாரணம் என உங்கள் சித்தத்தே ஆக்கிரகமிருப்பின் அதனை நான் நிவாரணஞ்செய்யவில்லையாயினும் நீங்கள் சுகமென வெண்ணிய ஆன்மாவினும் வேறாய அன்னமயாதிகள் உங்கள் ஆகத்திலேயே இருக்கின்றன. அவற்றை நீங்கள் சேவியுங்கள் அவற்றைவிட்டுப் பாகியத்தே அடையுமாறு ஏன் உழலுகின்றீர்கள். இப்பொதிப்பொருளையே லோகப்பிரசித்த திருஷ்டாந்தத்தால் வெளிப்படுத்துவாம் :—ஹே மைந்த! பசியானும் காமத்தானும் பீடையுற்ற ஒருவன் வீட்டைவிட்டு வெளியேசெல்ல முயலுவனாயின், அவன் தாய் அவன் கையைப்பிடித்து வீட்டினின்றும் வெளியேசெல்லலை இவ்வாறு கூறித் தடுப்பள்:— ஹே மைந்த! நீ அன்னம் பெண் வேண்டி வீட்டைவிட்டு வெளியே போகாதே, செல்வையேல் மிகு துயருறுவாய். நீ வேண்டிய நானாவகை அன்னாதிகளையும் ரூப யௌவன அவஸ்தாசம்பன்ன மனோரம ஸ்திரீகளையும் உனக்கு யான் நமது வீட்டிலேயே சம்பாதித்துக்கொடுக்கின்றேன். நீ அதன்பொருட்டு வெளியேயேகுதல் தகுதியன்றாம், இவ்வாறுரைத்த மாதாவின் வசனத்தைக்கேட்டு மைந்தன் மதிமானாயின், வெளியேசெல்லும் ஆக்கிரகத்தையொழித்து எங்கே அன்னம் எங்கே மனைவி என்னும் வசனத்தைக் கூறுபவனாய் விரைவாகவே தனது கிருகத்தே புகுவன்; புகுந்த மைந்தன் தாயின்கருணையால் சம்பூர்ண மனவாஞ்சித பதார்த்தங்

கமேயடைவன். அதுபோலத் தனது சரீரத்தினும் வெளியே பரசரீரத்தைச் சுக சாதனமெனவெண்ணிச் சுகமடையும்பொருட்டுப் பாகியத்தேயுழலும் பகிர்முகனை அந்தர்முகப் படுத்தும்பொருட்டுச் சுருதிபகவதி முதலில் அன்னமயகோசத்தைக் கூறினள். அவ்வுபதேசத்தா லதிகாரி பாகியவிஷயத்தைப் பரித்தியாகித்து அன்னமயகோசத்தே அடைவன் பாகியத் தூல விடயங்களாற் சன்னியசுகமுழுவதையும் அன்னமயகோசத்தேயடைவன். இவ்வாறு சுருதி மாதாவி னுபதேசத்தால் பாகியவிடயத்தினின்றும் நீங்கி அன்னமயகோசததேதிதமாய அதிகாரி அச்சுகத்தையடையினும் ஆன்மவடிவ வாஸ்தவசுகத்தையடைந்திலனாதலின், தற்சுகத்தை இச்சித்த அதிகாரி சுருதிரூப மாதாவின் வசனததேத விசுவாசம்வைத்து அன்னமயகோசத்தைப பரித்தியாகித்துப் பிராணமயகோசத்தையடைவன். அதன்கண்ணும் வாஸ்தவ ஆன்மவடிவ ஆநநததைக் காணுதவனாய் அதனையும் பரித்தியாகித்து மனோமயகோசத்தையடைவன். அதன்கண்ணும வாஸ்தவ ஆன்ம ஆநந்தத்தைக் காணுதவனாய் அதனையும பரித்தியாகித்து விஞ்ஞானமயகோசததையடைவன். அதன்கண்ணும் வாஸ்தவ ஆன்மாநநததைக காணுதவனாய் அதனையும் பரித்தியாகித்து ஆநநதமயகோசததை யடைவன். அதன்கண்ணுறற அதிகாரி சம்பூரண காரியப பிரபஞ்சததைப் பரிததியாகிபபன. ஆங்கு முதலில இஷ்டவஸ்து தரிசன ஜன்னிய சுகததையுறுவன், பின்னா இஷ்டவஸ்துப் பிராப்தி ஜன்னிய சுகத்தையுறுவன், பின்னர் இஷ்டவஸ்துப போகஜன்னிய சுகத்தையுறுவன். பின்னர்ச் சாமானிய சுகரூப ஆநந்தத்தையடைவன். பின்னர் யாவினும் உள்ளாய ஆநநதவடிவப பிரஹ்மத்தையடைவன். அதனைத்தான் சுருதி புசசரூபப் பிரதிஷ்டையென்றது. இசசர்வாதிஷ்டானப பிரஹ்மததை அறியும்பொருட்டுச் சுருதிபகவதி தூல அருநததி நியாயததை அங்கீகரிதது அன்னமயாதி பஞ்சகோசத்தை ஆன்மரூபமாய் வருணித்தனள். இவ்வாறு சுருதிபகவதி சாவ அதிகாரிகளின்மீது அநுககிரகம்வைதது உபதேசிதத ஆநநதவடிவப் பிரஹ்மத்தைத் தன தான்மவடிவமாய் அறியாதவன் ஜீவிக்கினும் மலடிமகனைப்போல அசத்திய பாவத்தையடைவன். இபபொருளிலும் தித்திரி மறையவர் இவ்வகையாய மநதிரரூப சுலோகத்தைக் கூறினர்:—யாவன் பிரஹ்மமின்றென வுணர்நதனனோ அவனன்மா அசத்தியமேயாம். யாவன் பிரஹ்மமிருககின்றதென வுணாநதனனோ அவனை யறிஞன் சத்தியனாயறிவன். இபபோதிபபொருளேயே வெளிப்படையாய் நிரூபிப்பாம்:—ஹே குழநதாய்! சர்வகாலத்தும தேசத்தும் சர்வதிறகும ஆன்மரூபமாயிருக்கும் ஆநந்தவடிவப் பிரஹ்மத்தை யாவன் நாஸ்திரூபமாய் அறிகின்றனனோ அறைகின்றனனோ, அவனுக்கு மித்தியாஞானத்தானும வசனத்தானும மகாபாவப் பிராப்தியாம். அதன் மகிமையால நாஸ்திகன் தன்னுள்ளுள்ள பிரஹ்மாநந்தத்தினும் விமுகனாய்ப் பாகியவிடயப்பிராப்தியின்பொருட்டு இரவும்பகலும சுழலுவன் அதனால் அனேக துக்கத்தையடைவன். மீண்டும் மிருததியுவையடைவன். மீண்டும் பிறப்பையடைவன், மீண்டும நானாவகைத் துக்கத்தையடைவன், மீண்டும் மிருத்தியுவையடைவன். இவ்வாறுயமராஜாவின் வசமுற்றவனாய தீனன் நிரந்தரம் சம்சாரத்தே சுழலுவன். அவன் அற்ப ஆயுஷ்யுடையவனாவன். யாவராலும் நிராதரத்தையடைவன் அநேகம்பிறப்பிறப்பா தி துக்கமுற்று அந்நாஸ்திகன் அசத்தி

யமபோன்றவன். ஹே மைந்த! குருசாஸ்திர வசனத்தே விசுவாசம்வைத்த ஆஸ்திகன் ஞானசாரியர் வாயிலாய்ப் பிரஹ்மத்தி னிருப்பையுணர்ந்து ஜன்மமரணுதி துக்கத்தோடுகூடிய மாயையை நாசஞ்செய்யும் ஆன்மஞானத்தைச் சம்பாதிப்பன்; அதன் மகிமையால் அவன் சர்வ துக்கமுமற்றவனுய் எப்போதும் ஆநந்த வடிவப் பிரஹ்மரூபமாய்த் திகமாவன். இத்தகைய பிரஹ்மவேத்தா ஆஸ்திகனுக்கு வேதவேத்தா மகாத்மாச் சத்தியரூபமாய்க் கூறுவனுதலின் சுகமடைய இச்சித்தவன் குருசாஸ்திரம் உபதேசித்த அதீந்திரிய அர்த்தத்தே நாஸ்திகத்தன்மையை யொருகாலு மடையலாகாது; மற்றோ, அதன்கண்ணே அதிகாரி எப்போது மாஸ்திகத்தன்மையையே செய்க. இப்போது விருத்திக்காரராய ஏகதேசிகள் ஆநந்தமயகோசத்தையே பிரஹ்மரூபமென வுடன்பட்டதைக் கண்டிப்பான், அன்னமயாதி கோசங்களின் சிரமுதலிய அவயவ பரம்பரையைப் புச்சரூபப் பிரஹ்மத்தே பரிசமாப்திசெய்தலை நிரூபிப்பாம் :—ஹே குழந்தாய்! அன்னமயாதி பஞ்சகோசத்துள் ஒவ்வொன்றின் சிராதி யவ்வைந்தவயவங்கள் ஒருங்குகூடி இருபத்தைந்தாம். அவ்வவயவ வடிவப் பூமிகைகளியாவும் பகிர்முக சித்தத்தைத் திரஞ்செய்யுங் காரணங்களாம். இப்போது அவற்றின் தியானப் பிரகாரத்தை நிரூபிப்பாம் :—ஹே மைந்த! அதிகாரியானவன் தனது சித்தத்தின் பகிர்முகத்தன்மையை நிவிருத்திக்கும்பொருட்டு முதலில் அன்னமயகோசப்பக்ஷியின் மஸ்தகத்தைச் சிரரூபமாய்த் தியானிக்குக, பின்னர்த் தக்ஷிணபுயத்தைத் தக்ஷிணபக்ஷமாய்த் தியானிக்குக, பின்னர் வாமபுயத்தை உத்தரபக்ஷமாய்த் தியானிக்குக, பின்னர் உதரத்தை உதரரூபமாய்த் தியானிக்குக, பின்னர் இரு பாதங்களையும் புச்சப்பிரதிஷ்டை வடிவமாய்த் தியானிக்குக. இதனினும் மேலாக அன்னமயகோசத்தே வேறொரு பொருளுமின்றாம். பின்னரதிகாரி பிராணமய கோசத்தைத் தியானிக்குக. அதன்கண்ணும் முன்போன்றே சிராதி யைந்தையும் முறைப்படி தியானிக்குக. இங்ஙனமே மனோமயாதி முக்கோச அவயவங்களையும் தியானிக்குக. இவ்வாறு இருபத்தைந்து பூமிகளையும் முறையே தியானித்த அதிகாரியின் சித்தம் அந்தர்முகமாம். ஹே குழந்தாய்! அன்னமய கோசத்தினவயவங்களி னந்தத்தே புச்சரூபமாயும் பிரதிஷ்டை வடிவமாயும் கூறிய இருபாதங்கள் அதற்காதாரரூபமாய் இருப்பனபோல இருபத்தைந்தவயவங்களி னந்தத்தே புச்சப்பிரதிஷ்டை வடிவமாய்க் கூறிய அதிஷ்டானப் பிரஹ்மத்தின்கண்ணே இருபத்துநான்கு பூமிகைகள் திகமாம். இதனை உணர்த்தும்பொருட்டே சுருதி பகவதியானவள் அவயவசகித அன்னமயாதிகளைக் கூறினள். சுருதிகூறிய இவ்வதிஷ்டானப் பிரஹ்மத்தை யறியாதொழியவே இகலோகத்தும், பரலோகத்தும், ஜீவர்கட்குச் சிறிதுமாத்திரையும் சுகப்பிராப்தி யுண்டாகாது; மாறாக அறியாமையின் மகிமையால் பிரஹ்மத்தை நாஸ்திரூபமா யறிந்தவன் இரண்டு லோகத்தும் அசத்தியபாவத்தையே அடைவன், இதனைத் தன்னான்மவடிவமா யறிந்தவன் இரண்டுலோகத்தும் சர்வ சுகத்தையும் அடைவன். ஆதலினிப்பொருள் துணியப்பெறும் :—எப்பொருள் பலமுடையதாமோ, காட்சியாதி யளவைகளா லறியப்பெறாததாமோ அதை யுணர்த்துவதிலேயே சுருதிக்குக் கருத்தாம். அத்தகையது அதி

ஷ்டானப்பிரஹ்மமேயாம், அன்னமயாதியைந்தும் அத்தகையனவன்றுமாதலின் பிரஹ்மத்தின்கண்ணே மறைக்குக் கருத்தாமன்றி அன்னமயாதிக் கான்மத்தன்மை யுணர்த்துவதின்கண்ணே கருத்தின்றாம். இத்துணையால் சிரவணரீதியாய் ஆன்மாவின் உண்மைவடிவம் நிரூபிக்கப்பட்டது. இப்போது உத்தரக்கிரந்தத்தால் ஆன்மாவின் வாஸ்தவவடிவத்தை மனனரீதியாய் நிரூபிப்பாம் :—ஹே குழந்தாய்! இவ்வாறு ஆன்மரூபப் பிரஹ்மத்தின் சத்தியாதிதருமங்களின் விசாரத்தால் இத்திரி மறையவர் நிச்சயஞ்செய்த பொருளை நீ சாவதானனாய்க்கேட்டி. பிரஹ்மஞானத்தே பிரஹ்மபாவப் பிராப்தியின் காரணத்தன்மையையமறுமாறு இவ்வாறாராய்ந்தனர். இப்போது பிரமேயரூபப் பிரஹ்மத்தே அசம்பாவனைவடிவச் சம்சயத்தை நீக்கும்பொருட்டு முதலிற் பிரஹ்மத்தே மூவகைச் சம்சயத்தை நிரூபிப்பாம் :—அந்தப் பிரஹ்மமிருக்கின்றதா? அல்லதில்லையா? அறியானுக் கடையத் தகுதியதா? தகுதியற்றதா? அறிஞனுக் கடையத் தகுதியதா? தகுதியற்றதா? முதலையத்தே பிரஹ்மமில்லையென்னு மிரண்டாவது கோடியைப் பூர்வபக்ஷ ரீதியாய் நிரூபிப்பாம் :—ஹே குழந்தாய்! சிலவாதியர் இவ்வாறு விகற்பிப்பர், பிரஹ்மத்தைச் சத்தியஞான அனந்த ரூபமென்னும் வேதாந்தியர் மதத்தே பிரஹ்மஞானம் வியர்த்தமாம். ஏனெனின், அத்தகையது எவருக்குந் தோற்றுவதின்றாமாதலின் அஃது தியாண்டுமின்றாம், இருக்குமாயின் உலகத்தே பிருதிவி முதலிய பதார்த்தங்கள் தோற்றுவனபோலப் பிரஹ்மமும் பிரதீதியாம்; ஆனாலது பிரதீதியாவதோ இன்றாமாதலி னஃதில்லையாம். இப்போது இரண்டாவது சம்சயத்தே அது அறியானுக்கு அடையத் தகுதியதாமென்னும் பிரதமகோடியைப் பூர்வபக்ஷ ரூபமாய் நிரூபிப்பாம் :—ஹே மைந்த! சில ரிவ்வாறு விகற்பிப்பர், வேதாந்தமதத்தே அங்கீகரித்த பிரஹ்மரூப ஆன்மா அறிஞனுக்கும் அறியானுக்கும் சமானமேயாம். அதறகெவரிடத்தும் பக்ஷபாத மின்றாமாதலின் அறிஞன் அதை ஸ்மரித்து அதை யடைவதேபோல அறியானும் அஃதையே னடையான்; மற்றேற அடையவேவேண்டும். அறிஞனேயடைவன் அறியானடையான் என்பதில் வேதாந்திகள் ஒருகாரணங் கூறவேண்டும். அறியானுக் கான்மஸ்மரணம் உண்டாகாதெனக் கூறின் பொருந்தாது; ஏனெனின் நீ அத்விதீயப் பிரஹ்மத்தைச் சர்வ ஜீவர்களின் ஆன்மரூபமாயெண்ணினையாதலின் அது அறிஞனுக்கு ஆன்மரூபமாயிருப்பதேபோல அறியானுக்கும் ஆன்மரூபமேயாமாதலின் அறிஞனுக்கேபோல அறியானுக்கும் பிரஹ்மஸ்மரணமும் அடைவும் அவசியமுண்டாம். இப்போது மூன்றாவது சம்சயத்தே பிரஹ்மம் அறிஞனுக்கும் அடையத் தகுதியதன்றென்னும் இரண்டாவது கோடியைப் பூர்வபக்ஷ ரீதியாய் நிரூபிப்பாம் :—ஹே குழந்தாய்! சிலவாதியரோ இவ்வாறு விகற்பிப்பர், நீ அங்கீகரித்த பிரஹ்மத்தை அறியா னடையானாயின் உனது பிரஹ்மம் அசத்தியமேயாம்; ஏனெனின், அது சர்வஜீவர்கட்கு மான்மரூபமாம், தன்னான்மா யாவருக்கும் நித்தியப் பிராப்தமேயாமாதலின் அதனை யாவருக்கும் ஆன்மரூபமென வுடன்பட்டு அப்பிராப்தமென்னல் அத்தியந்தம் விருத்தமாம். அறியானுக்கப்பிராப்தமாதலின் அஃதசத்தியமானபோது ஈண்டு வந்தியா புத்திராதி அசத்திய பதார்த்தத்தை எவனுமடையாததேபோல அசத்தியப் பிரஹ்மத்தை அறியானடையாததென்ன அறிஞ

தவனுமடையான். சத்தியம், ஞானம், அனந்தம், பிரஹ்மம் என்னும் சுருதிவசன த்தை அங்கீகரித்து நீ பிரஹ்மத்தைச் சத்தியமென வுடன்படின் அறிஞனுக்கடை யப்பெறும், அறியானுக் கடையப்பெறாது எனக் கூறல் அசங்கதமாம்; ஏனெனின், ஒரே ஆகாசத்தை அறிஞனே அடைவன், அறியான் அதனை யடையான் எனக் கூறல் சம்பவியாததேபோல, ஒரே அத்விதீயப் பிரஹ்மத்தை அறிஞ னடைவ னென்றும் அறியா னடையானென்றும் கூறலும் சம்பவியாது; மற்றோ முற்றுண ர்ந்தோனுக்கும் மூடனுக்கும் ஆகாசபபிராப்தி சமானமேயாவதுபோல அறிஞ னுக்கும் அறியானுக்கும் அத்விதீயப் பிரஹ்மப்பிராப்தி சமானமேயாம். இப் போது இம்மூன்று வினாக்கட்கும் விடை பகரும்பொருட்டு முதலிற் சூசி கடாஹ நியாயத்தால் பிரஹ்மபபிராப்தி அப்பிராபதியின் வியவஸ்தையை நிரூபிப்பாம். சூசிகடாஹ நியாயத்திற்கிது பொருளாம்:—ஒரு கொல்லன் கடாஹத்தைச்செய்து கொண்டிருப்ப அவன்பாலொருவன் வளைநத ஊசியை நிமிர்க்கவரின் அவன் கடா ஹத்தைவிட்டு முதலில் ஊசியை நிமிாததலாம். அதுபோல மொழிநத மூன்று வினாக்கட்கும் விடைமேல விஸ்தாரமாய் விளம்புவாம; ஆனல், அவ்விடை சுகமாய் விளங்குமபொருட்டு முதலில பிரஹ்மபபிராபதி அப்பிராப்தியின் வியவஸ்தையைக் கூறு வாம். ஹே மைந்த! தித்திரிமறையவர் முன் மூன்றுவினாக்களைக் கற்பித்து அவை கட் கிவ்வாறு விடையளித்தனர். பிரஹ்மம் அறிஞனுக்கும, அறியானுக்கும், சமா னமாயே பிராபதமாம், சமான ஆனமரூபமேயாமாதலின் அஃதுண்மையாய் இரு வருககும் நித்தியப்பிராபதமேயாமாயினும அறியானொருகாலும் அஃதை அடை யான் என்பதே ஊககததாற சம்பவிக்கும்; ஏனெனின், அவித்தை நாசமாகவே ஆவாணரகிதப் பிரஹ்மப் பிரகாசமே பிரஹ்மபபிராப்தியாம், அவ்வவித்தை நாசம் பிரஹ்மவித்தையினனேயாம். அஃதவித்வானுக்குப பிராப்தமின்றுமாதலின், அவ னவித்தையற்றவனுகானுதலினனே அத்விதீயபபிரஹ்மத்தையடையான். இப்போ திபபொருளையே திருஷ்டாநதத்தால் வெளிபபடுததுவாம்:—ஹே குழந்தாய்! ஈண்டு இருவருக்குத் தத்தமது கிருகத்தே சுவாணுதிரூபதனம் பூமியிற் புதைத் திருப்பின் ஒருவனே தனநிதியையறிபவன், மற்றொருவனே அறியான், வாஸ்தவ மாய் விசாரித்துப்பார்ககினே இருவரும நிதியுடையவரேனும் உணர்ந்தவனே அடைவன், உணரானே அடையான் இவ்வாறு நிதியின் பிராப்தி, அப்பிராப்தி வியவகாரம் உலகததாவதேபோல அறிஞனுக்கும் அறியானுக்கும் உண்மையாய்ப் பிரஹ்மப்பிராப்தி சமானமேயாயினும், அறிஞனுக்குப் பிரஹ்மஞான மிருப்பதே போல அறியானுக்கின்றும். ஆகையால், அறியான் அத்தியாத்மாதி முத்துக்கத் தால் எப்போதும் பீடிதனுவன். இது கூறியதுகொண் டிஃதியம்பப்பெறும். தனது சத்திய சுபாவ பலத்தால அசத்தியத்தன்மையைப் பரித்தியாகித்து யாண் டும் சமானமாயிருக்கும் பிரஹ்மத்தின் ஞானமே அறிஞனுக்குப் பிரஹ்மப்பிராப் தியாம், அறியானுடைய பிரஹ்மத்தின் அஞ்ஞானமே அவனுக்குப் பிரஹ்மத்தின் அப்பிராப்தியாம். இத்துணையால் பிரஹ்மத்தின் பிராப்தி அப்பிராப்தி வியவஸ்தை நிரூபிக்கப்பட்டது. இப்போது காமனை, விசாரம், ஜகத்தின் உற்பத்தி, ஜகத்திற் பிரவேசம், போக்கியபதார்த்த ரூபத்தன்மை என்னு மைந்து ஹேதுக்களால்

பிரஹ்மத்தே சத்தியத்தன்மையின் சித்தியைச் செய்வாம்:—ஹே குழந்தாய்! ஆகாசாதி பஞ்சபூதம், அவற்றின் காரியம் என்னும் இத்தூல சூக்ஷுமஜகத்தையுண்டாக்கிய பிரஹ்மம் அசத்தியமெனச் சங்கிப்பதிலும் வாதிக் காற்றலின்றாம்; இவ்வாறு சங்கிப்பதினும் ஆற்றலின்றாயின் பிரஹ்மத்தின் அசத்தியத்தன்மையின் சித்திசெய்வதில் எவ்வாதி யாற்றலுடையவனுவன்; மற்றோ, ஒருவனுமாகான். இப்போது பிரஹ்மத்தினின்றும் ஜகத்துற்பத்தியை நிரூபிப்பாம்:— ஹே குழந்தாய்! அனாதி ஜீவர்களின் கருமவாசனையால் விசித்திரபாவத்தையடைந்த மாயாரூப கஞ்சுகத்தோடு கூடியதாய பரமான்மா உலகமுண்டாவதற்கு முன்னர் ஏக அத்விதீயரூபமாயிருக்கும். அதுவே, சிருஷ்டியினாதிகாலத்தே ஜீவர்களின் புண்ணியபாவரூப கருமங்களால் ஏவப்பட்டு பூதபௌதிக ஜகத்தை யுண்டாக்கும்பொருட்டு "யானே எல்லாவடிவமும் ஆவேன்" என இச்சித்தது. இவ்வாறு இனி யுண்டாகும் நாமரூபக்கிரியைவடிவ ஜடசேதனரூப ஜகத்தை விடயஞ்செய்யும் இச்சைவடிவ சிந்தையைச்செய்து ஜகத்தின் விசேஷ நாமரூபாதிகளைச் செய்யும்பொருட்டு மீண்டும் பூர்வ கற்பத்திருந்ததுபோலவே இக்கற்பத்தும் ஜகத்தின் அவ்வப் பதார்த்தத்திற்கு, அவ்வவ்வகையாய நாமரூபக்கிரியையை யான் செய்வேனாகவும்; என ஆராய்ந்து அது பூர்வ கற்பத்தேபோல ஸ்தாவர ஜங்கமரூப ஜகத்தை யுண்டாக்கியது; சர்வத்திற்கும் பின்ன பின்ன நாமரூபக்கிரியையை யுண்டாக்கியது, பரமான்மா பூர்வ கற்பத்தே சூரியசந்திராதி ஜகத்தை யுண்டாக்கியதேபோல இக்கற்பத்தும் சூரியன், சந்திரன், சுவர்க்கம், பிருதிவி, அந்தரிக்ஷம் என்பன முதலாயுள்ள பூத பௌதிக சம்பூர்ண ஜகத்தையும் உண்டாக்கியது. இங்ஙனம், யாவற்றையும் உண்டாக்கித் தானே ஜீவரூபமாய் ஜகத்தின்கண்ணே புகுந்தது. "ப்ரஹ்மவிதாப்நோதிபரம்" என்னுஞ் சூத்திரரூப சுருதியின்கண்ணே எப் பிரஹ்மஞானத்தால் பூர்வம் மோக்ஷப்பிராப்தி கூறப்பெற்றதோ, "ஸத்யம்ஜ்ஞானமநந்தம் ப்ரஹ்ம" என்னுஞ் சுருதியின்கண்ணே பூர்வம எந்தப பிரஹ்மத்தின் ஸ்வரூபலக்ஷணங் கூறப்பெற்றதோ அதுவே ஸ்தாவர ஜங்கமரூப ஜகத்தையுண்டாக்கி அவற்றில் ஜீவரூபமாய்ப் பிரவேசித்தது. இங்ஙனம் அவ்வொரே பரமான்மா நானாரூபமாயுண்டாயது; அவற்றை நிரூபிப்பாம்:— ஹே குழந்தாய்! பரமான்மாவே சத்ரூபமாயும் த்யத்ரூபமாயும் ஆயது; ஈண்டு மண்ணீரனல் என்னும் மூன்றுபூதங்களும் நேத்திராதிகட்கு விடயமாதலின் அம்மூன்றையும் சுருதிபகவதி சத் எனக் கூறினள். வாயுவும், ஆகாசமும், அவிஷயமாதலின் சுருதிபகவதி த்யத் எனக் கூறினள். பரமான்மாவே நிருக்தரூபமும் அநிருக்தரூபமும் ஆயது; நாமரூபக்கிரியையால் ஜீவர்களால் நிரூபிக்கமுடிந்த பூத பௌதிகங்கள் நிருக்தங்களாம், அல்லாதன அநிருக்தங்களாம். அது நிலயனரூபமும், அநிலயன ரூபமும் ஆயது; பிருதிவி முதலியவற்றைப் பற்றியிருக்குங் கடாதிகள் நிலயனங்களாம். நிராதாரரூபமாய்ப் பிரசித்தமாய ஆகாசாதிகள் அநிலயனங்களாம். அதுவே விஞ்ஞானரூபமும் அவிஞ்ஞானரூபமுமாயது, ஈண்டுச் சேதனரூபமாய்ப் பிரசித்தமாய நேத்திராதிக ளந்தக்கரணம் விஞ்ஞானமாம், ஜடரூபமாய்ப் பிரசித்தமாய கடபடாதி பதார்த்தங்கள் அவிஞ்ஞானமாம். அதுவே சத்தியரூபமும் அநிருதரூபமுமாயது. ஈண்டு வியவகாரகாலத்தே யாதமற்ற பூமி

முதலிய வியாவகாரிக பதார்த்தங்கள் சத்தியமாம், வியவகாரகாலத்தே பூதிக் கப்படுவனவாய இரஜ்ஜு சர்ப்பாதி பிராதிபாசிகபதார்த்தங்கள் அநிருதமாம். ஆன்மஞானத்திலும் முற்காலம் வியவகாரகாலமாம். இங்ஙனம் அஸ்திரூபமாயும், நாஸ்திரூபமாயும் பிரசித்தமாயிராநின்ற விசித்திர ஜகத்துருவை ஏக அத்விதீயப் பிரஹ்மமேயடையும். ஒரே ஆகாசம் கந்தர்வ நகராரூபமாய் நாநாபாவத்தை அடைவதேபோல ஒரே அத்விதீயப் பிரஹ்மம் ஜகத்துருவமாய் நாநாபாவத்தையடையும், சத்தியரூபப் பிரஹ்மமே பூர்வம் ஜகத்துருவமாய் உற்பன்னமாயதாதலின் உண்மையாய் அசத்தியரூபமாயும் இவ்வுலகம் யாசிதமண்டன நியாயத்தாற் சத்தியரூபமாய்ப் பிரதீதியாம். யாதொன்றுமற்ற நிர்த்தனன் மற்றொரு தனவானிடத்தினின்றும் பூஷணவஸ்திராதி யாசித்துவந்து தன்வீட்டைச் சோபைசெய்தல் யாசிதமண்டன நியாயமாம். அதுபோல, இயல்பாயே தனது சத்தையற்ற இவ்வுலகம் அதிஷ்டானப் பிரஹ்மசத்தையை அங்கீகரித்தே சத்தியரூபமாம்.

சங்கை :—ஹே பகவன் ! இவ்வுலகத்தே தனதுசத்தையே யேனிராது ?

சமாதானம் :—ஹே குழந்தாய் ! பூதபவிஷ்யத் வர்த்தமானமென்னு முக்காலத்தேயும் ஏகரசமாய் ஒருகாலும் வேறுதன்மையை அடையாதது சத்தியமாம். இத்தகைய சத்தியரூபத்தன்மை உற்பத்தி நாசமுடைய ஜகத்தின்கண்ணே ஒருகாலுஞ் சம்பவியாது ; மற்றோ, பிரஹ்மத்தே சம்பவிக்கும். ஆதியிலும் அந்தத்திலு மிராதது மத்தியகாலத்தும் இராது. இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பம் முதலிலுங் கடையிலுமின்றுமாதலின், இடையிலு மின்றுவதேபோல அதிஷ்டானப் பிரஹ்மத்தே சம்பூரண உலகம் முதலிலுங் கடையிலுமின்றுமாதலின் இடையிலெவ்வாறுண்மையாம் ; மற்றோ, யாவும் மித்தையேயாம். அத்தகைய இது அதிஷ்டானப் பிரஹ்மசத்தையை அங்கீகரித்தே சத்தியமாய்ப் பிரதீதியாம். அக்கினி பாவமற்ற அயப்பிண்டமானது அக்கினியின் சம்பந்தத்தால் அக்கினிரூபத் தன்மையை யடைவதேபோல அதிஷ்டானசத்தியப் பிரஹ்ம தாதாத்மிய சம்பந்தத்தையடைந்து இம்மித்தையாய ஜகத்தும் சத்தியரூபமாய்த் தோற்றும். ஹே மைந்த ! இப்பொருளின்கண்ணும் தித்திரி மறையவர் இவ்வாறாய மந்திரரூப சுலோகத்தைக் கூறினர் :—

அஸஂ வா இடமக்ர ஆஸீத் ததோ வை ஸடஜாயத ।
தடாத்மாநஂ ஸ்வயமகுருத தஸ்மாத்தத் ஸுக்ருதமுச்யத இதி ॥

(பொ-ள்.) காணுமிவ்வுலகம் தனது உற்பத்தியின்முன்னர் அசத்துருவமாயிருந்தது, அவ்வசத்தினின்றும் இச்சத்துலக முற்பன்னமாயது, அக்காரணப் பிரஹ்மம் தனதான்மாவையே பிரபஞ்சரூபமாக்கியது, இதனானே அது சுகிருதமெனப்படும். இப்போது இம்மந்திரரூப சுலோகப்பொருளையே வெளிப்படையாய் நிரூபிப்பாம் :—ஹே குழந்தாய் ! கந்தர்வநகரம் தனதுற்பத்தியின்முன்னர் ஆகாசத்தின்கண்ணே அசத்தாவதேபோல இவ்வுலகும் தனதுற்பத்தியின்முன்னர் பிரஹ்மரூப ஆன்மாவின்கண்ணே அசத்தாம். ஈண்டு அசத் சப்தத்தால் நீ அத்தியந்த அபாவரூப சூனியத்தைக் கவராதொழிக ; மற்றோ, வெளிப்படாத நாமரூப

முடைய உலகைக் கவர்க. ஆகையால், "𑌅𑌸𑌦𑍍𑌵𑌾 𑌇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍" என்னும் சுருதி வசனத்தால் இவ்வுலகம் தனது உற்பத்தியின்முன்னர் வெளிப்படா நாம ரூபத்தோடிருந்தது என்னும் பொருள் துணியப்பெறும். பின்பு சிருஷ்டிகாலத்தே அது வெளிப்பட்ட நாமரூபமுடையதாயது. எல்லாவுலகும் காரணரூபப் பிரஹ்மத்தின் சத்தையினலே சத்தியரூபமாம்; இயல்பாலே இது சத்திய ரூபமன்றுமாதலின் சுருதிபகவதி பிரஹ்மத்தைச் சுகிருத் என்றனள். ஜகதுற்பத்திப் பிரகரணம் பிரஹ்மரூப ஆன்மாவின் சத்தியரூபத்தன்மையை வெளிப்படுத்தும்பொருட்டே பிரவிருத்தித்ததாயினும் பிரகரணபிப்பிராயத்தை அறியாது சில மந்தமதியினர் "𑌅𑌸𑌦𑍍𑌵𑌾 𑌇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍" என்னும மறை காரண அசத்தியரூபத்தன்மையையே கூறியது எனக் கூறுவர். வேதபாகிய நாஸ்திகர் பீஜப்பிரத்துவம்ஸாபாவத்தினின்றும் அங்குர உறபத்தி அங்கீகரிப்பதேபோலும், சில அர்த்த வைநாசிக நையாயிகரோ முற்கூறிய சுருதியின்கண்ணேயிருக்குங் காரியப் பிரபஞ்சவாசக இதம் சப்தத்திற்கு அசத் சப்தத்தோடு சாமானதிகரண்ய கற்பனைசெய்து சகத்துருவ காரியத்தையே உற்பத்தியின்முன்னர் அசத்தென்பர். சூனியவாதியரோ கூறிய சுருதியின்கண்ணேயிருக்கும இதம் சப்த அர்த்தரூபத்தன்மையைக் காரிய காரண மிரண்டன்கண்ணு முடன்பட்டும் 'இதம் சப்தத்திற்கு அசத் சப்தத்தோடு சாமானதிகரண்ய கற்பனைபுரிந்தும் காரியகாரணரூப சர்வ ஜகத்தையும் சூனியமென்பர். ஹே மைந்த! இவ்வாறு கூறிய மறைக்குண்மைப்பொருளையுணராது கூறும் மந்தமதியினர்பாலிது கேட்கவேண்டும:—காரணதிகளை நீவிர் அசத்தென்பது கேவலம் யுகதியினாலோ? அல்லது சுருதியினாலோ? முதலது சம்பவியாது; ஏனெனின், இதன் எட்டாவதத்தியாய ஆதியில் முன்னின்மை முதலியவற்றே காரணத்தன்மைக் கண்டனப் பிரசங்கத்தே பகிர்முகவாதியரின் நானவகை யுக்திகளை விஸ்தாரமாய்க் கண்டித்தேமாதலின் யுகதிபலத்தால காரணதிகளிடத்தே அசத்தியரூபத்தன்மை சித்தமாகாதாம. இரண்டாவதுஞ் சம்பவியாது; ஏனெனின், "𑌸𑌤𑍍𑌯𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌨𑌨𑍍𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮" என்னுஞ் சுருதியின்கண்ணே பிரஹ்மம் சத்தியமெனக்கூறி அதினின்றும் ஜகத்துற்பத்தியைக்கூறும் வேதபகவான் "𑌅𑌸𑌦𑍍𑌵𑌾 𑌇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍" என்னும் சுருதிவசனத்தால் அதனை அசத்தியரூபமென எவ்வாறு கூறுவர்? மற்றே கூறார். அங்ஙன் கூறின், என் வாயில் நாவில்லையென்பதேபோல் வியாகாததோடமுடையவராவர். ஆகையால், அம்மறைக்குக் காரண அசத்துத்தன்மையிற் கருத்தின்றாம். ஹே குழந்தாய்! மறையினுண்மைப்பொருளை அறியாது அர்த்த வைநாசிக நையாயிக வாதி உற்பத்தியின் முன்னர் அசத்தியமென்ற ஜகத்துருவ காரியத்தின்கண்ணே நிகழ்காலத்தே சத்தியத்தன்மை நிகழலாகாதாம்; மற்றே, மண்ணின் கடசராவாதிகாரியத்தே எல்லாவுயிர்க்கும் மட்புத்தி யுண்டாவதேபோல இக்காரியவடிவ உலகினும் யாவருக்கும் அசத்தசத்தென்னும் தொடர்ச்சி மதியுண்டாகவேண்டும்; ஆனலவ்வாறுண்டாவதில்லை; மாறாய்க் கடமிருக்கின்றது படமிருக்கின்றது என்னும் சத்தியபுத்தியே யுண்டாகின்றதாதலின் உண்டாவதன்முன்னர்க் காரியவுலக அசத்தியத்தன்மையில் மறைக்குக் கருத்தின்றாம். அல்லது ஒருகால் அதன்கண்ணே மறைக்குக் கருத்திருக்குமாயின் "𑌅𑌸𑌦𑍍𑌵𑌾 𑌇𑌦𑌮𑌗𑍍𑌰 𑌆𑌸𑍀𑌤𑍍" என்பதன்பின்

உலகை யுண்மையெனக் கூறும். "ததோவைஸதஜாயத" என்பது அசங்கத மாகும்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! இக்காரியவுலகம் இயற்கையானே சத்திய மாகாதொழிக எனினும், காரணவடிவப் பிரஹ்மசத்தையாற் சத்தியமேனாகாது?

சமாதானம் :—ஹே வாதியே! சத்தியப் பிரஹ்ம தாதாத்மிய சம்பந்தத்தை யுற்று இக்காரியவுலகம் சத்தியரூபமாம் என நீ யுடன்படல் எமக்குமிஷ்டமே யாம், யாமதை நீக்கவில்லை. பிரஹ்மசத்தையின் மகிமையால் அசத்தாய சகத்தும் சத்தியரூபமாம் என்பதையுணர்த்தும்பொருட்டே இத்திரிமறையவர் "சுஸஞ்சூ" என்பதாதி சுலோகத்தைக் கூறினர்.

சங்கை :—ஹே பகவன்! ஈண்டு ஒருவன் ஓரில்லத்தினின்றும் வஸ்துவை ஓரில்லத்திற்குக் கொண்டுசெலவதுபோலப் பிரஹ்மசத்தையைப் பிரபஞ்சத்தின் கண்ணே யாவன் கொண்டுசெல்வன்?

சமாதானம் :—ஹே குழந்தாய்! முக்காலத்தினும் அசத்தாகிய சகத்துரு வக்காரியம காரணப் பிரஹ்மததின் சத்தையினானே சத்தியமாய்த் தோற்றலின் கண்ணே அநாதி மாயையாலாக்கிய ஆன்ம அனான்ம அத்தியாசமே காரணமாம். இயல்பாயே வெம்மையறற நீரில் எரியின சையோக தோஷத்தால் வெம்மை தோற்றுவதேபோல இயல்பானே தற்சத்தையறற வுலகில் சத்பிரஹ்ம தாதாத்மிய அத்தியாசரூபதோஷத்தால சததியரூபத்தன்மை தோறறுமாதலின் இவ்வத்தியாசமே பிரஹ்மசத்தையை யுலகின்கண்ணே கொண்டுசெலுததுமென்பது கருத்தாம்.

சங்கை :—ஹே பகவன்! பிரஹ்மத்தினும் பின்னமாயதொன்றே தனது சத்தையால் உலகைச் சத்தியரூபமாயேன் செய்யாது?

சமாதானம் :—ஹே குழநதாய்! சத்தியப பிரஹ்மத்தினும் வேறாயுள்ள காரியகாரணரூபப் பொருள்கள் யாவும அனான்மவடிவமாதலின் அசத்தியரூபமே யாம். ஆகையால், பிரஹ்மத்தினும் வேறாய எப்பொருளின் சத்தையானும் உலகின் சத்தியரூபத்தன்மை சம்பவியாது. கருத்திதுவாம் :—உலகத்தே தனவானே தரித்திரனைத் தனவானாக்குவன், தானே தரித்திரனானோன் மற்றொரு தரித்திரனைத் தனவானாக்காததேபோலச் சத்தியப் பிரஹ்மத்தினின்றும் பின்னவடிவத் தானே சுயம் அசத்தியபாவமுற்ற பொருள் அசத்திய ஜகத்தைச் சத்தியரூபமாக்கமாட்டாது. அல்லது, இவ்வுலகத்தே ஒரு பெரும் வனத்தே சுழலும் குருடன் மற்றொரு குருடனுக்கு மார்க்கோபதேசஞ்செய்யின், அவன் அவனை இவ்வாறு ஆக்ஷேபிப்பன் :—ஹே குருட! எனக்குபதேசிக்கும் மார்க்கத்தை நீயேன் கண்டிலையென. அதுபோலப் பிரஹ்மத்தினும் வேறாகிய ஒன்று உலகின் சத்தையைச் சித்தஞ்செய்யின், அப்பொருளைநோக்கிக் கூறவேண்டியதாவது :—ஹே பொருளே! பிரஹ்மத்தினும் வேறாகிய நீயே அசத்தியமாதலின் முதலில் நீ நினது சத்தையைச் சித்தஞ்செய்தி, பின்னர் உலகிற் சத்தையைச் சித்தஞ்செய்ய லாம். தற்சத்தையின் சித்தியின்றி அயற்கட்சத்தையின் சித்திசெய்தல் சம்பவியா

தாம். அல்லது, பிரஹ்மத்தினும் வேறாகிய ஒருபொருள் தற்சத்தையபதல் உலகைச் சத்தியமாக்கக் கூறல், ஒரு பொருளின்கண்ணே பிரஹ்மபேதம் சித்தமாயி னன்றோ சம்பவிக்கும், அதனினும் வேறாக யாதொன்றுமின்றாம்; மற்றோ, இவை யாவும் பிரஹ்மவடிவமேயாம். இப்பொருளை "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" என் பதாதி சுருதிவசனங்களால் வேதவேத்தாக்களாகிய மகாத்மாக்கள் அடிக்கடி கூறு கின்றனராதலின் அதனினும் வேறுபொரு சிறிதுமின்றாம். அல்லது, ஒருகால் அதனினும் வேறாக ஒரு சிறிதை யுடன்படின், "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" என்னுஞ் சுருதிகூறிய பிரஹ்மத்தின் அநந்தத்தன்மை சித்தமாகாதாம்; ஏனெ னின், கம் முதலியவை மண் முதலியவற்றினின்றும் வேறாதலின், அவை வஸ்து பரிச்சேத முடைமையானே அநந்தரூப மல்லாதனபோலப் பிரஹ்மமும் அஃ துடைமையின் அநந்தமன்றாம். முற்கூறிய சுருதியோ பிரஹ்மத்திற்கநந்தவடிவத் தன்மை கூறியதாதலின் அஃ திலதாகவே அதனின்மையே அடைவுறும்; அக் கினிக்கு ஒளியும் வெம்மையுமே யுருவமாகும், அஃ திரண்டுமிலதாகவே அதுவு மிலதாவதே போலவாமென்க. பிரஹ்மமிலதாகவே அஃதையுணர்த்தும் ஞான காண்டம் அப்பிரமாணத்தன்மையையடையும், அடையவே அதன் சாதனத்தை யுணர்த்தும் இருகாண்டங்களும் அப்பிரமாணமாம். சர்வப் பிரமாண மன்னரும், பிரமாதிதோஷ மற்றவரும் ஆகிய வேதபகவான் அப்பிரமாணமாகவே பிரமாதிக ளோடுகூடிய இலௌகிகவசனம், காட்சிமுதலிய பிரமாணங்கள், யாவும் அப்பிரமா ணமாம். காக்ஷி முதலிய விசேடங்க ளப்பிரமாணமுறவே சாமானியமாய்ப் பிர மாணமாத்திரத்திற்கே அப்பிரமாணத்தன்மையாம். ஒரு பிரமாணத்தானே வஸ்து சித்தியாமன்றி வேறுவகையா லாகாதாமாதலின் காட்சிமுதலிய யாவற்றிற்கும் அப்பிரமாணத்தன்மை அடைவுறவே பிரஹ்மத்தினும் வேறாகிய தூலசூக்ஷ்ம பதார்த்தங்கட்கேனும், காரியகாரண பதார்த்தங்கட்கேனும் எவ்வாறு சித்தியாம்; மற்றோ, ஆகாதாம். ஆகையால், இப்பொருள் துணியப்பெறும்; எவ்வசத்தியப் பொருளும் பிரஹ்மத்தினும் வேறயின்றாம்; இன்றாகவே, அதன் சத்தையைப் பெற்றவை அதனினும் வேறாய் எங்ஙனமாம்; மற்றோ, அவை ஒருகாலும் வேறா காவாம். "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" என்னும் சுருதியானது காரண அசத்தி யத்தை யுணர்த்துகின்றதா? காரியாசத்தியத்தை யுணர்த்துகின்றதா? அவ்விர ண்டின் அசத்தியத்தை யுணர்த்துகின்றதா? என மூவிகற்பம் மந்தமதியினர்முன் செய்ததும் பொருந்தாதாம்; என்னை? ஈண்டுக் காட்சிமுதலிய அளவையானே வஸ்து சித்தியாமன்றி வேறுவகையா லாகாதாம். இவ்வுலகுருவக்காரிய அசத்திய த்தையும், காரண அசத்தியத்தையும், காட்சிமுதலிய எவையும் சித்தஞ்செய்யா; மாறாய் அவை கடமிருக்கின்றது, படமிருக்கின்றது என்பனமுதலிய தோற்றத் தான் அவ்விரண்டின் சத்தியத்தன்மையையே சித்தஞ்செய்யும்; அல்லது, அவ்வி ரண்டின்கண்ணும் அசத்தியத்தன்மையிருப்பின், "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்" என்னும் சுருதியானது இதம் சப்தத்தால் காரியகாரணத்தைக் கூறியது அசங் கதமாம்; என்னை, காட்சி யுணர்வின் விடயமும் அன்மையிலிருப்பதுமே இதம் சப்தத்தாற் கூறப்பெறும்; அவ்விரு தன்மையும் அசத்தியத்தின்கண்ணே சம்ப வியாதாம். இதனானும், காரியகாரணத்தே அசத்தியரூபத்தன்மை யின்றாம்.

அல்லது, அவ்விரண்டன்கண்ணும் காக்ஷி விடயத்தன்மையை யுடன்பட்டு மற்றுப்புத்தியர் அசத்தியரூபத்தன்மையை யுடன்பட்டது அத்தியந்தம் விருத்தமாம்; என்னை, அக்காட்சி, இருக்கும்பொருளையே விடயஞ்செய்யுமன்றி இராப்பொருளை விடயஞ்செய்யாதென்பது யாவருமுடன்பட்ட விடயமேயாமாதலின் காரியகாரணத்தைக் காக்ஷிக்கு விடயமாயுடன்பட்டு அசத்தியமென்னல் அத்தியந்தம் விருத்தமாம்; மற்றேர், அசத்தியவஸ்துவின் காக்ஷியின்றிச் சத்தியவஸ்துவின் காக்ஷியேயாமாதலின் சென்ற வரும் பொருள்களின் காக்ஷியுண்டாவதின்றாம்; ஒருகால் அசத்தியவஸ்துவும் காக்ஷிப்படின் இறந்த எதிர்ப்பொருள்களின் காக்ஷியுண்டாதல்வேண்டும். ஆகையால், "அஸதா இதமக்ர ஆஸீத்" என்னுஞ் சுருதியானது, காரிய, காரண, அவ்விரண்டின் அசத்தியத்தன்மையைக் கூறுகின்றதின்றாம்; மற்றேர், அசத் சப்தம் இம்மாயாமயவுலகின் வெளிப்படா நாமரூபச் சூக்ஷ்ம அவஸ்தையையே கூறுகின்றதாதலின் இப்பொருள் துணியப்பெறும்:— எதன் சத்தையைப்பெற்று இவ்வசத்துலகும் சத்தியமாமோ அந்தப் பிரஹ்மரூப ஆன்மாவே உண்மையாய்ச் சத்தியமாம். இத்துணையும் பிரஹ்மரூப ஆன்மாவின் சத்தியரூபத்தன்மை நிரூபிக்கப்பெற்றது. இப்போது அதன் ஆநந்தரூபத்தன்மை நிரூபிக்கப்பெறும்:—ஹே குழந்தாய்! யாது தனது ஆநந்தரூபசத்தையால் இவ்வெல்லாவுலகையும் சத்தியரூபமாக்கியதோ அந்தப் பிரஹ்மமே ஆநந்தவடிவமாதலின் சர்வ ஜகத்தின் சாரரூபமாம்.

சங்கை :—ஹே பகவன்! இந்தப் பிரஹ்மரூப ஆன்மா ஆநந்தரூபமாயிருக்கின்றதென்பதன்கண்ணே பிரமாணமென்னை?

சமாதானம் :—ஹே குழந்தாய்! இஃதவ்வாறிருப்பதன்கண்ணே பிரஹ்மவித்துக்களின் அனுபவமே பிரமாணமாம்; என்னை, விடயாநந்தத்தை அடைவிக்கும் மங்கையர் முதலியோரின்றேனும் அறிஞன்யான் பிரஹ்மரூபமாயிருக்கின்றேன் என்னும் ஞானத்தால் ஆநந்தரூப ஆன்மாவையடைந்து எப்போதும் ஆநந்தத்தின்கண்ணே மூழ்கியிருப்பனாதலின் எவ்வாநந்தவடிவ ஆன்மாவினடைவால் அறிஞன் எப்போதும் ஆநந்தியாயிருப்பனே அவ்விவ்வான்மாவே ஆநந்தவடிவமாம் என அறியப்பெறும். சர்வப் பிராணிகளின் இருதயதேயத்தேயிருக்கும் இவ்வாநந்தவடிவ ஆன்மா ஒருகால் பிராணிகளின் ஜீவனத்திற்கும், ஜீவனனுகூலப் பிராணாதிகளின் கிரியைக்கும் காரணரூபமன்றாயின் இத்தேகதாரிகளின் அவ்விரண்டையும் வேறு யாதுசெய்விக்கும்? மற்றேர், எதுவுஞ் செய்வியாதாம். இக்காரணத்தானும் இவ்வான்மா ஆநந்தவடிவமாம். எல்லா உயிர்களின் இருதயதேயத்தேயிருக்கும் இவ்வான்மா ஆநந்தவடிவம் என்பதன்கண்ணே நீ ஐயப்படவேண்டாம; என்னை, இவ்வுலகத்தே எவ்வெச்சீவன் சுகத்தையடைவனே அவனவன் இவ்வாநந்த ஆன்மாவினின்றே யடைவன். இதனைவிடுத்து எவ்வநான்மவஸ்துவின்கண்ணும் சுகரூபத்தன்மையின்றாம்.

சங்கை :—ஹே பகவன்! ஒருகால் இவ்வாநந்தம் ஆன்மாவின் சொரூபமேயாயின் எனக்கு விடயத்தினின்றும் ஆநந்தமுண்டாயது என்னும் உலக அனுபவத்தான் ஆநந்தத்தே விடய ஜன்னியத்தன்மை தோற்றலாகாதன்றே?

சமாதானம்:—ஹே குழந்தாய்! அவ்வான்மவடிவ ஆநந்தம், நித்தியமாதலின் சப்தப்பரிசாதி விஷயங்களால் ஜன்னியமன்றாம்; மற்றெது, விளக்கொளி குடத்தினின்றும் தோற்றுவிப்பதேபோலச் சப்தாதியும் இக்சர நீக்கமாயிலாய் அவ்வாநந்தத்தையே தோற்றுவிக்கும்; இதனை யுணரா மூடர் ஆநந்தத்தை விடய ஜன்னியமென்பர். இவ்வான்மாவே, ஆநந்தவடிவமாமாதலின் யாவருக்கும் ஆநந்தத்தை யடைவிக்கும். இதனை அறியாதவர்க்குப் பரிச்சின்ன விடயஜன்னிய ஆநந்தத்தையும், அறிந்தவர்க்குப் பரிபூரண ஆநந்தத்தையும் இது அடைவிக்கும். ஆகையால், தன் ஆநந்தத்தான் யாவருக்கும் ஆநந்தத்தை அடைவிக்கும் ஆன்மாவே ஆநந்தவடிவமாம். இத்துணையால் பிரஹ்மான்ம ஆநந்தரூபம் வருணிக்கப்பெற்றது. இப்போது அவ்வாநந்த ஆன்மா அறிஞனுக்கே பிராப்தமாம் என்னும் பொருளை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! ஆநந்தவான்மா, பிரஹ்மவித்தையொன்றனை அடையப்பெறும்; மற்றுபாயத்தாலாகாதாமாதலின் பிரஹ்மவித்தையையுடைய அறிஞனே ஜீவன்முக்த அவஸ்தையின்கண்ணும், விதேகமுக்த அவஸ்தையின்கண்ணும், ஆன்மவடிவ ஆநந்தத்தையடைவன். அஃதற்ற அஞ்ஞானியோ அதனைச் சத்தாதியினின்றும் ஜனித்ததெனநினைவனாதலின் அவன் ஆன்மவடிவ ஆநந்தத்தையடையான். பிரஹ்மவித்தையின் சொரூபமிதுவாம்:—ஹே குழந்தாய்! அதிகாரி துவம்பதார்த்த விசாரத்தால் அபயப் பிரஹ்மபாவ யோக்கியனுவன்; குரு உபதேசித்த தத்துவமசி மகாவாக்கியத்தாலுண்டாய யான் பிரஹ்மரூபன் என்னும் அபேத ஞானத்தால் தற்பதார்த்தத்தோடு அபேதபாவத்தை அடைவன். அடைந்தபோதே அபயரூபப் பிரஹ்மாநந்தத்தை அடைவன். அத்தற்பதார்த்தப் பிரஹ்மம், நேத்திராதிகட்கு விடயமாய பாகியப் பிரபஞ்ச மற்றதும், தூலாதி முச்சரீரமற்றதும் ஆம், அதுவே யான் என்னும் அபேதஞானமே பிரஹ்மவித்தையாம். இத்துணையால் அறிஞனுக்குப் பிரஹ்மாநந்த அடைவு நிரூபிக்கப்பெற்றது. இப்போது அஞ்ஞன் பிரஹ்மாநந்தத்தை அடையான் என்னும் பக்ஷத்தை வெளியாக்கும்பொருட்டு முதலில் ஈசுவரனிடத்தே அவனது பயகாரணத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! அறிஞன் ஆநந்தவடிவப் பிரஹ்மத்தை அடைந்ததேபோல அஞ்ஞனடையான்; ஏனெனின், ஜனனமரணாதி துக்ககாரண பேததிருஷ்டி அவனிடத்தே எப்போது மிருத்தலின்; மாறாகவோ பயத்தையேயடைவன். நூலுணர்ந்த அறிஞன் ஜீவப்பிரஹ்மங்களின் வாஸ்தவபேதத்தைக்காணான்; ஆனால், அவனும் ஒருகால் பகிர்முகத்தன்மையானும், தற்பண்டிதத்தன்மை அபிமானத்தானும் அவற்றின் வியாவகாரிக பேதத்தையேனும் காணின் பேதபர்வத சமீபத்தன்மையானே பரமபயத்தை அடைவன். அத்தகைய அவனும் பயத்தையடையின் வாஸ்தவபேதத்தை எண்ணும அஞ்ஞன் ரேரே பேத பர்வதத்தே வசிப்பவனாய்ப் பரமபயத்தையுடையவன் என்பதன்கண்ணே யாதோதற்குளது. உண்மையாய் அறிஞனன்றியும் மயலால் தன்னை அறிஞனென நினைபவனும், நூல்சாய்ச்சியறற கேவல அஞ்ஞானியும், பேததரிசனத்தால் அடையும் பயத்தைப் பிரமாதிபாய அறிஞனும் அடைவன். சன்றி நூலின் உண்மைப்பொருளையுணர்ந்தும் அதன்கண் நிட்டையற்றவன் பிரமாதியாவன். அவனும் பேததரிசனத்தால் அஞ்ஞனைப்போலவே [illegible]

[illegible] யடைவனுதல்ன அதன்னறும் ஙகை இசைந்தவன் பிரஹ்மமேது நாக்குருவாகிலாய் ஆநந்தான்மாவைச் சிரவணித்துச் சுருதியனுகூல யுக்திகளால் அதன் நிரந்தர விசாரூப மனனஞ்செய்க. செய்யாதொழியினோ அநாதியாய பேத வாசனையின் பலத்தால் அடிக்கடி ஜனனமரண சம்சாரத்தையேயடைவன். அப் பேதவாசனையின் நாசம் கூறிய மனனத்தாலேயாமன்றி மற்றெவ்வுபாயத்தானு மாகாதாமாதலின், முமுக்ஷுக்கள் பேதவாசனையின் நீக்கப்பொருட்டு நிரந்தரம் மனனஞ்செய்க. ஹே குழந்தாய்! ஆநந்தாத்விதீய ஆன்ம சாக்ஷாத்காரமின்றி மாயாவிசிஷ்டப்பரமேசுரர், வித்வான் தேவதைகட்கும் பயத்தையடைவிப்பராயின், நூலாராய்ச்சியற்ற அஞ்ஞர்கட்கும் பயத்தையடைவிப்பர் என்பதன்கண்ணே யாது கூறவேண்டும். "யதாஹ்யேவைஷ ஏதஸ்மிந்நுதரமந்தரம் குருதே அத தஸ்ய பயம் பவதி" அத்விதீய ஆன்மாவின்கண்ணே சிறிதுமாத்திரையும் பேத கற்பனை செய்யுங்காற் பேததரிசிக்குப் பரம பயப்பிராப்தியாம். ஹே குழந்தாய்! அத்விதீய ஆன்மஞான மின்றேல் அம்மாயாவிசிஷ்டப பரமேசுரர் யாவருக்கும் பயத்தையடைவிப்பர் என்பதன்கண்ணும் தித்திரி மறையவர் இம்மந்திரரூப சுலோகத்தைக் கூறியுள்ளார்.

பீஷாஸ்மாத்வாத: பவதே பீஷோதேதி ஸூர்ய: ।
பீஷாஸ்மாதக்நிச்சேந்த்ரச்ச ம்ருத்யுர்தாவதி பஞ்சம: ॥

"அங்கமாறினையும் வேதநாலுடனே யறியினுமனன மில்லவனுக்
கெங்குமெப்பொழுதும் பயத்தினுக்கேது வாயிடு மிறைவ னிந்திரன்கால்
செங்கதிர்வாரி தீயமன்றத்தஞ் செய்தொழில்களி லொருகாலும்
பங்கியாதொழுகும் பரிசதுபரனைப் பற்றியுண்டாகிய பயத்தால்."

(பொ-ள்.) பரமான்மாவின் பயத்தானே வாயுச்சலியாநிற்கும், சூரியனுதய மாவன், அக்கினி யெரியாநிற்கும், இந்திரன் மழைவாயிலா யுலகரைக்காப்பன், மிருத்தியு யாண்டாண்டுஞ் சுழன்று ஜீவர்களை ஹநநஞ்செய்வன். ஹே குழந்தாய்! சர்வ ஜகத்தின் வியவகாரசித்தியைச்செய்யும் வாயுமுதலிய பஞ்ச தேவதைகளும் பரமேசுரரால் பயமுறுவராயின் மற்றையர் பயமுறுவரெனக் கூறவும்வேண்டுமோ! இத்துணையும் பேததரிசிக்கு ஈசுரரால் பயப்பிராப்தி நிரூபிக்கப்பெற்றது. இப் போது அந்தப் பிரஹ்மரூப ஆன்மாவின்கண்ணே நிரதிசய ஆநந்தவடிவத்தை நிரூபிக்கும்பொருட்டு முதலில் விடயஜன்னிய ஆநந்தத்தின்குறைவு மிகுதியை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! அறிஞர்கட்கு ஆநந்தத்தையும் பேததரிசிகட்குப் பயத்தையும் அடைவிக்கும் எனக் கூறிய ஆன்மாவின் சொரூபபூத ஆநந்தம் எத்துணைப் பரிணமமுடையதென்னும் சிஷ்யஜிஞ்ஞாசையை நீக்கும்பொருட்டு அத்தித்திரி மறையவர் முதலில் விடயஜன்னிய ஆநந்தத்தில் குறைவு மிகுதியை வருணித்துச் சொரூபாநந்தத்தை அநந்தரூபமெனக் கூறினர். இப்போது முதலில் இம்மநுடலோக ஆநந்தாவதியை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! நன்கு, [illegible] அவஸ்தையோடு கூடியவனும், சுந்தரரூப சீலாதி சுபகுணங்களோடு கூடியவனும், [illegible], [illegible], [illegible], [illegible], [illegible], [illegible],

வியாகரணம், நிருக்தம், ஜோதிஷம், சந்தசு, இருக்கு, யஜுஷ், சாமம், அதர்வணம், என்னும் தர்ம ஞானங்களை யுணர்த்தும் பதினான்கு வித்தைகளையுங் கற்றவனும், கற்பிக்குமாற்ற லுற்றவனும், அவற்றின் அர்த்தகற்பனை செய்வதில் மிகவுங் குசலயுத்தியுற்றவனும், தாயாற் சிக்ஷிக்கப்பெற்றவனும், தந்தையாற் சிக்ஷிக்கப்பெற்றவனும், குருவாற் சிக்ஷிக்கப்பெற்றவனும், விநயத்தோடு கூடினவனும், வஜ்ஜிர சாரசமானமாய சரீரனும், இந்திரசமானபல முடையவனும், சுமேருபர்வதத்தை நாப்பண்ணுடைத்தாய்ச் சுவர்ணாதிதனத்தாலும், நெற்கோதுமைமுதலிய தானியத்தாலும் நிறைந்த எழுகடல்வரையுமுள்ள பிருதிவி முழுவதையும் வயஞ்செய்தவனும், தீர்க்க ஆயுளுடையவனும் ஆகிய சக்கரவர்த்திக்குண்டாம் விடய ஜன்னிய ஆநந்தம் மனுடலோகாநந்த அவதிரூபமாம். அதனினும் மனுடகந்தர்வரின் ஆநந்தம் நூறுமடங்கதிகமாம். ஈண்டுக் கரும உபாசனையின் பலத்தாற் கந்தர்வபாவத்தையடைந்தவன் மநுடகந்தர்வனாவன். அதனினும் தேவகந்தர்வ ஆநந்தம் நூறுமடங்கதிகமாம். அதனினும் பிதுர்க்களின் ஆநந்தம் நூறுமடங்கதிகமாம், அதனினும ஆஜானஜ தேவதைகளின் ஆநந்தம் நூறுமடங்கதிகமாம். ஈண்டு ஸ்மார்த்தகருமங்களை யனுட்டித்துத் தேவதாபாவத்தை யடைந்தவன் ஆஜானஜ தேவதையாவன். அதனினும் கர்மதேவதைகளின் ஆநந்தம் நூறுமடங்கதிகமாம். ஈண்டு அக்கினிஹோத்திராதி சிரௌதகருமங்களின் அனுஷ்டானத்தால் தேவதாபாவத்தை யடைந்தவன் கருமதேவதையாவன். அதனினும் வசு ருத்திராதி தேவதைகளின் ஆநந்தம் நூறுமடங்கதிகமாம. அதனினும் தேவராஜாவாய இந்திரனது ஆநந்தம நூறுமடங்கதிகமாம. அதனினும் பிருஹஸ்பதியினாநந்தம் நூறுமடங்கதிகமாம். அதனினும் பிரஜாபதியின் ஆநந்தம் நூறுமடங்கதிகமாம். ஈண்டுப் பிரஜாபதிசப்தத்தான் விராட்டுப்பகவானைக் கவர்ந்துகொள்க. அதனினும் பிரஹ்மாவின் ஆநந்தம் நூறுமடங்கதிகமாம். அவர் நூற்களில் ஹிரண்யகர்ப்பரெனவும், சூத்திரான்மாவெனவும் கூறப்படுவர். அவராநந்தத்தினும் அதிகமாய் எவ்விடயாநந்தமுமின்றாம்; மற்றோ, எல்லா ஆநந்தங்கட்கும் அஃதே அவதிரூபமாம். ஹே குழந்தாய்! மனுடலோகமுதற் பிரஹ்மலோகம்வரைச் சுருதிகூறிய சம்பூரண ஆநந்தங்களுள் எவ்வெவ்வாநந்தத்தினின்றும் அதிகாரி விரக்தனாவனோ அதனினும் நூறுமடங்கதிக ஆநந்தத்தையடைவன். கருத்திதுவாம்;— நெடுங்காலம்வரை அநேக கரும உபாசனைகளால் அடையப்பெறுவனவாய அவ்வாநந்தங்களை இந்நிட்காம அதிகாரி சுகமாகவே யடைவனாதலின் சர்வ காமங்களையும் பரித்தியாகித்து இவன் அவசியம் நிட்காமனாகுக. சர்வ விடயாநந்த இச்சைகளையும் விடுத்து அனுபவிக்கும் ஆன்மாநந்தம் ஹிரண்யகர்ப்ப ஆநந்தத்தினும் அதிகமாம்.

சங்கை :—ஹே பகவன்! பூர்வ பூர்வ மனுடாநந்தாதியை யபேக்ஷித்து உத்தர உத்தர மனுடகந்தருவாநந்தாதிகள் நூறுமடங்கதிகமாவனபோல ஆன்மாநந்தமும் ஹிரண்யகர்ப்பாநந்தத்தினும் நூறுமடங்கதிகமாம்.

சமாதானம் :—ஹே குழந்தாய்! இவ்வாநந்தங்களைக்குறித்து ஹிரண்யகர்ப்பாநந்த மதிகமாமாயினும் அது ஆன்மாநந்தக்கடலில் ஒரு பிந்துவேயாமாதலின் இவ்வாநந்தமாம். இதனைவிடை நூறுமடங் காயிரமடங் கதிகத்தன்மை கூறு

வொன்றுதாம். வியஷ்டியுபாதியையுடைய துவம்பதார்த்தபுருஷனிடத்தே யிருக்கு மிஃதே சமஷ்டியுபாதியையுடைய தற்பதார்த்த ஆதித்தியனிடத்தே யிருக்குமாதலின் துவம்பதார்த்த ஜீவனிடத்தும், தற்பதார்த்த ஈசுரனிடத்தும் சிறிதுமாத்திரையும் பேதமின்றாம்; மற்றேறு, இது யாண்டுமொன்றேயாம். ஆநந்த அத்விதீய ஆன்மாவின்கண் ஜீவர்களின் சூரியாதி அதிதைவங்கள், நேத்திராதி அத்தியான்மங்கள், ரூபாதி அதிபூதங்கள் என்னும் பேதந் தோற்றல் அஞ்ஞானத்தானேயாம். ஜீவர்கட்கு வஸ்துவின் பரோக்ஷஞான முண்டாயினும் அபரோக்ஷஞான முண்டாகாதவரை வஸ்துவின்கண்ணே மயல் நீக்கமுண்டாகாதாம்; மற்றேறு, அஃதுண்டாகியே அது நீங்கும். கிழக்குத்தெற்குமுதலிய திசைகளின் பரோக்ஷஞான முண்டாயினும் அபரோக்ஷஞான முண்டாகாதவரை திக்குப் பிரமம் நீங்காதாம்; மற்றேறு, அதனானே யஃதுண்டாம். அவ்வாறே பிரஹ்மான்மாவின் பரோக்ஷஞானமுண்டாயினும் அபரோக்ஷஞானம் உண்டாகாதவரை கூறியபேதப் பிரமம் நீங்காதாம்; மற்றேறு, அதனானே யஃதாம். இங்ஙனம் மயன் மரியாதையை யறிந்துகொண்டு பிரஹ்மான்ம சாக்ஷாத்காரப்பொருட்டு முயல்பவன் கூறிய அன்னமயாதி யைங்கோசங்களில் முறையாய ஆன்மபுத்திசெய்து ஆநந்தமயகோசத்தின் புச்சவடிவப் பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரிப்பன். இத்தகைய ஆநந்தவடிவப் பிரஹ்மத்தைத் தனதான்மவடிவமா யடைந்தவறிஞன் எதனினும் பயத்தையடையான்; இப்பொருளின்கண்ணும் அத்தித்திரி மறையவர் இம்மந்திர சுலோகத்தைக் கூறியிருக்கின்றனர்.

𑌯𑌤𑍋 𑌵𑌾𑌚𑍋 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌅𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯 𑌮𑌨𑌸𑌾 𑌸𑌹 ।
𑌆𑌨𑌨𑍍𑌦𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍋 𑌵𑌿𑌦𑍍𑌵𑌾𑌨𑍍 𑌨 𑌬𑌿𑌭𑍇𑌤𑌿 𑌕𑍁𑌤𑌶𑍍𑌚𑌨 ॥

"யாதொன்றின் பாலெங்குங் கோசரமா மிந்தமனஞ்செல்லா
தியாதொன்றின்பாற் செவிமுதலிந்தியங்கள் விடயங்களுஞ் செல்லா
வோதுஞ்சச்சிதாநந்த வொன்றும் பிரமமது தன்னைப்
பேதமறத் தன்வடிவாகப் பெற்றனச்ச மற்றனல்."

(போ-ள்) சப்தங்களிடத்தே வாக்குப் பிரவிருத்திக்கும், அவற்றின் பொருளின்கண்ணே மனம் பிரவிருத்திக்கும், இவ்வத்வீதியப் பிரஹ்மமோ சப்தரூபப் பிரபஞ்சமும் அர்த்தரூபப்பிரபஞ்சமும் அற்றதாமாதலின் இதன்கண்ணே வாக்கு மனங்கட்குப் பிரவிருத்தியுண்டாகாதாம். ஆநந்தவடிவப் பிரஹ்மத்தைத் தனதான்மவடிவமாயுணர்ந்த அபேததரிசியாய அறிஞன் எதனினும் பயத்தையடையான். ஜீவப்பிரஹ்மபேதத்தைக்காணும் அஞ்ஞானியைப் புண்ணியமும் பாவமும் தபிப்பிக்கும், அவற்றுள், புண்ணியமோ செய்யாதவனையும், பாவமோ செய்தவனையும் தபிப்பிக்குமென்க. கருத்திதுவாம்:—வேறு புண்ணியவான்கள் சுகியாயிருத்தலைக்கண்டு அஞ்ஞானிகள், எதனாலிவர்கள் சுகியாயிருக்கின்றார்களோ அத்தகைய புண்ணியத்தை நாம் பூர்வ ஜன்மத்தே செய்யவில்லை; செய்திருப்பின் நாமும் சுகமடைவோம் அல்லவா எனப் பச்சாத்தாபமுற்றுத் தம்மையே திக்காரஞ்செய்துகொள்வர், துக்கரூபபல மனுபவிப்பவரோ முற்பிறப்பில் இந்த

யைப் பாவகருமத்தை யேன் செய்தோம், செய்தோமல்லோமென்று இப்போது பரமதைத் தன்மையடைகின்றோம், எனப் பச்சாத்தாபப்பட்டுத் தம்மையே திக்காரஞ்செய்து கொள்வர். இவ்வாறு பேதமறிவில்லை, செய்யாதபுண்ணியமும் செய்தபாவமும் தபிப்பித்தலில்லைபோல, யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேன் என்னு மபேதஞானத்தால் பிரஹ்மபாவத்தையுற்ற அறிஞனைத் தபிப்பியா அறிஞனை யவை தபிப்பியாக் காரணமிதுவாம்:—கண்டு அக்கினி தன்னினும்வேறாய காஷ்ட முதலியவற்றையே தகிக்கும்; ஆனால், அது தன்வடிவத்தைத் தகிக்காதாம். அவ்வாறே யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேன் என்னும் அபேதஞான மகிமையால் புண்ணியபாவங்களையும் தன் வடிவமாய்க்கண்ட அறிஞனை ஆன்மவடிவ அவை தபிப்பியா. ஆகையாலிப்பொருள் துணியப்பெறும்:—இவ்வாநந்தவடிவப் பிரஹ்மத்தைத் தனதான்மவடிவமாயறிந்த அதிகாரி நிச்சயமாக அபயத்தை யுடைவன். ஹே குழந்தாய்! அக்நித்திரிமறையவர் தமது சீடர்பொருட்டுப் பிரஹ்மவித்யோபதேசஞ் செய்ததானது, அதிகாரிகளாகிய நமக்கு ஆநந்தவடிவ ஆன்மாவை யடைவிப்பதாம். இத்துணையும் ஆநந்தவல்லியின் பொருள் கூறப்பெற்றது. இனிப் பிருகுவல்லியின் பொருள் கூறப்பெறும்:—ஹே குழந்தாய்! பூர்வம் ஆநந்தவல்லியின்கண்ணே, பிரஹ்மவேத்தாக் குருவாயிலாய் ஆநந்தப் பிரஹ்மத்தைச் சிரவணித்து அடிக்கடி மனனஞ்செய்தவன் அன்னமயாதி பஞ்சகோசங்களை ஆன்மரூபமாயறியான்; மற்றே, ஆநந்தமயகோசத்தின் புச்சமாய பிரஹ்மத்தையே தன்னான்மவடிவமாயுணர்வன் எனக் கூறப்பட்டதன்றே! அதன்கண்ணே அத்திரித்திரி மறையவர் தந்தை மைந்த ரிதிகாசத்தைக் கூறினர். அது, பிரஹ்மவேத்தாக் குரு வுபதேச சிரவணாநந்தர மனனவடிவத்தை யுணர்த்துவதாம். அதனைச் சாவதானமாய்க்கேட்டி. ஹே குழந்தாய்! முற்காலத்தே வருணனெனப்பெயரிய இருஷியின் மைந்தர் பிருகுவெனப்பெயரிய இருஷியொருவரிருந்தார். அவர் ஒருகாலத்தே தன் தந்தைபாலுற்று இவ்வாறு வினவினர்:—ஹே பகவன்! தாங்களறிந்த பிரஹ்மத்தை என்பொருட்டு உபதேசஞ்செய்யுங்கள் என வினவவே அவர் தமது மனத்தே, யாமிவனுக்கு முதலில் துவமபதார்த்த ஆன்மாவின் உபலக்ஷண பதார்த்தங்களைக் கூறலாமா, தற்பதார்த்தப் பிரஹ்மத்தின் உபலக்ஷண பதார்த்தங்களைக் கூறலாமா; இவன் புத்திமானாயின் அவ்வுபலக்ஷணங்களால் உபலக்ஷித சைதன்ய ஆன்மாவைத் தானே யறிந்துகொள்வன் எனச் சிந்தித்து, மைந்தன் புத்தியைப் பரீக்ஷிக்கும்பொருட்டு முதலில் துவம்பதார்த்த ஆன்மாவின் உபலக்ஷணங்களைக் கூறுவாராயினர்:—ஹே பிருகுவே! தூலசரீரம், பஞ்சப் பிராணன், பஞ்ச ஞானேந்திரியம், பஞ்ச கருமேந்திரியம், அந்தக்கரண சதுஷ்டயம் என்னும் இத்துணைச் சமஷ்டி வியஷ்டிப்பொருள்களே போக்கியரூபமாய்ச் சர்வ ஜகத்தின்கண்ணு மிருக்கின்றனவன்றி மிகுதியாயின்றும், கூறிய போக்கிய பதார்த்தங்கட்குப் போக்தாரூப சாக்ஷியினனன்றிச் சித்தியுண்டாகாமையாதலின் அவற்றிற்கொரு போக்தாவாய சாக்ஷியுமிருக்குமென்பது கருத்தாம். இத்துணை பால் துவம்பதார்த்த ஜீவனது சரீராதி யுபலக்ஷண பதார்த்தங்கள் நிரூபிக்கப்பெற்றன. இப்போது தற்பதார்த்தப் பிரஹ்மத்தின் உபலக்ஷண பதார்த்தங்களை நிரூபிப்பாம்:—ஹே பிருகுவே! எத்தற்பதார்த்தப் பிரஹ்ம [illegible]

சாதனம் உலகத்தே பிரசித்தமாயில்லையோ, அதைச் செய்யும்பொருட்டுப் பிரஹ்ம லக்ஷணங் கூறுகின்றேன், அதனை யாராய்ந்து நீ யுனது புத்தியாற் கூறிய பதார்த் தங்களுள் ஒன்றைப் பிரஹ்மமாயறிதி; அல்லது, வேறாகிய ஒன்றைப் பிரஹ்மமா யறிதி; அறிதல் நினது மதியின தீனமாம். ஹே பிருகுவே! எவ்வுபாதானத்தி னின்றும் இவ்வெல்லாப் பூதபௌதிக ஜகத்தும் உண்டாமோ, எதன்பாலிருக் குமோ, மரிக்குமோ, அதுவே பிரஹ்மமாம். ஹே குழந்தாய்! எங்ஙனம் பூர்வம் "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" என்னுஞ் சுருதியின்கண்ணே சாஸ்திரதிருஷ்டி யை யங்கீகரித்துச் சத்தியம், ஞானம், அநந்தம் என்னும் மூன்றிலக்கணம் பிரஹ் மத்திற்குக் கூறப்பட்டதோ, இலௌகிகதிருஷ்டியை யங்கீகரித்துச் சத்தியஞான மநந்தம் என்னும் ஒரேயிலக்கணம் கூறப்பெற்றதோ, அங்ஙனம் ஈண்டும் வருணர் பிருகுவின்பொருட்டுச் சாஸ்திரதிருஷ்டியை யங்கீகரித்தோ ஜகத்தின் உற்பத்தி, திதி, இலயகாரணத்தன்மையென மூன்றிலக்கணம் பிரஹ்மத்திற்குக் கூறினர். இலௌகிக திருஷ்டியை யங்கீகரித்தோ ஜகத்தின் உற்பத்தி திதி லயகாரணத் தன்மையென ஒரே இலக்கணங் கூறினர். இவ்வாறு அவ்வருணர் பிரஹ்மத்தின் தடஸ்த இலக்கணத்தைக் கூறி மீண்டும மைந்தன்பொருட்டு இவ்வாறு இயம்பி னர்:—ஹே பிருகுவே! அந்தப் பிரஹ்மத்திற்கு இரண்டிலக்கணங்களிருக்கின் றன, அவை சொரூப இலக்கணமும் தடஸ்த இலக்கணமுமாம். முதலது உணரு மாற்றல் நினது மதிக்கின்றுமாதலின் இயம்பவில்லை. சூக்ஷுமபுத்தியையுடைய அதிகாரியே தனது நுண்மதியால் அதனை யுணர்வன்; தூலமதியான் முடியாதாம். இப்போது நின்மதியும் தூலமாமாதலின் முதலதைவிட்டு இரண்டாவதைக் கூறி னேன். இது முதலதைக்குறித்துத் தூலமாமாதலின் நின்மதியில் விரைவிலே றும். ஈண்டு, இலக்ஷியவடிவப் பிரஹ்மத்தினின்றும் பாகியத்திதி தடஸ்த இலக் கணத்திற்காவதே இதன்கட் லேதையாம். இப்போதிதனை வெளிப்படையாக்கும் பொருட்டு முதலில் லோகப்பிரசித்த திருஷ்டாந்தத்தே அவ்விரண்டையும் நிரூ பிப்பாம்:—ஈண்டு, சோமசருமாவின் கிருகம் தூலமும், மனோரமமும், வெண்ணிற முடையதும், விசித்திரத் துவசம்பதாகையுடையதும், மேகமண்டலத்தைத் தீண்டு வதும் ஆம். இவை கிருகவடிவத்துள்ளடங்கினவாதலின் சொரூப இலக்கணமாம். அக்கிருகத்தைக் காண்பிக்கும்பொருட்டு விசித்திரசப்தங்களைச்செய்யும் கிளி முத லியவை இருக்குங் கிருகத்தைச் சோமசர்மாவின் வீடென்றறிதியெனக் கூறின் கிளி முதலியவை தடஸ்த இலக்கணமாம். அவற்றின் இலக்கணம் வருமாறு:— எவ்விலக்ஷகப்பொருளின்றேனும் இலக்ஷியப்பொருளின் அபாவமின்றுமோ அது தடஸ்த இலக்ஷணமாம். கிளி முதலியவை இன்றேனும் கிருகமின்றுவதின்றுமாத லின் அவை தடஸ்த இலக்கணமாம். எவ்விலக்ஷகப்பொருளின்றுகவே இலக்ஷியப் பொருளின் அபாவமாமோ அது சொரூப இலக்கணமாம். தூலத்தன்மை முதலி யவை இலவாகவே கிருகமுமின்றுமாதலின் அவை சொரூப இலக்கணமாம். இத னின் இரண்டிலக்கணங்கள் தணியப்பெற்றன:—எவ்விலக்ஷகப்பொருளின் அபாவ த்தினால் இலக்ஷியப்பொருளின் அபாவப் பிரயோஜகமன்றுமோ அது தடஸ்த இலக்கணமாம்; கிளி முதலியவைபோலவாம். எவ்விலக்ஷகப்பொருளின் அபாவத்

தன்மை இலக்ஷியப்பொருளின் அபாவப் பிரயோஜகமாமோ அது சொரூப இலக்கணமாம்; தூலத்தன்மை முதலியவைபோலவாம்.

சங்கை :—ஹே பகவன்! இலக்ஷியவஸ்துவின் சொரூபபூதமாய பொருள்களிடத்தே இலக்ஷணரூபத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனின், இவ்வுலகத்தே இலக்ஷியத்தினின்றும் வேறாயதே இலக்ஷணமாமன்றோ?

சமாதானம் :—ஹே குழந்தாய்! சொரூப இலக்ஷணத்திற்கு இலக்ஷியத்தோடு உண்மையாய்ப் பேதமின்றாம்; மற்றோ, இலக்ஷணத்தைக் கூறுவோன் தனதுமதியால் அப்பேதத்தைக் கற்பிப்பனாதலின் அதை யங்கீகரித்தே சொரூப பூதபதார்த்தத்தின்கண்ணும் இலக்ஷணரூபத்தன்மை சம்பவிக்கும். தடஸ்த இலக்ஷணத்தலத்திலோ, ஆயினும் உண்மைப்பேதமுடையது அசுவமாவதேபோல இலக்ஷியத்தினும் உண்மைப்பேதமுடையதே இலக்ஷணமாம். இதனாலிரண்டு இலக்ஷணங்கள் உணர்த்தப்பெற்றன :—யாது இலக்ஷியபதார்த்தத்தினும் கற்பிதபேதமுடையதாய் அதனை இதரபதார்த்தங்களினின்றும் வேறாயுணர்த்துமோ அது சொரூப இலக்ஷணமாம். யாது இலக்ஷியபதார்த்தத்தினும் உண்மைப்பேதமுடையதாய் அதனை இதரபதார்த்தங்களினின்றும் வேறாயுணர்த்துமோ அது தடஸ்த இலக்ஷணமாம்; இப்போது தடஸ்த இலக்ஷணத்தைச் சித்தாந்தத்தே புகுத்துவாம் :—ஹே பிருகுவே! ஜடத்வ பரிச்சின்னத்வாதி தருமங்களால் இவ்வுலகின் கண்ணே பிரஹ்மத்தின்பேதம் யாவருக்கும் வெளியாமாதலின் உலகின் உற்பத்தி ஸ்திதி இலயாதி தருமங்களிடத்தே பிரஹ்மத்தின் தடஸ்த இலக்ஷணரூபத்தன்மை சம்பவிக்கும். இலக்ஷியப்பொருளை யறிவிக்கும்பொருட்டுத் தடஸ்த இலக்ஷணங் கூறுமிடத்தே அதனாலப்பொருளி னுண்மைவடிவம் விரைவிற் புலப்படாதாம்; மற்றோ, சாமானியமாய்த் தோற்றும. அதன்பின்னர் அதிகாரி தடஸ்த இலக்ஷணமுணர்த்தும் வசனத்தை அநேகவகையாய யுக்திகளால் ஆராயின் அப்பொருளின் உண்மைவடிவம் நேராய்த்தோற்றும். இவ்வகையாய நியமம் சர்வ தடஸ்த இலக்ஷணத்தின்கண்ணும் பிரசித்தமாமாதலின் நீயும் யாம் கூறிய வசனத்தை யாராய்ந்து பிரஹ்மத்தி னுண்மைவடிவத்தை யுணர்தி.

சங்கை :—ஹே பகவன்! இயல்பாயே பிரமாணரூப வேதவசனங்கள் தமதர்த்தத்தைப் போதிப்பதில் விசாரரூப மனனத்தை யபேக்ஷியாவன்றோ?

சமாதானம் :—ஹே பிருகுவே! அவ்வேதவசனங்கட்குத் தமது சாப்தபோதரூப பல உற்பத்தியின்கண்ணே விசாராபேக்ஷயின்றாயினும் கேட்போருடைய அபாதரூப அசம்பாவனாதிதோஷ நீக்கப்பொருட்டு அவற்றிற்கதனபேக்ஷ யவசியமாம். சக்ஷு இந்திரியம் கடாதி தரிசனத்தே அஞ்சனாபேக்ஷயைச் செய்யாதாமாயினும் தடையாய விழியிலுள்ள மலின நீக்கப்பொருட்டு அது அதனை விரும்பும்; அதுபோலப் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தே தடையின் நீக்கப்பொருட்டு அவை அதனை யவசியம் விரும்பும். தனதில்லத்தே புதைத்திருக்கும் பொன்முதலியவற்றை அவ்வில்லத்தான் சித்தாஞ்சனமின்றிக் காணாததேபோலச் சர்வப்பிராணிகளின் இருதயதேயத்தே எழுந்தருளியிருக்கும் பிரஹ்மத்தை அதிகாரியானவன் மனனமின்றிச் சாக்ஷாத்கரிக்கமாட்டான். புதைத்த தனத்தைக் காணுஞ்

சாதனமாய சித்தாஞ்சனத்தே சர்வ ஔஷதங்களும் காரணங்களன்றாம்; மற்றோ, விலக்ஷண ஒளஷதமே காரணமாம். அதுபோலப் பிரஹ்ம சாக்ஷாத்காரத்தின் கண்ணும் சர்வோபாயங்களும் பயனற்றனவாம்; மற்றோ, சுருதியநுகூல அநேக வகையுக்திகளால் இலக்ஷணவாக்கிய விசாரரூபமனனமே பிரஹ்ம சாக்ஷாத்கார உபாயமாம். அவ்வாக்கியஞானமோ அதன்கண்ணே முக்கிய உபாயமாம். உருவ முதலியவற்றின் தரிசனத்தே விழிக்கு அஞ்சனம் துணையாய் வேண்டியதேபோ லப் பிரஹ்மசாக்ஷாத்கார உற்பத்தியின்கண்ணும் அவ்வாகிய ஞானார்த்தவிசாரம் சககாரிமாத்திரமாம். அவ்வாக்கியஞானரூப உபாயம், குருசாஸ்திர உபதேசத்கா லடைவுறினும் அசுத்த அந்தக்கரணமுடைய புருடனுக்குச் சிறிதுமாத்திரையும் பலப்பிராப்தியை யடைவியாதாம்; மற்றோ, சுத்த அந்தக்கரணமுடையவனுக்கே யடைவிக்குமாதலின் அதிகாரியானவன் தன் மனதை யவசியம் தூய்தாக்கவேண் டும். அம்மனத்தூய்மையின் உபாயமிதுவாம்:—மனத்துள்ள அசுத்தம் விடய இராகத்தாலுண்டாம்; அது இந்தேகேந்திரிய கர்வத்தாலாம்; இது, விடய சம் பந்தத்தாலாம். ஆகையால், பரம்பரையாய் விடயசம்பந்தமே அதன்கண்ணே கார ணமாம். தன் மனத்தூய்மையாற்ற இச்சித்த அதிகாரி முதலில் விடயசம்பந்தத் தைப் பரித்தியாகிக்க; தியாகிக்கவே கர்வாதிகாரியங்கள் தாமே நாசமாம்.

சங்கை:—ஹே பகவன்! அன்னபானுதி சர்வ விடயங்களையும் பரித்தியாகஞ் செய்தலால் அதிகாரியின் சரீரத்திற்கே ஹானியாமன்றோ?

சமாதானம்:—ஹே பிருகுவே! சிறிதுமாத்திரையும் அன்னபானுதி விடயங் களைக் கவராதொழியின் சரீரம் விரைவாகவே அழியும்; அதிகமாக அவற்றைக் கொள்ளுதலாலோ தேகேந்திரியங்கள் கர்வத்தையடையும்; ஆகையால், எத்து ணையாற் சரீரநாசமாகாமற கர்வமுமுண்டாகாதோ அத்துணைமாத்திரம் கொள் ளுக. இவ்வாறு ஜீவனமாத்திர உபயோகியும், வருணசிரம அவிருத்தமும் ஆயவற் றினும் அதிகத்தைச் சேர்க்கலாகாது; இதுவே தவமாம். இச்சார்யமரூப தவம் அடைவுறவே, தேகேந்திரிய கர்வமொழியும், ஒழியவே விடய இராகமும் ஒழி யும், ஒழியவே மனந் தூய்மையாம்; தூய்தாய மனம் குரு சாஸ்திரங்கள் உபதே சித்த வசனார்த்தத்தை விசாரித்துப பிரஹ்மநிச்சயஞ்செய்யும். ஆகையால், நீயும் அத்தவத்தால் நின் மனத்தைத் தூய்தாக்கி, முற்கூறிய பிரஹ்ம இலக்கணவாக கியவிசாரஞ்செய்து பிரஹ்மத்தை நிச்சயஞ்செய்தி. பிரஹ்மலக்ஷண வாக்கியத தை நானுவித யுக்திகளோடு விசாரிக்குந் தவமும், தேகேந்திரியாதிகளின் அடக் கவடிவ தவமும், பிரஹ்ம சாக்ஷாத்காரத்தின்கண்ணே காரணமாம் என்னும் வச னத்தைக் கூறிலன்; என்னை, சீடனறியாப்பொருளையே குரு சாஸ்திரமுபதேசிட் பான்றி அறிந்ததை யுபதேசியார் இத்தவம் சர்வ மனோவாஞ்சிதப்பொருள்களைட் பயப்பதின் காரணமாமென நீயே யறிவாய். ஹே மைந்த! இவ்வாறு பிருகு இருஷி தம் தந்தையாய வருணன்வாயிலாய்ப் பிரஹ்மத்தின் தடஸ்த இலக்கணத்தைச் சிரவணித் தது, அத்தவத்தே பிரஹ்மஞான காரணத்தன்மையையும் நிச்சயித்து முதலில் அந்தக்கரண சுத்தியின்பொருட்டு முற்புகன்ற உடற்போறி யடக்கவடிவ தவத்

தை யாற்றினர். அதனுன் மனத்தூய்மைபெறவே முற்புகன்ற வாக்கிய விசார வடிவ மனனத்தைச் செய்தனர்; அதனுன், முதலில் அத்தியான்மாதிவடிவ சமஷ்டிவியஷ்டியாய தூலதேக அன்னமயகோசத்தே முன்னிலக்கணத்தையுன்னி அதனையே பிரஹ்மரூபமாயறிந்தனர். அதன்பின்னர் அதன்கண்ணும் தோடத்தைக்கண்டு மீண்டும் பிதாவையடைந்தனர்.

சங்கை :—ஹே பகவன்! அவ்வன்னமயகோசத்தே பிருகுவானவா பிரஹ்ம இலக்கணத்தை எவ்வாறு நிச்சயித்தனர்? அதன்கண் எத்தோடத்தைக் கண்டனர்?

சமாதானம் :—ஹே குழந்தாய்! சமஷ்டி வியஷ்டிவடிவ இத்தூலத்திலிருந்தே சம்பூரணஜகத்துமுண்டாயிருந்து இலயமாம். இலயித்தலோ மரித்த தேகம், நாய், புழு, தீ முதலிய தேகங்களை யடைவதேபோலும். என்றிவ்வாறு இலக்கண நிர்ணயஞ்செய்து, பின்னர் ஆராய்ந்து இவ்வாறு தோடங் கண்டனர் :—இது ஜகத்காரணமாயினும் தான் அழிவதும் பரிச்சின்னமுமாம். பிரஹ்மமோ அவை யற்றதாம்; யாண்டும் நிறைந்ததாமாதலின் இது பிரஹ்மரூபம் எவ்வாறாம்? ஆகாதென்க. அல்லது, இவ்வியஷ்டிதேகம் உதயநாச பரிச்சின்னமுடையதேபோலச் சமஷ்டி விராட்பகவானுடைய தூலசரீரமும் உடையதேயாமாதலின், அதன்கண்ணும் பிரஹ்மரூபத்தன்மை சம்பவியாதாம். ஹே குழந்தாய்! இவ்வாறு தோடங்கண்டு அன்னமயத்தின் காரணத்தை வினவும்பொருட்டு மீண்டும் தந்தைபால் வந்தனரென்றுணர்தி. பிரஹ்மோபதேசஞ் செய்யவேண்டுமென முன் வினவியதுபோலவே வினவினர். தந்தையாரும், ஹே பிருகுவே! யானுணர்த்தியதும் நீ நிச்சயித்ததுமாய தவமே பிரஹ்மநிச்சயத்தின்கண்ணே முக்கியகாரணமாம்; மற்றொரு காரணமுமின்றாமாதலின் தவத்தானே உலககாரணப் பிரஹ்மத்தையுணர்தி. அது முக்கியமாதலினுனே வேதவேத்தாக்கள் தவத்தைப் பிரஹ்மமென்றனரென் றிவ்வாறு உபதேசித்தபோது முன்போன்றே விசாரரூப தவத்தை அவர் ஆற்றினர்; அதனுல் பிராணமயகோசத்தையே பிரஹ்மமாயுணர்ந்து மீண்டும ஆராய்ந்து சடத்தன்மைமுதலிய தோடங்களைக்கண்டு தந்தைபால் வந்தனர். இவ்வாறே அன்னமயாதி ஐங்கோசங்களை முறைப்படி பிரஹ்மரூபமென வுணர்ந்து அவற்றின்கண் முறைப்படி தோடத்தைக்கண்டு ஐந்தாமுறை தந்தைபால் வந்தனர்; ஐந்தாமுறை பிரஹ்மோபதேசஞ் செய்யுமாறு வினவினர்; பிதாவும் விசாரரூப தவத்தால் நீ பிரஹ்மத்தை யறிதியென ஐந்துமுறை விடையருளினர்.

சங்கை :—ஹே பகவன்! பிருகுவானவர் பிராணுதிகளிடத்தே எவ்வாறு பிரஹ்ம இலக்கணத்தைக் கண்டனர்? அவற்றின்கண் எத்தோடத்தைக் கண்டனர்?

சமாதானம் :—ஹே குழந்தாய்! வினவிய யாவற்றையும் சொல்கின்றோம் கேட்டி! ஜராயுஜாதி நால்வகைத் தேகங்களும் பிராணவிசிஷ்ட சரீரத்தினின்றுமேயுண்டாம்; பிராணன் பக்ஷித்த அன்னத்தானே திதிபெறும்; தேகத்தைவிடுத்துப் பிராணன் லோகாந்தரகமனஞ்செய்யின் இலயத்தையுறும். ஆகையால், இப்பிராணனே பிரஹ்மரூபமாம். இங்ஙனம் உலகுதய திதி லய காரணத்தன்மைவடி

வப் பிரஹ்ம இலக்கணத்தைப் பிராணனிடத்தே யறிந்து அவர் பிராணனையே பிரஹ்மமென வுணர்ந்தனர். அதன்பின்பு அவர் ஆராய்ந்து அதன்கண் இத்தோடத்தைக் கண்டனர்:—இத்தூல சரீரரூப அன்னமயகோசம் ஜடமும் பரிச்சின்னமும் உற்பத்தி நாசமுடையதுமாமாறு பிராணமயகோசமுமாமாதலின் இப்பிராணனிடத்தும் பிரஹ்மரூபத்தன்மையும சர்வஜகத்காரண ரூபத்தன்மையும் சம்பவியாவாம்; மற்றேறு, இசசடத்திற்கும் ஒரு சேதனரூபகாரணம் அவசியமுண்டாம். யாவரும் என்மனமறிகின்றதெனக் கூறுகின்றனராதலின் யாவறறையு முணரும் சேதனரூபமனமே பிராணுதியாவறறின் உதய திதிலயகாரணமாம்; இதுவே பிரஹ்மரூபமாம. இவ்வாறு அவர்மனத்தின்கண்ணே யவறறைக்கண்டு மனத்தையே பிரஹ்மரூபமென வுணர்ந்தனர். அதன்பின்பு மீண்டு மாராய்ந்து பிராணமயகோசத்தேபோல மனோமயகோசத்தும இவ்வகைத்தோடத்தைக்கண்டனர்:—இம்மனமும் சவிகற்பக சமசயரூபமதாதலின் காரணமற்றதாகாதாம்; மற்றேறு, இதற்குமொருகாரணம அவசியமுண்டாம; ஏனெனின் இவ்வுலகத்தே இது குற்றியா? மகனு? என்பதுமுதலிய ஐயங்கள்யாவும் காரணமின்றி யுண்டாகாதாம்; மற்றேறு, எத்தருமியின்கண்ணே குறறிததன்மை மகன்மை என்னும் பகைத்தருமததோறற மாகின்றதோ அதன் இதம வடிவமாய சாமானிய ஞானமும், அவ்விரண்டுகோடிகளின ஸ்மாணரூபஞானமும சம்சயகாரணமாம; தருமியின்ஞானம் நிர்விகறபகபுத்தி ரூபமாமாதலின் அமமனத்திறகு நிசசயரூபபுததியே காரணமாம். கருத்திதுவாம:—மநத அந்தகாரத்தேயிருக்கும் மூன்றரைமுழ அளவுள்ள காட்டவிசேடம் குற்றியாய், அதன்கண்ணே, இதுகுற்றியா? மகனு? என்னு ஐயம் உண்டாம். ஆண்டு அவவையத்தினமுன்னர்க் குறறியின்கண்ணே மநுடனுயர்ந்த அளவின் நிச்சயம் உடையவனுக்கே ஐயமுண்டாம், மற்றவனுக் கின்றுமாதலின் அந்நிச்சயபுத்தி ஐயமனத்திற்குக் காரணமாம; ஆகையால், அப்புத்தியே பிரஹ்மரூபமாம். இவ்வாறு அவர் புத்தியின்கண்ணே யவறறைக்கண்டு மதிவடிவ விஞ்ஞானமயகோசததையே பிரஹ்மரூபமென வுணர்ந்தனர். அதன்பின்பு மீண்டு மாராய்ந்து அதன்கண்ணு மித்தகைய தோடத்தைக் கண்டனர்:—இம்மதியும் தூலம்போலப பரிசசின்னமாம். பரிசசின்ன முடையதெல்லாம் உற்பததிநாச முடையதாம். இத்தூலம் பரிச்சின்னமாதலின் உறபத்திநாச முடையதாவதே போலப் பரிச்சின்னமதியும உறபததிநாச முடையதாம. உற்பத்திநாச முடையதெல்லாம சர்வகாலதது மிராவாம்; மற்றேறு, ஒருகாலத்திருக்கும், ஒருகாலத்திரா. உற்பத்திநாசமுடையதேகம் ஒருகாலத்திருபபதும் இராததுமாவதேபோலப் புத்தியுமாம். ஒருகாலத்திருபபது பிரஹ்மரூபமாகாதாம். இததேகம் ஒருகாலத திருப்பதாதலிற பிரஹ்மரூப மாகாததேபோலப் புத்தியுமாகாதாம்; மற்றேறு, இம்மதிக்கும அவசியம் ஒருகாரண மிருக்கவேண்டும. மதியின் முயலவெல்லாம இன்பப்பொருட்டேயாமனறி மறறின்றும. சிலபாலோ துன்பின்கண்ணும், அதன் சாதனத்தின்கணணும், வெறுப்பவற்றின்கண்ணும், நொதுமலகளின்கண்ணும், முயல்வு காணவரினும, பிரமப்பிரமாதாதி தோஷவயத்தானேயாம. இயல்பாய் அது துன்பாதிகளின்கண்ணே முயலாது; மற்றேறு, இன்ப அடைவின்பொருட்டே

முயலும். அல்லது, சர்வ இச்சையுமற்ற சமாதியின்கண்ணேயிருக்கும் அறிஞனுடையபுத்திசமாதிகாலம்வரைக் கிளம்புகையையடையாதாம். இச்சையையுடைய அவிவேகியின்புத்தி எப்போதும் கிளம்புகையையடையும். இவ்வகையுடன்பாடெதிர்மறைகளால் இச்சையின்கண்ணே புத்தியின்காரணத்தன்மை சித்தமாம். நம்மனோர்க்குண்டா மிச்சையாவும் சுகத்தின்கண்ணேயாம். துன்பமுதலியவற்றே யெவர்க்கு மிச்சையின்றாம். இவ்வாறு தற்சுபாவப்படி இச்சை சுகத்தின்கண்ணே முயல்வுறினும் அநுபாதேயரூபத்தால் துக்காதிகளையும் விடயஞ்செய்யும்; யாது அடைவுறின் முயல்வினனேனும் நீக்கமுடியாததாமோ அது அநுபாதேயமாம். இயல்பானே கேவலசுகத்தையே விடயஞ்செய்யும் இச்சை புத்தியின் காரணமாம். அதனானே யுண்டாதலின் அம்மதியும் சுகத்தின்கண்ணேயுண்டாம். அநுபாதேயரூப துக்காதிகள் இச்சையி னுறபத்தியின்கண்ணே நிமித்தமன்றுவதேபோல மதியினுற்பத்தியின்கண்ணும் நிமித்தமன்றாம். ஆகையால், பிரியமோதாதி யவயவமுடையதாய ஆநந்தமயமே விஞ்ஞானமய மதியின் காரணரூபமாமாதலின் அதுவே பிரஹ்மரூபமாம். இவ்வாறு ஆநந்தமய கோசத்தின்கண்ணே அவற்றை அவர்கண்டு அதையே பிரஹ்மரூபமெனவுணர்ந்தனர். பின்பவர் மீண்டு மாராய்ந்து அதன்கண்ணு யித்தோடத்தைக்கண்டனர் :—இதன் கண்ணும் பிரிய, மோத, பிரமோதமென்னும் மூன்றவயவமோ அந்தக்கரண விருத்திரூபமாம். ஆநந்த வடிவ நான்காவதவயவம் அவித்யாவிருத்திரூபமாம. ஆகையால், நான்கும் காரியரூபமாம், காரியமெல்லாம் காரணத்தானே யுண்டாமென்பதொருதலை; கடாதிகள் காரியரூபமாதலின் மண்முதலிய காரணங்களாற் சன்னியமாவதேபோல, காரியமாய அந்நான்கும் ஒருகாரணத்தானே சனித்த லவசியமாகும். உதித்தனவெல்லாமோ அவசியமாயொழியும், உதித்த கடாதிகள்யாவும் ஒழிவனபோல உதித்த அநநான்கும ஒழியும். இவ்வாறுதித்தொழியும நான்கன் கண்ணும் பிரஹ்மரூபத்தன்மை சமபவியாதாம்; மற்றே, உற்பத்தி நாசமற்றுக் குறைவு மிகுதியற்றுள்ள பிரஹ்மஸ்வரூப ஆநந்தமே மதிமுதலிய ஜகத்காரணமாம. இவ்வாறு ஆராய்நது அவர் ஆநந்தமயகோசத்தின் புச்சபிரதிஷ்டைவடிவ ஆநந்த ஆன்மாவையே பிரஹ்மரூபமென நிசசயித்தார்; ஏனெனின், காரணமியாவும் முதலில் ஆநந்தத்தையுறறே ஒருகாரிய உற்பத்தியின்கண்ணே ஆற்றலுடையவாம்; அஃதின்றி யெவறறையு முண்டாக்கா. ஆண், பெண், இருவரும் ஆநந்தத்தையடைந்தே மக்களை யுண்டாக்கலேபோலும். யாவற்றிலும் தொடர்நதிருக்கும் ஆநந்தமே சர்வஜகததின் காரணமாமென அறியபபெறும. அஃதுற்பத்தி நாசமற்றதாமாதலின் நித்தியமாம. ஆநநதமானது பெண்முதலிய விடயத்தினின்றே யுண்டாவதாய்த் தோறறுவதாயினும் உண்மையாயது அவ்வாறன்றாம்; மற்றே, இச்சையின் நீக்கததான் சிதத ஒருமைவாயிலாய் அவை ஆநந்த அபிவியக்தியைச்செய்யும், இவ்வாறு நிததிரை முதலியவற்றின் சம்பந்தத்தானே வெளிப்பட்ட ஆன்மாநந்தததானே எல்லாப் பிராணிகளும் ஜீவனத்தையுறும். மரணகாலத்தே இச்சம்பூரணஜீவரும் இத்தூலசூக்ஷ்மசரீர அபிமானத்தைப் பரித்தியாகித்து இருதயத்தேயத்தில ஆநந்தவடிவப் பிரஹ்மத்தின்கண்ணே தாதாத்மிய சம்பந்தத்தான் இலயபாவத்தையடைவர். ஆநந்தவடிவப் பிரஹ்மத்தோடு அபேதபாவத்தையடைவரென்பது கருத்தாம்.

சங்கை :—ஹே பகவன்! அதிகாரி ஆன்ம சாக்ஷாத்காரத்தானே பிரஹ்மத்தோடு அபேதபாவத்தை யடைவனுதலின், மீண்டும் பிறப்புண்டாகாததேபோல் மாணகாலத்தே யாவரும் பிரஹ்மத்தோடு அபேதமடைவராயின், மீண்டும் ஜன்மப்பிராப்தி யுண்டாகாதாம். மாணனந்தரம் அஞ்ஞானிகட்குப் பிறப்போ அவசியமா யுண்டாகின்றதன்றோ.

சமாதானம் :—ஹே குழந்தாய்! ஆன்மஞானத்தால் அஞ்ஞானமற்ற அறிஞன் பிரஹ்மபாவத்தை யடைவதேபோல, மாணகாலத்தே அன்னியனும் அஞ்ஞானமற்றவனுய்ப் பிரஹ்மபாவத்தை யடையின், முக்தனுக்கேபோலப் புனர்ஜன்மப் பிராப்தியுண்டாகாதாம்; ஆனால், அஞ்ஞானி அக்கால அவ்வாறடைவதின்றாம்; மற்றோ, துயிலின்கண்ணே அஞ்ஞானத்தோடு கூடியவனுய்ப் பிரஹ்மபாவத்தை யடைவதேபோல மாணகாலத்தும் அடைவனுதலின் அஞ்ஞானிமீண்டும் பிறப்பை யடைவனென்க. உலக உற்பத்தி திதி இலயகாரணமாம ஆன்மஸ்வரூப ஆநந்தமே பிரஹ்மரூபமாம். ஹே மைந்த! இங்ஙனம் முன்னாப் பிருகுவானவர் விசாரரூப மனனத்தால் ஆன்ம சாக்ஷாத்காரத்தை யடைந்தனராதலின் இக்காலத்திய முமுக்ஷுக்களும் அதன்பொருட்டு அதை யவசியஞ்செய்க. வருணர் தமது புத்திரர்பொருட் டுபதேசித்த இந்தப் பிரஹ்மவித்தை இருதயதேயத்தின்கண்ணே யிருக்கும் ஆநந்தவடிவ ஆன்மாவையே பிரஹ்மரூபமா யுணர்த்துமாதலின், இப்பிரஹ்மவித்தையால் பிருகு சாவான்மபாவரூப பலத்தை யடைந்ததேபோல வேறதிகாரியும் பிரஹ்மவேத்தாவாய குருவாயிலாய்ப் பிரஹ்மவித்தையைச் சிரவணித்து அதை விசாரரூப மனனஞ்செய்வனுயின் அவனும் அப்பலத்தை யவசியமடைவன். ஆகையால், இக்காலத்திய முமுக்ஷுக்களும் தமது அசமபாவனுதோட நீக்கப்பொருட்டு மனனத்தை யவசியஞ்செய்க சமஷ்டிரூப அன்னமயாதி கோசங்களைத் தன்தான்மரூபமா யறிந்தவனுக்குச் சுருதிகூறிய சாவான்னப் பிராப்தியாதி யுண்டாவதேபோல ஆநந்தரூபப் பிரஹ்மத்தைத் தன்தான்மரூபமா யறிந்தவனுக்கும் ஆநந்தவடிவப் பிரஹ்மப்பிராப்திரூபபலம் அவசியமுண்டாம். இவ்வாறுமனனபலத்தால் அறிஞன் அன்னமயாதி பஞ்சகோசங்களைப் பரித்தியாகித்து 'ஹாவு' என்பதுமுதலிய சாமவேதகானஞ்செய்பவனுய் ஜீவன்முக்தனுயிருப்பன். ஆன்மஞானமகிமையால் அறிஞன் இவ்வாறு சாவான்மபாவத்தை யனுபவிப்பன். இது மிகவும் அற்புதமேயாம:—இவ்வுலகத்தே ஆன்மாவாய யானே அன்னுதிபோக்கியரூபமாயும், புருடாதிபோக்தாரூபமாயும் இருக்கின்றேன். அன்னத்தைத் தேவதை அதிதி முதலியவர்க்குக்கொடாமல் தனவயிற்றையே நிரப்பும் லோபியரை யானே மிருத்யுரூபமாய்ப் பக்ஷணஞ்செய்கின்றேன். யானே ஈசுவாரூபமாய் இருக்காதி வேதமந்திரங்களைச்செய்கின்றேன். யானே இருஷிரூபமாய் அவ்வேதமந்திரங்களைக் காண்பவனும் நினைப்பவனுமாவேன். யானே கருமோபாசனையின் சுவாக்காதி பலரூபமாயிருக்கின்றேன்; யானேசமஷ்டிசூக்ஷுமஹிரண்யகர்ப்பரூபமாயும், சமஷ்டி ஸ்தூல விராட்வடிவமாயும், சம்பூரணவியஷ்டி தேவதைகளினும முன்னேயுண்டானேன். பிரஹ்மாநந்தரூப மோக்ஷத்திற்கும் சம்சாரரூப சக்கரத்திற்கும் இடையே யானே நாபியைப்போ லிருக்கின்றேன்; யானே ஜீவர்கட்கு மோக்ஷத்தைக்கொடுப்

பேன்'; சம்சார அடைவைச்செய்வேன் என்பதுகருத்தாம். யானே தருமாதி சதுர்வித புருடார்த்தரூபன்; யானே அன்னுதியாவேன், யானே அன்னுதியைக்கொடுப்பவனுதலின் அன்னுதிரூப என்னை அதிதியாதிகட்குக் கொடுத்து மிருத்தியுவினின்றும் தன்னைக் காப்பாற்றுபவனுகிய அன்னதாதாவும என்னையே காப்பாற்றுகின்றுன். அதிதியாதிகட்கு அன்னத்தைக் கொடாமல் கேவலம் தனது வயிற்றையும் தன் குடும்பவயிற்றையும் நிரப்பும் லோபியை யானே தினமாசாதி காலரூபமாயும மிருத்தியுரூபமாயும் பக்ஷணஞ்செய்வேன். சுவர்ணமபோன்ருெளிர்ந்து சூரியமண்டலத்தேயிருக்கும் சுயஞ்சோதிப புருடரூபமாய் ஆன்மாவாய யானே சாவ ஜகத்தினும் மேன்மைமிக்கவனுவேன். ஹே மைந்த! இவ்வாறு அறிஞன் சாமவேதகானஞ்செய்வதேபோலச் சாவான்மபாவப பிராபதிவடிவ தனது அனுபவத்தை வெளிப்படுத்துவன். ஆனுல், தனது காரியப்பொருட்டு வெளிப்படுத்தியதன்றும; மற்ருே, அதிகாரி எவ்வாறேனும் சர்வான்மபாவப பிராப்தியின்பொருட்டுப பிரஹ்மவித்தையின்கண்ணே பிரவிருத்தனுகுகவென்னும் கிருபையைசசெய்தே அறிஞன் சுருதிபகவதிபோலத் தனதனுபவத்தை வெளியிடுவன். இபபோதிவ்வர்த்ததமே பிரமாணரூபமாய் யஜுர்வேத நாராயண உபநிஷதர்த்தம் நிருபிக்கபபெறும —

ஹே குழந்தாய்! அறிஞன் சாமவேதத்தாற் கானஞ்செய்யும சர்வான்மரூடப பிரஹ்மத்தை நாராயண உபநிஷத்தும் பிரதிபாதிக்குமாதலின், அதன்கண்ணே ஆநந்தவடிவப் பிரஹ்மததைச சர்வான்மரூபமாய்க கூறிய முறையின் பொருளைச சாவதானனுய் நீ கேட்டி. அவித்தைவடிவ நீரால் நிரமபிய சமசாரரூபக் கடலின்கண்ணும் இதன்மாட்டுற்ற பதினுன்கு புவனததும இவ்வாநந்தவடிவமாகிய சுபஞ்சோதிப் பரமான்மாவே ககனமபோலத் தொடர்நதிலங்கும். இது யாண்டும வியாபகமாமாதலின், லோகங்களை யபேக்ஷித்து மேலேயிருக்கும சுவர்க்கலோகத்தினும மேலேயிருக்கும். பெருவடிவினவாய்ப பிரசித்தமாய ஆகாசாதிகளினும் பரமான்மா அததியநதம் பெரியதாம். அத்தியாத்மரூபத்தானும, சூரியாதி அதிதைவரூபத்தானுமிருக்கும் நேத்திராதிகளில் இதுவே தனது சுயஞ்சோதிச் சைதன்யவடிவத்தானே பிரவேசிக்கும. தூலாதி மூன்றுபாதியின் சமபந்தததான் முறையே விராட்டு, ஹிரண்யகருப்பர், ஈஸ்வரர் என்னும் முபபெயரையடைநது சர்வானமததன்மை ரூபத்தானே சிருஷ்டி பரம்பரையை பிரவிருத்திபபிக்குமாதலின் சுருதிபகவதி பரமான்மாவைப பிரஜாபதி என்றனள். அத்தியாதமாதி மூவுருவமாய்நின்ற ஸ்தாவரஜங்கமப பிராணிகளின் இருதயதேசரூப ஆகாசத்தே பரமான்மாவே சாக்ஷிரூபமாய்ச் சஞ்சரிக்கும. சமபூரண ஸ்தாவர ஜங்கமரூப ஜகதது தனதுற்பத்தியாதிகாலத்தே இதன் அதீனமாயேயிருக்கும. விஸ்வே தேவரெனப்பெயரிய தேவதை முதலாயுள்ள எல்லா தேவதைகளும் இதனதீனமாயேயிருப்பர். ஹே குழந்தாய்! இவ்வெல்லாவுலகும இதனதீனமாமென்பதனுல் நீ இரண்டிற்கும் பேதமாமென எண்ணற்க; மற்ருே, பூதபவிஷ்யத்தாதியுலகம் யாவும் பரமான்மவடிவமேயாம்.

சங்கை :—ஹே பகவன்! இத்தகைய பரமான்மா எதன்கண்ணேயிருக்கின்றது?

சமாதானம் :—ஹே குழந்தாய்! இவ்வாநந்தவடிவ ஆன்மா வேறெபபொருளின்கண்ணுமிராது; மற்ருே, இது சிதாகாசரூப தனது மகிமையின்கண்ணே

யிருக்கும். இதுவே, ஆகாசத்தையும், சுவர்க்கத்தையும், பூமியையும் எப்பக்கத்தும் வியாபித்துநிற்கும்; சர்வலோக மண்டலமத்தியிலிருந்து ஒளிரும் சூரியபகவானையும் இதுவே தனது சுவப்பிரகாச தேஜசால் ஒளிர்விக்கும். கண்டு, நெய்வோன் தந்துவாஞ் சூத்திரத்தைப் படமாக்கும்பொருட்டு விஸ்தரிப்பதேபோலச் சம்சாரரூப சமுத்திரத்தேயிருக்கும் சம்பூரண பதார்த்தரூபப் படத்தின் பரமான்மரூபச் சூத்திரத்தை வான்மீகி முதலிய கவிகள் ஜகத் படரூபமாய் விஸ்தரிப்பார்கள். உண்மையாய் மனவாணிகட் கவிஷயமாயினும் இது உலகின்கண்ணே தாதாத்மியபாவத்தையடையும். இவ்வாறாய பரமான்மாவின் வருணனமே ஜகத் படரூபமாய்ப் பரமான்மரூபச் சூத்திரத்தின் விஸ்தாரஞ்செய்கலாம். சூத்திரத்தினும் படம் வேறாகாததாற் படத்தின் வருணனமே சூத்திரத்தின் வருணனமாவதேபோல, இவ்வுலகரூபப் படமும் பரமான்மாரூபச் சூத்திரத்தினும் வேறன்றாமாதலின், அக்கவிகள் ஜகத்தை வருணித்தவராய்ப் பரமான்மாவையே வருணித்துளார் என்பது கருத்தாம். "யஐஷெவீணாயாம் மாயஞ்தி வைதஜெவதெ மாயஞ்தி" இலௌகிகன் வீணையின்கண்ணே கானஞ்செய்வதும் பரமான்மாவையேயாம். யாவினும் மேலாய அவ்வியாகிருதரூபப் பரமான்மாவின்கண்ணே சர்வ ஜகத்துமிருக்கும். ஹிரண்யகருப்பரூப பிரஹ்மா இதனினின்றுமே யுண்டானவராய் ஆகாசாதி பஞ்ச மகா பூதங்களால் சம்பூரணப் பிரஜைகளையும் உண்டாக்கினர். இப்பூமியின் கண்ணே நெல் கோதுமை முதலிய ஔஷதிரூபமாய் மனு பசு முதலிய அநேக வகைப் பிரஜைகளை யுண்டாக்கினர். இவ்வாறு இரண்யகருப்பர்வாயிலாய்ச் சர்வ ஜகத்தையுமுண்டாக்கிய பரமான்மாவே ஜீவரூபமாய் ஜகத்தின்கண்ணே பிரவேசித்தது. இது பரமாணு முதலிய சூக்ஷும பதார்த்தங்களினும் அத்தியந்தஞ் சூக்ஷுமமாம். ஆகாசாதி மகா பதார்த்தங்களினும் அத்தியந்தம் மகானுமாதலின், இதைப்பார்க்கினும் சிறிதேனும் பெரிதேனும் கிடையா; மற்றும், இதுவே அணுவினும் அணுவாம், மகத்தினும் மகத்தாம். "அணோரணீயாந் மஹதோ மஹீயாந்" கண்டனுசசபத்ததால் அறிய முடியாத தன்மையைக் கவர்க. இது சர்வ பேதமுமற்றதாமாதலின் அநந்தமாம். இது சர்வ ஜகத்தின் காரணமாமாதலின் புராணமாம். இது காரியசகித அஞ்ஞானரூப தமத்தினும் பரமாமாதலின், சுயஞ்சோதிரூபமாம். சாஸ்திரத்தால் விதிக்கப்பெற்ற மனத்தின் வியாபாரம் இருதம் எனப்பெறும்; சரீர வியாபாரம் சத்தியம் எனப்பெறும். இருதம், சத்தியம் என்னும் புண்ணியகருமமே ஜீவனுக்குச் சுகரூபபலத்தை யடைவிக்கும். அவ்விரண்டுமிப் பரமான்மாவேயாம். இதுவே அக்கினிஹோத்திராதி இஷ்டகருமரூபமாம். இதுவே வாபீகூப தடாகாதி பூர்த்தகருமரூபமாம். முக்காலத்திய உலகமியாவும் இதன்கண்ணேயிருக்குமாதலின் பிரஹ்மவேத்தாக்கள் பரமான்மாவைச் சம்சாரரூப சக்கரத்தின் நாபிரூபமாய்க் கூறினர். இதுவே அக்கினி, வாயு, சூரிய சந்திரமா, மோக்ஷ சூக்ஷுமபூத விராட்வடிவமாம். இதனினின்றே நிமேஷம், கடி, முகூர்த்தம், பிரஹரம், தினம், இராத்திரி, பக்ஷம், மாசம், இருது, சம்வற்சரம் முதலிய காலங்களுண்டாம். இவ்வாறு பரமான்மாச் சர்வ ஜகத்தையுமுண்டாக்கி ஆகாசாதி பஞ்சபூதத்தினின்றும், அப்பஞ்சபூதமய மூவுலகக் கோவினின்

றும் நாலுவகைப் போகரூபப் பாலைக் கறந்தனர்; அதுவே ஜீவர்கட்குச் சுகரூபமாய்த் தோற்றும். இது நேத்திராதிகட்கு விடயமன்றுமாதலின் இதனை ஜகத்தின்மேலேனும், கீழேனும், இடையிலேனும் எவரும் கவரமுடியாதாம். இது எவ்விந்திரியத்தானுங் கவரமுடியாதாதலின் இதற்கு நியந்தாவுமின்றும். இது ஆன்மரூபமாய்ச் சர்வ ஜீவர்களின் நிரதிசயப் பிரீதிக்கு விடயமாதலின் சுருதிபகவதி இதனை மகத்யசஃ என்னும் பெயராலழைத்தனள். இது உருவாதி குணமற்றதாதலின், இதனை நேத்திராதிகளால் எவனுங் காணான். மற்றோ, மனத்தை நிரோதஞ்செய்யும் அந்தர்முகச் சுத்த புத்தியானே பரமான்மா அறியப்பெறும். பூர்வம் சிருஷ்டிகாலத்தே சூக்ஷ்மபூதத்தினின்றும் தூலபூதத்தினின்றும் உண்டாய ஹிரண்யகருப்பர் வைஶ்வாநரர் எனப பெயரிய தேவதைகளும் இதனினின்றுமேயுண்டாவர். இவ்வியஷ்டிரூப ஜகத்தினின்றும் சமஷ்டிரூபத்தால் அதிக பாவத்தையடைந்து ஹிரண்யகருப்பர் சம்பூரண வியஷ்டி சரீரத்தே வியாபித்துநிற்பர். அவர் தேகதாரிகள் யாவரினும் முதல்வர். இவ்வெல்லாத் தூல வுலகும் அவ்விரண்யகருப்பரது வடிவமேயாம். இந்நாராயணரூபப் பரமான்மாவே சூரியமண்டலத்தேயிருந்து தமது அஸ்திபாதிப் பிரியரூபத்தால் இச்சகத்தையும் அவ்வடிவமாயாக்குவர். இப்பரமான்மாவையே அதிகாரி பிரஹ்மவிதையாலடைவன். இவ்வுலக உற்பத்தியின்முன்னர் அநந்த நிர்க்குண சிறகன முதலிய ரூபமாய்த் திதமாமிதுவே ஹிரண்யகருப்பரின் உண்மைவடிவமாம். இத்தகைய மாயாரூபதமத்தினும் பரமாப் சூரிய சமானமாய் ஒளியுடையதாயும் மகானுயுமிருக்குஞ் சுயஞ்சோதி ஆநந்தவடிவப பரமான்மாவை மந்திரதிருஷ்டா இருஷியாய யான் எனதான்மவடிவமாயறிந்துளேன். என்போல எவ்வதிகாரியேனும் இதனை யான் பிரஹ்மரூபன் எனத் தன்னான்மவடிவமா புணரின் அவனும் சரீரமிருக்கும்போதே பிரஹ்மரூபமாய் மரணத்தின்பின்னர்ச சுத்தப்பிரஹ்மகதையேயடைவன். இத்தகைய அத்விதீயப் பிரஹ்மப பிராப்தியின்பொருட்டுப் பிரஹ்மஞானமின்றி வேறெம்மார்க்கமுமின்றும; மறறோ, இதுவே அதனடைவின் மார்க்கமாம். இப்போது பிரஹ்மஞானவடைவின்பொருட்டு முதலில் துவம்பதார்த்த சோதனம் நிரூபிக்கப்பெறும்:—ஹே குழந்தாய்! தாய் உதரத்தே பாலகனிருப்பதேபோல ஆதித்யமண்டலத்தேயிருக்கு மிச் சுயஞ்சோதியே விராட்வடிவமாய்ச் சர்வ ஜீவர்களின் உள்ளிருந்து நாலுவகைச் சிருட்டியையுண்டாக்கி விளையாடும; இது சரீராதியுபாதிகள் உண்டாயினும் உண்மையாய் உற்பத்தி யொழிவற்றதாம். சாஸ்திரவேத்தாக்கள் சூரியமண்டலாதிகட்குச் சூரியாதிகளின் கிரணத்தையே காரணமென அங்கீகரித்ததேபோலச் சர்வாந்தரியாமியாய பரமான்மாவையே விராட்டின் காரணமென வுடன்பட்டுளார். இப்போது தற்பதார்த்தசோதனஞ் செய்துகொண்டு முதலிற் சித்தசுத்தியின்பொருட்டுப் பரமான்மாவின் ஆராதனைப் பிரகாரத்தை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! அக்கினி முதலிய அதிதைவங்கள் வாக்குமுதலிய அத்தியான்மங்கள் என்னும், எல்லாவற்றின் உபகாரப்பொருட்டு ஆதித்யமண்டலத்தேயிருந்து யாண்டும் பிரகாசிப்பதும் இந்திராதி தேவதைகட்குப் புரோகிதராய் பிருஹஸ்பதியை விபூதியாகவுடையதும், விபூதிரூப சர்வ தேவதைகளினும் முன்னர் ஆதித்தியரூபமா யுண்டாயதும் ஆகிய ஸ்வப்பிரகாச சைதன்யரூப சுத்த

பரமான்மாவின்பொருட்டு எனது அநந்த நமஸ்காரமுண்டாகுக. ஹே மைந்த! அந்நாராயண பரமான்மா அக்கினிமுதலிய தேவதைகட்கு இவ்வரம் கொடுத்தது:—ஹே தேவதைகளே! ஆதித்தியரூப ஆநந்தவடிவ என்னை மகிழ்விக்கும் பொருட்டு எவன் சிரத்தாபக்திவாயிலாய் என்னை நமஸ்கரிப்பனோ அவனது சர்வ பாவகருமமும் நீங்கும். நீங்கியபின்னர் அவனதந்தக்கரணம் தூயதாம். அதன் கண்ணே எனது சாக்ஷாத்கார அடைவுண்டாம்.

சங்கை:—ஹே பகவன்! பரமான்மா அக்கினியாதி தேவதைகட்கு இவ்வரத்தை எக்காற்கொடுத்தது?

சமாதானம்:—ஹே குழந்தாய்! அக்கினிமுதலியதேவதைகள் ஒளிராநின்ற ஆதித்தியரூபப் பரமான்மாவை நானுவகை நமஸ்காரங்களால் வெளிபடுத்தினர். பின்னர் வர அடைவின்விழைவால் அதன சந்நிதியில இவ்வகையாகப பிரார்த்தித்தனா:—ஹே பகவன்! சர்வ ஜகதான்மவடிவமும, பரமாநந்தவடிவமுமாய தங்கள் பொருட்டுச சிரத்தை பக்திவாயிலாய் நமஸ்காரஞ்செய்யு மதிகாரியின் இருதய தேயத்தே தாங்கள் எபபோதும வெளிப்பட்டிருபபீர்கள்; அதாவது அவன் தங்களைத் தனதுவடிவமாய்ச் சாக்ஷாத்கரிபபான். இவ்வகையாய வரத்தைத் தாங்கள் எங்கள்பொருட்டுக கொடுககவேணடும். ஹே குழந்தாய்! இவ்வாறு அவர்கள் பிரார்த்திக்கவே பரமான்மா அவ்வரத்தைக் கொடுத்ததாதலின், பரமான்மாவின்பொருட்டுச் சிரத்தை பக்திவாயிலாய் நமஸ்கரிககும அதிகாரிக்கு அவ்வர மகிமையால் பிரஹ்மான்ம சாக்ஷாத்கார அடைவு அவசியமுண்டாம். இங்ஙனம், அக்கினிமுதலிய தேவதைகளின்பொருட்டுப பரமான்மாககொடுத்த வரரூபமாகிய வியவகாரத்தைக் குருசாஸ்திர உபதேசத்தால் அறியும அதிகாரிககு எல்லாத்தேவதைகளும் வயப்படுவர். ஆன்மசாக்ஷாத்கார அடைவின்பொருட்டுப பரமான்மாவை நமஸ்கரித்த அதிகாரி இவ்வாறு அதைத்துதிபபன்.—ஹே பரமான்ம தேவரே! ஐஸ்வரிய அபிமானி தேவதைவடிவ ஸ்ரீயும, சௌந்தரிய அபிமானி தேவதையாகிய இலக்குமியும் தங்களுடைய பத்தினிகளாவர். சர்வ பதார்த்தங்களோடுகூடிய தின ராத்திரி வடிவகாலங்கள் தங்களுடைய பக்கத்தானங்களாம். நக்ஷத்திரங்கள் யாவும் தங்களுடைய ஒளிர்வாய வடிவமாம். அசுவினீ குமாரர்களைபபோலத் துவந்துவரூபத்தாற் பிரசித்தமாய சுவர்க்கப பிருதிவி யிரண்டும் தங்களுடைய விரிந்த முகமாம. ஹே தேவதைகட்கீசுரரே! யாங்கள் மோக்ஷமடையும்பொருட்டுத் தங்களுடைய சுயஞ்சோதி ஆநந்தவடிவத்தை வெளிப்படுத்துங்கள் ஹே பகவன்! யாங்கள் அநேக நமஸ்காரங்களை அடிக்கடி திருவடியிலர்ப்பிக்கின்றோம். இத்துணையால் வைசுவாநர அந்தரியாமிரூபமாய் நாராயண பரமான்மவடிவத்தை நிரூபித்தோம்; இப்போது ஹிரண்யகருபப அந்தரியாமிரூபமாயும் நிரூபிப்பாம்:—எவ்விரண்யகருப்பரூப தேவர் இவ்வெல்லாவுலகினும் முன்னர் வெளிப்பட்டு இச்சர்வ ஜகத்தின் மகேஸ்வராராயினரோ, ஸ்தம்பம் வீட்டைத் தாங்குவதேபோல எவ்விரண்யகருப்பதேவர் இம்மூவுலக வீட்டைத் தாங்குவரோ, அவ்வொருவரை மகிழ்விக்கும்பொருட்டு யாம் நமது வருணாச்சிரம அனு

சர்ப்பி (நெய்) முதலிய ஹவிஷ் பதார்த்தங்களால் அர்ச்சனைசெய்வாம். பிராணனைத் தாரணைசெய்வதும் ஞான கருமேந்திரியங்களால் நானாவகை வியாபாரங்களைச் செய்வதும் ஆகிய சம்பூரணசேதனப் பிராணிகட்கும் ஹிரண்யகருப்பர் அதிபதியாவாராதலின் அவர் இருகாலுடை மநுடராதிகட்கும் நாற்காலுடைக் குதிரைமுதலியவற்றிற்கும், நியந்தாவாகிய ஈசுரராவர். இத்தகைய அத்தேவரது சரணத்தை யாமடைந்துளேம். அல்லது, எவ்விரண்யகருப்பர் ஆன்மசாக்ஷாத்காரமுடைய அதிகாரிகட்குத் தமதுண்மைவடிவத்தையடைவிப்பரோ, பலத்தையடைவிப்பரோ, எவரைத் தஞ் சரீரத்தேயிருந்து சம்பூரண தேவதைகளும் ஆராதனைசெய்வரோ, எவருக்கு இவ்வக்கினிமுதலிய தேவதைகளியாவரும் சீடராவரோ, எவர்பால் இவ்வெல்லாத் தேவதைகளும் ஆசீர்வாதத்தையடைவரோ, சாயைபுருடனதினமர்வதேபோல மோக்ஷமிருத்தியு இரண்டும் எவர்தங் கிங்கரரோ, அவரது சரணத்தை யாமடைந்துளேம். அல்லது, ஹிமாலயமே முதலாயுள்ள மலைகள் யாவும் எவ்விரண்யகருப்பரது விபூதிரூப மகிமையாமோ, அல்லது, ஹிமாலயாதி மலைகளினும் எவரது மகிமை அதிகமாமோ, நீர்மடுவானது பாலகரின் கிரீடைக் கிடனுவதேபோல ஹிமாலயாதி மலைகளைக் கரைகளாயுடைய எழுகடல்களும் பாதாளமும் எவரது கிரீடாத்தானமாமோ, கிழக்குமுதலிய நான்குதிசைகளும் அக்கினிகோணமுதலிய நான்குபதிசைகளும் எவரது புயங்களோ, அத்தகையாரது சரணத்தை யாமடைந்துளேம். அல்லது, எவரது சத்தையால் தாரணஞ்செய்யும் பிருதிவி நீர்மேல் நிற்குமோ, தரித்திருக்கும் சுவர்க்கம் ஆகாசத்தே நிற்குமோ, எவரதுண்மைவடிவத்தை அவ்விரண்டும் தமதுமனதத்தே யெப்போதும் தியானிக்குமோ, எதனுலவை அழகுற்றனவாமோ, எவரைப்பற்றி யாவற்றினும் அதிகத்தன்மை வடிவங்கொண்டு உதயமாய சூரியனும் எவரது பயத்தால் இரவும் பகலும் நானாவகையாய்ச் சுழல்வனே, அத்தகையாரது சரணத்தை யாமடைந்துளேம். அல்லது, எவ்விரண்யகர்ப்பரது விபூதிரூப க்ஷத்தரதருமத்தே பிரீதியையுடைய இந்திராதி மகா சூர வீரரோடு கூடியிருத்தலின் சுவர்க்கலோகம் உக்கிரரூபமாய்ப் பிரசித்தமாமோ, எவரது அனுக்கிரகத்தால் இப்பிருதிவி அத்தியந்தம் பலத்தையடைந்துநிற்குமோ, எப்பலமகிமையால் இப்பிருதிவி பிரஹ்மாண்ட பாரத்தோடுகூடியதாயினும் ஓடமொப்ப நீரின்கண்ணே மூழ்குவதின்றோ; தம்பங்களாற் றாங்கப்பெற்ற வீடு கீழே வீழாததேபோல எவராற் றரிக்கப்பெற்ற சுவர்க்கமும் அந்தரிக்ஷலோகமும் பிரஹ்மலோகமும் கீழே வீழ்வதின்றாமோ; எவர் இரஜோகுணத்தோடு கூடியவராய்ச் சுவர்க்கத்தே விமானத்திருக்கும் நானாவகைப் போகரூபங்களைத் தரித்து விடயசுக அடைவின்பொருட்டுத் தேவாங்கனைகளின் முகரூப முழுநிலவில் தமது நேத்திரரூப கமலங்களை யருப்பிதருளாரோ, அக்கினிமுதலிய தேவதைகளியாவரு மிருப்பதாகிய இல்லமாம் வைசுவாநரரையும் தரிப்பவராதலின் எவர் அளவற்றவராவரோ, அத்தகையாரது சரணத்தை யாமடைந்துளேம். அல்லது, கங்கைமுதலிய நதிகளின் நீர் கடலைப் பதிரூபமாய்ப் பற்றுவதேபோல, அவ்வியாகிருதம், பிரகிருதி, மாயை என்பன முதலிய நாமங்களாற் பிரசித்தமாய அவித்யாரூபநீர் எச்சர்வான்மகமாய ஹிரண்யகருப்ப தேவரைப் பதிரூபமாய்ப் பற்றுமோ, அவ்வவித்தைநீர் ஆகாசாதி கருவையுடையதாதலின் மக

த்தானது ; விராட்டுவடிவ வைதிக அக்கினியையும், லோகாக்கினியையும் சூக்ஷும பீஜரூபத்தால் தன்னிடத்தே தரிப்பது தன்பானின்றும் உண்டாக்குவது. அந்நீரினின்றும் கேவலம் அக்கினிமாத்திரம் உண்டாகவில்லை ; மற்றோ, வாக்கு முதலிய அத்தியான்மங்களையும் அக்கினி முதலிய அதிதைவங்களையும் தரிக்கும் பிராணனும் அந்நீரினின்றும் உண்டாம் ; இதனாற்றான் பிராணன் நீரின்றி நிலைப்பதில்லை. அத்தகையரது சரணத்தையடைந்துளேம். அல்லது, எவ்விரண்யகருப்பர் தமது ஸ்வப்பிரகாச சைதன்யரூப தேஜசால் அவித்யாரூப நீரை யொளிர்விப்பரோ, எவர் சர்வ ஜீவர்கட்கும் ஆன்மரூபரோ, எவர் இந்திராதி தேவதைகட்கும் அதிபதியோ, அத்தகையரை மகிழ்விக்கும்பொருட்டு நெய் முதலிய ஹவிஷ் பதார்த்தங்களால் வேதத்தை அருச்சனைபுரிபவராய் யாம் அவரது சரணத்தையடைந்துளேம். அல்லது, சாதனஹீனர்பொருட்டுப் பேதசித்தற்குத் தகுதியற்றதும், யாண்டும் நிறைந்ததும் ஆகிய சைதன்யவடிவ ஹிரண்யகருப்பர்பொருட்டு நமது அடிக்கடி செய்யும் அநந்த நமஸ்காரம் ஆகுக. சர்வ தருமமுமற்றுச் சர்வத்தின் ஆன்மவடிவமாய அவர் முமுக்ஷுக்களாகிய நமக்குப் பிரஹ்மசாக்ஷாத்காரத்தை யடைவிக்குக. ஹே குழந்தாய்! இவ்வாறு பரமான்மவடிவ நாராயணரை ஹிரண்யகருப்பவடிவமாயும், வைசுவாநரவடிவமாயும் நமஸ்கரித்துத் துதிப்பவனுக்கு அவர் அவசியமாய் ஆன்மசாக்ஷாத்காரத்தைத் தருவர். ஆகையால், ஆன்மசாக்ஷாத்கார அடைவை இச்சித்த அதிகாரி முற்கூறியமுறையே பரமான்மாவின் ஸ்துதியையும் நமஸ்காரத்தையும் அவசியமாய்ச் செய்க. இத்துணைக் கிரந்தத்தால் நாராயணரை வைசுவாநரரூபத்தானும் ஹிரண்யகருபரூபத்தானும் நிரூபித்தாம் ; இப்போது அவரை நேரே நிரூபிப்பாம :—ஹே குழந்தாய்! இப்பரமான்மவடிவ நாராயணர் இத்தூலஜகத்தின் உற்பத்தியின்முன்னர் ஹிரண்யகருப்பரூபமாயுண்டாயினராதலின் சுயஞ்சோதியாய இவரே கிழக்கு முதலிய திசைவடிவினரும், அக்கினிகோணமுதலிய உபதிசைவடிவினரும் ஆவர். பிரஹ்மாண்டகோளகத்தின் கருவிலிருக்கும் மூவுலக சரீரத்தையுடைய விராட்டுப் பகவானும் இந்நாராயணரேயாவர். முக்காலதநுமுண்டாம் ஜராயுஜாதி நால்வகைத் தேகங்களும் இவரேயாவர். இவ்வாறு உண்முக அதிகாரி இவரைப புத்தி முதலிய சர்வ பதார்த்தங்களினின்றும் அத்தியநதம் சமீபரூபமாய்க் காணின் அவனுக்கு உண்முகச் சமாதியின்கண்ணே இவரே தமதான்மரூபமாய்த் தோற்றுவர். இவர் சர்வபூதப் பிராணிகட்கும் ஆன்மவடிவராதலின் இவ்வுலகத்தே ஜீவர்கட்குள்ள சக்ஷுக்களும், முகங்களும், ஹஸ்தபாதாதிகளும் இவரினவேயாம். ஆகாசாதியோடுகூடிய ஜீவர்களின் புண்ணியபாவ கருமரூப இரு புயங்களால் இவரே இவ்வெல்லாவுலகின் உதய திதிலயஞ்செய்வர். இவரே சுவர்க்கரூப மேலுலகத்தையும் பூமிவடிவக் கீழுலகத்தையும் உண்டாக்குவர்.

சங்கை :—ஹே பகவன்! இவ்வாறு பரமான்மாவைத் துதித்து முன்னர் எவர்க்கேனும் ஆன்மசாக்ஷாத்கார முண்டாயதா ? இல்லையா ?

சமாதானம் :—ஹே மைந்த! முன்னர் ஒரு வேனன் என்னும் கந்தருவனிருந்தனன் ; அவன் முற்கூறியமுறையே இவரைத் துதித்து நமஸ்கரித்து, மனத்துய்

மைவாயிலாய் நாராயணாது உண்மைவடிவத்தைச் சாக்ஷாத்கரித்தனன். பின்பு அவன் வாமதேவ இருஷியைப்போலச் சர்வ அதிகாரிகளின்மீதுங் கிருபைவைத்து இவ்வாறு தனதநுபவத்தைக் கூறினன். அது வருமாறு:—எவ்வேக பரமான்மாவின்கண் இநநானுவகையாய ஜகத்திருக்கின்றதோ, உண்டாகின்றதோ, ஒழிகின்றதோ, நூலானது படத்தின்கண்ணே எப்புறமும் குறுக்கும்நெடுக்குமாயிருப்பதேபோல, இவ்வுலகபடத்தே எப்பரமான்மசூத்திரம குறுக்குநெடுக்குமாயிருக்குமோ, எது ஜீவரூபமாய் எல்லாத தேகததும புகுந்துளதோ, எது பிறப்பிறப்பாதி சர்வ விகாரமுமறறதோ, அத்தகைய ஆநநதரூப அதவிதீய பரமான்மாவை யான் எனதானமவடிவமாயச சாக்ஷாதகரிததுளேன். அது நான்கு பாதங்களோடுகூடியதாம. ஒரு பாதமோ சமபூரண பூதபௌதிக ஜகததாம; மறறைய முப்பாதமோ தனது ஸ்வபபிரகாச சாக்ஷிவடிவததேயிருக்கின்றது.

சங்கை:—ஹே பகவன்! நாறகாலுடைக கோவானது பரிச்சின்ன பரிமாணமுடையததேபோல நாறபாதமுடைய அதுவும பரிசசின்னமாமனறோ?

சமாதானம்:—ஹே குழநதாய்! முறகூறியது மறையின் கூறறுதலின் மறைக்குப பரமான்மாவின பரிசசின்னததன்மையிற கருத்தின்றும; மற்றோ, மறைககு அதன் அநந்தத்தன்மையினகண்ணே கருததாம. ஹே குழநதாய! இததகைய சூரியமண்டலத்தேயிருககும நாராயண பரமான்மாவின் ஸ்வபபிரகாச சாக்ஷிரூப முப்பாததத்தைக குருசாஸ்திர உபதேசத்தால தனதுன்மவடிவமாய்ச சாக்ஷாதகரித்த அறிஞனே நமது பநதுவாம், தாய்தநதையாம, ஆன்மாவாம, பிரஹ்மமாம். அவனினும வேறாய் எவனும் நமககு மேறகூறியவையாகான். இவ்வாறு அசகந்தருவன் தனதநுபவததைக கூறினன். ஹே குழந்தாய்! சூரியசந்திராதி தேஜசுகளிருக்குஞ் சம்பூரண ஸ்தானங்களை அறிஞன் பிரஹ்மரூபமாயறிவன்; அந்தப பிரஹ்மததைத் தன்வடிவமாயறிவனாதலின், யாவற்றையும தன்வடிவமாய்க் காணும் அறிஞனே நமது பந்துமுதலியவையாவன். அஞ்ஞானரூப அவ்வியாகிருதத்தின் அதிபதியாய தூய பிரஹ்மத்தை யான் பிரஹ்மரூபனெனத தனதான்மவடிவமாயுணாநது அறிஞன் ஜனனமரணாகித மோக்ஷத்தையடைவதேபோலப பூர்வம் அக்கினியாதி தேவதைகளும அடைநதார்கள். அபபரமான்மாத தனது பக்தர்கட்கு அநேக வரங்களைக் கொடுப்பதேபோல அவ்வக்கினி முதலிய தேவதைகளும் கொடுத்துத் திவ்யஸ்தானததை யடைவிப்பா. பிரஹ்மஞானமகிமையால அத்தேவதைகள் சுவாககாதி சர்வ லோகத்தேயும், கிழக்கு முதலிய சர்வ திசைகளிலேயும் தமதிசசைப்படி யுலவுவர். ஈண்டு, பருத்திச்செடியினின்றும் பஞ்சுண்டாம, அதனினின்றும நூலுண்டாம், அதனினின்றும் படமுண்டாம். அக்காரியத்தே காரணநூலிருப்பதேபோல யாகாதிகருமமோ அச்செடிவடிவமாம்; அதனினின்றும் அறமபாவவடிவப்பஞ்சுண்டாம், அதனினின்றும் தூலசூக்ஷ்மபூதரூப சூத்திரம் உண்டாம். தூலசூக்ஷ்மபூத சூத்திரரூபம் போலத் தூலசூக்ஷ்ம பூதங்களைச் சரீரமாகவுடைய ஈசுரரும் சூத்திரரூபமேயாவர். அத்தகைய சூத்திரத்தினின்றும் இவ்வுலகவடிவப் படமுண்டாம் இதன்கண்ணே அநேகனுகதமென வுணர்ந்து யாம் நமதான்மாவை அவ்வடிவமாய்ச் சாக்ஷாத்கரித்தேம். உபாதியின் சம்பந்தத்தால் ஜகத்காரணமாய சூத்திர ஆன்ம

வடிவமாம் பரமான்மாவே விசாரித்தபின்னர் ஔபாதிகத்தைவிடுத்து நிர்க்குணப் பிரஹ்மரூபமாம்; அதுவே நமதான்மவடிவமென்பது கருத்தாம். ஹே குழந்தாய்! இங்ஙனுராய்ந்த நமக்குமாத்திரம் கேவலம் பிரஹ்மப்பிராப்தியின்றும்; மற்றே, முன்னா ஹிரணியகருப்பருக்கும இவ்வாறேயாம. ஏனெனின், முன்னர் அவர் மேலாய கருமோபாசனையின் பலத்தால் சுவர்க்காதி லோகங்கட்கும் ஜராயுஜாதி நால்வகைப பிராணிகட்கும், ஆகாசாதிகட்கும், கிழக்குமுதலிய பத்துத் திசைகட்கும் சுவாமியாயினர். அவ்வாறாகியும மகிழ்வுறாக அவர் அந்தரியாமியாய ஆன்மாவை ஆராய்ந்தபோதே சுயஞ்சோதியாய ஆநந்தவடிவப் பிரஹ்மபாவத்தை யடைந்தனர். ஆகையால, அவ்விசாரமே அதன சாதனமாம என அறியப்பெறும். அஃதின்றி நானுவகை ஐசுவரியங்களால அஃதுண்டாகாதாம் 'ஸர்வே வேதா யத்பதமாமநந்தி' சம்பூரண வேதங்கள் சாக்ஷாத்தாகவும் பரம்பரையாகவும் அத்விதீயப் பிரஹ்மத்தையே கூறுகின்றனவென்னுமிச்சுருதியும் பிரஹ்மமே சர்வ வேதங்களாலுமபிர திபாதநியமெனக் கூறுகின்றதாதலின், 'ஸஹஸ்ரசீர்ஷம்' என்பது முதலிய நாராயண உபநிஷத்தின் மந்திரம் எவ்வந்தரியாமியாகிய பரமான்மாவை அக்கினி முதலிய தேவதைகளின் ஆன்மரூபமாய்க் கூறியுள்ளதோ அதுவே அறிஞனது ஆன்மரூபமாம். எச்சுயஞ்சோதி ஆநந்தவடிவப் பரமான்மாவினின்றும இருதம, சத்தியம் எனனுங் கருமபலம் உறபன்னமாமோ அதனையே அறிஞன் தனதான்மவடிவமாயடைவன். ஈண்டு, மனததாற்செய்த சுபகருமங்களின் பலம இருதமாம; சரீரத்தாலாம் பலம சத்தியமாம். சில நூலாசிரியரோ இருதம், சத்தியம் என்னும சபதங்கட்குப பொருள சந்திரனையுஞ் சூரியனையும் கூறுவா; அக்கூறறுக் கூறியதுகூறலெனனும் குற்றமுடையதாம். ஏனெனின், அவற்றினுறபத்தி மேற கூறபபெறுமாதலின் ஈண்டு இருதம், சத்தியம் என்பவற்றால் அவற்றைக் கூறல் சமபவியாதாம. ஹே குழந்தாய்! சிருஷ்டியின் ஆதிகாலத்தே அவ்விரு கருமபலம் உண்டாக எதிர்முகமாய போது அபபலசித்தி செய்யுமபொருட்டுப பரமான்மாவினின்றும் இருட்டும் ஆகாசாதியுமுண்டாயது; பின்றன்று சுழலகையால இரவுபகலாகருஞ சூரியரூப சமவதஸரமெனப பெயரிய காலமுண்டாயது. இவவாறு ஹிரண்யகருப்பவடிவாய்ச சர்வ ஜகத்தையுமுண்டாக்கிய பரமான்மாப பூரவ கறபத்தினும் இவ்வுலகை விலக்ஷணமாய்ப் படைத்திலது; மற்றே, முன்னுண்டாககியதுபோன்றே இககறபததும ஜராயுஜாதி நால்வகைத் தேகங்களையும், ஆகாசாதிகளையும், சுரோத்திராதிகளையும், பிராணாதிகளையும், சூரிய சந்திரர்களையும், சுவர்க்கபூமி யந்தரிக்ஷ லோகங்களையும் உண்டாக்கியது. ஜலமய சரீரத்தையுடைய பாவரூப ரஜசை நாசஞ்செய்யும் பிருதிவியிற் பிரசித்த வருணதேவரும் ஹிரண்யகருபபரைப்போலப் பரமான்மாவின் தாதாத்மிய சம்பந்தமுற்றே தமது காரியத்தின்கண்ணே சமர்த்தராவர். அச்சம்பந்தமின்றி எத்தேவதையும் தமது காரியம் செய்வதி லாற்றலுடையதாகாது. ஜகத்கர்த்தாவாய பரமான்மாவே திரிகாலத்தே யாவற்றினுள்ளுமிருந்து யாவற்றையுங் காக்கும். சுயஞ்சோதியாய ஆநந்தவடிவப் பரமான்மாவே புண்ணியவான்களைச் சுவர்க்கமடையுமாறும், பாவிகளை நரக மிருத்தியு முதலியவற்றையடையுமாறும் செய்யும்

கீழிருக்கும் பிருதிவியும் மேலிருக்கும் சுவர்க்கமும் எப்பயத்தால் உலகைத் தாங்குமோ அதனுடைமையும் அப்பரமான்மாவே செய்யும். நெருப்பிலும் நீரிலும் மற்றவற்றிலும் தாதாத்மியமாயிருக்குஞ் சேதனப் பரமான்மாவே புண்ணியவான்கட்குச் சுவர்க்கத்தையும், சாதன சம்பன்னாகட்கு மோக்ஷத்தையும் அடைவிக்கும் இத்தகைய அத்விதீயப் பிரஹ்மம் இவ்வகஞ்சப்த இலக்ஷிய அர்த்தரூப ஆன்மாவினும் வேறன்றும்; மற்றோ, ஆன்மரூபமேயாம்: இவ்வான்மாப் பிரஹ்மரூபமேயாம். இவ்வாறு இவ்விரண்டிற்கும் பரஸ்பரம் அபேதமேயாம். பேதமிருப்பின், இரண்டின் சொரூபஹானியேயுண்டாம். இத்தகைய அத்விதீயப் பிரஹ்மரூப ஆன்மஞானத்தால் அதிகாரி மாயை, பஞ்சக்கிலேசம், கருமம், வாசனை என்பனமுதலிய சர்வ பந்தத்தினின்றும் விடுபடுவன்; ஏனெனின், பந்தத்தையுற்ற சிதாபாசனை அறிஞன் பிரஹ்மாகாரவிருத்தியின்கண்ணே ஆரூடமாய பிரஹ்மரூப அக்கினியின்கண்ணே இடுவனாதலின், அறிஞனுக்குப் பந்தப்பிராப்தியுண்டாகாதாம். இவ்வாறு வேதவாக்கிய அர்த்த விசாரஞ்செய்து வேதங் கூறிய சுபகருமங்களின் அனுஷ்டானஞ்செய்து வேதமந்திரங்களை ஜபித்துக் கீர்த்திக்கு யோக்கியனுனபோதே அத்தூயமன அதிகாரி பிரஹ்மான்ம சாக்ஷாத்காரத்தையடைவன். சுகந்தியாகிய புஷ்பங்களோடுகூடிய சம்பகவிருக்ஷ சம்பந்தத்தால் மணமுற்ற வாயுப் பத்துத்திசையினும் சலித்து ஆநந்தத்தை யடைவிக்குமாறு புண்ணியவானுடைய் கீர்த்தியும் பத்துத்திசையுஞ்சென்று நூலுணர் நல்லோர்க்கு ஆநந்தத்தை யடைவிக்கும். தனது மாணத்தினும் பயத்தையடையாதவனும், தனது ஸ்திரீ முதலியவை சென்றகாலத்தும் பயத்தையுறாதவனும், பாவகருமத்தின்மாத்திரம் பயத்தையுற்றவனுமாயவன் புண்ணியவானவன். ஒரு குழியின்மேல் அநேகங் கூர்மையாய கட்கதாரைகளை நிரப்பியிருப்பின், அதைத் தாண்ட அசுவாதி வாகனமற்ற மிருதுவாய பாதத்தையுடையவனுக் குண்டாம் பெரும் பீதிபோலவே அறிஞனுக்குப் பரமேசுரன்பாற் பீதியுண்டாமாதலின் பாவத்தைப்பண்ணான். எப்பரமான்மாவின் பயத்தால அறிஞன் பாவத்தினின்றும் நீங்குவனோ, எதனை அறிஞன் தனது ஆன்மரூபமாயறிவனோ அது நாராயணரினும் வேறன்றும்; மற்றோ, அவ்வடிவமேயாம். எது பரமாணு முதலிய சூக்ஷ்ம பதார்த்தத்தினும் அத்தியந்தம் சூக்ஷ்மமாமோ, எது ஆகாசாதிய பெரியதினும் மிகப் பெரியதாமோ எது உயிர்களின் இருதயக்குகையின்கண்ணே புத்திமுதலிய சாக்ஷிரூபத்தாற் றிதமாமோ, அத்தகைய தூய பரமான்மாவை யாவன் குருசாஸ்திரப் பிரசாதத்தால் தனதான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரிப்பனோ, அவன் சர்வ சோகத்தையும் கடப்பன். இப்போது பரமான்மாவின் அத்விதீயரூபத்தன்மையை வெளிப்படுத்தும்பொருட்டு முதலில் அதன்கண்ணே சர்வ ஜகத்காரணத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! புண்ணியபாவங்களின் அநுசாரமாய்ச் சர்வ பதார்த்தங்களையு மடைவிக்கும் ஜகதீசுரரே அத்விதீயப் பிரஹ்மரூபராவர். ஏனெனின், ஏழுலோகத்தே நிகழாநின்ற எழுவகையாய சரீரங்களிருப்பதால் எழுவகையையடைந்த பிராணனும் அவரினின்றேயுண்டாம். அப்பரமான்மாவினின்றே பௌமம், ஜாடாம், சூரியன், சந்திரன், மின்னல், வாடவும், சக்ஷு என்னும் எழுவகை அக்கினியுண்டாம், காட்டத்திலிருப்பது பௌம

மாம், உதரத்திலிருப்பது ஜாடாமாம், சமுத்திரத்திலிருப்பது வாடவமாம்; அதனினின்றே ஏழுவகையாய சமித்துண்டாம். அவை இவ்வையாம்:—சுவர்க்கம், மேகம், பூவுலகம், புருஷன், ஸ்திரீ என்னும் பஞ்ச அக்கினிகட்கு முறையே ஆதித்தியன் வாயு, சம்வற்சரம், வாக்கு, உபஸ்தம் என்னும் பஞ்சசமித்துக் களாம். இவ்வார்த்தையை ஆறுவதத்தியாயத்தே விஸ்தாரமாய்க் கூறிவந்தேம். சுருதிப்பிரசித்தமாய ஆஹவநீய கார்ஹபத்திய முதலிய அக்கினிகட்குக் காஷ்டா திரூப சமித்தாம். ஸ்மிருதிப்பிரசித்த ஆவசத்திய அக்கினிக்கும் காஷ்டாதிரூப சமித்தாம் அதனினின்றே, பூ, புவ, சுவ, மக, ஜன, தப, சத்தியம் என்னும் ஏழுலகங்களுண்டாம். அதனினின்றே காலீ, கராலீ, மனோஜவா, சுலோகிதா, தூம்ரவர்ணா, ஸ்புலிங்கினீ, விசுவரூபி எனனும் அக்கினியின் எழுநாவுண்டாம். ஏழுலகத்தே சஞ்சரிக்கும் சர்வ ஜீவர்கட்கும் பாகியப்பிராணனாய ' நாற்பத்தொன் பது ' மருத்கணங்களும் அதனினின்றேயுணடாம். அதனினின்றே ஏழுகடலுண் டாம், ஹிமாலயாதி பர்வதங்களுண்டாம், சம்பூரண நதிகளுண்டாம். நெல், கோதுமை முதலிய ஓடதிகளுண்டாம். அதனானே இத்தேகம் ஜீவிக்கும்; அதுவே இச்சீவித சரீரத்தேயிருக்கும். அக்கினி முதலிய சர்வ தேவதைகளுள் எதற்கு ஹிரண்யகருப்பாதி தேவதைகள் முக்கிய விபூதியா யாவரோ, எதனை மதிமான்வேதவசன விசாரத்தால அறிவனோ, எதனை மதிமான் நெய் முதலிய திரவியரூபத்தானும யாகரூபத்தானும வருணிப்பனோ, எது இந்திராதி சர்வ தேவதைகளாற் பூச்சியமாமோ, சர்வ தேவதைகளினும் முன்னரிருப்பதாமோ, எது சர்வப்பிராணிகளின் இருதயதேயத்தேயிருந்து சித்தத்தின் சர்வ விருத்திகளையும் காணுமோ, எது ஹிரண்யகருப்பனைச சிருட்டித்து தனதனுக்கிரகதிருஷ்டியால் சர்வஞ்ஞத்தன்மையை அவருக்கடைவிப்பதாமோ, அத்தகைய நாராயணரூப பரமான்மா நமக்குச் சுபபுததியை யடைவிக்குக. ஹே குழந்தாய்! இவ்வாறு அதிகாரி பரமான்மாவைத் துதித்தபோது பரமான்மா மகிழ்ந்து அதிகாரிக்குத் தன்துண் மைவடிவத்தைக்காட்டும. அவ்வடிவத்தினுமதிகமாய் எதுவுமின்றாம. சூக்ஷ மமா யெதுவுமின்றாம. அவ்வடிவம தருவைப்போல நிச்சலமாம். தனது சுவப் பிரகாசரூபததே யிருப்பதாகும, ஏக அதவிதீயரூபமாகும். அவ்வடிவத்தால் இவ் வெல்லா வுலகும் நிறைந்திருக்கும. இத்தகைய தனது வடிவத்தை அது அதிகாரி கட்குத் தரிசிப்பிக்கும். இத்தகைய நாராயணரூப பரமான்மப்பிராப்தி அக்கினி ஹோத்திராதிகளானும், அநேக புத்திர பௌத்திராதிகளானும் சுவர்ணாதிரூப தனத்தானும் உண்டாகாதாம; மற்றோ, யாவறறையும் தியாகித்தேயுண்டாம். " நகர்மணா நப்ரஜயா தனேந த்யாகேனைகே அம்ருதத்வமானசு: " பூர்வம் அதிகாரிகள் அக்கினிஹோத்திராதி கருமஙகளானும், புத்திராதிப்பிரஜைகளா னும், சுவர்ணாதிதனத்தானும் பிரஹ்மபாவப் பிராபதிரூப மோக்ஷத்தையடை திலர்; மற்றோ, அவ்வியாவற்றையும் பரித்தியாகித்தே அதனை யடைந்தனர். ஹே குழந்தாய்! இவ்வாறு பூர்வம் அநேக ஆயிரம் மனுடருள் ஒரு பாக்கிய வானே யாவற்றையும் விடுத்து நாராயணவடிவ மோக்ஷத்தையடைந்தனனுதலின் தியாகமின்றி வேறொரு சாதனமுமின்றாம்; மற்றோ, தியாகமொன்றே மோக்ஷ

அடைவில் முக்கிய சாதனமாம். சுவர்க்காதி சுகத்திலும் மிகவும் மேலாகிய ஆனந்தவடிவப் பரமான்மரூப மோக்ஷத்தை முன்னதிகாரிகள் எல்லாவற்றையும் தியாகித்தடைந்ததேபோல இப்போதும் எவன் மூவேடணைகளையும் பரித்தியா கித்துச் சந்நியாசத்தைக்கவர்ந்தனனோ அவனே குருசாஸ்திர வுபதேசத்தால் மோக்ஷத்தையடைவன். சரீராதிகளிடத்தே யானென்னும் அபிமானத்தைவை த்துப் புத்திராதிகளிடத்தே எனதென்னும் அபிமானத்தைவைத்து அவற்றைப் பரித்தியாகஞ்செய்யாத இராகமுடையவன் மோக்ஷத்தைபடையான்.

சங்கை :—ஹே பகவன்! ஈண்டு எத்துணையோ சந்நியாசிகட்கும் ஆன்மசா க்ஷாத்கார அடைவு காணவில்லையாதலின் தியாகத்தே அதன் காரணத்தன்மை சம்பவியாதாம்?

சமாதானம் :—ஹே குழந்தாய்! சந்நியாசத்தாலும், சித்தநிரோதரூப யோ கத்தாலும் மனத்தூய்மைபடைந்தவரும், சமதமாதிசாதனங்களோடு கூடியவரும், வேதாந்தவாக்கியவிசாரத்தால் தத்துவம் பதார்த்தசோதனஞ்செய்தவரும் ஆகிய சாதனசம்பன்ன சந்நியாசிகட்கு ஒருதடையைத்தால இப்பிறப்பில ஆன்மசாக்ஷாத் காரமுண்டாகாதாயின் தேகத்தைவிடுத்து அர்ச்சிராதிவாயிலாய்ப் பிரஹ்மலோகத் தையடைந்து பிரஹ்மாவின் சமானத்தன்மையையடைந்து ஆன்மசாக்ஷாத்கார த்தை யடைவுற்றுப் பிரஹ்மாவின் அந்தியகாலத்தே அவரோடே விதேகமுத்தியை யடைவர். ஆகையால், சர்வபதார்த்த பரித்தியாகமே ஆன்மஞானவாயிலாய் மோ க்ஷசாதனமாம். பதினொருவாயில்களையுடைய சரீரபுரத்தைப் பரமான்மா உண்டா க்கியது, அதன்கண்ணிருக்கும் அங்குஷ்ட அளவுடைய இருதயகமலவில்லத்தே அமைந்தமர்ந்திருக்கும். அதனைத் தனதான்மவடிவெனவுணர்ந்தே சந்யாசியானவன் இவ்வுலகத்தும் பிரஹ்மலோகத்தும் மோக்ஷத்தையடைவன்; அவ்வுணர்வின்றி எவ்வுலகத்தும் மோக்ஷ அடைவுண்டாகாதாம். ஆகையால், ஹே சந்நியாசிகளே! பிரஹ்மலோகத்தும் யதிகட்கு ஆன்மசாக்ஷாத்கார அடைவுண்டாம என்பதைக் கேட்டு நீங்களும் இப்பிறப்பில் அம்முயல்வை விடடுவிடாதீர்கள்; மற்றோ, இம மனுடசரீரத்திலே மோக்ஷத்தைபபயக்கும சாக்ஷாத்காரத்தைச சம்பாதிக்க வேண்டும். நெடுநாட்குப்பின் அடையத்தக்கதாய பிரஹ்மலோகத்தே ஆசையை த்து இப்பிறப்பில் முயலாதிராதீர்கள். இப்போது அதன்பொருட்டுப் பிரணவத் தியானத்தை நிரூபிப்பாம் :—ஹே குழந்தாய்! மகாவாக்கிய விசாரத்தால் ஆன்ம சாக்ஷாத்காரமுண்டாகாத அதிகாரிகட்கு ஓங்காரரூபப் பிரணவ விசாரத்தானே அஃதுண்டாம். அது வருமாறு :—மனத்தைவெல்ல இச்சித்த மகாத்மாக்களின் ஆனந்தவடிவ ஆன்மாவின்கண் இவ்வோங்காரமே கிரீடிக்குமாதலின் சுருதிபகவதி அதனை ஸ்வரம் எனக் கூறினள். அது வேதத்தின் ஆதியினு மந்தத்திலும கூறப் பெற்றுளது. அது தன்னிலயகாலத்தே எப்பரையாகிய காரணத்தே இலயமாமோ அதினினும் பரமாய தூயசேதனமே என துண்மைவடிவமாம் என வெப்போதுஞ் சிந்தனைசெய்யும் அதிகாரிக்கும் அவசியம் ஆன்மசாக்ஷாத்கார அடைவுண்டாம. இருதயதேயத்திருக்கும் எதனை முன்னர் அணுவினும் அணுவெனக்கூறினேமோ அதனை நீ மகத்திலும் மகத்தெனவுணர்தி; ஏனெனின், ஈண்டு ஜீவர்கட்குள்ள ஸ்தூலசூக்ஷமசரீர இந்திரிய பிராணன்கள் முதலியன பரமான்மாவினவேயாம். அதுவே

உயிர்கட்கு அறம்பாவ அநுசாரமா யின்பத்துன்பங்களையடைவிக்கும். இத்தகைய் சயஞ்சோதியாய சர்வான்மதேவரைச் சுருதிபகவதி நாராயணர் என்னும் நாமத்தால் அழைத்தனள். இப்போது அந்நாராயண சப்தத்திற்குப் பதினொருவகை அருத்தங்கள் நிரூபிக்கப்பெறும் :—ஹே குழந்தாய்! தனது சமீபத்தன்மைமாத்திரையானே யாது சர்வ பதார்த்தங்களையும் தத்தமது காரியத்தே முயல்விக்குமோ அது நர எனப்படும். அதற்கிம்மாயை திருசியரூபமாய்ச் சம்பந்தியாதலின் மாயைக்கு நாராவெனப்பெயராம். இச்சூக்ஷுமப் பிரபஞ்சம், மாயையின் காரியமாதலின் இது நாரவெனப்பெறும். இவ்விரண்டன்கண்ணும் அது பிரதிபிம்பரூபமாய் நிகழுமாதலின் அம்மாயாவிசிஷ்டப் பரமான்மாவையும், அச்சூக்ஷுமப்பிரபஞ்ச விசிஷ்ட இரணியகருப்பரையும் சுருதிபகவதி நாராயணரென அழைத்தனள். அல்லது, பரமான்மரூபநரன் உண்டாக்கிய நீர் நாராவாம். அது விராட்டுக் காதாரமாயிருத்தலின் அதனை நாராயணரென அழைத்தனள். அல்லது, நதியின் நீர்ஓடத்திற்காதாரமாவதேபோலப் பூமியாகிய ஓடத்தின் ஆதாரமாகிய நீர் பரமான்மாவினின்றே யுண்டாமாதலின் அது நாராவெனப்பெறும். அதனைப் பரமான்மாவே சூத்திரான்மவடிவப் பிராணரூபத்தால் தாரணஞ்செய்தலின், அதனை நாராயணரென அழைத்தனள். அல்லது, தூலப்பிரபஞ்சத்தைச் சரீரமாகவுடையவிராட்டும், சூக்ஷுமப்பிரபஞ்சத்தைச் சரீரமாகவுடைய இரணியகருப்பரும் நரரெனப்பெறுவர். அவ்விருவரின் திதி பரமான்மாவிடத்தேயாமாதலின் அதை நாராயணர் என அழைத்தனள். அல்லது, பரமான்மாவின் பிரதிபிம்பரூபஜீவர் நரரெனப்படுவர்; அவர் தம் நிரூபணம் பிம்பரூப அதனானேயுண்டாமாதலின் அதை நாராயணர் என அழைத்தனள். அல்லது, ஜீவர்களிடத்தே இயல்பானே துணியப்பெற்ற காமக்குரோதாதி தோடங்கள் அர எனப்படும். அவற்றானுண்டாய துக்கம் ஆரவாம். அதற்காசிரயமாய அஞ்ஞானாதி ஜடப்பிரபஞ்சம் ஆராயணமாம். அது சுயஞ்சோதியானந்த ஆன்மாவின்கண்ணே முக்காலத்துமின்றாமாதலின் நாராயணரென அழைத்தனள். அல்லது, அவித்தையாதி பஞ்சக்கிலேசங்கள், அறம்பாவம், இன்பத்துன்பம், அவற்றின் வாசனை என்பன யாவும் சம்சாரசக்கிரத்தின் அராக்களாம்; இவற்றிற்கு மாயை பரிணாமி யுபாதானமாமாதலின் இது ஆராயணமாம். இதனினும் கூடஸ்தப் பரமான்மா வேறாமாதலின் நாராயணரென அழைத்தனள். அல்லது, கற்பிததாதாத்மிய அத்தியாசரூப சம்பந்தத்தால் மாயையாகிய நாரியின் ஸ்திதி பரமான்மாவின்கண்ணேயாமாதலின் அதனை நாராயணரென அழைத்தனள். அல்லது, பரமேசுரரூப நரசம்பந்தி இலக்குமி, நாரியெனப்படுவள். அவ்வம்மை, சர்வதேகதாரிகட்குப் பிரியையும், அநேக கலையோடுகூடியவளும், அநேகரூபமுடையவளும், அத்தியந்தம் மனோரமையும், புண்ணியவான்கட்குச் சந்ததம் சுகங்கொடுப்பவளும், பாவிகட்குத் தன்னையடைவியாமலும் நாசத்தானும் எப்போதும் துக்கத்தையடைவிப்பவளும் ஆவள். அந்நாரி பரமான்மபுருடனிடத்தே நிச்சலமாய் நிலைபெறுவளாதலின் நாராயணர் என அழைத்தனள். அல்லது, ஆனந்தவடிவதிருஷ்டாவாய ஆன்மாவிற்கு நான்வகையாய பதார்த்தங்களைக் காண்கின்றும் சர்வஜீவர்களின் புத்தி நாரியாம்; அதனை ஆன்மாவே யொளிர்விக்குமாது

வின் நாராயணரென அழைததனள. அலலது, பரமானமாவினும் வேறாய் ஒரு சிறிதுமின்றாமாதலின் நாராயணரென அழைத்தனள். இவ்வாறு நூலுணர்ந்தோர் நுவல்வர். இந்நாராயணரே சுயஞ்சோதிரூபர், அக்ஷரரூபர், பரமபதரூபர், சர்வ விசுவத்திலும் பரமானவர், சர்வ விசுவரூபர், சநாதனர் ஆவர்; ஹே குழந்தாய்! இத்தகைய நாராயணரைச் சிரத்தைபக்தியோடு நினைந்து தியானிக்கும் அதிகாரிகளின் பஞ்சக் கிலேசங்களையும் சர்வ பாவங்களையும் இவரே அழிப்பராதலின் கருதிபகவதி இவரை ஹரி என்றனள். இவரே யாவற்றையுமுண்டாக்கி இரக்ஷிபபராதலின் பதி என்றனள். இவர் தமதஸ்திபாதிப் பிரியரூபத்தால் இவ்வெல்லாவுலகத்தையும் வியாபிப்பராதலின் ஆன்மா என்றனள். இவர் சர்வ மங்கலங்கட்கும் மங்கலரூபர், பரம கல்யாணரூபராதலின் சிவம் என்றனள். இவ்வாநந்தக்கடலின் ஒரு பிந்துமாத்திர ஆநந்தத்தைக்கவர்ந்து இரணியகருப்பரும் ஆநந்தமடைந்திருக்கின்றனராதலின் இதை ஆநந்தம் என்றனள். காலத்தால் கடாதிகள் நாசமாதல் ச்யுதியாம் அது பரமான்மாவின்கண்ணின்றாம்; ஏனெனின், இது காலரூபமிருத்தியுவிற்கும் பயகாரணமாம், காலத்திற்குங்காலமாம். ஆகையால், அச்யுதன் என்றனள். இது சூரியாதி சர்வ ஜகத்திற்கும் நியந்தாவாதலின் ஈசுரன் என்றனள், இது எக்காலத்தும் எத்தேயத்தும் வேற்றுருவையடையாது; மற்றே, எப்போதும் யாண்டும் ஏகரசமாமாதலின் சாசுவதம் என்றனள். இது பிரஹ்மாதி மகாபுருடராலறியத்தக்கதாமாதலின், மகாஞேயம் என்றனள். இதுவே சர்வபூதங்கட்கும் பராகதியாதலின் பராயணம் என்றனள். இது அக்கினிமுதலிய ஜடஜோதிகளினும் புத்தி முதலியவற்றே யுலவும் சிதாபாசரூப சிற்சோதியினும் மிகவும் மேன்மையதாதலின் பரமஜ்யோதி என்றனள்; அவ்வாறே பிரஹ்மமெனவும், பரமதத்துவமெனவும் கூறினள். ஹே குழந்தாய்! தியானிப்பவன், தியானாகாரவிருத்தி, தியானிக்கும் வஸ்து என்பனவாதிய சம்பூரண ஜகத் நாராயணரூபமேயாம். காணப்பட்டவை கேட்கப்பட்டவையாய சம்பூரண ஜகத்தின் உள்ளும் புறம்பும் நாராயணரே வியாபித்திருக்கின்றனர். இவர் ஆநந்தவடிவர், உற்பத்தி நாசமற்றவர், ஸ்வப்பிரகாசரூபர், சர்வ ஜகத்தையும் ஒளிர்விப்பவர், சம்சார சமுத்திரகாரணமாகிய மாயையின்கண்ணே நியந்தாவடிவமாயிருந்தபோதினும் உண்மையாய் விகாரமற்றவர். இப்பரமான்மா யாண்டும் நிறைவுற்றிருப்பினும் இருதய கமலத்துண்ணின்ற சூக்ஷ்ம மதியினானே அறியத்தக்கதாம். இதனானே இதை முன்னம் அணுவென்றதாம். இதனை வெளிப்படுத்தும்பொருட்டு முதலில் இருதயகமலவடிவம் நிரூபிக்கப்படும்:—ஹே மைந்த! நண்டு, எட்டுத் தலமுடையதும், இரத்தவர்ணமாயதும், சிறிது விரிந்திருப்பதும் ஆகிய கமலமிருப்பதே போல இருதயதேய சிரத்தே கீட்சியாய ஒருட்கமலமிருக்கின்றது. அஃது அத்தியந்தம் இரமணீயமாயது, ஐந்து துவாரங்களோடு கூடியது, கீழ்முகமுடையது, நாபியினின்றும் பன்னிரண்டு அங்குலம் மேற்றேயத்திருப்பது; அதன் கிழக்குவாயில் நேத்திரமாம், தெற்குவாயில் செவியாம், மேற்குவாயில் வாக்காம், வடக்குவாயில் மனமாம், இடைவாயில் கிராணமாம், நாவதன் மூலஸ்தானமாம், மார்புமுதல் கழுத்திறுவுள்ள உட்டேயம் கமலபூமியாம்; இருதயகமலம் மனமிருக்குமிடமாதலின் நூலுணர்ந்தோர் மானசமென்பர். [illegible] கழுத்தினின்றும் [illegible]

ரண்டு அங்குலம் கீழ்த்தேயத்தே திதமாம்; இரவி, மதி, எரி, உடு, மின் என்னும் ஐந்தின் சமான ஒளியுடையதாம். சம்பூரண விசுவத்திற்காதாரமாம். அற்ப பரிமாணமுடையதாயினும் சர்வாதாரமாதலின் அறிஞனுகிய யோகி அதை மகான் என்பன். வெள்ளி முதலிய தாதுக்களாலாக்கிய சிலைக்குச் சமானமாயோங்கிய வர்ணமுடையதும், இரத்தமாம்சாதிகளால் பூச்சுற்றதும் ஆகிய இத்தேகத்துள்ள நானுவகை என்புகளால் எப்புறமும் அது மூடப்பெற்றதாகும். ஒரு பேரரசனுடைய வீட்டினுள் அவர் கிரீடிக்கும்பொருட்டுத் தடாகமிருப்பதேபோல இருதயமத்தியிலிருக்கும் வாயில் இருதயகமல தடாகமாம். அதன்கண்ணே பரமான்மா வாசஞ்செய்யும். அது அத்விதிய ஆநந்தவடிவமாம், அக்கினியைப்போல ஒளிர்வதாம், சுயஞ்சோதிரூபமாம்; அதன் சிதாபாசரூப ஜ்வாலை மதிமுதலிய எல்லா உலகின்கண்ணுமிருக்கும். மதிமுதலிய சர்வ சங்காதங்கட்கும் மிக அண்மையதாம். அஃதே மதிரூப உபாதியை யங்கீகரித்துச் சர்வ விஷயஜன்னிய சுகத்தையடையும். பிராண ஜாடராக்கினிரூபமாய்ப் புசித்த அன்னத்தைத் தூல, மத்யம, சூக்ஷுமமென்னும் மூன்று விபாகஞ் செய்துகொண்டு எல்லாவுயிரின் உதரத்தின்கண்ணுமிருக்கும். ஜாடராக்கினிவடிவப்பரமான்மாவின் பசிதாகக் குரோதாதிரூப கிரணங்கள் கீழ்மேலிடையில் தேஜசால்வியாப்தமாம். அக்கிரணங்களால் அது நகசிகைவரை ஆக முழுதையும் தபிப்பிக்கும். ஹே குழந்தாய்! இத்தகைய பரமான்மாவை அதிகாரி இருதயகமலத்தே தியானித்துப் பரமான்மசாக்ஷாத்காரத்தையடைவன். இவ்வாறு அவ்விருதயகமலத்தே பரமான்மாவைத்தியானித்தும் அதிகாரிக்கு அது சச்சிதாநந்தரூபமாய்த் தோன்றுதாயின் வேறு வகையாய்த் தியானிக்குக. இருதயகமலமத்தியில் ஒரு தீபத்தின் சிகையிருக்கின்றது. அஃதத்தியந்தம் சூக்ஷுமமாம், மேற்றேயத்தேயோங்கி யெரிவதாம், நிச்சலமாம், கார்மேகத்துற்ற மின்னல்ரேகையைப்போன்றொளிர்வதாம். வரகின்வாற்போலத்தியந்தஞ் சூக்ஷுமமாம். பொன்போன் மஞ்சணிறத்ததாம், சூக்ஷுமமாயினும் பிரகாசமுடையதாம் அத்தகைய சிகையிடையில் பரமான்மாவிருக்கும். அது பிரஹ்ம சிவஹரிரூபமாம், யாவினும் சனாதனமாம், இந்திரரூபமாம, அக்ஷரரூபமாம், எல்லா வுலகின் பிரபுவாம், தனது ஸ்வப்பிரகாசரூபத்தால் விளங்கிக்கொண்டிருப்பதாம். இத்தகைய பரமான்மாவை அதிகாரி தீபச்சிகையின்கண்ணே தியானஞ்செய்து பரமான்ம சாக்ஷாத்காரத்தைப பெறுக. இதுவே உபாதியின் சம்பந்தத்தால் ஹிரண்யகர்ப்பத்தன்மையையும் விராட்டன்மையையும் அடையுமாதலின் சுருதிபகவதி இதனை ஆதித்தியாதியநேகரூபமாய் வருணிப்பள். இதன் சாக்ஷாத்காரத்தானே அதிகாரிக்கு மோக்ஷமுண்டாம். ஹே குமர! இது விவேகமுடையவர்க்குண்டாகாதாம்; மற்றோ, அஃதின்றிய உண்முகர்க்கேயுண்டாமாதலின் சுருதிபகவதி தருமம், சத்தியம், தவம், தமம, சமம், தானம், பிரஜனனம், ஆகுதிதாக்கினி, அக்கினிஹோத்திரம், யாகம், மாநசம் என்னும் பதினொரு சாதனங்களைத் துதித்து அவற்றினும் சந்நியாசம் மேன்மையதென வுணர்த்தினள். இதனுற் சந்நியாச முக்கியத்தன்மையின்கண்ணே பகவதியின்கருத்தென வுணர்த்துகொள்ளலாம். அதன் மேன்மையையுணர்த்தற்பொருட்டு முதலில் கூறிய

பதினொன்றின் வடிவத்தையும் பலத்தையும் நிரூபிப்பாம்:—அவற்றுள் தருமம் நான்கு வருணங்களையும், நான்காசிரமங்களையும் கொண்டவர்க்கு நால்வகைப் புருடார்த்தத்தையும் அவற்றின் சாதனத்தையுங் கொடுப்பதாம். என்னை? அத்தியந்தங் கடினமாயகாரியத்தையும் தருமமே சித்தஞ்செய்யுமென்க. இஃதே எல்லாவுலகையுங்காக்கும் பரமேசுரரது சாத்விகமூர்த்தியாம். இதனானே மார்க்கத்தேயிருக்கும் பத்திரபுட்பபலாதியானிறைந்த தருவைநெறிச்செல்வோன் சேவிப்பதே போலத் தருமான்மாவை யாவரும் ஆசிரயிப்பர். அறிந்தேனும் அறியாமலேனும் செய்த பாவமனைத்தையும் இத்தருமமே யழிக்குமாதலின் இதுவே உயிர்களின் சிரேயஸ் சாதனமாம். ஆவிற்கு நான்குபாதமிருப்பதேபோல இதற்குமசத்தியம், தவம், தயை, தானம் என நான்குபாதங்களுண்டு. அத்தகைய இதை அதிகாரிகள் பிறந்ததுமுதலிறக்கும்வரை அவசியம் சேவிக்க. ஹே மைந்த! முதற்பாதத்தைப பலத்தோடு கேட்டி! தனது கண்களிற் கண்டவாறும், தர்மான்மாக்கள் வாயிலாய்க் கேட்டவாறுமே வாயால் விருத்தாந்தத்தை வழங்குதல் சத்தியமாம். அல்லது காரியத்தைச்செய்வதாய் வாயாற்செய்த பிரதிஞ்ஞையை நழுவாமை சத்தியமாம். இது வாக்காற் சித்தமாமாதலின் வாசனிகதருமமாம். மறுமையிற் பயன் பயப்பனவாய யாகாதிகள் வைதிககருமங்களாம், வியாபாராதிகள் இலெளகிககருமங்களாம். இரண்டின்மாட்டுமுள்ள முபல்வுசத்திய வசனத்தானேயாம். இஃதின்றி எக்கருமத்தும் முயற்சி சம்பவியாது, தருமராஜா முதலியோர் தூலதேகத்தோடும் சுவர்க்கமுற்று இதுவரை கீழ்நோக்கிலர்; இஃதுண்மைமொழியின் மகிமையேயாம். இதனானே வாயுத்தனது மரியாதைப்படி சலிக்கின்றது, சூரியன் எல்லாவுலகங்களையும் ஒளிர்விப்பன், பிருதிவிநீர்மேனிற்கும். சம்பூரணதேவதைகள் இதன் வலுவானே தத்தமததிகாரத்தை நிர்வகிப்பர். இதனையதிகாரி அவசியம் சம்பாதிக்குக. ஹே மைந்த! இரண்டாவது பாதத்தைப் பலத்தோடுங்கேட்டி! தன் மனத்தே திடசங்கற்பதாரணஞ்செய்து சீதோஷ்ணத்தைச்சகித்தல், பசிதாகஞ்சகித்தல், அன்னாதியற்றிருத்தல், தவமாம். இதன் மகிமையினானே முனிவர்களும், இந்திராதிகளும் உளம் விரும்பிய சுவர்க்காதி சுகமுறுகின்றார்; ஈண்டிம்மனுடர் பகைவெல்கின்றனர், ஆடையாகிய காரியம் நூலாகிய காரணத்தேயிருப்பதேபோலக் காரிய வுலகம் காரணதவத்தின்கண்ணேயிருக்கும். இதன் மகிமையினானே, துர்வாசாதி முனிவர் வரசாபங்கொடுப்பதிற் சமர்த்தராயினர். இஃதே சர்வகாரியசித்தியினும் அத்தியந்தம் ஒளிபொருந்திய சாதனமாம். இதனானே பூர்வம் விசுவாமித்திராதி மகரிஷிகள் புதிதாய சிருட்டியையமைத்தனர். இத்தகைய தபத்தை அதிகாரி வசியம் சம்பாதித்தல்வேண்டும். ஹே வற்ச! மூன்றாவதுபாதத்தைப் பலத்தோடுங்கேட்டி! தமம் சமம இரண்டும் தயையின் காரணமாம் அவையின்றி அஃதுண்டாகாதாதலின் நூலுணர்ந்தோர் அவற்றைச் சிரேயஸ்சாதனமென்றனர் இனிப் பலசகிததமத்தைக் கூறுவாம். ஈண்டு அடங்கா இடபமும் கயறு முதலிய கொண்டு கட்டுதலினானே அடங்குதல்போலப் பாகியசப்தாதிவிடயங்களிடத்தே தோடதிருஷ்டிசெய்து செவி முதலிய பொறிகளை யடக்கஞ்செய்தல் தமமாம். தமத்தோடுகூடிய பிரஹ்மசாரி பலத்தோடு சர்வபாவகருமங்களையும் பரித்தியாகித்து மரணத்தின்பின்னர்ச் சுயர்க்கலோகத்தையேனும் பிரஹ்மலோகத்தையேனும்

அடைவனாதலின் அதனை அதிகாரியானவன் அவசியம் சம்பாதனஞ்செய்க. ஹே மைந்த! பலத்தோடுஞ் சமவடிவத்தைக்கேட்டி! பெண் முதலியவிடயங்கள் அண்மையிலிருப்பினும் சுர முதலியவற்றால் அவற்றி லிச்சையுண்டாவதின்றுமாற அநேகவகையாயதோட தரிசனத்தால் அவற்றினிச்சையைப் பரித்தியாகித்துக் கேவல ஆனந்தவடிவ ஆன்மாவை யிச்சித்தல் சமமாம். இதன் பலம் உலகத்தும் வேதத்தும் பிரசித்தமேயாம்; ஏனெனின், ஈண்டுச்சமத்தோடுகூடிய முனிவர் பெரியவனத்தேயிருப்பினும் சிம்ம சர்ப்பாதிகளினின்றும் பயத்தையடையார்; மற்றோ, அவர் சமமகிமையால் அவற்றையும் ஹிம்சை முதலிய பாவத்தொழிலினின்றும் நீக்குவர்; காமக்குரோதாதிகளை வெற்றிகொண்டு சுவர்க்காதி யுத்தம லோகங்களையடைவர். இதனை யதிகாரியவசியம் சம்பாதிக்கவேண்டும். இதனானே ஜீவர்கட்கு எல்லா உயிரிடத்தும் தயையுண்டாம். இத்துணையால் தமசம அடைவால் தயையினடைவாம் என்னும் அன்வயங்கொண்டு அவற்றில் தயையின் காரணத்தன்மை கூறப்பெற்றது. இப்போது அவை கிடையாவிடின் அது கிடைக்காது என்னும் வியதிரேகத்தாலும் அவற்றில் அதன் காரணத்தன்மை கூறப்பெறும்:—ஹே குழந்தாய்! ஈண்டுச் சமமற்றவன் காமக்குரோதாதி விகாரமுடையவனேயாவன். தமமற்றவனோ எப்போதும் பொறிகளின் அதீனனேயாவன். பிரமாதத்தையுடைய அவ்விருவரும் காயமனவாக்கால் அவசியம் பூதப்பிராணிகட்கு ஹிம்சைசெய்வர். அத்தகையர் தயையற்றவரேயாவர். அவரிடத்தே ஒருகாலும் தயையின் சம்பாவனையுண்டாகாதாமாதலின் தயையினுற்பத்தி வாயிலாய் இச்சமதமமே ஜீவர்கட்குச் சிரேயஸ்சாதனமாம். ஹே குழந்தாய்! நான்காவது பாதத்தைப் பலத்தோடுங்கேட்டி! வாக்குத்தானம், மதித்தானம், தனத்தானம், காயத்தானம் என இவை முதலாக அநேகவகைத்தானங்கள் உள்ளன. அவற்றுள் அதிகாரிகட்கு வித்தைகொடுத்தல் முதலாவதாம். ஒருவனுக்கு மேன்மையாய மதிதரல் இரண்டாவதாம். சுபாத்திரப்பிராஹ்மணனுக்குச் சுவர்ணம், கோ, அன்னாதிகொடுத்தல் மூன்றாவதாம். சரணடைந்த உயிர்களைப் பகை முதலியவற்றினின்றும் காத்தல் நான்காவதாம். ஈண்டுப் பொன் முதலியவற்றைத்தானஞ்செய்பவனை யாவருந்துதிப்பர். கர்ணராஜா இந்திரருக்குத் தமது தோலைக்கொடுத்தனர், பலிச்சக்கரவர்த்தி வாமனபகவானுக்கு மூவுலகத்தையும் தானஞ்செய்தனர், சிபிச்சக்கரவர்த்தி சரணடைந்த புறாவைக்காக்கும்பொருட்டுத் தமது மாம்சத்தைக்கொடுத்தனர், இவரன்றியும அநேக தருமான்மாக்கள் நானாவகையாய தானஞ்செய்துளார், ஆகையால் அவர்களை யின்றளவும் புகழாதாரில்லை. தானஞ்செய்பவர் இத்தேகத்தை விடுத்தபின்னர்ச் சுவர்க்காதியுத்தமலோகங்களையடைவராதலின் அவர்கட்கு இம்மையினும் மறுமையினும் சுகமுண்டாம். அல்லது ஈண்டுத் தக்ஷிணைவடிவதானத்தானே அசுவமேதாதியாகங்கள் பரிபூரணத்தன்மையையடைகின்றன. மைந்தன் றந்தையைப்பற்றுவதேபோலத் தானகர்த்தாவை யாவரும்பற்றுவர். தானத்தால் சத்துருவும் மித்திருவாம். இதனானே சாமதானபேததண்டமென்னும் நான்குபாயங்களையறியும் அரசர் முதலாயினோர் தானோபாயத்தானே சத்துருவை வசப்படுத்துவர். தானத்தின்கண்ணே யெல்லா வுலகுமிருக்

ரும். இத்தகையதை அதிகாரி அவசியம் சம்பாதனஞ்செய்க. ஓ மைந்த! சத்தியம் முதலிய நான்குயாதங்களோடுகூடிய தருமம் சருவதேகதாரிகட்கும் சாதாரணமாம். அதன்கண்ணே நான்குவருணங்களின், நான்காசிரமங்களின், மூன்றவஸ்தைகளின், அபேக்ஷையின்றும். ஏனெனின், ஐந்து வயதையுடைய துருவன் தவத்தருமத்தால் பரமபதத்தையடைந்தனன். புருவானது அதிதிக்குத் தனது தேகத்தைத் தானஞ்செய்து உத்தமகதியையடைந்தது. ஆதலின் எல்லா வுயிர்கட்கும் தருமஞ்செய்வதன்கண்ணே அதிகாரமாம். இத்துணையால் தருமாதி ஆறு சாதனங்களையும் நிரூபித்தாம். இப்போது பிரஜனனரூப ஏழாவது சாதனத்தை நிரூபிப்பாம் :—ஓ மைந்த! தருமமானது வருணாதிகளை யபேக்ஷியாததேபோல மைந்தர் முதலிய பிரஜைகளின் உற்பத்திரூபப்பிரஜனன சாதனமன்றாம்; மற்றோ, இல்லறத்தையும், யௌவன அவஸ்தையையும் அபேக்ஷித்தே அவர்தம்மடைவாம். பெண்ணின்றி யௌவனமின்றி எவரும் புத்திரோத்பத்தியைச்செய்யார். சாக்ஷாத் பிரஜாபதியும் கூறிய இரண்டுமின்றிப் பிரஜைகளை யுண்டாக்குவதிலசமர்த்தரே யாயின் மற்றையர்வார்த்தையென்னும்? புத்திர பௌத்திராதிப் பிரஜைகளையுடையவன் இவ்வுலகத்தே கீர்த்தியையும் சுகத்தையும் பகைவெற்றியையும் அடைவன். புத்திரனையுடையோன் பிதிர்க்களின் இருணத்தினின்றும் விடுபட்டவனாய் மரணத்தின்பின்னர்ச் சுவர்க்கத்தையடைவன். பிரஜைகள் சம்சார சம்பந்தியாய சுககாரணமேயாவர், மோக்ஷசுக காரணமாகார்; மாறாக இராகத்தையுண்டாக்கும் வாயிலாய் மோக்ஷத்தே தடையேயாவர். விடயாசக்த இராகியோ பிரஜைகளையே மோக்ஷகாரணமென்பன். அவனைக் கண்டிக்கும்பொருட்டு முதலில் அவன் மதத்தைக் காண்பிப்பாம் :—காமரூபச்சுரபீடிதனாய அவிவேகி புத்திராதிப்பிரஜைகளையே மோக்ஷகாரணமென நினைவன். அபரகிர்முகன் அவ்வர்த்தசித்தி செய்வதில் இவ்வகையாய யுக்தியைக்கூறுவன் :—இவ்வுலகத்தே ஏழுமாடிகளையுடைய உயர்ந்த கிருகத்தின் சிகரத்தின்மேலேறுபவன் படியைத்தழுவியே செல்வன். அதினும் முதற்படி இரண்டாவதுபடி மூன்றாவதுபடியென்னும்முறையிற் பாதம் வைத்துப் பையப்பையபட்டிகளேறிச் சிகரத்தையடைவன், படியின்றியோ அடையமுடியாதாம். அதுபோல ஈண்டுத் தர்மார்த்தகாமமோக்ஷம் என்னும் சதுர்விதப் புருடார்த்தங்கள் உயிர்களால் அடையத்தக்கனவாம். அவையும் முன் முன்னதின் அடைவின்பின் பின்பின்னதின் அடைவென்னும் முறையேயாம். முறையின்றி யாகாதாம். முதலில் தருமத்தையும் பின் அர்த்தத்தையும் பின் காமத்தையும் பின் மோக்ஷத்தையும் அடைவன். இம்முறையின்றி முதலிலே மோக்ஷத்தையடையான். தருமாதிகளின்கண்ணே அருத்தாதிகளின் காரணத்தன்மையின்னமாம் :—தருமமே யர்த்தகாரணமாம், ஏனெனின், உலகர் துன்புடைய தரித்திரியைப் பாவியென்பர். சுகியாயதனிகனைப் புண்ணியவானென்பர், இதனாற் றருமத்தே அர்த்தகாரணத்தன்மையாமன்றோ?

சங்கை :—எத்துணையோ தனிகர் அறஞ்செய்வதில்லையாதலின் அவர்பாற் புண்ணியவான்கள் என்னும் வியவகாரம் சம்பவியாதாம்?

சமாதானம் :—தருமம் இருவகையாம்: ஒன்றோ, இத்தேகத்தே செய்யப்பட்டு இதன் கண்ணே பலவுண்டாவாம்; இவ்வர்கத்தே செய்யப்பட்ட காரியென்ப

பெரியயாகம் இதன்கண்ணே மழைவடிவப்பயனைத் தருவதேபோலும், புத்திர இஷ்டியாகம் புத்திரரூபபலத்தைத் தருவதேபோலும். மற்றென்றோ, இவ்வாகத் தாற் செய்யப்பெற்றது இவ்வாகத்தே பயன் தராது ; மற்றோ, மறுமையிற்றரும். இருச்சிரசாந்திராயணாதி விரதம்போலும். இப்பிறப்பிற் புண்ணியத்தைச் செய் யாது கேவலம் பாவத்தையேசெய்யும் தனிகனிடத்தே முற்பிறப்பின் புண்ணிய கற்பனை செய்யக்கூடும். அதனானே இப்பிறப்பில் அவனுக்குச் சுகவடைவாம். காரணமின்றிக் காரியமுண்டாகாதாம் இது சர்வ சாஸ்திரக்காரரின் சித்தாந்த மாம். காரியங்கண்டு காரணங்காணுமிடத்தே காரிய ஹேதுவால் காரண அனு மானமாமென்பது கருத்தாம், நதியின் நீர்ப்பெருக்கின் காரணமாய மழைதூர தேயத்திருப்பதாதலின் காட்சிப்படுவதின்றாம், நீர்ப்பெருக்கின் ஏதுவால் மழை யின் அனுமானமாவதேபோல, உண்டாம் சுகமி யாவும் அறத்தாலுண்டாவதாம், அறமின்றி யின்மின்றுமாதலின் சுகஹேதுவால் பாபாத்மாவாய தனிகனது பூர்வ ஜன்ம புண்ணியத்தின் அனுமானமாம். இவ்வாறு நாய் முதலிய பசுக்கட்கும் பெண்போகம் முதலியவற்றால் ஆனந்தமுண்டாவதும் பூர்வபுண்ணியத்தானே யாம் அறம் இருவகையாவதேபோல மறமும் இருவகையாம். சிலவோ, ஈண்டு செய்தன ஈண்டே துன்பந்தரும். சிலவோ இம்மையிற்செய்தன மறுமையிற் றுன் பம்பயக்கும். இம்மையில்தெரிந்து பாவகருமஞ்செய்யாது எப்போதும் புண்ணியத் தையே செய்பவனிடத்தும் அநேகவகைத் துக்கம் காணவருகின்றதாதலின் பூர்வ ஜன்மபாவம் அனுமிக்கப்பெறும். ஜீவர்கட்கு எத்துணைவிடய ஜன்னியசுகம் பிராப் தமாமோ அவை தருமத்தானேயாம். தருமான்மாக்கட்குக்கிடைக்கும் விடயசுகம் பொருளின்றிக் கிடைக்காதாம் ; ஏனெனின், தர்மான்மாவாயிருப்பினும் பெண் ணின்றி விடயசுகத்தையும் புத்திராதிகளையும் இல்லறத்தையுமடையான், அன்ன மின்றிப் பசி நீக்கான். தரித்திரியின் சமீபத்தே ஸ்திரீ முதலியவையிருப்பினும் சுகத்தையடைவியாவாதலின் தனநிரூப அர்த்தமேகாமசுகத்தின் காரணமாம் ; ஏனெனின், தனமற்றபதியைப் பதிவிரதையும் விட்டுவிடுவாள். பந்துக்களும் மித் திரர்களும் மற்றையரும் ஆதரியாது நிராதரமே செய்வர். பிணம் ஒரு காரியஞ் செய்வதன்கண்ணே யாற்றலற்றதேபோலத் தனமற்றவனது குலம் சீலம் நானு வகை வித்தைகள் சிறிதுமாத்திரையும் காரியஞ்செய்வதி லாற்றலுடையனவன்றாம், தனவானாயிருப்பவனே நானுவகைப்போகத்தையும் சுவர்க்கத்தையும், பெரும் புக ழையும், நானுவகைக் குணங்களையும் அடைவனாதலின் தனரூப அருத்தத்தானே ஸ்திரீசம்போக ரூபகாமத்தையடைவன் ; தனமின்றி அதுகிடைக்காதாமாதலின் அர்த்தம் காமகாரணமாம். அல்லது, விடயசுக இச்சைவடிவகாமத்தை யடையாத தேகதாரிகள் மூவுலகத்துமின்றாம் ; மற்றோ, எல்லா அவஸ்தைகளையுமுடைய ஆண் பெண் [illegible]லிவடிவ ஜங்கமப்பிராணிகளும், விருக்ஷாதிவடிவ ஸ்தாவரப்பிராணி களும், விடயசுக இச்சைவடிவகாமத்தானே நிறைந்தவசாவர். காமமற்ற பிராணி யொன்றுமின்றாமாதலின் விடயசுகபோகமின்றி எவ்வுயிர்க்கும் வைராக்கியப் பிரா ப்தியுண்டாகாதாம் ; போகத்தின்பின்பே வைராக்கிய அடைவுண்டாமாதலின் [illegible]முன் பிரஹ்மசரிய ஆசிரமத்தே மோக்ஷாதிகாரியாகான் ; இருஹல்த

ஆசிரமத்தின்பின்பே யாவன். அல்லது, வைராக்கியவானே மோக்ஷாதிகாரியென் பது வேதாந்தசாஸ்திர சித்தாந்தமாம். இராகப்பிரத்வம்சாபாவம் வைராக்கிய மாம். அது இராக உற்பத்தியின்றியே யுண்டாமா? அல்லது இராக உற்பத்தியின் பின்னருண்டாமா? முதலாவதுபக்ஷம் சம்பவியாதாம்; ஏனெனின், பிரத்வம்சா பாவத்திற்கே பிரதியோகியும் காரணமாம்; அஃதின்றி யஃதுண்டாகாதாம். தண்டத் தாலுண்டாய கடப்பிரத்வம்சாபாவத்தே 'தண்டங் காரணமாவதேபோலக் கடரூ பப்பிரதியோகியுமாம். கட உற்பத்தியின்றிக் கடப்பிரத்வம்சாபாவ முண்டாகா தாம். இவ்வாறே இராகரூபப் பிரதியோகியின்றி இராகப் பிரத்வம்சாபாவரூப வைராக்கியமு முண்டாகாதாம். இரண்டாவதுபக்ஷத்தை யங்கீகரிக்கின் அதுவுஞ் சம்பவியாதாம்; ஏனெனின், ஈண்டு ஜீவர்கட்குண்டாய பசி அன்ன அடைவின்றி நீங்கமாட்டாது, மற்றோ அஃதானே அது நீங்கும். அவ்வாறு உயிர்களிடத்துண் டாய விடயசுக இராகமும் விடயசுகப் பிராப்தியின்றி நீங்காதாம்; மற்றோ அஃ தானே அது நீங்கும். அது பிரஹ்மசர்ய ஆசிரமத்தே அடைவுறாதாமாதலின் ஆண்டு வைராக்கியப்பிராப்தி சம்பவியாதாம். வைராக்கியமின்றி மோக்ஷப்பிராப் தியின்பொருட்டு முயலல்பயனில் கூற்றேயாம்.

சங்கை:—பிரஹ்மசர்ய ஆசிரமத்தே ஜீவர்கட்கு விடயங்களிடத்தே இராக முண்டாயினும், நூலாராய்ச்சியின் வலுவால் விடயங்களிடத்தே நானுவகைத் தோடங்களைக்கண்டு இராகத்தைத் தடைப்படுத்தக்கூடுமாதலின் அவ் வவஸ்தை யின்கண்ணும் வைராக்கியமும் முமுக்ஷுத்தன்மையும் சம்பவிக்கும்.

சமாதானம்:—ஜீவர்களின் சித்தத்தேயுண்டாய விடய இராகம் விடயத்தை யடையாதவரை சித்தத்தை எல்லாப்பக்கங்களினின்றும் தடைப்படுத்தும், வேறு விடயத்தைப் புகவிடாது. ஸ்திரீயின் உதரத்தே பாலகனிருக்கும்வரை வேறு பால கனைப் புகவிடான், வெளியில்வந்த பின்னரே புகவிடுவன். அதுபோல ஜீவர்களின் சித்தத்தின்கண்ணும் ஒரு விடய இராகமிருக்கும்வரை வேறொரு இராகம் புகா தாம். கருத்திதுவாம்:—சித்தத்தே ஒரு விடய இராகமுண்டாகவே உலக விடய மும் புகமுடியாதபோது அலௌகிக மோக்ஷேச்சை எவ்வாறு பிரவேசிக்கும், பிர வேசியாதாம். அல்லது மதத்தாற் பேதிக்கப்பெற்ற கண்டஸ்தலத்தை யுடைய தும், அறுபது வயதோடுகூடியதுமாய யௌவனயானை ஒரு பெருவனத்தே சிறிய மார்க்கத்தே சஞ்சரித்துக்கொண்டு மார்க்கவாயிலைத் தடைப்படுத்திக்கொண்டிருப் பின் மற்றைய மிருகங்களை அவ்வாயிலாய் வனத்துட் புகவிடாதாம். அதுபோலச் சித்தரூபவனவாயிலில் விடய இராகரூப யானை யிருக்கும்வரை மோக்ஷேச்சை வடிவ மிருகாதிகளைப் புகவிடாதாம். இதனையே வெளிப்படையாக்கும்பொருட்டு முதலில் இலௌகிக விடய இராகத்தே வேறொரு அத்தகையதின்றடைத் திருட் டாந்தத்தால் நிரூபிப்பாம்:—அநேக மங்கையரிடையிலிருக்கும் மண்டோதரியின் பதியாய இராவணன் சீதையின் இராகத்தோடு கூடியபோது சீதையம்மையன்றி மூவுலகத்துற்றும் பொருளையும் இச்சித்திலன்; மற்றோ, அவ்வம்மையை யடையவே யிச்சித்தனன். நளராஜாவையே விரும்பிய இருதயத்தோடுகூடிய தமயந்தியானை வுள் சுவயம்வரத்தே யடைவுற்ற இந்திராதி தேவதைகளையும் [illegible];

மற்றோ, [illegible]னுக்கே மாலையிட்டனள். இவ்வாறு இராக[illegible] தினையுடைய ஜீவர் அநேகர் முன்னமுண்டாயினர் இப்போது மிரு[illegible] இனி யுண்டாவர். அவ்வியாவரும் எவ்விடய இராகமுற்றனரோ அவ்வி[illegible] வேறெவ் விடயத்தையும் இச்சித்திலர். ஜீவர்களது சித்தத்தே ஒரு விட[illegible] மிருக்கும்வரை வேறுவிடய இராகமுண்டாகாதெனத் துணியலாம். ஒரு விடய இராகமிருப்ப மற்றொரு விடய இராகம் சித்தத்தே சம்பவியாதபோது மோ[illegible] இச்சை எவ்வாறு சம்பவிக்கும்? சம்பவியாதாமென்க.

சங்கை :—முதலில் விடயசுகத்தின்கண்ணே இராகமுண்டாகாமல் மோ[illegible] சுகத்தே இராகமுடையவனே சந்பாசவாயிலாய் ஆன்மஞானத்திற்கும் மோக[illegible] திற்கும் அதிகாரியாவன்.

சமாதானம் :—விடயஜன்னிய சுகத்தே இராகமுறாத புருடனுக்கு முதலில் அலௌகிக மோக்ஷரூபசுகத்தே இராகம் யாங்ஙனமாம்? ஆகாதன்றோ. கருத்[illegible] வாம் :—இவ்வுலக விடயஜன்னிய சுகத்தே சுகத்தன்மைவடிவமாய் இஷ்டஞா[illegible] தையடைந்தவனுக்கே சுவர்க்கலோக விடயஜன்னியசுகத்தே இச்சையுண்டா[illegible] அஃதின்றி யிவ்விசசையுண்டாகாதாம. அதுபோல விடயஜன்னிய சுகஞா[illegible] முற்றவனுக்கே மோக்ஷசுகத்தே யிசசையுண்டாம். அஃதின்றி முதலிலே அஃ துண்டாகாதாமாதலின் தன் இருதயத்திருக்கும் விடயசுக இச்சையை அத னடைவால் பூரணஞ்செய்யாமல் அதிகாரி முதலிலே மோக்ஷ அடைவின்பொருட் டுச் சந்யாசத்தைக் கவரலாகாது; மற்றோ, புத்திமானவன் முதலில் விடயசுக இச்சைகளை விடயசுக அடைவால் பூரணஞ்செய்து பின்னர் மோக்ஷ அடைவின் பொருட்டுச் சந்யாச ஆசிரமத்தைக்கவர்க. இவ்வார்த்தையை மனுபகவானும் கூறியுள்ளார்.

ஸுநீத்ய் விஜொவெஷாந ஸுத்நாஷூ தயாவாதாந ॥
ஸுதிஷ்ராவெவ யஜ்ஞைஷொக்ஷித்தூநு வ ஜதத்ய ॥

"இருபிறப்பி னரிறை மறையியம்பி டாதெறிந்து
அரியமைந்த ரைத்தவத்தினிற்பயந்தி டாதவத்தே
உரியவாகிய மகங்களை யுஞற்றிடா தொருவிப்
பெரியவீ டடைவிழை வுறிற்பெரு நகைக்கிடனே."

(பொ-ள்.) பிராஹ்மணாதி மூன்று வருணங்களும் துவிஜரெனப்பெறுவர்; எவர் வேதங்களை யத்தியயனஞ்செய்யாது, மைந்தர்களை யுண்டாக்காது, யாகா[illegible] களைச்செய்யாது முதலிலே மோக்ஷப்பிராப்தியை இச்சித்தனரோ அத்து[illegible] மோக்ஷத்தையடையார்; மற்றோ, மாறாய் மோக்ஷத்தை யிச்சித்தவராய் அதோ[illegible] கதியையடைவர். ஆதையால் மோக்ஷ அடைவை யிச்சித்த துவிஜன் [illegible] லில் பிரம்மசர்யாசிரமத்தே வேதாத்தியயனஞ்செய்து இருஷிகள் கடனின[illegible] [illegible] விடுபடுவன். பின்பு கிருகஸ்த ஆசிரமத்தே புத்திரர்களையுண்டாக்கிப் [illegible] [illegible]னின்றும் விடுபடுவன், யாகாதிகளைச்செய்து தேவருதனின்ற [illegible]

[illegible]வன். பின்பு மோக்ஷப்பிராப்தியின்பொருட்டுச் சந்யாச ஆச்சிரமத்தைக் கவர்வன். இவ்வாறு இராகமின்மையையுணர்ந்த மனு முதலிய சர்வஞ்ஞ புருடர் [illegible]ளாராதலின் எல்லாவகை விடயபோகத்தானே அதிகாரியின் சித்தத்தே விடய இராகமழிந்த பின்னர்த்தான் சந்யாசத்தைக்கவர்ந்து மோக்ஷ அடைவின்பொருட்டு முயலவேண்டும். விடயபோகத்தின் முன்னரே மோக்ஷ அடைவின்பொருட்டு முயலல் பயனில் கூற்றும். இத்துணையால் விடயாசக்தர்களின் மதங் காட்டப்பெற்றது. இப்போது அவர் மதத்தைக் கண்டிப்பாம், ஓ குழந்தாய்! இவ்வாறு அவ்விடயாசக்தர் தருமாதி மூன்றையுமடைவுற்ற பின்னரே நான்காவது மோக்ஷரூப புருடார்த்த அடைவைக் கூறுவர் அப்பகிர்முகர் வாக்கியத்தை அறிஞர்கள் கவரார் மற்றோ, பகிர்முகரே கவர்வர் அவர் பூர்வபுண்ணியத்தே சுககாரணத்தன்மையைக்கூறினர் பாவத்தே துக்ககாரணத்தன்மையைக் கூறினர் அதையாமும்அங்கீகரிப்பேம்; ஆனால், அவர் தனாதிகளிடத்தே சுககாரணத் தன்மை கூறியதையங்கீகரியேம், ஏனெனின் ஈண்டு அர்த்தமிலரேனும் அநேகஞ் ஜீவர் சுகியாதல் கண்டுளேம், உளரேனும் துக்கியாதல் கண்டுளேமாதலின் அர்த்தத்தேயஃதின்றும். அருத்தமின்றியும் ஜீவர்கட்கு விடயசுகமுண்டாமென்னும் விஷயத்தையாம் ஏழாவது அத்தியாயத்தே யாஞ்ஞவற்கிய மைத்திரேயியின் சம்வாதத்தே விஸ்தாரமாய்க் கூறிவந்தேமாதலின் ஈண்டுக் கூறவில்லை. அர்த்தத்தையொருங்குசேர்ப்பதிலும், காப்பதிலும், அழிப்பதிலும் உயிர்கட்குப் பரமதுக்கம் பிராப்தியாம் என வுணர்ந்த அறிஞர்கட்கோ இவ்வர்த்தம் துக்ககாரணமாயே தோற்றும் இதனினின்றும் பகிர் முகர்க்குச் சுக அடைவு எவ்வாறும்; மற்றோ, ஆகாதாம் தழலின்கண் மணிமதியால் மூடன்றனது கையிற் கவரின் அழற்சியாலுண்டாம் துயரையேயடைவன் அதுபோலத் துக்கத்தையடைவிக்கும் அர்த்தத்தே சுகசாதன புத்தியால் மூடன் கவரும்பொருட்டு முயன்று துக்கத்தையேயடைவன். ஆகையால், அர்த்தத்தே சுககாரணத்தன்மை சம்பவியாது என்பது கருத்தாம். அருத்தமின்றியதரித்திரியை மனைவி முதலிய யாவரும் விட்டு விடுவர் என முன்னர்க் கூறியதும் சம்பவியாது; என்னை, ஈண்டுள்ள தரித்திரிகள் யாவரையும் மனைவியாதியர் விட்டுவிடுவர் என்னும் நியமத்தை யாண்டுங்காணேம்; மற்றோ, சில கெட்ட இயற்கையையுடைய மனைவியாதியரே பரித்தியாகிப்பர், நல்லியற்கையரோ பரித்தியாகியார் சர்வ ஜீவர்கட்கும் சுக இச்சையிருக்கின்றதாதலின், உலகம் யாவும் காமத்தால் நிறைவுற்றதாம் எனக்கூறியதும் பொய்யாம்; ஏனெனின், ஈண்டுச் சகலருக்கும் சுக அடைவின் இச்சையுண்டாவதுண்மையேயாயினும் அதனானே யாவரிடத்தும் காமித்தன்மை சித்தமாகாதாம்; மற்றோ, [illegible]யினும் யோனியினும் அதிக ஆசையுடையவனையே காமியென்பர், சுகமாத்திரம் அவாவினனைக் காமியென்பதில்லை ஜீவர்களின் சித்தத்தே யுண்டாய ஒரு விஷய இச்சையே வேறுவிஷய இச்சையையுண்டாக்குவதின்றும் என முன்னர்க்கூறியது [illegible]குமாணின்றும்; மற்றோ, அனுகூலமேயாம், என்னை, பூர்வபுண்ணிய [illegible] அதிகாரிகளின் மனத்தே மோக்ஷ இச்சையுண்டாம், அது எவ்விஷய இச்சையையும் உண்டாக விடாது. இதனானே [illegible] முதலியோர் [illegible] மோக்ஷேச்சையின் காலத்தே எப்பொருளையுங் கவர்ந்திலர். [illegible]

அத்தியயனம், புத்திரோற்பத்தி, யாகாதி கருமம் என்னும் மூன்றையும் அடை டியாது மோக்ஷத்தை யிச்சிப்பவன் அதோகதியையடைவன் என்னும் மனுபகவானுடைய வாக்கியம் மோக்ஷத்தை நிந்திக்கின்றது என முன்னர்க் கூறியதுஞ் சம்பவியாது; என்னை, வேதத்தேயும் மிருதியின்கண்ணும், இதிகாச புராணங்களினும் உள்ள நிந்தை வசனங்கட்கு நிந்தையின்கண்ணே கருத்தின்றாம்; மற்றோ, பிரசங்கப் பிராப்த அர்த்தத்தின் புகழின்கண்ணே கருத்தாம். விஷ்ணு புராணத்தே இங்ஙன் இயம்பப்பெற்றுளது:—

வாஸுதேவம் பரித்யஜ்ய உபாஸ்தே அந்யதேவதாம் ।
த்ருஷிதோ ஜாஹ்நவீதீரே கூபம் வாஞ்சதி துர்மதி: ॥

"அரியைவிட்ட யலாதியதேவரைப் புரியுபாசனைப் புன்கணர்தாகமுற்
றெரிதனீக் கிடவின்பமந்தாகினிக் கரையிற் கூபத்தைக் கல்லுவரோப்பரால்."

(பொ-ள்.) விஷ்ணுவைப் பரித்தியாகித்து அயலாயசிவன் முதலிய தேவதைகளை யுபாசிப்பவனாகிய மூடனானவன் தாகத்தோடு கூடியவனாய் அதை நீக்கும் பொருட்டு ஸ்ரீ கங்கையின் கரையில் கூபத்தைத் தோண்டுபவனேயப்பன். சிவ புராணத்தின் கண்ணிங்ஙன் செப்பப்பெறறுளது:—

மஹாதேவம் பரித்யஜ்ய உபாஸ்தே அந்யதேவதாம் ।
ஸமுத்ஸ்ருஜ்ய ஸுதாம் ஸோயம் க்ஷுதார்த்தோ வாஞ்சதே விஷம் ॥

"அரனைவிட்டயலாதிய தேவரைப் புரியுபாசனைப் புல்லியர்தோல் பசி
யெரியையெற்றுற வின்னமுதந்தனை யொருவிவெவ்விட முண்பவரோப்பரால்."

(பொ-ள்.) மகா தேவரைப் பரித்தியாகித்து அன்னிய விஷ்ணு முதலிய தேவதைகளை யுபாசிப்பவனாகிய மூடன் பசியாற் பீடிதமாயவன் அப்பசி தீர்ப்பான் அமிருதத்தை விடுத்து விஷத்தைபயில்வதேபோலும். இவ்விருவித வசனங்களுள் முதலாவதற்குச் சிவாதிகளின் நிந்தையின்கண்ணே கருத்தின்றாம்; மற்றோ, விஷ்ணுவின் துதியின்கண்ணே கருத்தாம். அதுபோலவே இரண்டாவதற்கும் மகா தேவஸ்துதியின்கண்ணே கருத்தாம். நிந்தையின்கண்ணே அவ்விரண்டிற்குங் கருத்தாயின் எத்தேவதையின் மாட்டும் பூச்சியத்தன்மை சித்தமாகாதாம். இவ்வாறே மனுபகவானுடைய வசனத்திற்கும் மோக்ஷநிந்தையின்கண்ணே கருத்தின்றாம்; மற்றோ, அஞ்ஞானிகளைக் கருமத்திற் பிரவிருத்திக்கும்பொருட்டு வருணாசிரம கருமஸ்துதியின்கண்ணே கருத்தாம். மோக்ஷ நிந்தையிற் கருத்திருக்குமாயின் அவர் தமது ஸ்மிருதியின் ஆறுவது அத்தியாயத்தே மோக்ஷதருமங்களைக் கூறுதொழிவர்; ஆனால் அவற்றை விஸ்தாரமாய்க் கூறியுள்ளார். மனுபகவானுக்கு மோக்ஷநிந்தையின்கண்ணே கருத்தாம் ஆறுவது அத்தியாயத்தே கூறியது மயலாதி தோஷபயத்தாலாம் எனச் சங்கித்தற்கிடனின்றாம்; ஏனெனின் சாக்ஷாத் சுருதிபகவதியே மனுபகவானைச் சர்வஞ்ஞனெனக் கூறியுள்ளாள்; அத்தன்மையிடத்தே மயலனுகாதாம். அம்மறையாவது, 'யத்வை கிஞ்ச மநுரவதத் தத்பேஷஜம்' [illegible] பகவான் இயம்பிய தருமங்கள் மங்களதேஹதுக்களாம்;

சங்கை :—மனுபகவானுக்கு மோக்ஷமுண்டென்ப தங்கீகாரமேயாயினும் இறந்தபிறகு மூன்றன் பின்னரே யங்கீகாரமாமன்றிப் முன்னான்றும்.

சமாதானம் :—அம்மனுபகவானுடைய வசனத்தை யுக்தியால் ஆராய்ந்து நோக்கின் அம்மூன்றன் பின்னர் மோக்ஷாங்கீகாரம் சித்தியாதாம் ; ஏனெனின் பூர்வம் அவர் மொழியில் மிருதியாயவேதங்களின் அத்தியயனம், மிருதியாய மைந்தர்களின் உற்பத்தி, மிருதியாயயாகங்களைச் செய்தல், கூறப்பட்டுள்ளன, அண்டம்மிருதித்தன்மை முப்பொருளின்கண்ணுளதா ? அல்லது, நான்கு, ஐந்து, ஆறுமுதலாகிய அநேகம் பொருள்களிடத்தேயுளதா ? ஆண்டு, அநேக நூற்றுக் கணக்காய சாகைகளின் பேதத்தால் நானுவிதமாய இருக்குமுதலிய வேதங்கள் முழுவதின் அத்தியயனத்தே போராயுளையுடைய புருடனும் ஆற்றலுடைய வனுகானுயின் இப்போதிருக்கும் அற்ப ஆயுளையுடையவன் எவ்வாறுற்றலுடைய வுனுவன் ; மற்றேறு, ஆகாதெனக. இவ்வாறே மும்மைந்தர்களையுண்டாக்கு வதின்கண்ணும், அநேக மைந்தர்களை யுண்டாக்குவதின்கண்ணும், இச்சீவன் தானே சமர்த்தனுகான். அது பூர்வ புண்ணியரூப அதிருஷ்டகாரண ஸ்திரீ யவ் வனுவஸ்தைவடிவ திருஷ்டகாரண அதீனமாம். இவையின்றிச் சுதந்திரமாய்க் காரணமாயின், புத்திரேச்சையுடையவரெவரும் புத்திராற்றவராகா திருத்தல் வேண்டும்; ஆனல், புத்திரன் வேண்டுமென்பாரும்பலர் புத்திரனற்றவராய்க்காணப் பெறுகின்றனர். இங்ஙனமே மூன்றுயாகங்கள்செய்வதன்கண்ணும், அநேக யாகங் கள் செய்வதன்கண்ணும் இவன் சுதந்திரனுகான் ; மனைவி மைந்தராதி அநேகம் பொருள்களானே அவை சித்திக்கும் அம்மனுபகவானுடைய வசனம் முடியாதன வாய மூன்றையும் உணர்த்துமாயின் பிரமாணமற்றதாம் ; என்னை, சீவர்கட்குச் சுகசாதனமாவதும், முயற்சியால் அடையயோக்கியமாயதும், வேறு பிரமாணத் தாற் பாதிக்கப்படாததும் ஆகிய பொருளைப் போதிப்பதானே சாஸ்திரம் பிரமாண மாம். ஆகையால், அம்மனுபகவானுடைய வாக்கியத்திற்கு அவ்வர்த்தத்தே கருத் தின்றும்.

சங்கை :—ஹே சித்தாந்தியே ! அம்மனுஸ்மிருதியின் வசனத்தான் மனுபக வானுக்கு அவ்வேத அத்தியயனுதிகளில கிடையாதபொருளை யுணர்த்துவதாய அபூர்வவிதி யங்கீகாரமின்றும் ; மற்றேறு, ஈண்டுத் தனது வேதசாகையை யத்தி யயனஞ் செய்தவனும், புத்திராதிப் பிரஜையையுண்டாக்கினவனும், யாகாதி களைச் செய்பவனும் ஆகியவனிடத்தே அம்மோக்ஷேச்சை காணப்பெறுகின்றது ; மாறுயவனிடத்தே காணப்பெறுவதின்றும் ; என்னும் உடன்பாடெதிர் மறைக ளானே வேதாத்தியயனுதிகளிடத்தே மோக்ஷ இச்சையின் காரணத்தன்மை பிர சித்தமாம், அதனையே அவ்வசனங் கூறுகின்றது, ஆதலின் அஃதனுவாதரூபமாம். அக்கினியின்கண்ணே பனிநீக்ககாரணத்தன்மை உலகப் பிரசித்தமாம், அதனைக் கூறும் ‘ எரிபனிக்குமருந்து ’ என்னும் வசனம் அனுவாதமாவதேபோலும் ; அபூர்வவிதிரூபம் அன்றும்.

சமாதானம் :—ஹே வாதியே ! எத்தலத்திலும் பிறழ்ச்சியையுறாத உடன்பா டெதிர்மறைகளே காரணத்தன்மையின் சித்தியையுண்டாக்கும். மன்றுபவன் [illegible]

டம் முதலியன இருப்பவே கடரூபகாரிய உற்பத்தி, இலவாகவே அநுற்பத்தியென் னும் உடன்பாடெதிர்மறைகட்கு எத்தலத்தும் பிறழ்ச்சியுண்டாவதின்றுமாதலின் கடகாரணத்தன்மையைச் சித்தஞ்செய்வதேபோலும். பிறழ்ச்சியுறுவது காரணத் தன்மையின் சித்தியைச் செய்யாதாம். குலாலபத்தினியும் நீள்செவியனும் இருப் பினும், இல்லாவிடினும் கடகாரிய உற்பத்தியாவதேபோலும் அந்தப பிறழ்ச்சியை யுடைய உடன்பா டெதிர்மறைகளால் கடகாரணத்தன்மை சித்தமாகாதாம்; மற்றோ, மாறாய் அதன் பாதமேபாம். அவ்வாறு ஈண்டுப் பிரசங்கத்தே வேத அத்தியயனாதிகளின்கண் மோக்ஷேச்சாகாரணத்தன்மையின் சித்தி செய்யும் பொருட்டுக் கூறிய உடன்பாடெதிர்மறை பிறழ்ச்சியுடையதேயாம்; என்னை, இவ் வுலகத்தே வேதாத்தியயனஞ் செய்பவரும், மூமனைமந்தருடையவரும், மூன்று யாகமுடையவரும் ஆகிய அநேக மறையவர் காணவருகின்றனர்; ஆனால் அவரி டத்தே மோக்ஷேச்சை காணவருவதில்லை; மாறாய் அநேக இடங்களிலோ அத் தகையினர் சம்சார சுகத்தே பற்றுற்றவராய் மோக்ஷத்தே பகிர்முகராயே காணப் பெறுகின்றனர். ஆகையால் பிறழ்ச்சியையுடைய உடன்பாடெதிர் மறைகளால் கூறியவற்றின்கண்ணே மோக்ஷ இச்சாகாரணத்தன்மை சித்தமாகாதாமாதலின், அவ்வசனம் அநுவாதரூபமன்றும்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! அம்மனுஸ்மிருதியின் வசனத்தால் அவர் நியமவிதியைக்கூறியுளார்; அல்லது, பரிசங்கியாவிதியைக் கூறியுள்ளார்.

சமாதானம் :—ஹே வாதியே! மனுபகவானுடைய வசனத்தே நியமவிதி ரூபத்தன்மையும், பரிசங்கியாவிதி ரூபத்தன்மையும் சம்பவியாதாம்; என்னை, இருபொருள் அடைவுறுந்தலத்தே ஒருபொருளை நீக்கி ஒருபொருளை விதிக்கும் அதுவே நியமவிதியாம். யாகாக்கினியின்கண்ணே உமி நீங்கிய அரிசிவடிவ அன் னத்தின் ஆகுதி கொடுக்கப்பெறும், அவ்வுமி நீக்கமானது, உலகத்தே யிருவகை யினும். ஒன்றோ, நகத்தானுண்டாம், மற்றொன்றோ உலக்கையாற் குத்துவதானே யுண்டாம் அவ்விருவகையினுள் எவ்வகையானே உமிப்போக்குதலெனக் கடா நிக ழச் சுருதியானது 'வ்ரீஹீநவஹந்யாத்' என்னும் வசனத்தால் உலக்கையானே நெல்லைக் குத்தல் விதிக்கப்பெற்றது, நகத்தானுமிபோக்கல் நீக்கப்பட்டது; ஆதலின் நுதலிய சுருதி நியமவிதிரூபமாம். இங்ஙன் மனுபகவானுடைய வச னத்தை நியமவிதியென அங்கீகரிக்கின் ஒரு பக்ஷத்திலோ மோக்ஷ இச்சையி னடைவாம்; மறுபக்ஷத்திலோ வேதங்களின் அத்தியயனம் புத்திரர்களின் உற் பத்தி யாகங்களின் அனுஷ்டானம் மூன்றும் அடைவுற்றன. இம்மூன்றினும் முன் னாடைவுற்ற மோக்ஷ இச்சையின்றடையால் அதிகாரி அம்மூன்றையும் செய்க. என்னும் நியமவிதிவடிவ வசனப்பொருள் சம்பவிக்கவேண்டுமாயின் மோக்ஷ இச்சையை நீக்குவதில் புருஷனுக்குச் சுதந்திரமிருக்கவேண்டும்; ஆனால் அஃ தின்றுமாதலின் மோக்ஷரூப சுகசௌந்தரியத்தன்மை ஞானத்தான் உயிர்களி டத்தே யுண்டாய மோக்ஷ இச்சையை நீக்குவதில் எவருஞ் சமர்த்தரல்லர். இவ் வண்ணமே முன் மூன்றைச் செய்யவும் எவருஞ் சுதந்திர ஆற்றலுற்றவரல்லர், ஆதல்

யால் மனுபகவானுடைய வசனத்தே நியமவிதிரூபத்தன்மை சம்பவியாதாம். இவ்வாறே அவ்வசனத்தே பரிசங்கியாவிதிரூபத்தன்மையும் சம்பவியாதாம்; ஏனெனின், ஒருகாலத்தே இருபொருள் அடைவுறும்போது ஒன்றன் நீக்கத்தையேபோதிக்கும் வசனம் பரிசங்கியாவிதிரூபமாம். ஓரேகாலத்தே இச்சையடைந்த உயிர்க்கடைவுற்ற முயன் முதலிய ஐந்து நகங்களையுடைய ஐந்து ஜந்துக்களின் பக்ஷணம், மனுடவானராதி ஐந்து நகங்களையுடைய ஜந்துக்களின் பக்ஷணம் என்பவற்றுள் 'பஞ்ச பஞ்சநகா பக்ஷ்யா:' இச்சுருதி முதலதைத் தழுவி மற்றதை நழுவுமாறுணர்த்துமாதலின் பரிசங்கியாவிதி ரூபமாம். ஈண்டுப் பிரசங்கத்தே அம்மூன்றும் ஒருகோடியாம், மோக்ஷ இச்சை மற்றொரு கோடியாம், இரண்டும் புருடனையடைந்தபோது அதிகாரிவேத அத்தியயன முதலியவற்றையே செய்கவென அம்மனுபகவானது வசனத்தின் விபரிணமைத்தானே மோக்ஷ இச்சையை நீக்கின்மாத்திரம் அவ்வசனம் பரிசங்கியாவிதிரூபமாம். அங்ஙனாற்றின் மோக்ஷ அடைவின்பொருட்டு எவனிடத்தும் முயல்வுண்டாகலாகாது; ஆனால் அம்முயல்வும் மோக்ஷ இச்சையும் எத்துணையோ அதிகாரிகளிடத்தே காணவருகின்றது. அம்மனுபகவானே தமது ஸ்மிருதியின் ஆறுவது அத்தியாயத்தே மோக்ஷ தருமங்களைக் கூறியிருக்கின்றனராதலின் அவ்வசனம் பரிசங்கியாவிதிரூபமாகாதாம். அல்லது, அம்மனுபகவானுடைய வசனம் ஒருகால் மோக்ஷ இச்சையை நீக்குமாயின் வேத அத்தியயனாதி மூன்றையும் செய்து அதிகாரி மோக்ஷ இச்சையைச்செய்க என வேதாத்தியயனாதியின் பின்னர் மோக்ஷ இச்சையை மொழிந்துள்ளது அசங்கதமாகும் என்னுமிதனாலும் அவ்வசனம் பரிசங்கியாவிதிரூபமன்றாம். அல்லது, வேத அத்தியயனாதிகளின் முன்னர் மோக்ஷத்தையிச்சிப்பவன் அதோகதியையடைவன் எனப் பூர்வம் வாதி கூறியபொருள் பிரத்தியக்ஷ சுருதியாற்பாதமாம்; ஏனெனின், சுருதிபகவதியே மோக்ஷ அடைவின்பொருட்டுப் பிரஹ்மசரிய ஆச்சிரமத்தின் பின்னரும் சந்யாசவிதானஞ் செய்துள்ளனள். அதாவது, 'யதிவேதரா யாவ்ரஜேத் ப்ரஹ்மசர்யாதேவ ப்ரவ்ரஜேத்' விஷயங்களிடத்தே தீவிரமாகிய வைராக்கியம் இல்லாதவனே பிரஹ்மசரியத்தின் பின்னர்க்கிரகஸ்தனாகுக, அதன்பின்னர் வானப் பிரஸ்தனாகுக, நான்காவதவத்தையிற் சந்யாசியாகுக தீவிர வைராக்கியமுடையவனே மோக்ஷ அடைவின்பொருட்டுப் பிரஹ்மசரியத்தின் பின்னரே சந்யாசத்தையுறுக; என்பது முதலிய சுருதிகளால் அம்மனுபகவானுடைய வசனப்பொருள் பாதிதமாமாதலின், அவ்வசனம் விதிரூபமன்றாம்; மற்றோ, அஞ்ஞானிகளைக் கருமத்தே முயல்விக்கும்பொருட்டு அதைத் துதிப்பதாய் அருத்தவாதரூபமாம்.

சங்கை:—ஹே சித்தாந்தியே! மனுபகவானுடைய வசனம் மோக்ஷ இச்சையின் நிஷேதத்தைக் குறிப்பிக்கவில்லை; மற்றோ, அது மோக்ஷ இச்சையினபூர்வத்தை விதானஞ்செய்கின்றது. 'நகலஞ்ஜம் பக்ஷயேத்!' என்னுமிது பிரயாகரூபமாம்ஸமதத்தே கலஞ்ச பக்ஷணத்தின் அபாவத்தை விதிக்கின்றது. இவ்வாறே அம்மனுபகவானுடைய வசனமும் மோக்ஷ இச்சையின் அபாவத்தையே விதிக்கின்றது. [விஷத்தோடுகூடிய பாணத்தாற் கொன்றமானின் மாம்சம் கலஞ்சமாம்.]

சமாதானம் :—ஹே வாதியே! மோக்ஷ இச்சையின் அபாவம் விதிக்கத்தகுந்ததன்றும்; ஏனெனின் 'ஸூர்யம்-ருகா செயஜெத' என்பது முதலிய வேதவசனங்கள் யாகாதி பாவபதார்த்தங்களையே விதிக்கின்றன. அபாவத்தை யெவ்வசனமும் விதிப்பதில்லை. மனுபகவானுடைய வசனத்தானே மோக்ஷ இச்சையின் அபாவ விதானத்தை யங்கீகரிக்கின்றவன்பாலிது கேட்கவேண்டும்:—அம்மனு பகவானுடைய வசனம் மோக்ஷ இச்சையின் முன்னின்மையை விதிக்கின்றதா? அல்லது, முற்று மின்மையை விதிக்கின்றதா? அல்லது, ஒன்றொன்றன்மையை விதிக்கின்றதா? அல்லது, பின்னின்மையை விதிக்கின்றதா? முதன் மூன்று பக்ஷமும் சம்பவியாது; ஏனெனின், முன்னரொரு பிரமாணத்தானே சித்தமாகாத பொருளையே சாஸ்திரம் விதிக்குமன்றி முற்றுணிந்த பொருளை யொருநாளும் விதியாது. நையாயிகர் மதத்தே முன்னின்மையோ உற்பத்தியற்ற அநாதியாம், எதிர்மறை யுண்டாயபின்னர் அஃதழியுமாதலின் அவ்வநாதியாய முன்னின்மையின் விதானஞ் சம்பவியாது. அவர் மதத்தே முற்றுமின்மையும், ஒன்றொன்றன்மையும் உற்பத்தி நாசமற்றனவாமாதலின் அவற்றின் விதானமுஞ் சம்பவியாது.

சங்கை :—ஹே சித்தாந்தியே! அம்முன்னின்மைக் குற்பத்தி சம்பவியாதாயினும் நாசமுண்டு. 'ப்ராஹ்மணோ நஹந்தவ்ய:' என்னும் மறைமொழி பிரஹ்மஹத்தியின் முன்னின்மையைக் காப்பாற்ற விதிக்கின்றதேபோல அம்மனு பகவானுடைய வசனமும் மோக்ஷ இசசையின் முன்னின்மையைக் காப்பாற்ற விதிக்கின்றது.

சமாதானம் :—ஹே வாதியே! சாஸ்திரமானது பிரஹ்மஹத்தியைச்செய்ய நிடேதிக்கின்றதேபோல ஒரு நூல் மோக்ஷ இச்சையை நிடேதஞ் செய்யுமாயின் அவ்வசனம் அதன் முன்னின்மையை விதானஞ்செய்யும்; ஆனால் அம்மோக்ஷ இச்சையை நிடேதஞ்செய்ய எந்நூலும் காணப்படவில்லை; மற்றோ, மாறாகச் சாஸ்திரமோ மோக்ஷ இச்சையையுடைய புருஷனுக்கு மகாபலப் பிராப்தியைக் கூறியிருக்கின்றது 'க்ஷணமேகம் க்ரதுசதஸ்ய' மோக்ஷமடைய இச்சையைவைத்து ஒருகணமேனும் ஆன்மவிசாரஞ்செய்பவன் 100 பரிமேதயாக பலத்தையடைவன். என்னும் இது முதலிய அநேக சுருதி ஸ்மிருதி வசனம் அம்மோக்ஷ இச்சையின் மகா பலத்தைக் கூறுகின்றதாதலின், அதன் முன்னின்மையின் காப்பும் விதிக்கொணாததாம். நான்காவது பக்ஷமும சம்பவியாதாம்; ஏனெனின், இவ்வுலகத்தே தானுய்த் துணியப்பெறாதபொருளையே சாஸ்திரம் விதிக்கும்; மாறாயதை விதியாதாம். கண்டு, அன்னமுண்பதால் பசி நீக்கம் தானே துணியப்பெறுமாதலின், அதைக்கொண்டு பசிநீக்கம் எந்நூலும் விதிப்பதில்லை, அவ்வாறிம் மோக்ஷ இச்சையும் க்ஷணபங்குரமாமாதலின் அதன்பின்னின்மையும் தானே பெறலாகும், அத்தன்மையதை அம்மனுபகவானுடைய வசனம் விதிக்குமாயின் அப்பிரமாணமேயாம். அல்லது, அவ்வசனம், ஒருகால் மோக்ஷ இச்சையின் பின்னின்மையை விதிக்குமாயின் பயனற்றதேயாகும்; ஏனெனின், இவ்வுலகத்தே யாவனுக்கு 'எப்பொழுதின்கண்ணேனும் ஏதுவகை செளத்ரியத்தன்மை ஞானமிருக்குமோ' அவனுக்கு

அதன்கண் அதுவரை ஒரிச்சையின் நாசமுண்டாயினும், மீண்டும்வேறிச்சை யுண்டாம். இங்ஙனம் மோக்ஷரூப நித்திய சுகசௌந்தரியத்தன்மையும் சண்டும் வேதத்தும் பிரசித்தமேயாமாதலின், அஃதொன்றற்றபின்னும் மீண்டும் சௌந்தரியத்தன்மை ஞானத்தால் வேறிச்சையுண்டாமாதலின், அதன் பின்னின்மையை விதிப்பதில் அவ்வசனத்திற்குக் கருத்தின்றாம்; மற்றோ, விஷயங்களிடத்தே ஆசக்தியையுடையவர்கட்குக் கருமங்களிடத்தே அதிகாரங்கண்டு மனுபகவானுனவர் அவர்களை யதன்கண்ணே முயல்விப்பான் மோக்ஷ நிந்தைவாயிலாய்க் கருமங்களைத்துதித்தனர்.

சங்கை:—ஹே சித்தாந்தியே! அம்மனுபகவானுடைய வசனத்திற்கு மோக்ஷ இச்சையின் நிஷேதத்தே கருத்தின்றாம் என்னும் பொருளை நீ ரெவ்வாறறிவீர்?

சமாதானம்:—ஹே வாதியே! அம்மனுபகவானுடைய வசனத்தினின்றே அப்பொருளை யாம் நிச்சயித்தேம்; எவ்வாறெனின், அம்மிருதியின் பன்னிரண்டாவது அத்தியாயத்தே அவரிவ்வாறு கூறியுள்ளார்:—

ஸர்வபூதேஷு சாத்மானம் ஸர்வபூதானி சாத்மநி ।
ஸமம் பஶ்யந்நாத்மயாஜீ ஸ்வாராஜ்யமதிகச்சதி ॥

"எவன்பர சிவத்தைக் காரண வடிவா லெப்பொரு டம்மினுந் தொடர்பாய்ச்,
சிவமதி லெவையுங் கற்பிதமாகச் செவ்விதிற் காண்குவ னவன்றன்,
உவமையில் பிரமவின்பமாம் வடிவ வொள்ளிய தனதிராச் சியத்தை,
யவமறத் தனது வடிவம தாக வறிந்தடைந் தமருவ னன்றே"

(பொ-ள்) எவ்வதிகாரியானவன் இவ்வான்மதேவரைச் சர்வ பூதங்களிடத்தும் காரணரூபத்தானே யனுகதமாய்க் காண்பனோ, அவ்வியாவற்றையும் அதிஷ்டானமான ஆன்மாவின்கண்ணே கற்பிதமாய்க் காண்பனோ அவ்வதிகாரியானவன் பிரம்மானந்தரூப சுவாராஜ்ஜியத்தைத் தனதான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரித்தடைவன். இவ்வகை யியம்புவராய்ச் சர்வவேதாந்த அருத்தங்களையும் அறியும் சர்வஞ்ஞராகிய மனுபகவான் முமுக்ஷுக்களை மோக்ஷ இச்சையினின்றும் எவ்வாறு நீக்குவர்; மற்றோ, நீக்காராதலின் மோக்ஷ நிந்தையின்கண்ணே மனுபகவானுடைய கருத்தின்றாய்க் கரும ஸ்துதியின்கண்ணே கருத்தாம். அவரது அபிப்பிராயத்தை யறியாத விஷயாசக்தர் அவர் வசனத்தை மோக்ஷ நிந்தையின்கண்ணே சேர்ப்பதனுல் தமது மூர்க்கத்தன்மையையே யுணர்த்துவர். அல்லது, சர்வ விஷய போகத்தால் வைராக்கியத்தை யடைந்தபோதே மோக்ஷத்தையடைவன் என விஷயாசக்தன் புகன்றது சந்நிபாதரோகவயத்தால் அநேகவகைச் சப்தங்களையுச் சரிப்பதேபோலக் காமரூப அக்கினியின்றுபத்தால் உண்டாய தாதுக்களின் விஷமத்தன்மைத் தோஷவயத்தாற் கூறுவதாகுமாதலின், அறிவாளிகளாற் சுவாத்தக்கதன்றாம். அல்லது, சர்வ விஷயங்களின் போகத்தின்பின்னர் வைராக்கியமுண்டாகி மோக்ஷமுண்டாம் என வுடன்படினோ இவ்வுலகத்தே எவ்வுயிருக்கும் மோக்ஷப்பிராப்தியுண்டாகலாகாது; ஏனெனின், முதலில் மனுஷாதி ஜீவர்கட்கு எண்பத்து நான்கு இலக்கம் யோனி பேதங்களிருக்கின்றன. அவற்றுள்ளும் ஒவ்

வொன்றன்கண்ணே தத்தமது ருசிபேதத்தானே அநேக விஷயங்களடைவுறும். அவையாவும் ஒரு மனுட சரீரத்தே அடைவுறல் மிகவுந் துர்லபமாமாதலின் மோக்ஷத்தைக் கூறுகிற்குஞ் சாஸ்திரம் அப்பிரமாணமாகும். அல்லது, சர்வ விஷயபோகத்தின்பின்னர் மோக்ஷ அடைவை யங்கீகரிக்கினு நரகத்தின்கண்ணேயும் அநேகவகை விஷயங்களுள்ளனவாதலின் மோக்ஷ இச்சுவானவன் அவ்விஷய போகப்பொருட்டு நரகத்தின்கண்ணேயும் அடைவன். முள்ளுண்ணலானுண்டாம் சுவாது ஒட்டகைக் கூட்டங்கட்கேயாமாதலின், அஃதடையும்பொருட்டு அம்முமுக்ஷு ஒட்டைத்தேகத்தையுமடைவன். இவ்வாறு அவ்வச்சாதியின் விஷயபோகப்பொருட்டு அம்முமுக்ஷு அவ்வத்தேகத்தையடைவன். அல்லது, சுவர்க்காதிலோகத்தே இராநின்ற கிடைத்தற் கரியவிடயங்கள் அநேகம் யாகங்களானும் அடையமுடியா. அவ்வியாவற்றையும் யாவன்றானடைவன்? மற்றேர், எவனுமடையுமாற்றலற்றவனேயாவன்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! அதிகாரியானவன் உபாசனையால் ஹிரண்ய கர்ப்பபாவத்தை யடைவனுயின் சர்வ விஷயபோகப் பிராப்தியாம். ஆண்டதிகாரி தன்னின்வேறுய் எப்போக்கியப்பொருளையுங் காணுதலின் அதன்பொருட்டு ஹிரண்யகர்ப்பப் பிராப்திக்காகவே முயலவேண்டும்.

சமாதானம் :—ஹே வாதியே! அவ்வடைவின்கண்ணே இவ்வுயிர்கட்கு அநேகம் வகையிடருண்டாபாதலின் நானுவகையுபாயங்களால் ஹிரண்யகர்ப்ப பாவப் பிராப்தியே முதலில் கிடைத்தற்கரியதாம். அதையுத்தேசித்து மனுஷ சரீரத்தே மோக்ஷ முயற்சியற்றவன் சர்வ மதிமான்களின் நகைப்பிற்கிடனுவன். வீட்டின் சமீபத்திருக்கும் மதுவைப் பரித்தியாகித்து அஃதடைவான் மலைமேற் செல்லும் மூட புத்தியன் எல்லாவுலகரின் நகைப்பிற் கிடனுவதேபோலும். அல்லது, அகங்கிருக உபாசனையானே பிரஹ்மலோகத்தையடைந்தவன் மோக்ஷப் பிராப்தியையோ அவசியமடைவனுதலின், அம்மோக்ஷ அதிகாரியை வருணிப்பதாய் மோக்ஷ சாஸ்திரம் நிஷ்பிரயோஜனத்தன்மைவடிவ அப்பிரமாணத்தன்மையை அடையும். மோக்ஷ சாஸ்திரத்தே அப்பிரமாணத்தன்மையைக்கூறல் அத்தியந்தம் அநுசிதமாம். ஆகையால், சர்வ விஷயபோகத்தின்பின்னரே மோக்ஷப் பிராப்தியாம் என வாதி கூறுவது அத்தியந்தம் விருத்தமாம். அல்லது, விஷய போகத்தானே காமசாந்தியாம் எனக் கூறியதும் இதிகாச புராணுதி சாஸ்திரங்களையறியாமையானேயாம்; ஏனெனின், பல விஷயபோகத்தால் இக்காமம் சாந்தத்தையடையாது என ஆண்டறையப்பட்டிருக்கின்றது; மாறுக அவ்விஷய போகத்தாலக்காமம் முன்னிருந்ததினும் அதிக விருத்தியையடையும். நெய்விறகுகளைப் பெய்வதால் இவ்வக்கினி சாந்தியையடையாது அதிக விருத்தியையேயடையுமாறே பலவிஷயபோகத்தானே இக்காமம் சாந்தியையடையாமாட்டாது, முன்னினும் அதிகமாம். அல்லது, இப்பிருதிவியின்கண்ணே நெற் கோதுமைமுதலிய அன்னங்களும், பொன்முதலிய தனங்களும், கோமுதலிய பசுக்களும், ஆசையையுடைய ஒருவனே யடையினும் அவனைத் திருப்திசெய்விலாற்று

துண்டாகாதபோது, அற்பத்தாற் காம நிவிருத்தியாங்வனமுண்டாம்; மற்றோ, உண்டாகாதாமாதலின், பல்விஷயபோகம் புருஷரின் வைராக்கிய காரணமன்றும்; மற்றோ, மாறாக அது இராககாரணமேயாகும். ஆகையால், விஷயாசக்த அதிகாரிகள் முதலில் அறத்தைச்செய்க, அதனால் தனதிரூப அர்த்தங்கிடைக்கும், அதனால் விஷயபோகரூப காமங்கிடைக்கும், அதன்பின்பு வைராக்கியத்தையடைந்து ஆன்மஞான வாயிலாய் மோக்ஷத்தையடையலாம், என எந்நூலையு மனுசரித்துக்கூறுது மாமோகாநுசாரமாகவே மலர்ந்தனராதலின், மதிமான்கள் அதை யொருகாலும் கோடலாகாது.

சங்கை :—ஹே பகவன்! விஷயபோகப் பிராப்தி இராக நீக்கத்தின் காரணமன்றாயின் வேறு காரணமியாது?

சமாதானம் :—ஹே குழந்தாய்! மைந்தன் மனைவிதனாதி பதார்த்தங்களிடத்தே அடிக்கடி தோடதரிசனமே இராக நீக்கத்தின் உபாயமாம், வேறுபாயமின்றாம். ஹே மைந்த! இந்நூலின் முதலத்தியாயத்தே வாமதேவாதி அதிகாரி சம்வாதத்தே விஷயதோடதரிசனப் பிரகாரத்தை விஸ்தாரமாய்க் கூறிவந்தேம். நான்காவது அத்தியாயத்தின்கண்ணும், தத்யங் அதர்வண இந்திர சம்வாதத்தே அவ்விஷயத்தை விரிவாய்க்கூறினேம். ஆகையால், மீண்டு மீண்டுங் கூறலவசியமன்றாயினும் அஃதை நினைவூட்டும்பொருட்டு மீண்டுஞ் சுருக்கமாய் அதைக் கூறுகின்றேம் நீசாவதானஞய்க்கேட்டி. ஹே குழந்தாய்! இம்மனுடலோகமே முதல் பிரஹ்மலோகபரியந்த மிராநின்ற விஷயங்கள் யாவும் அஞன்மரூபமாம், அழிவுறுவனவாம், பரிணாமகாலத்தே துக்ககாரணங்களாம், பராதீனங்களாம்; இத்தனமுதலியவை என் சமீபத்தே எப்போது மிருக்கவேண்டும் இவற்றிற் கழிவு ஒருகாலும் உண்டாகலாகாது என அவாவினும் அழிந்தேபோமாதலின் இவை பராதீனங்களாம்; சுவாதீனங்களன்றாம் என்பது கருத்து. பிரஹ்மலோகத்தே யிருக்கும் பிரஹ்மாவும், பூமியின்கண்ணுள்ள நாய்முதலிய பசுக்களும், நரகத்தின்கண்ணேயிருக்கும் நீச சீவர்களும், ஸ்திரீ முதலிய விடயபோகங்களைச் சமானமாகவே யடையும், அவற்றுள் சிறிதுமாத்திரையும் விலக்ஷணத்தன்மையின்றாம். எமது யாவினும் உயர்ந்தது என்னும் விலக்ஷணத்தன்மை தோற்றுவது கேவலம் யானெனதென்னும் அபிமானவசத்தானேயாம். இப்பூமியின்கண்ணேயிருக்கும் நாய்ச்சரீரம் ஆகாசாதியாலாயதுபோன்றே பிரஹ்மலோகத்திருக்கும் பிரஹ்மாவின் சரீரமும் ஐம்பூதவுருவமேயாம். நாய்க்குப் பிறப்பிறப்புண்டாவதேபோலப் பிரஹ்மாவிற்குமுண்டாம். சரீர சம்பந்தத்தானே நாய்க்குத் துக்கமுண்டாவதே போலப் பிரஹ்மாவிற்குமுண்டாம். விடயபோகமெல்லாம் ஜீவர்களின் துக்ககாரணங்களேயாம் என்பதை யாம்மாத்திரங்கூறவில்லை; மற்றோ, எல்லாப்பிரஹ்மவேத்தாக்கட்கும் இதுவே கருத்தாம். இதனானே, யாஞ்ஞவற்கியர் முதலிய பிரஹ்மவேத்தாக்கள் அவ்விடயங்களிடத்தே அநேகவகைத் தோடங்களை விசாரித்து யாவற்றையும் விட்டொழித்தனராதலின் அந்தப்புத்திராதிப் பிரஜைகளினுற்பத்தி இராக உற்பத்தி வாயிலாய் சம்சார ஹேதுவாதலின், பிரஹ்மசாக்ஷாத்கார ஹேதுவன்றாயினும் சுருதி பகவதியானவள் பிரஹ்மசாக்ஷாத்காரக்

தின் சத்தியாதி சாதனங்களுள் மைந்தர் முதலிய பிரஜை யுற்பத்தி கூறியது சகாமரின் சுவர்க்காதி சுகப்பொருட்டுக் கூறியதாம். புத்திராதிப் பிரஜைகளி னுற்பத்தி ஜீவர்கட்குச் சம்சார சம்பந்தியாய சுககாரணமாவதேபோலச் சத்தி யாதி சாதனமும் அதிகாரிகட்குப் பிரஹ்ம சாக்ஷாத்கார ஹேதுவாம். இவ்வா றுய திருஷ்டாந்தத்தை யுணர்த்தும்பொருட்டுச் சுருதியானது அவற்றோடவற் றைப் புகன்றது. அல்லது, இவ்வுலகத்தே யாது உயிர்களின் இராகத்தால் அடை யமுடியாதோ அதைச் சாஸ்திரம் விதிக்கின்றது; மாறுயதை விதிப்பதில்லை. ஆகார நித்திரைமுதலியவை இச்சையானே பிராப்தமாமாதலின் அவற்றைச் சாஸ்திரம் விதிப்பதின்றும்; அதுபோலவே மனுடர் முதலிய எல்லாச் சீவர்கட்கும் புத்திராதிகளினுற்பத்தி இராகத்தானே பிராப்தமாமாதலின் சுருதிவிதிப்பதில்லை.

சங்கை :—ஹே பகவன்! அதிகாரிகட்கு மோக்ஷ பிராப்தியின்பொருட்டுச் சுருதி கூறிய சத்தியாதி தருமங்களுள் இராகததாற பிராபதமாயதும், மோக்ஷத் தின்கண்ணே அனுபயோகியும் ஆகிய பிரஜோற்பத்தியைக்கூறல் அத்தியந்தம் அசங்கதமாம்.

சமாதானம் :—ஹே குழந்தாய்! மோக்ஷ அடைவின்பொருட்டுச் சத்தியாதி சாதனங்களின் விதானத்தைச்செய்யும் சுருதியின்கண்ணேயிருக்கும் பிரஜனன சப்தமும் சத்தியாதி சப்தங்களைப்போலத் தன்பொருளை விதானமேசெய்யும் என நீ கூறுவதைபாமங்கீகரிக்கின்றோம், ஆனால், அசசபதத்திற்குப் புத்திராதி பிர ஜோற்பத்திரூப அருத்தமின்றும்; மறறோ, வித்தையின் அத்தியாபனமேயாம்; என்னை, ஈண்டு இருவகை வமமிசமாம்:—ஒன்றோ சீடர்க்கு வித்தையைப் படிப் பித்து ஆம். மற்றொன்றோ, புத்திராதிகளையுண்டாக்கியாம். ஆகையால், உலகப் பிரசித்தமாகப் பிரஜனன சப்தத்தால் வித்தையின் அத்தியாபனத்தையே கவர்ந்து கொள்க.

சங்கை :—ஹே பகவன்! அந்தப் பிரஜனன சப்தம் பிரஜோற்பத்தியை விதி யாததேபோல வித்தையின் அத்தியாபனத்தையும் விதிப்பதின்றும்; என்னை, இராகத்தானும் காட்சிமுதலிய அளவையானும் அடையப்படாத பொருளே சாஸ்திரத்தால் விதிக்கத்தகுதியதாம்; மாறுயதன்றும். பசிநீக்கப்பொருட்டு அன் றுதி பக்ஷணம் கூறியவற்றாலடையப்பெறுமாதலின், அதை யெந்நூலும் விதிப்ப தில்லை. அங்ஙன் வித்தையின் அத்தியாபனமும் ஜீவனப்பொருட்டு மறையவர்க்கு இராகத்தானே அடையப்பெறும் 'யாஜநாத்யாபந ப்ரதிக்ரஹைர் ப்ராஹ்மணோ தனமர்ஜயேத்' யாகத்தைச் செய்வித்தல், வித்தையைப் படிப்பித்தல், தானம் வாங்குதல் என்னும் மூன்றுபாயங்களால் பிராஹ்மணன் தனத்தைச் சம் பாதித்துக்கொள்க. இவ்வசனத்தானும் தன அடைவின்பொருட்டு வித்தையின் அத்தியாபனம் பூர்வம் அடைவுற்றதேயாமாதலின், அந்தப் பிரஜனன சப்தத் தால் வித்தையின் அத்தியாபனவிதானஞ் சம்பவியாது.

சமாதானம் :—ஹே குழந்தாய்! யாம் அச்சப்தத்தானே கேவலம் வித்தை யத்தியாபனத்தையே கவரின் நின்னவிறுப் பொருந்தும்; ஆனால், கேவல மத்தியா

கவர்வில்லை; ஏனெனின், அதன்றிய ஆனமவடிவத்தை யுணர்த்துவிப்பதாய
பிரஹ்மவித்தைப் பிரகரணத்தின்கண்ணே சத்தியாதி சாதனங்கட் குபயோக
மிருத்தல்போல, வித்தை யத்தியாபனத்திற்கும் உபயோகமாம். அங்ஙனே அதன்
உபயோகமின்றாம்; மற்றேறு, அத்தியாபன பலபூதமாகிய அத்விதீயப் பிரஹ்மத்
தின்கண்ணே சர்வ வேதாந்தசாஸ்திர தாற்பரிய நிச்சயரூப சிரவணத்திற்கே
யுபயோகமாம். இதனானே அச்சப்தம், இலக்கணாவிருத்தியானே சிரவணத்தையே
யுணர்த்தும். அது இராகத்தால் காட்சி முதலிய பிரமாணங்களால் முன்னடை
வுற்றதன்றாமாதலின், இப்பக்ஷத்தே முன்மொழிந்த தோடஞ்சம்பவியாது. ஹே
குழந்தாய்! முன்னர் யாம் பிரஜனன சப்தத்தானே புத்திராதிப் பிரஜோற்பத்தி
கூறினேம்; அப்பூர்வ பக்ஷத்தினானே புத்திரோற்பத்தியின்பொருட்டு யௌவன
அவஸ்தை ஸ்திரீமுதலிய சாதனங்களின் அபேக்ஷை யவசியமாம். இப்போது
அச்சப்தத்தால் சிரவணத்தைக் கூறினேம், இச்சித்தாந்த பக்ஷத்தினானே சிரவணோற்
பத்தியின்பொருட்டு முற்சாதனாபேக்ஷையின்றாம்; மற்றேறு, கேவலம் சந்நியாச
ஆசிரமமே அபேக்ஷிக்கத்தக்கதாம். 'ஸந்ந்யஸ்ய ஶ்ரவணம் குர்யாத்' அதிகாரி
யானவன் சந்நியாச ஆசிரமத்தைத் தரித்தே சுரோத்திரிய பிரஹ்ம நிஷ்ட
குருவாயிலாய் வேதாந்த சாஸ்திர சிரவணஞ்செய்க. இத்துணைக்கிரந்தத்தானே
பிரஜனனவடிவ சப்தம சாதனம் நிரூபிக்கப்பெற்றது. இப்போது ஆகித அக்கினி
அக்கினிஹோத்திரயாகமாகிய மூன்று சாதனங்களைப் பலசகிதமாய் நிரூபிப்
பாம்:—ஹே குழந்தாய்! பிராஹ்மண க்ஷத்திரிய வைசிய மூவருணங்களுள்,
வேதாத்தியயன முடையவனும், மங்கையையுடையவனுமே ஆகிதாக்கினியின்
கண்ணும், அக்கினி ஹோத்திரத்தின்கண்ணும் யாகத்தின்கண்ணும், அதிகாரி
யாவன்; மாறுபவன் ஆகானாதலின் அவைபவசியம் வேண்டற்பாலனவாம்; ஏனெ
னின், சுருதியின்கண்ணும் ஸ்மிருதியின்கண்ணும் இவ்வாறியம்பப்பெற்றுளது:—
பிராஹ்மணாதி மூவரும் மங்கையையுடையராய், புத்திரரையுடையராய், மயிர்க்
கறுப்புடையராய், குருட்டுத்தன்மை செவிட்டுத்தன்மை முதலிய தோடமற்றவ
ராய், வேதத்தின் கருமகாண்டத்தே குசலராய், தனாதி சம்பத்துடையராய், நூற்
கூறியமுறையே தக்ஷிணாக்கினி, கார்ஹபத்தியம், ஆஹவனீயம் சப்யம் ஆவசத்
யம் என்னு மைந்தக்கினிகளைத் தமது கிரகத்தே ஸ்தாபனஞ்செய்க. அல்லது,
முதன் மூன்றைத் தாபனஞ்செய்க. அவ்வைந்தும் சுருதிகூறிய சர்வ கருமங்களை
யும் சித்தி செய்வனவாம். இதனானே, அவ்வக்கினிநூலின்கண்ணே சிரௌத
அக்கினியெனப்படும். ஹே குழந்தாய்; அதர்வணவேதத்தை அத்தியயனஞ்செய்
யும் சில மறையவரோ ஒரு இருஷியெனப்பெயரிய ஒரு அக்கினியையே சிரௌத
அக்கினி யென்பர்; அதன் கவர்ச்சியோ விவாககாலங்கொண்டேயாமெனக்கூறு
வர். கிருஹ்ய சூத்திரக்காரரோ:—தக்ஷிணாக்கினி முதலிய சிரௌத அக்கினி
களைக்கவருஞ் சமர்த்தில்லாதவன் ஒரு ஔபாசனமெனப்பெயரிய ஸ்மார்த்த அக்
கினியைக்கவர்க; ஆனால், அக்கினியின் ஆதானமின்றிக் கிருகஸ்தனானவன் ஒரு
காலும் சும்மாவிருக்கலாகாது. இத்துணையால், ஆகிதாக்கினியின் வடிவம் நிரூபிக்
கப்பட்டது. இனி யதன்பயனைக்கூறுவாம். அவ்வக்கினியாற் கேவலம் கருமத்
தையே செய்பவன் இவ்வுலகத்தே மகாகீர்த்தியையுடையவன் மரணத்தின்பின்

னர்க்கசுவர்க்கத்தையடைவன். அவ்வக்கினியால் உபாசனையோடுகூடிய கருமங் களைச்செய்பவனும் ஈண்டே மகா கீர்த்தியையும் மரித்தபின் தேவயானமார்க்க வாயிலாய்ப் பிரஹ்மலோகத்தையுமடைவன். இப்போது அக்கினிஹோத்திரரூப நவமசாதனத்தை பலத்தோடும் பகர்வாம் :—ஹே குழந்தாய்! முற்கூறிய ஆகித அக்கினியின்கண்ணே மாலையிலும் காலையிலும் ஆகுதியீதல் அக்கினிஹோத்திர மாம், அதனை இல்வாழ்வோன் வாழும்வரை செய்கவெனச்சுருதி விதித்திருந்த போதினும் அதன் கருத்திதுவாம் :—சந்யாசத்தின் காரணபூதமாய வைராக்கிய மான துண்டாகாதவரை அதிகாரியானவன் அவ்வக்கினிஹோத்திரத்தை அவசி யம் செய்க; வைராக்கியம் உண்டானவுடனே அவற்றைவிடுத்துச் சந்யாச ஆசிர மத்தையே கவர்க. இல்லறம் நடாத்தும் இல்லில், கண்டனீ, தலனீ, சுல்லீ, பேஷணீ, மார்ஜனீ என்னுமைந்தும் ஜீவஹிம்சாஸ்தானங்களாயிருக்கும் நெற் கோதுமை முதலியவற்றைக்குத்தும் உலக்கை கண்டனீயெனப்பெறும். சாகாதி களையறுக்குஞ் சாதனக்கருவி தலனீயெனப்பெறும், அன்னத்தைப் பக்குவப் படுத்துமிடம் சுல்லீயெனப்பெறும், அன்னத்தையரைக்குஞ் சாதனமாயது பேஷணீயெனப்பெறும், வீட்டைத்துய்தாக்கும் சாதனமாயது மார்ஜனீயெனப் பெறும். இவ்வைந்தாலும் ஜீவர்களின் ஹிம்சையவசியமாயுண்டாம். அதனாலுண் டாயபாவம் அக்கினிஹோத்திரமுடைய கிருஹஸ்தனுக்குண்டாகாதாம். அல்லது, அக்கினிஹோத்திரி மாலையிலும், காலையிலும் அக்கினியின்கண்ணே யீயும் ஆகுதி, அக்கினிவாயிலாய் ஆதித்தியனையடையும். அவ்வாகுதி விசிஷ்ட ஆதித் தியனினின்றும் மழையுண்டாம். அதனினின்றும் நெற் கோதுமை முதலிய அன்னமுண்டாம். அதனினின்றும் பிரஜையுண்டாம. இம்முறையே அவ்வக்கினி ஹோத்திரியே சர்வ ஜகத்தின்காரணமாம்; காப்பவனும். சர்வ ஜகத்தைத்திருப்தி செய்வதாலுண்டாய புண்ணியம் அக்கினிஹோத்திரிக்குத் தினமுண்டாமென்பது கருத்தாம். அல்லது, ஈண்டுப் பசிபாற் பீடிக்கப்பட்ட பாலகன் தன்றாயை ஆசிரயிப் பதேபோலச் சுவர்க்கத்தின்கண்ணேயிருக்கும் இந்திராதி சர்வ தேவதைகளும் அக்கினிஹோத்திரியையே ஆசிரயிப்பாரதலின், அவன் அவர்கட்குத் தாய்போன்ற வனும். அல்லது, அவன் இவ்வுலகத்தும் மகாகீர்த்தியையடைவன், தனுதிபதார்த் தங்களையுமடைவன், தரிசபூரணமாசாதி யாகங்களைச்செய்பு மதிகாரியுமாவன். அவன் இறந்ததன்பின்பு சுவர்க்கலோகத்தையடைவன். சர்வ தேவதைகளும் அவனை நமஸ்காரஞ்செய்வர். உபாசனையோடுகூடிய அக்கினிஹோத்திரஞ்செய்ப வனே மரணத்தின்பின்னர்த் தேவயானமார்க்கவாயிலாய்ப் பிரஹ்மலோகத்தையே யடைவன். இப்போது யாகவடிவதசமசாதனத்தைப்பலத்தோடு நிரூபிப்பாம் :— ஹே குழந்தாய்! முற்கூறிய ஆகித அக்கினிகளால் அணியப்பெறுவனவாய அசுவமேதம் முதலிய கருமங்கள் யாகங்களாம். முற்கூறிய தானத்தாலுண்டாம் பயன் யாகத்தாலுண்டாமாதலின் யாகபலனையீண்டு விஸ்தாரமாய் நிரூபிக்கவில்லை. இப்போது மானதவடிவ ஏகாதசசாதனத்தைப் பலத்தோடு நிரூபிப்பாம் :—ஹே மைந்த! தருமம், சத்தியம், தபம், தமம், சமம், தானம், பிரஜனனம், ஆகிதாக் கினி, அக்கினிஹோத்திரம் யாகம் என முற்கூறிய பத்துச்சாதனங்களும், மேற்

கூறுமசந்யாசசாதனமும், ஒரு மானதசாதனத்தானேயாம், அஃதானன்றி அவை
யுறுதவா. தைரியத்தோடுகூடிய மனமே மானதசாதனமாம். அண்டுத் தைரியத்
தோடுகூடிய மனத்தையுடையவனே தருமாதி சாதனங்களைச் சம்பாதிப்பன்,
தைரிய மற்ற அத்தியர்தந்தினன் அவற்றைச்சம்பாதியான். இவ்வாறுய உடன்பா
டெதிர்மறைகளால் இம்மானதசாதனத்தே அவற்றின் காரணத்தன்மை துணியப்
பெறும், இவ்வுலகத்தே பிரவிருத்தி நிவிருத்திவடிவமாயுள்ள வைதிககருமங்
களும் லௌகிக கருமங்களும் மனத்தின் அதீனமேயாம். மனமின்றி எக்கரும
மும் சித்தமாகாவாம். இதனானே சுருதியானது அத்தைரியத்தோடுகூடிய
மனத்தை பதினொன்றுவது சாதனமெனக்கூறியது. இம்மானத சாதனமே சர்வ
சாதனங்களின் மூலமாம் என்னும் பொருளின்கண்ணே இரண்யகருப்பரே திருஷ்
டாந்தமாவர்; எனெனின், அவர் தைரியத்தோடுகூடிய மனமகிமையானே சிருஷ்
டியின் ஆதிகாலத்தே இவ்வெல்லாத்தூலவுலகத்தையும் உண்டாக்கினர். தமது
ஸ்மரணமாத்திரையானே பக்தர்களின் சர்வ பாவங்களையும் நாசஞ்செய்வர், எல்லா
வுலகாலும் துதிக்கத்தகுதியர், எல்லா வுலகாலும் பூசிக்க யோக்கியர். ஹே
மைந்த! அந்தத் தைரியத்தோடுகூடிய மனத்தின் மகிமையானே அவ்விரண்யகருப்
பர் யாவரினும் அதிகத்தன்மையையடைந்ததேபோல வேறநேக முனிவரும்,
அநேகர் தேவதைகளும், அநேகம் மனுடரும் அத்தைரியத்தோடுகூடிய மனோ
மகிமையானே மேன்மையையடைவுற்றனர். இதனானே, சுருதிபகவதியானவள்;
மோக்ஷ இச்சையுடையவர்கட்கும், சுவர்க்க இச்சையுடையவர்கட்கும், தருமாதி
சர்வ சாதனங்களினும் மானதசாதனம் மேன்மையதெனக் கூறியுள்ளாள். ஆகை
யால், அதிகாரி அம்மானதசாதனத்தை அவசியமாய்ச் சம்பாதிக்கவேண்டும். இப்
போது சந்யாசரூபதுவாதசசாதனத்தை யெல்லாச்சாதனங்களினும் மேன்மைய
தெனவருணிக்கும்பொருட்டு முதலில் அச்சந்நியாசபேதநிரூபணஞ்செய்வாம்:—
ஹே குழந்தாய்! அது இலிங்கம் அலிங்கம் என இருவகைத்தாம். அவற்றுள்
தண்ட முதலிய குறியையுடையது இலிங்கமாம்; அஃதற்றது, அலிங்கமாம்.
முதலதன்கண்ணே பிராஹ்மணன் ஒருவனுக்கே யதிகாரமாம், க்ஷத்திரியர் முதலிய
வர்கட்கு அதன்கண்ணே அதிகாரமின்றாம். மற்றதன்கண்ணே க்ஷத்திரிய,
வைசிய, சூத்திர, ஸ்திரீ முதலிய யாவருக்கும் அதிகாரமுண்டு. அவ்விருவர்கட்
கும், தண்ட முதலிய குறிகளைவிடுத்து வேறுள்ள பிக்ஷாடனாதியாகிய தருமங்கள்
சமைதமை அகிம்சை முதலிய ஆந்தர தருமங்கள் சமானங்களேயாம். முதலதும்
திரிதண்டமெனவும், ஏகதண்டமெனவும் இருவகைத்தாம். முத்தண்டமுறல்
முதலதாம். ஏகதண்டமுறல் மற்றையதாம். முதலதும், குடீசகமெனவும், பகூதக
மெனவும் இருவகைத்தாம். அங்ஙனே, மற்றதும் ஹம்சமெனவும் பரமஹம்சமென
வும், இருவகைத்தாம். இப்போது முதலில் குடீசகசந்யாச அதிகாரியையும்,
அதன்தருமங்களையும் நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! புத்திரனுடையவரும்,
இல்லுடையவரும், தனமுடையவரும், மனைவியற்றவரும், ஜரையவஸ்தையோடு
கூடியவரும், ரோகயோடுகூடியவரும், புத்திராதிகளிடத்தே நேயமுடையவரும்,
பிக்ஷையுண்வருந்த ஆற்றலற்றவரும், கிலேசத்தைப் பொறுக்கமுடியாதவரும்,
ஆகிய மற்றையர் திரிதண்டசந்யாசத்தைக்கவர்க. தமது இருக்கத்தின்கண்ணே

குடும்பத்தினின்றும் வேறாக ஒரு குடிற்கட்டிவசிக்க, தமது மைந்தர்பாலே அன்னவஸ்திராதிகள் கொள்க. பிரணவாதிமந்திரஜபமே முதலாக எத்துணை, ஸ்மிருதிகளில் குடீசகசந்யாச தருமங்கள் கூறியிருக்கின்றனவோ, அவையாவற்றையும் சாவதானமாய்ச்செய்க. இனி பகூதகசந்யாச அதிகாரியையும், அதன் றருமங்களையும், நிரூபிப்பாம் :—ஹே மைந்த ! தமது மனைவி யிறந்துபோனவரும், மீண்டும் மனைவியின் சம்பாதனத்தே யிச்சையற்றவரும், அல்லது கிழ அவஸ்தையுடைய ஸ்திரீயையுடையவரும், எப்போதும் பிரஹ்மசரியதருமத்தே பிரீதியுடையவரும், சந்தியாஉபாசனாதிகருமத்தே சிரத்தையுடையவரும், ஜரா அவஸ்தையோடுகூடியவரும், புத்திராதிபந்துக்களிடத்தே நேயமற்றவரும், ஆகிய மறையவர் பகூதகசந்யாசத்தைக்கவர்க. அவர் வைத்துக்கொள்ளக்கூடிய ஐந்து பதார்த்தங்களாவன ;—திரிதண்டம், நீர்வைக்கும் கமண்டலம், பிக்ஷான்னங்கவரும்பொருட்டு வஸ்திரம், அன்னத்தையுண்ணும் பாத்திரம், நீரைச்சோதிக்கும் வஸ்திரம் என்பனவாம். அவர் கீடத்தைப்போலப் பையப்பையப் பிருதிவியின்மீது சஞ்சாரஞ்செய்க. ஸ்மிருதிகளில் அவர்க்கு விதித்த சர்வ தருமங்களையும் சிரத்தையோடும்செய்க. இப்போது ஹம்சசந்யாசத்தின் அதிகாரியையும் அதன்றருமங்களையும் நிரூபிப்பாம் :—ஹே குழந்தாய் ! விடயசுகத்தின்கண்ணே பரமவைராக்கியத்தை யடைந்திருந்தபோதினும் கருமங்களிடத்தே சிறிது மாத்திரை சிரத்தையுடையவர் ஆகிய பிராஹ்மணர், ஹம்சசந்யாசத்தைக்கவர்க. சாமவேதத்தை அத்தியயனஞ்செய்யும் பிரஹ்மசாரி சிகைபற்றவனாய் யஞ்ஞ உபவீதத்தைத்தரித்துக்கொள்வதேபோல அவரும் சிகையற்றுபவீதந்தரிக்குக, ஏகதண்டத்தைத்தரித்துக் கீடம்போலப் பையப்பையப்பிருதிவியின்மீது சஞ்சரிக்குக. பிரணவாதி மந்திர ஜபமே முதலாக எத்துணை ஹம்சசந்யாசிகளின் தருமங்கள் ஸ்மிருதிகளிற் கூறப்பெற்றிருக்கின்றனவோ அவையியாவற்றையும் சிரத்தையோடும் செய்க. இப்போது பரமஹம்சசந்யாசத்தின் அதிகாரியையும் அதன் றருமங்களையும் நிரூபிப்பாம் :—ஹே மைந்த ! இகபரவுலகவிடய சுகங்களில் மேலாய வைராக்கியத்தையடைந்தவரும், ஹிருதய தேயத்தே யிராநின்ற ஆநந்தவடிவ ஆன்மாவின் அடைவில் எப்போது மிச்சையுடையவரும், கருமவாதனையற்றவரும், ஆகிய மறையவர் தமது ஹஸ்தத்தே மூங்கிலின் ஏகதண்டத்தைத் தரித்துக்கொண்டு பரமஹம்ச சந்யாசத்தைக்கவர்க. ஆன்ம சாக்ஷாத்காரப்பொருட்டு எப்போதும் வேதாந்தசாஸ்திர சிரவணஞ்செய்க. ஹே மைந்த ! இங்ஙனம் நான்குவகை யிலிங்க சந்யாசங்கள் சுருதிஸ்மிருதிகளிற் கூறப்பெற்றிருக்கின்றன. அவற்றுள் நான்காவது யாவினும் உயர்ந்ததாம். அதன்கண்ணே பரம மேன்மையை வெளிப்படுத்தும்பொருட்டு முதலில் மேன்மைப்பதார்த்தங்களின் பரம்பரையை நிரூபிப்பாம் :—ஹே குழந்தாய் ! பிராணனுடைய போக்குவரத்தின் வெளிப்பாடில்லாத விருக்ஷாதிகளினும் வெளிப்பாடாகப் பிராண வியாபாரத்தையுடைய கீடாதிஜந்து மேன்மையதாம். அதனினும், ஸ்பஷ்டமதியுடைய சர்ப்பாதி ஜீவன் மேன்மைத்தாம். அதனினும் நாற்காலுடைப்பசு முதலிய பசுக்கள் மேன்மையனவாம். அவற்றினும், கோக்கள் மேன்மையனவாம். அவற்

ரினும் இருகாலுடைய உயிர் மேன்மையதாம். அதனினும் சூத்திரர் மேன்மைய ராவர். அவர் பிறப்பு முதல் இறப்பு வரை ஓரே வருண ஆசிரமமுடையவராவர். அவரினும் வைசியர் மேன்மையர். அவரினும் க்ஷத்திரியர் மேன்மையராவர். அவரினும், பிராஹ்மணர் மேன்மையராவர். இவ்வுலகத்தே பூதேவப்பிராஹ் மணர் பூஜ்ஜியராவதேபோல அக்கினி முதலிய தேவதைகளும் பூஜ்ஜியராவராத லின் சாஸ்திரத்தே அவ்வக்கினி முதலிய தேவதைகள் பிராஹ்மணரின் சம மாகவே கூறப்பெற்றிருக்கின்றனர். அம்மறையவரினும், வேதபாடிப் பிராஹ் மணர்கள் மேன்மையர். அவரினும், சாமானியமாய் வேதபொருளையறிந்த பிரா ஹ்மணர் மேன்மையராவர். அவரினும் ஐயந்திரிபற வேதார்த்தத்தை யறிந்துள்ள மறையவர் மேன்மையர். அவரினும் தமது வருணாசிரம கருமங்களைச்செய்யும் மறையவர் மேன்மையர். நான்காசிரமங்களினும் பிரஹ்மசரியத்தினும், கிருஹஸ் தம் உயர்வாம், அதனினும் வானப்பிரஸ்தம் உயர்வாம், அதனினும் சந்யாசம் உயர் வாம். அதன்கண்ணும் குடீசகமுயர்வாம, அதனினும் பகூதகமுயர்வாம், அதனி னும் ஹம்சமுயர்வாம, அதனினும், பரமஹம்சமுயர்வாம். அந்நால்வகையருள் ளும் பரமஹம்ச சந்யாசியோ பிரஹ்மசாக்ஷாதகாரப்பொருட்டே சந்யாசத்தைக் கவர்வனாதலின் சுருதிபகவதி அவனை பிரஹ்மவிதெனவும், பிரஹ்மநிஷ்ட னெனவுங் கூறுவள். இவ்வாநந்தவடிவ ஆன்மாவைத் தூல சூக்ஷ்மகாரணமென் னும் முத்தேகத்தினின்றும் வேறாக அறிதற்பொருட்டே சுருதியானது இச்சந் யாச ஆசிரமத்தை விதித்தது. அதனைத்தரித்தும் ஆன்மவிசாரத்தைச்செய்யாது மோகத்தாற் கருமத்தையே செய்பவன் பதிதனாவன். இவ்வார்த்தையை வார்த்தி கக் கிரந்தகர்த்தாவாய சுரேசுவர ஆசாரியரும கூறியுள்ளார்.

ஸம்வேதா ய-ஹவிவெகாய ஸந்யாஸ: ஸவ-ஹகஃ-ஹணாம் ।
ஶ்ரு-த்யா விஹிதெயஸ்மாக் தத்யாகீவதி தொஹவெக் ॥

"நீயேனும் பதப்பொரு ணிகழ் விவேகமே
மேயுறத் தொழிலெலாம் விடுத லாமென
ஆயநன் மறை விதியாத லானதைப்
பாயுற விடுத்தவன் பதித னுவனால்."

(பொ-ள்.) சுருதிபகவதியானவள் துவமபதார்த்த ஆன்மவிவேகஞ் செய் யும்பொருட்டே சர்வ கருமங்களின் சந்யாசத்தை விதித்தனள்; ஆகையால், சந் யாச ஆசிரமத்தைக்கவர்ந்து ஆன்மவிசாரத்தைச் செய்யாதவன் பதிதனாவான். ஓ குழந்தாய்! சந்யாச ஆசிரமத்தைக் கவர்ந்து நிரந்தரம் ஆன்மவிசாரம் செய் பவன் பிரஹ்மரூபனேயாவன். 'ப்ரஹ்மவெத ப்ரஹ்மைவ ஹவதி' ஆன்மவடிவப் பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரித்து அதிகாரியானவன் பிரஹ்மரூபனேயாவன். இவ் வுலகத்தே காரியகாரண ரூபத்தாலும், தூலசூக்ஷ்மரூபத்தாலும், பர அபரரூபத் தாலும், பிரசித்தமாய சம்பூரண பதார்த்தங்களும் பிரஹ்மரூபமேயாம். 'ஸவ-ஹம் வலிவடி ப்ரஹ்ம' இவ்வெல்லாவுலகும் பிரஹ்மரூபமேயாம். சர்வான்மவடிவப் பிரஹ்மத்தைத் தனதான்மரூபமாய்ச் சாக்ஷாத்கரித்தவனாகிய பிரஹ்மவித்தும் சர்வ ஜகத்தின் ஆன்மரூபமேயாவன். அவனினும் மேலவாய் மூக்காலத்திலுமெவ்

பதார்த்தங்களுமின்றாம்; மற்றோ, அவனே சர்வ ஜகத்திலும் மேலானவன். காரிய காரணரூபச் சர்வ ஜகத்தையும் அபேக்ஷித்து அந்தப் பிரஹ்மம் பரமாயிருக்கின்றதேபோல அந்தப் பரப்பிரஹ்மத்தை யடைவிப்பதாய இச்சந்யாசமும் தவமுதலிய சர்வ சாதனங்களினின்றும் பரமாம். இதனையொழிந்த மற்றவையாவும் கீழாயவாம். ஹே குழந்தாய்! அச்சந்யாசத்தே பிரஹ்மரூபத்தன்மையை வெளிப்படுத்தும்பொருட்டும், சர்வ ஜகத்காரண ரூபத்தன்மையை வெளிப்படுத்தும்பொருட்டும், அத்தித்திரி மறையவர் இவ்வாறாய யுக்தியைக்கூறினர்:—இவ்வுலகத்தே ஜீவர்கட்குப் பிரஹ்மபாவத்தை யடைவிக்கும் பிரஹ்மான்ம சாக்ஷாத்காரமானது சந்யாச ஆசிரமத்தானே யுண்டாமாதலின் இச்சந்யாசம் காரணப் பிரஹ்மரூபமாம். அம்மூலகாரணரூபப் பிரஹ்மத்தினின்றும் சமஷ்டி சூக்ஷ்மபூத உபாதியையுடைய சூத்திரான்மாவுண்டாம். அது சாஸ்திரத்தே ஹிரண்யகர்ப்பப் பிரஹ்மாவென்னும் நாமத்தால் கூறப்பெறும்; அதனினின்றும் சமஷ்டி ஸ்தூல உபாதியையுடைய பிரஜாபதியுண்டாம்; அதைச் சுருதிபகவதி விராட்டுச் சம்வற்சர ஆதித்தியன் என்பன முதலிய நாமங்களால் அழைத்தனள். இவ்வாதித்தியமண்டலத்தே சுவர்ணசமான வர்ணமுடைய சுயஞ்சோதியாய புருஷனிருக்கின்றான். அவனிடத்தே இவ்வுலகமெல்லாவற்றின் காரணத்தன்மை பிரத்தியக்ஷமாய்த் தோற்றும்; ஏனெனின், அவன் தனது சரீரத்தினின்றுமுண்டாய கிரணங்களால் இப்பிருதிவியின் கண்ணேயிருக்கின்ற சர்வ ஜலத்தையும் கவர்வன், மீண்டும் அதைத் தனது கிரணவாயிலாய் மேகத்தின்கண்ணே ஸ்தாபனஞ் செய்வன், அம்மேகவாயிலாய் அந்நீரை இப்பூமியின்கண்ணே அடைவிப்பன், அந்நீரினின்றும் இப்பிருதிவின்கண்ணே விருக்ஷாதி ஸ்தாவரப் பிராணியுண்டாம், நெற்கோதுமை முதலிய அநேகவகையாய ஔஷதங்களும், வநஸ்பதிகளும் உண்டாம்; அவற்றினின்றும் நெற்கோதுமை முதலிய அன்னமுண்டாம்; அவற்றினின்றும் மனுடர் முதலிய சர்வப் பிராணிகளுமுண்டாம், சர்வ ஜீவர்களின் பிராணதாரணையுமுண்டாமாதலின் அவ்வாதித்திய மண்டலத்தேயிருக்கின்ற சுயஞ்சோதியாய புருடனே அன்னவாயிலாய்ச் சர்வ ஜகத்தின்காரணமாம். இப்போ திப்பொருளையே வெளிப்படுத்தும்பொருட்டு முதலில் நெற்கோதுமைமுதலிய அன்னத்தின்கண்ணே பரம்பராசம்பந்தத்தானே சுவர்க்காதி சுகமோக்ஷகாரணத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! அந்நெற்கோதுமை முதலிய அன்னத்தினின்றும் உண்டாய பிராணிகளினின்றும் கரும உபாசனைசெய்யும் ஆற்றல்வடிவ பலமுண்டாம். அப்பலத்தினின்றும் தூயகருமரூப தவமுண்டாம். அத்தபத்தைப் பிருகு இருஷியானவர் வருணபிதாவினுபதேசத்தானே சம்பாதித்தனர். அச்சுத்த கருமரூப தவத்தினின்றும் பரலோக ஆஸ்திக புத்திவடிவ சிரத்தையுண்டாம். அதனினின்றும் சாஸ்திர அர்த்ததாரணஞ் செய்வதில் சமர்த்தபுத்திரூப மேதையுண்டாம். அதனினின்றும் மனதைத் தடைப்படுத்துமாற்றலுற்ற மதிவிருத்திரூப மனீஷையுண்டாம். அதனால் தடுக்கப்பட்ட இம்மனம் சர்வ லௌகிக பதார்த்தங்களின் பரித்தியாகத்தால் கேவலம் சாஸ்திர அர்த்தத்தின்கண்ணே பிரவிருத்தமாம். அம்மனீஷையினின்றும் சாஸ்திரார்த்தவாசனையோடுகூடிய தூயமனமும்

உண்டாம்; அதனினின்றும் ஆன்மாகார விருத்திவடிவ சாந்தியுண்டாம்; அதனினின்றும், ஆன்மாவின் ஆனந்தாதிவடிவத்தை நிர்ணயிக்கும் அந்தக்கரண விருத்தி விசேஷரூபச் சித்தமுண்டாம்; அதனினின்றும் குருவுபதேசித்த வேதவாக்கியப் பொருளை விஷயஞ்செய்யும் ஸ்மிருதியுண்டாம்; அதனினின்றும் சோதிக்கப்பட்ட தத்துவம் பதத்தின் அர்த்தப்பிரகாசரூப ஸ்மரணமுண்டாம்; அதனினின்றும் பிரஹ்மான்மாவின் பரோக்ஷஞான முற்பன்னமாம்; அதனினின்றும் யான் பிரஹ்மரூபன் என்னும் அபரோக்ஷ ஞானமுண்டாம், ஹே மைந்த! இவ்வாறு அந்தப் பிரஹ்மரூப சந்யாசம் அன்னத்தின் காரணரூபமும் பலரூபமும் ஆம். ஆண்டாதித்திய மண்டலத்திலிருக்கும் புருடரூபமாயோ பிரஹ்மரூப சந்யாசம் அன்னகாரணரூபமாம். பிராணாதி பரம்பரையாலோ அது அன்ன பலரூபமாம். இவ்வாறு நெற் கோதுமை முதலிய அன்னத்தைக் காரணரூபத்தாலும் பலரூபத்தாலும் பிரஹ்ம சம்பந்தமுடையதென வுணர்ந்து அதிகாரிகள் அதிதிகட்கு அஃதைக்கொடுப்பின் அவ்வன்னத்தின் முற்கூறிய சர்வ காரணங்களின் சர்வ காரியங்களின் தானஞ் செய்ததாகும்.

சங்கை:—ஹே பகவன்! காரியதானஞ் செய்யின், காரியத்தின் சர்வ காரண தானமும், காரணதானஞ் செய்யின், காரணத்தின் சர்வ காரியதானமும் செய்தல் சம்பவியாது.

சமாதானம்:—ஹே குழந்தாய்! இவ்வுலகத்தே எவனேனுமொருவன் ஒரு மறையவனுக்குத் தானஞ்செய்யின், இவ்வெனது மாமரம் இருக்கும்வரை அதன் பலத்தைக் கவர்ந்துகொள்க; எனக்கூறுக என்னுமித்தலத்தே காரியரூப பலங்களின்றானத்தால் அவற்றின் காரணரூப விருக்ஷதானமுமாம். ஆகையால், காரிய தானஞ் செய்யின் காரணதானஞ் சம்பவிக்கும். பிராஹ்மணனுக்குக் கோதானங் கொடுப்பவன் காரணரூப கோதானஞ்செய்வதால் காரியரூபப் பால் முதலிய வற்றையும் தானஞ்செய்தவனாவன். ஆகையால், காரணதானஞ் செய்வதாற் காரிய தானஞ் சம்பவிப்பதேபோல அன்னதானஞ்செய்வதால் முற்கூறிய அன்னத்தின் சர்வ காரணகாரியங்களின் தானஞ் சம்பவிக்கும். முற்கூறிய அன்னமய கோசத்தினின்றும் பிராணமய கோசமுண்டாயது, அதனினின்றும் மனோமய கோசமுண்டாயது, அதனினின்றும் விஞ்ஞானமய கோசமுண்டாயது, அதனினின்றும் ஆனந்தமயகோசமுண்டாயது. இவ்வாறு பஞ்சகோச ரூபத்தானே இவ்வன்னமேயிருக்கும்; இதனானும் இவ்வன்னமே சர்வ ஜகத்காரணமாம். ஹே குழந்தாய்! சுருதியின்கண்ணே விஞ்ஞானமய கோசத்தால் ஆனந்தமயகோச உற்பத்தி கூறியதின் கருத்திதுவாம்:—இவ்வானந்தமயகோசம் புச்சப் பிரதிஷ்டைவடிவ சுத்தப் பிரஹ்மரூபத்தால் உற்பத்தி நாசமற்றதாயினும், பிரியமோதப் பிரமோத முதலிய விருத்தி விசிஷ்டரூபத்தானே ஆனந்தமயகோசம் உற்பத்தியுடையதாமாதலின் அந்தப் பிரியாதிவிருத்தி விசிஷ்டரூபத்தை யங்கீகரித்துச் சுருதியானது விஞ்ஞானமயகோசத்தினின்றும் ஆனந்தமயகோசோற்பத்தியைக் கூறியதாம். இப்போது அவ்வானந்தமய புருடனிடத்தே யுண்மையாய் உற்பத்திநாசங்களின்மையைத் வெளிப்படுத்தும்பொருட்டு முதலில் ஆன்மாவுண்டாம் விருத்தியை

நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! அவ்வொரே ஆநந்தமயம் பூமியந்தரிக்ஷம் சுவர்க்கம் கிழக்கு முதலிய நாற்றிசைகள் அக்கினிகோண முதலிய நான்குபதிசைகள் என்னும் ஐந்து ரூபங்களால் ஐவகையாயுண்டாம். அது கேவலம் ஐந்து வடிவுடையதல்ல. மற்றோ, நூற்களால் ஆடை நாற்புறமும் குறுக்கும் நெடுக்குமாயிருப்பதேபோல இம்மூவுலகத்தும் முக்காலங்களிலுமிருக்கின்ற ஸ்தூல சூக்ஷ்மப் பொருள்கள் யாவும் இவ்வாநந்தவடிவ ஆன்மாவானே வியாப்தமாமாதலின் சர்வ ஜகத்துருவமாம். இது விசாரரூப அறியும் வேட்கையால் அடையத்தகுதியதாம். இது பல வடிவத்தால் கருமங்களாலுண்டாம். இது சுவர்ணாதி நல்வஸ்துக்களில் அம்சரூபமாயிருக்கும். இது அதிகாரிகட்குச் சிரத்தையினாலும் சத்தியத்தினாலும் பிராப்தமாமாதலின், சுருதிபகவதி இதனைச்சிரத்தை சத்தியமென அழைத்தனள். இது சுயஞ்சோதிரூபமாமாதலின் சுருதிபகவதி இதனை மஹஸ்வத் என அழைத்தனள். பிருகு இருஷியானவர் வருணபிதாவினுபதேசத்தானேசெய்த விசாரரூபதவத்தினும் இது மேன்மையதாமாதலின் சுருதிபகவதி இதனைத் தபஸோவரிஷ்டம் என அழைத்தனள். இத்துணையானே, அவ்வாநந்தவடிவ ஆன்மாவின்மகிமை கூறப்பெற்றது. இப்போது ஆநந்தவடிவ ஆன்மாவின் ஞானபலத்தை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! இத்தகைய ஆநந்தவடிவ பரமான்மதேவை அதிகாரி தனதான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரித்தபோது ஜீவித அவஸ்தையின்கண்ணே அவித்தை முதலிய சர்வக்கிலேசமும் அற்றவனாவன்; மரித்தபின்னோ, மீண்டும் மிருத்தியுவையடையான். எவ்வான்மஞானத்தையடைந்து அதிகாரி மீண்டும் மிருத்தியுவையடையானோ அவ்வஞ்ஞானநாசக ஆன்மஞானம் உயிர்கட்கு ஈண்டேனும் பிரஹ்மலோகத்திலேனும் அடைவுற்ற சந்யாசமகிமையானே கிடைக்கும். இதனானே, பிரஹ்மவேத்தாவாய அறிஞன் அச்சந்யாசத்தை முற்கூறிய சத்தியாதி சர்வசாதனங்களினும் மேன்மையதென்பன். இப்போது சந்யாசத்தால் அடையத்தகுதியதாய ஆன்மாவின் வடிவத்தை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! சந்யாசத்தாலடையப்பெறுவதாய சுயம்பிரகாச ஆநந்தவடிவ ஆன்மா உற்பத்திநாசமற்றதாமாதலின் சத்தியரூபமாம். அறிய முடியாததாமாதலின் சூக்ஷ்மரூபமாம். ஆகாசாதிகட்கும் அதிஷ்டானமாமாதலின் விபூதிரூபமாம். இச்சரீரத்துட் பிராண அபானங்களின் நியந்தாரூபத்தானே ஸ்திதமாம். பிராண அபானன்களிரண்டின் வியானரூபசந்தியைச செய்விப்பதாய்ப் பரிச்சின்னத்தன்மைவடிவவாமனசம்ஞையை யடையுமாதலின், சுருதிபகவதி அவ்வான்மாவைப் பிராணசந்தாதா என்றனள்; அது பிரஹ்மரூபமாம். சர்வ ஜகத்தையும் காப்பதாம். சூரிய சந்திரர்கட்கு ஒளிதருவதாம். பிராஹ்மணாதிகட்குவர்ச்சசை யடைவிப்பதாம். ஈண்டு, தாகத்தையும் பிரகாசத்தையும் செய்யும் ஜோதிபதார்த்தம் தேஜசாம்; சூரிய சந்திராதிகளைப்போலும். சரீர சௌந்தரியகாரணமாகிய ஜோதிப்பொருள் வர்ச்சசாம். ஹே குழந்தாய்! இவ்வான்மாப் பிராஹ்மணாதிகட்கு வர்ச்சசையடைவிப்பது ஜாடராக்கினிரூபத்தானேயாம்; என்னை, இவ்வக்கினியன்னத்தைப் பக்குவப்படுத்தும்போதுதான் இரசாதிதாதுவாயிலா யித்தேகத்தே சௌந்தரியத்தன்மையின் காரணம் வர்ச்சசாம். அதனாலிவன் நோயற்

றவனுவன், சுந்திரகாந்தியுடையவனுவன். பொன் கண்ணாடி முதலிய சொச்ச பதார்த்தங்களிடத்தே சூரியகிரணசம்பந்தத்தால் பரப்பிரகாசச் சோதிரூபம் உற்பன்னமாம், அது த்யும்நமெனப்பெறும், அதைக்கொடுப்பதும் இவ்வான்மாவேயாம். அல்லது, சூரியசந்திரதேஜஸேசத்யும்நமெனப்பெறும், அக்கினியின்தேஜசு வர்ச்சசாம் அச் சூரியாதி மூவர்க்கும் தேஜசையடைவிக்கும் ஆநந்தவடிவ ஆன்மாவே அதிகாரிகட்குச் சந்யாசத்தாலடையத்தகுதியதாம். அகிம்சை சத்தியாதி ஐந்துயமமும் சந்யாசத்திற்குச்சமீபத்தேயிருக்குமாதலின், சுருதிபகவதி அச்சந்யாசத்தை உபயாமமென்றனள். இவ்வாநந்தான்மா உபயாமரூபசந்யாசத்தானே பிராப்தமாமாதலின், இதனை உபயாமக்கிருகீதமெனக்கூறினள். இவ்வாநந்தான்மா சுவப்பிரகாசமாதலின் இதனை மக என்னும் நாமத்தாலழைத்தனள். இது சச்சிதாநந்தவடிவமாயிருத்தலின் இதனைப் பிரஹ்மமென்றனள். ஹே குழந்தாய்! ஜாபால முதலிய உபநிஷத்துக்களில்சந்யாசம் சுவரும்பிரகாரங் கூறப்பெற்ற வழியே சுவர்ந்து, ஜீவப்பிரஹ்ம அபேதத்தை யுணர்த்துவதாய பிரணவ மந்திரத்தை யினிதினுணர்ந்து ஹம்சாதியுபநிடதங்களால் கூறப்பெற்ற யோகத்தைப்பற்றி அதிகாரி பிரஹ்மவேத்தாவாய குருவி னுபதேசத்தால் தனதான்மாவைப் பிரஹ்மரூபமாய்ச் சிந்தனஞ்செய்து பிரஹ்மபாவத்தையடைவன். இப்போது இயம்பிய பிரஹ்மவித்தையின் பலத்தை நிரூபிப்பாம்;—ஹே குழந்தாய்; அத்தித்திரிமறையவர் தமது சீடர்பொருட்டுபதேசித்த பிரஹ்மவித்தை யெத்தகையதென்னின்? அஞ்ஞானரூபமோகத்தை நாசஞ்செய்வதாம், அக்கினி முதலிய தேவதைகளும் நிதியைபபோல அதைக்காப்பர்; ஆதலினது அக்கினி முதலிய தேவதைகட்கும் இரகசியதனமாம். இத்தகைய பிரஹ்மவித்தையைப் பிரஹ்மவேத்தாக்குருவாயிலாய் நிச்சயம்செய்யு மதிகாரியே அத்விதீயப்பிரஹ்ம பாவத்தையடைவனாதலின் பிரஹ்மபாவத்தையடைய இச்சித்த அதிகாரி எல்லா வகையானும் பிரஹ்மவித்தையைச் சம்பாதனஞ்செய்க. ஹே மைந்த! இவ்வான்ம ஞானரூபப்பிரஹ்மவித்தை தனது சமீபத்தன்மையானே காரியசகித அஞ்ஞானத்தை நாசம்செய்யுமாதலின் இவ்வுபநிடதசப்தம் பிரஹ்மவித்தையின் வாசகமேயாம். பிரஹ்மவித்தையையடைவிப்பது இத்தைத்ரீயகக்கிரந்தமாதலின், இஃதும் நூலுணர்ந்தோரால் உபநிடதமெனக் கூறப்பெறும். யஜுர்வேததித்திரிகாமசாகையின்கண்ணே தித்திரிமறையவர் தமது சீடர்பொருட்டு உபதேசித்த சம்பூரணப்பிரஹ்மவித்தையை இந்நூலின் பத்தாவதத்தியாயத்தே நிரூபித்தேம். இதனினும் அதிகமாக எப்பிரஹ்மவித்தையும் தித்திரிசாகையின்கண்ணேயின்றும். ஹே குழந்தாய்! இந்நாராயண உபநிடதத்தின் முடிவில் பிரஹ்மவேத்தாப் புருடனுடைய ஞானநிஷ்டைவடிவயாகத்தின்கண் ஆன்மாயஜமானன், சிரத்தை பத்தினி என்பனவாதியங்கநிரூபணம் ஆன்மசாக்ஷாத்காரப்பொருட்டுக் கூறவில்லை; மற்றோ, மந்தமதியினர்க்குச் சித்தசுத்தியுண்டாக்கும்பொருட் டுபாசனையின் பிரகாரம் கூறப்பெற்றதாமென்க. ஹே மைந்த! தித்திரிமறையவர் தமது சீடர்பொருட்டுக்கூறிய சம்பூரணப்பிரஹ்மவித்தையை நின்பொருட்டுக்கூறினேம். இனி யெப்பொருளைக்கேட்ப நினக்கிச்சையிருக்கின்றதோ, அதைக் கூறுதி. சயம்.

பத்தாவது அத்தியாயம் முற்றிற்று.

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## பதினோராவது அத்தியாயம்.



ஓம் ஸ்ரீ கணேசாயநமஃ ஸ்ரீ குருப்யோநமஃ ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நமஃ
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநமஃ.

முன்னர்ப் பத்தாவதத்தியாயத்தே யஜுர்வேதத்தின் தைத்திரீய உபநிடத்தின் நாராயண உபநிடத்தின்பொருள் நிரூபிக்கப்பட்டது. இப்போது பதினோராவது அத்தியாயத்தே ஜாபால 1, கர்ப்ப 2, அமிருதநாத 3, ஹம்ச 4, க்ஷுரிகா 5, ஆருணேய 6, பிரஹ்ம 7, பரமஹம்ச 8, மகத்து 9, ஆன்மப்பிரபோத 10, கைவல்யம் 11, என்னும் பதினொருபநிடதங்களின் பொருள் நிரூபிக்கப்படும். ஆண்டு, முன் பத்தாவது அத்தியாயத்தே தித்திரி மறையவரின் பிரஹ்மவித்தையைக் கேட்டுப் பரம ஆச்சர்யத்தையடைந்த சீடன் சாதன பலன்களோடு கூடிய பரமஹம்ச சந்யாசத்தைக் கேட்குமாவலுற்றவனாய்த் தனது குருவை நோக்கிக் கூறுவதாவது:—ஹே பகவன்! ஐதரேய இருஷியும், கௌஷீதகி இருஷியும், சூரிய பகவானும். சுவேதா சுவதர இருஷியும், தித்திரி இருஷியும், கட இருஷியும், தத்தமது சீடர் பொருட்டுபதேசித்த பிரஹ்மவித்தை யாவற்றையும் முன்னர்த் தாங்கள் என்பொருட்டுக் கூறினீர்கள். அந்தப் பிரஹ்மவித்தை துக்கவடிவ சமுத்திரத்தை வற்றவைப்பதாம். ஹே பகவன்! இந்நூலின் முதலாவது அத்தியாயத்தே தாங்கள் இருக்குவேத ஐதரேய உபநிடதப் பொருளை நிரூபிக்கும்பொருட்டுச் சனகாதி யிருஷிகளின் வாமதேவாதியதிகாரிகளின் சம்வாதவாயிலாய் நானாவகையாய பிரஹ்மவித்தையை யுபதேசித்தீர்கள். இரண்டாவது மூன்றாவது அத்தியாயத்தே தாங்கள் இருக்குவேதத்தின் கௌஷீதகீ யுபநிடதப் பொருளை நிரூபிப்பான், தேவராஜாவாய இந்திரப்பிரதர்த்தன ராஜசம்வாத வாயிலாய் நானாவகையாய பிரஹ்மவித்தையையும், அஜாதசத்துரு அரசர் பாலாகிப் பிராஹ்மணர் சம்வாதவாயிலாய் நானாவகைப் பிரஹ்மவித்தையையும் உபதேசித்தீர்கள். நான்காவது, ஐந்தாவது, ஆறாவது, ஏழாவது, என்னும் நான்கத்தியாயங்களில் தாங்கள் யஜுர்வேதத்தின் பிருகதாரண்யக உபநிடதப்பொருளை நிரூபிப்பான், இரண்டு புருடவம்சம் ஒரு ஸ்திரீவம்சம் என்னும் மூன்று வம்சங்களிலிருக்கும் இருஷிகளின் பரஸ்பரபேத அபேதங்களையும், அசுவனீகுமாரர்களோடுண்டாய சர்வஞ்ஞ இருஷியின் சம்வாதத்தையும், தத்யங் இருஷி, இந்திரருக்கும் அசுவனீகுமாரர்கட்கும் உபதேசித்த பிரஹ்மவித்தையையும், தத்யங் இருஷியின் பெருந்தன்மையையும், இந்திரனுடைய துரான்மத் தன்மையையும், பிரஹ்மவித்தையின் லோபத்தால் குருவின் மத்தகத்தைக்

சேதித்தல்வடிவ அசுவினீகுமாரரின் அநுசித கருமத்தையும்; ஜனக ராஜாவின் யாகசபையில் யாஞ்ஞவற்கியருக்கும் ஆசுவலாதி மறையவர்க்கும் பரஸ்பரம் உண்டாய ஜல்பரூப சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும், பிரஹ்மவேத்தாவாய யாஞ்ஞவற்கிய முனிவரின் சாபத்தால் சாகல்லியப் பிராஹ்மணரின் மிருத்தியுவையும்; யாஞ்ஞவற்கியருக்கும் ஜனகராஜாவிற்கு முற்ற இருமுறைச் சம்வாதவாயிலாய் நானுவகைப் பிரஹ்மவித்தையையும், யாஞ்ஞவற்கியருக்கும் மைத்திரேயியென்னும் அவரது மனைவிக்கும் உண்டாய சம்வாத வாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும், அவருடைய சந்நியாச ஆசிரமத்தையும் உபதேசித்தீர்கள். எட்டாவது அத்தியாயத்தே தாங்கள் அந்த யஜுர்வேதத்தின் சுவேதா சுவதர உபநிடதப்பொருளை நிரூபிக்கும்பொருட்டுச் சுவேதா சுவதா இருஷி சந்யாசிகள் சம்வாதவாயிலாய் நானுவகைப் பிரஹ்மவித்தையையும், சர்வ ஜகத்தின் காரணத்தையும் உபதேசித்தீர்கள். ஒன்பதாவது அத்தியாயத்தே தாங்கள் அந்த யஜுர்வேதத்தின் கடவல்லி யுபநிடதப் பொருளையுணர்த்தும் பொருட்டு யமராஜா நசிகேதாவின் சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையுபதேசித்தீர்கள். பத்தாவது அத்தியாயத்தே அந்த யஜுர்வேதத்தின் தைத்திரீய உபநிடத நாராயண உபநிடதப் பொருளை யறிவிக்கும்பொருட்டு அருண இருஷி பிருகு இருஷி சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும், வேநனென்னுங் கந்தர்வனுடைய அனுபவத்தையும் உபதேசித்தீர்கள் ஹே பகவன்! பத்தாவது அத்தியாயத்தே தாங்கள் தருமமே முதலாகச் சந்யாசம் வரை மோக்ஷசாதன பரம்பரையைக் கூறினீர்கள். ஆண்டு முடிவில் குடீசகாதி நால்வகைச் சந்யாசத்தே சர்வ சாதனத்தினும் மேன்மை கூறினீர்கள். அவற்றுள்ளும் பரமஹம்ச சந்யாசத்திற்கே யாவினும் மேன்மைகூறப்பெறறது. ஹே பகவன்! அவ்வத்தியாய அந்தத்தே இவ்வார்த்தையையும் கூறினீர்கள் :—ஜாபாலாதி உபநிடதங்களில் கூறிய சந்யாசத்தைக் கவர்ந்தும், ஹம்சாதி யுபநிடதங்களில் கூறிய யோகத்தைச் சம்பாதித்தும், அதிகாரி பிரஹ்மவேத்தாக்குருவின் உபதேசத்தால் தன்னான்மாவைப் பிரஹ்மரூபமாய் நிச்சயஞ் செய்கவென்றீர்கள். இதன்கண்ணே யெனது முக்கியமாய பேரவாவோ பரமஹம்ச சந்யாசத்தின் வடிவத்தை யறிவதன்கண்ணேயாமாதலின், அதனை முதலில் யான் தங்கள் பாற் கேட்கவேண்டும், அதன் பின்னர் ஜாபாலாதி யுபநிடதங்களில் கூறிய சந்யாச வடிவமும், ஹம்சாதி யுபநிடதங்களிற் கூறிய யோகவடிவமும் கேட்கவேண்டும். ஆகையால், தாங்கள் என்னிச்சைப்படி முறையாய்க் கூறல்வேண்டும். ஹே பகவன்! இதன்கண்ணே என்னுடைய வினு இத்துணையாம் :—அந்தப் பரமஹம்ச சந்யாசம் எவ்வதிகாரி செய்யத்தகுதியதாம்? (1) முன்னரதை எம்மகான்மாக்கள் கவர்ந்தனர்? (2) அதனெல்லவஸ்து அறியத்தகுதியதாம்? (3) அதனது தருமம் யாதாம்? (4) அதனது பயன் யாது? (5) இவ்வியாவற்றையும் தாங்கள் விஸ்தாரமாய்க் கூறுவீர்களாக எனச் சீடனால் வினவப்பட்ட ஆசிரியர். சீடனுடைய கூர்மையாய மதியைப் பார்த்து மிகவும் மகிழ்வுற்றுப் பின்னர்க் கூறுவாராயினர் :—ஹே குழந்தாய்! இப்பரமஹம்ச சந்யாச வினுவால் நீ விருத்தகுமாரியுடிய முறையாய் ஜாபாலாதி சர்வ உபநிடதங்களின் பொருளைக் கடாவினும்,

கருத்திதுவாம் :—விருத்த அவஸ்தையையடைவுற்ற ஒரு குமாரி தவத்தால் இந்திரனை மகிழ்வித்தனள், அவரும் வரம்வேண்டுமாறு கட்டளையிட அவள் மனத்தே யாலோசித்து இவ்வாறு வேண்டினள் :—ஹே இந்திரனே! எனது மைந்தன் தயிரன்னத்தைப் பொற்பாத்திரத்தே புசித்தலாகிய வரத்தை அடியாட்கீயவேண்டும் என. இவ்வொரே வரத்தால் அவ்விருத்த குமாரி தேவராஜாவிடத்தே தன்தருணவஸ்தை, நாயகன், மைந்தன் கோக்கள், பொன்முதலிய நிதி என்பன யாவற்றையும் வேண்டினள். இதுவே அந்த நியாயமாம். இதுபோல ஒரு பரமஹம்ச சந்யாசத்தின் வினவால் நீஜாபாலாதி யர்த்தம் முழுவதையும் கேட்டனை; ஏனெனின், ஜாபாலம்,பிரஹ்மம்,ஆருணேயம், பரமஹம்சம் என்னும் நான்குபநிஷத்தின்கண்ணே அந்தப் பரமஹம்ச சந்யாசத்தின் தருமமே கூறப்பெற்றுளது. ஆன்மசாக்ஷாத்கார அடைவின்கண்ணே உபயோகியாய யோகம், ஹம்ச க்ஷுரிகாதி யுபநிடதங்களில் கூறப்பெற்றுளது. அந்த யோக அடைவின்கண்ணே யுபயோகியாய வைராக்கியம் கர்ப்ப உபநிடதத்தே யுரைக்கப்பெறறுளது. ஆகையால், உனது வினவிற்கு விடைபகரும்போது அவ்வுபநிடதங்களின் பொருளையும் அவசியமறைவேன். இப்போது, அவற்றில எவ்விருடிகள் பரமஹம்ச சந்யாசத்தை வினவினரோ, எவ்விருடிகள் விடைவிளம்பினரோ, அவர் நாமங்கள் நிரூபிக்கப் பெறும் :—ஹே மைநத! ஜாபால உபநிடதத்தின் நான்காவது கண்டத்தே ஜனகராஜாவானவர் யாஞ்ஞவற்கியரை நோககிப் பரமஹம்ச சநயாசத்தை வினவினர். ஐந்தாவது கண்டத்தே அத்திரி இருடியானவர் யாஞ்ஞவற்கிய முனிவரைநோக்கி அதனையே வினவினர். ஆருணேய உபநிடதத்தே அருண இருஷி பிரஜாபதியை நோக்கி அதனையே கேட்டனர். பரமஹம்ச உபநிடதத்தே நாரதமுனியானவர் பிரஜாபதியைநோக்கி அதனையே வினவினர். ஜாபாலாதிகளி லுபதேசித்த அதுவே பிரஹ்ம உபநிடதத்தே இருடியின் வினவிடைகளின்றி வேத பகவானுற் சுயமே வெளிப்படையாய்க் கூறப்பெறறது. இவ்வாறவைகளிற் கூறப்பட்ட அதனையே நீ நம்பாற் கேட்டனையாதலின் அதன் வடிவத்தை யுனக்கு விஸ்தாரமாய்க் கூறுவேம்; நீ யுனது மனதைச் சாவதானப்படுத்திக் கேட்பாயாக. இப்போது அப்பரம ஹம்சசந்யாசத்தின் சாதனங்களை நிரூபிப்பான் முதலில் ஜாபால உபநிடதத்தின் ஐந்தாவது கண்டத்தே கூறியவிதவத் சந்யாசியை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! தேவதைகளின் குருவாகிய பிருகஸ்பதியின் சகோதரராகிய சம்வர்த்தகரெனப் பெயரிய ஒரு இருடி முன்னிருந்தனர். அவரது பெருமை மகாபாரதத்தின் அசுவமேத பருவத்தின்கண்ணே வருணிக்கப்பட்டுளது. அவரும் பரமஹம்ச சந்யாசத்தைக்கவர்ந்தனர். அருண இருடியின் மைந்தராய ஆருணிகரெனப்பெயரிய ஒரு இருடியானவர் முன்னிருந்தனர். அவரை யுத்தாலகரெனவுங் கூறுவர். சர்வ சாஸ்திரத்தையும் அறிந்த அவரும் அதனை யடைந்தனர். அவரது மைந்தராய சுவேதகேதுவும் அதனைக்கவர்ந்தனர். மகாதேவரின் அம்ச அவதாரமாகிய துர்வாச இருடியாகிய மகாதவசியும் அதனைக்கவர்ந்தனர். பிரஹ்மாவின் மானசபுத்திரராகிய சனகாதியரைப்போலிருந்த ரிபுவென்னு மிருடியும் அதனைக்கவர்ந்தனர். அவரது சிடராகிய நிதாகரென்பவர் முன்னர்க்கருமத்

தின்கண்ணே மிகவும் பற்றுடையவராயிருந்தார். அவருமதனையடைந்தனர். ஜடபாதரென்பவர் மிருக சரீரத்தின்முன் அரசராயிருந்தார் அவர் பெயராற்றான் இப்பாரதகண்டம் வழங்குகின்றது. அவரும் அதனைக்கவர்ந்தனர். விஷ்ணுவினவதாரமாகிய தத்தாத்திரேய முனிவரும் அதனைக்கவர்ந்தனர். ரைவதரென்னும் பிராஹ்மணரும் அதனைக்கவர்ந்தனர். பாரத்துவாஜ இருஷியும் அதனைக்கவர்ந்தனர். ஹே மைந்த! சம்வர்த்தகரே முதலிய பதின்மரே முதலாக வேறும் சுகவாமதேவாதி அநேகம் மறையவர் அதனைக்கவர்ந்தனர். அவர்தங்கதைகள் புராண இதிகாசங்களிற பிரசித்தமாம அவர் யாவரும் யான் பிரஹ்மரூபமாயிருக்கின்றேன் என்னும் ஆன்ம சாக்ஷாத்காரத்தால் எல்லாப்பந்தங்களும் அறறவராயினர். இபபோது அவ்வித்வத்சந்யாசிகளின் வெளிப்படையல்லாத குறிகளையும், ஆசாரங்களையும், நிரூபிப்பாம் :—ஹே மைந்த! சம்வர்த்தகாதியர் நியமமாய் முண்டிதராயேனும், ஜடாதாரிகளாயேனும், ஏகதண்டதாரிகளாயேனும், திரிதண்டதாரிகளாயேனும், வெள்ளாடை யுடையவராயேனும், சிவப்பாடையுடையவராயேனும் இருந்திலர். அவர்தங் குறிகள் வெளிப்படையல்லாதன போன்றே ஆசாரங்களுமாம். ஹே பகவன்! அவ்யக்த ஆசாரம் எத்தகையதாமெனிற் கூறுவாம் :—ஹே குழந்தாய்! அந்த அவ்யக்த ஆசாரமுடைய மகாத்மாக்கள் இவ்வாறுலகத்தின்கண்ணே சஞ்சரிப்பர், அவர் மதியும அவ்யக்தமேயாம், அவருடைய பிரகிருதியும் அவ்யக்தமேயாம், அவர்தங்குறியும் அவ்யக்தமேயாம். சில சமயத்தே அவர் எல்லாப்பொருள்களி னிசசையற்றவராயிருப்பர், சில சமயத்தே பற்றுற்றவரைபபோல எல்லாப்பொருள்களி னிச்சையுற்றவராய்ப் புலப்படுவர். சில சமயத்தே அவர் முற்று முணர்நதவரைப்போல எல்லாப்பொருளையுமுணர்ந்தவராய்த்தோற்றுவர்; மறறொருகால் அஞ்ஞானிகளைப்போல அறியாராய்த் தோற்றுவர். ஒருகால் அவர் நூலுணர்ந்தாரைப்போலப் பண்டிதராய்த் தோற்றுவர்; மற்றொருகால் நூலற்றவரைப்போல மூடராய்த்தோற்றுவர். ஒருபோதோ அவர் மதிமான்களைப்போல நானுவகையாயசேஷ்டை செய்பவராய்த் தோற்றுவர்; மற்றொருபோதோ ஜடரைபபோலச் சர்வசேஷ்டைகளுமற்றவராய்த் தோற்றுவர். ஒரு சமயத்தேயவர் வாசாலபுருடரைப்போல நானுவகையாய சப்தங்களை யுச்சரிப்பவராய்ப்புலப்படுவர்; மறறொருபோதோ ஊமரைப்போல மவுனராயுலாவுவர். ஒரு சமயத்தே யவர் இராகக்குருட்டுப்பாமரரைப்போல அந்தியந்தம் இராகமுடையாராய்ப் பிரதீதியாவர்; மறறொருகாலோ, விரக்தரைப்போலச் சர்வேச்சையற்றவராய்த்தோறறுவா. சில சமயத்தே அவர் மேன்மை மிக்கவரைப்போலச் சாஸ்திரவிகித ஆசாரத்தைச்செய்வர்; சிலகாலோ தாழ்ந்தோரைப்போலச் சாஸ்திரநிஷித்த ஆசாரததை ஆசரிப்பர். ஹே குழந்தாய்! இவ்வாறவர் அவ்யக்தமாய சின்னத்தையும் ஆசாரத்தையுமடைந்து உலகத்தே சஞ்சரித்தனர். இத்தகைய பரமஹம்ச சந்யாசிகளைப்பார்த்து எவரும் இவர் மேன்மையரென்றேனும், இவர் தாழ்மையரென்றேனும், அதிக சாஸ்திரம் படித்தவரென்றேனும், அல்லரென்றேனும், மேன்மை மிக்க ஆசாரமுடையவரென்றேனும் இல்லவரென்றேனும், மறையரென்றேனும், பறையரென்றேனும், துறவியரென்றேனும், இல்வாழ்வோரென்றேனும் அறியமுடியாதாம். ஹே குழந்தாய்!

இங்ஙனம், பிரஹ்மவேத்தாக்களாய சந்யாசிகளை எவ்வருணத்தாலேனும் எவ்வாசிரமத்தாலேனும் எம்மதிமானேனும் அறியானாயின் விசாரமற்ற மூடன் எவ்வாறறிவன்; மற்றோ அறியானென்க. இவ்வார்த்தை ஸ்மிருதியின்கண்ணும் கூறப்பெற்றுளது.

"யம் ந ஸந்தம் ந சாஸந்தம் நாச்ருதம் ந பஹுச்ருதம் ।
ந ஸுவ்ருத்தம் ந துர்வ்ருத்தம் வேத கச்சித் ஸ ப்ராஹ்மண: ॥

உலகினி லொருவரு முயாவு தாழ்வுளன்
மலமறு பண்டிதன் மடைமை யோனென
திலகமெய்ந் நூனெறி செயுவன் செய்கிலான்
இலையறி வதுபிரா மணனின் ஞானையே."

(பொ-ள்.) இவ்வுலகத்தே எவனறிஞனை, மேன்மையன், மேன்மையற்றவன், மூடகன், பண்டிதன், நூலவிதித்த ஆசாரமுடையவன, அல்லாதவன் என்பன முதலிய வடிவங்களால் எம்மனுடனும் அறியமுடியாதோ, அவ்வறிஞனே பிரஹ்மவேத்தாவாய பிராஹ்மணனாவன். ஹே மைந்த! இத்தகைய பிரஹ்மவேத்தாவாய சந்யாசிகளின் ஆசாரத்தை எம்மதிமானும் அறியமுடியாது என்னும் வார்த்தை தத்தாத்திரேய சம்ஹிதையின்கண்ணும் பிரசித்தமாம். ஆண்டிது பிரசங்கமாம் :—ஒரு காலத்தே தத்தாத்திரேய சுவாமிகள் நர்மதை நதியின் நீரின்கண்ணே யிருந்தனர், எவவாறெனின்? சிவப்பு நிறமுடைய வஸ்திரத்தோடும், தாருண்ய அவஸ்தையோடும், சூரியசமான சரீரகாந்தியோடும், ஒரு காதத்தே வெண்ணறைக் கலத்தைப்பற்றியும், மறுகரத்தே தண்டத்தைத் தரித்தும், மதத்தினன்மதாத்தவொண்கண் மடந்தையையிடத்தில் வைத்தும், அன்னவள் வதனத்தீம்பாலடிக்கடி விழியான் மாந்தியும், மங்கையை நோக்கி நல்ல மறைதரு மொழிகளாலே பங்கமிலதனிநீயப் பரமபொருளுபதேசித்தும் திகழ்ந்தனர். அத்தகையரை ஆயிரம்பாகுவுடைய அர்ச்சுனன்கண்டு தன் மனத்தே மிகவுமாராய்ந்தனன்; ஆனால், அத்தத்தாத்திரேயரை ஆயிரம் பாகுவறிந்ததில்லை.

சங்கை :—ஹே பகவன்! அத்தத்தாத்திரேயா முதலிய மகான்மாக்கள் இத்தகைய சாஸ்திர நிந்தித ஆசாரத்தை யாதின்பொருட்டுக் கொள்கின்றனர்?

சமாதானம் :—ஹே மைந்த! அவர்கள் இத்தகைய ஆசாரத்தைக்கொள்வதன் கருத்தைக்கேட்டி! நூலின்கண்ணே யிது நுவலப்பெற்றுளது :—

குஹிரகம் ஸஹாவாஸம் மௌனம் பொரஸௌஸம் ।
ப்ரதிஷ்டா ஸூகரீவிஷ்டா த்ரிணிதஜ்ஜா ஸவிஹவேத் ॥

"வெண்ணறை யெனவபி மானம் மேலவன்
எண்ணியோண் கவுரவ மேரியும் ரவுரவம்
பண்ணுறு புகழ்பன்றிப் பகர வீயென
நண்ணுத லறுத்திவை நாடு மின்பமே."

(பொ-ள்.) அபிமானத்தைக் கள்ளென வுணர்ந்தும், கௌரவத்தைக் கோர மாகிய இரௌரவமென வுணர்ந்தும், லோகப் பிரதிஷ்டையைப் பன்றியின் விட்டைக்குச் சமானமாயுணர்ந்தும், அறிஞன் இம்மூன்றையும் விட்டொழித்துச் சுகத்தையடைவன்; என்பன முதலிய சாஸ்திரத்தே அறிஞனுக்கு அபிமானம் முதலிய மூன்றன் பரித்தியாகம் கூறப்பெற்றது. மேன்மையாய ஆசாரத்தே நிகழும் அறிஞனுக்கு உலகத்தே புகழ்ச்சி யவசியமேயுண்டாம். அதனால் அவ்வறிஞன் சமீபத்தே அநேகர் வருவர்; அதனானே அவனது மனமும் வெளிமுகத்தையுறும்; அதன்கண்ணே ஜீவன் முக்திச் சுகமுண்டாகமாட்டாது; என எண்ணித் தத்தாத்திரேயாதி பிரஹ்மவேத்தாக்கள் உலகப்பிரவிருத்திரூப விக்ஷேப நீக்கப் பொருட்டு அவ்விபரீத ஆசரணத்தை மேற்கொண்டிருந்தனர். அல்லது, அதிகாரிகளாய சீடரின் சிரத்தையைப் பரீக்ஷிக்கும்பொருட்டுக்கொண்டனர். அல்லது, பிரஹ்மவித்தையினடைவால் சிறிதுமாத்திரையும் தோடம் தீண்டாதெனப் பிரஹ்மவித்தையின் பயனையுணர்த்தும்பொருட்டுக்கொண்டனர்; ஆனால் மனத்தின்கண்ணே பிரஹ்மவேத்தாக்கள் சர்வ விகாரங்களுமற்றவரே யாவார்கள். தத்தாத்திரேயாதி மகாபுருடரின் சித்த அவஸ்தை நம்மனோருக்கு ஆயிரம் பிறப்புறினும் அடைதற்கரிது. இத்தகையமகான்களின் முற்கூறிய கருத்தையுணராது மேற் சீலத்தை மாத்திரங்கவர்ந்து உலகத்தேயிலகும் அஞ்ஞர்கள் நரகத்தையேயடைவர். மகாதேவர் சர்வ லோகத்தையும் காக்கும்பொருட்டுத் தமது யோகமகிமையால் செய்த விஷபானத்தைக்கண்டு யோகசாதனையற்றவர் அதைச்செய்யின் அம்மூடர் மரணத்தையேயடைவதுபோலத் தத்தாத்திரேயர்முதலியோரது மேலாசாரத்தைக்கவரும் மூடர் நரகத்தையேயடைவர். அவர் யாம் பிரஹ்மரூபம் என்னும் ஆன்மசாக்ஷாத்காரத்தால் பிரஹ்மபாவத்தையடைந்தவராதலின் சர்வ புண்ணியபாவ கருமங்களையும் பரித்தியாகித்தது எப்போதும் பரமபதத்தேயிருப்பர். இப்போது அந்தப் பிரஹ்மவேத்தாக்களிடத்தே புண்ணியபாவ கருமபாவத்தை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! அத்தகையர்பால் பிரீதிசெய்யும் பக்தர்கட்கோ அவர் தமது புண்ணியம் யாவற்றையும் கொடுப்பர். அவர்பால் துவேடஞ்செய்யும் துட்டர்கட்கோ தமது பாவமியாவற்றையும் கொடுப்பர். இவ்வாறு சுகதுக்கரூப பலசகித சம்பூர்ண புண்ணிய பாவகருமங்களைக்கொடுத்து அவர் அவையற்றவராவர். 'ஸுஹ்ருதஃ ஸாது க்ருத்யம் த்விஷந்தஃ பாபக்ருத்யம்' அறிஞர்களின் புண்ணியத்தையோ சேவைசெய்யும் பக்தர்கொள்வர்; பாவத்தையோ வெறுக்கும் மூடர் கொள்வர். ஆதலின், அவர் எப்போதும் அசங்கராயிருப்பர். இப்போது அவர்தம் உன்மத்தரொத்த ஆசரணத்தை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! அவ்வறிஞராய யதிகள் ஒருக்கால் திசையாகிய வஸ்திரத்தையே தரிப்பர், மற்றொருக்கால் நானாவகையாய சால்வைகளைத் தரிப்பர், ஒருக்கால் மலமூத்திராதிகளைப் பூசிக்கொண்டிருப்பர், மற்றொருக்கால் சந்தனாதி சுகந்தப்பொருள்களைப் பூசிக்கொள்வர், ஒருக்கால் சிரித்துக்கொண்டிருப்பர், ஒருக்கால் நானாவகையாய கானத்தைச்செய்வர், ஒருக்கால் குதிரையைப்போல விரைவிலோடுவர், ஒருக்கால் பேய்களைப்போலத் தமதவயவங்களை யடித்துக்கொள்வர், ஒருக்கால் பாலகரோடு நானாவகைக் கிரீடைபுரிவர், ஒருக்கால் எல்லா ஆசைகளும் அற்றவராவர், ஒருக்காற்

காரணமின்றியேயழுவர், ஒருக்கால் துட்டராற கட்டுப்படினும் அடிக்கப்படினும் பரமாநந்தத்தையடைந்து மேகத்தைப்போலக் கர்ஜ்ஜனைசெய்துகொண்டிருப்பர். இவ்வாறவர் தமதுண்மைவடிவத்தே உலகரை வியாமோகஞ்செய்யும்பொருட்டுன்மத்தபுருடரைபபோல விபரீதசேஷ்டையைச் செய்தனர்; ஆனால் அவர் உண்மையாய் உன்மத்தர் அல்லர்; மற்றே, அஹிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரஹ்மசர்யம், அபரிக்கிரகம், என்னுமைவகை இயமத்தையே எப்போதும் காப்பாற்றுபவராவர்.

சங்கை :—ஹே பகவன்! பிரஹ்மவேத்தாவாய அறிஞரின் உன்மத்தர் போன்ற ஆசரணம் எசசாஸ்திரத்தாலும விதிக்கப்பெறாததன்றுமாதலின் அதனைத் தரித்தல தகுதியன்றாம்.

சமாதானம் :—ஹே மைந்த! தமது வடிவத்தை இரகசியமாய் வைக்கும் பொருட்டு யோகசாஸ்திரத்தே அறிஞருக்கு உன்மத்தாசரணம கூறப்பெறறுளது.

" ததா² சரேத வை யோகீ³ ஸதாம் த⁴ர்மமதூ³ஷயந் ।
ஜநா யதா²வமந்யேரந் க³ச்சே²யுர்நைவ ஸங்க³தம் ॥"

அறிவுடை யவாகண்மேலோ ரறந்தனை யடையக்காத்தே
போறியுறு மேவருமானம் புரிதரலிலது சங்கஞ்
சேறிதர லறவேமீக்கண் செய்கவா சரணம்பல்லா
றெறிதரு மவற்ருலன்றே வெங்கணு மேகுநெஞ்சே.

(பொ-ள்.) இந்தப பிரஹ்மவேததாவாய அறிஞா மேலோரின் தருமத்தைக் காபபாறறுபவராய்த தமமை யெவரும் புகழாதபடியும தம்மோடு ஒருவரும் சேராதபடியும மேலே ஆசரணத்தைக்கொள்ளலவேண்டும; ஏனெனின், அவற்றால் அறிஞனது மனதும் வெளிமுகத்தையடையுமன்றே. என்பது முதலிய சாஸ்திர வசனங்களை யாராய்நது அவவறிஞர் மேலே உலகர்ககுக காட்டும்பொருட்டு நானாவகையாய விபரீத ஆசரணததை வைததுக்கொள்வர்; ஆனால், அவா தமது மனோவாககுக காயஙகளால ஒருககாலும் அவவிபரீத ஆசரணததைச செய்யார்; மற்றே, சாஸ்திரம விதித்த தருமததையேகாபபா. இவ்வுலகத்தே ஓங்கியெரியும் வெவ்வழல காய்நத விறகுகளேயும் ஈரவிறகுகளையும் எரிப்பதேபோல அறிஞரது ஞானவடிவ அக்கினியும சம்பூரண சுப அசுப கருமங்களையும் நாசஞ்செய்யுமாதலின், அவர்க்குச் சிறிது மாததிரையும தோட அடையுண்டாகமாட்டாது. பிரசித்த அக்கினியானது விஷமுதலிய சர்வ வஸ்துக்களேயும் பக்ஷிக்கும், அதனைக் கண்டு அதுபோன்று முயன்ற மூடனும விரைவாகவே மழிவெய்தல்போல, இக்காலுள்ள ஆன்மசாக்ஷாத்காரமற்றவர் தத்தாத்ரேயர் முதலிய மகாபுருடரின் மேலாசரணத்தைத் தரிப்பின் இருவகை யுலகமும் அற்றவராவர். இவ்வுலகத்தேயோ அபமான ஜன்னிய துக்கமுண்டாம், பரலோகத்தேயோ நரகதுக்கமுண்டாம் என்பது கருத்தாம். இப்போது பிரஹ்மவேத்தாவினிடத்தே சாஸ்திரவிதியின் அபாவத்தை நிரூபிப்பாம :—ஹே குழநதாய்! இத்தகைய தத்தாத்திரேயாதியர்

க்கு அடைவுற்ற பலவடிவ வித்வத்சந்யாசம் ஒரு சாஸ்திரவிதியினாலே யடைவுற்றதன்றாம்; மற்றோ, தானேயடைவுற்றதாமாதலின் அவர்கட்குதன்கண்ணே கர்த்தவ்யத்தன்மைப புத்தியின்றாம. அவ்வாறே பகிரங்க அந்தரங்க சாதனங்களிடத்தும் கர்த்தவ்யத்தன்மைப்புத்தியின்றாம்; ஏனெனின் பல உற்பத்தியாகாத அளவே அவற்றினபேக்ஷையாம, பின்னரின்றாம. இதனாலே வேதபகவான் பிரஹ்மவேத்தாக்கட்குக் காலையுச்சி மாலையெனும் முக்காலங்களிலும் ஸ்நாநத்தையும் விதிக்கவில்லை; ஏனெனின், அம்முக்கால ஸ்நாநபலமாய அந்தக்கரணசுத்தி அவர்கட்கு முன்னமே பிராப்தமாம். அவ்வேதபகவான் அவர்கட்குச் சமாதிசெய்யவும் விதிக்கவில்லை. ஏனெனின், அச் சமாதியும் அவர்கட்குச சொரூபத்தானும் பலத்தானும முன்னமே சித்தமாம். இப்போது அவர்களிடத்தே சொரூபமாகவே சமாதியை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! அவ்வறிஞர் பத்மாதியாசனத்தோடு கூடியிருக்கும்போதும், தமது ஹஸ்தபாதாதியவயவங்களை யசைத்துக்கொண்டிருக்கும்போதும், ஆதனத்தில நின்றெழும்போதும், போஜனஞ்செய்யும்போதும, நீரருந்தும்போதும, பூமியிலுலவும்போதும், சயனம செய்யும்போதும் சமாதியோடு கூடியவரேயாவர். இவ்வார்த்தையை முன்னர்ப பெரியோருங் கூறியுள்ளார்:—

தேஹாபிமாநே களிதே விஜ்ஞாதே பரமாத்மநி ।
யத்ர யத்ர மநோ யாதி தத்ர தத்ர ஸமாதய: ॥

ஒருசிவ நாமேயென்னு முணர்வினா லுடலின்மான
மிரிதர லுற்றபோ திங்கெழிலறி வாளியுள்ளம்
போருளேவை யெவைக்கண் போகும் புகலவ ணவண்சமாதி
மருவுறு மிடத்தி லெல்லா மனுஞ்சிவ மருவலானே."

(பொ-ள.) யானத்விதீயப் பிரஹ்மரூபன் என்னும் ஆன்மசாக்ஷாத்காரமடைந்த மாத்திரையானே அறிஞனுக்குத் தேகாபிமான மழிந்துபோம், போகவே அறிஞன்மனம யாண்டு யாண்டுச்செல்லுமோ ஆண்டாண்டுஞ் சமாதியேயாம்; அறிஞனது மனம் எல்லாப்பொருள்களிடத்தும் நாமரூப அம்சத்தைப்பாதித்து இருப்பு விளக்க இன்பவடிவ சிவத்தையே காணுமென்பது கருத்தாம். ஹே குழந்தாய்! ஐந்துவருடம்வரை பாலகன்மீது சாஸ்திரவிதிநிஷேதம் உண்டாகாததே போலப் பிரஹ்மவேத்தாக்கள்மீதும் உண்டாகாதாம்; ஏனெனின், பேததரிசனரூப அவித்தையிருப்பவரிடத்தேமாத்திரம் விதிநிஷேதமாம; அஃது அவர்பாலின்றாதலின் அவர் மீதவை சம்பவியா. இப்போது அவர்பால் பேததரிசனமின்மை நிரூபிக்கப்பெறும்:—ஹே மைந்த! அவ்வறிஞர் தமது தேகத்தையும் நாய்விட்டையையும் விலக்ஷணமாய்ப் பாரார்; மற்றோ, சமமாகவேகாண்பர். ஆதலினாலே அன்பர்களால் மனோவாக்குக்காயங்களால் நானாவகையாய சால்வைகளாலும் சந்தனாதிகளின் பூச்சாலும், நறுநாற்றமுடைய மலர்களாலும், நானாவகையாய அன்னாதிபதார்த்தங்களாலும், பூசிக்கப்பெறினும் சிறிது மாத்திரையும் மகிழ்வையடையார். அவர் இத்தேகத்தினின்றுந் தம்மை வேறாபுணர்வாராதலின் இத்தேக பூஜாதிகளில் மகிழ்வுறாததேபோல, இத்தேகத்தை வெட்டல், பிளத்தல், கட்டல்,

அடித்தல், வெறுத்தல் முதலியவற்றின்கண்ணும் சிறிது மாத்திரையும் வாட்டத்தையடையார். அவர் தமது சரீரத்தும், அன்பர் ஆகத்தும், நீட்டருடலினும் ஓரான்மாவையே தொடர்ந்துணர்வர். ஆகலினன்றே, அபேதத்தரிசிகளாய பிரஹ்மவேத்தாக்கட்கு இவ்வுலகத்தே மித்துருவேனும் சத்துருவேனும் உபேக்ஷிக்கத் தக்கவரேனும் எவருமின்றாம். ஒருபொருளும் தன்னதாகவும், பிறரதாகவுமின்றாம்; தண்மையேனும் வெம்மையேனுமின்றாம்; பசிதாகமுமின்றாம்; சோகமோகமுமின்றாம்; ஜராமரணமுமின்றாம்; அவர் சரீராதியுபாதிகட்குத் தண்மை வெம்மைத் தருமங்களையுணர்ந்து தமது உண்மைவடிவத்தை எப்போதும் அசங்கமாயுணர்வர் என்பது கருத்தாம். இவ்வுலகத்தே சமபுத்தியற்றவராகிய விடமதரிசிகட்கு மானமோ சுகத்தை யடைவிக்கும். அவமானமோ துக்கத்தையடைவிக்கும். அவர் யாண்டும் சமபுத்தியுடையவராதலின் அவர்க்கு மானாபமானங்கள் மகிழ்ச்சிவாட்டங்களைச்செய்யா. இவ்வாறு யாண்டும் சமபுத்தியையுடையவரும் ஜீவன் முக்தியவஸ்தையுடையவரும் ஆகிய சமவர்த்தகாதி விதவத்சந்யாசிகள் முன்னருண்டாயினர். இந்த ஞானநிஷ்டைவடிவ பரமஹம்சசந்யாசத்தை முன்னர்வரடைந்தனர். வைராக்கியமற்றவெளிமுகரோ: கிரேத திரேதாதி காலங்களில் மாத்திரம் வருணாசிரமதருமவியவஸ்தையிருந்தது, இக்கால் அது காணவருவதின்றாம் என்பர். என்பவருக்கு வைராக்கியமுடைய மகான்மா பரமஹம்சசந்யாச தருமங்களைப் பிரத்தியக்ஷமாய்க் காண்பிப்பன்; ஆகையால், வைராக்கியமே சந்யாசகாரணமாம். இத்துணையால் ஜாபாலாதியுபநிடதத்தே கூறியிருக்கும் சமவர்த்தகாதியரின் பரமஹம்சசந்யாசம் நிரூபிக்கப்பெற்றது. அந்தப்பரமஹம்ச சந்யாசப் பிராப்தியின் சாதனமாய வைராக்கியத்தை யடைவுறும்பொருட்டுக் கர்ப்ப உபநிடதப்பொருளை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! கர்ப்ப உபநிடதத்தின்கண்ணே கூறிய சரீரவியவஸ்தையை விசாரித்தே அதிகாரிகட்கு வைராக்கியம் பிராப்தமாமாதலின், அக்கர்ப்ப உபநிடதப்பொருளை யாம் நினக்குக்கூறுகின்றேம். நீ ஒருமை மனத்துடன் கேட்டி: பிரஹ்மாவின் சரீரமே முதலாக நாய்ச்சரீரமீறாகவுள்ள சம்பூர்ண சரீரங்களும், பஞ்சபூதரூபங்களும், பஞ்சபூதகாரியமாய சுரோத்திராதி இந்திரியங்களின் ஆசிரயரூபங்களும் ஆமாதலின் யாவும் சமானமேயாம். இதனையே வெளிப்படுத்துவாம்:—ஆகாசாதியைந்தையும் மதிமான்கள் மகாபூதங்களென வழங்குவர். அவையே ஸ்தூல சூக்ஷ்மரூபத்தானே நிகழ்வதாய்ச் சர்வப்பிராணிகட்கும் ஸ்தூல சூக்ஷ்மசரீரரூபமாம். சூக்ஷ்ம பூதத்தினின்றும் சூக்ஷ்மசரீர உற்பத்தியை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! ஆகாசாதி ஐந்தன் சத்துவ அம்சங்களினின்றும் சுரோத்திராதி ஐந்திந்திரியங்களுண்டாயின; இவை சப்தாதி விடயங்களின் ஞானகாரணங்களாம்; அதனாற் சாஸ்திர முணர்ந்தோர் அவற்றை ஞானேந்திரியங்களென்றனர். ஆகாசாதி ஐந்தன் ராஜச அம்சங்களினின்றும் பாணிமுதலிய ஐந்திந்திரியங்களுண்டாயின. இவை சப்தோச்சாரணாதி கிரியாசாதனமாம். அதனால் நூலுணர்ந்தோர் கருமேந்திரியங்களென்றனர். ஆகாசாதிகளின் சேர்க்கையுற்ற சாத்விக அம்சத்தினின்றும் ஞான சக்தியையுடைய அந்தக்கரணமுண்டாம், ராஜச அம்சத்தினின்றும் கிரியா சக்தியையுடைய பிராண

னுண்டாம். அதுவும் பிராண அபானுதிபேதத்தானே ஐவகையாம்; அல்லது, நாக கூர்மாதிகளோடு கூடிப் பத்துவகையாம். சர்வ தேகதாரிகளின் இருதயகமலத்தேயிருக்கும் அவ்வந்தக்கரணமும் மனுதிபேதத்தானே நால்வகையாம். கூறிய யாவுங் கூடிச் சூக்ஷ்ம சரீரமாம்; இதனையே இலிங்க சரீரமென்பர். இஃதபஞ்சீகிருத சூக்ஷ்மபூத காரியமாம்; நேத்திராதி இந்திரிய அவிஷயமாம்; இதனை சாஸ்திர முணர்ந்தோர இதனைச் சூக்ஷ்ம சரீரமென்றனர். இத்தூல சரீரமோ பஞ்சீகிருத ஸ்தூலபூதகாரியமாம்; நேத்திராதிகட்கு விஷயமாம்; இதனை நூலுணர்ந்தோர் இதனைத் தூலசரீரமென்றனர். இதுதுணையானே ஸ்தூலசூக்ஷ்மமென்னும் இரண்டு சரீரங்கள் நிரூபிக்கப்பெற்றன. இப்போது அத்தியாத்ம அதிதைவமென்னும் வேற்றுமையானே இவற்றின் நால்வகை வேற்றுமையை நவில்வாம்:—அச்சூக்ஷ்ம சரீரமும் ஸ்தூலசரீரமும் அத்தியான்ம அதிதைவபேதத்தானே இருவகை இருவகையாம். அவற்றுள் முதலில் தற்பதார்த்தரூப அதிதைவவடிவத்தை நீ கேட்டி: ஆண்டுச் சமஷ்டி சூக்ஷ்மரூப ஹிரண்யகருபபா அதிதைவரூப சூக்ஷ்மசரீரமாவர், சமஷ்டி தூலரூபவிராட்டு அதிதைவரூப தூலசரீரமாவர். அதல, விதல, சுதல, தராதல, மகாதல, இரசாதல, பாதாலமெனனும் கீழேழுலோகஙகளும விராட்டுப பகவானுடைய இரணடு பாதஙகளாம. மேலேழுலோகங்களுள் பூலோகமோ விராட்டுபபகவானுடைய துடையிடமாம அந்தரிக்ஷலோகம் நாபிஸ்தானமாம். சுவர்க்கலோகம இருதயஸ்தானமாம். மகலோகம் கழுத்துமுதல வதனமவரையிலுள்ள ஸ்தானமாம. ஜனலோகம முகமுதல் விழிவரையிடமாம. தவலோகம இலலாடஸ்தானமாம சத்தியலோகம சிரமாம். இவ்வாறு விராட்டுப்பகவானே பதினனகு லோகஙகளின ஸ்தானமாம. இதுதுணையால் தற்பதார்த்தரூப அதிதைவ சூக்ஷ்ம தூலசரீரம நிரூபிககபபடடது. இப்போது துவம்பதாரத்தரூப அத்தியாதம சூக்ஷ்ம தூலசரீரததை நிரூபிபபாம்:—ஹே மைநத! யான் என தென்பதறகு விடயமாய வியஷ்டி சூக்ஷ்ம வியக்தி அத்தியான்ம சூக்ஷ்மசரீரமாம. அதனை நூலுணாநதோர் தைஜசமெனக்கூறினர். அகம்மம அபிமான விஷயீபூதமாய தூலவியக்தி அத்தியாதம தூலசரீரமாம். அதனை நூலுணர்ந்தோர் விசுவம எனககூறினா.

சங்கை:—ஹே பகவன்! அன்னிய சாஸ்திரஙகளிலோ அததியான்மம அதிதைவம் அதிபூதம என்னும் மூவகை விபாகம் விளம்பப்பட்டிருத்தலின் ஈண்டிருவகை கூறியது அசங்கதமாமன்றோ?

சமாதானம்:—ஹே குழநதாய்! தூல சூக்ஷ்மசரீரமே அத்தியான்ம அவஸ்தைபோல அபரோக்ஷரூபமாய்த் தோறறும்போது அத்தூல சூக்ஷ்மசரீரத்தையே மதிமான்கள் அதிபூதமெனக் கூறினராதலின், அதன்கண்ணே அதற்கு உள்ளடக்கமாம். அவ்விரண்டன் இரண்டு வடிவங்களும் சேர்ந்து வியவகாரவிடயமாம்போதுதான் இத்தாவரஜங்கம பேதமாமாதலின் அபபேதமும் தூலசூக்ஷ்மசரீரத்தினும் வேறன்றாம்; மற்றோ, உள்ளடக்கமேயாம். கருத்திதுவாம்:—சம்பூரண ஸ்தாவர ஜங்கம சரீரங்கள் தத்தம் அபிமானி ஜீவாபேக்ஷயானே அத்தியான்ம பாவத்தையடையும். வேறுகாண்போ னபேக்ஷயானே அதிபூத பாவத

தையடையும். சைத்திர புருடசரீரம தன்னபேக்ஷையானே அக்கியான்மரூபமாம், மைத்திரனபேக்ஷயானே அதிபூதரூபமாம். இவ்வாறே எல்லாத் தேகத்தூடும் கண்டுகொள்க. அவ் வியஷ்டியாய தூலசரீரமும ஜராயுஜாதி பேதத்தானே நால்வகையாகும ; ஆண்டு, மாதாவின உதரத்தே பாலகனை மறைக்கும ஜராயுவென்னும் சரும விசேடத்தினின்றும உண்டாம சரீரம் ஜராயுஜமாம ; மனுடர் முதலாயினாரேபோலவாம. அண்டத்தினின்றும் உண்டாம் சரீரம அண்டஜமாம் ; பறவை முதலியனபோலவாம. சரீராதிகளின் வேர்வை முதலிய மலத்தினின்றும் உண்டாம சரீரம் சுவேதஜமாம் ; மூட்டைமுதலியனபோலவாம. பீஜரூபகாரணமேலாகாரப்பரிணாமத்தையடையும் சரீரங்கள உற்பிஜ்ஜங்களாம. அவையும் பாவகருமஜந்நியமெனவும, புண்ணிய கரும ஜந்நியமெனவும் இருவகையாம். பூமியின்கண் ணுள்ள தருமுதலியனவும, நரகத்துள்ள யாதனா சரீரமும், முதலவாம். சுவர்க்கலோகத்தே இருக்கும தேவதாசரீரம இரண்டாவதாம. இத்துணையால் நால்வகைச் சரீரங்கள நிரூபிக்கப்பட்டன. இப்போது ஆகாசாதி பூதங்களின் வியாபாரங்கள் நிரூபிக்கப்படும :—மேற் சொன்ன அந்நால்வகைச சரீரங்களினும் அவகாசங்கொடுத்தல ஆகாய வியாபாரமாம. பதார்த்தங்களின் பரஸ்பர சையோகவியோகஞ்செய்வித்தல வாயு வியாபாரமாம. அன்னாதிகளைப பக்குவப்படுத்தல தேயு வியாபாரமாம. வஸ்திராதிகளை நனைப்பது ஜலவியாபாரமாம. சர்வ பதார்த்தங்களையும தரிப்பது பிருதிவியின வியாபாரமாம. இப்போது ஐந்து ஞானேந்திரியங்களின் வியாபாரங்களை நிரூபிப்பாம :—சப்தத்தைக்கவர்வது காதின்தொழிலாம். பரிசத்தைக்கவர்வது தோலின்தொழிலாம், உருவத்தைக்கவர்வது நோக்கின்தொழிலாம, இரசத்தைக்கவர்வது நாக்கின்தொழிலாம, மணங்கவர்வது மூக்கின்தொழிலாம. ஐந்து கருமேந்திரிய வியாபாரங்களை நிரூபிப்பாம் :—கூறல் வாக்கின்தொழிலாம, கவர்தல பாணியின்தொழிலாம, போதல வரல பாதத்தின்தொழிலாம், விடயாநந்தம உபஸ்தத்தின்றொழிலாம, மலபரித்தியாகம் பாயுவின்றொழிலாம். இனிப் பிராணவியாபாரம நிரூபிக்கப்படும :—முகநாசிவாயிலாய்த் தேகத்தினின்றும் வெளியே செல்லல உள்ளே போதல பிராணவியாபாரமாம. மலாதிகளைக் கீழே கொண்டுசெலுத்தல அபான வியாபாரமாம. அன்னத்தின் சூக்ஷ்மரசத்தைச்சர்வ நாடிகளினும சேர்ப்பித்தல வியான வியாபாரமாம. அன்னாதிகளை மேலேகொண்டு செலுத்தல உதானவியாபாரமாம. உண்ட அன்னத்தைப்பக்குவப்படுத்தும்பொருட்டுச் சாடராக்கினியை ஓங்கி யெரியச்செய்தல சமான வியாபாரமாம. வாந்தி நாகன் தொழிலாம, இமைகொட்டல கூர்மன் தொழிலாம, தும்மல கிருகரன் தொழிலாம, நகுதல தேவதத்தன் தொழிலாம, வீங்கவைத்தல் தனஞ்சயன் தொழிலாம், ஜீவனமும மரணகாலத்தே லோகாந்தரத்தே கிளம்புகையும, சர்வப்பிராணன்களின்சாதாரண வியாபாரமாம. இப்போது அந்தக்கரண சதுஷ்டய வியாபாரத்தை நிரூபிப்பாம் :—சம்சயரூபமனனம் மனத்தொழிலாம், பொருணிச்சயம புத்தியின் தொழிலாம், நினைவுவடிவ சாமானியஞானம் சித்தத் தொழிலாம், யானென அபிமானித்தல் அகங்காரத்தொழிலாம். இனி ஆகாசாதிகளின் சொரூப இலக்கணங்

கூறப்பெறும் :— அவகாசரூப சித்திரமும், சலித்தலும், வெம்மையும் ஒளிர்தலும், நெகிழ்வித்தலும் நேயப்படுத்தலும், கடினத்தன்மையும், முறையே ஆகாசாதியின் சொரூப இலக்கணமாம். தடஸ்த இலக்கணமோ இதுவாம் :—சப்தமும், சப்தப் பரிசங்களும், சப்தப் பரிச ரூபங்களும், சப்தப் பரிச ரூப ரசங்களும், சப்தப் பரிச ரூப ரச கந்தங்களும், முறையே ககனாதிகளின் தடஸ்த இலக்கணமாம இனிச் சுரோத்திரவிடயங்களாமாறு :—ஒன்றிரண்டு மூன்று நான்கு ஐந்து குணங்களை முறையாயுடையனவாய ககனாதிகள் செவி முதலியவற்றின் விடயங்களாம். ககன நீர் மண் மூன்றில் சுரோத்திர ரசனக் கிராண விடயத்தன்மை கூறியது குணதாதான்மியத்தை யங்கீகரித்தாம்; உண்மையாயோ, அவை குணங்களையே கவர்வனவாமன்றித் திரவியங்களைக்கவர்வனவன்றும். துவக்கும் சக்ஷுவும் குணங்களையும் திரவியங்களையும கவர்வனவாம். நியமமாய்ச செவி முதலியவற்றிற்கு விடயங்களாம் ககனாதிகளோ நியமமின்றி வாக்காதிகட்கும் விடயங்களாம்; ஹஸ்தம் நியமமாய் மண்ணைககவர்வதன்றி நீரையுங்கவர்தல்போலவாம. கூறிய சூக்ஷ்ம காரணகாரியமியாவும் வியஷ்டிரூபத்தானே அத்தியான்ம சூக்ஷ்மசரீரத்தேயிருக்கும். சமஷ்டிரூபமாயோ அதிதைவசூக்ஷ்மதேகத்தேயிருக்கும. மிகவும் சூக்குமங்களாதலின் நேத்திராதிகளாலவற்றி னுணாவுண்டாவதின்றும.

சங்கை :—ஹே பகவன்! ஆகாசாதிகளின் சூக்குமத்தன்மையின்கண்ணே யாது காரணம்?

சமாதானம் :—ஹே மைந்த! அவற்றின்கண்ணுள்ள சூக்குமத்தன்மையின் கண்ணே பஞ்சீகரணமின்மையே காரணமாம.

சங்கை :—ஹே பகவன்! எவ்வதுண்மையிற சூக்குமத்தன்மையும், இன்மையிற்றூலத்தன்மையுமெவற்றிறகாமோ அபபஞ்சீகரணதின் வடிவமியாதாம்?

சமாதானம் :—ஹே மைந்த! ஆகாசாதியைநதனுள் ஒவ்வொன்றும ஐந்து ஐந்து விபாகமாய. அவ்வைநதனுள் ஒன்று ஐநதுபாகமாகி முறையே ஐந்தனுட் சேரும்; சேரவே 21, 21, விபாகமோதத்தமதாம். நன்னான்கோ பிறபிறவாம. ஆகாயத்தை ஐந்து கூறுகக்கி அவறறுளொன்றை ஐநதுகூறாக்கி யொவ்வொரு கூறையும் ககனாதியின் பாலீவதுபோலவாம் இநநெறியை மறறைய பூதங்களினும் காண்க. ஆகாசத்தின் ஐநதாங்கூறறை ஐநதுகூறுசெய்ய ஒருகூறு ஆகாயத்திற்கு மடைவுற்றது, இதறகுச சமானமாய் முன்னிருககும இருபதுகூறும் ஆமென்பது கருத்தாம. இதுபறறியே அவை தமக்கு 21, 21, கூறு கூறியதாமென்க.

சங்கை :—ஹே பகவன்! பஞ்சீகரணத்தால் ஒவ்வொரு பூதத்தின்கண்ணே பஞ்சபூதாம்சத்தை யங்கீகரிக்கின்றே, ஒரோ ஆகாயத்தே வாயுததன்மை முதலியன தோற்றல்வேண்டும்; வாயு முதலியவற்றின்கண்ணும அவ்வாறே தோற்றவேண்டும்.

சமாதானம் :—ஹே மைந்த! பஞ்சீகரணமுறினும் பஞ்சபூதத்தே தத்தமது 21, 21, கூறு இருக்கின்றன. பிறவறறதொவ்வொரு கூறேயாம். இதனானே 21,

தோலா இடைப்பொன்னின்கண்ணே ஒரு தோலாத் தாம்பிரம்கலக்கினும் அம் மதியுண்டாகமற் பொன்மதியே யுண்டாதல்போலத் தன்னபச அதிகத்தன்மை யானே ஆகாயாதிகளிடத்தே வாயு முதலியவற்றின் தோற்றமுண்டாகாமல் ஆகா யத்தன்மையே தோறறும. வாயு முதலியவற்று மிவ்வாறேயாம். இவ்வார்த்தை பிரஹ்மசூத்திரத்தே ஸ்ரீ வியாசபகவானாலும் கூறப்பெறறுளது:—"வைஶே ஷ்யாத்து தத்வாதஸ்தத்வாத:" ஆகாசாதிகள் பஞ்சீகரணமுறையானே பரஸ்பரம்கூறு கள் சேர்ந்திலஙகுமாயினும அவறறிறகுத தத்தமதம்சமதிகமாதலின் உலகில் இது மண்ணென்பதாதி பின்னபின்ன வியவகாரமாம்.

சங்கை :—ஹே பகவன்! பஞ்சீகரணவார்த்திகக் கிரநதத்தின்கண்ணே ஆகா சாதிகளில் பாதிபாதிப பாகமோ தததமககாககி, பாதிபாதிபபாகத்தை மற்றவற் றிற்குக் கூறப்பெற்றுளது. இதன்கண்ணே தாங்கள் 21 பாகத்தைத் தத்தமக் காக்கி நான்குபாகத்தை அன்னியத்திறகறைந்தீர்களாதலின், தஙகள்கூறறு வார்த் திகக்கூற்றோடு முரணுகின்றதன்றோ?

சமாதானம் :—ஹே குழநதாய்! வார்ததிகத்தின்கண்ணும் பாதியென்னும் சபதத்தால சமபாதியைசசாறறவில்லை; மறறோ, அதனால நால்விபாகத்தின் விஷமப்பாதி கூறபபெறறுளதாதலின் முரணின்றும. வாாததிகத்தேயுற்ற பாதிச் சப்ததகாற சமானபபாதியைக் கவாந்தபோதினும முரணின்றும்; ஏனெனின், ஆண்டுக்கூறிய பஞ்சீகரணபபிரககிரியையைக்குறித்தது இபபிரக்கிரியைவேறும், பிரக்கிரியையின் பேதமுறினும, அத்வைதசித்தாநதத்திற்கு ஆனியின்றும்; மாறாக அவறறின்பேதம ஜகத்தின்கண்ணே அநிர்வசனீயத்தன்மையையே யுணர்த்தும். பஞ்சீகிருத பஞ்சபூதகாரியமாய தூலசரீரம தன்னிடத்தே அநேகவகையாய ரூபாதி குணங்களைத்தரிக்கும். இபபோது அக்குணங்களை நிரூபிப்பாம :—ஹே மைந்த! இதன்கண்ணே சுக்கிலம, இரகதம, கிருஷ்ணம், தூமிரம், பீதம, கபிலம், பாண்டுரம் என எழுவகைரூபங்களுள. புகைரூபததின் பெயர் தூமிரமாம. நபில, கோவின்ரூபம் கபிலமாம. கபிலவாணத்தோடு கூடியிருக்கும சுக்கிலம் பாண்டுரமாம. கோமளம, கடினம, மததியமம், உஷ்ணம், சீதம், அநுஷ்ண சீதம, என அறுவகைப்பரிசமிருக்கும கோமளகடினமின்றியபரிசம் மததியம மாம். உஷ்ணசீதமின்றியபரிசம அநுஷ்ணசீதமாம. நறுநாறறம தீநாற்றம் என விரண்டுள. நறுநாறறமோ புண்ணியவானாகிய யோகிக்கே பிரத்தியக்ஷமாம, மற்றை யர்க்குத்தோற்றாதாம். நவத்துவாரத்தின்கண்ணேயிருக்குந் தீநாறறமயாவருக்கும் நித்தியமும் அநுபவசித்தமேயாம. கார்பபு, காழ்பபு, கைபபு, துவாப்பு, புளிப்பு, இனிப்பு, என அறுவகை ரசங்களுள. தொனி வருணவடிவசசப்தஙகளுண்டு. முதலதோ நிஷாதம், இருஷபம, காநதாரம், ஷட்ஜம், மத்தியமம், தைவதம், பஞ் சமம், என்னும் வேற்றுமையால் எழுவகையாம். தொனிவடிவசபதசுரங்களை யுணர்த்துமபொருட்டு நாரதமுனிவா இவ்வகைததிருஷ்டாநதங் கூறியுள்ளார் :—

"ஷட்ஜம்ரௌதி மயூரோவ்ருஷபோ ரௌதி கோஷூகம் ।
அஜாவிகேது காந்தாரம் க்ரௌஞ்சோ நததி மத்யமம் ॥

पुष्पसाधारणे काले कोकिलो रौति पञ्चमम् ।
अश्वस्तु धैवतं रौति निषादं रौति कुञ्जरः ॥"

" வேலவன் மயூரம் ஷட்ஜம் விளங்குகோ விடப மாடு
காலவி காந்தா ரங்கி ரவுஞ்சமத் தியமே கண்டாய்
மாலியல் குயிலோ பஞ்ச மம்பரி தைவ தந்தான்
மேலுயர் கரியோ கூறல் நிஷாதமேன் றறைவர் மேலோர்."

(பொ-ள்.) மயூரமோ ஷட்ஜசுரத்தையும், கோவோ இருஷபத்தையும், அஜையும் அவியும் காந்தாரத்தையும், கிரௌஞ்சமோ மத்தியமத்தையும், கோகிலமோ பஞ்சமத்தையும், அசுவமோ தைவதத்தையும், குஞ்சரமோ நிஷாதத்தையும் கூறுநிற்கும். கருத்திதுவாம் :—ஸ்ரீராகம், வசந்தம், பஞ்சமம், வைரவம், மேகநாதம், நடநாராயணம் இவை யறுவகை இராகமாம். இவற்று ளொவ்வொன்றிற்கும் நிஷாதாதி ஏழு ஏழு சுரங்களுள, அவ்வாறு ஸ்திரீகளுமுள. ஆண்டு, கௌடீ, கோலாஹாசீ, தாலீ, திரவிடீ, மாளவகௌசிகா, கந்தாரீ இவ்வாறும் ஸ்ரீராக ஸ்திரீகளாம். ஆந்தௌலீ, கௌசிகீ, இராமகரீ, புடமஞ்சரீ, குங்கரீ, தேசாக்யை இவ்வாறும் வசந்தராக ஸ்திரீகளாம். பைரவீ, குர்ஜரீ, பாஷை, வேலீவதீ, கர்ணடகீ, இரக்தசிங்கை, இவையாறும் பஞ்சமராகஸ்திரீகளாம். திரிகுணு, ஸ்தம்பதீர்த்தா, ஆபீரி, ககுபா, விராடீ, சாமேரீ இவையாறும் வைரவராகஸ்திரீகளாம். பங்காளா, மதுரா, காமதா, சோகமாதிகா, கம்புக்கிரீவா, தேவாலா என்னும் ஆறும் மேகநாதராக ஸ்திரீகளாம். த்ரோடகீ, காந்தாரீ, சுத்தமுதகாரி என்பன முதலியவையாறும் நடநாராயணராக ஸ்திரீகளாம். இவ்வாறு முப்பத்தாறு இராகிணிகளும், ஆறு இராகங்களும், ஏழு சுரங்களும், ஆகத் தேயுறையும். ஆனால் யாவருக்குமவை பிரத்தியக்ஷமாகாவாம்; மற்றோ, நறுநாற்றம் யோகி யுணர்வதேபோல இவற்றையும் ஒரு அறம்புரிந்தோனேயறிவன். அந் நிஷாதாதிகளையே யோகி அநாகத சப்தாதிரூபத்தானே யனுபவிப்பன். கானம் செய்பவனோ அவ்வேழையும் தன் வாயினின்றும் வெளிப்படுத்துவன். தொனி யநேகம்வகையாவதேபோல வருணமும் அநேகவகையாம். அவையும் யோகிக்கோ ஆகத்துள்ளே யனுபவமாம், மறறையர்க்கோ முகத்தே பிரசித்தமாம். இரசம், உதிரம், மாமிசம், மேதை, அஸ்தி, மஜ்ஜை, வீர்யம் என ஏழுதாதுக்களுள. இவற்றினுற்பத்தி அன்ன ஜலத்தானேயாம். தம் வயிற்றின்கண்ணே பெய்த அன்ன ஜலம் பித்ததேஜசாற்பரிபக்குவமாகி நான்கு தினங்கட்குப் பின்பு முதலில் இரசமாம், 8-வது தினத்தே உதிரமாம், 12-வது தினத்தே மாமிசமாம், 16-வது தினத்தே மேதையாம், 20-வது தினத்தேஎன்பாம் 24-வது தினத்தே மஜ்ஜையாம், 28-வது தினத்தே வீரியமாம். இவ்வாறு வைத்திய சாஸ்திரத்தே ஏழுதாதுக்களினுற்பத்தி கூறப்பெறறுளது. 32, பல்லெலன்புகளிருக்கின்றன. 107, மர்மஸ்தானங்களிருக்கின்றன. அவையும் மாமிசமர்மம், சிராமர்மம், சநாயுமர்மம், அஸ்திமர்மம், சந்திமர்மம், என ஐவகையாம் அவற்றுள் 11, மாமிசமர்மங்களாம், 41, சிராமருமங்களாம், 27, சநாயுமர்மங்களாம், 8, அஸ்தி மர்மங்களாம், 20, சந்திமர்மங்களாம். அவற்றுள்ளே ஒவ்வொரு மர்மஸ்தானமோ

சஸ்திராதிகளால் பேதிக்கப்பெறின் விரைவாகவே ஜீவர்களின் மரணகாரண மாம. ஒவ்வொரு மர்மஸ்தானமோ காலாந்தரத்தே மரணகாரணமாம். ஒவ்வொரு மர்மஸ்தானமோ அசாத்தியரோக காரணமாம். சுசுருதம முதலிய வைத்திய சாஸ்திரத்தே அவற்றின் விசேட நிர்ணயம் செய்யப்பெற்றுளது. என்பின் சந்திகள் 180, இருக்கின்றன. 900, நரம்புகளிருக்கின்றன. 8000க் கோடி கேசரோமங்களிருக்கின்றன சில நூல்களிலோ 3½க் கோடியென அவை கூறபபெறுகின்றன, அக்கூறறே அவையிருக்குமிடமாய ரோம கூபஸ்தானங்களின் எண்ணிக்கையைக்கொண்டேயாம். நாக்கு 12 பலமாம். ஹார்த்தபத்மம் என்னும் இரக்தவர்ணமுடைய இருதயமத்தியம 8 பலமாம். இருதய தேயத்தேயிருக்கும் பித்ததாது ஒரு பிரஸ்தமாம. பலம பிரஸ்தம என்பவையிவையாம்:—ஐந்து குன்றிமணிகொண்டது மாஷமாம், 16 மாஷம் காஷமாம், 4 கர்ஷம் பலமாம். 4 பலம குடவமாம், 4 குடவம பிரஸ்தமாம். விசேடமாய்க் கண்டத்தேயிருக்குங் கபம் 4 பிரஸ்தமாம. வீரியம சரீரம முழுவதினுமிருப்பினும் கண்டம் இருதயம மூர்த்தம (உச்சி) எனனுமிடகதே விசேடமாயிருக்கும். அதுயாண்டும் குடவ அளவிருக்கும் மேதை 2, பிரஸ்தமாம. பஸ்தியென்னுமிடத்தேயிருக்கும் மூத்திரமும, சங்கிரகணியென்னுமிடததேயிருககும மலமும் கணக்கின்றியதாம்; என்னை, அதிக அன்ன நீரான் மிகுதலும குறைவாற் குறைதலுங் கூடலினென்க. கர்பப உபநிடததினறிருஷ்டாவாய பிபபலாத இருஷி அதன் கண்ணே இவற்றினளவை யிவ்வாறு கூறினா. இரச உதிராதி தாதுக்கட்கோ ஜலத்தின் நவ அஞ்ஜலி ஆதிப்பரிமாணம் யாஞ்ஞவற்கியாதிய இருஷிகள் கூறியுள்ளார்கள். இபபோது கர்பபோப நிடதத்தே கூறுத சரீர அவயவங்களை மற்றைய சாத்திரப் பிரமாணத்தான் நிரூபிபபாம:—ஹே மைந்த! ஈண்டுச் சர்வ ஜீவர்களின் சரீரம பாதநுனிப் பாகங்கொண்டு கேசம்வரைத் தத்தமது 96, அங்குல பரிமாண நீளமாகும். இதனிருபாலும் விறபோல 16, 16, என்புகளிருக்கின்றன. பிப்பலாதி விருக்ஷத்தின் ஏக மூலததினின்றும் முதலில் ஸ்தூல ஸ்கந்தம் வெளியாம். அதனினின்றும அநேகந தூலசாகைகள் கிளம்பும். அவற்றினின்றும் அநேகஞ் சூக்ஷ்ம சாகைகள் கிளமபும், அவறறினின்றும் அநேகம அத்தியந்த சூக்ஷ்ம சாகைகள் கிளம்புமு; அதுபோல இருதயதேயத்தினின்றும் முதலில சுழும்னையெனப பெயரிய நாடி கிளமபுமு, அதனினின்றும 100 நாடிவரும், அவற்றுள் ஒவ்வொன்றினின்றும் 100. 100, நாடிகள் வரும் அவற்றுள் ஒவ்வொன்றினின்றும் 72000, நாடிகள் வரும், யாவுமொருங்குகூடி 720,010,101, நாடிகளாம். இவையாவும சரீரமுழுவதும் வியாபித்திருக்கும் எனப் பிரசின உபநிடதத்தே எண்ணப்பட்டுள்ளன. 96, அங்குலமுடைய இத்தேகத்தினின்றும் பிராண வாயு நாசிவாயிலாய் 12, அங்குலம் வெளியேவருமாதலின் அது 108, அங்குல அளவுடையதாம். பாதநுனியினின்றும் 48, அங்குல மேற்றேயம், அல்லது கேசத்தினின்றும் 48, அங்குலக் கீழ்த்தேயம் சரீரமத்தியமதேயமாம், ஆண்டுக் காய்ந்த பொன்போன்ற ஒளியுடைய நாற்கோணமாய ஒரு அக்கினியினிடமிருக்கின்றது. அவ்வழல் நாடிவழியாய்ச் சர்வ சரீரத்தும் வியாபதமாம், மத்தகத்திருக்கும்

சந்திரமண்டலம்வரை வியாப்தமாயிருக்கும். இவ்வார்த்தை ஆகமசாஸ்திரத்தே ஸ்ரீ பகவான் மகாதேவராலும் கூறப்பெற்றுளது:—

"ஸர்வேஷாம் ப்ராணினாமூர்த்வம் சந்த்ரமா ஸம்ஸ்திதோ(அ)ஸ்ய து ।
அதஸ்தாத் ஸூர்ய ஏவ ஸ்யாத் ம்ருத்யுகாலே விபர்யய: ॥"

"எவ்வு யிாக்கட்கு மேலெழிற் சந்திரன்
வவ்வுங் கீழினிற் சூரியன் வாழ்வனல்
கவ்வுங் காலனு யிாகோளுங் காலையில்
அவ்வை மேலதுங் கீழது மாகுமே."

(பொ-ள்.) சர்வ ஜீவர்களின் உச்சிஸ்தானத்தே சந்திரனிருக்கும், கீழ்ஸ்தானத்தே சூரியனிருக்கும், மரணகாலம்வரினோ மாறி மதிகீழும் மார்த்தாண்டன் மேலுமாம். அந்நாற்கோணவடிவ குண்டத்தேயிருக்கும் அக்கினிரூப தேஜசானது சரீரேந்திரியாதி சர்வ சங்காதத்திற்குஞ் சாமர்த்தியத்தை யடைவிக்குமாதலின் நூலுணர்ந்தோர் அதனைச் சக்தியென்பர். அஃதத்தியந்த சூக்ஷுமமாதலின், ஜீவர்களாலறிய முடியாததாம், அஃதே தன துஷ்ணவடிவதாற் சர்வப் பிராணிகட்கும் ஜீவனகாரணமாம். அதனிடம் ஓரங்குல அளவாம் பாயுஸ்தானத்தினின்றும் இரண்டங்குல மேற்பேரபத்தே உபஸ்தஸ்தானத்தினின்றும் இரண்டங்குலக்கீழ்ததேயததே அஃதிருக்குமிடமாம். அதன்றானமிருக்குந் தேகமத்திய தேயத்தே ஒன்பதங்குல அளவு அவகாசமிருக்கும், அதன்கண்ணே நான்கங்குல நீளம் நான்கங்குல அகலம் ஒரு கந்தம்போன்றமாம்சபிண்டமிருக்கும், அதனினின்றும் நாபிசக்கரரூப கமலத்தின் நாளமொன்றுண்டாம், அது தண்டம்போல ஒன்பது அங்குல நீளமுடையது, இரசாதி யேழுதாதுக்களாற் கட்டுப்பட்டது, சர்வ அவயவங்களின் மூலமாயது அதனிடையே ஒரு நாபிச்சக்கரமிருக்கும், தேருருளையின் அராபபோல அது 12 அராக்களோடுகூடியிருக்கும், இத்தேகத்தாற் சுற்றப்பட்டிருக்கும். ஊர்ண நாபியானது நூற்களிடத்தே சுழலல்போல் அறமபாவவடிவ நூற்களைபபற்றியே இசசீவான்மா இதன்கண்ணே சுழலும்.

சங்கை: —ஹே பகவன்! கால்முதற்றலைவரை சர்வ சரீரத்தே இச்சீவான்மா வியாப்பியமாயிருக்குமாதலின், இதற்கொரு நாபிச்சக்கரத்தின்கண்ணே நிலைபேறுகூறல் சம்பவியாதாமன்றோ?

சமாதானம்:—ஹே குழந்தாய்! இது சர்வ சரீரத்துமிருந்தபோதினும், நாபி, இருதயம், கண்டம், சக்ஷு, உச்சி என்பன வாதியவிடத்தே விசேடமாயிதற் கிலக்கமாமாதலின், நூலுணர்ந்தோர் அவ்விடங்களிலிதற்கிருப்பியம்பினர். அவ்விடங்களுள்ளும் முதலில் நாற்கோணவடிவமாய் வருணித்த ஆதார சக்கரத்தை மூலசக்கரமெனவுங் கூறுவர். அதன்கண்ணே இப்பிராணசகித ஜீவன் எப்போதும் வாசஞ்செய்வன். அதற்குமேலே நாபிசக்கரத்திற்குக் கீழே பாம்புபோல வக்கிர ஆகாரமாய் ஒரு குண்டலினீ யென்னுஞ் சக்தியிருக்கும். அது காரணவடிவப்பிரஹ்மத்தின் மூர்த்திரூபமாம். பூதபஞ்சகம், மனம்புத்தியகங்காரம் என எண்வகையாய்க் கீதையிற்கூறிய அபரப்பிரகிருதிக்கும் இதுவே காரணமாம், இதுவே

பிராணவாயுவால் அடியுறப்பெற்று எல்லா ஒலிகளையுமுண்டாக்கும், இதுவே பிராணன்கள் வெளியே பிரஹ்மலோகஞ் செல்வதில் தடையாம்; உதரத்தேயிருக்கும் பிராணவாயு மேலே பத்தாவது வாயிலிற்சென்று ஆண்டுச் செல்லமுயலும்; ஆனால், செல்லமுடியாதாம்; ஏனெனின், செலலும மார்க்கம் சுழும்நைநாடியாம், அதன் முகத்தை இக்குண்டலினீ தன் முகததாற்றடுததுத் தனது தானத்தே சயனிக்கும். ஆகையால், இது செல்லமுடியாதாம.

சங்கை:—ஹே பகவன்! அது எக்காலத்தே நனவுறறுச சுழும்நை முகத்தைப் பரித்தியாகிக்கும்?

சமாதானம்:—ஹே மைந்த! யோக சமாதானததால் செலுத்தபபட்ட பிராணனால் அது நனவுறும்போது இருதயாகாயததை வியாபித்துவிளங்கும், பத்தாவது வாயில் பரியநதம்செல்லும. அது சேடநாகம்போன்ற ஒளிமிகுந்த மூர்த்தியாம. யோக சமாதானததாற செலுததபபெறற பிராணவாயு உள்ளக்கினியோடு சுழும்நையின் முகரூப நெறிவாயிலாய்த் தேகமததியிற புகுஙகால் நனவுற்ற அது அதன்முகததை மறையாதாம். இபபோது ஆதார சககராதிகளில் பிராணன்களின் திதிரூபப பிரத்தியாகாரததை நிரூபிககுமபொருட்டு முதலில அதனுபயோகியாய நாடிகளின் வடிவததை நிரூபிப்பாம:—ஹே மைந்த! இததேகமத்தியிலிருக்கும் மாம்சபிண்டரூபகந்ததிடையே சுழுமநையென்னும நாடியுளது, அதன் நாற்புறங்களினும் வேறநேக நாடிகளிருககும, அவவெல்லாவறறினிடையே இப் பதிநான்கு நாடிகள் பிரதானங்களாம:—அவை சுழுமநை, இடை, பிங்கலை, சரஸ்வதீ, குஹூ, வாரணை, யசஸ்விநீ, பூஷை, பயஸ்வநீ, சஙகிநீ, காநதாரீ, ஹஸ்திஜிஹ்வா, விஸ்வோதரை, அலம்புஷை எனபனவாம. இவற்றுள்ளும் சுழும்நை இடைபிங்கலை என்பன முக்கியங்களாம். இவறறுள்ளும் சுழும்நை நாடியொன்றே முக்கியமாம. அது பிரஹ்மலோகததையடைவிககும வாயிலாய் முத்திநெறியாம், சர்வ விசுவத்தையும் தாரணம் செய்வதாம். இபபோது அபபதினான்கின் இடமியம்புவாம்:—ஹே குமர! அந்நாடிகநததின் இடைத்தேயத்தோ அச்சுழும்நைநாடிதிதமாம. சரீரததின் பினறேயததினிடையேயிருக்கும நீள என்புவடிவ நெறிவாயிலாய் மூர்த்த ஸ்தானததையடையும. அதனிடதுபாகத்தே இடையென்னும் நாடியிருக்கும், வலதுபாகததே பிங்கலையென்னும நாடியிருக்கும். இம் மூன்றன் முன்னும பின்னும ஒவ்வொரு நாடியிருக்கும். சுழுமநையின் பின்னே சரஸ்வதீயிருக்கும், முன்னே குஹூ இருக்கும; இடையின்பின்னே காந்தாரியிருக்கும், முன்னே ஹஸ்தி ஜிஹ்வையிருக்கும; பிங்கலையின் பின்னே பூஷையிருக்கும், முன்னே யசஸ்விநீ யிருக்கும். இவ்வாறு அநநவநாடிகட்கும் மூன்று வரிசையாம, முன்னும இடையும் பின்னுமாம. சுழும்நையின் இடதுபாகமாக எண்ணின் இமமுறையாம:—ஹஸ்தி ஜிஹ்வை, குஹூ, யசஸ்விநீ என்பவை முன் முதற்பந்தியாம். இடை, சுழும்நை, பிங்கலை என்பவை இடையிரண்டாவது பந்தியாம். காந்தாரி, சரஸ்வதீ, பூஷை என்பவை பின் மூன்றாவது பந்தியாம். இத்துணையால் நவநாடிகளின் இடமியம்பப்பெற்றது. இப்போது பாக்கியாய பஞ்

சநாடிகளைப் பகர்வாம். ஹஸ்தி ஜிஹ்வை, குஹூ என்பவற்றினிடையே விசுவோதரையிருக்கும்; குஹூ, யசஸ்வநீயென்பவற்றினிடையே வாரணையிருக்கும்; காந்தாரீ, சரஸ்வதீ யென்பவற்றினிடையே பயஸ்வநீ யிருக்கும்; சரஸ்வதீ பூஷையென்பவற்றினிடையே சங்கிநீயிருக்கும்; அலம்புஷையென்பதோ அக்கந்தத்தின் கீழேயிருக்குமாதலின் இப்பதினான்கிறகு மிம்முறை துணியப்பெறறதாகும்:—ஹஸ்திஜிஹ்வை, விசுவோதரை, குஹூ, வாரணை, யசஸ்விநீ, என்பன முதல்முன்வரிசையிலிருக்கும்; இடை, சுழுமுனை, பிங்கலை, என்பன இரண்டாவது இடைவரிசையிலிருக்கும. காந்தாரீ, பயஸ்வநீ, சரஸ்வதீ, சங்கிநீ, பூஷை, என்பன மூன்றாவது பின்வரிசையிலிருக்கும். அலம்புஷை கந்தத்தின் கீழிருக்கும். இத்துணையால் அக்கந்த தேயத்தே நாடிகளின்றிதி கூறப்பெறறது. இப்போது அவை கந்தத்தினின்றுங் கிளம்பி எவ்வெவ்விடத்தேசென்று எவ்வெத தொழிலையுற்று மென்பதை நிரூபிப்பாம்:—சுழுமுனையானது ஆண்டிருந்து கிளம்பி உச்சியிற்சென்று சர்வ விசுவதாரணரூபவியாபாரத்தைச்செய்யும். இடை பிங்கலை முறையே இடது வலது நாசிகையையுற்று மணங்கவரும். காந்தாரீ பூஷை முறையே இடது வலது நேத்திரத்தையுற்று உருவங்கவரும். சங்கினீ யசஸ்வநீ முறையே இடது வலது செவியையுற்றுச சத்தங்கவரும். சரஸ்வதீயோ இரசனத்தையுற்று இரசத்தைக்கவரும். ஹஸ்தி ஜிஹ்வை பயஸ்வநீ முறையே இடது வலது பாதப் பெருவிரலைமேவி நடக்கும். அலம்புஷை பாயுவையுற்று மல பரித்தியாகத்தைச்செய்யும். குஹூ உபஸ்தத்தையுற்று விடயாநந்தமாறறும். விசுவோதரை வாரணை முறையே இடது வலது கையையுற்றுப பொருளைக்கவரும். இவையே முதலாக எண்ணிக்கையறற நாடிகளிததேகத்தே யிருக்கின்றன. எல்லாவற்றுள்ளும் பிராணவாயுச் சுழலுமாதலின், பிராண கமனமார்க்கரூபத்தன்மை சர்வ நாடிகட்கும் சாதாரண வியாபாரமாம. இததுணையால் நாடிகளின் வியாபாரம நிரூபிக்கப்பட்டது. இப்போது அவற்றின்கண்ணே சுற்றும் பிராணனுக்கு முக்கிய முக்கியஸ்தானத்தைக் கூறுவாம:—அது அபானாதி பேதமுற்றதாம், நாடி கந்தத்தின் கீழேயிருக்கும, முகம் நாசிகை இருதயம் நாபி பாதப்பெருவிரல்களிலிருக்கும். சரீர நாபிஸ்தானத்தினின்றும கணைக்காலவரை யபானவாயுவிருக்கும். ஆண்டும் பாயு உபஸ்தங்களிலோ அபானன் விசேடமாயிருக்கும். இருசெவி, இருவிழி, இருகை, காற்கணு, முதுகு என்பு, இடுப்பு, மார்புகளில் வியானனிருக்கும். சரீர சர்வ சந்திகளிலும இருகை கால்களிலும் உதானனிருக்கும. சமானனோ சர்வ சரீரத்தையும் வியாபித்திருக்கும். அதுவே உள்ளழலோடுற்று உண்ட அன்னரசத்தை உடம்பெங்கும் பகுக்கும். அதுவே முறகூறிய எல்லா நாடிகளிலும் சுற்றும். நாகாதியைந்து வாயுக்களோ முறையே தோலிரதத மிறைச்சி மேதையென்புகளிலிருக்கும். இத்துணையானே பிராணஸ்தானம் நிரூபிக்கப்பட்டது. இப்போது அவற்றின்றொழிலைக் கூறுவாம்:—இத்தேகத்தினின்று முகநாசிகை வாயிலாய் வாயுவை வெளிப்படுத்துதல சுவாசமாம், உள்ளிழுத்தல் பிரசுவாசமாம். இவ்விரண்டும பிராணனது தொழிலாம். மல மூததிரபரித்தியாகம் செய்தல் அபானன்றொழிலாம். பலத்தாலாவதாய கிரகணம், தியாகம், சேஷ்டை முதலியவை வியானன்றொழிலாம், சரீர எழுகை முதலியவை

உதானன்றொழிலாம். சர்வ சரீரத்தே வியாபக பிராணன்களின் சலிப்பு சமான வாயுவின் வியாபாரமாம். நாகாதிகட்குத்தொழில் முற்கூறியவாறேயாம். இத்துணையானே பிராணவியாபாரம் நிரூபிக்கப்பட்டது. இனி யோகி செய்ய யோக்கியமாய பிராண நிரோதரூபபிரத்தியாகாரத்தே யுபயோகியாய ஸ்ரீ வசிஷ்ட பகவானாற் கூறிய 18, ஸ்தானங்களைக்கூறுவாம் :—காற் பெருவிரல், கணு, கணைக்காலிடை, சித்திமூலம், முழந்தாள், தொடையிடை, பாயுமூலம், உடலிடை, உபஸ்தமத்தியம், நாபி, இருதயம், கண்டகூபம், நாககடி, மூக்கடி, நோக்கிடை, புருவ இடை, லலாடம், உச்சி, என்பனபிரத்தியாகாரத்தனவாம். முன்மொழிந்த 107 மர்மஸ்தானங்கள் 18க்கருகே யிருப்பனவாமாதலின் அவை 18ல் அடங்குவனவாம். கணைக்காலின் பிற்பாகமாமிசம் எத்தானத்தினின்றும் விருத்தியாமோ அது சித்திமூலம். கண்டத்தேயிருக்கும் கண்டிகையின் கீழ்த்தேசங் கண்டகூபம். முன்னர் லோகதிருஷ்டியைக் குறித்து 96, அங்குலம் சரீரம் எனக் கூறினேம். இப்போது ஸ்ரீ வசிஷ்ட பகவான் கூறிய சரீரப்பரிமாணத்தைக் கூறுவாம் :—ஹே வற்ச ! காற் பெருவிரல்முதல் இத்தேகத்தின் தனியளவு வருணித்தல் சம்பவியாது ; மற்றே, பெருவிரல் முதல் உள்ள பாத அவயவங்கள் யாவும் பாதசப்தத்தானே கவரப்பெறுமாதலின் பாதங்கொண்டே இத்தேக பரிமாணங்கூறல் தகுதியாம் கால் முதல் 4½-அங்குலமேற்றேயத்தே குற்பம் (பரடு-கரடு-கணு) இருக்கும், அதினின்றும் 10-அங்குலமேல் கணைக்காலிடையிருக்கும், அதினின்றும் 11-அங்குலமேல் சித்திமூலமிருக்கும், அதினின்றும் 2 அங்குலமேல் முழந்தாளிருக்கும், அதினின்றும் 9-அங்குலமேல் தொடையிடையிருக்கும், அதினின்றும் 9-அங்குலமேல் பாயுமூலமிருக்கும், அதினின்றும் 2½-அங்குலமேல் தேக இடையிருக்கும், அதினின்றும் 2½-அங்குலமேல் உபஸ்தமிருக்கும், அதினின்றும் 10½-அங்குலமேல் நாபியிருக்கும், அதினின்றும் 14-அங்குலமேல் இருதயமத்தியமிருக்கும், அதினின்றும் 6-அங்குலமேல் கண்டகூபமிருக்கும், அதினின்றும் 4-அங்குலமேல் நாக்குமூலமிருக்கும், அதினின்றும் 4 அங்குலமேல் மூக்குமூலமிருக்கும், அதினின்றும் ½-அங்குலமேல் விழியிடையிருக்கும், அதினின்றும் ½-அங்குலமேல் புருவ இடையிருக்கும், அதினின்றும் 3-அங்குலமேல் லலாடமிருக்கும், அதினின்றும் 3 அங்குலமேல் உச்சியிருக்கும். இவ்வாறு பாதமேமுதல் உச்சிவரைச் சர்வ சரீரத்திற்கும் 96-அங்குல அளவு ஸ்ரீ வசிஷ்ட பகவானாற் கூறப்பட்டது. இதனைத்தானிச்சீவன் யானென்னும் புத்திசெய்துகொண்டிருக்கின்றான். இத்துணைக்கிரந்தத்தால் இச்சரீர வருணனை செய்யப்பட்டது. இனி இச்சரீரவருணனையின் விவேக வைராக்கிய ரூபபலத்தை நிரூபிப்பாம்:-ஹே மைந்த ! பிப்பலாத இருஷி கர்ப்ப உபநிடதத்தே பூதபௌதிக ரூபமாய் வருணித்த சரீரம் இத்துணை யவயவங்களின் சமுதாயரூபமாம். அவை யிவையாம் :—ஆகாசாதிபஞ்சமகாபூதம், செவி முதலிய பத்திந்திரியம், அவற்றின் சப்தாதிவிடயங்கள் பத்து, அந்தக்கரண சதுஷ்டயம், பத்துப் பிராணன்கள் தோன் முதலிய ஏழு தாதுக்கள், எண்ணிக்கையற்ற நாடிகள் 107, மர்மஸ்தானங்கள், பித்தாதிமுத்தோடங்கள், கண்டம், இருதயகமலம், மலம், மூத்திரம்,

அனந்தகேசரோமம், என்பனவாதி அவயவங்களின் சமுதாயம், சரீரமெனப் பெறும். இவ்வகையாய அவயவத்திலும் வேறாக இச்சரீரம் சிறிது மாத்திரையும் வடிவமுடையதாகாதாம இத்தகை நிஷித்த தேகத்தே இச்சீவன் ஆன்மபுத்தி செய்தல் தகாததேயாம்; ஏனெனின், மல மூத்திராதி மலினவஸ்துக்களின் சமுதாயரூபமன்றோவிது? இவ்வஸ்துக்கள் நரகாதியின்கண்ணுமிருக்கின்றனவாதலின், இவ்வஞ்ஞானி இதன்கண்ணே ஆன்மபுத்தி செய்வதேபோல நரகாதியின் கண்ணிருக்கு மவற்றின்கண்ணேன் ஆன்மபுத்தி செய்வதில்லை? மற்றோ, அவசியம் செய்யவேண்டும். இத்தேகத்திலும் வெளியேயிருக்கும மலம், மூத்திரம, உதிரம், மாம்சம், அஸ்தி முதலிய மலினப்பொருள்களிடத்தே எவனுக்கும் ஆன்மபுத்தியுண்டாகாமல அவற்றின் றரிசனபரிசனத்தால ஸ்நாநாதி செய்வதே போல, அவற்றின் சமுதாயரூப இசசரீரத்தும் ஆன்மபுததி செய்தல் தகுதியன்றாம்; மற்றோ, மாறாக இதனினின்றும் அருவருப்படைதலே தகுதியாம. அல்லது, வேறொரு புருடனுடைய சரீரத்தேயிருக்கும கேசதந்தாதிகளிடத்தேயும மாக்கத்தேகிடக்கும் கேசதந்தாதிகளிடத்தும ஜீவர்கட்கு ஆன்மபுத்தியுண்டாகாததே போல, அவற்றின் சமுதாய இத்தேகத்தும ஆன்மபுத்திசெய்தல் தகுதியன்றாம். அல்லது, மரணம் மூர்ச்சை துயில முதலியவற்றே எச்சீவனுக்கும் இதன்கண்ணே ஆன்மமதியுண்டாவதில்லையாதலின், நனவின்கண்ணே இதனிடத்துண்டாம் ஆன்மமதி பொய்யேயாம. கருத்திதுவாம்.—ஒரு காறறோறறியொரு காற்றோற்றாப் பொருள் பொய்யேயாம்; கானனீர் ஒரு காறறோறறியொருகாறறோற்றுவதில்லையாதலின் அது பொய்யேயாமாறு, இத்தேகான்மமதியும தோறறலின் பொய்யேயாம். அல்லது, ஒரு வியாதியாலேனும், சஸ்திரததாலேனும், இத்தேகத்தே புண்டாய துர்க்கந்தத்தோடும் புழுசசியோடும் கூடிய புண்ணை நோக்கிச் சர்வ ஜீவர்கட்கும் தம்மனத்தே அருவருப்புண்டாம். ஆனால், அவ்விகாரத்திற்குக் காரணமாய இத்தேகத்தே அருவருப்புண்டாவதில்லை. இது மிகவும ஆச்சரியமாக எமக்குத்தோற்றுகிறது. உண்மையாய் அப்புண்ணினும் இததேகத்தே அதிக அருவருப்பையடைதலவேண்டும். அல்லது, இவ்வுலகததே அன்னவிகாரமாய மலம், வாந்தி, துர்க்கந்த அன்னம் முதலியவற்றைக்கண்டு சாவ ஜீவர்கட்கும் அருவருப்புண்டாவதேபோல, இததேகமும அன்னவிகாரமேயாதலின் இதன்கண்ணும் விவேகிகளாய நமக்கு அருவருப்பேன் உண்டாவதில்லை? மற்றோ, அவற்றின்கண்ணே யருவருப்புண்டாவதேபோல இதன்கண்ணும் அருவருப்புண்டாக வேண்டும். ஹே மைந்த! இவ்வாறு இவ்வதிகாரி இச்சரீரதோடங்களை விசாரித்தபோதே வைராக்கிய அடைவுண்டாமாதலின் இத்தேகத்தே யவசியம் அத்தோடங்களை விசாரஞ்செய்க இப்போது வேறு முறையானும் தேகவருணனைக்கு வைராக்கியபலத்தை நிரூபிப்பாம்:—ஹே குமர! கர்பப உபநிடதத்தே கூறிய ஜீவர்களின் ஜன்மத்தை அதிகாரி துக்கரூபமாய்ச சிந்திக்கவேண்டும் அச்சிந்தனத்தானும் அவசியமாய் வைராக்கிய அடைவுண்டாம. அதாவது, தந்தை தாயரின் சுக்கிலசோணிதத்தினின்றும் உண்டாம் சரீரங்கள் யோநிஜ சரீரங்களாம். இத்தகைய மனுடாதி யோநிஜ சரீரங்கட்குள்ள தந்தைதாயரின் சரீரங்கள் இரசருதிராதிசப்ததாது வடிவங்களாம், அவர் தந்தைதாயரின் சுக்கிலசோணிதத்தா

னுண்டாவனவாம். என்னுமிவ்வார்த்தை எல்லா மதிமான்கட்கும் சம்மதமேயாம், அவற்றினின்றுண்டாம் சரீரங்களும் அவ்வகையேயாம். ஹே மைந்த! பஞ்ச பூதமே முதலாகக்கேசரோமம்வரையுள்ள சர்வ அவயவங்களின் சமுதாயரூபமாய் முன் நின்பொருட்டு வருணித்த இத்தூலதேகம் கணந்தோறும் விசிரணபாவத்தையடையுமாதலின் சுருதிபகவதி இதனைச்சரீரமெனவழைத்தனள்.

சங்கை :—ஹே பகவன்! இத்தேகம் எக்காரணத்தானே கணந்தோறும் விசிரணபாவத்தையடையும்?

சமாதானம் :—ஹே மைந்த! இத்தேகத்துள்ளே மூன்றக்கினியிருக்கின்றன, அவையே இதன் விசிரணகாரணமாம். உதரத்துற்ற ஜாடராக்கினியொன்று, மனத்திருக்கும் ஜிஞ்ஞாசையக்கினியொன்று, செவி முதலிய பொறிகளிலுள்ள விடயாசைத்தன்மைவடிவ அக்கினியொன்று ஆகிய மூன்றால் இது நிரந்தரம் தாகத்தையடையும்.

சங்கை :—ஹே பகவன்! இவ்வுலக அக்கினிக்கு நெய் விறகு முதலிய பொருள்கள் ஆகுதிகள் ஆமாறு, இம்மூன்றக்கினிகட்கும் எப்பொருள் ஆகுதிரூபமாம்?

சமாதானம் :—ஹே மைந்த! லேகியம், பேயம், சோஷியம், போச்சியம், என்னும் நால்வகையாய அன்னம் ஜாடராக்கினியின் ஆகுதியாம். ஈண்டு, மதுமுதலியவை லேகியமாம், பால்முதலியவை பேயமாம், கரும்புமுதலியவை சோஷியமாம், ஓதனமுதலியவை போச்சியமாம். சாஸ்திர அனுசாரமாய உபாசனை முதலியவற்றின் ஞானம், சாஸ்திரவிருத்தமாய இலௌகிக ஞானம், சுகதுக்கரூபபலம் என்னுமியாவும் ஜிஞ்ஞாசைவடிவ மானச அக்கினியின் ஆகுதியாம். சுரோத்திராதி இந்திரியங்களிலிருக்கும் விடயாசைத்தன்மைவடிவ அக்கினிக்கோ, முறையே சத்தப் பரிசாதிகளே ஆகுதிகளாம். இம்மூன்றக்கினிகளாலித் தேகம் சிரணபாவத்தையடையுமாதலின், இத்தேகம் சரீரம் என அழைக்கப்பட்டது. இப்போது ஆறுங்து அத்தியாயத்தே கூறிய பஞ்சாக்கினிவித்தையின் முறையே ஜீவனது ஜாடராக்கினிப் பிரவேசத்தை நிரூபிப்பாம் :—ஹே மைந்த! பால் நெய் சோமம் என்பவற்றைப் பிரதானமாகவுடைய ஆகுதிகளைக் கருமியானவன் சிரத்தையோடும் சாஸ்திரவிதி வாயிலாய் ஆகவநீயாதி அக்கினியின்கண்ணேயிடும்போது அவை சூக்ஷ்மம அவஸ்தைவடிவப்பரிணாமத்தையடையும், மரித்தபின் அவன் அவற்றோடு கூடிச் சுவர்க்கலோகவடிவ முதலக்கினியையடைவன். ஆங்குச் சுகரூபபலத்தைப் போகித்து அவனது புண்ணியம் அழியும்போது அதினின்றும் கீழே விழுந்து மேகவடிவ மற்றைய அக்கினியையடைவன். அதினின்றும் மழைவாயிலாய்ப் பூவுலகையடைந்து நெற்கோதுமைமுதலிய அன்னபாவத்தையடைவன். அவ்வுயிரோடுற்ற அன்னத்தை ஆண் பெண் தம்பசிதணிப்பான் உண்பர். அது அவருடைய ஜாடராக்கினியையடையும். அவ்வக்கினி பிராணவாயுவாலேவப்பட்டதாய் அவ்வன்னத்தை அசாரம், மத்தியமம், சாரம், என மூவகைப்படுத்தும். மலமூத்திரமாதிய அசாரபாகத்தையோ பாயுவாயிலாய் வெளிப்படுதள்ளும். மத்தியபாகத்

னையோ இரசாதி சப்ததாதுரூபமாக்கும். அதன் சூக்ஷ்மசார பாகத்தானே மனப்பிராண இந்திரியங்கட்குத் திருப்தியையுண்டாக்கும். இவ்வாறவ்வழல் அன்னத்தை மூவகைப்படுத்தும். இப்போது அவ்வன்னத்தின் மத்தியம பாகத்தே இரசாதி சப்ததாதுரூபத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! அவ்விடைப் பாகம் அவ்வழலின் தேஜசால் பரிபக்குவத்தையுற்று முதலில் இரசதாதுரூபத்தையடையும், அது பக்குவமாகி உதிரமாம் அது கனமாகி மாம்சமாம். அது பரிபக்குவமுற்று மேதையாம். அது கடினமாகி என்பாம். அது நெகிழ்ந்து மஜ்ஜையாம், அது என்பினுள்ளேயிருக்கும், ஒரு சிறிது நெகிழ்வுற்ற நெய்க்கொப்பான வடிவுற்றிருக்கும்; அது பரிபக்குவமாகி வீரியமாம். அது புருடசரீரத்தே சிலேஷ்ம சமானவர்ணத்தையடையும். ஸ்திரீ சரீரத்தே உதிரசமான வர்ணமுடையதாம். புருடவீரியத்தைச் சுக்கிலமென்பர், ஸ்திரீ வீரியத்தைச் சோணிதமென்பர், இரசாதி தாதுக்களினுற்பத்தி நான்கு நான்கு தினங்கட்குப் பின்னருண்டாம் என்னும் பிரக்கிரியை இவ்வத்தியாயத்தே முன்னர்க்கூறி வந்தேம். சுவர்க்கம், நரகம், பூமி என்னும் மூவுலகத்திருக்கும் ஜீவர் யாவரும் பூர்வ சரீரத்தியாகத்தின்பின்னர் மனுடாதி யோனிஜசரீரத்தையடைவுற்றபோது முறகூறிய முறையே இரசாதி தாது வாயிலாய்த் தாய் தந்தையாது வீரியத்தே அவசியம் புகுவர். அவருள்ளும் சிலரோ மகாதுக்கத்தோடுகூடியவராய் ஒரு சிறிது சுவர்க்க சுகத்தையனுபவித்து அதினின்றும் விழுந்து மழைவாயிலாய்ப் பூமியையடைவர். சிலரோ பூமியின்கண்ணேனும் நரகத்தின்கண்ணேனுமிருந்தே மரித்தபின் மழைவாயிலாய் வேறு தேசத்தையடைவர். இவ்வாறு அன்னத்தே புகுந்தவர் யாவருக்கும் சமானமேயாம். ஈண்டு தருமுதலியவையும், மூட்டை முதலியவையும், பூர்வ சரீரத்தைப் பரித்தியாகித்துக் கூறிய சரீர அடைவின்பொருட்டு அன்ன பாவத்தையடையமாட்டாவாயினும், அவைதம் சரீரங்களைவிட்டு ஒரு யோநிஜசரீரத்தையடையும்போது அவசியம் அன்னபாவத்தையடையும். இக்கருத்தானே சுருதியின்கண்ணே சர்வ ஜீவர்கட்கும் அன்னபாவப் பிராப்தி கூறப்பெற்றுளது. இப்போது பூர்வ சரீரத்தியாகத்தின்பின்னர் ஜீவர் துக்கத்தை யனுபவித்தே பூவுலகின்கண்ணேவருவர் என முறகூறியபொருளை வெளிப்படையாய் நிரூபிப்பாம்:—ஹே மைந்த! நரகத்தேயும், பூமியிலேயும், மரணத்தேயும் சர்வ ஜீவர்கட்கும் துக்கப்பிராப்தி பிரசித்தமாவதேபோலச் சுவர்க்கலோகத்தும் துக்கப் பிராப்தி பிரசித்தமாம்; ஏனெனின், எவ்வதிகாரிசரீரத்திற்குக் கருமங்களால் சுவர்க்க சுகமுண்டாமோ அது எப்போதும் துக்கத்தானே வியாப்தமாகும். இப்போது சுவர்க்கிகட்குள்ள துக்கத்தை வெளிப்படையாக்குவான் சுவர்க்கமார்க்க நிரூபணம் செய்வாம்:—ஹே குமர! இப்பாரதகண்டத்தே அக்கினிஹோத்திராதி இஷ்டகருமங்களைச்செய்பவரும், வாபி கூப தடாகாதி பூர்த்த கருமங்களைச் செய்பவரும், நானுவகையாய தானம் செய்பவரும், கிருச்சிர சாந்திராயணாதி தவத்தைச் செய்பவரும், மரணமடைந்தபின் பிதுர்யானமார்க்கத்தையடைவர். அதன்கண்ணும் முதலில் தூமத்தையடைவர், பின்னிரவையடைவர், பின்கிருஷ்ணபக்ஷத்தையடைவர், பின் ஷண்மாசவடிவ தக்ஷிணாயனத்தையடைவர், அது தேவதைகட்கிரவும், பின் பிதுர்லோகத்தையடைவர், பின் சந்திரமாவையடைவர், அதை இந்திராதி

தேவதைகள் கிருஷ்ணபக்ஷத்தே பக்ஷணஞ்செய்வர், அது சுக்லபக்ஷத்தே விருத்தியாம். ஈண்டுத் தூமம் இராத்திரி முதலிய சப்தங்களால் அவற்றின் அபிமானி தேவதைகளைக்கவர்க. இவ்வுலகத்தே சேவைசெய்யும் தாசன், தனிகரின் போக சாதனமாவனாதலின் அவனைப்போகிப்பர்; அதுபோலச் சந்திரமாவோடு தாதாத்மியபாவத்தை அடைவுற்ற கருமிகளை வசுருத்திராதி தேவதைகள் தமது போக சாதனமாக்குவராதலின் அவரைப்போகிப்பர். ஈண்டு, அத்தாசன் தனிகனது அதீனத்தானேயும், பயத்தானேயும் எப்போதும துக்கத்தையே யடைவதுபோலச் சுவர்க்கலோகத்தே அக்கருமிகளும் தேவதைகளின் அதீனத்தானேயும், புண்ணிய கரும நாசபீதியினானும் எப்போதும் துக்கத்தையே யடைவர். இத்தேகதாரி மங்கை முதலியவரின் அடைவின்மையினானேயும, அரசர் முதலியோரின் பயத்தானேயும், பிரியப்பொருள்களின் நீக்கத்தானேயும் பரமதுக்கத்தைபடைவதே போல, சுவர்க்கத்தும் கருமியானவன் ஸ்திரீயாதிகளின் அபபிராபதியானும், தைத்தியர்களின் பயத்தானும, பிரியபதார்த்தங்களின் வியோகததானும் மரணத்தினும் அதிக துக்கத்தையடைவன். இவை முதலாக அநேகங்கோடி துக்கத்தைச் சுவர்க்கத்தேயடைவன். இவ்வாறனுபவித்து ஒரு காலகதே சுவர்க்கத்தினின்றும் கீழே விழுவன். பின்னர் மழை வாயிலாய்ப பூவுலகத்தே அன்னபாவத்தையடைந்து பிதாவின் ஜாடராக்கினியிலடைவன், அதன்கண்ணே அத்தியந்தம் தபிப்பன். இப்போது அச்சீவனுக்குப் பிதாவின் தாபவாயிலாய்த் தாபமுறலை வருணிப்பாம்:—ஹே குழந்தாய்! ஜீவன் சேர்நத அன்னத்தைப பக்ஷணஞ்செய்யும்போது யௌவன அவஸ்தையையுடைய புருடன் காமரூபபிசாசின் வசத்தையடைவன், அக்கால் அக்காமி ஸ்திரீயின்றிச சிறிதுமாத்திரையும் சுகத்தையடையான்; மற்றோ, ஸ்திரீயை நினைத்துக்கொண்டே எபபோதும் தபிப்பன். இவ்வுலகத்தே மலமூத்திரங்களையடக்கலால் புருடனுக்குண்டாந் துக்கத்தினும் அதிக துக்கத்தை வீரியத்தடையானே யடைவன். இத்தகைய வீரியத்தையுற்ற ஜீவன் பிதாவின் காமரூப அக்கினியானும, மாதாவின் காமரூப அக்கினியானும், தபிக்கப்பெற்றவனாய்த் தாயின்யோனியந்திரத்தேசெல்வன். ஈண்டு, நலிகாயந்திரத்தேயிருக்கும் புட்பங்களின் ரசம் அக்கினியின் சம்பநதத்தானே அதினின்று வெளியேவந்து வேறு பாத்திரத்தே விழுதல்போல, ஜீவன் சேர்நத வீரியரூபரசமும் காமரூப அக்கினியின் சம்பந்தத்தானே புருடசரீரத்தினின்றும வெளிப்போந்து பெண்ணின் யோனியின்கண்ணே நண்ணும். அக்காலவ்வீரியத்திருக்கும் ஜீவன் தான் அடையும் தீனதசையைக்காட்டினும் அதிக தீனதசையைப் பிதா அடையுமாறு செய்வன். அதனினும், அதிக தீனதசையை மாதாவடையுமாறு செய்வன். ஆனால், அக்கால் காமரூபப்பிசாசினானே மோகத்தையடைவுற்ற அந்த ஸ்திரீ தனது தீனதசையை யறிந்திலள்; மற்றோ, மிகவும் மகிழ்வுற்று அவ்வீரியத்தைத் தனது யோனிமார்க்கவாயிலா யுதரத்தேதரிப்பள், தரித்தபின் றுக்கத்தையடைவள்; மூடபாலகன் விடமுடைப்பாம்பின் அழகைக்கண்டு தன்கரத்தேபற்றியபின் மரணதுக்கத்தையே யடைவதுபோலவும், மூடன் சோரர் முதலிய தீங்குசெய்பவருறையும் மார்க்கத்தேசெல்வதானே மரணத்தையடை-

வதுபோலவும், காமத்தால் மோஹிக்கப்பட்ட ஸ்திரீ விடயபோகப்பொருட்டுப் புருட சமீபத்தையடைவதானே பரமதுக்கத்தையேயுடைவள். ஒரு தூர்த்தன் அபலாளைக் கொல்லும்பொருட்டு முதலில் அவளை மிகவும் ஸ்நேகத்தோடும் தழுவுவன், பின்னர்த்தனது ஸ்நேயத்தை நிலைவுறுத்தற்பொருட்டுத் தூங்கும் பாம்பைச் சுவர்ணபாத்திரத்தே யடைத்து, அதை நானாவகைப்புஷ்பங்களா லலங்கரித்து, சுகந்த சந்தனாதி பூசி அவன் கரத்தே கொடுப்பன், அதைக்கவர்தலால் அவன் மரணத்தையேயடைதல்போல, இக்காமியும் அவ்வீரியத்தைச் சகியாதவளாய் நானாவகையாய ஆலிங்கனத்தானே ஸ்திரீக்கு மோகத்தையுண்டாக்கி அவளுதரத்தேயடைவிப்பன். அதைத்தரித்த அவள் பரமதுக்கத்தையடைவளாதலின், தூர்த்தனைப்போல இக்காமியும் ஸ்திரீயின் பரமசத்துருவாவன். பிராஹ்மணர்களின் தனத்தை வஞ்சகத்தானே கவரும் துஷ்டர்கட்கு அது அக்கால் சுககாரணமாயினும், மரித்ததின்பின்பு நரகாதி துக்கத்தையே கொடுக்குமாறு, அவ்வீரியமும்ஸ்திரீயின் உதரத்தே பிரவேசிக்குங்கால் ஸ்திரீக்குச்சுகத்தைபடைவிக்குமாயினும், கர்ப்பரூபமாகி உதரத்தினின்றும் வெளியேவருங்காலத்தே மரணாந்த துக்கத்தையடைவிக்கும். விடங்கலந்த பாலானது பானஞ்செய்யும்போது சுகஹேதுவாயினும் பின்பு மரணஹேதுவேபாமாறு, இவ்வீரியமும் தான் புகுங்காலத்தோ ஸ்திரீயின் சுகஹேதுவாயினும், வெளிவருங்காலத்தே மரணஹேதுவேயாகும். ஆகலின்இப்பொருள் துணியப்பெறும்:—மரணசாதனமாகிய விஷத்தை ஒரு துஷ்டன் அன்னியப் பிராணிக்குக் கொடுப்பானாயின், அதனாலுண்டாம் பாபத்திற்குச் சமானமாய பாவம் அக்காமிக்கு ஸ்திரீயுதரத்தே வீரியம் செலுத்தலானேயுண்டாம். ஜீவர்களைச் சிறைவைக்கும் ஸ்தானத்தையும், ஹிம்சைசெய்யும் ஸ்தானத்தையும்செய்யும் புருடனுக்குண்டாம் பாவசமானபாவம் பிதாவிற்குப் புத்திரசரீர உற்பத்தி செய்வதன்கண்ணேயுண்டாம்; ஏனெனின், பிதாவுண்டாக்கும் புத்திர சரீரம் புத்திரனுக்கு அநேகவகைத் துக்கங்களையடைவிக்கும், பிதா ஸ்திரீயின் உதரத்தே வீரிய அடைவைசெய்யாதொழியின் புத்திர சரீரமுண்டாகாதாதலின், உடன்பாடெதிர்மறையானே பிதாவே புத்திர ஸ்திரீகளின் துக்ககாரணமாவன்.

சங்கை :—ஹே பகவன் ! இருக்குவேதத்தே ஹரிச்சந்திர உபாக்கியானத்தே '[illegible]' புத்திரரகித புருடனுக்குச் சுவர்க்காதிலோகங்கள் கிடைக்கா. என்பது முதலிய வசனங்களால் புத்திரோற்பத்தி ஸ்துதி செய்யப்பட்டிருத்தலின், பிதாவிற்குத் தோஷப்பிராப்தி சம்பவியாதன்றே?

*சமாதானம் :—ஹே மைந்த ! அவ்விருக்குவேத வசனம் புத்திர உற்பத்தியை ஸ்துதிசெய்யவில்லை; மற்றோ, அதிகாரிகட்கு அப்புத்திரனால் வைராக்கியமுண்டாக்கும்பொருட்டு அவ்வசனம் காமிகளின் பொய்யபிப்பிராயத்தை அநுவாதஞ் செய்தது; ஏனெனின், அவ்விருக்குவேதத்தே அவ்வசனத்தின்பின்னர் '[illegible]' அக்காமியும் பொய்யபிப்பிராயத்தானே பசுக்களைப் போலத் தன்மாதாவோடும் சகோதரியோடும் கமனஞ்செய்க. என்னும் வசனம் புத்திரோற்பத்தி செய்விக்கும் புருடனிடத்தே பசுவின் ஆசாரத்தைப் பிரமாண

மாக்கி நிந்தையையுணர்த்துகின்றது. ஹே சாமிகளே! இவ்வுலகத்தே நாய் முதலியவை தன்றாயோடும் சகோதரியோடும் சம்போகம் செய்கின்றது, அவசியம் புத்திரோற்பத்தியையும் செய்கின்றது, அவற்றின் ஆசாரணத்தை யங்கீகரித்து மனுடர்களாகிய நீங்களும் புத்திரோற்பத்திசெய்யின் ‘ஆத்மாவை புத்ர நாமாஸி’ என்னுமறையாற் பிதாவே புத்திரனெனப் பெறுகின்றானாதலின், அம்மைந்தன் உம்மிடத்தே நாய் முதலியவற்றின் சமானத்தன்மையையுணர்த்துபவனாய் அத்தியந்தம் நிந்தித நாமனாவன். ‘ஆத்மாவை ஜாயதே புத்ர:’ என்னும் சுருதியானே புத்திரன் பிதாவின் ஆன்மரூபனெனக் கூறப்பெற்றுளானாதலின், இப்பிதா தன் மாதாவின் உதரத்தினின்றும் வெளிவந்ததேபோலப் புத்திரரூபமாய்த் தனது பத்தினியினின்றும் வெளிவருவனாதலின், ஒரு மைந்தன் உண்டானபின்னர் ஸ்திரீ பதிக்கு மாதாவாவள். ஆகவே தனது மாதா காமபாவனையால் தீண்டத்தகுதியளல்லளேபோல, மனைவியும் தீண்டத்தகுதியளல்லள். உமது மைந்தனும்பிரா அறம் பாவ அதீனமாமாதலின் பரதந்திரமாம். அத்தகையது துக்கரூப மாதாவினுதரத்தே புகுவதின்கண்ணே யாதொரு ஆச்சரியமுமின்றாம்; ஆனால், நீவிர்சுதந்திரராயும் புத்திரரூபமாய்ப் புகுவது மிகவும் ஆச்சரியத்தைப்பயக்கின்றது. ஹே மைந்த! அவ்வரிச்சந்திர உபாக்கியானத்தேயிருக்கும் வசனத்திற்கிஃதே அபிப்பிராயமாமன்றிப் புத்திரஸ்துதியின்கண்ணே அபிப்பிராயமின்றாம். அல்லது, அவ்வசனபலத்தானே ஒருகால் பிதாவிற்குப் புத்திரனால் லோகப்பிராப்தியை அங்கீகரித்தபோதினும், இம்மனுடலோக அடைவையே அங்கீகரிக்கவேண்டிவரும்; ஏனெனின், பிருகதாரண்ய உபநிடதத்தே புத்திரனாற் பிதாவிற்கு இம்மனுடலோகப்பிராப்தியே கூறப்பெற்றுளது:—“புத்ரேணாயம் லோகஜய:” மைந்தனால் பிதாவிற்கு இம்மனுடலோகவெற்றியுண்டாம்; ஆனால் மோக்ஷப்பிராப்தியுண்டாகாதாம். தனதுமைந்தனுடைய சுகத்தை யிச்சிக்கும் தாய், அவன் நோய் நீங்கற்கு வேம்பு முதலிய கசப்பு ஔஷதத்தைக்குடிப்பிப்பள், அவனோ குடியான், குடியாமல் அவன் நோய் நீங்காதாதலின் தாய் பாலகன் மருந்து குடிப்பான் கருதி ஹே கண்மணியே! நீ யிதைக்குடிக்கின் நின்னாவில் வெல்லமிடுவேன் எனக்கூறுவள், அதைக்கேட்டு வெல்லலோபத்தால் கசப்புமருந்து குடிப்பன். ஆண்டுத் தாய்க்கு மருந்தீந்து நோய் நீக்கக்கருத்தேயன்றி வெல்லமீயக்கருத்தின்றாம். இதனைத்தான் ‘குடஜிஹ்விகா’ நியாயமென்பர். அதனால் அவ்வரிச்சந்திர உபாக்கியான வசனங்கட்கு அதிகாரியின் நிவிருத்தியின்கண்ணே கருத்தாமன்றிப் புத்திர உற்பத்தியின்கண்ணே கருத்தின்றாம். இப்போது இப்பொருளையே வெளிப்படையாய் நிரூபிப்பாம்:—ஹே மைந்த! ஜீவர்கள் யாவரும் விடயவிச்சையானே மூடரான்மையைக்கண்டு தாய்போன்ற அத்தியந்தம் ஹிதகாரியாய சுருதிபகவதி மிகுந்த கேதத்தையடைந்து, இராகத்தினின்றும் நீக்கற்பொருட்டு இவ்வாறு கூறினள்:—ஹே மைந்தர்களே! தபரூபதனத்தை நாசஞ்செய்யும் ஸ்திரீகளிடத்தே நீவிர் கமனஞ்செய்யாதொழிமின்; அவர்களுங்கட்கு இகலோகத்தும் பரலோகத்தும் [illegible] துக்கப்பிராப்தியாம், அத்துக்கங்களைப் போக்கற்பொருட்டு உமக்கு

அநேகவகைச் சரீரப்பிராப்தியாம், அவை பந்தனக்கிருகசமானமாம். நேத்திரம் முன்னிடத்தே அத்தியந்தம் சூக்ஷ்மமான வஸ்துவையும் தாங்காததேபோலச் சிறிது மாத்திர விக்ஷேபத்தையும் சகிக்கமுடியாத வித்துவான்கட்கு அவை நரகத்திலும் அதிக துக்கத்தை யடைவிப்பவாம், அவற்றை நீவிர் அடைவீர். ஹே குழந்தாய்! இவ்வாறு சுருதிபகவதி அதிகாரிகட்கு ஸ்திரீகளிடத்தே ரமணீயபுத்திவடிவ சங்கற்பத்தை நிரோதஞ்செய்வான் உபதேசித்து, நிரோதிக்கமுடியாதவர்கட் குபதேசித்ததாவது :—ஹே குமாரர்களே ! சங்கற்பநிரோதஞ்செய்வதன்கண்ணே ஆற்றலின்றாயினும், காமவேகத்தை நிரோதித்துப் பிரஹ்மசரிய தருமத்தைக் காப்பாற்றுங்கள். காப்பாற்றின் சுவர்க்கலோகத்தேயும் பிரஹ்மலோகத்தேயும் யான் நும் பொருட்டு மனுடலோக ஸ்திரீகளினும் ரூபாதி குணங்களால் கோடிகுண மதிகமாய ஸ்திரீகளைக் கொடுப்பேன். பிரஹ்மலோகத்தே 500 தேவாங்கனைகள் புஷ்ப சந்தன வஸ்திராதி பதார்த்தங்களைத் தம் கரத்தேகொண்டு உம்மை அழைத்துச் செல்லவருவார்கள். மனுடலோகஸ்திரீகட்குப் புருடசம்பந்தத்தானே கர்ப்பமுண்டாவதேபோலச் சுவர்க்கலோகஸ்திரீகட்கும் பிரஹ்மலோக ஸ்திரீகட்கும் கர்ப்பமுண்டாகாதாமாதலின், அதனாலவர்கட்கேனும் உங்கட்கேனும் சிறிது மாத்திரையும் துக்கமுண்டாகாதாம். ஹே மைந்த! இவ்வாறு சுருதிபகவதி அதிகாரிகட்குப் பிரஹ்மசரிய தருமத்தை யுபதேசித்து, அதனைக் காப்பாற்றுவதற்கும் ஆற்றலற்ற அதிகாரிகட்கு இவ்வாறுபதேசித்தனள் :—ஹே மைந்தர்களே! பிரஹ்மசரியத்தைக் காப்பாற்ற நீவிர் ஆற்றலற்றவராவீரேலாயினும், சரீர மன வாணிகளால் பரஸ்திரீகமனத்தை யொருகாலும் செய்யாதீர்கள்; ஏனெனின், அதைச் செய்பவன் இகலோகத்தும், பரலோகத்தும் பரமபயத்தையடைவன்; அத்தகையதைச் செய்யவேண்டாம்; மற்றோ, காம நீக்கப்பொருட்டு நீவிர் மனைவியரைச் சம்பாதித்துக் கிருகஸ்தராயிருங்கள். அதைத் தரித்தும் நீவிர் சாஸ்திர நிஷித்த தருமத்தே காலத்தைக்கழியாதீர்கள்; மற்றோ, யாகதானாதிய மேன்மையாய தருமங்களைச் செய்யுங்கள். ஹே குமாரர்களே! உங்கள் மனைவியரிடத்தும் இந்நியமத்தை வைத்துக்கொள்ளுங்கள் :—தினத்தே யொருகாலும் கமனஞ் செய்யாமலிரவிற்கமனஞ்செய்யுங்கள். அவற்றுள்ளும், ஏகாதசி, துவாதசி, அமாவாசை, பௌர்ணமாசி, சங்கராந்தி, வியதிபாதம், பிரதோஷம், முதலிய பருவராத்திரிகளில் கமனஞ் செய்யாதீர்கள். ஹே மைந்த! இவ்வாறு சுருதிபகவதியின் உபதேசத்தைக்கேட்டுக் கூறிய இரவுகளன்றி மற்றைய இரவுகளில் மனைவியரிடத்தே பற்றுறும் அதிகாரிகளைப்பார்த்துப் பற்றை நீக்கும்பொருட்டுச் சுருதிபகவதி இவ்வகை நியமத்தை யுபதேசித்தனள் :—ஹே மைந்தர்களே! நியமித்த இரவுகளினும் நீவிர் இருதுகாலத்தன்றி ஒருகாலும் அவர்களிடத்தே கமனஞ்செய்யவேண்டாம்; மற்றோ, இருது ஸ்நான ஸ்திரீகளிடத்தே சாஸ்திரத்திற் கூறிய சமஸ்காரங்களைச்செய்து கமனஞ்செய்க; இந்நியமப்படி நீவிர் கமனஞ்செய்யின், உங்கட்குச் சுபகுணமுடைய புத்திரப் பிராப்தியாம். ஹே மைந்த! இங்ஙனம், மூடர்களின் விடய ஆசக்தியறுப்பான் சுருதிபகவதி புத்திரஜன்மஸ்துதி செய்வளாதலின், மறைமொழிக்கு நிவிருத்தியின்கண்ணே கருத்தாமன்றிப் புத்திரஜன்மத்தே கருத்தின்றாம்.

சங்கை :—ஹே பகவன்! அம்மறைக்குப் புத்திர உற்பத்தியின்கண்ணே என் கருத்தின்று?

சமாதானம் :—ஹே மைந்த! இராகத்தால் அடையப்பெறாதபொருளைச் சாஸ்திரம் விதிக்கின்றது, அடையப்பெற்றதை விதிப்பதில்லை என்பது யாவருமங்கீகரித்ததேயாம். ஸ்திரீசங்கத்தாற் புத்திரோற்பத்தியும், அவர் சங்கமும், சாஸ்திரமின்றியே சர்வ ஜீவர்கட்கும் இராகத்தானே பிராப்தமாம்; ஏனெனின், சாஸ்திரமற்ற பசு முதலியவையும், அவ்வுணர்வற்ற மிலேச்சரும், கூறியவற்றை இராகத்தானே யடைகின்றனராதலின், இராகப்பிராப்த அர்த்தத்தே சுருதியின் றாற்பரியம் சம்பவியாது. இதனானே, அதர்வணவேதசுருதி புத்திர உற்பத்தியைச் செய்விக்கும் இராகிக்குப் பசுத்திருஷ்டாந்தங்கொடுத்தது. ஆதலினானே, 'வதி ஜாயாம் வ விமுதி' என்னும் சுருதி ஒரு புத்திர உற்பத்தியின்பின்னர் மீண்டு அவனுக்கவளோடு சம்பந்த நிஷேதஞ்செய்கின்றது; ஏனெனின், புத்திர உற்பத்தியின் முன்னர் எவள் மாதாவாசக ஜாயாசப்தத்தின் அர்த்தம் அல்லளோ அவளே பின்னர் அச்சப்தார்த்தமாவளாதலின், உயிர்கட்கு இராகப்பிராப்த புத்திரோற்பத்தி ஸ்திரீசம்பந்தங்களை வேதம் விதியாதாம்; மற்றோ, சம்சார துக்கத்தையடைவிப்பதும், ஆனந்தவடிவ ஆன்மாவை மறைப்பதும் ஆகிய இராகவடிவக் காம நிவிருத்தியையே சுருதி போதிக்குமென்க.

சங்கை :—ஹே பகவன்! சுருதிபகவதி அவ்விரண்டையும் விதியாளாயின், வேறெப்பொருளை விதிக்கின்றனள்?

சமாதானம் :—ஹே மைந்த! ஜீவர்களின் இருதயத்தேயிருக்கும் ஆநந்த வடிவச் சுயஞ்சோதி ஆன்மா, இராகரகித புருடர்கட்குப் பிரஹ்மசரிய சாதனத்தானே விளக்கைப்போல வெளிப்படையாய்த்தோற்றும். அத்தருமம் சாஸ்திரமின்றி இராகத்தானும் பிராப்தமன்றாமாதலின், சுருதிபகவதி அதிகாரிகட்கு அதனையே விதித்தனள். இப்போது சுருதிபகவதி பிரஹ்மசரிய தருமமுபதேசித்த வகையை நிரூபிப்பாம் :—ஜராயுஜாதி நால்வகைச்சீவர் எப்போதும் சுகப்பிராப்தியை யிச்சிப்பர், அது கிடைக்க முயற்சியும் செய்வர்; ஆனால் சுகங்கிடைப்பதோ இன்று. இத்தகைய சுகமற்ற ஜீவர்களை நோக்கிச் சகியாதவளாகிய சுருதிபகவதி அத்தியந்தகேதத்தையடைந்து ஹிதகாரியாய தாய்போலத் தனது கிருபையால் ஜனித்த துக்கத்தையுணர்த்தும்பொருட்டுத் தனது மஸ்தகத்தைப்புடைத்துக்கொண்டவளாய்ப் பிராஹ்மணாதி மூவரையும் நோக்கி இவ்வண்ணமியம்பினள் :—ஹே அதிகாரிகளே! உங்கட்குச் சுகமுற இச்சையிருப்பின் எனது வசனத்தே சிரத்தைவைத்துக் காமத்தியாகரூப பிரஹ்மசரியத்தைச் சம்பாதியுங்கள். அதனானே, உங்கட்குச் சுகப்பிராப்தியுண்டாம். நீங்கள் செவி முதலிய இந்திரியங்களோடும், புத்தி முதலிய குணங்களோடும் கூடியவர்களாயிருந்தும், சிரவணமனனாதிசாதனங்களைச் செய்வதன்கண்ணே சமர்த்தர்களாயிர்களாதலினானே, எனதுபதேசத்தைத் தாரணஞ்செய்வதன்கண்ணே உங்கட்கே அதிகாரமாகும், மற்றவர்க்கின்றாம்; ஏனெனின், கிருமியாதி [illegible]

கள் செவி முதலியவை யற்றவையாதலின், எனதுபதேசங்கேட்கவும் சமர்த்தின் றும். செவி முதலியவையுடைய பசுக்களோ சாஸ்திரார்த்த நிச்சயஞ்செய்யும் புத்தியற்றவையாதலின் அவைகட்கும் எனதுபதேச அதிகாரமின்றும். சூத்திர ஜாதியையுடைய மனுடர்கட்கோ 'ஸ்த்ரீ சூத்ரௌ நாதீயாதாம்' என்பதாதி வசனங்களால் வேதாத்தியயனம் நிஷேதம் செய்யப்பட்டதாதலின் சூத்திரர்கட் கும் எனதுபதேச அதிகாரமின்றும்; மற்றோ, மூவருணத்தவராகிய உங்கட்கே எனதுபதேச அதிகாரமுண்டாமாதலின், நீங்கள் எனதுபதேசத்தையங்கீகரித்தே காமபரித்தியாகம்செய்யுங்கள். ஹே அதிகாரிகளே! துக்கப்படுமுயிர்களெல்லாம் காமத்தாலேபடுவர். காமமின்றி யெவ்வுயிர்க்கும் துன்பமுண்டாகாதாமாதலின் என்றும் உடன்பாடெதிர்மறைகளால் இக்காமமே துக்ககாரணமாம். இக்காமவய மாதல் உங்கட்குசிதமன்றும். இப்போது தைத்திரீய உபநிடதத்தின் முறையாய் இக்காமத்தியாகத்தே சுககாரணத்தன்மை நிரூபிக்கப்படும் :—ஹே அதிகாரி களே! சக்கரவர்த்தியாகிய அரசன், மநுடகந்தருவன், தேவகந்தருவன், பிதர், ஆஜானஜதேவன், கர்மதேவன், வசுருத்திராதி அதிகார தேவதைகள், இந்தி ரன், பிருஹஸ்பதி, விராட்டு, ஹிரண்யகருப்பன் இப்பதினொருவரிடத்தே பூர்வ பூர்வ ஆனந்தத்திலும் உத்தர உத்தர ஆனந்தம் 100 மடங்கதிகமாமெனக் கூறப் பெற்றுளது. இவ்வெல்லா ஆநந்தங்களையும் காமதோஷமற்ற நிட்காமன் அடை வன். கூறிய ஆனந்தங்களியாவும் எப்பிரஹ்மானந்த சமுத்திரத்தின் ஒரு பிந்து மாத்திரமாமோ அதையும் நிட்காமனேயடைவன்; காமதோஷத்தையுடைய சக்கரவர்த்திராஜாதிகள் அதையடையமாட்டார்கள். அத்தகைய பிரஹ்மாநந்தத் தின் சாக்ஷாத்காரமே இம்மனுட சரீரபலமாமாதலின் மனுட சரீரத்தே புத்திர ஏஷணை, லோக ஏஷணை, வித்த ஏஷணை என்னும் மூன்றையும் பரித்தியாகம்செய்து ஆனந்தவடிவ ஆன்மசாக்ஷாத்காரத்தை இச்சியுங்கள். காமதோடத்தை விடாதிருப் பீர்களாயின் நாய் முதலியவற்றைப்போல விடயபோகரூபபாவகருமம் அவசியம் செய்யவேண்டிவரும். அது முற்கூறிய முறையே ஸ்திரீகட்கும் குழந்தைகட்கும் எப்போதும் துக்ககாரணமேயாம். சாஸ்திரஞானமற்ற நாய் முதலியவையும் தன் மனைவியின் சம்போகத்தானே புத்திரோற்பத்தி செய்கின்றன, அக்குடும்பத்தை யும் தாங்கிக் காப்பாற்றுகின்றன என்றால், அதிகாரி சரீரமுடைய உங்களிடத்தே நாய் முதலியவற்றினின்றும் யாதிகத்தன்மை சித்தமாகின்றது? மற்றோ, நீங்களு மவையும் நிகரே.

சங்கை :—ஹே பகவன்! ஸ்திரீ சம்போகத்தேயும் புத்திரோற்பத்தியிலே யும் நாயின்சமானத்தன்மை பெங்கட்காயினும், இல்வாழ்வோர்கட்குத் தம் மனைவி யின் சம்போகமும் புத்திரோற்பத்தியும் சாஸ்திரவிதியேயாமாதலின் நூலா ணையையுடன்பட்டு எம்மிடத்தே பசுச்சமானத்தன்மையையும் அங்கீகரிக்கின் றோம்.

சமாதானம் :—ஹே அதிகாரிகளே! அச்சாஸ்திரவசனக்கருத்தை நீங்க [illegible]; ஏனெனின், வேதத்தே இருவகையாய விதிவசனமிருக்கின்றது. [illegible]மென்றும், [illegible]மென்றும். [illegible]

அதிகாரிகட்குப் பாவ அடைவுண்டாமோ, செய்தலானே புண்ணிய வடைவுண்டாமோ, அது நித்தியவிதியாம்; 'அஹரஹஸ் ஸந்த்யாமுபாஸீத' என்பது முதலிய விதிவசனம் மூவருணத்திய அதிகாரிகட்குத் தினந்தோறும் சந்தியா காயத்திரி முதலிய அனுஷ்டானத்தை விதிக்கின்றது. இந்நித்தியகருமத்தைச் செய்யாதொழியின் பாவப்பிராப்தியாம், செய்யின் புண்ணிய அடைவாம்; ஆகையால், அவ்வசனம் நித்தியவிதிரூபமாம். எவ்விதிவசனத்தைத் தாண்டலானே பாவ அடைவுண்டாகாதோ, செய்தலானே பலப்பிராப்தியாமோ அவ்விதி காமிய விதியாம். 'ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்ககாமோ யஜேத' என்பதாதி விதிவசனம் சுவர்க்காதியை யிச்சித்தவனுக்குச் சோதிட்டோமாதியாகங்களை விதிக்கின்றது. அவற்றைச்செய்யாதொழியின் பாவமுண்டாகாதாம், செய்யின் சுவர்க்காதி பலப்பிராப்தியாமாதலின் அவ்வசனம் காமியவிதிரூபமாம். ஈண்டுப் பிரசங்கத்தே புத்திரோற்பத்தி முதலியவற்றைக் கூறுநின்ற வேதவசனம் ஒருகால் நித்தியவிதிரூபமாயின் அதைச் செய்யாதொழியின் பாவவடைவாம்; ஆனால் அது நித்தியவிதிரூபமன்றாம்; மற்றோ, காமியவிதிரூபமாமாதலின் செய்யாதொழியின் நிட்காமர்க்குப் பாவப்பிராப்தியுண்டாகாதாம். 'ஶ்யேநேநாபிசரந்யஜேத', என்னுங் காமியவிதி சத்துருவைக்கொல்லு மிச்சையையுடையவனுக்குச் சத்துருவைக் கொல்லச் சேனமெனப்பெயரிய யாகத்தை விதித்துளது. அதைச்செய்யாதொழியின் பாவப்பிராப்தியுண்டாகாதாம்; மற்றோ, மாறாக அதைச்செய்தலானே நரகாதி துக்கப்பிராப்தியாம். அதுபோலப் புத்திரோற்பத்தியைக்கூறும் காமிய விதியைத் தாண்டலானே அதிகாரிகட்குப் பாவவடைவுண்டாகாதாம்; மற்றோ, மாறாக அவையுண்டாக்கலானே அநேகவகைத்துக்க அடைவாம். புத்திரோற்பத்தியைக்கூறும் வேதவசனம இராகவானுக்கே விதிதமாமாறு புத்திரோற்பத்தியையுண்டாக்கும்பொருட்டு ஸ்திரீ விவாகத்தைக கூறுநிற்கும் வசனமும், இருதுஸ்நாதஸ்திரீயினிடத்தே கமனகால நியமத்தைக்கூறும் வசனமும் காமியவிதியாய் இராகவானுக்கே அவ்வவ்வர்த்தவிதானஞ்செய்யுமாதலின், நிராசையுடையவர்க்கு அவ்வசனத்தைத்தாண்டலானே சிறிது மாத்திரையும் தோஷப்பிராப்தியுண்டாகாதாம்; மாறாக மகாபலப்பிராப்தியேயாம். காமத்தாற் குருடாய நாய் முதலியவை தஞ் சகோதரியிடத்தும் கமனஞ்செய்தலேபோல, காமக்குருடான இவனும் செய்யலாமாதலின் இக்காமமே சர்வாநர்த்தகாரணமாம். இக்காமத்தை நீங்கள் எல்லாவகையானும் பரித்தியாகஞ்செய்மின். இவ்வார்த்தையைக் கேவலம் யான் கூறவில்லை; மற்றோ, சர்வ லோகருக்கும பிரசித்தமாம்; ஏனெனின், காமத்தானே குருடானவன் எவ்வெவ்வநர்த்தத்தைத்தான்செய்யான்? மற்றோ, எல்லா அநர்த்தத்தையும் செய்வன். காமத்தானே குருடானவன் தன் பிணிக்கோ கர்ப்பரூபதுக்கத்தை யடைவிப்பன், தனக்கோ பாவரூபதுக்கத்தை யடைவிப்பன், ஜீவான்மாரூப புத்திரனுக்குச் சரீரசம்பந்தரூபதுக்கத்தை யடைவிப்பனாதலின், காமமே அநர்த்தகாரணமாம். அதனைத் தியாகஞ்செய்யின் மாத்திரம் உங்கட்குச் சுகமுண்டாம். ஹே குழந்தாய்! இவ்வாறு சுருதிபகவதி தாயைப்போலக் கிருபையால் அதிகாரிகட்குப் பிரஹ்மசர்ய தருமத்தையுபதேசித்தனளாதலின், சம்

பூர்ண வேதவசனங்கட்கும் வேரகவேனும் ஒன்றன்வாயிலாகவேனும் நிவிருத்தி யின்கண்ணே கருத்தாம், புத்திராதியுற்பத்தியின்கண்ணே எம்மறைக்குங் கருத் தின்றும் எனத் துணியப்பெற்றது.

இப்போது காமிகளிடத்தே புத்திரதேகரூப துக்ககாரணத்தன்மையை வெளிப்படுத்தும்பொருட்டு முதலில் புத்திர சரீர உறபத்திப்பிரகாரம் நிரூபிக்கப் பெறும்:—ஹே குமர! பெண்ணின்சோணிதத்தோடு சேர்ந்த புருடவீரியமே புத்திரசரீர உற்பத்தியைச்செய்யும். அதனால் அவனுக்கு அநேகவகைத் துக் கங்களினடைவாம். இரக்தமும் கபமும் சேர்ந்ததால் ஒரு விலக்ஷணமேயாய வர்ணம் உண்டாமாறு, சோணித வீரிய சமயோகத்தாலும் ஒரு விலக்ஷணமே யாய வர்ணம் உண்டாம். அதனானே இசசீவான்மாக் கர்ப்பபாவத்தையடையும் வாயிலாய் மீண்டுஞ் சரீரத்தையடையும் தநதையின்றேகத்தினின்றும் வீரியம் வெளிவரும்வகையைக் கர்ப்ப உபநிடதத்தே கூறியபிரகாரம கூறக்கேட்பாயாக:- முற்கூறிய முறையே ஜீவனோடுகூடிய அன்னம் யௌவன புருட சரீரத்தை யடைந்து இரச உதிராதிதாதுவாயிலாய் வீரியரூப ஏழாவது தாதுவடிவத்தை யடைந்து கால்முதற் றலைவரை சர்வ சரீரத்தும் வியாபித்து நிற்கும். அக்கினி யின் சம்பந்தத்தானே புட்பங்களின் இரசம் வெளிவருவதேபோலப் பெண்களின் நினைவு முதலியவற்றால் உண்டாய காமரூப அக்கினியின்றாபத்தால் சர்வ அங்கத் தினின்றும் வீரியரூபரசம் வெளிவந்து முதலில் இருதயதேயத்தேயிருக்கும். மகாவாயு விருக்ஷத்தை அசைப்பிப்பதேபோல, வீரியமும் இருதயகமலத்தைச சலிப்பிக்கும்; சலிப்புறவே காமிதைரியமற்றவனுவனுதலினானே அக்கால் பெண்ண நினைவன், தீரர்களாற் சோகிக்கத்தக்கவனுவன். இத்துயா முழுதும் வீரியத்தி ருக்கும் ஜீவனுக்கு முண்டாம். கடலின்கண்ணேயிருக்கும் ஓடம பெருங்காற்றால் அசைவுறும்போது ஓடத்துள்ளேயிருககும புருடன் பெருந்துக்கத்தையடைவ தேபோல, இருதய கமலஞ் சலிப்பதால் ஜீவான்மாவும் மகா துக்கத்தையடையும். இவ்வாறு ஜீவான்மா இருதயதேயத்தே அநேகவகைத துக்கங்களை யனுபவிந்து அதினின்றும் பின்னர் நாடிரூபமார்க்கவாயிலாய்த் தந்தையின் சர்வ சரீரத்தின் கண்ணுமடையும். ஆண்டுப் பிதாவின் சரீரத்தேயிருக்கும் இரச உதிராதி ஏழு தாதுக்களிலிருக்கும் அக்கினியை ஜீவான்மா அடைந்து தாகத்தையுற்று மகா துக்கத்தையடையும், அக்கினியால் மரணமுமடையாது, அதனினின்றும் வெளியி னும் வர இயலாது. இங்ஙனம் அவ்வழலில அநேக காலபரியந்த துக்கத்தை அநு பவித்துப் பின்னர்ப் பித்தபாவத்தையடையும். அது அழலின் சம்பந்தத்தானே செகிழ்வுற்ற தாமிராதி தாதுவைப்போலக் காரகடுரசத்தோடு கூடியதாயிருக்கும். அத்தகைமையையுற்று நரகதுக்கத்தினும் அதிகதுக்கத்தையடையும். இவ்வாறு பித்தத்தே அநேகவகைத் துக்கத்தையனுபவித்து, பின்பு வாதத்தன்மையை யடையும். அது மகாவாயுவைப்போல வேகமுடையதாம். ஒரு உயர்ந்த மலைமே லிருக்கும் வல்திராதியற்ற புருடன் மகாவாயுவால் நடுக்கப்பெற்றவனுய்த் துயர முட்டவதேபோலப் பெருந்துயரை வாதத்தேயடையும். இவ்வாறு வாதத்தே துய ருற்றப்பின் மீண்டும் இருதயகமலத்தேயுறும். அஃதிருவகையாம். ஒன்றோ, எண் புகளின் பஞ்சரவடிவுமாம். அது உரஸ்தலம், வக்ஷஸ்தலம் என்பனவாதி நாமங்

களைப்பெறும். மற்றொன்றோ, அதற்குள்ளே மாம்சமய கமலரூபமாம். அஃதே இருதயகமலம், இருதயபத்மம், என்பனவாதிபாயியம்பப்பெறும்; அதன்கண்ணே ஜீவான்மாவிருக்கும். இப்போ திப்பொருளையே மீண்டும் வெளிப்படையாய் நிரூபிப்பாம்:—ஹே மைந்த! அன்னத்தோடு பக்ஷணஞ்செய்த ஜீவான்மா முதலில் பிதாவின் இருதய கமல சமீபத்தையடையும். பின் ஜாடராக்கினியை யடையும். பின் அன்னரூக்ஷமாசத்தோடுறுச் சமானவாயுவின் பலத்தால் மேலே கமனஞ்செய்யும், பின் பித்தபாவத்தையடையும். பின் வாதபாவத்தை யடையும், பின் மீண்டும் இருதய கமலத்தையடையும். இங்ஙனம் பிதா தேகத்தே பந்துபோலச் சுழலும், கீழும் மேலும் சுழன்று அநேக துக்கங்களையடையும், பின் புண்ணிய பாவகருமவசத்தானே வீரியத்தோடுகூடித் தந்தையின்றேகத்தினின்றும் வெளிப்போந்து தாயுதரத்தேயுறும். வேறுதேக அடைவின்பொருட்டு இவ்வகை நெறியைப் பிரஜாபதியானவருண்டாக்கியுள்ளாராதலின், சுருதிபகவதி அம்மார்க்கத்தைப் பிராஜாபத்யமெனக்கூறினள். மும்மலங்களால் இச்சரீர உற்பத்தியை யிப்போது கூறுவாம்:—ஹே மைந்த! மனுடாதியோனிஜ சரீரங்கட்குக் காமமணம், மாயீயம், ஆணவம் என்னும் மூவகைமலம் காரணமாம். ஆண்டுப் பிதாவின் சுக்கிலம் முதலதாம், மாதாவின் சோணிதம் இரண்டாவதாம், மூன்றுவதன்கண்ணே முமமதம உளது. சில நூலாசிரியரோ சுக்கில சோணிதங்களின் சந்தியையே ஆணவமலமெனவும், மற்றும் சில நூலாசிரியரோ புண்ணிய பாவரூப கருமத்தையே ஆணவமலமெனவும், மற்றும் சில நூலாசிரியரோ அம்மல மிரண்டின் அவஸ்தா விசேஷத்தையே ஆணவமலமெனவும் கூறுவர். இம்மூன்றனுள் கடையதே நலமதாம்; ஏனெனின், சுக்கில சோணிதமென்னும் இரண்டு மலங்களின் சேர்க்கையின் பின்னர் அதகாலை ஒரு விலக்ஷணவருண முற்பன்னமாம், அஃதாணவமலமாம், அஃதவ்விரண்டினும் வேறன்றும்; மற்றோ, உள்ளடங்கியதே யாம். அவித்தை முதலிய பஞ்சக்கிலேசங்களோடுகூடியதும், அறம்பாவங்களோடு கூடியதும, பூர்வவாசனையோடுகூடியதும் ஆகிய ஜீவான்மா மும்மலச்சம்பந்தத்தானேயடையும் சரீரம் தந்தைதாயரின் சமானமேயாமன்றி விலக்ஷணமாகாதாம்,

இப்போது புருட ஸ்திரீ நபும்சகசரீரங்களின் உற்பத்திப் பிரகாரத்தைக்கூறுவாம்:—ஹே மைந்த! புருட ஸ்திரீகளின் சம்போககாலத்தே சுக்கிலம் அதிகமாயும், சோணிதம் குறைவாயும் விழின் புருடசரீரமுண்டாம்; மாறுயினே ஸ்திரீ சரீரமுண்டாம்; சமானமாயினே நபும்சக சரீரமுண்டாம். அழகிய அழகின்றிய பாலரின் உற்பத்தியோ இவ்வாறும்:—தம்பதிகள் யாதொரு வியாகுல சிந்தையுமின்றிச் சுவஸ்தசித்தமுடையராயிருக்குங்கால், நூலளவுப்படி சம்போகம்செய்யின் அதனாலுண்டாம் மைந்தன் நேத்திராதி சர்வ இந்திரியங்களையும் உடையவனுவன், அநேக சுபகுணங்களோடுகூடியவனுவன், ஹஸ்தபாதாதி சர்வ அவயவங்களாலழகியவனுவன். இருவரும் வியாகுலத்தோடிருப்பினும் அல்லது ஒருவர்மனம் வியாகுலப்பட்டிருப்பினும் சம்போககாலத்தே அவ்விருவர் வீரியமும் சர்வ அங்கத்தினின்றும் வெளிவாராதாம்; வரினும் தடையுற்றுவிடும், அல்லது அது கபாதி

[illegible]க்களோடு கலக்கும், [illegible]லுண்டாம் மைந்தன் சர்வ அங்கங்களோடு [illegible]ராகாது குருடனாயேனும், நொண்டியாயேனும், கைகாலற்றவனாயேனும், குறைந்த விரலினனாயேனும், அதிக விரலினனாயேனும், கறுப்பு நகமுடையவனாயேனும், ஒருகால் ஒருகையுடையவனாயேனும், நேத்திராதி சர்வ இந்திரியங்களற்றவனாயேனும், ஏதேனும் ஓரிந்திரியமற்றவனாயேனும், குள்ளனாயேனும், கூனனாயேனும், மிக உயர்ந்தவனாயேனும், அத்தியந்தம் பயவானாயேனும், மற்றும் அநேகவகைக்குரூபமுடையவனாயேனும் தோற்றுவன். ஒரேகாலத்தே ஸ்திரீயின் உதரத்தே இரண்டு மூன்று பாலகரின் உற்பத்திமுறையோ யிதுவாம்:—சம்போககாலத்தே இருவருடைய அபானவாயு ஏதேனும் நிமித்தங்களால் கலக்கத்தையடையுமாயின், அது கர்ப்பாசயத்தின்கண்ணே சென்று சேர்ந்திருக்கும் சுக்கில சோணிதத்தை இருவிபாகமாக்கும், ஆக்கவே இருபாலகருண்டாவர். மூன்று விபாகமாக்கின் மூன்று பாலகர்வருவர். இங்ஙனம் ஜீவான்மா அறம்பாவவயத்தால் தாயுதரத்தே அநேகவகைச் சரீரங்களையடையும். இனி மாதாவினுதரத்தே பாலகனது விருத்தியின் பிரகாரத்தை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! ஸ்திரீயினுதரத்தே அடைவுற்ற சுக்கிலமும் சோணிதமும் ஒன்று சேர்ந்து முதலிரவின்கண்ணே நுரையைப்போலக் கலில அவஸ்தையையடையும். அதன் அளவு தாயின் பெருவிரலளவாம்; ஏழிரவுகழித்தபின் முன்னவஸ்தைவிட்டுமொக்குள் அவஸ்தையையடையும். சிறிது நெகிழ்ந்து அண்டம்போன்ற வர்த்துலாகாரமாய மாம்சவிசேஷம்மொக்குளாம். ஒருபக்ஷமானபின் அது நெகிழ்வற்றுத் தன்னக்கினிவாயுவானும், மாதாவினக்கினிவாயுவானும் பிண்டபாவத்தையடையும், நாற்கோணமுடையதாம். அது இரண்டண்டகோச ரூபத்தானே தனித்தன்மையையடையும். அக்கால் அந்தரப்பிராணவாயுவால் மேலேவப்பட்ட அதனினின்றும் முதலில் சுழும்னையெனப் பெயரிய நாடியுண்டாம். அது நாடிகந்த மத்தியிலிருப்பதாக முன்னர் வருணிக்கப்பட்டதாகும். அயோகிகட்கு இலக்ஷியப்படாததாம், வட்டவடிவத்ததாம், அத்தியந்தஞ் சரளமாம்; நாபி, இருதயம், களம், நா, புருவஇடை, என்னும் ஐந்துஸ்தானங்களின் பேதத்தானே 'ஐம்பருவை' யெனப்பெயரியதாம், தருப்போலக் கீழ்முகமுடையதாம். அதனிருபக்கத்தினும் வேறிரண்டு நாடிகள் உண்டாம். அவற்றினும் எந்நாடி வாமபாக அண்டகோசத்தினின்றும் கிளம்பிச் சுழும்னை நாடியின் வாமபாகத்தே சம்பந்தித்து; தக்ஷிணபாகத்தேயிருக்கும் துளைவடிவ மார்க்கவாயிலாயிருதயதேயத்தை யடைந்து, வாமஸ்கந்த வாமஜத்ருக்களின் மத்திய சித்திரரூப மார்க்கத்தானே வாமநாசிகையை யடையுமோ, இவ்வாறு விற்போல வக்கிரமார்க்கத்தால் வாமநாசியையடைவுற்ற அதுவே இடையென்றியம்பப்பெறும். எந்நாடி, தக்ஷிணபாக அண்டகோசத்தினின்றும் கிளம்பி சுழும்னையின் தக்ஷிணபாகத்தே சம்பந்தித்து, வாமபக்கத்தேயிருக்கும் சித்திரரூப மார்க்கவாயிலாய் இருதயதேயத்தையடைந்து, தக்ஷிண ஸ்கந்த தக்ஷிணஜத்ருக்களின் மத்திய சித்திரரூபமார்க்கவாயிலாய்த் தக்ஷிண நாசிகையையடையுமோ, இவ்வாறு விற்போல வக்கிரமார்க்கத்தால் தக்ஷிண நாசியையடைவுற்ற அதுவே பிங்கலையெனப் பிறங்கும். கழுத்தின் கீழெலும்பின் பெயர் ஜத்ருவாம். அக்கால் கர்ப்பத்தின் நாபிஸ்தானத்தினின்றும் ஒரு ஆப்பாயநீ யெனப் பெயரிய நாடியுண்டாம்.

இதனையே நூல் 'சங்கநீ' யென்னும். இது ஆண்டிருந்து கிளம்பித் தாயின் இருதய தேயத்தை சம்பந்திக்கும். கிணறு முதலியவற்றின் நீர் கால்வாய் வாயிலாய் வயலையுற்று நெற்கோதுமை முதலியவற்றை விருத்திசெய்வதேபோல, தாயுண்ட அன்னநீரின் சூக்ஷ்ம இரசம் அந்நாடிவாயிலாய்க் கர்ப்ப உதிரத்தைசென்று அதனை விருத்திசெய்யும்.

சங்கை :—ஹே பகவன்! இடை பிங்கலை என்பன அண்டகோசத்தினின்றும் கிளம்பி வாமதக்ஷிணநாசிகையிற்செல்லும் என முன்னர்த்தாங்கள் கூறியது புருடசரீரத்தை பொருந்துமாயினும், ஸ்திரீ சரீரத்தை பொருந்தாதாம்.

சமாதானம் :—ஹே மைந்த! நாடிகளின் மூலக்கிரந்திரூப இரண்டண்ட கோசங்களும் புருட சரீரத்தோ வெளிப்படையாயேயிருக்கும், ஸ்திரீ சரீரத்தோ மறைவாயிருக்கும், நபும்சக சரீரத்தோ ஒரு சிறிது வெளிப்படையாயிருக்கும். ஆதலின், பெண்ணலித்தேகங்களினும் அந்நாடிகளி னுற்பத்தி சம்பவிக்கும். இவ்வாறு ஒரு பக்ஷமானவுடன் நாடிகளி னுற்பத்தியாம், ஒரு மாதங்கழிந்தபின் அது கடினபாவத்தையடையும். இருமாதங் கழிந்தபின் அதினின்றும் முதலிற் சிரமுண்டாம். மும்மாதங் கழிந்தபின் முறைப்படி இருகாமும் இருகாலுமுண் டாம். நான்குமாதங் கழிந்தபின் கைகால்களில் விரல்களும், இடுப்பும், மார்பும், வயிற்றின் இருபாலும் சில என்புகளு முண்டாம். ஐந்துமாதங் கழிந்தபின் கர்ப் பத்தின் பிற்பாகத்தேயிருக்கும் நீண்ட என்புண்டாம். ஆறுமாதங் கழிந்தபின் அதன் முக முதலிய ஒன்பதுவாயிலும், ஆண்டுறையும் வாக்கு முதலிய இந்திரி யங்களும் உண்டாம் ஏழு மாதமானபின் னதன்கண் பிராணனது வியாபாரம் வெளிப்படையாம். எட்டாவது மாதத்தே அஃதுள்ளும் வெளியும் சர்வ அங்கங் களாற் பூரணமாம். ஆனால், அக்காலதன்கண் சைதன்யத்தன்மை வெளிப்படா தாமாதலின், துயில்பவனைப்போலிருக்கும். வாதபித்தாதி தாதுக்களின் விடமத் தன்மைரூபத்தோடமின்றியதாய் அது ஒருகால் மாதாவின் உதரத்தினின்றும் வெளிப்போந்து ஜீவனத்தையடையுமாயின், போக மோக்ஷமென்னு மிரண்டை யும் சம்பாதிப்பதிற் றகுதியதாகும். ஆண்டுப் பிரணவாதிகளி னுபாசனையானே பிரஹ்மலோகாதிரூப போகத்தையடையும். ஆன்மசாக்ஷாத்காரத்தானே மோக்ஷ த்தையடையும். இதனானே, எட்டாவதுமாதத்தே பிறந்த பாலகனது ஜீவனத்தே ஐயமே நிகழும் எனத் துணிபப்பெறும். ஒன்பதாவது மாதந் தொடங்கவே முற்றுமுணருந்தன்மையுண்டாம். விவேகாதி சாதன சதுஷ்டய சம்பன்ன அதி காரி பிரஹ்மசாக்ஷாத்காரத்தின் அடைவை இச்சித்தவனாய் விநயபூர்வகம் பிரஹ் மவேத்தாவாய குருவின் சமீபத்திருப்பதுபோல, ஒன்பதாவது மாதத்தே அக்கர்ப் பமும் விநயபூர்வகம் மாதாவி னுதரத்தேயிருக்கும். பூர்வ அநேக ஜன்மங்களின் புண்ணியபாவ கருமங்களை நினைந்து தன்னைச் சீயென இகழும். ஹே மைந்த! அம்மைந்தன் பூர்வ ஜன்மங்களை நினைந்து பச்சாத்தாபப்படும் பிரகாரத்தைக் கேட் பாயாக :—இத்துக்கரூபசமுசாரத்தே யான் முன்னர்ச் சுகதுக்கத்தையடைவிக் கும் எண்ணிக்கையற்ற சரீரங்களைத்தரித்தேன். அவற்றுள்ளும் அநேக முறை

நாய், பன்றி, கழுதை, ஒட்டை, கோ, எருமை, ஆடு, மான், பறவை, கோதை (சசகம்) சர்ப்ப, கீடாதி, பிரதிலோம, அநுலோம, சரீரங்களையடைந்தேன். உத்தமஜாதித்தாய்க்கும் நீசசாதித் தந்தைக்கும் உண்டாம் புத்திரன் பிரதிலோமன். மாறுய்ப்பிறப்பவன் அநுலோமன். அநேகமுறை சாண்டாளாதி, பிராஹ்மணாதி, விருக்ஷாதி, கீழ்மேல் தாவரசரீரங்களை யானடைந்தனன். மீன்றேகங்களையும், ஒன்றிரண்டு மூன்று நான்கு பாதமுடைத்தேகங்களையும், பாதமற்ற சரீரங்களையும், அநேக பாதமுடைத்தேகங்களையும், கையற்ற, ஒருகையுடைய, அநேகங்கையுடைத்தேகங்களையும் ஒரு பொறி, அநேகம் பொறியுடைத் தேகங்களையும், அநேக முறையானடைந்தனன்.

இவ்வாறு பிராஹ்மலோகத்தேயும், சுவர்க்கலோகத்தேயும், அந்தரிக்ஷலோகத்தேயும், மண்ணுலகத்தேயும், நரகத்தேயும், யான் அநேகவகைச் சரீரங்களையடைந்தேன். அத்திப்பழம் கொதுகுகளால் பூரணமாவதேபோல, இப்பிராஹ்மாண்ட ரூப அத்திக்கனியும் எனது சரீரரூப கொதுகுகளால் பூரணமாம். வாயுவால் சலிக்கப்பெற்ற திருணம் நிரந்தரம் சுழல்வதேபோலப் புண்ணியபாவ கருமவபத்தால் தீனனாகிய யானும் அநேகந் தேகங்களைக்கவர்ந்து விடுத்து நரகத்தேயும் விண்மண்ணிலும் நிரந்தரம் சுழன்றனன். உழுபவன் இரஜ்ஜுரூப பாசத்தால் விருஷபாதி பசுக்களைக்கட்டித் தன் கிருஷி முதலியவற்றைச் செய்வதேபோல, மாயாரூப சூத்திரத்தினின்றும உண்டாய புண்ணியபாவ கருமரூபபாசத்தாற்கட்டிப் பசுவாகிய என்னை ஸ்திரீபுத்திராதி குடும்பத்தைக் காப்பாற்றுவதில் அந்தரியாமி ஏவியுள்ளார்; ஆனால் அவரை மூடனாய யான் அறிந்தேனில்லை. பூர்வம் எனக்கு அநேக ஜாதியுடைச்சரீரங்கள் அடைவுற்றன. சமான ஜாதியுடைய அநேகந் தாய்மார்களின் தனங்களினின்றும் சீழுக்குச் சமானமாய் விசாரவான்கட்குப் பரமதுக்கரூபமாய்த்தோற்றும் நிந்திதமாய பாலையும் தூரான்மாவாய யான் அநேகமுறை பானஞ்செய்தேன். அவ்வசசாதிச் சரீரங்கட்கு நுகரயோக்கியமாய் வேறு சாதியவற்றிற்குப் பெருமருவருப்பைத் தருவதாயிருக்கும் நிந்தித ஆகாரங்களையும் அநேகமுறை போகித்தேன். முன்னர் யானெடுத்த தேகங்களில் எனக்குப் பிறப்பிறப்பினடைவுகள் மாறுதுண்டாயின. அவ்வத்தேக சம்பந்திகளாய தாய் தந்தை மைந்தர் மனைவி உறவினர் மனை ஆகாரம் முதலிய பதார்த்தங்களில் எனக்கத்திபந்தமிச்சையுண்டாயது. அவையொழிந்தபின் அவர் தஞ் சொரூபமும், இச்சையும் நாசமடைந்தன. மண்ணினுண்டுகளினும், விண்ணுடுக்கணத்தினும் அதிக தேகங்களும் தாய் தந்தையருமெனக்குண்டாயினர். ஒரு முறை யரைத்தமாவை மறுமுறை யரையாததேபோல, ஒரு முறை பிறந்திறந்த உயிர்க்கு மறுமுறை பிறந்திறத்தல் தகாததேயெனினும், அவை அநேக ஆயிரமுறை எனக்குண்டாயின; இஃதெனக்கு மிகவு மாச்சரியமாகவேயிருக்கின்றது. கூப முதலியவற்றின் மேலே ஏற்றம் சுற்றுவதேபோல, ஜன்மம் பாலியம், யவ்வனம், விருத்தம், மரணம், மீண்டும் ஜன்மம் என்னும் அவஸ்தைகளின் பிரவாகரூப ஏற்றம் எப்போதும் என்றலைமேற் சுற்றுகின்றது. சில மூடர் இவ்வுலக சுகப்பொருட்டுப் பிராஹ்மஹத்தி செய்வர். அஃதவர்க்கு இகத்தும் பரத்தும் துக்கத்தையேயுண்டாக்குவதேபோல்,

யான் சுகசாதனமெனவாற்றியகருமங்கள் யாவும் எனக்கு அநேகவகைத் துக்கங்களையே கொடுக்கின்றன ; ஏனெனின், அறம் பாவங்களைச்செய்வதில் இகத்தும் பரத்தும் ஜீவர்கட்குத் துக்கமேயுண்டாம். அவை யத்தியந்தம் உக்கிரமாயின் இப்பிறப்பில் கருத்தாவிற்குப் பலத்தையீயும். மந்தமாயின், வேறு பிறப்பிற் பலத்தையீயும். பாவகருமமோ முதலிலாரம்பகாலத்தும் வருங்காலத்தும் துயரையேயீயும், புண்ணியகருமமோ தொடங்குங்கால் துயரமாயினும், வருங்காற் றுயரமுண்டாக்காதாம் ; மற்றோ, சுகமேயுண்டாக்கும் எனச் சிலர் கூறுதல் சம்பவியாதாம்; என்னை, புண்ணியத்தின் சுகபலம்போகித்து நாசமாங்காற் பரமதுக்கப் பிராப்தியாம். அச்சுகமிருக்குங்காலத்தும், மற்றவனது அதிக சுகத்தைக்கண்டு ஈர்ஷையையுண்டாக்கிக்கொண்டு பரம துக்கத்தினடைவாம். அச்சுகங் கிடையாத காலத்தே அதை யிச்சித்துப் பரமதுக்கத்தினடைவாம். விடயசுகத்தே யெப்போதும் துக்ககாரணத்தன்மையை யான் அநேகமுறை அநுபவித்தனனாதலின், இச்சம்சாரம் கேவலம் துக்க சமுத்திரமேயாம் இதன்கண்ணேவிழுந்த அஞ்ஞானியாய யான் இத்துக்கத்தை நீக்கு முபாயத்தைக்கண்டிலேன். எவ்வுபாயத்தால் இச்சம்சார சமுத்திரத்தின் கரையைக்கடப்பேன்? இவ்வனாதியாய சம்சாரத்தே விடயரூபச் சூதாடி மூடனாகிய என்னைப் பூர்வம் அநேக சரீரங்களில் வெற்றிகொண்டனன். அவனை வெற்றிகொள்வது இம்மனுட சரீரமேயாம்; இதனைப் பெற்றும் யான் இந்திரியரூபபாசகங்களைத் தடைசெய்யும் குசலத்தன்மையற்றனனாதலின், மூடனாய யான் அவனை வெற்றிகொண்டிலேன்; மற்றோ, மாறாகஅவனே யென்னை வென்றனன். யாதேனும் ஒரு புண்ணிய மகிமையால் தாயுதரத்திருந்து யான் வெளியேசெல்லுவேனாயின், முற்சரீரத்தேபோல இப்போது யான் பிரமாதஞ்செய்யாது, ஜன்மமரணாதி துக்கங்களை நாசஞ்செய்யும் பிரஹ்மாத்மஞானத்தை அஷ்டாங்க யோகாதி உபாயங்களாற் சம்பாதிப்பேன். அதன்கண்ணேயாற்றலின்றாயினும், பார்வதியின் பதியாகிய மகாதேவரையும், இலக்குமியின்பதியாகிய விஷ்ணுவையும் நிரந்தரம ஆராதனைசெய்வேனேயன்றி மாதாவினுதரத்தினின்றும் வெளிப்போந்து பூர்வம்போல ஸ்திரீ புத்திராதி குடும்பபாலனஞ்செய்வதன்கண்ணே எனதாயுளை வீணாகக்கழியேன்; ஏனெனின், முன்னர் யான் எம்மங்கையராதியரைக் காக்கும்பொருட்டு அநேகவகை யறம்பாவங்களை யாற்றினேனே, என் பிரசாதத்தானே எவர்கட்கு இகத்தும் பரத்தும் சுகவடைவாமோ, அவர்கள் மகாசெய்ந்நன்றி கொன்றவர்களாவர்கள்; என்னை, தனது கிருகத்தினின்றும் மலத்தை வெளியாக்கி வெளியிலெறிந்துவருவதேபோல, மரித்தபின் என்னை இல்லினின்றும் வெளியாக்கி மயானத்தே ஒண்டியாய் விட்டுவிட்டுத் தமது கிருகத்தையடைவுற்றனராதலினென்க. யான் வாழுங்காலத்தே எனது கான்மேல் தமது மஸ்தகத்தைவைத்து நமஸ்காரம்செய்த மனைவியாதியரே, மரித்ததன்பின் என்னைத்தீண்டித்தம்மையசுத்தமாயெண்ணி ஸ்நானஞ்செய்தனர். யானிருக்கும்போது என்மீது சுகந்த சந்தனாதிகளைப்பூசிய அவரே, மரித்ததன்பின் என்னை மணி அக்கினியின்கண்ணே யிட்டனர். எவரைக்காக்கும்பொருட்டு அளவிறந்த பாவத்தை யாற்றினனோ அவர், பல மனுபவிக்க ஒரு பிறப்பிலேனும் கூடவந்தி

ஸர்; மற்றோ, யானொருவனுமே யனுபவித்தனன். இத்தகைய போக்குவாத்துடைய செய்ந்நன்றி கொன்ற உறவினரோடு நேயஞ்செய்தல் எனக்குத் தகுதியன்றும். வேசி உண்மையமற்றவளேனும் வெளியே நானாவகை நேயத்தைக் காண்பித்துத் தனவானை மோகிப்பிப்பதேபோல, மனைவியாதியரும் உண்மையமற்றவராயினும், வெளியில் நானாவகை நேயத்தைக் காண்பித்துத் தமது சுவார்த்தத்தைச் சித்தஞ்செய்யும்பொருட்டு மூடனாகிய என்னை மோகிப்பித்தனர். வேசியானவள் தனிகனது சர்வ தனத்தையும் கவர்ந்துகொண்டு நிர்த்தன ஆபத்துக் காலத்தே அவனைக்கைவிட்டு விடுவதேபோல, மனைவியாதியரும் மரணரூப ஆபத்துக்காலத்தே என்னைப் பரித்தியாகித்தனர். அவர்களை யினிதுகாத்தற்பொருட்டுச் செய்த பாவங்களின் பயனை யானொருவனே யனுபவித்தேன்.

ஹே மைந்த! இவ்வாறு ஒன்பதாவது மாதத்தே அப்பாலகன் மாதாவினுதரத்தேயிருந்து முன்னநேகம் பிறப்புகளை நினைந்து பச்சாத்தாபப்படுவன். பின்னர் மாதாவினுதரத்தேயிருக்கும் பிரசூதிவாயு முகத்தைக் கீழாக்கிக் காலை மேலாக்கும். அக்கால் வாதபித்த கபதாதுக்கள் கலக்கத்தையடையும், அதனால் மிகுதுயருற்ற பாலகன் தன்னையும் அன்னியத்தையும் காணான். 96 அங்குல பரிமாணமுள்ள தாயின்றேகத்தே 4 அங்குல பரிமாணம் யோனியாம். இத்தகைய சுருங்கிய யந்திரத்தே பிரசூதி வாயுவால்தள்ளப்படுவன். தாயுதரத்தே மூத்திரமிருக்கும் பஸ்தி ஸ்தானமும், மலமிருக்கும் சங்கிரகணி ஸ்தானமும், பிரசூதிவாயுச்சலித்தலானே கலக்கத்தையடைந்து பாலகனது மஸ்தகத்தின் மீது மல ஜலங்களைப்பெய்யும். கூர்மையாய இருப்பாயுதத்தால் வயிற்றைச்சேதித்தலானே நம்மனோர்க்குத் துக்கமுண்டாவதேபோல, அக்கர்ப்பத்தியாககாலத்தே துக்க அடைவு அக்கர்ப்பிணிக்கும் பாலகனுக்குமுண்டாம். ஓரற்பப்புண்ணின் கண்ணேயிருக்கும் ஒரு மகாகீடம் தனக்கும் புண்ணுடையோனுக்கும் மிகத் துயரையுண்டாக்குவதேபோல, குறுகிய யோனித்துவாரத்தே யடைவுற்ற பாலகன் தனக்கும் தாய்க்கும் பரமதுக்கத்தை யீவன். இரும்புக்கூர்மை யாயுதம் ஆடு முதலிய பசுக்களின் யோனிகளைக்கிழிப்பதேபோலப் பாலகனும் மாதாவின் யோனியைக்கிழிப்பன் அரசர் முதலியோரிடத்தே களவு முதலியவை செய்த புருடரை அரச சேவகர் தோலறுக்கும் ஆயுதமத்தியிலிடுவதேபோல, பிரசூதிவாயுவானது பாலகனைப் பலாத்காரமாய் மாதாவின் யோனியந்திரத்தே யடைவிக்கும், அக்கால் ஜராயுப்போர்வையின்மையில் அக்கோமளபாலகன் அக்கினியின் பரிசம்போன்ற யோனி யந்திரத்தின் பரிசத்தால் தாகத்தையடைவன். ஹே குழந்தாய்! இங்ஙனம் அநேகந்துயரை யனுபவித்து ஒன்பதாவது மாதத்தேனும் பத்தாவது மாதத்தேனும பூர்வ புண்ணியபாவங்களின் பயனயில அவ்வியந்திரத்தினின்றும் வெளியேவருவன். ஒரு துர்க்கந்தமாய் புண்ணினின்றும் வெளிப்போந்த கீடம் பூமியின்கண்ணே விழுவதேபோல, அப்பாலகன் அவ்வியந்திரத்தினின்றும் வெளியேவந்து பூமியின்கண்ணே விழுவன். அநேகங் கூர்மையாய முட்கள் தைத்தலால், இரும்பாயுதத்தால் தேகங் கிழிபடலால் நம்மனோர்க்கு எவ்வகைத்துயருண்டாகின்றதோ, அவ்வகைத்துயர் பாலகனுக்கு யோனியந்திரத்தினின்றும் வெளிவரலானுண்டாம். இங்ஙனம் அநேகவகைத் துக்கங்களை யண்

ந்து, தாய்க்கு மநேகவகைத்துக்கங்களையடைவித்துச் சுருங்கிய யந்திரத்தினின்றுங் கீழே விழுங்காலத்து மூர்ச்சையாகிய அவஸ்தையையடைந்து ஒன்று மறியா திருப்பன். பின் இவ்வைஷ்ணவவாயு தன் சம்பந்தத்தாலே பாலகனது பூர்வ விசாரத்தைக்கெடுத்துவிடும். அது மாதாவின் உதரத்தின்வெளியே யாண்டும் வியாபித்துள்ளது. ஜீவர்களை வியாமோகிக்கும் வாயிலாய்ச் சம்சாரசக்கரத்தை நிர்வாகம் செய்யும்பொருட்டு மகாவிஷ்ணுவாலுண்டாக்கப்பட்டது. அதனாலே, நூலுணர்ந்தோரால் அப்பாகிய வாயு வைஷ்ணவ வாயுவென அழைக்கப்பட்டது. இதன் பயத்தாற்றான் முன்னர் வியாசர் சேபாய சுகதேவர் தாயுதரத்தே யோக பலத்தால் பிரசூதிவாயுவை வெற்றிகொண்டு நெடுங்காலமிருந்தனர். எல்லாருடைய கருத்தையுமறிகின்ற மகிமானுப சர்வஞ்ஞனும பாவிசெய்த துஷ்டமந்திர ஔஷதிகளால் விரைவாகவே மூட அவஸ்தையையடைவதேபோல, அவ்வாயுவால் தீண்டப்பெற்ற முற்று முணர்ந்தவனும் மூட அவஸ்தையையடைவன். தாயுதரத்தேயிருந்து ஒன்பதாவது மாதத்தே, எமமனத்தாலே முன்விசாரமாற்றினனே, அவ்வாயுவின் பரிசத்தாலே அம்மனம் நேராநதன்மையைவிடுத்து நாய்வாலைப் போலவக்கிரபாவத்தையடையும். அக்கினியால் தகிக்கபபட்ட காட்டத்தைச்சுழற்றலாலே அக்கினிக்குச் சுழலுகையுண்டாவதேபோல, அவ்வக்கிரமனத்தின்றுதான்மிய அத்தியாசத்தால் சாக்ஷியாகிய ஆன்மாவும வக்கிரபாவத்தையடையும். பின்னர் அத்தியந்தந்துக்கியாய பாலகன் பூர்வ சர்வ விசாரத்தையும் மறந்து யான் யார்? யான் யார்? என்னும் பொருளமைநத "கோகம், கோகம்" என்னும் சப்தத்தை யுச்சரிக்கும். இவ்வாறு கர்பப உபநிடதத்தே ஜன்மங் கூறப்பெற்றுளது. அதை யாராய்நது அதிகாரிக்கு வைராக்கியபபிராப்தியுண்டாமாதலின், அதன் பொருட்டு அதிகாரி அவ்வுபநிடதமுறையாய்த் தனது ஜன்ம விசாரத்தை யவசியஞ்செய்க. ஹே மைந்த! ஜன்ம அவஸ்தையை விசாரித்தலாலே அதிகாரிக்கு வைராக்கியபபிராபதியுண்டாதலபோல, மரணவஸ்தையை யாராயினும் ஆமாதலின், தன் மரணவஸ்தையையும் அவசியமாயறியவேண்டும். தன் மரணரணம் 'ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர் த்ருவம் ஜந்ம ம்ருதஸ்ய ச' என்பதாதி சாஸ்திரவசனங்களானும உண்டாம். ஜன்மித்த பிராணியாவும் மரிக்குமென்ப தொருதலையேயாம்; ஜன்மித்திறநத தாய்தநதைபரைப்போலும். அவ்வாறு யானும் ஜன்மித்திருக்கின்றேனாதலின் எனக்கும் மரணம அவசியமாயுண்டாம்; என்னும் அனுமானப்பிரமாணத்தினானும், மரண நிச்சயமுண்டாம்; ஆனால், எனது மரணம் இத்துணைத் தினங்கட்குபபின்னுண்டாம் என்னும் நிச்சயம் அயோகியர்க்குண்டாகாதாமாதலின், மரணகால நிச்சயஞ் செய்யும்பொருட்டு இருக்குவேதத்தே கௌஷீதகி முனிவர் அநேகவகைசசின்னங்கள் கூறியுள்ளார், வசிஷ்ட சம்ஹிதையின்கண் ஸ்ரீ வசிஷ்ட பகவானும் அச்சின்னத்தைக் கூறியுள்ளார். அதனால் அதிகாரிக்குத் தன் மரணகாலநிச்சயம உண்டாம். அதனால் வைராக்கியப் பிராப்தியுண்டாமாதலின் அதனை யவசியம் அறிதல்வேண்டும். இப்போது இருக்குவேத கௌஷீதகி சாகையில் நனுவிற் காணத் தகுதியாய மரணக்குறிப்புரைப்பாம்:—ஹே மைந்த! இச்சூரிய மண்டலத்தேயும் புருட

. ஷிணை மாதுளாதத்தையும், ஒரே அந்தரியாமி இருவடிவமாயிருக்கும். அவற்றிற்கு நாடிரூப காரணவாயிலாய்ப் பரஸ்பர சம்பந்தம் சுருதியின்கண்ணே கூறப்பட்டிருக்கின்றது. மரணம் சமீபத்துறும்போது அச்சம்பந்தம் நீங்கிவிடும். நீங்கவே சூரியன் முன்போல் தோற்றார்; மற்றே, நிலாப்போற் சீதளமாய்த் தோற்றுவர். அல்லது, மத்தியான காலத்திலுஞ் சந்தியாகாலம்போலச் சூரியன் கிரணமற்றவராய்த் தோற்றுவர். அல்லது, சூரியன் துளையுடையராய்த் தோற்றுவர். அல்லது, மஞ்சிஷ்டத்தால் ரஞ்சிதமாய இரக்த வஸ்திரம்போன்ற இரக்தவர்ணமுடைய ஆகாசத்தேயிருப்பவராய்த் தோற்றுவர். இவ்வண்ணம் சூரியனை விபரீதமாய்ப் பார்ப்பவர் சிறிது காலத்திற்குள்ளே மரணமடைவர். கிழக்கு முதலிய திசைகளையும், அக்கினி கோணமுதலிய உபதிசைகளையும், அந்தரிக்ஷலோகத்தையும், தாராகணத்தையும் எப்போதும் இரக்த வர்ணமுடையதாய்க் காணும் புருடனும், மலப் பரித்தியாக காலத்தே பாயுவாயில் சங்கோசமற்றிருத்தல்போல எப்போது மிருக்கப்பெற்றவனும், அண்டங்களோடுகூடிய காகக்கூட்டில் துர்க்கந்த மிருப்பதே போலத் துர்க்கந்தம தலைபில் நிருக்கப்பெற்றவனும், தனது சாயையின்கண்ணே துளை காண்பவனும், கண்ணாடியினும் நீரினும் இருக்கும தனது பிரதி பிம்பத்தின், பூமியின்கண்ணேயிருக்குந் தனது சாயையின், தலை ஐயத்துடனேனும் இன்றியதாயேனும் தோறறப்பெற்றவனும் சிறிதுகாலத்துள்ளே மரிப்பர். மற்றையன் விழியின்கருமணியின்கண்ணே தனதுபிரதிபிம்பம் தலை கீழாய்த் தோற்றினும், தர்ப்பணாதிகளிடத்தேதோற்றும் தனதுபிரதிபிம்பத்தின் தலை மேலிருக்கிறதா கீழிருக்கிறதா எனச் சம்சயமுண்டாயினும், அங்குலியால் தனது நேத்திரத்தைப் பீடனஞ்செய்யின் நம்மனோருக்குக் கிரணங்களோடுகூடிய தேஜஸ் விசேஷம் பிரதீதியாம், அது தோற்றாதாயினும், இருவிரலா லிருசெவிகளைப் புதைப்பின் கேட்கும் பிராணனது தொனியானது கேட்காதாயினும், மயிலின் கழுத்திற்குச் சமானமாய் அக்கினியை நீலவர்ணமாய்க்காணினும், மேகமின்றியே ஆகாயத்தே மின்னலைக்காணினும், மேகங்களிருப்பினும் மின்னலைக்காணாவிடினும், பெய்யும் மேகத்தே சூரியனுடைய கிரணங்களைக் காணினும், அழலற்ற பூமியையும் அழலுற்றோங்கிபெரிபூமியதாகக் காணினும், அவாகள சிறிது காலத்தே மரணமுறுவர். இத்துணையால் இருக்குவேதத்தே கௌஷீதகி முனிவருரைத்த மிருத்தியு சின்னமுரைக்கப்பட்டது. இப்போது ஸ்ரீ வசிஷ்ட முனிவர் கூறிய மிருத்தியு சின்னங்களை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! ஒரே தினத்தே பிராதக்காலத்துஞ் சந்தியாகாலத்துந் தனது மத்தகத்தினின்றுங் கிளம்பிய தூமத்தைக் காண்பவன் மகாபயத்தையேனும் மரணத்தையேனும் அடைவன், சாயங்காலத்தும் பிராதக்காலத்தும் ஐந்து தினபரியந்தம் மஸ்தக தூமத்தைக்கண்டவன் மூன்று வருடங்கட்குப்பின் மரிப்பன். நான்கு தினம்வரை காண்பவன் இரண்டு வருடங்கட்குப்பின் மரிப்பான், மூன்றுதினம்வரை காண்பவன் ஒருவருடத்தின்பின் மரிப்பன். அன்றியும் விரலாற் செவியைப் புதைப்பின் பிராணத்தொனி கேளாதவனும், இளைத்திருக்கும்தேகம் நிமித்தமின்றியே பருத்தலையுடையவனும், மாறுபுடையவனும், குரோதசுபாவமுடைத்தாயிருந்து அகஸ்மாத்தாய்ச் சாந்திபெற்றமையனுமாயினும், மாறுபுடையவனும், மல மூத்திர பரித்தியாகத்தை யேககாலத் தடைவுற்ற

வனும், பசிதாகங்களை யேககாலத் தடைவுற்றவனும, அக்காலங்களில் வியாபோகங்கூட அடைவுற்றவனும், அகாரணமாய்த் தருவின்றுனியின்கண்ணே கந்தர்வநகரத்தைக்காண்பவனும், தனது தேகத்தைக் கிருஷ்ணவர்ணமுடையதாகவேனும் பிங்கலவர்ணமுடையதாகவேனுங் காண்பவனும், கழுகு காகம் முதலிய மாம்ச பக்ஷணிகளாகிய பறவைகள், கழுதை ஒட்டைகள், பல்லற்ற தேள் முதலிய ஜீவர்கள், ராக்ஷசபூத பிசாசங்கள், என்பன முதலவாய துஷ்ட ஜந்துக்களுள் ஒன்றேனும் பலவேனும் மாம்சபக்ஷணஞ் செய்யும்பொருட்டுத் தாவிவிழப்பெற்றவனும், ஒருவருடத்தின்பின்னர் மிருத்தியுவையடைவர். இவ்வாறு கனவின்கண்ணே அக்கழுகு முதலியவற்றைக் காணினும், மற்றவர் அருந்ததி நக்ஷத்திரங்காண்பித்தும், துருவ நக்ஷத்திரங்காண்பித்தும், பூரண சந்திரனிடத்திருக்குங் கருமையைக்காண்பித்தும், நிர்மல ஆகாசத்தே தக்ஷிண உத்தர திசையிலிருக்கும் தீர்க்க மந்தப் பிரபையைக் காண்பித்தும், தான்காணும்பொருட்டு முயல்வுறினும் அவற்றைக் காணானாயினும, ஒருவருடத்தின்பின் மரிப்பன், அல்லது முன்னரே மரிப்பன் ; ஆனால், அவன் எத்திதியின்கண் அநநிமித்தத்தைக் காண்பனோ வருடத்தின்பின் மீண்டு அத்திதியையடையான். இனியாறுமாதத்தில மரிக்குங் குறியிவையாம் :—தனது வெள்வதிரத்தைக கரியதாய்க்காணினும், மாறிக்காணினும், சூரிய சந்திரர்களை ஆகாயத்தினின்றுங் கீழே விழுவதாய்க்காணினும், பூமியின்கண்ணிருப்பதை ஆகாயத்தின்கண்ணே யிருப்பதாய்க்காணினும், மாறிக்காணினும், நோய் முதலியவையின்றியே உதடு நாவுகாயுமாயினும, சரீரம் சக்கரம்போற் சுழலுமாயினும், மலை முதலிய ஸ்தாவரப பொருள்கள் சுழலுவதாய்க்காணினும், சலிக்கும் பொருள்கள் திரமாயிருப்பதாய்க்காணினும், ஆறுமாதங் கழிந்தபின் மரிப்பன். கண்டாமணியின் சப்தத்தைக் கேளானாயினும், சேறுடைப் பூமியிலும், தூளியுடைப் பூமியிலும காற்குறியைக் கண்டிதமாய்க் காண்பானாயினும் ஆறுமாதத்திற்குள்ளே மிருத்தியுவையடைவன். மூன்றுமாதத்தில் மிருத்தியுவைச் செய்யுங்குறியோ இஃதாம் :—அங்குலியால் நேத்திரபீடனஞ்செய்யின் நம்மனோர்க்குத் தோற்றும் மின்மினிபோன்ற தேஜஸின் சூக்ஷ்மகணம் அஃதின்றியே எவனுக்குத் தோறறுமோ அவன் மூன்றுமாதங்களின்பின்னிறப்பனென்க. ஒருமாதத்தே மரணப்பிராப்தியாக்குங் குறியிதுவாம் :—நேத்திராதி இந்திரியங்களால் ரூபாதிவிடயங்களைப் பூர்வம்போல யதார்த்தமாய்க்கவரப்பெறாதவனும், நம்மனோருக்குப் பிரத்தியக்ஷமாய்ப் பிரதீதியாகாத தேவர் கேட்கும்படியான வசனங்களைக் கூறக்கேட்பவனும், மஸ்தகம் அக்கினியின் ஜ்வாலைகளோடு கூடியதாயிருப்பவனும், தினத்தே கொள்ளி வீழ்தலைக் காண்பவனும், இரவில் இந்திரதனுவைக் காண்பவனும், மேகமற்ற ஆகாயத்தே மின்னலைக்காண்பவனும், மேகமுடைய ஆகாயத்தே மின்னலைக்காணாதவனும், தர்ப்பணாதிகளிடத்தே தனது பிரதிபிம்பத்தைக் காணாதவனும், காகமைதுனத்தைக்காண்பவனும், ஹம்சமைதுனத்தைக் காண்பவனும், மயூர மைதுனத்தைக்காண்பனும், பசையறறவற்றைப் பசையுற்றவையாய்க்காண்பவனும், சீதளப்பொருள்களை உஷ்ணமுடையவைகளாய்ப் பார்ப்பவனும், மாறாய்க்காண்பவனும், ஸ்நானஞ்செய்தபின்பு மற்றெல்லா அங்கங்களும்

தம் இருதயம் பாதம் இரண்டும் விரைவாகவே காய்ந்தலையுடைய ... மூன்று தினங்கழிந்தபின் மரிப்பர். அரைமாதத்தே மரணமுறுங்குறியிவை யாம்:—அகஸ்மாத்தாய்ப் பூமியின்கண்ணே துளையைக்காண்பவனும், அத்துளையி னின்று மூண்டாய சப்தத்தைக்கேட்பவனும், சூரியகிரணங் குளிரப்பெற்றவனும், சந்திரகிரண முஷ்ணிக்கப்பெற்றவனும், முகத்தைச் செந்தாமரைபோலச் சிவப்பு வர்ணமாகவுடையவனும், நாவு ஓங்கியெரியுமக்கினியின் சமானவர்ணமாகவுடை யவனும், செவிகள் குதிரைச்செவிகளைப்போல ஸ்தப்தமாக்கப்பெற்றவனும், இரு தயத்தேயும் நாபியிலும் நாவிலும் நடுக்கமுற்றவனும், அரைமாதத்தின்பின்னி றப்பர். ஏழுநாளில் மரணமுறுங்குறி யிவையாம்:—சரீரத்தே அகஸ்மாத்தாக அக்கினியின்சுவாலை வெளிப்படப்பெற்றவனும், தாராமண்டலத்திருக்கும சப்த இருஷிகளையும் நவக்கிரகங்களையும் காணுதவனும, தனது மூக்கையும் நாக்கை யுங் காணுதவனும், ஒரு காரியத்தைச்செய்து அக்காலத்தே மறப்பவனும், முற்பாதி யுஷ்ணமாயும் பிற்பாதி சீதளமாயுமிருக்குஞ் சரீர முற்றவனும், நேத திரம் அத்தியந்தம் விகாசமாக மண்டலாகாரமாயிருக்கப்பெற்றவனும், இரண்டு கர்ணங்களும் சிதிலத்தன்மையானே தமது ஸ்தானத்தினின்றும் நழுவப்பெற்ற வனும், நாசிகைவக்கிரமாயிருக்கப்பெற்றவனும், ஏழு தினங் கழிந்தபின்னிறப்பர். ஒரு தினத்திறக்குங் குறியிவையாம்:—தெற்கே யிரவியிருப்பின் நியமமாய் வடக்கே யிருக்கவேண்டிய சாயை தெற்கு நோக்கி யிருக்கப்பெற்றவன் அத் தினத்தே சஸ்திராதிகளால் மரிப்பன். தான் புசிக்கும்பொருட்டு அன்னத்தைத் தியாகஞ்செய்ய அதனை ஒரு அபூர்வ ஸ்திரீயுண்ணக்காண்பவனும், இடபத்தின் மேலாரூடமாயிருப்பவனையேனும், எருமையின்மேலேறி யிருப்பவனையேனும், தண்டத்தைக் கைப்பற்றியிருக்கும் பயாநகபுருடனையேனும், விரிந்த இரக்தவர்ண முடைய கேசத்தையும் கையிற் பாசங்களைக்கவர்ந்த பயானகஸ்திரீயையேனும் உண்ணுங்காற் காண்பவனும், அத்தினத்தேமரிப்பர். இவ்வாறு மூன்றுவருட முதல் ஒரு நாள்வரை கூறிய மிருத்தியுவின் சின்னங்களில் ஒன்றையேனும், இரண்டு மூன்றையேனும், அளவிறந்தவற்றையேனும் எத்திதியில் எத்தினத்தே காண்பனோ அவன் அம்மூவருடாதிகாலத்தின்பின்னர் அத்திதியையும் அத தினத்தையும் மீண்டும் அடையான் ; மற்றே, அதற்குள்ளே மரிப்பன். இத்துணைக கிரந்தத்தானே நனவின்கண்ணே மரணக்குறி நிரூபிக்கப்பெற்றது. இப்போது வசிஷ்ட சம்ஹிதையின்கண்ணே ஸ்ரீ வசிஷ்ட பகவான் கனவின்கண்ணே மரணக் குறி யுரைத்திருப்பதை நிரூபிப்பாம்:—கனவில் கறுப்புப்பல்லுடையவனைக் காண்ப வனும், கறுப்புவர்ணமுடைய புருடனைக்காண்பவனுஞ் சிறிது காலத்திலே மரண முறுவர். தன் சரீரத்தை வராகமேனும், குரங்கேனும், டக்ஷணம பண்ணவேனுங் கொண்டுபோகவேனுங் காண்பவனும், மஞ்சள்நிறமுடைய பொருளைப்புசித்து வாந்திசெய்பவனும், மதுவோடுகூடிய அன்னத்தைப்புசிப்பவனும், கமலகோமள ... புசிப்பவனும், வெண்டாமரையைத் தனது மஸ்தகத்தேயும், கண்டாதி ... த்தேயுந் தரிப்பவனும், கழுதை, பன்றி, ஒட்டையோடுகூடிய தேரிலேறுப வனும், அவற்றின்கண்ணே யேறுபவனும், கறுப்புநிறக் கன்றோடுகூடிய கறுப் புக்கோவானது தென்றிசை நோக்கிச்செல்லக் காண்பவனும், இரக்தநிறமுடைய

## தாற்பரியவருணனம்.

செம்பருத்தம்பூமாலையைத் தன் கண்டத்தே தரித்தேனும், பாசிமாலையைத் தரித்தேனும், தேகத்தின்மீது தைலம் பூசிக்கொண்டேனும் நிர்வாணமாகவேனும் ஒண்டியாய்த் தென்றிசையை நோக்கிச்செல்பவனும், தன் கரத்திருக்கும் கழுகு, காகம் முதலியவற்றால் பக்ஷணத்தைப்பெற்றவனாய், பிரசன்னத்தன்மையோடுகூடியவனாய், இரக்தவஸ்திரங்களோடுகூடியவனாய், இரக்தசந்தனத்தோடுகூடியவனாய்த் தைலத்தோடுகூடியவனாய்ப் பசிதாகாதிகளாற் பீடிதனாய் நாய் முதலிய குரூர ஜீவர்களிடத்தினின்றும் பயத்தையடைவுற்றவனாய்த் தெனறிசையிற் கமனஞ் செய்பவனும், கிருகலாசசீவனைத் தன் வாகனமாகக்காண்பவனும் ஆறுமாதத்தின்பின் மிருத்தியுவையடைவர். இரும்புத்தண்டத்தைத்தரித்த கறுப்புப்புருடனைக் காண்பவன் மூன்று தினத்தின் மரிப்பன். கறுப்புவஸ்திரந்தரித்த கருஞ் சந்தனத்தோடுகூடிய ஒரு பெண் நேயமாக ஆலிங்கனஞ்செய்யக்காண்பவன் பத்துத் தினத்திற்கு முன்னரே மிருத்தியுவையடைவன்; அல்லது, அத்தினத்தே அருண உதய காலத்தேனும் சூரிய உதயகாலத்தேனும மிருத்தியுவையடைவன். இவ்வகையுண்டாஞ் சொப்பனமும் இருவகையாம. ஒன்றே. அறம்பாவ அதிருஷ்ட சாமக்கிரியானே ஜன்னியமாம். மற்றொன்றே, வாதபித்த கபமென்னும் முத்தோஷ விஷமத்தன்மைரூப திருஷ்டசாமக்கிரியானேனுங் காமக்குரோதலோப பயசிந்தனம் என்பனவாதி திருஷ்டசாமக்கிரியானேனும் ஜன்னியமாம். இருவகையுள் முதலதுட்கண்ட கூறிய மிருத்தியுசின்னங்களைக் காண்பவனுக் கவசியமாய் மிருத்தியுரூபப் பலப்பிராப்தியாம். இரண்டாவதிற் கண்டதோ பலப்பிராப்தியடைவியாதாம்; மற்றோ நிட்பலமேயாம். முதலதும் இரவின் நான்கு முகூர்த்தங்களின் வேற்றுமையானே வேறு வேறு பயனையேயடைவிக்கும். கனாக்காண்போன் இரவின் முதன் முகூர்த்தத்தே காணுங்கனா ஒருவருடத்தின்பின் பயனைப்பயக்கும். இரண்டாவது முகூர்த்தத்தே காண்பதோ ஆறுமாதத்தின்பின் பயனைப் பயக்கும். மூன்றாவது முகூர்த்தத்தே காண்பதோ மூன்று மாதத்தின்பின் பயனைப்பயக்கும். நான்காவது முகூர்த்தத்தேயோ இரண்டிரண்டு நாழிகையின் பேதத்தானே பின்ன பின்ன பயனையேபயக்கும். அதன் முதலிரண்டு நாழிகையின்கண்ணே காண்பதோ ஒரு மாதத்தின்பின் பயனைப்பயக்கும். இரண்டாம் இரண்டு நாழிகையின்கண்ணே காண்பதோ ஒரு பக்ஷத்தின்பின் பயனைப்பயக்கும். மூன்றாம் இரண்டுநாழிகையின்கண்ணே காண்பதோ பத்துநாட்கட்குப்பின் பயனைப்பயக்கும். நான்காம் இரண்டுநாழிகையின்கண்ணே காண்பதோ அத்தினத்தே பயனைப்பயக்கும். இவ்வாறதிருஷ்டகனவின் பலமாம். வாதாதியில்வரும் கனாநிட்பலமாவதேபோல, எக்கனவின்பின் வேறு கனவுண்டாமோ அம்முதற் கனவும் நிட்பலமேயாம்; இவ்வாறநேக தோடவயத்தால் அக்கனாப் பயனற்றதுமாமாதலின், இவ்வெனது கனா வாதபித்தாதிரூப திருஷ்டசாமக்கிரியானுண்டாயது. அல்லது, அதிருஷ்டவயத்தானுண்டாயது என விசாரியாதொழியின் அக்கனா காண்பவனுக்கு நியமமாய்ப் பலப்பிராப்தியைச் செய்வியாது; மற்றோ, ஐயமே நிகழ்விக்கும். கனவின்கண்ணே கூறிய மரணக்குறிகள் நியமமாய்ப் பலத்தைப் பயக்குமாதலின் அதன்கண்ணையமின்றும். இவ்வாறு கௌஷீதகீ இருஷியினும்

ஸ்ரீ வசிஷ்ட பகவானாலும் நனவிலுங் கனவிலும் மரணக்குறிப்பலவியவஸ்தை கூறப்பெற்றுளது. ஹே மைந்த! விடயங்களிலத்தியந்தம் ஆசக்தனுக்கும் முற்கூறிய குறிகளின் தரிசனத்தானே அவசியம் வைராக்கியப்பிராப்தியாம். ஆதலினாற்றான் அவ்விருமுனிவரும் அக்குறிகளை அறைந்தனர். கர்ப்ப உபநிடதத்தின் விசாரத்தாலும் மிருத்தியுசின்னங்களின் தரிசனத்தாலும் வைராக்கியப்பிராப்தியுண்டாவதேபோல, ஹம்சாதியுபநிடதங்களில் கூறிய யோகத்தானும் அதிகாரிகட்குப் பரம வைராக்கியப்பிராப்தியாமாதலின், வைராக்கிய அடைவின்பொருட்டு அதிகாரிகள் அவ்வியோகத்தையும் அவசியஞ் சம்பாதிக்கவேண்டும். இப்போது அதனை நிரூபிக்கும்பொருட்டு முதலில் அவ்வியோக அங்கத்தைக்கூறும் அமிருதநாத உபநிஷத்தின்பொருளை நிரூபிப்பாம்:—ஆண்டு முதலில் யோக அதிகாரியைக் கூறுவாம்—ஹே மைந்த! பிரஹ்மசர்ய தர்மமுடையவனும், உட்கரணத்தையும் புறக்கரணத்தையுந் தன் வயப்படுத்தினவனும், தைரியமுடையவனும், குருசாஸ்திரத்தே சிரத்தைபக்தியுடையவனும் எவனோ அவனே யோகாதிகாரியாவன். முதலில் தனது வருணாசிரமானுசார நித்திய நைமித்திக கருமங்களால் ஒருவனமுதலிய ஏகாந்ததேசத்தே குடில்செய்துகொண்டு ஆண்டு யோகம்பயில்க. அத்தேசம் சீத ஆதப வாயு என்பனவாதி சர்வ உபத்திரவங்களும் அற்றதும், மனத்திற்கும் நேத்திரங்கட்கும் ஆநந்தத்தைத் தருவதுமாயிருக்கவேண்டும். அத்தகைய இடத்தே முதலில் தர்ப்பையைவிரித்து அதன்மேல் மான்றோலைவிரித்து அதன்மேல் புலித்தோலைவிரித்து அல்லது கோமளவஸ்திராதிகளைவிரித்து இருக்கவேண்டும் அதனால் அத்தேகத்தே சிறிதுமாத்திரையும் பீடையுண்டாகாதாம். அவ்வாசனம் அதிக உயரமாகவேனும் அதிகத்தாழ்ந்ததாகவேனும் இருக்கலாகாது. அதன்கண்ணிருந்து முதலில் தனது சரீரமத்தியதேயத்தையும் கழுத்தையும் சிரத்தையும் தண்டம்போல நேரே வைக்கவேண்டும். தனது நாசிகையின் நுனிப்பாகத்தே திருஷ்டியைவைத்து வேறெப்பக்கத்திலும் திருஷ்டியை வைக்காதிருக்கவேண்டும். அகிம்சை, சத்தியம், அஸ்தேயம், பிரஹ்மசரியம், அபரிக்கிரகம், என்னும் ஐவகை இயமங்களை யெப்போதும் சேவிக்கவேண்டும். சௌசம், சந்தோஷம், தவம், சுவாத்தியாயம், ஈசுரப்பிரணிதானம் என்னும் ஐவகை நியமங்களையும் எப்போதும் சேவிக்கவேண்டும். இவற்றின்பொருளை எட்டாவது அத்தியாயத்தே விஸ்தாரமாய்க் கூறிவந்தேம். அந்த யோகம் புரிவதில் அதிகாரிக்கு அநேகவகை விக்கினங்கள் வருமாதலின் அவற்றை நீக்கும்பொருட்டு முற்கூறிய ஆசனத்தேயிருந்து தன் மனதை யொருமைப்படுத்தி உருத்திரபகவானைத் தியானிக்கவேண்டும். அதனால் எல்லா இடர்களும் நீங்கும். பின் சுவஸ்திகம், பத்மம், பத்திரம் என்னும் மூன்றாதனத்துள் ஒரு ஆதனத்தையிட்டு வடதிசையின் பக்கமாய் முகநோக்கி பிராணாயாமத்தைச்செய்க. இப்போது அவ்வாசனங்களின் சொரூபத்தை நிரூபிப்பாம்:—இடது கணைக்கால் துடையிடையில் வலது பாததலத்தை வைத்து, வலதுகணைக்கால் துடையிடையில் இடதுபாததலத்தைவைத்துத் தண்டம்போலச் சரளமாயிருத்தல் சுவஸ்திக ஆசனமாம். தன்னிடது துடையின் மேல் வலதுபாதத்தைவைத்து அதனங்குஷ்டத்தைத் தனது பிற்றேயத்தின் பின்புறமாக வலதுகையைக்கொணர்ந்து பிடித்துக்கொண்டு, தன் வலது துடையின்மேல்

இடதுபாதத்தை வைத்து அதனங்குஷ்டத்தைத் தனது பிறகேயத்தின் பின்புறம் இடது கையைக்கொணர்ந்து பிடித்துக்கொண்டு தன்தேகத்தைத் தண்டம் போல நேரேவைத்தலே பத்ம ஆசனமாம். தன்னிரண்டு பாதங்களின் தலைகளை விரையின்கீழ் ஒன்றாகவைத்து அப்பாதங்களின் தலத்தின்மேல் தன்னிரண்டு கரங்களை ஆமையாகாரமா யொன்றாகவைத்துத் தன்தேகத்தைத் தண்டம்போல நேரேவைத்தலே பத்ராசனமாம். இம்மூன்றாசனத்துள் தனக்குச் செய்யச்சமர்த்துள்ள ஆசனத்தைச்செய்துகொண்டு அதிகாரி பிராணாயாமஞ் செய்க. இப்போது யோகத்தின் ஆறு அங்கங்களை நிரூபிப்பாம்:— ஹே மைந்த! பிராணாயாமம், பிரத்தியாகாரம், தர்க்கம், தாரணை, தியானம், சமாதி, என்பனவாம். ஆண்டு முதலில் பிராணாயாமத்தைப் பல சகிதமாய்க் கேட்பாயாக. அக்கினியின் சம்பந்தத்தானே இரும்பு முதலிய தாதுக்களின் மலநிவிருத்தியாவதேபோல, பிராணாயாமத்தானே அந்தக்கரண தோஷமும், புறக்கரணதோஷமும் நீங்கும். அதுவும் ரேசகம், பூரகம், கும்பகம், என்னும் பேதத்தானே மூவகையாம். அவற்றுள்ளும் ஒவ்வொரு பிராணாயாமஞ் செய்யுங்காலத்தும் அதிகாரி பிரணவத்தோடு எழுவியாகிருதியோடு சிரத்தோடு காயத்திரிமந்திரத்தை மும்முறை யுச்சரிக்குக. சந்யாசிகளோ அக்காயத்திரிமந்திரத்தை மும்முறை யுச்சரிக்கின் எத்துணையக்ஷரங்களாமோ அத்துணை பிரணவங்களின் உச்சாரணஞ்செய்க; இவ்வாறு அம்மந்திரங்களோடு செய்த பிராணாயாமம் சர்வ தோஷங்களையும் நீக்கும். இனி ரேசகாதிமூன்றன் சொரூபத்தைக்கேட்பாயாக. தன் பிராணவாயுவை ஆதாரசக்கரத்தினின்றும் குண்டலினீமார்க்கவாயிலாய் மேலேசெலுத்தி நாசிகைவாயிலாய் வெளியாக்கித் தேகவெளியாகாசத்தே இலயம்செய்பல் ரேசகமாம். கமலநாளவாயிலாய் முகத்தால் ஜலத்தையிழுப்பதே போலத் தேகபாகியதேயிருக்கும் வாயுவை நாசிகைவாயிலாய்த் தேகத்துள்ளே யிழுத்தல் பூரகமாம். தப்தபாஷாணத்தின்மேலபட்ட நீர்த்துளி இலயபாவத்தை யடைவதேபோலப் பிராணவாயுவின் உட்கதியையும் வெளிக்கதியையும் தடுத்துத் தேகத்துள்ளேயே இலயம்செய்தல் கும்பகமாம். இனிப்பிரத்தியாகாரமிதுவாம்:— சப்தாதியைந்தையும் முறையே கொள்ளும் சுரோத்திராதி ஐந்து ஞானேந்திரியங்களைத் தத்தம் விடயத்தே இம்மனமே யேவும். இச்சஞ்சலமனத்தை ஆன்ம விசாரபலத்தால் தடைப்படுத்திச் சுரோத்திராதிகளைத் தடைப்படுத்தல் பிரத்தியாகாரமாம். சூரிய கிரணம் சூரியனினின்றும் பின்னமல்லாததேபோல, இச்சம்பூரண திருசியப்பிரபஞ்சம் சேதன ஆன்மாவினின்றும் பின்னமன்றும் என்னும் திருஷ்டியால் மனசகித இந்திரியத்தைத் தடைசெய்தல் பிரத்தியாகாரமாம். இதனை யாஞ்ஞவற்கிய முனிவரும் கூறியுள்ளார்:—

"யதீ₃யதீ₃ பஸ்யதி தத்த₃வ₂ம்வபெ₁யோஷ்டா தா₃மைதூ₃மா |
ப்ரத்யாஹாரஸ் ஸ அவெ₁ாக்தோயொமவித்₃ஃ₃ ஃ₂ஃ₃மைதூ₃மிஃ ||

"திகழ்தரு யோகி யெவ்வெத் திருசியந் தம்மைக் காணும்
புகழ்தா அவைக டம்மைப் பூரண சிவமே தென்று

நிகழ்தரக் காணும் யோக நெறியினி னின்றமேலோர்
இகழ்வறு பிரத்யா கார மென்றிதை யியம்பி னரால்.''

(பொ-ள்.) யோகியானவன் எவ்வெப்பொருளைக்காண்பனே அப்பொருள் யாவற்றையும் ஆன்மரூபமாய்க்காண்க. யோகவேத்தாக்கள் இதனையே பிரத்யாகாரமென்றனர். வேதத்தினின்றும் பாகியமாயமதத்தைப் பரித்தியாகித்துச் சர்வவேததாற்பரியத்தைவிடயரூபஞ்செய்து அந்த ஆன்மவஸ்துவைச் சிந்தனஞ்செய்தல் தருக்கமாம். சோரனைக்காணுத புருடனையே சோரன் அநர்த்தஞ் செய்வதேபோல விசாரதிருஷ்டியால் மனதனைக்காணுதவனையே மனம் சங்கற்ப விகற்பரூப அநர்த்தத்தை யடைவிக்கும்; என ஆராய்ந்து மனத்தை அந்த ஆநந்தரூப ஆன்மாவின்கண்ணே நிறுவி அசைவறுத்தல் தாரணையாம். தாரணைசெய்த ஆநந்தரூப ஆன்மாவின்கண்ணே அநாத்மாகார விஜாதீயவிருத்திகளின் வியவதானமின்றி நிரந்தரம் தைலதாரையைப்போலச் சஜாதீயவிருத்திகளின் பிரவாகமுண்டாக்கல் தியானமாம். அந்த ஆன்மவடிவ ஆநந்தத்தைக்கவர்ந்து தியாதா தியானம் தேயம் என்பனவாதி சர்வ துவைதப்பிரபஞ்சத்தின் அநாதரவாமவஸ்தையே சமாதியாம. இதன் வடிவத்தைக் கீதையின்கண்ணும் ஸ்ரீ பகவானருளிச்செய்துளார். "யம்லப்த்வா சாபரம் லாபம் மந்யதே நாதிகம் தத: ।" எவ்வறிஞன் எவ்வான்மரூப ஆநந்தத்தையடைந்து அதனினும் அதிகமாக ஒரு அயல் இலாபத்தைக்கருதானே. இத்துணையானே பிராணயாமாதி ஆறு சாதன நிரூபணமாம். இனி யோகிபரித்தியாகிக்கத்தக்க பொருளை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! ரோகியானவன் ரோகத்தை நீக்கும்பொருட்டுக் குபத்திய வஸ்துவைப்பரித்தியாகிப்பதேபோல, யோகியுட யோகசித்தியின்பொருட்டுப் பயம் குரோதம் ஆலசியம் என்னும் மூன்றையும் பரித்தியாகஞ்செய்க. மிகு நித்திரையையும், மிகு நனைவையும், மிக்க வுணவையும், மிக்க வுணவின்மையையும், பரித்தியாகஞ்செய்க; மற்றேர் யுக்தியோடுமவற்றைச்செய்க. இப்போது பிராணயாமம் செய்வதை நிரூபிபபாம்:—ஹே மைந்த! பிராணயாமஞ்செய்யும் விதத்தை வேதவேத்தாக்கள் இவ்வாறு கூறியுள்ளார்கள்:—யோகி முதலில் தன் வலது நாசியை விரலால் தடைசெய்து இடதுநாசி வாயிலாய்ப் பாகியவாயுவை யிழுத்து உட்டரிக்குக. மீண்டும் அவ்வாயுவை வலதுநாசி வாயிலாய்ப் பையப்பையவெளியே பரித்தியாகம்செய்க இவ்வாறு இடதுநாசியை விரலாலடைத்துக்கொண்டு வலதுநாசி வாயிலாய்ப் பாகியவாயுவை யிழுத்து உட்டரிக்குக. மீண்டு அவ்வாயுவை இடதுநாசிவாயிலாய்ப் பையப்பைய வெளியில்விடுக. பூரக கும்பக ரேசகமென்னும் மூவகைப்பிராணயாமங்களையும் யோகி ஓங்காரரூபப் பிரணவமந்திரத்தானே செய்க, அதன் எண்ணிக்கைமாத்திரையானே துணியப்பெறும். முதலில் ஏகமாத்திரை பூரகம்செய்க, இருமாத்திரை ரேசகம்செய்க, நான்குமாத்திரை கும்பகம் செய்க; இவ்வாறே 2—3—4—5 மாத்திரை முதற்கொண்டு மேன்மேற் பூரகாதிகளைப் பைப்பையப்பெருக்குக. யாண்டும் பூரகத்திலும் இருமடங்கதிகம் ரேசகம் செய்க. அதனினும் இருமடங்கதிகம் கும்பகம்செய்க. மார்க்கண்டேய புராண முறையாய் மாத்திரையினளவிதுவாம்:—தடையின்றிப் பன்னிரண்டுமுறை இமைக்கொட்டுங்காலம் மாத்திரையாம்; தடையின்றிப் பன்னிருமுறை [illegible]

## [illegible] உபநிடதத்தின் தாற்பரியவருணனம்.

காலம் மாத்திரையாம், தடையின்றிப் பன்னிருமுறை இலகு அக்ஷரத்தை உச்சாரணஞ் செய்யுங்காலம் மாத்திரையாம். வசிஷ்ட சம்ஹிதை முறையிதுவாம்:— பூரகாதிப்பிராணாயாமங்களில் 16 முதலிய முறை பிரணவமந்திரத்தை ஆவிருத்தி செய்தல் மாத்திரையாம். யாஞ்ஞவற்கியரோ, தடையற மும்முறை சொடிக்குறிரை, மும்முறை முழந்தாள்மீது கரம்பிறட்டல், மும்முறை தாளியடித்தல் செய்யுங்காலம மாத்திரையென்பர். மாண்டூக்கிய உபநிஷத்தின்கண்ணும் பிறசின உபநிடத்தின்கண்ணும் பிரணவத்தின் அகார உகார மகார அர்த்தமாத்திரையென்னும் 4 அவயவங்கட்கே மாத்திராரூபக்கூற்றும். நாதபிந்து உபநிடதத்தின்க்ண்ணே அகாராதி 4 மாத்திரையுள் ஒவ்வொரு மாத்திரையின் உதாத்த, அநுதாத்த, சுவரிதமென மும்மூன்று அவயவங்கள் கற்பனைசெய்து 3 மாத்திரைகட்கும் 12 பேதங் கூறப்பெற்றுளது. இவ்வாறு நூற்களில் வேறு வேறாய்க் கூறப்பெறினும், ஈண்டுத் தடையற மும்முறை தாளியடித்தலிலேகுங்காலமே மாத்திரையென்றுணர்க. பிரணவாதி மந்திரத்தோடாற்றும் பூரகாதிப் பிராணாயாமத்தை ஒரு மாத்திரையானே அனுஷ்டிக்கும் யோகி ஆகாச தத்துவத்தின் அதிபதித் தன்மையையடைவன். 2 மாத்திரையானே வாயு தத்துவ அதிபதித் தன்மையையடைவன். 3 மாத்திரையானே அக்கினிதத்துவ அதிபதித் தன்மையையடைவன். 4 மாத்திரையானே ஜலதத்துவ அதிபதித்தன்மையையடைவன். 5 மாத்திரையானே பிருதிவிதத்துவ அதிபதித்தன்மையையடைவன். இவ்வாறு அப்பயில்வின் திடத்தால் யோகிகட்குப் பஞ்சபூத ஜயரூபபலம் பிராப்தியாம். அப்பயில்வு சிதிலமாக்கப்பெற்றவர்க்கு அப்பல முண்டாகாதாம். மீண்டுமந்தயோகி அந்தப் பிரணவமாத்திரைகளில முறைப்படி சப்தாதி பஞ்சதன்மாத்திரைகளை ஆரோபித்துச் சிந்தனைசெய்க. அதனால் அந்த யோகிக்கு நிர்விசேஷப் பிரஹ்மரூபமாகச் சிந்திக்க யோக்கியமாய அர்த்தமாத்திரைவடிவப் பிரணவத்தின் அப்பியாசப்பிராப்தியாம். அந்தத் தியானவகை யிதுவாம்:—ஆண்டுப் பிருதிவிதத்துவதாரணத்தே சிந்தனை விடயமாதலின் பார்த்திவப்பெயரை அடைவுற்ற பிரணவத்தை யோகி சப்தாதி பஞ்சதன்மாத்திரைரூபத்தானே தியானம்செய்க. ஜல தத்துவதாரணத்தே வாருணநாமப்பிரணவத்தை நான்கு தன்மாத்திரைரூபத்தானே தியானம்செய்க. அக்கினி தத்துவதாரணத்தே ஆக்நேயப் பெயரிய பிரணவத்தை மூன்று தன்மாத்திரைரூபத்தானே தியானம்செய்க. வாயுதத்துவதாரணத்தே மாருதப்பெயரிய பிரணவத்தை இரண்டு தன்மாத்திரைரூபத்தானே தியானம் செய்க. ஆகாசதத்துவதாரணத்தே ஆகாசப்பெயரிய பிரணவத்தை ஒரு தன்மாத்திரைரூபத்தானே தியானம்செய்க. இவ்வாறு பயின்று யோகியின் மனம் சஞ்சலமற்றுத் திரமாங்கால், அர்த்தமாத்திரைரூபப் பிரணவத்தைப் பிரஹ்மரூபத்தானே சிந்தனஞ்செய்க. அல்லது யோகி தனது மனத்தை நிச்சலமாக்கும்பொருட்டுப் பிராணாயாமகாலத்தே தத்தம் வியாபாரத்தோடு பிராண அபானாதிகளைத் தியானம் செய்க. இப்போது தியானவகையை நிரூபிப்பாம்:—பிராணாதி [illegible] வியாபாரங்களைப் பூர்வம் கர்ப்ப உபநிடதத்தே [illegible] அவற்றை மீண்டு மிங்கே கூறவில்லை. [illegible]

[illegible] கூறுமிடத்து [illegible] 1036 பிர [illegible] அவற்றின்கண் சஞ்சரிக்கும் பஞ்சப்பிராணன்களும் ஹம்சமந் திரரூப [illegible] வியாபாரமாம். 'ஹம்ஸ:' என்னும் மந்திரம் ஹகாரம் மகாரம் அகா [illegible] விசர்க்கம் என்னும் ஐந்தவயவங்களுடையதாம். வேறு சாஸ்திரத்தோ [illegible] ஹம்சமந்திரத்தின் எண்ணிக்கை 21600 எனக் கூறியிருப்பினும், உபாதியாலாக்கப் [illegible] பேதத்தை யங்கீகரித்து அதன் எண்ணிக்கை 113180 எனச் சம்பவிக்கும்; [illegible] பஞ்சப்பிராணன்களுள் ஒவ்வொரு பிராணனுக்கு 21600 ஹம்ச மந்திர வியாபாரமாம், ஐந்தாய்ப்பெருக்கவே 108000 எண்ணிக்கையாம். 1036 நாடிகளில் சஞ்சரிக்கும் பஞ்சப்பிராணன்களின் எண்ணிக்கை நாடிகளின் எண் ணிக்கையால் ஐந்தாய்ப்பெருக்கவே 5180 எண்ணிக்கையாம். இருவகை எண் ணிக்கையையும் ஒன்றுகூட்டி எண்ணவே 113180 எண்ணிக்கை சித்தமாம். இத் [illegible] ஹம்சமந்திரம், அவற்றின் சாதாரண வியாபாரமாம். குதமுதல் களம்வரை யிருக்கும் உடம்பு 30 அங்குலபரிமாணமாம. அதன்கண்ணிருந்து ஐந்து வாயு ஹம்சமந்திர உச்சாரணம் செய்யுமாதலின், ஹம்சமந்திரரூபகாரிய ஆரம்பகத் தன்மைக்கு 30 அஙகுல அளவுடைத்துளேயே பிரயோஜகமாமாதலின் அந்த ஹம்சமந்திரம் அவற்றின் சாதாரண வியாபாரமாம். அவற்றுள்ளும் முக நாசி [illegible] யின்கண்ணே சஞ்சரிக்கும் வாயு ஹம்சமந்திரரூப வியாபாரத்தே பிரதான காரணமாம். இதனானே சாஸ்திரவேத்தாககள் அவ்வாயுவைப பிராணனெனக் கூறுவர். வேறு வாயுக்கள் அதன்கண்ணே கௌணகாரணமாமாதலின் நூலுண [illegible] தோர் அவற்றை அபானவியானாதி நாமங்களாற கூறுவர். இனித்தியானம் செய்யும்பொருட்டு அவற்றின் குணங்களையும் ரூபங்களையும வருணிப்பாம்:—ஹே [illegible]! பிராணாதி பஞ்சவாயுக்களுள், பிராணனே இருதயத்திருக்கும், அபா னன் குதத்திருக்கும், சமானன் நாபியிலிருக்கும், உதானன் கண்டத்திலிருக்கும், வியானன் சர்வ சரீரத்துமிருக்கும். பிராணன் சிவப்புமணிபோலச் சிவப்புவருண மாம். அதனதீனமாய அபானன் இந்திரகோப ஜந்துவைப்போல அத்தியந்தச் சிவப்பாம். அதனதீன சமானன் பால்போலும், வெண்படிகமணிபோலும் வெண் மையாம். அதனதீனஉதானன் அற்பப்பாண்டுவர்ணமுடையதாம். அதனதீன வியானன் அக்கினியின் சிகைபோலும் வர்ணமுடையதாம். இவ்வாயுக்களின்பால சிவப்பு முதலிய ரூபங்கள் சம்பவியாவாயினும், அவற்றை யிவற்றின்கண்ணே ஆரோபித்துத் தியானம்செய்க என்னும் பொருளின்கண்ணே மறையின் கருத் தாம். ஞானசக்தியையுடைய மனமும், கிரியாசக்தியையுடைய பிராணனும் இத்தேகத்தே யொன்றாயிருக்கும், வெளியேயேகும், ஒன்றைவிட்டொன்றிரா. [illegible] ' பிராஞைவடிவ இம்மனமும் பிராண னும் இத்தேகத்தே ஒன்றாயேயிருக்கும், மரித்தபின் அவ்விரண்டும் ஒன்றாகவே தி [illegible] சேரும்,' என மறையு மறைகின்றது. இவ்வார்த்தையை இந்நூ [illegible] கம் [illegible] விஸ்தாரமாய்க் கூறிவந்தேமாதலின், மனம் எவ்விடத் [illegible] ண [illegible] விருக்குமோ அவ்வவ்விடத்தே பிராணனுமிருக்கும் [illegible] மக் [illegible] ரு [illegible] த்

மார்க்கத்தைத் தியானிப்பன்; அதனால் இத்தேகத்தினின்றும் வெளிக்கிளம்பிப் பிரஹ்மலோகத்தையடைவன். இப்போது அம்மார்க்கத்தைத் தக்கூறுவாம் [illegible] கும்! இத்தேகத்தே மூலாதாரத்தின்மேல் நாபி சக்கிரம், அதன்மேல் இருதய கமலம், அது சுழும்னைநாடிரூபமார்க்கத்தானே சம்பந்தமாமாதலின் பிரஹ்ம லோகத்திற்குத் துவாரரூபமாம். அந்நாடி அவ்வியோகியின் பிராணமன [illegible] ரூபமாம்: அம்மார்க்கம் 10-வது துவாரத்தையடையும். சூரியமண்டலத்தின் உச்சியிலுள்ள சந்திரமண்டலத்தேயிருக்கும் பாகியசித்திரத்தோடு [illegible] துவாரம் அபேதமாம். தீவிர வைராக்கியமற்ற யோகியும் சுழும்னை [illegible] லாய்ப் பிரஹ்மலோகமுற்று வைராக்கியமடைந்து மோக்ஷத்தையடைவன். [illegible] வைராக்கிய யோகியோ அம்மார்க்கத்தினின்றும் வெளியாங்காலத்திலேயே [illegible] மோக்ஷத்தையடைவன், பூர்வம் ஹம்சமந்திரரூப வியாபாரத்தோடுற்ற பிராணன் களின்றியானத்திற்கும் அந்நாடி மார்க்கத்தே புகுந்து பிரஹ்மலோகத்தைப் [illegible] விதேகமுக்தியையேனுமடைதலே பலமாம். யோகி பிரணவமந்திரத்தானே பிரா ணுயாமஞ்செய்யும்போது அதன் அகார உகார மகார அர்த்தமாத்திரையென்னும் நான்கு மாத்திரைகளையும, அவற்றின் முறைப்பொருளாய வைசுவானர இரணிய கருப்ப ஈசுர துரியமென்பவற்றையும் சிந்தனஞ்செய்க. அல்லது புருடனைத் [illegible] னது மனவாஞ்சிதகிராமத்தையடைவிப்பதேபோல அதிகாரிக்குப் பிரணவமந்திர மும் மனவாஞ்சிதலோகத்தை யடைவிக்குமாதலின், அம்மந்திரத்தைத் தேர் [illegible] மாய்த் தியானம்செய்க. விஷ்ணுவடிவப்பரமான்மா அந்தரியாமிரூபமாய்ப் பிரண வத்தேரை ஏவுபவராதலின் அவரைச்சாரதியாய்த் தியானிக்குக. அத்தோற்ற [illegible] மனுக்கு ஹிரணியகருப்பரூபச் சகுணப்பிரஹ்மப்பிராபதியாம், நிட்காமனுக்கு நிர் குண சுத்தப்பிரஹ்மப்பிராப்தியாமாதலின் அவற்றை யடையத்தக்க ஸ்தானரூப மாய்த் தியானிக்குக. இவ்வாறு யோகம்பயிலவதில் அநேக இடர் அடைவுறுமாத லின் அவற்றை நீகக்கும்பொருட்டு யான் உருத்திரரூபனென அபேதரூபமாய் ருத்திரபகவானைத் தியானஞ்செய்க; அதனால் சர்வ விக்கினநீக்கமுண்டாம். பிராணுயாமகாலத்தே பாத அங்குஷ்ட அக்கரபாக முதற்கொண்டு பிராணனை மேலேயிழுத்தல் மிகக்கடினமாமாதலின் அதைச்சூக்ஷமம் எனப்பெயரிட்டழைத் தனர். அங்குஷ்டத்தைக்குறித்து மூலாதாரத்தினின்றும் பிராணனை மேலே யிழுத்தல் சுகமமாமாதலின் அதைத் தூலம் எனப்பெயரிட்டழைத்தனர். அதனைக் குறித்தும் நாபிசக்கிரத்தினின்றும் மேலேயிழுத்தல் அத்தியந்தம் சுகமமாமாத லின், அதை அதிதூலமென் றழைத்தனர். இத்துணையானே யோகாப்யாசம் நிரூபிக்கப்பட்டது. இப்போது அதன் பலத்தை நிரூபிப்பாம்:—[illegible] முற்கூறிய முறையே யோகத்தைப்பயில்பவனுக்கு மூன்று மாசத்தின்பின்னர் [illegible] ரதேயத்திருக்கும் திவ்ய விஷயங்களின் ஞானமுண்டாம். 4 மாதங்கழிந்த [illegible] திராதிதேவதைகளைக்காண்பதினும் ஆற்றலுடையவனுவன். 5 மாதங்கழிந்த [illegible] சம்பூரணவிடய சுகங்களையும் துச்சமென வுணர்ந்து வைராக்கிய[illegible] [illegible] 6 மாதமானபின் அதன் மகிமையானே தாயமனத்தினனுகி [illegible]
[illegible]

பிரஹ்மநிஷ்ட குரு சமீபத்தையடைந்து அவர் வாயிலா யொருமுறை மகாவாக்கியத்தைச் சிரவணித்துச் சம்சயவிபரீதமற்ற ஆன்மசாக்ஷாத்காரத்தையடைவன். அடைந்து ஜீவித அவஸ்தையிலேயே மோக்ஷத்தையடைவன். இப்போது ஜீவன் முக்தரிலக்கணத்தை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! ஜீவன் முக்தன் சர்வ பதார்த்தங்களிலும் அதிஷ்டானரூபமாய ஆன்மவடிவத்தையே காண்பனுதலின் நேத்திராதிகளால் ரூபாதிகளைக்காணினும் காணான். தன்றேகத்தையும் காய்ந்த காஷ்டம்போல வுணர்ந்துபேக்ஷிப்பன். இத்தகையபலத்தை யடைந்தபின்னர் முற்கூறிய சர்வ உபாயங்களையும் பரித்தியாகிக்க; ஏனெனின், எல்லா வுபாயங்களும் பலப்பிராப்தியின்பொருட்டேயாம், பின்போ அவற்றிறகு யாதொரு பயனுமின்றுமாதலின் மார்க்கத்தே நடப்பவன் ஓடமேறி நதிககரை யடைநதவுடன் ஓடம்விட்டுப்போவதேபோல அதிகாரியும் ஜீவன்முக்திரூபப்பலத்தை யடைந்தவுடன் லேசரூபச் சர்வ உபாயங்களையும் பரித்தியாகிபபன். இவ்வாறு அமிருதநாத உபநிஷத்தின்கண்ணே யோகசாதன நிரூபணஞ்செய்யபபெற்றுளதைக் கூறினேம். இப்போது ஹமச உபநிடதத்தே யோகசாதன நிரூபணமாமாறு கூறுவேம் சாவதானமாய்க்கேட்பாயாக:—யோகாப்பியாச சித்தியின்பொருட்டு முதலில் ஆறு சக்கிரத்தைக்கூறுவாம். ஹே மைந்த! இத்தேகத்தே பாயுஸ்தான முதலாகப் புருவவிடை யிடமீறாக ஆதாரசக்கிரம், சுவாதிஷ்டான சக்கிரம், மணிபூரகசக்கிரம், அநாகதசக்கிரம, விசுத்தசக்கிரம், ஆஞ்ஞாசக்கிரம், என ஆறு சக்கிரங்கள் உள்ளன. ஆதாரசக்கிரமாவது:—பாயுஸ்தானததினின்றும் இரண்டங்குல மேல் இருப்பதாம், இஃதே முன் கருபப உபநிடததேத தேகமதத்திய தேசரூபத்தானே வருணிக்கப்பட்டது. இது நான்கு தளமுடையதாம, செவ்வரத்தின் ரச சமானவர்ணமுடையது, அந்நான்கு தளததே பிரதக்ஷிணைககிரமத்தானே யிருக்கும் 'வம், ஶம, ஷம், ஸம' என்னும நான்கு அக்ஷரஙகளால் சோபாயமானமாம், குண்டலினீரூப சர்பபிணியின் வாலோடுகூடியதாம், பெருச்சாளியை வாகனமாகவுடைய ஸ்ரீ கணபதியென்னும் தேவதையோடுகூடியது. சுவாதிஷ்டான சக்கிரமோ, ஆதார சக்கிரத்தின்மேல உபஸ்தத்தின் மூலதேயத்தேயிருக்கும். அது ஆறுதளமுடையதாம், பொன்போன்ற மஞ்சள் நிறமுடையதாம், அத்தியந்தம் தேஜசுடையதாம். ஆறுதளத்தே பிரதக்ஷிணைக்கிரமத்தானேயிருக்கும் 'பம், பம், மம், யம், ரம், லம், என்னும் ஆறு அக்ஷரங்களால் சோபாயமானமாம், பிரஜாபதித்தேவதையோடு கூடியதாம. மணிபூரக சக்கிரமோ, சுவாதிஷ்டான சக்கிரத்தினும் மேல்நாபிஸ்தானத்தேயிருக்கும. அது பத்துத்தளத்தையுடையதாம், இந்திரநீலமணி யொப்பான வர்ணமுடையதாம், சூரிய சந்திர சமான தேஜசையுடையதாம், பத்துத்தளத்தே பிரதக்ஷிணைககிரமத்தானே யிருக்கும் 'டம், டம், ணம், தம், தம், தம், தம், நம், பம், பம்' என்னும் பத்தக்ஷரங்களாற் சோபாயமானமாம், விஷ்ணு தேவதையோடு கூடியதாம். அநாகதசக்கிரமோ, மணிபூரகசக்கிரத்தினும்மேல் இருதயதேயத்தேயிருக்கும். அது கோவின் பாற்போல் வெண்மையதாம், மனநேத்திரங்கட்கு ஆநந்தத்தை யடைவிப்பதாம்; பன்னிரண்டு தளத்தே பிரதக்ஷிணைக்கிரமத்தானேயிருக்கும், 'கம், கம், கம், கம், ஙம், சம், சம், ஜம், ஜம், ஞம், டம், டம், என்னும் 12 அக்ஷரங்களாற் சோபாய

மானமாம், ருத்திரதேவதையோடுகூடியதாம். விசுத்த சக்கிரமோ, அநாகத சக்கிரத்தின்மேல் கண்டதேசத்தேயிருக்கும். அது விசித்திர வர்ணமுடையதாம், 16, தளமுடையதாம், 16ன்கண்ணே பிரதக்ஷிணக்கிரமத்தானேயிருக்கும் ‘அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ரு, ரூ, லு, லூ, ஏ, ஐ, ஓ, ஔ, அம், அ:’ என்னும் 16 சுரங்களாற் சோபாயமானமாம், ஜீவான்மாவிருக்குமிடமாம். ஆஞ்ஞாச் சக்கிரமோ விசுத்த சக்கிரத்தின்மேல் இருபுருவத்திடையிருக்கும். அது சிறிது சிவப்பாம், இருதளமுடையதாம், சூரிய சந்திரசமான ‘ஹம், க்ஷம்’ என்னு மிரண்டு அக்ஷரங்களையும் இருதளங்களிலும் உடையதாம், பரமான்மாவிருப்பதறகிருப்பிடமாம். ஹே மைந்த! இத்தேகத்தே மத்தகத்தில ஆயிரம் தளமுடைய பதுமமிருக்கின்றது; அது அமிருதத்தைப்பொழியும சந்திரனை கர்ப்பத்திலுடைத்தாயது, அதன் கர்ணிகை பத்தாவது துவாரத்தையடைந்துளது, அத னமிருதத்தானே செய்யப்பட்ட திருப்தி ஆறு சக்கிரங்களிலிருக்கும், ஜீவான்மா அப்பதுமத்தின் அம்சமாம். அம்சரூபத்தன்மை யதறகிவ்வாறும் :—சப்தம உரைப்பதன் அனுசாரமாயே பறவைகட்குப பெயருண்டாம், காகாவெனக கரையும பறவை காகமெனப் படலேபோல, ஜீவான்மாவும் இருதய கமலத்தேயும ஆதாரசக்கிராதிகளிலேயும் பிராணனோடிருந்துகொண்டு இராப்பகல 21600 சுவாசப பிரசுவாசங்களால் ஹம்ஸ என்னும மந்திர உச்சாரணஞ் செய்யும. ஹகாரத்தானே பிராணன் முக நாசிகைவாயிலாய் தேகத்தினின்றும வெளியேவரும, சகாரத்தானே உள்ளே போம் இவ்வாறு ஜீவான்மாப பிராணனால எப்போதும ஹம்சமந்திர உச்சாரணஞ் செய்யுமாதலின் சுருதிபகவதி இதனை ஹம்ச என்றழைத்தனள். இப்போது தியானஞ்செய்யும்பொருட்டுச சீவரூப ஹம்சத்தைப பறவை வடிவமாய் வருணிப்பாம்:— ஹே குமர! ஒரு பறவை விசேஷம ஹம்சமாதலின் ஜீவான்மாவின்கண்ணே அதனருத்தப் பொருத்தமாகுவான் வேத வேதததாககள் ஜீவான்மாவைப பறவை வடிவமாய் வருணிப்பா. போக்தாரூப அக்கினியும், போக்கியரூப சோமமும் இரு பக்ஷங்களாம், பிரணவம் சிரமாம, மூல சக்தியின் கிரியாசக்தியையுடைய பரிணமபிந்து இருதயமாம், ஸ்ரீ மகாதேவரது முகம சூரியன் அக்கினிசோமன் என்னும் மூன்று நேத்திரங்களோடு கூடியிருத்தலபோல இதுவு முடைத்தாயிருக்கும், ஒரு கால் ருத்திரரூபமாம்; மற்றொருகால ருத்ராணிரூபமாம. இத்துவம்பதார்த்த ஜீவரூப ஹம்சமே தற்பதார்த்தபபரப்பிரஹ்மரூபமாம. நிருபாதிக திருஷ்டியானே ஜீவாம்சம் நிர்க்குணப் பிரஹ்மரூபமாம, சோபாதிக திருஷ்டியானே சகுணப் பிரஹ்மரூபமாம். இதுவும் வாமபாகத்தே அக்கினிரூபமாம், தக்ஷிணபாகத்தே சோமரூபமாம். கோடி சூரியனுக்கொப்பாய தேஜஸையுடையதாம், நகமுதற் சிகைபரியந்தம் சர்வ சரீரத்தும் வியாபித்து நிற்கும்; நின்றபோதினும் இருதய கமலத்தே விசேடமாய் நிற்கும்; ஆண்டும் அஷ்டதளபேதத்தானே எண்வகையிருப்பாம், அம்மகிமையானே நனுக்கனுக்களில் புண்ணிய புத்தி முதலிய காரியங்களினுற்பத்தியுண்டாம். இனி யிதையே வெளிப்படையாக்குவாம் :—கிழக்கு முதலிய எட்டுத்திசைகளின் பக்கமாய் முறையே அஷ்டதளங்களிருக்கும். ஆண்டு மனத்தோடுகூடிய ஜீவாம்சம் கிழக்குத்தளத்தின்மீதிருக்குங்கால் அறமியற்று

மதியாம். அக்கினிகோணத்தின் மீதிருக்கும்போது நித்திரை யாலஸியாதி விகாரமுண்டாம். தக்ஷிணதளத்தின்மீதிருக்கும்போது குரோதாதி விகாரமுண்டாம் நைருதிகோணத்தளத்தின்மீதிருக்கும்போது மறமாற்றுமதியுண்டாம். பச்சிமத்தளத்தின்மீதிருக்கும்போது நானாவகை வியவகாரஞ்செய்வதன்கண்ணே பிரீதியுண்டாம். வாயுகோணத்தளத்தின்மீதிருக்கும்போது ஒரு தேசத்திற்குச்செலலும் வேட்கையுண்டாம். உத்தரதளத்தின்மீதிருக்கும்போது ஸ்திரீ சம்போகத்தேயவாநிகழும். ஈசானகோணத்தளத்தின்மீதிருக்கும்போது தானத்தே பிரீதியாம். மத்தியதேடத்தேயிருக்கும்போது சாதாரண ஹம்சம் பாலையும் நீரையும் பகுத்தல்போல ஜீவாம்சமும் சத்திய அசத்திய வஸ்துக்களின் விசாரத தானே சர்வ விடயத்தினின்றும் வைராக்கியத்தையடையும். கேசரத்தின்கண்ணேயஃதிருக்கும்போது நன அவஸ்தையினடைவாம், காணிகையின் கண்ணிருக்கும்போது கன அவஸ்தையினடைவாம், கர்ணிகையின் மத்தியிலிருக்கும் சிவப்பு நிறமுடைய உதிரபிண்ட விசேடத்தேயிருக்கும்போது துயிலவஸ்தையாம். யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேன் என்னும் பூரணதிருஷ்டியானே பரிச்சின்ன இருதயகமல அபிமான பரித்தியாகஞ்செய்யும்போது மூன்றவஸ்தைகளைக்குறித்துத் துரியமென்னும் அவஸ்தையையடையும். இனித் துரீயாதீதமெனப் பெயரிய பஞ்சம அவஸ்தையைக் கூறும்பொருட்டு முதலில அத்துரிய அவஸ்தையின் கண்ணே நனவு முதலிய மூவவஸ்தையினின்றும் மேன்மையைக்கூறுவாம்; அத்துரியத்தே ஆன்மாவாகிய ஞேயவஸ்து ஞாதாவாகிய யோகியினின்றும் பின்னமாய்ப் பிரதீதியாம; ஏனெனின அந்த யோகி யோகப்பயில்வின வலிமையால் சவிகற்பசமாதியையும் நிர்விகறப சமாதியையும் அடைவன். ஞாதா, ஞானம், ஞேயம், தியாதா, தியானம, தேயம; என்னுந திரிபுடி தோறறுவது முதலதாம், மாறுயது இரண்டாவதாம. திரிபுடிவிளங்கும் வாயிலாயப் பிரஹ்மாகார விருத்தியிருக்குங்கால் யோகி துரீய அவஸ்தையையுடையவனுவன். அத்திரிபுடி அத்விதீயப் பிரஹ்மரூபநாதத்தே இலயமாஙகால் துரீயாதீத அவஸ்தையையுடையவனுவன். சருத்திதுவாம்:—ஓங்காரத்தின்கண்ணே அகார உகார மகார பிந்து நாதம என்னும் பஞ்ச அவயவமிருக்கும. அகாராதி மூன்றவயவமோ முறையே விசுவ தைஜசப்பிராஞ்ஞர்களின் வாசகமாம. அர்த்த மாத்திரைரூபப் பிந்துநாதங்கள் பிரஹ்மவாசகங்களாம். அவறறிலும் பிந்துவோ சகுணபிரஹ்மவாசகமாம. நாதமோ நிர்க்குணவாசகமாம். இத்தகைய துரீயாதீத அவஸ்தையை அநேக விரக்தர்களுள்ளும் ஒருவனேயடைவன்; யாவருக்குங்கிட்டாதாமாதலின் இஃதத்தியந்தந் துர்லபமாம். இவ்விஷயம் கீதையின்கண்ணும் ஸ்ரீ பகவானுல் கூறபபெற்றுளது.

"மநுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஶ்சித்யததி ஸித்தயே ।
யததாமபி ஸித்தாநாம் கஶ்சிந்மாம் வேத்தி தத்த்வத: ॥"

"மாயுமானுடரநேகர்பா லொருவனேயென்னையாயுமனம்வைத்துளா
ருயுமானுடரநேகர்பா லொருவனேயறிந்துமுடிவானேயா."

(பொ-ள்.) அநேகமாயிரம் மனுடருள் ஒருவனே என்னை யடைவான் முயல்வன், அவருள்ளும் ஒருவனே அத்விதீயப் பிரஹ்மமாகிய என்னை வாஸ்தவவடிவமாயுணர்வன். இப்போது அத்துரீயாதீத அடைவின்பொருட்டு யோகரூப உபாயத்தை நிரூபிப்பாம் :—ஹே மைந்த! யோகி முற்கூறிய முறையே இத்தேகத்தே ஆறுசக்கிரத்தோடு ஜீவரூப ஹமசவடிவத்தை யறிந்து முதலில தனது சொரூப சிந்தனஞ்செய்க. அதன்பின்னத விதீயப பிரஹ்மரூப நாதத்தைச சிந்தனஞ்செய்க. ஆதார சக்கிரமுதல தசமத்துவார பரியநதம வியாபகரூபததானும அத்தியந்தம் சுவேத ரூபத்தானும் அதவிதீயப பிரஹ்மததைச சிநதனஞசெய்க. இவ்வாறு அதன்கண்ணே மனத்தை யொருமைப்படுததி யோகிதன்பாயுவையும் உபஸ்தத்தையும் சுருக்குக, பின்பாத அங்குஷ்ட அகரபாக முதல் பிராணவாயுவை மேலே யிழுத்து முதலில் ஆதாரசக்கிரத்தே ஸ்தாபனஞ்செய்க, பின்னா, பையப்பைய சுவாதிஷ்டான சக்கிரததே ஸ்தாபனஞ்செய்க, அதன் நாறபுறததினும் பிராணவாயுவை மூவலம செய்விக்க, பின்மணி பூரகசக்கிரததே ஸ்தாபனஞ்செய்க, பின்னுகத சக்கிரத்தே ஸ்தாபனமசெய்க, பின விசுதத சககிரததே ஸ்தாபனஞ்செய்க, பின்னுஞ்ஞாசக்கிரத்தே ஸ்தாபனஞசெய்க, பின்றசமத்துவாரத்தே ஸ்தாபனஞ்செய்க; இங்ஙனம் யோகி யோகபபயிலவின பலததால பிராணவாயுவை மேலே செலுத்துக ஜீவரூப ஹம்சத்தைத தியாதரூபமாய்ச சிந்தனஞ்செய்க, பிரஹ்மரூப நாதத்தைத தியேயரூபமாய்ச சிந்தனஞசெய்க. இருஷி, சநத, தேவதைகளோடுகூடிய ஹமசமநதிரததை ஒருகோடியெண்ணிக்கையளவு ஜபம்செய்க, செய்யவே யோகியின சரீரததுள் யோகபல சித்தியின் கண்ணே விசுவாசஞ்செய்விக்கும், சிணிநாதம, சிணிசிணிநாதம், கண்டாநாதம், சங்கநாதம், தந்திரீநாதம், தாலநாதம, வேணுநாதம, பேரீநாதம், மிருதங்கநாதம், மேகநாதம், என்னும பத்துவகை நாதம் உண்டாம். அப்பத்துள்ளும் மேகநாதம், அடிக்கடி பயின்ற யோகிககு வைராக்கிய ஞானாதிகளை யடைவிக்குமாதலின், ஒன்பதையும் விடுத்துமேக நாததததையே நிரந்தரம பயில்க; அதன் பயில்வால் யோகியின் மனம இலயபாவத்தைபடையும, அடையவே, அறம்பாவம் சங்கற்பவிகற்பம் முதலிய மனோ தருமஙகள் இலயத்தையடையும். இவ்வஸ்து எனக்குக் கிடைக்குக என்னும் அபிலாஷை சங்கற்பமாம, சம்சயம் விகற்பமாம். இவ்விக்ஷேபமே ஆன்மாவின் அபபிரதீதியின்கண்ணே காரணங்களாம் அவை இலயமுறவே இவ்வானந்தவடிவ ஆன்மாததன் ஸ்வபபிரகாச சைதன்யரூபத்தானே யெப்போதும் யோகிகட்குப் பிரத்தியக்ஷமாம். இவ்வாறு ஹம்ச உபநிடதத்தே நிரூபிக்கப்பட்ட யோகத்தை நிரூபித்தோம். இப்போது க்ஷுரிகா உபநிடதத்தே நிரூபித்தவண்ணம் யோகத்தை நிரூபிப்பாம் :—சாவதானமாய்க்கேட்டி : ஆண்டு க்ஷுரிகா என்பது சஸ்திரத்திற்காம், அதுபோலச் சமசாரரூப பந்தத்தைச் சேதனஞ்செய்யும் தாரணையைக் கூறுவதிஃதாதலின், இதனை வேதவேத்தாக்கள் க்ஷுரிகையென்றழைத்தனர். யோகி முதலில் அஹிம்சை முதலிய ஐந்து யமங்களைச்செய்க, பின் சௌசாதி பஞ்சநியமங்களைச்செய்க, பின் சப்தாதி விக்ஷேப மற்ற ஏகாந்த தேயத்தே முதலில் தர்ப்பைவிரிக்குக, அதன்மேல் மான்றோலை

விரிக்குக, அதன்மேல் வஸ்திரம் விரிக்குக, அத்தகைய ஆசனத்தின் மேற்பத்மாதி
யாசனங்களையிட்டு யோகியிருக்குக. கூர்மமானது தன்னஸ்தபாதாதியங்கங்களைச
சங்கோசஞ்செய்துகொள்வதேபோல மனசகித நேத்திராதி யிந்திரியங்களைத் தத
தம் விடயங்களினின்றும் நீக்கி இருதய கமலத்தே ஒருமைப்படுத்துக, இதுவே
பிரத்தியாகாரமாம். பின் பன்னிரண்டு மாத்திரையோடுற்ற பிரணவ மந்திரத்தாற
பையப்பையப்பாகிய வாயுவாறறன் றேகத்தைப் பூரணஞ்செய்க, இதுவே பூரக
மாம். பின்யோகி முகநாசிகை முதலிய சர்வ துவாரங்களையும் தடைப்படுத்தி இரு
தயம் முகம் இடை கழுத்து முதலிய சர்வ அங்கங்களையும் நேராய் நிறுத்தி,
அவற்றுள்ளும் இருதயத்தைச சிறிது மேலே வைத்து அதில் பிராணவாயுவைத
தரிக்குக, இதுவே கும்பகமாம். பின் யோகி பிராணனை நாசிகாதி வாயிலாய்த
தேகத்தினின்றும் வெளியே செலுத்துக, இதுவே ரேசகமாம். கும்பகம் இரு
வகையாம். ஒன்றே, பூரகாதி சாபேக்ஷமாம்; மறறொன்றே நிரபேக்ஷமாம். முத
லதை முன்மொழிந்தோம. மற்றதைக் கூறுவான் முதலில் சரீர விசேட அங்கங்
களில் பிராணனது நிரோதத்தை நிகழ்த்துவாம்; இதனையே யாஞ்ஞவற்கியாதி
யோகிகள் தாரணை பிரத்திபாகாரம் என வுரைப்பர். யோகி பூரகாதிகளின்றியே
தியான பலத்தால் பிராணவாயுவை முதலில பாதாங்குஷ்டத்தே நிலைப்படுத்திப
பிரணவ மந்திரரூப மாத்திரைகளை ஜபஞ்செய்து இவ்வகைத்தாரணைகளைச்செய்க
வாமதக்ஷிண பாதக்கணுக்களில அதை ஸ்தாபனஞ்செய்யின் இரு இருமாத்திரை
களை ஜபஞ்செய்க; இருகணைக்காலகளில் அதை நிலைநிறுத்துவதில மூன்று மூன்று
மாத்திரை ஜபஞ்செய்க, இரண்டு முழந்தாள்களில, துடைகளில அதை நிறுத்துவ
தில் இரு இருமாத்திரைஜபிக்குக, குதம் லிங்கம் என்னுமிரண்டில் அதை ஸ்தாப
னஞ்செய்வதில் மூன்று மூன்றுமாததிரை ஜபிக்குக. அவ்விரண்டினிடையில் அஃதி
ருப்பதற்கு ஒரு கந்தமிருக்கின்றது அது நாபித்தேசத்தோடு சம்பந்தமுடையதாம்,
எல்லாருடைய பிற்பாகத்தேயிருக்கும் எத்தீர்க்க என்பாகிய நெறிவாயிலாய்ச
சுழும்நைநாடி தசமத்துவாரத்தையடையுமோ அதைச் சமீபித்திருக்கும், அக்கந
தத்தே யோகி பிராணரூபமாயடைவன். அதன்கண்ணே முற்கூறிய பத்து நாடிக
ளான் மூடப்பட்ட ஒரு சுழும்நைநாடியிருக்கும், மஞ்சள் சிவப்புக் கறுப்புத்
தாமிரலோகித வர்ணமுடையனவும், மிகச் சூக்குமமும், மிக லகுவும் ஆகிய அநேக
நாடிகளிருக்கும். அவ்வியாவறறையும் விட்டு யோகி சுக்கில வாணமுடைய சுழும்
நைநாடியையே யாசிரயம்செய்க. ஊர்ண நாபியானது நூனிறைந்த ஜாலத்தே பிரி
யமாகிய நூலின்கண்ணே சஞ்சரித்து மறறவற்றை விடுவதேபோல அந்நாடி கந
தத்தேயிருக்கும் யோகி எல்லா நாடியையும்விட்டுச் சுழும்நையின்கண்ணே பிராண
னைச்செலுத்துக. பின்னிருதய கமலத்தையடைக, அது சிவட்புப் புஷ்ப சமான
வர்ணமுடையதாம், அதையே வேதாந்தத்தே தஹரபுண்டரீகமென்பர், பின்கண்
டத்தேயிருக்கும் விசுத்த சக்கரத்தையடைக. பின்னாஞ்ஞா சக்கிரத்தையடைக,
பின்னுச்சியிலிருக்கும் ஆயிரந்தளமுடைய பத்மத்தையடைவன். உச்சியிலிருந்து
கொண்டு ஆதாரசக்கிரமுதல் ஆயிரந்தளமுடைப் பத்மபரியந்தம் அச்சுழும்நா
நாடியை நிரந்தரம் தியானஞ்செய்க. இவ்வாறு ஷட்சக்கிரங்களின் பேதனத்
தானே யோகி மனரூபக் கட்கத்தால் தேகாபிமானிகளைப் பந்தனஞ்செய்யும் மர்மத்

தைச் சேதனஞ்செய்க. அக்கட்கம், பிராணரூப இரும்புமய சரீரத்தையுடைய தாம், சகுண நிர்க்குணப் பிரஹ்மதத்தைக்கூறும பிரஹ்மவித்தைரூப சாணையிற் றீட்டி நிர்மல பாவத்தையடைந்ததாம். இதனையே வெளிப்படையாக்குவாம் :—நிர்மல மனமாகிய கூர்மையாய முனையையுடைய வயமாய பிராணவாயுவடிவ கட்கத் தானே யோகி தனது பாததலத்திற்குமேலேயிருக்கும் அங்குஷ்டம் கணுமுதலிய மாமங்களைச் சேதனஞ்செய்க. யோகசாதனையறறவாகளால இநதிர வஜ்ஜிரம் போலப் பேதிக்கவொண்ணாத கணைக்காலகளிலிருக்கும் மாமஙகளை யோகி தியான ரூப பலத்தோடுகூடிய மனரூப கட்கத்தானே சேதிப்பன். பேதன மாத்திரை யானே உயிர்ச்சேதமுண்டாம். துடையிலுள்ள மர்மங்களையும யோகி அதிகாலை, மத்தியானம், சாயஙகாலம், இரவு என்பவறறேற பயின்றபயில்வுடையோகத்தாற் சேதிப்பன். இவ்வாறு குதம், சிசுனம், கநதம, நாபி இருதயகமலம், கண்டம் என் பனவாதி ஸ்தானஙகளிலுள்ள மர்மங்களியாவறறையும் யோகி யோகபலத்தாற் சேதிப்பன். இவ்வாறு மர்மஙகளைச சேதிதது நாடிகளையும சேதிக்குக. இத்தேகத்தே 101 நாடிகள் முககியமாம. ஒவ்வொன்றிறகும சாகையாக 72000 நாடிக ளிருககும், யாவறறுள்ளும் சுழும்னையொன்றே முக்கியமாம். அது 10-வது வாயி லையடைந்தவுடன் அதில தன்பிராணனைப புகுவிதது வேறு எல்லா நாடிகளையும் சேதிக்குக. யான் இமமாமஙகளிலும் நாடிகளிலும் இருப்பவனல்லேன், என்னும் பாத நிசசயமே அவறறின் சேதனமாம இவவாறு செய்த யோகி இபபிறப்பி லேனும், மறுபிறபபிலேனும், வைராககியததையடைநது ஆன்மஞானவாயிலாய் மோக்ஷத்தையடைவனாதலின், ஞானரூப அககினியால ஒளிரா நின்ற தூயமனரூப கட்கத்தானே யோகி சர்வ நாடிரூபபநதனத்தைச சேதனஞ்செய்வன். இவ்வாறு யோகப்பயிலவின் பலத்தானே வைராக்கியமுறற மனமுடையவனும, எப்போ தும ஏகாநததேயத்தே வாழ்பவனும, சாவ சங்கரகிதனும், யோகத்தின் சர்வ அஙகங்களையுமுணர்நதவனும் ஆகிய யோகி முறகூறிய சாதனஙகளையும அபேக்ஷி யாமலே பையபபைய மோக்ஷத்தையடைவன் பாசஙகளாற கட்டுண்ட ஹம்சம் அவறறைச சேதித்துத தடையறறதாயாகாயத்தே பறககும, பறபபதில் அதறகு வேறெச சாதனாபேக்ஷையுமில்லாததேபோல, யோகியும நாடிபபாசஙகளையறுத்துப் பிரஹ்மலோகததேயுற்று மோக்ஷத்தையடைவன். அலலது, அக்கினிமுதலிய விசேடதேஜசு, காஷ்டாதி இநதனஙகளைத்தகித்து தனது சாமானியதேஜசுத்தன்மை யையடைவிப்பதேபோல, யோகியும யோகபபயில்வின் பலத்தால் சர்வ கருமங்களை யும் தகித்து இத்தேகத்தே பிரஹ்மபாவரூப மோக்ஷததையடைவன். ஆகையாலிப் பொருள் துணியப்பெறும் :—பிராணாயாமத்தால் சூககுமப் படுத்திபதும், பிரணவரூப மாத்திரையை யாதாரமாகவுடையதும, வைராக்கியரூப சாணையில் தீட்டப் பெற்றதும் ஆகிய மனரூபகட்கத்தானே யோகி நாடிரூப பந்தனங்களைச சேதித்து மோக்ஷத்தையடைவன். இங்ஙனம க்ஷுரிகா உபநிடதத்தே கூறிய யோக நிரூபண மனைத்தையும் நின்பொருட்டுககூறினேம். இத்துணைக் கிரந்தத்தானே பரம வைராக்கியத்தை யடைவிக்கும் யோகம் நிரூபிக்கப்பட்டது.

இப்போது பரமஹம்ச சந்யாசத்தை நிரூபிக்கும்பொருட்டு முதலில் ஜாபால உபநிடதத்தின் நான்காவது கண்டத்தேகூறிய அதைக்கவருங்கால அதிகாரிகளை நிரூபிப்பாம் :—ஹே மைந்த! எல்லா அதிகாரிகட்கும் எல்லா அவஸ்தைகளிலும் பரமஹம்ச சந்யாசத்தைக் கவர்வதில் வைராக்கியமே முக்கியகாரணமாம். அஃதின்றி எவ்வவத்தையின்கண்ணும் அதனை கவர்சசியுண்டாகாதாமாதலின், வைராக்கியமே அதைக்கவருங்காலமாம். 'யதஹரேவ விரஜேத் ததஹரேவ ப்ரவ்ரஜேத்' அதிகாரிக்குப் பாலிய யௌவன விருத்த அவஸ்தைகளில் எத்தினத்தே எக்கணத்தே தீவிர வைராக்கியப் பிராபதியாமோ, அத்தினவக்கணத்தே சம்பூர்ண கருமங்களையும் பரித்திபாகிததுச் சநயாச ஆசிரமத்தைக்கவர்க; என மறையுமுளது. தீவிர வைராக்கியமின்றி அதிகாரி எக்காலத்தும் சந்யாசஞ் செய்துகொள்ளவேண்டுமென்னும் சங்கற்பததையும் செய்யாதொழிக. ஆகையால், வேதவேத்தாக்கள் பரமஹம்ச சந்யாசத்தைக்கவாவதற்கு வைராக்கியததையே காலமாகக்கூறினர். அஃதுண்டாவதறகுமுன் கர்ப்பதுக்கவிசாரம், மரணகால உணார்ச்சி, யோகப்பயிலவு என்னும் மூன்று காரணங்கள் கூறிவநதேம் சம்பூரண உபநிடதங்களில் நாலுவகையாய உபாசனைகள் கூறப்பெற்றிருக்கின்றன, அவையும் வைராக்கிய உற்பத்தியின்கண்ணே காரணமாம்.

சங்கை :—ஹே பகவன்! அவை நேரே முத்தியின் காரணமேனுகமாட்டா?

சமாதானம் :—ஹே மைந்த! அவை விபரீத ஞானரூப அத்தியாசத்தானே ஜன்னியமாதலின், அவைகளில் நேர்முத்தி சாதனத்தன்மை சம்பவிக்கமாட்டாது. நாமரூபக் கிரியை ஸ்தான குணமென்னுமைந்தறற அதவிதீயப் பிரஹ்மதிற்கு 'உத்' தெனப்பெயராம், சுவர்ணம்போன்றரூபமாம, மேலுலகங்களைக் காபபாற்றல் கிரியையாம், ஆதித்திய மண்டலம் ஸ்தானமாம், யாவினு மேன்மை குணமாம். என நிர்க்குணப் பிரஹ்மததே நாமாதிகளின் ஆரோபணத்தால் யாண்டும் உபாசனையாமாதலின், அவையாவும விபரீத ஞானரூப அத்தியாசத்தால் ஜனித்ததாம். அவையும் அநேகவகையாம். உபநிடதங்களில் ஓரிடததோ நேரே பிரஹ்மோபாசனை கூறியிருக்கும். ஓரிடத்தோ பிரஹ்மவிபூதிகளினுபாசனை கூறியிருக்கும். அவற்றுள்ளும, சில விபூதியோ காரணரூபமாம், சமஷ்டிரூபமாம், அதிதைவரூபமாம, ஹிரணியகருப்பா விராட்டு ஆதித்தியன் முதலியவர்களேபோலும். சில விபூதியோ காரியரூபமாம், வியஷ்டிரூபமாம், அத்தியான்மரூபமாம், மனமபிராணன் வாக்காதிகள்போலவாம்; இவற்றையே பிரஹ்மரூபமா யுபாசனைகூறியிருக்கும். சில விடத்தோ பிரணவாதி மந்திரங்கட்கும், அவற்றின் பிரஹ்மரூப அர்த்தத்திற்கும் பரஸ்பர தாதாத்மியரூபத்தானே யுபாசனைகூறியிருக்கும். அவையுமிருவகையாம், ஒன்றன்கண்ணே பிரணவாதி முக்கியமாம; அவறறின் பிரஹ்மரூப அர்த்தம் கௌணமாம். மறறொன்றன்கண்ணே பிரணவாதி கௌணமாம்; பிரஹ்மரூப அர்த்தம் பிரதானமாம். ஆண்டு, அதர்வசிரம், யோகசிகை, பூர்வதாபநீயம், உத்தரதாபநீயம், மாண்டூக்கியம், ஆன்மபோதம், இருநாராயணம், அமிருத நாதம், அமிருதபிந்து என்பனவாதியின்கண்ணே பிரணவாதிகட்குப் பிரதானரூபத்தன்மையானே யுபாசனை கூறப்பெற்றுளது. அவற்றினருத்தத்திற்குக்

கௌணரூபத்தன்மையானே யுபாசனை கூறப்பெற்றுளது. பிரசினம், முண்டகம், பிரஹதாரண்யகம், சாந்தோக்கியம், கடவல்லி முதலியவற்றேயோ பிரணவாதிகளினர்த்தத்திற்குப் பிரதானரூபத்தன்மையானே யுபாசனை கூறப்பட்டுளது, பிரணவாதிகட்கோ கௌணரூபத்தானே யுபாசனை கூறப்பட்டுளது. ருத்திராத்தியாயத்தும், மண்டலப் பிராஹ்மணத்தும், புருடசூக்தத்தும், ஸ்துதி இரகசிய நாமமந்திரமென்னும் மூன்றேடு பிரஹ்மோபாசனை கூறப்பெற்றுளது. இவ்வாறு நான்கு வேதங்களிலுள்ள சர்வ உபநிடதங்களிலும் அநேக உபாசனைகள் கூறப்பெற்றிருக்கின்றன. அவையாவும் வைராக்கிய காரணமேயாம்.

சங்கை :—ஹே பகவன்! அதிகாரிகட்குத் தம்மான்மரூபத்தானே நிர்க்குணபிரஹ்ம வுணர்வுண்டாக்கறபொருட்டுப பிரவிருத்தமாய உபநிடதங்கள் யாவற்றுள்ளும், நாநாவகையாய உபாசனைகளைக்கூறல அசங்கதமாமன்றே?

சமாதானம் :—ஹே மைந்த! அவை நிர்க்குணபிரஹ்மததையே கூறுவவாயினும, அது எவா மதியிலேற்றதோ அம்மநதமதியினர்மேற றயைவைத்து ஸ்தூலாருந்ததி நியாயத்தையுடன்பட்டு நானாவகையாய்ப் பிரஹ்மவருணனஞ் செய்து அவர் மனத்தே அதன் ஞானததைச செய்விக்குமாதலின், உபநிடதத்தே உபாசனை வருணனம் அசஙகதமன்றாம்.

சங்கை :—ஹே பகவன்! அந்தப் பிரஹ்மம் எபபோதும் ஏகரசமாதலின் அதை நானாரூபமாய் வருணித்தல சம்பவியாதாமன்றே?

சமாதானம் :—ஹே குமர! அது அதிஷ்டானரூபத்தானே சாவ ஜகத்தின் ஆன்மரூபமாம். இரஜ்ஜுரூப இதமமசம் கற்பிதசர்பபாதிகளிடத்தே அநுகதமாய்ப் பிரதீதியாவதேபோல, அதுவும் தன் சத்தியரூபத்தானே சர்வ ஜகத்திலும் அநுகதமாய்ப பிரதீதியாம். அககறபித உபாதியின் சமபந்ததததானே நிர்க்குணப் பிரஹ்மத்தையும் உபநிடதம் நாமாதி ஐந்தன் விசிஷ்டமாய்க்கூறுமாதலின், உபாதி சம்பந்தததானே அது நானாரூபமாய் வருணிக்கத்தகுதியதேயாம். நாமாதி விசிஷ்ட சவிசேஷப்பிரஹ்மததை யுணர்த்துவதில உபநிடதங்களின் பிரவிருத்தி இருவகையாம் :—ஒன்றே நாமாதியுபாதிகளின் அநிஷேதபூர்வகப் பிரவிருத்தியாம். மற்றென்றே அவறறின் நிஷேதபூர்வகபபிரவிருத்தியாம். அதிகாரி தூய மனத்தினனாய்த தானே அவ்வுபாதிகளைப பரித்தியாகித்து நிர்கருணப்பிரஹ்மத்தை யறிவன் என்னுங்கருத்தை மனத்திலமைத்து, எவ்வுபநிடதம் சவிசேஷப் பிரஹ்மமாத்திரத்தைக்கூறி நிர்விசேஷப்பிரஹ்மத்தைக் கூறுவதினின்றும் உபாமத்தன்மையை யடைந்ததோ, அவ்வுபநிடதம் முதற்பிரவிருத்தியானே அச்சவிசேஷப்பிரஹ்மத்தைக்கூறிற்று. இவ்வதிகாரி எனதுபதேசமின்றி அந்நிர்விசேஷப்பிரஹ்மத்தை எவ்வாறுணர்வன்? என்னுங் கருத்தை மனத்தேவைத்து அதிகாரியின்பாலுற்ற மிகுந்த கருணையால், எவ்வுபநிடதம் அந் நாமாதி சர்வ உபாதிகளையும் நிடேதித்து அடிக்கடி அந்நிர்விசேஷப்பிரஹ்மத்தையே கூறியதோ, அவ்வுபநிடதமே அவ்வேறுபிரவிருத்தியானே அந்தப் பிரஹ்மத்தைக்கூறியது

அவ்வேறுபிரவிருத்தியை யங்கீகரித்தே நிர்க்குணப்பிரஹ்மத்தைக்கூறும் பிருஹ தாரண்யக முதலிய உபநிடதப்பொருளை நினக்கு முன்யாம் கூறிவந்தேம். அவற றினும் வேறாய எத்துணை யுபநிடதங்கள் நிர்விசேஷப்பிரஹ்மத்தைக்கூறுமோ அவ்வியாவற்றின் பொருளையும மேலுனக்கு யாம் வெளிப்படக் கூறுவேம். இவ் வாறு நானுவகை யுபாசனைகளால் பிரஹ்மத்தை ஆராதனைசெய்யும் அதிகாரி சிறிதுகாலத்திற்குள்ளே தூயமனத்தினனாகி வைராக்கியத்தை யடைவனாதலின், கர்ப்பதுக்க விசாரமும், மரணகால ஞானமும், அஷ்டாங்கயோகமும், வைராக்கிய காரணமாவதேபோல, பரமேசுர உபாசனையும் வைராக்கிய காரணமேயாம்.

சங்கை :—ஹே பகவன்! அவ்வுபாசனை செய்வதன்கண்ணே ஆற்றலற்ற வன் அவ்வைராக்கியமடைவான் எவ்வுபாயம செய்தல்வேண்டும்?

சமாதானம் :—ஹே குழந்தாய்! அதன்கண்ணே யாற்றலற்றவர்கள் இவ் வகை யுபாயம்செய்க :—வேதங்களின் கருமகாண்டத்தே கூறிய தம் வருணாசிரம கருமங்களைச் சிரத்தைபத்திவாயிலாய் நிரந்தரம் செய்க; ஆனால் அக்கருமங்களின் பல இச்சையைச்செய்யாதொழிக அநிஷ்காம கருமத்தானும் அதிகாரி நெடுநாட கட்குப் பின் மனத்தூய்மைவாயிலாய் வைராக்கியத்தையடைவனாதலின், அதுவும அதற்கேகாரணமாம். அதன்கண்ணும் ஆற்றலற்றவன் வைராக்கியமடைவான் இவ் வகை செய்க “ தமேதம் வேதாநுவசநேந ப்ராஹ்மணா விவிதிஷந்தியஜ்ஞேந தாநேந தபஸா அநாஶகேந ” என்னுஞ் சுருதி பிரஹ்மஞானப் பிராபதியின் பொருட்டு வேதாத்தியயனம், யாகம, தானம், தவம், அநசனம் என்னும் ஐந்து தருமங்களை விதித்துளது. என ஆராய்ந்து பிரஹ்மசாக்ஷாத்காரப்பொருட்டுக கூறியவற்றைச்செய்யு மதிகாரி மனத்தூய்மைவாயிலாய் வைராக்கியத்தையே யடைவனாதலின், பிரஹ்மஞான அடைவின்பொருட்டுக் கூறியவையும் வைராக்கிய காரணமேயாம். அவற்றை யாற்றுவதின்கண்ணு மாற்றலற்றவன் வைராக்கிய அடைவின்பொருட்டு இவ்வகை யுபாயம்செய்க :—

> “ யத்கரோஷி யதஶ்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் ।
> யத்தபஸ்யஸி கௌந்தேய தத்குருஷ்வ மதர்பணம் ॥ ”

> “ போதல ரிலையே நீரே பெற்றதே கொண்டு போற்றிக்
> காதலாற் றூய வன்பர் தந்ததே களித்துக் கொள்வ
> ஞதலா லீவ நோற்ப வுண்பவென் றிவைக ளேகொண்
> டேதலா மெனக்காய்த் தந்தா லென்னையே யெய்த லாமால்.”

(பொ-ள்.) ஹே கௌந்தேய! நீயாது செய்கின்றனையோ, யாதுண்கின்ற னையோ, எவ்வோமஞ் செய்கின்றனையோ, எத்தானம் பண்ணுகின்றனையோ, எத தவம் பண்ணுகின்றனையோ, அவ்வனைத்தையும் எனதர்ப்பணமாய்ச் செய்குதி. என்னும் பகவத்கீதைச் சுலோகத்தே சர்வ கருமங்களையும் பரமேசுரார்ப்பணம் செய்யக்கூறியிருக்கின்றதென ஆராய்ந்து சர்வ கருமங்களையும் பரமேசுரார்ப பணம் செய்பவனும் மனத்தூய்மை வாயிலாய் வைராக்கியத்தையேயடைவனாத லின், அதுவும் வைராக்கியகாரணமாம். ஹே மைந்த! கூறியவைராக்கியத்தை

யடைவிக்கும் ஏழுபாயங்களுள் எவ்வுபாயத்தைச்செய்ய அதிகாரிக் காற்றலுண்டோ அதைக் கவர்ந்தே வைராக்கியமடைக. பின் பரமஹம்ச சந்யாசத்தைக் கவர்க. இதனுடைப்பொருள் துணியப்பெறும்:—மனுடலோக முதல் பிரஹ்மலோகம்வரையுள்ள விடயஜன்னிய சுகமும், மனைவிமுதலிய அவற்றின் சாதனமும் ஆகிய யாவற்றினின்றும் உண்டாம் தீவிர வைராக்கியமே பரமஹம்ச சந்யாசத்தைக் கவருங்காலமாம்: இத்துணையானே சந்யாச கிரகணகாலம் நிரூபிக்கப்பட்டது. இப்போது அதிகாரியை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! தன ஏஷணை, லோக ஏஷணை, புத்திர ஏஷணை என்னும் மூவகை யேஷணை சர்வலோகப் பிரசித்தமாம். தனமிருவகையாம்:—ஒன்றோ தைவதனமாம், மற்றொன்றோ மானுஷ்யதனமாம். கரும உபாசனை வடிவம முதலதாம. சுவர்ணாதிகள் மற்றதாம். சுவர்க்கலோக முதலியவை லோகமாம். ஏஷணை இச்சையாம. அஃதற்றவனாகிய வைராக்கியவானே பரமஹம்ச சந்யாச அதிகாரியாவன். இப்போது ஜாபால உபநிடதத்தின் நான்காவது கண்டத்துற்ற வசனங்களை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! மூன்றேடணைகளையுமுடையவன் பரமஹம்ச சந்யாசத்தைக் கவராது முதலில் பிரஹ்மசாய ஆசிரமத்தைக்கவர்க, பின் கிருகஸ்த ஆசிரமத்தைக்கவர்க, பின் வானப்பிரஸ்த ஆசிரமத்தைக்கவர்க, பின் குடீசக பகூதக ஹம்சமென்னும் மூன்று சந்யாசத்துள் ஒன்றைக்கவர்க, ஆனால் அம்மூவேடணையுடையோன் பரமஹம்ச சந்யாசத்தைககவரக் கருத்திலும நினைககலாகாது; ஏனெனின், இகவுலக பரவுலக விடய சுகத்தே ஆவலற்றவனே அதற்கதிகாரியாவன், மற்றையனாகான். மோக்ஷ இச்சையுடையவனும், மூவேடணையற்றவனும, வைராக்கியவானும் ஆகியவனே பிரஹ்மசர்யத்தின் பின்னரே அதனைககவாக. அல்லது, இல்லறத்தானான பின்னேனும், வானப்பிரஸ்தனான பின்னேனும் அதனைககவாக. அதன்கண்ணே யாதொரு நியமமுமின்றாம்; ஆனால் அத்தகையனும பிரஹ்மசரியத்திற்கு முன்பு அதனைக் கவாறக. தன்வருணாசிரம தருமங்களோடுகூடியவனாய் நேத்திராதி யிந்திரியங்களோடு கூடியவனாயிருப்பினும, இல்லாவிடினும, எவ்வகையானும் தீவிர வைராக்கியமுடையவனே பரமஹமச சந்யாசத்திற் கதிகாரியாவன்.

இப்போது இப்பொருளையே வெளிப்படையாய் நிரூபிப்பாம:—ஹே மைந்த! வேதவித்தையை யடைவிக்கும் பிரஹ்மசாரியின் குருகுலவாசாதிக தருமங்களையுடையவன் விரதியாவன், அவைபற்றவன் அவிரதியாவன். குருசமீபத்தேவசித்து ஒருவேதம் முழுவதையேனும, இரண்டு வேதங்களையேனும், நான்கையேனும் அத்தியயனஞ்செய்து பிரஹ்மசரிய ஆசிரமத்தைச் சமாப்தஞ்செய்தவன் ஸ்நாதனவன். ஒரு வேதத்தின் ஓரம்சத்தையத்தியயனஞ்செய்தவன் அஸ்நாதனவன். முன்னர்ச் சிரௌத அக்கினியையேனும், ஸ்மார்த்த அக்கினியையேனும் கவர்ந்து, ஸ்திரீமரணாதி நிமித்தத்தானே அதை யிழந்தவன் உற்சன்ன அக்கினிகனவன். அநநிமித்தத்தால் அவ்வக்கினிகளைக் கவராமலேயிருப்பவன் அனக்கினிகனவன். அவற்றை யங்கீகாரமே செய்யாதவன் உற்சன்ன அக்கினிகனவன். அவற்றைக் கவர்வதி னுபயோகியாய தனாதிகளையே கிரகியாதவன் அநக்கினிகனவன். விரதி,

அவிரதி, ஸ்நாதகன், அஸ்நாதகன், உற்சன்ன அக்கினிகன், அநக்கினிகன், என்னும் அறுவகைப் புருடருள் எவனுக்கு எக்கால் தீவிர வைராக்கியமுண்டாமோ அவனக்கால் பரமஹம்ச சந்யாசத்தைக்கவர்க. குடீசகாதிமூவகையரும் தீவிர வைராக்கியமுறின்: பரமஹம்சசந்யாசத்தைக்கவர்க; ஆனால் அஃதின்றி யெவனும் அதனைக்கவரற்க. இத்துணையானே அதன் அதிகாரம் நிரூபிக்கப்பட்டது.

இப்போது தருமசாஸ்திரப்பிரகாரம் அதைக்கவரும் நெறி நிரூபிக்கப்படும்:- ஹே மைந்த! விவாகாதிசுபகாரியத்தே நாலுவகையாய மங்கலமாவதேபோல, சந்யாசத்தைக்கவரும் பூர்வதினத்தே நாலுவகையாய மங்களங்களோடு கூடியவனாய் அதிகாரி முதலில் நாந்திமுகசிராத்தஞ்செய்க, அதன்கண்ணே சந்யாசகர்த்தா முதலில் வசுசத்தியம் எனப் பெயரிய விசுவேதேவதைகளைப் பூசை செய்க. அதனுள் தைவசிராத்தம், இருஷி சிராத்தம், திவ்ய சிராத்தம், மானுஷ்ய சிராத்தம், பூத சிராத்தம், பிதூர் சிராத்தம், மாதூர் சிராத்தம், ஆன்ம சிராத்தம் என்னும் எட்டுள. இவ்வெட்டின் முதலில் ஒன்பதாவது வைசுவதேவசிராத்தமாம், அதனுள்ளடங்கிய இவ்வொன்பதையும் செய்க. சௌநகாதிக இருடியரோ, மாதூர்சிராத்தத்தினும் மாதாமகசிராத்தத்தை வேறென எண்ணி அப்பத்தாவதையும் விதித்துளார். ஆபஸ்தம்பாதி மகரிஷிகளோ, வேறன்றென எண்ணி அதை வேறாய் விதிக்கவில்லையாதலின், முதன்மதப்படி வைசுவதேவ சிராத்தத்தின்பின் ஒன்பது சிராத்தங்களாம். பின்மதப்படி எட்டு சிராத்தங்களாம். அவ்விரண்டின் பேதமும் அபேதமும் தத்தமது குலாசாரத்தானேயறியத்தக்கதாம். பேதபக்ஷத்தினும், அநேக இருஷிகளின் மதபேதத்தால் மாதூர்சிராத்தத்தே தேவதைகளின் பேதமுங்கூறப்பெறறுளது. சில இருடியரோ, மாதூர்சிராத்தத்திற்கு மாதா, பிதாமஹி, பிரபிதாமஹி என்னும் மூன்று தேவதைகளை யங்கீகரித்துளார்; சில இருடியரோ அதற்கு மாதா, மாதாமஹீ பிரமாதாமஹீ என முத்தேவதைகளுடன்பட்டுளார். அதனினும் வேறாய மாதாமஹ சிராத்தத்தோ மாதாமஹர், பிரமாதாமஹர், விருத்தப்பிரமாதாமஹரென்னும் முத்தேவதைகளை யுடன்பட்டுளார். இங்ஙனம் மாதுருசிராத்த மாதாமஹர்சிராத்தபேதத்தை யங்கீகரித்தசௌனகாதிக இருஷிகள் இரு சிராத்தங்களின் தேவதைகளையும் பேதமாகவே யங்கீகரித்துளார். அபேதமதத்தினும், தத்தமது குலாசாரபேதத்தானே மாதூர் சிராத்த தேவதைகளை வேறுகவே கூறியுள்ளார். ஆண்டுச் சில இருடியரோ, அதற்கு மாதா பிதாமஹி பிரபிதாமஹீ என மூன்று தேவதைகளை யங்கீகரித்துளர். சில இருடியரோ, அதற்கு மாதா மாதாமஹீ பிரமாதாமஹீ என மூன்று தேவதைகளை யங்கீகரித்துளார். இவ்வாறு பின்னபின்ன சாஸ்திரத்தே இருஷிகள் மாதூர்சிராத்த தேவதைகளை வேறுய்க்கூறியுள்ளார்; ஆனால் அத்தேவதைகளைப் பூசிப்பதில் தத்தமது குல ஆசாரமே பிரமாணமாம். குல ஆசாரத்தை மறந்தவன் மாதூர்சிராத்தத்தே மாதா பிதாமஹீ பிரபிதாமஹீ என்னும் முத்தேவதைகளையே பூஜைசெய்க; ஏனெனின், அநேக அறிஞரோ, அதன் கண்ணே கூறிய முத்தேவதைகளையே பூசிக்கின்றனராதலின் பன்மையாசாரத்தையேகொள்க. பிதாவின் பிதாவைப் பிதாமகரென்பர், அவர் பிதாவைப் பிர

பிதாமஹரென்பர், அவர் பிதாவை விருத்தப்பிரபிதாமஹரென்பர். பிதாவின் மாதாவைப் பிதாமஹியென்பர், பிதாமஹரின் மாதாவைப் பிரபிதாமஹியென்பர், பிரபிதாமஹரின் மாதாவை விருத்தப்பிரபிதாமஹியென்பர். மாதாவின் பிதாவை மாதாமஹரென்பர், அவர் பிதாவைப் பிரமாதாமஹரென்பர், அவர் பிதாவை விருத்தப்பிரமாதாமஹரென்பர். மாதாவின் மாதாவை மாதாமஹியென்பர், அவர் பதியின் மாதாவைப் பிரமாதாமஹியென்பர். அவர் பதியின் மாதாவை விருத்தப பிரமாதாமஹியென்பா. இஙஙனம மேலும் அறிக. இத்துணையானே மாதுர்சிராத்த மாதாமஹசிராதத பேதாபேதம் விசாரிக்கப்பெற்றது. இனிமுற்கூறிய அஷ்ட சிராத்தங்களையும் தேவதைகளையும கூறுவாம்:—பிரஹ்மா விஷ்ணு மஹேசுரர் என்பவர் தேவ சிராத்ததேவதைகளாவர். தேவ இருஷி, இராஜ இருஷி, மனுஷ்ய இருஷி, என்பவர் ரிஷி சிராத்ததேவதைகளாவர். வசுருத்திர ஆதித்தியர் என்பவா திவ்ய சிராத்ததேவதைகளாவா. சனக சநநதனசனற்குமாரா என்பவர் மானுஷ்ய சிராத்ததேவதைகளாவர். பிருதிவி முதலிய பஞ்ச பூதங்கள், நேத்திராதிபதகிநதிரியஙகள், ஜராயுஜாதி நான்கு யோனிகள் என்பவை பூதசிராத்ததேவதைகளாம. பிதா பிதாமஹா பிரபிதாமஹரென்பவர் பிதுர் சிராத்ததேவதைகளாவர். மாதா பிதாமஹி பிரபிதாமஹி என்பவர் மாதுர் சிராத்ததேவதைகளாவர். தங்குல ஆசாரத்தே மாதுர் சிராத்தத்திலும் வேறாகவே மாதாமஹ சிராத்தமாயின், அவரும அமமாதாமஹசிராத்தததை மாதுர் சிராத்தத்தினும் பின்னரே செய்க; முன்னாச செய்யறக. அம்மாதுா சிராத்தத்தினும் பின்னேனும், மாதாமஹசிராத்தததினும் பின்னேனும், சந்யாச காததாத் தன்சிராததம்செய்க, இதுதான் ஆன்மசிராததமாம்; இதறகு அவனும், பிதாவும், பிதாமஹரும் தேவதைகளாவர். இவ்வாறு அவன் அநநாந்தீமுக சிராத்தத்தே முதலில் வைசுவதேவ சிராத்தத்தைசசெய்து, பின் தன்குலாசாரானுசாரமாய் 8 சிராத்தங்களையேனும் 9 சிராத்தங்களையேனும் விசுவாசத்தோடும செய்க. முதல சிராத்தம் விடுத்து மற்றைய எட்டு ஒன்பது சிராத்தஙகளுள் ஒவ்வொன்றன்கண்ணும் மும்முத்தேவதையாம். அவர்களுள் ஒவ்வொருவருககு ஒவ்வொரு பிண்டம் கொடுக்க வேண்டுமாதலின், 8 சிராத்த பக்ஷத்தில 24 பிண்டஙகளாம். 9 சிராத்தபக்ஷத்தோ 27 பிண்டங்களாம. அவனப்பிண்டஙகளில் தயிா, பொரி, அக்ஷதை, இலந்தைக்கனி, தேன், அறுகு, குங்குமம, என்பனவாதி மங்கலபபொருள்களையிட வேண்டும், அப்பிண்டஙகளின் மத்தியில மது சாக்கராதிகளையதிகமாயிடவேண்டும். அந்நாந்தீமுக சிராத்தத்தே செய்யததக்க வைசுவதேவாதி சிராத்தங்களுள் ஒவ்வொரு சிராத்தத்தின்கண்ணும் இரண்டு இரண்டு பிராஹ்மணர்கட்குப் போஜனம் செய்விக்கவேண்டுமாதலின், 9 என்னும் பக்ஷத்தே 18 பிராஹ்மணபோஜனம் செய்விக்குக. 10 என்னும் பக்ஷத்தோ 20 பிராஹ்மணபோஜனம் செய்விக்க; குறைதலும் மிகலும்கூடா. சநயாச கர்த்தாததனவானுபின் அவர்கட்குச் சால்வை, கங்கணாதி பூஷணங்கள், குடை, செருப்பு, முதலியவற்றைத் தக்ஷிணையாகக்கொடுக்கலாம். அத்தியந்தந் தனவானுயினோ அம்மறையவர்க்குப் பூதானஞ்செய்யலாம், இருகத்தே அன்ன வஸ்திராதிகளைவைத்து அக்கிருகத்தைத் தானஞ்செய்

லாம்; அதனாலே மறையவர்க்குத் தரித்திரம் நீங்கும். நிர்த்தனனாயினோ சத்தியளவு தக்ஷிணைகொடுக்கலாம். இவ்வாறு பிண்டதானத்தின்பின் பிராஹ்மணபோஜனமானவுடன் சக்தியளவு தக்ஷிணைகொடுத்து அவ்வுச்சிஷ்ட அன்னத்தை விடுத்துத் தன் சக்தியளவு வேறு தீன அநாதைகட்கு நாலுவகையாய அன்னத்தையும், வஸ்திராதிகளையும் கொடுத்தல்வேண்டும். இவ்வாறு அவன்றனது இருஷி யியம்பிய சூத்திர அநுசாரமாகப் பிதுர்சிராத்தம்போல அந்நாந்தீமுக சிராத்தத்தைச்செய்க. அத் தினத்தே முற்கூறிய தானாதிகளைச்செய்து மகிழ்வுற்ற அவன் றன்னுறவினரோடும் மனைவி மக்களோடும் தகுதிப்படி சம்பாஷணைசெய்க. ஹோமப்பொருட்டுச் சிறிதுபொருளை வேறாகவைத்து, கந்தை கௌபீனாதி வஸ்திரங்களை வேறாக வைத்துவிட்டு மற்றெல்லாவற்றையும் மைந்தர் பொருட்டுப் பகுத்தல்வேண்டும். இங்ஙனம் எல்லாக்காரியங்களையும் செய்து தன்னுறவினரோடு ஒரு பந்தியி லுட்கார்ந்து 'புண்யாஹம்' என்னும் வசனத்தைக்கூறிப் போஜனம்செய்க; ஆனால், அத்தினத்தே அவன் மனத்தே யாதொரு விக்ஷேபமுமின்றாயின் போஜனஞ்செய்க; சித்த விக்ஷேபத்தானே அன்னத்தே ருசியில்லாதாமாயின், சிராத்தசேஷ அன்னத்தின் கந்தத்தைக் கிராணததானேகவர்ந்து அன்றுபவாசத்தையேசெய்க. அன்று போஜனஞ்செய்யின் மறுதினத்தே யுபவாசஞ்செய்க. பிண்டதானஞ்செய்யுந்தினத்தே யுபவாசஞ்செய்யற்க. மறுதினத்தேசெய்க; என்னும் பக்ஷம் அநேக நூற்களிற் கூறப்பெற்றுளதாதலின், அது முக்கியமாம். அத்தினத்தே யுபவாசஞ்செய்க; என்னும் பக்ஷம்ஏதோ ஒரு நூலிற் கூறியிருத்தலின் அது கௌணமாம். முக்கிய பக்ஷத்தை யங்கீகரித்து அவன் பிண்டதான மறுதினத்தே யுபவாசஞ்செய்க. அன்று தனது கட்கமயிரையும், உபஸ்தமயிரையும், சிகை மயிரையும் விடுத்து மற்றுள்ள எல்லாக்கேசரோமங்களையும் முண்டனஞ்செய்க. பின்னீர் மூழ்கி வேறு தூய ஆடையையணிக. ஹோமத்தின்பொருட்டு வைத்த திரவியத்தைவிடுத்துத் தன் வீட்டிலிருக்கும் சாலக்கிராமம், கம்பலாதிவஸ்திரம், புஸ்தகம், மான்றோல் முதலிய சந்யாசிகள் கவர்வதினும் நிஷித்தமல்லாத அவற்றைக் கொண்டுபோய்த் தன் பிரஹ்மவேத்தாக்குருவின் சந்நிதியிலர்ப்பிக்க. அவை அவனுக் கபேக்ஷிதமாயினும் குருவானவர் அவற்றை யங்கீகரிக்கின் யாவற்றையும் குருவிற்கே யர்ப்பணஞ்செய்க. ஆன்மோபதேசத்தே அத்தியந்தங் குசலரும், பிரஹ்மநிஷ்டரும், சமதமாதி சர்வ குணங்களோடு கூடியவரும் ஆகியவரை அவன் நெடுநாட் பரீக்ஷையாற் குருத்தாரணஞ்செய்க. இவ்வாறவன் தன் குருவிற்குச் சாளக்கிராமமுதலியவற்றை யர்ப்பித்துத் தன் சீதாதி நீக்கப்பொருட்டுக் கௌபீன கந்தாதிகளைத் தனியேவைத்து அவற்றையும் வேணுதண்டத்தையும அக்கினிகுண்ட சமீபத்தே ஸ்தாபிக்குக. அத்தண்டமானது நீராறறாய்தாக்கியதாயும், துளையற்றதாயும், காண அழகியதாயும், அவனது தேகஅள வுயரமுடையதாயும் இருக்கவேண்டும். அவன் ஓமஞ்செய்யுந் தினத்திரவில் விழித்திருக்கவேண்டும். அதற்காக மகாநதிதீரத்திலேனும், விஷ்ணு முதலிய தேவதைகளின் ஆலயங்களிலேனும், வனத்திலேனும், கோசாலையிலேனும், ஜனங்களற்ற ஏகாந்ததேசத்திலேனும் இருத்தல் வேண்டும். இத்தகைய தூய்தாய ஏகாந்த தேயத்தே தன்னாசனத்தின்மீதேயிருந்து தன் னிருகாங்களைக்கூப்பி மனம்பொறிகளை யொடுக்கி முதலில் பிரஹ்மா,

இந்திரன், சோமன், சூரியன், ஆன்மா, அந்தரான்மா, பரமான்மா, விஞ்ஞானான்மா என்னும் எண்வடிவமாய பரமேசுரனைச்சிந்திக்க. பிரணவத்தோடு 'ப்ரஹ்மணே நம:, இந்த்ராய நம:, ஸோமாய நம:, ஸூர்யாய நம:, ஆத்மனே நம:, அந்தராத்மனே நம:, பரமாத்மனே நம:, விஜ்ஞாநாத்மனே நம:' என்னும் எட்டு மந்திரங்களையும் மாநசஜபஞ்செய்க. அதன்வடிவத்தை ஸ்ரீ வியாசபகவானிவ்வாறருளுகின்றார்:—

"ப்ரியாய ஸ்வரஶ்ரேணிம் வர்ணஸ்வரவிஸர்ஜிதாம் ।
உச்சரேத்யத்ஸ்வம் ஸ்ருத்வாஸ்ம க்ஷோபத்வோஜபம் ॥"

"உற்ற வன்னஞ் சுரத்தோடு மக்கர
முற்ற பந்தியை யோண்டவ னப்பொரு
ளுற்ற நன்னினை வோடு மதிகோடே
யுற்ற வாறுரை யாடுதேன் மாநசம்."

(பொ-ள்.) ககாராதிவருணங்களோடும், உதாத்தாதி சுரங்களோடும் அக்ஷரங்களின் பந்தியை அன்பன் அர்த்தஸ்மிருதிபூர்வகம் புத்தியானே உச்சாரணஞ்செய்தலே மாநசஜபமாம்; பின்னவனொரு முஷ்டியளவு சத்துமாவைப்புசித்து மும்முறை யாசமனஞ்செய்க. பின்றனது கரத்தை நாபியில்வைத்துப் பிரணவத்தோடு 'ஆத்மனே ஸ்வாஹா, அந்தராத்மனே ஸ்வாஹா, ப்ரஜாபதயே ஸ்வாஹா' என்னும் மும்மந்திரங்களை யுச்சரிக்குக. பின் பால், தயிர், நெய்யென்பவற்றில் ஒவ்வொன்றை மூன்று மூன்று முறையயினுக. கூறிய நான்குண்ணும்போதும் பிரணவமந்திரத்தையே ஜபம்செய்க. பின்னுசமனஞ்செய்து கிழக்கு முகமாயிருந்து முடிந்தவளவு பிரணவமந்திரத்தையும், காயத்திரி மந்திரத்தையும் ஜபம்செய்க. உபவாசஞ்செய்யுஞ்சங்கற்பஞ்செய்க. பின் சர்வவேதங்களின் ஆதிவடிவாய பிரணவத்தை யுச்சாரணஞ்செய்க. அல்லது, இருக்கு யஜுஷ் ஸாமமென்னும் மூன்று வேதங்களின் முதலிலிருக்கும் 'அக்நிமீளே, இஷேத்வா, அக்ந ஆயாஹி' என்னும் மூன்று மந்திரங்களையும் பிரணவத்தோடு முச்சரிக்குக. பின்னவன் சாவித்ரீப் பிரவேச மந்திரத்தை யுச்சாரணஞ்செய்க; ஆண்டுப் பிரணவ பூர்வகமாய் 'பூ: புவ: ஸுவ:' என்னும் மூன்று வியாகிருதிகளுள் ஒவ்வொரு வியாகிருதியின் உச்சாரண பூர்வகம் 'ஸாவித்ரீம் ப்ரவிசாமி' என்னும் வசனத்தை இரண்டு இரண்டு முறை யுச்சரிக்குக. இம்முறையானே சாவித்ரீப் பிரவேசத்திற்கு ஆறுமந்திரம் சித்தமாம். அவ்வாறனுள், முறைப்படி திரிபதா காயத்திரீ மந்திரத்தின் பாதங்களை யுச்சாரணஞ்செய்க. ஆண்டு, முதன்மந்திரத்தோ அக்காயத்திரீ மந்திரத்தின் முதற்பாதத்தை யுச்சாரணஞ்செய்க, இரண்டாவது மந்திரத்தோ அதன் இரண்டாவது பாதத்தை யுச்சரிக்குக, மூன்றாவது மந்திரத்தோ அதன் மூன்றாவது பாதத்தை யுச்சரிக்குக, நான்காவது மந்திரத்தோ அதன் முதலிரண்டு பாதங்களை யுச்சரிக்குக, ஐந்தாவது மந்திரத்தோ அதன் மூன்றாவது பாதத்தை யுச்சரிக்குக, ஆறாவது மந்திரத்தோ அக்காயத்திரீ மந்திரம் முழுவதையும் உச்சரிக்குக. அவ்வாறு மந்திரம் உச்சரிக்கும் முறையிதுவாம்:—முதலிற் பிரணவ

மந்திர உச்சாரணஞ்செய்க, பின் வியாகிருதியை யுச்சரிக்குக, பின் சாவித்ரீப் பிர வேசவாக்கிய முச்சரிக்குக, பின் காயத்ரீயின் பாதத்தை யுச்சரிக்குக; இவையாவு மொருங்குகூடி யொருமந்திரமாம். இவ்வாறு சாவித்திரீப் பிரவேச ஷண்மந்திரங் களை யுச்சரித்துப் பின்னவன் பிரஹ்மான்வாதான காமகருமத்தைச்செய்க. அதன் முறையிதுவாம்:—அவன் சூரியன் அஸ்தமாவதற்குமுன் றன்னிருஷிப் பிரணீத சூத்திரங்களின் அனுசார ஹோமஞ்செய்யும்பொருட்டுச் சிரௌத அக்கினி யையேனும், ஸ்மார்த்த அக்கினியையேனும், ஒரு பவித்திரஸ்தானத்திருக்கும் லௌகிக அக்கினியையேனும் கொணர்ந்து குண்டத்தேனும், பூமியின்கண்ணே னும் ஸ்தாபனஞ்செய்க. பின்னவன் றன்னிருஷிப் பிரணீத சூத்திரங்களி னனுசார மாய்ச் சாயங்காலத்தே அவ்வக்கினியின்கண் அக்கினிஹோத்திரமெனப் பெயரிய ஹோமத்தைச்செய்க. ஆண்டு, ஆஜ்ஜியபாக பரியந்தம் சர்வ அங்கங்களையும் விதி பூர்வகஞ்செய்து, பின் பிரணவ பூர்வகமாய ஸ்வாஹாமந்திரத்தானே அவ் வழலின்கண்ணே ஆஜ்யாஹுதியைப்பெய்க. அம்மந்திரததானே அவ்வழலின் கண்ணே பூர்ணாஹுதியையிடுக, இதுவே பிரஹ்மான்வாதானமெனப்பெறும். அதைச் செய்தபின், சாயம் சந்தியா உபாசனையைச்செய்க. பின்னக்கினியின் வட திசையில் தர்ப்பையை விரித்து மேலுட்காருக. காயத்திரி மந்திரங்கூறிய பிரஹ் மத்தை மனத்தே நினைத்தவனும் அவ்விரவில் விழிததிருக்குக, இஷ்டியையும் செய்க. கார்ஹபத்யாதி சிரௌத அக்கினியுடையவனுயினே, அவன் அவ்வழலால் முதலில் அக்கினிதேவதைச சம்பந்தி வைசுவாநரீயெனப் பெயரிய இஷ்டியைச செய்க, பின், இராஜாதிராஜ சுவராட்டென்பதாதி குணவிசிஷ்ட தேவதா விசேட சம்பநதி திரைதாதவியெனப்பெயரிய இஷ்டியைச்செய்க. அவன் ஔபாசனமெனப பெயரிய ஸ்மார்த்த அக்கினியுடையவனுயினே, அவ்வழலால் பிராஜாபத்யமெனப் பெயரிய இஷ்டியைச்செய்க. பூர்வ கிருகஸ்த ஆசிரமத்தையிழந்து உத்தர ஆசிர மத்தைக் கவராதவன் விதுரனுவன், அவனும் அவ்வழலால் பிராஜாபத்ய இஷ்டி யையே செய்க. 'வரஷ்ஷோதிவி' என்பதாதிமந்திரத்தானே உண்டாய அக்கினி விதுராக்கினியாம். அவன் பிரஹ்மசாரியாகவேனும், வானப் பிரஸ்தனுகவேனு மிருப்பின், ஒரு பவிததிரஸ்தானத்தினின்றும அக்கினியைக்கொணர்ந்து அதனுல் பிராஜாபதய இஷ்டியைசசெய்க. சில இருடியரோ, ஆஹிதாக்கினிகட்கும், அநா ஹிதாக்கினிகட்கும, அநக்கினிகட்கும், பிராஜாபத்ய இஷ்டியே செய்யத்தகுதிய தாம், சிரௌத அக்கினியையுடையோன் ஆஹிதாக்கினியாம, ஸ்மார்த்த அக்கினி யையுடையோன் அநாஹித அக்கினியாம், இரண்டுமற்றவிதுரன் அநக்கினியாம் எனக்கூறுவர். சில இருடியரோ, மூவருக்கும் பிராஜாபத்ய இஷ்டியை விதிக்க விலலை; மற்றோ, முற்கூறியமுறையே ஆகித அக்கினிக்கோ வைசுவாநரீ இஷ்டி யையும், திரைதாதவீ இஷ்டியையும்; அநாகித அக்கினிக்கும், அநக்கினிக்கும் பிராஜாபத்திய இஷ்டியையும் விதித்துளளார். எவ்வதிகாரி எவ்விஷ்டியைச்செய் வது என்னும் எல்லா விவஸ்தைகளும் எம்மால் மேல் வெளிப்படையாய்க் கூறப் பெறுமாதலின் ஈண்டு விரித்திலம். இப்போது அவனுன் மூன்றாவது தினத்தே செய்யத்தகுங்காரியத்தை நீ கேட்பாயாக:—பிராஹ்ம முகூர்த்தத்தே தர்ப்பாச னத்தினின்றுங் கிளம்பி, நீராலேனும், 'மதுகூவ' என்பதாதிமந்திரங்களா

லேனும், பஸ்மத்தாலேனும், சக்திப்படி ஸ்நாநம்செய்க. பின் தன்னக்கினியின் ண் சருவைப்பக்குவஞ்செய்க, அதை யெரியினின்றுமெடுத்து அவ்வழலின் பூர்வதிசையிலேனும், உத்தரதிசையிலேனும் நிலைபெறுத்துக. பின்னப்பக்குவ தனரூபசருவை நெய்யோடு கூட்டிப் பின் பிரணவ பூர்வகம் பூராதி மூன்று யாகிருதிகளைப் படிக்குக. 'ஸஹஸ்ரசீர்ஷா' என்பதாதி 16 இருசாரூபப்புருட சூக்தத்தைப்படிக்குக. பிரணவ பூர்வகம் 'உம் ப்ராயஸ்வாஹா, ப்ரஜாவதயெஸ்வாஹா, விஷ்ணவெ ஷெடவெ ஸ்வாஹா, ப்ருஹ்மணெஸ்வாஹா', என்னும் 4 மந்திரங்களையும் ஜபம்செய்க. பின் புண்யாகம் என்னுமட வசனத்தை புச்சரிக்குக, பின்ன பன் சுசியென்னும் பாத்திரத்தே சமஸ்கிருதம் பண்ணப்பட்ட நெய்யைக்கவர்ந்து பிரணவ பூர்வகம் 'அக்நயெஸ்வாஹா' என்னும் மந்திரததானே அக்கினிமுக மெனப் பெயரிய ஆகுதியை அக்கினியின்கண்ணேயிடுக, போஜன ஆதிகாலத்தே செய்யத்தக்க பிராண அக்கினிஹோத்திரத்தே பிரணவபூர்வகம், 'ப்ராணாய ஸ்வாஹா, அபாநாயஸ்வாஹா, வ்யாநாயஸ்வாஹா, உதாநாயஸ்வாஹா, ஸமாநாய ஸ்வாஹா' என்னும் ஐந்து மந்திரஙகளால் ஐந்துகவளவடிவ ஐந்தாகுதிகளையிடலே போல, அவ்வைந்து மநதிரங்களால் அவ்வழலின்கண்ணே யாகுதிகளையிடுக. தன் வேதசாகையின்கண்ணே படிக்கபபட்ட சகஸ்ர சீர்ஷா என்பதாதி புருஷசூக்தத்தின் ஒவ்வொரு இருசாவாகபபடித்து அவ்வககினியினகண்ணே ஆஹுதியை யிடுக. இடுமுறை யிதுவாம்:—அவன் முதலில அவ்வழலில காஷ்டமாகிய சமித்தையிடுக, பின்னெய்யையிடுக, பின்னேதனமாகிய சருவையிடுக, பின் பிரணவபூர்வகம் 'ஸ்விஷ்டக்ருதெஸ்வாஹா' என்னும் மந்திரத்தானே நெய்யாகுதியைப்பெய்க, தன் வேதசாகானுசாரம புருட சூக்ததனதை ஜபம்செய்க: இவ்வாறு ஹோமத்தைச்செய்து, பின் மீண்டுமவன் வேறு விரஜாஹோமத்தை அவ்வழலின்கண்ணே முன்போன்ற வேறு சருபபக்குவஞ்செய்து அதை நெய்யோடு கூட்டிப் பூரணுகுதிவரைசெய்க. அதன்முறை நூலிவிவவாறும்:—அவன் நூற் கூறிய மந்திரங்களால் அவ்வக்கினியின்கண்ணே நெய்யோடுகூடிய சருவால் விரஜாஹோமத்தைச்செய்க, பின்னதிற சேடித்த அதனைப பக்ஷணஞ்செய்க, பின்னு சமனஞ்செய்துகொண்டு பிரணவ பூர்வக ஸ்வாஹாமந்திரத்தால் அவ்வக்கினியின் கண்ணே பூர்ண ஆகுதியைச்செய்க. இபபோது, முற்கூறிய இஷ்டியை நிர்ணயிக்கும்பொருட்டு முதலில் அதன்கண்ணே மும்மதங்களை நிரூபிபபாம்:—ஹே குழந்தாய்! சில இருடியரோ, வைசுவாநரீ இஷ்டியே முதலாய எல்லா இஷ்டிகளையும் சிரௌத அக்கினியுடைய புருடனேசெய்க; ஸ்மார்த்த அக்கினியுடையவனும், அக்கினியற்றவனும், எவ்விஷ்டியையும் செய்யலாகாது என்பர். மற்றையரோ, பிராஜாபத்ய இஷ்டியைவிடுத்து வேறு இஷ்டியைச சிரௌத அக்கினியுடையவனேசெய்க, பிராஜாபத்ய இஷ்டியையோ ஸ்மார்த்த அக்கினியுடையவனும்செய்க, அநக்கினியோ எவ்விஷ்டியையும் செய்யறக, என்பர். மற்றுஞ் சில இருடியரோ, 'நிஷாதஸ்தபதிம் யாஜயெத்' என்னும் மறைமொழியால் நூலுணர்ந்தோர் வருணசங்கர ஜாதியையுடைய நிஷாதனுக்கும் இஷ்டி செய்யுமதிகாரம் கற்பித்திருப்பதேபோல, சிரௌதஸ்மார்த்த அக்கினியற்ற விதுரப்பிரஹ்மசாரி, வானப்பிரஸ்தர்கட்கும்

பிராஜாபத்திய இஷ்டியினதிகாரம் சம்பவிக்கும்; ஏனெனின், சுருதிகளினும் ஸ்மிருதிகளினும் இஷ்டிவாயிலாகவே சந்யாசஞ்செய்ய விதித்துளதாதலின், விதுராதிகட்கும் சந்யாச அதிகார மங்கீகரித்து இஷ்டியினதிகாரத்தை யங்கீகரியாதொழிக; என்னும் வார்த்தை சம்பவியாதாம். 'ப்ராஜாபத்யாமிஷ்டிம் நிர்வபேத்' அதிகாரி பிரஹ்மதேவதையையுடைய இஷ்டியைச்செய்து சந்யாச ஆசிரமத்தைக் கவர்க.

"ப்ராஜாபத்யாம் நிருப்யேஷ்டிம் ஸர்வவேதஸ ஸதக்ஷிணாம் ।
ஆத்மந்யக்நீந் ஸமாரோப்ய ப்ராஹ்மண: ப்ரவ்ரஜேத்க்ருஹாத் ॥"

"தக்கணை முழுதி னேடு தனிமறை பிராஜா பத்ய
மிக்கநல் லிட்டி முற்றி மிளிர்தன துதரத் தின்கண்
ணக்கினி யெவையு மாரோ பணம்புரிந் தரிய தன்ன
துக்கிரக் கிருகம் விட்டுத் துறவினை யுறுக வன்றே."

அதிகாரியாய பிராஹ்மணன் சர்வ தக்ஷிணையோடுகூடிய பிராஜாபத்ய இஷ்டியைச்செய்து, தன்னுதரத்தே சர்வ அக்கினிகளையும இனிதாரோபித்துத் தன்னில்லத்தைப் பரித்தியாகஞ்செய்து சந்யாச ஆசிரமத்தைத் தாரணஞ்செய்க. என்பன முதலிய சுருதி ஸ்மிருதிகள் இஷ்டி பூர்வகமாகவே சந்யாச ஆசிரமத்தை விதித்துள்ளனவாதலின், விதுராதியரும் சந்யாசத்தினும் முன்பு இலெளகிக அக்கினியின்கண்ணே பிராஜாபத்திய இஷ்டியை அவசியமாகச்செய்க. இவ்வாறு இஷ்டிசெய்வதன்கண்ணே இருடியர்க்குறுமதமூன்றும். ஆண்டுச் சிரௌத அக்கினியின்கண்ணே பிராஜாபத்ய இஷ்டியாம் என்னுங் கருத்தானே முதன்மத முயல்வாம். ஸ்மார்த்த அக்கினியின்கண்ணும் பிராஜாபதய இஷ்டியாம் என்னுங் கருத்தானே இரண்டாவது மதமுயலவாம். இலெளகிக அக்கினியின்கண்ணும் பிராஜாபத்திய இஷ்டியாம் என்னுங் கருத்தானே மூன்றுவது மதமுயல்வாம். இம்மூன்று பக்ஷத்தும் சித்தாந்தமாய் ஜாபாலாதி யுபநிடதங்களில் கூறப்பெற்றதை நீ கேட்பாயாக :—சிரௌத அக்கினியையுடைய அக்கினிஹோத்திரி ஒருகால் பரமஹம்ச சந்யாசத்தைக் கவரினே வைசுவாநரீ இஷ்டியையும, திரைதாதவீ இஷ்டியையுமேசெய்க. மற்றைய மூன்றனுள் ஒரு சந்யாசத்தைக்கவரினே அவ்வக்கினிஹோத்திரியும் பிராஜாபத்திய இஷ்டியையேசெய்க. சிரௌத அக்கினியற்றவனுக்கு எவ்விஷ்டியின்கண்ணும் அதிகாரமின்றும், இத்தகைய சித்தாந்த பக்ஷம் வேத வேத்தாக்களாய இருஷிகளாற் கூறப்பெற்றிருத்தலின், இது துணியப்பெறும் :—பரமஹம்ச சந்யாசத்தைக்கவருங்கால் அக்கினிஹோத்திரியோ வைசுவாநரீ இஷ்டியையும், திரைதாதவீ இஷ்டியையும் அவசியமாய்ச் செய்யவேண்டும்; இதன்கண்ணே எவ்விருடிக்கும் விவாதமின்றும். பிராஜாபத்ய இஷ்டியின்கண்ணே நவின்றமுறையே நானாவகையாய விவாதம் காணவருகின்றது. அதனையும் தகுதியாய விகற்பத்தை யங்கீகரித்து மதிமானனவன் சமாதானஞ்செய்க. அவ்விஷ்டியைவிடுத்து முன்மொழிந்த எட்டுச் சிராத்தங்களும், ஹோமமும் செய்வதன்கண்ணே எந்நூலாசிரியருக்கும் விவாதமின்றும்; அக்காலெவருமவற்றைச்செய்க. இவ்வாறு அச்சந்நியாச கர்த்தாச் சிரௌத அக்கினியின்கண்ணேனும், ஸ்மார்த்த

அக்கினியின்கண்ணேனும், லௌகிக அக்கினியின்கண்ணேனும் முற்கூறிய சர்வ கர்மங்களையும்செய்து, அதன்பின்பு உத்தர நாராயணீய உபநிடதத்தின் பாடஞ் செய்து, தன்னில்லினின்றும் வெளிப்போந்து ஒரு நீரின்முனமேற்செல்க. அக்காலவன் யாவரிடத்தும் அனுக்கிரகரூப அமிருத விருஷ்டியைச்செய்க; அதாவது:— சிராத்தாதி கருமங்களைச்செய்வித்த இருத்துவிக்குப் பிராஹ்மணர்கட்குக் கோதானஞ்செய்க, சுவர்ணதானஞ்செய்க, சருவின்சேஷ அன்னமீக, ஓமத்தினின்று மெஞ்சிய நெய்யையீக, வேறு அன்னாதி பதார்த்தங்களையும் ஆறறறகொத்தபடி தானஞ் செய்க. அதன்பின் சந்யாச கர்த்தா இருத்துவிக்குப் பிராஹ்மணர்களிடத்தினின் றும், தன்பந்து ஜனங்களிடத்தினின்றும தன்னபராதத்தைப் பொறுத்துக்கொள் ளும்படி கேட்டுக்கொள்க. பின் தன்மைந்தன் மனைவிமுதலிய உறவினரை ஆசிர் வாதாதிகளால் மகிழ்வுறுத்திப பிரிக்குக. சநயாசங் கவர்ந்தபின் சங்கமற்றவனுவதேபோல முன்னரே ஆகுக. அவனது ஆணையைபபெற்று மைந்தன் முதலியோர் அக்கால மகிழ்வுற்றவராய்த் தங்கிருகம புகுக. அல்லது, வேறுதாசினர் வேடிக்கை பார்க்க ஆண்டுறைவதுபோல நேயம் நீக்கி ஆண்டேயுறைக. அவன் அதிகாலையில் தினமும ஹோமம் செய்வதேபோல முன்மொழிந்த ஹோமதேசத்தே ஹோமத் தைச்செய்து 'ஸஈஸிஂ அஂத—ஈ—தஃஸிஂ—' என்பதாதி மந்திரங்களால் அக் கினியின் உபஸ்தானஞ்செய்க. பின் 'யாதெஸஜெயஜி யாத ந—ஃ' என்பதாதி மந்திரத்தையேனும், 'ஸயஜெ யொநிஃ-ஙியொ' என்பதாதி மந்திரத்தையேனும் மும்முறை படித்துத் தனது சிரௌத ஸ்மார்தத அக்கினியை அதன் உஷ்ணத் தன்மையை மாந்தும வாயிலாய்த தன்னுதாததே இனிதாரோபணஞ்செய்க. எவனுக்கு மூவக்கினியுள் ஓரககினியும அடையபபடாதோ, அவன் ஹோமாதி சர்வ கருமங்களையும் நீரின்கண்ணே செய்க; பாவனமய அககினியையே தன்னுதாத் தேஇனிதாரோபணஞ்செய்க. இவ்வாறு பாகிய அக்கினியைத தனதுதாத்தேயினி தாரோபிதது ஆண்டுப் பாவனமய குண்டததே அவ்வக்கினியை ஸ்தாபனஞ் செய்து முன்மொழிந்த சாவித்திரீப் பிரவேச மந்திரஙகளைப்படிக்குக. அதன்பின் சநயாச கர்த்தாஜல சமீபஞ்செலக; ஆண்டு நாபியளவு ஜலத்தே திதிபெற்றுச் சந்தியாகாயத்திரீ யுபாசனைசெய்க. பின்னவன் கிழக்கே திரும்பித் தன்னிரண்டு தோளையுமுயர்த்தி 'ஸஹஂவஜஷிஸெஜி' என்னும் வசனமே முதல் 'ஸ்ரீஂஸஂ கொவெ-ஜஷா ந—வஅ நஂ' என்னும் வசனம்வரை எல்லா வசனங்களையும் படிக்குக. 'யஹூஂ ஓஸஂ' என்னும் சாந்தி மந்திரத்தேயிருக்கும் 9 வாக்கியங்களை ஜபஞ் செய்க. பின் 'வ—தைஷணாயாவிதை ஷணாயா' என்பதாதி வசனபாடஞ் செய்க. பின் பிரணவவாயிலாய்ப் பூராதி மூன்று வியாகிருதிகளுள் ஒவ்வொரு வியாகிருதியின் உச்சாரணவாயிலாய் முறையே மந்தம் மத்யமம் உத்தமம் என் னும் மூன்று சுரங்களால் பிரைஷமந்திர உச்சாரணஞ்செய்க. இப்போது பிரசங் கத்தால் ஆதுர சந்யாச நிரூபணஞ்செய்வாம். இவ்வெட்டுச் சிராத்தமே முதலாக நீரின்கண்ணே திதிபரியந்தம நிரூபித்துள்ள சந்யாச சாதனம் திடகாத்திரமுடை யோனுக்குக் கூறியதாம். நோய் முதலியவற்றால் வியாகுலமுடையவனே கேவலம்

பிரைஷ மந்திரத்தையே யுச்சாரணஞ்செய்க; அம்மாத்திரையானே சந்யாசஞ் சித்தமாம். அவ்வாது சந்யாசத்தே சிராத்தாதி சாதனங்களைச்செய்யயாதொரு அவசியமுமின்றாம். அதிகாரியானவன் வாணியானும் பிரைஷமந்திர உச்சாரணஞ் செய்வதன்கண்ணே சமர்த்திலனேல் அம்மரணகாலத்தே மனத்தானே அதனை யுச்சரிக்குக. 'யதி ஆதுர: ஸ்யாந்மநஸா வாசா வா ஸம்ந்யஸேத்' அதிகாரி அதியந்தம் ஆதுரனனபோது மனத்தானேனும், வாணியாலேனும், சந்யாசஞ் செய்துகொள்க. என, மறையறைதலின் ஆதுரர்கட்குச் சந்யாசங்கவர்வதன்கண்ணே சிராத்தாதிகருமஞ் செய்யவிதானமின்றாம்; மற்றோ, வாணியாலேனும், மனத்தாலேனும், உச்சரித்த பிரைஷமந்திரத்தானே ஆதுரர்க்குச் சந்யாசப்பிராப்தியாம். இப்போது பிரசங்கத்தானே சந்யாசபலத்தை நிரூபிபயாம்:—ஹே மைந்த! சந்யாச ஆசிரமத்தைத் தரித்து இத்தேகத்தைப் பரித்தியாகஞ்செய்யும் அதிகாரி தடையற்றவனாய் விரைவாகவே பிரஹ்மலோகத்தையடைவன். ஏதேனுந் தடையுளதாயின் காலாந்தரத்தே பிரஹ்மலோகத்தையடைவன். இப்பலத்தையே கபிலாதிமகரிஷிகளும் கூறியிருக்கின்றனர்.

"ஸம்ந்யஸ்தமிதி யோ ப்ரூயாத் ப்ராணை: கண்டகதைரபி ।
ஸ ஸம்யக் ஜ்ஞானம் ஹித்வா ப்ரஹ்மலோகே மஹீயதே ॥"

"மரித்திடிற் கண்டதேயத் துயிரது மருவுஞான்றுந்
தெரித்தநல் லவன்பிரைஷ மந்திரந்தனைச் செபித்தே
பெருத்தமெய்ச் சந்நியாசந் தரித்தவன் மரித்தபின்னாத்
திருத்திரவி யினைப்போழ்ந்து திசைமுகனுலகிற் போமே."

(பொ-ள்.) மரணகாலத்தே கண்டதேயத்தே பிராணனிருக்குமாயினும் பிரைஷமந்திர உச்சாரணஞ்செய்து சந்யாச ஆசிரமத்தைத் தாரணஞ்செய்தவன் மரித்தபின்பு சூரியமண்டலத்தைப் பேதித்துப் பிரஹ்மலோகத்தையடைவன். மகாப் பிரளயமுற்று பிரஹ்மாவின் இலயம் ஆம்போது அச்சந்யாசி பிரஹ்மாவோடு நிர்க்குணப்பிரஹ்மரூப மோக்ஷத்தையடைவன். ஹே குமர! அப்பயனை தக்ஷப்பிரஜாபதியும் கூறியுள்ளார்:—

"த்ரிம்சத் பராம்ஸ்த்ரிம்சதபராம்ஸ்த்ரிம்சச்ச பரத: பரான் ।
ஸத்ய: ஸம்ந்யஸநாதேவ நரகாத் த்ராயதே பித்ரூன் ॥"

"சிட்ட மெய்த் தவன் றன்ன தாச் சிரமமேன் மையினு
லிட்ட முற்ற தோண் ணூறுவங்கிசப் பிது ரேவரும்
கட்ட முட் டுறு நிரைய நின் றேறியே கதியை
யோட்டி யின்புற வாழ்வ தங் குறுதி யுண்மையதே."

(பொ-ள்.) சந்யாச கர்த்தாவானவன் தனதாசிரமப் பிரபாவத்தால முன்சென்ற 90 வம்சப்பிதுர்க்கள் யாவரையும் நரகத்தினின்றும் கரையேற்றுவன். சந்யாச பபன்ஜாபால உபநிடதத்தின்கண்ணும் கூறப்பெற்றுளது.

"பதம் காமுகதாம் வாசதோபஹதயா காமுகதாம் த்ரிபதம் ஸஹ ஸ்ரம் ।
ஸதேஹவஷிலாம் க்ருதஸஹ்யொகேயஷாம் காமெஸம்ந்யஸதீக்ஷவிப்ர: ॥"

" எக்குலத்தி லெம்மறையவன் எழிற்றுற வேயும்
அக்குலத்தின் முன்கழிந்தவ ரைம்ப திற்றிரட்டி
மக்கண்மேல் வருபவர்கண் மூந்நூறு மாமநுடர்
துக்கமின்றிய சொர்க்கமா திய பதந் தொடர்வார்."

(போ-ள்.) எக்குலத்தே எம்மறையவன் சந்யாச ஆசிரமத்தைக் கவர்வனோ, அக்குலத்தே முன்னர்க்கழிந்த 100 மக்களும், இனிமேல் வரும் 300 மநுடரும் சுவர்க்காதி உத்தமலோகத்தை யடைவர். ஹே மைந்த! சந்யாசம் என்னும் பதத்தே இரண்டு பதங்களிருக்கின்றன. ஒன்றே, சம் என்னும் பதமாம். மற்றொன்றே, நியாச என்னும் பதமாம். முதலதன் பொருள் நன்மையாம், மற்றதன் பொருள் தியாகமாம். ஆண்டுத் தியாகரூப நியாசத்தே நன்மையிதுவாம். சர்வ காலத்தும், சர்வ தேயத்தும், சர்வ பதார்த்தங்களையும், சரீர மனவாணியால் தியாகஞ்செய்தலாம். இவ்வகையாய பொருள் முக்கியமாகவோ பரமஹம்ச சந்யாசத்தின்கண்ணே பொருந்தும்; குடீசகாதியிலோ கௌணமாகப்பொருந்தும் இத்துணையானே சந்யாசபலம் நிரூபிக்கப்பட்டது. இனி ஆதுரசந்யாசப் பிரசங்கத்தானே பரமஹம்ச சந்யாசிக்கு மரணத்தின்பின்பு புத்திராதி பந்துக்களும், பக்தர்களும் செய்யவேண்டிய காரியத்தை நிரூபிப்பாம் :—ஹே குழந்தாய்! இம்மறையவன் பரமஹம்ச சந்யாசத்தைக்கவர்ந்துளான். என, உலகாலறியப்பெற்றவன் மரித்தபோது புத்திராதி யுறவினரே முதலாக நகரத்துறும் அரசனீறுகவுள்ள, சர்வ பக்தர்களும் அவன் சரீரத்தே எவ்வெச சமஸ்காரஞ் செய்யத்தகுதியரோ, அவ்வியாவற்றையும் சௌநக பௌத்தாயநாதி மகரிஷிகள் தர்ம சாஸ்திரங்களிற் கூறியுள்ளார்கள். அவற்றைக்கேட்பாயாக, ஹே குழந்தாய்! அந்தப் பரமஹம்ச சந்யாசி மிருத்தியுவையடையும்போது அதிகாரிகள் அவன திருமேனியை எழுந்தருளச் செய்யும்பொருட்டுச் சுந்தரமானத்தேரையேனும், சுந்தரவிமானத்தையேனும், சுந்தரமான பல்லக்கையேனும், சுந்தரமான மேனாவையேனும் தயார்செய்க. அது விஸ்தாரமாயும் மிகமிருதுவாயும், மிகதிடமாயும இருத்தல்வேண்டும். அர அரி பக்தர்கள் சிவநிசியின்கண்ணும், கிருஷ்ண ஜன்மாஷ்டமியின்கண்ணும் நானுவகை வாத்தியங்களைக்கோஷித்து நடனஞ்செய்து ஜயஜயசப்தஞ் செய்வதேபோலவும் வேத கோஷம் செய்வதுபோலவும் செய்க. வசந்தமாச ஓலிப்பண்டிகையில் உலகர் நானுவகை யுற்சவஞ்செய்வதேபோலச சாவ அதிகாரிகளும் முதலில் ஸ்நாநஞ் செய்து நானுவகை யழகிய வஸ்திரங்களைத்தரித்துத் தமது தேகங்களில் சந்தனம் பூசி முகத்தே தாம்பூலந்தரித்து கழுத்திற் சுகந்தமாலைகள் புனைந்து; மஞ்சட்பொடி பால் பழம சுகந்த புஷ்பம் முதலிய மங்கள வஸ்துக்களை தம்கரத்தேதரிக்குக. அதிகாரிகளிடத்தே மிகுந்த தன சம்பத்திருப்பின் அத்திருமேனியை எழுந்தருளச்செய்யும் மார்க்கத்தையும இல்லங்களையும் எப்புறமுந் துலக்கித் தூய்தாக்கிச் சந்தனகர்ப்பூராதிகளின் நீரால் தெளிக்குக. அன்பர்கள் சிவ விஷ்ணுப் பிரதிமைகளைப் பஞ்சாமிருதத்தால் அபிஷேகஞ்செய்வதேபோல அன்பர்களும் அத்திருமேனியைப் பஞ்சாமிருதத்தால் அபிஷேகஞ்செய்க. ஸ்ரீ கங்காதி

பவித்திரஜலத்தால் அபிஷேகிக்க. சந்தனாதிகள் பூசி நானாவகைப் புஷ்பமாலைகளால் அலங்கரித்துச் சந்தனாதிய பதார்த்தங்களால் அடிக்கடித் தூபமிட்டுக் கர்ப்பூரத்தோடுகூடிய ஆர்த்திக்கீபங்களால் அடிக்கடி ஆர்த்திசெய்க. இவ்வாறு, அதிகாரிகள் அத்திருமேனியைப் பூசித்து அவ்விமானத்தே எழுந்தருளச்செய்க. விஷ்ணு முதலிய தேவதைகளைப்போலவும், மகாராஜாவைப்போலவும், அத்திருமேனியை அத்தானத்தினின்றும் எழுந்தருளச்செய்து வேதகோஷங்களோடும் வெளியிற்செல்க. ஆண்டு, வனத்தே என்புமலாதியில்லாத பிப்பல விருக்ஷம், மனுடரற்ற வனஸ்பதி, விஷ்ணு சிவாதி தேவதைகளின்றானம், கோசாலை, மகாநதிதீரம், மற்றைய பவித்திரஸ்தானம் முதலியவற்றை, அத்திருமேனியைக் கொணர்க. அச்சுபஸ்தானத்தே கூபம்போல வட்டமாய் புருட பரிமாண ஆழம் ஒரு குழியை மறையவர் அடிக்கடி பூராதி வியாகிருதிகளைப் படித்துக்கொண்டே தோண்டி பூராதிசப்த வியாகிருதிகளைப் படித்துக்கொண்டே நீராலக்குழியைப் புரோக்ஷணஞ்செய்க. பின்பு அக்குழியின் கீழ்ப்பிரதேசத்தே பிரணவமந்திரத்தால் தர்ப்பாசனம் விரிக்குக; வெளியிடத்தே அத்திருமேனியை வைத்துச் சாவித்ரீமந்திரபாடத்தோடுகூட அபிஷேகித்து மிருத்திகை முதலிய அழுக்கற்றாக்குக. பின்னதிகாரிகள் அத்திருமேனியை விஷ்ணுபுத்தியால் புருஷ சூக்த மந்திரபாட பூர்வகம் அபிஷேகிக்க. முன்போன்ற சுகந்த புஷ்பமாலைகளால் அலங்கரிக்குக. பின் ' விஷ்ணோஹவ்யஂ ரக்ஷஸ்வ '' என்னும் மந்திரத்தை யுச்சரித்து அக்குழியில் கிழக்குமுகமாக வைக்குக, பின்னவ்வுத்தமன் றண்டத்தை மூன்று பாகப்படுத்தி அவன் வலக்கரத்தேயீக. அதிகாரிகள் ஆதுரசந்யாசத்தைத்தரித்து அக்கால் மிருத்தியுவையடையின் நான்முறையே தண்டப் பிராப்தமின்றாயினும் மரித்த பின்னவ்வுத்தமன்கரத்தே ஓரறிஞன் ' இதம்விஷ்ணுர்விசக்ரமே ' என்னும் மந்திரத்தானே தண்டத்தையீக; அத்தண்டத்தை மூன்று விபாகம்செய்து வலதுகரத்தேயீக. பின்னிருதயதேயத்தே அதிகாரிகரத்தைவைத்து ' ஸம்ஸம்ஸிஷக ' என்பதாதி மந்திரத்தை ஜபம்செய்க. புருவவிடைத் தேயத்தே கரத்தைவைத்துப் புருடசூக்த மந்திரங்களை ஜபம்செய்க. மூர்த்தஸ்தானத்தே கரத்தைவைத்து ' ப்ரஹ்மஜஜ்ஞானம் ' என்பதாதி மந்திரஜபம்செய்க. பின் ' ஸாவித்ரீ ஸாவித்ரி தமாக ' என்னும் மந்திரத்தை யுச்சரித்து மத்தகத்தைப் பாஷாணத்தாற் பேதனஞ்செய்க. பின் பிரணவமந்திரத்தையும் பூராதி வியாகிருதிகளையும அடிக்கடி யுச்சரித்து அக்குழியைப் பாஷாணங்களாலும் மண்ணாலும் திடமாய்ப் பூரணஞ்செய்க. அவன்றிருமேனியை நாய் நரி முதலிய பிராணிகள் பக்ஷணம் செய்துவிடாதபடி திடபூரணஞ்செய்யவேண்டும்; என்னை, அத்திருமேனியை அவைபக்ஷணஞ்செய்யின் அத்தேயத்தே துர்ப்பிக்ஷாதி யுபத்திரவங்கள் உண்டாம் என, பௌத்தாயன இருஷிகூறியுள்ளாராதலின் என்க. அவன் மரித்த பின்னர்ச் செய்யுமாறு விதித்த சமஸ்காரங்களனைத்தையும் விதிப்படிசெய்யின் அம்முத்தனுக்குப் புண்ணியப்பிராப்தியேனும், செய்யாதொழியின் பாவப்பிராப்தியேனும், இன்றாயினும்; அதிகாரிகள் அவன் மரித்தபின்னர் அவற்றை விதிப்படி செய்யின் புண்ணிய அடைவும், செய்யாதொழியின் பாவ அடைவும் ஆம். அசசந்நியாசி மரித்தபின்பு எனது தேகத்தை நீவிர் அரிந்து நாய் முதலியவற்றிற்

குப் பக்ஷிப்பான் கொடுமின் என இச்சிப்பினும்; துறக்கவின்பம் விழைந்த அதிகாரி அவ்வாறுசெய்ய இச்சியான்; மற்றோ, சாஸ்திர விதிப்படி மெய்யைச் சமஸ்கரிப்பன். அத்திருமேனியைப் பூமியின்கண்ணே இடபூரணஞ்செய்யும் நால்வருணத்தவர்க்குமே அது சுககாரணமாமாதலின் அதிகாரிகள் அத்திருமேனியை இனிதானவகையாற் பூரணஞ்செய்க. குடீசக பகூதக ஹம்சனென்னும் மூவகைச் சந்யாசிகட்குச் சிகை சூத்திரங்கள் இருக்கின்றனவாதலின், அநேக இருடிகள் அவர் மரித்தபின் அவரை அக்கினியின்கண்ணே தாகவிதானஞ்செய்துளார்; சில இருடியர் மண்ணின்கண்ணே பூரிப்பான் விதித்துளாராதலின், அவர் மரித்தபின் அதிகாரிகள் மெய்யைத் தகனஞ்செய்க. அல்லது, மண்ணிற் பூரணஞ்செய்க. எல்லா இருடியரும் பரமஹம்ச சந்யாசியைத் தாகம்செய்யுமாறு எல்லாவாற்றானும் நிஷேதஞ்செய்துளாராதலின் அதிகாரிகள் அவன் றிருமேனியை யொருகாலும் தாகஞ்செய்யற்க. இவ்வார்த்தையைக் கபிலமுனிவரும் கூறியுள்ளார்.

> ஸதமெஹ்ந-ஒஹதம் காய-ஒம்வஷெவ-ஒஹி கெஷாய-ஒயாவியி ।
> விஷ-ஷஹஸ்ய நதத்தாய-ஒ ஜெகொ ஷிஷாஷிகஹி-ஒஷிஸ ॥

> "மறையோடு மிருதிவந்த மாணழலிலர் முன்மூவர்
> செறியுடல் விடினற்றீயிற் செலுத்தி யேதகனஞ்செய்க
> பொறையுறு பரமஹம்சன் பொன்றிடிற் போற்றுமெய்யை
> யறியொருகாலுந் தீயிலழற்றிட லருகமன்றே."

(பொ-ள்.) சிரௌத ஸ்மார்த்த அக்கினியற்ற குடீசகாதி மூன்று சந்யாசிகளை மரணானந்தரம் அக்கினியின்கண்ணே தகனஞ்செய்க; ஆனால் பரமஹம்ச சந்யாசியை அக்கினியின்கண்ணே தாகத்தை யொருகாலும் செய்யாதொழிக. தேவதையின் பிரதிமையைப்போல அன்பருக்குச சர்வ மனோரதங்களையும் செய்விக்கும் அவ்வுத்தமன் றிருமேனியக்கினியாற் றகிக்கப்படினும், நாய் முதலியவை பக்ஷிப்பினும், பிராணிகளின் சம்பூரண மனோரதங்கள் அழியுமாதலின் அதிகாரிகள் அத்திருமேனியைத் தாகம்செய்யாதொழிக; மற்றோ, முன்மொழிந்த முறையே அதனைப் பூவின்கண்ணே இடமாய்ப் பூரணிக்குக; இவ்வாறு பூரணித்தப்பின் 'ஸுஹ்நாஹ்நாவவது' என்பது முதலிய மந்திரபாடஞ்செய்க. 'ஸஹியாஷதெ' என்பதாதி மந்திரங்களையும் பாடஞ்செய்க. விவாகாதி யுற்சவத்தே உலகர் மகிழ்வுறலேபோல மகிழ்வுற்றவதனத்தாய்ச சர்வ சோகக் கிலேசங்களற்றவராய் எல்லா அதிகாரிகளும் அச்சமாதியை வலஞ்செய்க, நமஸ்கரிக்குக, ஆலயம் அழகியதாயமைக்குக; அல்லது, ஆல் பிப்பலாதிய புண்ணிய விருக்ஷங்களை ஸ்தாபனஞ்செய்க. அவ்வாலயத்தே விஷ்ணுவின் பிரதிமையையேனும் சிவலிங்கத்தையேனும், சூரிய கணபதி தேவி முதலியவர்தம் பிரதிமைகளையேனும் ஸ்தாபனஞ்செய்க, அதனை யெப்போதும் பூஜைசெய்க. இவ்வர்த்தத்தே யாமதிகமாகச் சொல்லுவதென்னே, நெடுங்காலத்திற்குப் பின்னரும அத்தானத்தே என்புமலாதி அசுசிப்பொருள்களின் சம்பந்தம் உண்டாகாதபடி யுபாயஞ்செய்க. அத்தகைய உபாயத்தின் அவசிய கர்த்தவ்யத்தன்மை பிராப்தமாயினும் அத்தானத்தே தேவாலய

ஸ்தாபனஞ் செய்பவன் மிகமதிமானெனவறிக. தனது மாவிருக்ஷத்தில் அவசியம் விடவேண்டியதாய நீரைப் பிதுர்க்கட் கர்ப்பணஞ்செய்பவன் அத்தியந்தம் மதிமானவதேபோல அத்தானத்தே ஆலயஞ் செய்யும்புமானும் மிகமதிமானெனவறிக. மிருததேக தரிசனத்தானும் பரிசனத்தானுந் தநதேகத்தே அசுசித்தன்மை மதியுண்டாவதேபோல அத்திருமேனியைக்காண்டலானுந் தீண்டலானும் அதிகாரிகள் தம்பால் அசுசித்வ மதியையொருகாலுஞ் செய்யற்க; மற்றே, விஷ்ணுவின் பிரதிமையைக் காண்டலானும் தீண்டலானும் அன்பர்கட்குத் தம் சரீரத்தே சுசித்வமதியுண்டாவதேபோல அத்திருமேனியைக் காண்டலானும் தீண்டலானும் தம்பால் சுசித்வமதிசெய்க. அத்திருமேனியை யபிஷேகித்த நதியாதிகளுந் தீர்த்தரூபமாதலின் அவற்றின்கண்ணே அதிகாரிகள் தீர்த்த புத்தியோடும் ஸ்நாநம செய்க. ஆனால், தமபால அசுசித்வமதியோடும ஸ்நாநஞ்செய்யாதொழிக. ஸ்நாநஞ் செய்ய இச்சையில்லையேல ஸ்நாநஞ்செய்யாதொழிக. ஸ்நாநத்தே புருட இச்சையே காரணமாம்; அசுசித்தன்மை காரணமன்றும; என்னை, அத்திருமேனி மரிப்பதன் முன் சாக்ஷாத் விஷ்ணுரூபமாம், பின் விஷ்ணுவின் பிரதிமைக்குச் சமானமாம். இவ்வார்த்தையை அத்திரி இருஷியும கூறியுள்ளார் :—

"ஜௌராஷிவெவாஸா ஷெவஸ்ரூ அவுூஂ அாஅ வுஜெவது ।
அவுூஂஸஂ தஹீஸி நாஸாஷிவஂ சுஅவுூஂ வ்ரதிஶாழிகஂ ॥"

"ஷெவதா வ்ரதிசாஂ த்ரூஷாயதிஂ த்ரஜெஷவதணிஂ ।
வ்ணிவாத ஈகூவஷாணொ நாஸகஂ ஸளஸவஂ வஜெக் ॥"

"வாசுதேவன்றன் வடிவங்களி ரண்டுளவளமா
யாசிலொன்று நற்சலமயல சலமாஞ் சலந்தான்
ஏசிலாயதி பிரதிமையெழில சலமதாம்
பேசியே தொழுதிறைஞ் சுதல் பெரியவாகடனே."

"அரிபிரதிமை கண்ணுறவருங் கரங்கு வியாா
பரமஹஞ்ச நற்றண்டியைக் கண்டபின்பணியாா
நரகமெய்துவர் நாசமில் ரவுரவ நலிநதே
பரகதிய தெங்கவருறல் பண்ணிடிலிடரே."

(பொ-ள்.) ஸ்ரீ வாசுதேவருக்கு வடிவங்களிரண்டாம் ஒன்றே சலரூபமாம் மற்றொன்றே அசலரூபமாம, பரமஹம்ச சந்யாசியோ விஷ்ணுவின் சலரூபமாம், சாளக்கிராமாதி பிரதிமை அசலரூபமாம். யாவர் விஷ்ணுவின் சாளக்கிராமாதி பிரதிமைகளைக்கண்டு நமஸ்கரிக்கவில்லையோ, தண்டத்தையுடைய பரமஹம்ச சந்யாசிகளைக்கண்டு நமஸ்கரிக்கவில்லையோ அவர் என்றுந்தீரா இரவுரவமடைவர். இவ்வார்த்தை ஸ்ரீ மகாபாரதத்தின்கண்ணும் ஸ்ரீ வியாசபகவானாற் கூறியருளப் பெற்றுளது :—

"த்ரூவஜ்த்ரௌவாஸாவஜ் தௌவாசஷிவஷாஃ வஂஷிதவவா ।
காஷாயதணஶொத்ரணயதிஃ வஷிஜெஷூஜெஃ ஸநர ॥"

" சீலமற்றவனென்றுலுஞ் சீலமுறறவனென்றுலும்
காலறிவிலியென்றுலுங் கதித்தபண்டிதனென்றுலும்
சாலுநற்காவி தண்டமாத்திரத்தாலெப்போதும்
ஏலுபூச்சியனும்விட்டோ னிருபிறப்பாளரானே."

(பொ-ள்.) அந்தப பாமஹமச சநயாசி, மேன்மையறற ஆசாரமுடையவ னேனும், மேன்மையுறற அசாரமுடையவனேனும, மூர்க்கனேனும், பண்டித னேனும், காவிவஸ்திரத்தோடும, தண்டத்தோடும கூடியிருத்தன்மாத்திரை யானே அவன் மறையவா முதலியோரால விஷ்ணுவடிவமாய்ப் பூசிக்கத்தக்கவ னுவன். இவ்வார்த்தையை 'அவ்ரதெகஜெதெஷாஂ தெவாஃ வஸெஷுவகா ரிதாஃ' என்பதாதி வசனங்களால நாரதமுனிவரும் கூறியுள்ளார். அவ்வசனங் களின் கருத்திதுவாம :—பிரஹ்மா, விஷ்ணு, உருத்திரன், இநதிரன், உலகபாலர், வசு முதலிய தேவகணஙகள் என்னு மிவ்விபூாவரும அப்பரமஹம்ச சங்யாசியின் மெய்யிலிருக்கின்றனராதலின சிரத்தை பக்திகளோடும அவ்வுத்தமனைப் பூஜிக்கும் அதிகாரிகள் அவ்வெல்லாத்தேவரையும பூசைசெய்தவாகள ஆவர்கள். நிராதரஞ் செய்தவர்கள் அவ்வெல்லாத்தேவரையும நிராதரஞ் செய்தவர்களேயாவாகளாத லின் அவவுத்தமனை யொருபோதும நிராதரஞ்செயயலாகாது. ஸ்ரீ விஷ்ணு வானவா தமது சாளககிராமாதி பிரதிமைகளில எபபோதும இருபபதேபோல அவா சநயாசிகள சரீரத்தின்கண்ணும எபபோதுமிருபபா. ஆகைபால, அவ்வுத தமன் இருககுமிடமெல்லாம நேரே அமமகாவிஷ்ணுவே யிருப்பாராதலின் அதி காரிகள் அவ்வுத்தமனை அவசியமாய்ப பூஜைசெயக. இவ்வுலகத்தேயாவன் அநதப் பாமஹம்ச சநயாசியைப புகழுவன, இகழுவன, அன்னவஸ்திராதி யீவன், அவ் வியாவறறையும் அவ்வுத்தமன மகாவிஷ்ணுவிற காபபிபபன. அவற்றையேறற ஸ்ரீ பகவான் தகுதிபபடி தாமே கொடுபபவாககுச சகதுககரூபபலப் பிராப்தியாக் குவர். பிராஹ்மணுதி நாலவருணத்தவா ஒருகால அசசநயாசியைத தநதருமத்தி னின்றும் நழுவினவராய்க காணினும தண்டிக்கவேண்டும என்னும சங்கற்பத்தை யுஞ்செய்யாதொழிக; என்னை, அவரைத தண்டிபபவா ஆசிரியர், அரசர், தருமர் என மூவராவர். தநதருமததிதே யையுறற சநயாசியரை தநகுருவே சிக்ஷிக்கலாம். இவ்வார்த்தையை ஜமதகநியெனப பெயரிய இருடியும கூறியள்ளார் :—

ஸுவாயஹு-ாா-ஸை-ஷெயாதூா ய-ஷெவிஸஂகயா ।
நிமூ ஹெந-மூஹெ அாவி-ா-ஃ வஸ-ஷதூகாாணஂ ॥

" விட்டவன்றனக் கேவ்வார்த்தை விளம்புந்தன் குரவனத்தைத்
தோட்டிடல் வேண்டுமையந் தொடாந்தல னுகிமெய்யே
விட்டவற் கருளலூடும் வெஞ்சினத் தடிதலூடும்
சிட்டமெய்க் குருவேயாண்டுங் காரணந் தெளிகவன்றே."

(பொ-ள்.) துறவியானவன் தனதாசிரியா கூறிய வசனத்தைச் சம்சயமற்ற வனுய் அங்கீகரித்தல்வேண்டும்; ஏனெனின் அத்துறவியை நிக்கிரகிப்பதின்கண் ணும் அனுக்கிரகிப்பதின்கண்ணும் யாண்டும் ஆசிரியரே காரணராவர். இவ்வுல

கத்தே சந்யாசி மத்தியபானம் ஸ்திரீகமனம் முதலிய பாவகருமங்களைப் பிரசித்த மாகவே செய்யின் அவனை அரசர் சிக்ஷிக்கலாம். இவ்வார்த்தையைத் தக்ஷப்பிரஜா பதியும் கூறியுள்ளார்.

"வாரிவ்ராஜஸ்ய மரஹீஶாதஸ்ய ஸ்வயமேவ நதிஷ்டதி ।
ஸ்வதேஶாத் கயிஶாதம் ராஜாஸரீவ்ரம் வ்ருவாஸயேத் ॥"

"எம்மறையவன் றுறவியாய்த்தன் னறத்தியங்கா
தம்மவெண்ணறை பருகியங்கனை முலையணைக்கின்
செம்மலன் னவன்றலையி னிற்சின்னநாய்க்காலாற்
பொம்மித்தன் னுடைத்தேயம் விட்டகற்றிடல்புகழே."

(பொ-ள்.) எம்மறையவன் அந்தப் பரமஹம்ச சந்யாசத்தைக்கவர்ந்து தன் தருமத்தே நின்றிலனாய்க் கட்குடித்துக் கருங்கணாரணைத்துப் பாவமே புரிவனேல் அத்துற்கிருத்தியனை அரசர் தலையில நாயின்பாதக் குறிப்பிட்டுத் தம தேயத்தி னின்றும் வெளிப்படுத்துக. சந்யாசி அரசர் முதலியோருக்குத்தெரியாமல் இரக சியமாய்ப் பாவகருமத்தைச்செய்யின் அத்துராசாரியைத் தருமர் சிக்ஷைசெய்க. இம்மூவர் தவிர வேறெவருமவனைச சிக்ஷிப்பவராகார். இவ்வகையாய சாஸ்திர மரியாதையைப் பின்பற்றி அதிகாரிகள் தநதருமம் விருத்தியாம்பொருட்டும் துறக்கசுக அடைவின்பொருட்டும் சந்யாசிக்குச சரீரமனவாணியாற் சுகத்தையே யடைவிக்குக; அதனு லவாக்கு மனநினைநத யாவுங்கைகூடும் சந்யாசியின் மெய் அக்கினியின்கண்ணே தாகஞ்செய்யத தகுதியதன்றுமாதலின் மற்றையா மரித்தபின் அசௌசாதிகளாதலேபோல அவ்வுத்தமன் மரித்தபின்னின்றும, இலாஞ்சலிதானமுமின்றும், செய்மாநதலுமின்றும, அழலைத் தபனஞ்செய்தலு மின்றும், வேப்பிலையயிலலுமின்றும என்றுணர்க. பக்தி விசுவாசத்தோடும அச்சந்யாசியின் மெய்யை எடுத்துக்கொண்டு செல்லு மதிகாரிக்கு ஒவ்வொரு பாதந்தோறும் அசுவமேதயாகபலம் சித்திக்கும். சாளக்கிராமாதிகளைக்காண்ட லானுந் தீண்டலானும் அன்பர்கட்குண்டாம் பலபபடியே அம்மிருத திரு மேனியைக் காண்டலானும தீண்டலானும் அதிகாரிகட்குண்டாம். மனத்தானும வாக்கானும் பிரைஷமந்திர உச்சாரணத்தால் பரமஹம்ச சந்யாசத்தை யடைவுற்ற வன் மேனியை அக்கினியின்கண்ணே ஒருகாலும் தகிக்கறக; மற்றே, மண்ணின் கண்ணே சமாதிசெய்க, பின் அசௌசதிலாஞ்சலி முதலியவற்றையும் செய்யற்க. அத்திருமேனியை எடுத்துச்சென்றவனும், கூடச்சென்றவனும், குழிவெட்டிய வனும், சமாதிவைத்தவனும் எப்போதும் தூய்தாகவேயிருப்பர். அவன் மரித்த பின் அக்கினிதாகாதி சமஸ்காரமும் பிண்டோதகக் கிரியையும் உண்டாகாதென் றுஆம் பதினொன்றுநாள் பூர்வங் கிருகஸ்தா சிரமத்திருநத மைந்தன் பார்வண மெனப் பெயரிய சிராத்தத்தைச்செய்க. விவாகாதி காலத்தே உற்சவஞ்செய்வதே போல உற்சவவாயிலாய் அம்மைந்தன் 11 ஆம்நாள் விஷ்ணுநாம உச்சாரண பூர் வகந் தனது தந்தையின் நாம உச்சாரணஞ்செய்து சாஸ்திரவிதிப்படி மொழிந்த சிராத்தத்தைச்செய்க. மைந்தனின் வேறாய மற்றைய அதிகாரிகளோ மகாவிஷ்ணு விற்கு மகிழ்வுண்டாதற்பொருட்டு 12 ஆம் நாளில் கேவலம் நாராயணபலியே

செய்க; பார்வண சிராத்தம்செய்யறக. அம்மைந்தனே 11 ஆம்நாள் அசசிராத்தத்தைச்செய்து 12 ஆம் நாள் நாராயணபலிசெய்க. இப்போது பௌதாயன இருடியியம்பிய முறையே நாராயணபலியின்வடிவததை வருணிபபாம:—12 ஆம்நாள் நாராயணபலிசெய்யுமாறிதுவாம, முதலிலே சோடச உபசாரங்களால் விஷ்ணுவின் மகா பூஜைசெய்க, அவையாவன: ஆவாஹனம் 1, ஆசனம 2, பாதயம் 3, அர்க்யம் 4, ஆசமநீயம் 5, ஸ்நாநம் 6, வஸ்திரம 7, உபவீதம் 8, கந்தம 9, புஷ்பம் 10, தூபம 11, தீபம் 12, அன்னம் 13, நமஸ்காரம 14, பிரதக்ஷிணம் 15, விசர்ஜனம் 16 இம்மகாபூஜையின் பின் பாயச நைவேத்தியமாபபிக்க. பின்னதனைப் பிரணவ பூர்வகம் பூராதி மூன்று வியாகிருதிகளை புசசரிதது அககினியின் கண்ணே ஹோமஞ்செய்க. இங்ஙன் ஹோமததால சமஸ்கரிககபபெறற விஷ்ணுவின் நைவேத்யமாகிய பாயசத்தைச சர்வப பிராஹ்மணாகட்குமீக. அநநாராயண பலியில் 13 புருடரைப் பிரதானமாய்ப பூஜனைசெய்க, அமமுறையிதுவாம்: அந்த பலிகர்த்தாவானவன் 12 சங்யாசிகட்கு விருநதுகொடுததுத தன் விட்டிறகுக்கொணர்க. 12 பேர் கிடையாவிடின் மேனமையாய ஆசாரததையிருககும கிருஹஸ்தர்க்கு விருந்துகொடுத்து அழைததுவருக. 'கேஶவாயநம:' என்பதாதி பன்னிருமநதிரஙகளால பன்னிரு சஙயாசிகளையேனும பன்னிருமேன்மை மறையவரையேனும கநத புஷ்பாதிகள்கொண்டு பூஜைசெய்க. பின் பிரீதியோடும் அவர்கட்குப போஜனஞ்செய்விகக. சஙயாசிகளாயின் வஸ்திரம ஈக, மறையவராயின் தக்ஷிணையோடும் வஸ்திரமீக. 12 சஙயாசிகள் கிடைபாவிடினும 13 எண்ணிக்கையை நிறைவிக்கும்பொருட்டும பூஜிக்கும்பொருடடும ஒரு வித்வானுகிய சஙயாசியை யவசியங்கொணர்க. 13 சஙயாசியயைரயும புருடசூக்தத்தேயிருக்கும 16 இருசாரூப மநதிரங்களால், சோடச உபசாரங்கொண்டு பூஜைசெய்க. ஒரு பரமஹமச சஙயாசியுங் கிடையாவிடின் வித்வான்களாய தாமானமப பிராஹ்மணரைவைத்து விஷ்ணு புத்தியுடன் அபபதினறு மநதிரங்களால சோடச உபசாரஙகளாற் பூஜனைசெய்க. அவர் போஜனஞ் செய்யுந்தானத்தின் சமீபததேத தாப்பையை விரிதது ஜராயுஜாதி நால்வகைப் பூதபபிராணிகட்கும நானுவகையாய மதுர அன்னபலியீக. அவற்றுள் ஒவ்வொரு பூதபபிராணியின் நாம உசசாரணததால் முறைப்படி பிரணவ பூர்வகம் 'ஹ ஓ ஸ்வாஹா, ஹ வ ஸ்வாஹா வ ஸ்வாஹா, ஹ ஓ ஹ வ ஸ்வாஹா' இன்னுன்கு மந்திரங்களாற் பலிதானஞ்செய்க. அபபலிகர்ததா வீட்டில் தனசம்பத்தியில்லாவிடின் அன்னவஸ்திராதி மாததிரையடைவானே மகிழ்வுறும் 13 சங்யாசிகளையே உண்பிக்க. தனசம்பததி மிகவுண்டேல வஸ்திர பூஷணுதிபதார்த்தங்களைக்கவாத்தகுதியராய மேன்மை மறையவருக்கே போஜனமிடுக, ஆனல் அத்தனிகனும் ஒரு சங்யாசியையோ அவசியமாயுண்பிக்க. தானுதி கருமங்களை விதானஞ்செய்யுஞ் சாஸ்திரம் கருமகாத்தாவின் சக்தியனுசாரமாயே கர்மங்களை விதித்துளதாதலின் அந்நாராயணபலியில் முறகூறிய பக்ஷங்களுள் ஒரு பக்ஷத்தையாம் நியமிக்கவில்லை; மறறோ, அக்கர்த்தாவிற்குச் சக்தியுள்ள அளவு 13 சங்யாசிகளுக்கேனும் 13 மறையவர்கட்கேனும் உண்பித்து வஸ்திராதிகளையீக. பின் ஆற்றலளவு வேறனேக மறையவர்கட்கு நானுவகையாய மதுர அன்னங்களை

யுண்பிக்க. அம்மறையவர்கட்கு முடிந்தபடி தக்ஷிணையீக. இங்ஙனம் நாராயணபலி யாற்றும் அதிகாரிகள் இகவுலகத்தே மன நினைபொருளையெய்துவர்; மரித்தபின் றமது சர்வ பிதுர்க்களோடும் விஷ்ணுவுலகத்தை யெய்துவாராதலின் அந்நாராயண பலியை யவசியமாகச்செய்க. இவ்வாறு ஆதுர சந்யாசப்பிரசங்கத்தால் பரமஹம்ச சந்யாசி மரித்தபின் செய்யத்தக்க காரியத்தைச் சொன்னோம். இப்போது முற பிரசங்கத்தைக்கேட்டி:—ஹே மைந்த! திரி தண்டத்தையும், சிகையஞ்ஞோப வீதத்தையும் தரிப்பவரும் தமது புத்திரகிருகத்தே பிக்ஷைசெய்பவரும் ஆகிய குடீசக சந்யாசியும், முன்போன்று தரிப்பவரும் ஏழுகிருகங்களினின்றும் பயிக்க மேந்தியருந்துபவரும், தேசங்களில் சஞ்சரிப்பவரும் ஆகிய பகூதக சந்யாசியும், ஏகதண்டத்தைத் தரிப்பவரும் சிகையின்றி யஞ்ஞோப வீதத்தைத் தரிப்பவரும், தினம் எட்டுக்கவளம் அன்னமயில்பவரும் ஆகிய ஹம்சசந்யாசியும் தீவிரவைராக்கி யத்தையுற்றுப் பரமஹம்ச சந்யாசத்தைக் கவர இச்சிக்கின் அம்மூவரும் 8ச சிராத்தங்களையும் ஹோமாதி கருமங்களையும் செய்பக; மற்றோ, ஆதுரன் கேவ லம் பிரைஷமந்திர உச்சாரணஞ்செய்தே அதை யடைவதேபோல அம்மூவரும் அடைக. அம்மூவர் பிரைஷமந்திரம் உச்சரிக்கும்விதமோ இதுவாம். முதலில் தமது ஹஸ்த அஞ்சலியை நீரால் நிறைவித்துப் பூராதி மூன்று வியாகிருதிகளுக் குள் ஒவ்வொரு வியாகிருதியையும் பிரணவ பூர்வகம் உச்சரித்து 'ஸுஹயம்' என னும் பதங்கொண்டு 'ஸ்வாஹா' என்னும் பதபரியந்தம் உள்ள முழுமந்திரத்தை மந்த மத்திபம உத்தமமென்னும் முச்சுரங்களால் உச்சரித்துத் தமது யஞ்ஞோப வீதத்தை யெடுத்துத் தமது சிகையைக் கரத்தாற கொய்து அவ்விரண்டையும் அஞ்சலிக்குள் வைத்துப் பிரணவ பூர்வகம் 'ஓம் ஸ்வாஹா' என்னும் மந்திரத் தானே நீரின்கண்ணே பரித்தியாகஞ்செய்க. அல்லது, பூமியின்கண்ணே பரித்தி யாகஞ்செய்க. 'உபவீதம் ஹஉ ஸ்வாஹா விஸ்ருஜேத்' சந்யாச கர்த்தாத் தனது யஞ்ஞோப வீதத்தையும் சிகையையும் மொழிந்த மந்திரத்தானே பூமி யின்கண்ணேனும் நீரின்கண்ணேனும் பரித்தியாகம்செய்க. பின்னவன் விரக்த னாய் நக்னனாய் வடதிசையையேனும் கீழ்த்திசையையேனும் நோக்கிச்செல்க. ஆன்மாவையறிய இச்சையிருப்பின் சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட குருவை யாசிர யிக்குக. அம்மூவரும், தண்டம், கமண்டலம், சிக்கியம், பயிக்கபாத்திரம், பவித்தி ரம் என்னும் பஞ்சமுத்திரைகளை யெப்போதும் தாரணம்செய்க. பயிக்கபாத்தி ரத்திற காதாரமாயிருப்பது சிக்கியமாம். ஜலசோதனப்பொருட்டுள்ள வஸ்திரம பவித்திரமாம். பரமஹம்ச சந்யாசஞ்செய்துகொள்ளுங்காலத்தே நான்கு முத்தி ரைகளோடு ஏகதண்டத்தை ஹம்சசந்யாசி பரித்தியாகஞ்செய்க. நான்கோடுந் திரிதண்டத்தைக் குடீசக பகூதகர் பரித்தியாகஞ்செய்க. இம்மூவரும் பரமஹம்ச ராங்கால் கூறிய சிகையஞ்ஞோ பவீதத்தியாக விதியைப் பிரஹ்மசரியாதி மூவ ரும் பரமஹம்சங் கவருமிடத்தும் அறிந்துகொள்க. ஹம்சனுக்கு சிகையில்லா விடினும் யஞ்ஞோபவீதத்தைக் கூறியமந்திரத்தானே நீரிலேனும் மண்ணிலேனும் பரித்தியாகஞ்செய்க; தண்டங்கமண்டல முதலியவற்றையும் பரித்தியாகஞ்செய்க. இத்துணையானே பிராஹ்மணர் சந்நியாசஞ் செய்யுமுறை கூறலாயது இனி க்ஷத் திரிய வைசியர் சந்யாசங்கொள்ளும் வகையை ஜாபாலாதி யுபநிடதத்தே கூறிய

ரகாரம் கூறுவாம் :—முன்செய்த புண்ணியகரும மகிமையால் க்ஷத்திரிய வைசியருக்குத் தீவிரவைராக்கியப் பிராப்தியுண்டாயின் அவ்விருவரும் சந்யாசஞ் செய்ய இச்சிக்கின் முற்கூறியமுறையே 8 சிராத்த ஹோமாதி சர்வ கருமங்களையுஞ் செய்து சிகையோடும் யஞ்ஞோபவீதத்தை நீரின்கண்ணேனும் பூமியின்கண்ணேனும் பரித்தியாகஞ்செய்து நக்னராய் வடதிசையையேனும் கீழ்த்திசையையேனும் நோக்கிச்செல்க ; ஆனால் பிராஹ்மண சந்யாசி வடதிசையினின்றும் வந்து தண்டாதிகளைத் தரித்ததேபோல அவ்விருவருந்தரியற்க அவர் ஜட உன்மத்த பிசாசர்போல நக்னராய்ச சஞ்சரிக்குக வித்வானாயிருந்தபோதினும் வெளியே காட்டற்க. பரமஹம்ச சந்யாசத்தே தமது வடிவத்தை மறைத்தற்காக நானாவகையாய சின்னங்களைத்தரித்தல் சம்பவிக்குமாயினும் விஷ்ணு சமபந்தியாய தண்டரூப சின்னத்தைப் பிராஹ்மணன் ஒருவனே தரிக்குக ; மற்றைய இருவர்க்குந் தரிக்க அதிகாரமின்றாம். ஆறுமுடிச் சுடைத்தண்டம சுதரிசனமெனப்பெறும் ; எண்முடிச் சுடையது வாசுதேவமெனபபெறும ; ஆகையால், அத்தண்டம் வைஷ்ணவதண்டம் எனப்பெறும் அவ்விருவரும் அறைநதமுறையே சிகையஞ்ஞோபவீதங்களைப் பரித்தியாகித்து நக்னராய்ப் புனராவிருத்தியற்றவராய் வடதிசையிலேனும் கீழ்த்திசையிலேனும் செல்கவென முன்னர்க்கூறியது, சந்யாச கர்த்தாவாய பிராஹ்மணன் சிகைபூணு நூறகளைப பரித்தியாகித்து நக்னனாய் வடதிசையிற் செல்லும்போது முறகூறிய சிராததாதிகளைச செய்வித்த ஆசாரியப பிராஹ்மணர் அவன் சமீபத்தேசென்று தண்டமபோல நமஸ்கரிததுப பிரார்த்தித்துக் கௌபீனதியணிவிதது வடககினின்றும் திருபபிப் பிரஹ்மவேத்தாவாய சந்யாசியாசிரியர் சமீபததேகொணாக. ஆசாரயப் பிராஹ்மணருடைய தண்டவத் பிரணாம பூர்வகப பிரார்ததனை க்ஷததிரிய வைசியர்முன் சம்பவியாதாம, பிரார்த்தனையின்றிக கௌபீனாதிகள் தரிததலும வடதிசையினின்றும் திரும்புதலும் கூடாதாதலின் இருவரும் திசைதிரும்பலும் உடையுடுததலும தண்டந்தரித்தலும கூடா. இருஷபதேவரும பஞசபாண்டவரும் வீரமாககத்தால தம்சரீரங்களைப் பரித்தியாகித்ததேபோல, அவவிருவரும வீரமார்க்கததானே சரீர பரித்தியாகஞ் செய்க. சிங்காதிகளின் சப்தங்களினின்றும் நீர் நெருப்பு முதலியவறறினின்றும் புலி முதலிய ஜீவர்களினின்றும பயமறறு சரீர நாசபரியந்தம் பூமியின் கண்ணே சஞசரித்தல் வீரமார்க்கமாம அநதப பிரஹ்மவேத்தாக்களாய இருவரும தந்தூல சரீரத்தைத் துககரூபமென வுணர்ந்து நீரின்கண்ணே விழுந்தேனும், நெருப்பின்கண் விழுந்தேனும் அன்னஜல பரித்தியாகஞ்செய்தேனும், ஒரு திசையின்கண்ணே நிரந்தரங் கமனஞ்செய்தேனும் அழிக்குக. இத்துணையானே க்ஷத்திரிய வைசிய சந்யாசப்பிரகாரம் சாற்றபபெற்றது. இனி சூத்திர ஸ்திரீ முதலியவர்கட்குச் சந்யாசப்பிரகாரம கூறுவாம் :—ஹே மைந்த ! இவ்வுலகத்தே சூத்திரனுக்கேனும், ஸ்திரீக்கேனும, வருணசங்கரனுக்கேனும், பூர்வ புண்ணிய கருமமகிமையானே சம்சாரத்தினின்றும் தீவிர வைராக்கியப் பிராப்தியுண்டாயின், முற்கூறிய அஷ்டசிராத்த முதல் பிரைஷமந்திரபரியந்தமுள்ள கருமங்களை யொருகாலுஞ் செய்யற்க ; மற்றோ, தம்மனத்தே சந்யாசசங்கற்பஞ்

செய்து முன்னிருவர்போல விரமார்க்கத்தானே தம் சரீரத்தைப் பரித்தியாகஞ் செய்க. இவ்விர சந்யாசத்தே யாவருக்கும் அதிகாரமுண்டு, இதனையே அலிங்க சந்யாசமென்பர். இத்துணையானே க்ஷத்திரியாதியர்க்குச் சந்யாசங் கூறினும். இனிப் பூர்வப்பிரசங்கத்தை மீண்டும் கூறுவாம் :—ஹே மைந்த! அந்தப் பிராஹ்மண சந்யாசி சிகை யஞ்ஞோபவீதங்களைப் பரித்தியாகித்து நக்னனும் வடதிசை செல்லும்போது ஆசாரியப்பிராஹ்மணர் சென்று நமஸ்கரித்து தம் மிருகரத்தைச் சந்யாசியின் இரு பாதமீதுவைத்து 'இவ்வுலகத்தே வேதவேத்தாப் பிராஹ்மணன் தேகத்தே சம்பூரண தேவதைகளும் நிவாசஞ்செய்தலின் ஈசுரரூபனவன்; அத்தகையன் நீயுமாவாயாதலின் இவ்வுத்தம தேகத்தை வாளாவொழித்தல் உனக்குசிதமன்றும், உனது தரிசனத்தானும், வாய்மொழி கேட்டலானும், கிருதார்த்தராகும்அதிகாரிகளின் தேகமே யிதுவன்றி உன்னுடையதன்றாமாதலின் மதிமான் அயலார் பொருளை யழியாததேபோல, இவ்வயலார் தேகத்தை யழித்த லுசிதமன்றும்; மற்றேர், இத்துர்லப சரீரத்தையுற்ற நீ பிரஹ்மவேத்தாவாய குருவாயிலாய் வேதாந்த சாஸ்திர சிரவணஞ்செய்து மனனநிதித்தியாசனஞ் செய்து ஆன்ம சாக்ஷாத்காரத்தைச் சம்பாதிக்குக, அதன்பின் இச்சைப்படி செய்யலாம். நீ நெடுநாட்சேவித்த உனதாசிரியா எனக்கிவ்வாறு ஆணையிட்டுள்ளார், "என் சீடனை அநேக உபாயங்களாலேனும், பின்றிரும்பிவரச்செய்தி." ஆகையால், ஆன்மஞான அடைவின்பொருட்டு நீ உனது குருவினதாணையையே பாலனஞ் செய்யவேண்டும், என நானாவகையாய்ப் பிரார்த்தனைசெய்து இங்கே நில் இங்கே நில் எனக்கூறுக. அப்போது சநயாசி அவர் பிரார்த்தனையை யங்கீகரித்து நிற்க. பின் அவர் சந்யாசிக்கு வேணுவின் தண்டத்தைக் காத்திலீகலங்கோடு கௌபீனங் காஷாயவஸ்திரமீக. அச்சந்யாசி 'ஓம் ஸூயஶ்வஜ்ரோஸி' என்பதாதி மந்திரத்தானே அத்தண்டத்தைக்கவர்க. பிரணவமந்திரத்தானே கௌபீனாதிகளைத் தரிக்குக இவ்வண்ணந் தண்டநககமண்டல முதலியவற்றைக்கவர்ந்த சந்யாசி வடதிசையினின்றுந் திரும்பிக தனது பிரஹ்மவேத்தாவாய சந்யாசி குருவைத் தண்டம்போல நமஸ்கரிக்குக. பிரஹ்மவித்யாப் பிராப்தியின்பொருட்டு அவர்க்குச் சரீரமனவாணிகளாற் சேவைசெய்க. இத்துணையானே சுருதிஸ்மிருதி யனுசாரம் பரமஹம்ச சந்யாசத்தைக்கவரும் பிரகாரம் கூறப்பெறறது :—இப போது ஜபாலாதி யுபநிடதத்தின்கண்ணே கூறிய பரமஹம்ச சந்யாசிகளின் றருமங்களை நிரூபிப்பாம் :—ஹே குழந்தாய்! அந்தப் பரமஹம்ச சந்யாசிவேணுவின் றண்டத்தைத்தரிக்குக, சிகையஞ்ஞோபவீதமற்றவனுகுக, மகிழ்வுடைவதனனுகுக, இரண்டு கௌபீனங்களைக் கவர்ந்துகொள்க, சீதநீக்கத்தின்பொருட்டு ஒரு கந்தையை வைத்துக்கொள்க. கிராமத்தின்கண்ணே பிக்ஷையெடுக்கப்போங்கால் கௌபீனத்தின்மேற கட்டும்பொருட்டுச் சிதைவுற்றதாகவோ புதிதாகவோ ஒரு உத்தரீயம் வைத்துக்கொள்க. சௌசாதிக்கிரியைகளைச் செய்யும்பொருட்டுத் தன் கரத்தே சுரக்குடுக்கையேனும், மரக்கமண்டலமேனும், மூங்கிற் பாத்திரமேனும், மண்பாத்திரமேனும் வைத்துக்கொள்க. பிரயோஜனமின்றித் தன்னஸ்த பாதாதி யவயவங்களை யசையாதொழிக. வாக்குப்பேதாதிகளின்கண்ணும் சபலமுண்டாகலாகாது: ஒரு பொருளை யறிவிக்கும்பொருட்டு ஒருவன் கூறிய வச

னத்தை வேறு பொருளின்கண்ணே சேர்த்து அவன்பாற் றோடங்கூறல் வாக்குப் பேதமாம். ஒருவன் 'இத்தேவதத்தனென்போன் நவகம்பளமுடையோன்' எனக் கூறின், அதன்கண்ணுள்ள நவவென்னும் சப்தத்திற்குப் பொருள் புதிதென்பதும், ஒன்பதென்னும் எண்ணிக்கையுமாம். கூறுவோனுக்கோ முதற்பொருளின்கண்ணே கருத்தாம்; ஆனால், எண்ணிக்கைப்பொருட் கற்பனைசெய்து கூறுவோன்பால "தரித்திரத் தேவதத்தனுக்கு ஒரு கம்பளங்கிடைத்தலும் அரிதாக ஒன்பது கம்பளம் கிடைப்பது யாங்ஙனமாம்" எனத் தோடந்தருதலே வாக்குப் பேதமென்ப. இதனையே நையாயிகாசலமென்பர். இதன்கண்ணும் சந்நியாசி சஞ்சலமுறலாகாது. நடக்கும்போது எந்த ஜந்துவும் தன்காற் கீழ்வந்துறுவண்ணம் முன்பாக நான்குமுழ அளவு பூமியை நோக்கிச்செல்க. ஆதனத்திருக்கும்போது மனம் வெளிமுகமாகாவண்ணம் மூக்கின் நுனியையேனும் வேதாந்த சாஸ்திரத்தையேனும் பார்த்துக்கொண்டிருக்குக. சூனியமாய வீட்டிலேனும், தெய்வ ஆலயத்திலேனும், பிருதுவிக்குழியிலேனும், புற்கூட்டத்திலேனும், மரத்தடியிலேனும், குலாலசாலையிலேனும், அக்கினிஹோத்திர சாலையிலேனும், நதிக்கரைகளிலேனும், மலைக்குகைகளிலேனும், மரப்பொந்திலேனும், சமானபூமியிலேனும், தோட்டத்திலேனும், ஏகாந்தமாயிருந்துகொண்டு எப்போதும் தனது தேகத்தையும் மனத்தையும் தூய்தாகவைத்துக்கொண்டிருக்குக. பிக்ஷையெடுக்கக் கிராமத்துட்செல்லும்போது வலமாகச்சென்று பிக்ஷான்னத்தைக்கவர்க. உதரத்தையேனும், கரத்தையேனும், பாத்திரமாகவைத்து அப்பிக்ஷையை யேற்குக. அன்பர் வாயிலன்னத்தை யூட்டில் உதரமே பாத்திரமாகும். கரத்தில் வாங்கிப்புசிக்கில் கரமே பாத்திரமாம். இரண்டு பாத்திரங்களினும் வல்லமையிலாதோன் வஸ்திரத்தையே பாத்திரமாய்க்கொண்டு பயிக்கத்தை மருந்தொப்பக்கவர்க. ரோகியானவன் தனது ரோகநீக்கத்தின்பொருட்டு மருந்தயில்வதேயன்றிச் சுவாதின்பொருட்டல்லாததேபோலச் சந்நியாசியும் கேவலம் பசி நீக்கப்பொருட்டுண்ணலேயன்றிச் சுவாதின் பொருட்டேனும், புஷ்டியின்பொருட்டேனும் பயிக்க முண்ணற்கவென்பது கருத்தாம். 'ஔஷதவதஶநமாசரேத்' எனச் சுருதியுமுளதாம். ஒரு பொருளை நிந்திக்கவுங்கூடாது, துதிக்கவுங்கூடாது, பிக்ஷை கிடைக்கினும் கிடையாவிடினும் ஏகரசமாகவேயிருக்குக. ஆதரத்தோடும் நானாவகை ரசத்தோடுங்கூடிய பிக்ஷான்னத்தைக்கவர்ந்து மகிழ்வுறலுமாகாது, நிராதரத்தோடும் இரசாதிகுணமற்ற பிக்ஷையையடைந்து வாட்டமுறலுமாகாது. இன்பம், துன்பம், தட்பம், வெப்பம் முதலிய துவந்துவ தருமங்களின்கண்ணே சமானமுறுக. உபகாரஞ்செய்யும் அன்பரிடத்தும், அபகாரம்புரி துஷ்டரிடத்தும் சமமாயுறைக. தேகம் மிக வாடாமலும் கூடாமலும் இருக்குமாறு பிக்ஷைசெய்க. இரண்டு மாதங் கழிந்தபின் னிரண்டு இருதுக்களின் சந்தியில் பூரணமாசித்தினத்தே கழுத்துக்கு மேல் முண்டன க்ஷவரஞ்செய்துகொண்டு நகமெடுத்துக்கொள்க. மழைகாலத்தே முண்டனஞ்செய்துகொள்க, அல்லது, செய்யாதொழிக; இருபக்ஷமும் சாஸ்திரத்தேயிருக்கின்றன. ஆடிமாசப் பௌர்ணமாசியில் வியாசபூஜை செய்க. அதன்கண்ணே வியாசபஞ்சகம், கிருஷ்ணபஞ்சகம், ஆசார்யபஞ்சகம், குருபஞ்ச

கம், ஆன்மபஞ்சகம் என்னும் 5 பஞ்சகங்களையும் பூஜைசெய்குக. கிழக்கு முதலிய 4 திசையின்கண்ணும் முறையே உறையும வைசம்பாயனர், சுமந்தர், ஜைமினி, பைலா, என்னும் நால்வர்மத்தியில் ஸ்ரீ வியாசபகவானிருத்தல் வியாசபஞ்சகமாம். கிழக்கு முதலியவற்றே முறையே யுறையும் வாசுதேவர், சங்கர்ஷணர், பிரத்யும்நா, அநிருத்தா என்னும நால்வர் மத்தியில் ஸ்ரீ கிருஷ்ணபகவானிருத்தல கிருஷ்ணபஞ்சகமாம். கிழக்கு முதலியவற்றே முறையேயுறையும விசுவரூபர், பதமபாதா, ஹஸ்தாமலகா, தோடகர் என்னும் நாலவர் மத்தியில் ஸ்ரீ சங்கராசாரியா இருத்தல ஆசாரிய பஞ்சகமாம கிழக்கு முதலியவற்றே முறையே யுறையும பரமகுரு, பரமேஷ்டிகுரு, கோவிந்தபாதா, கௌடபாதர் என்னும் நாலவா மத்தியில் தன்னுசிரியரிருத்தல் குருபஞ்சகமாம கிழக்கு முதலியவற்றே முறையே யுறையும் அந்தரான்மா, ஞானன்மா, பரமான்மா, ஆனந்தான்மா என்னும் நான்கன்மத்தியில் ஆன்மாவிருத்தல ஆன்மபஞ்சகமாம். அந்தப் பூசை மண்டலத்தே இவ்வகை ஐந்தையும தாபித்துப பூசைசெய்க :—அம்மண்டலமத்தியில கிருஷ்ணபஞ்சகஸ்தாபனஞ்செய்க, அதன் கிழக்கே ஆன்மபஞ்சகஸ்தாபனஞ்செய்க, தெற்கே ஆசாரயபஞ்சகஸ்தாபனஞ்செய்க, மேற்கே குருபஞ்சகஸ்தாபனஞ்செய்க, வடக்கே வியாசபஞ்சகஸ்தாபனஞ்செய்க, அக்கினிகோணத்தே மகாகணபதி ஸ்தாபனஞ்செய்க, நிருதிகோணத்தே துர்க்காதேவியை ஸ்தாபனஞ்செய்க, வாயுகோணத்தே சரஸ்வதியை ஸ்தாபனஞ்செய்க, ஈசானகோணத்தே க்ஷேத்திரபாலகரை ஸ்தாபனஞ்செய்க, அககிருஷ்ணபஞ்சகத்தைச சுற்றினும சநந்தனா, சநகா, சநத்குமாரா, சநத்சுஜாதர் என்னும் நாலவரையும் ஸ்தாபனஞ்செய்க. அக்கிருஷ்ணபஞ்சகத்தின் முன்னிலையில் நரநாராயணரை ஸ்தாபனஞ்செய்க, பின்னிலையில பிரஹ்மா, விஷ்ணு, மஹேசுரர் என்னும் மூவரையும ஸ்தாபனஞ்செய்க, நரநாராயணரின் முன்னிலையில நாரதமுனிவரை ஸ்தாபனஞ்செய்க, இவ்வாறு மற்றைய முனிவர்களையும, திக்குப்பாலகாதிகளையும தக்கபடி தத்தமது ஸ்தானத்தே ஸ்தாபனஞ்செய்க, அவ்வியாவற்றுள்ளும ஸ்ரீ கிருஷ்ணபகவானை மூலமந்திரத்தானே பூசனைசெய்க, மற்றவரையோ பிரணவபூர்வகம் 'ம-ஈ வெ௩௨ஃ சூ௲தெ௩௨ஃ' என்பனவாதி நாமமந்திரங்களாலே பூசனைசெய்க, இவ்வாறு ஆடிமாசப பௌர்ணமாசியின்கண்ணே ஸ்ரீ வியாசாதி சர்வ தேவதைகளையும் பூசித்துப பரமஹம்ச சந்யாசி அவ்விடத்தே யிரண்டுமாதமிருப்பதாகச சங்கற்பித்துக்கொண்டேனும், நான்குமாதமிருப்பதாகச் சங்கற்பித்துக்கொண்டேனும் நிவாசஞ்செய்க. சாதுர்மாசத்தே இப்பூமி அநேகங்கோடி ஸ்தாவரஜங்கம ஜீவர்களால் நிறைந்திருக்கும், சஞ்சரித்தலால ஜீவர்களினிம்சை அவசியமாயுண்டாமாதலின் ஜீவர்களையும நூலணையையும் காக்கும்பொருட்டுஓரிடத்தே யுறைதல்வேண்டும. இப்போது அசசந்யாசியினிடத்தே இயமநியமாதிசாதன நிரூபணஞ்செய்வாம் :—அப்பரமஹம்சசந்யாசி ஸ்தாவரஜங்கம சரீரங்களில் எச்சரீரத்தையும் இம்சைசெய்யற்க, பொய் பேசற்க, ஒருயிரின்றிருணத்தையுங் களவாடற்க, ஸ்திரீவிடயபோகேச்சை செய்யற்க, விடயபோக சாதனங்களையும் ஒருங்குசேர்க்கற்க, எவ்விடம்பத்தோடுகூடிய சேஷ்டையையுஞ் செய்யற்க, வாளாமொழியற்க, எப்போதும ஸ்ரீமன் மகாதேவ விஷ்ணுஸ்மரணகீர்த்தனாதிகளையே செய்க,

அதிகாலை முதலியவற்றே பிராணாயாமஞ்செய்க, நிரந்தரவேதாந்த விசாரஞ்செய்க, முப்பொழுதும் நீர் மூழ்குக, ஆசிரியர் ஆணையிட்டவழி குருபக்திசெய்க, மழைகாலமொழிந்த மற்றையகாலத்தே ஓரிடத்தே யுறையாதொழிக, மழைகாலத்தும் உறையுமிடத்துற்ற பொருள்களில் இராகத்துவேடமின்றியிருக்குக, பிரிய பதார்த்த அடைவால் மகிழ்ச்சியடையற்க, அப்பிரியபதார்த்த அடைவால் துவேஷத்தையடையற்க, சத்துருமித்துருக்களிடத்தேயும் மானாபமானத்தேயுஞ் சமானமாயுறைக, சர்வ பூதப்பிராணிகளையுந் தன்னான்மாவைப்போலப்பார்த்துக் காயமனவாக்காற் சுகத்தையேசெய்க, எவ்வுயிர்க்குந் துயரீயற்க, பொன் முதலிய பொருள்களையும், சுந்தரிகளையுங் காகவிஷ்டையைப்போலத் துச்சமாய்க்கண்டு அத்தூரத்திலவரைப்பரித்தியாகஞ்செய்க, அவரை மனத்திலும் நினையற்க, அச்சந்நியாசியானவன் தன்னெஞ்சிற்கு வேறு நெஞ்சமே! நீ தாதாத்மிய அபிமானஞ்செய்யுஞ் சரீரம், தாய் தந்தையரின் சுக்கிலசோணிதரூப மலத்தினின்றும் உண்டாயதாம்; மல மூத்திர முதலிய அசுத்தங்கட்கிருப்பிடமாம்; எல்லா அவஸ்தைகளிலும் காமக்குரோதாதி அநேக ரோகங்களாற் பீடிதமாம், அழிவுடையதாம், இத்தகைய இகழ்தற்குரிய தேகத்தே நானெனப்புந்திசெய்தல் உனக்குத் தகுதியன்றாம், என அறிவுறுத்தல்வேண்டும். அச்சந்நியாசி யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேனென்னும் அபேதஞானப் பிராப்தியின்பொருட்டுப் பிரஹ்மவேத்தாவாய குருவாயிலாய் வேதாந்த வசனங்களைச் சிரவணித்து மனனஞ்செய்து நிதித்தியாசித்துவருக. ஆன்மசாக்ஷாத்கார அடைவுண்டாமளவுந் தன் மனத்தூய்மையின்பொருட்டுச் சக்தியளவு பிரணவமந்திர ஹம்சமந்திர மற்றைய மந்திரங்களின் ஜபஞ்செய்க; ஆனால் முக்கியமாயே பிரணவ ஹம்ச மந்திரங்களையே ஜபஞ்செய்க, குதிரையாதியேறற்க; தனாதிகளை யொருங்குசேர்க்கற்க, மற்று, எவையின்றி யிச்சரீரபரித்தியாகமாய்விடுமோ அவ்வன்னவஸ்திராதிகளைக்கவர்க, அவற்றிற் கதிகமாய்க் கவரற்க. இப்போது பரமஹம்ச உபநிடதத்தே பரமஹம்ச சந்நியாசிகளுக்குக் கூறியதருமங்களைக்கூறுவாம்:—மூன்று சந்தியாகாலத்தும் மறைபவர் முதலானோர் சந்தியாகருமத்தை அவசியமாய்ச் செய்வதேபோலச் சந்நியாசியும் அவசியஞ்செய்க, அதாவது, குருவினுபதேசத்தால் ஜீவப்பிரஹ்ம அபேதத்தை நிச்சயஞ்செய்து யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேனென நிரந்தரஞ் சிந்தைசெய்தலே சந்நியாசியின் சந்தியாகருமமாம். ஒருவரிடத்தேயிருக்குங் காமக்குரோதாதிதோஷங்களைப் பிரசங்கமின்றியே கூறல் நிந்தையாம்; இல்லாதவரிடத்தும் அவையிருப்பதாக ஆரோபித்துக்கூறலும் நிந்தையாம்; இத்தகையதொன்றையுஞ் செய்யற்க யான் வித்தை முதலிய குணங்களால் யாவரினுமதிகன், எனத் தன்னிடத்தே பெருமைபாராட்டலாகிய கர்வத்தையுஞ் செய்யற்க, எவ்வாற்றானும் அவமானமுண்டாகுகவென மற்றையரின் அதிகத்தன்மையைச் சகியாமையாகிய மற்சரத்தையுமடையற்க. தனது காயமனவாக்குகளால் செய்த சுபகருமங்களைத் தன்பெருமைவிளக்கற்பொருட்டு மற்றையர் முன்பு வெளிப்படுத்துந் தம்பமுமடையற்க, சுருதிவிருத்த குதர்க்கங்களால் வேறொரு வாதியின் பக்ஷத்தைக் கண்டித்தலாகிய தாபத்தையும் அடையற்க. சுகத்தும் சுகசாதனத்தும் இராகஞ்செய்யற்க. துக்கத்துந் துக்கசாதனத்துந்

துவேஷம்செய்யற்க. கனவின்கண்ணும் ஸ்திரீசம்போக இச்சையை விரும்பல் தகுதியன்றாம். தன் மனோவாக்குக்காயங்களால் எக்காலத்தும் பூதப்பிராணிகட்குத் துரோகஞ்செய்யற்க. தைவயோகத்தாலடைவுற்ற பொன் முதலியவற்றைக் கவராதொழிக; அஞ்ஞன்மரூபதேகத்தே ஆன்மமதி செய்யற்க, துச்சமனதுடைச் சீவர்களிடத்திருக்கும் வித்யா அபிமானாதி தருமங்களைக்கண்டு பொறாமையுற்றவனாகாமல் அவர் மீதும் பொறுமையேசெய்க. தன்தேகத்தே நானென்னு மதிசெய்யற்க, சரீரசம்பந்தி வஸ்திராதிபதார்த்தங்களிடத்தே எனதென்னு மபிமானஞ் செய்யற்க, மோக்ஷேச்சையையுடைய சந்யாசி, பொய்யை வாக்காலும் மனத்தாலும் ஒருகாலும் பேசற்க நினையற்க. எத்தொழிலால் உலகர் மிக மகிழ்வுறுவரோ தன்பாற் பிரீதியுறுவரோ அத்தொழிலை யொருகாலும் செய்யற்க, தன் தேகத்தை யெப்போதும் மலமூத்திரபாண்டமாய்ப் பார்க்குக, துதியற்றவனாகுக, நமஸ்காரமற்றவனாகுக, பிதுரன்னாகாரமற்றவனாகுக, நியமமாய் ஓரிடத்தே யிராமல் தன்னிச்சைப்படி சஞ்சரிக்குக, தன்னையன்றி எவரையும் பூசியற்க, மற்றையரை எச்சுபகருமத்தினின்றும் நீக்கற்க, ஆன்மாவினும் வேறாய பொருளைக்கூறும் மந்திரங்களை ஜபியற்க, ஆன்மாவினும் வேறாயதைத்தியானியற்க, உபாசிபற்க; மற்றோ, எப்போதும் ஆன்மாவையே தியான உபாசனைசெய்க. இவ்வெல்லா வுலகையுந் தனதான்மரூபமாய்க் காண்பனாதலின், ஈண்டு இத்தொழில் எனக்கு அவசியஞ் செய்யத்தக்கதாம் எனவும் மதியானே எத்தொழிலுஞ் செய்யத்தக்கதாயினறாம்; செய்யத்தகாததென்னும் மதியானே விடத்தக்கதுமின்றாம்; மற்றோ, அவ்வறிஞசிகாமணி பாலனைப்போலப் பற்றல் விடலின்றிச் சஞ்சரிப்பன். ஆன்மாவினும் வேற்றுருவமாய் ஜகத்தை விடயஞ்செய்யும் ஞானம் உண்டாகாதாம், அபின்னமாக ஜகத்தை விடயஞ்செய்யும் ஞானமும் உண்டாகாதாம், யாதொரு இச்சாவிடயப் பிரயோஜனமுமின்றாம், நான் நீ உலகு என்பனவாதி பேதமுமுண்டாகாதாம், அத்விதீய ஆநந்தவடிவப் பிரஹ்மமும் சர்வ ஜகத்தின் ஆன்மவடிவமும் ஆய ஆசிரயமற்றவதன்கண்ணே யெப்போதும் நிலைபெற்றிருப்பன். மட்முதலிய எல்லாப் பொருள்களுள்ளும் எனதென்பதை விடுத்து அத்விதீயப் பிரஹ்மத்தின் கண்ணே யெப்போதும் நிலைபெறுக. இராக பூர்வகம் பொன் முதலிய பொருள்களைப் பாரான்; தீண்டான்; கவரான்; என்னை, இவை யெனக்குக்கிடைக்குக எனவும் இராகத்தால் அவற்றைக் காண்பவன் பார்ப்பினிபாற் சூத்திரனுக்குண்டாம் பையனைப்பன்; தீண்டுபவன் சூத்திரச்சியின்பால் வேடனுக்குண்டாஞ் சுதனைப்பன்; கவர்பவன் ஆன்ம ஹத்திசெய்தவனாவன. ஆன்மாச் சர்வ ஜகத்துருவமாதலின், ஆன்மாவைக் கொலலிற் சர்வ ஜகத்தையுங் கொன்றதாகும். விவேக வைராக்கிய சம தம முதலிய சாதனங்களோடுகூடித் தனது யஞ்ஞோபவீதஸ்தானத்தே ஆன்மஞான யஞ்ஞோபவீதத்தைத்தரிக்குக. சிகையின் ஸ்தானத்தின்கண்ணும் ஆன்மஞான சிகையைத்தரிக்குக; என்னை, பிரஹ்ம உபநிடதத்தின்கண்ணும் பரமஹம்ச உபநிடதத்தின்கண்ணும் ஆருணிக உபநிடதத்தின்கண்ணும் ஆன்மஞானரூப யஞ்ஞோபவீதசிகையைத் தாரணஞ்செய்கவென விதிக்கப்பட்டிருக்கின்றது. ஆண்டு முதலில பிரஹ்மோபநிடதவசனப்பொருளை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! ஈண்டுப் பிராஹ்மணாதிகளின் கழுத்திலிருக்கும் முப்பிரிவு

நூலின் ஒவ்வொரு பிரிவும் மும்மூன்று நூலாலாக்கியதாமாதலின், அது 9 நூல் வடிவமாவதேபோலப் பிரஹ்மவேத்தாவாய சந்யாசியின் இருதயத்தேயிருக்கும் 9 தத்துவங்களே யஞ்ஞோபவீதமாம். அவையாவன:—ஈசுரர், ஹிரணிய கருப்பர், விராட்டு, விசுவன், தைஜசன், பிராஜ்ஞன், பிராணன், அபானன், வியானன் என்ப. 9 நூலாலாய உபவீதம், யஞ்ஞாதி கருமங்கட்குச் சாதனமாதலின் அதனைச் சாஸ்திரவேத்தாக்கள் யஞ்ஞோபவீதமெனக்கூறியதேபோல, அந் நவ தத்துவ விசாரத்தாலே வெளிப்பட்ட அகண்ட சைதன்யம் ஞானரூபயாகத்தின் அங்கரூபமாமாதலின் அதனை யஞ்ஞோபவீதமென்றனர். 'யஜ்ஞோபவீதம் பரமம் பவித்ரம்' என்னும் மந்திரமும் முக்கிய விருத்தியானே சைதன்யவடிவ யஞ்ஞோபவீதத்தையே கூறுகின்றது, ஏனெனின், பரமபவித்திரரூபத்தன்மை அச் சைதன்யமொழித்து வேறெவ்வனும் பொருளின்கண்ணுஞ் சம்பவியாதாம்; மற்றோ, அஃதே பரமபவித்திரமாம் அத்தகையதைத் தமதிருதயத்தே யுணர்ந்து அறிஞர் நூன்முறையே பாகியயஞ்ஞோபவீதசிகையைப் பரித்தியாகித்து, சமபூரண திருசியப்பிரபஞ்சத்தையும் பரித்தியாகித்து, ஆகாசாதி யாவற்றிற்கும் அதிஷ்டானரூப அக்ஷர பரப்பிரஹ்மத்தையே சூத்திரரூபமாய் நிச்சயஞ்செய்க; என்னை, நூல் தன்கண்ணிருக்கும் ஆடையை யொளிர்விக்குமாதலின் சூத்திரமெனப்படுதேபோலப் பரப்பிரஹ்மமும் தன்பாலிருக்கும் உலகவடிவ ஆடையை யொளிர்விக்குமாதலின் அதனைச் சூத்திரமென்றனர். அதைத் தன்னுண்மவடிவமாயுணர்ந்தவனே சர்வ வேதார்த்தத்தையும் உணர்ந்தவனாவன். சூத்திர ஆதாரமாய்ச் சர்வ மணிகளுமிருப்பதேபோல, இவ்வெல்லாப் பிரபஞ்சமுமிருக்கும் சைதன்யரூப சூத்திரத்தையே அறிஞன்றாரணைசெய்க. அஷ்டாங்கயோகத்தை யறிந்து நித்தியா நித்திய வஸ்து விவேகமுடையவனே அதைத் தரிக்கச் சமர்த்தனாவன்; அஃதற்றவன் சமர்த்தனாகான். ஜீவப்பிரஹ்ம அபேதத்தையறிந்து பாகிய சூத்திரத்தைப் பரித்தியாகித்துச் சைதன்யப் பிரஹ்ம சூத்திரத்தைத்தரிப்பவனே சேதனனாவன். பிரஹ்மவேத்தாவாய அறிஞனினும் வேறாயவன் சாஸ்திரத்தை யுணர்ந்தவனேயாயினுங் கனமுதலியவையேபோலச் சடனேயாவன். கூறிய சைதன்ய சூத்திரத்தைத் தரித்த அறிஞன் எக்காலத்தும் உச்சிஷ்டனாகான்; அசுசியுமாகான். சைதன்ய சூத்திரம் விளங்குமிருதயத்தையுடைய வித்வானுக்கு ஆன்மஞானமே பிரதான கருமமாம். அவனது காயிக மானச வாசகமென்னும் பாவகருமத்தைத் தூய்தாக்குவதும் அந்த ஞானமேயாம். 'நஹி ஜ்ஞாநேந ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே' இவ்வுலகத்தே ஆன்மஞானத்திற்குச் சமானமாய் வேறொரு பொருளும் பவித்திரமாயின்றாம். அக்கினியின் சுவாலையாகிய சிகை அக்கினியினும் வேறாயிலாததேபோல, நித்திய விஞ்ஞானரூப சிகை தன்னுருவினும் வேறற்ற வித்துவானையே வேதவேத்தாக்கள் சிகியெனக் கூறுகின்றபர். கேசத்தை மஸ்தகத்திலுடையவனை சிகியெனக்கூறார்; ஏனெனின் சூத்திரர் ஸ்திரீ முதலியோரும் அதைத் தரித்துளார்; ஆனால், அவரைச் சிகியெனக் கூறவில்லை.

சங்கை :—ஹே பகவன்! ஞானரூப யஞ்ஞோபவீதமும் சிகையுமே யாவி னும் மேன்மையவாயின், மறையவர்யாவருமே பாகிய யஞ்ஞோபவீதசிகைகளை பரித்தியாகஞ்செய்தல்வேண்டுமன்றோ ?

சமாதானம் :—ஹே குழந்தாய்! வேதபகவானனவர் கூறிய அக்கினிஹோத திராதி கருமங்களில் அதிகாரமுடைய மறையவரோ, அவற்றைச் சித்திசெய்தற் பொருட்டுப் பாகிய அவ்விரண்டையும் அவசியம் தரித்தல்வேண்டும். தூயமன முடைய அறிஞனுக் கருமத்தே யதிகாரமற்றவனே, உள்ஞானரூப யஞ்ஞோப வீதசிகையையே தாரணைசெய்க. சில பிரஹ்மவேத்தாக்கள் இவ்வாறியம்புகின்ற னர் :—சர்வாதிஷ்டான அத்விதீயப் பிரஹ்மரூபன் யான், என்னும் ஞானரூப யஞ்ஞோபவீதத்தையுஞ் சிகையையுந் தரித்த பிரஹ்மவேத்தாவின்கண்ணே சம்பூர்ண பிராஹ்மணத்தன்மையிருக்கும். ஆன்மஞானரூப யஞ்ஞோபவீதசிகை யைத் தரியாதவனுப் பாகியத்தே யவற்றைத்தரித்தவனிடத்தே பிராஹ்மணத தன்மை முக்கியமாயின்றாம்; கௌணமாம்; ஏனெனின், வஜ்ரசூசியுபநிடதத்தே பிரஹ்மவேத்தாவே பிராஹ்மணனெனப்படுவன்.

ஆ-சு. ஜந்மநாஜாயதெஶூத்ரஃ ஸம்ஸ்காராத்த்விஜ உச்யதெ ।
வெதாப்யாஸாத்பவெத்விப்ரோ ப்ரஹ்ம ஜாநாதி ப்ராஹ்மணஃ ॥

"உறு பிறப்பினுற் சூத்திர னுகியே யுறுவன்
செறியும் பூணுநூற் சிவணுறத் துவிஜனுய்ச் சிறப்பன்
மறை யறைதலின் விப்பிரப் பெயரினுன் மலர்வன்
அறி வுறுதலிற் பிரமபி ராமண னுவன்."

(பொ-ள்.) இத்தேககாரியாய ஜீவன் ஜன்மத்தாற சூத்திரனுவன், யஞ் ஞோபவீத சமஸ்காரத்தால் துவிஜனெனப்படுவன், வேதாத்தியயனத்தால விப்பிர னெனப்படுவன். பிரஹ்மஞானத்தாற் பிராஹ்மணனெனப்படுவன். ஆகையால, பிரஹ்மவேத்தாவே பிராஹ்மண சபதத்தின் முக்கியபொருளாவன்; யஞ்ஞாதி கருமரூபனுவன்; அவற்றின் கருத்தாரூபனுவன. ஆன்மஞானரூப யஞ்ஞோபவீத சிகையின்றி முக்கிய யஞ்ஞோபவீதத்தன்மையும சிகித்தன்மையும் சமபவியாததே போல, ஆன்மஞானரூபதண்டப்பிராப்தியின்றிக் கேவல காஷ்டதண்டதாரணஞ் செய்தலால் சந்யாசியின்கண்ணே தண்டித்தன்மை சித்தியாதாம; ஏனெனின், பரமஹம்ச உபநிடதத்தே இவ்வாறு கூறப்பட்டிருக்கின்றது.

"ஜ்ஞாநதண்டோ த்ருதோ யேந ஏகதண்டீ ஸ உச்யதெ ।
காஷ்டதண்டோ த்ருதோ யேந ஸர்வாஶீ ஜ்ஞாநவர்ஜிதஃ ।
ஸயாதி நரகாந் கோராந் மஹாரௌரவஸம்ஜ்ஞகாந் ॥"

"தகையுறும் பிரம வறிவுரு வான தண்டத்தைத் தரித்ததூ யோனே
மிகையுறு மேக தண்டியேன் றியம்பு மேன்மையன் வேணுவைத் தரித்தே
புகலுறு மஃதற் றேவற்றினு மாசை பொருந்துமஞ் ஞானியாந் துறவி
இகமுடல் விடுத்து ரவுரவ முதல வெரிகோடு நரகடை வானே."

(பொ-ள்) ஆன்மஞானரூபதண்டத்தைத் தரித்தவனே ஏகதண்டியாவன், கேவலங் காஷ்டதண்டத்தைத்தரித்து ஆன்மஞானதண்டமின்றியவனும் விடயங்களிடத்தே பற்றுற்றவனுமாகிய அஞ்ஞசந்யாசி, சரீரபரித்தியாகஞ்செய்தபின் இரௌரவாதி மகாகோரநரகங்களையடைவன். ஆகையால், இப்பரமஹம்ச சந்யாசியானவன் சிரவணமனனாதி சாதனங்களால் ஆன்மஞானத்தை அவசியமாய்ச் சம்பாதித்துக்கொள்க; அதனால் மீண்டும் பேதபுத்தியுண்டாகாதாம். இந்த ஜீவான்மாவின் தன்மை பிரஹ்மரூபத்தன்மையை யாம் நின்பொருட்டு அநேகமுறை கூறினோமாயினும் அப்பொருளையே திடஞ்செய்யும்பொருட்டு மீண்டும் யாம் நினக்குக் கூறுவேம்; அது அடைவுறின் அதிகாரி கிருதார்த்தனாவன். ஹே மைந்த! பரமஹம்ச சந்யாசி தன் மனத்தே யெப்போதும் இவ்வாறாராய்க:—மத்தியானகால சூரியன் அந்தகாரமற்றிருப்பதேபோல எவ்வத்விதீயப்பிரஹ்மம் தனது சுயஞ்சோதியுருவத்தால் எப்போதும் அவித்தையற்றதாமோ அவ்வாநந்தவடிவம் இச்சீவான்மாவின்கண்ணே யெப்போதும் அபேதரூபமாகவேயிருக்கும்; கடஸ்தரூபமாயிராதாம் சர்வ பேதமுமற்றதாதலின் அத்விதீயரூபமாம்; ஆதலினாலே, ஜன்மமரணாதி சர்வ விகாரங்களுமற்றதாம். ஆகாசம்போல யாண்டும் வியாபகமாமாதலின் சர்வ கிரியையுமற்ற நிச்சலரூபமாம். அவித்தை முதலிய விகாரமற்ற அத்விதீயப்பிரஹ்மம் நம்மான்மாவினும் வேறன்றாம்; மற்றோ, ஆன்மாவின் ரூபமேயாம். பின்னமாவமேல கடாதிகட்கேபோல நம்பாலும் அநான்மரூபத்தன்மை பிராப்தமாமாதலின் யாம் அதனினும் வேறல்லேம். இவ்வான்மவடிவப் பிரஹ்மமே நமக்கு யாவினும் மேன்மையாய பிரியஸ்தானமாம். 'ஸ பகவ: கஸ்மிந் ப்ரதிஷ்டித: ஸ்வே மஹிம்நி' அந்த வியாபக ஆன்மா எதன்கண்ணேயிருக்கும் என அறியும் வேட்கையுண்டாகவே, அது தனது சுவப்பிரகாசரூப மகிமாவின்கண்ணேயிருக்கும் என விடையளிக்கப்பட்டது. அவ்வத்விதீயப்பிரஹ்மம் கேவலம் நமதான்மரூபமாத்திரமன்றாம்; மற்றோ, அது சர்வ ஜகத்தின் ஆன்மவடிவமாமாதலின் அந்த ஞானவடிவப்பிரஹ்மமே எனது சிகையாம்; யஞ்ஞோபவீதமும், தண்டமுமாம்; ஏனெனின், ஈண்டு அரசர் முதலியோர் எவ்வுபாயத்தானே சத்துருமுதலியோரைத் தம்வயப்படுத்துகின்றனரோ அது தண்டமாம். இவ்வாறாய தண்ட சப்தப்பொருள் முக்கிய விருத்தியானே ஞானவடிவப் பிரஹ்மத்தின்கண்ணே பொருந்தும்; ஏனெனின், அதுவே மகாவாக்கியத்தாலுண்டாய அந்தக்கரண விருத்தியின்கண் ஆரூடமாய்க் காரியசகித அஞ்ஞானரூப சத்துருவை நீக்குமாதலின். கரத்திலிருக்குங் காஷ்ட தண்டமோ கேவலம் மனத்தை வயஞ்செய்யும் வினைவைச் செய்விக்குமாதலின் முக்கியப்பொருளன்றாம்; மற்றோ, கௌணப்பொருளாம்; என ஆராய்ந்து பரமஹம்ச சந்யாசி ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே நிலைபெறின் சர்வ கருமங்களின் அதிகாரமற்றவனாய் அத்விதீயப் பிரஹ்மத்தைத் தன்னான்மவடிவமாய்க்காண்பன். அறிஞன் தனதான்ம வடிவமாயினிது கண்ட அத்விதீயப்பிரஹ்மம் சர்வ ஜகத்தின்கண்ணும் வியாபகமாம்; நிரதிசய ஆநந்தரூபத்தால் யாவினும் மேலாயதாம். ஜீவர்களின் பிரத்தியக்ஷ ஞானத்

திற்கு அவிஷயமாயினும் இவ்விழிப்பொறி கடாதிகளை யொளிர்விப்பதேபோ
அஞ்ஞானிகளின் இருதயதேசத்தேயிருப்பினும், ஸ்வப்பிரகாச பிரஹ்மம மந்
முதலிய எல்லாப் பொருள்களையும் ஒளிர்விக்கும். இத்துணையானே பரமஹம்
உபநிடதப்பொருள் நிரூபிக்கப்பட்டது. இப்போது துவம்பதார்த்த ஜீவசோதனை
செய்து அதனைப பிரஹ்மரூபமாய்க் கூறும் பிரஹ்ம உபநிடதப்பொருளை நிரு
பிப்பாம்:—ஹே மைந்த! துவமபதார்த்த ஜீவான்மாவை வெளிப்படுத்து
பொருட்டு அதன்கண் நான்கவத்தைகள் கூறபபட்டிருக்கின்றன, அவற்றை
கேட்பாயாக: இவ்வாநநதவடிவச் சுயஞ்சோதியான்மா உண்மையாயோ சர்வ
அவஸ்தைகளும் அற்றதாமாயினும் மாயாவயத்தால் நனு, கனு, துயில், துரீயம
என நான்கவத்தைகளையடையும. அவைகட்கு முறையே நாபி கண்டம் இரு
தயம் உசசி என்பன இடங்களாம். இவ்வந்தக்கரணவிசிஷ்ட ஜீவான்மா நாபி
முதல் நேத்திரபரியநததேயத்தே சிறப்பாய்நிலைபெறுங்கால் விசுவநாமத்தை
யடைவிக்கும் நனுவவஸ்தையைபபெறும. கண்டதேயததே சிறபபாய் நிலைபெறும
போது தைஜசபபெயரையடைவிக்கும் கனவவஸ்தையையடையும். இருதயதேய
த்தேசிறபபாய் நிலைபெறும்போது பிராஞஞப்பெயரைப பெறுவிககுந் துயிலவஸ்தை
யையடையும். சமாதிப பிரபாவததால உசசியில நிலைபெறும்போது சுத்த ஆன்ம
ரூபத்தன்மையையடைவிக்கும துரீய அவஸ்தையைபபெறும. இபபோது அநநான
கவததைகளின் தேவதைகளைககூறுதும். நனுவிறகு விராட்டும, கனுவிறகு ஹிர
ணியகருப்பரும், துயிலுக்கு உருததிரரும, துரீயததிறகுப பரமான்மாவும தேவ
தைகளாம. அநதப பரமான்மா மாயாரூப உபாதிசபபநததால சர்வ ஜகத்துருவ
மாம்; உண்மையாயோ காரியகாரண பாவமறறதாட; மனவாணிகட்கு அவிஷய
மாம்; சுயஞசோதியாய ஆநநதவடிவமாம்; அதன்கண்ணே இககர்மபலரூப சப
தாதி விடயஙகள் தமது விடய வியறகையைப பரிததியாகஞசெய்வதேபோல
அதன்கண் தேவ வேத யஞஞ மாதா பிதா மருகி என்பனவாதிய எனதெனும் அத
தியாசவிடயப்பொருள்களுமதமமியறகையைபபரிததியாகஞசெய்யும. நானெனும
அததியாச விடயஙகளாய பிராஹ்மணதவம், க்ஷத்திரியதவம, வைசியதவம், சூத
திரதவம, சண்டாளத்வம், புறகசத்வம் என்பனவாதிய ஜாதிகளும் உண்மையாய்
அதன்கண்ணின்றும. ஈண்டுப பார்ப்பினியின்கண் சூத்திரனுக்குண்டாயவன் சண்
டாளன்; க்ஷததிரியப பெண்ணின்கண் சூத்திரனுககுண்டாயவன் புறகசன்.
பிரஹ்மசரியாதி நான்காசிரமமும் அதன்கண்ணின்றும. மேல இடை கீழென்னும
மூவகையாய கர்மகர்ததாக்களும், இகபரலோக சுகதுக்கரூப பலன்களையடைவிக
கும் நானுவகையாய சாதனஙகளும, கூறிய சுகதுக்கமே முதலாக நிறைவுறற இச
சம்சாரமும அதன்கண்ணுண்மையாயின்றும். இததகைய காரியசகித அஞஞான
மற்ற அத்விதீயப் பிரஹ்மம தூயமனமுடைய அதிகாரிகட்குத் தன் சுயஞசோதி
வடிவமாய்ப பிரதீதியாம. அது இநதிராதி சர்வ தேவதைகளையும் தன்னுணையின்
கண்ணே நடப்பிப்பதாமாதலின், இருஷி பிதுர்தேவதை என்பன முதலிய மகா
புருடரும் அதை நியமிப்பதிலாற்றலற்றவராவர். தன்னுன்மரூபமாய் அதையறிநத
அதிகாரி அநாதனைப்போல அவருக்குத் தாசனுகமாட்டான். அவ்வத்விதீயப
பரமான்மாவின்கண்ணே பரசீவஜகத்து என்பனவாதி துவைதபாவம் நம்மனே

ராலேயே கற்பிக்கப்பெற்றதாம்; உண்மையாலோ அதன்கண்ணே துவைதப் பிரபஞ்சமின்றாம். உண்மையாய் இருளின்றிய இரவியின்கண்ணே கூகை முதலி பவை இருளைக் கற்பித்தலேபோலச் சீவன் அத்விதியப் பிரஹ்மத்தின்கண்ணே உலககற்பனையைச்செய்வன். அக்கினி சம்பூரணகாஷ்டங்களின்கண் மறைந்திருப் பதேபோல காரியகாரணரூபமாய்ப பிரசித்தமாய ஜராயுஜாதி நால்வகைப் பூதப் பிராணிகளுள்ளும் சுயஞ்சோதியாய ஏகபரமான்மா மறைந்திருக்கும். ஆகாசம் போல யாண்டும் வியாபகமும், தூலசூக்ஷ்மகாரண சரீரங்களில் சாக்ஷிரூபமும், இராஜாவைப்போலச சர்வ பூதங்களையும் தன்வயப்படுத்தி அவற்றின்கண்ணிருப் பதுமாம். மத்தியஸ்தனுனவன் விவாதஞ்செய்பவரின் வியாபாரங்களைச சாக்ஷிரூப மாய்க்காண்பதேபோலப பரமானமாவும் சாக்ஷிரூபமாய்ப பூதவியாபாரங்களைக் காணும்; சாவ ஜடப்பொருள்களினும அது விலக்ஷணமாமாதலின் சிற்கனரூபமும், அத்விதீயரூபமும, நிர்க்குணரூபமும் ஆம. 'ஸாக்ஷீசேதா கேவலோ நிர்குணஶ்ச' எனச் சுருதியுமுளது. இதன்கண்ணுறும சேதா சபதப்பொருளைப் பேத வாதியர் சைதன்ய குணமுடையதென உடன்பட்டுளாராயினும், அது ஞானாதி குணங்களுடையதன்றாம்; ஏனெனின், அவறறைக் குணமென வுடன்படின் அச்சுரு தியின்கண்ணே நிர்க்குண சபதததாலே அதனை ஞானாதிய சாவ குணங்களுமற்ற தெனக்கூறல் அசங்கதமாம; கேவல சபதம் அதை அத்விதீயரூப மெனக்கூறும். அததகையதன்கண்ணே ஞானாதிகுண குணீபாவஞ் சமபவியாதாதலின், சேதா சபதம் சைதன்யரூப ஆனமாவையே கூறுகின்றது. அது மாயையின்கூட்டுற வானே தன்வடிவததையே இவ்வுலகுருவாககுமாதலின், காரணரூபமாய அதுவே இவ்வெல்லாவுலகின் சுவாமியாம்; யாவறறையும் தன்னாணையின்கண்ணே செலுத் துவதாம். காஷ்டஙகளில இரகசியமாயிருககும அக்கினியானது கடைதலாம் உபா யததானே வெளிப்படுவதேபோலப பிரஹ்மவேத்தாக்கள் அதன் சாக்ஷாத்காரப் பொருட்டு இவ்வகை யுபாயஙகூறியுள்ளார்:—அதிகாரியானவன் தன்தேகத்தை யேனும் மதியையேனும் கீழரணிரூபமாய்ச சிந்தனஞ்செய்க. அகார, உகார, மகார, அர்த்த மாததிரை என்னும நான்கு மாததிரைகளால் முறைபபடி விசுவ, தைஜச, பிராஞ்ஞ, துரீயமென்னும நான்கவததையையுடைய ஆன்மாவைக்கூறும் ஓங்கா ரத்தை மேலரணியாய்சசிந்திக்க. காஷ்டரூப இரண்டரணிகளையுங் கடைதலானே அழலுண்டாதலேபோலத தேகமதி யோஙகாரமென்னும் இரண்டரணிகளையுங் கடைதலானே ஆன்மசாக்ஷாத்காரவடிவ அழலுண்டாம்; அது காரியசகித அஞ் ஞானத்தை நாசஞ்செய்யும். முதலில விசுவாதி நான்கையும் முறைப்படி விராட்டு ஹிரணியகருப்பா ஈசுரா பரமான்மாவென்னும நான்கோடும் அபின்னரூபமாய்ச் சிந்தனஞ்செய்க, பின் விசுவாதி நானகையும் முறைபபடி அகாராதி நான்கு மாத் திரைகளோடு அபேதமாய்ச சிந்தனஞ்செய்க. இவ்வாறு நிரந்தரந் தியானஞ்செய் தலே இரண்டரணிகளின் கடைதலாம. இவ்வானந்தவடிவ ஆன்மா காஷ்டத்தே அழலிருப்பதேபோல இச்சங்காததே மறைந்திருப்பினும், தியானரூப மதனத் தால் விரைவாகவே வெளிப்படும். இபபொருளில் நீ சிறிதுமாத்திரையும் ஐயு றாதே. எள்ளில் மறைந்திருக்கும் எண்ணெய் யந்திரத்தே வைத்தாட்டு முபா

யத்தால் கிடைத்ததலேபோலவும், பாலின்கண்ணே மறைந்திருக்கும் நெய் கடைதலாமுபாயத்தானே கிடைத்ததலேபோலவும், மதிமுதலிய கூட்டத்தே மறைந்திருக்கும் ஆன்மாத்தியானரூப உபாயத்தானும், தவம், சததியம், விவேகம் முதலிய உபாயங்களானுங் கிடைக்கும். இஃதுண்மையாய் ஜீவேசுர பாவமற்றதாயினும் அவித்தையின் சமபந்தத்தானே ஜீவபாவத்தையடைவுற்று நனுக்கனுச சம்சாரத்தே சுழலும். குருசாஸ்திர உபதேசததானே ஆன்மாவைச சாக்ஷாத்கரித்தபோது கற்பித ஜீவபாவத்தைவிடுத்து அத்விதீயப பிரஹ்மரூபமாம். சிலநதிப் பூசியானது நாறகளை உண்டாக்கி இலயஞ் செய்தலேபோல இசசீவனும் நனுக்கனுக்களில் அநேகம் வகையாய பொருள்களை உண்டாககி இலயஞ்செய்வன்; குருசாஸ்திர உபதேசத்தானே தன்னிருதய தேயத்தேயிருககும ஆநந்தவடிவ ஆன்மாவைச் சாக்ஷாதகரித்தவுடன் சீவத்தன்மையை விடுததுப் பிரஹ்மத்தன்மையையடைவன். மனசகித வாக்கு முதலியவைகளாலவிடயஞ்செய்ய முடியாதது, தன்ஞானத்தானே ஜீவர்கட்கு ஆநந்தரூபத்தன்மையை வெளிபபடுத்துவதும் ஆகிய சுயஞ்சோதியான்மாவைச சாக்ஷாத்கரித்தே விவேகி மோக்ஷமடைவன். பாலின்கண்ணே நெய் வியாப்பியமாயிருபபதேபோல ஆன்மாச சாவ ஜகததின்கண்ணும் வியாப்பியமாயிருக்கும். கரும உபாசனையின் பலவடிவ இவ்வெல்லாசசம சாரததிற்கும் காரணமாகவுடைய ஆன்மாவை மனோ நிக்கிரகஞ்செய்து சாக்ஷாத்கரித்தவனே மோக்ஷத்தையடைவன்; மனோ நிககிரகமின்றி அநேகஙகோடி பிறப்பெடுபபினும ஆன்மாவையறியமுடியாதாதலின், மோக்ஷ இசசையுடையவன் மனோ நிக்கிரகததை யவசியஞ் செய்க. இத்துணையானே பிரஹ்ம உபநிஷதத்தின்பொருள நிரூபிசகபபட்டது. இப்போது இப்பொருளினேலயே பிரமாணரூபமாய்ப பிரஹ்மபிந் துபநிடதப்பொருளை நிரூபிபபாம்:—ஹே மைந்த! அதிகாரிக்கு மனோ நிக்கிரகத்தானே மோக்ஷங்கிடைக்கும என்பது பிரஹ்ம பிந்துவின்கண்ணுங் கூறபபெறறுளது. அதை நீ கேட்பாயாக: மனமிருவகையாம, ஒன்றே தூயதாம், மறறதோதீயதாம. விடய இராகததையுடையதே தீயதாம். நிட்காம கரும உபாசனையானே விடயராகமற்றதே தூயதாம். இவ்விருவகையே பநதமோக்ஷகாரணமாம. விடயங்களிடத்தே பற்றுறற தீயமனம் பந்தகாரணமாம்; மாறுபது மோக்ஷகாரணமாமாதலின், முமுக்ஷு மனததை யவசியம விடயமறறதாககுக. சாவ விடயங்களின்பற்றற்ற தூயமனம் இருதயதேயததே நிரோதததையடைநது ஜீவப பிரஹ்ம அபேதததை நிசசயித்தபோது அதிகாரிக்கு மோக்ஷரூப பலபபிராபதியின்கண்ணே சிறிது மாத்திரையுங் தாமதமின்றாம; மறறே, போஜன சமகாலத்திலேயே திருப்தியுண்டாவதேபோல ஆன்மஞானமடைவுறறபோதே மோக்ஷப் பிராப்தியாம. கனவின் கண்ணே யிம்மனம் தன் சொரூப அஞ்ஞானத்தால் பொய்யாய துவைதப பிரபஞ்ச ஆகாரத்தையடைந்து நானாவகையாய விகாரத்தையடைவதேபோல, நனவின்கண்ணும் இம்மனம் அஞ்ஞானத்தானே அவ்வாறுறறு விகாரப்படும். கனவின் கண்ணே அஞ்ஞானத்தானே துவைத ஆகாரத்தையடைவுறினும், இம்மனம் உண்மையாய் அதிஷ்டான சைதன்யரூபமாகத் துவைதபாவமற்றதாதலேபோல, நனவின்கண்ணும் இஃதுண்மையாக அத்தகையதேயாம். அதிஷ்டான ஆன்மாவின்

சாக்ஷாத்காரத்தானே துவைத ஆகார விருத்தியை விட்டபோது இதைக் கவர்த லின்மைவடிவ அமனஸ்தன்மையையடைவன்.

சங்கை :—ஹே பகவன்! அமனஸ்தன்மையையுற்றபோது ஆன்மாவின் எவ் வகையாயவடிவ மெஞ்சி நிற்கும்?

சமாதானம் :—ஹே மைந்த! அம்மயக்குற்றமனம் அமனஸ்தன்மையையடை ந்தபோது வேதவேத்தாக்கள் ஆன்மாவிற் கிவ்வகைவடிவங் கூறியுள்ளார் :— அக்காலான்மா ஏகமாய பிரஹ்மமெனவே யுணரத்தக்கதாதலின் சர்வ கற்ப னையுமற்றதாம். நித்தியமாதலின் ஜன்மாதி சர்வ விகாரமுமற்றதாம். ஜன்ம ரகித ஞானத்தானே ஜன்மாதித வஸ்துவின் போதமே யுண்டாமன்றி, அஜன்மப் பொருட்போதமுண்டாகாதாமாதலின், ஆன்மஞேயப் பொருளினும் அபின்னமாய சுவப்பிரகாசஞானரூபமாம். சிலமயலுடையோரோ, மனந்துயிலின்கண்ணே இல யமாவதேபோல இலயமடைந்தபோதுதான் அமனஸ்தன்மையினடைவாமென்பர்; அஃதொவ்வாதாம்; என்னை, துயிலின்கண்ணே மனமடங்கலின்மாட்டும், சமாதி யின்கண்ணே மனமடங்கலின் கண்ணும் மிகவுஞ் சிறப்புளதாம். அதாவது, விட யங்களினின்றும் மீண்டதும், சர்வ கற்பனைகளுமற்றதும், மகாவாக்கிய ஜன்னிய வித்தையானே தூய்தாயதும் ஆகிய மனதிற்கு நனவின்கண்ணே யுண்டாம் பிரஹ்மாகாரரூப அவஸ்தையினும விலக்ஷணமாகவே துயிலின்கண்ணேயாம்; என்னை, துயிலிலோ மனம் காரண அஞ்ஞானத்தே சூக்குமமாயொடுங்கும், சமா தியின்கண்ணோ ஆங்கொடுங்காமல் அதிஷ்டானப்பிரஹ்மத்தின்கண்ணே நாசத் தையடையும். அவ்விரண்டன்கண்ணே வேறு விசேடத்தையுங் கூறுவாம் :— சமாதியின்கண்ணே ஞாதா, ஞானம், ஞேயமென்பனவாதிய பேதமற்று நிருத்த மாய மனம் அத்விதீயப பிரஹ்மரூபமேயாம். அது துவைதபாவமற்றதாதலின் நிர்பயமும், ஸ்வப்பிரகாச ஞானவடிவமும, யாண்டும் நிறைந்ததும், ஜன்மாதி விகாரங்களற்றதும, அஞ்ஞானரூப நித்திரையற்றதும், யான் எனது என்பதாதி சர்வ அத்தியாசங்களற்றதும், நாமரூபாதி கருமங்களற்றதாதலின் நேத்திராதி சர்வ இந்திரியங்களின் அவிடயமும ஆம. பிரஹ்மஞானத்தானே ஒரு முறை யழிந்த அவித்தை மீண்டு முற்பன்னமாகாதாதலின், அது ஒரு முறையே ஆவிர்ப் பூதமாம்; சைதன்ய மாத்திரவடிவமதாம. இத்தகைய அத்விதீயப் பிரஹ்மாகாரத் தன்மையை அம்மனம் சமாதியின்கண்ணேயடையும். துயிலின்கண்ணோ அம் மனம் அவித்தையோடுகூடிய சேதனதின்கண்ணே இலயத்தையடையும்; அத் விதீயப் பிரஹ்மாகாரத்தன்மையை யடையாதாதலின், துயிலினுஞ் சமாதி மிகச் சிறப்புடையதாம். சமாதியின் துர்லபத்தன்மையாவது, முன்செய்த அநேக புண் ணியமகிமையானே அதிகாரியின் மனம் அமனஸ்தன்மையையடையின் நிர்விகற்ப சமாதி கிடைக்கும். அது வாக்கிந்திரிய விடயமாகிய சர்வ சப்தங்களுமற்றதாம்; அந்தக்கரணத்தின் சிந்தைமுதலிய சர்வவிருத்திகளுமற்றதாம். அதன்கண்ணே சர்வதுவைதங்களுமற்றிருத்தலின் அதன் கண்ணிலேபெற்ற அறிஞன் எப்பொரு ளையுங் கவர்தலேனும் விடலேனுமின்றாம்; சிந்தித்தலுமின்றாம். மனம் அத்விதீய

ஆன்ம நிச்சயஞ்செய்து சர்வ விக்ஷேபமற்ற நிச்சலத்தன்மையை யடைந்து அத்விதிய ஆன்மரூபமாய்ச் சர்வ சங்கற்ப விகற்பங்களுமறறுச் சமத்தன்மையை யடையிற்ருன் நிருவிகற்ப சமாதியையடையும். வேதாந்த சாஸ்திரங்கள் அதைக் கூறியபோதினும் பிரஹ்மவேத்தாவாய ஆசிரியரினுபதேசத்தானே அது கிடைக்கும். அது ஞாதா, ஞானம், ஞேயம், தியாதா, தியானம், தியேயம் என்பதாதி சர்வ சம்பந்தங்களுமற்றதாதலின், அறிஞர் அதை அஸ்பரிசயோகமெனக் கூறியுள்ளார்; அதை வேதாந்த விசாரமற்ற யோகிகாணுன்; என்னே, பயமற்ற ஏகாந்த ஸ்தானத்தே பயகாரண ஆரோபணஞ்செய்து மூடபாலகன் அச்சமடைதலேபோல, சர்வ பயமற்ற நிர்விகற்பசமாதியின்கண்ணே பயகாரண ஆரோபணஞ் செய்து வேதாந்த விசாரமற்ற யோகி நிர்விகற்பசமாதியினின்றும் பயத்தையடைவன். பிறவிக்குருடன் பிரசித்தமாயரூபத்தை யுணராததேபோல, அவ்வியோகியும் அந்தா ஆன்மாவின் அஞ்ஞானத்தானே அமனஸ்தன்மைவடிவ சமாதியைத் துயிலெனச்சொல்வன். அவ்வியோகி அதன்கண்ணே அசசமுறலில், ஒன்ரே ஆன்ம சொரூப அஞ்ஞானமே காரணமாம், மற்ெறுன்ரே, நான்முறைய நானுவகைக்கு தர்க்கங்காரணமாம். அஃதிதுவாம்:—சாங்கியசாஸ்திர அனுசாரயோகியின் குதர்க்கமாவது, சர்வ பேதமற்ற ஒரு அத்விதீய ஆன்மாவே சர்வ சரீரத்தும் வியாபகமாம்; அது சச்சிதாநந்தரூபமாம் என, ஆன்மாவின் வடிவம் வேதாந்த சாஸ்திரத்தே கூறப்பட்டுளது. அஃதோ சம்பவியாதாம்; என்னே, சர்வப் பூதப்பிராணிகளிடத்தும் ஒரே ஆன்மாவாயின், உலகத்தே ஒருவன் சுகியாகவே யாவருஞ் சுகியாகவேண்டும், ஒருவன் துககியாகவே யாவருந் துக்கியாகவேண்டும், இஃதோ காணவருவதின்றும்; மற்ரே, சிலர் சுகியும் சிலர் துக்கியுமாவர், சிலர் பிறப்பர், சிலரிறப்பர்; இங்ஙனங் காணவருதலின் சர்வ தேகதததும ஆன்மா ஒன்றன்றும்; மற்ரே, ஒவ்வொரு தேகத்தும் ஒவ்வொரு ஆன்மா இருக்கும்; சரீரமோ அநந்தமாதலின் ஆன்மாவும் அநந்தமாம்; அநேக ஆன்மாக்கட்குப்போக மோக்ஷங்களே யடைவிக்கும் பிரகிருதியொன்றை அங்கீகாரம் செய்யவேண்டும். அது சம்சார தசையின்கண்ணே மகதத்துவாதி அநேக ரூபங்களாயிருக்குமாயினும், மோக்ஷ அவஸ்தையின்கண்ணே புருடனுக்குத்தெரியாதாம்; அல்லது, சம்சாரதசையின் கண்ணே பந்தரூப அநுலோம பரிணாமத்தையடையினும், மோக்ஷகாலத்தே முக்திரூபப் பிரதிலோம பரிணாமத்தையடையும். அல்லது, அது தனது வடிவத்தானே புருடனுக்குப் பந்தத்தையுண்டாக்காதாம்; மற்ரே, மனரூபத்தானே பந்தத்தை யுண்டாக்குமாதலின், முக்தியவஸ்தையின்கண்ணே கிருதார்த்தத்தன்மையையடைந்த அம்மனமே தன் காரணத்தே இலயரூபததன்மையை யடையும். இம்மூவகையாய முறையே சம்பவிக்கத்தக்கதாம் வேதாந்திகள் மனத்தை யத்விதீயப்பிரஹ்மத்தின்கண்ணே தாதாத்மியரூப இலயத்தை யங்கீகரித்துளார், அது சம்பவியாதாம்; என்னே, காரியத்திற்குத்தன்காரணத்தே இலயமுண்டாமன்றி அகாரணத்தே இலயமுண்டாகாதாம். கடரூப காரியத்திற்கு மண்வடிவகாரணத்தே இலயமாமன்றி நூன் முதலிய அகாரணத்தே இலயமாகாதாம். நிர்விகார அத்விதீயப்பிரஹ்மத்தே அம்மனகாரணத்தன்மை சம்பவியாதாமாதலின், அதன்கண்ணே மனத்தின் இலயம் சம்பவியாதாம்; எனன் முதலாக அநேகவகைக் குதர்க்கங்களால்

வேதாந்த விசாரமற்ற யோகி நிர்விகற்ப சமாதியினின்றும் பயத்தையடைவன். சுருதி யறிஞர் அனுபவசித்தமாய் முற்கூறிய அமனஸ்பாவத்தைப் பரித்தியாகித்து அதைத் துயிலின் துல்லியமென்பதாதலின், அவ்வியோகி தன்னுணர்தவடிவ ஆன்மாவையடையான்; தருவைப்போல உணர்வறறவனாயினுந் தன்னைப் பண்டிதனென்பன்; கற்போல நிச்சலனாயினும் தாருத்தியைப்போல வாளாமுச்செறிவன். பிறவிக்குருடன் தன் காத்தேயிருக்கும் நிதியையும் காணாததேபோல, வேதாந்த விசாரமற்ற யோகி தன்னிருதயத்தேயிருக்கும் ஆநந்தவடிவ ஆன்மாவையும் காணான். இத்துணையானே சாங்கியக்குதாக்கம் காண்பிக்கப்பெற்றது. இனிநையாயிகாதியரின் குதர்க்கம் வருமாறு:—மதியாதிகட்குச் சான்றாய்ச் சர்வவுபாதியற்ற ஆநந்தவடிவச் சுயஞ்சோதி யான்மாவைச் சில நையாயிகர் இயல்பானே ஞானமற்ற ஜடமென்பர்; சூனியவாதியாய மாத்யமிகரோ சுகம் ஞானம் இரண்டையும் அத்தியந்தம் அசத்தியமென்பர். நையாயிக மதத்தோ ஆன்மாவோடு மனம் சையோகமானபோது ஞானசுகாதிகுணமுண்டாம்; அல்லாதபோது உண்டாகாதாம். மாத்யமிகன் மதத்தோ ஞானசுகாதிகள் அத்தியந்தம் அசத்தேயாம். நையாயிகமதத்தே ஆன்மாமோக்ஷகாலத்தே மனச சம்பந்தமற்றதாம், ஜீவித அவஸ்தையின்கண்ணே யாகாதாமாதலின, அவ்வாதிகள் அக்கால அமனஸ்பாவத்தை அங்கீகரிக்கவில்லை; மற்றோ, மோக்ஷகாலத்தே அஃதை யங்கீகரிப்பாதலின் அம் மயல்வாதியர் நிர்விகறபசமாதியின்கண்ணே யெப்போதும் பயத்தையே யடைவர். இத்தகைய சாஸ்திரவிருத்தமாய குதாககஙகளைப பரித்தியாகித்துப் பிரஹ்மவேத்தாக் குரு வேதாநத சம்பிரதாய அனுசாரமாய் மனத்தையொடுக்கும் அதிகாரி ஆன்மசாக்ஷாதகாரத்தையடைநது மோக்ஷரூப நிததியசுகததையடைவன்; சர்வ பயமுமற்றவனாவன்; ஜன்மமாணாதி சாவ துக்கஙகளுமறறவனாதலின், மோக்ஷ இசசையையுடையவன் முதலில தமமுளததைநேய வெறறிகொள்ளவேண்டும்.

சங்கை:—ஹே பகவன்! அத்தியந்தம பிரபலமாமாதலின் அதனை வெற்றி கொள்ள எவனு மாற்றலுடையவனாகானன்றோ?

சமாதானம்:—ஹே மைந்த! அம்மனோ வெறறியில் எவர்க்கும் ஆற்றலின்றாயின், சுருதிமிருதிரூப சாஸ்திரம் அதன் வெற்றியை விதிக்கவேண்டியதில்லை; ஏனெனின், எதைச்செய்ய அதிகாரிகட் காற்றலுண்டோ அதைச்செய்யச் சாஸ்திரம் விதிக்கும; மாறாயதை விதியாதாம. அக்கினிஹோத்திராதிகருமஞ் செய்வதில் அதிகாரிகட் காற்றலுண்டாமாதலின், சாஸ்திரம அதை விதிக்கின்றது. அக்கினியை விழுங்கவேனும், கடலைக்கடக்கவேனும் சமர்த்தின்றாமாதலின் எந்நாளும் அவற்றை விதிக்கவில்லை. மனத்தை வெறறிகொள்ளவோ அடிக்கடி சாஸ்திரம் விதிக்கின்றது, மேலும் ஜயஞ்செய்தல் அநேக அறிஞரின் அனுபவத்தாலுஞ் சித்தமாமாதலின், குருசாஸ்திர உபதேசத்தானே மனோஜயம் அவசியமாயுண்டாம். மனோநிக்கிரகத்தே அதிகாரியின் உத்வேகமற்ற திடஉற்சாகமே காரணமாம். முன்னொரு சிட்டுக்குருவி திடஉற்சாகத்தானே நீரின் ஒருபிந்துவைக் கவரும் தனது மூக்காற் சமுத்திரத்தை நீரற்றதாக்கியதேபோல, அதிகாரியும் உத்வேக

மற்றவனுய்த் திடஉற்சாகத்தானே மனநிக்கிரகஞ்செய்க. லோகபரம்பரையாற் பெற்ற சிட்டுக்குருவியின் விருத்தாந்தத்தை நீ கேட்பாயாக:—அலைகளோடு கூடிய கடற்கரையில ஒரு சிட்டுக்குருவி தன் முட்டையைவைக்கமுயன்றது. அக்கால் பெண் பறவை ஆணுக்கு அநேகமுறை தடுத்துக்கூறியும், ஆண் பறவை தன் அகங்காரத்தானே நாயகிவசனத்தை யங்கீகரிக்கவில்லை. மேலுங் கடலைத் துச்சமாயெண்ணிக நாயகியை நோக்கி யிவ்வாறுங் கூறியது:—ஹே கண் மணியே! நீ கடற்கஞ்சாதே, கடல் தன் கருவத்தாலொருகால் நம்முட்டையைக் கவரின் மநீதான்மத்தமாய சமுத்திரத்தை யானிப்போதே நீரற்றதாக் குவேன்; எனது கோபத்தாலுண்டாய பயத்தானே தேஜசற்ற இக்கடலை நீ காணுதி. இங்ஙன் நாயகனது கருவத்தோடுகூடிய மொழியைக்கேட்டுக் கூறியதாவது:—ஹே பிராணநாயகரே! நான் கடலை வற்றடிப்பேன் எனத் தாங்கள் கூறியது மிகவும் பொருந்தாததேயாம்; என்னை, கடலின் வல்லமையாண்டையது? தங்கள் வல்லமையாண்டையது? இப்பெருங்கடலை வற்றடிக்கத்தங்கட்கு முடியாதாம்; என அநேகமுறை கூறிப் பின் மௌனமுற்றது. ஆணே, மனைவிக்கு நீ கடற்குப் பயமுறுதே என அடிக்கடி கூறிக் கடற்கரையிலேயே தன் முட்டையைவைத்தது. பின் தன் மனைவியைக்கூட்டிக்கொண்டு ஆகாரபொருட்டுசென்றது. ஆண்சிட்டுப் பெண்சிட்டுக்குக்கூறிய வசனமியாவற்றையும் கடல் கேட்டுக்கொண்டேயிருந்தது. அவை சென்றபின் அக்கடல தன் பெருமையை நினைந்து சிட்டின் சிறுமையையும் எண்ணி மந்தமந்தமாகப் புன்சிரிப்புற்று மலைபோலும் அலைகிளப்பி அச்சிட்டின் முட்டையைக்கொண்டு சென்றது. அக்கடல் பரமேசுரரை எல்லா வுலகின் பயகாரணமென வெண்ணித தன் மனத்தே யிவ்வாறாராய்ந்தது:—உலகத்துள்ள ஸ்தாவரஜங்கம ஜீவர்களியாவரும் பரமேசுரரின் விபூதிகளாமாதலின் எவ்வுயிரின் சக்தியும் வடிவததானும், தேசத்தானும், காலத்தானும, நிமித்ததானும அறியமுடியாதாம; ஏனெனின், சாவ சக்திகளின் ஆசிரயமாய பரமேசுராது மாயை பொருந்தாப்பொருளையும் பொருத்திவைக்குமாதலினானே, நூலுணாநதோர் அகடிதகடனப டீயசீமாயை (செய்யத்தகாததையும் செய்விக்கும் சமர்த்தைமாயை) என மாயையின் வடிவத்தைக் கூறியுள்ளார். இச்சிட்டும பரமேசுராது விபூதிரூபமாதலின் இதறகுத் தேசமியாதோ! காலமியாதோ! மிததிரன் யாவனோ! ஆறறல் யாதோ! இவ்விஷயம் சர்வஞ்ஞப் பரமேசுரரன்றிச சீவராயயாம் அறியேமாதலின், இம்முட்டையை யழியாமல் ஒரு இரகசியஸ்தானத்தே வைத்திருபபேன் என எண்ணி யம்முட்டையை அவவாறே வைததது. மகா காஜனைரூபசப்தத்தைச்செய்து அக்கடல் முன்போன்றே நிர்ப்பயமாயிருநதது. பின்னா அச்சிட்டு வயிறு நிரப்பிப பெண்சிட்டோடும கடறகரைமேல வந்தது. ஆண்டுத் தன் மைந்தனாகிய முட்டையைக்காணாதாகிக் கண்சிவந்தது; கோபத்தோடு மூர்சசையையடைந்தது. இக்கடல் எனது முட்டையைக் கொண்டு சென்றதென அனுமானித்து, அககடலை வற்றடிக்கத்துணிந்தது. அக்கால் அப்பெண்சிட்டுத தன்னாயகன் கருத்தையறிந்து நாயகருக்கிதமுண்டாம் பொருட்டு நீதியோடுகூடிய மொழியை மொழியலாயது:—ஹே நாயகரே! சர்வநதிகட்கும் பதியாய இக்கடலின் பலம் மிகவும் பெரியதாம்; தங்கள் பலம் மிகச்

சிறியதாம். இத்தகைய கடலோடு வைரஞ்செய்தல் நீதிசாஸ்திர விருத்தமாம்; என்னை, ஆண்டிங்ஙனுரைத்துளது:—மைத்திரி விவாகம் என்னுமிரண்டும் சமானர்கட்கேயாம்; குறைவு மிகுதியாகக் கூடாவாம்; ஆங்கே பரஸ்பரமவைரமும் சமானர்க்கேயன்றிக் குறைவுமிகுதியாகவன்றாம். கடற்சமானபலம் தங்களிடத்தே யான் கண்டிலேனாதலின், இதனோடு வைரஞ்செய்தல் தங்கட்குத் தகுதியன்றாம். ஹே நாயகரே! இவ்வுலகத்தே தேசபலம், காலபலம், மித்திரபலம், தனபலம், சரீரபலம், குலபலம் என்னும் அறுவகைப்பலமோ கடலின்கண்ணே காணவருகின்றது. தங்களிடத்தோ காணேம்; ஏனெனின், தலை முதல் வாலவரைத் தங்கள் தேகநீளமோ 16 அங்குலபரிமாணமாம்; இருபக்கமோ 12 அங்குல நீளமாம்; வாமபக்க நுனிமுதல் தக்ஷிணபக்க நுனிவரைத் தங்கள் தேகம் ஒரு அஸ்த அளவுடையகலமாம்; மாம்பழக்காம்புபோன்றன தங்களிருபாதங்கள், தாமரையின் நுனியொத்தது தங்கள் மூக்கு; ஜீரணவஸ்திரமொத்தும் அத்தியந்தம் சிதிலமாய உரமுடைய இரண்டு பக்கங்கள்; இதனினும் அதிகதேசம் உம்முள்ளிலேனும் வெளியிலேனுமின்றாமாதலின், தேசபலமும் தங்கட்கின்றாம். ஹே பிராணநாதரே! பக்ஷிகளாகிய நீசசாதியாய நும்மிடத்தே பிறந்தது முதல் இறக்குமளவும் இக்காலம் ஒரேவடிவமாயிருக்கிறது; தேவ தைத்திய மனுடர் முதலிய உத்தமஜாதியின் கண்ணே இக்காலம் மேன்மையையும் தாழ்மையையும் அடைவிக்குமாதலின், காலபலமும் உமக்கின்றாம். புத்திரவியோகத்தானே தீனபாவத்தையடையுற்ற மனைவியாகிய என்னையன்றித் தங்களுக்கு வேறொரு நேயருமின்றாமாதலின், நேயபலமும் தங்கட்கின்றாம். தனவானுடைய தனத்தைக் கவரும் விழைவானே அமித்திரனும் மித்திரனாதலுண்டு, அத்தனமோ உமக்கின்றாமாதலின், தனபலமுமுமக்கின்றாம். ஒரு பலவானானவன் ஆகாயத்தே செலுத்தியபாணம் எத்துணைத்தூரம் சென்று வீழ்கின்றதோ அத்துணைத் தூரம் செலவதிலும் தங்கட்காற்றலின்றாமாதலின், தேகபலமும் தங்கட்கின்றாம். நீர் சிட்டுக்குருவிக்குலத்தே பிறந்திருக்கின்றீர், அது யாவற்றினும் தாழ்ந்ததாமாதலின் தங்களிடத்தே குலபலமுமின்றாம். இததுணையானே சிட்டின்கண்ணே அறுவகைப்பலமும் இல்லையென்பது காட்டப்பட்டது. இனிக் கடலின்கண்ணே அவ்வறுவகையுமாமாறு காட்டப்படும்.—ஹே பிராணநாயகரே! இக்கடல் இக்கரையிலோ ஒரு இலக்ஷயோஜனை விஸ்தீரணமாம். அக்கரையிலோ இரண்டு இலக்ஷயோஜனை விஸ்தீரணமாம். கீழே பிருதிவியின் கண்ணோ பாதாளபரியந்தம் விஸ்தாரமாம். தடாகநீர் காலவாய்வாயிலாய் வயல முழுதும் வியாபித்தலேபோல, இக்கடலும் பிரளயகாலத்தே மூவுலகத்தையும் வியாபித்து நிற்குமாதலின் இக்கடல் தேசபலமுடையதாம். இக்கடல் முதலிய மகாபுருடருக்குக் காலம் எப்போது மனுகூலமாயேயிருக்குமாதலின், இக்கடல் காலபலமுமுடையதாம். இப்பூமியின்கண்ணே எத்துணை ஜாதிப்பிராணிகளிருக்கின்றனவோ அத்துணை ஜாதி இரத்தினங்களும் கடலின்கண்ணே இருக்குமாதலின், இது தனபலமுமுடையதாம் இக்கடல் இந்திராதிதேவதைகட்கும் முனிகட்கும் மனுடர்க்கும் அநேகம்வகை இரத்தினங்களையடைவிக்குமாதலின், அவர் யாவரும் இக்கடலின் மித்திரேயாதலின் இது மித்திரபலமுமுடையதாம்.

இக்கடல் நேரே மகேசுரரிடத்தினின்று முண்டாயதாதலின், குலபலமுமுடைய தாம். அநேக நூறு யோஜனை விஸ்தாரமுடைய மைநாகாதி பர்வதங்கள் இந்திர பீதியையடைந்து இக்கடலைச் சரணடைந்தகாலத்தே அவற்றைத் தந்நீரின் கண்ணே வைத்துக்காத்ததாதலின், இது தேகபலமுமுடையது. இங்ஙன் தங்க ளுடையபலத்தையும், இக்கடலின் பலத்தையும் தாங்கள் நன்றாக ஆராய்ந்துபாருங் கள். தங்கள் அழிவின்பொருட்டே தாங்கள் இக்கடலோடு வாளா விரோதம் வளர் க்காதிர்கள். தாங்கள் தங்களுடைய மூர்க்கத்தன்மையானே முதலிலோ என்னைப் புத்திரனற்றவளாக்கினீர்கள். இனித் தங்கள் நாசத்தானே என்னை விதவையாக் காதீர்கள். இவை முதலாக அநேகவகை யினியவசனங்களைப் பெண்சிட்டுத் தன் னுயகருக்குப்போதித்தது. அதைக்கேட்ட ஆண் கூறியதாவது:—ஹே பிராண நாயகி! இவ்வுலகத்தே சம்பத்துக்காலத்திலோ தமது சுவார்த்தப்பொருட்டுக் கோடியாயிரம் மித்திரரிருப்பர்; ஆனால், ஆபத்துக்காலத்தோ ஒரு மித்திரரையுங் காணோம்; ஆபத்துக்காலத்து மித்திரனே மித்திரனுவன். ஆபத்துக்காலத்தே விட்டொழிக்கும் மனைவியோ, மைந்தனோ, அண்ணனோ, எவரேனும் சத்துருக் களே. புண்ணியபாவரூப கருமத்தே சுகதுக்கபோகத்தே அனுசாரியாயிருப்ப வரே மித்திரர். தன்னுன்மாவிற்கொப்பாக விசுவாசபாத்திரமாய் நினைந்திருந்த மதிமானுனவன் அவனை யாபத்துககாலத்தே சித்த உற்சாகமின்றியவனுகச் செய் வனேல, அவனுக்கம் மதிமான்சத்துருவே; கேவலந் தனது யோகக்ஷேமததையே இச்சித்து தனது மித்திரனது யோகக்ஷேமத்தை யிச்சியாதவனுகிய கபடியை முதலில் அழிக்கவேண்டும். பின்றன்னோர்சததுருவை யழிக்கவேண்டும என நீதிசாஸ்திரத்தே மதியுடையோர் மலர்நதிருக்கின்றனர். முன்னர் நீ எனக்கு மித்திரரூபமாய்த தோற்றியபோதினும், இவ்வாபததுக்காலததே என துற்சாக நாசஞ்செய்யுங் கடோரவசனங்களைக் கூறினையாதலின், இப்போது எனக்கு நீ சத் துருவாய்த் தோற்றுகின்றனை. உள்ளே பகைமையைவைத்துக்கொண்டு வெளியே நட்பைக்காண்பிக்குங கபடியைக்கொலவதில் நீதிசாஸ்திரத்தே தோஷங்கூறப்பட வில்லையாயினும் உன்னை நான் கொலலவில்லை; என்னை, சாஸ்திரததே சாமானி யம் விசேஷம் என வசனம் இருவகைத்தாம. ஒருயிரையுங் கொல்லலாகாதென் பது சாமானிய வசனமாம். யாகததே பசுக்கொலை கூடுமென்னல் விசேடவசன மாம். சாமானியத்தினும் விசேடம் பலமுடையதாதலேபோலக் கபடிமித்திரனைக் கொல்லச்சொல்லல சாமானியவசனமாம். ஸ்திரீபாலகரைக் கொல்லாதொழிகவென் னல் விசேஷவசனமாம். இவ்விசேஷவசனம் சாமானியவசனத்தினும பலமுடைய தாம். இவ்வகையாய சாஸ்திரவியவஸ்தையை யாராய்ந்து உன்னை யான் கொல்ல வில்லை. யாவன் 7 வசனம் பிரீதியோடும் பேசுவனோ 7 பாதங்கூடவே யெழு வனோ அவன் அவனுக்கு மித்திரனுவன். இவ்விலக்கணம் நின்பாலும் பொருந தும்; ஏனெனின், யான் நின்னோடும் சுவஸ்தசித்தனுய் நெடுங்காலம் வாழ்ந்தே னுதலின் உனக்கு மிருத்தியுரூப சரீரதண்டத்தை யான் செய்திலேன். முற்கூறிய சத்துரு இலக்கணமும நின்பாறபொருந்தலின், ஹே துஷ்டையே! நீ யென் சமீபத்தினின்றும் யாண்டேனும் வேறிடத்தே செல்லுதி, என்னுங் கடோரவசன ரூப இத்தண்டமே யுனக்கு யான் செய்கின்றேன். யான் ஒண்டியாயே எத் பலன்

தால் இக்கடலை வற்றடிப்பேன். என்னிரு இறகாலும் மூக்காலும் இக்கடனீரைக் கவர்ந்து வெளியேவிடுவேன். சிறிது காலத்திலேயே இதனை யாதகூபம்போல நீரற்றதாக்குவேன்; எனக்கூறிக் கோபமுடன் ஆகாயத்தே கிளம்பி கடலை வற்றடிக்கு மக் கருமத்தே தலைப்பட்டது. பின்னப்பதிவிரதையாகிய பெண்சிட்டுந் தன்னாயக ருடைய கடல் வற்றடிக்கும் திடநிச்சயத்தைக்கண்டு தன்னாயகரால் தன்னபரா தத்தைப்பொறுத்துக்கொள்ளும்படி. கேட்டுக்கொண்டு தானுமப்பணியின்றொழிலில் முயன்றது. இவ்வாறு இரண்டும் உதவேகமுற்றனவாய் இரவும் பகலும் நிரந்தரம் கடலை வற்றடிப்பதில் முயன்றேயிருந்தன. தம் மிறகுகளாலும் மூக்குகளாலும் கடனீரைக்கவர்ந்து வெளியே கொட்டின. நீரைக்கவர்ந்து மேலே கிளம்பிய போது வேகக்காற்றால் துவற்றுமெனினும் தம்முயற்சியினின்றும் அவை வழுவாது அடிக்கடி வெளியில் விட்டுக்கொண்டேயிருந்தன. இவை இவ்வாறு முயற்சித் தலைக்கண்டு அநேகம் சிட்டுகள்வந்து விருத்தாந்தம் முழுவதையுமறிந்து அம் முயல்வினின்றும் நீங்குமாறு வேண்டிய சமாதானங்கள் சொல்லியும் கேளாமல் அவற்றை நோக்கி யவையிவ்வாறு கூறின.—ஹே சிட்டுகளே! எம்மிடத்தே யுங்கட்கு நேயத்தன்மையிருப்பின் எங்களைப்போல நீங்களும் கடலை வற்றடிக்க முயலுமின். நேயமின்றேல உங்கள் வீடு சேரலாம். நாங்கள் இதை யவசியம் வற்றவைப்போம். எனக் கூறக்கேட்ட அவையாவும் அவ்வாறே வற்றடிக்கமுயன் றன. சிட்டுகள்யாவு மிவ்வாறு முயலவே வேறநேக ஜாதிப்பக்ஷிகள் ஆண்டுற்று வற்றடிப்பான் முயன்றன. இங்ஙன நிகழுங்கால தம்திசையையடி மூவுலகத்தே சஞ்சரிக்கும் நாரதமுனிவர் தைவயோகத்தாலே ஆண்டுற்றனர். அவர் அந்த விருத்தாந்தம் முழுவதையுங்கேட்டு அவற்றை நிவர்த்திக்குமாறு அநேக இதவச னங்கள் கூறியும், துன்புற்ற அவைகள் அங்கீகரிக்கவில்லை. அவர் அவற்றின் திட நிச்சயத்தைக்கண்டு கிருபையோடுகூடியவராயப்பக்ஷிகட்கு இவ்வாறு கூறினார்:— ஹே பறவைகளே! மகாவிஷ்ணுவின் வாகனமாகிய கருடபக்ஷியே யுங்கட்கெல் லாம் அரசாதலின் அதன் சமீபத்தே நீங்கள் யாவரும் சென்று பிரார்த்தித்து ஈண்டுக் கொண்டுவரின் உங்கள் காரியம் சித்திக்கும் எனக் கூறக்கேட்ட அவை கருடசமீபஞ்சென்று தமது விருத்தாந்தங்கூறி ஆங்கே அழைத்துவந்தன; அதன் வரவைக்கண்ட சமுத்திரம் பயந்து கலங்கி முன் கொண்டுசென்ற முட்டைகளி யாவற்றையும் சிட்டுகளளித்தது. ஹே மைந்த! இத்திருஷ்டாந்தத்தின் கருத்திது வாம்:—எவ்வாறு அச்சிட்டு தன திடமுயற்சியானே கடலை வெற்றிகொண்டதோ, அவ்வாறே அதிகாரியும் தன் திடமுயற்சியானே மனத்தை வெற்றிகொள்ளவேண்டு மென்பதேயாம் சிட்டு கடலை வற்றடிப்பான திடநிச்சயஞ்செய்தபோதே அதற்குக் கருடபகவான் வந்து சகாயஞ்செய்ததேபோல, அதிகாரியும் மனத்தை வெற்றிக் கொள்ளத் திடநிச்சயஞ் செய்தபோதே சம்பூரண தேவதைகளுஞ் சகாயஞ்செய்வர்.

சங்கை:—ஹே பகவன்! கருடபகவான் பக்ஷித்தன்மையானே சிட்டின்சஜாதியாதலின் சகாயஞ்செய்தல் பொருந்துமாயினும், தேவதைகள் மனுடசஜாதிய ரல்லராதலின் தேவதைகளிடத்தே மனுடசகாயஞ்செய்யுந் தன்மை பொருந்தா தன்றோ?

சமாதானம் :—ஹே குமர ! சமானஜாதியுடையவரே சகாயஞ்செய்வர் என்னும் நியமமின்றாம் ; மற்றோ, ஒவ்வோரிடத்தே விஜாதீயருஞ் சகாயஞ்செய்வர் ; சீதையின் வியோகதுக்கத்தை நீக்குவான், இராவணனோடு போர்க்காரியத்தே முயன்ற ஸ்ரீராமசசந்திரருக்குச் சகாயமாக விஜாதீய வானரங்கள் வந்ததேபோலத் திடநிச்சய பூர்வகம சுபகருமத்தே முயன்ற அதிகாரிக்குச் சகாயஞ் சர்வ தேவதைகளுஞ் செய்வா உத்யமம், சாஹசம், தைரியம், பலம், புத்தி, பராக்கிரமம் என்னும் ஆறு குணங்களும் உடையவனுக்கு எப்பொழுதும் துர்லபமின்றும ; யாவற்றையுமடைவன். முயற்சி உத்யமமாம ; இந்திரியஜயரூபதமம் சாஹசமாம், அநேக விக்கினங்கள் அடைவுறினும் சித்தத்தே உதவேகமடையாமை தைரியமாம் ; பிரத்தியக்ஷசாதனங்களை யடைவுறல பலமாம ; நானுவகையாய சாதுர்யத்தன்மையையடைதல் புத்தியாம ; சரீரபலம பராக்கிரமமாம, அதிகாரி பராக்கிரமத்தைச் சிங்கத்தின்பாறகறக ; எனனே, சிங்கமானது தனனெதிர்முகப பூமியின் கண்ணே பாதத்தைவைத்தபின, ஆணடநேகவித சஸ்திரஙகளாலடிபடினும பாதத்தைப பின்னெடாதாம. அவ்வாறே அதிகாரியும் ஆரம்பித்த பெரிய சுபகாரியத்தையேனும், சிறிய சுபகாரியத்தையேனும் பரித்தியாகஞ்செய்யலாகாது ; அதை முடிக்கவேவேண்டும் அஙகீகரித்த காரியத்தைப பரித்தியாகஞ்செய்யலாகாது என்னும பொருளில் அநேகம பெரியோர உவமானமாவர. அஙகீகரித்த காலகூடவிடத்தை ஸ்ரீ மகாதேவர் பரித்தியாகஞ்செய்திலர் ; அஙகீகரித்த வடவாககினியைக் கடல பரித்தியாகஞ்செய்திலது , அஙகீகரித்த பிருதிவியினபாரத்தைக கூர்மம பரித்தியாகஞ்செய்திலது ; அங்ஙன் ஆரம்பித்த சுபகாரியத்தைப பரித்தியாகஞ்செய்யலாகாது என ஆராய்ந்து எவ்வதிகாரியானவன் மனோநிககிரகம செய்யததலைப பட்டு மாணுநதசங்கடமடையினும முயல்வினினறும பின்னடையானே அவன் அவசியம் மனோஜயம்பெறுவன். இரஜோகுணத்தின் காரியமாய இச்சாரூபகாமத்தும, சத்துவகுணத்தின் காரியமாய விடயசுகானுபவரூபபோகத்தும் தறபரமுறற மனத்தையும, தாமசநித்ரைவடிவ இலயத்தே நணுக்கனு விக்ஷேபமறற மனத்தையும், அதிகாரி எவ்வுபாயத்தாலேனும நிக்கிரகஞ்செய்க. காமபோகம் அதிகாரிகடகனர்த்தகாரணமாவதேபோல, எலலாத தோடஙகட்கும பீஜபூதமாய நித்திரை வடிவ இலயமும அநாத்தகாரணமேயாமாதலின், அதிகாரி அநத இலயத்தினின்றும் மனத்தை நிவர்த்திக்குக. மனோநிக்கிரகத்தே யிரண்டுபாயமுளது ; ஒன்றோ வைராக்கியமாம ; மற்றையதோ அப்பியாசமாம ; அவற்றுள் இவ்வெல்லாத் துவைதபபிரபஞ்சமும ஜீவர்கட்கு அநேகமவகைத துக்கத்தைககொடுத்தலானும், பிரஹ்மாநந்தத்தைத்தடுத்தலானும துக்கரூபமேயாம. இவ்வாறு குருசாஸ்திர உபதேசத்தானே சாவ ஜகத்தையும துக்கரூபமெனவுணர்ந்து எபபொருளையும் இச்சியாதொழிகவென்பதே வைராக்கியமாம. இவ்வியாவும் பிரஹ்மரூபமேயாம் ; பிரஹ்மத்தினும் வேறாய் ஜகத்திற்குண்மைவடிவமின்றாம் ; மண்ணினும் வேறாய்க் குடத்தினுண்மைவடிவமில்லாததேபோலும். இவ்வாறு அடிக்கடி தன் மனத்தே சிந்தித்தல் அப்பியாசமாம். இவ்வுபாயங்களானே மனோநிக்கிரகமுண்டாம். இவ்வார்த்தையைக் கீதையின்கண்ணே ஸ்ரீ பகவானும் திருவாய்மலர்ந்தருளியுள்ளார்.

"𑌅𑌸𑌂𑌶𑌯𑌂 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌮𑌨𑍋 𑌦𑍁𑌰𑍍𑌨𑌿𑌗𑍍𑌰𑌹𑌂 𑌚𑌲𑌂 ।
𑌅𑌭𑍍𑌯𑌾𑌸𑍇𑌨 𑌤𑍁 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌵𑍈𑌰𑌾𑌗𑍍𑌯𑍇𑌣 𑌚 𑌗𑍃𑌹𑍍𑌯𑌤𑍇 ॥"

"இவ்வகை விசயன்கூற மாயவ னியம்புகின்று
னைவகைப் புலனுநெஞ்சு மடக்குகை யரிதாகுலு
முய்வகை யோகமியாவு முயற்சியி ஞலுமோவ்வா
வைவகைப் புலன்செயின்ப மனைதத்தையும் வெறுத்தலானும்."

(பொ-ள்.) ஹே அர்ச்சுன! நீ முன்னர் மனத்தின் துர்நிக்கிரகத்தன்மை கூறியதுண்மையேயாயினும் அப்பியாசத்தாலும், வைராக்கியத்தாலும், மனோநிக் கிரகமுண்டாம். மனோநிரோதரூபயோகத்தே சித்தத்திற்கு இலய விக்ஷேப கஷாய மென்னும் மூன்றவத்தைகள் விரோதிகளாம். அம்மூன்றையும் அதிகாரி கூறிய இரண்டானேயழிக்குக. இம்மனம் நித்திரைவடிவ இலயத்தைப் பிரவிர்த்திக்கும் போது மனத்தை ஆன்மசிந்தனைவடிவ அப்பியாசத்தின்கண்ணே சேர்க்குக. காம போகத்தே தற்பரத்தன்மைவடிவ விக்ஷேபத்தையடையும்போது விடயபோ கத்தே அநேகவகைத் தோஷசிந்தனைவடிவ வைராக்கியத்தானே விடயபோகத்தி னின்றும் மனத்தைமீட்குக. இராகாதிசம்ஸ்காரங்களால் சித்தத்தே ஆன்ம அனான்ம ஆகாரவிருத்தியற்றிருத்தல்வடிவ ஸ்தப்த அவஸ்தை கஷாயமாம். அத் தகைத் தோஷத்தோடுகூடிய சித்தத்தைக்கண்டு இரண்டுபாயத்தானும் அதனை நீக்குக. இவ்வாறு உபாயத்தானே அதிகாரியின் மனம் பிரஹ்மாகாரத்தன்மையை யடைவுற்றபோது, அவ்வவஸ்தையினின்றுஞ் சலிப்பியாது அதைக் காப்பாற்றுக. சமாதிகாலத்தே சத்வகுண அதிகத்தன்மையானேயுண்டாய சுகவிசேஷத்தின் கண்ணும் அதிகாரி பற்றுறாமல் விசாரித்து அச்சுகத்தினின்றும் நிச்சங்கனாக வேண்டும். பிரஹ்மாகாரத்தன்மையையடைந்தும் பாஹ்யத்தே செல்லுமாயின் முயன்று மீண்டும் பிரஹ்மாகாரஞ்செய்க. இலய விக்ஷேப கஷாயங்களினின்றும் கடந்து சலனமற்றதாய்ச் சர்வ திருசியப்பொருள்களின் சம்பந்தமற்ற காலத்தி லேதான் மனம் பிரஹ்மபாவத்தையடையுமென வறிக. சர்வ விக்ஷேபமும் அற்ற மனம் பிரஹ்மபாவத்தையடையும். அஃதே சுகத்தமும், சர்வ அநர்த்தங்களற்ற தும், நித்தியமுக்தமும், வாக்கு முதலிய சர்வ இந்திரியங்கட் கவிடயமும், பூமா நந்தரூபமும் ஆம். சாக்ஷியாய ஆன்மாவின்கண்ணே மனத்தின் பாதரூப இலயம் உண்டாகாதவரை அதிகாரி மனத்தை அவசியம் நிரோதஞ்செய்க; அம்மனத்திற் குப் பிரஹ்மபாவப் பிராப்தியே பாத்தியம். இம்மனோநிரோதமே வேதாந்தவாக் கிய விசாரரூப சாங்கியபலமாம்; யோகபலமாம்; இதனினு மதிகமாக வேறொரு பயன் அவைகட்கில்லையாம். இதனையே வெளிப்படையாக்குவாம்:—மனோநிக்கிர கத்தைச்செய்யாது, அதனைக்கூறும் அத்தியாத்ம சாஸ்திரத்தைக் கற்காமல் வேற நேக நூல்களைக் கற்பவன் மிகவும் வாயாடியாவன், விவகார குசலனாவன், மிகவும் பேசலானே அவனது மார்பு கண்டம் முதலியவை யுலர்ந்துபோம்; இதனினும் வேறாக ஒருபலமுங் கிடையாது. மனோநிக்கிரகத்தையடைந்தவனோ, சிறிது நூலைப் படிக்கினும் பரமபுருடார்த்தத்தையடைவன். இதனையும் இதனை யோதும் நூலை

யும் படியாமல் வேறு நியாய மீமாம்சை முதலியவற்றை அநேகமாய்ப்படிப்பினும், படிப்பிக்கினும் அவையாவும் அவனுக்குச் சிறிது மாத்திரையுஞ் சாந்தியைத்தர மாட்டா; மாருக, அவ்வனுன்மசாஸ்திரங்கள் அவனுக் ககங்காரத்தையே யுண்டாக்குமாதலின், மனோநிக்கிரகத்தை யவசியஞ் சம்பாதனஞ்செய்க; அஃதின்றிச் செய்யுங் கருமமியாவும் பயனற்றனவா.

"ஓாதஜஜ்ஞாதவ8 பளஅஂதீயஷ்ஂ வெதாஃ ஶ்ரு தஂதயா ।
அபராஜஷ்ஜைவ8 வாஂவ8 ஶவஷ்செந்ரியஷ்கஂ ॥"

"விடய வாதனை விட்டுமே லவன் வியன்சாந்தி
யடைகி லாதுற மவன்செயுந் தானமுந் தவமுந்
திடமதா மகஞ் சவுசமுந் தீர்த்தமு மறையும்
கடைய தாயுறுங் கேள்விமுற் கருமமுற் றினுமே."

(பொ-ள்.) எவன் மனம் விடயவாதனையைப் பரித்தியாகித்துச் சாந்தியை யடையாதோ, அவன் செய்யுந் தானம், யாகம், தவம், சௌசம், தீர்த்தம், வேதம், சிரவணம் என்பன முதலிய யாவும் நிஷ்பலமேயாம்; யானையின் ஸ்நானமே போலும். இவ்வுலகத்தே கிடைக்கத்தக்கனவாய சுபபலங்களும், பரலோகத்தே கிடைக்கத்தக்கனவாய சுபபலங்களும், மனோநிரோதஞ் செய்தலானே சித்திக்கும்; அஃதின்றி எப்பலப்பிராப்தியு முண்டாகாதாம். முமுக்ஷுவானவன் மனோநிரோதஞ் செய்யும்போது சுகமாகவே அகண்ட பிரஹ்மதத்தைத் தன்னுன்மரூபமா யடைவன். அஃதோ மனத்தானும் சிந்திக்கற்கரியதாமாதலின், சுருதிபகவதி அதனை 'அசிந்தியமென்றனள்' இம்மனம் சப்தாதிவிடயங்களைப் பிரஹ்மரூபமாய்ச் சிந்திப்பதேபோலப் பிரஹ்மத்தைப் பாகியரூபமாய்ச் சிந்தியாதாம்; மற்றேறு, அத்தூயமனம் அகண்டப் பிரஹ்மத்தை யாவினு முள்ளிருப்பதாய்ச் சிந்தனஞ் செய்யுமாதலின், சுருதிபகவதி அதனைச் 'சிந்தியமென்றனள்.' ஓரே பிரஹ்மத்தைச் சுருதியானது மனத்தானே அசிந்தியமென்றது, சிந்தியமென்றது, இதன் கருத்தோ இசசம்சாரவிடயசுகத்தே பற்றுற்ற தூய்தின்றியமனத்தானே அவிவேகியா பிரஹ்மசிந்தனம் செய்கிலாதலின், அசிந்தியமென்றதாம். விடயவாதனை யின்றிய தூயமனத்தானே பிரஹ்மம் சிந்திக்கத்தக்கதாமாதலின், முமுக்ஷுக்கள் விடயசிந்தனஞ் செய்யற்கவென வுபதேசிக்கும்பொருட்டுச் சிந்தியமென்றதாம். ஜீவர்கட்குத் தமசத்துரு மித்துரு முதலியோரிடத்தே பக்ஷபாதமிருப்பதேபோலப் பிரஹ்மத்திற்கு எப்பொருளின்கண்ணும் பக்ஷபாதமின்ரும்; சர்வ ஜகத்தின்கண்ணும் சமானவியாபகமாம். 'ஸ8 ஶ்ருஷிணாஸஶெ உபலெகூ ஶ ஶெளதாமெத' தேனீ மசகமுதலிய அற்ப சரீரத்தின்கண்ணும், யானை முதலிய மகத்சரீரத்தின்கண்ணும் பிரஹ்மம் சமானமாகவேயிருக்கும். சத்தாதிவிடயங்களோடு மனத்தின் சம்பந்தமே மனத்தைப் பிரஹ்மத்தினின்றும் பேதிப்பதாம். விடயசம்பந்தத்தைப் பரித்தியாகித்து நிரந்தரம் ஆன்மசிந்தனஞ்செய்யின் பிரஹ்ம பாவத்தையேயடையும். அதிகாரி மனோநிக்கிரகத்தானே அறியும் பிரஹ்மம் பரமபதரூபமும், நிரவயவமும், சர்வ விகற்பமற்றதும், காரியசகித அஞ்ஞானமற்றதும், தேசகாலவஸ்து பரிச்சேதமற்றதும், ஹேது திருஷ்டாந்தமற்றதும், பிர

மரண ஜன்னியஞானத்திற் கவிடயமும், கொள்ளல் தள்ளலற்றதும் ஆம். எதன் ஞானத்தானே மதிமான் முத்தியையடைவனோ அத்தகைய அத்விதீயப் பிரஹ்மத்தை, யான் பிரஹ்மரூபன் எனத் தனதான்மரூபமா யெவனறிவனோ, அவன் பிரஹ்மபாவத்தையே யடைவன். இத்தகைய பிரஹ்மான்மஞானத்தானே எவ்வறிஞனது மனம் அதிஷ்டானபிரஹ்மத்தே இலயபாவத்தை யடையுமோ, அவ் விவேகிக்கு அது சர்வ தருமங்களுமற்றதாய்த் தோற்றும். அவ்வத்விதீய பிரஹ்மத்தின்கண்ணே உண்மையாய் இவ்வுலகின் நிரோதமும் உற்பத்தியுமின்றாம்; பத்தனுமின்றாம்; சாதகனுமின்றாம்; முமுக்ஷுவுமின்றாம்; முத்தனுமின்றாம்; இதுவே சர்வ சாஸ்திரத்தின் உண்மைப்பொருளாம். நாசம் நிரோதமாம். கர்த்ருத்வ போகத்ருத்வாதிரூப சம்சாரமுடையவன் பத்தனாவன். யாகாதி பகிரங்க சாதனங்களைச் செய்பவன் சாதகனாவன். சமதமாதி யந்தரங்க சாதனங்களோடு கூடியவன் முமுக்ஷுவாவன்; ஞானவான் முத்தனாவன். கனவடிவத்தை நனவு முதலிய மூன்றவஸ்தைகளினும் வேறாகக் காண்பவனே நித்தியமாக அத்விதீய ஆன்மாவை நேரே அடைவன்; அவ்வறிஞன் மீண்டும் ஜனன மரணாதிகளையடையான்.

சங்கை.—ஹே பகவன்! இவ்வான்மா ஏக அத்விதீயரூபமாயின் இதன்கண்ணே இந்நானாபேதம் பிரதீதியாவதென்?

சமாதானம்.—ஹே மைந்த! ஆகாசத்தின்கண்ணேயிருக்கும் சந்திரனிடத்தே உண்மையாய்ப் பேதமின்றாயினும், ஜலபாத்திரரூப உபாதியொன்றாயின் ஒன்றாயத்தோற்றும், அநேகமாயின் அநேகமாய்த் தோற்றுமாறு, ஆன்மாவின்கண்ணே உண்மையாய்ப் பன்மையின்றேனும் காரண அஞ்ஞானரூப ஒருபாதியின்கண்ணுற்று ஒன்றாம்; காரியரூப அநேக உபாதிகளினுற்று அநேகமாம்; உண்மையாயோ ஆன்மா ஒருமை பன்மை முதலிய சர்வ தருமங்களுமற்றதாம். குருசாஸ்திர உபதேசத்தானே சர்வ பூதப்பிராணிகளிடத்தும் ஓரத்விதீய ஆன்மாவையே வியாபகமென அறிபவன் நனவு முதலிய மூன்றவத்தைகளின்கண்ணும் ஓரான்மாவையே நிச்சயிப்பன். அவ்வத்விதீய ஆன்மா நனவு முதலியவையற்றதுபோன்றே அவைகளையறிந்த அறிஞனும் அவையற்றிருப்பன். குருசாஸ்திர உபதேசத்தானே சர்வ பேதமற்ற அதை யுணர்ந்தபோது, உபாதியானே ஆன்மாவின்பாற் றோற்றிய பன்மையை அதிகாரி யுத்தியானே நீக்குவன். அவ்வியுத்திவருமாறு:—கடம் ஒரு தேயம்விட் டொருதேயத்தே பெயரினும் அதன்கணுற்ற ஆகாசம் பெயராததேபோல, இத்தூல சூக்ஷ்ம தேகங்கள் தேயம் விடுத்துத் தேயத்தே செல்லினும் ஜீவான்மாச் செல்லாதாம். கடம் ஜடமாதலின் தன்பிறப் பிறப்பாதிகளை யுணராததேபோல, தேகமும் ஜடமாதலின் தன் ஜனமமரணாதி விகாரங்களையுணராதெனக; எனவே, கடமும் தேகமும் சமானமாயினும் கடாகாசமும் ஜீவான்மாவும் சமானமாகாவாம்; என்னை, கடாகாசமோ ஜடமாமாதலின் அக்கடத்தின் ஜன்மாதிகளையறியாதாம், தேகத்துறையும் ஜீவான்மாவோ சேதனரூபமாதலின் சரீரத்தின் ஜன்மமரணாதி சர்வ விகாரங்களையும் சாக்ஷிரூபமாய்க் காணுமென்ப. இவ்வாறு இச்சீவான்மா, கடாகாசத்தினும் விலக்ஷணமாமாயினும் கடாகாசத்தைக்

கடரூப உபாதியின் கமனுகமனாதி தருமங்கள் தீண்டாதனபோலவே, இசசீவான்மாவையும் சரீரரூப உபாதியின் ஜன்மமரணாதி தருமங்கள் தீண்டா. இதனையே யம சத்தைக்கவர்ந்து கடாகாச திருஷ்டாநதங் கூறப்பெறறது. இப்போது ஜீவனுக்கு நிர்விகாரப் பிரஹ்மத்தோடு அபேத நிரூபணஞ்செய்வாம் :—ஹே மைநத ! ஜீவன் ஆன்மாவினும் வேறலலன் ; ஏனெனின், பின்னாயின் ஏகனோ ? அநேகனோ ? ஏகனெனிற சம்பவியாது ; என்னை, 'ஏகொதெவஃ ஸவஹஊ தெஷுமூடஃ' என்பதாதி சுருதிகள் ஆன்மாவையே யொன்றென்கின்றதாதலின், ஒன்றாய ஆன்மாவினும் ஏக ஜீவன் எவ்வாறுபின்னனாவன் ? ஆகானெனக. அநேகனெனினுஞ் சமப வியாது ; அநேக ஜீவர்கட்கு ஆன்மாவினும வேறாதலகூடாதாம ; என்னை, ஆன்மாவென்பது தன்வடிவமாம், தனவடிவததினும ஜீவா வேறாயின் அவாகட்கு மலடி மகனுக்கேபோல வடிவற்றதாநதன்மை யடைவுறுமாதலின என்க.

சங்கை :—ஹே பகவன் ! அநேகம் ஜீவர்களோடு ஆன்மாவிற கபேதமாயின், ஆன்மாவினகண்ணும அநேகரூபததன்மை பிராபதமாமாதலின், ஆன்மா அதவிதீயரூபமாம் என்னும் சித்தாநததகிற கானியாமனறோ ?

சமாதானம் :—ஹே குழந்தாய் ! நையாயிகர் மததகதே கடததன்மைசசாதி அநேக கடவியக்திகளின்கண்ணே யிருககின்றது, வியகதிகள் பேதமுறினும் ஜாதி பேத முறுவதின்றாவதேபோல, ஆன்மாவும சாவ ஜீவர்களிடததும் அநுகதமாயிருக்குமாதலின், ஜீவாகள பேதமுறினும ஆன்மாபேதமுறாதாம். உண்மையாய் விசாரிதது நோககினோ ஜீவர்கட்கும் பேதஞ்சமபவியாது, ஏனெனின், அஞ்ஞான விசிஷ்ட சேதனன் ஜீவனாவன் ; அலலது அநதககரண விசிஷ்டசேதனன ஜீவனாவன் ; ஜீவனிடததுள்ள சேதன அமசமோ யாண்டு மொன்றாமாதலின், சேதன அம்சத்திலோ பேதஞ் சமபவியாது. எஞ்சியதாய அநதக கரணாதி உபாதிகட்கே பேத மங்கீகரிக்கவேண்டிவரும். அவ்வுபாதிகளினின்றும அதிஷ்டானரூபச சத தமசத்தை வேறுபிரிககினோ, கறபித உபாதிகட்கும பேதம சமபவியாதாமாதலின், அத்விதீய ஆனமவடிவமே ஜீவனாவன என்றுணர்க ஜீவனை யான்மாவினும அபின்னனாய்க்கொள்ளாக்கால, சுருதியானது ஜீவான்மாவினகண்ணே கடாகாச திருஷ்டாநதங்கொடுத்தது அசஙகதமாம் ; ஏனெனின், தூலசூக்ஷ்ம காரணரூப இசசங்காதத்தே இசசீவனே கடாகாசம்போலிருககின்றான், ஆன்மா மகா ஆகாசமபோலிருக்கின்றது. கடரூப உபாதியின் பேதபரித்தியாகத்தானே கடாகாசத்திற்கு மகாகாசத்தினின்றும பேதம் சிததியாததேபோல, இசசஙகாதரூப உபாதி பரித்தியாகத்தானே ஜீவனுககும ஆன்மபேதமின்றாம். இக்கடாகாசரூப திருஷ்டாநதம கேவலம் ஜீவான்மாவின் அபேததததைச சித்தஞ்செய்வதின்றாம ; மற்றோ, வேறநேகம பொருள்களையுஞ் சிததஞ்செய்யும். அஃதாமாறு :—கடரூப உபாதி நீங்கியவுடன் கடாகாசம மகாகாயத்தே அபேதபாவத்தையடைவதேபோல, அந்தக்கரணதியுபாதி நீங்கியபின் ஜீவனும் வியாபக ஆன்மாவின்கண்ணே அபேத பாவத்தையடைவன். ஒரு கடாகாசம் தூளி தூமாதிகளோடுகூடிய காலத்தே வேறு கடாகாசம் அவறறோடுங் கூடாதாம். அங்ஙன் ஒரு ஜீவன் சுகதுககமடைந்தகாலத்தே வேறு ஜீவன் அவறறை யடையான். கருத்திதுவாம் :—அவை கேவலம்

அந்தக்கரணாதி யுபாதியின்கண்ணேயாம்; அவையோ சர்வ சரீரத்தும் பின்னபின்னமாமாதலின் ஒரு ஜீவன் சுகிதுக்கியாயினும் சர்வ ஜீவரும் சுகிதுக்கிகளாகார். கடாகாசத்தே உருண்டை நீட்சி முதலியவும் பேதமாம்; நீர்கொணர்தல் தாரணம் நிவாசம் என்பன முதலிய காரியங்களும் பேதமாம்; கடாகாசம் மடாகாசம் என்பனவாதி நாமங்களும் பேதமாம். இவ்வாறு நாம ரூப காரியமென மும்பேதமுறினும் ஆகாசபேத முண்டாகாதாம். அங்ஙன் அந்தக்கரணாதியுபாதியானே ஜீவர்கட்குப் பேதமுறினும் ஆன்மாப் பேதப்படாதாம். நிர்விகார நிரவயவ மகாகாசத்திற்குக் கடாகாசம் விகாரரூபமன்றும், அவயவரூபமுமன்றாம் அவ்வாறே சர்வவிகாரமுமற்ற நிரவயவ ஆன்மாவிற்கு இச்சீவன் விகாரரூபமேனும் அவயவரூபமேனுமன்றாம். உண்மையாய்ச் சர்வ மலமற்ற மகாகாசம் மூடபாலகர்க்கு நீலமாய்த் தோற்றலேபோல, உண்மையாய்ச் சர்வ சம்பந்தமற்ற ஆன்மா அவிவேகிகட்குப் பந்தமுடையதாய்ப் பிரதீதியாம். கடாதியுபாதிகட்கு ஜனனமரண கமன ஆகமனங்கள் கூடினும், அதனாகாசம் அவ்விகாரங்களையடையாததேபோல, சரீராதி யுபாதிகட்குச் சன்மாதி யுறினும் அவற்றிலிருக்குமான்மா அவ்விகாரத்தையடையாதாம். கனவின்கண்ணே தோற்றும் ஜீவனும், இந்திரஜாலக்காரன் தன் மாயையின் மகிமையானே காண்பிக்கும் ஜீவரும் பொய்யேயாயினும் அவர் மயங்கியோன் திருஷ்டியானே ஜன்மமரணாதி விகாரங்களையடைந்தவர்போற் புலப்படுவர்; புலப்படினும் உண்மையாய் அவ்விகாரமற்றவராவதேபோல மயங்கியோரது திருஷ்டியானே சீவர் ஜன்மாதிவிகாரமடைவதேபோற் றோற்றினும் உண்மையாய் அவ்விகாரம் அற்றவராதலின் ஒருவரும் அவற்றையடைவதேயில்லை; மற்றே, சித்தமே அவற்றையடைந்து அவற்றைச் சீவனாரவின்மாட்டுத் தோற்றுவிக்கின்றது. இவ்வாறு சர்வ சீவரும் உண்மையாய் எப்போதும் அவ்விகாரங்களற்றவரேயாயினும், அவ்விகாரமுடைச் சித்தசம்பந்தத்தானே அவ்விகாரமுடையவராய்த் தோற்றுவர். இப்போதிப்பொருளையே அலாதத்திருஷ்டாந்தத்தானே வெளிப்படுத்துவாம்:—(கொள்ளிக்கட்டை) அலாதமாம். அதனைச் சுழலவைக்கும் வியாபாரம் ஒருகாலோ தண்டம்போற் சரளமாய்ப் பிரதீதியாம் ஒரு காலோ சக்கரம்போல வட்டவடிவமாய்ப் பிரதீதியாம். அவ்வாறே மாயாவிசிஷ்ட பரமான்மாவினின்றுங் கிளம்பிய மனத்தினசைவும் ஞாதா, ஞானம், ஞேயம் என்பனவாதி திரிபுடிரூபத்தானே பிரதீதியாம். அசைவற்ற அலாதம் கற்பிதத்தண்ட சக்கராகார ரகிதமாய்க் கற்பிதரூபங்களாற் சன்மமற்றதாவதேபோல, அசைவற்ற சித்தமும் கற்பித திரிபுடிரூபமற்றதாய்க் கற்பிதரூபங்களால் ஜன்மமுமற்றதாம்; அச் சாந்தசித்தம் அக்காற் சேதனரூபமேயாம். அலாதம் அசையுங்காலத்தே தோற்றும் தண்டசக்கராதி ஆகாரங்கள் வேறோரிடத்தினின்றும் வந்து அலாதத்தே யுதிக்கவில்லை, அலாதத்தின் சுழலகையின்றிய அசைவற்றகாலத்தே அவை அலாதத்தினின்றுங் கிளம்பி வேறோரிடத்திற்கும் செல்லவதில்லை. அவை அலாதத்தேயும் புகுவதில்லை; ஏனெனின், அவை வரல் போதல் புகுதல் என்பன காணப்பெறவில்லை. அவையொரு பொருளல்லவாதலினானும் அவற்றிற்கு வரல் போதல் கூடாதாம். ஆகையால் அவை யலாதத்தே இரஜ்ஜுசர்ப்பமெனப் பொய்யேயாவதுபோல மனத்தி

னசைவாற் பிரதீதியாகின்ற ஞாதா முதலியவை வேறொரு பொருளினின்றும் வந்து மனத்தே யுதயமாவதின்றும், மனமசையாதபோது அவை மனத்தினின்றுங் கிளம்பி வேறோரிடத்தேயும் போவதுமில்லை, மனத்தின்கண்ணே புகுவதுமில்லையாதலின், அவையும் இரஜ்ஜுசர்ப்பம்போலப் பொய்யேயாம்.

சங்கை:—ஹே பகவன்! அவ்வாகாரங்கள் பொய்யாயின் எம்மனோருக்குத் தோற்றுமாறென்?

சமாதானம்:—ஹே மைந்த! இம்மனுடரிடத்தே கொம்புண்மையாயின்றாயினும், இம்மனுடரிடத்தே கொம்பிருக்கின்றதென்னும் சப்தரூபதோஷ மகிமையால் மனுடரிடத்துங் கொம்புதோற்றும். விண்ணின்கண்ணே கந்தர்வநகரம் உண்மையாயின்றேனும் மாயாதோஷபலத்தாற் றோற்றும். அதுபோலச் சப்தபலத்தானும், மாயையின் பலத்தானும் ஆன்மாவின்கண்ணே இத்துவைதப்பிரபஞ்சம் தோற்றுமாதலின், நரசிருங்கம்போலவும் கந்தருவநகரம்போலவும் இப்பிரபஞ்ச முழுதும் அசத்தியமாம்.

சங்கை:—ஹே பகவன்! பலாத்காரமா யிவ்வுலகைத் தோற்றிவைக்கும் மாயையினிடத்தும், சகத்தின்கண்ணும் அவ்வசத்தியத்தன்மை எவ்வண்ணம் சித்தமாம்?

சமாதானம்:—ஹே மைந்த! நரசிருங்கமென்னும் சப்தமாத்திரையானே, அது சித்தமாமன்றி ஒரு பிரமாணத்தானே அது சித்தியாதாம்; அவ்வாறே மாயை, அஞ்ஞானம், அவித்தை, பிரகிருதி என்பதாதி சப்தபலத்தானே அதன் சித்தியாமன்றி, ஒருபிரமாண பலத்தானே அதன் சித்தியின்றாமாதலின், அம் மாயையும் நரசிருங்கம்போல அசத்தியமேயாம். இங்ஙன், சகத்திற்கும் சப்தத்தானே சித்தியாமாதலின் அதுவும் அசத்தியமேயாம். 'വാചാരംഭണം വികാരോ നാമധേയം മൃത്തികേത്യേവ സത്യം' மண்ணின் விவர்த்தரூப கடசராவாதி விகாரமியாவும் கேவலம் அநர்மமாத்திரமேயாம். அநாமமின்றி அவ்விகாரங்களில் உண்மையின்றாம். அவ்விகாரங்களின் உபாதானகாரணமாய மண்ணே சத்தியமாம். அவ்வாறே மனவாணிகட் கவிஷயமாகிய ஆன்மாவே சத்தியமாம், அதனினும் வேறாய சம்பூரணஜகத்தும் பொய்யேயாம். சப்தமாத்திரத்தைவடிவமாகவுடைய இவ்வுலகவடிவ விகாரம், விகாரத்தின் காரணரூபமாயை என்னுமிரண்டானமறைபட்ட ஆன்மாத் தனதுண்மைவடிவத்தை யறியாததாகும், பரிச்சின்னமாய்ப் பிரதீதியாம். நீரினிடையேயிருக்கும் மகா கடமும் அற்பமாய்ப் பிரதீதியாவதேபோல, மாயாஜகத்தானே மறைபட்ட இம்மகா ஆன்மாவும் பரிச்சின்னமாகப் பிரதீதியாம். ஆன்ம சாக்ஷாத்காரத்தானே காரியசகித மாயாநிவிருத்தியுண்டாயின் ஜீவான்மாத் தனது வியாபக அத்விதீய ஸ்வரூபத்தையடையும். அகார உகார மகாரமெனனும் மும்மாத்திரையுடைய பிரணவத்தின்கண்ணே முறையே சமஷ்டி தூல சூக்ஷ்மகாரணமென்னும் மூன்று உபாதியுடைய பிரஹ்மம் தாதாத்மிய சம்பந்தத்தானேயிருக்கும்; அந்தச் சோபாதிகப் பிரஹ்மத்தைப் பிரணவமாத்திரையோடுகூட அதிகாரி இலயசிந்தனஞ் செய்யின் நாசரகித துரீயப்பிரஹ்மமே எஞ்சிநிற்கும்; அதுவே சர்வ பேதமுமற்ற ஏக அத்விதீயரூபமா

உபாதியையுடைய தைஜஸ ஜீவரூபப் பிரதிபிம்பங்களின் பிம்பரூப இவ்விரண்ய கருப்ப பகவான் மாயைவடிவச் சய்யையின்கண்ணே சயனித்தலின் 'நாராயண' னென்றனள். கருத்திதுவாம்:—பரமானமவடிவ நரசம்பந்தியாய மாயைநாரமாம். அது பரமான்மாவிற் கிடனாதலின் 'நாராயண'னென்றனள். அல்லது, ஜீவசமூகம் நாரமாம். அவற்றிற்கு எப்பிம்பபூதப் பரமான்மாவினின்றுந் தமதுவடிவ இலாபமாமோ அது 'நாராயண'னெனப்படும். பாலன் பந்தைத் தூரதேயத்தே யெறிவதேபோலச் சர்வதோஷமற்ற பரமானமாக காரியகாரண அவித்தைவடிவப் பந்தைத் தூரதேயத்தே எறிதலின் 'நாராயண'னென்றனள். கருத்திதுவாம்:— சம்சாரரூப சக்கரத்தின் இராகத்துவேஷ அராபபரமான்மாவின்கண்ணேயின்றாதலின் 'நாராயண'னென்றனள். அல்லது, ஜீவரூப நரர்களின் பிரவிருத்தி அவ்வந்தரியாமியானேயாமாதலின் 'நாராயண'னென்றனள். அல்லது, துரீய சுத்தரூபத தானே யறியப்பெறற பரமான்மாவினின்றே ஜீவர்களின் அவித்தை நிவிருத்தியாதலின் 'நாராயண'னென்றனள். அல்லது, பதரிகாசிரமவாசியாய குருமூர்த்தியினின்றுமே ஜீவர்களின் அவித்தியா நிவிருத்தியாதலின் நாராயணனென்றனள். வேறுள்ள 'நாராயண' சபதார்த்தம தசம அத்தியாயத்தே நிரூபிக்கப்பெறறுளது ஆண்டறிந்துகொள்க. இத்தகைய நாராயணபரமான்மா உலகுண்டாமுன்னம் ஏக அத்விதீயரூபபாகவேயிருந்தது. ஜீவர்களின் அறமபாவங்களால் ஏவப்பட்டுச் சிருஷ்டியினாதிகாலத்தே ஜகத்தையுண்டாக்குவேன் என இச்சித்தது, பின்னுண்டாக்கி, நானாவகையாய ஆற்றலோடுகூடிய பிரஹ்மா, இந்திரன், ஆதித்தியன், ருத்திரன், வசு, விசுவேதேவர், சாத்தியர் முதலிய சர்வ தேவதைகளையும் உண்டாக்கியது. பிரஹ்மாதி தேவதையே முதலாக ஸ்தாவர ஜங்கமஜகத்தியாவும நாராயண பரமான்மாவினினறேயுணடாகின்றன, அதனகண்ணே நிலைபெறுகின்றன, அதன் கண்ணே இலயமாகின்றன. கடவுற்பத்தி, ஸ்திதி, இலயம மண்ணின்கணணே யுண்டாதலின் கடம மண்ணினும வேறனறாதலைபோல, இவ்வுலகின உறபத்தி, ஸ்திதி, இலயம அதனிடத்தேயுண்டாமாதலின, இவவுலகம நாராயணனினும் வேறன்றும; மற்றேறு, பிரஹ்மா முதலிய சர்வதேவதைகளும நாராயணரூபமேயாம, கிழக்கு முதலிய பததுததிசைகள, ஆகாசாதி பூதஙகள, ஸ்தாவர ஜஙகம சரீரஙகள் முதலிய முக்காலததுமுளள ஜகததும, ஸ்தூல சூக்ஷ்மஜகததும், பிரத்தியக்ஷ பரோக்ஷ ஜகத்தும் நாராயணரூபமேயாம. இவவெலலாவுலகவடிவமாயுளள நாராயண பரமான்மா நிததியவடிவமும, பிராணன, சிரத்தை, ஆகாசம, வாயு, தேஜஸ், ஜலம, பிருதிவி, இநதிரியம, மனம, அன்னம, வீரியம, தவம, மந்திரம், கருமம, லோகம், நாமம், எனனும 16 கலையறறதும, ஜகத்துருவ விகறப மறறதும, காரண அஞ்ஞானரூப அஞ்சனமறறதும, சர்வ சுததமறற ஜடமாயையை யெபபோது மறறதும, மாயையாலாககிய சர்வ பேதமறறதும, ஆம. இததகைய நித்தியசுத்த நாராயணதேவதையினும வேறாக எபபொருளும முன்னுண்டாகவில்லை, இபபோதுமிலலை, இனியுணடாகவுமாட்டாது; மறறேறு, இவையாவும நாராயணரூபமேயாம். யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேன என்னும, தூயமதியைச சாரதியாககிச சிரவணாதி சாதனங்களோடுகூடிய தூயமனரூபக் கயிறறை மதிச் சாரதிவயமாககி வெறறிகொண்ட பொறிபபரிகளோடுகூடிய சரீரரூபத்தேரின்

கண்ணேயிருக்கும் அதிகாரி பிரஹ்மபாவப் பிராப்திரூபமோக்ஷத்தையடைவன். இங்ஙன், நாராயண பரமான்மாவை ஜீவனது ஆன்மரூபமாய்க்கூறும் நாராயணீய உபநிடதத்தை ஞானாசிரியர் வாயிலாய்ப் பொருளோடு மறியுமதிகாரி ஜீவன அவஸ்தையின்கண்ணே சர்வ ஆபத்துக்களுமற்றவனாய் மனோ வாஞ்சித போகங்களை யடைவன். மரித்தபின் பிரஹ்மலோகத்தேசென்று ஆண்டு மோக்ஷத்தையடைவனாதலின் அதிகாரியானவன் இதனை யவசியம் விசாரஞ்செய்க. இத்தகைய நாராயணரை நினைப்பூட்டும் 'ஓம் நமோ நாராயணாய' என்னும் அஷ்டாக்ஷர மந்திரம் தன்னைச் செபிக்கும் சர்வ ஜீவாகட்கும் மனவாஞ்சித பதார்த்தப பிராப்தியை யடைவிக்குமாதலின், பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசியரென்னும் மூன்று வருண முடைப் புருடரோ பிரணவபூர்வகம் அதைசசெபிக்குக. ஸ்திரீ சூத்திராதியரோ பிரணவத்தைவிடுத்து அதைச்செபிக்குக. சாக்ஷாத் நாராயண ஞானத்தானே அடையும் பலத்தை அஷ்டாக்ஷர மந்திர ஞானத்தானே யடையலாமாதலின், இது அதற்குச் சமானமாம. பிரணவம் நாராயணரையடைய உபாயமாவதேபோல, அஷ்டாக்ஷரம் உபாயமாமாதலின், இது அதறகுச சமானமாம். பாவியராய சூத்திரர், ஸ்திரீகள் சிரத்தையோடும் அர்த்தஞானவாயிலாய் இம்மந்திர ஜபஞ்செய்யின் அவரும் சர்வ பாவமறறவராய் நாராயணரைத தம்மான்மரூபமாய்ச் சாக்ஷாத்கரிப்பர். கருத்திதுவாம்:—பாவான்மாக்களாய சூத்திராகளும், ஸ்திரீகளும், இம்மந்திர ஜபத்தானே நாராயணரைத் தம்மான்மரூபமென வுணாந்து மோக்ஷத்தையடைவராயின், சர்வபாவமற்ற பிராஹ்மண, க்ஷத்திரிய, வைசியரென்னும் திரைவர்ணிக அதிகாரிகள் அம்மந்திர ஜபத்தானே நாராயணரை ஆன்மரூபமாயறிந்து மோக்ஷத்தையடைவரென்பதனைக் கண்ணியாது கூறறுளது. ஆகையால சாவ முமுக்ஷுக்களும் அவ்வஷ்டாக்ஷர மந்திர ஜபத்தையவசியஞ்செய்க. நாராயணீய உபநிடததேயுரைதத பிரஹ்மவித்தை முழுவதையும் யாம நினைத்துக்கூறினும். இப்போது மகோப நிடததேத கூறிய பிரஹ்மவித்தையைககூறுவாம, நீ சாவதானமாய்க்கேட்டி:—ஹே மைந்த! பிராசீன விருத்தாந்தத்தையுணாந்த வேதவேத்தாக்களாய இருஷிகள் இவ்வாறு கூறுகின்றனா.—இவ்வுலக உறபத்தியின் முன்னொரு நாராயணரேயிருந்தனா, பிரஹ்மாதி தேவருமிலலை, ஆகாசாதி பஞ்சமகாபூதமுமிலலை, காரியமாய ஸ்தாவர ஜங்கம சரீரங்களுமம உண்டாகவிலலை, பிருதுவி சொர்ககமுதலிய சாவகாரியப பிரபஞசமுமம உண்டாகவிலலை. இங்ஙன் சர்வத்துவைதப பிரபஞ்சமும மறறுஏகாகியாயிருந்த நாராயணா அககால சிறிது மாத்திரையுங் கிரீடைசெய்யவில்லை; பின் கிரீடைசெய்யுமபொருட்டு வேறு பொருளைத் தியானம் செய்தனர், பின்னவருக்கு மாயாரூபஸ்திரீயோடு சமபந்தமுண்டாயது, பின் 13 புத்திரரும், அநேகம் புருடரை விரும்பும ஒரு வியபிசாரியாய கன்னியும உண்டானாள். பின்னககன்னி தன்னை அதிதெய்வம் அதியான்மம அதிபூதம் என மூவுருவமாக்கினள்; 13 மைந்தரும் தமமை அதிதைவாதி மூவுருவமாக்கினா. சமஷ்டி சரீரத்துள்ளடங்கிய பதார்த்தம் அதிதைவமாம. வியஷ்டி சரீரத்துள்ளடங்கிய பதார்த்தம் அத்தியாத்மமாம். இதுவெனக்காணும் பொருள் அதிபூதமாம. சூரியாதி தேவதை அதிதைவமாம். நேத்திராதி இந்திரியம் அத்தியாத்மமாம். ரூபாதி

விடயம் அதிபூதமாம். உண்மையாய் ஏக அத்விதீயரூப நாராயணர் தமதுவாஸ்தவவடிவத்தின் அவிவேகத்தால் அநேகரூபமுடைப் புத்திரியோடும், அநேகரூபமுடை 13 மைந்தரோடும் தாதாத்மிய அத்தியாசஞ்செய்து தம்மையும் அநேகரூபமாய்க் கண்டனர். சிருஷ்டியின் ஆதிகாலத்தே நாராயணர் முதலில் புத்திரியோடுகூடிய 13 மைந்தரின் காரணத்தையுண்டாக்கிப பின் அதினின்றும் அவரையுண்டாக்கினர், பின் கிரியாசக்தியை யுண்டாக்கினர்; அது பூர்வமுண்டாய பதார்த்தங்களுள் சிலவற்றிற்கோ காரியரூபமாம், சிலவற்றின் திதிக்கோ காரணரூபமாம.

சங்கை :—ஹே பகவன்! அந்த 14 வருக்குக்காரணமியாது? அவரியாவர்? அந்தக்கிரியாசக்தியாது? இவை யாவற்றையும் தாங்கள் நிர்ணயமாய்க் கூறுங்கள்?

சமாதானம் :—ஹே மைந்த! ஆகாசாதிபூதம் 14 வரின் காரணமாம். அதுவும் தூலசூக்குமபேதத்தானே இருவகையாம் அவற்றுள் பஞ்சீகிருதபூதம் தூலமாம், அபஞ்சீகிருதசபதாதி பஞ்சதன்மாத்திரைகள் சூக்ஷ்மமாம். காரண மிருவகையாகவே காரியமும் தூலசூக்ஷ்மபேதத்தானே இருவகையாம். பிராணவாயுவே கிரியாசக்தியாம்; அது ஆகாசாதிகளின் காரியமாம். 14 வரின்றிதிக்குக் காரணமாம். அகங்காரம், மனம், சித்தம், சுரோத்திராதிவாக்காதி 13 மைந்தராவர். புத்தி புத்திரியாவள், இவை யாவும் நாராயணரிடத்திருந்தே யுண்டாயினவாதலின் இப்பொருள் துணியப்பெறும் :—பஞ்சதன்மாத்திரை, பஞ்சமகாபூதம், பிராணன் 1, அகங்காராதி 13 மைந்தர், புத்திரி 1, யாவுங்கூடி 25 தத்வமாம். அவற்றிற்கு ஹிரண்யகர்ப்பாதியரோ அதிதைவரூபமார். தாவரஜங்கம சரீரம் அதிபூதமாம். இதனகண் ஒன்றும் இத்துணை விசேஷத்தனமையுளது :—அதிபூதரூபமாய்க் கூறப்பட்ட சரீரங்களுக்குள் எவ்வெசசரீரத்தே எவ்வெசசீவனுக்கு யானென்னும் மதியுளதோ, அவ்வச்சரீரம அவ்வச்சீவனுக்கு அத்தியான்மமாம; அயலுயிர்கட்கோ இதுவெனத்தோற்றலின் அதிபூதமாம. தேவதத்தன்றேகம அவனுக்கத்தியான்மமாம்; யஞ்ஞதத்தனுக்கு அதிபூதமாம். இம்முறையை யாண்டும் கண்டுகொள்க. சர்வ பூதப்பிராணிகளின் உற்பத்தி திதிலயத்தைசசெய்யுங் காலத்தையும நாராயணரே யுண்டாக்கினர் இவ்வாறு ஆகாசாதி சர்வ ஜகத்தையும் உண்டாக்கிச சூத்திர ஆன்மரூபமாய்ச சர்வ தேவதைகளையும சிருட்டித்தார். யாவற்றையுமுண்டாக்கும் அந்நாராயணர் ஓரநிர்வசநீய நிமித்தத்தானே தம்பால் குரோதத்தை வெளிப்படுத்தினர். அதனால், கோணலுற்ற புருவத்தோடுகூடிய தமது லலாடதேசத்தினின்றும் ருத்திரபகவானை யுண்டாக்கினர். இப்போது தியானத்தின்பொருட்டு அந்த ருத்திரபகவானுடைய வடிவத்தை வருணிப்பாம் :—ஹே மைந்த! நீலகண்டத்தையும், சிவந்த திருமேனியையும், சூரியசந்திராக்கினியென்னும் மூன்று நேத்திரங்களையும், திரிசூலத்தையும, உடையவர். அநேக பலத்தாற் சித்திக்கத்தக்கமுடியாத தொழிலையுடையவர், சமானமற்றவர், நாராயணரினும் வேறல்லாதவராதலின் சம்பூர்ண ஐசுவரியங்கட்கும், தருமங்கட்கும், கீர்த்திகட்கும், இலக்ஷ்மிக்கும், ஞானத்திற்கும், வைராக்கியத்திற்கும், சத்தியத்திற்கும், பிரஹ்மசரியத்திற்கும், இந்திரிய நிக்கிரகரூபதவத்திற்கும், சர்வவேதசாஸ்திரங்கட்கும், சர்வகுணங்கட்கும ஆதாரர், அவரிடத்திலிருந்தே இந்தி

ராதிதேவதைகட்கு ஐசுவரியாதி சர்வ குணங்களும் பிராப்தமாம். ருத்திரபக வானே சாவ தேவதைகட்கும், முனிகட்கும், மனுடர்க்கும் நானுவகையாய வித்தை முதலியவற்றின் அடைவின்கண்ணே குருரூபமாயிருப்பவர். பஞ்சின் கூட்டம் அழலின் சம்பந்தத்தையடைந்து விரைவாகவே யழிவதேபோலப் பிரளய காலத்தே இம்மூவுலகரூபப் பஞ்சு ருத்திரரூப அக்கினியையடைவுற்று விரைவா கவே நாசத்தையடையும். இத்தகைய ருத்திரர் உண்டானபின், சர்வ ஜகத்தின் திருஷ்டாவாய நாராயணர் மீண்டும் தியானரூப தபத்தைச்செய்தனர். அதனல் சிரமத்தையடைந்த நாராயணரின் லலாடத்தினின்றும் வேர்வைத்துளி விழுந்தது; அது சர்வ பிரஹ்மாண்டத்தையும் சர்வ லோகங்களையும் உண்டாக்குவதிற் சமர்த் துடையதாம். அது சாஸ்திரத்தே நாரா எனக்கூறப்பெற்றுளது. அதன்கண்ணே நாராயணர் தமது தேஜோரூப வீரியத்தையிட்டனர். அது பொன்போலும் நிற முடையது. மிகவும் மனோரம்மியமானது, கோடி சூரிய சமமாய தேஜஸையுடை யது. இரண்டுங்கலந்து அண்டாகாரமுற்றது, அதனிடையில் நாபிக்கமலத்தினின் றும் நான்முகப்பிரஹ்மா உண்டானர். இப்போது தியானஞ்செய்யும்பொருட்டுப் பிரஹ்மாவின் சொரூபத்தை வருணிப்பாம்.—ஹே மைந்த! சர்வ பூதப்பிராணி கட்கும் ஆதிரூபர், கிழக்கு முதலிய நான்கு முகங்களினின்றும் முறையே காயத் திரி, திரிஷ்டுப்பு, ஜகதி, அனுஷ்டுப்பு என்னும் நால்வகையாய சந்தங்களையு முண் டாக்குபவர். ‘ஓ꞉ ஓ꞉வ꞉ ஓ꞉ ஓ꞉’ என்னும் நான்கு வியாகிருதிகளையும் உண்டாக்குபவர். இருக்கு முதலிய நான்கு வேதங்களையும் உண்டாக்குபவர். இது முதலாக யாவையுமுண்டாக்கும், நான்முகப்பிரஹ்மாவும் நாராயணரினின்றே யுண்டாயினர். இவ்வாறு ஏகஅத்விதீய நாராயணர் தமது மாயாசக்தியால் நானு பாவத்தை யடைந்திடினும் உண்மையாய் நானுரூபமின்றாம்; மற்றே, உண்மை யாமோ சர்வ பேதமுமற்ற ஏக அத்விதீயரூபமே யாவர். இவ்வகை யாராய்ந்தும் அதிகாரி நாராயணரை அறியானுயின் அவரைத் தியானஞ்செய்க. தியானஞ்செய் யும் வகையைப் பத்தாவது அத்தியாயத்தே நாராயண உபநிடத அர்த்தநிரூப ணத்தே விஸ்தாரமாய்க் கூறிவந்தேம். அந்தத் தியானரூபயோகத்தானே அதி காரி நாராயணரைச் சாக்ஷாத்கரிக்குக. சிரத்தாபக்தி பூர்வகம் இம்மகோபநிட தத்தை விசாரஞ்செய்யும் அதிகாரிபூர்வம் அசுரோத்திரியாயும் சுரோத்திரீ பாவத்தையடைவன் என்பது முதலாய் அநேகவகையாய மகான்மியம் இவ்வுபநிட தத்திற்கு வருணிக்கப்பட்டுளது. இதன் விசாரத்தானே மகா பலமுண்டாயின், விசாரத்தாலுண்டாய காரியசகிதமாயையைக்கொல்லும் ஆன்ம சாக்ஷாத்காரமகி மையைக் கூறுவதென்னே, மகோபநிடதத்திற்கூறிய சம்பூரணப் பிரஹ்மவித் தையை நினக்குக்கூறினேம். இப்போது ஆன்மப்பிரபோத உபநிடதத்தே உரை த்த பிரஹ்மவித்தையை உரைப்பாம். நீ சாவதானுய்க்கேட்டி! அவ்வுபநிட தத்தே முதலில் ஆன்மசாக்ஷாத்காரரூபப் பல அடைவின்பொருட்டு இருவகை யுபாயங் கூறப்பெற்றிருக்கின்றது. ஒன்றே, பிரணவமந்திரமாம், மற்றொன்றே அஷ்டாக்ஷரமந்திரமாம். எவ்வத்விதீய ஆநந்தவடிவ ஆன்மவாசகம் பிரணவமந் திரமோ, அதன் வாசகமே அஷ்டாக்ஷரமந்திரமுமாம். அவ்வாசகவாச்சியங்கட்

குச் சுருதி அபேதரூபத்தியானத்தைக் கூறியிருக்கின்றதாதலின், அதிகாரியும் அபேதமாயே சிந்திக்குக. அகார, உகார, மகார, மென்னும் வர்ணங்களின் சமூதாயரூப ஓங்காரம் பிரணவமந்திரமாம். பிரணவசகித 'நமோ நாரயணாய,' என்னு மந்திரம் அஷ்டாக்ஷரமந்திரமாம். இவ்விரண்டும் அதிகாரியின் மனோவாஞ்சிதத்தைத் தருவதாம். இரண்டு மந்திரங்களை ஜபஞ்செய்பவனும், அவற்றுற் றேவதையைப் பூஜிப்பவனும் இரண்டுமந்திரங்களின் அகாராதிமாத்திரைகளோடு விசுவாதிபாதங்களை அபேதசிந்தனைவடிவ உபாசனைசெய்பவனுமாகிய அதிகாரிக்குச் சம்சயவிபரீதமற்ற பிரஹ்மநிச்சயமுண்டாம். பின்னத்விதீயப் பிரஹ்மத்தைத் தன்னுன்மரூபமென வுணர்ந்து ஜனனமரணரூப சம்சாரபந்தத்தினின்றும் முக்தனாவன். இரண்டு மந்திரங்களின் வாசிய அர்த்தரூபப் பிரஹ்மத்தின் வாஸ்தவநிர்க்குணவடிவம் காரியசகித அவித்தையின் துவம்சவடிவ மோக்ஷத்தின் அதிஷ்டானமாம், அத்விதீயரூபமாம். இத்தகைய வத்துவைத் தன்னுன்மவடிவமாய்ச சாக்ஷாத்காரஞ்செய்யாதவரை, பிரஹ்மத்தின் சகுணரூபத்தியானஞ்செய்க, செய்யவே சுகமாகவே நிர்க்குணப்பிரஹ்ம சாக்ஷாத்காரமுண்டாம். சுருதிஸ்மிருதி முதலிய சாஸ்திரத்தே சகுணப் பிரஹ்மத்தின் வடிவம் பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன், சூரியன் என்பதாதி பேதத்தானே அநேகம் வகையாய் வருணிக்கப்பட்டுள்ளதேயாயினும், நாரதாதியர் அத்தியந்தம் ஆதரபூர்வகம் அதனைக்கூறியுள்ளார், அதைக்கேட்டி —ஹே குழந்தாய்' காஷ்டரூப அரணி, அக்கினியை வெளிப்படுத்துவதேபோல மண்ணின்கண்ணே சர்வப்பிராஹ்மணர்களையும் காக்கும்பொருட்டும், தபாதி தருமங்களைக் காககும்பொருட்டும் பரமான்மாவின் ஜோதியானது தேவகி வசுதேவரிடத்தினின்றுந் தம்மைக் கிருஷ்ணரூபமாய் வெளிப்படுத்தியது. அந்தக் கிருஷ்ணபகவானுககு அங்கிரசகோத்திரமுடைய கோரரெனப்பெயரியபிராஹ்மணர் சம்பூர்ணவித்தையையுங்கொடுத்தனர். அந்தப் பகவான் அர்ச்சுனனுக்கும், தம் தாய் யசோதைக்கும் தம் விசுவரூபத்தைக்காட்டி யருளினர், அந்தப் பகவானே யாவினும் மேன்மையராவர், அவர் தமது ஸ்மரணைமாத்திரையானே ஜீவர்களின் சாவ பாவங்களையும் கெடுப்பாதலின் சுருதிபகவதி யவரை 'ஹரியேன' அழைத்தனள். பாரதாதிகிரந்தங்களில் வேதவியாசருமு, ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய மகிமையை வருணித்துளார். பாகவதபுராணத்தே ஸ்ரீ சுகதேவரும், ஸ்ரீ பகவானுடைய மகிமையை வருணித்துளார். வேறு புராணங்களிலும், ஆகமங்களிலும், நாரதாதியமுனிவரும் ஸ்ரீ பகவானுடைய மகிமையை வருணித்துளார். ஆகையால் ஸ்ரீ கிருஷ்ணபகவான் யாவினும் மேன்மையர். இந்திராதி சர்வ தேவதைகளும் இந்தப் பகவானுடைய ரூபமேயாவராயினும், யாவரும் ஸ்ரீ பகவானுடைய பிரதிவிம்பங்களேயாவராதலின் தர்ப்பணாதி யுபாதிகளின் நீலபீதாதிதருமம் பிரதிபிம்பத்தின்கண்ணே தோற்றுமன்றி முகத்தே தோற்றாததேபோல, மாயாரூப உபாதியின் காமக்குரோதாதி தருமம் தேவதைவடிவப் பிரதிபிம்பத்தின்கண்ணே தோற்றுமன்றி ஸ்ரீ கிருஷ்ணபகவானாகிய பிம்பத்தே அது தோற்றாதாம். ஆதலினானே சில தேவதைகளினிடத்தே காம அதிகத்தன்மையும், குரோத அதிகத்தன்மையும், லோப அதிகத்தன்மையும்,

அகங்காராதி தூஷணங்களும் இருக்கும் ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்தே காமக்குரோதாதிதூஷணம் முக்காலத்திலுமில்லை.

சங்கை :—ஹே பகவன்! அந்தப் பகவானிடத்தே காமாதிதூஷணங்கள் இன்றென்படிதெங்ஙனம் அறியலாகும்?

சமாதானம் :—ஹே குழந்தாய்! அந்தப பகவான் அர்ச்சுனனுக்குச் சாரதியானாராதலின் அவரிடத்தே யகங்காரமின்றும். துரியோதனனைப பரித்தியாகித்துப பாண்டவர்களின் பக்ஷத்தேயிருந்தனராதலின் லோபமுமின்றும், தமது பலபத்திரப்பிராதாவின் அநேகங்க ரேவசனங்களைசசகித்திருந்தாராதலின் குரோதமுமின்றும், காமாவதாரமாகிய பிரத்யுமநநுககுப பிதாவேயாதலினனும் புத்திரன் பலம பிதாவின்மீது செல்லாதாதலினனும காமமின்றும். ஸ்ரீ பகவான் கநதருடைய சக்தியைத் தமது இடதுகரத்தே பெடுதது அவரது பிரஹ்மண்யத்தன்மையின் கருவத்தை நீக்கினாராதலின் மூவுலகததும பிரஹ்மண்யம் எனப் பெயர் பெற்றனர். இவவார்த்தை மகாபாரதத்தே ஸ்கநதோபாக்கியானத்தே விஸ்தாரமாய்க் கூறப்பட்டுளது. கருத்திதுவாம் :—சததியரூபதபத்தைக் காக்கும்பொருட்டுத் தேவகியின் புததிரராயினர், வேதஙகளைக காக்கும்பொருட்டு ஹயக்கிரீவாதிரூபங்களைத்தரித்து மது முதலிய தைத்தியரைககொன்றனர். மகாதேவரின் பூஜையில் தமது பிரதிஞ்ஞையை யுண்மையாக்கும்பொருட்டு ஒரு கமலஸ்தானத்தே தமது நேத்திரத்தை யருபபித்தனர். விஷ்ணுரூபததானே தமது வக்ஷஸ்தலத்தே பிருகு இருஷியின் பாதசின்னததைததரிததார். இததகைய பகவானைப் பார்க்கினும யாவர் தாம் பிரஹ்மண்யமாவர், ஸ்ரீ பகவானையன்றி யெவருமர்கார், யாவினும மேன்மை பிரஹ்மண்யமாம. அந்தக் கிருஷ்ணபகவான் ரூப, லாவண்ய, சௌபாக்கியம், முதலிய குணஙகளிருததறகிடனாகலின் அவருடைய திருமேனியின்கண்ணே விசுவகருமாவின் சாதுரியத்தன்மையும் பிரவிருத்தியாதாம். முத்தைபபோலும் அஙககாநதி லாவண்யமாம. மனோஹரத்தனமை சௌபாக்கியமாம். அவரிடத்தே காமாதியமதியானும சித்தமவைததவரும் திவலோகமடைந்தனர். பிருந்தாவனக்கோபியர் காமபாவனையானே திவலோகமடைந்தனர், கம்சன் ஸ்ரீ பகவானுடைய பயத்தானே திவலோகததையடைநதனன், சிசுபாலன் துவேஷத்தானே திவலோகமுறறனன், யாதவா பந்துத்வபுததியானே திவலோகமுறறனர், அர்ச்சுனுதிபாண்டவரும திரௌபதியும நேயத்தானே திவலோகமெய்தினர், நாரதாதியா பக்தியினுனே திவலோகமுறறனர், இவர் முதலாக அநேக ஜீவர், ஸ்ரீ பகவானுடைய தியானததானே திவலோகமுறறனர். சுருதிஸ்மிருதிகளில பிரஹ்மலோகமெனப பெயரிய வைகுண்டம் திவலோகமாம். அதன்கண்ணே பிரஹ்மாவோடு பரப்பிரஹ்மபாவததையடைநத சந்யாசி பிரஹ்மலோகத்தினின்றும் மீண்டும் சம்சாரத்தையடைவதில்லை. இத்தகைய வைகுண்டத்தே பகவத்பக்தர் செலவர். தியானஞ்செய்யுமபொருட்டு ஸ்ரீ கிருஷ்ணபகவானுடைய சொரூபத்தைக்காட்டுதும் :—ஸ்ரீ கிருஷ்ணபகவான் துவாரகாபுரியின்கண்ணும் மதுராபுரியின்கண்ணும் வாசஞ்செய்வர். கோபாலரூபத்தானே கோகுலாதி

ல்தானத்தே நிவாசஞ்செய்வர், நீரோடுகூடிய கார்மேகம்போலுங் கரியதிரு மேனியையுடையவர், மிகவும் அழகியர், இந்திர நீலமணிபோலும் வர்ணமுடையவர், கோடி சூரிய சமானமாய சோபையையுடையவர், முழந்தாள் பரியந்தம் நீண்ட தோள்களையுடையவர், சங்கம்போலும் திரிரேகையையுடைய கழுத்தையுடையவர், அவரது ஹனு பெரியதாம், கண்டஸ்தலம் உயர்ந்ததாம், விழிசெவிவரை நீண்டதாம், நாசி உயர்ந்ததும் கூர்மையதும் ஆம், ஓஷ்டம் சிவப்பாய்ப் புன்சிரிப்போடுகூடியதாம். லலாடமும் இருகபோலங்களும இருசெவிகளும மிகவும் அழகுடையனவாம, கேசம் அத்தியந்தம் நீலவர்ணமுடையதாம், அவரது நகதந்தங்களின் பிரபை சந்திரனது பிரபையையும் வெற்றிகொண்டுள்ளது அவரது மார்பானது விசாலமும் உயர்ந்ததும பிருகுப் பிராஹ்மணரின் பாதசின்னத்தால சோபாயமானமும் ஆம். அவரது இருகரங்களும, இருபாதங்களும் மண்டலாகாரமானதும், உயர்ந்ததுமாகிய கமலங்களாய்ச் சோபிப்பதாம. அவரது கணை, முழந்தாள், தொடை, சந்திமுதலியவை மிகவும் புஷ்டியுடையனவாம், வயிறு சுருங்கியதாம், ஹஸ்தபாதாதிகள் புஷ்டியுடையனவாம், அங்கங்களின் ரசனை வஜ்ரசமானமாய் மிகக்கனமாயதாம்; அவர் 16 வயதுடையவராவர், பருத்துன்னதமாய ஜகனஸ்தானங்களால் சோபிப்பர். விருக்ஷம் சாகைகளால் சோபிப்பதுபோல, இரு ஹஸ்தங்களிலும இருபாதங்களிலும இருக்கும வட்டவடிவ நீண்ட அங்குலிகளால ஸ்ரீ பகவான் சோபாயமானமாயிருப்பவா, நான்கு புயங்களோடு கூடியிலங்குவா, பெரிய திருமேனியையுடையவா, பட்டுப் பீதாம்பரந்தரித்தவா, இடையிலிருக்கும் காஞ்சி பூஷணத்தின் கண்டிகைகளின் மதுர சப்தத்தானே சோபாயமானமாயிருப்பவா. அநேகம் வகையாய ரத்தினங்களால அலங்கரிக்கப்பெற்ற கங்கணகரத்தா, அநேக ரத்நகசித அங்கதம் வாய்ந்த புயத்தர், அநேகரத்நம் நிறைந்த நூபுரமொலிக்கும் திருவடியுடையவர். அநேக ரத்நம் நிறைந்த அங்குலி பூஷணங்களாலலங்கரிக்கப்பெற்ற கைவிரல்களையும் கால்விரல்களையுமுடையவா. கழுத்திற் கவின்காலும் ஆபரணங்களோடு கௌஸ்துப மணியையும் கண்டத்தே தரித்திருப்பவர், முத்துமாலைகளையும, பத்ரபுஷ்பமய வனமாலையையும் வக்ஷஸ்தலத்தே தரித்தவர், தம்மிருசெவிகளில மகராகார குண்டலங்களைத்தரித்தவர், மயூரபக்ஷங்களோடுகூடிய சுவர்ண ரத்நமய மகுடத்தைச் சிரத்தே தரித்தவர். தமது லலாடத்தே கேசர திலகத்தைத் தரித்தவா. அநேகவகை ரத்தினங்களாலலங்கரிக்கப்பெற்ற அநேகவகைப் புஷ்பங்களோடுகூடிய சுவர்ணமய விசித்திரரக்ஷையை தமதுச்சியிற்றரித்தவர். எதனால் சிரசின கேசத்தைக்கட்டலாமோ, அது ரக்ஷையெனப்பெறும. மூவுலகத்துள்ள மங்கையரது மனத்தையும், நேத்திரங்களையும் ஆநந்திக்கச்செய்பவர். தமது நான்கஸ்தங்களில பிரதக்ஷிணக் கிரமமாக சங்கம, கதை, பத்மம், சக்கிரமென்னு நான்கையுந்தரித்தவர். தக்ஷிணபாகத்தின் கீழ்க்கரத்தோ சங்கத்தைத்தரித்துளார், மேற்கரத்தோ கதையைத் தரித்துளார். வாமபாகத்தின் மேற்கரத்தோ பத்மத்தைத் தரித்துளார்: கீழ்க்கரத்தோ சக்கிரத்தைத்தரித்துளார். அவர் கோக்கள், பிருதிவி, பிராஹ்மணரென்னு மியாவரின் பீடையையும் நீக்குபவர். தைத்தியர்கட்குச்சமானமாய் யாகாதி தருமங்கட்கும், தேவதைகட்கும், துரோகஞ்செய்யும் அதர்மிகளாய இராஜாக்கட்கெப்போ

தும் துக்கத்தையேயடைவிப்பர். பிருதிவியின்கண்ணே எவ்வெக்கால் தருமலோப மாமோ அதருமவிருத்தியாமோ அவ்வக்கால் இத்தேவகீ நந்தனனாகிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் தர்மிஷ்டர்களைக்காக்கும்பொருட்டும், துஷ்டர்களை நாசஞ்செய்யும் பொருட்டும் அவதரித்தருளுவர். இவ்வார்த்தையை ஸ்ரீ கீதையின்கண்ணே ஸ்ரீ பகவானே திருவாய்மலர்ந்தருளியிருக்கின்றார்.

"பரித்ராணாய ஸாதூநாம் விநாஶாய ச து³ஷ்க்ருதாம் ।
த⁴ர்மஸம்ஸ்தா²பநார்தா²ய ஸம்ப⁴வாமி யுகே³ யுகே³"॥

"சாவாது பிறவாது தனிமுதலா யிருந்தநா
னுவாவிவ் வுலகுபடு மழிதுயா தீர்ப்பதற்காக
மேவாது நின்றேயென் மாயையினன் மெய்யேபோ
லோவாது பிறந்திடுவே னுகந்தோறு முகந்தோறும்."

(பொ-ள.) தருமாத்மாக்களை ரக்ஷிக்கும்பொருட்டும் பாவாத்மாக்களை நாசஞ் செய்யும்பொருட்டும், கிருஷ்ணபகவானாகிய யான் யுகந்தோறும் அவதரிப்பேன். இவரே நாராயணரூபர், சர்வ தேவதைகளின் ஆன்மரூபர், பிரணவமந்திரமும், அஷ்டாக்ஷரமந்திரமும் இவருடைய சொரூபத்தையே பிரதிபாதிக்கின்றனவாதலின், சர்வ சகுணரூபத்தினும் மேன்மையர். நிர்க்குணப் பிரஹ்மசாக்ஷாத்காரம் உண்டாகாதவரை முற்கூறிய அலங்காரங்களோடுகூடிய ஸ்ரீ கிருஷ்ணபகவானைத் தியானஞ்செய்க. இருதயகமலத்தேயும், சூரியமண்டலத்தும், கோகுலாதிகளினுமிருக்கும் முன்மொழிந்த லீலாதிகுணங்களோடுகூடிய ஸ்ரீ கிருஷ்ணபகவான் அதிகாரிகளின் சித்தத்தே பிரயத்தனமின்றியே எப்போதுந்தோற்றுவராயின், தீபம்கடாதிகளை யொளிர்விப்பதிலேதுவாதல்போல அவரும் தமது நிர்க்குணவடிவசாக்ஷாத்காரத்தே ஹேதுவாவர். அவரது தியானத்தானே ஜடமனத்தனாய்த் தன்னான்ம வடிவமாய்ச் சாக்ஷாத்கரித்த நிர்க்குணப் பிரஹ்மம் சர்வ பூதங்களின் உள்ளிருப்பதாம்; சர்வ ஜகத்தின்காரணமாம்; உற்பத்தி நாசமற்றதாம்; சர்வ சோகமோகாதிகளற்றதாம். இதனைத் தன்வடிவமாயறிந்த அறிஞனும் இவ்வகையாவனாதலின், ஸ்ரீ கிருஷ்ண பகவானைத் தியானிக்கும் யோகி மீண்டும் சம்சாரதுக்கத்தையடைவதில்லையென மறையின்கண்ணே யறைவுற்றதுண்மையேயாம். ஸ்ரீ கிருஷ்ணபகவானது தியானத்தானே நிர்க்குணப் பிரஹ்மத்தைத் தன்னான்மவடிவமாய் அறியாதவரையுமே இத்துவைதப் பிரபஞ்சம் பிரதீதியாம்; பின் பிரதீதியாகாதாம். இரஜ்ஜுவின் ஞானத்தின்பின் கற்பித சர்ப்பம் இரஜ்ஜுரூபமேயாவதுபோல அத்விதீயப் பிரஹ்மஞானனந்தரம் இத்துவைதப் பிரபஞ்சமும் அத்விதீயப் பிரஹ்மரூபமேயாம். இப்போது பேததரிசனத்தே அநர்த்தகாரணத்தன்மையைக் காண்பிப்பாம்:—ஹே குழந்தாய்! அத்விதீய நிர்க்குணப் பிரஹ்மத்தே பேதத்தைக்காண்பவன் அநேகமுறை சம்சாரத்தையடைவன்; அநேகமுறை ஜன்மமரணாதி துக்கங்களையடைவன். நிர்க்குணப் பிரஹ்மத்தே யற்பபேதம் வாஸ்தவமாயில்லாததே போல மாயா விசிஷ்ட சகுணப் பிரஹ்மத்தின்கண்ணும் அப்பேதம் வாஸ்தவமாயின்றும்; ஏனெனின், மண்ணின் காரியமாய கடசராவாதி அக்காரணத்தினின்

றும் வேறன்றுவதேபோலப பிரஹ்மகாரிய ஜகத்தும பிரஹ்மகாரணததினின்றும வேறன்றுமாதலின், சகுணப் பிரஹ்மததும் நிர்க்குணப பிரஹ்மத்தும அபபேதம் உண்மையாயினும் இததன்மைய அதவிதீயப் பிரஹ்மததே பேதததைககாண்பவன் மிகவுங் கொடூரமாய துககத்தையடைவன் என மறையறைந்ததுண்மையேயாம். விபரீததரிசிககு அநாதத அடைவாமென்பது கேவலம சுருதிபபிரமாணததானே சிததமன்று, மறறு, சாவலோக அனுபவத்தானும் சிததமாம; ஏனெனின், மயஙகிவிடத்தை யமிருதமெனவெணணிப் பக்ஷிக்கின்ற விபரீத தரிசி மரணத்தையேயடைவன்; அககினியை நீரென நினைநதுபுகும விபரீததரிசி தாகத்தையேயடைவன்; விடததையமிருதமதியும எரியில நீரமதியும விபரீதமாவதேபோலச சர்வ துவைதமறற அதவிதீயப பிரஹ்மததே துவைதமதிபாறறல விபரீதமேயாம. அதனானே அடிககடி பிறபபிறபபாம எனபதுசிததமேயாம, எனனே, எவ்வாறெவவாறு விரையோ அவவாறவ்வாறேபலமாம. வேமபிடடவன அபபலமேயடைவனன்றி மாம்பலமடையாததேபோல அதவிதீய ஆன்மாவின்கணணே பேததிருஷ்டியானே அடிககடி பிறபபிறபபையேயடைவன மோக்ஷமடையான்; கருததிதுவாம — கௌணதமா, மிததியாதமா, முககியாதமா, என ஆன்மா மூவிதமாம. அவறறுள புததிராதியர் கௌணதமாவாம; தேகம மிததியாதமாவாம, சாக்ஷியாய கூடஸ்தா முககியாதமாவாம. ஒருவன் ஒருவனுடைய புததிரரூப கௌணனமாவையேயனும, சரீரரூபமிததியான்மாவையேனும கொலலின அவனே அரசாநியா பெருநதணடஞ்செய்வா. அவவிரணடைகொனறவரும தண்டிககபபடுவராயின, முககிய ஆன்மாவைப பேததிருஷ்டிரூப சஸ்திரததானே கொன்றவர் அடிககடி ஜனனமிருததியுவைவபடைவா எனபதன்கணணே யாது கூறறகுளது. அனனிய சாஸ்திரததின் கண்ணும இது கூறபபெறறுளளது :—

"ஸுகூபைராலஂ தஜாதூறஃகூபைா யொஹிஃகூகெ ।
கிஂதேந நகூதஂ வாவஂ௵ ஏநெணாதூவஹாரிணா॥"

சச்சிதானந்த பூரண விருமையில் சமததைத
துச்சமாறு பட்டெண்ணினன றன்னுதன்னினேயே
அச்சமிககுறக் கோன்றிடு மான்ம வததியன்றுன்
இச்சகததி லேப்பாவமு மியற்றினனேனுமே."

(பொ-ள்.) அதவிதீய சததுச சிததாநநத வியாபக ஆனமாவையாவன துவைத அசதது ஜடம துககம பரிசசினனமாப்ப பாரபபனே அவன தனனுன்மாவையே கொனறவனுவன், இததகைய கள்வன் இவ்வுலகததே எபபாவததைசசெய்யாதவனுவன்; மறறு, சமபூரண பாவகருமததையும செய்தவனுவன் என்க. ஆகையாலிவ்வதிகாரி அதவிதீய ஆன்மாவின்கண்ணே யொருகாலும பேததிருஷ்டியைசசெய்யறக. இசசீவாகளின இருதய கமலததே விளஙகாநினறதும சாவ பேதமுமறறதும், சாவ புததியின் பிரகாசகமும், சர்வ ஜகததின ஆதாரரூபமும, சூரியாதி சர்வப் பிரகாசஙகளின் காரணமும ஆகிய ஆநந்தவடிவ அதவிதீய ஸ்ரீ கிருஷ்ணபகவானை 'யான் கிருஷ்ணரூபன' எனத தனனுனமரூபமாயுணர்பவன் புசித்து மாத்திரமும சமசாரதுககத்தையடையானுதலின் இத்தகைய அபேத

ஞானத்தைப்பவசியமாய்ச் சம்பாதனஞ்செய்க. இவ்வான்மபுராணத்தின் முதலத்தியாய ஐதரேய உபநிடதார்த்த நிரூபணத்திலே பிரஞ்ஞாரூபமாய்க்கூறிய ஆன்மாவே ஐதரேய சாகையிலிருக்கும் ஆன்மப்பிரபோதகமென்னு முபநிடதத்திலே பிரஞ்ஞாநேத்ரமெனக் கூறப்பெற்றது. ஜீவர்களின் நேத்ரம் பாகிய சர்வ விவகாரத்தையுஞ் சித்திசெய்வதேபோல, ஞானரூபப் பிரஞ்ஞா நேத்ரமும் சர்வ விவகார சித்திசெய்யுமாதலின், ஆன்மாவைச் சுருதிபகவதி 'பிரஞ்ஞாநேத்திரம்' என்றனள். அந்தச் சைதன்யரூபப் பிரஞ்ஞையே சர்வ ஜகத்தின் ஆதாரமாம்; அதன்கண்ணே சர்வ ஜகத்தின் ஸ்திதிவடிவம் பிரதிஷ்டையாம். அந்தத் துவயபதார்த்தரூபப் பிரஞ்ஞையைப் 'பிரஞ்ஞானமானந்தம் பிரஹ்ம' என்பதாதி மகாவாக்கியங்கள் பிரஹ்மரூபமாய்க் கூறுகின்றன. அந்தப் பிரஞ்ஞாப் பிரதிஷ்டைவடிவப் பிரஹ்மத்தைத் தன்னான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரிக்கின், தேகாதியனான்ம பதார்த்தத்திலே ஆன்மபுத்திரூப அவித்தையைப் பரித்தியாகித்து பிரஹ்மபாவத்தையேயடைவன். இவ்வாறாரப்பவன் விடயேச்சையுள்ளானேல், அதனையடையாமல் ஆன்மசாக்ஷாத்காரம் பெறானாயினும், பிரஹ்மலோகத்தே சென்று நானாவகையாய திவ்யபோகங்களை யனுபவித்துப் பிரஹ்மத்தோடு பரப்பிரஹ்மபாவத்தையடைவன். வைராக்கியவானோ இப்பிறப்பிலே பிரஹ்மத்தையடைவனாதலின், விடயராகத்தைப் பரித்தியாகித்து ஆன்மசாக்ஷாத்காரப் பிராப்தியின்பொருட்டுத் திடமுயற்சியைச்செய்க. ஸ்வப்பிரகாசப் பிரஞ்ஞாரூப ஜோதியும் நிரதிசய ஆநந்தமுமா ஸ்வரூபபூதமாய் எப்போதுமிருக்கும் அத்விதீயப் பிரஹ்மப் பிராப்தியின்பொருட்டு அதிகாரி ஸ்ரீ கிருஷ்ண பகவானை யிவ்வாறு பிரார்த்தனைசெய்க:—ஹே வாசுதேவ வடிவெடுத்தருளும் பகவன்! ஹே தேவகித்தாயின திருநேத்திரங்கட்குத் தெவிட்டா ஆநந்தம் அருளும் தேசிக! ஹே வசுதேவர் மைந்த! யான் நின் சரணடைந்துளேனாதலின் தங்களுடைய வாஸ்தவ நிர்க்குணவடிவத்தை யருளல்வேண்டுமென்ப பிரார்த்தித்த மாத்திரத்தே ஸ்ரீ கிருஷ்ணபகவான் அதிகாரிக்கு வேதாந்த ஆசார்ய ரூபத்திலாகிய மதிவடிவமேகமைப்பயடைவிப்பா. அத்தருணத்தில் குருசாஸ்திர உபதேசத்தானே யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேன்' என்னும் ஆன்மஞானப் பிராப்தியாம். அதன் மகிமையானே ஜன்மமரணாதியெல்லாத்துயரும் நீங்குமாதலின் அதிகாரி ஸ்ரீ கிருஷ்ணபகவானைத் தியானமும் பிரார்த்தனையும் அவசியஞ் செய்க. இவ்வாறு ஆன்மப்பிரபோத உபநிடதத்தே கூறிய சம்பூரண பிரஹ்ம வித்தையை நினக்குக்கூறினேம். இனிக் கைவல்ய உபநிடதத்தே கூறிய பிரஹ்ம வித்தையை உனக்குக்கூறுவேம் நீ சாவதானமாய்க்கேட்டி:—ஹே மைந்த! முன்னர் இருக்குவேத ஆசிரியராய ஆசுவலாயனர் என்னும் மகரிஷியொருவரிருந்தனர், அவர் ஒருகால் பிரஹ்மவித்தையையடைய இச்சித்துப் பிரஹ்மாவிடத்தே சென்று இவ்வாறு வினவினர்:—ஹே பகவன்! பிரஹ்மவித்தையானது எல்லாவித்தையினும் மேன்மையதும், சமதமாதி சாதனங்களோடுகூடியவன் தன்னிருதயத்தேயெப்போதும் சேவிப்பதும், விடயாசக்த அநதிகாரிகட்குக் கொடுக்கத்தகாததும், தன்மகிமையானே சர்வ பாவங்களையும் விடுவித்துப் பிரஹ்மபாவத்தையடைவிப்பதும், ஆகிய பிரஹ்மவித்தையைத் தாங்கள் நன்றாயறிந்துள்ளீராதலின்

அதனை யடியேனுக்குக் கிருபையினாலே உபதேசித்தருளவேண்டும் எனப் பிரார்த்தித்தபோது, பிரஹ்மா கூறுவாராயினர் :—ஹே ஆசுவலாயன! குருசாஸ்திர வசனத்தே ஆஸ்திக்ய புத்திரூப சிரத்தையும், பிரஹ்ம உபதேஷ்டாவாய ஆசிரியரிடத்தே பரமபக்தியும் பொருந்திப் பிரஹ்மாகார விருத்திரூபத்யானத்தோடுகூடிய அதிகாரியே பிரஹ்மஞானத்தையடைவன். சிரத்தை, பக்தி, தியானம் என்னும் மூன்றுமற்ற புருடனுக்குப் பிரஹ்மஞானமுண்டாகாதாதலின் அன்வய வியதிரேகத்தானே இம்மூன்றே பிரஹ்மஞான சாதனமாம். இம்மூன்றும் சாதனமாவதே போலச் சந்யாச ஆசிரமும் சாதனமாம்; ஏனெனின், அதிகாரிக்கு அக்கினிஹோத்திராதி சிரௌதஸ்மார்த்த கருமத்தானும், புத்திர பௌத்திராதிப் பிரஜையினானும், கருமஉபாசனைவடிவத் தைவதனத்தானும், பொன்முதலிய மானுஷதனத்தானும், பிரஹ்மஞானபபிராப்தியுண்டாகாதாம்; மற்றோ, தியாகரூபசந்யாச ஆசிரமத்தானே பிரஹ்மஞானப்பிராப்தியாம். கருமம், பிரஜை, தனம் என்னும் மூன்றானே பிரஹ்மஞானமுண்டாயினும் பரோக்ஷமேயாம்; அபரோக்ஷமாகாதாம். கேவலம் சந்யாச ஆசிரமத்தானே அபரோக்ஷஞானப்பிராப்தியாம். 'நகர்மணா நப்ரஜயா தனேன த்யாகேனைகே அம்ருதத்வமானசு:' கருமங்களாலும் மைந்தர் முதலிய பிரஜைகளாலும், பொன் முதலிய தனங்களாலும் அமிருதபாவப்பிராப்தியுண்டாகாதாம்; மற்றோ, முன்னறிஞர் அம்மூன்றன் தியாகரூப சந்யாசத்தானே அமிருதபாவத்தையடைந்தனர். இவ்வர்த்தத்தையே வெளிப்படையாக்குவாம் :— இவ்வாநந்தவடிவப பிரஹ்மம் சுவர்க்கலோகத்தினும் மேலாய அமிருதரூபமாம்; சர்வ ஜீவர்களின் இருதயரூபக் குகையின்கண்ணே யிருப்பதாமாதலின், சுவயம்பிரகாசமாம். இத்தகைய சுவப்பிரகாச நித்திய அபரோக்ஷப்பிரஹ்மத்தின் பரோக்ஷஞானம் பிராந்திரூபமாம், அம்மயக்கிய ஞானத்தானே மோக்ஷப்பிராப்தியாகாதாம்; மற்றோ, அபரோக்ஷபிரஹ்மஞானத்தானே மோக்ஷப்பிராப்தியாம். அத்தகையதை எல்லாத் தடையுமற்ற சந்யாசியே யடைவன்; மற்றையரடையார். பிரஹ்மவேத்தாவாய குருவாயிலாய வேதாந்த வசனசிரவணத்தானே அத்விதீயப் பிரஹ்மத்தே தாற்பரிய நிச்சயஞ்செய்தவரும், சிரவணித்ததை அடிக்கடி மனனஞ் செய்தவரும், மனனஞ்செய்ததன்கண்ணே நிரந்தரம் மனோவிருத்திப் பிரவாகரூப நிதித்தியாசனஞ்செய்தவரும், ஆகிய சந்யாசியர்க்குப் பிரஹ்மலோகப்பிராப்தியினிச்சையாகிய தடையுண்டாயின் இதேகத்தே பிரஹ்மஞானத்தையடையார்; மற்றோ, இத்தேகத்தைப்பரித்தியாகித்தப் பிரஹ்மலோகமுற்று அடைவர். இச்சையற்றவரோ இதேகத்தே பிரஹ்மஞானத்தைப்பெறுவர். அச்சந்யாசி பிரஹ்மலோகத்தே சென்றபோதே பிரஹ்மஞானமுண்டாகமாட்டாது; மற்றோ, இரணியகருப்பரூப பிரஹ்மாவின் ஆயுஷ் முடிந்தபோதுதான் பிரஹ்மாவோடு பிரஹ்மபாவத்தையடைவனாதலின், பிரஹ்மலோகத்தை யடையவேண்டுமென்னு மிச்சையை யறவேவிட்டுப் பிரஹ்மபாவப்பிராப்தியின்பொருட்டு இவ்வகையாய யோகஞ்செய்க :—ஒரு ஏகாந்தநிர்மலதேயத்தே முதலில் தர்ப்பையைவிரித்து, அதன்மேல் மான்றோலைவிரித்து, அதன்மேல் வஸ்திரம்விரித்து ஆசனமாக்கி, அதன்மேல் பதுமாதியாசனமபற்றி யுட்கார்ந்து சாஸ்திரீதியாய் அந்தரசௌசத்தையும் பாகியசௌசத்தையும் செய்து சிரமமற்றவனாய் யோகி

யானவன் றனது மஸ்தகத்தையும், கழுத்தையும், காயத்தையும், தண்டம்போல நேரேவைக்குக, இவ்வாறாசனந்திடமானபின் நேத்திராதிபாகிய இந்திரியங்களையும் மனரூப அந்த ரிந்திரியங்களையும் நிரோதஞ்செய்க. தன்னுசிரியரைச் சிரத்தா பக்திபூர்வகம் நமஸ்காரம்செய்க. பின்னைந்து துவாரங்களோடு கூடிய இருதய கமலத்தைத் தியானம்செய்க. சூரியன், சந்திரன், அக்கினியென்னும் மூன்றோடு கூடியதும், இராகத்துவேஷாதி இராஜச தருமங்களற்றதும், மோகாதி தாமச தருமங்களற்றதும் ஆகிய இருதயகமலத்தியானத்தானே யோகி அதன்கண்ணே நிராகாரப்பிரஹ்மத்தைத் தியானம்செய்க. அது சர்வ துக்கங்களுமற்றதாம்; அத்விதீய ஆநந்தவடிவமாம்; மனவாணிகளாற் சிந்திக்கமுடியாததாம்; சப்தப்பரிசாதி குணங்களற்றதாம்; ஜன்மமற்றதாம்; சிவரூபமாம்; மாயையற்றதாம்; தேசகால வஸ்து பரிச்சேதமற்றதாம்; சுவாசம்போல முயல்வின்றியே நான்கு வேதங்களை யுண்டாக்கியதாம்; ஜன்மமரணுதி விகாரமற்றதாம்; ஏகஅத்விதீயரூபமாம்; சுயஞ்சோதிரூபமாம்; சர்வ சக்தியுடையதாம்; ரூபாதிகுணமற்றதாம்; ஆச்சரியஞ்செய்வதாம்; இத்தகைய வதனை யோகிதியானஞ்செய்க. அதனுனே, அந்த யோகிக்குச் சுகமாகவே நிர்க்குணப்பிரஹ்ம சாக்ஷாத்காரமுண்டாம். நிர்க்குணப்பிரஹ்மத்தியானத்தே சமர்த்தற்ற சித்தமுடைய அதிகாரி இருதயகமலத்தே கேனோபநிடதத்தே பிரஹ்மவித்யாரூபமாய் வருணித்த உமையென்னும் ரூபயவ்வன அவஸ்தையோடுகூடிய பரமேசுரியை மனைவியாகவுடைய பரமேசுராகிய சகுணபிரஹ்மத்தைத் தியானம்செய்க. அந்தப் பரமேசுரி உலகத்துள்ள நானுவகையாய ஜாதியையுடைய ஸ்திரீகளாகிய பிரதிபிம்பங்கட்குப் பிம்பரூபமாம்; சர்வ சக்திரூபமாம்; மகதாதி சர்வ தத்துவரூபமாம, அவ்வம்மையின் அநுக்கிரகத்தானே இந்திராதி தேவுதைகளும், மனுடாதியரும், சுவர்க்காதிகளையும், மோக்ஷத்தையும், இவ்வுலகத்தே நானுவகையாய சுகஙகளையும் அடைவர். உறபத்தியாகிய பிரஹ்மாவின் தொழிலும், ஸ்திதியாகிய விஷ்ணுவின் தொழிலும், சம்ஹாரமாகிய உருத்திரர் தொழிலும், இந்திராதிகளின் நானுவகையாய ஐசுவரியமும், மற்றும் பிறவும் ஸ்ரீ உமாதேவியாரின் கிருபாகடாக்ஷத்தானே யுண்டாம்; குரூரகடாக்ஷத்தானே யழியும். அவ்வமமையாரின் அமிருதகலசங்களிரண்டும் பருத்துயர்ந்தனவாம்; இடையுடுக்கொத்ததாம்; ஜகனஸ்தானம் விசாலத்ததாம்; வதனம் நிறைமதியையறைவதாம்; விழிகள் கயல்களொப்பப் பயில்வதாம்; கேசமபிரமரம்போற் கருமையதாம்; திருமேனி முழுதுமெழிலொழுகுவதாம். அவ்வம்மை ஸ்ரீ மகாதேவரின் தைரியத்தைக் கொள்ளை கொள்பவளாவள்; விசித்திரமாய மேகலாபரணத்தாற் சோபாயமானமாயிருப்பளாவள்; நானுவகையாய அரதனங்கள் அமிழ்த்தப்பட்ட கங்கண அங்கதநூபுரத்தானே கவின்மிக்கவளாவள். வெண்டாள ஆரங்களானும், கண்டபூஷணங்களானும் அலங்கரிக்கப்பெறறவளாவள். நானுவகை அரதனங்கள்பதித்த கிரீடத்தானும் குண்டலாதி பூஷணங்களானும் அழகு மிக்கவளாவள்; உபமானமற்ற வுருவமுடையவளாவள்; பூஷணங்களையும் பூஷிதஞ்செய்பளாவள்; சர்வ ஜகத்காரணத்தானே அநாதியளேயாயினும் 16 வயதுடைய தருணமங்கலேயோவள். இத்தகையஉமாதேவியாரோடிருப்பவரும், நாயகரும் ஆகிய ஸ்ரீ மகாதேவர்,

தேவியாரினும் அதிக குணமுடையவர், பிரஹ்மாதி சர்வ தேவதைகளின் பிரபுவா வர்; நானாவகையாய பூஷணங்களால் சோபாயமானமாவர்; புலித்தோலுடை யுடையர்; அல்லது திகம்பரர்; திருநீறு நிறைந்த திருமேனியர்; அயன்றலைமாலை யர்; வெண்ணிலாவிளங்குஞ் சிரத்தர்; ஸ்ரீ கங்கைசேர்ந்த சிவந்தசடையர்; புன் சிரிப்புறும் வதனர்; ஆன்பாற்போன்ற அருவெண்ணிறத்த காத்திரர்; மன்மதர் கோடிமானுமழகியர்; இரவிகோடிகளென வொளிர்மேனியர்; உலகினுற்பத்தியா தியின் காரணர்; தாமம் மூன்றும் தணர்வருமாவர், நிறைமதி நிகர்த்தமரை முகக் காந்தியர்; மதியெரியிரவியெனு மூவிழிகளில் அதிக காநதியையுடையருமாவர்; முழுத்திருமேனிமுற்றுமழகியர்; சங்கம்போலு மூவிரேகைகளா லங்கிதக்கழுத் தின் எழின்மிகவுடையர்; தம்மெழிலாலே யெம்முளக்கொள்ளையா; முழந்தாள் நீண்ட எழுந்தாழ்கரத்தர்; ஆதிசேடனும் வேதநூன்மார்பர்; பதுமாதனத்தைப பந்திதிருபபர்; மூக்கு நுனிபைப்பாாக்கும விழியர்; ஈசான தற்புருட வகோர சத்யோஜாத வாமதேவவென்னும் பஞ்சமூர்த்தியாரவர்; இம்மூர்த்திகளான்முறை யே உலகின் உதய திதி லயம்புகலனுககிரகம் எனு மைஙகாரியமியறறுவராவர்; சன கர் முன் முனிவாககனகவாசிரியா; சுயஞசோதியதாம் துணையிலாவடிவா; அத்துவி திய ஆநநதவடிவர்; சமஷ்டி தூலப்பிரபஞ்சத்தை யுண்டாக்குபவரும் தேவர் மனு டர் முதலியோரைத் தமதாணைபிறைசெலுத்துந தேவரும் ஆகிய பொன்கருப்பரை யுண்டாக்கு பவா; எல்லா வுலகின் ஏகவீசுரர், தமமை நினைக்குமாத்திரையானே தமதன்பருக்குறும் சாவ பாவத்தையும அக்கணததே யழிக்குஞ சதுரா. இத் தகைய ஸ்ரீ உமாதேவிபாருடன கூடிய நீலகண்டமகாதேவரை யோகியானவன் தனது இருதபகமலத்தே தியானஞ்செய்க; அல்லது சூரியமண்டலத்தே தியானஞ் செய்க; அலலதககினியின்கண்ணே தியானஞசெய்க; அலலது சநதிரமண்டலத்தே தியானஞ்செய்க; அலலது கைலாசாதிபாவதசதே தியானஞசெய்க ஹே ஆசுவ லாயனரே! இவ்வாறு ஸ்ரீ உமாதேவியாரோடுகூடிய ஸ்ரீ மகாதேவரூப சகுணப் பிரஹ்மததியானஞசெய்து யோகியின்மனம நிலைபெறின் சுகமாகவே நிாக்குணப் பிரஹ்மத்தைத் தனனுன்மரூபமாய்ச் சாக்ஷாத்கரிபபன்; அது மாயாசக்தியை யங்கீ கரித்துச் சாவ சகத்தின் காரணமாம்; மனவாணிகட் கவிடயமாம. அஞ்ஞானரூப தமத்தினும பாமாம்; அஃதறறதுமாம். மதி முதலிய சாவப்பிரபஞ்சத்தின் சாக்ஷி ரூபமாம; மதி முதலிபதறறதாம், இத்தகைய நிாக்குண அத்விதீயபபிரஹ்மத்தை அந்த யோகி தன்னுன்மரூபமாயுணர்வன். இப்போது அநிாககுணபபிரஹ்மத்தே அத்விதீயரூபததன்மையை வெளிபபடையாய் நிரூபிபபாம:—ஹே ஆசுவலாய னரே! ஸ்ரீ உமாதேவிபாரோடுகூடிய சகுணப்பிரஹ்மம் நிாக்குணபபிரஹ்மத்தி னும் வேறன்றாம்; மறறோ, உபாதிபரிததியாகமாகவே சகுணபபிரஹ்மமே நிாக் குணப் பிரஹ்மமாம். இத்தகைய அதவிதீயப்பிரஹ்மத்தினும் வேறாக ஒரு பொருளுமின்றாம. பிரஹ்மா, விஷ்ணு, ருததிரர், இநதிராதிதேவதைகள், அக் கினி, சூரியன், சநதிரன், காலம, 11 இந்திரியம, அந்தக்கரண சதுஷ்டயம், பஞ்சப் பிராணன், ஆகாசாதி பஞ்சபூதம், கிழக்கு முதலிய 10 திசைகள், ஜராயுஜாதி, 4 பூதப்பிராணிகள், பிரஹ்மாண்டம், விராட்டு, ஹிரணியகருப்பர், ஜீவர், ஈசுரர், மாயை, மாயாகாரியரூப தூலசூக்குமஜகத், பூதபவிஷ்யத்வர்த்தமானப் பொருள்

கள் என்பனவாதியாய உலகம் முழுதும் பிரஹ்மரூபமேயாம்; அதனினும் வேறாக ஒரு பொருளுமின்றாம். 'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம' இவ்வெல்லா வுலகும் பிரஹ்மரூபமேயாம் என மறையுமறைகின்றது. கனவின்கண்ணே ஒரே கனாக்காண்பவன் நானாபாவத்தை யடைவதேபோலப் பரமான்மாவொன்றே மாயையின் சம்பந்தத்தானே நானா உலகவடிவமாயிருக்கும். உண்மையாய்க் கந்தர்வநகரமற்ற ஆகாசத்தே அக்கந்தர்வநகரம் உதயஸ்திதிலயபாவத்தேபோல உண்மையாய்ச் சர்வ த்வைதப்பிரபஞ்சரகித இவ்வானந்தவடிவ ஆன்மாவின்கண் ணித்தத்வைதப்பிரபஞ்சம் உதயஸ்திதிலயத்தையடையும். இத்தகைய அத்விதீய ஆன்மஞானமன்றி வேறொரு மோக்ஷமார்க்கம் இப்போதுமில்லை, முன்னருமில்லை, இனிமேலுமில்லை, இதுவே யதுவாம். 'நாந்ய: பந்தா வித்யதேயநாய' மோக்ஷப்பிராப்தியின்பொருட்டு ஆன்மஞானமின்றி வேறொரு மார்க்கமில்லை, இதுவே யதுவாம் என மறையுமறைகின்றது. தன்னானந்தவடிவ ஆன்மாவைச் சர்வ பூதங்களிடத்தும் வியாபகமாயும் யாவற்றையும் அதன்கண்ணே கற்பிதரூபமாயும் காண்பவனே பிரஹ்மபாவத்தையடைவன். இவ்வுபாயமன்றி வேறெவ் வுபாயத்தானும் அஃதுண்டாகாதலின், அதிகாரி ஆன்மஞானத்தை யவசியம் சம்பாதனஞ்செய்க. முற்கூறிய முறையே ஆன்மாவைப்பற்றிய ஆற்றலற்றவன் முதலி லிவ்வாறு தியானஞ்செய்க:—ஓராணியைக் கீழ்வைத்து மற்றோ ராணியை மேல்வைத்து இரண்டனிடையில் நீண்டமத்தைவைத்துக் கயிறுபூட்டி அடிக்கடி கடைதலால் அக்கினி வெளியாதல்போலத் தன் தேகத்தைக் கீழரணியாகவும், மும்மாத்திரைவடிவப் பிரணவத்தை மேலரணியாகவும், மனத்தை மத்தாகவும், தியானமாகிய கிரியையைக் கயிறாகவும், சிந்தித்து நிரந்தரம் தியானஆவிருத்திவடிவாகக் கடைதலைச்செய்க; செய்யவே, இத்தகைத்தே அத்விதீய ஆன்மரூப அக்கினி வெளிப்படும்; அஃதொரு முறை வெளிப்படினும் காமக்குரோதாதி சர்வ பாசங்களையும் பொடியாக்கும்; பொடியானபின் னதிகாரி அத்விதீயரூபமாய நிலைபெறுவன். ஹே ஆசுவலாயனரே! யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேன் எனனும் ஞானரூப அக்கினி காமாதி சர்வ பாசங்களையும் தாகஞ்செய்யும்; த்வம்பதார்த்த ரூபஜீவன் தத்பதார்த்தரூபப் பிரஹ்மத்தினும் வேறன்றாம்; மற்றோ, பிரஹ்மரூபமேயாம்.

சங்கை:—ஹே பகவான்! ஜீவன் பிரஹ்மரூபமேயாயின் இவனுக்கு ஜன்ம மரணரூபச் சம்சாரப்பிராப்தியேன் உண்டாகின்றது?

சமாதானம்:—ஹே ஆசுவலாயனரே! சேதனத்தை யாசிரித்து அதனையே விடயஞ்செய்யும் அவித்தைரூபமாயையால் மறைந்த பிரஹ்மமே ஜீவரூபமாதலின் அவ்வஞ்ஞானத்தானே சம்சாரத்தையடையும். அம்மாயையால் மறைந்த பரமான்மா நானா உபாதிகளில் நிவாசஞ்செய்யும்; புருடப்பெயரையுமடையும். அம்மாயா சம்பந்தத்தானே இவ்வான்மா சீவபாவத்தையடைந்து நால்வகையாய புண்ணிய பாவகருமஞ்செய்யும்; சுகதுக்கபலத்தையும் போகிக்கும். மாயையோடுகூடிய ஆன்மா நனவின்கண்ணேயுங் கனவின்கண்ணேயும், நால்வகையாய சரீரங்களைக் கவரும். உண்மையாய் ஜன்னியபோகங்களால் திருப்தியற்றதாயினும், மாயாசம்பந்

தத்தானே அவ்வச்சாதிச் சரீரங்களிலிருக்கும் அநேக போகங்களால் திருப்தியை யடையும். அதுவே மூர்ச்சைக்குச் சமானமான சுழுத்தியவஸ்தையுமடைந்து விக்ஷேபரூபத்தடையற்றுத் தன் சொரூபாநந்தத்தைப் போகிப்பினும் மாயையின் சம்பந்தத்தானே அறியாது. மந்திர ஔஷதாதிகளால் மூடஅவஸ்தையையடைந்து தன் பிராஹ்மணத்தன்மையையும் க்ஷத்திரியத்தன்மையையும்மற்றவற்றையும் அறியாததேபோல இச்சம்சாரத்தே மாயையால் மூட அவஸ்தையையடைந்த ஜீவான்மாத் தன்னுண்மைவடிவத்தையறியாது. இயல்பாகவே களவு முதலிய தோஷமற்றவனயினும் தருமான்மாக் கள்வரின் சங்கத்தையடையின் பந்தனத்தையடைவதேபோல உண்மையாய் ஜன்மமரணுதி சம்சாரமற்றதாயினும், ஜீவான்மா மாயையின் சங்கத்தையடையின் அச்சம்சாரத்தையடைந்ததேபோலத் தோற்றும். உண்மையாய் ரூபரகித ஆகாசத்தின்கண்ணே மோகவயத்தானே நீலரூபத்தைக் காண்பதேபோல உண்மையாய் மாயாரகித ஆன்மாவின்கண்ணே மாயையும் மாயையினனே தோற்றுமாதலின் அதவிதீய ஆன்மாவின்கண்ணே இவ்வுலகம் மாயையாற கற்பிதமாதலின், பொய்யேயாவதுபோல அம்மாயையும் மாயையாற் கற்பிதமாதலின் பொய்யேயாம். தன்சித்தியில் தன்னபேக்ஷையுறல் ஆன்மாசிரயதோஷமடைவுறுமெனும், முடியாதகாரியத்தைச செய்தலாற் செய்யாததைச்செய்யுஞ் சமர்த்தையென்னும நாமம்வாய்ந்த மாயையின்கண்ணே அத்தோடம் சமபவியாதாம். சர்வ சாஸ்திரங்களையும் உணர்நத அறிஞனும் கனவின்கண்ணே நித்திரைத தோடத்தால் நானவகையாய மோகததையடைவதேபோல உண்மையாய்ச் சர்வ மோகமற்றதாயினும் ஆன்மா மாயாரூபதோஷத்தானே சம்சாரததே நானவகையாய மோகத்தையடையும். நித்திரையின்கண்ணே யுறங்குபவன் அஃதொழியும்வரை அக்கனுத் துககஙகளையடைவதேபோல, ஜீவான்மாவும மாயாரூப நித்திரையின் நாசபரியநதம் இச்சம்சாரசொப்பன அநேக துக்கங்களையடையும். கனவின் கண்ணே சிங்கசர்ப்பாதிகளைக்கண்டு துக்கததாலழுது பெருமூசசெறிதலோடுங் கூடிய பயாநகசப்தங்களைச் செய்துகொண்டிருப்பவனை ஒரு தயாளுவானவன் பேரி முதலிய பெருஞ் சப்தங்களால் விழிப்பிப்பதேபோல மாயாரூப நித்திரையின் கண்ணே இச்சம்சாரரூபக் கனவாற பீடிக்கபபெறறதும முத்தாபங்களோடுகூடியதும் ஆகிய ஜீவான்மாவைப் பிரஹ்மவேத்தாவாய தயாளுகுரு மகாவாக்கியரூபப் பேரிச்சபதத்தால மாயாரூப நித்திரையினினறுமவிழிப்பிப்பர். நனவையடைவுற்ற கனுக்காண்பவன் மீண்டும் அக்கனுச் சம்பந்தியாய துக்கங்களை யடையாததே போலப் பிரஹ்மவேத்தாவாய குருவினுபதேசத்தால் அவித்யாரூப நித்திரையினின்றும் பிரஹ்மஞானரூப நனவவஸ்தையை யடைவுற்று மீண்டும் சம்சாரரூபக கனுத்துக்கங்களையடையான். ஹே ஆசுவலாயனரே! இத்தகைய பிரஹ்மஞானததின் பிராப்தியானது இச்சீவர்கட்கு அநேக ஜன்மபுண்ணிய கருமத்தாலுண்டாமாதலின் அத்துரீய அவஸ்தை அத்தியந்தந் துர்லபமாம்; ஒரு பாக்கியவானுக்கே கிடைக்கும்.

சங்கை :—ஹே பகவன்! துரீயமென்பது நான்காவதற்காம்; அதுவும் மூன்றைபபேக்ஷித்தாமாதலின் ஈண்டுப் பிரஹ்மஞானரூபதுரீய அவஸ்தைக்கு எம் மூன்றவஸ்தைகளி னபேக்ஷையால் துரீயரூபத்தன்மையாம்?

சமாதானம் :—ஹே ஆசுவலாயனரே! நனவுவடிவ தூல அவஸ்தை, கனவுவடிவ சூக்கும அவஸ்தை, துயில்வடிவகாரண அவஸ்தை என்னும் மூன்றும் ஜீவான்மாக் கிரீடைசெய்யும் ஸ்தானமாமாதலின் புரமெனப்படும். அம்முப்புரமும் துரீய அவஸ்தையின் அடைவுறவே நாசத்தையடையும்; பிரஹ்மஞானத்தானன்றி வேறெவ்வுபாயத்தானும் நாசமுறாதாமாதலின் அம்மூன்றை யபேக்ஷித்து அதன் கண்ணே துரீயரூபத்தன்மை சபலிகரும். அஃதடைவுறுதவரை ஜீவான்மா முன்னறம்பாவவயத்தானே அடிக்கடி மரணமுற்றுத் தூலதேகங்களைக்கவர்ந்தும் விடுத்துமிருக்கும், பிறக்கும், பாலியமாம், யௌவனமாம், விருத்தமாம், மரணமாம், மீண்டும் பிறக்கும். இவ்வாறு அறமபாவவயத்தால் ஏற்றமரம்போலச் சம்சாரத்தே சுழலும்; இதுவே ஜீவான்மாவின் முப்புரக்கிரீடையாம். யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேன் என்னும் ஆன்மஞானப்பிராப்தி யுண்டாகாதவரையுமே அறமபாவனுசாரம அநேகவகை மேற்கீழ்த தேகங்களையடையும், மரணமுறும்; ஆன்மஞானமடைந்தபின் ஜனியாது; மரியாது. குருசாஸ்திர உபதேசத்தானே எத்துரீயத்தை யுணாநது ஜன்மமரண மறலாமோ, அது சாவ ஜகத்தின் ஆதாரரூபமாம, கேவலம சுருதியானே கூறத்தகுதியதாம், சுயஞ்சோதி யாநந்தவடிவமாம், சர்வ ஜகத்தின் காரணமாம், உண்மையாய்க் காரியகாரணபாவமற்றதாம், இத்தகைய தினின்றே பிராணனும், மனமும், வாக்காதிகளும், ஆகாசாதிகளும் உண்டாம். இத்தகைய துரீய பரமான்மாவைப பிரஹ்மவேத்தாக்களாய மகான்மாக்கள் அதிகாரிகட்கு இவவாறு ஆன்மரூபமாய் உபதேசிதத்துளார் —ஹே மைநத! சாவததிறகும் ஆன்மரூபமும், சாவ விசுவத்திறகும ஆதாரமும், முப்பரிச்சேதமின்றியதும, சூக்குமபதாரத்ததினும அத்தியநதம சூக்குமமும, உறபததி நாசமறறதும் ஆகிய அதவிதீயப பிரஹ்மமே உனது சொரூபமாம; உனது வடிவமே அதவிதீயப பிரஹ்மத்தின்வடிவமாம என ஜீவபபிரஹ்ம அபேதத்தை யுபதேசிப்பா. நனுக்கனுத துயில என்னும மூன்றவஸ்தைவடிவப பிரபஞ்சத்தைப் பொளிர்விகதும சாக்ஷி சைதனயமாகிய பிரஹ்மமே யான் என அபேதத்தை நிச்சயிப்பவன் காரியசகித அவித்தைவடிவச சர்வ பநதமுமறறவனுவன், நனவுமுதலிய மூன்றவத்தைகளில முறைப்படி தூலசூக்ஷமம ஆநந்தமெனனும மூவகைப் போக்கியமிருக்கும், விசுவாதி மூவகைப போக்தாககளிருப்பா, போக்கியங்களை விடயீகரிக்கும அந்தக்கரண அலலது அஞ்ஞானவிருததிரூபப் போகமிருக்கும் இம்மூன்றையும் தூய ஆன்மாவாய யான் சாக்ஷிரூபமாயொளிரவிபபேனுகலின சைதன்ய வடிவச் சுத்தான்மாவாய யான் போககியாதி மூன்றினும் விலக்ஷணன், எபபோதும துரீயசிவரூபன். கருத்திதுவாம:—விசிஷ்டவடிவம சுத்தவடிவத்தினும வேறன்றுமாயினும், சுத்தவடிவம விசிஷ்டவடிவததினும் பின்னமாம் என்பது சாஸ்திரக்காரர்களின் சித்தாநதமாம. கடதவாதி தரும விசிஷ்ட மிருததிகை சுத்தமிருத்திகையினும் வேறன்றுமாயினும சுததமிருததிகை அவ்விசிஷ்டமிருத்திகையினும் வேறுவதேபோல, விசுவாதி விசிஷ்டவடிவம் தூயசேதனத்தினும் வேறன்றுமாயினும் அது விசிஷ்டததினும வேறும; ஏனெனின் மோக்ஷ அவஸ்தையின்கண்ணே விசிஷ்டத்திற்குப் பாதமுண்டாயினும் சுத்தசேதனசொரூபமிருக்கும். இக்கருத்தானே.

"த்ரிஷுஸ்யாநேஷு யத்போக்யம் போக்தா போகஶ்ச யத்பவேத் ।
தேப்யோ விலக்ஷண: ஸாக்ஷீ சின்மாத்ரோஹம் ஸதாஶிவ: ॥"

"புகலுமுப் பதத்திற் போகம் போக்கியம் புசிப்பா னேநா
னிகழுமித் தனைக்குஞ் சான்றாய் நின்றதற் சொரூப னேநா
னிகழுவ தென்பா லென்பா னிற்பது மிறப்ப தென்பாற்
சகலமு மாத லாலே தற்பரம் பொருளா கின்றேன்.

(பொ-ள்.) முன்மொழிந்த மூன்றிடத்தும விருத்தியால் விடயத்தை யனுபவிப்பவன் யானே, தோற்றுநின்ற எவற்றிற்கும சாக்ஷியாயிருக்கும பரமசிவன் யானே, யாவும் என்னிடத்தே உதித்திருந்தொடுங்குமாதலின் சதாசிவன் யானே. என்னும் சுருதியும் அவ்விசிஷ்டவடிவத்தினும சுத்தத்தைத்ன்யம் விலக்ஷணம என விளம்புகின்றது. ஹே ஆசுவலாயனரே! இவவாறு பிரஹ்மவேதத்தாக்குருவாயிலாய் ஆன்மாவின் வாஸ்தவவடிவத்தைச சிரவணித்து இங்ஙன ஆன்மவடிவத்தை மனனஞ்செய்க :—இவவெல்லா வுலகும ஆன்மாவாய என்கணணே உதய திதி லய மேவுமாதலின சாவ பேதமுமறற அத்விதீயபபிரஹ்மமே யானுகின்றேன். என்னினும் பிரஹ்மம் வேறன்றுமாதலின் சாவ வேதங்களுூ என்னை விசுவரூபன், புராணபுருஷன், சாவதேஜஸினிதி, சம்பூரணஞான கருமேந்திரியமறறவன், உயிர்ப்பு மதி முதலியன அறறவன், பகவானுகிய பரமேசுரன், சாவஞ்ஞன், சாவ துவைதங்களுமறற அத்விதீயன், மனவாணிகட்கவிஷயன், சாவ வேதங்கட்கும வேத்தியன், சர்வ வேதாநதபபொருட பிரகாசகன், சாவ வித்தையின்குரு, தேவன், சாவப் பிரபஞ்சரகிதன் எனனும்; என்னை? நின்மல ஆகாசத்தே கந்தாவ நகரம் கற்பிதமாய்த தோறறலேபோல, ஆநந்தவடிவ அத்விதீய ஆனமாவாய என்னிடத்தே இம்மாயாசகித சம்பூரணப பூதபௌதிக உலகம கறபிதமாம். அதிஷ்டானத்தினும் கறபிதவஸ்து வேறன்றுமாதலின் கற்பிதத்தான என் வடிவத்தே முக்காலத்தினும் பேதமாகாதாம. இவ்வாறுராய்ந்து அடைந்த சுத்தபபிரஹ்மம அத்விதீய ஆநநதவடிவமாம, சாவ புத்திகளினுமிருப்பதாம, சாவ புத்திகட்குஞ் சான்றும், உதயநாசமறறதாம, தூலசூக்குமஜகமற்றதாம். ஹே குழந்தாய்! இவவாறு அந்தப் பிரஹ்மாவானவா ஆசுவலாயன மகரிஷிக்குச சகுண நிாக்குணப பிரஹ்மத்தியான பூாவகம் ஆன்மஞானோபதேசஞ் செய்தனராதலின, அதிகாரியும ஆன்மஞான அடைவின்பொருட்டு நிர்க்குணபபிரஹ்மத்தியானத்தையேனும சகுணப்பிரஹ்மத தியானத்தையேனும அவசியமாய்ச்செய்க. அந்தக்காரணமலின தொடக்கத்தே முன்மொழிந்த சகுணபபிரஹ்மத்தையும, நிாக்குணபபிரஹ்மத்தையும் சாக்ஷாத்கரிக்க முடியானுயின், அதன்பொருட்டு விரைவாகத் துறந்காது முதலில மனததூய்மையுபாயஞ்செய்க. அதற்காக நூறகளில கூறும சாவ சாதனங்களுக்குள் 'ருத்ரம்' என்பதாதி ருத்திர அத்தியாய பாடசமானமாய் வேறெச சாதனமுமின்றும; அதுவே சர்வ பாவங்களையும் நீக்குவததாாதலின தன் மனத தூய்மைக்காகசசிரத்தைபக்திவாயிலாய் நிரந்தரம அதனையே ஜபஞ்செய்க. அதனலே மனத்தூய்மைவாயிலாயேனும், முனமொழிந்த காபப துக்கவிசாரத்தாலேனும, மரணகாலஞானத்தாலேனும, அஷ்டாங்கயோகத்தாலேனும், உபாசனை முதலிய

வற்றுலேனும், வைராக்கிய அடைவுண்டாயின சந்யாச ஆசிரமத்தைககவர்க. கவரினும் ஆனமசாக்ஷாதகாரம உண்டாகாதவரை ருத்திராததிபாய ஜபபூாவகம் ஸ்ரீ உமாதேவியாரோடுறற ஸ்ரீ மகாதேவரைத தியானம் அவசியம செய்க. செய்யவே ஆன்மஞானவாயிலாய் மோக்ஷபபிராபதி அவசியமுண்டாம்.

"உமாஸஹாயம் பரமேஶ்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரஶாந்தம் ।
த்யாத்வா முநிர்கச்சதி பூதயோநிம் ஸமஸ்தஸாக்ஷிம் தமஸ: பரஸ்தாத் ॥"

பத்தியாற் குரவன் பதம்பணிந் திதய பங்கயந் தனைநினைந் ததிலே
நித்தமா யொருவ ரானினைப் பரிதாய் நிமலமா யெங்கணு நிறைந்து
சுத்தமாய்ச் சாநத மாயனைத் துலகுந தோற்றுதற் கியோனியாய்ச் சுபாவ
சித்தமா யமுதா யருவமா யொன்றாய்ச் சிற்சதா நந்தமாய்ச் சிவமாய்.

உரியநால் வேதத்தோமெனும் பொருளாயுள்ளதா யுள்ளவெப்பொருட்குங்
கரியதாய் நின்ற வொன்றினைக் காள கண்டமுங் கண்ணொரு மூன்றும்
பிரிவிலா மங்கை பாகமு மாகப் பேணு நற பாவனை பெறுவா
னரியதா யருளி னுல்வரும் விசசை யதனினு லதனையே யடையும்

(பொ-ள்.) அனபோடு மாசிரியா திருவடியைத தியானிதது இருதயதாமரையைச சிநதிததனகண்ணே, நிததியமாயும, ஏவரானு மெண்ணறகொண்ணுததாயும், நின்மலமாயும, யாண்டும நிறைநததாயும, தூயதாயும், சாநதமாயும், சாவ லோகஙகளும உதிததறகுக காரணமாயும, இயலபானே சித்திததாயும், அமிருதமாயும, அரூபமாயும், ஏகமாயும, சிததாயும, ஆநநதமாயும, சிவமாயும, நான்கு வேதஙகளிற பிரதிபாதிககபபட்ட பிரணவபபொருளாயும், எனறுமிருப்பதாயும, இருககுமபாவறறிறகும சான்றாயும், நின்ற பரமான்மாவை நீலகண்டமுடையதாயும, முககண்ணுடையதாயும், ஸ்ரீ உமாதேவி பிரியாத அாததநாரீசுர வடிவுடையதாயும, தியானம செயபவன திருவருளாலுண்டாம சிவஞானததாற சிவத்தையே தன்வடிவமாய்பபெறுவன். அதிகாரியானவன் துறவுறறுச் சிரததையோடு மெயமோதும பிரஹ்மஞானியாய ஆசிரியா வாயிலாய் வேதாந்த சாஸ்திர சிரவண மனன நிதித்தியாசனஞ்செயக, குருபக்தியைசசெய்க, அதனுல் பிரஹ்மசாக்ஷாத்காரப பிராபதியாம பிரஹ்ம உபநிடததேதே யாம்கூறிவந்ததே யம்ஸ்தாமாதலின் துறவிகள் அனவரதம வேதாநத சிநதனமேசெய்க.

"ஆஸுப்தேராம்ருதே: காலம் நயேத்வேதாந்தசிந்தயா ।
தத்யாந்நாவஸரம் கிஞ்சித் காமாதீநாம் மநாகபி ॥"

"துறவுற முறைந்து துயின்முதன் மரணந் தொடாவரை நிரந்தரந் தூயோன்
மறைமுடி யதனைச் சிந்தனம் புரிந்தே மாற்றுக பழுதறப் பொழுதை
நிறைதருந் தனது மனந்தனிற் காம நெடுஞ்சின முதலிய வாய
குறைகளுக் குறைய விறையளா வேனுங் கொடுத்திடா திடங்குல வுகவே."

(பொ-ள்.) சந்யாச ஆசிரமந்தைத்தரிதது அதிகாரியானவன் சுழுப்திமுதல் மரணபரியந்தம் நிரந்தரம வேதாநதசாஸ்திரசிநதனஞ் செய்தே காலத்தைக்கழிக்

குக, அதனுலே தன்னுளத்தே காமக்குரோதாதி விகாரங்கட்குச் சிறிதுமாத்திரையும் இடங்கொடுக்கவேகூடாது. இங்ஙனம், அனவரதம் மறைமுடிபாராயும் துறவிக்குவிரைவாகவே ஆன்மசாக்ஷாத்காரபபிராபதியாம. ஹே குழந்தாய்! இத்தகைய பரமஹமச சநயாசத்தால அதிகாரிக்கு ஆன்மசாக்ஷாதகாரபபிராப்தியாம; எனபதன்கண்ணே சர்வஞ்ஞசுவேதகேதுவே திருஷ்டாநதமாம; ஏனெனின், சாவ சநயாசிகளினும மேன்மைமிகக சுவேதகேதுவென்னும் சநயாசி பூர்வம் சாநதோககிய உபநிடததகின் ஆறாவது அததியாய சிரவணமனனுதிகளாலும் முன்மொழிநத வைராக்கியாதிசாதனங்களாலுமதனதுண்மைவடிவத்தையறிநதனராதலின இககாலததிய பரமஹமச சநயாசிபரும் சிரவணுதியுபாயங்களால் ஆன்மஞானததை யவசியம சமபாதிக்குக; ஏனெனின், பரமஹம்ச சநயாசிகட்கு ஆன்மஞானநிஷ்டைவடிவ ஆசாரமே முககியமாம்; மாருயமறறைய ஆசாரங்களெலலாஙகவுணமாமாதலின் மறறைப எலலா ஆசாரங்களையும பரிததியாகிததுக் கேவலம் ஞானநிஷ்டைவடிவ ஆசாரததையே சம்பாதனஞ்செய்க. ஹே குழந்தாய! நீ முன் பரமஹமச சநயாசததே வினவினுய், யாம் அதன்வடிவததையும், அதிகாரியையும, வைராககியாதிசாதனஙகளையும, கவரும முறையையும விஸ்தாரமாய்ககூறினேம. இபபோது யாதுகேட்க நினககுவிழைவெழுகின்றதோ அதைக் கேட்பாயாக.

பதினேன்ருவது அத்தியாயம் முற்றிற்று.



# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## பன்னிரண்டாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநமஃ ஸ்ரீ குருப்யோநமஃ ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நமஃ ஸ்ரீ சங்கராசார்யேப்யோநமஃ.

முன் 11-வது அததியாயத்தே ஜாபாலாதி 11 உபநிடதப்பொருள் நிரூபிக்கப்பட்டது. இபபோது இவ்வததியாயததே சாமவேத சாநதோக்கிய அாததம் நிரூபிக்கப்படும. முன்னத்தியாயங்களில நாலுவகையாய விசித்திரக் கதைகளைக்கேட்டு மகிழ்வுறற சிரத்தையேயுடையசீடன் சுவேதகேதுவின் கதையைச் சிரவணிபபான் மீண்டும் தன்னுசிரியாபா லிவ்வாறு வினவுவானுயினன் :—ஹே பகவன்! முன்னா ஐதரேய இருஷியும, கௌஷீதகி இருஷியும், சூரியபகவானும், சுவேதாசுவதர இருஷியும, கட இருஷியும், தித்திரி இருஷியும், ஜாபாலாதிக இருஷிகளும் தத்தம் சீடர்பொருட்டு எவ்வெப்பிரஹ்மவித்தையைக் கூறினரோ அவ்வப்பிரஹ்மவிததைகளையும், வைராக்கிய யோக உபாசனை சநயாசம முதலிய சாதனங்களையும் கூறினீர்கள், அவ்வியாவறறையும் தங்கள் வாயிலாய்க்கேட்டேன்,

பிரசங்கவாயிலாய் அநேக வகையாய விசித்திர ஆக்கியானங்களையுங்கேட்டேன். ஹே தேசிகோத்தமரே! முதலத்தியாயத்தே தாங்கள் இருக்குவேத ஐதரேய உபநிடதப்பொருள் கூறும்போது, பிரஜைகள் துக்கிகளாயிருத்தலைக்கண்டு கருணையோடுகூடிய சனகாதிகள் அவர்களின் இதப்பொருட்டுப் பிரஹ்மஞானோபதேசஞ் செய்தனர்கள்; அவருள் ஒரு வாமதேவரென்னும் அதிகாரி மிருத்தியுவையடைந்து தாயின் கருவிலிருந்து ஆராயுமதிகாரிகளின் இதப்பொருட்டுப் பிரஹ்மஞானத்தையுபதேசித்தனர் அவ்வுபதேச விசாரத்தானே அதிகாரிகள் காமலகம்போலத் தேகாதி ஜடசங்காதத்திலும் விலக்ஷண சாக்ஷியான்மாவைப் பிரஹ்மரூபமாயறிந்தார்கள் அவ்வுபதேச சிரவணமனனஞ்செய்தலானே விடயா சக்தராய காமிகட்கும் தந்தேகத்தும் மனைவிமக்களாதி தேகத்தும் தீவிரவைராக்கியமுண்டாம்; எனக்கூறினீர்கள். 2-வது 3-வது அத்தியாயத்தே அந்த இருக்குவேதத்தின் கௌஷீதகி யுபநிடதப்பொருளைக்கூறும்போது, இந்திரனோடு போர்செய்ய விழைந்து திவோதாச அரசரின் மைந்தனுப பிரதர்த்தனன் சுவர்க்கத்தையடைந்து அமராபுரிந்து இந்திரனைவெற்றிகொண்டனன். அவனது முயல்வைக்கண்டு மகிழ்வுற்ற இந்திரன் வரந்தந்தனன்; அஃதுமற்றைபர்க்குறுவது அத்தியந்த துர்லபமாம் எனவும்; பாலாகிப பிராஹ்மணர் எல்லாததேச வித்துவான்களையும் வெற்றிகொண்டு ஸ்ரீ காசியின்கண்ணே அஜாதசத்துருவின் சமீபத்தேசென்று அரசரது தண்டமொழிகளைக்கேட்டு அபிமானமற்றவராய் அவர்பா லுபதேசம்பெற்றனர் எனவுங் கூறினீர்கள். 4-வது 5-வது 6-வது 7-வது அத்தியாயத்தே யஜுர்வேதத்தின் பிருகதாரண்யக உபநிடதப்பொருளைக்கூறும்போது, 2 புருடவம்சம், 1 ஸ்திரீவம்சம், என்னும் மூன்றன்கண்ணுள்ள இருஷிகளின் பரஸ்பரபேதமும் அபேதமும் சம்பவிக்குமெனவும், ததயங அதாவண இருஷி இந்திரனுக்குப் பிரஹ்மவித்தையை யுபதேசிக்க, அதைக்கேட்டுக் கோபமுற்ற அவ்விந்திரன் மீண்டும் அதையுபதேசியாமலிருக்குமாறாணையிட்டனன். பின்னவா தமமொழியைமெய்யாக்கும்பொருட்டு அசுவினீ குமாரர்கட்கு அதை யுபதேசிக்கச் சினமுற்றவலாரி (இந்திரன்) அவர்சிரத்தையறுத்தெறிந்தனன். அசுவினீ குமாரரும் பிரஹ்மவித்தியாலோப த்தானே தமது குருவின் மஸ்தகத்தை வெட்டிக்குதிரைக்கழுத்தில்வைத்து, அத சிரத்தையறுத்துக் குருவின் கழுத்தில வைத்தனர் எனவும், ஜனகராஜாவின் ய சபையில் ஆசுவலாதி மறையவரோடு யாஞ்ஞவற்கிய முனிவரின் ஜல்பகதை ந தது, யாஞ்ஞவற்கியரின் சாபத்தால சாகலயரது மிருத்தியுவுண்டாயது என பரஸ்பரம் வெற்றிபெற நூறபொருள் விசாரஞ்செய்தல் ஜல்பமாம். யாஞ்ஞ ப முனிவருக்கு ஜனகராஜாவோடு இருமுறை வாதகதை நடந்தது எனவும், து வத்தையறிய இச்சித்துப்பரஸ்பரம சாஸ்திரார்த்த விசாரஞ்செய்தல வாதக ம். யாஞ்ஞவற்கிய முனிவருக்கும் அவர் மனைவியாகிய மைத்திரேயிக்கும் ாத வாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தைகூறப்பெற்றது, அவர் சந்யா சிரம முற்றனர் எனவுங் கூறினீர்கள். 8-வது அத்தியாயத்தே அந்த யஜுர் த்தின் சுவேதா சுவதர உபநிடதப்பொருள் கூறும்போது, சுவேதா சுவத வருக் கும் சந்யாசிகட்கும பூர்வவேத வேத்தாப் பிராஹ்மணர்கட்கும் பர ஜகத்

காரண விசாரம் நடந்ததெனவுங் கூறினீர்கள். 9-வது அத்தியாயத்தே அந்த யஜுர்வேதத்தின் கடவல்லியுபநிடதப் பொருளைக்கூறும்போது தருமராஜா நசிகேதாக்களின் சம்வாதவாயிலாய் நானுவகைப்பவாகங்களோடுகூடிய ஆக்கியானத்தைக் கூறினீர்கள் 10-வது அத்தியாயத்தே அந்த யஜுர்வேதத்தின் தைத்திரீய உபநிடதப்பொருளைக் கூறும்போது, வைசம்பாயனரின் ஆணையை முன்னிட்டு யாஞ்ஞவற்கிய முனிவர் வாந்திசெய்த யஜுர்வேத மந்திரங்களை மறையவர் தித்திரிப்புள் வடிவெடுத்துப் பக்ஷணஞ்செய்தலின் அம்மந்திரங்களிற் கிருஷ்ண யஜுர் வடிவத்தன்மை பிராப்தமாயது பிரஹ்மவித்தையைப்பெறும்பொருட்டுப் பிருகு இருஷி வருணபிதாவிடத்தே ஐந்துமுறை சென்றனர் வேநன் என்னுங் கந்தருவன் தன்னான்மானுபவத்தைக் கூறினன் எனவும். சத்தியாதி சாதனங்களுக்குள் சந்யாசரூப சாதனம் மேன்மையதெனவும் கூறி அச்சந்யாசத்தைத் துதித்தீர்கள். 11-வது அத்தியாயத்தே ஜாபாலாதி 11 உபநிடதப்பொருள் கூறும்போது, ஜாபால பரமஹம்ஸ ஆருணி யுபநிடதங்களிற் கூறிய சந்யாசம் வேதசாகைகள் பேதமுறினும் பேதமாகாததாம், மற்றே, எல்லா வுபநிடதத்தும் ஒரே சந்யாசங் கூறப்பெற்றுளது எனவும், அவ்வைதப்படையும் உபாயமாகிய வைராக்கியப் பிராப்தியின்பொருட்டு மரணத்தின் அநேக நிமித்தங்களோடு நானுவகைப்பாய போகங்களையும் கூறினீர்கள், காப்ப உபநிடதத்தே போகோபபோகிப்பாப அநேகம் பொருள்களை நிரூபித்துப் பிரசங்கத்தானே ஸ்ரீ வசிஷ்டர் கூறிய அற்புத யோகத்தையும் கூறினீர்கள். அமிருதநாத ஹம்ச க்ஷுரிகை யுபநிடதங்களில் வேத சாகைகளின் பேதங்களால் நிருபித்திருக்கும் யோகங்கள் யாவற்றையும் வெவ்வேறாய் நிரூபித்தீர்கள். பிரஹ்ம அமிருதபிந்து நாராயணீய மக ஆன்ம பிரபோத கைவல்ய உபநிடதங்களிற் கூறிய பிரஹ்மவித்தை யாவற்றையும், பரமஹம்ச சந்யாசிகளாய சமவர்த்தகாதி சந்யாசிகள் எல்லாவுலகரினும் விலக்ஷண ஆசாரமுடையவராய் நிகழ்ந்ததும், அதைக் கவர்வதனக்கண்ணே வைராக்கியமே காலமெனவும், காப்ப துக்கமே முதலான நானுவகையாய உபாயங்களால் வைராக்கியத்தையடைவுற்றவனே பரமஹம்ச சந்யாச அதிகாரியெனவும், சந்யாசஞ்செய்து கொள்ளுமுறை, அவன் மரித்த பின்னுற்றும் சம்ஸ்காரம், அவன் வேஷம், அவன் ஆசாரம், இத்தன்மைத்தெனவும் விஸ்தாரமாய்க் கூறினீர்கள். 11-வது அத்தியாயவீற்றில் சுவேதகேதுவைத் தாங்கள் வருணித்தீர்கள்: அவர் பிரஹ்மஞானத்திற்கு முன்னரும் சர்வஞ்ஞரென்றீர்கள் அவர் விடயம் மிகவும் ஆச்சரியகாரணமாமாதலின் அதைக்கேட்க எனக்கு மிகவும் அபிலாஷையிருக்கின்றது. தாங்கள் 11-வது அத்தியாயவாதியில் சர்வலோக விலக்ஷண ஆசாரமுடைய சமவர்த்தகாதியரைக் கூறுங்கால் சுவேதகேதுவையும் கூறினீர்கள்; மீண்டு மீற்றில் அவரைக்கூறுவானேன்? சர்வஞ்ஞராய அவர் எத்தோஷத்தால் அறியாமையையடைந்தனர்? எம்மகான் மாச சுவேதகேதுவிற்குப் பிரஹ்மவித்தையை யுபதேசித்தனர்? அது எத்தகையது? என்னுமிவாவற்றையும் கிருபையோடும் சிரத்தையையுடைய அடியேற்குக் கூறவேண்டும். இவ்வாறு புத்திமானுப சீடனால் வினவப்பட்ட ஸ்ரீ குரு அவ்வன்பனுக்குச் சந்தோக்கியக்கதையைக் கூறத்தொடங்கினர்:—ஹே மைந்த! பூர்வம் சுவேதகேதுவெனப் பெயரிய இருஷிபாலகர் ஒருவரிருந்தார். அவரிடத்தே தாய்

தந்தையாகக்கு மிகவும் சிநேகமிருந்தது. ஆனாலவர் சிக்ஷிக்கப்படாத துஷ்டவிடை போலானார். எப்போதும் விளையாடுதலிலே பிரியமுடையவராதலின் 12 வருடம் வரை உபநயநமற்றவரானார். விளையாட்டின் மிகுதியானே ஒருகாலுண்பார் ஒருகாலுண்ணார். வேறு பாலகரையும், மங்கையரையும், மறையவரையும், கோ முதலிய பசுக்களையும், கடுமொழிகளால் நிராதரஞ்செய்து, தடி முதலியவற்றானே யடித்துவிட்டு விரைவாகவே தம் வீட்டில் ஓடி யொளிவர். இவ்வாறுபாலிய அவஸ்தையில் அவர் கூறியவிடைபோல யாவருக்குந் துன்பத்தையே விளைத்தனர். ஒருகால் விநயபூர்வகம் தமது பிதாபாற்சென்றனர், அவ்வாருணி இருஷி புத்திரனது உன்மத்தஞ்சேஷ்டையைக்கண்டு தமது சிந்தையில் சிறிது கிலேசத்தையடைந்து மைந்தனுக்குக் கூறுவாராயினர்:—ஹே மைந்த! அவிவேகத்தாலுண்டாய நேயவயத்தால் நாங்கள் உன்னைச் சிக்ஷிக்காது கொஞ்சிக்கொஞ்சி வளர்த்தோமாதலின் நீ யித்தகைய உன்மத்தத்தையடைந்தனை. மைந்தன், சீடன், மனைவி யென்னும் மூவரோடும் விளையாடலால் அநேகந் தோஷமுடையும், தண்டித்தலால் மிக்க குணமுண்டாம் என நீதிசாஸ்திரத்தே கூறியது பொய்யன்று மெய்யேயாம். நீதிசாஸ்திரத்தே கூறியதாவது:—தாய் தந்தையர் நேயவயத்தானே மைந்தனைச் சிக்ஷியாமற் கொஞ்சின் புத்திரனது சத்துருக்களேயவராவர்; ஏனெனின், கொஞ்சுதலால் உண்டாந்தோஷத்தால் இகலோகத்துந் துக்கத்தையே அம்மைந்தன் அடைவதன்றி மரித்தபின்னும் நரகத்தையடைவனாதலின், தாய் தந்தையர் மைந்தனைச் சிக்ஷையேசெய்க. 3 வருடம்வரைத் தாய் சிக்ஷிக்குக. காப்பாதானமே முதலேனும் பிறப்பிலிருந்தேனும், 8 வருடம்வரை தந்தை சிக்ஷிக்குக. 16 வயதுவரை ஆசிரியர் சிக்ஷிக்குக. பின் சாவ சிக்ஷையினின்றும் விலகுவன. 16-ன பின்னரும் மைந்தனிடத்தேனும் சீடனிடத்தேனும் சிக்ஷைசெய்யும் யோக்யதையிருப்பின், தந்தையேனும் ஆசிரியரேனும் அடி முதலியவற்றாற்சிக்ஷியாபல மித்திரனைப்போல வாணியாற் சிக்ஷைசெய்க இந்நீதிசாஸ்திரக்கூற்றுப்படி தாய் தந்தையர் மைந்தனை யவசியம் சிக்ஷிக்கவேண்டும். மொழிந்த மூவர் சிக்ஷையையும் ஏற்காத மூட்பாலகன் யௌவனமுற்றுப் பரம கிலேசத்தையுறுவன், இகலோகத்தே அரசர் முதலியோரால் பயமுறுவன், பரலோகத்தே யமராஜாவாற் பயமுறுவன். புத்திரனைப்பெற்ற மூவரும் அவசியம் சிக்ஷிக்கவேண்டும், வேறொருவன் சிக்ஷிப்பவனிருப்பினும் தாங்களும் அவசியம் சிக்ஷிக்கவேண்டும். நாங்களிருவரும் உன்னைச் சிக்ஷியாமையின் பிரஹ்மசரியமற்றவனாய 12 வருடத்தனாய். ஒரு அநாசாரி நிக்கிருஷ்டப்பிராஹ்மணனைப்போல நீயெமது குலத்தே யுண்டாகாதவன்போலப் புலப்படுகின்றாய். நீதிசாஸ்திரமரியாதையைப் பரித்தியாகித்தது நேயவயத்தால் இத்துணையும் உன்னைக்கொஞ்சிவளர்த்தலின் யானுனக்கு உபநயனசம்ஸ்காரஞ்செய்து உன்னைச் சிக்ஷிக்கலாம் என்பது மிகவும் முடியாததேயாம், நேயமுறுமென்பால நினக்குச்சிரத்தையுண்டாகாது. சிரத்தையின்றி வித்தையை யுபதேசித்தல் சாம்பரின்கண்ணே ஆகுதியிடலேபோல வீணாமாதலின், நீ வேறொரு ஆசிரியரிடத்தே சென்று உபதேசம்பெற்று வித்தையத்தியயனஞ்செய்து பிரஹ்மசாரி தருமங்களைச் சம்பாதித்துக்கொள். பிரஹ்மசரியாசிரமத்தைத் தரித்து வேதாத்தியயனத்தை யாற்று

யாயின் ஈண்டு நரகதுக்கத்தினும் அதிக துக்கத்தைத்தரும் அபகீர்த்திபுண்டாம். நீ இக்குலத்திற் பிறந்திருத்தலின் நின்னபகீர்த்தியால் எனக்கும் முன்னோருக்கும் அபகீர்த்தியாம். மேன்மையர்க் கபகீர்த்திமரணத்தினு மதிகமாம். ஆகையால், வேறு குருவை நீ யடைந்து வேதாத்தியயனஞ்செய்தி. ஹே குமர! இவ்வாறு ஆருணி கூறக்கேட்ட சுவேதகேது ஆராய்வுற்றுப் பிதாவின் ஆணைகொண்டு தமது கிருகத்தைப் பரித்தியாகித்து வேறுதேயமுற்று ஒரு வேதவேத்தாவாய மறைய வரைக் குருவாய்க்கொண்டு, வியாகரணுதியாறு அங்கங்களோடுகூடிய நான்கு வேதங்களையும் அத்தியயனஞ்செய்தனர், உபநிஷத்பாக வேதாந்தத்தைவிட்டு எல்லாவேதங்கட்கும் பொருளுமாராய்ந்தனர். இவ்வாறு யாவும் முடிந்தபின்பு தமது குருவின் ஆணையின்மீது தமது கிருகத்தை நோக்கிவரும் மார்க்கத்திலே தம் முளத்தே எண்ணுவதாவது:—சர்வ வேதபாட அர்த்தங்களையும் யான் நன்றாகப் படித்திருக்கிறேனாதலின் மிகவும் யான் மதிமான். எனக்கு வேதபாட அர்த்தம் வரு வதேபோல என்றந்தைக்கும்வராது; ஏனெனின், அவர் அறிவராயின் பிரியனாய என்னை வேறு குருபால் ஏனனுப்புகின்றனர். அனுப்பியதானே அவருக்குண்மை யாய வேதவித்தைவராதாம். அல்லது யான் வேதவித்தையை அத்தியயனஞ் செய்த ஆசிரியரும் எனது கூர்மையாய மதியைக்கண்டு தமது மைந்தரினும் அதிக நேயத்தை யென்பாலவைத்தனர், அலலாவிடின் வைப்பரா? இதனுனும தந்தை யினும் அதிக மதிமான் யான். அலலது, எனதாசிரியர் ஒரு சமயத்தே நேயவாயி லாய் அநேக சபதங்கள்செய்து கூறியதாவது:—ஹே சுவேதகேதுவே! எனக்கு வரும் வேதவித்தைகள் யாவறறையும உனககுபதேசித்தனன், இவறறினும் அதிகமா யொரு வித்தையும் என்பாலின்றும், என்றதனுனும் தநதையினும அதிக வித்தையுடைவன் யான். அலலது மைநதன்றந்தையினும விந்தையான புந்திமான் என்பதன்கண்ணே யாதொரு ஆசசரியமுமின்றும; ஏனெனின், பிருஹஸ்பதியின் மைந்தனாய அஜனென்னும மைந்தன் றந்தையினும் அதிக வித்தையுடையவனா யிருந்தனன்; சாஸ்திரத்தே யவன் ‘கசன்’ எனபபடுவன். அவன் சுக்கிராசாரியரிடத்தி னின்றும் மிருத்தியு சஞ்சீவினி வித்தையைப படித்துவந்து பிருஹஸ்பதி முதலிய சர்வ தேவதைகட்கும் அவ்வித்தையைப் படிப்பித்தனன். இவ்வரர்த்தை வேதத் தின் சதபதப்பிராஹ்மணத்தேயும் மனுஸ்மிருதியின்கண்ணும் பிரசித்தமாதலே போலச் சுவேதகேதுவாகிய யானும் என் றநதையினும் அதிக வித்தையுடையவ னுவேன். இவவாறு சிநதித்துசசுவேதகேது மகாகர்வத்தையடைந்தனர், அத் தோடத்தாலுண்டாய மோகத்தால தமது கிருகத்தேபோய்த தந்தையின் றிருவடி களை வணங்காமல் ஸ்தம்பமபோல வணக்கமறறவராய் மேலாய ஆசனத்தின்மீ துட்கார்ந்தனர். இவ்வாறிவரிருநதும பிதாவானவர் சிறிதுங் கோபமடையாமற கிருபையோடும் மைநதனது இதப்பொருட்டுக் கூறியதாவது:—ஹே சுவேத கேதுவே! எவ்வதிசய அபிமானத்தால நீ ஸ்தாணுவைப்போல வணக்கமற்றவனாயி னையோ, ஆறங்கத்தோடுகூடிய நான்கு வேதங்களின் வேத்தாவென எண்ணி னையோ, எல்லா வித்வான்களினும் அதிகனெனக் கருவித்தாயோ! அவ்வதிசயத் தன்மை நின்பாலியாதென்பதை நீ கூறுதி. எஃதொன்றைக்கேட்டால் கேளா முழுதுங்கேட்டனவாமோ, எஃதொன்றை நினைந்தால் நினையாமுழுதும் நினைந்

தனவாமோ, எஃதொன்றையறிந்தால் அறியாமுழுது மறிந்தனவாமோ என, அத்தகையதை நீ நினது குருவினிடத்திற் கேட்டாயா? அறிவையாயின் நீ கூறுதி. இவ்வாறு பிதா கூறவே சுவேதகேதுவானவர் அவ்வஸ்துவை யறியாதவராய்க் கர்வமற்றவராயினர், பரம ஆசசரியத்தையடைந்தனர், சிரத்தாபக்தி பூர்வகம் பிதாவை நமஸ்கரித்துக்கூறுவாராயினர்:–ஹே பகவன்! எவ்வேக வஸ்துவைச் சிரவணித்தால், மனனித்தால், அறிந்தால் சர்வ பதார்த்தங்களின் சிரவண மனனவிஞ்ஞானமாமோ .அவ்வொன்றை யானறியேனாதலின் தாங்கள் கிருபை செய்து அதனை அடியேனுக் குபதேசிக்கவேண்டும் என வினவவே ஆருணி கூறியதாவது:—ஹே சுவேதகேதுவே! அவ்வேகவஸ்துவை நீ யறிதற்பொருட்டு முதலில் மூன்று திருஷ்டாந்தங்களால் இவ்வெல்லா வுலகையும் தேஜஸ், ஜலம், பிருதிவி என்னும் மூன்று ரூபமாய் நிசசயஞ்செய்க. பின் மூன்று திருஷ்டாந்தத்தானே தேஜசாதி மூன்றன் காரணமாய பரமான்மரூபமாய்ச் சர்வ ஜகத்தையும் நிச்சயஞ்செய்தி. 3 திருஷ்டாந்தங்கள் வருமாறு:—பிருதிவிரூபமட்பிண்டஞானமுண்டானபின் காரியரூபகடசராவாதி எல்லாப்பொருள்களின் ஞானமுண்டாம். தேஜஸ்வடிவ பொன்னுணர்வுண்டானபின் காரியமாகிய கடககுண்டலாதி எல்லாப்பொருள்களின் ஞானமுண்டாம். உகிர்சீவி முதலிய பிண்டத்தேயிருக்கும் இரும்பின் ஞானமுண்டான மாத்திரையானே கட்க முதலிய சர்வ பதார்த்தங்களின் ஞானமாம். கருத்திதுவாம்:—ஒரு முறை மண்ணின கடரூபகாரியத்தே மண்ணேயென நிச்சயிப்பவன் கடத்தினும் வேறாய மண்ணின் காரியங்களைக்கண்டு இது மண்ணோ? அல்லவா? என்னு மையத்தையடையாமல் மண்ணேயே காண்பன். இம்முறையைப் பொற்பிண்டத்தும், அயப்பிண்டத்தும் கண்டதேபோலத் தேஜஸ், ஜலம், பிருதிவி யென்னும் மூன்றன்காரணமாகிய பரமான்மாவின் ஞானத்தின் பின்னர் யாவற்றின் ஞானமுமுண்டாம்.

சங்கை:—ஹே பகவன்! மிருத்திகையின் பிண்டம் பிருதிவிரூபமாதலின் அதன்கண்ணே மட்பிண்ட திருட்டாந்தம் சம்பவிப்பதேபோலச் சுவர்ணபிண்டமும் தேஜோரூபமாதலின் அதன்கண்ணே பொற்பிண்ட திருட்டாநதமும் சம்பவிக்குமாயினும், உகிர்சீவியாய அயப்பிண்டம் நீரவடிவமன்றாதலின் அதன்கண்ணே அத்திருட்டாந்தஞ் சம்பவியாதாம்?

சமாதானம்:—ஹே சுவேதகேதுவே! நெகிழ்ச்சியுற்ற நீர்ச்சம்பந்தத்தானே மண்முதலியவற்றினின்றும் நாலுவகையாய காரியமுண்டாமன்றி மாறுயொன்றும் வாராதாமாதலின், உடன்பாடெதிர் மறைகளால் நீரின்கண்ணே காரணத்தன்மை பிரசித்தமாமாயினும், மண்முதலியவற்றின் சம்பந்தமறற கேவல ஜலபிண்டத்தே ஒன்றன்காரணத்தன்மை உலகங்காணவின்றாதலின் உலகரின் மதியை யங்கீகரித்துச் சுருதிபகவதியானவள், பனிக்கட்டி முதலியவற்றின் வடிவம்போன்ற நிர்மலத்தன்மையானே பிரசித்த உகிர்சீவி முதலிய இரும்பை மூன்றாவது திருஷ்டாந்தமாகக் கூறினளாதலின், ஆண்டது சம்பவிக்கும். இப்போது ஏககாரண வஸ்துவின் ஞானத்தால் சர்வகாரிய ஞானமாம் என்னும் நியமத்தே கௌணரூபத்தன்மையை

யங்கீகரிக்கும் பேதவாதிகளின் மதகண்டனப்பொருட்டு முதலில் பேதவாதியர் மதத்தை நிரூபிப்பாம்:—ஹே சுவேதகேதுவே! ஒரு காரணரூபப் பரமான்ம ஞானத்தானே காரியரூப சர்வ ஜகத்தின் ஞானமாம், என்னும் சுருதிப்பொருளில ஒரு பேதவாதி ஸ்தாலிபுலாக நியாயத்தை யங்கீகரித்துக் கௌணரூபத் தன்மை யங்கீகரித்ததின் கருத்திதுவாம:—அரிசியடும் பாத்திரம் ஸ்தாலியாம், தண்டுலம் புலாகமாம. அடுபவன் எரியின்மீது நீரோடுகூடிய ஸ்தாலியைவைத்து அதன்கண்ணே அரிசியை யிட்டுப்பின்னட்டதும் அடாததும் காண்பான் அவற்றுள் ஒன்றையெடுத்துப்பார்த்து அது அடப்பெற்றிருப்பின் யாவும் அடப்பெற்றவெனவும், பெறுவிடின் பெறுவெனவும் உணர்தல் ஸ்தாலீபுலாக நியாயமாம். அதனுனே அப்பேதவாதி ஆன்மஞானமொன்றால் சர்வ ஜகத்தின் ஞானத்தைக் கூறுவன், கூறின் வினவவேண்டியதாவது:—ஹே வாதியே! ஒரு ஞானத்தாலெல்லா ஞானமுமாமென்னும் சுருதியின்கண்ணே கூறிய நியாயத்தைக்கற்பிதததது, உன் மதியினுலு? அல்லது, சுருதிப பிரமாண ஜன்னியமதியினுலு? பெரியாரின் பரம்பரைச சம்பிரதாய பலததாலு? முதலது சம்பவியாது, ஏனெனின், மறையளவையற்ற கேவல புருடபுத்தியோ பலவிடஙகளில் தன்னாத்தத்தினின்றும் பிறழ்ச்சியுடையதாயே காணப்பெறும்; தாம்பின்கண்ணே பாம்புமதியும், இப்பியின்கண்ணே வெள்ளிமதியும் பிறழ்வுறலேபோலும். இதனுனே வேதவேததாக்கள் கேவலம் புருடமதியை பொருபொருளின் சித்தியின்கண்ணே பிரமாணரூபமா யங்கீகரித்திலர். அல்லது, சர்வதார்க்கீகருள்ளும சிறந்த கபிலர் புத்தா கணுதர் கௌதமர் முதலியோரும் மறையளவையின் வேறுபட்டுத் தமமதியால எவ்வெப்பொருட்சித்திசெய்துளாரோ அவர்தம் அவ்வம்மதி அவ்வபபொருளில அப்பிரமாணமேயாம், அதன்கண்ணே காரணமிதுவாம்:—அவர் மறையளவைககு முரணுய்க் கேவலம் தம்மதியானே ஜகத்காரணத்தையும ஆன்மாவின் சொரூபத்தையும், பந்தமோக்ஷங்களேயும் வேறு வேறுகவே கூறியிருக்கின்றனராதலின், அவர் யுக்திகள் பரஸ்பரமே கண்டிதங்களாம். பரஸ்பரம் முரண்படடபொருளே அறிவிக்கும் உலகருடைய மதிகளுள் ஒரு மதியும் பிரமாணத்தன்மையை மருவுறுதலேபோலப் பரஸ்பரம் முரண்பட்ட பொருளே விடயஞசெய்யும அவர் மதிகளுள்ளும் ஒரு மதியும் பிரமாணத்தன்மையைமருவாது. கபிலாதியரின் மதிகளிலும் சுதந்திரமாய்ப் பிரமாணத்தன்மையுண்டாகாதபோது, இதரர்தம்மதியில் சுதந்திரப் பிரமாணத் தன்மையின்றென்பதன்கண்ணே யாதோதல்வேண்டும? ஆகையால், மறையளவையற்ற கேவல புருட புத்தியின்கண்ணே பிரமாணரூபத்தன்மை சம்பவியாதென்பது சித்தமாம். இரண்டாவதுஞ் சமபவியாதாம்; ஏனெனின், மறையளவையின் கண்ணே அவிசுவாச முறும் பேதவாதியாகிய உனக்கு மறையளவையாலுண்டாய மதியானே மனுே வாஞ்சிதமாய பொருள் சித்தித்தல் அத்தியந்தம் முடியாததாம். மூன்றுவதுஞ் சம்பவியாதாம்; ஏனெனின், கபிலாதி மகா புருடரின் சீடர் தமது குருசம்பிரதாயத்தை யங்கீகரித்தேனும், சுருதியர்த்த நிர்ணயத்தே எந்நிமித்ததைதயுமடைந்திலராதலின் தம்விருத்த சம்பிரதாயத்தை யங்கீகரிப்பினும் புருடமதியே யங்கீகரிக்கப்படும், அதனினும் வேறுக ஒரு பிரமாணமும் அங்கீகரிக்கப் படமாட்டாதாம், ஏனெனின், கபிலாதி சாம்பிரதாயிகர் சுருதியர்த்தத்தே யுப

யோகியாய ஒரு பிரமாணத்தையடைந்திருப்பராயின் அவர் அதன்கண்ணே பரஸ்பரம் விவாதஞ்செய்யார், விவாதமோ கண்கூடாய்க் காணவருகின்றது. ஒருவர் யுக்திகளைமறறையர் கண்டிப்பர், மற்றையர் யுக்திகளை மற்றையர் கண்டிப்பர் எனக் காணக்கிடந்தது. புருடமதியின்கண்ணே முன் முதற் பக்ஷத்தே மொய்த்ததோடமியாவும் மூன்றாவது பக்ஷத்தும மொய்க்குமென்க.

சங்கை :—ஹே சித்தாந்தியே! சமபிரதாயத்தானே விருத்தரின் பரம்பரையை அங்கீகரிக்கின் முதறபக்ஷ மூன்றாவதுபக்ஷ சமானத்தன்மையடைவுறும்; ஆனால், அவ்வாறங்கீகரியாமற சம்பிரதாயத்தானே இலக்கணை விருத்தியால் நியாயததை யங்கீகரிக்கின் அதறகுச சுருதியாதத நிர்ணயத்தே சாவதானத்தன்மை சர்வ வாதிகட்குஞ் சம்மதமாமாதலின், மூன்றாவது பக்ஷத்திறகு முதறபக்ஷத்தே யுள்ளடக்கஞ் சம்பவியாதாம்?

சமாதானம்—ஹே வாதியே! சமபிரதாய சபதத்தானே நீ யங்கீகரிததவடிவ மியாது? கருத்திதுவாம:—யாண்டு யாண்டுப புகையுண்டோ ஆண்டாண்டுத்தீயுணடென்னும உடனிகழ்ச்சியைப பன்முறை கண்டுண்டாய 'தூமம் அக்கினியின் வியாபபியம' எனும் மதி நியாயமா? அலலது, எரியின்றிய மலையின்கண்ணும் புகையிருக்கும என்னும் வாதி சங்கையை நீககறபொருட்டுண்டாய 'புகை எரியின்றிய விடத்துமிருபபின் எரியாலெழுநததாகாதாம்' என்னும் தர்க்கமே நியாயமா? முதலது சம்பவியாதாம; ஏனெனின், இதன்கண்ணும புருடமதியினும வேறாக நியாயவடிவம சித்தியாதாம; மற்றோ, அதற்கே அதததகைமை சித்தித்தலின், இபபக்ஷத்திறகும் முதறபக்ஷத்தினும பேதம சிததியாதாம. அல்லது, அடிக்கடி உடநிகழ்ச்சிக் காடசியாலுண்டாய மதியைப பிரமாணரூபமா யஙகீகரிக்கினோ, யாண்டு யாண்டுப பிருதிவிததன்மையிருக்குமோ ஆண்டாண்டு இரும்பாற போழ்தலாந்தன்மையாம், என அடிக்கடி உடனிகழ்சசிக் காட்சியானேயுண்டாய 'பிருதிவித்தன்மை இரும்பாற்போழ்தலாந்தன்மையின் வியாபபியமாம, என்னும் மதியும பிரமாணமாகவேண்டும, ஆதலோ இலலே; என்னே, வஜ்ஜிரமணியின்கணணே பிருதிவிததன்மையோ உளது, இருமபாற்போழ்தலாந்தன்மையோ இல்லையென்றுணர்க. 2-வது பக்ஷத்தை யுடன்படின், அநத நியாயததே தர்க்கரூபத்தன்மையெவ்வாறிருக்கின்றது என வினவுக; நியாயம் பிரமாணததின்மீது அனுக்கிரகம செய்வதேபோலத் தர்க்கமும பிரமாணத்தின்மீது அனுககிரகம் செய்யுமாதலின், நியாயந்தருக்கவடிவமாம் எனக்கூறின்; அது பிரமாணத்தின்மீது எவவகையாய உபகாரததைச்செய்யும் என வினவுக. கருத்திதுவாம்:—அந்ததர்க்கரூப நியாயம் அந்தப் பிரமாணத்தே, பிரமாணததன்மையின் சித்திவடிவ உபகாரததைச செய்யுமா? அந்தப் பிரமாணத்தின் விரோதி நீகக உபகாரம் புரியுமா? பிரமாணததன்மையின் அபிவியக்திரூப உபகாரம புரியுமா? முதலதோ சம்பவியாதாம, என்னே, அந்தப பிரமாணத்தே விடயங்களின் பிரகாசகத்தன்மைவடிவப் பிரமாணத்தன்மையைச் சில நூலாசிரியரோ தன்னாற் கவரப்பெறுவதெனவும், சில நூலாசிரியரோ பிறிதாற கவரப்பெறுவதெனவுங் கூறுவர். ஆண்டுப் பிரமாணத்தன்

மையி னுசிரயத்தை எத்துணைச் சாமக்கிரிகவருமோ அத்துணையே பிரமாணத் தன்மையையுங்கவரும் என்பதே தன்னுற் கவர்தலாம்; கவராதென்பதே பிறிதாற் கவர்தலாம். வேதாந்த மீமாம்சைகளில் முதலதாம், நையாயிகர்மதத்தே மற்றதாம். முதலதில் வேறொன்றை யபேக்ஷியாது பிரமாணம் பிரமாணத்தன்மையைத் தானே கவரும் என்ப. தீபம் கடாதிவிடயப்பிரகாசத்தே வேறொன்றையவாவாததே போலப் பிரமாணமும் விஷயங்களின் பிரகாசகத்தன்மைவடிவப் பிரமாணத்தன்மை யின்கண்ணே வேறொன்றையு மபேக்ஷியாதாம், அபேக்ஷிக்கினே அதன்கண்ணே அப்பிரமாணரூபத்தன்மையே சித்திக்குமாதலின், அது தனது சமானவிஷயக தர்க்கத்தை யபேக்ஷியாதாம். அத்தர்க்கம் பிரமாணவிடயத்திலும் வேறு பொருளை விடயஞ்செய்யினும பிரமாணத்தின்மீது அதனுபகாரம் சம்பவியாது; ஏனெனின், பிரமாணத்தின்கண்ணே விடயப்பிரகாசகத்தன்மைவடிவப் பிரமாணத் தன்மை தர்க்கப்பிரவிருத்தியினும் முன்னரே சித்தமாமாதலின் தர்க்காபேக்ஷை சம்பவியாதாம். அல்லது, அப்பிரமாணரூபதர்க்கமானது பிரமாணவிடயத்தே புகுதல் மயலானுமேலாதாம்; ஏனெனின், பிரமாணம் அப்பிரமாணமென்னும் மிரண்டும தனுசொரூபபேதத்தானே ஆசிரயபேதத்தானே விடயபேதத்தானே பரஸ்பரம் விலக்ஷணமேயாம். சிறிதுமாத்திரையும் அவற்றின்கண்ணே ஒப்புமை யுண்டாகாதாம். சமானங்கட்கே உபகார்ய உபகாரகபாவம் கண்டோம், மாறுயதற்கு அஃதையாண்டுங் கண்டிலேம். ஆதலினுனும் பிரமாணத்தின்மீது அப்பிரமாண ரூபதர்க்கத்தின் உபகாரம் சம்பவியாது. ஜீவர்கட்கிட்டமில்லாததாய விட முதலிய போல அதன் நிவிருத்திரூப உபகாரமாய ஔஷதமந்திராதிகாரணமும் பிரசித்த மாம்; அவ்வாறே அத்தர்க்கம் பிரமாணத்தின்மீது பிரமாணவிரோதி நிவிருத்தி ரூப உபகாரஞ்செய்யும் என்னும் இரண்டாவது பக்ஷமுஞ் சம்பவியாது. உலகத்தே விரோதிநிவிருத்திரூப உபகாரம் பிரசித்தமாதலேபோல ஈண்டுச் சம்பவியாதாம்; என்னை, பிரமாணமும் எதிர்மறையாய அப்பிரமாணமும் ஓரிடத்தே ஒருங்குகூடியிருக்குமாயின், அத்தர்க்கம் அப்பிரமாண நிவிருத்திரூபஉபகாரத்தை யதற்குச்செய்யும்; ஆனல் ஒருங்குகூடியிராதாம், ஏகதேசத்தே ஏககாலத்தே யிருக்கும் பொருள்கட்கே பரஸ்பரம விரோதமாம், மாறுயதற்கு விரோதம் யாண்டுங்கண்டதின்றும்; மக்ஷிகையைவிழுங்கும் மண்டூகத்தை மணிநாகம் விழுங்குவதே போலப் பிரமாணம அப்பிரமாணம் என்னும் இரண்டன்கண்ணொன்றை விழுங்குவது வேறொன்றின்றும், இன்றாகவே உபகாரம்புரிதல் யாண்டையதென்க. அல்லது, எத்தலத்தே சமானபலமுடைய இருபிரமாணங்கட்கு ஒரு விடயத்தின் கண்ணே பிரவிருத்தியாமோ ஆங்கே மதிமான் இரு பிரமாணங்கட்கும் பரஸ்பரம விரோதத்தை அங்கீகரிக்கவேண்டும், அஃதீண்டிப் பிரசங்கத்தின்கண்ணேயின்றும்; ஏனெனின், பிரமாணத்திற்கோ சத்தியவஸ்துவின்கண்ணே பிரவிருத்தியாம், அப்பிரமாணத்திற்கு அசத்தியவஸ்துவின்கண்ணே பிரவிருத்தியாம்; அவ்விரண்டிற்கும் விடயபேதமிருப்பதேபோலத் தருமங்கட்கும் பேதமாம். பிரமாணத்தன்மைத்தன்மமோ கேவலம் பிரமாணத்தின்கண்ணே யிருப்பதேபோல, அப்பிரமாணத்தன்மைத்தன்மமும் கேவலம் அப்பிரமாணத்தின்கண்ணேயிருக்கும். இவ்வாறு வேறு வேறு பொருளை விடயஞ்செய்யும் அவ்விரண்டன்கண்ணும் பரஸ்

பரம் விரோதித்தன்மை சம்பவியாதாம். அல்லது, பிரமாண விரோதியின் நிவிருத்திரூபதர்க்கத்தின் உபகாரத்தைப் பிரமாணத்தின்மீது அங்கீகரித்தவன்பால் இங்ஙன் வினவுக:—நினது தர்க்கம் பிரமாணவிரோதியை அப்பிரமாணமெனவறிந்து நீக்குகின்றதா? பிரமாணமெனவறிநது நீக்குகின்றதா? முதற்பக்ஷத்தை வாதியங்கீகரிக்கின் அது சம்பவியாது; ஏனெனின், அரைத்த அன்னத்தை மீண்டும் அரையாததேபோலவும், மரித்த சரீரத்தை மீண்டும் அடியாததேபோலவும், பிரமாணவிரோதியை அப்பிரமாணரூபமாய் உணர்ந்த அத்தர்க்கம் பிரமாண விரோதியை நிவிருத்திசெய்வதன்கண்ணே பிரவிருத்தமாகாதாம்; இரஜ்ஜுசர்ப்பத்தை மித்தையென வுணர்ந்தவன் அதை நீக்குவதில் முயலாததேபோலும். இரண்டாவது பக்ஷத்தை யங்கீகரிக்கின் அதுவுஞ் சம்பவியாது; ஏனெனின், பிரமாண விரோதியின்கண்ணே பிரமாணரூபத்தன்மையை விடயஞ்செய்யும் தர்க்கத்தானே அதன் நிவிருத்தி சம்பவியாதாம், ஒருகாற் சம்பவிப்பின் அது பிரமாணத்தையும் நிவிருத்திசெய்யும். சுருதியனுகூலதர்க்கத்தானே அதன் நிவிருத்தி சம்பவிக்குமாயினும், சுருதிப்பிரமாணமின்றிக் கேவலந் துராக்கிரகத்தானே அர்த்தசித்திசெய்யும் வாதிகளாய உங்கட்கு வறுந்தருக்கவலுமையானே வாஞ்சிதார்த்தசித்தியாதல் முற்றும் முடியாததாம. இததுணையானே பிரமாணத்தின்கண்ணே தன்னாற் கவர்தலை யுடன்பட்டுத் தர்க்கோபகாரமின்மை வர்ணிக்கப்பட்டது. இப்போததன்கண்ணே பிறிதாற் கவர்தலை யுடன்பட்டு அதனை வருணிப்பாம்:—ஓ வாதியே! பிறிதாற கவர்தலை யுடன்படினும பிரமாணத்தின்கண்ணே தருக்கத்திற்கு யாதுபகாரம கூறுதி: கருத்திதுவாம:—அத்தருக்கத்திற்குப் பிரமாணத்தின்மீது விஷயங்களின் பிரகாசரூப உபகாரமோ சம்பவியாதாம்; ஏனெனின், அஃதோ பிரமாணத்தானே சித்திப்பதேபோல அத்தருக்கத்திற்குப் பிரமாணத்தின்மீது பிரமாதாவின் அசம்பாவனை நீக்கவடிவ உபகாரமும் சம்பவியாதாம்; என்னை, அது பூர்வபாவ கருமத்தானே ஜனித்ததாதலின் விரோதியாய புண்ணிய கருமத்தானே அதன் நிவிருத்தி சம்பவிக்கும், தருக்கத்தானே சம்பவியாதாம். அல்லது, அதனாலதன் நிவிருத்தியை யங்கீகரிக்கினும் அதற்குப் பிரமாதாவின் கண்ணே உபகாரம் சித்திக்கும், பிரமாணத்தே சித்தியாதாம். அல்லது, விஷயப் பிரகாசத்தே அசமர்த்த அப்பிரமாணத்தின்கண்ணே ஆயிரந்தருக்கத்தானும் பிரமாணரூபத்தன்மை சித்தியாதாம், விஷயப் பிரகாசகத்தே சமர்த்தப் பிரமாணத்தின்கண்ணே பிரமாணரூபத்தன்மை தர்க்கத்தின் பிரவிருத்தியின் முன்னரே சித்தமாமாதலின் அதனாற் சித்திசம்பவியாதாம். மூன்றாவது பக்ஷமுஞ் சம்பவியாதாம்; என்னை, அத்தர்க்கம் அப்பிரமாணரூபமா? பிரமாணரூபமா? முதலதொவ்வாது. அபபிரமை ஞானத்திற்கு விடயமாகிய பொருள்களியாவும் பொய்யேயாம். அப்பிரமைஞானவிஷய சுத்திரஜதாதி பொய்யேயாவதுபோல அப்பிரமாணரூபதர்க்கமும் எப்பிரமாணத்தின் பிரமாணத்தன்மைத் தன்மத்தை வெளிப்படுத்தா நிற்குமோ அந்தப் பிரமாணமும் பொய்யேயாமாதலின், அதனானே பிரமாணத்தன்மையின் அபிவியக்தி சம்பவியாதாம். இரண்டாவதும் பொருந்தாதாம், அத்தர்க்கத்தேயெவ்வாதியும் பிரமாணரூபத்தன்மையை யங்கீகரிக்கவில்லை, மற்றோ யாவரும்

அப்பிரமாணரூபத்தன்மையையே யங்கீகரித்துளாராதலின் அதன்கண்ணே அவ்வாறுடன்படலால் தன் சித்தாந்த ஹானிரூப அபசித்தாந்த தோஷப் பிராப்தியாம். அல்லது, பிரமாணத்தின் பிரமாணரூபத்தன்மையை அபிவியக்தி செய்யுந தர்க்கதனைப் பிரமாணரூபமென வுடன்படினே, அதன் பிரமாணத்தன்மையை அபிவியக்திசெய்யும் வேறொரு தர்க்கத்தை யங்கீகரிக்கவேண்டிவரும், அதன் பொருட்டும் மற்றொன்றை யுடன்படவேண்டிவரும். இவ்வாறு பரம்பரையாகத் தர்க்கதாரை யங்கீகரிப்பதானே அனவஸ்தா தோஷமாம். அல்லது, வாதியையிது வினவுக :—அத்தருக்கம் சுதந்திரப் பிரமாணமா? பிரத்தியக்ஷாதிப பிரமாணங்களின் அந்தர்பபூதமாய்ப் பிரமாணமா? முதலது சம்பவியாது, என்னை, அதன்கண்ணே சுதந்திரப் பிரமாணத்தன்மையை யெவ்வாதியும் அங்கீகரிககவில்லை. இரண்டாவதுஞ் சமபவியாது, என்னை, பிரமாணரூப தர்க்கத்திற்குப பிரதியக்ஷப பிரமாணத்தின்கண்ணே அடக்கமின்றுமாதலின் அனுமானாதிகளினகண்ணே யடக்கம் கூறவேண்டும். அவறறுள்ளும் இதன்கண்ணே யடக்கம் என நியமஞ் செய்யபபோகாதாம்; ஏனெனின், அநுமானாதிகளின் பிரமாணரூபத்தன்மையின்கண்ணே சர்வ வாதிகட்கும் ஒரு சம்மதியின்றும், நானாவகையாய விவாதங்காண வருகின்றது :—சார்வாகனே காட்சியொன்றே யென்றனன். வைசேஷிக பௌத்த ஆர்ஹதர்களோ காட்சி, கருதல் என்றனர். சாங்கியரோ உரையொடு மூன்றென்பர். நையாயிக ஏகதேசியர் காட்சி, கருதல், உவமையென்பர், நையாயிகரோ உவமையொடு நான்கென்பர். பிரபாகரரோ அருத்தாபத்தியொடு மைந்தென்பர். பட்டவேதாந்தியர் அனுபலப்தியொடுமாறென்பர். பௌராணிகரோ சம்பவ ஐதிகங்களுடன் எட்டென்பர். தந்திர சாஸ்திரக்காரரோ சேஷ்டையொடு மொன்பதென பர். இவ்வகை வாதியா வேறு வேறுகப் பிரமாணங்களுடன்படுவர். அவற்றுள் தர்க்கரூப நியாயம் எதன் கண்ணெடுங்கும் கூறுதி?

சங்கை :—ஹே சித்தாந்தியே! தன்விடயத்தினின்றும் வியபிசாரியாகாததே பிரமாணமாம், மாறுயதாகாதாம். இவ்வகையாய பிரமாணலக்ஷணத்தை விசாரிக்கு முன் அத்தர்க்கம் ஒரு பிரமாணத்துள்ளடங்குமாயினும் பின் அப்பிரமாணத்தன்மையயடையுமாதலின் முன்மொழிந்த விநிகமனு விரகதோஷப் பிராப்தியை யடையாதாமன்றே?

சமாதானம் :—ஹே வாதியே! இவ்வாறு முன்மொழிந்த பிரமாண இலக்ஷணத்தானே பிரமாண விசாரஞ்செய்யின் ஆறு பிரமாணங்களுள் தத்தமாத்த அவ்யபிசாரித்தன்மைவடிவப் பிரமாணத்தன்மையாயினும், அந்த நியாயரூபதர்க்கம் எப்பிரமாணத்திற்கந்தர்ப்பூதமாம் என முன்மொழிந்த விநிகமனு விரகரூபதோஷம் நின்மதத்தே பலாத்காரமாய்ப் பிராப்தமாம்; ஏனெனின், பட்டபாதாதி வித்வான்கள் பிரத்தியக்ஷாதி ஆறு பிரமாணங்கட்குத் தத்தம் விடயத்தே நியமமாய்ப் பிரமாணத்தன்மையைச் சித்தஞ்செய்துளார்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! நானுப்பிரமாணரூப அனுமானப் பிரமாணத்துள்ளடங்கியது நியாயரூபதர்க்கமாதலின், அது அக்காட்சியாதி சர்வப் பிரமாண அந்தர்ப்பூதமாம்; இவ்வாறுடன்படுவதில் முன்மொழிந்த விநிகமனுவிரகரூபதோஷ

முண்டாகாதாம். அநுமானப்பிரமாணத்திற்குச் சர்வப் பிரமாணரூபத்தன்மை யிவ்வகையாம்:—பிரதிஞ்ஞை, ஹேது, உதாஹரணம், உபநயம், நிகமனம் என்னும் ஐந்து வாக்கியரூப அவயவங்கட்குச் சமுதாயரூபம் பரார்த்தானுமானமாம். மலைதீயுடைத்து, என்பது பிரதிஞ்ஞை. புகையுடைமையின், என்பது ஹேதுவாம். யாது யாது புகையுடையது அஃதது தீயுடையது, அடுக்களைபோலும்; என்பது உதாரணமாம். அவ்வாறேயிது; அதாவது, இம்மலையும் அடுக்களைபோலத் தீவியாப்பியப்புகையுடையது, என்பது உபநயமாம். ஆகையால் அவ்வாறே; அதாவது, தீவியாப்பியப்புகையுடையதாதலின் இமமலையும அடுக்களைபோலத் தீவியாப்பியப்புகையுடையது என்பது நிகமனமாம். 1-வது ஆகமப்பிரமாணரூபமாம் 2-வது அனுமானபபிரமாணரூபமாம. 3-வது பிரத்தியக்ஷபபிரமாணரூபமாம் 4-வது உபமானப்பிரமாணரூபமாம். ஆகையால் என்னுமம்சத்தானே முற்கூறிய சர்வப பிரமாணங்களையுஞ சங்கிரகஞ்செய்யும் 5-வது சர்வபபிரமாணரூபமாம. இமமுறையே அனுமானபபிரமாணம் சர்வப் பிரமாணரூபமாம், அதனுள்ளடங்கிய தாய நியாயரூபதர்க்கமும் சர்வபபிரமாணரூபமேயாமாதலின் முற்கூறிய விநிகமனவிரகரூபதோஷம் என்மதத்தேயுறாதாம்.

சமாதானம்:—ஹே வாதியே! உனது வசனம் எண்ணிக்கையறற தோஷங்களோடுகூடியதாம; என்னை, அத்தூஷணங்களைக்கூறு மெனக்கும் கேட்கு முனக்கும் பிரஹ்மாவிறகுச சமானமாய பேராயுளிருககுமாயின்கூறக கேட்கமுடியும், ஆனல, அவ்வாயுள் நம்மிருவருக்குமிலலையாதலின் கூறக் கேட்கக்கூடாதாம்; எனினும், நியாயரூபதர்க்கததே யபிநிவேசமுறும் உனக்குச் சுருக்கமாக அத்தூஷணங்களின் முறைமாததிரம் கூறுகின்றேன். நீ சாவதானமாய்க்கேட்பாயாக:—ஹே வாதியே! அனுமானத்துள்ளடக்கிய காட்சிமுதலியவையாவும் ஒரே காரியத்தைச்செய்யுமா? யாவும் வேறு வேறு யநேக காரியங்களைச்செய்யுமா? 2-வது சம்பவியாது, ஏனெனின், காட்சி முதலியவறறின் சமுதாயரூபமா யுடன்பட்ட அனுமானத்தின்கண்ணே யிருப்பினும் அவை தமதநேககாரியங்களின் கர்த்துருத்தகைமைவடிவ இயறகையைப் பரித்தியாகஞ்செய்யா; மற்றோ, தங்காரியத்தை யவசியஞ்செய்யுமாதலின், அவறறை யனுமானத்தடக்கல் முற்றினும் முரணுமை. 1-வதுஞ் சம்பவியாது; ஏனெனின், அவையாவும் ஒரே காரியத்தைச்செய்கின்றதென் றுடன்படின், அனுமானததினும் வேறாக அவறறின்கண்ணே சுதந்திரப்பிரமாணத்தன்மை யுண்டாகாதொழியவேண்டும், இட்டந்தானெனிற் சம்பவியாதாம; என்னை, காட்சி முதலியவற்றிற்குத் தத்தம் விடயங்களிடத்தே சுதந்திரப்பிரமாணததன்மை காணவராதாயின் அவற்றின்கண்ணே அனுமானுபேக்ஷையால் பிரமாணத்தன்மை சித்தமாம், அவ்வாறோ இன்றாம்; மற்றோ, அவற்றிற்குச் சுதந்திரப்பிரமாணத்தன்மை எல்லா மதிமான்கட்கும் அனுபவசித்தமாமாதலின் அவற்றிற் கனுமானத்தே யடக்கம் சம்பவியாதாம். அல்லது, முன்மொழிந்த பிரதிஞ்ஞை முதலிய 5 அவயவங்களுக்குள் 2-வதாய ஏதுரூப அவயவத்தை வாதி அனுமானரூபமா யங்கீகரித்துளான், அதன்கண்ணே காட்சி முதலிய சர்வப் பிர

மாணரூபத்தன்மை அங்கீகரித்தல் முற்றினும் முரணும்; ஏனெனின், அதன்கண்ணே அவற்றினடக்கம் காணவருவதின்றாம். அதன்கண்ணே அவற்றின் அத்தியாகாரத்தைச்செய்து ஹேதுரூப அனுமானத்திற்குச் சர்வப் பிரமாணத்தன்மையை யங்கீகரிக்கிறோ, ஐந்தாம்வேற்றுமையை முடிவிலுடைத்தாய்க் குறியையுணர்த்தும் வசனமென்னும் ஹேதுவின்கண்ணே சாதனரூபத்தன்மையி னபாவமாம். அல்லது, முன்மொழிந்த 5 அவயவங்களுள் வாக்கியரூபத்தன்மை சமமேயாம், ஆயினும் ஒரு பிரதிஞ்ஞைவாக்கியத்தின்கண்ணே ஆகமப்பிரமாணரூபத்தன்மையை யங்கீகரித்து வேறு வாக்கியங்களிடத்தே அங்கீகரியாமை ஊகமற்ற மோகமாம. அல்லது, பிரதிஞ்ஞை யவயவத்திற்கு ஆகமப்பிரமாணரூபத்தன்மையை வாதி யங்கீகரித்தது சம்பவியாதாம; என்னை, அம்மொழி ஐயப்பொருளையறையும், ஆகமபபிரமாணமோ நிச்சிதப்பொருளையே நிகழ்த்தும், அது ஐயப்பொருளையு மூணர்த்துமாயின் தன்னுகமத்தன்மையற்றதாம என்பது உன்மதத்தும் சம்மதமேயாம். பரஸ்பரம் முரண்பட்டபொருளைக் கூறும் அவ்விரண்டிற்கும் அபேதமுடன்படல் மிகவுங்கூடாததாம். உபநயவாக்கியத்திருக்கும் அவ்வாறென்னுஞ்சப்தமும், நிகமனவாக்கியத்தேயிருக்கும் ஆகையால் என்னும சப்தமும் பக்ஷத்தே வியாப்தியையுடைய ஹேதுவின் சம்பந்தமாத்திரத்தையே போதிககும், ஒப்புமை முதலியவற்றை யோதாவாதலின் உபநயவாக்கியத்திறகு உபமானப்பிரமாணரூபத்தன்மையும், நிகமனவாக்கியத்திற்குக்கூறிய சர்வப்பிரமாணரூபத்தன்மையும் சமபவியாதாம். தர்க்கஜீவன ஔஷதியாயவியாபதி கேவலங் கற்பனைவடிவமேயாதலின் அதனைக்கூறும் உதாஹரணவாக்கியததே பிரததியக்ஷப் பிரமாணரூபத்தன்மை சம்பவியாதாம். இவை முதலாக அநேகவகையாய தூஷணம் வாதி யோதுவதன்கண்ணே அடைவுறுமாதலின் ஆகமப்பிரமாணரூப சூரியனையுபேக்ஷித்துக் கேவலங் கற்பனையாலுண்டாய தர்க்கத்தேயுள்ள மிக ஆதரமே விசாரரூபதிருஷ்டியின் மந்தத்தன்மையை வெளியாக்கும்.

சங்கை :—ஹே சிததாநதியே! நியாயரூபதர்க்கத்தானே ஒருபொருட் சித்தியுண்டாகாதாமாயின் 'ஶ்ரோதவ்ய:' என்பது முதலிய சுருதிகள் விசாரரூபதர்க்கத்தையேன் விதிக்கின்றன?

சமாதானம் :—ஹே வாதியே! இந்நியாயரூபதர்க்கத்தைவிருத்த ஆசிரியர் விசாரரூபமனனத்தே உபயோகியெனக் கூறியிருப்பினும, அது சுருதிப்பிரமாண சகாயமின்றிச் சுதந்திரமா யொருபொருளை நிச்சயிப்பதில ஆறறலுடையதன்றும்; மற்றோ, மறைச் சகாயததானே நிசசயிக்குமாதலின், ஆசிரியர் 'ஶ்ரோதவ்ய:' என்பதாதிகளில் சுருதியனுகூலதர்க்கத்தையே யங்கீகரித்தனரான்றிப் பிரதிகூலவறுந்தர்க்கத்தைக் கவர்ந்திலாதலின், அம்மறை ஸ்தாலீபுலாக நியாயத்தானே ஏக ஆன்மாவின் ஞானத்தானே சர்வ ஜகத்தின் ஞானத்தைக்கூறுகின்றது என்னும்பொருட் கற்பனையில் கற்பிக்கும புருடபுத்தியேதுவாம, மறையளவையாலுண்டாய மதியேதுவாம், உபதேசிக்கும் குரு பரம்பராரூபச் சம்பிரதாயத்தின் அநுகூலத்தன்மை யேதுவாம், என்னும் முப்பக்ஷங்களுள் முதறபக்ஷத்தும் மூன்றுவது பக்ஷத்தும் முன் அநேக தூஷணங்கள் கூறிவந்தேமாதலின் இருபக்ஷங்களும்

சம்பவியாவாம்; எஞ்சியதாய் 2-வது பக்ஷமேயுடன்படவேண்டிவரும், அதுவோ வாதியின் இஷ்டார்த்த சித்தியைச்செய்யாதாம்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! அம்மறையளவையாலுண்டாய மதிதான் றருக்கமின்றி யெவ்வாறுண்டாம்?

சமாதானம் :—ஹே வாதியே! வியாகரணாதி இலெளகிக உபாயத்தானே பதார்த்தத்தை யுணர்ந்து உபக்கிரம உபசமஹாராதி அறுவகைலிங்கங்களானே வாக்கியங்களின் பொருளையுணர்ந்து, வறுந்தருக்கமின்றியே அதிகாரிக்கு மறையளவையாலுண்டாயமதி அடைவுறுமாதலின், 2 வதன்கண்ணே வறுந்தருக்காபேக்ஷையின்றும். அவ்வாறே ஈண்டும் அந்த நியாயத்தையுபேக்ஷித்தே சுருதி பகவதி மட்பிண்டம், லோகமணி, உகிர்சீவி யென்னு முப்பதங்களானே உபாதான காரணசொரூபத்தைக்கூறி அதனோடு காரியத்திற் கபேதங்கூறினள். ஆகையால், ஒரு பரமான்ம ஞானத்தானே சர்வ ஜகத்தின் ஞானத்தைக்கூறும் சுருதி, அந்த நியாயம்போலச் சம்பாவனை மாத்திரவடிவச் சர்வ ஜகத்தின் ஞானத்தைக் கூறவில்லை.

சங்கை :—ஹே சித்தாந்தியே! அந்த நியாயத்தை யுடன்பட்டுச் சுருதியின் பிரவிருத்தியுண்டாகாதாயின், எந்த நியாயத்தை யுடன்பட்டுண்டாம்?

சமாதானம் :—ஹே வாதியே! விவாத்தவாதத்தேயிருக்கும் இரஜ்ஜு சர்பாதி நியாயத்தை யங்கீகரித்தே சுருதியின் பிரவிருத்தியாம். அதிஷ்டானரூப இரஜ்ஜுவின் வாஸ்தவவடிவஞானத்தானே இரஜ்ஜுவின்கண்ணே கற்பித சர்ப்ப தண்ட ஜலதாரை மாலை முதலிய யாவற்றின் உணர்வுமுண்மையாயுண்டாவதேபோல, அதிஷ்டான ஆன்மஞானத்தானே ஆன்மாவின்கண்ணே கற்பித சர்வ ஜகத்தின் ஞானமாம். ஹே குமர! முற்கூறிய எல்லா அபிப்பிராயங்களையும் கருத்தில் வைத்துக்கொண்டு ஆருணிபிதாவானவர் சுவேதகேதுவின்பொருட்டு மண், சுவர்ணம், இரும்பு என்னும் மூன்று திருஷ்டாந்தங்களால் சர்வஜகத்தின் காரணரூப பிரஹ்ம உபதேசத்தைச்செய்தனர். எவ்விடத்தும் காரணத்தினும் வேற்றுருவமதானே காரியத்தின் அசத்தியத்தன்மையே காரணத்தின் அத்விதீயத்தன்மையைச் சித்தஞ்செய்யுமென்பதை வெளிப்படுத்தும்பொருட்டு இவ்வகையாய யுக்தியைக்கூறினர் :—ஹே சுவேதகேதுவே! இக்கட முதலிய காரியங் கேவலம் வாக்குமாத்திரையானே தோற்றுமன்றி யுண்மையாய்த்தோற்றுதாதலின், காரியம் நாமமாத்திரத்ததேயன்றி யுண்மையாய் வடிவமின்றும்; அது மண்மாத்திரமேயாமாதலின் மண் அதன் ஆரம்பகமுமாகாதாம்; என்னை, ஆரம்பகமாயின் காரியகாரணபேதத்தை யங்கீகரித்தே அஃதாம்; நையாயிகர் கபாலரூபகாரணத்தினும் வேறாயகடத்தைக் கபாலங்களால ஆரப்தமென அங்கீகரிப்பதேபோலும். காரியத்தே காரணத்தினும் வேற்றுமை உண்மையாயின்றும்; மற்றோ, கடசராவாதி நாமவிசிஷ்டகாரியத்தேமட்காரணபேதம் தோற்றும்; விசிஷ்டப்பொருளில் தோற்றுந் தருமம் விசேஷியப்பொருளிற் சம்பவியாதாயின், அது கேவலம்

விசேஷணத்தின்கண்ணே அடைவுறும் என்பது எல்லா நூலுடையோரது நியமமாம். ஆங்கே, கடசராவாதி நாமவிசிஷ்டகாரியத்தைத் தோற்றும மண்வடிவ காரணபேதம் கடசராவாதிரூப விசேஷியபதார்த்தங்களிலோ சம்பவியாதாமாதலின், எஞ்சியதாய்க் கடசராவ முதலிய நாமரூபவிசேஷணங்களிலேயே பிராப்தமாம். இம்முறை சர்வ காரியகாரண பாவஸ்தலத்தும அறிந்துகொள்க. இப்போதிப்பொருளையே திருஷ்டாந்தத்தானே வெளிப்படுத்துவாம் :—ஹே சுவேதகேதுவே! உலகத்தே படபாவத்தையடைந்த தந்துவைப்படத்தினின்றும் வேறுக்கிக் காரியங்காண்பவ னெம்மதிமான்? இன்றும், இங்ஙனமே கடபாவத்தையடைந்த மண்ணைக் கடத்தினின்றும் வேறுக்கிக் காரியங்காண்பவ னெம்மதிமான்? இன்றும். ஆகையால் மண் முதலிய காரணமே சத்தியமாம், கடாதிகாரியமோ கேவலம் நாமமாத்திரமாய்ப் பிரதீதியாமாதலின் பொய்யேயாம். இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பதண்டாதிகள் பொய்யாகவே தோற்றுவதே போலும், ஆகாயத்தே கந்தர்வநகரம் பொய்யாகவே தோற்றுவதேபோலும், மண் முதலிய காரணத்தே கடாதிகாரியமும் பொய்யேயாய்த்தோற்றும். இப்போது இவ்விவர்த்தவாதத்தையே வெளிப்படுத்தும்பொருட்டுப் பரிணாமவாதத்தைக்கண்டிப்பாம் :—ஹே சுவேதகேதுவே! பால தயிராகபபரிணமிப்பதேபோல மண் பொன் முதலிய காரணங்கள் கடபூஷணாதிரூப பரிணாமத்தையடையாவாம; ஏனெனின், அடையுமாயின் தயிரானபால் நாசத்தையடைவதேபோல மண் முதலிய காரணமும் நாசத்தையடையும், அங்ஙனுவதின்றுமாதலின், பரிணாமமன்றாம்.

சங்கை :—ஹே பகவன்! தயிரானபால் நாசமுறும், கடாதியானமண் நாசமுறுவதில்லையென்பது எங்ஙனறியலாம்?

சமாதானம் :—ஹே சுவேதகேதுவே! கடாதியாயினும் அம்மண் முன்போல மண்ணாகவே தோற்றுமாறு, தயிராயபாலும் முன்போலப்பாலாகத்தோற்றாதாமாதலின் பால் தயிராங்காலழியுமெனவும, மண்கடாலத்தே யழியாதெனவும் அறியக்கிடந்ததன்றே? இதனானே 'வாசாரம்பணம் விகாரோ நாமதேயம் ம்ருத்திகேத்யேவ ஸத்யம்' என்னும் சுருதியின்கண்ணே மண்வடிவகாரணம் சத்தியமெனப்பட்டது. யாது பரிணாமிகாரணமோ அஃதுபாதானகாரணமாகாதாம்; மற்றே, நிமித்தகாரணமேயாம்; ஏனெனின், தங்காரியத்தே தொடர்ந்துநிற்கும் காரணமே காரியத்தின் உபாதானகாரணமாம், என அதனிலக்கணம நூலாசிரியரால் கூறப்பெற்றுளது. அது பரிணாமிகாரணத்தே பொருந்தாதாமாதலின் பால் தயிர் வடிவகாரியத்தின் உபாதானகாரணமன்றாம்; மற்றே, நிமித்தகாரணமாம்.

சங்கை :—ஹே பகவன்! உண்டாம் பாவகாரியமியாவும் உபாதான நிமித்தமென்னும் இருகாரணங்களானேயாம். தயிரும் பாவகாரியமாதலின், அதற்கும் பாலின் வேறாக ஒரு உபாதானகாரணங் கூறவேண்டும், அஃதியாதாம்?

சமாதானம் :—ஹே சுவேதகேதுவே! தேயு, நீர், பிருதிவியென்னும் முப்பூதங்களின் அவயவமே ஆன் முதலியவையயின்ற புன் முதலியவற்றேயிருந்து பாலினுபாதானகாரணமாம். தயிர், மோர், நெய்முதலியகாரியங்கட்கும் உபாதானகாரணமாம்; ஏனெனின், தேயுமுதலிய முப்பூதங்களின் அவயவமே முறையே

சிவப்பு, வெளுப்பு, கறுப்பு என்னும் மூன்றுருவங்களால் யாண்டும் தோற்றும். விசேஷ ஆகாரத்தையுடைய மட்பிண்டம் கடரூபகாரியோற்பத்திகாலத்தே கடரூபகாரியத்தே தொடர்ந்து பிரதீதியாகாதாமாதலின், மட்பிண்டம கடரூபகாரியோற்பத்தியின்கண்ணே உபாதானகாரணமன்றும்; மற்றே, நிமித்தகாரணமாம். அவ்வாறே பாலும் தயிர்வடிவ காரிய உற்பத்தி காலத்தே தயிர்வடிவகாரியத்தே தொடர்ந்திலங்காதாதலின், பால் தயிரின் உபாதானகாரணமன்றும்; மற்றே நிமித்தகாரணமாம். சூர்ண பிண்டாதி விசேஷ ஆகாரமற்ற சுத்தமண்ணனது கடசராவாதி சர்வ காரியத்தே தொடர்ந்திலங்குமாதலின் அது கடாதிகளின் உபாதானகாரணமாம் அவ்வாறே புன் முதலியவற்றே அவயவரூபமாயிருக்கும் தேயு நீர் மண்ணென்னும் முப்பூதமே சர்வ காரியத்தும் தொடர்ந்திலங்குமாதலின் அவையே தயிர் முதலிய காரியங்களின் உபாதானகாரணமாம். ஆகவே பரிணாமியாம் பொருள் பால்போல உபாதானகாரணமாகாதாம். பரிணாமியாகாப்பொருளே பாதானகாரணமாமாதலின் சுருதியின்கண்ணே லோஹமணிபதத்தால் கூறப்பட்ட சுவர்ணத்தையும், உகிர்சீவிபதத்தாற் கூறப்பட்ட இரும்பையும் பரிணாமித்தன்மைவடிவத்தானே திருஷ்டாந்தமாய்ச் சுருதி கூறவில்லை; மற்றே, விவர்த்த உபாதானரூபமாய்த் திருஷ்டாந்தப்படுத்தியதென்க. அவை பரிணாமிகாரணமாயின், தயிருண்டாங்கால் பாலாய பரிணாமிகாரணந் தோற்றாததேபோலக் குண்டல கங்கணாதி காரியமுண்டாம்போது பொன் முதலிய காரணமும் தோற்றலாகாது, யாவருக்குமோ தோற்றுகின்றது; ஆகையாலவை யவற்றிற்குப பரிணாமிகாரணமன்றும்; மற்றே, விவர்த்த உபாதானகாரணமேயாம். இத்துணையானே காரணத்தே சத்தியரூபத்தன்மை நிரூபிக்கப்பட்டது இப்போது அக்காரணத்தே அத்விதீயரூபத்தன்மையை வெளிப்படுத்தும்பொருட்டு முதலில் காரணகாரியமிரண்டன்பேதாபேத பக்ஷத்தையும், கேவலம் பேதபக்ஷத்தையும் கண்டிப்பாம்:—ஹே மைந்த! சாங்கிய நூலுடையாரும், பட்டபாதாதி மீமாம்சகரும் உபாதான காரணத்திற்குங் காரியத்திற்கும பரஸ்பரம் பேதாபேத மங்கீகரித்துளார், நையாயிகர் கேவலம் பேதத்தையே அங்கீகரித்துளார், இவை கூடாதனவேயாம்; ஏனெனின், பரஸ்பரம் பேதமுடையபொருள்கள் வேறு வேறு தேயத்தேயிருக்கும், ஆ, குதிரைகட்குப் பரஸ்பரம பேதமேயாதலின் அவை வேறு வேறு தேயத்தேயிருப்பதேபோலும். நூல் ஆடையில, மண்கடத்தில் வேறு வேறு தேயத்திருக்குந்தன்மையின்றுமாதலின், அவற்றிற் பரஸ்பரபேதமுஞ் சம்பவியாதாம். கருத்திதுவாம்:—அக்கினிரூப வியாபகமில்லையாயின் தூமரூப வியாப்பியமுமிலாததேபோல, வேறு தேயத்திருக்குந தன்மைவடிவ வியாபகமிலதாகவே பேதரூப வியாப்பியமுமிலதாகும். இதனானே துணியுமனுமானமிதுவாம்:—மண் கடமிரண்டும் பரஸ்பரம் அபின்னமாம், வேறு தேயத்திருக்குந் தன்மையின்மையனவாதலின், யாவை அபின்னமாகாவோ அவை வேறு தேயத்திருக்குந் தன்மையின்மையனவு மன்மையனவாம்; ஆ, அசுவம்போலும். இதனானே; காரணகாரிய அபேதமே துணியப்பெறும்.

சங்கை :—ஹே சித்தார்த்தியே! படாதிகாரியம், தந்து முதலிய தேயத்தே யிருக்கும், அக்காரணங்கள் பூதலாதியிலிருக்குமாதலின் காரணகாரியங்கட்குத் தேயம் வேறு வேறேயாகும். ஆகவே நம்மேது பக்கத்தேயிராதாதலின், சொரூபாசித்தமெனப் பெயரிய ஹேதுப்போலியாம், அத்தகைய ஹேதுவால் காரணகாரிய அபேதம் சித்தமாகாதாம்?

சமாதானம் :—ஹே வாதியே! அக்காரணகாரியங்கட்கு நீ வேறு வேறு தேயங்கூறினுய், அது கேவலம் கற்பனுமாத்திரத்தாற் கூறியதேயாகும், உண்மையாய் அவற்றிற்கு வேறு வேறு இடமில்லையாம்; ஏனெனின், பூதலாதிகளிடத்தே கடபடாதிபதார்த்தங்களின் இருப்புண்மையை யனுபவிக்கும் உலகர் காரிய காரணங்கட்கு வேறு வேறிடத்தையனுபவித்திலாதலின் அவற்றின் பேதபக்ஷஞ் சம்பவியாதாம். பேதம் அபேதம் என்னுமிரண்டும் பரஸ்பரம் விருத்தமாம், யாண்டுப் பேதமுறையுமோ ஆண்டபேதமுறையாதாம். யாண்டபேதமிருக்குமோ ஆண்டுப் பேதமிராதாமாதலின், பேதாபேத பக்ஷமும் சம்பவியாதாம். கேவலம் அபேதபக்ஷத்தையே எவ்வாதியரு மங்கீகரிக்கவேண்டும். இராஜ்ஜுவின்கண்ணே கற்பிதமாய சர்ப்பாதிகள் அக்காரணத்தினும் வேருயத்தோறறுவாமாதலின், அவை அதனினும் அபின்னமாவதேபோலக் கடாதிகாரியங்களும் மண் முதலிய காரணங்களினின்றும் வேருகத்தோற்றுவாமாதலின் அவையும் அதனினின்றும் அபின்னமேயாம். இராஜ்ஜுவினுண்மைவடிவத்தை யுணரவே சர்ப்பாதிகள் பிரதீதியாகாதனவேபோல, மண்முதலிய காரணங்களின் உண்மைவடிவத்தை யுணரவே கட முதலிய காரியங்களும் பிரதீதியாகாவாம். இவ்வாறு காரணததின் அத்விதீயரூபத்தன்மை எல்லா அறிஞர்களின் அனுபவசித்தமாம். அல்லது, கடமுதலிய காரியத்தேயுண்டாம் பேதமயல் அபரோக்ஷரூபமாமாதலின், அம்மயல் நீக்கம் காரணபரோக்ஷஞானத்தானே யாகாதாம; மற்றே, அபரோக்ஷஞானத்தானே யாம். கிழக்குமுதலிய திசைகளில் மேற்கு முதலியவற்றின் மயல் அபரோக்ஷமா மாதலின், திசையின் பரோக்ஷஞானமுளதாயினும் மயல் நீக்கமுண்டாகின்றதில்லை; மற்றே, அதன் அபரோக்ஷஞானத்தானே மயல் நீக்கமுண்டாம். அதுபோன்றே காரண அபரோக்ஷஞானத்தானே காரியபேதமயல் நீக்கமாம். ஹே சுவேதகேதுவே! கடாதிகள் பரஸ்பரம் பேதமுடையனவாதலின் காரியரூபமாம், ஆகவே அவை பிருதிவி நீர் தேயுரூபகாரணத்தினின்றும் பின்னசத்தை யுடையனவன்று வதேபோல, அப்பிருதிவியாதியும் பரஸ்பரம் பேதமுடையனவாதலின் காரியரூபமேயாம், ஆகவேயவையும் பரமான்மாவாய காரணத்தினின்றும் பின்னசத்தை யுடையனவன்றும். கருத்திதுவாம் :—அதிகாரி முதலில் பிருதிவி முதலிய மூன்று காரணங்களில் கடாதிகாரியத்தின் பேதாபாவத்தை நிச்சயம்செய்க, பின் அத்திருட்டாந்தத்தால் பிருதிவி முதலிய காரியபேத அபாவத்தைப் பரமான்ம காரணத்தே நிச்சயஞ்செய்க.

சங்கை :—ஹே பகவன்! கடாதிகள் பேதமுடையனவாதலின் காரியரூபங்களாம் எனத் தாங்கள் பேதரூப ஹேதுவினுனே காரியரூபத்தன்மையைச் சித்தஞ் செய்தல் சம்பவியாதாம்; ஏனெனின், எவ்வேது தன்சாத்தியப்பொருளைவிட்டு வேறிடத்தே இராதோ அவ்வேதுவினுனே அச்சாத்தியம் சித்திக்கும். தன்

சாத்தியத்தைவிட்டு மற்றிடத்துமிருக்குமேது பிறழ்ச்சியுடையதாம். அதனானே சாத்திய சித்தியுண்டாகாதாம். பேதரூபஹேதுவும் காரியத்வ அபாவமுடையான்மாவின்கண்ணேயிருத்தலின் பிறழ்ச்சியுடையதேயாம். அவ்வேதுவினானே காரியத்தன்மையின் சித்தியாகாதன்றோ?

சமாதானம்.—ஹே குமர! ஜடத்தன்மைத் தன்மவிசிஷ்டபேதரூப ஹேதுவேகாரியத்தன்மையைச் சித்திசெய்யும், அஃதான்மாவின் கண்ணின்றாமாதலின் காரியரூபத்தன்மையும் சித்தமாகாதாம்.

சங்கை:—ஹே பகவன்! அந்த ஜடத்தன்மை விசிஷ்டபேதம் அவித்தையின் கண்ணுமிருக்கும்; ஆனால் சித்தாந்தத்தே அவித்தையைக் காரியரூபமென அங்கீகரிப்பதின்றாம்; மற்றோ, அநாதியென அங்கீகாரமமாதலின், அவ்வேதுவும் பிறழ்ச்சியுடையதேயாம்.

சமாதானம்:—ஹே மைந்த! அவித்தையின்கண்ணே உற்பத்திகாரியத்தன்மையிராதாயினும், அதிஷ்டானத்தின்கண்ணே கற்பிதத்துவரூப காரியத்தன்மையிருக்குமாதலின், அவ்வேதுப் பிறழ்ச்சியதன்றாம்.

சங்கை:—ஹே பகவன்! ஆன்மாவின்கண்ணே அவ்வேதுவின்றாயினும், காரியத்தன்மை ஏன் கூடாதாம்?

சமாதானம்:—ஹே குமர! ஆன்மாவின்கண்ணே அவ்வேதுவின்றாயினும் காரியரூபத்தன்மையை யங்கீகரிக்கும் வாதியை வினவவேண்டியதாவது.—ஆன்மாவின்கண்ணேயிருக்கும் காரியத்தன்மைகாரணமற்றதா? காரணமுற்றதா? முதற் பக்ஷம் சம்பவியாது, ஏனெனின், ஆன்மாவின்கண்ணிருக்குங் காரியத்தன்மை காரணமற்றதேபோலக் கடபடாதி ஜகத்தின்கண்ணேயிருக்குங் காரியத்தன்மையும் காரணமற்றதாகவேண்டும, உடன்பாடேயெனின், கூடாதாம்; என்னை, கடாதிகாரியங்களின் மண் முதலியவற்றின் காரணத்தன்மையாவருக்கும் அனுபவ சித்தமாம். இந்நூலின் 8-வது அத்தியாயத்தே காரணமின்றியே காரிய உற்பத்தியின்கண்ணே அநேகவகையாய தூஷணம் கூறிவந்தேமாதலின் காரணமின்றிக் காரியோற்பத்தி சம்பவியாதாம். 2-வது பக்ஷத்தை யங்கீகரிக்கின் இங்ஙன் வினவுக:—ஆன்மாவின் காரணம் அசத்தியமா? சத்தியமா? 1-வது பக்ஷம் சம்பவியாதாம், என்னை, சத்தியரூபமாய்ப பிரசித்த கடாதி சத்தியகாரியம் மண்முதலிய சத்தியகாரணத்தானேயுண்டாம். அசத்தியத்தினின்றும் சத்தியோற்பத்தி யாண்டுங் காணப்பெறுவதின்றாம். ஆன்மாவும் சர்வலோக அனுபவத்தானும், சுருதி மிருதிரூப சாஸ்திரத்தானும் சத்தியரூபமாகவே பிரதீதியாமாதலின் அதற்கு அசத்திய காரணத்தினின்றும் உற்பத்தி சம்பவியாதாம், சம்பவிக்கின் ஆன்மாவும் காரணமேபோல அசத்தியரூபமேயாம், அங்ஙனறைதல் அத்தியந்தம் விருத்தமாம். அல்லது, ஆன்மாவின்காரணம் அசத்தியரூபம் என்னும் வசனத்தேயிருக்கும் அசத்திய சப்தப்பொருள் சத்தியவஸ்துவின் அபாவமெனப் பிரதீதியாம். அபாவமாவதெல்லாம் தம்ஞானத்தே பிரதியோகியினபேக்ஷையை யவசியம்செய்யும். பிரதியோகியின் ஞானத்தானன்றி அபாவஞானமுண்டாகாதாமாதலின், சத்தியத்தின்

அபாவரூப அசத்தியமும் தன் சித்தியின்கண்ணே சத்தியரூபப் பிரதியோகியினபே க்ஷையை அவசியம் செய்யுமாதலின், அந்தச் சத்தியவஸ்துவின்கண்ணே ஆன்மாவின் காரணத்தன்மை சம்பவிக்கும்; அதனபாவத்தே ஆன்மாவின்காரணத்தன்மையங்கீகரித்தல் பயனற்றதாம். அல்லது, எவ்வபாவமும் எக்காரியத்திற்கும் காரணமாகாதாம் என்பது 8-வது அத்தியாயத்தே காரணவிசாரப் பிரசங்கத்தே விஸ்தாரமாய்க்கூறிவந்தேமாதலின், ஆன்மாவின்காரணம அசத்தியம் என்னும் முதற் பக்ஷம் சம்பவியாதாம். சத்தியமென்னும் 2-வது பக்ஷத்தை யுடன்படின் வினவவேண்டியதாவது :—ஆன்மாவின் சத்தியகாரணம் பரிச்சின்னமா ? அபரிச்சின்னமா ? 1-வது சம்பவியாதாம் ; ஏனெனின், பரிச்சின்னமாவவெல்லாம் ஜடமேயாம், ஜடமாவவெல்லாம் காரியரூபமேயாம், காரியமாவவெல்லாம் தமமுற்பத்தியின் கண்ணே வேறு காரணத்தினபேக்ஷையை யவசியஞ்செய்யும். கடாதிகள் பரிச்சின்னத்தாற் சடமாய்ச் சடத்தாற் காரியமாய்க் காரியமாதலின் காரணாபேக்ஷையுடையனவாமாறு ; ஆன்மாவின் சத்தியகாரணமும் பரிச்சின்னத்தாற சடமாய்ச சடத்தாற் காரியமாய்க் காரியமாதலின் தன்னுற்பத்தியிற் காரணாபேக்ஷையுடையதேயாம ; மேல் அக்காரணமும் தன்னுற்பத்தியின்கண்ணே வேறு காரணத்தையபேக்ஷிக்கும், அவ்விரண்டாவது காரணமும் மூன்றாவது காரணததையபேக்ஷிக்கும். இவ்வாறு காரண பாம்பரையை யங்கீகரிப்பதில் அநவஸ்தா தோஷப்பிராப்தியாம், அதை நீக்கற்பொருட்டு ஆன்மாவின் சத்தியகாரணம் சேதனரூபம், அபரிச்சின்னரூபம் என்னும 2-வது பக்ஷத்தையேவாதி யங்கீகரிக்கவேண்டிவரும். இதன்கண்ணும் இவ்விசாரஞ்செய்யத்தக்கதாம் :—அக்காரணம் ஆன்மாவினும் வேறா ? அல்லவா ? வேறெனிற் சம்பவியாது, ஆன்மாவினும் வேறாயவெல்லாம் அநான்மரூபமேயாம். இல்லம்முதலியவை ஆன்மாவினும வேறாதலின் அநான்மரூபமாவதே போலும், அநான்மரூபமாவவெல்லாம் போக்தாவாய ஆன்மாவின் சுகசாதனமாம்; இல்லம் சையைமுதலிய பொருள்கள் அநான்மரூபமாதலின் போக்தா ஆன்மாவின் சுகசாதனங்களாதலேபோலும், அத்தகையனவெல்லாம் ஜடங்களாம், ஜடங்களியாவும் காரியங்களாம், இல்லம் முதலியனபோலும். காரியமாவவெல்லாம் ஒரு காரணத்தானே ஜனித்தனவாம, இல்லமுதலியவை மண் முதலிய காரணங்களானே ஜன்னியமாதலேபோலும். ஆன்மாவின் சத்தாரூபகாரணமும ஆன்மாவினும் பின்னமாதலின் முற்கூறிய பரம்பரையாய்க் காரியரூபமும அவசியமாகவேண்டும், வேண்டவே வேறொரு காரணத்தானே ஜனித்தலும் அவசியமாம். மேலிரண்டாவது காரணமும் 3-வது காரணத்தானேயுண்டாம. இவ்வாறு காரணபாம்பரை யங்கீகரிப்பதானே மீண்டும் முன்போலவே அநவஸ்தாதோஷப்பிராப்தியாம். அதன் நீக்கப்பொருட்டு ஆன்மாவின் சத்தாரூபகாரணத்தை வாதி ஆன்மரூபமெனவும், சேதனரூபமெனவும், ஆநந்தரூபமெனவும், சர்வ பேதமற்ற அபரிச்சின்னமெனவும், காரணமற்றதெனவும் அங்கீகரிக்கவேண்டும். இவ்வாறாயதை ஆன்மாவின் காரணமென வுடன்படவே அவ்வான்மரூபச் சத்தைவடிவக்காரணத்தினும் வேறாக ஒருகாரியத்தின்கண்ணே ஆன்மரூபத்தன்மை சம்பவியாதாமாதலின் வாதியங்கீகரித்த சத்தாரூபகாரணத்தையே யாம் ஆன்மவடிவமாயுடன்பட்டேம் ; இதனானே ஆன்மா ஒருகாரணத்தானே யுண்டாவதின்றாம் எனத் துணி

யப்பெறும். வேதசுருதிகளும ஆன்மாவை அஜம், நித்தியம், அக்கினி முதலிய சர்வகாரணங்கட்கும் காரணம், சுயஞ்சோதி, சர்வபேதமற்றது எனக்கூறுகின்றன. இவ்வான்மாவையே இச்சாந்தோக்கிய உபநிஷத்தானது சத்சப்தத்தானே கூறியது. சத்சபதத்தானே ஆன்மாவைக் கேவலம் சத்தியரூபத்தன்மையுடையதாகக்கூறவில்லை; மற்றோ, சேதனரூபத்தன்மை ஆநந்தரூபத்தன்மையுடையதாகவும் கூறுகின்றது; ஏனெனின், சத்து, சித்து, ஆனநதம், ஆன்மா நான்கு பதார்த்தங்களையும பரஸ்பரம் பேதமென அங்கீகரிக்கின் பேதரூபவஸ்து பரிச்சேத ஹேதுவால் சததியாதி நான்கிலும் கடாதிகட்கேபோல ஜடத்தன்மை சித்தமாம். அவ்வேதுவினானே அவற்றின்கண்ணே காரியரூபத்தன்மை சித்தமாம், அவ்வேதுவினானே, காரணாபேக்ஷை சிததமாம், அக்காரணங்கட்கும் தம்முற்பத்தியில் வேறு காரணாபேக்ஷையாம், அதற்கும மற்றொரு காரணாபேக்ஷையாம். இங்ஙன் காரண பரம்பரை யுடன்படுவதில் முன்போல அனவஸ்தாதோஷபிராப்தியாமாதலின், சத்தாதி நான்கில் சிறிதுமாததிரையும் பேதஞ் சம்பவியாதாம்: நான்கு சப்தங்களும் ஒரே பொருளின் வாசகஙகளாம்.

சங்கை:—ஹே பகவன்! அந்நான்கு சபதங்களும் ஒரே பொருளின் வாசகங்களாயின், கூறியது கூறலென்னும் குறறத்தை யடையுமன்றோ?

சமாதானம்:—ஹே சுவேதகேதுவே! ஆன்மாவின்கண்ணே மயலாலடைவுற்ற அசத்தன்மையைச சத்சப்தம் நீக்கும், ஜடத்தன்மையைச் சித்சப்தம் நீக்கும், துக்கத்தன்மையை ஆநநதசப்தம் நீக்கும், பரிச்சின்னத்தன்மையை ஆன்மசப்தம நீக்கும். இவ்வாறு அசத ஜடதுகக பரிசசின்னத்தன்மையை நீக்கி முன்னறியாத ஆன்மவடிவத்தைக்கூறுமாதலின், அவற்றின்கண்ணே கூறியது கூறலென்னும குற்றம் பற்றாதாம். ஆகாசத்தினின்றும் கநதர்வநகர முண்டாவதேபோலச சத்தியவடிவ ஆன்மாவினின்றும் தேயு முதலிய உலகமெல்லாமுண்டாம். இப்போதான்மாவின்கண்ணே விவாத்த உபாதானரூபததன்மையானே பரமசத்தியரூபத்தன்மையை அநேகம யுக்திகளோடு நிரூபிபபாம்:—ஹே சுவேதகேதுவே! கடாதி காரியத்தே மண்ணாகியகாரணம எபபோதும் தொடாந்து தோறறுவதேபோல ஆன்மரூபசத்தையும் உலகின்கண்ணே எல்லாபபொருள்களிலும் தொடர்ந்திலங்கும்.

சங்கை:—ஹே பகவன்! இரஜ்ஜுரூப அதிஷ்டான ஞானமுண்டான பின்னர்ச் சர்ப்பரூப அத்தியாசம் நிவிருத்தியாவதேபோல, அதிஷ்டானரூப சத்தையின் ஞானமுண்டான பின்னர்ச் சம்சாரரூப அத்தியாச நிவிருத்தியுண்டாதல் வேண்டும், ஆனால் அவ்வாறு காணவருவதோ இன்றாம்?

சமாதானம்:—ஹே சுவேதகேதுவே! மூடபாலகர்க்கு மனுடரூபத்தானே மகாராஜா அறியபபெறுவரேனுந் தநதை முதலிய பெரியோருபதேசத்தானன்றி அரசரூபமாயவர்க்குத்தெரிவுறா; மற்றோ, உபதேசததானே தெரிவர். அவ்வாறே ஆன்மரூபசத்தை யாண்டும விளங்கிக்கொண்டிருப்பினும ஞானசிரியரின் உபதேசத்தானன்றி அது தன்னான்மரூபமாய்ப் பிரதீதியாகாதாம். தற்பதார்த்த

ரூபசத்தைத் தன்னுன்மரூபமென உணரப்பெருதவரை அஞ்ஞானரூபமாயா நிவிருத்தியுண்டாகாதாம். ஆகாதவரை மாயையின் காரியரூபஜகத்தும் நீங்காதாம். குருசாஸ்திர உபதேசத்தானே பரமான்மரூபசத்தையைத் தன்னுன்மவடிவமாய்க்கண்டபோது அஞ்ஞானரூபமாயையின் நிவிருத்தியவசியமுண்டாம். மாயாரூபகாரணம் நீங்கியபின்னர் ஜகத்துருவ அத்தியாசத்தை ஒருகாலும் காணுன். தோஷரகித ஆகாசத்தின்கண்ணே கந்தர்வநகரம் ஒருகாலும் தோற்றுதாம் அவ்வாறே, மாயாரூபதோஷமற்ற ஆன்மாவின்கண்ணே இவ்வுலகம் ஒருகாலும் பிரதீதியாகாதாம். ஆகாசத்தின் அஞ்ஞானத்தானே கந்தர்வநகரமுண்டாவதேபோல ஆன்மாவின் அஞ்ஞானத்தானே யிவ்வெல்லா வுலகுமுண்டாம். விண்ணிற் கந்தருவநகரம் உண்மையாயோ முக்காலத்துமின்றும்; மற்றே, அது கேவலம் பெயர் மாத்திரையானே பிரதீதியாவதேபோல ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணும் இவ்வுலகம் உண்மையாய் முக்காலத்துமின்றுய்க் கேவலம் பெயர் மாத்திரையானே தோற்றுமாதலின் இதுவும அக்கந்தருவநகரம்போலப் பொய்யேயாம். விண்ணில முக்காலத்திலுமில்லாவிடினும் கந்தருவநகரம் மாயாவயத்தானே ஒரு தோஷதரிசிக்குமத்தியகாலத்தே . தோற்றுவதேபோல, ஆநந்தவடிவ ஆன்மாவின் கண்ணே முக்காலத்தே அசத்தியரூபமாயினும் இவ்வுலகம் மாயாவசத்தானே ஒரு தோஷதரிசிக்கு மத்தியகாலத்தே பிரதீதியாம். இதனுனும் இவ்வுலகம பொய்யேயாம். மாயையால் மோகிதமாகியவன் ஆகாயத்தே கந்தருவநகரத்தைக காணினும், அமோகிதன் காணுகதேபோல அஞ்ஞானி ஆநந்தவடிவ ஆன்மாவின் கண்ணே உலகைக்காணினும அறிஞன்காணுன். இதனுனே, அஞ்ஞானிக்குப பந்தமும் அறிஞனுக்கு மோக்ஷமும் உண்டாம். கனவின்கண்ணே கண்டபோனொருவனே அநேக ரூபங்களைத்தரித்து ஒருருவத்தானே பந்தமுறுவன், ஒருருவத்தானே மோக்ஷமுறுவன். அங்ஙனமே, ஆன்மா ஒன்றே அவித்தையின் சம்பந்தத்தானே அநேக உருவங்களைத்தரித்து ஒருருவத்தானே பந்தத்தையடையும், ஒருருவத்தானே மோக்ஷத்தையடையும. கனவில்கண்டபோன்பால் பந்தமோக்ஷங்கள் உண்மையாயின்றுவதேபோல நனவிலும் ஆன்மாவின்கண்ணே பந்தமோக்ஷஙகள் உண்மையாயின்றும. பநதமோக்ஷாதி சர்வ ஜகத்தையும் எப்போதும் சாக்ஷிரூபமாய்க்காண்பதாய ஆன்மாவே பரமசத்தியரூபமாம். ஆன்மாவினும் வேருய இவ்வெல்லாத் திருசியப்பிரபஞ்சமும் பொய்யேயாம். சர்வ ஜகத்தையும் காணும் சாக்ஷியே சர்வ ஜகத்தின் காரணமாமாதலின் பரமசத்தியரூபமாம். திருசிய பதார்த்தங்கள் யாவும் காரியரூபமும் நாமமாத்திரமுமாதலின் பொய்யேயாம். ஹே குமர! இவ்வாறு பரமான்மரூபகாரணத்தின்கண்ணே பரமசத்தியரூபத் தன்மையை அங்கீகரித்து ஆருணிப்பிதாவானவர் சுவேதகேதுவிற்கு மண் பொன் இரும்பு என்னும் மூன்றன்கண்ணே தன் தன் காரியத்தை யபேக்ஷித்துச் சத்தியரூபத்தன்மையைக் கூறினர். கடபூஷணகட்காதி காரியத்தே அசத்தியரூபத் தன்மையைக்கூறினர். மண் முதலிய மூன்றும் தமது கடாதிகாரியத்தைக்குறித்துச் சத்தியமாவதேபோலப் பரமான்மாவும் பிருதிவியாதி சர்வ ஜகத்தையுமபேக்ஷித்துப் பரமசத்தியரூபமாமாதலின் சுருதிபகவதி அதனைச் சத்தியத்திறகுஞ் சத்தியமென்றனள். அத்தகைய பரமான்மாவை நீயு மவசியமாயுணரவேண்

டும்; அதனை யுணர்ந்தமாத்திரையானே யிவ்வுலகில் யாது மறியவேண்டியதின்றாகும்; ஆனால், அத்தகைய பரமான்மாவை நீ பிரமாதத்தானே நின்குருபாற் கேட்கவில்லையாதலின், ஹே சுவேதகேதுவே! அந்தப் பரமான்மாவை யுணர்தற் பொருட்டு நீயும் மீண்டு அக்குருவின் சமீபத்தேசென்று வினவுதி. அவருபதேசத்தானே பரமான்மவடிவத்தை யுணர்ந்து மீண்டு விரைவாகவே என்னிடத்தில் வா. தமது பிதா இவ்வாறு கூறக்கேட்ட சுவேதகேதுவானவர் கூறுவதாவது:—ஹே தந்தையே! எந்தப்பரமான்மாவின் ஞானத்தானே இச் சர்வஜகத்தின் ஞானமாமோ அவ்வடிவத்தை என் குரு வறிந்திலர்; ஏனெனின், அவரறிந்திருப்பாராயின் என்னிடத்தில் மிகப்பிரியமுடைய அவர் சிரத்தையையுடைய எனக்கு அதனை யவசிய முபதேசித்திருப்பர்; ஆனாலத்தகைய உபதேசத்தை யவரொருபோதுஞ் செய்ததில்லையாதலின், அதனை யவரறியாரென அறிந்து கொள்ளலாமன்றோ? என்னாசிரியர் என்னைத் தமது மைந்தரினும் பிரியமாகவைத்திருந்தனராதலின், எவ்வித்தையையும் எனக்கவர் மறைத்துவையாது அறிந்த வித்தைகளையெல்லாம் எனக்குபதேசித்தனர், மீண்டும் அவர் சமீபத்தே செல்வதில் பயன் யாதுமில்லை. அவரது ஆணையை மேற்கொண்டு சமாவர்த்தனமெனப் பெயரிய சமஸ்காரத்தை யடைந்து வீட்டிற்கு வந்திருக்கின்றேன். ஆகையால், விசுவாசமற்றவன்போல மீண்டும் ஆசிரியர்பாற்சென்று வினவுதல் எனக்குசிதமன்றாம். ஹே பகவன்! எதனை யுணர்ந்தமாத்திரையானே அறிந்த அறியாதபொருள்களியாவும் அறியப் பெறலாமோ, அதன் உணர்வுண்டாம் வண்ணம் தாங்களே எனக்குபதேசியுங்கள். பிதாவாகிய தங்களைவிட்டு யான் வேறொரு குருவையடையேன். ஹே மைந்த! இவ்வாறு தந்தைபாற் சுவேதகேது கூறியபோது சர்வ வித்வான்களினும் மேன்மையாகிய ஆருணிரிஷி மைந்தன் வசனத்தை யங்கீகரித்து இங்ஙன் கூறத் தொடங்கினர்:—ஹே மதியைப்போலும் பிரியதரிசனனே! சுருதியாற் கூறப் பெற்றதும், உன்னால் வினவப்பெற்றதும் ஆகிய பரமான்மாவின் வடிவத்தை உனக்குபதேசிக்கின்றேன், நீ கருவத்தைப் பரித்தியாகித்து மனதைச் சாவதானப் படுத்திக்கொண்டு கேட்பாயாக.

இப்போது எதனை யுணரின் யாவுமுணர்ந்ததாமோ அந்தப் பரமான்மாவின் கண்ணே அத்விதியத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே சுவேதகேதுவே! தோற்றுநின்ற நாமரூபக்கிரியைவடிவ ஜகத்தானது முறையே தூலசூக்ஷுமவாசகங்களாகிய சத்து அசதது என்னும் சப்தங்களானே கூறத்தகுதியதாம். அச்சப்தத்தானே உண்டாய தூலசூக்ஷுமவிஷயகஞானங்கட்கு விஷயமாயதாம், அந்தச் சத்தசத்சப்த புத்தியோடுகூடியதாம். இத்தகைய உலகுண்டாவதற்குமுன் சத்தாகவே யிருந்தது. சத்தசத்தென்னும் சப்தஞானமற்றதாயிருந்தது. அக்காலிவ்வெல்லா வுலகும் சத்தையினும் வேறன்றாயிருந்தது. நையாயிகர் கடபடாதிகளிடத்தே ஒரு சத்தாஜாதியை யங்கீகரிப்பதேபோல, நீ சத்தாசப்தத்தானே சத்தையென்னும் ஜடஜாதியை யங்கீகரிக்கவேண்டாம்; மற்றே, யானுனக்கு முன்னர்க்கூறிய சிதானந்தரூபசத்தையையே யங்கீகரிக்குதி; ஏனெனின், சத்தாசப்

தத்தானே ஜாதிவடிவு ஜடசத்தையைக் கவரினே ஜடமாவனவெல்லாம் பேதரூப வஸ்துபரிச்சேதமுடையனவாம், பரிச்சேதமுடையனவெல்லாம் காரியரூபங்களாம், கடாதிஜடப்பொருள்கள் பேதமுடையனவாதலின் காரியரூபமாவனபோல ஜடசத்தையும் பேதரூபவஸ்து பரிச்சேதமுடையதாதலின் காரியரூபமாம்; காரியரூபசத்தையின்கண்ணே சர்வ ஜகத்தின் காரணத்தன்மை சம்பவியாதாம்: ஆகையால், ஈண்டுச் சர்வ ஜகத்தின்காரணரூபமாய்க் கூறிய சத்தை ஜாதிரூபஜடசத்தையினும் விலக்ஷணமேயாமென அறிவாயாக. சூரியனுதயமாவதற்கு முன்பு அந்தகாரமிருப்பதேபோல இவ்வுலகம் உண்டாவதற்குமுன்பு இச்சத்தையே எஞ்சி நின்றது. இக்காரணரூபசத்தையையே மாயாரூப உபாதி சம்பந்தத்தானே சுருதி பகவதி அவ்வியாகிருதமெனக்கூறினள். ஜகத்தின் உற்பத்தியின்முன்னர்க் காரணரூபமாயிருக்கும் சத்தாவஸ்து யாதோ, எச்சத்தாரூபகாரணத்தைச் சுருதியானது அவ்வியாகிருதப்பெயராற் கூறியதோ, அது நிர்க்குணப்பிரஹ்மரூபமேயாம். அதன்கண்ணே, 'யதோவாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மநஸா ஸஹ' என்பதாதி சுருதிகள் அறிஞனது மனசகிதவாணியின் நிவிருத்தியையும் கூறியிருக்கின்றன. தேசகாலங்களும் தூலசூக்ஷ்மபதார்த்தங்களும் முன்னுண்டாகவுமில்லை, இப்போதிருக்கவுமில்லை, இனி யுண்டாகப்போவதுமில்லை. இத்தகைய நிர்க்குணப் பிரஹ்மத்தின்கண்ணே 'ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத்' என்னும் சுருதி இருந்ததெனப் பொருள்படும் 'ஆஸீத்' என்னும் பதத்தால் சென்றகாலத்தைக்கூறியதும் காலவாசனையோடுகூடிய சீடனது புத்தியை யனுசரித்தேயாம்; உண்மையாய் அதீதகாலமும் பிரஹ்மத்தின்கண்ணேயின்றாம். இப்போது அந்நிர்க்குணப்பிரஹ்மத்தே சுவகத, சஜாதீய, விஜாதீயபேதங்களின் அபாவத்தை நிரூபிப்பாம்:—ஹே சுவேதகேதுவே! ஒரே விருக்ஷம் தன் பத்திரபுஷ்ப பல சாகை ஸ்கந்தம் என்பனவாதி அவயவங்களின் பேதத்தானே சுவகதபேதமுடையதாமாறு, பரமான்மா நிரவயவமாதலின் சுவகதபேதமுடையதன்றாம். ஆன், அசுவம் முதலியவை தமது சமானஜாதியையுடைய வேறு ஆன், அசுவம் முதலியவற்றினின்றும் சஜாதீயபேதமுடையனவாமாறு, பரமான்மா சஜாதீயபேதமுடையதுமன்றாம். அவ்வான் முதலியவை தம்மினும் விருத்தஜாதியையுடைய மகிஷாதிகளினின்றும் விஜாதீயபேதமுடையனவாமாறு, பரமான்மா விஜாதீயபேதமுடையதுமன்றாம். மூன்று பேதமுமற்றதனானே வேதவேத்தாக்கள் பரமான்மாவைச் சத்தாரூபமென்றனர். இத்துணையானே 'ஏகமேவாத்விதீயம்' என்னும் சுருதியின்கண்ணேயிருக்கும் ஏக சப்தத்தானே அதன்கண்ணே சஜாதீய பேதாபாவம் காட்டப்பட்டது, ஏவ வென்னுந் தேற்றத்தானே சுவகதபேதாபாவங் காட்டப்பட்டது, அத்விதீய சப்தத்தானே விஜாதீயபேதாபாவங் காட்டப்பட்டது.

சங்கை:—ஹே பகவன்! உண்டாவதற்கு முன்பு பிரஹ்மத்தின்கண்ணே இக்காரியஜகத்தின்றாமாயினும், அக்கால் மாயை இருக்கின்றதாதலின் அதனானே பிரஹ்மத்தின்கண்ணே சத்விதீயத்தன்மை சித்தமாமன்றோ?

சமாதானம்:—ஹே சுவேதகேதுவே! அந்நிர்க்குணப்பிரஹ்மத்தே ஜகத்காரணத்தைச் சித்திசெய்யும் மாயை துவிதீயரூபமாய்ச் சம்பாவனையாமாயினும்,

உண்மையாய் அது பிரஹ்மத்தின்கண்ணின்றாம்; மற்றோ, மாயையான் மோகிக்கப்பட்ட அஞ்ஞானியே அதனைப்பிரஹ்மத்தின்கண்ணே காண்பனாதலின், அஃததன்கண்ணே மாயையானே சித்தமாம். நம்மனோர்கட்குப் பிரத்தியக்ஷப்பிரமாணத்தானே சித்ததினத்தைக் கூகை இரவென எண்ணும்; அதன்கண்ணே யதற்குத் தன்னனுபவமே பிரமாணமாமன்றி வேறொரு பிரமாணமின்றாவதேபோல, மாயையின்கண்ணும் அஞ்ஞானிகளின் அனுபவமே பிரமாணமாமன்றி வேறு பிரமாணமின்றாமாதலின், மாயை மாயையானே சித்தமாம். உண்மையாய் அந்தகாரமற்ற சூரியபகவான் மேருகிரியின் பின்பக்கத்தே செல்லுங்கால் உண்டாம் இரவின்கண்ணே மூடன் சூரியனிடத்தே அந்தகாரத்தைக் கற்பிப்பதேபோல, உண்மையாய் மாயையற்ற பரமான்மாவின்கண்ணே மூடன் மாயையைக் கற்பனைசெய்வன். நேத்திரங்களால் கண்ட சூரியபகவான் உதயமானபின் அந்தகாரம் காணப்பெறாதேபோல, ஞானகுரியரின் உபதேசத்தாலுண்டாய ஆன்மசாக்ஷாத்காரம் உதயமானபின்பு அவ்வறிஞனுக்கு மாயை காணபபெறாதாம். சூரியபகவானை அந்தகாரம் முக்காலத்தும் தீண்டாததேபோல, ஆன்மாவையும் அம்மாயை முக்காலத்தும் தீண்டாதாம். அந்தகாரம், அல்லது மேகாதி காண்போனுடைய நேத்திரங்களை மறைத்தே ஆகாயத்தின்கண்ணிருக்கும் சூரியமண்டலத்தை மறைப்பதேபோல இவ்வஞ்ஞானரூபமாயையும் அஞ்ஞானிகளின் புத்தியைமறைத்தே பரமான்மாவைமறைக்கும்; பரமான்மாவின்கண்ணே இம்மாயை உண்மையாயின்றாம்; மாயையின் தூலசூக்ஷுமகாரியமும் உண்மையாயின்றாமாதலின், இவ்வுலக உற்பத்தியின் முன் சத்தாகிய பரமான்மாவேயிருந்தது; பரமான்மாவினும் வேறாய இவ்வுலகமும், காரணமாயையுமின்றாம். இத்துணையானே சத்தாகிய பரமான்மரூபகாரணத்தின்கண்ணே அத்விதீயரூபத்தன்மை சித்தஞ்செய்யப்பெற்றது. இப்போது 'தத்³தை⁴க ஆஹுரஸதே³வேத³மக்³ர ஆஸீதே³கமேவாத்³விதீயம் தஸ்மாத³ஸத꞉ ஸஜ்ஜாயத' என்னுஞ் சுருதிகண்டனஞ் செய்யும்பொருட்டுக் கூறிய அசத்காரணவாதிகளின் மதத்தை நிரூபிப்பாம்:—ஹே சுவேதகேதுவே! இவ்வாறு சர்வபேதமற்ற சத்தைவடிவகாரணம் சித்தமாயினும், சில பிரஹ்மஞானமற்ற பண்டிதர்கள் அத்தானத்தே அசத்தையை யங்கீகரித்து அதனையே ஜகத்காரணமென உடன்பட்டுளார். பரமான்மரூபசத்தையை ஜகத்காரணமென உடன்பட்ட நமது வேதாந்தமதத்தே அவர் இவ்வாறு தோடங்கூறுவர்:—வேதாந்திகளாகிய நீவிர் சர்வ ஜகத்தின் உபாதானகாரணரூபமா யங்கீகரித்த சத்தை சத்வடிவமா? அசத்வடிவமா? முதற்பக்ஷத்தை யுடன்படின் வினவவேண்டியதாவது:—அச்சத்தையின்கண்ணேயிருக்கும் சத்ரூபத்தன்மை தன் வடிவத்தானே சித்தமா? அல்லது ஒரு தருமரூப வேறு சத்தையானே சித்தமா? முதற்பக்ஷத்தை யங்கீகரிக்கின் அச்சத்தையின்கண்ணே அசத்தையினும் விலக்ஷணத்தன்மை சித்தியாதாம்; ஏனெனின், அச்சத்தையின்கண்ணே சொரூபமாய்ச் சத்வடிவத்தன்மையிருப்பதே போல அசத்தையின்கண்ணும் சொரூபமாய்ச் சத்வடிவத்தன்மை சம்பவித்தல் கூடும்; அதை நீக்குவதன்கண்ணே யெவ்வாதிக்கும் சமர்த்தின்றாம். அச்சத்தையின்கண்ணே இருக்கின்றதென்னும் விதிமுகப்பிரதீதிவிஷயத்தன்மையிருக்கின்

றது, அசத்தையின்கண்ணே இல்லையாதலின் அவ்விடயத்தன்மையே சத்தையின்கண்ணே அசத்தையினும் விலக்ஷணத்தன்மையாம், என வேதாந்தி கூறிற் சம்பவியாது; ஏனெனின், அச்சத்தையின்கண்ணே அவ்விஷயத்தன்மையிருக்கும், அசத்தையின்கண்ணேயிராது என வேதாந்தி யங்கிகரித்தது கேவலம் தங்குல தருமம்போலத் தமது விருத்தர்களின் சங்கேதமாத்திரத்தானே சித்தமாமன்றி வஸ்துவின் இயற்கை யநுசாரமன்றாம். ஆகையால், விருத்தர் சங்கேதம் அசத்தையின்கண்ணே விதிமுகப்பிரதீதி விஷயத்தன்மையை யுடன்படத்தடைசெய்யாதாம். ஒரு நிலைக்களத்திருக்கும் பதார்த்தங்கட்கே பரஸ்பரம் தடைப்படல் தடைப்படுத்துதற்றன்மையுளதாமாதலின், சத்தைக்கேபோல அசத்தையின்கண்ணும் அவ்விஷயத்தன்மை சம்பவிக்கும். அல்லது, உலகின் உற்பத்திகாலத்தே சத்தையின்கண்ணே விதிமுகப்பிரதீதிவிஷயத்தன்மை சம்பவிக்குமாயினும், உற்பத்தியின் முன்னர்ச் சம்பவியாதாம்; ஏனெனின், சிதாபாசனோடு கூடிய அந்தக்கரண விருத்தி பிரதீதியாம், அது சிதாபாசனோடுகூடிய அந்தக்கரணரூபப் பிரமாதாவின் ஆசிரிதமாயிருக்கும். அஃதோ உலகஉற்பத்தியின்முன்னரின்றாம். பிரமாதாவின்றிய அக்காலத்தே பிரதீதியுஞ் சம்பவியாதாமாதலின், உற்பத்தியின்முன்னர்த் தானேயில்லாததாய அவ்விதிமுகப்பிரதீதி சத்தையின் சித்தியை யெவ்வாறு செய்யும்? மற்றோ, செய்யாதாம். இரண்டாவது பக்ஷத்தை யுடன்படின், அவ்வேறு சத்தையின்கண்ணே சத்தியரூபத்தன்மையைச் சித்தஞ்செய்யும்பொருட்டு மூன்றாவது சத்தையைக் கற்பிக்கவேண்டும், அதன்பொருட்டும் நான்காவது சத்தையைக் கற்பிக்கவேண்டும். இவ்வாறு பூர்வ பூர்வ சத்தையின்கண்ணே சத்தியரூபத்தன்மையைச் சித்தஞ்செய்தற்பொருட்டுக் கற்பித்த உத்தர உத்தரசத்தை யாவும் நியமமின்றி யெண்ணிக்கையற்றனவா? நியதமான எண்ணிக்கையுற்றனவா? முதற்பக்ஷம் சம்பவியாதாம்; ஏனெனின், எண்ணிக்கையற்றனயாவும் முறையாய் அல்லது, ஏககாலத்தே எவ்வுயிர்க்கும் பிரதீதியாகாவாமாதலின், அவ்வியாவற்றுள்ளும் ஒரு சத்தையே சித்தமாமன்றிச்சர்வசத்தை சித்தமாகாதாம். இரண்டாவது பக்ஷமுஞ் சம்பவியாது; ஏனெனின், அவைகளுள் முடிவினுள்ளசத்தை அசத்தையினும் விலக்ஷணமாகாதாம்; மற்றோ, சமானமேயாம். முடிவினுறும் சத்தையின்கண்ணே வேறுசத்தையின்றியே சத்தியரூபத்தன்மையின் வியவகார சித்தியை யங்கீகரிக்கினோ முன்னுள்ள சத்தைகளினும் பிறசத்தையின்றியே சத்தியரூபத்தன்மை வியவகாரம் சித்தமாமாதலின், முடிவின் சத்தையினும் முன்முன் சத்தைகளின் கற்பனைவியர்த்தமேயாம். அல்லது, சர்வ ஜகத்தின் உபாதானகாரணரூபமாய் எச்சத்தையை யங்கீகரித்துள்ளரோ அது நிர்விகார இயற்கையுடையதாதலின், ஏகரூபமா? அல்லது, பரிணாமியியற்கையுடையதாதலின் அநேகரூபமா? முதற்பக்ஷத்தை யங்கீகரிக்கின் அவ்வேகரூபசத்தையின்கண்ணே அசத்தையினும் விலக்ஷணத்தன்மையாதுளது? மற்றோ, அச்சத்தையும் அசத்தையின் சமமேயாம். இரண்டாவது பக்ஷமுடன்படின் அச்சத்தையின்கண்ணே கடாதிகளின் சமானத்தன்மையாம்; அல்லது, இவ்வந்திய பக்ஷத்தே கடாதிகளின் றுல்வியத்தன்மையை யடைந்த சத்தைக்கு உலகின் முன்றிதியுடன்படின் அக்கால் கடாதிகள் எவ்வபராதம் புரிந்தன. இவையும் முன்னவசியமிருக்குமாதலின் முற்காலத்திற்கும் இக்

காலத்திற்கும் பரஸ்பரம் விசேஷத்தன்மை சித்தமாகாதாம்; ஆகாதாகவே அதன் கண்ணே அநேகரூபத்தன்மையும் சம்பவியாதாம். இவை முதலாக அநேகவகைத் தூஷணங்கள் சத்தையின்கண்ணே யடைவுறுமாதலின் சத்தை ஜகத்காரணமாகா தாம்; மற்றோ, அசத்தையே ஜகத்காரணமாம். இத்துணையானே அசத்காரண வாதிகளின் மதம் நிரூபிக்கப்பட்டது. இப்போது அதன்கண்டனஞ்செய்வாம்:— ஹே சுவேதகேதுவே! இவ்வாறு அசத்காரணசித்தியின்பொருட்டு மந்தபுத்தியை யுடைய வாதியர் அநேகம்வகையான குதர்க்கங்களைப்புரிவர். அவருண்மையாய்ப் பண்டிதத்தன்மையறறவரேனும் பொய்யாகவே தம்மைப்பண்டிதரென எண்ணி யவர். அவரை வினவவேண்டியதாவது:—சிருஷ்டியினாதிகாலத்தே அசத்கார ணத்தினின்றும் உண்டாம் இவ்வுலகரூபகாரியம் சத்வடிவமா? அசத்வடிவமா? முதலது சம்பவியாது; ஏனெனின், சிருஷ்டியினாதியில் அசத்காரணத்தினின்றும் சத்காரிய உற்பத்தியுண்டாதலேபோல, இக்காலத்தும் ஏன் அவ்வாறுண்டாத லில்லை? உண்டாதலன்றோ வேண்டும். அக்காலத்துண்டாம், இக்காலத்துண்டாகா தென்பதற்கு யாதேனும் ஊகங்கூறல்வேண்டும். இரண்டாவதுபக்ஷமுஞ் சம்பவி யாது; ஏனெனின், அசத்காரணத்தினின்றும் அசத்காரிய உற்பத்தி முக்காலத் தும் உண்டாவதில்லை அசத்மலடிமைந்தனாகிய காரணத்தினின்றும் அசத்நர சிருங்கரூபகாரிய உறபத்தி ஒருகாலும உண்டாகாததேபோலும். அசத்காரணத் தினின்றும் அசத்காரிய உறபததியுண்டாகுமாயின் மேற்கூறியதும் உண்டாக வேண்டும; ஆகையால் அசதவஸ்துவின்கண்ணே காரணரூபத்தன்மை சம்பவியா ததேபோலக் காரியரூபத்தன்மையும சம்பவியாதாமாதலின், எல்லாவாதியரும் காரியத்தைச் சத்தியரூபமாயே அஙகீகரிக்கவேண்டும். அச்சத்காரியம் அசத்கார ணத்தினின்றும் ஒருகாலுமுண்டாகாதாம். சத்காரியகாரணமும் சத்தியமாயே அங்கீகரிக்கவேண்டுமாதலின், அசதகாரணவாதி முன்னர்ச்செய்த எல்லா விகற் பங்களும் வீணேயாம். இப்போது முன்னையவிகற்பத்தான் மொழிந்த தூஷணங் களை நீக்குவாம. அலலது, அக்காரணரூபசத்தை தன் வடிவத்தானே சத்தியரூபத் தன்மையையடையும் என்னும் பக்ஷத்தை யுடன்பட்ட சித்தாந்தியாய எமக்கு எத்தோஷப்பிராப்தியாம்?

சங்கை:—ஹே சித்தாந்தி! அசசத்தை தன் வடிவத்தானே சத்தியரூபத் தன்மையையடைவதேபோல அசத்தையும் தன் வடிவத்தானே சத்தியரூபத் தன்மையையடையும் என்னும பிரதிபந்திரூபதூஷணம் உம்மதத்தேயுண்டாம்.

சமாதானம்:—ஹே வாதியே! தர்க்கத்தே குசலனாய மதிமான் வேறு பிரதி வாதிக்குப் பிரதிபந்திரூப தூஷணங்கொடான்; அகுசலனே கொடுப்பன். அல்லது அச்சத்தையின்கண்ணே வடிவத்தானே சத்தியரூபத்தன்மையை யங்கீகரிக்கின் அசத்தையின்கண்ணும் அங்ஙனுண்டாதல்வேண்டும் என வாதியோதிய தூஷ ணம் வியாப்தியற்றதாம்; ஏனெனின், யாண்டு யாண்டு சொரூபமாமோ ஆண் டாண்டு சத்தியரூபத்தன்மையாம் என்னும் வியாப்தி சம்பவியாதாம்; அங்கீகரிக் கின்றோ சொரூபத்தானே அக்கினியின்கண்ணே உஷ்ணத்தன்மையிருக்குமாதலின்

சொரூபத்தானே நீரின்கண்ணும் உஷ்ணத்தன்மையிருக்கவேண்டும். பார்த்திவமாதலின் கடம்நீர்கொணரும் தொழிலை யாற்றுவதேபோல ஓடும் என் கொணர்தலைவாதாமென்பன முதலிய பலவகைத்தூஷணங்கள் அவ்வாதியின் மதத்தே யுண்டாம். சர்வ தூஷணங்களையும் சாற்றுவதானே வாதிக்கு *உபகாசமும், கூறுவோர்க்குக் கண்டம், நா முதலியனவயுலர்தலும் ஆகிய இரண்டு தோடங்களுண்டாமன்றி வேறொரு பயனுமில்லை. அல்லது, அவ்வாதியின்கூற்றானே எமது சத்தை சித்தமாம்; அசத்தையினும் வேறாயது சத்தையாம், சத்தையினும் வேறாயது அசத்தையாம் எனச் சத்தையசத்தைச் சப்தப்பொருளை வாதியே யங்கீகரித்துளான். சத்தையை யங்கீகரியாவிடின் சத்தையின்பேதமுடைய அசத்தையே சித்தமாகாதாமாதலின், அதன் சித்தியின்பொருட்டு வாதியும் சத்தையையவசியம் உடன்படவேண்டும். அல்லது, சத்தையின் ஸ்தானத்தே வாதி யங்கீகரித்த அசத்தையாய காரணத்திற்கதன்சொரூபபலத்தானே வாதிகூறிய சத்தியரூபத் தன்மையாற் சத்காரண வாதியாய எமக்கு யாதொரு அநிஷ்டமுமின்றாம்; இஷ்டமேயாம். ஏனெனின், சர்வ பதார்த்தங்கட்கும் ஆன்மாவே உண்மைவடிவமாம்; அவ்வான்மாவின் சத்தியரூபத்தன்மை யெமக்கிஷ்டமேயாம். அல்லது, இருக்கின்றதென்னும் விதிமுகப் பிரதீதிக்கு விஷயமாவது சத்தையாம் என்னும் சத்தையின் இலக்கணத்தே குலதர்ம சமானத்தன்மையாய்க் கூறிய தூஷணம் வாதி மதத்தும் வந்து பொருந்தும்; என்னை, இல்லையென்னும் நிஷேதமுகப் பிரதீதிக்கு விஷயமாவது அசத்தையாம் என அசத்தைக்குக் கூறுமிலக்கணத்தேயும் கேவலம் தன்குல பரம்பரையே உடன்படவேண்டும்.

சங்கை :—ஹே சித்தாந்தியே! சத்தைக்கும் அசத்தைக்கும் தன்குல தர்மம் போற் சித்தியுடன்படின் அவ்விரண்டன் பேதம் சித்தமாகாதாம்?

சமாதானம் :—ஹே வாதியே! அச்சத்தையின்கண்ணும் அசத்தையின்கண்ணும் ஏகரூபத்தன்மை யடைவுறினும் மகாபேதமுண்டாம; என்னை, சத்தையோ பாவரூபமாம், அசத்தையோ அபாவரூபமாம் என அவற்றின் பேதம் சர்வலோக அனுபவசித்தமாமாதலின் ஏகரூபத்தன்மை சித்தமாகாதாம். இத்துணையானே, லோகதிருஷ்டியை யங்கீகரித்து வாதியின் சங்கையைச் சமாதானித்தாம். இப்போது நமது சித்தாந்தத்தை யங்கீகரித்து வாதியின் சங்கையைச் சமாதானிப்பாம் :—ஹே வாதியே! இருக்கின்றதென்னும் விதிமுகப் பிரதீதிக்கு விஷயமாவது சத்தையாம் என்னுமிலக்கணத்தை நீ முன்னர்க்கண்டித்தது எமக்குமுடன்பாடே; ஏனெனின், எமது சித்தாந்தத்தே அத்விதீயப் பிரஹ்மம் சத்தையாம்; அதன்கண்ணே விதிமுகப்பிரதீதிக்கு விடயத்தன்மைவடிவ இலக்கணம் சம்பவியாதாம்; மற்றே, அதற்கு மனவாணியின் அவிஷயத்தன்மையே இலக்கணமாம்; அல்லது, சர்வ இலக்கணங்களும் அற்றதன்மையே இலக்கணமாம்.

சங்கை:—ஹே சித்தாந்தியே! சத்தை அவ்விரண்டிலக்கணங்களையுமுற்றிருப்பதேபோல மலடிமகன் முதலிய அசத்பொருள்களும் அவ்விரண்டையுமுற்றிருப்பதாமாதலின் அசத்தின்கண்ணும் சத்தையின் இலக்கணத்திற்கு அதிவியாப்தியாம்.

* உபகாசம் - அவமதிச்சிரிப்பு.

சமாதானம் :—ஹே வாதியே! பிரதியோகி அநுயோகிரூப இரண்டு உண்மைப்பொருள்களானே அபாவ நிரூபணமாமென்பது எல்லா நூலாரும் உடன்பட்ட விடயமேயாமாதலின் அசத்பொருள்களில் அவ்விரண்டிலக்கணங்களுஞ் சம்பவியாவாம்; ஆகவே, சூரியபகவானிடத்தே தூளியையிடும் மூடமதியரே அதனால் வியாபிக்கப்படுவரன்றி யவர்க்கதன் சம்பந்தம் உண்டாகாததேபோல, மூடர் குதர்க்கரூபதூளியால் தாமே பராஜயத்தையடைவரன்றிச் சத்தாவடிவச் சூரியனைக் குதர்க்கரூபதூளி தீண்டமாட்டாதாம் எனத் துணியப்பெறும். ஆகையால், ஹே சுவேதகேதுவே! அசத்தே இவ்வுலகின் காரணமாம் என்னும் வாதியரின் வசனம் பொய்யேயாம். ஆகவே முமுக்ஷுக்கள் தார்க்கிகரின் வசனத்தை பொருகாலும் அங்கீகரிக்கலாகாது; மற்றோ, வேதத்தின்கண்ணே விதித்த சத்தைவடிவகாரணத்தையே யங்கீகரிக்கவேண்டும்; ஏனெனின், அசத்காரணத்தினின்றும் சத்காரிய உற்பத்திகாணவருவதின்றாமாதலின், இவ்வுலகவடிவ சத்காரியத்தின் காரணமும் சத்தியரூபமேயென அங்கீகரிக்கவேண்டும். மண், பொன், இரும்புவடிவ காரணஞானத்தானே குடம், அணி, வாள் முதலிய சர்வ காரியங்களின் ஞானமும் உண்டாவதேபோலச் சத்தைவடிவ காரணஞானத்தானே சர்வ ஜகத்வடிவ காரியத்தின் ஞானமாமாதலின், சர்வஞ்ஞதன்மைவடிவப் பலப்பிராப்தியின்பொருட்டு அதிகாரி சத்தைவடிவகாரணத்தை அவசியமாயறிதல்வேண்டும். இப்போது, அச்சத்தைவடிவகாரணத்தின்கண்ணே அத்விதீயரூபத்தன்மையை வெளிப்படுத்தும்பொருட்டு முதலில் இவ்வுலக உற்பத்திப்பிரகாரத்தை வருணிப்பாம் :—ஹே சுவேதகேதுவே! முன்னர் யாம் அத்விதீயரூபத்தானே கூறிய சத்தாரூபப்பிரஹ்மம் இவ்வுலகையுண்டாக்கும் வகையை நீ கேட்டி! சர்வ பேதமற்றதும், உண்மையாய் மாயாசம்பந்தமற்றதும் ஆகிய சத்பிரஹ்மம் கற்பித மாயா சம்பந்தத்தையுற்றுச் சிருஷ்டியின் ஆதிகாலத்தே இவ்வாறு சிந்தித்தது:—'பரமான்மாவாயயாமே பல்வடிவமாயுண்டவேம்; எம்பிறப்பானே அப்பல்வடிவத்தன்மையுண்டாமன்றி யொருகாலும் வேறு வகையாலுண்டாகாதாம்.' எனச் சிந்தித்து முறையே ஆகாசாதி பஞ்சபூதங்களையுண்டாக்கியது, ககனாதியுண்டாவதன்முன்னரேயலாது ஒவ்வொரு பூதஉற்பத்தியின்முன்னரும் அச்சிந்தனஞ்செய்தது.

சங்கை :—ஹே பகவன்! தைத்திரீய உபநிடதத்தின்கண்ணே ஆகாசாதி யைம்பூதங்களின் உற்பத்திகூறியிருப்ப, இச்சாந்தோக்கியத்தே தேயு நீர் மண்ணென்னும் முப்பூதங்களினுற்பத்தி கூறியிருக்கின்றது ஒன்றற்கொன்று முரண்படுகின்றதன்றோ?

சமாதானம் :—ஹே சுவேதகேதுவே! தேயுநீர்மண்ணென்னும் முப்பூதங்களின் சிருஷ்டியைக்கூறும் சாந்தோக்கியசுருதிக்குக் கருத்திதுவாம் :—அற்பமதியுடையோர்க்குப்பஞ்சீகரணப்பிரக்கிரியையுணர்தல் அத்தியந்தங்கடினமாமாதலின், அதன்கண்ணே உபயோகியாய ஆகாயவாயுக்களின் உற்பத்தியையுபேக்ஷித்துச் சுருதிபகவதி தூலமதியுடையார்பால் அருளேக்குற்று மூன்று பூதங்களின் திரிவித்கரணங்கூறினளாதலின், சாந்தோக்கிய சுருதிமுப்பூத உற்பத்தியே கூறியது;

ஆனால், உண்மையாய்ச் சாந்தோக்கியசுருதிக்கும் பஞ்சீகாணத்தின்கண்ணே தாற்பரியமாமன்றி யதன் நிடேதத்தே தாற்பரியமின்றாம். இன்றாகவே யிரண்டு சுருதிக்கும் முரணுறல் யாண்டையதென்க.

இப்போது, தேயு முதலிய முப்பூதங்களின் உற்பத்தி முறையையுரைப்பாம் :—ஹே சுவேதகேதுவே! சத்பிரஹ்மம் முதலில் தேயுவையுண்டாக்கியது, பின் நீரையுண்டாக்கியது, பின் மண்ணையுண்டாக்கியது, அம்மண்ணைச சுருதி யன்னமென்றது, அவற்றையுண்டாக்கிய காரணப் பிரஹ்மம் அவற்றோடு தாதாத்மியபாவத்தையடைந்தது. சிருஷ்டியினுதிகாலத்தே தேயு முதலிய முப்பூதங்களில் முதலில் தேயுநீரின்காரணமாம், நீர்மண்ணின் காரணமாம்; ஆங்கே, இக்காலத்தும் காணவருகின்றது; ஏனெனின், மிக வெய்யிலெறிப்பின் நீரின் விருஷ்டியாம், அதனினின்றும் அன்னமாம் என்பது அநுபவசித்தமேயாமன்றோ? இம்முப்பூதமே சர்வ ஜகத்தின்காரணமாமாதலின் காரண சுபாவத்தை யனுசரித்தே நூலுணர்ந்தோர் தேகதாரிகட்கு மூவகைக்காரணங்கூறினர். அவற்றுள் ஜராயுஜமென்னும் ஜீவர்களின்ஜாதி முதல் தேகதாரிகட்குப் பீஜமாம்; ஏனெனின், கர்ப்பத்தை மூடிக்கொள்ளும் ஜராயுவென்னும் சருமம் ஜாடராக்கினியின் தேஜசானுண்டாமாதலின் தைஜசப்பொருளாம். பின்னர் இருவகையாய சுவேதஜங்களுண்டாம். ஒன்றோ, கொதுகு முதலிய வடிவசுவேதஜம் உறபிஜ்ஜரூபமாம்; மற்றொன்றோ, பேன் முதலிய வடிவசுவேதஜம் அண்டஜரூபமாமாதலின், சுவேதஜமொன்றிற்கே ஜலசம்பந்த உற்பிஜ்ஜரூபததானும், பார்த்திவ அண்டஜரூபத்தானும் சங்கிரகம் சம்பவிக்கும். ஆகையால, ஜராயுஜம், உற்பிஜ்ஜம், அண்டஜம் என்னும் மூன்றே எல்லாத் தேகதாரிகட்கும் பீஜரூபமாம்.

சங்கை :—ஹே பகவன்! பிரஹ்மசூத்திர 3 - வதத்தியாய முதறபாதத்தே ஸ்ரீ வியாசபகவான் சுவேதஜத்திற்குற்பிஜ்ஜததின்கண்ணே உள்ளடக்கங்கூறியுள்ளார். ஈண்டோ தாங்கள் அதற்கு இரண்டின்கண்ணும் உள்ளடக்கங்கூறியுள்ளீராதலின், சூத்திரத்தோடு தங்கள் மொழி முரண்படுமன்றோ?

சமாதானம் :—ஹே குழந்தாய்! ஸ்ரீ வியாசபகவானது கருத்திதுவாம் :—தரு முதலியவை பூமிக்குமேற் பிளந்துகொண்டு வருதலேபோலக் கொதுகு முதலியவையும் பேன் முதலியவையும் தம்முபாதானகாரணரூப நீர்க்குமேற் பிளந்தேவருவனவாதலின், கொதுகு முதலிய உற்பிஜ்ஜங்கட்கேபோலும் மூடு முதலிய அண்டஜங்களிடத்தும் உற்பிஜ்ஜ சப்தார்த்தம்பொருந்தும். இப்பொருளையுணர்தற்காகவே ஸ்ரீ வியாசபகவான் உற்பிஜ்ஜத்தின்கண்ணே சுவேதஜத்திற்குள்ளடக்கங்கூறினர்; ஆனால், அண்டஜத்தின்கண்ணே சுவேதஜத்திற்குள்ளடக்கமின்றாம் என்னும்பொருளை யுணர்த்துவதிற் கருத்தின்றாம். அலலது, ஐதரேய உபநிடதத்தே ஜராயுஜ அண்டஜ உற்பிஜ்ஜமென்னும் மூன்றையபேக்ஷித்துக்கூறிய நான்காவதாய சுவேதஜத்திற்கு அசத்தியத்தன்மையின்றாம்; மற்றோ, அம்மூன்றேபோலச் சுவேதஜமும் உள்ளதாம் என அதனசத்தியத்தன்மை நீக்கத்தின்கண்ணே ஸ்ரீ வியாசபகவானது கருத்தன்றி, உற்பிஜ்ஜத்தின்கண்ணே சுவேதஜத்திற்குள்ளடக்கம் என்பதில் முற்றுமுணர்ந்த அவர்க்குக் கருத்தின்றாம்;

மற்றோ, பறவை, பாம்பு, பேன் முதலியவை அண்டஜங்கள், தருக்கோது முதலியவை உற்பிஜ்ஜங்கள், வேறு யாவும் ஜராயுஜங்கள் என்பதே கருத்தாம். சரீராதியத்தியான்மகாரியங்களின் காரணத்தே ஜராயுஜாதி முப்பேதத்தானே மூவடிவமிருப்பதேபோல எல்லாவுலகின் காரணத்தின்கண்ணும் தேயுவாதிமுப்பேதத்தானே மூவடிவிருக்கும்.

சங்கை :—ஹே பகவன்! இவ்வாறு தேயுவாதிகாரணஞானத்தானே அதிகாரிக்கெப்பயனடைவாம்?

சமாதானம் :—ஹே சுவேதகேதுவே! தேயுமுதலிய காரணங்கள் தத்தங்காரியத்தே தொடர்ந்திருப்பதேபோல அம்மூன்றன்கண்ணே பரமான்மாத் தன்சத்தையானே தொடர்ந்திருக்கும். இவ்வகையாய சாவ ஜகத்காரண பரமான்மாவே நம்மனோராலுணரத்தக்கதாம். இத்தகையதன்கண்ணே மதியின்றிதியே காரண விசாரபலமாம். இப்போது பரமான்மாவாய காரணத்திற்குத் தேயு முதலியவற்றை தொடர்ந்திலங்குந்தன்மையை வெளிப்படையாய் நிரூபிப்பாம்:—ஹே சுவேதகேதுவே! கடசராவாதி காரியத்தே மண்காரணரூபத்தானே புகுந்திருப்பதேபோலத் தேயு முதலியவற்றே பரமான்மாப்பூர்வங் காரணரூபத்தானே புகுந்தது; ஏனெனின், அந்தப்பரமான்மாவின் அசாதாரண தருமரூப ஈக்ஷணம் 'ததைக்ஷத' என்பதாதி சுருதியானே இயம்பப்பெறறுளது. கருத்திதுவாம்:—சிருஷ்டியினாதிகாலத்தே சத்தாகிய பரமான்மா 'யான்பலவடிவமாயுண்டாவேன்' என ஆராய்ந்து பல்வடிவமாயதேபோலத் தேயுவும், நீரும அவ்வாராய்வைப்புரிந்து பல்வடிவமாயின. ஜடமாகிய இவற்றின்கண்ணே சேதனம் புகுநதாலன்றி அவ்விசாரம் சம்பவியாதாதலின், சேதனமாய பரமான்மாவே அவற்றின்கண்ணே புகுநது அவ்விசாரம்புரிந்ததெனவுணரலாம்.

சங்கை :—ஹே பகவன்! பரமான்மா தேயு முதலியவற்றே முதலிலேயே தொடர்ந்திருப்பின் சுருதி மீண்டும் ஜீவரூபமாய்ப் பிரவேசம் கூறுவதெற்றிற்கோ?

சமாதானம் :—ஹே சுவேதகேதுவே! பரமான்மாக் காரணரூபமாயோ தேயு முதலியவற்றே முன்னே புகுந்திருப்பினும், ஜீவரூபமாயவற்றின்கண்ணே முற்புகவில்லை; ஏனெனின், பிராணனைத்தரிப்பவன் ஜீவனாவன், அத்தருமம் அக்காலில்லையாம். எச்சேதனம் பிராணாதியைந்தைத்தரிக்குமோ, அடிக்கடி ஜன்மமரண அடைவுவடிவசம்சாரத்தை யடையுமோ, சுப அசுபபலத்தையடையுமோ, பந்தநீக்கவடிவமோக்ஷத்தை யடையுமோ அதுவே ஜீவனெனப்படும். சர்வ தேகதாரி ஜீவர்கட்கும் தத்தம் அங்குஷ்டபரிமாணமாய ஹிருதயகமலத்தே ஞானசத்தியையுடைய அந்தக்கரணமெப்போதுமிருக்கும்; அதனோடு தாதாத்மிய அத்தியாசத்தையடையும் அந்தக்கரண உபகிதசேதனம் ஜீவனாம்.

சங்கை :—ஹே பகவன்! அந்தக்காரணத்தையே ஜீவோபாதியா யங்கீகரிக்கின் துயிலின்கண்ணே அஃதழியுமாதலின், ஜீவனும் அழியவேண்டும்; அது சித்தாந்தத்தே யுடன்பாடின்றாமன்றே?

சமாதானம் :—ஹே சுவேதகேதுவே! துயிலின்கண்ணும் அந்தக்காணத்திற்கு எல்லாவாற்றானும் அழிவில்லை; மற்றோ, ஆண்டும் அது சம்ஸ்காரபூத சூக்ஷ்ம வாசனாரூபத்தானே இருக்கும்; ஏனெனின், துயிலின்முன் பிரதீதியானதுபோலவே பின்னனவிலும பிரதீதியாம்: துயிலின் முற்றும் அழிவுற்றிருப பின்முன்னாளினும் பின்னாள் அநதக்காணம் விலக்ஷணமாகவேண்டும்; அங்ஙன் காணவாராமையின், அது துயிலின்கண் ணழிவுறவில்லையென வறிதல்வேண்டும்.

சங்கை :—ஹே பகவன்! அந்தக்காணத்தையும் அதன் வாசனையையும் ஜீவனதுபாதியா யங்கீகரிக்கின்றோ அவை யநேககமாதலின் ஜீவருமநேகராவர். 'அஜொ ஹெ்யகொஜுஷமாணொநுஶெதெ' என்பது முதலிய மறைகளின்கண் ஒரே ஜீவன் கூறப்பட்டுளான். அவறறிறகு முரணன்றோவாம்?

சமாதானம் :—ஹே சுவேதகேதுவே! அம்மாயாவிசிஷ்டப் பரமான்மகாரணத்தே அநதக்கரணவாசனாவிசிஷ்ட ஜீவனது தாதாத்மிய சம்பந்தத்தை நூலுணாநதோர் நுவன்றுளாராதலினானே, அந்தக்கரணாதி ரூபகாரியத்தோடு ஜீவனுக்குத தாதாதமிய அத்தியாசம முயல்வின்றியே கிடைக்கும், அநதக்கரணத்தின் காரணத்தோடு ஜீவனுக்குத தாதாதமிய சம்பநதமுண்டாகாதொழியின், அதனுதயகாலத்தே அதனோடு ஜீவதாதாதமிய அத்தியாசம் உண்டாகலாகாது. அந்தக்காணமுண்டாயினும், ஒழியினும் ஜீவனுண்டாகான் ஒழியான்; எப்போது மேகரூபனேயாவன். வேறு வேறு அந்தக்கரணததேயிருநது ஜீவன் வேறு வேறு வடிவமாய்ப் புலபபடுவனாயினும், அதன் காரணபூத அஞ்ஞானததோடும் தாதாதமிய சம்பந்தததையடைவன். அநதக்காண வாசனைகட்கு ஆதாரபூத அஞ்ஞானம் ஒனறேயாம். ஆன்மஞானமின்றி அஞ்ஞானததின் நாசமுமுண்டாகாதாம், அவ்வுபாதியைக்கவாநதே நூலுணர்நதோர் ஜீவான்மாவை யொன்றென்றனர், நிததியமென்றனர். நனா முதலிய மூன்றவஸ்தைகளின் நிமித்தகாரணபூத சம்ஸ்கார வடிவ கர்மவாசனை, விருத்திஞானரூப அந்தக்கரணத்தின் நிமித்தகாரணபூத சம்ஸ்காரவடிவ ஞானவாசனை என்னு மியாவற்றிற்கும் ஆசிரயம் அஞ்ஞானமாம். ஆசிரயநாசத்தானே சர்வ வாசனாநாசம் உண்டாயபோது ஜீவன் மோக்ஷத்தை யடைவன். இபபோதுடன்பாடெதிர்மறைகளானே வாசனாநாசத்தே மோக்ஷ காரணத்தன்மையை நிரூபிப்பாம் :—ஹே சுவேதகேதுவே! பூமியிலுள்ள விருக்ஷங்களுக்குள் மூலபீஜமொழிந்த விருக்ஷமே நாசமுறுமன்றி வேறு விருக்ஷம் நாசமாகாததேபோல, மாயையின்கண்ணேயிருக்கும் ஜீவர்களுக்குள் அநதக்கரண வாசனையழிவுற்றஜீவனே மோக்ஷமுறுவன், அல்லாதவர் உறார், அவர் பந்தமே யுறுவர்.

சங்கை :—ஹே பகவன்! முன்னர்த்தாங்கள் ஒரு ஜீவனைக்கூறினீர்கள், இப்போதோ நானாஜீவரைக் கூறுகின்றீர்களாதலின், முற்கூற்றுக்குப் பிற்கூற்று முரணன்றோ ஆகின்றது.

சமாதானம் :—ஹே சுவேதகேதுவே! கனவின்கண்ணே ஒரே கனாக்காண்போன் அஞ்ஞானவயத்தால் அநேகரூபங்களைத்தரித்து ஒருவடிவத்தானோ பந்தத்தையடைவன், ஒருவடிவத்தானோ மோக்ஷத்தையடைவன்; அவ்வாறே ஒரே

ஜீவான்மா மாயாவயத்தானே அநேகரூபங்களைத்தரித்து ஒரு ரூபத்தானே பந்தத்தையும், ஒரு ரூபத்தானே மோக்ஷத்தையும் அடையும். கனா நீங்கியபின்னர்க் கனாப் பந்தமோக்ஷம் காண்போனை யடையாததேபோல, ஆனந்தவடிவ ஆன்மாவின் சாக்ஷாத்காரமானபின்னர்ப் பந்தமோக்ஷமுண்டாகாதாதலின், தோற்றி நின்ற ஜீவர்களின் பரஸ்பரபேதமும், ஜீவபரமான்மபேதமும் கேவலம் உபாதி சம்பந்தத்தானே ப்ரதீதியாம், உண்மையாயோ ஜீவான்மா அத்விதீயப்பிரஹ்மரூபமேயாம்.

சங்கை :—ஹே பகவன்! இப்பரமான்மாவே ஜகத்தின்கண்ணே பிரவேசமாம் எனத் தாங்கள் கூறியது சமபவியாதாம்; என்னை, உலகத்தே பரிச்சின்ன வஸ்துவிற்கே பிரவேசம் காணவருகின்றது, வியாபகவஸ்துவின் பிரவேசம் காணப்படுவதில்லை.

சமாதானம் :—ஹே சுவேதகேதுவே! பாம்பு தன் புற்றிற் புகுவதேபோலப் பரமான்மா ஜகத்தின்கண்ணே புகவில்லை; மற்றோ, யாண்டும் வியாபகமுறினும் இவ்வாகாசம் கடாதியுபாதிகளில் பிரவேசிப்பதேபோல யாண்டும் வியாபகமுறினும் பரமான்மாத தேயு முதலியவற்றை பிரவேசிக்கும். துயிலின்கண்ணேயுற்ற புருடன் சாமானியரூபமாய்த் தேகத்தின்கண்ணே புகினும் விசேடரூபமாய்ப் புகவில்லை. அவனே மீண்டும் நனவின்கண்ணே விசேஷரூபமாய்த் தேகத்தே புகுவதேபோலத் தேயு முதலிய முப்பூதத்தே பரமான்மாச சாமான்யரூபமாய் முன்னரே புகுந்திருப்பினும், விசேஷரூபமாய் முன்னர்ப்புகவில்லை. அதுவே மீண்டும் தேயு முதலியவற்றை ஜீவான்மரூப விசேடசொரூபத்தானே புகும். அது விசேடரூபமாய்ப் புகும்பொருட்டு இவ்வாறு ஆராய்ந்தது —தத்தங்காரியத்தே புகுந்த முப்பூதங்களிற் பரமான்மாவாய யான் என் ஜீவவடிவத்தானே புகுந்து நாமரூபமிரண்டையும் நானாவகையாய்ச்செய்வேன், வெளிப்படையாக்குவேன், அவற்றையாற்றுவதன்கண்ணே இவ்வகையுபாயமெனக்குத் தோற்றுகிறது:—தேயு முதலிய முப்பூதரூபதேவதைகளில் புகுந்து ஒவ்வொரு பூதத்தையும் ஒன்பது ஒன்பது வகையாய்ச்செய்வேன்; செய்வதானே நாமரூபம் வெளிப்படையாம். அதனானே, இவ்வெல்லா வுலகுமுண்டாம் என ஆராய்ந்து பரமான்மா அவ்வாறே செய்தது. கருத்திதுவாம் :—தேயு முதலிய முப்பூதத்தே ஒவ்வொன்றையும் மும்மூன்று விபாகம் சமானமாய்ச்செய்து இரண்டிரண்டு விபாகத்தைத் தனித்தனியே வைத்து மூன்றாவது விபாகத்தை மீண்டும் மும்மூன்றாய்ப் பகிர்ந்து அவற்றுள் ஒவ்வொரு விபாகத்தை முறைப்படி அம்முப்பூதங்களின் இரண்டிரண்டு விபாகங்களில் சேர்ப்பதாம். இவ்வாறு தேயு முதலிய பூதங்களின் தத்தமது விபாகமோ எவ்வேழாம், மற்றைய பூதங்களின் விபாகம் இரண்டிரண்டாம். இப்பிரக்கிரியையே சாந்தோக்கிய சுருதியின்கண்ணே திரிவித்கரணமென்னும் நாமத்தானே கூறப்பெற்றுளது. ஹே குழந்தாய்! இவ்வாறு ஆருணித்தந்தை சுவேதகேதுவிற்கு அத்தியாரோபபூத திரிவித்காணரூப சிருஷ்டியைக் கூறி இக்காரியவுலகம் காரணமாத்திரரூபமாம், என்னும் மபவாதத்தைக்கூறும்பொருட்டு அக்கினி,

ஆதித்தியன், சந்திரன், மின்னல் என்னும் 4 திருஷ்டாந்தங்களைக்கூறினர். ஹே சுவேதகேதுவே! அக்கினி முதலிய நான்கின்கண்ணே தோற்றும் சிவப்பு ஏழுபாக முடைத் தேயுவினதேயென வுணர்க. நீரின் வெளுப்பு 8-வது பாகமென வுணர்க. கறுப்புப் பிருதுவியின் 9-வது பாகமெனவுணர்க. இவ்வாறவ்வக்கினி முதலிய நான் கும் தேயு முதலிய மூன்றன்வடிவமேயாம். சிவப்பாய தேயு, வெளுப்பாய நீர், கறுப்பாய மண்ணென்னும் 3 காரணங்களை அக்கினி முதலிய காரியங்களினின்றும் வேறுபடுத்தின் அவை பிரதீதியாகாவாமாதலின் பொய்யேயாம். அவ்வாறே நீர் வடிவ நதி முதலியவையும், மண்வடிவ மலை முதலியவையும் முற்கூறிய முறையே தேயு முதலிய முப்பூதகாரியமேயாம். தேயு முதலிய காரணங்களை நதி முதலிய காரியங்களினின்றும் வேறு பிரிக்கின் அவை தோற்றுவாகலின் பொய்யேயாம்; ஏனெனின், அவ்வக்கினி முதலிய விகாரங்கள் கேவலம் வாணிமாத்திரையானே சித்தமாம், உண்மையாயோ இல்லையாம். ஆகையால் தேயுவாதியினின்றும் வேறாய அக்கினி முதலியவை பொய்யேயாம்; ஆகவே, அவற்றின் காரணரூப தேயு முதலிய முபபூதம் அவ்விகாரத்தைக்குறித்து மெய்யேயாம். அக்கினி முத லிய விகாரம் காரியரூபமாதலிற பொய்யாவதேபோலத் தேயு முதலியவையும் காரியரூபமாதலின் பொய்யேயாம்; ஆகவே அவறறின் காரணமாய பரமான்மாவே மெய்யாம், அதனினும் வேறாய உலகமியாவும் பொய்யேயாம், அவ்வுண்மையாய பரமான்மஞானத்தானே இவ்வெல்லா வுலகின் ஞானமுண்டாம். இப்போதிப் பொருளின்கண்ணே அறிஞாதனுபவத்தையறைவாம:—ஹே சுவேதகேதுவே! இவ்வாறு காரணசத்தியரூபத்தையுணர்ந்து மிக மகிழ்வையுற்ற சில அறிஞர் பரஸ் பரம்சேர்ந்து பூர்வம் இவ்வகை கூறினர்:—நமது வித்வான்களாய பிராஹ்மணர் களின் வித்யாரூபகுலத்தே உண்டாம் புருடருள் எவனும் எவ்வறியாவஸ்துவை யும கூறான்; மற்றோ, அவன் காரணத்தின் சத்தியரூபத்தன்மையையும், காரியத் தின் மிதியாரூபத்தன்மையையும அறிந்து அறிந்தவஸ்துவையே கூறுவன்; ஏனெனின், இவ்வுலகத்தே காரணத்தினின்றுங் காரியம் சிறிதுமாத்திரையும் வேறாவதில்லையாதலின், காரணஞானத்தானே அவரியாவரும் சர்வஞ்ஞத்தன் மையையடைவா. அவ்வறிஞர் இவ்வாறு கூறல் அசங்கதமன்றாம்; மற்றோ, உண் மையேயாம; ஏனெனின், இவ்வெல்லா வுலகின் காரணரூபத்தேயு முதலிய முப் பூதங்களையும் நன்றாயறிந்துளார். அவற்றின் காரணரூபசத்தாய பரமான்மாவை யும நன்றாயறிந்துளார். அத்தகைய அறிஞர்கட்கு எல்லா வுலகின் ஞானமுண்டா தல் யாதொரு துர்லபமுமின்றாம். இத்துணையானே அக்கினி முதலிய பாகியப் பிரபஞ்சத்தே தேயு முதலிய மூன்று பூதங்களின் காரியத்தன்மை நிரூபிக்கப் பட்டது. இப்போது இத்தூலசூக்ஷமசரீரத்தே தேயு முதலிய பூதங்களின் காரியத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! இவ்வாறு உத்தாலகர் சுவேத கேதுவிற்கு இப்பாகியப் பிரபஞ்சத்தே பௌதிகத்தன்மையைக்கூறி, மனப்பிரா ணாதி அந்தரப்பிரபஞ்சத்தே தேயு முதலிய பூதங்களின் காரியத்தன்மையையும் அதன்வாயிலாய்ப் பிரஹ்மத்தின் காரியத்தன்மையையுங்கூற விரும்பியவரா யிவ்வாறு கூறத்தொடங்கினர்:—ஹே சுவேதகேதுவே! ஈண்டு அன்னஜலத் தையுண்ணும் தேகதாரிகள் எத்திரிவிருதரூப அன்னத்தைப் பக்ஷணஞ்செய்

வரோ, எத்திரிவிருதரூபநீரைப் பானஞ்செய்வரோ, அவ்விரண்டும் ஜடராக்கினியின் சம்பந்தத்தானே மண் முதலிய மூன்று ரூபத்தானே மூவகையாம். இவ்வாறு மூன்று விபாகத்தையடைந்த அன்னநீரின் தைஜசபாகமும் சூக்ஷ்மம, மத்தியம, ஸ்தூலமென மூவகையாம். முதலதோவாக்குவடிவமாய்ப் பரிணமிக்கும், மத்தியமமோ மஜ்ஜைவடிவமாய்ப்பரிணமிக்கும், கடையதோ என்புவடிவமாய்ப் பரிணமிக்கும். ஆங்கே ஜலீயபாகமும் மூவகையாம், முதலதோ பிராணவடிவமாய்ப்பரிணமிக்கும், இடையதோ இரகதரூபமாய்ப் பரிணமிக்கும், கடையதோ மூத்திரரூபமாய்ப் பரிணமிக்கும். ஆங்கே மண்ணின் விபாகமும் மூவகையாம், முதலதோ மனரூபமாய்ப்பரிணமிக்கும், இடையதோ மாம்சரூபமாய்ப் பரிணமிக்கும், கடையதோ மலரூபமாய்ப் பரிணமிக்கும். ஹே மைந்த! வாக்குத்தேயுவின் காரியம், பிராணன் நீரின் காரியம், மனம மண்ணின்காரியம என்னு மர்த்தத்தைக் கேட்டுச் சுவேதகேதுவானவர் தந்தைபால் வினவியதாவது :—ஹே தந்தையே! அன்னஜலாதிரூபத்தையடைந்த தேயு முதலிய முப்பூதம் அத்தியந்தந்தூலமாம். வாக்குப் பிராணன் மனம் என்னும் மூன்றும் அததியந்தம் சூக்ஷ்மமாம். அந்தத் தூலத்தினின்றும் இந்தச் சூக்ஷ்மமஉறபததி சம்பவியாதாம்; ஏனெனின், ஈண்டுச் சமான இயற்கையையுடைய நூலாடை முதலியவறறிற்கே பரஸ்பரம் காரிய காரணபாவம் காணவருகின்றதன்றி மாறுயவற்றிற்கின்றுமாதலின், முற்கூறிய பொருளைத் தாங்கள் அடியேன்பொருட்டு மீண்டும அதன் வாஸ்தவ ஸ்வரூப ஞானம் உண்டாம்வண்ணம் யுக்திகளானே கூறவேண்டும. இவ்வாறு பிதாவைக் கேட்டபோது அவர் கூறியதாவது: ஹே சுவேதகேதுவே! தூலத்தினின்றும் சூக்ஷ்மம உண்டாவதில நீ திருஷ்டாந்தத்தைக் கேள்.—கனத்தன்மையானே ஸ்தூலத்தன்மையையடைந்த தயிர மோர், நுரை, நெய்யென்னும் மூன்று சூக்ஷ்மரூபமாய்ப் பரிணுமத்தையடைவதேபோல, அன்னஜலபாவத்தை யடைவுற்ற தேயு நீர் மண்ணென்னும் மூன்று தூலபூதமும், வாக்காதி சூக்ஷ்மரூபமாய்ப் பரிணுமத்தையுடையும். கடைநத தயிரின் சூக்ஷ்ம அம்சம நெய்வடிவமாய் மேற்றேய்த்தையடைவதேபோல அன்னஜலரூபமாய் ஜாடராக்கினியின்கண்ணேயிருக்கும் தேயுவாதி மூன்றினின்றும் முறையே வாக்காதிமூன்றன் உபாதானகாரணரூப சூக்ஷ்ம அம்சமும் மேற்றேயத்தையடையும். இவ்வாறு தேயுவாதி தூலங்களினின்றும் வாக்காதி மூன்று சூக்ஷ்மமுமுண்டாம். ஹே குழநதாய்! இவ்வாறு தந்தை கூறவே மீண்டும் மைந்தர், ஹே தந்தையே! முன்றுங்கள் வாக்கின் கண்ணே தேயுரூபத்தன்மை கூறியது, நீரால் தேயுவின் பராபவம் காணவருவதே போல இத்தேகத்தே ஜலரூபக கபதாதுவின் விருத்தியானே தேயுவின் பராபவமாம்போது சர்வ தேகதாரிகளின் வாக்கும் சிதிலமாம், கபதாதுவிருத்தியின்றுயின் அவ்வாக்குப்புடமாய்ப் புலப்படும், என்னும் உடன்பாடெதிர் மறைகளானே சம்பவிக்குமாயினும், பிராணனிடத்தே ஜலகாரியத்தன்மையும், மனத்தே பிருதுவிரூப அந்நகாரியத்தன்மையும் எவ்வாறு நிசசயிக்கக்கூடும்? வாக்கிற்போலப் பிராணமனங்களில் ஒருடன்பாடெதிர்மறையைக்காணேமேயென வினவ, அவற்றின்கண்ணும் உடன்பாடெதிர்மறைகளைக் காண்பிப்பவராய்த் தந்தை யிவ்

வாறு கூறுவாராயினர்:—ஹே சுவேதகேதுவே! சுரோத்திராதி 5 ஞானேந்திரியம், வாக்காதி 5 கருமேந்திரியம், ஆகாசாதி 5 பூதம், பிராணன் என்னும் 16 தத்துவசமுதாயம் தப்தலோகபிண்டம்போலச் சேதனதாதாத்மிய சம்பந்தத்தோடுகூடியதாய்ப் புருடனெனக் கூறப்பெறும் சந்திரதேவதை வாய்ந்தமனத்தை முக்கியமாகவுடைய புருடனுக்கு வேதவேத்தாக்கள் 16 கலை கூறினார்கள். ஈண்டுத் தினந்தோறும் போஜனஞ்செய்யு மந்நத்தினின்றும் உண்டாய மனோவிருத்திகளின் உபாதானகாரணரூப சக்திவிசேஷமே கலையெனப் பெறும். ஒவ்வொருதின அன்னபக்ஷணத்தானே மனத்தே யொவ்வொரு கலையுண்டாம். இவ்வாறு 16 தினபரியந்தம் அன்னமுண்பதானே அம்மனோமய புருடனிடத்தே 16 கலையுண்டாம். அன்னமுண்ணாதவனுக்கு ஒவ்வொரு தினத்தே ஒவ்வொரு கலை குறையும், 16 நாள்வரை யன்னமுண்ணாயின், சர்வ கலைகளு மழியும். இப்பொருளில் சிறிதுமாத்திரையும் நீ யையமுறாதே; ஆனாலிவ்வெல்லா விடயமும நோயற்றவனிடத்தே பொருந்தும். நோயுறறவன் பாலோ, வாதபித்தாதி தோடத்திற்கே அச்சக்திபாம். இபபிராணன் நீரின்றி யொருதினமாத்திரமும் இத்தேகத்தே நிலைபெறாதாம். பிராணன் போனபின்பு அவ்வுடன்பாடெதிர்மறைகள் அறியமுடியாவாமாதலின், அதனை யறிவதினுபயோகியாய பிராணனைக்காக்கும்பொருட்டு நீ நீரை உன்னிசசைப்படி பானஞ்செய்; ஆனால் அன்னத்தை 15 தினம்வரை பக்ஷணஞ்செய்யாதே, செய்பாயாயின் நீ சுயமே அவறறை நிச்சயஞ்செய்துகொள்வாய் எனத் தந்தைகூற, அத்தந்தையின் ஆணையை யங்கீகரித்து 15 நாள்வரை அன்னமுண்ணவில்லை. பின் மீண்டும தநதைபால வந்துறறனர், பசியாவிளைத்த மனத்தையுடைய சுவேதகேது தன் சமீபத்தே வநதனதககண்டு கூறியதாவது:—ஹே மைநத! நீ முன் இருக்கு முதலிய வேதபாட அர்த்த அததியயனஞ்செய்திருக்கின்றாயல்லவா? அவறறை யென்முன் கூறுதியெனக் கூறக்கேட்ட மைந்தர் முன்படித்த வேதங்களைசசிநதித்தபோதினும் அக்கால சிறிதுமாத்திரையும் நினைவில் வரவில்லை. துர்ப்புத்தியுடையவன் எப்பொருளையும் நினைவுறாததேபோல, சுவேதகேதுவும் முன்படிதத அருத்தத்தைச சிறிது மாத்திரையும் நினைவுபடுத்திலர், பின் வெட்கமுறறவராய்க் கூறுவாராயினர்:—ஹே தநதையே! முன்படித்த வேதங்கள் இப்போது எனககுத தோறறவில்லை; மறறோ, ஒருவன் நெடுங்காலம்வரை ஆராதித்த மந்திரம் அவன் பாக்கியம் க்ஷயமாகவே நிட்பலமேயாவதுபோல, யான் முன்செய்த வேதாத்தியயனமெல்லாம் நிடபலமேயாயது என மைந்தர் கூறப பசியையுடைய அவரை நோககித தநதை கூறியதாவது:—ஹே சுவேதகேதுவே! நீயு மன்னத்தையுண்ணுதி, உண்டபின் சர்வ வேதார்த்தத்தையும் முன்போலவே யுணர்வாய். ஓங்கி யெரியாநின்ற அக்கினி காஷ்டாதி யிநதன மழியின் மின்மினிபோன்ற அக்கினியின் பொறிக்கணமெஞ்சும்; அதனானே முன்னழலிற்போல மகாகாஷ்டதாகரூபகாரியம் உண்டாகாததேபோல, 15 நாள்வரை அன்னமுண்ணாமையின் நின்மனத்தின் 15 கலையோ அழிந்தது. எஞ்சி யொரு கலை நின்றதாதலின் நின்மனம் சிறிதுமாத்திரையும் பொருளறிவதினும், நினைவு உறுவதினும் ஆற்றலற்றதாயதாதலின், நீயு மன்னமுண்டு மனத்தின் கலைகளின் விருத்தி செய்துகொள், மீண்டும் என்பால் வருதியெனக் கூறியதந்தை வசனத்தை

யுட்கொண்டு போஜனஞ்செய்து மீண்டும் பிதாவின் பால் வந்தனர்; வந்த மைந்தரைத் தந்தைமீண்டும் முன்படித்த வேத அர்த்தங்களை வினவினர்; சுவேதகேதுவும் யாவுங்கூறினர். இவ்வாறு அன்னமிலதாகவே மனமுமிலதாகும் என்னும் வியதிரேகத்தை அக்கினியின் திருஷ்டாந்தத்தானேகூறி, பின்பு அன்னமிருப்பின் மனமுமிருக்கும என்னும் அன்வயத்தை அவ்வக்கினி திருஷ்டாந்தத்தானே கூறுபவராயிங்ஙனியம்பத்தொடங்கினர்:—ஹே சுவேதகேதுவே! மின்மினிக்குச் சமானமாய சூக்ஷ்மம அக்கினி நுண்ணியகாய்ந்த திருணங்களை யிடுவதால் பையப் பைய விருத்தியை யடைவுற்றுப பெரிய காய்ந்த விறகையும், ஈர விறகையும் தகிப்பதேபோல, ஆகாரங்கவருமுனபு ஒரு கலைமாத்திரமா யெஞ்சிநின்ற நின் மனம் இப்போதாகாரங் கவரவே மீண்டும சர்வஞுத்தன்மையையடைவுற்றது. இவ்வகையாய அன்வயவியதிரேகததானே நீயும் மனத்தின்கண்ணே அன்னமய நிசசயஞ்செய்க. வாககிலும் மனததிலும அன்வய வியதிரேகத்தானே நீ தேயுமயததன்மையையும, அனனமயததன்மையையும நிச்சயஞ்செய்ததேபோல, பிராணனிடத்தும் நீ நீர்மயத்தன்மையை நிசசயஞ்செய்தி; ஏனெனின், அன்னமின்றி மனம க்ஷயமாவதேபோல நீரின்றிப பிராணனும் க்ஷயமாம். இத்துணைக் கிரந்தத்தானே சர்வ ஜகத்தின்காரணரூப அத்விதீயப்பிரஹ்மரூப ததபதாரத்தசோதனம் நிரூபிக்கப்பட்டது. இப்போது அதன்கண்ணே பிரத்தியககான்மரூப துவம்பதார்ததரூபத்தன்மை நிரூபிக்கபபடும.—துவமபதார்த்தரூப ஆன்மாவின்கண்ணே பிரத்தியக்குருவததன்மை மூவகையாய் வேதாந்தசாஸ்திரத்தே கூறப்பெற்றுளது: அவறறுளொன்றே அநதக்கரணாதிகளிடததேயிருககும சிதாபாச பிம்பரூபத்தானேயாம, மறறொன்றே, சரீர அதிஷ்டானத்தன்மைரூபததானேயாம், மற்றொன்றே இந்திரியஙகளின் அதிஷ்டான ததன்மைரூபத்தானேயாம. அவற்றுள் முதல்வடிவம் இச்சாந்தோக்கிய சுருதியின்கண்ணே சருனிப்பக்ஷி திருஷ்டாந்ததததானே கூறபபெறறுளது; அதைக்கூறுவாம'—ஹே குழந்தாய்! முன்மொழிந்த முறையே வாககு முதலியவறறின் உபாதானகாரணரூப அத்விதீயப் பிரஹ்மததை நிசசயித்த சுவேதகேதுவிறகு அவர் பிதா துவம்பதார்ததசோதனை செய்தற்பொருட்டு மீண்டும் இவ்வாறியமபினர:—ஹே சுவேதகேதுவே! முன்னர் யான் நினக்கு அன்னரூபமென வறைநதமனத்தினது விலாசமே தேயுவாதியின் வடிவ எலலாவுலகும, மனமிருபபதனுனே இப்புருடன் அடிக்கடி அத்தியாசரூப மோகத்தையடைவன, மனமிலலையாயின் மனததே பிரதிபிம்பரூப மோகத்தையுமடையான், மோகமிலலையாயின் இராகத்வேஷ விகாரமும அடைவுருதாம், உருதாகவே சம்சாரம் மீண்டுந் தீண்டாதாம. ஆகையால சிதாபாசனேடுகூடிய மனமே எல்லாவுலகின் நிர்வாகத்தையும் செய்வதாம்.

சங்கை:—ஹே பகவன்! மனத்தையும் உபாதானகாரணத்தன்மைரூபத்தானே தன்வயத்தே தாபனஞ்செய்வது எவ்வஸ்துவாகும?

சமாதானம்:—ஹே சுவேதகேதுவே! காரணரூப முதற்சரீரமே இம்மனத்தைத் தன்வயஞ்செய்வதாம. இதனையே வெளிப்படுத்தும்பொருட்டு முதலில்

முச்சரீரங்களை மொழிவாம்:—தூலம், சூக்ஷ்மம், காரணமெனச் சரீரம் மூவகையாம். அவற்றுள் எல்லாச்சீவர்களின் அஞ்ஞானமே காரணசரீரமாம்; அஃதொன்றாதலின் சர்வ தேகதாரிகட்கும் சாதாரணமாம், சர்வ துக்கங்கட்குங் காரணமாம், ஆதலின் அது தூலசூக்ஷ்மங்களைக்குறித்து மேலாயதாம்.

சங்கை:—ஹே பகவன்! அதன்கண்ணே பிரமாணம் யாதுளது?

சமாதானம்:—ஹே சுவேதகேதோ! எல்லா வுயிர்களும் துயிலினின்றும் எழுந்து 'சுகியாய் உறங்கினேம், சிறிதுமாத்திரையுமுணர்ந்திலேம்' என ஸ்மரிக்கின்றனராதலின், உயிர்கள் துயிலிற்சென்று சர்வ துக்கங்களுமற்ற ஆனந்தத்தையனுபவித்தன, அஞ்ஞானத்தையுமனுபவித்தன, அவ்வனுபவஜன்னிய சமஸ்காரத்தானே நனவின்கண்ணே ஆனந்த அஞ்ஞானங்களின் ஸ்மிருதியுண்டாகின்றது. அவ்வேதுவினானே அனுமானித்த சுழுப்தியினனுபவத்தானே அஞ்ஞானரூப காரணசரீரம் சித்தமாம். இப்போது சூக்ஷ்மசரீரத்தை நிரூபிப்பாம்:—ஹே சுவேதகேதுவே! காரண அஞ்ஞானவிசிஷ்ட ஆன்மாவினின்றும் ஆகாசாதி பஞ்ச சூக்ஷ்ம பூதங்களும், மனமிந்திரிய முதலிய பௌதிகபதார்த்தங்களும் உண்டாம். சமஷ்டிசூக்ஷ்மபதார்த்தங்களின் அபிமானியாய ஹிரணியகருப்பரை நூலுணர்ந்தோர் அதிதைவமெனக்கூறினர். மனத்தைப் பிரதானமாகவுடைய வியஷ்டிசூக்ஷ்ம அபிமானியாய தைஜசனை நூலுணர்ந்தோர் அத்தியான்மமெனக்கூறினர். இப்போது தூலசரீரத்தை வருணிப்பாம்:—ஹே சுவேதகேதுவே! அச்சூக்ஷ்மபூதங்களினின்றும் இத்தூலபூதங்களும, தூலசரீராதி பௌதிகபதார்த்தங்களும் உண்டாம். அச்சமஷ்டி ஸ்தூலபூதபௌதிகபதார்த்தங்களின் அபிமானிதேவதையை நூலுணர்ந்தோர் விராட்டெனக்கூறினர். வியஷ்டி ஸ்தூலாபிமானியை விசுவன் என்றனர். விராட்டோ அதிதைவரூபமாம், விசுவன் அத்தியான்மரூபமாம். இப்போது நனவு முதலிய மூன்றவஸ்தைகளின் ஆசிரயத்தை நிரூபிப்பாம்:—ஹே சுவேதகேதுவே! எல்லா வுயிர்கட்கும் வேறு வேறாகத் தத்தம் தூலசரீரம் பிரதீதியாம். இத்தூலசரீரமோ ஜாக்கிராவத்தையின்றானமாம், சூக்ஷ்மசரீரம் சொப்பன அவஸ்தையின்றானமாம். கனவின் ஆசிரயமாய அந்தக்கரணத்திற்கு அவஸ்தைகளிரண்டாம். ஒன்றோ சொரூபமாய் வெளிப்படும் வடிவ அவஸ்தையாம், மற்றொன்றோ, சமஸ்காரரூபத்தானே ஸ்திதிரூப அவஸ்தையாம். அவ்விரண்டின் பேதத்தானே கனவுமிருவகையாம், ஒன்றோ கனவாம், மற்றொன்றோ கனவற்றதாம். முதலது கனவென்பது வெளிப்படையே, மற்றையது துயிலாம். அதன்கண்ணே சர்வ துக்கங்களின் இலயமாம்; ஏனெனின், அதன் கண்ணே இப்பிரதிபிம்பரூபஜீவன் தனது பிம்பரூப பரமான்மாவின்கண்ணே இலயத்தையடைவன். அது பரமானந்தவடிவமும், சர்வ பேதமற்றதும் ஆமாதலினானே பசி, தாகம், மகிழ்ச்சி, வாட்டம், பிறப்பிறப்பு என்னும் ஷடூர்மியற்றதாம். அதன்கண்ணே இலயபாவத்தையடைந்த ஜீவனும் சர்வ துக்கமற்றவனாவன். கருத்திதுவாம்:—கண்ணாடியாய உபாதி இலயமாகவே கண்ணாடியிலிருக்கும் பிரதிபிம்பம் தன்னுண்மைவடிவ பிம்பத்தின்கண்ணே இலயமாவதேபோலத் துயிலின் கண்ணும் மனோபாதி இலயமாகவே அதன்கண்ணுற்ற பிரதிபிம்பரூப ஜீவனும்

தன்னுண்மைவடிவப் பரமான்மரூப பிம்பத்தின்கண்ணே இலயமாவன். சில மதிமான்கள் இலௌகிக திருஷ்டியை யங்கீகரித்து இவ்வவஸ்தையை ஸ்வபிதியென்பர், சில அறிஞரோ ஸ்வபிதியென்பது அவ்வவஸ்தையின் வாசகமன்றாம்; மற்றோ பரமான்மாவின் வாசகமேயாம்; ஏனெனின், துயிலின்கண்ணே ஜீவன் எத் தன்னுண்மைவடிவப் பரமான்மாவையடைவனோ அதைச்சுருதிபகவதி 'ஸ்வமபீத' என்றனள். மேன்மையுடையவர்போல இந்திராதிதேவதைகட்குப் பரோக்ஷநாமமே பிரியமாமாதலின், அந்தப்பரோக்ஷப்பிரியதேவதை பரமான்மாவை 'ஸ்வமபீத' என்னும் சாக்ஷாத்நாமத்தானே கூறாது 'ஸ்வபிதி' யென்னும் பரோக்ஷநாமத்தானே கூறும். ஹே சுவேதகேதுவே! நனவுங் கனவும் மனத்தின் பரிணாமமாவதேபோலத் துயிலும் ஆம்; என்னை, அவ்விரண்டினும் பததுத்திசைகளினுஞ் சுற்றும் மனமே, சுற்றுநதயரோடுற்று இலயரூபத்துயிலையடையும் கூட்டின்கண்ணே நீண்ட கயிற்றாற் கட்டுற்ற சகுனிபபுள் ஆகார இச்சையுடையதாய்க் கூட்டிலேயே இறகுகளை யடித்துக்கொண்டெழும்பும். அதனானே, ஆகாரத்தையடைந்தோ அடையாமலோ பரிசிரமத்தையடைநதபோது * நீடத்திடையே தானிருக்குமிடத்தையடைந்து சுற்றும், காலதுக்கமற்றதாய் நிச்சலமுற்றதாய் லீனமுற்ற புருடனைப்போல ஆண்டுறையும். அதுபோலவே இம்மனமும் அறம்பாவவடிவ சூத்திரத்தானே இத்தேகவடிவ நீடத்தே இருதயதேயத்தே கட்டபபட்டு இராக வடிவப்பசியானையுண்டாய அத்தியான்ம அதிதைவ அதிபூதமென்னும் மூவகைத் துக்கங்களால தபிக்கும். அததகைய அது விஷயசுக அடைவின்பொருட்டு நனவிலும் கனவிலும் எபபோதும் சுற்றுவதால் அத்தியந்தம் பரிசிரமத்தையடைநது நுகர்ச்சிபபோகநதரும் கருமமும க்ஷயமாயின், பரிசிரம நீக்கத்தின்பொருட்டு அவ்விருதயதேயத்தே துயிலையடையும். அதன்கண்ணே காரண அஞ்ஞான உபகித ஆனந்தவடிவ பரமான்மாவே இந்திரியசகிதமனத்தின் இலயஸ்தானமாமன்றிமற்றொன்றுமன்றாமாதலின், அது அஞ்ஞானோபகித பரமான்மாவைவிடுத்து வேறெவ்வஸ்துவையும் ஆசிரயிக்கமாட்டாது. கருத்திதுவாம் :—அத்துயிலின்கண்ணே அம்மனமோ காரண அஞ்ஞானத்தின்கண்ணே இலயமாம். அதன்கண்ணிருக்கும் பிரதிபிம்பமோ பரமான்மவடிவ பிம்பத்தின்கண்ணே இலயமாம். ஹே சுவேதகேதுவே! துயிலின்கண்ணே இம்மனம் அஞ்ஞானோபகித பரமான்மாவன்றி வேறொன்றையுமாசிரயாது என்பதன்கண்ணே துவிதுவாம் :—ஆனந்தவடிவ ஆன்மாவினும் வேறாய் எதது‌ணைத் தூலசூக்ஷ்மபதார்த்தங்கள் உளவோ அவையாவும மனத்தானே கற்பிதமாதலின், மனத்தின் காரியமேயாம். காரியமாவவெல்லாம காரணத்தினும் பினனுண்டாவனவேயாம். கடபடாதிகாரியங்கள் மிருத்திகை தந்து முதலிய காரணங்களினின்றும் பின்னுண்டாவதேபோல, இத் தூலசூக்ஷ்மபதார்த்தங்களும மனரூபகாரணத்தினும் பின்னுண்டாவதேயாம. இத்தகைய காரியபபொருள் மனமாகிய காரணத்திற் காசிரயமாவதெங்ஙனம்; மற்றோ, ஆகாதாம். பிரதிபிம்ப சகிதமனம் துயிலின்கண்ணே இலயமடையுமிட

* நீடம் - குருவிக்கூடு.

*மாய பரமான்மாவே முன்மொழிந்த தேயு முதலிய மூன்றன்காரணமாம், அந்தச் சத்தாய பரமான்மாவின்கண்ணே நீ சர்வாந்தரியாமித்தன்மையையறிதி.*

சங்கை :—*ஹே பகவன் ! பரமான்மாவின் அடைவானே ஜீவர்கட்குச் சம்சார பந்தநிவிருத்தியாம் என்பது வேதாந்தசாஸ்திர சித்தாந்தமாமாதலின், துயிலின் கண்ணே பரமான்மாவின் பிராப்தியுண்டாகியும் ஜீவர்கட்கு மீண்டும் சம்சாரப் பிராப்தியேன் உண்டாகின்றது ?*

சமாதானம் :—*ஹே சுவேதகேதுவே ! துயிலின்கண்ணே ஜீவர்கட்குப் பரமான்மாவினடைவுண்டாயினும், துயிலின்கண்ணும் மோக்ஷத்தின்கண்ணும் இவ்வளவு விசேடமுண்டு : அதாவது, துயிலில காரண அஞ்ஞானத்தே லயபாவத்தையடையினும் சூக்ஷ்ம சமஸ்காரரூபத்தானே எஞ்சியிருக்கும். இதனானே, அம்மனம் நனவின்கண்ணே மீண்டுமுண்டாகின்றது, முக்தியின்கண்ணோ அதிஷ்டான ஆன்மாவில் இலயத்தையடைந்த அது மீண்டும் வருவதில்லை ; ஏனெனின், ஆங்கு ஆன்மஞானரூப அக்கினியானே அதன் சமஸ்கார ஆசிரயரூப அஞ்ஞானம் நாசமுறும். இவ்வாறாய வேற்றுமை அவ்விரண்டவத்தையின்கண்ணுமுண்டாதலின், துயிலின்கண்ணே பரமான்மாவின் அடைவுறினும் மீண்டும் சம்சார நிவிருத்தியுண்டாவதின்றாம். ஆன்மாயாண்டு மொன்றேயாயினும் சர்வ ஜீவர்கட்கும் மனமொன்றன்றாம் ; மற்றோ அநேகமாம். சுகதுக்க பந்தமோக்ஷ முதலிய எல்லாத் தருமங்களும் மனத்தினவேயாம். ஆகையால் உலகத்தே சிலர் சுகியும், சிலர் துக்கியும், சிலர் பத்தரும், சிலா முத்தரும் ஆவர் என்னும் எல்லா வியவஸ்தைகளும் கூடும். இத்துணையானே மனத்தின்கண்ணேயிருக்கும் சிதாபாசனது பிம்பரூபத்தன்மையானே ஆன்மாவின்கண்ணே பிரத்தியக்ரூபத்தன்மை நிரூபிக்கப்பட்டது. இப்போது சரீரத்தின் அதிஷ்டானரூபத்தன்மையானே ஆன்மாவின் கண்ணே பிரத்தியக்ரூபத்தன்மையை நிரூபிப்பாம். ஈண்டு யாவினும் உள்ளிருக்குந்தன்மை பிரத்தியக்ரூபத்தன்மையாம். முக்தியை யபேக்ஷித்துச் சிறிது குறைவையுடையதாய் யான் கூறிய சுழுப்தியவஸ்தைவாசனாரூபமனவாயிலாய் ஆனந்தரூப ஆன்மாவின் சம்பந்தமுடையதாமாறும், பிம்பப் பிரதிபிம்பங்களின் ஒருமை ஞானவடிவ பலமுடையதாமாறும், வேறாகனா நனவடிவ அவஸ்தையும், அம்மனவாயிலாய் ஆன்மாவின் சம்பந்தமுடையதும், பிம்பப் பிரதிபிம்பங்களின் ஒருமை ஞானவடிவ பலமுடையதும ஆம். உண்மையாய்ச் சர்வ நாமரூபங்களற்றதாயினும் ஆன்மாத்தூலசரீர அபிமானமுடைய நனவின்கண்ணேயும், சூக்ஷ்மசரீர அபிமானமுடைய கனவின்கண்ணேயும் ' அுஶநாயா உடந்யூ ' என்னுமிரண்டு நாமங்களையுமடையும். துயிலின்கண்ணே ஆன்மா 'ஸ்வபிதி' யென்னும் நாமத்தையடைவதேபோலும். கூறிய இரண்டு நாமங்களும் ஆன்மாவின்கண்ணே பிரவிருத்திப்பது பிராணரூப உபாதியைக்கொண்டேயாம் ; என்னே, ஆநந்தவடிவ ஆன்மாவின் கண்ணே சாக்ஷாத் பசியுமின்று, தாகமுமின்று ; மற்றோ, அவை சாக்ஷாத்தாய்ப் பிராணனிடத்தேயிருக்கும், பிராணன் சர்வ சரீரத்தும் வியாபகமாமாதலின், சர்வ ஜீவர்களின் உதரத்தேயிருக்கும் அன்னஜலத்தை நாடிவாயிலாய்ச் சர்வ அங்கங்களினும் கொண்டு செலுத்தும் : ஆதலினானே, 'அுஶநாயா உடந்யூ' என்னு மிரு*

நாமங்களும் முக்கிய விருத்தியானே பிராணனிடத்தே பொருந்தும். பிராண ஞேடு ஆன்மாவிற்குத் தாதான்மிய சம்பந்தமிருக்கின்றதாதலின், பிராணவாயி லாய் அவ்விருநாமங்களும் ஆன்மாவிற்குமாம். அவ்விரண்டு நாமங்களும் ஆன்மா வையபேக்ஷித்தோ பிராணனிடத்தே முக்கியமாயினும், நீர்தேயுவையபேக்ஷித்து அவ்விருபெயரும் பிராணனிடத்தும் முக்கியமன்றும்; மற்றே, நீர்தேயுவின் கண்ணே முக்கியமாம்; ஏனெனின், உண்ட அன்னத்தை நீரே நெகிழ்ச்சிசெய்து கொண்டு செல்லும்; ஆதலின், அநநீரை 'அசநாயா' எனக்கூறுவர். குடித்தநீரைக் காயவைக்குந் தேயு கொண்டேகுமாதலின், அதனே 'உதந்யா' எனக்கூறுவர். கோக் களைக்கொண்டு செல்பவனைக் கோநாயா என்பதுபோலவும், அஸ்வங்களைக்கொண்டு செல்பவனை அஸ்வநாயா என்பதுபோலவும், இந்நீரும் நெகிழ்ச்சி யியற்கையுடைய தாதலின் உண்ட அன்னத்தைக்கொண்டு செல்லுமாதலின், இதனைச் சுருதிபக வதி 'அசநாயா' எனக்கூறினள். இத்தேயுக்காயவைக்கு மியல்புடையதாதலின், குடித்த ஜலத்தைக்கொண்டு செல்லுவதால இதனை 'உதந்யா' எனக்கூறினள். ஆநந்தவடிவ ஆன்மாவிறகு நீரோடுந் தேயுவோடும் தாதாத்மிய அத்தியாசமிருக் கின்றதாதலின், அவற்றின் வாயிலாய் ஆன்மாவும் அவ்விரண்டு நாமங்களானே கூறப்படும்.

இப்போது அந்தச் சத்தாய பரமான்மாவின்கண்ணே யாவினும் அநந் தரூபத்தன்மையை யுணர்த்தும்பொருட்டு முதலில் காரியகாரணங்களின் பரம் பரையை வருணிபபாம்:—ஹே சுவேதகேதுவே! நீ முதலில் இத்தூல சரீ ரத்தையும், அன்னத்தையும், பிருதிவியையும், ஜலத்தையும், தேஜசையும் காரிய ரூபமாயறி. கூறிய 5 காரியங்களுள் கடையதாய தேயுரூபகாரியத்திற்கோ முன் மொழிந்த சத்வஸ்துவே மூலகாரணமாம். அத்தேயு நீர்க்கும், நீர்பிருதிவிக்கும், அது அன்னத்திற்கும், ஜலதேஜசால் பரிணாமமுற்ற அன்னம் சரீரத்திற்கும் மூலகாரணமாம். விருக்ஷங்கட்கு மூலமும் அங்குரமுமிருப்பதேபோலச் சுருதி சுங்கபதத்தால் இத்தேகாதி விகாரத்தை யங்குரரூபத்தானே கூறினள், அன் னமேமுதலாகச சத்வஸ்து பரியந்தமுள்ள பதார்த்தங்களை மூலரூபமாய்க் கூறி னள். ஆகையால், அங்குரரூபலிங்கத்தானே மூலானுமான முண்டாவதேபோல இத்தேகரூபகாரியத்தானே நீ அன்னரூப மூலகாரணத்தையும், அதனுனே நீ பிரு திவிரூப மூலகாரணத்தையும், அதனுனே ஜலரூப மூலகாரணத்தையும், அதனுனே நீ தேயுரூப மூலகாரணத்தையும், அதனுனே நீ பரமான்மவடிவ மூலகாரணத்தை யும் நிச்சயஞ்செய்தி. அந்தப் பரமான்மரூப சத்வஸ்துவே இவ்வெல்லாப் பூத பௌதிக ஜகத்தின் உற்பத்தி காரணமாமாதலின், சுருதிபகவதி அந்தச் சத்வஸ் துவை 'மூல'மெனக்கூறினள்; அதுவே சர்வ ஜகத்தின் திதிகாரணமாமாதலின், அதனை 'ஆயதன'மென்றனள். அதுவே சர்வ ஜகத்தின் இலயகாரணமாதலின், அத னைப் 'பிரதிஷ்டை'யென்றனள், உண்மையாயோ சத்வஸ்து மூலம், ஆயதனம், பிர திஷ்டை என்னும் மூன்றுமமற்றதாம். இவ்வாறு நனவிலும் கனவிலும் பசிதாகங்க ளால் பீடிக்கப்பட்ட பிராணுதியுபாதியையுடைய ஜீவன் அறம்பாவானுசாரம் எப் போதுஞ் சுகதுக்கங்களையே யனுபவிப்பன். இதனுனே இத்தேக அதிஷ்டானத்

தன்மையானே ஆன்மாவின்கண்ணே பிரத்தியக்குருவத்தன்மை நிரூபிக்கப்பட்டதனால் துவம்பதார்த்த சோதனம் சித்தமாயது.

இப்போது மரணகாலத்தே இந்திரியங்களின் அதிஷ்டானரூபத்தன்மையானே ஆன்மாவின்கண்ணே பிரத்தியக்குருவத்தன்மையை வருணிக்கும் வாயிலாய்த் தத்துவம் பதார்த்தங்களினபேதத்தை வருணிப்பாம். ஆண்டு, ' தத்வமசி சுவேதகேதோ ' என்னும் மகாவாக்கியத்தை 9 முறையுத்தாலகர் சுவேதகேதுவிற்குபதேசித்தனர், அதன்கண்ணே பிரதமவாக்கியப்பொருளை நிரூபிப்பாம் :— ஹே சுவேதகேதோ ! நனவுமுதலிய மூன்றவஸ்தைகளில் விளையாடும் இச்சீவான்மா அஞ்ஞானவயத்தால் அநேக சரீரங்களைக்கவரும், விடும்

சங்கை :—ஹே பகவன் ! இச்சீவான்மா எவ்வாறு அத்தேகங்களைவிடும் ?

சமாதானம் :—ஹே சுவேதகேதோ! ஜீவான்மாமரணவஸ்தையைச் சமீபித்தபோது தன் பூர்வபாவத்தை நினைந்து பச்சாத்தாபபபடுவன், அவனை மைந்தர் முதலிய பந்துக்கள் கடினபூமியின்கண்ணே சயனிக்குமாறுசெய்வர், எல்லா உறவினரும் அவனை நாறபுறமும் சுற்றிக்கொண்டுட்காருவர், அவன் பேரிழுப்புடன் பெருமூச்செறிவதோடுறுவன், அவனதிருவிழிகளும் மேலாகாயப் பக்கம் விழித்துக்கொண்டிருக்கும், வாயில் கோழை நீர்வடியும், இவ்வகை மரணவஸ்தையையடைந்தவன் நேத்திராதி இந்திரியசகித வாக்கிந்திரியத்தின் தன்காரியத்தைச் செய்யும ஆற்றல வடிவவிருத்தி, புருடனது மனத்தே இலயபாவத்தையடையும. மனத்தினது தன் காரியஞ்செய்யுஞ் சாமர்த்தியவடிவ விருத்தி கிரியாரூபப பிராணனது விருத்தியின்கண்ணே இலயத்தையடையும. அது சூக்ஷ்ம பஞ்சபூதங்களோடுகூடிய ஜீவான்மாவின்கண்ணே இலயபாவததை யடையும். அது சுழுப்தியைப்போலச் சமஸ்காரவடிவ எஞ்சிய மாயோபகித ஆனந்தவடிவ ஆன்மாவின்கண்ணே இலயபாவத்தையடையும். சுழுப்திமரண அவஸ்தைகளில் கேவலம் சமஸ்காரமாத்திரரூபப் பந்தமுடைய ஜீவான்மாவின் இலயஸ்தானமாவதும், ஜீவரூபமாய்ச் சங்காதத்தின்கண்ணே புகுந்ததும, முன்னர்த் தேயு முதலிய பூதங்களின் காரணமெனக் கூறப்பெறறதும் ஆகிய உண்மை வஸ்துவே உன்னுடைய ஆன்மாவாம். அது சூக்ஷ்மபதார்த்தங்களினும் அத்தியந்தம் சூக்ஷ்மமாம். கால ஆகாசாதி மகாபதார்த்தங்களினும் அத்தியந்தம் மகானும். இரஜ்ஜுவின்கண்ணே கற்பிதமாய சர்ப்பம் தண்டம் ஜலதாரை முதலியவை இரஜ்ஜுமாத்திரமேயாமாறு தேயு முதலிய சர்வ ஜகத்திற்கும் சத்வஸ்துவே வாஸ்தவவடிவமாம். சர்வ ஜகத்தின் அதிஷ்டானவடிவப்பரமான்மா நின்வடிவத்தினும் வேறன்றாம் ; மற்றோ, அது நீயாவாய். தேகவடிவசஙகாதரூபம் நீயன்றாம். எவ்வான்மா மதி முதலியவற்றின் சாக்ஷிரூபமாய் எவ்விடத்துமிலங்குமோ, அத்விதீயரூபமாதலின் பரம ஆநந்தவடிவமாமோ, சர்வ ஜடப்பொருள்களின் பிரகாசகமாதலின் சுயஞ்சோதிவடிவமாமோ, அத்தகைய ஆன்மாவே நினது வாஸ்தவவடிவமாமாதலின் நீ கர்த்தாவல்லை, போக்தாவல்லை, பிரமாதாவல்லை, பிரிய புத்திரனாகிய நினக்காக இவ்வித்தையை யுபதேசித்தனன், இது நினது கர்வதோஷத்தை நீக்குவதாதலின் இதனை யான் ஆதேசசப்தத்தானே கூறினேன். துஷ்

டர்களுக்கு அரசர் முதலியோர் தண்டந்தருவது ஆதேசமாம். எசசர்வாந்தரியாமியாய ஆன்மாவி னுபதேசத்தை நினக்குசசெய்தேனே அதன் சிரவணத்தால்; மனனத்தால், விஞ்ஞானத்தால் எல்லாக கேளாதபொருள்களும் கேட்டனவாம், மனனஅவிடயங்களும் மனனித்தனவாம், அறியப்பெறாதவை யறியப்பெற்றனவாம், இவ்வாறு அவ்வுத்தாலகர் சுவேதகேதுவிற்குச சீவப்பிரஹ்ம ஐக்கியத்தைக் கூறியபோது அவர் ஐயத்தோடுற்றவராய் மீண்டும் பிதாவின்பால் 8 வினா வினவினர். தநதையும் மைந்தரின் ஐயம் நீங்கும்பொருட்டு அவைகட்கு முறையே விடைதந்தனா.

சங்கை —ஹே பகவன்! தந்தையார் மைநதருக்கு 'தத்வமஸி' என்னும் முதல மகாவாக்கியத்தை யுபதேசித்துச சீவப்பிரஹ்ம அபேதநிச்சயஞ் செய்வித்தனர். அம்மாவாக்கியப்பொருளை யறிந்தும் மீண்டும் ஐயமுண்டாயதேனே?

சமாதானம் :—ஹே குமா! மகாவாக்கியத்தைச சிரவணித்தும மைந்தருக்கு எண்முறையையமுண்டாயது. அவறறிற்காரணம் அவர் எண்முறைசெய்த குதர்க்கமேயாம. அவ்வெட்டையும தந்தையாா எண்முறை மகாவாககிய உபதேசத்தானே தீர்த்தனர். அவ்வெண்வகையுள் முதலதாவது :—ஹே பகவன்! முன்னர்த் தாங்கள் துயிலின்கண்ணும் மரணத்தின்கண்ணும் சர்வ ஜீவர்கட்கும சத்வஸ்துவின் பிராபதியைக்கூறினீாகள்; அதன்கண்ணே எனக்கிவ்வையமுண்டாகின்றது :—அவ்வாறாயின் யாவரும் யாம அச்சத்வஸ்துவையடைந்தேமென ஏனறிந்திலா? யாவருமதனை யறிந்திலாாதலின், அஃதையுறறபோதிலும் அதன் அஞ்ஞானமாம. இதன்கண்ணே தாங்கள் யாதேனும் திருஷ்டாந்தங்கூறவேண்டும், அதனாலெனதையம் நீங்கவேண்டும். 2-வது: ஹே பகவன்! துயிலின் மாணங்களில வாக்கு முதலிய சர்வ இந்திரியங்களும் இலயமாயினும் அவித்தைவடிவமாயையிருக்கின்றதாதலின், தன்னில்லத்தினின்றும்வெளிவநதவனுக்கு 'யானென்னிலலத்தினின்றும வெளிவந்துளேன்' என்னு மனுபவமுண்டாவதேபோல, துயிலில ஜீவன் சத்வஸ்துவையுறறு நனவையடையின் 'யான் சத்வஸ்துவினின்றும் வந்தனன்' என்னு மனுபவம் ஏன் உண்டாவதில்லையென்னும் எனது சங்கை நீங்கும்பொருட்டும் தாங்கள் ஒரு திருஷ்டாந்தங்கூறவேண்டும். 3-வது : ஹே பகவன்! எல்லா நதிகளும் கடலின்கண்ணே இலயபாவததையடைவதேபோலத் துயிலின்கண்ணேயும், மரணத்தின்கண்ணேயும் ஜீவர்கட்குச் சத்வஸ்துவின்கண்ணே இலயமாம் என்னும் நதிகளின் திருஷ்டாநததானே இலயத்தை யுடன்படினோ, கடலிலடங்கிய நதிகட்கு மீண்டும் உற்பவம் ஆண்டிருந துண்டாவதின்றி யதன் கண்ணே யழிவதேபோலத் துயில்மரணங்களில் உயிரும் சத்வஸ்துவையடைவுற்று நாசததையேயடையும்; அடையவே சத்வஸ்துவினடைவெதற்காம்? என்னு மெனது சங்கை நீங்குமபொருட்டும் ஒரு திருஷ்டாந்தங் கூறவேண்டும். 4-வது : ஹே பகவன்! இவ்வான்மா அத்தியந்தம் சூக்ஷுமமாதலின் இது தூல ஜகத்தின் ஆதாரம எவ்வாறாமென்னும் எனது சங்கை நீங்கும்பொருட்டும் ஒரு

திருஷ்டாந்தங் கூறவேண்டும். 5-வது: ஹே பகவன்! இவ்வதிகாரிக்கு ஆன்மா சிரத்தையினுலே கிடைக்கும் எனத் தாங்கள் கூறினீர்கள், அது அனுபவித்த பதார்த்தத்தின்கண்ணேயாம்; ஒருகாலும் அநுபவமில்லாத பொருளின்கண்ணே சப்தமும் பிரவேசியாதாயின் சிரத்தை யெவ்வாறும் என்னும் எனது சங்கை நீங்கும்பொருட்டும் தாங்கள் ஒரு திருஷ்டாந்தங் கூறவேண்டும். 6-வது: ஹே பகவன்! இந்திரியங்களாற் கவரத்தகுதியாயவஸ்துவின் வடிவமே ஒரிந்திரியத்தாற் கவரலாகும். இரசம நேத்திராதி யிந்திரியங்கட்கு அவிடயமாயினும் இரசன இந்திரியத்தானே கவரலாவதேபோலும்; இவ்வான்மாவோ எவ்விந்திரியத்தாலுங் கவர முடியாததேயாம். இத்தகையதெவ்வுபாயத்தாலறியப்பெறும் என்னு மெனது சஙகையை நீக்கும்பொருட்டும் ஒரு திருஷ்டாந்தங் கூறவேண்டும் 7-வது: ஹே பகவன்! மரணகாலத்தே அஞ்ஞானிகளின் இந்திரியாதிகள் சூக்ஷ்மரூபமாயிருப்பதேபோல வித்வானுடைய பொறிகளுமிருப்பினும மீண்டும் அஞ்ஞர்கட்குப் பிறப்புண்டாவதேபோல, அறிஞர்கட்கும் மீண்டும் பிறப்பேனுண்டாவதில்லை என்னும் எனது சங்கை நீங்கும்பொருட்டும் ஒரு திருஷ்டாந்தங் கூறவேண்டும். 8-வது: ஹே பகவன்! மரண அவஸ்தையில் வித்வானுடைய வாக்காதிகள் எஞ்சுதலின்றி இலயத்தையடைவதேபோல, அஞ்ஞானிகட்கும அவை அவ்வாறே றுவதில்லை என்னு மெனது சங்கை நீங்கும்பொருட்டும் ஒரு திருஷ்டாந்தங் கூறவேண்டும். ஹே குழந்தாய்! இவ்வாறு சுவேதகேதுவானவர் தந்தையின்பால் தனதையத்தைத் தெரிவிக்கும் 8 வினுக்களையும் வினவ, உத்தாலகரும் முறையே விடை கூறியதாவது:—1-வது: ஹே சுவேதகேதுவே! வண்டானது தனது பணியாரம் போன்ற வீட்டில நானுவகையாய விருக்ஷங்களின் இரசத்தைக்கொண்டு சென்று அவ்விரதத்தை மதுரூபமாய்ப் பரிணமிபபிக்கும். அவை 'யான்மாநதருவிரதம்நகத் தருவிரதமன்று' எனத் தமமையுணராததேபோலத் துயில்மரணங்களில் நானுஜாதியையுடைய ஜீவர் சத்வஸ்துவையடைவுறறு அதனேடொருமையை யுறினும், தம் மான்மாவை விசேடரூபமாயறிந்திலர். ஈண்டிதுகருத்தாட:—மதுரூபதிருஷ்டாந்தத்தே தமது வடிவத்தின் அவிவேகம் தமது ஜடசுபாவத்தானேயாம; தாஷ்டாந்திக ஜீவரிடத்தே தமதுவடிவ அவிவேகம் இயற்கையானேயன்றும்; மற்றே, அவித்தையாலாய ஆவரணத்தானேயாம. அல்லது, அம்மதுரூபதிருஷ்டாந்தத்தே அவ்விரதத்திலும் வேறாய பிரமாதாவினிடத்தேயிருக்கும் அவிவேகத்திற்கு இரதங்களிடத்தே யாரோபணமாம. தாஷ்டாந்திகத்திலோ அஞ்ஞானத்தான் மறைவுற்ற ஜீவர்களிடத்தே அவ்வவிவேகம் முக்கியமாம்; இவ்வாறிரண்டின்கண்ணும் விசேடத்தன்மையுறினும் அதனைப் பரித்தியாகித்துக் கேவலம் அஞ்ஞானத்தின் சமானத்தன்மைமாத்திரம் அவ்விரண்டிலுங் கவரவேண்டும்.

சங்கை:—ஹே பகவன்! துயிலின்கண்ணே இச்சீவர் ஒருகாற் சத்வஸ்துவோடு ஒருமையை யடைவராயின், அதினின்றுங் கிளம்பிய ஜீவர்கட்கு மீண்டும் அச்சாதியையுடைய சரீரப்பிராப்தியுண்டாகலாகாதன்றே?

சமாதானம்:—ஹே சுவேதகேதுவே! புலி பாம்பு முதலிய தாமதரும், அரசர் முதலிய இராஜதரும், பிராஹ்மணுதி சாத்விகரும், எவ்வெத்தேகமுடைய

ராய்த் துயிலிற் சத்வஸ்துவையுற்றனரோ, பின் கிளம்பி அவற்றையே யவரடைவர். வேறுயவற்றைபடையார்; ஏனெனின், மழைகாலம் நீங்கியபின்பு சர்வ தவளை களும் மண்ணும்; ஆனால், அவற்றின் சூக்ஷ்ம அவயவரூப சமஸ்காரம் மண்ணின் கண்ணே நண்ணும்; மீண்டும் மழைகாலம வந்தபோது அவை சமஸ்காரவபத் தால் மீண்டும அவ்வத்தேகங்களையடையும்: வேறுயவற்றை யடையாது. அது போலத் துயிலின்கண்ணே சர்வ ஜீவர்களின் இலயமாயினும், அவர் தம் வாசனு ரூப சூக்ஷ்மசமஸ்காரம் ஆண்டிருக்கும்; அதன் வயத்தானே அவர் துயிலினின் றும் கிளம்பி அவ்வத்தேகங்களையடைவர். 2-வது: ஹே சுவேதகேதுவே! கங்கை முதலிய நதிகள் தமது நாமரூபங்களைப் பரித்தியாகித்துச் சமுத்திரபாவத் தையடையும், அவை மீண்டும் மேகவாயிலாய் மழைரூபமாய்க் கடலினின்றும் வெளிவந்தும், 'யாங்கள் நதிகள், கடலினின்றும் வநதேம' என அவை யுணரா தேபோலத் துயிலின்கண்ணே சதப்ரஹ்மத்தையடைந்தும் துயிலினின்றும் கிளம்பி அதனினின்றும் வந்தேமென வுணர்வதில்லை; ஏனெனின், அதனை யடை யுங்காலத்தே அதன் விளக்கததைத் தடைசெய்த மூலாஞ்ஞானம் நனவின்கண்ணு மிருக்கின்றது. அஞ்ஞானததான்மோகிதா அந்தச சத்பிரஹ்மத்தையுணர்ந்திலர். 3-வது: ஹே சுவேதகேதுவே! சீவன் எசசாதியுடையவனுய்த துயிலில எச்சத் வஸ்துவையடைகின்றனனே அதனினின்றும் வந்து அச்சாதியுடையவனேயாவன், அதனினும் வேறு ஜாதியுடையவனுகான்; ஏனெனின, எவ்வெவ்வுயிர்கள் துயிலின் கண்ணே சத்வஸ்துவோடு அபேதபாவத்தையடைகின்றனரோ அவர்கட் கொரு காற் கிளமபுகை கூடாதாயின், துயிலில் அசசதவஸ்துவின்கண்ணே இலயமாத்தி ரததானே நாடோறும அவாகட்குத தேகவீழ்ச்சி யுண்டாதல்வேண்டும; அவ் வாறு காணவருவதின்றுமாதலின் அத்துயிலையடையும ஜீவரே அதனினின்றுங் கிளம்புவர். அல்லது, ஜீவரின் நாசததை யெவரும் கண்டிலர்; மற்றேறு, இச்சீவர் பரித்தியாகிக்கும பொருள்களின் நாசஙகாணவருகின்றது தருவின்கண்ணே யிருக்கும் உயிாகள் தருவின் சாகைகளில எதை யெதைப் பரிததியாகிபபரோ அவ் வவற்றின் காய்தல உண்டாகிமேபவிடும், ஜீவனற்ற எசசாகையும் ஜீவியாதாம,

சங்கை:—ஹே பகவன்! தருவின்கண்ணேயிருககு முயிாகள் பரிததியா கித்த சாகையின்கண்ணே ஒருகால் வேறு ஜீவர்புகினேறு, சாகைகாயாததேபோலத துயிலின்கண்ணே ஜீவா சத்பிரஹ்மததையடைவுறறு முகதர் ஆய்விடுவாராயினும், வேறு ஜீவர் இத்தேகத்தேபுகுந்து இதனைக் கிளபபுவாராதலின் நாடோறும் இத் தேகவீழ்ச்சியின்றும்.

சமாதானம்:—ஹே சுவேதகேதுவே! தருசசாகையேபோல ஒருகால் துயி லில் இத்தேகத்தின்கண்ணே வேறு ஜீவர் பிரவேசித்துத் தேகத்தைக் கிளப்புவ ராயின் இவ்வுலகத்தே எத்தேக நாசமுமுண்டாகவேண்டுவதில்லை; ஏனெனின், துயிலின்பின் இத்தேகத்தே புகுநது இதனைக் கிளப்புவராகிய வேறு ஜீவர் மரித்தபின்பும் இதன்கட்புகுந்து இதனை யெடுக்கவேண்டுமாதலின் எத்தேக நாசமுமுண்டாகாதாம்; ஆனுலவ்வாறு காணவருவதின்றும். ஆகையால், துயி

லடைபவரே கிளம்புவர், வேறுள்ளவர் கிளம்பார். துயிலையடைந்த ஜீவனே துயிலினின்றும் கிளம்புவதேபோல மரணாவஸ்தையில் சத்பிரஹ்மத்தையடைந்த ஜீவனே பின்பு அறம்பாவவயத்தால் வேறு தேகத்தையடைவன்; மற்றையர் அடையார். இவ்வாறு ஜீவரூப அதிகாரி நித்தியமாதலின் மோக்ஷசாஸ்திரத்திற்கும் வீண் தன்மையின்றும், 'செய்ததறகின்றிச் செய்யாததற்கொன்றும்' என்னும் தோஷமும் அடைவுறாது. 4-வது: ஹே சுவேதகேதுவே! அத்தியந்தம் சூக்ஷ்மமாகிய ஆலம்விதைபோலவிருக்ஷத்திற்காதாரமாம்; ஏனெனின், அத்தருத் தானுண்டாம்முன்னர் ஒருகால அவ்விரையில் அத்தியந்தம் அசத்தாயின் அஃதொருகாலும உறபததியாகமாட்டாது; அத்தியந்தம் அசத்தாகிய மலடிமகன் ஒருகாலும் உண்டாகாததேபோலும். ஆகையால், அம்மகாவிருக்ஷம் தானுண்டாம் முன்னர் விரையின்கண்ணேயிருநதது, ஆனல் விரைத்தசையில் அவ்வடதரு அவ்விரையின்கண்ணே ஸ்கநதம் சாகை பத்திரம என்பனவாதி பேதத்தானே பிரதீதியாகாததேபோல, இவ்வுலகின் சூக்ஷ்ம சமஸ்காரங்களோடுகூடிய மாயோபகித இவ்வான்மாச சூக்ஷ்மமாயினும இவ்வெலலாவுலகு முண்டாவதன் முன்பு இவற்றிறகு ஆதாரமாம; ஆனல முன்பிருந்ததென்பது சாஸ்திர திருஷ்டியறறவர்க்கு நிசசயமாகாதாம்: மற்றேr, 'ஸதேவஸௌம்யேதமக்ரஆஸீத்' என்பதாதி சாஸ்திரவடிவ சக்ஷுவையுடைய அறிஞருக்கே அநநிச்சயமாம. 5-வது 'ஹே சுவேதகேதுவே' இவ்வெல்லாவுலகின் உபாதானகாரணரூப ஆன்மாப பிரத்தியக்ஷாதி இலௌகிகப பிரமாணங்களால அறியமுடியாதாமாயினும், குருசாஸ்திரவசனததே விசுவாசரூப சிரதநதையானே யறியத்தககதாம். நீரின்கண்ணேயிருககும் இலவணம விழிமுதலிய பொறிகளாலறியமுடியாதாயினும், இரசன இநதிரியத்தானே அஃதறியப பெறுவதேபோல, ஆன்மா இவ்வெல்லா ஜடபிரபஞசததேயிருபபினும குருசாஸ்திரவசனத்தே விசுவாசரூப சிரததையறறவன் ஆன்மாவையறியான; மறறேr, சிரத்தையுற்றவனே தத்துவம பதார்த்த சோதனையானே ஆநநதவடிவ சைதனய ஆன்மாவைச சாக்ஷாத்கரிப்பன் 6-வது: ஹே சுவேதகேதுவே' இவ்வுலகப பிரசித்த இநதிரியாதி யுபாயங்களால இவ்வான்மாச சாக்ஷாத்கரிககபபடாதாயினும பிரஹ்மவேத்தாக் குருவினுபதேசரூப அபூர்வ உபாயததானே ஆம. காநதாரதேயத்தேயிருக்குமொருவனைக கள்வா பெருங்காட்டிறகொண்டுசென்று இருவிழிகளையுங் கட்டிவிட்டனர்; அவன் மீண்டுநதன் தேயத்தை யடையுமிசசையுடையனாய் மிகவுந துயரையடைந்தனன். அரநதையுற்ற அவன் இமமகாவனததே என்னைக் கள்வர் காந்தாரதேயததினின்றுங் கொண்டுவந்துவிட்டனர், என்னுநதன் விருத்தாந்தத்தைப் பெருங்குரலோடும் கதறினன்; கதறுமகுரலைக்கேட்ட அந்நெறியேசெல்லுமஒரு தயாளுவானவன் அவன் சமீபத்தேவந்து. கதறுநதுக்கியைக்கண்டு கட்டுறற கண்டிறந்துவிட்டுக் கூறியதாவது:—ஹே புருஷ! இத்திசையிலிருக்கும் காந்தாரதேயத்தினின்றும் நீவந்தனையாதலின் நீயித்திசையிறசுகபூர்வகம போகலாம், எனக்கூறியதயாளுவின் வசனத்தைக்கேட்டு மிக மகிழ்வுற்றவன் அவ்வசனத்தே நம்பிக்கையுற்று அத்திசையின் கண்ணேசென்று சென்றுபையப்பையத்தனது காந்தாரதேயத்தேயடைந்தனன். இவ்வாறே இம்மதிமானய அதிகாரியும் பிரஹ்மவேத்தாவாய குருவினுபதேசத்தானே தன்னுன்ம

ரூபதேயத்தையடைந்தனன். கருத்திதுவாம்:—அதிகாரியைக் காமக்குரோதாதிய நான்கும் தன்னான்மரூப தேயத்தினின்றும் கொண்டுசென்று சம்சாரரூபவனத்தே அடைவித்தன, அவனது சாக்ஷிவடிவ நேத்திரங்களை அஞ்ஞானரூப திடபந்தனஞ் செய்தன, அதனால் அவன் சமசாரவனத்தே சந்ததம் சுழன்று பரமதுக்கத்தை யடைவன்; அவ்வனத்தே பிரஹ்மவேதநாக் குருரூப தயாளுவானவர் மகாவாக்கியவடிவ தமது திருக்கரத்தால் சாக்ஷிரூப நேத்திரத்தின் அஞ்ஞானரூப பந்தனத்தையவிழ்க்கவே, அஞ்ஞானரூப மறைப்பற்றுத் தனது அத்விதீய ஆன்மரூப தேயத்தையடைவன். அவருபதேசத்தானே அக்காமக்குரோதாதிகள்வரைச சம்சாரரூபவனத்தின் அடைவிற்கேதுவாக வறிந்து மீண்டொருகாலும அக்கள்வர் வயமாகான். ஆகையால், ஞானுசிரியர் உபதேசமே இவ்வானந்தவடிவ ஆன்மாவினடைவிற்குக் காரணமாம். 7-வது: ஹே சுவேதகேதுவே! மரணகாலத்தே வாக்காதி இந்திரியங்கட்கு மனாதிகளிடத்தே சொரூபமாகவே இலயமாகாதாம்; மற்றோ, தம்விருத்திரூபத்தானே இலயமாம். சமஸ்காரரூபத்தானே அவற்றின் வடிவம் அப்போதிருக்கும் என முன்னுனக்குக் கூறியது அஞ்ஞானிகளின் மரண அபிப்பிராயத்தானேயாம். வித்வான்கட்கோ பிரஹ்மஞான மகிமையால் மரண காலத்தே தத்தம வியாபாரசகித சாவ வாககாதிய பிரபஞ்சம் சொரூபமாகவே இலயத்தையடையுமாதலின், வித்வான் அஞ்ஞானிகளைப்போல மீண்டும் பிறவான். இருவர் மரணத்தேயும் விசேடங்கூறியது சாஸ்திர திருஷ்டியை யங்கீகரித்தேயாம். லோகதிருஷ்டியானே இருவர் மரணமும சமமேயாம்; ஏனெனின், அஞ்ஞானி மரணமுறும்போது அவனைத் தாய்தந்தையராதி பந்துக்கள் நாற்புறமும் சுற்றிக்கொண்டு அழுவதுடன் இவ்வாறு கூறுவர்:—ஹே மைந்த! பிராண சமானப பிரியமாய தாயாகிய என்னை நீ யுணராகின்றனையா? ஹே அண்ணு! பிராணசமானப் பிரியமாய தமபியாகிய என்னை யுணராகின்றாயா? இவ்வகையாய மொழிகளை வாக்காதிகள் இலயமாவமடையாதவரை கேட்பன், இலயமாய பின்னே அவன் எவ்வத்துவையுமுணரான். இவவாறவ்வித்வானும மரண சமீப காலத்தே வாக்காதியிந்திரியங்கள் இலயமடையும்போதோ பந்துக்களின் நானு வகை வசனங்களைக்கேட்பன், வாககாதிகள் இலயமாயபின்பு அவ்வறிஞனும் எவ்வத்துவையு முணரமுடியாதவனுவன். இவ்வாறு உலகதிருஷ்டியானே அவ்விருவர் மரணத்தும் சமானத்தன்மையுறினும, மகாவிசேடத்தன்மையாவது வித்வான் மீண்டும் பிறவான், அஞ்ஞன் பிறப்பன் என்பதேயாம். 8-வது: ஹே சுவேதகேதுவே! இருவர் மரணவஸ்தையும் சமானமாயினும் வித்வானே மரித்தபின்பு மீண்டும் ஜன்மத்தையடையான், அவித்வானே அடைவன் என்னும் விசேடத்தே யேது விதுவாம்:—வித்வானே சத்தியவடிவ ஆன்மாவையேயறிவன், அவித்வானே மித்தியாவடிவ மூன்று சரீரத்தையே ஆன்மாவாயுணர்வன். இதனானே அறிஞன் சத்திய ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்து மாயாரூபபாச மற்றவனுவன். மரணகாலத்தே வாக்காதிகள் இலயமாயபின் மீண்டும் ஜன்மத்தையடையான். அவித்வானே பொய்யாய மூன்றுதேகங்களை ஆன்மரூபமாயறிந்து மரணகாலத்தே வாக்கு முதலிய இந்திரியங்களின் இலயத்தின்பின் சமஸ்காரவயத்தானே மீண்

டும் சரீரத்தையடைவன். இவ்வுலகத்திலும் யாவனுக்குச் சத்தியத்தின்கண் அபிப்பிராயமாமோ அவனொருகால் ஒரு பொய்க்களங்கத்தையடையினும் அச்சத்தியவாதி அம்மித்தியாகளங்கத்தினும் முக்தனேயாவன். யாவனுக்கு மித்தையின்கண்ணே அபிப்பிராயமாமோ அவன் துக்கத்தையேயடைவன். ஒருகள்வனையும் நல்லவனையும் அரசசேவகர் பலாத்காரமாய்க் கவர்ந்துசென்றனர்; இவ்விருவருங் கள்வராதலின் தண்டஞ்செய்யத்தகுதியர் எனத்துணிந்து அரசசபையின்கண்ணே உய்த்தனர். ஆங்குக்கள்வன் யான்கள்வனல்லன் என்றனன், சாதுவும் அவ்வாறே கூறினன். அவ்விருவர் வசனங்களையுங்கேட்டு முக்கிய சேவகர்கட் கிவவாறு ஐயமுண்டாயது:—'இவ்விருவருள் யாவன் கள்வன், யாவன் சாது' வென அவ்வைய நீக்கப்பொருட்டு, அக்கினியின்கண்ணே இருப்பு மழுவைக்காய்வைத்து இருவர்கரத்தினுமீந்தனர், சத்தியவாதியாகிய சாதுவோ அதனாற்றுக்கத்தையடைந்திலன், மித்தியாவாதியாகிய கள்வனோ அதனாற்றுக்கத்தையடைந்தனன். சாதுவின் கரங்கள் மழுவால் அழலாமையைக்கண்டு அவனைச் சத்தியவாதியென விட்டுவிட்டனர், கள்வன் கரங்களோ மழுவால் அழன்றமையைக்கண்டு அவனை மித்தியாவாதியெனச் சிறையில் வைத்தடித்தனர். இவ்வாறு அறிஞனுக்கும் அறியானுக்கும் மரணம் சமானமாயினும் சத்தியான்மாவையுணர்ந்த வித்வானுடைய வாக்கு முதலிய பொறிகளோ அக்கால் சொரூபமாயே இலயத்தையடையுமாதலின், அவ்வுத்தமன் மீண்டுஞ் சன்மாதி துக்கங்களையடையான். மித்தையாய தேகாதிகளையே ஆன்மரூபமாயுணர்பவனாகிய அவித்வானுடைய வாக்குமுதலிய பொறிகள் அக்கால் சொரூபமாய் இலயமாகாவாம்; மற்றோ, சம்ஸ்காரரூபமாயிருக்குமாதலின அவ்வதமன் அடிக்கடி ஜன்மாதி துக்கங்களையடைவன். ஓ என் மைந்த! இவ்வாறு உத்தாலகர் சுவேதகேதுவிற்கு 'தத்வமஸி ஶ்வேதகேதோ' எனனும் மகாவாக்கியத்தை 9 முறை கூறினர்; அவ்வுபதேசத்தைக்கேட்டுச் சமசயமற்ற சுவேதகேது அவ்வொன்பதாவது உபதேசத்தே முதல வசனத்தேகூறிய ஆன்மாவினுண்மை வடிவத்தைச்சாக்ஷாத்காரஞ்செய்தனர். பிதாவினுபதேசத்தால ஆன்மஞானத்தையடைந்து மகாதேஜசையுடைய சுவேதகேதுவானவர் சிறிது காலம்வரை தன்னிலத்தேயிருந்தனர், பின் பரமவைராக்கியத்தையடைந்து தனது பிதாவைப்போலவே பரமஹம்ச சந்யாசத்தையடைந்தனர். அவ்வுத்தாலகர் தமது மைந்தனை மிகவும மதிமானெனக்கண்டு அவருக்கு ஆன்மரூபசத்தையின்கண்ணே சுகரூபத்தன்மையை உபதேசித்திலர்; ஏனெனின், சூக்ஷ்மமதியையுடையவர் கூறுதபொருளையும் தாமேயுணர்ந்துகொள்வர். அம்மைந்தரும தந்தையாரிடத்துக் காரணரூபசத்தை சுகரூபமா, அல்லவாவெனக் கேட்டிலர்; இக்காரணத்தானும் அவர் அவருக்கு அவ்விடயத்தை யுபதேசித்திலர். பூர்வம நாரதமுனிவரின் வினாவால சந்தோஷத்தையடைந்த சநத்குமார பகவான் அந்நாரதமுனிவருக்குக் கேட்காமலே ஆன்மரூபசத்தைக்குச் சுகரூபத்தன்மை கூறினர். பூர்வம் நீ சுவேதகேதுவின அஞ்ஞானகாரணங் கேட்டனை அதைக்கூறினேம், மீண்டும் உத்தாலகர் உபதேசத்தால் ஆன்மஞான முண்டானவகையையும் கூறினேம. இப்போது எப்பொருளைக்கேட்க நினைக்கிச்சையோ அதைக்கேட்பாயாக.

பன்னிரண்டாவது அத்தியாயம் முற்றிற்று.

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## பதின்மூன்றாவது அத்தியாயம்.



ஓம் ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ குருப்யோநம: ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நம:
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநம:.

முன்னர் 12-வது அத்தியாயத்தில் சாமவேத சாந்தோக்கிய உபநிடதத்தின் ஆறாவது அத்தியாயப்பொருள் நிரூபிக்கப்பட்டது இப்போது 13-வது அத்தியாயத்தில் அவ்வுபநிடதத்தின் ஏழாவது அத்தியாயப்பொருளை நிரூபிப்பாம். இவ்வாறு அச்சீடன் குருவாயிலாய்த் தன்னான்மாவின் பிரஹ்மரூபத்தன்மையைக் கேட்டு மீண்டும் வினவ இச்சையுற்றவனாயிவ்வாறு கூறினன்:- ஹே பகவன்! முதலத்தியாயத்தில் தாங்கள் இருக்குவேதத்தின் ஐதரேயப்பொருளை கூறும்போது சனகாதி முனிவர் வாமதேவாதி யதிகாரிகட்குப் பிரஹ்மவித்யா உபதேசஞ்செய்தனரெனவும், வாமதேவமுனிவர் தாயின்கருவிலிருந்துகொண்டு அவ்வதிகாரிகட்குத் தமது சர்வான்மபாவத்தைக் கூறினரெனவும், இன்னும் அநேகவிடயங்களையும் கூறினீர்கள். 2-வது அத்தியாயத்திலும், 3-வது அத்தியாயத்திலும் தாங்கள் இருக்குவேதத்தின் கௌஷீதகி யுபநிடதப்பொருளைக்கூறும்போது தேவராஜாவாய இந்திரர் பிரதாத்தனனுக்குப் பிராணப் பிரஞ்ஞாரூபமாய் ஆன்மாவை யுபதேசித்தனரெனவும், அஜாதசத்துரு மன்னர் பாலாகி மறையவர்க்குப் பிராணாதிகளினும் வேறாக ஆன்மோபதேசம் செய்தனரெனவும் கூறினீர்கள். 4-வது 5-வது 6-வது 7-வது என்னும் நான்கத்தியாயங்களில் தாங்கள் யஜுர்வேதத்தின் பிருகதாரண்யப்பொருளை நிரூபிக்கும்போது இருபுருடவம்சம ஒரு ஸ்திரீவம்சம என்னும் மூன்றன்கண்ணுள்ள இருஷிகளின் பரஸ்பரபேதத்தையும், அபேதத்தையும் வருணித்தீர்கள். ததயங அதாவணர் தேவராஜாவாய இந்திரர்க்குப் பிரஹ்மவித்தையை உபதேசித்தனரெனவும், சிரவணித்த இந்திரர் மாறாக அவ்விருடியின் மீது குரோதமுடையவராய்ப் பிரஹ்மவித்தையை யுபதேசியாதிருக்கும்படியாணையிட்டனர்; அவ்விருடி தமது பிரதிஞ்ஞையைச் சத்தியமாக்கும்பொருட்டுப் பிரஹ்மவித்தையை அசுவினீகுமாரர்கட்குபதேசித்தனர்; பின்னிந்திரர் இருடியின் மத்தகத்தைச்சேதித்தனர், அசுவினீ குமாரர் பிரஹ்மவித்தையின் லோபத்தாலே தமது குருவின் தலையைவெட்டிக் குதிரையின் கழுத்திலவைத்து, குதிரையின் றலையைவெட்டிக் குருவின் கழுத்தில்வைத்தனரெனவும், மற்றும்பிறவும்; ஜனகராஜாவின் யாகசபையில் ஆசுவலாதி மறையவர் யாஞ்ஞவற்கிய முனிவரைவெற்றிகொள்ள இச்சித்து அவரோடு அநேக விவாதம்செய்தனர், அவையின்கண்ணே யாஞ்ஞவற்கிய முனிவரின் சாபத்தாலே சாகல்யப் பிராஹ்மணரது மரணமுண்டாயது எனவும்; யாஞ்ஞவற்கிய முனிவர் ஜனகராஜாவிற்கு இருமுறை பிரஹ்ம

வித்தையையுபதேசித்து ஜனகராஜாவிற்குக் கிருதகிருத்தியபாவத்தையடைவித்தனர்; அம்முனிவர் தமது மைத்திரேயி மனைவிக்குப் பிரஹ்மவித்யா உபதேசத்தாலே கிருதகிருத்தியத்தன்மையை யடைவித்தனர்; பின்பு அம்முனிவர் சந்யாசத்தைக்கவர்ந்தனர் எனவுங் கூறினீர்கள். 8-வது அத்தியாயத்தே தாங்கள் யஜுர்வேதத்தின் சுவேதாசுவதர உபநிடதப்பொருளை நிரூபிக்கும்போது சம்பூரண சந்யாசிகள் ஜகத்காரணத்தே விவாதித்து சுவேதாசுவதர முனிவரின் ஆசிரமத்தே சென்றனர் எனவும், அவர்கட்கம் முனிவர் பூர்வவேத வேத்தாக்களின் ஆக்கியானத்தைக்கூறிச் சகத்காரண நிச்சயத்தைச் செய்வித்தனர் எனவும் கூறினீர்கள். 9-வது அத்தியாயத்தே தாங்கள் அந்தயஜுர்வேதத்தின் கடவல்லிப்பொருளை நிரூபிக்கும்போது தந்தையாரை மெய்ம்மொழியராக்கும்பொருட்டு நசிகேதா யமராஜாவினுலகத்தேசென்றதும், அவரது தைரியத்தைக்கண்டு மகிழ்வுற்ற தருமர் அவருக்குப் பிரஹ்மவித்தை முழுவதையும் கூறியதையும் கூறினீர்கள். 10-வது அத்தியாயத்தே அந்த யஜுர்வேதத்தின் தைத்திரீய நாராயணீயப் பொருளைக்கூறும்போது தாங்கள் பிருகு இருடி தமதுவருணபிதாபாற்சென்று பிரஹ்மவித்தையைப் பிரார்த்தித்ததும், பிதாவுபதேசித்ததும், வேநன் எனனும் கந்தருவன் தனது சர்வான்மபாவத்தின் அனுபவத்தைக்கூறியதும், சத்தியாதி சாவசாதனங்களுக்குள் சந்யாச ஆசிரமத்தின் அதிகத்தன்மையையும் வருணித்தீர்கள். 11-வது அத்தியாயத்தே தாங்கள் ஜாபாலாதி பேகாதச உபநிடதத்தையுபதேசிக்கும்போது பரமஹம்ச சந்யாசத்தைப் பூர்வம் சமவர்த்தகாதி மகான்மாக்கள் கவர்ந்தனர் எனவும், அதன்கண்ணே வைராக்கியமேகாலம், அதனுற்பத்தியில் கர்ப்ப உபநிடதவிசாரம், மரணகாறியுணாசசி, அஷ்டாங்கயோகம் என்பதாதியுபாயம் காரணமெனவும், வைராக்கியவானே யதற்கதிகாரியெனவும், அவன் சிகை சூத்திரமுதலியவற்றை யறறிருததலபாகிய ஆசாரமெனவும், அஹிம்சாதிதருமம் அந்தராசாரமெனவும், அவனது முக்கியதருமமோ ஆன்மஞானமேயெனவும் கூறி அவ்வான்மஞானத்தையோ பிரஹ்மஉபநிடதாதிகளின்வாயிலாய்த் தாங்கள் கூறினீர்கள். 12-வது அத்தியாயத்தே சாமவேத சாந்தோக்கிய உபநிடதத்தின் ஆறுவது அத்தியாயப்பொருளைக்கூறும்போது உத்தாலகமுனிவர் சுவேதகேதுவின் ஐயநீக்கப்பொருட்டு 'தத்வமஸி ஶ்வேதகேதோ' என்னும் மகாவாக்கியத்தை ஒன்பதுமுறை உபதேசித்தனரெனவும், அதைக்கேட்டுச் சுவேதகேது சம்சயமற்றவரா யான்மஞானத்தை யடைந்தனரெனவும் கூறினீர்கள். ஹே பகவன்! அவ்வத்தியாய ஈற்றில் தாங்கள், உத்தாலகர் தமது மைந்தரைமதிமானென நினைந்துகேட்காமையின் ஆன்மாவின் சுகரூபத்தன்மையைக் கூறிலர் எனவும், பூர்வம் சநற்குமாரரோ நாரதமுனிவருக்குக் கேட்காமலே அதனைக் கூறினர் எனவும் கூறினீர்கள். சநற்குமாரர் நாரதர்க்கருளிய பிரஹ்மவித்தையைத் தங்கள் வாயிலாய்க்கேட்க இச்சிக்கின்றனனாதலின், தாங்கள் கிருபைசெய்து அதனை யெனக்குபதேசியுங்கள்; எனச்சிரத்தையுடைய சீடனால் வினவப்பட்ட ஸ்ரீ குருவானவர் அவனுக்கிவ்வாறுகூறினர் :—ஹே மைந்த! முன்னொருகாலத்தே சம்சாரதாபத்தால் தபிக்கப்பெற்ற நாரதர் ஏகாந்ததேயத்தேயிருந்த சனற்குமாராது சமீபத்தே சென்று இவ்வாறு கூறினர் :—ஹே பகவன்! எந்தப் பிரஹ்மம் சர்வஜகத்திற்கும்

அதிஷ்டானமாமோ, யாவினும் மேன்மையதாமோ, எதனுணர்வானே அறிஞன் கர்த்திருத்துவ போக்திருத்துவம் முதலிய அத்தியாசரூப சர்வசோகங்களைத் தாண்டுவானே அதைத்தாங்கள் நன்றுபுணர்வீர்களாதலின், எதன்ஞானம சர்வசோக நிவிருத்தியின்காரணமாமோ அதை அடியேனுக்குக் கையால் கூறியருள வேண்டுமெனப் பிரார்த்தித்தபோது அவா புன் சிரிப்புடன் நாரதாது அஞ்ஞான நீக்கப்பொருட்டு இவ்வாறியம்பத்தொடங்கினா:—ஹே நாரத! நீ சர்வலோகத்திலும் சர்வஞ்ஞதன்மையானே பிரசித்தனாதலின், உனக்குவரும் வித்தையாவற்றையும் நீயென்பாற கூறுதி; யாவற்றையுங்கேட்டுப பின்னிணக்குப் பிரஹ்மஞானோபதேசஞ்செய்கின்றேன் எனக்கூறக்கேட்ட நாரதர் தண்டம்போல் நமஸ்கரித்துத் தமது சர்வ வித்தையையுங் கூறினா. அஃதாமாறு:—ஹே பகவன்! மந்திரப்பிராஹ்மணபேதத்தானே இரு இருவகையையுற்ற இருக்கு, யஜுஷ், சாமம், அதாவணம் என்னும நான்குவேதங்களையும யான் நமது பிரஹ்மாவாகிய தந்தையாரது பிரசாதத்தானே நன்றுபறிந்தனன். அநநான்கனுள் எமமொழி பூர்வப்பிராஹ்மணுதிகளின் கதையைககழறுகின்றதோ அஃதிதிகாசமாம். அவ்விதிகாசங்களையும, ஜகததின் உறபததிமுதலியவற்றைககூறும வசனம் புராணமாம் அதனையும், இசசபதம சாது இஃதசாதுவென்னும ஞானவேதுவாகியதும், சுருதி ‘வெஷாதாம் வெஷ’ என்னும நாமத்தானே கூறிபதும் ஆகிய வியாகரணத்தையும், சிராத்தகருமஙகளின ரீதியைக்கூறும பித்திரியமெனப பெயரிய நூலையும, ஆயிரமிலககாதி யெண்ணிக்கையின வடிவததை நிண்ணயஞ்செய்யும ராசியெனச சுருதியிற கூறபபெறற கணிதசாஸ்திரததையும், ஜீவாகளின் உற்பாதாதிசொரூப நிண்ணயஞ்செய்யும தைவமென நூல்களாற கூறபபெற்ற சாஸ்திரத்தையும, பூமியின்கண்ணே புதைததிருக்குந தனத்தையெடுக்த முணர்வைத் தரும நிதியெனப பெயரிய நூலையும, தாக்கததைப பிரதானமாகவுடைய அககபாதராக்கிய நியாயசாஸ்திரததையும, வேததததின்கண்ணேயிருக்கும் வினுவிடைப் பாகத்தையும, ‘அநத நியாயசாஸ்திரத்தையும் வினுவிடைபபாகத்தையுந் தான் சுருதி வாகோவாககியம எனக் கூறியிருககின்றது.’ அநேகவகையாய வியவகாரங்களின் நியமத்தைககூறுகினற ஏகாயனமெனச சுருதிகூறிய நீதிசாஸ்திரத்தையும், வேதாஙகரூப நிருக்தசாஸ்திரத்தே சாவ தேவதைகளையும சாவான்மரூபமாய்க் கூறிய பாகமாகிய தேவவிததையையும, அப்பாகம்விட்டுப பாக்கியிருக்கும் நிருகதசாஸ்திரம், சிக்ஷை, கறபம என்னும் வேதாங்க வேதோபகார வேதவித்தையையும, சர்வ பூதப்பிராணிகளின் ரோகததை நீக்கி யாவற்றிற்கும உபகாரகமாய சுசுருதாதி கிரந்தசகித ஆயுர்வேதமாகிய பூதவித்தையென்னும் வைத்தியததையும், சாந்திபுஷ்டி முதலிய பலன்களையடைவிக்கும் நானுவகைபாய மந்திரஙகளையும், அஸ்திரவித்தையோடுகூடிய தனுர்வித்தையாகிய க்ஷத்திரவித்தையையும், இராகு கேது முதலிய கிரகஙகளின்நிதி முதலியவற்றைப பிரதிபாதிக்கும் நக்ஷத்திர வித்தையென்னும் சோதிடநூலையும, தேவசரீரஙகளையுடைய சர்ப்பஙகளை வயப்படுத்தும சாதனமாய சர்ப்பதேவ வித்தையென்னும் காருடவித்தையையும், எல்லாருடைய மனத்தையும் ரமிக்கச்செய்வதும், கீத முதலியவற்றைப பிரதிபாதிப்ப

தும் ஆகிய் ஜனவித்தையென்னும் காந்தருவசாஸ்திரத்தையும் நன்றாயுணர்வேன். இவை யாவற்றையும் நன்குணர்ந்தபோதினும் வேததாற்பரியவிடயரூப எனது மோக்ஷசாதனத்தை யானுணர்ந்திலேன். வேதங்களின்பொருள்களைச் சாமானிய மாய் உணர்ந்தபோதினும், அதன் றாற்பரிய விஷயீபூத அத்விதீய ஆன்மாவை யானுணர்ந்திலேனாதலின், கேவலம் வேதமந்திரபாட முணர்ந்தவனேயன்றிப் பொருளுணர்ந்தவனல்லன். முன்னாத தங்களைப்போன்ற பெரியோர்வாயிலாய் ஆன்மாவையுணர்ந்தவன் மூலகாரணத்தோடுகூடிய சர்வ சோகங்களையுங் கடப் பன் எனக் கேட்டிருக்கின்றேன். முக்கோணமுடைய அக்கினிகுண்டத்தே விழுந்த நொண்டிக்கு மகா சோகபிராப்தியுண்டாவதேபோல, அத்தியான்மதுக்கம், அதிதைவதுக்கம், அதிபூததுக்கம் என்னும் மூன்றால் எனக்கு எப்போதும் சோகப்பிராப்தியுண்டாகின்றது. ஹே தீனதயாளுவாகிய சனற்குமாரரே! ஒரு பதிவிரதையாகிய ஸ்திரீ, சிறிய பாலாகளையுடையவளாயேனும், இல்லளாயேனும், யௌவனமுடையவளாயும், தனமற்றவளாயும், உறவினரற்றவளாயும் இருந்து தருணியாயிருக்கும்போதே புருடன் போய்விடின் அவள் ஹாதெய்வமே! எனக்கென்ன கதியாமென நிரந்தரம் அழுதுகொண்டிருப்பதேபோல, யானும் ஹாதெய்வமே! எனக்கென்ன கதியாமென நிரந்தரம் சோகித்துக்கொண்டிருக்கின்றேன், முத்தாப வயத்தனாயிருக்கின்றேன், விசாரஹீனாகளால் தாண்டமுடியாத இச்சோகரூபியாய சமுத்திரத்தின்கண்ணே யானெப்போதும் முழுகியிருக்கின்றேன், அகாத சோகரூபியாய கடலின் அக்கரையையடைய யான் எப்போது மிச்சித்துக்கொண்டிருக்கின்றேன், இத்தகையனாகிய என்னைக் கிருபையினால் சோகசமுத்திரத்தின் கரையை அடைவிக்கவேண்டும். ஹே குழந்தாய்! இவ்வாறு நாரதர் பிரார்த்தித்ததைக்கேட்டுச் சநற்குமார பகவான் தூலாருந்ததிநியாயத்தானே நாரதருக்கு ஆன்மாவின் உண்மைவடிவத்தை யுணர்த்தும்பொருட்டுக் கூறியதாவது:—ஹே நாரத! நீ யுணர்ந்ததாய் முற்கூறிய சாஸ்திரங்களியாவும் சப்தரூபமேயாம்; ஏனெனின், சம்பூர்ணபிரபஞ்சத்தின் ஏகதேசரூப எல்லாப்பொருள்களையும் இவ வாக்கு முதலிய இந்திரியங்கள் நாமதவரூபத்தானே கூறும்: நாமமில்லையாயின் எவனும் எதையும் கூறச் சமாத்துடையவனாகான. பெயரானே சர்வ வஸ்துக்களின் வியவகாரமாமாதலின், இந்நாமம் சர்வ வஸ்துரூபமாம். இச்சர்வ வஸ்துரூப நாமத்தை நீ பிரஹ்மரூபமாய்ச் சிந்தனைசெய்தி. உனது சித்தம் துவைதவாதனைகளானே மழுங்கியிருக்கின்றது. நீ முன் பயின்ற நாமத்தின்கண்ணே பிரஹ்ம பாவனையைச்செய்யின் நினது சித்தம் சாக்ஷாத்தாய்ப் பிரஹ்மத்தை யறிவதின் கண்ணே சமர்த்துடையதாம். சம்பூரண சப்தரூபநாமங்களைப் பிரஹ்மரூபமா யுபாசிக்கின் நாமத்தாற் கட்டுற்ற சர்வ ஜகத்தினகண்ணும் சுதந்திரத்தன்மை வடிவ பலமுண்டாம்; மகாராஜாவிற்குத் தனது தேயத்தே சுதந்திரத்தன்மை யுண்டாவதேபோலும். ஹே மைந்த! இவ்வாறு சநற்குமார பகவானனவர் நாரதருக்குச் சப்தரூபநாமத்தைப் பிரஹ்மரூபமா யுபாசிக்கக் கூறியபோது நாரதர் ஆசிரியரை நோக்கி வினவியதாவது:—ஹே பகவன்! இச்சப்தரூபநாமத்தே பிரஹ்மதிருஷ்டிமாத்திரத்தால் சோகநீக்கமுண்டாகாதாதலின், நாமத்தைக்காட்டினும் அதிக வஸ்துவை எனக்குக் கூறவேண்டும் என நாரதரால் வினவப்பட்ட

ஆசிரியர் நாரதருக்கு முன்முன்னைக்குறித்துப் பின்பின்னின்கண் அதிகத்தன்மையை நிரூபிப்பவராய் வாக்கிந்திரியமே முதலாக ஆசைபரியந்தமாய 13 தத்துவங்களை வருணித்தனர், அவற்றுள் ஒவ்வொன்றையும் பிரஹ்மரூபமாயுபாசிக்குமாறு கூறினர்; நாமத்தைப் பிரஹ்மரூபமாயுபாசிப்பவனுக்கு நாமசம்பந்த சர்வ ஜகத்தின்கண்ணும் சுதந்திரரூபபலம் பிராப்தமாவதேபோல, வாக்கு முதலியவற்றைப் பிரஹ்மரூபமாயுபாசிக்கும் புருடனுக்கு வாக்கு முதலியவற்றுற் சம்பந்தமாய சர்வ ஜகத்தின்கண்ணும் சுதந்திரரூபதன்மைப்பயன் பிராப்தமாம் என வாக்காதிகளின் உபாசனைப்பயனையும் வருணித்தனர். இப்போது, பதின்மூன்றன் வடிவத்தைக்கூறுகின்றார்:—ஹே நாரத! சப்தரூபநாமம் வாக்கிந்திரியத்தினின்றுமுண்டாம். அக்காரியத்தினும் இக்காரணமதிகமாம். அவ்வாக்கைத் தன் காரியத்தே இசைவடிவமனமே பிரேரிக்குமாதலின், அதனினும் இஃததிகமாம். இக்காரியம் எனக்குச் செய்யத்தகுந்தது, தகாதது என்னுங் கர்த்தவ்ய அகர்த்தவ்யவடிவ இருகோடிகளை வேறுவேறுபடுத்தி விடயஞ்செய்யுஞ் சங்கற்பரூப அந்தக்கரணவிருத்தியே இச்சாரூபமனத்தை யுண்டாக்குமாதலின், மனத்தினும் சங்கற்ப மதிகமாம். இவ்வனுசந்தானரூபசித்தம் சுகசாதனத்தன்மைவடிவத்தானும், துக்கசாதனத்தன்மைவடிவத்தானும் முன்னனுபவித்துள்ள பதார்த்தங்களின் ஒப்பான எதிரிலிருக்கும் பதார்த்தங்களில் விடயஞ்செய்யின்மாத்திரம் கர்த்தவ்ய அகர்த்தவ்ய விடயசங்கற்பமுண்டாமாதலின், அநுசந்தானரூபசித்தம் சங்கற்பத்தினும் அதிகமாம். விருத்திஞானங்களின் பிரவாகவடிவச் சிந்தாரூபத்தியானம் பூர்வ சமஸ்காரங்களின் கிளப்புகைவாயிலாய் ஸ்மிருதிரூப அநுசந்தானத்தை யுண்டாக்குமாதலின், இது அதனினும் அதிகமாம். எவ்வஸ்துவை உபேக்ஷை ஞானத்தினும் வேறாய விசேஷஞானம் விடயீகரிக்குமோ அதனறியானஞ் செய்யப்படுமாதலின், அவ்விசேஷஞானரூப விஞ்ஞானம் தியானத்தினும் அதிகமாம். அன்னத்தை யுண்டுண்டாய அவயவங்களின் விருத்திரூப பலத்தானே சர்வ சத்துருக்களும் பயத்தையடைவர், அப்பலத்தோடுகூடிய மனத்தானே அவ்விஞ்ஞானம் சித்தமாமாதலின், அப்பலம் விஞ்ஞானத்தினும் அதிகமாம். அதுவும் பூமிரூப அன்னத்தானுண்டாமாதலின் இது அதினினும் அதிகமாம். பூமிரூப அன்னம் மழைவடிவ நீரினின்றுமுண்டாமாதலின் அந்நீர் பூமியினும் அதிகமாம். உஷ்ணத்தன்மைவடிவத்தேயுவி னதிகத்தன்மைகாணின்மாத்திரம் மழையுண்டாதலின் அத்தேயு நீரினுமதிகமாம். ஆகாசம் தேயுவினுதாரமாதலின் இது அதனினும் அதிகமாம். ஈண்டுத் தேயுவினும் வாயுவின்கண்ணே அதிகத்தன்மைகூறல் யோக்கியமாமாயினும், உஷ்ணத்தன்மைவடிவத்தேயு மழையின் காரணமாவதேபோல இப்பாகிபவாயுவும் மழையின் காரணமாமாதலின், வாயுவைத் தேயுவின்கண்ணேயுள்ளடக்கிக்கொண்டு அவ்வாயுவோடுகூடிய தேயுவினின்றும் ஆகாயத்தை யதிகமாகக்கூறினர். துயிலினீற்றில் முன் கண்டுண்டாய ஆகாயத்தின் நினைவே ஆகாய உற்பத்தியின்கண்ணே காரணமாம். பூர்வ மனுபவித்தகடநினைவே உத்தரகட உற்பத்தியின்காரணமாம். பூர்வகட ஸ்மரணமின்றி உத்தரகட உற்பத்தியுண்டாகாதாமாதலின், அந்நினைவுவடிவ காரணம் ஆகாயகாரியத்

தினு மதிகமாம். இக்காரிய மிவ்வகையாயுண்டாம் என்னும் ஆசையே ஸ்மரண காரணமாம். நிஷ்காமனுக்கு ஸ்மரிப்பதிற் சிறிது மாத்திரையும் பயனின்றுமாத லின் அவ்வாசை நினைவினும் அதிகமாம். இவ்வாறு அவ்வாசிரியர் நாரதருக்கு வாக்கு முதல் ஆசையீறாய பதின்மூன்றையும் பின் பின்னததிகமெனக்கூறி அதி கத்தன்மையில் ஊகங்கூறிடதாவது :—1-வது, ஹே நாரத ! நீ முன்மொழிந்த இருக்குவேதமுதற் காந்தாவவேதமீறாகக் கூறிய சம்பூர்ணசப்தரூப சாஸ்திரம் உலகரின்வாககானே யுணரப்பெறும், இருக்குமுதலியவற்றின் பொருள், சுவர்க் காதிலோகம், ஆகாசாதிபஞ்சபூதம், இந்திராதிதேவதை, அசுராதிகள், மனுடாதி கள் ஆகிய ஜங்கமஜீவர், தரு முதலிய தாவரஜீவர் என்பன முதலாக அநேகங் கோடி பதார்த்தங்களை உலகா வாககிந்திரியத்தானே யுணர்வா. தருமம், சத்தி யம, சாது, இருதயஞ்ஞம; அதருமம், அசததியம், அசாது, அஹிருதயஞ்ஞம் என்னும எண்பொருள்களையும வாககானே யறிவர் ; வாக்கானன்றி அஷ்ட பதார்த்த ஞானதமே எவருஞசமாததராகா. அவற்றுள், சுககாரணம் தரும மாம. எபபொருளை எத்தன்மைததாயுணர்நதானோ அதை யத்தன்மைத்தாயறை வது சத்தியமாம. பிராணிகட்குபகாரமாம வசனம சாதுவாம. விரைவாகவே உலகரின்மனததை மகிழ்விக்கும வசனம ஹிருதயஞ்ஞமாம். தருமத்தினும் விப ரீதமாயது அதருமமாம. சததியவிபரீதமாயது அசததியமாம சாதுவினும விப ரீதமாயது அசாதுவாம. ஹிருதயஞ்ஞததினும் விபரீதமாயது அஹிருதயஞ்ஞ மாம். இவ்வாறு அவ்வாககிந்திரியமே சபதரூபநாமங்களின் சர்வ பதாாததங் களின் வியவகாரகாரணமாமாதலின், அது நாமததினும் அதிகமாம. ஆகையி ஞனே அது முன்மொழிநத நாமம்போலப பிரஹ்மரூபமா யுபாசனைசெய்ய யோககியமாம. நாமோபாசனைககுக் கூறிய பயனே வாககிந்திரிய உபாசனைககு மாம். 2-வது : ஹே நாரத ! இரண்டு இலந்தைக்கனியையேனும நெல்லிக்கனியை யேனும இக்கரந் தனக்குள் அடக்கிககொள்வதேபோல, முன்னர்க்கூறிய இரண் டையும் மனமே தனககுள்ளடககிககொள்ளும் ; எனெனின், மனமொடுங்கின் நாமமும் வாக்குநதோறறுவாம ; மனமிருந்தாறறுன் அவை தோறறும. மனததா ராய்ந்தே வேதாததியயனத்தைசசெய்வன், யாகாதிகருமங்களை யனுஷ்டானஞ் செய்வன், இகலோக பரலோக பலன்களை விரும்புவன், பயனையடைவிக்கும் சாத னங்களை விரும்புவன்; இத்தேகமும வாக்கு முதலிய பொறிகளும் நானுவகையாய இலௌகிக சுகமும பிறவும மனமிருநதாறறுனிருக்கும் ; இல்லாவிடின் இராவாத லின், அவை யாவும மனரூபமேயாம. ஆகையா லிம்மனம் வாக்கினும் அதி கமாம். இத்தகைய மனததைப பிரஹ்மரூபமா யுபாசனைசெய்தி. 3-வது : ஹே நாரத ! யாவன் முறகூறிய சங்கறபதமேதாடு கூடியவனோ அவனே சர்வமா னச வியாபாரங்களையும செய்வன், பின்பவன் வாக் விவகாரம்செய்வன், பின் சப்த விவகாரமசெயவன். அதன்கண்ணே சம்பூரணவேதாதிகளின் சப்தசமூ கம அநதர்பபாவமாம. சபதசமூகத்தே சுகப்பிராப்தியைச செய்விக்கும் சர்வ கரு மங்களுமிருக்கும் ; இவ்வாறுய பரம்பரையானே சங்கற்பமே சர்வ கருமங்களின் காரணமாம ; என்னை, யாகாதிகளின் உற்பததி திதி லயத்தே சங்கற்பமேகுசல மாம். சுவர்க்காதி யுலகங்கள், பிருதிவியாதி பூதங்கள், எச்சராசர விசுவத்தை

யுண்டுபண்ணுமோ அவ்வுதயம் சங்கற்ப நிமித்தமிருப்பதானேயிருக்கும் சங்கற்ப மின்றியுண்டாகாதாம்; எனனே, லோகபூதங்களின் சங்கற்பத்தாலே மழையுண்டாம், மழையின் சங்கற்பத்தானே யன்னமுண்டாம், அன்னசங்கற்பத்தானே பூதங்கட் கிந்திய சகிதப்பிராணனுண்டாம். பிராண சங்கற்பத்தானே மந்திர முண்டாம், மந்திர சங்கற்பத்தானே கருமமுண்டாம், கருமசங்கற்பத்தானே தருமரூப அபூர்வமுண்டாம், அபூர்வசங்கற்பத்தானே சுவாக்காதிபலமுண்டாம். ஈண்டு லோகமுதல் அபூர்வமீறாகிய சப்தங்களால உலகமுதலியவற்றின் அபிமானி தேவதைகளைக்கவாந்துகொள்க. சேதன தேவதைகளானன்றி ஜடலோகாதிகளிடத்தே சங்கற்பஞ் சம்பவியாதாம். இம்முறையாய்ச் சங்கற்பமே சர்வ ஜகத்தின் காரணமாமாதலின் இதுமனத்தினுமதிகமாம். இதனை யெவன் பிரஹ்மரூபமாயுபாசிக்கின்றானோ அவன் சர்வ துக்கங்களற்றதும், நாசமற்றதும், அதிசயத்தன்மையற்றதும் ஆகிய லோகங்களையடைவன்; அவ்வுபாசகன்றானும் அத்தன்மைகளையடைவன். ௪-வது: ஹே நாரத! சர்வ ஜகத்தின காரணரூபமாய்க்கூறிய சங்கற்பமும் முன்மொழிந்த சாமானிய ஞானரூப சித்தமுண்டாயினுண்டாம்; சித்தமின்றிச் சங்கற்பமுண்டாகாதாம்; எனனுமனவாய வியதிரேகங்களால் சித்தமே சங்கற்பத்தின் காரணமெனச் சித்தமாம் சித்தத்தின் அதிகத்தன்மை உலகத்தும் பிரசித்தமாம்; ஏனெனின், முற்றுமுணர்பவரும் அனுசந்தானரூபச் சித்தமற்றவராயின் அவரை மைந்தர் முதலிய சர்வ பந்துக்களும் இவவாறியம்பிக்கொண்டு அநாதரத்தையடைவர்; அதாவது, இவன் சர்வஞ்ஞனாயின் அனுசந்தானரூப சித்தமற்றவனா யென்றோதுகின்றான்? இவன் கன்முதலிய ஜடபொருள்கள் போல அனுசந்தானமற்றவனாயோ புலப்படுகின்றானாதலின், சர்வஞ்ஞனல்லன். இவ்வாறு சித்தாங்கத்தனைப்போதும் நிராகாதத்தையேயடைவன்; அஃதுடையவனோ எல்லாராலும் சாக்ஷித்தன்மையாற் கவர்ப்படுவன்; அவன் வாயிலாய் யாவரும் லௌகிக வசனங்களையும் வைதிகவசனங்களையும் சிரத்தையோடுஞ் சிரவணிப்பர். அவனால விதிக்கப்பட்ட குருத்வ உத்தம வானத்வ முதலிய தருமங்களையும் உலகர் சிரத்தா பூர்வகமங்கீகரிப்பராதலின், அனுசந்தானரூபசித்தம் சங்கற்பத்தினு மதிகமாம். இத்தகைய சித்தத்தையாவன் பிரஹ்மரூபமாயுபாசிக்கின்றானோ, அவன் பூர்வ வுபாசனையினுமதிகப்பயனையடைவன். ௫-வது: ஹே நாரத! சுவர்க்க அந்தரிக்ஷ பூ வெனும் மூவுலகம், ஆகாசாதி பஞ்சபூதம், ஹிமாலயாதி பர்வதம், தேவதைகட்குச் சமானமாய சமதமாதி சாதன சம்பன்ன மனுடர் நிச்சலமாயிருந்துகொண்டு தியானஞ் செய்பவரைப்போலப் பிரதீதியாவராதலின், அந்தத்தியானம் மிகவுமேன்மையதாம். யாவன்றனது சமதமாதிகுணங்களானே எல்லா மனுடரினும் பூஜ்யத்தன்மையையடைகின்றானோ அவன் தியானத்தின் ஒரு சிறிது பலத்தையடைந்தவன்போலப் புலப்படுவன். தியானத்தானன்றி இம்மையிலேனும் மறுமையிலேனும் பெருமைப்பயன் பிராப்தமாகாதாம். யாவன் எப்போதும் பரதூஷணமேசெய்துகொண்டிருக்கின்றானோ, நிந்தித்துக்கொண்டிருக்கின்றானோ, அன்னியரின் அபகாரத்தே, கலகத்தே முயன்றுகொண்டிருக்கின்றானோ, அவன் எல்லா மனுடரினும் அதமனாய்ப்புலப்படுவன்; அத்தகையன் தியானமின்மையின் எப்

போதும் விக்ஷேபத்தோடுகூடிய சித்தமுடையவனுவன்; அவ்விக்ஷேபத்தைத் தியானமுடைய மகாபுருடனடையான்; மற்றோ, அவன் தியானமகிமையால் எப்போதும் மானியனுவனுதலின், தியானம் சித்தத்தினுமதிகமாம். அதைப் பிரஹ்மரூபமா யுபாசிப்பவன் பூர்வபலத்தினு மதிகபலத்தையடைவன். 6-வது: ஹே நாரத! இருக்குவேதமே முதலாக அஹிருதயஞ்ரும்வரை வாக்கிந்திரிய விஷயமென முற்கூறிய எல்லாப்பொருள்களையும், மற்றவறறையும் விஞ்ஞானத்தானே யுணர்வன்; ஏனெனின், பக்ஷணஞ்செய்தற்குத் தகுதியாய நானுவகை யன்னத்தேயிருக்கும் மதுராதி யறுவகை இரதங்களையும விஞ்ஞானததானே யறிவன். இகலோக பரலோக சர்வ விவகாரங்களையும் விஞ்ஞானத்தானே யறிவனுதலின், அது தியானத்தினு மதிகமாம். அதனைப் பிரஹ்மரூபமா யுபாசிப்பவன் சாஸ்திரார்த்தங்களை விடயஞ்செய்யும் விஞ்ஞானம், விவகாரத்தித குசலவடிவஞானம் உறும் உலகங்களையடைவன். 7-வது: ஹே நாரத! ஒரே பலவான் தன் பலத்தானே விஞ்ஞானத்தோடுகூடிய நூறுபெயரை நடுங்கச்செய்வன், அவனே பிருதிவியைத் தரிக்கும் பூபதியாவன் அவனே முதலில முயல்வுடையவனுவன், பின் குரு முதலியோரது சேவையிற் சமர்த்தனுவன், பின் குருவின் சமீபத்திருப்பன், பின்திருஷ்டாவாவன், பின் சுரோதாவாவன், பின் மந்தாவாவன், பின் போத்தாவாவன், பின் கர்த்தாவாவன், பின் விஞ்ஞாதாவாவன் ஈண்டுபேதசஞ்செய்பவரைப் பரீக்ஷார்ரூப தரிசனஞ்செய்பவன் திருஷ்டாவாவன். குரு கூறியபொருளைச் சிரவணிப்பவன் சுரோதாவாவன், சிரவணித்த பொருளை யுகதிகளாற் சிந்திப்பவன் மந்தாவாவன், இப்பொருளிவவாறுயதெனத் துணிபவன் போத்தாவாவன் நிச்சயித்தபொருளை யனுஷ்டிப்பவன் கர்த்தாவாவன். விகிதகருமங்களினபயனைச் சாக்ஷாத்கரிப்பவன் விஞ்ஞாதாவாவன். இவ்வாறுய சாதனங்களின பரம்பரை, பலத்தானே யுண்டாமாதலின், அது விஞ்ஞானத்தினும் மேனமையதாம். அல்லது, சுவர்க்காதி ஆகாசாதி, ஹிமாலயாதி, இந்திராதி, மனுடாதி ஜங்கமம், விருக்ஷாதிதாவரம என்னுமியாவும பலத்தைப்பற்றியே நிலையாம்; பலமின்றியெதற்கும நிலையிலலை, இதனுனும் பலம் விஞ்ஞானத்தினும மிக்கதாம். இத்தகையபலத்தைப் பிரஹ்மரூபமாயுபாசிப்பவன் பலத்தோடுகூடிய சாவலோகங்களையுமடைவன். 8-வது: ஹே நாரத! பலவானும் 10 இரவுவரை அன்னத்தையுட்கொள்ளாவிடின் நானுவகையாய விக்ஷேபத்தையடைவன், நேத்திராதி இந்திரிய மன வியவகாரங்களற்றவனுவனுதலின், ஜீவித்திருப்பினும மரித்தவனேயாவன்; அல்லது, நேரே மரணத்தையேயடைவன்; அவனே மீண்டும அன்னபக்ஷணத்தாற பலவானுயின் மனசகித சர்வ இந்திரியங்களின் வியாபாரத்தைச் சித்தஞ்செய்வனுதலின், அவ்வன்னம் பலத்தினும் அதிகமாம். இத்தகைய அன்னத்தைப் பிரஹ்மரூபமாயுபாசிப்பவன் நானுவகையாய அன்னபானத்தோடுகூடிய உலகங்களையடைவன். 9-வது: ஹே நாரத! மழை நீருண்டாங்கால் அன்னமுண்டாம, அஃதின்றுயினின்றும்; இன்றாகவே பிராணன் விரைவிலேயே நாசத்தையடையும; அஃதிருப்பிற பிராணன் விருத்தியை யடையுமாதலின், அந்நீர அன்னத்தினுமதிகமாம். அல்லது, சுவர்க்கம் பூமி பாதாளம் என்னும் 3 உலகம், ஆங்குள்ள பிராணிகள் யாவும் அன்னபாவத்தையடைந்து நீர்வடிவமேயாம்; நீரினும் வேறாக யாதொரு பொருளுமில்லையாமாதலினுனும் அந்

நீர் அன்னத்திலுமதிகமாம். இத்தகைய நீரைப் பிரஹ்மரூபமாயுபாசிப்பவன் இச்சித்த பொருள்களியாவற்றையுமடைவன். எப்போதும் திருப்தியையேயடைவன். 10-வது: ஹே நாரத! தேயு முதலில் தனதுஷ்ணத்தைக்காண்பித்தே மின்னலை, இடிகாற்றையுண்டாக்கியே மழையையுண்டாக்குமாதலின், அத்தேயு நீரினும் அதிகமாம். அல்லது, யாவன் தேஜஸ்வியோ அவன்றன் ஸ்ரீமதஸ்வரூபத்தால் விளங்குவன், தமதோஷமற்றவனுவனுதலினுலும் தேயு நீரினுமதிகமாம். இத்தகைய தேயுவைப் பிரஹ்மரூபமாயுபாசிப்பவன் மகாபலத்தையடைவன். 11-வது: ஹே நாரத! தேயுவாயுமுதலாயுள்ள நான்குவகையாய ஜகத்தியாவும் ஆகாயத்தின்கண்ணேயிருக்குமாதலின், அவ்வாயுசகித தேயுவினின்றும் ஆகாயம் அதிகமாம். அல்லது, இத்தேகதாரி ஆகாயத்தையாசிரயித்தே வாக்காதிகளின் வியாபாரத்தைச் செய்வன், அறம்பாவப்பயனுப சுகதுக்கரூபபலத்தையடைவன், அவற்றின் சாதனத்தையுமடைவன்; ஆகாயமின்றி யெக்காரியத்தின் சித்தியுமுண்டாகாது; இதனுனும ஆகாயம் தேயுவினுமதிகமாம். இத்தகைய ஆகாயத்தைப் பிரஹ்மரூபமாயுபாசிப்பவன் விஸ்தாரப் பிரகாசத்தோடுகூடிய கீர்த்திமான் லோகங்களையடைவன். 12: ஹே நாரத! தேகதாரிகள் முன்னநுபவித்த ஆகாசாதி ஜகத்தின் ஸ்மரணத்தாலே உத்தர உத்தர ஆகாசாதி ஜகத்தின் கற்பனையைச்செய்வர், வாக்காதி இந்திரிய வியாபாரங்களை யாரம்பிப்பர், புண்ணியபாவகரும சுகதுக்கரூப பலத்தையடைவர், சாதனங்களையுமடைவர்; ஸ்மரணமின்றி எக்காரியத்தின் சித்தியுமுண்டாகாதாதலின் அஃதாகாசத்தினுமதிகமாம் இத்தகைய ஸ்மரணத்தைப் பிரஹ்மரூபமாயுபாசிப்பவன் ஸ்மரணவிடயபூத சர்வ பதார்த்தங்களினும் சுதந்திரத்தன்மைவடிவ பலத்தையடைவன். 13-வது: ஹே நாரத! காமவடிவ ஆசையோடுகூடியவனே ஸ்மரணத்தாற் சர்வ புண்ணியபாவகருமங்களையும் செய்வன். சுகதுக்கரூப பல அநுபவப்பொருட்டு இரண்டுலோகங்களில் சுழலுவன். ஆசையற்ற நிட்காமன் ஸ்மரணத்தையுஞ்செய்யான் வேறு வியாபாரத்தையும் செய்யானுதலின், ஆசை ஸ்மரணத்தினுமதிகமாம். இத்தகைய ஆசையைப் பிரஹ்மரூபமாயுபாசிப்பவன் சர்வ மனவாஞ்சித பதார்த்தங்களையுமடைவன்; சத்தியசங்கற்பனுவன். இவ்வாறு நாரதர் ஆசிரியரிடத்தே நாமத்தினும் யாததிகம் என்பதாதி 13 வினவினர். அவரும் நாமத்தினும் வாக்கதிகம் என்பதாதி 13 விடைவிடுத்தனர். அன்றியும் நாரதரது சித்தத்தே லோபமுண்டாக்கும்பொருட்டு வாக்காதிகளின் உபாசனை ஜன்னிய பலத்தையும் ஆண்டாண்டுக்கூறினர். பின் மதிமானுய நாரதர் ஆசிரியர்பால் மீண்டுமிவ்வாறு வினவினர்:—ஹே பகவன்! அவ்வாசையினும் அதிகமியாது? இவ்வாறு வினவப்பட்ட ஆசிரியர் கூறியதாவது:—ஹே நாரத! சர்வ ஜீவர்களும் ஆன்மரூபமாய் நிச்சயித்த பிராணன் ஆசையினும் அதிகமாம். அஃதாமாறு.—தேரசக்கிர அராக்கள் சக்கிரநாபியை யாசிரயித்திருப்பதேபோல இவ்வுலகமியாவும் பிராணுசிரிதமாயிருக்கும்; ஏனெனின், இப்பிராணனே சர்வ காரகரூபமாம். தேவதத்தன் அசுவத்தாற் கிராமத்தையடைகின்றனன் என்னுந் தலத்தே கமனக்கிரியையின் கர்த்தாவாய தேவதத்தன், கமனக்கிரியையின் காரணரூப அசுவம், கமனக்கிரியையின் கருமரூப கிராமம் என்னும் மூன்

றும் பிராணரூபமேயாம். இவன் சுபாத்திரமறையவன்பொருட்டுக் கோவைக்கொடுப்பன் என்னுந் தலத்தும் தானரூபக்கிரியையின் கர்த்தா, அக்கிரியையின்சம்பிரதானமறையவன், கிரியையின் காமரூப கோ, என்னுமியாவும் பிராணரூபமேயாம். பிதா, மாதா, ஆசிரியர், மறையவர், அண்ணன், தம்பி, மாமி, மருகி, மனைவி, மைந்தா என்பன முதலிய ஜீவர் யாவருமே பிராணரூபமேயாம; பிராணனினும் வேறாக இவ்வுலகத்தே சிறிதுமாத்திரையுமில்லை. இப்போதிப்பொருளையே உலகசித்த அன்வயவியதிரேகத்தானே திடப்படுத்துவாம்—ஹே நாரத! எவனேனும் பிராணனிருப்பத் தன்றாய்தந்தையரின் சரீரத்தை வாக்குமாத்திரையானுந் திரஸ்காரஞ்செய்யின் அவனை நோக்கி மறறைபமதிமான் கூறுவதாவது :—தாய்தந்தையராதி மகாபுருடரை நீ வாக்காற்றிரஸ்கரித்தது வதஞ்செய்ததேயாகும் ; என்னை, உத்தமரை வாணியால் நிராதரஞ்செய்தலே சஸ்திரமின்றிய வதமாமாதலின், நீ பிதுருஹா, மாதுருஹா, எனபதாதியாம. தாய் தந்தையரின் தேகத்தினின்றும பிராணன் வெளியானபின் அத்தேகங்களை மகா அக்கினியின்கண்ணே தீக்ஷண காஷ்டத்தால அடிக்கடி வேதனைத்தால தகிப்பன். தகிப்பவனை யுலகர் புண்ணிய கர்த்தாவென்பா ; தாய் தந்தையரின அன்பன் என்பா. இவ்வகையாய அன்வய வியதிரேகம் சர்வலோகத்தும பிரசித்தமாம ; அதனுலிப்பிராணனே பிதாமாதாதி ரூபமெனச் சித்தமாம். ஹே நாரத! பாகிய விழிமுதலிய இந்திரியங்களானும், உண்மனப்புந்திமுதலியவற்றானும ஆம்எலலாவிவகாரகாலத்தும இப்பிராணனையே சர்வகாரகரூபமெனக் காண்பவனே அதிவாதியாவன் ; ஏனெனின, அவன் பிராணனையே யாவினும அதிகமெனபன். கருத்திதுவாம.—இவவுலகத்தே ஒருவன் ஒருவனை நோக்கி யானுன்றந்தையெனக்கூறின், அவனை நீ மரியாதையைக்கடந்து ஏனிவ்வாறு கூறுகின்றனை? என உபாலம்பம்பீவன் ; ஆனலவன் யானுன்பிதாவெனக்கூறிய மாத்திரையானே முக்கிய அதிவாதியாகான் ; மற்றே, அவன் கௌண அதிவாதியாவன்; ஏனெனின், பிதாவினும வேறாய் ஆசிரியர் முதலாக எஞ்சிய பலபொருள் ஆன்மரூபமாயறியப்படவில்லையன்றே! பிதாமாதாதி சர்வபதார்த்தரூபப் பிராணன் யானெனக்கூறியவனே முக்கிய அதிவாதியென மொழியப்பெறுவன். அந்தப் பிராணுன்மவாதியைக்குறித்து ஒருகால ஒருவன் நீ யெவ்வாறதிவாதியாயினையென வினவினும், அவன் யானதிவாதியலலேன் என ஒருகாலும் கூறான் ; மறறே, யானதிவாதியெனக் கம்பீரமாய்க்கூறுவன். ஹே மைந்த! இவ்வாறவ்வாசிரியா கூறவே நாரதர் பிராணனினும் மேலாகத்தத்துவத்தைக் கேட்பதில் ஆற்றலறறவராய் மௌனத்தையுறறு மீண்டும வினவுதலினின்றும உபராமத்தையடைந்தனா ; ஏனெனின், யாவனுக்கு எதனது சாமானியரூப ஞானமாமோ அவனே அப்பொருளின் விசேடரூபத்தையறியும்பொருட்டு வினவுவன், சாமானிய ஞானமின்றி விசேடரூபவினவுண்டாகாதாம. இவன் பிராஹ்மணன் என்னும் சாமானிய ஞானமுண்டானபின்னரே என்ன பிராஹ்மணன்? என்னும் விசேடவினவுண்டாவதேபோலும். ஈண்டோ, பிராணனினு முயர்வாயதத்துவம் மனோவசனங்கட்கும பிரத்தியக்ஷாதிப பிரமாணங்கட்கும அவிஷயமாதலின், பிராணனினும் மேலாயதத்துவத்தை நாரதர் அறிந்திலாதலினனே வினவவில்லை.

சங்கை :—ஹே பகவன்! அந்நாரதர் சநத்குமார பகவானைப் பிராணனுடைய உபாசனையின் பயனையேன் வினவவில்லை?

சமாதானம் :—ஹே குமரதாய்! அவ்வாசிரியர் பிராணனைப் பிரஹ்மரூபமா யுபாசனை செய்தியெனக்கூறியிருப்பினும் பயனையும் கேட்டிருப்பர், கூறுமையிற் கேட்கவுமில்லை. இவ்வாறு நாரதர் சும்மாயிருந்ததலைக்கண்டு கிருபையோடுகூடியவ ராய்த் தாமே பிராணனினும் மேலாய தத்துவத்தை யுபதேசித்தனர் :—ஹே நாரத! பிராணஞானத்தானே அவ்வதிவாதித்தன்மையாம் என நிச்சயஞ்செய்ய வேண்டாம்; ஏனெனின், பிராணனினும் மேலாக அதிகவஸ்துவில்லையாயின் அவ்வா றாம்; ஆனால், பிராணனினும் சத்தியவஸ்து அதிகமாமாதலின் பிராணஞானத்தானே அதிவாதித்தன்மையுண்டாகாதாம், மற்று, நிரந்தரம் சத்தியவஸ்துவையே கூறு பவனே முக்கிய அதிவாதியெனவறிக. சத்தியவஸ்துவைக் கூறும் புருடனே முக்கிய அதிவாதியாவன் எனக்கூறிய ஆசிரியரபிப்பிராயமிதுவாம் :—யாது முன்னத்தி யாயத்தே ஜகத்காரணரூபமாய்க் கூறப்பெற்றதோ, இவ்வத்தியாயத்தே சுகரூப மாய் வருணிக்கப்பெறுமோ, நாமமுதல் பிராணனவரையுமுள்ள சர்வ விசுவரூப மாய்க்கூறப்பெற்றதோ, அந்தப் பரப்பிரஹ்மமே அசத்திய சப்தப்பொருளாம். இவ்வகையாய கருத்தை மனத்தில்வைத்து ஆசிரியர் ஈண்டுக்கூறுவதாவது :— ஹே நாரத! அந்தப் பிராணனினும் வேறாய சத்தியவஸ்துவே நீயறியத்தக்கதி யதாம், அதனறிவின்றி நீ நின்னைக் கிருதகிருத்தியனாக நினைத்துக்கொண்டி ராதே. ஹே குமர! இவ்வாறு ஞானாசிரியர் நாரதருக்குக் கூறியபோது நாரதர் முன்போல இங்ஙன்வினவினர் :—ஹே பகவன்! அசத்தியவஸ்துவை யறியயா னிச்சிக்கின்றேன், தாங்கள் தயவுசெய்து அடியேனுக்குபதேசிக்கவேண்டும். ஹே மைந்த! சநத்குமாரபகவான் நாரதருக்குச் சத்தியவஸ்துவையறியும் வேட் கையையுண்டாக்கும் வசனத்தை வழங்கியதுபோலவே விஞ்ஞானம், மனனம், சிரத்தை, நிஷ்டை, கிருதி, சுகம் என்னும் ஆறுவகைப்பொருள்களை யறியும் வேட்கையையுண்டாக்கும் ஆறுவசனங்களையுங்கூறினர். அவற்றைக்கேட்டு நாரத ரும் ஆறுமுறைவினவினர். கருத்திதுவாம் —ஹே பகவன்! யானந்தச் சத்திய வஸ்துவையறிய இச்சிக்கின்றேன் என முதல் வினாவினவிப் பின்பு விஞ்ஞானத்தை யறிய இச்சிக்கின்றேன் என்பனமுதலிய ஆறுவினாவினவினர். ஈண்டு, ஆநந்த வடிவ சத்தியவஸ்துவே உபேயமாம், விஞ்ஞானாதியாறு பொருள்களோ உபாய ரூபமாம். பூர்வ பூர்வவஸ்துவின் அடைவிற்குச் சாதனரூபமாம். உபாயத்தாலடை யக்கூடிய வஸ்து உபேயமாம். இவ்வகையான விசேஷத்தன்மையுண்டாகவே அவற்றுட் கூறியதுகூறலென்னுங் குற்றமுண்டாகாதாம். இதன்கண்ணும் இத் துணை விசேடமுணர்க :—காமானுவிஷயத்தன்மை வடிவத்தானே சுகத்தே உபாய ரூபத்தன்மையாம். சுபாவசித்த சத்தியரூபத்தானே சுகத்தே உபேயரூபத்தன்மை யாம். இப்போது அந்த விஞ்ஞானாதியாறு பொருள்களின் வடிவத்தையும் உத்தர உத்தரப் பொருள்களில் பூர்வ பூர்வப்பொருள்களின் பிராப்தி சாதனத்தன்மையை யும் நிரூபிப்பாம் :—ஹே நாரத! அந்தச்சத்தியவடிவப்பிரஹ்மத்தைப் பிரத்தியக்ஷ

மாயுணர்பவனே அதை வெளிப்படையாய் விளம்புவன் ; மாறாயவன் விளம்பானாதலின், சத்தியவஸ்துவைக்கூறுவதில் அதன் பிரத்தியக்ஷப் பிரமாணரூப விஞ்ஞானமே காரணமெனவுணரத்தகும். நானாவகையாய யுக்திகளால் சத்தியவஸ்துவின் சிந்தனவடிவ மனனத்தானே சத்தியவஸ்துரூபப் பிரமேய அசம்பாவனை நீங்கின் மாத்திரம் அதன் விஞ்ஞானமாம் ; மனனத்தானன்றியஃதுண்டாகாதாமாதலின், மனனம் விஞ்ஞானகாரணமென அறியத்தகும. குருசாஸ்திரஉபதேசத்தே விசுவாசரூப சிரத்தையையுடைய புருடனே மனனஞ்செய்வதில் முயல்வன்;அஃதற்ற நாஸ்திகன் அதில் முயலானாதலின், சிரததை மனனகாரணமென வுணரக்கிடந்தது. வேதாநதசாஸ்திரம் ஜீவப்பிரஹ்ம அபேதத்தைக்கூறுகின்றதா? பேதத்தைக்கூறுகின்றதா? என்னும் பிரமாணகத அசம்பாவனையை நீக்குவதும், அத்விதீயப்பிரஹ்மத்தே வேதாந்ததாற்பரியத்தை நிச்சயஞ்செய்விபபதும் ஆகிய யுக்திகளின் சிந்தனம் நிஷ்டையாம. அஃதுடையவனே சிரத்தையுடையோனாவன; மாறாபவனாகாதலின், நிஷ்டைசிரத்தையின்காரணமெனத் துணியபபெறும். யாகாதிகளாகிய பகிரங்க, சமதமாதிகளாகிய அநதரங்க சாதனங்களின் அனுட்டானம் கிருதியெனபபடும் ; அதனோடு கூடியவனே மனத்தூய்மை, மன ஒருமைகளோடு கூடியவனாய் நிஷ்டையுடையவனாவன் ; மாறாயவனாகாதலின் கிருதி நிஷ்டையின் காரணமாம எனத் துணியப்பெறும். சுகரூபபுருடார்த்த அடைவை யிச்சிக்கின்றவனே அவ்வங்கங்களை யனுட்டிபபன். சுகேச்சையின்றி எவனும் சாதனத்தே முயலான். துக்காபாவ இச்சையினானும் சாதனங்களிற பிரவிருத்தியுண்டாமெனினும துக்காபாவம் சுதந்திரபுருடார்த்தமன்று ; மறறோ, அது சுகத்தின் அபிவியகதிககுச சாதனமாதலின், ஜீவ இசசாவிடயமாமாதலின் சுகம் கிருதியின்காரணமென அறியப்பெறும். ஹே மைந்த! இவ்வாறு ஞானாசிரியா திருமொழிகளைக்கேட்டுச சம்சாரசுகத்தே விரக்தியுற்ற நாரதர் அச்சுகததைத் துக்கபக்ஷத்தேயிட்டு முக்கிய சுகத்தை யறியுமவாவை வெளிபபடுததினர். ஹே பகவன்! எனககு மோக்ஷப பிராப்தியாகுகவென்னுங் காமனையுறற சித்தமுடையவனாற சுகததின் வாஸ்தவ வடிவம அவசியமா யறியத்தகுநததாம். எசசுகஞானததால மோக்ஷப்பிராப்தியாமோ அது சம்சாரத்தே பிரசித்தமன்றாம்; ஏனெனின், ஈண்டு விடயத்தானுண்டாம் சுகம் சுகரூபமன்றாம, துககரூபமேயாம். வஸ்துவினியற்கை யொருகாலும மாறுவதிலலை. அக்கினியின் வெம்மை எப்போதும் மாறாததேபோல விடயசுகமும் சுகரூபமாயின் எக்காலத்தும் துககரூபமாகா திருக்கவேண்டும், அவவாறு காண்வருவதோ இன்றாம்; மறறோ, இது தனது அபபிராபதிகாலத்தும் ஜீவர்கட்குத் துக்கத்தையே யடைவிக்கும்; வியோககாலத்தும் துக்கத்தையே யடைவிக்கும். ஆதியந்தங்களில் துக்கததைத்தரும் விடயசுகம் மத்தியகாலததும் சுகமெவ்வாறாம்? கேவலந் துக்கரூபமேயாம். இததகைய துக்கரூபசுகத்தே ஜீவர்கட்குச் சுகரூபத்தன்மை தோற்றுவது கேவலம் அஞ்ஞானவயத்தானேயாம். சஸ்திரத்தால் அடியுண்ணல் துக்கரூபமாயினும், பரிபக்குவமாய புண்ணில் சஸ்திரப்பிரகாரம் சுகரூபமாய்ப்பிரதீதியாவதேபோல விடயஜன்னியசுகம் உண்மையாய்த் துக்கரூபமாயினும் அஞ்ஞானவயத்தால் ஜீவர்கட்குச சுகரூபமாய்ப் பிரதீதியாமாதலின், வாஸ்தவசுகத்தை யடியேனுக்கருளவேண்டும். ஹே மைந்த! இவ்

வாறு நாரதர் சுகவடிவத்தை வினவியபோது ஆசிரியர் வாஸ்தவ சுகவடிவத்தை வழங்கத்தொடங்கினர் :—ஹே நாரத! தேசகாலவஸ்துவென்னும் பரிச்சேதம் மூன்றுமற்ற வியாபகவஸ்துவையே வித்வான் சுகரூபமென்பன். சர்வ பரிச்சேதங்களும் அற்றிருத்தலின் எதனைச் சுருதி பூமாவென்னுஞ் சப்தத்தாலே கூறியதோ அதனையே சுகரூபமென அறிதி. அதனினும் வேறாய யாவும் துக்கரூபமேயாம். உனக்கவ் வாஸ்தவசுகவடிவநிர்ணயம் செய்ய இச்சையிருப்பின் நீ அப்பூமா பதார்த்தத்தை யறிய இச்சைசெய்தி; எனக் கூறிய ஆசிரியர் வசனங்களைக்கேட்டு நாரதர் பூமாபதார்த்தத்தை வினவியபோது ஆசிரியர் அதன்வடிவத்தைக் கூறத் தொடங்கினர் :—ஹே நாரத! எத்தத்துவத்தேயிருக்கும் அறிஞன் தன்னினும் வேறாக எப்பொருளையும் விழிகளாற் காணானோ, செவிகளாற் கேளானோ, மனத்தாலறியானோ அதுவே பூமாசப்தப்பொருளும், சுகசப்தப்பொருளும் ஆம். எப்பொருளின் புத்தியிலாரூடமாயவன் தன்னையானினும் வேறாயவற்றை விழிகளாற் காணானோ, செவிகளாற் கேளானோ, மனத்தாலறியானோ அது அற்பமும் துக்கரூபமுமாம். 'த்விதீயாத்வை பயம் பவதி' ஆனமாவினு மிரண்டாவது வஸ்துவாற் பயமுண்டாம் என்னும் சுருதியுமுளது. கூறிய சுகவடிவப் பூமாவோ மரணாதி சர்வ விகாரங்களுமற்றதாமாதலின் அம்ருதஸ்வரூபமாம். பூமாவினும் வேறாய அற்ப பதார்த்தங்கள் யாவும் மரணாதி சர்வ விகாரங்களையுமுடையனவாமாதலின் அவை மர்த்யரூபங்களாம். இத்தகைய சுகரூபப்பூமாவை அதிகாரி குருசாஸ்திர உபதேசத்தாலே அறிந்தபோதே முக்கிய அதிவாதியாவன். அதனினும் வேறாய பிராணாதிகளின் ஞானத்தே முக்கிய அதிவாதியாகானாதலின் அம்ருதமயபொருட்டுச் சுகரூபப்பூமாவை யவசியமறியவேண்டும் ஹே நாரத! இங்ஙன் ஆசிரியர் நாரதருக்குப் பூமாவை யுபதேசித்தபோது நாரதர் தமதுளத்தே யிவ்வாறாராய்ந்தனர் :—சநத்குமாரபகவான் எனக் குபதேசித்த சுகரூபப் பூமாவிற்கு யாதேனு மாதாரமுண்டா? அல்லது நிராதாரமா? ஆதாரத்தை யங்கீகரிப்பின், பூமாவும் கடாதிகளைப்போலப் பரிச்சின்னமாம்; நிராதாரமெனின், எனது மதியிலெவ்வாறம்சீதறும் எனச் சிந்தித்து வினவுவதாவது :—ஹே பகவன்! சுகரூபப்பூமா எவ்வாதாரத்தேயிருக்குமோ அதனைக்கூறவேண்டுமென வினவச் சநத்குமார பகவான் கூறுவதாவது :—ஹே நாரத! நீ வினவிய பூமாவினாதாரம், விவகாரமாத்திர உபயோகியாய ஆதாரமா? வாஸ்தவ ஆதாரமா? முதலதை யுடன்படினோ மாயையே முதலாக எல்லா வுலகும் பூமாவின் விபூதிகளாம். விபூதிரூப மகிமையின்கண்ணே பூமாவிருக்குமாதலின் அதுவே பூமாதாரமாம்.

சங்கை :—விபூதிரூப மகிமைக்கும் மகிமையுடையதற்கும் பரஸ்பரம்பேதமே கண்டனமாதலின், மகிமாவினும் பின்னமாகிய பூமா கடாதிகளைப்போல வஸ்து பரிச்சேதமுடையதாமன்றோ?

சமாதானம் :—ஹே நாரத! தேவதத்தனென்பானுக்குக் கோ, குதிரை, குஞ்சரம், பொன், அடிமை, மனைவி, பூமி, இல்லம் என்பனவாதியாயிருக்கும் விபூதிரூப மகிமைகள் அவனினும் வேறாகவேயிருக்கும். தேவதத்தனோ அவைகட் காசிரித

மாயே தோற்றுவதேபோல ஈண்டும் மாயாசகிதப் பிரபஞ்சரூபமகிமை சுகரூபப் பூமாவினும் வேறல்லவாம்; மற்றோ, அம்மகிமை அதனினும் அபின்னமேயாமாதலின் அதன்கண்ணே பேதரூப வஸ்துபரிச்சேதப்பிராப்தியில்லையாம்.

சங்கை :—ஹே பகவன்! அம்மகிமை பூமாவினும் அபின்னமாமாயின் மகிமைக்கும் பூமாவிறகும் பரஸ்பரம் ஆதார ஆதேயபாவமில்லையாம; ஏனெனின், பரஸ்பரம் பின்னபதார்த்தங்கட்கே பரஸ்பரம் ஆதார ஆதேயபாவமாம.

சமாதானம் :—ஹே நாரத! 'ஸ்வயம் தாஸாஸ்தபஸ்விந:' தவமுடையோன் தானே தனது தாசனுவன் என்னுமிடத்தே தவசிகளுக்குள் ஒருவனே சுவாமிதாசபாவத்தை யடைவதேபோலச சுகரூபப் பூமாவினது சர்வ பரிச்சேதமற்ற தனது வடிவமே பூமாவின் மகிமையாம; அதன்கண்ணே அது விவகாரதிருஷ்டியானேயிருக்கும. இரண்டாவதுஞ சமபவியாது; ஏனெனின், முன் மொழிநத தன் மகிமை சொரூபததினும வேறாய பதாாத்தங்களிடததோ ஒருகாலும் இராதாம, தனது சொரூப பூதமகிமையின்கண்ணே பூமாவின்றிதி கூறியதும் விவகாரதிருஷ்டியைபபற்றியாம, அதனை விடுக்கின் பூமா ஆதாரமற்றதாய் நிராதாரமாம. இப்போது நிராதாரபபூமா எவவாறுமதியின்கண்ணே ஆரூடமாம் என்னும் நாரதா சங்கையை நீக்கும்பொருட்டு முதலில் அது தறபதார்த்தரூபமாய் வருணிக்கப்படும் :—ஹே நாரத! இததறபதார்ததரூபப பூமாவே பத்துத திசையிலுமிருக்கும; முககாலத்திலுமிருக்கும. நிர்மல ஆகாயத்தே கநதாவநகரம கறபிதமாதலேபோல சாவ பேதமுமற்ற பூமாவின்கண்ணே தேசகாலமே முதலாயுள்ள சர்வ ஸ்தூலசூக்ஷம பதாாததங்களும கறபிதமாம், கறபிதப்பொருள் அதிஷ்டானததினும வேறுகாதாமாதலின் பூமாவே சாவ ஜகதவடிவமாம்; இவ்வாறு சாவ ஜகததின் அதிஷ்டானரூபமாய் அபபூமாவை நீ முதலில உன் மதியில ஆரூடஞ்செய்தி. பின்பு அபபூமாவின் தடஸ்தவடிவததை நீக்கும்பொருட்டுச சாவத்தினும் வியாபக பூமா யானேயுளன் என அதனை நீ உனதான்மவடிவமாயறிதி.

சங்கை :—ஹே பகவன்! பரிசசின்ன அகஙகாரவிசிஷ்டவாசக அகம சபததை வியாபக பூமாவின்கண்ணே பிரயோகிததல் சம்பவியாது.

சமாதானம் :—ஹே நாரத! அகமென்னும சபதத்தானே அகங்காரபபிரதீதியாயினும அவ்வகங்காரத்திறகுப பூமாவின்கண்ணே சாதிருசியததன்மையாம்; அதைக்கவர்நதே அவ்வகம் சபதம கௌணீலக்ஷணையானே பூமாவையேயுணர்ததும. அகங்காரத்திறகும பூமான்மாவிறகும சாதிருசியததன்மைபாவது பத்துத திசைகளிலும முக்காலங்களிலுமிருக்கும தேகதாரிகள யாவரும் முதலில் யான் என அனுபவிததே பின் வசன உச்சாரணாதி விவகாரஞ்செய்வா; அகமனுபவமின்றி எவவிவகாரமும சித்தமாகாதாமாதலின், அகஙகாரமே ஜீவாகளின் சாவ வியவகாரகாரணமாம. அது சாவ திசைகளையும சர்வ பூதபபிராணிகளையும வியாபித்திருபபதேபோல அகங்கார ஆசிரயரூபத்தானே ஜீவான்மாவும சாவ திசைகளையும், சாவ பூதபபிராணிகளையும வியாபிததிருக்கும; இவவாறிரண்டிறகும சாதிருசியத்தன்மையாம; அதை யங்கீகரித்து அவவகம சபதம் இலக்கணவிருததியானே சாவ உபாதிகளுமற்ற கூடஸ்த ஆன்மாவையே யுணர்ததும்; அதற்குத்

தற்பதார்த்தரூபப் பூமாவோடு அபேதம் தத்வமசி முதலிய மகாவாக்கியங்களானே பிரதிபாதிக்கப்படும். இப்போது அவ்வபேதஞானத்தின் ஜீவன் முக்திரூபப்பயனை நிரூபிப்பாம்:—ஹே நாரத! அஞ்ஞானி நேத்திராதி இந்திரியங்களால் மனத்தால் சர்வ விவகாரங்களையும் செய்தபோதிலும் தன் மனுடத்தன்மையை மறப்பதில்லை; மற்றே, அதனை ஐயம் விபரீதமற எப்போது மறுபவிப்பதேபோல குருசாஸ்திர உபதேசத்தானே அவ்வகங்காராதி யுபாதிகளை மறந்து: ஆன்மாவாய யான் பூமாரூபமாயிருக்கின்றேன், என ஐயந்திரிபற்ற ஞானத்தையடைந்த அறிஞன் வேதாந்தசாஸ்திரத்தின் சிந்தனகாலத்தே ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே கிரீடைசெய்பவனாயிருப்பன்; பாலகன் பாலகர் கூட்டத்தே விளையாடிக்கொண்டிருப்பதேபோலும் அறிஞன் ஸ்நாநபோஜநாதி காலத்தும் ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே சித்தத்தின் சகதிரூபரதியைத் தரித்துக் கொண்டிருப்பன்; காமியானவன் வேறு தேயத்திருந்தபோதிலும் சித்தத்தின் சகதிரூப ரதியை யெப்போதும் தன் மனைவியிடத்தே வைத்திருப்பதேபோலும். இத்துணையானே, ஜீவன் முத்தனுக்குச் சமாதிதசை, உத்தானதசை எனத்தசை யிருவகையாம்: பின்னும் வேதாந்தசாஸ்திர சிந்தனரூப உத்தானதசையெனவும், ஸ்நாநபோஜநாதி வியவகாரரூப உத்தானதசையெனவும் இருவகையாம். முதலதன்கண்ணே, அறிஞன்செய்யு மான்மசிந்தனத்தைச் சுருதி கிரீடையெனக் கூறியது. இரண்டாவதன்கண்ணே அறிஞன்செய்யும் ஆன்மசிந்தனத்தைச் சுருதி ரதியெனக்கூறியது. வியுத்தானதசை யிருவகைப்படுவதேபோலச் சமாதியுமசவிகற்ப நிர்விகற்பபேதத்தானே யிருவகையாம் முன்னதன்கண்ணே அறிஞன் செய்யு மான்மசிந்தனத்தைச் சுருதி மிதுனமெனக்கூறியது, பின்னதன்கண்ணே செய்யு மான்மசிந்தனத்தை ஆநந்தமெனக்கூறியது என அறியக்கிடந்தது. கிரீடை ரதியென்னு மிருசபதப்பொருளையும் முன்னாக்கூறிவந்தேம். இப்போது மிதுன ஆநந்தசபதப்பொருளை நிரூபிப்பாம்—ஹே நாரத! சித்தத்தின் சர்வ விவகாரங்களையும் பரித்தியாகித்து ஏகாந்தத்தேயத்தேயிருக்கும் பெண்ணாணிருவர்க்குமுண்டாம் பரஸ்பரமிதுனீபாவம் விடயாநந்த ஹேதுவாதலேபோலத் தியானிப்போன் தியானிக்கப்படுவது என்னுந் தன்மையானே ஆன்மாவின்கண்ணுண்டாம் மிதுனீபாவமே அறிஞனுக்குச் சவிகற்பசமாதிகாலத்தே ஆநந்தஹேதுவாம். எண்டுக காந்தருவாதி விஷயப்பிராப்தியின் பின்பு பரீக்ஷகர்க்குண்டாம் அவ்வாநந்தரூப பலானுபவம் நிர்விகற்பமேயாவதுபோல, அறிஞனுக்கு நிர்விகற்பசமாதிகாலத்தே உண்டாம் நிரதிசய ஆனந்தானுபவமும், தியாதா தியானம் தியேயம் என்பதாதி திரிபுடிரூப விகற்பமற்றதேயாம் அறிஞனுக்கான்மாவின்கண்ணே யாநந்தமுண்டாம் என்பதற்குக் காரணமிதுவாம் —அத்விதீய ஆன்மாவைச் சாக்ஷாத்தா யனுபவித்த அறிஞன் ஜன்மமரணாதி சர்வ துக்க நீக்கத்தின்கண்ணே வேறொன்றையுமபேக்ஷியானாதலின், விராட்டுப்பகவானைப்போலச் சுவராட்டென்னும் பெயரையுறுவன். அவ்வறிஞனே பிரஹ்மரூபனாதலால் சர்வ ஜீவர்களின் ஆன்மரூபனுமவனாதலின், எல்லா மேலுலகங்களிலும் காமசாரனுவன்; தடையறச்சர்வலோக அடைவுகாமசாரமாம். இத்துணையானே பூமான்மஞான

பலம் புகலப்பட்டது. இனி ஞானமற்றவர்க்கு அநர்த்தப்பிராப்தியை வர்ணிப்பாம் :—ஹே நாரத! அந்தப் பூமாவைத் தன்னுன்மவடிவமாயறியாமல் மோகவயத்தாலதை வேருயுணரும்மூடன் எப்போதும் பராதீனதையும், அழியும் உலகங்களையும், சுதந்திரதன்மையின்மையையும், அடிக்கடி ஜனனமரணுதி துக்கங்களையும் அடைவன். இப்போது அவ்வறிஞனை ஜகத்கர்த்தாவாய ஈசுரரூபமாய் வருணிப்பாம் :—ஹே நாரத! முன்மொழிந்தவகையே தறபதார்த்தரூபப் பூமாவைத் தன்னுன்மவடிவமாயுணர்ந்த அறிஞனிடத்திருந்தே நாமமே முதலாகப் பிராணபரியந்தமாய்க்கூறிய 15 தத்துவங்களுமுண்டாம். இரஜ்ஜுவினின்றும் சர்ப்பம் உண்டாவதேபோல அறிஞனிடத்திருந்தே நாமாதிகளும், யாகாதி கருமங்களோடும் சுவர்க்காதி பலன்களோடும் மந்திரப் பிராஹ்மணரூப இருக்குமுதலிய நான்கு வேதங்களும் உண்டாம். இதன்கண்ணே யாம் அதிகமாய்க்கூறுவதென்னே! தூலசூக்ஷ்ம சமபூரண ஜகத்தும் அறிஞன் பானின்றேயுண்டாம். பூமான்ம சாக்ஷாத்காரமடைந்தவனுக்குச் சர்வ ஜனனமரணுதி துக்கங்களும் நீங்கும் என உனக்கு ஆன்மஞானபலம் கூறியதனகண்ணே வேதவேதத்தாக்கள் இவ்வாறுய மந்திரரூப சுலோகத்தையருளிச்செய்துளார் :—

“ ந பஶ்யோ ம்ருத்யும் பஶ்யதி ந ரோகம் நோத துঃখதாம் ।
ஸர்வம் ஹ பஶ்ய: பஶ்யதி ஸர்வமாப்நோதி ஸர்வஶ: ॥

(பொ-ள்.) ஹே நாரத! இஜ்ஜீவான்மாத் தனது ஞானபலத்தானே சுபாசுபரூப சர்வ சம்சாரத்தையும் மோக்ஷத்தையும் காணுமாதலின், சுருதி பகவதி இதனை ‘பஶ்ய’ என அழைத்தனள். மிருத்தியுவென்பது மரணமாம். மிருத்தியு சப்தத்தானே சுரமுதலிய ரோகங்களின்றிச் சரீரஜன்மாதி தருமங்களியாவற்றையும் கவர்க. உதரத்தே ஜாடராக்கினியானே பரிபக்குவமாய அன்னரசத்தின் குறைவுமிகுதியினுனே உண்டாய சுரமுதலிய வியாதிரோகமாம்.

சங்கை :—ஹே பகவன்! மந்திரரூப சுலோகத்தேயிருக்கும் மிருத்தியு சப்தத்தானே ஜன்மாதி விகாரங்கள் கவரப்பெறுவதேபோல ரோகமும் கவரப்பெறுமாதலின், சுருதியின்கண்ணே ரோகத்தைத் தனியேகவர்ந்தது அசங்கதமாமன்றோ ?

சமாதானம் :—ஹே மைந்த! ஜீவர்களின் மரணம் அற்பகாலம் வரையிருப்பதேபோல ஜன்மாதிகளுமிருக்குமாதலின், அற்பகாலமிருக்குந்தன்மைவடிவ சாமானிய தருமத்தையங்கீகரித்து மிருத்தியு சப்தம் ஜன்மாதிகளையுமுணர்த்தும். சுரமுதலியவற்றே அற்பகால மிருக்குந்தன்மையில்லையாம்; மற்றே, அவற்றின் கண்ணே நெடுநாளிருக்குந்தன்மையுளதாதலின், சுருதியின்கண்ணே அச்சப்தத்தால் சுராதிகளைக்கவராமல ரோகசப்தத்தாற கவர்ந்ததாம். ஜராயுஜாதி நால்வகைப் பூதப்பிராணிகளின் நானுவகையாய விலக்ஷணமதிகளின் பிரதிபிம்பத்துவரூபமாய் நானுவகையாய பேதமுற்ற ஜீவர்களின் ஜன்மாதி யநேக தருமங்களோடுகூடிய தேகத்தோடுண்டாம் யான் எனது என்னும் அத்தியாசரூப சம்பந்தம் துக்கமாம். இத்தகைய மரணுதிவிகாரங்களையும் ரோகங்களையும் அகம்மம அத்தியாசரூபதுக்கத்தையும் பஶ்யவெனப் பெயரிய ஜீவன் காணுன். அவ்வறி

ஞன் மிருத்தியு முதலியவற்றைக் காணுதற்குக் காரணமிதுவாம்:—தூல சூக்ஷ்ம ரூபமாய்ப் பிரசித்தமாய இத்துவைதப்பிரபஞ்சமெல்லாம் ஆன்மாவின்கண்ணே கற்பிதமாம்; கற்பிதத்திற்கு அதனைக்காணும் ஞானம் உண்டாகாதவரை இத்தியாம்; பின்னது மீண்டுங் காணப்பெறாது. இவ்வாறு சர்வ துவைதப் பிரபஞ்சத்தையும் அதிஷ்டான ஆன்மாவின்கண்ணே கற்பிதரூபமாய்க் காணும் அறிஞன் மரணாதிவிகாரங்களைக்காணான். இப்பூமான்மஞானத்தின்பின்னர் இவ்வெல்லாவுலகும் அதில் அநன்யபாவத்தைப்படையும்; அஃதே ஜீவான்மாவிற்குச் சர்வ ஜகத்தினடைவாம், ஏனெனின், சர்வ வேதத்தாற்பரிய விஷயமாய பூமான்மாவின்கண்ணே எல்லா யாக லோகாதிரூப வேதப்பொருள்களும் அந்தர்ப்பூதமாம்; அதனினும் வேறாக யாதொரு வேதப்பொருளுமின்றாமாதலின், அதன் ஞானத்தானே ஜீவான்மாச் சர்வ பதார்த்தங்களையுமடையும் என்னும் வார்த்தை சம்பவித்தல்கூடும். இப்போது அறிஞனால் உபாதிபேதத்தானே நாநாரூபத் தன்மையை நிரூபிப்பாம்:—ஹே நாரத! யான் பூமாரூபன்; என்னும் ஞானத்தோடுகூடிய அறிஞன் தனது வாஸ்தவ பூமாரூபத்தானே ஒருவனாயினும், தன் மாயையால் நானாவாவன். ஆன்மா, மாயை, மாயாகாரியம் என்னும் மூவுருவத்தைக் கவர்ந்தோ மூவகையாவன். ஆகாயாதியைந்தையேனும், சுரோத்திராதியைந்தையேனுங் கவர்ந்தோ ஐவகையாவன். பூராதி சப்தலோகங்களைக்கவர்ந்தோ ஏழு வகையாவன். ஆதித்தியன், சந்திரன், செவ்வாய், புதன், பிருகஸ்பதி, சுக்கிரன், சனி, ராகு, கேதுவென்னும் நவக்கிரகங்களைக்கவர்ந்தோ ஒன்பது வகையாவன். ஞானேந்திரியம் 5, கருமேந்திரியம் 5, மனம் 1 என்னும் 11 இந்திரியங்களைக் கவர்ந்தோ 11 வகையாவன் அப்பதினொன்றனுள் ஒவ்வொரு இந்திரியத்திற்கும் 10-10 விருத்திகளை யங்கீகரித்தோ 110 வகையாவன். இராப்பகலில் 21,600 சுவாசப்பிரசுவாசரூப ஹம்சமந்திரங்களின் பேதத்தைக்கவர்ந்து 21,600 வகையாவன். இவ்வாறு பிரஹ்மரூப அறிஞன் உண்மையாலொரு அத்விதீயரூபமாயினும் உபாதிபேதத்தை யங்கீகரித்து நானாவகையாவன். இப்போது ஆன்மஞானத்திற்கு ஆகாரசுத்தி முதலிய சாதனங்களை நிரூபிப்பாம்:—ஹே நாரத! வெளியிலே எப்போதும் புண்ணியகருமங்களின் அநுட்டானஞ்செய்து மனத்தே யெப்போதும் பாவவாசனையிருப்பின் அவர்கட்குச் சதகோடி ஜன்மமெடுப்பினும் சர்வான்மஞானம் அத்தியந்த துர்லபமாம். உட்பாவவாசனையோடுகூடிய புண்ணியவான்கட்கும் ஆன்மஞானம் துர்லபமாயின், வெளியும் உள்ளும் எப்போதும் பாவகருமாசரணத்தைச் செய்பவர்க்கு ஆன்மஞானம் துர்லபமென்பதன்கண்ணே கூறவேண்டியதென்? ஆகையால், ஆன்மசாக்ஷாத்காரத்தை யிச்சித்த அதிகாரி முதலில் தனது சித்தத்தைச் சுத்தஞ்செய்க.

சங்கை.—ஹே பகவன்! அந்த மனத்தூய்மை யெவ்வாறுண்டாம்?

சமாதானம்:—ஹே நாரத! தத்தமது வருணாசிரம அநுசாரம அடைவுற்ற அன்னபானாதிவிடயக்கவர்ச்சியாகாரமாம். அஃதியாவனுக்கு இராகத்வேஷமற்ற மதியானே பாவமற்றுத்தூய்த்தாமோ அவன் மனமே தூய்த்தாம். அவ்வாகார சுத்தி

யின்றிச் சித்தசுத்தி யுண்டாகாதாம். ஆகாரசுத்தியுடைய புருடனுக்குப் பாவகரு மத்தே பிரீதியுண்டாகாததேபோல பீஜயோனிவிவகாரமென்னும் மூன்றன் சுத்தியுடையவனுக்கு ஆபத்துக்காலத்திலும் பாவகருமத்தின்கண்ணே பிரீதியுண் டாகாதாம். அண்டம் பிதுர்குலம் பீஜமாம; மாதுர்குலம் யோனியாம்; பதார்த்தங் களின் கிரகணத்தியாகம விவகாரமாம்; இவ்வாறு ஆகாரவிவகாரபீஜயோனி என் னும் நான்கன் சுத்தியால் சித்த சுத்தியுற்றவன் ஒருகாலும பாவகருமத்தே முய லான். பாவகருமமே சித்த ஏகாக்கிரபபிரதிபந்தகமாம். ஆகாராதிகளின் சுத்தி யால பாவகருமங்களற்றவனுமபோது ஒருமையையுறுவன்; உற்றவன் பிரஹ்ம வேததாவாய ஆசிரியரின் உபதேசத்தானே விரைவாகவே தன் பூமாவடிவ ஆன் மாவைச சாக்ஷாத்கரிப்பன்; வேடரால காப்பாற்றப்பட்ட க்ஷத்திரியராஜபுத்திரன் ஒரு மகானமாவாயிலாய் நீ க்ஷத்திரிய ராஜகுமாரன் என்னும வசனத்தைக் கேட்டு விரைவாகவே தனது க்ஷத்திரியசொரூபத்தை நினைப்பதேபோல, நீ பிரஹ்மரூபன் என்னும் பிரஹ்மவேததாகுருவின் வசனத்தைக்கேட்டு அத்தூய மனத்தோன விரைவாகவே தனது பிரஹ்மவடிவத்தை நினைவன்; பூாவ புண்ணிய கரும மகிமையால, ஞானாசிரிய ருபதேசத்தால பூமான்மாவின் நினைவையடைய வன் ஆன்மஞானரூபகடகத்தானே காமக்குரோதாதி கிரந்திகளை விரைவாகவே சேதிப்பன்; அஃதின்றிக் காமக்குரோதாதி ஒருகாலும நிவிருத்தியாகாவாதலின், அதிகாரி காமாதிபந்தநீக்கப்பொருட்டு அநதப பூமாஞானத்தை அவசியம் சம்பா திக்குக. இப்போது அந்நாரதமுனிவரிடத்தே பிரஹ்மவித்யாதிகாரியின் விசேஷ ணங்களை நிரூபிப்பாம்:—ஹே குழந்தாய்! அம்முனிவா முற்கூறிய ஆகாராதி களைத் தூய்தாக்கித் தூயமனமுடையவரானா; பின் காமாதிகளற்றவரானா. எக கடுக்காய் முதலியவற்றாலுண்டாய ரசசம்பந்தத்தானே வஸ்திரத்தில சிவப்பு முதலிய நிறங்கள மிக வலியவாமோ அவ்விரசத்தை மதிமான்கஷாயமென்பன். அவ்விரசமபோல இக்காமக்குரோதாதி விகாரமும சித்தரூபவஸ்திரத்தை இரஞ் சிதமாக்குமாதலின், காமாதியையும நூலுணாந்தோா கஷாயசப்தத்தாற கூறினா. வஸ்திரத்தின்கண்ணேயிருக்கும கஷாயரசம உவர்மண் முதலியவற்றானே நீங்கு வதேபோலக் காமாதிகஷாயங்களையும பிரஹ்மசரியாதி சாதனங்களால் நீக்கலாம். நாரதா பிரஹ்மசரியாதி சாதனங்களோடுகூடியவரும், சம்சார சமுத்திரத்தினின் றும வைராக்கிய முடையவருமாவராதலின், சுருதி பகவதி நாரதரை மிருதித கஷாயரென்றனள். அத்தகைய நாரதாபொருட்டுச சநத்குமார பகவான் மூல அஞ்ஞானரூப தமத்தின் பூமாரூப அக்கரையைககாண்பித்தனா. உலகத்தே தம் சத்துருவிறுகுத் துக்கம காணபிப்பதேபோல நாரதருக்கு ஆசிரியா பூமான்மாவைக் காண்பித்தனர்; அதன்றரிசனத்தானே அதிகாரிமீண்டும சம்சாரரூப சோகத்தை யடையான். நாரதமுனிவருக்குப பிரஹ்மவித்தையை யுபதேசித்த சநத்குமார பக வான் மறுஜன்மத்தே கார்த்திகேய சுவாமியவதாரத்தைத்தரித்தருளினா. ஹே மைந்த! இப்பொருளில் இதிகாச முணாந்த மறையவா இவவாறுய கதையைக் கூறியுள்ளார். அக்கதையைக் கூறக்கேட்பாயாக:—ஒரு காலத்தே ஒரு நிமித் தத்தை முன்னிட்டுச் சர்வ முனிவர்களும் ஸ்ரீ காசியின்கண்ணே சேர்ந்தனா. அவர் அதிகாலையில் ஸ்நாநாதி நித்தியகருமங்களைச் செய்துகொண்டு ஸ்ரீ கங்கா

நேரத்தே வீற்றிருந்தனர் அவரியாவரும் தத்தமது மதியால் பரப்பிரஹ்மத்தைச் சிந்தித்தனர். அக்கால் ஸ்ரீ பவானிதேவியோடுகூட ஸ்ரீ மகாதேவர் ஆண்டெழுந்தருளினர். அவர் தமது சுயஞ்சோதியானதவடிவத்தானே அம்முனிவர்து தியானவிஷயரேயாயினும், கிருபையினாலே அம்முனிவரின் மாம்சமய நேத்திரங்கட்கு விஷயமாயினர். அம்மையாரோடுகூடிய மகாதேவரைக்கண்டு எல்லா முனிவரும் தத்தமது ஆசனத்தினின்றும் எழுந்தனர், மிகவும் மகிழ்ந்தனர். பிராணப்பிரவேசத்தானே இதேகம் எழுந்து மகிழ்வுறுவதேபோல அவரும் ஸ்ரீ மகாதேவரைக்கண்டெழுந்தனர், மகிழ்ந்தனர். அவ்வியாவருள்ளும் சநற்குமார பகவான் ஒருவர் மாத்திரம் தமதாசனத்தினின்றும் எழும்பவில்லை, என்னை. அவர் எப்போதும் ஏக அத்விதீய ஆன்மாவைப் பெருவெளியாகவும் பரிபூரணமாய்க் காண்பர் அக்காலே அவர் விசேஷமாய்ச் சமாதியினகண்ணேயிருந்தனராதலின், ஸ்ரீ மகாதேவரைக்கண்டு அப்யுத்தானம் செய்யவில்லை மற்றவரெல்லாம் கண்டபோதே அப்யுத்தானம் செய்தனர் நமஸ்கரித்தனர். அவருள் சிலரோ வேதபாடஞ்செய்து மகாதேவரைத் துதித்தனர். சிலரோ சுவீனஸ்தோத்திரஞ்செய்து துதித்தனர் சிலரோ முன்னோர்கூறிய ஸ்துதிகளாற் றுதித்தனர் இவ்வாறு யாவரும் ஸ்ரீ பவானிசகித மகாதேவரை மகிழ்வித்துத் தமதாசனத்திருந்தனர். இவ்வாறிய முனிவர்களின் சிரத்தாபக்தியைக் கண்ணுற்று மிக மகிழ்ந்த மகாதேவர் எல்லார்க்கும் வேண்டிய வரங்களைத்தந்தனர் பின்பு மஹாதேவர் ஆங்கிருந்து விஜயஞ்செய்ய விழைந்து எல்லாரையும் பார்வையார்த்தனர். அச்சமயத்தே சநற்குமாரர் தியானத்திருப்பதைக்கண்டு பரமசந்தோஷத்தையடைந்தனர்; ஆனால் மகாதேவியார் சந்தோஷத்தையடையாமல் திருவுள்ளத்தேதாயிவ்வாறு சிந்தித்து மங்கையரியற்கையானே மிகச் சினந்தனர். இப்போது ஸ்ரீ பவானியின் சிந்தனையைவருணிப்பாம் — ஸ்ரீ மகாதேவர் அநாதிபுருஷர், எப்போதும் யோகியரின் இருதயத்தேயிருப்பவர், அஷ்டாங்கயோகத்தோடுகூடிய புருடரால் எப்போதும் தியானிக்கத்தக்கவர், சர்வவித்தைகளின் பரமகுருவும், அரசர் முதலியோர்க்குக் காப்பதாசர் கிங்கரராயிருப்பதேபோலப் பிரஹ்மா விஷ்ணு இந்திரர் சர்வலோகபாலர்முதலிய தேவர்களியாவரும் இவர்க்குக் காப்பதாச கிங்கரராவர். தனத்தால் வாங்கிய தாசியிற்பிறந்த பிள்ளைகள் காப்பதாசராவதேபோல இவர் சத்தாஸ்பூர்த்திரூபதனங்கொடுத்து மாயாரூப தாசியைத் தமவயமாக்கி அவளிடத்திருந்தே பிரஹ்மாதிகள் உண்டாயினராதலின், இவர்க்கவர் காப்பதாசராவர். மகத்தாதித்தத்துவங்களையும் ஸ்தாவரஜங்கமபூதங்களையும் உண்டாக்குபவர், நிலைப்படுத்துபவர், ஒழிப்பவர். இவருக்குச்சமானமாயொருவரும் முன்னுண்டாயிலர், உண்டாகார்; இரார். இவர்க்கொப்புமில்லையாயின் அதிகர் யாவராவர்? அதிகரெவருமிலர். மன்மதனை யழித்தனராதலின இவரே பிரஹ்மசரிய தருமமுடையவராவர். இத்தகைய ஜகத்குருவாகிய ஸ்ரீ மகாதேவரை மங்கையளாகிய என்னோடிருப்பதாய்க்கண்டு மங்கையினதீனர் என இச்சநற்குமாரன் நினைந்தனன், இவன் தன்னைப் பிரஹ்மசாரியாக நினைந்து மகா கருவத்தோடுகூடியிருக்கின்றானதலினானே மகாதேவரைக்கண்டும் அப்யுத்தானம் நமஸ்காரம் செய்தில

ளுதலின், அபிமானியாய இவனுக்கு யான் ஒருகொடிய சாபங்கொடுப்பேன்; என்று அம்மையார் சிந்தித்துச் சாபங்கொடுக்க நிச்சயித்து மீண்டு மெச்சாபங்கொடுப்ப தெனச் சிந்தித்தனர். இவ்வுலகத்தே மகா துக்கத்தையடைவிக்குந் தானங்களில் வசிக்கும் ஜீவர்கள் அநேகருண்டெனினும், யாவருள்ளும் அசுவசேவையால் தமது ஜீவனஞ்செய்யும்புருடர் முக்கியர்; ஏனெனின், துர்க்கந்தத்தோடுகூடிய அசுவ சாலைகளில் அவரெப்போதும் வசிப்பர், மிகச் சேவைபுரியினும் அற்பதனமே பெறுவராதலின் யாவரினும் அவர் கீழோர். அத்தகைய குலத்தே இவன் பிறக்கக் கடவது உரிதென எண்ணி, ஹே சநற்குமார! நீ எனது நாயகராகிய மகாதேவ ரையவமானஞ்செய்தனையாதலின், அசுவசேவகர்குலத்தே பிறக்கக்கடவாய் எனச் சபித்தனர். தேவியார் சாபங்கொடுக்கும்போது ஸ்ரீ மகாதேவர் பலவாறு தடுத் தும் சினவசத்தராய அம்மையார் மகாதேவர் மொழியையுங் கவனித்திலர். சாபத் தின் பின்பு சநத்குமாரர் பூர்வ சரீரத்தைப்பரித்தியாகித்து அசுவசேவககுலத்தே தேகமுற்றனர், அத்தேகத்துமவர் பரமாநந்தத்தையே யடைந்தனர்; ஏனெனின், பூர்வப் பிராஹ்மணதேகத்தே ஸ்நாநாதி நித்தியநைமித்திக கருமங்களைச்செய்வ தானே உண்டாம் சாவக கிலேசங்களும் அத்தேகத்தே நீங்கின. குதிரைகள் உட்கொள்ளும் கடலை முதலியவற்றை யுட்கொண்டு அத்தியந்தம் தூலசரீர முடையவராயினர். அத்தியந்தம் ஆலசியமுடையவராயினராதலின், அத்தகைய ஆலசியரைக்கண்டு வேறொரு காரியத்தினும் அவரையேவாது அசுவசாலைவாயிற் காததன்மாத்திரப்பொருட்டு வாயிலில் அவரைவைத்தனர். அவர் தமமாணையை மேற்கொண்டு வாயிலிலேயே இரவும் பகலும் இன்புடனிருந்தனர். இவ்வாறு சில காலங் கழிந்தபின் ஸ்ரீ மகாதேவரோடுகூட ஸ்ரீ மகாதேவி அவ்வசுவசாலையின் சமீபத்தே வந்தனர். தேவியார் நீசசரீரத்தே பரமானந்தத்துடனிருக்கும் சநத் குமாரரைக்கண்டு மகிழ்வுற்றனர். பின் தேவியார் சநத்குமாரரைநோக்கிக் கூறு வதாவது:—ஹே சநத்குமார! யாம் நின்மீது மகிழ்வுற்றனம், வேண்டியவரத்தைக் கேட்டுக்கொள்கெனக் கூறவே அவர் கூறியதாவது:—ஹே தேவீ! தாங்கள் தயையால் அடியேனுக்கு இத்தேகத்தை யருளினீர்கள், இது முன்னிருந்த பிராஹ் மணாதி சரீரத்தினும் மேன்மையதேயாயினும் இதன்கண்ணே மலஜல பரித்தியா கப்பொருட்டெழுந்து தூரத்தே செல்வதால் மிகக் கிலேசமுண்டாகின்றதாதலின், தயவுசெய்து இருந்த இடத்திலிருந்தே விட்டைமூத்திரங்களும் தேகங்கொடுத் தால் நலம். அவையும் தேகத்தினின்று தூரத்தேபோய் விழவேண்டும், அதன் பரிசம் தேகத்தேயிருக்கலாகாது. ஹே மைந்த! சநத்குமாரர் தேவிபாலிவ்வகை வரங்கேட்டபோது தேவி மீண்டுஞ் சினந்து ஹே சநற்குமார! ஒட்டைத் தேகத்தே விட்டைமூத்திராதிகள் தேகத்தினின்றும் சேய்மையிற்போய் விழுமா தலின், நீ ஒட்டைத்தேகத்தையடைதி எனச் சபித்தனள். ஹே மைந்த! பின் சநற்குமாரர் அத்தேகத்தைவிட்டு ராஜகிருகத்தே ஒட்டைத்தேகத்தை யெடுத் தனர். ஒட்டைச் சிக்ஷகர் அவ்வொட்டையை யெவ்வளவோ சிக்ஷித்தும் அது சிறிதுமாத்திரையும் படியவில்லை. பின்னவர் மிகவும் ஆலசியம்வாய்ந்ததென எண்ணிக் காட்டிலோட்டினர்; வனத்தே அது பரமசுகத்தை அடைந்தது; ஏனெ னின், ஆண்டது கரீரம் முதலிய பல முட்களைப்பக்ஷித்து ஸ்ரீ கங்கையின் மதுர

ஜலத்தைப் பானஞ்செய்து இருந்த இருப்பிலேயே மலமூத்திர விசர்ஜனஞ்செய்தது. ஆகையால் அவர் அதனேகண்டே பரமானந்தமுற்றனர். அல்லது சிருஷ்டியின் ஆதிகாலத்தே பிரஹ்மாவானவர் உண்டாக்கிய பசுத்தேகங்கள் யாவற்றுள்ளும் இவ்வொட்டைத்தேகத்தை முதலில் சிருஷ்டித்தனராதலின், இது பசுத்தேகங்களியாவற்றுள்ளும் மேன்மையதாம் என ஆராய்ந்தும் அதன்கண்ணே மிக மகிழ்வுற்றனர். நெடுங்காலங் கழிந்தபின் ஸ்ரீ மகாதேவர் சகித ஸ்ரீ மகாதேவிவனத்தே வந்தனள். சநத்குமாரர் ஒட்டைத்தேகத்தும் பரமானந்தமுற்றலைக் கண்ணுற்று இவ்வாறு கூறினள்:—ஹே சநத்குமார! யாம் நின்பால மிக மகிழ்வுற்றனம் வேண்டிய வரத்தைக் கேட்டுக்கொள்ளென, அவர் கூறுவதாவது—ஹே தேவி! தாங்கள் தயைகூர்ந்தருளிய இத்தேகக்கொடையினும் உயர்ந்த வரத்தைக்கண்டிலேன்; இத்தேகத்தே யான்சிருக்கிருத்தியனாயுளேன; இதன்கண்ணே எனக்கு வேதத்தானும் உலகத்தானும் பயப்பிராப்தியும் இலஜ்ஜையின்மையும் உண்டாவதில்லை. படுத்திருந்தே மலமூத்திர பரித்தியாகஞ்செய்யினும் தேகத்தை யவை தீண்டவில்லை, வெகு தூரத்தேசென்று விழுகின்றன, பரமசுகத்தையடைந்துகொண்டிருக்கின்றேனாதலின், ஒருகால் பரமேசுரா எனக்குத் தேகங்கொடுப்பராயின் ஒட்டைத்தேகத்தையே அடிக்கடி கொடுப்பராகவெனப் பிரார்த்திக்கின்றேன். இவ்வநாதியாய சம்சாரத்தே யான் முன்னநேகவகையான உயர்ந்த தாழ்ந்த தேகங்களை யெடுத்திருப்பேன்; ஆனால்இவ்வொட்டைத்தேகத்தைப்போலச் சுகமேவது இப்பிரமாண்டத்தே எத்தேகத்தையுங்காணேன ஆகையாலிதனினும் மேலாய வரத்தை யான் வேண்டிலேன எனச் சனத்குமாரர் கூறியதைக்கேட்ட பவானி அவரது நிட்காமத்தைக்கண்டு ஸ்ரீ மகாதேவரோடு ஆலோசித்து இவ்வாறு கூறினள்:—ஹே சநத்குமார! நீ யெல்லாக்காமமுமற்றனையாதலின் யாதொரு வரமும் வேண்டுகின்றிலை. நீ யெனக்கு வேண்டியவரத்தைக்கொடு, என அம்மை வினவியதை அம்முனிவரங்கீகரித்தபோது தேவி 'நீ யெனது மைந்தனாதி' யென வரங்கேட்க முனிவரும் அவ்வாறே வரமீந்து தேவிக்கு ஸ்கந்தனென்னும் பெயர் வாய்ந்த மைந்தரானார். அவரையே நூலுணர்ந்தோர் கார்த்திகேயஸ்வாமியென அழைப்பர். காமத்தைத் தம வயப்படுத்தலின் ஸ்கந்தரெனப்படுவர். அவர் அவ்வவதாரத்தும் முனபோலவே பிரஹ்மசரிய தருமத்தின்கண்ணே நிலைபெற்றிருந்தனர். இவ்வாறு முன்னாச சநத்குமாரபகவான் நாரதருக்குச் சுகரூபப் பூமாவை யுபதேசித்தனர்; அவை யாவற்றையும உனக்குக் கூறினேன். ஹே மைந்த! ஆருணி சுவேதகேதுவிற்கு ஆன்மாவைச் சத்தியரூபமாயும், சநத்குமாரர் நாரதருக்கு ஆநந்தரூபமாயும உபதேசித்ததேபோலப் பிரஹ்மா இந்திரருக்கும் விரோசனனுக்கும் இவ்வான்மாவை நனவு முதலிய மூன்றவஸ்தைகளுக்கும அற்றதென உபதேசித்தனர்; ஆனால், தேவராஜாவாய இந்திரரோ தூய ஆகாரமுடையவரும், தூயமனமுடையவரும, முறகூறிய ஸ்மிருதியுடையவரும, காமக்குரோதாதி கிரந்திகளைப் பரித்தியாகிப்பதில் முயலவுடையவரும் ஆதலின், பிரஹ்மாவினுபதேசத்தானே நனவு முதலிய மூன்றவஸ்தைகளினும வேறாக ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்தனர். விரோசனனோ ஆகாரசுத்தி முதலியவை யற்றவனாதலின், ஆன்மாவை

யவ்வாறறியாமல் இத்தூலத்தையே ஆன்மாவென வுணர்ந்தனன். ஹே மைந்த! 13-வது அத்தியாய ஆதியில் நீ ஆன்மாவின் சுசுரூபத்தை வினவினாய், அதை விரிவாக யாம் கூறினேம். எப்பொருளைக் கேட்ப இப்போது விழைவுள்ளதோ அதைக் கேட்பாயாக.

பதின்மூன்றாவது அத்தியாயம் முற்றிற்று.

---

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## பதினான்காவது அத்தியாயம்.



ஓம் ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ குருப்யோநம: ஸ்ரீ காசிவிஶ்வேஶ்வராப்யாம்நம:
ஸ்ரீ சங்கராசார்யேப்யோநம:

முன் 13-வது அத்தியாயத்தே சாமவேதசாந்தோக்கிய உபநிடதத்தின் 7-வதத்தியாயப்பொருள் நிரூபிக்கப்பட்டது. இவ்வத்தியாயத்தே 8-வதத்தியாயப்பொருள் நிரூபிக்கப்படும். முன்னத்தியாயத்தே பூமான்மாவின் சுசுரூபத்தன்மையைச் சிரவணித்துப் பரமானந்தத்தையடைந்த சீடன் மீண்டும் நனவு முதலிய மூன்றவத்தைகளினும் வேறாய பூமானமாவைச் சிரவணிப்பானிச்சித்தவனாய்த் தனதாசிரியரை நோக்கி யிங்ஙன கூறினன்.—ஹே பகவன்! 1-வது அத்தியாயத்தே தாங்கள் இருக்குவேத ஐதரேயப்பொருள் கூறும்போது சனகாதிமுனிவர்க்கும் வாமதேவாதி அதிகாரிகட்கும் நடந்த சமவாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையை நவின்றீர்கள். 2-வது, 3-வது அத்தியாயங்களில அவ்விருக்குவேத கௌஷீதகிப்பொருள் கூறும்போது தேவராஜா பிரதாத்தனிருவர்க்குமுற்ற சமவாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள். அஜாதசத்துரு பாலாகிப்பிராஹ்மணரிருவர்க்குமுற்ற சமவாதவாயிலாய நானுவகையாய பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள். 4-வது, 5-வது, 6-வது, 7-வது என்னும் நான்கத்தியாயங்களில யஜுர்வேத பிருகதாரண்யகப்பொருள் கூறும்போது ஒரு ஸ்திரீவம்சம் இருபுருடவம்சம் என்னும் மூவகையாய இருஷிகளின் வம்சத்தைக்கூறியதுமல்லாமல், ததயங் மகரிஷி இந்திரருக்கும், அசுவினீகுமாரர்கட்கும் உபதேசித்த பிரஹ்மவித்தையையும், இந்திரரால் தத்யங் இருடியின் மரணத்தையும், மகரிஷியின பொறுமை முதலிய குணங்களையும், மற்றும் பிறவற்றையும்; ஜனகராஜாவின் யாகசாலையின்கண்ணே யாஞ்ஞவற்கியர்க்கும் ஆசுவலாதிமறையவர்க்கும் நடந்தசமவாதவாயிலாய் நானுவகையாயபிரஹ்மவித்தையையும், யாஞ்ஞவற்கிய முனிவரின் சாபத்தால் சாகல்லியமறையவருற்ற மரணத்தையும், அம்முனிவருக்கும் ஜனகராஜாவிற்குமுற்ற இருமுறைச் சம்வாதவாயிலாய் நானுவகையாயபிரஹ்மவித்தையையும், அவ்வித்தை அம்முனிவருக்குச் சூரியபகவானால் கொடுக்கப்பட்டதெனவும், அம்முனிவருக்கும் மைத்திரேயிக்குமுற்ற சம்வாத

வாயிலாய் நாலுவகையாய பிரஹ்மவித்தையையும், அம்முனிவரின் சந்யாச ஆசிரமத்தையுங் கூறினீர்கள். 8-வதத்தியாயத்தே யஜுர்வேதத்தின் சுவேதாசுவதரப் பொருளை நிரூபிக்கும்போது சுவேதாசுவதரமுனிவருக்கும் சந்யாசிகட்குமுற்ற சம்வாதவாயிலாய் ஜகத்காரணத்தை நிரூபித்தீர்கள். 9-வதத்தியாயத்தே யஜுர்வேதத்தின் கடவல்லிப்பொருள் கூறும்போது, நசிகேதஸ் பிதாவசனத்தை யுண்மையாக்கும்பொருட்டு யமலோகத்தேசென்றதும், ஆங்குத் தருமராஜாபால தந்தையின் பிரசன்னத்தன்மை, அக்கினிவித்தை, ஆன்மஞானம் என்னும் 3 வரம் வாங்கியதும், வரமகிமையானே யமராஜவாயிலாய் வைராக்கியாதி சாதனங்களோடு கூட ஆன்மஞானத்தைச் சிரவணித்ததுங் கூறினீர்கள். 10-வதத்தியாயத்தே யஜுர்வேதத்தின் தைத்திரீய நாராயணீயப்பொருள் கூறும்போது வருணப்பிருகு சம்வாதவாயிலாய்ப் பிரஹ்மத்தின் சொரூப இலக்கண தடஸ்தஇலக்கணங்களையும், அன்னமயாதிபஞ்சகோசங்களின் அயலாகப் பிரஹ்மசொரூபத்தையும், வேநன்னைப் பெயரிய கந்தருவனது சர்வான்மபாவரூப அநுபவத்தையும், சத்தியாதி சாதனங்களின் நிரூபணவாயிலாய் எல்லாவற்றினும் சந்யாச ஆசிரமம் அதிகமென்பதையும் வருணித்தீர்கள். 11-வது அத்தியாயத்தே ஜாபாலாதி 11 உபநிடதப்பொருள் கூறும்போது, பூர்வம் சம்வாதத்தாதி மகாபுருடர் பரமஹம்ச சந்யாசதாரணஞ்செய்ததும், சந்யாச அடைவிற்கு வைராக்கியமொன்றே காரணமெனவும், அதைப்பெறல் காமதுக்கவிசாரத்தானும், மரணஞானத்தானும், அஷ்டாங்கயோகத்தானும் ஆமெனவும், வைராக்கியவானே சந்யாச அதிகாரியெனவும், பரமஹம்சசந்யாசிக்குப் பாகிய அந்தரபேதத்தால் இருவகையாசாரம் உண்டெனவும், தண்டங்க, மண்டலம், பிக்ஷை முதலியவை பாகிய ஆசாரமென சமதமாதிகள் அந்தர ஆசாரமெனவும், யான் பிரஹ்மரூபன் என்னும் அபேத ஞானத்திற்கோ அந்தர ஆசாரமே முக்கியகாரணமெனவும், அந்தப் பிரஹ்ம ஞானமும் பிரஹ்ம உபநிடதாதிகளில் கூறியிருக்கும் வண்ணமும், மற்றும் பிறவுங் கூறினீர்கள். 12-வதத்தியாயத்தே சாமவேதசாந்தோக்கியப்பொருள் கூறும்போது உத்தாலக சுவேதகேது சம்வாதவாயிலாய் நாலுவகையாய பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள். 13-வதத்தியாயத்தே அச்சாந்தோக்கியப்பொருள் கூறும்போது சநத்குமாரநாரத சம்வாதவாயிலாய் நாலுவகையாய பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள்; ஆண்டுப் பிரஜாபதியாய பிரஹ்மா, இந்திரருக்கும் விரோசனனுக்கும் மூன்றவத்தைகளுமற்ற பூமானமாவை உபதேசித்தனர்; இந்திரரோ பூமாவை யுணர்ந்தனர், விரோசனனுணரவில்லையெனக் கூறிய விசித்திர ஆக்கியானத்தைத் தங்கள் வாயிலாய்க்கேட்க விரும்புகின்றனன்; தாங்கள் தயவுசெய்து எல்லா விருத்தாந்தங்களையுங் கூறவேண்டும். இவ்வாறு சிரத்தையையுடைய சீடனால் வினவப்பட்ட ஸ்ரீ குருவானவர் சாந்தோக்கிய உபநிடதத்தின் 8-வது அத்தியாயத்தே கூறியுள்ள கதையைக் கூறத்தொடங்கினார்.—ஹே மைந்த! இந்திரருக்கும் விரோசனனுக்கும் பிரஹ்மவித்தையை யுபதேசித்த பிரஹ்மா எப்போதும் நிவாசஞ்செய்யும் பிரஹ்மலோகம் அதிவிசாலமாயது, எல்லாத் துயரையுங் கெடுப்பது, தூயமனமுடைய சந்யாசிகள் அர்ச்சிராதி மார்க்கத்தானே அடை

யப்பெறுவது, பிருகு முதலிய பிரஜாபதிகளின் மகராதி லோகங்கள் யாவற்றினும் மேலேயிருப்பது, ஐரம்மதீயமெனப் பெயரிய ஒரு பெரிய சரோவரம் ஆங்குண்டு அது அநேகம் வகையான கமலங்களானே சோபிக்கப்பெறுவது, முத்தாபங்களையும் நீக்குவது, உபாசனையின் பலத்தானே அற்பபயன்களைக்கொடுக்கும், புண்ணிய பாவகருமங்களின் க்ஷயமானபின்னர் உபாசகர்கட்கு அரசரோவரப் பிராப்தியாம், அது இராவெனப் பெயரிய அன்னத்தின் இரசரூபமாம், மதத்திற் கேதுவாமாதலி னானே நூலுணர்ந்தோர் அதனை ஐரம்மதீயம் என அழைத்தனர். அவ்வுலகத்தே அசுவத்த விருக்ஷ ஆகாரமாய்ச் சோமசவனமெனப் பெயரிய கற்பதருவிருக்கின் றது, அது மாதாவைப்போலச் சர்வ பூதப்பிராணிகட்கும் மனோ வாஞ்சிதபதார் த்தங்களையடைவிக்கும், அதனினின்றும் எப்போதும் அமிருதமொழுகுமாதலின் நூலுணர்ந்தோரதனைச் சோமசவனமென அழைத்தனர் ஆண்டு, அரவெனப் பெயரிய தடாகமும், ண்யவெனப் பெயரிய தடாகமும் உண்டு, அவை கடற் கொப்பாய விஸ்தாரமுடையவை பால், தயிர், நெய்யென்னும் மூன்றானும் நிரம் பியவை. அரசசேவகன் அரசகுமாரனை ஆதர பூர்வகம் அரசதாபபாரிலகொண்டு செல்வதேபோல, மின்னலுலகத்தை யடைந்த உபாசகனை அமானவன் அவணி ருந்து பிரஹ்மலோகத்திற்குக் கொண்டுசெல்வன். ஆங்குற்ற வுபாசகனுக்குப் பிரஹ்மாவினாலேவப்பட்ட 500 தேவாங்கனைகள் எதிர்கொண்டுவருவார்கள், அவர் கள் சூரியனையொத்த காந்தியர்கள், 16 வயதுடையவர்கள், ரூபயௌவன சம் பன்னர்கள், துரியாதி வாத்தியங்களின் மதுரசப்தங்களாற் சோபிக்கப்பெற்றவர் கள், உபாசகனைக்காணும் பெருவேட்கையர்கள், அவனது தேகத்தைப் பிரஹ்மா விற்குச் சமானமாயலங்கரித்துச் சோபாயமானம் செய்பவர்கள், அவர்கள் சுருதி யின்கண்ணே, அப்பர், அப்பராயவீயமென்னும் பெயர்களால் அழைக்கப்படுபவர் கள்; அத்தகையர்கள் 500 பெயர்கள் சமீபத்தேவருவர்; 100 மங்கையர், உபாச கனுக்கணிந்துகொள்ள நானாவகையாய சுகந்தியுள்ள புஷ்பமாலைகளைத் தம்கரத்தே கொண்டுவருவர்; 100 மடவார், அவனுக்குத்தீட்ட நானாவகையான அஞ்சனங் களைத் தங்கரத்தே கொண்டுவருவர்; 100 குங்குமக் கொங்கையரோ உபாசகன் அணிந்துகொள்ள நானாவகையான சூர்ணங்களைத் தங்கரத்தே கொண்டுவருவர்; 100 இலங்கிழையார் உபாசகன் அணிந்துகொள்ள நானாவகையான வஸ்திரங்களைத் தங்கரத்தே கொண்டுவருவர்; 100 சுந்தரிகளோ, உபாசகன் அணிந்துகொள்ள நானாவகையாய பூஷணங்களைத் தங்கரத்தேகொண்டுவருவர். சரீரத்தின் மினு மினுப்பிற் கேதுவான சுகந்தியுடையதைலாதிகள் அஞ்சனங்களாம். சரீரமார்த்த னஞ் செய்யத்தகுதியதாய சுகந்திப்பொருள் சூர்ணமாம். இவை முதலிய அநே கம் பொருள்களைத் தம்மஸ்தத்தே அத்தேவாங்கனைகள் கொண்டுவருவர். ஆங்கு ஆரவென்னும் மடுவொன்றுண்டு, தாண்டமுடியாத விரஜா எனப் பெயரிய நதி யொன்றுண்டு, அவ்விரண்டன் மத்தியில் யேஷ்டிகவென்னும் பெயர்வாய்ந்த முகூர்த்தங்களின் அபிமானி தேவதையிருக்கும்; அதை யுபாசகன் தனது விவே கத்தோடு கூடிய மனத்தானே செய்மையிலோட்டிவிடுவன். ஆண்டு, உபாசகன் அவ்விரண்டையுங்கடந்து இல்யவென்னும் விருக்ஷ சமீபத்தேசெல்லும்போது பிரஹ்மா கவரத்தகுதியதாய திவ்யகந்தம் பிராப்தமாம்; சாலஜன்யமென்னும் சம

ஸ்தானத்தையடையும்போது பிரஹ்மா கவாதத்தக்க திவ்ய ரசம் பிராப்தமாம்; அபராஜிதமென்ப பெயரிய ஆயதனத்தின் சமீபத்தே செல்லும்போது நானுவகையாய திவ்யரூபம் பிராப்தமாம்; உபாசகன்பால பிரஹ்மாவின் தேஜஸ் பிரவேசிக்கும். ஆங்கு மகாதேஜசுடைய இந்திரன் பிரஜாபதியென்னும் வாயிற் காவலாளர் உபாசகன் பிரஹ்மாவின் தேஜசோடு கூடியிருப்பதைக்கண்டு பயத்தோடுகூடியவரைப்போல விரைவாகவே உளளேபோகுமாறகத்தை யடைவிப்பர். ஆங்கு ஹிரண்மயமென்ப பெயரிய பிரஹ்மாவின் மாளிகையொன்றுண்டு, அது மிக விசாலமாயது அநேகவகை ரத்தினங்கள் பதிக்கப்பெற்றது சபாஸ்தானத்தோடுகூடியது, அதன்கண்ணே விசக்ஷணையென்ப பெயரிய புத்திரூப வேதிகையுண்டு, சர்வ சுப இலக்கணங்களோடு அது கூடியதாம்; சர்வ ஜகத்தின்காரணமாம். பிரஞ்ஞாரூப வேதிகையின்கண்ணே அமிதௌஜசவென்ப பெரிய பிராணரூபபரியங்கமிருக்கும். இதனை வாஜசநேயசாகையுடையமறையவர் உக்தரூபமாயுபாசனை புரிவர். சாந்தோக்கிய சாகையுடைய மறையவர் உத்கீதரூபத்தானே யுபாசனைபுரிவர். அந்தப் பரியங்கம கிழக்கே இரண்டுபாதமோ பூதபவிஷ்யத ஜகத்வடிவமாம். இலக்குமியும் பிருதிவியும் அதன் மேற்குப்பக்க இருபாதங்களாம். பிருஹத்சாமம், இரதந்தரசாமம இரண்டும் தெற்கு வடக்குப்பாக நீண்டகாஷ்டமய இருபட்டிகைகளாம்; பத்திரசாமம, யஜ்ஞாயஜ்ஞீயசாமம இரண்டும் கிழக்கு மேற்குகளின் அறபகாஷ்டமய இருபட்டிகைகளாம்; மந்திரரூப இருக்குவேதம், மந்திரரூப சாமவேதம இரண்டும் கிழக்கு மேற்குத் திசைகளின் நீாகக சூத்திரமயபபட்டிகைகளாம்; மந்திரரூப யஜுர்வேதம தெற்கு வடக்குத் திசைகளின் அறபசூத்திரமயப் பட்டிகையாம; உலகத்தே யது நாடா எனபபடும. அதன்மீது சந்திர கிரணமயமெத்தை விரித்திருக்கும, உத்கீத சாமவேதம அதனமேல விரிக்கத்தகுதியாய வெண்டுகிலாம; இலக்குமி அதன் தலையணையாம. இத்தகைய பிராணரூப பரியங்கத்தே பிரஹ்மா எபபோதும வீற்றிருப்பர். அவவிரணிபகருப்பர உலகவடிவ ஆடையால மூடப்பெற்றவர், அவரது திருமேனி ஐம்பூதத்தாலே புஷ்டமாம; அவர் சர்வ ஜீவர்களின் சமஷ்டிவடிவமாவர். சுருதியினகண்ணே அமபரர் எனனும் சப்தத்தானே கூறப்பட்ட உபாசனைவடிவ நதிகளின் நீரை எபபோதும மாந்துவர்; அவர்க்குப் பிரியமாய இருமங்கையருளர். பிரதிரூபையென வொருவர், அவ்வமமையார் சமஷ்டிரூப தேஜோ புஞ்சத்தைத் தமதபிமான விடயமாகக் வீற்றிருப்பர்; எல்லா நேத்திரங்கட்கும உபாதானகாரணமாவர். மற்றொருவர் மாநசியெனப் பெறுவர், அம்மாநசிப பிரியை சரசுவதிரூபமாய்ப பிரசித்தர்; இத்தகைய இரு பத்தினிமாரோடும அவர் அச்சபையின்கண்ணே வீற்றிருப்பர்; அவர் இந்திராதி சர்வ தேவதைகட்கும் தேவர், சர்வ பிரஹ்மாண்டத்தும வியாபித்த விபூதியையுடையவராகிய இந்திராதி தேவதைகளாலும் அவர் உபாசிக்கததக்கவர். இத்தகைய பிரஜாபதியாய பிரஹ்மா சர்வ பூதங்களின் ஹிதத்தையிச்சிப்பவராயவைகட்கின்பத்தை யெய்துவிப்பான் ஒரு பிரசங்கத்தை முன்னிட்டுச் சபையில் இவ்வாறு கூறினர்:—யாது அத்தியந்த தாலக்ஷியமெனக் கூறப்பெற்றுளதோ, பூமாவடிவமாய் வருணிக்கப்பெற்றுளதோ சர்வ தேகதாரி ஜீவர்கட்கும பிரத்யக்

வடிவமாய்ப் பிரசித்தமாமோ, அது சர்வ அநாத்மப்பொருள்களினும் நிரதிசயப் பிரீதி விஷயமாமாதலின் அதனை யான்மா என்னும் சப்தத்தானே கூறுவர்; அதனை அகங்காராதிகளின் மேலெனக்கூறுவர். அநித்திய பலத்தைப்படைக்கும் கருமம் பாபமாவெனப்பெறும்; அதைப்பற்றிய இதனால் சூக்ஷ்மதேக சங்கமற்றதாமாதலின் ஆத்மா அபகதபாப்மாவெனப்படும்; அது ஜராமரண சோகமோக பசிதாகமென்னும் ஷடூர்மிகளுமற்றதாம். ஏனெனின், ஜராமரண ஜன்மாதி தூல சரீரத்தின்றன்மங்களாம், சோகமோக ராகமுதலியவை மனோதன்மங்களாம், பசிதாகமிரண்டும் பிராணதன்மங்களாம். அவற்றுள் எதுவும் ஆன்மாவின்றன்மமன்றாமாதலின் அதைச் சுருதிபகவதி விஜரம், விமிருத்தியு, விசோகம், விஜிகத்சம், அபிபாசம் என்பதாதி நாமங்களாலழைத்தனள்; ஆன்மாவினிச்சைவடிவ காமமும் ஞானவடிவ சங்கற்பமும் சத்தியமாமாதலின், சத்தியகாமம் சத்திய சங்கற்பம் என அழைத்தனள்; ஏனெனின், தேகமனப்பிராணன் என்னும் மூன்றினுக்கும் அத்தியாசரூப சம்பந்தத்தானே ஆன்மாவிற்குச் சன்மமரணாதி சம்சாரப் பிராப்தியாம். சம்சார காலத்தே இவ்வான்மாச் செய்யுங் காமங்கள் சங்கற்பங்கள் முழுவதும் பாதிக்கப்படும் பொருள்களை விடயஞ் செய்தலின் பொய்யேயாம். ஆன்மஞானத்தானே தேகாதிகளின் பாதமாகவே அவை முதலிலோ உண்டாகவே மாட்டாவாம். அந்தஞான அவஸ்தையின்கண்ணே ஒருகாற் பாதிதானுவிருத்தியானே உதயமாயினும் பொய்யாகாவாம், ஏனெனின். ஞானகாலத்தே யறிஞன இச்சைமுதலிய சர்வ ஜகத்தையும் ஆன்மவடிவமாயே யனுசந்திப்பன்; வேறுபவற்றைக்காணான்; அவையுண்டாவதன் முன்பும் சன்மாத்திரவடிவமேயாமாதலின், அவை புண்மையனவேயாம் அவ்வான்மாச் சம்சார சர்வ பதார்த்தங்களுமற்றதாம்; மதிமுதலியவற்றினும் விலக்ஷணமாம், அஃதே யதிகாரிகளாலவசியமறியத்தக்கதாம்; அறியுமவகையோ, முதலிலதிகாரி பிரஹ்மசரியாதி சாதன சம்பன்னனாய்ப் பிரஹ்மவேத்தாவாய குருவின் சமீபத்தேசெல்க; பின் பிரமாணகத அசம்பாவனையை நீக்குமபொருட்டுப் பிரஹ்மவேத்தாவாய ஆசிரியர் வாயிலாய்வேதாந்த வசனங்களைச் சிரவணிக்க; பின் பிரமேயகத அசம்பாவனையை நீக்குமபொருட்டு அப்பொருளை மனனிக்க; பின் விபரீதபாவனையை நீக்குமபொருட்டு மனனம் பண்ணியபொருளிற் சித்தவிருத்திகளின் பிரவாகரூப நிதித்தியாசனஞ்செய்க. வேதாந்த சாஸ்திரம் ஜீவபிரஹ்ம அபேதத்தைப்போதிப்பதா? அல்லது, பேதத்தை போதிப்பதா? இவ்வகைய ஐயம் பிரமாணகத அசம்பாவனையாம். இப்பிரத்தியக்கான்மாப் பிரஹ்மத்தினும் அபின்னமா பின்னமா என்பதாதி சம்சய பிரமேயகத அசம்பாவனையாம். பரிபூரண ஆன்மாவைப் பரிச்சின்னமாகக் காணன்முதலியவை விபரீதபாவனையாம். இவ்வாறு சிரவணாதி சாதனங்களானே ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்த மதிகாரியாய அறிஞன் சர்வான்மபாவப் பிராப்தியானே சர்வ பேதமற்றவனாகப் பூர்த்தி சர்வ லோகங்களையுமுடையவன், ஆங்குள்ள சர்வ போகங்களையுமுடையவன்; ஏனெனின், அவ்வறிஞன் சர்வலோக போக்கியங்களைத் தன்னான்மவடிவமாகவேகாண்பன், இச்சர்வான்மஞானமே எல்லாப்பொருள்களினடைவாம். எனப்பிரஜாபதியாய பிரஹ்மா சபையின்கண்ணே கூறியபோது தேவதைகளும் அசுரர்களும் கேட்டனர்.

சங்கை:—ஹே பகவன்! கக்கமது லோகத்திலிருக்கும் தேவதைகளும் அசுரர்களும் பிரஹ்மாவின் வசனத்தை யெவ்வாறு கேட்டனர்?

சமாதானம்:—ஹே மைந்த! பிரஹ்மாவின் சபையின்கண்ணே அவரது வாம பாகத்தையும் தக்ஷிணபாகத்தையும் அநேகமாயிரந்தேவதைகளும் அசுரர்களு மிருப்பர்; அவருள் ஜேஷ்டர்களின் அசுரர் தக்ஷிணத்தும் கனிஷ்டர்களின் சுரர் வாமத்துமிருப்பர்.

"த்வயா ஹ வை ப்ராஜாபத்யா ஜ்யாயாம்ஸோஸுரா: கநீயாம்ஸோ தேவா:"
என்னுஞ் சுருதியுமுளது.

(பொ-ள்.) அசுரரும் சுரரும் பிரஜாபதியினின்றும் உண்டாயினர், அவருள் அசுரர், ஜேஷ்டர், சுரர் கனிஷ்டர்; அவ்விருவரும் அத்தியந்தம் உக்கிர தேஜஸையுடைய பிரஹ்மாவினுடைய நேத்திர திருஷ்டியை வைத்தவராவர், பரஸ்பரம் விரோதிகளாயிருத்தலின் ஒருவரையொருவர் பார்ப்பதில்லை. இவ்வாறு சபையின்கண்ணே பிரஹ்மாவின் திருமுகத்தினின்றும் மோக்ஷசாதனத்தைப் பிரகாசிப்பிக்கும் வசனங்களையப்பவே, அதை அவ்வசுரரும் சுரரும் கேட்டு மூவுலகத்திருக்கும் தத்தம் இனத்தவர்க்குக் கூறினர் தேவராஜர் இந்திரர் கேட்டுத் தேவதைகளியாவரையும் நோக்கிக் கூறியதாவது.—ஹே தேவதைகளே! இவ்வார்த்தையை நமது பகைவர் அறியாதபடி எதேனுமுபாயம் செய்யுங்கள். அசுரராஜர் விரோசனனும் கேட்டு அசுரர்களியாவரையும் நோக்கிக் கூறியதாவது:—ஹே அசுரர்களே! இவ்வார்த்தையை நமது பகைவர் அறியாதபடி எதேனுமுபாயம் செய்யுங்கள். இங்ஙனமவ்விருவரும் தத்தம் அநுசரரால் அவ்வார்த்தையை வெளிப்படுத்துவதை நிவாரணஞ்செய்தனர். பின்னிருவரும் தம்மினத்தாரோடு மாராய்வதாவது:—ஹே மதிமான்களாய அநுசரர்களே! முப்புவியின்கண் எல்லா லோகங்களையுமடைவிப்பதும் ஆங்குள்ள எல்லாப் போகங்களையுமடைவிப்பதும் ஆகிய ஆன்மஞானம் நம்மால் அவசியமாய்ச் சம்பாதிக்கத்தக்கதாம், ஆனால் அஃதுறுவான் யாவரும் உலகத்தைப் பரித்தியாகித்துப் பிரஹ்மசபைக்குச் செல்லின், நமது துவாரங்களை யெப்போதும் பார்த்துக்கொண்டிருக்கும் நம் பகைவர்கள், நம் மூவுலகராஜ்ஜியத்தைத் தம்வயப்படுத்திக்கொள்வராதலின், மூலதனத்தை விருத்திபாக்க விய பாரத்தே முயன்றுண்டு ஆங்கு மூலதனமும் நஷ்டமாவதே போல, இந்நியாயம் நம்பாலும் அடையுறும்; ஆகையால், யாவும்விட்டு யாவரும் ஆங்குச்செல்லலாகாது; மற்றோ, நம்மியாவருள்ளும் யாராவதொருவர் மதிமானுப்ச சென்று பிரஹ்மாவினபால் ஆன்மஞானோபதேசம்பெற்றுவந்து நம்மியாவருக்கும் குருரூபமாயதை யுபதேசித்தல்வேண்டும், இவ்வாறவ்விருவரும் தத்தமக்குள் பரஸ்பரம் ஆராய்ந்து இந்திரனும் விரோசனனும் சென்றார்கள். அவ்விருவரும் பலம் மதி முதலிய குணங்களோடுகூடியவர், தைரியமுடையவர், எல்லா லோகத்திலும் புகழ்படைத்தவர், பிரஹ்மவித்யா இச்சையுடையவர், மிகவுமபிமானத்தோடுகூடியவர் பரஸ்பரம் வெற்றிகொள்ள இச்சையுடையவர், இத்தகைய இருவரும் சமிதாதிபதார்த்தங்களைக் காத்தேகவாந்து ஒரேகாலத்தே கட்டுகு உபயோபாத

நியாயரீதியாய்ப பிரஹ்மாவின் சமீபத்தேசென்றனர். நதியின்றீரத்தேயிருக்கும் குடிசையில் அரசசேவகனிருந்து அன்னுதிபதார்த்தங்கட்கு வரிவாங்கிக்கொண் டிருப்பின், வரிசசெலுத்தாமலே தன்றேபஞ்செல்ல இசசித்தவணிகன் குடிசை வழியைப பரித்தியாகித்து வேறு வழியில் இரவிற்சென்றனன், தைவயோகத்தால வழியிழைக்கவே சுங்கசசாவடிக்கண்வர விடிந்தது இதுவே கட்டகுடீப்பிரபாத நியாயமாம். இதுபோலவே இருவருமே ஒரேகாலத்தே பிரஹ்மாவின்பால வந்தனர். பிரஹ்மாவின் வசனத்தைப பகைவருணரா திருககுமாறு விரைந்த விரைவு நிறைய விலலே. ஹே மைந்த! அவ்விருவரும் தததங்காரியசித்தியால மிகவும மதிமான்க ளாதலின் உள்ளே பரஸ்பரம் பகைமையிருப்பினும் வெளியே சகோதரர்கள போலப் பரஸ்பரம நேயமுற்றுப பிரஹ்மவித்தையை யடையும்பொருட்டுப பிரஹ் மாவின் பாதத்தே தண்டமபோல நமஸ்கரித்துப பிரஹ்மாவை நோக்கி வினவினர். சாவ பூதபபிராணிகளினும முன்னுண்டான மனு முதலியோரினும முன்னுண் டாய நான்முகபபிரஹ்மா அவ்விருவருட் கருத்தெலலாமுணாந்து கர்வாதிதோட நீக்கபபொருட்டு, 32 வருடபரியந்தம வேறொரு காரியத்தே மனந்தந்தவர்போல விருந்தனர். இருவா மொழிகளைககேட்டும் கேளாதவாபோல விருந்தனர். இவ் வாறு பிரஹ்மாசெய்த உபேக்ஷாரூப நிராதரத்தையடைந்த இருவருமசர்வபோகங களுமற்றவரா யவர்சமீபத்தேயிருந்தனர். உலகத்தே மகாராஜாவின் நேயத்திற குரித்தாய ஒருவன் தன்பால் நிகழ்ந்த பெரிய குற்றத்தைக்குறித்து மகாராஜாவா லுபேக்ஷிக்கபபடினும, நிராதரத்தையும சர்வ போகங்களின்மையையுமடைந்த அவன் அரசன் முகத்தையே யெப்போதும பார்த்துகொண்டு மகா வெட்கத் தோடும் ஆங்கேவசிப்பன்; அதுபோல, அவ்விருவருமாங்கே வசித்தனர். மாலை யிலும் காலையிலும செய்யததககனவாய போஜனாதிகளும் அவர்கட்கு நியமமாகக் கிடைக்கவிலலை. இதுவே கிடையாதபோது மங்கையரைக்கூடல் முதலியவற்றை காதல் யாதுளது! இவவாறு 32 வருடமவரையும பிரஹ்மசரிய தருமத்தை பாலித்துப் பிரஹ்மா எபபோது நமமீது அனுக்கிரகம புரிவர் என இசசித்து எப்போதும் பிரஹ்மாவின் முகத்தைபபார்த்துகொண்டேயிருந்தனர். 32 வருட மானபின் பிரஹ்மா அவ்விருவா முகத்தையுமபார்த்துக கூறியதாவது:—ஹே இந்திரவிரோசன! உங்கள் போககிய போக்கியமாய சுவாக்காதி உலகங்களின் றாலபோகங்களற்றவராய் மகா துககத்தாலடைபத்தகததாய இவ்வுலகத்தே வெந் துயாவாயிலாய்வந்து எப்பயனடைவானிருக்கின்றீா எனப் பிரஹ்மா வினவவே, அவ்விருவரும இவ்வாத்மா அபஹதபாபமா எனபதாதியாய் முறகூறிய பிரஹ் மாவின் வசனத்தைபபடித்து இங்ஙனியமபினா.—ஹே பகவன்! அதிகாரிகட் கான்மஞானத்தாலே சர்வ லோகங்களின், ஆங்குள்ள போககியபதார்த்தங்களின் பிராப்தியாம் என முன்றுங்கள் அவையின்கண்ணே கூறினீாகளன்றோ, அதைக் கேட்டு ஆன்மஞானமடைய இச்சித்து யாங்களிருவரும தங்கள் சமீபத்தே 32 வருட மிருந்தோமாதலின், தாங்கள் தயவுசெய்து எங்களுக்கான்மஞான உபதே சஞ்செய்யவேண்டும். இவ்வாறு இவரியமபியபோது புன் சிரிப்புடன் பிரஜாபதி யானவர் இருவருக்கும முதலில நனு அவஸ்தையின் சான்றுய ஆன்மாவை நேத் திரத்திருபபதா யுபதேசித்தனர்: ஹே இந்திரவிரோசன! அதிகாரிகள் சாஸ்திர

சமஸ்காரத்தோடுகூடிய மதியால் சக்ஷுவினகண்ணே யாவன் காண்கின்றனனோ அவனே ஆன்மாவாவன்; அந்நேத்திரத்திருப்பவனே அபஹதபாப்மா, விஜரன், விமிருத்யு, விசோகன், விஜிகத்சன், அபிபாசன், சத்தியகாமன், சத்தியசங்கற்பன் ஆவன், அவனே பயமற்ற நிர்க்குண பிரஹ்மரூபனுமவன் வெல்லமியற்கையாய் மதுரமேயாயினும் நாவிற் பித்தத்தோடுற்றவன் மதுரவத்தையும் கைப்பாகக்கவர்வதேபோலப் பிரஜாபதிவசனம் ஆன்மாவினுண்மைவடிவப் பிரதிபாதகமாயினும், தம் விஷயசம்ஸ்காரரூபதோஷப்பத்தால் அவ்விருவரும் அவ்வசனத்திற்கு வேறு பொருளைக் கற்பித்துக்கொண்டு கூறுவதாவது: ஹே பகவன்! இச்சரீரப் பிரதிபிம்பரூபச்சாயையே நேத்திரத்தினகண்ணே காணவருகின்றதாதலின் தாங்கள் நேத்திரத்திருக்கும் சாயையையே ஆன்மவடிவமாய்க்கூறினீர்கள் அச்சாயான்மவடிவத்தை யாங்கள் புத்திபலத்தானும் நேத்திரபின்னத்தலத்தும் அறிகின்றோம்; ஏனெனின், நேத்திரத்தே சாயைவடிவ ஆன்மா தோற்றுவதேபோலத் தூயகண்ணாடியினகண்ணும், நீரினகண்ணும், கட்கத்தினகண்ணும் தோற்றும். ஹே பகவன்! தக்கிண நேத்திரத்தே காணப்படும் புருடனே ஆன்மா எனத் தாங்கள் கூறிய வசனம் காணும் புருடக்கருத்தானே சம்பாவியாது; ஏனெனின், தன் சாயையைக்காண இச்சையையுடையவன் கண்ணாடி முதலியவையின்றிக் கேவலந் தன் கண்ணில் தன் சாயையைக் காணமுடியான்; மற்றோ, கண்ணாடி முதலியவற்றிலேயே அதைக்காண்பனாதலின், யாங்கள் கூறிய தாப்பணம் ஜலம் கட்கம் முதலியவற்றேயிருக்கும் சாயைவடிவ ஆன்மா, தாங்களருளிய கண்ணிலிருக்குமான்மா எனபவற்றுள் யாது கவரத்தக்கது? ஹே மைந்த! இவ்வாறாய வசனத்தை அவ்விருவரும் தம் பண்டிதத்தன்மை யபிமானத்தால் கூறியபோது பிரஜாபதி இருவர் மயக்கத்தையுமுணர்ந்தாராயினும் அதை யுபேக்ஷித்துத் தம் துணைமை யனுபவானுசாரம் கூறியதாவது:—ஹே இந்திரவிரோசன! அவ்வாநந்தவடிவ ஆன்மா தாப்பணாதி யெல்லா வுபாதிகளினும் சாக்ஷிரூபமாய்ப் பிரதீதியாமாதலின் அது தாப்பணாதி யெல்லா வுபாதிகளினுமிருக்கும்; என அவர்க்கான்மோபதேசஞ்செய்து தம் மனத்தே பிரஜாபதி யெண்ணுவதாவது, இவர்க்கு யாம் ஆநந்தவடிவ விளக்கத்தையே ஆன்மரூபமா யுபதேசித்தேம்; ஆனாலிவர் மதிதோடத்தானே முதலில் நமதுபதேசத்தா லான்மபோதத்தையடையாதது போலவே இரண்டாவது முறை யுபதேசத்தானும் அடையாமல் சாயையையே ஆன்மாவென்றுணர்ந்தனர். என எண்ணி யிருவருக்குங் கூறியதாவது:—ஹே இந்திரவிரோசன! நீர் நிறைந்த இம் மண்பாண்டத்திலுங்களான்மாவைப் போய்ப் பாருங்கள், பார்த்தவஸ்துவை யெம்பாலவந்து பகருங்கள். ஹே மைந்த! பிரஹ்மா இவ்வாறு கூறியதன் கருத்திதுவாம்:—தாப்பணஜலாதி யுபாதிகளிலிருக்கும் சாயை நித்தியமன்று; மற்றோ, உபாதிபேதத்தானே பரிணாமியாமாதலின் கடபடாதிபோல அதனகண் அனான்மத்தன்மை வெளிப்படையாம். ஸ்புரணரூப சாக்ஷியே யுள்ளும் வெளியுமியாண்டும் பரிபூரணமாதலின் ஆன்மாவாம். இங்ஙனமிரண்டற்கும் மகாவிசேஷமுளது, அதனை யிவ்விருவருங் கவர்ந்திலர்; ஏனெனின், இவர்க்குப் பண்டிதத்தன்மைப் பேரபிமானமுளது, பரஸ்பரந்துவேடத்தாற்

சித்தம் மலினமடைந்திருக்கின்றதாதலின் இருவரும் நமதுபதேசத்தால் ஸ்புரண ரூப சாக்ஷியான்மாவை யறிந்திலர்; மற்றோ, மாறுகச சாயையையே ஆன்மாவென வெண்ணித தாபடணுதிகளிலிருக்கும சாயைகளுள் எவவான்மாக்கவரற்பாலதென வையுறறனா. யாமுஙகட்குக் கூறிய ஆன்மோபதேசத்தை நீங்களுண்மையாய்க் கவரவிலலை; மறறோ, விபரீதமாய்க் கவாநதீாசள் என யாமிவர்பாற கூறின் இரு வாக்கும மானபஙகமாய, ஆகவே இலஜ்ஜையுறுவா, உறவேமதிமங்கும், மங்கிய மதியால எமமொழிபபொருளொரு சிறிது மிலங்காதாதலின் இவா மயக்கத்தை வெளிபபடுதத ! ஆன்மோபதேசஞசெய்தல் எமக்குசிதமன்றும். இவ்வபிமானி கட்கு எவவுபாயததாலேனும ஆன்மபோதமுண்டாககவேண்டும்; ஏனெனின், சாஸ்திரததே இநநியமஙகூறபபட்டுளது:—சீடன் மதியிருககுமாறு கவாநது குரு சீடனுக்குணர்ததுக, சீடன் மதியை யுபேக்ஷிதது ஆசிரியா சீடனுககுப போதிக்கலாகாது. கருததிதுவாம.—உததமன், மத்தியமன், மந்தன், என்னும வேறறுமையானே சீடா மூவகையராவா; சத்துவகுணததை யதிகமாயுடைத்தாய் ரஜதமோ குணஙகுறைநதவா உததமராவா, இரஜோகுணததை யதிகமாயுடைத தாய்ச் சததுவதமங குறைநதவா மததியமராவா, தமோகுணததை யதிகமாயுடைத் தாய்ச சததுவரஜசு குறைநதவர் மநதராவா அம்மூவரும மதியின்கூர்மை மத யமை மென்மைகளால மூவகைபபடுவா அவருள எவனெவனுககு எவ்வெவ வாறு மதியாமோ அவனவனுக்கு அவ்வவ்வாறு மதியைககவாநதே குருபோதிக்க வேண்டும; என்னுங கருததையுள்ளததேவைததுப பிரஜாபதி அவாக்குத தாபப ணுதி சாவ உபாதிகளிலும ஆனமாவியாபகமென விடைபகாநதனர். யாமுமக்குப் பிரத்தியக வஸ்துவையுபதேசித்தும அறியாது அஞுன்மச சாயையை ஏன் ஆன் மாவெனவெண்ணுகின்றீா என வினடவிடுககிலா. இககருததானே பிரஜாபதி இருவாச்கும பானை நீரில தமமைபபாாகக உபதேசிததததாம. ஹே மைநத! பிரஹ்மாவின் உபதேசததை யுடகொண்டு இருவரும சென்று தமமைபபானை நீரிற பாாததனா, பாாததபின் மீணடும் பிரஜாபதிபால வநதுறறனா, உற றதைககணட பிரஜாபதி கூறியதாவது:—ஹே இந்திரவிரோசன! பானைநீரில் உஙகள் பிரதிபிமபததைப பாாதததால எதததத்துவததை நிசசயித்தீா எனக் கூறவே, மூடபாலகா தமபபிபபிராயததைத தநதைபாற கூறுவதேபோல இரு வரும பிரஜாபதியின் முன்பு இவ்வாறு தம்மபிபபிராயத்தைககூறினர். ஹே பகவன்! பாதமே முதல மஸ்தகமவரை நகசேசாதிகளோடுகூடிய இத்தேக வடிவ ஆனமாவையே பானை நீரிறகண்டோம. இவ்வாறுகூறப பிரஜாபதி மயங கிய அமமொழியைககேட்டுத தமமுபதேசமுயலவை நிட்பயனெனக் கருதி மிகத்துயரையடைநதனர். பின மீண்டும அவாககுணர்ததுமபொருட்டுப் பிரஜா பதி தமது மனததே இவ்வாறுராய்நதனர்:—இவ்விருவர் மதியையும் மோகிபபிக் கும ஒரு விசித்திர தோஷமிருககிறது அதன் பலத்தால் எமமுபதேசததை விப ரீதமாயே கவாகின்றனா; ஏனெனின், முதலில இவர்க்குச சூக்ஷுமரீதியாப் நேததிரத்திலான்மாவை யுபதேசிததேம, அதனுலிவர் சாயையையே யான்மா வெனவெண்ணினர். பின் மத்தியமரீதியானே தாபபணுதி யெல்லா உபாதிகளி லான்மாவை யுபதேசிததேம். அதனுனும, சாயையையே யான்மாவென வெண்

ணினர். பின் மென்மைமுறையானே பானையிற் பார்க்கச்சொன்னேன், அதனா லும் இத்தூலத்தையே யான்மாவென வெண்ணினர். ஆனால், 3-வதுபதேசத்தால் இத்துணை விசேடபோதமுண்டாயது —முன்தாப்பணுதிகளிலுறையும் சாயை யையே ஆன்மாவென வெண்ணினர். இப்போது பானையைப்பார்க்கவே சாயையை விட்டுத் தூலதேகத்தையே ஆன்மாவென வெண்ணினர் இங்ஙனாராய்ந்து சாயை யான்மாவை விட்டனர் :—பேதமற்றுக் காண்பவனது தேகமே மற்றையன் விழி முதலியவற்றே காணப்பெறுகின்றமையின். காண்பவனது தேகத்தே பேதமின் றும். விழி முதலிய உபாதிகளில் பிரதிபிம்பரூபச்சாயை தோற்றும்; அது பரி ணாமபேதத்தாலும், ரூபாதி குணபேதத்தாலும், பேதமுடையதேயாமாதலின் சாயை யான்மாவன்றும், மற்றோ, பேதமற்ற இத்தேகமே யான்மாவாம் என ஆராய்ந்து சாயாவான்மத்தன்மையை விட்டனராதலின், சாயையின்கண்ணே நாநா ரூபத்தன்மையைக்கண்டு சாயான்மத்தன்மையைப் பரித்தியாகித்ததேபோல, இத் தேகத்தும் நானாத்தன்மையைக்கண்டு இதனான்மத்தன்மையையும் விடும்படிசெய் விக்கு முபாயமொன்றைச் செய்யவேண்டும் அதாவது, இவ்விருவரும் முன் பானையின்கண்ணே பார்த்ததேகம் நக கேசாதிகளோடுகூடியதாம், மலினமாம், மலின வஸ்திரமுடையதாம், இப்போது நகாதிகளை யெடுப்பித்து நீ ழுழ்குளித்து மீண்டும் பானையைப் பார்க்கச்சொல்லவேண்டும், தங்கள் தேகத்தை முன்றேகத் தினும் வேறாகக்கண்டு சாயையைப்போலத்தேகத்தும் ஆன்மபுத்தியைப் பரித்தியா கிப்பர், என எண்ணி பகவானாகிய பிரஜாபதி அவர்க்குக் கூறியதாவது :—ஹே இந் திரவிரோசன ! நீவிரிருவரும் நககேசங்களையெடுத்துவிட்டு நீராழ்ந்து அழகிய வஸ்தி ரங்களையணிந்து, மேன்மையாய அலங்காரங்களைச்செய்துகொண்டு மீண்டும் பானை யில் ஆன்மாவைப் பார்த்துப் பின்பானையிற் கண்டதை வந்து கூறுங்கள்; எனப் பிர ஜாபதி கூறியபோது இருவரு முடன்பட்டு அவ்வாறே க்ஷவர ஸ்நானாதிகளைச் செய்துகொண்டு பானையிற்சென்று நோக்கினர், அதனால் மீண்டும் இத்தேகத்தி லேயே திடமான ஆன்மத்தன்மையைக்கவர்ந்து பிரஜாபதியை யிவ்வாறு கூறி னர் :—ஹே பகவன் ! இத்தூலதேகத்தின்கண்ணே ஆன்மத்தன்மை சித்தமாம். யாங்கள் பானையின்கண்ணே எங்களான்மாவைக் கண்டோமாதலின், இஃதே யான்மாவாம். என அவர் கூறவே மீண்டு மிவர் மயலின்றிடத்தைக்கண்டு உள் ளத்தே யெண்ணியதாவது.—அற்பமதியையுடைய இவ்விருவர்க்கு அன்வய வியதிரேகத்தானே ஆன்மபோதமுண்டாக்க ஆரம்பித்தேம் எல்லாப்பொருள் களினும் ஆன்மாவின் அனுகதத்தன்மை யன்வயமாம். திருசியப்பொருள்களில் வரவு போக்குத்தன்மை வியதிரேகமாம். இருவரும் பானையினுங்களைப்பாருங்கள் என்னுமுபதேசத்தானும் நககேசாதிகளை வரவுபோக்குடையதெனக் காண்பித்துத் தேகத்தினும் வேறாகவே ஆன்மநிரூபணஞ்செய்தேம். இத்தேகான்மத்தன்மை யின்கண்ணே எமது கருத்தின்றும், ஆனால் தம்மதித்தோடத்தானே தேகத்தினு ம்வேறாக ஆன்மாவையறியாது மாறாகத் தூலதேகத்தையே ஆன்மரூபமாயுணர்ந் தனராதலின், இவர் மயக்கத்தை நீக்க யாமோருபாயஞ் செய்யவேண்டும். அதா வது, தேகரூப ஆன்மாவின்கண்ணேசெய்யும் சந்தனப்பூச்சு முதலிய சர்வ சமஸ்

காரங்களும் சாயைவடிவ ஆன்மாவின்கண்ணே தோற்றும், சரீர சமஸ்காரத்தா லன்றிச் சாயையின்கண்ணே இடம்பொய்ச் சிறிதேனும் சமஸ்காரமின்றும், ஸர்வ சமஸ்காராசிரயமாதலின் இத்தேகமே யான்மாவாம். இச்சாயை ஆரோபித்தரு மாசிரயமாதலின் ஆன்மரூபமல்லவாம். அன்றி, சகானுடவரூபட்டமனும் ஜீவ னுக்கு இத்தேசமுளதாகவேயுளதாம், சாயையுளதாகவே யுட்பயன் எவர்க்கு முண் டாவதில்லையாம். இக்காரணத்தானும் இத்தேகமேயான்மாவாம். இவ்வாறு இத் தேகத்தின் மேன்மையை விடயம்செய்யும் மதியையங்கீகரித்து இவ்விருவரும் இத் தேகத்தே ஆன்மரூபத்தன்மையைத் திடஞ்செய்து கொண்டாராதலின், இவர் மதி யையங்கீகரித்தே சரீரான்மபுத்தியை விடுவித்து ஸ்புரணரூப முக்கிய ஆன்மாவின் கண்ணே இவர் மதியைப்பொருத்தவேண்டும் அவ்விதமிதுவாம் — இவர் ஆன் மாவென நினைந்த தூலதேகம் இயல்பாயே ஜனனமரணாதி விகாரமுடையதாயும், பகைவரால் பயத்தையடைவதாயும், பரிச்சின்னமாயும் காணவருகின்றது; இத் தகைய அநித்தியதேகத்தே அமரத்வாதிதருமம் எப்புராணதாதம்ய சம்பந்தத் தானே தோற்றுமோ அதையும் எமது சர்வ உபதேசத்திலும் காண்கின்றனர்; ஏனெனின், இவர் ஆன்மாவென எண்ணிய தேகமுதலிய எல்லாப்பொருள்களின் கண்ணும் இவ்வான்மா அத்தியாச சம்பந்தத்தானே அனுகதமாம்; அஃதின்றி எப்பொருளும் தோற்றாதாதலின், இத்தேகத்தே யிருக்குந் தருமங்களைச் சாயையின் கண்ணே அசம்பவமாய்க்கண்டு சாயையைப்பரித்தியாகித்துத் தேகத்தையே யான் மாவென எண்ணியதேபோல, இத்தூலத்தும் சம்பவியாதனவாயக் கூறப்பெறும் அம ரத்வாதி ஸ்புரண தருமங்களையும் கண்டு தாமே சரீரகர்த்த யான்மத்தன்மை மதி யைவிடுவர் என எண்ணிப் பிரஜாபதியிருவருக்கும் கூறியதாவது — ஹே இந்திர விரோசன! இந்த ஸ்புரணரூப ஆன்மா மரணம், பயம், தேசகாலவஸ்து பரிச் சேதம் அற்றது, பிரஹ்மரூபமாயது; இத்தகைய ஆன்மாவாய ஸ்புரணசொரூ பத்தை நீங்கள் எமது சர்வ உபதேசத்தின்கண்ணும் சாமானியரூபமா யனுபவித் தீர் எனப் பிரஜாபதி கூறியபோது, அவர் அவ்வுபதேசத்தானும் மீண்டும் தேகத்தின்கண்ணே ஆன்மரூபத்தன்மையை நிச்சயித்தனர். பிரஜாபதி கூறிய ஆன்மாவின் அமரத்வ அபயத்வாதி தருமங்களையும் தூலதேகத்தின்கண்ணே யங்கீகரித்தனர். ஹே மைந்த! இத்தூலத்தே அமரத்வ அபயத்வாதி தருமங்கள் சம்பவியாவாமாயினும், அவர் தூலத்தே அவற்றை யங்கீகரித்த அபிப்பிராயத்தை நீ கேட்டி! ஜரைரோகமுதலியவற்றை நீக்கும் இரசாயனவடிவ ஔஷத உபாய மும் நானாவகையாய மந்திர கற்பாதி உபாயங்களும் சரீரத்தை ஜரைமுதலியவற்ற தாக்குமாதலின், அவற்றானே இதற்கும் அமரத்தன்மை சம்பவிக்குமாதலின், இதை யமரஞ்செய்யும்பொருட்டு யாம் இரசாயனாதி யுபாயங்களை யவசியம் செய்ய வேண்டும். இத்தேகத்தே அவற்றானே அமரத்தன்மை சித்தமாயபோது அபயத் தன்மையும் முயல்வின்றியே சித்திக்கும்; ஏனெனின், மரணமுடைய ஜீவரே அதனாற்பயத்தையடைவர். அமரர் தங்கள் பகைவர் முதலியோரினின்றும் ஒரு காலும் பயப்படவேண்டியதில்லை. இத்தேகம் அபயமானபோது இதன்கண்ணே பிரஹ்மரூபத்தன்மையும் சம்பவிக்கும்; ஏனெனின், வியாகரணரீதியாய்ப் பிரஹ்ம சப்தத்திற்குப் பொருள் விருத்தியுடையதெனவாம்; சங்கோசாபாவம் விருத்தி

பாம்: சங்கோசப் பிராப்தி ஜீவாகட்டுப் பட்டதானேயுண்டாம். பாப்மற்றவனுக்கு எவ்வாறும் சங்கோசமுண்டாகாதாம். அல்லது, நானுவகைப்ப ரூபங்களைத் தரிக்குமாற்றல் விருத்தியாம், இவ்வகை விருத்தியும் இத்தேகத்தே சம்பவிக்கும்; ஏனெனின், போகபலத்தானும் திவ்ய ஔஷதி சேவிதபலத்தானும் மிருகம் அசுவம் யானை எருமை என்பனவாதி சரீரங்களைத் தரிக்கவும், பாவகசமான ஆகாரத்தைத்தரிக்கவும், நேரபாவரூபங்களைத்தரிக்கவும் ஆற்றலுண்டாமாதலின், இத்தேகத்தே அநந்த பிரஹ்மரூபத்தன்மை சம்பவிக்கும். அல்லது, உபதேசந் தொடங்கியகாலத்தே பிரஹ்மாவானவர் ஆன்மாவிற்கு அபஹதபாப்மா, விஜரம், விமிருத்யு, விசோகம், விஜிகத்சம், சத்தியகாமம், சத்தியசங்கற்பம் என்பனவாதியாய இலக்கணங்கூறினர். அவைபாவும் யோகாதியுபாயத்தானே இத்தேகத்தே சம்பவிக்கும்; ஏனெனின், இத்தேகமானது இரசாயனாதிகளாலே ஜராமரணமற்றதாம்போது சோகமுமற்றதாம், ஏனெனின், என்றும் ஜராமரணாதியுடைய ஜீவனே எப்போதும் சோகத்தையடைவன். மந்திர ஔஷதாதி பலத்தானே இத்தேகம் பசிதாகாதியுமற்றதாம். இங்ஙனம் அதிகாரி தனது தேகத்தை இரசாயனாதியுபாயங்களால் அமர அபாதிருபமாக்குக, ஆங்ஙனே தன் பலமகிமையானே பூராதி சர்வ லோகங்களையும் ஆங்குள்ள சர்வ போகவஸ்துக்களையுமடைவன். இப்பொருளில் சிறிதுமாத்திரையும் ஐயமில்லை. அல்லது, பிரஜாபதி முன்னமக்குச் சக்ஷுவின்கண்ணும், நீர்ப்பாணியின்கண்ணுமென நிழலின்கண்ணுமாமுபதேசித்தனர். அதனானும் அவ்வுவமையானே இத்தேகமானதே ஜரை மரணம் பாவம் சோகம் பயம் என்பதாதி விகாரமற்றதெனக் கூறினர் அவர் கூறியதின் கருத்திதுவாம்.—இச்சாயை சஸ்திரங்களானும் அக்கினி முதலியவற்றானும் நாசத்தையடையாததேபோலும், பாவம் சோகம் பயம் என்பதாதி விகாரத்தையும் அடைவுறாததேபோலும், இத்தூலதேகத்தும் மரண முதலியவை யடைவுறாவண்ணம் ஒருபாயம் அதிகாரி செய்பத்தக்கதாம். அல்லது, காலையிலும் மாலையிலும் இந்நிழல்விருத்தியுறுவதேபோல, இத்தேகமும் உபாயத்தானே விருத்தியையடையும், இதனானும் இத்தேகமே யான்மாவாம். அல்லது, இப்பலபானே நாசமற்றதாயினும் இந்நிழல் காரணநாசத்தால் நாசமுறுவதேபோல, இயல்பாகவே நாசமற்றதாயினும், இத்தேகம் காரணநாசத்தானே நாசத்தையடையும். அல்லது, பிரதிபிம்பரூபச்சாயைக்கு இத்தேகான்மாவே காரணமாதல்போல, இத்தேகான்மாவிற்கும் துவக்கு முதலிய ஏழு தாதுக்களே காரணமாம். சஸ்திரதாடனாதியாகிய நிமித்தத்தானும், நோய் முதலிய ஆந்தர நிமித்தத்தானும் வாதபித்தகபமென்னு முத்தோஷங்கலங்கும்போது அவ்வேழும் கலக்கத்தையடைந்து சரீரநாசமாமாதலின், சரீரபிம்பஸ்திரதன்மையானே பிரதிபிம்பச்சாயை திரமாவதேபோல, அதிகாரி மந்திர ஔஷதாதிகளின் சேவனத்தானே சஸ்திரம் அக்கினி முதலியனவும் ரோகாதிகளும் ஆகிய பாகிய ஆந்தர நிமித்தங்களையுண்டாக்காதபோது வாதாதி கலங்காவாம், அவை கலங்குதலின்றித் துவக்காதிகலங்கா, அவை கலங்காதபோது இத்தேகம் தகித்தல் வெட்டல் முதலியவற்றானே யொருகாலும் நாசமாகாதாம். அல்லது, யோகம் மந்திரம் ரசாயன முதலிய ஔஷதாதி உபாயங்களானே

சித்தியுற்றதேகம் அக்கினியின்கண்ணே ஜலம்போலச் சீதளமாயிருக்கும், ஜலத்தே கற்போலிருக்கும், பிருதிவியின்கண்ணே பிருதிவியைப்போலேனும் ஜலசமானமாயேனும் இருக்கும், வாயுவில் வாயுவைப்போலிருக்கும், ஆகாயத்தே ஆகாயம் போலிருக்கும். அல்லது, யோகாப்யாசகாலத்தே இவன் பிருதிவி முதலிய பஞ்சபூதங்களைத்தரித்தபோது இவன் தேகம் அவற்றின் ஒப்புமையையடையுமாதலின் சஸ்திராதிகளானும் பேதனத்தையடையாது. அம்பு முதலியவற்றானே பேதனமுற்றபோதினும் ஜலம் முன்போல இருப்பதேபோல, யோகசித்தனது தேகம் அம்பு முதலியவற்றால் பேதனத்தையடைந்தபோதினும் மீண்டும் முன்போலவேயிருக்கும். ஆகையால் மந்திர ஔஷத யோகம் முதலிய உபாயங்களால் இத்தூலதேகத்தும் அஜரத்தன்மை, அமரத்தன்மை, அபயத்தன்மை முதலிய தருமம் சம்பவங் கூடும். ஹே மைந்த! இவ்வகையாய விசாரத்தைத் தம் மனத்தேசெய்து குபுத்தியுற்று ஆத்தசாஸ்திர காமசாஸ்திர சமஸ்காரங்களால் தூடிக்கப்பட்ட சித்தத்தையுடைய அவ்விருவரும் இத்தூலத்தையே யான்மாவென வுணர்ந்தனர். பிரஹ்மாவினுபதேசத்தானே சரீரத்தை யான்மாவாயுணர்ந்து அவ்விருவரும் தம் மனத்தே மிக மகிழ்வுற்றனர், தாம் கிருதகிருத்தியரென எண்ணினர், பின் பிரஜாபதியை நமஸ்கரித்துத் தம் முலகத்தையடைவான் சென்றனர். அக்கால பிரஜாபதி மௌனத்தையுற்றிருந்தனராதலின், அவரைப் போகவேனும் இருக்கவேனும் சிறிதுங்கூறவில்லை. இவ்வாறு அவ்விருவரும் போம்போது பிரஹ்மா பார்த்துத் தம்மனத்தே யெண்ணியதாவது:—தேவதைகளின் பதியாய இந்திரனும், அசுரபதியாய விரோசனனும் தம்மைப்பண்டிதரெனவெண்ணினர், உலகத்தும் இவர் மகாபலமதியுடையரென்பதாகப் பிரசித்தம். இவர்க்குப் பரஸ்பரம் மிகவும் விரோதமுண்டு, மேலதிகாரத்த அபிமானியராதலின் மீண்டும் நம்பால் வினவவில்லை; மற்றே, இத்தேகத்தையே யான்மாவென வெண்ணி இருவரும் எம்மை நமஸ்கரித்து விரைவாகவே தம்முலகத்தே சென்றனர். இப்போது யாம் ஒரு பணியாளையனுப்பி நும்மிருவருக்கும் ஆன்மாவின் உண்மைப்போதமுண்டாகவில்லையாதலின், நீர் நுமமுலகத்தே செல்லாதீரெனக்கூறிப் போவதைத் தடுப்பின், இராஜசப்பிரகிருதியையுடைய இருவரும் தம்மபிமானநாசத்தானே குரோதவான்களாய் வாழுகிலையார்; ஏனெனின், மானத்தைப் பங்கஞ்செய்யும் வசனத்தைச் சிறிது கேட்பதனானேயும் சினப்பகைவன் வயத்தராயெம்மைக் காணவருவர். அத்தகைய இவ்விருவரையும் அவ்வாறு யாம் செய்யின் சினத்த இருவரும் கனத்த போர்புரிவர். இருவரும் சுராசுரர்களின் ஸ்திரீகளின் பதிகளையழித்து அவரை விதவைகளாக்குபவர், மாம்சபக்ஷணஞ்செய்யும் கழுகு முதலிய ஜீவர்கட்கு ஆனந்தத்தைத் தருபவர், சாதுவியற்கையையுடையவரைப் பயமடையச்செய்பவர், இத்தகைய இவர் சினந்து சதுரங்கசேனையை யழிக்கும் போர் தொடங்குவராதலின், இவ்விருவரின் ஆன்மஞானப்ரசங்கத்தே யாதொரு நிமித்தமுமின்றி அகஸ்மாத்தாகவே சர்வ பூதநாசமாதல் கூடாதாதலின் போவதைத்தடுத்தல்கூடாது.

சங்கை:—ஹே பகவன்! போரின் அச்சத்தால் பிரஹ்மாவானவர் இருவர் செல்கையையும் தடுக்கவில்லை என்பது மேன்மையல்ல; ஏனெனின், தேகத்தை யான்மாவென வெண்ணித் தம் முலகத்தே யவரடைவாராயின், சர்வ ஜீவர்கட்கும்

தேகான்மவாதத்தை யுபதேசிப்பர், அந்நிச்சயத்தாலே உயிர்களெல்லாம் அனர்த்தத்தையடையுமன்றோ?

சமாதானம்:—ஹே மைந்த! அத்தேகான்மவாதத்தினின்றும் யாவரும் நீங்கும்பொருட்டுப் பிரஜாபதி தேகான்மவாதியாகத் இவ்வாறு சாபந்தந்தனர்:— தேவதைகட்கும் அசுரர்கட்கும் மனுடர்கட்கும் இந்திர விரோசனர் போல்க் குருவாயேனும், பரம்பரையாயேனும் தேகான்மவாதத்தை யுபதேசிக்கின், அசிட்டர் யாவரும் இப்பிறப்பினும் மறுபிறப்பினும் மோக்ஷமார்க்கத்தினின்றும் பிரட்டராவர்; ஏனெனின், அம்மூடர் இத்தேகத்தையே யான்மாவெனவெண்ணி இதைக் காக்கும்பொருட்டு நாநாவகையாய உபாயஞ்செய்வர், அவ்வுபாயமெல்லாம் நிட்பலமாம்போது மிகுந்த துன்பத்தையுறுவர், ஏனெனின், அக்கனிரூப பக்குவ அன்னமும், பயிர்வடிவ பக்குவ அன்னமும் நானாவகையாய உபாயங்களாலும் நாசமற்றன வாயிராவாம்; மற்றோ, அவசியம் அழிவதேபோல இத்தூலதேகமும் நானாவகையாய உபாயங்களாலும் நாசமற்றதாய்த் திடமாகாது அவசியம் நாசமேயுறும். அல்லது, சர்வ பூதப்பிராணிகளையும் தாரணைசெய்யும் மகா பர்வதங்களோடுகூடிய இப்பிருதிவியும், நீரால் நிறைந்த கடலும், தேயு வாயு ஆகாசம் மூன்றும் அழியும்போது புற்புதம்போன்ற விப்புற்கலம் எவ்வாறு நிலைபெறும்? நிலைபெறாதென்க. அல்லது, சுர முதலிய வியாதிரூபசத்துருவும் மிருத்தியுரூபசத்துருவும் ஆகத்தின் அன்ன ஜலத்தோடு சேர்ந்திருக்கும், இரத்தவர்ணமுடைய அங்காரவடிவ அக்கினிக்குச் சமானமாய்ப் பசிவடிவ தாகம் தேகோதரத்தே எப்போதுமிருக்கும், தேகத்தின் புறத்தும் சாவ தேள் முதலிய பூகரூபதாகம் எப்போதுமிருக்கும், சஸ்திர அஸ்திரரூப மிருத்தியு தேகபாகிபத்தே சஞ்சரிக்கும். வாழைத்தம்பம் தோன்மாத்திரமாதலின் சாரமற்றதாதல்போல ஆராயினும் இத்தேகமும் சாரமற்றதேயாம். இத்தகைய இத்தூலதேகம் எவ்வாறமரமாகும்? மற்றோ, இதன்கண்ணே யெவ்வகையானேனும் அமரரூபத்தன்மை சம்பவியாதாம். அல்லது, சர்வ ஜீவர்களின் இத்தூலதேகம் அறம்பாவவடிவ நிமித்தகாரணத்தாலே உற்பன்னமாம், பஞ்சபூதரூப உபாதானகாரணத்தினின்றும் உண்டாம் காமங்களும் பூதங்களும் நாசமாம்போது இத்தேகம் எவ்வாறு திடமாம்? திடமாகாதென்க. அல்லது, இத்தேககாரணரூபகருமம் 100 வருட ஆயுளை மனுடர்க்குக் கொடுக்குமாயினும் பின்னர் அதிக ஆயுளைத்தாராதாம்; ஏனெனின், ஜகத்கர்த்தாவாய ஈசுரர் சிருட்டியின் ஆதிகாலத்தே விவத்தைசெய்தவண்ணம் கருமாதிகள் பலத்தைக்கொடுக்குமாதலின், நூறு வருடத்தின்பின்பு இதன்கண்ணே அமரத்தன்மை யெவ்வாறும்? ஆகாதென்க. அல்லது, வைத்தியசாஸ்திரத்தே இருடியர் கூறியிருக்கும் இரசாயனௌடதங்கள் கேவலம் தேகரோகாதிகளை நீக்கும்பொருட்டனவேயாமன்றி அமரத்தன்மையின்பொருட்டன்றும் யோகாப்பியாசகாலத்தே தாரணையால் வயப்படுத்திய பிருதிவி முதலிய பஞ்சபூதங்களும் யோகியின் பலத்தை விருத்திசெய்வதற்கேயாமன்றி யோகியை யமரஞ்செய்வதற்கன்றும். இரசாயனௌடதங்களாலும் பஞ்சபூததாரணையாலும் இத்தேகம் அமரமாகுமாயின், இரசாயனௌ

ஔஷதப்பிரவாதத்தரும், பூதங்களின் குணப்பிரவாத்தரும் மிருத்தியுவை யடையவேண்டியதில்லை ; மிருத்தியுவையடைந்தனராதலின், அவற்றின்கண் தேகத்தை யமமசெய்யும் ஆற்றலின்றும். அல்லது, ஈண்டு பிறப்புடைய பொரு ளெல்லாம் அவசியம் நாசமுடையனவாம், கடபடாதிகள் பிறப்புடையனவா யழிவை யவசியமடைவதேபோல இத்தேகமும் பிறப்புடையதாதலின் அழிவையு மவசியமடையும். அல்லது, எல்லாமனுடா சரீரங்களும் ஐந்துவருடபரியந்தமோ பாலிய அவத்தையுடையனவாம், பின் 16 வருடமவரை குமார அவத்தையுடை யனவாம், பின் 60 வருடமவரை யௌவனமுடையனவாம், பின் விருத்த அவஸ்தை யுடையனவாம். இவ்வாறு சாவ தேகதாரி ஜீவாகட்கும் தத்தமது தேகநாசம அநுபவசித்தமேயாம். இத்தகைய இது எவ்வாறு நித்தியமாம்? அல்லது, உயிர் களின் மரணம் தேகத்தேதாடேயுண்டாம், தேகமிருப்ப அதை நீக்கயாதொருபாய முமின்றும். இவ்வாறாதலையைப் புராணத்தேத ஸ்ரீ வியாசபகவானும் கூறியுள் ளார் :—

“ ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர் தேஹேந ஸஹ ஜாயதே ।
அத்யவாப்தசதாந்தே வா ம்ருத்யுர் வை ப்ராணினாம் த்ருவ꞉ ॥”

“ பிறப்பவ ரிறப்புவீர பேணுமிவ் வுடல்தோடே
பிறப்பதா மவ்விறப்பும் பிறங்குவ தின்றேயேனும்
சிறப்புறு வருடம்நூறு சென்றபின் னேனுஞ்சோக
இறப்பது திண்ணமன்றே இம்பரில் வந்தபோகமே ”

(பொ-ள்.) ஹே வீர ! ஜன்மமுடைய பிராணிகளின் மிருத்தியு தேகத் தோடேயுண்டாம், அஃதின்றேனும் நூறுவருடங் கழிந்தபின்னேனும் ஆகுக, ஆனால் ஜன்மமுடைய பிராணிகட்கு மிருத்தியு அவசியமாயுண்டாம் அல்லது, அம்மிருத்தியுவை நீக்குதற்கு இஃதோருபாயமாம் :— மீண்டு மிதத்தகங் கவாதலா காதெனபதே : இஃதொன்றொழிந்து வேறொரு மரணநீக்க உபாயம் மூவுலகத்து மின்றும். இஃதன்னிய நூலின்கண்ணும் கூறப்பெற்றுளது —

“ ம்ருத்யோர் பிபேஷி கிம் மூட பீதம் முஞ்சதி கிம் யம꞉ ।
அஜாதம் நைவ க்ருஹ்ணாதி குரு யத்னமஜந்மனி ॥”

“ காலனி னின்றும்மூட கலங்கலேன் கலங்குமுன்னைக்
காலனுங் கண்டுவிண்ட லுண்டுகோல் கருவிலாரைக்
காலனுங் கவரான்காலன் கவருதல் தவிரவேண்டின்
மாலேனும் பிறப்பைப்பெற்றும் மகிழுமெய் யுணர்வைச்சோக.”

(பொ-ள்.) ஹே மூட ! மிருத்தியுவினின்றும் நீயேன் பயமுறுகின்றாய் ? நீ பயமுறுவதைக் கண்டு யமராஜா விட்டுவிடுவாரா என் ? விடார். எவர்க்கு ஜன்ம மில்லையோ அவரைத் தருமராஜா கவராராதலின், தருமராஜாவினின்றுந் தப்ப நீ விழையின் ஜன்மத்தையறுக்கும் ஆன்மஞானத்தே முயலுதி. இத்தகைய பிறப்பிறப்பை மாற்றும் ஆன்மஞானம் இத்தேகான்ம வாதிகட்கு மிகத் துர் லபமாம் ; ஏனெனின், இத்தூலதேகம் மரணத்தின்பின் நாய் முதலியவற்றா

றின்னப்படியே விட்டை வடிவமாம். அக்கினியின்கண்ணே தகிக்கப்பெற்றே சாம்பராம், குழியின்கண்ணே வைக்கின்றே மண்ணாம், இத்தகைய அழியுமுடலை யான்மாவென எண்ணிய தேகான்மவாதி ஆன்மஞான அடைவின்பொருட்டு மனத்தாலும் முயலான் அல்லது. சர்வ தேகான்மவாதிகளின் குருவாய் பிரஹ்லாதனது மைந்தனாகிய விரோசனனும், தேவராஜாவாய இந்திரனும் தரித்த தேகங்கள் மரித்தபின் விட்டை சாம்பர் மண்ணாவசியமாம் இவர் தேகமும் இத்தியையடையின் இதர ஜீவர்களின் தேகத்தைக்கூறுவதென்! அல்லது, அம்மூடர் தேகத்தையே ஆன்மாவெனவெண்ணி விவேக சந்தோஷாதி குணங்களற்றவராய்க் கேவலம் பாவகருமத்தையே செய்யின் அதனால் பரலோகத்தே சிறிது மாத்திரையும் சுகத்தையடையாமல் கேவலந் துக்கத்தையேயடைவர். அவற்றை வாக்கால் கூறுவது முடியாதாம். இந்திரனும் விரோசனனுமுபதேசிக்கப்படும் தேகான்மவாதம் எவ்வெவ்வுயிர்களிடம் பிரவேசமாமோ அவர்யாவரும் இரண்டுலகத்தும் துயரையே யுறுவராதலின், இத்தேகான்மவாதம் மகா கோரமாயதாம். ஹே மைந்த! இவ்வாறு தேகான்மவாதத்தாலே பலகாந்த அனர்த்தப்பிராப்தி வடிவமாயதனைச் சிந்தித்துப் பிரஜாபதியானவர் போதினைச்சத்தால் இருவர்க்கும் யாதொன்றுங்கூறாமல் மௌனமாயிருந்தனர். பின்னவ்விருவரும் தத்தமுலகத்தே சென்றனர். இப்போது இருவருள் விரோசனவிருத்தாந்தங்கூறுவாம்:—ஹே மைந்த! தேகரூப ஆன்மாவையுணர்ந்து அகங்காரம் பிரசன்னத்தையடைந்த விரோசனன் பிரஹ்மலோகத்தினின்று மிலாவிரதேசமெனும் அசுரசபையையடைந்தனன். அசுரரோ இயற்கையிலேயே தாமதர், இராஜோகுணத்தாலே சூழப்பட்டவர், சத்துவ குணலேசமாத்திரமுமின்றியவர், எப்போதும் விசாரமற்றவர் ஆவர். அத்தகையவர் குழுமிய அவையின்கண்ணே வந்து அவரால் மிகவும் சன்மானிக்கப்பட்டுச் சூரிய சமான தேஜசையுடைய அவ்விரோசனன் உயர்ந்த ஆசனத்தேயிருந்தனன், பின்னம் மூடனாய் பாஹ்யலோகத்தே மிக்க நஷ்டத்தோடும் கவர்ந்த தேகான்மவித்தையை எல்லா அசுரர்கட்கும் உபதேசித்தனன். அவ்வசுரரோ உபதேசத்தின் முன்பே அநேகம் வகையாய ஸம்ஸ்காரங்களால் இத்தேகத்தையே ஆன்மாவென வெண்ணியவராதலின், பின்னைக் குருசமீபத்தாய வாயிலாயுணர்ந்து அத்தியந்தம் திடநிச்சயஞ்செய்தனர். ஹே குமர! இவ்வாறவ்விரோசனன் சர்வ அசுரர்கட்கும் பிரஜாபதியின் சர்வோபதேசத்தையுமுபதேசித்து மீண்டுங் கூறியதாவது:—ஹே அசுரர்களே! நீவிர் இத்தேகரூப ஆன்மாவையே எப்போதும் பூஜைசெய்யுங்கள், இதனினும் வேறாய அக்கினி பிராஹ்மணாதிகள் யாவற்றையும் ஒருகாலும் பூஜியாதீர்கள், ஏனெனின், இதனினும் வேறாகிய அவையாவும் இதற்கு பகாரமாதலின் இதனது அங்கமாம், இதுவே அவையாவற்றிற்கும் அங்கியாம். அத்தகைய இதனை யாவினும் மேலாயறிவதே ஆன்மாவின் பூஜனமாம். ஹே அசுரர்களே! இரண்டுலக சுகத்தையுமுடைய இச்சித்த அதிகாரி தன் குருவைப்போல இத்தேகரூப ஆன்மாவையே நானாவகையாய பீதாம்பரங்களாலும், சுவர்ணத் தழுத்திய நானாவகை ரத்தினங்களாலும் பூஜைசெய்க, அத்தியந்தமத்தகத்தினின்றுங்கிளம்பிய முத்துக்குஞ்சங்களாலும், சூரிய சமான தேஜசையுடைய நானாவகை

யாய அலங்காரங்களாலும் பூஜைசெய்க. கோபளன்பரிசமுடையனவும் அழகியனவும் சுகந்தமுடையனவும் ஆகிய விசித்திர புஷ்பமாலைகளாலும், காப்பூராதிகளோடுகூடியதும் சீதள ஜலத்தோடுகூடியதும ஆகிய சந்தனத்தாலும பூஜைசெய்க. சைய்யை ஆசனம் அன்னம பானம் என்பன முதலிய பொருள்களாலும் பூஜைசெய்க. இவ்வாறு அநேகம வகையாய பொருள்களால சிரத்தையுடன் இத்தேகரூப ஆன்மாவைப் பூஜிப்பவன் இரண்டுலகத்தும் சுகத்தையடைவனாதலின், சுகத்தையவாவியவன் இதை யவசியம் பூஜைசெய்க.

சங்கை :—ஹே பகவன்! பிரத்தியக்ஷ நாசத்தையுடைய இத்தேகத்தைப பூஜிப்பதானே யாதொருபலமுங் கிடைக்கமாட்டாதன்றோ?

சமாதானம் :—ஹே அசுரர்களே! இரசாயனாதி யுபாயங்களால சித்தித்தன்மையை யடைந்த இத்தேகவடிவ ஆன்மா ஒருககாலும மரணத்தையடையாது; சித்திதன்மையாகாத தேகத்திற்கு மரணாவஸ்தையை விசாரமற்ற மூடர் அங்கீகரிப்பினும், விவேகியா இததேகம் மரணமுற்றதென மரணமதியால தேகத்தை யக்கினியின்கண்ணே தாகஞ்செய்தல தகாதாம; ஏனெனின், போர்சசாலையின்கண்ணே சஸ்திர அஸ்திரதாடனத்தானே பீடிதராய சூரவீரர் சிறிதுகாலமவரை தேரின்கண்ணே சாவசேஷ்டையுமற்ற மூாசசிதராகச சயனஞ்செய்வதேபோல, இத்தேகமும் இரசாயனாதி சித்திகளையடையாமல் சிறிதுகால பரியந்தம் மரிததலேபோல மூர்ச்சையையுற்றுச சயனஞ்செய்யும; ஆனால் மரியாதாதலின் அவ்வான்மாவின் பந்துக்கள் மரண சங்கையானே தேகத்தை அக்கினியின்கண்ணே தாகஞ்செய்துவிடலாகாது; மற்றோ, அவாகள் முதலில அதை மேன்மையாய தீர்த்தத்தான் மூழ்குவித்துச சுகந்தியையுடைய புஷ்பங்களால அலங்கரிக்குக. நானாவகையாய வஸ்திரங்களாலும, நானாவகையாய மாலைகளாலும அலங்கரித்து விமானத்தேற்றி நானாவகை வாத்தியங்களுடன் வெளியேகொண்டுசெல்க பக்ஷித்தற்கு யோக்கியமாய பக்ஷியம் போசசியம லேகியம சோஷியம என்னும நாலவகை யன்னத்தையும், சுகந்தியையுடைய சீதளநீரால நிறைந்த கலசங்களையும் வெளியேகொண்டு செல்க. சென்று தேகம வசித்தற்கு யோக்கியமாகிய பூமியின்கண்ணே குழிவடிவகிருகமுண்டாக்கி அதை நாற்புறமும் தூய்தாக்கி, கோமள ஆசனம்விரித்து அதன் மேற் றேகத்தைவைத்து இருபுறமும பக்ஷிக்கத்தகுதியாய நால்வகை யன்னத்தையும் நீர்க்கலசங்களையும வைக்குக. மகாராஜாவின் சேவகன் அவர்பொருட்டு நானாவகையாய சாமக்கிரிகளைத் தயார்செய்துவைப்பதேபோல உறவினரும் அத்தேகசமீபத்தே நானாவகையாய போக்கியபதார்த்தங்களைச சேகரித்துவைக்குக. பூமியின்கண்ணேசெய்யும கிருகம் தேகரூப ஆன்மாவின் தீர்க்க நித்திரைத்திதியை யழிக்காமலிருக்கவேண்டும, அக்கிருகத்தின்மீது ஒரு மண்டபமாகிய வேதிகை செய்யவேண்டும, அதனால் அக்கிருகம நெடுநாள்வரை யழியாமலிருக்கவேண்டும். அதன்கண்ணே மழைநீர் புகலாகாது, வெய்யிற்றாபமும் புகலாகாது, மாமச பக்ஷணிகளாகிய நரி முதலியவையும் புகலாகாது. இவ்வாறுறவினர் நல்வகையாய்க் காப்பாற்றின் அத்தேகம் மகாராஜாவைப்போலச் சுகபூர்வகம் நெடுநாள்வரை சயனஞ்செய்யும். ஹே அசுரர்களே! தேகான்மவாதத்தே முயல்வித்த பிரஹ்மா

தமது பேடையைப்பார்க்கவாராதவரை அத்தேகத்தை சுகமாய்ச் சயனஞ்செய்யும். அவர் கிருபையோடும் பேடையை நோக்கவரின் வாயுவால் யாண்டும் வியாபகமுற்ற பிரஹ்மாவின் தேக சுகந்தத்தானே அத்தேகங்களியாவும் நீண்ட நித்திரையினின்றும் எழும். சஸ்திர அஸ்திர தாடனத்தானே மூர்ச்சையையடைவுற்ற சூரவீரன் ஒரு வாயுவின் பரிசத்தானே விரைவாகவே மூர்ச்சையினின்றுங் கிளம்பி முற்சம்ஸ்காரவயத்தானே மீண்டும் தன் சத்துருவை யழிப்பதேபோல, இரசாயனசித்தி உபாயங்களில் முயன்றுகொண்டிருப்பவன் தீர்க்க நித்திரையின்கண்ணே யமரின் பிரஹ்மாவின் சுகந்தத்தானே நித்திரையினின்றும் எழுந்து பூர்வ சம்ஸ்காரவயத்தானே மீண்டும் இரசாயனசித்தியடைவின்பொருட்டு முயல்வன். இவ்வாறு முயன்றுகொண்டேயிருந்து ஒரு காலத்தே இரசாயனசித்தியையடைந்து அவசியம் அமரனாம். அமரனாகிய யோகியின் தேகம் ஒருகாலும் அழிவையடையாது. ஆகையால், ஹே அசுரர்களே! தேகரூப ஆன்மாவை யமரஞ்செய்யும்பொருட்டு நீவிர் யாவரும் இரசாயனசித்திகளைச் சித்தஞ்செய்மின், யோகபாராயணராமின், கவையற்றவராய்ச் சத்துருக்களாகிய தேவதைகளை யழிமின், அவிவேகிகளாற் பூஜிக்கற்குரிய பிராஹ்மணர் கோக்கள் தேவதை சாது முதலிய தேகங்கள் வேறு தேகங்களினும் விலக்ஷணமன்றும், சமானமேயாம்; ஏனெனின், இருகாலுடைய மறையவரிடத்தே இருகாலுடைச் சூத்திராதியரினும் சிறிது மாத்திரையும் விலக்ஷணத் தன்மையின்றும், சமானமேயாம் நாற்காலுடைக் கோக்களில் நாற்காலுடைப் பரிமுதலியவற்றினும் சிறிது மாத்திரையும் விலக்ஷணத்தன்மையின்றும், சமானமேயாம். இவ்வகைச் சமானமுடைய இருவருள் இவர் பூச்சியர், இவர் அபூச்சியரென்னும் விஷமத்தன்மை கற்பனை அயோக்கியமாம் அவர் சரீரங்கள் விசேஷமின்றியனபோலவே அவற்றின் காரணமும் விசேஷமின்றியதாம்; ஏனெனின், பிராஹ்மண சரீரம் காமத்தோடுகூடிய பிதாமாதாக்களின் சுக்கில சோணிதத்தினின்றும் உண்டாவதேபோல இதர சரீரங்களுமாமாதலின், காரண விசேடத்தானும் அவர்பால் விசேடத்தன்மை சம்பவியாதாம். ஹே அசுரர்களே! சர்வ ஜகத்தின் கருத்தாவாய ஈசுரர் பிராஹ்மணர்களிடத்தே பக்ஷபாதமுடையவராதலின், அவர்பால் யாவரினும் அதிகத்தன்மையிருக்கின்றது என நீவிர் கூறினும் சம்பவியாதாம்; ஏனெனின், நூலுணர்ந்தோர் கூறும் ஈசுர இலக்கணம் இக்காமத்தின்கண்ணே பொருந்தும்; காமத்தினும் வேறாகக் கடவுளென்பதொன்றில்லை. இப்போது அதைக்காண்பிப்பாம் — ஹே அசுரர்களே! இக்காமமே எல்லாவுயிர்கட்கும் தாயுந்தந்தையும், விப்பிரரும், கோவும், தேவதையும், சாதுவும், அண்ணன் முதலிய உறவினரும், தாதாவும், பலாத்காரத்தாலேனும் தன்னிச்சையாலேனும் வஸ்துவைக் கவரும் பிரீதியையுடைய சுவாபவனும் ஆமாதலின், இதுவே சர்வ ஜகத்காரணமாம். இதுவன்றி வேறொன்றும் ஜகத்காரணமாகாதாம். பிருதிவியின்கண்ணேயிருக்கும் சர்வ அம்சரூப ஜலத்தினபேக்ஷயானே சமுத்திரம் அம்சிரூபமாமாதலின் சமுத்திரம் அவற்றினும் மேன்மையதாமாறே, ஈண்டுத் தேகத்தினும் வேறாய பொருள்களை விடயஞ்செய்யும் காமங்கள் யாவற்றினும் தேகவிஷயககாமமே மேன்மையதாம்; ஏனெனின், பிரஹ்மாண்டத்தேயிருக்கும்

தேவதைகள், முனீசுரர், அசுரராகியயாம், முக்காலத்தும் நிகழும் மனுடர் முதலிய பிராணிகள் யாவரும் அவ்வப போக்கியபபொருள்களின் காமத்தானே தத்தம் தேக வியாபாரத்தைச்செய்கின்றனர். காமமின்றி யெப்பிராணியும் எவ்வியாபாரத்தும் முயல்வதில்லையாதலினாலும், தேகத்தினும வேறாய சர்வ போக்கியபதார்த்தவிஷயக சர்வ காமங்களும் தேகப்பொருட்டேயாமாதலினாலும், காமத்தினும் காமவிடயங் கள் யாவற்றினும் இததேகமே மிகவும் மேன்மையுறறதாம். ஆகையால, ஆஸ்திக ரால் காபபாறறத்தகுதியாய பிராஹ்மணர் கோ தேவதை சாது முதலிய எவரினும் நநதேகமே மேன்மையதாம், யாவும் தேக உபகாரங்களாம்; ஆகவே நீவிர் உமது தேகத்தையே பிராஹ்மணர் முதலியவராக நினைந்து எப்போதுங் காப்பாற்றுமின். இவ்வுலகத்தே எக்கருமம சுகததையடைவிக்குமோ அது புண்ணியமாம், துக்கத் தையடைவிப்பது பாவமாம். பசு முதலியவற்றை யிம்சிததல், பிறன்மனை தழுவல், பிறன்பொருள் கவரல முதலிய கருமஙகள் பிரசித்த சுகததையடைவிப்பனவாத லின் புண்ணியகருமங்களாம். அதிகாலை ஸ்நாநப், அக்கினிஹோத்திரம், சாநதி ராயணவிரதம் முதலியவை பிரசித்த துக்கம் பயபபனவாதலின் பாவகருமங்க ளாம. இவற்றை நீவிரொருகாலும் செய்யாதொழிமின்; கூறிய புண்ணியததையே செய்மின். தேகான்மாவிற் கனுகூலமாயிருப்பதைத் தேவதையெனவறிமின், சாது வென வறிமின், பிரதிகூலமாயிருப்பதை அசுரரெனவறிமின. அத்தகையவறறை யவசியம கொன்மின். ஒருகால் தம்பிதா முதலியோரும் பிரதிகூலமாயின் அழி மின்; ஏனெனின், இவ்வுலகத்தேயிருக்கும தாய் தந்தை தஙகை தம்பி மருகி மனைவி மைநதன் முதலிய சம்பநதிகளுள் ஒருவர் பிரதிகூலமாயின் எவரும மித்திரரென்ப தின்றிச சத்துருவென்பாராதலின், பிரதிகூலமாயினவரை யவசியஙகொன்மின். இத னையானே விரோசனன் சர்வ அசுரர்கட்கும தன்மத உபதேசஞ்செய்தமை கூறப் பெறறது; இனி வைதிகமததத்தே தோடநிரூபணம காண்பிககபபெறும:—ஹே அசுரர்களே! பிராஹ்மணஹியரைக கொலவதாற பாவமாய், பிறனமனை தழுவலிற் பாவமாம, பிறன்பொருள் கவர்தலிற பாவமாம் என வைதிகர் கூறுமமொழிகளி யாவும் பொய்யேயாம்; ஏனெனின், எக்கருமத்தாற புருடனுக்குத் துக்கரூபப் பலப்பிராப்தியாமோ அது பாவமாம. அது மறையவரைக் கோறலின்கண்ணே பொருந்தாதாம்; ஏனெனின், தன்விரோதியாய மறையவனைககொன்றபிறகு புரு டனுக்கின்பமேயுண்டாகின்றது, பிறன்மனையைத் தழுவலினும், பிறன்பொருளைக் கவர்தலினும புருடனுக்கின்பமேயுண்டாகின்றது, துன்பமுண்டாவதே யிலலை யாதலின், அவை பாவமாகாமற புண்ணியமேயாம. ஹிம்சாதிகள் நிகழ்காலததே சுகத்தைத தருவனவேயாயினும காலாநதரததே துக்கத்தைப் பயக்கும் என வைதிகர் கூறுவது சம்பவியாது; என்னை, காரிய உற்பத்தியினும தடையறற பூர்வ கணத்தேயிருக்கும் பொருள் காரணமாகும், மண் குலாலாதிகள் கடரூபகாரிய உற்பத்தியினும் தடையற்ற பூர்வகணத்தேயிருப்பனவாதலின் காரணமாவதே போலும. இத்தகைய காரண இலக்கணம் ஹிம்சாதிகளிற பொருநதுவதிலலை; ஏனெனின், அவை 3-4 கணமாத்திரமிருப்பனவாமன்றி நெடுங்கால மிருபபன வன்றாதலின், இனிமேலுண்டாகும் துக்ககாலம் வரையிராவாம். நஷ்டமாய அவற் றிற்கும் வருங்கால துக்ககாரணத்தன்மையிருப்பின், இறந்த குலாலனும் வருங்

குடத்திற்குக் காரணமாகவேண்டும், அங்ஙனமாகாததேபோல இறந்த ஹிம்சாதிகளும் வருந்துக்ககாரணமாகாவாம. அவை அக்காலே அழிவுறினும அவற்றினின்றும் பாவவடிவ அதிருஷ்டமுண்டாம், அது வருந்துக்கம்வரையிருக்குமாதலின், அதனானே அத்துபருண்டாம என வைதிகா கூறலும் சரியன்று; ஏனெனின், திருஷ்டகாரணஞ் சம்பவியாவிடத்தே அதிருஷ்டகாரண கற்பனை செய்யலாகும், திருஷ்டகாரணம் சம்பவிக்கின் அக்கற்பனையின்றும வருந்துக்க உற்பத்தியோ குபத்தியத்தைச சேவித்த திருஷ்டகாரணத்தானே சம்பவமாமாதலின், பாவவடிவ அதிருஷ்டகாரணத்தால் வருந்துக்க உற்பத்தியுடன்படல் பயனற்றதேயாம். அஹிம்சை, சத்தியம, பிரஹ்மசரியம என்பனவாதி தவங்களும், யாகதானாதி கருமங்களும, பிறவும உயிாகட்குக் கிலேசத்தையேயடைவிப்பனவாமாதலின், அவைபாவமெனப் பரித்தியாகஞ்செய்யத்தக்கனவாம். அவற்றைக் கேவலம் யாமே பாவரூபமெனக் கூறிலம்; மற்றோ, அவ்வைதிகர் வசனத்தானே அவற்றின் கண்ணே பாவரூபத்தன்மை சித்தமாம; ஏனெனின், அவா, சுகமீபவற்றைப் புண்ணியமெனவும், துக்கமீபவற்றைப் பாவமெனவுங் கூறுவர். பாவ இலக்கணம் யாகாதிகளிடத்தே பொருந்தும், புண்ணிய இலக்கணமோ பிறன்மனை தழுவன் முதலியவற்றே பொருந்துமாதலின், யாகாதி பாவங்களைப் பரித்தியாகித்து ஹிம்சாதிகளையே புண்ணியமெனச் செய்யமின். சிருஷ்டியாதிகாலத்தே பரம்பரையுபதேசவடிவ வேதங்களின சம்பிரதாயம இருவகையாய்ப் பிரவிருத்தித்தது. ஹிம்சாதிகளைச் செய்தலானே நமக்கு மகா அநாத்தமுண்டாம் என்னும பயத்தானே தூஷித சித்தாகளாகிய பயமுடையாரிடத்தோ, விரைவிற் சுகத்தைத்தரும ஹிம்சாதிபாவமெனவும, விரைவிற்றுக்கந்தரும யாகாதி புண்ணியமெனவும் சம்பிரதாயமுண்டாயது. பயமற்ற வீராரிடத்தோ மாறாய சம்பிரதாயமுண்டாயது. அக்காலம முதல் இதுவரை பயந்தோா சம்பிரதாயமோ மறையவா அமராரிடத்தும், வீரர் சம்பிரதாயமோ நம்மிடத்துமிருக்கின்றன. 2-வது உம்மையன்றியெவரிடத்துமின்றும, இதைப் பிரஹ்மா அறிவர் யானறிவேன், எம்மிருவரையுமொழிந்து எவருமறியாா. மறையவாமராாதியா யாவரும அஞ்ஞானத்தானும துர்ச்சங்கத்தானும் வல்லமையில்லாமையானும தூஷிதராவராதலின, அவா வீரசம்பிரதாயம் தரியாமல் மோகவயத்தானே அதை நிந்திப்பா. அத்தகைய உத்தம சம்பிரதாயம உங்கட்குப் பூர்வ புண்ணிய மகிமையால என்னுபதேசத்தானே யடைவுற்றது. சகலர்க்கு மின்பமுண்டாக்குவதும ஹிம்சாதி புண்ணியகாரணமும் ஆகிய வீரசம்பிரதாயத்தை நீவிர் யாவரும உங்கள புயவலிமையானே மூவுலகத்தும விரியுங்கள், வீரசம்பிரதாய விரோதியரைக் கொல்லினன்றியது விரியாதாம், கொன்றால் விரியுமெனக்கூறவோ? யாகாதிகளிடத்தே பிரீதியையுடைய பிரஹ்மசரியாதி சாதன சம்பன்ன மறையவரும வீரசம்பிரதாய விரோதியா, இயற்கையாகவே நமது சத்துருக்களாகிய தேவதைகளும இதன் விரோதியா, நமது சத்துரு பக்ஷத்தேயிருந்துகொண்டு எப்போதும நம்மைத் துடிக்கும மற்றைய துர்ப்பலப் பிராணிகளும் இதன் விரோதியர். இவா கேவலம் வீரசம்பிரதாய விரோதியா மாத்திரமல்லர்; மற்றோ, நமது விரோதியருமாவா, வேதப் பொருளையும வேறு படுத்துபவராவர்

இத்தகைய பாவான்மாக்களை நீவிர்சென்று கொன்மின். ஹே அசுரர்களே! இவ்வாறெனது உபதேசத்தை யங்கீகரித்தது தயைபற்றவராய்ப் பிராஹ்மணாதியரைக் கொல்வீராயின் உங்கட்கிகலோகத்தும் பரலோகத்தும் சுகப்பிராப்தியாம். ஹே மைந்த! இவ்வாறு விரோசனராஜா அசுரர்க்கு உபதேசித்தவுடன் அவர் சர்வ ஜகத்திற்கும் அவ்வாறே துயரை விளைத்தனர். அவர் உபதேசத்தின் முன்பே இப்பறகையரே பாவாத்மாக்கள், தயையற்றவர், கொடுந்தொழில் செய்பவர். மறைபவரோடு விரோதித்தல், ஜீவித அவஸ்தையின்கண்ணே யெப்போதும் இத்தூலதேகத்தையே காப்பாற்றல், மரித்தபின் இத்தேகத்தை நானாவகையலங்காரங்களாலழகுசெய்தல், எப்போதும் ஹிம்சை முதலியவைசெய்தல் என்பனவாய அசுரசம்பிரதாயம் இதுகாறும் நஷ்டமாகவில்லை; மற்றே, அஃதிப்போதும் அநேகரிடத்தே காணவருகின்றது. இப்பொருளின்கண்ணே மகான்மாக்களின் வசனமும் பிரமாணமாம்; ஏனெனின், ஈண்டு யாவன் மோக்ஷ இச்சையற்றவனுவனோ, ஹிம்சாதிபாவகருமத்தே பிரீதியுடையவனோ, சாஸ்திரவிபரீத ஆசாரஞ்செய்பவனோ அந்நாஸ்திகனை நோக்கி மகான்மாக்களாகிய ஆஸ்திகமறையவரிவ்வாறு கூறுவர்:—அசுராதிகட்குப் பிரியமாகிய ஹிம்சாதிபாவகருமத்தை இவனெப்போதுஞ் செய்கின்றனனாதலின் அசுரசம்பிரதாயத்தின்கண்ணேயுள்ளான; அசுரசம்பிரதாயத்தே யில்லானாயின நாஸ்திகத்தன்மையானே யாகாதி கருமங்களினின்றும் விமுகனேனாகின்றான்? அல்லது, மரித்தபின் பிணத்தை நானாவகையாய அன்னாதி பதார்த்தங்களாலும நானாவகையாய வஸ்திரபூஷணாதிகளாலும அழகு செய்வதனானே இவன்றனதுவாஸ்தவவடிவத்தின் அஞ்ஞானரூபமாயைபால மூடபாவத்தையடைந்துளானெனன அறிந்துகொள்ளலாமன்றோ? அல்லது, மரித்தபின் பிணத்தைப் பூஜித்தலானே தேகான்மாவிற்குப் பரலோக ஜயரூப பலப்பிராப்தமாமென மூடன் மொழிவதானே அம்மந்தமதியன்பால அசுரசரிய வடிவ மூர்க்கத்தன்மை மாகான்மியமிருக்கின்றதென அறியலாம், அம்மகிமையானே மூடன் முதலில இத்தூலதேகத்தையே ஆன்மாவென வுணர்வன், இரண்டாவது அது மரித்தபின் பிணத்திற்கலங்காரஞ்செய்தலானே தேகான்மாவிற்குப் பரலோகத்தே மேன்மையாய பலப்பிராப்தியை யெண்ணுவன். ஹே குழந்தாய்! ஆராய்ந்துபார்க்கினே அத்தேகான்மாவாதிமதத்தே லேசமாததிரயுக்தியுஞ் சம்பவியாது; ஏனெனின், மரித்தபின் பிருதிவியின்கண்ணே புதைத்த தூலம மண்வடிவமேயாம; அத்தகைய தேகம் மீண்டுங் கிளம்பல எவ்வாறாம்? ஆகாதென்க தன்மதசித்தியின்பொருட்டு அவன், நீர்த்தடாகத்தேயுற்ற மண்டூகம நீர்வற்றியபினபு மண்ணின்கண்ணே இலயமாம, நீர் நிறையினே மீண்டு முயிர்பெற்றுக்கிளம்பும; அவ்வாறே மரித்திம் மண்ணிலிலயமாயினும் தேகம பிரஹ்மாவின் சுகந்தியானே மீண்டு முயிர்பெறும என உவமைப்படுத்தலும பொருந்தாதாம்; ஏனெனின், நீர்வற்றியபின் மண்டூகம் எல்லாவாற்றானும் நாசமாவதில்லை; மற்றே, சர்வ அங்கங்களோடுங்கூடியதாய் நீரின்மையின் மூர்ச்சையுற்று மண்ணின்கண்ணே நண்ணும். மழைநீர் அதோடு சம்பந்தமுற்றபோது அது மீண்டும உயிர்பெற்றெழும. எம்மண்டூக அவயவத்தைக் காகாதிகள் பக்ஷணஞ்செய்துவிடுமோ அது அம்மழைநீரால ஒருகாலுங் கிளம்பாதாம; அவ்வாறே இதேகமும் மண்ணின்கண்ணே நெடுங்காலத்திற்குப்பின்பு

எல்லாவகையானும் நாசத்தையுறும், உற்றது மீண்டும் கிளம்புவதென்பது மூடணும். அல்லது, பிரஜாபதியின் சரீரபரிசத்தானே சஞ்சரிக்கும் வாயுவின் சம்பந்தமகிமையால் மண்ணிலிலயமுற்றதாகும் மீண்டும் கிளம்பும் என விரோசனன் விளம்பல் 'உஷ்ட்ரலகுட' நியாயத்தால் அவன் யுத்தியானே கண்டிக்கப்பெறும் ஈண்டு விறகின் சுமையோடுகூடிய ஒட்டகையை அவ்விறகிலொன்றையெடுத்து அடித்தல் கூறிய நியாயமாகும். அதுபோலவே விரோசனன் வைதிகரைக்கண்டிக்கும்பொருட்டுத் திருஷ்டவஸ்து சம்பவிக்குமவரை அதிருஷ்டவஸ்துவைக்கற்பித்தல் தகுதியின்றாகலின், வந்துக்கத்தக்க பாவரூப அதிருஷ்டங் காரணமன்று; மற்று, குபத்யசேவனாதி திருஷ்டநிமித்தமே துக்கத்தே காரணமாம் என்னும் அதிருஷ்ட அர்த்தகற்பனைவடிவ தூஷணம் அவன் மதத்தேயுறும்; ஏனெனின், மண்ணின்கண்ணே இலயமாய சரீரங்கட்குப் பிராஜாபத்யவாயு சம்பந்தத்தால் கிளம்புகை யங்கீகரித்தலும் அதிருஷ்ட கற்பனையேயாம். நஷ்டமாய தேகத்திற்கு மீண்டுங் கிளம்பல் யாண்டுங் கண்டிலேம். அல்லது, விரோசனன் வைதிகர் சம்பிரதாயத்தைப் பயந்தவர் சம்பிரதாயமெனக் கூறியதும் கேவலம் அஞ்ஞானத்தானேயாம்; ஏனெனின், நாரத முனிவர், பிருகு இருஷி, தேவராஜாவாய இந்திரர், சுவாயம்புவமனு என்பவர் முதலாய மகாபராக்கிரம மகாமதியுடைய புருடரிருக்கின்றனரன்றே? அவரியாவரும் எவ்வாறு பயமுடையோரெனக் கூறப்பெறுவர்? மற்று, அவரைப் பயந்தவரென்பது மிகத்தகுதியன்றுமாதலின், தைத்தியரின் சபையின்கண்ணே இருந்துகொண்டு விரோசனன் ஆன்மஞானமற்ற மூட அசுரர்க்குபதேசித்த வசனமியாவும் பொய்யேயாம். அவனே ஆஸ்திகர் காமமோகிதமுடையவனென்னறிக. எல்லாப் பிரமாணங்களோடும் முரண்பட்ட விரோசனமதத்தை உன்மத்தனவசனம்போல எண்ணி எல்லாவாற்றானும் பரித்தியாகம் செய்க. காமபீடிதனும் நரகவடிவ கிராமமாகத்தே நின்றுகொண்டு அவ்வசுரமதத்தை யங்கீகரித்து முன்மொழிந்த குதர்க்கங்களானே ஹிம்சாதி பாவங்களைப் புண்ணியமெனவெண்ணிச் செய்பவன் ஈண்டோ மகா அகீர்த்தியையடைவன், பரலோகத்தே நிவிருத்திக்கு முபாயமற்ற மகா துக்கத்தையடைவன்; என்பதை ஸ்ரீ கீதை முதலிய சாஸ்திரங்களில் ஸ்ரீ கிருஷ்ணபகவான் முதலியோர் கூறியுள்ளாராதலின், சுகமடைய இச்சித்த அதிகாரி கண்டத்தே பிராணனிருக்கும்வரை விரோசனமதத்தே ஒருகாலும் புகலாகாது. அதை அதிசேய்மையில் விட்டொழிக்கவேண்டும். இத்துணைக் கிரந்தத்தானே விரோசனவிருத்தாந்தம் கூறப்பட்டது. இப்போது இந்திரவிருத்தாந்தத்தை நிரூபிப்பாம்.—ஹைமந்த' பிரஹ்மலோகத்தினின்றும் இந்திர விரோசனரிருவரும் தத்தமதுலகத்தே சென்றபோது பாதி வழியில் தேவராஜாவாய இந்திரர் விரோசனனைத் தாமசியெனக் கண்டு பையப்பையச் செல்வதானே பரித்தியாகித்துத் தமது தேவசபையை யடையாமல் வழியிலேயே ஏகாந்ததேசத்தேயிருந்து சாத்விக இயற்கையானே தமது மனத்தே விசாரித்து முன்கவர்ந்த ஆன்மாவின்கண்ணே இவ்வகையாய தோஷத்தைக்கண்டனர். கருத்திதுவாம்.—பிருஹதாரண்யக உபநிடதத்தே தேவதை மனுடர் அசுரர் என்னும் மூவரும் பிரஜாபதியின்பால் தமது மேன்மையின்

சாதனத்தை வினவினர். வினவியதைக்கேட்ட பிரஜாபதி 'த' கார அக்ஷரத்தை யுச்சரித்தனர், அதைக்கேட்டுத் தத்தமது பாவனையினனுசாரமாய்த் தேவதைகளோ இந்திரிய நிக்கிரகரூப தமத்தையே மேன்மையின் சாதனமெனக்கொண்டனா. மனுடரோ கோ சுவர்ணாதிகளின் தானத்தையே மேன்மையின் சாதனமெனக் கொண்டனர். அசுரரோ தயையையே மேன்மையின் சாதனமெனக்கொண்டனர். அதுபோலப் பிரஜாபதியானவர் அவ்விருவருக்கும் 'யஏஷோ உக்ஷிணிபுருஷோ த்ருச்யத ஏஷ ஆத்மா' என்னும் வசனத்தைச் சமானமாய்க் கூறினா. அதைக் கேட்டு விரோசனனோ அவ்வசனத்திற்கு இலக்கணையால் சாயைக்குச் சமானமாய சரீரத்தையே ஆன்மாவென வுணர்ந்தனன். இந்திரரோ அவ்வசனத்திற கேட்ட படி சாயையையே ஆன்மாவென வுணர்ந்தனராதலின், அதன்கண்ணுராய்ந் தெடுத்த தோஷமாவது :—இச்சாயையின் வடிவத்தைச் சித்திசெய்யும் இத்தேகத்தே ஜன்மமரணமே முதலாக அநேகவகை விகாரங்கள் பிரதீதியாம், அவையிருப்ப இத்தேகம் அமிருதத்வ அபயத்வ முதலிய தருமமுடையதாயெவ்வாறும? ஆகாதாம. ஆகையால, ஜன்மமரணாதி விகாரமுடைய கடாதிகள் ஆன்மாவல்லாதது போல இத்தேகமும ஆன்மாவன்றாம். இததேகத்தின்கண்ணும ஆன்மரூபத தன்மை சித்தமாகாதபோது பிம்பரூபதேகாதீன சக்ஷு தாபபணாதிகளிடத்தே யிருக்கும் சாயையின்கண்ணே அவ்வான்மரூபததன்மை எவவாறு சமபவிக்கும? சம்பவியாதாம; ஏனெனின், பிரஜாபதியானவர் ஆனமாவை அமிருத அபயபரஹ்மரூபமென்றனா; அத்தருமங்கள சாயையினகண்ணே சம்பவியாவாதலின் இச சாயை யான்மரூபமன்றாம். அலலது, இபபிரதிபிமபரூபச சாயையின்கண்ணே பிம்பாபேக்ஷையின்றி இபறகையானே மாணபயங்காணவருவதினறாமாதலின், இச் சாயையின்கண்ணே அமரத்வ அபயதவரு சமபவிக்கும. காலையிலும மாலையிலும் சாயையின் விருத்தியுங்காணவருகின்றதாதலின், இதன்கண்ணே பிரஹ்மரூபத்தன்மையும் சம்பவிக்கும். ஆயினும, இததூலதேகமேபோல இச்சாயையும பரித்தியாக யோக்கியமேயாம; ஏனெனின், இசசாயை யெப்போதும இததூலதேகத்தின் குணதோஷங்களைத் தன்பாறறரிக்கும். பிமபரூபதேகம வஸ்திரபூஷணங்கொடை முதலிய அலங்காரததோடு கூடுமபோது சாயையும அவ்வகை யலங்காரத்தோடுகூடியதாய் நிகழும, இததேகங் குருடாயின் சாயையும் குருடாம. சிலேஷ்மத்தோடுகூடியதாயின் சாயையும சிலேஷ்மத்தோடுகூடியதாகும். அஸ்தபாதாதி யவயவஹீனமாயின் சாயையும அவ்வாறும. இஙஙன் பிம்பரூபதேகானுசாரம் பிரதீதியாகும் சாயை இயறகையானே ஜடமாம், நாசமுடையதாம், போகங்களைப போகிக்கும் யோக்கியமறறதாமாதலின் இதன்கண்ணே போக்தாத்தன்மை சம்பவியாதாம். பிரஹ்மாவானவர் ஆன்மஞானத்தானே சாவ லோகத்திருக்கும போகங்களின்பிராப்தியைக்கூறினரன்றோ' இசசடச்சாயைவடிவ ஆன்மஞானத்தானே சர்வ போகப்பிராப்திரூபப்பயனை யான் கண்டிலனாதலின், இச்சாயை ஆன்மாவன்றாம் ; மற்றோ, இதனினும வேறாகவே யான்மாவிருக்கவேண்டும். அல்லது, இபபிம்பரூபத் தேகநாசமாம்போது இச்சாயையும் அழியுமாதலின், அறம்பாவங்களின் இன்பத்துன்பப்பயனை யனுபவிக்கும்பொருட்டுச் சாயான்மாவிற்கோ பரலோகத் தேகமனஞ்சம்பவியாது; மறறோ, அங்குப்பயனை யனுபவிக்க வேறொரு ஆன்மாவை

யுடன்படவேண்டுமே; மாறுயின்றே செய்த கருமங்கட்குப பல போகமின்றியே நாச வடிவக இருதநாசதோஷபிராபதியுண்டாமாதலினுனும், இசசாயை யான்மாவன்றும; மற்றேறு, சாயையினும தேகததினும வேறுகவே ஆன்மாவொன்றிருக்கும்: அதனே யான் மீண்டும் பிரஹ்மாவின்பாறபோய் வினவவேண்டும. ஹே மைந்த! இவ்வாறுய விசாரத்தைத தபமனததேசெய்து அசசாதவிக இயல்பையுடைய தேவராஜாவாய இந்திரா ஆன்மாவையறிய அவாவினராய்ச சமிதது முதலிய பதார்த்தங்களைத தமது காததேகொண்டு விநயபூாவகம மீண்டும பிரஜாபதியாய குருசமீபஞசென்றனர். இநதிரா மீண்டும வநததைககண்ட பிரஜாபதி புன்சிரிப்புறறு இநதிரனை நோக்கிககூறியதாவது:—ஹே இநதிர! நீ விரோசனனேடு மகிழ்ந்த மனததனுக ஈண்டிருநது சென்றனையன்றே? மீண்டும எபபயனைககருதி ஈண்டு வநதனை? எனக்கேட்டபோது இநதிரா சாயையினகண்ணும தேகத்தின்கண்ணும நிச்சயஞசெய்த தோஷஙகளியாவறறையும் பிரஜாபதியின்பாற கூறினா. அதைக் கேட்ட பிரஜாபதியானவர் கூறியதாவது:—ஹே இநதிர! இததாலதேகமும் சாயையும் ஜடஙகளாமாதலின் இவறறில் போகதாத்தனமை சபபலியாதாம் என நீ கூறியதுண்மையே; ஆனுல், எவ்வான்மாவை யறியாமையால் நீ கூறுதனைக் கூறிய தாய்கொண்டு கூறலபோல இபபரிசிரமஞசெய்தனையோ, அததேகசசாயையினும் வேறுகிய ஆன்மாவை மீண்டும யாம உன்பொருட்டுபதேசிக்கின்றனம. எதை விரோசனசகித உன்பொருட்டு யாம முன்னரும உபதேசிததனமோ அவ்வான்மாவையே மீண்டு முபதேசிககின்றனம ஈண்டுக்கூறிய வசனததின் உண்மைப பொருளை யறியாமல அதற்கு விபரீதபபொருளைக்கவாநது கூறுபவனைக கூறிய தாய்கொண்டு கூறல, கூறுதலைக் கூறியதாய்கொண்டு கூறலாம் அஃதீண்டுப பிரசஙகத்தே 'யஷோ ஃக்ஷிணிவு-ஷோ ஓூரயஷூதவாஷகுஹூா' என்னும் வசனததானே பிரஜாபதியானவா இநதிரர்கு இததேகசசாயையினும் விலக்ஷண சாக்ஷியானமாவையே போதிததனா. அவரது உணமைபபொருளை யுணராமல் அதறகுச சாயை தேகவடிவ விபரீதபபொருளைக் கறபிதது இநதிரா கூறியதாய்க் கொண்டு கூறியதும, கூறுதலைக கூறியதாய்கொணடு கூறியதேயாம. பிரஜாபதி கூறல்:—ஹே இநதிர! முன்னா நீ முபபததிரண்டு வருடமவரை பிரஹ்மசரியஞ்செய்தனையன்றே? அதை எமது வசனசஙகறப பூாவகமாய்சசெய்திலை, மறறேறு, சங்கறபமின்றியே செய்தனையாதலின், நினமனததூய்மையின்பொருட்டுநீ மீண்டும 32 வருடமவரை பிரஹ்மசரியததைசசெய்தி பின்னுனக கவ்வான்போபதேசத்தைச் செய்வோம எனப பிரஜாபதி இநதிராககுக கூறியபோது, அவ்விநதிரா பிரஹ்மாவின் ஆணையைச் சிரமேறகொணடு மீண்டும 32 வருடம்வரை பிரஹ்மசரியத்தை யாறறினா. பின் பிரஜாபதியின சமீபததே வநததைககண்ட பிரஜாபதியானவர் அவர்ககுச சொபபனுவஸ்தையின் சாக்ஷிரூபமா யான்மோபதேசஞசெய்தனர். ஹே இநதிர! முனனா யாம் சக்ஷுவினகண்ணேயும ஜலசராவததின்கண்ணேயும எப்புருடனை யுபதேசிததேமோ அவனே சொபபனுவஸ்தையின்கண்ணே, தன் விபூதிவடிவ நானுவகையாய விடயங்களைச சாக்ஷிரூபததானே அநுபவித்துக் கொண்டிருப்பன்; அவனை நினதான்மவடிவமாயறிதி. ஹே மைநத! இவ்வாறு

பிரஜாபதி கூறலும் இந்திரர் அம்மொழியால் அந்தக்கரணத்தி விசிஷ்டதைஜசப் பெயர்வாய்ந்த ஜீவனை ஆன்மாவென வுணர்ந்து மிகவும் மகிழ்ந்தனர். முன்போலவே பிரஜாபதியை நமஸ்கரித்துவிட்டு மீண்டும் தமதுலகை நோக்கிச்சென்றனர். பாதிவழியில் ஒரேகாந்தத்தேசத்தேயுட்கார்ந்து மீண்டும் தமது மனத்தே ஆராய்ந்து அச்சொப்பன திருஷ்டாப்புருடனிடத்தும இவ்வகையாய தோடத்தைக் கண்டனர் :—சாயை யான்மா இத்தூலதேக குணதோடங்களையடைவதேபோல இசசொப்பனதிருஷ்டாபபுருடன் அடைவதில்லையாயினும, இவன்பால் இவ்வகையாய மகாதோடமெனககுப் புலபபடுகின்றது:—கனவின்கண்ணே இவனை ஒருபகைவன் கொல்லின், நனவின்கண்ணே ஒரு மதயானை சினந்து தன் தும்பிக்கையை மேலே தூககி மூடபாலகரைப பயபபடசசெய்வதேபோல, கனவின்கண்ணே இவனை நரி புலி பாமபு முதலிய ஜீவா பயததையடையசசெய்யின், ஆங்குத் தன் சுகிருத்துக்களின் வியோகத்தால பரமதுககததையடைவன் ; அழுவன் ; இவை முதலாகிய அநேக தோஷங்கள இவன்பாற காணவருகின்றன. பிரஜாபதியானவர் எனக்கு ஆன்மா அமிருதம், அபயம், பிரஹ்மரூபம என ஆன்மாவினிலக்கணங்கூறினர் அவ்விலக்கணம இவன்பாற பொருநதுவதில்லையாதலின் இக்கனுக்காண்போன் ஆன்மாவல்லன் ; மறறோ, இவனினும வேறாகவே யான்மாவொன்றிருக்க வேண்டும. அதை யறியுமபொருட்டு யான் மீண்டும அவர்பாற் செல்வேனாகவும ; எனசசிநதிதது மீண்டும அவர்பாற சென்றனர். இநதிரர மீண்டும் வநததைக் கண்ட பிரஜாபதி கூறுவதாவது :—ஹே இநதிர ! நீ முன் ஆன்மோபதேசத்தைக் கேட்டு மகிழ்நத மனத்தினனாய் நின்னுலகத்தையடைநதனையே, மீண்டு மெய்பயனைக்கருதி மீண்டு வநதனையெனப பிரஜாபதி யிநதிரராககுக கூறியபோது இநதிரர்மார்க்கததே எததுணைக்தோடங்களைக கனககாண்போனிடததே கண்டனரோ, அவ்வியாவறறையும பிரஜாபதியின் முன்னிலையிற கூறினார். அதனைககேட்ட பிரஜாபதி மீண்டும் 32 வருடம பிரஹ்மசரியஞ்செயய ஆணையிட்டனர். குரு ஆணையைச சிரமேறகொண்டு ஆங்கே முடிததுப பிரஜாபதிபால வந்து ஆன்மாவை மீண்டும் வினவினர். வினவியதைககேட்ட பிரஹ்மா மீண்டும சுழுபதியவஸ்தாசாக்ஷிரூபமா யான்மோபதேசஞ்செய்தனர். பிரஜாபதி கூறல :—ஹே இந்திர ! எக்காலிப்புருடன் சாவ விசேஷஞானமறறவனாகச் சயனஞ்செய்கின்றனனோ, அக்கால் இவன் எவ்விருதயாகாசப பிரஹ்மலோகத்தே ஒருமையையடைநது சர்வ துக்கததினின்றும நீங்குவன் ; சாவேநதிரியங்களுமற்றவனாவன் ; எவ்வதன்கண்ணே யடைநதபோதினும இவன் அதனை யறியாமல் மீண்டும மீண்டும வெளியேவருவானோ, அமமாயாமாததிர உபாதியையுடைய இருதயாகாசப் பிரஹ்மலோகமே அமிருத அபயபபிரஹ்மரூபமாதலினானே நின்னான்மாவாம். இவ்வான்மாவே எம்மால் முன்னரும உனபொருட்டுபதேசிக்கலாயது என உபதேசித்தபோது இந்திரர அம்மொழியால அஞ்ஞானவிசிஷ்டப பிராஞ்ஞனெனப்பெயரிய ஜீவனை ஆன்மாவெனவுணர்ந்து மிகவும் மகிழ்ந்து முன்போலவே பிரஜாபதியை நமஸ்கரிதது மீண்டும் தமதுலகத்தையடையசசெல்லும் பாதிவழியில் ஒரேகாந்த தேசத்தையடைநது தமது மனத்தே யாராய்நது பிராஞ்ஞ ஆன்மாவின்கண்ணும் இவ்வகைத்தோடததைக்கண்டனர் :—இத்துயிலின்கண்ணேயிருக்கும பிரா

ஞன் கணுக்காணும் புருடனைப்போலப் பயாதிகளையடையானாயினும், இந்தப் பிராஞ்ஞனாகிய யான் இவ்வாறிருக்கின்றேனெனத் தன்னையுமுணர்ந்திலன், என்னினும் பின்னன், இவனித்தகையனென மற்றையனையுமறியான் ஈண்டுக் கண் முதலியவற்றின் பானத்தால் மூடனாவன் தன்னையும் அயலானையும் அறியாததேபோலத் துயிலினகண்ணே பிராஞ்ஞனும் தன்னையும் பரனையுமுணரான்; மற்றே, துயிலிலிருந்தபோதினும் அழிந்தவனைப்போல இருப்பானாதலின், பிரஜாபதி கூறிய அமிருத அபயப்பிரஹ்மரூபத்தன்மை யிலக்கணம் பிராஞ்ஞனிடத்தே பொருந்தாது; அவ்விலக்கணமுடையது பிராஞ்ஞனைப்பார்க்கினும் வேறொன்றேயாம். அதை நிச்சயிக்குப்பொருட்டி யான் மீண்டும் பிரஜாபதி சமீபம் செல்வேனெனச் சிந்தித்துப் பிரஜாபதி சமீபமவா, அவா வரவைக்கண்ட பிரஜாபதி கூறியதாவது:—ஹே இந்திர! முன் எமதுபக்கத்தகாதேன நீ ஆன்மாவையுணர்ந்து மகிழ்ந்தமனத்தனாய் நின்னுலகையடைந்தனையே? இப்போது மீண்டும் எம்பானை விரும்பி ஈண்டுவந்தனையெனக் கேட்டபோது, இந்திரமாகத்தே பிராஞ்ஞனிடத்திற் கண்ட தோடமுழுவதையும் பிரஜாபதியின் முன்னிலையிற் கூறினா; அதைக்கேட்ட பிரஜாபதி மீண்டும் 5 வருடம் பிரஹ்மசரியம் அனுட்டிக்குமாறாணையிட்டனா. ஹே மைந்த! இந்திரா முதலிலோ ஆணையினறியே 32 வருடமும், பின்னிரண்டாவது மூன்றாவது முறை ஆணையை முன்னிட்டு 32, 32, வருடமும், 4-வது முறை ஆணையைமுன்னிட்டு 5 வருடமும், ஆக ஒருநூறே 101 வருடமவரை பிரஜாபதியின் முன்னிலையில் பிரஹ்மசரியத்தை யனுட்டித்தனா. இப்போது அந்தப்பிரஹ்மசரிய மகான்மியத்தைவருணிப்பாம்.—ஹே மைந்த! ஈண்டு எவ்வெப்பொருள் மிகவுங் கிடைத்தற்கரிதாமோ அவற்றையும் இவன பிரஹ்மசரியத்தானே யடைவன, ஏனெனின், வேதவேதத்தாக்கள இப்பிரஹ்மசரியத்தையே சாவ யாகாதிரூபமாயக் கூறியுள்ளாா ஈண்டு, இவவாநந்தவடிவ ஆன்மாவை யுணாநதவன இப்பிரஹ்மசரியத்தானே ஆன்மாவையுணாநதவனாவன்; அஃதின்றி ஆன்மாவை யறியமுடியாதாபாதலின், வேதவேதத்தாக்கள் பிரஹ்மசரியத்தைத், யஞ்ஞம், எனனும் நாமத்தானே கூறினா தரிசபௌர்ணமாசாதி கருமம் அதிகாரிக்குச் சுவாக்கம் முதலிய இஷ்டபதாாத்தங்களின அடைவைச்செய்யுமாதலின், வேதவேதத்தாக்கள அக்கருமத்தை இஷ்டமெனபா, அஃதும இப்பிரமசர்யமேயாம்; ஏனெனின, சாவபதாாத்தங்களின அபேக்ஷையால அத்தியந்தம பிரியரூபத்தனமையானே இஷ்ட சபதத்தின் முக்கியப்பொருளாகிய இஷ்ட ஆன்மாவை அதிகாரி பிரஹ்மசரியத்தானேயறிவனாதலின், வேதவேதத்தாக்கள பிரஹ்மசரியத்தை இஷ்டமென்பா. கோசமுதலிய இலௌகிகப் பிரமாணபலத்தானே யஞ்ஞசபதப் பொருளும இஷ்ட சபதப்பொருளும வேறறுமையடையாமல ஒரு பொருளின் வாசகங்களேயாமெனினும், மீமாமசகா அவவிரண்டிறகும இவவகையாய பேதத்தைக் கூறியுள்ளாா —சோமம், பசுமுதலிய பதாாத்தங்களால துணியப்பெறுவதாய ஜோதிஷ்டோமாதிகருமம யஞ்ஞமாம பசுமுதலியவையின்றிக் கேவலம ஔஷதாதிக பதாாத்தங்களால சித்தமாம தரிசபௌர்ணமாசாதி கருமம இஷ்டமாம, அநேகர் ஒருங்குகூடிச்செய்யும யாகவிசேஷம சத்திராயணமாம, அஃதும் பிரஹ்ம

சரியமேயாம; ஏனெனின், அதிகாரி தன் சத்தியஸ்வரூப ஆன்மாவைப் பிரஹ்மசரியத்தானே ஜன்மமரணரூப சமசாரத்தினின் றுங்காப்பாற்றுவனுதலின், வேதவேத்தாக்கள் பிரஹ்மசரியத்தைச் சத்திராயணமென்பர். மனனசீல புருடர்க்குறுந்தன்மைமௌனமாம், அதன் பிரசித்தமாய பொருளோ வாக்கின் நிரோதரூபத்வமாம், அல்லது சநயாச ஆசிரமமாம், அத்தகைய மௌன சப்தமும பிரஹ்மசர்யத்தின் வாசகமேயாம்; ஏனெனின், சர்வ அதிகாரிகளும பிரஹ்மசரியத்தின் மகிமையானே ஆன்மாவின் மனனத்தே சமர்த்தராவர், அஃதின்றிக் கோடிஜன்மததானும் ஆன்மாவின் மனனமாகாதாமாதலின், வேத வேத்தாககள அதை மௌனமென்றனர். உலகபபிரசித்தமாய உபவாச பராயணங்களின் வாசகமாகிய அநாசகாயந பதமும பிரஹ்மசரியததின் வாசகமேயாம; ஏனெனின. பிரஹ்மசரியததானே பிராபதமாய ஆன்மா, காரியசகித அஞ்ஞானரூபப பிரதிபநதகந தாகமாகததான் ஒருக்காலும் அழிவையடையமாட்டாதாதலின், வேதவேததாக்கள் பிரஹ்மசரியததை அநாசகாயந என்னும நாமததானே கூறினர் உலகபபிரசிததமாய வனவாச வாசகமாகிய ஆரண்யாயந சபதமும பிரஹ்மசாய வாசகமேயாம; ஏனெனின், சமுத்திரசமான விஸ்தாரமுடைய அரண்யமெனப பெயரிய இரணடு மடுககளோடுகூடிய பிரஹ்மலோகததையும அதிகாரி பிரஹ்மசரியததானே யடைவனுதலினுனே, வேதவேததாககள் பிரஹ்ம சரியததை ஆரண்யாயநமெனககூறினர். பிரஹ்மசரியமகிமையானே இபபுருடன் தடையறறுத தன்னிசசைவாயிலாய்ச சாவ லோகங்களினுஞ சஞசரிபபன்; நாரதமுனிவா பிரஹ்மசரிய மகிமையானே தமமிசசைபபடிச சாவ லோகஙகளினுஞ சஞசரிபபதேபோலும. பிரஹ்மசரியத்தோடுகூடிய பிராஹ்மணுதி யதிகாரிகள இருக்குமுதலிய வேதஙகளை யதயயனஞசெய்து பால், மது, நெய், தயிர, அமிருதம, சோமரசப முதலிய பதாரத்தஙகளால் அக்கினி முதலிய தேவதைகளைத திருபதிசெய்வா. அவாகளின பிரசாததததானே அதிகாரிகள் தாங்களும அப பால முதலிய பதாரததஙகளைத தமமிசசைபபடிபானஞ் செய்வா சாவலோகங்களினுஞ சுதநதிரமாய்ச சுறறல, பால முதலிய பதார்ததங்களைப பானஞ்செய்தல எனச சாஸ்திரஙகளில பிரஹ்மசாயபலங கூறியிருத்தல் அவாநதரபலக்கூறறும; முக்கியபலமோ இதுவேயாம:—பிரஹ்மசரியமுடைய அதிகாரி ஆநந்தவடிவ ஆன்மாவையுணாநது மிருததியுதககரூப சமசாரததைத் தாண்டுவன் என்பதேயாம ஹே மைநத! நின்பொருட்டு யானதிகமாக யாதுகூறுவேன்? இவ்வுலகத்தேயுள்ள சாதனங்கள் யாவும இபபிரஹ்மசரியததின் கண்ணே உள்ளடக்கமாம்; யானையின் பாததததே சாவ பாதஙகளின் அடககமுண்டாவதேபோலப பிரஹ்மசரியததின்கண்ணே சாவ சாதனஙகட்கு மடக்கமாம்; பிரஹ்மசரியத்தினும அதிகமாக யாதொரு சாதனமுமினறும. அதிகாரியைததூய்தாக்கும் சௌசமும, சுவர்ககாதி சுகததையடையசசெய்யுந தவமும பிரஹ்மசாயமேயாம. இததகைய பிரஹ்மசர்யததோடுகூடியிருநத அநேகம பிராஹ்மணா திவலோகத்தையடைநதனா. அவாகள் கேவலம திவலோகததைமாததிர மடையவில்லை; மற்றோ, தேவயானமார்ககவாயிலாய்ப பிரஹ்மலோகததையுமடைநதனர். அம்மார்க்கம் மீண்டும் வருகையறறதாம்; கருமகாண்டததையுபதேசிக்கும 88000 முனிவர் தக்ஷிணமார்க்கததேயிருப்பதேபோல, உபாசனகாண்டத்தை யுபதேசிக்

கும் 88000 முனிவர் அத்தேவயானமாகத்தேயிருப்பர். அத்தகையமார்க்க வாயிலாய்ப் பிரஹ்மசரியமுடையோர் பிரஹ்மலோகம் சேர்வர். ஈண்டு, வேறு சர்வ சாதனங்களோடு கூடியவனாயினும், வித்தையின்கண்ணும் குசலனாயினும், ஒரு பிரஹ்மசரிய சாதனமற்றவனாயின், மோக்ஷத்தையடையாமல் அவ்விடயாசக்தன் ஜன்மமரணரூபக் கிலேசத்தையேயடைவன். இப்பொருளின்கண்ணே சௌபரிமுதலிய கோடி புருடர் திருஷ்டாந்தமாவர். கடலைக்கடப்பதில் கப்பலொன்றே சாதனமாதலேபோலச் சனனமரணக் கடலைத்தாண்டப் பிரஹ்மசரியமொன்றே சாதனமாம். இப்பிரஹ்மசரியம் துபாரீகத்துவது மாத்திரமல்ல; மற்றோ, இதனுலிவன் சுவர்க்கத்தையும், மோக்ஷத்தையும், தீர்க்க ஆயுஷையும், இகலோகத்தே மகா சுகத்தையும், மகா கீர்த்தியையும், சர்வ நோயற்றதன்மையையும் அடைவன்; சுந்தராகாரத்தையுமுடையவனாகவும், சர்வ துக்கங்களு மற்றவனாகவும், சர்வ பாவங்களுமற்றவனாகவும் ஆவன். இவைமுதலாக அநேகவகையாய மகான்மியங்கள் பிரஹ்மசரியத்திற்குச் சாஸ்திரங்களிற் கூறப்பெற்றிருக்கின்றன. யாவன் இவ்வகையாய மகான்மியத்தை யுணர்ந்தும் பிரஹ்மசரியத்தைக் கிரகஞ்செய்வதிற் சமர்த்தனல்லனோ, அவன் இவ்வகையாக விசாரித்து அதனைக் கிரகஞ்செய்க:—தன்றாயின்றேகத்தும் தன்மனைவியின்றேகத்தும் யாது விசேஷத்தன்மையுளது? எவ்விசேஷத்தன்மையைக்கண்டு இவன் பிரஹ்மசரியத்தினின்றும் பிரஷ்டனாகின்றனனோ? மற்றோ, அவ்விரண்டு தேகத்தும் சிறிது மாத்திரையும் விசேடத்தன்மையின்று. எல்லா ஸ்திரீகட்கும் பாஞ்சபௌதிக சரீரஞ் சமானமேயாமாதலின், சர்வ ஸ்திரீகளையுந் தனது மாதாவைப்போலறிந்து பிரஹ்மசரியத்தை ரக்ஷிக்கவேண்டும். அல்லது, மூத்திரத்தின் பாத்திரமும், அபானவாயுவாற் றூடிதமுமாய ஸ்திரீயோனியின்கண்ணே செல்லும் புருடனுக்குச் சுகம் யாதுண்டாம்? சிறிது மாத்திரையுஞ் சுகமின்று, மாறாகவே சரீரத்தைச் சொறிதலால் கரங்கட்குத் துயரேயுண்டாவதுபோலக் காமிகட்கு விடயபோகத்தானே கேவலந் துக்கமேயுண்டாம். இவ்வகை விசாரஞ்செய்தும் இவனுக்கொரு பூர்வபாவ கருமவயத்தால் ஸ்திரீத்யாக புத்தியுண்டாகாவிடின், அப்புத்தியுண்டாமாறு அந்தரியாமியாய பரமேசுரர் முன்னிலையில் இவ்வகையாகப் பிரார்த்தனைசெய்க —ஹே அந்தர்யாமியாய ஈசுரரே! சர்வப் பிராஹ்மண க்ஷத்திரியாதிகளின் ஆன்மவடிவமாகிய பிரஹ்மபாவத்தைப்படைய எப்போதும் யானிச்சிக்கின்றனனாதலினானே, யான் சன்மார்க்கத்தே ஸ்திதிவடிவ ஆசரண அபிலாஷையுடையவனானேன். ஒருகாலெனக்குப் பிரஹ்மபாவ இச்சையுண்டாகாதிருக்குமாயின், சன்மார்க்கத்தேயிருக்க இச்சையையேன் செய்வேன்? எனக்கெப்போதும் பிரஹ்மபாவப் பிராப்தியிச்சையிருக்கின்றது, அதனடைவோ பிரஹ்மசாயமின்றி யுண்டாகமாட்டாதாதலின், எனமீது தாங்கள் அனுக்கிரகிக்கவேண்டும். யான் மீண்டும் இந்த ஸ்திரீயோனியில் கமனஞ்செய்யாதிருக்கவேண்டும், எந்த யோனியை யான் தாயின் உதரத்தினின்றும் வெளிப்போந்த காலத்தே அநேகமுறை யனுபவித்தனனே; அது எப்போதும் மூத்திரத்தானே நனைந்திருக்கும், மிகவும் லோபத்தோடு கூடியிருக்கும், பலம் விவேகம் வைராக்கியம் முதலிய குணங்களை நஷ்டப்படுத்

தும், பக்குவமாகிய புண்ணிற்குச் சமானமாக இரத்தவர்ணமுடையதாம், அதி பந்த துர்க்கந்தமுடையதாம், சர்வ ஜன்மங்களிலுந் துக்கத்தைக்கொடுப்பதாம்; இத்தகைய நிந்தித ஸ்திரீயோனியின்கண்ணே மீண்டும் எனது கமனமுண்டாகலாகாதவண்ணம் தாங்கள் தயவுசெய்யவேண்டும். இவ்வதிகாரி பரமேசுரரது முன்னிலையில் இங்ஙன் பிரார்த்திப்பின் அப்பரமேசுரர் அதிகாரிக்கு ஸ்திரீகளின் மைதுனத்தே வைராக்கியத்தைத் தருவர், அதனாலதிகாரி யதன்கண்ணே முயலான். கேவலம் ஸ்திரீசம்போகமே மைதுனமன்று; மற்றோ, சம்போக சாதனரூபமாகிய ஸ்மரணம், கீர்த்தனம், கேலி, பிரேக்ஷணம், குஹ்யபாஷணம், சங்கற்பம், அத்யவசாயம், என்னும் ஏழும் சாஸ்திரத்தே மைதுனமெனப்பெறும். மங்கையரை மனத்தே சிந்தித்தல் ஸ்மரணமாம், அவருடைய சௌந்தர்யாதி குணங்களை வாயாற் கூறல் கீர்த்தனமாம், அவர்களோடு சூதாடல் பரிகாசஞ்செய்தல் கேலியாம், இச்சையோடும் அடிக்கடி அவர்களைப்பார்த்தல் பிரேக்ஷணமாம், ஏகாந்த தேசத்தே அவர்களோடு சம்பாஷணஞ்செய்தல் குஹ்ய பாஷணமாம், அல்லதவர்தம் இரகசியமாய அங்கங்களைக்கூறல் குஹ்ய பாஷணமாம், அவர்களிடத்தே இரமணீயமதிசெய்தல் சங்கற்பமாம், இவளோடியானவசியம் சம்போகஞ் செய்வேன் என்னும் நிச்சயம் அத்யவசாயமாம், என்னும் அஷ்டவித மைதுனமே ஸ்திரீகளிடத்தே பிரீதிக்கேதுவாம். அவ்வெண்வகையையும் விட்டவனுக்கு அவர்களிடத்தே பிரீதியுண்டாகாதாம். அவ்வெண்வகையைப் பரித்தியாகித்தலே பிரஹ்மசரியமாம். இப்பிரஹ்மசரியத்தோடுகூடியவன் முயலவின்றியே சர்வ துக்கங்களினின்றும் விடுபடுவன், ஆநந்தவடிவ ஸ்வயஞ்சோதி யான்மாவை யடைவனாதலின், சர்வ முமுக்ஷுக்களும் பிரஹ்மசரியதர்மத்தை அவசியஞ் சம்பாதனஞ் செய்க. விஷயங்களிடத்தே யாசக்திபுற்றுப் பிரஹ்மசரியத்தைப் பரித்தியாகித்தவன் நானாவகைப்பட்ட யோனிகளை யவசியமடைவன்; ஏனெனின், அவனுக்கு மிகச் சமீபத்திலிருக்கப்பட்டிருக்கும் ஆன்மா ஒருகாலும் புலப்படுவதின்றாம்; மற்றோ, அவன் மனத்தே மலமூத்திராதி அசுத்த சமூகம் நிறைந்தபெண்ணே யெப்போதும் பிரதீதியாவள். நிரந்தரம் ஸ்திரீயின் தியானத்தானே உண்டாய சமஸ்கார பலத்தானே விஷயாசக்தன் சொப்பனமனோராதியின்கண்ணேயும் ஸ்திரீகளையே காண்பன் இவ்வாறு எப்போதும் அவளையே பார்த்துத் தியானித்து விஷயாசக்தன் மரித்தபின் இகலோகத்தேனும் பரலோகத்தேனும் அவளுதரத்தே ஜன்மத்தையடைவன். அல்லது, அவளுடைய சஜாதீய வேறொரு ஸ்திரீயின் உதரத்தே ஜன்மத்தையடைவன். அல்லது, விஜாதீய வேறு பசுமுதலிய ஸ்திரீ யுதரத்தே ஜன்மத்தையடைவன். ஜனித்தபின் பூர்வ சமஸ்காரவயத்தானே மீண்டும் அவர்களையே எப்போதும் பார்த்துத் தியானித்துப் பின்மரித்து மீண்டும் அவர்களுதரத்தே ஜன்மத்தையடைவன்; பின் பூர்வ சமஸ்காரவயத்தால் மீண்டும் அவர்களிடத்தே ஆசக்தியைப்புறுவன். இவ்வாறு பிரஹ்மசரியமற்றவனாகிய விஷயாசக்தன் தன்னானந்தவடிவ ஆன்மாவை அறியாமல் அடிக்கடி ஜன்மமரணரூப சம்சாரத்தையடைவன். இங்ஙன் அன்வய வியதிரேகத்தானே பிரஹ்மசரியத்திற்கே பிரஹ்மவித்யா ப்ராப்தியின் காரணத்தன்மையாமாதலினானே, பிரஜாபதி இந்திரா

பொருட்டு ஆன்மஞானமடைவதற்கு முன்முறை 32, 32, வருடம் பிரஹ்மசரியம் அனுட்டிக்குமாறும், நான்காவது முறை மனத்தூய்மை வந்ததையும் அறப்போகட்டிருப்பதையுங்கண்டு அது நீங்கும்பொருட்டு 5 வருடம்வரை பிரஹ்மசரியம் அனுட்டிக்குமாறும் ஆணையிட்டனர். அவ்வாணையைச் சிரந்தாங்கி இந்திரர் அவ்வாறேயனுட்டித்து மீண்டும் பிரஜாபதி சமீபம் வந்ததைக்கண்ட பிரஜாபதி அவர்க்கு இவ்வாறு துரீய ஆன்மாவையுபதேசித்தனர் —பிரஜாபதிகூறல். ஹே இந்திர! தூலசூக்ஷ்மகாரணமென்னும் முத்தேகங்களினும் விலக்ஷணமாய ஆநந்த ஸ்வரூப ஆன்மாவையாம் முன்னரே நேத்திர முதலிய ஸ்தானங்களில் உபதேசித்தனம்; ஆனால் நின்னஞ்ஞான வயத்தால் நீ ஆன்மாவை வேறாகவே கவர்ந்தனை. இப்போது முத்தேகங்களினும் வேறாக ஆன்மாவையுணர்த்தும்பொருட்டு முதலில் தாமங்களோடுகூடிய முத்தேகங்களையும் வருணிப்பாம்:—ஹே இந்திர! எச்சரீரவிசிஷ்ட ஆன்மாவை நீ கவர்ந்திருக்கின்றனையோ, அதன் உபாதிரூப சரீரம் தூலம் சூக்குமம் காரணம் என மூவகைப்படும், அவை கேவல மஞ்ஞானத்தானே சித்தமாம். அஞ்ஞானம்பாவத்தைப்படைப்பின் காரிய காரணரூபத்தானே அத்தேகங்களின் சித்தியுண்டாகாவாம். அவை யவித்தையின்கண்ணே கற்பிதமாதலின், மரணமுடைத்தருமம் அவற்றின்கண்ணே சமானமேயாயினும் இத்தூல தேகம் எப்போதும் அம்மரணமுடைத் தருமமுடைத்தாம், ஏனெனின், சர்ப்பம் தனது பக்ஷியரூபமாய மண்டூகத்தைக் கவ்வுவதேபோலப் பிராமரூப மிருத்யு தனது பக்ஷியரூபத்தானே எப்போதும் இத்தூலதேகத்தைக் கவ்வும், இத்தகைய இத்தூலதேகத்தே அஜரத்வம் அமரத்வம் அபயத்வம் முதலிய ஆன்மாவின் இலக்கணஞ் சம்பவியாதாதலின், இத்தூலதேகம் ஆன்மாவன்றாம்; மற்றே, இதனினும் விலக்ஷணமே யான்மாவாம். இத்தூலதேகம் ஆன்மாவல்லாததேபோலச் சூக்ஷ்மதேகமும் ஆன்மாவன்றாம்; ஏனெனின், அநுகூலரூப பிரியத்தன்மையும் பிரதிகூலரூப அப்பிரியத்தன்மையும் இத்தூலத்தேயிருப்பதேபோலச் சூக்ஷ்ம தேகத்துமிருக்கும், ஆன்மா பிரிய அப்பிரியதருமங்களற்றதாதலின், சூக்ஷ்ம தேகத்தின்கண்ணும் ஆன்மரூபத்தன்மை சம்பவியாதாம், மற்றே, இச்சூக்ஷ்ம சரீரத்தினும் ஆன்மாவிலக்ஷணமாம். இத்தூல சூக்ஷ்ம சரீரம் ஆன்மா அல்லாததேபோல அஞ்ஞானவடிவ காரண சரீரமும் ஆன்மாவன்றாம்; ஏனெனின், அச்சுழுபதியின் காரண தேகத்தே சுழுப்திகாலத்தே துக்கமில்லாவிடினும் அதன்கண்ணே இனியுண்டாகும் எல்லாத்துக்கங்களும் பீஜவடிவமாயிருக்குமாதலின், அதுவுமான்மாவாகாதாம்; அதனினும் ஆன்மாவிலக்ஷணமாம். தூலசூக்ஷ்ம காரணமென்னும் மூன்று தேகங்களினின்றும் அவற்றின் பிரியாதி தருமங்களினின்றும் விடுபட்ட ஆன்மாத் துக்கமற்றிருத்தலேபோல, விடயஜன்னிய சுகமுமற்றதாம்; ஏனெனின், விஷயஜன்னிய சுகமும் துக்கசமானமேயாம்.

சங்கை:—ஹே பகவன்! ஆன்மாவின்கண்ணே சுகதுக்கம் உண்டாகாததாமாயின் யான் சுகி, யான் துக்கியெனனும் பிரதீதியானே ஆன்மாவின்கண்ணே சுகதுக்கம் எக்காரணத்தானேயிலங்குகின்றது?

சமாதானம்:—ஹே இந்திர! இவ்வானந்தவடிவ ஆன்மாவின்கண்ணே பிரீதியாம் சுகப்பிரதீதியும், அப்பிரீதியாந் துக்கப்பிரதீதியும் கேவலஞ் சரீரதாதாத்மிய அத்தியாசத்தானே பிரதீதியாம். அஃதின்றி ஆங்கு அஃதுண்டாகாதாம்; உண்டாமாயினோ சமாதியின்கண்ணும் அறிஞர்கட்குச் சுகதுக்கப் பிரதீதியுண்டாதல் வேண்டும், உண்டாவதோயில்லையாதலின், சரீரதாதாத்மிய அத்தியாசத்தானே ஆன்மாவின்கண்ணே சுகதுக்கப்பிரதீதியாம் என்றறியலாம். இப்போதிப்பொருளையே திருஷ்டாந்தத்தானே வெளிப்படுத்துவாம்:—ஹே இந்திர! ஈண்டு வாயு அக்கினிமுதலியபூதம், மின்னல் மேகம் முதலிய பௌதிகம் என்பன யாவும் கனமான அவயவங்களோடுகூடிய தேகமற்றனவாதலின் அவை பிரியாப்பிரியங்களுமற்றனவாம்; ஏனெனின், மனுடாதி சரீரம் யாவருக்கும் புலப்படுவதேபோல அவற்றின் கனமான தேகத்தை யெப்புருடனும் எத்தேயத்துங் கண்டதேயில்லை; மற்றோ, ஜீவர்களின் புண்ணியபாவரூப அதிருஷ்டாதி காரணவயத்தானே அகஸ்மாத்தாய்ப் பிரகடமாய் மழை முதலிய காரியங்களைச் செய்யுமாதலின், இதற்குச் சம்பந்தமே சுகதுக்ககாரணமாம். வாயு மேகாதி காரியங்கள் தமமத்விதீயப் பிரஹ்மரூபகாரணத்தையடைந்து சாவபேதமுமற்ற அத்விதீயரூபத்தானே நிலைத்திருப்பதேபோல, சுழுப்தியின்கண்ணேயிருக்கும் பிராஞ்ஞ ஜீவனும் சரீராபிமானத்தைப் பரித்தியாகித்து இருதயாகாசரூப சுயஞ்சோதிப் பிரஹ்மத்தையடைந்து தன் வாஸ்தவ அத்விதீயரூபத்தானே நிலைபெறுவன. அவை பிரஹ்மத்தினின்றுமேயுண்டாம். காரியத்திற்குத் தன்னுடைய தான காரணத்தின்கண்ணே இலயமாமாதலின் இலயகாலத்தே அவை பிரஹ்மரூப காரணத்தையே யடையுமன்றி வேறொன்றையுமடையாது; ஏனெனின், சாவ ஜகத்திற்கு மிருப்புவிளக்கத்தைக்கொடுக்கும் பிரஹ்மரூப ஆன்மாவற்ற பொருள்களியாவும் முயற்கோடுபோல வடிவற்றதேயாம். அத்தகையதன்கண்ணே வாயு மின்னல் முதலிய பதார்த்தங்களின் இலயஞ் சம்பவியாதாம். வாயு முதலிய காரியங்கட்குச் சைதன்ய ஆன்மாவின்கண்ணே இலய முண்டாவதேபோலக் கடாதிகாரியங்கட்கும் கேவலம் மண் முதலியவற்றே இலய முண்டாகாதாம்; மற்றோ, மண் முதலியவற்றின் உபகிதசைதன்ய ஆன்மாவின்கண்ணே அவற்றின் இலயமாம் அல்லது, தாமிரதாதுவிற்கு முன் செம்மையிருப்பப் பொன்மையுண்டாகாதாம்; எல்லாவாற்றானும் நஷ்டமாய தாமிரத்திற்கும் பொன்மையுண்டாகாதாம்; மற்றோ, முன்வடிவத்தைவிட்டபின்னிருக்கும் தாமிரத்திற்கே பொன்மையுண்டாவதேபோலக் கடாதிகட்குத் தமமான்மவடிவத்தினும் வேறாய கேவல கடாதிவடிவத்தானே ஒருகாலுங் காரணத்தின்கண்ணே இலயமுண்டாகாதாம்; என்னை, ஆன்மாவினும் வேறாய அவை தாமே முயற்கோடுபோல வடிவற்றனவாம். வடிவற்றவற்றிற்கு எப்பொருளின்கண்ணும் இலயங்காணவருவதின்றுமாமே, அன்னமவடிவ படத்தே அன்னமவடிவகடத்தின் லயமும் காணவருவதின்றுமாதலின், கடாதிகட்கு மண் முதலிய ஜடப்பொருள்களில் இலயமுண்டாகாதாம்; மற்றோ, மண்ணுபகிதசேதனத்தின்கண்ணே அவை தமது நாமரூபங்களைப் பரித்தியாகித்து இலயமாம். கடாதி ஜடப்பொருள்களும் தம்மிலயகாலத்தே சேதனப்பிரஹ்மபாவத்தையே யடையும்போது, எப்போதும் பிரஹ்மத்தோடு

அபேதத்தையடைவுற்றிருக்கும் இச்சேதன ஜீவான்மாத் தம்மிலயகாலத்தே சேதனப்பிரஹ்மபாவத்தையடையுமென்பதன்கண்ணே கூறவேண்டியது யாதுளது?

சங்கை:—ஹே பகவன்! ஜீவான்மாவிற்கு எப்போதும் பிரஹ்மத்தோடு அபேதமாயின் சம்சார தசையினும் மோக்ஷதசையின்கண் யாது விசேடமுளது?

சமாதானம்:—ஹே இந்திர! துவம்பதார்த்தரூப ஜீவான்மாவின்கண்ணே யான் கர்த்தா, யான் போக்தா எனப் பிரதீதியாம் தருமங்கள் அவித்தையிற் கற்பிதமாதலின் மித்தையேயாம். ஜீவான்மாவிற்குச் சுயம்பிரகாசத்தன்மையும் அத்விதீய ஆநந்தரூபத்தன்மையும் உண்மைவடிவமாம்; அவ்வடிவமே தற்பதார்த்தரூபப் பிரஹ்மத்திற்குமாமாதலின், வாஸ்தவவடிவத்தானே ஜீவப்பிரஹ்மங்களிரண்டும் அபின்னமாம். சம்சாரதசையின்கண்ணே எச்சீவப்பிரஹ்மபேதம் பிரதீதியாமோ அப்பேதப்பிரதீதற்கு தூலசூக்ஷுமசரீரசகிதகாரண அஞ்ஞானமேயாம், காரணம் நீங்கியபின்பு கற்பிதபேதமும் நீங்கும். "யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேன்" என்னும் அபேதஞானத்தானே அஞ்ஞானநீக்கமாங்கால் கர்த்திருத்வ போக்திருத்வாதி கற்பிதரூபங்களும் தாமே நீங்கும்; இதுவே சம்சாரதசையினும் மோக்ஷதசையின்கண்ணே விசேஷத்தன்மையாம். இரஜ்ஜுரூப அதிஷ்டான ஞானத்தானே இரஜ்ஜுவிஷயக அஞ்ஞான நிவிருத்தியாம்போது கற்பித சர்ப்பமும், அதன் பயவுற்பத்தியாக்கல், மோகமுண்டாக்கல் முதலிய தருமங்களும் தாமே நீங்குமாறு அதிஷ்டானப்பிரஹ்மஞானத்தானே பிரஹ்மவிஷயக அஞ்ஞானம் நீங்கும்போது கர்த்திருத்வ போக்திருத்வாதி தருமங்களும் தாமே நீங்கும். கடரூப உபாதி நீங்கவே அக்கடாகாசம் தன் மகாகாசரூபத்தானே யிருக்குமாறு, தூலசூக்ஷுமகாரணமென்னும் முத்தேகங்களும் கர்த்திருத்வ போக்திருத்வாதி தருமங்களும் அற்ற இச்சீவான்மாத் தன் பரிபூரண பிரஹ்மரூபத்தானே நிலைபெறும்.

சங்கை:—ஹே பகவன்! மின்னல் முதலிய ஜடபதார்த்தங்கட்கும் ஜீவான்மாவாய சேதனத்திற்கும் இலயகாலத்தே சமானமாகவே பிரஹ்மபாவப்பிராப்தியுண்டாகுமாயின், சுருதியின்கண்ணே ஜீவான்மாவிற்குப் பிரஹ்மபாவப்பிராப்தியின்கண்ணே மின்னல் முதலிய திருஷ்டாந்தங்கள் கொடுத்திருப்பது அசங்கதமாகும்; ஏனெனின், சிறிது மாத்திரமேனும் விலக்ஷணத்தன்மையை யங்கீகரித்தே உபமான உபமேய பாவமுண்டாமாதலின், அவற்றின்கண்ணே சிறிதுமாத்திரையேனும் விலக்ஷணத்தன்மை கூறவேண்டும்.

சமாதானம்:—ஹே மைந்த! சுருதியானது இலய அவஸ்தையின்கண்ணே ஜீவான்மாவிற்குப் பரப்பிரஹ்மபாவ அடைவைக் கூறியிருப்பதேபோல மின்னல் முதலிய ஜடப்பொருட்கட்கும் அவ்வடைவைக் கூறியிருந்தபோதினும், அத்திருஷ்டாந்த தார்ஷ்டாந்திகத்தே காரிய அகாரியரூபத்தானே விலக்ஷணத்தன்மை பிரசித்தமேயாம். மின்னல் முதலிய திருஷ்டாந்தங்களிலோ காரியத்தன்மைத் தருமமிருக்கும், ஜீவான்மவடிவ தார்ஷ்டாந்திகத்திலோ காரியத்தன்மைத் தருமமிராதாம், அகாரியத்வ தருமமிருக்குமாதலின், இரண்டிற்கும் விலக்ஷணத்தன்மை சம்பவிக்கும்.

சங்கை :—ஹே பகவன்! அம்மின்னல் முதலியனவைபோலச் ஜீவான்மாவின்கண்ணும் காரியரூபத்தன்மை ஏனுண்டாவதில்லை?

சமாதானம் :—ஹே மைந்த! மேகம் மின்னல் முதலியவற்றைப்போல ஜீவான்மாவின்கண்ணுங் காரியரூபத்தன்மையை யங்கீகரிக்கின்றேன், காரியரூபமாம் பொருளியாவும் அழிவையேயடையும். இதுகாறுங் காரியரூபமாய் அழிவதைப்போலக் காரியரூபத்தன்மையால் ஜீவான்மாவிற்கும் அசேயம் அழிவாமாதலின், "ஆன்மா அஜரம் அமரம் அபயம் பிரஹ்மரூபம் ஆம்" என்னும் ஆன்மாவின் மஹிமையைக் கூறும் பிரஜாபதி மிதயாவாதியாவர். அதைத்து, முன்னர் மும்முறை ஆன்மாவின்கண்ணே விநாசத்தன்மைவடிவ தோஷத்தைக்கண்டு அவ்விந்திரன் பிரஜாபதி சமீபத்தே வந்தனன், நான்காவது முறையும் அவ்விந்திரனுக்கு அவிநாசியான்மலாபம் உண்டாகாதாயின் இந்திரன் வந்ததே வீணும். முன்போல அவ்வான்மாவின்கண்ணும் விநாசித்தன்மையைக்கண்டு மீண்டும் வரும்படி நேருமன்றோ? அல்லது, ஜீவான்மாவிற்கு நாசத்தையங்கீகரிக்கின்றேன், பிரஜாபதி இந்திரனுக்குச் சுயஞ்சோதிப் பிரஹ்மப்பிராப்தி பூர்வகம் தன் பரிபூரணரூபத்தானேயிருத்தல்வடி வபலங்கூறியதும் அசங்கதமாம்; ஏனெனின், நஷ்டமாய ஜீவர்க்குச் சாமானியமாயுள்ள பொருளின் பிராப்தியுஞ் சம்பவியாதாம்; சம்பவியாதபோது அநந்தப்பிராப்தி பூர்வகசொரூபமாய் நிலைபெறு மெவ்வாறு? ஆகாதென்க. என்பன முதலிய அநேகவகைத்தோஷம் பிராப்தமாமாதலின், அதன்கண்ணே காரியரூபத்தன்மை சம்பவியாதாம். அல்லது, உண்மையா யாராய்ந்து நோக்கின், வாயு மேகம் மின்னல் முதலிய திருஷ்டாந்தத்தேயும், ஜீவான்மவடிவ தார்ஷ்டாந்திகத்தும் காரிய அகாரியத்தன்மைவடிவ விலக்ஷணத்தன்மை அபேக்ஷிதமன்றும் வியக்திகளின் பேதமாத்திரையானேனும் அவற்றின்கண்ணே திருஷ்டாந்தரூபத்தன்மை சம்பவமாம் என்னுங் கருத்தானே கூறிய திருஷ்டாந்தத்தின்கண்ணும் உண்மையாய்க் காரியரூபத்தன்மையின் கண்டனஞ்செய்யப்படும். அவற்றின்கண்ணே நையாயிகமதத்தேபோல உண்மையாய்க் காரியரூபத்தன்மை யிருப்பின், அழிவுடைய திருட்டாந்தத்தே சுருதி சமானத்துருபரூபத்தானே கூறிய சமுத்தானம், பிராப்தி, சொரூபாவஸ்திதி யென்னும் மூன்றும் சம்பவியாதாம்; ஆனால் காரணத்தினும் தனிச்சத்தைவடிவ வாஸ்தவகாரியத்தன்மையின்றும்; மற்று, காரணமே காரியரூபத்தானே நிலைபெறும். அது காரணத்தினும் வேறுருவமாய்ச் சத்தன்றும்; ஏனெனின், வேறாய அது சத்தையையுடைய நையாயிகர்க்கேபோல அக்காரியந் தன் காரணத்தினும் தனிவடிவமாய் நிலைபெறுமாயின், தன் விநாசத்தானே அசத்தையையுமடையும், அதனானே முன்மொழிந்த சர்வ தோஷங்களும் பிராப்தமாம்; ஆனால் காரியத்தை யாம் காரணத்தினும் வேறு சத்தையுடையதா யங்கீகரித்திலேமாதலின், இப்பக்கத்தே முன்மொழிந்த தோடம் பிராப்தமாகாதாம்.

சங்கை :—ஹே பகவன்! அத்திருட்டாந்தத்தேயிருக்குங் காரியத்தன்மையை மித்தையெனின் தார்ஷ்டாந்திக ஜீவனிடத்தும் மித்தியாத்தன்மை சித்தமாம்.

சமாதானம் :—ஹே குழந்தாய்! திருஷ்டாந்தத்தேயிருக்குங் காரியரூபத் தன்மை மித்தையாதலேபோல ஜீவத்தன்மையும் மித்தையாம் என்னுந் துல்லி

யத்தே நினக்காக்கிரகமிருப்பின் அஃதெதுவகதகநிஷ்டமின்றாம்; வனெனின், ஜீவத் தன்மையை யாமும் மித்தையாயே யுடன்படுகின்றோம்; ஆதலினானே, 'ஏயாஹா ஹொத ஜீவெஸ்வளகரோதி' என்னும சுருதியும ஜீவேஸ்வரரின் நிதியை மாயா தீனமாய்க்கூறியிருக்கின்றது. கடரூபஉபாதி நாசமாகவே கடாகாசத்தன்மை மித்தையேயாவதேபோல, முதலேதக விவேகஞ்செய்யின் ஜீவத்தன்மையும் மித்தையேயாம். கடாகாசரூபசங்காததேத விசேஷ்யரூபததானையிருக்கும் ஆகாசம சத்தியரூபமாவதேபோல, ஜீவரூபசங்காததத்த விசேஷ்யரூபமாயிருக்கும ஆநந்தவடிவ ஆன்மாவும் சத்தியரூபமாமாதலின, வாயு மேக முதலிய திருஷ்டாந்தத்தேயும் தார்ஷ்டாந்திக ஜீவனிடதநுமிருக்கும நாமரூப இலக்ஷணமாயையின் அம்சத்தே வாதி மித்தியாததன்மையைககூறின சங்கையுறறுமைக; மாயாம்சததே யாமும் சத்தியங கூறிலேம; மற்று, அஸ்திபாதிபிரியரூபமா யெல்லாபபொருள்களினும் தொடர்ந்திலகும பரமானமாவே சததியமென யாம கூறினேம. ஸ்தூலாதி முத்தேகாதிகளோடுகூடிய ஜீவனே ஆநநதவடிவ ஆன்மசநதையை யங்கீகரித்தே சத்தியமாவன்; இயலபாயோ ஜீவனிடதநும் மெய்ம்மையின்றாம இவ்வாறு வாயு மேகாதிகளும பரமான்மாவின சததையைப்பற்றியே மெய்ம்மையாயிலகும; இயல்பானே அவற்றின்கண்ணும மெய்ம்மையினறாம இததுணை யம்சத்தையொப்பா யங்கீகரித்தே அவற்றில உபாசனரூபத்தன்மை கூறப்பட்டது, ஜீவனிடத்தோ உபமேயரூபததனமை கூறப்பட்டது, ஆனால், அதநிருட்டாந்தத்தேயிருக்குங் காரியததன்மை யம்சத்தே ஜீவனுக்குத் திருட்டாந்த சமானத்தன்மையின்றாம, வாயுவாதிகளைபபோல ஜீவனிடதநும காரியரூபததனமையிருப்பின், உறபத்தியுடையனவெல்லாம நாசமுடையனவாம, கடாதிகள் உறபததியுடையனவாய் நாசமுடைவதேபோலச் சீவனும காரியமாயின நாசமடைவன்; அடையினே பல போகங்களின்றிச் செயதகருமங்களின் விநாசதோஷமும், செய்யாதவற்றின் பலப்பிராபதிவடிவ தோஷமும ஆம. இததகைய அழிவுகூடிய ஆன்மோபதேசத்தானே பிரஜாபதிக்கும் மித்தியாவாதித்தன்மை சித்தமாம.

சங்கை:—ஹே பகவன! வாயு முதலியவற்றே காரியரூபத்தன்மை யிருப்பதேபோல கடாதிகளினுமிருக்குமாதலின், பிரசித்தமாய கடாதிகளைவிட்டுப பிரஜாபதியானவா வாயுவாதிகளைத திருஷ்டாந்தமாககியதென்?

சமாதானம்:—ஹே மைநத! திருஷ்டாநதமாககியதோ காரியரூபததன்மையைப்போதிப்பதின் கருததாயன்றாம; மற்று, பிரியாபபிரியமறறதாகும அசரீர பாவத்தே கருததாம. கடாதிகட்கு வாயுவாதிகட்கேபோலச சரீரமறறிருக்குந் திதி பொருநதாதாமாதலின், பிரஜாபதிகடாதிகளைத் திருட்டாநதமாககிலர். ஹே குமர! பிரஜாபதியின் கருததிதுவாம:—கனமாய அவயவங்களோடுகூடிய தேகங்களற்ற வாயு முதலியவை பிரியாபபிரிய பாவததையடையாததேபோல, ஜீவான்மாவும் முத்தேகங்களறறதாய் அவறறையடையாது. பிரளயம் வரவே சரீரமறற வாயு முதலியவை பரஞ்சோதிவடிவ காரணததையடைந்து தம் பரிபூரண சொரூபத்தானேயிருந்து மீண்டொருக்காலும் சம்சார சமபந்தியாய துக்கத்தையடை

யாததேபோல, சரீர அபிமானமற்ற இச்சீவான்மாவும் பரமஜோதிரூபப் பரமான்மாவையடைந்து தன் பரிபூரணரூபத்தானேயிருந்து மீண்டொருகாலும் சம்சார சம்பந்தியாய துக்கத்தையடைவதில்லை. அந்தப பரமான்மரூபஜோதியின்கண்ணே பரமஜோதிரூபத்தன்மை கூறியது ஸ்வப்ரகாசத்தானே கூறியதாம்; ஏனெனின், சுயஞ்சோதியாய பரமான்மாவினும் வேறாக இருக்கும் சூரியன் முதலிய ஜோதிகள் தம் சித்தியின்பொருட்டுத தம்மினும் வேறாய ஞானரூபஜோதியை யபேக்ஷிக்குமாதலின், அவற்றின்கண்ணே பரமஜோதிரூபத்தன்மை சம்பவியாதாம். ஞானரூப பரமான்மாத் தன்சித்தியின்பொருட்டு வேறொரு ஞானத்தை யபேக்ஷிப்பதில்லையாதலின், சுருதிபகவதி அதைப் பரமஜோதியென்றனள். அல்லது, அவ்வான்மவடிவஞானம் ஒருகால் தன் சிததியின்பொருட்டு வேறொரு ஞானத்தையபேக்ஷிக்கின் ஆன்மாசிரயம, அன்யோன்யாசிரயம, சக்கிரிகை, அநவஸ்தையென்னும் நான்கு தோஷங்களுமு பிராப்தமாம்; ஏனெனின், ஞானமுடையவனை ஞாதாவென்பர. ஆன்மசொரூபஞானம் தன் சித்தியின்பொருட்டு எஞ்ஞாதாவையபேக்ஷிக்குமோ அந்தஞாதா அம்முதன்ஞானத்தானே ஞானமுடையவனாயம்முதன் ஞானத்தைச சித்திசெய்வனா? அலலது, வேறொரு ஞானத்தானே ஞானமுடையவனாய் முதல் ஞானத்தைச் சித்திசெய்வனா? முதலதிலோ தன் சித்தியின்கண்ணே தன்னதபேக்ஷையென்னும ஆன்மாசிரய தோஷபபிராபதியாம. இரண்டாவதன்கண்ணும் இவ்விசாரஞ்செய்யத்தக்கதாம்:—அந்த ஞாதா அவ்விரண்டாவது ஞானத்தைச் சித்திசெய்வது அவ்விரண்டாவது ஞானத்தால் ஞானமுடையவனாய் அவ்விரண்டாவது ஞானத்தைச சித்திசெய்வனா? அலலது, முதன் ஞானத்தானே ஞானமுடையவனாய் அவ்விரண்டாவது ஞானத்தைச் சித்திசெய்வனா? அல்லது, வேறொரு மூன்றாவது ஞானததானே ஞானமுடையவனாய் அவ்விரண்டாவது ஞானத்தைச சித்திசெய்வனா? அவற்றுள், முதலதிலோ மீண்டும் முன்போலவே ஆன்மாசிரய தோஷஅடைவாம். இரண்டாவதிலோ அன்யோன்யாசிரயமாம்; என்னை, முதன் ஞானத்திறகுத் தன் சித்தியின்கண்ணே இரண்டாவது ஞான அபேக்ஷையாம். அவ்விரண்டாவதற்குத் தன் சித்தியின்கண் முதன்ஞான அபேக்ஷையாம். மூன்றாவதன்கண்ணும் இங்ஙனாராயவேண்டும்:—அநத ஞாதா மூன்றாவது ஞானத்தைச் சிததிசெய்வது, அம்மூன்றாவது ஞானத்தால் ஞானமுடையவனாயதனைச் சித்திசெய்வனா? அல்லது, இரண்டாவது ஞானத்தால் ஞானமுடையவனாயதனைச சித்திசெய்வனா? அல்லது, முதன் ஞானத்தால் ஞானமுடையவனாயதனைச்சித்திசெய்வனா? அல்லது, வேறு நான்காவது ஞானத்தால் ஞானமுடையவனாயதனைச் சித்திசெய்வனா? முதலதிலோ மீண்டும் முன்போலவே ஆன்மாசிரயதோஷப் பிராப்தியாம். இரண்டாவதிலோ முன்போலவே மீண்டும அன்யோன்யாசிரயப் பிராப்தியாம். மூன்றாவதிலோ சக்கிரிகையடைவுறும; ஏனெனின், முதலதற்குத் தன் சித்தியில் இரண்டாவதனபேக்ஷையும், இரண்டாவதற்குத் தன் சித்தியில் மூன்றாவதனபேக்ஷையும, மூன்றாவதற்குத் தன் சித்தியில மீண்டும் முதன்ஞான அபேக்ஷையும் என்பதாகச சக்கிரம்போலச சுழலல்வடிவமாம். நான்காவதிலோ அந்நான்காவது ஞானம தன் சித்தியின்பொருட்டு வேறொரு ஐந்தாவது ஞானத்தையபேக்ஷிக்கும, அதுவும் தன் சித்திக்காக ஆறாவதையபே

க்ஷிக்கும் என மேன்மேல ஞானதாவையை யுடன்படுவதில் அனவஸ்தா தோஷப் பிராப்தியாமாதலின, அவவானம செரூபஞானம தன் சித்தியின்பொருட்டு வேறொரு ஞாதாவை யபேக்ஷியாதாம ; மறறு, அது ஸ்வப்ரகாசரூபமாமாதலின் அதனைச் சுருதிபகவதி பரஞ்ஜோதியெனறனள். அத்தகைய அதனையடைவுற்ற இச்சீவான்மாததனது பரிபூரண அதவிதீயவடிவததானே திதிபெறும்.

சங்கை :—ஹே பகவன் ! ஜீவான்மாவிற்குப பரஞ்சோதியின் பிராப்தியே தன் வடிவததானே திதிரூபமாமாதலின, சம்பததியென்னும சப்தததானே அந்தப் பிராப்தியைக்கூறுவதும, ஸ்வரூப அபிநிஷ்பததியென்னுஞ சபதத்தானே அந்த ஸ்திதியைக்கூறுவதும ஆகிய 'பரம்ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே' என்னும சுருதியினகண்ணே கூறியது கூறலென்னுங் குறறமாம்.

சமாதானம் :—ஹே மைநத! மகாவாககியததினின்று முண்டாய "யான் பிரஹ்மரூபன்" என்னும ஞானம் சமபததியாம. ஜீவபிரஹ்ம அபேதஞானததாலுண்டாய சர்வ துவைதங்களும அறறதாய பலம் ஸ்வரூபாபிநிஷ்பததியாமாதலின், அச்சுருதியின்கண்ணே கூறியது கூறலெனனுங குறறமுண்டாகாதாம. பிரஜாபதி கூறல் :—ஹே இநதிர ! அவவதவிதீபததன்மை வடிவப பலபிராபதிகாலததே உண்டாம ஜீவபிரஹ்ம அபேத ஸ்வரூபம சாவ காரியகாரணரூபப பிரபஞ்சத்தினும் மேன்மையதாம ; சாவ உபாதிகளினும பரிபூரணமாமாதலின சுருதிபகவதி அதனை உத்தமபுருஷனென்றனள. அவ்வபேத ஸ்வரூபததினும் மேலாக வேறொரு பொருள் உததம புருஷரூபமனறும. இபபோது ஜீவன் முக்தரின் திதிவிததனைக் கூறுவாம் :—ஹே இநதிர ! மகாவாககியததால ஜீவபிரஹ்ம அபேதத்தை யுணாநத உததம புருஷன தன் பிராபததரும சமாபதி பரியநதம் நிவாசம் செய்யும் வகையை நீ கேட்பாயாக. ஆண்டு நிர்விகறப சமாதியின்கண்ணேயிருக்கும் ஜீவன் முக்தன் எலலாவகையானும அதவிதீயப பிரஹ்மததையேகாண்பன் ; அஃதையன்றி வேறெவவனன்மபபொருளையும் காணான். சமாதியினின்றுங் கிளம்பிய காலத்தோ சர்வ ஜகததையுந தன்னுன்மவடிவமாய்க்கண்டு எல்லா லோகங்களினுந் தன்னிசசைப்படி சுதநதிரமாய்ச சஞசரிபபன் , மகாராஜா சுதநதிரனாய்த் தன்றேயத்தே சஞசரிப்பதேபோலுஞ சர்வான்மவடிவ அறிஞன் சர்வப் பிராணி வடிவமாய்ப பக்ஷிய அபக்ஷியபபொருளகளைப புசிபபன், பாலரைப்போலநானுவகையாய கிரீடையைசசெய்வன, மகாபுருடரால ஆதரிக்கபபடுவன், இநதிராதி ரூபத்தானே தேவாங்கனைகளோடு ரமிபபன, நானுவகையாய தேர் முதலிய வாகனங்களில் ஆரூடனாவன், அநேகஞ சகிகளோடும இரமிபபன், தனனுறவினரோடு கூடியிருப்பன். இவ்வாறு அநேக விவகாரஙகளைச் செய்தபோதினும அவ்வறிஞன் அவ்விவகாரங்களோடு தன் தேகததை யொருகாலும ஸ்மரிப்பதேயில்லை ; துயில்வோன் அத்துயிலில் தன்றேகாதிகளை ஸ்மரியாததேபோலும்.

சங்கை :—ஹே பகவன் ! தேகாதி சாவ பதார்ததங்களையும் மறநதவனாகிய அறிஞன் மநதமதியினனெனப்படுவனன்றோ ?

சமாதானம் :—ஹே இந்திர! ஒருவன் உன்மத்ததசையையடைந்து அத்தசையின்கண்ணே நானாவகைப்பாய விபரீத விவகாரங்களைச்செய்வன், அத்தசை நீங்கிய போது அத்தசையின் சர்வ விவகாரங்களையும் மறந்தபோதினும் மந்தமதியினனெனப்படாததேபோல, அவ்வறிஞனும அவித்யா சம்பந்தமாய விவகாரங்களை மறந்தபோதினும் மந்தமதியினனெனப்படான; மாறாக, அவற்றை நினைவதானே மந்தமதியினனெனப்படுவன.

சங்கை :—ஹே பகவன்! அவ்வறிஞனுக்கொருகால் தேகாதி சர்வ பதார்த்தங்களின் மறதியுண்டாயின் தேகஸ்திதியெவ்வாறாம?

சமாதானம் :—ஹே இந்திர! துயிலப்பவனுக்குத் துயிலின்கண்ணே தன் றேகக்காப்பிற சிந்தையின்றாமாயினும, அத்தேகத்தைப் பிராணன் காப்பதேபோல, முக்தனது தேகத்தையும பிராணனேகாக்கும். தேரின்மீது சாரதி யுறங்கினும தேரிற்பூட்டிய சிக்ஷையடைந்த குதிரைகள் தேரை முன்போல் நியமபூர்வகம் கொண்டு செல்வதேபோல, அறிஞனுக்குபராமமுண்டாயினும் அறிஞனது தேகத்தை அந்தப் பிராணன் முன்போல நியமபூர்வகம நடத்தும். மகாராஜா உறங்கினும் அவன் மந்திரி முன்போல இராசியத்தை இரக்ஷிப்பதேபோல, முக்தன் உபராமத்தையடையினும் பிராணனவன்றேகத்தைக்காக்கும் முக்தனது தேகக்காப்பின் ஹேதுப் பிராணனுவதேபோல, அவனது போகஹேது மனத்தோடுகூடிய சுரோத்திராதிகளாம. இப்போது விஷய போககாலத்தே அஞ்ஞானிகளினும அறிஞரிடத்தே விசேடத்தன்மையை வருணிப்பாம —ஹே இந்திர! மூடபாலகனேனும உன்மத்தனேனும சுரோத்திராதி பதினொரு இந்திரியங்களால சப்தாதி அநேக விடயங்களைக் கவரினும பின்னவற்றை நினையாததேபோல, சீவன் முத்தனும் அவற்றால் அவற்றைக் கவரினும தன்னான்மாவினும் வேறாக எப்பொருளையு மறியான். சப்தாதிகளிடத்தே ஆசக்திபற்றவனாயினும அறிஞன் பிரஹ்மலோகாதி லோகங்களில் நிகழும் போகங்களைச் சூரியாதி தேவதைகளால ஏவப்பட்ட நேத்திராதிகளாற்கவர்வன், தன்னைச்சிவாயிலாயவற்றைக்கவாரானாகலின் அவ்வறிஞன் சர்வ துக்கங்களுமற்றவனாவன். இப்போது அவ்வறிஞனிடத்தே பிரஹ்மரூபத்தன்மையை வெளிப்படையாக்குமபொருட்டு முதலில சர்வ தேவதைகளாலும் உபாசியத்தன்மைவடிவப் பிரஹ்மத்தின்றருமத்தை அவன்பால நிரூபிப்பாம:—ஹே இந்திர! எப்பிரஹ்மவேத்தாவாய அறிஞனை யாம உத்தமபுருடனெனக்கூறினேமோ அச்சர்வான்மவடிவ அறிஞனைச சமதமாதி சாதனங்களோடுகூடிய தேவதைகள் தம்மான்மவடிவமாய்ச சாக்ஷாத்கரியாதவரை நானாவகையாய சவிசேடரூபங்களாலுபாசிப்பர். அந்தச சர்வான்மவடிவ வித்வானையுபாசித்தே அத்தேவதைகட்குச் சர்வ லோகங்களிலும் சர்வ போகங்களிலும் சுதந்திரத்தன்மையுண்டாம். அத்தேவதைகள் சர்வான்மவடிவ அறிஞனை யுபாசித்துச் சர்வ லோகத்திருக்கும் போகங்களையடைவதேபோல, இக்காலத்தும் சர்வான்மவடிவ அறிஞனைத் தன்னான்மவடிவமாயறிந்து உபாசித்த அதிகாரியும் சர்வ லோகத்துமிருக்கும போகப்பொருள்களையடைவன். இப்பொருளின்கண்ணே நீ சிறிது மாத்திரையும ஐயப்படவேண்டாம். ஹே இந்திர! சர்வஜகத்தின் அதிஷ்டானரூப

மாயைத் தற்பதார்த்தரூபப் பரமான்மாவை யாம் உனக்குக் கூறினோமோ அதுவே சர்வபூதப் பிராணிகளின் இருதயாகாசத்தே துவம்பதார்த்த ஜீவரூபமாய்த் திகமாம், சங்காதரூப உபாதி சம்பந்தத்தானே சபலமெனப் பெயருறும். அத்தகைய ஆனந்தவடிவ பரமான்ம தேவதையைத் தன்னான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரித்த அதிகாரியாய அறிஞன் மகாபாவங்களாலும் பற்றுறான். அவ்வறிஞனைப் பாவங்கள் தீண்டா என்பதன்கண்ணே காரணங் கூறுவாம்:—சர்வ காலத்தும் பரமார்த்த சத்திய சாக்ஷியே எனதான்மாவென ஆவரணமற்ற ஆன்மஞானத்தையடைந்த அறிஞன் எவ்வாறு பாவகருமத்தைச் செய்பவன்? மற்றோ, செய்யான். ஏனெனின், பாவகருமத்தே பிரவிருத்திக்கேதுவாய துவைத தரிசனம் அறிஞனுக்கு நீங்கியதன்றோ! எப்போதும் சுகரூப ஆன்மாவையே பிரியமாயுணர்வனே, ஆன்மாவினும் வேறாய விஷய சுகத்தைப் பிரியமாயறியானே, அத்தகைய அறிஞன் அவ்விஷயாநந்தத்தையடையும்பொருட்டு எவ்வாறு பாவகருமத்தைப் பெறுவன்; இயற்றானென்க. ஜனனமரணாதி விகாரங்களையும் அன்னியமேயடையும் சாக்ஷியான்மாவாய யான் ஜன்மமரணாதி விகாரங்களையடையேன், சுபாசுப கருமங்களின் சுகதுக்கரூபபலத்தையும் அன்னியமேபோகிக்கும், சாக்ஷியான்மாவாய யானப்பல போக்தாவல்லன் என எப்போதுந் தன்னை யசங்கமாயுணர்ந்த அறிஞன் புண்ணிய கருமங்கட்குக் கருத்தாவாகவுந் தன்னையுணராதபோது, பாவகருமங்களைச் செய்யான் என்பதன்கண்ணே யாது கூறவேண்டும்.

சங்கை:—ஹே பகவன்! விவகாரந்தையிருக்கும் அவ்வறிஞனுக்கு இத்தகைய மகிமை எவ்வாறுண்டாம்?

சமாதானம்:—ஹே இந்திர! சர்வ பூதப்பிராணிகளின் ஆன்மரூபனும், சர்வ பூதப்பிராணிகளின் அபின்னமாய்க் காணப்பெறுபவனும் ஆகிய பிரஹ்மவேத்தாவின் நிஷ்டாரூபமார்க்கத்தே அநேக மதிமான்களும் மோகத்தையடைந்துள்ளார். அவ்விதவானுடைய நிஷ்டைவடிவமார்க்க அடைவை யிச்சித்த தேவதைகள் தன்னியர்களாவர். சர்வ புண்ணியபாவங்களுமற்ற பிரஹ்மவேத்தாப் புருடோத்தமனை இவன் புண்ணியவானென்றாவது, இவன் பாவியென்றாவது எவனுமறிய முடியாது. இவ்வாறு பூர்வ புண்ணிய கருமமகிமையால ஆநந்தவடிவ அத்விதீயப் பிரஹ்மத்தைத் தன்னான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரித்தவன் அவசியம் மோக்ஷத்தையடைவன் என்பதன்கண்ணே சிறிது மாத்திரையும் நீ யையுறதே. ஹே குழந்தாய்! இங்ஙன் அந்த முற்றுமுணர்ந்த பிரஜாபதியானவர் தேவராஜாவாய இந்திரர்க்கு மூன்றவதைகளுமற்ற பூமாவாய பிரஹ்மத்தைத் தன்னான்மவடிவமாயுபதேசித்தனர்; அது சர்வ பூதப்பிராணிகட்கும் இருதயாகாசரூபமாம்; தன்னிருப்பு விளக்கத்தைக்கொடுத்து நாமரூபான்மக சர்வ ஜகத்தையும் நிர்வாகஞ் செய்வதாம்; எப்போது மெவ்வுலகினும் பரமாம்; அதன் சம்பந்தமற்றதாம்; இத்தகைய பூமாவடிவப் பிரஹ்மத்தை இந்திரர் தமது வடிவமாயுணர்ந்தனர். ஹே மைந்த! இங்ஙன் குருசிஷ்ய பரம்பரைவடிவ வித்தையின் சம்பிரதாயம் இருவகையாகப் பிரவிருத்திப்பது; ஒன்றே, தேவராஜாவாய இந்திர முதலாகவாம்; மற

றென்றே, சுவாயம்பு மனுமுதலாகவாம்; ஏனெனின், பிரஜாபதி, இந்திரர்க்கு வித்தையையருளியதேபோலச் சுவாயம்பு மனுவிற்கும் அருளினர். அம்மனு பகவான் பூவுலகத்தே ஆதிகுருவாய அதிகாரிகட்கு அந்தப் பிரஹ்மவித்தையை யுபதேசித்தனர். அதன்கண்ணே அதிகாரத்தைச சித்திசெய்யும் அந்தக்கரண சுத்தியற்ற பிராஹ்மணரை மூவரையும் நோக்கி யம்மனுபகவானுபதேசித்ததாவது :—ஹே மூவருணத்திபரே! உங்கட்கந்தககரண சுத்தி பூர்வகம ஆன்மஞானமுண்டாகாதவரை நீவிர் நான்காசிரமங்களுள் ஓராசிரமத்தைத் தரித்துத் தத்தமது யாகாதி கருமங்களைச் சாவதானமாகச செய்யுங்கள். அநநிஷ்காம கருமத்தானே மனத்தூய்மைவாயிலாயுஙகட்கு வைராக்கியப் பிராபதியுண்டானபோது ஆன்மசாக்ஷாத்காரப பொருட்டுப பரமஹம்ச சந்யாசத்தைககவர்மின் ; வைராக்கியமின்றி நீவிர்கவரன்மின் ஹே குழந்தாய்! இவவாறு அமமனுபகவான் அதிகாரிகட்கு அதிகாரபபடி வித்தையினுபதேசத்தைசசெப்தனா. இநதிரரும பிரஜாபதியின்பால துர்லபமாய பிரஹ்மவிததையைககவர்நது அக்கினி வாயு முதலிய தேவதைகட்குபதேசிததனர். உமைவடிவய பிரஹ்மவித்தையின்றிருவருளானே அக்கினி வாயு முதலிய தேவதைகளும் மூன்றவஸ்தையபறற பூமாவாகிய பிரஹ்மத்தைத தஙகளான்மவடிவமாய்ச சாக்ஷாத்கரிததனா. ஹே மைநத! அத்தேவதைகள் சாதவிக குணமுடையராதலின், அவாபாற் பரமேசுரருக்கு மகா பக்ஷபாதமிருநததாதலினானே அவா பிரஹ்மத்தைத் தம்மான்மவடிவமாய்ச சாக்ஷாதகரிததனர். இவ்வததியாய ஆதியில நீ நனவுமுதலிய மூன்றவஸ்தைகளறற பூமாணமாவின வடிவததை வினவினாய், அவை யாவறறையும உனககு விஸ்தாரமாய்க கூறினேனம. இப்போது எபபொருளை வினவ நினக்கிச்சையோ அபபொருளை நீ வினவுதி.

பதினான்காவது அத்தியாயம் முற்றிற்று.



# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## பதினைந்தாவது அத்தியாயம்.

ஓம் ஸ்ரீ கணேசாயநம ॥ ஸ்ரீ குருப்யோநம ॥ ஸ்ரீ காசிவிஶ்வேஶ்வராப்யாம்நம ॥
ஸ்ரீ சங்கராச்சார்யேப்யோநம ॥

முன்னர்ப பதினான்காவது அத்தியாயததே சாமவேதத்தின் சாந்தோககியப பொருளை நிரூபிததாம. இபபோதிவ்வத்தியாயத்தே சாமவேதத்தின் கேனோப நிடத அர்தத்தை நிரூபிப்பாம் :—முன்னத்தியாயவீற்றில் அக்கினி வாயு முதலிய தேவதைகட்குப் பிரஹ்மவித்தையின்றிருவருளானே பிரஹ்மஞானப் பிராபதியுண்டாகியதாகக்கூறப்பட்டது. அதைக்கேட்ட சீடன் அப்பொருளைககேட்க இச்சித்தவனாய்த் தன் குருவின்பாலிவ்வாறு வினவினன் :—ஹே பகவன்! ஆன்ம புராணத்தின் முதலத்தியாயத்தே தாங்கள் இருக்குவேத ஐதரேயப்பொருளைக்

கூறும் வாயிலாய்ச் சனத்குமாராதி முனிகளின் வாமதேவாதி யதிகாரிப் பிரஜைகளின் சம்வாதவாயிலாய் நானுவகையான பிரஹ்மவித்தையைக்கூறினீர்கள். கர்ப்பத்தின்கண்ணேயிருந்த வாமதேவரது சர்வான்ம பாவரூப அநுபவத்தையும், வாமதேவாதி சர்வாதிகாரிகளின் ஞானவைராக்கியாதிகளேயுங் கூறினீர்கள். 2-வது 3-வது அத்தியாயங்களில இருக்குவேதத்தின் கௌஷீதகீ யுபநிடதப்பொருளை நிரூபிக்கும்போது தேவராஜாவாய இந்திரர்க்கும் பிரதர்த்தன நரேந்திரர்க்கு முற்ற சம்வாதவாயிலாய்ப் பிராணப பிரஞ்ஞைவடிவ ஆன்மாவைக்கூறி அஜாதசத்துரு அரசர்க்கும பாலாகி மறையவர்க்குமுற்ற சம்வாதவாயிலா யான்மாவைப் பிராணாதிகளினும் வேறாகக் கூறினீர்கள். 4-வது 5-வது 6-வது 7-வது அத்தியாயங்களில் யஜுர்வேதத்தின் பிருஹதாரண்யக உபநிடதப்பொருளை நிரூபிக்கும்போது இருபுருடவம்சம ஒருஸ்திரீவம்சம என்னும மூன்றன்கண்ணுள்ள இருஷிகளின் பரஸ்பரபேதத்தையும, அபேதத்தையும், ததயங் அதாவண இருஷி இந்திரர்க்குப பிரஹ்மவித்தையை யுபதேசித்தனா, அதைக்கேட்டுக் கோபமுற்ற இந்திரா அவ்விருடியை மீண்டும் பிரஹ்மவித்தை யுபதேசம செய்வதினின்றும் நிவாரணஞ்செய்தனா, பின்னவ்விருடி தமது மொழியை மெய்யாக்கும்பொருட்டு அசுவினீ குமாரர்கட்குப பிரஹ்மவித்தையை யுபதேசித்தனா, அதனுற சினந்த இந்திரா அவ்விருடியின் சிரச்சேதஞ்செய்தனா என்பதையும், ஜனகராஜாவின் யாகசபையில் யாஞ்ஞவற்கிய முனிவா ஆசுவலாயனாதி முனிவர்களியாவரையும் வெற்றிகொண்டனா, யாஞ்ஞவற்கியா சாபத்தால சாகலயப பிராஹ்மணர் மரித்தனா என்பதையும, யாஞ்ஞவற்கிய ஜனகராஜாக்களின இருமுறைச சம்வாத வாயிலாயுற்ற நானுவகைப பிரஹ்மவித்தையையும, யாஞ்ஞவற்கியருக்கும் அவா மனைவியாய மைத்திரேயிக்கும் நடந்த சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்ம வித்தையையும், யாஞ்ஞவற்கிய முனிவரின சந்யாச ஆசிரமத்தையுங கூறினீர்கள். 8-வது அத்தியாயத்தே யஜுர்வேதத்தின் சுவேதாசுவதர உபநிடதப்பொருளை நிரூபிக்கும்போது சுவேதாசுவதரா சந்யாசிகள் சம்வாதவாயிலாய் ஜகத்காரண விசாரத்தைக்கூறினீர்கள் 9-வது அத்தியாயத்தே யஜுர்வேதத்தின் கடவல்லி யுபநிடதப்பொருளை நிரூபிக்கும்போது யமராஜா நசிகேதா சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள். 10-வது அத்தியாயத்தே யஜுர்வேதத்தின் தைத்திரீய நாராயணீய உபநிடதப்பொருளை நிரூபிக்கும்போது வருணபிதா பிருகு புத்திரவாயிலாய்ப பஞ்சகோச விசாரத்தையும, வேநனெனப் பெயரிய கந்தருவனது அநுபவத்தையும, சத்தியாதி சாதனங்களினும் சந்யாச ஆசிரமத்திற்கு அதிகத்தன்மையையும கூறினீர்கள். 11-வது அத்தியாயத்தே ஜாபாலாதி யேகாதச உபநிடதப்பொருளை நிரூபிக்கும்போது சம்வர்த்தகாதி மகா புருடா பரமஹம்ச சந்யாசத்தைத் தரித்ததையும, அதைத்தரிப்பதற்கு வைராக்கியகாலம, இயமநியமாதி சாதனமுடைய விரக்தனே யதிகாரி, தண்டங்கமண்டலங் காஷாயவஸ்திர முதலியவை பாஹ்ய வேஷம, பிக்ஷாடனம ஏகாந்தவாசம் வேதாந்த சிந்தனம முதலியவை யாசாரமாம் என்பனவாதி யெல்லாவிடயங்களையும் கூறினீர்கள். 12-வது 13-வது 14-வது அத்தியாயங்களில் சாமவேதத்தின் சாந்தோக்கியப் பொருளை நிரூபிக்கும்போது உத்தாலக சுவேதகேது முனிவர் சம்

வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும், பகவானுகிய சனத்குமார நாரதமுனிவர் சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும், பிரஜாபதி யிந்திரவிரோசனசம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும் கூறினீர்கள். ஹே பகவன்! 14-வது அத்தியாயமற்றில் தேவதைகளுள் இந்திரர் அக்கினி வாயு முதலியவர்க்குப பிரஹ்மவித்யாரூப உமாதேவியின் திருவருளானே சிறப்பாகப் பிரஹ்மஞானமுண்டாயதெனக் கூறினீர்கள் தாங்கள் கூறியதால் அடியேனுக்கிவ்வாறு தோறறுகின்றது:—இபபிரசஙகததே ஒரு ஆச்சரியவார்த்தையிருக்குமென அதனைக்கேட்ப விழைவுளேனுதலின், தாங்கள் கிருபைசெய்து அவ்வாசசரியததை யடியேன் பொருட்டருளவேண்டும் எனக் கூறிய சீடன் மொழியைக் கேட்ட ஆசிரியர், சிரததையையுடைய அவனுக்குக் கேனஉபநிடததததேயிருக்கும் கதையை யுபதேசித்தனர் அக்கதை அதிகாரிகட்குப பிரஹ்மஞானபபிராப்தியை யடைவிப்பதாம. ஸ்ரீ குரு கூறல் :—ஹே குமர! தூயமனத்தினராய அக்கினிவாயு முதலிய தேவதைகள் இநதிரரிடததினின்றும பிரஹ்மவிததையையடைநது அசசடையின்சண்ணேயிருந்த இநதிரா சமீபததேசென்று இவ்வாறு மனனஞ்செய்தனர் :— ஹே தேவராஜாவாய இநதிரரே! சுரோததிராதி ஐந்து ஞானேநதிரியங்களையும், வாக்காதி யைந்து கருமேநதிரியஙகளையும, மனத்தையும், பிராணனையும் தத்தம் காரியஞ் செய்வதன்கண்ணே ஏவுவதியாவர்? ஜீவனே ஏவுகின்றனன் எனத் தாங்கள் கூறினே சபடவியாது; ஏனெனின், இநதிரியஙகளால யானிவ் வியாபாரததை யொருகாலுஞ் செய்யேனெனத் தன் மனததே சங்கற்பிக்கினும் அவ் வியாபாரததைச்செய்வன், பூத ஆவேசமுற்றவன் தனது பிரதிகூல வியாபாரததையும செய்வதேபோல, ஜீவனும வியாபாரததைச்செய்ய இசசியானேனும அவசியமாயவவியாபாரத்தைச செய்வனுதலின் சுதநதிரனல்லன்; பரதநதிரனே யாவன்; அததனையன்பால் பொறிகளை யேவல் சப்பவியாதாம். தூங்கிய சாரதி தேர்ப்பரிநியாயத்தானே ஜீவன் முகதனது சுரோத்திராதி இந்திரியம சுதந்திரமாய்த் தத்தம வியாபாரததைசசெய்வதேபோலச சர்வபிராணிகளின் சுரோத்திராதி இநதிரியங்களும் சுதநதிரமாய்த் தத்தம வியாபாரங்களைச்செய்யும் எனத் தாங்கள் கூறினும சப்பவியாதாம; ஏனெனின், இவ்வுலகததே அநேகம பெயரோ தமதனுகூலமென ஆராய்ந்ததன்கண்ணே முயல்கின்றனர்; பிரதிகூலமென ஆராய்நதறிநததினின்றும் நீஙகுகின்றனர். அவ்விசாரம ஜட இந்திரியஙகட்கோ சமபவியாதாம்; மறறே, சேதனததின்கண்ணே சமபவிக்கும. முக்தர்களினிந்திரிய வியாபாரத்தின்கண்ணும சககிரப்ரமிநியாயத்தானே மறைவுறற சேதனவியாபாரத்திறகே அனுமானமாமாதலின், பரதநதிர இந்திரியங்களை யேவாநின்ற சேதனமொன்றை யஙகீகரிக்கவேண்டும். இசசுரோத்திராதி யிநதிரியமே சேதனமாம எனத் தாங்கள் கூறினுஞ் சம்பவியாதாம்; ஏனெனின், அவறறையே சேதனமென வுடன்படின் ஒரே சரீரத்தே அநேக சேதன ஆன்மா ஆம், அவையும வேறு வேறு கருத்துடையனவாமாதலின், ஒரு கிராமததின்கண்ணேயிருக்கும் வேறு வேறு மதமுடைய அநேகம பிரதானர் அக்கிராமத்தையே யழிப்பதேபோல, அவையும் இத்தேகக்தையழிக்கும், ஆகையால், பொறிகளிடத்தே சேதனரூபத தன்மை சம்பவியாதாம். ஹே பகவன்! புண்ணியபாவகருமமே சுரோத்திராதி

யிந்திரியங்களைத் தத்தம் வியாபாரத்தே முயல்விக்குமெனத் தாங்கள் கூறினுஞ் சம்பவியாது; ஏனெனின், செவி முதலியவை சடமாதலின் சுதந்திரமல்லாதன போல அறம்பாவமும் ஜடமாதலின் சுதந்திரமன்றும். ஆகையா லக்கருமத்தும் பொறிகளை யேவுந்தன்மை சம்பவியாதாம். ஹே பகவன்! இவ்வுலகத்தே எல்லாப் பிராணிகளுந் தமதனுகூலத்தை விசாரித்தே முயல்வர்; பிரதிகூலத்தை விசாரித்தே நீங்குவர்; அவையின்றி யெப்பிராணிக்கும பிரவிருத்தி நிவிருத்தி யுண்டாகாதாம். அவ்விசாரம் தேக இந்திரியாதி ஜடசங்காதத்தே பொருந்தாதாமாதலின், அச்சங்காதத்தைத தத்தங்காரியத்தே யேவுவது அச்சங்காதத்தினும வேறுவொன்றிருக்கவேண்டும; அதததகைய சேதனமியாதாம்? அதனைத் தாங்கள் தயவுசெய்து கூறவேண்டும். ஹே மைந்த! இவ்வாறு அக்கினி முதலியோர் இந்திரனை வினவியபோது இநதிரர் கூறுவதாவது '—ஹே தேவதைகளே! எவ்வான்மா இநதிரியங்கட்கு மிநதிரியமாமோ, மனததிற்கும் மனமாமோ, பிராணனுக்கும பிராணனுமோ, எவவான்மாவைப பிரஹ்மா நனு முதலிய மூன்றவஸ்தைகளற்றதென்றனரோ, அவவான்மாவே தன்னண்மையானே சர்வ தேக தாரி ஜீவர்கட்கும் இந்திரியங்கட்கும் பிரேரகமாம. யாது இநதிரியங்கட்கும் மனத்திற்கும் பிரேரகமாமோ அதுவே பிராணனுக்கும் பிரேரகமாம்; ஏனெனின், ஈண்டு எததேகதாரிகளும் பிராணனாலேனும் அபானனாலேனும் ஜீவிப்பதில்லை; மறறேு, எவ்வான்மாவைபபறறி இப்பிராண அபானனிருக்குமோ அவ்வான்மா வாய பிராணனாலே இவ்வெலலாப பிராணிகளும ஜீவனததையடையுமாதலின், அவ்வான்மாவைச சுருதிபகவதி பிராணன்கட்கும் பிராணனென்றனள். இவ்விந்திரியங்களும் மனமும் ஆன்மாவினிருபபுவிளககததை யடைவுறறே தததங்காரியஞ்செய்வதில் ஆறறலுடையனவாமாதலின், அதைச சுருதிபகவதி யிந்திரியங்கட்கு மிந்திரியமென்றனள்; மனத்திற்கும் மனமென்றனள். ஹே தேவதைகளே! இவ்வாறு பிரஹ்மவேத்தாவாய குருவாயிலா யிந்திரியாதிகளை யேவு மான்மாவைச் சிரவணித்துப் பின் தூயமனததால் அதை விசாரிககு மதிகாரியே நனு முதலிய மூன்றவஸ்தைவடிவ பநதத்தினின்றும விடுபட்டு அவ்வநதிரியாமியாய அத்விதீய ஆன்மாவை நிச்சயஞ்செய்வன். இத்தகைய இநதிரியாதிகளை யேவும் ஆன்மாவின் ஞானததானே இவ்வறிஞன் ஜன்மமரணாதி விகாரநீக்கவாயிலாய்ப் பிரஹ்மபாவப் பிராபதிவடிவ அமிருதத்தையடைவன். பிரஹ்மபாவத்தையடைந்து அறிஞன் மீண்டும ஜன்மமரணரூபசமசாரததை யடையான். மனசகித இந்திரியங்களியாவும் பிரவிருத்திக்க முடியாததாய ஆநநதவடிவ ஆன்மாவை இநதிரனாகிய யான் நன்று யறிவேனாயினும உலகப்பிரசித்த சாமான்ய ரூபத்தானும் விசேஷரூபத்தானும் ஆன்மாவைக் கூறுவதறகு யானறியேன். லோகவாசனையோடுகூடிய உங்கட்கு, ஆன்மாவின் சாமானிய விசேடரூபத்தானே உபதேசம் அபேக்ஷிதமாம். ஆன்மாச் சாமானிய விசேடபாவமற்றதாம; மன சகித சர்வ இந்திரியங்கட்கு மவிஷயமாம். அத்தகையதைச சாக்ஷாத் துபதேசம் யான் உங்கள்பொருட்டு எவ்வாறு செய்வேன்; மறறேு, சாக்ஷாத் தாயுபதேசிக்க எனக்குச் சமர்த்தில்லையாதலின், நிஷேதவாயிலாக யானுஙகட்கான்ம உபதேசஞ்செய்கின்றேன்; நீங்கள் சாவதானமாய்க் கேட்பீர்களாக. ஹே தேவதைகளே! எவ்வான்மாவை நீவிர் என்பால்

வினவினீரோ, எதை யுபதேசிக்க யான் முயன்றனனோ அது அறிந்தபொருள்களி னும் அறியாத பொருள்களினும் அயலாம். ஈண்டுப் பிருதிவித்தன்மை முதலிய சாமானியரூபத்தாலுங் கடத்வாதிவிசேடரூபத்தாலும் அறியப்பெறுபவை அறியப் பெற்றனவாம்; அவை யாவுங் கடாதிகளைப்போல அனுன்மரூபமாதலின், தியாகிக் கத்தக்கனவாம். ஜீவர்கட்கொருகாலும் பிரதீதியாகாதவை அறியப்பெறாதன வாம்; அவையும் மலடிமகன்போல அத்தியந்தமசத்தாதலின், அனுன்மரூபமே யாம்; அவையும் பரித்தியாகிக்கத்தக்கனவேயாம். இவ்வாறு அவ்விருபதார்த்தங் களினும் வேறாய ஆன்மவடிவத்தை யான் பூர்வாசார்யவாயிலாய்ச் சிரவணஞ் செய்துளேன், அவரெனக்கான்மாவை யுபதேசித்த பிரகாரம் நீவிர் கேட்பீராக. எப்பிரத்யக்சேதனம் சுரோத்திராதி ஞானேந்திரியங்களாலும், வாக்காதி கருமேந் திரியங்களாலும், மனத்தாலும் அறியமுடியாததாமோ, சர்வ தேவதைகளையும் விபூதியாயுடைய கிரியாசக்திப் பிரதானமாய பிராணனாலும் அறியமுடியாத தாமோ, தன் சாக்ஷிவடிவத்தானே சர்வேந்திரியங்களையும் மனத்தையும் பிராண னையும், அவற்றின் வியாபாரங்களையும் அறியுமோ, தன்னண்மை மாத்திரையானே அவற்றைத் தத்தமது வியாபாரத்தே செலுத்துமோ, அந்தப் பிரத்யக்சேனத்தை நீவிர் பிரஹ்மரூபமா யறிமின். நீவிர் பராக்வடிவமா யுபாசிக்கும் வஸ்துப் பிரஹ்ம ரூபமன்றாம். யாம் தினந்தோறும் ஆன்மாவின் சொரூபத்தை உபாசிக்கின்றன மாதலின், அது நம்மனோரால் எளிதாகவே யறியத்தகுதியதாம் என நும்மனத்தே எண்ணன்மின்; ஏனெனின், எவ்வான்மாவின் தகராகாசமெனப்பெயரிய நாமரூபத் தை நீவிர் உபாசிக்கின்றீரோ அது கேவலம் தியானஞ்செய்யத்தகுதியதாமன்றி யறி யத்தகுதியதன்றாம்; அத்தகைய தகராகாசப்பெயரிய தியேயரூபத்தை நீவிர் ஞேய ரூபமாயெண்ணுவது மிக ஆச்சரியமேயாம். அதிகாரிகளாலறியத்தகுதியதாய ஆன்மாவின் சொரூபமோ, நீ யான் இது என்பதாதி சர்வ சப்தங்களுமற்றதாம். இத்தகைய புத்தியாதிகளின் சான்றாய ஆன்மப்பிராப்தியின்பொருட்டு நீவிர் யாவரும் பரஸ்பரங்கூடி விசாரிமின்; சுருதியின்யதார்த்த தாற்பரியத்தை அறிந்த அறிஞனோ ஆன்மாவை அவிஞ்ஞேயம், விஞ்ஞேயம், சுவிஞ்ஞேயம், துர்விஞ்ஞேயம் என்னும் நான்கு நாமங்களால் கூறுவன். ஈண்டுள்ள தேகாபிமானி ஜீவர்கள் யாவ ரும் ஆன்மாவைச் சச்சிதானந்தவடிவமா யொருக்காலும் அறியவல்லுனரல்லராத லினுனே, வேதவேத்தாக்கள் ஆன்மாவை அவிஞ்ஞேயமென்றனர். ஈண்டுச் சர்வ தேகதாரிகளும் யானிருக்கின்றேன் என ஆன்மவடிவமாயுணர்தலின், விஞ்ஞேய மென்றனர். அதிகாரிகள் பிரஹ்மவேத்தாவாய ஆசிரியரின் உபதேசத்தானே ஆன்மாவை அத்விதீயப் பிரஹ்மரூபமாயறிவாராதலின், சுவிஞ்ஞேயமென்றனர். சுருதிப் பிரதிகூலதர்க்கத்தைப் பிரதானமாகவுடைய சாஸ்திரங்களால் ஒருகாலு மான்மா அறியமுடியாதாதலின், துர்விஞ்ஞேயமென்றனர். இப்போதிப்பொருளை யேமீண்டும் வெளிப்படையாய் நிரூபிப்பாம்:—ஹே தேவதைகளே! இச்சச்சி தானந்தவடிவ சுயஞ்சோதியாய ஆன்மாச் சர்வப் பிராணிகளினிருதய கமலத்தே விளங்கிக்கொண்டிருப்பினும், சுழுப்தியவஸ்தையின்கண்ணே சர்வ ஜீவர்களாலு மடையப்பெறினும், சம்சாரக் கிலேசத்தாற் றபிக்கப்பட்டவனும், பரமேசுரமாயை யான் மோகிதனுமாய ஜீவன் ஆன்மாவையறியான். பிறவிக்குருடன் தன் காத்தி

ருக்கும் நிதியையும் அறியாததேபோல, அஞ்ஞானியும் ஆன்மாவையறியான்; மாறாக ஆன்மாவினும் வேறாய அனான்மாவையே யெப்போதுங்காண்பன்; அதைக் காண்பதனானே அடிக்கடி ஜன்மமரணத்தையேயடைவன். ஹே தேவதைகளே! இவ்வான்மாயானிருக்கின்றேனென்னும் சபதத்திற்கும், அதனாலாய ஞானத்திற்கும் விஷயமாய்த்தோற்றுமாதலின், சர்வப் பிராணிகட்கு மிஃதறியப்பெற்றதாம். அல்லது, இவ்வான்மாக் கேவலம் யானிருக்கின்றேன் என்னும் பிரதீதியால் அறியப்பெற்றதல்லவாம்; மற்றோ, நனவிலும் கனவிலும் அஸ்திபாதிப் பிரியமென்பதாதிப் பிரதீதிகளாலும் அறியப்பெற்றதாம். அஸ்திபாதிப் பிரியமென்பதாதி அம் சங்கைப் பரித்தியாகித்துச் சிறிதுமாத்திரையுங் கடாதி பதார்த்தங்கட்கு விவகாரமுண்டாகாதாதலின், வேதவேத்தாக்கள் ஆன்மாவை விஞ்ஞேயமென்றனர். ஹே தேவதைகளே! இவ்வதிகாரி பூர்வ அநேக ஜன்மபுண்ணியங்களாலும் பிரஹ்மசரியாதி சாதனங்களாலும் பிரஹ்மவேத்தாவாய குருவுபதேசத்தானே தன்னான்மாவைப் பிரஹ்மரூபமாய்ச சாக்ஷாத்கரித்தபோது, தன்னிருதய கமலத்தேயிருக்கும் சுயஞ்சோதியாநந்தவடிவ ஆன்மாவை வெளிதாகவேயடைவனாதலின், வேதவேத்தாக்கள் ஆன்மாவைச் சுவிஞ்ஞேயமென்றனர். ஞானசுகாதி குணங்கள் சமவாய சம்பந்தத்தானே யிருக்குந் திரவியமான்மாவாம் என்னும் நையாயிகர் தர்க்கத்தை யங்கீகரித்து ஆன்மாவை நிச்சயிக்க முயன்றபோது, ஆன்மாவின் கண்ணே ஞானரூபத்தன்மையும் ஆநந்தரூபத்தன்மையும் சித்தமாமாறாற்றும் சுருதியநுகூலதர்க்கத்தைக்கண்டு, ஆன்மா ஞானசுகாதி குணத்தையுடையதா? அல்லது, ஞான சுகாதிவடிவமா? என்னும் ஐயத்தையடைவன்; ஐயமுற்றவனுக்கு ஆன்மா அத்தியந்தம் துர்விஞ்ஞேயமாம்.

சங்கை:—ஹே பகவன்! மகாமதியையுடைய இலௌகிகரும் நூலுணர்ந்தவரும் பிரஹ்மவேத்தாக் குருவினுபதேசமின்றியே தம்மதிவலுமையானே ஆன்மாவையேனறியார்?

சமாதானம்:—ஹே தேவதைகளே! அதிகாரி பிரஹ்மஞானியாய குருவினுபதேசத்தானன்றிக் கேவலந் தனது மதியின் வலுமையானே ஆன்மாவையொருக்காலுமறியமுடியாதாம்; ஒரு காலறிவனாயினும் உண்மையாயறியமுடியாதாம்; மற்றோ, உலகப்பிரசித்தமாய விசேடரூபததாலேனுஞ் சாமானியரூபத்தாலேனுமறிவன். இவ்வான்மாச் சர்வ விசேஷமுமற்ற நிர்விசேஷமாதலின், இத்தகையதை விசேஷமாயறியும் பிராந்தன் ஆன்மாவையறிந்தவனாகான். சர்ப்பபாவமற்ற இரஜ்ஜுவைச் சர்ப்பரூபமாய்க் காண்பவன் இரஜ்ஜுவடிவத்தை யுணராததேபோல, நிர்விசேஷ ஆன்மாவைச் சவிசேஷமாய்க் காண்பவனும் ஆன்மாவின் வடிவத்தையுணரான். இவ்வான்மா விசேஷவடிவத்தை யவாவுஞ் சாமானியரூபமுமற்றதாதலின், இதைச் சாமானியரூபமாயறியும் பிராந்தனும் ஆன்மாவையறியான்; ஆதலின், பிரஹ்மஞானியாய குருவினுபதேசத்தானன்றி ஆன்மாவின் உண்மையுணர்வதிகாரிக்கொருகாலுமுண்டாகாதாம். ஆசிரியர் வாயிலாயான்மாவைச் சிரவணிக்கின் ஆன்மாவினுண்மைவடிவ நிச்சயமவசியமுண்டாம். ஆன்மாவினுண்மைவடிவத்தைச் சுருதியானது சாமானிய விசேடமற்றதாய்க் கூறியிருக்கின்றது.

"யஸ்யாமதம் தஸ்ய மதம் மதம் யஸ்ய ந வேத ஸ: |
அவிஜ்ஞாதம் விஜாநதாம் விஜ்ஞாதமவிஜாநதாம் ||"

(பொ-ள்.) இப்போதிச் சுருதிப்பொருளை விரிவாய்க் கூறுவாம் :—ஹே தேவதைகளே! எவன் சித்தாந்தத்தே இவ்வான்மரூபப் பிரஹ்மம், மாதா, மானம், மேயம் என்னும் திரிபுடிகோசர ஞானவிடயமாமோ அவன் அதன் அத்விதீய சுபாவத்திலும் விபரீத திரிபுடிரூபபேதத்தைக் காண்பனாகலின், பேததரிசியாய அவன் பிரஹ்மத்தைக் கண்டிலன்; இத்துணையால் 'மதம் யஸ்ய ந வேத ஸ:' என்னும் சுருதியினிரண்டாவது பாதப்பொருளுரைக்கப்பட்டது. இனி 'யஸ்யாமதம் தஸ்ய மதம்' என்னும் முதற்பாதப்பொருள் வருமாறு: பிரஹ்மவேத்தாவாய குரு வாயிலாய்த் திரிபுடிரூப துவைதமற்ற அத்வைதப் பிரஹ்மத்தைச் சாக்ஷாத்கரித்து யானத் விதீயப் பிரஹ்மத்தை யறிந்தனனெனச் சித்தாந்தப்படுத்து மறிஞன் பிரஹ்மத்தின் அத்விதீயரூப வாஸ்தவவடிவத்தையே யறிந்தவனாதலின், அவனுக் கத்விதீயப் பிரஹ்மமறியப்பெற்றதேயாகும்.

சங்கை :—ஹே பகவன்! தாங்கள் பிரஹ்மஞானத்தின் அப்பிரமாணத்தன் மையின்கண்ணே பேதவிஷயத்தன்மைவடிவ ஹேதுவைக்கூறினீர்கள்; பிரமாணத் தன்மையின்கண்ணே பேத அவிஷயத்தன்மைவடிவ ஹேதுவைக் கூறினீர்கள்; அது சம்பவியாதாம்.

சமாதானம் :—ஹே தேவதைகளே! அந்தப் பிரஹ்மஞானத்தின் பிரமா ணத்தன்மையின்கண்ணும் அப்பிரமாணத்தன்மையின்கண்ணும் இருவகையேது க்கூறியது சுருதி கூறியதேயாகும். ஆண்டு, 'அவிஜ்ஞாதம் விஜாநதாம்' என்னும் மூன்றாவது பாதப்பொருளால் அப்பிரமாதவ ஹேதுவை வருணிப்பாம் :—மாயை யால் மோகிதனாய்ப் பிரமாதா பிரமாணம் பிரமேயம் என்பதாதி ரூபத்தானே அவ் வத்விதீயப் பிரஹ்மத்தை நானாவிதமாயுடன்படும் பேததரிசிகட்கு அஃதெப்போ தும் அறியப்படாமலேயிருக்கும்; ஏனெனின், எப்போதும் அபின்ன சுபாவ முடைய பிரஹ்மம் ஒருக்காலும் பேதமுடையதாகாதாம். இத்தகைய அதன் கண்ணே பேதத்தைவிடயஞ்செய்யும் பேதவாதியரின் ஞானம் அப்பிரமைவடிவ மேயாம். இனி 'விஜ்ஞாதமவிஜாநதாம்' என்னும் நான்காவது பாதத்தானே பிரஹ்மஞானத்தின் பிரமாத்தன்மையின ஹேதுவைக் கூறுவாம்:—ஹே தேவதை களே! ஆநந்தவடிவ அத்விதீய நிர்க்குணப் பிரஹ்மத்தை ஞாதாஞான ஞேயரூபத் தானே நானாவிதமாயறியாத அபேததரிசியாய வித்வானுக்கோ அஃதெப்போதும் அறியப்பெற்றதேயாம்; அவ்வறிஞனது பிரஹ்மஞானமும் பிரமைவடிவமேயாம். யான் பிரஹ்மரூபன் என்னும் போதத்தானே கணந்தோறுந் தன்னான்மவடிவத் தைச் சிந்திக்கும் மகான்மாவிற்குத் தன்னான்மவடிவம் அறியப்பெற்றதேயாம்; ஏனெனின், யான் பிரஹ்மரூபன் என்னும் அபேதஞானத்தானே சர்வ அதிகாரி களும் அவ்வாநந்தவடிவ ஆன்மாவையடைவர். அஃதின்றி யெவ்வுபாயத்தானும் அவ்வான்ம அடைவுண்டாகாதாம். அவ்வாநந்தவடிவ ஆன்மா ஜனனமரணாதி விகாரமற்றதாதலினானே அதை வேதவேத்தாக்கள் அமிருதமெனக்கூறினர். இப் போது ஆன்மஞானத்தானே அமிருதபாவப் பிராப்தியின்கண்ணே ஏகந்கூறு

வாம்:—ஹே தேவதைகளே! பிரஹ்மசரியாதி சாதனங்களோடு கூடியவரும் கிருபணாதி தோடங்களற்றவருமாய வதிகாரிகளே பிரஹ்மஞானியினுபதேசத்தானே தூயமனத்தால பிரஹ்மவித்யாரூப வீரியத்தையடைவர்; அதனானே அவர் ஆன்மாநந்தவடிவ அமிருதத்தையடைவர், மோக்ஷவடிவ அஃதையடைந்து மீண்டும் மரணத்தையடையார். இத்தேகத்தே தன்னிதத்தையாராய்ந்து பிரஹ்மசரியாதி சாதனத்தைச் செய்யுமதிகாரி அறபமுயலவானே ஆனமாநந்தவடிவப பெரும் பயனையடைவன்; அடைந்தவுடனே ஆநந்தககடல்வடிவமாவன்; மாயை மாயையின் காரியமாகிப சாவ துக்கரூப நுரைகுமிழி முதலியவையற்றவனாவன். இவ்வாநந்தவடிவ பலத்திற்கு மேலாக எபபொருளும ஜீவபபிரார்த்தனை விடயமாகாதாம்; வேறொருலாபமும உலகத்தின்றும், இத்தகைய ஆன்மவடிவ ஆநந்த அடைவின்பொருட்டு அதிகாரி அவசியம் முயலக. இவ்வதிகாரி தேகத்தையுற்று இவன் பரமேசுவரமாயையால மோகிதனாய் மூடாற சேவிககபபட்ட விடயங்களிடத்தே பறறுற்றவனாய ஆநந்தவடிவ ஆன்மாவை யறியாதபோது காமக்குரோதாதி வடிவச சூதாடிகள் மிகுதுயரீவர், அதனாலடிக்கடி ஜனனமரணாதி துக்கத்தையடைவன், அச்சூதாடிகளோ மிகவுந தூர்த்தர், விடயரூபப பூமியின்கண்ணே இந்திரியரூபப பாசங்களையுருட்டுவதில மிககுசலா, நானாவகைபாய ரூபக்கிரகணத்தே சமர்த்தர், அநேக ஜனமஙகளில இவனை வெற்றிகொண்டவா; அவராறறோற்கப்பட்ட இவன் நிந்தையின் பாத்திரமாதலின், ஜீவிததுககொண்டிருப்பினும் மரித்தவனேயாவன். நானாவகையாய தேகஙகளைக்கவர்நது அடிக்கடி ஜன்மமரணாதி துக்கத்தையடைவன், ஆசைவடிவ அநேகம பாசஙகளால கட்டுறறவனாய்க் குரோதலோபாதிகளின் வயததனா யிவ்வஞ்ஞானி காலகருமவயததால அநேகம் வகையாய மேற்கீழ்த தேகத்தையடைவன், அவறறில நானாவகையாய துக்கததை யனுபவிப்பவனா யஞ்ஞானி நஷ்டமடைநதவனைபபோலாவனாதலின், தைரியமுடையவர் அந்த ஜனன மரணாதி துககநீக்கப்பொருட்டு இத்தேகத்தே அவ்வாநந்தவடிவ ஆன்மாவை அவசியமறிக. மோக்ஷவடிவ பலசகித ஆன்மஞானமானது இவ்வதிகாரி சரீரத்தே துர்லபமாம என்னும சங்கையானே நீவிர் முயலவறறிராதொழிமின்; ஏனெனின், அஃதித்தேகத்தே பிராபதமாமென்பது சாவ அறிஞர்கட்கும் அனுபவசித்தமாம். முனனர் எவ்வதிகாரிகளித தேகத்தேயிருந்து பிரஹ்மசரியாதி சாதனங்களைச்செய்தனரோ, பரமதைரியத்தையடைந்திருநதனரோ அவர்கள் பிரஹ்மஞானியாய ஆசிரியருபதேசத்தானே ஆகாயமபோல யாண்டும் வியாபக சுயஞ்சோதி ஆநந்தவடிவ நிர்க்குண அத்விதீயப பிரஹ்மததைத தமமான்மவடிவமாயுணர்ந்து ஜீவித அவஸ்தையின்கண்ணேனும் மரண அவஸ்தையின்கண்ணேனும் அமிருதபாவத்தையடைவர்கள். அவ்வமிருதபாவத்தையடைவுற்று அவ்வறிஞர் மீண்டும் ஜன்மமரணாதி விகாரரகிதராயினராதலின், ஆன்மஞானத்தானே அமிருதபாவப் பிராப்திரூபப்பயன் எலலா அறிஞர்கட்கும் அனுபவசிததமேயாம். சாவ பூதப் பிராணிகளிடத்தேயிருக்கும் பரமான்மா உண்மையாயொன்றேயாம்; ஆனால், தேகாதி யுபாதிபேதத்தானே அது நானாரூபமாய்ப் பிரதீதியாம். உண்மையாய்ச் சந்திரனொன்றாயினும் ஜலபாத்திரபேதத்தானே அநேகரூபமாய்ப் பிரதீதியாவதேபோல, அவ்வொரு பரமான்மாவும் உபாதிபேதத்தானே அநேகவடிவமாய்ப் பிரதீ

தியாம். இவ்வாறு யாண்டும் வியாபக பரமான்மாவைத் தன்னுன்மவடிவமாயறியு மதிகாரி பூர்வ அறிஞர்போலவே சர்வ லோகங்களையுஞ் சர்வ போக்கிய பதார்த்தங் களையுந் தன்னுன்மவடிவமாயடைவன்; இவ்வகைப்பலத்தே நீவிர் சிறிதுமாத்திரை யும் ஐயப்படாதீர். மாதுர்ய அன்னத்தையுண்பதன் முக்கியபயனே பசி நீக்கமே யாம்; புஷ்டி உள்ளடங்கியபயனும்; ஆங்கே பிரஹ்மஞான முக்கியப்பயனே அமிருத பாவப்பிராப்தியேயாம்; சத்துருஜயாதி உள்ளடங்கியப்பயனும். ஈண்டு, முக்கியப் பயனையடைவிக்கும் முயல்வினுனே உண்டாம் பலசித்தி உள்ளடங்கியபயனும். இவ் வாறு அக்கினி வாயு முதலிய தேவதைகள் இந்திரர் வாயிலாய்ப் பிரஹ்மவித்தை யைச்சிரவணித்துப் பிரஹ்மபாவத்தையடைந்தனர். பிரஹ்மவித்தையின் மகிமை யானே அவர்கள் சர்வ லோகங்களையுமடைந்தனர்; சர்வ காமங்களையுமடைந்தனர்; சர்வ சத்துருக்களினின்றும் வெற்றிவாய்க்கப்பெற்றனர்; சர்வ துக்கங்களுமற்ற னர். இவ்வாறு பிரஹ்மவித்தையின்பலத்தையடைந்து சுவர்க்கபோகங்களிலிருந்த போதிலும் அவர்கள் எப்போதும் பிரஹ்மசிந்தன பராயணராயினர். ஹே மைந்த! இங்ஙன் ஆன்மசாக்ஷாத்கார மகிமையானே பிரஹ்மரூபத்தன்மையையடைந்த அவ் விந்திராதி தேவதைகளின் சமீபத்தினின்றுஞ் சர்வ அசுரர்களும் க்ஷயத்தையடை ந்தனர். அக்கினியின் சமீபத்தானே விட்டில்நாசத்தையடைவதேபோலப் பிரஹ்ம வேத்தாக்களாய தேவதைகளின் சமீபத்தானே அசுரர் க்ஷயத்தையடைந்தனர். அக்கினியால் தபிக்கப்பட்ட அயப்பிண்டம் காய்ந்த ஈரதிருணங்களைத் தகிப்பதே போலப் பிரஹ்மரூப அக்கினியானே ஒளிராநின்ற தேவதைகள் அசுரர்களைத் தகித்தனர். அயப்பிண்டம் திருணங்களைத்தகிப்பது அழலினாற்றலினானேயாம்; இயல்பானே அதன்கண்ணே தகிக்குமாற்றலில்லாததேபோல, இந்திராதி தேவதை களும் அசுரரைத்தகிப்பது பிரஹ்மரூப அக்கினியின் ஆற்றலினானேயாம்; இயல் பாயோ அவர்பால் அசுரரைத்தகிக்கும் ஆற்றலின்றாம். சாமுத்ரிகா சாஸ்திரத்தே கூறியிருக்கும் சிரேஷ்ட இலக்கணபலத்தானே ஜீவர்கட்குத் தனுதிகளினடை வாம்; அவ்வடைவின்கண்ணே தமது பிரயத்ன சாத்ய அபிமானஞ்செய்தல் வீணாவதேபோலப் பிரஹ்மபலத்தானே தேவதைகட்கு விஜயமுண்டாயது.

சங்கை:—ஹே பகவன்! அந்தப் பிரஹ்மமே தன்பலத்தால் தேவதைகளின் ஜயகாரணமும் அசுரரின் பராஜயகாரணமும் ஆயின், அதன்கண்ணே நம்மனோ ரைப்போல விஷமத்தன்மைத் தோடம் பிராப்தமாமன்றோ?

சமாதானம்:—ஹே மைந்த! எல்லாவற்றையும் ஒளிர்விப்பவராயினும் சூரிய பகவான் அத்தியந்த நிர்மலமாகிய சூரிய காந்தமணியின்கண்ணே விசேஷப் பிர திபிம்பபாவத்தையடைவதேபோல, யாண்டும் வியாபகமாயினும் அந்தப் பிரஹ்மம் சத்வகுணப் பிரதான தேவதைகளிடத்தே விசேஷ சம்பந்தமுறுமாதலின், தேவ தைகள் விசேஷ தேஜசையுடையவரானார்கள். பதுமைக் கூத்தாட்டும் சூத்திர தாரி சூத்திரங்களால் காஷ்டப்பதுமையை யாட்டிவைப்பவனாய் அவற்றுள் ஒன் றற்கு வெற்றியையும் ஒன்றற்குத் தோல்வியையும் உண்டாக்குவதேபோலச் சகத் வடிவ லீலைசெய்வதில் முயன்ற பரமான்மாவாகிய சூத்திரதாரியும், தேவ அசுர வடிவப் பதுமைகளுள் யாதேனுமொன்றற்கு வெற்றியையவசியம் உண்டாக்குவ

ராதலின், அசோகவனிகா நியாயத்தானே தேவர்க்கே வெற்றியையுண்டாக்கினர்; ஆகையாலீசுரரிடத்தே பக்ஷபாததோஷமின்றாம். கூறிய நியாயப்பொருள்: இராவணன் சீதையம்பனை எங்கேனும் ஓரிடத்தே வைக்கவேண்டியவனான்; ஆனால் தைவயோகத்தால் அசோகவனத்தே வைத்தனன் என்பதாம். விளையாடும் பாலகன் கிரீடையின் சாதனமாய பதார்த்தங்களுள் சிலவற்றை இப்பொருள்களில் மேன்மையிருக்கின்றமையின் என்னுடையனவே மேன்மையனவாம் என அபிமானித்துச் சிலவற்றை அபிமானியாததேபோலப் பரமான்மாவும் தேவதைகளையபிமானித்ததாதலின், பாலகனைப்போல ஈசுரரிடத்தே விஷமத்தன்மைத் தோஷப்பிராப்தியுண்டாகாதாம். இத்தகைய பிரஹ்மத்தின் விபூதிரூபமகிமையால் இந்திராதியர்போரில் பலவான்களாய அசுரரைவென்றனர். ஹே மைந்த! இவ்வாறு பிரஹ்மவேத்தாக்களாகிய தேவதைகளும் ஒருகாலத்தே பரமேசுரரது மாயையால் மோகிதராய் விடயபோகத்தே யாசக்தராயிருந்ததால் அவர் பிரஹ்மத்தின் மகிமையானே நமக்கு அசுரரினின்றும் வெற்றியுண்டாயது என்னும் பிரஹ்ம உபகாரத்தை மறந்தனர்; மாறாக, நமது வலுமையானே நமக்கு வெற்றியுண்டாயது எனத் துணிந்தனர். மகாதுக்கத்தையடைந்த ஒருவன், தேவதை முனிவர் அருளால் அத்துக்கத்தினின்றும் நீங்கியும் மீண்டும் தனதிமதத்தானே தூடிக்கப்பட்டவனாய் அவர்களை மறப்பதேபோலத் தேவதைகளும் பிரஹ்மத்தின் அனுக்கிரகத்தின் முன்னர் அநேகமுறை தைத்தியராற்றோல்வியுற்றனர்; பின் பிரஹ்மத்தினனுக்கிரகத்தால் வெற்றியுற்றனர்; பின் இராஜோகுணத்தோடு கூடியவராய்த் தமது வெற்றியின் காரணமாய பிரஹ்மத்தைமறந்தனர்; மற்றோ, தமபலமகிமையானே வெற்றியுற்றதாயெண்ணினர். சலத்தோடுகூடிய சூதிற்றற்பர வஞ்சகன் தனக்குபகாரஞ்செய்பவனையும் மறப்பதேபோலப் பிரஹ்ம அனுக்கிரகத்தானே கிருதார்த்தத்தன்மையைப்பெற்ற இந்திராதி தேவதைகளும் உபகரித்த பரமேசுரரைமறந்தனராதலின், அவர்கள் செய்ந்நன்றி கொன்றவரேயாவர். அவர்கள் இராஜோகுணமகிமையானே எவ்வபிமான முடைமையால் ஜீவர் எப்போதும் விநாசமுறுவரோ அத்தகைய மகாபிமானமுற்றனர். இப்போது தேவதைகளின் அபிமானத்தை நிரூபிப்பாம:—தேவதைகளாய யாமே மனோநிக்கிரகரூப சமமுடையேம், இந்திரிய நிக்கிரகரூப தமமுடையேம், மகாகுலத்துற்பன்ன முற்றேம், சுந்தரரூபயௌவனமுடையேம், வித்தை விநயமுடையேம், மகாகீர்த்தியுடையேம், மகாபாக்கியமுடையேம், நானாவகைப் போக்கியப்பொருளுடையேம், நம்மாற்றலானே நாம் மூவுலகத்தையுங் காப்பாற்றுகின்றேம். இத்தகைய நமது பலத்தின்முன்பே இவ்வசுரர் பல மெவ்வெண்ணிக்கையது; மற்றோ, மிகத்துச்சமாம். இவ்வசுரர் நீலமலைபோலும் கறுப்பர், காலன் அந்தகன் யமன் என்னும் மூவர்க்கொப்பானோர்; தினமாசாதி சமய அபிமானி தேவதைகாலன், ஜகத் சம்ஹாரஞ்செய்யும் மிருத்தியு அந்தகன், தர்மராஜாயமன். மிகவும் மாயாவிகள், போரில் மிகக்குசலர், மிகப்பராக்கிரமமுடையர், அதிகபல வீரியமுடையர், மூவுலகத்துள்ளவற்றையும் விழுங்குவதிற் சமர்த்தர், இத்தகைய அசுரர் அனைவருள் ஒருவனோடேனும் நம்மையொழித்து யாவரே போர்செய்யவல்லார். இத்தகையரை நமது பலத்தானே நாம் வென்றேமாதலின் நமக்குச் சமானமாக வேறுயார்; இத்துணையானே சர்வ தேவ

தைகளின் சாதாரண அபிமானங்காட்டப்பட்டது. இப்போது தேவராஜாவாய இந்திராது விசேஷாபிமானம் காட்டப்படும்: வஜ்ஜிரத்தைக் கரங்கொண்ட யான் என் பலத்தானே இவ்வஜ்ஜிரத்தானே மிக உன்னதமாய பர்வதத்தையும் சூரணிப் பேன். எனது வஜ்ஜிரம் நூறு முடியுள்ளது நூறு கூர்மையாய தாரையுடையது, இது சென்றவிடத்தே யொருக்காலும் பலமற்றுவருவதில்லை. இத்தகைய வஜ்ஜிர முடைய யான் யாவரினும் பலவானுவேன். வாயுவின் விசேஷாபிமானம் வரு மாறு: வாயுதேவதையாகியயான் சர்வ ஜகத்தையும் என்வயிற்றிற்பெய்து துரும்பு பஞ்சுபோலப் பிரஹ்மாண்டகோளகத்தினும் வெளியேகொண்டு செல்லச் சமர்த் துடையேன், எனக்குச் சமானபலமுடையவர் எவர்? அக்கினியினபிமானம் வரு மாறு: காய்ந்த ஈரமான கனத்த வுலகமியாவையும் பஞ்சுபோலக் கணத்தே சாம் பராக்குவேன் ஆதலின், எனக்கெவரே ஒப்பாவர்? வேறு மைந்த! வேறு வரு ணுதி தேவதைகளுந் தத்தமது பலத்தை வெளிப்படுத்தி மகாகருவத்தையடைந திருந்தனர் அக்கருவம் இரஜோகுணத்தானே யுண்டாயதாம்; பாவகாரணமாம்; பராக்கிரமநாசஞ்செய்வதாம்; கீர்த்தியைக்கெடுப்பதாம. இத்தகைய அநிஷ்டத் தையடைவிக்கும தேவதைகளின் கருவத்தைக்கண்டு பரப்பிரஹ்மம் தந்தையைப் போலத் தேவதைகளினிதத்தை யிசசித்து இவ்வாறு சிந்தித்தது: இத்தேவதை கள் எமதருளானே சர்வ லக்ஷணங்களோடுகூடியவராவர், வெற்றியுமுண்டாயது, இப்போதும் மகாபராக்கிரமமுடையவராயிருக்கின்றனர். இவர் நமது மாயையானே மோகிதராய்ச் செய்ந்நன்றி கொனறவரைபபோல உபகாரஞ்செய்த நம்மையே மறந்தனராதலின், மிக மூடபாலகரேயாவர். செய்ந்நன்றிகொன்ற தோடநீககப் பொருட்டு முதலில் அததோஷ அநர்த்தபலம் வருணிககபபடும்: யாவன் எவனரு ளால் மேன்மையையடைந்தனனே அவன் ஒருகால் மோகவயத்தால் உபகாரஞ் செய்தவனை மறப்பனேல கிருதககினனுய அவன் நூறு அயுதஜன்மபரியந்தம் மகா துக்கத்தையடைவன். அல்லது, தனக்குபகாரஞ் செய்தவனையெண்ணுதவனுகிய மூடன் கிருதககினதோடத்தால் கோடிகறப பரியந்தம் விட்டையின்கண்ணே கிரு மிசரீரத்தை யெடுத்துழல்வன். அல்லது, ஒருவன்செய்த அற்ப உபகாரத்தையும் எண்ணுதமூடன் கிருதக்கினனெனப்படுவன். அவனீண்டு பிரஹ்மஹததிசெய்த வனினும் அதிகப் பாவியாவன்; ஏனெனின், பிரஹ்மஹததியை நீக்கும்பொருட்டு மனுமுதலிய வேதவேத்தாக்கள் பிராயச்சித்த விதானஞ்செய்துளார். கிருதக்கின தோடநீக்கப்பொருட்டோ யாதொரு பிராயச்சித்தமும் விதிக்கவில்லையாதலின், அதற்காக யாதொரு பிராயச்சித்தமுமில்லையென அறிந்துகொள்ளலாமன்றே; இத ஞனே பிரஹ்மஹத்தியினும் மிகுந்த துயரைத்தருவது கிருதக்கினதோஷமாம். அல்லது, தேவதைகளிடத்தே கேவலம் கிருதக்கினதோஷமாத்திரமில்லை; மற்றே தம்மைத்துதித்தலானே மற்றயரை நிந்தித்தலானே ஆன்மகாதித்தன்மையும் விசு வகாதித்தன்மையும் ஆகிய தோஷமிரண்டுமிருக்கின்றன; ஏனெனின், ஈண்டு எப் பேததரிசியானவன் கருவத்தோடுகூடியவனுய்த் தன்றெழிலை மனத்தானுந் துதி க்கின்றனனே பிறர்தொழிலை நிந்திக்கின்றனனே அவ்வவிவேகி பேத திருஷ்டி யானே தன்னையும் அன்னியரையும் கொன்றவனுவன்; என்னை; சாஸ்திர வேத் தாக்கள் பேததிருஷ்டி பூர்வகந் தன்னைத்துதிப்பதில் ஆன்மஹத்தியையும், பிறரை

நிந்திப்பதில் பரஹத்தியையும் கூறியிருத்தலினென்க. அல்லது, யாவன், தன்னைத்துதித்தலானே தன்னைக்கொல்கின்றானோ அவன் இவ்வுலகத்தே அத்தியந்தம் பாவான்மாவாவன். கிருதக்கினதோஷ நீக்கப்பொருட்டுச சாஸ்திரத்தே யாதொரு பிராயச்சித்தமுங் கூறாததேபோல, ஆன்மஹத்தியை நீக்கும்பொருட்டுங் கூறவில்லையாதலின் அவையிரண்டுமொப்பாம் அல்லது. தேவதைகள் எப்போதும் தம்மையே துதிக்கின்றனர்; அயலாரை நிந்திக்கின்றனராதலின், நாடோறும் இவர்கட்கு ஆன்மஹத்தி விசுவஹத்தியுண்டாம.

சங்கை:—இத்தகைய ஆன்மஹத்தியாதி அநர்த்தரூப கருமத்தே ஜீவர் முயலுங்காரணமென்?

சமாதானம்:—பரமான்மாவாய நமது மாயையான் மோகிதராய்க் காலபாசவசத்தராய் அஞ்ஞானிகள் தமது அற்பகாரிய சித்தியின்பொருட்டும் ஆன்மஹத்தியையும் கிருதக்கினததன்மையையும விசுவஹததியையும் செய்கின்றனர் என்பதன்கண்ணே யாதொரு ஆசசரியமுமின்றாம். அலலது, கிருதக்னதாதி பாவ கருமத்தே பிரீதியையுடைய இத்தேவதைகள் அசுரரைப்போலத் தண்டிக்க யோக்கியரேனும இவர்கட்கவ்வாறு தண்டனுசெய்தல் உசிதமன்றாம். ஈண்டுத் தன் காத்தால்வைத்து மிகப் பிரயாசையுடன் வளர்த்த நச்சுமரத்தை வெட்டல் தகுதியன்றன்றோ, நச்சுமரமும் நாசயோக்கியமல்லாதபோது மேன்மையையுடைய தேவதைகள் எவ்வாறவ்வகைத் தண்டயோக்கியராவர்கள்? ஆகார்கள். பாவகருமத்தை யாசரிக்கும் புருடரைத் தண்டிக்கும்பொருட்டுப் புருடன்றான் பாவ ஆசரணமுடையனாகாதொழிக; மறறோ, தன்னைப் பாவமடையா உபாயத்தானே பாவிகளைச் சிக்ஷிக்குக; ஏனெனின், பாவஞ்செய்ய இச்சித்தவனோ தானே பாவ கருமத்தானே கொல்லபபட்டவனாவன், அத்தகையனைச சாதுவியறகையுடையவன் குரூரகருமத்தானே சிக்ஷிப்பின், அசசாதுவிற்கு இருவகைத்தோஷமலபிக்கும்; தன் சாதுவியறகையைப் பரித்தியாகித்தலொன்றும், அரைத்தமாவை யரைத்தல் போல, அடிபட்டவனை யடிததல் வடிவதோஷமொன்றுமாம். அல்லது, இவ்வெல்லாத் தேவதைகளும் எமது மைநதராவா இவரை யாம இனிதுகாத்துவந்தேம், அசுரரினின்றும் வெறறியடைவித்தேம. தேவரைக்கோறல் பூனையின்றொழிலே போலப் பாவரூபமேயாமாதலின், ஆன்மஹத்தி கிருதக்கினததன்மை விசுவஹத்தியென்னும்முத்தோடங்களையுமடைவிக்கும; இவருடைய கருவதோடததைவேறோருபாயத்தானே நீக்குவேம்; அதனீககத்தா லிவர்கட்குக் கலியாணமுண்டாம எனப் பரமான்மா ஆராய்நதது. ஹே மைநத! அர்ச்சுனனுக்கு ஸ்ரீ கிருஷ்ணபகவான் உபதேசித்தருளிய ஸ்ரீ கீதாசாஸ்திரத்தை அர்ச்சுனன் ஒருகாலததேபோக ஆசக்தியால் மறந்தனன், அம்மறதியை ஸ்ரீ பகவான் மீண்டும் அநுகீதையினுபதேசத்தால நீக்கியதேபோலப் பரமான்மாவுந் தேவதைகட்கு மீண்டும் மீண்டும் தமது வடிவத்தை நினைத்தறபொருட்டும் அபிமான நீக்கபபொருட்டும் முற்கூறிய விசாரத்தானே ஒரு அற்புத யக்ஷவடிவததைத்தரித்துத் தேவதைகளின் நேத்திரகோசரமாயது. அது எண்ணிககையற்ற சிரததையும், எண்ணிக்கையற்ற நேத்திராதியிந்திரியங்களையும், சர்வ ஜாதியையுடைய ஜீவர்களின் சர்வ முகஙகளை

யுந் தரித்திருந்தது, அதன்கண்ணே சர்வபூத பௌதிகபதார்த்தங்களுமிருந்தன, சர்வ ஆயுதங்களையுந்தரித்திருந்தது, சர்வ மாலைகளையுஞ் சர்வ வஸ்திராதிகளையுந் தரித்திருந்தது, ஸ்திரீபுருஷ நபும்சகமென்னும் மூன்று சின்னங்களையுந் தரித்திருந்தது, இத்தகைய அற்புதரூபமுடைய யக்ஷனைக்கண்டு சர்வ சபைக்கண்ணுள்ள தேவதைகளும் ஆச்சரியத்தையடைந்தனர்; இவன் யாவன் இவன் யாவன் எனப் பரஸ்பரங் கூறினர். ஹே மைந்த! மதிமான்களாய தேவதைகள் அன்னியர்களின் ஆகாரத்தையும், அவயவங்களின் கிரியைகளையும், கதியையும், சேஷ்டையையும், சப்தசிரவணத்தையும், வதனநேத்திரங்களின் வேற்றுத்தன்மையையுங் கண்டு அவர் மனவிருத்தாந்தங்களை யுணர்பவராயினும், அந்த அற்புத யக்ஷவடிவத்தைக்கண்டு நிச்சயத்தையடைந்திலர்; விஸ்மயத்தையடைந்த மனத்தையுடையவராய், உற்புல்லநேத்திர கமலமுடையராய், ரோமாஞ்சமுடையராய், யாவனிவன் யாவனிவன் என்னும் வசனத்தையே யடிக்கடி கூறினர். ஜராயுஜ அண்டஜ ஸ்வேதஜ உற்பிஜ்ஜமென்னும் நால்வகைச்சரீர இலக்கணமுடைய அவ்வியக்கனை முன்பெவருங் கண்டதேகிடையாது. அந்த அபூர்வயக்ஷதரிசனத்தால் தேவசபையின்கண்ணே மகா கலக்கமுண்டாயது. அக்காட்சியால் பயத்தோடுகூடிய இதயத்தராய்த் தம் மகிமையை மறந்தவராய்ச் சமீபத்தேசெல்லவுஞ் சமர்த்தற்றவராயினர். பின்பு அவ்விந்திராதி சர்வ தேவதைகளும் அக்கினிதேவரை நோக்கிக் கூறியதாவது:—ஹே அக்கினிதேவ! இவ்வியக்க சமீபத்தேசென்று இவ்வியக்கனியாவனென நிச்சயஞ்செய்தி; நமக்கனுகூலனோ? அல்லது, பிரதிகூலனோ? என அவ்வக்கினிதேவர் சர்வ தேவதைகளினுங் கனிஷ்டர் முதலிலுண்பவர், சர்வ தேஜசின் சமுதாயவடிவர். 'அக்நிரவமொ தேவாநாம் விஷ்ணு: பரமொ தேவதா' அக்கினி தேவதை சர்வதேவதைகளினுங் கனிஷ்டமாம; விஷ்ணுதேவதை சர்வதேவதைகளினுஞ் சிரேஷ்டமாம்; என்னுஞ் சுருதியுமுளது. அக்கினிதேவர் எல்லாத் தேவதைகளுங் கூறியதைக்கேட்டுச சங்கையற்றவராய் இயக்கசமீபஞ்சென்றனர்; அவரை நோக்கி இயக்கன் நீயாரெனக்கேட்டனன், அதைக்கேட்ட அக்கினிதேவர் பயமற்று யான் ஜாதவேதாவெனப் பிரசித்தமாய அக்கினிதேவதை யென்றனர். 'ஜாதம் வெதொயஸ்ம யஸ்மாத்ஸ ஜாதவெதா:' என்னும் விற்பத்தியானே அச்சப்தம் தனதாதாவின் வாசகமாம். 'ஜாதெ ஜாதெவித்யதெஸ ஜாதவெதா:' என்னும் விற்பத்தியானே அச்சப்தம் வியாபகவாசகமாம். அக்கினிதேவதை கூறியதைக்கேட்ட இயக்கன் ஹே ஜாதவேதாவாய அக்கினியே! உன்பாலெவ்வளவு ஆற்றலுளது எனக்கூறவே, அக்கினிதேவர் ஹே இயக்க! மூர்த்தவடிவமாய பிரபஞ்சமியாவற்றையும் ஒரு கணத்தே பஸ்மமாக்குவேன்; இத்துணையாற்றல் எனக்குண்டு எனக்கூறக்கேட்ட இயக்கன் புன் சிரிப்புற்று அக்கினிதேவர் முன்பு ஒரு காய்ந்த திருணத்தைவைத்து, ஹே அக்கினிதேவ! இதனை நீபஸ்மம் செய்தியெனக்கூற, அவர் தம் சர்வவேகத்தானும், சர்வ முயற்சியானும் தகிக்க முயன்றும் முடியாமற்போகவே கருவத்தைப் பரித்தியாகித்து இலஜ்ஜையையடைந்து தேவசபையில் வந்து சர்வ தேவதைகளையும் நோக்கிக்கூறியதாவது:—ஹே தேவதைகளே எனது சர்வ பலத்தையுமழித்த யக்ஷனையான் அறியவல்லேனல்லன், அவ்வியக்கன் நமக்கனுகூலனோ, அல்லது, பிரதிகூலனோ தெரியவில்லையாதலின்,

அவ்வியக்கவடிவ நிர்ணயப்பொருட்டு நீவிர் வேறு தேவதைகளையனுப்புமின். ஹே மைந்த! இவ்வாறியம்பிய அக்கினிதேவர் வசனத்தைக்கேட்டு இந்திராதி தேவதைகள் வாயுபகவானை யனுப்பினர். எல்லாத்தேவருடைய ஆணையை மேற்கொண்டு வாயு பகவான் யக்ஷசமீபம் வரவே, அவ்வியக்கன் நீ யாரென வாயுவை வினவ, அவ்வாயுபகவான் யான் மாதரிஶ்வவெனப் பெயரிய வாயுதேவதையென்றனர்; அதைக்கேட்ட இயக்கன் ஹே வாயுவே உன்பலம் எத்துணையது? எனவே வாயு பகவான் அஞ்சாமல், ஹே இயக்கனே! பாலகன் தனது வாயால் அற்பதிருணத்தைக்கொண்டு செலவதேபோல, யானிவ்வெல்லா வுலகையும் என்வயிற்றிலடக்கிப் பிரஹ்மாண்டகோளகத்தினும வெளியேகொண்டு செல்லும் ஆற்றலுடையேன் என. அக்கினிதேவர் பாற்கூறியதேபோல, வாயுபகவான் முன்னிலையினும் ஒரு காய்ந்த திருணத்தைவைத்துக கூறியதாவது:—ஹே வாயுவே! உன்பாலவ்வளவு ஆறறலிருப்பின் இததிருணததைககொண்டு செல்லுதிபார்ப்போம் என இயக்கனியம்பக்கேட்ட வாயுபகவான், தமது சர்வவேகததானுந் திருணத்தையெடுக்க முயன்றுஞ் சிறிதளவுந திருணததையசைக்க முடியவில்லை. பின் அக்கினிதேவரைப்போலக் கருவத்தைவிட்டு தேவசபையிற சென்று சர்வ தேவதைகளையும் நோக்கிக்கூறியதாவது:—ஹே தேவதைகளே இவவியக்கன் நமக்குப் பிரதிகூலனென்பதையும; அனுகூலனென்பதயையும, யானறியவல்லேனல்லேன்; ஆதலின், நீவிர் வேறு யாரேனுமொருவரை யனுப்பி இதனை நிசசயஞ்செய்ம்மின். எனவே சர்வதேவதைகளும ஹே தேவராஜாவாய இநதிரரே அவ்விஷயமாகிய நிசசயத்தை நீரேசென்று செய்யவேண்டும் என்றனா; அதைக்கேட்ட இந்திரர் அக்கினிவாயுவைப்போலவே யக்ஷசமீபஞ் செல்லவே? இந்திரர் சமீபத்தே வரக்கண்ட வியக்கன், இநதிரரது விசேஷாபிமானத்தை நீககும்பொருட்டு மறைந்தனன். மறைந்ததைக்கண்ட இந்திரா நான்கு திசைகளினும் அவ்வியக்கனைப்பார்த்துக்கொண்டே ஆங்கேநின்றனர். இயக்கனைக்காண வேண்டுமென்னும் அதிக விருப்பத்தோடு கூடிக் கர்வாதி தோஷத்தைவிடுத்து நின்ற இந்திரர்; அவவிடத்தே ஒரு அபூர்வ மங்கையாரைக்கண்டனர்; அம்மங்கையார் ஹிமாசல பர்வதபுத்திரியார்; சர்வ கல்யாணகுணங்களோடும் மேன்மையான இலக்கணங்களோடும சோபிக்கப்பெற்றவர்; தமது காநதியாற்கவின்வாய்ந்தவர்; உவமையற்ற திருமேனியைத்தரித்தவர்; தேவாராஜாவாய இந்திரர்மீது அன்னையைப்போலும கிருபைவடிவ நேயமுடையவர். அவ்வுமையாகிய பவானிதேவியார் சாஸ்திரவேத்தாக்களால் பிரஹ்மவித்தையென அழைக்கப்பெற்றவா; அவ்வம்மையாரின் றிருவருளானே மூவுலகத்துமிருப்பவர் அற்புத சௌந்தரியத்தன்மையை யடைவா; மனோவாஞ்சித சம்பத்தையடைவர்; அவ்வமமையாரின் அனுக்கிரகத்தானே பிரஹ்மசாரிகளாய புருடர்கள் அகண்டிதபிரஹ்மசரியத்தை யடைவர்; நான்கு வேதங்களையுமடைவர்; இல்லறத்தார் இரண்டுலகததும் சுகத்தைபடைவிக்கும் இல்லறத்தன்மையையடைவர்; வனத்தே வசிக்கும் வானப்பிரஸ்தர் தவத்தையடைவர்; சங்யாசியர் தமது தருமத்தையடைவர்; அதனானே யவர் பிரஹ்மலோகத்தையடைவர். அந்தப் பிரஹ்மவித்யாவடிவ உமாதேவியாா மாதாவைப்போலத் தயையால் பாமஹம்ச சங்யாசிகட்குத் தமது பிரஹ்மவித்யாவடிவத்தை யடைவிப்பர். அந்தப் பிரஹ்ம

வித்தையின் றரிசனத்தானே பரமஹம்ச சந்யாசிகளின் அவித்தைவடிவ சிறைச்சாலை நாசத்தையடையும்; காமக்குரோதாதி ரூபசச்சங்கிலிநாசத்தையடையும். அத்தேவியார் ஸ்ரீ மகாதேவரது வதனசௌந்தரியத்தைக்கண்டு தமது சௌந்தரியத்தன்மையானே சர்வ ஜீவர்களின் மனத்தை மோகிப்பித்துக்கொண்டிருப்பவர். அவ்வம்மையாரது திருமேனியின் காந்திகோடி சூரியசமானமாம்; தண்மை கோடி சந்திரர்க்குச் சமானமாம்; தமது திருமேனியின் இலாவண்யத்தானே கோடி மன்மதசமானமானவர்; நான்குவகையாய ஐசுவரியத்தானே கோடி இலக்ஷ்மிக்குச் சமானமானவர்; ஒரு பிரசித்ததேசத்தேனும் அப்பிரசித்ததேசத்தேனும் ஜீவர்கள் எவ்வெச்சாமர்த்தியத்தையடைவரோ, அவையெல்லாம் அவ்வுமாதேவியாரின் திருவருளானேயாம். அவ்வம்மையார் அன்பர்கள் துன்பத்தை யறுக்கும்பொருட்டுச் சாந்தவடிவமாயும், அன்பிலார்க்குத் தமது தேஜசின் அதிசயத்தானே அறியமுடியாமையை யடைவிப்பவராதலினானே, இந்திரரது கருவத்தை நீக்கும்பொருட்டுத் தமது தரிசனத்தானே அவரது ஆயிரம் விழிகளினுமிருந்த தேஜசையுங் கவர்ந்தனர். அவ்வம்மையார் இந்திரரால் மூவுலகத்தும் முன்னெப்போதுங் காணப்படாதவர்; திவ்வியமாய கந்தத்தையும், திவ்வியமாய மாலைகளையும், திவ்வியமாய வஸ்திரங்களையுந் தரித்தவர். அவ்வம்மையார் தமது தரிசனத்தானே சர்வப் பிராணிகளின் நேத்திரங்களையும் மனங்களையும் ஆநந்திக்கச்செய்பவர்; சர்வ பூஷணங்களோடுங்கூடியவர்; புன்சிரிப்போடுங்கூடிய வசனங்களை வசனிப்பவர்; பிரஹ்மவித்யாரூபமா யெப்போதும் உபநிடதங்களிலிருப்பவர்; பிரஹ்மசரியாதி சாதனசம்பன்ன பரமஹம்ச சந்யாசிகளின் மனத்தேயிருப்பவர்; காமதேவரை நஷ்டஞ்செய்தவரும், யக்ஷரூபத்தைத்தரித்தவரும், பரப்பிரஹ்மரூப திரிலோசன மகாதேவரும் ஆகிய நாயகரின் வாமபாகத்தே எப்போதும் வீற்றிருப்பவர். இத்தகைய என்னன்னையாகிய உமாதேவியார் ஆங்கிருப்பதைக் கண்டிந்திரர் இவ்வாறு வினவினர்:—ஹே தேவியாகிய தாயே! இவ்விடத்தே முன்தோன்றி மறைந்த இயக்கன் யாவன்? அவ்வியக்கவடிவத்தைத் தாங்களுணர்வீர்களேல் தயையால் அடியேனுக்குக் கூறவேண்டும் என, இந்திரர் வேண்டவே உமாதேவியார் இந்திரருக்குப் பிரஹ்மரூப மகாதேவரது வாஸ்தவவடிவத்தை யுபதேசித்தனர். எப்பயனுக்காக அம்மகாதேவர் யக்ஷரூபத்தைத்தரித்து ஆண்டு வந்தனரோ அவ்வியாவற்றையும் கூறினர். அம்மையாரது வசனத்தைக்கேட்டு இந்திரர் கருவத்தை யொழித்தனர்; பூர்வம் மறந்த மகாதேவரது பிரஹ்மபாவரூப வாஸ்தவவடிவத்தை மீண்டும் நினைந்தனர்; மகாதேவரையே தமது வெற்றியினேதுவாயெண்ணினர். இவ்வாறு ஜனனமரண சம்சாரநாசஞ்செய்யும் ஸ்ரீ பவானி தேவியார் இந்திரருக்குச் சர்வ பிரஹ்மவித்தையி னுபதேசத்தைச் செய்து அவ்வம்பரத்தே மறைந்தனர். பின்பு இந்திரர் மறைந்த ஸ்ரீமன் மகாதேவர் மகாதேவியார்க்கு நமஸ்கரித்துத் தேவ சபையில் வந்து சர்வதேவதைகட்கும் யக்ஷ உமாதேவியாரது விருத்தாந்தத்தைக்கூறினர்; அதைக்கேட்ட அக்கினிதேவர் முதலியோர் கர்வாதி தோடமற்றவராயினர். ஹே மைந்த! இந்திராதியர் சாத்துவிகராதலின் இயற்கையானே கர்வாதி தோஷமற்றவர், பிரமாதாதியற்றவர், பரீக்ஷித்து யாவற்றையுஞ் செய்பவர், தமது ஹித அஹிதங்

களையறிபவர், அவரும் ஒரு காலத்தே பரமேசுரமாயையாலும் இராஜோகுணத்தாலும் மோகத்தையடைந்தனர் பிரஹ்மவித்தைவடிவ உமாதேவியார் பிரஹ்மவித்தையை யுபதேசித்து மீண்டும் முன்போலச் சாவதானமாயினர். அந்தப் பிரஹ்மவித்தையி னனுக்கிரகத்தானே அவர் அந்தப் பரப்பிரஹ்மத்தையே சர்வ ஜகதத்தின் உபாதானகாரணமாயும நிமித்தகாரணமாயு முணர்ந்தனர். அது அன்னியதேவதைகட்கும் மனுடாதிகட்கும அத்தியந்தந் துர்லபம். அந்த யக்ஷரூபப் பரப்பிரஹ்மத்தை அவ்விந்திர அக்கினி வாயு தேவதைகள அத்தியந்தம் சமீபமாயடைந்தனராதலின், அவர்கள் மற்றைய தேவரினும் உயர்ந்தவர்கள், அம்மூவரினும் இந்திரருயர்ந்தவர்; ஏனெனின், இந்திரர் நேரே ஸ்ரீ உமா தேவியாரின் வாயிலாகப் பரப்பிரஹ்மத்தின் உண்மைவடிவத்தைச் சாக்ஷாத்கரித்தனராதலின், இந்திரர் எல்லாத்தேவதைகளினும் மேன்மையர். அக்கினிவாயுக்களாலடையப்பெற்றதும இந்திரரால் நிச்சயிக்கப்பெற்றதும் ஆகிய அந்தப் பரப்பிரஹ்மத்தை வேதவேத்தாக்களாகிய பிராஹ்மணர், அதிதைவம அத்தியான்மம் என்னும் இருவடிவத்தானே யுபாசிப்பர். இப்போது அந்தப் பரப்பிரஹ்மத்தின் அதிதைவரூபத்தை வருணிப்பாம்:—ஹே மைந்த! விராட்பகவானுடைய ஜனகரும் இவ்வெல்லாவுலகத்தையும் தமது திருமேனியாயுடையவரும் ஆகிய ஹிரண்யகர்ப்ப பகவானுடைய சமஷ்டிரூபதேகத்தே மின்னல் ஒளிக்கொப்பாய தத்துவமியாது, அது சேதனரூபமாதலின் ஜடமின்னலினும விலக்ஷணமாமோ, தனது சமீபத்தன்மை மாத்திரையானே சர்வப்பிராணிகளின் இந்திரியத்தையும் மனத்தையும் ஏவுவதாமோ, அச்சத்துவமே பரப்பிரஹ்மத்தின் அதிதைவரூபமாம். இனி பரப்பிரஹ்மத்தின அத்தியான்மரூபத்தை வருணிப்பாம்:—ஹே மைந்த! அந்தப் பரப்பிரஹ்மத்தின் அதிதைவரூபம சுருதியின்கண்ணே கூறப்பட்டிருப்பதேபோல, அத்தியான்மரூபமும் கூறப்பட்டிருக்கின்றது. ஆண்டு எத்தத்துவம் இத்தேகதாரிகளின்றனித்தனியாய தேகத்தேயிருந்து சங்காதத்தேயிருக்கும் புத்தியின் நனவு முதலிய அவஸ்தைகளைச் சாக்ஷிரூபமாய்ப் பிரகாசிப்பிக்குமோ, அச்சாக்ஷிவடிவமாய தத்துவம அத்தியான்மவடிவமாம். ஹே மைந்த! அந்தச்சாக்ஷிவடிவ தத்துவம் இச்சம்சார வனத்தே புருஷ சர்வாந்தரியாமியாய பரப்பிரஹ்மரூபமேயாம். சர்வ ஜனங்களின் நிரதிசயப்பிரீதிக்கு விடயமாதலின், சர்வர்களாலும் போற்றத்தக்கதாயிருத்தலின், அந்தப் பிரத்தியக் சாக்ஷியாய ஆன்மாவை வேதவேத்தாக்கள் வனம் என அழைத்தனர். வனமென்னும் நாமத்தானே பரமான்மாவையுபாசிப்பவனைச் சர்வ ஜனங்களும் ஆராதனைசெய்ய இச்சிப்பர். இப்போது பிரஹ்மவித்தையின் சாதனத்தை வருணிப்பாம்:—ஹே மைந்த! யாம் நினக்குக்கூறிய பிரஹ்மவித்தையின் பிராப்தி சாதனமின்றி யுண்டாகாதாமாதலின், சுருக்கமாயதன் சாதனத்தைக்கூறுவாம; அதனை நீ சாவதானமாய்க்கேட்டி. சர்வ ஜீவர்கட்கும் தத்தம் வருண ஆசிரம அனுசாரம் வேதபகவான் நித்திய நைமித்திககருமத்தை விதித்துள்ளார், அக்கருமமும் நிட்காமமாய்ச்செய்யின் மனத்தூய்மைவாயிலாய்ப் பிரஹ்மவித்தையின் சாதனமாம்; கிருச்சிரசாந்திராயணாதிக தவமும், சமதமாதிகளும், வேதத்தே கூறியுள்ள நானாவகையாய உபாசனைகளும் சித்தவிக்ஷேப நீக்கவாயிலாய்ப் பிரஹ்மவித்தையின் சாதனங்களாம். சுருதியின்

கண்ணே கூறப்பட்டுள்ள வேதவாணிரூபதேனுவினுபாசனையும், ஆன்மஞானபி லாஷையையுடைய அதிகாரியால் அவசியஞ் செய்யத்தக்கதாம். அவ்வாக்குவடிவத் தேனுவிற்கு இருக்கு யஜுஷ் சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதங்களும் பாதரூபமாம். வேதாங்கங்களாகிய சிக்ஷாதிகள் சிராதியவயவரூபமாம். ஸ்வாஹா கார, வஷட்கார, ஹந்தகார, ஸ்வதாகார என்னும் நான்கு மந்திரங்களும் அத் தேனுவின் நான்கு ஸ்தனங்களாம். சுருதியின்கண்ணே சத்திய சப்தத்தானே கூறப்பட்ட பரப்பிரஹ்மமே அத்தேனுவிற்குப் பூமிரூப ஆதாரமாம்; மனத்தின் விருத்திரூபபோதம் அத்தேனுவின்கன்றும். இவ்வாறு வாக்குவடிவ தேனுவை யுபாசிப்பவன் மனத்தூய்மைவாயிலாய் ஆன்மஞானத்தையேயடைவன்; அதனடை வானே அறிஞன் அத்விதீய ஆநந்தவடிவப் பிரஹ்மத்தின்கண்ணே ஸ்திதியை யடைவன்; அடைந்த அவ்வறிஞன் மீண்டும் ஜன்மமரணரூப சம்சாரத்தைசெல் லான். முன்னர் 14-வது அத்தியாயத்தே பிரஜாபதிசிடராய் வருணிக்கப்பெற்ற இந்திரர் பிரஹ்மவித்தையின் அனுக்கிரகத்தானே அவ்வத்விதீயப் பிரஹ்மத்தைத் தம் மான்மவடிவமாயுணர்ந்தனர். பிரஜாபதிக்கு இந்திரர் சிடரானதேபோல அதர்வாவெனப் பெயரிய ஒரு ஜேஷ்டமைந்தரும் சிடராயினர்; அம்மைந்தரினின் றும் உண்டாய சம்பிரதாயத்தால் பிரஹ்மவித்தை மிக விஸ்தாரத்தையடைந்தது. பிரஹ்மவித்தைவடிவ ஸ்ரீ உமாதேவியாரின் திருவருளால் இந்திராதி தேவதை கள் பிரஹ்மவித்தையையடைந்தவெவ்வாறென நீ முன் வினவியதால் அந்தப் பிரஹ்மவித்யாப்பிரசங்கத்தால் சர்வ வார்த்தையையும் யாம் நினக்குக்கூறினேம். இப்போதெப்பொருளைக்கேட்க நினக்கிச்சையிருக்கின்றதோ அதைக்கேட்பாயாக.

பதினைந்தாவது அத்தியாயம் முற்றிற்று.

---

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## பதினாறுவது அத்தியாயம்.



ஓம் ஸ்ரீ கணேசாயநமஃ ஸ்ரீ குருப்யோநமஃ ஸ்ரீ காசிவிஶ்வேஶ்வராப்யாம்நமஃ ஸ்ரீ சங்கராச்சார்யேப்யோநமஃ.

இவ்வாத்மபுராணத்தின் 1-வது 2-வது 3-வது அத்தியாயங்களில் இருக்கு வேத உபநிடதப்பொருள் நிரூபிக்கப்பட்டது. 4-வது 5-வது 6-வது 7-வது 8-வது 9-வது 10-வது அத்தியாயங்களில் யஜுர்வேத உபநிடதப்பொருள் நிரூபிக்கப் பட்டது. 11-வது அத்தியாயத்தே இருக்கு முதலிய நான்கு வேதங்களின் உபநிடதப்பொருள் நிரூபிக்கப்பட்டது. 12-வது 13-வது 14-வது 15-வது அத் தியாயங்களில் சாமவேத உபநிடதப்பொருள் நிரூபிக்கப்பட்டது. 16-வது 17-வது 18-வது அத்தியாயங்களில், அதர்வணவேத உபநிடதப்பொருள் நிரூபிக்கப்படும். இந்த 16-வது அத்தியாயத்தே முண்டகஉபநிடதப்பொருளை நிரூபிப்பாம். ஆண்டு

முன்னத்தியாயத்தே பிரஹ்மவித்தையோடுகூடிய அத்தியந்தம் சுந்தரமாய கதையைச் சிரவணித்துச் சீடன் மிக மகிழ்வுற்று அதர்வா இருஷிகூறிய பிரஹ்மவித்தையை வினவக் குருசந்நிதியிலிவ்வாறு கூறத்தொடங்கினன் :—ஹே பகவன்! தாங்கள் 1-வது அத்தியாயத்தே இருக்குவேத ஐதரேய உபநிடதப்பொருள் கூறும்போது சனகாதி முனிவருக்கும் வாமதேவாதி யதிகாரிகட்கு முற்ற சம்வாதவாயிலாய் வைராக்கியாதி சாதனங்களோடுகூடிய நானுவகையாய பிரஹ்மவித்தையைக்கூறித் தாயினுதரத்தேயிருந்த வாமதேவரின் சர்வான்ம பாவரூப அனுபவத்தையுங் கூறினீர்கள். 2-வது 3-வது அத்தியாயங்களில் இருக்குவேதத்தின் கௌஷீதகி யுபநிடதப்பொருள் கூறும்போது இந்திரப் பிரதர்த்தன சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும், அஜாத சத்துரு பாலாகி சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையுங் கூறினீர்கள். 4-வது 5-வது 6-வது 7-வது அத்தியாயங்களில யஜுர்வேதத்தின் பிருஹதாரண்யக உபநிடதப்பொருள் கூறும்போது, இருபுருடவம்சம ஒரு ஸ்திரீவமசம் என்னும் மூன்றன்கண்ணுள்ள இருஷிகளின் பரஸ்பர பேதத்தையும் அபேதத்தையுங்கூறி, தத்யங் அதர்வண இருஷி குருவாய் அசுவினீ குமாரர்கட்குப பிரஹ்மவித்தையை யுபதேசித்தார்; உபதேசிக்கவே அவ்விருடி இநதிரரால் மகாதுக்கத்தையடைவுற்றனர் என்பதாதியையும், சாவ சாஸ்திரங்களையுமுணர்ந்த யாஞ்ஞவறகிய முனிவர் ஜனகராஜாவின் யாகசபையின்கண்ணே சென்று ஜல்பகதைசெய்து ஆசுவலாதி எல்லாமறையவர்களையும் வெற்றிகொண்டனர். அம்முனிவர் சாபத்தானே சாகல்லியர் மிருத்தியுவையடைந்தனர் என்பதையும, வெறறியை விழைந்து சாஸ்திர அர்த்த விசாரஞ்செய்தல ஜல்பகதையாம. மிகவுந் தாண்டமுடியாத சமசார சமுத்திரத்தே மூழ்கி அதனினின்றுங் கரையேற இச்சித்த ஜனகராஜாவிற்கு அம்முனிவர் இருமுறை பிரஹ்மவித்தையை யுபதேசித்து அக்கடலினின்றுங் கரையேற்றினர் என்பதையும், அம்முனிவர் நான்காவதவத்தையில தமது மைத்திரேயி மனைவிக்குப் பிரஹ்மவித்தையையுபதேசித்துச சமசார சமுத்திரத்தினின்றுங் கரையேற்றினர்; பின்னம் முனிவர் சந்யாச ஆசிரமத்தைத்தரித்தனர் என்பதையுங் கூறினீர்கள். 8-வது அத்தியாயத்தே யஜுர்வேதததின் சுவேதாசுவதர உபநிடதப்பொருள் கூறும்போது, சுவேதாசுவதர இருஷிக்கும் சந்யாசிகட்கும் உற்ற சம்வாதவாயிலாய் இச்சகத்காரண விசாரஞ்செய்தீர்கள். 9-வது அத்தியாயத்தே யஜுர்வேதத்தின் கடவல்லி யுபநிடதப்பொருள் கூறுமபோது யமராஜா நசிகேதா சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள். 10-வது அத்தியாயத்தே யஜுர்வேதத்தின் தைத்திரீய நாராயணீய உபநிடதப்பொருள் கூறும்போது, வருணப்பிருகு சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும், வேநனெனப் பெயரிய கந்தருவரின் சர்வான்ம பாவரூப அனுபவத்தையும், ஆன்மஞான அடைவின்பொருட்டுச் சத்தியமே முதலாகச் சந்யாச மீறாகவுள்ள சாதனங்களையும், அவ்வியாவற்றுள்ளும் சந்யாச ஆசிரமம் உத்தமமென்பதையுங் கூறினீர்கள். 11-வது அத்தியாயத்தே ஜாபாலாதி 11 உபநிடதப்பொருள் கூறும்போது பரமஹம்ச சந்யாசத்தைச் சம்வர்த்தகாதி மகா புருடர் ·தரித்த

னர்; அதனடைவின்கண்ணே வைராக்கியமே காரணம், அதன்கண்ணும் கர்ப்ப துக்கவிசாரமும் மரணசின்ன ஞானமும் அஷ்டாங்கயோகமும் காரணமாம். அச் சந்யாசத்தே விரக்தனே அதிகாரி, அச்சந்யாசிக்குச் சிகை சூத்திரமற்றிருத்தலே வேஷமாம், பிரஹ்மஞானம் முக்கிய ஆசாரமாம் என்னுமியாவற்றையும் கூறினீர் கள். 12-வது 13-வது 14-வது அத்தியாயங்களில் சாமவேத சாந்தோக்கியப் பொருள் கூறும்போது, உத்தாலக சுவேதகேது சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும் அவ்விருமுனிவரும் ஜாபாலாதிகளில் சர்வ சந்யாசிகளினும் முக்கியமாய்க் கூறப்பட்டவராவர்; பகவான் சனத்குமார நாரத சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும், பிரஜாபதியாய பிரஹ்மா இந்திர விரோ சன சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையுங் கூறினீர்கள். 15-வது அத்தியாயத்தே சாமவேதத்தின் தலவகார சாகையிலுள்ள கேந உபநிடதப் பொருள் கூறும்போது, இந்திரர் பிரஹ்மவித்தையின் அனுக்கிரகத்தானே பிரஹ் மஞானத்தையடைந்ததையும் மற்றும் பிறவற்றையுங் கூறினீர்கள். 15-வது அத் தியாய ஈற்றில் பிரஜாபதியாய பிரஹ்மாவிற்கு இந்திரர் சீடரானதேபோலப் பிரஹ் மாவின் அதர்வாவெனப் பெயரிய ஜேஷ்டகுமாரரும் சீடராயினர் எனக் கூறினீர் கள்; பிரஹ்மாவானவர் அம்மைந்தர்க்குபதேசித்த பிரஹ்மவித்தையைக்கேட்க யானிச்சிக்கின்றனன், அம்மைந்தர் அவ்வித்தையை எச்சீடர்க்குபதேசித்தனர் என்னும் எல்லாவற்றையும் தாங்கள் கிருபைசெய்து அடியேனுக்குக் கூறவேண் டும்; என வினவிய சிரத்தையையுடைய சீடனுக்காசிரியர் முண்டக உபநிடதத்தே கூறப்பட்ட கதையைக்கூறினர்; அது, கேட்பவன் மனத்தையும் செவியையும் சுக மடையச்செய்வது, அத்விதீயப் பிரஹ்மசொரூபத்தைக் கூறுவதாம். இப்போது இரண்யகர்ப்ப பகவானது முதன்மையை வெளிப்படுத்தும்பொருட்டு முதலில் மனுபகவான் கூறிய சிருஷ்டிக் கிரமத்தைப்பற்றி அச்சிருஷ்டிகால பூர்வ அவஸ் தையை நிரூபிப்பாம்:—ஹே குமர! இக்காரிய வுலகமெல்லாம் தமமுற்பத்தியின் முன் றமமாயிருந்தன, அது பிரத்தியக்ஷப் பிரமாண அயோக்கியமாம், காரியரூப ஹேதுவினுனே அனுமானிக்க யோக்கியமாம், குதர்க்கங்கட் கயோக்கியமாம், சப் தத்தானும் சாற்றமுடியாததாம், துயில்பவனைப்போலக் காரிய ஆரம்பத்தே அச மர்த்தமாம். இத்தகைய தமமுலகுண்டாவதற்கு முன்பிருந்தது. ஈண்டுத் தமத் தின் சமானமாய் ஆவரணஞ்செய்யும் அவ்வியாகிருதம் மாயையவித்தை யென்ப தாதி சப்தவாச்சியமாய அஞ்ஞான உபகித சத்தியவஸ்துவே தமமாம்; இப்போ திப்பொருளின்கண்ணே 'நாஸதாஸீந்நோ ஸதாஸீத்ததா நீம்கிம்கவ ஹ்ருதஃ' என்னும் சுருதிப்பொருளைப பிரமாணரூபத்தானே வருணிப்பாம்:—இவ்வுல கத்தே அசத்சப்தத்தானே கூறயோக்கியமாய அபாவமும் ஜகதுற்பத்தியின் முன்னருண்டாகவில்லை, சத்சப்தத்தானே கூறயோக்கியமாய பாவ பதார்த்த மும் முன்னுண்டாகவில்லை, தேயுவிற்கு விரோதியாய்ப் பிரசித்தமாய அந்த காரமும் முன்னுண்டாகவில்லை, ஆகாசாதி பஞ்சபூதமும் முன்னுண்டாகவில்லை, பகலிரவும் முன்னுண்டாகவில்லை, பிராதக்காலம சாயங்காலம், என்னும் இரண்டு சந்தியாக்களும் முன்னுண்டாகவில்லை, இருவகைச் சந்தியாவின் சின்னவடிவ சூரிய சந்திரர் முதலிய தேயுக்களும் முன்னுண்டாகவில்லை; மற்றோ, பிரசித்த

மாய தமமேபோல ஆன்மவடிவத்தை யாச்சாதனஞ் செய்யுங் காரணதத்வமே முன்னிருந்தது ; அது மிருத்தியுரூபமாயேனும் அமிருதரூபமாயேனும் அறியப் பெற்றதன்றும். சமஹாரஞ்செய்வது மிருததியுவாம், விருத்தியின் காரணரூப ஆஹ¬தியின் பரிணமம் அமிருதமாம, அவ்விரண்டும் துவைததசையின்கண்ணே யிருக்கும் ; அத்வைததசையின்கண்ணே யிராவாம். அக்காரணததுவம் உலகமுண் டாவதன்முன்னர் வெளிப்பாடறற நாமரூபத்தோடுகூடியதாயேயிருக்குமாதலின், வேதாந்தசாஸ்திரத்தே அது அவ்வியாகிருதமென்னப்பட்டது ; அதுவே சர்வ ஜகத்தின் நாமரூபகாரணமாம் ; தனக்குக் காரணாபேகூஷயறறதாம் ; ஏக அத்வி தீயரூபமாம் ; கேவல சுருதிவாக்கியத்தானே யறியத்தக்கதாம் ; சர்வ இலக்கணங் களுமற்றதாம. ஈண்டு உண்மையாயிருக்கும் பொருளே காரணமாம் ; உண்மையா யிலலாதபொருள் காரணமாகாதாம. அவ்வியாகிருத தததுவமோ உண்மையா யிலலாததேயாயினும் ஜகதகாரணமாம். அநாதிபாவரூப பதாாத்தத்திற்கு அவி நாசித்தன்மையே பிரசிததமாம. ஆன்மா அநாதிபாவரூபமாதலினுனே அவிநாசி யாம. அவ்வியாகிருதமோ அவ்வாறாயினும் ஆன்மஞானததாலழியும் ஜடரூப மாதலினுனே பாதநதிரமாயினுமம அக்கிரிய அசஙக ஆன்மாவின சஙககருமாதிகட் குக் காரணமாம இவை முதலாக அநிர்வசநீயபோததிற்கு ஹேதுவாய அநேக வகைக் கூடாத இலக்கணஙகளோடுகூடியதாம. இததகைய சுததப்பிரஹ்மத்தின் பிரதிபிம்பத்தோடுகூடிய அவ்வியாகிருதகாரணததினின்றும ஹிரண்யகருப்ப பகவானுண்டானுர். அவா சாவ வியஷ்டிஜீவாகட கீசுரர், சமஷ்டியபிமானிரூபத் தன்மையானே ஜீவகனநாமத்தால கூறபபெறுவா. அநதககரணம், ஐந்து ஞானேந் திரியப, ஐநது கருமேந்திரியம், பிராணன், பஞ்சசூகூஷமபூதம் என்னும் 17, தத்துவவடிவ சமுதாயரூபதேகததே ஹிரணயகருபபரூப ஆன்மாவாசஞ்செய்யும். அடபகவானினின்றும ஆகாசாதிபஞசஸ்தூலபூதமுண்டாம ; அவறறினபிமானத் தானே அபபகவான் விராட்பெயரை யடைநதனா. பின்னத்தூலத்தே வசிப் பவராய்த் தாம் வசிப்பான் பிரஹ்மாண்டரூபகோளகத்தை யுண்டாக்க விழைந் தனர். அவாது சததியசஙகறபவயததால் ஆகாசாதி பஞசபூதம் நீர்மேனின்ற சுவர்ணமய அண்டரூபமாய்ப பரிணமததையடைநதது, அது கோடிசூரிய சமானமாம, அதன்கண்ணே பூராதிசப்தலோகங்களுங் கறபிதமாம், பாதாளாதி லோகங்களுஙு கறபிதமாம், சமவறசராதிரூபகாலமுங் கறபிதமாம், அதனுள்ளே யிருககும் பூமிரூபபதமததின் காணிகைவடிவமேருவினின்றும அவர் சதுா முகபபிரஹ்மாவடிவததானே வெளிபபடுவா, அப்பிரஹ்மாவானவர் இந்திராதி சர்வ தேவதைகட்கும் முதன்மையானவா, அவர் யாவரானும் பூச்சியர், எல்லா வுலகின் கருத்தா, இரகூஷகர், நாசகா, அத்தகைய பிரஹ்மாவிறகு அதர்வா வெனப் பெயரிய ஒரு ஜேஷ்ட மைநதருண்டானுர் ; அம்மைநதருக்கு மேற்கூறப் படும் பிரஹ்வித்தையைக்கொடுத்தனா ; அது மூலாஞ்ஞானத்தை நாசஞ்செய்வதா மாதலின், எல்லாவித்தைகட்கும் ஆதாரமாம். இத்தகைய பிரஹ்மவித்தை பிராப்த மாயின் இதரவித்தைகளினபேகூஷயுண்டாகாதாம் ; ஏனெனின், இதரவித்தை களெல்லாம் சிறிது சிறிது பொருளை யொளிர்விக்கும் ; இந்தப் பிரஹ்மவித்தையோ

எல்லாப் பொருள்களையும் ஒளிர்விக்குமாதலின், அவ்வெல்லாவித்தைகளும் பலரூபத்தானே இந்தப் பிரஹ்மவித்தையின்கண்ணே அந்தர்ப்பூதமாம். திருப்திரூபபல சித்தியின்கண்ணே எல்லாக்கவளங்களின் இரசமுமுள்ளடங்குதலேபோல, இந்தப் பிரஹ்மவித்தையின்கண்ணும அயலாய அகிலவித்தைகளுமடங்கும். இத்தகைய பிரஹ்மவித்தையைப் பிரஹ்மாவானவர் அதாவாவாயசீடருக்களித்தனர்; அவருக்கு அங்கிரவென்பவர் சீடரானார், அவருக்குப பாரத்வாஜரென்பவர் சீடரானார் அவருக்குலகத்தே சத்யவஹரெனவும் பெயர்வழங்கும்; அவருக்கு அங்கிரசவென்பவர் சீடரானார், அவருக்குச் சௌனகர் சீடரானார், அவர் அளவற்ற அன்னதானாதிகளால் பெருமில்லறவாசியாயிருந்தார; அவருக்குத் துவிஜர் யாவரும சீடராயினர். ஹே மைந்த! இம்முண்டக உபநிடதத்தே கூறப்பட்ட பிரஹ்மவித்தையை முதலிலோ பிரஹ்மாவானவர் அதர்வாமைந்தருக்குபதேசித்தனர். அவ்விருடியின் வதனததையுறறு முற்கூறிய முறைமே அளவிலாச் சீடபரம்பரையையடைந்த பிரஹ்மவித்தையை யாம் உனக்குக் கூறுகின்றோம்; நீ சாவதானமாய்க்கேட்டி. இப்போது அங்கிரசசௌனக இருடிசம்வாதவாயிலாய் அந்தப் பிரஹ்மவித்தையை வருணிப்பாம்:—முன்னொரு காலத்தே அங்கிரச இருடிபிராதக்காலத்தே ஸ்நாநாதி நித்தியகருமங்களைச்செய்துவிட்டு ஏகாந்ததேயததேயிருந்தனர்; அவ்விருடி சர்வ வேதங்களையுமுணர்ந்தவர்,வேதங்கள் கூறிய அத்விதீயப்பிரஹ்மத்தையுணர்ந்தவர், சர்வ இசைகளுமறற நிட்காமர். அத்தகைய சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்டராகிய அவரை நோக்கிச் சௌனகர் சமிதாதிகளைக் கரத்தேகவர்ந்து விதிவாயிலாய்ச் சமீபததேசென்று இவ்வாறு வினவினர்:—ஹே பகவன்! எவ்வேகவஸ்துவின் ஞானத்தா லிவ்வெல்லா வுலகின் ஞானமாமோ அவ்வத்தையைத்தயையால் அடியேனுககுக் கூறவேண்டும. இவ்வாறு சௌனகர் பிரார்த்தித்தபோது அங்கிரசர் கூறுவதாவது:—ஹே சௌனக! அத்விதீயபிரஹ்மரூப ஏக ஆன்மவஸ்துவின் ஞானமுண்டாகவே இவ்வெல்லா வுலகின் ஞானமுண்டாம்; அதை யடையுமபொருட்டுப் பிரஹ்மபிரநது உபநிடதாதிகளில் சாப்தப்பிரஹ்ம ஞானமே சிரேஷ்ட உபாயமெனக்கூறப்பட்டுள்ளது. ஆண்டுசிக்ஷை முதலிய ஆறங்கங்களோடுகூடிய நான்கு வேதங்களையுஞ் சரீரமாகவுடையபிரஹ்மத்தின் பெயா சாப்தப்பிரஹ்மமாம். அதன்கண்ணே குசலனுபவனே பரபிரஹ்மத்தை யடைவனுதலின், முமுக்ஷுக்கள் இருவித வித்தையை அவசியம் சம்பாதனஞ் செய்யவேண்டும்; அவறறுள் ஒன்றோ சாதனமாதலின் அபரையாம்; மற்றொன்றோ பலரூபமாதலின் பரையாம்; அவ்விரண்டனுள் முதலில் அபரையை நீ கேட்டி. சிக்ஷை முதலிய ஆறங்கங்களோடுகூடிய இருக்காதி நான்குவேதங்களை விஷயமாகவுடைய வித்தை அபரையாம்; அபரையானே பரை அடையப்படும்; அத்விதீயப் பிரஹ்மத்தை விடயமாகவுடைய வித்தை பரையாம்; பரை பகரும் பிரஹ்மம் மறைகளில் அக்ஷரமெனப்படும. அவ்வக்ஷரவடிவபிரஹ்மத்திற்கு வேதவேத்தாக்கள் இவ்வாறிலக்கணங் கூறியுள்ளார்:—அது மனத்தோடுகூட ஞானேந்திரிய கருமேந்திரியங்களற்றது, பிராண பஞ்சகமறறது, ஆகாசாதி பூதபஞ்சகமற்றது, சப்தாதி ஞானேந்திரிய விடயமற்றது, வசனுதி கருமேந்திரிய வியாபாரமற்றதாதலின், நேத்திராதி ஞானேந்திரியங்களாலுந்

காணமுடியாதது, வாக்காதி கருமேந்திரியங்களாலுங் கவுரமுடியாதது, அது நாமரூபக் கிரியை மூன்றுமற்றது, ஜன்மாதி விகாரமற்றது. ஆகையால், குல ரூபகோத்திரமுமற்றது, பிராஹ்மணத்வ க்ஷத்திரியத்வாதி ரூபவர்ணங்களுமற் றது; ஆகாயத்தைப்போல யாண்டும் நிறைந்ததாதலின், தேசபரிச்சேதமற்றது. அது சாதனஹீனருக்கறிய முடியாததாதலின், சூக்ஷ்மமாம். அது உற்பத்தி நாசமற்றதாதலின், காலத்தாலாய பரிச்சேதமற்றது. அது மாயாவயத்தானே சர்வ ஜகத்தின்காரணமாயினும் உண்மையாய்ச் சர்வ ஜகத்வடிவ துவைதமற்ற தாமாதலின், வஸ்து பரிச்சேதமற்றதாம். அதனை பிரஹ்ம சரியாதி சாதன முடையவனே தன் சித்தத்தே காண்பன்; சாதனஹீனன்காணான். அத்தகைய அக்ஷரபிரஹ்மத்தையே நீ நின்னுண்மவடிவமாயறிதி; அதனினும் வேறாய குலவாணுதிகளை நின்னுண்மவடிவமாயறியவேண்டாம; அதன்ஞானத்தானே இவ் வெல்லாவுலகின் ஞானமாம. இப்போது அக்ஷரப்பிரஹ்மஞானத்தானே சர்வ ஜகதஞான சித்தியின்பொருட்டு அதனகண்ணே ஜகத்காரணத்தன்மையை, 3 திருஷ்டாந்தங்களால சிததஞ்செய்வாம:—ஹே சௌனக! இவ்வக்ஷரப் பிரஹ் மமே இவ்வெல்லாவுலகின் உறபததி திதிலய அபின்ன நிமித்த உபாதானகாரண மாம்; இப்பொருளில வேத வேத்தாககள ஊாணநாபி (சிலந்தியைத்) திருட்டாந் தித்துளார். சிலந்தியானது தன்னினும வேறாய காரணாபேக்ஷயின்றியே நூலை யுறபததி திதி இலயபபடுததும்; அதுபோலவே இவ்வக்ஷரப் பிரஹ்மமும் தன்னி னும் வேறாய காரணாபேக்ஷயின்றியே சர்வ ஜகத்தினுறபத்தி திதி இலயத்தைச் செய்யுமாதலின், சிலந்தி நூறகுபாதான நிமித்தகாரணமாவதேபோல, அக்ஷரப் பிரஹ்மமும ஜகததினுபாதானமும நிமித்தமுமாம. ஈண்டொருவன் சுகியாயும், ஒருவன்றுககியாயும, ஒருவன்றனிகனுயும், ஒருவன்றனமறறவனுயும் இன்னும் அநேகவகையாய் விலக்ஷணமாகட பிரதீதியாம். இத்தகைய விலக்ஷண ஜகததிற்கு ஒரு அக்ஷரப்பிரஹ்மததைக் கர்ததாவெனின், அதன்கண்ணே விஷமத்தன்மைத் தோடமும் நிர்த்தயைததன்மைததோடமும உண்டாம; என வுண்டாஞ சங்கை யைக் கண்டிபபான் வேதவேததாக்கள் பூமியைத்திருஷ்டாந்தபபடுத்தினர். அநே கவகையாய ஸ்தாவர ஜஙகமரூப சரீரங்கள் ஒரே பூமியினின்றும் உண்டாவதே போல, ஒரே அக்ஷரப்பிரஹ்மத்தினின்றும் நானுவகையாய ஜகத்துண்டாம். கருத் திதுவாம்:—ஒரே பூமியினின்றும விரைகளின் விலக்ஷணத்தன்மையானே நானு வகையாய ஸ்தாவர ஜஙகமசரீரம உண்டாவதேபோல, ஒரே அக்ஷரத்தினின்றும் ஜீவர்களின் அறம்பாவ சமஸ்கார விலக்ஷணத்தன்மையானே நானுவகையாய ஜகத் துண்டாமாதலின், அவ்வக்ஷரத்தே விஷமத்தன்மையும் நிர்த்தயைத்தன்மையும் உண்டாகாதாம். சமான சுபாவமுடைய மண் கடமுதலிய பதார்த்தங்கட்கே பரஸ் பரம் காரணகாரிய பாவங்கண்டோம்; விலக்ஷணங்கட்கது கண்டிலோமாதலின், சேதனமாகிய பிரஹ்மத்தினின்றும் ஜடஜகத்தினுற்பத்தி சம்பவியாதாமென வுண் டாஞ் சங்கையை நீக்கும்பொருட்டு வேதவேத்தாக்கள் புருடதிருஷ்டாந்தம் கூறி னர். ஜீவன அவஸ்தையின்கண்ணே சேதனரூபமாய்ப் பிரசித்தமாய புருடனிடத் தினின்றும் நக கேச ரோமாதி அசேதனகாரியமுண்டாவதேபோலச் சேதனரூப

அக்ஷரப்பிரஹ்மத்தினின்றும் இச்சடவுலக முண்டாமாதலின், எல்லாவாற்றானும் சமான சுபாவமுடைய பதார்த்தங்கட்கே பரஸ்பரங் காரியகாரண பாவமாம் என்னும் நியமம் யாண்டுஞ் சம்பவியாதாம். அவ்வக்ஷரத்தினின்றும் ஜகத்தின் ஜன்மாதி மூன்றுமுண்டாம்; அவற்றுள் ஜன்மத்தை யிவ்வாறறிஞர் கூறியுள்ளார்:— அது ஜகத்துண்டாவதன் முன்னர் உற்பன்னஞ் செய்யத்தகுதியாய ஜகத்விஷயக ஞானரூபத்தபத்தைச்செய்தது, அச்சகத்து வேதப பிரசித்தமாய நானுவகையாய நாமரூபத்தையுடையது, அதன்விஷயக ஞானத்தின் பின்னர் அவ்வக்ஷர உற்பத்திக்கனுகூலமாய ஸ்தூலத்தன்மையை யடைந்தது. ஜலத்தானே உருண்டையாய பிருதிவியின்கண்ணே அடைவுற்ற ஜீவன் ஸ்தூலத்தன்மையை யடைவதேபோல, அவ்வக்ஷரமும் ஸ்தூலத்தன்மையயடையும், பின் ஞானரூபத்தபத்தானே ஸ்தூலத்தன்மையையடைந்த அக்ஷரத்தினின்றும முறையே ஆகாசாதி பஞ்சபூதமுண்டாம்; அவற்றினின்றும் எல்லாவுலகமுமுண்டாம். அப்பஞ்சபூதம சுருதியின்கண்ணே அன்னமெனக் கூறப்பட்டது; அல்லது, அன்னசப்தத்தானே ஈண்டு அவ்யாகிருதத்தைக்கவாக. அந்நாமரூபாத்மக ஜகத்தை யாரம்பிக்கும அவ்யாகிருதரூப அஞ்ஞானம் சித்தாந்தத்தே அநாதியாயினும் ஜகதுற்பத்திகாலத்தே பிரதானத்தன்மையினடைவுவடிவ ஜன்மத்தையடையும். அந்தச சேதனப பிரதிபிம்பத்தோடுகூடிய அவ்வியாகிருதரூப அன்னத்தினின்றும மனப் பிராணுதி சமஷ்டி சூக்ஷ்ம சரீரமுடைய ஹிரண்யகர்ப்பருண்டாவர்; அவரைப பிருஹதாரண்யகம் மிருத்தியுவெனக் கூறியுள்ளது. அவரினின்றும் சமஷ்டி ஸ்தூலபூதரூப சரீரமுடைய விராட்டுப் பகவானுண்டானர், அவர் சுருதியில சத்திய சப்தத்தானே கூறப்பட்டுளார்; அவருண்டானபின்னர் அவர்பாலிருக்கும் பூராதி ஏழுலகங்களுமுண்டாயின, பின்னுண்டிருக்கும் ஜனங்களை யதிகாரியாகவுடைய வேதோக்த சர்வ கருமங்களுமுண்டாயின, அவ்வேதத்தே கூறியகருமங்களினின்றும் சுவாக்காதிரூப பலமுண்டாயின, அப்பலங்கள் ஜீவர்கட்கு அவசியம அடைவுறுமாதலின், அவற்றைச் சுருதிபகவதி அமிருதமென்றனள்; இதனானே விஷயசகித பரவித்தையைச் சுருக்கமாய்க்கூறினேம. இப்போது வைராக்கிய அடைவின்பொருட்டு விஷயசகித அபரவித்தையை நிரூபிப்பாம்:—ஹே சௌனக! இவ்வக்ஷரப் பிரஹ்மம் சாமானியமாய்ச் சர்வ ஜகத்தையுமறியுமாதலின், வேதவேத்தாக்கள் சர்வஞ்ஞமென்றனர், விசேஷமாயறியுமாதலின், சர்வவித்தென்றனர்; அத்தகையதினின்றும் சமஷ்டி சூக்ஷ்ம அபிமானியாய ஹிரண்யகருப்பருண்டாவர்; அவரினின்றும் சமஷ்டிஸ்தூலாபிமானியாய விராட்டுண்டாவர்; அவ்விருவடிவ விசுவத்தையும் வேதவேத்தாக்கள் கருமபலமென வருணித்துளார். அப்பலம் கருமத்தின் பின் ஜீவர்கட்கவசியமாய்க் கிடைக்குமாதலின், சுருதியின்கண்ணே கருமபலம் சத்தியசப்தத்தானே கூறப்பெற்றுளது.

சங்கை:—ஹே பகவன்! அவ்விரண்யகர்ப்பாதியரின் ஐசுவரியம் எக்கரும பலமாம்?

சமாதானம்:—ஹே சௌனக! அதிகாரிகட்கு வேதபகவான் விதித்த தரிச பௌர்ணமாசாதி யாகசகித அக்கினிஹோத்திராதி கருமம், தயிர், நெய், எஜமா

னன், மந்திரம், தேசம், காலம் என்பதாதி பதார்த்தபேதத்தானே நானுவகையாம். அத்தகைய அக்கினிஹோத்திராதி கருமங்களால அதிகாரிகட்கு ஐசுவரியரூபப் பலப்பிராப்தியாம். அவற்றைச்செய்யாமல வேதநிஷித்த ஹிம்சாதிகளையும், நேத்திராதிகளின் விடயரூபாதிகளிடத்தே அதிபந்தம ஆசத்தியையும செய்துகொண்டிருப்பவர் அதோகதியையடைவார்; மேற்கூறிய மூன்றினும் மாறுபவதிகாரிகள் சுவர்க்காதி புக்தமவுலகங்களில தேவசரீரத்தையடைவார். அவ்வக்கினிஹோத்திராதி கருமங்கள் கேவலம சுவர்க்காதி சுககாரணமேயென்பதாகவில்லை; மற்றோ, நிட்காமமாய்ச்செய்த அவை மனத்தூய்மைவாயிலாய் ஆன்மஞானத்திற்கும் ஹேதுவாம; ஏனெனின், அவை சகாமம நிட்காமம என இருவகையாம. சுவர்க்காதிகளைத்தருபவை சகாமமாம; மனத்தூய்மையைத்தருவது நிட்காமமாம்; முதலதின் பயனுப சுவர்க்காதி கூறப்பட்டன. இனி மனத்தூய்மையின்பொருட்டுச்செய்த நிட்காமகருமத்தின் வைராக்கியரூபபலத்தை நீ கேட்டி. ஸ்தூலசூக்ஷமகாரணமென்னும முக்தேகங்களுமற்ற மோக்ஷத்தையும் அக்கருமிகளடைவர் என்னும் ஆசையை நீ பொருகானுஞ் செய்யற்க. என்னை, கருமத்தானே ஜனிப்பனவாய பயன்களியாவும் அநித்தியரூபங்களேயாம். சுவர்க்கபலம் கருமஜன்னியமாதலின அநித்தியமேயாம. ஆங்கே மோக்ஷமும் கருமஜன்னியமாயின் அநித்தியமேயாம. வேதவேதாக்கள மோக்ஷத்தை யநித்தியமென அங்கீகரித்திலர்; நித்தியமெனபாராதலின, அதன்கண்ணே கருமபலரூபத்தன்மை சம்பவியாதாம. ஜோதிஷ்டோமமெனப பெயரிய யாகமே முதலாகவுள்ள அக்கினிஹோத்திராதி கருமங்களியாவும அதிகாரிகட்குச சம்சார சமுத்திரத்தினின்றும மோக்ஷவடிவ பரம்பரையையடைவிப்பதிற சமாத்துவடையனவன்றும. மகா சமுத்திர ஜலத்தே திருணகாஷ்டாதிகளாற செய்யப்பட்டு தாண்டசசாதனமாய ஓடம், கேவலம மத்சியாதிகொல்வதற்கே யுபயோகமாமன்றி அக்கடலைக்கடக்கவுபயோகமாகாதாம்; என்னை, அஃதறபமாதலின் திடமற்றதாம, கடலலைகளாலலைவுற்றதாம், கடனீரிற் மூழ்கியிருப்பதேபோனறிருப்பதாம், கடனீரால நிரம்பிய அது மிகவுமாடிக்கொண்டிருக்குமாதலினுனே தன்னை யாசிரயத்தவருக்கு எப்போதும் பயத்தையடைவிப்பதாம்; அத்தகைய அது கடலைக்கடத்துவிப்பதிற சமர்த்துடையதாகாதாம். ஆங்கே, இச்சம்சாரரூப மகாசமுத்திரத்தே அவ்வக்கினிஹோத்திராதிகருமரூப ஓடமிருக்கும, அது காமக்குரோதாதி யலைகளாலெப்போதும் சஞ்சலமாயேயிருக்கும, அறபவிக்கினத்தானும அஃதழிவுறுமாதலின், திடமற்றதாம்; அத்தகையதை பரமேசுரர் சம்சார சமுத்திரத்தேயுள்ள சுவர்க்காதி சுகரூபமத்சியங்களின் அடைவின்பொருட்டே செய்தனரன்றி, இக்கடலைக் கடப்பதற்குச் செய்யவில்லை.

சங்கை :—ஹே பகவன்! இக்கடலிலிருக்கும் ஓடத்தை நடத்தும் செம்படவனிருப்பதேபோலச் சம்சார சமுத்திரத்தேயிருக்கும் அக்கினிஹோத்திராதி கருமரூப ஓடத்தைச்செலுத்துபவன் யாவனுளான்?

சமாதானம் :—ஹே சௌனக! அத்வர்யுவே முதலாக 16 இருத்துவிஜர்கள், யஜமானன், அவன் மனைவியென்னும் 18 பெயர்கள் அவ்வோடத்தைச்

செலுத்துபவராவர். யாகாதிகளைச் செய்விப்பவராகிய மறையவர் இருத்துவிக்குகளாவர்; அவர்கள் பெயர், யஜுர்வேதத்தை யுணரும் அத்வர்யு, பிரதிபஸ்தாதா, நேஷ்டா, நேதாவென நால்வர்; இருக்குவேதத்தை யுணரும் ஹோதா, மைத்திராவருணா, அச்சாவாகர், கிராவஸ்துநா என நால்வர்; சாமவேதத்தை யுணரும உத்காதா, பிரஸ்தோதா, பிரதிஹர்த்தா, சுபரமண்யர் என நால்வர்; அம் மூன்று வேதத்தையுமுணரும் பிரஹ்மா, பிராஹ்மணாச்சசந்தசீ, அக்நீத்ர, போதா என நால்வர் எனப் பதினறு பெயர்; அப்பதினெண்மரை விடுத்து அவ்வக்கினி ஹோத்திராதிகருமம் நடைபெறுதாமாதலின், அவர் அக்கருமஓடத்தை நடத்தும் செம்படவராவர். சம்சார சமுத்திரத்தேயிருக்குங்கருமரூப அறபஓடத்தே சுரோத்திரியப் பிரஹ்மநிஷ்ட குருரூபசசெம்படவனில்லை, பிரஹ்மசர்யாதி சாதனரூப அனுகூலவாயுவுமில்லை, அக்கருமஓடம்தானே இப்பறகைபானே கணநேதாறுமழிவதாம்; திடமறறதாம்; அத்தகையதைபபறறி எம்மதிமான் பயமின்றிச்சம்சார சமுத்திரத்தே புகுவன்? மற்றோ, அதைக்கடக்க எம்மதிமானும் அவ்வோடத்தைப்பற்றான்; விசாரஹீனமூடனே பறறுவனாதலின், மோக்ஷரூப நித்தியசுகமடைய இச்சித்த முமுட்சுக்கள் அதைக்கடக்க அதை யொருகாலும பறறவேகூடாது இச் சம்சார சமுத்திரத்தேயிருக்குஞ் சுவர்க்கசுக மதசியாதிகளையடைவிக்கும அக்கினி ஹோத்திராதி கருமஓடத்தைபபறறித தன்னைக் கிருதகிருத்தியனென வெண்ணியிருக்கும் மூடனாய கருமி யொருகாலும் இக்கடலைக்கடவான்; மாறாக, அவன் காமக்குரோதாதிரூப அலைகளால கருமஓடம் நடுங்குவதால் அக்கடலின் பிறப பிறப்புவடிவ நீரினகண்ணே அடிக்கடி மூழ்குவன்; ஒருககாலுஞ் சுகத்தை யடையான். அவித்தையாகிய நீரையுடைய அக்கடலில இக்கருமி உலகப்பிரசித்த செம்படவனைப்போலத தனக்கும பிறாக்குங் கிலேசத்தையடைவித்துககொண்டேயிருப்பன். தனக்குந் தன் சீடனுக்கும அநர்த்தத்தைச்செய்விப்பவனாதலின், அக கருமி துர்ப்புத்தியுடையவனாவன்; ஆயினுந் தன்னைப பண்டிதனெயெண்ணுவன். அநேகவகை ரோகாதியநர்த்தங்களால விக்ஷேபத்தையடைந்த அவன் மாயையாலாக்கப்பட்ட மோகரூபச்சேறுடையபள்ளத்தே அடிக்கடி விழுவன். அநித்திய சுகத்தையடைவிக்கும் கருமத்தையே மோக்ஷசாதனமென்பனாதலின், அத்தியந்தம் மூடமதியாவன், விவேகமறறவனாவன்; குருவும் அவ்வாறே யாவனாதலின், செய்யத்தக்க பொருணிர்ணயந் தன் குருவாலுமுண்டாகாதாம். விவேகமற்ற குருடன் வேறொரு அவிவேகியாகிய குருடன் பின்போய் அடிக்கடி சேறறுக் குழியில் விழுவதேபோல, விவேகமற்றுச் சுவர்க்கசுகவடைவை யிச்சித்த கருமியும விவேகஹீனகருமிகுருவின் பின்போய் மாயைவடிவ நீர் நிறைந்த சமுசார சமுத்திரத்தே மகா துக்கத்தையடைவன். பூத ஆவேசத்தாற் பிடிக்கப்பட்டவன் தன் றுயரையும் அதை நீக்கு முபாயத்தையும் அறியாததேபோலக் காமக்குரோதாதிரூபப்பிசாசினாவேசத்தானே பிடிக்கப்பட்ட கருமியுந் தன்றுயரையும் அதை நீக்கு முபாயத்தையு மறியமுடியான்; மற்றோ, மாறாக அவ்வற்பமதியையுடைய கருமி அக்கருமங்களால் யான் கிருதகிருத்தியனாயினேன், இதனினும் மேலாக யாதொரு கர்த்தவ்யமுமெனக்கின்று என எண்ணிப் பேயைப்போல நடிப்பன், நகைப்பன், அவன் காமப் பேயின்வயத்தனாய்ப் பரமேசுரமாயையால் மோகி

தனு யிப்பாஞ்சபௌதிக சரீரத்தின்கண்ணே பரமசுகமதியைச்செய்வன். எப்போது மிவ்வாறெண்ணுவன்:—இப்பகைவனை யான் என்பலத்தால் வீழ்த்தினன், மீண்டுங் கிளம்பியுளான் இபபகைவன், இவனையும் என்பலத்தால் கொல்வேன், இவ்வெனது மித்திரன் மகாபலமுடையவனுயிருக்கின்றனனுதலின், எனக்கிப்போது எவனிடத்தினும் பீதிகிடையாது; என்பன முதலாக அநேகவகையாய்ச் சிந்தித்து வியாப்தமாய சித்தமுடையவனும், பிரமாதவடிவ கிரகவயமுற்ற சித்தமுடையவனும ஆகிய கருமி, தன்னிருதய தேயத்தேயிருக்கும் ஆநந்தவடிவ ஆன்மாவையுணாவதில சமர்த்துடையவனுகாணுதலின், அடிக்கடி ஜன்மமரணத்தை யடைவன். ஆநந்தவடிவ ஆன்மாவைமறந்து அக்கினிஹோத்திராதி கருமததைமே தன்மேன்மைச சாதனமெனவெண்ணிச சம்சாரசுகத்தே பறறுற்றவன் சுவர்க்கத்தே புண்ணியகருமபலத்தைப போகித்து ஒருகாலத்தே அச்சுவர்க்க உலகத்தினின்றுஞ் சோகத்தோடுங்கூடியவனுய்க் கீழேவிழுவன். ஈண்டுப புத்திராதி குடும்பத்தோடுகூடிய தனவானுனவன் தன் மரண காலத்தே துக்கமடைவதேபோல, அக்கருமி சுவாககததினின்றுங கீழே விழும்போது துக்கத்தை அடைவன். மகாசுகத்தையுடைய ஒரு அரசனுக்குத் தன் மரண காலத்தே உண்டாநதுயரைப்போலவே அக்கருமி துறக்கத்தினின்றும்கீழே விழும்போது துயரை அடைவன். மரணகாலத்தே எல்லாவுயிர்கட்குந துககமுண்டாமாயினுந தனவான்கட்கும அரசாகட்கும் மிகுபோக ஆசக்தியால் அக்கால் மற்றையரினும அதிகதுககமுண்டாமாதலின், சுவர்க்கத்தினின்றுங் கீழேவிழுந் துக்கத்திற்கு அவ்விருவரையுந் திருஷ்டாநதப படுததியதாம. அககருமிக்குக் கேவலந துறககததினின்றும விழும்போது மாததிரந துயருண்டாவதலல; மற்றே, துறக்கத்தின்கண்ணும் இநதிராதிகளின் பாதந்திரததன்மையானே மகாதுக்கமுண்டாம; அதிகபோகங்களின் அப்பிராப்தியானும்பெருநதுயருண்டாம. தனிகனுக்குத் தனநாசத்தானே பெருந்துயருண்டாவதேபோலச சுவாக்காதியின்கண்ணுங கருமிக்குப் புண்ணியகரும நாசததானே பெருநதுயருண்டாம. இவ்வாறு கருமிக்குக் கரும அனுட்டான காலத்தும, பலப் பிராபதிகாலத்தும் பலமழிநத பின்னரும் பெருந்துயருண்டாவதேயுமன்றி மீண்டும ஜன்மததானே துயராமாதலின், அதிமதபாந்த காலததே இக்கருமம் துககதாரணமேயாம. சுவர்க்கத்தை யடைநது மீண்டும பூமியின்கண்ணே ஜன்மத்தையடையுங கருமி யெச்சரீரத்தை யடைவன்? ஒருததமதேகத்தையடைவனே? மத்தியமதேகத்தையடைவனே? அதமதேகததையடைவனே? நாகசம்பநதமாய தேகததையடைவனே? என்னும புருடகருமபலத்தைச் சாவஞ்ஞ ஈசுரனன்றியாவனே யறியவலலான்; மற்றே, சர்வஞ்ஞ ஈசுரனன்றி கருமபலததை யறிபவரெவருமில்லை. அககினிஹோததிராதி இஷ்டகருமததையும் வாபி கூப தடாகாதிரூப பூர்ததகருமததையும் செய்யுங் கருமிகட்குச் சுவர்க்கததையடைவிக்குந தக்ஷிணமாாக்கததைககூறினேம். இனித் தேவயானமெனப் பெயரிய உததரமாாககத்தே கமனஞ்செய்யும புருடர் கதியைக் கேட்டி:—ஹே சௌனக! சுவர்க்கத்தையடைவிக்குந தக்ஷிணமார்க்கம சமசாரத்துள்ளிருப்பதேபோலப் பிரஹ்மலோகத்தையடைவிக்கும தேவயானமெனப் பெய

ரிய உத்தரமார்க்கமும் சம்சாரத்துள்ளடங்கியதேயாம். ஆனல், தேவயானமார்க்கமோ சம்சார சமுத்திரத்தின் அக்கரைச் சமீபத்துள்ளதாமாதலின், அது யாவருக்குங்கிடைக்காதாம்; மற்ருே, ஓரோர் வைராக்கியவானுக்கே பிராப்தமாம். இதனையே வெளிப்படுத்துவாம்:—யான் என் வீரியத்தை வெளிப்படுத்தேன், எனத் திடசங்கற்பஞ்செய்துகொண்டு ஸ்திரீ சம்போகஞ்செய்யாமலிருப்பவனுகிய நைஷ்டிக பிரஹ்மசாரியும், தகராதியுபாசனைசெய்யும புருடனும், சுவர்க்காதி பஞ்சாக்கினியையுபாசிக்கும் இல்லறத்தானும் உத்தரமார்க்கவாயிலாய்ப் பிரஹ்மலோகத்தே செலவர். பிரஹ்மசர்யாதி சாதனம் மிகவுங் கடினமாமாதலின், தேவயான மார்க்கம் ஒ ரொருவனுக்கே கிட்டும்; எல்லாருக்குங்கிட்டாதாம். உத்தரமார்க்கத்தானே கிடைக்கத்தக்க பிரஹ்மலோகத்தும் எல்லோருக்கும ஆன்மஞானப்பிராப்தி யுண்டாகாதாம்; மறருே, பிரஹ்மலோகத்தே தேவயோகததானே ஆன்மஞானப பிராபதியாயவனுக்கே ஹிரண்யகாபபரினும் மேலேயிருக்கும அத்விதீயப பிரஹ்மததைத் தன்னுன்மரூபமாயடையக்கிடைக்கும். பூவுலகத்திருக்கு மதிகாரிகள் ஆன்மஞானததானே அத்விதீயப் பிரஹ்மத்தையடைவதேபோலப் பிரஹ்மலோகத்தேயிருக்கும அதிகாரிகளும் ஆன்மஞானத்தானே அதவிதீயப பிரஹ்மத்தையடைவராதலின், இரண்டிடத்தும ஆன்மஞானத்தானே மோக்ஷப்பிராபதி சமானமேயாம். பிரஹ்மலோகத்தே ஆன்மஞானப் பிராப்தி கிடைக்கப்பெருத அதிகாரிகள் பிரஹ்மலோகத்தினின்றும மீண்டும மனுட உலகத்தையடைவர். ஆனல அவர் இமமன்வந்தரததே அலலதிக்கற்பததே பிரஹ்மலோகத்தினின்றும ஈங கடைவதிலலே; மறருே, வேறு மன்வநதரத்தேனும் வேறு கறபத்தேனும் மனுடலோகத்தையடைவராதலின், தக்ஷிணமார்க்கம் புனராவிருத்தியோடு கூடியிருபபதேபோலத தேவயானமாாககமும் புனராவிருததியோடுகூடியதாம. ஆகையால, முமுக்ஷுக்கள் தக்ஷிணமார்க்கத்தைப்போல உததரமாாககத்தையும பரித்தியாகித்தலுசிதமாம. உபாசனை முதலிய சாதனஙகளோடுகூடிய நைஷ்டிகப்பிரஹ்மசாரி கிருகஸ்தன் வானப்பிரஸ்தன் சங்யாசியென்னும சர்வ அதிகாரிகட்கும பிரஹ்மலோகத்தேனும் சுவர்க்கலோகத்தேனும் பூமியிலேனும் பாதாளத்தேனும நரகத்தேனும பிரஹ்மான்மஞானமே முக்தியின் காரணமாம்; அஃதின்றி எவ்வுலகத்தும் மோக்ஷப்பிராபதியுண்டாகாதாம்; இபபொருளில் நீ சிறிதுமாத்திரையும் ஐயுருதே. பிரஹ்மஞானத்தானன்றி எவ்வுலகத்தும் மோக்ஷப்பிராப்தியுண்டாகாததேபோல, இத்தேகமெவ்வுலகததும் சுகத்தையடைவிக்கமாட்டாது; மறருே, இது பூமியிலிருந்து பிரஹ்மலோகம்வரையுள்ள எல்லா வுலகங்களிலும துயரையேயடைவிக்கும். தேகசம்பந்தம் பூவுலகத்தே யிருப்பதேபோலப் பிரஹ்மலோகத்துமிருக்குமாதலின், முறகூறிய முறையே சுவர்க்கலோகத்தேபோலத துக்ககாரணமேயாமாதலின், அறிஞர்கள் பிரஹ்மலோகததையும் நரகம்போலத் துக்ககாரணமாயறிக. மனுடர் தேவர் மிருகம் என்பதாதி பேதத்தானே சரீரவிலக்ஷணப்பிரதீதியாமாயினும் சரீரஜன்னிய துக்கரூபப்பலம் யாண்டும் சமானமேயாம். மகாராஜா வசிக்கும்பொருட்டுச் செய்யப்பட்ட ஏழடுக்குமாடியாய உயர்ந்த கிருகத்தின்மேலிருப்பவனுக்கும் பூமியிலிருப்பவனுக்கும் சுர முதலிய வியாதி ஜன்னியதுக்க பலம் சமானமேயாவதுபோலச சுவர்க்காதி உலகத்தேயிருக்குந் தேவதைகட்கும

பூமியிலிருக்கும் மனுடருக்கும் இத்தேகசம்பந்தத்தானே துக்கரூபபலம் சமானமேயாம்; அப்பலத்தின்கண்ணே சிறிது மாத்திரையுங் குறைவு அதிகமில்லை. பொன்மயச்சங்கிலியும் இரும்புமயச்சங்கிலியும் புருடபந்தனகாரணமாதல் சமானமேபோலத் தேவசரீரமும் மனுடசரீரமும் சீவர்க்குத் துக்கமீதல் சமானமேயாம். யாவினுமுத்தமமாய ஹிரண்யகர்ப்பர் தேகமும் யாவினும் கீழாய நாயின் றேகமும் அநித்யபாகாரியமாதலும் பாஞ்சபௌதிகமாதலும் சமானமேயாமாதலின், ஆராயின் இரண்டிறகும் சிறிது மாத்திரையும் பேதஞ்சித்தமாகாதாம்; அஃதாகாததுபோலவே அபிமானி சீவர்க்கும் பேதசித்தமாகாதாம். எவ்வெச்சீவன் எவ்வெத்தேகத்தைக்கவர்வனே அவ்வச்சீவனுக்கு அவ்வத்தேகம் யாவினும் மேலாகவே தோறறும்; மற்றைய சர்வ சரீரங்களும் கீழாகவே பிரதீதியாமாதலின், அபிமானததாலாய மேன்மையும் பிரஹ்மாவினின்றும் நாய்பரியந்தம் உள்ள எல்லாத்தேகத்தும் சமானமேயாம். ஜீவன் அதிகமென நினைந்த தேகம் ஆதிவியாதிஜன்னிய சர்வ துக்ககாரணமாம்; எப்போதுந் துர்க்கந்தத்தோடு கூடியதாம்; எப்போதும் அசுசியாம்; இத்தகைய மலினதேகமும் ஜீவர்கட்கு எத்தெய்வயோகத்தானே துக்ககாரணமாய்த் துர்க்கந்த அசுசிரூபமாய்ப் பிரதீதியாவதில்லை, அவ்விசித்திர தைவகதியை நினைந்து மதிமான்கள் சோகிக்கவேண்டியவராயிருக்கின்றனர். இத்தேகம் துர்க்கந்தாதி யநேக தோஷங்களோடு கூடியதாயினுங் கருமகாம அவித்தைகளின் மகிமையானே ஜீவர்கட்கு அவை பிரதீதியாவதில்லை; மற்றே, மாறாக இத்தேகம அமிருதம்போலப் பிரியமாய்ப் பிரதீதியாம். ஈண்டுப் பிராரப்தகருமபலங் கருமமாம; இராகங் காமமாம்; அத்தியாசம் அவித்தையாம்; எம்மூன்றன்பலததானே இம்மலதேகமும் அமிருதமாய்த்தோற்றுமோ அம்மூன்றும் சீசீயென இகழத்தக்கனவாம். அத்தியாசரூப அவித்தையானே மோகத்தையடைந்த ஜீவர் தமமுகத்துதித்த எசசிலையுண்டும் அருவருப்படைவதில்லை. எவ்விட்டை, மூத்திரம், உதிரம், கபம் முதலிய பதாரத்தங்கள் வைதரணி முதலிய நரகங்களிலிருக்குமோ, அவையே இத்தேகத்துமிருக்கும். நரகத்திருப்பவற்றினும் இத்தேகத்திருப்பவற்றினும் சிறிதும் பேதமேயில்லையாயினும், ஜீவர்கட்குப் பாபாதிதோஷவயத்தானே மலினமாய அவையும் சௌந்தரியமாய்ப் பிரதீதியாமாதலின், ஜீவர்களின் பாபாதிதோஷமகிமை மிகவும் ஆச்சரியமாயதாம். இவ்வாறதிகாரி பிரஹ்மலோகமேமுதல் மனுடலோகம்வரையுள்ள சர்வ லோகங்களையும் அநர்த்தரூபமெனக்கண்டு, அவ்வியாவற்றினின்றும் வைராக்கியத்தையடையவேண்டும். 'வரீக்ஷ்யலொகாநு உ–த்விதாநு஬்ராஹ்மணொ நிவெ–த்ஷமா யாக' இவ்வதிகாரி முற்கூறிய முறையே கர்மத்தாலாய சர்வ லோகங்களையும் அநித்தியாதிதோட முடையதாய்க்கண்டு, அவற்றினின்றும் வைராக்கியத்தையடையவேண்டும். ஹே சௌனக! அதிகாரிக்குக் கேவலம் முற்கூறிய தோஷவிசாரத்தானே இவ்வுலக பரித்தியாக யோக்கியமன்றும்; மற்றே, கர்மஜன்னியமாதலினுன் அநித்தியத்தன்மை முதலிய தோஷத்தானும் பரித்தியாகிக்க யோக்கியமாம்; ஏனெனின், பூமி அந்தரிக்ஷம் சுவர்க்கம் என்னும் மூவுலகங்களுள் அடங்கிய உலகங்களியாவும் ஜீவர்கட்கு யாகாதி சரீரசம்பந்த கர்மத்தானே

கிடைக்கும். அம்மூன்றினும் வேறாய பிரஹ்மலோகாதிகளோ உபாசனைவடிவ மானச கருமத்தானே பிராப்தமாம்; இவ்வகையாய நியமம் எக்காலத்தும் வேறு யாவதின்றாம். ஆகையால், எல்லா வுலகங்களும் கர்மஜன்னியமாம்; கர்மஜன்னிய மான யாவும் அநித்தியமேயாம். கடாதிகள் கர்மஜன்னியமாதலின் அநித்திய மாவதேபோல, சுவர்க்காதிகள் கர்மஜன்னியமாதலின் அநித்தியமேயாம். அநித்தியங்கள் யாவுந் தமது வியோககாலத்தே ஜீவர்கட்கு அவசியந் துயரையே யீயும். தனாதிகள் அநித்தியமாதலின் தமது வியோககாலத்தே ஜீவர்கட்கு அவசியம் துக்கத்தை யடைவிப்பதேபோல, சுவர்க்காதிகள் அநித்தியமாதலால் துயரையே தருமாதலின், அவை விடத்தக்கனவேயாம் சுவர்க்காதிகள் கர்மஜன்னியமாவதேபோல, மோக்ஷம் கர்மஜன்னியமன்றாம்; ஏனெனின், சுவர்க்காதிகளைப்போல ஒருகால் மோக்ஷமும் கர்மஜன்னியமாயின், அவற்றைப்போல அநித்தியமேயாம். மோக்ஷத்தை யநித்தியமென வுடன்படினே மோக்ஷ அடைவின் பொருட்டு அதிகாரிகளின் பிரயத்நமே வியர்த்தமாம். அல்லது, மோக்ஷமும் ஒருகால் கர்மஜன்னியமென வுடன்படின் அதன்கண்ணே சுவர்க்கத்தைக்குறித்துச் சிறப்பின்றாகும; மறறோ, மோக்ஷத்திறகும சுவர்க்க விசேஷரூபத்தன்மை பிராப்தமாம்; ஏனெனின், விசுவஜித்தெனப பெயரிய யாகத்தானே அடையப்படும் சுவர்க்கமும், ஜோதிஷ்டோமமெனப பெயரிய யாகத்தானே அடையப்படும் சுவர்க்கமும், தம்மில் ஒரு சிறிது அவாநதர விசேஷத்தன்மையுடையனவாயினும் சுவர்க்கத்தன்மை யுருவததானும அநித்தியரூபததானும் அவ்விரண்டன்கண்ணும் சிறிது மாத்திரையும் விஷமத்தன்மையின்றாம்; இரண்டும் சமானமேயாம். அவ்வாறே கர்மஜன்னிய சுவர்ககத்தும் கர்மஜன்னிய மோக்ஷத்தும் ஒரு சிறிது அவாந்தரவிசேஷத்தன்மையிருப்பினும், சுவர்க்கத்தன்மை யுருவத்தானும் அநித்தியத்தன்மை யுருவத்தானும் அவ்விரண்டன்கண்ணும சமானத்தன்மையேயாம. அல்லது, சுவர்க்காதிகளைபபோல மோக்ஷத்தையும் அநித்தியமெனின் 'ந ஸ வா₃ புநராவர்த்ததே' என்னும சுருதி, முக்தருக்கு மீண்டும் வருகையின்மையைக்கூறல் வீணாம். சர்வ சாஸ்திரங்களின் ஆசாரியர்கட்கும மோக்ஷநித்தியத்தன்மையி லிருந்த பிரசித்தியும் வீணாம். இதனானும் மோக்ஷத்தே அநித்தியத்தன்மை சம்பவியாதாம். அல்லது, 'நாந்ய꞉ பந்தா² வித்₃யதே(அ)யநாய' மோக்ஷ அடைவின் பொருட்டு ஆன்மஞானமின்றி வேறு மார்க்கமில்லை; ஆன்மஞானமொன்றே மார்க்கமாம். 'ப்₃ரஹ்மவேத₃ ப்₃ரஹ்மைவ ப₄வதி' அதிகாரி அத்விதீயப்பிரஹ்மத்தைத் தன்னான்மவடிமாயுணர்ந்து பிரஹ்மரூபமேயாவன்; என்னு மிருமறைகளும ஆன்மஞானமொன்றானே மோக்ஷப்பிராப்தியைக் கூறுகின்றன. மோக்ஷமும் சுவர்க்காதிபோலக் கர்மஜன்னியமாயின் இருசுருதியும் வீணன்றோவாம்? சுருதி வியர்த்தமாதல் எவ்வாஸ்திகர்க்குஞ் சம்மதமின்றாம்; இதனானும், மோக்ஷத்தே கர்மஜன்னியத்தன்மை சம்பவியாதாம். இப்போதிப்பொருளையே யுக்தியானே நிரூபிப்பாம்:—அவித்தைவடிவ ஆவரணமற்ற ஆநந்தவடிவப்பிரஹ்மத்தையே வேதவேத்தாக்கள் மோக்ஷமெனக்கூறினர். எவ்வவித்தையற்ற பிரஹ்மம் மோக்ஷமாமோ, எவ்வவித்தை அறிஞர்களான் மாயை அஞ்ஞானம் அவ்வியாகிருதம் சக்தியென்பதாதி நாமங்களால் கூறப்பெற்றதாமோ, அவ்வஞ்ஞான நீக்கம் கேவலம்

ஞானத்தாலேயாம்; ஏனெனின், உலகத்தே எவ்வஸ்துவிஷயக அஞ்ஞானமாமோ அவ்வஸ்துவிஷயக ஞானத்தாலே அதன் நீக்கமாம்; வேறெக கருமாதி உபாயங்களாலும் அஞ்ஞான நீக்கமுண்டாகாதாம். இரஜ்ஜுவின்கண்ணே கற்பிதசர்ப்பத்தின் காரணரூப அஞ்ஞானம் இரஜ்ஜுவிஷயகமாம்; அதன் நீக்கம் இரஜ்ஜுவிஷயகஞானத்தாலேயாம்; வேறெக காமாதியுபாயங்களாலும் அதன் நீக்கமுண்டாகாதாம்; அந்த ஞானத்தாலே அவ்வஞ்ஞானங்கெடவே அஞ்ஞான காரியரூபசர்ப்பம் தானே நீங்கும் என்பது சர்வலோக அனுபவசித்தமாம். அவ்வாறே இசசம்சார காரணரூப அஞ்ஞானமும் பிரஹ்மான்ம விஷயகமாமாதலின், பிரஹ்மான்ம விஷயகஞானத்தாலே அது நீங்கும்; அஃதின்றி வேறு கர்ம உபாசனை முதலிய உபாயத்தாலே அஞ்ஞானநீக்கம் சம்பவியாதாம். அதனால் அது நீங்கும்போது அஞ்ஞானஜன்னிய துக்கநீக்கமுந் தானேயுண்டாம். அல்லது, எவ்வாதி சம்சார சம்பந்தி துக்கத்தை அஞ்ஞானஜன்னியமென வுடன்படுவதில்லையோ; மற்றோ, நையாயிகமதத்தேபோல ஆன்மவடிவ சமவாயிகாரணத்தோடு அத்துக்கத்தைச் சத்தியமாவெண்ணுவரோ, அவ்வாதி மதத்தே அத்துக்கம் ஆன்மாவைப்போல எப்போதும் இருக்குமாதலின், அத்துக்க நீக்கரூப மோக்ஷப்பிராப்தியின்பொருட்டு எல்லா அதிகாரிகளின் முயலவும் வீணாம். ஒருகாலவ்வாதி கடாதிபோலத் துக்கத்தைச் சத்தியமாயுடன்பட்டும் அநித்தியமென வெண்ணினும் துக்கநீக்கவடிவ மோக்ஷப்பிராப்தியின்பொருட்டு அதிகாரிகளின் முயல்வு வீணாம்; ஏனெனின், எண்டுப பாவபொருள்களெல்லாம் அநித்தியமாய் ஒருகாலத்தே தாமே நாசத்தையுறும். குதிரின்கண்ணேயிருக்குந் தானியம் ஒருகால தானே நாசமாவதேபோல, அநித்திய துக்கமும் ஒருகால தானே நாசமாம்; அவ்வநித்திய துக்க நீக்கப்பொருட்டு முயலவுறல் வீணேயாம். அல்லது, நையாயிகர் துக்கத்தை யநித்யஜன்யமென வங்கீகரியாது ஆன்மஜன்னியமென்பர், அம்மதத்தும் துக்கத்திற்கு அத்தியந்தநாசஞ் சம்பவியாதாம்; ஏனெனின், அவர் துக்கசமவாயிகாரண ஆன்மாவை நித்தியமென நினைவராதலின், ஒரு துக்கம் நாசமாயினும் அந்நித்திய ஆன்மாவினின்றும் மீண்டுந் துக்க உற்பத்தியாம்; காரணமிருப்பக் காரிய உற்பத்தியை எவராலும் நீக்கமுடியாதாம். அல்லது, துக்க காரணரூப இத்துவைதப்பிரபஞ்சம் ஒருகால சத்தியமாயின், சாக்ஷாத் ஈசுரரும் துக்கநீக்கத்தே சமாத்துடையராகார்; ஏனெனின், ஈசுரர் ஒருகால சத்தியவஸ்துவையும் நீக்குவராயின், வாதிமதத்தே சத்தியமாய்ப் பிரசித்தமாய இவ்வுலகைச் சம்ஹரித்து மீண்டும் உண்டாக்கவேமாட்டாரன்றோ? அவ்வாறு காணவருவதின்றாமாதலின், சத்திய துவைதத்தின்கண்ணே துக்ககாரணத்தன்மை சம்பவியாதாம்; மற்றோ, ஆன்ம அஞ்ஞானத்தாலே அத்துக்க உற்பத்தியாம். ஆன்ம ஞானத்தாலே அஞ்ஞானநிவிருத்தியுண்டாயின் அத்துக்கம் மீண்டும் ஒருகாலும் உற்பன்னமாகாதாம் என்னும் முப்பிட்டதமதமே யுக்தியுடையதாம். இரஜ்ஜுவஞ்ஞானத்தாலே உற்பன்னமாய சர்ப்பாதி தரிசனஜன்னிய பயகம்பாதிரூப துக்கம் இரஜ்ஜுவஞ்ஞானம் நீங்கவே மீண்டுமுண்டாகாதாம்; அதுபோலவே ஆன்ம அஞ்ஞானத்தாலேயுண்டாய இசசம்சார துக்கம் ஆன்ம அஞ்ஞானம் நீங்கவே

மீண்டு முண்டாகாதாமாதலின், அநர்த்த நிவிர்த்திவாயிலாய்ப் பிரஹ்மாநந்தப் பிராப்திவடிவ மோக்ஷம் கேவலம் ஆன்மஞானத்தானேயுண்டாம்; கருமஉபாசனை யினனே யுண்டாகாதாம் எனத் துணியப்பெறும். 'நாஸ்த்யக்ருத꞉ க்ருதேந' காரியபாவமற்ற நித்தியமோக்ஷம் கர்மஉபாசனைகளானே பிராப்தமாகாதாம்; மற்றோ, ஆன்மஞானமொன்றானே பிராபதமாம் என மறையும் அறைகின்றது. இப்போது பிரஹ்மான்மஞானப்பிராப்தியின் பிரகாரத்தை வருணிப்பாம்:—ஹே சௌனக! பிரஹ்மரூப ஆன்மாவின் ஞானம் அதிகாரிகட்குப் பிரஹ்மவேத்தாவாய குருவினுபதேசத்தானேயாம்; ஏனெனின், சர்வ அர்த்தத்தையும் ஒளிர்விக்கும் சுருதிபகவதியே சாக்ஷாத்தாக இப்பொருளைக் கூறியுள்ளாள்:—

"தத்விஜ்ஞாநார்த²ம் ஸ கு³ருமேவாபி⁴க³ச்சே²த் ।
ஸமித்பாணி꞉ ஶ்ரோத்ரியம் ப்³ரஹ்மநிஷ்ட²ம் ॥"

(பொ-ள்.) விவேகாதி சாதன சதுஷ்டய சம்பன்ன அதிகாரி சமிதாதி பதார்த்தங்களை ஹஸ்தத்தின்கண்ணே கவர்ந்து பிரஹ்மான்மஞானப் பிராப்தியின் பொருட்டுச் சுரோத்திரியப்பிரஹ்மநிஷ்டகுருவையடையவேண்டும். ஈண்டுச்சாஸ்திரத்திற்கூறிய அநேகவகையாய யுக்திகளோடும் சீடனதையத்தை நீக்குவதில் சமர்த்துடைய குரு சுரோத்திரியராவர். பிரஹ்மத்தின்கண்ணே நிஷ்டையுடைய குரு பிரஹ்ம நிஷ்டராவர். அத்தகைய ஆசிரியரை விதிப்படி சரணடைந்த சிரத்தையையுடைய சீடனுக்கு அவர் எல்லாத் துயரையுமழிக்கும் பிரஹ்மவித்தையை யருள்வர்; அதனால் பிரஹ்மசரிய சத்தியாதி சாதனசம்பன்ன அதிகாரி அவ்வக்ஷரப் பிரஹ்மத்தைத் தன்னான்மவடிவமாய் நிசசயிப்பன். இப்போது முன்னர்ச் சுருக்கிக்கூறிய பரவித்தையை விரித்துக்கூறுவாம:—ஹே சௌனக! விரக்த முமுக்ஷு ஞானசிரியர் வாயிலா யெப்பிரஹ்மத்தைச் சத்தியரூபமாயுணர்ந்தனனே, எதனினும் வேறாய வுலகமியாவும் அசத்தியமெனவுணர்ந்தனனே, அதனின்றே இவ்வுலகமியாவுமுண்டாம்; அதன்கண்ணே திதமும் இலயமுமாம். அதன்கண்ணுவமை வருமாறு:—ஹே சௌனக! ஓங்கியெரியாநின்ற அக்கினியினின்றும் பிரகாசத்தன்மைவடிவத்தானே அக்கினியின் சமானரூபமுடைய விஸ்புலிங்கமு (பொறியு)முண்டாம; அக்கினியினின்றும் மலினத்தன்மை யுருவத்தானே விருத்த தருமமுடைய தூமமுண்டாம்; அவ்வாறே அக்ஷரப்பிரஹ்மத்தினின்றும் சமானவுருவமுடைய சேதனப்பொருளும், விருத்தவுருவமுடைய ஜடப்பொருளுமுண்டாம். ஜடசேதனங்களையுண்டாக்கும் பிரஹ்மம் சுயம்பிரகாசரூபத்தானே எல்லாவுலகினும் விலக்ஷணமாமாதலின், சுருதிபகவதி பரப்ரஹ்மத்தைத் திவ்யம் என்றனள்; ஆகாயத்தைப்போல யாண்டும் வியாபகமாமாதலின், அமூர்த்தமென்றனள்; சர்வ சரீர உபாதிகளினுள்ளும் வெளியும் நிறைந்திருத்தலின், புருஷனென்றனள்; இத்தூலசரீரமற்றதாதலின், அஜன் என்றனள்; சூக்ஷ்மசரீரமுமற்றதாதலின், அப்பிராணன், அமனசு என்றனள்; மாயைவடிவ காரண சரீரமுமற்றதாதலின், சுப்ரமென்றனள்; ஆகாசாதி ஜகத்வடிவ காரியத்தைக்குறித்து அம்மாயை நெடுங்காலமிருக்குமாதலின், அக்ஷரமெனப்படும்; தன் காரியரூப ஜகத்தைக்குறித்துக் காரணரூப மாயை பரமுமாம்; அத்தகைய மாயையினும் பரப்

பிரஹ்மம் பரமாதலின், பரமாய அக்ஷரத்தினும் பரமென்றனள்; இத்துணையானே பரமான்மசொரூப வர்ணனமாம். இனி அதற்கத்விதீயத்தன்மையைசசித்திசெய்யும் பொருட்டு அதனினின்றும் சர்வ ஜகத்தினுற்பத்தியை வர்ணிப்பாம:—ஹே சௌனக! இம்மாயா உபகித பரமான்மாவினின்றும் பிராணனும் மனமும் சுரோத்திராதி ஞானேந்திரியமும் வாக்காதி கர்மேந்திரியமும் ஆகாசாதி பஞ்சபூதமும் உண்டாம்; இதுவே சூக்ஷூம 17 தத்துவவடிவ ஹிரண்யகர்ப்பர துற்பத்தியாம். பரமான்மாவின் தூலவிராட்வடிவததை வேதவேத்தாக்கள் யிவ்வாறுமென்பர்:— சுவர்க்கலோகம் சிரமாம், இரவியுமதியு மிருவிழிகளாம், கிழக்குமுதலிய திசைகள் செவிகளாம், இருக்குமுதலிய நான்கு வேதங்கள் வாக்கிந்திரியமாம், பாகிய வாயு பிராணனும், இவ்வெல்லாவுலகும் இருதயமாம், பிருதிவிமுழுதும் பாதமாம, இவ்வகையாய சரீரமுடையதும் சர்வ வியஷ்டி பூதங்களின ஆன்மவடிவமும் ஆகிய பரமேசுரவடிவத்தை விராட்டென்பர். அவ்விராட்பகவானினின்றும் உலகங்களின் விருத்தியுண்டாககும் பஞசாக்கினி யுறபததியைக்கூறுவாம்:—அவ்விராட்வடிவத்தினின்றும் இப்பிரசித்த அக்கினியும் அதிதைவரூப சுவர்க்கலோகவடிவ அக்கினியுமுண்டாம். அது ஆஹவனீயகார்ஹ பத்தியாதி ரூபத்தானேயும சுவர்க்காதிபல ரூபத்தானேயும் அக்கினிஹோததிராதி சர்வ கருமங்களின் பிரவிருததிகாரணமாம். அவ்வக்கினியின் ஆதித்தியரூப சமிதயேமுதலாக ஜ்வாலை, தூமம், விஸ்புலிங்கம், அங்காரம் என்பனவாதி சர்வ பதார்த்தங்களும் உறபன்னமாயின. இவற்றை 6-வது அத்தியாயத்தே விஸ்தாரமாய் நிரூபித்து வந்தேம; யாவும் ஆண்டறிந்து கொள்க. அசசுவர்க்கரூப அக்கினியின் பினனாச சந்திரனெனப்பெயரிய சோமனுண்டாயினன், அசசோமன் சூரிய பகவானிடததினின்று முண்டாய, கலாவடிவத்தால பரிணாமததைபடைநத அககினிஹோத்திர ஆஹுதிகளால் விருத்தியையடைந்த சரீரத்தையுடைமையானே, அககினிஹோத்திராதி கருமங்களைசசெய்யுங் கருமிகட்கே அடைவுறுவன். இத்தகைய நெகிழ்சசிததன்மையை யடைவுறறசோமனினின்றும பர்ஜன்யமெனபபெயரிய வேறக்கினியுண்டாம. மேகரூப பர்ஜன்யத்தினின்றும் மழைவாயிலாய்ப் பிருதிவிரூப மூன்றாவது அக்கினியுண்டாம். அதினின்றும் நெற்கோதுமை முதலிய சர்வ ஒஷதிகளுமுறபன்னமாம. புருஷரூப நான்காவதக்கினியில் அன்னரூபமாயடைவுறறஅவ்வோடதிகளினின்றும் வீரியரூபரேதசுண்டாம். அது யோஷித்வடிவ பஞ்சம அக்கினியைபடைவுறறுக் கர்ப்பரூபமாய் வெளியாம். அதனினின்றும் புத்திராதிரூப அநேகவகைப பிரஜைகளுண்டாம். அவர்களால் இலௌகிக வைதிக சாவ விவகார சித்தியாம். விராட்டுண்டாதற்கேதுவாய பரமான்மாவினின்றும் சுவாசப் பிரசுவாசம்போல முயல்வின்றியே இருக்குமுதலிய வேதங்கள் உண்டாமாதலினானே, வேதவேத்தாக்கள் அவற்றையபரப்பிரஹ்மமென்றனர். அப்பரமான்மாவினின்றும் தரிசபௌர்ணமாசாதியாக முண்டாயது, ஜோதிஷ்டோமாதி இருதுண்டாயது, யாகாதிகருமங்களைச் சித்திசெய்யும் வசந்தாதி இருதுண்டாயது, கோ சுவர்ணாதிரூப தக்ஷிணையுண்டாயது, கருமகருத்தாவின் நானாவகையாயநியமரூப தீக்ஷையுண்டாயது, சமவறசராதிரூப காலமுண்டாயது, சுவர்க்காதி பலப்பிராப்தியை விழையுமதிகாரியாய யஜமானனுண்டாயினன், கொடி

விசேஷ இரசரூப சோமதிரவியமுண்டாயது, சுவர்க்கலோக தேகத்தை யாரம்பிக்கும் சோமரூப பலமுண்டாயது, சுவர்க்காதிலோக சகித சூரியபகவானுண்டாயினர்; இவை முதலாகச் சர்வஸ்தூல சூக்ஷ்மபதார்த்தஙகள் பரமான்மாவினின்றுமேயுண்டாயின. அதனினின்றே வசுமுதலிய தேவதைகளுண்டாயினர், சாதய தேவதையுண்டாயது, மனுட பசு பக்ஷி யுண்டாயின, பிராணுதியைநதுமுண்டாயின, நெற் கோதுமை முதலிய அன்னமுண்டாயின, கிருச்சிரசாநதிராயணுதி தவமுண்டாயது, ஆஸ்திகததன்மைவடிவ சிரத்தையுண்டாயது, அவசியம்பவிக்கததக்கதாய கர்மபலரூப சத்தியமுண்டாயது, யதார்த்தவசனரூபசத்தியமுண்டாயது, உபஸ்த இநதிரியசமயமனவடிவ பிரஹ்மசாயமுண்டாயது, வேதவிகிதகாமரூபவிதியுண்டாயது, சபதப்பிராணன், சப்த அர்சசிஷ், சப்தசமித்து, சப்தஹோமம், சப்தலோகம் யாவுமுண்டாயின. மஸ்தகத்தின்கண்ணேயிருக்கும இரு செவி இரு விழி இரு கிராணம வாக்கு என்னும சப்த இநதிரியமே பிராணனும்; அதனினின்றுமுண்டாய சப்தவிதமாய விருததிகள் அர்சசிஷாம. அவ்வேழு பிராணன்களின் விஷயங்கள் சமிததாம் அவவிடயங்களின் பிராணன்களிடத்தே இலயசிநதனைவடிவ உபாசனை ஹோமமாம. அநதப்பிராணன்களிருக்கும் ஸ்தானவடிவ கோளகங்கள் உலகமாம. இவ்வியாவும் எவ்வேழாய்ப் பரமான்மாவினின்றும் உண்டாயின. பரமான்மாவினின்றே சப்த சமுதநிரஙகளும், ஹிமாசலாதி பர்வதங்களும், ஸ்ரீ கஙகை முதலிய நதிகளும், விருக்ஷாதிஸ்தாவர சரீரங்களும், மனுடாதி ஜங்கமசரீரங்களும் மற்றும பூதபவிஷ்யதவாத்தமான காலத்துள்ளனவாய சர்வ ஜகததும் உண்டாயின. இத்துணையானே பரமான்மாவினின்றும ஜகதுற்பததிரூப அததியாரோபவர்ணனம் செய்யப்பட்டது. இப்போது ஜகதபவாததததானே பரமான்மாவின்கண்ணே அத்விதீய சுத்தரூபததன்மையை வாணிப்பாம:—ஹே சௌனக! சர்வஜகத்தையுமுண்டாககிய பரமான்மாவினும் இவவுலகம வேறன்றும்; மறறு, உலகமெல்லாம் பரமான்மவடிவமேயாம். உலகம தவகாமவேதவடிவமாம். உபாசனையின் பலம் தவமாம், யாகாதிகருமபலன் கருமமாம, இரண்டையு மொளிர்விப்பதும அபௌருஷேயமுமாயது வேதமாம. இததகைய உலகமியாவும அமிருதப்பிரஹ்மசொரூபமேயாம. பிரஹ்மத்தினும வேறுசச சிறிதுமாததிரையுமில்லவேயில்லையாதலின், பரமான்மா ஏக அதவிதீயவடிவமாம. இவ்வாறு யாண்டும வியாபக சர்வத்தின் ஆன்மவடிவ உறபததிநாசமறற சாவ பூதபபிராணிகளின் இருதயகமலததே நிவாசஞ்செய்யும பரமான்மாவைத தன்னுன்மரூபமாயறிநத அதிகாரி யானஞ்ஞானியென்னும அவித்யாககிரநதியறறவனுவனுதலின், அதிகாரி பரமான்மாவை யவசியமாயறிக. இப்போது முற்செய்த வுபதேசத்தானே அக்ஷரப் பிரஹ்மபோதமுறுத அதிகாரிக்கு வேறு முறையாய்ச் சாதனங்களோடுகூட அக்ஷரப் பிரஹ்மபோதத்தை வர்ணிப்பாம்:—ஹே சௌனக! எவ்வக்ஷரப் பிரஹ்மம ஸ்வப்பிரகாசத்தன்மை ரூபத்தானே யெப்போதும் ஆவிர்ப பூதமாமோ, புத்திரூபக் குகையின்கண்ணே இருத்தலினுனே அத்தியந்தம் சமீபமாமோ, யாவினும் மேன்மையதாமோ, அதிகாரி சரீரததேதபடைவுறுமோ, தேருருளையின்கண்ணேயிருக்கும் அராக்கட்கு நாபி அதிஷ்டானமாவதேபோலப் பிராணன்கட்கும் இந்திரியங்கட்கும் அதிஷ்டானரூபமாமோ, தன் சமீபத்தன்மை

மாத்திரையானே பிராண இந்திரியங்களின் வியாபாரங்களின் காரணரூபமாமோ, சநாதனமாமோ, புத்தியாதி யுபாதிகளினும் பரமாமோ, அவ்வக்ஷரப்பிரஹ்மமே அதிகாரிகளால் தங்களான்மவடிவமா யறியத்தகுதியதாம், மாயாசம்பந்தத் தானே தூலசூக்ஷ்மரூபத்தன்மையை யடைந்தபோதினும் உண்மையாய்த் தூல சூக்ஷ்மபாவமற்றதாம்; யாதுவிவேகிகளாற் பிரார்த்திக்கத்தகுதியதோ, சர்வ தேகதாரிகட்கும் அத்தியந்த பிரியமாமோ, தன் சுயஞ்சோதிபபிரகாசத்தானே பிரகாசமாமோ, தூலக்ஷியபதார்த்தத்தினும் அத்தியந்தந் தூலக்ஷியமாமோ, எதன்கண்ணே இந்திராதிலோக பாலரோடுகூடச் சர்வ லோகமும் ஸ்திதமாமோ, அவ்விவ்வக்ஷரப்பிரஹ்மமே முன்னர் நீ எவ்வஸ்துவின் ஞானத்தால் சர்வ ஜகத்தின் ஞானமாமென வினவியபொருளாம. இதன் ஞானத்தானே சர்வ ஜகத் ஞான மாம். இதனையே வேதவேத்தாக்கள் பிராண இந்திரியரூபத்தானும், சுவர்க்க மோக்ஷரூபத்தானுங் கூறுவர். இப்போது ஆன்மஞானப்பிராப்தியின்பொருட்டுத் தியானரூப உபாயத்தை வருணிப்பாம:—ஹே சௌனக! ஈண்டு, ஒரு சூரவீரன் தன் தனுவினின்றும் பாணத்தைவிடுத்து ஒரு இலக்ஷியத்தை யெய்தலேபோலத் தைரியத்தோடுகூடியவனும் ஆன்மவிவேகத்தோடு கூடியவனுமக் காமக்குரோதாதி சத்துருக்கட்கெப்போதும் பயபபிராப்தியைச செய்விக்கும் அதிகாரி முற்கூறிய அக்ஷரப்பிரஹ்மத்தை இலக்ஷியரூபமாயெய்க. மகாவாக்கியரூப வேதாந்தத்தை உதாத்தேயுடைய ஓங்காரரூபப பிரணவமந்திரமோ தனுஷ்வடிவமாம; தியானிப் பவனுடைய சோதிதத கூடஸ்த ஆதமா பாணமாம; யான் பிரஹ்மரூபன் என்னும் மகாவாக்கிய அர்த்தசிந்தனம் தனுஷை வளைத்தலாம; சுத்தப்பிரஹ்மம் இலக்ஷிய வடிவமாம். அவ்விலக்கியத்தே யடைவுறற கூடஸ்த ஆன்மாவாய பாணம் அவ் வடிவமேயாம். அவ்வக்ஷரப்பிரஹ்மத்தே பூ அந்தரிக்க சுவர்க்கமென்னும் மூவுலகு மிருக்கும், ஆகாசாதி பஞ்சபூதம் ஸ்திதமாம்; மனம் பிராணனிந்திரியம் முத லிய பௌதிகங்கள் ஸ்திதமாம; சபதப்பிரஹ்மமென அறிஞரறைந்த இருக்கு முதலிய வேதமிருக்கும். இத்தகைய சர்வ ஜகத்தின் அதிஷ்டானரூப அக்ஷரப் பிரஹ்மமே அதிகாரிகட்கறிய யோக்கியமாம்; இதனினும் வேறாய அனான்மப் பொருள்கள் அறியத்தக்கனவன்றாம. அதிகாரிகட்கு அக்ஷரப்பிரஹ்மத்தினும் வேறாயவை பரித்தியாகிக்கத்தக்கனவேபோல, அதனினும் வேறாயவற்றைப் பிரதி பாதிக்கும் வசனமும் பரித்தியாகிக்கத்தக்கதேயாம்; ஏனெனின், அவ்வசனம் கேவலம் வாக்கு நா கண்ட முதலியவற்றிற்குப் பரிசிரமத்தையே யடைவிப்பதா மன்றி வேறொரு பலமும் அதற்குக் கிடையாதாமாதலின், மோக்ஷத்தை யிச்சித்த அதிகாரி வேதாந்தவசனமொன்றை விடுத்து வேறு மொழியை யொருகாலு முரை யாடாதொழிக; கேளாதுமொழிக; என்னை, வேதாந்தவசனமொன்றொழிந்து மற்ற மொழிகளெல்லாம் அனான்மரூப துவைதத்தையே பிரதிபாதிக்குமாதலின், அம்மொழி மோக்ஷரூப அமிருதத்தை அடைவியாதாம். அவ்வனான்மவசனங்க ளுள் சிலவோ தருமத்தையடைவிக்கும், சிலவோ அர்த்தமாகிய தனத்தை யடை விக்கும், சிலவோ விஷயசுககாமத்தை யடைவிக்கும், சிலவோ கேவலந் துக்கத் தையே யடைவிக்கும். இந்நான்கினும் வேறாயபலம் அம்மொழிக்குக் கிடையா

தாம். தருமாதி மூன்றும் விசாரஹீனர்கட்குச் சுகரூபமாய்ப் பிரதீதியாயினும் விசாரித்து நோக்கினோ அவை தமதப்பிராப்திகாலத்தேயும் பிராப்திகாலத்தேயும் வியோககாலத்தேயும் ஜீவர்கட்குக் கேவலந் துக்கத்தையேயுண்டாக்குமாதலால், அவற்றை மொழியும் மொழியும் கேவலந் துக்ககாரணமேயாமாதலின், அறிஞர் துக்கத்தை யடைவிக்கும் வசனங்களை ஒருகாலும் உச்சரிபபதில்லை. அவ்வறிஞர் சமீபத்தே வேறெவரும் அவ்வாறுரையாடின் அவரையும் அவ்வாறுரையாடாவண்ணந் தடுப்பர் என்னும் சிரேஷ்டபுருடா ஆசாரம் பிரசித்தமாம். அவ்வாசாரரூபப் பிரமாணத்தாலும் அனான்மவசனம வசனித்தலின் நிஷேதமேயடைவுறும் கேவலம் சிரேஷ்டபுருடாசாரரூபப் பிரமாணத்தால் அந்நிஷேதம் பிராப்தமானதன்றும்; மற்றோ, சாக்ஷாத்சுருதிபகவதியே அநான்மவசனத்தை நிஷேதிப்பள். 'தமேவைகம் ஜாநதாத்மாநமந்யா வாசோ விமுஞ்சத' ஹே அதிகாரிகளே! வேதாந்த வசனங்களால் ஏக அத்விதீயப்பிரஹ்மத்தையே யறியுங்கள்; வேறாய அனான்மமொழிகளை விட்டொழியுங்கள். அவ்வநான்மவசனம் மரித்தவன் விருத்தாந்தம் கூறுவதேபோலவீணாம; இது அன்னிய நூலின்கண்ணும் கூறப்பெற்றுளது.

> " காகஸ்ய கதி தந்தா மேஷஸ்யாண்டம் கியத் பலம் ।
> கர்த்தபே கதி ரோமாணி இத்யேஷா மூர்க்கவிசாரணா ॥ "

> " வாய சந்தனக் கேத்துணை யெயிறென வழங்கல்
> தூய யந்தன தண்டம தேத்துணைத் தூக்கம்
> காய முற்றுறு ரோமங்கள் காத்தபந் தனது
> ஏய லுற்றதேவ் வளவேனல் மூடரி னியல்பே."

(பொ-ள்.) காகத்திற் கெவ்வளவு பற்கள், ஆட்டின் அண்டகோசமெவ்வளவு பலம், கழுதை யுடம்பில் மயிரெத்தனை என்னும் விசாரத்தை மூர்க்கரே செய்வர். அம்மூர்க்கர் விசாரம பயனற்றதாமாறு அனான்மவசன உச்சாரணமும் நிட்பலமேயாகும். முற்கூறிய பொருளையே மீண்டும் வெளிப்படையாய் மொழிவாம். தனாதிரூப அர்த்தத்தை யடைவிக்கும் வசனமும், விஷயபோகரூப காமப்பிராப்தியை யடைவிக்கும் வசனமும் ஜீவாகட்குத் துக்கத்தையேயடைவிக்கும்; ஏனெனின், அர்த்தகாமமிரண்டு மிருவகையாம; ஒன்றோ சாஸ்திர அவிருத்தமாம், சாஸ்திர விருத்தம் மற்றொன்றும். முதலதோ தனதடைவிலாக்காலத்தே இச்சையை யுண்டாக்கும் வாயிலாய்ச் சீவாகட்குத் துயரையுண்டாக்கும்; அடைவுறுங்காலத்தே காப்பாற்றும் சிந்தைவாயிலாய்த் துயரை யீயும், நாசகாலத்தே வியோகவாயிலாய்த் துயரை யீயும், இவ்வாறவ்விரண்டும் முக்காலத்தும் துக்கத்தைப்பயக்குமாதலின், அதை மொழியும மொழியுந் துக்ககாரணமேயாம். இரண்டாவதோ முன்போலவே முக்காலத்துந் துக்கத்தையேயுண்டாக்கும். சாஸ்திரவிகிதநிஷித்த அர்த்தகாமத்தே துக்ககாரணத்தன்மை சமானமாயினும், இரண்டன்கண்ணும் இத்துணை விசேடமுமுளது:—முதலதோ இகத்தே சிந்தைவாயிலாய்த் துக்கத்தை யடைவியாது, பரத்தே நரக அடைவுவாயிலாய்த் துக்கவடைவைச்செய்யாது; இரண்டாவதோ மொழிந்ததின் மாறாக அவ்விரண்டன் ஏதுவாதலின், அவற்றை மொழியும் மொழியும் துக்ககாரணமேயாம். அத்தகைய மொழியை யெம்மதிமான் மொழி

வன்? மொழியானென்க. ஆத்தகாமப் பிரதிபாதனவசனம் ஜீவர்கட்குத் துக்க காரணமாவதேபோலத் தர்மப்பிரதிபாதகவசனமும் துக்ககாரணமேயாம்; ஏனெனின், அக்கினிஹோத்திராதி கருமத்தினின்று முண்டாய தருமத்தானே உண்டாம் சுவர்க்காதி சுகம் அநித்தியமும், சாதிசயதோஷமுடையதுமாம். தன் வியோககாலத்தேயும் வர்த்தமானகாலத்தேயுந் துக்கத்தையே அஃதடைவிக்குமாதலின், அநித்தியபலத் தருமத்தைப்பகரும் வசனமுந் துக்ககாரணமேயாம். தருமார்த்த காமங்களைக்கூறும் வசனமெல்லாம் முற்கூறிய முறையே துக்கத்தையே யடைவிப்பதாதலின், முமுக்ஷுக்கள் அவ்வநான்ம வசனங்களை ஒருபோதுங் கூறுமொழிக; மற்றோ, அதிகாரிக்கு மோக்ஷரூப அமிருதத்தை யடைவிக்கும் வேதாந்த வசனத்தையே அதிகாரி யெப்போது மப்யாசஞ்செய்கவெனத் துணியப்பெற்றதாம்; இவ்விஷயம அன்னியசாஸ்திரத்தின்கண்ணும் கூறப்பட்டுளது.

"ஆஸுப்தேராம்ருதே: காலம் நயேத்வேதாந்தசிந்தயா ।
த்யாதவ்யோ நாவகாஶம் கிஞ்சித்காமாதீநாம் மநாகபி ॥"

"எழுந்த தினின்று மின்றுயில் வரையுமே யாகம்
விழுந்து றும்வரை விமலவே தாந்தநூற் றுணிந்தே
தொழுந்த னிப்பொழு தகற்றுக காமமுன் றொடரின்
அழுந்து றவக மளித்திடா தகற்றுக வகத்தே."

(பொ-ள்.) அதிகாரி பிராதக்காலமே முதல் சுழுப்திபரியந்தமும், வித்தையடையுங்காலமே முதல் மரணம்வரையும் வேதாந்தசாஸ்திரசிந்தனத்தானே காலத்தைக்கழிக்குக; அவ்வேதாந்த விசாரத்தானே காமாதி விகாரங்கட்குச் சிறிதுபோதும் சித்தத்தே இடங்கொடாதொழிக அணைமார்க்கத்தானே நதி முதலியவற்றினக்கரை யடைவதேபோல, ஆன்மஞானரூபசேதுவினானே இச்சம்சார சமுத்திர மோக்ஷரூப அக்கரையை யடைவனாதலின், இவ்வாநந்தசொரூப ஆன்மா மோக்ஷரூப அமிருத அடைவின்பொருட்டுச் சேதுவைப்போலவிருக்கும். இவ்வான்மாநந்தத்தைக் கவர்ந்தே அறிஞன் சர்வ பயமுமற்றவனாவன். 'ஆநந்தம் ப்ரஹ்மணோ வித்வாந் ந பிபேதி குதஶ்சந' இவ்வதிகாரி அத்விதீயப்பிரஹ்ம ஸ்வரூபபூத ஆநந்தத்தையறிந்தே எதனினின்றும பயத்தையடையான். இவ்வாநந்தவடிவ ஆன்மாச் சர்வப்பிராணிகளின் இருதயாகாயத்தேயிருக்குமாதலின், சுருதிபகவதி ஆன்மாவைத் தகராகாசமென்றனள். தேர்ச்சக்கரநாபியின்கண்ணே அராவிருப்பதேபோல, இருதயகமலத்தே ஹிதையென்னும் நூறாயிரம் நாடிகளிருக்கும். அத்தகைய இருதயகமலத்துள்ளே ஆநந்தசொரூப ஆன்மா எப்போதுஞ் சஞ்சரிக்கும்; அஃதுண்மையாய் ஜன்மமற்றதாயினும் சரீராதி யுபாதியின் ஜன்மத்தானே ஜன்மமுடையதேபோலப் பிரதீதியாம்; கடரூப உபாதியின் ஜன்மத்தானே ஆகாசம் ஜன்மித்ததாய்க் காணலேபோலும். இவ்வாறாய ஆன்ம வுபதேசத்தானும் ஒரு பாவகருமரூபத்தடையத்தால் "யான் பிரஹ்மரூபனாயிருக்கின்றேன்" என ஆன்மாவை யறிவதிற் சமர்த்தனாகானேல், அவ்வதிகாரி அவ்வாநந்த சொரூப ஆன்மாவைப் பிரணவமந்திரத்தானே சிந்தனஞ்செய்க. இங்ஙன் ஆநந்தசொரூப ஆன்

மாவைப் பிரணவமந்திரத்தானே சிந்தனஞ்செய்யு மதிகாரி தியானரூபுத்தீப பலத்தானே பிரதிபந்தகபாவரூப அந்தகாரமற்றவனாய்ப் பிரஹ்மஞானத்தை யடைவன்; அதனானே அவ்வறிஞன் அவித்யாரூப சமுத்திரத்தின் மோக்ஷரூப அக்கரையை யடைவன். ஆன்மாவின் றியானத்தானே பிரதிபந்தகமாகிய பாவநிவிருத்தியாவதேபோலப் பிரஹ்மவேத்தாவாய குருவின ஆசீர்வாததத்தானும், மீண்டும் மீண்டும் உபதேசத்தானும் பாவகருமரூபப்பிரதிபந்தக நீங்குமாதலினானே, மகான்மாவாய்த் தயாளுவாய ஆசிரியர் தமது சீடன்பொருட்டு: ஹே மைந்த! உனக்கு ஆன்மஞானப் பிராப்தியின்கண்ணே சர்வ விக்கினநீக்கமுண்டாம் என ஆசீர்வதித்து அடிக்கடி ஆன்மோபதேசஞ்செய்க. ஆன்மஞானப் பிராபதியின்பொருட்டு அதிகாரி ஞானசிரியரை மகிழச்செய்யவேண்டியதவசியமாயதே. இப்போது பரமான்மசொரூப வருணனை செய்வாம்:—ஹே சௌனக! பரமானமாச சர்வ ஜகத்தையும் சாமான்ய ரூபத்தானும் விசேஷரூபத்தானும அறியும், அதன் ஜகதுற்பத்தி திதி இலய ரூப விபூதியாவும் உலகப்பிரசித்தமேயாம்; அது பிரஹ்மபுரத்தேயிருக்கும் திவ்ய வியோமத்தேயிருக்கும. உண்டாயகடம் ஆகாயத்தானே நிறைந்திருப்பதேபோல உண்டாய இததேகமும பிரஹ்மததானே நிறைநதிருக்குமாதலின், சுருதிபகவதி இத்தேகத்தைப் பிரஹ்மபுரமென்றனள். பிரஹ்மபுரத்தேயிருக்கு மெத திவ்ய வியோமம், சுயமபிரகாச ஆன்மரூபமேயாமோ அதைச சுருதிபகவதி தகராகாசம் என்றனள். இத்தகைய தன் சொரூபத்தின்கண்ணே அபபரமான்மாவிருக்கும்; 'ஸ்வே மஹிம்நி ப்ரதிஷ்டித:' அநதப பூமான்மா எதன்கண்ணே யிருக்கும் என அறியும வேட்கையுளதாகவே, அத்தனது சொரூபமகிமையின் கண்ணேயிருக்கும் என்னு முத்தரத்தைச சுருதிகூறியது. இப்போது அறியப் பெறாத ஆன்மா, அறியப்பெறற ஆன்மாக்களின் இபறகையை வர்ணிப்பாம:— இவ்வாநந்தசொரூப ஆன்மா அஞ்ஞாதமாங்கால் மனத்தின்றாதாத்மிய அத்தியாசத்தானே மனோமயப பெயரையடையும; பிராணனையும தேகததையும் இநதிரியத்தையும் தன்றன்வியாபாரததேயேவும். பிரஹ்மான்மஞானப் பிராபதியுண்டாகாதவரை மனோமய ஆன்மாச சர்வ ஜகத்தின் பீஜபூதமூலாஞ்ஞானத்தே தாதாத்மியாத்தியாசத்தானேயிருக்கும. பிரஹ்மசரியாதி சாதனசம்பன்ன அதிகாரி ஆன்மாவினுண்மைவடிவததை யறிந்தபோது ஆன்மாவைப் பரமாநந்தசொரூபமாயே பார்பபன்; ஜன்மமரணமே முதலாயுள்ள சம்சார சம்பநதி தருமமற்றதாயே காண்பன்; ஞாதா ஞான ஞேய முதலிய திரிபுடித்துவைதமற்றதாயேகாண்பன். இனி யான்மஞானபலத்தை வருணிபபாம்:—ஹே சௌனக! அந்தப் பரப்பிரஹ்மத்தைத் தன்னான்மவடிவமாயறிநத அதிகாரிக்கு இவ்வகையாய பலப்பிராப்தியைச் சுருதிகூறியிருக்கின்றது:—

"பித்யதே ஹ்ருதயக்ரந்திஶ்சித்யந்தே ஸர்வஸம்ஶயா: ।
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந்த்ருஷ்டே பராவரே ॥"

"திகழ்ப ராபரப் பொருளதைத் திடம்பெறக் காணில்
இகழி ருதயக் கிரந்திக ளிரிந்திடேந் திருந்தா
துகளே லாச்சமு சயங்களு மொழிந்திடு மொழிந்த
புகழ வனுடைக் கருமங்கள் பொன்றிடேந் தாமே."

(போ-ள்.) காமக்குரோதாதிகளின் காரணரூப ஆன்மாஞான்ம எந்த அத்தியாசம ஜீவர்கட்குச் சர்வ துககபிராப்தியைச் செய்விக்குமோ அதுவே இருதயக்கிரந்தியாம்; துவம்பதார்த்த ஜீவனிடத்தே சம்சாரித்தன்மை அற்பஞ்ஞத்தன்மையைக்கண்டு, தற்பதார்த்தப பிரஹ்மத்தே அசம்சாரித்தன்மை சர்வஞ்ஞத்தன்மையைக்கண்டு இச்சீவன் பிரஹ்மரூபனு? அல்லது, பிரஹ்மததினும வேறு? என்பதாதி ஆன்மவிஷயக அசப்பாவனை சம்சயமாம். இத்தேகத்தைத்தந்த அறம்பாவப் பிராரபதமொழிந்த எவ்வறம்பாவத்தானே இச்சீவனனந்த தேகங்களையடைவனே அநதச் சஞ்சிதகருமங்கள் கருமமாம. அசசர்வ கருமங்களுஞ் சாவ இருதயக்கிரநதிகளுஞ் சர்வ சம்சயங்களுஞ் சர்வான்மவடிவப் பிரஹ்ம சாக்ஷாத்காரததானே நீங்கும. எவ்வான்ம சாக்ஷாதகாரததானே சம்சய கருமாதிகளின் நிவிருத்தியாமோ அதனை யறிஞர் சிரவணாதி சாதனபலமென்பர்; அஃதுண்டாகவே சர்வ துக்கத்தையுமீயுமவித்தை யழியும். எவ்வான்ம சாக்ஷாத்காரத்தானே இக்காரிய சகித அவித்தை நீங்குமோ அவ்வான்மா அன்னமயாதி பஞ்சகோசத்துள் முடிவாய ஆநநதமயகோசத்தே புச்சப்பிரதிஷ்டைவடிவப பிரஹ்மரூபமாய்த்திதமாம்; அது ஆவரணஞ்செய்யும் மாயாரூப ரஜமறறதனுனே சுருதிபகவதி அதை விரஜமென்றனள்; அது மாயையின் காரியரூபகலைகளறறதாமாதலினுனே நிஷ்களமென்றனள்; அது ஸ்வபபிரகாசரூபமும், உலகபபிரசித்த சூரிய சந்திராதி ஜோதிகளையும ஒளிரவிபபதுமாதலின், சோதிகட்கும் சோதியென்றனள், அது அத்விதீய ரூபத்தன்மையினுனே பரமாநநத சொரூபமாமாதலின், சுப்ரமென்றனள். இபபோது ஆன்மாவின்கண்ணே சொபபிரகாசததன்மையை வருணிப்பாம்:—ஹே சௌனக! சாஸ்திர வேததாக்களாய அறிஞா அதன்கண்ணே இஙஙன் சொப்பிரகாசத்தன்மையைககூறுவா: சூரியன், சநதிரன், உடுக்கணம், மின்னல், அக்கினி என்னும் பாகிய ஒளிபபொருள்கள், உளளேயிருக்கும மனம், புந்திமுதலிய தைஜசப்பொருள்கள எவைகள் உளவோ, அவறறோடுகூடியநாய் எத்தததுவம ஒளிராதோ, மறறோ, அவறறின் சகாயமின்றியே தானே ஒளிருமோ, எதன் பிரகாசத்தை அநுசரித்தே இச்சடசேதனரூப சர்வ ஜகத்தும் ஒளிருமோ, அவ்வான்ம தத்துவததை அறிஞர் ஸ்வபபிரகாசமென்பா.

சங்கை:—ஹே பகவன்! 'தாதம்மநுமதேமநுமதி வகுதஃ' கமனஞ் செய்யும் பிதாவை யனுசரித்தே பின் மைந்தன் செல்கின்றான் என்னும் வாக்கியதநால் பிதாவின் கமனரூபககிரியையினின்றும் புத்திரனது கமனரூபக்கிரியை வேறுகபபிரதீதியாவதேபோல, 'தமேவபாநதமநுபாதி ஸர்வம்' என்னும சுருதி வசனத்தானும ஆன்மபபிரகாசத்தினும இச்சகத்பிரகாசம் பின்னமாகவே சிததமாம்.

சமாதானம்:—ஹே சௌனக! பிதாவின் கமனரூபக்கிரியையினுனே புத்திரனது கமனரூபக்கிரியை பின்னமாவதேபோல, ஆன்மப பிரகாசத்தினும் ஜகத்பிரகாசம் பின்னமாம என்னும் பொருளில சுருதியின் கருத்தின்றாம்; மற்றோ, காய்ந்த இரும்பு அக்கினியாற் பிரகாசிதமாகியே பிரகாசமுடையதாம். அக்கினியாலன்றித்தானே பிரகாசமுடையதாகாததேபோலப் பரமான்மாவின் பிரகாசத்தானே

விளங்குவதாய் இவ்வுலகம் பிரகாசமுடையதாம்; அவ்வான்மப் பிரகாசமின்றித் தானே யுலகம் பிரகாசமுடையதாகாதாம். இவ்வாறு தன் பிரகாசத்தானே சர்வ ஜகத்தையுமொளிர்விசகும் ஆநந்தசொரூப ஆன்மாவை அறிஞர் ஸ்வப்பிரகாச மென்பர். இச்சொப்பிரகாச ஆன்மாவே சூரியாதிபாகிய ஜோதிகளையும், மதி முதலிய ஆந்தரஜோதிகளையும் ஒளிர்விக்கும். இப்போது தற்குச் சர்வான்மரூபத் தன்மையை வர்ணிப்பாம்:—ஹே சௌனக! ஆநந்தச் சொப்பிரகாசப் பிரஹ்மம் கிழக்கு மேற்குத் தெற்கு வடக்கு கீழ் மேல் முதலிய எல்லாத்திசைகளிலும் வியாப்தமாம்; அதுவே கிழக்கு முதலிய திசைகளோடுகூடிய சர்வ விசுவவடிவமாம். அதுவே பூத பவிஷ்யத் வர்த்தமானமென்னும் முக்காலரூபமாம். ஸ்தூலசூக்ஷ்ம காரணவடிவ ஜகத்துருவமாம். அதனினும் வேறாக யாதொன்று மில்லவேயில்லை. இப்போது ஜீவப்பிரஹ்ம அபேதரூப மகாவாக்கிய ஆத்தரூப நிரூபணப்பொருட்டு முதலில் தத்துவம் பதார்த்தங்களின் சோதனத்தை நிரூபிப்பாம்:—ஹே சௌனக! அதிகாரி சுருதிவசனங்களால மகாவாக்கிய ஆத்தரூபப பிரஹ்மான்மாவை யறியாதபோது அவ்வதிகாரியாய சீடனுக்குப் பிரஹ்மவேத்தாவாய குரு இவ்வாறு தத்துவம் பதார்த்தங்களை யுபதேசிக்குக:—சரீரரூப அசுவத்த விருக்ஷத் தின்கண்ணே ஜீவேசுவரரூப இருபறவைகளிருக்கின்றன, அவை யெப்போது மொன்றுகூடியேயிருப்பனவாம், சச்சிதானந்தரூபத்தானே ஒப்பாய இப்பறவை யுடையனவாம், தேகவடிவத்தருவோடு தாதாத்மிய முற்றனவாம். அவ்விரண்டனுள் ஒன்றே இததேகரூப விருக்ஷத்தின் அறமபாவவடிவ மலர்களினின்று முண்டாய சுகதுக்கரூப பலத்தைப்போகிப்பதாய் ஜீவப்பெயரையடையும், அதுவே துவம் என்னும் சப்தார்த்தமாம்; மற்றொன்றோ, அதைப் போகியாததாய்க் கேவலம் அக்கருமபலத்தைப் பிரகாசிப்பிக்குமாதலின், அதுவே ஈசுரப்பெயரையடையும்; அவ்விரண்டும் நிறைந்த அத்விதீய ஈசுரர் தத்பதார்த்தரூபர். ஈசுரப் பறவை வசிக்கும் வபுவின்கண்ணே ஜீவப்பறவையும் வசிக்கும்; ஆனால், ஜீவப்பறவை தன்னை யறம்பாவங்கட்குக் கர்த்தாவெனவும், அவற்றின் பல போக்தாவெனவும் எண்ணித் தீனத்தன்மையையடைவுற்று எப்போதும் சோகத்தையேயடையும். ஈசுரப் பறவையோ கர்த்ருத்வ போக்தருத்வங்களை யடையாதாம், அதன்கண்ணே அவை யில்லாததேபோல ஜீவப்பறவைக்கண்ணு முண்மையாயவையின்றாம்; மற்றோ, அந்தக்கரணோபாதி சம்பந்தத்தானே அத்தருமங்கள் பிரதீதியாமாதலின், இத் துவம்பதார்த்தரூப ஜீவான்மாத் தத்பதார்த்தரூப ஈசுரரைத் தன்னுன்மவடிவமாய்க் காணும்போது பரமான்மாவின் அத்விதீயத்தன்மைவடிவ மகிமையையடையும், அப்பரமான்மா உண்மையாய்த் துவம்பதார்த்தரூப ஜீவனினும் அபின்னமாயினும், உபாதியின் சம்பந்தத்தானே பின்னமாய்ப் பிரதீதியாம, ஆநந்த சமுத்திரமாமாதலினானே ஜீவனது பரமப்பிரேமைக்கு விடயமாம. அத்தகைய பரமான்மாவின் அத்விதீயத்தன்மைவடிவ மகிமையையடைவுற்றுச் சர்வ துக்கமுமற்று வாழ்வன். ஜீவனானவன் சுயஞ்சோதியாய பரமான்மாவைத் தன்னான்மவடிவமாய்க் காணும்போது நாமரூபமற்று, அறிஞத்தன்மையையுற்று அத்விதீய பாவத்தையடைவன். பரமான்மா, பிராண உபகித ஹிரண்யகர்ப்ப வாயிலாய்ச் சர்வ வியஷ்டி பூதங்களில் வியாபகமாம், ஜீவேசுர ஜகத்தென்பதாதி பேதவிசிஷ்டத்தன்மை

வடிவத்தானே கற்பிதமாயதேபோலப் பிரதீதியாம். இத்தகைய தூயபரமான்மாவை அதிகாரி தன்னுன்மவடிவமாயுணர்ந்தபோது அதிவாதியெனப்பெறுவன். அவ்வறிஞன்பால் அதிவாதித்தன்மையின் பிரகாரத்தை வேதவேத்தாக்களுணர்த்தியவாறு:—பாலகன் நானாவகையாயக் கிரீடைசெய்வதேபோல அறிஞன் அத்விதீய ஆன்மாவின்கண்ணே யெப்போதும் கிரீடைசெய்வன்; யௌவனன்றனது யௌவன ஸ்திரீயினிடத்தில் இரதிசெய்வதேபோல அறிஞன் அத்விதீய ஆன்மாவின்கண்ணே இரதிசெய்வன்; யாககர்த்தா நானாவகையாய கிரியைசெய்வதேபோல, அறிஞனது நானாவகையாய கிரியையும் அத்விதீய ஆன்மாவின்கண்ணேயாம். இவ்வாறெப்போதும் ஆன்மாவையே சிந்திக்குமறிஞனே அதிவாதியென்றனர். அவ்வதிவாதியாய அறிஞன் எல்லாப பிரஹ்மவேத்தாப் புருடர்களுள்ளும் மேன்மையன். இப்போததிவாதித்தன்மையின் அனடவிற்கேதுவாய பிரஹ்மவித்தையின் சாதனத்தை நிரூபிப்பாம்:—ஹே சௌனக! சத்தியம், தவம், பிரஹ்மசர்யம் என்னும் மூன்று சாதன சகித முறகூறிய தத்துவம் பதார்த்த சோதனவடிவ ஞானத்தானே அதிகாரிக்கு மகாவாக்கிய அர்த்தரூப ஆன்மாப் பிராப்தமாம்; அவ்வான்மாவையே காமக்குரோதாதி தோஷமற்ற சந்யாசி யெப்போதும் தன் சித்தத்தின்கண்ணே காண்பன். சத்தியாதி சாதனங்களோடுகூடிய தத்துவம பதார்த்த சோதனம் ஆன்மஞானத்தின்கண்ணே காரணமாவதேபோல, அச்சந்யாசமும் ஆன்மஞானத்தேகாரணமாமென்பது கருத்தாம். பொய்ம்மொழிமொழியாமையே மெய்ம்மையாம். மனத்தோடுகூடிய சுரோதிராதி இந்திரியங்களின் ஒருமைபபாடே தவமாம். உபஸ்தேந்திரிய ஒடுக்கமே பிரஹ்மசரியமாம். இனிச் சத்தியத்தின் மேன்மையையகூறுவாம:—ஹே சௌனக! முன்மொழிந்த சத்தியம் பிரஹ்மஞானகாரணமாதலின், சர்வ சாதனங்களினும் மேன்மையதாம். ஆகையாலது இப்பூவுலக சுகத்திற்கும், சுவர்க்கலோக சுகத்திற்கும், பிரஹ்மலோக சுகத்திற்கும் காரணமாமென்பதன்கண்ணே யாதொரு ஆச்சரியமுமின்றாம். இனி ஆன்மா அறியமுடியாததென்பதை யறைவாம்:—ஹே சௌனக! எசசத்தியப பிரஹ்மம் அதிகாரிகட்கு மகாவாக்கிய ஜன்னிய ஞானத்தானே அடைவுறுமோ அதுவே ஆகாசாதி மகா பதார்த்தஙகட்கும் ஆதாரரூபமாமாதலின், அது மகா பதார்த்தங்களினும் அத்தியந்தம் மகானும். அது பரமாணு முதலிய சூக்ஷ்ம பதார்த்தங்களினுள்ளும வியாபித்திருக்குமாதலின், சூக்ஷ்ம பதார்த்தத்தினும் அத்தியந்தம சூக்ஷ்மமாம். ஸ்வப்பிரகாசததன்மை வடிவத்தானே எல்லாவுலகினும் விலக்ஷணமாமாதலின், திவ்யரூபமாம; மனத்தானும் சிந்திககமுடியாதாதலின், அசிந்தியரூபமாம்; வெளிமுகாககு முற்றினுமறியமுடியாதாதலின், சேய்மையினும் அதிசேய்மையதாம்; சாதன சமபன்னர்களாகிய உண்முகர்கட்கு மிக வெளிதாதலின், மிக அண்மையினும மிக அண்மையதாம. அதன்கண்ணே மன சகித நேத்திராதி யிந்திரியங்கள் ஒளிராவாதலின், சதசித்துருவததானே யாண்டும் விளங்கிக்கொண்டிருப்பினும், பிரத்தியக்கத்விதீயரூபத்தானே உலகிலிலகுவதில்லையாம். சர்வ ஜீவர்களின் மதிக்குகையின்கண்ணேயிருப்பதும், எல்லாப பொருள்களையும் ஒளிர்விப்பதும் ஆகிய பரப்பிரஹ்மம் ஒரு மகாவாக்கியஜன்னியப் பிரஹ்

மான்மஞானத்தானன்றி வேறெவ்வுபாயத்தாலேனும் அடைவுறுதாம்; மற்றோ, அதனாலே அதிகாரிக்குத் தன்னுண்மைவடிவமாய்க் கிடைப்பதாகும். சர்வேந்திரியங்களையும தரிக்கும் பிராணனும மனததோடும் எப்பரமான்மாவின்கண்ணேயிருக்குமோ அததகைய சர்வப் பிராணேந்திரியங்களையும் தத்தங்காரியத்தே பிரேரிப்பிக்கும் பரமான்மாத் தேகத்தாரிகள் அறிவதறகெளிதன்றும; அத்தியநதம் துர்லபமாம. துர்லபமாயினும அதை யடைய ஒருபாயம் சாஸ்திர வேத்தாக்கள் கூறியிருக்கின்றார்கள்; அதாவது:—இராகததுவேடங்களற்று வேதாந்த சாஸ்திர சமஸ்காரததோடுகூடியிருக்கும தூயமனததாலே சிரவணாதி சாதன சம்பன்ன அதிகாரி ஆநநதவடிவ ஆனமாவைச் சாக்ஷாதகரிபபன். 'ஸமெஷாணா- மாதாவெத ஸாவெஷிதவூ' இத்தாவிஞ்ஞேயமாய ஆன்மா சுத்த சித்தத்தாலே யறியயோக்கியமாம என மறையுமறைகின்றது. எச் சுததசித்த முடையவன் தன்னான்மாவைப பிரஹ்மரூபமாய்ச சாக்ஷாதகரிபபனோ அவ்வறிஞன் பிரஹ்மரூபமேயாவனாதலின், அந்தப பிரஹ்மரூபமாய அறிஞன் சாவ ஜகத்தினுற்பத்தி திதி இலயஞ செய்வதன்கண்ணும் ஆறறலுடையவனாவன். அவ்வறிஞனே சர்வ ஜீவர்கட்கும், அறம்பாவததையும் சுகதுக்க பலத்தையும் கொடுப்பவனாவன்; ஜீவர்கட் கடையத் தகுதியதாய போகங்களியாவும் அவ்வறிஞன் ஆணையினாலே நிகழும்; ஜீவர்களின் சாவப் பிராண மதி இநதிரியங்கள் முதலியவையும அவ்வறிஞன் ஆணையினாலே நிகழும். அவ்வறிஞன் ஜீவர்கட்குச் சாப அனுக்ரகம் செய்வதிலும் எபபோதும் ஆறறலுள்ளவனாவன். அததகைய பிரஹ்மவேததாவிறகுப் பூஜனை யர்ச்சனை செய்வதனாலே புண்ணியவானாய்ச சுகத்தையடையலாம. அவ்வறிஞனை யவமதிபபதாலோ பாவியானவன் எப்போதும துககததையடைவனாதலின், புத்ரதனாதி ஐசுவரியத்தை விருபபியவனும அறிஞனை யெபபோதும் பூஜனை யாசசனைசெய்க, மனத்தானும நிநதிக்க எண்ணலாகாது, கனவினும நிந்திக்கலாகாது. அததகைய சிரததையுடையவனுககே மனோவாஞசித பதார்த்தஙகள் யாவுங் கிடைக்கும். 'ருதஷூ ஹ ெ஭ஷ ... ' தனாதி ஐசுவரியததை விருமபியவன் பிரஹ்மவேததாவாய அறிஞனைப பூஜனையருச்சனைசெய்க; அதனாலே அவனுக்கு மனோவாஞசிதம யாவுங்கிடைக்குமென மறையுமறைகின்றது. நிட்காமமாய் அறிஞனைச சேவிக்கும் விவேகி சாவ துக்கங்களுமறற பரப்ரஹ்ம பாவத்தையடைவன்; ஏனெனின், அவ்வறிஞன் இச்சரீரத்தின்கண்ணேயிருந்தபோதினும் ஆநந்தவடிவப் பிரஹ்மத்தையே சாக்ஷாததான்மரூபமாயறிவன், அநதப பிரஹ்மத்தையே யபேதமாயுபாசிபபன், அதன்கண்ணே அபேதமாய்த் திதிபெறுவன்; இத்தகைய பிரஹ்மரூபப் பிரஹ்மவேததாவைச சிரத்தையோடும் பக்திசெய்யும் அன்பரும், அவ்வறிஞன் திருவருளாலே பிரஹ்மவேத்தாக்களாய் அவ்வறிஞனைபபோலாவாராதலின், பிரஹ்மபாவரூப மோக்ஷப்பிராப்தியின்பொருட்டு நிட்காமரா யதிகாரிகள் பிரஹ்மவேத்தாக்களைசசேவிககுக. இப்போது சகாமத்தன்மையை நிந்தித்து நிட்காமத்தன்மையின் மேன்மையை வருணிபபாம:—ஹே சௌனக! ஸ்திரீ புத்திரதனாதி விடயங்களின் பிராப்தியை யிசசிக்கும் சகாமர் நானாவகையாய தேகங்களைக் கவர்நது அவ்வத்தேகத்தே அநேகம்வகைத் துக்கங்களையடைவாராதலின், காமததன்மையே சர்வ துக்கங்களின் காரணமாமென அறியக்கிடந்தது. எவ்விவேகி யச்சர்வ

காமங்களையும் பரித்தியாகித்துப பிரஹ்மஞானத்தையடைவனே அநிட்காமன் இகபரலோகங்களில் சிறிது மாத்திரையும் துக்கத்தையடையானாதலின், நிட்காமத தன்மையே சாவ சுகத்தின் காரணமாம்; அத்தகைய நிட்காமதகன்மையை அதிகாரிகள் அவசியம சம்பாதிக்கவேண்டும். இபபோதான்ம ஞானபபிராபதியின் பிரதான சாதனத்தை நிரூபிப்பாம:—ஹே செளனக! இவ்வாநநதவடிவ ஆனமா, பிரஹ்மவேத்தாவாய ஆசிரியர் அருளாலன்றிக் கேவலம் வேதங்களை அத்தியயனஞ் செய்தலினுனும், செய்விததலினுனும, கூாமையாய மதியானும் அதிகாரிகளாலறியப்பெறுதாம; மறறோ, ஞானாசிரியரினுபதேசததானே அடையககிடைக்கும். பிரஹ்மான்மஞானத்தானே பிரஹ்மரூபத்தன்மையையடைவுற்ற ஞானாசிரியா எசசீடன்மீது திருவருள் புரிவரோ அவன்மீது அநதப பரபபிரஹ்மமும அனுக்கிரகிககும. ஈண்டுச சீடனது சிததத்தின்கண்ணே தனததவிதீயவடிவத்தை வெளிபபடுத்தலே பாபரஹ்மததின் அனுககிரகமாமாதலின், அதிகாரி பிரஹ்மான்மஞானப பிராபதியின்பொருட்டு ஞானாசிரியா திருவருளை யவசியம சமபாதிக்குக. என்னும் முற்கூறிபபொருளமைநத சுருதியும புகலகின்றது.

நாயமாத்மா ப்ரவசநேந லப்யோ ந மேதயா ந பஹுநா ச்ருதேந ।
யமேவைஷ வ்ருணுதே தேந லப்யஸ்தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம் ॥

"எண்ணிலாக் கல்வி யாலு மிலங்கிய கேள்வி யாலும்
திண்ணிதா மதியி ஞனுந் தெளியவா ராது தீர
நண்ணிய ஞானி தானே நயந்தருள் செய்யின் ஞானக்
கண்ணினுற் காண லாகுங் கரத்திலா மலகம் போல."

இனி யான்மஞானப் பிராபதியில சககாரி சாதனத்தை நிரூபிப்பாம்:—ஹே செளனக! காமக்குரோதாதி பகைவர்களாலமிழ்ததபபடாத மன இந்திரியஙகளின்றைரியமாகிய பலமறறவனுக்கும ஆன்மா அடைபபபடாதாம; மற்றோ, அப்பலவானையே யான்மாவடையும. அதனைரியமாகிய பலமற்றவர்க்குக கேவலம் 'ஆன்ம அடைவின் அபாவம் ஆவது மாததிரமன்றும்; மறறோ, இகபரவுலகங்களில துக்க அடைவேயுண்டாமாதலின், அதிகாரிகள் அத்தைரியவடிவ பலத்தை யவசியம் சம்பாதனஞ்செய்க. அபபலமின்மையினுனே ஆன்மா அடையப்படாததேபோலப் பிரமாததத்தினும அடையப்படாதாம்; ஓராசிரமமற்ற பாசண்டவடிவதவத்தானும் அடையப்படாதாம்; ஈண்டு, விடய சமீபமுண்டாகவே தைரிய நாசமாதலே பிரமாதமாமாதலின, அதிகாரிகட்கு அப்பிரமாதத்தோடு கூடிய தைரியத்தானும், தமதாசிரம தருமத்தோடுகூடிய தவத்தானும் பிரஹ்மான்ம ஞானமுண்டாம்; உண்டாதலானே ஆநந்தவடிவ ஆன்மாவினடைவாமெனத் துணியப்பெறும். இனிப் பிரஹ்மான்மஞானத்தின் ஜீவன்முக்தி முதலிய பல வியவஸ்தை நிரூபிக்கப்படும்:—ஹே செளனக! பூர்வம் ஆநந்தவடிவப் பிரத்தியக்கான்மாவின் சாக்ஷாத்காரத்தானே அவ்வாநந்தத்தே மூழ்கிய முனிவர் ஆன்மஞானகாலத்தே பிரஹ்மபாவத்தையடைந்து மீண்டும் சம்சாரத்தே திரும்பார். பிரஹ்மலோகப் பிராப்தியின் இச்சைவடிவத்தடையானே இப்பிறப்பில்

பிரஹ்மசாக்ஷாத்காரத்தையடைவுறாத சந்யாசிகட்கும் பிரஹ்மலோகத்தே சென்று பிரஹ்மஞானமவசியமுண்டாம். இப்பிறப்பில் மகாவாக்கியரூப வேதாந்த வசனங் களின் பொருள்களை இனிதாக விசாரித்தவரும், இராகத்வேஷாதியற்றுத் தூய் தாயமனத்தையுடையவரும் ஆகிய சந்யாசிகளே பிரஹ்மலோகத்தையடைந்து இரண்யகர்ப்பரூபப் பிரஹ்மாவின் மரணகாலத்தே பிரஹ்மாவைப்போல அத்வி தீயப் பிரஹ்மபாவத்தையடைவர். இவ்வுலகத்தேனும் பிரஹ்மலோகத்தேனும் அன்னிய வுலகங்களிலேனும் பிரஹ்மஞானி பிராரப்தத்தை யனுபவித்து விதேக மோக்ஷத்தையடையும்போது அவ்வறிஞனது தேவதத்தாதி நாமங்களைவிட்டு வேறுள்ள பிராணாதி 15 கலைகளும் தத்தங்காரணத்தே இலயத்தையடையும்; அவையிவையாம:—

"ப்ராணஶ்ரத்தாவாகாஶவாயுதேஜோஜலம் பூமிரிந்த்ரியம் மந: ।
அந்நம் வீர்யம் தபோ மந்த்ரா: கர்ம லோகா: கலா: ॥"

"காற்றேடு சிரத்தை கம்முன் கரணவிந் திரியத் தோடும்
தேற்றுறு மனமு மன்னம் வீரியந் தவமாஞ் சேவை
யேற்றுமந் திரத்தி னேடு மெழிறரு கரும லோகம்
போற்றிவை பதினைந் தாகக் கலைகளைப் புகல லாகும்."

(பொ-ள்.) 1 பிராணன், 2 சிரத்தை, 3 ஆகாசம், 4 வாயு, 5 தேயு, 6 நீர், 7 மண், 8 வாக்காதியிந்திரியம், 9 மனம, 10 அன்னம், 11 வீரியம, 12 தவம் 13 மந்திரம், 14 கருமம், 15 லோகம் என்பவை 15 கலைகளாகும். அந்தப் பிரஹ்ம வேத்தாவின் அத்தியான்மவடிவ வாக்கு முதலிய இந்திரியங்களின் அக்கினி முதலிய தேவதைகள் தத்தம் அதிதைவரூபத்தையடையும், அவ்வறிஞன் றிருமே னியிலிருக்கும் புத்திவிசிஷ்ட விஞ்ஞானமய ஜீவன் றூபபரமான்மாவின்கண்ணே இலயபாவத்தையடைவன்; இவ்வாறு சர்வ காரியகாரணரூப உபாதி இலயமாய பின்னா அவ்வறிஞன் ஏக அதவிதீயப் பிரஹ்மரூபமாய்த் திகழுவன். சர்வ திசை களிலுமுள்ள சாவ நதிகளும சமுத்திரத்தையடைநது தமது நாமரூபத்தை விடுவதேபோல இவ்விஞ்ஞானமயனும் தன்னுன்மரூபத்தைவிட்டு அத்விதீயப பிரஹ்மத்தே இலயத்தையடைவன். பிரஹ்மவேத்தாவின் 15 கலைகள் இலயமாவ தேபோல, நாமவடிவ 16-வது கலையுமாகவேண்டுமெனினும், சுருதியின்கண்ணே நாமத்தைவிடுத்துப்பிராணாதி 15 கலைகளின் இலயமகூறப்பட்டிருக்கின்றது. அதன் கருத்தோ, சுக வாமதேவாதி மகா புருடர் முன்முக்தராயினும் அவர் தம் நாமங் களின்றளவும் உலகவாணியாலுச்சரிக்கப்படுமாதலின், அந்நாமங்கள் நாசமடையா வென்னும் உலகமதியை யனுசரித்து 15க்கே இலயங்கூறியதென்பதாம். முற் பிரஹ்மவேத்தாக்கள் பிரஹ்மஞானபலத்தானே அத்விதீயப்பிரஹ்மபாவத்தை யடைந்ததேபோல, இக்காலத்தும் குருசாஸ்திர உபதேசத்தானே பிரஹ்மத்தைத் தம் மான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரித்த அதிகாரிகளும் பிரஹ்மஞானமகிமை யானே அத்விதீயப்பிரஹ்மபாவத்தையே யடைவர். அவ்வாறுணர்ந்த அறிஞனது வித்யாமயவம்சத்தும் ஜன்மமயவம்சத்தும் உள்ள சிடப்பிரசிடர் புத்திர பௌத்தி ரர் முதலியோர் பிரஹ்மஞானமற்றவராகார்; மற்றே, அவர் யாவரும் பிரஹ்ம

ஞான நிஷ்டையுற்றவரேயாவர். 'நாஸ்யாப்ரஹ்ம வித்குலெ ஹவதி' பிரஹ்ம' ஞானியின் குலத்தே எச்சிடரும் எம்மைந்தரும பிரஹ்மஞானமற்றவராகார்; என மறையுமறைகின்றது. பிரஹ்மஞானிகள் பிரஹ்மஞானமகிமையானே காரண அஞ் ஞானத்தோடுகூடச் சர்வ பாவகருமங்களையும் நாசஞ்செய்து காமக்குரோதாதி சர்வ தோஷமுமற்றவராய்ச் சர்வ சோகமுமற்றவராய் ஆநந்தவடிவ அத்விதீயப் பிரஹ்மத்தே அபேதரூபத்தானேயிருப்பர். மேற்கூறிய வித்தையினதிகாரியைக் கூறுவாம்:—ஹே சௌனக! உனக்குபதேசித்த பிரஹ்மவித்தையை அநதிகாரிக் குபதேசியாமல் சாந்தி முதலிய குணங்களோடுகூடிய அதிகாரிகட்கே யுபதேசிப் பாயாக. விதிவாயிலாய் வேதங்கற்றவனும், வைதிககரும அனுட்டானத்தானே தூய்தாயமனத்தனும், ஏகர்ஷியென்னும் அக்கினியை யாராதனைசெய்தவனும், பிரஹ்மசரிய ஆசிரமத்தே தன் சிரமீது அக்கினியின் தாரணைவடிவ விரதத்தை யனுட்டித்தவனும், சமதமாதிசாதனங்களோடுகூடியவனும், பிரஹ்மவித்தையை யுபதேசிக்கும் ஆசிரியரால் அத்தியந்தம் சிரத்தைபக்தியுடையவனும் ஆகிய அதி காரிகட்கே உபதேசிப்பாயாக. அவ்வித்தை யெப்போதும் மேன்மையாற் சேவிக் கப்படுவதும் மிகத் துர்லபமுமாம். ஹே மைந்த! எதனை யெம்பால் வினவி னையோ, எதனை யாமுனக்குக் கூறினேமோ அது முன் அங்கிரா இருடிக்குப் பரம்பரையாய்ப் பிரஹ்மாவினின்றும பிராப்தமாயது. அதை யவர் சௌனகர்க் குபதேசித்தனர். அதுபோலவே பிப்பலாதரெனப் பெயரிய முனிவரும் சம்சார துக்கத்தானே பீடித சுகேசாதி ஆறுசீடர்க்குபதேசித்தனர். அவ்வித்தை ஆறு வினுக்களால் மிக வெளிப்படையாக இருப்பதாம். ஹே குமர! 16-வது அத்தியாய ஆதியில் அதாவாமுனி கூறிய பிரஹ்மவித்தையை வினவினுய், அவை யாவற்றை யும் கூறினேம். இப்போதெப்பொருளைக்கேட்க விழைவிருக்கின்றதோ அதைக் கேட்டி.

பதினாறுவது அத்தியாயம் முற்றிற்று.

---

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## பதினேழாவது அத்தியாயம்.



ஓம் ஸ்ரீ கணேசாயநமஃ ஸ்ரீ குருப்யோநமஃ ஸ்ரீ காசிவிஸ்வேஸ்வராப்யாம்நமஃ ஸ்ரீ சங்கராசார்யேப்யோநமஃ.

முன்னர் 16-வது அத்தியாயத்தே அதர்வண வேதத்தின் முண்டகோப நிடதப்பொருள் நிரூபிக்கப்பட்டது, இப்போது 17-வது அத்தியாயத்தே அவ் வேதத்தின் பிரசிேனுப நிடதப்பொருள் நிரூபிக்கப்படும். முன் அதர்வா முனிவர் கூறிய பிரஹ்மவித்தையைக்கேட்டுப் பரமானந்தத்தையடைந்த சிரத்தாவானுகிய

சீடன் மீண்டும் அவ்வாசிரியர் வாயிலாய்ப் பிப்பலாத இருடி கூறிய பிரஹ்மவித்தை யைக் கேட்பான் விழைந்து குரு சந்நிதியிலிவ்வாறு கூறத்தொடங்கினன்:— ஹே பகவன்! 1-வது அத்தியாயத்தே தாங்கள் இருக்குவேதத்தின் ஐதரேய உபநிடதபொருள் கூறும்போது சனகாதி முனிவருக்கும் சாத்விகப் பிரஜைகட்கு முற்ற சம்வாதவாயிலாய் வைராக்கியாதி சாதனங்களோடுகூடிய நானுவகையாய பிரஹ்மவித்தையையும், தாயுதரத்தேயிருந்த வாமதேவரின் சர்வான்ம பாவரூப அனுபவத்தையும் கூறினீர்கள். 2-வது 3-வது அத்தியாயங்களில் அவ்வேதத்தின் கௌஷீதகி யுபநிடதபொருள் கூறும்போது இந்திரப் பிரதர்த்தன சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும், அஜாத சத்துருபாலாகி சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும் கூறினீர்கள். 4-வது 5-வது 6-வது 7-வது அத்தியாயங்களில் யஜுர்வேதத்தின் பிருகதாரண்யக உபநிடதபொருள் கூறும்போது இருபுருடவம்சம் ஒரு ஸ்திரீவம்சம் என்னும் மூன்றன் கண்ணிருக்கும் இருஷிகளின் பரஸ்பரபேதத்தையும் அபேதத்தையும், தத்யங் கதர்வண இருடியானவர் இந்திரருக்கும் அசுவினீகுமாரருக்கும் கூறிய பிரஹ்மவித்தையையும், அசுவினீகுமாரர்கட்குப் பிரஹ்மவித்யா உபதேசஞ்செய்தலானே அவ்விருடியுற்ற கிலேசத்தையும் மற்றும் பிறவற்றையும், ஜனகராஜாவின் யாக சபையில் யாஞ்ஞவற்கிய முனிரூபசூரியன் ஆசுவலாதிப் பிராஹ்மணரூப நிசாசரர் களைவெற்றிகொண்டு சாகல்யப பிராஹ்மணரூப அந்தகாரத்தை நீக்கியதையும், சூரியபகவான் தமது கிரணங்களால் அந்தகாரத்தை நீக்கி உலகர்க்கு ரூபாதிகளைக் காண்பிப்பதேபோல யாஞ்ஞவற்கிய முனிரூப பாஸ்கரரும் தமதுபதேசகிரணங் களால் ஜனகராஜாவின் அஞ்ஞானரூப அந்தகாரத்தை நீக்கி அவருக்கத்விதீயப் பிரஹ்மத்தைக்காண்பித்தனர் என்பதையும், அம்முனிபாஸ்கரர் மீண்டும் தம முபதேசகிரணங்களால் மைத்திரேயி மனைவியின் அஞ்ஞானரூப அந்தகாரத்தை நீக்கி அவ்வம்மைக்கு அத்விதீயப் பிரஹ்மத்தைக்காட்டினர், பின்னர்ச் சந்யாச ஆசிரமத்தைக்கவர்ந்தனர் என்பதையும் கூறினீர்கள். 8-வது அத்தியாயத்தே அவ்வேதத்தின் சுவேதாசுவதர உபநிடதப்பொருள் கூறும்போது சுவேதாசுவதர முனிவர் சந்யாசிகள் சம்வாதவாயிலாய் ஜகத்காரண நிரூபணஞ்செய்தீர்கள் 9-வது அத்தியாயத்தே அவ்வேதத்தின் கடவல்லி யுபநிடதபொருள் கூறும்போது யம நசிகேதா சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள். 10-வது அத்தியாயத்தே அவ்வேதத்தின் தைத்திரீய நாராயணீய உபநிடதப பொருள்கூறும்போது வருணப்பிருகுத்தந்தைமைந்த சம்வாதவாயிலாய் நானுவகை யாய பிரஹ்மவித்தையையும், வேநனெனப் பெயரிய கந்தருவரது சர்வான்ம பாவ ரூப அனுபவத்தையும், சத்தியாதி சாவ சாதனங்களினும் சந்யாச ஆசிரமத்தினதி கத்தன்மையையும் கூறினீர்கள். 11-வது அத்தியாயத்தே ஜாபாலாதி 11-உபநிட தப்பொருள் கூறும்போது, பரமஹம்ச சந்யாசத்தைச் சம்வர்த்தகாதி மகாபுருடர் தரித்தனர். அதனடைவிற்கு வைராக்கியமே காலமாம், கர்ப்ப துக்கவிசாரம் மரணசின்னஞானம் அஷ்டாங்கயோகம் என்பனவாதி யுபாயங்கள் வைராக்கிய காரணம், அதன்கண்ணே விரக்தர்கட்கே யதிகாரம், தண்டங்கமண்டலம் காஷாய வஸ்திரம் என்பன முதலியவற்றைத்தரித்தல் சந்யாசபாகிய வேஷம், சந்யாசிகட்

குப் பிரஹ்மசர்யாதிரூபம் ஆசாரம என்பன யாவற்றையும் கூறினீர்கள். 12-வது 13-வது 14-வது அத்தியாயஙகளில சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிடதப் பொருள் கூறும்போது, உததாலக சுவேதகேதுவென்னும் தந்தைமைந்த சமவாத வாயிலாய் நானுவகையாய பிரஹ்மவிததையையும், சநத்குமார பகவான் நாரதமுனி சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவிததையையும, பிரஜாபதி இநதிர விரோசன சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவிததையையும் கூறினீர்கள். 15-வது அத்தியாயத்தே அவ்வேதததின் கேநோபநிடதபபொருள் கூறுமபோது தேவராஜாவாய இநதிரர்ககுப பிரஹ்மவிதயாரூப உமாதேவியாரின் பிரசாதத் தானே திட ஆன்மஞானப்பிராபதியையும கூறினீர்கள். 16-வது அததியாயத்தே அதாவணவேதத்தின் முண்டக உபநிடதபபொருள் கூறும்போது, அங்கிரா சௌனகசமவாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவிததையையும கூறினீாகள். அவ்வத்தியாய வீற்றில் அஙகிராமுனிவா சௌனகர்க்குப பிரஹ்மவித்தையை யுபதேசித்ததேபோலப பிப்பலாத முனிவர் சுகேசாதி ஆறு இருடியாககு ஆறு வினுவிடைகளோடுகூடிய பிரஹ்மவித்தையை யுபதேசிததனா எனக கூறினீர் கள். அவ்வித்தையை யான் சிரவணிப்பான விருமபுகின்றனன், தாங்கள் தயவு செய்து அதைக் கூறவேணடும என வினவபபட்ட ஞானுசிரியா அதர்வண வேத த்தின் சௌனகீய சாகையின்கணணேயிருக்கும பிரசிநோபநிடததததே கூறிய கதையைக் கூறுவாராயினர்:—ஹே மைநத! முன்னெரு காலததே ஒரு தேயததே ஒரு நிமித்ததததை முன்னிட்டு ஆறு முனிவர் ஒருஙகுகூடினா. அவர் பரஸ்பரம் அததியநதம நேயமுடையவா, காலை மாலை முதலிய நித்திய கருமஙகளில பிரீதியையுடையவா அவாகள் நாமமாவன:—கோத்திரத் துதித்த தானே பாரதவாஜரெனப பெயரிய சுகேசா (1), சிபி இருடிகுலததே யுதிதத தானே சைபியபபெயாவாய்நத சததியகாமா (2), கோததிரத்தானே கார்க கியபபெயாபெறற சௌாயாயணா (3), கோசல இருடி குலதததுதிததானே கௌசல்யப்பெயருறற ஆசுவலாயனா (4), விதாபப இருடிகுலததே யுதிதத தானே வைதர்ப்பியெனப பெயருறற பாாககவா (5), கத இருடி குலததே யுதிததானே காதயாயனரெனப பெயாவாய்நத கபநதி (6), இவ்வறுவரும வியாகரணுதி ஆறஙகங்களோடுகூட நாலவேதஙகளையும கற்று வேதததே விளம் பிய நிததியநைமிததிக கருமங்களையும, சகுணபபிரஹ்ம உபாசனைகளையும செய் தனர்; பின்னர் அக்கரும உபாசனையின் மகிமையானே தூயமனததையடைநத அவர் நிர்க்குணப பிரஹ்மத்தையடைய விழைநதனர், பரஸ்பரமறுவருங்கூடி யாராய்வதாவது:—விதயாதி குணஙகளால நமமினுமுயாநது சுரோததிரியப் பிரஹ்மநிஷ்டராயிருபபவரே நமபொருட்டு நிர்க்குணப பிரஹ்மோப தேசஞ்செய் வர்; ஆனுல அததகையா யாவர்? எவரையாம சரணடைந்துய்யலாம? இவ் வாருராயும் அவ்வறுவருக்கும் திருவருள் புரிவான் பகவான் பிபபலாத முனி வர் தம்மிச்சைப்படி சஞ்சரிப்பவரா யவ்விடததே வந்தனர், தூரத்தே யவரது வருகையைக்கண்ட அவ்வறுவரும மகிழ்வுறறு இவ்வாசிரியர் நம்வினுக்கட்கெல

லாம் விடையளிப்பரெனப் பரஸ்பரம் வார்த்தையாடிக்கொண்டு அவர் சமீபத்தே வந்ததும் தம்மாசனத்தினின்றும் எழுந்து அம்மகரிஷிக்குப் பூஜனை யர்ச்சனை முதலிய வற்றைத்தக்கபடி செய்தனர். பின்னவ்வறுவரும அவருக்குத் தண்டம்போல் நமஸ்காரஞ்செய்து இருகைகளையும் கூப்பிக்கொண்டு சாஸ்திரவிதி பூர்வகம் சமிதாதி பதார்த்தங்களை ஹஸ்தத்தே தரித்துக்கூறுவதாவது :—ஹே பகவன் ! இச்சம்சார ஜன்மமரணரூப துக்கத்தாலஞ்சி யாங்கள் தேவரீரைச் சரணடைகின்றோம், தாங்கள் தயைகூர்ந்து பிரஹ்மவித்தையை யுபதேசிக்கவேண்டும், அதனால் சர்வ துக்க நீக்கத்தையுமடைவேம். இவ்வாறு அவ்வறுவரும் முனிவர் சந்நிதியிற் பிரார்த்தித்தபோது அம்முனிவர் கூறியதாவது :—ஹே இருடியரே ! விவேகாதி சாதனங்களோடுகூடியவனேனும், குருசாஸ்திரங்களில் விசுவாசமுள்ளவனேனும், ஆசிரியர் பால் ஒரு வருடபரியந்தம் இராதிருப்பனேல் அவனுக்குப் பிரஹ்மவித்தையை யுபதேசியாரா ; மற்றே, அத்தகைய சீடனையும் ஒரு வருடம்வரை பரீக்ஷித்தே பின்னுசிரியர் பிரஹ்மவித்தையை யுபதேசிக்கவேண்டுமென்பது சாஸ்திர மரியாதையாம்; அதை நீவிருமறிவீராதலின், நீங்களியல்பானே தவமுடையீர், பிரஹ்மசர்யாதி சாதனங்களோடு கூடியுள்ளீர், இதனானே சர்வப் பிரஹ்மவித்தைக்கும் அருகரே எனினும், நூன்மரியாதையைக் காக்கும்பொருட்டு நீவிர் யாவரும் ஒருவருடம்வரை பிரஹ்மசர்யத்தைத் தரித்து எம் சமீபத்தே வாசஞ்செய்யுங்கள் ; செய்தபின் உங்கட்கு நிர்க்குணப் பிரஹ்மசாக்ஷாத்காரம் வரும்வரை நீங்கள் வினவும் வினுக்கட்கெல்லாம் நன்றாக விடைதருகின்றேன் ; எம்மொழியை யங்கீகரித்து நீவிர் அவ்வாறு செய்ம்மின் எனப்பிப்பலாத முனிவர் கூறவே அவ்வறுவரும் அவ்வாறே செய்தனர். ஒருவருடங்கழிந்தபின் கபந்தியெனப் பெயரிய காத்யாயனர் ஞானுசிரியர் சமீபத்தேசென்று தண்டம்போல நமஸ்கரித்து பூர்வம் முண்டகோப நிடதத்தே பரை யபரையென இருவகை வித்தை கூறப்பட்டது, கருமம் உபாசனையென இருவகையான அபரவித்தையின் பலத்தை நிர்ணயிக்கும் பொருட்டு முதலில் ஜகத்தின் உற்பத்தியைவினவத்தொடங்கினா :—ஹே பகவன் ! இவ்வெல்லாப் பிரஜைகளும் எக்காரணத்தினின்று முண்டாகின்றனரோ அக்காரணத்தைக்கூறவேண்டும் ? என வினவியபோது ஆசிரியர் காத்யாயனருக்குப் பிரஜாபதியெனப் பெயரிய விராட்டினின்று முண்டாய சிருஷ்டியைக் கூறத்தொடங்கினர். மாயாவிசிஷ்ட பரமேசுரரினின்று முண்டாய ஆகாசாதி பஞ்சபூதரூப ஹிரண்யகர்ப்பாதிரூப மகாசிருஷ்டியே கூறத்தகுதியதாம் எனினும், காத்யாயனர் பூர்வ சாஸ்திரத்தானே அம்மகாசிருஷ்டியை நன்றாயுணர்ந்துளாரெனவெண்ணி அதையுபேக்ஷித்து விராட் சம்பந்த சிருஷ்டியைக் கூறத்தொடங்கினர் :—ஹே காத்யாயன ! முன் ஜகத்தை விருத்திசெய்ய விழைந்த விராட்டுப்பகவான் இவ்வக்கினி சோமமிரண்டும் பரஸ்பரம் ஒன்றுகூடி நானுவகையாய சிருஷ்டி செய்வதிலாற்றலுடைத்தாம் என ஆராய்ந்து போக்தாரூப அக்கினியையும் போக்யரூப சோமத்தையும் உண்டாக்கினர். இப்போதவ்விரண்டனுள் முதலில் போக்தாரூப அக்கினியின் சர்வான்மரூபத்தன்மையை வருணிப்பாம் :—ஹே காத்யாயன ! அவ்வக்கினி அத்தியான்ம அதிதைவரூபத்தானே இருவகையாம். இச்சங்காதத்தேயிருக்கும் பிராணன் அத்தியான்ம அக்கினிரூபமாம், அதன்கண்ணே இச்சங்காதத்தை

வயஞ்செய்யும் போக்தாத்தன்மை வெளிப்படையேயாம் ஆதித்யரூப அதிதைவமாம், அது தன்னுதய அஸ்தபாவத்தானே கிழக்கு முதலிய சர்வ திசைகளையும் விபாகம் செய்வதாம், சர்வப் பிரகாசிய வஸ்துக்களின் போக்தாவாம்; சர்வ விசுவத்தின் ஆன்மரூபமாதலின் சர்வ விசுவரூபமாம்; காய்ந்த காஞ்சனம்போலப் பிரபையுடையதாம், அதனானே சர்வ வஸ்து விஷயக ஞானரூபதனமுண்டாம், அது தன் சகஸ்ரகிரணங்களால் வெளிப்பட்ட ஜோதிரூபமாம், சர்வ ஜீவர்கட்கும் பாகியப் பிராணனும், அநேக வியஷ்டிரூபங்களோடு கூடியிலங்கும். இப்போது பிராணரூப அக்கினியின்கண்ணே சமவத்சரரூப காலவடிவத்தானே சிருஷ்டியின் கர்த்தாத்தன்மையை புணர்த்தும்பொருட்டு முதலில் உத்தராயணாதி காலத்தே பிராணரூப அக்கினியின் அவயவரூபத்தன்மையை வருணிப்பாம்:—ஹே காத்யாயன! 12 மாதத்திய சமவத்சரத்தின் ஆறுமாதவடிவ உத்தராயணமும் பிராணாக்கினிரூபமேயாம். இதனானே அம்மார்க்கத்தானே பிரஹ்மசர்யாதி சாதன சம்பன்ன உபாசகர் ஆதித்திய மண்டலத்தைபேதித்து மேலே செல்வர்; அவ்வாறு செல்லும் பரோக்ஷ ஸ்தானம் சமஷ்டிபிராணவடிவ ஹிரண்யகர்ப்பரின் நிவாச ஸ்தானமாமாதலினானே வேதவேத்தாக்கள் அதனைப் பிராணாயதனமென்றனர். அது மிருத்தியு பயமற்றதாதலின், அதை அமிருதம், அபயம் என அழைத்தனர். அது ஹிரண்யகர்ப்பரூபப பிரஹ்மாவினுக்கும ஸ்தானமாதலின், பிரஹ்மலோகமென்றனர். அது சூரியமண்டலத்தினும மேலேயிலங்கும. சகுணபிரஹ்மத்தை யபேதமாயுபாசித்தவரும, பிரஹ்மசரியதருமத்தோடு கூடியவரும் ஆகிய அகங்கிரக உபாசனையுடைய அதிகாரிகள் அவ்வுத்தராயணமார்க்க வாயிலாய்ப் பிரஹ்மலோகத்தையடைந்து மீண்டு மிசசமசாரமண்டலத்தே வருவதில்லை; மற்றே, ஆங்கே மோக்ஷத்தையடைவர். ஹே காத்யாயன! ஷண்மாசவடிவ உத்தராயணம் உபாசகரைச் சூரியமண்டலத்தே யடைவிக்குமாதலின், வேதவேத்தாக்கள் அதைப் பிராண அக்கினிரூபத்தானே கூறியதேபோல, அதற்குள்ளடங்கிய சுக்கிலபக்ஷம், அதற்குள்ளடங்கிய தினம என்பவற்றையும் அவ்வடிவத்தானே கூறியுள்ளார்; ஏனெனின், ஷண்மாசவடிவ உத்தராயணம் தேவயானமார்க்கத்தடங்கியதேபோலச் சுக்கிலபக்ஷமும் தினமும உள்ளடங்கியதாமாதலின், அவற்றின்கண்ணும் பிராண அக்கினிரூபத்தன்மை சம்பவிக்கும். இத்துணையானே போக்தாரூப அக்கினியின் ஆதித்தியாதிரூபங்களை வருணித்தாம். இனிப்போக்கியரூப சோமரூபங்களை வருணிப்பாம்:—ஹே காத்யாயன! இச்சந்திரன் போக்கிய அமிருதாதிரூபமாதலின் சோமரூபமாம், ஷண்மாசவடிவ தக்ஷிணாயனம் கருமிகட்குச் சந்திரவடிவ சோமத்தையடைவிக்குமாதலின், வேதவேத்தாக்கள் அதனையும் சோமமென்றனர். அதனானே, அக்கினிஹோத்திராதி கருமங்களைச்செய்யும் சிரத்தையுடையவர் சந்திரலோகத்தையடைவர். அத்தக்ஷிணாயனம் சோமரூபமாவதேபோல அதனுள்ளடங்கிய கிருஷ்ணபக்ஷமும் இரவும் சோமரூபமேயாம். எவ்விரவுகளில் தன்மனைவியோடு சம்போகஞ்செய்யுமில்வாழ்வானுடைய பிரஹ்மசரியம் பங்கமாகாதோ. இத்துணையானே கூறிய

பொருளாவது :—இத்தினம் பிராணவடிவ அக்கினிரூபமாதலின், இதன்கண்ணே தன்னாயகியோடு சம்போகஞ்செய்யும் புருடருக்குக் கேவலம் பிரஹ்மசர்ய தருமத்தின் ஹானிமாத்திரமுண்டாகமாட்டாது ; மற்றோ, அவர் தம் பிராணஹானியுமுண்டாம். ‘𑌪𑍍𑌰𑌾𑌣𑌂 𑌵𑌾 𑌏𑌤𑍇 𑌪𑍍𑌰𑌸𑍍𑌕𑌨𑍍𑌦𑌨𑍍𑌤𑌿 𑌯𑍇 𑌦𑌿𑌵𑌾 𑌰𑌤𑍍𑌯𑌾 𑌸𑌂𑌯𑍁𑌜𑍍𑌯𑌨𑍍𑌤𑍇 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌚𑌰𑍍𑌯𑌮𑍇𑌵 𑌤𑌦𑍍𑌯𑌦𑍍𑌰𑌾𑌤𑍍𑌰𑍌 𑌰𑌤𑍍𑌯𑌾 𑌸𑌂𑌯𑍁𑌜𑍍𑌯𑌨𑍍𑌤𑍇’ எவ்வில்வாழ்வோர் தம் நாயகிமாரோடும் தினத்தே சம்போகம் செய்வரோ அவர் தமது பிராணனையே இழக்கின்றனர், எவ்வில்வாழ்வோர் தம் நாயகிமாரோடும் இரவில் சம்போகம் செய்வரோ அவர் பிரஹ்மசர்யதருமத்தையே பாலனம் செய்வர். ஹே காத்யாயன! உத்தராயணம், சுக்கிலபக்ஷம், தினம் என்னும் மூன்றன்வடிவ அக்கினி, தக்ஷிணாயனம், கிருஷ்ணபக்ஷம, இரவு என்னும் மூன்றன்வடிவ சோமம், இவ்விரண்டனது பரஸ்பரசசோக்கையே சமவத்சரமாம், அது பிரஜாபதிவடிவமாம். அவர் வசந்தாதி ஆறு இருதுக்களாகிய பாதங்களோடுகூடியவர், மார்கழி முதலிய 12 மாதங்களோடு கூடியவர். சம்வத்சரரூபப பிரஜாபதி ஆறு இருதுவடிவ அராககளோடுகூடிய சிசுமாரமெனப் பெயரிய சக்கிரத்தே சூரியரூபமாயிருப்பா, சுவர்க்கலோகத்தின் மேலேயிருப்பர், மழையோடுகூடிய மேகங்களின் காரணரூபமாதலின், சர்வ ஜகத்தின் பிதாரூபமாவா ; ஏனெனின், சூரியன் சந்திரன் உத்தராயணம் தக்ஷிணாயனம் என்பதாதிரூபத்தானே அக்கினிசோமரூபப் பிரஜாபதியினின்றும் விருஷ்டிவாயிலாய் நெறகோதுமைவடிவ நானாவகையான அன்னமுண்டாம். அது பசியையுடையவரது ஜாடராக்கினியின்கண்ணே அடைவுற்றுப் பரிபககுவமாகியபோது அதனினின்றும வீரியரூபரேதசுண்டாம், அதனினின்றும் நானாவகையாய பிரஜைகளுண்டாம. இவ்வாறு அக்கினிசோமவாயிலாய்ப் பிரஜாபதியே உலகின்காரணமாவா. (1) இத்துணையானே இம்முதல வினாவின் கண்ணே உபாசனைசெய்ய யோக்கியமாகிய பிராணனது ஆதிதைவப்பிரபாவத்தைச் சூரியாதிரூபத்தானே வருணித்தாம். இப்போது பிராணனது அத்தியான்ம மகிமையை நிர்ணயஞ்செய்யும்பொருட்டு இரண்டாவது வினாவிடையை நிரூபிப்பாம் :—ஹே மைந்த! இவ்வாறாய உத்தரத்தைச் சிரவணித்துக் காதயாயன இருஷிமௌனமுற்றவுடனே வைதாபபியெனப் பெயரிய பார்க்கவ இருஷி பிப்பலாதமுனிவரை நோக்கி வினவுவதாவது :—ஹே பகவன்! இவ்வத்யாத்ம சங்காதரூபஜகத்தைத்தரிக்கும் தேவதைகள் எத்துணையினர்? அவருள்ளும் பிரகாசஞ்செய்யும் தேவதைகள் எத்துணையினர்? அவ்வியாவருள்ளும் கீர்த்தி அதிசயத்தன்மை முதலிய குணங்களையுடைய யாவரினும் மேன்மைய தேவதையாவர்? இம்மூன்று வினாக்கட்கும் விடையைத் தாங்கள் கிருபைசெய்து அடியேன் பொருட்டருளவேண்டும் என வினவவே பிப்பலாத முனிவர் கூறுவதாவது :—ஹே பார்க்கவ! ஆகாசாதிபூதம் 5, ஞானேந்திரியம் 5, கருமேந்திரியம் 5, மனம் 1, பிராணன் 1, என்னும் 17 தேவதைகளே இவ்வெல்லாத் தேகங்களையும் தரிப்பவர்களாவர்கள். இப்பதினேழனுள்ளும் ஞானேந்திரியம் 5, மனம் 1, ஆக ஆறு தேவதைகள் ரூபாதிபதார்த்தங்களைப் பிரகாசிப்பனவாம். இத்தேகத்தே பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் என ஐந்து விருத்திரூபத்தாலிருக்கும் பிராணன் சர்வ தேவதைகளினும் மேன்மையதாம்; ஏனெனின்,

மற்றைய சுரோத்திரநேத்திராதி இந்திரியங்கள் நஷ்டமாயினும் செவிடு குருடாயத்தேகத்திதி காணவரும்; ஆனால் பிராணன் போனபின்னர் இத்தேகத்திதியிராதாமாதலின், இப்பிராணதேவதை யாவினும் மேன்மையதாம். இதனையே வெளிப்படுத்துவாம் :—ஹே பார்க்கவ! தேனீக்களுள் மதுகராராஜாவெனப் பெயரிய முக்கிய தேனீ ஒன்றுண்டு; அது மதுவிருக்குமிடத்தே யிருக்குமாயின் மற்றைய தேனீக்களும் ஆங்குறையும், அது ஆங்கிருந்துங் கிளம்பின் யாவும் கிளம்பிவிடும், என்னு மிவ்விடயம் எல்லா வுலகத்தும் பிரசித்தமாம். இது போலவே இத்தேகத்தே பிராணனிருக்குமவரை வாக்கு முதலிய சர்வ இந்திரியங்களும் திதமாம். பிராணன் இங்கிருந்து வெளிப்படினே வாக்கு முதலிய யாவும் வெளிப்படுமாதலின், இததேகத்தே பிராணனிருப்ப விழி முதலிய பொறிகள் இல்லாவிடினும் இச்சங்காத ஜீவனரூப அன்வயம், பிராணன் கிளம்பின் விழி முதலிய பொறிகளின் வியாகூலத்தன்மை வியதிரேகம் என்பவற்றால் பிராணனிடத்தே யாவற்றையும் தாங்கும் வடிவமேன்மைத துணிபாம். அம்மேன்மையைக்கண்டு விழி முதலிய இந்திரியங்களின் அபிமானிதேவதை இவ்வாறு அந்தப்பிராணனைத துதிபுரிந்தன :—அக்கினி, சூரியன், பர்ஜன்யம், மின்னல், வாயு, இந்திரன், ஆகாசாதிபூதம், சோமம், சத, அசத, அமிருதம், இருக்கு முதலிய நால்வேதம் முதலாகவுள்ள நாமரூபக்கிரியைவடிவ விசுவரூபம் நீயேயாவாய். பர்ஜன்யசப்தத்தானே மழையுடைமேகங்களைக்கவர்க. சோமசபதத்தானே போக்கியபதார்த்தங்களைக் கவர்க. சதசபதததானே மூர்த்தபதார்த்தங்களைக் கவர்க அசத் சபதத்தானே அமூர்த்தபதார்த்தங்களைக்கவர்க, அமிருதசப்தத்தானே தேவதைகளின் போக்கியபதாாததங்களைக்கவர்க. இரதசக்கிரநாபியின் கண்ணே அராவிருப்பதேபோல இவ்வெல்லா விசுவமும் உன்னிடத்தேயிருக்குமாதலின், நீ சர்வ விசுவத்தின் ஆன்மவடிவமாவாய். ஜராயுஜாதி நால்வகைப் பிராணிரூபத்தானும் நீயேயுண்டாவாய். விராட்டிரண்யகாப்பரூபத்தானும் நீயேயுண்டாவாய்; நின்னினும் மேன்மையாயது யாதுமின்றாம். தேவதைகளுள் அக்கினி, பிதுர்க்களுள் நாந்திமுகர், இருஷிகளுள் சத்தியபராயணர், ஆங்கிரசர், அதர்வர் முதலியோர் என இவ்வுலகத்தே ஐசுவரியத்தன்மையையுடைய பிராணிகள், அக்கினி முதலிய ஐசுவரியமுடைய தேவதைகளை மகிழ்விக்கும் சுவாஹா சப்தத்தோடுகூடியது, பிதுர்க்களை மகிழ்விக்கும் ஸ்வதா சப்தத்தோடு கூடியது என்பன யாவையும் நின்வடிவமேயாம். நினது மூர்த்தியே விழி முதலிய எல்லா இந்திரியங்களுள்ளும் பலத்தைத்தரித்து நிற்கும். நின்மூர்த்தியை நீ யெப்போதும் அநுகூலபரிணாமமுடையதாக்குதி. யாங்களியாவரும் நின்றுதரோயாவேமாதலின், எமதபாதத்தைப்பொறுத்து இத் தேகத்தினும் வெளியே ஒருகாலும கிளம்பாதே. சுவர்க்கம், அந்தரிக்ஷம், பூமி என்னும் மூவுலகத்தேயிருக்கும் பூதபௌதிகங்கள் யாவும் நின்வயத்தனவேயாம், இவ்வாறு நினது வடிவத்தையுணரும் எங்களையும், எமது மைந்தரையும் நீ தாயைப் போலக் காப்பாற்றுதி. எங்கட்கு நால்வேதவடிவ பிராஹ்மணதனத்தையடைவி, சுவர்ணாதிவடிவ க்ஷத்திரியதனத்தை யடைவி, நன்மதியையடைவி எனச்

சர்வேந்திரிய தேவதைகளும் பிராணதேவதையைத் துதிபுரிந்தனவாதலின், இப்பிராணனே யாவினும் மேன்மையதாம். 2, இத்துணையானே 2-வது வினாவின் விடை நிரூபிக்கப்பட்டது. இப்போது 3-வது வினாவின்விடை விளம்பப்படும்:— ஹே மைந்த! இவ்வாறு வைதாப்பியெனப் பெயரிய பார்க்கவ இருஷி பிராணன்களின் மேன்மையை நிச்சயித்து மௌனத்தையடைந்தனர். அதன்பின்னர் ஆசுவலாயனரெனப் பெயரிய கௌசல்ய இருஷி பிராணனது உற்பத்தி திதி முதலியவற்றை நிர்ணயிக்கும்பொருட்டுப் பிப்பலாதமுனிவரை நோக்கி இவ்வாறு ஆறு வினா வினவினர்:—ஹே பகவன்! எவ்வஸ்துவினின்றும் பிராணனதுற்பத்தியுண்டாம்? எந்நிமித்தத்தானே பிராணனுக்குச் சர்வ சரீரங்களோடு சம்பந்தமுண்டாம்? இந்தப்பிராணன்றன்னைப் பின்னபின்னமாக்கி யெவ்வாறு இத்தேகங்களுள்ளிருக்கும்? இந்தப்பிராணன் இத்தேகத்தினின்றும் வெளியில் எத்துவாரவாயிலாய், எவ்விருத்தி விசேஷத்தானே, எந்நிமித்தத்தானே கிளம்பும்? இந்தப்பிராணன் பாகிய அதிபூத அதிதைவரூப சர்வ ஜகத்தையும் எவ்வாறு தரிக்கும்? இந்தப்பிராணன் அந்தர அத்யாத்மஜகத்தை யெவ்வாறு தரிக்கும்? இவ்வாறு வினாக்களோடுகூடிய எனது வினாவிற்குத் தாங்கள் தயைகூர்ந்து விடையளிக்க வேண்டும்; என ஆசுவலாயனர் வினவியபோது பிப்பலாதமுனிவர் கூறுவதாவது:—ஹே ஆசுவலாயன! நீ அத்தியந்தம் சூக்ஷ்மமாய் வினவினையாதலின், இச்சர்வ முனிவர் குழாத்துள் பிரஹ்மநிஷ்டனுவாய். அதிசயமாகப் பிரஹ்ம பாராயணனுபவன் பிரஹ்மநிஷ்டனுவன். இத்தகைய உத்தமனுகிய உனது வினாக்கட்கு விடையளிக்கின்றேன் சாவதானமாய்க்கேட்டி. இப்போது 1-வது வினாவின்விடை நிரூபிக்கப்படும்:—ஹே ஆசுவலாயன! இத்தூலதேகத்தினின்றும் தர்ப்பணுதிகளின் சமீபத்தன்மைவடிவ நிமித்தத்தானே பிரதிபிம்பரூபச் சாயையுண்டாவதேபோலப் பரமார்த்த சத்தியவடிவ ஆன்மவடிவ பிம்பத்தினின்றும் ஜீவபூதப்பிராணவடிவப் பிரதிபிம்பம் உண்டாம். இத்துணையானே இப்பொருளுணர்த்தப்பட்டது:—தர்ப்பணுதிகளிலிருக்கும் பிரதிபிம்பத்திற்கு முகாதிரூபப் பிம்பத்தினும் வேறு சத்தை சித்தியாதாமாதலின், அது பிம்பமாத்திரத்தை யாசிரயித்ததாமாறு இப்பிராணனும் ஆன்மாவையே ஆசிரயித்திருக்கும் என்பதாம். இப்போது 2-வது வினாவின் விடை நிரூபிக்கப்படும்:—ஹே ஆசுவலாயன! இஜ்ஜீவரூபப்பிராணன் அவ்வத்தேகத்தோடு பற்றுறும் சம்பந்தத்தே விஞ்ஞானரூபத்தானே செய்த அறம்பாவமே நிமித்தகாரணமாம். மனஞ்செய்த கருமத்தானே இது அவ்வத்தேகத்தைப்பற்றுறும்; ஏனெனின், ஆன்மப்பிரதிபிம்பத்தைக்கிரகித்துச் சேதனபாவத்தையடைந்த சிதாபாசனேடுகூடிய மனம் இச்சம்சாரத்தே எவ்வறம்பாவத்தைச்செய்யுமோ அதன் பலத்தை யதுவே போகிக்குமாதலின், மனமே கர்த்தாபோக்தாவாம். எம்மனத்தின் காரியரூப எம்மானச கருமம் உளதோ அதனுனே ஜீவரூபப்பிராணன் அவ்வத்தேகத்தே யடைவுறும்.

சங்கை:—ஹே பகவன்! அன்னிய சாஸ்திரத்தின்கண்ணே காயகருமம், வாக்கருமம், மனேகருமம் என்னும் மூவிதமான அறம்பாவகருமத்தே இச்சன்மமாணரூப சம்சாரநிமித்தகாரணத்தன்மை கூறப்பட்டுள்ளது; ஈண்டுத் தாங்கள்

கேவலம மானசகருமத்தையே இச்சம்சாரகாரணமெனக் கூறினீர்களாதலின், இரண்டற்கு முரண்படுமன்றோ?

சமாதானம் :—ஹே ஆசுவலாயன! இவ்வாக்காதி யிந்திரியமும இத்தேகமும் அம்மனத்தானன்றிச சுதந்திரமா யொருகாரியமசெய்வதில் சமாத்துடையனவாகாவாம்; மறறோ, மனததைபபற்றியே அவை சுபாசுபகருமஙகள செய்வதில் ஆற்றலுடையனவாமாதலின், தேகவாக்கருமங்களிலும மனததிறகே பிரதானத்தன்மையாம் அதை அஙகீகரிதது யாம கேவல மானசகருமத்திறகே சம்சாரகாரணததன்மையைக் கூறினேம இபபோது மனப்பிரதானத்தன்மையை நிரூபிபபாம் :—ஹே ஆசுவலாயன! அம்மனத்தின் சகாயத்தானன்றிக் கேவலம் இத்தேகத்தானேனும் வாக்காதி இந்திரியஙகளாலேனும ஆக்கப்படுங் கருமஙகளில் அறவடிவத்தன்மையேனும் மறவடிவததன்மையேனும் உண்டாமென எநநூலினும் கூறவில்லை.

சங்கை :—ஹே பகவன்! மனோவியாபாரததானன்றிக் கேவலம் தேகேந்திரியங்களாற செய்யப்பட்ட கருமத்தே அறம்பாவத்தன்மையுண்டாகாதாயின், தருமசாஸ்திரததே மனத்தின் விஞ்ஞானரூப வியாபாரத்தானனறிக கேவல சரீர இந்திரியங்களானே செய்யப்பட்ட பிரஹ்மஹததியாதி பாவ நீககபபொருட்டு ஒருபங்கு பிராயச்சித்தமும், மனோவியாபாரவாயிலாய்ச செய்யப்பட்ட அதன் நீககபபொருட்டு மூன்றுபங்கு பிராயச்சிததமும் விதிககபபெற்றுளது; அஃத சங்கதமாமன்றோ?

சமாதானம் :—ஹே ஆசுவலாயன! தருமசாஸ்திரத்தே அறியாமற செய்த பாவங்களை நீக்குமபொருட்டுப பிராயச்சித்தம் விதிததிருநதபோதினும் அது மானச வியாபார சமபநததானே செய்யபபடும, அஃதினறி யதுசெய்ய முடியாதாம்; என்னை, அறிநது பாவகருமம செய்யாதவன் அறியாமற பாவகருமம செய்திருப்பேன் எனத தனமனத்தெண்ணியபோதே பிராயசசிதத அதிகாரியாவன்; எண்ணுதலின்றி யதிகாரியாகான்; ஆகையால, மனோவிஞ்ஞானரூப வியாபாரத்தானே அறியாமற செய்த பாவங்கட்குப பிராயசசித்தமாம, அஃதின்றி யஃதுண்டாகாதாமாதலின், அறியாமறசெய்த கருமததே மனோ சம்பநதத்தானே அறத்தன்மையேனும், மறத்தன்மையேனும சித்திக்கும; அஃதின்றிச சித்தியாதாம். அல்லது, அறம்பாவங்களின் கர்த்தாத்தன்மையும் போக்தாத்தன்மையும் தூய ஆன்மாவின்கண்ணுமா? தேகேநதிரியாதிகளின் கண்ணுமா? மனததின்கண்ணுமா? என விசாரிக்கத்தக்கதாம. அவறறுள், தூய ஆன்மாவோ அசங்க நிர்விகாரமாமாதலின், அவ்விரணடு தன்மைகளும பொருநதா; தேகேநதிரியாதிகளோ ஜடங்களும் பரதநதிரஙகளுமாமாதலின், அவறறின்கண்ணும அவை பொருந்தா; மற்றோ, எஞ்சியதாக அவ்விருதன்மைகளும் அறம்பாவமும மனத்தின்கண்ணேயிருக்குமாதலின், சிதாபாசத்தோடு கூடியமனமே அறமபாவமியறறும. மனமியற்றிய அவற்றானே தேகேந்திரியாதி சஙகாதங்களுண்டாம். மனமாற்றிய புண்ணிய பாவவயத்தானே இஜ்ஜீவரூபப் பிராணன் அவ்வத்தேகததோடு சமபந்தத்தை யடையும்.' (2) இப்போது அப்பிராணன் தன்னை வேறு வேறாக்கி இத்தேகத்தே

எவ்வாறிருக்கும என்னும் 3-வது வினவின்விடை நிரூபிக்கப்படும்:—ஹே ஆசுவலாயன! இவ்வுலகத்தே பேரரையன் தன் மந்திரிமாரகளைத் தத்தமது காரியத்தேயேவுவதேபோல இத்தேகத்தேயிருக்கும் இக்கிரியா சக்தியையுடைய பிராணனும் தன்னைப் பிராணன் அபானன் சமானன் வியானன் உதானன் என ஐவகைப்படுத்தி நேத்திராதிகளைத் தத்தமது வியாபாரத்தேயேவும். அவ்வைந்து பிராணன்களின் இடங்களும் காரியங்களும் வருமாறு:—அவ்வைந்தனுள் முதலாவதாய பிரதானப் பிராணனே சிரத்தேயிருக்கும் இருநாசிகை, இருசெவி, இருவிழி, வாயென்னும் 7 துவாரங்களிலிருக்கும; முக நாசிகைவாயிலாய்ப பாகிய கமனுகமனத்தைச்செய்யும். அபானனே பாயு, உபஸ்தம் என்னு மிரண்டன்கண்ணேயிருக்கும்; மல மூதத்திரவிபாகத்தைச்செய்யும். சமானனே உண்ட அன்னத்தையும் குடித்த நீரையும் சமானஞ்செய்யுமாதலின், சர்வ சரீரத்தும் வியாபகமாயினும் மேற்கூறிய 7 துவாரங்கட்கும ஆதாரசக்கிரததிறகும இடையில் விசேஷரூபமாயிருக்கும வியானனுக்கு ஆசிரயம கூறுமபொருட்டு நாடிகளின் பரம எண்ணிக்கையைக் காண்பிப்பாம். தேகதாரிகளின் இருதயதேயததே 720010101 நாடிகளிருக்கும். பிபபல விருக்ஷததிற்கு மூலமொன்றுப, அதனினின்றும ஸ்கநதங்கிளம்பும, அதனினின்றும் தூலசாகை கிளம்பும, அதனினின்றும வேறு சூக்ஷ்மசாகை கிளம்பும், அதனினின்றும வேறு அத்தியந்தம் சூக்ஷ்மசாகை கிளமபும், அதுபோலவே சர்வ நாடிகளினுள்ளும சுழுபனையெனப பெயரிய நாடியே தருமூலமபோல முக்கியமாம். அதனினின்றும் ஸ்கநதரூப 10 நாடிகளுண்டாம். அவற்றுள் ஒவ்வொரு நாடியின் தூலசாகைவடிவ வேறு 9, 9, நாடிகளுண்டாம். சுழும்னையொன்றை விடுத்து மற்றையயாவும் ஒருங்குகூடி 100 ஆயின. அந்நூறு நாடிகளுள் ஒவ்வொரு நாடியின் சூக்ஷ்மசாகைவடிவ வேறு 100, 100 நாடிகளுண்டாம். யாவுங்கூடி 10000 ஆம. அவற்றுள், ஒவ்வொரு நாடியின் அத்தியந்த சூக்ஷ்மசாகைவடிவமாய் 72000, 72000, நாடிகளுண்டாம, யாவுங்கூடி 720010101 நாடிகளாம். சுழும்னையைவிடுத்து வேறெல்லா நாடிகளுள்ளும் வியானனிருக்கும்; அதனைச் சுருதி பிராண அபான சந்திரூபத்தானே வருணித்துளது. பலமுடைக் கருமங்கட்குச் சாதகரூபமாயும் கூறியுளது. சுழுமனை நாடியினூனே உதானனே சஞ்சரிக்கும்; அஃதெப்போதும் ஊர்த்வகமனஞ் செய்யுமியறகையையுடையது. இத்துணையானே இப்பிராணன் இத்தேகததினும் வெளியே எத்துவாரத்தால், எவ்விருத்தி விசேஷத்தால, எநநிமித்தத்தால் கிளமபும் என்னும 3 விகற்பங்களோடுகூடிய 4-வது வினவின்கண்ணே முதலிரண்டு விகறபங்களின் சமாதானம் கூறப்பட்டது; ஏனெனின், இப்பிராணன் சுழும்னை நாடிரூபவாயிலாய் உதானவிருத்திரூபத்தானே இத்தேகத்தினின்றும் பாகிய உறகிராநதியைச செய்யும் என்னும் வசனத்தானே இரண்டு விகற்பங்களின் உத்தரம் சித்தமாம். இப்போது எந்நிமித்தத்தானே இப்பிராணன் சரீரததினின்றும உதகிரமணமாமோவென்னும் 3-வது விகற்பத்தின் சமாதானத்தை வருணிப்பாம்:—ஹே ஆசுவலாயன! மரணகாலத்தே எவ்வுயிர்கட்கு அக்கினிஹோத்திராதி புண்ணிய கருமம் பலங்கொடுக்கும்பொருட்டு எதிர்முகமாமோ அவ்வுயிர்களை இவ்வுதானன் சுவர்க்காதி லோகங்களிலடைவிக்கும்; பாவகருமம் பலங்கொடுப்பான் எதிர்முக

மாமுயிர்களை நரகாதிகளிலடைவிக்கும்; அறம்பாவ மிரண்டும் பலங்கொடுப்பான் எதிர்முகமாமுயிர்களை மனுடலோகத்தேயடைவிக்கும்; சுவர்க்காதி யுலகங்களை யடையும் புண்ணிய பாவகருமரூபப பிரதிபந்தக மற்றவரையோ சுழும்னை நாடி வாயிலாய்ப் பிரஹ்மலோகத்தேயடைவிக்கும். ஆன்மசாக்ஷாத்காரத்தாலே புண்ணியபாவரூப சாவ கருமமும் நீங்கியவரைத் தேகத்தினும் வெளியே கிளம்புமாறு செய்வதில்லையாதலின், அன்வய வியதிரேகத்தானே புண்ணியபாவகருமங்கட்கே பிராணனது கிளம்புகையின் நிமித்தகாரணத்தன்மை சித்தமாம். இத்துணையானே 4-வது வினவிடை நிரூபிக்கப்பட்டது. இப்போது இப்பிராணன் பாகிய அதிபூத அதிதைவப் பிரபஞ்சத்தை யெவ்வாறு தரிக்கும்? அங்கா அத்தியான்மரூப ஜகத்தை எவ்வாறு தரிக்கும்? என்னும் 5-வது 6-வது வினைகளின் விடையை நிரூபிப்பாம் —ஹே ஆசுவலாயன! இப்பிராணன் பாகிய ஆதித்திய பிருதிவி முதலிய ரூபங்களால் இவ்வதிபூத அதிதைவரூப சர்வ ஜகத்தையும் தரிக்கும். இப்பிராணன், பிராணாதி ஐந்து முதலிய சொரூபங்களாலும், சக்ஷு முதலிய கௌணசொரூபங்களாலும், அந்தர அத்தியான்ம ஜகத்தைத்தரிக்கும். இப்போது இப்பொருளையே வெளிப்படுத்துமபொருட்டுக் கிரமமாகப் பஞ்சப்பிராணன்களின் பாகியரூபங்களை நிரூபிப்பாம் —ஹே ஆசுவலாயன! சக்ஷுவும் ஆதித்தியனும் பிராணவடிவமாமாதலின், அவையிரண்டிற்கும் பரஸ்பரம் பேதமின்றாம்; அபேதமேயாமாதலின், பிராணவாயுவிற்குப் பாகியரூபம் ஆதித்தியனும். பிருதிவி தேவதையினாலே அபானவாயுவின் ஆகாஷணமாமாதலின், அபானனுக்குப் பிருதிவி பாகியரூபமாம். சமானன் சரீரமத்திய தேயத்தேயிருப்பதேபோலப் பூமிக்கும் சுவர்க்கத்திற்கும் மத்தியில் இவ்வாகாசமிருக்குமாதலின், சமானனுக்கு அவ்விடையிலுள்ள ஆகாசமபாகியரூபமாம். வியானன் சர்வ நாடிகளிலும் வியாபித்திருப்பதேபோல இப்பாகிய வாயுவும் வியாபகமாமாதலின், வியானனுக்கு இவ்வாயு பாகியரூபமாம். உதானனுக்கு ஊர்த்தவகமனஞ் செய்யுமியற்கையிருப்பதேபோல அக்கினிரூபத்தேயுவிற்கும் ஊர்த்தவகமனஞ் செய்யுமியற்கையாமாதலின், உதானனுக்கு இத்தேயுப் பாகியரூபமாம். இத்தேகத்தேயிருக்கும் அந்தக்கரணவிருத்திரூப உஷ்ணத்தன்மைவடிவ தேயுவானது சாந்தமாங்காலத்தே இச்சீவன ஊர்த்வசுவாசரூபப்பிராணவிருத்தியுடையவனுவன; பிராணன் 'ஆபோமய: ப்ராண:' என்னும் சுருதியின்கண்ணே ஜலமயரூபத்தானே கூறியிருப்பினும், மரணகாலத்தே அது தேயுரூப உதானவிருத்தியோடுகூடியதாய்ச் சீவனை லோகாந்தரத்தே செலுத்தும். கருத்திதுவாம்:—முற்கூறிய தேயுவினானன்றி இத்தேகத்தே உதானனது ஸ்திதியுண்டாகாதாம் என்பதனாலும், அத்தேயு உதானரூபமேயாம். மரணகாலத்தே எச்சீவன் கருமவயத்தால் மேல்வரும் சரீரத்தின் ஞானஜன்னிய சமஸ்காரமுடையவனுவனோ, யாவன் இந்திரியமனப் பிராணன்களோடு தாதாத்மிய சம்பந்தத்தை யடைந்துளானோ, அவனையே கிரியாசக்தியையுடைய பிராணன் லோகாந்தரத்தடைவிக்கும். இப்போது முற்கூறிய வித்தையின் பலத்தை வருணிப்பாம்:—ஹே ஆசுவலாயன! எப்பிராணன் முற்கூறிய முறையே பரமான்மாவினின்றும் உண்டாயதோ, புண்ணிய பாவகருமவயத்தால் அநேக சரீரங்க

ளோடு சம்பந்தத்தையடைவுற்றதோ, நாடிமுதலிய அநேக ஸ்தானங்களிலிருக்குமோ, யாவற்றையும் ஏவுவதாமோ, அத்தியாத்ம அதிதைவரூபமாமோ அந்தப் பிராணன் யானுயுள்ளேன்; எனப் பிராணனை யபேத உபாசனைசெய்யும் அதிகாரியின் சிஷ்யப் பிரசிஷ்யர்களின் பாம்பரைவடிவ வித்யாவம்சமும், புத்திரபௌத்திராதிகளின் பாம்பரைவடிவ ஜன்மவம்சமும் ஒருகாலும் நஷ்டமாகாதாம்; மற்றேறு, அவ்வுபாசகனது இருவம்சமும் எப்போது மிலங்கும். பிராண உபாசகர்க்குக் கேவலம் வம்சவிருத்திரூப பலமாத்திரமன்றும்; மறறேறு, அவர்கட்கு மனத்தூய்மை வாயிலாய் ஆன்மசாக்ஷாத்காரப் பிராப்தியுமாம்; அதனுனே மோக்ஷரூப அமிருதத்தையடைவர்; அடைவுற்று மீண்டும் சம்சார துக்கத்தையடைவுறாாதலின், அந்தக்காண சுத்தியின்பொருட்டு அதிகாரிகள் பிராண உபாசனையை யவசியம செய்க. ஈண்டுப் பூர்வப் பிரசங்கத்தே காத்யாயனா, பார்க்கவர், ஆசுவலாயனா என்னும் மூன்று இருடியரின் மூன்றுவினவிடைகளால சகுணவித்யாவிஷயம் நிரூபிக்கப்பட்டது. இப்போது நிர்கருண வித்யாவிஷயத்தை நிசசயிக்கும்பொருட்டு நான்காவது வினவிடையை நிரூபிபபாம:—ஹே குழந்தாய்! இவ்வாறு பிப்பலாத முனிவாது வசனத்தைச சிரவணித்து அவ்வாசுவலாயன இருஷி மௌனத்தையடைந்தனர். பின் கார்க்கியரெனப பெயரிய சௌாயாயணி இருஷி பிப்பலாத முனிவரைநோக்கி இவ்வைவகையாய கேள்வியைக்கேட்டனர்:—ஹே முனிவரே! இத்தேகத்தே தத்தம் வியாபாாத்தின் உபாமத்தன்மைவடிவ சயனத்தை யாரடைகின்றனர்? ஈண்டு, இம்முதல் வினவிற்கு சாக்கிரத்தவத்தையின் ஆசிரய நிர்ணயம் பிரயோஜனமாம; ஏனெனின், எதன வியாபாாத்தின் உபாமத்தன்மையினுனே நனவின் நிவிருத்திரூப சயனம் ஆமோ, அதறகே ஜாக்கிரத்தின் ஆசிரயத்தன்மை அர்த்தத்தானே சித்தமாம. ஹே பகவன்! இததேகததே எபபோதும தத்தம் வியாபாாததேயிருப்பதாய் எது நனவையடைந்திருக்கும? இதற்கு இத்தேகத்தைககாப்பவனது நிர்ணயம பிரயோஜனமாம்; ஏனெனின், சர்வ காலத்தும் சாவதானமாயிருபபதன்கண்ணே இாக்ஷகததன்மை சமபவிக்கும, மாறுய தன்கண்ணே சமபவியாதாம. ஹே பகவன்! இச்சங்காததத்தே நானுவகையாய சொப்பனங்களைக் காண்பவன் யாவன்? இதறகுச சொபபன அவஸ்தையின் ஆசிரயநிர்ணயமே பலமாம; ஏனெனின், சொவபபன அவஸ்தையில சாவதானமாயிருககும் வஸ்துவின்கண்ணே சொவப்பன ஆசிரயத்தன்மை சம்பவிகரும். ஹே பகவன்! இச்சங்காததத்தே சுழுபதிச சுகத்தையனுபவிப்பதார்? சுழுப்தியவத்தையின் ஆசிரய நிாணயமே இதறகுப் பலமாம; ஏனெனின், சுழுப்திகால சுகத்தைப போகிக்கும் வஸ்துவின்கண்ணே சுழுப்தியவஸ்தையின் ஆசிரயத்தன்மைச் சம்பவமாம். ஹே பகவன! அசசுழுப்தியவஸ்தையின்கண்ணே இச்சம்பூர்ணப் பிராணுதிகள் எவ்வாதாரத்தின்கண்ணேயிருக்கும? துரீய அக்ஷா ஆன்மாவின் நிர்ணயமே இதனது பிரயோஜனமாம். ஹே குழந்தாய்! இவ்வாறு கார்க்கியர் பிபபலாத முனிவரை நோக்கி ஐவகை வினவினவியபோது அந்த ஞானுசிரியர் அச்சீடர்பொருட்டு முறையே அவ்வினுக்கட்கு விடையளிக்கத்தொடங்கினுர்:—ஹே கார்க்கிய! கனவின்கண்ணே இவ்விழிமுதலிய 5 ஞானேந்திரியமும், வாக்காதி 5 கருமேநதிரியமும் மனததோடு தாதாத்மிய பாவத்தையடைநது தத்தம் வியா

பாரத்தினின்றும் நிவிருத்திரூப சயனத்தையடையும். சுழுப்தி யவஸ்தையின் கண்ணே விழிமுதலிய பத்து இந்திரியம் மனத்தோடே சயனத்தையடையுமாதலின், சக்ஷுமுதலிய இந்திரிய விசிஷ்டமனமே ஜாக்ர அவஸ்தையின் ஆசிரயமாம். 2-வது வினவின்விடை :—ஹே கார்க்கிய! சுழுப்தியவஸ்தையின்கண்ணே மனசகித இந்திரியங்கட்கு இலயமுறினும், பிராணன் முதலிய ஐவகைப் பிராணனும் ஜாடராக்கினியோடு தத்தம வியாபாரத்தே ஸ்திதிரூப ஜாக்ரத்தையடையும். இக்காரணத்தினானே சுழுப்தியின்கண்ணே ஜீவர்களினுதரத்தேயிருக்கும் அன்னம் பரிபாகத்தையடையுமாதலின், ஜாடராக்கினியோடுகூடிய பஞ்சபிராணனே இத்தேகத்தைக் காப்பாற்றுவதாம். ஈண்டு, சுழுபதியவஸ்தையின்கண்ணேயிருக்கும் அறிஞனுக்குச் சுருதி அக்கினிஹோத்திரப் பிராப்தியைக்கூறுகின்றது. அதைக்கூறுவாம் :—ஹே கார்க்கிய! பிரசித்த அக்கினிஹோத்திரிகட்குக் கார்கபத்தியமெனப் பெயரிய அக்கினியெப்போதுந் திரமாயிருக்கும், ஆஹவனீய அக்கினியோ ஹோமஞ்செய்யும்பொருட்டுக் கார்ஹபத்திய அக்கினியினின்றும் எடுத்து. மிக வளர்க்கப்படும்; அதுபோலவே, ஈண்டுப் பிரசங்கத்தின்கண்ணே உட்பிரவேசஞ்செய்யும் அபானவாயுவினின்றும் பாகிய கமனஞ்செய்யும் பிராணவாயு எடுக்கப்படும். இவ்வகையாய சமானத்தன்மையைக் கவர்ந்து சுருதிபகவதி வித்வானுடைய பிராணனை ஆகவனீய அக்கினிரூபமென்றது, அபானனைக் கார்ஹபத்திய அக்கினிரூபமென்றது. வித்வானுடைய வியானவாயு அன்வாஹார்ய பசனரூபமாம். ஈண்டு, ஓதனவிசேஷத்தின்பெயர் அன்வாஹார்யமாம், அவ்வன்வாஹார்யரூப ஓதனம் எவ்வக்கினியின்கண்ணே பாகப்படுத்தப்பெறுமோ அவ்வக்கினி அன்வாஹார்யபசனமாம்; அதனையே வேதவேத்தாக்கள் தக்ஷிண அக்கினியென்பர். அந்தத் தக்ஷிண அக்கினிவடிவம் வியானவாயுவாம்; ஏனெனின், பிரசித்த அக்கினிஹோத்திர சாலையின்கண்ணே அத்தக்ஷிணாக்கினி தக்ஷிணதிசையின் குண்டத்தேயிருப்பதேபோல வியானவாயுவும் இருதயத்தின் ஐந்து துவாரத்தின் தக்ஷிண துவாரத்துள்ளிருக்கும்; இச்சமானத்தன்மையானே சுருதி வியானனைத் தக்ஷிணாக்கினியென்றது. வித்வானுடைய சமானவாயுவோ கார்ஹபத்தியாதி அக்கினிகளில் பக்ஷபாதமற்ற ஹோதாரூபமாம். அக்கினிஹோத்திரத்தே யஜமானன் வேறு காரியத்தைக் கவனித்திருப்பின் யஜமானனது பிரதிநிதிரூபமாய்ச் சிஷ்யாதிகள் ஹோத்தாக்களாவர். அதுபோலவே, வித்வானுடைய பிராணரூப அக்கினிஹோத்திரத்தே சமானவாயுவே ஹோதாரூபமாம்; ஏனெனின், இச்சமானவாயு உசுவாச நிசுவாசரூப இரண்டாகுதிகட்கும் குறைவு மிகுதியற்ற சமானத்தன்மையை யடைவிக்கும். இவ்வுதானவாயுவோ வித்வானுடைய பிராண அக்கினிஹோத்திரத்தின் பலரூபமாம்; ஏனெனின், இப்பிரசித்த அக்கினிஹோத்திரத்தின்கண்ணும் யஜமானனுக்கு உதானவாயுவின் கிளம்புகையானே சுவர்க்காதி பலப்பிராப்தியாம். இக்காரணத்தானே உதானவாயு அறிஞனது அக்கினிஹோத்திரத்தின் பலரூபமாம். எவ்வறிஞனது பிராணன் அக்கினிஹோத்திரத்தேயாமோ அவ்வறிஞனது மனம் யஜமானரூபமாம். பாகிய அக்கினிஹோத்திரத்தே பிரசித்த கார்கபத்யாதி அக்கினிகள் யஜமானனுக்குச் சுவர்க்கபலத்தையடைவிக்கும்;

அதுபோலவே, இந்தப் பிராணரூப அக்கினிகளும் மனரூப யஜமானனைச் சுழுப்தி யவஸ்தையின்கண்ணே இருதயகமலத்தேயிருக்கும் பிரஹ்மானந்தரூப ஸ்வர்க்கத்தையடைவிக்கும். இவ்வாறு பிரஹ்மவேத்தாவாய அறிஞனுக்கெப்போதும் அக்கினிஹோத்திரமாம். இப்போது 3-வது 4-வது வினாக்கட்கு விடைபகர்வாம்:— ஹே கார்க்கிய! எம்மனம் கனவின்கண்ணும் விழித்திருக்குமோ, எம்மனம் துயிலின்கண்ணும் அறிஞனது பிராண அக்கினி ஹோத்திரத்திற்கு யஜமானரூபமாமோ, அம்மனமே சேதனப் பிரதிபிம்பத்தைக்கவர்ந்து பிரகாசிப்பதாய் நான்குவகையாய கனுக்களுக்கானுமாதலின், அந்தச் சிதாபாசத்தோடு கூடியமனமே அக்கனுவஸ்தையினாசிரயமாம். ஹே கார்க்கிய! அம்மனமே சுழுப்திச் சுகத்தையடையும்; ஏனெனின், அச்சுழுப்தி அவஸ்தையின்கண்ணே இச்சம்சாரம் வெளிப்படையாய்ப் பிரதீதியாகாவிடினும் சூக்ஷ்ம பீஜரூபமாயிருப்பதேபோல, அச்சுழுப்தியின்கண்ணே இம்மனம் வெளிப்படையாய்ப் பிரதீதியாகாவிடினும் சூக்ஷ்ம பீஜரூபமாயிருக்குமாதலின், அவ்வாறிருக்கும் அம்மனமே அச்சுழுப்தியின் ஆசிரயமாம். இப்போது 5-வது வினாவினவிடை நிரூபிக்கப்படும்:— ஹே கார்க்கிய! சேதனவடிவ ஆன்மா அம்மனத்தே பிரதிபிம்பரூபமாயத்திதமாம், சேதன ஆன்மாவின்கண்ணே இந்தப் பிராணாதி சர்வ ஜகத்துமிருக்கும். இவ்வுலகத்தே சாயங்காலத்தே அநேக திசைகளினின்றும் வந்த அநேகம் பறவைகள் பகாவிருக்ஷத்தின்கண்ணேயிருப்பதேபோலப் பிருதிவி முதலிய பஞ்சபூதங்களும், அவற்றின் கந்தாதி குணங்களும், சக்ஷு முதலிய பத்து இந்திரியங்களும், நால்வகையாய அந்தக்கரணமும், ஐவகையாய பிராணனும் ஆகிய யாவும் சேதன ஆன்மாவின்கண்ணேயிருக்கும். சேதன ஆன்மாவின்கண்ணே கேவலம் இஜ்ஜடப்பிரபஞ்சமேயிராதாம்; மற்றோ, இந்திரிய அந்தக்கரண பிராணாதி வியாபார விசிஷ்டரூபத்தானே இச்சீவனும் சுத்த ஆன்மாவின்கண்ணேயிருக்குமாதலின், இவ்வான்மாவே சர்வத்திற்கும் ஆதாரமாம். இவ்வான்மா, சக்ஷு முதலிய இந்திரியங்களோடுகூடித் தரிசனாதி அநேக வியாபாரங்களைச் செய்யுமாதலின், காண்போன், தீண்டுவோன், கேட்போன் என்பதாதி குணமுடையதாய் ஜீவப்பெயரையடைந்தபோதினும் உண்மையாய்ப் பரமான்மவடிவமேயாம். ஜீவ பரமான்மாக்களிடத்தே சிறிது மாத்திரையும் பேதமின்றாம். இப்போது இப்பாபிய நிர்க்குணவித்தையின் பலம் நிரூபிக்கப்படும்:— ஹே கார்க்கிய! எவ்வான்மா சர்வ வியாபகமாயினும் தூயமனத்தே விசேஷமாய் வெளிப்படுமோ, சர்வ ஜகத்தின் அதிஷ்டானரூபமாமோ, தூல சூக்ஷ்மகாரணமென்னும் முத்தேகங்களற்றதாமோ, ஸ்வப்பிரகாச அக்ஷர ஆநந்தவடிவமாமோ, அத்தகைய ஆன்மாவை எவ்வதிகாரி பிரஹ்மவேத்தாவாய குருவினுபதேசத்தானே சாக்ஷாத்கரிப்பனோ, அவன் சர்வ ஜகத்தையும் சாமானியரூபமாயும் விசேஷரூபமாயும் சாக்ஷாத்கரிப்பன். இச்சம்சாரத்தின் ஜன்ம மரணாதி சர்வ தாபத்தினின்றும் விடுபடுவன். எவ்வக்ஷர பரமான்மாவின்கண்ணே இச்ஜீவனிருக்குமோ, ஜீவ உபாதிரூப பிராண இந்திரியாதிகளிருக்குமோ, அதனைத் தன்னான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரிக்கும் அதிகாரி சர்வஞ்ஞனாய்ப் பிரஹ்மபாவரூப பரமபதத்தையடைவன். இத்துணையானே நான்காவது வினாவின்விடை விளம்பப்பட்டது. இப்போது அக்ஷர ஆன்மாவின் ஒருமுறை

யுபதேசத்தானே அதனை யறிவதன்கண்ணே ஆற்றலற்றவனுக்குப் பிரணவ உபாசனையை விதானஞ்செய்யும்பொருட்டு 5-வது வினாவிடையை நிகழ்த்துவாம்:— ஹே மைந்த! இவ்வாறு பிப்பலாத முனிவர் கார்க்கியருக்குக் கூறியபோது அக்கார்க்கியர் மௌனமுற்றனர். பின் சத்தியகாமனென்ப பெயரிய சைப்ய இருஷி பிப்பலாத முனிவரைநோக்கி இவ்வாறு வினவினர்:— ஹே பகவன்! தன் மரணபரியந்தம் ஓங்காரரூபப் பிரணவத்தைத் தியானஞ்செய்யு மதிகாரி பூமி முதலிய லோகங்களுள் எவ்வுலகத்தைப்படைவன்? என்னும் அடியேனுடைய வினாவிற்குத் தாங்கள் தயவுசெய்து உத்தரமருளவேண்டும். இவ்வாறு வினவியபோது பிப்பலாத முனிவர் கூறுவதாவது.— ஹே சத்தியகாம! எவ்வருணத்தை வேதவேத்தாக்கள் ஓங்காரம் என்னும் நாமத்தானே கூறியுள்ளார்களோ, அவ்வோங்காரம் அக்ஷரவடிவ பரப்பிரஹ்மத்தின் நாமமாம், பிரணவடிவ அபரப்பிரஹ்மத்திற்கும் நாமமாம். அது பரப்பிரஹ்மத்தோடும் அபரப்பிரஹ்மத்தோடும் அபின்னமாம்; ஏனெனின், வாச்சியப்பொருட்கும் வாசகப்பொருட்கும் வேதவேத்தாக்கள் அபேதத்தையே கூறியுள்ளார்கள் அல்லது, நேயனதப்பிரதிமையைப்போல அவ்வோங்காரம், பர அபரப்பிரஹ்மத்தின் பிரதீகமாமாதலினானே பர அபர பிரஹ்மத்தினும் அபின்னமாம். அன்னியத்தினதனானே அன்னிய திருஷ்டியின் ஆலம்பனமாதலே பிரதீகமாம். சாளக்கிராமத்தின்கணனே யாதொரு விஷ்ணு திருஷ்டியுண்டோ அத்திருஷ்டியின் பற்றுக்கோடு சாளக்கிராமமாம், அது விஷ்ணுவின் பிரதீகவடிவமாதலேபோல, அவ்வோங்காரமும் அந்தப்பர அபரப்பிரஹ்மத்தின் பிரதீகவடிவமாம். இவ்வோங்காரரூபப் பிரணவத்தைப் பரப்பிரஹ்மரூபமாய்ச் சிந்திக்கு மதிகாரி அந்தத்தியானமகிமையானே பரப்பிரஹ்மத்தையேயடைவன். பிரணவத்தை அபரப்பிரஹ்மரூபமாய்ச் சிந்திக்கு மதிகாரி அந்தத்தியான மகிமையானே அபரப்பிரஹ்மத்தையேயடைவன். அந்தப் பலபேதத்திற்கு கேவலம் புருடஇச்சையின் பேதம் காரணமன்று; மற்று, பிரணவத்தின் மாத்திரைகளின் பேதமும் அதன் பேதத்திற்குக் காரணமாம்; ஏனெனின், பிரணவ மந்திரத்திற்கு அகாரம் உகாரம் மகாரம் அர்த்தமாத்திரை என்னும் மூன்றரை மாத்திரையிருக்கும். முதலகார மாத்திரையை இருக்குவேதரூபமாய்ச் சிந்திக்கு முபாசகனுக்கு இருக்குவேத அபிமானிதேவதை இப்பூமியை யடைவிக்கும். அகாரம் உகாரம் என்னு மிரண்டு மாத்திரைகளையும் யஜுர்வேதரூபமாய்ச் சிந்திக்கு முபாசகனுக்கு யஜுர்வேத அபிமானிதேவதை சுவர்க்கலோகத்தை யடைவிக்கும். அகாரம் உகாரம் மகாரம் என்னு மூன்று மாத்திரைகளையும் சாமவேதரூபமாய்ச் சிந்திக்கு முபாசகனுக்குச் சாமவேத அபிமானிதேவதை பிரஹ்மலோகத்தை யடைவிக்கும். பிரஹ்மலோகத்தை யடைவுற்ற உபாசகன் மீண்டும் பூமியின்கண்ணே வாராதலின், முமுக்ஷுக்கள் 3 மாத்திரையையுடைய பிரணவத்தையே தியானஞ்செய்க ஒரு மாத்திரையையேனும் இருமாத்திரையையேனும் தியானம் செய்யாதொழிக; ஏனெனின், பிரணவத்தின் அகார உகாரமென்னு மிரு மாத்திரைகள் மீண்டுந் திரும்புகையோடுகூடிய பூமி சுவர்க்கலோக சுகத்தையே அடைவிக்கும், மீண்டும் வருகையற்ற சுகத்தையடைவியாதாம். அம்மும்மாத்

திரையோடுகூடிய பிரணவமோ உபாசகர்க்கு மீண்டும் வருகையற்ற பிரஹ்ம லோகத்தை யடைவிக்குமாதலின், அதிகாரி யதனையே தியானம்செய்க. ஒரு அகார மாத்திரைப்பிரதானப்பிரணவத்தைச் சிந்திப்பவன் பூவுலகத்தை யடைவதே போலும், இரு மாத்திரைப்பிரதானப் பிரணவத்தைச் சிந்திப்பவன் சுவர்க்கலோக ததை யடைவதேபோலும், மும்மாத்திரைப்பிரதானப் பிரணவத்தைச்சிந்திக்கும் புருடன் பிரஹ்மலோகத்தை யடைவதேபோலும், யாவன் அர்த்த மாத்திரைப் பிரதானப்பிரணவத்தைச் சிந்திப்பவனே அவன் அத்விதீயப் பிரஹ்மபாவத்தை யடைவன். இவ்வாறு அதிகாரிகட்கு ஓங்காரரூபப் பிரணவத்தானே சர்வ போக மோக்ஷப்பிராப்தியாமாதலின், இப்பிரணவமந்திரம் சர்வ மந்திரத்தினும் மேன் மையதாம். இத்துணையானே 5-வது வினவின்விடை பகரப்பட்டது. இப்போது நான்காவது வினவின்கண்ணே கூறிய அக்ஷரப்பரமான்மாவின்கண்ணே பிரத்தி யக்ரூபத்தன்மையை நிச்சயிக்கும்பொருட்டு ஆறுவது வினவிடையைப் பகர்வாம். ஹே மைநத! இவ்வாறு பிப்பலாதமுனிவர் சத்தியகாமருக்குக் கூறியபோது அவர் மௌனமுற்றனர். பின் சுகேசரெனப் பெயரிய பாரத்வாஜ இருஷி பிப்ப லாதமுனிவர்பால் பிரத்தியக்கான்மவடிவத்தை வினவினர்:—ஹே பகவன்! வேதவேத்தாக்கள் கூறியுள்ள 16 கலையையுடையவனை நிரணயிக்கும்பொருட்டு யான் அநேகமுறை விசாரிததனன்; ஆனல், அபபுருடன் வடிவத்தை யானிதுகா றும் நிச்சயஞ்செய்திலன். முன்ன ரொருகாலத்தே கோசல தேசாதிபதியாய ஹிரண்யநாபராஜாவானவர் என்பால் வநதனர். அவர் மிகவும் விநயபூர்வகமாக 16 கலையுடைப் புருடனது வடிவத்தை என்பாற் கேட்டனர். அதைக்கேட்ட யான் கூறியதாவது:—ஹே அரசனே! நீ கேட்ட 16 கலையையுடைய புருடனை யானறியேன். இவ்வுலகத்தே யாவன் மோகவயத்தானே பொய் மொழிவனே, அப்பொய்யோனாகிய தரு இரண்டுலகத்தின் சுகரூபபலத்தை யடையாமல் பாக்கிய ரூப மூலசகிதநாசத்தையடையும். இவ்வாறு பொய் மொழியின் மகா துக்கரூப பலத்தை அறிந்த யான் கனவின்கண்ணும் பொய் புகலேன் எனின், நனவில் எங் ஙன் புகல்வேன்? ஆகையால், 'சுகேசர் 16 கலையுடைப்புருடனை யறிந்திருந்தும் எனக்குக்கூறவில்லை' யென்னுஞ் சங்கையை நீ நின்மனத்தின்கண்ணே ஒருகாலுஞ் செய்யற்க. ஹே பகவன்! இவ்வாறு இறைவனை நோக்கி யியம்பியபோது அவ்வா சன் மௌனமுற்றுத் தன் தேயத்தையடைந்தனன். அன்று முதல் என் மனத்தே 16 கலையுடைப்புருடனை யறியும் வேட்கை மிகவும் பற்றியிருந்தது, தாங்கள் கிருபைசெய்து அவ்வடிவத்தை யடியேனுக்குக் கூறவேண்டும். இவ்வாறு சுகேசர் வினவியபோது பிப்பலாதமுனிவர் சுகேசருக்குக் கூறியதாவது:—ஹே சுகேச! நீ 16 கலையுடைப்புருடனைக் கேட்டனை, அவன் மிகத் தூரத்திலில்லை; மற்றே, யாவனிடத்தே 16 கலையிருக்குமோ அவன் நின்றேகத்தே பிரத்தியக்கான்ம வடிவமாயிருப்பன். அவன் சர்வ ஜகத்வடிவ 16 கலைகட்கு அதிஷ்டானமாதலின், சர்வ ஜகத்தின் நியந்தாவாவன். இப்போது அப்பரமான்மதேவரூப புருடனுக்கு அத்விதீயரூபத்தன்மையை வெளிப்படுத்தும்பொருட்டு அப்புருடனினின்றும் 16 கலைகளினுற்பத்தியைக்கூறுவாம்:—ஹே சுகேச! பிரத்தியக்குருவமாய் இத் தேகத்தேயிருக்கும் பரமான்மாவே இவ்வுலக உற்பத்தியின்முன்னர் ஜராயு சருமம்

போலக் கட்டுப்படுத்தும் உபாதியைச்செய்ய இச்சித்ததா யிவ்வாறு விசாரித்தது :—பரமான்மாவாய யான் இததேகததேயிருந்த போதிலும் சர்வ இடத்தும் வியாபகனுவேன் ; விக்கிரியையற்றவனுவேன் ; அத்தகைய பரமான்மாவாகிய யான் கிளம்புகை, செல்கை, வருகை முதலிய குணங்களையுடைய சம்சாரத்தை யெவ்வுபாதியினுனே யடைவேன் ? என ஆராய்நது அந்தப பரமான்மா முதலில் பிராணன், அபானன், சமானன், வியானன், உதானன் என்னு மைந்து விருத்தியையுடைப் பிராணரூபக்கலையையுண்டாக்கியது. அந்தப் பிராணன் இத்தேகத்தினின்றும கிளம்புதற்கும, பரலோகததே செலலுதற்கும, பரலோகத்தினின்றும் வருதற்கும் காரணமாகும். பின் பரமான்மா சிரததைவடிவ வேறு கலையையுண்டாக்கியது. ஈண்டுச சுபகருமத்தே யேவும் ஆஸ்திக்யமதியே சிரத்தையாம். பின் கருமங்களைச்செய்தறகும அவறறின் பல போகத்திறகும் ஆதாரரூப ஆகாசாதி டஞ்சபூதரூப ஐநது கலையையுண்டாக்கியது. பின் ஞானசாதனரூப சுரோத்திராதி ஞானேநதிரியங்களைநது, கருமசாதனரூப வாக்காதி கருமேந்திரியங்களைந்து என்னும 10 இந்திரியவடிவ எட்டாவது கலையையுண்டாக்கியது. பின் இந்திரியங்களை யேவும மனரூப 9-வது கலையையுண்டாககியது. பின் மனத்தின் றிதியைசசெய்விககும அன்னரூப 10-வது கலையை யுண்டாக்கியது. பின் வீரியரூப 11-வது கலையை யுண்டாக்கியது, ஈண்டன்னததாலுண்டாய சாமர்த்தியம் வீரியமாம. பின் அவ்வீரியததினின்றும உண்டாகிய தூய்தாக்கும் தபமென்னும் 12-வது கலையயுண்டாக்கியது. பின் மநதிரரூப 13-வது கலையையுண்டாக்கியது, ஈண்டு வேதங்களின் அததியயனம மநதிரமாம். பின இலெளகிக வைதிககருமரூப 14-வது கலைய யுண்டாககியது. ஈண்டு, மநதிரசபதத்தால் வேதாத்தியயனததே இலக்ஷணை கூறியதன காரணம மநதிரரூப பிராஹ்மணரூப வேதங்கள் சாக்ஷாத பிராணனினின்றே வெளிபபடடதாகும.

“ ஸவஸ்ரைவ தொஷண்கவஸ்ஜ8 ஷஹிதூவெதஜ்ஷிஷரஜேதொயஜுஷெவெ-தஜு8 ।
ஸாஉவெஷெ ஸுஜவா-ஒஐிரவெ ” ॥

(பொ-ள்.) இருக்கு, யஜுர், சாபம, அதாவணம் என்னும் நான்கு வேதங்களும இம்மகா பரமான்மாவினுடைய சுவாசரூபமேயாம. என்னு மிச்சுருதியானது நேராய்ப பிராணனினின்றே வேதங்கள் வெளிப்படுகின்றனவெனக் கூறியிருக்கின்றதாதலின், சாமர்ததியரூபவீரியததினின்றும் அவ்வேதங்களினுறபத்தியுண்டாகவில்லை எனினும், அன்னததை ஆதிகாரணமாகவுடைய சாமர்ததியரூபம வீரியமும தவமுமாம். அவவீரியததாலும தபத்தாலும் அவ்வேதம் அத்தியயனுதிரூப விஸ்தாரத்தையடையுமாதலின், அவ்வேதம் அததியயனவாயிலாயே அவ்வீரியாதிகளினின்றும் வெளிப்படையாம். நேராய் வெளிபபடை யாகாதாமாதலின், அம்மநதிரபததததிறகு வேதாத்தியயனத்தின்கண்ணே இலக்கணைசெய்தல் பொருத்தமுடைத்தேயாம். அக்கருமததின்பின் பரமான்மா லோகரூப 15-வது கலையையுண்டாக்கியது, ஈண்டு அக்கருமங்களினின்றும உண்டாய சுகதுக்கரூப பலம் லோகமெனபபடும. பின் நாமரூப 16-வது கலையையுண்டாக்கியது, ஈண்டுச்

சரீராவச்சின்னசேதன வாசகமாகிய தேவதத்தன், யஞ்ஞதத்தன் என்பனவாதி சப்தங்கள் நாமமெனப்படும். 16-வது கலைவடிவ நாமம் முத்தர்கட்கும் நீங்குவ தில்லை; மற்றோ, அது பிரளயகாலபரியந்தம் ஸ்திரமாயிருக்கும். இக்காரணத் தானே சுருதியின்கண்ணே அந்நாமம் அநந்தம் எனக் கூறப்பட்டது. இப்பதினாறு கலைகளும் பரமான்மாவினின்றேயுண்டாயின. என 'ஸ ப்ராண மஸ்ருஜத ப்ராணாச்ச்ரத்தாம் கம் வாயுர்ஜ்யோதிராப: ப்ருதிவீந்த்ரியம் மநோந்நமந்நாத்வீர்யம் தபோ மந்த்ரா: கர்ம லோகா லோகேஷு ச நாம ச' என இச்சுருதியும்புகலகின்றது. இதன் பொருள் முன்மொழிந்தவாறே கொள்க. ஆன்மசாக்ஷாத்காரத்தையடைந்த முத்தனது திருஷ்டியினாலே இப்பிராணாதி சோடச (16) கலைகள் தமததிஷ்டான நிர்க்குண புருடனையடைந்து அதர்சன பாவத்தையடையும். ஸ்ரீ கங்கை யமுனை முதலிய நதிகள் கடலையடையாதவரை அவை தத்தமது பின்ன பின்ன நாமரூபத் தைத்தரித்திருக்கும், கடலையடையினோ தமது வேறு வேறாய நாமங்களையும் வேறு வேறாய ரூபங்களையும் விடுத்துக் கடலின் நாமரூபத்தையே தரிக்கும். அது போலவே முத்தனது பிராணாதி சோடசகலைகள் நிர்க்குண புருடனையடையாத வரையுமே தத்தமது வேறு வேறாய நாமரூபங்களைத்தரிக்கும், நிர்க்குணப் புருடனை யடைந்துவிடினோ தத்தமது வேறு வேறாய நாமரூபங்களைப் பரித்தியா கித்து அந்நிர்க்குண புருடனுடைய நாமரூபங்களைத்தரிக்கும். பிராணாதி 16 கலை களும் இலயபாவத்தையடைந்துள்ள புருடன் உண்மையாய் நாமரூபமற்றவ னுவன், நிரவயவனுவன், ஆநந்தவடிவனுவன், சுயஞ்சோதியாய அமிருதவடிவ னுவன். இரத சக்கிரநாபியின்கண்ணே அரா இருப்பதேபோலப் பிராணாதி 16 கலைகளுமிருக்கும். பரமான்மாவைத் தன்னான்மவடிவமாய்ச் சாக்ஷாத்கரிக்கும் புருடன் இத்தேக நாசத்தின் பின்னர் மீண்டும பிரமாதரூபமிருததியுவின்றை பயத் தையடையான். ஆகையால், அதிகாரி பிரஹ்மான்மஞானத்தை அவசியம் சமபா திக்கவேண்டும். ஹே மைந்த! இவ்வாறு பிப்பலாதமுனிவர் சுகேசரெனப் பெய ரிய பாரத்வாஜருக்கு ஆன்மோபதேசஞ்செய்து மீண்டும சர்வ இருடியரையும் நோக்கி இவ்வாறு கூறினர்:—ஹே சுகேசாதி சர்வ மறையவர்களே! எவ்வத் விதீயப் பிரஹ்ம ஸ்வரூபத்தை யாமுங்கட் குபதேசிததேமோ, இத்துணையேயா மறிவேம், இதனினும் மேலாக எவ்வஸ்துவையும யாமறிந்திலேம. பிரஹ்மத்தின் வாஸ்தவவடிவம் யாம் உங்கள்பொருட்டு உபதேசித்தேம்; இதனினும மேலாக வேறொருவஸ்து உபதேசிக்கத்தகுதியதின்றுமாதலின், அவ்வத்விதீயப் பிரஹ் மத்தை நீவிர் யாவரும் உங்களான்மரூபமாய் நிச்சயஞ்செய்யுங்கள் என்பது கருத் தாம். ஹே மைந்த! இவ்வாறு பிப்பலாதமுனிவர் சுகேசாதி யறுவர்க்கும் பிரஹ் மவித்தையை யுபதேசித்தபோது அவர்களியாவரும் பிப்பலாத முனிவரைத் தேவ தையையேபோல அருச்சித்துப் பூஜித்தனர். பின்னவர் கூறியதாவது:—ஹே பகவன்! தாங்கள் தயைசெய்து எங்களுடைய எல்லா ஐயங்களையும் ஒழித்தீர்கள், எங்களை மாயையினும் மேலான நிர்க்குண பிரஹ்மசாக்ஷாத்காரமடையுமாறு செய் வித்துத் தாங்கள் கிருதார்த்தராக்கினீர்கள். ஹே பகவன்! தங்களுடைய உபதே சத்தானே பிராஹ்மண பாவத்தையடைந்த யாங்கள் யாவரும் இன்றையதினத்தே

தங்களிடத்தினின்றும் பிரஹ்மவித்தன்மை வடிவத்தானே உற்பன்னமாயினேம்; ஏனெனின், '𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑌾𑌤𑌾𑌦𑍍𑌧𑌿 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌃' என்பதாதி சுருதிகளின்கண்ணே பிரஹ்மவித்தையை யடைவித்தே முக்கியப் பிராஹ்மண பாவப்பிராப்தி கூறப்பட்டுள்ளதாதலின், தாங்களே யெங்கள் தந்தைதாய், தங்களையன்றி யெங்கட்கொரு தந்தைதாய் கிடையாது; ஏனெனின், இவ்வுலகப பிரசித்த பிதாமாதாவோ இத்தேகவடிவ மித்யான்மாவையே உண்டாக்குவர், இத்தேக சம்பந்தத்தானே ஜீவர்கட்கு அநேகவகையாய துக்க அடைவுண்டாம. இவ்விஷயம மனுபகவானாலும் கூறப்பட்டுளது :—

> "𑌉𑌤𑍍𑌪𑌾𑌦𑌕𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌦𑌾𑌤𑍍𑌰𑍋𑌰𑍍𑌗𑌰𑍀𑌯𑌾𑌨𑍍 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌦𑌃 𑌪𑌿𑌤𑌾 ।
> 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌜𑌨𑍍𑌮𑌹𑌿𑌵𑌿𑌪𑍍𑌰𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑍇𑌤𑍍𑌯𑌚𑍇𑌹 𑌚 𑌶𑌾𑌶𑍍𑌵𑌤𑌮𑍍 ॥"

> " தூலவா கத்தைத் தருபவன் ஜனகன் றேலிலாப் பிரமபா வத்தை
> யேலவே தருவன் குரவனு மிவருள் இறுதியன் மேன்மைய னவன்
> சாலவே யரிய பிரமபா வத்தைத் தருதலாற் றருமஃதிகத்தும்
> மூலமாய்ப் பரத்து மிருந்துந்த் தியமாய் முதமளித் திருத்தலா னன்றே."

(பொ-ள்.) தூலதேகத்தை யுண்டாக்கும் பிதாவெனவும, பிரஹ்ம பாவத்தையடைவிக்கும குருவாகிய பிதாவெனவும இருதந்தையராவர்; இவ்விருவருள் பிரஹ்மபாவத்தையடைவிக்கும் குருரூப பிதா மிகவும் மேன்மையராவர்; ஏனெனின், அதிகாரிக்குப் பிரஹ்மோபதேசக குருவினால் பிரஹ்மவிற்றன்மைரூபத் தானேயுண்டாம் ஜன்மம் ஜீவித அவஸ்தையின்கண்ணேயும, மரணத்தின் பின்னரும், மற்றைய எல்லாக்காலத்தும் நித்தியமாம்; பிரஹ்மவித்வரூப ஜன்மத்திற்கு ஒருகாலும் அழிவுண்டாகாதாம். இவ்விஷயம் வேறு சாஸ்திரத்தின்கண்ணும் கூறப்பெறறுளது :—

> "𑌶𑌰𑍀𑌰𑌮𑍇𑌤𑍌 𑌕𑌰𑍁𑌤𑌃 𑌪𑌿𑌤𑌾 𑌮𑌾𑌤𑌾 𑌚 𑌭𑌾𑌰𑌤 ।
> 𑌆𑌚𑌾𑌰𑍍𑌯𑌶𑌾𑌸𑍍𑌤𑌾 𑌯𑌾𑌜𑌾𑌤𑌿𑌃 𑌸𑌾𑌸𑌤𑍍𑌯𑌾 𑌸𑌾𑌜𑌰𑌾𑌮𑌰𑌾 ॥"

> " தாயுந் தந்தையுந் தந்திடுந் தேகமோ ஜரையாம்
> மாயுந் தன்மையும் மருவுறும் மாசிலா னீந்த
> தூய தாகிய பிரமவிற் றன்மையோ தொலையா
> தாயஜர மமரமதாதலின் அரிதே."

(பொ-ள்.) ஹே பாரத! இவ்வுலகப் பிரசித்த தாய் தந்தையர் உண்டாக்குந் தேகமோஜராமரணத்தோடுகூடியதாம, பிரஹ்மவேத்தாவாய குரு அதிகாரிகட்குக் கொடுக்கும் பிரஹ்மவிற்றன்மைவடிவ ஜாதியோ நித்தியமாம், அஜரமாம், அமரமாமாதலின், பிரஹ்மவித்தையை யுபதேசஞ்செய்யுங் குரு உலகப்பிரசித்த தாய் தந்தையரினும் மிகவு மேன்மையராவர். ஹே பகவன்! காமக்குரோதாதி மகரங்களோடுகூடிய அவித்தைவடிவ தாண்டமுடியாத கடலினின்றும் தாங்கள் பிரஹ்மவித்யாரூபப் பேரோடத்தால் எங்களைத் தாண்டவைத்தீர்கள். இத்தங்களுடைய பேருதவிக்குக் கைம்மாறாக மூவுலகத்தும் யாதொன்றையும் கண்டிலேம்,

எப்பொருளைத் தங்கட்கர்ப்பித்து யாங்கள் தங்களுடைய இருணத்தினின்றும் முக்தராவேமோ அறியேம்? ஆகையால், ஞானசிரியராகிய தாங்கள் மகிழ்வுறும் பொருட்டு எங்களுடைய அநந்தங்கோடி நமஸ்காரமாகுக. எங்களுடைய நமஸ் காரத்தை மாத்திர மங்கீகரித்தே தாங்கள் மகிழ்வுறவேண்டும். ஹே மைந்த! இவ்வாறு சுகேசாதி முனிவராறுவருங் கூறியபோது பிப்பலாதமுனிவர் மகிழ்வுற்று ஆசீர்வாத வாயிலாய் அவ்விருடிகட்கு விடைதந்தனர். தாமும் அவ்விடம் விட்டுச் சுகமாகச்சென்றனர். மோக்ஷத்தையடைவிக்கும் இவ்வான்மஞானம் மகா பிரஹ்ம வேத்தாவாய ஞானசிரியரால் உபதேசிக்கப்படினும் தூயமனமுடைய அதிகாரி களையே அடைவுறும், மலின மனமுடையவர்க்கு அடையமுடியாதாம், அம்மனத் தூய்மை உபாசனையானே யடைவுறும், உபாசனையின்றி யுண்டாகாதாம். பூர்வம் நரசிம்ஹ பகவானது உபாசனையினானே தூயமனத்தையடைந்த தேவதைகள் பிர ஜாபதிரூப குருவின் உபதேசத்தானே பிரஹ்ம ஆன்மஞானத்தையடைந்துளார். இப்பதினேழாவது அத்தியாய ஆதியின்கண்ணே நீ பிப்பலாதமுனிவர் கூறிய பிரஹ்மவித்தையைக் கேட்டனை; அவை யாவற்றையும் கூறினேம். எப்பொருளைக் கேட்க இப்போதவா விருக்கின்றனேதா அப்பொருளை நம்பால் கேட்குதி

பதினேழாவது அத்தியாயம் முற்றிற்று

---

# ஸ்ரீ ஆத்மபுராணம்.

## பதினெட்டாவது அத்தியாயம்.



ஓம் ஸ்ரீ கணேசாயநம: ஸ்ரீ குருப்யோநம: ஸ்ரீ காசிவிஶ்வேஶ்வராப்யாம்நம: ஸ்ரீ சங்கராச்சார்யேப்யோநம:

முன்னர்ப் பதினேழாவது அத்தியாயத்தே அதர்வண வேதத்தின் பிரசின உபநிடதப்பொருள் நிரூபிக்கப்பட்டது:—இப்போது இபபதினெட்டாவது அத் தியாயத்தின்கண்ணே அவ்வதர்வண வேதத்தின் நரசிம்ஹ பூர்வோத்தரதாப நீய உபநிடதப்பொருளையும், ஈசாவாசிய உபநிடதப்பொருளையும் நிரூபிப்பாம:— ஆண்டுப் பூர்வாத்யாயத்தே நானுவகையாய பிரஹ்மவித்தையைச் சிரவணித்துத் திருப்தியையடைந்தவனுயினும், சீடன் பூர்வம் 17-வது அத்தியாய ஈற்றில நர சிம்ஹ பகவானுடைய உபாசக தேவதைகளின் விருத்தாந்தத்தைக்கேட்டு மீண் டும் வினவ விழைவுற்றனன். பிரஹ்மவித்தையின் சிரவணத்தானே அத்தியந்த மகிழ்ச்சியையடைந்த மனத்தனும், மகிழ்ந்த மனத்தானே விரிந்த கமலம்போன்ற முகத்தையுடையவனும் ஆகிய சீடன் தனது குருவைநோக்கிக் கூறியதாவது:— ஹே பகவன்! பூர்வம் தாங்கள் அடியேன்பொருட்டு ஐதரேயாதி அநேக முனிவ ரால் கூறப்பட்டுள்ளதும், இந்திர ஆதித்தியாதி அநேக தேவதைகளால் கூறப்பட் டுள்ளதும் ஆகிய நானுவகையாய பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள்; அதனைக் கேட்டு அடியேனது கோரசம்சாரத்தையடைவிக்கும் ஆவரணரூப அஞ்ஞானம்

நீங்கியது; இக்காரணத்தானே அடியேனுக்குச் சுயஞ்சோதியான்மாவே யெப்போதும் பிரதீதியாகின்றது. விஷபாசகத காமிக்குக் கன்னிருகபத்தே யெப்போதும் காமினியே பிரதீதியாவதேபோல, அடியேனுக்கடியேனுடைய இருகபத்தே ஆநந்தவடிவ ஆன்மாவே யெப்போதும் பிரதீதியாகின்றது; தங்களுடைய உபதேசத்தானே ஆன்மாவின் வாஸ்தவவடிவத்தை யுணர்ந்து அடியேனிப்போது கிருதகிருத்தியபாவத்தை யடைந்துளேனாகலின், ஆன்மசொரூபத்தின்கண்ணே அடியேனுக்குச் சிறிது மாத்திரையும் ஐயமில்லையாகலின், ஆன்ம நிர்ணயஞ்செய்வதன்கண்ணே அடியேனுக்கிப்போது சிறிதுமாத்திரையும் வினவவேண்டியதில்லையெனினும், பிதா மாதாக்கள் பாலகனோடு கொஞ்சுவதேபோலத் தாங்களும் என்னோடு கொஞ்சினீர்கள். அடியேன் அடிக்கடி வினவிய வினாக்கட்கு யாதொரு கலக்கமுமற்று உத்தரமருளியதே கொஞ்சியதாகுமாகலின், பாலபாவத்தை யங்கீகரித்து அடியேனுக்கு ஒரு பொருளையறிய வேண்டுமென்னு மிச்சைவடிவ கௌதூஹலமொன்றுளது; அதைத் தாங்கள் தயைகூர்ந்து அடியேன் பொருட்டுரைத்தல்வேண்டும். இப்போது சீடன் விளைபாட்டாகப் பூர்வம் சிரவணித்த சர்வ கதைகளையும் வருணிக்கின்றான்.—ஹே பகவன்! 1-வது அத்தியாயத்தே தாங்கள் இருக்குவேதத்தின் ஐதரேய உபநிடதப்பொருள் நிரூபிக்கும்போது ஐதரேய முனிவர் கூறிய ஆன்மஞானத்தைக் கூறினீர்கள். அது சனகாதி முனிவருக்கும் வாமதேவாதிய பிரஜைகட்கும் சம்வாதரூபமாயது, துவிஜருக் கத்தியர்க்குத் துர்லபமாயது; ஏனெனின், அவ்வெல்லாத் துவிஜருள்ளே எவ்வதிகாரி ஆன்மஞானத்தைச் சிரவணித்து ஜீவிக்கின்றானோ அடியேன்போன்ற பாக்கியவானாகிய சுரோதாவாய அவ்வதிகாரி இவ்வுலகத்தே துர்லபனையன்றோ? ஆன்மஞானத்தைக் கூறுகின்ற தங்களைப்போன்ற பாக்கியவானாய உபதேசகர்த்தாவும் துர்லபமேயன்றோ? அத்தகைய துர்லபமாய ஆன்மஞானத்தைத் தாங்கள் அடியேன்பொருட்டு அனுக்கிரகித்தீர்கள். 2-வது 3-வது அத்தியாயங்களில் தாங்கள் இருக்குவேதத்தின் கௌஷீதகி உபநிடதப்பொருளை நிரூபிக்கும்போது கௌஷீதகி முனிவர் கூறிய ஆன்மஞானத்தைக் கூறினீர்கள்; அம்முனிவர் கூறிய ஞானம் இக்காலத்தே குறைந்த சம்பிரதாயத்தோடு குலவுகின்றது; ஏனெனின், அம்முனிவர் கூறிய ஞானம் இக்காலத்தே ஒவ்வொரு விரக்தபுருடனிடத்தே பிருக்கின்றது; ஆனால், இத்தேயத்தே அந்தக் கௌஷீதகி சாகையை அத்தியயனஞ்செய்யும் பிராஹ்மணரிருக்கின்றனர் என அந்த ஞானத்திற்குப் பிரசித்தியின்றும். அம்முனிவர் கூறிய விஞ்ஞானத்தின்கண்ணே இந்திரபிரதர்த்தன சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள். அஜாதசத்துருபாலாகி சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும் கூறினீர்கள்; அவ்விருவர் சம்வாதமும் ஆச்சரியகாரணமாயதாம், கேட்பவர்களுடைய மதியை வளரச்செய்வது. 4-வது 5-வது 6-வது 7-வது அத்தியாயங்களில் யஜுர்வேதத்தின் பிருஹதாரண்யக உபநிடதப்பொருளைக் கூறும்போது யாஞ்ஞவற்கிய முனிவர் தாம்செய்த யாஞ்ஞவற்கிய ஸ்மிருதியென்னும் கிரந்தத்தின்கண்ணே சந்யாசிகட்கிவ்வாறுபதேசித்துளார்:—ஹே சந்யாசிகளே! யான் சூரியபகவானிடத்தினின்றும் அத்தியயனஞ்

செய்த பிருஹதாரண்யக உபநிடதம் முமுக்ஷுக்களால் அவசியம் அர்த்தத்தோடு
மறியத்தக்கதாம். அதன்கண்ணே கூறிய விஞ்ஞானம், மதுகாண்டம், யாஞ்ஞ
வற்கியகாண்டம், கிலகாண்டம் என்னும் முக்காண்டங்களால் பிரகாசிதமாம். இரு
புருடவம்சம் ஒரு ஸ்திரீவம்சம் என்னும் மூன்று வம்சங்களைக்கூறுவதாம். மதுப்
பிராஹ்மணத்தே பிரதானத்தன்மையானே முடிவையடைந்துளது. இத்தகைய
விஞ்ஞானத்தை உபாசனைபாகத்தை விடுத்துக்கூறினீர்கள். எப்பிருஹதாரண்யக
உபநிடத விஞ்ஞானத்தே மதுகாண்டத்தேயிருக்கும் சர்வ மந்திர அர்த்தத்தை
பிரகடமாமாறு செய்து சர்வ மதுகாண்டத்தின் மகா அர்த்தத்தைத் தாங்கள்
வெளிப்படுத்தினீர்களோ, அம்மதுகாண்ட மந்திர அர்த்தத்தின்கண்ணே கில
காண்ட அர்த்தத்தை யுள்ளடக்கித் தாங்கள் கூறினீர்கள். அம்மதுகாண்டத்தே
தாங்கள் தத்யங் அதர்வணருக்கும் அசுவநீ குமாரர்கட்கும உண்டாய சம்வாத
வாயிலாய் நாலுவகையாய பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள். அவ்வசுவநீ குமாரர்
கட்குப் பிரஹ்மவித்தையை யுபதேசித்தலானே இந்திரர் அம்முனிவரது சிரச்
சேதஞ்செய்ததையும், அசுவநீகுமாரர் அம்முனிவரைப் பிழைக்கவைத்ததையும்
கூறினீர்கள். 5-வது 6-வது அத்தியாயவடிவமாய யாஞ்ஞவற்கிய காண்டத்தே
முறைப்படி பிரசித்தித்த ஜல்பகதை வாதகதைகளைக் கூறினீர்கள். அவை
சிரத்தையுடையவர்க்கு ஞானத்தை யுண்டாக்குவதாம். அவ்விருகதைகளையும்
தாங்கள் அத்தியாயபேதத்தானே கூறினீர்கள். ஜனகராஜாவின் யாகசபையின்
கண்ணேயிருந்த ஆசுவலாதிமறையவர் கார்க்கியென்பவரின் இருதயத்தேயிருந்த
சம்சயத்தைத்தர்க்கரூப பலத்தானே அவர்கள் வெளிப்படுத்தினர்; அவற்றையெல்
லாம் யாஞ்ஞவற்கிய முனிவர் ஜல்பகதையானே பேதித்தனர், சாகல்லியப்பிராஹ்
மணருக்கோ சரீரசகிதஞ் சம்சயமொழித்தனர். ஈண்டு, பரஸ்பரம் ஜயிக்க
வேண்டுமென்னும் இச்சையுடன் சாஸ்திர அர்த்தவிசாரஞ்செய்தல் ஜல்பகதை
யாம். மிதிலாநாதனாகிய ஜனகராஜா இச்சம்சாரரூபவனத்தினின்றும் பயத்தை
யடைந்தனர், அவரை அம்முனிவர் வாதகதையினானே அவ்வனத்தினின்றும்
வெளிவருமாறு செய்தனர். அம்முனிவர் தமது மனைவியாய மைத்திரேயியை
வாதகதையினானே சமசாரவனத்தினின்றும் வெளிப்படுத்தினா பின்னம்முனிவர்
சந்யாச ஆசிரமத்தைக் கவர்ந்தனர். ஈண்டுத் தத்துவவஸ்துவை நிர்ணயம்செய்யும
பொருட்டுண்டாம் குரு சிஷ்யசம்வாதம் வாதகதையாம். 8-வது அத்தியாயத்தே
தாங்கள் யஜுர்வேதத்தின் சுவேதாசுவதர உபநிடதப்பொருளை நிரூபிக்கும்
போது சுவேதாசுவதரமுனிவா சந்யாசிகள் சம்வாதவாயிலாய் நாலுவகையாய
பிரஹ்மவித்தையைக் கூறினீர்கள். 9-வது அத்தியாயத்தே யஜுர்வேதத்தின்
கடவல்லி யுபநிடதப்பொருள் கூறும்போது யமராஜா நசிகேதா சம்வாதவாயி
லாய் நாலுவகையாய பிரஹ்மவித்தையைக்கூறினீர்கள். 10-வது அத்தியாயத்தே
யஜுர்வேதத்தின் தைத்திரீயக நாராயணீய உபநிடதப்பொருள் கூறும்
போது வருண பிதா பிருகு புத்திரசம்வாதவாயிலாய் நாலுவகையாய பிரஹ்
மவித்தையைக் கூறினீர்கள், வேநனெனப் பெயரிய கந்தருவனது சர்வான்ம
பாவரூப அனுபவத்தையும் கூறினீர்கள்; சத்தியாதி சர்வ சாதனங்களினும்
சந்யாச ஆசிரமத்தின் அதிகத்தன்மையையும் கூறினீர்கள். 11-வது அத்தி

யாயத்தின்கண்ணே ஜாபாலாதி 11 உபநிடதப்பொருள் கூறும்போது ஜாபாலாதி யுபநிடதங்களிற் கூறிய பரமஹம்ச சந்யாசத்தையும், பூர்வம் சம்வர்த்தகாதி மகாபுருடர் கவர்ந்தனர் என்பதையும், அதன்கண்ணே வைராக்கியமே காரணம், அதுவும் கர்ப்பதுக்கவிசாரத்தானும், மரணக்குறி யுணர்ச்சியினானும், அஷ்டாங்க யோகத்தானும அடையப்பெறும்; அச்சந்யாசத்தின்கண்ணே விரக்தர்கட்கே அதிகாரமென்பதையும், அந்தப் பரமஹம்சசந்யாசிகட்குச் சிகை யஞ்ஞோபவீதத் தியாகவாயிலா யேகதண்டம் தரித்தல் பாகியவேஷமென்பதையும், பிரஹ்மசர்யாதி தர்மங்களின் பாலனரூபம் ஆசாரம், ஆத்மஞானரூபம் முக்கிய ஆசாரம் என்ப தையும் மற்றுமநேகவிடயங்களையுங் கூறினீர்கள். 12-வது 13-வது 14-வது அத்தியாயங்களில் சாமவேத சாந்தோக்கிய உபநிடதப்பொருள் கூறும்போது உத்தாலகமுனி சுவேதகேது சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தை யையும், சனத்குமாரபகவான் நாரதமுனிவர் சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையையும், பிரஜாபதி இந்திரவிரோசன சம்வாதவாயிலாய் நானுவகை யாய பிரஹ்மவித்தையையும் கூறினீர்கள். 15-வது அத்தியாயத்தே சாமவேதக் கேநோபநிடதப்பொருள் கூறும்போது பிரஹ்மவித்தைவடிவ மாமதன்னையாகிய ஸ்ரீ உமாதேவியாரின் திருவருளானே, இந்திரர் யக்ஷரூபப்பிரஹ்மத்தைத் தரிசித்தமையைக்கூறினீர்கள். 16-வது அத்தியாயத்தே அதர்வணவேதமுண்டக உபநிடதப்பொருள் கூறும்போது பிரஹ்மாவானவர் அதர்வாமுனிவருக்குபதே சித்த பிரஹ்மவித்தையை அங்கிரா முனிவருக்கும், சௌனக முனிவருக்கும் உற்றசம்வாதவாயிலாய்க்கூறினீர்கள். 17-வது அத்தியாயத்தே அதர்வணவேதப் பிரசினஉபநிடதப்பொருள் கூறும்போது பிப்பலாதமுனிவருக்கும சுகேசாதியறு வருக்கும் உற்ற சம்வாதவாயிலாய் நானுவகையாய பிரஹ்மவித்தையைக் கூறினீர் கள். ஹே பகவன்! இவ்வாறு முன்னர் அடியேன் வினவியபொருளையெல்லாம் கூறி னீர்களாதலின், இப்போதும பாலகனாகிய யான் சிறிது பொருளை வினவ விழை கின்றனன்; தாங்கள் தயவுசெய்து விடையளித்தருளவேண்டும். யான் தங்கள் முன் வினவுமவிது அந்த ரஜ்ஜு நியாயமுறையாய் முற்கூறிய தங்களுடைய பொருளை மறந்து செய்கின்றேனில்லை; மற்றோ, தாங்களருளிய எல்லாப்பொருளை யும் மனத்தே நினைந்தே வினவுகின்றனனாதலின், இவ்வினாவிற்கு விடையைத் தாங் கள் தயவுசெய்து அவசியமருளிச்செய்யவேண்டும். அதாவது:—ஹே பகவன்! முன்னர் 17-வது அத்தியாய ஈற்றில் தாங்களிவ்வார்த்தை யருளினீர்கள்:—ஸ்ரீ நர சிம்ஹ பகவானது உபாசனையினானே தூயமனத்தையடைந்த தேவதைகள் பிரஜா பதிவடிவப் பிரஹ்மாவினுபதேசத்தானே பிரஹ்மான்மஞானத்தை யடைந்தனர் என்பதாக; அதைக்கேட்க மிகவும் விருப்புள்ளேனாதலின், தாங்கள் தயவுசெய்து அதனை யருளிச்செய்யவேண்டும. இவ்வாறு சீடனால் வேண்டப்பட்ட ஞானாசிரியர் அதர்வணவேதத்தேயிருக்கும் ஸ்ரீ நரசிமஹபகவானுடைய கதையைச்சீடனுக்குக் கூறத்தொடங்கினார்:—ஹே மைந்த! பூர்வம் யாம் கூறிய ஸ்ரீ நரசிம்ஹ பகவா னுடைய உபாசக தேவதைகள், சக்ஷு முதலியவற்றிற்கு அதிஷ்டாதாக்களாகிய சூரியாதி தேவதைகளே யாவர்கள். இப்போது ஸ்ரீ நரசிம்ஹ பகவானுடையு

திருமேனியை வருணிப்பாம்:—ஹே மைந்த! மனுடரூபத்தையும் சிம்ஹரூபத்தையும் உடையது நரசிம்ஹமாம். அந்த ஸ்ரீ நரசிம்ஹ பகவானே அதிகாரிகட்குபாசனைசெய்ய யோக்கியர், அவர் குரோதமுடையவராய்ச் சர்வப்பிராணிகளையும சம்ஹாரஞ்செய்வாராதலினுனே அவரே ருத்திரரூபர்; அவரே சர்வ ஜகத்தையுமுண்டாக்குவாராதலின் அவரே பிரஹ்மாவடிவினா; அவரே சர்வ ஜகத்தையும் காப்பாராதலின் அவரே விஷ்ணுரூபர்; 'ஸ ப்ரஹ்மா ஸ ஶிவஃ ஸ ஹரிஃ' எனச் சுருதியும் புகல்கின்றது. அதர்வண சிரமெனபபெயரிய உபநிடதத்தே கூறிய ருத்ரபகவானும் இநத ஸ்ரீ நரசிம்ஹ பகவானுடைய வடிவமேயாவா அநத ருதர பகவான் சரணடைந்த ஜீவர்களைக் காப்பாறறுபவர், கைலாசரூப சுவாக்கத்தையேனுமு, சத்துவவிருததிரூப சுவர்க்கத்தையேனும் அடைவுறற நீா யாரெனக் கேட்ட சர்வ தேவதைகட்குங் குருவாவர். அததேவதைகட்குத தமது சாவவியாபிவடிவ உபதேசத்தானே யாவினுமுள்ளாய தமது பிரதயக்பாவத்தைப போதித்து அக்கண்டுகொண்டிருநத தேவதைகளை யனுகரவுசெய்து தந்திருமேனியை யநதர்த்தானஞ்செய்தனா, அந்த உமாபதியாய பகவானுக்குப் பிரஹ்மா விஷ்ணு முதலிய சர்வ தேவதைகளும் விபூதிரூபங்களாவர். அவ்வுமாதேவியாரோடுகூடிய ருதரபகவான் வடிவஆன்மாவைககண்டு மகிழ்நத மனததையுடைய சர்வ தேவதைகளும் சர்வ ஜனங்களபேரிலும் தயைபுரிநது தமது சமீபததேயிருக்குமு அதிகாரிகட் கிவ்வாறு கூறினா:—ஹே அதிகாரிகளே! தேவதைகளாகிய யாஙகள் ஸ்ரீ உமாதேவியாரோடுகூடிய மகா தேவரூப அமிருததைத நேத்திரரூபப்பாத்திரததானே குடித்தேமாதலின், மிகவும் பாக்கியமுடையேம், மரணமற்ற அமிருதமாயினேம, சிரததையோடும் பகதியோடும் அநத ருத்ரபகவானையே யாராதிததேம். அதனுனே, பாமஜோதியாய ஆநந்தவடிவ அதவிதீய ருத்ர பகவானை எங்களான்மவடிவமாயடைநதேம, அவரையடைநதையானே யாங்கள் ஜன்மமரணுதி சாவ துக்கங்களுமறறவராயினேமாதலின், இபபோது யாங்கள் எங்களுடைய இநதிராதி தேவதாவடிவததை எங்களான்மவடிவமா யொருகாலும் யாங்கள் எண்ணுவதேயில்லை; மறறே, அவ்வுமாபதியாய ருத்ர பகவானே எங்களான்மாவாவர். அல்லது, காமதேவரை நஷ்டப்படுத்தும் உமாபதியாய ருத்ர பகவானை யாங்கள் எங்களான்மரூபமாயறிநதுளேமாதலின், எங்கட்குக் காமரூப சத்துருவுமு கோப முதலிய சததுருக்களும் இப்போது சிறிது மாத்திரையுமு அநர்த்த அடைவைசசெய்யமுடியாது. அக்காமரூப சத்துரு இவ்வுலகத்தே வஞ்சகனுகிய சூதாடியானவன் சிறிது தனத்தை யாட்டத்திற்கட்டி உலகரது சர்வ தனங்களையும் அபகரிப்பதேபோலக் காமனுமு அத்தியநதந் துசசமாகிய பெண்வடிவதனத்தைக்கட்டி உலகருடைய தர்மாதிரூப சர்வ தனத்தையும் அபகரிப்பனுதலின், இக்காமன் மிகத் தூர்த்தனுவன். அல்லது, சர்வ தேவதைகளின் ஆன்மவடிவ ருத்ரபகவான் எஙகளுடைய இருதயத்தே யெப்போதும் நிவாசஞ்செய்வாராதலின், தேவதைகளியாவரும் எங்களிருதயத்தே நிவாசஞ் செய்வர். ருத்ர பகவான் நமது பிராண அபானமத்தியில் இருந்து அவறறைத் தத்தமது காரியத்தே பிரவிருததிப்பர். ஸ்தூலசூக்ஷ்மகாரணமென்னும் 3 வாசசியார்த்தங்களோடு தாதாத்மியபாவத்தை யடைவுற்ற அகாரம் உகாரம

மகாரம் என்னும் 3 மாத்திரைகளையுடையது ஓங்காரரூபப் பிரணவமாம், அந்தப் பிரணவத்திலும் ருத்ரபகவான் துரியரூபத்தானே மேலாக நிகழ்வர். மனத்தைப் பிரதானமாகவுடைய பிராண இந்திரியாதிகளின் சமுதாயரூப சூக்ஷ்ம லிங்க சரீரத்தையும் அந்த ருத்ரபகவானே சாக்ஷிரூபமாய்ப் பிரகாசிப்பர். படமானது நானாவகையாய சித்திரங்கட்கு ஆதாரமாயிருப்பதேபோலச் சூக்ஷ்ம லிங்க சரீரபடமும் நாலஜகதவடிவ சித்திரங்கட்காதாரரூபமாம். சூக்ஷ்ம லிங்க சரீரத்தே அவ்வபபொருளை விடயம்செய்யும் பசி தாகம் காமம் குரோதம் முதலியவற்றின் சூக்ஷ்ம அவஸ்தைவடிவ அநேகங்கோடி வாசனையிருக்கும்; அவ்வாசனையினானே இவ்வெல்லாச சம்சாரமும் பிரவிருத்திக்கும் அத்தகையலிங்க தேகத்தையும் ருத்ரபகவானே பிரகாசிப்பர். அகாரம் உகாரம் மகாரம அர்த்தமாத்திரையென்னும் மூன்றரை மாத்திரையையுடைய பிரணவ மந்திரத்தோடு தாதாத்மிய பாவத்தை அடைவுற்ற ருத்ரபகவானுக்கு இப்பதினெண்ணாமங்களை வேதவேத்தாக்கள் கூறியுள்ளார்கள்:—ஓங்காரம், பிரணவம், சர்வவியாபி, அநந்தம், தாரகம, சூக்ஷ்மம், சுக்லம், வைத்யுதம், பரப்ரஹ்மம், ஏகம, ஏகோருத்ரம, ஈசானம, பகவான், மஹேசுவரம், மகாதேவம், விஷ்ணு, பிரஹ்மா, பிரஜாபதி என்பன 18 நாமங்கள். இனி முறைப்படியே யிந்நாமங்கட்குப பொருள்கூறுவாம்:—உச்சரிக்கப்பட்ட இவ்வருத்திரரூப பிரணவம் இவ்வுலகருடைய பிராணன்களைச சிரரூப ஊர்த்வஸ்தானத்தின்கண்ணே அடைவிக்கும். அல்லது மேலாய உலகத்தையடைவிக்கும். ஆகையால வேதவேத்தாக்கள் அந்தப பிரணவரூப ருத்ரபகவானை ஓங்காரமென அழைத்தனா (1) ருத்ர பகவான் தமது பிரஹ்மணாதி பகதஜனங்கட்கு இருக்கு முதலிய நான்கு வேதரூப சப்தபரஹ்மத்தை யடைவிப்பர்; அல்லது, பூவுலகமே முதலாக பிரஹ்மலோகம் வரை எல்லா லோகங்களினுமிருக்கும் நானாவகையாய ஆநந்தங்களையடைவிப்பராதலின், பிரணவமென அழைத்தனர். பக்தஜனங்களின் துக்கசகித பாவாதி சர்வ விகாரங்களின் ஆத்யந்திக இலயம் உருத்ரபகவானிடத்திருந்தே யுண்டாமாதலின், பிரணவமென அழைத்தனர். (2) அரைத்த எட்பிண்டத்தையும் கனமாகிய தயிர்ப்பிண்டத்தையும் தைலகிருதாதிரூப சிநேகம் தன்வடிவத்தானே உள்ளும் புறம்பும் வியாபிப்பதேபோல உருத்ர பகவானும் தமதஸ்திபாதிப் பிரியரூபத்தானே சர்வ ஜகத்தையும உள்ளும் புறம்பும் வியாபித்திருப்பாராதலின், சர்வ வியாபியென அழைத்தனர். 3, ருத்ரபகவான் தேசபரிச்சேதம் காலபரிச்சேதம் வஸ்து பரிசசேதம் என்னும் மூன்றுமற்றவா, அதிகாரிகட்கு இருதயத்தே உபாசனையினானே பிரதீதியாவராதலின், அநந்தமென அழைத்தனர் (4) ருத்ரபகவான் தமது பக்தஜனங்களைப பிரஹ்மவித்தையினுபதேசத்தானே துக்கரூப சம்சார சமுத்திரத்தினின்றும் தாண்டவைப்பராதலின், தாரகமென்றழைத்தனர். (6) ருத்ரபகவான் சரவ சரீரங்களினும அத்தியந்த சூக்ஷ்ம ஜீவரூபமாயிருப்பராதலின், சூக்ஷ்மமென்றனர். ஒரு கேச நுனியின் சததமபாகத்திலும் சததம பாகமேபோல ருத்ரபகவான் ஜீவரூபமாய்ச சூக்ஷ்மமாவர், அச்சூக்ஷ்மத்தன்மையும் அந்தக்கரணாதி உபாதிகளின் சமபந்தத்தானேயாம்; உண்மையாயின்றும்.

உண்மையாயோ ஆகாசாதி பெரும்பொருள்களினும் பெரிதாம். 'உஜுஷொ உஜீயாகு' அல்லது, யோகிகட்குப் பரசரீரப் பிரவேசகாரணம் அவர் தம்பிராணனும், அது பரசரீரத்தேயிருக்கும் நாடி முதலிய சர்வ சூக்ஷ்ம அங்கங்களில் பிரவேசிக்குமாதலின், அத்தியந்தம் சூக்ஷ்மமாம், அதனினும் ருத்ரபகவான் அத்தியந்தம் சூக்ஷ்மமாவராதலின், சூக்ஷ்மமென அழைத்தனர் (7) இந்த ருத்ர பகவான் தமது பக்தஜனங்களின் அவித்தை அஸ்மிதை இராகம் துவேஷம் அபிநிவேசம் என்னும் பஞ்சக்கிலேசகங்களை அத்தியந்தம் நீக்குவராதலின், சுக்கிலமென்றனர். (8) ருத்ரபகவான் நிர்க்குண சாக்ஷிரூபமாயிசசங்காதத்துள்ளே பிரகாசிப்பர்; சூரியாதி சகுணரூபத்தானே பாகியப் பிரகாசஞ்செய்விப்பாராதலின், வைத்யுத என வழைத்தனர். ருத்ரபகவான் ஆகாசாதி சர்வ ஜகத்தினும் மகானும், தமதிருபபு விளக்கத்தைக்கொடுததுச் சர்வ ஜகத்தின் விருத்திகாரணமாவாராதலின், பரப்பிரஹ்மம் என அழைத்தனர் (9) ருத்ரபகவான் சர்வ ஜகத்தின் உற்பத்தி ஸ்திதி இலயஞ்செய்வாராதலின், அவரே சர்வ ஜகத்வடிவமாயிருபபர், ஜகத்காரணரூப ருத்ரபகவான் அஞ்ஞானவபத்தானே கற்பிதபேதமுடையவராய்த்தோற்றினும், உண்மையாய்ச் சர்வ பேதமும் அற்றவராதலின், ஏகமென வழைத்தனர். (10) ருத்ரபகவான் சர்வபேதமுமற்ற அத்விதீயரூபர், தமது மாயா சக்தியினுனே சர்வ ஜகத்தையும காப்பாற்றுபவர், தமது பக்தஜனங்கட்குத துரீயபதத்தையடைவித்துச் சர்வ துக்கங்களையும் நீக்குபவராதலின், ஏகோருதரரென அழைததனர். (11) படமொருகால சங்கோச முடையதாயிருககும, மற்றொருகால் விரிவுடையதாயிருக்குமாறு ருதரபகவானும் ஜகத்தின் பிரளயகாலத்தின்கண்ணே சங்கோசமுடையவராயிருப்பா ஜகத்தினுற்பத்தி காலததே விகாசமுடையவராயிருப்பர். சர்வ ஜகத்தையும காபபாறறுபவா, சாவ ஜீவாகளின் புத்திக்குங காரணரூபர், அப்புத்தி முதலியவற்றின் இராகத்வேஷாதி சாவ தருமமுமற்றவராதலின், ஈசானனென்றனர். கருத்திதுவாம்:—ருத்ரபகவானே, சாவ ஜகததிறகும் அபின்ன நிமிதத உபாதானகாரணமாவர், புத்திமுதலிய சாவ ஜகததினுமுள்ளாவா, விஷமத்தன்மை முதலிய தோஷங்கள் அற்றவராவராதலின் அந்த ஈசானசபதம முக்கியமாக ருத்ரபகவானிடததே பொருநதும் 'ஈ.ஸீரயாமொ அதிஉஜஹூஉாந8' என்பதாதி சுருதிகளில் ஜீவர்கள் பாதநதிரர்கள் எனபபட்டுளராதலின் ஜீவர்களிடத்தே ஈசானசப்தம் முக்கியமன்றும்; மற்றோ, கௌணமாம். ருத்ர பகவான் சர்வ ஜகத்தையும தத்தங் காரியத்தே பிரவிருத்திப்பாராதலின் வேதவேததாக்கள் இவ்வாறு ருத்ர பகவானைத் துதிக்கின்றனர். இந்த ருத்ர பகவான் அசுரர்களோடு யோர்செய்யுங்காலத்தே அநேக குணங்களோடு கூடியவராவராதலின் அவரே மகா சூரவீரர். அல்லது ருத்ர பகவான் தமதாத்ம சாக்ஷாத்காரரூப பலத்தானே காமக்குரோதாதி உட்சத்துருக்களைப் பக்ஷிபபாராதலினுனும் அவரே மகா சூரவீரர், ருத்ர பகவான் காமரூப மன்மததேகத்தைச் சாம்பராக்கினராதலின் ருத்ர பகவானை ஸ்மரதேகதககென்பர், ஹே ருத்ர பகவன்! அதிகாரிகளாகிய யாங்கள் தங்களுடைய ஸ்துதிரூப வசனங்களினுனே யெப்போதும் தங்களை ஆராதிப்பேம். தாங்கள் சர்வ ஜீவர்களின் இருதயகமலத்தே யெபபோதும் நிவாசஞ்செய்பவராவீர். தங்கட்குத் தங்களுடைய ஸ்துதியே பிரீதி ஹேதுவாம்.

ஹே ருத்ரபகவன்! கடத்தைப்போலும் விசாலமான பாலிருக்கும் ஸ்தானரூப உதஸ்(மடி) எவற்றிற்கோ அத்தகைய புதிதாய்க் கன்றீன்ற பாற்கறவாத கோக்கள் ஹூம்காரரூப சிநேக சப்தங்களால் தமது கன்றுகளை அழைப்பதேபோலப் பரமாநந்தரூபப் பாலோடுகூடிய தங்களுடைய ஸ்துதிரூப கோக்கள் ஆநந்தரூபப்பாலை யடைவிக்கும்பொருட்டு அன்பாகளாகிய கன்றுகளா மெங்களைப் பிரேமையோடுகூடத் தானே அழைக்கும்; கன்றுகளாகிய எங்களது முயற்சியினபேக்ஷையைச் செய்வதில்லை; அதனாலே, தங்களுடைய ஸ்துதிரூபகோக்கள் எங்களது சர்வ துக்கங்களையும் நாசஞ்செய்வனவாம். இவ்வாறு வேதவேத்தாக்கள் ஈசானனெனப் பெரிய ருத்ர பகவானை யெப்போதுந் துதிபுரிவர், (12.) இந்த ருத்ரபகவான், சம்பூர்ணஐசுவர்யம், சம்பூர்ணதருமம், சம்பூர்ணமாயகீர்த்தி, சம்பூர்ணஸ்ரீ, சம்பூர்ணஞானம், சம்பூரணவைராக்கியம் என்னும் அறுவகையாய பகங்கட்காசிரயமாவாராதலின், வேதவேத்தாக்கள் அவரைப் பகவானென அழைத்தனர். (13) இவ்வுலகத்துள்ள அரசர்களியாவரும் ஒரு சிறிது தேசத்தேயிருக்கும் பிராணிரூப பூதங்கட்கீசுராரவர். அநேகப் பிராணிகளினும் வேறாக இருப்பர், ருத்ர பகவானே ஆகாசாதி பஞ்சமகா பூதங்கட்கு மீசுரராவர், அவற்றினுற்பத்தியாதி காரணமாதலின அவற்றிற்கபின்ன நிமித்த உபாதானகாரணமாவாராதலின் வேதவேத்தாக்கள் அவரை மகேசுரரென அழைத்தனர். (14) ஆநந்தவடிவ ஆன்மாவினும் மகிமையாம, ஸ்வப்ரகாச அத்விதீயரூபமாம், சச்சிதாநந்தவடிவமாம், சர்வ பேதமும் அற்றதாம, இத்தகைய மகா ஆன்மாவைப் பிரஹ்மவித்யாரூப உமாபதியாகிய ருத்ர பகவான் எப்போதும் தம்மான்மவடிவமாயே காண்பவராதலின் வேதவேத்தாக்கள் அவரை மகாதேவரென்றனர். சர்வ ஜகத்திற்கும் சத்தாஸ்பூர்த்தியைக்கொடுக்கும் ருத்ர பகவான் சர்வ ஜகத்தின்கண்ணும் சத்தாதிரூபமாய்ப் பிரவேசிப்பாராதலின் வேதவேத்தாக்கள் அவரை விஷ்ணுவென்றனர். அல்லது அந்த ருத்ர பகவானிடத்தே யோகி அபேதரூபமாய்ப் பிரவேசிப்பனாதலின வேதவேத்தாக்கள் அவரை விஷ்ணுவென்றனர். ருத்ர பகவான் யாண்டும் வியாபகத்தன்மைவடிவ பிரஹ்மத்தன்மையினாலே யாவினு மதிகராவர்,* சர்வப் பிரகாசத்திற்கும் நியந்தாவாவாராதலின் அந்த ருத்ர பகவான் நரசிம்ஹ பூர்வதாபநீயத்தே மஹாவிஷ்ணுவெனப்பட்டனர். ஆண்டுப் பூர்வதாபநீயத்தே

> “உக்ரம் வீரம் மஹாவிஷ்ணும் ஜ்வலந்தம் ஸர்வதோமுகம் ।
> ந்ருஸிம்ஹம் பீஷணம் பத்ரம் ம்ருத்யும்ருத்யும் நமாம்யஹம்” ॥

இவ்வேகாதச பதங்களையுடைய மந்திரத்தே மகாவிஷ்ணுரூப நரசிம்ஹ பகவானே பிரதிபாதிக்கப்பட்டுளார். அம்மந்திரம் 32 அக்ஷரவடிவ அனுஷ்டுப் சந்தமுடையதாம், அம்மந்திரத்தின் சுரவிசேஷரூபம் சாமத்தானே உச்சாரணமாம். அம்மந்திரம் பிரணவாதி யங்கமந்திரங்களோடு கூடியதாம், 4 பாதங்களோடுகூடியதாம். இத்தகைய மந்திரத்தானே கூறப்பட்ட ஸ்ரீ நரசிம்ஹ பகவான் அதிகாரிகளா லவசிய முபாசிக்கத்தக்கவர். ஹே மைந்த! இந்தப் பிரணவரூப ருத்ரரூப ஸ்ரீ நரசிம்ஹ பகவான் கேவலம் அம்மந்திரார்த்தரூபத்தானே

உபாசிக்கத்தக்கவரல்லர் ; மற்றோ, மகாசக்கிரத்தின் நாபிரூபத்தாலும் உபாசிக்கத் தக்கவராவர். அம்மகாசக்கிரத்தின் வடிவத்தை யாசிரியர் இவ்வாறு வருணித்துளார் :—முதலில் ஓங்காரரூபப்பிரணவத்தை யெழுதுக. அந்தப் பிரணவத்தின் வெளித்தேயத்தே சுதர்சனமந்திரத்தின் ஆறக்ஷரங்களோடுகூடிய ஆறு கோண முடைய கமலமெழுதுக, அதன் பாகிய தேயத்தே அஷ்டாக்ஷரமந்திரத்தின் அஷ்டாக்ஷரங்களோடுகூடிய அஷ்டகோண முடைய கமலமெழுதுக, அதன் பாகிய தேயத்தே 12 அக்ஷரமந்திரத்தின் 12 வருணங்களோடுகூடிய 12 கோண முடைய கமலமெழுதுக, அதன்பாகிய தேயத்தே மாத்ருகாதி 16 சுரங்களோடுகூடிய 16 கோணமுடைக் கமலமெழுதுக, அதன்பாகிய தேயத்தே முற்கூறிய அனுஷ்டுப் சந்த 32 அக்ஷரங்களோடுகூடிய 32 கோணமுடைக் கமல மெழுதுக, பின் மாயாபீஜததாலும் பூவலயத்தாலும் மாதருகா வருணங்களாலும் அச்சக்கிரத்தின் பாகியத்தைச் சுற்றுக. அறுகோணமே முதலாக 16 கோணம் வரை ஒவ்வொருகோணரூப தலத்தைப பிந்து சகித ஈகாரத்தானே சுறறுக. இதன் பெயர் நரசிமஹமெனப் பெயரிய மகாசக்கிரமாம். 'ஷட்கோணஸ்ய ஸுதர்ஶனம் வஸுதளேஷ்வஷ்டாக்ஷரம் | பாஹ்யே த்வாதசபத்ரகே த்வாதசாக்ஷரம் ஷோடசாரே ஸ்வரான் || த்வாத்ரிம்ஶத்தளபத்ரகே த்வனுஷ்டுபம் ஸம்வேஷ்டிதம் மாத்ருகம் | ஏதஸ்யாக்ரவஹ்னி பீஜவலயம் சக்ரம் ந்ருஸிம்ஹாஹ்வயம் ||' இதன பொருளை முற்கூறியபடியே யறிந்துகொள்க. இத்தகைய மகா சககிரததே ரத சக்கிர நாபியைப்போலிருக்கும் பிரணவரூப நரசிம்ஹ பகவான் அதிகாரிகளால் அவசியம் உபாசனைசெய்பத் தக்கவர். இவ்வாறு முறகூறிய மந்திரார்த்தரூபரும் மகாசக்கிர நாபிரூபரும் பாற்கடலின்கண்ணே விஷ்ணுரூபமாயிருபபவரும், சாவப் பிராணிகளின் இருதயாதிகளிடத்தேயிருப்பவரும் ஆகிய ஸ்ரீ நரசிம்ஹ பகவானை யுபாசனை அதிகாரிகள் நிரந்தரம் செய்யவேண்டும், செய்பவர் மகா சம்சார சமுத்திரத்தைக் கோவினடிபோல அற்பமாயெண்ணித் தாண்டுவாராதலின், அதிகாரிகள் ஸ்ரீ நரசிம்ஹ பகவானதுபாசனையை அவசியம் செய்க (16) சிருஷ்டியையுண்டாக்கும் நான்முகமுடைய பகவானை வேதவேத்தாக்கள் பிரஹ்மாவென்பர். அந்தப் பிரஹ்மாவே சமஷ்டி சூக்ஷ்மரூபமாய் வியஷ்டி ஸ்தூல சரீரங்களை யுண்டாக்குவாராதலின், வேதவேத்தாக்கள் அந்தப் பிரஹ்மாவைப் பிரஜாபதியென அழைத்தனர். அவர், பொன்மயமாகிய இந்தப் பிரஹ்மாண்டலோகத்தேயிருக்கும் இப்பூமிரூபமும் பொன்மலையைக் கர்ணிகையாயுடையதும் ஆகிப கமலத்தே சத்தியலோகத்தே தேவதைகட்குபகாரம்செய்யும்பொருட்டு இருப்பா. அந்தப் பிரஹ்மாவாகிய பிரஜாபதியும் ருத்ரரூப ஸ்ரீ நரசிம்ஹபகவானது வடிவமேயாவர். இத்துணைக் கிரந்தத்தானே ஓங்காராதி 18 நாமங்களின் பிரசங்கவாயிலாய் நரசிம்ஹ பூர்வதாப நீயத்தின்கண்ணே கூறிய பிரணவத்தைக் கவுணமாகவுடையதும், முற்கூறிய அனுஷ்டுப் சந்தரூப மந்திரத்தைப் பிரதானமாகவுடையதும் ஆகிய சகுணவித்தையின் வடிவத்தை நிரூபித்தாம். இனி முற்கூறிய அனுஷ்டுப் சந்தயடிவ மந்திரத்தை கௌணமாகவுடையதும் ; பிரணவத்தைப் பிரதானமாக வுடையதும் ஆகிய சகுணவித்தையின் வடிவத்தைக்கூறுவதும், கேவலப் பிரணவத்தை பிரதானமாகவுடைய சகுணவித்தையின் வடிவத்தைக் கூறுவதும், துரீ

யப் பிரணவத்தைப் பிரதானமாகவுடைய நிர்க்குணவித்தையின் வடிவத்தைக்கூறுவதும் ஆகிய நரசிம்ஹ உத்தரதாபநீயத்தின் பொருளை நிரூபிக்கும்பொருட்டு முதலில் ஸ்ரீ நரசிம்ஹபகவானுடைய உபாசகர்களாகிய தேவதைகளின் ஜிஞ்ஞாசையைவருணிப்பாம்:—ஹே மைந்த! முன்னொருகாலத்தே அக்கினி முதலிய சர்வதேவதைகளும் பிரஜாபதியின் சமீபத்தேசென்றனர். அவர் தமது மானசியெனப் பெயரிய பிரியையோடு அபின்னதாளஜச நாமதேய பரிபக்கதந்தேயிருப்பர், யாரினும் முற் சிருஷ்டசோபையுடையராவர், வேதவேத்தாக்கள் பிரஹ்மாவென அவரைக் கூறுவர். அவ்வக்கினிமுதலிய தேவதைகள் பிரஜாபதியின் சமஷ்டி ஸ்தூலரூப விராட்சரீரத்தின்கண்ணேயிருப்பர், அனுஷ்டுப் சந்தரூப மந்திரத்தின் வித்தையின்கண்ணே பிரஜாபதியின் சிஷ்யத்தன்மையானே குசலர் பிரணவத்தைப் பிரதானமாகவுடைய பிரஹ்மாத்மபாவத்தை யுணர்த்தும் வித்தையையுடைய இச்சித்தவ்ரூப, முன்மொழிந்த வித்தையினானே தூயமனத்தையுடையவரும் ஆகிய அக்கினி முதலிய தேவதைகள் பிரஜாபதியை நோக்கித் தண்டம்போல நமஸ்கரித்து தங்கள் இருகரத்தையும் கூப்பி இவ்வாறுகூறத்தொடங்கினர்:—ஹே பகவன்! முன்னர்த்தாங்கள் எங்கள்பொருட்டுச் சர்வ மந்திரத்தின்கண்ணும் ராஜாவடிவ அனுஷ்டுப் சந்தரூபமந்திரம் பிரணவாதிபஞ்ச மந்திரங்களோடும் சக்தியோடும் சாம உபாசனையோடும், மகா சக்கிரத்தோடும் கூறினீர்கள் அம்மந்திர ராஜா, மிருத்தியுபயத்தை நீக்குவதாம், அதன் நிரூபணத்தே தாங்கள் சுருக்கமாய் நான்குபாதமுடைய பிரணவமந்திரத்தையும் கூறினீர்கள். அந்தப் பிரணவம், தன்னான்கு பாதங்களின் வாச்சியரூப நால்வகை யான்மாவோடு அபின்னமாம். ஹே பகவன்! இச்சம்சாரரூப அக்கினியால் மிகவும் தபிக்கப்பட்ட தேவதைகளாகிய எங்கட்குத் தாங்கள் கிருபைசெய்து பிரணவத்தை யுபதேசிக்கவேண்டும், பிரணவத்தானே பிரதிபாதிக்கப்பட்ட அத்தியந்த மறியமுடியாத ஆன்மாவை யுபதேசிக்கவேண்டும். ஹே மைந்த! இவ்வாறாய வினாவை அக்கினி முதலிய தேவதைகள் பிரஜாபதியிடத்தே செய்தபோது பிரஜாபதியானவர் தேவதைகட்கிவ்வாறுபதேசித்தனர்:—ஹே தேவதைகளே! நீங்கள் முன்புபாசித்த மந்திரராஜாவிற்கு நான்குபாதங்களுளவாதலின் அம்மந்திரத்தை நான்கு விபாகஞ்செய்து, அந்நான்கு விபாகங்கட்கு முறைப்படி பிரணவமந்திரத்தின் நான்கு மாத்திரைகளில் சேர்க்குக. பின் எந்நரசிம்ஹ பகவானைப் பூர்வதாபநீயத்தின் மந்திரராஜாவின்கண்ணேயிருக்கும் 11 பதங்கட்கு விசேஷசகிதமாய அர்த்தரூபத்தானே கூறினேமோ, அந்நரசிம்ஹ பகவானைச் சர்வ பதார்த்தங்களும் அற்றதாய துரீய இலக்ஷியவடிவமென வுணர்ந்து முறைப்படி பிரணவமந்திரத்தின் நான்கு மாத்திரைகளின் வாச்சியார்த்தரூப அம்மந்திர ராஜாவின் நான்கு பாதங்களின் வாச்சியார்த்தரூப ஆன்மாவின் கற்பிதமாய நான்கு பாதங்களோடு இலக்ஷியத்தை யபேதசிந்தனம்செய்க. இவ்வதிகாரி நரசிம்ஹ பகவானுக்குப் பிரஹ்மா, விஷ்ணு, ருத்ரன், சர்வேசுரன் என்னும் நான்குவடிவத்தைக் கற்பித்து முறைப்படி நாபி, இருதயம், புருவஇடை, பத்தாவது வாயில் என்னும் நான்கிடங்களில் ஸ்ரீ நரசிம்ஹ பகவானை அம்மந்திரங்களானே பூஜைசெய்க. ஹே தேவதைகளே! ஓங்கார

ரூபப் பிரணவத்திற்கு அகாரம் உகாரம் மகாரம் நாதம் என நான்கு மாத்திரைக ளுண்டு. அவற்றுள், ஒவ்வொரு மாத்திரை தூலசூக்ஷ்மாதிபேதத்தானே நன் னான்குவகையாகும். அகாராதிவர்ணங்களின் வைகரியென்னும் தூல அவஸ் தையோ வாக்கின்கண்ணேயிருக்கும், மத்யமையென்னும் சூக்ஷ்மாவஸ்தை இருதயதேயத்தேயிருக்கும், பசியந்தியென்னும் பீஜாவஸ்தை குண்டலியின் கண்ணேயிருக்கும், பரையவஸ்தையோ சாக்ஷிரூபமா யெவ்விடத்தும் வியாபகமாம். இவ்வாறு அகாராதி நான்கு மாத்திரைகள் நன்னான்கு பிரகாரமாதலின் அம்மாத் திரைகளின் சமுதாயரூபப்பிரணவம, 16 அவயவங்களையுடையதாய்ச் சித்தமாம். அல்லது, அகாராதி நான்கு மாத்திரை புலுதம் தீர்க்கம் ஹ்ரஸ்வம் சாக்ஷியென் னும் நான்கு பேதத்தானே நன்னான்கு பிரகாரமாமாதலின், அச்சர்வ மாத்திரை களின் சமுதாயரூபப பிரணவம் 16 அவயவமுடையதாய்க் கூறப்பெறும. இப் போது ஆன்மாவின் 16 பேதத்தை வருணிப்பாம் :—ஹே தேவதைகளே! பிரண வத்திற்கு அகார உகார மகார நாதமென்னும் நான்கு பாதங்களிருப்பதேபோலப் பிரணவத்தின் வாச்சியார்த்தரூப ஆன்மாவிற்கும் நான்கு பாதங்களாம். ஆண்டு, வியஷ்டிஸ்தூலசரீரரூப உபாதியையுடைய விசுவன் ஆன்மாவின் முதற்பாதமாம, வியஷ்டிசூக்ஷ்ம சரீரரூப உபாதியையுடைய தைஜசன ஆன்மாவினிரண்டாவது பாதமாம், வியஷ்டிகாரண சரீரரூப உபாதியையுடைய பிராஞ்ஞன் ஆன்மாவின் மூன்றாவது பாதமாம், அவறறை யொளிர்விக்கும் சாக்ஷிரூபதுரீயம ஆன்மாவின் நான்காவது பாதமாம. இந்நான்கும் முறையே பிரணவமந்திரத்தின் அகாராதி நான்கு மாத்திரைகளின் அர்த்தரூபமாம், அத்தியான்மரூபமாம். ஆன்மாவிறகு விசுவாதி நான்கு அத்தியான்மபாதங்களிருபபதேபோல நான்கு அதிதைவபாதங் களுமுண்டு. சமஷ்டிஸ்தூலசரீரரூப உபாதியையுடைய விராட்டு முதற்பாதமாம், சமஷ்டிசூக்ஷ்மசரீரரூப உபாதியையுடைய ஹிரண்யகர்ப்பர் இரண்டாவது பாத மாம், சமஷ்டிகாரணசரீரரூப உபாதியையுடைய ஈசுரர் மூன்றாவது பாதமாம், யாவற்றையும் பிரகாசிப்பிக்கும் பரமான்மா நான்காவது பாதமாம். இவை யான்மா வின் அதிதைவ பாதமாம். பிரணவத்தின் அகாராதி 4 மாத்திரை நன்னான்கு வகையாயிருப்பதேபோல ஆன்மாவின் விராட்டாதி 4 அதிதைவரூபத்தினும வேறல்லாத விசுவாதி நான்கு பாதங்களும், தீவிர மத்யம மந்த துரீயமென்னும் 4 பேதங்களால் நன்னான்கு வகையாம். ஆண்டு, ஜாக்ரதரூப விசுவத்தின் சொரூபம் நேத்திராதி யிந்திரியங்களால ரூபாதிவிடயங்களைக்கவரும், அது விசு வத்தின் தீவிரமென்னும் முதற் பாதமாம். அந்த விசுவத்தின் சொரூபம் மனோ ரதங்களைச்செய்யும், அது விசுவத்தின் மத்தியமமென்னும் இரண்டாவது பாத மாம் விசுவத்தின் சொரூபம் மோகத்தானே வறிதிருத்தலைபடைவுறும், அது விசுவத்தின் மந்தமென்னும் மூன்றாவது பாதமாம். விசுவத்தின் சர்வ உபாதிகளு மற்ற நிர்விசேஷ துரீயசொரூபம் விசுவத்தின் நான்காவது பாதமாம. இவ்வாறு கனுக்காண்போனாகிய தைஜசனும் நால்வகையாவன். ஆண்டுக் கனவின்கண்ணே தைஜசனது வடிவம் சத்தியமந்திராதிகளைக் கவரும். அது தைஜசனது தீவிர மென்னும் முதற் பாதமாம். தைஜசனது வடிவம் கனவைச் சொரூபத்தானே காணும், அது மத்யமமென்னும் 2-வது பாதமாம். தைஜசனதுவடிவம் கனவில்

மோகத்தானே மூடபாவத்தையடையும், அது மந்தமென்னும் 3-வது பாதமாம். தைஜசனதுவடிவம் நிர்விசேஷதுரீயரூபமாம், அது 4-வது பாதமாம். இவ்வாறு சுழுப்தியவஸ்தையையுடைய பிராஞ்ஞனும் நால்வகையாவன். ஆண்டுச் சாத்விக விருத்தியைப் பிரதானமாகவுடைய பிராஞ்ஞனது வடிவம் பிராஞ்ஞனது தீவிர மென்னும் 1-வது பாதமாம். இராஜச விருத்தியைப் பிரதானமாகவுடைய பிராஞ்ஞனது வடிவம் மத்தியமமென்னும் 2-வது பாதமாம். தாமச விருத்தியைப் பிரதானமாகவுடைய பிராஞ்ஞனது வடிவம் மந்தமென்னும் 3-வது பாதமாம். பிராஞ்ஞனது வடிவம் நிர்விசேஷ துரீயரூபமாம்; அது நான்காவது பாதமாம். பூர்வம் பிரணவமந்திரத்திற்கு நாதமென்னும் நான்காவது மாத்திரைகூறினேம், அதன் பீஜம் பிந்து சக்தி சாந்தம் என்னும் நான்கவஸ்தைகூறியுள்ளேம்; அந் நான்கிறகும் முறைப்படி ஓத அநுஞ்ஞாதா அநுஞ்ஞா அவிகற்பம் இத்துரீய ஆன்மாவிற்கு நான்கு பாதாந்தரூபமாம்; ஓதாதி நான்குபாதங்கட்கும் தீவிராதி ரூபங்களாவன:—பொறிகளின்கண்ணே யக்கினி அநுகதமாயிருப்பதேபோல ஆன்மாச் சர்வ ஸ்தூலாதி தேகங்களில் சாக்ஷிரூபமாய்த் தொடரும், சர்வ ஜீவர் களின் ஆன்மவடிவமாம், அவ்வான்மாவால் இவ்வெல்லாவுலகும் தத்தம் ரூபத் தானே அறியப்பெறும், அவ்வந்தரியாமியாய ஆன்மாவே ஓதவெனப்பெறும்; அவ்வோதவென்னும் ஆன்மாத துரீய ஆன்மாவிற்குத் தீவிரமென்னும் முதற்பாத மாம். ஆன்மா, தியாதா தியானம் தியேயம் ஞாதா ஞானம் ஞேயம் என்பதாதி ஜகத்திற்குத் தன் இருப்பு விளக்கமில்லாததைக்கண்டு அவை யிதற்குண்டாக வேண்டுமென வெண்ணித் தனனிருப்புவிளக்கத்தையிதன்கண்ணே யடைவிக் கும், அவ்வான்மா அநுஞ்ஞாதாவெனப்பெறும்; அது மத்தியமமென்னும் 2-வது பாதமாம். ஆன்மா கற்பித ஜகத்தினின்றும் தன்னிருப்பு விளக்கத்தை யிழுத் துக் கற்பிதவுலகை இலயப்படுத்திக் கேவலத் தன்னத்விதீயரூபத்தையேயுணரும், அது அநுஞ்ஞாவெனப்பெறும், அது மந்தமென்னும் 3-வது பாதமாம். ஆன்மா வின் சொரூபத்தின்கண்ணே கற்பித துவைதப் பிரபஞ்சத்தின் ஸ்மிருதியுமிரா தாம், அவ்வான்மவடிவம் யோகியரின் அநேக ஜன்ம புண்ணிய கருமங்களாலடை யப்பெறும், அதன் பெயர் அவிகற்பமாம், அது நான்காவது பாதமாம். அவிகற்ப மென்னும் துரீய ஆநந்தவடிவ நான்கவஸ்தைகளில் அதிஷ்டானத்தன்மை ரூபத் தானே தொடர்ந்திருப்பதாய்ப் பிரதீதமாம். அதனிருப்புவிளக்கத்தானே இம் முறைகூறிய 16 வகையாய ஆன்மாவினவடிவம் பிரதீதமாம், ஆண்டு ஆன்மாவின் றுரீயவடிவத்தே கற்பிதரூபத்தன்மை சம்பவியாதாமாயினும் அத்துரீய ஆன்மா வின்கண்ணே அத்துரீயத்தன்மைவடிவ தருமம் தன்னினும் வேறாய மூன்று வஸ் துக்களையபேக்ஷிக்கும், அதனபேக்ஷையினானே துரீயமெனப்பெறுமாதலின், அத் துரீயத்தன்மைத் தர்மமும் கற்பிதமேயாம்; ஆனால் துரீயத்தன்மைத் தர்மத் தின் ஆசிரயரூப ஆன்மாக்கற்பிதமன்றாம். நிர்மல ஆகாசத்தின்கண்ணே கந்தர்வ நகரம் பிரதீதியாமாதலின், அது கற்பிதமாவதேபோல, அவிகற்பரூப சுத்தஆன் மாவின்கண்ணே இவ்வெல்லாவுலகும் பிரதீதமாமாதலின், இவ்வுலகும் கற்பித மெனப்படும். இவ்வவிகற்ப ஆன்மாச் சர்வ பயமுமற்றதாம். ஜன்மாதி சர்வ விகா

ரங்களுமற்றதாய், பரமாணுமுதலிய சூக்ஷ்மபதார்த்தங்களினும் அத்தியந்தம் சூக்ஷ்மமாய், ஆகாசாதி பெரும்பொருள்களினும் மிகவும் பெரியதாம், இத்த தகைய ஆன்மசாக்ஷாத்காரத்தானே மோக்ஷப்பிராப்தியாம். இப்போதான்ம ஞானத்தின் அதிகாரியை வருணிப்பாம்:—அவிகற்பமென்னும் ஆநந்தவடிவ ஆன் மாவையறிய இச்சித்த பிராஹ்மணாதி யதிகாரி வேதவிகித அக்கினிஹோத்தி ராதிகருமங்களைச்செய்வன், ஹிம்சாதி நிஷித்தகருமங்களைப் பரித்தியாகஞ்செய் வன்; அவ்வதிகாரி சத்தியம் தபம் தயைதானம் பிரஹ்மசரியம் அஹிம்சையென் பதாதி சுபகருமங்களைச்செய்வன். இதனானே மந்தமத்தியம மென்னுமிரு வகையாய அதிகாரிகளை வருணித்தாம். இனி உத்தம அதிகாரியை வருணிப் பாம்:—அவிகற்பவடிவ ஆன்மாவையறிய இச்சித்து ஒவ்வொரு பிராஹ்மணர் புத்ரஏஷணை வித்தஏஷணை லோகஏஷணையென்னும் மூவகையாய ஏஷணைகளைப் பரித்தியாகித்து, பரமஹம்ச சந்யாசக்ரகண பூர்வகம சர்வ கருமங்களையும் பரித் தியாகித்துக் கேவலம் பிக்ஷாவிருத்தியைத்தரிப்பர், இத்தகைய உத்தம அதிகாரி கள் இவ்வாநந்தவடிவ ஆன்மாவைச் சாக்ஷாத்கரித்து உள்ளே சாவஞ்ஞராயினும் குருடு ஊமைபோலப் பிருதிவியின்கண்ணே சஞ்சரிப்பாராதலின், அவிவேகிகள் அறிஞரையறியார். பூர்வம் சம்வர்த்தகாதி சந்யாசிகள் உலகரால் அறியமுடியாத வராய்ச் சஞ்சரித்தனராதலின், அதிகாரிகள் அவிகற்ப ஆன்மாவின் சாக்ஷாத்காரத தை அவசியம சம்பாதனஞ்செய்க. இப்போது, முற்கூறிய அனுஷ்டுப் சந்தரூப மந்திரசகித பிரணவ உபாசனையையும கேவலம பிரணவ உபாசனையையும் நிரூ பிப்பாம்:—இவ்வதிகாரி ஒருகால் ஒரு பாவகருமரூபப பிரதிபந்த வயத்தால் ஆன்மாவை அவிகற்பரூபமா யறியமுடியாவிடின், பாவரூபப் பிரதிபந்தகத்தை நீக்கும்பொருட்டு ஒருபாயம அவசியஞ்செய்க. அதாவது, முன்னர் நான்கு பாதமுடைய மந்திரராஜா கூறப்பட்டது, அம்மந்திரத்தின் நான்குபாதங்கட்கு, முறையாய் விசுவ தைஜச பிராஞ்ஞதுரீயமென்னும் நான்கு ஆன்மாவின் சொரூபங் களின் வாசகங்களாகிய அகார உகார மகார நாதமென்பவை பிரணவத்தின் நான்கு மாத்திரைகளாம், அந்நான்கு மாத்திரைகளோடும் அபேதசிந்தனஞ்செய்க. பிர ணவமந்திரத்தின் மாத்திரைகளின் விபூதி யிவ்வாறு சுருதியாற் கூறப்பெற் றுளது:—பிரஹ்மா வசு காயத்ரீ கார்கபத்தியம் பிருதிவி இருக்மந்திரம் இருக் வேதம் என்னும் சம்பூர்ணம் அகாரரூபமாம், விஷ்ணு ருத்ரன் த்ரிஷ்டுப் தக்ஷிணாக் கினி யஜுர்மந்திரம் யஜுர்வேதம், அந்தரிக்ஷம் என்னுமியாவும் உகாரரூபமாம், ருத்ரன் ஆதித்தியன் ஜகதி ஆகவநீயம் சுவர்க்கம் சாமமந்திரம சாமவேதம் என்னுமியாவும் மகாரரூபமாம. விராட் மருத் ஏகாக்ஷிரூப அக்கினி பிரணவம் அதர்வண மந்திரம், அதர்வவேதம், சம்வர்த்தகாக்கினி, சோமம லோகம் என் பன யாவும் நாதரூபமாம். இவ்வாறு விபூதிகளோடுகூட அகாராதி நான்கு மாத் திரைகளைப் பிரஹ்மவேத்தாக் குருவாயிலாயறிந்து அதிகாரி முற்கூறிய மந்திர ராஜாவின் நான்கு பாதங்களை முறையாய் அகாராதி நான்கு மாத்திரைகளில் அபேதசிந்தனஞ்செய்க. அதன்பின் இவ்வதிகாரி அம்மந்திரத்தின் நான்கு பாதங் களோடு அகாராதி மாத்திரைகளின் இலயசிந்தனஞ்செய்க. அல்லது, கேவல

அகாராதி மாத்திரைகளையே இலயசிந்தனஞ்செய்க. இலயசிந்தனப்பிரகாரம் சாஸ்திர வேத்தாக்களால் இவ்வாறு கூறப்பட்டுளது:—அகாராதி பூர்வ பாதங்களை உகாராதி யுத்தரபாதங்களில் இலயஞ் செய்வதேபோல, உகாராதி பாதங்களையும் உத்தர மகாராதிபாதங்களில் இலயஞ்செய்க. இவ்வாறு துரியம்வரை அவற்றை இலயஞ்செய்க. அதன்பின் பீஜம், பிந்து, சக்தி, சாந்தம் என்னும் நான்கவஸ்தையையுடைய துரீயரூபப்பிரணவத்தை மனத்தானே சிந்தனஞ்செய்க. பிரணவ மந்திரத்தின் வாச்சிய அர்த்தரூபப் புருடனுக்கு இப்பாதரூபப் பதினறுகலை கூறப்பட்டுளது. அப்பதினறு கலை முறைப்படி முற்கூறிய 16 அவயவமுடைய பிரணவமந்திரத்தின்கண்ணே தாதாதமிய சம்பந்தத்தானேயிருக்கும்; சர்வ பேதமுமற்ற சுத்த பரமான்மாவின்கண்ணே அக்கலைகளிராவாமாதலின், அவ்வெல்லாக்கலைகட்கும் இலயம் சபபவிக்கும். இப்போது வேறு வகையாய் வருணிப்பாம்:—முறகூறிய முறையே நான்கு நான்கு அவயவங்களையுடைய அகாராதி நான்கு மாத்திரைகளோடு முறையாய் முறகூறிய அனுஷ்டுப்சந்தரூப மந்திர ராஜாவிற்கு நான்கு பாதங்களைச் சேர்ப்பிப்பதனுனே அம்மந்திராராஜாவிற்கும் 16 அவயவங்கள் சித்தமாம்; ஏனெனின், அவ்வனுஷ்டுப்சந்தம் 32 அக்ஷரங்களாலாம், அச்சந்தத்திற்கு எட்டெட்டக்ஷரங்களையுடைய நான்கு பாதங்களுண்டு, அந்நான்கு பாதங்கட்கு முறையே நான்கு நான்கு அவயவங்களையுடைய அகாராதி நான்கு மாத்திரைகளோடு சேர்க்கும்போது அம்மந்திரத்தின் இரண்டிரண்டக்ஷரங்கட்கு ஒவ்வொரு அவயவவாசகத்தன்மை சித்தமாம். அந்த 16 அவஸ்தைகளை அதிகாரிபையப் பையஜயஞ்செய்க. மனத்தின்கண்ணே தடையற்ற இடப்பிரதீதியே அப்பூமிகளின் ஜயமாம. அவற்றின்கண்ணும் இவ்வதிகாரி எவ்வெப்பூமியை ஜயிப்பனே அவ்வப்பூமியைப் பரித்தியாகித்தது உத்தர உத்தர பூமியைப்பற்றுக. இவ்வாறு பையப்பைய அப்பசித்தப்பசித்து அதிகாரிக்கு முற் புண்ணியமகிமையானே அவிகறப துரீய ஆன்மாவின் பிராப்தியாம்போது காரிய சகித அஞ்ஞானநீக்கமுண்டாம். பின்னதிகாரிக்குச் சிறிது மாத்திரையுங் கர்த்தவ்யம் எஞ்சியதாகவில்லைபாதலின், ஆன்மசாக்ஷாத்கார அடைவின்பொருட்டு அதிகாரி பிரணவ உபாசனையை அவசியஞ் செய்க. இனிப் பிரஹ்மஞானத்தானே காரியசகித அஞ்ஞான நீக்கமாம். பிரஹ்மத்தின் இயற்கையை வெளிப்படுத்தும் யுக்திகளைக்கூறுவாம்:—ஹே தேவதைகளே! ஸ்தூலசூக்ஷ்மகாரண சரீரங்களையபேக்ஷித்துத் துரீயரூப அவிகறபத்தூய ஆன்மா வாக்கு முதலிய 10 பாகிய இந்திரியங்கட் கவிஷயமாம், மனத்திற்கு மவிஷயமாமாதலின், ஆன்மாவை வினவுவதன்கண்ணும் எவனும் சமர்த்தனுகான்; விடைகூறுவதன்கண்ணும் எவனும் சமர்த்தனுகானுதலினுனே, சிரத்தையையுடைய சீடர்களால் வினவியபோதினும் சில பிரஹ்மவேத்தாககளாகிய அறிஞர் அவர் பொருட்டுச் சச்சிதாநந்தவடிவ அவிகற்ப ஆன்மாவை மௌனத்தானே உபதேசித்தனர்; ஏனெனின, எவ்வெவ்வஸ்து வாணியால் வசனிக்கமுடியுமோ அவ்வவ்வஸ்துவின்கண்ணே சோத்திராதி பாகியேந்திரியங்களின் விஷயத்தன்மையாம். அல்லது, அந்தரமனபுத்தியாதிகளின் விஷயத்தன்மை அவசியமாம். அந்தப்பாகிய ஆந்தர இந்திரியங்களின்

விஷயத்தன்மையின்றிக் கேவலம் வாணியின் விஷயத்தன்மை சம்பவியாதாதலின், இந்திரியங்களின் விஷயத்தன்மையோ வியாபகமாம், வாணியின் விஷயத்தன்மை வியாப்பியமாம், யாண்டு வியாபகாபாவமாமோ ஆண்டுவியாப்பியாபாவமாம்; அக்கினியாகிய வியாபகமிலதாகவே தூமமாகிய வியாப்பியமிலதாகும், அதுபோலவே ஈண்டுப் பிரசங்கத்தே சர்வ அவஸ்தைகளினும் அநுகதமாகிய அத்விதீயப்பிரஹ்மரூப ஆன்மாவின்கண்ணே நேத்திராதி இந்திரியம் மனம் புத்தி பிரவிருத்தியாது; ஆகையால், ஆன்மாவின்கண்ணே வாணி விஷயத்தன்மையும் சம்பவியாதாம். அல்லது, அதிஷ்டான ஆன்மாவால் ஏவப்பட்ட நேத்திராதி இந்திரியங்களும் மனம் புத்தி சரீராதிகளும் தத்தம் காரியத்தே பிரவிருத்திக்கும்; ஆனால், மனத்தோடுகூடிய நேத்திராதி இந்திரியம் தம்மை யேவும் ஆன்மாவின்கண்ணே பிரவிருத்தியா. கருத்திதுவாம:—தன் சமீபமாத்திரையானே சர்வ வியவகாரங்களின் சித்திசெய்யும் ஆன்மாவின்கண்ணே மனசகித இந்திரியங்களின் விஷயத்தன்மைவடிவ கருமத்தன்மையை யங்கீகரிக்கின், ஒரே ஆன்மாவின்கண்ணே கர்த்தாத்தன்மையும் கருமத்தன்மையும் அடைவுறும்; அஃதத்தியந்தம் விருத்தமாம்; இக்காரணத்தானும் ஆன்மாவின்கண்ணே மனசகித இந்திரியங்களின் விஷயத்தன்மை சம்பவியாதாம். அல்லது, இவ்வாக்கிந்திரியமோ கேவலம் சப்தத்தையே விஷயம்செய்யும், அர்த்தத்தை விஷயம்செய்யாது. அச சப்தம் அப்பதார்த்தங்களை விஷயம்செய்யும். எப்பொருள் நேத்திராதியாகிய யிந்திரியங்கட்கும் மனபுத்திரூப அந்தக்கரணத்திற்கும் விஷயமாமோ, அச்சர்வ பதார்த்தங்களையும் அச்சப்தம் விஷயம்செய்யாதாம். அந்நேத்திராதி இந்திரியமும் அப்பதார்த்தங்களை விடயம்செய்யும். எப்பொருள்களில் அனுன்மத்தன்மைத் தர்மமிருக்குமோ ரூபஸ்பரிசாதி குணமிருக்குமோ அவை ஆன்மாவின்கண்ணே யிராவாமாதலின், அவ்வான்மாவின்கண்ணே இந்திரியஙகளின் விஷயத்தன்மையும் சம்பவியாதாம். இந்திரியங்களின் விஷயத்தன்மையபாவமாகவே ஆன்மாவின்கண்ணே சப்த விஷயத்தன்மையும் சம்பவியாதாம். கருத்திதுவாம்:—நேத்திராதி இந்திரியங்களோ நியமமாய் ரூபஸ்பரிசாதி தருமங்களையும், அவற்றையுடைய பொருள்களையுமே விடயஞ்செய்யும். மனரூப அந்தர இந்திரியமோ நியமமாய்ச் சுகதுக்காதி தருமங்களையும், அவற்றையுடைப் பொருள்களையுமே விஷயஞ்செய்யும். ரூபாதிகுணங்களும் சுகாதிதருமங்களும் ஆன்மாவின்கண்ணேயின்றாமாதலின், ஆன்மாவின்கண்ணே இந்திரியங்களின்பிரவிருத்தி சம்பவியாவாம். அல்லது, அகம் சுகி, அகம் துக்கியென்னும் பிரதீதியினானே சுகதுக்கம் ஆன்மாவின்கண்ணே பிரதீதியாமாயினும், சுகதுக்கம் ஆன்மாவின்கண்ணே உண்மையாயின்றாம்; மற்றோ, இரஜ்ஜுவின்கண்ணே சர்ப்பம் கற்பிதமாவதேபோலச் சுகதுக்கமும் ஆன்மாவின்கண்ணே கற்பிதமாம. கற்பித வஸ்துவின் ஞான மிந்திரியத்தாலுண்டாவதில்லை; மற்றோ, சாக்ஷியான்மாவானே யுண்டாமாதலின், கற்பித சுகதுக்கமும் ஆன்மாவின்கண்ணே மனத்தின் விஷயத்தன்மையைச் சித்திசெய்யாதாம். இப்போது ஆன்மாவின்கண்ணே இந்திரியங்களின் அவிஷயத்தன்மையைச் சித்திசெய்யும்பொருட்டு முதலில் அதிஷ்டானத்தன்மையைச் சித்தஞ்செய்வாம்:—ஹே தேவதைகளே! கற்பித பதார்த்தங்களின் உபாதான காரணரூப அஞ்ஞா

னத்திற்கு யாது விடயமாமோ அது அதிஷ்டானமாம், அது சர்வ கற்பித பதார்த்தங்கட்கும் ஒன்றேயாம். ஒரே இரஜ்ஜுரூப அதிஷ்டானத்தின்கண்ணே கற்பித சர்ப்ப தண்ட ஜலதாரை பூவிலயம் என்பன முதலிய பதார்த்தங்களேயாம்; அவற்றிற்கு ஒரே இரஜ்ஜு அதிஷ்டானமாவதேபோலச் சர்வ கற்பித பதார்த்தங்கட்கும் ஒரே அதிஷ்டானமாம்.

சங்கை :—ஹே பகவன்! கற்பித இரஜதாதிகளின் அதிஷ்டானரூப சுக்தி முதலியவற்றினின்றும் கற்பித சர்ப்பாதிகளின் அதிஷ்டானரூப இரஜ்ஜு முதலியவற்றின் பேதமேகாணவருகின்றதாதலின், சர்வ கற்பித பதார்த்தங்கட்கும் ஒரே அதிஷ்டானமாம் என்பது சம்பவியாதாம்.

சமாதானம் :—ஹே தேவதைகளே! அவிசாரகாலத்தே கற்பித சர்ப்ப இரஜதாதிகளின் அதிஷ்டானம் வேறு வேறாகவே பிரதீதியாமாயினும், ஆராய்ந்து நோக்கின் இரஜ்ஜு முதலியவற்றிற்கும் கற்பித சர்ப்பாதிகட்கும் அதிஷ்டானத் தன்மை சம்பவியாதாம்; மற்றே, இரஜ்ஜு சுக்தி முதலியவற்றே அநுகதமாய சாமானிய சைதன்யத்தின்கண்ணே கற்பித சர்ப்பாதிகளின் அதிஷ்டானத்தன்மை சம்பவியாதாம்; ஏனெனின், கற்பித வஸ்துவின் உபாதானகாரணமாகிய அஞ்ஞானத்திற்கு விஷயமாவது அதிஷ்டானமாம். அவ்வஞ்ஞானம் இயல்பாயே மறைபட்ட இரஜ்ஜு முதலிய ஜடப்பொருள்களை விடயஞ்செய்யாது; மற்றே, அவற்றின்கண்ணே தொடர்ந்திலகும் சேதனத்தையே விடயஞ்செய்யுமாதலின், அச்சேதனமே கற்பிதப்பொருள்கட்கு அதிஷ்டானமாம்; அஃதியாண்டுமொன்றும். இப்போதிப்பொருளையே வெளிப்படையாக்கும்பொருட்டு முதலில் தூலாருந்ததி நியாயத்தானே இதந்தைவடிவ சாமானிய அம்சத்தின்கண்ணே அதிஷ்டானரூபத் தன்மையை நிரூபிப்பாம் :—ஹே தேவதைகளே! மயங்கிய காலத்தே எவ்வஸ்து எக்கற்பிதப்பொருளோடு தாதாத்மிய சம்பந்தத்தானே பிரதீதியாமோ அதுவே அதற்கதிஷ்டானமாம்; அதனினும் வேறுப எதுவும் அதிஷ்டானமாகாதாம். இவ்வதிஷ்டான இலக்கணம் இரஜ்ஜு சுக்தி முதலியவற்றே சம்பவியாதாம்; மற்றே, அவற்றின்கண்ணே அநுகதமாயிருக்கும் இதந்தைவடிவ சாமானிய அம்சத்தே சம்பவிக்கும்; ஏனெனின், மயங்கியபோது பழுதைப்பாம்பு இப்பிவெள்ளி எனப் பிரதீதியாகாதாம்; மற்றே, அக்கால் யாவருக்கும் இது பாம்பு, இது வெள்ளி என்பதாகவே பிரதீதியாமாதலின், கற்பித சர்ப்பாதிகளோடு தாதாத்மிய சம்பந்தத்தானே பிரதீதியாகும் இதந்தைவடிவ சாமானிய அம்சமே சர்ப்பாதிகளின் அதிஷ்டானமாம்.

சங்கை :—ஹே பகவன்! பாதசாமானாதிகரண்யம், அத்யாச சாமானாதிகரண்யம், விசேஷண சாமானாதிகரண்யம், ஐக்ய சாமானாதிகரண்யம் என நால்வகைச சாமானாதிகரண்யம் நூற்களில் கூறப்பட்டிருக்கின்றன; அவற்றுள் கட்டையின்கண்ணே கள்வன் என்னும் மயலின் பின்னர், பழுதையின்கண்ணே பாம்பென்னும் மயலின்பின்னர், கட்டை பழுதைகளின் ஞானமுண்டாகவே 'கள்வனிக் கட்டை, பாம்பிப் பழுதை' எனத்தோற்றுவதே பாதசாமானாதிகரண்யமாம்.

இது பாம்பு, இது வெள்ளி என்பது அத்யாச சாமாநுதி கரண்யமாம். நீலக்குடம் என்பது விசேஷணசாமாநுதி கரண்யமாம். அவனித்தேவதத்தன் என்பது ஐக்ய சாமாநுதி கரண்யமாம். அத்யாச சாமாநுதி கரண்யத்தின்கண்ணே இதந்தை யம்சத்திற்குக் கற்பித சர்ப்பத்தோடு தாதாத்மிய சம்பந்தம் பிரதீதியாவதே போலப் பாதசாமாநுதி கரண்யத்தின்கண்ணும் பழுதைக்குப்பாம்போடு தாதாத்மிய சம்பந்தம் பிரதீதியாம்; ஆகையால், இதந்தையின்கண்ணே கற்பித சர்ப்பாதிஷ்டானத்தன்மை சம்பவியாதாம்.

சமாதானம் :—ஹே தேவதைகளே! பாதசாமாநுதி கரண்யத்தின்கண்ணே இரஜ்ஜுவாதிகட்குச் சர்ப்பாதிகளோடு தாதாத்மியப் பிரதீதியாமாயினும், அக்கால் அவை ஆண்டிலவாமாதலின், சாஸ்திர முணர்ந்தார்க்குண்டாம் 'பாம்பிப் பழுதை' யென்னும் ஞானம் மலடிமைந்தன் ஞானமேபோல விகற்ப மாத்திரமேயாம்; அந்த விகற்பஞானத்தானே இரஜ்ஜு முதலியவற்றின்கண்ணே சர்ப்பாதிகளின் அதிஷ்டானத்தன்மை சித்தமாகாதாம், அதனுனும் வஸ்து சித்தியாகுமாயின், வந்தியா புத்திரன் என்னும் விகற்பஞானத்தானும் அவனது சித்தியுமாகவேண்டும்; ஆகையால், இதந்தைவடிவ சாமானிய அம்சமே சர்ப்பாதி சர்வ கற்பிதப் பொருள்களின் அதிஷ்டானமாம். இத்துணையானே இதந்தையின்கண்ணே அதிஷ்டானரூபத்தன்மையைச் சித்தஞ்செய்தாம்; இனி இதந்தையின்கண்ணே பிரஹ்மரூபத்தன்மையைச் சித்தஞ்செய்யும்பொருட்டு முதலில் அவ்விதந்தையின்கண்ணே பேதமற்ற தன்மையை நிரூபிப்பாம்:—ஹே தேவதைகளே! இதந்தைவடிவ சாமானிய அம்சத்தே பிரதீதியாம் பேதம் கேவலம் சப்தமாத்திரத்தானேயாம்; உண்மையாயோ அப்பொருளின்கண்ணே சிறிதுமாத்திரையும் பேதமில்லை.

சங்கை :—ஹே பகவன்! அச்சப்தங்களின் பேதத்தானே அர்த்தத்தின் பேதமேனுண்டாகமாட்டாது?

சமாதானம் :—ஹே தேவதைகளே! இவ்வுலகத்தே சப்தங்களின் பேதமுண்டாயினும் பொருளின் ஏகத்தன்மையையே கண்டோம். ஒரே தேவதத்தனை ஒருவன் இவன் தேவதத்தனென்கின்றான், மற்றொருவன் நீயென்கின்றான், வேறொருவன் நேயவயத்தானே தேவதத்தன் யானேயென்கின்றான்; அயலொருவனோ இத்தேவதத்தன் எனதெல்லாப் பந்துக்களுமாவன் என்பன்; என்றிவ்வாறு ஒருவனே அநேக வக்தாக்களா லுச்சரிக்கப்பட்ட அநேக சப்தங்களையடைவன்; ஆனால், அச்சப்தங்களின் பேதத்தானே தேவதத்தனுக்குப் பேதமுண்டாவதில்லை. அதுபோலவே, இதந்தையின் வாசக சப்தங்களின் பேதமுண்டாயினும் அவ்விதந்தைவடிவ சாமானிய அர்த்தத்தே பேதஞ்சித்தமாகாதாம். அல்லது, எல்லாப்பொருள்களின்கண்ணும் ஒருமை இயல்பாகவே சித்தமாம்; அஃதிருப்ப அதன்கண்ணே சப்தபேதத்தானே பன்மை ஒருகாலுமிராதாம்; தோற்றினும் கந்தர்வ நகரம்போலப் பொய்யேயாம்; பொய்யாயபன்மையானே மெய்யாய ஒருமையினழிவுண்டாகாதாம். அல்லது, அளவையினானே பொருளின்றுணிபாம்; அஃதின்றியமையாதாமாதலின், இதந்தைவடிவ அர்த்தத்தின் பேதம் எவ்வளவையினானே யாமெனு ஆராயத்தக்கதாம். பேதரூப அரசனுடைய முக்கியமாயு போர்வீரனு

ஙிய சப்தமோ இதந்தைவடிவ அர்த்தத்தானே தோல்வியையடைந்தது; ஏனெனின், அவ்விதந்தைப் பொருளின்கண்ணே இயற்கையானேயிருக்கும் அபேதத்தானே பேதநீக்கம் உண்டாகியேவிட்டதாதலின், பேதரூப அசையனை யனுசரித்து அப்பொருளின்கண்ணே பிரவேசிக்க இச்சிக்கும சப்தமும் அதன்கண்ணே பிரவேசிக்கமுடியாதாம்; மற்றேறு, அது கற்பிதபேதமாத்திரத்தை யங்கீகரித்தே சந்தோஷத்தையடையும்; சத்தியபேதத்தை யபேக்ஷியாதாம். அல்லது, அச்சப்தம் இதந்தைவடிவ அர்த்தத்தின் பேகத்தை யங்கீகரியாததே போல விழிமுதலிய பொறிகளும பேதத்தைககவராவாம்; மற்றேறு, அவைகள் வஸ்துவின் சொரூபமாத்திரத்தைக்கவர்ந்தே கிருதகிருத்தியமாம். தோடத்தோடு கூடிய விழி சுக்தியின்கண்ணே 'இது இராஜதம' என்னும் இராஜதமாத்திரத்தைக்கவர்ந்தே கிருதகிருத்தியமாம். சுக்தியின்கண்ணே இராஜத பேதத்தைக் கவராதாம்; ஒருகால் துஷ்டசக்ஷு பேதத்தையும் கவருமாயின், பிரமமாத்திரத்திற்கே லோபமுண்டாம் அலலது, சக்ஷுமுதலிய இந்திரியத்தானே கனுப்பொறிகளேபோ லிதந்தையும் சித்தமாகாதாயின், அவற்றானே இதந்தையின் பேதமெவ்வாறு சித்தமாம? மறறேறு, ஆகாதாம். ஏனெனின், முக்காலத்தும் பாதமாகாதசத்தையே இதநதைவடிவமாமாதலினானே இவ்வுலகத்தே இஃதிருக்கிறது இஃதிருக்கிறது எனததோற்றுகின்றது, அத்தோற்றத்தானே இதம் சப்தார்த்தத்திற்கும் சத்சபதார்த்தத்திறகும் அபேதமேசித்தமாமாதலின், சத்தைவடிவ இதந்தையையும் அதன்பேததததையும் இச்சக்ஷு முதலிய இந்திரியம் கிரகணஞ்செய்யாதாம். அல்லது, முன்மொழிநத யுக்தியினானே இதந்தையின்கண்ணும் பேதம சித்தியாகாதபோது, அவ்விதந்தையையும் விசேஷரூபமாயுடைய யாண்டுந தொடர்ந்த பரமான்மாவின்கண்ணே அபபேதம எவ்வளவையினானே சித்தமாம்? மற்றேறு, சித்தியா தெவ்வாற்றானுமென்க. இப்போது அவ்விதந்தைவடிவ சத்தையின் பானத்தே வேறொன்றன் அபேக்ஷையின்மையை யறிவிக்கும்பொருட்டு முதலிலச்சத்தையின் ஸ்புரணத்தானே அபேதத்தைச சித்தஞ்செய்வாம்:—ஆண்டுத் திருஷ்டி சிருஷ்டிவாத சித்தாநதத்தே தோற்றுப்பொருட்குச சத்தையின்றாம்; மற்றேறு, தோற்றும்பொருட்கே சத்தையாமாதலின், அச்சத்தை ஸ்புரணத்தினும் வேறன்றாம்; மற்றேறு, ஸ்புரணரூபமேயாம. அது ஸ்வப்பிரகாசமேயாம். இவ்விஷயத்தை முன் அநேகமுறை கூறிவந்தேமாதலின், ஸ்வப்பிரகாச ஸ்புரணத்தினும் வேறாகாத சத்தையும் ஸ்வப்பிரகாசமேயெனத் துணியப்பெறும். இப்போது ஸ்புரணத்தின் ஸ்வப்பிரகாசத்தன்மையின்கண் சிறிது யுக்திகளையும் வர்ணிப்பாம்:—ஹே தேவதைகளே! சைதன்னிய மற்ற அசைதன்னியவடிவ வஸ்துக்கள் யாவும் சைதன்னியத்தானே துணியப்பெறும்; இவ்விஷயத்தே எவ்வாதிக்கும் விவாதமின்றாம்; மற்றேறு, சர்வவாதிகட்கும் சம்மதமேயாம். ஒருகால் அச்சைதன்னியமும் சைதன்னியத்தானே தோற்றும் என அங்கீகரிக்கின் இவ்வாறாராயத்தக்கதாம்:—எச்சைதன்னியம சைதன்னியத்தாற்றோற்றுமோ அத்தோற்றத்திற்கு விஷயமாய சைதன்னியம் ஸ்புரணத்தினும் விலக்ஷணமா? அல்லது அதன்வடிவமா முதலது சம்பவியாது. ஏனெனின், ஸ்புரணத்தினும் விலக்ஷணவஸ்துவின்

கண் சைதன்னியரூபத்தன்மையை அங்கீகரிப்பதில் சிறிது மாத்திரையும பிரமாணமின்றும்; பிரயோசனமுமின்றும். ஏனெனின், ஸ்புரணரூப சைதன்னியத்தைபிரகாசிப்பிக்கும் சைதன்னியத்தானே சர்வ நிர்வாகமுண்டாம். ஸ்புரணரூப சைதன்னியத்தை அங்கீகரிப்பது வீணேயாம். இரண்டாவதும் பொருந்தாது. ஏனெனின், அச்சைதன்னியத்தை ஸ்புரணரூபமா யங்கீகரிக்கின் அது சர்வ புத்தி விருத்திகளின் சாக்ஷிரூப ஆன்மாவேயெனச சித்தமாம். அதற்குத் தன் பிரகாசத்தே வேறொன்றினபேக்ஷை சம்பவியாது. சம்பவிக்குமாயின் அதன் கண்ணே கடாதிகட்கேபோல அநான்மரூபத்தன்மை பிராப்தமாம். ஆகையால், அது ஸ்வப்பிரகாசரூபமாம். இத்துணையானே ஆன்மாவிற்குச் சத்சித்துருவத் தன்மை நிரூபிக்கப்பட்டது. இனி ஆநந்தரூபத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே தேவதைகளே! யாம் கூறிய சத்சித்துருவ ஆன்மா இத்தேகதாரிகளாகிய ஜீவர்கட்கு எல்லாப்பொருள்களினும் அத்தியந்தம பிரியரூபமாமாதலின், ஆத்மா பரமாநந்தவடிவமாம். ஏனெனின், ஜீவர்கள் தங்கள் ஆன்மவடிவமாய் அங்கீகரித்த இத்தேகரூப ஆன்மாவின் நாசப்பிரசங்கமாங்கால், விஷயசுகநாசப பிரசங்கமாங்கால் விவேகி சரீரரூப ஆத்மாவைக் காக்கும்பொருட்டு விஷய ஜன்னிய சுகத்தையே பரித்தியாகஞ்செய்வன், அதிக சுகத்தின்பொருட்டே அற்பசுகப்பரித்தியாகங் காணவருகின்றது, அறப சுகத்தின்பொருட்டு அதிக சுகபபரிததியாகஞ்செய்தல் யாண்டும் கண்டதில்லையாதலின், சர்வ லோக விவகாரத்தானும் விஷய சுகத்தினும் விஷயசுகசாதனங்களினும் ஆன்மாவின்கண்ணே பரமாநநதரூபத்தன்மை சித்தமாம். ஹே தேவதைகளே! முற் கூறிய அபிப்பிராயத்தை யுணர்த்தும் வித்துவான்களினுடைய மௌனத்தானே பிரஹ்மவேத்தாக்கள் தங்கள் சீடர் பொருட்டுச் சச்சிதாநந்த ஆன்மாவை உபதேசித்துளார். அவ்வுபதேசத்தால் அதை யுணராத சீடர்க்கு ஆசிரியர் தயையால் அத்விதீய ஆன்மாவின்கண் சிறிது தர்மங்களை ஆரோபித்து இவ்வாறுபதேசிப்பர்:—வசனத்தானே வெளிப்படையாய்விளம்பப்படும் வஸ்துவை அறிஞர்கள் சததென அழைததனர். கேவலம் மனத்தானே சிந்திக்கத்தக்க வஸ்துவை அசத்தென அழைத்தனர். இவ்வான்மாவின் சொரூபமோ சதசத்தற்றதாம. இத்தகைய ஆன்மாவிடத்தே ஞானசிரியர் சத்தசத்தர்மஙகளை யாரோபித்துச சீடனுககு இவ்வாறுபதேசிப்பர்:—ஹே மைந்த! அநுபவநதானே சித்தமாய சச்சிதாநந்தவடிவமும் சர்வக்கிலேசங்களற்றதுமாய ஆத்மா நீ. மந்தமதியுடைய சீடன் சததின்வடிவம யாதென வினவின் ஞானசிரியர் இவ்வாறு கூறுவர்:—எல்லாப்பொருள்களிலும இது இது என்பதாகப் பிரதீதியாகும் வஸ்துவையே நீ சத்தெனவுணர்தி. முன்னர்த் தூலாருந்ததி நியாயத்தானே இதந்தையின்கண் கூறிய ஆன்மத்தன்மையை இபபோது முக்கிய ஆன்மாவின்கண்ணே அடைவிப்பாம்:—மனவாணிகட்கு அவிஷயரூப ஸ்புரணத்தின்கண் முற்கூறிய இதந்தையும் கற்பிதமாம். அந்த ஸ்புரணமே நம்மால் நின்பொருட்டுச் சத்தெனக் கூறப்பட்டது. அதை வித்வான்கள் அநுபூதியென வழைத்தனர். இச்சத்துருவ அநுபூதி எதன்கண்ணே இருக்குமென வினவின், யாம் நினக்கு ஸ்தானத்தோடுகூட அநுபூதியின் வடிவத்தைக் கூறுவாம்; சாவதானமாய்க் கேட்பாயாக. சர்வ ஜீவர்களின் புத்தியின்கண்ணே

பிரதி பிம்பபாவத்தை யடைந்ததும, சாவ விஷயங்களில் இது சித்து, இது சித்து, எனத் தொடர்ந்தோறறமுடையதும் ஆகிய அறிவே அநுபூதியாம். அவ்வடிவத்தே முற்கூறிய இதந்தையும பாதிக்கப்படும். ஆகையால், அம் மதியே அநுபூதியின் உபலபதிஸ்தானமாம். இவ்வாறு சிரத்தையுடைய சிடன் ஞானசிரியரிடத்தே ஆன்மாவின் வடிவத்தைக்கேட்டபோது அவர் அவனுக்கு அத்விதீய ஆன்மாவின்கண் வாக்காதி இந்திரியங்கட்கு யோக்கியமாய சத்தாதி தர்மங்களை ஆரோபித்து ஆன்மாவை யுபதேசிப்பா; உண்மையாய் மன வாணிகட்கு அவிஷயமாய ஆன்மாவின்கண் மனவாணிகட்குண்டாம் பிரவிருத்தி அத்தியாசமின்றியுண்டாகாதாம். அத்தியாசத்தை அங்கீகரித்தே அவற்றின் பிரவிருத்தியாமாதலின், யாமுன்னா நிகழ்குச சச்சிதாநந்தவடிவமாய்க் கூறிய ஆன்மாவின் வடிவம் அததியாசத்தானன்றி வாணியாலு மனத்தாலு மறியமுடியா தாம். இப்போது இப்பொருளையே கைமுதிக நியாயத்தால் வெளிப்படையாக்கு வாம்:—ஹே தேவதைகளே! ஜீவர்கட்குச சுகதுக்கங்களை யடைவிக்கும் பாவ பதார்த்தங்கள் யாவும தமது சககாரி சாதனங்களோடு கணந்தோறும் பரிணா மத்தையடையும. அத்தகைய பதாாத்தங்களையும் ஒருவன் வர்ணிக்கமுடியாவாம். முத்து, பால், நிலா, மலலிகைப்பூ என்னுமின்னோன்கில வெணமை சமானமாயி னும், அவற்றிலுள்ள உள் விசேஷத்தைக் கூறுவதற்கெவனும் சமர்த்தனல்லன். நேத்திராதி யிந்திரியங்களால பிரததியக்ஷமாய்க்கவரத்தக்க இந்தப் பாவபதார்த்த மும் வாக்கால் கூறமுடியாதாயின், சாவ இந்திரியங்கட்கு மவிஷயமாய ஆன்மாவை வாக்கால் கூறமுடியாதென்பதில் யாது கூறறகுளது? அல்லது, விஷய இந்திரியங் களின் சம்பந்தத்தாலுண்டாய விஷய சுகமே மனத்திற்கு விஷயமாம். எவ்வான் மவடிவ சுகம் அதிகாரிகட்குத்தவம் முதலிய அநேக உபாயங்களால் பிராப்த மாமோ அது மனத்திற்கு விஷயமாகாதாம். அதன்கண்ணே மனத்திற்கும் பிர விருத்தியிலலாதபோது, வாக்குக்குப பிரவிருததி இல்லையென்பதன்கண்ணே கூறவேண்டியதென்? அல்லது, ஜீவர்கட்கு மனத்தால் தோற்றப்படும் விஷய சுக மும் தம் மநுபவத்தானே அறியப்பெறும், ஆனல் அது மற்றையனுக்கு வாக்கால் கூறமுடியாதாம். தன் விஷய சுகமும மறறையனுக்கு வாக்கால் கூறமுடியா தாயின், மனவாணிகட்கு அவிஷயமாய சொரூபசுகத்தை ஆசிரியர் அறிந்திருந்த போதிலும் சிடர்கட்கு வாக்கால கூறமுடியார் என்பதின்கண்ணே யாது கூறற் குளது? இவ்வாறு ஆத்மா நேராய் வாக்கால கூறமுடியாதாதலின், ஞானசிரியர் ஆநந்தவடிவ ஆன்மாவின்கண் பாவ அபாவரூப தர்மங்களை ஆரோபித்தே தம் சிடருக்கு ஆன்மாவை யுபதேசிப்பா. சத்தியத்தன்மை, சேதனத்தன்மை, ஆநந் தத்தன்மை முதலிய தர்மங்களோ பாவரூபங்களாம் தூலமற்றது, அணுவற்றது, குறுகலற்றது, நீட்சியற்றது முதலிய தர்மங்களோ அபாவரூபங்களாம். இவ் வாறு ஞானசிரியர் வாயிலாய் ஆன்மாவின்வடிவத்தைக்கேட்டுச் சிரத்தையுடைய சிடன் ஆன்மாவை மனன நிதித்தியாசனஞ்செய்தபோதே தன்னநுபவத்தால் பாவ அபாவ தர்மங்களற்ற சுத்த ஆன்மாவைச் சாக்ஷாத்கரிப்பன். இப்போது இப் பொருளையே வெளிப்படுததும்பொருட்டுச் சர்வ சிவர்களின் ஆன்மாவின்கண் நிஷ்

பிரபஞ்சத்தன்மைரூப பிரஹ்மத்தின் தருமத்தை நிரூபிப்பாம்:—ஹே தேவதைகளே! சர்வ தேகதாரி ஜீவர்களின் ஆத்மா எப்போதும் பிரபஞ்சமற்றதாகும்.

சங்கை:—ஹே பகவன்! நனமுதலிய வடிவப் பிரபஞ்சமிருப்ப ஆன்மாவில் நிஷ்பிரபஞ்சரூபத்தன்மை எவ்வாறு சம்பவிக்கும்?

சமாதானம்:—ஹே தேவதைகளே! சர்வப் பிரபஞ்சமும் பழுதைப்பாம்பே போலப் பொய்யேயாம்; ஆதலின், பொய்ப் பிரபஞ்சம் ஆன்மாவின் உண்மையாய நிஷ்பிரபஞ்சத்தன்மையை நீக்காதாம. இப்போது ஜகத்தின் மித்தியாத்தன்மையைச் சித்திசெய்யும்பொருட்டுத் திருஷ்டி சிருஷ்டி வாதமுறையாய்ச் சகத்தின் உற்பத்திலயத்தை நிரூபிப்பாம்:—ஹே தேவதைகளே! ஆன்மா நன அவஸ்தையை யடைந்தபோது அதையுண்டாக்கும். இத்தூலதேகத்தையுண்டாக்கும். பாகிய மாகிய கடாதிகளை யுண்டாக்கும். கனவையடையும்போது சூட்சும தேகத்தையுண்டாக்கும். வெளியில் நிகழும தேர் முதலியவற்றையு முண்டாக்கும். கனவைவிட்டு நனவிலவரின் கனப்பொருள்களைக் காணுதாதலின், கனப் பிரபஞ்சத்தை நனவின்கண்ணே லயப்படுத்தும். நனவை விடுத்துக் கனவில் வரின் நனப்பொருள்களைக் காணமாட்டாதாதலின், நனப்பிரபஞ்சத்தைக் கனவின்கண்ணே லயப்படுத்தும். இரண்டையும் விடுதது துயிலிற்செல்லின் இரண்டு பிரபஞ்சங்களையும் காணமாட்டாதாதலின், துயிலில் அவ்விரண்டையும் லயப் படுத்தும். சமாதி யவஸ்தையையடையின் துயிலின் தமவடிவ அஞ்ஞானத்தையும் காணுதாதலின், ஆங்கு அஞ்ஞானத்தையும் லயப்படுத்தும். அவ்வஞ்ஞானத்தானே மோகிக்கப்பட்ட ஜீவன் தன் சொரூபாநந்தத்தையுமறியான். சர்வ துவைதப் பிரபஞ்சத்தின் சம்ஹாரசாக்ஷிரூப ஞானத்தையுமறியான். துரீயவடிவ தூயவான்மாவின்கண்ணே அஞ்ஞானத்தின் லயவடிவ நிவிர்த்திசெய்வதில் இவ் வதிகாரி ஞானுசிரியரின் கிருபையானே சமர்த்துடையவனுவன். குருகிருபையின்றி ஈஸ்வரரும் அஞ்ஞானத்தை நீக்குவதிற சமாத்தாராகாராயின், அன்னிய ஜீவர்கட்குக் கூறவேண்டியதென்? ஹே தேவதைகளே! ஹிரண்யகர்ப்பாதி ஈஸ்வரர்கட்கு உண்டாம் ஆன்மஞானப்பிராப்தியும் குருவாலன்றிச் சுதந்திரமாயுண்டாகாதாம்; மற்றோ, வேதபகவான் வடிவ குருவசன ஸ்மரணத்தானே ஆன்மஞானப்பிராப்தியாமாதலின், அஞ்ஞானத்தை நீக்கும் ஆன்மஞானத்திற்கு ஞானுசிரியரே காரணமாவர். குருவாலன்றி எவர்க்கும் ஞானமுண்டாகாது. ஹிரண்யகர்ப்பாதி ஈஸ்வரர்கட்கு ஸ்மரிக்கப்பட்ட வேதவசனரூப குருவால் ஆன்மஞானமுண்டாவதேபோல இப்போதுள்ளவர்களுக்கு ஸ்மரிக்கப்பட்ட வேதவசனரூப குருவால் ஆன்மஞானமுண்டாகாதாம்; இதன்கண்ணே ஈஸ்வரத்தன்மையின்மைகாரணமன்றாம்; மற்றோ, மனத்தூய்மையின்மையே காரணமாம். ஏனெனின், இவ்வுலகத்தும் ஒவ்வொருவர் ஹிரண்யகர்ப்பரைப்போல மனத்தூய்மையுடையராயின், அவர்க்கும் ஆன்மஞானப்பிராப்தியாம். ஆனல், அவ்வாறு மனத்தூய்மையுறல் அத்தியந்தம் முடியாததாகுமாதலின், ஞானுசிரியரின் உபதேசத்தானே ஆன்மஞானமுண்டாம். இப்போதுள்ளாரின் அஞ்ஞானத்தினீக்கம் ஞானுசிரியரின் உபதேசத்தானே யுண்டாமென்னும் இவ்வொரு வார்த்தையை

விடுத்து ஜகத்தினுற்பத்திலயகாரணத்தன்மை ஹிரண்யகர்ப்பரிடத்தேயிருப்பதே போல ஜீவான்மாவின்கண்ணும் முற்கூறிய திருஷ்டி சிருஷ்டிவாதமுறையா யிருக்குமாதலின், இச்சீவாத்மா பரமேஸ்வர வடிவமேயாம்; ஜகத்தின் உற்பத்தி ஸ்திதிலயஞ்செய்வதன்கண்ணே ஈஸ்வரரே சுதந்திரகாரணர். வேறு காரணமின் றும் என வேதாந்தசாஸ்திரத்திற் கூறுவதும் பொய்யன்றும்; மற்றோ, உண் மையேயாகும். ஆனல் அதன் கருத்திதுவாம்:—ஈஸ்வரரே சர்வ ஜீவர்களின் ஆன் மாவாவர். ஈஸ்வரரின் வேறு யாதொரு ஆன்மாவுமின்றும். 'நான்யோऽதோऽஸ்தி த்ரஷ்டா' பரமான்மாவினும் வேறாக யாதொரு காண்போனுமில்லை யென்னுங் கருத்தானே சுருதியில் ஈஸ்வரர் ஜகத்காரணரெனக் கூறப்பட்டுளார். இப்போது ஆன்மாவின் ஒருமையை வர்ணிப்பாம்:—ஹே தேவதைகளே! ஒரே ஈஸ்வரர் இராவணப்பகைவனை முன்னிட்டு ஸ்ரீ இராமச்சந்திரரெனப்படுவர். கம்சப்பகை வனை முன்னிட்டு ஸ்ரீ கிருஷ்ணபகவானெனப்படுவர். இவ்வாறு ஒரே பரமான்மா வியஷ்டி அஞ்ஞானரூப உபாதியின் சம்பந்தத்தானே ஜீவனெனப்படும். சமஷ்டி அஞ்ஞானரூப உபாதியின் சம்பந்தத்தானே ஈஸ்வரனெனப்படும். ஒரே ஈஸ்வர ரிடத்தே கர்மபேதத்தால ஈஸ்வரர், அநீஸ்வரர் என இருவகையாய விவகார முண்டாம். தசரதகுமாரராய ஸ்ரீ இராமசசந்திர மூர்த்தியானவர் இராவணனைக் கொல்வதிற் சமர்த்தராதலின் ஈஸ்வரரெனப்படுவர். பாற்கடலில் ஆதிசேஷன் மீது பள்ளிகொண்டருளும் ஸ்ரீ விஷ்ணுபகவான் இராவணனைக்கொல்வதிற் சமர்த்தற்றவராதலின அநீஸ்வரராவர். ஆங்கே இவ்வொரே பரமான்மா சமஷ்டி வியஷ்டி உபாதியின் சமபந்தத்தால் ஈசுரர, அநீசுரர் எனப்படும். ஸ்ரீ இராமச் சந்திர அவதாரத்தையும இராவணவதாதிரூப காரியத்தையும் செய்யாராயினும், சேஷசாயியாகிய ஸ்ரீ விஷ்ணுபகவான் தமது விசித்திர காரியங்களின் அபேக்ஷை யால் ஈஸ்வரரேயெனப்படுவதேபோல, வியஷ்டியபிமானியாய ஜீவரும் தத்தம் விசித்திரகாரியங்களி னபேக்ஷையால் ஈஸ்வரரூபமேயாவா இப்போது ஜீவர்க ளிடத்தே ஈஸ்வரரூபத்தை வெளிப்படுத்தும்பொருட்டு முதலில் ஜீவர்களிடத்தே விசித்திர சத்தியை நிரூபிப்பாம்:—ஹே தேவதைகளே! இவ்வுலகத்துள்ள சர்வ ஜீவர்களும் ஒருவா மற்றொருவரை யபேக்ஷித்து விசித்திர சக்தியுடையராய்த் தோற்றுவராதலின், இவ்வெல்லா ஜீவர்களின் தத்தம் காரியங்களும் ஆச்சரிய காரணங்களேயாம். வெளிப்படையாய வசனத்தை யுச்சரிக்கு மாற்றல் கேவலம் மனுடர்களிடத்தே யிருக்கின்றது; பசு முதலியவற்றிலில்லை. ஆகாயத்தின் கண்ணே செல்லுமவல்லமை பட்சிகளிடத்தேயிருக்கின்றது; மனுடர்களிடத்தே யில்லை. மண்ணின் அற்ப துவாரத்தின்கண்ணும் பிரவேசிக்கும் ஆற்றல் சர்ப்பங்க ளிடத்திருக்கின்றது; மனுடாதிகளிடத்தில்லை. நிச்சலமாயிருக்குமாற்றல் விரு க்ஷங்களிடத்தேயிருக்கின்றது; மனுடாதிகளிடத்தில்லை. சர்வ ஜீவர்களும் கண்டு கொண்டிருக்கும்போதே மறையும் ஆற்றல் தேவதைகளிடத்தேயிருக்கின்றது; மனுடாதிகளிடத்தில்லை. இவ்வாறு வேறேயும் ஜாதி கோத்திரகுலாதிகளின் பேதத்தால் பின்னத்தன்மையடைந்த அநேகவகையாய ஜீவர் நானாவகையாய சக்திகளோடு கூடியிருப்பர். வேறு ஜீவர்களின் காரியத்தை வேறு ஜீவர்கள்

செய்யமுடியாதாம். மனுடர்களுள் ஒவ்வொருவர் மகா சூரவீரர். ஒவ்வொருவர் எல்லா மனுடர்களையும் தம் ஆணையிற் செலுத்துபவர். ஒவ்வொருவர் சர்வ மந்திரங்களையு முணர்பவர். ஒவ்வொரு மறையவர் சர்வ வேதங்களையு முணர்பவர். ஒவ்வொருவர் சாஸ்திரக்கர்த்தாக்கள். ஒவ்வொருவர் சாஸ்திரங்களின் யதார்த்த அர்த்தங்களைக்கூறுபவர். ஒவ்வொருவர் வேதசாஸ்திர அர்த்தங்களை யனுஷ்டிப்பவர். ஒவ்வொருவர் கந்தர்வ நாடகாதி உபவித்தையின்கண்ணே குசலர். ஒவ்வொருவர் காமக்குரோதாதிரூப அசுரசம்பத்தையுடையவர். ஒவ்வொருவா சாந்தி தாந்தி முதலிய தெய்வசம்பத்தையுடையவர். இவ்வாறு பரமேஶ்வரருடைய சக்தி அவ்வவ்வுபாதியின்கண்ணே விசித்திரபாவத்தை யடைந்துளது. அவ்வீஶ்வர சக்தியே வரசாபத்தைக்கொடுப்பதில் சமர்த்துடைய இருடிகளின் சரீரங்களிலிருக்கும். அதுவே ஆண் பெண் முதலிய சரீரங்களிலிருக்கும. அதுவே சாவ இந்திரியங்களிலுமிருக்கும்; ஏனெனின், இத்தேகத்தேயிருக்கும் நாசிகை முதலிய துவாரங்கள் வெளியே சமானமாய்ப் புலப்படினும், அவைகளில் உள் விசேஷத்தைச் சித்திசெய்யும் ஒரு சக்தியுண்டு. அதன் பலத்தால் நாசிகை முதலியவற்றின் கந்தக்கிரகணாதிரூப காரியம் பரஸ்பரம் விலக்ஷணமேயாகும். ஒரு இந்திரியத்தின் காரியத்தை மற்றோரிந்திரியம் செய்யமுடியாதாதலின், இவ்வுலகத்திலுள்ள பதார்த்தங்கள் யாவும் சிந்திக்கமுடியாத சக்தியுடையனவாமெனத் துணியப்பெறும். இதனானே அவைகள் அநிர்வசனீய இயற்கையுடையனவாம். விசித்திர சக்தியுடைய ஓர் ஈஶ்வரனை ஆசிரயித்தனவாம். ஆகையால், ஒரே ஆநந்தஸ்வரூப பரமான்மா சரீராதி யுபாதிகளின் பேதத்தானே ஈஶன், ஜீவன், புருஷன், ஸ்திரீ, விப்பிரன், பண்டிதன், மூர்க்கன், கோ, விருக்ஷம், பக்ஷி, நாற்பாதமுடையன, இருபாதமுடையன, பாதமற்றன, முப்பாதமுடையன, அநேகபாதமுடையனவென்பனவாதி நாமங்களை அடையும். இவ்வாறு அவிசாரகாலத்தே தேகாதி யுபாதிகளின் சம்பந்தத்தானே எல்லா நாமங்களும பரமான்மாவிற்குண்டாம். விசாரகாலத்தோ அந்நாமங்கள் யாவும் தூலதேகத்திற்கேயாம. தேகசாக்ஷியாய ஆன்மாவிற்கு எந்நாமமும் பொருந்தாது. உண்மையாயோ ஆநந்தசொரூப ஆன்மா சுயஞ்சோதிரூபமாம், சர்வ பேதமற்றதாம். கற்பித பேதத்தானே சத்திய ஞானாதி குணங்களையுடையதாயினும், உண்மையாய் நிர்க்குணவடிவமாம். சர்வ உபாதிகளுமற்றதாம். இத்தகைய ஆன்மா அநாதி மாயாசம்பந்தத்தால் நானாவகையாய காரியங்களைச்செய்யும். காரியசகித அநாதிமாயையின் கண்ணேயிருந்து அப்பரமான்மா ஜீவேஶ்வரபேதமுடையனவாய்ப் பிரதீதியாகும். ஒரே ஆகாசம் கடமடாதிரூப உபாதிகளின் பேதத்தைக்கவர்ந்து மகாகாசம், கடாகாசம், மடாகாசம் என்பனவாதி பேதத்தையடைவதேபோல, ஒரே ஆன்மா அஞ்ஞானாதியுபாதிகளை யங்கீகரித்து ஜீவேஶ்வராதி பேதத்தையடையும். ஆகாசத்தே மாயையாற் கற்பிக்கப்பட்ட கந்தர்வ நகரம் நானாவகையாய பொய்ப் பேதத்தை யுண்டாக்குவதேபோல, ஆநந்தசொரூப ஆன்மாவின்கண் மாயையாற் கற்பிக்கப்பட்ட நானாவகையாய துவைதப்பிரபஞ்சம் நானாவகையாய பொய்ப் பேதத்தையுண்டாக்கும். குலாலாதிகளின் தாரணைவடிவ கிருகாகாச காரியத்தைக் கடாகாசம் செய்யமாட்டாததேபோல, ஈஶ்வர காரியத்தை இச்சீவன் செய்யான்.

கடாகாசம், கிருகாகாசம் என்பவற்றின் பேதம் கடகிருகரூப உபாதிகளாலே யாம்; உண்மையாய் ஆகாசபேதமில்லாததேபோல, ஜீவேஸ்வரபேதமும் அந்தக் காரண அஞ்ஞான உபாதிகளாலேயாம்; உண்மையாய்ப் பேதமின்றும். கிருகா காச கடாகாசபேதம் நாமமாத்திரமாவதேபோல ஜீவேஸ்வரபேதமும் நாமமாத் திரமேயாம்; உண்மையாயின்றும். ஆகையால், சர்வ பேதமுமற்ற பரமான்மாவே சர்வ சரீரத்துமிருக்கும். அவ்வீஸ்வரதன்மையைக் கவர்ந்து இச்சர்வ ஜீவர் களும் அவ்வம மனுஷ்யாதி சரீரரூப உபாதிகளில இருநக போதிலும் திருஷ்டி சிருஷ்டி வாதமுறையாய்த தன் தரிசனத்தாலே ஜக துறபத்தியையாக்குவர். அதர்சனத்தாலே லயப்படுததுவா அம்முறையை இரண்டாவதத்தியாயத்தே விஸ்தாரமாய் நிரூபித்துளேம.

சங்கை:—ஹே பகவன்! சாரீரக மீமாம்சையின் நான்காவது அத்தியாயத் தின் நான்காவது பாதத்தே 'ஜமஷூா வாரவஜ-௨௦' என்னுஞ் சூத்திரத்தே ஸ்ரீ வியாசபகவானுனவர் சகுணப பிரஹ்மததின் அகங்கிரக உபாசனை செய்பவர்கட்கு ஜக துறபத்தியாதி வியாபாரஙகளைவிட்டு வேறெல்லா ஐஸ்வரியத்தின் பிராப்தியைக் கூறியுள்ளார். ஈண்டுத்தாங்கள் சாவ ஜீவர்களின் ஜக துறபத்திபின்காரணத்தன் மையைக் கூறினீர்களாதலின், அவ்வசனததோடு தங்கள் வசனம் முறண்படு கின்றதன்றோ?

சமாதானம்:—ஹே தேவதைகளே! ஸ்ரீ வியாசபகவான் சூத்திரரூப வச னத்தால் உபாசனைவடிவ யோகததின் பல நியமத்தைககூறினா. ஆனால் அவ்வவ் வுபாதியின்கண்ணே பிரவேசித்த ஈஸ்வராிடததேயிருக்கும் ஜக துறபத்தி முத லியவற்றின் சக்தியின் நியமததைககூறவில்லை. கருததிதுவாம்:—அதிகாரி அகங் கிரக உபாசனைவடிவ யோகபலத்தை படைநதபோது ஜகதுறபத்தியாதி வியாபா ரத்தைவிடுததது மறறெலலா ஐஸ்வரியததையுமடைவன். இவ்வாறு உபாசனுபலத் தின் பரிச்சின்னத்தன்மையை அவ்வசனம் கூறுகின்றதெனபதேயாம். சரீராதி சாவ உபாதிகளில இருக்கும ஈஸ்வரா ஜகதுறபத்தியைச செய்வதில முயன்றவராய் விசேஷரூபமாயும் சாமான்யரூபமாயும சகதுறபத்தியாதியைச் செய்வதேபோல, ஜீவபாவத்தையடைவிக்கும அநதக்காணாதி உபாதிகளிலிருந்தபோதினும் இப்புரு டன் வாமதேவரைப்போல "யானே யெல்லா வடிவினன்" எனச சாஸ்திரஜன்னிய பிரஹ்மதிருஷ்டியோடு கூடினவனுய் இவ்வுலகைச் சாமான்ய விசேஷரூபமா யுண் டாக்குவன். கருத்திதுவாம்:—கருமோபாசனையின் பலன்களைச் சிருஷ்டியின் ஆதி காலத்தே ஈஸ்வரா நியமஞ்செய்துவைததுளாராதலின், கர்த்திருத்துவ அபிமான பூர்வகம் கருமோபாசனைகளைசசெய்பவன் நியமமாயத்துணைப்பலத்தையே யடை வன்; அதிகபலத்தையடையான் அதிகாரி எங்கும் பரிபூரணமாய பிரஹ்மதிருஷ்டி யால் பரிச்சின்னத்தன்மையின் அபிமானத்தைப் பரித்தியாகித்தபோது பேதம் நீங்கிவிடுமாதலின், அக்கால் ஈஸ்வராது கர்மமே அவ்வறிஞர்கட்காம். அவ்வீஸ் வரர் வியஷ்டி சரீரத்தேயிருந்தபோதினும் சமஷ்டி யுபாதிகாரியத்தைச் செய்வ திற் சமர்த்துடையவராவர். பரமேஸ்வரர் விஸ்வாமித்திராது சரீரத்தேயிருந்து

திரிசங்குவின் ஹிதத்தின்பொருட்டு வேறோர் சொர்க்கத்தைச் சிருஷ்டித்தாரென்பது இராமாயணாதிகளில் பிரசித்தமாதலின், இந்நனுப் பிரபஞ்சாதிகளின் சிருஷ்டியும் ஈப்ஸ்வரரது கர்த்தமேயாகுமென்பதை எவ்வாதியும் நீக்கமுடியாதாம். அல்லது 'ஜகத்வ்யாபாரவர்ஜம்' என்னும் சூத்திரக்கருத்திதுவாம் :—யோகிகட்குப பிரஹ்மவித்தையின் பலத்தால் ஈப்ஸ்வரரோடு அபேதமுண்டாயினும் ஈப்ஸ்வரர் அதிகாரவர்; ஏனெனின், ஈப்ஸ்வரரே எப்போதும் சகத்தின் கர்த்தாவாவர். யோகிகளிடத்தே பிரஹ்மவித்தையின் முன்னர்ச் சர்வ ஜகத்கர்த்தாத்தன்மையில்லையாதலின், எப்போதும் சர்வ ஜகத்தின்கர்த்தரல்லர். இவ்வாறு பரமேப்ஸ்வரரின் அதிகத்தன்மையின் காரணம் சூத்திரத்தே கூறப்பட்டதாகும். ஆனல், அச்சூத்திரத்தால் ஸ்ரீ வியாசபகவான் யோகி முதலிய ஜீவர்கட்குத் தத்தம் ஈப்ஸ்வரத்தன்மையை நீக்கவில்லை. ஒருக்கால் அச்சூத்திரம் சமஷ்டியுபாதியையுடைய ஈப்ஸ்வரரின் அதிகத்தன்மையையும், வியஷ்டி யுபாதியையுடைய ஜீவர்களின் அநீப்ஸ்வரத்தன்மையையும் கூறுமாயின், அதன்கண் வாக்கியபேதரூப தோஷவடைவுண்டாமாதலின், அது கேவலம் ஈப்ஸ்வரரின் அதிகத்தன்மையையே கூறுவதாகும். அல்லது, இத்தேகதாரிகளுள்ளே எத்துணையோ ஜீவர் அநேகம் பதார்த்தங்களை உற்பத்திலயம் செய்பவராய்த்தோற்றுவர். எத்துணையோ ஜீவர் அற்ப பதார்த்தங்களை உற்பத்திலயஞ்செய்பவராய்த் தோற்றுவர். அவ்வுற்பத்திலயகாரணத்தன்மைவடிவ தர்மம் கேவலம் ஜீவர்கட்கின்றும்; ஈப்ஸ்வரருக்காம். சக்கிரவர்த்தி மகாராஜாவின் பிரஜைகளைக்காபபாற்றும் வியாபாரம அவரதீனமான மண்டலேப்ஸ்வர ராஜாக்கட்கு மவ்வாறேயாம். அவ்வியாபாரம் ஒவ்வொரு கிராமத்தைக்காக்கும் பிரதான புருடனுக்குமாம், மற்றைய சேவகாகட்குமாம். மண்டலேப்ஸ்வர ராஜாவே முதல் சேவகர் பரியந்தம் யாவரிடத்துமிருக்கும் பிரபுத்தன்மையின்கண் சக்கிரவர்த்தி மகாராஜாவின் பிரபுத்தன்மை தொடர்ந்திலங்கும். அதுபோலச் சர்வ ஜீவர்களின் கர்த்தாத்தன்மையின்கண் பரமேப்ஸ்வரரின் கர்த்தாத்தன்மை தொடர்ந்திலங்கும். முதலில் மாயாவிசிட்ட பரமேப்ஸ்வரரோ சக்கரவர்த்தி மகாராஜாவிற்குச் சமானமாவர். அவ்வீப்ஸ்வரரது சாக்ஷாத்காரியரூப சமஷ்டிசூக்ஷ்ம உபாதியையுடைய ஹிரண்யகாப்ப பகவான் மண்டலேப்ஸ்வர ராஜாவிற்குச் சமானமாவர். ஹிரண்யகாபபரின் காரியரூப சமஷ்டி ஸ்தூல உபாதியையுடைய விராட்டுப்பகவான் கிராமாதிபதிக்குச் சமானமாவர். அவரது காரியரூப இத்தாவரஜங்கம வியஷ்டிப்பிராணிகள் சேவகரொப்பாவர். ஹிரண்யகர்ப்பாதியின் கர்த்தாததன்மையின்கண் ஈப்ஸ்வரரின் கர்ததாத்தன்மை தொடர்ந்திலங்கும். அந்தக்காரணாதி யுபாதியையுடைய ஜீவர்கள் அஞ்ஞானபலத்தால் தமது சொரூபபூத ஈப்ஸ்வரரினும் பேதத்தையடைந்துளார்; அவர்கட்கு இந்நனு முதலிய மூன்றவஸ்தையே காரியரூபமாகும். இவ்வாறு நேராகவேனும் பரம்பரையாகவேனும் ஈப்ஸ்வரரே சர்வ ஜகத்தின் காரணராவர். இச்சீவாத்மா எவ்வெவ்வவஸ்தையைக் காணுமோ அவ்வவ்வவஸ்தையையுண்டாக்கும். காணுதவற்றைத் தம்பாலயப்படுத்தும். இத்திருஷ்டி சிருஷ்டிவாதமுறையா யிச்சீவான்மாவே நனவாதி யவஸ்தைகளின் உற்பத்திலயகாரணமாகும். இத்தூல தேகம் தாய் தந்தையரின் சோணித சுக்கிலங்களினின்றும் உண்டாகும். சூக்ஷ்மதேகம் பஞ்சபூதவாயிலாய் மாயா

விசிஷ்ட சுபாவமானினின்று முண்டாகும். இவ்வார்த்தை உலகத்தும் சாத்திரத்தும் பிரசித்தமாம் எனினும், இநதப பிரக்கிரியையை மாகபுத்திகட்குணர்த்தும் பொருட்டுச் சாத்திரங்கூறியது. உத்தம அதிகாரிகட்கோ இததிருஷ்டி சிருஷ்டிப் பிரக்கிரியையே மோக்ஷபிராப்தியாயிலாகும். இவ்வாயில் வேதாநதங்களில் இரகசியமாய் வைக்கப்பட்டுளது. ஆகையால, இத்தூல சரீராதி பதார்த்தங்கள் தன் தெரிசனகாலத்திதயோ உண்டாம. அதரிசனகாலத்தேலயமாம. இச்சுருதி யநுபவத்தால சித்தமாய திருஷ்டி சிருஷ்டிப் பிரக்கிரியையே புத்திமான்களால் அங்கீகரிக்கத்தக்கதாம்.

சங்கை :—ஹே பகவன! ஒருககால் தரிசனாதரிசனத்தால் சரீராதிகளின் உற்பத்திலயமாகுமாயின் ஜீவாகட்கு அஃதேதன் தோற்றுவதிலலை ?

சமாதானம் :—ஹே தேவதைகளே ! இத்தேகாதி பதார்த்தஙகள் தர்சனாதர்சனகாலத்தே பூரவ சரீராதிகளின் சமான ஆகாரமுடையதாய் உண்டாமாதலின், சரீர உற்பத்தி நாசத்தை அறியமுடியாதாம. இப்போதிப்பொருளையே வெளிப்படையாய் நிரூபிபபாம :—ஹே தேவதைகளே! உண்மையாய் ஜனமமரணமற்ற இவ்வான்மாவிற்கு இத்தூலசரீரத்தோடு அடைந்துள்ள தாதாத்மிய அத்தியாசரூப அபிமானமே ஜன்மமாம் ; அதன் நீக்கமே மரணமாம. இத்தேகாதி திருசியபதார்த்தங்கட்குத தரிசனமே ஜன்மமாம, அதர்சனமே மரணமாம். ஆதலின், இசசீவான்மா இசசம்சார தசையின்கண்ணே எவ்வெபபொருளைக் காணுமோ அவற்றையெலலாம் தரிசனகாலததே யுண்டாகும். காணுதவறறை அதரிசனகாலத்தே சம்மரிக்கும். இவவாறு திருஷ்டி சிருஷ்டிவாத முறையாய் இச்சீவான்மா நனு முதலிய மூன்றவஸ்தைகளில தேகாதி பதாாததஙகளை உற்பததி சம்மாரஞ் செய்யவும் தம்மை சுபாவரூபமாயறிவதிலலை. அதனானே ஜீவபபெயரையடையும். அதிகாரிகளின் நனு முதலிய மூன்றவஸ்தைகளின் காரணரூப அஞ்ஞானம் குருகிருபையாலடைவுறற ஆன்மஞானததானே அழிவுறறபோது மூன்றவஸ்தைகளுமற்ற துரீயவடிவ பரமபதம் கிடைக்குமாதலின், அதிகாரிகள் ஆன்மஞானத்தை அவசியஞ் சமபாதிககவேணடும். இபபோது முறகூறிய பிரணவ மநதிரததா லறியத்தக்க சுத்த ஆன்மா எவ்வாறு குருவால சீடனுக்குபதேசிககப்படுமென்பதையும், சீடனால் எவ்வாறு அஃதறியபபடுமென்பதையும் நிரூபிப்பாம்:—ஹே மைந்த! இவ்வாறககினி முதலிய தேவதைகள் பிரஜாபதி வாயிலாய்ச் சமதமாதி யுபாயங்களோடுகூடப் பிரணவரூப ஆன்மாவைச் சிரவணித்து மீண்டும் கேவல சுத்த ஆன்மாவைக் கேட்க இசசித்தவராய்ப் பிரஹ்மாவை நோக்கி இவ்வாறு வினவினர் :— ஹே பகவன் ! முன்னர்த் தாஙகள் எங்கள்பொருட்டுப் பிரணவரூப ஆன்மாவை உபாயரூபத்தால் கூறினீர்கள். இப்போது பிரணவரூப உபாயததால் அடையத்தக்கதாய நிர்விசேஷ சுத்த ஆன்மாவை உபதேசிக்கவேண்டும் எனத் தேவதைகள் வேண்டவே பிரஜாபதி கூறிபதாவது :—ஹே தேவதைகளே ! மனவாணிகட்கவிஷயமாய சுத்த ஆன்மாவைச் சாக்ஷாத்தா யுபதேசிப்பதில் எவரும் சமர்த்துடையராகாராதலின், அவ்வான்மாவின்கண் நானுவிதமாய தர்மங்களை யாரோ

பித்து யாம் உங்கள்பொருட்டுக் கூறுகின்றேம்; நீங்கள் சாவதானமாய்க் கேண்மின். ஏனெனின், மனத்தூய்மையின்பின்னர் அத்தூய ஆன்மா உங்கட்கு அவசியம் உபதேசிக்கத்தக்கதாகும். முன்னர் யாம் உங்களுக்குச் சச்சிதாநந்தவடிவ எங் நரசிம்ம பரமான்மாவைத் தத்துவமசி மஹா வாக்கியத்தேயிருக்கும் தற்பதார்த்த ரூபத்தால் கூறினேமோ, அப்பரமான்மாவே தொம்பதார்த்த ஜீவனோடு ஏகத்தன்மையையடைவுற்றுத் தன் சமீபத்தன்மை மாத்திரையானே சர்வ புத்தி முதலியவற்றிற்கும் திருஷ்டாரூபமாம். உண்மையாய்ப் புத்தி முதலியவற்றின் சம்பந்தமற்றதாம். இச்சங்காதத்தே ஜீவர்களின் மனம் சுபாசுப கருமங்களைச் செய்தபோது திருஷ்டாவாய ஆன்மா அக்கருமத்தே அநுமதியைச்செய்யும். முயன்றதை நீக்காதிருத்தல் அநுமதியாம்; ஏனெனின், அவ்வான்மா நொண்டியைப்போலச் சாமர்த்தியமற்றதாதலின் உதாசீனமாகும்.

சங்கை :—ஹே பகவன்! அவ்வான்மா மனப்பிரவிருத்தியின்கண்ணே அநுமதிசெய்யுமாயின் விகாரமுடையதாகுமன்றோ?

சமாதானம் :—ஹே தேவதைகளே! அவ்வான்மா சைதன்னியவடிவமாம். சாவ விகாரங்களுமற்றதாம். சுகதுக்காதியற்றதாம். மனம் புந்தி முதலியவற்றின் சாக்ஷிரூபமாம் சச்சிதாநந்தவடிவமாம. எல்லாவடிவின்கண்ணும் ஏகரூபமாம. இவ்வெல்லாத் துவைதப்பிரபஞ்சமும் அவ்வத்விதீய ஆன்மாவின்கண்ணே உண்மையாயின்றாம்; மற்றோ, மாயையாற் கற்பிதமாம. இதனானே இவ்வத்விதீய ஆன்மாவினும் வேறாகத் துவைதப் பிரபஞ்சத்திற்குச சத்தை சித்தியாதாம். எம்மாயையால் எப்பரமான்மாவின்கண்ணே இவ்வுலககற்பனையாமோ அம்மாயையின் வடிவம் வேதவேத்தாக்களால் கூறபபட்டுளது :—தானே பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்கட்குப் பிரதீதியாகாதாம். தன் காரியம் பிரதீதியாம். அதனைக்கூடாததைக் கூட்டிவைக்கும மாயையென்பர். அது தானே சத்துருவமன்றாயின், அதன் காரியமாய உலகம் எவ்வாறு சத்துரூபமாம்? மற்றோ, மாயையைப்போல உலகமும் அசத்ரூபமேயாம. ஆனல இவ்வுலகம் அம்மாயையின் மகிமையால சத்ரூபமாய்ப் பிரதீதியாகுமாதலின், அத்விதீய ஆன்மாவின்கண்ணே இவ்வுலகம் பொய்யேயாகும்; உண்மையாயின்றாம். ஆகாசத்தின்கண்ணே பிரதீதியாகுங் கந்தர்வ நகரம் விசாரமின்றியே தோறறும்; விசாரிக்கினோ தோற்றாததேபோல, அத்விதீய ஆன்மாவின்கண்ணே பிரதீதியாகும் துவைதப் பிரபஞ்சமும் விசாரமின்றியே தோற்றும்; விசாரிக்கினோ சிறிது மாத்திரையும் ஜகத்தில்லலேயில்லை. சர்வ ஜீவர்களின் நனவு முதலிய மூன்றவஸ்தைகளில் தொடர்ந்திலகும் இவ்வான்மா சச்சிதாநந்த சொரூபமாமாதலின், இத்தொம்பதார்த்தரூப ஆன்மா தற்பதார்த்தரூபப் பிரஹ்மரூபமேயாம். சுழுப்தி யவஸ்தையின்கண்ணேயிருக்கும் பிராக்ஞனென்னும் ஜீவன் சிறிது மாத்திரையுந் துக்கத்தையுணராததுபோல, இவ்வாநந்தவடிவ ஆன்மா எல்லாக் காலத்தும் சிறிது மாத்திரையும் துக்கத்தையறியாதாம்.

சங்கை :—ஹே பகவன்! இவ்வான்மா ஒருக்கால் சர்வ துக்கங்களுமற்றதாமாயின் ஜீவர்கட்கு நான் துக்கிபெனத் துக்கத்தின் பிரதீதியேனுண்டாகின்றது?

சமாதானம் :—ஹே தேவதைகளே! சர்வ துக்கங்களுமற்ற பரப்பிரஹ்மத்தோடு இவ்வான்மாவிற்கு உண்மையா யபேதமாமாதலின், இவ்வான்மாவின்கண்ணும் உண்மையாய்த் துக்கமின்றாம். இத்தகைய துக்கமற்ற ஆன்மாவின்கண்ணே பிரதீதியாகுந் துக்கம் அவித்தையினுலேயாம்; உண்மையாயில்லை. இப்போதிப் பொருளை வெளிப்படுத்தும்பொருட்டு அவித்தையின் வடிவத்தை வர்ணிப்பாம்:—ஹே தேவதைகளே! குருசாஸ்திர உபதேசத்தாலுண்டாய "யான் பிரஹ்மரூபன்" என்னும் ஞானத்தை அறிஞர்கள் வித்தையென்றனர். அதனோடு விரோதமுடையதும், சர்வ ஜீவர்கட்குந் துக்ககாரணமுமாயதை வேதவேத்தாக்கள் அவித்தையென்றனர். அது "யானித்தேகத்தேயிருக்கின்றேன், யாண்டும் வியாபகனல்லேன்" எனச் சர்வ தேகதாரி ஜீவர்களின் அநுபவத்தானே சித்தமாம். உற்பத்தியற்றதாம். சத்தசத்வடிவத்தால் கூறமுடியாததாம். சம்சாரமற்ற ஆத்மாவின்கண்ணும் சம்சாரகாரணத்தன்மையைச் சித்தஞ்செய்வதாம். இதனுனே, அறிஞர் அவித்தையைத் துர்க்கடமென்றனர். அது ஜடமாதலின் ஆன்மாவினும் பின்னமாயினு மவ்வாறு தோற்றுதாம்; அதிஷ்டான ஆன்மாவை யாசிரயித்தே தோற்றுமாதலின், உண்மையாய்ச்சுதந்தரமற்றதாயினும் சத்துருவைப்போல ஆன்மாவிற்கு அநேகவகையாய துக்கங்களையடைவிக்குமாதலின், வேதவேத்தாக்கள் அதனைச்சுதந்திரமென்றனர். இச்சுயஞ்சோதியாய ஆநந்தவடிவ நிர்க்குணவான்மா உண்மையாய் அத்விதீயரூபமாயினும், அவித்தையால பேதமுடையதாய்ப் பிரதீதியாகும்; அதனுல் அநேகவகையாய துக்கங்களையடையுமாதலின், பேத திருஷ்டிவாயிலாய் இவ்வவித்தையே சர்வ துக்கங்களின் காரணரூபமாம். அறியப்பட்ட சுகத்தின்கண்ணே சர்வ ஜீவர்கட்கும் பிரீதியுண்டாகும். அறியப்படாத சுகத்தின்கண்ணே பிரீதியுண்டாகாதென்பது சர்வலோகப் பிரசித்தமாம். சர்வ ஜீவர்கட்கும் தம் ஆன்மாவின்கண்ணே பிரீதி காணப்படுகின்றதாதலின், சர்வ ஜீவர்களும் தம ஆநந்தவடிவ ஆன்மாவை அறிகின்றவரே யாவரேமாயினும், அவித்தையால் மூடப்பெற்றவராய் ஆன்ம சொரூப ஆநந்தத்தை விசேஷரூபமாயறியார். அதனுனே இச்சீவர் ஆநந்தவடிவ ஆன்மாவினும் வேறாய அற்ப விடயங்களில் சுகபுத்தியைச்செய்து எப்போதும் துக்கத்தையேயடைவராதலின், ஆநந்தவடிவ ஆன்மாவின் ஆவரணவாயிலாய் இவ்வவித்தையே ஜீவர்களின் துக்ககாரணமாகும். நனவின்கண்ணும் கனவின்கண்ணும் இச்சீவர் ஆநந்தவடிவ ஆன்மாவை அறிகின்றிலர். பிரமரூபக்காரிய அவித்தையின் பலத்தானே அறிந்திலர் என்றதாகும். துயிலின்கண்ணே இச்சீவர் ஆநந்தவடிவ ஆன்மாவையறிந்திலர். அவ்வறியாமை அஞ்ஞானரூபகாரண அவித்தையின் பலத்தானே யாமாதலின், காரியகாரணரூபத்தால் அவித்தையே சர்வ ஜீவர்கட்கும் மோகத்தையடைவிப்பதாகும். துயிலின்கண்ணே சைதன்னியவடிவ ஆன்மாவிடத்தே தோற்றும் அறியாமையில் ஆன்மாவின் சைதன்னியவடிவத்தின் நாசகாரணமின்றாம்; மற்றோ, சர்வ துவைதப் பிரபஞ்சத்தின் அபாவமே அஞ்ஞத்தன்மையின்கட் காரணமாம். ஆன்மாவின் சைதன்னியவடிவம் துயிலின்கண்ணுமிருக்கின்றது. 'ந ஹி த்ரஷ்டுர் த்ருஷ்டேர் விபரிலோபோ விந்யதே அவிநாசித்வாத்' திருஷ்டாவாய ஆன்மாவின் சொரூப

பூத சைதன்னிய திருஷ்டி நாசமற்றதாமாதலின், அதற்கு எவ்வவத்தையின்கண்ணும் அபாவமுண்டாகாதாம். துயிலின்கண்ணே ஒருக்கால் ஆன்மாவின் சைதன்னியவடிவம் நாசமாகுமாயின், இவ்வான்மா தமரூப அஞ்ஞானத்தையுமுணராது. துயிலின்கண்ணே தமரூப அஞ்ஞானத்தையோ இஃதவசியமுணர்கின்றது. ஏனெனின், துயிலினின்று மெழுந்த ஜீவன் "யான் சிறிது மாத்திரையு மொன்று மறியேன்" என்று ஸ்மரிப்பன். நனவின் ஸ்மரணம் அஞ்ஞானத்தையே விடயஞ் செய்யும். முன்னர் அநுபவித்த வஸ்துவின் ஸ்மரணமே யுண்டாமாதலின், இவ்வான்மா சுழுத்தியின்கண்ணே அஞ்ஞானத்தை அவசியம் அநுபவித்ததேயாகும். அவ்வநுபவ ஜன்னிய சம்ஸ்காரத்தானே நனவின்கண்ணே அஞ்ஞானத்தின் ஸ்மரணமுண்டாகுமாதலின், அத்துயிலின்கண் ஆன்மாவின் சைதன்னியரூபத் தன்மை நாசமாகாதாம் இப்போது அஞ்ஞானத்தின் துச்சரூபத்தன்மையை நிரூபிப்பாம். ஹே தேவதைகளே! இந்தப்பிரகாரம் துயிலின்கண்ணே அநுபவ விஷயரூபத்தால் சித்தஞ்செய்யப்பட்ட ஆன்மாவினும் வேறாய ஜடரூப அஞ்ஞானம் பிரத்தியக்ஷாதிப் பிரமாணங்களால் கவரமுடியாதாமாதலின், அறிஞர்கள் அதனைத் துச்சமென்றனர். இவ்வுலகத்தே பெபபொருள் மூன்று காலத்திலும் சத்தையற்றதாமோ, சொரூபமற்றதாமோ, நாமமாத்திரததானே எதற்குப் பிரதீதியாமோ, அப்பொருளை உலகத்தே துச்சமென்பர். மலடிமைந்தன், மனுடக்கோடு முதலிய பொருள்கள் முக்காலதநுஞ் சத்தையற்றதும், சொரூபமறறதும்; மலடிமைந்தன் மநுடக்கோடு முதலிய நாமமாத்திரத்தால் பிரதீதியாவதுமாகுமாதலின், அவற்றைத் துசசமென்பதேபோல, அஞ்ஞானமும் முக்காலத்தும சத்தையறறதும், சொரூபமற்றதும்; அஞ்ஞானம், அவித்தை, மாயை யென்பனவாதி நாமமாத்திரத்தானே பிரதீதியாவதும் ஆமாதலின், அதனை அறிஞர் துச்சமென்றனர். அவ்வாறு துச்சமாயினும் அஞ்ஞானம சர்வ சம்சாரகாரணமாம் அதனானே, வேதவேத்தாக்கள் அதனைத் துர்க்கடமென்றனர். இவ்வஞ்ஞானம் மலடிமைந்தனைப் போல துச்சரூபமாயினும பாவரூபமாய்ப பிரதீதியாகும இவ்வுலகின் காரணமாதலின், வேதவேத்தாக்கள் பாவரூபமென்றனர். துசசரூபததன்மை பாவரூபத்தன்மையென்னும் தர்மங்கள் பரஸ்பரம விரோதிகளாதலின், ஒன்றன்கண்ணே யிராவாம். இவ்வாறு கூடாமை விசாரித்து அறிஞர்கள் அஞ்ஞானத்தை அநிர்வசநீயமென்றனர் இவ்வஞ்ஞானம்சைதன்னிய சொரூப ஆன்மாவினும்வேறாம். ஜடஜகத்தின் காரணரூபமாம். சேதன ஆன்மாவை மறைபபதாமாதலின், அறிஞர் ஜடமென்றனர். கடாதிகள் தம துற்பத்தியின் முன்னா மண் முதலியவறறேயிருக்கும் பிராகபாவத்தின் பிரதியோகித்தன்மைவடிவ அநதமுடையனவாவதேபோல, இவ்வஞ்ஞானம் காலிக பரிச்சேதரூப அந்தமுடையவல்லவாதலின், அறிஞர் இவ்வஞ்ஞானத்தை அநந்தமென்றனர். கடாதிகட்கு மண் முதலியவை காரணமாவதேபோல, இவ்வஞ்ஞானத்திற்கும் ஒரு காரணத்தை யங்கீகரிக்கின், அஞ்ஞானத்தின் காரணத்திற்கும் வேறொரு காரணம் உண்டா? இல்லையா? முதற்பக்ஷத்தை யங்கீகரிக்கின் அவ்விரண்டாவது காரணத்திற்கும் மூன்றாவது காரணம் வேண்டும். அதற்கும் நான்காவது வேண்டும். இவ்வாறு காரணங்களின் பரம்பரையை யங்கீகரிப்பதில் அநவஸ்தாதோஷபிராப்தியாம். இரண்டாவது பக்ஷதததை யங்கீகரிக்

கின் அஞ்ஞானத்தின் காரணத்தாலேயே சர்வ வியவகாரசித்தியும் உண்டாம். அஞ்ஞானத்தே வீணுந்தன்மையடைவுறுமாதலின், அஞ்ஞானம் எக்காரணத்தினின்று முண்டாவதில்லை. இதை யங்கீகரித்தலேயுசிதமாம். இக்கருத்தாலே அறிஞர் அஞ்ஞானத்தை அநந்தமென்றனர். அல்லது பிரபஞ்சத்தின் அந்தத்தை எப்புருடனும் அறியானாதலின் பிரபஞ்சமநந்தமாம். அது எப்பரிச்சின்னக்காரணத்தினின்று முண்டாகாதாம். அஞ்ஞானரூப காரணத்தினின்றே யுண்டாமாதலின் வேதவேதாந்தாக்கள் அஞ்ஞானத்தை அநந்தமென்றனர். அல்லது, இவ்வஞ்ஞானம் பிரஹ்மஞானத்தானன்றி அயலான ஆயிரங்காரணங்களாலும் நாசரூப அந்தத்தை அடையாதாமாதலின் அறிஞர் அஞ்ஞானத்தை அநந்தமென்றனர். உண்மையாய்ச் சர்வ மோகங்களுமற்ற சுயஞ்சோதியாய ஆநந்தவடிவ அத்விதீய ஆன்மாவையும் இவ்வஞ்ஞானம் மறைக்குமாதலின் வேத வேதாந்தாக்கள் அஞ்ஞானத்தை மோகரூபமென்றனர். இவ்வஞ்ஞானரூப அவித்தை சுயஞ்சோதியாய ஆன்மாவின்கண் முன்னர் எப்போது முண்டாகவேயில்லை; இனி யெப்போதாகிலும் உண்டாகப் போவதுமில்லை; இப்போது மிருப்பதில்லை. இவ்வாறு ஆன்மாவின் சொரூபத்தினின்றும் எப்போதும நீங்கியிருப்பதாயினும இவ்வவித்தை தன்னுடைய அசிந்திய சத்திரூபபலத்தால சுயஞ்சோதி ஆன்மாவிற்கு நானாவகையாய மோகத்தைத்தரும். இப்போது அவித்தையாலாக்கப்பெற்ற மோகத்தின் சொரூபத்தை வர்ணிப்பாம் :—ஹே தேவதைகளே! ஆகாசாதி பஞ்சபூதங்களின் காரியரூப இதநூல சூக்ஷுமசரீரங்களில ஆநந்தசொரூபஆன்மா, யான் எனது என்னும் புத்தியைச்செய்யும். இவ்வான்மா எப்பூதங்களின் காரியத்தைப் பிரத்தியகான்ம வடிவமாய் அங்கீகரித்ததோ அப்பூதங்களின காரியத்தே அகம் புத்தியைசசெய்யும. பாகியமாயங்கீகரித்ததில மமதையைசசெய்யும. உண்மையாய்ச சாவ துவைதப்பிரபஞ்சமற்றதாயினும இவ்வாநந்தவடிவ நிர்க்குண வானமா அவித்தைவடிவ மாயையால் மோகிக்கப்பட்டதாய்ச சரீராதிகளின் பரிச்சின்னத்துவாதி தர்மங்களைத் தம்பாற்கொள்ளுப. இவை முதலாக அநேகவித மோகத்தை இவ்வான்மா வடையும. இவ்வாறு ஆன்மாவின் மோககாரணரூபத்தாலும் துச்சசடரூபத்தாலும் சாவ ஜகத்தின் காரணரூபத்தாலும் அநிர்வசநீயரூபத்தாலும முற்கூறப்பட்ட மாயாரூப அஞ்ஞானம் சிதத்துவதாமததால விசிஷ்டமாய்ப் பிரதீதியாமாதலின், அறிஞா அதனைச சததுரூபமென்றனா. அசித்தத்வரூப தர்மத்தால் விசிஷ்டமாய்ப பிரதீதியாமாதலின், அறிஞா அதனை அசதரூபமென்றனர். இப்போது அஞ்ஞானத்தின் சித்தத்வ அசித்தத்வரூபத்தை நிரூபிப்பாம :—ஹே தேவதைகளே! இந்திரியாதிகளின் விஷயத்தன்மை சித்தத்வமாம்; அது காரியரூபத்தால் அஞ்ஞானத்தின்கண்ணுமிருக்குமாதலின், அதனைச சித்தமென்பர். சொரூபமாக அஞ்ஞானத்தே இந்திரியாதிகளின் விஷயத்தன்மையின்றுமாதலின், அஞ்ஞானத்தை அசித்தமென்பர். அல்லது, இவ்வஞ்ஞானம யானஞ்ஞானியென்னும் சர்வ ஜீவர்களின் அநுபவவிஷயமாதலின், சித்தமென்பர். விசாரத்தாலே அதனிவிர்த்தியாமாதலின், அசித்தமென்பர். அல்லது, இவ்வுலகத்தே சுதந்திர புருஷனைச் சித்தனென்பர்; பரதந்திர புருஷனை அசித்தனெனபர்; சுதந்திரத்

தன்மையும் பரதந்திரத்தன்மையும் இக்காரணரூப அஞ்ஞானத்தேயிருக்குமாதலின், இவ்வஞ்ஞானத்தைச் சித்த அசித்த நாமங்களாற்கூறினர். இப்போது அஞ்ஞானத்தின் சுதந்திரத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே தேவதைகளே! வேதவேத்தாக்கள் அஞ்ஞானத்திற்கு இவ்வாறுய சுதந்திரத்தன்மையைக் கூறியுள்ளார்:—இவ்வஞ்ஞானம் சொரூபத்தால் ஜடதுச்சரூபமாயினும், அநிர்வசநீயரூபத்தால் பிரசித்தமாம். உண்மையாய் மோகமற்ற அத்விதீய ஆன்மாவையும் மோஹிப்பிக்குமாதலின், இவ்வஞ்ஞானம் சுதந்திரமெனப்படும். அலலது, மத்தியான சூரியனிடத்தே அந்தகாரத்தின் ஸ்திதியாதல் மிகவும் முடியாததேபோல, சுயஞ்சோதி ஆநந்தவடிவ ஆன்மாவின்கண் துக்கத்தையடைவிக்கும் அஞ்ஞான ஸ்திதியாதலும் அத்தியந்தம் துர்க்கடமாமாயினும், இவ்வஞ்ஞானம் தன்பலத்தால் சுயஞ்சோதியாய ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே ஸ்திரமாமாதலின், அறிஞர் அஞ்ஞானத்தைச் சுதந்திரமென்றனர்; அல்லது, இம்மாயைவடிவ அஞ்ஞானம் சுயஞ்சோதியாய ஆன்மாவையே யாசிரயித்திருக்குமாதலின், ஆன்மாவின் அதீனமாம்; இது எவ்வான்மாவினதீனமாயிருக்குமோ அவ்வான்மாவைத் தன் வயமாக்குமாதலின், வேதவேத்தாக்கள் அஞ்ஞானத்தைச சுதந்திரமென்பர். இப்போது அஞ்ஞானரூப அவித்தையின்கண்ணே பரதந்திரத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே தேவதைகளே! இவ்வஞ்ஞானரூப அவித்தை தனது ஆசிரயத்தையும் விஷயத்தையுமபேக்ஷித்தே சித்தமாம்; அஃதின்றிச சித்தமாகாதாமாதலின், அறிஞர் அவித்தையைப் பரதந்திரமென்றனர்.

சங்கை:—ஹே பகவன்! அவித்தையின் சொரூபமே அவித்தையின் ஆசிரய பாவத்தையும விஷயபாவத்தையுமடையுமாதலின், அதற்கு வேறு ஆசிரய விஷய அபேக்ஷை சம்பவியாதன்றே?

சமாதானம்:—ஹே தேவதைகளே! இவ்வுலகப் பிரசித்த அந்தகாரத்திற்கு அந்தகாரம் விஷயமாவதின்றும்; மற்றே, அநதகாரததினும் வேறுய கிருகாதி பதார்த்தமே அந்தகாரத்திறகு விஷயமாவதேபோல, அவித்தையும் அவித்தைக்கு விஷயமாகாதாம்; அவித்தையினும் வேறுய சேதன ஆன்மாவே அவித்தைக்கு விஷயமாம்; ஏனெனின், எப்பொருள் எப்பொருளில் ஓரதிசயத்தன்மைவடிவ பலத்தையுண்டாக்குமோ அப்பலத்தின் ஆசிரய பதார்த்தமே அப் பலகர்த்தாப் பதார்த்தத்திற்கு விஷயமாகும்; அப்பல உறபத்திதன்னினும் வேறுய பொருளின் கண்ணே செய்யப்படும்; தன்பால் தானே அதிசயத்தன்மைவடிவ பல உற்பத்தி செய்வதில் எதற்குஞ் சமர்த்தின்றுமாதலின், அவித்தையின்கண்ணே விஷயத்தன்மை சம்பவியாது. யான் அஞ்ஞானி, யான் துக்கி, யென்னு மநுபவத்தாற் சித்தமாய ஆவரண விக்ஷேபரூபபலத்தை அவித்தை ஆநந்தவடிவ ஆன்மாவின் கண்ணே யுண்டாக்குமாதலின், அவ்வவித்தைக்கு ஆன்மாவே விஷயமாம; அவித்தைவிஷயமன்றும்; இவ்வாறே அவித்தைக்கவிதகை ஆசிரயமுமல்ல. உலகப் பிரசித்த அந்தகாரத்திற்கு அந்தகாரம் ஆசிரயமல்ல; மற்றே, அதனினும் வேறுய இல்லம் முதலியவையே ஆசிரயமாம். அதுபோலவே அவித்தைக்கும் அதனினும் வேறுய ஆன்மாவே ஆசிரயமாம்; ஏனெனின், இவ்வுலகத்தே எப்பொருள் எப்

பொருளினும் வேறோ, அதிகமோ, அப்பொருளே அப்பொருட்காசிரயமாம். அவித்தையின்கண்ணே அவித்தையின் வேறாயதன்மையும், அதிகரூபத்தன்மையும சம்பவியாவாமாதலின், அவித்தையே அவித்தையினாசிரயமாகாதாம். இச்சைதன்யவடிவ ஆன்மா அவித்தையினும பின்னமும் அதிகமுமாமாதலின், இதுவே அவித்தையினாசிரயமாம். சுத்தி விஷயக அஞ்ஞானம் ரஜதமபலுடைய புருஷனிடத்தேயிருப்பதேபோல அவித்தை ஆன்மாவின்கண்ணேயிருக்கும்.

சங்கை :—ஹே பகவன்! சுததிவிஷயக அஞ்ஞானத்தின் ஆசிரயம் மயங்கியோனவன்; சுத்தி விஷயமாகும. அதுபோல, அஞ்ஞானரூப அவித்தைக்கும் ஆசிரயமும் விஷயமும் வேறேயாமன்றோ?

சமாதானம் :—ஹே தேவதைகளே! சுததியினஞ்ஞானரூப திருஷ்டாந்தத்தின்கண்ணே அஞ்ஞானததிற்குப் புருடவடிவ ஆசிரயத்தினும் சுத்திரூப விஷயம் பின்னமாப்ப பிரதீதியாமாயினும, உண்மையாய் ஆராய்ந்து நோக்கின் அஞ்ஞானத்திற்கும் சுததிவிஷயமன்றாம; மறறே, சுத்திக்குள்ளிருக்கும சுத்தியவச்சின்ன சேதன ஆன்மாவே அஞ்ஞானத்திறகு விஷயமாம; ஏனெனின், சுத்திமுதலிய சடபதாரத்தமோ இயலபாயே மறைபட்டதாம்; அவற்றில அஞ்ஞானத்தாலாக்கபபெறற ஆவாணம சமபவியாதாமாதலின், எஞசியதாய் அவ்வஞ்ஞானம் பூர்வ இதநதைவடிவத்தால கூறபபட்ட சுததியவச்சின்ன சேதனத்தையே விஷயஞசெய்யும. ஈண்டு, சேதன ஆன்மாவின் சொரூபத்தை ஆவரணஞ்செய்தலே அதன்கண் அஞ்ஞானவிஷயத்தன்மையாம்.

சங்கை :—ஹே பகவன்! அவ்வஞ்ஞானம ஒருகால் சேதனத்தையே விஷயஞசெய்யுமாயின், சுகதியின்கண்ணே அவ்வஞ்ஞான விஷயத்தன்மைப் பிரதீதியாதலாகாதன்றோ?

சமாதானம் :—ஹே தேவதைகளே! முன் இதநதைவடிவத்தால் வர்ணிக்கப்பட்ட ஸ்புரணரூப சாமான்ய சைதன்யததில சுத்தியவச்சின்ன விசேஷ சைதன்னியம் தாதாதமிய சம்பநததைதானேயிருககும. அநத சுத்தி யவச்சின்ன விசேஷ சைதன்னியததையே கல்பித ரஜத உபாதான காரணரூப அஞ்ஞானம மறைக்கும்; சாமான்ய சைதன்னியத்தை மறையாதாமாதலின், அது அவச்சேதகத்தன்மைரூபத்தானே சுத்தியையும் விஷயஞசெய்யும்; இக்கருத்தானே சுக்திவிஷயக அஞ்ஞானமென விவகரிக்கபபடும. பாகிய சுக்திமுதலிய பதார்த்தங்களிலிருக்கும் ஸ்புரணரூப சேதனம் அந்தா ஆன்மாவினும் வேறன்றாம்; மற்றே, அந்த ஸ்புரணரூப சேதனத்தை வேதவேத்தாக்கள் அந்தரான்ம சொரூபமாயே கூறினர். ஆதலின், சுக்தி முதலிய திருஷ்டாநதங்களினும் அந்தரான்மாவே அஞ்ஞான விஷயமாம்; அவ்வஞ்ஞானம் ஆன்மாவின் ஆசிரயமாயிருக்கும். இப்பொருளில் எவ்வாதிக்கும் விவாதமின்றாம். எலலா வாதியருமே அஞ்ஞானத்தை ஆன்மாவினாசிரிதமாகவே யுடன்பட்டுளார். அஞ்ஞான விஷயத்தின்கண்ணே, வாதிகட்குப் பரஸ்பரம் விவாதங் காணவருகின்றது. சில வாதியர் அனான்மப்பொருளையே அஞ்

ஞான விஷயமென்பர்; அவர் மயல் முற்கூறிய யுக்திகளானே நீக்கப்பட்டதாத லின், உண்மையாய் அவித்தைபற்ற சச்சிதாநந்தவடிவ ஆன்மாவே அவித்தை யின் ஆசிரயமும் விஷயமுமாம் எனத் துணியப்பெறும். இவ்விஷயம் அன்னிய சாஸ்திரத்தின்கண்ணும் கூறப்பட்டுளது.

"ஆஶ்ரய ஜவிஷயஜஹாமிநீநிவிஃஹாமதிகி ரெவகெவலா ।
வஃவஃவஸி ஜூதஃஹொஹி வஸ்ரொ நாஶ்ரயொஹவதிநா விமொஅர ॥"

"பிரிப டாதமெய்ப் பேரறி வொன்றுமே
யொருவி டம்விட யம்மென வொன்றுமே
மருவு முன்னரே மன்னுத மக்குப்பின்
னருவி டம்விட யம்மென லாகுமோ".

(பொ-ள்.) ஜீவ ஈசாதிபேதமற்ற அத்விதீய சேதனமே அநாதியஞ்ஞான ஆசிரயமும் விஷயமுமாம்; சேதன வஸ்துவினும் வேறாய எலலாப் பொருள் களும் அஞ்ஞானகாரியமாதலின், அநான்மப்பொருள் அநாதியஞ்ஞான ஆசிரய ரூபமும விஷயரூபமும் ஆகாதாம். இவ்வாறு ஆசிரயத்வ விஷயத்வவடிவத்தானே அவித்தை ஆநந்தவடிவ ஆன்மாவோடு சம்பநதமுறறதாமாதலின், இது பரதந் திரமேயாம். ஆசிரயவிடய அபேக்ஷை அவிததையின்கண்ணே பரதந்திரத்தன்மை யைச் சித்தஞ்செய்வதேபோல, ஜடத்தன்மைத்தருமமும் அவித்தையின்கண்ணே பரதந்திரத்தன்மையையே சித்தஞ்செய்யும்; ஏனெனின், ஜடத்தன்மை வடிவத் தானே பிரசித்தமாய தேர் முதலியவை எருது குதிரை முதலிய சேதனப பொருள்களின்றிச் சுதந்திரமாய்ப் பிரவிருத்தியா; மறறோ, அவறறின் சம்பந்தத் தானே அவற்றின்கண்ணே கிரியையுண்டாமாதலின், சர்வ ஜடப்பொருள்களும் சுதந்திரமற்றனவேயாகும். அஞ்ஞானரூப அவித்தையும் தேர் முதலியனபோலச் சடவடிவமாமாதலின், அவித்தையும் பரதந்திரமேயாம். இதனுவிவ்வநுமான மாம்:—அவித்தை பரதந்திரமாகத் தகுதியதாம், ஜடமாதலின், தேர் முதலியவை போலும் என்பதாம். இங்ஙன் அவித்தையின்கண்ணே பரதநதிரத்தன்மை சித்த மாம். சுதந்திரமற்ற பொருள் அசித்தமும் மசுதந்திரமுமாதலின், அவித்தையும் அசித்தமேயாம். அசித்தமாகிய பொருள் அசததேயாகும். முயற்கோடு முதலி யவை அசித்தமாதலின், அசத்தாவனபோலவே அசித்தமாதலின், அவித்தையும் அசத்தியமேயாகும்.

சங்கை:—ஹே பகவன்! இவ்வவித்தை அசுதநதிரத்தன்மை, அசித்தத் தன்மை, அசத்தன்மை முதலிய தருமமுடையதாயின், முன்னர்த்தாங்கள் அவித் தையின்கண்ணே சுதந்திரத்தன்மை, சித்தத்தன்மை, சத்துத்தன்மை முதலிய தருமங்களைக் கூறியதென்னே?

சமாதானம்:—ஹே தேவதைகளே! எக்கருத்தானே யாம் அவித்தையின் கண்ணே அத்தருமங்களைக் கூறினேமோ அதைக் கேட்பீராக. அசத்தாம் பொருளியாவும் ஒரு காரியத்தை யாரம்பிக்கும் கருத்தாவாகாதாம். அசத்திய மலடிமைந்தன் ஒரு காரியத்தையு மாரம்பியானுதலின், அசத்துவதருமமோ

வியாப்பியமாம்; காரியத்தை ஆரம்பியாமைத் தருமம் வியாபகமாம். யாண்டு வியா பகத்தின் அபாவமாமோ ஆண்டு அதன் வியாப்பியத்திற்கும் அபாவமேயாம். மகா ஜலத்தே அக்கினிரூப வியாபகத்தின் அபாவமாகுமாதலின், அந்நீரில் அதன் தூமரூப வியாப்பியமும் அபாவமாம். அதுபோலப் பிரசங்கத்தே சர்வ ஜகத்தையு மாரம்பிக்கும் அசங்க நிர்க்குண ஆன்மாவையும் மோகிப்பிக்கும் அவித்தையில் காரிய அநாரம்பகத்தன்மைவடிவ வியாபக தருமமிராதாமாயின், அதன் வியாப் பியரூப அசத்வதருமமு மிராதாமாதலின், அவித்தையைப் பூர்வம் யாம் சத்திய மெனக்கூறினேம். அசத்துவ தருமம் அசித்தத்துவதருமத்தின் வியாபகமாம். அவித்தையின்கண்ணே அசத்துவரூப வியாபக தருமமிலாதாயின் அசித்தத்துவ ரூப வியாப்பிய தருமமுமிலதாகுமாதலின், முன்னர் யாம் அவித்தையைச் சித்த மெனக்கூறினேம். அச்சித்தத்துவ தருமம் அசுதந்திரத்துவ தருமத்திற்கு வியா பகமாம். அவித்தையின்கண்ணே அசிதத்துவரூப வியாபகதருமமிலதாயின் அசுதந்திரத்தன்மைவடிவ வியாப்பிய தருமமிலதாகுமாதலின், முன்னர் யாம் அவித்தையைச் சுதந்திரமென்றேம். இவ்வாறு அவித்தையின்கண்ணே சத்துவம், அசத்துவம், சித்தத்துவம், அசித்தத்துவம், சுதந்திரத்தன்மை, அசுதந்திரத் தன்மைஎன்பனவாதி சாவ தருமங்களும் சமபவிக்குமாதலினுனே, வேதவேத்தாக் கள் அவித்தையை அநிர்வசனீயம், துர்க்கடம் என்பன முதலிய நாமங்களால் கூறி னர். இப்போது அவவவித்தை ஆன்மாவின்கண்ணே செய்யும வியாமோகத்தை நிரூபிப்பாம்:—ஹே தேவதைகளே! ஜீவர்களிடத்தே யானஞ்ஞானி, யான்றுக்கி யென வுண்டாம் போதம எப்போதுமுண்டாகாதாம்; மற்றூ, ஓரொருக்காலே யுண்டாம. ஓரொருக்காலுண்டாம் பொருளியாவும் காரியரூபமேயாகும். கடாதி கள் ஓரொருக்காலுண்டாதலின் காரியரூபமாவதேபோலப் போதமும் ஓரொருக் காலுண்டாதலின் காரியரூபமேபாம். காரியமாவனவெல்லாம ஒரு காரணத் தானே ஜன்னியமாம், காரணத்தானன்றிக் காரிய உறபத்தியாகாதாம். கடாதிகள் காரியமாதலின் மண் முதலிய காரணஙகளானே ஜன்னியங்களாம். ஆங்கே போதமும் காரியமாதலின், ஒரு காரணததானே அவசியம ஜன்னியமாம். நானஞ் ஞன், நான்றுக்கி என்னும் விபரீதபோதம் அவித்தையானன்றி வேறு காரணத் தானே சம்பவியாதாம்; மற்றூ, செய்பாதகதைச் செய்விக்கும் சமர்த்தையாய அவித்தையே போதகாரணமாம்; ஏனெனின், உண்மையாயோ சுயம்பிரகாச ஆநந்தவடிவ ஆன்மாவிடத்தே யானஞ்ஞானி, யான்றுக்கியென்னும் விபரீத போதம் ஒருகாலு முண்டாவதில்லையாதலின், எஞ்சியதாய்ப் போதத்தின் காரண ரூப அவித்தையே கற்பிக்கபபெறும். ஆதாரத்தை யடைவுறற நீசன் ஆதாரஞ்செய்ப வனது மத்தகத்தே யேறிக்கொள்வதேபோலக் கற்பிக்கப்பட்ட நீச அவித்தையும் தன்னாசிரயமாய ஆன்மாவைத் திரஸ்கரிக்கும். தானே விலாசத்தையடையும். அவித்தையானே திரஸ்கரிக்கப்பட்ட சர்வ ஜகத்தின் அதிஷ்டானமாகிய சேதனம் யாவினுமுள்ளாகிய ஆநந்தவடிவ ஆன்மா அவித்தையின் மகிமையானே அசத் தின் சமானமாகும். அநேக வகையாய விலாசங்களோடு கூடிய மாயைவடிவ அவித்தைக்குக் 'கூடஸ்தான்மாவில்லை'. யென்பதான அசத்வாபாதனரூப முதல்

விலாசமாம்; அதனாலே, ஆன்மா தன் சுயஞ்சோதியாய ஆநந்தவடிவத்தையும் மறந்தது. இவ்வாறு ஆன்மா அசத்வபாதனரூப அவித்யா விலாசத்தைக்கண்டு வேறேயும் அநேகவகையாய விக்ஷேபரூப விலாசத்தைக்காணும்; அவற்றை நீ கேட்பாயாக. யான் பிறந்தேன், யான் பாலகன், யான் யௌவனன், யான் விருத்தன், யான் மரிப்பேன், யான் சுகி, யான் துக்கி, யான் சுவர்க்கி, யான் நரகி, யான் ஸ்திரீ, யான் புருடன், யான் நபும்சகன், யான் பாவி, யான் கருமி இவை முதலாக அநேகவகையாய அகமபிமானரூப துக்கங்களை ஜீவான்மாக்காணும். ஜன்மாதிகளின் அகமபிமானத்தோடுகூடியதாய்ப் பின்னர் மமத்வ அபிமானத்தைச்செய்யும். அதன் வசத்தாலே ஜீவான்மா என்றநதை, என்றாய், என் மைந்தன், என் மகள், என் மனைவி, என் பந்துக்கள், என்றனம், என் வீடு, என்பனவாதியாய் நானாவகையாய அவித்யா விலாசத்தைக்காணும்; அது சம்சார திதி காரணமாம். இத்தகைய அவித்யாவிலாசப்ராப்தியின்பின்னர் தேகரூபப்பந்தனக கிருகத்தையடைவுற்றதாய்க் காமக்குரோதாதி சங்கிலியால கட்டப்பட்டதாய் 'யான் எப்போதுமிருக்கவேண்டும. எனதபாவம் ஒருக்காலும் உண்டாகலாகாது' எனப் பிரார்த்தித்து தன்றேகத்தைக் காத்துக்கொண்டு இம்மூடன் அநேக ஜன்மங்களையடைவன். அவறறுள்ளும், இமமூடன் சுபஞ்சோதிபாநந்தவடிவ அத்விதீய ஆன்மாவைக்காணாதவனாய் அநேகவகையாய துக்கங்களைக காண்பவனாய் நிரந்தரம் இச்சம்சாரத்தே சுழல்வன். அதனால் இருந்தபோதிலும் இல்லாததுபோலவே யாவனாதலின், இம்மாயாரூப அவித்தை அத்தியந்தம் விசித்திரமாம். அத்தியநதம துர்க்கடமாம். சர்வ ஜீவர்கட்கும் துபரை யீவதாம. சம்சாரரூப விஷவிருக்ஷ ஜனனிபாம். விசாரஹீனமனுடரால் அறிபத்தகாததாம். இத்தகைய அவித்தையின் மகிமைபாலே இஜ்ஜீவான்மா யானஞானி, யான் துக்கி, யான் பிராஹ்மணன், யான் மகாகுலத்தையுடையவன் என்பதாதி விபரீத ஞானத்தோடுகூடியவனாய் இச்சம்சார சமுத்திரத்தே அடிக்கடி மூழ்குவன். இப்போது ஆலம்வித்தைபோல அவித்தையின் விவஸ்தையைக் கூறும்பொருட்டு முதலில் அவித்தையின்கண்ணே சம்சார விருக்ஷபீஜரூபத்தன்மையையும், பரிணாம சுபாவத தன்மையையும்வருணிப்பாம்:—ஹே தேவதைகளே! அவித்தை சம்சார விருக்ஷ பீஜரூபமாம், ஞானகருமத்தின் சமஸ்காரரூப அநேகங்கோடி வாசனைவடிவ காபபத்தோடு கூடியதாம், படம்போலச் சங்கோசவிகாச சுபாவமுடையதாம், சுழுப்தி மூர்ச்சை மரணம் மகாப்பிரளயம் என்பதாதி காலங்களிலோ அவித்தை சங்கோசபாவத்தையடையும்; நனவு முதலியவறறே விகாசபாவத்தையடையும்; ஜீவான்மா நானாவகையாய தேகங்களில் நனைக்கனைக்களில் பாதந்திரமாய் அவித்தையின் விகாசபாவத்தாலே அநேகவகையாய துக்கங்களையடையுமாதலின், அது ஜீவர்கட்குத் துக்ககாரணமேயாகும. நனா முதலிய அவஸ்தைகளில் போகத்தைக்கொடுக்கும் கருமங்களின் க்ஷயமானபோது அவித்தை சங்கோசத்தையடையும். துயில் முதலிய சங்கோசகாலத்தே ஜீவாத்மா நனா முதலிய அவஸ்தைகளின் பரிசிரமத்தைப் பரித்தியாகித்துச் சயனஞ்செய்யும். ஆகாயத்தின்கண்ணே பறத்தலினால் பரிசிரமத்தையடைந்த பட்சி பரிசிரமத்தைப் பரித்தியாகித்துத் தன் கூண்டில் சயனஞ்செய்வதேபோல, ஜீவான்மா நனா முதலியவற்றின் விக்ஷேபத்தைப் பரித்தி

யாகித்துத் துயில் முதலியவற்றே சயனஞ்செய்யும். அக்கால் துக்கத்தையடையா தாயினும், இனிவரும் துக்கங்களின் பீஜரூப அவித்தை துயின் முதலிய காலத்து மிருக்குமாதலின், அதன் சப்பந்தத்தானே ஜீவான்மா ஆண்டும் துக்கியேயாகும். இவ்வாறு சங்கோச விகாசசுபாவங்களால இவ்வவித்தையே சம்சாரகாரணமாம். இவ்வவித்தை 'நான் அஞ்ஞன்யென்னும்' சர்வ ஜீவர்களின் அநுபவத்தானே சித்த மாம். அத்தியந்தம் துறசடமாம். முற்கூறிய நானாவகையாய விகாசங்களோடு கூடிய பொய்யாய அவித்தை ஜீவர்களின சம்சாரகாரணமாவதேபோல, குருசாஸ்திர உபதேசத்தானே அறியப்பெற்ற இவ்வான்மா ஜீவர்களின் மோக்ஷகாரண மாம். சம்சார தசையின்கண்ணே ஜீவர்கட்கு ஆநந்தவடிவ ஆன்மாதோற்றாது; அல்லது, விபரீதமாய்த் தோற்றும் அதுபோல மோக்ஷதசையின்கண்ணே அறிஞர்கட்கு அவித்தை தோற்றாதாம.

சங்கை :—ஹே பகவன்! ஒரே அவித்தை அநேக ஜீவர்களின் விவகாரத்தை யெவ்வாறு சித்தஞ்செய்யும?

சமாதானம்.—ஹே தேவதைகளே! அம்மாயாரூப அவித்தை உண்மை யாயே ஏகரூபமாயின் ஆலவிதையேபோல நானாவிதமாய்ப் பிரதீதியாம். இப்போது ஆலவிதைத் திருஷ்டாந்தத்தை வெளிப்படையாய் விளம்புவாம்:— ஹே தேவதைகளே! ஆலவிதையைத் தொடர்ந்த ஜாதிரூப சாமான்யமே ஆல மரங்களின் காரணமாகும. ஆலவிதைகளாகிய வியக்திகளோ நாசமுடையன வாதலின் யாண்டுந் தொடர்ந்திலங்கா; இலங்காதாகவே அவை யாண்டும் காரணத்தன்மைக்குத் தகுதியுடையனவல்லவாம. அதுபோலவே கடபடாதி சர்வ காரியங்களின் பிரசித்தகாரணரூப மண் நூல முதலியவைகளில் தொடர்ந்திலங் கும் சாமானியத்தையே அவித்தை, மாயை, அஞ்ஞானம், சக்தி என்பதாதி நாமங் களால் வேதவேத்தாக்கள் கூறினா. அவ்வவித்தைவடிவ மாயையே சர்வ காரி யங்களின் காரணரூபமாம். ஆலம விரைவடிவ வியத்திகள நாசமாயினும எல்லா விரைகளிலும் அநுகதமாய ஜாதிரூப சாமான்யம நாசத்தையடையாததேபோல, துயில் முதலிய அவஸ்தைகளில சர்வ காரியங்களின் நாசமுறினும அவற்றின் காரணவடிவ சாமானயமாயை நாசத்தையடையாது. ஆலம் விதையின்கண்ணே யிருக்கும ஜாதிரூப சாமான்யம அவ்வவ்வால விருக்ஷங்களின் காரணமாய விதை வியக்திகளின் விசேஷத்தன்மையை யங்கீகரித்து வேறு வேறாய காரியத்தைச் செய்வதேபோல, அவித்தையாரூபமாயையும அவ்வககாரியத்தின் சூக்கும அவஸ்தைவடிவ சம்ஸ்காரங்களை யங்கீகரித்து நானாவகையாய ஜகத்காரணரூபமாம். ஆலம்விதையின்கண்ணேயிருக்கும சாமான்யரூப ஜாதி நாசமுறாதிருப்பினும் அவ் வவ்வாலவிருக்ஷ உற்பத்தியின் பின்னர் அவ்வவ்விதை வியக்திகளின் நாசமாவ தேபோல, மாயை நாசமுறாவிடினும அவ்வககாரிய உற்பத்தியின் பின்னர் அவ்வச் சம்ஸ்காரங்களின் நாசமுண்டாம். ஒரே ஆலவிதை ஆலவிருக்ஷவடிவ பரிணா மத்தையடைந்து பலங்களையடையும். பலத்தோடுகூடிய ஆலவிருக்ஷத்தினின்றும் வசந்தருதுவின்கண்ணே அநேககோடிரூபமா யுற்பன்னமாம். சாலவிதை வியக்தி

களில் மீண்டும் ஒவ்வொருவிதை வியக்தி ஆலவிருக்ஷ உற்பத்திவாயிலாய் அநேகங்கோடி ரூபமாயுண்டாம்; அதுபோலவே இச்சாமான்யரூபமாயையும் தன் சம்ஸ்காரரூப வியக்திகளால் அநேகவகையாயுற்பத்தியாம். ஏனெனின், அம்மாயையால் ஒருகாரிய முண்டானபின்னர் அக்காரியத்தால் மீண்டும் நானுவகையாய காரியமுண்டாம். அவற்றுள் மீண்டும் ஒவ்வொரு வியக்தி அநேகரூபமாகும். இவ்வாறு சம்சாரத்தே அநந்தரூபத்தன்மைச் சித்தமாம். அச்சாமான்யரூபமாயையின் விசேஷ வியக்திரூப சம்ஸ்காரம் அநந்தமாயினும் வேதவேத்தாக்கள் தொகுத்து நால்வகையாயதைக் கூறியுள்ளார்; ஏனெனின், அச்சம்ஸ்காரங்களின் காரியம் தேகம், இந்திரியம், கிரியை, போகம் என்னும பேதத்தால் நால்வகையாதலின், அச்சம்ஸ்காரமும் நால்வகையேயாகும. பீசத்தினின்று அங்குரமும, அங்குரத்தினின்று மீண்டு பீஜமும், பீஜத்தினின்று மீண்டு அங்குரமும் என்பதாக பீஜாங்குரங்கட்கு நிரந்தரப பிரவாகம் செல்வதேபோல, அநாதி சம்சாரத்தே அச்சம்ஸ்காரங்களினின்றும் தேகாதிகளும், அத்தேகாதிகளினின்று மீண்டும் சம்ஸ்காரங்களும், அச்சம்ஸ்காரங்களினின்று மீண்டும் தேகாதிகளுமுண்டாம்; என்பதாக சம்ஸ்காரதேகாதிகளின் நிரந்தரப் பிரவாகஞ்சென்று கொண்டேயிருக்கும். சம்ஸ்கார தேகாதிகளுள் எந்த வியக்தியும் ஸ்திரமாயிராதாம். இப்போது இத்தேகாதி நால்வகைக் காரியங்களின் மூன்று மூன்றுவகையாய பேதத்தை வர்ணிப்பாம் :—ஹே தேவதைகளே! நானுவகையாய அவாந்தர பேதங்களோடு கூடிய ஜராயுஜாதி நால்வகைப் பிராணிகளும், அந்நால்வகைப் பிராணிகளுள்ளிருக்குந் தேகம், இந்திரியம், கிரியை, போகம் மென்னும் நால்வகையாய காரியமுமுள்ளனவாம். அக்காரியம் உத்தமம், மதயமம், அதமமெனனும பேதத்தால் மூன்று மூன்றுவகையாகும். அவ்வசசாதியையுடைய சீவர் அநநதாாதலின் சர்வ ஜீவர்களில் அவ்வுத்தமாதிரூபத்தைக்கூறமுடியாதாமாதலின், சர்வவர்ணங்களினு மேன்மையதாய பிராஹ்மண ஜாதியில் அவ்வுத்தமாதி பாவத்தை நிரூபிப்பாம :—பிராஹ்மணத்துவஜாதியையுடைய பூதேவரூப பிராஹ்மணர் இப்பூவுலகத்தே பிறந்து சுகதுக்கங்களைப் போகிப்பராதலின், பிராஹ்மணத்துவ ஜாதியையுடைய சரீரமும் புண்ணியபாவங்களாற செய்யபபட்டதாம. பிராஹ்மண சரீரங்களினுத்தமத்தன்மை அநேகவகை நிமித்தங்களாலாம்; அவற்றுள், தந்தைதாய் ஆசிரியர்களின் குலம், வித்தை, தவம் முதலியவற்றின் மேன்மையினும், மைந்தர்களிடத்தே உத்தமத்தன்மையடைவுறும். தந்தை தாயரின் அம்சரூப வீரியங்களின் அவஸ்தா விசேஷங்களால் பரிபக்குவமாதலும் மைந்தனிடத்தே உத்தமத்தன்மையை யடைவிக்கும். புத்திரன் பத்துமாதரூபகாலம் நிறைந்த பின்னர் மாதாவின் உதரத்தினின்றும் வெளியில் வருதலினுலும் மைந்தனிடத்தே உத்தமத்தன்மையாம். சுநதிர சிவப்புவடிவ லாவண்ய சதாசார சிரேஷ்டலக்ஷணம் முதலிய குணங்களாலும் சரீரத்தே உததமத்தன்மையாம். இவை முதலிய அநேகவகை நிமித்தங்களால் உத்தமத்தன்மையுண்டாம். இந்திரியங்களின் உத்தமத்தன்மைவருமாறு:—தேகத்தின் உத்தமத்தன்மை அநேக நிமித்தங்களாலாவதேபோல, ஸ்ரோத்திராதி இந்திரியங்களினுத்தமத்தன்மையும் அநேக நிமித்தங்களாலாம். ஆண்டு, ரூபாதி விஷயங்களைக் கவர்வதில் ஸ்புடத்தன்மையினுனும் சுந்தரசெய்கை

விசேஷத்தாலும் விஸ்தாராதிரூப பரிமாணத்தாலும இந்திரியங்களில் உத்தமத் தன்மையுண்டாம். கிரியையின் உத்தமத்தன்மை வருமாறு :—கிரியைவடிவ கருமத்தே சிரத்தாபக்தி பூர்வகம தேவதாத்தியானுதிரூப பிரக்ஞையாலும், சாஸ்திரத்தில் விதிக்கப்பட்ட தானுதிகளைச செய்தலாலும், நிஷேதிக்கப்பட்ட ஹிம்சாதிகளைச் செய்யாமையாலும் உததமததன்மையுண்டாம். போகங்களின் உத்தமத்தன்மைவருமாறு :—தாய் தநதையரிருத்தலினுலும், தன் பந்துககளின் சுசீல சுபாவத்தாலும, தன சுசீல சுபாவத்தாலும, நானுவகையாய வித்தைகளினடைவாலும், அவ்வித்தையின் பலததால் உறவினர் உடலுளத்துட, தன்னுடலுளத்தும் பீடையுண்டாகாதிருத்தலினுலும், பூரவம செய்த அநேக புண்ணியங்களாலும், தன்மதியின் குசலததன்மையினுலும போகஙகளில உததமததனமையாம். சில சாஸ்திரவேததாக்கள் தந்தை தாயாசிரியா முதலிய சர்வ பந்துககளையும் ஜீவர்களின் போககாரியமாயங்கீகரிததுளார. சில சிரேஷ்ட புததியையுடைய அறிஞர்களோ சுருதிபபிரமாணததை யநுசரிததுப பெண்ணுணிருவரையே பாஸ்பர போககாரணமாய் அஙகீகரிததுளார ; ஆசாரியாதிகளைப போககாரணமென அஙகீகரிக்கவில்லை ; ஏனெனின், பிருஹதாரணிய உபநிடததின்கண்ணே யாக்ஞவற்கிய முனிவா தமது மைததிரேயியென்னும மனைவிககு இவவாறு கூறியுளளார்'—

" நவாஅரெ ... (Sanskrit quotation in Grantha script, partly illegible) ... "

யென்னும் சுருதிவசனததாலே அம்முனிவா பெண்ணுணிருவாபால மயககத்தாலுற்ற போகசாதனததன்மையையே நீககினுன்றித தாய்தநதை முதலியோரிடத்தே நீக்கவில்லையாதலின், பெண் ஆண் இருவரிடத்தே பாஸ்பாம போகவேதுத்தன்மையாம. அலலது, ஒரு சரீரததே போகம சம்பவியாதாதலின, இரண்டு சரீரமும் அபேக்ஷிக்கபபட்டது. இபபொருளிலேயே அசசாஸ்திர வேத்தாககளின் கருத்தாம். வேறு சில சாஸ்திரவேததாககளோ இவ்வாறுகூறுகின்றனா :—சீடர் முதலியோரின் புண்ணியரூப அதிஷ்டததாலே ஆசார்யாதியர் உண்டாவர். எப்பொருள் எச்சீவனுக்குப் புண்ணியபாவரூப அதிஷ்டத்தாலே யுண்டாமோ அப்பொருள் அவனுடைய சுகதுககரூப போகவேதுவாகுமாதலின், அவ்வாசார்யாதியரும சீடராதியரது போகவேதுவாவா. சில சாஸ்திர வேத்தாக்களோ இவ்வாறு கூறுவர் :—குரு சிஷ்யாகட்கும, தநதை மைநதருககும், பரஸ்பரம் உபகாரிய உபகாரக பாவம காணவருகின்றதாதலின், அவ்விருவரும் பாஸ்பரம் போகவேதுவாவர். உண்மையாய் விசாரிககின் குரு, தந்தைதாய் முதலிய பநதுக்களும் ஜீவர்களின் போகவேதுக்களேயாவரென்னும மதம் சில தூல திருஷ்டியுடையவர்க்காம். சூக்ஷுமமதியுடையரோ ஆசாரியாதியரை ஜீவர்களின் சாக்ஷாத்போக வேதுவாய் அங்கீகரித்திலர் ; மற்றோ, ஆசார்யாதியரைத் தர்மார்த்தங்களின் ஏதுவாயங்கீகரித்துளார்; ஏனெனின், அவர் சீடர் முதலியோருக்கு மேன்மையாய வித்தையினுபதேசத்தால் தர்மத்தையடைவிப்பர். கர்ம உபாசனைவடிவ தெய்வதனத்தை

யடைவிப்பர். வித்தைவாயிலாய்ப் பொன் முதலிய லௌகிகதனத்தை யடைவிப்பர். அவற்றால் ஜீவர்கட்குப் போகவலடவாம். இத்தனையானே தேகம், இந்திரியம், கிரியை, போகமென்னும் நான்கன்கண் உத்தமத்தன்மை வர்ணிக்கப்பட்டது. இப்போது அவற்றில் மத்திமத்தன்மையும் அதமத்தன்மையும் வர்ணிப்பாம்:— ஹே தேவதைகளே! பூர்வம் தேகம், இந்திரியம், கிரியை, போகமென்னும் நான்கினுத்தமத்தன்மையிற்கூறிய வேதுக்களுள் ஒரு ஹேது இல்லாதபோதினும் அவற்றில் மத்திமத்தன்மையடைவுறும்; முற்கூறிய சர்வ ஹேதுக்களின் அபாவமுண்டாயினே அவற்றில் அதமத்தன்மையடைவுறும். இவ்வாறு தேகாதி நான்கும் உத்தமாதி மூன்றன்பேதத்தால் மூன்று மூன்றுவகையாகும். அந்நான்கன்கண்ணேயிருக்கும் அம்மூன்றில் ஒவ்வொன்றை மீண்டும் உத்தமத்தன்மையாதியோடு சேர்க்கின் ஒன்பது பேதமாம். அவையாவன:—உத்தமோத்தமம், உத்தம மத்யமம், உத்தம அதமம், மத்யமோத்தமம்; மத்யம மத்யமம், மத்யமாதமம்; அதமோத்தமம், அதமமத்யமம், அதமாதமம் என்பனவாம. அவற்றுள்ளும் ஒவ்வொன்றை மிருதுத்தன்மை, மத்யத்தன்மை, உத்கடத்தன்மையென்னும் மூன்றோடுகூட்டின் இருபத்தேழாகும். உத்தமோத்தமமிருது, உத்தமோத்தம மத்யம, உத்தமோத்தம உத்கடமென வேறு உத்தமமத்யமாதி யெட்டினும் மூன்று மூன்று பேதத்தையுணர்ந்துகொள்க. அவ்விருபத்தேழு பதார்த்தங்களுள்ளும் ஒவ்வொரு பதார்த்தத்தையும் மீண்டும் மிருதுமத்ய உத்கடமென்னும் மூன்றோடு சேர்க்கின் எண்பத்தொருபேதமாம். உத்தமோத்தம மிருதுமிருது, உத்தமோத்தமமிருது மத்யம், உத்தமோத்தமமிருது உத்கடம் என இவ்வாறு வேறு இருபத்தாறு பதார்த்தங்களையும் மூன்று மூன்று பேதமுடையதாகவுணர்க. அவ்வெண்பத்தொரு பேதங்களினும ஒவ்வொன்றையும் கருமவாயிலாய்சசெய்தல், செய்வித்தல், மகிழ்தல் என்னும் மூன்றுதர்மங்களோடுகூட்டின் 243ஆம். இவை முதலாக தேகாதிகளின் அநந்தபேதஞ் சித்தமாம். அவை அத்தியந்தஞ் சூக்ஷ்மமாமாதலின் யாவராலும் வர்ணிக்கமுடியாதாம். இப்போது தேகம் இந்திரியம் கிரியை போகம் என்னும் நான்கிறகும், அவற்றின் சம்ஸ்காரங்கட்கும் பரஸ்பரம் பீஜாங்குரம்போலக் காரியகாரண நிரூபணஞ்செய்யும்பொருட்டு முதலில் தேகத்தின் பிரதானத்தன்மையை நிரூபிப்பாம்:—ஹே தேவதைகளே! தேகங்களின் சம்ஸ்காரத்தானே மீண்டுந் தேகமுண்டாம். அதனினின்றும் மீண்டும் தேகாதி நான்கன் ஜனகமாய சம்ஸ்காரமுண்டாமாதலின், தேகத்தினின்றே சர்வ இந்திரியாதியும் வெளிப்படும். தேகத்தினின்றே இந்திரியகிரியா போகங்கள் வெளிப்படும். இப்பொருளின்கண்ணும் வேதவேத்தாக்கள் இவ்வகையாய யுக்தியைக் கூறியுள்ளார்:—யாவன் முதலில் தேகத்தோடுகூடியவனுவனே, அத்தேகியே வசஞ்செய்த பொறிகளோடுகூட யாகாதி கருமங்களைச்செய்வன், பலத்தையனுபவிப்பன்; தேகமின்றி அக்கர்த்தாத்தன்மையும் போக்தாத்தன்மையும் பொருந்தாவாம். தேகிபாவத்தின் பின்னர் மீண்டும் தேகிபாவத்தையடைவிக்கும் சம்ஸ்காரமுண்டாம்; அதனினின்றும் மீண்டும் தேகாதியுண்டாம். இவ்வாறு இத்தேகமே சர்வகாரணமாம். இதுபோலவே இந்திரியமும் போகமும் கர்மாதிவாயிலாய்ச் சர்வ சங்காதகாரணமாம். நேத்திராதி இந்திரியங்களின் ரூபாதிவிஷயங்களிடத்தே லப்படனுய

புருஷனுக்கு எக்கருமமும் சம்பூர்ணமாகாதாமாதலின், விடயங்களினின்றும் நிரோதித்த இந்திரியங்களிடத்தே கருமவாயிலாய்ச் சர்வ சங்காதகாரணத்தன்மை யுண்டாம். பகிர்முக இந்திரியங்களிடத்தே அக்காரணத்தன்மையுண்டாகாதாம். இப்போது கருமத்தானே சர்வ சம்பவம் கூறப்படும்:-ஹே தேவதைகளே! புண்ணியபாவரூப கருமத்தோடுகூடியவனே இந்திரியங்களோடுகூடுவன், தேகத்தோடு கூடுவன், நானாவகையாய போகத்தையடைவன்; புண்ணிய பாவகருமத்தானன்றி எப்பதார்த்தத்தையும் அடையமுடியாதாமாதலின், அவற்றானே இத்தேகாதி சர்வ சம்பவமாம். போகத்தானே சர்வ சம்பவம் வருமாறு:—யாவன் போகியாவனோ அவனே கருமஞ்செய்வதிற் சமர்த்தனாவன்; வயஞ்செய்த இந்திரியங்களோடுகூடியவனாவன்; ஏனெனின், இவ்வுலகத்தே எல்லாவகையாய போகங்களையும் போக்கிய பதார்த்தங்களையும அநுபவித்த பின்னரே கரும அனுஷ்டான விருத்தி காணவருகின்றது; அநுபவத்தானன்றி விருத்தியில்லை; ஏனெனின், இவ்வுலகத்தே யாவன் எவ்விடயத்தையடைவனோ அவன் மீண்டும் அவ்விடயத்தை இச்சிப்பன்; பின்னவன் அவ்விஷயத்தையடையும்பொருட்டுக் கருமத்தைச் செய்வன்; இம்மனுஷர் சொர்க்கத்திலுள்ள தேவாங்கனைகளை யநுபவித்திலர்; இங்குள்ள மங்கையரை யநுபவித்துளாராதலின், இவர்கட்குத் தேவாங்கனைகளிடத்திச்சை யுண்டாவதில்லை; மற்றே, இம்மங்கையரிடத்தே யிச்சையுண்டாம். நாய்கள் மநுடமங்கையரை யநுபவித்ததில்லை; மற்றே, பெண்ணாயை யநுபவித்துள்ளனவாதலின், அவற்றிற்கு மனுடமங்கையரிடத்தே யிச்சையுண்டாவதில்லை; மற்றே, பெண்ணாயிடத்தே யிச்சையுண்டாம். தேவதைகள் மனுடமங்கையரையும் இவ்வன்ன பானாதிகளையும் அநுபவித்ததில்லை; மற்றே, தேவாங்கனைகளையும் சொர்க்கலோக போக்கியபதார்த்தங்களையும் அநுபவித்துளாராதலின், அவர்கட்கு இவற்றின்கண்ணே யிச்சையுண்டாகாமல் அவற்றின்கண்ணே யிச்சையுண்டாம். ஆகையால், அன்வயவியதிரேகத்தானே போகங்களினநுபவமே போகங்களையடைவிக்கும் கருமவிருத்தியின் காரணமாகும். எவ்வெப்போகங்களை யநுபவிக்கின்றேமோ அவ்வப்போகங்களில் வைராக்கியப்பிராப்தியுண்டாகாதாம். தினந்தோறும் அப்போகங்களில் குசலத்தன்மையேயுண்டாம். இவ்விஷயம் யோகபாஷியத்தின்கண்ணும் கூறப்பட்டுளது.

"போகாப்யாஸமநு விவர்த்தந்தே ராகா: கௌஶலாநி சேந்த்ரியாணாம்"

(பொ-ள்.) போகங்களை யநுபவித்தபின்னர்த் தினந்தோறும் இச்சைவிருத்தியடையும். அப்போகங்களில் இந்திரியங்களின் குசலத்தன்மையும் விருத்தியடைந்துகொண்டேபோம். அநேக போகங்களடைவுறினும் இச்சை விருத்தியடையுமென்றில் காமியும், பலவானும், தனிகனுந் திருஷ்டாந்தமாவர்; ஏனெனின், இவ்வுலகத்தே அம்மூவரும் அநேக வகையாய போகங்களை யடைவுற்று அவற்றின்கண்ணே குசலராய் மீண்டும் மீண்டும அப்போகங்களை இச்சிப்பவராய்ப் பிரதீதியாதலின், அநேக போகங்களினடைவால் இச்சைவிருத்தியேயடையும். நெய், விறகுகளை இடுவதால் அக்கினி விருத்தியடைவதேபோலும், அநுபவித்த

போகம் தன் விஷய இச்சையையுண்டாக்கும் வாயிலாயத் தேக இந்திரிய கருமாதி ரூப சம்சாரகாரணமாவதேபோல, அநுபவித்த தேகேந்திரியாதி கருமமும் தன் விஷய இச்சையையுண்டாக்கும் வாயிலாய்ச் சம்சாரகாரணமேயாகும். ஏனெனின், இச்சீவான்மா இச்சை சம்ஸ்காரங்களோடு கூடி எவ்வெத்தேகங்களை ராக பூர்வகம் சேவிக்குமோ அவற்றின் வயத்தால அவ்வச்சாதியுடைய தேகாதிகளை யநேகமுறை யடையும். இவ்வாறு தேகம், இந்திரியம, கிரியை, போகம் என்னும் நான்கும் அநுபவ, இச்சா, சம்ஸ்காரமென்னும் மூன்றனாலே பிராப்தமாமாதலின், தேகாதிகள் சென்மந்தோறும் விருததியைபயடையினும் இத்தேகத்தின் பின்னர் மீண்டும் இத்தேகமே அடைவுறுமென நியமமில்லை; ஏனெனின், தேகாதிகளின் காரணரூப அநுபவ இச்சை சம்ஸ்காரங்கட்கு நியமமில்லைபாயின், அவற்றின் காரியங்கட்கு நியமமெங்ஙனுண்டாம்? நியமம் சமபவியாதாம். ஜீவாத்மா இச்சை சம்ஸ்காரங்களின் வபத்தால மீண்டும் அச்சாதியையுடைய தேகதலதயடையும் எனக்கூறுவதின் கருத்திதுவாம:—இவ்வனாதி சம்சாரத்தே பூரவம் அநேக சாதியையுடைய சரீரங்களநுபவிக்கபபட்டன. மரணகாலத்தே புண்ணியபாவ கருமவயபத்தால எவ்வெச்சாதியையுடைய சரீர சம்ஸ்காரம் வெளிப்படுமோ மரணத்தின்பின்னா அவ்வத்தேகத்தையடையும. இவ்விஷயம ()-வது அததியாயத்தே விஸ்தாரமாய் நிரூபித்தேம. இநதிரியம, கிரியை, போகம் என்னும மூன்றோடு கூடிய ஜராயுஜாதி நால்வகைத் தேகஙகள் ஆலமரத்திற்கொப்பாம. சம்ஸ்காரம ஆலம்விதைக்கொப்பாம. சர்வ சமஸ்காரங்களினுமிருககும் சாமான்யத்தை வேதவேததாக்கள் மாயை யென்றனா. அது சாவ ஜகத்தின் காரணரூபமாம். அனாதியாம. ஆலம்விதைகளிலும, அங்குரங்களிலும் தொடர்ந்திலங்கும சாமானியம் நாசமறறதாம்: அதனானே அது காரணரூபமாம். அதறகு விசேஷரூபமாய பீஜாங்குரங்கள் சாமான்யகாரணத்தினின்றும் வேறன்றுமாதலின், அது அத்விதீயரூபமாம. பரஸ்பர காரணகாரியரூபத்தால் பிரசித்தமாய பீஜாங்குரங்கள் நாசமுடையனவாதலேபோல, காரணகாரியரூபத்தால் பிரசித்தமாய சம்ஸ்கார தேகங்கள் நாசமுறினும மாயை நாசமாகாதாம. ஆலம்விதையினின்றும் ஆலவிருக்ஷம் உண்டாம். அதனினின்றும் மீண்டும் பீஜமுண்டாம். அதனினின்றும் மீண்டும ஆலவிருக்ஷமுண்டாம். இவ்வாறு பிரவாகரூபத்தானே அவ்விரண்டற்கும் பரஸ்பரம் காரியகாரண பாவமாம். அதுபோலச சம்ஸ்காரங்களினின்றும தேகமுண்டாம். அதனினின்றும் மீண்டும் சம்ஸ்காரமுண்டாம். அதனினின்றும மீண்டும் தேகமுண்டாம். இவ்வாறு பிரவாகரூபத்தால் அவ்விரண்டற்கும் பரஸ்பரம் காரியகாரணபாவமாம். காரியகாரணரூபத்தானே பிரசித்தமாய பீஜ விருக்ஷங்களில் மண்ணின் அவயவம் தொடர்ந்திலங்கும். அவ்வவயவங்களில் மண் தொடர்ந்திலங்கும். அம்மண் ஆலம்விரை, ஆலவிருக்ஷம் நாசமுறினும் பிரளயாக்கினியினானன்றி நாசத்தையடையாததேபோல, தேகாதிகளிலும் காரணபூத சம்ஸ்காரங்களிலும் அநுகதமாய மாயை தேகாதிகள் நாசமுறினும் பிரஹ்ம ஞானரூப காலாக்கினியினாலன்றி நாசத்தை யடையாதாம். மாயையே சர்வ காரிய காரணத்தே சமர்த்துடையதாயின், பிரஹ்மத்தை யாதின்பொருட் டங்கீகரிக்க வேண்டுமென்னும் சங்கையை நீக்கும்பொருட்டு மாயையின் சொரூபத்தையும்

பிரஹ்மத்தின் சொரூபத்தையும் வேறு வேறாக நிரூபிப்பாம்:—ஹே தேவதைகளே! சர்வ காரியங்களிலும் சர்வ காரணங்களிலும் தொடர்ந்திலங்கும பரிணாமபாகத்தை வேதவேத்தாக்கள் மாயையென்றனர். காரிய காரணங்களேயும் தொடர்ந்த பரிணாமபாகத்தையும் பிரகாசிப்பிக்கும் ஸ்புரணரூப சத்வஸ்துவை வேதவேத்தாக்கள் பிரஹ்மம், ஆத்மாவென்றனர். ஸ்தூலசூக்ஷ்ம சர்வபதார்த்தங்களிலும் பரிணாமரூபத்தானே மாயையின் தொடர்ச்சி காணப்படும். சத்தாரூபத்தால் பிரஹ்மத்தின் தொடர்ச்சி காணப்படுமாதலால் அம்மாயையும் பிரஹ்மமும் ஜகத்திற்குபாதான காரணங்களாம்; ஆனால் பிரஹ்மமோ விவர்த்தோபாதானகாரணமாம். மாயையோ பரிணாமோபாதான காரணமாம். இப்போது மாயை பிரஹ்மங்களிடத்தே வெளிப்படையாய் ஜகத்காரணத்தன்மையின் நிரூபணத்தைச் செய்வாம்:—எப்போதும் ஏகரூபசத்தையே ஒருகால் சர்வ காரியங்களிலும் தொடர்ந்திலங்குமாயின், மாயைக்குக காரணரூபத்தன்மை சித்தமாகாதாம்; ஆனால், உலகத்தே கேவலம ஒரு சத்தையின் அநுகதத்தன்மையே காணவருவதில்லை; மற்றோ, பரிணாமரூப மாயையும் தொடர்ந்திலங்கும். பரிணாமரூப மாயையே கேவலம் உலகின்கண்ணே தொடர்ந்திலங்குமாயின், சத்துரூபப் பிரஹ்மத்திற்குக் காரணத்தன்மை சித்தமாகாதாம்: ஆனால், பரிணாமரூபமாயையும் கேவலம் தொடர்ந்திலங்குவதில்லை; மற்றோ, பிரஹ்மமும் தன் சத்தாரூபத்தால் யாண்டும் தொடர்ந்திலங்குமாதலின், பிரஹ்மமும் மாயையுமே உலககாரணங்களாம். பரிணாமசாமான்யரூப மாயைக்கும், ஸ்புரணரூப சத்பிரஹ்மத்திற்கும் பரஸ்பர பேதம அறிஞர்கள் கூறியுள்ளார்; ஆகையால், இவ்வுலக காரணத்தன்மையில் மாயையைப்போலப பிரஹ்மத்தையும் அவசியம் அங்கீகரிக்கவேண்டும். இப்போது ஜடவிகாரங்கட்குக் காரணரூப மாயாசொரூபத்தினும் வேறாகாததன்மையை நிரூபிப்பாம்:—எல்லா ஆலம்விதைகளிலும் தொடர்ந்திலங்கும் சாமான்யம எல்லா விதைகளிலும் தொடர்ந்திலங்கும் சத்தைவடிவ பிரஹ்மத்தின் சத்திரூபமாய்த் தன் சொரூபத்தினும் வேறாகாத நானாவகைபாய ஆலம் விருக்ஷங்களை யுண்டாக்கும். அதுபோலப பிரஹ்மத்தின் சத்திரூப பரிணாமமாய மாயையும் தேகாதிரூப அநேக விஸ்வங்களையுண்டாக்கும். காரணரூப மாயையினும் அவ்விசுவம் அபின்னமாம். பீஜாங்குரங்களைப்போலப பரஸ்பரம காரியகாரணரூபமாம். இப்போது பரஸ்பரம் வியாப்பிய வியாபகரூபததாலிருக்கும் மாயையின் மூன்று வடிவத்தை நிரூபிப்பாம்:—ஹே தேவதைகளே! ஒவ்வொரு ஆலவிருக்ஷத்தினும் தொடர்ந்திலங்கும் காரியசத்தியெனப் பெயரிய சாமான்யம் பின்னமாம். ஒவ்வொரு ஆலம் விதையின் கண்ணும் தொடர்ந்திலங்கும் காரண சத்தியெனப் பெயரிய சாமான்யம் பின்னமாம். ஆலவிருக்ஷம், ஆலம்விதை என்னுமிரண்டிலும் சமான்யரூபமாய்த் தொடர்ந்திலங்கும் பிருதிவிவடிவம் மூன்றாவது சாமான்யமாம். விருக்ஷமும் விதையும் பரஸ்பரம் காரணரூபமாவதேபோல, இரண்டன்கண்ணும் தொடர்ந்திலங்கும் மூன்றாவதாய மண்வடிவ சாமான்யமும் அவ்விரண்டற்கும் காரணரூபமாமாதலின், அம்மூன்றாவதும் வீணன்றாம். பிருதிவிரூப சாமான்யம் ஆலம் விதைச் சம்பந்தத்தானும், விருக்ஷத்தின் சம்பந்தத்தானும் இருவகைபாயிருக்கும்.

ஆலம்விதை ஆலவிருக்ஷங்களில் தொடர்ந்திலங்குவதால் அச்சாமான்யம் ஏகரூபமாயிருக்கும். அதுபோலச் சாமான்யரூபசக்தியும் காரியசம்பந்தத்தாலுங் காரண சம்பந்தத்தாலும் இருவகையாயிருக்கும். சர்வ காரியங்களிலும் சர்வ காரணங்களிலும் தொடர்ந்திலங்குவதாய மாயாசக்தி ஏகரூபமாயிருக்கும். இம்மாயை வியாபகவடிவத்தால் ஒன்றாயினும், காரியத்தும் காரணத்தும் வியாபதமாயிருக்குமாதலின், வேறுதலைபோலவிருக்கும். ஒரே மாயை காரியாவச்சின்ன சத்திரூபத்தாலே ஜீவபேதகாரணமாம். காரணாவச்சின்ன சத்திரூபத்தாலே ஈப்வர பேதகாரணமாம். ஒரே பூமி கடரூபதனையும் கிருஹரூபத்தையும் அடைந்து கடாகாசம் கிருகாகாசமென்னும் இரண்டன் பேதத்திற்குக் காரணமாவதேபோல, இவ்வொரேமாயை தன் காரியகாரணரூபத்தால் ஜீவேப்வரபேதகாரணமாம். ஒரே பூமி இலை, தாதகிரி, கு, பிருதிவி, தரணி, க்ஷமை யென்பதாதி அநேக நாமங்களையடைவதேபோல பரிணாமரூப ஒரே மாயை சக்தி, துர்ப்பலை, அவித்தை, தமம், மோகம், அஞ்ஞானம், பிராகதி, விபரியயம், சநாதநி யென்பதாதி யநேக நாமங்களையடையும. மாயையின் விசித்திரத்தன்மை முதலிய விசேஷணங்களாமாறு:—ஜீவேப்வரபேதத்தைச் செய்யும பரிணாம சாமான்யரூபமாயை அத்தியந்தம் அற்புத சரீரமுடையதாம. நாலுவகையாய சம்ஸ்காரரூப சித்திரங்களோடு கூடியதாம். வாணக்காரன் வஸ்திரஙகளை நாலுவகையாய நீலபீதாதி சித்திரங்களோடுகூடியதாய்ச் செய்வதேபோல, இம்மாயையும் விசித்திரப் பிரபஞசததைத் தன் சம்ஸ்காரரூப சித்திரங்களோடு உண்டாக்கும். மாயையின் திடத்தன்மையாவது:—இம்மாயை ஆன்மஞானத்தானன்றி நாசமாகாதாமாதலின் திடமெனப்படும்; ஏனெனின், எல்லாவுலகினும் மேலாய ஈப்வரரும இம்மாயையையழிக்கார். அவர் இமமாயையாலாககியபலத்தோடுகூடியவராயே ஜகதுறபத்தியாதி செய்யும சாமர்த்தியவடிவ ஈப்வரத்தன்மையையடைவர். மாயையின்றி ஈப்வரத்தன்மை சித்தியாதாம். இவ்வாறுபகாரஞ்செய்யும் மாயையை அவ்வீப்வரர் எவ்வாறு கெடுப்பர்? கெடுக்காரென்க. சாஸ்திரவேத்தாக்கள் மாயை அனர்த்த காரணமென உணர்நது நாசஞசெய்வதிற சமாத்தராயினும், இம்மாயை தன் மகிமையால் அவா புத்திகளை மனைவி, மைநதா, தனம முதலிய விஷயங்களில் மூழ்கவைத்திருக்கின்றதாதலின், அவர்களுமதையழிக்கார். இபபோது இப்பொருளையே வெளிப்படுத்தும்பொருட்டு இம்மாயையை மகா அடவிரூபமாய் வர்ணிப்பாம்:—இம்மாயைவடிவ மகா அடவி நாலுவகையாய சிதாபாசரூப ஜீவர்களால் வியாப்தமாம. பஞ்சமகா பூதரூப விருக்ஷங்களால் பரிபூரணமாம். விஷயங்களிலிருக்கும் ராகவடிவ சிநேகரூப மூலங்களோடு கூடியவாம். நாலுவகையாய துக்கரூப பலங்களோடு கூடியவாம். மைந்தர் மனைவி முதலிய புஷ்பங்களோடு கூடியவாம். தந்தை தாய் முதலிய இலைகளோடு கூடியவாம். உறவினராகிய சாகைகளோடு கூடியவாம். 'எனக்கு இச்சுகமுண்டாகுக' வென்னும் நீண்ட ஆசைவடிவ பீஜங்களோடுகூடியவாம். மிருத்தியுவடிவ பேரழலோடு கூடியவாம். மாயாரூப மகா அடவியை அழிப்பதாய சமதமாதிரூப விவேக அரசரின் சேனையைப் பக்ஷணஞ்செய்வதான காமக்குரோதாதிரூப மகா மோகராஜாவின் சேனையாகிய சிங்கங்களால் பூரணமாம். துர்ச்சனரூபப் பாம்பு முட்டைகளோடுகூடிய

தாம், நரிவடிவப் பிசாசுகளோடுகூடியதாம். ஜன்மமரணாதி தேட்களோடு கூடியதாம். இத்தகைய மாயாரூப மகா அடவியைச் சாஸ்திரவேத்தாக்கள் தியானயோகாதி யுபாயங்களால் நாசஞ்செய்வதிற் சமர்த்தராயினும், அம்மாயை சாஸ்திரவேத்தாக்கட்கு பக்னவி மைநதராதி நீனத்தன்மையை யடைவிக்குமாதலின், அவர்களும் மாயையை யழிப்பதிற சமர்த்தராகார். பத்ரம், மந்தரம், மிருகம், என்னும பேதத்தால் யானைகள் மூவகையாம். அவற்றுள் முதற் சாதியையுடையது மகாபலவானும். சிரேஷ்ட லக்ஷணங்களோடுகூடியதாம். எதனினும்பயமற்றதாம். அது மகாவனத்தை யழிப்பதில் சமர்த்துடையதாவதேபோலப் பிரஹ்மவேத்தாரூபப் பத்ர ஹஸ்தியும் மாயாரூப மகா அடவியை யழிப்பதில் சமர்த்துடையதாம்; ஆனால், அத்தகைய பிரஹ்மவேத்தா இவ்வுலகத்தே துர்லபமாமாதலின், சாஸ்திரவேத்தாக்கள் இமமாயையைத் திரடையென்றனர். இப்போது மாயைக்கு வெகு அங்குரத்தன்மை, குண பின்னத்தன்மை, யாண்டும்பிரஹ்மாதி வியாத்ததன்மையென்னுந் தாபங்களுண்டென்பதை நிரூபிப்பாம் :— நானுவகையாய வரும் சரீரங்களை அடைவிப்பனவாய மரணகால அநேக வாசனைவடிவ அங்குரங்களோடு மாயாரூப அடவிகூடியதாகும். சத்துவ ரஜ தமமென்னும முக்குண பதார்த்தங்களால் நானுவகையாயிருக்கும். இவ்வுலகப் பிரசித்த மகாவனத்தே ஒரு மகா விருக்ஷமிருப்பதேபோல இம்மாயாரூப மகா அடவியின்கண்ணே பிரஹ்மா, விஷ்ணு, சிவன் என்னும் மகாவிருக்ஷங்களிருக்கும். அவ்விருக்ஷங்கள் யாண்டும வியாபகமாகும். அநேகவகைப பலன்களின் பிராப்தியால் சர்வ ஜீவர்கட்கும் ஆநந்தத்தையடைவிப்பதாகும். இம்மாயா மகா அடவியினின்றும் வெளியிற் செல்வதில் சமாததுடைய விதவானுகிய பதா ஹஸ்தி ஒருகால் காமக்குரோதாதிரூப சிங்கங்களால், மிருத்தியுரூப பேரழலால பயமுற்றதாய் ஓடின், பிரஹ்மா, விஷ்ணு, சிவவடிவ விருக்ஷங்களுள் ஒரு விருக்ஷத்தை ஆசிரயிக்கும். பிரஹ்மாதி தேவதைகளை உபாசித்தலே ஆசிரயமாம. ஆசிரயிக்கும் மகிமையானே காமக்குரோதாதி ஜன்னிய சர்வதாபங்களுமற்றதாகும் அத்விதீயரூபப் பிரஹ்மாதி மூன்று விருக்ஷங்களில் காமக்குரோதாதி சிங்கங்களும் மிருத்தியுவடிவ பேரழலும், தேகாபிமானியாய துரஜன மநுஷ்யர்களும் பிரவேசிப்பதிற் சமர்த்துடையராகார் ; ஏனெனின், தேசகாலவஸ்து பரிச்சேதமற்ற பிரஹ்மாதி தேவதைகளின் பரிபூரண சொரூபத்தினின்றும் பரிசசின்னமாய காமக்குரோதாதிகள் எப்போதும் பயத்தையேயடையுமாதலின், அவ்விருக்ஷங்களின் சமீபத்தே செல்லமாட்டாவாம். விருக்ஷங்களின்மேற் கொடியிருப்பதேபோல பிரஹ்மாரூப விருக்ஷத்தில் சரஸ்வதியாய கொடியிருக்கும். விஷ்ணுரூப விருக்ஷத்தில் இலக்ஷுமியாகிய கொடியிருக்கும். சிவரூப விருக்ஷத்தில் பவானியாகிய கொடியிருக்கும். பிரஹ்மாரூப விருக்ஷமோ பொன்மயமாயிருக்கும். விஷ்ணுரூப விருக்ஷமோ தமாலம்போல நீலமாம். சிவரூப விருக்ஷமோ பால்போல வெண்மையாம். அம்மூன்று விருக்ஷங்களும் பார்க்கபபட்டவர்களது விழிக்கும் மனத்திற்கும் ஆநந்தத்தைத் தருவனவாம். பிரஹ்மா விருக்ஷக்கொடியாகிய சரஸ்வதி வெள்ளியவர்ணமாம். விஷ்ணு விருக்ஷக்கொடியாகிய இலக்குமி மஞ்சள் வர்ணமாம். சிவ விரு

க்ஷக்கொடியாய பவானி நீலவர்ணமாம். மூன்று விருக்ஷங்களும் மூன்று கொடிகளும் நிர்விசேஷரூபத்தானே சர்வ வர்ணங்களுமற்றனவாம். சர்வ விஸ்வரூபமாதலின், சர்வ வர்ணங்களுமுடையனவாம். டம்பத்தோடுகூடிய புருஷர்கட்கோ பலமற்றனவாம். சரணாகத பக்தஜனங்கட்கு நாலுவகையாய பலங்களோடு கூடினவாம். அநாதியாதலின், பீஜமற்றனவாம். மந்திரரூப பீஜமுடையனவாதலின், பீஜமுடையனவாம். ஆதியந்தமற்றனவாம். சர்வப பிரபஞ்சத்தின் பீஜரூபங்களாம். நித்தியங்களாம். தம்மை ஆசிரயித்தபக்தஜனங்களினது சம்சாரதாபத்தை நீக்குவனவாம். மனோவாஞ்சிதரூபங்களைத் தரிபபனவாம. மகா பதார்த்தங்களின் கணக்கில் மிகவும் மகான்களாம. சூக்ஷ்மபதார்த்தங்களின் கணக்கில் மிகவும் சூக்ஷ்மங்களாம். இவ்வவித்தைவடிவ மகா அடைவி ஜீவர்கட்கு மகாதுக்கத்தைத் தருவதாமாயினும, எப்பிரஹ்மவேத்தாரூபப் பத்ரஹஸ்தி பிரஹ்மாதிரூப விருக்ஷங்களின் சாயையை ஆசிரயித்ததோ, அந்தப் பிரஹ்மவேத்தா அவித்தியாரூப மகா அடவியின் துக்கத்தையடையான். இக்கொடியோடுகூடிய பிரஹ்மாதி விருக்ஷம் தம் சைதன்னியரூபப் பிரகாசத்தானே பிரகாசிபபதாய்ச் சர்வ ஜகத்தையும் பிரகாசிப்பிக்குமாதலின், சுயம்பிரகாசரூப விருக்ஷங்களின் சரணத்தை யடைவுற்றவன் அஞ்ஞானரூப அந்தகாரமற்றவனுவன். அவ்விருக்ஷம இயல்பானே சொப்பிரகாசரூபமாம். ஆநந்தவடிவமாம். ஆனால், புருடர்களின் பாவனையி னநுசாரமாய் ஜங்கமஸ்தாவரரூபமாகும். தர்மார்த்த காமமோக்ஷமென்னும் நால்வகைப புருஷார்த்தங்களையடைய இச்சித்து ஆராதனைசெய்யும் பக்தர்கட்கு நால்வகைப் புருஷார்த்தங்களின் பிராபதியைச்செய்வதாம். பிரஹ்மாதி மூன்று விருக்ஷங்களையும், சரஸ்வதிவடிவ மூன்றுலதை (கொடி) களையும், சிரத்தா பக்தியோடு பற்றுகின்றவன் ஒரு காலததிலும் துக்கத்தையடையான்; ஆகையால், வேதவேத்தாக்கள் அவ்விருக்ஷங்களைக கல்பவிருக்ஷமென்பர். அக்கொடிகளைக் கல்பலதையென்பர். இபமாயாரூப மகா அடவியின்கண்ணே உற்பத்தியுறறதும், பிரஹ்மஞானரூப துதிக்கையுறறதுமாகிய பிரஹ்மவேத்தாவடிவ பத்ரஹஸ்தி சிநேகரூபமாய திடமூலத்தோடு கூடிய அவித்தைவடிவ மகா அடவியை யவசிய மழிக்கும். அது தனது துதிக்கையைப் பாலத்தன்மையானும், காமக்குரோதாதி சிங்கங்கள் செய்த உபத்திரவத்தாலும் துர்ப்பலமாய்க் காணும் வரை, பிரஹ்மாதி மூன்று விருக்ஷங்களை ஆசிரயித்தேயிருக்கும்; ஒருக்காலும் பரித்தியாகஞ்செய்யாது. மாயாரூப மகா அடவியின்கண்ணே; பிரஹ்மாதி விருக்ஷங்கள் சர்வ விஸ்வத்தையும் வியாபிததிருக்கும். அவற்றின் இயற்கையும் யாண்டுந்தொடர்ச்சியாய்த்தோற்றும். அதனானே, இவ்வெல்லா வுலகும் அதிதெய்வ, அத்யாத்ம, அதிபூதமென்னும் மூன்று வடிவத்தோடு முண்டாயிருக்கின்றன. சர்வ ஜகத்தையுஞ் சிருஷ்டிக்குந் தன்மை பிரஹ்மாவினியற்கையாம். காப்பாற்றுந் தன்மை விஷ்ணுவினியற்கையாம். சம்மரிக்குந்தன்மை உருத்திரனின் இயற்கையாம். எம்மாயை பிரஹ்மாதி சம்பந்தத்தால் சத்துவாதி குணங்களால் மூவகையாமோ, அதன் சம்பந்தத்தால் இவ்வான்மாவும் கர்த்தா, பாலகன், சம்ஹர்த்தா என்னும் மூன்று ரூபங்களையடையும். நனவு முதலிய மூன்று அவஸ்தைவடிவ சம்சாரத்தே யான், எனதென்னும் அபிமானத்தைச்செய்யும்; அவ்வான்மாவே

சமஷ்டிஸ்தூல உபாதியின் சம்பந்தத்தானே விராட்டுப்பெயரையடையும். சமஷ்டி சூக்ஷ்ம உபாதியின் சம்பந்தத்தானே ஹிரண்யகர்ப்பப்பெயரை யடையும். சமஷ்டிகாரணோபாதியின் சம்பந்தத்தானே ஈஸ்வரப்பெயரை யடையும். இப்போது ஹிரண்யகர்ப்பப் பகவானிடத்தே ஜீவரூபத்தன்மையும், ஈஸ்வரரூபத்தன்மையும் சித்திக்கும்பொருட்டு ஹிரண்யகர்ப்பரை அத்யாத்ம அதிதெய்வரூபமாய் வர்ணிப்பாம்:—விஸ்வ, தைஜஸ, பிராக்ஞன் என்னும் அத்யாத்ம முப்பேதமுடைய ஹிரண்யகர்ப்ப பகவானே சமஷ்டி சாக்கிரத்தின்கண்ணேயிருப்பவராய் அதிதெய்வரூப விராட்டெனப்படுவர். வியஷ்டி ஸ்தூலசரீரங்களி னபிமானத்தானே விஸ்வனென்னப்படுவர். நானுவகையா யிலங்கிக்கொண்டிருப்பதால் விராட்டுப்பெயராம். சமஷ்டி சூக்ஷ்மதத்தே அகம் அபிமானஞ்செய்வதாய் ஆன்மா ஹிரண்யகர்ப்பப்பெயரையடையும. தேயுப்பிரதான வியஷ்டி சூக்ஷ்மசரீர அபிமானத்தால் ஆன்மா தைஜசப்பெயரையடையும. கேவல அஞ்ஞானத்தே அகம் அபிமானஞ்செய்யு மான்மா நிர்விக்ஷேபசாக்ஷிரூப ஞானமுடையதாதலின், பிராஞ்ஞப் பெயரையடையும். சர்வ விசுவதத்திறகுங் காரணமாதலின் ஈஸ்வரரெனப்பெயர் பெறும. அதிதெய்வ மரியாதையின்கண்ணே ஹிரண்யகர்ப்பரெனப் பெயர்பெற்ற ஆன்மா சர்வ ஜகத்திலும் அகமபிமானத்தையடையும். காரண உபாதியுடைய அதிதெய்வ ஈஸ்வரரூபமென்ற ஆன்மாவே, சர்வ ஜகத்தையும் தத்தம் மரியாதையின்கண் ணிலைநிறுத்துமாதலின், வேதவேத்தாக்கள் ஆன்மாவை நியந்தா, அந்தர்யாமி யென்றனர். காரண உபாதியையுடைய ஈஸ்வரர் அத்யாத்மாதி மூன்றுரூபமாயிருப்பதேபோல, காரிய உபாதியுடைய ஹிரண்யகர்ப்ப ஜீவனும் யாண்டும் வியாபகனாதலின், அத்யாத்மாதி மூவுருவமாயிருப்பன். ஈஸ்வரர் சுயஞ்சோதி ஆநந்தவடிவமும் யாண்டும வியாபகமுமாயிருப்பதேபோல, ஹிரண்யகர்ப்பனுமிருப்பனாதலின், ஈஸ்வரரூபனேயாவன். ஹிரண்யகர்ப்பன் கிரியாசத்திரூபப் பிராணனுடையவனும, ஞானசத்திரூப புத்தியையுடையவனுமாவன். ஈஸ்வரர் அவையற்றவராவராதலின், விலக்ஷணத்தன்மை சம்பவிக்குமாயினும, ஹிரண்யகர்ப்பன் சுயம் சித்தித்த ஞானத்தால் தன்வடிவத்தைச் சர்வோபாதிகளுமற்ற நிர்விசேஷ வடிவமாகவே யெண்ணுவனாதலின், அவன்பால ஈஸ்வரரூபத்தன்மை சம்பவிக்கும். மாயைவடிவ உபாதியின் சம்பந்தத்தால் ஈஸ்வரனெனப் பெயர்பெற்ற சேதனமே ஞானசத்திவடிவமும் கிரியாசத்தி வடிவமுமாய உபாதியுடையதாய் ஹிரண்யகர்ப்பன் எனப்படும். அவன்பால மாயையாலாக்கப்பட்ட அநேகவகை விக்ஷேபம் பிரதீதியாம்; இக்காரணத்தானும ஹிரண்யகர்ப்பன் ஈஸ்வரரூபமேயாவன். இரண்டு உபாதிகளின் அபேதவாயிலானும இருவருக்கும் அபேதம் வருமாறு :— அம்மாயையே ஆன்மாவை மறைத்து அவித்தையெனப்படும். அதனால் ஞானம் கிரியை என்னு மிரண்டுமுண்டாம். உண்டாகவே சர்வ ஜகத்துமுண்டாம். ஏனெனின், பஞ்சபூதங்களோடு கூடிய பிராண புத்தியாதி யெத்துணைப்பொருள்கள் விஸ்வச்சப்தத்தாற் கூறப்பெறுமோ, அவை யாவும ஞானக்கிரியாசத்திரூபமேயாம். ஞானத்தையும் கிரியையையும் உண்டாக்காமல் எப்பொருளுங் காணவருவதில்லை. எல்லாப் பரிணாமங்களினும தொடர்ந்த சாமானியத்தை முன்னர் அவித்தையென்

ரும். அம்மாயாரூப அவித்தையே ஈம்வரோபாதியாம். அதன் காரியரூப ஞானக் கிரியைகளில் தொடர்ந்த காரியசக்தி ஹிரண்யகர்ப்போபாதியாம். மண் முதலிய காரணங்கட்கும் கடாதிகாரியங்கட்கும் அபேதமே காணவருகின்றதாதலின், ஈம்வரோபாதிக்கும் ஹிரண்யகர்ப்போபாதிக்கும் அபேதமே சித்தமாம். உபாதிகள் அபேதமுறவே அவ்விருவரும் அபேதமேயாவர்.

சங்கை :—ஹே பகவன் ! முற்கூறிய முறையே ஹிரண்யகர்ப்பருக்குப் பரமான்மாவோடு ஒருமை சித்திக்குமாயினும், வியஷ்டி சீவர்கட்கு அதனோடு எவ்வாறு ஒருமை சித்தமாகும் ?

சமாதானம் :—ஹே தேவதைகளே ! ஹிரண்யகர்ப்போபாதிவடிவ சமஷ்டி லிங்கசரீர சமானமும், நானாசம்ஸ்காரங்களைப்பற்றலால் விசித்திரரூபமுற்றதும், மாயையாலுண்டாகியதும் ஆகிய அநேகவகை லிங்கசரீரம் வியஷ்டி ஜீவோபாதியாம். ஆலவிருக்ஷத்தேயும் ஆலம்விதையின்கண்ணுமிருக்கும ஜனகத்தன்மை வடிவ சாமான்யம் ஒவ்வொரு வியத்தியின்கண்ணும் பரிபூரணத்தன்மை வடிவமாய் நிகழ்வதேபோல, இவ்வவித்யாவடிவ மாயையும் ஹிரண்யகர்ப்பரின் சமஷ்டி சூக்ஷ்ம உபாதியிலும் ஜீவர்களின் ஞானக்கிரியாசத்திவடிவ வியஷ்டி உபாதியிலும் பரிபூரணத்தன்மைவடிவமாய் நிகழும். மண் தன் கடாதி சர்வகாரியங்களிலும் தொடர்ந்திருப்பதேபோல, ஈம்வரோபாதியாகிய மாயையும் அதிதெய்வ, அதிபூதரூபப் பாஹியப்பிரபஞ்சத்தும் அத்தியாத்மரூப ஆந்தரப்பிரபஞ்சத்தும தொடர்ந்து நிற்கும். வியஷ்டி சமஷ்டிரூப சர்வ உபாதிகளும் சர்வ சக்தி சம்பன்ன மாயையோடு தாதாத்மிய சம்பந்தமாமாதலின், சர்வோபாதிகளும் சர்வரூபமாமெனத் துணியப்பெறும் ; ஆகையால், உபாதிகளினபேதவாயிலாய் ஹிரண்ய கர்ப்பருக்குப் பரமான்மாவோடு அபேதமுண்டாதல்போல, வியஷ்டி ஜீவர்கட்குமுண்டாம். அவித்தைவடிவ உபாதியின் கருத்திதுவாம் :—அவித்தியாரூப உபாதியின்கண்ணும், உபஹிதசேதன ஆன்மாவின்கண்ணும் பேதஞ் சித்தமாகாதாயின், வியஷ்டி ஜீவர்களிடத்தும் அவருடைய காரியரூப உபாதிகளிடத்தும் பேதம் எந்நிமித்தத்தாற் சித்தமாம் ? பேதம் எந்நிமித்தத்தாலுஞ் சம்பவியாதென்க.

சங்கை :—ஹே பகவன் ! வியஷ்டி சமஷ்டிகட்கு அபேதமேயாயின், வியஷ்டியின்கண்ணே பரிச்சின்னத்தன்மை தோற்றுவதேன் ?

சமாதானம் :—ஹே தேவதைகளே ! நனவு முதலிய மூன்றவஸ்தைகளை அடைபவராய ஜராயுஜாதி நால்வகைச்சீவரும உண்மையாய் ஹிரண்யகர்ப்பரூப ஈம்வர சமானவடிவுடையராய் மகா பதார்த்தத்திலும் அத்தியந்தம் மகானவர் ; ஆயினும், பரிச்சின்னப்புத்தியாதிகளின் சம்பந்தத்தாற் பரிச்சின்னமுற்றவரே போலத் தோற்றுவர். உண்மையாய்ப் பரிபூரணமாயினும் ஆகாசம் கடமடாதி உபாதிகளின் சம்பந்தத்தாற் கடாகாசாதி பரிச்சின்னரூபமாய்ப் பிரதீதியாவதே போலும். சச்சிதாநந்தவடிவ ஆத்மாவே ஹிரண்யகர்ப்பரூபமாய் ஸ்தூலவிராட்டை யுண்டாக்கும். அக்கினி முதலிய தேவதைகளோடு வாக்காதி இந்திரியங்களையும், ஆகாசாதி பஞ்சபூதங்களையும், அன்னமயாதி பஞ்சகோசங்களையுமுண்டாக்கும்.

இவ்வாறு சர்வ ஜகத்தையுமுண்டாக்கி ஆன்மாவே ஜீவரூபமாய் அதன்கண்ணே பிரவேசித்துப் பின்னர் அத்தேகாதிகளில் நான், எனதென்னும் சட்டையோடு கூடியதாய்ச் சுயஞ்சோதியாய ஆநந்தவடிவ ஆன்மா உண்மையாய் முற்றுமுணர்ந்ததானபோதிலும் மூடமேபோலவிருந்தது. பின்னர்த் தூலாதி முத்தேகத்தே நிகழாநின்ற நானுவகையாய விவகாரங்களை சாக்ஷிரூபமாய்க் கண்டபோதிலும், அவற்றைத் தன்பாலெண்ணியது. உண்மையாய் ஜீவேஸ்வராதி பேதமற்ற ஆன்மாவின்கண்ணே அப்பேதம் பிரதீதியாம்; அதில் மாயையே காரணமாம்; அம்மாயை சேதனாதீனமாம்; அநாதியாம்; அதிஷ்டானசத்தையினும் அயறசத்தையற்றதாம்; உண்மையில் துச்சரூபமாம்; இத்தகைய பொய்யாய மாயையால் தோற்றுநின்ற ஜீவேஸ்வராதிப்பேதப் பிரபஞ்சமும் பொய்யேயாகும். இப்போது பிரபஞ்சத்தின் மித்தியாத்துவத்தை வாணித்து ஆன்மாவின்கண்ணே சித்தமாய அத்விதீயத்தன்மை முதலிய விலக்கணங்களை வாணிப்பாம்.—ஹே தேவதைகளே! பேதம் துச்சரூப மாயையின் காரியமாதலால், ஆன்மாவின்கண்ணே சிறிது மாத்திரையுமின்றாமாதலின், வேதவேத்தாக்கள் அத்விதீயமென்றனர். கனவின் கண்ணே கனக்காண்பவன் கண்ட ஜீவேஸ்வராதிரூப அநேகவித கற்பிதபேதத்தால சிறிது மாத்திரையும் கனக்காண்பவனுக்கு பேதமுண்டாகாததேபோல, மாயாகற்பிதபேதத்தால அத்விதீய ஆன்மாவின்கண் சிறிது மாத்திரையும் துவைதரூபப் பிராப்தியுண்டாகாதாம; இவ்வானமாவின் சச்சிதாநந்த சொரூபங்கட்கும் பரஸ்பரம் பேதஞ் சம்பவியாது. முறகூறிய முறையாய் ஆன்மாவின்கண் கற்பிதப் பிரபஞ்சத்திறகும் பேதஞ சம்பவியாதாதலின், ஆன்மா அதவிதீயரூபமாம். அதனானே சத்தியரூபமாம். எவ்வாதியும சத்தைக்கு அழிவை யுடன்படவில்லை. யாவரும் சத்தைப அழியாததேயென்பர். சத்பதார்த்தத்தை க்ஷணிகமென்னும் நாஸ்திகனும சத்தைக்கு ஆசிரயரூப பதார்த்தங்களையே க்ஷணிகமென்பன்; சர்வ பதார்த்தங்களினும அநுகதமாகிய சத்தையை க்ஷணிகமென்னுதலின், நாச காரணமற்ற சத்தைவடிவ ஆன்மாவை வேதவேத்தாக்கள் நித்தியமென்றனர். சடத்தன்மைரூபததாலே அசுத்தமாகும் பதார்த்தமே நாசத்தையடையும்; கடாதிஜடபதார்த்தங்கள் அசுத்தமாதலின் நாசத்தையடைவதேபோலும். இவ்வான்மா ஜடகடாதிகளினும் விலக்ஷணசேதனரூபமாதலின் நாசத்தையடையாதாம்; அதனானே, வேதவேத்தாக்கள் ஆன்மாவைச் சுத்தமென்றனா. இவ்வாநந்தவடிவ ஆன்மா தன் சுயம்பிரகாசரூபததானே யெப்போதும தன்சொரூபத்தை யனுபவிக்குமாதலின், ஜட அசுத்தவடிவ ஜகத்தினும் வேறாம்; அதனானே வேதவேத்தாக்கள் ஆன்மாவைப் புத்தமென்றனா. பொய்வடிவமாய பொருள்களெல்லாம் ஆநந்தத்தினும் வேறேயாகும்; பொய்வடிவ இப்பிவெள்ளி ஆநந்தத்தினும் வேறுதலேபோலும். இவ்வான்மாவோ சுயஞ்சோதிரூபமாதலின் பொய்ப்பொருள்களினும் விலக்ஷண ஆநந்தவடிவமாம்; அதனானே, வேதவேத்தாக்கள் ஆன்மாவைச் சத்தியமென்றனர். சத்தியமாவனவெல்லாம் தம்பாற் கற்பிதமாய பொய்ப்பொருள்களால் கட்டுப்படமாட்டாவாம். ஒரே இரஜ்ஜுவின்கண்ணே தோஷத்தோடு கூடிய அநேகங் காண்போர்களால் கற்பிக்கப்பட்ட அநேகம்

பொய்ச்சர்ப்பங்களால் சத்திய ரஜ்ஜு கட்டுப்படாததேபோல, சத்திய ஆன்மாவும் தன்பால் கற்பித பொய்யுலகத்தால் கட்டுப்படாதாம; ஆதலின், வேதவேத்தாக்கள் சத்திய ஆன்மாவை முக்தமென்றனர. உண்டாய பநதத்திற்குக் காரணமாயதை அஞ்சனமென்பர்; சர்ப்பத்தின் பந்தனத்திறகுக் காரணமாதலின் இரஜ்ஜு அஞ்சனரூபமாதலேபோலும். ஆன்மாவின்கண்ணே ஒருகாலும் பநதமுண்டாகவில்லையாதலின், பந்தத்தை நிவிர்த்திக்கும் சாதனங்கள் சிறிது மாத்திரையும் உபயோகமில்லை; அதனானே வேதவேத்தாக்கள் அந்நித்தியமுக்த ஆன்மாவை நிரஞ்சனமென்றனர். காரியரூபமாவனவெல்லாம பரிச்சின்னங்களாம; கடாதி பதார்த்தங்கள் காரியரூபமாதலின் பரிச்சின்னமாதலேபோலும். இவ்வான்மா காரியரூபமன்றாதலின் இதன்கண்ணே பரிச்சின்னரூபததன்மையும் சம்பவிக்காதாம்; அதனானே வேதவேததாக்கள் ஆன்மாவை விபுவென்றனர். அதிஷ்டானமாவனவெல்லாம் ஆரோபித பதார்த்தங்களினும் மேன்மையனவேயாகும். இரஜ்ஜு சுக்தி முதலிய அதிஷ்டானங்கள் ஆரோபித சாபப ரஜகாதிகளினும் மேன்மையனவாம். ஆநந்தசொரூப அத்விதீய ஆனமாவும் சர்வ ஜகத்தினதிஷ்டானரூபமாமாதலின், ஆரோபித ஜகததினுமேலாயதாம்; அதனானே வேதவேத்தாக்கள் ஆன்மாவைப பரமென்றனர. பாகிய கடாதி பதாாததஙகளைககுறிததுநேத்திரம் ஆநதரமாவதேபோல, புததி முதலிய திருசிய பதாாததங்களைக்குறித்து திருஷ்டாவாய ஆன்மா யாவினு மாநதரமாமாதலின், வேதவேத்தாக்கள் ஆன்மாவைப் பிரத்தியக்கென்றனர். நீல பீதாதி அநேக வாணங்களையுடைய கோக்கனின்பால் மதுரத்தன்மையானே யேகரசமாவதேபோல, இவ்வான்மாவும் சச்சிதாநந்தவடித்தானே யாண்டும் பரிபூரணமாம. அசச்சசிதாநநதரூபமும பரஸ்பரம் பேதமற்றதாமாதலின், வேதவேத்தாக்கள் ஆனமாவை ஏகரசமென்றனர். ஆநநத வடிவ ஆன்மா ஸ்புரணரூபமாதலின், முறகூறிய அத்விதீய நாமமே முதலாக ஏகரச நாமமீறாக உள்ள சர்வ நாமங்களாலும் ஆன்மாவே யறியப்பெறும். திருசியப் பதார்த்தங்களை விஷயஞ்செய்யும ஸ்புரணரூபபோததததாலும ஆன்மாவே யறியப் பெறும். பிரத்தியக்ஷாதி சர்வப பிரமாணங்களாலும ஆன்மாவே யறியபபெறும். இபபோது இபபொருளையே வெளிபபடையாய் நிரூபிபபாம்:—ஹே தேவதைகளே! பிரமாஞானத்தின் காரணததையே சாவ வாதியரும் பிரமாணமென்பர். அநேக நூலாசிரியர் பிரமாஞானததை ஸ்புரணரூபமா யங்கீகரித்துளார். சில நூலாசிரியரோ ஸ்புரணத்தின் அபிவியஞ்சகமாய அநதக்கரண விருத்தியையே பிரமாஞானமென்பர். இருவகையானும் அந்தப பிரமாணததிற்கு ஸ்புரணத்தோடு சம்பந்தம் அவசியமுண்டாம். சர்வகாலத்து மிராநின்ற ஸ்புரணமே சத்தாரூபமாமென்பதை முன்னர்க் கூறினேமாதலின், சர்வ போதத்தும் சத்தாரூபத்தால் விளங்காநின்ற ஸ்புரணமே ஆவரண நிவிருத்திசெய்யும விருத்திகட்கு விஷயமாம்; ஏனெனின், 'ஸத்தாத்ரம் ஸவ-ம' என்னும் சுருதி சத்தாரூப ஸ்புரணத்தினும் வேறாய சர்வ வஸ்துக்களின் அபாவத்தைக் கூறுகின்றதாதலின், சத்தாரூப ஸ்புரணத்தினும் வேறுப கடபடாதிகளில் எந்த ஞானத்திற்கும் நியமமாய்ப் பிரமாணரூபத்தன்மையேனும், அப்பிரமாணரூபத்தன்மையேனும கூற முடியாதாம். கருத்திதுவாம்:—இது குடமென்னும் குடவிஷயகஞானம் சர்வ

குடவியக்திகளேயோ விஷயஞ்செய்வதில்லை; மற்றோ, ஒரு குடத்தை விஷயஞ் செய்யாது ஒரு குடத்தை விஷயஞ்செய்புமாதலின், அந்த ஞானத்தே அர்த்த போதகத்தன்மையும் அர்த்த அபோதகத்தன்மையுமிருக்கும். முதலதோ பிரமாணத்தன்மைக்குச் சாதகமாம்; மற்றதோ அபிரமாணத்தன்மைக்குச் சாதகமாம்; இரண்டு தர்மங்களும் பரஸ்பரம விரோதிகளாமாதலின், அவற்றின்கண்ணே நியமமாய்ப் பிரமாணரூபத்தன்மையேனும் அபபிரமாணரூபத்தன்மையேனும் நிச்சயிக்க விடா. மீமாம்சகர் மதத்தே பரஸ்பரம் வியபிசாரியாய கடாதி வியக்திகள் கடாதி சப்தங்களுக்கு வாசசிபார்த்தங்களன்றாம்; மற்றோ, சர்வ வியக்திகளினும் அநுகதமாய கடத்துவாதி ஜாதிகளே கடாதி பதங்கட்கு வாச்சியார்த்தமாம். அவ்வாறே சித்தாந்தத்தே பரஸ்பர வியபிசாரி கடாதி வியக்திகள் அந்த ஞானங்கட்கு விஷயமன்றாம்; மற்றோ, யாண்டும் அநுகதமாய சத்தைவடிவ ஸ்புரணமே விஷயமாகும். அல்லது, பிரத்தியக்ஷாதிப் பிரமாணம் எவ்வர்த்த விஷயக நிச்சயரூப ஞானத்தையுண்டாக்குமோ அதன்கண் பிரத்தியக்ஷாதிப் பிரமாணரூபத்தன்மையைச் சர்வவாதிகளுமங்கீகரித்துளார். கடமிருக்கிறது, படமிருக்கிறது என்பதாதி சர்வ ஞானங்களினும கடபடாதி உபலக்ஷிதசத்தையே பிரதிபாதிக்குமாதலின், யாவருக்கும் பிரமாரூபத்தானும் அபபிரமாரூபத்தானும் பிரசித்தமாய சர்வ ஞானங்களும் சத்தாமாத்திரத்தையே விஷயஞ்செய்புமாதலின், சர்வ போதங்கட்கும் ஸ்புரணரூப சத்தையின்கண்ணே பிரமாணத்தன்மையாமென்னும் விஷயத்தை வார்த்திகக்காரராய ஸ்ரீ சுரேசுவராசசாரியரும் கூறியுள்ளார்.

“ததோபக்நா ஹவயெவெ கொவிஷயொ ஜ்ஞாதயுக்ஷணஃ ।
ஸக்ஷாதீநாம் ஸவிஷயெய தாதெஷாம் வாரணதா ॥”

“விளக்க மாகிய சத்தையே பவிதத்தையின் விடயமு மிடமுமா தலினால்
அளக்குறு மளவை தமக்கது விடய மாகுமப் புரணசத் தையினை
விளக்கலி னளவை தமக்கள வையின்றன் மெய்ம்மைய தாகுமற் றவற்றை
விளக்கலி னளவை தமக்கள வையதாய் மெய்ம்மையின் றெனவிளம் புவரே.”

(பொ-ள்.) ஸ்புரணரூபசத்தையே அஞ்ஞான ஆசிரய விஷயமாதலின், பிரத்தியக்ஷாதிப பிரமாணங்கட்கு விஷயமாம. ஸ்புரணரூப சத்தையின் போதனத்தானே பிரத்தியக்ஷாதிகட்குப் பிரமாணத்தன்மையாகும். அன்னியபோதனத்தால் பிரத்தியக்ஷாதிகட்கும் பிரமாணத்தன்மையாகாதாம.

சங்கை:—ஹே பகவன்! “கடமிருக்கின்றது” என்னும் ஞானத்தில் சத்தை தோற்றுவதேபோல, கடத்தின் அசத்தையினபாவமுந் தோற்றுமாதலின், அசத்தையினபாவமே சர்வப் பிரமாணத்திற்கும் விஷயமாமெனவேனுகாது?

சமாதானம்:—ஹே தேவதைகளே! எந்த ஞானம் அசத்தையினிவிருத்தியையுணர்த்துமோ அந்த ஞானமும் முடிவிற்சென்று சத்வஸ்துவின்கண்ணே சம்பந்தத்தையடையும். சத்வஸ்துவின்னன்றி வேறெப்பொருளும் ஞானாசிரயமாகாதாம்; மற்றோ, அதுவேயாகும். கருத்திதுவாம்:—சத்ததிஷ்டானத்தாலன்றி பிரம

முண்டாகாதாம். பிரமத்தால் பிராப்தமாய பதார்த்தமே நிஷேதமாகுமென்பது நூலுணர்ந்தோர் துணிபாம். அத்துணிபை யங்கீகரித்தே ஒருசத்ததிஷ்டானத்தின்கண்ணே அசத்தையை யாரோபித்து நிஷேதஞ்செய்தலாகுமாதலின், அவ்வசத்தையின் நிவிர்த்தியின்பின்னர்ச சதததிஷ்டான ஸ்பூர்த்தியை யாவர் நீக்குவர்? மற்றோ, அவசியமாயுண்டாம. இப்போது சர்வ ஞானங்கட்கும சத்வஸ்துவின்கண்ணே பரியவசானத்தை (முடிவை) வெளிப்படுத்தும்பொருட்டு யாண்டும் ஆதாரத்தினபேக்ஷையை வர்ணிப்பாம் :—ஹே தேவதைகளே! அசத்தையைப் பிரதிபாதிக்கும் 'மலடிமைந்தனில்லை' யென்னும் வசனத்தே முதலில் இவ்விசாரஞ் செய்யத்தக்கதாம:—'மலடிமைந்தனில்லை' யென்னும் வசனத்தே ஆதாரவாசகமாகிய 'எவ்விடத்தி'லென்னும்சப்தத்தினபேக்ஷயுண்டா? அலலதில்லையா? இரண்டாவது பக்ஷத்தை யங்கீகரிக்கிலது சம்பவியாது; ஏனெனின், அவ்வசனத்தே ஆதாரவாசக பதாபேக்ஷ யாவருக்கும் வெளிப்படையாய்த்தோறறும். யாவருக்கும் அநுபவசித்த அர்த்தத்தை யுடன்படாதிருத்தல் வாதியின் ஹடமாத்திரமேயாகும். முதற்பக்ஷததை யங்கீகரிக்கின் எஞ்சியதாய்ச சத்தையின் சித்தியேயாம்; ஏனெனின், 'மலடிமைநதனில்லை' யென்னும் வசனத்தை யபேக்ஷித்த ஆதாரவாசக 'எவ்விடத்தி'லென்னும் சப்தம் உலகத்தே அப்பிரசித்தமாதலின், பிரதீதியாகும் அற்புதப் பொருள் எஞ்சியதாய்ச சத்தையேயாகும. அச்சததை சர்வ பதார்த்தங்கட்கும் தன்பாலாசிரயந்தருவதாம. கருத்திதுவாம் :—'பூதலத்தில் கடமிருக்கிறது' என்பதாதி ஸ்தலத்தே, யாண்டுலோகப பிரசித்த பூதலாதிகள் கடாதிகட்கு ஆதாரரூபமாய்த் தோறறு நிற்குமோ, ஆண்டு அவற்றிற்கு ஆதாரரூபத்தால் சத்தையின் பிரதீதியாம். மலடிமைநதனில்லை யென்பதாதி ஸ்தலததே பிரசித்த ஆதாரம் சம்பவியாது. அவ்விடத்தோ சாக்ஷாத்சததையே ஆதாரரூபமாய்ப் பிரதீதியாம்; ஆகையால், கடமிருக்கின்றது, படமிருக்கின்றது என்பன முதலிய சர்வ ஞானங்களும் சத்வஸ்துவின்கண்ணேயிருந்தே பிரமாணரூபமாம். அச்சதவஸ்து ஆன்மவடிவமேயாம். இதை முன்னர்க்கூறினேமாதலின், எலலா ஞானங்களும் ஆன்மாவின்கண்ணே பிரமாணரூபமாம். தேகமே முதலாகவுள்ள பூதபௌதிக வடிவ துவைதப் பிரபஞ்சம் கற்பிதமாகும். சத்தாரூப அதிஷ்டானமே பரமார்த்தமாய்ச் சத்தியரூபமாம். அவ்வதிஷ்டானம் சர்வ பேதமற்றதாதலின், பிரஹ்மான்மரூபமும், சச்சிதாநந்தவடிவமுமாம்; இதுவும் முன்னர்க்கூறப்பட்டது. சத்தாசாமான்ய திருஷ்டியை யங்கீகரிக்கும் அறிஞனுக்குத் துவைதப் பிரபஞ்சத்தினநுபவமுண்டாகாதாமாதலின், சர்வாதிஷ்டான சத்பிரஹ்ம அத்விதீயரூபமே சித்தமாம்.

சங்கை :—ஹே பகவன்! பிரத்தியக்ஷ சிதத துவைதப் பிரபஞ்சவிரோதமாதலின், அத்வைத சித்தி யெவ்வாறுண்டாம்?

சமாதானம் :—ஹே தேவதைகளே! ஏகதேசத்தும், ஏககாலத்தும், நிகழாநின்ற பதார்த்தங்கட்கே பரஸ்பரம் விரோதமாம். வேறு தேயத்தே வேறுகாலத்தே நிகழாநின்ற பதார்த்தங்கட்குப் பரஸ்பரம் விரோதம் சம்பவியாது. இப்பிரசங்கத்தே அத்வைதத்தின் பிரதீதியும் துவைதத்தின் பிரதீதியும் ஏகதேசத்து ஏக

காலத்தே நிகழா ; மற்றோ, வேறு வேறு தேசகாலத்தே நிகழுமாதலின், பரஸ்பரம் விரோதம் சம்பவியாது. அஞ்ஞானிகட்கு அத்வைதானுபவமில்லை ; அஞ்ஞானிகள் காணும் துவைதப் பிரபஞ்சம் அத்விதீயரூப அதிகாணத்தே ஒருக்காலும் சம்பந்தத்தையடையாதாம். அத்விதீய வஸ்துவினநுபவத்தையுடைய வித்வான்களது மதத்தும் அத்விதீயரூப அதிகாணத்தே துவைதப் பிரபஞ்சம் ஒருகாலத்தும் சம்பந்தியாதாமாதலின், பின்ன தேசகாலத்திருப்பதாதலின், அத்வைதத்தோடு துவைத விரோதம் சம்பவியாது ; ஆகையால, முற்கூறிய அத்வைதத்தின் கண்ணே துவைதப் பிரபஞ்சாபாவம சமபவமாம. ஒருகால் அஞ்ஞானிகட்கு துவைதப் பிரபஞ்சாநுபவமுண்டாயின் சங்கையற்றுண்டாகுக. பிராந்தர்களின் அநுபவசித்தத துவைதப பிரபஞ்சத்தால அறிஞர்களாகிய நமதநுபவசித்த அத்வைதத்திற்குச் சிறிது மாத்திரையும் ஹானியின்றாம ; ஏனெனில், பொய்யாய துவைதம் அதிஷ்டான வஸ்துவைத் தீண்டமாட்டாது. அந்தத் துவைதப் பிரபஞ்சம் அவிசாரத்தானே தோறறும. விசாரததைப பொறுக்காதாதலின் மாயாமயமாம். அதனானே அது அதிஷ்டானத்தின்கண்ணே கற்பிதமாம. கற்பித அதனால் வாஸ்தவ அதவைததிற்கு ஹானியுண்டாகாது.

சங்கை :—ஹே பகவன் ! அககறபித துவைதப் பிரபஞ்சத்தானே அத்வைத ஹானி உண்டாகாதொழிக; எனினும, அககறபித த்வைதாபாவத்தால் அத்வைத ஹானியுண்டாம்.

சமாதானம் :—ஹே தேவதைகளே ! கற்பிதத் துவைதப்பிரபஞ்சம் அத்வைத ஆனியைச் செய்யாததேபோல, அதனபாவமும செய்யாதாம ; ஏனெனின், வேதாநத சித்தாநததது கறபிதவஸ்துவினபாவம் அதிஷ்டானவடிவமேயாம் : அதிஷ்டானத்தினும வேறின்றாம். கறபித சாபபாபாவம் ரஜ்ஜுவடிவ அதிஷ்டானமேயாமாவதேபோல, ஆகாசாதி கறபிதப பிரபஞ்சததின் அபாவமும் அதிஷ்டான சொரூபமேயாம். கறபிதப் பிரபஞசத்திறகு மதனபாவத்திற்கும் அத்விதீய ஆன்மாவே அதிஷ்டானமாமாதலின், கறபிதத்வைதப் பிரபஞ்சா பாவம் தனது சொரூபபூதமாய அத்விதீய ஆன்மாவை ஹானிசெய்யாது. சுத்த ஆன்மாவின் கண்ணே இத்துவைதப் பிரபஞ்சம் முன்னா எப்போது முண்டாகவேயில்லை. இனி யெபபோது முண்டாகமாட்டாது. இப்போதில்லவேயில்லை. ஆதலின், வேதவேததாக்கள் ஆன்மாவை அத்வைதமென்றனர். ஆகாயத்தே கந்தர்வ நகரம் கற்பிதமாவதேபோல ஆநந்தஸ்வரூப ஆன்மாவின்கண்ணே இத்துவைதப் பிரபஞ்சமும் கற்பிதமேயாம. கறபிததுவைதத்தானே ஆன்மாவின் அத்வைதரூபத தன்மையின் ஹானியுண்டாகமாட்டாது.

சங்கை :—ஹே பகவன் ! கற்பிதப் பிரபஞ்சத்தால் ஆன்மாவின்கண்ணே துவைத முண்டாகாவிடினும், சர்வப் பிரபஞ்சத்தின் காரணமாய மாயையால் ஆன்மாவின்கண்ணே துவைதபாவப பிராப்தியுண்டாமன்றோ ?

சமாதானம் :—ஹே தேவதைகளே ! ஆநந்தவடிவ ஆன்மா சர்வ துவைதங்களுமற்றதாம். புத்திமுதலிய சர்வ சகத்திற்குஞ் சாக்ஷியாம். ஜன்மமாண சர்வ

விகாரமற்றதாம். சூரியபகவானைப்போல வொளிர்வதாம். சூரியனிடத்தே அந்தகாரம்போல இத்தமரூப அவித்தை சம்பவியாது ; மற்றோ, சுயஞ்சோதிரூப ஆன்மாவின் மகிமையானே இவ்வவித்யாரூப மாயை தானே நீங்குமாதலின், சுயஞ்சோதியாய ஆன்மாவின்கண் மாயையின் ஸ்திதியாம். அது மாயையின் திருஷ்டியானே ஆம். வாஸ்தவதிருஷ்டியானே மாயையின் ஸ்திதியுண்டாகாதாம். ஒளிரா நின்ற சூரியனிடத்தே கூகை முதலியவைகளாற் கற்பிக்கப்பட்ட அந்தகாரரூப தமம் கற்பித தமபலத்தாலே சித்தமாம். சூரியதேஜசால்சித்தமாகாதாம். ஏனெனின், இரண்டிறகும் பரஸ்பரம் அத்தியந்தம் விரோதமன்றோ? அதுபோல, அத்விதீய சுயஞ்சோதியாய ஆன்மாவின்கண்ணே அஞ்ஞானிகளாற் கற்பிக்கப்பட்ட அவித்தியாரூபமாயையும் அம்மாயையானே சித்தமாம ; ஒரு பிரமாணத்தாற் சித்தமன்றாம். உண்மையாய்க் காரிய சகிதமாயையறற ஆநந்தவடிவ ஆன்மாவில் மாயையின் சாரியவடிவ பிரபஞ்சங் கற்பிதமாதலேபோல, ஜடமாயையும கற்பிதமாம். பரமான்மாவினும் வேறாக காரியசகிதமாயைக்குச் சத்தையின்றாம். இத்துணையானே சாவத துவைதப் பிரபஞசத்தே கற்பிதரூபத்தன்மை நிரூபிக்கப்பட்டது. இப்போது எவ்விக்கள்வன் அக்கட்டையே யென்னும பாதசாமானுதி காரணயத்தால் சர்வ ஜகத்தில் பரமேஸ்வர திருஷ்டியை நிரூபிபபாம் :—ஹே தேவதைகளே! முன்னர் யாம் உங்கட்குச சசிதாநந்தவடிவமாய்க்கூறிய சுயஞ்சோதியாய பரமான்மாவே மாயாசகித சர்வ விஸ்வரூபமாம். பிரஹ்மாவே முதலாகவுள்ள இத்தாவர ஜங்கம உலகமுழுதும் பரமான்மாவே. சர்வான்மரூபப்பரமான்மா தேகதாரிகட்கு எப்போதுங் கிடைத்திருப்பதாயினும், மாயையின் பலத்தால் கிடையாததேபோலவிருக்கும் ; அது சர்வ சகத்தினதிஷ்டானரூபமாம் ; முக்காலத்தும சத்தியமாம் ; நாசமறறதாம் ; சொப்பிரகாச சுகரூபமாயினும் துக்கரூபத தேகாதி அத்தியாசத்தால் வேறாகத்தோற்றுவதாம். இப்போது யாண்டும் ஆத்மதிருஷ்டியின்கண்ணே ஆன்ம அடைவின் உபாயரூபத்தன்மையை யுணர்ததும்பொருட்டுப் பிரபஞ்சத்தும சத்தியரூபத்தன்மையைக் காட்டுதும் :—ஹே தேவதைகளே ! முன்னர் யாம் கற்பிதரூபமாய் வர்ணித்த மாயாசகித சர்வப்பிரபஞ்சமும மலடிமைந்தனேபோல அத்தியந்தம் அசத்தன்றாம் ; ஏனெனின், பிரபஞசத்தை அத்தியந்தம் அசத்தென உடன்படின் அவ்வசத்தாரூபதர்மமும் அதறகெவ்வாறாம். அத்தாமமும் ஒரு தர்மியை யாசிரயித்தன்றோவிருக்கும்? தர்மியின்றி தர்மத்தின் ஸ்திதி சம்பவியாது.

சங்கை :—ஹே பகவன் ! இவ்வாறு சகத்திற்குச் சத்தியரூபத்தன்மையை யங்கீகரித்தபோதிலும், மலடிமைந்தன், மனுடக்கொம்பு முதலிய அசத்திய பதார்த்தங்களில் ஆன்மதிருஷ்டி செய்தல் சம்பவியாதாமாதலின், யாண்டும் ஆத்ம திருஷ்டி செய்தல் மிகவும் முடியாததாம்.

சமாதானம் :—ஹே தேவதைகளே ! அசத்தென்னும் பதத்திற்கு அர்த்தரூபத்தால் பிரசித்தமாய வஸ்துக்களினும் நூலுணர்ந்தோர் சத்ரூபத்தன்மையே கூறியுள்ளார். ‘அநஸ்வம்’ என்னும பதத்தே ‘அந்’ யென்னும் பதம் அஸ்வா பாவத்தைக் கூறுவதன்றாம் ; மற்றோ, அஸ்வத்தினும் வேறாய பாவரூப அஸ்வத்

திற்கோப்பாய வஸ்துவையே கூறுவதுபோல, நானுவகையாய காரியத்தைச் செய் வதில் சமர்த்தமாகிய பிரசித்த சத்பதார்த்தத்திலும் காரியஞ்செய்வதில் அசமர்த் தத்தன்மை ரூபத்தால் விலக்ஷணமாய சூக்ஷ்ம பதார்த்தங்களையே வேதவேத் தாக்கள் அசத்தென்றனர். ஆன்மாவின் சத்தையை யங்கீகரித்து சத்தியரூபத் தன்மையோ சத்தசத்வடிவ சர்வ பதார்த்தங்களிலும் சமானமேயாம். இவ்விஷ யம் முதலத்தியாயத்தே கூறப்பட்டதாதலின், ஆன்மாவின் சத்தையை யங்கீகரி த்துச் சர்வ ஜகத்தையும் சத்ரூபமா யங்கீகரிப்பதில் சிறிதும் ஹானியின்றும். இக் காரியப் பிரபஞ்ச சகித ஜடமாயை ஆநந்தவடிவ ஆன்மாவின்கண் கற்பிதமாதலின், உண்மையாய் ஆன்மாவின் சொரூபமன்றும்; ஏனெனின், அது தனக்கெனச் சத் தையற்றதாம். ஒரு தனமற்றவன் இன்னொருதனிகனிடத்தினின்றும் பூஷணாதி களை வாங்கித் தன்னில்லததை அலங்கரிப்பதேபோல, அம்மாயையும் அதிஷ்டான ஆன்மாவின் சத்தையைப்பெற்று சதவடிவமாய்த்தோற்றும்.

சங்கை:—ஹே பகவன்! அம்மாயை ஆன்மாவின் உண்மைவடிவமன்றாயின், ஆன்மாவின் வாஸ்தவவடிவம் யாது?

சமாதானம்:—ஹே தேவதைகளே! சச்சிதாநந்தவடிவமும் சர்வ சாக்ஷிரூப மும் சுயஞ்சோதிவடிவமுமாகிய ஆத்மாவின் வடிவம யாது முன் கூறப்பட்டதோ அதுவே ஆன்மாவின வாஸ்தவவடிவமாம. ஆன்மாவின் வடிவம் யெப்போதும் நித்தியமாதலின், தன் சித்தியில வேறொன்றையும அபேக்ஷியாது; நித்திய ஆன் மாவினும் வேறாய உலகம் யாவும ஜடமாதலின், தம் சித்தியில் வேறொன்றை யபேக்ஷிக்கும்; ஆகையாலிவ்வெல்லா வுலகமுமனித்தியமாம். இவ்வனித்திய ஜகத் தில் நித்தியரூபததன்மையின் சமபாவனையும் உண்டாகாதாமாதலின், யாது நித்தி யம் யென்னும மநதபுததியரின் விஷயியாத்தமேயாகும். சேதன ஆன்மாவின் பலத் தானே ஜடபபிரபஞ்சத்தின் சித்தியாம். சேதன ஆன்மாவினலன்றி இயற்கையாய் சடப்பிரபஞ்சத்தின் சித்தியாகாதாமாதலின், ஜடபபிரபஞசத்தின்கண் அநித்திய ரூபத்தன்மை வெளிபபடையாய்த்தோற்றும்; ஆகையால், இவ்வுலகம் நித்தியமா? அல்லதனித்தியமா? வென்னும் சம்ஸயததை நீவிர் ஒருக்காலும் செய்யன்மின்.

சங்கை:—ஹே பகவன்! இவ்வெல்லா உலகும் எவ்வாறு ஆன்மாவாற் சித்த மாம்?

சமாதானம்:—ஹே தேவதைகளே! ஜன்மமாணாதி சர்வ விகாரமுமற்ற அவித்தியாரூப மாயையற்ற புத்தியின் சாக்ஷிவடிவ ஆன்மாவே சாக்ஷாத்தேனும் புத்திவிருத்திவாயிலாயேனும் சாவ ஜகத்தின் பிரகாசத்தைச்செய்யும். வெளிப் பொருள்களையோ ஆன்மா சிதாபாசனேடு கூடிய புத்திவிருத்தி வாயிலாய் ஒளிர் விக்கும். உள்ளிருக்கும் அஞ்ஞானாதிகளையோ நேராகவே யொளிர்விக்கும். அது சர்வ சங்கமுமற்றதாதலின், அதை வேதவேத்தாக்கள் நித்திய சித்தமென்றனர். யாமுங்கட்குபதேசித்த ஆன்மாவை நீங்கள் நிச்சயித்தீர்களா? அல்லதில்லையா? வென்பதைக்கூறுங்கள். ஹே குழந்தாய்! இவ்வாறு தேவதைகளை நோக்கி பிரஜா பதி கூறியபோது அவர்கள் முன்னுபதேசத்தால் சிதாபாசனை ஆன்மரூபமா

யெண்ணி பிரஜாபதியை நோக்கிக் கூறுவதாவது:—ஹே பகவன்! முன்னுப தேசத்தில் தாங்கள் யெங்கட்கு லௌகிக விவகாரமற்ற மனவாணிகட்கு விஷய மாகாத புத்தியை யுபாதியாகவுடைய அற்பப்பரிமாணத்தோடு கூடிய ஆன் மாவைக் கூறினீர்கள் யெனக்கூறிய தேவதைகள் வசனத்தைக்கேட்டுப் பிரஜா பதியானவர் தேவதைகளின் மயக்கத்தை நீக்கும்பொருட்டுச் சிதாபாசனிடத்தே சம்பவியாத தர்மங்களால் ஆன்மாவின் சொரூபத்தை வர்ணிக்கத்தொடங்கி னூர்:—ஹே தேவதைகளே! முன்னர் யாம் உங்கட்கு அற்பப்பரிமாணமுடைய ஆன்மாவை உபதேசித்திலேம்; மற்றோ, சர்வ ஜகத்தின் சாக்ஷிரூபத்தால் ஆன்மாவை உபதேசித்தோம். அவ்வான்மா நானாவகையாய விஷயங்களால் ஆக்கப்பட்ட விசேஷத்தன்மையற்ற வடிவினதும் பிரமாதாக்களாய உங்கள் யாவரோடும் அதிஷ்டானத்தன்மையானே தாத்மிய சம்பந்தமுடையதும் சுக துக்காதி சர்வ தர்மங்களற்றதும் அத்விதீயரூபமும் யாவினும் மேன்மையதும் சர்வ சங்காதங்களையும் காப்பாற்றுவதும் சர்வஞ்ஞரும் சர்வ பேதங்களற்ற தாதலினனந்தமும் ஆம். ஆன்மாவின்கண்ணே சர்வஞ்ஞத்தன்மை ஒருகாலுண் டாம் ஞானத்தாலாகாதாம்; மற்றோ, முக்காலத்தும் நிகழும் சொப்பிரகாசச் சைதன்னியவடிவத்தானேயாம். ஆன்மாவின் வாஸ்தவ சொரூபத்தினும் விப ரீதரூபத்தன்மைப் பிரதீதியாவதில் மாயாகற்பித சம்பந்தமே காரணமாமாத லின், பிரஹ்மரூப ஆன்மாவிற்கு முன்னர் வர்ணித்தவடிவமே யதார்த்தமாம். உங்கள்பொருட்டுக் கூறியதும் உங்கள்பால் வினவியதுமாகிய ஆன்மாவினும் வேறாக சிறிது மாத்திரையும் பொருளில்லை; ஆத்மா உங்களுடைய வடிவமே யாம். ஹே குழந்தாய்! இவ்வாறு பிரஜாபதி தேவதைகளுக்கு ஆன்மாவை யுபதேசித்து அவர்களை நோக்கி வினவியதாவது:—ஹே தேவதைகளே! எம் உபதேசத்தால் நீங்கள் சொப்பிரகாசரூப அத்விதீய ஆன்மாவைக் கண்டீர்களா இல்லையாயெனக் கூறிய பிரஜாபதி வசனத்தைக்கேட்டு தேவதைகள் துவைத அனுபவத்தால் ஆன்மாவின் சொப்பிரகாசத்தன்மையின்கண்ணே அசம்பாவனை செய்து பிரஜாபதியை நோக்கிக்கூறுவதாவது.—ஹே பகவன்! ஆன்மாவிற்குச் சொப்பிரகாசத்தன்மையே யெவ்வாறு சம்பவிக்கும் யென வினவப்பட்டு பிரஜா பதி, தேவதைகளை நோக்கிக் கூறினதாவது:—ஹே தேவதைகளே! மாயையின் சொரூபத்தை யொளிர்விக்கும் ஆன்மாவின்கண் இம்மாயை இராதாம்; இருக்கு மாயின் ஆன்மாவா லொளிர்விக்கப்படாவாம்; நேத்திரத்தின் கண்ணிருக்கும் அஞ்சனம் சக்ஷுவால் பிரகாசியாததேபோலும்; மாயை இன்றாதலின் ஆன்மா வின்கண்ணே மாயையாலாக்கப்பட்ட துவைதமும் சப்பவியாதாம்; ஆன்மா வன்றிப் பிரகாசஞ்செய்வது வேறொன்றுமின்றாமாதலின், யெஞ்சியதாய் ஆநந்த வடிவ ஆன்மாவின்கண்ணே சுயஞ்சோதிரூபத்தன்மை சித்தமாம்; இவ்வாறு ஆன்மாவிற்கு சொப்பிரகாசத்தன்மை யுணர்த்தும்பொருட்டே சுருதியில் அத்வி தீயரூபத்தன்மைக் கூறப்பட்டுளது. அவ்வத்விதீயரூபத்தன்மையைக் கூறியே ஆன்மாவின்கண்ணே மாயாரகிதத்தன்மையும் சுயம்பிரகாசத்தன்மையும் சித்த மாம். ஆத்மக்ஞானதசையின்கண்ணே இத்துவைதப் பிரபஞ்சம் சிறிது மாத்தி ரையுமிராதாம், சர்வ பேதமுமற்ற சுயஞ்சோதியாய உங்களது ஆநந்தவடிவமே

யெஞ்சி நிற்கும். இவ்வாறு பிரஜாபதி தேவதைகட்கு ஆன்மாவின் அத்விதிய சொப்பிரகாசத்தன்மையைக் கூறியபோது அவர்கள் தம்மனத்தே இவ்வாறாராய்ந் தனர் : ஒருகால் ஆன்மா அத்விதீயரூபமாயின் சங்காதிதோஷங்களால் துஷ்டமாய இக்காரியப் பிரபஞ்ச சகிதமாயைக்கும் ஆன்மாவின் சொப்பிரகாச சொரூபத்தே பிரவேசமாம். சங்கமுடைய மாயையின் பிரவேசத்தால் ஆன்மாவும் சங்கமுடைய தாகும். அத்தகையதன்கண் சொப்பிரகாசத்தன்மை சம்பவியாதாம். என்று இவ் வண்ணமெண்ணி அத்தேவதைகள் பிரஜாபதியை நோக்கி மீண்டும் இவ்வாறு வினவினர் :—ஹே பகவன்! ஜடப்பிரபஞ்ச தாதாத்மிய சம்பந்தரூப சங்கத்தோடு கூடியதும் திருஷ்டாக்களின் திருசிய பாவத்தையுற்றதும் மாயாரூப உபாதியின் சம்பந்தத்தால் ஈஸ்வரப்பெயரைப்பெற்றதும ஆகிய இவ்வான்மாவின்கண் அசங் கத்தன்மையும் சொப்பிரகாசத்தன்மையும் சம்பவிபாவாம். இவ்வாறு தேவதை கள் வினவியபோது பிரஜாபதியானவர் அவர்களை நோக்கி இவ்வாறு கூறினர் :— ஹே தேவதைகளே! உங்கட்கு துவைதத்தோடு தோற்றும் ஆன்மா கேவலம் அவித்தைவடிவ மாயையின் மகிமையானே தோற்றும். உண்மையாய் அதன் கண்ணே துவைதமில்லை. அதன்கண்ணே துவைததரிசனமே மூடத்தன்மைக் குறியாம். ஒருக்கால் உங்கள் வடிவத்தே உண்மையாய் பேதஞ் சம்பவிக்குமாயின் திர்ஷ்டாவாகிய ஆன்மாவிற்கும் திருசியமாய பிரபஞ்சத்திற்கும் தாதாத்மிய சம் பந்தத்தாற் சொரூபத்தே சஙகமும் பரப்பிரகாசத்தன்மையும் சம்பவிக்கும். ஆனால், உங்கள் வாஸ்தவவடிவத்திற்குச் சிறிது மாத்திரையும் பேதமின்றாம். நீங் களே சர்வ துவைதங்களுமற்ற சுத்த ஆத்மசொரூபமாவீர். உங்கள் சொரூபத்தி னும் வேறாக சிறிது மாத்திரையும் துவைதப் பிரபஞ்சமில்லையாதலின், நீங்கள் சொப்பிரகாசச் சொரூபமேயாவீர். உங்களுடைய அத்விதீய ஆன்மவடிவத்தே சங்கம் பரப்பிரகாசத்துவம் யெவ்வாறுண்டாம்? உங்களுடைய அசங்க ஆத்மா சொப்பிரகாசரூபமாம். இவ்வாறாய வசனத்தை பிரஜாபதி கூறியபோது அத்தேவ தைகள் பிரஜாபதியை நோக்கிச் சொல்வதாவது:—ஹே பகவன்! தேவதைகளாகிய யாங்கள் கடாதிபாஹ்ய பதார்த்தங்களை சம்வித்ரூப ஞானத்திற்கு விஷயரூபமா யறிவதேபோல பிரபஞ்ச பாவத்தை யடைவுற்ற யெங்களான்மாவையும் யாங்கள் ஞானத்திற்கு விஷயரூபமாய் அறிவேமாதலின், யெம்மிடத்தே தாங்கள் கூறிய சொப்பிரகாசத்தன்மை சம்பவியாது. ஹே பகவன்! சர்வ ஜகத்தையுமசரீரமாக வுடைய ஈஸ்வரரும் என்னினும் வேறலலர்; மற்றோ, அவர் எமது சொரூபமே யாதலின், யாங்கள் அத்விதீயசொரூபமாம். அத்விதீயரூபமாதலினானே அசங்க ரூபமாவோம். அவ்வாறாயினும் யாங்கள் சர்வப் பிரபஞ்சரூப எங்களான்மாவை ஞானத்திற்கு விஷயரூபமாயறிவேமாதலின், அத்விதீய பாவத்தையடைந்தபோதி னும் விஷய விஷயி பாவரூப பேதநிவிர்த்தியுண்டாகாதாம். ஹே குழந்தாய்! இவ்வாறு தேவதைகள் பிரஜாபதியை நோக்கிக் கூறியபோது பிரஜாபதியானவர் தேவதைகட்குக் கூறுவதாவது :—ஹே தேவதைகளே! ஆத்மாவின் அத்விதீய ரூபத்தன்மைத் தோற்றுதவரையுமே காரிய சகிதமாயையின் ஸ்திதியால் துவை தப் பிரதீதியாம். காரிய சகிதமாயையை யழிக்கும் அத்விதீயரூபத்தன்மையின்

போதமுண்டாயபோது உங்களுடைய அத்விதீய சொரூபத்தே ஞானவிஷயத் தன்மை சம்பவியாது. இவ்வாறு கூறிய பிரஜாபதியின் வாக்கியதனைக்கேட்டு மீண்டும் வினவத் தொடங்கினா:—ஹே பகவன்! இவ்வத்விதீய வான்மா சம்வித் ரூப ஞானத்திற்கு விஷயமாமென்னும் பொருளைத் திடப்படுத்தும் யுக்திகளை யாங் களறியேம்; ஆனால், இதுகாறும் பிரபஞ்சரூப ஆன்மாவை ஞானத்திற்கு விஷய மாகவே யறிந்தேம்; சொப்பிரகாசத்தன்மையானே ஆன்மாவை யறிந்திலேமாத லின், சாஸ்திர உபதேசத்திற்கும் எமதனுபவத்திற்கும் மகா விரோதமாம்; அவ் விரோதத்தை நீக்கும் தாங்களே எங்கட்குப் பிரமாணரூபமாவீர்கள்; தாங்கள் கூறியபொருளையே யாங்கள் நிச்சயஞ்செய்வோம். ஹே மைந்த! இவ்வாறு தேவ தைகள் கூறியபோது பிரஜாபதியானவர் தேவதைகளை நோக்கிக் கூறியதாவது:— ஹே தேவதைகளே! நீவிர் சர்வ சாஸ்திரங்களிலும் மிகவும் குசலரும் மிகவும் மதிமான்களுமாவீர்கள். அத்தகைய உங்கட்கும் ஆன்மவிஷயத்தன்மையில் யுக்தி தோற்றுவிடின் வேறு யாவர் அவ்வர்த்தத்தே யுக்திகூறுவர். அதைச் சித்திசெய் யும் யுக்தியாதொன்று மின்றுமாதலின், ஆன்மாவின்கண்ணே அத்விதீயரூபத் தன்மையானே பூர்வம் சித்தமாய சொபபிரகாசரூபத்தன்மையையே நீவிர் நிச்ச யம் செய்மின். ஒருக்கால் சொப்பிரகாச ஆன்மாவை நீவிர் விஷயத்தன்மைவடி வத்தால் அறிவீராயின் உம்மிடத்தே அனான்மக் ஏத்வம் பிராப்திபாம். ஆன்மா விற்கும் சம்வித்வடிவ ஞானத்திற்கும் பரஸ்பரம் வாஸ்தவபேதமுண்டாயின், அவ் விரண்டன் விஷய விஷயி பாவத்தே உங்கட்கு யுக்திதோற்றும்; ஆனால், அந்த சுயஞ்சோதி அத்விதீய ஆநந்தவடிவ ஆன்மாவின்கண்ணே ஞானத்திறகு பேத மில்லை. ஞானம் ஆன்மவடிவமேயாகுமாதலின், அவ்விரண்டன் விஷயவிஷயி பாவத்தே யாதொரு யுக்தியு முங்களுக்குத் தோற்றவில்லையாகையால் சுயஞ்சோதி யாய அத்விதீய ஆன்மாவின்கண்ணே விஷயத்தன்மை அபாவமேயாகும். துவை தப்பிரதீதியின் முதற்கணத்தும் சமாதிகாலத்தும் இவ்வான்மா யானிருக்கின்றே னெனப் பிரத்தியக்ஷவடிவத்தால் பிரதீதியாங்கால சுயஞ்சோதி அத்விதீய ஆன்மா வில் விஷயவிஷயி பாவரூப பேதம் சிறிது மாத்திரையும் பிரதீதியாகாதாம். அது ஆன்மாவில் உண்மையாயிருக்குமாயின் சமாதிகாலத்தும் பிரதீதியாகும்.

சங்கை:—ஹே பகவன்! வியவகாரபலத்தா லிவ்வான்மாவில் அப்பேதம் சித்தமாமன்றோ?

சமாதானம்:—ஹே தேவதைகளே! வியவகாரகாரணரூப மனவாக்குகட்கும் இவ்வான்மா பரமாம்; மனவாக்குகளின் விஷயரூப சர்வ பேதமுமற்றதாம்; அத னானே, இச்சுயஞ்சோதியாய ஆன்மா எவ்விவகாரத்திற்கும் விஷயமன்றாம்.

சங்கை:—ஹே பகவன்! மனவாக்குகட்கு அவிஷயமாய ஆன்மாவின் உபதேசமே சம்பவியாதன்றோ?

சமாதானம்:—ஹே தேவதைகளே! சுயஞ்சோதி அத்விதீய ஆன்மா மன வாக்குகட்கு அவிஷயமாம்; அதனானே ஞானாசிரியர் தம் சிஷர்பொருட்டு மௌன ரூபத்தானே ஆன்மாவை யுபதேசிப்பர். ஸத்சப்தத்தின் அர்த்தரூப ஸ்தூலப் பிரபஞ்சமும் அஸத்சப்தார்த்தரூப சூக்ஷ்ம பிரபஞ்சமும் வாக்குமனங்கட்கு

விஷயமாம். இவ்வான்மா ஸ்தூலசூக்ஷ்மஜகத்தற்றதாமாதலின், இதன்கண்ணே அவ்விரண்டும் பிரவிருத்தியா. இப்போது காரணாதி மூன்றவஸ்தைகளினும் ஆன் மாவின் பின்னரூபத்தன்மையை வெளிப்படுத்தும்பொருட்டு முதலில் அதிதெய் வாதிரூபத்தால் அவ்வவஸ்தைகளில் விவகார விஷயத்தன்மையை நிரூபிப்பாம்:— ஹே தேவதைகளே! இக்காரணசரீரரூப அவித்தை இயல்பாகவே துச்சரூப மாயினும் ஜகத்வடிவ காரியத்தை உண்டாகுவதாய் சத்தியம்போலத் தோற் றும்; அது தனக்குச் சத்தையிலலாவிடினும் ஆன்மாவைபபற்றிச சத்தையைப் பெறும்; பெற்று நானுவகையாய காரியததைச்செய்யும்; அதனானே, நானுவகை யாய வியவகாரங்கட்கு யோக்கியமாம்; அதன்கண்ணே பிரதிபிம்பபாவததை யடைந்த சேதன ஆன்மா ஈஸ்வரரெனபபடும். அவா தம் சங்கல்பத்தால் பிராண புத்தி முதலிய உபாதியுடையவராங்கால் ஜீவனெனப்படுவர். முதற் காரியரூபத் தாற் பிரசித்தமாய சமஷ்டி சூக்ஷ்மாபிமானி ஹிரண்யகர்பபரென்னும் ஜீவனு வர். அவர் தானேயுண்டாகிய ஞானத்தையுடையவர். அநந்த சகதியையுடையவ ராதலின் அவரே ஈஸ்வரரெனப்படுவா. அவரே சமஷ்டி ஸ்தூல உபாதியுடைய வராய் விராட்டெனப்படுவர். சமஷ்டிரூபககாரணாதி மூன்றுபாதிகளின் சம்பந்தத் தால் ஆன்மா ஈஸ்வராதி மூன்று நாமங்களைபபெறுவதேபோல, வியஷ்டிரூபக் காரணாதி மூன்றுபாதிகளின் சமபந்தத்தால் பிராஜ்ஞாதி மூன்று நாமங்களைப் பெறும். இவ்வாறு சேதன ஆன்மாவே துயில் முதலிய அவஸ்தைகளை யடை வுற்று ஜீவனெனப்படுமாதலின், ஈஸ்வராதி சர்வ சப்தங்களும் ஒரு சேதன ஆன் மாவிற்கேயாம். இவ்வாறு சர்வ விவகாரங்களையுஞ் சித்திசெய்யும் மூன்று அவஸ் களுமறற மனவாக்குகட்கு அவிஷயமாய சுயஞ்சோதி ஆநந்தவடிவ ஆன்மா துரியமெனப்பெறும. அதன்கண்ணேயுண்டாம துரியரூப விவகாரமும் மூன்றவஸ் தைகளால் நிரூபிக்கப்பட்ட கற்பிதபேதத்தை யபேக்ஷித்தேதாம். இயல்பாயதன் கண் துரியவிவகாரமும் சம்பவியாது.

சங்கை:—ஹே பகவன! அவ்வான்மா எவ்விவகாரத்திற்கும் விஷயமன்று யின் தாஙகள் யெங்கட்கு அதனுபதேசததை யெவ்வாறு செய்தீர்கள்?

சமாதானம்:—ஹே தேவதைகளே! மனவாககுகட்கு அவிஷயமாய ஆன்மா வில் துரியத்தன்மை தாமததைப்போல சில தர்மங்களை யாரோபித்தே உங்கட்கு ஆன்மோபதேசத்தைசசெய்தேம். தாம ஆரோபணமின்றிக கேவலம் நிர்க்குண ஆன்மாவை யுபதேசிப்பதில் யாமும் சமர்ததரல்லேம. ஹே மைந்த! அத் தேவதைகட்குப பிரஜாபதியானவர் இவ்வாறு ஆன்மோபதேசஞ்செய்து அவர் களை நோக்கிக் கூறியதாவது:—ஹே தேவதைகளே! யாம் உபதேசித்த ஆன்மாவை நீங்களறிந்தீர்களா இல்லையா? அதைக்கேட்ட தேவதைகள் கூறியதாவது:—ஹே பகவன்! சீடர்களாகிய எங்களிடத்து ஆன்மாவின் சொரூபத்தை வினவும் ஆசிரிய ராய தங்கட்கு ஆன்மாவின் வடிவத்தை யாங்கள் கூறவேண்டிய தவசியமாயினும் அவ்வான்மாவின்கண்ணே ஞாதத்தன்மையும் அஞ்ஞாதத்தன்மையும் சம்பவியா வாமாதலின், அவ்விரண்டுள் எத்தர்ம விசிஷ்ட ஆன்மாவை யாங்கள் தங்கட்குக் கூறுவது? தாங்கள் யெங்கட்குபதேசித்த ஆன்மஞானத்திற்கு விஷயரூப விதித

பதார்த்தத்தினும் ஞானத்திற்கவிஷயரூப அவிதிதபதார்த்தத்தினும் அத்தியந்தம் விலக்ஷணமாமாதலின், அவ்வான்மாவின் வடிவத்தை யாங்கள் யிவ்வாறு கூறுவோம்:—அவ்வான்மா அறியப்பட்டபோதிலும் அவிஷயமாதலின் அறியப்படாததேபோல நிகழும். இவ்வாறு அத்தேவதைகள் துவம்பதார்த்தவடிவத்தால் ஆன்மாவின் யதார்த்தவடிவத்தை யறிந்தபோது அந்தப் பிரஜாபதியானவர் அத்தேவதைகட்குத் துவம்பதார்த்தரூப ஆன்மாவைத் தற்பதார்த்தரூபத்தானே உபதேசித்தனர்.

சங்கை:—ஹே பகவன்! பிரஜாபதி, தேவதைகட்கு முன்னரநேகமுறை ஆன்மோபதேசஞ் செய்துவந்தனராதலின் மீண்டு மீண்டு மவ்வான்மாவை யுபதேசிப்பதில் கூறியது கூறலாமென்னும் குற்றம் பிராப்தியாமன்றோ?

சமாதானம்:—ஹே மைந்த இவ்வான்மா அத்தியந்தம் அறியமுடியாததாமாயினும் சீடர்க்குபதேசிப்பதில் முயன்ற ஞானாசிரியர் சீடர்க்கு ஆன்மாவை யடிக்கடி யுபதேசித்தபோது அவ்வுபதேசத்தால் அச்சீடர்க்கு விபரீதபாவனை, துர்வாசனை யென்னும் தடைகள் நீங்கும். அதன் நீக்கத்தின்பின் அவர்க்குத் திட ஆத்மஞானமுண்டாமாதலின், ஆன்மாவை மீண்டு மீண்டு முபதேசிப்பதில் கூறியது கூறலென்னுங் குற்றம் அடைவுறாது. பயனற்ற அறிதற்கெளிதாய வஸ்துவை மீண்டு மீண்டு முபதேசிக்கிலக்குற்றமாம். இவ்வாறு பலத்தை விசாரித்து பிரஜாபதி தேவதைகட்கு மீண்டு மீண்டும் ஆன்மாவினுபதேசத்தைச்செய்தனர். மீண்டு மீண்டும் செய்யின் ஆன்மாவினுபதேசம் துர்வாசனைகளின் நீக்க காரணமாவதேபோல, நான்கு பாதங்களையுடைய பிரணவத்தால் ஆன்மாவின் சிந்தனையும் அதன் காரணமாகுமென வெண்ணி பிரஜாபதி, தேவதைகட்கு இவ்வாறு கூறத்தொடங்கினர்:—ஹே தேவதைகளே! அகார உகார மகார அர்த்த மாத்திரையென்னும் நான்கு பாதங்களையுடைய பிரணவத்தே விஸ்வாதி அத்யாத்மரூப நான்கு பாதங்களாலேனும் விராட்டாதி அதிதெய்வரூப நான்கு பாதங்களாலும் தாதாத்மிய பாவத்தையடைந்த ஆன்மாவை நீங்கள் தியானஞ்செய்வீராயின் உங்கட் கெத்துர்வாசனையுமிராதொழிந்துபோம். ஆன்மஞானத்தால் உங்களுடைய துர்வாசனையொழிந்தபோதே நீங்கள் பிரஹ்மபாவத்தை யடைவீர்கள். அதனால் உங்கட்கு மீண்டும் சம்சார துக்க அடைவு உண்டாகாதாம். நீங்கள் அகம் சப்தத்தாற் கூறும் துவம்பதார்த்தரூப ஆன்மா தற்பதார்த்தரூப பிரஹ்மமேயாம். அச்சத்தியப்பிரஹ்மம் துவம்பதார்த்த ஆன்மாவினும் வேறாகாது; அபின்னமேயாம். இவ்வாறு தத்பதார்த்த பிரஹ்மத்தையும் துவமபதார்த்த ஆன்மாவையும் பரஸ்பரம் அபின்னரூபமாய் நீவிர் அறிமின். ஜீவப்பிரஹ்ம அபேதத்தே சிறிதுமாத்திரையுஞ் சம்சயத்தை யடையாதீர்கள். எப்பிரணவரூப சத்தியப்பிரஹ்மரூப ஆன்மாவை மகாவாக்கிய அர்த்தரூபத்தானே வர்ணித்தேமோ அதை சூக்ஷ்ம புத்தியுடையவனே தன்னுண்மவடிவமா யறிவன்; ஸ்தூலமதியினன் அறியான். அது ஆகாசாதி பஞ்சபூதங்களின் முறையாய சப்தாதி ஐந்து குணங்களற்றதாம். சுரோத்திராதி ஐந்திந்திரியங்களும் வாக்காதி ஐந்திந்திரியங்களும் சப்தாதி விஷயங்களும் நானாவகையாய வியாபாரங்களுமற்றதாம். மனபுத்தி பிராணாதிகளின் வியாபாரங்களும் இந்திரியம் மனம் புத்தி பிராணன் ஐந்து மகாபூதம் பௌதிகப்பொருள்கள்

மாயையென்பன முதலிய யாவும், சர்வ தர்மங்களுமற்றதாம். உங்களுக்கு யாமுப தேசித்த சச்சிதாநந்தவடிவ ஆன்மா சொப்பிரகாசமாயினும் உபநிஷத்வடிவ வேதாந்தங்களிலே பிரதிபாதிக்கப்படுமாதலின், வேதவேத்தாக்கள் 'ஔபநிஷ தம்' என்றனர். இவ்வாநந்தவடிவ ஆன்மா சொப்பிரகாசரூபமாதலின், 'சுவி பாதம்' என்றனர். இவ்வான்மா பிரஹ்மக்ஞானத்தால் ஒரு முறையே ஆவரண மற்றதாய்த் தோற்றலின் மீண்டு மஞ்ஞானரூப ஆவரண உற்பத்தியுண்டாகாதா மாதலின் 'சக்ருத்விபாதம்' என்றனர். இவ்வான்மா அந்தக்கரணவிருத்தி ரூபஞானங்களில் பிரதிபிம்பரூபமாய் மீண்டு மீண்டும் தோற்றலின் 'சர்வதஃ புரதோ விபாதம்' என்றனர். இது முதலான சர்வ குணங்களோடு கூடிய அத்வி தீய ஆன்மாவை நீங்கள் தத்துவமபதார்த்தங்களின் பரஸ்பர அபேதரூபத்தால் சாக்ஷாத்காரஞ்செய்யுங்கள். ஹே மைந்த! அந்தப் பிரஜாபதியாய பகவான் அத் தேவதைகட்கு இவ்வாறுன்மோபதேசஞ்செய்து மீண்டும் இவ்வாறு வினவினர்:- ஹே தேவதைகளே! யாமுங்கட்கு உபதேசித்த ஆன்மாவை சாக்ஷாத்கரித்தீர் களா? இல்லையா? எனக்கேட்கவே அத்தேவதைகள் முன்போல மீண்டும் விதித அவிதித பதார்த்தங்களினும் விலக்ஷணரூபத்தால் ஆன்மாவின் வடிவத்தைக்கூறி னர். அதைக்கேட்ட பிரஜாபதி அவர்கள் புத்தியைப் பரீக்ஷிக்கும்பொருட்டு அவர் களை வினவினர்:-ஹே தேவதைகளே! யாமுன்னர் எவ்வாநந்தவடிவ ஆன்மாவின் சொரூபபூத அநுபூதியை யுபதேசித்தேமோ சொப்பிரகாச அவ்வநுபூதி எவ்வா தாரத்தேயிருக்கும் என்பதை நீவிர்க்கூறுமின். இவ்வாறு கேட்டபோது அத் தேவதைகள் விடைபகர்ந்ததாவது:—ஹே பகவன்! முன்னர்த்தாங்கள் எங்கட்கு ஆதாரமற்ற ஆன்மாவை யுபதேசித்தீர்கள். இப்போது அவ்வநுபூதிரூப ஆன்மா வின் ஆதாரத்தைத்தான் ஏன் கேட்கின்றீர்கள் யென அத்தேவதைகள் பிரஜா பதியை நோக்கிக் கூறவே, அவர் மீண்டும் அவர்களைப் பரீக்ஷிக்கும்பொருட்டு வின வியதாவது:—ஹே தேவதைகளே! முன்னர் யாமுங்கட்கு எச்சுயஞ்சோதி அத் விதீய ஆநந்தவடிவ ஆன்மாவை யுபதேசித்தேமோ அவ்வறியப்பட்ட ஆன்மா வால் அதிகாரிகட் கெப்பயனுண்டாம். இவ்வாறு பிரஜாபதி கேட்கவே அவ்வா சிரியர்பால் இவ்வாறு கூறினர்:—ஹே பகவன்! ஞாத ஆன்மாதானே பலவடிவ மாம்; அதற்கு வேறொரு பலமுமின்றாம். பலாவஸ்தையையடைவுற்ற மாமுதலிய விருக்ஷங்களினின்றும் வேறு பலமுண்டாதல் காணபபடுவதில்லை; மற்றோ, அங் குர விருக்ஷாதி அவஸ்தையையுடைய மா முதலிய விருக்ஷங்களினின்றே பலோற் பத்தியாம். அதுபோல, பலரூப ஆன்மாவினின்றும் வேறு பலமுண்டாகாதாம். அதுதானே பலரூபமாம். இவ்வாறு கூறியதேவதைகளின் வசனத்தைக்கேட்டு பிரஜாபதியானவர் மீண்டும் தேவதைகளின் ஞானத்தைப் பரீக்ஷிக்கும்பொருட்டு அவர்களை நோக்கிக்கூறினர்:—ஹே தேவதைகளே! அத்தியந்த மாச்சரியவடிவ மாயைக்கும் பிரஹ்மரூபத்தன்மையால் நீவிர் சத்தையைக் கொடுப்பவராதலின், நீவிர் மிகுந்த ஆச்சரியமுடையவராவீர். இவ்வாறு கூறிய பிரஜாபதியின் வசனத் தைக்கேட்டு அத்தேவதைகள் கூறுவதாவது:—ஹே பகவன்! இவ்வுலகத்துள்ள சர்வ பதார்த்தங்களும் பிரஹ்மரூபத்தால் ஆச்சர்யரூப மாயைக்குச் சத்தையை

யடைவிப்பதாமாதலின், யாவுமாச்சரியவடிவமேயாம். கேவலம்,தேவதைகளாகிய எங்களிடத்தே நியமமாய் ஆச்சரியத்தன்மை கூறல் சம்பவியாதாம். இவ்வாறு கூறிய தேவதைகளின் வசனத்தைக்கேட்ட பிரஜாபதி தேவதைகட்குக் கூறியதாவது :—ஹே தேவதைகளே! கடாதி திருசியபதார்த்தங்கட்கும் பிரஹ்மரூபத்தன்மையால் ஆச்சரியரூபமாயறிவீராயின் அவ்வாச்சரியரூபப் பிரஹ்மம கடாதிகளைப்போல இதந்தைவடிவத்தானும் நீவிர் அறிந்தீரெனக் கூறுவதாற் றுணியப்படுமாதலின், அவ்வோங்காரரூப பிரணவத்தினனுசந்தான பூர்வகம் பிரத்தியக்கான்மாவை யாங்களறிந்தேமென நீவிர் ஏன் கூறுவதில்லை? எனக் கூறிய பிரஜாபதியின் வசனத்தைக்கேட்டு அத்தேவதைகள் கூறியதாவது :—ஹே பகவன்! யாண்டும் வியாபகமாய ஏக அத்விதீய ஆன்மா எவ்விந்திரியங்கட்கும் விஷயமன்றுமாதலின், ஞாதமெனவும் கூறமுடியாது. அஸ்திரூபத்தால் யாண்டும் பிரதீதியாதலின், அஞ்ஞாதமெனவுங் கூறலாகாது. அவ்விரண்டும் பரஸ்பரம் விரோதியாதலின் ஓரிடத்தேயிராவாம். ஆதலின், இவ்வான்மா அவ்விரண்டு தர்மங்களையுடையதாமெனக் கூறப்படாதாம். யாங்கள் ஞாதரூபத்தாலும் அக்ஞாதரூபத்தாலும இரண்டு ரூபத்தாலும் ஆன்மாவைக் கூறுவதில் எவ்வாறு சமர்த்தராவோம்; இதனானே பாதசாமானுதி காரணத்தால் சர்வ பதார்த்தங்களிலும் பிரஹ்மரூபத்தன்மையை யாங்கள் கூறினேம்; அதனால் இவ்வான்மாவின் பிரத்தியக் வடிவததன்மையின் ஹானியுண்டாகாதாம். ஹே மைந்த! இந்தப்பிரகாரம் தேவதைகளின் வசனத்தைக்கேட்ட பிரஜாபதியானவர் கூறியதாவது :—ஹே தேவதைகளே! உங்கட்கிவ்வாறு ஆன்மாவின் சொரூப நிச்சயமுண்டாயிருப்பின் நீங்கள் இவ்வான்மா எங்களுடைய அநுபவசித்தமாமெனக் கூறுங்கள். இவ்வாறு கூறிய பிரஹ்மாவின் வசனத்தைக்கேட்டு தேவதைகள் கூறியதாவது :—ஹே பகவன்! தங்களுடைய கிருபையால் யாங்கள் ஆநந்தவடிவ அத்விதீய ஆன்மாவைப் பிரத்தியக்வடிவமாயறிந்தோம். விஷய விஷயி பாவரூபபேதத்தால் ஆன்மாவை அறிந்திலோமாதலின், இவ்வான்மாவின்கண்ணே விஷயத்தன்மையையடைவிக்கும் விசேஷணங்களைக்கூறுவதில் யாங்கள் எவ்வாறு சமர்த்துடையவர்களாவோம்; மற்றோ, ஆகோம. சர்வ லோகங்கட்கும் பிதாமகராய்க் குருவாயிராநின்ற ஹே பிரஜாபதியே! தங்களுக்கு எங்களுடைய கோடி நமஸ்காரத்தை அற்பிக்கின்றோம்; சர்வ ஜகத்திற்குமீஸ்வரராய தாங்கள் சர்வக்ஞராயினும் அக்ஞானியைபோல் எங்கள் பாலடிக்கடிவினவினீர்கள் அது எங்களைப் பரிக்ஷிக்கும்பொருட்டேயாமன்றி வேறொருகாரணமுமின்றும். தாங்கள் பிரஹ்மவித்தையை யுபதேசித்து எங்களைக் கிருதார்த்தராக்கினீர்களாதலின், இப்போது எங்களைப் பரீக்ஷிக்கவேண்டியதில்லை. சச்சிதாநந்தவடிவ ஆன்மாவை யடைவித்தத்தங்களுக்கு எங்களுடைய அநந்த நமஸ்காரத்தைச் சமர்ப்பிக்கின்றோம். எங்கள்மீது தாங்களெப்போதும் பிரசன்னராயிருக்கவேண்டும்; தங்கள் பிரசன்னத்தன்மையானே எங்கட்குத் துர்லப ஆன்மப் பிராப்தியாயது. ஹே குழந்தாய்! இவ்வாறு தேவதைகள் தங்கள் கிருதகிருத்தியபோதக வசனத்தைக்கூறியதைக் கேட்டும் பிரஜாபதியானவர் தேவதைகளின் ஞானத்தைத் திடஞ்செய்யும்பொருட்டுப் பரீக்ஷிப்பவராய் மீண்டும் வினவினர் :—ஹே தேவதைகளே! நீங்கள் எம்மை அடிக்கடி நமஸ்கரித்துப்பிரார்த்தனை

செய்தீர்கள்; அதனால் உங்கள்மீது யாம் மிகவும் பிரசன்னமுடையேமாதலின், எம்மை மீண்டு மீண்டும் வினவுவதில் நீவிர் சிறிது மாத்திரையும் பயப்படாதீர்கள். உங்களிருதயத்தே சிறிதேனும் ஐயமிருப்பின் வினவுங்கள். உங்கள் பெல்லா ஐயங்களையும் நீக்குவேம் என்பதில் நீங்கள் சிறிது மாத்திரையும் சம்சயப்படாதீர்கள். இவ்வாறு பிரஜாபதி கூறியபோது அத்தேவதைகள் கூறிபதாயது:—ஹே பகவன்! சர்வ காலத்தும் சித்த ஸ்வரூபத்தோடுகூடிய ஆத்மவர்ணனப் பிரசங்கத்தே சாத்தியத்தன்மைவடிவத்தால் சித்த ஆத்மாவினும் விலக்ஷணமாய 'ஞாதாஜாநீயும்' (அறியுங்கள்) என்னும் அநுக்ஞையைத் தாங்கள் கூறினீர்கள். அஃது அசங்கதமாமென்னும் ஐயம் நிகழுகின்றது எனக்கூறவே பிரஜாபதி விடைதருவாராயினர்:—ஹே தேவதைகளே! நித்திய சித்த ஆன்மாவின் வர்ணனப்பிரசங்கத்தேயாம் உங்களுக்கு சாத்தியரூப அநுக்ஞையைக்கூறவில்லை; அத்வைத ஆன்மரூப அநுக்ஞையையே கூறினேம். ஏனெனின், துவைதப் பிரபஞ்சத்தை மறததறபொருட்டு சத்திவடிவப் 'பிரணவத்தினவஸ்தாவாச்சியார்த்த வடிவ அநுக்ஞாரூப ஆன்மாவே அதிகாரிகளால் சிந்திக்கத்தக்கதாமென்னும் பொருளையே கூறினேம் எனப் பிரஜாபதி மொழியவே, தேவதைகள் வேறெவ் விதத்தானும் பிரஜாபதியினுபகாரத்தை நீக்கமுடியாதவராய் முன்போல நமஸ்கரித்து அவர்க்கு தங்களான்மாவையே அர்ப்பித்தனர்; எங்கள்மீது மகிழ வேண்டுமென்று பிரார்த்தித்தனர். ஹே மைந்த! இவ்வண்ணம் பிரஜாபதியாய பிரஹ்மா முன்னர் தேவதைகட்குப் பிரஹ்மவித்யா உபதேசத்தைச்செய்தனர். அதன்கண்ணே ஞானவானுய சீடனுக்கு முயர்ந்த ஜிஞ்ஞாசையுண்டாம். சம்சாரரூப சூலத்தின் மூலரூபமாகிய அஞ்ஞானத்தை யழிக்கும் ஆன்மஞானத்தை உன் பொருட்டுபதேசித்தோம். அதையன்றே, சிரத்தையுடைய நீ முதலிற் கேட்டனையன்றே. இப்போது முன்னர் விரித்துக்கூறிய பொருளைத் தொகுத்துக்கூறுவாம்:—ஹே மைந்த! முன் விரித்த பொருளை யிப்போதும் தொகுத்துக்கூறுவம் கேட்குதி. யானஞ்ஞனென்னு மனுபவ விஷய அஞ்ஞானரூபமாயையை வேத வேத்தாக்கள் காரணசரீரம் என்றனர். அதனினின்றும் சூக்ஷ்ம தூலசரீர பேதத்தால் இருவகைத் திருசியப்பிரபஞ்சமுண்டாம்; அதுபூத பௌதிகரூபமாம்; அதிதைவாதிரூபமாம்; நனுப்பிரபஞ்சம் தூலம், கனுப்பிரபஞ்சம் சூக்ஷ்மம், மாயைவடிவ அவித்தை துயிலாம்; அம்மூன்றையு மதிகாரி விடவேண்டும். மூன்றினும் மேலாய வஸ்துவைத் துரீயமென்பர்; அதுவும் ஓதா அனுஞ்ஞாதா, அனுஞ்ஞா, அவிகற்பம் என்னும் பேதத்தால் நால்வகையாம். அதிதைவரூப சாக்ஷியான்மாவிற்குக் கூறிய நான்கு அவஸ்தைகளாம்; அவற்றினடைவில் ஸ்தூலாதி முத்தேகாபிமானம் தடையாம். அவ்வபிமானம் நீங்கவே அறிஞன் சமாதியினின்றுங் கிளம்பிய காலத்தே பாகியாந்தர விசுவத்தைப் பிரஹ்மரூபமா யனுபவிப்பன். அக்காற் சர்வ விசுவத்தையு மொளிர்விக்கும் சைதன்யத்தை ஓதா என்றனர். தியாதா, தியானம், தியேயம் என்னும் திரிபுடியோடு கூடிய சவிகற்ப சமாதியிலிருக்கும் அறிஞன் சர்வ விசுவத்தையும் பிரஹ்மரூபமாய்க் காண்பன். அக்கால் சர்வத்திற்கும் சத்தையைத் தரும் சைதன்யத்தை அனுஞ்ஞாதாவென்ற

றனர். எந்நிர்விகற்ப சமாதியிலிருக்கு மறிஞன் தியாதா முதலிய எல்லாத் திரிபுடிகளையும் பரித்தியாகித்து சர்வ ஜகத்தின் சத்தையையிழுக்கும் எச் சைதன்ய ஆன்மாவை அநுபவிப்பனோ அதை அநுஞ்ஞா என்றனர். எக்கால் பிரஹ்மஞானரூப அக்கினியால் சம்சார துக்கரூப சூலத்திற்கு மூல பூதமாய அஞ் ஞான மழிவுறுமோ, மனவாக்குக் கவிஷயமாகிய சுயஞ்சோதியாநந்தவடிவ அத்விதீய ஆன்மாவை அறிஞன் அவிஷயத்தன்மையானே காணினும் விஷயத் தன்மையானே காணானோ, இவன் யான், இவன் வேறு என்பதாதிபேதத்தைக் காணானோ, பேதாபாவத்தையும் காணானோ, யான் வாழ்கின்றேன், யானிறக்கின் றேன் என்பதாதி விசேஷத்தையும் காணானோ, அக்காலிருக்கும் சைதன்யவடிவ ஆன்மாவை அவிகற்பமென்றனர். நனு முதலிய மூன்றவஸ்தைகளும் பேத தோடத்தோடு கூடியதாமாதலின், அதிகாரி விடத்தக்கனவாமாறே, துரீய ஆன் மாவின் ஓதா முதலிய மூன்றும் பேததோடத்தோடு கூடியதாதலின், விடத்தக் கனவாம். நான்காவதாய அவிகற்பவடிவம் மனவாணிகட்கவிஷயமாம்; துவைதப் பிரபஞ்சமற்றதாம்; ஆநந்தவடிவமாம்; சரீரரூப துவாராவதியின்கண்ணேயிருப் பதாம்; சர்வ ஆசிரயமுமற்றதாம்; சர்வ பேதமுமற்றதாம்; மாயையற்ற சுயஞ் சோதிரூபமாம்; சர்வப்பிராணிகளின் இருதயகமலத்தே எப்போதுஞ் சாக்ஷி ரூபமாய் விளங்குவதாம். இத்தகைய அவிகற்பவடிவ ஆன்மாவைக் கடாதி திருசியப்பதார்த்தங்களைப்போல அதிகாரி இதந்தைவடிவமாய்க்காணாமல் 'யா னிருக்கின்றேன்' என்னும் பிரத்தியக்வடிவமாய்க்காணவேண்டும். இதுவே பரம பலரூப ஞானத்தின்வடிவமாம். இந்த ஞானமே இந்நூலின் பிரயோஜனமாம்.

இப்போது இப்பொருளை வெளியாக்கும்பொருட்டு முதலில் அவிகற்ப ஆன்ம ஞானத்திலிருக்கும் அசம்பாவனையைத் திருஷ்டாந்தத்தானீக்குவாம்:—ஹே குழந்தாய்! ஆகாயத்திற் கந்தர்வ நகரங் கற்பிதமாவதுபோல, ஆநந்தவடிவ ஆன் மாவில் இம்மாயை முதலிய துவைதப்பிரபஞ்சமுங் கற்பிதமாம். நிரவயவ ஆகா சத்திற் கற்பிதமாய ஏகதேசத்தே ஆகாயத்தின் வாஸ்தவவடிவ அஞ்ஞானத்தால் கந்தர்வநகர கற்பனையுண்டாவதேபோல, உண்மையாய் நிரவயவ ஆன்மாவிற் கற்பிதமாய ஏகதேசத்தே ஆன்மாவின் வாஸ்தவவடிவ அஞ்ஞானத்தால் மாயை முதலிய பிரபஞ்ச கற்பனையாம். ஆகாய வாஸ்தவரூபஞானத்தால் கந்தர்வ நகரம் லயமாவதேபோல, ஆன்மாவின் வாஸ்தவவடிவ ஞானத்தால் திருசியப்பிரபஞ்சம் லயத்தையடையும். ஆகாயஞானத்தால் கேவலம் கந்தர்வநகரமாத்திரம் நிவிர்த் தியாகாமல் அதன் காரணமாய அஞ்ஞானமும் நிவிர்த்தியாவதேபோல, ஆநந்த வடிவ ஆன்மாவின் ஞானத்தால் காரியப்பிரபஞ்சமும், காரண அஞ்ஞானமும் நீங் கும். அபரோக்ஷமயலை நீக்கற்பொருட்டு அதிஷ்டான அபரோக்ஷஞானமே அபே க்ஷிதமாம். பரோக்ஷஞானத்தால் அபரோக்ஷமயலி னீக்கமுண்டாகமாட்டாது. கிழக்கு முதலியவற்றே மேற்கு முதலிய பிரத்தியக்ஷமயக்கம் கிழக்கு முதலிய வற்றின் பரோக்ஷஞானத்தால் நீங்காதாம்; அவ்வபரோக்ஷஞானத்தானே அவ் வபரோக்ஷமயக்கம் நீங்கும்: அதுபோல, ஆன்மாவின் பரோக்ஷஞானத்தால் அப ரோக்ஷரூப சம்சாரமயக்க நீக்கமுண்டாகாது; மற்றே, அபரோக்ஷஞானத்தானே

நீங்கும். ஒரே கனுக்காண்போன் நித்திராதோஷவயத்தால் அநேகவகையாய்த் தோற்றுவதேபோல, ஒரே ஆன்மாத் தன் சொரூப அஞ்ஞானத்தால் அநேக வகையாய்ப் பிரதீதியாம்.

சங்கை :—ஹே பகவன்! மத்தியான சூரியனிடத்தே அந்தகாரத்தினிருப்புச் சம்பவியாததேபோல, விளங்கானின்ற ஸ்வயஞ்ஜோதி ஆன்மாவின்கண் அஞ்ஞானத்தினிருப்புச் சம்பவியாதன்றோ?

சமாதானம் :—ஹே குழந்தாய்! இம்மாயை மிகவும் கூடாததைக் கூட்டுவிப்பதாம்; தாண்டமுடியாததாம்; ஜீவர்கட்கு மிகவுந் துக்கத்தைத்தருவதாம்; சம்சாரசூலத்தையுண்டாக்குவதாம்; நூலுணர்ந்தோர் இதனைக் கூடாததைக் கூட்டுவிக்குஞ் சமர்த்தையென்பர். தன்னியல்பின் வலிமையானே ஸ்வயஞ்ஜோதி ஆன்மாவின்கண்ணிருக்கும். தேளானது தன் கர்ப்பத்தால் நாசமுறுவதேபோல, சர்வ பேதமற்ற ஆநந்தவடிவ ஆன்மாவை விடயஞ்செய்யும் மஹாவாக்யஜன்ய அந்தக்கரணவிருத்திரூப ஞானகர்ப்பத்தானே இம்மாயைவடிவத்தேளும் நசிக்கும். அவித்யாரூபமாயை ஆநந்தவடிவ சாக்ஷியான்மாவால் ஒருகாலும் பயத்தையடையாது; மற்றோ, மஹாவாக்கியத்தாலுண்டாய அந்தக்கரண விருத்தியிலிருக்கும் சாக்ஷியான்மாவின் பிரதிவிம்பத்தாலேயே எப்போதும் பயத்தையடையும். கருத்திதுவாம் :—காஷ்டத்தை யொளிர்விப்பதாயினும் அக்கினி, கோடரி முதலிய ஆயுதத்தேயிருந்து காஷ்டங்களைப்பேதிப்பதேபோல, இவ்வான்மா தன் சாக்ஷிரூபத்தால் மாயாசாதகமாயினும், மஹாவாக்ய ஜன்ய அந்தக்கரண விருத்தியின் கண்ணேயிருந்து மாயையைப்பாதிக்கும்; அதனானே, வேதவேத்தாக்கள் அநாதி மாயை நசிப்பதற்கு மஹாவாக்கிய ஜன்ய ஆன்மஞானவடிவ உபாயமொன்றே கூறினர்; ஆன்மஞானத்தையன்றி வேறெவ்வுபாயத்தையுங் கூறிலர். மநுஷ சரீரத்தே பிரவேசித்து அநேகவகைத் துக்கத்தையடைவிக்கும் பிசாசானது ஒரு மஹா மந்திரத்தானே நீங்குவதேபோல, ஜீவர்களின் ஜன்மமரணாதி அநேக துக்ககாரணமாய மாயாரூபப பிசாசு பிரஹ்மக்ஞானரூப மஹா மந்திரத்தானே யழிவுறும்; வேறெவ்வுபாயத்தாலும் அழியாதாமாதலின், சாந்தியாதி குணங்களோடும்சித்தவொருமையோடுங்கூடிமாயைப்பசாசினின்றும்பயத்தையடைந்து, முமுக்ஷுக்கள் ஞானாசிரியரின் சமீபத்திற்சென்று, ஆன்மஞானரூப மஹா மந்திரத்தைச் சம்பாதிக்கவேண்டும். இவ்வான்மஞானமே வேதாந்த சாஸ்திரப் பிரயோஜனமாம். இதுவே முமுக்ஷுக்களால் அவசியம் சம்பாதிக்கத்தக்கதாம். வேறுபாயங்களைச்செய்வதால் மீண்டும் மீண்டும் சம்சாரப்பிராப்தியேயாமாதலின், வேறொருபாயஞ்செய்யத்தக்கதன்றாம்.

இப்போது ஸ்ரீ சங்காராநந்தமுனிவர் தமது சிடனுக்குச்செய்த பிரஹ்மவித்யா வுபதேசபரிபூரணத்தன்மையை நிரூபிப்பாம் :—ஹே மைந்த! இருக்கு முதலிய நான்கு வேதங்களில் பிரசித்தமாய ஐதரேயாதி உபநிடதரூப வேதாந்தங்களில் உபாசனைகளையே பிரதிபாதனஞ்செய்யும் பாகத்தைவிடுத்து, மற்றைய சர்வ வேதாந்தார்த்தரூபப் பிரஹ்மான்மஞானத்தையும்பொருட்டுக் கூறினேம்.

அது சர்வ தோஷங்களுமற்ற சுத்தப்பிரஹ்மாத்ம விஷயகமாதலின், எப்போதுந் திடமாகும். அது பரிபூரணமான பின்னர் யாம் உன்னை முன்போல நீ யிப்போ தெப்பொருளைக்கேட்க இச்சிக்கின்றனையோ வென்னும் வினாவினாதலுசிதமன்றும்; ஆன்மஞானப்பொருட்டு இப்போது கூறத்தக்கது வேறொன்றுமில்லை.

இவ்வாறு உபாசனாபாகங்களற்ற சர்வ வேதாந்தங்களாற் பிரதிபாதிதமாய நிர்க்குண ஆன்மஞானத்தைக் குருவாயிலாய்ச் சிரவணித்துச் சிரத்தாவானாய சீடன் கிருதகிருத்தியத்தன்மையை யடைந்தனன். தன் ஆசிரியரைத் தண்டம் போல் வணங்கித்துதித்தனன். இவ்வாறு தன் குருவைப் பூஜித்துப் பரமாநந் தத்தையடைந்த சீடன், குரு உபதேசித்த ஆன்மஞானத்தைத் தன் சீடர் பொருட்டு உபதேசித்தனன். அச்சீடர்களால் விஸ்தாரத்தை யடைவுற்ற ஆன்ம ஞானம் கலிகாலமாய இப்போதும் அதிகாரிகட்குக கிடைத்தது. முன் ஐதரே யாதி உபநிஷதங்களில் கூறிய பிரஹ்மவித்தைகளே இவ்வான்ம புராணரூபமாய்ப் பரிணமத்தையடைந்தனவாதலின், இம்மஹா புராணம் சாக்ஷாத் வேதசமான மாம். சம்சாரரூப சூலத்தின் மூலகாரணமாய மாயாவடிவ அஞ்ஞானத்தைக் காரி யத்தோடழிப்பதாம்; ஆகையால், முமுக்ஷுக்கள் இம்மஹா புராணத்தையே அவ சியம் விசாரஞ்செய்துகொண்டே யிருக்கவேண்டும். இப்போது இம்மஹா புரா ணத்தே பிரசித்த புராணங்களின் இலக்கணத்தைப் பொருத்திக்காட்டுவாம்:— இதில் ஜகத்தின் உற்பத்தி, ஸ்திதி, சம்ஹாரம் வர்ணிக்கப்பட்டிருக்கின்றது. ஆகா சாதி பூதங்களின், விராட்டாதி பௌதிகங்களின் வம்சமும் வர்ணிக்கப்பட்டிருக் கிறது. ஸ்வாயம்புவமநுவின் உத்பத்தி முதலியவையும் வர்ணிக்கப்பட்டிருக்கின் றது. ஸ்வாயம்புவமநுவைக் கூறியதால் அவர் விபூதிபாய மற்றைய மநுக்களும் பொருளாற் கூறியதாம். ஆகாசாதி பூதங்களின், அவற்றின் காரியமாய இந்திரி யாதிகளின், மநுவம்சத்தேயிருந்த பிரதர்த்தனாதி இராஜாக்களின் அநேகவகை யாய வியாபாரங் கூறப்பட்டிருக்கின்றது. வேதரூப மூலப்பிரமாணமற்ற ஒரு சிறிது பொருளு மிதிற்கூறவேயில்லை; மற்றேறு, பிரஹ்மசூத்திரத்தும், அதன் பாஷியத் தும், பகவத்கீதாதி ஸ்மிருதிகளிடத்துங்கூறிய பொருளே இதன்கண் கூறப்பட் டுளது. பிரஹ்மசூத்திராதிகளில் வேதமூலகத்தன்மை எல்லா அறிஞர்கட்குஞ் சம்மதமாம்; ஆகையால், வேதார்த்தத்தை விஸ்தாரமாய்ப் பிரதிபாதித்தல் வடிவ புராணதர்மமோ இம்மஹா புராணத்தே மிகவும் வெளிப்படையேயாம்.

இப்போது எச்சம்ஸ்கிருத ஆன்மபுராணத்தை இச்செந்தமிழ் ஆன்மபுராண மாய் ஆக்கப்பட்டதோ அதன் உற்பத்தி தேசத்தை வர்ணிப்பாம்:—இத்தெக்ஷிண தேயத்தேயிருக்கும் காவிரியெனப் பெயரிய பவித்திர புண்ய நதியின் தீரத்தே வாசஞ்செய்துகொண்டிருந்த 'ஸ்ரீ சங்கராநந்தமுனிவர்' திருவருள் சுரந்து தமது சிரத்தையுடைய சீடனுக்கு இதனைக்கூறினர். சர்வப்புராணேதிகாசங்களில் அநான்மபதார்த்தங்களைப் பிரதிபாதிக்கும் அரசர் முதலியோரது நானாவகையாய கதைகளைக்கேட்டு விரக்தியையுற்றவனும், சம்சாரரூப சூலத்தால் மிகத்தபிக்கப் பெற்றவனுமாய சீடன் இம்மஹா புராணவாரம்பத்தில் தன்குருவின்பால் மூல சஹித சம்சார சூலத்தை நாசஞ்செய்யும் ஆன்மஞானத்தையே கேட்டனன்;

அநான்ம பதார்த்தங்களைப் பிரதிபாதிக்கும் அரசா முதலியோரது கதைகளைக் கேட்டிலனாதலின், இதன்கண்ணே யாதோர் அநான்ம கதையுங் கூறப்படவே யில்லை. ஆரம்பமுதல சமாப்திபரியந்தம ஆன்மஞானத்தையும், அதன் சாதனங்க ளாய வைராக்கியாதிகளையுமே இம்மஹா புராணங்கூறுகின்றது; அதனானே இதற்கு " ஆன்மபுராணம் " எனப்பெயராம.

ஸ்ரீ சங்கராநந்த முனிவரது சீடரைப்போல அநான்ம கதைகளில் விராக முற்றவனும், சமசார சூலததாலமிகத்தாபமுறறவனும், விடய சுகங்களில் விரக்தனுமாயவனே இம்மஹா புராணததிறகதிகாரியாவன்.

சங்கை :—இவ்வாறுய அதிகாரி சாக்ஷாத் உபநிஷத்ரூப வேதாந்தத்தானே ஆன்மஞானத்தைச் சம்பாதிப்பனாதலின், இம்மஹா புராணம் வீணேயாமா மன்றோ ?

சமாதானம் :—அசம்பாவனாதி தோடங்களொடுகூடியவனுக்குச் சாக்ஷாத் வேதார்த்தத்தே பிரவேசமுண்டாகாதாம்; அவையற்றவனுக்கே யுண்டாமாத லின், அத்தோடங்கள் வேதார்தத நிசசயத்திறறடைகளாம. அவற்றை நீக்கும் பொருட்டு ஸ்ரீ சஙகராநந்த முனிவர், இம்மஹா புராணத்தை இயற்றினர். இம்மஹா புராணம் சர்வ உபநிடதரூப வேதாந்தங்களின் சாரமாய பொருளைப் பிரதிபாதிப்பதாமாதலின், இதனினும அதிகமாக ஆன்மாவைப் பிரதிபாதிக்கும் நூல் வேறொன்றுமில்லை.

இம்மஹா புராணம் முறகூறிய முக்கிய அதிகாரியின் பொருட்டே பிரவர்த்த மாயினும், பகிர்முகனுயும, இச்சாவானுயுமிருக்கப்பட்டவனும் இதனைச் சிரத்தை யோடும் நிரநதரஞ் சிரவணிக்கின்; அதன் மஹிமையால் அந்தர்முகனுய், விராக வானுய், ஆன்மஞானத்தை யடைவனாதலின், மோக்ஷேச்சையுடையவர்கள் அவசி யம் எப்போதும் இப்புராணத்தையே விசாரஞ்செய்க. இதனையே சிரவணஞ் செய்க.

சிரத்தாவானுய சீடனுக்கு உபதேசிததருளிய ஸ்ரீ சங்கராநந்த முனிவர் ஸ்ரீ சங்கரராகிய மஹா தேவரை எப்போதுந் தம்மான்மவடிவமாய்க் கண்டு கொண்டேயிருந்தவராதலின், அந்த ஞானசிரியர் திருமேனியிலிருந்து சாக்ஷாத் மஹாதேவரே இம்மஹா புராணத்தையுண்டாக்கினர். ஸ்ரீ சங்கரர் தம்திருவாக் கில் எப்போதும் நித்திய சரஸ்வதியையுடைத்தானவர்; அவரே பிரஹ்ம, விஷ்ணு, இந்திராதி சர்வ தேவதாவடிவர். ஆகையால், யாவன் இவ்வான்ம மஹாபுராணத் தைச் சிரத்தாபக்தி வாயிலாய் ஞானசிரியரிடத்தே சிரவணித்து விசாரஞ்செய் வனே, அவன் பொருளைத்தரிக்கும் புத்தியையடைவன். ஆன்மஞானத்தையடை வன். இவ்வகையாய கைகண்டபலத்தில் ஒருவரும் ஐயுறலாகாது.

இப்போது இந்நூலின் விடயசம்பந்த அநுபந்தத்தை நிரூபிக்கும்வாயிலாய் நூல்முடிவின் மங்களாசரணத்தைச் செய்பவராய் நூலாசிரியர் ஈஶாவாஸ்யோப

நிடதத்தின் பொருளை நிரூபிக்கின்றார் :—அவ்வுபநிடதப் பிரதிபாதித பரமான்மா ஸ்தாவர சங்கமரூப சர்வ ஜகத்தாம்; அதுவே இந்நூலிற் பிரதிபாதிக்கப்பட்டதாம். அதைச் சர்வ ஜகத்தின் ஈஸ்வரரூபமெனக்கண்ட வேதவேத்தாக்கள் தம் சிடர்க்கிவ்வாறுபதேசித்தனர் :—ஹே சிடர்களே! ஸ்தாவரசங்கமரூப சர்வ ஜகத்தும் அபின்ன நிமித்தோபாதானகாரணவடிவ ஈஸ்வரரால் வியாபிக்கப்பட்டதாம். இதனையே அநேக திருட்டாந்தங்களாற் காட்டுவாம் :—உபாதான காரணவடிவமாய மண்ணால் கடமுதலிய காரியங்கள் வியாபிக்கப்பட்டிருப்பனபோல, உபாதான காரணவடிவப் பரமேஸ்வரரால் இவ்வெல்லாவுலகும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. அரசன் திருட்டிவாயிலாய்த் தன் சர்வ நகரமுதலியவற்றையும் வியாபித்திருப்பதே போல, நிமித்தகாரணரூப ஈஸ்வரரும் எல்லாவுலகையும் வியாபித்திருப்பர். இத்தேகம் வெளியில் வஸ்திரத்தால் விபாப்தமாவதேபோல, இவ்வெல்லாவுலகமும் விபுவாய ஈஸ்வரரால் வியாப்தமாம். சுகந்தியுடைய பூவானது தன் சூட்சும அவயவங்களால் சீத ஜலத்தை வியாபித்து அதில் ரமணீயத்தன்மையை யுண்டாக்குவதே போல, இவ்வீஸ்வரரும் தமது சத்தாஸ்பூர்த்தியாற் சர்வ ஜகத்தையும் வியாபிப்பவராய் இதில் ரமணீயத்தன்மையையுண்டாக்குவர். பிரவிர்த்திக்குக் காரணமாய வாசனைகளால் ஜீவர்கள் மனம் வியாப்தமாவதேபோல, அந்தர்யாமியாகிய ஈஸ்வரரால் இவ்வெல்லாவுலகும் வியாப்தமாம். தனது பிறரது ஸ்திரீ புத்ரதனாதிகளியாவும் முற்கூறிய முறையே ஈஸ்வரரூபமேயாகும்; ஈஸ்வரரினும் பின்னசத்தையுடையனவாகாவாமாதலின், யாவும் ஈஸ்வரரேயாகும்; ஜீவர்கட்கு யாதொன்றுமின்றாம். கந்தர்வ நகரம் ஆகாசரூபமாதலின் ஆகாசத்ததே யாவதுபோல, இவ்வெல்லாவுலகும் ஈஸ்வரவடிவமாதலின், ஈஸ்வரரேயாகும். அரசர் முதலிய மஹா புருடரிடத்தும், அவரது தனாதிகளிடத்தும் மதிமான் தன்னுடையதென்னும் திருட்டிவைச்செய்யான்; தன்னிச்சை வாயிலாய் அப்பொருள்களைக்கொள்ளல் தள்ளலே தன்னுடையதென்பதாம். அதுபோல, தன்னுடையதென்னுந் திருட்டியற்றவன் மனைவியாதியர் ஈஸ்வரரூபமேயென எல்லாப்பொருள்களையும் ஈஸ்வரரூபமாயுணர்ந்து பரித்தியாகிப்பன். அல்லது, இவ்வெல்லாப்பொருள்களும் ஈஸ்வரரதேயென யாவற்றையும் அவரதெனவறிந்து அவரறிநிச்சையைவிடுவன். இவ்வுலகமியாவும் ஈஸ்வரவடிவமென்னும் முதற்றிருஷ்டியிலோ சர்வப் பிரபஞ்ச பாதத்தால் தன்னுடையதென்னுந் திருட்டிவிடப்பட்டு எஞ்சியதாய் நிர்க்குணப் பிரஹ்மஞானரூபப் பலம் சித்தமாம்.

இவ்வுலகமியாவும் ஈஸ்வரரதேயென்னும் இரண்டாவது திருட்டியாலோ, சகுணப் பிரஹ்மஞானரூபப்பலம் சித்தமாம். பொய்யாய கந்தர்வநகரத்தே தன்னுடையதென்னும் ஆசை புருடனுக்குத் துக்கத்தையே அடைவிக்கும், சக்கரவர்த்தியின் மனைவி முதலியவரிடத்தே தன்னுடையதென்னும் ஆசை துக்கத்தையேயடைவிக்குமாறுபோல, தன்னுடைய மனைவி மைந்தராதியரின் ஆசையும் துக்கத்தையே தருமாதலின், அதிகாரியானவன் சர்வ ஆசைகளையும் வேருடன் விடுத்துச் சர்வாதிஷ்டானவடிவ ஈஸ்வரரையே தன்னான்மவடிவமாய்க் காணவேண்டும். அல்லது, சர்வ ஜகத்தின் பிரேரகரூபத்தால் அவ்வீஸ்வரரை ஆராதனஞ்செய்க.

ஹே மைந்த! மனத்தூய்மையின்றி யொருகால் நினக்குச் சகுணப் பிரஹ்ம ஞானத்தும், நிர்க்குணப் பிரஹ்மஞானத்தும் அதிகாரமின்றேனும், மனைவி மைந்த ராதியரை 'ஈஸ்வரருடையனவே' என்னுடையனவன்று, என வுணர்ந்து கன்மங் களின் பலவடிவ லோகங்களை பரித்தியாகஞ்செய்க. பின்னர், உனது வருணாச் சிரம அநுசாரம் சரீரமனவாணிகளால் நிட்காம கர்மங்களைச்செய்தி; இவ்வாறு செய்வையேல், இப்பிறப்பிலேனும், மறுபிறப்பிலேனும் நின்னுளந்தூய்தாம்; அதன்பின் பிரஹ்மஞானமுண்டாம்; அதன் மஹிமையால் ஜன்மமரணாதி சர்வ துக்கங்களும் நீங்கும.

இப்போது இப்பொருளையே வெளிப்படுத்துவான் வேண்டி மூன்று மார்க் கங்களை நிரூபிப்பாம்:—ஹே மைந்த! சுவர்க்கப் பிரஹ்மலோகரூப அப்யுதயம், மோக்ஷரூப நிஸ்ரேயஸ—, அவற்றையடைவிப்பன மூன்று மார்க்கங்களாம். அக் கினிஹோத்திராதிரூப இஷ்டகன்மங்களையும்; வாபி, கூப, தடாகாதி பூர்த்தகன் மஙகளையுஞ் செய்பவனுக்குச் சுவர்க்கத்தையடைவிக்கும் பிதுர்யானம் தக்ஷிண மார்க்கமாம.

அகங்கிரஹோதியுபாசனைகளைச் செய்பவனுக்குப் பிரஹ்மலோகத்தையடைவிக் கும் தேவயானம் உத்தரமார்க்கமாம. சிரவணாதி சாதனங்களோடுகூடிய நிஷ் காமனுக்கு மோக்ஷத்தையடைவிபபது பிரஹ்மஞானமார்க்கமாம். இம்மூன்றி னும் வேறாக ஜீவர்கட்குச சுகாதிகளையடைவிப்பான் வேறொருமார்க்கமுமின்றாம். இம்மூநெறிகளையும் விடுத்துக் கேவலம் பாவத்தையே செய்யும் அற்பமதியினர் எப்போதுந் துக்கத்தையேயடைவர். அம்மூந்நெறிகளுள்ளும், மூன்றாவதாய பிரஹ்மஞான நெறிமேன்மையதாம. பிரஹ்மலோகத்தும், சுவர்க்கலோகத்து மிருக்குந் தேவதைகளுள்ளும் பிரஹ்மஞானமற்ற தேவதைகட்கு உண்மையாய்ச் சிறிது மாத்திரையும சுகமின்றாம; ஏனெனின், மஹான்மாக்களின் திரஸ்காரமே அவர்களைக்கொல்வதாம் என்பது எங்கும் பிரசித்தமேயாகும். யாவினும் பெரிய தாய ஆன்மாவையறியாத அஞ்ஞானி ஆன்மாவைத் திரஸ்கரிக்கும் வாயிலாய்க் கொன்று ஆன்மஹத்தியுடையவனாவன்; அவனுக்குச் சம்சாரதுக்க அடைவையே சுருதி கூறியிருக்கிறது.

" [Grantha script verse line 1] ।
[Grantha script verse line 2] ॥ "

" சிவசுக முழுகிவாழ்வர் சுரரதைச் சேறிந்திலாதோர்
அவியறு மசுரரன்றோ றறமற வினையிலாகும்
பவமெனு மசுர்யலோகம் பற்றுவர் பரத்தைமூடும்
அவவந் தந்தமமாமத் தையான்ம ஹத்தியனேய்வானே. "

(பொ-ள்.) யாவன் ஆன்மாவின்கண்ணே நன்றாக ரமிப்பனோ, அவன் சுர னாவன். அத்தகைய ஆன்ம ராமனாகிய அறிஞனினும் வேறாய அஞ்ஞானிகள் அசுரரெனப்படுவர். அவர்களடையத்தக்கது சுப அசுபகர்மஜன்ய லோகமாம்.

அது 'அசுர்ய' மெனப்படும். அது ஆன்மாவை மறைக்கும் அஞ்ஞானவடிவ அந்ததமத்தால் வியாப்தமாம். அதை ஆன்மஹத்திசெய்தவன் மரித்தபின் அடைவன்.

இப்போது எவ்வான்மஞானத்தால் அவ்வசுர்யலோகமுண்டாகாதோ அவ்வான்மாவின் வடிவத்தை வர்ணிப்பாம்:—ஹே மைந்த! அசுரர்களால் அறியப்படாத ஆன்மாவின் வடிவம் அத்தியந்தம் ஆச்சர்யரூபமாம்; ஏனெனின், தான் கிரியையற்றதாயினும் மனத்தினும் அதிக வேகமுடையதாம். கருத்திதுவாம்:— எவ்வெப்பொருளை இம்மனம் தன் சங்கற்பவாயிலாய் அடையுமோ அவ்வப்பொருளில் ஆத்மா மனத்தின் செல்கைக்கு முன்பே பரிபூர்ணமாகும். இவ்வான்மா நேத்திராதி யிந்திரியங்களால் அறியப்படாதாயினும் பிரஹ்மஞானத்தா லறியப்படும். மலைபோல நிச்சலமாயினும, விரைவிற்செல்லும் வாயு முதலியவற்றையும் உல்லங்கனஞ்செய்து முன்னே செல்லும். அந்தர்யாமி ஆன்மாவால் ஏவப்பட்டதாகவே சூத்திரான்மவடிவ வாயு சர்வ தேகங்களிலும் அக்னிஹோத்திராதி சர்வ கருமங்களைச்செய்வதிற் சமர்த்துடையதாம். மேகாதிபாவங்களையடைவுற்ற அக்னிஹோத்திரத்தின் ஆகுதிகளால் அநேகம் கன்மபாவங்களின் பலரூப விசுவமுண்டாம். ஆன்மா உண்மையாய்ச் சர்வகிரியைகளற்றதாயினும, சர்வக்கிரியைகளுடையதாம். அஞ்ஞானிகட்கு அத்தியந்தந் தூரமாயினும், அறிஞர்கட்கு அத்தியந்தஞ் சமீபமாம்; இவ்வான்மா திருசிய பிரபஞ்சத்தினுள்ளும் புறம்பும் நிறைந்ததாம். இதன் ஞானபலத்தை யினிக்கூறுவாம்:—ஹே மைந்த! விவேகியானவன் வாழுங்காலத்தே பிரஹ்மா முதல் பிபீலிகை பரியந்தமுள்ள சர்வ சரீரங்களையும் தன்னுன்மவடிவத்திற் கற்பிதவடிவமாய்க்காண்பன், அநுகதரூபமாயுங்காண்பன், அவனே சிறிது மாத்திரையுந் துக்கததையடையான். ஆன்மஞான மஹிமையால் சர்வ பூதப்பிராணிகளும் ஆன்மபாவமாய்த்தோற்றுதலையுடைய அறிஞன் அதிஷ்டான ஆன்மாவின் ஒருமை யியற்கையைக் குருசாஸ்திரோபதேசத்தாற் சாக்ஷாத்கரிப்பன். அத்தகைய வித்துவானுக்கு ஆவரணரூப மோஹப்பிராப்தியுமுண்டாகாது. விக்ஷேபரூப சோகமுமுண்டாகாது. எவ்வதிகாரி சுயம்பிரகாச ஆநந்தவடிவ ஈஸ்வரரை அபின்னரூபமாய்ச் சாக்ஷாத்கரிக்கின்றனனோ, அவன் யாண்டும் வியாபகமாய ஆன்மாவையே காண்பன்; அவ்வான்மா ஸ்தூலாதி முத்தேகமற்றதாம். நிர்க்குண நிரவயவமாம். அத்தகைய ஆன்மாவை ஈஸ்வரரூபமாய் அறிந்த அறிஞனே ஸோபாதிக திருஷ்டியால ஆராதனைசெய்யத்தக்க ஈஸ்வரவடிவனுமாவன். அவ்வீஸ்வரர் சங்கோசமற்ற தரிசன சுபாவமுடையவர். சர்வ மனப்பிரவிர்த்திகளையும் அறியுஞ் சர்வஞ்ஞர். அஞ்ஞானாதி சத்துருக்களைத் திரஸ்கரிப்பவர். சர்வ காரணங்களுமற்றவர்; ஆதலின், சுவயம்புரூபர். சர்வ காரணங்கட்குங்காரணர். இத்தகைய ஆன்மசாக்ஷாத்காரப்பிராப்தியில் மனத்தூய்மைவாயிலாய் உபாசனையோடுகூடிய கருமமே யுபாயமாம். அக்கர்மத்தை வேதவேத்தாக்கள் 'அசம்பூதி, அவித்தை' என்றனர், உபாசனையை 'சம்பூதி, வித்தை' என்றனர். அவ்விரண்டும் மனத்தூய்மைவாயிலாயும், ஒருமைவாயிலாயும் ஆன்மஞான காரணங்களாம்.

இப்போது கருமோபாசனையென்னு மிரண்டன் சமுச்சயவிதானஞ்செய்யும் பொருட்டு முதலில் உபாசனையற்ற கேவல கர்மத்தை நிந்திப்பாம்:—ஹே குழந்தாய்! யாவன் கேவல கருமத்தையே செய்வானோ, அவன் அக்கரும மஹிமையால் மனைவி மைந்தாரதியரிடத்தே மிகவும் பற்றுதலை யடைவன். சுவர்க்காதிய நித்திய லோகங்களையடைவன். நானாவகையாய இராகத்துவேடங்களோடு கூடியவனாவன். இவ்வாறு சம்சார சுகத்திற் பற்றுற்றவனாப அக்கருமி அடிக்கடி ஜன்மமரணத்தை யடைவன்.

இனிக்கேவல உபாசனையின் நிந்தை வருமாறு:—கேவல உபாசனையின் கண்ணே பிரீதி யுடையவன் அதன் ஐசுவர்யத்தன்மைரூப பலத்தே பற்றுற்றவனாய்க் கன்மியினும் அதிகக்கொடிய தமத்தையடைவன்; ஏனெனின், யாவன் வேதவிகிதகர்மங்களைப் பரித்தியாகித்துக் கேவல உபாசனையில் தர்பரனாவனோ, அவன்பால் இரண்டனர்த்தங்களுண்டாம். ஒன்று விஹித்த கர்மங்களின் தியாகமாம்; மற்றொன்றோ, நானாவகையாய ஐசுவரியத்தே பற்றுறலாம். இவ்விரண்டானும் உபாசகன் கருமியினும் அதிக துக்கத்தை யடைவனாதலின், அதிகாரி வேதவிகிதகர்மங்களோடுகூடிய உபாசனையையே அநுஷ்டிக்கவேண்டும். கேவல கருமத்தையேனும், கேவல உபாசனையையேனும் அநுஷ்டிக்கலாகா. இவ்வாறு கருமோபாசனைகளோடுகூடிய தத்வஞான விச்சையையுடைய அதிகாரி மனவொருமையால 'பொன்மயப்பாத்திரத்தால்' என்பதாதி மந்திரத்தால் ஆதித்தியபகவானை மீணடு மீண்டும் பிரார்த்தனைசெய்க. அவர் பிரஹ்மலோகத்தை யடையும் வாயிலாய்க கிரமமுத்தி யடையும்பொருட்டுத தமது மண்டலததே சித்திரரூபமார்க்கத்தை யடைவிப்பவராவர். அவ்வதிகாரி 'பொன்மயப்பாத்திரத்தால்' என்னும் மந்திரத்தால் ஆதித்தியபகவானைப் பிரார்த்திக்கில் இவ்வகையாய சுப்பூத்தியுண்டாம்:—ஆதித்தியமண்டலத்தேயிருக்கும சுவயஞ்சோதியாய புருடனே எனது வாஸ்தவவடிவமாம். தேகேந்திரியாதிரூப சங்காதம் எனதுண்மை வடிவமன்றாய. ஏனெனின், தேஹாதிரூப சங்காதம எனதான்மவடிவமன்றாம். ஆகாசாதி பஞ்சபூதங்களின் காரியரூபமாம. மரணத்தின்பின் சாம்பராவனவாம், இத்தகையன பிரணவபத வாச்சியார்த்தமாய ஆன்மாவை யறியும் அறிஞனாய எனது வடிவமெவ்வாறாம்? எனது வடிவமாகாவென்க.

இவ்வாறு கருமோபாசனைகளோடுகூடி இசசங்காதத்தே வைராக்கியமுறற வதிகாரி தன் மனத்திற்குக் கூறவேண்டியதாவது:—ஹே மனமே! முன் எத்தேசகாலங்களில எவ்வெப்பொருளை நீ யடைநதனையோ அவ்வபபொருளை நீ சங்கற்பசகித கர்மங்களானே யடைந்தனை; அஃதின்றிச சிறிது பொருளுமடைவுறுதாம். இவ்வாறாய சங்கறப கருமங்களின் மஹாத்மியத்தை யிப்போது நீயேன் மறந்தனை? மறத்தல் தகுதியன்றாமாதலின், வேதவிஹித கர்மம் உபாசனைவழுவ சங்கற்பம் என்பவற்றின் மஹாதமியத்தை நீ ஸ்மரித்து தற்பரமாகுதி.

இவ்வாறு மனத்தைப் பிரார்த்திதத அதிகாரி 'பொன்மயப்பாத்திரத்தால்' என்னும் வைதிகமந்திரத்தானும், லௌகிகஸ்தோத்திரங்களானும் ஆதித்திய பகவானைப் பிரார்த்திக்குக. அக்கினி பகவானைப் பிரார்த்திக்குக. அப்போது இவ்வதிகாரி சர்வ பாபங்களுமற்றவனாய்க் கிரமமாய்ப் பிரஹ்மபாவத்தை யடைவன். அக்கினி தேவதையின் பிரார்த்தனை வருமாறு:—ஹே அக்கினி தேவதையே! தாங்கள் அடியேனுக்குச் சர்வ துக்கங்களற்றதும், பிரகாசமாயிருப்பதுமாகிய தேவயான மார்க்கத்தால் பிரஹ்மலோகத்தை யடைவியுங்கள். பாவப்பிராப்தியை யடைவிக்கும் அடியேனது காமக்குரோதாதி சர்வ சத்துருக்களையு மழியுங்கள். தாங்

கள் சர்வ ஜீவர்களின் சித்த விருத்தாந்தங்களை யறிவீர்களாதலின், அடியேனது காமக்குரோதாதி சர்வ சத்துருக்களுந் தங்களாலறியப்படாதவரல்லர்; மற்றே, அறியப்பட்டவரேயாவர். இவ்வாறு அதிகாரிகளின் கர்மக்குரோதாதி சத்துருக்களை நாசஞ்செய்பவரும், பிரஹ்மலோகத்தை யடைவிப்பவருமாகிய தங்களுடைய உபகாரத்திற்குக் கைமாறியற்ற வல்லமையில்லையாதலின், தங்களை யடிக்கடி நமஸ்கரிக்கின்றேன்.

சூரிய பகவானைப் பிரார்த்திக்கும் 'பொன்மயப்பாத்திரத்தால்' என்னும் மந்திரப்பொருள் வருமாறு:—தப்த சுவர்ண சமானமாய், அத்தியந்தம் பிரகாசத்தோடுகூடிய ஆவரணஞ்செய்யும் இப்பாத்திர சமானமாய தேஜோமண்டலரூபப் பொன்மயப் பாத்திரத்தால் ஆதித்தியமண்டலத்திலிருக்கும் பிரஹ்மோபாசக புருடரின் பிராப்திக்குத் துவாரபூதமாய சித்திரரூப முகத்தைத் தாங்கள் மறைத்திருப்பீர். ஹே சர்வ ஜகத்தையும் போஷணஞ்செய்யும் சூரிய பகவானே! சத்திய பாராயணத்தன்மைவடிவ தர்மமுடைய அதிகாரிகட்குத் தங்கள் தரிசனந்தந்து இச்சம்சாரத்தினின்றுங் காக்கும்பொருட்டுத் தங்கள் முக ஆவரணத்தை நீக்குங்கள். ஹே பகவன்! ஸ்மரணமாத்திரத்தால் சர்வ அநர்த்தங்களையும் நஷ்டஞ்செய்யும் தங்களுடைய வாஸ்தவ சொரூபத்தை யெவ்வாறு யாங்கள் சாக்ஷாத்கரிப்போமோ அவ்வாறு எங்கள்மீது அநுக்கிரகிக்கவேண்டும். இவ்வாறுப ஆதித்திய பகவானுடைய கீர்த்தனையை அதிகாரிகள் செய்க.

இவ்வண்ணம் வேதவேத்தாக்கள் எவ்வான்மப்பிராப்தியின்பொருட்டுத் தமது சீடர்க்கு நானாவகையாய் வித்தையை யுபதேசித்தனரோ, அப்பரமான்மா இவ்வான்ம புராணத்தில் யாண்டும் பிரதிபாதிக்கப்பட்டுளது. பரமான்மாவினும் வேறாய எவ்வநான்மப்பொருளும் பிரதிபாதிக்கப்படவில்லையாதலின், எவ்வதிகாரிஞானசிரிபரிட்டத்தில் இம்மஹா புராணத்தைப் படிப்பனோ, சிரவணஞ்செய்வனோ, வேறு முமுக்ஷுவுக்குக் கூறுவனோ, இதன் பொருளை நிரந்தரஞ் சிந்தனஞ்செய்வனோ, அவ்வதிகாரிகளியாவரும் பரமான்மாவைத் தங்கள் ஆன்மவடிவாயுணர்ந்து காரியசகித அஞ்ஞான நீக்கவாயிலாய்ப் பிரஹ்மபாவப் பிராப்திரூப மோக்ஷத்தையடைவராதலின், மோக்ஷ இச்சையை யுடையவர் சிரத்தாபக்தியாயினராய் இம்மஹா புராணத்தையே இடைவிடாமல் அவசியம் விசாரஞ்செய்துய்வாராக.

சுபம்! சுபம்!! சுபம்!!!

பதினெட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

---

ஸ்ரீ சங்கரானந்த சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

ஸ்ரீ ஆத்மபுராணம் முற்றிற்று

---

வாழ்த்து.

சீருற்ற சங்கரா நந்ததே சிகனுடைத் திருவருட் சிறப்பினாற்கப்
பேருற்ற தேசிகன் றிருவருட் பாங்கையும் பெரிதினி துணரத்திடுமெகா
வீருற்ற ஆத்தும புராணமிதை மெய்த்தமிழ் மேன்மையினில் வைத்துலாவும்
தேருற்ற வீரமெய்த் தேசிகன திணையடிகள் தினமன திருத்துவாமே.



PRINTED AT THE MADRAS TIMES PRINTING AND PUBLISHING CO., LTD.
மசாமசே